அரசர்கள். அத்ர—இப்பாண்டவஸேனையில், (உள்ளனர்); (அவர்களாவார்:-) யுயுத₄ாந:—ஸாத்யகியும். விராட: ச—விராடராஜனும், மஹாரத₂:-பெரும் தேராளியான. த்₃ருபத₃:-பாஞ்சாலராஜனும், த்₄ருஷ்டகேது:—த்₄ருஷ்டகேதுவென்னு மரசனும், சேகிதாந:—சேகிதானனும். வீர்யவாந்—வீர்ய முடைய, காஶீராஜ:ச—காசிராஜனும், புருஜித்—புருஜித்தும், குந்திபோ₄ஜ:ச — குந்திபோஜனும், நரபுங்க₃வ: மனிதருள் சிறந்த. சைப்₄ய:—சிபியின் வமிசத்துதித்த அரசனும். விக்ராந்த:—பராக்ரமமுடைய, யுத₄ாமந்யு: ச-யுதாமன்யுவும், வீர்யவாந்—வீரியமுடைய, உத்தமௌஜா: ச — 'உத்தமௌஜா:' என்னுமரசனும், ஸௌப₄த்₃ர:—சுபத்திரையின் பிள்ளையான அபிமன்யுவும், த்₃ரௌபதே₄யா:—திரௌபதியின் பிள்ளைகளான ஐந்து இளம்பாண்டவர்களும் (ஆவர்). ஸர்வ ஏவ—இவர்கள் அனைவருமே, மஹாரத₂ா:-மஹாரதர்களாவர்.

---

**வீமன் விசயன் என**-பீமனையும் அர்ஜுனனையும்போலே. **வெற்றி அமர் வில்லாளர்** — வெற்றிபொருந்திய வில்லாளிகள், **நன்றியமர் தன்னுள் நலம் புனேவோர்**—நல்ல போரிலே வீரத்தைக் காட்டவிருக்கிறுர்கள். **நின்று இகல்வோன்**—நிலை நின்று போர்புரிபவன் (யுயுதானன்) என்னும் பெயருடைய ஸாத்யகியும். **வெல்லும் விராடன்**-வெற்றியேகாணும் விராடனும், **மிகுதேரான் பாஞ்சாலன்** — சிறந்த தேராளியான பாஞ்சாலவரசனும் (உளர்). **தொகை சொல்லும் அளவோ?** அவர்களுடைய எண்ணிக்கை சொல்லக்கூடிய அளவோ?

**மற்றும் பல அரசர் மாரதராய் நிற்கின்றுர்**—மற்றும் பல அரசர்கள் மஹாரதர்களாயுள்ளனர். **முற்றும் அபிமனுடன்**—வலிமை முற்றுகிற அபிமன்யுவுடன், **முந்துற்று பற்றி அமர் முயற்றி சேர்வர்** — முன்னிடம்தேடி போர்க்களத்தின் முன்னணியை அடைவர். **அதுநிற்க**—அது இருக்கட்டும்; **நமர் முயற்றிதனே**—நம்முடைய முன்னணியை. **நயந்து கேளாய்**—விரும்பிக் கேட்பீராக.

4, 5, 6. (அத்ர ஶூரா:) மூன்று ச்லோகங்களாலே பாண்டவஸேனையின் பெருமையைக் காட்டுகிறான். (மஹேஷ்வாஸா;) "**இஷவ: அஸ்யந்தே ஏபி₄: இதி இஷ்வாஸா:**" [அம்புகள் இவைகளால் எய்யப்படுகின்றனவாகையாலே விற்கள் இஷ்வாஸங்கள் எனப்படுகின்றன] என்கிற வ்யுத்பத்தியாலே விற்கள் இஷ்வாஸங்கள் எனப்படுகின்றன. "**மஹாந்த: இஷ்வாஸா: யேஷாம் தே**" [பெரிய விற்களையுடையவர்கள் மஹேஷ்வாஸர்கள்] என்கிற வ்யுத்பத்தியின்படி மஹேஷ்வாஸசப்தம் பெரியவில்லாளிகளைக் குறிக்கிறது. (யுயுத₄ாந:) 'நின்று போரிடவல்லவன்' என்று பொருள். ஸாத்யகியைக்குறிக்கும் என்று கீதார்த்தஸங்க்ரஹதீபிகை கூறும். (விராட:) அஜ்ஞாதவாஸத்தின்போது பாண்டவர்க்குதவிய விராடவரசன். (த்₃ருபத₃:) திரௌபதியையும் திருஷ்டத்யும்னனையும் பெற்ற பாஞ்சாலவரசன். (சைப்₃ய:) சிபியின் வமிசத்துதித்த அரசன். (ஸௌப₄த்ர:) சுபத்திரையின் பிள்ளையான அபிமந்யு. (த்₃ரௌபதே₃யா:) திரௌபதியிடம் பஞ்சபாண்டவர்களுக்கும் பிறந்த பிரதிவிந்த்யன் முதலான ஐந்து இளம்பாண்டவர்கள். (ஸர்வ ஏவ மஹாரத₂ா:) இவர்களில் ஒருவர் தவறாமல் அனைவரும் மஹாரத₂ர்கள் என்றபடி.

**"ஏகாத₃ஶஸஹஸ்ராணி யோத₄யேத்₃யஸ்து த₄ந்விநாம் |**
**ஶஸ்த்ரஶாஸ்த்ரப்ரவீணஶ்ச ஸ மஹாரத₂ உச்யதே ||**
**அமிதாந் யோத₄யேத்₃யஸ்து ஸம்ப்ரோக்தோதிரத₂ஸ்து ஸ:|**
**ரதே₂நைகேந யோ யோத்₃த₄ா ஸ ந்யூநோர்த்த₄ரதே₂ாத்தம:||"**

[பதினோராயிரம் வில்லாளிகளோடு ஒருவனுகப் போர்புரிய வல்லவனாய், படைக்கருவிகளைப்பற்றிய சாஸ்திரங்களில் வல்லவனுயிருப்பவன் மஹாரத₂ன் எனப்படுகிறான். பலரோடு போர்புரியவல்லவன் அதிரத₂ன் என்று கூறப்படுகிறான். ஒரு தேராளியோடு மாத்திரம் போர்புரியவல்லவன் அர்த்த₄ரதன் எனப்படுகிறான். அவன் வீரர்களில் தாழ்ந்த

असाकं तु विशिष्टा ये तान्निबोध द्विजोत्तम।
नायका मम सैन्यस्य संज्ञार्थं तान् ब्रवीमि ते॥ ७॥

7. அஸ்மாகம் து விஶிஷ்டா யே தாந்நிபோ₃த₄ த்₃விஜோத்தம ।
நாயகா மம ஸைந்யஸ்ய ஸம்ஜ்ஞார்த்த₂ம் தாந் ப்₃ரவீமி தே ॥

भवान् भीष्मश्च कर्णश्च कृपश्च समितिञ्जयः।
अश्वत्थामा विकर्णश्च सौमदत्तिस्तथैव च॥ ८॥

8. ப₄வாந் பீ₄ஷ்மஶ்ச கர்ணஶ்ச க்ருபஶ்ச ஸமிதிஞ்ஜய: ।
அச்வத்த₂ாமா விகர்ணஶ்ச ஸௌமத₃த்திஸ் ததை₂வ ச ॥

अन्ये च बहवः शूरा मदर्थे त्यक्तजीविताः।
नानाशस्त्रप्रहरणाः सर्वे युद्धविशारदाः॥ ९॥

---

6. மின்னுநூல் வேதியனே வெற்றியரை யானுரைக்கேன்
முன்னுநீ பாட்டன் முயல்கன்னன்—முன்னங்
கிருபனச்வத் தாமா விகன்னனுடன் கேளிர்
நிருபர் பலரு நிறைந்து.

மின்னு நூல வேதியனே—*நூலால் விளங்கப்பெற்ற அந்தணனே!* வெற்றியரை—*(நம் சேனையிலுள்ள) வெற்றிவீரர்களை,* யான் உரைக்கேன்—*நான் உரைக்கின்றேன்;* முன்னும் நீ—*(வீரத்தில்) முந்திநிற்கும் நீயும்,* பாட்டன்—*பிதாமஹரான பீஷ்மரும்,* முயல்கன்னன்—*முயற்சியையுடைய கர்ணனும்,* முன்னம் கிருபன்—*முன்னணியில்நிற்கும் கிருபன்,* அச்வத்தாமா—*(துரோணபுத்திரனை) அச்வத்தாமாவும்,* விகன்னனுடன்—*தம்பி விகர்ணனோடுகூட,* கேளிர் நிருபர் பலரும்—*உறவினரும் அரசரும் பலரும்,* நிறைந்து—*நிறைந்துள்ளனர்.*

---

*வன்.] என்னும் மஹாரத₂ அதிரத₂ அர்த்₄ரத₂லக்ஷணம் இங்கு அநுஸந்திக்கத்தக்கது.* "ஶூரா:" "மஹேஷ்வாஸா:" "பீ₄மார்ஜுநஸமாயுதி₄" "ஸர்வ ஏவ மஹாரதா₂:" *என்றும் பதங்கள் பாண்டவஸேனை கௌரவஸேனையைக் காட்டிலும் வலிமிகுந்தது என்பதை உணர்த்துகின்றன.* 4. 5. 6.

9. அந்யே ச ப$_3$ஹவ: ஶூரா மத$_3$ர்த்தே$_2$ த்யக்தஜீவிதா: ।
நாநாஶஸ்த்ரப்ரஹரணா: ஸர்வே யுத்$_3$த$_4$விஶாரதா$_3$: ॥

**த்$_3$விஜோத்தம**—*அந்தணர் தலைவரே!* **அஸ்மாகம் து**—*நம்மிடையேயோவெனில்,* **மம ஸைந்யஸ்ய**—*என்னுடைய சேனையின்,* **விசிஷ்டா: நாயகா: யே (ஸந்தி)**—*சிறந்த சேனைத் தலைவர்கள் எவர்கள் உள்ளனரோ,* **தாந்**—*அவர்களை,* **தே**-*உமக்கு,* **ஸம்ஜ்ஞார்த்த$_2$ம்**—*நன்கு அறிவதற்காக,* **ப்$_3$ரவீமி**—*கூறுகிறேன்,* **தாந்**—*அவர்களை,* **நிபே$_3$த$_4$** *(நான் கூறக்) கேட்பீராக,* **ப$_4$வாந்**—*துரோணாசார்யரான தேவரீரும்;*

---

7 வேறும் பலசூரர் மெய்யே யெனக்காக
ஊறு படவுடல முள்ளுயிர்விட்—டேறு
நிலையுடைய பல்படையார் நின்றமரு ளென்று
மலையுமவ ரெல்லாரும் வந்து.

**வேறும் பல சூரர்**—*மற்றும் பல சூரர்கள்,* **மெய்யே**—*உண்மையாகவே,* **எனக்காக**—*என் நன்மையின் பொருட்டு,* **உடலம் ஊறுபட உள் உயிர் விட்டு**—*தம் உடம்புக்குத் தீங்கு விளையப்பெற்றுப் பிராணனைவிட்டு,* **ஏறு நிலை உடைய**—*சிறந்த*

---

*7, 8, 9. பாண்டவசேனைத்தலைவர்களை முன் மூன்று சுலோகத்தாலே கூறிவிட்டு, தன் சேனைத்தலைவர்களை இம் மூன்று சுலோகங்களாலே கூறுகிறான் துரியோதனன். (ப$_4$வாந்) பாண்டவர்களோடு எங்களோடு வாசியற ஆசார்யராயிருந்தும், பாண்டவர்களிடமும், அர்ஜுனனிடமும் விசேஷ ப்ரீதியுள்ள தேவரீர் எங்கள் சேனைக்குத்தலைவர். (பீ$_4$ஷ்மஶ்ச) இருவருக்கும் பாட்டனாராயிருந்தும் பாண்டவர் களிடமும் கிருஷ்ணனிடமும் பக்ஷபாதமுள்ள பீஷ்மரும் எங்கள் சேனைத்தலைவர். (கர்ணஶ்ச...ஶூரா:) கர்ணன் முதலான சூரர்களிருந்தபோதிலும் பாண்டவர்களின் தலை வர்களைப்போல் அனைவரும் மஹாரதர்களல்லர். (மத$_3$ர்த்தே$_2$ த்யக்தஜீவிதா:) இவர்களிடத்திலுள்ள ஒரு நன்மை யாதெனில் எனக்காக உயிரையே விட்டிருக்கின்றார்களென்*

பீ$_4$ஷ்ம: ச—*பீஷ்மரும்,* கர்ண: ச—*கர்ணனும்,* ஸமிதிஞ்ஜய: க்ருப: ச—*போரில் வெற்றிபெறும் கிருபாசார்யரும்,* அச்வத்தா$_2$மா -*(துரோணபுத்திரனை)அச்வத்தாமாவும்,* விகர்ண: ச-*(தம்பி)விகர்ணனும்,* ஸௌமத$_3$த்தி:-*ஸோமதத்தனின் பிள்ளையும்,* அந்யே-*மற்றுமுள்ள,* ப$_3$ஹவ: ஶூரா: ச -*பல வீரர்களும்,* (ஸந்தி)—*உள்ளனர்;* *(அவர்கள்)* மத$_3$ர்த்தே$_2$ —*எனக்காக,* த்யக்தஜீவிதா:—*உயிரையே விட்டிருப்பவர்கள்;* நாநாஶஸ்த்ர ப்ரஹரணா:—*பல அஸ்திரங்களையும் ஆயுதங்களையும் உடையவர்கள்;* ஸர்வே யுத்$_3$த$_4$விஶாரதா$_3$:—*எல்லோரும் போரில் வல்லவர்கள்.*

अपर्याप्तं तदस्माकं बलं भीष्माभिरक्षितम् ।
पर्याप्तं त्विदमेतेषां बलं भीमाभिरक्षितम् ॥ १० ॥

10. அபர்யாப்தம் தத$_3$ஸ்மாகம் ப$_3$லம் பீ$_4$ஷ்மாபி$_4$ரக்ஷிதம் ।
பர்யாப்தம் த்வித$_3$மேதேஷாம் ப$_3$லம் பீ$_4$மாபி$_4$ரக்ஷிதம் ॥

தத்—*ஆகையால்,* பீ$_4$ஷ்மாபி$_4$ரக்ஷிதம்—*பீஷ்மரால் காக்கப்படும்,* அஸ்மாகம் ப$_3$லம்—*நம்ஸேனை,* அபர்யாப்தம்- (*அவர்*

---

*நிலையுடைய,* பல் படையார்—*பல ஆயுதங்களை உடையவர்களாய்,* எல்லாரும் வந்து—*அனைவரும் (யுத்தத்துக்கு) வந்து,* அமருள் என்றும் நின்று—*யுத்தத்தில் எப்போதும் நின்று,* அலையுமவர்—*திரியவிருக்கின்றார்கள்.*

8. நங்கள்படை பாட்ட னயந்தினிது காக்கவே
யிங்கமைவு போதா திராநிற்கு—மங்கவர்தம்
வீமன் மிகக்காக்கும் வென்றிப் படையமைந்து
சேம முறுதிபெறுஞ் சேர்ந்து.

---

*பதே. நடக்கப்போவதை விதி இவன் வாயாலேயே சொல்ல வைக்கிறது.* (*நாநாஶஸ்த்ர...விஶாரதா$_3$:*) *எல்லோரும் பலவிதமான ஆயுதங்களையுடையவர்கள்தான்; போர்புரிவதில் வல்லவர்கள்தான்; ஆனாலும் அவர்களைப்போலே அனைவரும் மஹாரதர்களாகார்கள்.*

7, 8, 9.

*களை வெற்றிகொள்ளப்) போதாதது.* **பீ₄மாபி₄ரக்ஷிதம்**—*பீமஸேனனுல் காக்கப்படும்,* **இதம் ஏதேஷாம் ப₃லம் து**—*இந்தப் பாண்டவர்களின் ஸேனேயோவெனில்,* **பர்யாப்தம்**—*(நம்மை வெற்றிகொள்ளப்) போதுமானது.*

---

**இங்கு**—*இவ்விடத்தில்,* **பாட்டன் நயந்து இனிது காக்கவே** *பீஷ்மன் விரும்பி அழகாகக் காக்கவிருக்கும்,* **நங்கள் படை**—*நம்முடைய ஸேனை,* **அமைவு போதாது இராநிற்கும்**—*(அவர்களை ஜயிக்க) வல்லமை அற்றதாயிருக்கிறது,* **அங்கு**—*அவர்களிருக்குமிடத்தில,* **வீமன் மிக் காக்கும்**—*பீமஸேனன் மிகவும் ரக்ஷிக்கும்,* **அவர் தம் வென்றி படை**—*அவர்களுடைய வெற்றியுடைய ஸேனை,* **அமைந்து**—*(நம்மை வெல்லத) தகுதிபெற்று,* **சேர்ந்து**—*ஒன்றுசேர்ந்து,* **சேமம் உறுதி பெறும்**—*ரக்ஷையையும், உறுதியையும் பெற்றிருக்கிறது.*

---

*10. சென்ற ஏழு சுலோகங்களால் சொன்னவற்றினுல் பலித்த அர்த்தத்தை இந்த ச்லோகத்தில் கூறுகிருன். (தத்) தஸ்மாத். ஆகையால் முன்சுலோகங்களில் சொன்ன காரணங்களால். (பீ₄ஷ்மாபி₄ரக்ஷிதம் அஸ்மாகம் ப₃லம் அபர்யாப்தம்) பாண்டவகிருஷ்ண பக்ஷபாதியென்று பிரஸித்தரான பீஷ்மரால் ரக்ஷிக்கப்படும் நம் ஸேனை பாண்டவர்களை வெல்லப் போதாதது. (பீ₄மாபி₄ரக்ஷிதம் ஏதேஷாம் இத₃ம் ப₃லம் து பர்யாப்தம்) மஹாபலசாலியும், கொடூரமானவனும், கௌரவர்களனைவரையும் கொல்லப் பிரதிஜ்ஞை செய்திருப்பவனுமான பீமனுல் ரக்ஷிக்கப்படும் பாண்டவர்களுடைய இந்த ஸேனை நம்மை வெற்றிகொள்ளப்போதுமானது. இது துரியோதனனின் மனவருத்தத்தைக்காட்டுகிறது.* "**அபர்யாப்தம்**—*அபரிமிதம் (அளவற்றது)" "பர்யாப்தம்—அளவுள்ளது" என்று பொருள் கொள்வதன்மூலமும், மற்றும் வ்யவஹிதாந்வயம், பாடபேதம் முதலான அஸ்வாரஸ்யங்களை ஸஹித்துக்கொண்டும் துர்யோதனன் பதினொரு அக்ஷௌஹிணியுள்ள தன்சேனையின் பெருமையையும், ஏழு அக்ஷௌ*

अयनेषु च सर्वेषु यथाभागमवस्थिताः।
भीष्ममेवाभिरक्षन्तु भवन्तः सर्व एव हि॥ ११॥

11. அயனேஷு ச ஸர்வேஷு யதா₂பா₄க₃மவஸ்தி₂தா:।
பீ₄ஷ்மமேவாபி₄ரக்ஷந்து ப₄வந்த: ஸர்வ ஏவ ஹி॥

**ஸர்வே ஏவ ப₄வந்த:**—*நீங்கள் அனைவருமே,* **ஸர்வேஷு அயனேஷு ச**—*(வியூஹத்தினுள் நுழையும்) எல்லா வழிகளி லும்,* **யதா₂பா₄க₃ம் அவஸ்தி₂தா:**—*உங்கள் பகுதிகளைக் கைவிடாமல் நிற்பவர்களாய்,* **பீ₄ஷ்மம் ஏவ**—*பீஷ்மரையே,* **அபி₄ரக்ஷந்து**—*சூழ்ந்துநின்று காப்பாற்றுங்கள்.*

॥भा॥ दुर्योधनः स्वयमेव भीमाभिरक्षितं पाण्डवानां बलं, आत्मीयं च भीष्माभिरक्षितं बलमवलोक्य, आत्मविजये तस्य बलस्य पर्याप्ततां, आत्मीयस्य बलस्य तद्विजये चापर्याप्ततामाचार्याय निवेद्य, अन्तर्विषण्णोऽभवत्।

---

9. வேகப் படைநடைப்பி லெல்லாம் வியந்துமது
பாகத்தை நீங்காது பாட்டனையே—யேகமா
யாங்கமர்ந்து சூழ்ந்தே யமர்முகதது நோக்குங்கோள்
பாங்கமர்ந்து நீங்கள் பலர்.

**நீங்கள் பலர்**—*பலராயிருக்கும் நீங்கள்,* **வேக படை நடப்பில் எல்லாம் வியந்து**—*வேகமாகப் படையை நடத்துவதில் எல்லாவகையிலும் சிறந்துநின்று,* **உமது பாகத்தை நீங்காது**—*(போர்க்களத்தில்) உங்கள் பகுதிகளைக் கைவிடாமல்,* **ஏகமாய் ஆங்கு அமர்ந்து**—*ஒருமுகமாய்ப் போர்க்களத்தில்நின்று,* **சூழ்ந்து**—*சூழ்ந்திருந்து,* **பாட்டனையே**—*பிதாமஹரான பீஷ்*

---

*ஹிணியுள்ள பாண்டவசேனையின் தாழ்வையும் கூறுவதாகச் சிலர் பொருள்கொள்வர். அது முன்பின் ப்ரகரணங்களுக்கு ஒட்டாதாகையாலே அநாதரிக்கத்தக்கது.* 10

*11. முற்கூறிய காரணத்தால், துரியோதனன் தன் சேனைத்தலைவர்கள் நடக்கவேண்டிய முறையைத் தெரிவிக்கிறான். (அயனேஷு ச ஸர்வேஷு) வியூஹத்தில் நுழையும்*

तस्य सञ्जनयन् हर्षं कुरुवृद्धः पितामहः।
सिंहनादं विनद्योच्चैः शङ्खं दध्मौ प्रतापवान्॥१२॥

12. தஸ்ய ஸஞ்ஜநயந் ஹர்ஷம் குருவ்ருத்$_3$த$_4$: பிதாமஹ:|
ஸிம்ஹநாத$_3$ம் விநத்$_3$யோச்சை: ஶங்க$_2$ம் த$_3$த்$_4$மௌ
ப்ரதாபவாந்||

ப்ரதாபவாந்—மஹா பராக்ரமமுடையவரும், குருவ்ருத்$_3$த$_4$:—குருவமிசத்தி லுதித்தவர்களில் சிறந்தவரும், பிதாமஹ:—பாட்டனருமான பீஷ்மர், தஸ்ய—அந்த துரியோதனனுக்கு,

---

யரையே, அமர்முகத்து—போர்முனையிலே, பாங்கு அமர்ந்து—பக்கத்தில் இருந்து, நோக்குங்கோள்—காப்பாற்றுங்கள்.

10. இவ்வா றியம்பு மிகலரச னுண்மகிழ
தெவ்வார் குருமுதலாஞ் சீர்பாட்ட—னெவ்வாறுஞ்
சிங்க வரவஞ் செலுத்தினன் வீடுமனற்
சங்கு முழங்குவித்தான் றன்.

இவ்வாறு இயம்பும்—இம்மாதிரியாய் பேசுகிற, இகல் அரசன்—வலிமிக்க அரசனான துரியோதனன், உள்மகிழ—ஸந்தோஷப்படும்படியாக, தெவ்வார் குரு முதலாம் சீர் பாட்டன் வீடுமன்—வீரம் நிறைந்த, குருக்களிற்சிறந்த, குணம் மிக்க

---

வழி 'அயநம்' எனப்படுகிறது. படையை நடத்துவதைக் கூறுவதாகவுமாம். (யதா$_2$பா$_4$க$_3$ம் அவஸ்தி$_2$தா:) அவரவர்க்குரிய பகுதியைக் கைவிடாமலிருக்கவேண்டும் என்றுகருத்து. (பீ$_4$ஷ்மமேவாபி$_4$ரக்ஷந்து) சேனைத்தலைவரான பீஷ்மரையே சூழ்ந்து நின்று காப்பாற்றுங்கள். 'எல்லாரும் சேர்ந்து கொண்டு பீஷ்மரைக்காப்பாற்றுங்கள்' என்று கூறுகிறபடியால், முன்சுலோகத்தில் தன் சேனையின் வலிமைக்குறைவே இவன் நெஞ்சில் ஓடுகிறதென்பது தெளிவு.

*12, 13.* துரியோதனனுடைய வருத்தம் போவதற்காக பீஷ்மர் செய்த காரியத்தைச் சொல்லுகின்றன இரண்டு சுலோகங்களும். (தஸ்ய ஸஞ்ஜநயந் ஹர்ஷம்) அவனுக்கு

ஹர்ஷம்-ஸந்தோஷத்தை, ஸஞ்ஜநயந்-உண்டு பண்ணுவதற்
காக, உச்சை:-பலமாக, ஸிம்ஹநாத₃ம் விநத்₃ய ஸிங்கநாதம்
செய்து, ஶங்க₂ம்-சங்கத்தை, த₃த்₄மௌ ஊதினார்.

**ततः शङ्खाश्च भेर्यश्च पणवानकगोमुखाः।**
**सहसैवाभ्यहन्यन्त स शब्दस्तुमुलोऽभवत्॥ १३॥**

13. தத: ஶங்கா₂ச்ச பே₄ர்யச்ச பணவாநககோ₃முகா₂: ।
ஸஹஸைவாப்₄யஹந்யந்த ஸ ஶப்₃த₃ஸ்துமுலோऽப₄வத் ॥

தத:—அதற்குப்பின், ஶங்கா₂: ச பே₄ர்ய: ச பணவாநக கோ₃முகா₂:—சங்கங்கள், பேரிகள், பணவங்கள், ஆநகங்கள் கோமுகங்கள் முதலான பல வாத்தியங்களும், ஸஹஸா ஏவ-உடனேயே அப்₄யஹந்யந்த-சப்தம் செய்விக்கப்பட்டன, ஸ: சப்த₃:-அந்த சப்தம், துமுல: அப₄வத்-மிகப்பெரிதாக ஆயிற்று.

---

பாட்டனை பீஷ்மர், எவ்வாறும சிங்க அரவம் செலுத்தினான்-எல்லாப்புறத்திலும் தன் சிங்கநாதத்தை முழக்கச்செய்தான்; தான்—தானே, நல் சங்கு முழங்குவித்தான் — தன்னுடைய நல்ல சங்கை முழங்கச்செய்தான்.

11. பின்னும் பலசங்கம் பேரி பெருமுரசு
துன்னும் பணவமுதற் றொல்லியங்கள் - பன்னி
யறைந்தெழுந்த வந்தவொலி மேலாகு மாழி
நிறைந்தெழுந்த பேரொலிபோ னின்று.

பின்னும் பல சங்கம் பேரி பெருமுரசு துன்னும் பணவம் முதல் தொல்லியங்கள்—மேலும் பல சங்கங்களும், பெருமுரசங்களும், பணவம் முதலான வாத்தியங்களும். பன்னி அறைந்து எழுந்த-பலதரம் ஒலித்து எழுந்தன, அந்த ஒலி—அந்த சப்தம், மேல் ஆகும் ஆழி நிறைந்து எழுந்த பேர் ஒலி போல் நின்று—மேலான கடல் நிறைந்து எழுந்ததால் உண்டான பெருமுழக்கம்போல்நின்று ஒலித்தது.

---

உகப்பை உண்டுபண்ணுவதற்காகத் தான் சிங்கசங்கநாதங்களைச்செய்து, தன் சேனை வீரர்களையும் விஜயத்தைத் தெரிவிக்கும் வாத்தியநாதங்களையும் செய்வித்தார் என்கிறது. 'ஸந்தோஷத்தை உண்டுபண்ணுவதற்கு' என்றதாலும் முன் துரியோதனனுக்கு வருத்தம் ஏற்பட்டிருந்தது என்பது விளங்குகிறது.
12, 13.

॥ भा ॥ तस्य विषादमालक्ष्य भीष्मस्तस्य हर्षं जनयितुं सिंहनादं शङ्खध्मानं च कृत्वा, शङ्खभेरीनिनादैश्च विजयाभिशंसिनं घोषं चाकारयत् ॥

ततः श्वेतैर्हयैर्युक्ते महति स्यन्दने स्थितौ।
माधवः पाण्डवश्चैव दिव्यौ शङ्खौ प्रदध्मतुः ॥ १४ ॥

14. தத: ஶ்வேதைர் ஹயைர்யுக்தே
மஹதி ஸ்யந்த₃நே ஸ்தி₂தௌ ।
மாத₃வ: பாண்ட₃வஶ்சைவ
தி₂வ்யௌ ஶங்கௌ₂ ப்ரத₃த்₄மது: ॥

தத:—அதற்குப்பின், மாத₄வ:—லக்ஷ்மீநாதனை கண்ணனும், பாண்ட₃வ: ச ஏவ—பாண்டுபுத்திரனை அர்ஜுனனுமே, ச்வேதை: ஹயை: யுக்தே — வெள்ளைக்குதிரைகள்

---

12. ஆங்கதற்பின் வெள்ளைப் புரவியணி தேரின்மேற்
பாஙகமரு மாதவனும் பாண்டவனு—மோங்கரவச்
சங்கமலர்க் கைகளினுற் றம்முகம்வைத் தூதினு
ரங்கமலத் தன்னமது வாம்.

ஆங்கு-அந்த யுத்தபூமியில். அதன்பின்-அதற்குப்பின். வெள்ளை புரவி அணிதேரின் மேல்—வெள்ளைக் குதிரைகளால் அலங்கரிக்கப்பட்ட தேரின்மேல். பாங்கு அமரும் மாதவனும் பாண்டவனும்—அருகில் அமர்ந்திருக்கும் கண்ணனும், அர்ஜுனனும். அம் கமலத்து அன்னம் அதுவாம் அழகிய

---

14. (தத:) கௌரவஸேனையின் அந்த ஒலியைக் கேட்டபின்பு. (ச்வேதைர் ஹயைர் யுக்தே மஹதி ஸ்யந்த₃நே ஸ்தி₂தௌ) வெள்ளைக்குதிரைகள் பூட்டிய பெரிய தேரின்மேல் இருப்பவர்கள். இத்தேரில் இருந்து யுத்தம் செய்பவன் ஸாமாந்யனுயினும் மூவுலகையும் வெற்றி கொள்ளலாம். மாதவனும் பாண்டவனும் இத்தேரிலிருந்து கொண்டு கௌரவர்களை வெல்லச்சொல்லவேணுமோ என்று கருத்து. (ஸ்தி₂தௌ) நின்ற நிலையிலே மூவுலகும் நடுங்

பூட்டியதான, மஹதி ஸ்யந்த$_3$நே-பெரியதேரில், ஸ்தி$_1$தௌ இருப்பவர்களாய், தி$_3$வ்யௌ ஶங்கௌ$_2$-அப்ராக்ருதங்களான சங்கங்களை, ப்ரத$_3$த்$_4$மது:—ஊதினார்கள்.

**पाञ्चजन्यं हृषीकेशो देवदत्तं धनञ्जयः ।**
**पौण्ड्रं दध्मौ महाशङ्खं भीमकर्मा वृकोदरः ॥ १५ ॥**

**15. பாஞ்சஜந்யம் ஹ்ருஷீகேஶோ தே$_3$வத$_3$த்தம் த$_4$நஞ்ஜய: ।**
**பௌண்ட்$_3$ரம் த$_3$த்$_4$மௌ மஹாஶங்க$_2$ம் பீ$_4$மகர்மா**
**வ்ருகோத$_3$ர: ॥**

**ஹ்ருஷீகேஶ:**— இந்திரியங்களுக்கு ஈசனான கண்ணன், **பாஞ்சஜந்யம் மஹாஶங்கம்**—பாஞ்ச சன்னியமெனும் பெருஞ்

---

தாமரையில் அன்னம்போல் உள்ள, **ஓங்கு அரவச் சங்கம்**— ஓங்கும் ஒலியையுடைய சங்கங்களை, **மலர் கைகளினால் தம் முகம் வைத்து**—(தாமரை) மலர்போன்ற கைகளினால் தம் முகங்களிலே வைத்து, **ஊதினார்**—ஊதினார்கள்.

**13. பன்னியசீர்ப் பாஞ்ச சனியப் பணவத்தை**
**முன்னிருடீ கேசன் முழக்கினான்—மன்னியபூந்**
**தாரார் தனஞ்சயனுந் தன்றேவ தத்தமெனுஞ்**
**சீரார்சங் கூதினான் சேர்ந்து.**

**பன்னிய சீர் பாஞ்சசனியப் பணவத்தை**-பெருமைமிகுந்த பாஞ்சஜந்யமெனும் சங்கத்தை, **முன்** -முதலில், **இருடீகேசன்** -

---

கும்படி நின்றனர். கண்ணன் ஸாரதியாகவும், அர்ஜுனன் ரதியாகவும் இருந்தனர் என்று கருத்து. (மாத$_4$வ: பாண்ட$_3$வஶ்சைவ) ஶ்ரிய:பதியான கண்ணனும், பாண்டுபுத்திரனான அர்ஜுனனும், ஸாரதியாயிருந்தபோதிலும் லக்ஷ்மீநாதனாயிருக்கையாகிற பிராதான்யத்தைப்பற்றக் கண்ணனை முதலில் எடுக்கிறார். 'மாதவன்' [லக்ஷ்மீநாதன்] என்கையாலே இவனே **'லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ'** என்று புருஷஸூக்தத்தில் ஓதப்பட்ட ஸர்வேச்வரேச்வரன் என்று உணர்த்தப்படுகிறது. (தி$_3$வ்யௌ ஶங்கௌ$_2$ ப்ரத$_3$த்$_4$மது:) சிறப்புடைய சங்கங்களை ஊதினார்கள்.

*சங்கத்தை,* **த₃த்₄மௌ**—*ஊதினான்;* **த₄நஞ்ஜய:**—*அர்ஜுனன்,* **தே₃வத₃த்தம்**—*தேவதத்தமெனும் பெருஞ்சங்கை ஊதினான்;* **பீ₄மகர்மா**—*பயங்கரமான செயல்களையுடைய,* **வ்ருகோத₃ர:**—*பீமஸேனன்,* **பௌண்ட்₃ரம்**—*பௌண்ட்ரம் எனும் பெருஞ் சங்கை ஊதினான்.*

**॥भा॥ ततः-तं घोषमाकर्ण्य, सर्वेश्वरेश्वरः पार्थसारथी रथी च पाण्डुतनयः त्रैलोक्यविजयोपकरणभूते महति स्यन्दने स्थितौ त्रैलोक्यं कम्पयन्तौ श्रीमत्पाञ्चजन्यदेवदत्तौ दिव्यौ शङ्खौ प्रदध्मतुः॥**

**अनन्तविजयं राजा कुन्तीपुत्रो युधिष्ठिरः।**
**नकुलः सहदेवश्च सुघोषमणिपुष्पकौ॥ १६॥**

16. **அநந்தவிஜயம் ராஜா குந்தீபுத்ரோ யுதி₄ஷ்டி₂ர:।**
**நகுல: ஸஹதே₃வஶ்ச ஸுகோ₄ஷமணிபுஷ்பகௌ ||**

**குந்தீபுத்ர:**—*குந்தியின் பிள்ளையும்,* **ராஜா**—*அரசனுமான* **யுதி₄ஷ்டி₂ர:**—*தர்மபுத்திரன்,* **அநந்தவிஜயம்**—*அநந்தவிஜயம்*

---

*கண்ணன்,* **முழக்கினான்**—*முழங்கச்செய்தான்,* **மன்னிய பூ தார் ஆர் தனஞ்சயனும்**—*(அரசர்க்குரிய) பூமாலையால் விளங்காநிற்கும் அர்ஜுனனும்,* **தன் தேவதத்தம் எனும் சீரார் சங்கு**—*தன்னுடைய தேவதத்தம் என்னும் பெருமை பொருந்திய சங்கத்தை,* **சேர்ந்து**—*(கண்ணனோடு) சேர்ந்து,* **ஊதினான்**—*ஊதினான்.*

14. **பாடார் பவுண்டிரமாம் பாரப் பணிலத்தை**
**யோடா விறல்வீம னூதினான்—சேடார்ந்த**
**வந்தருமன் மைந்த னனந்த விசயமெனு**
**நந்தரவஞ் செய்தா னயந்து.**

---

*15–18. கிருஷ்ணார்ஜுன பீமயுதிஷ்டிர நகுலஸஹதேவர்களின் சங்கங்களின் பெருமையை உணர்த்துவதற்காக முறையே பாஞ்சஜந்யம், தேவதத்தம், பௌண்ட்ரம், அநந்தவிஜயம், ஸுகோஷம், மணிபுஷ்பகம் என்று அவற்*

*எனும் சங்கத்தை ஊதினன்;* **நகுல: ஸஹதே₃வஸ்₂ச**— *(மாத்₃ரீபுத்திரரான) நகுலனும் ஸஹதேவனும் (முறையே)* **ஸுகோ₄ஷமணிபுஷ்பகௌ** — *ஸுகோ₄ஷம் மணிபுஷ்பகம் என்னும் தம் சங்குகளை ஊதினர்கள்.*

**काश्यश्च परमेष्वासः शिखण्डी च महारथः।**
**धृष्टद्युम्नो विराटश्च सात्यकिश्चापराजितः॥ १७॥**

---

**பாடு ஆர் பவுண்டிரமாம பாரப் பணிலத்தை**—*நாதம் நிறைந்த பௌண்ட்₃ரம் என்னும் பெருஞ்சங்கத்தை,* **ஓடாவிறல் வீமன் ஊதினன்**—*(போரில் புறமுதுகுகாட்டி) ஓடாத பலத்தையுடைய பீமஸேனன் ஊதினன்;* **சேடு ஆர்ந்த அம தருமன் மைந்தன்**—*(அரசனெனும்) பெருமையுடைய அழகிய தர்மபுத்தின்,* **அனந்தவிசயம் எனும் நந்து**—*அநந்தவிஜயம் எனும் சங்கத்தை,* **நயந்து**—*விரும்பி,* **அரவம் செய்தான்**—*ஒலித்தான்.*

**15. துங்கப் பரிநகுலன் றொல்சீர்ச் சுகோடமெனுஞ்**
**சங்கத் தரவந் தனைவிளைத்தான்—றுங்கமலர்**
**மிக்கமணிப் புட்பகத்தை வென்றிச் சகதேவ**
**னொக்கவெடுத் தூதினா னுற்று.**

**துங்கப் பரி நகுலன்**—*உயர்ந்த குதிரைகளையுடைய நகுலன்,* **தொல் சீர் சுகோடம் எனும் சங்கத்து**—*தொன்மையான பெருமையை உடைய ஸுகோ₄ஷம் என்னும் தன் சங்கத்திலே,* **அரவம் தனை விளைத்தான்**—*ஒலியை உண்டாக்கினான்;* **வென்றி சகதேவன்**-*வெற்றியேயடையும் ஸஹதேவன்,* **துங்கமலர் மிக்க மணிப் புட்பகத்தை**—*உயர்ந்த மலர்களால் அலங்கரிக்கப்பெற்ற மணிபுஷ்பகமெனும் சங்கை,* **உற்று எடுத்து**—*உறுதியுடன் எடுத்து,* **ஒக்கஊதினன்**- *ஒலித்தான்.*

---

*றைப் பெயரையிட்டுக் காட்டுகிறார். அனைவரிலும் கண்ணன் உயர்ந்தவனாயிருப்பதுபோலே, எல்லாச் சங்கங்களிலும் பாஞ்சஜந்யம் பெருமைபெற்றது என்று காட்டுவதற்காக அதை முதலில் எடுக்கிறார். "காப்யஸ்₂ய" என்று*

17. காஶ்யஶ்ச பரமேஷ்வாஸ: ஶிக$_2$ண்டீ$_3$ ச மஹாரத$_2$:|
த்$_4$ருஷ்டத்$_3$யும்நோ விராடஶ்ச ஸாத்யகிஶ்சாபராஜித:||

द्रुपदो द्रौपदेयाश्च सर्वतः पृथिवीपते।
सौभद्रश्च महाबाहुः शङ्खान् दध्मुः पृथक् पृथक्॥ १८॥

18. த்$_3$ருபதோ$_3$ த்$_3$ரௌபதே$_3$யாஶ்ச ஸர்வத: ப்ருதி$_2$வீபதே|
ஸௌப$_4$த்$_3$ரஶ்ச மஹாபா$_3$ஹு: ஶங்கா$_2$ந் த$_3$த்$_4$மு: ப்ருத$_2$க் ப்ருத$_2$க்||

ப்ருதி$_2$ வீபதே—*திருதராஷ்ட்ரவரசனே!* பரமேஷ்வாஸ:- *சிறந்த வில்லாளியான,* காஶ்ய: ச-*காசிராஜனும்,* மஹாரத$_2$:—*மஹாரதனை,* ஶிக$_2$ண்டீ$_3$ ச—*சிகண்டியும்,* த்$_4$ருஷ்டத்$_3$யும்ந:—*திருஷ்டத்யும்னனும்,* விராட: ச—*விராடவரசனும்,* **அபராஜித:**—*போரில் தோல்வியுறாத,* ஸாத்யகி: ச—*ஸாத்யகியும்,* த்$_3$ருபத$_3$:—*பாஞ்சாலவரசனும்,* த்$_3$ரௌபதே$_3$யா: ச—*திரௌபதியின் புத்திரர்களும்,* மஹாபா$_3$ஹு:—*நீண்ட கையை*

16. வில்லாண்மைக் காசிமனும் வென்றிச் சிகண்டியுடன்
மல்லார்பாஞ் சாலனவன் மைந்தனுமற்-றெல்லாருஞ்
சாத்திகியுஞ் சௌபத் திரனுந் தனித்தனியே
வாய்த்ததஞ்சங் கூதினர் மற்று.

**வில் ஆண்மை காசிமனும்**—*வில்லாளியான காசியரசனும்,* **வென்றி சிகண்டியுடன்**—*வெற்றிபெறும் சிகண்டியோடு,* **மல் ஆர் பாஞ்சாலனவன் மைந்தனும்**—*மற்போரில் வல்ல பாஞ்சாலன் மைந்தனை திருஷ்டத்யும்னனும்,* **சாத்திகியும்** *ஸாத்யகியும்,* **சௌபத்திரனும்**—*சுபத்திரையின் பிள்ளையான*

*தொடங்கி இரண்டு ச்லோகங்களாலே பாண்டவஸேனையில் மற்றுமுள்ள அரசர்களும் தங்கள் தங்கள் சங்கங்களைத் தனித்தனியே ஊதினார்கள் என்கிறார் (ப்ருத$_2$க் ப்ருத$_2$க்) தனித்தனியே தங்கள் தங்களுடைய பெருமை தோற்றும் படி வரிசையாக ஊதினார்கள்* **என்று** *கருத்து. ஒரு சங்கத்*

யுடையவனுன, ஸௌபத்ர: – அபிமன்யுவும், ஸர்வத: – எல்லாப்பக்கங்களிலும், ப்ருதக் ப்ருதக்—தனித்தனியாக, சங்காந்-சங்கங்களை, தத்4மு:—ஊதினார்கள்.

स घोषो धार्तराष्ट्राणां हृदयानि व्यदारयत्।
नभश्च पृथिवीं चैव तुमुलो व्यनुनादयन्॥ १९॥

19. ஸ கோ4ஷோ தா4ர்த்தராஷ்ட்ராணும் ஹ்ருதயாநி
வ்யதா3ரயத |
நப4ஶ்ச ப்ருதி2வீம் சைவ துமுலோ வ்யநுநாதயந் ||

நப4: ச–ஆகாயத்தையும், ப்ருதி2வீம் ச ஏவ –பூமியையுமே, வ்யநுநாத3யந்–எதிரொலிக்கச்செய்துகொண்டு, துமுல: ஸ கோ4ஷ:–ஒன்று சேர்ந்த அந்த சங்கநாதம், தா4ர்த்தராஷ்ட்ராணும் — திருதராஷ்ட்ர புத்திரர்களுடைய, ஹ்ருதயாநி - இருதயங்களை, வ்யதா3ரயத்–நன்ருகப் பிளந்தது.

---

அபிமன்யுவும், மற்று எல்லாரும்—(பாண்டவர்களைச் சேர்ந்தவரான) மற்றுமுள்ள அனைவரும், தனித்தனியே - தனித்தனியாக, வாய்த்த தம் சங்கு தமக்கென்று ஏற்பட்ட சங்கங்களை, ஊதினுர்–ஒலித்தனர்.

17. அக்கடிய பேரரவ மந்தன் சுதரிதயம்
சிக்கெனத் தீரச் சிதைத்ததே—தொக்கெழுந்து
வான்றிசையு மண்ணகமு மற்றும் பலவிடமுந
தான்றிகழ வோங்கித் தழைத்து

அக்கடிய பேர் அரவம்—அந்த வலிமைமிக்க பேரொலி
தொக்கு எழுந்து—கிளர்ந்து எழுந்து, வான்திசையும்—ஆகா

---

தின் ஒலியே துரியோதனுதியரின் இருதயத்தைப் பிளக்கப் போதுமாயிருந்தது என்னும் கருத்தைத் தெரிவிப்பதாகவுமாம். 15—18.

19. (நபஶ்ச...வ்யநுநாதயந் ஸகோ4ஷ:...வ்யதா3ரயத்) ஆகாயத்தையும், பூமியையும் எதிரொலிக்கச்செய்துகொண்டு அந்த சங்கோஷம் திருதராஷ்டிர புத்திரர்களின் இதயங்களைப்பிளந்தது. உலகெங்கும் வியாபித்தபோதிலும், பிரதிகூலரான துரியோதனுதியரின் இதயங்களையே பிளந்தது

॥भा॥ ततो युधिष्ठिरो वृकोदरादयश्च स्वकीयान् शङ्खान् पृथक्-पृथक् प्रदध्मुः। स घोषो दुर्योधनप्रमुखानां सर्वेषामेव भवत्पुत्राणां हृदयानि बिभेद। अद्यैव नष्टं कुरूणां बलमिति धार्तराष्ट्रा मेनिरे। एवं तद्विजयाभिकाङ्क्षिणे धृतराष्ट्राय सञ्जयोऽकथयत्॥

अथ व्यवस्थितान् दृष्ट्वा धार्तराष्ट्रान् कपिध्वजः।
प्रवृत्ते शस्त्रसंपाते धनुरुद्यम्य पाण्डवः॥ २०॥

---

யத்திலும், **மண்ணகமும்**—பூமியிலும், **மற்றும் பல இடமும்**—மற்றும் பல இடங்களிலும், **தான் திகழ ஓங்கித் தழைத்து**—தானே விளங்கும்படியாக ஓங்கி நிலைத்துநின்று, **அந்தன் சுதர் இதயம்**—குருடனான திருதராஷ்டிரனின் பிள்ளைகளுடைய இருதயங்களை, **சிக்கென தீர சிதைத்தது**—உறுதியாகவும் முடியவும் பிளந்தது.

---

என்று கருத்து. பெருமாள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலியை அநுகூலர் ஆசைப்பட்டிருப்பார்களாகையாலே அவர்களுடைய நெஞ்சை உகப்பித்து, பெருமுழக்கால் அடங்காரை எரியப்பண்ணுமதாகையாலே எதிரிகளின் நெஞ்சைப் பிளந்தது. (தார்த்தராஷ்ட்ராணாம்) துர்யோதனன் முதலானவரின் நெஞ்சங்களையும் பிளந்தது. அவர்களில் இவ்வொலியைக் கேட்டபின் உறுதிகொண்ட நெஞ்சினனாயிருந்தவன் ஒருவனும் இல்லை என்று கருத்து. (வ்யதாரயத்) நன்றாகப் பிளந்தது. ஒலியானது மனத்தைப் பிளப்பதாவது என்? என்னில்: 'இன்றே கௌரவசேனை முழுவதும் அழிந்தது' என்று எண்ணவைப்பதன் மூலம் நெஞ்சைக் கலக்கிற்று என்று கருத்து. துரியோதனாதியரின் வெற்றியை விரும்பிக்கேட்ட திருதராஷ்டிரனுக்கு அவர்களுடைய தோல்வியையே காட்டும் இவ்வார்த்தைகளை ஸஞ்ஜயன் இவ்வாறாகச் சொன்னான்.

20. அத$_2$வ்யவஸ்தி$_2$தாந் த்$_3$ருஷ்ட்வா தா$_4$ர்த்தராஷ்ட்ராந் கபித்$_4$வஜ: ।
ப்ரவ்ருத்தே ஶஸ்த்ரஸம்பாதே த$_4$நுருத்$_3$யம்ய பாண்ட$_3$வ: ॥

हृषीकेशं तदा वाक्यमिदमाह महीपते।
अर्जुन उवाच–
सेनयोरुभयोर्मध्ये रथं स्थापय मेऽच्युत ॥ २१ ॥

21. ஹ்ருஷீகேஶம் தத$_3$ா வாக்யமித$_3$மாஹ மஹீபதே ।
அர்ஜுந உவாச—
ஸேநயோருப$_4$யோர் மத்$_4$யே ரத$_2$ம் ஸ்த$_2$ாபய மேऽச்யுத ॥

மஹீபதே—திருதராஷ்டிரனே! அத$_2$ [illegible] களின் முழக்கத்திற்குப்பின், கபித்$_4$வஜ: அநுமக்கொடி யோனை அர்ஜுனன், ஶஸ்த்ரஸம்பாதே ப்ரவ்ருத்தே ஸதி போர் தொடங்கியவளவில், வ்யவஸ்தி$_2$தாந் தா$_4$ர்த்தராஷ்ட்ராந் த்$_3$ருஷ்ட்வா-முன்னணியில்நிற்கும் திருதராஷ்டிர புத்திரர்களை நோக்கி, த$_4$நு:-காண்டீபவில்லை, உத்$_3$யம்ய-எடுத்துக்கொண்டு, தத$_3$ா—அக்காலத்தில், ஹ்ருஷீகேஶம்—இருடீகேசனான கண்ணனைக் குறித்து, இத$_3$ம்--பினவரும், வாக்யம் -வார்த்தையை, ஆஹ-சொன்னான், அச்யுத-அச்சுதனே! உப$_4$யோ: ஸேநயோ: மத்$_4$யே-இரண்டு சேனைகளுக்கும் நடுவில், மே என்னுடைய. ரத$_2$ம்—தேரை, ஸ்த$_2$ாபய-நிலைநிறுத்துவாயாக.

---

18. போர்முகத்தில் வந்துன் புதல்வர் தமைநோக்கிக்
கார்முகத்தை வாங்கிக் கவித்துவசன்—பார்முகத்து
நின்றா ரிருபடைக்கு ணீநிறுத்தென் தேர்கண்ணா
வென்றாங் குரைத்தா னிது.

கவித்துவசன்— அனுமக்கொடியோனை அர்ஜுனன். போர்முகத்தில் வந்து—போர் முனையில் வந்து, உன் புதல்வர் தமை நோக்கி—உன் பிள்ளைகளைக்கண்டு. கார்முகத்தை வாங்கி-காண்டீபமெனும் வில்லையெடுத்து. 'கண்ணா-கண்ணனே! போர்முகத்து நின்றார் இருபடைக்குள்—போர் முனையில் நிற்கும் அரசர்களின் இரண்டு படைகளின் நடுவில், என் தேர்-என்தேரை, நீ நிறுத்து—நீ நிறுத்துவாயாக', என்று-என்று, இது—இவ்வார்த்தையை, ஆங்கு அப்போர் தொடங்கிய வளவில், உரைத்தான்—சொன்னான்.

*20-23. இச்சமயத்தில் கண்ணனைக் குறித்து அர்ஜுனன் சொன்ன வார்த்தைகளை விளக்குகின்றன நான்கு சுலோகங்களும். (வ்யவஸ்தி₂தாந்) விசேஷமான அவஸ்தி₂தாந். போர் புரிய விரும்புகின்றவர்கள் என்கை. (கபித்₄வஜ:) அநுமக் கொடியோன். சாதாரணக் குரங்கன்று இவனுக்குக் கொடியாயிருப்பது. இலங்கையைச் சுட்டெரித்த வானரவீரனே இவனுக்குக் கொடியாயிருப்பது. லௌகந்திகயாத்திரையின் போது அர்ஜுனனுக்குக் கொடியாவதாகவும், தன்னைக் கண்டவுடனே அர்ஜுனனுடைய எதிரிகள், பாபவிரோதிகளான அரக்கர் நடுங்கியதைப்போலே நடுங்குவரென்றும் அநுமன் அருளிய வரத்தை உணர்த்துகிறார். (ஹ்ருஷீகேசம்)*
**"ஹ்ருஷீகாணீந்த்₃ரியாண்யாஹுஸ் தேஷாமீஷோ யதோ ப₄வாந் | ஹ்ருஷீகேஶ இதி க்₂யாத:"** *[(ஹர்ஷஸாதனமான) இந்திரியங்கள் ஹ்ருஷீகங்கள் எனப்படுகின்றன; அவற்றுக்கு ஈசனுகையாலே ஹ்ருஷீகேசன் எனப்படுகிறீர் தேவரீர்.] என்கிறபடியே மேலோர் கீழோர் என்னும் வாசியில்லாமல் அனைவருடைய வெளியிந்திரியங்களையும் உள்ளிந்திரியமான மனத்தையும் எல்லாவிதமாகவும் நியமிப்பவனே என்கை.*

**"க்ரீட₃யா ஹ்ருஷ்யதி வ்யக்தம் ஈஶ: ஸந் ஸ்ருஷ்டிரூபயா |**
**ஹ்ருஷீகேஶத்வமீஶத்வம் தே₃வத்வம் சாஸ்ய தத் ஸ்பு₂டம் ||**
**அவிகாரிதயா ஜுஷ்டோ ஹ்ருஷீகோ வீர்யரூபயா |**
**ஈஶ: ஸ்வாதந்த்ர்யயோகே₃ந நித்யம் ஸ்ருஷ்ட்யாதி₃கர்மணி ||**
**ஐச்வர்ய வீர்யரூபத்வம் ஹ்ருஷீகேஶத்வமுச்யதே ||"**

*[ அஹிர்பு₃த்₄ந்ய 53-44, 45, 46 ]*

*[ஈசனுயிருந்துகொண்டு ஸ்ருஷ்டிரூபமான விளையாட்டாலே ஹர்ஷம் (இன்பம்) அடைகிறான். ஆகையாலே ஹ்ருஷீகேசத்வமும், ஈசனுயிருக்கையும், தேவனுயிருக்கையும் இவனுக்கு மிகத்தெளிவாய் விளங்குகிறது. விகாரமின்மையாகிற வீர்ய குணம் நிறைந்தவனுகையாலே 'ஹ்ருஷீகன்' எனப்படுகிறான். படைத்தளித்துக் காக்கும் தொழிலில் எப்போதும் சுதந்*

यावदेतान् निरीक्षेऽहं योद्धुकामानवस्थितान्।
कैर्मया सह योद्धव्यमस्मिन् रणसमुद्यमे॥ २२॥

22. யாவதே₃தாந் நிரீக்ஷேऽஹம் யோத்₃து₄காமாநவஸ்தி₂தாந்।
கைர்மயா ஸஹ யோத்₃த₄வ்யமஸ்மிந் ரணஸமுத்₃யமே॥

**யோத்₃து₄காமாந்**—போர்புரியவிருப்பமுடையவர்களாய், **அவஸ்தி₂தாந்**—முன்னே நிற்பவர்களான, **ஏதாந்**—இந்த யோதர்களை, **யாவத் நிரீக்ஷே**—எதுவரையில் பார்க்கிறேனோ, **அஸ்மிந் ரணஸமுத்₃யமே**—இந்தப் போர்முயற்சியில, **மயா**—என்னாலே, **கை: ஸஹ யோத்₃த₄வ்யம்**—யாரோடு கூடப் போர்புரியவேணும் (என்பதை), **யாவத் நிரீக்ஷே**—எதுவரையில் காண்கிறேனோ (அதுவரையில் தேரை நிறுத்து.)

---

திரனுயிருக்கையாலே ஈசனுகிறான். ஆகையால் ஐச்வர்யமும் வீர்யமுமுடைய பரமபுருஷன் ஹ்ருஷீகேசனாகிறான்". / என்னும் வசனத்தின்படி ஹ்ருஷீகேசபதத்தால், தன் ஸங்கல்பத்தாலே உலகைப் படைத்தளித்துக் காப்பவன் என்றும், ஜ்ஞாநஶக்தி பலைச்வர்ய வீர்யதேஜஸ்ஸுக்களாகிற ஆறு குணங்களுக்கும் ஓரிருப்பிடமாயிருப்பவனென்றும் காட்டுகிறது. (ஸேநயோருப₄யோர் மத்₄யே) இரண்டு சேனைகளையும் பார்க்கலாம்படி இரண்டுக்கும் நடுவில் நிறுத்தவேணும் என்கை. (அச்யுத) "நச்யாவயதீத்யச்யுத:" [அடியவரை நழுவ விடாதவனாகையாலே அச்யுதனாகிறான்] என்பது அச்யுத சப்த வ்யுத்பத்தி. அடியானை அர்ஜுனன் விஷயத்தில் வாத்ஸல்ய பரவசனாயிருப்பதலாலே(தேரை நிறுத்து)என்று ஏவலாம்படி அவனுக்கு ஸாரதியாய் விளங்குகிறான் என்று கருத்து. (யாவத்) ஸாகல்யவாசியாய், முழுவதும் காணக் கடவேன் என்கை. (யாவத் நிரீக்ஷே) என்று கூட்டி. 'பார்க்கும்வரையில்' என்றும் கொள்ளலாம். "யாவத்புராநிபாதயோர் லட்" [அஷ்டா 3-3-4] என்னும் பாணினிஸூத்ரத்தின்படி 'காணப்போகிறேன்' என்று வருங்காலத்தைச் சொல்லுவதாகவும கொள்ளலாம். (நிரீக்ஷே) உள்ளபடி.

योत्स्यमानानवेक्षेऽहं य एतेऽत्र समागताः।
धार्तराष्ट्रस्य दुर्बुद्धेर्युद्धे प्रियचिकीर्षवः॥ २३॥

23. யோத்ஸ்யமாநாநவேக்ஷேऽஹம் ய ஏதேऽத்ர ஸமாக₃தா:।
தா₄ர்த்தராஷ்ட்ரஸ்ய து₃ர்பு₃த்₃தே₄ர் யுத்₃தே₄ ப்ரியசிகீர்ஷவ:॥

**து₃ர்பு₃த்₃தே₄:**—*தீயறிவையுடைய,* **தா₄ர்த்தராஷ்ட்ரஸ்ய**—*துரியோதனனுக்கு,* **யுத்₃தே₄**—*போரிலே,* **ப்ரியசிகீர்ஷவ:**—*இனியதைச்செய்யவிரும்பியவர்களாய்,* **அத்ர**—*இப்போர்க்களத்தில்,* **யே ஏதே**—*எந்த பீஷ்மர், துரோணர் முதலானோர்,* **ஸமாக₃தா:** *குழுமியுள்ளார்களோ,* **யோத்ஸ்யமாநாந்**—*நம்மோடுபோர்புரிய விருப்பவர்களான அவர்களை,* **அஹம அவேக்ஷே**—*நான் காண்பேன்;* **(இதி) அர்ஜுந உவாச**—*என்று அர்ஜுனன் கூறினான்.*

---

19. பொல்லாத வந்தன் புதலவனுக்குப் போர்முயல
வெல்லாரும் வந்திங் கெதிர் நின்றே—வில்லாண்மை
யேவருடன் காட்டுவதென் றேவும் படைமுனையில்
யாவரையுங் காண்பனினி யான்.

**யான்**—*நான்,* **பொல்லாத அந்தன் புதல்வனுக்கு**—*திருதராஷ்டிரனுடைய தீயபுத்திரனுக்காக,* **போர் முயல**—*போர்புரிய,* **எல்லாரும் இங்கு வந்து** *அனைவரும் இங்கு வந்து,* **எதிர் நின்றே**—*(நமக்கு) எதிரே நின்று,* **ஏவும் படைமுனையில்**—

---

*காண்பேன்.* *(கைர்மயா ஸஹயோத்₃த₄வ்யம்—யோத்ஸ்யமாநாந்) எவர்களோடு கூட நான் போர்புரியவேண்டுமோ, என்னோடு எவர்கள் போர்புரியவிருக்கிறார்களோ என்று பொருள் வேறுபடுகையாலே புனருக்தியில்லை. அன்றிக்கே ''கைர் மயா ஸஹ (ஸ்தித்வா) (பரை:) யோத்தவ்யம்'' என்று கொண்டு 'எவர்கள் என்னோடு கூட நின்று எதிரிகளுடன் போர்புரியவேண்டுமோ' என்று தன் பக்ஷத்தவர்களையும், 'யோத்ஸ்யமாநாந்' என்று எதிரிகளையும் குறிக்கையாலே புனருக்தியில்லை. இருபத்து மூன்றாம் சுலோகத்தில் துர்யோதனுடைய தோஷம் அதிகப்படியாகத் தெரிவிக்கப்படுகிறபடியாலும் புனருக்தியில்லை ... ... 20-23.*

सञ्जय उवाच–

एवमुक्तो हृषीकेशो गुडाकाशेन भारत।
सेनयोरुभयोर्मध्ये स्थापयित्वा रथोत्तमम्॥ २४॥

ஸஞ்ஜய உவாச—

24. ஏவமுக்தோ ஹ்ருஷீகேசோ குடா$_3$கேசேந ப$_4$ாரத ।
ஸேநயோருப$_4$யோர் மத்$_4$யே ஸ்த$_2$ாபயித்வா ரதே$_2$ாத்தமம் ॥

भीष्मद्रोणप्रमुखतः सर्वेषां च महीक्षिताम्।
उवाच पार्थ पश्यैतान् समवेतान् कुरूनिति॥ २५॥

25. பீ$_4$ஷ்மத்$_3$ரோணப்ரமுக$_2$த: ஸர்வேஷாம் ச மஹீக்ஷிதாம ।
உவாச பார்த்த$_2$ பச்யைதாந் ஸமவேதாந் குரூநிதி ॥

ஸஞ்ஜய உவாச—*ஸஞ்ஜயன் கூறினான்;*— ப$_4$ாரத *பரத குலத்துதித்த திருதராஷ்டிரனே!* ஹ்ருஷீகேச:—*இந்த்ரியங்களுக்கு ஈசனான கண்ணன்,* குடா$_3$கேசேந—*தூக்கத்தை ஜயித்த அர்ஜுனனால்,* ஏவம்-*இவ்வண்ணமாக,* உக்த:—*சொல்லப்பட்டவனாய்,* உப$_4$யோ: ஸேநயோ: மத்$_4$யே *இரண்டு சேனைகளுக்கும் நடுவில்,* பீ$_4$ஷ்மத்$_3$ரோண ப்ரமுக$_2$த: *பீஷ்ம துரோணர்களின் முன்னிலையில்,* ஸர்வேஷாம் மஹீக்ஷிதாம் ச (ப்ரமுக$_2$த.)—*எல்லா அரசர்களுக்கும் முன்னிலையில்,* ரதே$_2$ாத்தமம்– (*அர்ஜுனனுடைய*) *சிறந்த தேரை,* ஸ்த$_2$ாபயித்வா–*நிறுத்தி,* பார்த்த$_2$–*குந்திபுத்திரனே!* ஸமவேதாந்– (*போர்*

---

(*ஸேனைகளை*) *ஏவும் போர்முனையில்,* வில்லாண்மை–(*என்*) *வில்திறமையை,* ஏவருடன் காட்டுவது என்று-*எவர்களுடன் காட்டுவது என்று,* யாவரையும்—(*பீஷ்மர் துரோணர் முதலான*) *அனைவரையும்,* இனி—(*நீ தேரை நிறுத்தியவுடன்*) காண்பன்—*காணக்கடவேன்.*

20. என்று விசய னிசைப்ப வெழிற்கண்ணன்
சென்றங் கிருபடையுட் டேர்நிறுத்தி—நின்றணியும்
பாட்டன் றுரோணன்முன் பார்த்தனே பல்குருக்க
ளீட்டம்பா ரென்ரு னெடுத்து

புரியக்) குழுமியுள்ள, ஏதாந் குரூந் — குருவம்சத்துதித்த இந்த துரியோதனாதியரை, பஶ்ய—காண்பாய், இதி—என்று, உவாச – கூறினன்.

॥ भा ॥ अथ युयुत्सूनवस्थितान्धार्तराष्ट्रान्दृष्ट्वा लङ्कादहनवानरध्वजः पाण्डुतनयो ज्ञानशक्तिबलैश्वर्यवीर्यतेजसां निधिं स्वसङ्कल्पकृतजगदुदयविभवलयलीलं हृषीकेशं परावरनिखिलजनान्तरबाह्यकरणानां सर्वप्रकारनियमनेऽवस्थितमाश्रितवात्सल्यविवशतया स्वसारथ्येऽवस्थितं युयुत्सून् यथावदवेक्षितुं तदीक्षणक्षमे स्थाने रथं स्थापयेत्यचोदयत्॥ स च तेन चोदितस्तत्क्षणादेव भीष्मद्रोणादीनां सर्वेषामेव महीक्षितां पश्यतां यथाचोदितमकरोत्। ईदृशी भवदीयानां विजयस्थितिरिति चावोचत् ॥२०-२५॥

---

என்று விசயன் இசைப்ப—இவ்வண்ணமாக அர்ஜுனன் கூற, எழில் கண்ணன்–அழகனான கண்ணன், அங்கு சென்று–அவன் சொன்னவிடத்திற்குச் சென்று, இருபடையுள்—இரண்டு ஸேனைகளுக்கு நடுவிலே, நின்று அணியும் பாட்டன் துரோணன் முன்–நின்று விளங்கும் பீஷ்ம துரோணர்களுக்கு முன்னே, தேர் நிறுத்தி—தேரை நிறுத்தி, 'பார்த்தனே!—அர்ஜுனனே! பல்குருக்கள்—பலராயிருக்கும் கௌரவர்களின், ஈட்டம்—கூட்டத்தை, எடுத்து பார்—நன்றாகப்பார் என்றான்—என்று கூறினன்

---

*24–25. அர்ஜுனன் சொன்ன வார்த்தைக்குப் பிறகு கண்ணன் செய்த காரியத்தைக் காட்டுகின்றன இரண்டு ச்லோகங்கள் '(கு₃டா₃கேஶேந)கு₃டா₃கா-நித்திரை; அதற்கு ஈசன் கு₃டா₃கேஶன். தூக்கத்தை ஜயித்தவன் என்றபடி. அர்ஜுனனுக்குப்பெயர். (பீ₄ஷ்மத்₃ரோணப்ரமுக₂த; ..) 'ப்ரமுக' ஶப்த₃ம் முதலானோர் என்னும் பொருளுடையதாகவும், ஸார்வவிபக்திகமான (எந்த வேற்றுமையையும் குறிக்கக்கூடிய) தஸில் ப்ரத்யயம் இங்கு ஆறும் வேற்றுமையைக் குறிப்பதாகவும் கொண்டு, ஆறும் வேற்றுமையை*

तत्रापश्यत्स्थितान् पार्थः पितॄनथ पितामहान्।
आचार्यान्मातुलान् भ्रातॄन् पुत्रान् पौत्रान् सखींस्तथा ॥ २६ ॥

26. தத்ராபஶ்யத் ஸ்தி₂தாந் பார்த்த₂: பித்ரூநத₂ பிதாமஹாந்।
ஆசார்யாந் மாதுலாந் ப்₄ராத்ரூந் புத்ராந் பௌத்ராந்
ஸகீ₂ம்ஸ்தத₂ா ॥

श्वशुरान् सुहृदश्चैव सेनयोरुभयोरपि ।॥ * २७॥

*27. ச்வஶுராந் ஸுஹ்ருத₃ச்சைவ ஸேநயோருப₄யோரபி।

---

21. பந்தமுற வாங்கவனும் பார்த்தான் படையிரண்டிற்
றந்தையர்கள் பாட்டர்தாந் தாழ்குருக்கள்—மைந்த
ருடன்பிறந்தார் பேர ருயர்மாமர் தோழர்
மடந்தையருண் மாமடிகண் மற்று.

---

*அநாதரப்பொருளதாகவும் கொண்டால், "பீஷ்மதுரோணர் முதலானோரும், எல்லா அரசர்களுமே பார்த்துக்கொண்டிருக்கையில், அவர்களை அநாதரித்து இரண்டு சேனைகளின் நடுவில் தேரை நிறுத்தினன்" என்று பொருளாகிறது. 'ஸர்வேஷாம் ச' என்றவிடத்தில் சகாரம் அசாரப்பொருளையுடையது. அன்றிக்கே, சகாரத்தை ஸமுச்சயமாகக் கொண்டு 'ப்ரமுகத:' என்றதை முன்னிலையில் என்றுகொண்டு "பீஷ்மதுரோணர்கள் முன்னிலையிலும், எல்லா அரசர்கள் முன்னிலையிலும் தேரை நிறுத்தினன்" என்றும் பொருள் கொள்ளலாம். (உவாச பார்த்த₂ பச்யைதாந் ஸமவேதாந் குருநிதி) 'அர்ஜுன! இங்கு குழுமியிருக்கும் கௌரவர்களைப் பார்' என்று கூறினன். 'உன்னால் ஜயிக்கப்பட வேண்டியவர்களைப்பார்; உன்னைச்சேர்ந்தவர்களின் வெற்றியிருக்கும் நிலையைப் பார்' என்பது இதன் கருத்து என்று பாஷ்யம். (ஸஞ்ஜய உவாச) இவ்விரண்டு சுலோகங்களும் ஸஞ்ஜயனின் வார்த்தை. "திருதராஷ்டிரனே! உன் புத்திரரின் வெற்றியின்நிலை இருக்கிறபடிபாராய்!" என்னும் ஸஞ்ஜயனின் கருத்தை இருபத்தைந்தாம் சுலோகபாஷ்யத்தின் கடைசி வாக்கியம் குறிப்பதாகவும் கொள்ளலாம். ... 24-25.*

அத₂—*பிறகு,* **தத்ர**—*அங்கு,* **பார்த்த₂:** — *அர்ஜுனன்,* **உப₄யோ: அபி ஸேநயோ: ஸ்தி₂தாந்**—*இரண்டு ஸேனையிலும் இருக்கும்,* **பித்ரூந்**—*(பெரிய சிறிய) தந்தையரையும்,* **பிதாமஹாந்**—*பீஷ்மர் முதலான பாட்டன்மாரையும்,* **ஆசார்யாந்**-*துரோணர் முதலான ஆசார்யர்களையும்,* **மாதுலாந்**-*மாமன்மாரையும்,* **ப்₄ராத்ரூந்**—*அண்ணன் தம்பிகளையும்,* **புத்ராந்**—*பிள்ளைகளையும்,* **பௌத்ராந்**—*பேரரையும்,* **ஸகீந்**—*நண்பரையும்,* **ச்வசுராந்** — *மாமனுர்களையும்,* **ஸுஹ்ருத₃:** *நன்மை செய்தவர்களையும்,* **அபச்யத்**—*பார்த்தான்.*

---

**ஆங்கு**—*அந்தப் போர்க்களத்தில்,* **அவனும்**—*அந்த அர்ஜுனனும்,* **படை இரண்டில்** — *இரண்டு ஸேனைகளிலும்,* **தந்தையர்கள்**-*சிறிய பெரிய தகப்பன்மார்களையும்,* **பாட்டர்**--*பாட்டன்மார்களையும்,* **தாம் தாழ் குருக்கள்**--*தாம் வணங்கும் ஆசாரியர்களையும்,* **மைந்தர்**-*புத்திரரையும்,* **உடன் பிறந்தார்**-*கூடப்பிறந்தவர்களையும்,* **பேரர்**-*பேரர்களையும்,* **உயர் மாமர்**—*பெருமைபெற்ற மாமன்மாரையும்,* **தோழர்**—*நண்பரையும்,* **மற்று**—*மேலும்,* **மடந்தை அருள் மாமடிகள்**—*மனைவியைப் பெற்றுக்கொடுத்த மாமனுர்களையும்,* **பந்தம் உற பார்த்தான்**-*அன்போடு பார்த்தான்.*

---

*26-*27.* *தேரை நிறுத்தியவுடன் அர்ஜுனன் தன் உறவினர்களனைவரையும் இரண்டு சேனைகளிலும் கண்டமையைச் சொல்லுகிறது. 'ஸகீ₂ந்' என்று ஒத்தவயதையுடைய நண்பர்களையும். 'ஸுஹ்ருத₃:' வயது வேறுபட்ட போதிலும் நன்மை விரும்புகிறவர்களையும் குறிக்கையாலே புநருக்தியில்லை.* ... ... ... *26-*27.*

---

* *இக்குறி எண்ணுக்கு முன்னுலிருந்தால் சுலோகத்தின் முற்பகுதியென்றும், பின்னுலிருந்தால் சுலோகத்தின் பிற்பகுதியென்றும் கொள்க.*

तान् समीक्ष्य स कौन्तेयः सर्वान् बन्धूनवस्थितान् ॥ २७* ॥
कृपया परयाऽऽविष्टो विषीदन्निदमब्रवीत । *२८ ॥

**27*** தாந் ஸமீக்ஷ்ய ஸ கௌந்தேய: ஸர்வாந் ப₄ந்தூ₄நவஸ்தி₂தாந் ||

***28.** க்ருபயா பரயாவிஷ்டோ விஷீத₃ந்நித₃மப்₃ரவீத் ।

**ஸ கௌந்தேய**.—*குந்தியின் பிள்ளையான அந்த அர்ஜுனன்*, **அவஸ்தி₂தாந்**-*(போர்முனையில்) நிற்கும்*, **தாந் ப₄ந்தூ₄ந்** - *அந்த எல்லா உறவினரையும்*, **ஸமீக்ஷ்ய** *நன்கு பார்த்து*, **பரயா க்ருபயா ஆவிஷ்ட:**-*மேலான கருணையால் நிறைந்தவனாய்*, **விஷீத₃ந்**-*துன்புறவனாய்*, **இதம்**—*பின்வரும் வார்த்தைகளை*, **அப்₃ரவீத்**—*சொன்னான்*.

---

**22.** மேவலராய் நின்றெதிர்ந்த மிக்கபெருஞ் சுற்றமாம்
காவலரை நோக்கிக் கவுந்தேய—னோவதனால்
மிக்கமனம் பேரிரக்க மேவிப் பிரான்முன்றான்
றக்கவுரை செய்தான் றளர்ந்து.

**கவுந்தேயன்**-*குந்திபுத்திரன்*, **மேவலராய் நின்று எதிர்ந்த**-*உறவற்றவர்களாய்நின்று போரிடவந்த*, **மிக்க பெரும் சுற்றம் ஆம் காவலரை நோக்கி** — *எண்ணிக்கையிலும் உறவிலும் பெருத்துநின்ற அரசர்களைப் பார்த்து*, **பேர் இரக்கம் மேவி** - *பெரும் கருணைகொண்டு*, **மிக்க மனம் நோவதனால்**—*மிகவும் மனம் துன்புற்றதனால்*, **தளர்ந்து**-*தளர்வெய்தி*, **பிரான்முன்** - *கண்ணபிரான்முன்*, **தான் தக்க உரை செய்தான்** — *தகுந்த தன்மைக்கேற்ற வார்த்தையைச் சொன்னான்*.

---

*27*-*28.* *உறவினரைக் கண்டபின் பார்த்தன் செய்த காரியத்தைச் சொல்லுகிறது. (ஸ கௌந்தேய:) முன் சொல்லப்பட்ட துரியோதனனைக் காட்டிலும் இவனுடைய வேறுபாடு 'ஸ:' [அந்த] என்னும் பதத்தின்மூலம் உணர்த்தப்படுகிறது. (க்ருபயா பரயாऽऽவிஷ்டோ விஷீதந்) மேலான கருணையால நிரம்பியவனாய், அதனாலேயே மிக்க மன வருத்தமுடையவனாய். இதனால், பிறர்க்கு நேரவிருக்கும் துன்பத்தைக்கண்டு தானும் துன்புறுகையே மேலான கருணைக்கு இலக்கணம் என்று காட்டப்படுகிறது. 27*-*28.*

अर्जुन उवाच—

दृष्ट्वेमं स्वजनं कृष्ण युयुत्सुं समुपस्थितम् ॥ २८* ॥
सीदन्ति मम गात्राणि मुखं च परिशुष्यति ।
वेपथुश्च शरीरे मे रोमहर्षश्च जायते ॥ २९ ॥

அர்ஜுந உவாச—

28* த3ருஷ்ட்வேமம்ஸ்வஜநம்க்ருஷ்ணயுயுத்ஸும்ஸமுபஸ்தி2தம்॥

29. ஸீத3ந்தி மம கா3த்ராணி முக2ம் ச பரிஶுஷ்யதி।
வேபது2ஶ்ச ஶரீரே மே ரோமஹர்ஷஶ்ச ஜாயதே ॥

க்ருஷ்ண—*கண்ணா!* யுயுத்ஸும்—*போர்புரிய விரும்பியவராய்,* ஸமுபஸ்தி2தம்—*முன்னேநிற்கும்,* இமம் ஸ்வஜநம—*இந்த உறவினரை,* த3ருஷ்ட்வா—*பார்த்து,* மம—*என்னுடைய,* கா3த்ர

23. நன்றி புனையு நமரெல்லா நாளமருட்
கன்றி வரக்கண்டு கண்ணனே—குன்றி
முகஞ்சுவறி மெய்ந்நடுங்கி முற்றுந் தளர்ந்தென்
னகங்குழைய ரோமாஞ்ச மாம.

கண்ணனே!—*கண்ணா!* நன்றி புனையும் நமர் எல்லாம்—*நன்றியுள்ள உறவினர் அனைவரும்,* நாள் அமருள்—*இன்று தொடங்கும் யுத்தத்தில்,* கன்றிவர-*எதிர்த்துவர,* கண்டு—*(அதைப்)பார்த்து,* குன்றி—*(அவயவங்கள்) மெலிந்து,* முகம்

*28* 29. இனி பதினெட்டரை ச்லோகம் அர்ஜுனனின் வருத்தத்தைக் காட்டும் வார்த்தைகள். (க்ருஷ்ணா) கறுப்பு நிறமுடையவனாகையாலே கிருஷ்ணன் எனப்படுகிறான்.*

"க்ருஷிர் பூ4வாசக: ஶப்3த3: ணஶ்ச நிர்வ்ருதி வாசக: ।
விஷ்ணுஸ் தத்3பா4வ யோகா3ச்ச க்ருஷ்ண இத்யபி4தீ4யதே ॥

*[க்ருஷிசப்தம் பூமியைக்குறிக்கிறது; 'ண' என்பது ஆனந்தத்தைக் குறிப்பது. (மண்ணின் பாரம் நீக்கி) பூமிக்கு ஆனந்தத்தை அளித்தமையாலே பரமபுருஷன் கிருஷ்ணன் எனப்படுகிறான்.]*

ராணி—கைகால் முதலான அவயவங்கள். ஸீதந்தி—(ஓ)மலி கின்றன; முகம் ச-முகமும், பரிசுஷ்யதி—முழுவதும் வாடுகிறது; மே சரீரே—என்னுடைய சரீரத்தில். வேபது:—நடுக்கமும், ஜாயதே-உண்டாகிறது; ரோமஹர்ஷ: ச ஜாயதே—மயிர்க்கூச் செறிகிறது.

गाण्डीवं स्रंसते हस्तात् त्वक्चैव परिदह्यते।
न च शक्नोम्यवस्थातुं भ्रमतीव च मे मनः॥ ३०॥
निमित्तानि च पश्यामि विपरीतानि केशव। *३१.

30. காண்டீவம் ஸ்ரம்ஸதே ஹஸ்தாத் த்வக் சைவ பரிதஹ்யதே।
ந ச சக்நோம்யவஸ்தாதும் ப்ரமதீவ ச மே மந:॥
*31 நிமித்தாநி ச பச்யாமி விபரீதாநி கேசவ।

ஹஸ்தாத் — கையிலிருந்து, காண்டீவம் — காண்டீவ மெனும் என் வில், ஸ்ரம்ஸதே-நழுவுகிறது; த்வக் ச ஏவ

---

சுவறி—முகம்வாடி, மெய் நடுங்கி—உடல் நடுங்கி, முற்றும் தளர்ந்து-(உடல்) முழுவதும் தளர்ந்து, என் அகம் குழைய—என் மனம் (இரக்கத்தால்) குழையும்படி, ரோமாஞ்சம் ஆம்—மயிர்க்கூச்சு எறியும்.

24. கைந்நின்றுங் காண்டீவம் வீழுங் கனன்றுடற்றோன்
மெய்நின்று தாங்கமிகமாட்டேன்—மைந்நின்ற
நெஞ்சந் திகைக்கு நிமித்தங் களுந்தீதா
வஞ்சும் படியா மவை.

கை நின்றும் காண்டீவம் வீழும்—என் கையிலிருந்து காண்டீவம் என்னும் என் வில் நழுவும்; உடல் தோல்—உடம்பிலுள்ள தோல், கனன்று—எரிந்து, மெய் நின்று

---

என்கிறபடியே பூமிக்கு இன்பத்தையளிக்நவன் என்றும் சொல்லலாம். அனைவர்க்கும வருததம் நீக்கும் நீ எனக்கும் வருத்தம் போக்கவேணும் என்று கருத்து 28* 29

(என்) தோலுமே. பரிதஹ்யதே—முழுவதும் எரிகின்றது. அவஸ்தாதும ச-நிலையாக நிற்பதற்கும். ந்க்நோமி-வல்லமை யற்றவனுயிருக்கிறேன். மே மந ச—என் மனமும். ப்ரமதி இவ-சுழல்வதுபோலேயுள்ளது கேவ-கேசவனே! விபரீதாநி நிமித்தாநி ச—தீமையைக் குறிக்கும் கெட்டசகுனங்களையும். பய்யாமி—காண்கிறேன்.

न च श्रेयोऽनुपश्यामि हत्वा स्वजनमाहवे ॥ ३१* ॥
न काङ्क्षे विजयं कृष्ण न च राज्यं सुखानि च । *३२.

31* ந ச ச்ரேயோऽநுபச்யாமி ஹத்வா ஸ்வஜநமாஹவே ||
*32 ந காங்க்ஷே விஜயம் க்ருஷ்ண ந ச ராஜ்யம் ஸுகாநி ச |

தாங்க மிக மாட்டேன்—உடம்பை நிலைநிறுத்தித் தாங்க மிகவும் முடியாதவனுயிருக்கிறேன்; மை நின்ற நெஞ்சம்—(தர்மாதர்மபயத்தால்) கறுத்து நிற்கும் நெஞ்சம். திகைக்கும்—கலங்கும். நிமித்தங்களும் அவை—(நான்காற்றும்) அந்த சகுனங்களும். தீதா — தீயதாகவும். அஞ்சும்படி ஆம்— பயப்படும்படியாகவும் உள்ளன.

25. தன்றமரைக் கொன்று சமரத்துத் தான்சேரு
நன்றி தனையொன்று நான்காணேன்—கொன்ற
விசையமுநான் கண்ணனே வேண்டே னரசு
மசைவில் வருஞ்சுகமு மாங்கு.

29 *31. (கேசவ) 'ப்ரசஸ்தகேசன்' [அழகிய திருக்குழலுங் கற்றைகளையுடையவன்] என்றும், கேசியென்னும் அசுரனைக் கொன்றவனென்றும்,

"க இதி ப்ரஹ்மணோ நாம ஈசோऽஹம் ஸர்வதேஹிநாம் |
ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவநாமவாந்||"

['க:' என்பது பிரமனின் பெயர்; (சிவனுகிற) நான் தேஹாபிமானமுள்ளார் அனைவர்க்கும் ஈசன். நாங்கள் இருவரும் உன் அங்கத்திலிருந்து தோன்றினோம். ஆகையால் நீ கேசவனென்னும் பெயருடையவனுகிறாய்] என்னும் ஹரிவம்சச்லோகத்தின்படி ப்ரஹ்மருத்ரர்களையுடையவன் என்றும் கொள்ளலாம். 29 *31

ஆஹவே—போரில், ஸ்வஜநம்—சுற்றத்தாரை, ஹத்வா—கொன்று, ச்ரேய:—நற்பயனை, ந ச அநுபச்யாமி—காண்கின்றிலேன். க்ருஷ்ண—கண்ணா! விஜயம் ந காங்க்ஷே—வெற்றியை நான் விரும்பவில்லை; ராஜ்யம்—அரசையும், ஸுகாநி ச—சுகங்களையும், ந காங்க்ஷே—நான் விரும்பவில்லை.

किं नो राज्येन गोविन्द किं भोगैर्जीवितेन वा ॥ ३२* ॥
येषामर्थे काङ्क्षितं नो राज्यं भोगाः सुखानि च ।
त इमेऽवस्थिता युद्धे प्राणांस्त्यक्त्वा धनानि च ॥ ३३ ॥

---

சமரத்து—போரிலே, தன் தமரை கொன்று—தன் சுற்றத்தினரைக் கொன்று, தான் சேரும் நன்றிதனை—தான் அடையும் நன்மையை, ஒன்றும்—சிறிதும், நான் காணேன்—நான் காணவில்லை, கண்ணனே—கண்ணா! கொன்ற விசையமும்—கொலையினால் வரும் வெற்றியையும், ஆங்கு—அதனாலேற்படும், அரசும்—ராஜ்யத்தையும், அசைவில் வரும் சுகமும்—அழியாமல் ஏற்படும் சுகத்தையும், நான் வேண்டேன்—நான் விரும்பவில்லை.

26. இந்த வுயிரரசு போகங்க ளாலெமக்கென்
அந்தவவை யாவர்க்கா வத்தித்தோ—நந்தமரா
மங்கவர்க ளெலலா மமர்த்தலையி லேநின்றார்
தங்களுயிர் வித்தர் தவிர்ந்து.

---

31*—*32. உறவினரைக் கொன்றதால் நன்மையொன்றுமில்லை' என்றான் அர்ஜுனன். 'ஏனில்லை? வெற்றியும், அதனால் வரும் அரசும், அதனால் ஏற்படும் சுகங்களும் பெரும்பயன்களல்லவோ?' என்று கண்ணனுக்குக் கருத்தாகக்கொண்டு. "கொலைசெய்து கிடைக்கும் இப் பயன்களை நான் ஒரு பொருளாகக் கருதவில்லை; ஆகையால் எனக்கு இவை நன்மையல்ல" என்கிறான். இவ்வார்த்தைகளிலிருந்தும் முன் பின்-வார்த்தைகளிலிருந்தும் இவன் பெருந்தன்மையுள்ளவனென்பதும், பரமகாருணிகனென்பதும், உறவினரிடம் பேரன்புள்ளவனென்பதும் வெளியாகிறது.

31*-*32.

32* கிம் நோ ராஜ்யேந கோ₃விந்த₃ கிம் போ₄கைர் ஜீவிதேந வா॥
33 யேஷாமர்த்தே₂ காங்க்ஷிதம் நோ ராஜ்யம் போ₄கா₃: ஸுகா₂நி ச।
த இமேऽவஸ்தி₂தா யுத்₃தே₄ ப்ராணாம்ஸ்த்யக்த்வா த₄நாநி ச॥

கோ₃விந்த₃—*கோவிந்தனே!* ந:—*எங்களுக்கு,* ராஜ்யேந கிம்–*அரசினால் என்ன பயன்?* போ₄கை₃:–*(மாலை, ஆபரணம் முதலான) போகங்களாலோ,* ஜீவிதேந வா—*எங்களுடைய உயிரினாலோ,* கிம்–*என்ன பயன்?* யேஷாம அர்த்தே₂—*எந்த ஆசாரியர்கள் முதலானோரின் பொருட்டு,* ந.–*எங்களுக்கு,* ராஜ்யம்–*அரசும்,* போ₄கா₃:–*போகங்களும்,* ஸுகா₂நி ச—*ஸுகங்களும்,* காங்க்ஷிதம்—*விரும்பப்படுகின்றனவோ,* தே இமே—*அந்த ஆசார்யாதிகளான இவர்கள்,* யுத்₃தே₄—*போரிலே,* ப்ராணாந்–*உயிர்களையும்,* த₄நாநி ச–*செல்வங்களையும்,* த்யக்த்வா–*கைவிட மனங்கொண்டு,* அவஸ்தி₂தா:—*நேர்நிற்கிறார்கள்.*

---

இந்த உயிர் அரசு போகங்களால் எமக்கு என்–*இந்த உயிர்களாலும், ராஜ்யத்தாலும், போகங்களாலும் எமக்கு என்ன பயன்?* அந்த அவை—*அந்த உயிர் அரசு போகங்களை,* யாவர்க்கா அ(ர்)த்தித்தோம்—*எவர்களுக்காக விரும்பினோமோ,* நம் தமராம் அவர்கள் எல்லாம்–*நம் உறவினரான அவர்கள் அனைவரும்,* தங்கள்—*தங்களுடைய,* உயிர்–*உயிர்களையும்* வித்தம்—*செல்வங்களையும்,* தவிர்ந்து–*கைவிட்டவர்*

---

32*-33. (கிம்நோ ராஜ்யேந கோவிந்த₃) கோவிந்தனே! எங்களுக்கு ராஜ்யத்தால் என்ன பயன்? பிரளயகாலத்தில் கோசப்தவாச்யமான பூமியை எடுத்து ரக்ஷித்தவன் கோவிந்தனாகிறான். நீ உயிர்களை அளிப்பதற்காக பூமியை அடைந்தாய்; நாங்கள் உறவினரை அழித்து பூமியை அடையவேணுமோ? என்று கருத்து. பசுக்களைக் கல்மழையிலிருந்து காத்து கோவிந்த பட்டாபிஷேகம் செய்துகொண்டதைக் குறிப்பதாகவுமாம். உன்னையண்டிய பசுக்களை அருஞ்செயல்களைச் செய்தும் ரக்ஷிப்பவனாயிருக்க, நாங்கள் அரசின்மேலே ஆசையாலே உற்றுருறவினரை அழிப்பதோ என்று கருத்து. (யேஷாமர்த்தே காங்க்ஷிதம்...) "சரீரம் வஸு விஜ்ஞாநம் வாஸ: கர்மகு₃ணாநஸூந் குர்வர்த்த₂ம் த₄ாரயேத்" [உடம்பும், பொருளும், இருப்பிடமும், செயலும், குணமும்,

आचार्याः पितरः पुत्रास्तथैव च पितामहाः ।
मातुलाः श्वशुराः पौत्राः स्यालाः संबन्धिनस्तथा ॥ ३४ ॥
एतान्न हन्तुमिच्छामि घ्नतोऽपि मधुसूदन । *३५.

34. ஆசார்யா: பிதர: புத்ராஸ் தகைவ ச பிதாமஹா: ।
மாதுலா: ச்வசுரா: பௌத்ரா: ஸ்யாலா: ஸம்பந்திநஸ்ததா ॥
*35 ஏதாந்ந ஹந்துமிச்சாமி க்நதோऽபி மதுஸூதந ।

ஆசார்யா:—*ஆசாரியர்களும்*, பிதர: — *தந்தையர்களும்*, புத்ரா.—*பிள்ளைகளும்*, தகா:-*அவ்வண்ணமே*. பிதாமஹா: ஏவ ச-*பாட்டன்மார்களும்*. மாதுலா.—*மாமன்களும்*. ச்வசுரா:—*மாமனார்களும்*. பௌத்ரா:—*பேரர்களும்*, ஸ்யாலா:—*மைத்துனர்களும்*, தகா ஸம்பந்திந:-*அவ்வண்ணமே ஸம்பந்திகளும்* (*இங்கு நிற்கின்றனர்.*) மதுஸூதந—*மதுஸூதனனே!* க்நத: அபி-(*எம்மைக்*) *கொல்லுகின்றவர்களாயினும்*, ஏதாந்-*இவர்களை*, ஹந்தும் ந இச்சாமி-*கொல்ல விரும்புகின்றேனல்லேன்*.

---

*களாய்*. அங்கு அமர் தலையிலே நின்றார் — *முன்னே போர் முனையில் நிற்கிறார்கள்*.

27. தந்தை குருபாட்டர் தம்மாமர் மாமடிகண்
மைந்த ரவர்மைந்தர் மற்றுள்ள—பந்தத்
தியன்ற விவர் தம்மை யான்கொல்ல வெண்ணேன்
முயன்று கொலினுமெனை மொய்த்து.

தந்தை—*தந்தையரும்*, குரு-*ஆசாரியரும்*, பாட்டர்—*பாட்டன்மாரும்*. தம் மாமர்-*மாமன்மாரும்*. மாமடிகள்—*மாமனார்களும்*, மைந்தர்—*பிள்ளைகளும்*, அவர் மைந்தர்—*அவர் பிள்ளைகளும்*, மற்றுள்ள பந்தத்து இயன்ற இவர் தம்மை—*மற்றுள்ள உறவுடையவர்களுமாகிற இவர்களை*.

---

*உயிர்களும் குருவுககாகவே வைத்துக்கொள்ளவேண்டியது] என்று சாஸ்திரம் சொல்லும்போது, நாங்கள் அந்த குருக்களையும், அவர்களுகந்தவர்களையும் அழித்து உடலையும் உயிரையும் பேணவோ?* 32*-33.

अपि त्रैलोक्यराज्यस्य हेतोः किन्नु महीकृते ॥ ३५* ॥
निहत्य धार्तराष्ट्रान्नः का प्रीतिः स्याज्जनार्दन । *३६.

---

எனை மொய்த்து—என்னைச் சூழ்ந்து நின்று, முயன்று கொலி னும்—முயற்சி செய்து கொன்றாலும், யான் கொல்ல எண் ணேன—நான் கொல்ல எணணேன்.

---

*34 *35.* (ஹ்நாந்ந ஹந்துமிச்சா²மி மது⁴ஸூத³ந) மதுவைக் கொன்றவனே! மது⁴வைப்போன்ற அஸுரர்களைக் கொல்லலாமே யொழிய ஆசாரியர்களையும் உறவினர்களையுமா அழிப்பது? (க்⁴ந ததாபி) என்னைக் கொல்கின்றவர்களாயினும்.

''கு³ரும் வா பா³லவ்ருத்³தௌ⁴ வா ப்³ராஹ்மணம் வா
ப³ஹுச்ருதம் ।
ஆததாயிநமாயாந்தம் ஹந்யாதே³வாவிசாரயந் ॥
நாததாயிவதே⁴ தோ³ஷோ ஹந்துர்ப⁴வதி கஶ்சந ।
உத்³யதாஸி விஷாக்³நிஞ்ச ஶாபோத்³யதகரம் ததா² ॥
ஆத²ர்வணேந ஹந்தாரம் பிஶுநம் சைவ ராஜஸு ।
பா⁴ர்யாதிக்ரமிணம் சைவ வித்³யாத் ஸப்தாததாயிந: ॥''
*[விஷ்ணுஸ்மிருதி 5-185...188]*

*[ஆசாரியனாயினும், சிறுவனாயினும், முதியவனாயினும், பெருங்கேள்வி யறிவுடைய அந்தணனாயினும், (தன்னைநோக்கி)வரும் ஆததாயியைக் (கொல்லலாமோ கூடாதோ என்று)ஆராயாமலே கொல்லவேண்டும். ஆததாயியைக் கொல்லுமவனுக்கு அதனால் ஒரு தோஷமும் கிடையாது. (1, 2, 3.) (தன்னைக்கொல்ல) கத்தி, விஷம், அகனி ஆகியவற்றை ஏந்திநிற்பவர் மூவர், 4. சாபங் கொடுக்கக் கை தூக்கிநிற்பவன் 5. அபிசாரத்தால் கொல்லவிருப்பவன் 6. (தன் னைப்பற்றி) அரசர்களிடம் கோட்சொல்லுமவன். 7. தன் மனைவி யிடம் தகாதசெயலைப் புரிபவன் ஆகிய எழுவரையும் ஆததாயிகள் என்று அறியவேண்டும்.]* என்று சாஸ்திரம் சொல்கிறது. துரி யோதனாதியர் அரக்குமாளிகையில் எம்மை வைத்து எரித்தவர்கள். பீமனுக்கு விஷமூட்டியவர்கள்; பல ஆயுதங்களால் எம்மைக் கொல்லப் பலதடவை முயன்றவர்கள்; இப்போதும் எம்மைக் கொல்லநிற்பவர்கள். எங்கள் பத்தினியான திரௌபதியை அவ மதித்தவர்கள். இப்படிப் பலவிதங்களிலும் இவர்கள் ஆததாயிக

**35* அபி த்ரைலோக்யராஜ்யஸ்ய ஹேதோ: கிம் நு மஹீக்ருதே॥**
***36 நிஹத்ய தா$_4$ர்த்தராஷ்ட்ராந்ந: கா ப்ரீதி:ஸ்யாஜ்ஜநார்த்த$_3$ந।**

**ஜநார்த்த$_3$ந**—*ஜநார்த்தனனே!* **த்ரைலோக்யராஜ்யஸ்ய அபி ஹேதோ:**-*மூவுலகவரசுக்காகவும்,* **தா$_4$ர்த்தராஷ்ட்ராந்**-*திருதராஷ்ட்ரபுரத்திரர்களை,* **நிஹத்ய**-*கொன்று,* **ந:**-*நமக்கு,* **கா ப்ரீதி: ஸ்யாத்**-*என்ன ப்ரீதி உண்டாகும்?* **கிம் நு மஹீக்ருதே**-*இந்த பூமிக்காகக் கொல்லுதல் [illegible] வேண்டுமோ?*

---

28. மூவுலகும் பேறெனினு முன்னேன் கொலையதனிற்
பாவுதரைக் காகப் பகைப்பனோ—மேவுசினத்
தந்தன் புதல்வர்களை யாங்கமருட் கொன்றெங்கட்
கெந்தவுகப் புண்டா மினி.

**மூவுலகும பேறு எனினும்**—*மூவுலகமும் பயனாகக் கிடைத்தாலும்.* **கொலையதனில்**-*(உறவினரைக்) கொல்வதை.* **உன்னேன்**—*நினைக்கவும் மாட்டேன்.* **பாவுதரைக்காக**—*கால்பாவும் இந்த பூமிக்காக.* **பகைப்பனோ** *(உறவினரை) பகைத்துக் கொள்வேனோ?* **மேவு சினத்து அந்தன் புதல்வர்களை**—*சினங்கொண்ட திருதராஷ்டிரபுத்திரர்களை,* **ஆங்கு அமருள் கொன்று**-*போரில் கொன்று,* **எங்கட்கு**-*எங்களுக்கு* **இனி எந்த உகப்பு உண்டாம்**—*இனிமேல் எந்த மகிழ்ச்சி உண்டாகும்.*

---

*ளாகையாலே கொல்லத்தக்கவராஞலும் உறவினர்களாகையாலே இவர்களைக் கொல்ல விரும்பவில்லை என்று கருத்து. 34-*35.*

*35*-*36. (ஜநார்த்த$_3$ந)* "ரக்ஷாப்ரதிபக்ஷாந் ஜநாந் அநபேக்ஷ: அர்த்த$_3$யதீதி ஜநாதக$_3$ந:" *[ஸஹஸ்ரநாமபாஷ்யம்-128] [தன்னுடைய ரக்ஷைக்கு விரோதிகளாயிருக்கும் ஜனங்களை அபேக்ஷையை எதிர்பாராமல் ஹிம்ஸிக்கிறான்] என்கிறபடியே வேண்டியவர்களுக்கு விரோதியாயிருப்பவர்களை ஹிம்ஸிப்பவன் ஜநார்த்தனனாகிறான். "த$_3$ஸ்யுத்ராணாத் ஜநார்த்த$_3$ந:" என்று நிர்வசனம். வேண்டியவர்களுக்கு விரோதிகளை ஹிம்ஸிக்கலாமேயொழிய வேண்டியவர்களையோ ஹிம்ஸிக்கலாமோ? 35*-*36*

पापमेवाश्रयेदस्मान् हत्वैतानाततायिनः ॥ ३६* ॥
तस्मान्नार्हा वयं हन्तुं धार्तराष्ट्रान् सबान्धवान् ।
स्वजनं हि कथं हत्वा सुखिनः स्याम माधव ॥ ३७ ॥

36*. பாபமேவாச்ரயேத$_3$ஸ்மாந் ஹத்வைதாநாததாயிந: ||
37. தஸ்மாந் நார்ஹா வயம் ஹந்தும் த$_4$ார்த்தராஷ்ட்ராந் ஸப$_3$ாந்த$_4$வாந் ।
ஸ்வஜநம் ஹி கத$_2$ம ஹத்வா ஸுகி$_2$ந: ஸ்யாம மாத$_4$வ ||

ஆததாயிந:(அடி) *ஆததாயிகளானபோதிலும்*, ஏதாந்—*இவர்களை*, ஹத்வா -*கொல்வதினால்*, அஸ்மாந்—*நம்மை*, பாபம் -*பாவம்*, ஆச்ரயேத் ஏவ—*வந்தடைந்தேதீரும்*; தஸ்மாத்—*ஆகையால்*, வயம்-*நாங்கள்*, ஸப$_3$ாந்த$_4$வாந்-*உறவினர்களோடு கூடிய*, த$_4$ார்த்தராஷ்ட்ராந்—*துரியோதனாதியரை*, ஹந்தும் அர்ஹா: ந -*கொல்லவல்லவராகின்றிலோம்*, மாத$_4$வ—*லக்ஷ்மீ*

29 பாவிகளா மற்றிவரைக் கொன்றாலும் பாவமே
மேவுமெமை யாதலினிம மேவலரைச்—சாவநினைந்
தேதமுயல் கிற்கிலோ மென்சுற்றங் கொன்றிங்கே
மாதவனே யாம்சுகிப்போம் வந்து.

மற்று—*மேலும்*, பாவிகளாம் இவரை — *பாவிகளான இவர்களை*, கொன்றாலும்-*போரில் அழித்தாலும்*, எ(ம்)மை-*எங்களை*, பாவமே மேவும்-*பாவமே வந்தடையும்*, ஆதலின்—*ஆகையால்*, இம்மேவலரை—*இந்த எதிரிகளை*, சாவநினைந்து-*சாகவேணுமென்று நினைத்து*, ஏதம் முயல்கிற்கிலோம்-*தீங்கு செய்ய முயலவல்லோமல்லோம்*, மாதவனே—*லக்ஷ்மீநாதனே!*

*36*–37. (ஆததாயிந:) 'ஆததாயி' [*35] என்றவிடத்து வியாக்கியானத்திலெடுத்த பிரமாண வசனத்தையும், "அக்$_3$நிதோ$_3$ கரத$_3$ச்சைவ சஸ்த்ரபாணிர் த$_4$நாபஹ:, க்ஷேத்ரதா$_3$ராபஹாரச்சைவ ஷடேதே$_3$ ஆததாயிந:" [(1) நெருப்பை வைப்பவன்; (2) விஷமிடுபவன்; (3) ஆயுதமேந்தியவன்; (4) பணத்தை அபஹரிப்பவன்; (5) வயலையும் (6) மனைவியையும் திருடியவன் என்னும் அறுவரும் ஆததாயி*

நாதனே! ஸ்வஜநம்—உறவினரை, ஹத்வா—கொன்று, கத2ம் ஸுகி2ந: ஸ்யாம—எப்படி ஸுகமுடையவராவோம்?

यद्यप्येते न पश्यन्ति लोभोपहतचेतसः।
कुलक्षयकृतं दोषं मित्रद्रोहे च पातकम्॥ ३८॥
कथं न ज्ञेयमस्माभिः पापादस्मान्निवर्तितुम्।
कुलक्षयकृतं दोषं प्रपश्यद्भिर्जनार्दन॥ ३९॥

38. யத்3யப்யேதே ந பச்யந்தி லோபே4ாபஹததசேதஸ:।
குலக்ஷயக்ருதம் தே3ாஷம் மித்ரத்3ரோஹே ச பாதகம்॥

39. கத2ம் ந ஜ்ஞேயமஸ்மாபி4: பாபாத3ஸ்மாந் நிவர்த்திதும்।
குலக்ஷயக்ருதம் தே3ாஷம் ப்ரபச்யத்3பி4ர் ஜநார்த்த3ந॥

ஜநார்த்த3ந-ஜநார்த்தனனே! லோபே4ாபஹததசேதஸ:-ராஜ்யத்தில் பேராசையினலே பகுத்தறிவற்ற மனத்தையுடைய, ஏதே-இந்த துரியோதனதியர், குலக்ஷயக்ருதம் தே3ாஷம்—குலத்தின் அழிவினுல் உண்டாகும் பாவத்தையும், மித்ர

இங்கே வந்து-போர்முனையில்வந்து, சுற்றம் கொன்று-உறவினரைக்கொன்று, என்சுகிப்போம்—என்ன சுகத்தை அடைவோம்?

30. கோதில் குலஞ்செற்ற குற்றங் குலக்கேளைக்
காதி வரும்பாவங் காணுத—வேதிலர்க
ளீங்கிவர்க ளேலு மிஃதறிந்த யாந்தவிர்த
லாங்கிசைகை யான வமைவு.

கோது இல்—குற்றமற்ற, குலம்-குலத்தை, செற்றகுற்றம்-அழித்த பாவத்தையும், குலக்கேளை காதிவரும் பாவம்—குலத்தின் நண்பர்களுக்குத் தீங்கிழைப்பதனுல் உண்டாகும் பாவத்தையும், காணுத—அறியாத, ஏதிலர்கள்—பகைவர்களாக, ஈங்கு இவர்களேலும—இங்குள்ள துரியோதனதியர் இருந்து

சன்] என்ற வசனத்தையும் காண்பது. (மாதவ) மங்கள ஸ்வரூபிணியான பிராட்டிக்குப் பதியாயிருந்தும் இந்த அமங்களமான காரியத்தில் என்னை ஏவலாமோ? என்று கருத்து. 56*-57.

த்₃ரோஹே பாதகம் ச—நண்பர்களுக்குத் தீங்கிழைப்பதனால் ஏற்படும் பாவத்தையும், யத்₃யபி ந பச்யந்திதத₂ாபி—காணவில்லையானாலும், குலக்ஷயக்ருதம் தோ₃ஷம்—குலத்தின் அழிவினால் உண்டாகும் தீங்கை, ப்ரபச்யத்₃பி₄:—நன்கு காண்கின்றவர்களான, அஸ்மாபி₄:—எங்களால், அஸ்மாத் பாபாத்—முற்கூறிய இருபாபங்களினின்றும், நிவர்த்திதும்-மீள்வதற்கு, கத₂ம் ந ஜ்ஞேயம—எப்படி அறியாமலிருக்கமுடியும்?

कुलक्षये प्रणश्यन्ति कुलधर्माः सनातनाः।
धर्मे नष्टे कुलं कृत्स्नमधर्मोऽभिभवत्युत ॥ ४० ॥
अधर्माभिभवात्कृष्ण प्रदुष्यन्ति कुलस्त्रियः।
स्त्रीषु दुष्टासु वार्ष्णेय जायते वर्णसङ्करः॥ ४१ ॥
सङ्करो नरकायैव कुलघ्नानां कुलस्य च ।*४२

40. குலக்ஷயே ப்ரணச்யந்தி குலத₄ர்மா: ஸநாதநா: ।
த₄ர்மே நஷ்டே குலம க்ருத்ஸ்நமத₄ர்மோऽபி₄பவத்யுத் ॥

41. அத₄ர்மாபி₄ப₄வாத் க்ருஷ்ண ப்ரது₃ஷ்யந்தி குலஸ்த்ரிய: ।
ஸ்த்ரீஷு து₃ஷ்டாஸு வாஷ்ணேய ஜாயதேவர்ணஸங்கர:॥

*42. ஸங்கரோ நரகாயைவ குலக்₄நாநாம் குலஸ்ய ச ।

---

போதிலும், இஃது அறிந்த யாம — இப்பாவங்களை அறிந்த நாங்கள், ஆங்கு தவிர்தல் இசைகை—அறிந்தபின்பு மீள இசைவதே, ஆன அமைவு—பொருத்தமானதாகும்.

31. குலங்குறையின் மாளுங் குலத்தறங்கண் மீது
விலங்கு நெறியமுக்கி மேலா—நலங்குலைந்து
மாதர் நெறியழிவர் வண்ணங் கெடுமதுவே
போத நரகப் புணர்ப்பு.

---

38-39. (ஜநார்த்த₃ந) துஷ்ட ஜனங்களை ஹிம்ஸிப்பவனே! பந்துவதமும், மித்ரதுரோகமும் துஷ்டர்களின் காரியம். அதைச் செய்யும்படி நீயே எங்களை ஏவலாமோ? என்று கருத்து. 38-39.

**குலக்ஷயே(ஸதி)**—குலத்தின் அழிவு உண்டானவளவில், **ஸநாதநா:**—பழமையானவையான, **குலத₃ர்மா:**—குலதர்மங்கள், **ப்ரணச்யந்தி**—அழிகின்றன. **த₄ர்மே நஷ்டே (ஸதி)**—தர்மங்கள் அழிந்தவளவில், **க்ருத்ஸ்நம் குலம்**—குலம் முழுவதையும், **அத₄ர்ம:உத**—அதர்மமும், **அபி₄ப₄வதி**—சூழ்ந்து (குலத்தை) வெற்றி கொள்கிறது; **வார்ஷ்ணேய க்ருஷ்ண!**—விருஷ்ணிகுலத்துதித்த கண்ணனே!, **அத₄ர்மாபி₄ப₄வாத்**—(குலத்தை) அதர்மம் சூழ்ந்து கொள்வதால், **குலஸ்த்ரிய:**—குலப்பெண்கள், **ப்ரது₃ஷ்யந்தி**—மிகவும் கெடுகின்றனர்; **ஸ்த்ரீஷு து₃ஷ்டாஸு (ஸதீஷு)**—குலப்பெண்கள் கெட்டுப் போனவளவில், **வர்ணஸங்கர:**—நான்கு வர்ணங்களிலும் கலப்பு, **ஜாயதே**—உண்டாகிறது, **ஸங்கர:**—வர்ணக்கலப்பு, **குலக்₄நாநாம்**—குலத்தை அழித்தவர்களுக்கும், **குலஸ்ய ச**—குலத்திற்கும், **நரகாய ஏவ**—நரக வாஸம் ஏற்படவே காரணமாகிறது.

---

**குலம் குறையின்**—குலம் அழிந்ததாகில், **குலத்து அறங்கள் மாளும்**—குலதர்மங்கள் அழியும்; (அப்போது) **விலங்கு நெறி**—விலக்கத்தக்க அதர்மங்கள், **மீது அமுக்கி மேல் ஆம்**—(குலத்தின்) மீது சூழ்ந்து வெற்றிகொள்ளும்; (அப்போது) **மாதர்**—குலப்பெண்கள் **நலம் குலைந்து**—குணங்கள் அழிந்து, **நெறி அழிவர்**—கற்புநெறி தவறுவர்; (அப்போது) **வண்ணம்**—நாலுவர்ணங்களும், **கெடும்**—அழிந்துபோகும்; **அதுவே**—அந்த வர்ணக்கலப்பே, **போதநரகப் புணர்ப்பு**—சாஸ்திரங்களில் அறியப்படும் நரகத்திற்குக் காரணமாகும்.

---

40–*42. (அத₄ர்மாபி₄ப₄வாத்) 'மறம் மேலோங்குவது' என்று மனத்தில் உண்டாகும் குற்றம் சொல்லப்படுகிறது. (ப்ரது₃ஷ்யந்தி குலஸ்த்ரிய:) என்று உடலாலும் கற்புநெறி தவறுவதாகிற தோஷம் சொல்லப்படுகிறது. (வார்ஷ்ணேய) விருஷ்ணிகுலத்திற்குச் சிறப்பையளித்தவனே! உன்னோடு உறவுபூண்ட பாண்டுவின் குலத்திற்குத் தாழ்வைத் தரலாமோ? என்று கருத்து. 40-*42.

पतन्ति पितरो ह्येषां लुप्तपिण्डोदकक्रियाः ॥ ४२* ॥
दोषैरेतैः कुलघ्नानां वर्णसङ्करकारकैः ।
उत्साद्यन्ते जातिधर्माः कुलधर्माश्च शाश्वताः ॥ ४३ ॥
उत्सन्नकुलधर्माणां मनुष्याणां जनार्दन ।
नरके नियतं वासो भवतीत्यनुशुश्रुम ॥ ४४ ॥

42*. பதந்தி பிதரோ ஹ்யேஷாம் லுப்தபிண்டோ₃த₃கக்ரியா: ॥

43. தோ₃ஷைரேதை: குலக்₄நாநாம் வர்ணஸங்கரகாரகை: ।
உத்ஸாத்₃யந்தே ஜாதித₄ர்மா: குலத₄ர்மாச்ச ஶாச்வதா: ॥

44. உத்ஸந்நகுலத₄ர்மாணாம் மநுஷ்யாணாம் ஜநார்த்த₃ந ।
நரகே நியதம் வாஸோ ப₄வதீத்யநுசுச்ரும ॥

**ஏஷாம்**—*குலத்தைக்கெடுத்த இவர்களுடைய*, **பிதர:**—*பிக்ருக்களும்*, **லுப்தபிண்டோ₃த₃கக்ரியா:**-*பிண்டக்ரியை, உதகக்ரியை ஆகியவற்றை இழந்தவர்களாய்*, **பதந்தி**-*(கீழுலகுகளில்) விழுகின்றனர்*, **குலக்₄நாநாம்**—*குலத்தை அழித்தவர்களுடைய*, **வர்ணஸங்கரகாரகை:**—*வர்ணக்கலப்பை ஏற்படுத்துகிற*, **ஏதை: தோ₃ஷை:**—*இந்த தோஷங்களாலே*.

---

32. மீது மவர்பிதுக்கள் வீழ்வர் மிகுபழியாற்
சாதி குலதன்மந் தானழியு—மாதலினு
னீங்கா நிரயத்து நிற்பவ ரென்றுரைக்கும்
பாங்கார் சுருதிப் பயன்.

**மீதும்**—*மேலும்*, **அவர் பிதுக்கள்**-*குலத்தையழித்தவர்களுடைய பிக்ருக்கள்*, **வீழ்வர்**—*கீழுலகங்களில் விழுவர்;* **மிகுபழியால்**-*(முற்கூறிய)மிகுந்த தோஷங்களால்*, **சாதி குல தன்மம் தான் அழியும்**-*சாதி தர்மங்களும், குலதர்மங்களும் தாமே அழியும்;* **ஆதலினுல்**—*இக்காரணங்களால்*, **நீங்கா நிரயத்து நிற்பவர்**-*மீளமுடியாத நரகத்தில் (அவர்கள்)வஸிப்*

---

*42*-44.* (நரகே நியதம் வாஸ...அநுசுச்ரும) "ப்ராயச்சித்தமகுர்வாணா: பாபேஷு நிரதா நரா:, அபச்சாத்தாபிந: கஷ்டாந் நிரயாந் யாந்தி தா₃ருணாந்" [பாபத்தில் ஈடுபட்ட ஜனங்கள் பிராயச்சித்தமும் செய்யாமல், பச்சாதத்தாபமும் படாமலிருப்பார்களா

**சாச்வதா:**—*நிலையானவையான,* **ஜாதித₄ர்மா:** —*ப்ராம்மணர் முதலான ஜாதிதர்மங்களும்,* **குலத₄ர்மா: ச** *குலதர்மங்களும்* **உத்ஸாத்₃யந்தே**—*அழிகின்றன.* **ஜநார்த்தந** *-ஜநார்த்தனனே!* **உத்ஸந்நகுலத₄ர்மாணும்**—*அழியப்பெற்ற குலதர்மங்களை உடையவர்களான,* **மநுஷ்யாணும**—*மனிதர்களுக்கு,* **நரகே**—*நரகங்களில்,* **நியதம் வாஸ: ப₄வதி**—*எப்போதும் வாஸம் ஏற்படுகிறது,* **இதி**—*என்று,* **அநுசுச்ரும**—*கேள்விப்படுகிறோம்.*

अहो बत महत्पापं कर्तुं व्यवसिता वयम् ।
यद्राज्यसुखलोभेन हन्तुं स्वजनमुद्यताः ॥ ४५ ॥

यदि मामप्रतीकारमशस्त्रं शस्त्रपाणयः ।
धार्तराष्ट्रा रणे हन्युस्तन्मे क्षेमतरं भवेत् ॥ ४६ ॥

**45.** அஹோ ப₃த மஹத் பாபம் கர்த்தும் வ்யவஸிதா வயம் ।
யத்₃ராஜ்யஸுக₂லோபே₄ந ஹந்தும் ஸ்வஜநமுத்₃யதா: ॥

**46.** யதி₃ மாமப்ரதீகாரமசாஸ்த்ரம் சாஸ்த்ரபாணய: ।
தா₄ர்த்தராஷ்ட்ரா ரணே ஹந்யுஸ் தந்மே க்ஷேமதரம் ப₄வேத் ॥

**வயம்**—*நாம்,* **ராஜ்யஸுக₂லோபே₄ந** — *ராஜ்யத்தினால் வரும் இன்பத்தில் பேராசையால்,* **ஸ்வஜநம்**—*உறவினரை,* **ஹந்தும் உத்₃யதா:**—*கொல்ல முயல்கின்றோம்;* **(இதி)யத்**—*என்பது யாதொன்றுண்டோ,* **(தத்)**—*அது,* **மஹத்** *-பெரிதான*

---

*பார்கள்;* **என்று**—*என்று,* **பாங்கு ஆர் சுருதி பயன் உரைக்கும்**-*சிறப்புடைய வேதசாஸ்திரங்கள் உரைக்கும்.*

**33.** ஐயோ பெரும்பாவத் தாங்கமைந்தோ மாதலினுன்
மெய்யோருஞ் சுற்றத்தை வீழ்த்துதலால்-வையோவாச்
சத்திரத்தால் வீண்கையெனேத் தாந்தடிவரேன்மாற்று
ரத்திரத்தா லஃதே கடன்.

**மெய் ஓரும் சுற்றத்தை**—*உண்மையாகவே (நாம்) அறிந்த உறவினரை,* **வீழ்த்துதலால்**—*அழிப்பதால்,* **பெரும் பாவத்து அமைந்தோம் ஐயோ**—*பெரும் பாவம் செய்யத்துணிந்தோம்!*

---

*கில் மிகத்துன்பத்தை விளைக்கும் கொடிய நரகங்களை அடைவர்] முதலான சாஸ்திரவசனங்களில் கேட்கிறோம் என்று கருத்து. 42-44.*

பாபம்—பாவத்தை, **கர்த்தும்**—செய்வதற்கு, **வ்யவஸிதா:**—துணிந்துள்ளோம்; **அஹோ**—ஆச்சர்யம்! பத-கஷ்டம்! **ரணே**-போரிலே, **அப்ரதீகாரம**—(இங்கிதற்குப்) பழிவாங்காதவனும், **அஸஸ்த்ரம**-ஆயுதமற்றவனை, **மாம**—என்னை **ஸஸ்த்ரபாணய:**-ஆயுதத்தைக் கையிலேந்தியவர்களான, **தார்த்தராஷ்ட்ரா:**—துரியோதனாதியர், **யதி ஹந்யு:**-கொல்லுவார்களாகில், **தத்**-அந்தக்கொலையே, **மே**—எனக்கு, **க்ஷேமதரம் பவேத்**—மிகவும் நன்மையாகும் (என்று அர்ஜுனன் சொன்னான்).

सञ्जय उवाच—

एवमुक्त्वाऽर्जुनः सङ्ख्ये रथोपस्थ उपाविशत्।
विसृज्य सशरं चापं शोकसंविग्नमानसः॥ ४७॥

ஸஞ்ஜய உவாச:—

47. ஏவமுக்த்வார்ஜுந: ஸங்க்யே ரதோபஸ்த உபாவிஸத்।
விஸ்ருஜ்ய ஸஸரம் சாபம் ஸோகஸம்விக்நமாநஸ:॥

இதி ஸ்ரீமத்பகவத்கீதாஸு உபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுந ஸம்வாதே
அர்ஜுநவிஷாதயோகோ நாம ப்ரதமோத்யாய:

---

**ஆதலினால்**-ஆகையால், **மாற்றார்**-எதிரிகள், **வீணைகளை**-ஆயுதமற்ற என்னை; **வை ஓவாச் சத்திரத்தால்**-கூர்மை நீங்காத ஆயுதங்களாலும், **அத்திரத்தால்**—அம்புகளாலும், **தாம் தடிவரேல்**—தாமே கொல்லுவராகில், **அஃதே கடன்**—அதுவே நன்மை.

---

45–46. இந்த ச்லோகங்களோடு அர்ஜுனனின் வாக்கியம் முடிகிறது. இவ்வளவால், இவர்கள் ஆததாயிகளாயிருந்தபோதிலும், இப்போது எம்மைக் கொல்லநிற்பவர்களாயினும், யுத்தத்திலிருந்து திரும்புவது அதர்மம், அகீர்த்தி முதலானவற்றை அளிப்பதாயினும், போர்புரிவது மூலம் கவரசு, தர்மம், கீர்த்தி முதலானவற்றை அளிப்பதாயினும், ஸர்வேச்வரனை தேவரீரே என்னை நியமித்தபோதிலும் நான் உறவினரோடு போர் புரியமாட்டேன் என்று அர்ஜுனன் தன் கருத்தைத் தெரிவித்தானாயிற்று. "க்ஷேமதரம் பவேத்" என்றதன் பின் "இதி" [என்று] என்னும் பதத்தைக் கூட்டிக்கொண்டு, கீழே "அர்ஜுந உவாச" என்ற வாக்கியத்தோடாவது, "விஷீதந்நிதமப்ரவீத்" என்ற ச்லோகப்பகுதியோடாவது அந்வயித்துக்கொள்ளவேண்டும். 45–46.

**ஏவம்**—*இம்மாதிரியாக,* **உக்த்வா**—*சொல்லி,* **ஸஶரம் சாபம்**—*அம்போடுகூடியவில்லை,* **விஸ்ருஜ்ய**—*கைவிட்டு,* **ஶோகஸம் விக்$_3$நமாநஸ:**-*துன்பத்தால் கலங்கிய மனத்தை யுடையவனாய்,* **ஸங்க்யே**—*யுத்தத்தில்,* **ரதோ$_2$பஸ்தே$_2$**—*தேரின்மேல்,* **உபாவிசத்**-*உட்கார்ந்துவிட்டான் (என்று ஸஞ்ஜயன் சொன்னான்.)*

---

**34. இவ்வாறு சொல்லி யிகல்விசய னம்புடனே**
**தெவ்வார் சிலைபொகட்டுச் சிந்தைதளர்ந் தவ்வாறு**
**நின்றதேர் மீது நிலைகுலைந்து தானிருந்தான்**
**துன்றுசோ கத்தாற் றிகைத்து.**

**இகல் விசயன்**—*போர்வீரனான அர்ஜுனன்,* **இவ்வாறு சொல்லி**—*இப்படிச்சொல்லி,* **அம்புடனே தெவ்வார் சிலை பொகட்டு**—*அம்போடு கூட, பகைவரை அடக்கும் வில்லைக் கீழே எறிந்து,* **அவ்வாறு நின்ற தேர் மீது**-*அப்படி (காம்பீர்யத்தோடு)நின்றதேரின் மேல்,* **நிலைகுலைந்து**-*தன் நிலைகுலைந்து* **துன்று சோகத்தால் திகைத்து**—*மிக்க வருத்தத்தால திகைப்படைந்து,* **தான் இருந்தான்**--*தானே உட்கார்ந்துவிட்டான்.*

---

*47.* (ரதோ$_3$பஸ்தே$_3$ உபாவிசத்) தேரின் நடுவில் உயர்ந்திருக்கும் ஸ்தானம் 'ரதீ' எனப்படும் தேராளியுடையது; முன்னால் தாழ்ந்திருக்கும் ஸ்தானம் ஸாரதியினுடையது. இரண்டுக்கும் நடுவிலுள்ள ஸ்தானம் தேரின் உபஸ்தம் எனப்படுகிறது. ரதிஸ்தானத்திலிருந்து இறங்கி பிராயோபவேசம் செய்பவன்போலே உபஸ்தத்தில் உட்கார்ந்துவிட்டான் அர்ஜுனன் என்று கருத்து. (விஸ்ருஜ்ய ஸஶரம் சாபம்) யுத்த யாகததுக்கு ஸ்ருக்காகவும் ஸ்ருவமாகவுமிருக்கும் அம்போடுகூடிய வில்லைக் கையிலிருந்து எறிந்துவிட்டான். (ஶோகஸம் விக்$_3$நமாநஸ:) பந்து விநாசத்தால் ஏற்படுவது சோகம். இங்கு பந்து விநாசம் ஸித்தம் என்னும் உறுதியால் சோகம் ஏற்பட்டுவிட்டது. அல்லது சோகசப்தம் பொதுவான வருத்தத்தைக் காட்டுவதாகவுமாம். ஸம்விக்$_3$நமாநஸ:– "ஓவிஜீப$_4$யசலநயோ:" என்று தாது வாகையாலே சோகத்தாலே போரில் உறுதி மிகவும் சலிக்கப்(தளரப்) பெற்றவன்என்று பொருளாகிறது. இப்படிப் போர்புரிவதில் உறுதி தளர்ந்துபோனதாலேயே வில்லையும் அம்பையும் கைவிட்டுவிட்டான் என்றுகருத்து. 47.

॥ भा ॥ स तु पार्थो महामनाः परमकारुणिको दीर्घबन्धुः परमधार्मिकः सभ्रातृको भवद्भिरतिघोरैर्मारणैः जतुगृहदाहादिभिरसकृद्वञ्चितोऽपि परमपुरुषसहायेनात्मना हनिष्यमाणान् भवदीयान् विलोक्य बन्धुस्नेहेन परया कृपया धर्माधर्मभयेन चातिमात्रसन्नसर्वाङ्गः सर्वथाऽहं न योत्स्यामीत्युक्त्वा बन्धुविश्लेषजनितशोकसंविग्नमानसः सशरं चापं विसृज्य रथोपस्थ उपाविशत् ॥

॥ इति श्रीभगवद्रामानुजविरचिते श्रीभगवद्गीताभाष्ये प्रथमोऽध्यायः ॥

---

*இப்படியார் பார்த்த னெழுந்தபெருஞ் சோகத்தாற்*
*றப்படியாந் தன்மையினைச் சார்ந்தனை—மைப்படியா*
*மாயனருள் கீதை மன்னுமுத லோத்துரைக்கு*
*மேய பொருண்முடிந்த திங்கு.*

*இப்படி ஆர் பார்த்தன்*—இப்படியாக அர்ஜுனன், *எழுந்த பெரும் சோகத்தால்*—உண்டான பெரிய வருத்தத்தால், *தப்பு அடியாம் தன்மையினை சார்ந்தனை*—தர்மாதர்ம மயக்கத்துக்குக் காரணமான தன்மையை அடைந்தனை, *மைப்படியாம் மாயன் அருள் கீதை மன்னும் முதல் ஓத்து உரைக்கும்*—மையை ஒத்த மேனியை உடைய கண்ணன் அருளிய கீதையின் விளங்காநிற்கும் முதல் அத்தியாயம்

---

ஆக இவ்வத்தியாயத்தின் ஸாரார்த்தமாவது; உதாரமான மனத்தையுடையவனும், மிகச்சிறந்த கருணையுடையவனும், உறவினரிடம் பெருங்காதல் கொண்டவனும், அறவழியில் நிற்பவர்களிற் சிறந்தவனுமான அர்ஜுனன் த்ருதராஷ்ட்ரபுத்திரர்களாலே, அரக்குமாளிகைக்குத் தீயிடுவது முதலான மிகக்கொடிய வதோபாயங்களாலே பலதடவை வஞ்சிக்கப்பட்டபோதிலும் பரமபுருஷனைத் துணையாகக்கொண்ட தன்னாலே கொல்லப்பட இருக்கும் துரியோதனாதியரைக்கண்டு, உறவினரான அவர்களிடம் அன்பாலும், மேலான கருணையாலும், தர்மாதர்ம பயத்தினாலும் மிகவும் சோர்வுற்ற அவயவங்களையுடையவனாய், 'எப்படியாலும் நான் போர்புரியமாட்டேன்' என்று கூறி உறவினர்களின் பிரிவினால் உண்டான வருத்தத்தால் சலிக்கப்பெற்ற மனத்தையுடையவனாய்

## ஸ்ரீவேதாந்த தேசிகர் அருளிய
# கீதார்த்த சங்கிரகம்

### தனியன்கள்

◈◈◈◈◈◈

கட்டப் பொருள்விரித்த காசினியி னுன்மறையி
னிட்டப் பொருளியம்பு மின்பொருளைச்- சிட்டர்தொழும்
வேதாந்த தேசிகனை மேவுவார் தங்கடிருப்
பாதாம் புயமடியேன் பற்று.

**காசினியில்**–*பூமியில்*, **கட்டப்பொருள் விரித்த**–(*அறிவதற்) கடினமான அர்த்தங்களை விரித்துக்கூறுகின்ற*, **நான மறையின்**—*நான்கு வேதங்களின்*, **இட்டப்பொருள் இயம்பும்**–*இஷ்டமான அர்த்தங்களைக் கூறுகின்ற*, **இன் பொருளை**—*இனிய ப்ராப்ய வஸ்துவாயுள்ளவரும்*, **சிட்டர் தொழும்**—*நல்லோர்களால் தொழப்படுமவருமான*, **வேதாந்ததேசிகனை** - *ஸ்ரீவேதாந்ததேசிகனை*, **மேவுவார்தங்கள்** — *அடைகின்றவர்களுடைய*, **திருப்பாதாம்புயம்**—*திருவடிகளாகிய தாமரை* **அடியேன் பற்று**—*அடியேனுக்கு அடைக்கலமாகும்*.

கீதை மொழிந்தருளும் வேதாந்த தேசிகனர்
பாதார விந்தமலர் பற்று.

**கீதை மொழிந்தருளும்** — *கீதையின் ஸாரப்பொருளை, (கீதார்த்தசங்கிரகமென்னும் நூலில்) அருளிச்செய்தவரான*.

---

உரைக்கின்ற, *மேய பொருள் இங்கு முடிந்தது*—பொருந்திய பொருள் இங்கு முடிவுபெற்றது.

வாதிகேஸரி அழகியமணவாள ஜீயர் அருளிய
பகவத்கீதை வெண்பாவில் முதல் அத்தியாயம் முற்றிற்று.

---

*அம்போடுகூடிய வில்லைக் கைவிட்டுத் தேரின் உபஸ்தப்ரதேசத்தில் உட்கார்ந்துவிட்டான் என்கை.*

ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி தாஸன் இயற்றிய
கீதார்த்த விவரணத்தில் முதல் அத்தியாயம் முற்றிற்று.

வேதாந்த தேசிகனுர்—*ஸ்ரீவேதாந்தேதேசிகனுடைய* பாதார விந்தமலர் *திருவடித்தாமரை*, பற்று—(எனக்குத்) *தஞ்சமாகும்.*

*கீதை முழுவதின் ஸாரப்பொருள்.*

1. கருமமு ஞானமுங் கொண்டெழுங் காதலுக் கோரிலக்கென்
றருமறை யுச்சியு ளாதரித் தோது மருமபிரமந்
திருமக ளோடு வருந்திரு மாலென்று தானுரைத்தான்
றருமமுகந்த தனஞ்சய னுக்கவன் சாரதியே

தருமம் உகந்த—*தர்மத்தில் விருப்பமுள்ள*, தனஞ்சய னுக்கு—*அர்ஜுநனுக்கு*, அவன சாரதி—*அவனுடைய தேர்ப் பாகனுகிய கண்ணன்*, கருமமும ஞானமும் கொண்டு—*கர்மயோகத்தையும் ஜ்ஞாநயோகத்தையும் (அங்கமாகக்) கொண்டு*, எழும்—*மேன்மேல் வளர்கின்ற*, காதலுக்கு—*பக்தி யோகத்திற்கு*, ஓர் இலக்கு என்று—*ஒரே விஷயம் என்று*, அரு மறை உச்சியுள்—*(அறிதற்கு) அரிய வேதாந்தத்தில்*, ஆதரித்து ஓதும—*கொண்டாடிக் கூறப்படுகின்ற*, அரும் பிரமம்—*(அடைதற்கு) அரிய ப்ரஹ்மம்*, திருமகளோடு வரும்—*(எப்பொழுதும்) பெரியபிராட்டியாரோடு தோன்றுகிற*, திருமால் என்று—*நாராயணனே என்று*, தான் உரைத்தான்—*தானே அருளிச்செய்தான்.*

*முதல் அத்தியாயத்தின் ஸாரப்பொருள்.*

2. உகவை யடைந்த வுறவுடை யார்பொர லுற்றவந்நாட்
டகவுட னன்பு கரைபுர ளத்தரு மத்தளவின்
மிகவுள மஞ்சி விழுந்தடி சேர்ந்த விசயனுக்கோர்
நகையுட னுண்மை யுரைக்க வமைந்தன னாரணனே.

உகவை அடைந்த—*ஐச்வர்யச் செருக்கையுடையரா யிருந்த*, உறவுடையார்—*துரியோதனுதியரான உறவினர்*, பொரலுற்ற அந்நாள்—*போர்செய்யத்தொடங்கிய அக்காலத்தில்*, தகவுடன்—*கருணையுடன்*, அன்பு கரைபுரள—*அன்பு கரை புரண்டோட*, தருமத்து அளவில்—*யுத்த தர்மவிஷயத்திலும்*, உளம் மிக அஞ்சி—*(அதர்மமென) மனம் மிகப்பயந்து*, விழுந்து அடி சேர்ந்த—*திருவடிகளில் விழுந்து சரணமடைந்த*, விசயனுக்கு—*அர்ஜுநனுக்கு*, நாரணன்—*(கண்ணனுக அவ*

## ஆளவந்தார் அருளிய
# கீதார்த்த ஸங்க்ரஹம்
[இரண்டாவது அத்தியாயத்தின் சுருக்கம்]

नित्यात्मासङ्गकर्मेहागोचरा सांख्ययोगधीः ।
द्वितीये स्थितधीलक्षा प्रोक्ता तन्मोहशान्तये ॥ ६ ॥

6. நித்யாத்மாஸங்க₃கர்மேஹாகோ₃சரா ஸாங்க்₂யயோக₃தீ₄:
த்₃விதீயே ஸ்தி₂ததீ₄லக்ஷா ப்ரோக்தா தந்மோஹஶாந்தயே ||

**நித்ய ஆத்ம அஸங்க₃ கர்ம ஈஹா கோ₃சரா**—என்றுமிருக்கும் ஆத்மதத்துவமென்ன, பற்றற்ற கர்மாநுஷ்டானமென்ன இவற்றை விஷயமாகக்கொண்டதாய், **ஸ்தி₂ததீ₄ லக்ஷா**–ஸ்தி₂தப்ரஜ்ஞதையை லட்சியமாகக்கொண்டதான, **ஸாங்க்₂ய யோ₃கதீ₄:**—ஆத்மஜ்ஞானமும், கர்மயோகத்தைப் பற்றிய அறிவும், **தந்மோஹஶாந்தயே**—அர்ஜுனனின் மயக்கம் நீங்குவதற்காக, **த்₃விதீயே**-இரண்டாம் அத்தியாயத்தில், **ப்ரோக்தா**—உபதேசிக்கப்படுகிறது.

---

தரித்த) ஸ்ரீமந்நாராயணன், **ஓர் நகையுடன்**—ஒப்பற்ற புன்சிரிப்புடன், **உண்மை உரைக்க**–உண்மையை உபதேசிக்க, **அமைந்தனன்**—பொருந்திநின்றான்.

---

### கீதார்த்த விவரணம் இரண்டாமத்தியாயம்

**இரண்டாவது அத்தியாயார்த்தச் சுருக்கம்:**—இவ்வத்தியாயத்திற்கு ஸாங்க்யயோகம் என்று பெயர் கூறப்படுகிறது. ஸங்க்யையாவது புத்தி. புத்தியால அறியப்படும் நித்யமான ஆத்மதத்துவம் ஸாங்க்யம எனப்படுகிறது. "யோக₃: ஸந்நஹநோபாய" என்கிற நிகண்டுவின்படியே யோக₃சபதம உபாயத்தைக் குறிக்கிறது; இங்கு முன் ஸாங்க்யமெனப்பட்ட நித்யமான ஆத்மதத்துவத்தை அடையும் வழியான கர்மயோகம் கூறப்படுகிறது. பற்றுவைக்காமல் செய்யப்படும கர்மாநுஷ்டானமாகிற இக்கர்மயோகத்தைப்பற்றிய அறிவும், ஸாங்க்யம் எனப்படும் ஆத்மதத்வத்தைப்பற்றிய அறிவும் இவ்வத்தியாயத்தில் கூறப்படுகின்றன. "ஏஷா தே பி₄ ஹிதா

## பகவத்கீதை வெண்பா—அத்தியாயம் 2.

### ஸாங்க்யயோகம்

#### அத்தியாயப்பொருளின் சுருக்கம்



*மேலிரண்டா மோத்தால் விசயன் வெறுப்பகற்றக்*
*கோலி யுயிருடலின் கூற்றிவைகள்—காலியுடன்*
*போமாயன் மன்னுயிர்கள் பொன்றாமை முன்னகமா*
*மாமாயன் சொன்னான் மகிழ்ந்து.*

*காலியுடன் போம் ஆயன்*—பசுக்களின் பின்போகும் இடையனும், *மாமாயன்* — பேராச்சரியமான ஸ்வரூபரூபகுணவிபூதிகளையுடையவனுமான கண்ணன், *விசயன் வெறுப்பு அகற்ற கோலி*—அர்ஜுனனுக்கு (யுத்தத்தினாலுண்டான) வெறுப்பை நீக்கநினைத்து, *மன் உயிரின் பொன்றாமை முன்னகமா*—நிலைநிற்கும் ஆத்மாவின் அழியாமையை முன்னிட்டுக்கொண்டு, *உயிர் உடலின் கூற்றிவைகள்*—உயிரினுடையவும், உடலினுடையவும் (அழியாமை, அழியும் தன்மை முதலான) இத்தன்மைகளை, *மேல் இரண்டாம் ஓத்தால்*—அடுத்ததான இரண்டாமத்தியாயத்தினால், *மகிழ்ந்து சொன்னான்*—மகிழ்ச்சியுடன் உபதேசித்தான்.

**1. தண்கொ ளருளாலே சூழ்வுற்ற தார்விசயன்**
**கண்க ளழுநீர்க் கலுழியெழ--வெண்குலைந்த**
**வண்ணங்கண் டாங்கே மதுசூ தனனவன்ற**
**னெண்ணங்கொண் டதுரைத்தா னென்று.**

---

ஸாங்க்யே புத்திர்யோகே த்விமாம் ச்ருணு" [கீதை 2-39] [ஸாங்க்யமாகிற ஆத்மதத்துவத்தைப்பற்றிச் சொல்லவேண்டியதைச் சொல்லிவிட்டேன்; யோகவிஷயத்தில் இனிவரும் வார்த்தைகளைக் கேட்பாயாக.] என்கிற ச்லோகத்திற்குமுன் பல ச்லோகங்களில் ஆத்மதத்துவத்தைப்பற்றிய அறிவும் பின் ச்லோகங்கள் பலவற்றில் கர்மயோகத்தைப்பற்றிய அறிவும் கூறப்படுகின்றன. அதற்குப்பின் இக்கர்மயோகாநுஷ்டானத்தால இச்சேதனனுக்கு ஸ்திதப்ரஜ்ஞனாயிருக்கும் நிலையொன்று ஏற்படுகிறது (இதுவே ஜ்ஞானயோகம் எனப்படுகிறது) என்பதும் இந்த ஜ்ஞானயோகத்தால் ஆத்மஸாக்ஷாத்காரம் ஏற்படுகிறது என்பதும் இவ்வத்தியாயத்தில் அர்ஜுனனின் மயக்கம் தெளிவதற்காகக் கூறப்படுகின்றன.

## ॥ श्रीमद्भगवद्गीतायां द्वितीयोऽध्यायः ॥

## பகவத்கீதை இரண்டாமத்தியாயம்

सञ्जय उवाच—

तं तथा कृपयाविष्टमश्रुपूर्णाकुलेक्षणम् ।
विषीदन्तमिदं वाक्यमुवाच मधुसूदनः ॥ १ ॥

**ஸஞ்ஜய உவாச—**

**தம் தத$_2$ா க்ருபயாऽऽவிஷ்டமச்ருபூர்ணுகுலேக்ஷணம் ।**
**விஷீத$_3$ந்தமித$_3$ம் வாக்ய முவாச மது$_4$ஸூத$_3$ந: ॥**

**ஸஞ்ஜய: உவாச**—*ஸஞ்ஜயன் கூறினான்:*— **தத$_2$ா**—*அவ்வண்ணமாக,* **க்ருபயா ஆவிஷ்டம்**--*கருணையால் நிறையப் பெற்றவனும்,* **அச்ருபூர்ணுகுலேக்ஷணம்**-*கண்ணீர் நிறைந்து கலங்கி நிற்கும் கண்களையுடையவனும்,* **விஷீத$_3$ந்தம்**—*எண்ணங்குலைந்திருப்பவனுமான,* **தம்**-*அவ்வர்ஜுனனைக்குறித்து,* **மது$_4$ஸூத$_3$ந:**—*மதுசூதனன்,* **இத$_3$ம வாக்யம் உவாச** -*இந்த வாக்கியத்தை உபதேசித்தான்.*

---

**தண்கொள் அருளாலே சூழ்வுற்ற தார் விசயன்**—*தண்மையு மிக்க அருளாலே நிறையப்பெற்ற மாலையணிந்த அர்ஜுனன்,* **கண்கள் அழு நீர் கலுழி எழ** *கண்களில் கண்ணீர் வெள்ளப் பெருகும் படியாக,* **எண்குலைந்த வண்ணம் கண்டு**—*எண்ணம் நிலைகுலைந்த நிலைமையைக் கண்டு,* **மதுசூதனன்**—*கண்ணன்,* **அவன் தன் எண்ணம் கொண்டு**—*அவ்விசயனின நினைவை உள்ளத்தில் கொண்டு,* **ஏன்று ஈது உரைத்தான்**—*(அவன் காரியத்தைத் தன்னுடையதாக) ஏற்றிட்டுக்கொண்டு இவ் வார்த்தையை உரைத்தான்.*

---

*1.* (தத$_2$ா) தகாதவிடத்தில். (க்ருபயாவிஷ்டம்) 'கிருபையாவது மனத்திலுள்ள வருத்தம' என்று தாத்பர்யசந்திரிகை. (அச்ருபூர்ணுகுலேக்ஷணம்) 'உள்ளிருக்கும் வருத்தம கண்ணீரினமூலம் வெளிபோயும் வெள்ளமிட்டது. (விஷீத$_3$ந்தம்) முன் அத்தியாயத்தில் சொல்லியபடி வருத்தத்தையடைந்து உட்கார்ந்து விட்டவனை. (மது$_4$ஸூத$_3$ந:) ரஜோகுணமும் தமோகுணமும் வடிவெடுத்த மதுகைடபர்களை அழித்தவன் என்கையாலே, அர்ஜுனனுடைய சோகத்

श्रीभगवानुवाच–
कुतस्त्वा कश्मलमिदं विषमे समुपस्थितम् ।
अनार्यजुष्टमस्वर्ग्यमकीर्तिकरमर्जुन ॥ २ ॥

ஶ்ரீப4க3வாநுவாச—
குதஸ்த்வா கச்மலமித3ம் விஷமே ஸமுபஸ்தி2தம் ।
அநார்யஜுஷ்டமஸ்வர்க்3யமகீர்த்திகரமர்ஜுந ॥

**அர்ஜுந**—*அர்ஜுநா!* **அநார்யஜுஷ்டம்**-*அறிவற்றவர்களால் அடையப்படுவதும்,* **அஸ்வர்க்3யம்**—*மறுமைக்குத் தடையாயிருப்பதும்,* **அகீர்த்திகரம்**—*இகழ்வுக்குக் காரணமானதுமான,* **இத3ம் கச்மலம்**—*இந்த வருத்தம்,* **விஷமே** —

---

2, எத்தாலே யுன்னைத் தகாவிடத்தே யிக்கலக்கஞ்
சத்தானோர் சாராது சார்ந்ததுதா - னித்தாலே
மேலுலக மில்லை மிகுபழியாம் பார்த்தனே
யேலுமதன் றேகா ணிது.

**பார்த்தனே!**—*அர்ஜுனனே!* **சாத்தனோர் சாராது**—*நல்லவர்களை வந்தடையாததான,* **இக்கலக்கம்**-*இந்தக்கலக்கம்,* **தகா இடத்தே**—*தகாத இடத்தில்,* **எத்தாலே உன்னைச் சார்ந்ததுதான்**-*எதனால் உன்னை வந்தடைந்தது?* **இத்தாலே**—*இதனாலே,* **மேல் உலகம இல்லை**—*மேலுலகங்கள் இல்லாமற்போகும்;* மிகு

---

*திற்கும் காரணமான ரஜஸ்தமோகுணங்களை அழிக்கப்போகிறான் என்று உணர்த்துகிறார்.*

*2. (கச்மலம்) மூர்ச்சையடைந்தாற்போல் என்னத்தக்க வருத்தம். (விஷமே) வருந்தத்தகாத இடமான விஷயத்தில். (அநார்யஜுஷ்டம்) "அதத்வேப்4ய: குதர்க்கேப்4ய: ஆராத்–தூ3ராத் யாதா பு3த்3தி4ர் யேஷாம் தே ஆர்யா:" [பொய்களினின்றும் குயுக்திகளினின்றும் வெகுதூரத்தில் நிற்கும் அறிவையுடையவர்கள் ஆர்யர்கள்] என்பது ஆர்யபதவ்யுத்பத்தி. ஆர்யரல்லாதவர்களால் அடையப்படுவது என்றேனும் ஆர்யர்களால் அடையப்படாதது என்றேனும் கொள்ளலாம். (அஸ்வர்க்3யம்) சுவர்க்கசப்தம் மோக்ஷமுள்ளிட்ட மறுமைப்*

தகாதவிடத்தில், குத:-எதற்காக, த்வா—உன்னை, ஸமுபஸ்திதம்—வந்தடைந்திருக்கிறது?

क्लैब्यं मा स्म गमः पार्थ नैतत्त्वय्युपपद्यते।
क्षुद्रं हृदयदौर्बल्यं त्यक्त्वोत्तिष्ठ परन्तप॥ ३॥

**3. க்லைப்₃யம் மா ஸ்ம க₃ம: பார்த்த₂ நைதத் த்வய்யுபபத்₃யதே।**
**க்ஷுத்₃ரம் ஹ்ருத₃யதௌ₃ர்ப்ப₃லயம் த்யக்த்வோத்திஷ்ட₂ பரந்தப॥**

**பார்த்த₂**—குந்தீபுத்திரனே! **க்லைப்₃யம்**—பயங்கொள்ளித்தனத்தை, **மா ஸ்ம க₃ம:**-அடையாதே; (ஏனெனில்) **ஏதத்**-இத்தன்மை, **த்வயி**—உன்னிடத்தில், **ந உபபத்₃யதே**-பொருந்துவில்லை; **பரந்தப**—எதிரிகளை அழிப்பவனே! **க்ஷுத்₃ரம்**—மிகத்தாழ்ந்ததான, **ஹ்ருத₃யதௌ₃ர்ப்ப₃லயம்** — மனோபலமின்மையை **த்யக்த்வா**-விட்டு, **உத்திஷ்ட₂**-எழுந்திரு.

---

**பழி ஆம்**—மிகுந்த பழி உண்டாகும்; **இது**-இக்கலக்கம், **ஏலுமது அன்றே காண்**-ஏற்றுக்கொள்ளக்கூடியது அன்றல்லவோ?

**3. இந்த வலித்தனததை யெய்தாதே யீதுன்பால்**
**வந்தணைவ தல்லகாண் மன்னவனே— குந்தி**
**சிறுவனே நெஞ்சிளைப்பாஞ் சிற்றியல்பை நீங்கி**
**யுறுவதே கொண்டெழுநீ யுற்று.**

**குந்தி சிறுவனே! மன்னவனே!**—குந்தியின் பிள்ளையான அரசனே! **இந்த அலித்தனத்தை எய்தாதே**—இந்தப் பேடித்தனத்தை அடையாதே! **ஈது**-இது, **உன்பால்**-உன்னிடம் **வந்து அணைவது அல்லகாண்**—வந்து அடையுககூடியதல்லகாண்! **நெஞ்சிளைப்பாம சிற்றியல்பை**-மனவலியினமையாகிற தாழ்ந்த தன்மையினின்றும், **நீங்கி**-நீங்கப்பெற்று, **உறுவதே கொண்டு**-அடையத்தக்க மனோபலததையேகொண்டு **உற்று**-(உன்னிருப்பிடத்தை) அடைந்து, **எழு**-(போர்புரிய) எழுந்திருப்பாயாக.

---

பலன்கள் எல்லாவற்றுக்கும் உபலக்ஷணம். 'விரோதி' என்னுமாத்தத்தில் 'நஞ்' பிரயோகிக்கப்பட்டுள்ளது. மற்றுமைப்பலன்களுக்கு விரோதி என்றபடி. (அகீர்த்திகரம்) புகழுக்கு விரோதியான பழியை விளைப்பது

॥भा॥ एवमुपविष्टे पार्थे कुतोऽयमस्थाने समुपस्थितः शोक इत्याक्षिप्य तमिमं विषमस्थं शोकमविद्वत्सेवितं परलोकविरोधिनमकीर्तिकरमतिक्षुद्रं हृदयदौर्बल्यकृतं परित्यज्य युद्धायोत्तिष्ठेति श्रीभगवानुवाच॥

अर्जुन उवाच—

कथं भीष्ममहं संख्ये द्रोणं च मधुसूदन।
इषुभिः प्रतियोत्स्यामि पूजार्हावरिसूदन॥४॥

---

3. (க்லைப்3யம்) 'க்லீப3:' என்றால் அலியைக்குறிக்கும்; க்லீபனின் (அலியின்) தன்மை க்லைப்3யமாகிறது. இங்கு அலித்தனமாவது பயங்கொள்ளித்தனம். (க்ஷுத்3ரம்) மஹாவீரனான அர்ஜுனன் இந்த பயங்கொள்ளித்தனத்தை அடைவது மிகத்தாழ்ந்தது என்று கருத்து. (ஹ்ருத3ய தௌ3ர்ப3ல்யம் த்யக்த்வா) மனோபலமின்மையை விட்டு; இதை விட்டால் உன் வருத்தமும் நீங்கும் என்று கருத்து. காரணசப்தத்தையிட்டுக் காரியத்தைக் குறிக்கிறதாய், ஹ்ருத3யதௌர்ப்பல்யத்தால் ஏற்பட்ட க்லைப்யம் (பயங்கொள்ளித்தனம்) என்றும் பொருள் கொள்ளலாம். (உத்திஷ்ட2 பரந்தப) பரந்தபன் (எதிரிகளைத் தவிக்கச்செய்பவன்) என்னும் பெயரை நிலைநிறுத்திக்கொள்ளப் பார்த்தாயாகில் போர்புரிய எழுந்திருப்பாய் என்று கருத்து. அர்ஜுனனுடைய நற்குடிப்பிறப்பு, கல்வி கேள்விகள், சௌர்யவீர்யாதிகள் முதலியவற்றை உணர்த்துவதற்காக, 'அர்ஜுந', 'கௌந்தேய', 'த்வா', 'த்வயி', 'பரந்தப' என்னும் சப்தங்களையிட்டு அவன் வருத்தமடைவது பொருந்தாது என்று காட்டுகிறார்.

ஆக, இம்மூன்று ச்லோகங்களாலே, முன் அத்தியாயத்திற் சொல்லியபடி அர்ஜுனன் ரதோபஸ்தத்தில் உட்கார்ந்தவுடன் 'தகாதவிடத்தில் இந்த சோகம் உனக்கு ஏன் ஏற்பட்டது?' என்று ஆக்ஷேபித்து, தகாதவிடத்திலுண்டானதும், அறிவற்றவர்களாலேயே அடையப்படுவதும், பரலோகவிரோதியும், இகழ்ச்சியை அளிப்பதும், மிகத்தாழ்ந்ததும், மனவலியின்மையால் ஏற்படுவதுமான இந்த வருத்தத்தைவிட்டுப் போர்புரிய எழுந்திருப்பாயாக என்று பகவான் அருளினான் என்றதாயிற்று. 3.

4 கத₂ம் பீ₄ஷ்மமஹம் ஸங்க்₂யே த்₃ரோணம் ச மது₄ஸூத₃ந।
இஷுபி₄: ப்ரதியோத்ஸ்யாமி பூஜார்ஹாவரிஸூத₃ந ॥

அரிஸூத₄ந—*எதிரிகளை அழிப்பவனே!* மது₄ஸூத₃ந - *மதுவெனும் அசுரனை அழித்தவனே!* அஹம்-*நான்,* ஸங்க்₂யே-*யுத்தத்தில்,* பூஜார்ஹௌ-*பூஜிக்கத்தக்கவர்களான,* பீஷ்மம்—*(பாட்டனரான) பீஷ்மரையும்,* த்₃ரோணம் ச ப்ரதி—*(ஆசார்யரான) துரோணரையும் குறித்து,* கத₂ம்—*எப்படி,* யோத்ஸ்யாமி—*சண்டை செய்வேன்?*

---

4. அவ்வளவி லந்த வருச்சுனனு மண்ணலைப்பார்த்
தெவ்வகையாம் பாட்ட னெழிற்குருவா—மிவ்வவரைப்
பூசிப்ப தன்றிப் பொருவதேதம் பாலென்று
வாசிப் படவுரைத்தான் மற்று.

அவ்வளவில்—*இப்படிக் கண்ணன் உரைத்தவளவில்,* அந்த அருச்சுனனும—*அந்த அர்ஜுனனும்,* அண்ணலைப் பார்த்து-*புருஷோத்தமனைப் பார்த்து,* 'பாட்டன்-*பாட்டனாகிற பீஷ்மர்,* எழில் குருவாம் இவ்வவரை—*அழகிய ஆசாரியரான துரோணர் ஆகிய இவர்களை,* யாம்-*நாம்,* பூசிப்பது அன்றி—*பூஜிக்கலாமேயல்லாமல்,* எவ்வகை அம்பால் பொருவது ஏது—*எந்தவிதமான அம்பாலும் சண்டைபுரிவது எப்படி?'* என்று-*என்று,* வாசிபட உரைததான்—*(போர்புரிய நிற்பவர்களின்) பெருமை தெரியும்படியாகச் சொன்னான்.*

---

4. (அர்ஜுந உவாச) மறுபடியும் பார்த்தன் உறவினர்களிடம் அன்பினாலும் கருணையினாலும் க்ஷத்ரியதர்மத்தையே அதர்மமாக எண்ணி பயந்து கலங்கிப் பரமபுருஷன் சொன்ன நல்வார்த்தையை உணராமல் மறுபடியும் சில வார்த்தைகள் சொன்னான் என்கிறார். (த்₃ரோணம் ச) சகாரம் அநுக்தஸமுச்சயமாய், மற்றுமுள்ள தூரியோதனதியரையும் காட்டுகிறது. (பூஜார்ஹௌ இஷுபி₄: கத₂ம் ப்ரதியோத்ஸ்யாமி) பூக்களையிட்டுப் பூசிக்கத்தக்கவர்களை அம்புகளாலே எப்படி அடிப்பேன்? (மது₄ஸூத₃ந அரிஸூத₃ந) நீயும் மது முதலான எதிரிகளை அழித்தாயேயொழிய, ஸாந்தீபினி முதலான ஆசார்யர்களின்பேரிலோ அம்புவிட்டாய்? 'அஹம்' என்னும்

गुरूनहत्वा हि महानुभावान् श्रेयश्चर्तुं [श्रेयो भोक्तुं] भैक्ष्यमपीह लोके।
हत्वार्थकामांस्तु गुरूनिहैव भुञ्जीय भोगान् रुधिरप्रदिग्धान् ॥ ५॥

5. கு$_3$ரூநஹத்வா ஹி மஹாநுபா$_4$வாந்
ச்ரேயச்சர்த்தும் [ச்ரேயோ போ$_4$க்தும்] பை$_4$க்ஷமபீஹ லோகே ।
ஹத்வாऽர்த்த$_2$காமாம்ஸ்து கு$_3$ரூநிஹைவ
பு$_4$ஞ்ஜீய போ$_4$கா$_3$ந் ருதி$_4$ரப்ரதி$_3$க்$_3$தா$_4$ந் ॥

மஹாநுபா$_4$வாந்-*மதிக்கத்தக்கவர்களான*, கு$_3$ரூந்-(*பீஷ்மர் துரோணர் முதலான*) *பெரியவர்களை*, அஹத்வா—*கொல்லாமல்*, இஹலோகே—*இவ்வுலகில்*, பை$_4$க்ஷம போ$_4$க்தும் அபி—*பிச்சை எடுத்து உண்பதும்*, ச்ரேய: ஹி—*சிறந்ததன்றோ*,

---

5. தொழப்படுமே லோரைத் தொலையா துலகி
லெழப்படுத னன்றே யிரப்பில்—விழப்படுத்தி
வாய்ந்த பொருள் காமித்த மற்றவரை யக்குருதி
தோய்ந்ததுவோ போகத்தின் றுய்ப்பு.

தொழப்படும் மேலோரை— (*நம்மால்*) *வணங்கப்படுகிற பெரியவர்களை*, தொலையாது—*அழிக்காமல்*, உலகில—*இவ்வுலகில்*, இரப்பில் எழப்படுதல் நன்றே—*பிச்சையெடுத்து அழிந்தொழிவது நல்லதே*, மற்று வாய்ந்த பொருள் காமித்த அவரை-

---

*பதத்தாலே தன்னுடைய நற்குடிப்பிறப்பு முதலானவற்றை உணர்த்துவதனாலும், இவ்வாறு செயலைச் செய்வது தனக்குத் தகாது என்று உணர்த்துகிறான்.* 4.

5. *'பீஷ்மத்ரோணாதிகளைக் கொல்லவில்லையாகில் உண்ண உணவும் உனக்குக் கிடைக்காதே' என்று கண்ணனுக்குக் கருத்தாகக்கொண்டு கூறுகிறான்; (கு$_3$ரூநஹத்வா... பை$_4$க்ஷம் சர்த்தும் ச்ரேய:) பீஷ்மாதிகளைக் கொல்லாவிடில் உணவு கிடைக்காதெனில், பிச்சையெடுத்து உண்பதும், பிச்சை கிடைக்காவிடில் அழிந்தொழிவதுங்கூட மிகச்சிறந்தது. இவர்களைக் கொல்வதால் வரும் நரகத்துன்பத்தைக் காட்டிலும், இவர்களைக்கொல்லாமல் பிச்சையெடுப்பதால் வரும் இழிவும் அழிவுங்கூடச் சிறந்தது என்று*

அர்த்த₂காமாந்—பொருளில் மிகவும் பற்றுள்ள, கு₃ரூந் ஹத்வாது—பெரியவர்களைக் கொன்றுவிட்டு, ருதி₄ரப்ரதி₃க்₃த₄ாந்-(அவர்களுடைய) ரத்தத்தால் நனைந்திருக்கும், போ₄க₃ாந்—(அவர்களுடைய) போகங்களை, இஹ ஏவ—அவர்களுடைய இடத்திலேயே (இருந்துகொண்டு), கத₂ம் பு₄ஞ்ஜீய-எப்படிப் புசிப்போம்?

॥ भा ॥ पुनरपि पार्थः स्नेहकारुण्यधर्माधर्मभयाकुलो भगवदुक्तं हिततममजानन्निदमुवाच– भीष्मद्रोणादिकान् गुरून् बहुमन्तव्यान् कथमहं हनिष्यामि? कथंतरां भोगेष्वतिमात्रसक्तान् तान् हत्वा तैर्भुज्य-

---

அப்படியல்லாமல், தமக்கு வாய்த்த பொருளை மிகவிரும்பும் அவர்களை, விழப்படுத்தி—(போரில்) விழும்படியாக அழித்து, அக்குருதி தோய்ந்ததுவோ — அவர்களுடைய ரத்தத்தைத் தோய்த்து உண்பதோ, போகத்தின் துய்ப்பு—போகத்தின் அனுபவமாகும்?

---

கருத்து. (அர்த்தகாமாந்குரூந்) அவர்கள் பொருளை விரும்பாதவராயிருந்தாலும் ஒருவாறு அவர்களுடைய போகங்களை நாம் எடுத்துக் கொள்ளலாம். அவர்கள் பொருளில் பெரும்பற்று வைத்திருக்கையில் பசித்தவன் கையிலுள்ள சோற்றைப்பிடுங்குவதுபோல் நாம் அவர்களுடைய போகத்தை பலாத்கரித்து அபஹரிக்கலாமோ? (ஹத்வா ருதி₄ரப்ரதி₃க்₃த₄ாந் போ₄க₃ாந் இஹைவகத₂ம் பு₄ஞ்ஜீய) அவர்களைக் கொன்று, அவர்களனுபவித்த போகங்களை அவர்களுடைய ஆஸனங்களிலேயே உட்கார்ந்துகொண்டு, அவர்களுடைய ரத்தத்திலேயே தோய்த்து ருசிபார்த்து எப்படி உண்பது? ‘கத₂ம்’ [எப்படி] எனபதை முன்ச்லோகத்திலிருந்து வருவித்துப் பொருள் கொள்ளவேண்டும். அவர்களைக் கொன்று பெறும் போகம் ரத்தத்தால் நனைந்த அவர்களை நினைவுறுத்துவதன்மூலம், தானும் ரத்தச் சோறுபோலே புஜிக்கத்தகாததாயிருக்குமாகையாலே இம்மையிலும் இன்பமில்லை என்று கருத்து. ஆக, இந்த ச்லோகத்தால் பீஷ்மத்ரோணாதிகளைக் கொல்வது இம்மை மறுமைகளிரண்டிலும் துன்பத்தையேதரும் என்று உணர்த்தப்பட்டதாயிற்று. பீஷ்மத்ரோணாதிகளோடு போர்புரிவது இகழத்தக்கது என்றுன் முந்திய ச்லோகத்

मानांस्तानेव भोगान् तद्रुधिरेणोपसिच्य तेष्वासनेपूपविश्य भुञ्जीय ? ॥४॥५॥

न चैतद्विद्मः कतरन्नो गरीयो यद्वा जयेम यदि वा नो जयेयुः ।
यानेव हत्वा न जिजीविषामः तेऽवस्थिताः प्रमुखे धार्तराष्ट्राः ॥ ६ ॥

6. ந சைதத்$_3$வித்$_3$ம: கதரந்நோ க$_3$ரீய:
யத$_3$வா ஜயேம யதி$_3$வா நோ ஜயேயு: ।
யாநேவ ஹத்வா ந ஜிஜீவிஷாம:
தேऽவஸ்தி$_2$தா: ப்ரமுகே$_2$ தா$_4$ர்த்தராஷ்ட்ரா: ॥

**யத்$_3$வா ஜயேம**—*நாங்கள் (அவர்களை) ஜயிப்போமோ,* **யதி$_3$வா ந: ஜயேயு:**– *(அவர்கள்) நம்மை ஜயிப்பார்களோ (என்றும்),* **கதரத் ந: க$_3$ரீய:**–*(இவ்விரண்டினுள்) எது நமக்குச் சிறந்தது (என்றும்)* **ந வித்$_3$ம:**–*அறியோம், (வயம்–*

6. ஏதறியோஞ் சீரிதென யாம்வெல் லவுமாகு
மீதவர்கள் வெல்லவுமாம் வேறில்லை—பூதலத்தில்
யாவரைநாங் கொன்று விராதே முடிகின்றே
மாவரிவர் போர்முன் னமர்ந்து.

**யாம் வெல்லவும் ஆகும்**—*(இப்போரில்) நாம் ஜயித்தாலும் ஜயிக்கலாம்;* **அவர்கள் மீது வெல்லவும் ஆம்**—*அவர்கள் எங்களை ஜயித்தாலும் ஜயிக்கலாம்;* **வேறில்லை**–*(இவ்விரண்டு நிலையைத்தவிர) வேறு நிலையில்லை;* **ஏது சீரிது என**—*இவ்விரண்டினுள் எது சிறந்தது என்று,* **அறியோம்**–

*...தில்; அவர்களைக் கொன்று அவர்களுடைய போகங்களை அனுபவிப்பது மிகவும் இகழத்தக்கது என்கிறான் இந்த ச்லோகத்தில்.* 5.

*6. 'போரைத் தொடங்கினபின்பு போரிலிருந்து மீண்டீர்களாகில், துரியோதனுதியர் உன்னையும் உன்னுடைய அண்ணன் தம்பிகளையும கொன்று விடுவரே; ஆகையால் அவர்களை ஜயிப்பதற்காக நீ அவசியம் போர்புரிந்தே தீரவேண்டும்' என்று கண்ணனுக்குக் கருத்தாகக்கொண்டு கூறுகிறான்,-(ந சைதத்$_3$ வித்$_3$ம:-யத்$_3$வா ஜயமே யதி$_3$வா நோ ஜயேயு:) நாங்கள் அவர்களை ஜயிப்போமா?*

நாங்கள்) யாந் ஹத்வா—எவர்களைக்கொன்று, ந ஜிஜீவிஷாம:- வாழவே விரும்பவில்லையோ. தே தா₄ர்த்தராஷ்ட்ரா: ஏவ— அந்த துரியோதனாதியரே. ப்ரமுகே₂-நமக்கு முன்னிலையில். அவஸ்தி₂தா:-(போர்புரிய) நிற்கிறார்கள்.

कार्पण्यदोषोपहतस्वभावः
पृच्छामि त्वा धर्मसम्मूढचेताः।
यच्छ्रेयः स्यान्निश्चितं ब्रूहि तन्मे
शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम्॥७॥

---

நாம் அறியமாட்டோம். பூதலத்தில்—இவ்வுலகில், நாம்-- நாங்கள், யாவரை கொன்றால் இராதே முடிகின்றோம்—எவர் களைக் கொன்றுவிட்டு உயிர்தரியாமல் (நாமும்) அழிந்து விடுவோமோ, இவர்—அப்படிப்பட்ட இந்த துரியோதனாதி யர், போர் முன் அமர்ந்து ஆவர்- (நம்மோடு சண்டைசெய்ய) யுத்தகளத்தின் முன்னிலையிலே பொருந்திநிற்கின்றனர்.

---

அல்லது அவர்கள் எங்களை ஜயிப்பார்களா என்பதை நாங்கள் அறியோம். யுத்தத்தில் ஜயபராஜயங்கள் (வெற்றி தோல்விகள்) நிலையற்றவையாகையாலே. (ந சைதத் வித்₃ம: கதரந்நோ க₃ரீய:) நாங்கள் ஜயிப்பது, அவர்கள் ஜயிப்பது ஆகிய இரண்டில் எது எங்களுக்குச் சிறந்தது என்றும் தெரியவில்லை. எங்களுக்கு எல்லா மான நீயோவெனில நாஙகள் அவர்களை ஜயிப்பதே எங்களுக்கு நலலது என்கிறாய். நான் மாறாக நினைக்கிறேன். ஆகையால் எது சிறந்தது என்று முடிவுகட்டமுடியவில்லை. 'நான் கருதுவதற்கு மாறாக நீ ஏன் நினைக்கிறாய்?' எனில்,-(யாநேவ... தா₄ர்த்தராஷ்ட்ரா:) எந்த துரியோதனாதியராகிற சகோதரரைக் கொன்றபின்பு நாங்கள் உயிர்வாழ விரும்பவில்லையோ, அந்த துரியோதனாதியர் எங்களுக் கெதிராகப் போர்முனையில் நிற்கின்றனர். ஆகையால் அவர்களை நாங்கள் ஜயிப்பதாலும் எங்களுக்கு வாழ்ச்சியில்லை. ஆகையால் தர்மிஷ்டரான நாம் அதர்மவழியிலே அவர்களைக் கொன்று வெற்றி பெறுவதிலும், தர்மாதர்மங்களை அறியாத அவர்களால் கொல்லப் படுவதே எங்களுக்குச் சிறப்பென்று நான் எண்ணுகிறேன் என்று கருத்து. 6.

7. கார்ப்பணயதோ₃ஷோபஹததஸ்வப₄ாவ:
ப்ருச்ச₂ாமி த்வா த₄ர்மஸம்மூட₄சேதா: |
யச்ச்₂ரேய: ஸ்யாந் நிச்சிதம் ப்₃ரூஹி தந்மே
ஶிஷ்யஸ் தேஹம் ஶாதி₄மாம த்வாம ப்ரபந்நம் ||

**கார்ப்பண்ய தோ₃ஷோபஹதஸ்வப₄ாவ:**—*மனவலியின்மையாகிற தோஷத்தால் அழிக்கப்பட்ட தைரியத்தை உடையவனாய்,* **த₄ர்மஸம்மூட₄சேதா:**—*தர்மவிஷயத்தில் மயங்கிய நெஞ்சையுடையவனாய்.* **த்வா**—*உன்னை,* **ப்ருச்ச₂ாமி**—*கேட்கிறேன், (இவ்விஷயத்தில்)* **யத் நிச்சிதம் ச்ரேய: ஸ்யாத்**—

---

7. கார்ப்பணியத் தாற்கலங்கிக் கண்ணா தருமமனத்து
ஓர்ப்பதிலேன் கேட்கின்றே னுன்னையான்—ருற்பரியத்
தேதிறலாஞ் சொல்லதுநீ யானுன் னடியனெனைச்
சாதியுனைத் தாழ்ந்தேனைச் சார்ந்து.

**கண்ணா** — *கண்ணனே!* **கார்ப்பணியத்தால்** — *மனவலியின்மையால்,* **கலங்கி**—*கலக்கமடைந்து,* **தருமம் மனத்து ஓர்ப்பது இலேன்**—*தருமத்தை மனத்தால் ஆராய்ந்து அறியாதவனாயிருக்கிறேன்.* **யான் உன்னை கேட்கின்றேன்**—*நான் உன்னையே கேட்கின்றேன்;* **தாற்பரியத்தே**—*ஆராய்ந்து பார்த்*

---

7. 'உன் கருத்து என்கருத்திலும் வேறுபடுகிறதாகில் நான் செய்யக்கூடியதென்ன?' எனில் கூறுகிறான்; (கார்ப்பண்யதோ₃ஷோபஹதஸ்வப₄ாவ:) ஸ்வபாவம்—தைர்யம். கார்ப்பண்யமாவது; 'இவர்களைக்கொன்று நாம் எப்படி உயிர்வாழ்வோம்' என்னும் மனவலியின்மை; அதுவே தோஷம். அன்றிகே, தோஷமாவது, "குலக்ஷயக்ருதம் தோ₃ஷம" [கீதை 1-38] என்கிறபடியே குலத்தின் அழிவினால் ஏற்படுவது என்றுமாம். கார்ப்பண்ய தோஷங்களினால அழிக்கப்பட்ட தைரியமாகிற தன்மையை உடையவன் என்கை. (த₄ர்மஸம்மூட₄சேதா:) 'குருவதத்தைச் செய்தாவது ராஜ்யஸுகத்தை அனுபவிப்பது தர்மமா? குருவதத்தைச் செய்யாமல் பிச்சையெடுத்தாவது ஜீவிப்பது தர்மமா?' என்று தர்மவிஷயத்தில் மயங்கின நெஞ்சையுடையவன். (த்வா ப்ருச்ச₂ாமி) உன்னைக் கேட்கிறேன். எதையெனில்: (யத் நிச்சிதம் ச்ரேய: ஸ்யாத் தத் மே

(எனக்கு) எது உறுதியாக நன்மை பயக்குமோ, தத்— அதை, மே—எனக்கு, ப்₃ரூஹி—சொல்லுவாயாக, அஹம்—நான், தே—உனக்கு, ஶிஷ்ய:—சிஷ்யனாகிறேன், த்வாம் ப்ரபந்நம்—உன்னை சரணடைந்த, மாம்—என்னை, ஶாதி₄—சிக்ஷிப்பாயாக.

॥भा॥ एवं युद्धमारभ्य निवृत्तव्यापारान् भवतो धार्तराष्ट्राः प्रसह्य हन्युरिति चेत्; अस्तु। तद्वधलब्धविजयादधर्म्यादस्माकं धर्माधर्मविजानद्भिस्तैर्हननमेव [श्रेय] गरीय इति मे प्रतिभातीत्युक्त्वा, यन्मह्यं श्रेय इति निश्चितं, तत् शरणागताय तव शिष्याय मे ब्रूहीत्यतिमात्रकृपणो भगवत्पादावुपससाद॥ ६॥ ७॥

न हि प्रपश्यामि ममापनुद्याद्यच्छोकमुच्छोषणमिन्द्रियाणाम्।
अवाप्य भूमावसपत्नमृद्धं राज्यं सुराणामपि चाधिपत्यम्॥ ८॥

---

தால், திறலாம அது—சிறந்ததாயிருப்பதை, நீ சொல—நீ சொல்லுவாயாக. யான் உன் அடியன்—நான் உன்னுடைய அடியை அடைந்த சீடன்; உனைச் சார்ந்து—உன்னை அடைந்து தாழ்ந்தேனை எனை—சரணடைந்தவனான என்னை; சாதி—சிக்ஷிப்பாயாக.

8. சாலவெதி ரற்றித் தலத்தரசில் வீற்றிருப்பு
மேலமரர் நாயகமு மேவிடினு—ஞாலத்தென்
ஹெல்லைப் புலனுலர்த்துஞ் சோகத்தைப் போக்குவதோ
ரெல்லைப் பொருள் காணேன் யான்.

---

ப்₃ரூஹி) எது உறுதியாக எனக்கு நல்லதோ அதை எனக்குச் சொல்லுவாய் எனக் கேட்கிறேன். உனக்குச் சொல்லவேண்டுமென்னும் நிர்ப்பந்தமென்ன? எனில்: (சிஷ்யஸ் தேஹம் ஶாதி, மாம் த்வாம் ப்ரபந்நம்) நான் உனக்கு சீடன்; அதோடு உன்னை சரணமடைந்தவன்; ஆகையால் நீ எனக்கு அவசியம் உபதேசிக்கவேணும் என்று கருத்து. (சிஷ்யம் ப்ரபந்நம்) வத்₄யன் (கொல்லத்தக்கவன்) ஆயினும், ப்ரபன்னனைக் கைவிடலாகாது என்று வேதம் ஓதாநிற்க, சிஷ்யனாய் ப்ரபந்நனான என்னைக் கைவிடலாமோ என்கை. 7.

8. ந ஹி ப்ரபச்யாமி மமாபநுத்₃யாத்
யச்சே₂ாகமுச்சே₂ாஷணமிந்த்₃ரியாணும் ।
அவாப்ய பூ₄மாவஸபத்நம் ருத்₃த₄ம்
ராஜ்யம ஸுராணுமபி சாதி₄பத்யம் ॥

இந்த்₃ரியாணும்—*கண் முதலான இந்திரியங்களை,* **உச்சே₂ாஷணம்**—*மிகவும் உலர்த்துவதான,* **மம ஶோகம்**—*என்னுடைய வருத்தத்தை,* **யத் அபநுத்₃யாத்**–*யாதொன்று போக்கடிக்குமோ, (தத்-அதை)* **அஹம்**–*நான்,* **பூ₄மௌ**-*இப்புவியில்,* **அஸபத்நம்**–*எதிரிகளற்றதும்,* **ருத்₃த₄ம்**–*செழிப்புள்ளதுமான,* **ராஜ்யம்**—*அரசையும்,* **ஸுராணும் ஆதி₄பத்யம் அபி ச**–*தேவர்*

---

**சால எதிர் அற்று**—*எதிரிகள் அடியோடு இல்லாமல்,* **இத்தலத்து அரசில வீற்றிருப்பும்**-*இப்புவியில் அரசனுக வீற்றிருப்பதையும்,* **மேல் அமரர் நாயகமும்**—*மேலான அமரர்க்குத் தலைமையையும்,* **மேவிடினும்**—*அடைந்தாலும்,* **ஞாலத்து**—*இவ்வுலகில்,* **என் தொல்லை புலன் உலர்த்தும் சோகத்தை**—*என் பழமையான இந்திரியங்களை வற்றச்செய்யும் வருத்*

---

*8. நீயே ஆராய்ந்து தகுந்ததைச் செய்தாலாகாதோ? என்று கண்ணனுக்குக் கருத்தாகக்கொண்டு கூறுகிறுன்: (ந ஹி ப்ரபச்யாமி) நான் காணவேயில்லையே. எதைனில்: (மமாபநுத்₃யாத் யச்சே₂ாகமுச்சே₂ாஷணமிந்த்₃ரியாணும்) என் இந்திரியங்களை உலர்த்தும் வருத்தத்தைப்போக்கும் சிறந்தவழியைக் காண்கின்றிலேன். உங்களுக்குரிய அரசைப்பெற்ருல் இவ்வருத்தம நீங்காதோ? எனில்: (அவாப்யபூ₄மாவஸபத்நம் ருத்₃த₄ம் ராஜ்யம்) (பூ₄மௌ ராஜ்யம்)பூமண்டலம் முழுவதையும் ஒருகுடைக்கீழ் ஆளும் அரசைப் பெற்ருலும் நீங்காது; (அஸபத்நம் ராஜ்யம்) அதிலும் எதிரிகளேயில்லாத அரசைபபெற்ருலும் நீங்காது. (ருத்₃த₄ம் ராஜ்யம்) போக்யங்கள் (இனியபொருள்கள்) போகஉபகரணங்கள் (அவற்றை அனுபவிக்கும் கருவிகள்), போகஸ்தானங்கள் (அவற்றை அநுபவிக்கும் இடங்கள்) ஆகியவற்ருல் நிரம்பிய எதிரற்ற பூமண்டல ராஜ்யத்தைப்பெற்ருலும் என்வருத்தம் நீங்காது. (ராஜ்யம்) அரசனின் தன்மையை. இம்மைப்பெருமையைவிடச் சிறந்த மறுமைப் பெருமையைப் பெற்ருல் நீங்காதோ? எனில்: (ஸுராணும் ஆதி₄*

களுக்குத் தலைவனுயிருக்கும் தன்மையையுங்கூட, அவாப்ய அடைந்தாலும். ந ஹி ப்ரபச்யாமி—காண்கின்றேனல்லேன்.

*सञ्जय उवाच-

एवमुक्त्वा हृषीकेशं गुडाकेशः परन्तपः।
न योत्स्यामीति गोविन्दमुक्त्वा तूष्णीं बभूव ह॥९॥

*ஸஞ்ஜய உவாச—
9 ஏவமுக்த்வா ஹ்ருஷீகேஶம் கு₃டா₃கேஶ: பரந்தப:।
ந யோத்ஸ்யாமீதி கோ₃விந்த₃முக்த்வா தூஷ்ணீம ப₃பூ₄வ ஹ ॥

பரந்தப—எதிரிகளைத் தவிக்கச்செய்பவனான, கு₃டா₃கேஶ:—அர்ஜுனன், ஹ்ருஷீகேஶம்—இருடீகேசனைக்குறித்து, ஏவம் உக்த்வா—இவ்வண்ணம் கூறிவிட்டு, ('அஹம்—நான், ) ந யோத்ஸ்யாமி — போர்புரியமாட்டேன்' இதி — என்று,

---

த்தை, போக்குவது—போக்குவதான, ஓர் எல்லைப்பொருள்—ஒரு சிறந்த வழியை. யான் காணேன்—நான் காணமாட்டேன்.

9. மைவண்ண மாயவனை மன்னன் குடாகேச
னிவ்வண்ணம் வார்த்தை யியம்பியே—தெவ்வண்ணங்
கோலேன்யான் போரென்று கோவிந் தனையுரைத்து
மேலேதுஞ் செய்யான் வெறுத்து.

மை வண்ணம் மாயவனை—மையின் நிறத்தையுடைய கண்ணனை, மன்னன் குடாகேசன்—அரசனான அர்ஜுனன், இவ் வண்ணம்-இப்படியாக, வார்த்தை இயம்பியே-வார்த்தை சொல்லி, 'யான்-நான், போர்—போரிலே, தெவ்வண்ணம்

---

பத்யம்) தேவர்களுக்குத் தலைவனுயிருக்கும் இந்திரனின் பதவியைப் பெற்றாலும் எனவருத்தம் நீங்காது. இவற்றால் பெறும் இன்பத்தைக் காட்டிலும், ப₃ந்து₄வத₄த்தாலுண்டான துன்பமே பெரிதாயிருக்குமாகையால, இவையும அவ்வருத்தத்தைப் போக்கடிக்காது என்று கருத்து. 8.

---

* பொருள் தெளிவாகையால், 'ஸஞ்ஜய உவாச' 'பகவானுவாச' 'அர்ஜுந உவாச' முதலான வாக்கியங்களுக்கு இனி பதவுரை எழுதப்படமாட்டாது.

கோ₃விந்த₃ம உக்த்வா—கோவிந்தனைக்குறித்துச் சொல்லி விட்டு, தூஷ்ணீமபூ₄வ—பேசாமலிருந்தான் (ஹ—வருத் தத்தைக் குறிப்பது).

---

கோலேன்—சண்டைசெய்யமாட்டேன்' என்று கோவிந்தனை உரைத்து—என்று கோவிந்தனிடம் கூறி, வெறுத்து (போரில்) வெறுப்படைந்து, மேல் ஏதும்செய்யான்—மேலே ஒன்றும் செய்யாமலிருந்தான்.

---

9. இபபடிக கூறியபின் அர்ஜுனன் என்ன செய்தான்? என்ன, ஸஞ்ஜயன் கூறுகிறான்:–(ஏவமுக்த்வா ஹ்ருஷீகேசம்) இருடீ கேசனைககுறித்து இப்படிச் சொல்லிவிட்டு. (ஹ்ருஷீகேசம்) "ஹ்ருஷ யந்தி ஹர்ஷயந்தி்திவா ஹ்ருஷீகாணி" [தாங்கள் ஹர்ஷத்தை (இன்பத்தை) அடைகின்றன; அல்லது (ஜீவனை) இன்பததை அடைவிககினறன. ஆகையால் ஹ்ருஷீகங்கள் எனப்படுகின்றன.] என்று ஹ்ருஷீகசப்தவ்யுதபத்தி. இவ்விந்திரியங்களுககுக் கண்ணன் ஈசனுகையாலே கண்ணன் ஹ்ருஷீகேசன் எனப்படுகிறான. முன் ச்லோகத்தில் என் இந்திரியங்களை உலர்த்தும் வருத்தத்தைப் போக்க வழிகாணேன் என்று கூறி ஹ்ருஷீகேசனை (இந்திரியங் களுக்கு ஈசனை) சரணாடைகையாலே, இவனுடைய வருத்தம் நீங்கும் என்று கருத்து. உடையவன் உடைமையை நலிவடைய விடமாட்டா னன்றோ. இனிச் சொல்லப்போகும் நல்வார்த்தைகளைக் கேட்கலாம படி அர்ஜுனனுடைய இந்திரியங்களை நியமிக்கக் கூடியவன் கண் ணன் எனகிறதாகவுமாம். இப்படி உரைத்தவன்தான் யாரெனில்: (குடாகேச:)"நித்ராலஸயே குடாகா ஸ்யாத்"[தூக்கமும் சோம்பலும் 'குடாகா' எனப்படுகின்றன.] என்கிறபடியே தூக்கமும சோம்ப லும் 'குடாகா' என்பபடுகின்றன. அவற்றை நியமித்து அடக்கிய வனுகையாலே அர்ஜுனன குடாகேசன் எனபபடுகிறான். தமோகுணகாரியமான தூக்கத்தையும், சோம்பலையும் அடக்கிய வனுககு, அத்தமோகுணத்தால் ஏற்படும் சோகமோஹங்கள் பொருந்ாது என்று கருத்து. (குடாகேச.) கற்றையாயிருக்கும் மயிர்முடியையுடையவன் என்றுமாம். (பரந்தப:...) எதிரிகளைப் போரில் தவிக்கச்செய்பவன் சோகமோஹங்களை அடைவதும் 'நான் போர்புரியமாட்டேன்' என்பதும் தகாது என்கை. (நயோத்ஸ்யாமீதி கோ₃விந்த₃முக்தவா)'நான் போர் புரியமாட்டேன்' என்று கோவிந்த னிடம் சொல்லி. (கோ₃விந்த₃ம்) கோசப்தம் வாக்கைக்குறிக்கும்;

॥भा॥ एवमस्थाने समुपस्थितस्नेहकारुण्याभ्यामप्रकृतिं गतं, क्षत्रियाणां युद्धं परमधर्ममप्यधर्मं मन्वानं धर्मबुभुत्सया च शरणागतं पार्थमुद्दिश्यात्मयाथात्म्यज्ञानेन युद्धस्य फलाभिसन्धिरहितस्यात्मप्राप्त्युपायताज्ञानेन च विना अस्य मोहो न शाम्यतीति मत्वा, भगवता परमपुरुषेण अध्यात्मशास्त्रावतरणं कृतम्। तदुक्तम्–अस्थानस्नेहकारुण्यधर्माधर्मधियाऽऽकुलम्। पार्थं प्रपन्नमुद्दिश्य शास्त्रावतरणं कृतम्॥ ॥इति॥८॥९॥

तमुवाच हृषीकेशः प्रहसन्निव भारत।
सेनयोरुभयोर्मध्ये सीदमानमिदं वचः॥ १०॥

---

அர்ஜுனனுடைய வருத்தத்தைப்போக்கத்தகும் வாக்கையுடையவன் என்கை. கேசப்தம் பூமியையும் குறிக்கும். "மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தான்" [திருவாய் 9-1-10] என்கிற படியே மண்ணின் பாரம் நீக்குவதற்காக இப்புவியை அடைந்தவனுகையாலே, அவனிடம் அர்ஜுனனுடைய யுத்தநிவ்ருத்தி வாக்கியம் செல்லாது என்கை. (தூஷ்ணீம் பபூவஹ) பரமபுருஷன் செய்யவேண்டிய பூபாராவதரணகாரியத்திற்குத் துணையாயிருக்க வேண்டியவன் முயற்சியற்றவனுனே! என்று வருந்துகிறுன் ஸஞ்ஜயன். 'ஹ' என்பது வருத்தத்தைக் குறிப்பது.

ஆக இச்லோகங்களால், தகாதவிடத்தில் உண்டான ஸ்நேஹ காருண்யங்களாலே நிலைகுலைந்தவனும், க்ஷத்ரியர்களுக்கு மேலான தர்மமான யுத்தத்தையும் அதர்மமென நினைப்பவனும், தர்மத்தை அறியவேண்டுமென்று சரணமடைந்தவனுமான பார்த்தனைக் குறித்து, 'ஆத்மாவைப்பற்றிய உண்மையறிவையும், பலனில் விருப்பமற்ற யுத்தமாகிற கர்மம் ஆத்மஜ்ஞானத்திற்கு உபாய மென்பதையும் அறிந்தாலொழிய இவனுடைய மயக்கம் தீராது' என்று எண்ணி, பகவானுன பரமபுருஷன் ஆத்மாவைப்பற்றியதான இந்த சாஸ்திரத்தைத் தொடங்கினுன் என்றதாயிற்று. "அஸ்தாந ஸ்நேஹ" என்று தொடங்கும் கீதார்த்தஸங்க்ரஹம் முதல் ச்லோகத்தில் யாமுநாசார்யரும் இதையே அருளினர் 9.

10 தமுவாச ஹ்ருஷீகேஶ: ப்ரஹஸந்நிவ பா₄ரத।
ஸேநயோருப₄யோர் மத்₄யே ஸீத₃மாநமித₃ம் வச: ||

பா₄ரத—*பரதகுலத்துதித்த திருதராஷ்டிரனே!* **ஹ்ருஷீகேஶ:** — *கண்ணன்,* **ப்ரஹஸந் இவ** — *சிரிப்பவன்போலே,* **உப₄யோ: ஸேநயோ: மத்₄யே**-*இரண்டு சேனைகளுக்கும் நடுவில்,* **விஷீத₃ந்தம்**—*வருந்துகின்றவனை,* **தம்**—*அர்ஜுனனைக்குறித்து,* **இத₃ம வச.**—*இவ்வார்த்தையை,* **உவாச**—*கூறினன்.*

---

10 முன்ன மவனை முறுவலிப்பான் போன்மாயன்
மன்ன னிருபடையின் மத்தியத்தே—யின்னேதன்
சிந்தை யழிந்தோனைத் தெளிவித்தல் காரணமா
விந்தைமொழி சொன்ன னெடுத்து.

**முன்னம்**—*முதலில்,* **மன்னவன் அவனை முறுவலிப்பான் போல்**—*அரசனை அவனைப்பார்த்துச் சிரிப்பவன்போலே.* **மாயன்**-*கண்ணன்,* **இருபடையின் மத்தியத்தே**-*இருபடையின் நடுவிலே,* **இன்னே**-*இவ்வாறாக,* **தன் சிந்தை அழிந்தோனை**-*தன் மனம் கலங்கியவனை,* **தெளிவித்தல் காரணமா**—*தெளிவடையச் செய்வதற்காக,* **இந்த மொழி**-*இந்த வார்த்தையை,* **எடுத்து சொன்னன்**—*நெஞ்சில் படும்படி சொன்னன்.*

---

10. *அதற்குமேல் நடந்ததைக் கூறுகிறன்: (தமுவாச ஹ்ருஷீகேச:) அனைவருடைய இந்திரியங்களையும் நியமிப்பவன், அர்ஜுனனுடைய இந்திரியங்களை நியமிப்பதற்காகச் சொன்னன். (ப்ரஹஸந்நிவ) பரிஹாஸவாக்கியத்தைச் சொல்லுவான்போலே கூறினன். காரணமில்லாமல் போரிலிருந்து நீங்குவது பரிஹஸிக்கத்தக்கதன்றே. மேலும், இவன் தேஹத்தைப்பற்றியும் ஆத்மாவைப் பற்றியும் உண்மையறிவையடையாமல் அதனல் வருந்துகிறன் என்பதையும், அதே சமயத்தில் தேஹத்தைக்காட்டிலும் வேறுபட்டது ஆத்மா என்று அறிந்தவன்போலே பேசுவதையும், இப்படி முன்னுக்குப்பின் முரணன குணங்களையுடையவனயிருப்பதையும் கண்டு பரமபுருஷன் பரிஹஸிப்பதுபோலே சிரித்துக்கொண்டு வார்த்தை சொன்னன் என்கை. இப்பார்த்தன் கண்ணனுக்கு அத்தைபிள்ளையாகையாலே அவனேடு பரிஹஸித்து வாக்கியம் சொல்லுவதும் பொருத்தமே என்பதை "பார்த்த₂மாலோக்ய"*

॥ भा ॥ [तमेवं] एवं देहात्मनोर्याथात्म्याज्ञाननिमित्तशोकाविष्टम्, देहातिरिक्तात्मज्ञाननिमित्तं च धर्मं भाषमाणम्, परस्परविरुद्धगुणान्वितम्, उभयोस्सेनयोर्युद्धायोद्युक्तयोर्मध्ये अकस्मान्निरुद्योगम्, पार्थमालोक्य परमपुरुषः प्रहसन्निवेदमुवाच—परिहासवाक्यं वदन्निव आत्मपरमात्मयाथात्म्यतत्प्राप्त्युपायभूतकर्मयोगज्ञानयोगभक्तियोगगोचरं *न त्वेवाहं जातु नासमित्यारभ्य *अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि मा शुचः* इत्येतदन्तं वचनमुवाचेत्यर्थः ॥ १० ॥

---

என்று காட்டினார் ஸ்ரீபாஷ்யகாரர். ப்ருதை என்னப்படுபவள் குந்தி; அவளுடைய பிள்ளை பார்த்தனாகிறான். மேலும், வேதஸாரார்த்தத்தை உபதேசிக்கும்போது முகத்தைக் கடுகடுவென்று வைத்துக்கொண்டு உபதேசித்தால் சுவையற்றதாகிவிடும்; கேட்பவனுக்கும் புரியாது; ஆயாஸமும் தோற்றும். இப்படியில்லாமல் சிரித்துக்கொண்டே பேசினான் கண்ணன் என்கையாலே, இவனுடைய உபதேசம் சுவையுடையதாயும், புரியும்படியும், அநாயாஸமாகவும் இருந்தது என்று கருத்து. (ஹ்ருஷீகேச: ப்ரஹஸந்நிவ) முதலில் இவன் மனத்தை மாற்றிப்போரிலிருந்து மீளச்செய்ததும் நாமே; இனிப் போரில் ஈடுபடச்செய்யப்போவதும் நாமே; நம் கையிலே இவனிப்படிக் கருவியாயிருக்கும்படியென! என்று கருதிச்சிரித்தானென்றுமாம். (ஹ்ருஷீகேச: உவாச) அர்ஜுனனின் மனத்தை ஸங்கல்பத்தால் நியமிப்பதன் மூலமே அர்ஜுனனுடைய கருத்தை மாற்றக் கூடியவனாயினும், உலகமெல்லாம் உய்வதற்காக கீதா சாஸ்திரத்தை உபதேசித்தே திருத்துவோம் என்று திருவுள்ளம் பற்றிக் கூறினான் என்கை. தீரனான அர்ஜுனனுடைய மனத்தை, தான் ஹ்ருஷீகேசனாகையாலே மாற்றி, உலகம் உய்ய கீதையைக் கூறினான் என்றுமாம். (ப்ரஹஸந்நிவ பா$_1$ரத) திருதராஷ்டிரனே! இச்சிரிப்பு வெறுஞ்சிரிப்பல்ல. உன் ஸந்ததிகளை வேரறுக்கப்போகும் ஊழிக்காலச்சிரிப்பாகும். (ஸேநயோருப$_4$யோர் மத்$_1$யே ஸீத$_3$மாநம் ப்ரஹஸந்நிவ) யுத்தம்செய்ய முற்பட்டுநிற்கும் இரண்டு ஸேனைகளுக்கும் நடுவில் வருத்தமுற்று, சரியான காரணமில்லாமல் கைவாங்கி நிற்பவனைக் கண்டு சிரிப்பவன்போலே. (இத$_3$ம் வச: ப்ரஹஸந்நிவ உவாச) ஆத்மாவைப்பற்றியும், பரமாத்மாவைப்பற்றியுமான உண்மையறிவையும், அவ்வாத்மபரமாத்மாக்களை அடைய உபாயமாயிருக்கும் கர்மஜ்ஞாநபக்தியோகங்களையும் சொல்லுகின்ற ''ந த்வேவாஹம்''

श्रीभगवानुवाच—
अशोच्यानन्वशोचस्त्वं प्रज्ञावादांश्च भाषसे।
गतासूनगतासूंश्च नानुशोचन्ति पण्डिताः॥ ११॥

ஸ்ரீப₄க₃வாநுவாச—
11. அஶோச்யாநந்வஶோசஸ்த்வம் ப்ரஜ்ஞாவாதா₃ம்ஶ்ச
பா₄ஷஸே।
க₃தாஸூநக₃தாஸூம்ஶ்ச நாநுஶோசந்தி பண்டி₃தா:॥

(*அர்ஜுநா!*) த்வம் - *நீ*, அஶோச்யாந்—*வருந்தத் தகாதவர்களைக் குறித்து*, அந்வஶோச—*வருந்தினாய்*; ப்ரஜ்ஞாவாதா₃ந ச —*அறிவின் காரணமாக வரும் பேச்சுக்களையும்*, பா₄ஷஸே—*பேசுகிறாய்*; பண்டி₃தா:—*அறிவாளிகள்*, க₃தாஸூந்—*உயிரற்ற தேஹங்களைக்குறித்தும்*, அக₃தாஸூந்—*உயிருள்ள ஜீவர்களைக் குறித்தும்*, ந அநுஶோசந்தி—*வருந்துவதில்லை*.

---

11. சோகிக்க லாதவற்றைச் சோகித்தாய் தொல்லறிவி
லாகப் படிபகர்வ தாகின்றாய்—யோகத்தான்
மாயு முயிர்களையு மாயா வுயிர்களையு
மாயுமவர் சோகியா ராங்கு

**சோகிக்கலாதவற்றை**-*வருந்தத்தகாதவற்றைக்குறித்து*, **சோகித்தாய்**—*வருந்தினாய்*; **தொல் அறிவிலாக படி பகர்வது ஆகின்றாய்**-*பழைமையான சாஸ்திரஜ்ஞானத்தின் காரணமாக வரும் வார்த்தைகளைப் பேசுகின்றாய்*; **யோகத்தால்**-*(உத்பத்தி விநாச) யோகத்தால்*, **மாயும் உயிர்களையும்**—*அழியும் உயிர்களையுடைய உடல்களையும்*, **மாயா உயிர்களையும்**—*அழியாத ஆத்மாக்களையும்*, **ஆயுமவர்**—*ஆராய்ந்தறியுமவர்*, **ஆங்கு**—*அவ்விரண்டின் விஷயமாகவும்*, **சோகியார்**—*வருந்தமாட்டார்கள்*.

---

*[கீதை 2-12]* என்று தொடங்கி, *"ஸர்வத₄ர்மாந்...மாசுச:" [கீதை 18-16]* என்பதீறாகவுள்ள பலநூறு வாக்கியங்களை ஒருகோபமோ, முகக்கடுப்போ இல்லாமல் சிரித்துக்கொண்டே பேசுவதுபோலே இங்கிதத்தாலேயே பல்லாயிரம் பாவங்களை உணர்த்திக்கொண்டு பேசினான் பரமபுருஷன் என்று கருத்து. 10.

॥भा॥ अशोच्यान्प्रति अनुशोचसि। *पतन्ति पितरो ह्येषां लुप्तपिण्डोदकक्रियाः इत्यादिकान् देहात्मस्वभावप्रज्ञानिमित्तवादांश्च भाषसे। देहात्मस्वभावज्ञानवतां नात्र किंचिच्छोकनिमित्तमस्ति। गतासून् देहान् अगतासून् आत्मनश्च प्रति [तयोः] तत्स्वभावयाथात्म्यविदो न शोचन्ति।

---

11. பரிஹாஸத்திற்குக் காரணம் சொல்லுகிறது. (அசோச்யாந் அந்வசோச: த்வம்) வருந்தத்தகாதவற்றைக் குறித்து நீ வருந்துகிறாய். இப்போதும் வருந்தமிருக்கையாலும், 'பாஷஸே' என நிகழ்காலமாயிருப்பதையொட்டியும், இறந்தகாலமாயிருக்கும் 'அந்வசோச:' என்பதையும் நிகழ்காலமாக மாற்றிக்கொள்வது. நெடுநேரமாக வருத்தம் ஏற்பட்டிருக்கையாலே இறந்தகாலமாகப் பிரயோகிக்கப்பட்டுள்ளது. அன்றிக்கே, 'பாஷஸே' என்பதை "வர்த்தமாநஸாமீப்யே வர்த்தமாநவத்வா" [அஷ்டாத்யாயீ 3-3-131] [நிகழ்காலத்துக்கு அருகிலிருக்கும் மற்ற காலங்களையும் நிகழ்காலமாகவே பிரயோகம் செய்யலாம்] என்கிற ரீதியிலேயான பிரயோகம் என்று கொண்டு, இரண்டையும் இறந்தகாலமாகக் கொள்வது, (ப்ரஜ்ஞாவாதாம்ச்ச பாஷஸே) "பித்ருக்கள் பிண்டோதகக்ரியைகளையிழந்து வீழ்வர்" [1-42] முதலானவிடங்களிலே தேஹாத்மஸ்வரூபஸ்வபாவங்களை அறிந்ததனால் ஏற்படும் பேச்சுக்களையும் பேசுகிறாய். உண்மையில் இவ்வறிவுள்ளவனுக்கு வருந்தத்தகாதவற்றைக் குறித்து வருந்த இடமில்லை. அவை எவையெனில்: (கதாஸூந் அகதாஸூம்ச்ச) அஸு-சப்தம் பிராணனைக் குறிக்கும்; 'கதாஸூந்' என்றது உயிரற்றவர்களை என்றபடி; 'அகதாஸூந்' என்றது உயிருள்ளவர்களை என்றபடி. இப்பொருள் இங்கு பொருந்தாததாகையால் இங்கு அஸு-சப்தம் லக்ஷணையாலே அழிவின்மையைக் குறிக்கிறது. ஆகையால், கதாஸுவெனப்படுவது அழிவுள்ள ஜடமான தேஹமாகும். அகதாஸுவெனப்படுவது எப்போதும் ஸத்தையுள்ளதாகையாலே அழிவற்ற ஆத்மாவாகும். (பண்டிதா: ந அநுசோசந்தி) பண்டா எனப்படுவது அறிவு; பண்டிதர்கள் அறிவாளிகள். தேஹாத்மஸ்வரூபங்களை அறிந்தவர்கள் தேஹத்தைக் குறித்தும் ஆத்மாவைக்குறித்தும் வருந்தமாட்டார்கள். நீயோ வருந்துகிறாய்; பண்டிதர்களின் பேச்சையும் பேசுகிறாய்; இது முன்னுக்குப்பின் முரணாகையாலே பரிஹஸிக்கத்தக்கது என்று கருத்து.

अतस्त्वयि विप्रतिपिद्धमिदमुपल[क्ष्य]भ्यते; यदेतान् हनिष्यामीत्यनुशोचनम्, यच्च देहातिरिक्तात्मज्ञानकृतं धर्माधर्मभाषणम्। अतो देह स्वभावं च न जानासि, तदतिरिक्तमात्मानं च नित्यम्; तत्प्राप्त्युपायभूतं युद्धादिकं धर्मं च। इदं च युद्धं फलाभिसन्धिरहितमात्मयाथात्म्यावाप्त्युपायभूतम्। आत्मा हि न जन्माधीनसद्भावो न मरणाधीनविनाशश्च, तस्य जन्ममरणयोरभावात्। अतः स न शोकस्थानम्। देहस्त्वचेतनः परिणामस्वभावः; तस्योत्पत्तिविनाशयोगः स्वाभाविक इति सोऽपि न शोकस्थानमित्यभिप्रायः॥ ११॥

---

'ப்ரஜ்ஞாவாதாங்' என்று கூறுகையாலே, இவனுக்கு உண்மையில் பல விஷயங்களைக்குறித்து அறிவில்லை; அறிவானது பேச்சளவிலேயே வெளிப்படுகிறது என்று கருத்து. இவன் அறியாத விஷயங்கள் எவை யெனில்: 1. தேஹத்தின் தன்மையை அறியவில்லை 2. தேஹத்தைக் காட்டிலும் வேறுபட்டதான ஆத்மா நித்யமானது என்று அறியவில்லை. 3. யுத்தம் முதலான வர்ணாச்ரமதர்மங்கள் அவ்வாத்மாவையடைய உபாயமாயிருப்பவையென்பதையும் அறியவில்லை.

கோரமான யுத்தம் எப்படி ஆத்மாவை அடைய உபாயமாகும்? எனில்: ராஜ்யப்ராப்தி முதலான பலன்களை உத்தேசித்துச் செய்யப்பட்டதாகில், யுத்தம் முதலான வர்ணாச்ரமதர்மங்கள் ஸம்ஸாரத்தில் ஜீவன் மேலும்மேலும் கட்டுப்படவே காரணமாகும்; இவையே ஒரு பலனையுத்தேசிக்காமல் பகவதாராதனமாகச் செய்யப்பட்டனவாகில் ஆத்மபரமாத்மாக்களை அடையக் காரணமாகும் என்று மேலே உபதேசிக்கப்போகிறாராகையாலே இவ்வாக்ஷேபம் எழ இடமில்லை. பலனையளிப்பவன் பகவானேயாயிருக்க, கர்மாதிகளை உபாயமாகச் சொல்லலாமோ? எனில்: பலனையளிப்பவனாகையாலே பரமபுருஷன் ஸித்தோபாயமாயிருந்தபோதிலும் கர்மாதிகளை அனுஷ்டித்தால்தான் பலனளிக்கிறானாகையாலும, அனுஷ்டிப்பவனும் அவற்றில் உபாயபுத்திவைப்பதாலும் இவற்றுக்கும பல கரணத்வமாகிற (பலத்துக்கு அஸாதாரண காரணமாயிருக்கையாகிற) ஸாத்யோபாயத்வம் உண்டு. 'பலப்ரதனைவிட்டு தொடன்றியில் பலகரணமான உபாயமும் நீயேயாகவேணும்' என்னும் ப்ரார்த்தனையாகவேயிருக்கும் ப்ரபத்தி ஸ்தலமொன்றில்தான் ஸ்வீகாரரூபமான ப்ர

न त्वेवाहं जातु नासं न त्वं नेमे जनाधिपाः।
न चैव न भविष्यामः सर्वे वयमतः परम्॥१२॥

12. நத்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜநாதி₄பா:|
ந சைவ ந ப₄விஷ்யாம: ஸர்வே வயமத: பரம்||

அஹம்–(ஸர்வேச்வரனை) நான், ஜாது–(முற்காலத்தில்) எப்போதும், ந ஆஸம் (இதி) ந–இல்லாமலிருந்தேன் என்ப

---

12 இறையா கியநானு மிவ்வுயிரா நீயு
முறையா லரசரிவர் முற்று—மறையாலே
முன்னாளு மின்மையிலே முற்றுமிதன் மேலாகு
மெந்நாளு மின்மையிலம் யாம.

---

பத்திக்கு எவ்விதமான உபாயத்வமுமில்லை; அதிகாரி விசேஷணத்வமேயுண்டு என்பது நம் ஆசார்யர்கள திருவுள்ளம்.

இவன் ஆத்மஸ்வபாவத்தை அறியவில்லையென்பது எப்படியெனில்: "ந ஜாயதே ம்ரியதே" [கட 2-18] என்று கடர்ஸ்ருதி சொல்லுகையாலே, ஆத்மாவுக்குப் பிறப்போ இறப்போ கிடையாது. ஆகையால் ஆத்மாவுக்குப் பிறப்பினாலே ஸத்தை உண்டாகிறதென்பதுமில்லை. இறப்பினாலே அழிவு உண்டாகிறதென்பதுமில்லை. ஆகையால் அதைக்குறித்து வருந்த இடமில்லை. இவனோவெனில் உறவினரைக்குறித்து வருந்துகிறான். ஆகையால் இவன் ஆத்மஸ்வபாவத்தை அறியாதவனாகிறான்.

இவன் தேஹத்தின் தன்மையை அறியவில்லையென்பது எப்படியெனில்: தேஹமென்பது அறிவுள்ளதாய், விகாரமற்றதாய் பிறப்பிறப்பற்றதான ஆத்மாவைக்காட்டிலும் வேறுபட்டது; அறிவற்றதாகவும், பரிணாமத்தை (விகாரத்தை) இயற்கையாகக்கொண்டதாயுமிருப்பது. அதற்குப் பிறப்பிறப்புக்கள் இயற்கையானவை. அதற்கு ஆறிலும்சாவு, நூறிலும்சாவு. ஆகையால் அதனுடைய மரணத்தைக் குறித்தும் வருந்த இடமில்லை. இவனோவெனில் உறவினர்களின் சரீரநாசத்தைக்குறித்து வருந்துகிறான். ஆகையால் இவன் தேஹஸ்வபாவத்தையும் அறியாதவனாகிறான். இப்படிப் பலவிஷயங்களை அறியாதவனாயிருந்தும் எல்லாமறிந்தவனபோலே பேசுகையாலே, 'ப்ரஹஸந்நிவ' என்கிறபடியே பரிஹஸிக்கத்தக்கவனாகிறான் என்று கருத்து.

இல்லை, த்வம்—(ஜீவனான) நீயும், (ஜாது நாஸீ: இதி) ந—(முற்காலத்தில் எப்போதும் இல்லாமலிருந்தாய் என்பது) இல்லை. இமே ஜநாதிபா:-(ஜீவர்களான) இந்த அரசர்களும், (ஜாது நாஸந் இதி) ந-(முற்காலத்தில் எப்போதும் இல்லாம

---

இறையாகிய நானும—ஸர்வேச்வரனான நானும், இவ்வுயிராம் நீயும்—ஜீவனாகிய நீயும், முறையால் அரசர் இவர் முற்றும்—முறைப்படி அரசராயிருக்கும் இவ்வரசர்கள் அனைவரும், மறையாலே—வேதவாக்கியத்தின்படி, முன் நாளும்

---

12. சென்ற சுலோகத்தில் உபேயமான (அடையத்தக்கதான) ஆத்மாவினுடையவும், அதற்கு உபாயமான (அடையும் வழியான) யுத்தம் முதலான கர்மங்களினுடையவும், அதை அடைவதற்கு விலக்கான தேஹாத்தினுடையவும நன்மைகளை அர்ஜுனனுக்குக் கண்ணன் உபதேசிக்க விரும்பினான் என்று கூறப்பட்டது. இம்மூன்றினுள் உபேயமான ஆத்மாவின ஸ்வபாவங்களை முதலில் கூறத் தொடங்குகிறான் இந்த ச்லோகத்தில். உபாயத்தை அனுஷ்டித்த பின்பன்றோ உபேயத்தை அடைவது; ஆகையாலே உபாயத்தையன்றோ முதலிற் சொல்லவேண்டும் எனில்: அனுஷ்டானவேளையிலேயே அந்நியமமாகையாலே த்வயம் முதலானவற்றில் உபாயத்தை முதலிற்சொல்லிப் பிறகு உபேயத்தைச் சொல்லிற்று. உபதேசவேளையில் முதன்முதலில் புருஷார்த்தமாயிருக்கும் உபேயத்தின் பெருமையை உபதேசித்தால்தான் அதில் ருசிபிறந்து இதையடைய உபாயமென்ன, இதற்கு விலக்காயிருப்பவையாய் நம்மால் தள்ளப் படவேண்டியவையென்ன என்னும் ஆராய்ச்சியிலே இறங்குவானாகையாலே முதலில உபேயமான ஆத்மஸ்வரூபத்தின் பெருமைகளைக் கூறுகிறான் கீதாசாரியன். உபாயத்தை அனுஷ்டிக்கும் அதிகாரியும் இவனேயாகையாலே இவனுடைய நன்மையை முதலில் உபதேசிப்பது பொருத்தமுடையது.

ஆத்மஸ்வரூபத்தின் நித்யத்வத்திற்கு திருஷ்டாந்தமாக ஈச்வர ஸ்வரூபத்தின் நித்யத்வத்தை எடுக்கத் திருவுள்ளம்பற்றி அதை முதலிற் சொல்லுகிறான் (அஹம் ஜாது ந ஆஸம் இதி ந) என்று. ஈச்வரன் நித்யமானவன் என்பது ஸுலபமாக அறியக்கூடியதாகையாலே, இங்கு ப்ரஸங்கமில்லாதபோதிலும் அதை திருஷ்டாந்தமாக எடுக்கிறான் கண்ணன். இவ்விடத்தில் ஓரா

விருந்தனர் என்பது) இல்லை; **ஸர்வே வயம்**—(நானும் நீயும் இவர்களுமாகிய) நாம் அனைவரும், **அத: பரம்**—இதற்குமேல் உள்ள காலத்திலும், **ந பவிஷ்யாம: ச ஏவ(இதி) ந**—இருக்க மாட்டோம் என்பதும் இல்லவேஇல்லை.

---

**இன்மை இலை**—இறந்த காலத்திலும் இல்லாமலிருந்ததில்லை; **இதன் மேல் ஆகும் எந்நாளும**—இனிவரும் எல்லாக்காலத்திலும், **யாம்**—நாம், **முற்றும் இன்மை இலம்**—முழுவதும் இல்லாமலிருந்ததில்லை.

---

க்ஷேபம் எழக்கூடும். அதாவது:-யோகிகளால் ப்ரத்யக்ஷமாகக் காணத்தக்கவனை ஆத்மாவைப்பற்றியோ ஐயமுறும் இவ் வர்ஜுனன், "உணர்ந்துணர்ந்துரைரிலும் இறைநிலை உணர் வரிது" [திருவாய் 1-3-6] என்கிறபடியே அவர்களாலும் காணமுடியாதவனுய், ஆத்மாவைக் காட்டிலும் ஸூக்ஷ்மமான வனை பரமாத்மஸ்வரூபத்தை அறிந்திருக்கமுடியுமோ எனில்: இவ்வர்ஜுனன் நாஸ்திகனன்று; நாரதர், அஸிதர், தேவலர், வியாஸர் முதலான பற்பல பரமரிஷிகளிடமிருந்து பரம புருஷனைப்பற்றிய உண்மைகளை அறிந்துவைத்திருப்பவன்; "புருஷம் சாச்வதம் திவ்யம்" [கீதை 10-12] என்று பரமபுருஷன் நித்யமான வன் என்று தன்வாயாலே உரைப்பவன். இந்திரலோகத்திற்கும் சென்று வந்தவன்; அஸ்திரமந்திரங்களையும் தவத்தின் பெருமை களையும் அறிந்து அனுஷ்டானத்தில் கொண்டு வந்திருப்பவன். மிகச்சிறந்த குருதேவதாபக்திகளையுடையவன். வர்ணாச்ரம தர்மங் களிலிருந்து வழுவாதவன். தர்மம் அழிந்துவிடுமோ என்று பயந்து வருந்திநிற்பவன்; ஆகையால இவன் தேஹத்தைக்காட்டிலும் வேறு பட்ட ஆத்மாவையோ பரமாத்மாவையோ அடியோடு இல்லையென்று மயங்கவில்லை; ஐயமுறவுமில்லை. ஆத்மபரமாத்மாக்களின் சில தன்மைகள் அவனுக்குத் தெரியவில்லை. அதனாலே வருந்துகிறான். ஈச்வரனையும் அவன் நித்யமானவன் என்பதையும் பொதுப்படை யாக அறிந்து வைத்திருககிறான். ஜீவனுக்கு உலகில் உத்பத்தி விநாசங்களிருப்பதாலும், "ந பரேத்ய ஸம்ஜ்ஞாஸ்தி" [ப்ருஹ 4-4-12] முதலான சுருதிவாக்கியங்களை மேலெழப்பார்க்கும்போது ஜீவ னுக்கு அழிவுளளதுபோலே தோற்றுகையாலும் ஜீவனுடைய நித் யத்வம் முதலானவற்றில் மாத்திரம் ஐயமுடையவனுயிருக்கிறான். ஆயையாலே ஜீவநித்யத்வத்திற்கு திருஷ்டாந்தமாகப் பரமாத்மாவின் நித்யத்வத்தை எடுக்கக்குறையில்லை.

॥भा॥ अहं सर्वेश्वरस्तावत्, अतो वर्तमानात्पूर्वस्मिन् अनादौ काले, न नासम्–अपि त्वासम्। त्वन्मुखाश्चैते ईशितव्याः क्षेत्रज्ञा न नासन्–अपि त्वासन्। अहं च यूयं च सर्वे वयम्, अतः परम्–अस्मादन्तरे काले, न चैव न भविष्यामः–अपि तु भविष्याम एव। यथाऽहं सर्वेश्वरः परमात्मा नित्य इति नात्र संशयः, तथैव भवन्तः क्षेत्रज्ञा आत्मानोऽपि नित्या एवेति मन्तव्याः॥

---

(அஹம்) ஸர்வேச்வரனான நான்; எல்லாவற்றையும் படைத்து அழித்து நியமிக்கும் நான். முக்காலத்திலுமிருக்கும் எல்லாவற்றுக்கும் தலைவனான நான் முக்காலத்திலுமில்லாமலிருப்பது எப்படி? எல்லாரையும் படைத்து அழித்து நியமிக்குமவனான நான் ஒருவனால் நியமிக்கப்படுவதோ படைக்கப்படுவதோ அழிக்கப்படுவதோ எப்படி முடியும்? ஆகையால் நான் நித்யமாயிருப்பவனென்பது வெளிப்படை. (ஜாது ந ஆஸம் இதி ந) இக்காலத்திற்குமுன் அநாதிகாலத்திலும் ஒருபோதாவது இல்லாமலிருந்தேன் என்பதில்லை. (ந ஆஸம் இதி து ந) இல்லாமலிருந்தேன் என்பதில்லை; இருக்கவே செய்தேன் என்கை. இரண்டு 'நஞ்'ஞையிடுவது அர்த்தத்தில் உறுதியைக் காட்டுகைக்காக. (ந த்வம் நேமே ஜநாதி$_4$பா:) த்வம் நாஸீரிதி ந; இமே ஜநாதி$_4$பா: ந ஆஸந் இதி ந என்று பரிணமம்செய்து கூட்டிக் கொள்வது. நீயும் இல்லையென்பதில்லை. இங்குள்ள மற்ற அரசர்களும் இல்லையென்பதில்லை. 'த்வம்' 'இமே' என்று அருகிலுள்ளாரை எடுத்தது பிரமன் தொடக்கமாகப் புல்லெறும்பீறாகவுள்ள எல்லா ஜீவர்களுக்கும் உபலக்ஷணம். எல்லா ஜீவர்களும் என்னைப் போலே அநாதிகாலமாக இருந்தவர்களே என்கை. பின்னுள்ள காலத்தில் அழிவுண்டோ? எனில்: (ஸர்வே வயம் அத: பரம் ந ப$_4$விஷ்யாம: இதி ஏவ ந ச) நானும் நீயும் இவர்களுமாகிற நாம் அனைவரும் இதற்குப்பின்னுள்ள அனந்தமான காலத்திலும் இல்லாமலிருப்போம் என்பதில்லை. இருக்கவேபோகிறோம் என்றபடி. (ப$_4$விஷ்யாம: ஏவ) காலம் அநந்தமாகையாலே மிகவும் நிலையுள்ள பர்வதங்கள் கூட அழிவதைக்காண்கிறோம். அப்படி அநந்தகாலத்திலும் இவ்வாத்மாவுக்கு அழிவில்லையென்பதை ஏவகாரம் காட்டுகிறது. ஆக, இவ்வளவால், "ஸர்வேச்வரனாய், பரமாத்மாவான நான் நித்யன் என்பதில் எப்படி ஐயமில்லையோ, அப்படியே க்ஷேத்ரமெனப்படும் அசித்திலும் வேறுபட்டவர்களாகையாலே

॥भा॥ एवं भगवतः सर्वेश्वरात्, आत्मनां परस्परं च भेदः पारमार्थिक इति भगवतैवोक्तमिति प्रतीयते; अज्ञानमोहितं प्रति तन्नि-वृत्तये पारमार्थिकनित्यतत्त्वोपदेशसमये अहम्, त्वम्, इमे, सर्वे वयमिति

---

க்ஷேத்ரஜ்ஞர்கள் எனப்படும் ஜீவர்களும் நித்யர்களே என்று நினைக்கவேண்டும்'' என்று கண்ணன் அருளிச்செய்தானாயிற்று.

இவ்விடத்தில் கண்ணன தத்துவங்களை உபதேசிப்பதற்காகவே ஏற்பட்ட இந்த கீதாசாஸ்திரத்தை உபதேசிக்கத் தொடங்குகிறான். இக்கண்ணன் ஒரு வழிப்போக்கனல்ல; ''ஜ்ஞாநசக்திப₃லைச்வர்ய வீர்யதேஜாம்ஸ்யசேஷத: ப₄க₃வச்ச₂ப்₃த₃வாச்யாநி விநா ஹேயைர் கு₃ணாதி₃பி₄:'' [வி-பு 6-5-79] [தாழ்ந்த குணம் முதலியவையில்லாத ஜ்ஞாநம், சக்தி, பலம, ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ்ஸு என்னும் ஆறுகுணங்களும் ஒன்றுகூடி பகவான் என்னும் சப்தத்திற்குப் பொருளாகின்றன] முதலான இடங்களில் எல்லா நற்குணங்களையும் உடையவனாகவும், தாழ்ந்த குணம் ஒன்றுமில்லாதவனாகவும பகவான் என்னும் பதத்திற்கு முக்கியவாச்யனாகவும் உத்கோஷிக்கப் படுபவன். அனைவரையும நியமிக்கும் ஸர்வேச்வரனென்று ச்ருதி ஸ்ம்ருதிகளிலே ஓதப்படுபவன். ''த்வமேவ த்வாம் வேதத₂ யோஸி ஸோஸி'' [யஜுஃ-காடகம் 1-6] [நீ எப்படிப்பட்டவனென்பதை நீயே அறிவாய்.] முதலான வேதவாக்கியங்களிலே தன்னையுள்ளிட்ட அனைவரையும் அறிந்த ஓரே அறிவாளியாக ஓதப்படுமவன். அப்படிப்பட்டவன் தனக்கு மிகவினியவனான அர்ஜுனனுக்கு உபதேசிக்கும் வேளையிலே, 'அஹம்' 'த்வம்' 'இமே ஜநாதிபா.' 'ஸர்வேவயம்' என்று பதங்களையிடுகையாலே, ஸர்வேச்வரனை தன்னைக் காட்டிலும் ஜீவர்கள் உணமையில் வேறுபட்டவர்களென்றும், ஜீவர்கள தங்களுக்குள் உண்மையான வேறுபாடு உண்டு என்றும் காட்டுகிறான். அஜ்ஞானத்தால் மயங்கிநிற்கும் அர்ஜுனனைக் குறித்து இவன் உபதேசிக்கிறானாகையாலே, மயக்கநிலையில் பொய்யாகத்தோன்றும் பொருள்களை உபதேசிக்கமாட்டான். அர்ஜுனனின் மயக்கம நீங்குவதற்காக உண்மையாகவும், நித்யமாகவும் உள்ள தத்துவங்களை உபதேசிக்கும் சமயமாகையாலே, 'அஹம்' 'த்வம்' 'இமே' 'வயம்' என்னும் பதங்களில் ஜீவர்களிடையேயும், ஸர்வேச்வரனுக்கும் ஜீவர்களுக்கும் பேதமே உண்மை என்பதே கண்ணனின் கருத்தாகமுடியும். 'அஹம்' என்று ஸர்வேச்வரனை தன்னைச்சொல்லுகிறது. 'த்வம்' என்று எதிரில் நிற்கும் மற்றொரு

व्यपदेशात्। औपाधिक[ात्म]भेदवादे हि आत्मभेदस्याताात्त्विकत्वेन तत्त्वोपदेशसमये भेदनिर्देशो न संगच्छते। भगवदुक्तात्मभेदः स्वाभाविक

---

சேதனனை அர்ஜுனனைச் சொல்லுகிறது. 'இமே' என்று தங்களை எதிரிட்டுநிற்கும் பல சேதனர்களைச் சொல்லுகிறது. 'ஸர்வே வயம்' என்று இப்படிப் பரஸ்பரம் வேறுபட்ட சேதனர்கள் கணக்கற்ற வர்கள் என்று காட்டுகிறது. இப்படியிருக்கும்போது "தே₃ஹபே₄ த₃ராபி₄ப்ராயேண ப₃ஹுவசநம் நாத்மபே₄த₃ராபி₄ப்ராயேண" [தேஹத்தில் பேதத்தைக்கருதிப் பன்மையில் பேசுகிறார்; ஆத்மாவில் பேதத்தைக் கருதியன்று] என்று சங்கரர் வியாக்கியானம் செய்தது நடுநிலை யாளர்களால் அநாதரிக்கத்தக்கது. உண்மையில் சங்கரருடைய பக்ஷத்தில் ஆத்மபேதத்தைப்போலே தேஹங்களும், தேஹபேதமும் பொய்யாகையாலே, "தேஹபேதத்தைக் கருதிப்பேசுகிறார்" என்று அவர் கூறியது பொருந்தாப்பேச்சேயாகும். தேஹாதிபேதத்தை உண்மையாகக்கொள்ளும் பாஸ்கரமதத்தவர்கள்தான் இவ்வாக்கி யத்தை எழுதலாம்.

ஆத்மாக்களுக்குள் பேதமில்லையென்று பாஸ்கரமதத்தைச் சேர்ந்தவர்களும், சங்கரமதத்தைச் சேர்ந்தவர்களும் கூறுகிறார்கள். ஆனால் இரண்டுமதத்தைச் சேர்ந்தவர்களுக்கும் ஒரு முக்கியமான வேறுபாடு உண்டு. பாஸ்கரமதத்தைச் சேர்ந்தவர்கள உண்மை யான உபாதியினாலே, பேதமற்ற ஒரே ஆத்மா பல ஆத்மாக்க ளாகத் தோன்றுகிறது என்கிறார்கள். சங்கரமதத்தவர்களோவெனில் உண்மையல்லாத மாயை அல்லது அவித்யை எனப்படும் ஓர் உபாதியினாலே, பேதமற்ற ஒரே ஆத்மா பல ஆத்மாக்களாகத் தோன்றுகிறது என்கிறார்கள்.

பாஸ்கரமதத்தவர்கள் சொல்லுவதாவது:—ஒரே முகம் அல்லது சந்திரன், மணி, கத்தி, ஆறு, சமுத்திரம் முதலான உண்மையான உபாதிகளிலே பிரதிபலிக்கும்போது பலவாகத்தோற்றுகிறது. ஒரே ஆகாசம் குடம் கரகம் முதலான உண்மையான உபாதிகளினுள் ளிருக்கும்போது கடாகாசம் கரகாகாசம் என்று பலவாகத் தோற்று கிறது. இவைபோலவே ஒரே ஆத்மா உண்மையான அந்தःகர கரணங்களாகிற உபாதிகளிலே பிரதிபலிக்கும்போது, அல்லது அவற்றோடு சேரும்போது பல ஆத்மாக்களாகத் தோன்றுகிறது என்கிறார்கள். இவர்களுடைய மதத்தின்படியும் உபாதி₄கள்

इति श्रुतिरप्याह–*नित्यो नित्यानां चेतनश्चेतनानामेको बहूनां यो विदधाति कामान् (श्वे ६-१३; क ५-१३) इति। नित्यानां बहूनां चेतनानां य एको नित्यश्चेतनः, [स] कामान् विदधातीत्यर्थः। अज्ञानकृतभेददृष्टिवादे तु परमपुरुषस्य परमार्थदृष्टेर्निर्विशेषकूटस्थनित्यचैतन्यात्मयाथात्म्यसाक्षात्कारान्निवृत्ताज्ञानतत्कार्यतया अज्ञानकृतभेददर्शनं तन्मूलोपदेशादिव्यवहाराश्च न संगच्छन्ते।

---

உண்மையாயிருந்தபோதிலும் ஆத்மாவில் பேதம் பொய்யேயாகையாலே, உண்மையை உபதேசிக்கும் சமயத்தில் ஸர்வஜ்ஞன் இங்கு ஆத்மபேதத்தை உபதேசிப்பது இவர்களுக்கு ஒட்டாது.

பொய்யான அந்த:கரணங்களாகிற உபாதிகளிலே பிரதிபலிக்கும் ஓரே ஆத்மாவே பலவாகத்தோன்றுகின்றன என்று கூறும் சங்கரமதத்தவர்களுக்கும், உண்மையான உபாதிகளாலே ஆத்ம பே$_4$த$_3$ம் தோற்றுகிறது என்று கூறும் பாஸ்கரமதத்தவர்களுக்கும் பல வேதவாக்கியங்களும் பொருந்தமாட்டா. உதாஹரணமாக, தானே ஸர்வஜ்ஞனான பகவானாலே இங்கு காட்டப்பட்ட ஆத்ம பேதம் இயற்கையாகவே உள்ளதென்பதை, “நித்யோ நித்யாநாம் சேதந: சேதநாநாம் ஏகோ ப$_3$ஹூநாம் யோ வித$_3$தா$_4$திகாமாந்” [ச்வே6-13; கட 5-13] என்னும் வேதவாக்கியமும் மிகத்தெளிவாகக் காட்டியது. “நித்யர்களான பல சேதனர்களுக்கு எந்த ஒரு நித்யனான சேதனன் காமங்களை (விருப்பங்களை) அளிக்கிறானோ” என்று இவ்வேதவாக்கியத்தின் பொருள். இவ்வேதவாக்கியத்தில் “நித்யோ நித்யாநாம்” என்று கூறுகையாலே ஆத்மாவை அநித்யம் என்று கூறும் பௌத்தர்களும், உபாதி$_4$யினாலே ஆத்மபேதம் என்று கூறும் சங்கரபாஸ்கரமதத்தவர்களும், ‘சேதந:சேதநாநாம்’ என்று இயற்கையாகவே அறிவுள்ளவர்களாகக் கூறுகையாலே அநித்யமான அறிவையுடையவர்கள் ஆத்மாக்கள் என்று கூறும் வைசேஷிகர்களும், ‘ய: ஏக: நித்ய: சேதந:’ என்று எப்போதும் பரம்பொருளாயிருப்பவன் ஒருவனேயென்று கூறுகையாலே திரிமூர்த்திகளும் மற்றும் பலதேவதைகளும் பரம்பொருளேயென்றும், ஒவ்வொரு கல்பத்தில் ஒவ்வொருவர் பரம்பொருள் என்றும் கூறும் வாதிகளும் “யோ வித$_3$தா$_4$தி காமாந்” என்கையாலே அபூர்வமே பலனையளிக்கிறது என்னும் மீமாம்ஸகர்களும் தள்ளப்படுகின்றனர்.

இனி, சங்கரமதத்தில் உள்ள மற்றும் பல அநுபபத்திகளும் (பொருந்தாமைகளும்) காட்டப்படுகின்றன. இவர்கள் அஜ்ஞானத்தாலே ஜீவர்கள் உலகம் முதலான பேததர்சனங்கள் உண்டாகின்றன. உண்மையில உள்ளது சிந்மாத்ரம் ஒன்றே. இதை உபதேசிக்கவே கீதாசாஸ்திரம் தோன்றியது என்கிறுர்கள். இவர்களுடைய இப்பக்ஷத்தில் உபதேசமே பொருந்தாதாகையால, கீதாசாஸ்திரத்தையே ஆரம்பிக்கமுடியாது. எப்படியெனில்: நிர்விசேஷ கூடஸ்த₂நித்ய சைதந்யமாகிற ஒரே ஆத்மாவே உண்மை என்கிறுர்கள் இவர்கள். நிர்விசேஷமாகையாவது, உலகிலகாணும் மூன்று விதமான பேதமும் அற்றிருக்கை; அவையாவன,- குடம முதலான பொருள்களுக்கு அதே ஜாதியைச் சேர்ந்த மற்ற குடங்களைக் காட்டிலும் பேதம் உள்ளது. இது ஸஜாதீயபேதம் எனப்படும்; அதே குடம் முதலானவற்றுக்கு வேறு ஜாதியைச்சேர்ந்த படங்கள் முதலானவற்றைக் காட்டிலும் பேதமும் உள்ளது. இது விஜாதீய பேதம எனப்படும். அதே குடம் முதலியவற்றுக்குத் தம்மிடமுள்ள க₄டத்வம்(குடமாயிருக்கை), நிறம் முதலான குணங்களைக் காட்டிலும் பேதமும் உள்ளது. இது ஸ்வக₃தபேதம் எனப்படும். நித்யசைதந்யத்தைக் காட்டிலும் வேறுபட்ட ஒரு பொருளும இல்லையாகையால அதற்கு ஸஜாதீயபேதமும் விஜாயதீயபேதமும் கிடையாதென்றும் இந்தச் சைதந்யத்திற்கு எவ்விதமான குணமும் கிடையாதாகையால் இதற்கு ஸ்வக₃தபேதமும் கிடையதென்றும் அத்வைதிகள் கூறுகிறுர்கள். இப்படி நிர்விசேஷமாயிருக்கும் இது கூடஸ்த₂ம் என்றும் கூறப்படுகிறது. "கூடயுக்₃த₄ா ஹி ராக்ஷஸா:" முதலானவிடங்களில் கூட சப்தம் வஞ்சனையையும் குறிப்பதைக் காண்கிறேம. இல்லாத பொருள்கள் இருப்பதாகத் தோன்றவைந்து வஞ்சிக்கும் மாயை—கூடம் எனத்தகுந்தது. அந்த மாயையோடு கூடியிருக்கையாலே நித்யசைதந்யம் கூடஸ்தம் என்று குறிப்பிடப்படுகிறது. அப்படியல்லாமல், கூடஸ்தம் என்னும் பதம் பலபொருள்களுக்குப் பொதுவான மூலப்பொருளையும் குறிக்குமாகையால, இங்கு உலகில் காணும் தோற்றங்களுக்கெல்லாம் பொதுவான மூலப்பொருளான நித்ய சைதந்யத்தைக் காட்டுகிறது. அப்படியுமல்லாமல், 'கூடம்' என்னும பதம் கொல்லனின் உலைக்களத்தில் பழுக்கக்காய்ச்சிய மற்றபொருள்களை இஷ்டப்படி இதில் வைத்து அடித்து மாற்றலாம்படி ஆதாரமாயிருக்கும் இரும்புக்குண்டைக் குறிப்பதுமுண்டாகையாலே, "கூடவத்திஷ்ட₂தீதி கூடஸ்த₂:" [கூடம்போலே இருப்பது கூடஸ்தம்]

என்கிற வ்யுத்பத்தியின்படி, தான் விகாரமடையாமல் பிறபொருள்களை விகாரமடையச்செய்யும் உலைக்களக் கூடம்போலே இச்சைதந்யமும் தான் விகாரமடையாமலே மற்ற (பொய்ப்) பொருள்களின் விகாரத்திற்குக் காரணமாயிருக்கையாலே கூடஸ்தமெனப்படுவதாகவும் கொள்ளலாம். இப்படி நிர்விசேஷமாகவும், கூடஸ்தமாகவுமிருக்கும் சைதந்யம் நித்யமாகவுமிருக்கிறது என்கிறார்கள் அத்வைதிகள். நித்யமாகையாவது, காலத்தினால் அளவுபடாமை. இப்படிப்பட்ட சைதந்யமாகிற ஒரே ஆத்மாவே உண்மை, மற்ற பேதங்கள் எல்லாம் பொய் என்பது அத்வைதிகளின் மதம். இவ்விஷயத்தைக் கண்ணன் அர்ஜுனனுக்கு கீதையில் உபதேசிக்கிறான் என்று அத்வைதிகள் கூறுகிறார்கள். இது பலவிதத்திலும் பொருந்தாதென இனி நிரூபிப்போம்.

அத்வைதஜ்ஞானத்தைக் கண்ணன் உபதேசிப்பதாக அத்வைதிகள் கூறுவதில் பல கேள்விகள் கேட்கவேண்டியிருக்கிறது. (1) கண்ணன் தான் அறிந்த அர்த்தத்தை உபதேசிக்கிறானோ? அறியாத அர்த்தத்தை உபதேசிக்கிறானோ? (2) அறிந்ததையுபதேசிக்கிறானாலும், அதை நேரே கண்டு உபதேசிக்கிறானோ, அல்லது கேட்டதை மாத்திரங்கொண்டு உபதேசிக்கிறானோ? (3) அறிந்தோ அல்லது கேட்டோ உபதேசிக்கும்போதும் அக்கண்ணனுடைய அஜ்ஞானம் நீங்கிவிட்டதா அல்லது நீங்கவில்லையா (4) நீங்கிவிட்டதானாலும் அவ்வஜ்ஞானத்தினாலுண்டாகும் பேதமயக்கம் கண்ணனுக்கு நீங்கிவிட்டதா இல்லையா?

கண்ணனுடைய கீதைக்கு அத்வைதிகள் ஆதரத்தோடு வியாக்கியானம் எழுதுகையாலே முதல் கேள்வியில் அறியாத அர்த்தத்தைக் கண்ணன் உபதேசிப்பதாகக் கூறமாட்டார்கள்; மூன்றாவது கேள்வியிலும் கண்ணனுடைய அஜ்ஞானம் நீங்கவில்லையென்று கூறத் துணியமாட்டார்கள். ஆக, (1) கண்ணன் தான் நேரே கண்டு அறிந்ததை அஜ்ஞானமும் அதனாலுண்டாகும் பேதமயக்கமும் நீங்கப்பெற்று உபதேசிக்கிறான் என்றோ, (2) அப்படிக் கண்டறிந்தபடியாலே அஜ்ஞானம் நீங்கினாலும் அதனாலுண்டான பேதமயக்கம் நீங்காமையாலே உபதேசிக்கிறான் என்றோ (3) கேட்டறிந்ததை அஜ்ஞானமும் பேதமயக்கமும் நீங்கப்பெற்று உபதேசிக்கிறான் என்றோ (4) கேட்டறிந்தபடியாலே அஜ்ஞானம் நீங்கினாலும் பேதமயக்கம் நீங்காமலேயே உபதேசிக்கிறான் என்றோ கூறும் இந்தநாலு பக்ஷங்களில் ஒன்றைத்தான் அத்வைதிகள் கைக்கொண்டாகவேண்டும்.

॥ भा ॥ अथ परमपुरुषस्याधिगताद्वैतज्ञानस्य बाधितानुवृत्तिरूपमिदं भेदज्ञानं दग्धपटादिवन्न बन्धकमित्युच्यते-नैतदुपपद्यते; मरीचिका-

இதில் கண்ணன் நிர்விசேஷ கூடஸ்த நித்யசைதந்யமாகிற ஆத்மாவை நேரே கண்டறிந்து அஜ்ஞானமும் பேதமயக்கமும் நீங்கப்பெற்று உபதேசிக்கிறான் என்னும் முதல பக்ஷம் பொருந்தாது. எப்படியெனில்; இக்கண்ணன் பரமபுருஷன். ஆகையால ஜீவனுக்குப்போலே இவனுக்குப் பொய்யறிவு பொருந்தாது. மெய்யறிவே பொருந்தும். ஒருவனுக்கு ஒரு அர்த்தத்தை உபதேசிப்பதாகில உபதேசிப்பவன் பொருள்களை பலவற்றை இருப்பதாக அறிய வேண்டும். (1) உபதேசிக்கப்படும பொருள் (2) அதைச் சொல்லும சப்தம் (3) அதைக்கேட்கத்தக்க சிஷ்யன (4) ஆசாரியன் (5) கேட்ட தால் பயன முதலான பற்பலபொருள்களை உண்மையில வெவ்வேருகக் கண்டால்தான எவனும் உபதேசத்தில இழிவான. அத்வைதிகளின் மதத்திலோவெனில் இவ்வேறுபாடுகளெல்லாம பொய்யானவை. ஆகையால பரமபுருஷனுகையாலே மெய்யறிவுடையவனுய், பொய்யறிவும் பேதமயக்கமும நீங்கப்பெற்ற கண்ணனுக்குப பொய்யறிவிஞல் ஏற்படும் பேதமயக்கமும், அதனுல் ஏற்படும் உபதேசம், அநுஷ்டிப்பிக்கை முதலான காரியங்களும் உண்டாக மாட்டா. அப்படி உண்டாவதாக ஒப்புக்கொண்டால், காரணமான பொய்யறிவும, பேதமயக்கமும் நீங்கினபின்பும் கார்யமான உபதேசம் முதலானவை எப்படி உண்டாகின்றன? என்னும கேள்வி எழும். வ்யாகாதம் (முன்னுக்குப பின்முரண்) அபஸித்தாந்தம (தன ஸித்தாந்தத்துக்கு மாருகப்பேசுவது), சாஸ்திரத்தை ஆரம்பிக்க முடியாமை, உபதேசம் கூடாமை, பயனற்ற பரிச்ரமம், வேத விரோதம் முதலான நூற்றுக்கணக்கான தோஷங்கள் இப்பக்ஷத்தில ஏற்படும். ஆகையால் முதலபக்ஷம் பொருந்தாது.

இனி, கண்ணனுக்குத் தான் நேரே கண்டறிந்தமையாலே பொய்யறிவு நீங்கினுலும் அதனுலுண்டான பேதமயக்கம் நீங்காமையினுல் உபதேசிக்கிருன் என்று கூறும் இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது என்று காட்டப்படுகிறது. அத்வைதிகள் கூறுவதாவது:— ''வஸ்திரம் எரிந்தபின்பும், அதை எரிந்த வஸ்திரம் என்று அறிந்தவனுக்கும் அது வஸ்திரம்போலே காட்சியளிக்கிறது. கானல்நீரைக் கானல்நீர் என்று அறிந்தவனுக்கும் அது நீர்போலே காட்சியளிக்கிறது. இதுவே பாதிதாநுவ்ருத்தி என்று கூறப்படுகிறது: அது

जलज्ञानादिकं हि बाधितमनुवर्तमानं न जलाहरणादिप्रवृत्तिहेतुः। एवमत्राप्यद्वैतज्ञानेन बाधितं भेदज्ञानमनुवर्तमानमपि मिथ्यार्थविषयत्वनिश्चयान्नोपदेशादिप्रवृत्तिहेतुर्भवति। न चेश्वरस्य पूर्वमज्ञस्य शास्त्राधिगत-

---

போலே பேதமயக்கம் நீங்கிய கண்ணனுக்கும் பூர்வவாஸநையாலே இந்த பேதங்கள் காட்சியளிக்கக்கூடும். ஆகையால் அவன் உபதேசம் முதலானவற்றில் இழியலாம். எரிந்த வஸ்திரமும் கானல் நீரும் முறையே வஸ்திரத்தினுடையவும், நீரினுடையவும் காரியத்தைச் செய்யமாட்டாததுபோலே வாஸநாதிபலத்தாலே பேதமயக்கம் நீங்கப்பெறுத கண்ணனையும் இந்த பேதமயக்கம் கட்டுப்படுத்தாது'' என்று அத்வைதிகள் கூறுகிறுர்கள். இந்த பா₃தி₄தாநுவ்ருத்தி பக்ஷமும் பொருந்தாது. ஏனெனில்: எரிந்த வஸ்திரத்தை உள்ளபடி அறிந்தவன் வஸ்திரம்போலே தோனறினபோதும் அதை உடுத்திக் கொள்ள முயலமாட்டான். கானல்நீரை உள்ளபடி அறிந்தவன், நீர்போலே அது தோன்றினுலும் அதிலிருந்து நீர் எடுத்துவர முயலமாட்டான். அதுபோலே அத்வைதஜ்ஞானத்தாலே தள்ளப்பட்ட பேதமயககம் வாஸநாபலத்தாலே தொடர்ந்து வந்தாலும் 'இம்மயக்கத்தில் தோன்றும் பேதங்கள் பொய்' என்னும் நிச்சயம் ஏற்பட்டுவிட்டபடியாலே உபதேசம் முதலான காரியங்களில் அவன் ஈடுபடமாட்டான். ஆகையால் கண்ணனுக்கு பா₃தி₄தாநுவ்ருத்தியை ஒப்புக்கொண்டாலும், பாதிதாநுவ்ருத்தியின் பலமாக அத்வைதிகள் அபிமானிக்கும் உபதேசாதிகள் ஓட்டாமையாலே இவ்விரண்டாவதுபக்ஷமும் பொருந்தாது என்றதாயிற்று.

இனி, மூனருவது பக்ஷத்தை எடுத்துக்கொண்டால், அஜ்ஞானமும், பேதமயக்கமும் நீங்கப்பெற்றபின் உபதேசிப்பதென்பது பொருந்தாது என்னும் விஷயம் முதல்பக்ஷத்தை விசாரிக்கும்போதே நிரூபிக்கபபட்டுவிடடது. நிர்விசேஷப்பொருளைக் கண்டறிவதும் கேட்டறிவதும் ஒன்றேயாகையால் முதற்பக்ஷம் தள்ளப்பட்டபோதே இப்பக்ஷமும் தளளப்பட்டதாயிற்று.

இனி, இம்மூன்ருவது பக்ஷத்திலும், நாலாவது பக்ஷத்திலும் ஸர்வேச்வரனை கண்ணன் முதலில் அறியாதவனுயிருந்து, பிறகு சாஸ்திரத்தைக் கேட்டறிந்து உண்மையை அறிகிருன் என்று அத்வைதிகள கூறுவதும நாலாவது பக்ஷத்தில் இப்படிக் கேட்

டறிந்தபடியாலே அஜ்ஞானம் நீங்கினாலும் பாதிநாநுவ்ருத்தியாலே பேதமயக்கம் நீங்காமையாலே கண்ணன உபதேசிக்கிறான் என்று கூறுவதும் பொருந்தாதென்று காட்டப்படுகிறது. கண்ணன் ஸர்வேச்வரனானையாலே முதலில் அறியாதவனாயிருக்கிறான் என்று கூறுவது பொருந்தவேமாட்டாது. இல்லாவிடில் இவன் ஈச்வரனல்லாதவனாகவேண்டிவரும். ஈச்வரனே முதலில் அறியாதவனாயிருந்தான என்று கூறினால், அவன் சாஸ்திரத்தைக்கேட்டு உண்மையை அறிவதெனபதும் முடியாது. ஏனெனில் அவனைக்காட்டிலும் அதிகமான அறிவை உடையவனாய், அவனுக்கும் உபதேசிக்கக்கூடியவன் ஒருவனில்லையே. அப்படி ஒருவனிருந்தால, அவனுக்கு எப்படி அத்வைதஜ்ஞானம் ஏற்பட்டது என்னும் கேள்வி ஏற்பட்டு, அவனுக்கும் உபதேசிக்கக் கூடியவனாக ஒருவனை ஒப்புக்கொள்ள வேண்டிவரும. இப்படியே முடிவில்லாமல் போய்க்கொண்டிருக்கும். இது அநவஸ்தை என்னும் தோஷமாகும. ப்ரவாஹேச்வரர்கள் பலர் என்று கூறவும் முடியாது, "ஏகோ தேவ:" "தேவ ஏகோ நாராயண:" என்று ஆயிரக்கணக்கான ச்ருதிஸ்மிருதிகள் ஸர்வேச்வரன ஒருவனே என்று கோஷிக்கையாலும், "நித்யோ நாராயண:" முதலான வாக்யங்கள் அவன் நித்யன் என்று கோஷிக்கையாலும ஈச்வரர் பலரென்னவொண்ணாது. ஒரே ஈச்வரனே தான் செய்த சாஸ்திரத்தினால உண்மையை அறிந்து கொள்கிறான் என்று கூறலாமேயெனில்: அபௌருஷேயமென்றும், நித்யமென்றும நாம் ஒப்புக்கொள்ளும் வேதம பௌருஷேயமும் அநித்யமும் ஆக வேண்டிவரும். மேலும் உண்மையை அறிந்தபினபே ஈச்வரன் வேதங்களைச் செய்யமுடியும். வேதங்களைக்கொண்டுதான் ஈச்வரன் உண்மையை அறியமுடியும என்று அந்யோந்யாச்ரயதோஷம வரும். அநாதியான வேதங்களை மறந்திருந்து, இப்போது நினைவுக்கு வந்த அவைகளைக்கொண்டு அத்வைதஜ்ஞானத்தை அடைகிறான் என்றும் கூறமுடியாது. இப்போது மறந்திருந்தாலும் முன் ஒருதடவை அனுபவித்திருந்தால்தான் மறுபடியும் நினைவுவரும். முன் அனுபவித்திருக்கிறான் என்று ஒப்புக்கொண்டால, அப்போது யார் அவனுக்கு உபதேசித்தார்கள் முதலான முன் எடுத்த கேள்விகளும தோஷங்களும் வந்தேதீரும. ஆகையால், கண்ணன் முதலில் அறியாதவனாயிருந்து, பிறகு சாஸ்திரத்தால் அறிவுபெற்றான் என்றும், இப்படி அறிவுபெற்று அஜ்ஞானம் நீங்கினாலும அதனாலுண்டான பேதமயக்கம் நீங்கவில்லையெனறும கூறும் மூன்றாவது நாலாவது பக்ஷங்கள் தவறு என்று நிரூபிக்கப்பட்டது. இப்படிக் கூறுவதில் ச்ருதிஸ்மிருதி

तत्त्वज्ञानतया बाधितानुवृत्तिः शक्यते वक्तुम्; *यः सर्वज्ञः सर्ववित् (मु १-२-९) *पराऽस्य शक्तिर्विविधैव श्रूयते स्वाभाविकी ज्ञानबलक्रिया च (श्वे ६-७) *वेदाहं समतीतानि वर्तमानानि चार्जुन। भविष्याणि च भूतानि मां तु वेद न कश्चन॥ (गी ७-२६) इति श्रुतिस्मृतिविरोधात्।

---

விரோதமும் வரும். "ய: ஸர்வஜ்ஞ: ஸர்வவித்" [முண்ட 1-2-9] [எந்தப் பரமபுருஷன் எல்லாப் பொருள்களின் ஸ்வரூபஸ்வபாவங்களை அறிகிறானோ] "பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே ஸ்வாபா4விகீ ஜ்ஞாந ப3லகரியா ச" [ச்வே 6-7] [இப்பரமபுருஷனுக்கு இயற்கையானதும், மேலானதும், விதவிதமானதுமான சக்தியும், அறிவும், பலமும், கிரியையும் இருப்பதாக ஓதப்படுகிறது] என்று வேதவாக்கியங்களிலும், "வேதா3ஹம் ஸமதீதாநி வர்த்தமாநாநி சார்ஜுந, ப4விஷ்யாணி ச பூ4தாநி மாம் து வேத3 ந கச்சந" [கீதை 7-26] [அர்ஜுனா! நான் முன் நடந்தவற்றையும், நடக்கின்றவற்றையும், நடக்கப்போகிறவற்றையும் அறிவேன். என்னை எவனுமறியான்.] என்று கீதை முதலான ஸ்ம்ருதிகளிலும் பரமபுருஷனான கண்ணன் ஒருவனே எப்போதும் இயற்கையான அறிவையுடையவனென்று உத்கோஷிக்கப்படுகிறது. இவற்றிலிருந்து ஈச்வரன் முதலில் அறியாதவனாயிருந்தான் என்றும், சாஸ்திரத்தினால் அவனுக்கு அறிவுண்டாயிற்று என்றும், அவனுக்கு ஒருவன் உபதேசித்தான் என்றும், அவனுக்கு மயக்கம் உள்ளது என்றும் கூறும் வாதங்கள் ச்ருதிஸ்ம்ருதிவிருத்தங்கள் என்பது தெளிவாகிறது. ஆக இவ்வண்ணமாக மூன்றாவது நாலாவது பக்ஷங்களும் தவறு என்று நிரூபிக்கப்பட்டன. ஆக, இவ்வளவால் சங்கரமதத்தில் கண்ணன் கீதையை உபதேசிக்கக் காரணமே இல்லை என்று காட்டப்பட்டதாயிற்று.

இனி, அத்வைதிகளின் மதத்தில் கண்ணன் உபதேசிக்கும் ஆசார்யனாகவும் அர்ஜுனன் உபதேசத்தைக் கேட்கும் சிஷ்யனாகவும் ஆகமுடியாது என்று காட்டப்படுகிறது. கண்ணன் மாத்திரமல்லாமல் இப்போது சங்கரமடங்களில் இருக்கும் அத்வைதாசார்யர்களும் தங்கள் சிஷ்யர்களுக்கு அத்வைதமதத்தை உபதேசிக்க முடியாது. எப்படியெனில்: இவ்வாசார்யர்கள் ஒன்றேயான ஆத்ம ஸ்வரூபத்தை அறியாமல் உபதேசிக்கிறார்கள் என்றோ அதைப் பற்றிய ஸந்தேஹத்தையுடையவர்கள் என்றோ, பொய்யை உப

॥ भा ॥ किंच परमपुरुषश्चेदानींतनगुरुपरम्परा च, अद्वितीयात्मस्वरूपनिश्चये सति अनुवर्तमानेऽपि भेदज्ञाने, स्वनिश्चयानुरूपमद्वितीयात्मज्ञानं कस्मा उपदिशतीति वक्तव्यम्। प्रतिबिम्बवत्प्रतीयमानेभ्यो-

---

தேசிக்கும் வஞ்சகர்கள் என்றோ, யாரோ சொன்னதைத் திருப்பிச் சொல்லுகிறவர்கள் என்றோ, சிறுபிள்ளையைப்போலும் பைத்தியம் பிடித்தவனைப்போலும் தோன்றியபடியெல்லாம் பிதற்றுகிறவர்கள் என்றோ கூறமுடியாது. ஆகையால் அறிந்து உபதேசிக்கிறார்கள் என்று கூறியே தீரவேண்டும். பேதமயக்கம் தொடர்ந்துவந்த போதிலும் தாங்கள் நிச்சயித்தறிந்த இந்த அத்விதீயாத்ம தத்துவத்தை யாருக்கு உபதேசிக்கிறார்கள் என்னும் கேள்வி எழுகிறது. இக்கேள்வியைப் பின்வருமாறு விரிவுபடுத்தலாம். (1) தனக்கே உபதேசிக்கிறானா அல்லது பிறர்க்கு உபதேசிக்கிறானா? (2) தனக்கே யென்னும்போது தன்னைக்காட்டிலும் வேறுபட்டவனாக நிச்சயிக்கப் பட்ட தனக்கு உபதேசிக்கிறானா, அல்லது தன்னைக்காட்டிலும் வேறு படாதவனாக நிச்சயிக்கப்பட்ட தனக்கு உபதேசிக்கிறானா? (3) தன்னைக்காட்டிலும் வேறுபட்டவனாக நிச்சயிக்கப்பட்ட தனக்கு உபதேசிக்கிறான் என்னும்போதும, உண்மையில் வேறுபட்டவனாக நிச்சயிக்கப்பட்ட தனக்கு உபதேசிக்கிறானா, அல்லது பொய்யாக வேறுபட்டவனாக நிச்சயிக்கப்பட்ட தனக்கு உபதேசிக்கிறானா? (4) பிறர்க்கு உபதேசிக்கிறான என்னும்போது உண்மையான பிறர்க்கு உபதேசிக்கிறானா அல்லது பொய்யான பிறர்க்கு உபதேசிக்கிறானா (5) பொய்யான பிறர்க்கு உபதேசிக்கிறான் என்னும் போதும், இவன் பொய்யானவன் என்று அறிந்து உபதேசிக்கிறானா அல்லது மெய்யானவன் என்று நினைத்து உபதேசிக்கிறானா?

இவைகளில் எந்தப்பக்ஷத்தை ஒப்புக்கொண்டாலும் பொருந்தாது என்று இனி காட்டப்படுகிறது, (1) உண்மையில் வேறுபட்டவனாக நிச்சயிக்கப்பட்ட தனக்கு உபதேசிக்கிறான் என்றால் இது அத்வைத ஸித்தாந்தத்திற்கே விரோதமாகும். மேலும், தன்னைத் தன்னிலும் உண்மையில் வேறுபட்டவனாக அறிபவன் அறிவிலியுமாவான். (2) பொய்யாக வேறுபட்டவனாக நிச்சயிக்கப்பட்ட தனக்கு உபதேசிக்கிறான் என்றால், பொய்யாயிருந்துகொண்டு வேறு பட்டவனாக நிச்சயிக்கப்பட்டிருக்கும் மலடிமகன் முதலானோர்க்கும் உபதேசிக்கும்படி நேரிடும். (3) தன்னைக்காட்டிலும் வேறுபடாதவ

ऽर्जुनादिभ्य इति चेत्—नैतदुपपद्यते; न ह्यनुन्मत्तः कोऽपि मणिकृपाण-दर्पणादिषु प्रतीयमानेषु स्वात्मप्रतिबिम्बेषु, तेषां स्वात्मनोऽनन्यत्वं जानन्, तेभ्यः [कमप्यर्थमु] किमप्युपदिशति।

---

வனுக நிச்சயிக்கப்பட்ட தனக்கு உபதேசிக்கிருன் என்ருல், அர்ஜுனன் முதலான சிஷ்யர்களின் தோற்றமில்லாமலே எப்போதும் தனக்கே உபதேசித்துக்கொள்ள வேண்டிவரும். தனக்குத் தானே உபதேசித்துக் கொள்வதில் ஒரு பயனுமில்லை. (4) உண்மையான பிறர்க்கு உபதேசிக்கிருன் என்னும் பக்ஷமும் சரீரபேதமிருந்தபோதிலும் உணமையான ஆத்மபேதத்தை அத்வைதிகள் ஒப்புக்கொள்ளாமையால் பொருந்தாது. (5) பொய்யானவன் என்று அறியப்பட்ட பிறனுக்கு உபதேசிக்கிருன் என்ருல், முன சொன்னதுபோலே பொய்யானவரென்று அறியப்பட்ட மலடிமகன் பிரதிபிம்பம் முதலானவற்றுக்கும் உபதேசிக்கவேண்டிவரும். (6) பொய்யான பிறனையே மெய்யானவன் என்று நினைத்து உபதேசிக்கிருன் என்ருல், உண்மையையே இவன் அறியவில்லையாகையால் உபதேசம் செய்யவே இவனுக்குத் தகுதியில்லை. (7) பிரதிபிம்பமபோலே உண்மையில் ஒன்ருகவேயிருந்தபோதிலும் மயக்கத்திஞல் வேருகத்தோன்றுகின்றவர்களும், அத்வைதஜ்ஞான பலத்தாலே வேறுபடாதவர்களென்று நிச்சயித்தறியப்பட்டிருப்பவர்களுமான அர்ஜுனன் முதலான சிஷ்யர்களுக்கு உபதேசிக்கிருன் ஆசார்யன் என்று கூறிஞல், இதுவும் பொருந்தாது. பைத்தியம் பிடிக்காத எவனுமே, மணி, கத்தி, கண்ணுடி முதலானவற்றில் தோன்றும் தன் பிரதிபிம்பங்களுக்கு, அவை தன்னைக்காட்டிலும் வேறுபடாதவை எனறு அறிந்துகொண்டே எந்த அர்த்தத்தையும் உபதேசிக்கமாட்டானன்ருே. ஸாமாந்யமான விஷயத்தைக்கூட எவனும் உபதேசிக்கமாட்டான் என்பது ஸித்தமாயிருக்க மோக்ஷத்திற்காக உபதேசிப்பாஞே? சிறுபிள்ளை அல்லது பைத்தியம் பிடித்தவனைத் தவிர எவனுமே பிரதிபிம்பத்துக்கு உபதேசிக்கமாட்டான் என்பது திண்ணமாயிருக்க, ஸர்வஜ்ஞஞன ஸர்வேச்வரஞே உபதேசிப்பான்? ஆகையால், கண்ணன் அத்வைதஜ்ஞானத்தை உபதேசிக்கும் ஆசார்யஞயிருப்பதும், அர்ஜுனன் அதைக்கேட்கும் சிஷ்யஞயிருப்பதும் எவ்வகையிலும் பொருந்தாது என்று நிச்சயிக்கப்பட்டதாயிற்று.

बाधितानुवृत्तिरपि तैर्न शक्यते वक्तुम्; बाधकेनाद्वितीयात्मज्ञाने नात्मव्यतिरिक्तभेदज्ञानकारणस्या[ज्ञ]नादेर्विनष்टत्वात्। द्विचन्द्रज्ञानादौ

முன், (99, 100-வது பக்கங்களில்) பா₃தி₄தாநுவ்ருத்தி ஏற்படக் கூடும் என்று வைத்துக்கொண்டு, (அத்வைதஜ்ஞானத்தாலே தள்ளப் பட்ட பேதமயக்கம் வாஸநாபலத்தாலே தொடர்ந்து வந்தாலும்,) உபதேசம் முதலான காரியங்கள் ஓட்டாது என்று காட்டப்பட்டது. இனி, அத்வைதமதத்தில பா₃தி₄தாநுவ்ருத்தியே ஓட்டாது என்று நிரூபிக்கப்படுகிறது. அத்வைதமதத்தில் ஆத்மா ஒன்றே உண்மை என்னும் அறிவினாலே அவ்வாத்மாவைக்காட்டிலும் வேறான எல்லாப் பொருள்களும் பா₃தி₄க்கப்படுகின்றன, அதாவது பொய்யென்று அறியப்படுகின்றன. ஆகையால், பேதமயக்கத்துக்குக்காரணமாய் அநாதியாயிருந்துவரும் மாயை, அவித்யை (அஜ்ஞானம்) முத லானவையெல்லாம் அழிந்துவிடுகின்றன. இப்படிக் காரணமான மாயை முதலானவை அழிந்தபின்பு காரியமான பேதமயக்கம் தொடர்ந்துவரமுடியாது. தோஷம் நீங்கியபின் மயக்கம் போகாம லிருக்க இடமேயில்லை. மேலும், வேறொன்றாலும் அழிக்கப்படாமல் இந்நாள்வரை தொடர்ந்துவந்த அநாதியான பேதஜ்ஞானகாரண மான தோஷம் அத்வைதஜ்ஞானத்தாலும் அழியவில்லையானால், ஒன்றாலும் ஒருபோதும் அது அழியமுடியாது; ஆகையால் ப்ரஹ்மம் நித்யஸம்ஸாரியாயிருப்பதைத்தவிர வேறு வழியில்லை. இதற்குமேல் அத்வைதிகள் "கண்ணில் திமிரதோஷமுள்ளவன் ஒரு சந்திரனை இரண்டாகக் காண்கிறான். அவனுடைய நண்பனொருவன் 'சந்திரன் இரண்டல்ல; ஒன்றுதான்' என்று உபதேசித்தபின் சந்திரன் இரண்டு என்னும் மயக்கம் நீங்கிவிடுகிறது; இப்படி மயக்கம் நீங்கியபின்னும் சந்திரன் இரண்டாகவே காட்சியளிக்கிறது. இதுவே பா₃தி₄தாநுவ்ருத்தி எனப்படுகிறது. அப்படியே இங்கும் பேதமயக்கம் நீங்கியபோதிலும், பேதங்கள் தெரிகின்றன" என் கிறார்கள். இது சரியன்று. சந்திரன் இரண்டாகக் காட்சியளிக்கு மிடத்தில், நண்பனுடைய உபதேசத்தாலே 'சந்திரன் இரண்டு' என்னும் பொய்யறிவு நீங்கினாலும், அவ்வறிவுக்குக்காரணமான உண்மையான திமிரம் முதலான கண்தோஷங்கள் நீங்கவில்லை. ஆகையால் அங்கு சந்திரன் இரண்டாகக் காட்சியளிப்பது பொருந் தும். தோஷம் காரணமாக ஏற்படும் ப்ரத்யக்ஷத்தாலே இரண்டாகக்

तु चन्द्रैकत्वज्ञानेन पारमार्थिकतिमिरादिदोषस्य द्विचन्द्रज्ञानहेतोरविनष्टत्वात् बाधितानुवृत्तिर्युक्ता; अनुवर्तमानमपि प्रबलप्रमाणबाधितत्वेना-

---

காட்சியளித்தாலும், தோஷமற்ற ஆப்தோபதேசத்தாலே அது பாதிக்கப்பட்டு விடுகிறபடியால் சந்திரன் இரண்டு என்றும் வியவஹாரம் முதலானவற்றை அவன் செய்யமாட்டான். இங்கோ வெனில் 'ஆத்மாவொன்றே உண்மை, மற்றவை பொய்' என்னும் மெய்யறிவாலே ஆத்மாவைக்காட்டிலும் வேறுபட்டதாய், பேதமயக் கத்துக்குக் காரணமான அஜ்ஞானமாகிற பொய்யான தோஷமும் நீங்கியே தீரவேண்டும். அப்படி நீங்கவில்லையாகில் அது எப் போதும் நீங்காது. தோஷம் நீங்கியபிறகு பேதங்களைக் காணாது அவைகளைப்பற்றி வியவஹரிப்பது முதலானவை ஒட்டவேமாட்டா. த்₃விசந்த்ரஜ்ஞானத்துக்குக் காரணமான உண்மையான திமிர தோஷம் 'சந்திரன் ஒன்றே' என்னும் ஆப்தோபதேசத்துக்கு விஷயமல்லாமையாலே அவ்வுபதேசத்தால் நீங்கமாட்டாது. சஸ்திர சிகிச்சை முதலானவற்றாலேயே நீங்கும். பே₄த₃ஜ்ஞாநகாரணமான பொய்யான அஜ்ஞானம், எல்லாப்பொய்யறிவுகளையும் போக்கும் 'ஆத்மா ஒன்றே மெய்' என்னும் அறிவுக்கு விஷயமாகையாலே அத னாலேயே நீங்கும். வேறொன்றாலும் நீங்காது. ஆகையால் த்₃வி சந்த்ரஜ்ஞானஸ்தலத்தில் பா₃தி₄தாநுவ்ருத்தி ஒட்டும். பே₄தஜ்ஞான ஸ்தலத்தில் அது ஒட்டாது. மேலும், த்விசந்த்ரஜ்ஞான ஸ்தலத்தில் நிர்த்தோஷமான (தோஷம் காரணமாக ஏற்படாத) ஆப்தோப தேசம், தோஷம்காரணமாகவரும் ப்ரத்யக்ஷத்தைக் காட்டிலும் ப்ரபல மானது. ஆகையால் அங்கு முன்னதுபின்னதை நீக்கக்கூடும். இங்கு பே₄த₃ப்₄ரமமும், அதைப்போக்கும் ஆத்மைக்யஜ்ஞானமும் அஜ்ஞானத்தால் ஏற்படுபவை. ஆகையால் துல்யப₃லமான இவ் விரண்டில் ஒன்றை ஒன்று நீக்கமுடியாது. நீக்கும் என்று பிடிவாதம் பிடித்தால் துலயபலமான இவ்விரண்டில் பேதஜ்ஞாநந்தான் ஆத்மைக்யஜ்ஞானத்தை நீக்கட்டுமேஎன்னும் கேள்வி எழும். பா₃த₄க ஜ்ஞானமான ஆத்மைக்யஜ்ஞானம் அவித்யையாகிற தோஷத்தால் ஏற்படுவது என்பது அறியப்படவில்லை; பா₃த்₄யஜ்ஞானமான பே₄த₃ஜ்ஞானம் அந்த தோஷத்தால் ஏற்படுவது என்று அறியப் பட்டுவிட்டது. ஆகையால் முத்தியது பிந்தியதைப் போக்கடிக்கும் என்று அத்வைதிகள் கூறுவதும் சரியல்ல. முதலில் வாக்யார்த்த ஜ்ஞானம் ஏற்படும்போதே ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறான எல் லாப் பொருள்களும் பொய் என்பதை இவன் அறிந்துவிடுகிறான்.

किंचित्करम्। इह तु भेदज्ञानस्य सविषयस्य सकारणस्यापारमार्थिकत्वेन वस्तुयाथात्म्यज्ञानविनष्टत्वान्न कथञ्चिदपि बाधितानुवृत्तिः संभवति।

---

ஆகையால், 'ஆத்மாவொன்றே மெய்' எனனுமஇவ்வறிவும் பொய் யென்று அறிந்தேதீரவேண்டும். ஆகையால், ஆத்மைக்யஜ்ஞானம் பொய்யென்று இவனறியவில்லையென்று கூறுவது ஒட்டாது. ஆத்மைக்யஜ்ஞானம் மெய்யே என்று கூறினல், ப்ரஹ்மமும், இந்த ஜ்ஞானமுமாகிய இரண்டு உண்மைப்பொருள்கள் ஏற்பட்டுவிடுவதால், ஒன்றே உண்மை என்று கூறும் அத்வைதம போய்விடுகிறது. ஆத்மைக்யஜ்ஞானம் ப்ரஹ்மஸ்வரூபமே என்று கூறினல் ப்ரஹ்ம ஸ்வரூபம் நித்யமாகையாலே எப்போதுமே மோக்ஷம் ஏற்படவேண்டி வரும். மேலும். 'ஆத்மைக்யஜ்ஞானம் பொய்யென்று அறியப்படவில்லை; பேதஜ்ஞானம் பொய்யென்று அறியப்படுகிறது' என்பதால்மாத்திரம் பேதஜ்ஞானவிஷயமான பேதங்கள் பொய்யாகிவிடாது. இப்படி நிர்ப்பந்தம் கொண்டால், பின்வரும் விபரீதம ஏற்படும். உண்மையான வெள்ளியை ஒருவன் சுக்தி (கிளிஞ்சல்) என்று எண்ணிவிடுகிருன். இங்கு 'இது சுக்தி' என்னும் அறிவு 'இது வெள்ளி' என்னும் அறிவை பாதிக்கிறது. முந்திய அறிவு பொய்யானது என்று அறியப்படவில்லை. பிந்திய அறிவு பொய் என்று அறியப்படுகிறது. இதனல் பொய்யென்று அறியப்பட்ட பிந்திய அறிவுக்கு விஷயமான வெள்ளி பொய்யாகிவிடுவதில்லை; சுக்தியும் நிஜமாகிவிடுவதில்லை. இதுபோலவே அத்வைதமதத்திலும் பேதங்கள் பொய்யாகமுடியாது; ஆத்மைக்யமும் மெய்யாக முடியாது. பேதஜ்ஞானமும், ஆத்மைக்யஜ்ஞானமும் ஆகிய இரண்டும் தோஷத்தால் ஏற்படுவதானுலும், ஆத்மைக்யஜ்ஞானம் பிந்தியதாகையாலே முந்திய பேதஜ்ஞானத்தைப் போக்கடிக்கும் என்று அத்வைதிகள் கூறுவதும் சரியன்று. தோஷமூலம் என்று அறியப்பட்டவளவில், பிந்தியதாயிருக்கையால்மாத்திரம் அதற்கு முந்தியதை அடிக்கும் பலம் வந்துவிடாது. அப்படிக் கொண்டால் மயங்கியவன் ஒருவன் 'எல்லாம் பொய்' என்று கூறும் வாக்கியம், ஒவ்வொன்றையும் மெய்யென்று கூறும் எல்லா வாக்கியங்களுக்கும் பிந்தியதாகவேயிருக்கையாலே, அவை எல்லாவற்றையும் அடிக்கவேண்டிவரும். 'வரட்டுமே' என்று அத்வைதிகள் கூறினல், 'ஆத்மாவொன்றே மெய்' என்னும் அத்வைதியின் வாக்கியம் 'ஆத்மாவையுள்ளிட்ட எல்லாம் பொய்' என்னும்மாத்யமிக பௌத்தனின் வாக்யத்தால் தள்ளப்படவேண்டிவரும். ஆகையால் இரண்டும்

अतः सर्वेश्वरस्येदानींतनगुरुपरंपरायाश्च तत्वज्ञानमस्ति चेद्भेददर्शन-तत्कार्योपदेशाद्यसंभवः। नास्ति चेदज्ञानस्य तद्धेतोः स्थितत्वेनाज्ञत्वादेव सुतरामुपदेशो न संभवति॥

---

தோஷமூலமென்று அறியப்பட்டபோதிலும், பிந்திய வாக்கியம் முந்தியவாக்கியத்தை அடிக்கும் என்றது பொருந்தாது என்று நிரூபிக்கப்பட்டது ஆக, இவ்வளவால் [பக்கம் 105 முதல் இது வரை] பேதஜ்ஞானமும், அதன் விஷயமான பேதங்களும், அதன் காரணமான அநாதிமாயையும் பொய்யானவையாகையாலே, ஆத்மா ஒன்றே உண்மை என்னும் மெய்யறிவாலே அழிக்கப்பட்டு விடுகின்றனவாகையாலே அத்வைதமதத்தில் அநாதியான அஜ்ஞானத்தாலோ, பேதஜ்ஞானத்தாலோ, பேதவாஸனை முதலான வற்றாலோ பாதிதாநுவ்ருத்தி ஏற்படமுடியாது என்று நிரூபிக்கப் பட்டதாயிற்று. ஆக, இவ்வளவால் [பக்கம் 98-முதல் இதுவரை] நிரூபிக்கப்பட்டவைகளின் ஸாராம்சமாவது:-ஸர்வேச்வரனிலிருந்து தொடங்கி இப்போதுள்ள அத்வைத குருபரம்பரையிலுள்ளவர்கள் வரையில் உள்ள ஆசார்யர்களில் ஒருவருக்காவது (அத்வைத மதத்தின்படி) உண்மையறிவு இருந்ததாகில், பேததர்சனமும் அத னால் உண்டாகும் உபதேசம் முதலானவையும் பொருந்தாது. உண்மையறிவு இல்லையாகில், அஜ்ஞானம், அதன் காரணமான அவித்யை முதலானவை இருக்கையாலே இவர்கள் அனைவரும் அறிவற்றவர்களாகையாலே உபதேசம் ஓட்டவே ஓட்டாது. உண்மை யறிவு உண்டென்றால் பாதிதாநுவ்ருத்திக்கு த்விசந்திரஜ்ஞானத் தைப்போன்ற திருஷ்டாந்தமாத்ரமாவது உண்டு; அறிவுமில்லை யென்றால் அதுவும் கிடையாது. கீதை முதலானவற்றுக்கு அத்வைதிகள் வியாக்கியானம் எழுதுவதும் பிரவசனம் செய்வதும் நிஷ்பலமேயாகும் என்றதாயிற்று.

இதுவரையில் அத்வைதமதத்தில் கீதையை உபதேசிக்கக் காரணமில்லையென்றும், கண்ணன் உபதேசிப்பவனாகவும், அர்ஜுனன் கேட்பவனாகவும் இருக்கமுடியாதென்றும் நிரூபிக்கப்பட்டது. இனி, அத்வைதோபதேசத்தால் ஒரு பயனுமில்லை என்று நிரூபிக் கப்படுகிறது. அத்வைதமதத்தில் ஜீவாஜ்ஞாநபக்ஷம், ப்ரஹ்மா ஜ்ஞானபக்ஷம் என்று இரண்டு பக்ஷங்கள் உண்டு. ஜீவாஜ்ஞான பக்ஷமாவது:— ஒன்றான சிந்மாத்ரப்ரஹ்மம் மாயை, அதன் கார்யமான அவித்யை ஆகியவற்றில் பிரதிபலிக்கும்போது ஸகுண

॥ भा ॥ किंच गुरोरद्वितीयात्मविज्ञानादेव ब्रह्माज्ञानस्य सकार्यस्य विनष्टत्वात् शिष्यं प्रत्युपदेशो निष्प्रयोजनः। गुरुस्तज्ज्ञानं च कल्पितमिति

---

ப்ரஹ்மம் எனப்படும் ஈச்வரனாகவும் பல ஜீவர்களாகவும் ஆகிறது; இந்த ஜீவேச்வரர்கள் அனைவருக்கும் அத்வைதஜ்ஞானம் ஏற்பட்ட பிறகே ஸம்ஸாரமோக்ஷம் ஏற்படும் என்னும் பக்ஷம். பைத்தியம் பிடிக்காத எவனும், தன்னுடைய பிம்பத்திற்கே உபதேசிக்கமாட்டான் என்பதும், அப்படி உபதேசிப்பதால் எவ்விதப் பயனும் ஏற்படாது என்பதும் சிறுவர்களுக்குக் கூடத்தெளிவாகும். ஆகையால் இப்பக்ஷத்திலும் உபதேசம் பயனற்றது என்பது தெளிவு. இந்த தூஷணம் ப்ரஹ்மாஜ்ஞானபக்ஷத்துக்கும் பொதுவானது. இனி, ப்ரஹ்மாஜ்ஞான பக்ஷமாவது:—ஒன்றேயான சிந்மாத்ரப்ரஹ்மம் அவித்யை எனப்படும் அஜ்ஞானத்தால் மறைக்கப்பட்டு ஒரே ஜீவனாக மாறுகிறது; ஒரு மனிதன் தன் ஸ்வப்னத்தில் பலரைக் காண்பதுபோல், ஒருவனான இந்த ஜீவனுடைய மயக்கத்தால் பல ஜீவர்களும், உலகமுமாகிற தோற்றம் உண்டாகிறது; அந்த ஒரு ஜீவனே உண்மையானவன்; மற்றவர்கள் அவனால் கற்பிக்கப்பட்டவர்கள்; அந்த ஒரு ஜீவன் எந்த தேசத்தில் அல்லது தேஹத்தில் இருக்கிறான் என்பது யாருக்கும் தெரியாது; அத்வைத உபதேசத்தால் அந்த ஒரு ஜீவனுக்குத் தத்வஜ்ஞானம் உண்டாகிவிட்டதானால், ஸ்வப்நம் காணகிறவன் விழித்தவுடன் அவனால் காணப்பட்ட மனிதர்கள், பொருள்கள் ஆகியவையெல்லாம் அழிந்து ஸ்வப்நம் காண்பவன ஸுயநிலையடைவதுபோலே இந்த ஜீவனும் அஜ்ஞானம் நீங்கி சிந்மாத்ரப்ரஹ்ம நிலையை அடைகிறான் என்கிறார்கள் ப்ரஹ்மாஜ்ஞானவாதிகள். இப்பக்ஷத்திலும் அத்வைதோபதேசத்தால் ஒரு பயனும் விளையாது என்பதற்கு முன்காட்டியதற்கு மேலும் சிலகாரணங்கள் நிரூபிக்கப்படுகின்றன இனி.

இவர்களைச் சில கேள்விகள் கேட்கவேண்டியுள்ளது; இங்கு கீதையை உபதேசிக்கும் கண்ணன உண்மையான ஜீவனா? அல்லது கல்பிதஜீவனா? என்பது முதற்கேள்வி. கண்ணனே உண்மையான ஜீவன் என்று கூறுவார்களாகில், ஆசார்யனான அவனுடைய அத்வைதாத்மஜ்ஞானத்தாலேயே ப்ரஹ்மாஜ்ஞானமும், அதன் கார்யமான சிஷ்யத்வம், ஆசார்யத்வம் முதலானவையும் அழிந்துவிடுகின்றனவாகையாலே, உபதேசிப்பவன் ஒருவனில்லை, கேட்பவனுமில்லை, உபதேசிக்கப்பரிகரமான அறிவு முதலானவையுமில்லை.

चेत्, शिष्यतज्ज्ञानयोरपि कल्पितत्वात्तदप्यनिवर्तकम्। कल्पितत्वेऽपि पूर्व-

ஆகையால் சிஷ்யனான அர்ஜுனனைக் குறித்துக் கண்ணன் உபதேசிக்கவும் முடியாது; உபதேசிப்பதால் பயனுமில்லை. இனி, அத்வைதிகள் கண்ணனும், அவனைப்போன்ற மற்ற அத்வைதாசார்யர்களும் கல்பித ஜீவர்களே என்று கூறியாகவேண்டும். ஸ்வப்னத்தில் காணப்பட்ட புருஷனின் அறிவினால் ஸ்வப்னம் பாதிக்கப்படாததுபோலே கல்பித ஜீவனான கண்ணனின் அறிவினால் உலகம் பாதிக்கப்படாது. அது பாதிக்கப்படுவதற்காக உபதேசம் செய்வது பயனுடையதே என்று இவர்கள் கருத்து. இவர்களை மற்றொரு கேள்வி கேட்கிறோம். சிஷ்யனான அர்ஜுனன் உண்மையான ஜீவனா, அல்லது கல்பித ஜீவனா? என்று. அர்ஜுனனே உண்மையான ஜீவன் என்று கூறுவார்களாகில், அதற்கு என்ன ப்ரமாணம்? என்று அவர்களைக் கேட்கவேண்டும். ஒரு ப்ரமாணமும் அவர்களால் காட்டமுடியாது. மேலும், எந்த ஆசார்யனும், "இந்த என்னுடைய சிஷ்யனான ஜீவன் என் உபதேசத்தாலே முக்தனாகப்போகிறான்; ஸ்வப்னம் காணப்படுபவனைப்போலே நான் இவனாலே கல்பிக்கப்பட்டவன்" என்று நினைக்க மாட்டான்; அப்படி நினைத்தாலும், தன்னையே அழிக்கப்போகும மஹாபகாரியான அவனுக்கு உபதேசிக்கவும் மாட்டான். "ஸ்வப்நம் தானே கலைகிறபோது கலையட்டும்; நாமாக எதற்கு இதைக் கலைய வைத்து நம்மையே அழித்துக்கொள்ளவேண்டும்?" என்றே நினைப்பான். ஆகையால் மோக்ஷோபாயத்தை அனுஷ்டிக்கவேமாட்டான். சிஷ்யனும் ஸ்வப்னத்தில் காணப்பட்டவனைப்போலே ஆசார்யனைத் தன்னால் கல்பிக்கப்பட்டவனாக நினைத்தானாகில் அவ்வாசார்யனிடம் ஒன்றையும் கேட்கவும் மாட்டான். குருவும், அவருடைய அறிவும் தன்மயககத்தால் கல்பிக்கப்பட்டவை என்று அறிந்தானாகில் அவனிடமிருந்து எந்த அர்த்தத்தைக் கேட்பான்? தன்னால் கல்பிக்கப் பட்ட ஆசார்யன் செய்கிற உபதேசம் என்னும் பொய்யறிவாலே தன் மயக்கம் தீருகிறது என்பதும் பரிஹஸிக்கத்தக்கது. இப்படிக் கூறுவதைவிட தன் மயக்கத்தாலேயே தன் மயக்கம் தீர்ந்துவிடுகிறது என்று கூறுவதே சிறந்ததாகும். மேலும், அர்ஜுனனுக்கு உபதேசமாகி எத்தனையோ ஆயிரம் வருஷங்களாகிவிட்டது. இன்னமும் ஸம்ஸாரமயக்கம தீரவில்லை. ஆகையால் அர்ஜுனனும், இன்றளவும் இருந்த எல்லா அத்வைத சிஷ்யர்களும், எல்லா அத்வைதாசார்யர்களும் வேறு ஒரு உண்மையான ஜீவனாலே கல்

विरोधित्वेन निवर्तकमिति चेत्, तदाचार्यज्ञानेऽपि समानमिति तदेव निवर्तकं भवतीत्युपदेशानर्थक्यमेव, इति कृतमसमीचीनवादैः [निरस्तैः] ॥ १२ ॥

---

பிக்கப்பட்டவர்கள் என்று. கூறவேண்டிய ஒரு வழியே அத்வைதிகளுக்கு உள்ளது. ஆக, "சுகோ முக்த: வாமதேவோ விமுக்த:" முதலான சாஸ்திரங்களெல்லாம் பலர் முக்தியடைந்தார்கள் என்று கூறுவதெல்லாம் அத்வைதிகளுக்குப் பொய்யாகிவிட்டது. கிருஷ்ணன். அர்ஜுனன், ஆதிசங்கராசார்யர் முதலான அனைவரும் மற்ற பலன்களையெல்லாம் விட்டு, மோக்ஷத்தை அடைவதற்காகப் பட்டபாடெல்லாம் வீண் என்று அத்வைதிகளே ஒப்புக்கொண்டதாகிவிட்டது. ஆகையால் கீதோபதேசம் அர்ஜுனன் காலத்திலிருந்து தொடங்கி, இன்றளவும் பயனற்றதேயாகும். இனி, எவனோவொரு ஜீவனால் கல்பிக்கப்பட்டவர்களே தாங்கள் என்று அறிந்தார்களாகில் எந்த ஆசாரியனும் தன் அழிவுக்குத் தானே உபதேசிக்கவும் மாட்டான்; எந்த சிஷ்யனும் தன் அழிவுக்காகத் தான் கேட்கவும்மாட்டான். ஆகையால் அந்த உண்மையான ஜீவனும் எக்காலத்திலும் மோக்ஷமடைய வழியேயில்லை. இனி, சிஷ்யனும் அவனுடைய அறிவும் கல்பிதமேயானாலும், சிஷ்யனுடைய ஆத்மைக்ய ஜ்ஞானமானது பேதஜ்ஞானத்திற்கு விரோதியாகையாலே பேதஜ்ஞானத்தைப் போக்கடிக்கும் என்று அத்வைதிகள் கூறுவார்களாகில், ஆசார்யனுடைய ஜ்ஞானமும் பேதஜ்ஞானத்திற்கு விரோதியாகையாலே அதுவே பேதஜ்ஞானத்தைப் போக்கடித்திருக்கவேண்டும். ஆகையால் ஆசார்யன் சிஷ்யனுக்கு உபதேசிப்பது பயனற்றதேயாகும். ஆக, இப்படி சாஸ்திரோபதேசம், அதை உபதேசிப்பவன், அதைக்கேட்பவன், அதன்பயன், ஆகிய எதுவுமே அத்வைதிகளின் மதத்தில் பொருந்தாது என்று நிரூபிக்கப்பட்டதாயிற்று. 'கரடிக்குப் பிடித்த விடமெல்லாம் மயிர்' என்பதுபோலே அத்வைதமதத்தில் எந்த விஷயத்தையெடுத்தாலும் இப்படி தோஷமயமாயிருக்கிறது. குயுக்திவாதங்களும், பொருந்தாப்பேச்சுகளும், கற்பனைக் கோட்டைகளும் நிரம்பிய இவ்வத்வைதமதத்தை, கண்ணனின் கீதாமிருதத்தைப் பருகும் சமயத்தில் கண்டிக்க நேர்ந்தது குறித்து உண்மையில் வருந்தவேண்டியுள்ளது. ஆகையால், இதை இத்துடன் நிறுத்திக்கொள்கிறோம். விரிவு வேண்டுவார் ஸ்ரீபாஷ்யம், ச்ருதப்ரகாசிகை, சததூஷணீ முதலான பூர்வாசார்யக்ரந்தங்களிலே கண்டு கொள்வது. 12.

देहिनोऽस्मिन् यथा देहे कौमारं यौवनं जरा।
तथा देहान्तरप्राप्तिर्धीरस्तत्र न मुह्यति ॥ १३ ॥

13. தே₃ஹிநோऽஸ்மிந்யத₂ா தே₃ஹே கௌமாரம் யௌவநம் ஜரா।
தத₂ா தே₃ஹாந்தரப்ராப்திர் தீ₄ரஸ்தத்ர ந முஹ்யதி ॥

அஸ்மிந் தே₃ஹே—*இந்த உடம்பில் (இருக்கும்).* தே₃ஹிந:—*ஆத்மாவுக்கு,* கௌமாரம்—*இளமையும்,* யௌவநம—*வாலிபப்பருவமும்,* ஜரா—*கிழத்தனமும்,* யத₂ா (ப₄வந்தி)—*எப்படி ஏற்படுகின்றனவோ,* தத₂ா—*அப்படியே,* தே₃ஹாந்தர ப்ராப்தி:—*(இந்த தேஹத்தை விட்டவுடன்) மற்ெறாரு தேஹத்தை அடைவதும் ஏற்பட்டே தீரும்.* தீ₄ர:—*அறிவாளியாயிருப்பவன்,* தத்ர—*இந்த தேஹத்தைவிட்டு வேெறாரு தேஹத்தை எடுப்பதில்,* ந முஹ்யதி—*மயக்கமடைவதில்லே.*

---

13. இந்தவுயிர் கௌமாரம் யௌவனமூப் பென்பவற்றை
வந்தவுட னின்று மருவுதல்போ—லந்தவுயிர்
வேறுடல மேவுதலு மிக்கன்ன தாங்கதனைத்
தேறுமவர் தாங்கலங்கார் திர்ந்து.

இந்த உயிர்—*இந்த (உடம்பிலிருக்கும்) ஆத்மாவானது* வந்த உடல் நின்று—*வந்தேறியான உடலிலே இருந்துகொண்டு* கௌமாரம யௌவநம் மூப்பு என்பவற்றை—*இளமை, வாலிபத் தன்மை, கிழத்தனம் என்னும் நிலேகளை,* மருவுதல் போல்—*அடைவதுபோல்,* அந்த உயிர்—*அதே ஆத்மாவானது,* மிக்கு—*தேஹமரணத்திற்குப்பின்,* வேறு உடலம் மேவுதலும்—*வேறு உடம்பை அடைவதும்,* அன்னது—*தேஹஸம்பந்தத்தால் ஏற்படுவதேயொழிய ஆத்மாவின் தன்மையல்ல.* ஆங்கு அதனே தேறுமவர்—*பிறப்பு இறப்பு என்னுமிரண்டும் தேஹத்தின் தன்மையே என்பதை அறிகிறவர்கள்,* தாம் தீர்ந்து கலங்கார்—*தாமே (ஆத்மாவின் நித்யத்தன்மையில்) உறுதியுடனிருக்கையாலே கலங்கமாட்டார்கள்.*

॥ भा ॥ एकस्मिन् देहे वर्तमानस्य देहिनः कौमारावस्थां विहाय यौवानाद्यवस्थाप्राप्तावात्मनः स्थिरत्वबुद्ध्या यथाऽऽत्मा नष्ट इति न शोचति, देहाद्देहान्तरप्राप्तावपि तथैव स्थिर आत्मेति बुद्धिमान्न [शोचति] तत्र मुह्यति। अत आत्मनां नित्यत्वादात्मानो न शोकस्थानम्।

---

13. சென்ற சுலோகத்தில் ஆத்மாக்களைக்குறித்து வருந்தக் கூடாது என்று காட்டுவதற்காக ஆத்மாக்கள் நித்யமானவர்கள் என்று காட்டப்பட்டது. அதன்மேல், 'ஆத்மாக்கள் நித்தியமானால் பிறப்பு, இறப்பு முதலான வழக்குகள் எப்படி ஒட்டும்?' என்னும் கேள்வி எழுகிறது. இதற்கு ஸமாதானத்தை திருஷ்டாந்தத்தைக் காட்டி விளக்குகிறது இந்த ச்லோகம் (அஸ்மிந் தே₃ஹே தே₃ஹிந:) இந்த தேஹத்திலிருக்கும் ஜீவனுக்கு. (தேஹிந:) தேஹத்தையுடைய வனாகையால் 'தே₃ஹீ' என்று ஜீவன் சொல்லப்படுகிறான். ஜீவனுக்கு இந்த தேஹத்தில் கௌமாரம் முதலான அவஸ்தைகளானாலும், இந்த தேஹத்திலேயே தேஹாந்தரப்ராப்தி கிடையாதாகையாலே, "தே₃ஹிந: அஸ்மிந் தே₃ஹே யதா₂ கௌமாரம்..." [ஜீவனுக்கு இந்த தேஹத்தில் எப்படிக் கௌமாரம் முதலிய நிலைகள் ஏற்படு கின்றனவோ] என்று கூட்டிப் பொருள்கொள்ளாமல், "அஸ்மிந் தே₃ஹே (வர்த்தமாநஸ்ய) தே₃ஹிந: யதா₂கௌமாரம்..." [இந்த தேஹத்தில் இருக்கும் ஜீவனுக்கு எப்படிக் கௌமாரம் முதலான நிலைகள் ஏற்படுகின்றனவோ] என்று கூட்டிப் பொருள் கொள்ள வேண்டியிருக்கிறது. (கௌமாரம் யௌவநம் ஜரா) ஒரு தேஹத் திலிருக்கும் ஜீவனுக்கு முதலில் குமாராவஸ்தை ஏற்படுகிறது. அதை விட்டவுடன் யௌவநாவஸ்தை ஏற்படுகிறது. அதைவிட்டவுடன் 'ஜரை' எனப்படும் கிழத்தனம் ஏற்படுகிறது. (யதா₂...) இப்படி ஒவ்வொரு நிலைகள் கழிந்து, மற்றொரு நிலை ஏற்பட்டாலும் எல்லா நிலைகளிலும் தேஹத்துக்கே மாறுபாடாகையாலும், ஆத்மா அழியாமல் நிலையாயிருக்கிறானாகையாலும் இந்நிலைமாறுபாடுகளைக் கண்டு 'நாம் (ஆத்மா) அழிந்து விட்டோமே' என்று அறிவாளியா யிருப்பவன் எவனும் எப்படி வருந்துவதில்லையோ, அப்படியே மற்றொரு தேஹத்தை இவ்வாத்மா எடுத்துக்கொள்வதிலும் வருந்த லாகாது. (ததா₂தே₃ஹாந்தரப்ராப்தி:) ஒரே ஆத்மாவுக்கே எப்படிக் கௌமாரம் முதலான நிலைகள் ஏற்படுகின்றனவோ, அப்படியே அவ்வொரு ஆத்மாவுக்கே மற்றொரு தேஹத்தை அடைகையாகிற

एतावदत्र कर्तव्यम्—आत्मनां नित्यानामेवानादिकर्मवश्यतया तत्तत्कर्मोचितदेहसंसृष्टानां तैरेव देहैर्बन्धनिवृत्तये शास्त्रीयं स्ववर्णोचितं

---

நிலையும் ஏற்படுகிறது. கௌமாரநிலைபோய் யௌவனநிலை வரும்போதும், யௌவனநிலைபோய் கிழத்தனம் வரும்போதும் முந்தின நிலை போய்விட்டதே என்று வேண்டுமானால் வருந்தலாமேயொழிய ஆத்மா அழிந்துவிட்டதே என்று எவரும் வருந்துவதில்லை. அப்படியே இந்த தேஹம் கழிந்து மற்றொரு தேஹம் ஏற்படும்போதும இந்த தேஹம் அழியப்போகிறதே என்று வேண்டுமானால் வருந்தலாமேயொழியத் தானாகிற ஆத்மா அழியப்போகிறதே என்று எவனும் வருந்தமாட்டான். (தீ₄ரஸ் தத்ர ந முஹ்யதி) அறிவாளியாயிருப்பவனேவெனில் கௌமாரம் முதலிய நிலைகள் ஜீவனுக்கு எப்படி வந்தே தீரவேண்டியவையோ, அப்படியே தேஹமும் என்றோ ஒரு நாள் அழிந்தே தீரக்கூடியதாகையாலே தேஹம் அழிவதற்காகவும் வருந்தமாட்டான். ஆத்மா நித்யமானவன் என்று அறிகையாலே ஆத்மாவுக்காக வருந்தவும் இடமில்லை.

முந்திய ச்லோகத்தில ப்ராப்யமான (அடையத்தக்கதான) ஆத்மாவின நித்தியத்தன்மை காட்டப்பட்டது. இந்த ச்லோகத்தில் கழிக்கப்படவேண்டியதான தேஹத்தின் நிலையின்மை உணர்த்தப்பட்டு, ஆத்மாவின் நித்தியத்தன்மை வலியுறுத்தப்பட்டது. ஆத்மா அழியாதது என்றும், தேஹம் என்றும் ஒருநாள் அழிந்தே தீரவேண்டியது என்றும அறிவுறுத்துவதன்மூலம் அர்ஜுனன் யுத்தம் செய்யத் தயங்கக்கூடாது என்று காட்டினான் கண்ணன. இனி, அர்ஜுனன் கேட்கக்கூடும்:—"ஆத்மா நித்தியமே; ஆகையாலே அது அழிந்துவிடும் என்று நான வருந்தவில்லை. ஆயினும், யுத்தம முதலானவற்றைசெய்வதால், என்மேல் அம்பு முதலானவைபட்டு நான வருந்த நேரிடும். எனக்கு வேண்டியவாகள அம்புபட்டு வருந்துவதைக் காண்பதாலும் நான் வருந்தநேரிடும். இதையெல்லாம் நான் எதற்காகப் பொறுத்துக்கொள்ளவேண்டும? இப்போதே யுத்தத்தைவிட்டு ஓடிவிட்டால் இவ்வருத்தங்களை அடையாமல் தப்பிவிடலாமே" என்று. இந்தக்கேள்விகருப் பின்வரும் இரண்டு ச்லோகங்களாலே பதில் கூறுகிறான கண்ணான். அவற்றின் ஸாராம்சமாவது:— ஆத்மாக்கள் நித்யர்களாயிருந்தபோதிலும் அநாதிகாலமாகத் தாங்கள் செய்த கர்மங்களின் பலன்களை அனுபவிக்கவேண்டியவர்களாயிருக்கிறார்கள். அந்தந்தக் கர்மங்களுக்குத் தகுந்த தேவர், மனிதர் முதலான சரீரங்களோடு படைக்கப்பட்டிருக்கிறார்கள். இவ்வண்ண

युद्धादिकमनभिसंहितफलं कर्म कुर्वतामवर्जनीयतया इन्द्रियैरिन्द्रियार्थ-स्पर्शाश्शीतोष्णादिप्रयुक्तसुखदुःखदा भवन्ति, ते तु यावच्छास्त्रीयकर्म-समाप्ति क्षन्तव्या इति ॥ १३ ॥

॥ भा ॥ इममर्थमनन्तरमेवाह—

मात्रास्पर्शास्तु कौन्तेय शीतोष्णसुखदुःखदाः ।
आगमापायिनोऽनित्यास्तांस्तितिक्षस्व भारत ॥ १४ ॥

---

மாகக் கர்மங்களும் அதன் காரணமாக ஏற்படும் சரீரங்களும் ஜீவர்களை இந்த ஸம்ஸாரத்தில் சிறைப்படுத்தியிருக்கின்றன. இந்தச் சிறையிலிருந்து விடுபடவேண்டுமானால் இவன் சில உபாயங்களை அனுஷ்டிக்கவேண்டும். இவனைச் சிறைப்படுத்தி வைத்திருக்கும் இந்த தேஹமே இவனுடைய உபாயானுஷ்டானத்துக்கும் உதவும்படி அமைத்துவைத்திருக்கிறான் ஸர்வேச்வரன். இவனுடைய பந்தம் கழலுவதற்கு உபாயம் யாதெனில்: சாஸ்திரங்களில் அந்தந்த வருணத்தார்க்கு எம்பெருமானால் விதிக்கப்பட்டிருக்கும் வர்ண தர்மங்களைப் பலனில ஆசை வைக்காமல் அனுஷ்டிப்பதேயாகும். ஆகையால் க்ஷத்ரியனான அர்ஜுனனும் தன் வருணத்திற்குரிய தர்மயுத்தத்தைப் பலனில் ஆசை வைக்காமல் செய்தால்தான் கர்ம பந்தம் கழலும்; மோக்ஷம் கிடைக்கும். ஆக, இப்படி மோக்ஷமாகிற அரும்பயனைப் பெறவேண்டுமானால் அர்ஜுனன் யுத்தம் செய்தே தீரவேண்டும். மற்ற வர்ணங்களின் தர்மமான பிச்சையெடுப்பது முதலானவற்றை ஏற்றுக்கொள்ளக்கூடாது. யுத்தம் செய்யும்போது மெய் வாய் கண் மூக்கு செவி முதலான இந்திரியங்கள் சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் கந்தம் முதலான விஷயங்களோடு ஸம்பந்தப்படும் போது குளிர், உஷ்ணம், அம்படிபடுதல் முதலானவற்றால் ஸுக துக்கங்கள் ஏற்பட்டேதீரும். மோக்ஷ பலனை அடைவதற்காக, மோக்ஷோபாயமாக சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட யுத்தம் முதலான கர்மங்கள் முடிவடையும் வரை அர்ஜுனன் இந்த ஸுகதுக்கங்களைப் பொறுத்துக்கொண்டே தீரவேண்டும். இல்லாவிட்டால் மோக்ஷமாகிற அரும்பயன் இவனுக்குக் கிடைக்காததோடன்றியில் பகவானுடைய ஆணையை மீறினதால் தண்டனையே கிடைக்கும். ஆகையால் யுத்தம் செய்வதாலுண்டான ஸுகதுக்கங்களை இவன் பொறுத்தேயாகவேண்டும் என்னும் இவ்வர்த்தத்தைப் பின்வரும் இரண்டு ச்லோகங்களாலே அருளிச்செய்கிறான் கண்ணன். 13.

14. மாத்ராஸ்பர்ஶாஸ்து கௌந்தேய ஶீதோஷ்ண ஸுக$_2$ து:க்$_3$க$_2$தா$_3$: |
ஆக$_3$மாபாயிநோऽநித்யாஸ் தாம்ஸ்திதிக்ஷஸ்வ ப$_4$ாரத ||

**கௌந்தேய**—*குந்திபுத்ரனே!* **மாத்ராஸ்பர்ஶா:**—*தந்மாத்ரா கார்யமான சப்தஸ்பர்சரூபரஸகந்தங்களோடும், அவற்றை யுடைய பொருள்களோடும் (இந்திரியங்களின்) ஸம்யோகங்கள்,* **சீதோஷ்ண ஸுக$_2$து$_3$:க்க$_2$தா$_3$:**—*குளிர், உஷ்ணம் முதலான வற்றாலுண்டான ஸுகதுக்கங்களைத் தருகின்றன.* **ஆக$_3$மாபாயிந:**-*(இவை) வந்து மீள்வதையே இயற்கையாகக்கொண் டவை;* **அநித்யா:**—*(மோக்ஷநிலையில்) அடியோடு அழியக்கூடி யவை.* **ப$_4$ாரத**—*பரதவமிசத்துதித்தவனே!* **தாந்**—*ஸுகதுக் கத்தைத்தரும் அவ்விந்திரியார்த்தஸ்பர்சங்களை,* **திதிக்ஷஸ்வ**—*பொறுத்துக் கொள்வாயாக.*

---

14. தன்மாத் திரைதீண்டுந் தன்மையவை சீதமழ
லென்மாச் சுகதுக்க மெய்துவிக்கும்—புன்மாயம்
வந்தியன்று போமதனுன் மற்றவற்றை யெய்தலுருக்
குந்திசுதா நீபொறுத்துக் கொள்.

**குந்தி சுதா**—*குந்தியின் பிள்ளையே!* **தன்மாத்திரை தீண் டும் தன்மையவை**—*தன்மாத்திரையின் கார்யமான சப்தாதி விஷயங்கள் இந்திரியங்களைத் தொடுவதாலேற்படும் ஸம் யோகங்கள்,* **சீதம் அழல் என்(ம்) மா சுக துக்கம் எய்துவிக்கும்**—*குளிர் உஷ்ணம் என்கிற பெரிய சுகதுக்கங்களை அடைவிக்கும்.* **புன் மாயம்**—*மிகச்சிறிய இத்துன்பம்,* **வந்து இயன்றுபோம்**—*வந்து சிலகாலம் நின்று அழிந்துவிடும்.* **மற்று**—*(மோக்ஷ மாகிற) விலக்ஷணநிலையில்,* **அவற்றை எய்தல் உறு**-*(ஜீவர்கள்) இந்த சுகதுக்கங்களை அடையமாட்டார்கள்.* **அதனுல் நீ பொறுத்துக்கொள்**-*(மோக்ஷமடையும் வரையில்) இக்காரணத் தாலேயே (இச்சுகதுக்கங்களை) நீ பொறுத்துக்கொள்.*

---

14. முந்திய ச்லோகங்களில் ப்ராப்யமான ஆத்மாவின் நித்தியத் தன்மையும், ப்ராப்திவிரோதியாகையாலே கழிக்கப்படவேண்டிய

।। भा ।। शब्दस्पर्शरूपरसगन्धास्साश्रयास्तन्मात्राकार्यत्वान्मात्रा इत्युच्यन्ते। श्रोत्रादिभिस्तेषां स्पर्शाश्शीतोष्णमृदुपरुषादिरूपसुखदुःखदा भवन्ति। शीतोष्णशब्दः प्रदर्शनार्थः। तान् धैर्येण यावद्युद्धादिशास्त्रीय-

---

சரீரத்தின் அநித்தியத்தன்மையும் காட்டப்பட்டது. இந்த ச்லோகத்திலும், அடுத்த ச்லோகத்திலும் ப்ராப்திக்கு உபாயத்தில் ஒரு பகுதி விளக்கப்படுகிறது. ஆத்மாவின் நித்தியத்தன்மையை ஸாதிக்கத்தொடங்கி, அதை முடிப்பதற்கு முன்னமே இடையில் உபாயத்தைப்பற்றிய இப்பேச்சு எதற்கு எனில்: உபாயத்தைப்பற்றி இவனறியவேண்டியது மிகமுக்கியமாகையாலே ஆத்மநித்யத்வ ப்ரகரணம் முடியும்முன்னே இதை அருளிச்செய்கிறான். 'நான் ஆத்மாவின் நித்தியத் தன்மையையோ, தேஹத்தின் அநித்தியத் தன்மையையோ அறியாமல் வருந்தவில்லை. யுத்தத்தில் வரும் ஸுக துக்கங்களைக் குறித்தே வருந்துகிறேன்' என்று அர்ஜுனனுடைய கருத்தாகக்கொண்டு இந்த ச்லோகத்தை அருளிச்செய்கிறான் கண்ணன் என்றும் கொள்ளலாம். (மாத்ராஸ்பர்சாஸ்து) என்றவிடத்தில் 'து' சப்தம் அர்ஜுனனின் சங்கை போக்கடிக்கப்படுகிறது என்று காட்டுகிறது. (மாத்ராஸ்பர்சா:) ''சப்₃த₃மாத்ரம் தத₂ாகாசம்...ஸ்பர்சமாத்ரம் ஸஸர்ஜ ஹ' [வி-பு 1-2-38] முதலானவிடங்களில் சப்தஸ்பர்சரூபரஸகந்ததந்மாத்ரைகள் மாத்ர(ா) சப்தத்தாலே வழங்கப்படுவதைக் காண்கிறோம். அந்தந்தத் தன்மாத்ரைகளிலிருந்து சப்தஸ்பர்சரூபரஸகந்தங்களும், அவைகளைத் தனிக்குணமாகக்கொண்ட வான், காற்று, தீ, நீர், பூமி என்னும் பஞ்சபூதங்களும் முறையே உண்டாகின்றன. காரணப்பொருளைக் குறிக்கும் சப்தத்தாலே கார்யப்பொருளைக் குறிப்பதென்று ஒரு முறையுண்டு. அந்த ரீதியிலே இங்கு காரணமான தந்மாத்ரைகளைக்குறிக்கும் மாத்ராசப்தம் கார்யமான சப்தஸ்பர்சரூபரஸகந்த குணங்களையும் அவைகளையுடைய விஷயங்களையும் குறிக்கிறது. அந்த மாத்ரைகளின் ஸபர்சமாவது,-சப்தாதிவிஷயங்கள் அவற்றை கிரஹிக்கும் மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் இந்திரியங்களோடு ஸம்பந்தப்படுகை. (சீதோஷ்ணஸுக₂து₃:க்க₂த₃ா:) இப்படிப்பட்ட விஷயேந்திரிய ஸ்பர்சங்கள் குளிர், உஷ்ணம், அணைத்தல் அடித்தல் ஆகியவற்றாலுண்டாகும் ஸுகதுக்கங்களை அளிக்கின்றன. சீதோஷ்ணம் என்றது அம்புபடுதல் முதலானவற்றுக்கும் உபலக்ஷணம். (ஆக₃மாபாயிந:) இவை எப்போதும் இருப்பவையல்ல.

कर्मसमाप्ति तितिक्षस्व। ते चागमापायित्वाद्धैर्यवतां क्षन्तुं योग्याः, अनित्याश्च ते-बन्धहेतुभूतकर्मनाशे सत्यागमापायित्वेनापि न वर्तन्त इत्यर्थः॥ १४॥

॥भा॥ तत्क्षमा किमर्थेत्यत्राह—

यं हि न व्यथयन्त्येते पुरुषं पुरुषर्षभ।
समदुःखसुखं धीरं सोऽमृतत्वाय कल्पते॥ १५॥

15. யம் ஹி ந வ்யத₂யந்த்யேதே புருஷம புருஷர்ஷப₄।
ஸமது₃:க்க₂ஸு₂க₂ம் தீ₄ரம் ஸோऽம்ருதத்வாய கல்பதே॥

புருஷர்ஷப₄—*புருஷர் தலைவனே!* ஏதே—*இந்த இந்திரியார்த்த ஸ்பரிசங்கள்,* ஸமது₃:க்க₂ஸு₂க₂ம்—*சுகதுக்கங்களை*

---

வந்துகொண்டும் போய்க்கொண்டுமிருப்பவை. (அநித்யா:) வந்து கொண்டும் போய்க்கொண்டுமிருக்கும் ஆகாரமும நித்யமானதல்ல. ஸம்ஸாரபந்தத்துககுக் காரணமான கர்மம் கழிந்தவுடன் இந்த இந்திரியார்த்த ஸ்பர்சங்கள் அடியோடு கழிந்துவிடும். (தாந்திக்ஷஸ்வ) இப்படி வந்து கொண்டும் போய்க்கொண்டுமிருப்பவை யாகையாலும், மோக்ஷத்தில் அடியோடு கழியக்கூடியவையாகை யாலும், இவைகளை தைர்யத்தோடு மோக்ஷோபாயமான யுத்தம் முதலான சாஸ்திரோக்தகர்மங்கள் முடியும் வரையில் பொறுத்துக் கொள்வாயாக. (கௌந்தேயப₄ாரத) குந்தீபுத்திரனே! பரதவமிசத் துதித்தவனே! உன் தாய் வழியைப்பார்த்தாலும், தந்தை வமிசத்தைப் பார்த்தாலும் உயர்ந்த க்ஷத்ரிய வம்சமாயிராநின்றது. அப்படிப் பட்ட வமிசத்திலுதித்த உனக்கு யுத்தத்தில் அம்புவிடுதல் முதலான வற்ருல் ஏற்படும் ஸுகதுக்கங்களைப் பொறுப்பது அரிதோ என்கை. (திதிக்ஷஸ்வ) தவம் புரியும்போதும், யாகாதிகளைச் செய்யும்போதும் காற்றடித்தல், வெயில், பசி, தாகம் முதலானவற்றை அவைமுடியும வரையில் பொறுத்திருபபதுபோலே, நீயும் இந்த யுத்தயஜ்ஞும முடியும்வரையில் இதனுலுண்டாகும் ஸுகதுக்கங்களைப் பொறுத் திருககவேணும் என்று கருத்து. (திதிக்ஷஸ்வ) யுத்தத்தைவிட்டு நீ ஓடினுலும் இந்த தேஹத்தோடிருக்கும் வரையில் இந்திரியார்த்த ஸபர்சங்களும், அதனுலேற்படும் ஸுகதுக்கங்களும் உன்னை விடாது. ஆகையால், ஸ்வதர்மமான யுத்தத்தைச் செய்துகொண்டே இவற்றைப் பொறுத்திருப்பதே நீ செய்யக்கூடியது என்று கருத்து.

*ஒக்க எண்ணுமவனாய்,* **தீ₄ரம்**—*தைர்யமுடையவனான* **யம் புருஷம்**—*எந்தப் புருஷனை,* **ந வ்யத₂யந்தி**—*மனவுறுதியைக் குலைப்பதில்லையோ,* **ஸ:**—*அந்த மனிதனே,* **அம்ருதத்வாய கல்பதே**—*மோக்ஷமடையவல்லவனாவான்.*

**॥ भा ॥ यं पुरुषं धैर्ययुक्तमवर्जनीयदुःखं सुखवन्मन्यमानममृतत्वसाधनतया स्ववर्णोचितं युद्धादिकर्मानभिसंहितफलं कुर्वाणं तदन्तर्गताश्शस्त्र-**

---

15. **ஒத்த சுகதுக்க னுயர்தீர னொன்னாரை**
**யித்தகைய தன்மையிவை யீடழியா—முத்தனென**
**வாங்கவன்றா னாகுமே யாணேரும் பார்த்தனே**
**யோங்கமுதத் தன்மைக் குறுப்பு.**

**ஆண் ஏரும் பார்த்தனே!**—*புருஷர்தலைவனான அர்ஜுனா!* **ஒத்த சுகதுக்கன்**—*சுகதுக்கங்களை ஒக்க எண்ணுமவனும்,* **ஒன்னாரை உயர் தீரன்** — *எதிரிகள் அனைவரைக்காட்டிலும் உயர்ந்திருக்கும் தீரனுமானவனை,* **இத்தகைய தன்மையிவை**-*இப்படிக் கொடுமைப்படுத்தும் இந்த இந்திரியார்த்தஸ்பரிசங்கள்,* **ஈடழியா**—*மனவுறுதியைக் குலைக்கமாட்டா;* **ஆங்கு அவன்தான்**-*அப்படிப்பட்ட நிலையிலுள்ள அவனே,* **முத்தன் என**—*முக்தாத்மாவைப்போலே.* **ஓங்கு அமுதத்தன்மைக்கு உறுப்பு ஆகுமே**-*உயர்ந்த மோக்ஷநிலைக்குத் தகுந்தவனாவான்.*

---

15. "சுகதுக்கங்களையளிக்கும் இந்திரியார்த்த ஸ்பரிசங்களை நான் எதற்காகப் பொறுத்துக்கொள்ளவேண்டும்?" என்று அர்ஜுனனுக்குக் கருத்தாகக்கொண்டு இந்த ச்லோகம் அருளிச்செய்கிறான். (யம்ஹிபுருஷம்) அர்ஜுனனுக்கு இந்நிலையில்லையென்பதைக் காட்டுவதற்காக யத்தச்சப்தங்களாலே பரோக்ஷநிர்த்தேசம் பண்ணுகிறான். (புருஷம் ந வ்யத₂யந்தி) 'புரிசேத இதி புருஷ:' [உடலில் இருப்பவனாகையாலே புருஷனாகிறான்] என்று வ்யுத்பத்தியாகையாலே, 'இவ்வுடலிலிருக்கும்போதே எவனை இவ்விந்திரியார்த்த ஸ்பர்சங்கள் அசைப்பதில்லையோ' என்று கூறுவதன் மூலம் இவனுடைய சிறப்பைக் காட்டுகிறது. (நவ்யத₂யந்தி) இந்திரியார்த்த ஸ்பர்சத்தால் ஏற்படும் வருத்தம் விலக்கவொண்ணாததாகையாலே, 'வருத்தவில்லையோ' என்று இதற்குப் பொருளல்ல. 'வரக்கூடாதது வந்துவிட்டதே' என்னும் மனஸ்தாபத்தை ஏற்படுத்த

पातादिमृदुक्रूरस्पर्शा न व्यथयन्ति; स एवामृतत्वं साधयति। न त्वा-दृशो दुःखासहिष्णुरित्यर्थः। आत्मनां नित्यत्वादेतावदत्र कर्तव्य-मित्यर्थः॥ १५॥

---

வில்லையோ என்பதே இதன்பொருள். (ஏதே) முன் ச்லோகத்தில் சொன்ன சுகதுக்கங்களை அளிக்கும் இந்திரியார்த்த ஸ்பர்சங்கள். (புருஷர்ஷப) புருஷர்தலைவனுயிற்றே நீ! நீயும் இதனையவனை முயலவேண்டாமோ? என்கை. அன்றிக்கே, முட்டாளைப் பரமபுத்தி சாலி என்பதுபோலே விபரீதலக்ஷணையாய், துக்கங்களைப் பொறுக்க முடியாத உன்னைப்போன்ற புருஷாதமன் மோக்ஷத்தைப் பெற முடியாது என்கிறதாகவுமாம், இவன் மனவுறுதியைக் குலைக்க முடியாமைக்கு இரண்டு காரணங்களை இரண்டு விசேஷணங்களின் மூலம் காட்டுகிறது.- (ஸமதுஃக்கஸுகம்) துக்கத்தையும் ஸுகத்தையும் ஒக்க நினைப்பவனை. விலக்கவொண்ணாத துக்கத்தையும் ஸுகம்போலே எண்ணுகிறவனை, நோயாளியானவன் நோய்தீரு வதற்காக துக்கத்தையளிக்கும் கசப்புமருந்தையும் சுகஸாதனமா யிருக்கையாலே ஸுகமாக நினைத்துக் குடிப்பதுபோலவும், பொருளை விரும்பிக் கஷ்டப்பட்டுக் கடல்கடப்பது போலவும், மோக்ஷத்தின் பொருட்டு இவனும மோக்ஷோபாயமான யுத்தாதிகளில் வரும துக்கங்களை ஸுகமாக எண்ணுகிருன் என்கை. ஸுகாநுபவத் தோடு துக்காநுபவத்தோடு வாசியற இரண்டிலும் மோக்ஷ விரோதியான புண்யபாபங்கள் கழிகிறபடியால் இரண்டிலும் ஒக்க ஆனந்தித்திருப்பவன் என்றுமாம். பொன்விலங்காலும், இரும்பு விலங்காலும் பூட்டப்பட்டிருப்பவன் இவற்றில் எந்த விலங்கு கழன் ருலும் ஒக்க ஸந்தோஷிப்பானன்ரே. இப்படி ஸமதுக்கஸுகனு யிருக்கைக்கு ஹேதுசொல்லுகிறது,- (தீரம்) தைர்யமுடையவனை "விகாரஹேதௌ ஸதி விக்ரியந்தேயேஷாம ந சேதாம்ஸி த ஏவ தீரா:" எனகிறபடியே மனவிகாரஹேதுவான சுகதுக்கங்களிருந்தும் மன வுறுதி குலையாமலிருக்கிருனன்ரே இவன். (ஸ:) இப்படிப்பட்டவனு யிருக்கையால் மோக்ஷஸாதனமாகத் தன் வர்ணத்தவர்க்கு விதிக்கப் பட்டிருக்கும் யுத்தம் முதலான கர்மங்களை, அம்புபடுதல் முதலான வற்ருலுண்டாகும் சுகதுக்கங்களைக் கணிசியாமல், பலனிலும் விருப்பமில்லாமல் செய்கிருன். (அம்ருதத்வாய கல்பதே) இப்படிப் பட்டவனே மோக்ஷமடையவல்லவன். உன்னைப்போலே துன்பத்தைப் பொறுக்கமுடியாதவனுல் மோக்ஷமடையமுடியாது. ஆத்மாவானது நித்யமாயிருக்கையால் மோக்ஷமடைய விருப்பமுள்ளவன் இப் பொறுமையை அவசியம் கடைப்பிடித்தே தீரவேண்டும என்கை. 15.

॥ भा ॥ यच्चात्मनां नित्यत्वं देहानां स्वाभाविकं नाशित्वं च शोकानिमित्तमुक्तं *गतासूनगतासूंश्च नानुशोचन्ति पण्डिता इति; तदुपपादयितुमारभते—

नासतो विद्यते भावो नाभावो विद्यते सतः।
उभयोरपि दृष्टोऽन्तस्त्वनयोस्तत्त्वदर्शिभिः ॥ १६ ॥

---

16. நில்லா வுடலசத்து நிற்குமுயிர் சத்ததனு
லில்லா ததுக்குண்மை யில்லையுண்மைக்—கில்லாத
தென்றிரண்டி னீறுங்கண் டேய்ந்தவத் தத்துவத்தை
நின்றென்றுங் காண்பார் நிகழ்ந்து.

---

*16.* "க₃தாஸூநக₃தாஸூம்ச்ச நாநுசோசந்தி பண்டி₃தா:" [*கீதை 2-11*] என்று முதலில் அர்ஜுனனுடைய சோகத்தைப் போக்குவதற்காகக் கூறப்பட்ட ஆத்மநித்யத்வமும், தேஹங்கள் எப்போதும் அநித்தியமாகவேயிருக்கும் என்பதும் இந்த ச்லோகம் தொடக்கமாக விவரிக்கப்படுகின்றன. அதில் இந்த ச்லோகத்தில் தேஹாத்மாக்களின் அநித்திய நித்தியத்தன்மைகள் பிரதிஜ்ஞை செய்யப்படுகின்றன. (அஸத: ப₄ாவ: ந வித்₃யதே ஸத: அப₄ாவ: ந வித்₃யதே) அஸத்துக்கு ப₄ாவம் கிடையாது; ஸத்துக்கு அப₄ாவம் கிடையாது. எப்போதும் 'உள்ளது, உள்ளது' என்றே கூறலாம்படி மாருமலேயிருக்கும் ஆத்மா 'ஸத்' [உள்ளது] என்றும், எப்போதும் 'இல்லை, இல்லை' என்றே கூறலாம்படி மாறிக்கொண்டேயிருக்கும் அசேதனம் 'அஸத்' [இல்லாதது] என்றும் கூறப்படுவதை சாஸ்திரங்களில் காண்கிறோம். இங்கு தேஹத்திற்கு மாறிக்கொண்டேயிருக்கையாகிற அநித்தியத்தன்மையையும், ஆத்மாவுக்கு மாருமலேயிருக்கையாகிற நித்தியத்தன்மையையும் அர்ஜுனனுக்கு விளக்க வேண்டிய பிரகரணமாகையாலே, 'ஸத்' என்று ஆத்மாவும், 'அஸத்' என்று அசேதநவிசேஷமான தேஹமும் கூறப்படுவதாகக் கொள்வதே பொருத்தமுடையது. இதையொட்டிப் பார்க்கும்போது 'ப₄ாவ:' [உள்ளதாயிருக்கும் தன்மை] என்று நித்தியத்தன்மையும், 'அப₄ாவ:' [இல்லாததாயிருக்கும் தன்மை] என்று அநித்தியத்தன்மையும் கூறப்

**16.** நாஸதோ வித்₃யதே ப₄ாவோ நாப₄ாவோ வித்₃யதே ஸத:|
உப₄யோரபி த்₃ருஷ்டோந்தஸ் த்வநயோஸ் தத்வத₃ர்சிபி₄:||

**அஸத:**—*'இல்லது' எனப்படும் தேஹத்திற்கு,* **ப₄ாவ:**—*உள்ளதின் தன்மையாகிற நித்தியத்தன்மை,* **ந வித்₃யதே**—*கூடாது,* **ஸத:**—*'உள்ளது' எனப்படும் ஆத்மாவிற்கு,* **அப₄ாவ:**—*இல்லதின் தன்மையாகிற அநித்தியத்வம்,* **நவித்₃யதே**-*கூடாது,* **அநயோ:**-*தேஹம் ஆத்மா என்னும் இவ்விரண்டைப்பற்றிய,* **அந்த:**-*முடிவானது,* **தத்வத₃ர்சிபி₄:**-*உண்மையறிவாளிகளால்,* **த₃ருஷ்ட:**—*(இவ்வண்ணமாக) அறியப்பட்டுள்ளது.*

---

**நிலலா உடல் அசத்து**—*நிலைநில்லாததான உடல் 'அஸத்' எனப்படுகிறது;* **நிற்கும் உயிர் சத்து**—*என்றும் நிலைநிற்கும் ஆத்மாவானது 'ஸத்' எனப்படுகிறது;* **அதனால்**-*இக்காரணத்தால்,* **இல்லாததுக்கு உண்மை இல்லை**-*அஸத்தான உடலுக்கு நித்தியத்தன்மை இல்லை;* **உண்மைக்கு இல்லாதது இல்லை**—*ஸத்தான ஆத்மாவுக்கு அநித்தியத்தன்மை இல்லை;* **என்று**—*இவ்வண்ணமாக,* **இரண்டின் ஈறும் கண்டு**—*(உடல் உயிர் ஆகிய) இரண்டைப்பற்றிய முடிவையும் கண்டு,* **ஏய்ந்த அத் தத்துவத்தை**—*பொருந்திநிற்கும் அவ்வுண்மையை,* **நின்று என்றும் நிகழ்ந்து காண்பார்**-*(அறிவாளிகள்) எல்லா இடங்களிலும், காலங்களிலும் நிலைகளிலும் காண்பார்கள்.*

---

படுகின்றன என்று கொள்வதே பொருந்தும். (நாஸதோ வித்₃யதே ப₄ாவ:) அஸத: ப₄ாவ: ந வித்₃யதே. மின்னின் நிலையற்றதாகையாலே 'அஸத்' எனப்படும் தேஹத்திற்கு நித்தியத்தன்மை கிடையாது. (நாப₄ாவோ வித்₃யதே ஸத:) ஸத: அப₄ாவ: ந வித்₃யதே. எப்போதும் உள்ளதேயாகையாலே 'ஸத்' எனப்படும் உயிருக்கு அநித்தியத் தன்மை கிடையாது. (அநயோ: உப₄யோ:) அனைவராலும் முறையே அழிவுள்ளதாகவும், அழிவற்றதாகவும் அறியப்படும் தேஹத்திற்கும் ஆத்மாவிற்கும். 'அநயோ:' என்னும் பதத்தாலே தேஹாத்மாக்கள் அனைவராலும் முறையே அநித்தியமாகவும், நித்தியமாகவும் அறியப் படுகின்றன என்று உணர்த்தப்படுகிறது. (தத்வத₃ர்சிபி₄: து அந்த:

॥ भा ॥ असतो देहस्य सद्भावो न विद्यते। सतश्चात्मनो नासद्भावः। उभयोः—देहात्मनोरुपलभ्यमानयोर्यथोपलब्धि तत्त्वदर्शिभिरन्तो दृष्टः- निर्णयान्तत्वान्निरूपणस्य निर्णय इहान्तशब्देनोच्यते। देहस्याचिद्वस्तुनोऽसत्त्वमेव स्वरूपम्; आत्मनश्चेतनस्य सत्त्वमेव स्वरूपमिति निर्णयो दृष्ट इत्यर्थः। विनाशस्वभावो ह्यसत्त्वम्। अविनाशस्वभावश्च सत्त्वम्। यथोक्तं भगवता पराशरेण—*तस्मान्न विज्ञानमृतेऽस्ति किंचित्क्वचित्कदाचिद्द्विज वस्तुजातम् (वि २-१२-४३) *सद्भाव ए[वं]षो भवतो मयोक्तो ज्ञानं यथा सत्यमसत्यमन्यत् (वि २-१२-४५) *अनाशी परमार्थश्च प्राज्ञैरभ्युप-

---

த்₃ருஷ்ட:) உண்மையைக் காண்பவர்களாலே தேஹாத்மாக்களுக்கு இவ்வண்ணமாக முடிவு காணப்பட்டுள்ளது. (தத்வத₃ர்சிபி₄:து) உண்மையைக் காண்பவர்களன்றோ இவர்கள்; ஆகையாலே தாங்கள் கண்டபடியே முடிவுகட்டியுள்ளார்கள் என்று 'து' சப்தம் காட்டுகிறது, (அந்த:) ஆராய்ச்சியின முடிவு நிர்ணயமேயாகையால் இங்கு இப்பதம் நிர்ணயத்தைக் காட்டுகிறது. அறிவற்றபொருளான உடலுக்கு அஸத்தாயிருக்கும் தன்மையே ஸ்வரூபநிரூபகதர்மம்; அறிவுள்ள பொருளான உயிருக்கு ஸத்தாயிருக்கும் தன்மையே ஸ்வரூபநிரூபகதர்மம் என்று அறிவாளிகள் முடிவுகட்டியிருக்கிறார்கள் என்றபடி. அஸத்தாயிருக்கும் தன்மையாவது முயற்கொம்பைப் போலே அடியோடு இல்லாததாயிருக்கையன்று. அழியும் தன்மையே இங்கு அஸத்தாயிருக்கும் தன்மையென்றும் அப₄ாவம் என்றும் கூறப்படுகிறது. அவ்வண்ணமே, அழியாத்தன்மையே ஸத்தாயிருக்கும் தன்மையென்றும் ப₄ாவம் என்றும் கூறப்படுகிறது. பராசர மஹர்ஷியும் ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில்இப்படிப் பிரயோகித்திருக்கிறார்: "தஸ்மாந் ந விஜ்ஞாநம் ருதேஸ்தி கிஞ்சித் க்வசித் கத₃ாசித் த்₃விஜ வஸ்துஜாதம்" [வி-பு 2-12-43] [அந்தணரே! ஞானஸ்வரூபமான ஆத்மாவைக்காட்டிலும் வேறான எப்பொருளும் எவ்விடத்திலும் எக்காலத்திலும் 'அஸ்தி' (உள்ளது) என்று கூறப்படமாட்டாது.] "ஸத்₃ப₄ாவ ஏவம் ப₄வதோ மயோக்தோ ஜ்ஞாநம் யத₂ா ஸத்யமஸத்யமந்யத்" [வி-பு 2-12-45] [ஸத்தின் தன்மை இவ்வண்ணமாக தேவரீருக்கு என்னால் உரைக்கப்பட்டது; ஜ்ஞானஸ்வரூபமான ஆத்மாவே ஸத்யமெனப்படுகிறது என்றும் அசேதனப்பொருள் அஸத்யமெனப்

गम्यते। तत्तु नाशि न संदेहो नाशिद्रव्योपपादितम्॥ (वि २-१४-२४) *यत्तु कालान्तरेणापि नान्यसंज्ञामुपैति वै। परिणामादिसंभूतां तद्वस्तु नृप तच्च किम्॥ (वि २-१३-१००) इति। अत्रापि—*अन्तवन्त इमे देहाः (२-१८) *अविनाशि तु तद्विद्धि (२-१७) इति ह्युच्यते। तदेव

---

படுகிறது என்றும் கூறப்பட்டது.] முதலான சுலோகங்களில் பராசரர் அழிவுள்ளதாகையாலே அசேதனத்தை 'நாஸ்தி' என்றும் 'அஸத்யம்' என்றும், 'அவஸ்து' என்றும், அழிவற்றதாகையாலே சேதனத்தை 'அஸ்தி' எனறும் 'ஸத்யம்' என்றும், 'வஸ்து' என்றும் குறிப்பிட்டிருக்கிறார். உலகத்தில் முயற்கொம்புபோலே இல்லாத பொருளையன்றோ 'அஸத்' என்றும், 'நாஸ்தி' என்றும், 'அஸத்யம்' என்றும் 'அவஸ்து' என்றும் வழங்குகிறோம் எனில்: ரிஷிகள் அழியும் பொருளையும் இப்படி வழங்கியிருக்கிறார்கள் என்பதை, "அநாசீ பரமார்த்த₂ச்ச ப்ராஜ்ஞைரப்₄யுபக₃ம்யதே தத்து நாசி ந ஸந்தே₃ஹ: நாசித்₃ ரவ்யோபபாதி₃தம்" [வி-பு 2-14-24] [நாசமற்ற பொருளே 'பரமார்த்தம்' (ஸத்யம்) என்று அறிவாளிகளால் ஒப்புக்கொள்ளப்படுகிறது; நாசமடையும் திரவியமாக நிரூபிக்கப்பட்டது நாசி (அஸத்யம்) என்பதில் ஐயமில்லை.] "யத்து காலாந்தரேணாபி நாந்யஸம்ஜ்ஞாமுபைதி வை பரிணாமாதி₃ ஸம்பூ₄தாம் தத்₃வஸ்து ந்ருப தச்ச கிம்"[வி-பு 2-13-100] [எப்பொருள் காலாந்தரத்திலும் பரிணாமம் முதலானவற்றாலுண்டாகும் வேறுபெயரை அடைவதில்லையோ, அதுவே வஸ்துவாகும்; அது (காணப்படும் பொருள்களில்) எதுவாகமுடியும்?] என்னும் சுலோகங்களிலிருந்து அறியலாம். கீதையிலும் இப்பிரகரணத்தில் அடுத்த சுலோகங்களில், "அந்தவந்த இமே தே₃ஹா:" [2-18] [இந்த தேஹங்கள அழிவையுடையவை] என்று தேஹங்களின் அழியும் தன்மையும், "அவிநாசி து தத்₃வித்₃தி" [2-17] [ஆத்மாவை அழியாதது என்று அறிவாயாக] என்று ஆத்மாவின் அழியாத்தன்மையும் நிரூபிக்கப்பட்டன. ஆகையால் இந்த ச்லோகத்தில் 'ஸத்' 'அஸத்' என்று ஆத்மாவையும், தேஹத்தையும் வழங்குவதற்குக்காரணம் அவற்றின் அழியாத்தன்மையும், அழியும் த்ன்மையுமேயாகும் என்று விளங்குகிறது. "ஸத்யஞ்சாந்ருதஞ்ச" [தை-ஆ 6] என்று உபனிஷத்திலும், "இல்லதும் உள்ளதும்" [திருவாய் 1-2-4] "உள்ளதும் இல்லதுமாய்" [திருவாய் 7-8-4] என்று தமிழ்வேதத்திலும் சிதசித்துக்களை முறையே மெய்யாகவும் பொய்யாகவும் வழங்குவதற்குக்

सत्त्वासत्त्वव्यपदेशहेतुरिति गम्यते। अत्र तु सत्कार्यवादस्या[संगत] प्रस्तुतत्वान्न तत्परोऽयं श्लोकः। देहात्मस्वभावाज्ञानमोहितस्य तन्मोहशान्तये ह्युभयोर्नाशित्वानाशित्वरूपस्वभावविवेक एव वक्तव्यः। स एव

காரணமும் இதுவேயாகும்*. "அஸதே₃வேத₃மக்₃ர ஆஸீத்" [சாந்6-2-1] [இவ்வுலகம் அஸத்தாகவேயிருந்தது] முதலான சிலவிடங்களில ஆத்மாவும் 'அஸத்' எனப்படுகிறதேயெனில்: அங்கு பிரளயாவஸ்தையில் நாமரூபங்கள் இல்லாமலிருந்த நிலையைநோக்கி ஆத்மாவையும் 'அஸத்' என்கிறதென்று கொள்ளவேணடும். அவ்வண்ணமே தேஹம முதலான அசேதனப்பொருள்களைச் சிலவிடங்களில் 'ஸத' எனபதும அவை முயற்கொம்புபோலே பொய்ப்பொருளல்ல எனறு காட்டுவதற்காகவாகும்.

"இல்லாத பொருள் புதிதாக உண்டாகாது; உள்ள பொருள் அடியோடு அழிநதும போகாது" என்று இந்தச்லோகத்தின் முதற் பாதிக்குப் பொருள் கொள்கிறார்கள் சிலர். இவ்வர்த்தம் வேதாந்திகள் அனைவரும் ஒப்புக்கொண்ட ஸத்கார்ய வாதமாகும். ஆயினும இந்தப் பிரகரணத்தில அதுபற்றிய பிரஸ்தாவம் இல்லாமையாலே இப்பொருள் இங்கு பொருந்தாது. வைசேஷிகமதம் முதலான சில மதங்களில இந்த ஸத்கார்யவாதத்தை ஒப்புக்கொள்வதில்லை. அவர்களை நிரஸிக்கும பிரகரணமாயிருந்தால இங்கு இதைச்சொல்லலாம். 'ஒன்றையறிந்தால எல்லாமறிந்ததாகும்' என்னும் வேதாந்தக் கொள்கை ஸத்கார்யவாதத்தை அடிப்படையாகக்கொண்டது. இஙகு இதை நிரூபிக்கும பிரகரணமாயிருந்தாலும் ஸத்கார்யவாதத்தைச் சொல்லலாம். ஸத்கார்யவாதத்தை ஒப்புக்கொள்ளும் ஸாங்க்யமதம் முதலானவற்றை உபந்யாஸம் செய்யும் பிரகரணமாயிருந்தாலும் அதைச் சொல்லலாம. ஆனால், இங்கு இத்தகைய பிரஸ்தாவங்களே ஏற்படவில்லை. ஆகையால் இந்த ச்லோகத்தில் ஸத்கார்ய வாதத்தைச் சொல்லுவதாகக்கொள்ள ப்ரஸக்தியேயில்லை. தேஹாத்ம விவேகத்தை உபதேசிப்பதே இப்ரகரணத்திற்குப் பொருந்தும். இங்கு அர்ஜுனன் தேஹாத்மஸ்வபாவங்களை அறியாமல் மயங்கி நிற்கிறான். அவனுடைய மயக்கம் நீங்குவதற்கு தேஹம் அழியும்

* "உள்ளதும் இல்லதுமாய்" என்ற ஆழ்வார், இப்படிக் கூறுவதற்குக் காரணம் சிதசித்துக்கள் முறையே அழியாமலும் அழிந்துகொண்டு மிருப்பதேயென்பதை, அடுத்து "உலப்பில்லனவாய்' வியவாய்" என்று காட்டினானன்றோ.

*गतासूनगतासूंश्च इति च प्रस्तुतः। स एव च *अविनाशि तु तद्विद्धि *अन्तवन्त इमे देहाः इत्यनन्तरमुपपाद्यते। अतो यथोक्त एवार्थः॥ १६॥

॥भा॥ आत्मनस्त्वविनाशित्वं कथमवगम्यत इत्यत्राह—

अविनाशि तु तद्विद्धि येन सर्वमिदं ततम्।
विनाशमव्ययस्यास्य न कश्चित् कर्तुमर्हति॥ १७॥

17. அவிநாசி து தத்$_3$வித்$_3$தி$_4$ யேந ஸர்வமித$_3$ம் ததம்।
விநாஶமவ்யயஸ்யாஸ்ய ந கச்சித் கர்த்துமர்ஹதி॥

**யேந**—*எந்த ஆத்மவஸ்துவினால்,* **இத$_3$ம் ஸர்வம்**—*இந்த எல்லா அசேதனப்பொருள்களும்.* **ததம்**—*வியாபிக்கப்பட்டுள் ளனவோ,* **தத் து**—*அந்த ஆத்மவஸ்துவை.* **அவிநாசி**—*விநாச மற்றதாக.* **வித்$_3$தி$_4$**—*அறிவாயாக.* **அவ்யயஸ்ய**—*அழியாததான.* **அஸ்ய**—*இவ்வாத்மாவுக்கு.* **கச்சித்**—*எப்பொருளும்.* **விநாசம்**—*அழிவை,* **கர்த்தும்**—*செய்வதற்கு.* **ந அர்ஹதி**—*முடியாது.*

---

17. யாதினலிந்த வசித்தெங்கும் யாப்புற்ற
தாதிதனை மாயாதென் றுங்குணர்வாய்—மீதுதனக்
கூன மிலாதா லிதற்கொருவ னுசத்தை
யான மியற்றுவா னல்.

**யாதினல்**—*எதனால்,* **இந்த அசித்து**—*இந்த அசேதனப் பொருள்கள்.* **எங்கும் யாப்புற்றது**—*எல்லாவிடத்திலும் வியா பிக்கப்பட்டுள்ளதோ.* **ஆது இதனை**—*அப்படிப்பட்ட இவ் வாத்மவஸ்துவை.* **மாயாது என்று**—*அழியாதது என்று.* **உணர்வாய்**—*அறிவாய்.* **மீது**—*மேலும்.* **தனக்கு**—*(இவ்வாத்ம வஸ்து) தனக்கு.* **ஊனமிலாதால்**—*விநாசமில்லாததால்.* **இதற்கு**—*இவ்வாத்மாவுக்கு.* **யா(வ)னும் ஒருவன்**—*எதுவும்.* **நாசத்தை**—*அழிவை.* **இயற்றுவான் அல்**—*செய்யவல்லவதல்ல.*

---

*தன்மையுடையது, ஆத்மா அழியாதது என்னும் இத்தன்மைகளையே இங்கு உபதேசிக்கவேண்டிய அவசியமுள்ளது. ஸத்கார்யவாதத்தை*

तत्-आत्मतत्त्वमविनाशीति विद्धि, येनात्मतत्त्वेन चेतनेन तद्व्यतिरिक्तमिदमचेतनतत्त्वं सर्वं ततं—व्याप्तम्। व्यापकत्वेन निरतिशयसूक्ष्म-

---

உபதேசிப்பதால் அர்ஜுனனுடைய சோகம் நீங்காது. இந்த ச்லோகத்திற்கு முன்னால் "க₃தாஸூநகஸூ₃தாஸூம்ச்ச நாநுசோசந்தி பண்டி₃தா:" [2-11] [தேஹத்தைக்குறித்தும், ஆத்மாவைக்குறித்தும் பண்டிதர்கள் வருந்துவதில்லை] என்று தேஹாத்மஸ்வபாவத்தைப் பற்றிப் பிரஸ்தாவம் செய்யப்பட்டுள்ளது. பின்னலும் "அவிநாசி து தத்₁ வித்₃தி₄" 'அந்தவந்த இமே தே₃ஹா:' என்று இதுவே விவரிக்கப் படுகிறது. ஆகையால் இங்கு விவரிக்கப்பட்டதே சுலோகத்தின் உண்மைப்பொருளாகும். மற்றும் பல பாஷ்யகாரர்கள் பலபடியாக இந்த ச்லோகத்திற்குப் பொருளுரைப்பதும், பிரகரணம் முதலானவற்றுக்குப் பொருந்தாதாகையாலே ஏற்கத்தக்கதல்ல. 16.

17. சென்ற சுலோகத்தில் பிரதிஜ்ஞை செய்யப்பட்ட தேஹாநித்யத்வத்தையும், ஆத்மநித்யத்வத்தையும் புத்திஸ்தக்ரமத்தில் விவரிக்கத் திருவுள்ளம்பற்றி, இந்த ச்லோகத்தில் ஆத்மாவின் நித்தியத்தன்மையை நிரூபிககிறன். ஆத்மாவானது ப்ராப்யமாகையாலும், அதன் நித்தியத்தன்மையை அறிவதே சோகம் நீங்குவதற்கு முக்கிய காரணமாகையாலும், ப்ரதிஜ்ஞை செய்த கிரமத்திலே விவரிக்காமல் முதலில் ஆத்மநித்யத்வத்தை நிரூபித்தருளுகிறன் கண்ணன். மேலும், தேஹம் அநித்தியமானது என்பது அர்ஜுனனையுள்ளிட்ட அனைவரும் நன்கு அறிந்ததாகும். ஆத்மாவின் நித்தியத்தன்மையே அறிவாளிகளைக்கூட ஐயமுறவைப்பது. ஆகையால் அதை முந்துற விளக்குகிறன். (அவிநாசி து தத்₃ வித்₃தி₄) அவ்வாத்மதத்வத்தை அழிவற்றதாக அறிவாயாக. 'து' சப்தத்தாலே அழிவுள்ளதான தேஹத்தைக்காட்டிலும் ஆத்மாவுக்குள்ள வேறுபாடு உணர்த்தப் படுகிறது. (தத்) ஜீவாத்ம ஸமூஹம் முழுவதையும் குறிக்கிறது. (அவிநாசி) "ந விநஷ்டும் சீலம் அஸ்யேத்யவிநாசி" என்று வ்யுத்பத்தி அழியாமையையே இயற்கையாகக்கொண்டது ஆத்மா என்றபடி. ஆதமா அழியாததென்பதை எப்படியறிவது? எனில்: (யேந ஸர்வமித₃ம் ததம்) ஆத்மதத்துவத்திறல் அதைக்காட்டிலும் வேறுபட்ட அசேதனதத்துவம் முழுவதும் வியாபிக்கப்பட்டுள்ளமையாலே என்கை. (ஸர்வம் இத₃ம்) 'இவையெல்லாம்' என்று கையாலே காட்டுகையாலே தமக்குத்தாமே பிரகாசிக்காமல், பிறர்க்கே ஒளி விடும் ப்ராக்திரவியங்களான அசேதன தத்துவங்கள் காட்டப்படு

त्वादात्मनो विनाशानर्हस्य तद्व्यतिरिक्तो न कश्चित्पदार्थो विनाशं कर्तुमर्हति, तद्व्याप्यतया तस्मात् स्थूलत्वात्। नाशकं हि शस्त्रजलाग्नि वाय्वादिकं नाश्यं व्याप्य शिथिलीकरोति। मुद्गरादयोऽपि हि वेगवत्संयोगेन वायुमुत्पाद्य तद्द्वारेण नाशयन्ति। अत आत्मतत्त्वमविनाशि ॥ १७ ॥

---

கின்றன. அதற்குப் பிரதிகோடியாக (யேந) என்று எடுக்கப்படுவது தனக்குத்தானே பிரகாசிக்கும் ப்ரத்யக்த்ரவ்யமான சேதநஸமூஹமே யாகமுடியும். (ததம்) ஆத்மஸமூஹமானது எள்ளில் எண்ணெய் போலவும் கட்டையில்நெருப்பைப்போலவும் கறந்தபாலில் நெய்யைப் போலவும் அசேதநஸமூஹம் முழுவதையும் வியாபித்திருக்கிறது என்றுகருத்து. ஆத்மா அணுவாயினும், அநந்தமான ஆத்மாக்களின் கூட்டம் முழுவதும் சேர்ந்து அநந்தமான அசேதன ஸமூஹத்தை வியாபிக்கக் குறையில்லையன்றோ. அன்றிக்கே, ஒவ்வோராத்மாவும் அசேதநஸமூஹம் முழுவதையும் தேசகாலபேதத்தாலே வியாபிக்கத்தகுதியுள்ளது என்னும் கருத்திலே சொல்லுகிறதாகவுமாம்.

ஆத்மதத்துவமானது வியாபகமாகவும், அசேதநதத்துவமானது அதனால் வியாபிக்கப்படுவதாகவுமிருப்பதாலே ஆத்மா எப்படி நித்தியமாகிவிடமுடியும்? என்னும் கேள்விக்கு பதிலாக அமைந்திருக்கிறது உத்தரார்த்தம் (அவ்யயஸ்ய அஸ்ய) அசேதனப் பொருள்கள் அனைத்தையும் வியாபித்திருப்பதாகக் கூறியதிலிருந்து அவற்றைக்காட்டிலும் ஆத்மதத்துவம் மிகவும் ஸூக்ஷ்மமானது என்று ஏற்படுகிறபடியால் ஸ்தூலமான அவற்றாலே அழிக்கத்தகாத இவ்வாத்மதத்துவத்திற்கு. (கச்சித்) அவ்வாத்மதத்துவத்தைக் காட்டிலும் வேறுபட்டதாய், அதனால் வியாபிக்கப்படுவதாய், அதைக் காட்டிலும் ஸ்தூலமாயிருப்பதான அசேதனப்பொருள் எதுவும். (விநாசம் ந கர்த்தும் அர்ஹதி) அழிவைச்செய்ய வல்லமையுடையதன்று. ஆத்மதத்துவம் ஸூக்ஷ்மமானதாகையாலும். அசேதனதத்துவம் ஸ்தூலமாகையாலும், உலகில் ஸூக்ஷ்மவஸ்துவே ஸ்தூல வஸ்துவின் உட்புகுந்து அதை அழிப்பதைக் காண்கையாலும், அசேதனப்பொருள் எதுவும் ஆத்மாவை அழிக்க சக்தியுடையதலல என்று கருத்து. ஸூக்ஷ்மவஸ்துவே ஸ்தூலவஸ்துவை அழிக்கும் என்பதை எங்கே காண்கிறோம்? எனில்: ஆயுதங்கள், நீர், நெருப்பு, வாயு முதலானவை தம்மைக்காட்டிலும் ஸ்தூலமான பொருள்களை உட்புகுந்து வியாபித்து அவற்றை உருக்குலையச்செய்து அழிப்பதைக் காண்கிறோமன்றோ.

இனி, ஸூக்ஷ்ம வஸ்துக்களே ஸ்தூலப்பொருள்களை அழிக்கும் என்று கூறியதில் ஓர் ஐயம் ஏற்படுகிறது. உலக்கை முதலான ஸ்தூலப்பொருள்களே அவற்றைக் காட்டிலும் ஸூக்ஷ்மமான மண் குடம் முதலானவற்றை அழிப்பதைக் காண்கின்றோமாகையால, ஸூக்ஷ்மப்பொருளே ஸ்தூலப்பொருளை அழிக்கும் என்னும் நியமம ஸித்திக்கவில்லையே என்னும் ஸந்தேஹம் ஏற்படுகிறது. இதற்கு ஸமாதானம் பின்வருமாறு:— உலக்கையும், குடமும் கூடுவதால் மாத்திரம் குடம் அழிந்துவிடாது; அப்படியானல் உலக்கையின் மேல் வைக்கப்பட்ட குடமும் அழியவேண்டிவரும். உலக்கையின் வேகம் மாத்திரம் குடத்தை அழிப்பதாகவும் கூறமுடியாது; அப்படியானல் வேகத்தோடு வரும் உலக்கை குடத்தைத் தொடாமலிருக்கும்போதே குடம் அழியவேண்டிவரும். வேகமும், ஸம்யோகமும் இருந்தாலும் புல்போன்ற பொருளால குடத்தை அழிக்கமுடிவதில்லை என்பதையும் காண்கிறோம்- வேகமுள்ள உலககையின் ஸமயோகமும், வேகமுள்ள திசைக்கு எதிர்த்திசையில் குடத்திற்கு ஏற்பட்டாலும் குடம் அழிவதில்லை என்பதைக் காண்கிறோம். ஆகையால் வேகமுள்ளதான ஒரு கடினப்பொருளின (வேகமுள்ள) ஒரு குறிப்பிட்ட பாகத்தோடு ஸம்பந்தப்பட்டால் தான் மண்குடம் முதலான பொருள்கள் அழிகின்றன என்று அறிகிறோம். கடினப் பொருள் வேகமாகச் செல்லும்போது வழியிலுள்ள அசையாத காற்றைத் தாம் செல்லும் திசையில் அசையவைக்கின்றன என்பதையும் காண்கிறோம். வெடி (வேட்டு) முதலானவற்றிலிருந்து கிளம்பும ஸூக்ஷ்மமான காற்றானது அதிஸ்தூலமான கட்டிடங்களையும் அதிர வைப்பதையும் காண்கிறோம். ஆகையால், வேகமாகவரும் உலக்கையானது காற்றை அசையவைத்து, ஸ்தூலமான குடத்தின் உட்புக வைத்து, அதை உருக்குலையச்செய்வித்துக் குடங்களை அக்காற்றைக் கொண்டு நாசமடையச்செய்கிறது எனறு கொள்வதே பொருதத மாகும். ஆகையால், இங்கும் ஸூக்ஷ்மமான காற்றினலேயே ஸ்தூல மான குடத்திற்கு நாசமாகையாலே நியமபங்கமில்லை. இதற்குமேல், மற்றொரு ஆக்ஷேபம்: மிகப்பெரிய பாறையை மண் குடததின்மேல் வேகமில்லாமல் வைத்தாலே மண் குடம் நொறுங்கிவிடுகிறதே; இங்கு காற்றில்லாமலே அழிவு ஏற்படுகிறதாகையாலே நியமபங்கம வருகிறதே எனில்: இங்கும், பாறையானது குடத்தின் ஒரு சிறு அவயவத்தைத் தன் பாரத்தாலே கீழ் நோக்கித் தள்ளுகிறது. ஸூக்ஷ்மமான இந்தச் சிறு அவயவம், தன்னைக்காட்டிலும் ஸ்தூல

॥भा॥ देहानां तु विनाशित्वमेव स्वभाव इत्याह—
अन्तवन्त इमे देहा नित्यस्योक्ताश्शरीरिणः।
अनाशिनोऽप्रमेयस्य तस्माद्युध्यस्व भारत॥१८॥

18. அந்தவந்த இமே தே₃ஹா நித்யஸ்யோக்தா: ஶரீரிண:।
அநாசிநோऽப்ரமேயஸ்ய தஸ்மாத்₃யுத்₄யஸ்வ ப₄ாரத॥

இமே தே₃ஹா:–*காண்கின்ற இந்த சரீரங்கள்*, நித்யஸ்ய–*தோற்றமில்லாதவனும்*, அநாசிந:–*அழிவற்றவனும்*, அப்ரமேயஸ்ய—*அனுபவிக்கப்படும் அசேதனத்திலும் வேறுபட்டு*

---

18. மாயா தளவின்றி மன்னுஞ் சரீரிதனக்
கோயாது மாறு முடலமிவை—மீயாரு
மந்த முடையவெனு மாதலினூற் பார்த்தனே
யிந்த வமர்முயல்வா யின்று.

மாயாது—*அழிவில்லாமல்*, அளவின்றி — *அறியப்படும் அசேதனத்திலும் வேறுபட்டதாய்*, மன்னும்—*தோற்றமுமில்லாமையாலே நிலைநிற்கும்*, சரீரிதனக்கு—*ஆத்மாவிற்கு*, ஓயாது மாறும் உடலம இவை—*இடைவிடாமல் மாறிக்*

---

மான அவயவங்களின் உட்புகுந்து அவற்றை உருககுலைத்து நாசமடையச் செய்கிறது. இப்படிப் பல சிறு அவயவங்களே ஸ்தூலமான பெரிய அவயவங்களை அழிப்பதன் மூலம் குடத்தை அழிக்கின்றன வாகையால் இங்கும் நியமபங்கமில்லை. ஆகவிப்படி ஆத்மாவானது வியாபகமாகையாலும், ஸூக்ஷ்மமாகையாலும், ஆத்மாவைக் காட்டிலும் ஸ்தூலமானவையும், அதை வியாபிக்கமாட்டாதவையுமான ஆயுதங்கள் ஆத்மாவை அழிக்கமாட்டா. ஆத்மாவைக்காட்டிலும் ஸூக்ஷ்மமான அசேதனம் எதுவுமில்லாமையாலே, எதுவுமே ஆத்மாவை அழிக்கமாட்டாது. "அணோரணீயாந்" என்கிறபடியே அணுவான ஜீவனைக்காட்டிலும் ஸூக்ஷ்மமான பரமாத்மாவால ஆத்மாவை அழிக்கமுடியாதோ? எனில்: முடியும்; ஆனாலும், தனக்கு ஸ்ரீகௌஸ்துபம்போலே இனியதான ஆத்மவஸ்துவை அழிப்பதில்லை என்று அவன் ஒரு நித்யஸங்கல்பம் செய்துவைத்திருக்கிறானகையாலே அவனாலும் இவ்வாத்மவஸ்து அழியாது. ஆகையால், ஆத்ம தத்வம் எவ்வகையாலும் அழியாதது என்று அறிவாயாக என்கை. 17.

அனுபவிப்பவனுயிருப்பவனுமான, **சரீரிண:**—ஆத்மாவிற்கு, **அந்தவந்த: உக்தா:**—(கர்மபலங்களை அனுபவிக்க ஏற்பட்டவையாகையாலே கர்மம் கழிந்தவுடன்) அழிவையடைகின்றன என்று (சாஸ்திரங்களில்) சொல்லப்படுகின்றன, **ப₄ாரத** — பரதகுலத்துதித்தவனே! **தஸ்மாத்** — ஆகையால், **யுத்₄யஸ்வ**—யுத்தம் செய்வாயாக.

**|| भा || *दिह उपचये इत्युपचयरूपा इमे देहा अन्तवन्तः-विनाश-स्वभावाः। उपचयात्मका हि घटादयोऽन्तवन्तो दृष्टाः। नित्यस्य शरीरिणः**

---

கொண்டுவரும் இந்த தேஹங்கள், **அந்தம் உடைய எனும மீயாரும்**—அழிவை உடையவை என்பர் அறிவுமிக்க எவரும். **பார்த்தனே!** — அர்ஜுனு! **ஆதலினுல்** — இக்காரணத்தால், **இன்று**–இன்று, **இந்த அமர் முயல்வாய்**–இந்த யுந்தத்திலே முயற்சி கொள்வாயாக.

---

18. ஆத்மாவின் நித்தியத்தன்மையைச் சென்ற ச்லோகத்தில் காரணங்காட்டி நிரூபித்தான். இந்த சலோகத்தில் தேஹம் எப்போதும அநித்தியமாகவே இருப்பதென்பதைக் காரணங்காட்டி நிரூபிக்கிருன். "நாஸத:" [2-16] என்று தொடங்கும் சுலோகம் இவ்விரண்டு சுலோகங்களாலும் நிலைநாட்டப்படுகிறது. (அந்தவந்த இமே தே₃ஹா:) இந்த தேஹங்கள் அழிவையுடையவை. (இமே தே₃ஹா:) என்று தன் முன்னேயிருக்கும் அர்ஜுனன் முதலானுரின் பிராகிருததேஹங்களைக் காட்டுகிறன். (அந்தவந்த:) முடிவையுடையவை. அழிவையுடையவையென்றபடி. ஏனெனில்: (தே₃ஹா:) தேஹமாகையாலே. "தி₃ஹ உபசயே" என்ற தாதுவிலிருந்து தோன்றியதாகையாலே, தேஹசப்₃த₃ம் உபசயமடைவது [வளர்வது] என்னும பொருளையுடையது. அவயவங்கள் சேருவதால் உண்டான குடம் முதலானவற்றுக்கு அழிவைக காண்கிறேமாகையாலே அவயவங்கள் சேர்ந்து வளரும் தேஹத்திற்கும் அழிவுண்டென பதை அறியலாம் என்கை. ஆக, இத்தால் தேஹம் அழிவது என பதை அதனுடைய உபசயஸ்வபாவம் [வளரும் தன்மை] அல்லது ஸாவயவத்வம் [அவயவங்களோடு கூடியிருக்கை] ஆகிற ஹேதுவைக்கொண்டு அறியலாம் என்று கூறுவதன்மூலம தேஹாநித்தியத்தன்மைக்கு ஒரு ஹேது காட்டப்பட்டது. (நித்யஸ்ய அந்த

कर्मफलभोगार्थतया भूतसंघातरूपा देहाः*पुण्यः पुण्येन इत्यादिशास्त्रैरुक्ताः कर्मावसानविनाशिनः। आत्मा त्वविनाशी; कुतः? अप्रमेयत्वात्, न ह्यात्मा प्रमेयतयोपलभ्यते, अपि तु प्रमातृतया [च]। तथा

---

வந்த உக்தா: இமே) நித்தியனன ஆத்மாவிற்கு சரீரமாயிருக்கும் இவை அநித்தியமாக சாஸ்திரங்களில் சொல்லப்படுகின்றன. "நித்யோ'நித்யாநாம்" என்று சாஸ்திரங்களால் நித்தியமாகச் சொல்லப் படுவது ஆத்மா; "புண்ய: புண்யேந..." [ஜீவனுக்குபுண்யகர்மத்தினுல் புண்ணியசரீரம் உண்டாகிறது. பாபகர்மத்தினுல பாபசரீரம் உண் டாகிறது] என்று சாஸ்திரங்களில அநித்தியமாகச் சொல்லப்படு வது தேஹம். (சரீரிண: இமே) சரீரஸம்பந்தமுடையவனுகையாலே சரீரி எனப்படுகிறுன ஆத்மா; அவனுடைய சரீரம் எனப்படுகிறது தேஹம. இவ்விரண்டுககும உள்ள தொடர்பு யாதென்று ஆராயப் புககால் கர்மஸம்பந்தமே என்று விளங்கும். கர்மபலனை அனுபவிப் பவன் ஆத்மா; அவ்வனுபவத்திற்காக ஏற்பட்டது இந்த சரீரம். ஆகையாலே கர்மாநுபவம கழிந்தவுடன இந்த சரீரம் அழிந்து விடும் எனறு ஸித்திக்கிறது. "சீர்யத இதி சரீரம்" [அழிகிறதாகை யாலே சரீரம்] என்னும் சரீரசப்த வ்யுத்பத்தியிலிருந்தும் இது விளங் கும். ஆக, இத்தால தேஹாநித்யத்வத்தை ஸாதிக்க கர்மபல போகத்துக்காயிருக்கை எனனும் மற்றொரு ஹேது காட்டப்பட்ட தாயிற்று. (இமே தேஹா:) நம் கண்ணெதிரே ஐம்பெரும்பூதங்களின கூட்டரவாலே உண்டானதாகக் காணப்படுவதாகையாலும் தேஹம் அழிவையுடையதே. இத்தால் தேஹாநித்யத்வத்தை ஸாதிக்க அஞ்சுசேராக்கையாயிருக்கையாகிற மூன்ருவது ஹேதுவும் காட்டப் பட்டது. 'இமே' என்கையால் அஞ்சுசேராக்கையாயிருக்கையும், 'தேஹா:' எனகையாலே அவயவமுடைத்தாயிருக்கையும், 'சரீரிண:' என்கையாலே கர்மாநுபவத்துக்காயிருக்கையும் தேஹம் அநித்தியம் என்று காட்டித்தரும் மூன்று ஹேதுககள் என்று உணர்த்தப்பட்டது. சென்ற சுலோகத்தில் ஆத்மா எல்லாவற்றையும் வியாபிப்பதாகை யாலும், அதை வியாபிக்கும ஆயுதஙகள் முதலான அசேதனம் ஒன்று மில்லையாகையாலும் ஆதமாவுக்கு அழிவில்லை என்று உரைக்கப் பட்டது. இதிலிருந்து ஆயுதங்கள் முதலானவற்ருல் வியாபிக்கப் படுவதாகையாலும் சரீரம் அநித்தியம் என்று ஸித்திக்கும். ஆக, இவ்விரணடு சுலோகங்களிலிருந்தும் சரீரத்தின் அநித்தியத் தன்மையை நிருபிக்க நான்கு ஹேதுக்கள் காட்டப்பட்டன.

च वक्ष्यते-*एतद्यो वेत्ति तं प्राहुः क्षेत्रज्ञ इति तद्विदः (गी. १३-१) इति। न चानेकोपचायात्मक आत्मोपलभ्यते, सर्वत्र देहे अहमिदं

இனி, (அநாசிந: அப்ரமேயஸ்ய) என்று ஆத்மாவின் நித்தியத் தன்மையை நிரூபிக்க மேலும சிலஹேதுக்களைக் காட்டுகிறான். 'நித்தியன்' என்று சுலோகத்தின் முற்பாதியில ஜீவனைச்சொன்னது எப்படி ஒட்டும்? என்னும் கேள்வியெழ, (அநாசிந:) என்கிறான்; நாசமடையத் தகாதவனுடைய என்றபடி. முற்பாதியில் சொன்ன நித்தியத்வத்தை ஸ்திரப்படுத்துகிறானகையாலே புநருக்தியில்லை. அன்றிக்கே, 'நித்யஸ்ய' என்று உத்பத்தியின்மையும், 'அநாசிந:' என்று நாசமின்மையும் கூறப்படுகிறதாகையாலே புநருக்தியில்லையெனறுமாம். ஒரு பதம் ஸ்தூலநாசமின்மையையும், மற்றபதம் ஸூக்ஷ்மநாசமுமில்லை யென்பதையும் குறிக்கிறதாகவுமாம். 'அநாசிந:' என்று ஆத்மாவை நாசமடையத்தகாததாகக் கூறுவது எப்படிப் பொருந்தும? எனில்: (அப்ரமேயஸ்ய) அறியப்படுவதையே இயற்கையாகக்கொண்ட அசேதனத்தைக் காட்டிலும் வேறுபட்டதாய், அறிவதையே இயற்கையாகக் கொண்டதாய் ஆத்மா இருக்கையாலே ஆத்மா அழியத்தகாதது என்கை. அறியப்படுவதாகவும், அநுபவிக்கப்படுவதாகவுமே யிருக்கும் அசேதனம் இங்கு 'ப்ரமேயம்' எனப்படுகிறது. இப்படி அறியப்படுவதாகவும், அநுபவிக்கப்படுவதாகவுமேயிராமல் இயற்கையிலேயே அறிவதாகவும், அநுபவிப்பதாகவுமிருப்பதாகையாலே ஆத்மா 'அப்ரமேயம்' [ப்ரமேயத்தைக் காட்டிலும் வேறுபட்டது] என்று கூறப்படுகிறது. "ஏதத்₃யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்₃வித₃:" [கீதை 13-1] ['க்ஷேத்ரம்' எனப்படும் இந்த சரீரத்தை அறிபவனை ஜீவனை அறிவாளிகள் க்ஷேத்ரஜ்ஞன் என்று கூறுகிறார்கள்] என்று கீதையிலும் அறிபவனாயிருக்கையே ஜீவனுக்கு ஸ்வரூபம் என்று காட்டப்பட்டது. 'தத்₃வித₃:' என்று அவனை அறிபவர்களும் இருக்கிறார்கள என்று கூறுகையாலே, 'அப்ரமேயஸ்ய' என்றதற்கு 'அறியப்படாதவன் ஜீவன்' என்று பொருள் கூறுவது பொருந்தாது. ஆக, 'அப்ரமேயஸ்ய' என்று ஆத்மாவானவன் அறிபவன் என்றும், கர்மபலத்தை அனுபவிப்பவன் என்றும கூறியதாகிறது. முன் பாதியில் ஜீவன் கர்மபலத்தை அனுபவிப்பதற்காக ஏற்பட்டிருக்கையாலே தேஹம் அநித்தியம் என்று காட்டப்பட்டது. இங்கு கர்மபலத்தை அனுபவிப்பவனாகையாலே ஆத்மா நித்யமாயிருப்பவன் என்று காட்டப்படுகிறது. இவ்வொரு ஹேது முன் பகுதியில் காட்டப்பட்ட மற்ற இரண்டு ஹேதுக்களின் எதிர்த்தட்டு

जानामि इति देहस्य चान्यस्य च प्रमातृतयैकरूपेणोपलब्धेः। न च देहादेरिव प्रदेशभेदे प्रमातुराकारभेद उपलभ्यते। अत एकरूपत्वेन अनुपचयात्मकत्वात् प्रमातृत्वाद्यापकत्वाच्च आत्मा नित्यः। देहस्तु उप-

---

களுக்கும் உபலக்ஷணம. ஆக, அவயமுள்ளதாகையாலே தேஹம அநித்தியம் எனறதற்கு எதிர்த்தட்டாக, அவயமற்றதாகையாலே ஆத்மாநித்யம் என்றும, பலவற்றின சேர்க்கையாயிருக்கையாலே தேஹம் அநித்யம் எனறதற்கு எதிர்த்தட்டாக, ஏகரூபமாய் (ஒன்றேயாய்) இருக்கையாலே ஆத்மா நித்தியம என்றும் இங்கு கூறியதாகக கொள்ளவேணடும். உலகில் காணும் எல்லா தேஹங் களிலும், ஒவ்வொரு தேஹத்தின எல்லா அவயவங்களிலும், 'நான் இதை அறிகிறேன்' என்று தேஹத்தையும் மற்ற பொருள்களையும் அறிபவனாக ஒருபடிப்பட்டவனாகவே ஆத்மா அறியப்படுகிறான். பல அவயவமுடையவனாக இருநதால் எப்போதாவது 'நாங்கள்' என்று தன்னைப்பலவாகச் சொல்லவேண்டிவரும். அவயவங்களில் ஒன்றுக்கொன்று கலஹம், அஸூயை, பொறுமை, நிக்ரஹம், அநுக்ரஹம் முதலானவை உண்டாகவேண்டிவரும். இப்படியெல் லாம் ஏற்படுவதில்லையாகையாலே ஆத்மா அவயவமற்றதே என்னத் தட்டில்லை. ஆகையால், அவயவமுடையதான தேஹத்திலும் விலக்ஷணமாய், அவயவமற்றதாயிருக்கையாலே ஆத்மா நித்தியமே என்கை. மேலும, தேஹத்தை ஆராய்ந்தால், அதில் ஐந்து பூதங் களின் சேர்க்கை இருப்பது தெரியும். பல், எலும்பு முதலானவற் றில் ப்ருதிவ்யம்சம் அதிகமாகவும், இரத்தம் முதலானவற்றில் ஜலாம்சம் அதிகமாகவும், இப்படியே ஒவ்வோரவயவத்தில் மற்ற பூதங்களின் அம்சம் அதிகமாகவும் இருப்பதைக் காண்கிறோம். ஆத்மாவில் இப்படி ஒவ்வோரிடத்தில் வேறுபாடு இருப்பதாகக் காணவில்லை. "க்ருத்ஸ்நः ப்ரஜ்ஞாநகந:" [ப்ருஹ 6-5-13] என்று ஞானமொன்றேயாயிருப்பவனாக வேதத்திலும் ஓதப்படுகிறான் ஆத்மா. ஆகையால், அஞ்சுசேர்க்கையிலும் விலக்ஷணமாய் ஒன்றா யிருக்கையாலும் ஆத்மா நித்யமே என்கை. சென்ற ச்லோகத்தில் ஆத்மநித்யத்வத்தை ஸாதிப்பதற்கு ஹேதுவாகச் சொல்லப்பட்ட வ்யாபகமாயிருக்கையையும் கூட்டினால ஆத்மநித்யத்வத்திற்கும் நாலு ஹேதுக்கள் காட்டப்பட்டதாகிறது. 1. ஏகரூபமாய் (ஒன்றாய்) இருக்கை 2 அவயவமற்றதாயிருக்கை 3. அனுபவிப்பவனாயிருக்கை 4. வியாபகனாயிருக்கை என்னும் நாலு ஹேதுக்களாலும் ஆத்மாவை

चयात्मकत्वात् शरीरिणः कर्मफलभोगार्थत्वात् अनेकरूपत्वात् व्याप्यत्वाच्च विनाशी। तस्माद्देहस्य विनाशस्वभावत्वादात्मनो नित्यस्वभावत्वाच्च उभा-

நித்தியனென்று ஸாதிக்கலாம் என்றும், 1. பலவாயிருக்கை 2. அவயவமுடையதாயிருக்கை 3. கர்மபலாநுபவத்துக்காயிருக்கை 4. வியாபிக்கப்படுவதாயிருக்கை என்னும் நாலு ஹேதுக்களாலும் தேஹத்தை அநித்தியமென்று ஸாதிக்கலாம என்றும் இவ்விரண்டு சுலோகங்களாலும் கூறப்பட்டதாயிற்று.

ஆத்மநித்யத்வத்தையும், தேஹாநித்யத்வத்தையும் ஸாதிக்கும் ஹேதுக்களாகக் கூறப்பட்ட இந்த நாலும் நாலும் எட்டு ஹேதுக்களும் பொருந்தமாட்டா என்று சில ஆக்ஷேபங்களும, அவற்றுக்கு ஸமாதானங்களும் ஸ்ரீவேதாந்ததேசிகரால் தாத்பர்யசந்திரிகையில் காட்டப்பட்டன. அவற்றைச் சுருக்கமாகக் காட்டுவோமினி

**ஒன்றாயிருக்கையாலும், அவயவமற்றதாகையாலும் ஆத்மாநித்யன்**

ஆக்ஷேபம்:—இவ்விரண்டு ஹேதுக்களும் ஆத்மாவின் நித்தியத்வத்தை ஸாதிக்கமாட்டா; ஏனெனில்: ரூபம், ரஸம் முதலான பூதகுணங்கள் ஒன்றாகவேயிருக்கின்றன; அவயவமற்றதாகவுமிருக்கின்றன. ஆனாலும் நெருப்பால் சுடும்போது ரூபம் ரஸம் முதலானவை அழிவதைக் காண்கிறோம். மஹான், அஹங்காரம், இந்திரியங்கள் ஆகியவை ஒன்றாகவும், அவயவமற்றதாகவுமேயிருக்கின்றன. ஆயினும், பிரளயத்தின்போது அவை அழிவதையும் காண்கிறோம். ஆகையால், ஒன்றாயிருப்பது, அவயவமற்றிருப்பது என்னும் காரணங்களைக்கொண்டு ஆத்மாவை எப்படி நித்யமாக (அழிவற்றதாக) ஸாதிக்கமுடியும்?

ஸமாதானம்:—அர்ஜுனன் இப்ரகரணத்தில் ஆயுதம் நெருப்பு முதலானவற்றால் ஆத்மாவும் அழியக்கூடியதோ என்றே கலங்குகிறான். ஆகையால் கண்ணனும் "ஆத்மா ஆயுதம் நெருப்பு முதலானவற்றால் அழிக்கமுடியாதது; ஒன்றாகவும், அவயவமற்றதாகவும் இருக்கையால்" என்றே ஸாதிக்கவிரும்புகிறான். ஒன்றாகவும், அவயவமற்றதாகவுமிருக்கும் மஹான், அஹங்காரம். இந்திரியங்கள் முதலானவற்றை ஆயுதங்களோ நெருப்போ அழிக்கமுடியாது. ஆகையால் ஆக்ஷேபத்தின் இப்பகுதி பயனற்றது. "ஆத்மா ஆயுதம் நெருப்பு முதலானவற்றால் அழிக்கமுடியாதது; திரவியமாயிருக்கையில் ஒன்றாகவும், அவயவமற்றதாகவுமிருக்கையால்" என்று

वपि न शोकस्थानमिति शस्त्रपातादिपरुषस्पर्शानवर्जनीयान् स्वगतानन्यगतांश्च धैर्येण सोढ्वा अमृतत्वप्राप्तये अनभिसंहितफलं युद्धाख्यं कर्मारभस्व ॥ १८ ॥

ஹேதுவை விசேஷித்துவிட்டோமானால் ரூபரஸாதிகளைக்கொண்டு எழுந்த ஸந்தேஹமும் நீங்கிவிடும். ரூபம், ரஸம் முதலானவை த்ரவியங்களன்றே; குணங்களாயிற்றே. ஆகையால் ஆக்ஷேபத்தின் இரண்டு பகுதிகளுக்கும் ஸமாதானமுரைக்கப்பட்டது. இனி, ஜீவனும் ஒன்றாகவும், அவயவமற்றவனாகவுமிருந்தபோதிலும், அப்படியிருக்கும் மஹான் முதலானவற்றைப்போல் ஈச்வரஸங்கல்பத்தால் அழியக்கூடாதோ? எனனில்: ஈச்வரஸங்கல்பத்தால் ஜீவன் அழியமுடியுமானாலும், "நித்யோ நித்யாநாம்" முதலான சுருதிகள் ஜீவனை நித்தியனாகச் சொல்லுகையாலே, ஈச்வரன் ஜீவனை அழிக்கும் ஸங்கல்பத்தை ஒருபோதும் செய்வதில்லை என்று விளங்குகிறது.

### அநுபவிப்பவனாயிருப்பதால் ஆத்மா நித்யன்

**ஆக்ஷேபம்:**—அநுபவிப்பவன் என்பதற்குக் கர்மபலத்தை அனுபவிப்பவன் என்று பொருள்கொண்டால், "ஆத்மா அழிவில்லாதவன்; கர்மபலத்தை அனுபவிப்பவனாகையால்" என்னும் அனுமானத்தில் அஸாதாரண அநைகாந்த்யம என்னும தோஷம ஏற்படுகிறது. அதாவது: ஜீவர்களிடம் மாத்திரமே கர்மபலத்தை அனுபவிப்பனாயிருக்கை என்னும் ஹேது உள்ளது. ஜீவனிலும் வேறுபட்டவனாய் நித்யனான (*ஸபக்ஷமான) ஈச்வரனிடமும் இந்த ஹேதுவில்லை; ஜீவனிலும் வேறுபட்டதாய் அநித்யமான (*விபக்ஷமான) அசேதனங்களிலும் இந்த ஹேதுவிலலை. ஆகையால், இந்த அனுமானத்திற்கு "எங்கெங்கெல்லாம் கர்மபலத்தை அனுபவிப்பனாயிருக்கை என்னும் ஹேது இருக்கிறதோ, அங்கங்கெல்லாம் அழிவில்லாமை உள்ளது" என்னும் *வியாப்தியும், திருஷ்டாந்தமும் காட்டமுடியாது. இதுவே அஸாதாரண அநைகாந்த்யம் என்னும் அனுமானதோஷமாகக் கூறப்படுகிறது. ஈச்வரனையும் சேர்த்து "சேதனர்கள் அனைவரும் நித்யர்கள்; கர்மபலபோக்தாக்களாகையாலே" என்று அனுமானம் உரைக்கலாம் என்று பார்த்தால், *பக்ஷததில் சேர்ந்த ஈச்வரனிடம் கர்மபலபோக்தாவாயிருக்கையாகிற ஹேதுவில்லாமையால பாகாஸித்தி என்னும தோஷமும் அனுமானத்திற்கு ஏற்படுகிறது.

---

*பக்ஷம், ஸபக்ஷம் முதலானவற்றின் லக்ஷணத்தை ஸந்மதகாரிகாவளி அநுமாநப்ரகரணத்தில காணலாம்.

அநுபவிப்பவன் என்பதற்குக் கர்மபலத்தை அநுபவிப்பவன் என்று பொருள் கொள்ளாமல், அநுபவம் முதலான அறிவுக்கு இருப்பிடமாயிருப்பவன் என்று பொருள்கொண்டு, ஜீவேச்வரர்கள் அனைவரையும் உள்ளடக்கி, "சேதனர் அனைவரும் நித்யர்கள்; அறிவுடையவர்களாகையாலே" என்று அனுமானம் சொல்லப்பார்த்தால், அறிவுடைமையாகிய இந்த ஹேது ஜீவேச்வரர்களைத்தவிர வேறு எவரிடமுமில்லாமையாலே முன்போலே வியாப்தி திருஷ்டாந்தங்கள் காட்டமுடியாதாகையாலே அஸாதாரண அநைகாந்த்யம் எனனும் தோஷம்வரும். ஜீவர்களை மாத்திரம் அடக்கி, "ஜீவர்கள் அனைவரும் நித்யர்களே; அறிவுடையவர்களாகையாலே" என்று அநுமானம கூறி, ஈச்வரன் நித்யமாயிருப்பதைக்காட்டி வியாப்திதிருஷ்டாந்தங்கள் கூறலாமே என்று பார்த்தால், ஈச்வர நித்யத்வமும் நிச்சயமல்ல எனனும் ஆக்ஷேபம் வருகையாலே, அந்த திருஷ்டாந்தத்தில் ஸந்திக்தஸாத்யவைகல்யம் என்னும் தோஷம் வருகிறது.

ஸமாதாநம்:—கர்மபலத்தை அனுபவிப்பவனுயிருக்கையாவது, ப்ரமேயம்போலே கர்மபலத்தை அனுபவிப்பதற்காக உண்டானதாயில்லாமலிருக்கையாகும். இது உத்பத்தியில்லாததாயிருக்கையிலே முடிந்து நிற்கும். ஆக, "ஆத்மா நித்யன்; உத்பத்தியில்லாதவனுயிருக்கையாலே" என்று அநுமான சரீரம் ஸித்திக்கிறது. இவ்வனுமானத்தில் வியாப்தியும், ஈச்வரனுகிற திருஷ்டாந்தமும் காட்டலாமாகையாலே அஸாதாரண அநைகாந்த்யம் என்னும் தோஷம் வாராது. ஆத்மாவுக்கு உத்பத்தியில்லை என்னும் ஹேதுவையும சாஸ்திரத்தைக்கொண்டு ஸாதித்துக்கொள்ளலாம் ஆகையால் ஸ்வரூபாஸிததிதோஷமும் வாராது. அநுபவிப்பவனுயிருக்கையாவது அறிவுடையவனுயிருக்கை என்று கொண்டால், ஜீவர்களை மாத்திரம் உள்ளடக்கி அனுமானம் சொல்லி ஈச்வரனை திருஷ்டாந்தமாகக் காட்டலாம். அந்த திருஷ்டாந்தத்தில் ஈச்வரன் அநித்யனே? என்று எழும ஸாத்யஸந்தேஹமானது "ந த்வேவாஹம்" என்ற விடத்திலேயே போக்கடிக்கப்பட்டது. அவ்விடத்து வியாக்கியானத்திலும் நிரூபிக்கப்பட்டது. ஈச்வரனை நித்யமாகக் கூறும் சாஸ்திரங்களும் இவ்விஷயத்தில் பிரமாணம்.

*வ்யாபகனுயிருக்கையால் ஆத்மா நித்யன்.*

ஆக்ஷேபம்:-வியாபகனுயிருக்கையாவது ஸர்வவ்யாபகனுயிருக்கையென்று கொண்டால், அணுவான ஜீவர்கள் ஸர்வத்தையும் வியா

பிக்க முடியாதாகையாலும், ஈச்வரனால் வியாபிக்கப்படுகையாலும் பக்ஷத்தில் ஹேதுவின ஸ்வரூபமே ஸித்திக்காது. ஆகையால் ஸ்வ ரூபாஸித்தி என்னும் தோஷம்வரும். வியாபகனுயிருக்கையாவது, சிலவற்றை வியாபித்திருக்கை என்று கொண்டால், சிலவற்றை வியாபித்திருக்கும் ஆயுதம், ஆகாசம் முதலானவை அநித்யமாயிருப் பதைக் காண்கிறோமாகையாலே வியபிசாரம் என்றும் அநை காந்த்யம் என்றும் கூறப்படும் தோஷம் வரும்.

ஸமாதாநம்:—வ்யாபகனுயிருக்கையாவது சரீரத்தை அழிக்கும் ஆயுதம், அகநி முதலானவற்றை வியாபிக்கிறவனுயிருப்பதேயாகும். ஆகையால், "ஆத்மா ஆயுதம் முதலானவற்றால் அழிக்கமுடியாதது; அவற்றை வியாபிப்பதாகையாலே" என்னும் அநுமானம் ஸ்வரூபா ஸித்தி, அநைகாந்த்யம் முதலான தோஷங்களை உடையதல்ல.

ஆக, ஆத்மா நித்யம் என்பதை நிரூபிக்கும் நாலு ஹேதுக் களும் குறையற்றவையே என்று காட்டப்பட்டது. இனி, தேஹம் அநித்தியம் என்று நிரூபிக்கும் நாலு ஹேதுக்களில் ஏற்படும் ஆக்ஷேபங்கள் பரிஹரிக்கப்படுகின்றன.

**அவயவமுடையதாகையாலும், பலவாயிருப்பதாலும் சரீரம் அநித்யம்**

ஆக்ஷேபம்:—அவயவமுடையதாயினும் பஞ்சோபநிஷத்திரவியம் எனும்ஐந்து உபநிஷத்துக்களின் கூட்டரவாயிருந்தபோதிலும் பகவா னுடைய திவ்யமங்களவிக்ரஹம் ஆபரணம் ஆயுதம் முதலானவை நித்யமாயிருப்பதைக் காண்கிறோமாகையாலே, இவ்வநுமானத் திற்கு வியபிசாரதோஷம் ஏற்படுகிறது

ஸமாதாநம்:-"சரீரம் அநித்யம்; பிராகிருதமாகவும் அவயவமுடைய தாகவுமிருக்கையால்" "சரீரம் அநித்யம்; பிராகிருதமாகவும்பலவாகவு மிருக்கையால்" என்று அநுமானங்களில் ஹேதுக்களை விசேஷித்து விட்டால் வியபிசாரதோஷம் வாராது. ஆகையாலே குறையில்லை.

**கர்மபலபோகத்துக்காயிருக்கையாலே சரீரம் அநித்யம்**

ஆக்ஷேபம்:— கர்மபலபோகத்துக்காயிருக்கையாவது, கர்மபல போகத்திற்குக் காரணமாயிருக்கை என்று கொண்டால், நித்யரான ஈச்வரனும், ஜீவனுங்கூடக் கர்மபலபோகத்திற்கு ஓவ்வொரு வகை யில் காரணமேயாகையால் வியபிசாரதோஷம் வரும். கர்மபல போகத்துக்காயிருக்கையாவது—கர்மபலபோகத்துக்காக உண்டான

தாயிருக்கை என்று கொண்டால், 'கர்மபலபோகத்துக்காக' என்றது தேவையற்ற விசேஷணம். 'உண்டானதாயிருக்கை' என்பதே போதும். ஆகையால் இதிலும் வ்யர்த்தவிசேஷணம் என்னும தோஷம் உண்டாகிறது.

ஸமாதாநம்:— கர்மபலபோகத்துக்காயிருக்கையாவது — கர்மபல போகத்துக்காக உண்டானதாயிருக்கையேயாகும். வ்யர்த்த₂ விசேஷணம் என்னும் தோஷமும் வாராது. ஏனெனில்: முக்தாத்மாவினுடைய ஞானவிகாஸம உண்டானதாயிருந்தபோதிலும் நித்யமாயிருக்கிறது. ஆகையால் "சரீரம் அநித்யம்; உண்டானதாயிருக்கையால்" என்று அநுமானமுரைத்தால் முக்தாத்மஜ்ஞாநவிகாஸத்தில வியபிசாரம் வரும். "ப்ரகாச்யந்தே ந ஜந்யந்தே" [வி-தர் 104] என்கிறபடியே முக்தாத்மாவின் ஞானம் உண்டானதல்லவாயினும், அந்த ஞானத்தின் விகாஸம் (மலர்ச்சி) முகதி தசையில் உண்டானதேயாகும். "ஞானவிகாஸமாவது, ஞானத்தின் ஒருநிலையேயாகையாலே அவஸ்தை₂ (நிலை) ஆகிற அதற்கு உத்பத்தி கிடையாதே" எனில்: அப்படியே கொண்டாலும, அந்த நிலையோடு கூடிய ஞானத்திற்கு உத்பத்தியுண்டெனறேயாகுமாகையாலே, அதைவேறுபடுத்துவதற்காக 'கர்மபலபோகத்திற்காக' என்று விசேஷணமிடுவதாகக் கொள்ளலாம். இதைத்தேவையற்ற விசேஷணமென்றே கொண்டாலும், இவ்விசேஷணத்திற்கு ஒரு பிரயோஜனமுண்டு. சில சரீரங்கள் உண்டாவதை நாம் அறிவதில்லை. கர்மபல போகத்திற்காக ஏற்பட்டதாகையாலே இவையும் உண்டாவதே என்று காட்டுவதற்காக இவ்விசேஷணமிடுவதாகக் கொள்ளலாம். அல்லது, சரீரம் காமத்தின் முடிவில் அழிவது என்று காட்டுவதற்காக காமபலபோகத்திற்காக உண்டானதாயிருப்பதை ஹேதுவாகக் காட்டுவதாகவும் கொள்ளலாம்.

### வ்யாப்யமாயிருக்கையால் சரீரம் அநித்யம்

வ்யாப்யமாயிருக்கையாவது, எல்லாவற்றாலும் வியாபிக்கப்படுவதாயிருக்கை என்று கொண்டால் ஸ்வரூபாஸித்திதோஷம் வரும். சரீரம் பர்வதம் முதலானவற்றால் வியாபிக்கப்படுவதல்லவே. உண்மையில் (தன்னைத்தவிர்ந்த) எல்லாப்பொருளாலும் வியாபிக்கப்படுவதாயிருக்கை என்னும் தன்மை எப்பொருளிலுமேயில்லையாகையாலே ஹேதுவுக்கு அப்ரஸித்தி என்னும் தோஷமும் வரும். வ்யாப்யமாயிருக்கை யாவது சிலவற்றால் வியாபிக்கப்படுவதாயிருக்கை என்று

கொண்டால், ஈச்வரனுல் வியாபிக்கப்படும் திவ்யமங்களவிக்ரஹம் முதலானவை அநித்யமாகவேண்டிவரும். ஜீவனுல் வியாபிக்கப் படுவதாயிருக்கை என்று கொண்டால், நித்யஸூரிகளால் வியா பிக்கப்படும் அவர்களுடைய திருமேனிகள் அநித்யமாகவேண்டி வரும். ஜீவர்களால வியாபிககப்படும் மூலப்ரக்ருதியும அநித்யமாக வேணடிவரும். வியாபிக்கப்படுகையாவது, வியாபகமல்லாததா யிருக்கை என்று கொண்டால், அணிமா முதலான ஸித்திகள் பெற்ற யோகிகளின சரீரங்கள் கல் முதலானவற்றையும் ஊடுருவி வியாபிக் கக் கூடியவையாகையாலே அஸித்திதோஷம் வரும்.

ஸமாதானம்:—வியாபிக்கப்படுகையாவது—ஆயுதம் முதலானவற் ருல் வியாபிக்கப்படுகையேயாகும். ''சரீரம் ஆயுதம் முதலானவற் ருல் அழிவது; ஆயுதம் முதலானவற்ருல் வியாபிக்கப்படுவதாகை யாலே'' என்று அனுமானம் கொண்டால் ஒருதோஷமும் வாராது. ''எது எதனுல் வியாபிக்கப்படுகிறதோ, அது அதனுல் அழிவது'' எனனும் ஸாமாந்ய வியாப்தியின்படி பார்த்தால், ஈச்வரனுல் வியாபிக்கப்படும் மூலப்ரக்ருதி, புருஷன், காலம் முதலானவையும் ஈச்வரனுல் அழியவேண்டிவருமே எனில்: ''சரீரம் ஆயுதம் முதலான வற்ருல் அழியத்தக்கது; அவற்ருல் வியாபிக்கப்படுவதாகையாலே'' என்றே அனுமானத்தின் கருத்தாகையாலே இக்குறையுமில்லை. பிரகிருதி முதலானவையும் ஈச்வரனுல் அழிக்கத்தக்கவையேயாகை யாலே. ஈச்வரன் ஜீவன முதலானுரை அழிக்க நினைத்தால் அவனை யார் தடுக்கமுடியும்? அப்படியழிப்பதில்லையென்று நித்யஸங்கல்பம் செய்திருப்பதாலன்ருே அவை அழிவதில்லை. ஆகையால் அவையும் அவனுல் அழிக்கத்தககவையே என்னக்குறையில்லை. ஆயினும, ஜீவனுலும் ஆகாசத்தாலும் வியாபிக்கப்படும் ஸூக்ஷ்ம சரீரம் இந் திரியம் முதலானவை அவற்ருல் அழிவதில்லையே எனில்: ஜீவனுலும் ஆகாசததாலும் ஸூக்ஷ்ம சரீரம் முதலானவை அழியத்தக்கவையே யாஞலும் ஈச்வரன் ஜீவன் முதலானுரைக்கொண்டு அவற்றை அழிப்பதில்லை. ஆகையால் ஜீவாதிகளால் சரீராதிகள் அழியத் தக்கதே என்னக்குறையில்லை. ஆகையால், இந்த தோஷமும் இல்லை. ஸாமாந்ய வ்யாப்தியைக் கொள்ளாமல், ''சரீரம் ஆயுதம் முதலான வற்ருல் அழிவது; அவற்ருல வியாபிக்கப்படுகையாலே'' என்னும் அநுமானத்தில், ''எது எது ஆயுதம் முதலானவற்ருல் வியாபிக்கப் படுகிறதோ அதெல்லாம் அவற்ருல் அழிவது. வாழைத்தண்டைப் போல்'' என்னும் விசேஷ வ்யாப்தியைக்கொண்டுவிட்டால் முற்கூறிய ஆக்ஷேபங்கள் எழவே இடமில்லை. ஆகாசம் முதலானவை ஆயுதம்

முதலானவற்றால் வியாபிக்கப்படுபவையாகையாலும், அவற்றால் அழியாதவையாகையாலும் வியபிசாரம் வருமே எனில்: வாராது. வியாபிப்பதாவது— ஸூக்ஷ்மமாயிருந்துகொண்டு உள்நுழைவது. பல பொருள்களைத் தடுக்க வல்லமையுள்ள எப்பொருளில் (கத்தியில்) எப்பொருள் (ஆகாசம்) தடுக்கப்படுவதில்லையோ, அவற்றில் தடுக்கப்படாத பொருள் மற்ற பொருளைக்காட்டிலும் ஸூக்ஷ்மமாகும். ஆகையால், ஆகாசம் கத்தியைக்காட்டிலும் ஸூக்ஷ்மமென்று தேறுகிறபடியால், ஆகாசம் கத்தியால் வியாபிக்கப்படமுடியாது. ஆகையால் வியபிசாரம் வாராது. யோகி முதலானாரின் சரீரங்கள் கத்தி முதலானவற்றால் வியாபிக்கப் படுவதாயிருந்தபோதிலும், அவற்றால் வெட்டமுடியாதவையாயிருக் கையாலே முற்கூறிய அனுமானத்தில் வியபிசாரதோஷம் வருகிறதே எனில்: யோகிசரீரங்களில் யோகமஹிமையாலே அணிமா முதலிய நிலைகள் ஏற்பட்டுவிடுகையாலே, அவற்றில் ஆயுதங்களால் வியாபிக்கப்படுவதாயிருக்கை என்னும் ஹேதுவேயில்லை உண்மையில் அவற்றின் சரீரம் ஆயுதங்களையே வியாபிக்கக்கூடியதாயிருக்கிறது. ஆகையால், இங்கு வியபிசாரதோஷம் வாராது. யோகிசரீரம் ஆயுதம் முதலானவற்றால் அழிக்கமுடியாததானால் அதற்கு அழிவே கிடையாதோ? எனில்: அந்த சரீரத்தைக்காட்டிலும் ஸூக்ஷ்மமான ஈச்வரஸங்கல்பம் தன் ஸங்கல்பம் முதலானவற்றால் அந்த சரீரமும் அழிவதே. காயகல்பம் முதலானவற்றால் மிகவும் உறுதியடைந்த சரீரங்கள் ஆயுதம் முதலானவற்றால் அழியாமலிருப்பதற்கும் இந்த நியாயத்தையே கொள்வது. ஆகையால் ஆத்மநித்யத்வத்தையும், சரீரத்தின் அநித்தியத்வத்தையும் ஸாதிக்கும இந்த எட்டுஹேதுக் களும் அசைக்முடியாதவை என்று நிரூபிக்கப்பட்டதாயிற்று.

இங்கு சரீரத்தின் அநித்தியத்தன்மையை ஸாதிக்கும் நாலு ஹேதுக்களும் பயனற்றவை என்று ஓர் ஐயம் எழுகிறது. சரீரம் அநித்தியமானது என்பது அனைவரும் அறிந்ததேயாகும். இதை சில சரீரங்களில் நேரே காண்கிறோம். நாசமடையாத மற்ற சரீரங் களில் அனுமானத்தால் ஊகிக்கிறோம். சண்டைசெய்யும் எவனும் இதை அறியவில்லையானால் எதிரிகளைக் குறித்து ஆயுதங்களைப் பிர யோகிக்கமாட்டான். எதிரிகள் தன்னைக் குறித்துவிடும் ஆயுதங்களைத் தடுக்கவும்மாட்டான். ஆக, இப்படி சரீரத்தின அநித்தியததன்மை அனைவருமறிந்ததேயாகையாலும், ஸந்தேஹப்படும் விஷயத்தையே யுகதிகளால் ஸாதிக்கவேண்டுமாகையாலும, இங்கு இதை ஹேதுக் களைக்காட்டி ஸாதிப்பது பயனற்றது என்னும் ஆக்ஷேபம் எழுகிறது.

இதற்கு ஸமாதானம் பின்வருமாறு:-அனைவருக்கும் தெரிந்த சரீரா நித்யத்வமே இங்கு ஸாதிக்கப்படுகிறது என்பது உண்மையே. ஆயினும், அதற்குப் பயனில்லை என்று கூறமுடியாது. எட்டுவிதமான பயன்கள் இருக்கின்றன. அவையாவன:-(1) ஆத்மா நித்யமே என்று நிரூபிக்கும்போது அந்வயதிருஷ்டாந்தம், வ்யதிரேகதிருஷ்டாந்தம் என்னும் இருவகை திருஷ்டாந்தங்களைக் காட்டவேண்டியிருக்கிறது. "ஆத்மா ஈச்வரனைப்போலே நித்யம்" என்பதில் ஈச்வரன் அந்வயதிருஷ்டாந்தம். "ஆத்மா சரீரத்தைப்போலே அநித்யமல்லன்" என்பதில் சரீரம் வ்யதிரேகதிருஷ்டாந்தம். இப்படி வ்யதிரேகதிருஷ்டாந்தத்தையும் அதையொட்டிய வ்யதிரேக வ்யாப்தியையும் காட்டுவது முதல்பயன. (2) தேஹமே ஆத்மா என்று சிலர் கருதுகிறார்கள். தேஹாத்மாக்களுக்கு முறையே அநித்யத்வ நித்யத்வங்களைக் காட்டுவதன்மூலம் அவை வேறுபட்டவை என்று காட்டுவது ஒருபயன். (3)ஆயுதங்களால வெட்டமுடியாதபடி மருந்து முதலானவைகளை உபயோகித்து தேஹத்தை என்றும அழியாமல் காத்துவிடலாமோ என்னும் ஐயத்தைப் போக்குவது மற்றொரு பயன். (4) தேஹம் எப்படியும அழிவதே எனக்காட்டுவதன்மூலம் தேஹத்தில் வைராக்யத்தை விளைப்பது வேறொரு பயன். (5) தேஹம் எத்தனையோ காரணங்களால் அழிவதென்று காட்டுவதன்மூலம், தான் ஒருவனே எதிரிகள் அனைவருடைய தேஹங்களையும் அழிக்க வல்லவன் என்னும் மயக்கத்தை நீக்குவது மற்றுமொருபயன். (6) நாசகாரணமிருந்தால் தேஹம் அழிந்தேதீரும் என்று காட்டுவதன்மூலம், பலனில் விருப்பமற்ற கர்மம் முதலான உபாயங்களை அனுஷ்டித்தால் தேஹத்தை அடியோடு ஒழித்து மோக்ஷத்தைப் பெறலாம் என்று காட்டுவது பிறிதொருபயன். (7) அழியக்கூடியதாகையாலே தேஹம் வருந்தத்தக்கதல்ல என்று காட்டுவது வேறொரு பயன். (8) எந்த நிமிஷத்திலும் சரீரம் அழியக்கூடியதாகையாலே த₄ர்மஸாத₄நமான சரீரமிருக்கும்போது உடனேயே மோக்ஷஸாதனத்தில் இழியவேண்டும் என்று காட்டுவது மேலான பலன். இப்படியே பல பயன்களையும் கண்டுகொள்ளலாமாகையாலே சரீராநித்யத்வ ஸாதனம் பயனுள்ளதே. இனி, வியாக்கியானத்தைத் தொடர்வோம்.

(தஸ்மாத்₃ யுத்₄யஸ்வ பா₄ரத) பரதகுலத்துதித்தவனே! ஆகையாலே யுத்தம் செய்வாயாக. (பா₄ரத) பரதகுலத்துதித்தவனே! நீ ஸ்வதர்மமான யுத்தத்தைச் செய்யாவிடில் அது உன் குலத்துக்கே இழுக்கு என்று கருத்து. (தஸ்மாத) ஆகையாலே. தேஹமானது அழிவதையே இயற்கையாகக் கொண்டதாகையாலும, ஆத்மா

य एनं वेत्ति हन्तारं यश्चैनं मन्यते हतम्।
उभौ तौ न विजानीतो नायं हन्ति न हन्यते॥ १९॥

19. ய ஏநம் வேதத்தி ஹந்தாரம யச்சைநம் மந்யதே ஹதம் ।
உபௌ தௌ ந விஜாநீதோ நாயம ஹந்தி ந ஹந்யதே ॥

ய:—*எவனொருவன்,* ஏநம்—*ஆத்மாவைக்குறித்து,* ஹந்தாரம்–*கொல்லுகிறதாக (அக்னி முதலானவற்றில்) ஒன்றை,* வேத்தி—*அறிகிருனே,* ய: ச–*எவனொருவன்,* ஏநம்-*இவ்வாத்மாவை,* ஹதம்-*கொல்லப்பட்டவனாக,* மந்யதே–*நினைக்கிருனே,* தௌ உபௌ–*அவ்விருவரும்,* ந விஜாநீத:–*அறிகிருர்களல்லர்:*

---

19. யாவ னிவனை யிவன்கொல்வா னென்றறியும
யாவனிவன கொல்லுண்பா னென்றறியும்—மேவு
மறிவிருவ ருஞ்சாரா ராங்கிவனுங் கொல்லா
னெறியவனுங் கொல்லுண்ணு னோர்ந்து.

யாவன்—*எவனொருவன்,* 'இவனை இவன் கொல்வான்—*ஆத்மாவை மற்ெருருவன் கொல்லுவான்,* என்று அறியும்–*என்று அறிகிருனே,* யாவன்–*எவனொருவன்,* 'இவன்–*இவ்வாத்மாவானவன்,* கொல்லுண்பான் — *கொல்லப்படுவான்.'* என்று அறியும்-*என்று அறிகிருனே,* இருவரும்-*இவ்விருவரும்,*

---

*வானது அரியாமையையே இயற்கையாகக்கொண்டதாகையாலும் இரண்டுமே வருந்தத்தக்கதல்ல என்னும காரணத்தாலே. (யுத்யஸ்வ) யுத்தமாகிற செயலைச் செய்வாயாக. 'யுத்தத்தாலே பலத்தைப் பெறுவாயாக'' என்று யுத்தத்தைப் பலகரணமாகக் கொண்டு பொருள்கொள்வர் பூர்வமீமாம்ஸகர்கள். இது சரியன்று. யுத்தத்தைக் கர்மமாகக்கொண்டு பொருள்கொள்வதே பொருந்தியதாகும். எதற்காக யுத்தம் செய்யவேண்டும்? எனில்: ''ஸோம்ருதத்வாயகல்பதே'' [2-15] என்று மோக்ஷத்திற்காக என்பது முதலிலேயே உணர்த்தப்பட்டது. யுத்தம் செய்வதால துன்பங்கள் நேரிடுமே எனில்: தன்மேலும், பிறர்மேலும் ஆயுதங்கள் விழுவதால் உண்டாகும் தவிர்க்கவொண்ணுத துன்பங்களை தைரியத்தோடு பொறுக்கவேண்டும் எனபது ''மாத்ராஸ்பர்சா:'' [2-14] ''யம் ஹி ந'' [2-15] என்னும் ச்லோகங்களில் உரைககப்பட்டது. 18.*

அயம்-இந்த அக்னி முதலானது **ந ஹந்தி** கொல்லுவதில்லை. அயம் — இவ்வாத்மாவானது. **ந ஹந்யதே (ச)**—கொல்லப்படுவதுமில்லை.

**॥ भा ॥ एनम्–उक्तस्वभावमात्मानं प्रति, हन्तारं हननहेतुं कमपि यो मन्यते; यश्चैनं केनापि हेतुना हतं मन्यते; तावुभौ न विजानीतः,**

---

**மேவும் அறிவு சாரார்** பொருந்திய அறிவை உடையவரல்லர்; **ஆங்கு**-ஆத்மாவின் விஷயத்தில். **இவனும**-மற்றொருவனும். **கொல்லான்**-(ஆத்மாவைக்) கொல்லமாட்டான்; **நெறி அவனும**-நித்தியத்தன்மையை உடைய ஆத்மாவும். **நேர்ந்து கொல்லுண்ணுன்**—எந்நிலையிலும் கொல்லப்படமாட்டான்.

---

19. "அவிநாசி து" என்னும் சுலோகத்தில் உரைத்த ஆத்ம நித்யத்வத்தை, அதை அறியாதவர்களை நிந்திப்பதன்மூலம் உறுதிப்படுத்துகிறுன். "நைநம் சிந்தந்தி" [2-23] என்னும் சுலோகத்தில் விவரிக்கப்போகிற ரீதியில் இவ்வாத்மாவை ஆயுதம் நெருப்பு முதலான எதுவும் அழிக்கமுடியாதென்றும், இவ்வாத்மாவும் அழிவடையமாட்டான் என்றும் கூறுகிறுன் கண்ணன் இந்த ச்லோகத்தில். (ஏநம் ஹந்தாரம் ய: வேத்தி) இவனைக் கொல்லுகிறதை எவன அறிகிறுனே. ஆயுதம், நெருப்பு முதலான எதையும் இவனைக் கொல்வதாக எவன் அறிகிறுனே என்றபடி. (ஏநம்) நித்தியனுக நிரூபிக்கப்பட்ட இவனை. (ய. ச ஏநம் ஹதம் மந்யதே)எவனொருவன் இவ்வாத்மாவை ஆயுதம், நெருப்பு முதலான எதனுலும் கொல்லப்பட்டவனுக அறிகிறுனே. (உபௌ தௌ ந விஜாநீத:) ஆயுதம் முதலானவற்றை ஆத்மாவைக் கொல்லுவதாக அறிபவனும், ஆத்மாவைக் கொல்லப்பட்டவனுக அறிபவனுமாகிய இருவரும் அறிகிறுர்களல்லர். (அயம் ந ஹந்தி) ஆத்மா முன் நிரூபித்த காரணங்களாலே நித்யமாகையாலே ஆயுதம் முதலானவை அதைக் கொல்லமாட்டா. (அயம் ந ஹந்யதே) இக்காரணத்தாலேயே இவ்வாத்மாவும் கொல்லப்படமாட்டாது. கருத்து வேறுபடுகையாலே, 'அயம்' என்னும் ஓரே பதம், 'ஹந்தி' என்னும் பதத்தோடு சேரும்போது ஆயுதம் முதலானவற்றையும், 'ஹந்யதே' என்னும் பதத்தோடு சேரும்போது ஆத்மாவையும் குறிக்கிறது. தந்த்ரேண உச்சரிக்கப்பட்டது இப்பதம்.

उक्तैर्हेतुभिरस्य नित्यत्वादे[वायं हननहेतुनैनं]नमयं हननहेतुर्न हन्ति, अत एव चायमात्मा न हन्यते। हन्तिधातुरप्यात्मकर्मकः शरीरवियोग-

---

இந்த ச்லோகத்தில் ஆத்மாவானவன் ஆயுதம் முதலானவற்றால் கொல்லப்படுவதில்லை என்று கூறப்படுகிறது. இது லோக வேதவழக்குகளுக்கு ஒட்டாது என்னும் ஆக்ஷேபம் எழுகிறது. அதாவது.-லோகத்தில ''மனிதனைக் கொல்லுகிறான'' என்பதுபோனற வழக்குகள் உள்ளன. சாஸ்திரங்களிலும் ''ந ஹிம்ஸ்யாத் ஸர்வா பூ₄தாநி'' [எல்லா உயிர்களையும் கொல்லக்கூடாது] ''ப்₃ராஹ்மணோ ந ஹநதவய:'' [பிராஹ்மணனைக் கொல்லக்கூடாது.] முதலான வழக்குகள் உள்ளன. இங்கு ''மனிதனை'' ''உயிர்களை'' ''பிராஹ்மணனை' என்றது அந்தந்த உடலைமாத்திரம் குறிப்தாகக்கொள்ளலாமே எனில்: அப்படிக்கொண்டால செத்த மனிதவுடலைக் கத்தியால் வெட்டும்போதும் ''மனிதனைக் கொல்லுகிறான்'' என்னும் வழக்கு ஏற்படவேண்டிவரும். உண்மையில் அப்படிப்பட்ட வழக்கு ஏற்படுவதில்லை. உயிருள்ள மனிதனின உடலைவெட்டினால்தான் மனிதனைக் கொல்லுவதாக வழங்குகிறார்கள். மனிதன் முதலான சப்தங்கள் உடலைமாத்திரமல்லாமல உயிரையும குறிக்கின்றன என்பதே நம் ஸித்தாந்தம். ஆகையால் ஆத்மாவுக்கும் கொல்லப்படும் தன்மையை ஒப்புக்கொளளவேண்டிவருகிறதே என்பது ஆக்ஷேபம். இதற்கு ஸமாதானம பினவருமாறு:-ஆத்மாவானவன் கொலைக்கு விஷயமாகிறான் என்பது உண்மையே. ஆனால், ''மநுஷ்யம் ஹந்தி'' [மனிதனைக் கொல்லுகிறான்] முதலானவிடங்களில் கொலையைக் குறிக்கும் ஹந்திதாதுவுக்குப் பொருள் என்ன என்று ஆராயவேண்டியது அவசியமாகிறது. அப்படி ஆராயுமளவில், ஹந்திதாதுவானது ஆத்மாவின் ஸ்வரூபநாசத்தைக் குறிப்பதல்லவென்றும், அவனுடைய மரணத்தையே குறிககிறதென்றும் விளங்கும். அதாவது, ''மனிதனைக் கொல்லுகிறான்'' என்றால் ''மனிதனை மரணமடைவிக்கிறான்'' என்றே பொருள்படுகிறது. மரணமடைவித்தலாவது,-ஆத்மாவை சரீரத்திலிருந்து பிரித்தலாகும். ''ம்ருங் ப்ராணத்யாகே₃'' என்னும தாதுபாடமும் இதையே வலியுறுத்துகிறது. ஆகையால் ''மனிதனைக் கொல்லுகிறான்'' ''எல்லா உயிர்களையும் கொல்லலாகாது'' ''அந்தணன் கொல்லத்தக்கவனல்ல'' முதலான விடங்களில் கொலை என்பது சரீரவியோகம் என்னும் பொருளிலேயே பிரயோகிக்கப்படுகிறது. ''அயம் (ஆதமா) நஹந்

**करणवाची। *न हिंस्यात् सर्वा भूतानि, *ब्राह्मणो न हन्तव्यः इत्यादीन्यपि शास्त्राणि अविहितशरीरवियोगकरणविषयाणि ॥ १० ॥**

---

யதே'' [ஆத்மாவானவன் கொல்லப்படுவதில்லை] என்னும் இவ்விடத்திலோவெனில் நாசத்திற்குத்துவமானது ஸ்வரூபநாசம் என்னும்பொருளிலேயே பிரயோகிக்கப்பட்டுள்ளது. ஆக இப்படி ஆத்மாவுக்கு சரீர வியோகம் ஏற்படலாமாகையாலும், ஸ்வரூபநாசம் ஏற்படமாட்டாதாகையாலும் இரண்டு வாக்குகளிடையேயும் விரோதமில்லை என்பது ஸமாதானம.

இந்த ப்ரஸங்கத்தில் மற்றும் ஒரு ஸந்தேஹத்திற்கும பரிஹாரம செயயப்படுகிறது. ''ந ஹிமஸயாத ஸர்வா பூதாநி'' என்னும வேத வாக்கியத்தில் எவ்வுயிர்களையும கொல்லக்கூடாது என்று நிஷேதிக்கப்படுகிறது. ''அக்நீஷோமீயம் பசுமாலபேத'' என்னும் மற்றொரு வேதவாக்கியத்தில் அக்நீஷோமயாகத்தில் ஒரு பிராணியைக் கொல்லும்படி விதித்திருககிறது, இவ்விரண்டு வாக்கியங்களிடையேயும் தோன்றும் விரோதத்தை எப்படிப்போக்குவது என்பது ஸந்தேஹம். இதற்குப் பூர்வமீமாம்ஸகர்கள் பின்வருமாறு ஸமாதானமுரைத்தார்கள்:— ''ந ஹிம்ஸ்யாத்' என்னும் வாக்கியம் உத்ஸர்க்கவாக்கியம் (Rule) ஆகும்; ''அக்நீஷோமீயம்'' என்னும வாக்கியம அபவாதவாக்கியம் (Exception) ஆகும். ஆகையால உத்ஸர்க்க வாக்யமானது அபவாதவாக்கியமான அக்நீஷோமீய வாக்கியத்தில விதிக்கப்பட்ட பசுஹிம்ஸையைத் தவிர்த்து மற்ற பசுஹிமஸைகளையே தள்ளும். இதுவே உத்ஸர்க்காபவாத ந்யாயம் எனபது. நம் ஆசாரியர்கள் இங்கு வேறொரு விதமாகவும் ஸந்தேஹபரிஹாரம் செய்வார்கள். அதாவது:- இறுதியில எது துன்பததை விளைக்கிறதோ அதுவே ஹிம்ஸையெனப்படும். மருத்துவன் வாளாலறுத்துச்சுடுவது முதலில் துன்பத்தை விளைத்தாலும் இறுதியில் இனபத்தையே விளைப்பதால் அது ஹிமஸையாகாது. அதுபோலவே யாகத்தில் பசுவைக்கொல்லுவது முதலில் அதற்குத் துன்பத்தை விளைத்தாலும், இறுதியில் அதற்கு ஸ்வர்க்கத்தைக் கொடுப்பதன் மூலம இன்பத்தையே விளைக்கிறது. ஆகையால் அக்நீஷோமீயவாக்கியத்தில விதிக்கப்பட்டது பசுஹிம்ஸையே அல்ல; ஆகையால் இவ்விரண்டு வாக்கியங்களுக்கும் விரோதமேயில்லை என்பது நம ஆசாரியர்கள் உகக்கும ஸமாதானம்.

இனி, மற்றொரு ஸந்தேஹம் எழுகிறது அதாவது,—

''ஹந்தா சேந் மந்யதே ஹந்தும் ஹதச்சேந் மந்யதே ஹதம்।
உபௌ தௌ ந விஜாநீதோ நாயம் ஹந்தி ந ஹந்யதே ॥''
[கட 1-2-19]

[கொல்லுகிறவன் கொல்ல நினைத்தாலும், கொல்லப்பட்டவன் (தன்னை) கொல்லப்பட்டவனாக நினைத்தாலும் அவ்விருவரும் அறியாதவர்கள்; முதலவன் கொல்வதுமில்லை; இரண்டாமவன் கொல்லப்படுவதுமில்லை.] என்று கடோபனிஷத்திலுள்ள மந்திரத்தின் நிழல்போலே அமைந்திருக்கும் இந்த ச்லோகம் அதற்கு விவரணமாயிருக்கிறது என்பது தெளிவு. இரண்டிலும் இரண்டாவது பாதி அப்படியேயிருக்க, முதற்பாதியில் மாத்திரம் சில பதபேதங்கள் உள்ளன. மந்திரத்தில் "ஹந்தாசேந மந்யதே ஹந்தும்" என்னும் முதல் பாதத்தின் ஸ்தானத்தில் "ய ஏநம் வேத்தி ஹந்தாரம்" என்று கீதையின் முதற்பாதம் உள்ளது. ஆகையால் அதையொட்டி இதற்கும் [எவன் இவ்வாத்மாவைக் கொல்லுகிறவனாக அறிகிறானோ] என்றே பொருள் கொள்ளவேண்டும். ஸ்ரீபாஷ்யத்திலும் "கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்வாத்' [ப்ரஹ்மஸூ 2-3-33] என்னும் அதிகரணத்தில் "ஹந்தா சேத்" என்னும் மந்திரத்திற்கு இவ்வண்ணமாகவே பொருள் கொள்ளப்பட்டது. அப்படியிருக்கும் போது இந்த கீதையில் "ய ஏநம் வேத்தி ஹந்தாரம்" என்னும் முதற்பாதத்திற்கு "எவன் இவ்வாத்மாவைக் கொல்லுகிறவனாக அறிகிறானோ" என்று பொருள் கொள்ளாமல், "எவன் இவ்வாத்மாவைக் கொல்லுமவனொருவனை அறிகிறானோ" என்று பொருள் கொள்ளக் காரணமென்ன? என்று ஸந்தேஹம் எழுகிறது. இதற்குப் பரிஹாரம் பின்வருமாறு: கடமந்திரத்தையே கீதையின் இந்த ச்லோகம் உபப்ரும்ஹணம் [விவரணம்] செய்கிறது என்பதில் ஆக்ஷேபமில்லை. மந்திரத்தின் பொருளை மாத்திரம் அப்படியே உரைப்பது உபப்ரும்ஹணமல்ல; அதைமேலும் விவரித்துக் காட்டுவதே உபப்ரும்ஹணமாகும். "ஓராத்மாவை மற்றோராத்மா கொல்ல முடியாது என்று உபதேசித்தது உபனிஷத்து. இதைக்காண்பவர்களுக்கு "ஓராத்மாவை மற்றோராத்மா கொல்லமுடியாதானாலும், மற்றொரு அசேதனப்பொருள் கொல்லக்கூடுமோ?' என்னும் ஐயம் ஏற்படக்கூடும். இவ்வையத்தையும் தவிர்ப்பதற்காகவே கீதாசார்யன் இவ்வுபப்ரும்ஹண ச்லோகத்திலே "எவன் கத்திமுதலான அசேதனப்பொருளையோ, அல்லது வேறொரு சேதனப்பொருளையோ ஆத்மாவைக் கொல்லுமவனாக அறிகிறானோ" என்று பொருள்படும்படி

न जायते म्रियते वा कदाचिन्नायं भूत्वा भविता वा न भूयः।
अजो नित्यः शाश्वतोऽयं पुराणो न हन्यते हन्यमाने शरीरे॥ २०॥

20. ந ஜாயதே ம்ரியதே வா கதா₃சித்
நாயம் பூ₄த்வா ப₄விதா வா ந பூ₄ய:।
அஜோ நித்ய: ஶாச்வதோऽயம புராணோ
ந ஹந்யதே ஹந்யமாநே ஶரீரே॥

அயம்—*ஆத்மா,* கதா₃சித் அபி—*ஒருபோதும்,* ந ஜாயதே—*உண்டாவதில்லை.* ந ம்ரியதே வா—*அழிவதுமில்லை;* அயம்—

---

20. என்றும் பிறவா னிவனிறவான் முன்புளனாய்ச்
சென்று பிறந்திலனாஞ் செய்தியில—னின்றென்றுந்
தொல்லையவ னனவிவன் றேன்றுமுடல் கொன்றாலுங்
கொல்லரிய னாகுங் குறித்து.

இவன்—*இவ்வாத்மா,* என்றும் பிறவான்—*என்றுமே உண்டானவனல்லன்;* இறவான்—*அழியவும்மாட்டான்;* முனபு—

---

"ய ஏநம் வேத்தி ஹந்தாரம்" என்று பதப்பிரயோகம் செய்தருளி யிருக்கிறான். கடலில் குளப்படிபோலேயும், நூறில் பத்துபோலேயும் இந்த ச்லோகத்தின் பொருளில் ஸ்ரீபாஷ்யத்தில் [2-3-33] ஆதரிக்கப் பட்ட உபனிஷதர்த்தமும் அடங்கியுள்ளது. மேலும், "ஹந்தாரம்" [கொல்லுகிறதை] என்ற பதத்தைக் காண்பார்க்கு 'யாரைக் கொல்லு கிறதை?' என்னும் ஆகாங்க்ஷை எழும். "ஏநம்" [இவ்வாத்மாவை] என்னும் பதம் அவ்வாகாங்க்ஷையை சமிப்பிக்கிறது என்று கொள்வதே ஸ்வரஸமானது. உபனிஷத்தில் வேறு வழியில்லாமை யாலே "ஆத்மாநம்" என்னும் பதத்தை அத்யாஹாரம் செய்து கொள்ள வேண்டியுள்ளது. இங்கு அத்யாஹாரம் செய்துகொள்ள வேண்டிய அவசியமில்லை. மேலும், இப்ரகரணத்தில் ஆயுதங்கள் முதலானவை ஆத்மாவைக்கொல்லுமோ என்று ஐயமுறும் அர்ஜுன னுக்கு, அவை ஆத்மாவைக் கொல்லமாட்டா என்று உபதேசிக்க வேண்டிய அவசியமும் உள்ளது "நைநம் சி₂ந்த₃ந்தி சஸ்த்ராணி" [2-23] என்று இவ்வர்த்தம் மேலேயும் விவரிக்கப்படுகிறது. ஆகையால் கீதாபாஷ்யத்தில் காட்டப்பட்ட பொருளில் ஒரு குறையுமில்லை. 19.

இவ்வாத்மா, பூ₄த்வா—(கல்பாதியில்) உண்டாகி, பூ₄ய:—மறுபடியும் (கல்பத்தின்முடிவில்) ந ப₄விதா (இதி) ந—அழிவான் என்பதும் இல்லை. அயம்—இவன், அஜ:—உத்பத்தியற்றவன்; நித்ய:—அழிவற்றவன்; ஶாச்வத—பரிணாமமற்றவன்; புராண:—பழையவனாயினும் புதியவனாயிருப்பவன். அத:—ஆகையால், ஶரீரே ஹந்யமானே (ஸதி)—சரீரம் அழிக்கப்படுமளவில், அயம்—இவ்வாத்மா, ந ஹந்யதே—அழிக்கப்படுவதில்லை.

**॥ भा ॥ उक्तैरेव हेतुभिर्नित्यत्वेनापरिणामित्वादात्मनो जनन-मरणादयस्सर्वे एवाचेतनदेहधर्मा न सन्तीत्युच्यते। तत्र जायते, म्रियते**

---

பிரளயகாலத்தில், உளனாயச் சென்று பிறந்து — உண்டாகிச் சென்று பிறந்து, நின்று—கல்பமுடிவுவரை வாழ்ந்து, இலனாம செய்தி இலன்—பிறகு இல்லாதவனாகும் தன்மையும் இல்லாதவன். என்றும் தொல்லையவனான இவன் — எப்போதும் பிறப்பு இறப்பு முதலான விகாரங்களற்றவனான இவ்வாத்மா, தோன்றும் உடல் கொன்றாலும்—கண்ணுக்குத் தெரியும் உடலை (ஒரு பொருள்) கொன்றாலும், குறித்து கொல்லரியன் ஆகும்—(எப்பொருளுக்கும்) இலக்காக்கிக் கொல்லமுடியாதவனாவன்.

---

20. முன் ச்லோகங்களில் ஆத்மாவுக்கு விநாசமில்லை என்று காரணங்களைக்காட்டி நிரூபிக்கப்பட்டது. இங்கு அக்காரணங்களாலேயே உத்பத்தி, விநாசம், பரிணாமம் முதலான அறிவற்ற தேஹத்தின தன்மைகள் எல்லாமே ஆத்மாவுக்கு இல்லையென்று ஸ்தாபிக்கப்படுகிறது. விநாசமில்லையென்றபோதே ஆத்மாவுக்குப் பரிணாமம் முதலானவையும் இல்லையென்றே ஸித்திக்கும். எப்படியெனில்: க₄டத்தின் விநாசமாவது, அது அடியோடு அழிவதன்று. கடமென்னும் நிலையைவிட்டு கபாலங்கள் (ஓடுகள்) என்னும் நிலையை அடைவதே கடத்தின் விநாசமாகும். அப்படியே ஆத்மாவுக்கும் ஒரு நிலையைவிட்டு மற்றொரு நிலை ஏற்பட்டால்தான் அதற்கு விநாசம் ஏற்படமுடியும். ஆகையால் விநாசம் இல்லையென்றபோதே பரிணாமமும் (விகாரமும்) இல்லையென்றதாயிற்று. கடமானது கபாலங்களாக உடையும்தருவாயிலிருக்கும்போது கடத்திற்கு அபக்ஷயம் என்னும் நிலை ஏற்படுவதாகக் கூறப்படுகிறது. [உடைந்து

इति वर्तमानतया सर्वेषु देहेपु सर्वैरनुभूयमाने जननमरणे कदाचिदप्यात्मानं न स्पृशतः। नायं भूत्वा भविता वा न भूयः--अयं कल्पादौ

---

விட்டால் விநாசம்; உடையுந்தருணமாயிருக்கும்போது அபக்ஷயம்.]
கூடத்தின் விநாசநிலையோ காலத்தின் உத்பத்தியாகும். குயவனிட-
மிருக்கும் ஈரமண்ணுருண்டை சக்ரத்தில் சிறிது சிறிதாக வளர்ந்து
கடம் என்னும் நிலையை உடையதாகிறது. மண் குயவனின் சக்ரத்-
தில் கடமாகச் செய்யப்படும்போது வளர்தல் என்னும் நிலையை-
யும், செய்துமுடிந்ததும் பர்யந்த உத்பத்தி நிலையையும் உடைய-
தாகிறது. இதிலிருந்து விநாசம (அழிவு) உள்ள வஸ்துவுக்கே
அபக்ஷயம (குறைதல), பரிணாமம் (மாறுபடுதல), விருத்தி (வளர்தல்)
உத்பத்தி (உண்டாதல) என்னும் மற்ற விகாரங்களும் ஏற்படும்
என்று விளங்கும். ஆகையால் விநாசமற்ற ஆத்மாவுக்கு 1. ஜாயதே
(உண்டாகிறது), 2. பரிணமதே (மாறுதலடைகிறது), 3. வர்த்ததே (வளர்கிறது), 4. அபக்ஷீயதே (குறைகிறது), 5. விநச்யதி (அழிகிறது), 6. அஸ்தி (இந்த இந்த விகாரங்களோடு இருக்கிறது) எனனும் ஷட்(ஆறு)பாவவிகாரங்களும் இல்லை என்றே ஸித்திக்கும். இதையே இந்த ச்லோகத்தில் நிரூபிக்கிறான் கீதாசார்யன். முன் ச்லோகத்தைப்போலே இந்தச்லோகமும் கடவல்லீ மந்திரம் ஒன்றின் நிழல்போலே அமைந்திருக்கிறது. மூன்றாம்பாதத்தில் மந்த்ரத்தில் "விபச்சித்" [அறிவுடையவனான ஜீவன] என்றுள்ள ஸ்தானத்தில் கீதையில் "கதாசித்" [ஒருபோதும்] எனறுள்ளது என்னுமிவ்வளவே வாசி. இனி ச்லோகத்தை விவரிப்போம்.

(ந ஜாயதே ம்ரியதே வா) ஆத்மாவானவன் பிறப்பதுமில்லை அழிவதுமில்லை. ['வா' சப்தம சகாரப்பொருளது.] அதாவது,-'பிறக்கிறது, இறக்கிறது' என்று அந்தந்தக் காலத்திலுள்ள புருஷர்களால் அந்தந்த சரீரங்கள் எல்லாமே பிறப்பு இறப்புக்களை அடைவதாகவே அநுபவிக்கப்படுகின்றன. அந்தப் பிறப்பிறப்புக்கள் ஆத்மாவை ஸ்பர்சிக்கமாட்டா என்கிறது. ஒருகாலத்தில் ஸ்பர்சிக்கமாட்டாவாயினும, மற்றொருகாலத்தில் ஸ்பர்சிக்கலாமோ எனில்: (கதாசித்) எககாலத்திலும ஜநநமரணங்கள் ஆத்மாவை ஸ்பர்சிக்கமாட்டா. (கதாசித்) ஸ்ருஷ்டி தொடங்கும் காலத்தையும, உலகம அழியும ப்ரளயகாலத்தையும் அடுத்த பாதத்தில் தனியாக எடுத்துக் கழிக்கப் போகிறாராகையாலே, இங்கு கல்பத்தின் ஆதியந்தகாலம் தவிர்ந்த மற்றகாலங்கள் அனைத்தும் எடுக்கப்படுகின்றன. ஆக, (ந ஜாயதே

भूत्वा भूयः कल्पान्ते च न न भविता; केषुचित्प्रजापतिप्रभृतिदेहेष्वागमेनोपलभ्यमानं कल्पादौ जननं कल்पान्ते च मरणमात्मानं न स्पृश-

மரியாதே வா கதாசித்) என்று ஆத்மாவுக்கு சரீரத்துக்குப்போலே நித்யோத்பத்தி விநாசங்கள் கிடையாது என்று உரைக்கப்பட்டது.

இனி, அடுத்த பாதத்தில் ஆத்மாவுக்கு நைமித்திகமான உத்பத்திவிநாசங்களும் கிடையாது என்று கோஷிக்கப்படுகிறது. அதாவது,- ஆத்மாவுக்கு ஒவ்வொரு சரீரமும் பிறக்கும்போதும் இறக்கும்போதும் பிறப்பிறப்புகள் இல்லாவிடினும், ஸ்ருஷ்டி காலத்தில் பிறப்பும், ப்ரளயகாலத்தில் இறப்பும் ஏற்படலாம்; "தோயேந ஜீவாந் வ்யஸஸர்ஜ பூம்யாம்" [தை.நா 1-4] [ஜலத்தோடு கூட ஜீவர்களை பூமியில் ஸ்ருஷ்டித்தான்.] என்று உபனிஷத்திலும ஸ்ருஷ்டிகாலத்தில ஜீவர்களை ஜலம முதலானவற்றைபபோலே ஸ்ருஷ்டித்ததாக ஓதப்படுகிறது; ஸ்ருஷ்டிக்குமுன் ப்ரஹ்மம் ஒன்றேயிருந்ததென்றும், பிறகு 'பலவாகிறேன்' என்று ஸங்கல்பித்துப பலவாயிற்றென்றும், ப்ரஹ்மம் ஒன்றையறிந்தால் எல்லாவற்றையும் அறிந்ததாகும் என்றும் வேதாந்தங்கள் ஓதுகையாலே ஒன்றான ப்ரஹ்மம ஸ்ருஷ்டிகாலத்தில் புதிதாக ஜீவர்களை ஸ்ருஷ்டித்ததென்றும், ப்ரளயகாலத்தில் அந்த ஜீவர்கள் அழிகிறார்கள் என்றும், ஆகையால ஜீவர்கள் ஒரு கல்பகாலம வாழ்பவர்களே என்றும சங்கிப்பதற்கு இடமுண்டு. இந்த சங்கை தவிர்க்கப்படுகிறது இனி.- (நாயம் பூத்வா பவிதா வா ந பூய:) அயம் பூத்வா பூய: ந பவிதா இதி ந. இவ்வாத்மா கல்பத்தின் தொடக்கத்தில் உண்டாகிப் பிறகு கல்பத்தின் முடிவில இல்லையாகிறான் என்பதும் இல்லை. பிரமன் முதலான சில ஜீவர்களின் தேஹங்களுக்குக் கல்பத்தின் தொடக்கத்தில் உதபத்தியுண்டாகிக் கல்பத்தின் முடிவில் விநாசமுண்டாவதாக சாஸ்திரங்களில் கூறப்படுகிறது. இவ்வுத்பத்தி விநாசங்களும் அவர்களுடைய ஆத்மாக்களைத் தொடுவதில்லை என்றும, எல்லா ஜீவர்களுக்குமே கல்பத்தின் ஆதியந்தங்களில் சொல்லப்படும் ஸ்ருஷ்டி ப்ரளயங்களால் அவர்களின் ஆத்ம ஸ்வரூபம் புதிதாக ஸ்ருஷ்டிக்கப்படுவதோ அழிவதோ இல்லை என்றும் கூறியதாகிறது. 'தோயேந ஜீவாந் வ்யஸஸர்ஜ" முதலான வேதாந்த வாக்கியங்களை எப்படிப் பொருள்கொள்வதெனில்: ஸ்ருஷ்டிகாலத்திற்கு முன் தேஹமற்றிருந்த ஜீவர்களை தேஹத்தோடு சேர்த்து வெளியிடுவதே இவ்வாக்கியங்களில் ஸ்ருஷ்டி எனப்படுகிறது.

तीत्यर्थः। अतस्सर्वदेहगत आत्मा अजः, अत एव नित्यः, शाश्वतः, प्रकृतिवदविशदसततपरिणामैरपि नान्वीयते, पुराणः-पुराऽपि नवः, सर्वदा अपूर्ववदनुभाव्य इत्यर्थः। अतश्शरीरे हन्यमाने न हन्यतेऽयमात्मा ॥ २० ॥

---

இப்படிக் கொள்ளாவிடில் "நித்யோ நித்யாநாம்" முதலான மற்ற பல வாக்கியங்களில் ஜீவர்களை நித்யர் என்றது விரோதிக்கும். ஸ்ருஷ்டிக்கு முன் ஒன்றேயிருந்தது என்று சில வாக்கியங்கள் கூறுவதும் அப்போது சேதநாசேதநப்பொருள்கள் நாமரூபப்பிரிவற்றிருந்தமையாலேயே என்று நிச்சயிப்பதே பொருந்துமுள்ளது. ஸூக்ஷ்ம சேதநாசேதநங்களோடு கூடிய ப்ரஹ்மமே 'நான் பலவாகக் கடவேன்' என்று ஸங்கல்பித்து ஸ்தூலசேதநாசேதநப்ரஹ்மமாகப் பரிணமிப்பதால், ப்ரஹ்மமே பலவானதாகவும், ப்ரஹ்மத்தையறிந்தால் எல்லாமறிந்ததாவதாகவும் கூறும் வேதாந்த வாக்கியங்களும் பொருந்துகின்றன. ஆகையால் கல்பாதியிலும், அந்தத்திலும் ஜீவஸ்வரூபத்துக்கு உத்பத்திவிநாசங்கள் ஏற்படுவதாகக் கூறுவது பொருந்தாது என்றும் அப்போதும் தேஹஸம்யோகவியோகங்களே ஏற்படுகின்றன என்றும கருத்து.

இனி, மூன்றுவது பாதத்தாலே முன்னிரண்டு பாதங்களிற் சொன்ன அர்த்தங்களைச் சேர்த்துப்பிடித்துக் கூறுகிறார். முன் இரண்டு பாதங்களிலும் முக்காலங்களிலுமுள்ள ஜீவர்களுக்கும் உத்பத்தி முதலானவையில்லை யென்கையாலே எல்லா தேஹத்திலுமுள்ள ஆத்மாக்களுக்கும் உதபத்தி முதலானவையில்லை என்று இம் மூன்றுவது பாதத்தில கூறுகிறாராகவுமாம். ஆகையாலே புநருக்தியில்லை. (அஜ:) ஜாத்யேகவசனமாகையாலே எல்லா தேஹத்திலுமுள்ள ஆத்மாக்கள் பிறப்பற்றவர்கள் என்றபடி. கீழும்மேலும் ஜாத்யேகவசனமே. (நித்ய:) பிறப்பற்றவனாகையாலே நாசமும் அற்றவன் ஆத்மா. இங்கு உத்பத்தி, விநாசம் என்னும் இரண்டு விகாரங்களின் இன்மையைக்கூறியது அபக்ஷயம், பரிணாமம், வ்ருத்தி முதலான மற்ற விகாரங்களின் இன்மைக்கும் உபலக்ஷணம். ஆதிஸ்ருஷ்டியிலிருந்து ஏற்படும் ஸ்தூலபரிணாமம் இல்லாவிடிலும், "நித்யா ஸததவிக்ரியா" என்னும் பிரகிருதியைப்போலே ப்ரளயாவஸ்தையில் ஸூக்ஷ்மபரிணாமமுடையதாயிருக்குமோ இவ்வாத்மவஸ்து? எனில்: (சாச்வத:) எப்போதும் ஏகரூபமாயிருப்பது. பிரகிருதிக்கு எப்போதுமுள்ளதுபோன்ற ஸூக்ஷ்மபரிணாமமும் இவ்வாத்மவஸ்துவுக்கு எக்காலத்திலும் கிடையாது என்று கருத்து.

वेदाविनाशिनं नित्यं य एनमजमव्ययम्।
कथं स पुरुषः पार्थ कं घातयति हन्ति कम्॥२१॥

21. வேத₃ாவிநாஶிநம் நித்யம் ய ஏநமஜமவ்யயம்।
கத₂ம ஸ புருஷ: பார்த்த₂ கம் க₄ாதயதி ஹந்தி கம்॥

எப்போதும் ஏகரூபமாய் (ஒருபடிப்பட்டதாய்) இருக்குமாகில், இவ்வாத்மவஸ்துவை அநுபவிப்பார்க்குச் சலிப்பு ஏற்படுமோ? எனில், ஏற்படாது என்கிருர் அடுத்தபடியாக: (புராண:) "அக்ஷரஸாம்யாந் நிர்ப்₃ரூயாத்" [அக்ஷரஸாம்யத்தைக்கொண்டு நிர்வசனம் செய்யலாம்] என்னும் நியாயத்தாலே "புராபி நவ: புராண:" என்று நிர்வசனம். 'புரா' என்றதாலே இவ்வாத்மவஸ்து மிகப்பழையது என்றும், அப்படியிருந்தபோதிலும் எப்போதும் புதிதாகவேயிருப்பது என்றும் பொருளாகிறது. அல்லது புரா என்று முற்காலத்தைச் சொன்னது பிற்காலத்துக்கும் உபலக்ஷணமாய் எப்போதும் புதிதாயிருப்பது என்கிறதாகவுமாம். 'புராபி' என்றதில் அபிசப்தம நிகழ்காலத்தையும், வருங்காலத்தையும் ஸமுச்சயிப்பதாகையாலே எக்காலத்திலும் புதிதாயிருப்பது என்கிறதாகவுமாம். 'நவ;' [புதிது] என்றது இங்கு ஆச்சரியமானது என்னும் கருத்தையுடையது' புதிதாயிருப்பதெல்லாம் ஆச்சரியமாயிருக்கிறதன்றே. ஆக, எப்போதும் ஏகரூபமாயிருந்தபோதிலும், மிகவாச்சரியமாயிருப்பதாகையாலே எப்போதும் புதிதுபோலே அநுபவிக்கத்தக்கது என்று கருத்து. "ஆச்சர்யவந்" [2-29]என்று மேலேயும் இதை விவரிக்கப் போகிருனன்றே. 'புரா' என்னும் சப்தம் முற்காலத்தை மாத்திரமே குறிப்பதாகக்கொண்டும் பொருள்கொள்ளலாம். அதாவது:— அவயவமுடைய வீடு முதலானவற்றைப் பிற்காலங்களில் வெள்ளையடிப்பது முதலானவற்ருலே புதிதாக்கிக்கொள்ளவேண்டும். இவ்வாத்மாவோ எனில் அவயவமற்றதாகையாலே ஏற்கனவே புதிதாயிருப்பதால் பிற்காலத்தில் புதிதாக்கவேண்டாதபடியிருப்பது என்று கருத்து. இனி நான்காவது பாதத்தாலே இக்காரணங்களாலேயே சரீரம் கொல்லப்படும்போது ஆத்மவஸ்துவானது கொல்லப்படுவதில்லை என்று அர்ஜுனனுக்கு உணர்த்துகிருன்:- (ந ஹந்யதே ஹந்யமாநே சரீரே) முற்கூறிய காரணங்களாலே சரீரம் கொல்லப்படும்போது ஆத்மாவானது கொல்லப்படுவதில்லை; ஆகையால் பீஷ்மத்ரோணுதிகளைக் கொல்லப்போகிறேனே என்று நீ கலங்கவேண்டா என்று கருத்து. 20.

பார்த்த₂—அர்ஜுநனே! ய: புருஷ:—எந்த மனிதன், ஏநம்—இவ்வாத்மாவை, அவிநாசிநம்—அழிவற்றவனுகவும், அஜம்—பிறப்பற்றவனுகவும், அவ்யயம் — குறைவற்றவனுகவும் (இருக்கையாலே), நித்யம்—என்றுமிருப்பவனுக, வேத₃—அறிகிருனே, ஸ: புருஷ:—அந்த மனிதன், கம்—யாராத்மாவை, கத₂ம்—எப்படி, ஹந்தி—கொல்லுவான்? கம்—யாராத்மாவை, கத₂ம் (வா)—எப்படித்தான், க₄ாதயதி — (மற்ருெருவனைக் கொண்டு) கொல்லுவிப்பான்?

॥भा॥ एवमविनाशित्वेनाजत्वेन व्ययानर्हत्वेन च नित्यमेनमात्मानं यः पुरुषो वेद स पुरुषो देवमनुष्यतिर्यक्स्थावरशरीरावस्थ-

---

21. உண்டாய்ப் பிறந்துவளர்ந் தோங்கிக் குறைந்திறத்தல்
கொண்டோ டுடம்பியல்வைக் கூடானைக்—கண்டா
னெவனைத்தான் கொல்லுவிக்க வேல்வான்மற் றெங்ங
னெவனைத்தான் கொல்வா னியன்று.

உண்டாய் — (அஸ்தி என்னலாம்படி விகாரங்களோடு) இருப்பதாய், பிறந்து–(ஜாயதே என்னலாம்படி) பிறப்பதாய், வளர்ந்து–(பரிணமதே என்னலாம்படி) மாறுபாட்டை அடைவதாய், ஓங்கி–(விவர்த்த₄தே என்னலாம்படி) விருத்தியடைவதாய், குறைந்து—(அபக்ஷீயதே என்னலாம்படி) க்ஷயத்தை

---

21. "ய ஏநம்" என்னும் சுலோகத்திலே, ஆத்மாவைக் கொல்லப்படுவதாக அறிந்தவன் அறிவற்றவன் என்றது. இந்த ச்லோகத்தில், ஆத்மா நித்யமேன்றறிந்தவன் எவனையும் கொல்லவோ, கொலலுவிக்கவோ முற்படமாட்டான் என்கிறது. (ய: புருஷ:) எந்தச்சேதனன். தன் ஸ்வரூபத்தைக் கூட அறியாவிடில் இவன் சேதனனே (அறிவுடையவனே) ஆகமாட்டான் என்று கருத்து. (ஏநம்) முன் சுலோகங்களில் நிரூபிக்கப்பட்ட ஆத்மஸ்வரூபத்தை. (அவிநாசிநம் வேத) அழிவற்றதாக அறிகிருனே. இத்தால் விநச்யதி [அழிகிருன்] என்னும் விகாரம் இவனுக்கில்லை என்றதாகிறது. (அஜம் வேத₃) பிறப்பற்றவனுக அறிகிருனே. இத்தால் "ஜாயதே" [பிறக்கிருன்] என்னும் விகாரம் இவனுக்கில்லை என்றதாகிறது.

तेष्वात्मसु कमप्यात्मानं कथं घातयति ? कं वा कथं हन्ति—कथं नाशयति; कथं वा तत्प्रयोजको भवतीत्यर्थः। एतानात्मनो घातयामि हन्मीत्यनुशोचनमात्मस्वरूपयाथात्म्याज्ञानमूलमेवेत्यभिप्रायः ॥ २१ ॥

---

*அடைவதாய்,* **இறத்தல் கொண்டு**–(*விநச்யதி என்னலாம்படி*) *அழிவையுடையதாய்,* **ஓடு**—(*இப்படி ஆறு விகாரங்களையும் உடையதாய்ச்*) *செல்லாநிற்கிற,* **உடமபு இயலவை கூடானை**–*உடம்பின் இவ்விகாரங்கள் பொருந்தப்பெறாத ஆத்மாவை,* **கண்டான்**-(*உள்ளபடி*) *அறிந்தவன்,* **எங்ஙன்**-*எப்படி,* **எவனை**-*எவ்வாத்மாவை,* **தான்**-*தானே,* **இயன்று கொல்வான்**-*முயன்று கொல்வான்?* **மற்று**—*மேலும்,* (**எங்ஙன்**—*எப்படி*) **எவனை**—*எவ்வாத்மாவை,* **தான்**—*தானே,* **கொல்லுவிக்க ஏல்வான்**—(*மற்றொருவனைக்கொண்டு*) *கொலை செய்விக்க முயலுவான்?*

---

(அவ்யயம் வேத$_3$) குறைவற்றவனாக அறிகிறானே. குறைவுடையவனுக்கே விருத்தியும மாறுபாடும் உண்டாகையாலே 'வ்யய' சப்தம் ஜந்மநாசம் தவிர்ந்த மற்ற எல்லாவிகாரங்களையும் குறிக்கிறது. இத்தால் "அபக்ஷீயதே" [குறைவடைகிறான்] "விவர்த்த$_4$தே" [வளருகிறான்] "பரிணமதே" [மாறுபாடடைகிறான்] "அஸ்தி" [விகாரங்களோடு இருக்கிறான்] என்னும் மற்ற நாலு விகாரங்களும் இவனுக்கு இல்லையென்றதாகிறது. அன்றிக்கே, (அவ்யயம்) என்றதில் 'அபக்ஷீயதே' என்னும் ஒருவிகாரத்தையே குறிப்பதாகக் கொண்டு, இங்கு மூன்று விகாரங்களைச் சொன்னது மற்ற மூன்று விகாரங்களுக்கும் உபலக்ஷணம் என்றும் கொள்ளலாம். (நித்யம் வேத$_3$) இப்படி எல்லா சரீரங்களுக்குமுள்ள ஷட்$_3$பா$_4$வ விகாரங்களுமில்லாமையாலே எவனொருவன் ஆத்மாவை நித்யனாக—என்றும் விகாரமற்றவனாக—அறிகிறானோ என்றபடி. (ஸ: புருஷ:) அந்தச் சேதனன் என்று அவனுக்குள்ள வைலக்ஷண்யத்தைக் (சிறப்பைக்) காட்டுகிறது. (பார்த்த$_2$) என் அத்தைக்குப் பிறந்த நீ அத்தகைய சிறந்த புருஷனாகவேண்டாமோ என்று கருத்து. (கம்) தேவர், மனிதர், திர்யக் (ஊர்வன), ஸ்தாவரம் (நிற்பன) என்னும் நான்குவிதமான சரீரங்களில் நிற்கும் ஆத்மாக்களில் எந்த ஒரு ஆத்மாவையும். (கத$_2$ம் ஹந்தி) எப்படித் தானே கொல்லுவான்? (கத$_2$ம் க$_4$ாதயதி) பிறரை விட்டுத்தான் எப்படிக் கொல்லுவிப்பான்? எந்த ஆயுதமும்,

वासांसि जीर्णानि यथा विहाय नवानि गृह्णाति नरोऽपराणि।
तथा शरीराणि विहाय जीर्णान्यन्यानि संयाति नवानि देही॥ २२॥

22. வாஸாம்ஸி ஜீர்ணாநி யதா₂ விஹாய
நவாநி க்₃ருஹ்ணாதி நரோऽபராணி।
ததா₂ ஶரீராணி விஹாய ஜீர்ணாநி
அந்யாநி ஸம்யாதி நவாநி தே₃ஹீ ||

நர:—*மனிதன்*, யதா₂—*எப்படி*, ஜீர்ணாநி வாஸாம்ஸி—*கிழிந்த வஸ்திரங்களை*, விஹாய—*கைவிட்டு*, அபராணி நவாநி

---

22. பீறும் பழம்புடைவை பேணாது விட்டொருவன்
வேறு புதுப்புடைவை மேவுதல்போ—லீறிலவன்
முத்துடம்பை விட்டு முதிராது வேறுவரும்
புத்துடம்பைச் சேரும் புகுந்து.

ஒருவன்—*ஒரு மனிதன்*, பீறும் பழம் புடைவை—*கிழிந்த பழைய வஸ்திரத்தை*, பேணாது விட்டு—*ஆதரிக்காமல் கை*

---

எப்பொருளும் ஆத்மாவைக் கொல்லமுடியாது என்று அறிந்தவன் எப்பொருளாலும் ஆத்மாவைக் கொல்லவோ, பிறரைக்கொண்டு கொல்லுவிக்கவோ நினைக்கவும் மாட்டான் என்றபடி. இக்காரணத்தாலே பீஷ்மர், துரோணர், துரியோதனன் முதலானாரின் ஆத்மாக்களை நான் எப்படிக் கொல்லுவேன்? பீமாதிகளைக்கொண்டு எப்படிக் கொல்லுவிப்பேன் என்று நீ நினைப்பதும், அந்நினைவாலே வருந்துவதும் ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி அறியாமையினாலேயே என்று கண்ணனின் திருவுள்ளம். 21.

22. "ஆத்மாக்கள் நித்யமே என்பதையும், அவற்றை சரீரத்திலிருந்து பிரிப்பதே யுத்தம் முதலானவற்றில் செய்யப்படுகிறது என்பதையும் நானறிகிறேன்; இருந்தபோதிலும், எத்தனையோ அழகிய போகங்களை அனுபவிக்க ஸாதனமாயிருக்கும் இந்த சரீரங்கள் அழியும்போது, அந்த சரீரங்களின் பிரிவினாலே எனக்கு வருத்தம் ஏற்படுவது நியாயம்தானே" என்று அர்ஜுனனுக்குக் கருத்தாகக் கொண்டு இந்த ச்லோகத்தை அருளிச் செய்கிறான் கண்ணன்: (நர: யதா₂ ஜீர்ணாநி வாஸாம்ஸி விஹாய அபராணி நவாநி க்₃ருஹ்ணாதி) மனிதன் கிழிந்த வஸ்திரங்களை விட்டு எப்படி

(வாஸாம்ஸி) — வேறு புதிய வஸ்திரங்களை, க்$_3$ருஹ்ணுதி— கைக்கொள்ளுகிறுனே, ததா$_2$— அப்படியே. தே$_3$ஹீ— ஆத்மா வானவன், ஜீர்ணுநி ஶரீராணி—கட்டுக்குலைந்த சரீரங்களை, விஹாய — கைவிட்டு, அந்யாநி நவாநி(ஶரீராணி) — வேறு புதிய சரீரங்களை, ஸம்யாதி—நன்றாக அடைகிறான்.

---

விட்டு, வேறு புதுப் புடைவை—வேறான புதிய வஸ்திரத்தை, மேவுதல்போல்–கைக்கொள்வதுபோலே, ஈறிலவன்–அழிவற்ற ஆத்மா, முத்துடம்பை–வயதான உடம்பை, விட்டு–கைவிட்டு, முதிராது—(தான்) வயதாகாமல், வேறு வரும் புத்துடம்பை– வேறாக ஏற்படும் புதிய உடம்பை, புகுந்து சேரும்–அடைந்து பொருந்திநிற்கும்.

---

வேறு புதிய வஸ்திரங்களைக் கைக்கொள்ளுகிறானே. (ஜீர்ணுநி வாஸாம்ஸி) கிழிந்த வஸ்திரமாகையாலே கைவிடத்தக்கது; கைவிடும்போதும் வருத்தம் ஏற்படாது என்று கருத்து. (நவாநி வாஸாம்ஸி) புதியதாய், அதனாலேயே அழகியதாயிருப்பதாகையாலே கைக்கொள்ளத்தக்கது; கைக்கொள்ளும்போது பேரானந்தம் உண்டாகும் என்று கருத்து. (ததா$_2$ தே$_3$ஹீ ஜீர்ணுநி சரீராணி விஹாய அந்யாநி நவாநி ஸம்யாதி) முற்கூறிய லோகதிருஷ்டாந்தத்திற் போலவே தேஹத்தையுடைய ஜீவன கட்டுக்குலைந்த சரீரங்களைக் கைவிட்டு வேறு புதிய சரீரங்களை அடைகிறான். (தே$_3$ஹீ) ஒரு தேஹத்திலிருந்து மற்றொரு தேஹத்திற்குச் செல்வதையே இயற்கையாக உடையவன். (சரீராணி) "சீர்யதே இதி சரீரம்" என்கிறபடியே அழிவதையே இயற்கையாகக் கொண்டதாகையாலே இதைக கைவிடுவதற்கு வருந்த இடமில்லை. (ஜீர்ணுநி சரீராணி) அதிலும் பீஷ்மாதி வ்ருத்$_3$த$_4$ சரீரங்கள் கட்டுக்குலைந்த சரீரங்களாகையாலே வெகுசீக்கிரம் அழியக்கூடியவை; இருக்கும் போதும் இவற்றால் இன்பத்தைவிடத் துன்பமே அதிகம், (அந்யாநிநவாநி) கட்டுக்குலைந்த பழைய சரீரங்களைவிட்டு அவற்றினும் மிகஅழகியவையாய், புத்தம்புதியவையான வேறு சரீரங்களைக் கைக்கொள்ளும்போது, கிழிந்த வஸ்திரத்தைக் கைவிட்டுப் புதிய வஸ்திரத்தைக் கைக்கொள்வதுபோலே உண்மையில் ஆநந்தப்பட வேண்டுமேயொழிய, உன்னைப்போலே துன்பமுறக்கூடாது என்றபடி. அழியாத ஆத்மாவை அழிவதாக நினைத்துத் துன்பமுற்றபோது, துன்பமுறத்தகாத விஷயத்தில் துன்பமுற்றாய் என்னும் தோஷமே

॥भा॥ धर्मयुद्धे शरीरं त्यजतां त्यक्तशरीरादधिकतरकल्याण-शरीरग्रहणं शास्त्रादवगम्यत इति जीर्णानि वासांसि विहाय नवानि कल्याणानि वासांसि गृह्णतामिव हर्षनिमित्तमेवात्रोपलभ्यते ॥ २२ ॥

॥भा॥ पुनरपि *अविनाशि तु तद्विद्धि येन सर्वमिदं ततम् इति पूर्वोक्तमविनाशित्वं सुखग्रहणाय व्यञ्जयन् द्रढयति—

---

இருந்தது. இப்போது இன்பமுறவேண்டிய விஷயத்தில் துன்பமுறு கிருய் என்னும் பெருந்தோஷம் ஏற்படுகிறது என்று கருத்து. இதற்குமமேலே அர்ஜுனன் பின்வருமாறு கேட்கக்கூடும். 'ஒரு சரீரத்தை விட்டு மற்ருெரு சரீரத்தை அடையும்போதும் அழகிய சரீரத்தைத் தான் அடையவேண்டும் எனனும் நிர்ப்பந்தமில்லையே; சக்ரவர்த்தியின் சரீரத்திலிருப்பவன், தன் கர்மத்திற்குத் தக்கவாறு நரக சரீரத்திலும், திர்யக் ஸ்தாவரம் முதலான பாபசரீரங்களிலும் புகக்கூடும். ப்ரளயததிற்போலே சரீரமெடுக்காமலுமிருக்கக்கூடும். ஆகையால் சரீரத்தை விடும்போதும், 'மேலே எவ்வகையான பாப சரீரத்தில் புகப்போகிறேமோ' என்று வருந்த இடமுண்டு. மேலும், புதியது என்றதால் மாத்திரம் ஸுகமளிப்பதாகிவிடாது. பழைய தான அரண்மனையை விட்டுப்புதியதான சிறைக்குச் செல்லுவதால் இன்பமில்லை; துன்பமேயுண்டு. பழைய கிழிந்த வஸ்திரத்தைக் கைவிட்டுப் புதியதான சாக்கைக் கட்டிக்கொள்வதாலும் துன்பமே யொழிய இன்பமில்லை. மேலும, கிழிந்த வஸதிரத்தைக்கை விட்டுப் புதிய வஸ்திரத்தை உடுத்துக்கொள்வதை நேரே காண்பதுபோலே, இம்மனிதசரீரம் கழிந்தவுடன் புதியதாய் அழகியதான சரீரம் ஏற்படுவதை நாம் நேரே காண்பதில்லை. ஆகையால் நான் சரீரம் அழிவதைக் குறித்து வருந்துவது நியாயமே'' என்று. இதற்குக் கண்ணன் கருதும் பதில பின்வருமாறு:— ''நீ தர்மயுத்தத்திலேயே பிறருடைய சரீரத்தை அவர்களுடைய ஆத்மாவிலிருந்து பிரிக்கப் போகிருய், தர்மயுத்தத்தில் சரீரத்தைக் கைவிடுபவர்களுக்கு வீர ஸ்வர்க்கம் கிடைப்பதாக சாஸ்திரம் சொல்லுகிறது. ஆகையால், இபபோதுள்ள மனிதசரீரத்தைக் காட்டிலும் மிகவும் அழகிய தேவாதிசரீரங்களே பீஷ்மாதிகளுக்குக் கிடைக்கும். ஆகையால் நீ அது குறித்து இன்பமடையவேண்டுமேயொழியத் துன்பமுறக் கூடாது'' என்று. 22.

नैनं छिन्दन्ति शस्त्राणि नैनं दहति पावकः।
न चैनं क्लेदयन्त्यापो न शोषयति मारुतः॥ २३॥

अच्छेद्योऽयमदाह्योऽयमक्लेद्योऽशोष्य एव च।
नित्यस्सर्वगतः स्थाणुरचलोऽयं सनातनः॥ २४॥

23. நைநம் சி₂ந்த₃ந்தி ஶஸ்த்ராணி நைநம் த₃ஹதி பாவக:।
ந சைநம் க்லேத₃யந்த்யாபோ ந ஶோஷயதி மாருத:॥

24. அச்சே₂த்₃யோயமதா₂ஹ்யோऽயமக்லேத்₃யோऽஶோஷ்ய ஏவ ச।
நித்ய: ஸர்வக₃த: ஸ்தா₂ணுரசலோऽயம் ஸநாதந:॥

ஶஸ்த்ராணி— *(கத்தி முதலான)* *ஆயுதங்கள்*, ஏநம்— *இவ்வாத்மாவை*, ந சி₂ந்த₃ந்தி—*வெட்டுவதில்லை;* பாவக:— *நெருப்பு*, ஏநம்—*இவ்வாத்மாவை*, ந த₃ஹதி—*எரித்து அழிப்பதில்லை;* ஆப:—*ஜலம்*, ஏநம்—*இவ்வாத்மாவை*, ந க்லேத₃யந்தி—*கரைத்து அழிப்பதில்லை;* மாருத:—*காற்று*, ஏநம்—*இவ்வாத்மாவை*, ந ஶோஷயதி—*உலர்த்தி அழிப்பதில்லை.*

அயம்—*இவ்வாத்மா*, அச்சே₂த்₃ய:—*வெட்டத்தகாதவன்;* அயம்—*இவன்*, அதா₃ஹ்ய:(*ச*)—*எரிக்கவும் தகாதவன்;* அக்லேத்₃ய: (*ச*)—*கரைக்கவும் தகாதவன்;* அஶோஷ்ய: ஏவ ச— *உலர்த்தவுமே தகாதவன்*. அயம—*இவ்வாத்மா*, ஸர்வக₃த:—

---

23 ஆயுதங்க ளாங்கிவனைச் சேதியா வன்னவகை
தீயு மவனைத் தெகியாது—பாயுஞ்
சலத்தாறு மற்றவனைத் தான்கரைக்க மாட்டா
துலர்த்தாது மாருதமு முற்று.

ஆங்கு—*தேஹம் அழியும்போது*, அவனை—*ஆத்மாவை*, ஆயுதங்கள்—*கத்தி முதலான ஆயுதங்கள்*. சேதியா—*வெட்ட மாட்டா;* அன்னவகை—*அவ்வழியிலேயே*. தீயும்—*நெருப்பும்*, அவனை தெகியாது—*ஆத்மாவை எரிக்கமாட்டாது;* மற்று—

எல்லா அசேதனங்களிலும் வியாபித்திருப்பவன்; நிதய:—(அதனாலேயே) நித்யனாயிருப்பவன்; ஸ்தாணு—நிலையான தன்மையுடையவன்; அசல:-அசைக்கமுடியாதவன்; ஸநாதந:-பழையோனாயிருப்பவன்.

---

மேலும், அவனை—அவ்வாத்மாவை, பாயும் சலத்து ஆறு தானும்—பாய்கின்ற நீரையுடைய ஆறுதானும், கரைக்கமாட்டாது—கரைக்கவல்லதன்று; மாருதமும்—காற்றும், உற்று—(அவனை) அடைந்து, உலர்த்தாது—உலர்த்தமாட்டாது.

**24. அவ்வவற்று லேது மழியா னிவனென்று**
**மெவ்விடத்துந்தாணுவா யேய்ந்தசைவற்-றிவ்வகையென்**
**றுதுந் தெரியா னறிவரியா னென்றறிந்து**
**யாதுந் துயரேனீ யிங்கு.**

**அவ்வவற்றால்**—ஆயுதம், அக்னி, ஜலம், வாயு என்னும் இவற்றால், **ஏதும்**—வெட்டப்பட்டோ, எரிக்கப்பட்டோ, கரைக்கப்பட்டோ, உலர்த்தப்பட்டோ, **இவன்**—ஆத்மா, **அழியான்**—அழியமாட்டான்; **என்றும்**—எல்லாக்காலத்திலும், **எவ்விடத்தும் ஏய்ந்து**—எல்லாவிடத்திலும் வியாபித்து, **தாணுவாய்**—நிலையான தன்மையை உடையவனாய், **அசைவற்று**—அசைக்கமுடியாதவனாய், **இவ்வகை என்று**—இப்படிப்பட்டது என்று, **ஆதும் தெரியான்**-(எவராலும்)எவ்வகையிலும் அறிய முடியாதவனாயிருப்பான். **அறிவு அரியான்**—(எவராலும்) நினைக்கவும் முடியாதவன்; **என்று அறிந்து**—என இவ்வண்ணமாகத்தெளிந்து, **நீ**—(அர்ஜுனனாகிற) நீ, **இங்கு**—இவ்விஷயத்தில, **யாதும் துயரேல்**—எவ்வகையிலும் துன்பமுறாதே.

---

23–24. "அவிநாசி து தத்₃வித்₃தி₄ யேந ஸர்வமித₃ம் ததம்" [2--17] [எல்லா அசேதனப் பொருளகளையும் வியாபித்திருக்கும் ஆத்மாவை அழிவற்றதென்று அறிவாயாக] என்ற ச்லோகத்தில் ஆத்மாவானது அழியாதது என்று நிருபிக்கப்பட்டது. இவ்விஷயத்தை இவ்விரண்டு சுலோகங்களிலும் எளிதில் விளங்கவைத்து உறுதிப்படுத்துகிறான் கீதாசார்யன். ஆகையாலே புநருக்திதோஷம் இல்லை.

॥ भा ॥ शस्त्राग्न्यम्बुवायवः छेदनदहनक्लेदनशोषणान्यात्मानं प्रति कर्तुं न शक्नुवन्ति सर्वगतत्वादात्मनस्सर्वतत्त्वव्यापनस्वभावतया

(நைநம் சி₂ந்த₃ந்தி சஸ்த்ராணி) அசேதனப்பொருள்கள பல வற்றைக் கத்தி முதலான ஆயுதங்கள் வெட்டி உருவழிப்பதைக காண்கிறோம். அவ்வண்ணம் இவ்வாத்மாவை எந்த ஆயுதமும் வெட்டி அழிக்கமாட்டா என்கிறது. (ந சி₂ந்த₃ந்தி) வெட்டுகின்றன வல்ல. 'அச்சே₂த்₃யோயம்' [இவ்வாத்மா வெட்டத்தக்கவனல்லன்] என்று மேலே பிரயோகிக்கப்படுகையாலே, இங்கும் ஆயுதங்கள் வெட்ட வல்லவையல்ல எனறே பொருள் கொள்ளவேண்டும். (நைநம் த₃ஹதி பாவக:) அசேதனப்பொருள்கள் பலவற்றை நெருப்பு எரிந்து அழிப்பதைக் காண்கிறோம். அவ்வண்ணம் இவ் வாத்மாவை நெருப்பானது உருவழிக்கவல்லதல்ல. (ந சைநம் க்லேத₃ யந்த்யாப:) உப்பு, சர்க்கரை முதலானவற்றை ஜலமானது நனைத்துக் கரைத்து உருவழிப்பதைக் காண்கிறோம். அவ்வண்ணம் இவ்வாத் மாவை ஜலமானது கரைத்து உருவழிக்கவல்லதல்ல. (நக்லேத₃யந்தி) 'நனைப்பதில்லை' என்று பொதுவாகப் பொருளானாலும், முன்பின் பதங்களைப்போலே 'உருவழிப்பதில்லை' என்றே பொருள் கொள்ள வேண்டுமாகையால், 'கரைப்பதில்லை' என்று பொருளாகிறது. ''பாயும் சலத்தாறும் மற்றவனைத்தான் கரைக்கமாட்டாது'' என்றார் வாதிகேஸரி ஜீயரும். (ந சோஷயதி மாருத:) ஜலம் முதலான வற்றைக் காற்று உலர்த்தி உருவழிப்பதைக் காண்கிறோம். அவ் வண்ணம் இவ்வாத்மாவைக் காற்று உலர்த்தி உருவழிக்கவல்லதல்ல.

இனி, ஆயுதங்கள், நெருப்பு, ஜலம், காற்று ஆகியவை ஆத் மாவை உருவழிக்கவல்லவையல்லவானாலும், வேறு சில வஸ்துக்கள் இவ்வாத்மாவை வெட்டியும், எரித்தும், கரைத்தும், உலர்த்தியும் உருவழிக்கக்கூடுமோ எனில், இவ்வாத்மாவானது எதனாலும் வெட்டவோ, எரிக்கவோ, கரைக்கவோ, உலர்த்தவோ தக்கதல்ல என்று உணர்த்துகிறான் இருபத்திநாலாம் சுலோகத்தின் முற்பாதி யாலே. (அச்சே₂த்₃யோயம்) ஆயுதம் முதலான எதனாலும் இவ்வாத்மா வெட்டி உருவழிக்கத்தக்கதல்ல. (அத₃ாஹ்யோயம்) நெருப்பு முத லான எதனாலும் இவ்வாத்மா எரித்து உருவழிக்கத்தக்கதல்ல. (அக்லேத்₃ய:) ஜலம் முதலான எதனாலும் இவ்வாத்மா கரைத்து அழிக்கத்தக்கதல்ல. (அசோஷ்ய ஏவ ச) காற்று முதலான எதனாலும்

सर्वेभ्यस्तत्त्वेभ्यस्सूक्ष्मत्वादस्य तैर्व्याप्त्यनर्हत्वात्; व्याप्य कर्तव्यत्वाच्च छेदनदहनक्लेदनशोषणानाम्। अत आत्मा नित्यः स्थाणुरचलोऽयं सनातनः स्थिरस्वभावोऽप्रकम्प्यः पुरातनश्च ॥ २३ ॥ २४ ॥

---

இவ்வாத்மா உலர்த்தி அழிக்கதக்கதுமல்ல. ஆத்மா வெட்டவோ, எரிக்கவோ, கரைக்கவோ, உலர்த்தவோ தக்கதல்லவாகையால் மற்ற பொருள்களைக்குறித்து இச் செயல்களைச் செய்யும் ஆயுதங்கள், அக்னி, ஜலம், காற்று ஆகியவையோ மற்றும் உலகினர்க்குத் தெரிந்தும் தெரியாமலும் இச்செயல்களைச் செய்யும் வேறு பொருள் களோ ஆத்மாவைக் குறித்து இச்செயல்களைச் செய்ய வல்லமையுடை யவை யல்ல என்று கருத்து. "அச்சே₂த்₃ய:" முதலான பதங்களில் யத்ப்ரத்யயம் அர்ஹார்த்தமாகையால், 'வெட்டத்தக்கது அல்ல, எரிக்கத்தக்கது அல்ல......உலர்த்தத்தக்கது அல்ல' என்று பொருள் கொள்ளவேண்டும்.

இனி, இருபத்துநாலாவது சுலோகத்தின் பிற்பாதியாலே, இப்படி ஆத்மா நித்யமாயிருப்பதற்கு ஏற்கனவே நிரூபிக்கப்பட்ட காரணத்தைக் காட்டிக்கொண்டு, அந்த நித்யத்வத்தை விவரிக் கிறான்,—(நித்ய:) கடந்த ஒன்றரை சுலோகங்களில் காட்டியபடி எப்பொருளுமே ஆத்மாவை உருவழிக்க வல்லதல்லவாகையால் ஆத் மாவானது நாசமற்றது. எப்பொருளும் ஏன் ஆத்மாவை உருவழிக்க வல்லமையற்றதாகிறது.? எனில்: (ஸர்வக₃த:) ஆத்மாவானது எப் பொருளையும் வியாபிக்கவல்லதாகையால், உலகில் வெட்டுதல், எரித்தல், கரைத்தல், உலர்த்துதல் ஆகிய செயல்களைச் செய்யும் எப்பொருளைக்காட்டிலும் ஆத்மாவானது நுண்ணிய தாயிருக்கிறது. இச் செயல்களைச் செய்யும் பொருள்கள் எல்லாம் தம்மால் வெட்டியோ, எரித்தோ, கரைத்தோ, உலர்த்தியோ உரு வழிக்கப்படும் பொருள்களை உட்புகுந்து வியாபித்தே இச்செயல் களைச் செய்யமுடியும். ஆத்மாவோவெனில் இந்த எல்லாப்பொருள் களையும் வியாபிப்பதாயிருக்கையால், அவற்றிலும் நுண்ணியதாய், அதனாலேயே அவற்றால் வியாபித்து உருவழிக்கத்தகாததாயிருக் கிறது என்று கருத்து. (ஸர்வகத:) எல்லாவற்றையும் வியாபிப்பவன் என்ற இத்தால் ஆத்மா ஸ்வரூபத்தாலேயே எங்கும் வியாபித் திருக்கும் விபு₄ என்று பொருள்கொள்வது ஆத்மாவை அணுவெனக் கூறும் சுருதி முதலான சாஸ்திரவசனங்களுக்கு விருத்தமாகும். ஆகையால், காலபேதத்தால் தன் ஸ்வரூபத்தாலும், தன் தர்மபூத ஜ்ஞானத்தாலும் எல்லா அசேதனப் பொருள்களையும் வியாபிக்க

※ अव्यक्तोऽयमचिन्त्योऽयमविकार्योऽयमुच्यते।
तस्मादेवं विदित्वैनं नानुशोचितुमर्हसि॥ २५॥

*25. அவ்யக்தோऽயமசிந்த்யோऽயமவிகார்யோऽயமுச்யதே।
தஸ்மாதே₃வம் விதி₃த்வைநம் நாநுஶோசிதுமர்ஹஸி ||

வல்லவன் என்றே பொருள்கொள்ளவேண்டும். (ஸர்வக₃த: நித்ய) எல்லாப் பொருள்களையும் வியாபிக்கவல்லவனுகையால், அவற்றிலும் நுண்ணியனுயிருக்கையால், அவற்ருல் வெட்டியோ, எரித்தோ, கரைத்தோ, உலர்த்தியோ அழிக்கப்படமாட்டான். ஆத்மா ஒரு வஸ்துவாலே அழிக்கப்படாவிடிலும், பல அசேதனப்பொருள்கள்போலே காலத்தாலே தானே அழிவானே? எனில்: (ஸ்த₂ாணு:) இயற்கையாகவே நிலையாயிருப்பவனுகையால் காலத்தாலேற்படும் நாசத்தையும் அடையாதவன். காலத்தாலே ஸ்வரூபநாசமில்லாவிடிலும், ஸ்வபாவ நாசமேற்படுமோ எனில்: (அசல:) காலம் முதலான எதனுலும் ஞானம் முதலான ஸ்வபாவத்திலும் அழிவேற்படுத்தமுடியாதவன். ஞானத்தில் இவனுக்கு ஏற்றத்தாழ்வைக் காண்கிருேமே எனில்: "ப்ரகாச்யந்தே ந ஜந்யந்தே" [வெளிப்படுத்தப்படுறதேயொழிய (ஞானம் முதலிய குணங்கள்) உண்டாக்கப்படுவதில்லை] என்கிற ரீதியிலே, இவனுடைய அறிவு முதலானவற்றுக்கு மறைவும், மறைவுநீங்கப் பெறுதலும் உண்டேயொழிய உத்பத்திவிநாசங்கள் இல்லையன்ருே. "ஸ்த₂ாணு:" என்று "அச்சே₂த்₃ய:" என்ற விடத்திற்போலே இவனுக்கு விநாசத்துக்குத் தகுதியேயில்லை என்பதையும் "அசல:" என்று "நைநம் சி₂ந்த₃ந்தி" என்ற ச்லோகத்திற் சொன்னபடி நாசமடைவிக்கும் வஸ்துக்களால் அசைக்கமுடியாதவன் என்பதையும் கூறி நிகமனம் செய்கிருனுகவுமாம். முன் நிரூபித்தபடி அழிவற்றவனுயிருந்தாலும், உத்பத்தியுள்ளவனுயிருப்பானே? எனில், அதுவுமில்லையென்கிறது கடைசியாக:– (ஸநாதந:) புராதந: என்றபடி. 'நித்ய:' என்னும்பதத்தால் நாசமில்லை என்று கூறிவிட்டபடியால ஸநாதன பதத்திற்கு ஆதியற்ற புராதனன் என்றே பொருள கொள்ளவேண்டும். இதனுலேயே "புராதநச்ச" என்று ஸநாதன பதத்திற்குப் பொருளுரைத்தார் பாஷ்யகாரர். வாதிகேஸரி ஜீயருமவெண்பாவில் "நித்ய: ஸநாதந:" என்னும் இரண்டு பதங்களுக்குமாகச் சேர்த்து "என்றும் ஏய்ந்து" என்று அருளினர். 23-24.

* 24, 25 சுலோகங்களுக்கு 24-வது வெண்பாவே மொழிபெயர்ப்பாய் அமைந்திருக்கிறது. "அச்சேத்ய: அதாஹ்ய: அக்லேத்ய: அசோஷ்ய: அவிகார்ய:" என்னும் பதங்களுக்கு, "அவ்வவற்ருல் ஏதுமழியான்" என மொழிபெயர்ப்பு.

அயம்—இவ்வாத்மா, **அவ்யக்த:** —(அழிவுடையவனாக) அறியப்படாதவனாகவும், **அயம்**—இவனே, **அசிந்த்ய:**—(அழிவுடையவற்றின் தன்மைகளை உடையவனாக) நினைக்கவும் தகாதவனாகவும், **அயம்**—இவனே, **அவிகார்ய:**—விகாரமற்வனாகவும், **உச்யதே**—கூறப்படுகிறான். **தஸ்மாத்**—ஆகையால், **ஏநம்**-இவனை, **ஏவம்**-இவ்வண்ணமாக, **விதி₃த்வா**-அறிந்து, **அநுஶோசிதும் ந அர்ஹஸி**—நீ வருந்தக்கூடாது.

**॥ भा ॥ छेदनादियोग्यानि वस्तूनि यैः प्रमाणैर्व्यज्यन्ते; तैरयमात्मा न व्यज्यत इत्यव्यक्तः; अतश्छेद्यादिविसजातीयः। अचिन्त्यश्च-**

---

**25.** முன் சுலோகங்களில் அனுமானங்களைக் காட்டி ஆத்மாவின் நித்தியத்தன்மை ஸாதிககப்பட்டது. ப்ரமாணத்தோடோ, அல்லது யுக்தியுடனோ இவ்வனுமானங்களுக்கு ஏற்படக்கூடிய விரோத சங்கைகளை இந்த ச்லோகத்தில் தவிர்த்துக்கொண்டு ஆத்ம நித்யத்வஸாத₄நப்ரகரணத்தை முடித்தருளுகிறான் கண்ணன். (அயம் அவ்யகத:) இவ்வாத்மா அறியப்படாதவன். சாஸ்திரம் முதலான பல ப்ரமாணங்களால் அறியத்தக்கவனாயிருக்கும் ஆத்மாவை அறியப்படாதவன் என்னலாமோ? எனில்: இங்குகருத்து அதுவன்று. சாஸ்திரவிரோதம வராமலிருக்கவும், ப்ரகரணத்தை ஒட்டியும் இதற்குப்பொருள பின்வருமாறு ஆகும்:-சரீரம் முதலான அசேதனப்பொருள்கள் எந்தப் பிரமாணங்களாலே வெட்டவும், எரிக்கவும், கரைக்கவும், உலர்த்தவும் தக்கவையாக அறியப்படுகின்றனவோ அந்தப்பிரமாணங்களால் அவ்வண்ணமாக இவ்வாத்மா அறியப்படாதவன் என்பதே இங்கு பொருள். எவ்விதமாகவும் இவன் அறியப்படாதவன் என்று கொண்டால் ப்ரத்யக்ஷம், சாஸ்திரம் முதலான எல்லாப்பிரமாணங்களும் விரோதிக்கும். அவனவனுடைய ஆத்மா அவனவனுக்கு ஞானனந்தமயமாகவும் அறிபவனாகவும் பிரகாசிக்கின்றது. சாஸ்திரங்களிலும், ஞானனந்தமயமாகவும், அறிபவனாகவும், நித்யமாகவும், பகவச்சேஷமாகவும் அறியப்படுகிறது ஆத்மா. சரீரம முதலானவற்றைப்போல் அழியத்தக்கதாக எந்தப் பிரமாணத்தாலும் ஆத்மா அறியப்படவில்லை. ஆகையால் ஆத்மநித்யத்வத்தை ஸாதிக்க முன் காட்டப்பட்ட அனுமானங்களுக்கு ப்ரமாணயுக்தி விரோதமில்லை என்று கருத்து. (அவ்யக்த.)

सर्ववस्तुविजातीयत्वेन तत्तत्स्वभावयुक्ततया चिन्तयितुमपि नार्हः; अतश्चाविकार्यः—विकारानर्हः। तस्मादुक्तलक्षणमेनमात्मानं विदित्वा तत्कृते नानुशोचितुमर्हसि ॥ २५ ॥

---

"இந்த்₃ரியைர் க்₃ருஹ்யதே யத்₃யத் தத்தத்₃ வ்யக்தமிதிஸ்தி₂தி: ।
அவ்யக்தமிதி விஜ்ஞேயம் லிங்க₃க்₃ராஹ்யமதீந்த்₃ரியம் ॥"

*[பார-சாந்தி 330-41]*

[எந்த எந்தப் பொருள்கள் வெளிஇந்திரியங்களால் அறியப்படுகின்றனவோ, அவையவை வ்யக்தமெனப்படுகின்றன. வெளி இந்திரியங்களால் அறியப்படாததாய், மானஸப்ரத்யக்ஷம்,அனுமானம் முதலான மற்ற ப்ரமாணங்களால் அறியப்படுவது அவ்யக்தம் எனப்படுகிறது.] என்று பாரதம் மோக்ஷதர்மத்தில் அவ்யக்த சப்தார்த்தம் அறிவிக்கப்பட்டதால், அத்வைதிகள் கருதுவதுபோல் எல்லாப்படியாலும் அறியத்தகாதது ஆத்மா என்று பொருளாகாது. இனி, பௌத்தர் முதலானோர், "ஆத்மா முதலிய எல்லாமே க்ஷணிகம்; ஸத்தாயிருக்கையால்; ஸத்தாயிருப்பதெல்லாம் க்ஷணிகமாயிருப்பதைக் காண்கிறோமன்றோ; தீபஜ்வாலையைப்போலே" என்று அனுமானம் கூறுகிறார்கள். அவர்களை நிரஸிக்கிறான அடுத்தபடியாக,—(அசிந்த்யோயம்) முற்கூறியபடி அநித்யப் பொருள்கள் எந்தப் பிரமாணததால் அநித்யமாக அறியப்படுகின்றனவோ, அந்தப் பிரமாணத்தால் அவ்வண்ணமாக அறியப்படாமையால் அவற்றினின்றும் அடியோடு வேறுபட்டிருக்கையாலே, 'அவ்வநித்யப் பொருள்களின் தன்மை இவ்வாத்மாவிடமும் உண்டு என்று நினைக்கவும் தகாததாயிருக்கிறது இவ்வாத்மதத்வம் என்றபடி. ஸத்தாய் (உள்ளதாய்) இருக்கும் பொருள்கள் எல்லாம் க்ஷணிகமாயிருப்பதாக ப்ரத்யக்ஷத்தால் நாம் அறியவில்லையாகையாலும், சாஸ்திரமும் ஆத்மாவை நித்யமெனறே கூறுகையாலும் பௌத்தர் கூறிய அனுமானம் அடியோடு தவறு என்று கருத்து. இனி, அவ்யக்தனுகவும் அசிந்த்யனுகவுமிருக்கையால், ஆத்மாவுக்கு விகாரமில்லை என்று முடிவுகட்டுகிறான்,-(அவிகார்யோயமுச்யதே) 'அவ்யக்த: அசிந்த்ய:" என்னும் பதங்களில் நிரூபிக்கப்பட்டபடியே, ஆத்மாவின் நித்யத்வத்தை ஸாதிக்க முன் கூறப்பட்ட நாலு அனுமானங்களுக்கும் பிரமாணயுக்திவிரோதம் இல்லாமையாலே ஆத்மா விகாரமற்றது என்று நல்லோர்களால் முடிவுகட்டப்பட்டிருக்கிறது. இதை எவராலும் அசைக்கமுடியாது என்று கருத்து. இப்படியல்லாமல், ஆத்மா

अथ चैनं नित्यजातं नित्यं वा मन्यसे मृतम्।
तथाऽपि त्वं महाबाहो! नैवं शोचितुमर्हसि॥ २६॥

வின் நித்யத்தன்மையை ஸாதிக்க, முன் கூறப்பட்ட நாலு அனுமானங்களுக்குமேலே ஐந்தாவது அனுமானம் ஒன்று இந்த ச்லோகத்தில் காட்டப்படுவதாகவும் கொள்ளலாம். அதாவது,-அவ்யக்தனுயிருக்கையால் ஆத்மா விகாரமற்றவன் என்று ஸாதிப்பதாகக் கொள்ளலாம். அநுமாநசரீரம் பின்வருமாறு:—“ஆத்மா விகாரத்திற்குத் தகுதியற்றவன்; விகாரமுடையவனென்று காட்டும் பிரமாணம் இல்லாமையால். ஈச்வரஸ்வரூபம்போலே” என்றபடி. இங்கு, விகாரமுடையது என்று காட்டும் பிரமாணம் இல்லாமையால், விகாரமற்றது என்று ஸித்திக்கும் ஈச்வரஸ்வரூபம் அந்வய (நேர்முக) திருஷ்டாந்தமாகும். விகாரமுடையது என்று காட்டும் (ப்ரத்யக்ஷம் முதலான) ப்ரமாணம் இருக்கையால் விகாரமுள்ளது என்று ஸித்திக்கும் கடம் முதலானவை வ்யதிரேக (மாறுமுக) திருஷ்டாந்தமாகும். இப்படி விசேஷவ்யாப்தியைக்கொண்டு ஸாதிப்பதோடன்றியில், “எது எத்தகைய ஆகாரத்தைக் காட்டும ப்ரமாணமற்றதாயிருக்கிறதோ, அது அத்தகைய ஆகாரம் அற்றதாயுள்ளது; கறுப்புநிறம் மஞ்சள்நிறமற்றதாயிருப்பதுபோலே” என்னும் ஸாமாந்யவ்யாப்தியின்மூலமும், ஆத்மாவானது அவ்யக்தனுயிருக்கையால்-(அதாவது,-விகாரம உடையவனென்று காட்டும் பிரமாணமற்றவனுயிருக்கையால்)-விகாரமற்றவனுயிருக்கிறுன் என்று ஸாதிக்கலாம். ஆக, இவ்வளவால ஆத்மாவின் நித்யத்வத்தை ஸாதிக்க ஐந்தாவது அனுமானமும காட்டப்பட்டதாயிற்று. (அவிகார்ய:) இங்கும் யத்ப்ரத்யயம் அர்ஹார்த்தமாகையாலே ஆத்மதத்வம் விகாரத்திற்குத் தகுதியுடையதேயனறு என்று காட்டுகிறது. ‘அவிகார:’ என்று கூறினுல், ‘சில சமயம் விகாரமற்றவன ஆத்மா’ என்றும் பொருள் கூறிவிடமுடியுமாகையாலே, அப்படியாகாமல விகாரத்திற்குத் தகுதியே உடையவனல்லன என்று காட்டுவதற்காக ‘அவிகார்ய;’ என்று சப்தப்ரயோகம் செய்கிருன.

(தஸ்மாத்) இப்படி எவ்வகையிலும் விகாரமற்றவனுயிருக்கையால். (ஏநம ஏவம் விதித்வா) இவ்வாத்மாவை இப்படி விகாரத்திற்குத் தகுதியே அற்றவனுக அறிந்தபின்பு. (நாநுசோசிதுமர்ஹஸி) இவ்வாத்மாவைக் குறித்து நீ வருந்துவது தக்கதல்ல. (ந அர்ஹஸி) ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்த உனக்கு வருந்துவதற்குத் தகுதியே இல்லை என்று கருத்து. 25.

26. அத₂ சைநம் நித்யஜாதம் நித்யம் வா மந்யஸே ம்ருதம்।
தத₂ாபி த்வம் மஹாபா₃ஹோ நைவம் ஶோசிதுமர்ஹஸி ॥

**மஹாபா₃ஹோ**—*தடக்கையனே!* **அத₂**—*முற்கூறியபடியல்லாமல்,* **ஏநம்**—*இவ்வாத்மாவை,* **நித்யஜாதம்**—*என்றும் உண்டாகிறதும்,* **நித்யம் ம்ருதம் வா ச**—*என்றும் இறக்கிறதுமான சரீரமாகவே,* **மந்யஸே (சேத்)**-*நினைக்கிறாயாகில்,* **தத₂ா அபி**—*அப்படி நினைத்தாலும்,* **த்வம்**—*நீ,* **ஏவம்**—*இவ்வண்ணமாக,* **ஶோசிதும்**—*வருந்துவதற்கு,* **ந அர்ஹஸி** — *தகுதியுடையவனல்ல.*

---

**25. இத்தன்மை யன்றியிவ னென்றும் பிறந்திறக்கு**
**மத்தன்மை யாக வறிதியோ—சித்தந்**
**தளரும் படியிங்ஙன் றுன்வெறுக்க வேண்டா**
**வளருந் திரடோளாய் மற்று.**

**வளரும் திரள் தோளாய்**—*நீண்டு வளர்ந்து திரண்டிருக்கும் கைகளையுடைய அர்ஜுனா!* **மற்று**-*முற்கூறியபடியல்லாமல்,* **இவன்**—*இவ்வாத்மாவை,* **இத்தன்மை அன்றி**-*நித்தியத் தன்மையற்றவனாய்,* **என்றும் பிறந்து இறக்கும் அத்தன்மை ஆக**-*என்றும் பிறப்பதும் இறப்பதும் செய்யும் தன்மையையுடைய சரீரமாகவே,* **அறிதியோ**—*அறிகின்றாயோ? (அப்படி அறிந்தாலும்),* **சித்தம் தளரும்படி**—*நெஞ்சு குலையும்படி,* **இங்ஙன் தான்**-*இவ்வண்ணமாகத்தானே,* **வெறுக்க வேண்டா**—*வருத்தத்தை அடையவேண்டாமே!*

---

26. இதுவரையில் தேஹத்தைக்காட்டிலும் வேறான ஆத்மாவின் நித்தியத்தன்மை ஸாதிக்கப்பட்டு, அதையறிந்தவனுக்கு சோகம் ஏற்படக்காரணம் இல்லை என்று காட்டப்பட்டது. இனி, மூன்று சுலோகங்களிலே அப்₄யுபக₃ம்யவாத₃ம் [தான் இசையாததையும் ஏற்றுக்கொண்டு வாதம் செய்வது] புரியும் ரீதியிலே நாஸ்திகனைப்போலே நீ தேஹத்தைக்காட்டிலும் வேறான ஆத்மா இல்லை என்று நினைத்தாலும் வருந்துவதற்கு இடமில்லை என்று காட்டுகிறான். (அத₂) முன் சொன்னதிலும் வேறான பக்ஷமென்று காட்டுகிறான். 'அத₂மந்யஸே?' [நினைக்கிறாயோ?] என்று கேள்வியாகவு

॥ भा ॥ अथ नित्यजातं नित्यमृतं देहमेवैनमात्मानं मनुषे, न देहातिरिक्तमुक्तलक्षणम्; तथाऽप्येवमतिमात्रं न शोचितुमर्हसि, परिणामस्वभावस्य देहस्योत्पत्तिविनाशयोरवर्जनीयत्वात् ॥ २६ ॥

---

மாம். தேஹாத்மவாதத்தை ஒப்புக்கொண்டு வாதம் செய்வதைக் காட்டுவதாகவுமாம். (அதஃ ச நித்யஜாதம் நிதயம் ம்ருதம் வா ஏநம் மந்யஸே) வாசப்தம் சகாரப்பொருளையுடையது. சகாரம் ஏவ காரப்பொருளையுடையது. என்றும பிறப்பதும், என்றும் இறப்பதும் செய்யும் தேஹமாகவே இவ்வாத்மாவை நினைக்கிறுயாகில். (நித்யஜாதம் நித்யம் ம்ருதம்) நித்யமாயிருப்பதற்குப் பிறப்பிறப்புகள் பொருந்தாவாகையால், "நித்யமாயும பிறப்பிறப்புகள் உடையதாயும்" எனறு பொருள் கொள்ளமுடியாது. பிறப்பிறப்புக்கள் ஒருபொருளுக்கே எப்போதுமே ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றன எனறு கூறுவதும் பொருந்தாது. ஆகையால், நியதமான (அவசியம் ஏற்பட்டே தீரவேண்டியதான) பிறப்பிறப்புக்களை உடையது என்றே கருத்து. இப்படிப்பட்ட தன்மையையுடையது தேஹமே யாகையால், இங்கு குறிக்கப்படுவது தேஹமே யாகமுடியும். (ஏநம் நித்யஜாதம் நித்யம் மருதம் மந்யஸே) முன் சொன்னபடி தேஹத்தைக்காட்டிலும் வேறுபட்ட நித்யப்பொருளாய் அறியாமல், பிறந்தும் இறந்தும் தீரவேண்டிய தேஹமாகவே இவ்வாத்மாவை நினைக்கிறுயாகில் என்றபடி. (ததாபி) இப்படி பிறப்பிறப்புக்களை இயற்கையாகக்கொண்ட தேஹமே ஆத்மா என்று நினைத்தாயானுலும். (நைவம் சோசிதுமர்ஹஸி) இவ்வண்ணமாக நீ மிகவும் வருந்துவது தக்கதன்று. முன் ச்லோகங்களில், ஆத்மாவுக்கு நாசமில்லாமையால் வருந்துவதற்கு இடமேயில்லை என்று கூறப்பட்டது. இப்போது தேஹமாகிற ஆத்மாவிற்கு விநாசம் ஏற்படுகையால் சிறிது வருந்தலாமானுலும், பிறப்பிறப்புக்களையே இயற்கையாகக்கொண்ட தேஹத்திற்கு இவ்விநாசம் தவிர்க்கமுடியாததாகையால் நீ மிகவும் வருந்துவது தகாது என்கிறது. அன்றிக்கே, தேஹத்திலும் வேருன ஆத்மாவை ஒப்புக்கொள்ளும்போதாவது ஆசார்யாதிவதத்தால் நரகம் முதலான தீக்கதிகளுக்குச்சென்று விடுவோமோ என்று மிகவும் வருந்த இடமுண்டு. தேஹாத்மவாதம் செய்யும்போது நரகாதிகளுமில்லையாகையாலும், சரீர மரணமே ஸம்ஸார துக்க விடுதலையாகையாலும் மிகவும்ஆனந்தப்படவேண்டிய மரணத்தைக்குறித்துமிகவும் வருந்துவது பொருந்தாது என்றும் கொள்ளலாம். (மஹாபாஹோ த்வம்) மஹாவீரனை நீ, இயற்கையின் நியதியின்படி நடந்தே தீரவேண்டிய ஸ்வபரமரணத்திற்கு வருந்துவது தகாது. 26.

जातस्य हि ध्रुवो मृत्युर्ध्रुवं जन्म मृतस्य च।
तस्मादपरिहार्येऽर्थे न त्वं शोचितुमर्हसि॥

27. ஜாதஸ்ய ஹி த்$_4$ருவோ ம்ருத்யுர் த்$_4$ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச।
தஸ்மாத$_3$பரிஹார்யேऽர்த்தே$_2$ ந தவம் ஶோசிது மர்ஹஸி॥

ஜாதஸ்ய—*உண்டானதற்கு*, ம்ருத்யு:—*அழிவு*, த்$_4$ருவ:—*தவிர்க்கவொண்ணுதது;* ம்ருதஸ்ய—*அழிந்ததற்கு*, ஜந்ம ச-*மறுபிறப்பும்*, த்$_4$ருவம்—*தவிர்க்கவொண்ணுதது*, தஸ்மாத்—*ஆகையால்*, அபரிஹார்யே அர்த்தே$_2$ — *விலக்கவொண்ணுத இவ்விஷயத்தில்*, த்வம்—*நீ*, ஶோசிதும் — *வருந்துவதற்கு*, ந அர்ஹஸி—*தகுதியுடையவனல்லே*.

---

26. பிறந்தவனுக் காங்கிறத்தல் பின்னறுதி யவ்வா
றிறந்தவனுக் கும்பிறப்பு மெய்துந்—திறந்தன்ன
லொன்றும் பரிகார மில்லா வொருபொருட்கு
நின்று மனந்தளரே னீ.

பிறந்தவனுக்கு—*உண்டான சரீரத்திற்கு*, ஆங்கு—*அந்த ஜந்மத்தில்*, பின்—*பின் ஒருகாலத்தில்*, இறத்தல:—*இறந்து போவது என்பது*, அறுதி—*நிச்சயம்*, அவ்வாறு—*அப்படியே*, இறந்தவனுக்கும்—*அழிவடைந்த சரீரத்திற்கும்*, பிறப்பும்—*மறுபிறப்பும்*, எய்தும்—*வந்தே தீரும்;* திறம தன்னல்—*இத்தன்மையாலே*, ஒன்றும் பரிகாரம் இல்லா ஒரு பொருட்கு-*எவ்விதத்திலும் தவிர்க்கமுடியாத இவ்விஷயத்தில்*, நீ—*நீ*, நின்று-*நிலேநின்று*, மனம் தளரேல்-*மனத்தைத் தளரவிடாதே*.

---

27. தேஹாத்மவாதியானுலும் நீ வருந்த இடமில்லே என்று முன் சுலோகத்தில் சொன்னதை விளக்குகிருன். (ஜாதஸ்ய ம்ருத்யு: த்ருவோஹி) பிறந்தது எதற்குமே அழிவு நிச்சயமன்ருே. (ம்ருத்யு:) அழிவு. (த்$_4$ருவ:) நிச்சயம். விலக்கவொண்ணுது என்றபடி. (ஹி) பிரஸித்தியைக்காட்டும் பதம். உலகில் எங்குமே இப்படியே [அதாவது,-பிறந்தது எல்லாமே அழிவுள்ளதாகக்] காணப்படுகிறது எனறு கருத்து. (ஹி) முன் சுலோகத்தில் வருந்தக்கூடாது என்று கூறியதற்குக் காரணத்தைக் காட்டுகிறதாகவுமாம். (ம்ருதஸ்ய ச ஜந்ம த்$_4$ருவம்) அவ்வண்ணமே அழிந்தது எதற்குமே மறுபிறப்பும் நிச்

நிலைக்கு அறிவும் ஒடுங்கலாகிற நிலைக்கு உற்பத்தியும் ஏற்படுகின்றன. இதிலிருந்து ஒரு நிலையிலுண்டான ஒருபொருள் அழியும்போதே மற்றொரு நிலையோடு அப்பொருள் பிறக்கிறது என்று அறிகிறோம். ஆகையால் அழிந்ததெல்லாம் மறுபிறப்படைகிறது என்றதில் குறையில்லை. அழிந்ததெல்லாம் மறுபடி உண்டாகியேதீரும் என்றுகொண்டால், நாம் அனுபவித்து அழிந்த துன்பங்களெல்லாம் மறுபடி உண்டாகிக்கொண்டேயிருக்குமாகையால், துன்பங்கள் அடியோடு அழிவதாகிற மோக்ஷநிலை என்றுமே உண்டாகாமல் போய்விடும் என்றதும் சரியல்ல; துன்பம் என்பது நமது ஆத்மாவிலிருக்கும் (தர்மபூதஜ்ஞாநம் எனப்படும்) அறிவின் ஒருநிலையாகும். அவ்வண்ணமே இன்பம் என்பதும் அதன் மற்றொருநிலையாகும், கர்மம், அது காரணமாகவரும் தேஹஸம்பந்தம் ஆகியவற்றால் இவ்வுலகிலிருக்கும்போது அறிவு விஷயாநுபவத்தாலுண்டாகும் இன்பங்களாகவும், துன்பங்களாகவும் மாறிமாறிப் பரிணமிக்கிறது. கர்மமும் தேஹஸம்பந்தமும் நீங்கியவுடன் மோக்ஷநிலையில் அவ்வறிவானது அதற்கு இயற்கையானதாய், சாச்வதமான பேரின்ப நிலையை அடைந்துவிடுகிறது. ஆகையாலே குறையில்லை. உறவினர் மரணமடையும்போது உறவினர் என்றும் நிலைபோய், உறவற்ற மற்றொரு நிலையே ஏற்படுகிறபடியாலே உறவிலே இன்பங்காணும் உலகினர் வருந்துவதும் பொருந்தும். உடலுக்கு நோயுடன் கூடியிருக்கும் நிலை துன்பம் தருவது. நோய் நீங்கியிருக்கும் நிலை அது நிலைத்திருக்கும்வரையில் இன்பம் தருவது. ஆகையால் தாத்காலிகமான இன்பத்திற்காக நோய் நீங்கமுயலுவதும் பொருந்துமே. எதிரிகளை அழிக்கமுயலுவதும் இப்படியே. ஆகையால் அழிந்ததெல்லாம் மறுபிறப்படையும் என்றதில் எவ்வித தோஷமும் இல்லை என்றதாயிற்று.

இனி, நியாயவைசேஷிகமதங்களைச் சேர்ந்தவர்கள் இக்கொள்கையின்மீது சில ஆக்ஷேபங்களைக் கிளப்புகிறார்கள். அவர்களுடைய கொள்கையாவது,-மண்கட்டியிலிருந்து தடி, சக்கரம் முதலானவற்றின் உதவியாலே குடமுண்டாகும்போது, மண்கட்டியைக் காட்டிலும் வேறான குடம் என்னும் புதியபொருள் ஒன்றே அங்கு உண்டாகிறது. அவ்வண்ணமே நூல்களைத் தறியில் நெய்யும்போது அந்த நூல்களைக்காட்டிலும் வேறான வஸ்திரம் என்னும் புதிய பொருள் உண்டாகிறது. மண்ணிலிருந்து குடம் உண்டாவதற்குத் தடி, சக்கரம் முதலானவற்றின் உதவி தேவைப்படுகிறது. நூலி

லிருந்து துணி உண்டாவதற்குத் தறி முதலானவற்றின் உதவி தேவைப்படுகிறது. அப்படித் தறி முதலானவற்றைக்கொண்டு செய்யும் செயல்கள் காரகவ்யாபாரங்கள் எனப்படுகின்றன. இவ் வண்ணமாக மண்கட்டி, நூல் முதலான காரணப்பொருள்களி லிருந்து குடம், துணி முதலான கார்யப்பொருள்கள் உண்டா வதற்குக் காரகவ்யாபாரங்கள் தேவைப்படுவதால், குடம், துணி முதலான கார்யப்பொருள்கள் ஏற்கனவே இல்லாமலிருந்து புதிதாக உண்டாகின்றன என்றே கொள்ளவேண்டும். அப்படியல்லாமல் கார்யப்பொருள் ஏற்கனவே இருக்குமாகில், காரகவ்யாபாரங்கள் பயனற்றவையாகும். மேலும், காரணப்பொருள்களுக்கும் கார்யப் பொருள்களுக்கும் பெயர்களும் வேறுபடுகின்றன. காரணமான மண்கட்டியைக்கொண்டு நீர் எடுத்துவர முடிவதில்லை; நூலை உடுத்த முடிவதில்லை. கார்யங்களான குடத்தையும், துணியையும்கொண்டே நீர் எடுத்துவருவது, உடுத்துவது முதலிய வ்யவஹாரவிசேஷங் களைச் செய்யமுடிகிறது. ஆக, காரகவ்யாபாரங்கள், நாமாந்தர பஜனம் (வேறு பெயரை அடைவது) வ்யவஹாரவிசேஷங்கள் என்னும் மூன்று ஹேதுக்களாலே காரணப் பொருள்களைக் காட்டிலும் வேறுபட்டவையாய், ஏற்கனவே இல்லாதவையான குடம், துணி முதலான கார்யப்பொருள்கள் புதிதாக உண்டா கின்றன என்று கூறுகிறார்கள் நியாய வைசேஷிகமதத்தைச் சேர்ந்த வர்கள். மேலும், காரணமான நூல்கள் பலவாகவும், கார்யமான துணி ஒன்றாகவுமுள்ளது. மண்கட்டியான காரணத்தைக் காட்டிலும் குடமாகிற கார்யத்தின் பரிமாணம் வேறுபடுகிறது, காரணகார்யங் களைப்பற்றிய அறிவும் வேறுபடுகிறது. காரணகார்யங்களின் அமைப்பும் வேறுபடுகிறது. அவையிருக்கும் காலமும் வேறுபடு கிறது. கார்யமான குடம் அழிந்தபின் காரணமான மண் ஓடு அழியாமலிருப்பதைக் காண்கிறோம். இவையெல்லாம் காரணத்தைக் காட்டிலும் கார்யம் மிகவும் வேறுபட்டது என்பதை வலியுறுத்து கின்றன என்று கூறுகிறார்கள் அவர்கள். ஏற்கனவே இல்லாத கார் யப்பொருள் புதிதாக உண்டாவதாகக் கூறுகிறபடியாலே இவர்கள் அஸத்கார்யவாதிகள் எனப்படுகின்றனர். "த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச" [அழிந்தது மறுபிறப்பை அடைந்தேதீரும்] என்று கூறுவதன்மூலம் இவர்களை நிரஸிக்கிறான் கண்ணன் இந்த ச்லோகத்திலே.

இவர்களை நிரஸிக்கும் யுக்திகள் பின்வருமாறு:-உத்பத்தி, விநா சம் முதலான விகாரங்கள் எல்லாம் உள்ள பொருளின் நிலைகளே

द्रव्यस्यावस्थाविशेषाः। तन्तुप्रभृतीनि हि द्रव्याणि सन्त्येव रचनाविशेषयुक्तानि पटादीन्युच्यन्ते। असत्कार्यवादिनाऽप्येतावदेवोपलभ्यते। न हि तत्र तन्तुसंस्थानविशेषातिरेकेण द्रव्यान्तरं प्रतीयते। कारकव्यापार-

---

பொழிய. இவற்றில் புதிதாக எப்பொருளும் உண்டாவதில்லை. நூல், மண்கட்டி முதலான பொருள்களே ஒருவிதமான அமைப்பைப் பெற்றவுடன் முறையே வஸ்திரம், குடம் முதலான பெயர்களைப் பெறுகின்றன. அவ்விடங்களில் புதிதாக எப்பொருளும் உண்டாவதில்லை. கடைசி நூலைச் சேர்ப்பதற்கு முன்னும் நையாயிகர்களும் அதை நூல்களின் ஒருவிதமான அமைப்பு என்று கூறமுடியுமேயொழிய வஸ்திரம் என்று கூறமுடியாது. கடைசி நூலைச் சேர்த்தபின்பும் அந்த நூல்களின் ஒருவிதமான அமைப்பேயென்றும், வஸ்திரத்திற்காகத் துணி முதலான பெயர்களால் வழங்கப்படுகின்றதென்றும் கொள்ளக் குறையில்லை. மிக நீளமான ஒரே நூலைக்கொண்டு துணி நெய்வதையும் காண்கிறோம். இந்த அவயவங்கள் இரண்டில்லாமையாலே, நையாயிகர்களும் இத்துணியை ஒரே நூலின் ஒருவிதமான அமைப்பு என்று கொள்ளமுடியுமேயொழியப் புதிதாக ஓரவயவி உண்டாவதாகக் கொள்ளமுடியாது. இப்படியே பல நூல்கள் சேர்ந்து ஒரு துணியுண்டாகும்போதும் நூல்களின் ஒருவிதமான அமைப்பே துணியெனப்படுகிறதென்று கொள்வதில் ஒரு குறையுமில்லையே. அஸத்கார்யவாதியான நையாயிகனை "அவயவஸமுதாயத்தைக் காட்டிலும் வேறான அவயவி என்று ஒன்றை நீ காண்கிறாயா? அல்லது கற்பிக்கிறாயா" என்றும் கேள்வியைக் கேட்க வேண்டும். துணி முதலானவற்றில் நூல்களின் கூட்டரவால் ஏற்படும் ஓர் அமைப்பைக் காட்டிலும் வேறொன்றும் காணப்படாமையால், அவயவஸமுதாயத்தின் ஓர் அமைப்பைத் தவிர வேறு எதையும் காண்கிறேன் என்று அவன் கூறமுடியாது. ஆகையால், காரணத்திலிருந்து காரியமுண்டாவதற்கு வேண்டிய காரகவ்யாபாரங்கள், காரணகாரியங்களின் பெயர் வேறுபாடுகள், காரணகாரியங்களைக் கொண்டு செய்யக்கூடிய வியவஹார வேறுபாடுகள், காரணகாரியங்களின் எண்ணிக்கை, பரிமாணம், அறிவு, அமைப்பு, காலம் முதலானவற்றின் வேறுபாடுகள் ஆகியவற்றைக்கொண்டு காரணமாயிருக்கும் அவயவஸமுதாயத்தைக் காட்டிலும் வேறான காரியத்தைக் கல்பிக்கிறோம் என்றுதான் அவன் கூறமுடியும். இக்கற்பனையும் பொருந்தாது. ஏனெனில்: ஸாங்க்யர்களைப்போலே நாம் எல்லாப் பதார்த்தங்களும் புதிதாக உண்டாகாதவை என்று கொள்ள

नामान्तरभजनव्यवहारविशेषाणामेतावतैवोपपत्तेः न द्रव्यान्तरकल्पना युक्ता। अत उत्पत्तिविनाशादयस्सतो द्रव्यस्यावस्थाविशेषाः। उत्पत्त्याख्यामवस्था-

---

வில்லை. அப்படிக்கொண்டால் காரணவ்யாபாரம் முதலானவை பயனற்றதாகிவிடும் என்பது உண்மையே. நாமோவெனில், த்ரவ்யம் எதுவுமே புதிதாக உண்டாகிறதென்றும், அதன் விதவிதமான அமைப்புகளாகிற நிலைகள் புதிது புதிதாக உண்டாகக்கூடியவை என்றும் கொள்ளுகிறோம். ஆகையால், காரணவ்யாபாரம், பெயர் வேறுபாடுகள், வியவஹாரவேறுபாடுகள், எண்ணிக்கை முதலானவற்றின் வேறுபாடுகள் ஆகிய எல்லாமே ஒரே பொருள் காரணமாயிருக்கும் நிலையை விட்டுக் காரியமாயிருக்கும் நிலையை அடைந்திருப்பதைக் காட்டுவதாகக்கொண்டு நிர்வஹித்துவிடலாம். இவ் வேறுபாடுகளைக்கொண்டு ப்ரமாணவிருத்தமாய்ப் புதிதாய் ஒரு திரவியம் உண்டாவதாகக் கொள்ளவேண்டிய அவசியமில்லை. மேலும் நீர் பிசைந்த மண்கட்டி குடமாகும்போது, அந்த மண் கட்டியின் எடையும், குடத்தின் எடையும் ஒன்றாகவேயிருப்பதையும் காண்கிறோம். இப்படியே நூல்கள் அனைத்தின் எடையும் அவற்றால் உண்டான துணியின் எடையும் ஒன்றாகவேயிருப்பதைக் காண்கிறோம். காரணத்தைக்காட்டிலும் வேறுபட்டதாய், புதிதான ஒரு கார்யம் உண்டாகிறதாகில் எடை அதிகரிக்கவேண்டும். காரண கார்யஸ்தலங்களில் எங்குமே இப்படி எடை வேறுபடுவதில்லை. அவயவ அவயவிகளின் எடைகளில் ஒன்று மற்றொன்றைத் தடுக்கிறது என்று கல்பிப்பதும் மிகவும் கிலேசமுள்ள கல்பனையாகும். ஆகையால் புதிதான கார்யத்தைக் கல்பிப்பது தவறே. இதுவே பாரதம் மோக்ஷதர்மத்தில்.

"யதி3 த்3ரவ்யாந்தரம் கார்யம் காரணேப்4யோ ப4வேதி3ஹ।
கு3ருத்வமதிரிச்யேத கார்யே தச்ச ந த்3ருச்யதே॥
த்3விபலம் கு4ட இத்யேதத்3வ்யபதே3சோ ந யுஜ்யதே॥"

[காரணங்களைக் காட்டிலும் கார்யம் வேறுபட்டதென்று கொண்டால், கார்யத்தின் எடை காரணத்தின் எடையைக்காட்டிலும் வேறுபட வேண்டும். அப்படிக் காணப்படவில்லை. (மண் கட்டியைப் போலவே) குடமும் இரண்டு பலமே எடையுள்ளது என்னும் உலகவழக்கு அஸத்கார்யவாதிக்குப் பொருந்தாது.] என்று கூறப்பட்டது. ஆக, இவ்வளவால் உத்பத்தி விநாசம் முதலான விகாரங்கள் உள்ளதான ஒரே பொருளுக்கு ஏற்படும் வெவ்வேறு நிலைகளே என்று காட்டுவதன்மூலம் நையாயிகமதம் நிரஸிக்கப்பட்டது.

मुपयातस्य द्रव्यस्य तद्विरोध्यवस्थान्तरप्राप्तिर्विनाश इत्युच्यते। मृद्द्रव्यस्य

---

இதற்குமேல் வேறொரு கேள்வி எழுகிறது. அதாவது: உத்பத்தியென்பதை ஒரு திரவியத்தின் நிலையாக ஒப்புக்கொண்டாலும் அபாவ (பொருளின் இன்மை)ரூபமாய், உத்பத்திக்கு நேரே விருத்தமான விநாசம் எப்படி அதே திரவியத்தின் நிலையாகமுடியும்? என்னும் கேள்வி எழுகிறது. இதற்கு பதில் பின்வருமாறு:—அபாவம் என்று ஒரு பொருளை நாம் தனியாகக் காண்பதில்லை. அதனாலேயே நையாயிகர்களைப்போலே அபாவம் என்று ஒரு தனிப்பொருளை நாம் ஒப்புக்கொள்வதில்லை. 'குடமில்லை; படமில்லை' முதலான உலகவழக்குகளில் 'இல்லை' 'இல்லை' என்று வழங்குவதற்குக் காரணமாக 'அபாவம்' என்று ஒரு பதார்த்தத்தைக் கல்பிக்க வேண்டாமோ? எனில்: அனைவரும் இசையும் பொருள்களின் நிலைகளைக்கொண்டே இவ்வழக்குகளையும் நிர்வஹித்துவிடலாமாகையால் இக்கற்பனைக்கும் அவசியமில்லை. அப்படியாகில், கடத்தின் நிறம் மாறுபடுவது முதலான மற்ற நிலைகளில் 'கடம் அழிகிறது' என்னும் வழக்கு ஏற்படுவதில்லையே; கடம் ஓடுகளாக உடையும்போதுதானே கடம் அழிகிறது என்னும் வழக்கு ஏற்படுகிறது; இது எப்படி? எனில்: நிலைகள் விரோதமற்ற நிலைகள் என்றும் விரோதமுள்ள நிலைகள் என்றும் இருவகைப்படும். தண்ட சக்கரங்களால் உண்டாக்கப்படும்போது பசுமைநிறமுள்ள குடம் சூளையில் சுட்டவுடன் சிவப்பு நிறமுள்ளதாக மாறும்போது கடமானது ஒரு நிலையிலிருந்து கடநிலையோடு விரோதமற்ற மற்றொரு நிலையை அடைகிறது. ஆகையாலேயே இங்கு கடவிநாசவழக்கு இல்லை. அதே குடம் ஓடுகளாக உடையும்போது குடநிலையோடு விரோதமுள்ள ஓடுகளாகிற நிலையை அடைகிறது. இதுவே குடத்தின் விநாசம் (அழிவு) எனப்படுகிறது. குடமும், ஓடுகளும் உள்ள பொருள்களாயிற்றே. அவற்றினிடையே விரோதம் எப்படி ஒட்டும்? பாவ பதார்த்தமெனப்படும் உள்ளபொருளுக்கும் அபாவபதார்த்தமெனப்படும் இல்லாப்பொருளுக்குமிடையே தானே விரோதம் ஒட்டும்? எனில்: ஒளி இருள், குளிர் உஷ்ணம், வைக்கோல் நெருப்பு முதலான உள்ள பொருள்களினிடையேயும் விரோதத்தைக் காண்கிறோமாகையாலே ஒட்டும். அபாவத்தின் அபாவத்தை பாவமாகவே நையாயிகரும் ஒப்புக்கொள்ளுகிறதாகையாலே அவ்விடத்தில் அவனும் பாவாபாவங்களிடையே விரோதம் கூறமுடியாது. ஆகையால் விரோதம் என்பது அந்தந்த வஸ்துக்களின் தன்மையைப் பொறுத்து ஏற்படுவதேயொழிய, பாவமென்றும், அபாவமென்றும்

पिण्डत्वघटत्वकपालत्वचूर्णत्वादिवत् परिणामिद्रव्यस्य परिणामपरम्परा अवर्जनीया। तत्र पूर्वावस्थस्य द्रव्यस्योत्तरावस्थाप्राप्तिर्विनाशः। सैव तदवस्थस्य चोत्पत्तिः। एवमुत्पत्तिविनाशाख्यपरिणामपरम्परा परिणामिनो द्रव्यस्यापरिहार्येति न तत्र शोचितुमर्हसि॥ २७॥

---

வெவ்வேறு ராசியைச் சேர்ந்ததாயிருப்பதைப் பொறுத்து ஏற்படுவதன்று. இல்லாவிடில், பாவம், அபாவம் என்னும் இரண்டையும் பதார்த்தங்களாகிற ஒரே ராசியைச் சேர்ந்தவையாகத் தார்க்கிகர் ஒப்புக்கொள்ளுதலையால் அவற்றினிடையேயும் விரோதம் ஏற்படாமல் போகவேண்டிவரும். நையாயிகன் (1) ப்ராகபாவம், (2) ப்ரத்வம்ஸாபாவம் (3) அந்யோந்யாபாவம் (4) அத்யந்தாபாவம் (5) ஸம்ஸர்க்காபாவம் என்றும் அபாவங்களை ஒப்புக்கொள்ளுகிறான். இவையெல்லாமே பாவபதார்த்தங்களில் சேர்ந்துவிடும் என்பதைக் காட்டுவோம்: (1) கடம் தோன்றுவதற்கு முன் கபாலத்தில் ப்ராகபாவம் உள்ளது என்கிறான் நையாயிகன். கடநிலையோடு விரோதமுள்ள முன் நிலையான மண்கட்டிநிலையே இப்ராகபாவமாகும். (2) கடம் அழிந்தவுடன் கடத்தின் ப்ரத்வம்ஸாபாவம் ஏற்படுகிறது என்கிறான்; கடநிலையோடு விரோதமுள்ள பின் நிலையான ஓடு நிலையே இந்த ப்ரத்வம்ஸாபாவமாகும். (3) 'கடம் படமல்ல' என்பதுபோலே ஒரேவேற்றுமையில் நிஷேதம் ஏற்படும்போது அந்யோந்யாபாவம் தோற்றுகிறது என்கிறான். படத்தன்மையோடு விரோதமுள்ள கடத்திற்கேயுரிய கடத்தன்மை முதலானவையே இவ்வபாவமாகும். (4) 'கடத்தில் படமில்லை' என்பதுபோலே வேறு வேற்றுமையில் நிஷேதம் ஏற்படும்போதும் அத்யந்தாபாவம் தோற்றுகிறது என்கிறான். இங்கும் படத்தன்மையோடு விரோதமுள்ள கடத்தன்மை முதலானவையே இவ்வபாவமாகும் (5) அந்யோந்யாபாவத்திலும் வேறுபட்ட ப்ராகபாவம், ப்ரத்வம்ஸம், அத்யந்தாபாவம் என்னும் மூன்றும் ஸம்ஸர்க்காபாவம் என்று பெயர்பெறும் என்கிறான். முன்பின் தேசகால ஸம்பந்தங்களோ, அதனாலேற்படும் சில நிலைகளோதான் இவ்வபாவம் என்று கொண்டுவிடலாம். ஆகையால் அபாவம் என்று ஒரு தனிப் பொருள் இல்லையென்றும், உத்பத்தி என்னும் நிலையை அடைந்த ஒரு திரவியமே அதற்கு விரோதியான மற்றொரு நிலையை அடையும் போது விநாசமென்னும் நிலையை அடைகிறது என்று வழங்கப் படுகிறது என்றும் நிரூபிக்கப்பட்டதாயிற்று.

இதற்குமேல் மற்றொரு கேள்வி எழுகிறது. அதாவது:-விரோத முள்ள பின்நிலையான ஓடுநிலையை அடைவதே கடத்தின் விநாசம் என்று கொண்டால், ஓடு உடைந்து பொடியாகும்போது கடவிநாசம் விநாசத்தை அடைகிறபடியால் கடம் மறுபடியும் உண்டாகவேண்டி வருமே. விரோதமுள்ள முன்நிலையான மண்கட்டிநிலையே கடத்தின் ப்ராகபாவம் என்றுகொண்டால், மண்ணைப் பிசைந்து கட்டியாக்குவதற்குமுன் ப்ராகபாவம் இல்லாமையால் கடமே இருக்க வேண்டியோ, அல்லது கடம் என்றுமே இல்லாமற்போகவேண்டியோ வருமே என்னும் கேள்வி எழுகிறது. இதற்கு பதில் பின் வருமாறு:—ஓடு நிலை என்னும் ஒரு பின்நிலை மாத்திரம் கடநிலையோடு விரோதமுள்ளது என்று கருதலாகாது. பொடிநிலை முதலான மற்ற பின்நிலைகளும் கடநிலையோடு விரோதமுள்ளவையே யாகும். கடநிலைக்குப்பின் கபால(ஓடு)நிலை, சூர்ண(பொடி)நிலை, அணுநிலை முதலான கடநிலையோடு விரோதமுள்ள நிலைகளின் பரம்பரை ஒப்புக்கொள்ளப்படுவதால் முற்கூறிய ஆக்ஷேபம் எழ இடமில்லை. ப்ரத்வம்ஸத்தை அபாவமாக ஒப்புக்கொள்ளும் தார்க்கிகனும் விரோதிநிலைகளின் பரம்பரையை ஒப்புக்கொண்டே தீரவேண்டும். ஆக, "மஹீ கடத்வம் கடத: கபாலிகா கபாலிகா சூர்ணரஜஸ் ததோணு:" [வி-பு 2-12-42] [மண்கட்டி கடநிலையை யடைகிறது. கடத்திலிருந்து ஓடுகள் உண்டாகின்றன; ஓடு பொடித்துகளாகிறது; அதிலிருந்து அணுக்கள் உண்டாகின்றன.] என்கிற விஷ்ணுபுராணச்லோகத்தில் சொல்லியபடி ஓடுநிலை, பொடி நிலை, அணுநிலை ஆகிய அனைத்துமே கடநிலையோடு விரோத முள்ளவையேயாகையால், அந்நிலைகளனைத்திலும் கடம் அழிந்தது என்னும் வழக்கு ஏற்படக்குறையில்லை. ப்ராகபாவவிஷயத்திலும், இவ்வண்ணமே விரோதமுள்ள முன்நிலைகளின் பரம்பரையை ஒப்புக்கொண்டு நிர்வஹித்துவிடலாம். இப்படி ஒப்புக்கொள்ளாவிடில் அபாவம் என்பதைத் தனிப்பொருளாகக்கொள்ளும் தார்க்கிகனுடைய பக்ஷத்திலும் இவ்வாக்ஷேபங்களெல்லாம் ஏற்படும். ஆக, இவ்வளவால் மண்ணானது கட்டிநிலை, கடநிலை, கபாலநிலை, சூர்ண(பொடி)நிலை அணுநிலை முதலான நிலைகளை அடைவது போலே பரிணாமமுள்ள எந்த த்ரவியமும் பரிணாமபரம்பரையை அடைவது தவிர்க்கவொண்ணாதது என்று ச்லோகத்தின் முற்பாதியாலே நிரூபிக்கப்பட்டதாயிற்று.

இனி கடைசியாக ஒரு ஐயம் எழுகிறது. இப்போது நிரூபித்தபடி பார்த்தாலும் "உண்டான கடம் முதலானவற்றுக்கு அழிவு நிச்சயம்" என்பது பொருந்துகிறதேயொழிய, "அழிந்த கடம் முதலானவற்றுக்குப் பிறப்பு நிச்சயம்" என்பது பொருந்தவில்லை; அழிந்த சட்டிபானைகள் மறுபடி சட்டிபானைகளாவதை நாம் கண்டதில்லையே என்றும் "உண்டான சரீரம் அழிவதைக்கண்டு அர்ஜுனன் வருந்துவதுபோல், அழிந்த சரீரம் மறுபிறப்படைவதைக் கண்டு இவன் வருந்த இடமில்லையே; ஆகையால் அழிந்தது மறுபிறப்படைவதை இங்கு சொல்லக்காரணமில்லையே" என்றும் ஸந்தேஹம் எழுகிறது. இதற்குப் பரிஹாரம் பின்வருமாறு: ஒரு நிலையையுடைய ஒருபொருள் அழிந்ததோ, அந்நிலையுடனே அது பிறக்கிறதென்று நாம் கூறவில்லை. வேறு நிலையுடன் அது பிறக்கிறது என்றே கூறுகிறோம். கடநிலையோடிருக்கும் மூலத்ரவியம் அழியும்போது அதுவே கபால (ஓடு) நிலையோடு பிறக்கிறது. ஓடு நிலையென்னும் நிலையே கடநிலையோடு கூடிய பொருளுக்கு அழிவாகவும், ஓடுநிலையோடு கூடிய அப்பொருளுக்கே உத்பத்தியாகவுமாகிறது. அழிவு ஏற்படும் எவ்விடத்திலும் முன் நிலையோடு கூடிய பொருளுக்குப் பின்நிலையை அடைவதே அழிவு எனப்படுகிறது; பின்நிலையை அடைவதே பின்நிலையோடு கூடிய அதே பொருளுக்கு உத்பத்தி என்றும் கூறப்படுகிறது. ஆகையால் அழிந்தது மறுபிறப்படையும் என்பது மிகப்பொருந்தும். மறுபிறப்படைவது தவிர்க்கவொண்ணாதது என்று இங்கு கூறுவதும் மறுபடியும் நாசம் அடைவது தவிர்க்கவொண்ணாதது என்று காட்டுவதற்காகவே. ஆகையால் அர்ஜுனனுக்கு அதைக்கூறுவது பொருத்தமே. அறிவற்ற இந்த சரீரம் அழிகிறதே என்று நீ வருந்துகிறாயாகில், அதே சரீரம் மற்றொரு நிலையோடு உண்டாகிறதே என்று நீ ஆநந்தமும் படலாமே; ஏன் ஆனந்தப்படவில்லை? என்று யுக்திக்காட்டுவதற்காக அழிந்தது மறுபிறப்படைவதைக் கண்ணன் காட்டுகிறான் என்றும் கொள்ளலாம். ஆகையாலே எக்குறையுமில்லை.

(தஸ்மாதபரிஹார்யேர்த்தே ந த்வம் சோசிதுமர்ஹஸி) இவ்வண்ணமாக பரிணாமத்தையடையும் சரீரமெனும் பொருளுக்கு உத்பத்தி விநாசம் என்று பெயர்கொண்ட பரிணாமபரம்பரை தவிர்க்கவொண்ணாததாகையாலே, தவிர்க்கவொண்ணாத இவ்விஷயத்தில் நீ வருந்துவது பொருத்தமல்ல. (அபரிஹார்யே) வருந்தவொண்ணாமைக்குக் காரணத்தைக்காட்டும் பதம். 27.

॥भा॥ सतो द्रव्यस्य पूर्वावस्थाविरोध्यवस्थान्तरप्राप्तिदर्शनेन योऽल्पीयाञ्छोकः, सोऽपि मनुष्यादिभूतेषु न संभवतीत्याह—

अव्यक्तादीनि भूतानि व्यक्तमध्यानि भारत।
अव्यक्तनिधनान्येव तत्र का परिदेवना॥ २८॥

**28. அவ்யக்தாதீ₃நி பூ₄தாநி வ்யக்தமத்₄யாநி பா₄ரத|**
**அவ்யக்தநித₄நாந்யேவ தத்ர கா பரிதே₃வநா ||**

**பா₄ரத**—*அர்ஜுனா!* **பூ₄தாநி**—*தேவர், மனிதர் முதலான சரீரங்கள்,* **அவ்யக்தாதீ₃நி**—*காணப்படாத முன்நிலையை உடையனவாகவும்,* **வ்யக்தமத்₄யாநி** — *காணப்படும் நடு*

---

27. பூதங்க ளான புணர்ச்சி முதல்விளங்கா
சாதனங்க ளானவிடை தான்விளங்கு—மீதங்குப்
பொன்றுநிலை தான்விளங்கா போக்கா மதில்வெறுப்பென்
இன்றதனைக் கேளின்ன நீ.

**பூதங்களான புணர்ச்சி**—*ஐந்து பூதங்களின் கூட்டுறவால் உண்டான சரீரங்கள்.* **முதல் விளங்கா**—*முன் நிலை விளங்காமல் உள்ளன;* **சாதனங்கள் ஆன இடைதான்**—*(போக மோக்ஷங்களுக்கு) சாதனங்களாய் உள்ள (அவற்றின்) நடு நிலைதான்,* **விளங்கும்**—*விளங்குகிறது;* **மீது**—*மேலே.* **அங்கு**—*மரணகாலத்தில்,* **பொன்று நிலைதான் விளங்கா**—*அழிந்தபின் ஏற்படும் நிலையும் விளங்கவில்லை.* **போக்காம் அதில்**—*நிலை*

---

*28. சட்டியானது முதலான மற்றுள்ள அநேக த்ரவ்யங்கள் அந்நிலைக்கு வேறுபட்ட ஓடு முதலான நிலைகளை அடைவதை நாம் காண்கையாலே, 'ஐயோ! என் சட்டி போயிற்றே! பானை போயிற்றே' என்று நமக்குச் சிறிது வருத்தமுண்டாகலாம்; முன்பின் நிலை தெரியாமையாலே, அந்த வருத்தமும் மனிதர் முதலான சரீரங்கள் அழியும் போது ஏற்பட இடமில்லை என்று கூறுகிறான் இந்த ச்லோகத்தில். முன்பின் நிலை தெரியாமையாலே ஏன் வருத்தமேற்பட இடமில்லை? எனில்: முன்பின் நிலைகள் இப்போதுள்ள நடுநிலையைக்காட்டிலும் துன்பமுள்ளதாயிருக்கும் என்று தெரிந்தால் அவற்றைக்குறித்து வருந்தலாம்; அவை இந்நிலையைக்காட்டிலும் துன்பமுள்ளதா, அல்*

நிலையை உடையனவாகவும். அவ்யக்தநித₄நாநி ஏவ— காணப்படாத பின்நிலையை உடையனவாகவுமே உள்ளன, தத்ர— அவ்விஷயத்தில், பரிதே₃வநா— அழுகை, கா எதற்காக?

---

நிலைமையாகிற இத்தன்மையில். வெறுப்பு என்— துன்பம் எதற்காக? இன்று— இன்று. அதனை —(சரீரங்களைக் காட்டிலும் வேறுபட்ட) ஆத்மாவின் மேன்மையை. நீ— நீ. இன்னம்— மேலும், கேள்— கேட்பாயாக.

---

லது இன்பமுள்ளதா என்று நம்மால் அறியமுடியவில்லையாகையால் அவற்றைக்குறித்து வருந்த இடமில்லை என்று கருத்து. (பூ₄தாநி) தேஹாத்மவாதத்தை ஏற்று வார்த்தை சொல்லும் பிரகாரமானமையால் பஞ்சபூதங்களின் கூட்டால் உண்டான தேஹங்களைக் காட்டுகிறது இப்பதம். (பூ₄தாநி அவ்யக்தாதீ₃நி) சரீரங்கள் காணப்படாத முன்நிலையை உடையவை. அவ்யக்தம் எனப்படும் மூலப்ரக்ருதியிலிருந்து தோன்றி மறைபவை பூதங்கள் என்று பொருள் கொள்வது பிரகரணத்தோடு ஒட்டாதாகையாலே பொருந்தாது.

"அப₄ாவாதீ₃நி பூ₄தாநி ப₄ாவமத்₄யாநி ப₄ாரத |
அப₄ாவநித₄நாந்யேவ தத்ர கா பரிதே₃வநா ||
அத₃ர்ஶநாத₃ாபதிதா: புநச்சாத₃ர்ஶநம் க₃தா: |
நைதே தவ ந தேஷாம் த்வம் தத்ர கா பரிதே₃வநா ||"
[பார-ஸ்த்ரீ 2.6,13]

[திருதராஷ்ட்ரனே! அப₄ாவத்தை (அறியப்படாமையை) முதலாகவும் ப₄ாவத்தை(அறியப்படுகையை) நடுவாகவும், அப₄ாவத்தை (அறியப்படாமையை) முடிவாகவுமே கொண்டவை ஜீவராசிகள்: இதில் வருத்தமென்ன? காணப்படாத நிலையிலிருந்து வந்திருந்தார்கள்: மறுபடியும் காணப்படாதநிலையை அடைந்துவிட்டார்கள்; இவர்கள் உன்னுடையவர்களல்லர்; நீயும் அவர்களுடையவனல்லன்: இதில் வருத்தமென்ன?] என்று பாரதப்போரின் முடிவில் விதுரன் திருதராஷ்டிரனுக்கு ஆறுதல் கூறும்போது இந்த ச்லோகத்தின் நிழல் போலவே வார்த்தை சொல்லுமிடத்தில் 'அவ்யக்த' என்னும் ஸ்தானத்தில் 'அபாவ' 'அதர்சந' என்னும் பதங்களையிட்டு விவரித்திருப்பதும் (காணப்படாமை என்னும்) இப்பொருளையே காட்டு

॥ भा ॥ मनुष्यादीनि भूतानि सन्त्येव द्रव्याण्यनुपलब्धपूर्वावस्थान्युपलब्धमनुष्यत्वादिमध्यमावस्थान्यनुपलब்धोत्तरावस्थानि स्वेषु स्वभावेषु वर्तन्त इति न तत्र परिदेवनानिमित्तमस्ति ॥ २८ ॥

---

கிறது. (வ்யக்தமத்யாநி) பிறப்பிலிருந்து மரணம் வரையிலுள்ள நடுநிலையொன்றே விளங்குவனவாக உள்ளன இந்த சரீரங்கள். (அவ்யக்தநிதநாநி) காணப்படாத பின்னிலையை உடையவை இந்த சரீரங்கள். (ஏவ) முன்பின் நிலைகள் காணப்படாமலிருப்பதும் நடுநிலை காணத்தக்கதாயிருப்பதும் தவிர்க்க வொண்ணாதது என்கை. மநுஷ்யாதிசரீரங்களுக்கு முன்பின் நிலைகள் காணப்படாமலிருக்கையும், நடுநிலை காணத்தக்கதாயிருக்கையுமே இயற்கை என்று கருத்து. பரிணமமடைவதே சரீரஸ்வபாவம் என்று இதிலிருந்து தேறுகிறது. (தத்ர கா பரிதேவநா) இப்படிப் பரிணமமடைவதே சரீரஸ்வபாவமானபின்பு வருந்துவது எதற்காக? வருந்தக்காரணமேயில்லையென்கை.

தேஹாத்மவாதம்செய்யும் லோகாயதமத ரஹஸ்யங்களின்படி ஆராய்ந்தாலும் வருந்தக்காரணமில்லையென்பது இந்தச்லோகத்தின் திரண்டபொருளாகும். எப்படியெனில்: மனிதநிலை முதலானவை கைகால் முதலானவற்றின் சேர்க்கையால் உண்டாவதாகையாலும், முன்னும்பின்னும் அவையில்லாமையாலும், அந்நிலைகளே சரீரங்களுக்கு இயற்கையென்று கூறமுடியாது. பின் நிலையானது மனுஷ்யாதிநிலை பிரிந்தபின்பே ஏற்படுகையாலும், முன்நிலையும் மனுஷ்யாதிநிலையிருக்கும்போது காணப்படாமையாலும் முன்பின் நிலைகளும் இயற்கையென்று கூறமுடியாது. ஆகையால் மநுஷ்யாதி சரீரங்களுக்குப் பரிணமித்வமாத்ரமே இயற்கை என்று தேறுகிறது. ஆகையால், பரிணமமுடைய இந்த சரீரங்களுக்குக் காணப்படாத முன் நிலையைக்குறித்தும் காணப்படும் நடுநிலையைக் குறித்தும் எவரும் வருந்தாமலிருப்பதுபோல், காணப்படாத பின்நிலையைக் குறித்தும் எவரும் வருந்த இடமில்லை. காணப்படாத முன்பின் நிலைகளே சரீரத்தின் இயற்கைநிலையாயிருக்கக் கூடாதோ? எனில்: அப்படியானால் இயற்கைமாறின நடுநிலையைக்கண்டு வருந்த வேண்டுமேயொழிய இயற்கைநிலையான (காணப்படாத) பின் நிலையைக்கண்டு வருந்தலாகாது. நடுநிலையான மனுஷ்யாதி நிலையே இயற்கைநிலை; ஒருதடையினால் முன்பின் நிலைகள் ஏற்படு

கின்றனை என்று சொல்லலாமே எனில்: அப்படிச் சொல்லக்கூடாது. அத்தனையானாலும் [illegible] அத்தனை என்றவைது [illegible] நீங்கியே [illegible] அப்படி நீங்கும்போது இயற்கைநிலையான [illegible] தன்னுடைய மறுபடி [illegible] வருந்த இடமில்லை. சரீரம் முதலான பொருள்களின் இயற்கைநிலைகளே பொதுவாக வருத்தத்தை விளைக்கின்றனவாகையால் வருந்துகிறேன் எனில்: அத்தகைய பொருள்கள் நிறைந்த உலகில் வாழும் அனைவரும் எப்போதுமே துன்பக்கடலில் மூழ்கியிருக்க வேண்டுமாகையால் இப்போதாக விசேஷித்து நீ வருந்த இடமில்லை. துன்பக்கடலில் மூழ்கியிருந்தாலும் சில சமயம் சில காரணங்களால் ஸுகஹேதுக்கள் தோன்றி அதனால் ஸுகம் ஏற்படுவதுண்டு. அவை மறைவதனால் ஸுகம் போய்விடுகிறதே என்று வருந்துகிறேன் எனில்: அப்படியானால் துக்கத்தை விளைக்கும் எதிரிகள் முதலானோரையும், "ச்ரேயோ போக்தும் பைக்ஷ்யம்" என்று நீ கூறும் பிச்சையெடுப்பது முதலியவற்றையும் நீ விலக்க வேண்டுமே. பெரிய ஸுகத்தை விளைக்கும் சத்ருநிரஸனத்தையும், ராஜ்ய ப்ராப்தியையும் நீ இகழலாகாது. இன்பத்தை விளைக்கும் உன் சரீரம் முதலானவற்றின் அழிவைக்கண்டு பயப்படுகிறாயாகில், மஹாபாஹுவாய், பரதகுலத்துதித்தவனான நீ உன்னைக் கொல்லவரும்பும் எதிரிகளைக் குறித்துப் போர்த்தொழில் புரிந்து சரீரம் முதலானவற்றை ரக்ஷித்துக்கொள்ள முயலவேண்டும். 'உறவினர்களைக் கொன்றுவிட்டான் அர்ஜுனன்' என்னும் லோகாபவாதத்தைக் கண்டு பயப்பட்டுப் போர்புரிவதிலிருந்து மீள்கிறாயாகில், "தர்மபுத்ராதிகளான நெருங்கிய உறவினர்களைக் காப்பாற்றாமல் கைவிட்டுவிட்டான் அதிஸமர்த்தனான அர்ஜுனன்" என்னும் பெரிய லோகாபவாதமும், 'பயந்தவன், கையாலாகாதவன்' என்னும் மரணத்திலும் கொடிய அகீர்த்தியும் ஏற்படும். இவ்வபவாதமும், அகீர்த்தியும் சிதோஷ்ணம் முதலான துன்பங்கள்போல தவிர்க்கத்தகாததுமல்ல. ஆராய்ச்சியின்மையால் ஏற்பட்ட அஸ்தானஸ்நேஹத்தால் (தகாதவிடத்தில் அபிமானத்தால்) ஏற்படுவதாகையாலே அவ்வபிமானத்தை விடுவதன் மூலம் விலக்கக் கூடியதே. ஆகையால், தேஹாத்ம மயக்கமாகிற பெரியமுதலையால் பிடித்துக்கொள்ளப்பட்டிருக்கும் நீ, தேஹாத்மவாதிகளுக்குத் தலைவர்களான லோகாயதமதத்தைச் சேர்ந்தவர்களின் கொள்கைகளை ஆராய்ந்தாலும் எவ்விதத்திலும் வருந்த இடமில்லை என்று பாவம் 28.

॥भा॥ एवं शरीरात्मवादेऽपि नास्ति शोकनिमित्तमित्युक्त्वा शरीरातिरिक्त आश्चर्यस्वरूप आत्मनि द्रष्टा वक्ता श्रोता श्रवणायत्तात्मनिश्चयश्च दुर्लभ इत्याह—

आश्चर्यवत्पश्यति कश्चिदेनमाश्चर्यवद्वदति तथैव चान्यः।
आश्चर्यवच्चैनमन्यः शृणोति श्रुत्वाऽप्येनं वेद न चैव कश्चित्॥ २९॥

29. ஆஶ்சர்யவத் பஶ்யதி கஶ்சிதே₃நம்
ஆஶ்சர்யவத்₃ வத₃தி ததை₂வ சாந்ய:।
ஆஶ்சர்யவச்சைநமந்ய: ஶ்ருணோதி
ஶ்ருத்வாப்யேநம் வேத₃ ந சைவ கஶ்சித்॥

ஆச்சர்யவத்—ஆச்சரியமாயிருக்கும், ஏநம்—இவ்வாத்மாவை, கச்சித் ஏவ (பலகோடியில்) ஒருவனே, பச்யதி—காண்கிறான்; ததா₂—அப்படியே, ஆச்சர்யவத் (ஏநம்)—ஆச்சரியமாயிருக்கும் (இவனைக்குறித்து), அந்ய: (ஏவ)—(பல

---

28. வியப்புளனைக் காணு மிவனை யொருவன்
வியப்புளனைக் கூறு மொருவன்—வியப்புளனை
மற்றொருவன் கேட்குமிம் மன்னுயிரைக் கேட்குந்தா
னுற்றுணர்க லானொருவ னோர்ந்து.

வியப்புளனை இவனை—ஆச்சரியமான இவ்வாத்மாவை, ஒருவன்—(பலரில்) ஒருவனே, காணும்—காண்பான்; வியப்புளனை (இவனை)—ஆச்சரியமான இவனை(ப்பற்றி) ஒருவன்—(பலரில்) ஒருவனே, கூறும்—பேசுவான்; வியப்புளனை (இவனை)—ஆச்சரியமான இவனை(ப்பற்றி) மற்றொருவன்—

---

29. சென்ற மூன்று சுலோகங்களாலே, சரீராத்மவாதத்தை ஏற்றுக்கொண்டு பேசினாலும் வருந்தக் காரணமில்லை என்று உரைத்துவிட்டு, சரீரத்தைக்காட்டிலும் வேறுபட்டவனாய், ஆச்சரியமான ஸ்வரூபத்தை உடையவனான ஆத்மவிஷயத்தில் காண்பவனும், பேசுகிறவனும், கேட்கிறவனும், கண்டு பேசிக் கேட்டதனால் ஆத்மாவைப்பற்றி உறுதியாக அறிகிறவனும் கிடைத்தற்கரியவன் என்று இந்த ச்லோகத்தில் கூறுவதன்மூலம், முன் நிரூபித்த ஆத்மநித்யத்வம் முதலான தன் ஸித்தாந்தத்தையே புகழ்கிறான். இந்த ச்லோக

கோடியில்) மற்றொருவனே. வததி—பேசுகிறான்; ஆச்சர்யவத் ஏநம்—ஆச்சரியமாயிருக்கும் இவனைப்பற்றி, அந்ய: (ஏவ)—(பலகோடியில்) வேறொருவனே. ச்ருணோதி—கேட்கிறான். ச்ருத்வா அபி—கேட்டும், கச்சித் ஏவ ச—ஒருவனுமே. ஏநம்—இவனை, ந வேத—அறிகிறானல்லன்.

|| भा || एवमुक्तस्वभावं स्वेतरसमस्तवस्तुविसजातीयतया आश्चर्यवदवस्थितमनन्तेषु जन्तुषु महता तपसा क्षीणपापः उपचितपुण्यः कश्चित्पश्यति । तथाविधः कश्चित्परस्मै वदति । एवं कश्चिदेव शृणोति ।

---

(பலரில்) வேறொருவனே. கேட்கும்—கேட்பான், கேட்கும் தான்—(இவனைப் பற்றிக்) கேட்டதானே. இம்மன்னுயிரை—நிலைநிற்கும் இவ்வாத்மாவை. ஒருவன்—எவனுமே. உற்று ஓர்ந்து நுணுகி ஆராய்ந்து, உணர்கலான்—அறியமாட்டான்.

---

மும் சில பதவேறுபாடுகளுடன் உபநிஷத்தில் காண்கிறது. (ஆச்சர்யவத் ஏநம்) ஆச்சர்யமான பொருளைப்போலே உள்ள இவ்வாத்மாவை. முன் சொல்லப்பட்ட நித்யத்வம் முதலான தன்மைகளை உடையவனாய், தன்னிலும் வேறுபட்ட அசேதனப்பொருள் அனைத்திலும் மிகச்சிறந்தவனாய் விளங்குகையாலே மிகவாச்சர்யமாயிருப்பவன் ஆத்மா என்று கருத்து. "ஆச்சரியம்போலே பார்க்கிறான்" "ஆச்சரியம்போலேயுள்ள ஒருவன் காண்கிறான்" என்று கூட்டிப் பொருள்கொண்டனர் சிலர். ஆத்மாவின் பெருமையைச் சொல்லும் பிரகரணமாகையாலே, "ஆச்சர்யம்போலேயுள்ள ஆத்மாவைக் காண்கிறான்" என்று பொருள்கொள்வதே பொருத்தமுடையது. (கச்சித் பச்யதி) பசுப்ராயராயிருக்கும் கணக்கற்ற சேதனரிடையே பெருந்தவத்தாலே பாபங்கள் கழியப்பெற்றுப் புண்ணியங்கள் நிறையப்பெற்று, அதனாலே பேரறிவுபெற்ற ஒரு சேதனனே இவ்வாத்மாவைக் காண்கிறான். (கச்சிதேவ பச்யதி) எல்லாச் சேதனரும் ஆத்மாவைக் காணமுடியாது. பல்லாயிரவரில் ஒருவனே காண முடியும் என்று கருத்து. (ததா ஆச்சர்யவத் ஏநம் அந்ய: வததி) அவ்வண்ணமே ஆச்சரியமாயுள்ள இவ்வாத்மாவைப்பற்றி பாக்யசாலியான ஒருவனே மற்றவர்களுக்குச் சொல்லுவான். அந்யசப்தம் முன்பின் வாக்யங்களிலுள்ள 'கச்சித்' சப்தஸ்தானத்தில்பிரயோகிக்கப்பட்டிருக்கையாலே அதன் பொருளையே உடையது. (ஆச்சர்யவத் ஏநம் அந்ய: ஏவ ச்ருணோதி) அவ்வண்ணமே ஆச்சர்யமாயுள்ள இவ்வாத்மாவைப் பற்றிப்பெருந்தவத்தோனான ஒருவனே கேட்பான்.

श्रुत्वाऽप्येनं यथावदवस्थितं तत्त्वतो न कश्चिद्वेद। चकारात् द्रष्टृवक्तृश्रोतृष्वपि तत्त्वतो दर्शनं तत्त्वतो वचनं तत्त्वतश्श्रवणं दुर्लभमित्युक्तं भवति ॥ २९ ॥

---

(ச்ருத்வாபி ஏநம் ந கச்சித் வேத₃) கேட்டபோதிலும், பிரமாணங்களால் அறியப்படும் எல்லாத்தன்மைகளோடும் கூடிய இவ்வாத்மாவை, ஒருவனும் உள்ளபடி அறியமாட்டான். ஒருவனும் அறியவேமாட்டான் என்று பொருள்கொண்டால், "வேத₃ாவிநாசிநம்" முதலான மற்ற ச்லோகங்களோடு விரோதம் வருமாகையாலும், ஆத்மவிஷயமான சாஸ்திரங்கள் எல்லாம் பயனற்றவையாகுமாகையாலும், "எவனும் உள்ளபடி அறியமாட்டான்" என்றே பொருள்கொள்ளவேண்டும். "நசைவ" என்றவிடத்தில் சகாரம் அநுக்தஸமுச்சயம்; இவனைக் காண்பவனும், பேசுபவனும், கேட்பவனும், உள்ளபடி காண்பதோ, உள்ளபடி பேசுவதோ, உள்ளபடி கேட்பதோ முடியாது என்று சொல்லிற்றாயிற்று: (கச்சித் பச்யதி வத₃தி–ச்ருணோதி–ந வேத₃) தேஹத்தைக் காட்டிலும் வேறுபட்டதாக ஆத்மாவைக் காண்பவனே கிடைத்தற்கரியவன்; ஆத்மாவை உள்ளபடி காண்பவன் அரியவனெனச்சொல்லவும் வேணுமோ? அப்படிக் காண்பவன் கிடைத்தாலும், "வார்த்தை பதினாயிரத்தொருவர்" என்கிறபடியே அவ்வாத்மாவைப்பற்றிய ரஹஸ்யங்களைச் சொல்லவல்லவன் அரியவன். எல்லா ரஹஸ்யங்களையும் உள்ளபடி சொல்லவல்லவன் அரியவனென்னச் சொல்ல வேணுமோ? இப்படிச் சொல்லவல்லவர்களிருந்தாலும் கேட்பவர்கள் அரியவர்: சிஷ்யனுக்கிருக்கவேண்டிய எல்லாகுணங்களும் நிறையப்பெற்ற உன்னைப்போன்ற தகுதியுள்ள ச்ரோதா அரியவனென்னச் சொல்லவேணுமோ? என்று கருத்து. அப்படியல்லாமல், "ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதி₃த்₄யாஸிதவ்ய:–த்₃ரஷ்டவ்ய:" என்கிற ச்ருதியை அநுஸரித்து, (ச்ருணோதி–வத₃தி பச்யதி) என்று கிரமத்தைத் தலைகீழாகமாற்றி, முதலில் ஆத்மவிஷயத்தைக் கேட்பது, அதன் பிறகு மனனம் செய்து அதனாலேற்படும் ஆத்ம நிச்சயத்தை அடைவது, அதன் பிறகு ஆத்மாவைப் பற்றிப் பேச வல்லவனாவது, அதில் நெடுநாள் பழகி உள்ளபடி பேசவல்லவனாவது, அதற்குப்பின் த்யானத்தினால் ஆத்மாவைக் காண்பது, அதற்குப்பின், ரத்னபரீக்ஷையில் பழகப்பழக ரத்னத்தின் மதிப்பை

देही नित्यमवध्योऽयं देहे सर्वस्य भारत।
तस्मात्सर्वाणि भूतानि न त्वं शोचितुमर्हसि॥ ३०॥

30. தே₃ஹீ நித்யமவத்₄யோ(அ)யம் தே₃ஹே ஸர்வஸ்ய பா₄ரத।
தஸ்மாத் ஸர்வாணி பூ₄தாநி ந த்வம் சோசிதுமர்ஹஸி॥

ஸர்வஸ்ய—தேவர், மனிதர் முதலிய அனைவருடைய. தே₃ஹே—தேஹமானது, (வத்₄யமானே ஸத்யபி—கொல்லப் பட்டபோதிலும்), அயம் தே₃ஹீ—தேஹத்திலிருக்கும் இந்த ஆத்மா, நித்யம் — எப்போதும், அவத்₄ய: — கொல்லத்

---

*29. நின்ற வுயிர்வதத்தை நேரா துடலெதிலு
மென்றதனி லெங்கு மிடரெய்தே—லுன்றருமம்
பார்த்துந் தளர்வுறுய் பார்த்திபர்க்குத் தன்மப்போர்க்
கேற்குந் தகைமையதொன் றில்.

உடல் எதிலும் நின்ற உயிர் தேவர் முதலான எந்த சரீரத்திலிருக்கும் உயிரும், வதத்தை நேராது (என்றுமே) அழிவை அடையாது, என்று என்னும் காரணத்தால், அதனில்—அந்தந்த சரீரங்களோடு கூடிய ஆத்ம விஷயத்தில், எங்கும்—எக்காலத்திலும், இடர் எய்தேல்—துன்பமுறாதே; உன் தருமம் பார்த்தும்-யுத்தமே உன்னுடைய தருமம் என்று

---

உள்ளபடி அறிவதில் வல்லவனுவதுபோலே ஆத்மதர்சனத்தில் நெடுநாள் பழக்கத்தாலே அதை உள்ளபடி காண்பது என்கிற ச்ரவண மநநநிதித்யாஸந தர்சனக்ரமத்தைச் சொல்லுகிறதாகவுமாம். இந்த ச்லோகத்தில் ஆத்மாவை அறிவதில் அருமையைச் சொன்னதில் கருத்தென்ன? எனில்: "ஆத்மா தேஹத்தைக் காட்டிலும் வேறுபட்டவனெனில், ஏன் அப்படி எனக்குத் தோற்றவில்லை" என்று அர்ஜுனனுக்குக் கருத்தாகக்கொண்டு, எவராலுமே உள்ளபடி அறியமுடியாத ஆத்மவஸ்துவை நீயொருவன் அறியாதது வியப்பல்ல என்று காட்டுவதற்காக ஆத்மஜ்ஞானத்தில் அருமையைக் கூறுகிருன் கண்ணன். 29.

---

*30, 31 இலக்கமுள்ள இரண்டு சுலோகங்களுக்கும் மொழிபெயர்ப்பாய் அமைந்திருப்பது 29-ம்பாடல்.

தகாதவன்; பாரத—பரதகுலத்துதித்தவனே! தஸ்மாத்—முற்கூறிய காரணத்தால், ஸர்வாணி பூதாநி(ப்ரதி)—எல்லா பூதங்களைக் குறித்தும், த்வம்—நீ, சோசிதும் — வருந்துவதற்கு, ந அர்ஹஸி—உரியவனல்ல.

॥ भा ॥ सर्वस्य देवादिदेहिनो देहे वध्यमानेऽप्ययं देही नित्यमवध्यो मन्तव्यः। तस्मात्सर्वाणि देवादिस्थावरान्तानि भूतानि विष-

---

அறிவதனாலும், தளர்வுறுய்—நீ தளர்ச்சியடையாமலிருக்க வேண்டும்; பார்த்திபர்க்கு—அரசர்களுக்கு, தன்மப்போர்க்கு ஏற்கும் தகைமையது—தர்மயுத்தத்தைப் போலே சிறந்த பூலலாதநம், ஒன்று இல்—வேறொன்று இல்லை.

---

30. "தேவ மநுஷ்ய திர்யக் ஸ்தாவரங்கள் என்றும் நாலுவகையான தேஹங்களிலிருக்கும் உயிர்களுக்கு தேஹவிஷயத்தில் ஜாதி, குணம், தேசம், காலம், தன்மை முதலானவற்றில் வேறுபாடு காணப்படுகிறது; ஆத்மவிஷயத்திலும் இன்பதுன்பங்கள், அறிவில் ஏற்றத் தாழ்வுகள் முதலான வேறுபாடுகள் காணப்படுகின்றன. தேவர் முதலான சப்தங்கள் அந்தந்த சரீரங்களோடு கூடிய ஆத்மாவையே குறிக்கின்றன. இப்படியிருக்கும்போது ஆத்மாக்களிலும் ஒன்று நித்யமாகவும், ஒன்று அநித்யமாகவும் ஏன் இருக்கக்கூடாது?" என்று அர்ஜுனனுக்குக் கருத்தாகக்கொண்டு, முன் சொன்ன ஆத்மநித்யத்வம் ஸர்வாத்மாக்களுக்கும் பொதுவானதேயென்று உறுதிப்படுத்துகிறான் கண்ணன் முப்பதாவது ச்லோகத்தில்-

(ஸர்வஸ்ய தேஹே) "வத்யமானேபி" என்பதை அத்யாஹாரம் செய்துகொண்டு பொருள்கொள்ளவேண்டும். தேவர், மனிதர், திர்யக் (விலங்கு), ஸ்தாவரம் (நிலைநிற்பன) என்று நாலுவகைப்பட்டவருடைய தேஹம் கொல்லப்பட்டபோதிலும். "தேஹே (வர்த்தமாநः) தேஹீ" [தேஹத்தில் (இருக்கும்) ஆத்மா] என்று வர்த்தமானசப்தத்தை அத்யாஹாரம் செய்துகொண்டு பொருள்கொள்வாருமுண்டு. "தேஹீ" என்னும் சப்தமே தேஹத்தில் இருப்பவன் என்பதைக் காட்டுமாகையாலும், 'தேஹம் கொல்லப்பட்டபோதிலும் ஆத்மா கொல்லப்படுவதில்லை' என்று கூறுவதிலேயே பொருட்சுவையுள்ளதாகையாலும் பாஷ்யத்தில் "வத்யமானேபி" என்று அத்யாஹாரம் செய்துகொண்டு பொருளுரைக்கப்பட்டதே பொருந்

साकाराण्यप्युक्तेन स्वभावेन स्वरूपतस्समानानि नित्यानि च। देहगतं तु वैषम्यमनित्यत्वं च। ततो देवादीनि सर्वाणि भूतान्युद्दिश्य न शोचितुमर्हसि; न केवलं भीष्मादीन्प्रति ॥ ३० ॥

स्वधर्ममपि चावेक्ष्य न विकम्पितुमर्हसि।
धर्म्याद्धि युद्धाच्छ्रेयोऽन्यत् क्षत्रियस्य न विद्यते ॥ ३१ ॥

31. ஸ்வத4ர்மமபி சாவேக்ஷ்ய ந விகம்பிதுமர்ஹஸி।
த4ர்ம்யாத்3தி4 யுத்3த4ாச்ச்2ரேயோந்யத் க்ஷத்ரியஸ்ய
ந வித்3யதே ॥

---

துர். "ந ஹந்யதே ஹந்யமாநே சரீரே" [2-20] என்ற கீதாவாக்யத்தோடும் ஒட்டியிருக்கும். (அயம் தே3ஹீ நித்யம் அவத்4ய:) எந்த தேஹத்திலுமிருக்கும் இந்த ஆத்மா என்றுமே கொல்லத்தகாதவனே. ஆகையால் ஓராத்மா கொல்லத்தகாதவனாகவும், மற்றொருவன் கொல்லத்தக்கவனாகவும், ஒருகாலத்தில் கொல்லத்தகாதவனாகவும், மற்றொரு காலத்தில் கொல்லத்தக்கவனாகவும் இருக்கலாமே என்று நீ ஐயுற வேண்டாவென்று கருத்து. (தஸ்மாத்) முற்கூறிய ஸூக்ஷ்மமாயிருக்கை, வெட்டவோ எரிக்கவோ கரைக்கவோ உலர்த்தவோ முடியாதவனாயிருக்கை முதலான காரணங்களால். (ஸர்வாணி பூ4தாநி) தேஹத்திலும், ஆத்மாவின் தர்மபூ4தஜ்ஞானமாகிற அறிவிலும் எத்தனையோ ஏற்றத்தாழ்வுகளையும் வேறுபாடுகளையும் உடைய எல்லா ஜீவராசிகளைக் குறித்தும். "சரீரத்திலும், சரீரஸம்பந்தத்தினால் ஆத்மாவின் ஸ்வபாவமான அறிவிலும் வேறுபாடுகள் ஏற்படமுடியுமேயொழிய ஆத்மஸ்வரூபத்தில் அவை ஏற்படமுடியாதாகையால் எல்லா ஆத்மாக்களின் ஸ்வரூபமும் ஸமானமாகவும் நித்யமாகவுமேயிருக்கின்றன; வேறுபாடுகளும் அநித்யத்தன்மையும் சரீரத்தையேபற்றி நிற்கின்றன; தேஹம் தானுள்ளவரையில் ஆத்மாவைவிட்டுப் பிரியாமலிருக்கையாகிற ஒரே காரணத்தால் தேஹத்தைக் குறிக்கும் தேவர் முதலான சப்தங்கள் ஆத்மாவையும் காட்டுகிறமாத்திரத்தால் தேஹத்திலுள்ள அநித்யத்தன்மை முதலானவை ஆத்மாவிலும் வருமோ என்று சங்கிக்கலாகாது" என்று கருத்து. (ஸர்வாணி பூ4தாநி ந த்வம் சோசிதும் அர்ஹஸி) உன் எதிரே காணும் பீஷ்மர் முதலானோரைக் குறித்துமாத்திரமல்லாமல் எந்த ஜீவனைக்குறித்துமே நீ வருந்துவது தகாது.

அபி ச-மேலும், ஸ்வத₄ர்மம் அவேக்ஷ்ய-(யுத்தமாகிய) உன் தர்மத்தை நோக்கினாலும், விகம்பிதும்-(போரிலிருந்து) நழுவுவதற்கு, ந அர்ஹஸி—நீ உரியவனல்ல. க்ஷத்ரியஸ்ய—அரசனுக்கு, த₄ர்ம்யாத் யுத்₃த₄ாத்—தருமத்தை மீறாத யுத்தத்தைக்காட்டிலும், அந்யத்-வேறொன்று, ச்ரேய:-நன்மை பயப்பதாக, ந வித்₃யதே ஹி—இல்லையன்றோ.

॥ भा ॥ अपि चेदं प्रारब्धं युद्धं प्राणिमारणमपि अग्नीषोमीयादिवत् स्वधर्ममवेक्ष्य न विकम्पितुमर्हसि। धर्म्यात्—न्यायतः प्रवृत्ताद्युद्धा-

---

31. "அசோச்யாந்" [2-11] என்றுதொடங்கும் ச்லோகத்திலிருந்து "ந த்வம் சோசிதுமர்ஹஸி" [2-30] என்பதிறுக "அஸ்தா₂நஸ்நேஹகாருண்ய" [கீதார்த்தஸங்க்ரஹம்-5] என்று ஆளவந்தாரால் அருளிச்செய்யப்பட்டதாய், அர்ஜுனனுக்கு உறவினரிடமுள்ள தகாத அன்பினால் உண்டானதான இரக்கம் கண்ணாலால் போக்கடிக்கப்பட்டது. இனி, நான்கு ச்லோகங்களாலே "த₄ர்மாத₄ர்மதி₄யாகுலம்" [5] என்ற கீதார்த்த ஸங்க்ரஹ ச்லோகப்பகுதியினால் ஆளவந்தாரால் அருளிச்செய்யப்பட்டதாய், அர்ஜுனனுக்குள்ளதான தர்மத்தில் அதர்மம் என்னும் மயக்கம் போக்கடிக்கப்படுகிறது. அதில் முதல் ச்லோகத்திலே அர்ஜுனன் அதர்மமாக மயங்கும் யுத்தமே அவனுக்கு தர்மமாகும் என்று உணர்த்துகிறான்.

(அபி ச) மேலும். ப்ரகரணபேதத்தைக் காட்டும் இப்பதத்தால், இதுவரை அஸ்தான காருண்யம் தவறானது என்று காட்டப்பட்டதென்றும், இனி தர்மத்தில் அதர்மமயக்கம் தவறானது என்று காட்டப்படப்போகிறது என்றும் உணர்த்துகிறான். (ஸ்வத₄ர்மம் அவேக்ஷ்ய) "த₄ர்ம்யாத் யுத்₃த₄ாத்" என்று பிற்பகுதியில் சொல்லப்படுவதால், தர்மயுத்தமே இங்கு ஸ்வதர்மம் எனப்படுகிறது. இப்போது தொடங்கியிருப்பதான இந்த யுத்தத்தை உன்னுடைய வர்ண தர்மமென்று அறிந்து. (ந விகம்பிது மர்ஹஸி) தொடங்கிய இந்த யுத்தத்திலிருந்து நீ நழுவலாகாது. "வேபது₂ச்ச சரீரே மே ஜாயதே" [1-29] என்றவிடத்தில் உனக்கு உண்டாவதாக உன்னாலேயே சொல்லப்பட்ட நடுக்கத்தை அடைவது தகாது என்றுமாம். இப்பொருளிலும் யுத்தத்திலிருந்து நழுவுவது தகாது என்பது அர்த்தஸித்தமாகும். (ந விகம்பிதுமர்ஹஸி) 'உறவினர்களைக் கொல்லும் ஹிம்ஸையாயிற்றே இந்த யுத்தம்' என்று நீ நடுங்கவோ நழுவவோ கூடாது. அக்நீஷோமயாகத்தில் பசு

दन्यन्न हि क्षत्रियस्य श्रेयो विद्यते। * शौर्यं तेजो धृतिर्दाक्ष्यं युद्धे चाप्यपलायनम्। दानमीश्वरभावश्च क्षात्रं कर्म स्वभावजम्॥ (१८-४३)

---

ஹிம்ஸை தர்மமாவதுபோல் தர்மயுத்தத்திலும் ப்ராணிஹிம்ஸை தர்மமேயாகும் என்று கருத்து. நடுங்காமைக்குக் காரணமாக "ஸ்வதர்மமபி சாவேக்ஷ்ய" என்று முற்பாதியில் கூறப்பட்டதை பிற்பாதியில் விளக்குகிறான். (தர்ம்யாத்) அறவழியில் நின்றும் விலகாத. (தர்ம்யாத் யுத்தாத்) தர்மவழியில் நடத்தும் யுத்தத்தைக் காட்டிலும். ஆயுதமற்றவன், புறமுதுகிடுபவன், சரணமடைந்தவன், பிறருடன் போரிடுபவன் முதலானோரைத் தாக்குவது முதலான பல விஷயங்கள் அதர்மயுத்தங்கள் என்று ராஜதர்மங்களைக் காட்டும் சாஸ்திரங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. இத்தகைய தகாத போர் முறைகள் இல்லாத யுத்தம் தர்மயுத்தம் எனப்படுகிறது. (ச்ரேயோந்யத் க்ஷத்ரியஸ்ய ந வித்யதே) க்ஷத்ரியஸ்ய தர்ம்யாத்யுத்தாத் அந்யத் ச்ரேயோ ந வித்யதே என்று அந்வயம். க்ஷத்ரியனுக்கு தர்மயுத்தத்தைக்காட்டிலும் வேறொன்று சிறந்த பலஸாதனமாக இல்லை. 'ச்ரேய:' என்னும் சப்தம் பலஸாதனத்தைக் காட்டுகிறது. க்ஷத்ரியனுக்கு தர்மயுத்தம் ஒன்றே மோக்ஷமுள்ளிட்ட எல்லா பலன்களையும் ஸாதித்துக்கொள்ள சிறந்த ஸாதனமாகும் என்று கருத்து. (ஹி) இவ்விஷயம் லோகத்திலும் சாஸ்திரங்களிலும் ப்ரஸித்தம் என்று கருத்து. "சௌர்யம் தேஜோ த்ருதிர் தாக்ஷ்யம் யுத்தே சாப்யபலாயநம், தாநமீச்வரபாவச்ச க்ஷாத்ரம் கர்ம ஸ்வபாவஜம்" [கீதை-18-43] [யுத்தத்தில் பயமின்றிப் புகுதலாகிற சூரத்தன்மை, பிறரால் வெல்லவொண்ணாமையாகிற தேஜஸ்ஸு, இடையூறுகளையும் போக்குவதாகிற தைர்யம், எச்செயலையும் முடிக்கும் வல்லமையாகிற ஸாமர்த்தியம், மரணம் நேரிடினும் புறமுதுகிடாமை, தன் உடைமைகளைப் பிறர்க்குக் கொடுக்கும் தியாகம், பிறரை நியமிக்கையாகிற ஈச்வரத்தன்மை ஆகியவையனைத்தும் க்ஷத்ரியனுக்கு இயற்கையிலேயே அமைந்த செயல்.] என்று மேலே கீதையிலேயே இவ்விஷயம் காட்டப்படுகிறதன்றோ. ஆகையால், அர்ஜுனன் கருதுவதுபோல் ப்ராணிஹிம்ஸாத்மகமான யுத்தம் அதர்மமன்று; அவனுக்குச் சிறந்த வர்ணதர்மமாகையாலே, அக்நீஷோமீய பசுஹிம்ஸை போலே அனுஷ்டிக்கத்தக்க பரமதர்மமே என்று கருத்து.

இங்கு ஓர் விவாதம் எழுகிறது. இதைப் பூர்வபக்ஷிக்கும் ஸித்தாந்திக்கும் ஸம்வாதமாக விளக்குவோம்.

பூர்வபக்ஷி:-அக்நீஷோமயாகத்தில் பசுஹிம்ஸை அதர்மமாகாதது போலே, யுத்தத்தில் பிராணிஹிம்ஸையும் அதர்மமாகாது என்று கூறியது தவறு. அக்நீஷோமயாகத்தில் பசுஹிம்ஸையும் அநர்த்தத்தை விளைக்கும் அதர்மமேயாகும். "ந ஹிம்ஸ்யாத் ஸர்வாபூதானி" [எந்த ஜீவராசியையும் ஹிம்ஸிக்கலாகாது] என்பது ஒரு வேத வாக்கியம். இவ்வாக்கியத்திலிருந்து எல்லாப்பிராணி ஹிம்ஸையும் அதர்மம் என்றே ஏற்படுகிறது. ஆகையால் அக்நீஷோமயாகத்தில் செய்யப்படும் பசுஹிம்ஸையும் அதர்மமேயாகும்.

ஸித்தாந்தி;— "அக்நீஷோமீயம் பசுமாலபேத" என்னும் மற்றொரு வேதவாக்யத்தில் ஸ்வர்க்கத்தை அடைவதற்கு அக்நீஷோமயாகம் செய்யும்போது அதில் யாகபசுவைக் கொல்லலாம் என்று விதிக்கப் பட்டுள்ளது. இப்படி "ந ஹிம்ஸ்யாத்" என்னும் வாக்கியத்திற்கும், "அக்நீஷோமீயம்" என்னும் வாக்கியத்திற்கும் விரோதம் வருகையாலே அக்நீஷோமயாகபசுஹிம்ஸை தவிர்ந்த மற்ற பசுஹிம்ஸைகளையே ."ந ஹிம்ஸ்யாத்" என்னும் வாக்கியம் தள்ளுகிறது என்று கொள்ளவேண்டும். இதுவே உத்ஸர்க்காபவாத(Rule and exception) நியாயம் எனப்படும். ஆகையால் பிராணிஹிம்ஸையுள்ளவிடமெல்லாம் அதர்மம் என்று பூர்வபக்ஷிசொன்னது தவறு. வேதவாக்கியத்தால் நிஷேதிக்கப்பட்டதெல்லாம் அதர்மம் என்று கூறுவதே பொருந்தும். அக்நீஷோமீய பசுஹிம்ஸை வேதவாக்யத்தால் நிஷேதிக்கப்படாததோடன்றியில் விதிக்கவும் பட்டிருக்கிறது. ஆகையால் அது அதர்மமாகாது.

பூர்வபக்ஷி:—"ந ஹிம்ஸ்யாத்" என்னும் வாக்கியத்திற்கும் அக்நீஷோமீய வாக்யத்திற்கும் ஒரு விரோதமும் இல்லை. முதல் வாக்கியம் பிராணிஹிம்ஸையெல்லாம் அதர்மமென்றும் அதற்கு துக்கானுபவமாகிற பலன் உண்டென்றும் காட்டுகிறது. இரண்டாவது வாக்கியம் பசுஹிம்ஸையோடுகூடிய அக்நீஷோமயாகத்தால் ஸ்வர்க்கம் கிடைக்கும் என்று விதிக்கிறது. முதல் வாக்கியத்தின் பலத்தால் ஏற்படக்கூடிய துக்கானுபவத்தை இரண்டாவது வாக்கியம் தள்ளவில்லை. அக்நீஷோமயாகம் செய்பவனுக்கு முதல்வாக்கியத்தின்படி துக்கானுபவமும், அதன் பிறகு இரண்டாவது வாக்கியத்தின்படி ஸ்வர்க்கமும் கிடைக்கலாம். துக்கானுபவம் சிறிதாகவும், ஸ்வர்க்கஸுகம் பெரிதாகவும் இருக்கையால் அக்நீஷோமயாகத்தை அனுஷ்டிக்கவும் தயங்கமாட்டான். ஆகையால், முதல் வாக்கியத்தால் நிஷேதிக்கப்பட்ட ஹிம்ஸைகளில் அக்நீஷோமீய பசுஹிம்ஸையும் அடங்கும். ஆகையால் வேதவாக்கியத்தால் நிஷேதிக்கப்பட்டதெல்லாம் அதர்மம் என்று கொண்டாலும் அக்நீஷோமீய பசுஹிம்ஸை அதர்மமேயாகும். அதுபோலவே யுத்தத்தில் பிராணிஹிம்ஸையும் அதர்மமேயாகும்.

इति हि वक्ष्यते। अग्नीषोमीयादिषु च न हिंसा पशोः, निहीनतर-
च्छागादिदेहपरित्यागपूर्वककल्याणतरदेहस्वर्गादिप्रापकत्वश्रुतेस्संज्ञपनस्य।
*न वा उवेतन्म्रियसे न रिष्यसि देवाँ इदेषि पथिभिस्सुगेभिः। यत्र
यन्ति सुकृतो नापि दुष्कृतः। तत्र त्वा देवस्सविता दधातु।
(यजु ४-६-९-४६; यजु-ब्रा ३ ७ ७ १४) इति हि श्रूयते।

---

ஸித்தாந்தி:— வேதவாக்கியத்தால் விதிக்கப்பட்டதுதான் தர்மம் என்று கொண்டுவிட்டோம்: அப்படிக்கொண்டால் அக்நி ஷோமீய வாக்கியத்தால் விதிக்கப்பட்டிருப்பதான பசுஹிம்ஸை அதர்மமாகாமல் தர்மமேயாகும்.

பூர்வபக்ஷி:- இப்படிக்கொண்டால் எவ்வாக்கியத்தினாலும் விதிக்கப்படாமலும், நிஷேதிக்கப்படாமலுமிருக்கும் கைகால் பிசைப்பது முதலான காரியங்களும் அதர்மமாக வேண்டிவரும். ஆகையால் இப்படிக்கொள்ளலாகாது.

ஸித்தாந்தி:—நீர் சொல்லுகிறபடி அக்நிஷோமீய பசுஹிம்ஸையிலும் துக்கானுபவம் உண்டாகுமாகில், ஆயிரம் தாய்தந்தையரினும் வாத்ஸல்யமுடைய வேதவாக்கியம் அதை விதிக்குமோ?

பூர்வபக்ஷி:—கடுக்காய் சாப்பிடுவது வாய்க்குக் கசப்பாயிருந்தாலும் ஆரோக்கியத்தைத் தருகையாலே வைத்யசாஸ்திரம் அதை விதிக்கிறதல்லவோ. "த்ருசமாதா ஹரீதகீ" [கடுக்காய் பத்து தாய் செய்யும் நன்மையைச் செய்யவல்லது.] என்றல்லவோ சொல்லப் படுகிறது. இதுபோலே இதன் பலனான துக்கானுபவம் சிறிதாகை யாலும், அதையும் ப்ராயச்சித்தத்தால் போக்கிக்கொள்ளலாமாகை யாலும், இதன் பலனான ஸ்வர்க்கஸுகம் மிகப்பெரியதாகையாலும் வேதம் அக்நீஷோமீய பசுஹிம்ஸையை விதிக்கலாம். "ஹிம்ஸா ச புருஷஸ்ய தோஷமாவக்ஷ்யதி க்ரதோச்ச உபகரிஷ்யதி" [ஸா-கௌ-2] [யாகபசுஹிம்ஸை புருஷனுக்கு தோஷத்தை ஏற்படுத்தும். யாகத் திற்கு உதவியாகவுமிருக்கும்.] என்று ஸாங்க்ய தத்வகௌமுதி யிலும், "ஸ்யாத் ஸ்வல்பஸ் ஸங்கர: ஸபரிஹர: ஸப்ரத்யவமர்ஷ:" [யோகஸூத்ரவ்யாஸபாஷ்யம் 2-13] [(யாக பசுஹிம்ஸையால்) சிறிது தோஷமுண்டாகலாம்; பச்சாத்தாபத்தோடு கூடிய ப்ராயச்சித்தத் தால் அது எளிதில் போக்கடிக்கப்படலாம்.] என்று பஞ்சசிகா சார்யராலும் இவ்விஷயம் விளக்கப்பட்டது. ஆகையால் அக்நீ ஷோமீய பசுஹிம்ஸையும், யுத்தத்தில் ப்ராணிஹிம்ஸையும் துக்கானு பவத்தை விளைக்கும் அதர்மமேயாகும்.

**इह च युद्धे मृतानां कल्याणतरदेहप्राप्तिरुक्ता, वासांसि जीर्णानि यथा विहाय नवानि गृह्णाति इत्यादिना। अतश्चिकित्सकशल्यादिकर्म आतुरस्येवास्य रक्षणमेवाग्नीषोमीयादिषु संज्ञपनम्॥ ३१॥**

---

*[இவ்வளவில் ஸித்தாந்திகளில் தலைவரான எம்பெருமானார் பூர்வபக்ஷியின் வாதங்களுக்குத் தினவடங்க பதில் கூறுகிறார்.]*

எம்பெருமானார்:- அக்நீஷோமயாகத்தில் பசுவுக்கு ஹிம்ஸையே கிடையாது. யாகத்தில் கொல்லப்படும் அப்பசு மிகத்தாழ்ந்ததான பசுசரீரத்தைவிட்டு மிக அழகியதான தேவசரீரத்தைப்பெற்று ஸ்வர்க்கம் முதலான புண்யசாலிலோகங்களை அடைவதாக வேதம் கூறுகிறது. "ந வா உ வேதந் ம்ரியஸே ந ரிஷ்யஸி தேவாக்ம் இதேஷி பதிபி: ஸுகேபி:। யத்ர யந்தி ஸுக்ருதோ நாபி துஷ்க்ருத:। தத்ர த்வா தேவ: ஸவிதா ததாது।" [யஜு-ஸ-1-6-9-46; யஜுர்-ப்ரா 3-7-7-94] [நீ இப்படி மரணமடைகிறாயில்லை; ஹிம்ஸையடைகிறாயில்லை; நல்ல வழியாலே தேவர்களை அடைகிறாய்; அங்கு புண்யசாலி களே செல்வார்கள்; பாபிகள் செல்லார்கள். அவ்விடத்தில் உன்னை ஸவிதா என்னும் தேவன் சேர்ப்பிப்பானாக.] என்று யாகத்தில் மூச் சடங்கும் ஆட்டைப்பற்றி வேதத்தில் கோஷிக்கப்படுகிறதன்றோ. அநர்த்தத்தைத் தரும் செயலே ஹிம்ஸையெனப்படும்; இங்கு யாக பசுவுக்கு அநர்த்தம் ஏற்படாததோடன்றியில் சிறந்த புருஷார்த்த மான ஸ்வர்க்கமே ஏற்படுகிறது. ஆகையால் அக்நீஷோமயாகத்தில் பசுஹிம்ஸையேயில்லை. ஆகையால் அது "ந ஹிம்ஸ்யாத்" என்னும் வாக்கியத்தில் நிஷேதிக்கப்படுவதாகாது.

பூர்வபக்ஷி: அக்நீஷோமயாகத்தில் "ந வா உ" என்று தொடங் கும் வேதவாக்யத்தின் பலத்தாலே பசுவுக்கு ஹிம்ஸையாகாமல் போனால் போகட்டும்; இங்கு யுத்தத்தில் பீஷ்மர், துரோணர் முத லான ஆயிரக்கணக்கான உயிர்களைக் கொல்லுவது எப்படி ஹிம்ஸை யாகாமலிருக்கமுடியும்?

எம்பெருமானார்:—"வாஸாம்ஸி ஜீர்ணாநி" [2-22] முதலான ச்லோ கங்களில் இந்த கீதையிலேயே யுத்தத்தில் வீரமரணமடையும் எவ ருக்கும் இப்போதுள்ள தேஹத்தைக்காட்டிலும் மிக அழகிய தேஹம் கிடைப்பதாகவும், வீரஸ்வர்க்கம் கிடைப்பதாகவும் கூறப்படுகிறது. ஆகையால் இங்கும் ப்ராணிஹிம்ஸை கிடையாது.

यदृच्छया चोपपन्नं स्वर्गद्वारमपावृतम् ।
सुखिनः क्षत्रियाः पार्थ लभन्ते युद्धमीदृशम् ॥ ३२ ॥

32. யத்ருச்சயா சோபபந்நம் ஸ்வர்க்கத்வாரமபாவ்ருதம் |
ஸுகிந: க்ஷத்ரியா: பார்த்த லபந்தே யுத்தமீத்ருஸம் ||

---

பூர்வபக்ஷி: ''அஹிம்ஸந் ஸர்வபூதாநி அந்யத்ர தீர்த்தேப்ய:'' [சாந் 8-15-1] [விஹிதஹிம்ஸையுள்ளவிடம் தவிர மற்ற ஹிம்ஸைகளைச் செய்யாமலிருந்துகொண்டு] முதலானவிடங்களில் அக்நீஷோமீயாதி விஹிதஸ்தலங்களிலும் பசுஹிம்ஸை இருப்பதாகக் கூறப்படுகிறதே: அப்படியிருக்க இந்த ஹிம்ஸையை யில்லையென்று எப்படிச் சொல்லலாம்?

எம்பெருமானார்:— துன்பத்தை விளைப்பதை மாத்திரம் ஹிம்ஸையென்று கூறமுடியாது; அப்படிக் கூறினால் நோயாளியின் வியாதி தீருவதற்காக அவனுடைய உடலை வாளால் அறுத்துச் சுடும் வைத்யனின் செயலும் ஹிம்ஸையாகவேண்டிவரும். பிராணனைப் போக்குவதுதான் ஹிம்ஸை என்றும் கூறமுடியாது. அப்படிக் கொண்டால், பிராணனைப்போக்காமல் எல்லா தனங்களையும் அபஹரிப்பது, நரகபீடை, சித்ரவதை செய்வது முதலானவை ஹிம்ஸையாகாமல் போகவேண்டிவரும். மரணத்தைக் காட்டிலும் பெரிய ஹிம்ஸையாயிருக்கும் இவற்றை ஹிம்ஸையென்பது ஔபசாரிக ப்ரயோகமும் ஆகமுடியாது; முக்கியப்ரயோகமேயாகும். ஆகையால், ''முடிவில் தீங்கை விளைப்பதாய், அப்போதும் துன்பத்தைத்தரும் செயல் ஹிம்ஸை'' என்பதே ஹிம்ஸாலக்ஷணமாகும். இந்த லக்ஷணத்தின்படி அப்போதைக்குச் சிறிது துன்பத்தைத் தந்தபோதிலும் முடிவில் பெரிய ஸுகத்தைத்தரும் அக்நீஷோமீய பசு ஹிம்ஸையும், யுத்தத்தில் உயிர்களைக்கொல்லுவதும் ஹிம்ஸையாகாதென்று விளங்கும். பாமரர்களின் கருத்தைக்கொண்டு, ''அந்யத்ர தீர்த்தேப்ய:'' என்றவிடத்தில் விஹித பசுவதங்களை ஹிம்ஸையென்றது. மனுவும், ''தஸ்மாத் யஜ்ஞே வதோ(அ)வத:'' [5-39] [ஆகையால் யாகத்தில் பசுவதம் வதமாகாது] என்று பாமரர்களின் கருத்தின்படி வதமென்று அநுவாதம் செய்து உண்மையில் அது வதமாகாது என்று காட்டினார். ஆகையால் அக்நீஷோமீய பசு ஹிம்ஸையைப்போலே யுத்தத்தில் பிராணிவதமும் அதர்மமாகாது என்று தேறிற்று.

ஹே பார்த்த₂-குந்திபுத்ரனே!, யத்₃ருச்ச₂யா-தானாகவே, உபபந்நம்—வந்தடைந்திருப்பதும், அபாவ்ருதம் ஸ்வர்க்க₃த்வாரம்—தடை நீங்கப்பெற்ற மோக்ஷஸாதனமாயிருப்பதுமான, ஈத்₃ருஶம் யுத்₃த₄ம்—இத்தகைய யுத்தத்தை, ஸுகி₂ந:

30 தானே வருமிந்தத் தன்ம சமரத்தை
வானேறும் வாயி லெனமதித்துத்—தேனேருந்
தார்மன்னர் பார்த்தனே தாங்கள் சுகமுடனே
சீர்மன்ன வேறுவர்காண் சென்று.

பார்த்தனே—குந்திமகனே! தானே வரும்—(ஒரு முயற்சியில்லாமல்) தானே நேர்ந்த, இந்த தன்ம சமரத்தை—இந்த தர்மயுத்தத்தை, தேன் ஏறும் தார் மன்னர்–மதுநிரம்பிய மாலைகளை அணிந்த அரசர்கள், வான் ஏறும் வாயில் என மதித்து–மோக்ஷத்தை அடைய ஸாதனம் என்று எண்ணி, சுகமுடனே—ஸுகத்தோடு, சீர் மன்ன—செல்வம் நிரம்பும்படி

32. பிராணி வதையோடு கூடிய யுத்தத்தை மறுபடியும் புகழ்வதன்மூலம், யுத்தம் அதர்மம் என்னும் மயக்கத்தை நீக்குகிறான் கண்ணன் இந்த ச்லோகத்திலும். (யத்₃ருச்ச₂யா உபபந்நம் யுத்தம்) ஒரு முயற்சி செய்யாமல் தானே வலிய வந்ததான இந்த யுத்தத்தை, முன் ஜன்மங்களில் செய்த புண்ணியத்தால் இது வந்திருக்கிறதேயொழிய இப்போது நாம் முயன்று வந்ததல்ல என்று கருத்து. (ஸ்வர்க்க₃த்₃வாரமபாவ்ருதம்) அபாவ்ருதம் ஸ்வர்க்கத்வாரம். தடை நீங்கப் பெற்ற மோக்ஷவழியாயிருப்பது இந்த தர்மயுத்தம். தர்மங்கள் பரமபுருஷனுக்கு ஆராதனமாகவேயிருக்கையாலே இயற்கையில் மோக்ஷத்திற்கு ஸாதனமாகவேயிருக்கின்றன, மோக்ஷம் தவிர்ந்த வேறு பலன்களை அவற்றுக்குப்பலனாக விரும்பினால், அவற்றின் மோக்ஷஸாதனத்தன்மை தடைபடுகிறது. அப்படி வேறு பலன்களில் விருப்பமில்லாமையாலே தடைநீங்கப்பெற்ற மோக்ஷஸாதனமாயிருக்கிறது தர்மயுத்தம் என்று கருத்து. (ஸ்வர்க்க₃த்₃வாரம்) இங்கு ஸ்வர்க்கசப்தம் இந்த்ராதிதேவலோகங்களைக் குறிப்பதன்று. எல்லையற்ற ஸுகரூபமாயிருக்கும் மோக்ஷத்தையே குறிக்கிறது. "யஸ்மிந்நோஷ்ணம் ந சீதம்" [எதில் உஷ்ணம் குளிர் முதலான ப்ராக்ருத ஸுகதுக்கங்களில்லையோ] என்று தொடங்கி,

க்ஷத்ரியா:—பாக்யசாலிகளான அரசர்களே. லப₄ந்தே—அடைகிறார்கள்.

॥भा॥ अयत्नोपनतमिदं निरतिशयसुखोपायभूतं निर्विघ्नमीदृशं युद्धं सुखिनः पुण्यवन्तः क्षत्रिया लभन्ते॥३२॥

अथ चेत्त्वमिमं धर्म्यं संग्रामं न करिष्यसि।
ततः स्वधर्मं कीर्तिं च हित्वा पापमवाप्स्यसि॥३३॥

---

யாக. தாங்கள் சென்று ஏறுவர்காண்—தாங்களே விரும்பிச் சென்று ஏற்று நடத்துவார்கள்.

* 31. நீயித் தரும சமரத்தை நின்றியலா
யாயிற் புகழுன் னறம்விட்டுப்—போயிற்றால்
பாவந் தனையடைதி பாரெல்லா நின்றிசைக்கு
மேவந் தனையே யெழுந்து.

---

"து₃க்கே₂ந யந்ந ஸம்பி₄ந்நம் ந ச க்₃ரஸ்தமநந்தரம் |
அபி₄லாஷோபநீதம் யத் தத்ஸுக₂ம் ஸ்வ: பத₃ாஸ்பத₃ம் ||"
[சாபரபாஷ்யம் 6-1-1]

[எது துன்பத்தோடு இதுவரையில் கலசாமலிருந்ததோ, பின்வரும் காலத்திலும் எது துன்பத்தால் பிடிக்கப்படாதோ, எது அவரவராலும் ஆசைப்படத்தக்கதோ அந்த ஸுகமே 'ஸ்வ:' என்று சொல்லப்படுவது.] என்று ஸ்வர்க்காதிசப்தங்கள் முக்கியமாக மோக்ஷத்தையே குறிக்கும் என்று கோஷிக்கப்பட்டதன்றோ. (ஸுகி₂ந: க்ஷத்ரியா: ஈத்₃ருசம் யுத்₃த₄ம் லப₄ந்தே) ஸுகஹேதுவான புண்ணியத்தை உடைய அரசர்களே இத்தகைய யுத்தத்தை அடைவார்கள். ஸுகமே யுத்தலாபத்திற்குக் காரணமாகமாட்டாதாகையால், ஸுக சப்தம் இங்கு ஸுககாரணமான புண்ணியத்தை லக்ஷணையாலே குறிக்கிறது. அன்றிக்கே, சாப்தமாகவும் இவ்வர்த்தம் கிடைக்கும். அதாவது:- ஸுகத்திற்குரிய அரசர்களே தர்மயுத்தத்தை அடைவார்கள் என்கை. ஸுகத்திற்குரியவராகையாவது, புண்ணியமுடைமையேயாகும். (பார்த்த₂) இத்தகைய புண்ணியசாலிகளான க்ஷத்திரியர்களின் குலத்திற்பிறந்தவனன்றோ நீயும் என்கை. 32.

---

* 33-வது ச்லோகத்தையும், 34-வது ச்லோகத்தின் முற்பாதியையும் விவரிப்பது 31-வது பாடல்.

33. அத₂ சேத் த்வமிமம் த₄ர்ம்யம் ஸங்க்₃ராமம் ந கரிஷ்யஸி।
தத: ஸ்வத₄ர்மம் கீர்த்திம் ச ஹித்வா பாபமவாப்ஸ்யஸி॥

அத₂—இப்படியல்லாமல், த்வம்—நீ, இமம் த₄ர்ம்யம் ஸங்க்₃ராமம்—இந்த தர்மயுக்தத்தை, ந கரிஷ்யஸி சேத்—செய்யவில்லையானல் தத:—அக்காரணத்தாலேயே, ஸ்வத₄ர்மம்—உன் வர்ணதர்மத்தின் பலனையும் கீர்த்திம் ச—புகழையும், ஹித்வா—கைவிட்டு, பாபம்—பாவத்தை, அவாப்ஸ்யஸி—அடைவாய்.

॥ भा ॥ अथ क्षत्रियस्य स्वधर्मभूतमिमम्–आरब्धं संग्रामं मोहान्न करिष्यसि चेत्–ततः प्रारब्धस्य धर्मस्याकरणात्स्वधर्मफलं निरतिशयसुखं विजयेन निरतिशयां च कीर्तिं हित्वा पापं निरतिशयमवाप्स्यसि ॥ ३३ ॥

---

நீ—நீ, இத்தரும சமரத்தை-இந்த தர்மயுத்தத்தை, நின்று இயலாயாயில — நிலைநின்று செய்யாமலிருந்தாயாகில், உன் புகழ்-உன் புகழும், உன் அறம்-உன் வர்ண தர்மபலனும், விட்டுப்போயிற்றால் உன்னைவிட்டுப் போய்விடும்; (மேலும்)

---

33. முன் இரண்டு ச்லோகங்களில் யுத்தம் தர்மமேயாகையாலே மோக்ஷஸாதனமாகிறது என்று கூறப்பட்டது. இனி இரண்டு ச்லோகங்களாலே யுத்தம் செய்யாவிடில் ஏற்படும் தோஷத்தைக் கூறுகிறது. (அத₂) யுத்தம் செய்யவேண்டும், என்னும் என் பக்ஷத்தை அனுஷ்டிக்காமல், யுத்தம் செய்யக்கூடாது என்னும் உன் பக்ஷத்தை அனுஷ்டிக்க விரும்பினையாகில், (த்வம்) நீ ப்ராஹ்மணனல்லவே; க்ஷத்ரியனுயிற்றே. (த₄ர்ம்யம் ஸங்க்₃ராமம்) க்ஷத்ரியனை நீ உன் தர்மமான யுத்தத்தைச் செய்யாமலிருப்பது தகாது. (இமம் ஸங்க்₃ராமம்) சண்டை தொடங்காமலிருந்தாலும் நீயாக ஆரம்பிக்கவேண்டுவதில்லை; சண்டையோ தொடங்கிவிட்டது. தொடங்கிய சண்டையைத் தொடர்ந்து நடத்தாவிடில் இம்மை மறுமைகளில் பெரிய தோஷம் ஏற்படும் என்று கருத்து. (ந கரிஷ்யஸி சேத்) தர்மமான இதை அதர்மமென்று மயங்கி யுத்தம் செய்யாமலிருந்தாயாகில், இதனால் ஏற்படும் தோஷங்களை இனிச் சொல்லுகிறது,-(தத:) தொடங்கிய சண்டையைத் தொடராததே காரணமாக. (ஸ்வத₄ர்மம் ஹித்வா)

अकीर्तिं चापि भूतानि कथयिष्यन्ति तेऽव्ययाम्।
संभावितस्य चाकीर्तिः मरणादतिरिच्यते ॥ ३४ ॥

34. அகீர்த்திம சாபி பூ₄நாநி கத₂யிஷ்யந்தி தேऽவ்யயாம் ।
ஸம்பா₄விதஸ்ய சாகீர்த்திர் மரணாத₃திரிச்யதே ॥

பூ₄தாநி அபி—எல்லாப் பிராணிகளும், தே—உனக்கு, அவ்யயாம்—எல்லாதேசத்திலும் காலத்திலும் பரவக்கூடிய, அகீர்த்திம் ச—பழியையும், கத₂யிஷ்யந்தி—கூறுவார்கள்; ஸம்பா₄விதஸ்ய—சௌர்யம், வீர்யம் முதலான நற்குணங்களை உடையவனாகக் கொண்டாடப்பெறும் உன்னைப் போன்றவனுக்கு, அகீர்த்தி:—பழிச்சொல், மரணாத் ச—மரணத்தைக்காட்டிலும், அதிரிச்யதே—கொடியதாகிறது.

---

பாவம் தனை அடைதி—பாபத்தையும் அடைவாய்; பார் எல்லாம்—உலகனைத்தும், ஏவம் தனையே—பழிச்சொல்லையே, எழுந்து நின்று இசைக்கும்—அனைவருமறிய நின்று பேசுவார்கள்.

* 32. கொண்டாட்டுற் ருர்க்குக் கொடிதுபழி சாமதனிற்
கண்டார்க ளச்சத்தாற் காதமரிற்—றிண்டாடி
மீண்டா யெனநினைப்பர் மேலார் வியப்புறுநீ
வேண்டாத நோய்மையுறேன் மிக்கு.

---

முற்பாதியிலேயே தர்மத்தை விட்டாயாகில் என்று சொல்லிவிட்டு அதனால் ஏற்படும் தோஷத்தை இங்கு சொல்லுகிறதாகையாலே, இங்கு தர்மசப்தம் தர்மத்தின் பலனைக் குறிக்கிறது. யுத்தம் செய்யாவிடில் நீ மோக்ஷமாகிற மிகச்சிறந்த மறுமைப்பலனை இழக்க வேண்டிவரும் என்று கருத்து. (கீர்த்திம் ச ஹித்வா) யுத்தத்தில் ஜயிப்பதால் ஏற்படக்கூடிய மிகச்சிறந்த கீர்த்தியாகிய இம்மைப்பலனையும் இழக்கவேண்டிவரும் என்று கருத்து. (பாபமவாப்ஸ்யஸி) இம்மை மறுமைப்பலன்களை இழப்பது மாத்திரமல்ல; மிகப்பெரிய துன்பத்தை அனுபவிப்பதற்குக் காரணமான பாபத்தையும் அடைவாய். 33.

---

* 34-வது ச்லோகத்தின் பிற்பாதியையும், 35-வது ச்லோகத்தையும் விவரிப்பது 32-ம் பாடல்.

।।भा।। न ते केवलं निरतिशयसुखकीर्तिहानिमात्रम्, पार्थो युद्धे प्रारब्धे पलायितः इत्यव्ययां–सर्वदेशकालव्यापिनीमकीर्तिं च समर्थान्यसमर्थान्यपि सर्वाणि भूतानि कथयिष्यन्ति। ततः किमिति चेत्–शौर्यवीर्यपराक्रमादिभिस्सर्वसंभावितस्य तद्विपर्ययजा ह्यकीर्तिर्मरणादतिरिच्यते; एवंविधाया अकीर्तेर्मरणमेव तव श्रेय इत्यर्थः।। ३४।।

---

கொண்டாட்டு உற்றார்க்கு—உலகத்தால் கொண்டாடப்பட்டவர்களுக்கு, பழி—பழிச்சொல். சாமதனில் கொடிது—மரணத்தைக்காட்டிலும் கொடியது; கண்டார்கள்–(நீ பின்வாங்குவதைக்) கண்டவர்கள், சாதமரில்—கடும்போரில்.

---

34. முன் ச்லோகத்தில் யுத்தம் செய்யாவிடில் இம்மை மறுமைப் பலன்களை இழக்கவேண்டிவரும் என்றும், மறுமையில் பாபமாகிற தோஷம் வரும் என்றும் கூறப்பட்டது. இந்த ச்லோகத்தில் இம்மையிலும் பழிச்சொல்லாகிற பெரும் தோஷம் வரும் என்று கூறப்படுகிறது. (அகீர்த்திம்) கீர்த்தியின்மையைமாத்திரம் சொல்லுவதன்று; கீர்த்திக்கு எதிர்த்தட்டான பழிச்சொல்லையே குறிக்கிறது (அகீர்த்திம் ச) முன் ச்லோகத்தில் சொல்லியபடியே இம்மை மறுமைப்பலஹானி மறுமையில் பாபமாகிற தோஷம் ஆகியவை மாத்திரம் உன்னையடைவதன்று; அர்ஜுனன் யுத்தம் தொடங்கியவுடன் ஒன்றும் செய்யமுடியாமல் ஓடிவிட்டான் என்னும் இம்மையில் பழிச்சொல்லாகிற பெருந்தோஷமும் ஏற்படும் என்று சகாரம் காட்டுகிறது (அவ்யயாம் அகீர்த்திம்) எக்காலத்திலும் அழியாத பழிச்சொல்லை; எல்லா தேசத்திலும் ஸுப்ரஸித்தனான அர்ஜுனனைப்பற்றிய பழிச்சொல்லாகையாலே எல்லா தேசத்திலும் எல்லாக் காலத்திலும் பரவி என்றும் அழியாதிருக்கும் என்று கருத்து. (பூதாந்யபி கதயிஷ்யந்தி) வல்லமையுள்ளவர்கள் பழிசொன்னாலும் பொறுத்துக்கொள்ளலாம். வல்லவர்களோடு அல்லவர்களோடு வாசியற அனைவரும் பழிச்சொல்லைப்பேசுவர். 'எவர் பழி சொன்னால் எனக்கென்ன?' என்று அர்ஜுனனுக்குக் கருத்தாகக்கொண்டு ச்லோகத்தின் பிற்பாதி அவதரிக்கிறது. பிற்பாதியிலுள்ள சகாரம் இக்கருத்தைத் தள்ளுகிறது. (ஸம்பாவிதஸ்ய) வல்லவர்களோடு, அல்லவர்களோடு வாசியற அனைவராலும், "சௌர்யம், வீர்யம்,

भयाद्रणादुपरतं मंस्य[मन्य]न्ते त्वां महारथाः ।
येषां च त्वं बहुमतो भूत्वा यास्यसि लाघवम् ॥ ३५ ॥

35. ப₄யாத்₃ரணாது₃பரதம்
மம்ஸ்ய[மந்ய]ந்தே த்வாம் மஹாரதா₂: ।
யேஷாம் ச த்வம் ப₃ஹுமதோ
பூ₄த்வா யாஸ்யஸி லாக₄வம் ॥

---

திண்டாடி—திகைத்து. அச்சத்தால்—பயத்தால். மீண்டாய்—பின்வாங்கிவிட்டாய். என நினைப்பர்—என்று நினைப்பார்கள்; மேலார் வியப்புறும் நீ—மஹாரதர்களாலும் மதிக்கப்படும் நீ. மிக்கு வேண்டாத நோய்மை உறேல்—(உனக்கு) மிகவும் கூடாத சிறுமையை அடையாதே.

---

பராக்ரமம் முதலான குணங்களை உடையவன் அர்ஜுனன் ஒருவனே" என்று கொண்டாடப்பட்ட உன்னைப்போன்றவனுக்கு (அகீர்த்தி: மரணாததிரிச்யதே) பழிச்சொல் மரணத்தைக் காட்டிலும் கொடியது. "ஜீவந் ப₄த்₃ராணி பச்யதி" [பாரதம்-விராட 58-44] [உயிருடனிருந்தால் நல்லது நேரக்கூடும்.] "ஆத்மார்த்தே₂ ப்ருதிவீம் த்யஜேத்" [பாரதம்-உத் 127-49] [தன் உயிரைக் காப்பாற்ற பூமியையே கைவிடலாம்] என்று உயிரைக் காப்பாற்றுவதற்குப் பூமியையும் விடலாம் என்று கூறப்பட்டிருக்க, இந்த பழிச்சொல் வராமலிருக்க உயிரையும் விடலாம் என்னலாமோ? எனில்: அந்த வசனங்கள் ஸாமாந்யர்களுக்குச் சொன்னது. மானத்தை உயிரினும் மேலாக மதிக்கும் க்ஷத்ரியர்களுக்குப் பொருந்தாது. மேலும், அர்ஜுனனுக்கு இங்கு வரவிருக்கும் பழிச்சொல் மிகப்பெரிது.

"அகீர்த்தீர் யஸ்ய கீ₃யேத லோகே பூ₄தஸ்ய கஸ்யசித் ।
பதத்யேவாத₄மாந் லோகாந் யாவச்ச₂ப்₃தோ₃ஸ்ஸ கீ₃யதே ॥
[ரா.உ.45-11]

[ஒரு மனிதனுக்கு உலகில் பழிச்சொல் ஏற்பட்டதாகில், அவன் நரகலோகங்களுக்கே போகிறான்; சப்தமுள்ளவரையில் அவன் இகழப்படுகிறான்] என்கிற ஸ்ரீராமவாக்யத்தின்படியே நரகத்தையும் அளிப்பது; யுத்தத்தில் மரணமடைவதோவெனில் ஸ்வர்க்கத்தைக் கொடுப்பது. ஆகையால் அர்ஜுனனைப்போன்ற க்ஷத்ரியனுக்குப் பழிச்சொல்லைக் காட்டிலும் மரணமே சிறந்ததென்று கூறியது பொருத்தமேயாகும். 34.

மஹாரதா2:-மஹாவீரர்களான எதிரிகள், த்வாம்-உன்னை, ப4யாத்-பயத்தாலே, ரணாத் உபரதம்-போரிலிருந்து புறமுதுகிட்டவனாக, மம்ஸ்யந்தே-நினைக்கப்போகிறார்கள்; யேஷாம்-எந்த மஹாவீரர்களுக்கு, த்வம்—நீ, ப3ஹுமத: பூ4த்வா—மதிக்கத்தக்கவனாய் இதுவரையில் இருந்தாயோ, (தேஷாம்-அவர்களுக்கு) லாக4வம் யாஸ்யஸி—எளியவனாகும் தன்மையை அடையப்போகிறாய்.

॥भा॥ येषां कर्णदुर्योधनादीनां महारथानामितःपूर्वं त्वं शूरो वैरीति बहुमतो भूत्वेदानीं युद्धे समुपस्थिते निवृत्तव्यापारतया लाघवं—

---

35. இதுவரையில் தர்மத்தை அதர்மமென்றெண்ணுவதும் மயக்கம் போக்கடிக்கப்பட்டது. இனி மூன்று ச்லோகங்களாலே, 'அஸ்தான ஸ்நேஹம்' எனப்படும் தகாதவிடத்தில் அன்பு தவிர்க்கப்படுகிறது. "நான் போருக்கு பயந்து ஓடவில்லையே; உறவினரிடத்தில் அன்பினாலும், கருணையினாலும்தானே, போரிலிருந்து மீள்கின்றேன்; இப்படிப்பட்டவனாய், ஆனால் எனக்கு எப்படி அகீர்த்தி ஏற்படும்? உண்மையில் கீர்த்தியன்றோ ஏற்படும்?" என்று அர்ஜுனனுக்குக் கருத்தாகக்கொண்டு, 'நீ எவரிடம் உறவு பாராட்டுகிறாயோ, அவர்கள் நீ பயந்தோடுவதாகவே நினைத்தும் சொல்லியும் உனக்கு இகழ்வை ஏற்படுத்தப்போகிறார்கள்' என்று கூறுகிறான் இந்த ச்லோகத்தில். (யேஷாம்...) கர்ணன் துர்யோதனன் முதலான எந்த மஹாரதர்கள் இதுவரையில் உனக்கு எத்தனையோ அபகாரம் செய்து வந்தபோதிலும் உன்னை மதித்து வந்தார்களோ, அவர்களே உன்னை அவமதிக்கப்போகிறார்கள் என்று கருத்து. பீஷ்மர் த்ரோணர் முதலான அறிவாளிகள் இப்படி நினைக்கமாட்டார்களானாலும், கர்ணன், துரியோதனன் முதலான எதிரிகள் இப்படி நினைத்தே தீருவார்கள். அவர்கள் மஹாரதர்களாகையாலும், இதுவரையில் உன்னை மதித்துவந்தவர்களாகையாலும், நீ என்று இடறி விழப்போகிறாய் என்று எதிர்பார்த்திருப்பவர்களாகையாலும், அவர்களுடைய இகழ்ச்சி, உலகில் உனக்கு அகீர்த்தியை உண்டு பண்ணியே தீரும். ஆகையால், 'அவர்கள் எப்படி இகழ்ந்தால் எனக்கென்ன?' என்று நீ நினைக்கமுடியாது. (ப3ஹுமத: பூ4த்வா) இதுவரையில் அவர்களால் சூரனென்றும் வைரியென்றும் மதிக்கப்

॥ भा ॥ किंच,

अवाच्यवादांश्च बहून् वदिष्यन्ति तवाहिताः ।
निन्दन्तस्तव सामर्थ्यं ततो दुःखतरं नु किम् ॥ ३६ ॥

36. அவாச்யவாத₃ாம்ச்ச ப₃ஹூந் வதி₃ஷ்யந்தி தவாஹிதா:।
நிந்த₃ந்தஸ்தவ ஸாமர்த்₂யம் ததோ து₃:க்க₂தரம் நு கிம் ॥

தவ அஹிதா:—உன் எதிரிகளான துரியோதனாதியர். தவ—உன்னுடைய. ஸாமர்த்₂யம்—திறமையை. நிந்த₃ந்த:—நிந்திப்பவர்களாய். ப₃ஹூந் அவாச்யவாத₃ாந் ச—பேசத்தகாத பல வசைச்சொற்களையும், வதி₃ஷ்யந்தி—சொல்லப்போகிறார்கள்; தத:—அவற்றைக் கேட்பதைக் காட்டிலும். து₃:க்க₂தரம்—கொடிய துக்கம். கிம் நு—வேறென்று உளதோ?

॥ भा ॥ शूराणामस्माकं सन्निधौ कथमयं पार्थः क्षणमपि स्थातुं शक्नुयात्, अस्मत्सन्निधानादन्यत्र ह्यस्य सामर्थ्यमिति तव सामर्थ्यं

---

33. ஒன்னுதா ருன்னுண்மை யொன்றன் றெனப்பழித்துச்
சொன்னுடாப் பல்பழியைச் சொல்லுவார்—என்னாளு
மாங்கதனின் மிக்க வருந்துன்பந் தானுண்டோ
வோங்கினிதாந் தோளா யுரை.

ஒன்னுதார்—உன் எதிரிகள், உன் ஆண்மை — உன் ஆண்மையை, ஒன்று அன்று என பழித்து— 'இதுவும் ஒரு ஆண்மையோ?' என நிந்தித்து, சொல் நாடா பல் பழியை—சொல்லத்தகாத பல பழிச்சொற்களை, சொல்லுவார்—

---

36. முன் ச்லோகத்தில் 'யேஷாம்' என்ற பதத்தாலே துரியோதனாதியர் செய்த பழைய உபகாரங்களையும், "யாஸ்யஸி லாக₄வம்" முதலான பதங்களாலே அவர்கள் அர்ஜுனனைக் கோழையென்று அவமதிக்கப்போவதையும் உணர்த்தினான்; மேலும் அவர்கள் செய்யப்போகும் அபகாரத்தைக் கூறுகிறான் இந்த ச்லோகத்தில். (அவாச்யவாத₃ாம்ச்ச ப₃ஹூந் வதி₃ஷ்யந்தி) "சூரர்களான நம் முன்னிலையில் கோழையான இவ்வர்ஜுனன் ஒருகணமேனும் நிற்பவனல்லனே? கோழைகளான மற்றவர்களிடமன்றோ இவனுடைய

**निन्दन्तः शूराणामवाच्यवादांश्च बहून्वदिष्यन्ति तव शत्रवो धार्तराष्ट्राः। ततोऽधिकतरं दुःखं किं तव? एवंविधावाच्यश्रवणान्मरणमेव श्रेय इति त्वमेव मंस्यसे॥ ३६॥**

---

*சொல்லுவார்கள்;* **ஓங்கு இனிது ஆம் தோளாய்**-*உயர்ந்து அழகியதாயிருக்கும் தோளையுடையவனே!* **எந்நாளும்** *எக்காலத்திலும்.* **ஆங்கு**-*போர்க்களத்தில்.* **அதனில் மிக்க**—*அந்த வசைச்சொற்களைக் கேட்பதைக் காட்டிலும் கொடியதான.* **அரும் துன்பம் தான் உண்டோ**—*பெரியதுன்பம் எதுவும் உண்டோ?* **உரை**—*நீயே சொல்லுவாயாக.*

---

*திறமை விஜயசெல்லும்!" என்பது போன்ற பேசத்தகாத பேச்சுக்கள் பலவற்றையும் சொல்லப்போகிறார்கள். (அவாச்யவாதாம்ச்ச) சூரர்களைக்குறித்துப் பேசத்தகாதவையும், பேடிகளைக் குறித்தே பேசத்தக்கவையுமான கேட்பார் செவி சுடும் கீழ்மை வார்த்தைகளையும், தூஷணபரிஹாஸவாக்கியங்களையும் கூடப்பேசுவார்கள். (பஹூந் வதிஷ்யந்தி) ஒன்றிரண்டல்ல: பலவற்றையும் பேசுவார்கள். இவர்கள் இப்படிப் பேசுவதற்குக் காரணமென்ன? எனில்: (தவ அஹிதா:) உனக்கு எதிரிகளாய், நீ எப்போது தாழ்வடையப் போகிறாய் என்று எதிர்பார்த்துக் கொண்டிருப்பவர்களன்றோ இந்த திருதராஷ்டிர புத்திரர்கள். 'துஷ்டர்களான அவர்கள் என்னை நிந்தித்தால் எனக்குத் தாழ்வென்ன?' எனில்: (நிந்தந்தஸ் தவ ஸாமர்த்யம்) உன்னுடைய திறமையைத் தாழ்த்தியன்றோ அவர்கள் பேசப்போகிறார்கள். அதற்கு நீ இடமளிக்கலாமோ? என்று கருத்து. (தவஸாமர்த்யம் நிந்தந்த: தவ அஹிதா: வதிஷ்யந்தி) பீஷ்மர், துரோணர், கிருபர், சல்யர் போன்ற சூரர்களும் ஆசார்யர்களுமான மஹனீயர்கள் ஏதாவது சொன்னாலும் பொறுத்துக்கொள்ளலாம். உண்மையான சூரத்தன்மையற்றவர்களாய், மஹாசூரர்களாகத் தங்களைத் தாங்களே அபிமானித்திருப்பவர்களாய், பேராபகாரம் புரிந்தவர்களான இவர்கள் பேசும் பற்பல கீழ்மைவசவுகளை எப்படிப் பொறுத்துக் கொள்ளப்போகிறாய் என்று கருத்து. (தவ ஸாமர்த்யம்) திட்டுவதைப் பொறுத்துக்கொள்ள நீ தெருப்போக்கனல்லவே! அல்லது யோகியல்லவே! மஹாவீரனையிற்றே. அப்படிப் பட்ட உன் திறமையையன்றோ குறைத்துப் பேசப்போகிறார்கள்!*

॥ भा ॥ अतशूरस्यात्मना परेषां हननमात्मनो वा परैर्हननमुभय
मपि श्रेयसे भवतीत्याह—

हतो वा प्राप्स्य[से]सि स्वर्गं जित्वा वा भोक्ष्यसे महीम्।
तस्मादुत्तिष्ठ कौन्तेय युद्धाय कृतनिश्चयः॥ ३७॥

37. ஹதோ வா ப்ராப்ஸ்ய[ஸே]ஸி ஸ்வர்க்க₃ம் ஜித்வா வா
பே₄ாக்ஷ்யஸே மஹீம்।
தஸ்மாது₃த்திஷ்ட₂ கௌந்தேய யுத்₃த₄ாய க்ருதநிச்சய: ||

கௌந்தேய—குந்திபுத்திரனே! ஹதோ வா (தர்மயுத்தத்தில்) கொல்லப்பட்டாலும், ஸ்வர்க்க₃ம்—மோக்ஷத்தை.

---

34. இன்றிகலிற் பொன்றினீ யிந்திரலோ கம்பெறுதி
வென்றியுறி லாளுதியிம் மேதினியை—யென்றிதனை
யோர்ந்ததனாற் கௌந்தேயா வுற்றெழு நீ வெஞ்சமத்துத்
தீர்ந்தமனத் தோடுந் தெளிந்து.

---

அதற்குமேலென்ன? எனில்: (ததோ து:க்க₂தரம் நு கிம்) அதைக்காட்டிலும் துன்பத்தைத் தருவது வேறெது உள்ளது? (தத:) பேசத்தகாத பேச்சுக்களைக் காட்டிலும். அவற்றைக் கேட்பதைக் காட்டிலும் என்று ப₂லிதம் (து₃:க்க₂தரம்) துக்கமாவது பிரதிகூலத்தன்மை; அதிகமான பிரதிகூலத் தன்மையை உடையது து:க்க₂தரம் எனப்படுகிறது. (ததோ து₃:க்க₂தரம் கிம் நு) கீழ்மை வசவுகளைக் கேட்பதைக் காட்டிலும் கொடிய துன்பத்தை விளைக்கக்கூடியது வேறென்ன இருக்கிறது? "மரணாத₃திரிச்யதே" [2-34] [அகீர்த்தி மரணத்திலும் கொடிது] என்று நான் சொன்னதை நீயும் இசைந்துதானே தீரவேண்டும். காண்டீவத்தின் திறமையை நிந்தித்த தமயனை தர்மபுத்திரனையு மன்றோ பின்பொருகாலத்தில் நீ கொல்ல முற்படப்போகிறாய், அப்படிப்பட்ட உன் திறமையையே துரியோதனாதியர் இகழ்வதைக் கேட்டிருப்பதைக் காட்டிலும், மரணமே சிறந்ததெனப் பின்பு நீயே நினைப்பாய். ஆகையால், இப்போது நீ திரும்பினாலும், பின்பு அவர்களுடைய பழிச்சொல்லைக் கேட்டுத் துன்புற்று மறுபடியும் போர்புரிய வருவாய். அந்தவிடப் பழிச்சொல்லுக்கே இடங் கொடாமல் இப்போதே போர்புரிவது நல்லது என்று கருத்து. 36.

ப்ராப்ஸ்யஸே—அடையப்போகிறாய்; ஜித்வா வா—போரில் ஜயித்தாலும், மஹீம்—பூமியை, போக்ஷ்யஸே—அநுபவிக்கப் போகிறாய்; தஸ்மாத்—ஆகையால், யுத்தாய—போரின் பொருட்டு, க்ருதநிச்சய:—உறுதியுடையவனாய், உத்திஷ்ட—எழுந்திருப்பாயாக.

भा॥ धर्मयुद्धे परैर्हतश्चेत्तत एव परमनिःश्रेयसं प्रप्स्यसि; परान्वा हत्वा अकण्टकं राज्यं भोक्ष्यसे। अनभिसंहितफलस्य युद्धाख्यस्य धर्मस्य

---

கௌந்தேயா—குந்தீபுத்திரனே! இன்று—[illegible]. இகலில்—போரில், நீ பொன்றில்—நீ இறந்தாலும், இந்திரலோகம் பெறுதி—ஐச்வர்யமுடையவனென்கையாலே இந்திரன் எனப்படும் பரமாத்மாவின் உலகம் பெறுவாய்; வென்றியுறில்—(போரில்) ஜயித்தாயாகில், இம்மேதினியை ஆளுதி—இந்த பூமியை ஆள்வாய்; என்று இதனை ஓர்ந்து—என்னும் இவ்விஷயத்தை ஆராய்ந்து, அதனால்—அது காரணமாகவே, நீ—நீ, வெஞ்சமத்து—போரில், தீர்ந்தமனத்தோடும்—உறுதிகொண்ட நெஞ்சத்தோடும், தெளிந்து—தெளிவுற்று, உற்று எழு—உறுதியுடன் எழுந்திருப்பாயாக.

---

37. "யச்ச்ரேய: ஸ்யாந் நிச்சிதம் ப்ரூஹி" [2-7] என்று 'எனக்கு எது உறுதியாகச் சிறந்ததோ அதைச் சொல்லு' என்ற அர்ஜுனனுக்கு உறுதியாகச் சிறந்த பொருளை உபதேசிக்கிறான் இந்த ச்லோகத்தில். 'சூரனாயிருப்பவன் போரில் தான் பிறரைக் கொன்றாலும், தான் பிறரால் கொல்லப்பட்டாலும் இரண்டுமே சிறந்த பலனையளிக்குமேயொழியத் தாழ்வையளிக்காது; ஆகையால் போர் புரிய எழுந்திரு' என்கிறான். (ஹதோ வா) தர்மயுத்தத்தில் பிறரால் நீ கொல்லப்பட்டாயாகில், (ப்ராப்ஸ்யஸி ஸ்வர்க்கம்) "யந்ந து:க்கேந ஸம்பிந்நம்" என்கிறபடியே என்றுமே துன்பம் கலக்கப்பெறாததாகையாலே ஸ்வர்க்கசப்தத்திற்கு முக்கியார்த்தமான மோக்ஷத்தைப் பெறுவாய். மோக்ஷோபாயத்தை உபதேசிக்கப்போகும் ப்ரகரணமாகையாலும், "ராஜ்யம் ஸுராணாமபி சாதிபத்யம்" [2-8] என்று தேவலோகத்தை அர்ஜுனன் பொருட்படுத்தாமையாலும், இங்கு ஸ்வர்க்கசப்தம் மோக்ஷத்தைக் குறிப்பதாகக் கொள்வதே பொருந்தும். மோக்ஷஸ்தானமாகிற பரமபதத்தைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்

परमनिःश्रेयसोपायत्वात् तच्च परमनिःश्रेयसं प्राप्स्यसि। तस्माद्युद्धायोद्योगः परमपुरुषार्थलक्षणमोक्षसाधनमिति निश्चित्य तदर्थमुत्तिष्ठ। कुन्तीपुत्रस्य तवैतदेव युक्तमित्यभिप्रायः ॥ ३७॥

---

"ஸ ஏதேந ப்ராஜ்ஞேந ஆத்மநா அஸ்மால்லோகாதுத்க்ரம்ய அமுஷ்மிந் ஸ்வர்க்கே லோகே ஸர்வாந் காமாநாப்த்வா அம்ருதஸ் ஸமபவத்" [ஐதரேய 3-4] [அந்த ஜீவன் பரமபுருஷனாலே இவ்வுலகிலிருந்து கிளம்பி, இந்த ஸ்வர்க்க (மோக்ஷ) லோகத்தில், எல்லாக் காமங்களையும் அடைந்து முக்தனானான்.] "அநந்தே ஸ்வர்க்கே லோகே ஜ்யேயே ப்ரதிதிஷ்டதி" [கேந 4-9] [அழிவற்றதும், மிகச்சிறந்ததுமான ஸ்வர்க்க (மோக்ஷ) லோகத்தில் நிலைநிற்கிறான்] "ஸ்வர்க்கலோகா அம்ருதத்வம பஜந்தே" [கட 1-1-13] [ஸ்வர்க்கலோகத்தை அடைபவர்கள் மோக்ஷமடைகிறார்கள்] முதலான விடங்களில் மோக்ஷ லோகத்தையே வேதாந்தவாக்கியங்கள் ஸ்வர்க்கலோகமாகக் குறித்தனவன்றோ. (ஜித்வா வா போக்ஷ்யஸே மஹீம்) மஹாரதர்களான பீஷ்ம த்ரோணாதிகளைக் கொன்று போரில் ஜயித்தாயாகில்' எதிரிகளாகிற இடரற்ற பூமியை அநுபவிக்கப் போகிறாய். இந்த ராஜ்யம் உனக்கு ஒரு பொருட்டல்லவாகிலும், பலனில் விருப்பமற்று யுத்தம் என்னும் மோக்ஷஸாதனத்தை நீ அநுஷ்டிக்கையால் ஆநுஷங்கிகமான ராஜ்ய போகத்திற்குப் பிறகு மோக்ஷத்தையும் அடையப்போகிறாய். ஆகையால் உன்னைக்குறித்து நீ வருந்த வேண்டா; பீஷ்மாதிகளுக்கும் இதே நியாயமாகையாலே அவர்களைக் குறித்தும் நீ வருந்தவேண்டா என்று கருத்து. (தஸ்மாத் யுத்தாய க்ருதநிச்சய: உத்திஷ்ட) எப்படியானாலும் நீ மோக்ஷத்தையே அடைவாயாகையாலே, மோக்ஷஸாதனமான யுத்தத்தைச் செய்தே தீர வேண்டும் என்னும் உறுதியுடன் எழுந்திருப்பாயாக. (கௌந்தேய) குந்தீபுத்ரனன்றோ நீ! சிங்கக்குட்டி மான்குட்டியைப் போல் நடக்கலாமோ? க்ஷத்ரியாபுத்திரன் மரணத்தைக்கண்டு நடுங்கலாமோ? *"ம்ருதம் ஸூதே க்ஷத்ரியா ராஜபுத்ரீ" [பார-த்ரோண 77-18] க்ஷத்ரிய வம்சத்தைச் சேர்ந்த ராஜபுத்ரி பெற்றெடுக்கும்போதே செத்தபிள்ளையைப் பெற்றெடுக்கிறாள்.] என்கிறபடியே உன் தாய் உன்னைப் பெறும்போதே எந்த நிமிஷத்திலும் தர்மயுத்தத்தில் உன்னைப் பலி கொடுக்கத் துணிந்தன்றோ பெற்றிருக்கிறாள். அப்படிப்பட்ட மஹா பாக்யவதியான என் அத்தைக்குப் பிறந்த நீ தர்மயுத்தமாகிற பரம தர்மத்தைக் கைவிடலாகாது என்று கருத்து. 37.

---

* (பா) "சூரம் ஸூதே..." வீரனைப் பெறுகிறாள் க்ஷத்ரியை என்று பொருள்.

॥ भा ॥ मुमुक्षोर्युद्धानुष्ठानप्रकारमाह—

सुखदुःखे समे कृत्वा लाभालाभौ जयाजयौ।
ततो युद्धाय युज्यस्व नैवं पापमवाप்ஸ்யसि ॥

38. ஸுக₂து₃:க்கே₂ ஸமே க்ருத்வா லாப₄ாலாபௌ₄ ஜயாஜயௌ।
தவதா யுத்₃த₄ாய யுஜ்யஸ்வ நைவம் பாபமவாப்ஸ்யஸி ॥

ஸுக₂து₃:க்கே₂—*இன்பதுன்பங்களை*, ஸமே—*ஸமமாக*, க்ருத்வா —*எண்ணி*, லாப₄ாலாபௌ₄ —(*அவ்வின்பதுன்பங்களுக்குக் காரணமான*) *விரும்பியபொருள் கிடைப்பதையும், கிடையாமையையும்*, ஜயாஜயௌ (*அதற்குக் காரணமான*) *வெற்றிதோல்விகளையும்*, (ஸமௌ க்ருத்வா—*ஸமமாக நினைத்து*), தத:—*அதற்குப்பின்*, யுத்₃த₄ாய—*யுத்தத்தின் பொருட்டு*, யுஜ்யஸ்வ—*முன்னிற்பாயாக:* ஏவம்—*இவ்வண்ணமாகப் போர் புரிந்தாயாகில்*, பாபம்—*துன்பமயமான ஸம்ஸாரத்தை*, ந அவாப்ஸ்யஸி—*அடையமாட்டாய்.*

---

35. இன்பந்துன் பம்பே றிழவு சயாசயங்க
ளுன்பந்தத் தொக்க வுணர்வெய்தி—வன்பந்தத்
தெவ்வகையார் வெஞ்சமத்தைச் சேர்வுறு நீ பாவத்தை
யிவ்வகையான் மேலணையா யிங்கு.

இன்பம் துன்பம்—*இன்பதுன்பங்களையும்*, பேறு இழவு—(*அவற்றுக்குக் காரணமான*) *விரும்பிய பொருள்களைப் பெறுவதையும் இழப்பதையும்* சயாசயங்கள் —(*அவற்றுக்குக் காரணமான*) *வெற்றிதோல்விகளையும்*, உன் பந்தத்து ஒக்க உணர்வு எய்தி—(*அவை விஷயமான*) *உன் பற்றில் ஒரேமாதிரியான அறிவை அடைந்து*, வன் பந்தம் தெவ்வகையார்—*கோபம் முதலிய கொடிய நினைவுகளையுடைய எதிரிகளோடு*, வெம் சமத்தை—*கொடியபோரை*, சேர்வுறு—*அடைவாயாக*, இங்கு இவ்வகையால்—*இங்கு இப்படிச் செய்தாயாகில்*, நீ—*நீ*, பாவத்தை—*துன்பமயமான ஸம்ஸாரத்தை*, மேல்—*இனிமேல்*, அணையாய்—*அடையமாட்டாய்.*

॥ भा ॥ एवं देहातिरिक्तमस्पृष्टसमस्तदेहस्वभावं नित्यमात्मानं ज्ञात्वा युद्धे चावर्जनीयशस्त्रपातादिनिमित्तसुखदुःखार्थलाभालाभजयपराजयेष्वविकृतबुद्धिः स्वर्गादिफलाभिसन्धिरहितः केवलकार्यबुद्ध्या युद्धमारभस्व ।

---

38. இதுவரையில் "அஸ்தா2நஸ்நேஹ காருண்ய த4ர்மாத4ர்மதி4யாகுலம்" என்று ஆளவந்தார் கீ3தார்த்தஸங்க்3ரஹத்தில் அருளிச் செய்தபடியே தகாதவிடத்தில் அன்பும், வருத்தமும், தர்மத்தை அதர்மமென்று நினைக்கும் மயக்கமும் போக்கடிக்கப்பட்டது. இனி, தர்மவிஷயமான உபதேசத்தைத் தொடங்குகிறான். முற்கூறியபடி தேஹத்தைக் காட்டிலும் வேறுபட்டதாய், தேஹத்தின் தன்மைகள் எதனாலும் தொடப்படாததாய், நித்யமானதான ஆத்மாவை அறிந்து அர்ஜுனனைப் போன்ற க்ஷத்ரியன் மோக்ஷஸாதனமாக ஸ்வதர்மமான யுத்தத்தை அநுஷ்டிக்கவேண்டிய முறையைக் காட்டுகிறான் இந்த ச்லோகத்தில்: (ஸுக2து3:க்2கே2 ஸமே க்ருத்வா) போரிலே தவிர்க்கவொண்ணாத ஆயுதங்கள் முதலானவற்றால் ஏற்படும் ஸுகதுக்கங்களை ஸமமாக எண்ணவேண்டும்; (லாபா4லாபௌ4) இன்பதுன்பங்களில் சிலவற்றுக்குக் காரணமான தன லாபம், தன நஷ்டம் ஆகியவற்றையும் ஸமமாக எண்ணவேண்டும்; (ஜயாஜயௌ) முற்கூறிய லாபாலாபங்களுக்குக் காரணமான வெற்றி தோல்விகளையும் ஸமமாக எண்ணவேண்டும். (ஸமே க்ருத்வா) மிகவும் வேறுபட்ட ஸுகதுக்கம் முதலானவற்றை ஸமமாக நினைப்பது எப்படி எனில்: ஸுகமும், லாபமும், ஜயமும் ஏற்படும்போது ஆனந்தத்தையும், துக்கமும், நஷ்டமும், தோல்வியும் ஏற்படும்போது வருத்தத்தையும் அடையாமலிருப்பதே இவற்றை ஸமமாக நினைப்பதாகிறது. ராஜ்யம் முதலான ப்ராக்ருதமான பலன்களை அபேக்ஷிப்பவனாயிருந்தால் இத்தகைய ஸமபுத்தி தேவையில்லை; அர்ஜுனன் அல்பமும் அஸ்திரமும் துக்கமிச்ரமுமான ராஜ்யம் முதலானவற்றை வெறுத்து மேலான பலனைக் கேட்க விரும்பிக் கண்ணனைச் சரணடைந்தவனாகையாலே, மோக்ஷஸாதனமான கர்மயோகத்துக்கு அவச்யாபேக்ஷிதமான ஸமபுத்தியை முதலில் உபதேசிக்கிறான். "கிம் நோ ராஜ்யேந கோ3விந்த3" [1-32] "ராஜ்யம் ஸுராணாமபி சாதி4பத்யம்" [2-8] என்று ராஜ்யம் முதலான இவ்வுலகப் பலன்களிலும், ஸ்வர்க்கம் முதலான அற்பமான மறுமைப்பலன்களிலும் வெறுப்பைக்காட்டி, "யச்ச்2ரேய: ஸ்யாந்நிச்சிதம் ப்3ரூஹி தந்மே சிஷ்யஸ்தேஹம சாதி4 மாம் த்வாம் ப்ரபந்நம்" [2-7] என்று மேலான பலனைக்கேட்க

एवं कुर्वाणो न पापमवाप्स्यसि—पापं—दुःखरूपं संसारं नावाप्स्यसि; संसारबन्धान्मोक्ष्यस इत्यर्थः ॥ ३८ ॥

---

விரும்பிக் கண்ணனைச் சரணமடைந்தவனாகப் போர் புரிந்தான். (ஸுகது:கே) யுத்தத்திற்கு வெற்றி முதலானவை பலன்களல்ல: அது நமக்கு ஸ்வதர்மமாகையாலே நாம் செய்தே தீரவேண்டியது என்னும் நினைவாலேயே. (யுத்தாய) யுத்தத்தின் பொருட்டு. தாதர்த்யத்தைக்காட்டும் நான்காம் வேற்றுமையாலே, யுத்தத்தின் பொருட்டே. நீ யுத்தத்தைச் செய்யவேண்டுமேயொழிய வீரஸ்வர்க்கம் வெற்றி முதலான பலன்களைக் கருதிச் செய்யக்கூடாது என்று கருத்து. “கர்மண்யேவாதிகாரஸ்தே மா பலேஷு கதாசந” [2 47] [கர்மத்தில் தான் உனக்கு அதிகாரமேயொழியப் பலத்தில் ஒருபோதும் அதிகாரமில்லை] முதலானவிடங்களில் மேலே இது விவரிக்கப்பட்டிருக்கிறது. (யுத்தாய யுஜ்யஸ்வ) யுத்தத்தின் பொருட்டே. அதைத் தொடங்குவாய். (ஏவம்) இப்படி ஸாம்யபுத்தியோடு யுத்தத்தைச் செய்தாயாகில்; (பாபம் ந அவாப்ஸ்யஸி) பாபம் எனப்படும் துன்பமயமான ஸம்ஸாரத்தை நீ அடையமாட்டாய்; பாபம் என்று பாபபலமான ஸம்ஸாரதுன்பத்தைச் சொல்லுகிறது. ஸம்ஸாரக்கட்டிலிருந்து விடுபடுவதாகிற மோக்ஷத்தை அடைவாய் என்று கருத்து. இங்கு ‘பாபம்’ என்றது பீஷ்மாதிகளைக் கொல்லுவதால் ஏற்படக்கூடிய பாபமாகக்கூடாதோ? எனில்: இன்பதுன்பங்களில் ஸாம்யபுத்தியில்லாமல், தேஹாத்மவிவேகத்தோடும், யுத்தம் ஸ்வதர்மம் என்னும் நினைவோடும் மாத்திரம் போர்புரிந்தாலே பீஷ்மாதிகளைக்கொல்லுவதால் பாபம் ஏற்படாது. இங்கு ஸாம்யபுத்தியோடு போர்புரிந்தால் நசிப்பதாகக்கூறப்படும் பாபம், பீஷ்மாதிவதத்தால் ஏற்படக்கூடிய பாபத்திலும் மேற்பட்டதாய், கர்மயோகம் முதலான மோக்ஷஸாதனத்தாலேயே அழிக்கப்படும் புண்யபாபரூபமான ஸகல கர்மங்களுமேயாகமுடியும். “ஸோம்ருதத்வாய கல்பதே” [2-15] என்றுஸமதுக்கஸுகனை இவ்வதிகாரியைக்குறித்து முன்னமே சொல்லுகையாலே இனியொருஸம்ஸாரத்துன்பத்தை அடையாமலிருப்பதோடன்றியில், உள்ளதான அத்துன்பத்திலிருந்து விடுபட்டு மோக்ஷத்தையும் அடைவாய் என்று தாத்பர்யம். (நைவம் பாபமவாப்ஸ்யஸி) என்று கர்மயோகத்திற்கு மோக்ஷபலகரணத்வரூபமான மோக்ஷஸாதனத்வம் காட்டப்படுகிறது. கர்மயோகம், ஜ்ஞானபக்தியோகங்களை விளைத்தே மோக்ஷஸாதனமாகின்றதாகையால் இது பரம்பரயா மோக்ஷஸாதனமாகிறது என்று கருத்து. 38.

॥ भा ॥ एवमात्मयाथात्म्यज्ञानमुपदिश्य तत्पूर्वकं मोक्षसाधनभूतं कर्मयोगं वक्तुमारभते—

एषा तेऽभिहिता साङ्ख्ये बुद्धिर्योगे त्विमां शृणु।
बुद्ध्या युक्तो यया पार्थ कर्मबन्धं प्रहास्यसि ॥ ३९ ॥

39. ஏஷா தே(அ)பி$_4$ஹிதா ஸாங்க்$_2$யே
புத்$_3$தி$_4$ர் யோகே த்விமாம் ச்ருணு ।
பு$_3$த்$_3$த்$_4$யா யுக்தோ யயா பார்த்த$_2$
கர்மப$_3$ந்த$_4$ம் ப்ரஹாஸ்யஸி ॥

பார்த்த$_2$—*பார்த்தனே!* ஸாங்க்$_2$யே—*அறியத்தக்க ஆத்ம தத்வ விஷயத்தில்,* ஏஷா பு$_3$த்$_3$தி$_4$:—*இந்த புத்தி,* தே *உனக்கு,* அபி$_4$ஹிதா — *உபதேசிக்கப்பட்டது.* யோகே$_3$து — *இனி கர்மங்களுக்குச் சொல்லப்படும் புத்தியோக விஷயத்தில்.* இமாம—*(அடுத்தபடி சொல்லவிருக்கும்) புத்தியை.* ச்ருணு—*கேட்பாயாக;* யயா பு$_3$த்$_3$த்$_4$யா—*எந்த புத்தியோடு.* யுக்த:—*கூடிய நீ.* கர்மப$_3$ந்த$_4$ம்—*கர்மத்தினால் ஏற்படும் ஸம்ஸாரபந்தத்தை,* ப்ரஹாஸ்யஸி—*விடுவாயோ (அதைக்கேள்;)*

---

36. சாங்கியத்தின் தன்மையின்மேற் புந்தித் தகவுரைத்தே
னீங்குகன்ம யோகத் தியல்பிலிதன்—பாங்கியம்பக்
கேளாயிப் புத்தியினைக் கிட்டவினைக் கட்டினைநீ
மூளாம னிற்றி முயன்று.

சாங்கியத்தின் தன்மையின் மேல் *ஆத்ம ஸ்வரூபத்தைப் பற்றி,* புந்தி தகவு உரைத்தேன்—*அறியவேண்டிய அறிவின் பெருமையை உரைத்தேன்;* ஈங்கு—*இனி,* கன்மயோகத்து இயல்பில்—*கர்மயோகஸ்வரூபத்தில்,* இதன் பாங்கு—*(அறிய வேண்டிய) புத்தியின் பெருமையை,* இயம்ப கேளாய்—*நான் சொல்லக் கேளாய்;* இப்புத்தியினை முயன்று கிட்ட—*இந்த புத்தியை முயற்சிசெய்து அடைந்தாயாகில்,* வினைக்கட்டினை—*கர்மங்களால் ஏற்படும் ஸம்ஸாரபந்தத்தை,* நீ மூளாமல் நிற்றி—*நீ அடையமாட்டாய்.*

॥ भा ॥ सङ्ख्या बुद्धिः। बुद्ध्याऽवधारणीयमात्मतत्त्वं साङ्ख्यम्। ज्ञातव्ये आत्मतत्त्वे तज्ज्ञानाय या बुद्धिरभिधेया *न त्वेवाहम् इत्या-

---

39. இவ்வத்தியாயத்தில் முதல் பத்து ச்லோகங்கள் கீதா சாஸ்திரத்திற்கு உபோத்காதமான முதலத்தியாயத்தின் சேஷமாய் அமைந்தன; அதற்குப்பின் முப்பதாவது ச்லோகம் வரையில் தேஹத்தைக்காட்டிலும் வேறுபட்ட ஆத்மாவைப்பற்றிய அறிவு உபதேசிக்கப்பட்டது; அர்ஜுனன் கொண்டிருந்த வருத்தம் தகாதது (அஸ்தான காருண்யம) என்று காட்டப்பட்டது. அதற்கு மேல் நாலு ச்லோகத்தாலே தர்மத்தில் அதர்மமென்னும் மயக்கம் போக்கடிக்கப்பட்டது; அதற்குமேல் மூன்று ச்லோகங்களாலே தகாதவிடத்தில் அன்பு (அஸ்தானஸ்நேஹம்) போக்கடிக்கப்பட்டது. சென்ற ச்லோகத்தில் மோக்ஷமடைய விரும்புகிறவன் ஸ்வதர்மமான யுத்தத்தை எப்படி அனுஷ்டிக்கவேண்டுமென்று கூறப்பெற்றது. இவ்வளவாலும் அர்ஜுனன் வருந்தலாகாது என்று நிரூபிக்கப் பல ஹேதுக்கள் காட்டப்பட்டன. இந்த ஹேதுக்களில் முக்கியமானது முதலில் உபதேசிக்கப்பட்ட ஆத்மாவைப்பற்றிய உண்மையறிவாகும். இனி. இவ்வறிவை முன்னிட்டுக்கொண்டு மோக்ஷ ஸாதனமாயிருக்கும் கர்மயோகத்தை உபதேசிக்கத்தொடங்குகிறான். ஆத்மஜ்ஞானத்தை உபதேசித்தபிறகு ஆத்மாவைச் சிந்திப்பதாயிருக்கும் ஞானயோகத்தை உபதேசிப்பதே பொருத்தமாயினும், இக்கர்மயோகம் கைவந்தபிறகே ஜ்ஞானயோகநிஷ்டை ஏற்படுமாகையாலே கர்மயோகத்தை முதலில் கூறுகிறான். மேலே, இக்கர்மயோகத்தினால் உண்டாகும் ஞானயோகத்தை "ப்ரஜஹாதி யதா காமாந்" [2-55] என்று தொடங்கி உபதேசிக்கப்போகிறான். இனி ப்ரதானமாக விளக்கவிருக்கும் கர்மயோகத்தைப்பற்றிய உபதேசத்திற்கு இந்த ச்லோகம் பீடிகையாயிருக்கிறது. (ஸாங்க்யே-யோகே) ஸாங்க்யம் யோகம் என்று வேதவிருத்தமான ஸாங்க்யமதமும் யோகமதமும் குறிக்கப்படுவதாகச் சிலர் மயங்கக்கூடும்; முன்னும் பின்னும் அம்மதங்களைப்பற்றிய ப்ரஸ்தாவமேயில்லையாகையால் அப்படிப்பொருள் கொள்வது தவறு. உண்மைப்பொருள் இனி விளக்கப்படும்: (ஸாங்க்யே) "புத்திர் மதிச்ச மேதா ஸங்க்யா ஸம்வித்திருபலப்தி:" என்று நிகண்டுகளிலே ஸங்க்யாசப்தமானது புத்திசப்தத்தோடு பர்யாயமாக (ஒரே பொருளையுடையதாகப்) படிக்கப்படுகையால் ஸங்க்யை என்று புத்தியைச் சொல்லுகிறது. ஸாங்க்யம் என்று ஸங்க்யையாகிற புத்தியினால் அறியத்தக்கதான

रभ्य *तस्मात्सर्वाणि भूतानि न त्वं शोचितुमर्हसि इत्यन्तेन, सैषा तेऽभिहिता। आत्मज्ञानपूर्वकमोक्षसाधनभूतकर्मानुष्ठाने यो बुद्धियोगो वक्तव्यः, स इह योगशब्देनोच्यते। *दूरेण ह्यवरं कर्म बुद्धियोगात् (२.४९) इति हि वक्ष्यते। तत्र योगे या बुद्धिर्वक्तव्या, तामिमामभिधीयमानां

---

ஆத்மதத்வம் சொல்லப்படுகிறது. (ஸாங்க்₂யே ஏஷா பு₃த்₃தி₄: தே அபி₄ஹிதா) ஆத்மதத்வவிஷயத்தில் ஆத்மஸ்வரூபஜ்ஞானத்தின் பொருட்டு யாதொரு புத்தியானது அறியவேண்டியதோ அந்த புத்தி "ந த்வேவாஹம்" [2-12] என்று தொடங்கி, "ந த்வம் சோசிதுமர்ஹஸி" [2-30] என்பதீறாக உனக்கு உபதேசிக்கப்பட்டது. இங்கு முன்னால் ஆத்மதத்வஜ்ஞானமே உபதேசிக்கப்பட்டதாகை யால் ஸாங்க்யசப்தத்திற்கு ஆத்மதத்வமென்றே பொருளாகக் கடவது. "புருஷம் நிர்க்கு₃ணம் ஸாங்க்₂யம்" [மந்த்ரிகோபநிஷத்] என்று அறியத்தக்கவனான பரமாத்மா ஸாங்க்யசப்தத்தால் உபநிஷத்தில் சொல்லப்பட்டதுபோலே இங்கும் அறியத்தக்கவனான ஆத்மாவை அந்த சப்தத்தால் குறிக்கக் குறையில்லை. "ஜ்ஞாந யோகே₃ந ஸாங்க்₂யாநாம்" [3-3] என்றவிடத்திலும் ஸாங்க்யசப்தத் திற்கு அறிவு என்னும் பொருளைக்கொண்டே ஜ்ஞாநயோக நிஷ்டர்கள் ஸாங்க்யர்கள் எனப்பட்டனர். ப்ரகரணங்கள் வேறு படுகையாலே ஸாங்க்யசப்தம் இங்கு அறியத்தக்க ஆத்மதத்வத்தை யும், அங்கு அறிவோடு கூடிய ஜ்ஞாநயோக நிஷ்டர்களையும் குறிக்கிறது. ப்ரகரணம் முதலானவை வேறுபடுகையாலே ஒரே சப்தம் வெவ்வேறு அர்த்தங்களைக் குறிப்பதை கீதையிலும், மற்ற சாஸ்திரங்களிலும் வேறிடங்களிலும் காணலாம். (யோகே₃) புத்தி யோகவிஷயத்தில். ஆத்மஜ்ஞானத்தை முன்னிட்டுக்கொண்டு மோக்ஷஸாதனமான கர்மங்களை அனுஷ்டிப்பதில் சொல்லத்தக்க தான புத்தியோகம் யாதொன்றுண்டோ அது இங்கு யோகம் எனப்படுகிறது. "தூ₃ரேண ஹ்யவரம் கர்ம பு₃த்₃தி₄யோகா₃த்" [2-49] [புத்தியோடு கூடிய கர்மத்தைக் காட்டிலும், அந்த புத்தியற்ற கர்மம் மிகவும் தாழ்ந்தது] என்று அடுத்தபடியாக புத்தியோகம் என்றே கூறப்பட்டதன்றோ. (யோகே₃ து இமாம் பு₃த்₃தி₄ம் ச்ருணு) அந்த யோகவிஷயத்தில் சொல்லவேண்டிய யாதொரு அறிவு அடுத்தபடி சொல்லப்படப்போகிறதோ அதைக்கேள். கர்மங்களை எந்த புத்தியோடு கூட அனுஷ்டிக்கவேண்டுமோ, அதுவிஷயமாக

शृणु, यया बुद्ध्या युक्तः कर्मबन्धं प्रहास्यसि; कर्मणा बन्धः कर्मबन्धः, संसारबन्ध इत्यर्थः ॥ ३९ ॥

॥ भा ॥ वक्ष्यमाणबुद्धियुक्तस्य कर्मणो माहात्म्यमाह—

नेहाभिक्रमनाशोऽस्ति प्रत्यवायो न विद्यते।
स्वल्पमप्यस्य धर्मस्य त्रायते महतो भयात् ॥ ४० ॥

40. நேஹாபி4க்ரமநாசோऽஸ்தி ப்ரத்யவாயோ ந வித்3யதே।
ஸ்வல்பமப்யஸ்ய த4ர்மஸ்ய த்ராயதே மஹதோ ப4யாத் ॥

இஹ—*கர்மயோகத்தில்,* அபி4க்ரமநாச:—*தொடங்கியதற்கு அழிவு,* ந அஸ்தி *இல்லை; (தொடங்கி விட்டாலும்)* ப்ரத்யவாய:—*தோஷம்,* ந வித்3யதே—*கிடையாது;* அஸ்ய த4ர்மஸ்ய—*கர்மயோகம் எனப்படும் இந்த தர்மத்தினது,* ஸ்வல்பம அபி-*சிறு பகுதியும்,* மஹத:-*பெரிதான,* ப4யாத்-*ஸம்ஸாரபயத்திலிருந்து,* த்ராயதே—*காப்பாற்றுகிறது.*

---

37. *செய்தவறங் குன்றுது சேரா தவஞ்சிறிது
மெய்தருமங் காக்கு மிகுபயத்திற்—பொய்தலிரும்
புத்திதீர் வொன்றுகும் புண்மைப் பலனினைவா
மத்திறந்தீர் வில்லா தவர்க்கு.

---

*அடுத்தபடி சொல்லப்போவதைக் கேள் என்று கருத்து. புத்தியோடு யோகம் (சேர்க்கை) கர்மங்களுக்கேயாகையாலே யோகசப்தத்திற்குக் கர்மயோகம் என்றே பொருள்கொண்டார் வெண்பாவில் வாதிகேஸரி ஸ்ரீயர். புத்தியோடு யோகத்தை (சேர்க்கையை) உடையதாகையாலேயே கர்மங்களுக்குக் கர்மயோகம் என்னும் பெயர் உண்டாகிறது என்பதும் குறிக்கொள்ளத்தக்கது. (பார்த்த) பார்த்த அறிவாளியான ப்ருதை எனப்படும் குந்தியின் புத்திரனே! (யயா புத்3த்4யா யுக்த:(த்வம்) கர்மப3ந்த4ம் ப்ரஹாஸ்யஸி) எந்த புத்தியோடு கூடியவனாக நீ கர்மபந்தத்தை விடுவாயோ, அந்த புத்தியைக் கேள் என்று கீழோடு அந்வயம். (கர்மப3ந்த4ம்) கர்மத்தினால் ஏற்பட்ட ஸம்ஸாரக்கட்டு இங்கு கர்மபந்தம் எனப்படுகிறது. நான் சொல்லப் போகும் புத்தியோடு கூட நீ யுத்தம் முதலான கர்மங்களைச் செய்தாயானால் ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்டு மோக்ஷமடைவாய் என்று ச்லோகத்தின் திரண்டபொருள்.* 39.

---

* 37-ம் பாட்டு 40, 41 ச்லோகங்களுக்கு மொழிபெயர்ப்பு.

॥ भा ॥ इह कर्मयोगे नाभिक्रमनाशोऽस्ति; अभिक्रमः—आरम्भः, नाशः—फलसाधनभावनाशः; आरब्धस्यासमाप्तस्य विच्छिन्नस्यापि न निष्फलत्वम्, आरब्धस्य विच्छेदे प्रत्यवायोऽपि न विद्यते। अस्य कर्मयोगाख्यस्य धर्मस्य स्वल्पांशोऽपि महतो भयात्—संसारभयात् त्रायते।

---

செய்த அறம் குன்றாது—(கர்மயோகத்தில்) செய்யப்பட்ட அம்சத்திற்கு அழிவில்லை; அவம் சிறிதும் சேராது (இடையில் விட்டாலும்) தோஷம் சிறிதும் சேராது. எய்(த) தருமம் மிகு பயத்தில் காக்கும்—அதனுடைய கர்மப்பகுதியும் பெரியதான ஸம்ஸாரபயத்திலின்றும் காக்கும்; பொய் தவிரும்

---

40. அடுத்தச்லோகத்திலிருந்து சொல்லப்போகும் கர்மயோகத்தின் பெருமையைச் சொல்லுகிறான் இந்த ச்லோகத்தில். அதனைச் சொல்லுவதற்கு முன் அதன் பெருமையைக் காட்டுகிறான். அதை அறிந்து அநுஷ்டிப்பதில் ஆவல் அதிகமாகுமல்லவா. அதற்காக மற்ற கர்மங்களைக் காட்டிலும் கர்மயோகத்தின் பெருமையைக் காட்டுகிறான். (இஹ) இந்தக் கர்மயோகவிஷயத்தில். (அபிக்ரமநாச: நாஸ்தி) தொடங்கி, விடப்பட்டாலும் நடந்த பகுதிக்கு அழிவில்லை; நடந்தபகுதிக்கு அழிவாவது பலனை கொடுக்கும் தன்மையின் அழிவு, நடந்த பகுதி பயனற்றதாகாது என்றபடி. தொடங்கிய கர்மயோகத்தை தேசகாலவைகுண்யாதிகளாலே முடிக்காமல் இடையிலேயே இவன் விட்டு விட்டாலும் செய்த அம்சமானது மேலே தானே கர்மயோகத்தைத் தொடர்ந்து முடிக்கச்செய்து பலனை அளிக்கும் என்று கருத்து. (ப்ரத்யவாய: ந வித்யதே) தொடங்கியதை இடையிலே இவன் விட்டதினால் தோஷமும் ஏற்படாது. (அஸ்ய தர்மஸ்ய ஸ்வல்பமபி மஹத: பயாத் த்ராயதே) கர்மயோகமாகிற இந்த தர்மத்தின் சிறுபகுதியும் பெரியதான ஸம்ஸார பயத்திலிருந்து காப்பாற்றும். ஒவ்வொரு பலன்களுக்கு ஸாதநமான மற்ற லௌகிகவைதிககர்மங்கள் இடையில் தடைபட்டால் அந்தந்தப் பலன்களை அளிக்காததோடன்றியில், தடைபட்டதால் தோஷமும் ஏற்படுகிறதென்று காண்கிறோம். இந்தக்கர்மயோகமோவெனில் தடைபட்டாலும் காலக்ரமத்தில் பலனையுமளிக்கும்; தோஷமும் ஏற்படாது என்பது இதன் பெருமை. "பார்த்த நைவேஹ நாமுத்ர விநாசஸ் தஸ்ய வித்யதே" [6-40] [பார்த்தனே! இங்கும் அங்கும் அவனுக்கு விநாசமில்லை] என்று இவ்விஷயம் மேலே

अयमर्थः *पार्थ नैवेह नामुत्र विनाशस्तस्य विद्यते (६.४०) इत्युत्तरत्र प्रपञ्चयिष्यते। अन्यानि हि लौकिकानि वैदिकानि च साधनानि विच्छिन्नानि न फलाय भवन्ति, प्रत्यवायाय च भवन्ति ॥ ४० ॥

॥ भा ॥ काम्यकर्मविषयाया बुद्धेर्मोक्षसाधनभूतकर्मविषयां बुद्धिं विशिनष्टि—

व्यवसायात्मिका बुद्धिरेकेह कुरुनन्दन।
बहुशाखा ह्यनन्ताश्च बुद्धयोऽव्यवसायिनाम् ॥ ४१ ॥

41. வ்யவஸாயாத்மிகா பு$_3$த்$_3$தி$_4$ரேகேஹ குருநந்த$_3$ந ।
ப$_3$ஹுஶாகா$_2$ ஹ்யநந்தாச்ச பு$_3$த்$_3$த$_4$யோऽவ்யவஸாயிநாம் ॥

குருநந்த$_3$ந—அர்ஜுநா! இஹ—கர்மயோக விஷயத்தில் வ்யவஸாயாத்மிகா—ஆத்ம ஸ்வரூபநிச்சயத்தை முன்னிட்ட பு$_3$த்$_3$தி$_4$:—அறிவு. ஏகா—(மோக்ஷரூபமான ஒரே பயனைப்பற்றிய தாகையால்) ஒருபடிப்பட்டது; அவ்யவஸாயிநாம்—ஆத்ம ஸ்வரூபநிச்சயமற்றவர்களுடைய, பு$_3$த்$_3$த$_4$ய:—(காம்யகர்மவிஷயமான) புத்திகள், அநந்தா: (கணக்கற்ற பலன்களைப்பற்றியவையாகையால்) கணக்கற்றவை. ப$_3$ஹுஶாகா$_2$:—(ஒவ்வொரு புத்தியும்) பல பிரிவுகளையுடையவை.

---

தீர்வு புத்தி ஒன்றாகும்—தேஹத்தைக்காட்டிலும் வேறுபட்ட ஆத்மாவைப்பற்றிய நிச்சயத்தை முன்னிட்ட கர்மயோக புத்தி (மோக்ஷமாகிய ஒரே பலனைப் பற்றியதாகையால்) ஒன்றாகும்; அத்திறம தீர்வு இல்லாதவர்க்கு—அத்தகைய ஆத்ம ஸ்வரூபநிச்சயமில்லாதவர்களுக்கு, நினைவு புன்மை பலவாம்—நினைவுகள் கிளைப்பிரிவுகளோடு கூடிப் பலவாயிருக்கின்றன.

---

விவரிக்கப்படப்போகிறது. நித்யநைமித்திக கர்மங்களிலும் அசக்தி முதலானவற்றால் சிறிது குறையேற்படலாம்; ஆனால் அவைகளும் புத்திபூர்வகமாகக் காரணமில்லாமல் விடப்பட்டால் பலனற்றவையாகவும், தோஷத்தை விளைப்பவையாயும் ஆகும். காம்யகர்மங்களில் அங்கம் சிறிது குறைந்தாலும் ஸ்வர்க்காதிபலன் இல்லாமல் போவதோடு ப்ரஹ்மராக்ஷஸனாவது முதலான தோஷமும் ஏற்படும்; கர்மயோகமோவெனில், இடையில் தடைபட்டாலும் தோஷமேற்படாததோடன்றியில் காலாந்தரத்தில் பலனளிக்கும் என்று கருத்து. 40.

॥ भा ॥ इह—शास्त्रीये सर्वस्मिन् कर्मणि व्यवसायात्मिका बुद्धिरेका—मुमुक्षुणाऽनुष्ठेये कर्मणि बुद्धिर्व्यवसायात्मिका बुद्धिः, व्यवसायो निश्चयः, सा हि बुद्धिरात्मयाथात्म्यनिश्चयपूर्विका। काम्यकर्मविषया

---

41. முன் ச்லோகத்தில் கர்மயோகத்தின் பெருமையைக்காட்டுவதற்காக, இக்கர்மயோகத்திற்கு மற்ற எல்லாக் கர்மங்களைக் காட்டிலும் சிறப்பு கூறப்பட்டது. அதற்கு முந்திய ச்லோகத்தில் கர்மயோகத்தை ஒரு குறிப்பிட்ட புத்தியோடு கூட அநுஷ்டிக்க வேண்டும் என்றும் அதை உபதேசிக்கப்போவதாகவும் ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டது. அந்தபுத்திக்குக் காம்யகர்ம விஷயமான புத்தியைக் காட்டிலும் ஹேதுவிஷயத்திலும் ப₂லவிஷயத்திலும் சிறப்பு காட்டப்படுகிறது இந்த ச்லோகத்தில். (இஹ) சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட எல்லாக்கர்மங்களிலும். சாஸ்திரங்களில் விதிக்கப்படாமலும், நிஷேதிக்கப்படாமலும் உள்ள லௌகிகமான கர்மங்கள் வெவ்வேறு பலன்களை உடையவையாகையால், மோக்ஷமாகிற ஓரே பலனுக்கு அவை ஸாதனமாகமாட்டா; ஆகையால் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களே மோக்ஷஸாதனமான கர்மயோகத்தில் அடங்கியுள்ளன என்று கொள்ளவேண்டும். யுத்தம் முதலான ஒவ்வொரு கர்மம் மாத்திரம் கர்மயோகமன்று; சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட நித்யகர்மங்கள், நைமித்திககர்மங்கள், (பலத்தில் விருப்பமற்ற) காம்யகர்மங்கள், அவற்றின் பல்வகைப்பிரிவுகள் ஆகிய எல்லாமே கர்மயோகத்தில் அடங்குகின்றன என்று கருத்து. (வ்யவஸாயாத்மிகா பு₃த்₃தி₄:) ஆத்மாவைப்பற்றிய நிச்சயத்தை முன்னிட்டுக்கொண்ட புத்தி. கார்யம் செய்யமுனைதல் முதலான பல பொருள்களைக் காட்டக்கூடியதாயினும், இங்கு வ்யவஸாயசப்தம் 'நிச்சயம்' என்னும் பொருளையுடையது. 'வ்யவஸாயாத்மிகா' என்னும் சப்தத்திற்கு 'நிச்சயரூபா' என்று பொருள்கொண்டால் புத்திசப்தத்தோடு புநருக்தி வருமாகையால், 'நிச்சயபூர்விகா' [நிச்சயத்தை முன்னிட்டுக் கொண்டது] என்றே பொருள் கொள்ள வேண்டும். முன் ப்ரகரணத்தையொட்டிப் பார்க்கும் போது, ஆத்மாவைப்பற்றிய உண்மையான அறிவே இங்கு 'வ்யவஸாயம்' [நிச்சயம்] எனப்படுகிறது என்று விளங்குகிறது. ஆக "ஆத்மாவைப் பற்றிய உண்மையான நிச்சயத்தை முன்னிட்டுக்கொண்ட கர்மயோக விஷயமான புத்தி" என்று பொருளாகிறது. காம்யகர்ம விஷயமான புத்தி ஆத்மாவைப்பற்றிய நிச்சயத்தை முன்னிட்டுக்

तु बुद्धिरव्यवसायात्मिका। तत्र हि कामाधिकारे देहातिरिक्तात्मास्तित्व-ज्ञानमात्रमपेक्षितम्, नात्मस्वरूपयाथात्म्यनिश्चयः। स्वरूपयाथात्म्या-

---

கொண்டிருப்பதில்லை; சுவர்க்கம் முதலானவற்றைக்குறித்து காம்ய கர்மங்களை அநுஷ்டிக்கும்போது தேஹத்தைக் காட்டிலும் வேருன நீண்டகாலம் வாழக்கூடிய ஆத்மாவொன்று உள்ளது என்னும் அறிவு இருந்தால் போதுமானது; அவ்வாத்மாவானது நித்யமானது ஜ்ஞாநாநந்தமயமாயிருப்பது, பகவானுக்கு சேஷப்பட்டிருப்பது முதலான உண்மையறிவு தேவையில்லை. மோக்ஷார்த்தமான கர்ம யோகமோவெனில் இவ்வுண்மையறிவை முன்னிட்டுக்கொண்டே யிருப்பது. இது கர்மயோக புத்திக்குக் காம்யகர்ம புத்தியைக் காட்டிலும் ஹேதுவில் உள்ள சிறப்பு.

இங்கு ஓராக்ஷேபம் எழுகிறது. "தேஹத்தை விட்டுச்சென்று அநுபவிக்கவேண்டிய சுவர்க்கம் மோக்ஷம் ஆகிய இரண்டில், மோக்ஷஸாதனத்திற்கு மாத்திரம் ஆத்மாவைப்பற்றிய உண்மை யறிவு வேண்டும் என்றும் ஸ்வர்க்கஸாதனத்திற்கு அது வேண்டாம் என்றும் கொள்ளக்காரணம் என்ன?" என்று. இவ்வாக்ஷேபம் பொருந்தாதென்பதை இனி நிரூபிப்போம்.

ஆத்மஜ்ஞானம் இல்லாவிடில் காம்யாநுஷ்டானம் பொருந்தாது என்று கூறமுடியாது. பொருந்தாமை மூன்று விதமாக வரக்கூடும்; அம்மூன்றும் இங்கு வாராது என நிருபிப்போமினி: (1) காம்ய கர்மத்தில் இச்சையே ஏற்படாமை. ஸுகரூபமான சுவர்க்கம் முதலான வற்றில் ஆத்மதத்வஜ்ஞானமிருந்தால்தான் விருப்பம் ஏற்படும் என்று கூறமுடியாது; அந்த ஜ்ஞானமில்லாவிடிலும் ஸுகரூப மானதில் தன்னடையே விருப்பம் ஏற்படலாம். (2) காம்யபலத்தின் ஸாதநத்தை அநுஷ்டிக்க முடியாமை. காம்யகர்மமான சுவர்க்கத்தை ஒருவன் விரும்புகிறுன்; அதன் ஸாதனமான ஜ்யோதிஷ்டோம யாகம் முதலானவற்றை அநுஷ்டிக்கவேண்டிய சரீரமும் உப கரணங்களும் அவனுக்கு இருக்கின்றன. மரணமடைந்த பின்னும் தன் ஆத்மா ஸ்வர்க்கலோகத்தில் வாழக்கூடியது என்பதை அறிந்திருக்கிறுன் அவன். அவன் ஸ்வர்க்கஸாதனத்தை அநுஷ்டிக்க இவ்வளவே போதுமானது. ஆத்ம தத்வஜ்ஞானமும் வேண்டும் என்னும் அவசியமில்லை ஆகையால் ஸாதநாநுஷ்டான அநுப பத்தியும் இல்லை. (3) பலாநுபவம் கூடாமை. ஜ்யோதிஷ்டோமம

निश्चयेऽपि स्वर्गादिफलार्थित्वतत्साधनानुष्ठानतत्फलानुभवानां संभवाद-

முதலான ஸாதனங்களை அநுஷ்டித்துவிட்டால், சுவர்க்கம் முதலான பலன் உண்டாவதற்கு வேறு காரணம் தேவையில்லை. அவற்றை அநுபவிக்கும் போதும், ராஜபோகம் முதலானவற்றிற்போலே, மின்னனைய நுண்ணிடையார் உருப்பசியும் மேனகையும் அன்னவர் தம் பாடலொடும் ஆடலவை ஆதரித்து, உம்பர் உலகாண்டு ஒரு குடைக்கீழ் உருப்பசிதன் அம்பொற்கலையல்குல் பெற்று அநுபவிக்கும் சுவர்க்கலோகபோகத்தை அநுபவிக்க ஆத்மதத்வஜ்ஞானம் தேவையில்லை. [ உண்மையில் இவ்வனுபவத்திற்கு அது விரோதியு மாகும். ] ஆகையால் பலாநுபவம் கூடாமையாகிற பொருந்தாமையு மில்லை. ஆக இவ்வளவால் ஆத்ம ஸ்வரூபத்தைப்பற்றிய உண்மை யான நிச்சயமில்லாவிடிலும் காம்யகர்மங்களை அநுஷ்டிப்பதில் பொருந்தாமையொன்றுமில்லை என்று நிரூபிக்கப்பட்டது.

ஆத்மதத்வஜ்ஞானம் இல்லாவிடில் காம்யகர்மங்களை அநுஷ்டிப்பதற்கு சாஸ்திர விரோதம் ஏற்படுகிறது என்றும் கூறமுடியாது. சாஸ்திர மானது ப்ரத்யக்ஷமாகத் தெரியும் ஓர் உபகாரத்திற்காகவோ, அல்லது அப்படித் தெரியாததான ஓர் உபகாரத்திற்காகவோ ஒரு காரியத்தை அங்கமாக விதிக்கக்கூடும். ஆத்மயாதாத்ம்ய நிச்சயத்தால் ப்ரத்யக்ஷமாகத் தெரியும் உபகாரம் ஒன்றுமில்லை என்பது சற்று முன் நிரூபிக்கப்பட்டது. ப்ரத்யக்ஷமாகத் தெரியாத உபகாரம் இருவகைப்பட்டது :— (1) ஆராத் உபகாரகத்வம். ப்ர யாஜம் முதலான அங்கயாகங்கள் அங்கியான யாகத்தின் சரீரத்தைப் பூர்த்தி செய்வதில் உபகாரம் செய்யாவிடிலும், பலத்தைப் பெறுவ தற்கு உபகாரகங்களாகின்றன. இவை ஆராத் உபகாரகம் எனப் படுகின்றன. இவைபோலே ஆத்மயாதாத்ம்யஜ்ஞானம் காம்ய கர்மங்களின் பலத்தைப் பெறுவதற்கு உதவிபுரிவதாகக் கூற முடியாது. (2) ஸந்நிபத்யோபகாரகத்வம். காம்யகர்மங்களில் ப்ரோ க்ஷணம் செய்வது முதலானவை யாகத்தின் சரீரத்தைப் பூர்த்தி செய்து தருவதன் மூலம் யாகத்திற்கு உபகாரகமாகின்றன. "ப்ரோக்ஷணம் செய்யவேண்டும்" என்று விதிக்கப்பட்டிருப்பது போலே, "ஆத்மாவை உள்ளபடி அறியவேண்டும்" என்று காம்யகர்ம ப்ரகரணங்களில் விதிக்கப்படவில்லை. ஆகையால ஸந்நிபத்ய உபகாரகத்வமும் இல்லை. ஆத்மதத்வஜ்ஞானம் அதிக பலனைப்பெறுவிப்பதன் மூலமும் காம்யகர்மங்களுக்கு உபகாரக மாகாது என்று சாரீரக சாஸ்திரத்தில் நிரூபிக்கப்பட்டுள்ளது.

"ப்லவா ஹ்யேதே அத்3ருடா4 யஜ்ஞரூபா:........ஏதச்ச்2ரேயோ யேபி4நந்த3ந்தி மூடா4:" [முண்ட 1-2-7] [யஜ்ஞங்களாகிற இவை உறுதியற்ற ஓடங்களாகும்; எந்த அறிவற்றவர்கள் இதைச் சிறந்ததாக நினைக்கிறார்களோ...] முதலான ச்ருதிகளும், "யாமிமாம் புஷ்பிதாம்" என்று தொடங்கும் அடுத்துள்ள கீதாச்லோகங்களும் ஆத்மதத்வஜ்ஞானமில்லாதவர்களுக்கும் ஸ்வர்க்காதி பலங்கள் கிடைப்பதாகக் கூறுகின்றன. ஆத்மதத்வஜ்ஞானமில்லாதவர்கள் தூமாதி மார்க்கத்தாலே ஸ்வர்க்கம் முதலான பலன்களைப் பெறுகிறார்கள் என்று உபநிஷத்துக்கள் ஒருமிடறாக போதிக்கின்றன. ஆகையால் ஆத்மயாதா2த்ம்ய நிச்சயமில்லாதவன் காம்யகர்மங்களை அநுஷ்டித்துப் பலன் பெறுகைக்கு ச்ருதிவிரோதமுமில்லை. உண்மையில், காம்யகர்மங்களுக்கு ஆத்மயாதா2த்ம்யஜ்ஞானம் அங்கமாகிறது என்று கொண்டால்தான் முன் எடுத்த ச்ருதிகள் விரோதிக்கின்றன. மோக்ஷஸாதன விஷயத்திலோவெனில், ஆத்மயாதாத்ம்யஜ்ஞானம் எல்லாவிதத்திலும் உதவிபுரிகின்றது. எப்படியெனில்: உண்மையான ஸ்வரூபத்தை அடைவதே மோக்ஷமாகும். ஆகையால் அந்த ஸ்வரூபத்தைப்பற்றிய நிச்சயமில்லாவிடில் அதைப்பெற விருப்பமே உண்டாகாது. அதுபற்றிய அறிவும் விருப்பமுமில்லாவிடில் அதைப்பெற ஸாதநாநுஷ்டானமும் செய்யமுடியாது. மோக்ஷஸாதனமான கர்மஜ்ஞாந பக்தி யோகங்களுக்கு அங்கமாக ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞானத்தை சாஸ்திரங்களும் விதிக்கின்றன. ஆகையால் அவ்வறிவில்லாவிடில் மோக்ஷஸாதனம் நிறைவுபெறாது. தன்னைப்பற்றிய நிச்சயமில்லாதவனுக்குத் தன் ஸ்வரூபத்தை அடைகையாகிற பலாநுபவமும் ஒட்டாது. ஆகையால் முமுக்ஷுவுக்கு ஸ்வரூபயாதாத்ம்ய நிச்சயமில்லாவிடில் யுக்திவிரோதமும் ஏற்படுகிறது. சாஸ்திரங்கள் மோக்ஷப்ராப்திக்கு எல்லாவிதத்திலும் உபகரிப்பதாக ஆத்மதத்வஜ்ஞானத்தை விதிக்கவும் செய்கின்றன. ஆகையால் அந்த அறிவில்லாவிடில் சாஸ்திர விரோதமும் உண்டாகும். ஆக, இவ்வளவால் முமுக்ஷுவுக்கு "வ்யவஸாயாத்மிகா பு3த்3தி4" எனப்படும் ஆத்மயாதா2த்ம்ய நிச்சயம் அவச்யாபேக்ஷிதம் என்றும், "அவ்யவஸாயிநாம்" எனப்படுகிற காம்யகர்மநிஷ்டர்களுக்கு அந்த நிச்சயம் தேவையல்லாதது என்றும் நிரூபிக்கப்பட்டதாயிற்று.

ஆக, "வ்யவஸாயாத்மிகா பு3த்3தி4:" "அவ்யவஸாயிநாம் பு3த்3த4ய:" என்ற பதங்களால் காம்யகர்மபுத்தியைக்காட்டிலும், கர்மயோக புத்திக்கு ஹேதுவில் உள்ள சிறப்பு உணர்த்தப்பட்டது; இனி,

विरोधाच्च। सेयं व्यवसायात्मिका बुद्धिः एकफलसाधनविषयतयैका; एकस्मै मोक्षाख्यफलाय हि मुमुक्षोस्सर्वाणि कर्माणि विधीयन्ते।

---

"ஏகா" "பஹுஶாகா ஹ்யநந்தாச்ச" என்று மூலத்தில் உள்ள சிறப்பு காட்டப்படுகிறது. (ஏகா) ஆத்மயாதாத்ம்ய நிச்சயத்தை முன்னிட்டுக்கொண்ட இந்தக் கர்மயோகவிஷயமான புத்தி ஒன்றாயிருப்பது. இங்கு சில ஆக்ஷேபங்கள் எழக்கூடும்: இந்த புத்தி எப்படி ஒன்றாகமுடியும்? இது போன்ற புத்திகள் பல இருக்கக் கூடுமாகையால், புத்திஸ்வரூபத்தின் ஐக்யம் இங்கு கூறப்படுவதாகக்கொள்வது பொருந்தாது. இந்த புத்திகள் எல்லாவற்றிற்கும் விஷயம் ஒன்றேயாகையால் இவையெல்லாம் ஒருபடிப்பட்டிருப்பதால் ஒன்றெனக் கூறப்படுவதாகக் கொள்ளுவதும், அங்கங்கள், ப்ரதானம் என்று விஷயங்கள் பலவாயிருப்பதால் ஒட்டாது. இந்த புத்திகளின் ஸமுதாயத்தை நோக்கி ஒன்றெனக் கூறப்படுகிறது எனில், இக்கர்மயோகபுத்திக்கு எதிர்த்தட்டாக எடுக்கப்படும் காம்ய கர்மபுத்திகளும் ஒரே ஸமுதாயமாகையால் அவற்றைப் பலவென்று கூறியது ஒட்டாமற்போய்விடும். ஆகையால் இவற்றை 'ஒன்று' என்றது எப்படிப் பொருந்தும்? எனில்: மோக்ஷமாகிற ஒரே பலனின் ஸாதனத்தை விஷயமாகக்கொண்டதாகவே இக்கர்மயோகபுத்திகள் எல்லாமிருப்பதால் இவற்றை இங்கு 'ஒன்று' எனக்கூறப்படுகிறது. ஆகையால் முற்கூறிய ஆக்ஷேபங்கள் இங்கு எழமாட்டா. மோக்ஷம் என்னும் ஒரே பலத்தின் பொருட்டே முமுக்ஷுவுக்கு (மோக்ஷமடைய விரும்புகிறவனுக்கு) எல்லாக் கர்மங்களும் விதிக்கப்படுகின்றன. முமுக்ஷுவினால் அனுஷ்டிக்கப்படும் நித்திய நைமித்திக காம்ய கர்மங்கள் எல்லாம் நேராகவோ, மறைமுகமாகவோ மோக்ஷஸாதனத்திற்கு உபகாரம் செய்வதால், அவற்றுக்கு மோக்ஷம் ஒன்றே முக்கியமான பலம். "ஸர்வமாயுரேதி" (சாந் 4—11—2) [பூர்ணமான ஆயுளை அடைகிறான்] முதலான அவாந்தர பலன்களை அடைவதும் மோக்ஷஸாதனத்தை அநுஷ்டிப்பதற்கு உறுப்பாகின்றது. ஆக இப்படி மோக்ஷஸாதனத்தை விஷயமாகக் கொண்டதாகவே எல்லாக்கர்மயோக புத்திகளும் இருப்பதால், சாஸ்த்ரார்த்தம் ஒன்றாகையால் எல்லாக் கர்மங்களையும் விஷயமாகக் கொண்ட புத்தி ஒன்றாகவேயிருக்கிறது. சாஸ்த்ரார்த்தம் ஒன்றாகையாவது,— ஒரே விதிக்கு விஷயமாகை. மோக்ஷஸாதனத்தை அநுஷ்டிக்க வேண்டும் என்னும் ஒரே விதிக்கு விஷயமாயிருக்

अतश्शास्त्रार्थस्यैकत्वात् सर्वकर्मविषया बुद्धिरेकैव; यथैकफलसाधनतया आग्नेयादीनां षण्णां सेतिकर्तव्यताकानामेकशास्त्रार्थतया तद्विषया बुद्धिरेका,

---

கையில், பலவிதமான கர்மங்களும் ஒரே சாஸ்த்ரார்த்தமாகையால், அவாந்தர கர்மபேதமிருந்தபோதிலும், அக்கர்மங்கள் விஷயமான புத்தி ஒன்றெனக் கூறப்படுகிறது என்று கருத்து. தனித்தனி விதிகளால் விதிக்கின்றவையும், வெவ்வேறு வாக்யங்களால் காட்டப்படும் இதிகர்த்தவ்யதைகளை (செய்ம்முறைகளை) உடையவைகளுமான பல கர்மங்கள் எப்படி ஒரே விதிக்கு விஷயமானவையாய், ஒரே சாஸ்த்ரார்த்தமாகமுடியும்? எனில்: இதற்குப் பூர்வ பாகத்தில் ஒரு த்ருஷ்டாந்தமுண்டு. ஆக்நேயம், அக்நீஷோமீயம், உபாம்சு, ஐந்த்ரயாகங்களிரண்டு, ஐந்த்ராக்நயாகம், ஆக ஆறு யாகங்கள் தனித்தனி விதிவாக்யங்களால் விதிக்கின்றன. "ய ஏவம் வித்வாந் பௌர்ணமாஸீம் யஜதே" "ய ஏவம் வித்வாந் அமாவாஸ்யாம் யஜதே" என்னும் இரண்டு வாக்யங்களாலே இவ்வாறு யாகங்களில் மூன்று "பௌர்ணமாஸீ யாகம்" என்றும், மற்ற மூன்று "அமாவாஸ்யா யாகம்" என்றும் ஸமுதாயப் பெயர்கள் பெற்றன. "ஏதாப்யாம் தர்ச பௌர்ணமாஸாப்யாம்" என்னும் விதிவாக்யம் இவ்விரண்டு ஸமுதாயங்களையும் ஸ்வர்க்க ஸாதனமாக விதித்தது. ஆக இப்படி ஏகவிதி விஷயமாகையால், இவை ஏகசாஸ்த்ரார்த்தமாயின. அப்படியே "பல வாக்யங்களால் விதிக்கும் பற்பல நித்யநைமித்திகாதி கர்மங்கள் எல்லாமே மோக்ஷ ஸாதனமாக ஆத்மயாதாத்ம்ய ஜ்ஞான பூர்வகமாக அநுஷ்டிக்கப் படவேண்டும்" என்று சாஸ்திரம் விதிக்கையாலே எல்லாக் கர்மங்களுமடங்கிய கர்மயோகம் ஏகசாஸ்த்ரார்த்தமாகக் குறையில்லை. ஆகையால் அது விஷயமான புத்தியும் இங்கு 'ஒன்று' என்று கூறப்படுவதில் எவ்வித தோஷமுமில்லை.

ஆக, இந்த ச்லோகத்தின் முதற்பாதியால் கர்மயோகபுத்திக்கு ஹேதுவையிட்டும், பலத்தையிட்டும் இரண்டு சிறப்புக்கள் கூறப் பட்டன. காம்யகர்ம புத்திக்கு இவ்விரண்டும் இல்லையென்று காட்டப்படுகிறது இரண்டாம் பாதியால். (அவ்யவஸாயிநாம் புத்தய:) ஆத்மயாதாத்ம்ய ஜ்ஞானமற்ற காம்யகர்ம நிஷ்டர்களின் புத்திகள். கர்மயோகபுத்திக்குள்ள ஹேதுச்சிறப்பு காம்ய கர்மபுத்திக்கு இல்லையென்று காட்டப்பட்டது. இனி பலச்சிறப்பு மில்லையென்று காட்டப்படுகிறது, (அநந்தா:) கணக்கற்றவை

तद्वदित्यर्थः। अव्यवसायिनां तु स्वर्गपुत्रपश्वन्नादिफलसाधनकर्माधिकृतानां बुद्धयः फलानन्त्यादनन्ताः। तत्रापि बहुशाखाः; एकस्मै फलाय चोदितेऽपि दर्शपूर्णमासादौ कर्मणि*आयुराशास्ते इत्याद्यवगतावान्तरफलभेदेन बहुशाखत्वं च विद्यते। अतोऽव्यवसायिनां बुद्धयोऽनन्ता

---

யாகின்றன; சுவர்க்கம், புத்ரன், பசு அந்நம் முதலான பலன்களை ஸாதித்துத்தரும் கர்மங்களைப்பற்றி நிற்பவர்களானமையாலே, அவர்களுடைய புத்திகள் அவர்கள் விரும்பும் அநந்தமான பலன்களையொட்டி அநந்தமாகின்றன என்று கருத்து. (பஹுசாகா:) ஒவ்வொரு புத்தியும் பல கிளைகளை உடையனவாகின்றன. சுவர்க்கமாகிற ஓரே பலனின் பொருட்டு விதிக்கப்பட்டிருக்கும் தர்சபூர்ணமாஸமாகிற ஓரே காம்யகர்மத்தை சுவர்க்கமாகிற ப்ரதாந பலத்தை ஸாதித்துத்தரும் மரமாக உருவகப்படுத்தினால், அந்த ப்ரதாந பலத்துக்கு விருத்தமல்லாத "ஆயுராசாஸ்தே" முதலானவற்றால் அறியப்படும் ஆயுள்விருத்தி முதலான அவாந்தர பலன்களை ஸாதித்துத் தரும் கிளைகளும் அதில் அடங்கியிருக்கின்றன என்று கருத்து. மோக்ஷசாஸ்திரத்திலோவெனில், ஆயுள விருத்தி முதலான அவாந்தர பலன்களும் மோக்ஷஸாதனத்திற்கு உறுப்பாகவேயாகின்றபடியால் அங்கு மோக்ஷம் ஒன்றே பலனாகிறது என்று முன்னமே கூறப்பட்டது. ஆகையால், ஆத்மயாதாத்ம்ய நிச்சயமற்ற காம்யகர்ம நிஷ்டர்களின் புத்திகள் ப்ரதான பலபேதத்தாலே கணக்கற்றவையாகவும், அவாந்தர பலபேதத்தாலே பல பிரிவுகளையுடையவையாகவும் உள்ளன. கர்மயோக புத்தியிற்போலே மோக்ஷம் ஒன்றே பலம் என்னும் சிறப்பு இவைகளுக்கு இல்லை என்று கருத்து.

இவ்விடத்தில் சில சங்கைகள் எழக்கூடும். (1) வெவ்வேறு ப்ரதானபலன்களையும், அவாந்தர பலன்களையும் ஸாதிப்பதற்கென்றே விதிக்கப்படும் நித்யநைமித்திகாதிகர்மங்களுக்கு எப்படி பலன் ஒன்றேயாகமுடியும்? (2) வெவ்வேறு விதிகளுக்கு விஷயமான இவை எப்படி ஓரே விதிக்கு விஷயமாய் ஓரே சாஸ்த்ரார்த்தமாக முடியும்? (3) காமமற்ற முமுக்ஷு காம்யகர்மங்களை எப்படி அநுஷ்டிக்கமுடியும்? (4) அந்தந்தக் காம்யபலன்களை விரும்பாமலே அந்தந்தக் காம்யகர்மங்களை அநுஷ்டிக்கலாம் எனில்: இதே நியாயத்தைக்கொண்டு பார்க்கும்போது அந்தந்த தர்மங்களில் அதிகாரமில்லாமலே பிராம்மணர் முதலானோர் க்ஷத்ரியர் முதலா

चहुशास्त्वाश्च। एतदुक्तं भवति—नित्येषु नैमित्तिकेषु कर्मसु प्रधान-फलान्यवान्तरफलानि च यानि श्रूयमाणानि, तानि सर्वाणि परित्यज्य मोक्षैकफलतया सर्वाणि कर्माण्येकशास्त्रार्थतयाऽनुष्ठेयानि; काम्यानि च स्ववर्णाश्रमोचितानि तत्तत्फलानि परित्यज्य मोक्षसाधनतया नित्यनैमित्तिकैरेकीकृत्य यथाबलमनुष्ठेयानि—इति ॥

---

ஒருடைய கர்மங்களை அநுஷ்டிக்கலாம் என்று ஆகிவிடுமே. (5) பரஸ்பரவிருத்தமான பலன்களையுடைய காம்யகர்மங்களை அநுஷ்டிப்பதால் முரண்பாடு ஏற்படும்; [illegible] காம்யகர்மங்களையெல்லாம் அநுஷ்டிப்பது செய்யமுடியாததாகும். சிலவற்றைச் செய்யலாம் எனில்: எதை எவ்வாறு செய்யலாம் என்பதில் நியாமகம் என்ன? இந்த ஐந்துவிதமான சங்கைக்கும் இனிப் பரிஹாரம் உரைக்கப்படுகிறது.

(1) நித்யநைமித்திகாதிகர்மங்களுக்கு வெவ்வேறு ப்ரதான பலன்களும் அவாந்தரபலன்களும் உள்ளன என்பது உண்மையே. ப்ராஜாபத்யலோகம் முதலானவற்றை அடைவது, செய்த பாபம் தீருவது, செய்யாததினால் ஏற்படக்கூடிய ப்ரத்யவாயம் (தோஷம்) இல்லாமற்போவது ஆகியவை நித்யநைமித்திககர்மங்களின் பலன்கள். முமுக்ஷுவான கர்மயோக நிஷ்டனுக்கு ப்ராஜாபத்யலோகம் முதலானவற்றில் விருப்பமில்லாமையாலும் அவை மோக்ஷவிருத்தமாகையாலும் அப்பலன்கள் கிடையாது. பாபம் போவது முதலானவை இவனுடைய மனத்துக்கு சுத்தியை விளைப்பதன் மூலம் மோக்ஷத்திற்கு உறுப்பாகிறதாகையாலே தனிப்பலனாகமாட்டா. ஆகையால் கர்மயோகநிஷ்டனுக்கு மோக்ஷம் ஒன்றே பலன் என்று கூறியதில் குறையில்லை.

(2) நித்தியநைமித்திகாதி கர்மங்கள் மற்றவர்கள் விஷயத்தில் ஒவ்வொரு பலனைப் பெறுவதன் பொருட்டு விதிக்கப்படுகின்றன; ஆகையால் அவர்களுக்குப் பல விதிகளுக்கு விஷயமாய், அதனாலேயே பல சாஸ்த்ரார்த்தங்களாயிருந்துகொண்டு பல பலன்களை அளிக்கின்றன; முமுக்ஷுக்களான கர்மயோக நிஷ்டர்களுக்கோவெனில், ‘இவையெல்லாவற்றையும் பலனில் விருப்பமற்றவனாய், ஆத்மயாதாத்ம்யஜ்ஞானத்துடன் மோக்ஷஸாதனமாக அநுஷ்டிக்கவேண்டும்’ என்னும் ஒரே விதிக்கு விஷயமாய், அதனாலேயே ஒரே சாஸ்திரார்த்தமாயிருந்துகொண்டு ஒரே பலனையளிக்கின்றன. நித்யகாம்யஜ்யோதிஷ்டோமாதிகளிற் போலே விநியோகபேதத்தாலே இவ்வேறுபாடு ஏற்படுகிறது.

(3) & (4) காம்யகர்மங்களை அந்தந்தக் காம்ய பலன்களில் விருப்பமில்லாமலே கர்மயோக நிஷ்டன் மோக்ஷஸாதனமாக அனுஷ்டிக்கலாம். இதனால் அந்தந்த தர்மங்களில் அதிகாரமில்லாமலே பிராம்மணர் முதலானோர் க்ஷத்ரியர் முதலானோருடைய தர்மங்களை அனுஷ்டிக்கலாம் என்று ஆகிவிடாது. ஓரதிகாரிக்கு, ஒரு பலனை உத்தேசித்து, ஒரு காம்யகர்மாநுஷ்டானம் விதிக்கப்படுகிறது. அதே கர்மத்தை வேறொரு பலத்திற்காக அநுஷ்டிக்க வேண்டும் என்று விதிக்கும்போதும் அவனே அதிகாரியாவதே பொருந்தும். "க்லுப்தகல்ப்யவிரோதே து யுக்த: க்லுப்தபரிக்₃ரஹ:" [ஏற்கனவே ஸித்தமாயிருப்பதற்கும், இனிக்கல்பிக்கவேண்டியிருப்பதற்கும் விரோதம் ஏற்பட்டதாகில், ஏற்கனவே ஸித்தமாயிருப்பதை எடுத்துக்கொள்வதே உசிதம்.] என்னும் நியாயப்படி பலனில் விருப்பத்தோடு அநுஷ்டிக்கப்படும் காம்யகர்மத்திற்கு எந்த வர்ணாச்ரமங்களை உடையவன் அதிகாரியோ, அவனே பலனில் விருப்பமில்லாமல் அநுஷ்டிக்கப்படும் காம்யகர்மத்திற்கும் அதிகாரி என்று கொள்வதே பொருந்தும். நித்ய காம்ய ஜ்யோதிஷ்டோமாதிகளிலும், வேதத்தை ஜபிக்கும்படி விதிக்குமிடத்திலும் விநியோகபேதமிருந்தபோதிலும், அதிகாரி வேறுபடுவதில்லை என்பதைக் காண்கிறோம். அதுபோலவே இங்கும் வர்ணாச்ரமதர்மங்களின் கலப்பு ஏற்படாது என்று கொள்ளக்குறையில்லை.

(5) இவனுக்கு அந்தந்தப் பலன்களில் விருப்பமில்லையாகையால், விருப்பமுள்ளவர்களின் விஷயத்தில் பரஸ்பரவிருத்தமான பலன்களையுடையனவாயினும் அக்கர்மங்களை இவன் அநுஷ்டிப்பதால் முரண்பாடு ஏற்படாது. இனி, அநந்தமான காம்யகர்மங்கள் எல்லாவற்றையும் அநுஷ்டிக்கமுடியாதே; எதைச் செய்வது? எதை விடுவது? எனில்: தன்னால் இயன்றவரையில் செய்யலாம் என்று சாஸ்திரங்கள் கோஷிக்கின்றன. "தத்₃தி₃ குர்வந் யதா₂சக்தி ப்ராப்நோதி பரமாம் க₃திம்" [மநு 11-34] [இயன்ற வரையில் யுக்த தர்மத்தைச் செய்பவன் மேலான கதியை அடைகிறான்.] என்று மனுவும் கூறினானன்றோ. "ஸர்வாங்கோ₃பஸம்ஹாரே காம்யம் கர்ம ப்ரஸித்₃த்₄யதி" [எல்லா அங்கங்களும் கூடியிருந்தால்தான் காம்யகர்மம் ஸித்திக்கும்] என்கிறபடியே காம்யகர்ம நிஷ்டனுக்குத் தன் கர்மத்தின் அங்கங்களில் சிறிது குறைவு ஏற்பட்டாலும் கர்மஸ்வரூபமே ஸித்திக்காது; பலனும் கிடைக்காது; தோஷமும் ஏற்படும். கர்மயோக நிஷ்டனை

44. பே₄ாகைச₃ச்வர்ய ப்ரஸக்தாநாம் தயாऽபஹ்ருதசேதஸாம்।
வ்யவஸாயாத்மிகா பு₃த்₃தி₄: ஸமாதெ₄ள ந விதீ₄யதே ॥

பர்ாத்த₂—*பார்த்தனே!* **வேத₃வாத₃ரதா:**—*வேதங்களில் உள்ள ஸ்வர்க்கம் முதலான பலன்களைப்பற்றிய பேச்சுக் களிலேயே ஈடுபட்டவர்களாய்,* **காமாத்மாந:**—*காமங்களி லேயே ஈடுபட்ட நெஞ்சையுடையவர்களாய்,* **ஸ்வர்க்க பரா:**— *ஸ்வர்க்கத்தையே மேலான ப்ராப்யமாகக் கொண்ட வர்களாய்,* **'அந்யத் ந அஸ்தி' இதி வாதி₃ந:**— *'ஸ்வர்க்கத் தைக் காட்டிலும் சிறந்த பலன் வேறு இல்லை' என்று பேசுகின்றவர்களான,* **அவிபஶ்சித:**— *சிற்றறிவாளர்கள்,* **பே₄ாகைச₃ச்வர்யக₃திம் ப்ரதி**— *ஸ்வர்க்கா₃திகளை அனுபவிப் பதாகிற செல்வத்தை அடைவது குறித்து,* **புஷ்பிதாம்**- *காய்க்காத பூப்போலே மேலெழப்பார்க்கும்போது அழகா யிருப்பதாய்,* **ஜந்மகர்மப₂லப்ரத₃ாம**— *(ஸ்வர்க்காதி பலானு பவம் முடிந்தவுடன்) புநர்ஜந்மகர்மங்களாகிற பலத்தை அளிப்பதாய்,* **க்ரியா விசேஷ ப₃ஹுளாம்**— *(தத்வஜ்ஞான மின்மையாலே) பல கிரியைகள் நிறைந்திருப்பதான,* **யாம இமாம் வாசம்**— *யாதொரு வார்த்தையை,* **ப்ரவத₃ந்தி**— *மிகவும் பேசுகின்றார்களோ,* **தயா**— *அந்தப் பேச்சாலே,* **அபஹ்ருதசேதஸாம்**— *அழிக்கப்பட்ட அறிவையுடையவர் களாய், (அதனாலேயே)* **பே₄ாகைச₃ச்வர்யப்ரஸக்தாநாம்**— *ஸ்வர்க்காதிகளை அநுபவிப்பதாகிய செல்வத்திலேயே ஈடு பட்டவர்களான அப்புல்லறிவாளர்களுக்கு,* **ஸமாதெ₄ள**— *மனத்தில்,* **வ்யவஸாயாத்மிகா**—*ஆத்மயாதா₂த்ம்யநிச்சயத்தை முன்னிட்டுக் கொண்டிருக்கும்,* **பு₃த்₃தி₄:**— *(முற்கூறிய) கர்மயோகபுத்தி,* **ந விதீ₄யதே**—*உண்டாவதில்லை.*

---

*42-44.* முன் ச்லோகத்தில், காம்யகர்மபுத்தியைக் காட்டிலும் மோக்ஷஸாதனமான கர்மயோகபுத்திக்கு உள்ள சிறப்பு காட்டப் பட்டது. இனி, மூன்று சுலோகங்களாலே மோக்ஷஸாதனமான கர்ம யோகத்தில் விரைவில் ஈடுபாடு ஏற்படுவதற்கு அவசியமான மற்ற

38. புன்பயனுற் பூத்தவுரை போதப் புகல்வாறி
வென்பதனை யில்லா ரெழின்மறையி-னன்பகருஞ்
சொற்பயனே பற்றியதிற் றொல்பொருண்மற்றில்லென்பார்
கற்பதனைக் காணுதார் கண்

(காம்யகர்மங்களில் ஈடுபட்டவர்கள்) புன் பயனுல் பூத்த உரை— பயனின்மையாலே காய்க்காத பூப்போன்ற வார்த்தையை, போத புகல்வர்—மிகவும் பேசுவர்; அறிவு என்பதனை இல்லார்—அறிவற்றவர்கள்; எழில் மறையில் நன் பகரும் சொல் பயனே பற்றி—அழகிய வேதத்தில் (ஸ்வர்க்காதிகளைப் பற்றி) நன்றாகச் சொல்லப்படும் சொல்லாகிற பயனையே பற்றி நின்று, மற்று—அதைக்காட்டிலும் சிறந்த, அதில் தொல் பொருள்— வேதத்தின் பழமையான தாத்பர்யார்த்தமான மோக்ஷத்தை, இல் என்பார்— இல்லை என்று கூறுவார்கள்; கற்பதனை கண் காணுதார்— (வேதத்தின் உத்தரபாகத்தில்) கற்கப்படும் மோக்ஷத்தைக் கண்ணுலும் காணமாட்டார்கள்.

---

பலன்களில் வைராக்யத்தை உண்டாக்குவதற்காக, அந்தந்தக் காம்ய பலன்களை ஸாதித்துத்தரும் காம்யகர்மங்களில் அதிகாரம் உடையவர்களை நிந்திக்கிறார். "ஸ்வகீயத்வபு₄த்₃தி₄ர் ஹி அதி₄கார:" [அதிகாரமாவது, தன்னுடையது என்னும் நினைவு] என்று வேதார்த்த ஸங்க்ரஹ வ்யாக்யானத்தில் ச்ருதப்ரகாசிகாசார்யராலும், "காம்ய கர்மாதி₄க்ருதாநிதி— காம்யகர்மஸு ஸ்வர்க₃ாதி₃ ஸ்வாபி₄லஷித ஸாத₄நத்வ ஸ்வார்த்த₃தா பு₃த்₃தி₄ யுக்தாந் இத்யர்த்த₂:" ["காம்யகர்மாதி₄க்ருதாந்" என்னும் கீதாபா₄ஷ்ய ஸ்ரீஸூக்திக்கு, "காம்யகர்மங்கள் ஸ்வர்க்கம் முதலான தான் விரும்பும் பலன்களை ஸாதித்துத் தருமவையாயிருக்கையாலே, அவற்றில் தன்னுடையவை என்னும் புத்தியோடு கூடியிருப்பவர்களை" என்று பொருள்] என்று தாத்பர்யசந்த்₃ரிகையில் ஸ்ரீ வேதாந்த தேசிகராலும், "நியோஜ்ய: ஸ ச கார்யம் ய: ஸ்வகீயத்வேந பு₃த்₃த்₄யதே" [எவனொருவன் ஒருகாரியத்தை தன்னுடையது என்று நினைக்கிறானே அவனே அதற்கு நியோஜ்யன் (அதி₄காரி) ஆகிறான்.] என்று பஞ்சிகையில் பூர்வமீமாம்ஸகர்களாலும் அதி₄காரலக்ஷணம் உரைக்கப்பட்டது இங்கு அநுஸந்திக்கத்தக்கது. காம்யகர்மங்களைத் தாம் விரும்பும் பலன்களுக்கு

॥भा॥ यामिमां पुष्पितां—पुष्पमात्रफलाम्, आपातरमणीयां वाचमविपश्चितः—अल्पज्ञाः भोगैश्वर्यगतिं प्रति वर्तमानां प्रवदन्ति,

---

39. காமத்தை யுன்னிக்கணிசித்து மேலுலகைச்
சேமத்தை யிட்டுச் செனித்துழலு—மீமத்
தியற்றிதரும் போகத்தி லின்பத்தை நோக்கி
முயற்றியுட னேயெழுவர் மூண்டு.

**காமத்தை உன்னி**— *காமங்களையே நினைந்து*, **மேல் உலகை கணிசித்து**— *ஸ்வர்க்கம் முதலான (ப்ராக்ருதமான) மேல் உலகங்களையே பெறவிரும்பி*, **சேமத்தை இட்டு**— *கர்மசேஷம் காரணமாக*, **செனித்து உழலும்**— *மறுபடியும் மறுபடியும் பிறந்து உழலும்படியானதாய்*, **ஈமத்து**— *அழியக்கூடியதாய்*, **இயற்றி தரும்**— *முயன்று செய்யவேண்டிய கிரியைகளால் உண்டாகுமதான*, **போகத்தில் இன்பத்தை நோக்கி**–*சுவர்க்கபோகம் முதலானவற்றிலுள்ள சிற்றின்பத்தைக் கருதி*, **முயற்றியுடனே**— *முயற்சியோடு*, **மூண்டு எழுவர்**— *ஈடுபாட்டுடன் எழுவார்கள்*.

---

*ஸாத₄னமாக நினைத்து அவற்றில் ஈடுபடுபவர்களை நிந்திக்கிறான் இம்மூன்று ச்லோகங்களாலே என்று கருத்து.*

*(யாம் இமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவத₃ந்தி) யாதொரு இந்தக் காய்க்காத பூப்போன்ற வார்த்தையைக் கூறுகின்றார்களோ. சில மரங்கள் பூக்குமேயொழியக் காய்க்காது. அது போலே இந்த வார்த்தை கேட்பதற்கு அழகாயிருக்குமேயொழிய, நல்ல பலன் ஒன்றும் அதற்குக் கிடையாது என்று கருத்து. காம்யகர்மங்களைப் பற்றிய இந்த வார்த்தைகளின் பலனாகக் கிடைக்கும் ஸ்வர்க்கம் முதலானவை உண்மையில் மோக்ஷவிரோதியாயிருந்துகொண்டு துன்பத்தையன்றோ தருகின்றன. இருந்தபோதிலும் பார்ப்பவர்களுக்கு இன்பம் போலே தோற்றமளிக்கையாலே காய்க்காத பூப்போன்ற வார்த்தை என்கிறார். (வாசம்) வார்த்தையை. வேதத்தில் காம்யவிதி₄ ப₄ாக₃த்திலுள்ள வார்த்தைகளைச் சொல்லிற்றாகவுமாம்; காம்யகர்ம நிஷ்ட₂ர்களுடைய வார்த்தைகளைச் சொல்லிற்றாகவுமாம். (ப்ரவத₃ந்தி) மிகவும் பேசுகின்றார்களோ. (வாசம் ப்ரவத₃ந்தி) வார்த்தையை மிகவும் பேசுகின்றார்களேயொழிய அவ்வார்த்தையின்*

वेदवादरताः-वेदेषु ये स्वर्गादिफलवादाः तेषु सक्ताः, नान्यदस्तीति वादिनः-तत्सङ्गातिरेकेण स्वर्गादेरधिकं फलं नान्यदस्तीति वदन्तः, कामात्मानः-कामप्रवणमनसः, स्वर्गपराः—स्वर्गपरायणाः, स्वर्गादिफलावसाने पुनर्जन्म-

---

40. போகமிகு செல்வத்துப் பூண்டதன் னெஞ்சழிந்தார்க்
கேக வகையுற்ற வெழிற்புந்தி—யோக
மமைவுறு துள்ளத்தி லாதலால் வேதச்
சமைவுதான் கேளாய் தரித்து.

**ஆதலால்**—ஆகையால், **போகம் மிகு செல்வத்து**— சுவர்க்கம் முதலான போகமாகிற பெருஞ்செல்வத்தில், **பூண்டு**—ஈடுபட்டு, **அதன்**— அதினாலே, **நெஞ்சு அழிந்தார்க்கு**— அறிவு அழிந்தவர்களுக்கு, **ஏகவகை உற்ற எழில் புந்தி யோகம்**—மோக்ஷம் ஒன்றையே கருதுவதாய், (ஆத்மதத்வஜ்ஞானத்தை முன்னிட்டதாகையாலே) அழகியதான (கர்மயோக) புத்திச்சேர்க்கை, **உள்ளத்தில்**— நெஞ்சில், **அமைவுஉறுது**—பொருந்தாது; **வேதச் சமைவுதான்** வேதம் அமைந்திருக்கும் வகைதன்னை, **தரித்து**— உறுதியுடனிருந்து, **கேளாய்**— கேட்பாயாக.

---

அர்த்தஸ்வரூபத்தை அடியோடு அறிவதில்லை. இதற்குக் காரணமென்ன? எனில்: (அவிபச்சிதঃ) அல்பஜ்ஞர்களாகையாலே அர்த்தஜ்ஞானமில்லாமல் வார்த்தையே பேசுகிறார்கள். "விவிதம் பச்யச்சித்த்வம்—விபச்சித்த்வம்" என்கிற வ்யுத்பத்தியின்படியே விதவிதமாக அறியும் அறிவை உடையவன் 'விபச்சித்' எனப்படுகிறான். "ப்ருஷோதராதீநி யதோபதிஷ்டம்" [அஷ்டாத்யாயி 6-3-109] என்னும் வியாகரணவிதிப்படி 'பச்யத்' என்னும் சப்தத்தின் பகுதியான 'யத்' என்னும் சப்தம் ஸமாஸத்தில் மறைந்துவிடுகிறது. ஆக, 'விபச்சித்' என்று பேரறிவாளனைக் காட்டுகிறது. 'அவிபச்சிதঃ' என்று இங்கு பேரறிவாளர்களுக்கு எதிர்த்தட்டான புல்லறிவாளர்களைக் காட்டுகிறது. வேதத்தின் உத்தரபாகமான உபனிஷத்துக்களின் பொருளை அறிவதனால் ஏற்படும் நித்யாநித்ய வஸ்துவிவேகம் முதலான பேரறிவுகள் இல்லாத புல்லறிவாளர்கள் என்று கருத்து.

எதைப்பற்றிய வார்த்தையைப் பேசுகிறார்கள்? எனில்: (போ₄கைச்₃வர்யக₃திம் ப்ரதி) "வர்த்தமாநாம்" என்னும் பதத்தை அத்₄யாஹாரம் செய்துகொண்டு "வாசம்" என்னும் பதத்திற்கு விசேஷணமாக்கிப் பொருள் கொள்ளவேண்டும், சுவர்க்கம் முதலானவற்றின் அநுப₄வமாகிற செல்வத்தைக்குறித்துப் பேசப்படும் வார்த்தையை என்றபடி.

பேசுகிறவர்கள் எப்படிப்பட்டவர்கள்? எனில்: (வேத₃வாத₃ரதா:) வேதத்தின் பூர்வபாகத்தில் ஸ்வர்க்கம் முதலான அல்பாஸ்திரபலன்களைப் பற்றிய பேச்சுக்களில் ஈடுபட்டவர்கள். வேதத்தைப் பலவிடங்களில் புகழ்ந்திருக்கும் கண்ணன் பொதுவாக அதை நிந்திப்பது ஒட்டாதாகையாலே இங்கு வேதசப்தம் ஸ்வர்க்காதி பலன்களை மாத்திரம் குறிப்பதாகக்கருதப்படும் பூர்வபாகத்தையே குறிக்கிறது என்று கொள்ளவேண்டும். "விஷ்ணு நாமா ஸ வேதே₃ஷு வேதா₃ந்தேஷு ச கீ₃யதே" [வி-பு 6-4-40] [அந்தப் பரமாத்மா வேதங்களிலும் வேதாந்தங்களிலும் விஷ்ணு என்னும் பெயராலே பாடப்படுகிறான்.] முதலானவிடங்களில் வேதசப்தம் பூர்வபாகத்தையே குறிப்பதைக்காண்கிறோமன்றோ. "புஷ்பிதம் வாசம்" "வேத₃வாத₃" என்று இரண்டிடங்களிலும் பூர்வபாகத்தைச் சொல்லுகிறதாகில், புநருக்திதோஷம் வருமே எனில்: ஒன்று விதிக்கும் வாக்யத்தையும், மற்றொன்று பலத்தைச்சொல்லும் வாக்யத்தையும் கூறுவதாகக்கொண்டோ, ஒன்று காம்யகர்ம நிஷ்டர்களுடைய வாக்யத்தையும், மற்றொன்று வேதவாக்யத்தையும் குறிப்பதாகக் கொண்டோ புநருக்திதோஷபரிஹாரம் செய்யலாம். (நாந்யத₃ஸ்தீதி வாதி₃ந:) அந்த ஸ்வர்க்காதிபலன்களில் உள்ள மிகுதியானபற்றாலே, "ஸ்வர்க்கத்தைக் காட்டிலும் சிறந்த பலன் வேறொன்று இல்லை" என்று கூறுகின்றவர்கள். (வாதிந:) "வதி₃தும் சீலம் ஏஷமிதி வாதி₃ந:" இப்படிக்கூறுவதையே ஸ்வப₄ாவமாகக் கொண்டவர்கள். வேதங்களில் கோஷிக்கப்படும் மோக்ஷபுருஷார்த்தத்தை மறுக்கமுடியாதாகையாலே, "அந்த மோக்ஷமும் இந்த ஸ்வர்க்காதி பலங்களைக்காட்டிலும் சிறந்ததன்று" என்று கூறுகிறவர்கள் என்று கருத்து. (காமாத்மாந:) "காமேஷு ஆத்மா—மந:, யேஷாம் தே காமாத்மாந:" என்று வ்யுத்பத்தி; காமங்களிலேயே ஈடுபட்ட நெஞ்சையுடையவர்கள் என்று பொருள். ஆத்மசப்தம் இங்கு மனத்தைக்குறிக்கிறது. (ஸ்வர்க்க₃பரா:) "ஸ்வர்க்க₃: பர:— பராயணம்—பரமப்ராப்யம்—யேஷாம்தே—ஸ்வர்க்க₃பரா:" என்று வ்யுத்பத்தி. ஸ்வர்க்கத்தையே பரமப்ராப்யமாகக்கொண்

कर्माख्यफलप्रदां, क्रियाविशेषबहुलां-तत्त्वज्ञानरहिततया क्रियाविशेषप्रचुरां, भोगैश्वर्यगतिं प्रति वर्तमानां यामिमां पुष्पितां वाचं ये प्रवदन्तीति संबन्धः।

---

டிருப்பவர்கள் என்று பொருள். மோக்ஷத்தைக் கணிசியாதவர்கள் என்று கருத்து. 'காமாத்மாந:' 'ஸ்வர்க்கபரா:' என்ற சப்தங்கள் புநருக்தமன்றோ? எனில்; காம சப்தம் பொதுவாகக் காமங்களையும், ஸ்வர்க்க சப்தம் காமவிசேஷமான ஸ்வர்க்கத்தையும் குறிக்கிறது என்றோ, இரண்டும் முறையே இம்மை மறுமைப் பலன்களைக்குறிக்கின்றன என்றோ, முந்தியது ஸ்வர்க்காதிஸாதனமான ஜ்யோதிஷ்டோமாதிகளில் விருப்பத்தையும், பிந்தியது அவற்றால் ஸாதிக்கப்படும் ஸ்வர்க்காதிகளில் விருப்பத்தையும் குறிக்கின்றதென்று கொண்டோ, முந்தியது ஸ்வர்க்காதிகாம்யங்களில் விருப்பத்தையும், பிந்தியது மோக்ஷத்தில் வெறுப்பையும் காட்டுகிறது என்று கொண்டோ புநருக்தியைப் பரிஹரிக்கலாம்.

அந்த வார்த்தை எப்படிப்பட்டது? எனில்: (ஜந்மகர்மபலப்ரதாம்) சுவர்க்கம் முதலான பலன்கள் முடிந்தவுடன், மறுபடியும் பிறப்பையும் கர்மங்களையும் அளிப்பது. "யாவத்ஸம்பாதமுஷித்வா அதை ஏதமேவாத்வாநம் புநர்நிவர்த்தந்தே" [சாந் 5 10 5] [பலனளிக்கும் கர்மம் உள்ளவரையில் ஸ்வர்க்கலோகத்தில் வஸித்துவிட்டு, மறுபடியும் (சென்ற வழியிலேயே) தூமாதிமார்க்கத்திலே திரும்பி வருகின்றார்கள்.] "ப்ராப்யாந்தம் கர்மணஸ்தஸ்ய யத்கிஞ்சேஹ கரோத்யயம்। தஸ்மால் லோகாத் புநரேதி அஸ்மை லோகாய கர்மணே ॥" [ப்ருஹ 6-4-6] [இந்த ஸம்ஸாரி இவ்வுலகில் (ஸ்வர்க்காதி பலனை விரும்பி) யாதொரு கர்மத்தைச் செய்கிறானோ, அந்தக்கர்மத்தை (அந்தப் பலபோகத்தாலே கழித்து) முடிந்து, அந்தலோகத்திலிருந்து மறுபடியும் கர்மம் செய்வதற்காக இந்த லோகத்திற்குத் திரும்பி வருகிறான்.] "ஆப்ரஹ்மபுவநால்லோகா: புநராவர்த்திநோர்ஜுந" [கீதை 8-16] [அர்ஜுநா! ப்ரஹ்மலோகம் வரையிலுள்ள எல்லா உலகங்களும் அழிவையுடையவை.] "ஸ்வர்க்கேபி பாதபீதஸ்ய க்ஷயிஷ்ணோர் நாஸ்தி நிர்வ்ருதி:" [வி-பு 6-5-50] [ஸ்வர்க்கத்திலும், அநுபவம் கழிந்து செல்லுகையில், 'எப்போது கீழே விழுந்து விடுவோமோ' என்னும் பயத்தாலே ஸுகமில்லாமற்போகிறது.] என்று ச்ருதிஸ்ம்ருதிகளில் சுவர்க்கம் முதலானவை அழியக்கூடியவை என்று உத்கோஷிக்கப்பட்டதன்றோ.

"ப்லவா ஹ்யேதே அத்₃ருட₄ா யஜ்ஞரூபா: |
அஷ்டாத₃ஶோக்தமவரம் யேஷு கர்ம ||
ஏதச்ச்₂ரேயோ யேऽபி₄நந்த₃ந்தி மூட₄ா: |
ஜராம் ம்ருத்யும் தே புநரேவாபி யந்தி ||" *[முண்ட 1-2-7]*

*[( பதினாறு ருத்விக்குகள், யஜமானன் பத்னி என்னும்) பதினெட்டு கர்த்தாக்களை ஆச்ரயித்து நிற்பதாய், (க்ஷுத்ரபலனில் விருப்பத்தாலே) தாழ்ந்ததான யாகாதி கர்மத்தையுடையவர்கள் உறுதியற்ற ஓடம்போல ஸம்ஸாரக்கடலைத்தாண்ட வல்லமையற்றவர்கள். எந்த அறிவிலிகள் இக்கர்மங்களைச் சிறந்தவையாக அபிமானிக்கிறார்களோ அவர்கள் ஜராமரணங்களையுடைய ஸம்ஸாரத்தையே மறுபடியுமடைகிறார்கள்.]* "தத்₃ ய இஹ ரமணீயசரணா அப்₄யாஸோ₂ ஹ யத்தே ரமணீயாம் யோநிமாபத்₃யேரந் ப்₃ராஹ்மண யோநிம் வா க்ஷத்ரியயோநிம வா வைஸ்₂யயோநிம் வா, அத₂ ய இஹ கபூயசரணா: அப்₄யாஸோ₂ ஹ யத்தே கபூயாம் யோநிமாபத்₃யேரந் ஸ்₂வ யோநிம் வா ஸூகரயோநிம் வா சண்டாளயோநிம் வா ||" *[சாந் 5-10-7]* *[அவர்களில் திரும்பிவருகிறவர்கள் புண்ணியகர்மத்தை எஞ்சிய கர்மமாகக் கொண்டிருக்கும்போது ப்ராஹ்மண க்ஷத்ரிய வைச்யஜன்மங்களாகிற அழகிய பிறவிகளில் ஒன்றை அடைகிறார்கள்; பாப கர்மத்தை எஞ்சிய கர்மமாகக் கொண்டிருக்கும்போது நாய், பன்றி, சண்டாளன் முதலான தாழ்ந்த பிறவிகளில் ஒன்றை அடைகின்றார்கள்.]* முதலான வேதவாக்யங்களிலும் "தத: பரிவ்ருத்தௌ கர்மப₂ல ஸே₂ஷேண ஜாதிம் ரூபம் வர்ணம் ப₃லம் மேத₄ாம் ப்ரஜ்ஞாம் த்₃ரவ்யாணி த₄ர்மாநுஷ்ட₂ாநமிதி பரதிபத்₃யதே | தச்சக்ரவது₃ப₄யோர் லோகயோஸ் ஸுக₂ ஏவ வர்த்ததே" *[ஆபஸ்தம்பதர்மம் 2-1-2, 3]* *[அதன் பிறகு திரும்பிவரும்போது எஞ்சிய கர்மத்தின் பலனாக ஜாதி, உருவம், (ப்ராஹ்மணாதி₃) வர்ணம், ப₃லம், அபூர்வார்த்தங்களை அறியும் மேதை, அறிவு, பொருள்கள், நற்கருமங்களைச் செய்தல் ஆகியவற்றை அடைகிறான். ஆக இவ்வண்ணம் சக்கரம்போலே மாறி மாறி இவ்வுலகிலும் அவ்வுலகிலும் ஸுகத்தையே அடைகிறான்.]* "வர்ணா ஆஸ்₂ரமாஸ்₂ச ஸ்வகர்மநிஷ்ட₂ா: ப்ரேத்ய ஸ்வகர்மப₂லமநுபூ₄ய ததஸ்₂ ஸே₂ஷேண விஸி₂ஷ்டதே₃ஸ₂ஜாதி குலரூபாயு: ச்ருத வ்ருத்த வித்த ஸுக₂மேத₄ஸோ ஜந்ம ப்ரபத்₃யந்தே | விஷ்வஞ்சோ விபரீதா நஸ்₂யந்தி" *[கௌதமதர்மம் 2-11-10, 11]* *[வர்ணாச்ரம கர்மங்களில் நிலைநிற்பவர்கள் இறந்தபின் தம்முடைய கர்மங்களின் ப₂லத்தை அநுபவித்து, எஞ்சிய கர்மத்தின் ப₂லமாக நல்ல தேசம், ஜாதி, குலம், ரூபம், ஆயுள், கேள்விஞானம், ஒழுக்கம், செல்வம், இன்பம், அறிவு*

'ஸ₂' 'ஶ' என்னும் எழுத்தைக்குறிக்கிறது.

तेषां भोगैश्वर्यप्रसक्तानां तया—वाचा भोगैश्वर्यविषयया अपहृतज्ञानानां यथोदितव्यवसायात्मिका बुद्धिः, समाधौ मनसि न विधीयते,-नोत्पद्यते; समाधीयतेऽस्मिन्नात्मज्ञानमिति समाधिर्मनः। तेषां मनस्यात्मयाथात्म्य-

ஆகியவற்றை உடையவர்களாகப் பிறக்கிறார்கள். வர்ணாச்ரம கர்மங்களில் நிலைநில்லாதவர்கள் நேர்மாறான பிறவியை அடைந்து அழிகிறார்கள்.] முதலான ஸ்ம்ருதிகளிலும் ஜந்மங்களும் கர்மமும் கர்மசேஷத்தின் பலமாகக் கிடைப்பதாகக் கூறுகையாலே, "ஜந்மகர்மபலப்ரதாம்" என்றதற்கு "ஜந்மகர்மங்களாகிற பலன்களை அளிப்பது" என்று பொருள் கொள்ளவதே பொருத்தமானது. அதிலேயே "ஜந்மகர்மாக்யபலப்ரதாம்" என்று பாஷ்யத்தில் பொருள் அருளப்பட்டது. "ஜந்மாக்யகர்மபலப்ரதாம்" என்றும் பாஷ்யபாடமிருப்பதாகத் தாத்பர்யசந்த்ரிகையில் காண்கிறது. அப்போது "பிறப்பாகிற கர்மபலத்தை அளிப்பது" என்று பொருளாகிறது.

அந்த வார்த்தை மேலும் எப்படிப்பட்டது? எனில்: (க்ரியாவிசேஷபஹுலாம்) உண்மையறிவு இல்லாமையாலே பல கர்மங்கள் நிறைந்ததாயிருப்பது. ஸ்வர்க்காதிபலன்களை விரும்பும் காமிகளுக்கும், அப்பலன்களை விரும்பாத ஞானிகளுக்கும் பல கர்மங்கள் வேண்டியிருக்கும்போது, காமிகளுக்கு மாத்திரம் க்ரியாவிசேஷங்கள் நிறைந்திருப்பதாகச் சொல்லலாமோ? எனில்; ஞானிகள் எல்லாக்கர்மங்களையும் இவை மோக்ஷஸாதனம் என்னும் ஞானத்தோடு கூடவே செய்கிறார்கள். அவர்களுக்கு எல்லாக் கர்மங்களும் மோக்ஷமாகிற ஒரே பலனுக்கு ஸாதனமாகவும், ஒரே சாஸ்திரார்த்தமாகவும் ஆகின்றன. மேலும், மோக்ஷத்துக்குப் பயன்படாத பல கர்மங்களை அவர்கள் செய்வதுமில்லை. ஆகையால் சரீரமுயற்சியை அதிகமாக உடையதாய், அளவும் அழிவுமுள்ள பலனை உடையதான காமியின் கர்மங்களை "க்ரியாவிசேஷபஹுலாம்" என்றது பொருத்தமே.

ஆக, முன்னிரண்டு ச்லோகங்களாலே காம்யகர்மநிஷ்டர்களின் நிலையைச் சொன்னார். இனி, மூன்றாவது ச்லோகத்தாலே அவர்களுக்கு உண்மையறிவு இல்லையெனக்கூறுகிறார்: (போகைச்வர்யப்ரஸக்தாநாம்) முதல் ச்லோகத்தில் "யே ப்ரவதந்தி" என்றும் இங்கு "போகைச்வர்யப்ரஸக்தாநாம் தேஷாம்" என்றும் "யே" "தேஷாம்" என்னும் பதங்களைக் கூட்டிக்கொண்டு பொருள் கொள்ளவேண்டும். "எவர்கள் காய்க்காத பூப்போன்ற இவ்வார்த்தையை மிகப்பேசுகின்றார்களோ, ஸ்வர்க்காதிகளை அநுப

निश्चयपूर्वकमोक्षसाधनभूतकर्मविषया बुद्धिः कदाचिदपि नोत्पद्यते इत्यर्थः। अतः काम्येषु कर्मसु मुमुक्षुणा न सङ्गः कर्तव्यः॥४२॥४३॥४४॥

---

விப்பதாகிற செல்வத்திலேயே ஈடுபட்ட அப்புல்லறிவாளர்களுக்கு" என்று பொருள். (தயாபஹ்ருதசேதஸாம்) "யாம் ப்ரவத₃ந்தி தயா அபஹ்ருதசேதஸாம்" என்று அந்வயம். போகைச்வர்யத்தில் ஈடுபாட்டாலே கவரப்பட்ட நெஞ்சையுடையவர்களுக்கு. (அபஹ்ருத சேதஸாம்) போகைச்வர்யர்களில் மனத்தைப் பறிகொடுத்த தோடன்றியில், ஆத்மஜ்ஞானமே அரியப்பெற்றவர்களுக்கு என்று கருத்து. இப்படி ஆத்மஜ்ஞானமில்லாமையாலே புதை முன்னிட்ட மோக்ஷஸாதன புத்தியில்லையென்கிறது இனி,– (வ்யவஸாயாத்மிகா பு₃த்₃தி₄:) முன் சொல்லப்பட்ட ஆத்மயாதாத்ம்ய ஜ்ஞானத்தை முன்னிட்ட காமயோக விஷயமான அறிவு. (ஸமாதௌ₄) மனத்தில். "ஸமாதீ₄யதே அஸ்மிந்நிதி ஸமாதி₄ர் மந:" என்றும் வ்யுத்பத்தியாலே ஆத்மஜ்ஞானம் நிலைநிறுத்தப்படுமிடமான மனம் இங்கு ஸமாதி எனப்படுகிறது. அஷ்டாங்கயோகத்தில் உள்ள ஸமாதியைச் சொல்லுவதாகக் கூறுவது பொருந்தாது. (ந விதீ₄யதே) உண்டாவதில்லை. அவர்களுடைய நெஞ்சில் ஆத்மயாதாத்ம்ய நிச்சயத்தோடு கூடிய மோக்ஷஸாதனமான கர்மயோகத்தைப்பற்றிய அறிவு உண்டாவதில்லை. "ந விதீ₄யதே' என்று நிகழ்காலத்திலே கூறுகை யாலே எப்போதுமே இவ்வறிவு இவனுக்கு உண்டாவதில்லை என்றபடி. ஆக, இவ்வளவால் முமுக்ஷுவான கர்மயோகநிஷ்டன் காம்யகர்மங் களில் பற்று வைக்கக்கூடாது என்று தேறிற்று. இவனும் பலனில் பற்றில்லாமல் காம்யகர்ம ஸ்வரூபத்தை அநுஷ்டிக்க சாஸ்திரங்கள் அனுமதித்திருக்கிறபடியால் ஸ்வர்க்காதி பலன்களில் விருப்பம் வைக்கக்கூடாது என்பதே தாத்பர்யார்த்தம். மோக்ஷத்தில் விருப்ப மிருப்பவனுக்கு மோக்ஷவிரோதியான ஸ்வர்க்கம் முதலானவற்றில் விருப்பம் கூடாதன்றோ. 42 44.

45-46. முந்திய மூன்று ச்லோகங்களாலே காம்யகர்மங்களும், அதில் விருப்பமுடையவர்களும் நிந்திக்கப்பட்டனர். இவ்விரண்டு ச்லோகங்களிலும், "மேலான நன்மையை உபதேசிக்கும் சாஸ்திரம் இப்படி நிந்திக்கத்தக்க காம்யகர்மங்களை விதிப்பது பொருந்தாது; விதித்தபின்பு, இங்கு அவற்றைக் கைவிடத்தக்கவையாக உப தேசிப்பது முரண்பட்டது; கர்மங்களை விதிக்கும் சாஸ்திரமாவது அப்ரமாணமாகவேண்டும்; அல்லது அது ப்ரமாணமாரு மாகில், அதை நிந்திக்கும் இந்த சாஸ்திரமாவது ப்ரமாணமல்லாமற் போகவேண்டும்" என்னும் சங்கைக்குப் பரிஹாரம் உரைக்கப்

एवमत्यल्पफलानि पुनर्जन्मप्रसवानि कर्माणि मातापितृसहस्रेभ्योऽपि वत्सलतरतया आत्मोज्जीवने प्रवृत्ता वेदाः किमर्थं वदन्ति, कथं वा वेदोदितं त्याज्यतयोच्यत इत्यत आह—

त्रैगुण्यविषया वेदा निस्त्रैगुण्यो भवार्जुन।
निर्द्वन्द्वो नित्यसत्त्वस्थो निर्योगक्षेम आत्मवान्॥ ४५॥
यावानर्थ उदपाने सर्वतः संप्लुतोदके।
तावान् सर्वेषु वेदेषु ब्राह्मणस्य विजानतः॥ ४६॥

45. த்ரைகு₃ண்ய விஷயா வேதா₃:
நிஸ்த்ரைகு₃ண்யோ ப₄வார்ஜுந।
நிர்த்₃வந்த்₃வோ நித்ய ஸத்வஸ்தே₂ா
நிர்யோக₃க்ஷேம ஆத்மவாந்॥

46. யாவாநர்த்த₂ உத₃பாநே ஸர்வத: ஸம்ப்லுதோத₃கே।
தாவாந் ஸர்வேஷு வேதே₃ஷு ப்₃ராஹ்மணஸ்ய விஜாநத:॥

வேத₃ா:—வேதங்கள். த்ரைகு₃ண்யவிஷயா:—முக்குணங்களை உடையவர்களுக்கு நன்மையைக் கூறுபவை; அர்ஜுந—அர்ஜுனனே! (த்வம் து—நீயோவெனில்) நிஸ்த்ரைகு₃ண்ய: ப₄வ—முக்குணங்களையும் உடையவனாக ஆகாமலிரு; நிர்த்₃வந்த்₃வ: (ப₄வ)—(ஸுகதுக்கம், சீதோஷ்ணம், லாபாலாபம், ஜயாஜயம் முதலான) இரட்டைகளைப் பொறுத்துக்கொள்பவனாக ஆவாய்; நித்யஸத்வஸ்த₂: (ப₄வ)—தினந்தோறும் வளரும் ஸத்வகுணத்தை உடையவனாக ஆவாய்; நிர்யோக₃க்ஷேம: (ப₄வ) — (ஆத்மஸ்வரூபம், அதையடைய உபாயம் ஆகியவை தவிர்ந்த மற்ற) பொருள்களை அடைவதாகிய யோகத்தையும், அடைந்த அவற்றை ரக்ஷிப்பதாகிற க்ஷேமத்தையும் பற்றி முயற்சியற்றவனாக ஆவாய்; ஆத்மவாந் (ப₄வ)—ஆத்மஸ்வரூபத்திலேயே ஈடுபாடு உடையவனாக ஆவாய்.

---

படுகிறது. முதலில் சங்கையைப் பின்வருமாறு இரண்டு கேள்விகளாக அமைக்கலாம். (1) காம்யகர்மங்களை ஸம்ஸாரக்காட்டிலே சில மரங்களாக உருவகப்படுத்தினால், மறுபிறவியில் தேவாதி

ஸர்வத: ஸம்ப்லுதோதகே உதபானே — எல்லாப் புறத்திலும் நிறைந்த நீரையுடைய நீர் நிலேயில். (அதன் நீரை உபயோகிக்க விரும்புகிறவனுக்கு) யாவாந் அர்த்த:— எவ்வளவு மாத்திரம் பயனுடையதோ, தாவாந் (யதா உபாதீயதே)– அவ்வளவே எப்படிக் கைக்கொள்ளப்படு கிறதோ, (ததா—அப்படியே)' ஸர்வேஷு வேதேஷு— எல்லா வேதங்களிலும், ப்ராஹ்மணஸ்ய–வைதிகனுய், விஜா நத:—அறிவாளியான முமுக்ஷுவுக்கு, யாவாந்—(மோக்ஷ ஸாதனமாயிருப்பது) எவ்வளவோ, தாவாந் (ஏவ உபா தேய: )–அளவளவே (ஏற்றுக்கொள்ளத்தக்கது.) (எல்லா வேதபாகமும் ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று என்று கருத்து.)

---

சரீரங்களையெடுப்பதை அந்த மரங்களின புஷ்பங்களாகவும், அந்த சரீரங்களைக்கொண்டு அநுபவிக்கும் ஸ்வர்க்காதிஸுகங்களை அந்த மரங்களின் பழங்களாகவும் உருவகப்படுத்தலாம். இந்த ஸ்வர்க் காதி பலங்கள் மிகவும் அற்பமானவை; மோக்ஷவிரோதியாகை யாலே எட்டிப்பழம் போன்றவை. வேதமோ ஆயிரம் தாய் தந்தை யரைக் காட்டிலும் வாத்ஸல்யம் மிக்கது; தாய் பிரியத்தையே உபதேசிப்பவள்; தந்தை ஹிதத்தையே உபதேசிப்பவன்; வேதமோ இரண்டையும் உபதேசிப்பது; தாய்தந்தையர் தேஹம் முதலான வற்றின் ஆரோக்யம் முதலியவற்றைக் குறித்துச் சிலசமயம் உப தேசிப்பார்கள். வேதமோவெனில் ஆத்மாவுக்கு ஜீவனஹேதுவும் உஜ்ஜீவநஹேதுவுமான நாலுவிதமான புருஷார்த்தங்கள், அபுரு ஷார்த்தங்கள் அனைத்தையும் போக்கடிப்பது, அவற்றுக்கு ஸாதனம் ஆகிய அனைத்தையும் சொல்லுவது; தாய்தந்தையர் தங்கள் குழந்தைகளுக்கே ஒரு ஜன்மத்தில் பிரியஹிதங்களை உபதேசிப் பார்கள். வேதமோவெனில் ஸர்வாத்மாக்களுக்கும் ஸர்வஜன்மங் களிலும் பிரியஹிதங்களை உபதேசிப்பது. அதனுலேயே ஆயிரம் தாய்தந்தையர்களைக் காட்டிலும் வாத்ஸல்யம் மிக்கது வேதம் என்று கூறப்படுகிறது. அத்தகைய வேதங்கள் இப்படி அற்ப பலன்களை அளிப்பவையும், மறுபிறவியை உண்டாக்குகின்றவையு மான காம்யகர்மங்களை எதற்காக உபதேசிக்கின்றன? என்பது முதற்கேள்வி. "வேதங்கள் காம்யகர்மங்களை வஞ்சிப்பதற்காக உப தேசிக்கின்றன என்னவொண்ணுது; ஹிதத்தை உபதேசிப்பவை யன்றே. ஜ்யோதிஷ்டோமம் முதலான ஒவ்வொரு கர்மமும் ஸ்வர்க்கம் முதலான அந்தந்தப் பலன்களோடு நிற்பவையாகை

41. முக்குணத்தோர் பண்புரைக்கு மூண்டுமறை நீமன்னு
வக்குணத்து மன்னே லவாநெஞ்சா—யிக்குணத்தாற்
சாருதுய ரற்றென்றுஞ் சத்துவத்தி னப்புறத்தி
லாருதியோ கக்கேம மற்று.

மன்னு—*அரசனே!* மறை—*வேதமானது.* முக்குணத்தோர் பண்பு—*ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று குணங்களை உடையவர்களுடைய அந்தந்த குணங்களுக்குத் தக்க விஷயங்களை,* மூண்டு உரைக்கும்—*மிகவும் உபதேசிக்கும்;* நீ—*நீ.* அக்குணத்து—(*மூன்றோடொன்று கலந்த*) *அந்த முக்குணங்களில்,* மன்னேல்—*ஈடுபடாதே;* இக்குணத்தால்—*இந்த ரஜஸ்தமோகுணங்களால்,* அவா நெஞ்சாய்—(*ஸ்வர்க்கம், லாபம், ஜயம் முதலானவற்றில்*) *ஈடுபட்ட நெஞ்சையுடையவனுகையாலே,* சாரும்) துயர் அற்று—*ஏற்படும்* (*துக்கம், நஷ்டம், தோல்வி முதலானவை*) *இல்லாதவனாய்,* இயோகக் கேமம் அற்று—(*ஆத்மஸ்வரூபம், அதையடைய உபாயம் ஆகியவை தவிர்ந்த மற்ற*) *பொருள்களை அடைவதாகிற யோகத்தையும், அடைந்த அவற்றை ரக்ஷிப்பதாகிற க்ஷேமத்தையும் பற்றி முயற்சியற்றவனாய்,* என்றும் சத்துவத்தின் அப்புறத்தில் ஆருதி—*என்றும் ஸத்வகுணத்தை நிறைத்துக்கொண்டு,* (*முற்கூறிய யோகக்ஷேமத்தில்*) *வேறுபட்ட ஆத்மஸ்வரூபத்தில் நிலைநிற்பாயாக.*

---

யால், மேலே ஒரு ஹிதத்தைத் தருவதற்காக முதலில் ஸ்வர்க்காதிகளை ஆசை காட்டுகின்றன என்றும் கூறமுடியாது. ஆகையால் தனக்கு ஒருவரால் ஒரு பெருமையை விளைக்கமுடியாமலிருப்பவனாய், பரமகாருணிகனான புருஷோத்தமனுடைய ஆஜ்ஞாரூபமான வேதங்கள், அடியிலிருந்து நுனிவரையில் அளவற்ற துன்ப விளைவையே தருவதும், மின்மினியையொத்த இன்பவொளியையே அளிப்பதுமான ஸ்வர்க்கம் முதலானவற்றின் ஸாதனங்களை உபதேசிப்பது, விஷங்கலந்த உணவை உண்ணும்படி உபதேசிப்பது போலே மிகவும் பொருந்தாது; உண்மையில் இந்தக் காம்யகர்மங்களை அநுஷ்டிக்காதே என்று நிஷேதிப்பதே பொருந்தும்; நன்கு ஆராயப்புகில், ப்ரத்யக்ஷம் முதலானவற்றால் அறியப்படாத இதை அறிவித்து நிஷேதிப்பதைவிட இவற்றைச் சொல்லாமலே விட்டிருக்கவேண்டியதே பொருத்தம்; சேற்றைப் பூசிக்கொண்டு

॥ भा ॥ त्रयो गुणास्त्रैगुण्यं सत्त्वरजस्तमांसि; सत्त्वरजस्तमःप्रचुराः पुरुषास्त्रैगुण्यशब्देनोच्यन्ते; तद्विषया वेदाः; तमःप्रचुराणां रजःप्रचुराणां सत्त्वप्रचुराणां च वत्सलतरतयैव हितमवबोधयन्ति वेदाः। यद्येषां

---

கழுவிக்கொள்வதை விட, தூரத்தில் விலகிச்செல்வதே மேலா யிருப்பதுபோல்'' என்னும் இவ்வளவும் இக்கேள்வியின் கருத்து. (2) இனி, இரண்டாவது கேள்வி:— வேதத்திற்கு முரணானதையே த்யாஜ்யமாக உபதேசிக்கலாமேயொழிய, வேதத்தில் சொல்லப் பட்டதை எப்படி த்யாஜ்யமாக உபதேசிக்கலாம்? இவ்விரண்டு கேள்விகளுக்கும் பதில் இவ்விரண்டு ச்லோகங்களிலும் கூறப் பட்டிருக்கிறபடியை ச்லோக வ்யாக்யானத்திலே காட்டுவோம் இனி.

(த்ரைகு₃ண்யவிஷயா:) ''சதுர்வர்ணாதீ₃நாம் ஸ்வார்த்தே₂'' [அஷ்டாத்யாயீ 7-3-31 வார்த்திகம் 3091] என்கிற வார்த்திகத்தின் படி சதுர்வர்ணமே சாதுர்வர்ண்யம் எனப்படுகிறாற்போலே, ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களாகிற த்ரிகு₃ணங்களே த்ரைகு₃ண்யம் எனப்படுகின்றன. முக்குணங்கள் என்னும் வழக்கு ஸத்வரஜஸ் தமஸ்ஸுக்களுக்கே பிரஸித்தமானது; மேலே ''நித்ய ஸத்வஸ்த₂:'' என்று ஸத்வகுணத்தை எடுக்கையாலும் இங்கு அவற்றைக் குறிப்ப தாகக் கொள்வதே பொருத்தம். இனி, ''முக்குணங்களை விஷய மாகக் கொண்டவை வேதங்கள் என்பது எப்படிப் பொருந்தும்? ஸ்வர்க்கம் முதலான பலன்கள், அவற்றின் ஸாதனங்கள், அவற்றின் செய்முறைகள், அதிகாரிகள் முதலானவற்றையன்றோ வேதங்கள் விஷயமாகக் கொண்டுள்ளன'' என்னும் ஆக்ஷேபம் எழுமாகை யாலே, முக்குணங்களையுடைய புருஷர்கள், அந்தகுணங்களின் மிகுதியையிட்டு த்ரைகு₃ண்யசப்தத்தாலே அமுக்கியமாகக் கூறப் படுவதாகக் கொள்ளவேண்டும். (த்ரைகு₃ண்யவிஷயா வேதா₃:) முக்குணங்களை மிகுதியாகக் கொண்டவர்களை விஷயமாகக் கொண்டவை வேதங்கள். இதன் கருத்தாவது:-உலகில் ஸத்வ ரஜஸ்ஸுக்களைக் காட்டிலும் தமோகுணத்தையே மிகுதியாகக் கொண்டவர்களாய், இம்மைப்பலன்களையே விரும்புகின்றவர்கள் மிகவதிகமாயிருக்கிறார்கள்; ரஜோகுணம் விஞ்சியிருக்கப்பெற்ற வர்களாய், மறுமைப்பலன்களான ஸ்வர்க்கம் முதலானவற்றில் ஆசையுள்ளவர்கள் முற்கூறியவர்களிலும் குறைவாக இருக்கிறார்கள்; ஸத்வகுணம் விஞ்சியிருக்கப்பெற்றவர்களாய் மோக்ஷத்தில் ஆசை யுள்ளவர்கள் மிகக்குறைவாகவேயிருக்கிறார்கள். ஸத்வ நிஷ்டர் களுக்குப் போலவே ரஜஸ்தமோ நிஷ்டர்களுக்கும் நன்மையை அறிவிக்கவேண்டிய கடமை ஆயிரம் தாய் தந்தையரைக் காட்டிலும்

स्वगुणानुगुण्येन स्वर्गादिसाधनमेव हितं नावबोधयन्ति, तदैते रजस्तमः-प्रचुरतया सात्त्विकफलमोक्षविमुखाः स्वापेक्षितफलसाधनमजानन्तः काम-प्रावण्यविवशा अनुपादेयेषु उपादेयभ्रान्त्या प्रविष्टाः प्रनष्टा भवेयुः,

---

வாத்ஸல்யம் மிக்க வேதத்திற்கு உள்ளது. வாதம், பித்தம், கபம் ஆகியவற்றில் ஒவ்வொன்று விஞ்சியிருக்கப்பெற்ற மனிதர்களுக்குத் தக்கவாறு வைத்தியன் உணவையும் மருந்தையும் அவரவர்களுடைய நன்மையைக் கருத்திற்கொண்டு வெவ்வேறாக அளிக்கிறான்; வெவ்வேறு அபத்யங்களை நிஷேதிக்கிறான்; அதைப்பின்பற்றுபவர்கள் ஸுகமடைகிறார்கள்; மீறுகிறவர்கள் வியாதி, மரணம் முதலானவற்றை அடைகிறார்கள். தாம்பூலம் முதலான சிலவற்றில் மிகவும் ஈடுபாடுள்ள பிள்ளைகளை முதலிலே தடுத்தால் அவற்றை அப்பிள்ளைகள் திருடி உபயோகித்து அழிகின்றார்கள். இதைத் தடுப்பதற்காகத் தாய்தந்தையரே முதலில் அவற்றைக் கொடுத்துச் சிறுகச்சிறுக உபதேசித்துப் பிள்ளைகள் அவற்றை உபயோகிப்பதைத் தவிர்ப்பதையும் காண்கிறோம். இவ்வண்ணமாகவே முக்குணமுடையவர்களுக்கும் அவரவர்களுடைய குணங்களுக்குத் தக்கவாறு அவரவர்கள் விரும்பும் ஒவ்வொரு பலனின் ஸாதனங்களை வேதங்கள் உபதேசிக்கின்றன. தாகமெடுத்தவனுக்குத் தண்ணீரையே கொடுக்கவேண்டுமேயொழிய மருந்தைக் கொடுத்துப்பயனில்லையே. அது போலவே வேதங்கள் தமோகுணம் நிறைந்தவர்களுக்கு அவர்கள் விரும்பும் இம்மைப்பலன்களைப் பெறுவதற்கு ஸாதனங்களை உபதேசிக்கின்றன; ரஜோகுணம் நிறைந்தவர்களுக்கு அவர்கள் விரும்பும் ஸ்வர்க்கம் முதலான மறுமைப்பலன்களின் ஸாதனங்களை உபதேசிக்கின்றன. இப்படியல்லாமல் இவர்களுக்கும் முதலிலே மோக்ஷத்தையே உபதேசித்ததாகில், ரஜஸ்ஸும் தமமும் நிறைந்திருக்கையால், ஸாத்விகர்களின் பலமான மோக்ஷத்தில் ஈடுபாடில்லாத இவர்கள், தாங்கள் விரும்பும் பலன்களுக்கு ஸாதனங்களை அறியாமல், அவற்றில் பெருவிருப்பத்தாலே நெஞ்சழிந்தவர்களாய், கைக்கொள்ளத்தகாதவற்றைக் கைக்கொள்ளத்தக்கவையாக மயங்கி அவற்றில் புகுந்து அவைதிகரான பௌத்தர் முதலானோரைப் போலே ஸ்வரூபநாசத்தை அடைவார்கள். ஆகையாலேயே வேதங்கள் ரஜஸ்தமோகுணங்கள் நிறைந்தவர்களுக்கு அவரவர் விரும்பும் பலங்களுக்கு உபாயங்களாகிற காம்யகர்மங்களை உபதேசிக்கின்றன; இதனாலேயே முக்குணங்களையுடையவர்களை விஷயமாகக்கொண்டவை வேதங்கள் என்று கூறப்படுகிறது — என்று கருத்து. இத்தால் முதல் கேள்விக்கு பதிலுரைக்கப்பட்டதாயிற்று.

अतस्त्रैगुण्यविषया वेदाः, त्वं तु निस्त्रैगुण्यो भव—इदानीं सत्त्वप्रचुरस्त्वं तदेव वर्धय; नान्योन्यसङ्कीर्णगुणत्रयप्रचुरो भव; न तत्प्राचुर्यं वर्धयेत्यर्थः।

---

(அர்ஜுந!) வெளுத்தவனே! அர்ஜுனசப்தம் வெளுப்பைக் கூறும்; ஸத்வகுணத்தை வெளுப்பென்று கூறுவது உண்டு. ஆகையால் இங்கு 'அர்ஜுந!' என்னும் விளி, "ஸத்வகுணத்தை மிகுதியாக உடையவனே!" என்னும் பொருளை உடையதாகிறது. (நிஸ்த்ரைகுண்யோ பவ) ஒன்றோடொன்று கலந்த முக்குணங்களுமில்லாதவனாவாயாக; ஸத்வகுணத்தை மிகுதியாகவுடைய நீ அந்த ஸத்வகுணத்தோடு கலந்து நிற்கும் ரஜஸ்தமோகுணங்களை வளர்த்துக்கொள்ளாமல், சிறுகச்சிறுகக் குறைத்துக்கொண்டு ஸத்வகுணத்தை மேலும் மேலும் வளர்த்துக்கொள்வாயாக என்று கருத்து. ஸம்ஸாரமண்டலத்தில் உள்ள ஜீவனான இவனுக்கு இம்முக்குணங்களும் அடியோடு கழிவது பொருந்தாதாகையாலும், மேலே 'நித்ய ஸத்வஸ்த:' என்று ஸத்வகுணத்தில் நிலைநிற்கும்படி உபதேசிக்கையாலும், முக்குணங்களையும் அடியோடு கழித்துக்கொள் என்று பொருள் கொள்வது பொருந்தாது. ஸத்வகுணத்தை வளர்த்துக்கொள்வதும், ரஜஸ்தமோகுணங்களைக் குறைத்துக் கொள்வதும் இவன் கையிலிருக்கிறதோ? எனில்: சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டவற்றைச் செய்யாமலிருப்பதாலும், நிஷேதிக்கப்பட்டவற்றைச் செய்வதாலும் ராஜஸதாமஸாஹாரங்களை உண்பதாலும் மற்றும் பல காரணங்களாலும் ரஜஸ்தமஸ்ஸுக்கள் வளருமென்றும், சாஸ்திரவிதிநிஷேதங்களின்படி நடப்பதாலும், ஸாத்விகாஹாரத்தை உண்பதாலும் மற்றும் பல காரணங்களாலும் ஸத்வகுணம் வளருமென்றும் சாஸ்திரங்களிலேயே கூறப்பட்டுள்ளது; அதன்படி சாஸ்திரவிதிநிஷேதங்களைப் பின்பற்றுவதாலும் ஸாத்விகாஹாரஸேவை முதலானவற்றாலும் ஸத்வகுணத்தை வளர்த்துக் கொண்டு, ரஜஸ்தமோகுணங்களைக் குறைத்துக்கொள்வாயாக என்று கருத்து. இனி இப்படி நிஸ்த்ரைகுண்யனானதால் ஏற்படும் பலனைச் சொல்லுகின்றன இருபதங்கள் (நிர்த்வந்த்வ:) த்வந்த்வம் எனப்படும் இரட்டைகள் அற்றவனாக ஆவாயாக; புண்யபாபங்களால் இந்த ஸம்ஸாரத்தில் ஏற்படும் ஸுகதுக்கங்கள், லாபாலாபங்கள், ஜயாஜயங்கள் முதலான ஸ்வபாவங்களான த்வந்த்வங்கள் (இரட்டைகள்) அற்றவனாக ஆவாயாக என்கிறது. இதன் கருத்தை மூன்று விதமாகக் கொள்ளலாம்: (1) ஸுகதுக்கம் முதலான இரட்டை-

निर्द्वन्द्वः—निर्गतसकलसांसारिकस्वभावः, नित्यसत्त्वस्थः—गुणद्वयरहित-नित्यप्रवृद्धसत्त्वस्थो भव; कथमिति चेत्; निर्योगक्षेमः आत्मस्वरूपतत्प्राप्त्यु-

களைப் பொறுத்துக் கொள்வாயாக. (2) ஸோபாக்யானந்தத்தை அனுபவிக்கும்போது ஸுகதுக்கம் முதலானவற்றை ஸுகதுக்கங்களாகக் கருதாது உன்வசத்தில் நிற்பாயாக. (3) ஸம்ஸாரமண்டலத்திலுள்ள இரட்டைகள் எல்லாமற்ற மோக்ஷத்தை அடைவாயாக. (அதை அடைவதற்குரிய ஸாதனங்களை அனுஷ்டிப்பாயாக என்கை.) (நித்யஸத்வஸ்த: பவ) "அப்பக்ஷ:" [ஜலத்தை ஆஹாரமாகக் கொண்டவன்] என்றும் "அப்மாத்ரபக்ஷ:" [ஜலத்தை மாத்திரம் ஆஹாரமாகக்கொண்டவன்] என்று பொருளாவதுபோல். "நித்ய ஸத்வமாத்ரஸ்த: பவ" [எப்போதும் ஸத்வம் ஒன்றிலேயே நிலை நிற்பவனாவாயாக.] என்று பொருளாகிறது. ரஜஸ்தமங்கள் தலை மட்டுப்பெற்றதாய், எப்போதும் வளருகின்றதான ஸத்வம் ஒன்றிலேயே நிலைநிற்பாயாக என்று கருத்து. (நித்ய ஸத்வஸ்த: பவ) ஒருசமயத்தில் ரஜஸ்தமோகுணங்கள் ஸத்வகுணத்தைக் காட்டிலும் விஞ்சினாலும் நித்யஸத்வஸ்தன் என்று கூறமுடியாது; ஆகையால் எப்போதுமே ஸத்வகுணம் மற்ற இரண்டு குணங்களைக்காட்டிலும் விஞ்சியிருக்கும்படி பார்த்துக்கொள் என்றதாகிறது. "ஸத்வ குணத்தை எப்போதும் வளர்த்துக் கொண்டே போ" என்று பலிதார்த்தம். "நிஸ்த்ரைகுண்ய:" என்றவிடத்தில் ரஜஸ்தமஸ்ஸுக்களைக் குறைத்துக்கொள் என்று உபதேசிப்பதிலும், "நித்யஸத்வஸ்த:" என்றவிடத்தில் ஸத்வத்தை வளர்த்துக்கொள் என்று உபதேசிப்பதிலும் நோக்கமாகையாலே புநருக்தியில்லை. இனி, "ரஜஸ்தமங்களை வளர்க்காதே; ஸத்வத்தை மிகுதியாக வளர்த்துக்கொள் என்னும் விதிநிஷேதங்கள் பொருந்தாவே; இது ரஜஸ்ஸு, இது தமம், இது ஸத்வம் என்று பார்த்து முன் இரண்டைத் தவிர்ப்பதும் பின்னதை வளர்ப்பதும் செய்யமுடியாதே; ஸத்வகுணத்தை வளர்ப்பதற்கும், ரஜஸ்தமங்களைக் குறைப்பதற்கும் உபாயமென்ன?" என்னும் கேள்வி எழக்கூடும். இக்கேள்விக்குப் பரிஹாரம் உரைக்கின்றன அடுத்துள்ள "நிர்யோகக்ஷேம ஆத்மவாந்" என்னும் இரண்டு பதங்கள்,—(நிர்யோகக்ஷேமோ பவ) கிடைக்கப்பெறாத பொருளை அடைவது யோகம் என்றும், கிடைத்த வஸ்துவை நன்கு ரக்ஷிப்பது க்ஷேமம் என்றும் கூறப்படுகிறது. இங்கு ப்ரகரணபலத்தாலே ஆத்மஸ்வரூபமென்ன, அதையடையும் உபாயமென்ன இவைகளிலும் வேறுபட்ட பொருள்களை அடைவது யோகம் என்றும் அப்பொருள்

पायबहिर्भूतानामर्थानां योगं प्राप्तानां च क्षेमं परित्यज्य आत्मवान् भव—आत्मस्वरूपान्वेषणपरो भव। [अप्राप्तस्य प्राप्तिर्योगः प्राप्तस्य परिरक्षणं क्षेमः।] एवं वर्तमानस्य ते रजस्तमःप्रचुरता नश्यति सत्त्वं च वर्धते।

---

42. எங்கு நிறைநீ ரெழிற்றடத்து யாவர்க்கு
மிங்கு மருவுபய னெவ்வளவா—மங்கனைத்து
வேதத்து மந்தணற்கு வேண்டுபய னவ்வளவாம்
போதத்துக் கீடாப் புணர்ந்து.

இங்கு—*இம்மையில்,* எங்கும் நிறை நீர் எழில் தடத்து—*நாற்புறத்திலும் நீர்நிறைந்த அழகிய நீர்நிலையில்.* யாவர்க்கும்—*(அதனால் பயனடைய விரும்பும்) அனைவர்க்கும்.* மருவு பயன் எவ்வளவாம்—*உண்டாகும் பயன் எவ்வளவோ.* அங்கு—*மறுமையில்,* அனைத்து வேதத்தும்—*எல்லா வேதத்திலும்.* அந்தணற்கு-*வேதத்தில் நிலை நின்றவனுக்கு.* போதத்துக்கு ஈடா புணர்ந்து வேண்டு பயன்—*(மோக்ஷத்தை விரும்பும் தன்) அறிவுக்குச்சேர ஆசைப்பட்டுக் கைக்கொள்ளும் பயன்.* அவ்வளவாம—*அவ்வளவேயாகும்.*

---

*களை நன்கு ரக்ஷிப்பது க்ஷேமம் என்றும் கொள்ளவேண்டும். இந்த யோகக்ஷேமங்கள் அற்றவனாக ஆவாயாக; இப்படியானவனாகில் ரஜஸ்தமங்கள் குறையும் என்று கருத்து. ஸத்வம் வளருவதற்கு வழியை அடுத்தபடியாகக் கூறுகிறது.—( ஆத்மவாந் பவ ) என்று. ஆத்மாவை உடையவனாவாயாக; மிகவும் கவனத்தோடு ஆத்மஸ்வரூபத்தைத் தேடுவதில் ஈடுபடுவாயாக என்று கருத்து. இப்படி ரஜஸ்தமஸ்ஸுக்கள் வளருவதற்குக் காரணமான மற்ற விஷயங்களில் யோகக்ஷேமங்களைக் கைவிட்டவனாய், ஆத்மஸ்வரூபத்தைத் தேடுவதில் ஈடுபாடு உடையவனாக ஆனாயானால் ரஜஸ்தமங்கள் தன்னடையே குறைந்து ஸத்வகுணம் வளரும் என்று கருத்து. ஸத்வரஜஸ்தமங்களை நேரே கண்டு ஒன்றை வளர்ப்பதையும் இரண்டைத் தவிர்ப்பதையும் நீ செய்ய வேண்டியதில்லை; இதர விஷயங்களில் யோக க்ஷேமமற்றவனாய், ஆத்மஸ்வரூபத்தைத் தேடுவதில் ஈடுபாடுடையவனாக ஆனாயானால் ராஜஸதாமஸாஹாரங்களற்று, ரஜஸ்தமங்கள் குறையப்பெற்று, ஸத்வம் வளரப்பெற்று நீ நிஸ்த்ரைகுண்யனாகவும் நித்யஸத்வஸ்தனாகவும், நிர்த்வந்தவனாகவும ஆகலாம் என்பது ச்லோகத்தின் திரண்ட பொருள். ( 45 )*

न च वेदोदितं सर्वं सर्वस्योपादेयम्; यथा सर्वार्थपरिकल्पिते सर्वतः संप्लुतोदके उदपाने पिपासोर्यावानर्थः—यावदेव [पानीयं] प्रयोजनम्, तावदेव तेनोपादीयते, न सर्वम्। एवं सर्वेषु च वेदेषु ब्राह्मणस्य

---

(46) இனி, "வேதத்திற்கு முரணானதுவே த்யாஜ்யமாக உபதேசிக்கலாமேயொழிய, வேதத்தில் சொல்லப்பட்டதை எப்படி த்யாஜ்யமாக உபதேசிக்கலாம்?" என்னும் இரண்டாவது கேள்விக்கு, 'அதிகாரிபேதத்தைப்பற்றி த்யாஜ்யமாக உபதேசிக்கலாம்' என்று திருஷ்டாந்தத்தோடு பதிலுரைக்கப்படுகிறது "யாவாநர்த்த:" என்னும் ச்லோகத்தாலே. (ஸர்வத: ஸம்ப்லுதோதகே உதபாநே) எல்லாப்புறங்களிலும் நிறைந்த நீரையுடைய நீர் நிலையில். இதனால் இந்த நீர்நிலை குடிப்பது, குளிப்பது முதலான ஒவ்வொரு பயனை உத்தேசித்துவரும் எல்லா அதிகாரிகளுக்கும் அவரவர் விரும்பும் எல்லாப்பயன்களுக்கும் உபயோகப்படக் கூடியது என்று உணர்த்தப்படுகிறது. (யாவாந் அர்த்த:) எவ்வளவு (ஒருவனுக்குப்) பயன்படுமோ (அவ்வளவே அவனால் கைக்கொள்ளப்படுகிறது; நீர்நிலை முழுவதையும் அவன் உபயோகப்படுத்துவதில்லை.) அந்த நீர்நிலையில் தாஹசாந்தி செய்து கொள்ளுவதற்காக ஒருவன் வருகிறான் என்று வைத்துக்கொள்ளுவோம்; அவனுக்குத் தன் தாஹசாந்திக்கு வேண்டிய ஒரு செம்பு நீர்த்தமே பயன்படுகிறது. நீர்நிலை முழுவதும் அவனுக்குப் பயன்படுவதில்லையன்றோ. (தாவாந் ஸர்வேஷு வேதேஷு) அப்படியே பலவிதமான ஏற்றத்தாழ்வுகளுடன் கூடிய முக்குணங்களோடு கூடிய பலவிதமான அதிகாரிகளுக்கு வேண்டிய பலவிதமான விஷயங்களைக்கூறும் எல்லா வேதங்களிலும் அந்தந்த அதிகாரிக்குத் தனக்கு வேண்டியதைக்கூறும் பகுதிமாத்திரம் கைக்கொள்ளத்தக்கதாகவும், மற்ற பகுதிகள் கைவிடத்தக்கதாகவும் ஆகின்றன என்கை. அடுத்த இரண்டு பதங்களாலே ப்ரக்ருதமான அதிகாரியைக் காட்டுகிறார்,- (ப்ராஹ்மணஸ்ய) இங்கு அர்ஜுனன் க்ஷத்ரியனாகையாலும் க்ஷத்ரியவைச்யர்களுக்கும் ப்ரஹ்மவித்யையில் அதிகாரமுண்டாகையாலும் 'ப்ராஹ்மண ஜாதியைச்சேர்ந்தவனுக்கு' என்று பொருள்கொள்ளமுடியாது: "ததத்தே" [அஷ்டாத்யாயீ 4-2-59] என்னும் ஸூத்ரத்தையொட்டி 'ப்ரஹ்ம' எனப்படும் வேதத்தை அத்யயனம் செய்தவனாகையாலே ப்ராஹ்மணன் எனப்படுவதாகக் கொள்ளலாமே? எனில்: "ப்ராஹ்மோ

विजानतः—वैदिकस्य मुमुक्षोः यदेव मोक्षसाधनं तदेवोपादेयम्; नान्यत् ॥ ४५ ॥ ४६ ॥

॥ भा ॥ अतस्सत्त्वस्थस्य मुमुक्षोरेतावदेवोपादेयमित्याह—

कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन ।
मा कर्मफलहेतुर्भूः मा ते सङ्गोऽस्त्वकर்மणि ॥ ४७ ॥

---

(அ)ஜாதௌ" [ அஷ்டாத்யாயீ 6-4-171 ] என்னும் ஸூத்ரத்தின் படி ஜாதிதவிர்ந்த மற்ற பொருள்களில் வரும்போது "ப்ராஹ்மः" என்றே பிரயோகிக்கவேண்டுமேயொழிய, 'ப்ராஹ்மண:' என்றிருப்பது ஒட்டாது; ஆகையால் "ப்ரஹ்ம அணதிதி ப்ராஹ்மண:" [ வேதத்தை உச்சரிக்கிறானாகையாலே ப்ராஹ்மணனாகிறான். ] என்னும் வ்யுத்பத்தியாலே ப்ராஹ்மணசப்தம் வைதிகனான ஸந்யாஸிகளைச் சொல்லுவதாகவே கொள்ளவேண்டும். "ஸுகந்த்வாதிஷு பரரூபம் வக்தவ்யம்" [ அஷ்டா 1-1-64 ல் வார்த்திகம் 3632] என்னும் வார்த்திகத்தையொட்டி "ப்ரஹ்மண" என்றாகி, ப்ரஜ்ஞாதியாகையாலே அண்ப்ரத்யயம் வந்து, ஆதிவ்ருத்தி ஏற்பட்டு, "ப்ராஹ்மண:" என்னும் ரூபம் ஸித்திக்கிறது. "ப்ராஹ்மண சப்தஸ்யாத்ர ஸந்ந்யாஸி பரத்வேந சங்கரவ்யாக்யா த்வதிமந்தா" [ ப்ராஹ்மண சப்தம் இங்கு ஸந்யாஸியைக் குறிக்கிறது என்று சங்கரர் வியாக்கியானம் செய்திருப்பது (அர்ஜுனன் ஸந்யாஸியல்லாமையாலும், க்ருஹஸ்தர்களுக்கும ப்ரஹ்மவித்யையில் அதிகாரம் உண்டாகையாலும்) அதிமந்தமானது. ] என்று தாத்பர்ய சந்த்ரிகை. (விஜாநத:) விசேஷமான அறிவையுடையவனுக்கு. நன்மைதீமையைப்பகுத்து உணரும் அறிவை உடைய முமுக்ஷுவுக்கு என்று கருத்து. "நீர்நிலையில் தாஹசாந்தி செய்து கொள்ள விரும்புகிறவனுக்கு ஓரளவு ஜலமே ஏற்கத்தக்கதாகிறது போலே, வைதிகனாய், முமுக்ஷுவாயிருப்பவனுக்கு, வேதங்களில் மோக்ஷஸாதனத்தைக் கூறும்பகுதியே கைக்கொள்ளத்தக்கதாகிறது; மற்றவேதப்பகுதி கைவிடத்தக்கதாகவுமாகின்றது" என்பது ச்லோகத்தின் திரண்ட பொருள். வர்ணம், ஆச்ரமம், ப்ரவரம், சரணம் முதலானவற்றில் வேறுபடும் வெவ்வேறு அதிகாரிகளுக்கு அவரவர்களுக்கேயுரிய வெவ்வேறு தர்மங்களை விதிப்பதுபோலே, காமிகளுக்குஜ்யோதிஷ்டோமாதி காம்யகர்மங்களையும், ஞானிகளுக்கு மோக்ஷஸாதனகர்மங்களையும் விதித்திருக்கிறதாகையாலே, ஞானிகள் காமயகர்மங்களைக்கைவிடுவதில் தவறில்லை என்று கருத்து. 45-46

47. கர்மண்யேவாதிகாரஸ் தே மா பலேஷு கதாசந ।
மா கர்மபலஹேதுர் பூ: மா தே ஸங்கோऽஸ்த்வகர்மணி ॥

தே — முமுக்ஷுவான உனக்கு. கர்மணி ஏவ — நித்ய நைமித்திகாதி கர்ம ஸ்வரூபத்திலேயே. அதிகார: விருப்பம் வைக்கத்தக்கது; பலேஷு — (அந்தந்தக் கர்மங்களுக்குப் பயனாக ஓதப்படும்) ஸ்வர்க்கம் முதலான தாழ்ந்த பயன்களில். கதாசித் ஒருபோதும். (அதிகார:) மா (பூத்) — விருப்பம் வைக்கத்தகாதது. கர்மபல ஹேது:— கர்மத்துக்கும் பலத்திற்கும் காரணமாக. மாபூ: — நீ ஆகாதே; அகர்மணி — மோக்ஷஸாதன கர்மங்களை அநுஷ்டியாமலிருப்பதில், தே — உனக்கு. ஸங்க: — ஈடுபாடு, மாஸ்து — ஏற்படவேண்டாம்.

---

43. கருமத்தே யுன்ற னதிகாரங் கண்டாய்
வருமப் பயனிலனு மன்று—தொருமித்து
மற்றதனுக் கேதுவா மன்னேல் கருமமலா
வெற்றமைவில் வேண்டா விருப்பு.

உன்றன் அதிகாரம்—நீ விருப்பம் வைக்கவேண்டியது. கருமத்தே கண்டாய்-கர்மஸ்வரூபத்திலேயே என அறிவாய்; வரும் அப்பயனில் — அக்கர்மங்களாலே வரும் சுவர்க்கம் முதலான தாழ்ந்த பலன்களில். அனு மன்றது—சிறிதும் ஈடுபடாது. மற்று—மேலும். அதனுக்கு—கர்மபலங்களுக்கு. ஒருமித்து ஏதுவா மன்னேல்—நீ ஒருவனே ஹேதுவென்று அநுஸந்திக்காதே; கருமம் அலா வெற்று அமைவில்-கர்மமே செய்யாமலிருக்கும் வீணான நிலையில், விருப்பு வேண்டா— விருப்பத்தை வைக்காதே.

---

47. இனி, "முமுக்ஷுவான கர்மயோகநிஷ்டன் மோக்ஷம்தவிர்ந்த பலன்களை யளிக்கும் எல்லாக்கர்மங்களையும்கைவிடலாம் எனில், நித்ய நைமித்திக கர்மங்களுக்கும், பொய்சொல்லாதிருத்தல் முதலான நிவ்ருத்தி தர்மங்களுக்கும் சாஸ்திரங்களில் சிற்சில பலன்களைச் சொல்லியிருக்கிறதாகையாலே, அக்கர்மங்கள் அனைத்தையுமே கைவிட்டு இஷ்டப்படி நடக்கலாம் என்று ஆகிவிடுமே; மேலும், 'முமுக்ஷுவுக்கு எவ்வளவு தேவையோ அவ்வளவே வேதங்களில் ஏற்கத்தக்கது' என்று சென்ற சுலோகத்தில் சொல்லப்பட்ட

॥ भा ॥ नित्ये नैमित्तिके काम्ये च केनचित् फलविशेषेण संबन्धितया श्रूयमाणे कर्मणि नित्यसत्त्वस्थस्य मुमुक्षोस्ते कर्ममात्रेऽधिकारः।

---

அளவை எப்படி நிர்ணயிப்பது?" என்னும் சங்கைகள் ஏற்படக் கூடும்; அந்தசங்கைகளுக்கு, "ஸத்வநிஷ்டனை முமுக்ஷுவுக்கு நித்ய நைமித்திக கர்மங்களின் ஸ்வரூபமும், இயன்றவரையில் அனுஷ்டிக்கவேண்டிய காமயகர்மங்களின் ஸ்வரூபமுமே ஏற்கத்தக்க அளவு. தான் விரும்பும் மோக்ஷபலனுக்கு முரணானவையாகை யாலே அக்கர்மபலன்கள் மாத்திரமே கைவிடத்தக்கவை. முமுக்ஷுவுக்கு அவச்யாபேக்ஷிதமாகையாலே, நிவ்ருத்திதர்மங்களும் மோக்ஷ ஸாதனமாகக் கைக்கொள்ளவேண்டியவையே. ஆகையால் காம சாரதோஷமும ஏற்படாது" என்று இந்த ச்லோகத்தில் பதில் உரைக்கப்படுகிறது.

(கர்மண்யேவ) கர்மஸ்வரூபத்திலேயே. முழுவதும் அநுஷ்டிக்கவேண்டிய நித்யநைமித்திக கர்மங்கள், இயன்றவரையில் அநுஷ்டிக்கவேண்டிய காம்யகர்மங்கள் ஆகியவற்றின் ஸ்வரூபத்திலேயே. (தே அதி₄கார:) உனக்கு அதிகாரம் உண்டு. "ஸ்வகீயத்வபு₃த்₃தி₄ர் ஹ்யதி₄கார:" [தன்னுடையது என்னும் புத்தியே அதிகாரம் எனப்படுகிறது.] என்று வேதார்த்தஸங்க்ரஹவ்யாக்யானத்தில் அதி₄காரசப்தத்தின் பொருள் விளக்கப்பட்டது. (கர்மண்யேவ அதி₄காரஸ்தே) எப்போதும் ஸத்வகுணத்தில் நிலைநிற்பவனும், முமுக்ஷுவான நீ கர்மஸ்வரூபதததை அநுஷ்டிப்பதிலேயே விருப்பம் வைக்கவேண்டும்; அவ்வக்கர்மங்களுக்குப் பலமாக சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட பலன்களில் விருப்பம் வைக்கக்கூடாது என்று கருத்து. நித்தியநைமித்திககர்மங்களுக்கும் (1) வேறு கர்மங்களைச் செய்ய அதிகாரம் (2) முன் உள்ள பாபம் தீருவது (3) செய்யா விட்டால் ஏற்படக்கூடிய தோஷத்தைத்தவிர்த்தல் (4) ப்ராஜாபத்யாதிலோகங்களை அடைவது முதலான பலன்கள் சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளன; காம்யகர்மம் ஒவ்வொன்றுக்கும் தனித்தனிப் பலன் உண்டு என்பது பிரஸித்தம. இந்தப்பலன்களில் விருப்பமில்லாமல், (மோக்ஷமாகிற ஒரே பலனில் விருப்பத்தோடு) அந்தந்தக் கர்மஸ்வரூபத்தை மாத்திரம் முமுக்ஷுவான நீ அநுஷ்டிக்கவேண்டும என்று கருத்து. இனி, 'ஏவ'காரத்தால் தள்ளப் படுவதை விவரிக்கிறது,— (மா ப₂லேஷு கதா₃சந) அந்தந்தக்கர் மங்களுக்குப் பலமாகச்சொல்லப்படும் சுவர்க்கம் முதலான தாழ்ந்த

तत्संबन्धितयाऽवगतेषु फलेषु न कदाचिदप्यधिकारः। सफलस्य बन्धरूपत्वात् फलरहितस्य केवलस्य मदाराधनरूपस्य मोक्षहेतुत्वाच्च। मा च कर्मफलयोर्हेतुर्भूः। त्वयाऽनुष्ठीयमानेऽपि कर्मणि नित्यसत्त्वस्थस्य मुमुक्षोस्तवाकर्तृत्वमप्यनुसन्धेयम्। फलस्यापि क्षुन्निवृत्त्यादेर्न त्वं हेतुरित्यनुसन्धेयम्। तदुभयं गुणेषु वा सर्वेश्वरे मयि वाऽनुसन्धेयमित्युत्तरत्र वक्ष्यते। एवमनुसन्धाय कर्म कुरु। अकर्मणि—अननुष्ठाने *न योत्स्यामीति यत्त्वयाऽभिहितं न तत्र ते सङ्गोऽस्तु; उक्तेन प्रकारेण युद्धादिकर्मण्येव सङ्गोऽस्त्वित्यर्थः॥ ४७॥

---

பலன்களில் உனக்கு ஒருபோதும் அதிகாரம் இல்லை. அவற்றில் நீ விருப்பம் வைக்கக்கூடாது என்று கருத்து. நீ முமுக்ஷுவாகையாலே, நீ விரும்பும் மோக்ஷமாகிற மிகவுயர்ந்த பலனைத் தவிர்ந்த மற்ற பலன்களில் விருப்பத்தோடு செய்யப்படும் கர்மங்கள் ஸம்ஸாரத்திலேயே உன்னைக் கட்டிவைப்பவையாகையாலே, அப்பலன்களில், முமுக்ஷுவான நீ விருப்பம் வைக்கக்கூடாது என்பதும், அப்பலன்களில் விருப்பமற்று பகவதாராதனமாகச் செய்யப்படும் அதே கர்மங்கள் மிகச்சிறந்த பலனான மோக்ஷத்திற்கு ஸாதனமாகையாலே அவற்றை அநுஷ்டிப்பதில் நீ விருப்பம் வைக்கவேண்டும் என்பதும் ச்லோகத்தின் பூர்வார்த்தத்தின் (முற்பாதியின்) கருத்து. (மா கர்மபலஹேதுர் பூ:) கர்மங்களுக்கும் பலன்களுக்கும் நீ ஹேதுவாகாதே. "கர்மங்களின் பலன்களுக்கு" என்று உத்தரபதார்த்தப்ரதானமான (ஷஷ்டீ) தத்புருஷஸமாஸமாகக் கொண்டால், "மா பலேஷு கதாசந" என்பதோடு புநருக்தி வரப்ரஸக்தியுண்டாகையாலும், மேலே விவரிக்கப்போகும் அகர்த்ருத்வாநுஸந்தானத்தை இங்கும் உணர்த்துவதாகக் கொள்ளுவது உசிதமாகையாலும், "கர்மங்களுக்கும் பலன்களுக்கும் (ஹேதுவாகாதே)" என்று உபயபதார்த்தப்ரதானமான த்வந்த்வஸமாஸமாகக்கொள்வதே தக்கது. "உனக்குக் கர்மத்திலேயே அதிகாரம்" என்றும், "செயலின்மையில் பற்று வைக்காதே" என்றும் முன்னும் பின்னும் சொல்லிவிட்டு நடுவில் "நீ கர்மத்துக்கு ஹேதுவாகாதே" என்று நிஷேதிப்பது பொருந்தவில்லையே? எனில்; உன்னைக் கர்மத்துக்கு ஹேதுவாக அநுஸந்திக்காதே என்று கூறுவதிலேயே இங்கு நோக்காகையாலும் கர்த்ருத்வமே கிடையாது என்று கூறுவதில் நோக்கில்லையாகையாலும் முன்பின் விரோதமில்லை.

(மா ப₂லஹேதுர் பூ₄:) பலஹேதுவாகாதே; பலத்தில் விருப்பத்தோடு கர்மத்தைச்செய்வதில் ஈடுபடாதே என்று கருத்து. "மா ப₂லேஷு கதா₃சந" என்றதற்கும், "மா ப₂லஹேதுர் பூ₄:" என்றதற்கும் புநருக்தி வருகின்றதே எனில்; "மா ப₂லேஷு கதா₃சந" என்றவிடத்தில், ஜ்யோதிஷ்டோமயாகமும் முதலானவற்றின் பலமான ஸ்வர்க்கம் முதலான மறுமைப்பலன்களில் ஆசைவைக்காதே என்று கூறப்படுகிறது; "மா ப₂லஹேதுர் பூ₄:" என்றவிடத்தில் உண்பது முதலானவற்றின் ப₂லமான பசிதீருதல் முதலான இம்மைப்பலன்களிலும் ஆசைவைக்காதே என்று கூறப்படுகிறது. ஆகையாலே புநருக்தியில்லை. பசிதீருதல் முதலான இம்மைப்பலன்களுக்கு இவன் ஹேதுவல்லவெனில்; அவற்றுக்கு ஸாதனமான உணவருந்துதல் முதலானவற்றிலும் விருப்பமற்று, சரீரம் நிலைகுலைந்து, கர்மயோகம் முதலான மோக்ஷோபாயங்களையும் அனுஷ்டிக்கமுடியாமல் போகவேண்டிவருமே எனில்: இங்கு பசிதீருதல் முதலான பலன்களுக்கு ஹேதுவாகத் தன்னைக் கருதலாகாது என்று கூறுவதிலேயே நோக்காகையாலும், இவனுக்குப் ப₂லகாரணத்வமே கிடையாது என்று கூறுவதில் நோக்கில்லையாகையாலும் இந்த தோஷம் வாராது. ஆக, "மா கர்மப₂லஹேதுர் பூ₄:" என்றதால், கர்மத்துக்கும், பலத்திற்கும், உன்னை ஹேதுவாக அனுஸந்திக்காதே என்று சொல்லிற்றாயிற்று.

இதற்கு மேலும் ஓராக்ஷேபம் எழக்கூடும். அதாவது:— கர்மத்திற்கும் பலத்திற்கும் இவன் உண்மையில் ஹேதுவாகாநிற்க, 'அவற்றுக்கு நான் ஹேதுவல்லன்' என்று அநுஸந்திப்பது பொருந்தாதே. காரணமில்லாமல் கார்யம் உண்டாகிறது என்று கூறும் சார்வாகர் முதலானோரைப்போல் கர்மபலங்களுக்குக் காரணமே இல்லையென்று இவன் நினைக்கவேண்டிவருமே; அப்படி நினைத்தால், உபாயநுஷ்டானமாகிற காரணமில்லாமலே, மோக்ஷமாகிற காரியமும் ஸித்திக்கும் என்று நினைந்து, கர்மயோகமாகிற உபாயாநுஷ்டானத்தைத் தவிர்க்கவேண்டிவருமே என்பது அவ்வாக்ஷேபம். இதற்குப்பரிஹாரம் பின்ருமாறு: இங்கு கர்மத்திற்கும் ப₂லத்திற்கும், தான் ஹேதுவல்ல என்று அநுஸந்திக்கவேண்டுமென்னுமிவ்வளவே கருத்தேயொழிய ஹேதுவே கிடையாது என்று அநுஸந்திககவேண்டுமென்று கருத்தல்ல. ஏனெனில்: ஸத்வரஜஸ்தமோகுணங்கள் கர்மப₂லஹேதுவாகின்றன, ஸர்வேச்வரன்

கர்மபலங்களுக்கு ஹேதுவாகிறன் என்று அநுஸந்திக்கவேண்டும் என்று மூன்றாமத்தியாயத்தில் சொல்லப்படப்போகிறதன்றோ.

"அஸக்த்யா லோகரக்ஷாயை குணேஷ்வாரோப்ய கர்த்ருதாம்।
ஸர்வேச்வரே வா ந்யஸ்யோக்தா த்ருதீயே கர்மகார்யதா॥"

[மோக்ஷம் தவிர்ந்த பலன்களில் ஸங்கமற்று, லோகஸங்க்ரஹத்தின் (கீதை 3-20) பொருட்டு, ஸத்வாதிகுணச்சேர்க்கையினால் தனக்குக் கர்த்ருத்வம் ஏற்படுகிறது என்றும், அதுவும் ஸர்வாந்தர்யாமியான பகவானுடைய ப்ரேரணத்தாலேயே என்றும் நினைத்துக் கர்மாநுஷ்டானம் செய்யவேண்டும் என்று மூன்றாமத்தியாயத்தில் கூறப்படுகிறது.] என்று ஆளவந்தாரும் கீதார்த்தஸங்க்ரஹத்தில் அருளினர். ஆகையால் காரணமில்லாமல் கார்யமுண்டாவதாக இங்கு கருத்தில்லையாகையால், முற்கூறியபடி மோக்ஷஸாதனத்தை அனுஷ்டிக்க வேண்டியதில்லையென்று ஆகாது. 'அப்படியும், தான் ஹேதுவல்ல என்று அநுஸந்தித்தாலே மோக்ஷஸாதனத்தைத் தான் அனுஷ்டிக்காமற்போக வேண்டிவரும் என்னும் தோஷத்திற்குப் பரிஹாரம் ஏற்படவில்லையே' எனில்: தான் ஸர்வாத்மநா ஹேதுவல்ல என்று நிஷேதிப்பதில் கருத்தில்லையிங்கு. (1) தன்னை யுள்ளிட்ட ஐந்து காரணங்கள் உள்ளவாகையாலே தான் ஒருவனே கர்மபலங்களின் ஹேதுவல்ல என்றும், (2) தனக்குள்ள கர்மபலஹேதுத்வம் ஸத்வாதிகுணங்களால் செயற்கையாய் ஏற்பட்டதேயொழிய ஸ்வரூபப்ரயுக்தம் (இயற்கையானது) அல்ல என்றும் அநுஸந்திக்கவேண்டும் என்பதே இங்கு கருத்து. மஹோபகாரம் செய்த உதாரன் ஒருவன், 'தான் ஒன்றும் செய்யவில்லை' என்று அநுஸந்திப்பதுபோலே, இவனும் தனக்கு ஒருவகையில் கர்மபலஹேதுத்வமிருக்கச்செய்தேயும், தனக்கு அது இல்லை யென்று அநுஸந்திக்கக்குறையில்லை என்றுமாம். உண்மையில் ஜீவனுடைய கர்த்ருத்வமும் பரமாத்மாவின் வசப்பட்டதே என்று "பராத்து தச்ச்ருதே:" [2-3-20] என்று ப்ரஹ்மஸூத்ரத்தில் நிலை நிறுத்தப்பட்டதும் இங்கு அறியத்தக்கது. ஆகையாலே முற்கூறிய தோஷம் வாராது. இவ்விஷயம்

"ப்ரக்ருதே: க்ரியமாணானி குணை: கர்மாணி ஸர்வஶ:।
அஹங்காரவிமூடாத்மா கர்த்தாऽஹமிதி மந்யதே॥ [3-27]

[பிரகிருதியின் குணங்களான ஸத்வரஜஸ்தமங்களால் செய்யப்படும் எல்லாக்கர்மங்களையும் தேஹாத்மாபிமானியானவன் 'நானே செய்கிறேன்' என்று எண்ணுகிறான்.]

॥ भा ॥ एतदेव स्फुटीकरोति—
योगस्थः कुरु कर्माणि सङ्गं त्यक्त्वा धनञ्जय।
सिद्ध्यसिद्ध्योः समो भूत्वा समत्वं योग उच्यते॥ ४८॥

48. யோக₃ஸ்த₂: குரு கர்மாணி ஸங்க₃ம் த்யக்த்வா த₄நஞ்ஜய।
ஸித்₃த்₄யஸித்₃த்₄யோ: ஸமோ பூ₄த்வா ஸமத்வம் யோக₃ உச்யதே ॥

**த₄நஞ்ஜய**—*அர்ஜுன!* **ஸங்க₃ம்**—*(ராஜ்யம் உறவினர் முதலானவற்றில்) பற்றை,* **த்யக்த்வா**-*கைவிட்டு,* **ஸித்₃த்₄ய ஸித்₃த்₄யோ:**—*(வெற்றி முதலானவை) ஸித்திப்பதிலும், ஸித்தியாமலிருப்பதிலும்* **ஸம: பூ₄த்வா**-*ஒருபடிப்பட்டவனாய்,* **யோக₃ஸ்த₂:**-*யோகத்திலிருப்பவனாய்* **கர்மாணி குரு**-*கர்மங்களைச் செய்வாயாக;* **ஸமத்வம்**-*(வெற்றிமுதலானவை ஸித்திப்பதிலும், ஸித்தியாமலிருப்பதிலும்) ஒருபடிப்பட்டவனாயிருக்கை,* **யோக:**-*யோகம்என்று,* **உச்யதே** *சொல்லப்படுகிறது.*

---

"அதி₄ஷ்டா₂நம் ததா₂ கர்த்தா கரணம் ச ப்ருத₂க்₃வித₄ம்।
விவித₄ா ச ப்ருத₂க் சேஷ்டா தை₃வம் சைவாத்ர பஞ்சமம்॥
ஶரீரவாங்மநோபி₄ர் யத் கர்ம ப்ராரப₄தே நர:।
ந்யாய்யம் வா விபரீதம் வா பஞ்சைதே தஸ்ய ஹேதவ:॥
[கீதை 18-14, 15]

*[சாஸ்திரத்தால் அனுமதிக்கப்பட்டதாகவோ நிஷேதிக்கப்பட்டதாகவோ இருப்பதாய், மநோவாக்காயங்களால் செய்யப்படுவதான எந்தக்கர்மத்திற்கும், (1) அதிஷ்டானம் எனப்படும் சரீரம் (2) ஜீவன் (3) தனித்தனித்தொழில்களையுடைய கர்மேந்திரியங்களும் மனமுமாகிற இந்திரியங்கள் (4) பல விதமான தனித்தனித்தொழில்களையுடைய ப்ராணபாநாதி பஞ்சப்ராணன்கள் (5) ஐந்தாவதும் முக்கியமானதுமான பரம்பொருள் ஆகிய இவ்வைந்தும் காரணங்களாகும்.] என்று கீதையிலேயே பின்வரும் அத்தியாயங்களில் விவரிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், தான் கர்மபலன்களுக்கு ஹேதுவல்லன் என்னும் அநுஸந்தானத்தோடேயே இவன்கர்மங்களைச் செய்யவேண்டுமேயொழிய விட்டுவிடக்கூடாது என்று கருத்து. (மா தே ஸங்கோ₃ஸ்த்வகர்மணி) "ந யோத்ஸ்யாமி" [2-9] [நான் யுத்தம்செய்யமாட்டேன்] என்று முன் சொன்னபடி போர்புரியாமையிலே பற்று வைக்காதே. முன்சொன்ன ரீதியிலே யுத்தம்முதலான உன்வர்ணாச்ரம தர்மங்களைச் செய்வதிலேயே ஈடுபடுவாயாக என்று கருத்து. 47.*

44. பேறிழவி லொத்தமைந்து பேணு நசைதுறந்து
தேறிவரும் யோகத்துச் சேர்ந்து நீ—யாறியமைந்
தித்தகைவி லாங்கரும மேந்துதிநீ யோகந்தா
னொத்த லெனவுரைப்ப ரோர்ந்து.

**பேறுஇழவில் ஒத்து அமைந்து**—(வெற்றி முதலானவை) ஸித்திப்பதிலும், ஸித்தியாமலிருப்பதிலும் ஒருபடிப்பட்டவனுயிருந்து, **பேணும் நசை துறந்து**—(ராஜ்யம், உறவினர் முதலானவற்றை) விரும்பும் ஆசையைவிட்டு, **தேறி வரும் யோகத்து சேர்ந்து**—முன்வண்ணமாக ஏற்படும் யோகத்தில் சேர்ந்து, **நீ**—நீ, **ஆறி அமைந்து**—மனவமைதியைப்பெற்று, **இத்தகைவிலாம் கருமம்**—(யுத்தம் முதலிய) இந்தகைய கருமங்களை, **ஏந்துதி**—செய்வாயாக; **யோகம் தான்**—யோகம் என்பது, **ஒத்தல் என**—(முற்கூறியபடி) ஒருபடிப்பட்ட மனத்தையுடையவனுயிருக்கையே என்று, **ஓர்ந்து**-ஆராய்ந்து, **உரைப்பர்**—(அறிவாளிகள்) சொல்லுவர்.

---

48. சென்ற ச்லோகத்தில் யுத்தம் முதலானவற்றுக்கு ப்ரதாந பலமான சுவர்க்கம் முதலானவற்றில் ஆசைவைக்காதிருத்தலாகிற ப்ரதாந பலத்யாகம் கூறப்பட்டது. இந்த ச்லோகத்தில் யுத்தம் முதலானவற்றுக்கு அவாந்தர பலமாய், இவன விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் கிடைத்தே தீருகின்றவையான வெற்றி தோல்வி முதலான பலன்களில் ஒருபடிப்பட்டவனுயிருக்கவேண்டும் என்று கூறுவதன்மூலம் முன் ச்லோகத்தில் காட்டப்பட்ட பலத்யாகமும் விவரிக்கப்படுகிறது. (ஸங்கம் த்யக்த்வா) ராஜ்யம் உறவினர் முதலான பலன்களில் பற்று வைக்காமல். ராஜ்யம் முதலானவற்றில் பற்று வைத்தால் முற்கூறிய பலத்யாகமும் ஸித்திக்காதாகையாலே அதை முன்னிட்ட கர்மயோகம் கைகூடாது; உறவினர் முதலானோரிடத்தில் பற்று வைத்தால் யுத்தம்முதலான கர்மங்களைச் செய்யவே முடியாதாகையால் கர்மயோகம் கைகூடாது. ஆகை யால் இவற்றில் பற்றை முதன்முதலில் கைவிடவேண்டும் என்று கருத்து. (கர்மாணி குரு) யுத்தம் முதலான உன் வர்ணாச்ரம தர்மங்களைச் செய்வாயாக. இவன் விரும்பினாலும், விரும்பா விட்டாலும் ஏற்பட்டே தீரும் வெற்றி தோல்வி முதலானவற்றால் இன்பதுன்பங்கள் ஏற்பட்டுக் கர்மயோகாநுஷ்டானத்துக்குத் தடை-

॥ भा ॥ राज्यबन्धुप्रभृतिषु सङ्गं त्यक्त्वा युद्धादीनि कर्माणि योगस्थः कुरु, तदन्तर्भूतविजयादिसिद्ध्यसिद्ध्योस्समो भूत्वा कुरु। तदिदं सिद्ध्यसिद्ध्योस्समत्वं योगस्थ इत्यत्र योगशब्देनोच्यते। योगस्सिद्ध्यसिद्ध्योस्समत्वरूपं चित्तसमाधानम् ॥ ४८ ॥

---

ஏற்படுமே எனில்: (யோகஸ்த₂: குரு) யோகத்திலிருப்பவனாய் அக்கர்மங்களைச் செய்வாயாக; அப்படிச் செய்தால் தடையேற்படாது என்று கருத்து. யோகத்திலிருப்பவனாகக் கர்மங்களைச் செய்கையாவது என்ன? எனில்: (ஸித்₃த்₄யஸித்₃த்₄யோ: ஸமோ பூ₄த்வா குரு) யுத்தம் முதலானவற்றுக்கு அவாந்தரப₂லனாக ஏற்படுகின்றவையாய், "லாப₄ாலாபௌ₄ ஜயாஜயௌ" [2-38] என்று முன் சொல்லப்பட்டவையான வெற்றி, அர்த்த₂லாபம் முதலானவை ஸித்திப்பதிலும், ஸித்தியாமலிருப்பதிலும் ஒருபடிப்பட்ட மனத்தையுடையவனாகக் கர்மங்களைச் செய்வாயாக. இதுவே யோகத்திலிருப்பவனாகக் கர்மங்களைச் செய்கை என்று கருத்து. யோகசப்தத்திற்கு இப்படிப் பொருள் உண்டோ? எனில்: (ஸமத்வம் யோக₃ உச்யதே) வெற்றி முதலானவை ஸித்திப்பதிலும், ஸித்தியாமலிருப்பதிலும் ஒருபடிப்பட்ட மனத்தை உடையவனாயிருக்கையே யோகம் என்று அறிவாளிகளால் உரைக்கப்படுகிறது. பாதஞ்ஜலயோகஸூத்ரம் முதலானவற்றில் யோகசப்தம் சித்தஸமாதா₄நம் (மனம் ஒருபடிப் பட்டிருக்கை) என்னும் பொருளில் பிரயோகிக்கப்பட்டிருக்கிறதன்றோ. (ஸமத்வம் யோக₃ உச்யதே) "யோக₃க்ஷேமம் வஹாமி" [9-22] முதலானவிடங்களில் யோகசப்தத்தின் பொருள் வேறாயினும், இங்கு யோகசப்தத்தின் பொருள் இதுவே என்று கருத்து. (ஸமத்வம்) "பண்டி₃தா: ஸமத₃ர்சிந:" [5-18] முதலானவிடங்களில் ஸமத்வசப்தத்தின் பொருள்வேறாயினும், "ஸித்₃த்₄யஸித்₃த்₄யோ: ஸமோ பூ₄த்வா" என்பதையொட்டி சித்தஸமாதா₄னமே இங்கு ஸமத்வசப்தத்தின் பொருளாகும். (த₄நஞ்ஜய) 'பொருளை ஜயிப்பவன்' என்னும் பெயரையுடைய நீ மிகச்சிறந்த தனமான இந்த ஸமத்வபுத்தியை வசப்படுத்தவேண்டாமோ? என்று கருத்து. 48.

49. "ஸுக₂து:க்கே₂ ஸமே க்ருத்வா லாப₄ாலாபௌ₄ ஜயாஜயௌ" [2-38] "வ்யவஸாயாத்மிகா பு₃த்₃தி₄:" [2-41] முதலானவிடங்களில் முன்னமே சொல்லப்பட்ட புத்தியோகமும் இந்த ஸமத்வபுத்தியும் மறுபடியும் ஏன் வலியுறுத்தப்படுகிறது எனில்: இதன் பெருமையைப்

॥ भा ॥ किमर्थमिदमसकृदुच्यत इत्यत आह—

दूरेण ह्यवरं कर्म बुद्धियोगाद्धनञ्जय।
बुद्धौ शरणमन्विच्छ कृपणाः फलहेतवः ॥ ४९ ॥

49. தூ$_2$ரேண ஹ்யவரம் கர்ம பு$_3$த்$_3$தி$_4$யோகா$_3$த்$_3$ த$_4$நஞ்ஜய ।
பு$_3$த்$_3$தௌ$_4$ ஶரணமந்விச்ச$_2$ க்ருபணா: ப$_2$லஹேதவ: ॥

த$_4$நஞ்ஜய—அர்ஜுனனே! பு$_3$த்$_3$தி$_4$யோகாத் (புத்தியோடு) கூடிய கர்மத்தைக்காட்டிலும். கர்ம—(அந்த புத்தியற்ற) காம்யகர்மம். தூ$_3$ரேண அவரம் ஹி-மிகவும் தாழ்ந்ததன்றோ: (ஆகையால்) பு$_3$த்$_3$தெ$_4$ள—(முற்கூறிய) புத்தியில். ஶரணம் அந்விச்ச$_2$—புகலடைவாயாக; ப$_2$லஹேதவ:—காம்ய பலனில் விருப்பம் வைப்பவர்கள். க்ருபணா:—அற்பமானிகளாகின்றனர்.

॥ भा ॥ योऽयं प्रधानफलत्यागविषयोऽवान्तरफलसिद्ध्यसिद्ध्योस्समत्वविषयश्च बुद्धियोगः, तद्युक्तात्कर्मण इतरत् कर्म दूरेणावरम्। महदिदं द्वयोरुत्कर्षापकर्षरूपं वैरूप्यम्। उक्तबुद्धियोगयुक्तं कर्म निखिल-

---

45. தக்கமரும் புத்தியோ கத்திற் றனஞ்சயனே
யக்கருமந் தூர வவரங்கா—ணொக்கவரும்
புத்திக்கே நிற்கும் புகல்விரும்பு புல்லியர்கா
ணத்தித்தே செய்யு மவர்.

தனஞ்சயனே!-அர்ஜுனா! தக்கு அமரும் புத்தியோகத்தில்-நன்கு அமைந்த புத்தியுடன் கூடிய கருமத்தைக்காட்டிலும். அக்கருமம்—(புத்தியற்ற) அந்தக் கேவலகர்மம். தூர அவரம் காண்—மிகவும் தாழ்ந்தது காண்; ஒக்க வரும்—புத்திக்கே— ஒருபடிப்பட்டவனாயிருக்கும் புத்தியிலேயே, நிற்கும்—நிற்கும். புகல்—நிலையை. விரும்பு - விரும்புவாய்: அ(ர்)த்தித்தே செய்யுமவர் -(காம்யபலன்களை) விரும்பியே கருமங்களைச் செய்கின்றவர்கள், புல்லியர்காண்—மிகத் தாழ்ந்தவர்காண்!

सांसारिकदुःखं विनिवर्त्य परमपुरुषार्थलक्षणं च मोक्षं प्रापयति; इतरद्-परिमितदुःखरूपं संसारमिति। अतः कर्मणि क्रियमाणे उक्तायां बुद्धौ शरणमन्विच्छ; शरणं—वासस्थानम्। तस्यामेव बुद्धौ वर्तस्वेत्यर्थः।

---

பார்த்தால் எத்தனைதரம் சொன்னாலும் * புநருக்தியில்லையென்று விளங்கும் என்று உணர்த்துவதற்காக இந்த பு₃த்₃தி₄யோக₃த்தின் பெருமையைக்காட்டி அதை உடையவனாகவேயாக என்று அர்ஜுநனை நியமிக்கிறான். (த₄நஞ்ஜய) சிறந்த செல்வத்தையெல்லாம் ஜயிப்பவன் என்னும் பெயரையுடைய நீ இந்த புத்திச்செல்வத்தை வசப்படுத்தவேண்டாவோ? (பு₃த்₃தி₄யோக₃ாந்)புத்தியோகமாவது,-ஸ்வர்க்கம் முதலான ப்ரத₄ானபலன்களில் ஆசைவைக்காமல், வெற்றி தோல்வி முதலான அவாந்தர (ஆநுஷங்கிகமான) பலன்களில் ஸமபுத்தியுடையவனாயிருக்கை. இங்கு, "அவரம் கர்ம" என்று இந்த புத்தியோகத்திற்கு ப்ரதிகோடியாக ஓருவிதமான கர்மம் எடுக்கப்படுகையாலே புத்தியோகசப்தம் முற்கூறிய புத்தியை முக்கியமாகக்கொண்டு அத்துடன் சேர்ந்திருக்கின்ற கர்மயோகத்தைக் குறிக்கிறது. (பு₃த்₃தி₄யோக₃ாத் கர்ம தூ₃ரேண அவரம் ஹி) முற்கூறிய புத்தியோடு கூடிய கர்மயோகத்தைக்காட்டிலும், அந்த புத்தியற்ற கேவலகர்மம் மிகத்தாழ்ந்ததன்றோ. கேவலகர்மமே இங்கு தூஷிக்கப்படுகையாலே, எல்லாக்கர்மமும் தூஷிக்கப்படவில்லையென்று அறியத்தக்கது. (தூரேண அவரம்) மிகவும் தாழ்ந்தது. முற்கூறிய புத்தியோகத்தோடு கூடிய கர்மம் ஸம்ஸாரத்திலுள்ள எல்லாத்துன்பங்களையும் போக்கி மிகச்சிறந்த புருஷார்த்தமான மோக்ஷத்தை ஸாதித்துக்கொடுக்கிறது; அந்த புத்தியற்ற கர்மம் அளவற்ற துன்பமயமான ஸம்ஸாரத்தையே அடைவிக்கிறது; ஆகையால் இவ்விரண்டு கர்மங்களுக்கும் நெடுவாசியுண்டு என்று கருத்து. (ஹி) இவ்வர்த்தம் சாஸ்திரப்ரஸித்தம் என்பதைக் காட்டுவதாகவுமாம்; "பு₃த்₃தௌ₄ஶரணமந்விச்ச₂" என்பதற்குப் பூர்வார்த்த₄ம ஹேதுவைக் காட்டுகிறது என்றுமாம். (ஹி- ஆகையால்)

---

* "உபக்ரமோபஸம்ஹாரௌ அப்₄யாஸோऽபூர்வதா ப₂லம்।
அர்த்த₂வாதோ₃பபத்தீ ச லிங்க₃ம் தாத்பர்யநிர்ணயே ||"
[(1) உபக்ரமோபஸம்ஹாரங்கள் (முதலும் முடிவும்) (2) அப்₄யாஸம் (அடிக்கடிபடித்தல்) (3) அபூர்வதா (புதிதாகக்கூறுதல்) (4)ப₂லம் (பயன்) (5)அர்த்தவாதம் (புகழ்ச்சி) (6)உபபத்தி (யுக்தி) என்னும் இவ்வாறும் ஒரு நூலின் தாத்பர்யத்தை நிர்ணயிக்க உதவும் அடையாளங்கள்] என்கிறவிடத்தில் சொன்ன அப்₄யாஸமெனும் தாத்பர்யலிங்கத்தில் நோக்காகையாலே புநருக்தியில்லை.

कृपणाः फलहेतवः—फलसङ्गादिना कर्म कुर्वाणाः कृपणाः—संसारिणो भवेयुः ॥ ४९ ॥

---

(புத்3தௌ4 சரணமந்விச்ச2) புத்தியில் புகலைப் பார்ப்பாயாக: "உபாயே க்3ருஹரக்ஷித்ரோ: சப்3த3: சரணமித்யயம் வர்த்ததே" [அஹிர் 36-34] [(1) உபாயம் (ஸாதனம்) (2) க்3ருஹம் (வஸிக்குமிடம்) (3) ரக்ஷிதா (காப்பவன்) ஆகிய மூன்று பொருள்களைக் குறிப்பது 'சரணம்' என்னும் பதம்.] என்கிறபடியே சரணபதத்திற்குப் பல பொருள்கள் உண்டாயினும், இங்கு வஸிக்குமிடம் என்றும் பொருளே பொருந்தும். கர்மயோகத்தைச் அநுஷ்டிக்கும்போது முற்கூறிய புத்தியைப் புகலிடமாகக் கொள்வாயாக என்கிறது. அந்த புத்தியில் நிலைநிற்பாயாக என்று கருத்து. இனி, புத்தி யோகத்தைக் கைகொள்ளவேண்டுமென்பதை வலியுறுத்துவதற் காக புத்தியோகமற்றவர்களுடைய தாழ்வைக் கூறுகிறது. (க்ருபணா: ப2லஹேதவ:) ப2லத்துக்கு ஹேதுவாயிருக்கும் புருஷர்கள் தரித்ரர்கள். (ப2லஹேதவ:) இந்த சப்தம் இங்கு பலத்துக்குக் காரணமான அனைத்தையும் குறிக்காமல், ப2லகாரணமான புருஷர்களைமாத்திரம் குறிக்கிறது. ஏனெனில்: (1) 'மா கர்மப2லஹேதுர் பூ4:'' என்று முன் ச்லோகத்தில் புருஷனே ப2லஹேதுவாகக் குறிக்கப்பட்டான்; (2) ''பு3த்3தி4யுக்த:'' என்று தொடங்கும் அடுத்தச்லோகத்தில் புத்தி யோடு கூடிய புருஷனே புகழப்படுகிறானாகையாலே, அந்த புத்தி யற்ற புருஷனே இங்கு நிந்திக்கப்படுகிறான் என்று கொள்வது உசிதம். (3) '' கத3ர்யே க்ருபண க்ஷுத்3ர கிம்பசாந மிதம்பசா: '' [அமர 3-வி 49] [க்ருபணன், க்ஷுத்ரன், கிம்பசானன், மிதம்பசன் என்னும் பதங்கள் தரித்ரனைக் குறிக்கும்.] என்று க்ருபணபதம் புருஷனைக்குறிப்பதாகவே நிகண்டுவில் படிக்கப்படுகிறது. பலத்தை விளைக்கும் கர்மத்தைச் செய்வதன் மூலம் புருஷனும் பலத்துக்குக் காரணமாகிறான் என்பது பிரஸித்தம். (க்ருபணா:) தரித்ரர்கள். இவர்களுக்கு எதிர்த்தட்டியான புத்தியுக்தர்களைச் சொல்லும்போது ''பு3த்3தி4யுக்தோ ஜஹாதீஹ உபே4 ஸுக்ருதது3ஷ்க்ருதே'' [2-50] ''பு3த்3தி4யுக்தா:—ஜந்மப3ந்த4விநிர்முக்தா: பத3ம் க3ச்ச2ந்த்யநாமயம்'' என்று அடுத்துள்ள ச்லோகங்களில் அவர்களைப் புண்யபாபம் நீங்கப்பெற்று மோக்ஷச்செல்வத்தைப் பெறுகிறவர் களாகக் கூறுகையாலே, அவர்களுக்கு எதிர்த்தட்டான இவர்கள் மோக்ஷச்செல்வமற்றவர்களாய் ஸம்ஸாரமாகிற ஏழ்மையில் உழல் கின்றவர்கள் என்பதை க்ருபணசப்தம் காட்டுகிறது. (த4நஞ்ஜய-க்ருபணு:) தனத்தை ஜயிப்பவன் என்னும் பெயர் பூண்ட நீ ஏழை யாகலாமோ? என்று கருத்து. 49.

बुद्धियुक्तो जहातीह उभे सुकृतदुष्कृते।
तस्माद्योगाय युज्यस्व योगः कर्मसु कौशलम्॥५०॥

**50.** **புத்₃தி₄யுக்தோ ஜஹாதீஹ உபே₄ ஸுக்ருததுஷ்க்ருதே।**
**தஸ்மாத்₃யோக₃ாய யுஜ்யஸ்வ யோக: கர்மஸு**
**கௌஶலம் ॥**

**இஹ**—*கர்மம் செய்கின்றபோது.* **புத்₃தி₄யுக்த:**—*(முற் கூறிய) புத்தியோடு கூடிய புருஷன்.* **உபே₄ ஸுக்ருத துஷ்க்ருதே**—*புண்ய பாபங்கள் இரண்டையும்.* **ஜஹாதி**—*விடுகிறான்.* **தஸ்மாத்**—*ஆகையால்.* **யோக₃ாய**—*(முற்கூறிய) புத்தியோகத்தின் பொருட்டு;* **யுஜ்யஸ்வ**—*முயற்சி கொள்வாயாக;* **கர்மஸு**—*கர்மங்கள் செய்யப்படும்போது.* **யோக₃:**—*இந்த புத்திச்சேர்க்கை.* **கௌஶலம்**—*மிகுந்த ஸாமர்த்தியத்தால் ஏற்படுவது.*

---

**46.** **இந்நிலையிற் புத்தியுட னேய்ந்தா ரிருமைவினை**
**தந்நிலையை யிங்கே தவிர்வர்கா—ணந்நிலையான்**
**மெய்கருதி யோகத்து மேவுதிநீ யோகங்காண்**
**செய்கருமத் தாகுஞ் சிறப்பு.**

**இந்நிலையில் புத்தியுடன் ஏய்ந்தார்**—*இதுவரையில் கூறப்பட்ட புத்தியோடு கூடியவர்கள்.* **இருமை வினை தம் நிலையை**—*நல்வினை தீவினை என்னும் இருவகைப்பட்ட செயல்களால் உண்டாகும் புண்யபாபங்களை.* **இங்கே**—*ஸாதநாநுஷ்டானதசையிலேயே,* **தவிர்வர்காண்**—*விடப்பெறுவர்காண்!* **அந்நிலையால்**—*ஆகையால்.* **மெய்கருதி**—*மெய்யான பலனான மோக்ஷத்தை அடையவிரும்பி.* **நீ**—*நீ.* **யோகத்து மேவுதி**—*புத்திச்சேர்க்கையை அடைவாய்;* **செய் கருமத்து**—*கருமங்கள் செய்யும்போது.* **யோகம்**—*புத்திச் சேர்க்கை,* **சிறப்பு காண்**—*மிகுந்த ஸாமர்த்தியத்தால் ஏற்படுவது கண்டாய்.*

॥ भा ॥ बुद्धियोगयुक्तस्तु कर्म कुर्वाणः उभे सुकृतदुष्कृते अनादिकालसञ्चिते अनन्ते बन्धहेतुभूते जहाति। तस्मादुक्ताय बुद्धियोगाय

50. புத்தியோடு கூடிய கர்மயோகத்தைச் செய்பவன புண்ய பாபங்கள் நீங்கப் பெறுகிறான் என்கிறது. (இஹ) கர்மம் செய்யும் போது. (புத்தியுக்த:) முற்கூறிய புத்தியோடு கூடியிருப்பவன். (ஸுக்ருத துஷ்க்ருதே உபே ஜஹாதி) புண்ணிய பாபங்கள் இரண்டையும் விடுகிறான். (இஹ ஜஹாதி) என்று கூட்டி ஸாதநாநுஷ்டான தசையிலேயே புண்யபாபங்களை விடுகிறான் என்றும் பொருள் கொள்ளலாம். "இஹைவ தைர்ஜித: ஸர்க்க:" [கீதை 5-19] [அவர்களால் ஸாதநாநுஷ்டான தசையிலேயே ஸம்ஸாரம் ஜயிக்கப்பட்டதாகிறது.] என்றவிடத்திற்போலே புண்யபாபங்களை விடுவது நிச்சயம் என்பதைப்பற்ற "இங்கேயே புண்யபாபங்களை விட்டுவிடுகிறான்" என்றுசொல்லப்படுகிறது. (ஸுக்ருத துஷ்க்ருதே ஜஹாதி) அநாதிகாலமாக இவன் தாழ்ந்த பலன்களைக் குறித்துச் செய்யும் கணக்கற்ற நற்கருமங்களால் எம்பெருமானுக்கு இவன் விஷயத்தில் ஏற்பட்டிருக்கும் பிரீதி ஸுக்ருதம் என்றும், புண்ணியம் என்றும் கூறப்படுகிறது. அநாதிகாலமாக இவன் செய்யும் கணக்கற்ற தீயகருமங்களால் எம்பெருமானுக்கு இவன் விஷயத்தில் ஏற்பட்டிருக்கும் கோபம் துஷ்க்ருதம் என்றும் பாபம் என்றும் கூறப்படுகிறது. "புண்யாபுண்யேஈச்வரப்ரீதிகோபௌ" "யத்த்வத்ப்ரியம் ததிஹ புண்யமபுண்யமந்யத்" [பகவானுடைய பிரீதியும் கோபமுமே முறையே புண்ணியமென்றும் பாபமென்றும் கூறப்படுகின்றன] என்று சொல்லப்பட்டதன்றோ. கர்மயோகத்தைச் செய்கின்றவனுக்குக் கிரமமாக ஜ்ஞாநயோகமும், பக்தியோகமும் ஏற்பட்டு அதனால் எம்பெருமானுக்குள்ள பிரீதிகோபங்கள் கழிந்து மோக்ஷமேற்படுகின்றது என்று கருத்து. கோபம் கழிவது உத்தேச்யமாகலாம்; பிரீதி கழிவது எப்படி உத்தேச்யமாகும்? எனில்: சுவர்க்கம் முதலானவற்றின் ஸாதனமான ஜ்யோதிஷ்டோமம் முதலானவற்றை அநுஷ்டிப்பதால் ஏற்படும் பிரீதியே இங்கு கழிக்கப்படுகிறது. கர்மயோகம் முதலானவற்றை அநுஷ்டிப்பதால் ஏற்படுவதாய், மோக்ஷகாரணமாயிருக்கும் மேலான பிரீதி இங்கு கழிக்கப்படுவதில்லை. முதலிற்சொன்ன பிரீதி சுவர்க்கம் முதலான பலன்களை விளைப்பதன் மூலம் ஸம்ஸாரத்திலேயே இவனைக் கட்டிவைப்பதற்கே உதவுகிறது. அதனாலேயே பாப கர்மத்தால் ஏற்படும் ஈச்வரகோபத்தைப்போலவே இதுவும்

युज्यस्व। योगः कर्मसु कौशलम्—कर्मसु क्रियमाणेष्वयं बुद्धियोगः कौशलम्—अतिसामर्थ्यम्। अतिसामर्थ्यसाध्य इत्यर्थः॥ ५०॥

कर्मजं बुद्धियुक्ता हि फलं त्यक्त्वा मनीषिणः।
जन्मबन्धविनिर्मुक्ताः पदं गच्छन्त्यनामयम्॥ ५१॥

---

மோக்ஷத்திற்குத் தடையாயிருக்கிறது. ஏதே வை நிரயாஸ் தாத ஸ்த₂ாநஸ்ய பரமாத்மந:" [பார-மோக்ஷ 198-11] [பரமாத்மாவின் ஸ்தானத்தோடு ஒப்பிடும்போது இவையெல்லாம் நரகங்களாகின் றன] "ஸ்வர்க்கோ₃பி யச்சிந்தநே விக்₄நோ யத்ர நிவேஶிதாத்மமநஸோ ப்₃ராஹ்மோபி லோகோல்பக:" [வி-பு 6-8-56] [எந்தப் பரமபுருஷனை நினைக்கும்போது சுவர்க்கமும் இடையூருகின்றதோ, ப்ரஹ்ம லோகமுங்கூட மிகச்சிறியதாகிறதோ] முதலான ப்ரமாணங்கள் பிரமனின் உலகம், சுவர்க்கம் முதலான புண்யலோகங்களையும் மோக்ஷத்திற்குத் தடையென்றும், நரகதுல்யமென்றும் கூறியதும் காணத்தக்கது. பொன்விலங்கால் விலங்கிட்டு வைப்பதிலும், இரும்புவிலங்கால் விலங்கிட்டுவைப்பதிலும் வாசியில்லாமைபோலே புண்ணியபாபங்கள் இரண்டுமே வாசியற ஸம்ஸாரக்கட்டிற்குக் காரணமாகின்றன என்றே ஞானிகள் கருதுகிறார்கள். (பு₃த்₃தி₄ யுக்த: ஜஹாதி) "ப்லவா ஹ்யேதே அத்₃ருடா₄ யஜ்ஞரூபா:" [முண்ட 1-2-7] [யஜ்ஞரூபமான இக்கர்மங்கள் உறுதியற்ற ஓடங் கள் போன்றவை.] "ந ஹ்யத்₄ருவை: ப்ராப்யதே ஹி த்₄ருவம் தத்" [கட 2-10] [நிலையற்ற கர்மங்களால் நிலையான பொருள் கிட்டாது] என்கிறபடியே கேவலகர்மங்களால் புண்யபாபமோக்ஷம் (புண்ய பாபங்களினின்றும் விடுதலை) கிட்டாது; புத்தியோடு கூடிய கர்ம யோகத்தாலேயே புண்ய பாபங்கள் அகலும் என்று கருத்து. (தஸ்மாத்) இப்படி புத்தியோகமானது புண்யபாபமோக்ஷத்திற்குக் காரணமாயிருக்கையால். (யோகாய யுஜ்யஸ்வ) முற்கூறிய புத்தி யோகத்தை அடைவதில் முயற்சி கொள்வாயாக. (கர்மஸு) கர் மங்கள் செய்யும்போது (யோக₃:) முற்கூறிய புத்தியோடு கூடி யிருப்பது. (கௌஶலம்) மிகவும் ஸாமர்த்தியம். மிகுந்த திறமை யால் ஏற்படுவது என்று கருத்து. காரணத்தைச் சொல்லும் சப்தம் இங்கு அதனால் ஏற்படும் காரியத்தைக் குறிக்கிறது. ஆக, இந்த ச்லோகத்தால் கர்மயோக நிஷ்டனுக்கு மோக்ஷத்திற்குத் தடையான புண்யபாபங்கள் கழிகின்றன என்று கூறப்பட்டதாயிற்று. 50.

51. கர்மஜம் புத்₃தி₄யுக்தா ஹி ப₂லம் த்யக்த்வா மநீஷிண:।
ஜந்மப₃ந்த₄விநிர்முக்தா: பத₃ம் க₃ச்ச₂ந்த்யநாமயம் ॥

மநீஷிண:—அறிவாளிகள். பு₃த்₃தி₄யுக்தா:- (முற்கூறிய) புத்தியோடு கூடியவர்களாய், கர்மஜம்—கர்மத்தினால் உண்டாகும். ப₂லம்—(சுவர்க்கம் முதலான) பலனை. த்யக்த்வா- விட்டு(கர்மத்தைச் செய்வதன்மூலம்)ஜந்மப₃ந்த₄விநிர்முக்தா:- பிறப்பாகிற கட்டிலிருந்து நன்கு விடுபட்டு, அநாமயம் — துன்பமற்ற. பத₃ம்—பரமபதத்தை. க₃ச்ச₂ந்தி ஹி—அடைகின்றனரன்றோ.

---

47. தீர்ந்த மனத்துத் தெளிவுற்றார் செய்கருமத்
தார்ந்த பயனை யறத்துறந்து—சேர்ந்த
பிறப்பணையுங் கட்டவிழ்ந்து பெய்துயர்நோய் தீர்ந்த
சிறப்பணைவர் நன்மையினைச் சேர்ந்து.

தீர்ந்த மனத்து தெளிவுற்றார்—(முற்கூறிய) புத்தியோடு கூடிய நெஞ்சையுடைய அறிவாளிகள். செய் கருமத்து ஆர்ந்த பயனை—செய்யப்பட்ட கர்மத்தினால் உண்டாகும் (சுவர்க்கம் முதலிய) பயனை. அற துறந்து—நன்றாகக் கைவிட்டு, சேர்ந்த பிறப்பு அணையும் கட்டு அவிழ்ந்து—(அநாதி காலமாக) இணைந்திருக்கும் பிறப்புக்களை அடைகையாகிற கட்டு களையப்பெற்று, நன்மையினை சேர்ந்து— அடைய வேண்டிய நன்மையை (ப்ராப்யத்தை) அடைந்து, பெய் துயர் நோய் தீர்ந்த சிறப்பு அணைவர்—துன்பம் தரும் நோய்கள் நீங்கப்பெற்ற பெருமையை அடைவர்.

---

51. இனி புண்யபாபமோக்ஷத்தின் பலனாக பிறப்பிறப்பாகிற ஸம்ஸாரத்தின் நிவ்ருத்தியும் பரமபதப்ராப்தியும் ஏற்படுகின்றன என்று இந்த ச்லோகத்தில் விளக்கப்படுகிறது. (புத்தியுக்தா: மநீஷிண:) முற்கூறிய புத்தியோகத்தோடு கூடிய அறிவாளிகள். (கர்மஜம் ப₂லம் த்யக்த்வா) கர்மத்தினால் ஏற்படும் சுவர்க்கம் முதலான ஸாம்ஸாரிகபலன்களில் விருப்பமற்றவர்களாய்;(நிஷ்காம) கர்மத்தைச் செய்வதன் மூலம் என்று கூட்டிக்கொள்வது. (ஜந்ம ப₃ந்த₄ விநிர்முக்தா:) பிறப்பினால் ஏற்படும் பாரதந்திரியமாகிற

॥भा॥ बुद्धियोगयुक्ताः कर्मजं फलं त्यक्त्वा कर्म कुर्वन्तः, तस्मात् जन्मबन्धविनिर्मुक्ताः अनामयं पदं गच्छन्ति। हि—प्रसिद्धं ह्येतत्सर्वासूपनिषत्स्वित्यर्थः॥ ५१॥

यदा ते मोहकलिलं बुद्धिर्व्यतितरिष्यति।
तदा गन्तासि निर्वेदं श्रोतव्यस्य श्रुतस्य च॥ ५२॥

---

பந்தத்தினின்றும் விடுபட்டவர்களாய். பிறப்பாகிற கட்டினின்றும் விடுபட்டவர்களாய் என்றுமாம். (அநாமயம் பத₃ம் க₃ச்ச₂ந்தி) துன்பத்தைத்தரும் வியாதி முதலானவையற்ற விஷ்ணுவின் பரம பதத்தை அடைகின்றார்கள். (ஆமயம்—வியாதி) "பத₃ம் பரமம் விஷ்ணோ: மோக்ஷாக்₂யம் க₃ச்ச₂ந்தி" [மோக்ஷம் எனப்படும் விஷ்ணு வின் மேலான பரமபதத்தை அடைகின்றனர்.] என்று வியாக்கியானம் செய்தார் சங்கரரும். (பத₃ம்) "பத்₃யதே—க₃ம்யதே-இதி பத₃ம்" என்னும் வ்யுத்பத்தியாலே ப்ராப்யத்தைக் கூறுகிறது. இங்கு ப்ராப்ய மான நித்யவிபூதியைக் கூறுகிறதாகவுமாம்; பரமப்ராப்யமான பர மாத்ம ஸ்வரூபத்தைக் கூறுகிறதாகவுமாம். "யோக₃மவாப்ஸ்யஸி" [2-53] என்று தொடங்கி ஸ்வாத்மதர்சனத்தை ப்ராப்யமாகப்பேசப் போகிறாராகையாலே, ப்ரஹ்மப்ரகாரமான ஜீவாத்ம ஸ்வரூபமே இங்கு பத₃சப்தத்தால் கூறப்படுவதாகவும் கொள்ளலாம். ஜந்ம பந்தவிநிர்முக்தனுக்குப் பரமாத்மஸ்வரூபம் நேரே ப்ராப்யமாகவும், நித்யவிபூதியும் தன் ஸ்வரூபமும் பரமாத்ம ஸ்வரூபத்தையிட்டு (பரம்பரயா) ப்ராப்யமாகவும் ஆகின்றனவாகையால், மூன்றையும் ப்ராப்யத்தைச்சொல்லும் பத₃ஸப்தத்தால் குறிக்கலாமன்றோ. (ஹி) இவ்வர்த்தம் எல்லா உபனிஷத்துக்களிலும் ப்ரஸித்தமானதன்றோ என்று கருத்து. ஆக, இந்த ச்லோகத்தால் கர்மயோகநிஷ்ட னுக்குப் பரமபதப்ராப்தியாகிற மேலான இஷ்டப்ராப்தி கிடைக்கும் என்று சொல்லப்பட்டதாயிற்று. முன் ச்லோகத்தில் அநிஷ்ட நிவ்ருத்தியும், இந்த ச்லோகத்தில் இஷ்டப்ராப்தியும் கர்மயோகத் தின் பலனைக்கிடைக்கும் என்றது அவை கர்மயோகத்திற்கு நேரே பலம் என்னும் கருத்தாலேயல்ல; ஜ்ஞாநயோகத்தை இடையிட்டோ இடையிடாமலோ பக்தியோகத்தை விளைத்தே கர்மயோகமானது புண்யபாபநிவ்ருத்தியாகிற அநிஷ்டநிவ்ருத்தியையும், பரமபத ப்ராப்தியாகிற இஷ்டப்ராப்தியையும் விளைக்கின்றதாகையால் கர்ம யோகத்திற்குப் பரமப்ராப்யமாயிருப்பவற்றைச் சொன்னபடி. 51.

52. யதா₂ தே மோஹகலிலம் பு₃த்₃தி₄ர் வ்யதிதரிஷ்யதி।
தத₃ா க₃ந்தாஸி நிர்வேத₃ம் ஶ்ரோதவ்யஸ்ய ஶ்ருதஸ்ய ச॥

யத₃ா—எப்போது. தே பு₃த்₃தி₄:- உன் அறிவு, மோஹ கலிலம்—விபரீதஜ்ஞானமாகிற கலக்கத்தை. வ்யதிதரிஷ்யதி- கடக்கப்போகின்றதோ. தத₃ா—அப்போது. ஶ்ருதஸ்ய— (இதற்குமுன் என்னால் கைவிடத்தக்கதாகச்) சொல்லப்பட்ட பலன் முதலியவற்றைக் குறித்தும். ஶ்ரோதவ்யஸ்ய ச— இனிச் சொல்லப்போகின்றதைக் குறித்தும். நிர்வேத₃ம் க₃ந்தாஸி—உன்னை நீயே இகழ்ந்துகொள்ளப்போகிறாய்.

---

48. எவ்வளவி னின்மோகத் திற்கலக்க மாமிதனை
யிவ்வகையே புந்தி யெழக்கடக்கு -மவ்வளவிற்
கேத மருவுதிநீ கேட்பதிலுங் கேட்டதிலு
மேத மிகும்பயனு மென்று.

எவ்வளவில் —எந்த சமயத்தில். நின் புந்தி—உன் அறிவு. மோகத்தில் கலக்கமாம் இதனை— மாறுபட்ட அறிவாகிற இக்கலக்கத்தை. இவ்வகையே - (முற்கூறிய) கர்மயோகத்தாலே. எழ கடக்கும்-நன்றாகத் தாண்டுமோ. அவ்வளவில்- அந்த சமயத்தில். நீ—நீ. கேட்டதிலும்—இதுவரை கேட்டதான அற்ப பலன்களைப்பற்றியும். கேட்பதிலும்—இனிக் கேட்கப்போகிற அற்பபலன்களைப்பற்றியும். 'ஏதம் மிகும் பயனும்' என்று— 'துன்பம் நிறைந்த பலன்களே இவை' என்று. கேதம் மருவுதி—வெறுப்பை அடையப்போகிறாய்.

---

52. இதுவரையில் சொல்லப்பட்டதும், இனிச்சொல்லப்படப் போகின்றதுமான த்யாஜ்ய உபாதேயப் பாகுபாடானது, கலக்கம் தீர்ந்தபின் ஒரு ப்ரமாண யுக்திகளின் அபேக்ஷையின்றியே உனக்கே தெளிவாகும் என்கிறது. (தே பு₃த்₃தி₄:) முன் சொன்ன ரீதியில் கர்மயோகத்தைச் செய்கின்றவனாய், அதனால் மோஹ காரணமான புண்யபாபங்கள் நீங்கப்பெற்றவனான உன்னுடைய அறிவு. (யதா₃ மோஹகலிலம் வ்யதிதரிஷ்யதி) எப்போது மோஹ மாகிற கலக்கத்தைத் தாண்டப்போகிறதோ. மோஹமாவது—கைக் கொள்ளத்தக்கவற்றைத் தகாதவையாக நினைக்கையும், தகாத

॥ भा ॥ उक्तप्रकारेण कर्मणि वर्तमानस्य तया बुद्ध्या निर्धूत-कल्मषस्य ते बुद्धिर्यदा मोहकलिलम्—अत्यल्पफलसङ्गहेतुभूतं मोहरूपं

---

வற்றைத் தக்கவையாக நினைக்கையும். கலிலம் —கலுஷம்; இங்கு காலுஷ்யமாகிற கலக்கத்தைக் காட்டுகிறது. (தே புத்₃தி₄: யதா₃ மோஹகலிலம் வ்யதிதரிஷ்யதி) புண்யபாபரூபமான ஸாம்ஸாரிக கர்மத்தால் மோஹமென்னும் மயக்கம் ஏற்படுகிறது; பலனில் விருப்பமற்றுக் கர்மங்களை அனுஷ்டிக்கையாகிற கர்மயோகத்தாலே அந்தப் புண்யபாபரூபகர்மம் நீங்கும்; காரணமான அக்கர்மம் நீங்கினவளவில் அதன் காரியமான மோஹம் என்னும் மயக்கமும் நீங்கிவிடும் என்று கருத்து. (தத₃ா) மிகச்சிறிய பலன்களில் பற்றுக்குக் காரணமான அந்த மோஹம் நீங்கினவளவில். (நிர்வேத₃ம் க₃ந்தாஸி) 'இத்தகைய பலன்களிலா நாம் பற்றுவைத்தோம்' என்று உன்னை நீயே நொந்துகொள்ளப்போகிறாய். எவை குறித்து நிர்வேதம் என்பதை விளக்குகிறார்,—(ஶ்ருதஸ்ய ஶ்ரோதவ்யஸ்ய ச) மிகவும் ஆப்தனான என்னிடமிருந்து, கைவிடத்தக்கவையாக இதுவரையில் நீ கேட்ட ப₂லஸங்கம் (பலனில் விருப்பம்) முதலானவைகுறித்தும், இனிக் கைவிடத்தக்கவையாக நீ கேட்கவிருக்கிறவற்றைக் குறித்தும். கேட்கப்பட்டவற்றிலும், கேட்கப்போகிறவற்றிலும் உபாதேயமாய் (கைக்கொள்ளத்தக்கவையாய்) இருப்பவை நிர்வேதத்துக்கு (வெறுப்புக்கு) விஷயமாகமாட்டாவாகையால் அவற்றில் த்யாஜ்யமாய் (கைவிடத்தக்கதாய்) இருப்பவையே நிர்வேதவிஷயமாகவேண்டும். அன்றிக்கே, இதுவரையில் சொல்லப்பட்ட தாழ்ந்த பயன் முதலானவற்றில் பற்றுவைத்ததையும், இனிச் சொல்லப்போகும் ஆத்மபரமாத்மஸ்வரூபம் முதலானவற்றில் பற்றுவைக்காமலிருந்ததையும் குறித்து உன்னை நீயே நொந்துகொள்ளப் போகிறாய் என்பதாகவும் கொள்ளலாம். (நிர்வேத₃ம் க₃ந்தாஸி) நிர்வேதத்தை அடையப்போகிறாய். "தத்வஜ்ஞாநாபத்₃ரீர்ஷ்யாதே₃ர் நிர்வேத₃: ஸ்வாவமாநநம்" [தசரூபகம்—பரிச்சேதம் 4] [உண்மையறிவு, ஆபத்து, பொறாமை முதலானவற்றாலே தன்னைத் தானே நொந்து கொள்வது நிர்வேதமாகும்] என்கிறபடியே இங்கு த்யாஜ்யோபாதேயங்களைப்பற்றிய உண்மையறிவால் தன்னைத் தானே நொந்துகொள்வது நிர்வேதம் எனப்படுகிறது. (யதா₃ மோஹகலிலம் வ்யதிதரிஷ்யதி தத₃ா நிர்வேத₃ம் க₃ந்தாஸி) மோஹம் நீங்கியவுடன் வேறொரு ப்ரமாணயுக்திகளை நான் காட்டத் தேவையில்லாமல் த்யாஜ்ய உபாதே₃யப்பாகுபாடு ஏற்பட்டு நீயே

कलुषं व्यतितरिष्यति, तदा अस्मात् इतःपूर्वं त्याज्यतया श्रुतस्य फलादेरितः पश्चाच्छ्रोतव्यस्य च कृते स्वयमेव निर्वेदं गन्तासि—गमिष्यसि ॥ ५२ ॥

---

மனவருத்தத்தை அடையப்போகிறாய். (கந்தாஸி) லுட்ப்ரயோகமாகையாலே, 'அடையப்போகிறாய்' என்று பொருளுரைத்தது; எதிர்கால நிகழ்ச்சியைக் காட்டும் லுட் பதம். லுடந்தமான இப்பதம் பொதுவாக மறுநாளிலிருந்து நடக்கப்போவதையே காட்டுமாயினும், எதிர்காலம் முழுவதையும் காட்டும் ல்ருடந்தமான 'வ்யதிதரிஷ்யதி' என்னும் பதத்தோடு தொடர்புடையதாயிருக்கையால் இந்த எதிர் காலம் முழுவதையுமே காட்டுகிறது. கந்தாஸி—கமிஷ்யஸி என்றபடி. 'கந்தாஸி' என்று லுடந்தமான ஒரே பதமாகக் கொள்ளவேண்டிய நிர்ப்பந்தம் என்ன? 'கந்தா அஸி' என்று இரண்டு பதமாகவும் கொள்ளலாமே எனில்: இங்கு வியாகரணமரபொன்றை அறிய வேண்டும். "காவ்யஸ்ய கர்த்தா" "காவ்யம் கர்த்தா" என்று இரண்டு பிரயோகங்கள் உள்ளன. த்ருஜந்தமான முதல் தொடர் ஏதோவொருசமயம் காவ்யம் செய்பவனைக்குறிக்கும். *த்ருந்நந்தமான இரண்டாவது தொடர் காவியம் செய்வதையே தொழிலாகவுடைய கவியைக் குறிக்கும்; அல்லது காவியத்தை நன்கு செய்பவனைக் குறிக்கும். இங்கு "நிர்வேதம் கந்தா" என்றவிடத்தில் நிர்வேதபதம் இரண்டாம் வேற்றுமையாயிருக்கையால் த்ருஜந்தமாகமுடியாது. த்ருந்நந்தமாகக் கொள்ளுவோமென்று பார்த்தால், 'நிர்வேதமடைவதையே இயற்கையாகக் கொண்டவனாகிறாய்' என்றே பொருள்படுமாகையால் எதிர்கால நிகழ்ச்சியை ஸ்வரஸமாகக் குறிக்காது. இங்கோவெனில், 'வ்யதிதரிஷ்யதி' என்பதோடு தொடர்புள்ள 'கந்தாஸி' என்னும் பதம் எதிர்கால நிகழ்ச்சியைக் குறிப்பதேயாகவேண்டும். ஆக, த்ருந்நந்தமாகக் கொள்வதும் ஒட்டாது. ஆகையால் லுடந்தமான ஒரே பதமேயிது. ஆக, இந்த ச்லோகத்தால் த்யாஜ்யோபாதேயங்களை மாறுபடுத்தி அறிகையாகிற மோஹம் நீங்கியவுடன், த்யாஜ்யோபாதேயங்களை உள்ளபடியறிந்து உன்னை நீயே நொந்துகொள்ளப்போகிறாய் என்று சொல்லிற்றாயிற்று. 52.

---

* "ஆக்வேஸ்தச்சீலதத்தர்மதத்ஸாதுகாரிஷு" "த்ருந்" [அஷ்டாத்யாயீ 3-2-134, 135] என்னும் ஸூத்ரங்களின்படி த்ருந் நந்தத்திற்கு, தொழிலாகவுடையவன், கடமையாகவுடையவன், நன்கு செய்பவன் என்னும் மூன்று பொருளிருப்பது காண்க.

॥ भा ॥ *योगे त्विमां शृणु इत्यादिनोक्तस्यात्मयाथात्म्यज्ञान-पूर्वकस्य बुद्धिविशेषसंस्कृतस्य धर्मानुष्ठानस्य लक्ष(क्ष्य)भूतं योगाख्यं फलमाह—

श्रुतिविप्रतिपन्ना ते यदा स्थास्यति निश्चला ।
समाधावचला बुद्धिस्तदा योगमवाप्स्यसि ॥ ५३ ॥

53. ஶ்ருதிவிப்ரதிபந்நா தே யத₃ா ஸ்த₂ாஸ்யதி நிஶ்சலா ।
ஸமாத₄ாவசலா பு₃த்₃தி₄ஸ் தத₃ா யோக₃மவாப்ஸ்யஸி ॥

**ஶ்ருதிவிப்ரதிபந்நா**—*என்னிடம் கேட்டதால் விசேஷமாக அறியப்பட்டதாய்,* **அசலா**-*ஒருபடிப்பட்டதாயிருக்கும்,* **தே**—*உன்னுடைய,* **பு₃த்₃தி₄:**—*அறிவானது,* **ஸமாதௌ₄**—*மனத்தில்,* **யத₃ா**—*எப்பொழுது,* **நிஶ்சலா ஸ்த₂ாஸ்யதி**—*அசைக்கமுடியாததாகிறதோ,* **தத₃ா**—*அப்போது,* **யோக₃ம்**-*ஆத்மஸாக்ஷாத்காரத்தை,* **அவாப்ஸ்யஸி**-*அடையப்போகிறாய்.*

---

49. ஓதுமென் பாற்கேள்வி யுற்றமைந்த புந்தியுயிர்
மீதுசமா திக்கண் மிகச்சலியாப்—போதினீ
வந்தியோ கத்துணர்வை மன்னுறுதி யாங்கதுகாண்
புந்தியோ கத்தின் புணர்ப்பு.

**ஓதும் என்பால்**—*உனக்கு உபதேசிக்கும் என்னிடம்,* **கேள்வி உற்று**—*கேட்டு,* **அமைந்த**—*நன்கு பொருந்திய,* **உயிர்மீது புந்தி**—*ஆத்மதத்வத்தைப்பற்றிய அறிவு,* **சமாதிக் கண்**—*மனத்திலே,* **மிக சலியா போதில்**-*மிகவும் நிலையாயிருக்கும் சமயத்தில்,* **நீ**—*நீ,* **யோகத்து வந்து**—*யோகம் (ஆத்மதர்சனம்) கைவரப்பெற்று,* **உணர்வை மன்னுறுதி**—*அறிவுமயமான* **ஆத்மாவைக்** *காண்பாய்;* **ஆங்கு**—*அந்நிலையில்,* **அது**—*அவ்வாத்மதர்சனம்,* **புந்தி யோகத்தின் புணர்ப்பு காண்**—*புத்தியோடு கூடிய கர்மயோகத்தின் பலனேயாகும்.*

॥ भा ॥ श्रुतिः–श्रवणम्। अस्मत्तः श्रवणेन विशेषतः प्रतिपन्ना, सकलेतरविसजातीयनित्यनिरतिशयसूक्ष्म[तत्त्व]त्मविषया, स्वयमचला—

53. "ந த்வேவாஹம்" [2-12] என்று தொடங்கி ஆத்மாவைப் பற்றிய உண்மையறிவை உபதேசித்து, "புத்திர் யோகே த்விமாம் ச்ருணு" [2-39] என்று தொடங்கி, அவ்வாத்ம யாதாத்ம்ய ஜ்ஞானத்தை முன்னிட்டிருப்பதாய், மோக்ஷம் தவிர்ந்த மற்ற பலன்களில் விருப்பமின்மையோடு கூடியதான கர்மயோகத்தை இது வரையில் உபதேசித்தார். இனி, 'நித்யாத்மாஸங்க கர்மேஹாகோசரா ஸாங்க்யயோகதீ:। த்விதீயே ஸ்திததீலக்ஷா ப்ரோக்தா தந்மோஹசாந்தயே ॥" [கீதார்த்தஸங்க்ரஹம் 2-6] [நித்யமான ஆத்மாவைப்பற்றிய ஆத்மதத்வஜ்ஞானமும், பலனில் பற்றற்று அனுஷ்டிக்கப்படும் கர்மானுஷ்டானத்தைப்பற்றிய (கர்ம) யோக ஜ்ஞானமும், ஸ்திதப்ரஜ்ஞதையாகிற ஜ்ஞானயோகத்தை இலக்காகக் கொண்டவை என்னும் விஷயம் அர்ஜுனனின் மயக்கம் தீர்வதற்காக இரண்டாமத்தியாயத்தில் உரைக்கப்பட்டது.] என்கிறபடியே இக்கர்மயோகத்தினால் ஸாதிக்கப்படுவதான ஜ்ஞான யோகத்தைச் சொல்லத்தொடங்கியவராய், அதன் பலமான யோக மெனப்படும் ஆத்மஸாக்ஷாத்காரத்தைச் சொல்லுகிறார் இந்த ச்லோகத்தில்.

(ச்ருதிவிப்ரதிபந்நா) 'ச்ருதஸ்ய' என்று சென்ற ச்லோகத்திற் சொன்னதையொட்டிப் பார்க்கும்போது, இங்கு 'ச்ருதி' என்று ச்ரவணமாகிற கேள்வியைச் சொல்லுகிறது; 'ச்ருதிவிப்ரதிபந்நா' என்னும் பதம், "என்னிடமிருந்து கேட்டு விசேஷமாக அறியப்பட்டது" என்று பொருள்படுகிறது. (விப்ரதிபந்நா) ஸர்வஜ்ஞனாய், ஸர்வசக்தியாய், பரமகாருணிகனாய், இயற்கையுற வினனாய், இருள் துயக்கு மயக்கு மறப்புக்களற்றவனான பகவானிட மிருந்து கேட்கப்பட்டதாகையாலும், மேலே "ஸ்தாஸ்யதி" என்று இவ்வறிவு நிலைநிற்பதாகக் கூறுகையாலும், 'விப்ரதிபந்நா' என்றதில் விசப்தம் விருத்தம்என்னும் பொருளைச் சொல்லுவதன்று; விசேஷம் என்னும் பொருளையே சொல்லுகிறது. (விப்ரதிபந்நா புத்தி:) இவ்வறிவுக்கு விசேஷம் யாதெனில்: எல்லா அசேதனப் பொருள்களைக்காட்டிலும் சிறப்புற்றதாய், நித்யமாய், மிகவும் ஸூக்ஷ்மமான ஜீவாத்மதத்வத்தைப்பற்றியதாயிருக்கையே இதற்குள்ள விசேஷம் என்கை. "அர்த்தேஷ்வேவ விசேஷோ ஹி

एकरूपा बुद्धिः, असङ्गकर्मानुष्ठानेन निर्मलीकृते मनसि यदा निश्चला स्थास्यति, तदा योगम्—आत्मावलोकनम् अवाप्स्यसि। एतदुक्तं भवति–

---

நிராகாரதயா தி₄யாம்'' [குஸுமாஞ்ஜலி] [அறிவுகளுக்கு ஆகாரமில்லையாகையால், (அறியப்படும) அர்த்தத்தைக்கொண்டே அவற்றுக்கு விசேஷம் ஏற்படுகிறது.] என்றுரன்றோ உதயநர். (அசலா பு₃த்₃தி₄: ) இயற்கையிலேயே ஒருபடிப்பட்டதாயிருக்கும் அறிவு; ''ப₃ஹுசா₂கா₂ ஹ்யநந்தாஸ்ச'' [2-41] என்கிறபடியே பல விஷயங்களில் செல்லாமல், ''பு₃த்₃தி₄ரேகா'' [2-41] என்கிற படியே மோக்ஷமாகிற ஒரே விஷயத்தில் ஈடுபட்டிருப்பதாகையாலே ஒருபடிப்பட்ட அறிவு எனப்படுகிறது. (யதா₃ நிஸ்சலா ஸ்தா₂ஸ்யதி) எப்போது மாறுததாய் நிலைநிற்குமோ; ஒருபடிப்பட்டதாயிருக்கும் இவ்வறிவு எப்போது தைலதா₄ரைபோலே இடைவெளியற்றதாய் நிலைநிற்குமோ என்கை. அன்றிக்கே, (ஸ்ருதிவிப்ரதிபந்நா பு₃த்₃தி₄:) என்று ச்ரவணத்தைச் சொன்னபடியாலே, 'அசலா' என்று மனனத்தாலே நிலைநிறுத்தப்பட்டதாயும், 'நிஸ்சலா' என்று குதர்க்கங்களாலே அசைக்கவொண்ணாததாயுமிருப்பது இவ்வறிவு என்கிறதாகவுமாம். இவ்வறிவு நிலைநிற்குமிடம் எது? எனில்: (ஸமாதௌ₄ள) ''ஸமாதீ₄யதே அஸ்மிந் ஆத்மஜ்ஞாநம்'' என்னும் வ்யுத்பத்தியாலே ஆத்மஜ்ஞாநம் நிலைநிற்குமிடமாகையாலே ஸமாதி₄ எனப்படும் மனமே இவ்வறிவு நிலைநிற்குமிடம் என்கிறது. அறிவு நிலைநிற்குமிடமாகக் கூறப்படுகையாலே ஸமாதி₄ பதம் இங்கு புத்திவிசேஷத்தைக் குறிக்கமாட்டாது. ஸமாதிகாலத்தைக் குறிப்பதாகக் கொண்டாலும் லக்ஷணா தோஷம் வரும். ஆகையால் ''ஸமாதௌ₄ள ந விதீ₄யதே'' [2-44] என்றவிடத்திற்போலே இங்கும் ஸமாதி₄ பத₃ம் மனத்தைக்குறிப்பதாகக் கொள்வதே பொருந்தும். (யதா₃ ஸமாதௌ₄ள நிஸ்சலா ஸ்தா₂ஸ்யதி) பற்றற்ற கர்மாநுஷ்டானத்தாலே பாபம் நீங்கப்பெற்றுப் பரிசுத்தமான மனத்தில் எப்போது ஆத்மயாதா₂த்ம்யஜ்ஞானமானது இடைவெளியற்றதாய் நிலைநிற்கப்போகிறதோ. எப்போது ஜ்ஞானயோகத்தை நீ அடையப் போகிறாயோ என்றபடி. கர்மயோகத்தால் பரிசுத்தமான மனமே ஆத்மதத்வத்தைப்பற்றிய இடைவெளியற்ற சிந்தனமாகிற ஜ்ஞான யோகத்துக்குக் காரணம் என்று கருத்து. (ததா₃ யோக₃மவாப்ஸ்யஸி) அப்போது அந்த ஜ்ஞாநயோகத்தின் பலமான ஆத்ம ஸாக்ஷாத்காரமாகிற யோகத்தை அடைவாய். ''யோக₃ஸ் ஸந்நஹந–நோபாய த்₄யாநஸங்க₃தியுக்திஷு'' [அமர 3-3-22] [யோகசப்தம

शास्त्रजन्यात्मज्ञानपूर्वककर्मयोग :   स्थितप्रज्ञताख्यज्ञाननिष्ठामापादयति ; ज्ञाननिष्ठारूपा स्थितप्रज्ञता तु योगाख्यमात्मावलोकनं साधयति–इति ।।५३।।

---

(1) முயற்சி, (2) உபாயம், (3) தியானம், (4) சேர்த்தி, (5) யுக்தி என்னும் பொருள்களையுடையது.] என்கிறபடியே யோகசப்தம் உபாயத்தைச் சொல்லுவதாய், இங்கு ஜ்ஞாநயோகமாகிற உபாயத்தினால் ஸாதிக்கப்படும் ஆத்மஸாக்ஷாத்காரமாகிற பலத்தைச் சொல்லுகிறது. கார்யே காரணசப்தோபசாரம்.

இங்கு சில ஸந்தேஹங்களும், அவற்றுக்குப் பரிஹாரங்களும் அறியத்தக்கவை. (1) "பு3த்3தி4ர் யோகே3 த்விமாம் ச்2ருணு" [2-39] முதலான விடங்களில் உபாயமாக விதிக்கப்பட்ட யோகம் இங்குப் பலமாகக் கூறப்படுவது எப்படி? (2) "வ்யவஸாயாத்மிகா பு3த்3தி4:" [2-41] முதலானவிடங்களில் கர்மயோகம் ஆத்மஜ்ஞானத்தை முன்னிட்டுக்கொண்டிருப்பது என்று கூறப்பட்டது. இந்த ச்லோகத்தில் அந்த ஆத்மஜ்ஞானமே கர்மயோகத்தின் பலனாகக் கூறப்படுவது எப்படி? இப்படி ஒப்புக்கொண்டால் ஆத்மாச்ரயதோஷம் வருமே. (3) ச்ரவணமநநங்களாலே நிலை நின்ற அறிவையுடையவனுக்கல்லவோ கர்மாநுஷ்டானம் கைகூடும்; இங்கு கர்மாநுஷ்டானத்தாலே நிலைநின்ற அறிவு உண்டாவதாகக் கூறுவது எப்படி? (4) "யதா3 ஸ்தா2ஸ்யதி நிச்சலா" என்று ஆத்மதத்வஜ்ஞானம் நிலையாக நிற்கும் அவஸ்தையே ஜ்ஞாந நிஷ்டையென்று இங்கு கூறப்படுகிறது; இந்த ஜ்ஞாநநிஷ்டையிலிருந்து உண்டாவதாகவும், இதினும் வேறுபட்டதாகவும் "யோகம்" என்று வேறு என்ன இருக்கிறது. இந்த நான்கு கேள்விகளுக்கும் முறையே பரிஹாரம் பின்வருமாறு: (1) யோகசப்தத்தின் பொருள் ப்ரகரணத்திற்குத் தக்கபடி மாறுபடுகிறது: "பு3த்3தி4ர் யோகே3" [2-39] முதலானவிடங்களில் அது கர்மயோகத்தைக் குறிக்கிறது. "ஸமத்வம் யோக3:" [2-48] என்றவிடத்தில் சித்த ஸமாதாநத்தை யோக சப்தம் குறிக்கிறது. இங்கு கர்மஜ்ஞாந யோகங்களால் ஸாதிக்கப்படும் ஆத்மஸாக்ஷாத்காரத்தைக் குறிக்கிறது என்று கொள்வதே இப்ப்ரகரணத்திற்குப் பொருந்தும். (2) சாஸ்திரத்தினாலுண்டாகும் ஆத்மஜ்ஞானமே கர்மயோகத்திற்கு முன் வேண்டியது; அந்தக் கர்மயோகத்தினால் ஜ்ஞானயோகமுண்டாகி, அதனால் ஏற்படுவது 'யோக3ம்' என்று இங்கு கூறப்படும் ஆத்மஸாக்ஷாத்காரம். ஆத்மாவைப்பற்றிய அறிவு முந்தியது; ஆத்மாவை நேரே காண்பது பிந்தியது. ஆகையால் ஆத்மாச்ரய

॥ भा ॥ एवमुक्तः पार्थोऽसङ्गकर्मानुष्ठानरूपकर्मयोगसाध्यस्थितप्रज्ञताया योगसाधनभूतायास्स्वरूपम्, स्थितप्रज्ञस्यानुष्ठानप्रकारं च पृच्छति—

अर्जुन उवाच—

स्थितप्रज्ञस्य का भाषा समाधिस्थस्य केशव।
स्थितधीः किं प्रभाषेत किमासीत व्रजेत किम्॥ ५४॥

அர்ஜுன உவாச—

54. ஸ்தி₂தப்ரஜ்ஞஸ்ய கா பா₄ஷா ஸமாதி₄ஸ்த₂ஸ்ய கேஶவ।
ஸ்தி₂ததீ₄: கிம் ப்ரபா₄ஷேத கிமாஸீத வ்ரஜேத கிம்॥

கேஶவ—*கேசவனே!* ஸமாதி₄ஸ்த₂ஸ்ய—*ஸமாதியிலிருக்கும்,* ஸ்தி₂தப்ரஜ்ஞஸ்ய—*ஜ்ஞாநயோகநிஷ்டனுக்கு,* பா₄ஷா—*வாசகமான சப்தம்,* கா—*எது?* ஸ்தி₂ததீ₄:—*அந்த ஜ்ஞாந யோக நிஷ்டன்,* கிம் ப்ரபா₄ஷேத *என்ன பேசுவான்?,* கிம் ஆஸீத—*என்ன மானஸவ்யாபாரங்களைச் செய்வான்?* கிம் வ்ரஜேத—*என்ன காயிகவ்யாபாரங்களைச் செய்வான்?*

---

தோஷமில்லை. (3) சாஸ்திரம், ஆசார்யோபதேசம் ஆகியவற்றால் ஆத்மதத்துவத்தைப்பற்றிய நிச்சயம் ஏற்படுகிறது; அதன்பிறகு கர்மயோகத்தை அனுஷ்டிக்கிறான். பிறகு ஆத்மாவைப்பற்றிய இடைவிடாத நினைவாகிற ஜ்ஞாநயோகம் உண்டாகிறது. முன்னிருந்த ஆத்மநிச்சயத்திலும் வேறுபட்ட இதுவே ஸ்தி₂தப்ரஜ்ஞ நிலை எனப்படுகிறது. ஆகையால் இதிலும் பொருந்தாமையில்லை. (4) இந்த ச்லோகத்தில் யோகம் எனப்படுவது ஆத்மாவை நேரே காண்பதாகிற ஆத்மஸாக்ஷாத்காரம்; ஆத்மாவை இடைவிடாமல் நினைப்பதாகிற ஞானநிஷ்டை இதற்குக் காரணமாகிறது. ஆகையால் இரண்டுக்கும் வேறுபாடு உண்டு. முதலில் சாஸ்திரத்தினால் ஆத்மாவைப்பற்றிய உண்மையறிவும், பிறகு ஆத்மாவைப்பற்றிய இடைவிடாத நினைவாகிற (ஜ்ஞாநயோகம் எனப்படும்) ஆத்மோபாஸனமும், அதன்பிறகு அதனாலேயே ஆத்மஸாக்ஷாத்காரமும் ஏற்படுகின்றன என்று அறியவேண்டும். ஆகையாலே எக்குறையுமில்லை. ஆக, இந்த ச்லோகத்தால், "சாஸ்திரத்தினால் உண்டாகும் ஆத்மஜ்ஞானத்தை முன்னிட்டுக்கொண்டிருக்கும் கர்மயோகம், (ஸ்தி₂தப்ரஜ்ஞநிலை எனப்படும்) ஜ்ஞானயோகத்தை விளைக்கிறது; அந்த ஜ்ஞாநநிஷ்டை யோகம் எனப்படும் ஆத்மஸாக்ஷாத்காரத்தை உண்டாக்குகிறது" என்று சொல்லிற்றாயிற்று. 53.

॥ भा ॥ समाधिस्थस्य स्थितप्रज्ञस्य का भाषा-को वाचकश्शब्दः? तस्य स्वरूपं कीदृशमित्यर्थः। स्थितप्रज्ञः किं च भाषणादिकं करोति? ॥ ५४ ॥

---

50. என்று திருமா லியம்பு நிலைகேட்ட
வென்றி விசயன் மிகவிரும்பி—நின்ற
வறிவுடையான் மாற்ற மவனிலைமை பேற்றின்
பிறிவுரையா யென்றுரைத்தான் பின்.

**என்று**— *இவ்வண்ணமாக.* **திருமால்**— *கண்ணன்.* **இயம்பும நிலை** - *கூறிய நிலையை.* **கேட்டபின்**—*கேள்வியுற்ற பின்.* **வென்றி விசயன்**—*(போரில்) வெற்றியல்லது அறியாத அர்ஜுனன்,* **மிக விரும்பி**—*மிகவும் விருப்பத்துடன்.* **நின்ற அறிவுடையான் மாற்றம்**— *'ஸ்தி₂தப்ரஜ்ஞன்' எனப்படும் ஞானயோக நிஷ்டனின் ஸ்வரூபத்தைக்கூறும் சொல்லையும்.* **அவன் நிலைமை**—*அவனுடைய(மனோவாக்காய)நிலைகளையும்.* **பேற்றின பிறிவு**—*அவனுடைய தசாபேதங்களையும்.* **உரையாய்**-*உரைப்பாயாக.* **என்று உரைத்தான்**-*என்று கேட்டான்.*

---

*54. இவ்வண்ணம உரைக்கப்பட்ட பார்த்தன் இதரபலன்களில் பற்றில்லாமல் கர்மங்களை அனுஷ்டிக்கையாகிற கர்மயோகத்திலுண்டாவதாய், 'யோகம்' எனப்பட்ட ஆத்மஸாக்ஷாத்காரத்துக்கு ஸாதனமாயிருப்பதாய், 'ஸ்தி₂தப்ரஜ்ஞதை' எனப்படுவதான ஜ்ஞாநயோகத்தின ஸ்வரூபத்தையும், அந்த ஜ்ஞாநயோகத்தில் நிலைநிற்பவனுடைய அநுஷ்டானப்ரகாரத்தையும கேட்கிறான் இந்த ச்லோகத்தில். அதில் முற்பாதியில ஜ்ஞாநநிஷ்டையின் ஸ்வரூபம கேட்கப்படுகிறது. ( ஸமாதி₄ஸ்த₂ஸ்ய ) முன ச்லோகத்திற்சொன்னபடியே நெஞ்சில நிலைநிற்பவனுடைய; நெஞ்சை வசப்படுத்தி அதில் நிச்சலமான ஆத்மஜ்ஞானத்தைப் பெற்றவனுடைய என்று கருத்து. இவன் யாரெனில்: (ஸ்தி₂தப்ரஜ்ஞஸ்ய) ஸ்தி₂தப்ரஜ்ஞன் [ நிலைநின்ற அறிவையுடையவன் ] எனப்படும் ஜ்ஞாநயோக நிஷ்டனே இவன் என்கை. (கா ப₄ாஷா) ப₄ாஷை எது? 'கிம் ப்ரப₄ாஷேத' என்றவிடத்தில், அந்த ஸ்தி₂தப்ரஜ்ஞன் பேசும் பேச்சைப்பற்றி அடுத்தபடியாகத் தனியாகக்*

॥ भा ॥ वृत्तिविशेषकथनेन स्वरूपमप्युक्तं भवतीति वृत्तिविशेष उच्यते—

---

கேட்கப்படப்போகிறதாகையால், இங்கு அவனைப்பற்றிய பேச்சைக் கேட்பதாகக் கொள்வதே பொருத்தம். (ஸ்தி₂தப்ரஜ்ஞஸ்ய கா ப₄ாஷா) ஸ்தி₂தப்ரஜ்ஞனின் ஸ்வரூபத்தைச் சொல்லும் சப்தம் எது? என்று கருத்து. அவனுடைய ஸ்வரூபம் எத்தகையது என்று கேட்பதில் நோக்கு. இனி, பிற்பாதியாலே அவனுடைய அநுஷ்டான ப்ரகாரம் கேட்கப்படுகிறது.— (ஸ்தி₂ததீ₄: கிம் ப்ரப₄ாஷேத) ஸ்திதப்ரஜ்ஞன் எதைப் பேசுவான்? அவனுடைய வாசிகவ்யாபாரம் எத்தகையது என்கை. (கிம் வ்ரஜேத) அவனுடைய காயிகவ்யாபாரம் எத்தகையது என்கை (கிம ஆஸீத) ''ஆஸீந: ஸம்ப₄வாத்'' [ப்ர·ஸூ 4-1-7] முதலானவற்றில் உட்கார்ந்திருக்கு மிருப்பே தியானத்திற்கு உகந்ததாகச் சொல்லுகையாலே, இங்கு 'ஆஸீத' என்று தியானம் முதலான மாநஸவ்யாபாரங்களைச் சொல்லுகிறது. ஆக, ஸ்தி₂தப்ரஜ்ஞனின் திரிகரணவ்யாபாரங் களாகிற அநுஷ்டானப்ரகாரம் கேட்கப்பட்டதாயிற்று. (கேஶவ) ப்ரஹ்மருத்ராதிகாரணனை நீயே இவ்வரிய அர்த்தங்களைச் சொல்ல வல்லவன் என்று கருத்து.

"க இதி ப்₃ரஹ்மணோ நாம ஈஶோऽஹம் ஸர்வதே₃ஹிநாம்।
ஆவாம் தவாங்கே₃ ஸம்பூ₄தௌ தஸ்மாத் கேஶவநாமவாந்॥"

['க:' என்பது ப்ரஹ்மாவின் பெயர்; எல்லா ஸம்ஸாரிகளுக்கும் நான் தலைவன்; நாங்களிருவரும் உன் உடம்பிலிருந்து தோன்றி யவர்கள்; ஆகையால் நீ கேசவன் என்னும் பெயரை உடையவனு கிறுய்.] என்னும் ஹரிவம்சத்திலுள்ள ருத்ரவசனமும்,

"ஹிரண்யக₃ர்ப்ப₄: க: ப்ரோக்த: ஈஶ: ஶங்கர ஏவ ச।
ஸ்ருஷ்ட்யாதி₃நா வர்த்தயதி தௌ யத: கேஶவோ ப₄வாந்॥"

[பிரமன் 'க:' எனப்படுகிறுன். 'ஈசன' என்பப்படுபவன் சங்கரன்., அவர்களை ஸ்ருஷ்டி முதலானவற்றைச் செய்து வாழச்செய்கையாலே நீர் 'கேசவன்' எனப்படுகிறீர்.] என்று மத்வபாஷ்யத்தில் எடுக்கப் பட்ட வசநாந்தரமும் இங்கு அநுஸந்திக்கத்தக்கது. 54

श्रीभगवानुवाच—

प्रजहाति यदा कामान् सर्वान्पार्थ मनोगतान्।
आत्मन्येवात्मना तुष्टः स्थितप्रज्ञस्तदोच्यते॥ ५५॥

55. ப்ரஜஹாதி யதா காமாந் ஸர்வாந் பார்த்த மநோகதாந் ।
ஆத்மந்யேவாத்மநா துஷ்ட: ஸ்திதப்ரஜ்ஞஸ்
தததோச்யதே ॥

**பார்த்த** -*அர்ஜுனா!* **ஆத்மநா**—*(ஆத்மாவையே பற்றி நிற்கும்) மனத்தினால்,* **ஆத்மநி ஏவ**— *(ஆனந்தரூபமான) தன் ஆத்மாவிலேயே,* **துஷ்ட:**—*ப்ரீதியுடையவனாய்,* **மநோகதாந்**—*மனத்திலிருக்கும்,* **ஸர்வாந் காமாந்**—*(மற்ற பலன்களைப்பற்றியிருக்கும்) எல்லா விருப்பங்களையும்,* **யதா**—*எப்பொழுது,* **ப்ரஜஹாதி**—*நன்கு கைவிடுகிறானோ,* **ததா**—*அப்போது,* **ஸ்திதப்ரஜ்ஞ. உச்யதே**—*ஸ்திதப்ரஜ்ஞன் என்று கூறப்படுகிறான்.*

---

51. ஆங்கவனுக் கண்ண லதுவுரைத்தா னாங்குயிரின்
பாங்கதனாற் றானே படிந்தமைந்து—தாங்கரிய
வெண்ணரிய காமங்க ளெல்லாந் துறக்குமவன்
றிண்ணறிவ னாகுமெனச் செப்பு.

**ஆங்கு**—*அப்போது,* **அவனுக்கு**—*அவ்வர்ஜுனனுக்கு,* **அண்ணல்**—*ஸ்வாமியான கண்ணன்,* **அது உரைத்தான்**—*அக்கேள்விக்கு பதிலை உரைத்தான்:* **ஆங்கு**—*ஜ்ஞானயோக நிஷ்டர்களில்,* **உயிரின்பாங்கு அதனால்**—*ஆத்மாவையே பற்றி நிற்கும் மனத்தால்,* **தானே படிந்து அமைந்து**—*தன் ஸ்வரூபத்திலேயே ஈடுபட்டு நின்று,* **தாங்கரிய**—*(மனத்தினால்) தாங்கமுடியாதவையாய்,* **எண்ணரிய** – *எண்ணமுடியாதவையான,* **காமங்கள் எல்லாம்**—*எல்லா விருப்பங்களையும்,* **துறக்குமவன்**—*கைவிடுகின்றவன்,* **திண்ணறிவனாகும் என**—*ஸ்திதப்ரஜ்ஞன் (நிலைநின்ற அறிவையுடையவன்) என்று,* **செப்பு**—*கூறுவாய்.*

|| भा || आत्मन्येवात्मना—मनसा आत्मैकावलम्बनेन तुष्टस्तेन तोषेण तद्व्यतिरिक्तान् सर्वान्मनोगतान् कामान् यदा प्रकर्षेण जहाति; तदाऽयं स्थितप्रज्ञ इत्युच्यते; ज्ञाननिष्ठाकाष्ठेयम् || ५५ ||

---

55. இனி, நான்கு ச்லோகங்களாலே ஜ்ஞாநயோக நிஷ்டனுடைய அநுஷ்டான ப்ரகாரத்தை விவரிப்பதின் மூலம், முன ச்லோகத்தின் பிற்பாதிக்கு நேரே பதிலுரைக்கிறார். அதில் ஜ்ஞாந நிஷ்டையின் மேலெல்லையில் நிற்பவனின் அநுஷ்டானத்தைச் சொல்லும் இந்த ச்லோகத்தாலே, முன் ச்லோகத்தின் முற்பாதியாலே கேட்கப்பட்ட ஜ்ஞாநநிஷ்டனின் ஸ்வரூபமும் விவரிக்கப் பட்டதாகிறது. (ஆத்மந்யேவாத்மநா துஷ்ட:) முதல் ஆத்மசப்தம் ஜீவாத்மஸ்வரூபத்தையும், இரண்டாம ஆத்மசப்தம் மனத்தையும் குறிக்கின்றன. ஆத்மநா—மனத்தினாலே, ஆத்மநி ஏவ துஷ்ட;—தன் ஆத்மாவிலேயே ப்ரீதியுடையவனாய் என்று பொருள். அன்றிக்கே, 'ஆத்மநி ஏவ ஆத்மநா— தன் ஆத்மாவிலேயே (நிலைநிற்கும்) மனத்தினால, துஷ்ட:— (வேறொன்றிலும் விருப்பமின்மையாகிற) திருப்தியை உடையவனாய்' என்றும பொருள் கொள்ளலாம். ''ந விவேத₃ாத்மநோ க₃ாத்ரம் தத்ஸ்ம்ருதயாஹ்லாத₃ஸம்ஸ்தி₂த:'' [வி-பு 1-17-39] [பரமாத்மாவின் நினைவாகிற இன்பத்தில் திளைத்த அந்த ப்ரஹ்லாதன் தன் உடலையும் அறியவில்லை] என்றது போலே ஆத்மாவிலுள்ள அந்தத் துஷ்டியாலே இதரவிஷயங்களில் ஏற்படும் வைராக்யத்தை ச்லோகத்தின் முற்பாதி சொல்லுகிறது. (யத₃ா மநோக₃தாந் ஸர்வாந் காமாந் ப்ரஜஹாதி) எப்போது நெஞ்சிலுள்ள எல்லா விருப்பங்களையும் நன்கு கைவிடுகிறானோ. (ஸர்வாந் காமாந்) ஆத்மாவைத் தவிர்ந்த மற்ற விஷயங்களில் விருப்பஙகளே இங்கு கூறப்படுகின்றன, (ப்ரஜஹாதி) ப்ரகர்ஷேண ஜஹாதி. நன்கு கைவிடுகிறானோ. மறுபடியும் ஏற்படமுடியாதபடி வாஸனையோடு கைவிடுகிறானோ என்றபடி. (யத₃ா ப்ரஜஹாதி தத₃ா ஸ்தி₂த ப்ரஜ்ஞ: உச்யதே) எப்போது மற்ற விஷயங்களில் விருப்பத்தை வாஸனையோடு கைவிடுகிறானோ அப்போது ஸ்தி₂தப்ரஜ்ஞன் என்று கூறப்படுகிறான. அடுத்த ச்லோகத்தில் விவரிக்கப்படும் முன் நிலையில் இவனுக்கு மனத்தில் எஞ்சி நிற்கும் வாஸநாசேஷம் இந்நிலையில் கழிக்கப்பட்டு விடுகிறது என்று கருத்து. இந்த ச்லோகத்தில் சொல்லப்படுவது ஜ்ஞாநநிஷ்டையின் மேலான நிலை. இனி வரும் மூன்றுச்லோகங்களில் படிப்படியாக ஜ்ஞாநநிஷ்டையின் கீழ்நிலைகள் விவரிக்கப்படவிருக்கின்றன. இந்த ச்லோகத்தில் சொல்லப்படும்

॥ भा ॥ अनन्तरं ज्ञाननिष्ठस्य ततोऽर्वाचीनादूरविप्रकृष्टावस्थोच्यते–
दुःखेष्वनुद्विग्नमनास्सुखेषु विगतस्पृहः ।
वितरागभयक्रोधः स्थिर(त)धीर्मुनिरुच्यते ॥ ५६ ॥

56. து₃:க்கே₂ஷ்வநுத்₃விக்₃நமநாஸ் ஸுகே₂ஷு
விக₃தஸ்ப்ருஹ: ।
வீதராக₃ப₄யக்ரோத₄: ஸ்தி₂ர(த)தீ₄ர் முநிருச்யதே ॥

**து₃:க்கே₂ஷு**—*துன்பம் தருமவை வந்தடைந்த போதிலும்,* **அநுத்₃விக்₃நமநா:**—*துன்பமுறுதவனாய்,* **ஸுகே₂ஷு**—*இன்பம் தருமவை வந்துற்றபோதிலும்,* **விக₃தஸ்ப்ருஹ:**—*(அவற்றில்)ஆசையற்றவனாய்,* **வீதராக₃ப₄யக்ரோத₄:**—*ராக₃ம், பயம், கோபம் ஆகியவையற்றவனாய்,* **முநி:**—*ஆத்மாவைப் பற்றியே மனனம செய்கின்றவனாயிருப்பவன்,* **ஸ்தி₂ததீ₄: உசயதே**-*ஸ்தி₂தப்ரஜ்ஞன் எனப்படுகிறான்.*

---

52. துன்பத்தி லென்றுந் துளங்கா மனத்தனா
யின்பத் திடையாசை யில்லவனாய்ப்—புன்பற்றி
லன்பு பயம்வெகுளி யற்றவனே யாங்குணர்வின்
வன்பு பெறுமுனியா மற்று.

**மற்று**—*மேலும்,* **துன்பத்தில்**—*துன்பம் தருமவை ஏற்பட்டால்,* **என்றும் துளங்கா மனத்தனாய்**—*என்றுமே துன்புறாத மனத்தையுடையவனாய்,* **இன்பத்திடை** — *இன்பம் தருமவற்றில்,* **ஆசை இல்லவனாய்**—*ஆசை இல்லாதவனாய்,* **புன்பற்றில்**—*தாழ்ந்த விஷயங்களில் பற்றினால் வரும்,* **அன்பு பயம் வெகுளி அற்றவனே**-*ராகம், பயம், குரோதம் ஆகியவை இல்லாதவனே,* **ஆங்கு**-*ஜ்ஞானநிஷ்டர்களுக்குள்,* **உணர்வின் வன்பு பெறும் முனியாம்**—*அறிவில் உறுதிபெற்ற முனியெனப்படுகிறான் (இவனும் ஸ்திதப்ரஜ்ஞனே யென்றபடி.)*

---

மேலான நிலை "த்₃ருஷ்டாநுஶ்ரவிகவிஷயவித்ருஷ்ணஸ்ய வஶீகார ஸம்ஜ்ஞா வைராக்₃யம்"[பாதஞ்ஜல யோகஸூத்ரம்1-15] [ப்ரத்யக்ஷமான இம்மையிலும், சாஸ்திரத்தால் அறியப்படும் மறுமையிலும் உள்ள எல்லாப்பலன்களிலும் வைராக்யம் யாதொன்று உள்ளதோ அது வஶீகார ஸம்ஜ்ஞை எனப்படுகிறது.]என்று யோகஸூத்ரத்தில் வசீகார ஸம்ஜ்ஞை என்று பெயரிட்டு அழைக்கப்பட்டது. 55.

56. சென்ற ச்லோகத்தில் ஞானநிஷ்டையின் மேலான நிலேயான வசீகார ஸம்ஜ்ஞை விவரிக்கப்பட்டது. அதற்குக் கீழ் நிலேயான ஏகேந்திரிய ஸம்ஜ்ஞை இந்த ச்லோகத்திலும், அதற்கும் கீழ் நிலேயான வ்யதிரேக ஸம்ஜ்ஞை அடுத்த ச்லோகத்திலும், அதற்கும கீழ் நிலேயான யதமாந ஸம்ஜ்ஞை அதற்கடுத்த ச்லோகத்திலும விவரிக்கப்படுகின்றன. (1) யதமாந ஸம்ஜ்ஞை: ஞானநிஷ்டையைப் பெற விரும்புகிறவன் முதலில் வெளியிந்திரியங்களே விஷயங்களினின்றும் இழுத்து மனத்தை ஆத்மாவில் நிலேநிறுத்த யத்னம் செய்ய வேண்டும். இந்நிலே யதமாந ஸம்ஜ்ஞை எனப்படுகிறது; (இது 58-வது ச்லோகத்தில் விவரிக்கப்படவிருக்கிறது.) (2) வ்யதிரேக ஸம்ஜ்ஞை: முற்கூறிய முதல் நிலேயில் ராக₃த்₃வேஷாதிகளில் ஒருபகுதியே போக்கடிக்கப்படுகிறது; எஞ்சிய பகுதியினல் கலங்கி நிற்கும் மனமானது, விஷயங்களினின்றும் பலாத்காரமாக இழுக்கப்படும் இந்திரியங்களேயும் அவ்வப்போது விஷயங்களில் செல்லும்படி தூண்டும; மனம் தானும் ஆத்மாவில் நிலேநிற்க முடியாமல் தடுமாறும். இனி, இரணடாவது நிலேயில் இந்த எஞ்சிநிற்கும் ராக₃த்₃வேஷாதிகளேயும், சுபங்களில் விருப்பமின்மை, அசுபங்களின் வெறுப்பின்மை முதலான பயிற்சிகளாலே போக்கடிக்கிருன் ஞானி. முதல் நிலேயில் போக்கடிக்கப்பட்ட ராக₃த்₃வேஷாதிகளேக் காட்டிலும் போக்கடிக்கப்படாத ராக₃த்₃வேஷாதி₃களே வேறுபடுத்தி அநுஸந்தித்து அவற்றையும் போக்கடிக்க முயலும் இந்நிலே வ்யதிரேக ஸம்ஜ்ஞை எனப்படுகிறது. (வ்யதிரேகம்-வேறுபடுத்துதல்) (இந்நிலே அடுத்ததான 57-வது ச்லோகத்தில் விவரிக்கப்படவிருக்கிறது.) (3) ஏகேந்த்₃ரிய ஸம்ஜ்ஞை: முன் நிலேயில் ராகத்வேஷாதிகளெல்லாம் போக்கடிக்கப்பட்டபடியால் வெளியிந்திரியங்கள் நன்கு ஜயிக்கப்பட்டவையாகின்றன. ஆயினும் மனம் என்னும் உளளிந்திரியமானது அநாதிகாலமாக விஷயங்களே அநுபவித்து வந்ததால் ஏற்பட்ட வாஸனேயால் ஆத்மாவை அநுபவிக்கவொட்டாமல் தடுக்கப்படும். புருஷனே வெறுக்கும் பெண்ணுக்குக் கட்டிளங்காளேயொருவனேக் காட்டிக் காட்டி அவளே அவனிடம் ஈடுபடுத்துவதுபோலே, இந்த மனத்திற்கும் தன் ஆத்மாவைக் காட்டிக்காட்டி அதை ஆத்மாவிடம ஈடுபடுத்தி மனத்திலுளள அநாதிவாஸனேயையும போக்கடிக்க ஞானியானவன் முயலவேண்டும. மனமெனும் ஓரே இந்திரியத்தையும் வெல்லமுயலும் இந்நிலே ஏகேந்த்₃ரிய ஸம்ஜ்ஞை எனப்படுகிறது. (இந்த 56-வது ச்லோகத்தில் விவரிக்கப்படுவது இந்நிலே.)

॥भा॥ प्रियविश्लेषादिदुःखनिमित्तेषु उपस्थितेष्वनुद्विग्नमनाः न दुःखी भवति; सुखेषु विगतस्पृहः—प्रियेषु सन्निहितेष्वपि विगतस्पृहः,

---

(4) வசீகாரஸம்ஜ்ஞை. முன் நிலையில வாஸனை பெரும்பாலும் கழிந்தபோதிலும், மறுபடியும் விஷயங்களில் நோக்கு உண்டாவதற் குறுப்பான வாஸநாஶேஷம நீறு பூத்த நெருப்பு போலே மனத்தில் எஞ்சிநிற்கும். மனத்திலிருக்கும் எல்லாக்காமங்களையும் அடியோடு கைவிட்டு ஆத்மாவிடமே மனத்தை வசப்படுத்துவதன் மூலம் இந்த வாஸநாஶேஷத்தையும் கழிக்கும நிலையே வசீகார ஸம்ஜ்ஞை எனப் படும் ஞானநிஷ்டையின மேலான நிலை. (இந்நிலை சென்ற ச்லோகத் தில் விவரிக்கப்பட்டது.) இந்த உத்பத்திக்ரமத்திற்கு நேர்மாருக கீதையில் சென்ற ச்லோகத்திலிருந்து ஞானநிஷ்டையின் மேலான நிலை தொடக்கமாய்ப் படிப்படியாகக் கீழ்நிலைகள் விவரிக்கப்படு கின்றன. இனி, உத்பத்திக்ரமப்படி ஞான நிஷ்டையின் மூன்ருவது நிலையான ஏகேந்திரிய ஸம்ஜ்ஞையை விவரிக்கும் இந்த ச்லோகத்தைக் காண்போம்.

(து₃:க்கே₂ஷு அநுத்₃விக்₃நமநா:) மனத்திற்கினிய வஸ்துவைப் பிரிவது, மனத்திற்கு இனியதல்லாததை அடைவது ஆகிய துக்க ஹேதுக்கள் வந்தடையும்போது துன்புருமலிருக்கும் மனத்தை யுடையவன். (அநுத்₃விக்₃நமநா:) என்னும் பதம் துன்புருத மனத்தையுடையவன் என்னும பொருளையுடையதாகையாலே, (து:க்கே₂ஷு) என்னும பதம் துன்பத்திற்குக் காரணமான பொருள் களைக் குறிக்கிறது. துன்பம் தரும் வஸ்துக்கள் இவனுக்குத் துன்பத்தைத் தரமுற்படும்போதும் இவன் துன்பத்தை அடையாம லிருக்கிருன் என்றபடி. (அநுத்₃விக்₃நமநா:) "ஓவிஜீ ப₄யசலநயோ:" என்னும் தாதுவிலிருந்து தோன்றிய உத்₃விக்₃நஶப்தம் பயம சலநம் என்னும் இரண்டு பொருள்களை உடையது. "வீதராக₃ ப₄யக்ரோத₄: என்று, மேலே பயமின்மையைத் தனியே சொல்லப் போகிறதாகையாலே, இங்கு 'அநுத்₃விக்₃நமநா:' என்று (துக்க ஹேதுக்கள் வந்தடையும்போதும) சலனமடையாத மனத்தையுடை யவன் என்று கூறுகிறதாகவுமாம். (ஸுகே₂ஷு) இன்பத்திற்குக் காரணமான பொருள்கள் வந்தடைந்தபோதிலும். (விக₃தஸ்ப்ருஹ:) அவற்ருல் இன்பமடையாதவனுகையாலே அவற்றில் ஆசையற்ற வன். வந்தடைந்த ஸுகதுக்கஹேதுக்களாலே இன்பதுன்பங்க ளடையாமலிருப்பதோடன்றியில், வரவிருக்கும் ஸுககாரணங்களில்

वीतरागभयक्रोधः—अनागतेषु स्पृहा रागः, तद्रहितः; प्रियविश्लेषाप्रियागमनहेतुदर्शननिमित्तं दुःखं भयं, तद्रहितः; प्रियविश्लेषाप्रियागमनहेतुभूतचेतनान्तरगतदुःखहेतुभूतस्वमनोविकारः क्रोधः, तद्रहितः; एवंभूतो मुनिः—आत्ममननशीलः स्थितधीरित्युच्यते ॥ ५६ ॥

---

விருப்பையும், துःக்ககாரணங்களில் பயத்தையும் அடையமாட்டான் என்கிறது மேலே: (வீதராக₃ப₄யக்ரோத₄:) வரவிருக்கும் ஸுக காரணங்களில் விருப்பையும், துக்ககாரணங்களில் பயத்தையும், கோபத்தையும் அடையாதவன். (விதராக₃:)ராக₃மற்றவன். வர விருக்கும் ஸுககாரணங்களில் ஆசையே 'ராக₃ம்' எனப்படுகிற தாகையால், இத்துடன் 'புநருக்தி வாராமைக்காக 'ஸுகே₂ஷு விக₃தஸ்ப்ருஹ:' என்றவிடத்தில வந்தடைந்த ஸுககாரணங்களில் ஆசையின்மையே குறிக்கப்படுகிறது என்று பொருள் உரைக்கப் பட்டது. (வீதப₄ய:) பயமற்றவன. 'இனிய பொருளைப் பிரித்து விடுமோயிது, இனியதல்லாததை அடைவித்து விடுமோயிது' என இவன் நினைக்கலாம்படி, ஸித்தமான நிலையிலுள்ள துக்ககாரணத்தை இவன் காண்பதால் உண்டாவதும், உடல் நடுக்கம் முதலான வற்றை விளைப்பதுமான துன்பம் ப₄யமெனபபடுகிறது. இத்துடன் புநருக்தி ஏற்படாமைக்காகவே " து₃:க்கே₂ஷ்வநுத்₃விக்₃நமநா: " என்றவிடத்தில் வந்தடைந்த துக்ககாரணங்களால் துன்பமுருமையே குறிக்கப்படுகிறது என்று பொருள் உரைக்கப்பட்டது. (வீத க்ரோத₄:) கோபமற்றவன். கோபம் என்பது தனக்குத் தீங்கு செய்யும் ஒரு சேதனனைக் குறித்தே மற்றொரு சேதனனுக்கு முக் காலத்திலும் உண்டாவது. தீங்கு செயதபோதிலும, புயற்காற்று, கடும் வெயில், முள முதலான அசேதனங்களைக்குறித்து எவனுக் கும் கோபம் உண்டாவதில்லை. பைததியம் பிடித்தவனும குழந்தை யும் அசேதனங்களைக் குறிததுக்கோபம் கொள்ளும்போதும அவற்றைச் சேதனர் என்றெண்ணியே கோபிக்கின்றனர். ஒரு சேதனன் மற்றொரு சேதனனுக்கு இனியதைப் பிரிப்பது, இன்னு செய்வது ஆகியவற்றைச் செய்கிருன்; அப்போது முதல்வனைக் குறித்து இரண்டாமவனுக்கு ரஜஸ்தமோகுணங்கள் தலைதூககு வதனுல் ஒரு மநோவிகாரமும் அதனுல் அவனுடைய அறிவில் ஒரு விகாரமும் ஏற்படுகிறது. இது கோபம் எனப்படுகிறது. இந்த மநோபுத்தி விகாரமாகிற கோபம் முதல்வனுக்குத் துன்பத்தைத் தரக்காரணமாகவும அமைகின்றது. பிறரிடம் கோபத்தாலே தற்

॥भा॥ ततोऽर्वाचीनदशा प्रोच्यते—
यस्सर्वत्रानभिस्नेहस्तत्तत्प्राप्य शुभाशुभम्।
नाभिनन्दति न द्वेष्टि तस्य प्रज्ञा प्रतिष्ठिता॥५७॥

**57. யஸ்ஸர்வத்ராநபி₄ஸ்நேஹஸ் தத்தத் ப்ராப்ய ஶுபா₄ஶுப₄ம் ।**
**நாபி₄நந்த₃தி ந த்₃வேஷ்டி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டி₂தா ॥**

**ய:**—*எவனொருவன்,* **ஸர்வத்ர**— *(இனிய பொருள்கள்) அனைத்திலும்,* **அநபி₄ஸ்நேஹ:**—*மிகுந்த ஈடுபாடற்றவனாய்,* **தத் தத் ஶுபா₄ஶுப₄ம்**—*அந்தந்த நன்மை தீமைகளை,* **ப்ராப்ய**—*அடைந்தும்,* **ந அபி₄நந்த₃தி**— *(நன்மையைப்) புகழ்வதில்லையோ,* **ந த்₃வேஷ்டி**—*(தீமையை) இகழ்வதுமில்லையோ,* **தஸ்ய**—*அவனுடைய,* **ப்ரஜ்ஞா**—*அறிவு,* **ப்ரதிஷ்டி₂தா**— *நிலை நிற்கிறது. (அவனும் ஸ்திதப்ரஜ்ஞன் என்றபடி).*

---

கொலை முதலான தீங்குகளைத் தனக்குத்தானே செய்துகொள்ளும் போதும் அததீங்குகளால் கோபவிஷயமாயிருக்கும் பிறர்க்கும் தீங்கு நேரிடவேண்டும் என்னும் கருத்தாலேயே அத்தீங்குகள் தனக்குச் செய்துகொள்ளப்படுகின்றன. ஆக, "வீதராக₃பய க்ரோத₄:" என்று ராகம், பயம், கோபம் ஆகியவை அற்றவனிவன் என்றதாயிற்று. (முநி:) தானா ஸாக்ஷாத்கரிக்கப்போகும் ஆத்ம விஷயத்தில் மனனம் செய்பவனாயிருப்பவன். மனத்திலுள்ள அநாதி வாஸனையைப் போக்குவதற்காக இவன எப்போதும் ஆத்மாவை மனனம் செய்பவன் என்று காட்டும் இப்பதத்தாலே இவன் ஏகேந்த்₃ரிய ஸம்ஜ்ஞை என்னும மூன்ருவது நிலையிலுள்ளவன் எனறு உணர்த்தப்படுகிறது. மனத்திலுள்ள விருப்பு வெறுப்புக் கள் நீங்கியிருக்கும் அம்சத்தில் முன் ச்லோகத்தில் சொன்ன வசீகார ஸம்ஜ்ஞைக்கும், இந்த ஏகேந்திரிய ஸம்ஜ்ஞைக்கும் ஒற்றுமை யிருந்தபோதிலும், "ப்ரஜஹாதி" "ஆத்மந்யேவ துஷ்ட:" என்று அவனையும், "முநி:" [ஆத்மமனனசீலன்] எனறு இவனையும் குறிக்கை யாலே இவனுக்கு மறுபடியும் விஷயங்களில் நோக்கு உண்டாவதற் குறுப்பான வாஸநாஶேஷம் நீறு பூத்த நெருப்புப்போலே மனத்தில் எஞ்சி நிற்கிறதென்றும், அவனுக்கு அதுவும் கழிந்து விஷயவைராக்₃ யம பரிபூர்ணமாக ஏற்பட்டுவிடுகிறது எனறும் வேற்றுமை காட்டப்படுகிறது. 56.

|| भा || यस्सर्वत्र प्रियेष्वनभिस्नेहः-उदासीनः, प्रियसंश्लेषविश्लेषरूपं शुभाशुभं प्राप्याभिनन्दनद्वेषरहितः, सोऽपि स्थितप्रज्ञः || ५७ ||

---

53. எங்கு மருவுநசை யேது மறத்துறந்து
தங்கு நலந்தீங்கு தானணைந்தே—யங்கங்கு
முந்து முகப்பு முதிர்வெறுப்பு மற்றூர்க்கு
வந்து நிலையா மதி.

**எங்கும் மருவும் நசை ஏதும்** —*(இனிய பொருள்கள்) எல்லாவற்றிலும் உண்டாகும் எந்த ஈடுபாட்டையும்,* **அற துறந்து**—*நன்கு கைவிட்டு.* **தங்கும் நலம் தீங்கு தான் அணைந்தே**—*நிலைநிற்கும் நன்மைதீமைகளை அடைந்தபோது,* **அங்கங்கு**-*அந்தந்த நன்மைதீமைகளில் (முறையே)* **முந்தும் உகப்பும்**-*அதிகமான ஆநந்தத்தையும்,* **முதிர் வெறுப்பும்**—*மிகுந்த வெறுப்பையும்,* **அற்றூர்க்கு**—*அடையாமலிருப்பவருக்கு,* **மதி வந்து நிலையாம்**-*அறிவு ஏற்பட்டு நிலையாகும்.* *(அவனும் ஸ்தி₂தப்ரஜ்ஞனே என்றபடி.)*

---

57. சென்ற ச்லோகத்தில் விவரிக்கப்பட்ட ஏகேந்த்₃ரிய ஸம்ஜ்ஞைக்கும் கீழ் நிலையான வ்யதிரேக ஸம்ஜ்ஞையென்னும் இரண்டாவது நிலை இந்த ச்லோகத்தில் விவரிக்கப்படுகிறது. அடுத்த ச்லோகத்தில் விவரிக்கப்படவிருக்கும் யதமாந ஸம்ஜ்ஞை என்னும் முதல் நிலையில் இவன் இந்திரியங்களை விஷயங்களினின்றும் பலாத்காரமாக இழுத்துக்கொண்டபின்பும் மனத்திலுள்ள விருப்புவெறுப்புகளில் ஒரு பகுதி எஞ்சிநிற்கிறது. அதைப் போக்கடிப்பதற்காக இவன் செய்யும் முயற்சியைச் சொல்லுகிறது இந்த ச்லோகம். (யஸ் ஸர்வத்ர அநபி₄ஸ்நேஹ:) இனிய பொருள்கள் அனைத்திலும் ஈடுபாடற்றவன். (ஸர்வத்ர) இனியதல்லாத பொருள்களில் ஈடுபட ப்ரஸக்தியில்லையாகையால், இப்பதம் இனிய பொருள்கள் அனைத்தையும் குறிககிறது. (அநபி₄ஸ்நேஹ:) அபி₄ ஸ்நேஹமாவது அவற்றைப் பெறமுயல்வது வரையில் கொண்டு போய்விடும் ஈடுபாடு. அநபி₄ஸ்நேஹனுகையாவது அவற்றைக் கண்டாலும் அடைய விருப்பமில்லாமல் உதாஸீநனுயிருக்கை. இதனுல், இனிய வஸ்துக்களை அடையத்தானுக முயல்வதில்லை

॥ भा ॥ ततोऽर्वाचीनदशामाह—

यदा संहरते चायं कूर्मोऽङ्गानीव सर्वशः।
इन्द्रियाणीन्द्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ५८ ॥

58. யதா₃ ஸம்ஹரதே சாயம் கூர்மோऽங்கா₃நீவ ஸர்வஶ:।
இந்த்₃ரியாணீந்த்₃ரியார்த்தே₂ப்₄யஸ் தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டி₂தா ॥

யதா₂—எப்போது, அயம்—இந்த ஞானநிஷ்டன், இந்த்₃ரியாணி—(விஷயங்களைத் தொடமுயலும்) இந்திரியங்களை, கூர்ம: அங்கா₃நி இவ—ஆமை அவயவங்களை (உள்ளே இழுத்துக்கொள்வது) போலே, ஸர்வஶ:—எல்லாப் படியாலும், இந்த்₃ரியார்த்தே₂ப்₄ய:—சப்தம் முதலான விஷயங்களினின்றும், ஸம்ஹரதே—இழுத்துக்கொள்ளுகிறானோ, தஸ்ய—அவனுடைய, ப்ரஜ்ஞா—அறிவு, ப்ரதிஷ்டி₂தா—நிலை நிற்கிறது. (அவனும் ஸ்தி₂தப்ரஜ்ஞனேயென்கை.)

---

என்று காட்டப்பட்டது. விதிவசத்தால் வந்தடைந்த இனிய பொருள்களிலும் இன்னாதவைகளிலும் விருப்பு வெறுப்புக் கொள்வதில்லையென்கிறது இனி: (தத்தத் ப்ராப்ய ஶுபாஶுபம்) இனியவைகளின் சேர்த்தியாகிற அந்தந்த சுபங்களையும், இனியவைகளின் பிரிவாகிற அந்தந்த அசுபங்களையும் அடைந்தபோதிலும். (நாபி₄நந்த₃தி) சுபங்களால மிகுந்த ஆநந்தத்தை அடைவதில்லை. தொடர்புடைய பொருள்களிலும், காலாந்தரத்திலும் இவ்வின்பம் சென்று பாயுமபடியிருப்பது அபி₄நந்த₃னம். (நாபிநந்ததி) சுபங்களைப புகழ்வதில்லை எனறுமாம. (ந த்₃வேஷ்டி) அசுபங்களை மிகவும வெறுப்பதுமில்லை. அசுபங்களால் மிகுந்த துனபத்தை அடைவதில்லை என்றபடி. அசுபங்களை இகழ்வதில்லை என்றுமாம். இத்தால் மனததில எஞ்சி நிற்கும விருப்பு வெறுப்புக்களை, தொலைந்த விருப்பு வெறுப்புக்களிலும வேறுபடுத்தி அறிந்து அவற்றையும போக்குவதற்காக மநோவ்யாபாரங்களைக் கட்டுப்படுத்துகிறவன் இவன என்று காட்டப்படுகிறது. இந்நிலையே வ்யதிரேக ஸம்ஜ்ஞை எனப்படுகிறது. (தஸ்ய...) இவனும் ஸ்தி₂தப்ரஜ்ஞனேயென்கை. 57.

॥ भा ॥ यदेन्द्रियाणीन्द्रियार्थान् स्प्रष्टुमुद्युक्तानि, तदैव कूर्मोऽङ्गानीवेन्द्रियार्थेभ्यस्सर्वशः प्रतिसंहृत्य मन आत्मन्यवस्थापयति, सोऽपि स्थितप्रज्ञः। एवं चतुर्विधा ज्ञाननिष्ठा पूर्वपूर्वा उत्तरोत्तरनिष्पाद्या ॥ ५८ ॥

---

54. அங்கங்க ளாமை யகத்தடக்கு மாறுபோ
லிங்கைம் பொறிக ளியல்பனைத்தும்—பொங்கைம்
புலனின் றகத்தடக்கும் போதத் தனக்கு
வலனின்ற வேற்குமே வந்து.

**ஆமை**—*ஆமையானது.* **அங்கங்கள்**—*தன் அவயவங்களை.* **அகத்து**—*உள்ளே.* **அடக்கும் ஆறு போல்**—*இழுத்துக்கொள்வதுபோலே.* **இங்கு**—*இவ்வுலகில்.* **ஐம்பொறிகள் இயல்பு அனைத்தும்**—*ஐந்து இந்திரியங்களின் தொழில்கள் எல்லாவற்றையும்.* **பொங்கு ஐம் புலனின்று**—*(என்னைக்கொள் என்னைக் கொள் என்று) பொங்கிவரும் ஐந்து சப்தாதி விஷயங்களிலிருந்து இழுத்து.* **அகத்து அடக்கும் போது**—*மனத்தை ஆத்மாவில் ஈடுபடுத்தும்போது.* **அத்தனக்கு**—*அந்த யோகிக்கு.* **வலன் வந்து நின்ற ஏற்குமே**—*அறிவு உண்டாகி நிலைநின்றதாகும். (அவனும் ஸ்திதப்ரஜ்ஞனே யென்றபடி.)*

---

58. இந்த ச்லோகத்தில் யதமாந ஸம்ஜ்ஞை எனும் ஞான நிஷ்டையின் முதல் நிலை விவரிக்கப்படுகிறது. (யதா₃ இந்த்₃ரியாணி அயம ஸம்ஹரதே) எப்போது இந்திரியங்களை இவன் உள்ளிழுத்துக்கொள்ளுகிறானோ. எதிலிருந்து? எனில்: (இந்த்₃ரியார்த்தே₂ப்₄ய.) இந்திரியங்களுக்கு உணவாயிருக்கும் சப்தம், ஸ்பர்சம், ரூபம, ரஸம், கந்தம என்னும் விஷயங்களிலிருந்து என்கை. (இந்த்₃ரியாணி) மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து ஞானேந்திரியங்களும் தத்தமக்குரிய விஷயங்களைப் பற்ற முயலும்போதே அவற்றை இழுத்துக்கொள்ள வேண்டும என்று கருத்து. கிழத்தனம், வியாதி முதலானவற்றாலும், தூக்கம் முதலான காலங்களிலும் இந்திரியங்கள் தாமே

॥ भा ॥ इदानीं ज्ञाननिष्ठाया दुष्प्रापतां तत्प्राप्त्युपायं चाह–

विषया विनिवर्तन्ते निराहारस्य देहिनः।
रसवर्जं रसोऽप्यस्य परं दृष्ट्वा निवर्तते ॥ ५९ ॥

59. விஷயா விநிவர்த்தந்தே நிராஹாரஸ்ய தே₃ஹிந: ॥
ரஸவர்ஜம் ரஸோऽப்யஸ்ய பரம் த்₃ருஷ்ட்வா நிவர்த்ததே ॥

**நிராஹாரஸ்ய தே₃ஹிந:**—*விஷயங்களினின்றும் இந்திரியங்களை இழுத்த ஜீவனுக்கு,* **விஷயா:**—*விஷயங்கள்,* **ரஸவர்ஜம்**—*(அவற்றில்) ஆசை தவிர,* **விநிவர்த்தந்தே**—*நீங்குகின்றன; (ஆசை மாத்திரம் நீங்குவதில்லை.)* **அஸ்ய**—*இந்த ஜ்ஞாநயோகநிஷ்டனுக்கு,* **ரஸ: அபி**–*இவ்வாசையும்,* **பரம்**–*(விஷயங்களைக்காட்டிலும் ஸுகமாயிருக்கையாலே) மேலான ஆத்மஸ்வரூபத்தை,* **த்₃ருஷ்ட்வா**–*கண்டவுடன்,* **நிவர்த்ததே**–*நீங்குகிறது.*

---

விஷயங்களைத் தொடமாட்டா. இவற்றை வேறுபடுத்துவதற்காகவே "இந்திரியங்கள் விஷயங்களைப் பற்ற முயலும்போது" என்று விசேஷிக்கப்பட்டது. "முயலும் போதே" என்றதால் விஷயங்களை அநுபவித்தபின் இழுத்துக்கொள்வது பயனற்றது என்று காட்டப்பட்டது. இழுத்துக்கொள்வது எது போல வெனில்: (அங்கா₃நி கூர்ம: இவ) தன் அவயவங்களை ஆமை இழுத்துக்கொள்வதுபோலே என்கை. இவ்வுபமானததால், இவன் இந்திரியங்களை விஷயங்களின்றும் இழுப்பது இவனுடைய ஸங்கல்பத்தாலேயே ஆகிறது என்று உணர்த்தபபடுகிறது. (ஸர்வஶ:) விஷயஙகளைப்பார்ப்பது, அவை பற்றிப்பேசுவது, களிப்பது, பரிஹஸிப்பது முதலான எதுவும கூடாது என்று கருத்து. (ஸாவஶ: ஸம்ஹரதே) விஷயங்களின் தோஷதர்சனம் முதலான எல்லா ஹேதுக்களாலும இந்திரியஙகளை அடக்குகிறுன் என்றுமாம. (ஸம்ஹரதே) ஞானநிஷ்டையின் ஒரு நிலையைக்காட்டும் பிரகரணமாகையாலே, இங்கு இந்திரியநிக்ரஹத்தைச் சொல்லுவதோடன்றியில, மனத்தை ஆத்மாவில் நிலைநிறுத்துவதாகிற இந்த்ரியநிக்₃ரஹபலனையும் கூறுவதாகக்கொளள வேண்டும். (தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டி₂தா) இவனும ஸ்திதப்ரஜ்ஞனேயென்றபடி. 58.

॥ भा ॥ इन्द्रियाणामाहारा विषयाः, निराहारस्य विषयेभ्यः प्रत्याहृतेन्द्रियस्य देहिनो विषया विनिवर्तमाना रसवर्जं विनिवर्तन्ते;

---

55. துய்யாது தான்றுறந்தான் றுய்த்தபொருள் விட்டாலு
மெய்யாருஞ் சங்கம் விடாதிருக்கும்—பையவே
சென்று பரமாகுஞ் சீருயிரைக் கண்டக்கா
னின்றதுவு நீங்கு நெகிழ்ந்து.

**துய்யாது**—*விஷயங்களை அநுபவிக்காமல்*, **தான் துறந்தான்**—*தானே அவற்றை (முற்கூறிய வழியில முயன்று) விட்டவனை ஞானிக்கு*, **துய்த்த பொருள் விட்டாலும்**—*அநுபவித்த விஷயங்கள் நீங்கியபோதிலும்*, **மெய் ஆரும் சங்கம்**-*(அநாதியான) தேஹஸம்பந்தத்தால் ஏற்படும் பற்று*, **விடாது இருக்கும்**—*நீங்காமலிருக்கும்;* **பையவே சென்று**—*சிறுகச்சிறுகக் கிட்டி*, **பரம் ஆகும் சீர் உயிரை**—*(விஷயங்களைக்காட்டிலும்) மேலானதாயிருக்கும் ஸ்வரூபமான ஆத்மஸ்வரூபத்தை*, **கண்டக்கால**—*பார்த்தவுடன்*, **நின்றதுவும்**—*எஞ்சியதான அவ்வாசையும்*. **நெகிழ்ந்து நீங்கும்**—*(இவனை) விட்டு நீங்கும்*.

---

59. இது வரையில் ஞானநிஷ்டையின் நான்கு நிலைகளைச் சொன்னார். இனி மூன்று ச்லோகங்களாலே இந்த நான்குவிதமான ஞானநிஷ்டையும் அடைய அரிதென்பதையும், அதை அடையும் உபாயத்தையும் காட்டுகிறார். அதில், இந்த ச்லோகத்தாலும், அடுத்த ச்லோகத்தாலும் ஞான நிஷ்டையின் அருமையும், மூன்ருவது ச்லோகத்தாலே அதையடையும் வழியும் உணர்த்தப்படுகின்றன. (நிராஹாரஸ்ய) ஆஹாரமற்றவனுக்கு. "ந சைகாந்தமநஶ்நத:" [6-16] [அடியோடு சாப்பிடாமலிருப்பவனுக்கு யோகம் கிட்டாது.] "யுக்தாஹாரவிஹாரஸ்ய" [6-17] [தக்க ஆஹாரத்தையும், விஹாரத்தையும் உடையவனுக்கு யோகம் கைகூடும்.] என்று மேலே இவன் தேஹதாரணத்துக்கு வேண்டிய ஆஹாரத்தை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று விதிக்கப்போகிறாராகையாலும், "அத்யாஶநாத₃ தீபாநாத்" [தை-நா 1-34] என்று உபநிஷத்திலும அதிகமான உணவும் பானமுமே தள்ளப்பட்டிருக்கையாலும், இங்கு தள்ளப்

रसो रागः, विषयरागो न निवर्तत इत्यर्थः। रागोऽप्यात्मस्वरूपं विषयेभ्यः परं सुखतरं दृष्ट्वा निवर्तते॥५९॥

---

படும் ஆஹாரம் உணவு ஆகமாட்டாது. மேலும், நாக்கு முதலான சில இந்திரியங்களுக்கே விஷயமான உணவைத் தவிர்ந்ததால் மாத்திரம் எல்லா விஷயங்களும் நீங்கிவிடமாட்டா; ஆகையால, ப்ரகரணநுகுணமாக இங்கு ஆஹாரம் எனப்படுவது இந்திரியங்கள் அனைத்துக்கும் உணவான விஷயங்களாகக்கடவது. "த₃ஸைதாநீந்த்₃ரியோக்தாநி த்₃வாராண்யாஹாரஸித்₃த₄யே" [பார-மோக்ஷ ] [இந்திரியங்கள் எனப்படும் இப்பததும் ஆஹாரம எனப்படும் விஷயங்களை கிரஹிக்கும் த்வாரங்கள்.] என்று மோக்ஷ தர்மத்திலும் ஸர்வேந்திரியவிஷயங்களும ஆஹாரசப்ததநாலே சொல்லப்பட்டது காணத்தக்கது. ஆக, 'நிராஹாரஸ்ய' என்னும் பதத்துக்கு, 'விஷயங்களின்றும் இந்திரியங்களை முற்கூறிய வழியில் இழுத்துக்கொண்டவனுக்கு' என்றே பொருள் கொள்ளவேண்டும். (விஷயா: ரஸவர்ஜம் விநிவர்த்தந்தே) இத்தகையவனுக்கு ரஸம் எனப்படும் விஷயராகம் தவிர விஷயங்கள் மாத்திரம் நீங்குகின்றன. விஷயங்கள நீங்குகின்றனவேயொழிய அவற்றில் ஆசை நீங்குவதில்லை என்று கருத்து. ஆசை மாத்திரம் நீங்காமலிருப்பானேன் எனில்: (தே₃ஹிந:) அநாதிகாலமாக தேஹஸம்பந்தமுடையவனை இவனுக்கு, அந்த தேஹஸம்பந்தத்தால் நெடுங்காலமாகத் தொடர்ந்து வந்த ஆசையானது எளிதிலும்பனுன இவனுடைய முயற்சியால் மாத்திரம நீங்குவது எளிதல்ல என்று கருத்து. ஆசை எபபோது நீங்கும்? எனில்: (அஸ்ய ரஸோபி பரம த்₃ருஷ்ட்வா நிவர்த்ததே) விஷயராகமும, விஷயங்களைக்காட்டிலும மேலான ஆத்மஸ்வரூபத்தைக் கண்டவுடன் இவனுக்கு நீங்கும். (பரம) ஸுகரூபமாயிருக்கும் விஷயங்களைக்காட்டிலும ஸுகத்தில் விஞ்சியிருக்கும் ஆத்மஸ்வரூபத்தை. (த்₃ருஷ்ட்வா நிவர்த்ததே) கண்டவுடன விஷயங்களில் ஆசையும் நீங்கிவிடும். மேலான இன்பத்தைக கண்டவுடன தாழ்ந்த இன்பத்தில் ஆசை நீங்கி விடுமன்றோ என்று கருத்து. (ரஸோபி பரம த்₃ருஷ்ட்வா நிவர்த்ததே) 'ராகமும ஆத்மஸ்வரூபத்தைக் கண்டவுடன் நீங்கிவிடும்' என்று ராகம் எனப்படும ஆசையானது ஆத்மஸ்வரூபத்தைக் காண்பதாகப் பிரயோகித்திருப்பது ஔபசாரிகப்ரயோகம். ஆத்மாவினுல் செய்யப்படும ஆத்மதர்சனம், அவ்வாத்மதர்சனத்தினுல்

यततो ह्यपि कौन्तेय पुरुषस्य विपश्चितः।
इन्द्रियाणि प्रमाथीनि हरन्ति प्रसभं मनः॥६०॥

**60. யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபஶ்சித:।**
**இந்த்₃ரியாணி ப்ரமாதீ₂நி ஹரந்தி ப்ரஸப₄ம் மந:॥**

**ஹே கௌந்தேய**—*குந்தீபுத்திரனே!* **விபஶ்சித:**—*பகுத்தறிவுடையவனும்,* **யதத: அபி** — *(ஆத்ம தர்சனத்தின் பொருட்டு) முயற்சி செய்பவனுமிருந்த போதிலும்,* **புருஷஸ்ய**—*மனிதனுடைய,* **ப்ரமாதீ₂நி** —*பலமுடையவையான,* **இந்த்₃ரியாணி**—*இந்திரியங்கள்,* **மந:**—*நெஞ்சை,* **ப்ரஸப₄ம்**-*பலாத்காரமாக.* **ஹரந்தி**—*இழுக்கின்றன.*

---

***56. முயன்றிடினுந் தன்புலன்கண் மொய்ம்பான் மனத்தை**
**யியன்று நிலைதொலைக்கு மென்பா - னயந்தே**
**யவையென்றுங் காக்கி லவன்கண் வசமா**
**நவையின்றி நிற்குமதி நன்கு.**

**முயன்றிடினும்**—*ஆத்ம ஸ்வரூபத்தைக்காண மிகவும் முயற்சிசெய்தபோதிலும்,* **தன் புலன்கள்** — *இவனுடைய இந்திரியங்கள்,* **மொய்ம்பால்**-*தம் வலிமையாலே,* **மனத்தை**-*நெஞ்சை,* **இயன்று**—*பலாத்கரித்து,* **நிலைதொலைக்கும்**—*ஆத்மாவில் நிலைநில்லாதபடி செய்யும்;* **என்பால் நயந்தே**—*என்னிடம் நெஞ்சை ஈடுபடுத்தி,* **அவை என்றும் காக்கில்**-*அவ்விந்திரியங்களை எப்போதும் நியமிக்கில்,* **அவன்கண் வசமாம்**—*அவ்விந்திரியங்கள் அந்த ஜீவனுக்கு வசப்பட்டு விடும்,* **மதி நவையின்றி நன்கு நிற்கும்**—*அவனுடைய அறிவு மீள்வதாகிற குற்றமில்லாமல் நன்கு நிலைநிற்கும்.*

---

*நீங்கும் ராகத்தின்மேல் ஏறிட்டுக்கூறப்படுகிறது. அல்லது 'ஸ்தி₂தஸ்ய' என்னும பதத்தை அத்₄யாஹாரம செய்துகொண்டு (பரம த்₃ருஷ்ட்வா ஸ்தி₂தஸ்ய அஸ்ய ரஸோபி நிவர்த்ததே) 'மேலான ஆத்மஸ்வரூபத்தைக் கண்டு நிற்கும் இவனுக்கு விஷயராகமும் நீங்குகிறது' என்று பொருள் கொள்ளலாம. ஆக, இந்த ச்லோகத்தால், 'ஆத்மாவைக் கண்டாலொழிய விஷயராகம நீங்காது' என்று சொல்லிற்றாயிற்று.* 59.

---

* இப்பாடல் 60, 61 ஆகிய இரு ச்லோகங்களின மொழிபெயர்ப்பு.

आत्मदर्शनेन विना विषयरागो न निवर्तते, अनिवृत्ते विषयरागे विपश्चितो यतमानस्यापि पुरुषस्येन्द्रियाणि प्रमाथीनि-बलवन्ति, मनः प्रसह्य हरन्ति। एवमिन्द्रियजय आत्मदर्शनाधीनः, आत्मदर्शनमिन्द्रियजयाधीनमिति ज्ञाननिष्ठा दुष्प्रापा॥ ६०॥

---

60. இந்த ச்லோகத்தில் "விஷயங்களில் ஆசை நீங்கினுலொழிய இந்திரியங்களை ஜயிக்கமுடியாதாகையாலே ஆத்ம தர்சனம் கைகூடாது" என்று கூறுவதன மூலம் ஞானநிஷ்டையின அருமை விளக்கிமுடிக்கப்படுகிறது. (விபஸ்சித:) அறிவாளியுடைய. சாஸ்திரங்களிலிருந்து ஆத்மஸ்வரூபம் நல்லதெனறும, சப்தம முதலான விஷயங்கள் தாழ்ந்தவையென்றும் பகுத்துணர்ந்தவனுடைய. (யதத: அபி புருஷஸ்ய) அக்காரணத்தாலேயே ஆத்மாவைக் காணபதின் பொருட்டு முயற்சி செய்பவனுடைய. ஆத்மாவைக் கணடால்தான் விஷயங்களில் ஆசை விடுமாகையாலே ஆத்மாவைக் காணபதற்கு மிகவும இவன முயற்சி செய்தபோதிலும் என்று கருத்து. (ப்ரமாதீ₂நி இந்த்₃ரியாணி) பலமுடையவையாகையாலே பலாத்கரித்து இழுக்கவல்ல இந்திரியங்கள். "ப₃லவாநிந்த்₃ரியக்₃ராமோ வித்₃வாம்ஸமபி கர்ஷதி" [மநு 2-215] [பலமுடையவையான இந்த்ரிய ஸமூஹம் அறிவாளியாயிருப்பவனையும் இழுக்கும.] என்று இந்திரியங்கள் பலமுடையவையாகையாலே அறிவாளியையும் இழுக்கவல்லவை எனறு கூறப்பட்டதனரே. இந்திரியஙகளுக்கு பலமாவது, விஷயங்களைப்பற்றியவையான ஜீவனிடமுள்ள ராகாதிகளே. (மந: ப்ரஸப₄ம் ஹரந்தி) ஆத்மாவிடம் செலலமுயலும் நெஞ்சை இவ்விந்திரியங்கள் பலாத்காரமாக விஷயஙகளிடமே இழுக்கின்றன; ஆகையால் இவன் எவ்வளவு முயனருலும் இநதிரியங்களை ஜயித்து, அதன மூலம் விஷயராகத்தைப் போக்கினுலொழிய ஆத்மஸாக்ஷாத்காரத்தைப்பெற முடியாது எனறதாயிற்று. சென்ற ச்லோகத்தில் ஆத்மாவைக் கண்டாலொழிய விஷயங்களில் ஆசை நீங்காது எனறு சொல்லப்பட்டது. ஆகவிப்படி இந்திரியஜயம ஆத்மதர்சனத்தினுல் வருவதாகவும், ஆத்மதர்சனம் இந்திரிய ஜயத்தால் வருவதாகவுமிருக்கையாலே ஜ்ஞானநிஷ்டை அடைய அரிது என்று சொல்லப்பட்டதாயிற்று. (இப்படி ஒன்றையொன்று ஆஸ்ரயித்து நிற்பதை அந்யோந்யாஸ்ரயதோ₃ஷம் என்பர்.) 60.

तानि सर्वाणि संयम्य युक्त आसीत मत्परः।
वशे हि यस्येन्द्रियाणि तस्य प्रज्ञा प्रतिष्ठिता॥ ६१॥

**61.தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர:।**
**வஶே ஹி யஸ்யேந்த்₃ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டி₂தா॥**

**தாநி ஸர்வாணி** — *(விஷயராகமுள்ளதாயிருக்கையாலே வெல்லவரிய) அந்த எல்லா இந்திரியங்களையும்*, **ஸம்யம்ய**— *விஷயங்களினின்றும் இழுத்து*, **மத்பர:**—*என்னிடமே ஈடுபட்டு*, **யுக்த:**-*சித்தஸமாதானத்தை உடையவனாய்*, **ஆஸீத**— *வாழக்கடவன்;* **யஸ்ய**—*எவனுக்கு*, **இந்த்₃ரியாணி**—*மனம் முதலிய இந்திரியங்கள்*, **வஶே**—*(என்னுடைய அருளால்) வசப்பட்டு நிற்கின்றனவோ*, **தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டி₂தா ஹி**- *அவனுக்கு அறிவு நிலைநிற்கிறதன்றோ.*

॥भा॥ अस्य सर्वस्य परिजिहीर्षया विषयानुरागयुक्ततया दुर्जयानीन्द्रियाणि संयम्य चेतसश्शुभाश्रयभूते मयि मनोऽवस्थाप्य समाहित

---

61. இப்படி இந்திரியஜயமும், ஆத்மதர்சனமும் ஒன்றையொன்று அபேக்ஷித்திருப்பதாகில், இந்த்ரியஜயத்தால் ஆத்மஸாக்ஷாத்காரம் ஏற்படுகிறது என்று முன் உபதேசித்தது எப்படி ஓட்டும்? என்னும் கேள்வியெழ, இந்த்ரியஜயத்திற்கு வேறு உபாயமுண்டு என்கிறது இந்த ச்லோகம். (தாநி ஸர்வாணி ஸம்யம்ய) விஷயங்களில் ஆசையோடு கூடியிருக்கையாலே வெல்ல அரியவையான எல்லா இந்திரியங்களையும் சப்தாதி விஷயங்களினின்றும் இழுத்து. (மத்பர: ஆஸீத) சுபாச்ரயமான திவ்யமங்களவிக்ரஹத்தோடு கூடிய என்னிடத்திலே தன் நெஞ்சை செலுத்தி வாழக்கடவன். திவ்யாத்மஸ்வரூபம் தியானிப்பதற்கு அரிது. திவ்யமங்களவிக்ரஹமே தியானிப்பதற்கு எளிது. தியானிகக எளிதாயிருக்கையாகிற இத்தன்மை ஆஶ்ரயத்வம் எனப்படுகிறது. இந்த ஆஶ்ரயத்வம் பரமபுருஷனுடைய திவ்யாத்மஸ்வரூபத்திலிருப்பதன்று; திவ்யமங்களவிக்ரஹத்திலேயே இருப்பது. பிரமன் முதலான ஜீவாகளுடைய விக்ரஹத்தில் இவ்வாஶ்ரயத்வமிருந்தபோதிலும, அவர்களுடைய உடம்பு ரஜஸ்தமங்களோடு கூடியதாகையாலே அதில் தோஷங்களைப்போககடிக்கவல்லதாயிருக்கையாகிற சுப₄த்

आसीत। मनसि मद्विषये सति निर्दग्धाशेषकल्मषतया निर्मलीकृतं विषयानुरागरहितं मन इन्द्रियाणि स्ववशानि करोति। ततो वश्येन्द्रियं मन आत्मदर्शनाय प्रभवति। यथोक्तम् * यथाऽग्निरुद्धतशिखः कक्षं दहति सानिलः। तथा चित्तस्थितो विष्णुर्योगिनां सर्वकिल्बिषम्॥ इति, तदाह—वशे हि यस्येन्द्रियाणि तस्य प्रज्ञा प्रतिष्ठितेति॥ ६१॥

---

வம் இல்லை. ஆகையால் அதுவும தியானிக்கத்தகாததாகிறது. பகவானுடைய திவ்யமங்களவிக்ரஹமோவெனில ரஜஸ்தமங்கள் கலசாத சுத்தஸத்வமயமாகவும் தியானிப்பவர்களுடைய தோஷங் களைப் போக்கவல்லதாகவுமிருப்பதால் அதனாலேயே இது சுப$_4$ாஶ்ரய மெனப்படுகிறது, இந்த சுப$_4$ாச்ரயதிவ்யமங்கள விக்ரஹத்தில நெஞ்சைச் செலுத்தி தியானிக்கச்சொல்லுகிருன் (மத்பர:) என்று தன்னைத் தொட்டுக் காட்டி. (யுக்த: ஆஸீத) சித்தஸமாதானம் எனப்படும மனத்தின் ஒருமைப் பாட்டுடன் வாழக்கடவன். சுபா ஶ்ரயமான திவ்யமங்களவிக்ரஹத்தைப் பற்றிநிற்கும் மனம ஆத்மா விலேயே ஒருமைப்பாட்டுடன் ஈடுபடவல்லதாகிறது என்று கருத்து. முற்கூறிய அந்யோந்யாஶ்ரய தோஷபரிஹாரம் எப்படி ஏற்படு கிறது? எனில்: சுபாஶ்ரயமான விக்ரஹத்தில் நெஞ்சைச் செலுத் தியவுடன், "யத$_2$ாக்$_3$நிருத்$_3$த$_1$தஶிக$_2$: கக்ஷம் த$_3$ஹதி ஸாநில:। தத$_2$ா சித்தஸ்தி$_2$தோ விஷ்ணுர் யோகி$_3$நாம் ஸர்வகில்பி$_3$ஷம்॥" [வி-பு 6-7-74; காருடம்-பூர்வ 222-16] [காற்ருேடு கூடிக் கொழுந்து விட்டெரியும் நெருப்பு வைக்கோலை எரிபபதுபோலே நெஞ்சிலிருக் கும் விஷ்ணு, யோகிகளின் எல்லாப்பாபங்களையும் எரிக்கிருர்.] எனகிறபடியே நெஞ்சில விஞ்சியிருந்த ரஜஸ்தமங்கள் திருமேனி யின் பெருமையாலே நீங்குகின்றன. இப்படி நெஞ்சானது ரஜஸ்த மங்களாகிற அழுக்குகள் நீங்கப்பெற்று ஸத்வம் விஞ்சியிருக்கப் பெற்றவுடன் விஷயங்களில் ஆசையும் அதைவிட்டு நீங்குகிறது. உடனே நெஞ்சமானது மற்ற இந்திரியங்களைத் தன் வசப்படுத்து கிறது. (வஶேஹி யஸயேந்த்$_3$ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டி$_2$தா) இப்படி இந்திரியஜயமானது ஆத்மதர்ஶநத்தை எதிர்பாராமல் திருமேனியின் பெருமையாலே ஏற்பட்டவளவில் ஆத்மதர்சனம் தன்னடையே உண்டாகி நிலைநிற்கிறது. ஜ்ஞாநநிஷ்டையைக் குறிக்கும் ப்ரஜ்ஞாஶப்தம் இங்கு அதன் பலமான ஆத்மதர்சனத் தையும் குறிக்கிறது. இவ்வண்ணமாக அந்யோந்யாஶ்ரயதோஷ மில்லையாகையால், இந்த்ரியஜயத்தால் ஆத்மஸாக்ஷாத்காரம் ஏற் படுகிறது என்று முன் உபதேசித்தது பொருந்திவிடுகிறது என்று கருத்து. 61.

॥भा॥ एवं मय्यनिवेश्य मनः, स्वयत्नगौरवेणेन्द्रियजये प्रवृत्तो विनष्टो भवतीत्याह—

ध्यायतो विषयान्पुंसस्सङ्गस्तेषूपजायते।
सङ्गात्संजायते कामः कामात्क्रोधोऽभिजायते ॥६२॥
क्रोधाद्भवति संमोहः संमोहात्स्मृतिविभ्रमः।
स्मृतिभ्रंशाद्बुद्धिनाशो बुद्धिनाशात्प्रणश्यति ॥६३॥

62. த்₄யாயதோ விஷயாந் பும்ஸஸ்
ஸங்க₃ஸ் தேஷூபஜாயதே ।
ஸங்கா₃த் ஸஞ்ஜாயதே காம:
காமாத் க்ரோதோ₄ऽபி₄ஜாயதே ॥
63. க்ரோதா₄த்₃ப₄வதி ஸம்மோஹ:
ஸம்மோஹாத் ஸ்ம்ருதிவிப்₄ரம: ।
ஸ்ம்ருதிப்₄ரம்ஶாத்₃பு₃த்₃தி₄நாஶோ
பு₃த்₃தி₄நாஶாத ப்ரணஶ்யதி ॥

**விஷயாந்**—*சப்தம் முதலான ஐந்து புலன்களையுமே.* **த்₄யாயத:**—*(அநாதி வாஸனையினுல) சிந்திப்பவனுய் (என்னை தியானிக்காத)* **பும்ஸ:**—*அதிகாரிக்கு.* **தேஷு**—*அப்புலன்களில்,* **ஸங்க₃:**—*பற்று.* **உபஜாயதே**—*வளர்கிறது;* **ஸங்கா₃த்**—*அப்பற்றினுல்,* **காம.**—*(விஷயங்களைப் பெற்ருலலலது தரிக்க மாட்டாமைக்குறுப்பான) காமம்,* **ஸஞ்ஜாயதே**—*அதிகமாக ஏற்படுகிறது;* **காமாத்**—*காமத்தினுலே.* **க்ரோத₄:**—*கோபம்.* **அபி₄ஜாயதே** — *பரவலாக உண்டாகிறது;* **க்ரோதா₄த்**—*கோபத்தினுலே.* **ஸம்மோஹ:**-*பகுத்தறிவின்மை,* **ப₄வதி**—*ஏற்படுகிறது;* **ஸம்மோஹாத்**—*பகுத்தறிவின்மையால்.* **ஸ்ம்ருதிவிப்₄ரம: (ப₄வதி)**—*நினைவின் அழிவு ஏற்படுகிறது;* **ஸ்ம்ருதிப்₄ரம்ஶாத்**-*நினைவின் அழிவினுலே.* **பு₃த்₃தி₄நாஶ:(பவதி)** *அறிவின் அழிவு உண்டாகிறது.* **பு₃த்₃தி₄நாஶாத்**-*அறிவின் அழிவினுலே.* **ப்ரணஶ்யதி**-*(ஸம்ஸாரத்தில் மூழ்கி) அழிகிருன்.*

*கீ—37*

॥ भा ॥ अनिरस्तविषयानुरागस्य हि मय्यनिवेशितमनस इन्द्रियाणि संयम्यावस्थितस्याप्यनादिपापवासनया विषयध्यानमवर्जनीयं स्यात् ।

---

57. புன்பொருளை யுள்ளும் புமானுக் கதிற்சங்கம
பின்பதனுற் காமமதற் பின்வெகுளி—யன்பதனுன்
மோகமதிற் பொன்று மிருதியதிற் புத்தியழி
வாகுமதிற் ருனசிக்கு மாங்கு.

**புன் பொருளை**—*(என்னை தியானிக்காமல்) தாழ்ந்தவையான சப்தாதி விஷயங்களையே.* **உள்ளும்**-*தியானிக்கும்.* **புமானுக்கு**—*புருஷனுக்கு,* **அதில் சங்கம்**—*அவ்விஷயங்களில பற்று (ஏற்படுகிறது.)* **பினபு**—*பிறகு,* **அதனுல் காமம**—*அப்பற்றினுல் காமம் (ஏற்படுகிறது;)* **பின்**—*அதற்குப்பின்.* **அதில்**—*அக்காமததால்.* **வெகுளி**—*கோபம் (உண்டாகிறது;)* **அன்பதனுல**—*காமத்தினுல் உண்டாகும் அக்கோபத்தால்,* **மோகம்**—*பகுத்தறிவின்மை (உண்டாகிறது)* **அதில்**—*அப்பகுத்தறிவின்மையாலே.* **மிருதி**—*நினைவு.* **பொன்றும்**—*அழியும்;* **அதில்**—*அந்த நினைவழிவாலே.* **புத்தியழிவு ஆகும்**-*புத்தியழிவு ஏற்படும்;* **ஆங்கு**-*அந்நிலையிலே.* **அதில்**-*அப்புத்தியழிவாலே,* **தான் நசிக்கும்**—*(ஸம்ஸாரத்தில் மூழ்கி) இவ்வாத்மாவே அழிந்துவிடும்.*

---

62-63. இவ்வண்ணமாக சுபாஶ்ரயமான திருமேனியை தியானிக்காமல் இந்திரியஜயத்தையும், ஆத்மதர்ஶனத்தையும் தன் முயற்சியாலே அடைய விருமபுகிறவனுக்கு அந்யோந்யாஶ்ரய தோஷத்தாலே அவையிரண்டுமே கிட்டாமல் அவன் ஆத்ம நாசத்தை அடைந்துவிடும விதம இவ்விரண்டு சுலோகங்களாலும் விவரிக்கப்படுகிறது. (த்யாயதோ விஷயாந்) சப்தாதி விஷயங்களை தியானிப்பவனுக்கு. சுபாஶ்ரயமான திருமேனியை தியானிக்காமை யாலே, விஷயங்களில் ஆசை நீங்கப்பெருமல் அதனுலேயே ஆத்ம தர்ஶனமும் கைவரப்பெருமலிருக்கும இவன் இந்திரியங்களை எவ்வளவு முயன்று இழுத்துக்கொண்டாலும் அநாதிபாபவாஸனையால் விஷயங்களையே தியானிப்பது தவிர்க்கவொண்ணுமற் போகிறது என்று கருத்து. (பும்ஸ. ஸங்கஸ் தேஷூ உபஜாயதே)

ध्यायतो विषयान् पुंसः पुनरपि सङ्गोऽतिप्रवृद्धो जायते। सङ्गात्सं- जायते कामः। कामो नाम सङ्गस्य विपाकदशा। पुरुषो यां दशामापन्नो विषयाननुभुक्त्वा स्थातुं न शक्नोति स कामः। कामात्क्रोधोऽभिजायते— कामे वर्तमाने, विषये चासन्निहिते, सन्निहितान् पुरुषान् प्रत्येभिरस्मदिष्टं विहतमिति क्रोधो भवति। क्रोधाद्भवति संमोहः—संमोहः कृत्या- कृत्यविवेकशून्यता, त(य)या सर्वं करोति। ततश्च प्रारब्धे इन्द्रियजयादिके

---

இத்தகைய ஜீவனுக்கு அவ்விஷயங்களில் பற்று மேன்மேலும அதிகமாக உணடாகிறது. அவ்விஷயங்களில் பற்றையறுக்கும திருமேனியில் நெஞ்சு செலுத்தாமையாலே வந்த கேடு இது. (ஸங்காத் ஸஞ்ஜாயதே காம:) அப்பற்றுலே விஷயங்களில் காமம நனகு உண்டாகிறது. பற்று முற்றின நிலேயே காமம் எனப்படு கிறது; எந்த நிலையை அடைந்தவுடன ஜீவன் விஷயங்களை அனுபவிக்காவிடில் உயிர்தரிக்கமாட்டானே, அந்த நிலே காமம் எனப்படுகிறது. (ஸஞ்ஜாயதே) நன்கு உண்டாகிறது; இந நிலேயையடைந்த பின விஷயராகம் போக்க அரிதாகிறது என்கை. (காமாத் க்ரோதோ₄பி₄ஜாயதே) காமத்திஞல் கோபம பரவலாக உண்டாகிறது. எப்படியெனில்: ஒரு விஷயத்தைக் குறித்துக் காமம் ஏற்பட்டு, விஷயமும கிடைககாமல போய்விட்டதானல், அதைக் கிடைக்காமல செய்தவர்கள் மேல மாத்திரமல்லாமல, அருகிலிருப்பவர்கள் மேலெல்லாம 'இவர்களே நம இஷ்டத்தைத் தடைசெய்து விட்டார்கள' எனனும் எண்ணம ஏற்பட்டுக் கோபமும் உண்டாகிறது. இதனுலேயே (அபி₄ஜாயதே) அபி₄த: ஜாயதே- பரவலாக ஏற்படுகிறது எனறு கூறப்பட்டது. ஸர்வேஶ்வரனும், ராமனுயவதரித்தபோது சீதையைப் பிரிந்து கோபவேகத்தைக் காட்டும்போது, தீங்கு செய்த ராவணனமேல் மாத்திரமல்லாமல், "ஸதே₃வக₃ந்த₄ர்வமநுஷ்யபந்நக₃ம் ஜக₃த் ஸஶைலம் பரிவர்த்தயாம் யஹம" [ரா-ஆ 64-76] [தேவர், கந்தர்வர், மனிதர், பாமபுகள், ஆகிய ஜீவராசிகளோடும் மலேகளோடும கூடிய உலகையே தலே கீழாக்கி விடுவேன.] எனறு உலகனைத்தினமேலேயும கோபத்தைக காட்டிஞனனரே. (க்ரோதா₄த ப₄வதி ஸம்மோஹ:) கோபத்திஞலே மிகுநத மயக்கம உணடாகிறது. மிகுநத மயககமாவது,—இனனது செய்யலாம, இன்னது செயயலாகாது எனனும் பகுத்தறிவே

प्रयत्ने स्मृतिभ्रंशो भवति। स्मृतिभ्रंशाद्बुद्धिनाशः—आत्मज्ञाने यो व्यवसायः कृतस्तस्य नाशः स्यात्, बुद्धिनाशात्पुनरपि संसारे निमग्नो विनष्टो भवति ॥६२॥६३॥

---

யில்லாமலிருக்கை. "க்ருத்₃த₄: பாபம் ந குர்யாத் க: க்ருத்₃தே₄ா ஹந்யாத் கு₃ரூநபி" [ரா-ஸு 55-4] [கோபங்கொண்ட எவனதான் பாவம புரியமாட்டான்? கோபங்கொண்டவன் பெரியோர்களையும கொன்றுவிடுவான்.] என்கிறபடியே இப்பகுத்தறிவினமை எத்தகைய தீச்செயலையும் செய்யவைத்துவிடுமன்றோ. (ஸமமோஹாத் ஸ்மருதி விப்₄ரம:) இப்படி எதையும செய்யவைக்கும இப்பகுத்தறிவினமை யாலே தான ஆரமபிதத இந்திரியஜயம முதலானவற்றில முயறசி யைப்பற்றிய நினைவே இவனுக்கு நழுவிவிடுகிறது. அடுததபடி யாக "ஸ்ம்ருதிப்₄ரம்ஶாத்" எனறு அநுவதிக்கையாலே, இங்கு "ஸம்ருதி விப்₄ரம:" எனறு நினைவின நழுவுதலே சொல்லப்படுகிறது. அதிலும், தொடங்கிய காரியத்தைப்பற்றிய நினைவின நழுவுதலைச் சொலலுவதாகக் கொள்வதே பிரகரணத்திற்குப் பொருந்தும். (ஸ்மருதிப்₄ரம்ஶாத் பு₃த்₃தி₄நாஶ:) இப்படி இந்திரியஜயாதிகளில் முயற்சியைப் பற்றிய நினைவே நழுவியவுடன, ஆத்மதர்சனத்தைப் பெறுவதற்காகத தான ஜ்ஞானயோகத்தை அனுஷ்டிக்கவேண்டும் என்னும் அத்₄யவஸாயம ( நிச்சயரூபமான அறிவு ) அழிந்து விடுகிறது. முற்கூறிய நினைவு நழுவியவுடன் பொதுவாக எல்லா அறிவும் போய்விடுகிறது என்று கூறுவது ஒட்டாது. இதுவரையில் ஆத்மதர்ஶனம ஏற்படவில்லையாகையாலும, வரப்போகிற ஆத்ம த₃ர்ஶனம் இப்போது அழியமுடியாதாகையாலும ஆத்மத₃ர்ஶனத்தை இங்கு 'புத்தி' எனக்கூறுவதாகக் கொளவதும் பொருந்தாது. ஆகையால் அவ்வாத்மதர்சனத்தை அடைவதில் விருப்பத்தால் உண்டாவதும, அவ்வாத்மதர்சனத்திற்கு உபாயமாயிருக்கும் இந்திரியஜய முயற்சி முதலானவற்றின் நினைவிலை ஏற்படுவதும், ஆத்மத₃ர்ஶனத்துக்கு உபாயமாயிருக்கும் ஞான யோகத்தை அனுஷ்டிக்கவேண்டும் எனனும் நிஶ்சயரூபமாயிருப்பது மான அத்₄யவஸாயமே இங்கு புத்திஶப்தத்தால் குறிக்கப்படுவ தாகக் கொள்வதே பொருந்தும். ( பு₃த்₃தி₄நாஶாத் ப்ரணஶ்யதி ) இவ்வத்₄யவஸாயம அழிந்தவுடன இவனுக்கு மோக்ஷோபாயமும் மோக்ஷமும் ஏற்பட இடமிலலாமற்போகிறபடியாலே பழையபடி ஸம்ஸாரத்திலேயே மூழ்கி அஸத்கல்பனாகி அழிகிறான் இவன்.

रागद्वेषवियुक्तैस्तु विषयानिन्द्रियैश्चरन् ।
आत्मवश्यैर्विधेयात्मा प्रसादमधिगच्छति ॥ ६४ ॥

64. ராக₃த்₃வேஷவியுக்தைஸ்து விஷயாநிந்த்₃ரியைஶ் சரந்।
ஆத்மவஶ்யைர் விதே₄யாத்மா ப்ரஸாத₃மதி₄க₃ச்ச₂தி ||

**ராக₃த்₃வேஷவியுக்தை:**—*(என் அருளாலே) ராகத்வேஷங்கள் நீங்கப்பெற்றவையாய்;* **ஆத்மவஶ்யை:**—*தனக்கு வசப்படிருப்பவையான,* **இந்த்₃ரியை:**—*இந்திரியங்களாலே,* **விஷயாந்**—*சப்தாதி விஷயங்களை,* **சரந்**—*கடந்து நிற்பவனாய்.* **விதே₄யாத்மா**—*மனத்தை யடக்கியவனான புருஷன்* **ப்ரஸாத₃ம்**—*மனத்தெளிவை.* **அதி₄க₃ச்ச₂தி**—*அடைகிறான.*

---

*58. உகப்புவெறுப் பற்றுத்தன் னுள்ளாற் பொருள்க
ளகத்துவச மாம்புலனா லார்ந்தோன்—மிகத்தெளிவு
சேரு மதிற்றுயருந் தீருந் தெளிநெஞ்சி
லாரு நிலைப்புந்தி யாசு.

**உகப்புவெறுப்பு அற்று**-*ராகத்வேஷங்களில்லாமல்,* **அகத்து வசமாம் புலனால்**—*தனக்கு வசப்பட்டிருக்கும் இந்திரியங்களாலே,* **பொருள்கள் ஆர்ந்தோன்**—*விஷயங்களைக் கடந்தவனாய்,* **தன் உள்ளான்**—*தன் நெஞ்சை அடக்கியவனான புருஷன்,* **மிகத்தெளிவு சேரும்**—*மிகவும் மனத்தெளிவை அடைவான்;* **அதில்**—*அந்த மனத்தெளிவாலே,* **துயரம் தீரும்**—*எல்லாத்துன்பங்களும் அழியும்;* **தெளிநெஞ்சில்**—*தெளிந்த நெஞ்சினாலே,* **ஆசு**—*விரைவில்,* **புந்தி**—*அறிவு,* **நிலை ஆரும்**—*நிலைநிற்கும்.*

---

ஆத்மாவுக்கு ஸ்வரூபநாஶம் ஒட்டாதாகையால், தேஹஸம்பந்தத்தால் 'தேஹமே ஆத்மா' முதலான மயக்கம் ஏற்பட்டு, தன் ஸ்வரூபத்தை அறியாமல் அஸத்கல்பனாகையே இங்கு அழிவு எனப்படுகிறது. 62-63.

---

* இப்பாட்டு, 64, 65 ச்லோகங்களுக்கு மொழி பெயர்ப்பு.

॥ भा ॥ उक्तेन प्रकारेण मयि सर्वेश्वरे चेतसश्शुभाश्रयभूते न्यस्तमना निर्दग्धाशेषकल्मषतया रागद्वेषवियुक्तैरात्मवश्यैरिन्द्रियैर्विषयां-श्चरन् विषयांस्तिरस्कृत्य वर्तमानो विधेयात्मा—विधेयमनाः प्रसाद-मधिगच्छति। निर्मलान्तःकरणो भवतीत्यर्थः ॥ ६४ ॥

---

64. இனி இரண்டு ச்லோகங்களாலே, தன் திருமேனியை தியானிப்பவனுக்கு அந்யோந்யாஶ்ரயதோ₃ஷபரிஹாரமும, பரம ப்ரயோஜனமான ஸம்ஸாரநிவ்ருத்தியும் ஏற்படும் வழியை விவரிக்கிறார். அதில் அந்யோந்யாஶ்ரயதோ₃ஷபரிஹார வழி இந்த ச்லோகத்தில் விவரிக்கப்படுகிறது. (ராக₃த்₃வேஷவியுக்தை: இந்த்₃ரியை:) முற்கூறிய வழியில் நெஞ்சுக்கு ஶுபா₄ஶ்ரயமான தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹத்தோடு கூடிய என்னிடததில் நெஞ்சு செலுத்துகையாலே ரஜஸ்தமங்கள் முதலான எல்லா தோஷங்களும நீங்கப்பெற்று, அதனாலேயே ராகத்வேஷங்கள் கழியப்பெற்ற இந்திரியங்களாலே. ஆத்மதர்ஶனம் ஏற்பட்டால் தான இந்திரிய ஜயம் ஏற்படும, இந்திரியஜயம் உண்டானால் தான் ஆத்மத₃ர்ஶனம் ஏற்படும என்பது அந்யோந்யாஶ்ரயதோ₃ஷம். திருமேனியில் நெஞ்சு செலுத்தி ராகத்வேஷங்களைப்போக்கிக் கொள்வதன்மூலம் ஆத்மதர்ஶனத்தை எதிர்பாராமலே இந்திரியஜயம ஏற்பட்டுவிடுகிறபடியால் இந்த தோஷம் பரிஹரிக்கபபட்டதாகிறது என்று கருத்து. (ஆத்ம வஶ்யை: இந்த்₃ரியை:) இப்படி ராகத்வேஷங்கள் நீங்கியிருக்கையாலே தனக்கு வசப்பட்டிருக்கும் இந்திரியங்களாலே. (விஷயாந் சரந்) விஷயங்களைத் திரஸ்கரித்து நிற்பவன். "சர-க₃தி ப₄க்ஷணயோ:" என்று தா₄து. இங்கு க₃த்யர்த்த₂ம் ப₄க்ஷணார்த்த₂ம் இரண்டிலும் இப்பொருளதேறும். க₃த்யர்த்தத்திலே விஷயங்களைக் கடந்து நிற்பவன என்றும், ப₄க்ஷணார்த்தத்திலே விஷயங்களை ஸமஹரித்து நிற்பவன் என்றும் பொருள கொள்ளவேண்டும். விஷயங்களை அனுபவிக்கிறான் என்னும பொருள் பொருந்தாதாகையால 'விஷயங்களைத் திரஸ்கரித்து நிற்பவன' என்றே பா₄ஷ்யத்தில் பொருள கொள்ளப்பட்டது. "அநாத₃ர: பரிப₄வ: பரீபா₄வஸ திரஸ்க்ரியா" [அமரம 1-நாட்ய 204] என்கிறபடியே திரஸ்காரமாவது அநாத₃ரம். (விதே₄யாத்மா) இப்படி வெளியிந்திரியங்களையும், அவற்றின் புலன்களையும வென்று நிற்கையாலே தனக்கு வசப்பட்டிருக்கும நெஞ்சையுடையவனாகிறான் இவன். இங்கு

प्रसादे सर्वदुःखानां हानिरस्योपजायते।
प्रसन्नचेतसो ह्याशु बुद्धिः पर्यवतिष्ठते॥ ६५॥

65. ப்ரஸாதே$_3$ ஸர்வது$_3$:க்கா$_2$நாம் ஹாநிரஸ்யோபஜாயதே।
ப்ரஸந்நசேதஸோ ஹ்யாஶு பு$_3$த்$_3$தி$_4$: பர்யவதிஷ்ட$_2$தே॥

அஸ்ய — இப்புருஷனுக்கு, ப்ரஸாதே$_3$(ஸதி) — மனத் தெளிவு ஏற்பட்டவுடன், ஸர்வது$_3$:க்கா$_2$நாம் ஹாநி:—எல்லாத் துன்பங்களின் அழிவு, உபஜாயதே—உண்டாகிறது; ப்ரஸந்ந சேதஸ:—மனத்தெளிவுபெற்றவனுக்கு, ஆஶு—விரைவில், பு$_3$த்$_3$தி$_4$:—அறிவு, பர்யவதிஷ்ட$_2$தே ஹி—நிலைநிற்கிறதன்றோ.

॥भा॥ अस्य पुरुषस्य मनःप्रसादे सति प्रकृतिसंसर्गप्रयुक्तसर्वदुःखानां हानिरुपजायते। प्रसन्नचेतसः आत्मावलोकनविरोधिदोषरहित-

---

இந்திரியஜயத்தைச்சொல்லும் பிரகரணமாகையாலே, ஆத்மஶப்தம் மனத்தைக் குறிப்பதாகக் கொள்வதே பொருந்தும். (ப்ரஸாத$_3$ம் அதி$_4$க$_3$ச்ச$_2$தி) மனத்தெளிவை அடைகிறான். "விதே$_4$யாத்மா" என்று மனத்தைப்பற்றியபேச்சு இங்கு ஏற்பட்டிருக்கையாலும், "ப்ரஸந்நசேதஸ:" என்று அடுத்த ச்லோகத்தில் இங்கு சொல்லப்படும் தெளிவு மனத்தெளிவே என்று காட்டப்படுகையாலும், இங்கு 'ப்ரஸாத$_3$ம்' என்று மனத்தின் தெளிவே குறிக்கப்படுகிறது. ஆக, ஶுபா$_4$ஶ்ரயத்தில் நெஞ்சு செலுத்தியவனுக்கு மனம் முதலான இந்திரியங்களில் உள்ள அழுக்குகள் நீங்குகையாலே இந்திரிய ஜயம் ஏற்பட்டு ஆத்மத$_3$ர்ஶனம் தன்னடையே ஏற்படும் என்று உணர்த்துவதன் மூலம் அந்யோந்யாஶ்ரயதோ$_3$ஷம் எப்படிப் பரிஹரிக்கப்படுகிறது என்று காட்டப்பட்டது. 64.

65. இனி, இந்த ச்லோகத்தில் மனத்தெளிவு ஏற்பட்டவனுக்கு ஆத்ம த$_3$ர்ஶனமும், அதடியாகப் பரமப்ரயோஜனமான ஸாவ துக்க விமோசனமும் ஏற்படுகின்றன என்று காட்டுகிறார். (அஸ்ய ப்ரஸாதே$_3$) முற்கூறிய வழியில் மனத்தெளிவு இவனுக்கு ஏற்பட்ட அளவில், (ஸர்வது$_3$:க்கா$_2$நாம் ஹாநி: உபஜாயதே) இந்த ஸாத$_4$கனுக்கு எல்லாத் துன்பங்களும் அழிகின்றன. "து$_4$:க்கா$_2$ஜ்ஞாநமலா த$_4$ர்மா: ப்ரக்ருதேஸ் தே ந சாத்மந" [வி. பு. 6-7-22] [துன்பம் அஜ்ஞானம், மலம் ஆகிய தன்மைகள் பிரகிருதி ஸம்பந்தத்தால்

मनसः तदानीमेव हि विविक्तात्मविषया बुद्धिः पर्यवतिष्ठते। अतो मनःप्रसादे सर्वदुःखानां हानिर्भवत्येव॥ ६५॥

नास्ति बुद्धिरयुक्तस्य न चायुक्तस्य भावना।
न चाभावयतः शान्तिरशान्तस्य कुतः सुखम्॥ ६६॥

**66.** நாஸ்தி பு₃த்₃தி₄ரயுக்தஸ்ய ந சாயுக்தஸ்ய பா₄வநா।
ந சாபா₄வயத: ஶாந்தி: அஶாந்தஸ்ய குத:ஸுக₂ம் ॥

**அயுக்தஸ்ய**—என்னிடம் ஈடுபடாத நெஞ்சையுடையவனுக்கு, **பு₃த்₃தி₄:**—ஆத்மாவைப்பற்றிய அறிவு, **ந அஸ்தி**—ஸித்திக்காது; **அயுக்தஸ்ய**—அவ்வறிவற்றவனுக்கு, **பா₄வநா**—ஆத்மதியானம், **ந ச (அஸ்தி)**—கைகூடாது; **அபா₄வயத:**—ஆத்மதியான மற்றவனுக்கு, **ஶாந்தி:**—விஷயங்களில் ஆசையின்மை, **ந ச (அஸ்தி)**-ஏற்படாது; **அஶாந்தஸ்ய**—விஷயங்களில் ஆசையின்மையற்றவனுக்கு, **குத: ஸுக₂ம்**—பேரின்பம் எப்படிக்கிடைக்கும்?

---

**59.** யோகமென் பக்க லிலானுக்குப் புந்தியில்லை
யேக நினைவவனுக் கில்லையுமாம்—போகத்திற்
சாந்தியவ னுக்கில்லை சாந்தியில னுக்கெத்தா
லேந்திவரு மின்பந்தா னீங்கு.

---

ஏற்படுகின்றவையே தவிர ஆத்மாவுக்கு இயற்கையாயமைந்தவை அல்ல.] என்கிறபடியே பிரகிருதி ஸம்பந்தத்தால் வந்தேறியாயிருக்கும் எல்லாத் துன்பங்களும் கழிகின்றன என்று கருத்து. இனி, மனத்தெளிவால் ஸாம்ஸாரிகமான எல்லாத் துன்பங்களும எப்படி நீங்கும்? என்னும் கேள்விககு பதிலுரைக்கிறது உத்தரார்த்த₄ம. (ப்ரஸந்நசேதஸ:) ஆத்மத₃ர்சனத்துக்கு விரோதி₄யான தோஷங்கள் நீங்கப்பெற்ற நெஞ்சையுடையா ஸாத₄கனுக்கு. (ஆஶு) உடனேயே. (பு₃த்₃தி₄: பர்யவதிஷ்ட₂தே ஹி) சரீரத்திலும் வேறுபட்ட ஆத்மாவைக் காண்பதாகிற ஆத்மத₃ர்ஶனம நிலைநிற்கிறதன்றோ. (ஹி) இப்படி மனத்தெளிவாலே ஆத்மதர்ஶனம் ஏற்படுகிறபடியால், அதனால் பக்தி யோகம ஏற்பட்டு, அதன் ப₂லனாக ஸர்வதுக்கங்களும அழிவதாகிற மோக்ஷம மனத்தெளிவின பரமப்ரயோஜனமாக ஏற்படுகின்றது என்று கருத்து. 65.

॥ भा ॥ मयि सन्न्यस्तमनोरहितस्य स्वयत्नेनेन्द्रियनियमने प्रवृत्तस्य कदाचिदपि विविक्तात्मविषया बुद्धिर्न सेत्स्यति। अत एव तस्य

---

**என் பக்கல்**—*என்னிடம்.* **யோகம் இலானுக்கு**—*ஈடுபடாத நெஞ்சை உடையவனுக்கு.* **புந்தி**—*ஆத்மாவைப் பற்றிய அறிவு,* **இல்லை**—*இல்லை.* **அவனுக்கு**—*அவ்வறிவற்றவனுக்கு.* **ஏகநினைவு**—*ஆத்மாவைப் பற்றிய நீண்ட சிந்தனை.* **இல்லையுமாம**—*இல்லாமலும் போகும்.* **அவனுக்கு**—*அந்நினைவற்றவனுக்கு.* **போகத்தில் சாந்தியில்லை** — *விஷயங்களில் ஆசையறுவது இல்லை;* **ஈங்கு**—*இவ்வுலகத்தில்.* **சாந்தியிலனுக்கு**-*ஆசையருதவனுக்கு,* **இன்பந்தான்**-*பேரின்பமானது.* **எத்தால் ஏந்தி வரும்**—*எப்படிப் பொருந்திவரும்.*

---

66. இனி, இந்த ச்லோகத்தில் "**புத்₃தி₄ நாஶாத் ப்ரணஶ்யதி**" [63] என்று முன் சொன்னதை விவரிப்பதற்காக, ஶுபா₄ஶ்ரயமான திவ்யமங்கள விக்₃ரஹத்தோடு கூடிய தன்னிடத்தில் நெஞ்சைச் செலுத்தாதவனுக்கு, முற்கூறிய அந்யோந்யாஶ்ரய தோ₃ஷத்தாலே ஆத்மத₃ர்ஶனம கிட்டாமற்போவதை அநுவதி₃த்துக் கொண்டு, அதனுலேயே பரமப்ரயோஜனமான மோக்ஷம் எவ்விதத்தில் கிட்டாமற்போகிறது என்பதைக் காட்டுகிறுர். (அயுக்தஸ்ய பு₃த்₃தி₄ர் நாஸ்தி) "**யுக்த ஆஸீத மத்பர:**" [61] என்கிறபடியே ஶுபா₄ஶ்ரயமான திவ்யமங்கள விக்ரஹத்தோடு கூடிய என்னிடத்தில் 'நெஞ்சு செலுத்தாதவனுக்கு ஆத்மாவைப்பற்றிய அறிவு கைகூடாது. ஆத்மத₃ர்ஶனத்தை எதிர்பாராமல் விஷய ராக₃த்தைத்தானே அறுக்கவல்ல ஶுபா₄ஶ்ரயமான திவ்யமங்கள விக்ரஹத்தோடு கூடிய எனனிடத்தில நெஞ்சை ஈடுபடுத்தாதவனுய், தன் முயற்சியாலே இந்திரியங்களை வெல்லப்புகுந்தவனுக்கு, "ரஸோப்யஸ்ய பரம் த்₃ருஷ்ட்வா நிவர்த்ததே" [59] எனகிறபடியே ஆத்மத₃ர்ஶனம் ஏற்படாதவரையில் இந்திரியஜயம கைவராதாகையாலே எவ்வளவு காலம் முயனருலும ஒருபோதும (தேஹத்திலும் வேறுபட்ட) ஆத்மத₃ர்ஶனம் ஸித்திக்காது எனறு கருத்து. (அயுக்தஸ்ய ச பா₄வநா நாஸதி) மூன்ருவது பாதத்திலிருந்து, முனபாதத்திற்சொனனதைப் பின பாதத்தில் சங்கிலிதொடர்போலே அநுவதி₃க்கையாலே, இவ்விரண்டாவது பாதத்திலும "அயுக்தஸ்ய"

तद्भावना च न संभवति। विविक्तात्मानमभावयतो विषयस्पृहाशान्तिर्न भवति। अशान्तस्य—विषयस्पृहायुक्तस्य कुतो नित्यनिरतिशयसुखप्राप्तिः॥ ६६॥

---

என்றதற்கு முதற்பாதத்தையொட்டி "அபு₃த்₃தி₄யுக்தஸ்ய" என்றே பொருள் கொள்ளவேண்டும். அயுக்தனுயிருக்கையின் ப₂லனை அபு₃த்₃தி₄யுக்தத்வம் இங்கு அயுக்தஶப்₃தத்தால் லக்ஷணையால கூறப்படுகிறது. ஆக, "முற்கூறிய ஆத்மத₃ர்ஶனமற்றவனுக்கு, அக்காரணத்தாலேயே அவ்வாத்மாவைப்பற்றிய நீண்டசிந்தனை யாகிற பா₄வனை கைகூடாது" என்று பொருள். அன்றிக்கே, சங்கிலித்தொடரில் நோக்கு வைக்காமல், "அயுக்தஸ்ய" என்ற தற்கு முதற்பாதத்திற் சொன்ன பொருளையே கொள்ளலாம். அப்போது "அயுக்தஸ்ய பா₄வநா ச ந" என்று அந்வயம்; "என்னிடத்தில் ஈடுபடாதவனுக்கு, முற்கூறியபடி ஆத்மதர்ஶனம் ஏற்படாதாகையாலே, ஆத்மபா₄வனையும் ஸித்திக்காது" என்று பொருள். (அபா₄வயத: ச ஶாந்திர் ந) இப்படி ஆத்மாவைப் பற்றிய நீண்ட நினைவு இல்லாதவனுக்கு விஷயராகங்கள் அடங்குவது இல்லை. உயர்ந்த விஷயமான ஆத்மாவை நீண்ட காலம் சிந்தித்தால்தான் தாழ்ந்த விஷயங்களில ஆசை அறும் என்று கருத்து. "ரஸோப்யஸ்ய பரம் த்₃ருஷ்ட்வா நிவர்த்ததே" [59] "ராக₃த்₃வேஷவியுக்தை:" [64] "ஸுகே₂ஷு விக₃தஸ்ப்ருஹ:" [56] என்று இப்ரகரணத்தில் விஷயராக₃ஶாந்தியே பலகால் வலியுறுத்தப்பட்டிருக்கிறதாகையாலே, இங்கு 'ஶாந்தி' எனப்படுவது அதுவே என்று கொள்வதே பொருந்தும். (அஶாந்தஸ்ய குத: ஸுக₂ம்) விஷயங்களில ஆசை அடங்கப்பெருதவனுக்கு, பேரின்பமாகிய மோக்ஷம் எப்படிக் கைகூடும். விஷயராகமுள்ளவனுக்கும் சிற்றின்பமான ஸ்வர்க்காதி ஸுகங்கள் கிட்டுமாகையாலே, இங்கு 'ஸுகம்' என்று பேரின்பமான மோக்ஷம் குறிக்கப்படுவதாகக் கொள்வதே பொருந்தும். யமம், நியமம், ஆஸநம, ப்ராணாயாமம் ப்ரத்யாஹாரம், த்₄யானம், தா₄ரணை, ஸமாதி₄ என்னும் அஷ்டாங்க யோகத்தில் ப்ரத்யாஹாரம் தொடங்கியுள்ள நாலு நிலைகளிலும் முன் முன் நிலைகள் இல்லாவிடில் பின பினநிலைகள் ஸித்திக்காது என்பதும், அந்நிலைகளின் பலமான மோக்ஷமும் ஸித்திக்காது என்பதும் நேரேயும் ஸூசனையாகவும் இந்த ச்லோகத்தில் காட்டப்படுகிறது என்று தாத்பர்ய சந்த்₃ரிகை. 66.

॥ भा ॥ पुनरप्युक्तेन प्रकारेणेन्द्रियनियमनमकुर्वतोऽनर्थमाह—

इन्द्रियाणां हि चरतां यन्मनोऽनुविधीयते।
तदस्य हरति प्रज्ञां वायुर्नावमिवाम्भसि ॥ ६७ ॥

67. இந்த்₃ரியாணும் ஹி சரதாம் யந்மநோऽநுவிதீ₄யதே ।
தத₃ஸ்ய ஹரதி ப்ரஜ்ஞாம் வாயுர் நாவமிவாம்ப₄ஸி ॥

சரதாம்—(இஷ்டப்படி) விஷயங்களில் ஈடுபடும், இந்தி₃ரியாணும்—இந்திரியங்களை, யத் மந:—எந்த மனமானது, அநுவிதீ₄யதே—பின்பற்றும்படி (புருஷனுல்) செய்யப்படுகிறதோ, தத்—அந்தமனம், அஸ்ய—இப்புருஷனுடைய, ப்ரஜ்ஞாம்—(ஆத்ம விஷயமான) அறிவை, வாயு:—(எதிர்த்திசையில் வீசும்) காற்றானது, அம்ப₄ஸி நாவம் இவ—தண்ணீரில் (செலுத்தப்படும்) கப்பலை (எதிர்த்திசையில் இழுத்துச்செல்வது) போலே, ஹரதி ஹி—(விஷயங்களை நோக்கி) இழுத்துச்செல்கிறதன்றே.

---

*60. ஏயுமனந் தோய்புலனி லேதுடனு மாதுணர்வை
வாயுமரத் தோணியென மாய்க்குமால்—தோயும்
பொருளிடத்து நின்று புலன்மீட்க வாங்கே
தெருளுறைப்புச் சேருஞ் சிறந்து.

தோய் புலனில்—(விஷயங்களில்) ஈடுபடும இந்திரியங்களோடு, ஏது மனம் ஏயும்—எந்த மனமானது பொருந்தி நிற்கிறதோ, ஆது—அம்மனம், உடனும் உணர்வை—ஆத்மவிஷயமான அறிவை, மரத்தோணி(யை) வாயு என—மரப்படகை (எதிர்த்திசை) வாயுவைப்போலே, மாய்க்குமால்—அழித்துவிடும், தோயும் பொருளிடத்து நின்றும்—(இந்திரியங்கள்) ஈடுபடும் சப்தாதிவிஷயங்களினின்றும், புலன் மீட்க—இந்திரியங்களை இழுத்தவுடன், ஆங்கே—அப்போதே, தெருளுறைப்பு சிறந்து சேரும்—ஸ்திதப்ரஜ்ஞநிலை சிறப்புடன் பொருந்தும்.

---

* இப்பாட்டு 67, 68 ச்லோகங்களுக்கு மொழிபெயர்ப்பு.

॥भा॥ इन्द्रियाणां विषयेषु चरतां वर्तमानानां वर्तनमनु यन्मनो विधीयते—पुरुषेणानुवर्त्यते तन्मनोऽस्य विविक्तात्मप्रवणां प्रज्ञां हरति—विषयप्रवणां करोतीत्यर्थः ; यथाऽम्भसि नीयमानां नावं प्रतिकूलो वायुः प्रसह्य हरति ॥६७॥

---

67. "நாஸ்தி பு$_3$த்$_3$தி$_4$ரயுக்தஸ்ய" என்று சென்ற ச்லோகத்தில் இந்திரிய ஜயமில்லாதவனுக்கு ஆத்மத$_3$ர்ஶனம் கைகூடாது என்று கூறப்பட்டது. அது எப்படி என்று விவரிக்கப்படுகிறது இந்த ச்லோகத்தில். ஆகையாலே புநருக்தியில்லை.ஓரளவுக்குப் புநருக்தியே யாயினும, ஆதரத்தினாலே மறுபடியும் சொல்லுவதாகக்கொளளலா மாகையாலேதோஷமில்லை.(சரதாம் இந்த்$_3$ரியாணும்)அடக்கப்படாத வையாகையாலே,ஶப்தம் முதலான விஷயங்களில் இஷ்டப்படி ஸஞ்சரிக்கும் இந்திரியங்களின் ஸஞ்சாரத்தையொட்டி. எல்லா இந்திரியங்களும் விஷயங்களில் சென்றுஸஞ்சரிக்கமுடியாதாகையால்,இங்கு ஸஞ்சாரம் என்று அவற்றில் ஈடுபாடே குறிக்கப்படுகிறது. "இந்த்$_3$ரியாணி இந்த்$_3$ரியார்த்தே$_2$ஷு வர்த்தந்தே" [5-9] எனறு மேலேயும் "வர்த்தந்தே" எனறு ஈடுபாட்டையே குறிக்கிறதன்றோ. (யந் மந: அநுவிதீ$_4$யதே) இந்திரியங்களின ஸஞ்சாரத்தையொட்டி யாதொரு மனமானது (புருஷனால்) ஸஞ்சரிக்குமபடி செய்யப்படுகிறதோ.

"இந்த்$_3$ரியாணும் து ஸர்வேஷாம் யத்$_3$யேகம் க்ஷரதீந்த்$_3$ரியம் ।
தேநாஸ்ய க்ஷரதி ப்ரஜ்ஞா த்$_3$ருதே: பாத$_3$ாதி$_3$வோத$_3$கம் ॥"
[மநு 2-99]

[எல்லா இந்திரியங்களுக்குள்ளும் ஒரு இந்திரியம விஷயப்ரவணமானாலும், தோற்பையில் ஓரே துவாரத்தின் மூலம் எல்லா நீரும் ஒழுகிவிடுவதுபோலே இவனுடைய எல்லா அறிவும் நழுவி விடுகிறது.] என்னும் மநுஸ்ம்ருதி வசனத்தையொட்டியிருப்ப தாலே இந்த ச்லோகத்திலும, 'இந்த்$_3$ரியாணும்' என்றவிடத்தில் நிர்த்த$_4$ாரணே ஷஷ்டியாகக்கொண்டு, "விஷயங்களில் ஸஞ்சரிககும் இந்திரியங்களுக்குள் யாதொரு இந்திரியமானது மனத்தைப் பினபற்றும்படி செய்யப்படுகிறதோ, அவ்விந்திரியம் அறிவையழிக்கிறது" என்றோ "விஷயங்களில் ஸஞ்சரிக்கும் இந்திரியங்களுக்குள் எந்த இந்திரியத்தை மனம பின்பற்றும்படி செய்யப்படுகிறதோ, அவ்விந்திரியம் அறிவையழிக்கிறது" என்றோ பொருள்கொள்ளலாமே என்று சிலர் கருதக்கூடும். இது பொருந்

तस्माद्यस्य महाबाहो निगृहीतानि सर्वशः।
इन्द्रियाणीन्द्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ६८ ॥

68. தஸ்மாத்₃ யஸ்ய மஹாபா₃ஹோ நிக்₃ருஹீதாநி ஸர்வஶ:।
இந்த்₃ரியாணீந்த்₃ரியார்த்தே₂ப்₄யஸ் தஸய ப்ரஜ்ஞா
ப்ரதிஷ்டி₂தா ॥

**மஹாபா₃ஹோ**—*தடக்கையனே!* **தஸ்மாத்**—*ஆகையால்,* **யஸ்ய இந்த்₃ரியாணி**—*எவனுடைய இந்திரியங்கள்,* **இந்த்₃ரியார்த்தே₂ப்₄ய:**—*விஷயங்களினின்றும்,* **ஸர்வஶ: நிக்₃ருஹீதாநி**—*எல்லாப்படியாலும் இழுக்கப்பட்டனவோ,* **தஸ்ய**—*அவனுக்கு.* **ப்ரஜ்ஞா**—*(ஆத்ம விஷயமான) அறிவு.* **ப்ரதிஷ்டி₂தா**—*நிலைநிற்கிறது.*

---

தாது. மநுவசனத்தில் மனம் எடுக்கப்படவில்லையாகையாலும், இந்திரியசப்தத்தை இரண்டு தடவை படிககையாலும், 'ஏகம' என்னும் ஶப்தத்தின் ப₃லத்தாலும் அங்கு அப்படியே பொருள் கொள்ளவேண்டும். இந்த ச்லோகத்தில் அப்படியில்லை. மேலும், அறிவையழிப்பதில் மனமே முக்கியமானதாகையால், "யத்—தத்" என்னும் பதங்களுக்கு அதையே பொருளாகக்கொள்வது உசிதம். நிர்த்த₄ரணே ஷஷ்டியாகக் கொண்டு விவரித்த முதற்பொருளில் வெளி இந்திரியம் மனத்தைப்பின் பற்றும்போது அறிவு வளருமே யொழிய அழியாது; இரண்டாவது பொருளில் மனம் இந்திரியங் களைப் பின்பற்றும்போது அறிவு அழிவது எல்லா இந்திரியங் களுக்கும் பொதுவாயிருக்க, "இந்திரியங்களுக்குள் எந்த இந்திரி யத்தை" என்னும் நிர்த்தாரணப் பொருள ஒட்டாது. ஆகையால் இங்கு விவரிக்கப்பட்டதே பொருத்தமான பொருள். (தத் அஸ்ய ப்ரஜ்ஞாம் ஹரதி) அந்த மனம், தன்னை இந்திரியங்களைப் பின் பற்றச் செய்தவனை இந்தப் புருஷனுடைய அறிவை அழிக்கிறது. சரீரத்திலும் வேறுபட்ட ஆத்மாவில் ஈடுபட்டிருக்கும் இவனுடைய அறிவை அழித்து விஷயங்களால் ஈடுபடுமபடி செய்கிறது என்று கருத்து. இவ்விஷயத்தில் திருஷ்டாந்தம கூறுகிறார் மேலே,— (அம்ப₄ஸி நாவம் வாயுரிவ) நீரில் ஒரு திசையை நோக்கிச் செலுத் தப்படும் கப்பலை எதிர்த்திசையை நோக்கியடிக்கும் காற்றானது வழியல்லாவழிகளில் அலைத்தழிப்பதுபோலே, இந்த மனமும் ஆத் மாவில் ஈடுபட்டிருக்கும இவனுடைய அறிவை விஷயங்களை நோக்கி பலாத்காரமாக இழுத்துச் செல்லுகிறது என்கை. 67.

॥भा॥ तस्मादुक्तेन प्रकारेण शुभाश्रये मयि निविष्टमनसो यस्येन्द्रियाणीन्द्रियार्थेभ्यः सर्वशो निगृहीतानि, तस्यैवात्मनि प्रज्ञा प्रतिष्ठिता भवति ॥ ६८ ॥

॥भा॥ एवं नियतेन्द्रियस्य प्रसन्नमनसस्सिद्धिमाह—

या निशा सर्वभूतानां तस्यां जागर्ति संयमी।
यस्यां जाग्रति भूतानि सा निशा पश्यतो मुनेः ॥ ६९ ॥

69. யா நிஶா ஸர்வபூ₄தாநாம் தஸ்யாம் ஜாக₃ர்த்தி ஸம்யமீ।
யஸ்யாம் ஜாக்₃ரதி பூ₄தாநி ஸா நிஶா பஶ்யதோ முநே: ॥

**யா**—யாதொரு ஆத்மவிஷயமான அறிவு. **ஸர்வபூ₄தாநாம்**—எல்லா ஜீவராசிகளுக்கும், **நிஶா**—இரவுபோலே இருண்டுகிடக்கிறதோ, **தஸ்யாம்**—அவ்வறிவு விஷயத்தில், **ஸம்யமீ**—இந்திரியங்களை அடக்கிய ஜ்ஞாநயோகநிஷ்டன். **ஜாக₃ர்த்தி**—விழிப்புடன (ஆத்மத₃ர்ஶனம் செய்துகொண்டு) இருக்கிறுன்; **யஸ்யாம்**—யாதொரு சப்தாதி விஷயமான

---

68. "யத₃ா ஸம்ஹரதே" [58] என்று தொடங்கிச் செய்யப்பட்டுவந்த இந்திரியங்களை அடக்குவது பற்றிய உபதேசம் இந்த ச்லோகத்துடன முடிக்கப்படுகிறது. (தஸ்மாத்) இந்திரியங்களைப் பின்பற்றும் மனமானது அறிவை அழிப்பதாகையால். (யஸ்ய இந்த்₃ரியாணி இந்த்₃ரியார்த்தே₂ப்₄ய: ஸர்வஶ: நிக்₃ருஹீதாநி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டி₂தா) முற்கூறிய வழியில் சுபாச்ரயமான என்னிடத்தில் நெஞ்சு செலுத்திய எவனுடைய இந்திரியங்கள் சப்தாதி விஷயங்களினின்றும் எல்லாப்படியாலும் மீட்கப்பட்டனவோ, அவனுடைய அறிவே நிலைநிற்கிறது. அவனே ஆத்மாவைக் காண்கிறுன என்று கருத்து. (ஸர்வஶ: நிக்₃ருஹீதாநி) "ரஸோப்யஸ்ய நிவர்த்ததே" [59] என்ற ரீதியிலே விஷயராகமும நீங்கும்படியாக இந்திரியங்கள அடக்கப்பட்டமையைக் குறிக்கிறது. இது சுபாச்ரயமான திவ்யமங்களவிக்ரஹத்தில் நெஞ்சு செலுத்தியவனுக்கே கைகூடும என்று முன்னமே விளக்கப்பட்டது. (மஹாபா₃ஹோ) தடக்கையனே! ஸ்தூ₂லமான உன கை முதலான அவயவங்கள் சிறப்புற்றிருப்பதுபோலே ஸூக்ஷ்மமான உன் இந்திரியங்களும் விஷயராகத்தை விட்டுச் சிறப்புறவேண்டாவோ என்று கருத்து. 68.

*அறிவில்,* **பூ₄தாநி**—*ஜீவராசிகள்,* **ஜாக்₃ரதி**—*விழிப்புடன் (விஷயங்களை அநுபவித்துக்கொண்டு) விளங்குகின்றனவோ,* **ஸா**—*அவ்வறிவு,* **பஶ்யத:**—*ஆத்மாவைப் பார்க்கின்றவனாய்,* **முநே:**—*அதை மனனம் செய்பவனான ஜ்ஞாநயோக நிஷ்டனுக்கு,* **நிஶா**—*இரவுபோலே இருண்டு கிடக்கிறது.*

**॥भा॥ या आत्मविषया बुद्धिः सर्वभूतानां निशा—निशेवाप्रकाशा, तस्यामात्मविषयायां बुद्धौ इन्द्रियसंयमी प्रसन्नमनाः जागर्ति—**

---

**61. யாது வுலகர்க் கிருளிரவா மாங்குணர்ந்து**
**போத மருவும் புலன்வென்றோ—னேதி**
**லுணர்வுறுவ ரீங்கிவர்க ளுற்றுணர்ந்த யோகிக்**
**கிணரில்லா தாகு மிருண்டு.**

**யாது**—*யாதொரு ஆத்மவிஷயமான அறிவு,* **உலகர்க்கு**—*ஸம்ஸாரிகளுக்கு,* **இருள் இரவாம்**—*இரவு போலே இருண்டு கிடக்கிறதோ,* **ஆங்கு**—*அவ்வாத்ம விஷயமான அறிவில்,* **புலன் வென்றோன்**—*இந்திரியங்களை அடக்கியவனான ஜ்ஞாநயோக நிஷ்டன்,* **உணர்ந்து**—*ஆத்ம த₃ர்ஶநம் செய்துகொண்டு,* **போதம் மருவும்**—*விழிப்புடன் இருப்பான்;* **இவர்கள்**—*ஸம்ஸாரிகள்,* **ஏதில்**—*எந்த சப்தாதி விஷயங்களைப்பற்றிய அறிவு விஷயத்தில்,* **உணர்வுறுவர்**—*(விஷயாநுபவத்தாலே) விழிப்புடன் விளங்குகிறார்களோ,* **ஈங்கு**—*இந்த சப்தாதி விஷயமான அறிவில்,* **உற்று உணர்ந்த யோகிக்கு**—*ஆத்மாவைப் பார்க்கின்றவனாய், அதை மனனம் செய்யும் ஜ்ஞாநயோக நிஷ்டனுக்கு,* **இருண்டு**—*(அநுபவமில்லாமையாலே) பிரகாசமற்று,* **இணர் இலலாதாகும்**—*இணக்கமாகிற தொடர்பு இல்லாமலிருக்கும்.*

---

69 இதுவரையில் ஆத்மத₃ர்ஶனத்துக்கு உபாயமான இந்திரிய நிக்ரஹத்தைப்பற்றி உபதேசித்தார். இனி இரண்டு ச்லோகத்தாலே இவ்விந்திரிய நிக்ரஹத்தால் உண்டாகும் நான்கு நிலைகளையுடைய ஜ்ஞானயோகத்தின் பலமான ஆத்மதர்சனத்தின் பெருமை

आत्मानमवलोकयन्नास्त इत्यर्थः। यस्यां—शब्दादिविषयायां बुद्धौ सर्वाणि भूतानि जाग्रति—प्रबुद्धानि भवन्ति; सा शब्दादिविषया बुद्धिरात्मानं पश्यतो मुनेर्निशेवाप्रकाशा भवति ॥ ६९ ॥

---

யைப் பேசுகிருர். ஆத்மதர்ஸனம் ஏற்கனவே கூறப்பட்டிருந்த போதிலும் இங்கு அதைப புகழ்வதில் நோக்காகையாலே புநருக்தியில்லே. (யா) யாதொரு ஆத்மதர்ஸநரூபமான அறிவு. முன் ச்லோகத்தில் "தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா" என்று ஆத்ம விஷயமான ப்ரஜ்ஞையே (அறிவே) ப்ரஸதுதமாகையாலே, அதையே இங்கு 'யா' என்று எடுப்பதாகக் கொள்வது உசிதம். (ஸர்வ பூதாநாம் நிஶா) எல்லா ஜீவராசிகளுக்கும் இரவாகிறதோ. இங்கு பிரஸித்தமான இரவை (ராத்ரியைக்) கூறுவதாகக் கொள்ள முடியாது; ஏனெனில்: தேசகாலபேதத்தாலே அவ்விரவானது சிலருக்கே ஒரு சமயம ஏற்படுகிறது. அனைவர்க்கும் ஒரே சமயம் ஏற்படுவதில்லே. இங்கு இந்த இரவு அனைவர்க்கும ஓரே சமயத்தில ஏற்படுவதாகக் கூறப்படுகிறபடியால் 'இரவுபோலே பிரகாசமற்றிருக்கை' எனறே பொருளகொள்ள வேண்டும. ஆக, (யா நிஶா ஸர்வபூதாநாம்) என்றது, "யாதொரு ஆத்மதர்ஸனமானது எல்லா ஸம்ஸாரிஜீவர்களுக்கும இரவுபோலே இருண்டு கிடக்கிறதோ" என்று பொருள்படுகிறது. ஸ்வயம்ப்ரகாஶமான அறிவுக்குப் பிரகாசமற்றிருக்கை ஓட்டுமோ எனில்: கர்மம காரணமாக ஏற்படும் ஸங்கோசதசையில் ஓட்டும. (தஸ்யாம் ஜாகர்த்தி ஸம்யமீ) அவ்வாத்மதர்ஸன விஷயத்தில் இந்த்ரியநிக்ரஹம செய்த ஜ்ஞாநயோக நிஷ்டன் விழிப்புடனிருக்கிருன். இங்கு இந்திரியநிக்ரஹம் ப்ரஸ்துதமானபடியால் ஸம்யமிஶப்தம் இந்திரியங்களே அடக்கியவனைக் குறிக்கிறதேயொழிய ஸந்யாஸியைக் குறிப்பதல்ல; "த்ரயமேகத்ர ஸம்யம:" என்னும் பாதஞ்ஜலபரிபாஷைப்படி தாரணத்யாந ஸமாதிகளாகிற மூன்றையும் ஒன்று சேரப்பெற்றிருப்பவனைக் குறிப்பதுமல்ல. இங்கு இந்திரியஜயத்தை உடையவனென்றது, "ப்ரஸாதே மதிகச்சதி" [2-64] என்றவிடத்தில இந்திரியஜயத்தினுலே ஏற்படுவதாகச் சொல்லப்பட்ட மனத்தெளிவையும் உடையவன் என்று காட்டுகிறது. (ஜாகர்த்தி) விழிப்புடனிருக்கிருன். லோகப்ரஸித்தமான (உறக்கத்தினின்றும்) விழிப்பு இங்கு பொருந்தாதாகையாலே, ஆத்மதர்ஸனமாகிற விழிப்பை உடையவனுயிருக்கிருன எனறே கொள்ளவேண்டும.

आपूर्यमाणमचलप्रतिष्ठं समुद्रमापः प्रविशन्ति यद्वत्।
तद्वत्कामा यं प्रविशन्ति सर्वे स शान्तिमाप्नोति न कामकामी ॥ ७० ॥

70. ஆபூர்யமாணமசலப்ரதிஷ்டம்
ஸமுத்ரமாப: ப்ரவிஶந்தி யத்வத்।
தத்வத் காமா யம் ப்ரவிஶந்தி ஸர்வே
ஸ ஶாந்திமாப்நோதி ந காமகாமீ ||

**யத்வத்**—*எப்படி*, **ஆபூர்யமாணம்**—*தானே நிறைந்திருப்பதாய்*, **அசலப்ரதிஷ்டம்**—*ஒரே நிலையிலிருப்பதான*, **ஸமுத்ரம்**—*கடலை*. **ஆப:**—*நதீஜலங்கள்*, **ப்ரவிஶந்தி**—*பிரவேசிக்கின்றனவோ*, **தத்வத்**-*அப்படியே*, **ஸர்வே காமா:**-*சப்தாதி விஷயங்கள் அனைத்தும்*, **யம்**—*(இந்திரியங்களை அடக்கிய) எவனை*, **ப்ரவிஶந்தி**—*பிரவேசிக்கின்றனவோ*, **ஸ:**—*அவனே*, **ஶாந்திம்**—*விஷயானுபவங்கள் நீங்கப்பெறுகையாகிற சாந்தியை*, **ஆப்னோதி**—*அடைகிறான்*; **காமகாமீ**-*சப்தாதிவிஷயங்களை விரும்பி விகாரமடைபவன்*, **ந**-*சாந்தியை அடைவதில்லை*.

---

(தஸ்யாம ஜாகர்த்தி) 'புத்தியில் விழிப்புடனிருக்கிறான்' என்றதற்கு "ஆத்மாவை விஷயமாகக்கொண்டு ஒளிவிடும் புத்தியை உடையவனாயிருக்கிறான்" என்றே கருத்து. (யஸ்யாம் ஜாக்ரதி பூதானி) ஶப்தாதி விஷயங்களைப் பற்றிய யாதொரு அறிவிலே மற்ற ஜீவராசிகள் விழிப்புடன் விளங்குகின்றனவோ. புத்திப்ரகரணமாகையாலே 'யஸ்யாம்' என்னும் இப்பதமும் அறிவைக்குறிப்பதாகக் கொள்வதே பொருந்தும். அதிலும், ஶப்தாதி விஷயங்களைப்பற்றிய அறிவெனறே கொள்ளவேண்டும. ஏனெனில்: இவ்வறிவை "பூதானி" எனப்படும் ஸம்யமியல்லாத ஸாமாந்ய ஜீவர்களுக்குள்ளதாகவும,ஸம்யமிக்கு இரவாகவும் குறித்திருக்கிறதன்றோ. முற்பாதியில் 'ஸர்வபூதாநாம்' என்று கூறியதையொட்டி, இங்கு 'பூதானி' என்றதும் ஸர்வபூதங்களையும் குறிக்கிறது. (ஸா நிஶா பஶ்யதோ முநே) அந்த ஶப்தாதி விஷயமான அறிவு ஆத்மாவைக்கண்டு அதை மனனம் செய்யும் ஞானிக்கு இரவுபோலே இருண்டுகிடக்கிறது. இங்கு 'பஶ்யத:' என்று பொதுவாகச் சொன்னபோதிலும், பிரகரணபலத்தாலே ஆத்மாவைக் காண்கிறவனே இந்தப்பதத்தால் குறிக்கப்படுகிறான் என்று விளங்குகிறது. 69.

॥ भा ॥ यथा स्वेनैवापूर्यमाणमेकरूपं समुद्रं नादेय्य आपः प्रविशन्ति, आसामपां प्रवेशेऽप्यप्रवेशे च समुद्रो न कञ्चन विशेषमापद्यते;

---

62. நிறைந்து நிலைசலியா நீள்கடல்வாய் நீர்யா
றுறைந்த வகையதுபோ லுள்ளே—மறைந்தெவன்பால்
காமங்க ளெல்லாங் கரக்குமவன் சாந்திபெறு
மேமம் பெறுன்காமி யிங்கு.

**நிறைந்து**—*தானே நிறைவு பெற்று*, **நிலை சலியா**—*ஓரே நிலையிலிருப்பதான*. **நீள் கடல் வாய்**—*சமுத்திரத்தினிடத்திலே*, **யாறு நீர்**—*ஆற்று நீர்கள்*, **உள்ளே மறைந்து உறைந்த வகை அதுபோல்**—*உள்ளே மறைந்து அதற்கு யாதொரு விகாரத்தையும் விளைக்காமல் நிற்கும் தன்மைபோல்*, **எவன் பால்**—*எந்த மனிதனிடம்*, **காமங்கள் எல்லாம்**—*சப்தாதி விஷயங்கள் அனைத்தும்*, **உள்ளே மறைந்து கரக்கும்**—*உட்புகுந்து யாதொரு விகாரத்தையும் விளைக்காமல் மறைந்து நிற்குமோ*, **அவன்**—*அந்த மனிதன்*, **சாந்தி பெறும்**-*விஷயானுபவங்கள் நீங்கப்பெறுகையாகிற சாந்தியை அடைவான்;* **இங்கு**—*இவ்வுலகில்*, **காமி**—*சப்தாதி விஷயங்களை விரும்பி விகாரமடைபவன்*, **ஏமம் பெறுன்**—*(முற்கூறிய சாந்தியாகிற) நன்மையை அடையமாட்டான்*.

---

*70.* "ஸா நிஶா பஶ்யதோ முநே:" என்று, முன் ச்லோகத்தில் ஶப்த₃ாதி₃விஷயங்களைக் காணுமல், ஆத்மாவையே கண்டுகொண்டிருக்கும் ஜ்ஞாநயோக₃ ப₂லம் கூறப்பட்டது. இதற்குக் கீழ்நிலையாய், இதையொட்டியிருப்பதாய், சப்தாதிவிஷயங்களைக் கண்டபோதிலும் அவற்ருல் விகாரமடையாமலிருக்கையாகிற ஜ்ஞாநயோக₃ப₂லத்தின் நிலை இந்த ச்லோகத்தில் விவரிக்கப்படுகிறது. (ஆபூர்யமாணம் ஸமுத்₃ரம்) தானே நிறைந்து நிற்கும் கடலை. சப்தாதிவிஷயப்ரவேஶத்தாலே விகாரமடையாமல், ஆத்மத₃ர்ஶனத்தாலேயே திருப்தி பெற்றுத் தானே நிறைந்து நிற்கும் ஞானிக்கு இது திருஷ்டாந்தமாகையாலே, இப்படியே பொருள்கொள்ள வேண்டுமேயொழிய "நதீஜலங்களால் நிறைவிக்கப்படும் கடலை" என்று பொருள்கொள்ளக்கூடாது. (அசலப்ரதிஷ்ட₂ம் ஸமுத்₃ரம்)

**एवं सर्वे कामाः—शब्दादयो विषयाः यं संयमिनं प्रविशन्ति—इन्द्रियगोचरतां यान्ति, स शान्तिमाप्नोति—शब्दादिष्विन्द्रियगोचरतामापन्नेष्वनापन्नेषु च स्वात्मावलोकनतृप्त्यैव यो न विकारमाप्नोति, स एव शान्तिमाप्नोतीत्यर्थः। न कामकामी—यश्शब्दादिभिर्विक्रियते, स कदाचिदपि न शान्तिमाप्नोति॥ ७०॥**

---

நதீஜலங்கள் உட்புகுந்தபோதோடு, உட்புகாதபோதோடு வாசியற ஒரே நிலையிலிருக்கும் கடலே. நதி வெள்ளம் ஏராளமாக விழும மழை காலத்தில் கரையைக் கடப்பதோ, நதிகள் வற்றிவிடும் கோடைகாலத்தில் தான் வற்றுவதோ செய்யாத கடலே. (யத்₃வத் ஆப: ப்ரவிஶந்தி) எப்படி நதி ஜலங்கள் பிரவேசிக்கின்றனவோ. தாங்கள ஏராளமாக விழுந்தபோதோடு, விழாதபோதோடு வாசியறக் கடலுககு எப்படி ஒரு விகாரத்தையும் விளைப்பதில்லையோ என்றுகருத்து. (தத்₃வத்) அது போலவே. (ஸர்வே காமா:) சப்தாதி விஷயங்கள் அனைத்தும். "காம்யந்தே—இதி காமா:" என்னும் வ்யுத்பத்தியாலே விருமபபபடும் சப்தாதிவிஷயங்கள் இங்கு காம ஶப்தத்தால் குறிக்கப்படுகின்றன என்று கொள்வதே பிரகரணத்திற்குப் பொருந்தும். (யம் ப்ரவிஶந்தி) முற்கூறிய எந்த இந்திரிய நிக்ரஹமுடையவனைப் பிரவேசிக்கினறனவோ. திருஷ்டாந்தமான கடலே விகாரமற்றதென்று விசேஷிக்கையாலே, இங்கு யச்ச₂ப்த₃த்தால் குறிக்கப்படுகிறவனும் விகாரமற்றவனுய், முற்கூறப்பட்ட இந்திரியநிக்₃ரஹம செய்த ஜ்ஞாநயோகநிஷ்டனேயாகவேண்டும். (யம ப்ரவிஶந்தி) விஷயங்கள் அந்நபாநாதிகளைப்போலே உடலினுள் நுழைவதில்லையாகையாலே, "எவனுடைய இந்திரியங்களுககு விஷயமாகின்றனவோ" என்றே பொருள்கொள்ளவேண்டும். அந்தந்த இத்திரியங்கள மூலமாக எவனுடைய அறிவுக்கு விஷயமாகின்றனவோ என்று கருத்து. (தத்₃வத் காமா: யம் ப்ரவிஶந்தி) கடலினுள் நதீஜலங்கள் நுழைவதுபோலே சப்தாதிவிஷயங்கள இவனிடம் நுழைகினறன. நதீஜலங்கள் உட்புகுந்தபோதோடு, புகாதபோதோடு வாசியற விகாரமடையாமல் நிறைவுபெற்றிருக்கும் கடலைப்போலே, சப்தாதி விஷயஙகள் இந்திரியங்களுக்கு விஷயமானபோதோடு, ஆகாதபோதோடு, வாசியறத் தன ஆத்ம த₃ர்ஶனதிருப்தியாலேயே எவனொருவன விகாரமடையாமலிருக்கிறனே என்று கருத்து. (ஸ ஶாந்திமாப்நோதி) அவனே விஷ

विहाय कामान् यः सर्वान् पुमांश्चरति निःस्पृहः।
निर्ममो निरहङ्कारः स शान्तिमधिगच्छति॥ ७१॥

71. விஹாய காமாந் யஸ்ஸர்வாந் புமாம்ஶ்சரதி நி:ஸ்ப்ருஹ:।
நிர்மமோ நிரஹங்கார: ஸ ஶாந்திமதி₄க₃ச்ச₂தி ॥

ய: புமாந்—*எந்த மனிதன்,* ஸர்வாந் காமாந்—*சப்தாதி விஷயங்கள் அனைத்தையும்,* விஹாய—*கைவிட்டு,* நி:ஸ்ப்ருஹ:—*(அவற்றில்) ஆசையற்றவனாய்,* நிர்மம:—*மமகாரமற்றவனாய்,* நிரஹங்கார:—*அஹங்காரமற்றவனாய்,* சரதி—*வாழ்கிறானோ,* ஸ:—*அவன்,* ஶாந்திம் அதி₄க₃ச்ச₂தி—*விஷயானுபவம் நீங்கப்பெறுகையாகிற சாந்தியை அடைகிறான்.*

---

63. காம மனைவயனைத்துங் கைவிட் டவணசையற்
றேமமுற யானெனதென் றிவ்விரண்டி—னாம
மறத்துறந்து நின்றா னவன்கண்டாய் சாந்தி
பெறப்பயின்று நின்றான் பெரிது.

---

யானுப₄வங்களினின்றும் நீங்கப்பெற்றிருக்கையாகிற சாந்தியை அடைகிறான்; நித்யமாய், குற்றமற்றதாய், மிகச்சிறந்ததான ஆத்மானுபவானந்த வெள்ளத்தில் மூழ்கியிருப்பவன், நிலையற்றதாய், துன்பங்கலந்ததாய் அற்பமாயிருப்பதான விஷயானுபவானந்தத்திவலைகளில் ஈடுபடமாட்டான் என்று கருத்து. இனி, இவ்வர்த்தத்தை வ்யதிரேகமுகத்தாலே உறுதிப்படுத்துகிறார்,—(ந காமகாமீ) காமங்கள் எனப்பட்ட சப்தாதி விஷயங்களை விரும்பி, அவற்றாலே விகாரமடைபவன் முற்கூறிய விஷயானுப₄வம் நீங்கப் பெறுகையாகிற சாந்தியை ஒருபோதும் அடையமாட்டான். 'காமகாமீ' என்னும் பதம் "காமாந் காமயிதும் ஶீலம் யஸ்ய ஸ:—காமகாமீ" என்னும் வ்யுத்பத்தியாலே விஷயங்களை விருமபுகின்ற இயல்புடையவனையே குறிக்குமாயினும் முற்பகுதியில் விகாரமடைவது ப்ரஸக்தமாயிருக்கையாலே, விஷயவிருப்பத்தின் பலனாக விகாரமடைகின்றவனைக் குறிக்கிறது என்று கொள்ளவேண்டும். (காமகாமீ ந ஶாந்திமாப்நோதி) காமங்களைவிரும்பி விகாரமடைபவன் அவ்விருப்பம் நீங்குகிறவரையில் விஷயானுபவம் நீங்கப் பெறமாட்டான். விஷயங்களைக் காணும்போது விகாரமடைபவன், காணாதபோதும் விருப்பமும விகாரமுமற்றவனாயிருக்கமாட்டான் என்று கருத்தாகையாலே புநருக்தியில்லை. 70.

॥ भा ॥ काम्यन्त इति कामाश्शब्दादयः। यः पुमान् शब्दादीन् सर्वान्विषयान् विहाय तत्र निस्स्पृहः तत्र ममतारहितश्च, अनात्मनि देहे आत्माभिमानरहितश्चरति; स आत्मानं दृष्ट्वा शान्तिमधिगच्छति ॥ ७१ ॥

---

**காமம் அவை அனைத்தும் கைவிட்டு**—*சப்தாதி விஷயங்கள் அனைத்தையும் கைவிட்டு.* **அவண்**—*அவற்றில்.* **நசை அற்று**—*ஆசையற்று.* **யான் எனது என்று இவ்விரண்டின் நாமம் அற துறந்து**—*அஹங்கார மமகாரங்களாகிற இரண்டையும், வாஸனையும் நீங்கும்படி விட்டு.* **ஏமம் உற நின்றான்**—*ஆத்ம தர்சனமாகிற நன்மை கைகூடும்படி நின்றவனை.* **அவன் கண்டாய்**—*அவனேயன்றோ.* **சாந்தி பெற**—*விஷயாநுபவம் நீங்கப்பெறுகையாகிற சாந்தியை அடைய,* **பெரிது பயின்று நின்றான்**—*மிகவும் முயற்சி செய்து நிற்பவன்.*

---

71. சென்ற ச்லோகத்தில் காமங்களால் விகாரமடைபவனுக்கு சாந்தியில்லையென்றது; எப்போதுமே அவனுக்கு சாந்தியில்லையோ? எனனும் கேள்வியெழ, அவன் அஹங்காரமமகாரங்களையும், விஷயங்களில் ஆசையையும், விஷயங்களையும் கிரமமாக விட்டானாகில் அவனும் சாந்தியை அடைவான் என்கிறார் இந்த ச்லோகத்தில். அறுபத்தொன்பதாவது ச்லோகத்தில் ஶப்தாதி. விஷயங்களைக்காணாமலேயிருக்கும்பரிபூர்ணாதிகாரியைச்சொல்லிற்று. இவனுக்கும் கீழ்ப்பட்டவனாய், விஷயங்களைக் காண்கின்றவனை அதிகாரியைச் சொல்லிற்று சென்ற ச்லோகத்தில். இவ்விரண்டு அதிகாரிகளுக்கும் கீழ்ப்பட்டவனாய், அவர்களடைந்த ஸித்தியை யடைய முயற்சிப்பவன் ஏறவேண்டிய படிகளைக் காட்டுகிறது இந்த ச்லோகம். (ய: புமாந்) எந்த மனிதன். (காமாந் விஹாய) சப்தாதி விஷயங்களை விட்டு "காம்யந்தே இதி காமா:" என்னும் வ்யுத்பத்தியாலே விரும்பப்படும் சப்தாதி விஷயங்கள் முன் ச்லோகத்திற்போலே இங்கும் காமசப்தத்தினால் குறிக்கப்படுகின்றன. விஷயங்களை விடுவதற்கு இவன் என்ன செய்யவேண்டும் எனில்: (நி:ஸ்ப்ருஹ:) அவற்றில் ஆசையை விடவேண்டும் என்கிறது; அவ்வாசையை விடுவதற்கு இவன் என்ன செய்யவேண்டும் எனில்: (நிர்மம:) தன்னுடையதல்லாத அவற்றில் தன்னுடையது என்னும் மமகாரபுத்தியைத் தவிர்க்கவேணும் என்கிறது இந்த மமகாரபுத்தியைக் தவிர்க்க இவன் என்ன செய்யவேண்டும்?

एषा ब्राह्मी स्थितिः पार्थ नैनां प्राप्य विमुह्यति।
स्थित्वाऽस्यामन्तकालेऽपि ब्रह्म निर्वाणमृच्छति ॥ ७२ ॥

72. ஏஷா ப்₃ராஹ்மீ ஸ்தி₂தி; பார்த்த₂
நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி।
ஸ்தி₂த்வாऽஸ்யாமந்தகாலேऽபி
ப்₃ரஹ்ம நிர்வாணம் ருச்ச₂தி ॥

**इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे साङ्ख्ययोगो नाम द्वितीयोऽध्यायः ॥**

**ஹே பார்த்த₂**–*அர்ஜுநா!* **ஏஷா ஸ்தி₂தி:**–*ஆத்மயாதாத்ம்ய ஜ்ஞானத்தை முன்னிட்டுக்கொண்டு அஸங்ககர்மத்தில் இப்படி நிலைநிற்பது,* **ப்₃ராஹ்மீ** *(ஜ்ஞாநயோகத்தை விளைப்பதன் மூலம்) ப்ரஹ்மமெனப்படும் ஆத்மாவை அடைவிக்கிறது,*

---

எனில்: (*நிரஹங்கார:*) ஆத்மாவல்லாததான சரீரத்தில் ஆத்மாவெனனும் அபிமானத்தைத் தவிர்க்கவேண்டும் என்கிறது; இதைத் தவிர்த்தானுகில் சரீர ஸம்பந்தத்தால் தான் அனுபவிக்கும் விஷயங்களில் மமகாரபுத்தி நீங்கும் என்று கருத்து. (*ஸரதி*) இத்தன்மைகளையுடையவனுய் எவன் வாழ்கிருனே. அஹங்காரம் நீங்கினுல் மமகாரம் போய்விடும். மமகாரம் நீங்கினுல் விஷயங்களில் ஆசை நீங்கும்; அவ்வாசை கழிந்தால் விஷயங்கள் விலகிவிடும்; விஷயங்கள் விலகினுல் ஆத்மதர்ஶனம் கைகூடும் என்று கருத்து. *நிரஹங்கார:, நிர்மம:, நி:ஸ்ப்ருஹ: விஹாய காமாந்* என்னும் நானகு தொடர்களாலும் முற்கூறிய ஜ்ஞாநநிஷ்டையின் நான்கு நிலைகளும காட்டப்படுகின்றன என்றும் கொள்ளலாம். இப்பதங்களையிடுகையாலே இந்த ச்லோகம் ஆத்மதர்ஶனத்தை ஸாதிககவிரும்பும புருஷனைப்பற்றியதென்று விளஙகுகிறது. முன் இரண்டு ச்லோகங்களோவெனில், ஆத்மத₃ர்ஶனம் கைவந்த புருஷனின இரண்டு நிலைகளைக் காட்டின. (*ஸ:*) இவ்வண்ணமாக அஹங்காரமமகாரங்களும் விஷயஸ்ப்ருஹையும், விஷயங்களும் நீங்கப்பெற்ற மனிதன். (*ஶாந்திம் அதி₁க₃ச்ச₂தி*) ஆத்மத₃ர்ஶனம் கைவரப்பெற்று, விஷயாநுபவம் நீங்கப்பெறுகையாகிற சாந்தியை அடைகிருன. முதலில் விஷயங்களைக் கண்டபோதும் விகாரமடையாத நிலையை அடைந்து, பிறகு "*ஸா நிஶா*" [69] என்று சொல்லப்பட்டதாய், விஷயங்களைக் காணுமலேயிருக்கையாகிற நிலையை அடைகிருன் என்று கருத்து. 71

ஏ நாம்—அஸங்ககர்மத்தில் நிலைநிற்பதாகிய இதை, ப்ராப்ய—அடைந்து, ந விமுஹ்யதி—(மனிதன்) மயக்கமடைவதில்லை; அஸ்யாம்–இந்தக்கர்மயோக ஸ்திதியில், அந்தகாலே அபி—ஆயுளின் கடைசிப்பகுதியிலாவது, ஸ்தித்வா—நிலைநின்று, நிர்வாணம்—ஸ்வரூபமான, ப்ரஹ்ம–ஆத்மாவை, ருச்சதி–அடைகிறான்.

।। भा ।। एषा नित्यात्मज्ञानपूर्विका असङ्गकर्मणि स्थितिः स्थितधीलक्षा ब्राह्मी–ब्रह्मप्रापिका, ईदृशीं कर्मणि स्थितिं प्राप्य न विमुह्यति–पुनस्संसारं

---

64. இதுகாண் பிரமமெனு மிவ்வுயிரின் றன்மை
யிதுகாண் பெறின்மயக்க மெய்தா—னிது தன்னி
னந்தகா லத்தமர்ந் தப்பிரமா னந்தமெனுஞ்
சந்தமாந் தன்மை பெறும்.

இது–முற்கூறியபடி ஜ்ஞானயோகத்தை அடைவதற்காக ஆத்ம தத்வஜ்ஞானத்தை முன்னிட்டுக்கொண்டு பற்றற்ற கர்மத்தில் நிலைநிற்கும் இதுவே, பிரமம் எனும் இவ்வுயிரின் தன்மை காண்—ப்ரஹ்மம் எனப்படும் ஜீவாத்மாவை அடைவிக்கும் உபாயமாயிருப்பது; இது—இக்கர்மயோகத்தை, பெறின்—அடைந்தானாகில், மயக்கம் எய்தான் காண்—(மனிதன்) ஸம்ஸார மயக்கத்தை அடையமாட்டான் கண்டாய்; இது தன்னின்—இக்கர்மயோகத்தில், அந்த காலத்து அமர்ந்து—ஆயுளின் கடைசிப்பகுதியில் நிலைநின்றாலும், அப் பிரமானந்தம் எனும்—ப்ரஹ்மமாகிற ஆத்மாவை அனுபவித்து ஆனந்தப்படுகையாகிற, சந்தமாம் தன்மை பெறும்—சிறந்த நிலையை (மனிதன்) அடைவான்.

---

72. இந்த ச்லோகத்தால் இவ்வத்தியாயத்தின் ஸாரார்த்தத்தைச் சொல்லி முடித்துக்கொண்டு, இதில் நிஷ்டையை உடையவனுக்கு ஆத்மப்ராப்தியாகிற பலன் தப்பாமற்கிடைக்கும் என்று கூறுகிறார். (ஏஷா ஸ்திதி:) இவ்வத்தியாயத்திற் சொல்லப்பட்ட நிலை; இவ்வத்தியாயத்தில் ப்ரதானமாகச் சொல்லப்பட்டது கர்ம யோகநிஷ்டையேயாகையால் அது இங்கு ஸ்திதி பதத்தால் சொல்லப்படுவதாகக் கொள்வதே உசிதம். 'ஏஷா' என்று முன் சொன்ன எல்லாப் பிரகாரங்களையும் காட்டுகையாலே, "ஆத்ம தத்வஜ்ஞானத்தை முன்னிட்டுக்கொண்டிருப்பதாய், ஸ்திதப்ரஜ்ஞ

नाप्नोति, अस्यां स्थित्यामन्तिमेऽपि वयसि स्थित्वा ब्रह्मनिर्वाणमृच्छति—निर्वाणमयं ब्रह्म गच्छति, सुखैकतानमात्मानमवाप्नोतीत्यर्थः ॥ ७२ ॥

---

நிலையெனப்பட்ட ஜ்ஞானயோகஸாதனமாயிருப்பதாய், பற்றற்ற கர்மத்தில் நிலைநிற்பதான கர்மயோகநிஷ்டை'' என்று பொருள் படுகிறது. (ப்₃ராஹ்மீ) ப்ரஹ்மத்தை அடைவிக்கிறது; இக்கர்ம யோகமானது ஜ்ஞானபக்தியோகங்களை விளைத்துப் பரப்ரஹ் மத்தை அடைவிக்கிறது. இப்படிப் பொருள் கொள்ளும்போது, "ஸர்வது₃:க்க₂ாநாம் ஹாநிரஸ்யோபஜாயதே" [65] முதலான ச்லோ கங்களில் பரமப்ரயோஜனமாகக் கூறப்பட்ட ஸம்ஸாரநிவ்ருத்தி பூர் வகமான பரப்ரஹ்மப்ராப்தியைக் கூறி முடித்ததாகிறது. அன்றிக்கே, ச்லோகத்தின் பிற்பாதியில் ப்₃ரஹ்மஶப்தத்தாலே ஆத்மாவையே குறிப்பதாக பாஷ்யமிருக்கையாலே, இங்கும் ப்ரஹ்மமெனப்படும அவ்வாத்மாவை இக்கர்மயோகம் அடைவிக்கிறது எனறும் கொள்ள லாம். (ஏநாம் ப்ராப்ய) முற்கூறப்பட்ட தன்மையையுடைய கர்ம யோகநிஷ்டையை அடைந்து- (ந விமுஹ்யதி) தேஹாத்மமயக்கம முதலான மயக்கங்களையும், அதன் பலனான ஸம்ஸாரத்தையும் அடையமாட்டான். (அஸ்யாம் அந்தகாலேபி ஸ்தி₂த்வா) ஆயுளின கடைசிப்பகுதியிலாவது இக்கர்மயோகநிஷ்டையில் நிலைநின்றானா கில். உயிர் உடலைவிட்டுப் பிரியும் காலத்தில் கர்மயோகநிஷ்டை கைகூட இடமில்லையாகையாலே, 'அந்தகாலே' என்னும் பதத்திற்கு 'ஆயுளின் கடைசிப் பகுதியில்' என்றே பொருள் கொள்ளவேண்டும. "உத்தமே சேத்₃வயஸி ஸாது₄வ்ருத்த:" [கடைசி வயஸ்ஸிலாவது நல்லொழுக்கமுடையவனாகில்] என்ற போத₄ாயநஸூத்ரப்ரயோகம் போலே. "அந்தகாலேபி" என்ற அபிசப்தத்தாலே, பா₃ல்ய யௌவனங்களில் விஷயப்ரவணனாயிருந்தபோதிலும், பிறகு பஶ்சாத் தாபத்துடன இதில் இழிய விரும்புகிறவனுக்கும் அதிகாரமுண்டு என்று உணர்த்தப்படுகிறது; இதிலிருந்து, ப்ரஹ்மசர்யம் தொடங்கி இக்கர்மயோகத்தில நிலைநின்றவனுக்குப் பலன் கிடைக்கும் என் பது கிம்புநர்ந்யாயஸித்தம். (அஸ்யாம ஸ்தி₂த்வா) ஸ்தி₂தியெனப் பட்ட இக்கர்மயோகநிஷ்டையில் நிலைநிற்கையாவது கர்மயோக நிஷ்டனாவதேயாகும். (நிர்வாணம் ப்₃ரஹம ருச்சதி) ஸுகமே வடி வெடுத்த ஆத்மாவை அடைகிறான். ஜ்ஞானயோகத்தை லக்ஷ்ய மாகக்கொண்ட கர்மயோகம் ஆத்மப்ராப்தியையே செய்துகொடுக் கிறதாகையாலே இங்கு ப்₃ரஹ்மஶப்தத்தாலே ஆத்மாவைக் குறிப்ப தாகக் கொளவதே உசிதம. (நிர்வாணம்) "காயோ வாணம் ஶரீரம் ச" என்கிறபடியே வாணஶப்தம் சரீரத்தைக் குறிப்பதாய், நிர்வாண ஶப்தம சரீரவியுக்தமாய், ஸுகரூபமான ஆத்மாவைக் குறிக்கிறது.

।। भा ।। एवमात्मयाथात्म्यं युद्धाख्यस्य च कर्मणस्तत्प्राप्तिसाधनतामजानतश्शरीरात्मज्ञनेन मोहितस्य तेन च मोहेन युद्धान्निवृत्तस्य मोहशान्तये नित्यात्मविषया या साङ्ख्यबुद्धिः, तत्पूर्विका च असङ्गकर्मानुष्ठानरूपकर्मयोगविषया बुद्धिः स्थितप्रज्ञतायोगसाधनभूता द्वितीयेऽध्याये प्रोक्ता। तदुक्तं *नित्यात्मासङ्गकर्मेहागोचरा साङ्ख्ययोगधीः।। द्वितीये स्थितधीलक्षा प्रोक्ता तन्मोहशान्तये।। (सं. ६) इति ।।

---

## இவ்வத்யாயார்த்தத்தின் உபஸம்ஹாரம் (முடிவுரை)

ஆத்மாவின உண்மைநிலையையும், யுத்தமானது க்ஷத்ரியனுக்கு அவ்வாத்மாவையடைய உபாயமாயிருக்கிறது என்பதையும் அறியாமல், சரீரமே ஆத்மாவென்று மயங்கி அதனுல் யுத்தத்தினின்றும் கைவாங்கி நிற்கும் அர்ஜுனனைத் தெளிவிப்பதற்காக இவ்வத்தியாயத்தில் முதன்முதலில் நித்யமான ஆத்மாவைப்பற்றிய உண்மையறிவு விளக்கப்பட்டது; அதற்குப்பின, இவ்வாத்ம ஜ்ஞானத்தை முன்னிட்டுக்கொண்டு யுத்தம முதலான தன் வரணுச்ரம த₄ர்மங்களைப் பலனில் விருப்பமற்று அனுஷ்டிப்பதாகிற கர்மயோகம, ஸ்தி₂தப்ரஜ்ஞநிலை எனப்படும ஜ்ஞானயோகத்தைவிளைத்து அதன மூலம் ஆத்மஸாக்ஷாத்காரத்தை அடைவிக்கிறது என்று நிரூபிக்கப்பட்டது. இவ்விஷயத்தையே ஆளவந்தாரும், கீதார்த்தஸங்க்ரஹத்திலே,

"நித்யாத்மாஸங்க₃கர்மேஹாகோ₃சரா ஸாங்க்₂யயோக₃தீ₄:।
த்₃விதீயே ஸ்தி₂ததீ₄லக்ஷா ப்ரோக்தா தந்மோஹஶாந்தயே||"

*[கீதார்த்தஸங்க்ரஹம-6]*

*[என்றுமிருக்கும் ஆத்மதத்துவத்தையும், பற்றற்ற கர்மாநுஷ்டானத்தையும் விஷயமாகக்கொணடதாய், ஸ்தி₂தப்ரஜ்ஞநிலையை லட்சியமாககொண்டதான ஆத்மஜ்ஞானமும, கர்மயோகஜ்ஞானமும அர்ஜுனனின் மயக்கம் நீங்குவதற்காக இரண்டாம அத்தியாயத்தில் உபதேசிக்கப்பட்டது.]* எனறு அருளிச்செய்தாரனறே.

ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி தாஸன் இயற்றிய கீதார்த்த விவரணத்தில்
இரண்டாமத்தியாயம் முற்றிற்று.

## பகவத் கீதை வெண்பா

(இரண்டாமத்தியாயத்தின் ஸாரத்தைக் கூறும் பாசுரம்)

ஆய னருள்கீதை யாய்ந்தவிரண் டாமோத்தின்
மேய வுயிர்நிலைமை மெய்ம்முடிவு—தூய்மனத்தர்
ஆன்றதுணி வாற்ற லமைந்தா ரமர்பொருள்க
ளென்றவகை தான்முடிந்த தீங்கு.

வாதிகேஸரி ஜீயர் அருளிய பகவத்கீதை வெண்பாவில்
இரண்டாமத்தியாயம் நிறைவுபெற்றது.

**ஆயன்**—*கண்ணன்.* **அருள்**—*அருளிய.* **கீதை**—*கீதையின்.* **ஆய்ந்த**—*ஆராய்ச்சிமிக்க.* **ஈங்கு இரண்டாம் ஓத்தில்**-*இந்த இரண்டாமத்தியாயத்தில்.* **மேய உயிர் நிலைமை மெய் முடிவு**—*நித்யமான ஆத்மாவின் நிலையைப்பற்றிய உண்மையான நிச்சயரூபமான அறிவென்ன.* **தூய் மனத்தர்**-*(பலன்களில் பற்றற்றிருக்கையாலே) பரிசுத்தமான மனத்தையுடையவர்களாய்.* **ஆன்ற துணிவு**—*(முற்கூறிய) ஆத்மதத்வ நிச்சயத்தையும்,* **ஆற்றல்**-*கர்மங்களை அனுஷ்டிக்கும் திறமையையும்.* **அமைந்தார்**—*பெற்றிருப்பவர்கள்.* **அமர் பொருள்கள்**—*அடையும் பலன்களான ஞானயோகமென்ன ஆத்மஸாக்ஷாத்காரமென்ன,* **என்ற வகை தான்**—*ஆகிய விஷயங்கள்.* **முடிந்தது**—*விளக்கிமுடிக்கப்பெற்றன.*

## கீதார்த்த சங்கிரகம்

(ஸ்ரீவேதாந்ததேசிகர்)

இரண்டாமத்தியாயத்தின் ஸாரப்பொருள்

3. உடல மழிந்திடு முள்ளுயி ரொன்றழி யாதெனைப்போல்
விடுமது பற்று விடாத தடைத்த கிரிசைகளே
கடுக வுனக்குயிர் காட்டு நினைவத னுளதாம்
விடுமய லென்று விசயனைத் தேற்றினன் வித்தகனே,

**வித்தகன்**-*ஆச்சரியமான ஸ்வரூபரூபகுணவிபூதி சேஷ்டி தங்களையுடைய கண்ணன்,*—"**உடலம்**-*சரீரம்,* **அழிந்திடும்**-*அழிந்து போகும்; (ஆனால்)* **உள் உயிர் ஒன்று**—*அந்த சரீரத்தினுள் அவயவங்களற்றதாயிருக்கும் ஆத்மா,* **எ(ன்)னைப் போல்**—*(பரமாத்மாவாகிய) என்னைப்போலே,* **அழியாது**— *அழிவில்லாமலிருக்கும்;* **பற்று**— *(பலனில்) பற்றே,* **விடும் அது**—*விடத்தக்கதாகும்;* **அடைத்த கிரிசைகளே**-*விதிக்கப்பட்ட கருமங்களோவெனில்,* **விடாதது**-*விடத்தகாதவையாகும்;* **அதனால்**— *பயனில் பற்றில்லாமல் செய்யப்படும் அக்கர்மயோகத்தால்,* **உயிர் காட்டும் நினைவு**-*ஆத்மஸ்வரூபத்தை நேரே காட்டக்கூடிய ஸ்திதப்ரஜ்ஞநிலை எனப்படும் ஞானயோகம்,* **கடுக**— *விரைவில்,* **உனக்கு உளதாம்**—*உனக்கு உண்டாகும்;* **மயல் விடு**—*'தேஹமே ஆத்மா' என்னும் மயக்கத்தை விடு"* **என்று**—*என்று,* **விசயனை**— *அர்ஜுனனை,* **தேற்றினன்**— *தெளிவடையச் செய்தான்.*

## கீதாச்லோகார்த்தச் சுருக்கம்

### முதலிரண்டு அத்தியாயங்கள்

முதலத்தியாயமும், இரணடாமத்தியாயத்தில் பத்து ச்லோகங்கள் முடியவும் சாஸ்திரம் அவதரித்த சந்தர்ப்பத்தைக்கூறும் அவதாரிகையாகிறது. மேலேயுள்ள ச்லோகங்களின் அர்த்தச்சுருக்கத்தைக் காட்டுவோமினி.

| ச்லோ. | அர்த்தம். |
|---|---|
| 11–13. | ப்ராப்யமான ஆத்மா நித்தியமானது; ப்ராப்தி விரோதியான சரீரம் அநித்தியமானது. |
| 14–15. | ப்ராப்திக்கு உபாயமான யுத்தம் முதலான கர்மங்களை அநுஷ்டிப்பதால் ஏற்படும் இன்பதுன்பம் முதலானவற்றைப் பொறுத்துக் கொள்ளுகிறவனே மோக்ஷமடையலாம். |
| 16–25. | உத்பத்தி, விநாஸம், பரிணமம் முதலான தன்மைகள் எல்லாம் தேஹத்தினுடையவையே; ஆத்மாவுக்கு இவை கிடையாது. |

26–28. தேஹத்தைக் காட்டிலும் வேறான ஆத்மா இல்லை என்று நினைத்தாலும், நேர்ந்தே தீரவேண்டிய ஜந்மமரணங்களைக் குறித்து வருந்த இடமில்லை.

29. ஆத்மநித்யத்வ ப்ரஸமஸை.

30. ஆத்மநித்யத்வம் எல்லா ஆத்மாக்களுக்கும் பொதுவானது.

31–34. யுத்தம் இம்மைமறுமைகளில் நன்மையை விளைக்கும் தர்மமேயொழிய அதர்மமாகாது.

35–37. உறவினர் முதலான தகாதவிடத்தில் அன்பாலே போர் புரியாமலிருப்பதும் தவறு. (இதுவரையில் அஸ்தான ஸ்நேஹகாருண்யமும், தர்மத்தை அதர்மமென மயங்குவதும் போக்கடிக்கப்பட்டது. இனி, தர்மவிஷயமான உபதேசம்.)

38. மோக்ஷமடைய விரும்புகிற க்ஷத்ரியன் இன்பதுன்பங்கள் முதலானவற்றில் ஸமபுத்தியுடன் போர்புரியவேண்டும்

39–52. பலனில் பற்றற்று, அகர்த்ருத்வாநுஸந்தானத்துடன் தனக்குரிய கர்மங்களை அனுஷ்டிப்பதாகிற கர்மயோகம் மோக்ஷஸாதனமாகும்; பலனில் பற்றுடன் அனுஷ்டிக்கும் கர்மம் தாழ்ந்தது.

53. முற்கூறிய கர்மயோகத்தின் பலமான ஜ்ஞானயோகத்தின் பலமாயிருப்பது யோகம் எனப்படும் ஆத்மஸாக்ஷாத்காரம்.

54–58. ஸ்திதப்ரஜ்ஞநிலை எனப்படும் ஜ்ஞானயோகத்தின் நான்கு நிலைகளின் விவரணம்.

59–68. ஞானயோகம் அடைய அரியது; திவ்யமங்கள விக்ரஹத்தோடு கூடிய பரமபுருஷனிடம் நெஞ்சு செலுத்துகிறவனுக்கே அதுஸித்திக்கும். அப்படிச் செலுத்தாதவனுக்கு ஸித்திக்காது.

69–71. ஞானயோகத்தின் பலமான ஆத்மதர்சனத்தின் பெருமையும், அதை அடையும் மூன்றுவிதமான அதிகாரிகளும்.

72. அத்தியாயத்தின் ஸாரார்த்தம்.



## ஆளவந்தார் அருளிய
# கீதார்த்த ஸங்க்ரஹம்
[ மூன்றுவது அத்தியாயத்தின் சுருக்கம் ]

असक्त्या लोकरक्षायै गुणेष्वारोप्य कर्तृताम्।
सर्वेश्वरे वा न्यस्योक्ता तृतीये कर्मकार्यता ॥ ७ ॥

*7. அஸக்த்யா லோகரக்ஷாயை கு₃ணேஷ்வாரோப்ய கர்த்ருதாம் ।*
*ஸர்வேஶ்வரே வா ந்யஸ்யோக்தா த்ருதீயே கர்மகார்யதா ॥*

**லோகரக்ஷாயை**–*(ஜ்ஞாநயோகத்தில் அதிகாரமில்லாத) ஜனங்களைக் காப்பதற்காக,* **கு₃ணேஷு**—*ஸத்வ ரஜஸ்தமோ குணங்களில்,* **கர்த்ருதாம் ஆரோப்ய**—*தன்னிடமுள்ள கர்த்ருத்வத்தை அநுஸந்தித்து,* **ஸர்வேஶ்வரே வா ந்யஸ்ய**—*அந்த குணங்கள் முதலான அனைத்துக்கும் ஈஶ்வரனான பகவானிடத்திலாவது அக்கர்த்ருத்வத்தைச் சேர்த்துவிட்டு* **அஸக்த்யா**—*மோக்ஷம் தவிர்ந்த மற்ற பலன்களில் பற்றில்லாமல்,* **கர்மகார்யதா**—*கர்மங்களைச் செய்யவேண்டும் என்பது,* **த்ருதீயே உக்தா**—*மூன்றுமத்தியாயத்தில் கூறப்பட்டது.*

---

## ஸ்ரீ க்ருஷ்ணஸ்வாமி தாஸன் இயற்றிய
# கீதார்த்த விவரணம் மூன்றுமத்தியாயம்

**மூன்றுவது அத்தியாயார்த்தச் சுருக்கம்:**—சென்ற அத்தியாயத்தில் கர்மயோகத்திற்குப் பிறகு ஞானயோகம் செய்யவேண்டும் என்று கூறப்பட்டது, உலகில் பல அதிகாரிகளுக்கு ஞானயோகத்தை அனுஷ்டிக்கத்தக்க ஜ்ஞாநசக்திகள் கைகூடாது. அவர்கள் ஞானயோகத்தைச் செய்யமுயன்றால், அதைச்செய்ய முடியாமல் நாசத்தை அடைவர். இவர்களும் தனனைப்பார்த்து ஞானயோகத்தில் இழிந்து நாசத்தையடையாமலிருப்பதற்காக, ஞானயோகத்தைச் செய்யவல்ல அதிகாரியும் ஞானத்தோடு கூடிய பற்றற்ற கர்மயோகத்தையே அநுஷ்டிக்கவேண்டும் என்றும், அதனாலேயே ஸித்திபெறலாம் என்றும் கூறுகிறது மூன்றுமத்தியாயம். ஆனால் இப்படிக் கர்மயோகத்தைச் செய்யும்போது 'நான்

## வாதிகேஸரி ஜீயர் அருளிய
# பகவத்கீதை வெண்பா அத்தியாயம் 3.
## கர்மயோகம்

*மூன்ருமோத் தாகுமிது முன்னுரைத்த புந்தியினும்*
*ஏன்ரு வதுகரும மென்பதனு—லான்றமைந்து*
*தன்கருமஞ் செய்யுமதே தக்கதென மிக்குரைக்கும்*
*வன்கருமந் தீரும் வகை.*

*முன் உரைத்த புந்தியினும்*—முன் அத்தியாயத்தில் கூறப்பட்ட ஞானயோகத்தைக் காட்டிலும், *ஏன்று ஆவது கருமம்*— (அனே வரும்) ஏற்றுக்கொள்ளத்தக்கதாயிருப்பது கருமயோகமே. *என் பதனுல்*—என்னும் காரணத்திஞல், *ஆன்று அமைந்து*—மற்ற பலன்களில் பற்றில்லாமல் இருந்துகொண்டு. கர்த்ருத்வத்யாகத்தை யும் செய்து கொண்டு, *தன் கருமம் செய்யுமதே*—தன்னுடைய வர்ணுச்ரமதர்மங்களேச் செய்வதே, *வன் கருமம் தீரும் வகை*— வலியதான புண்ணிய பாபரூபமான கருமங்களேப் போக்கும் வழி களுள், *தக்கது*— (அனேவருக்கும்) தக்கது, *என*—என்று, *மூன்ரும் ஓத்தாகும் இது*—இந்த மூன்ரும் அத்தியாயம், *மிக்கு உரைக்கும்*— உறுதியுடன் கூறும்.

---

செய்பவன்' என்று கர்த்ருத்வத்தைத் தன்னிடமே உள்ளதாக நினேயாமல், முக்குணங்களால் தூண்டப்பெற்றே தான் காரியம் செய்கையாலே அந்த முக்குணங்களே செய்கின்றன என்று கர்த் ருத்வத்தை அவற்றினிடத்தில் அநுஸந்திக்கவேண்டும் இவன். அல்லது, குணங்கள் இவனேக் கர்மம செய்யத்தூண்டும் சக்தியைப் பெற்றிருப்பதும் ஸர்வேஶ்வரனுலேயேயாகையாலும், அவனே இச் சேதனனேயும் உட்புகுந்து கர்மம் செய்யும்படி நியமிக்கிருனகை யாலும், தன்னிடமேயுள்ளதாகத்தோன்றும் கர்த்ருத்வத்தை ஸர் வேஶ்வரனிடம் உள்ளதாக இவன அநுஸந்திக்கவேண்டும். இது கர்த்ருத்வத்யாகம் எனப்படுகிறது. ஆக, 'ஸர்வேஶ்வரன் நிய மிப்பதால், குணங்களால் தூண்டப்பட்டு நான் கர்த்தாவாகிறேன்' என்கிற விவேகத்துடன் இவன் கர்மயோகத்தைச் செய்யவேண்டும் என்றதாயிற்று. இப்படிக் கர்மயோகத்தின் பெருமையைக் கூறுகிறபடியால் இவ்வத்தியாயம் "கர்மயோகம்" என்று அழைக்கப்படுகிறது.

श्रीः
श्रीमते रामानुजाय नमः
श्रीभगवद्रामानुजमुनिभिरनुगृहीते

# गीताभाष्ये तृतीयोऽध्यायः

॥ भा ॥ तदेवं मुमुक्षुभिः प्राप्यतया वेदान्तोदितनिरस्तनिखिलाविद्यादिदोषगन्धानवधिकातिशयासंख्येयकल्याणगुणगणपरब्रह्मपुरुषोत्तम -

---

## முன்பின் அத்தியாயங்களோடு ஸங்கதி

மோக்ஷமடைய விரும்பும் முமுக்ஷுக்களுக்கு ப்ராப்யனுயிருப்பவன் நாராயணன என்றும, புருஷோத்தமன் என்றும் வேதாந்தங்களிலும், உபப்₃ரும்ஹணங்களிலும் அழைக்கப்படும் பரம் பொருள். "ப்ர₃ஹ்ம வித₃ாப்நோதி பரம்" [தை-ஆ 1] [ப்ரஹ்மத்தை அறிந்தவன் மேலானதை அடைகிருன்.] "ஏஷ ஸம்ப்ரஸாத₃: அஸ்மாச்ச₂ரீராத ஸமுத்த₂ாய பரஞ்ஜ்யோதிருபஸம்பத்₃ய ஸ்வேந ரூபேணுபி₄ நிஷ்பத்₃யதே" [சாந் 8-3-4] [இந்த ஜீவன இவ்வுடலினின்றும் கிளம்பி பரஞ்சோதியான நாராயணனே அடைந்து தன் ஸ்வரூப விளக்கத்தைப் பெறுகிருன்.] "பராத் பரம் புருஷமுபைதி தி₃வ்யம்" [முண்ட 3-2-4] [மேலானதைக் காட்டிலும் மேலானவனுன திவ்யபுருஷனே அடைகிருன.] "ரஸம் ஹ்யேவாயம் லப்₃த்₄வா நந்தீ₃ப₄வதி" [தை-ஆ 7] [ரஸஸ்வரூபனுன பரமாத்மாவை இந்த ஜீவன் அடைந்து ஆநந்தமுடையவனுகிருன.] "பரமம் ஸாம்யமுபைதி" [முண்ட 3-1-3] [பரமபுருஷனேடு ஜீவன் மேலான ஒற்றுமையை அடைகிருன்.] முதலான நூற்றுக்கணக்கான வேதவாக்யங்களிலும், ஸூத்ரங்களிலும், வேதத்தையொட்டியிருக்கும் ஸ்மருதிகளிலும் மோக்ஷமடைநத பின்பும் இப்பரம் பொருளுக்கும் ஜீவனுக்கும் வேற்றுமையுண்டென்று கோஷிக்கப் பட்டிருக்கையால், இந்த ஜீவனே ப்ராப்தாவென்றும, ப்ரஹ்மத்தை ப்ராப்யமென்றும் கொள்ளககுறையில்லை. பல கல்யாணகுணங்களே உடையவனென்று பலவேதவாக்யங்களில் கோஷிககபபடும இவனேச் சில வேதவாக்யங்கள் 'நிர்க்குணம' எனறு கூறுவது, தாழ்ந்த குணங்களின் நாற்றமும் இவனிடம் இல்லை எனனும கருத்தினுலேயே. ஸகு₃ணவாக்யங்கள் எல்லையற்றவையாய், எண்ண முடியாதவையான கல்யாணகுணங்கள இவனிடம் உள்ளனவென்று கோஷிக்கினறன. நிர்க்குணவாக்யங்கள, ஸத்வம் முதலான பிரகிருதியின் குணங்களும், அவற்றுல் ஜீவனுக்கு ஏற்படும அஞ்ஞானம் முதலான தீய குணங்களும் இப்பரமாத்மாவிடம இல்லை

प्राप्त्युपायभूतवेदनोपासनध्यानादिशब्दवाच्यां तदैकान्तिकात्यन्तिकभक्तिं वक्तुं तदङ्गभूतं * य आत्माऽपहतपाप्मा (छा. ८. ७. १) इत्यादि-

---

யென்று கோஷிக்கின்றன. ஆகையாலே ஸகுண நிர்க்குணவாக்ய விரோதமில்லை. இப்பரம் பொருளையே காரணவாக்யங்கள ஜகத் காரணப்பொருளாக கோஷிக்கின்றன. "ஸத்யம் ஜ்ஞானம்" முதலான ஸோதகு (ஸ்வரூபத்தைச் சொல்லும) வாக்யங்கள் இவ னுடைய திவ்யாத்மஸ்வரூபத்தைச் சொல்லுகின்றன. "நாராயண பரம் ப்3ரஹ்ம" என்று பரப்ரஹ்மமாக இவன் கோஷிக்கப்படுவ தாலும, இவனே எல்லாமாக இருக்கிறான் என்றும் இருந்தா னென்றும், எல்லாவற்றையும் படைக்கிறான் என்றும் வேதவாக் யங்களில் ஓதப்படுவதாலும் இந்தப் பரமபுருஷன் குடத்திற்கு மண்போலே உலகிற்கு உபாதானகாரணமாகவும், குடத்திற்குக் குயவன் போலே நிமித்தகாரணமாகவுமிருக்கிறான் என்று விளங்கு கிறது. ப்ரளயகாலத்தில் ஸூக்ஷ்மசேதநாசேதனங்களோடு கூடிய இவனே, ஸ்ருஷ்டி காலத்தில ஸ்தூலசேதநாசேதனங்களை உடைய வனாகிறானாகையால் இவனே உலகிற்கு உபாதானகாரணம் என்னக் குறையில்லை. "பூர்வபத3ாத் ஸம்ஜ்ஞாயாமக3:" என்னும் ஸூத்ரத் தின்படி நாராயணஶப்தம் இவனைத்தவிர வேறு எந்ததேவதையை யும் குறிக்கமாட்டாதாகையால, ஸத், ப்ரஹ்ம, ஆத்மா முதலான ஸாமாந்யஶப்தங்களால் பல காரணவாக்யங்களில் அழைக்கப் பட்டிருப்பவன, "ஏகோ ஹ வை நாராயண ஆஸீத்" என்னுமிடத் தில் நாராயணன் என்று கோஷிக்கப்படும் இவனே என விளங்கு கிறது. ஆகையால் மும்மூர்த்திகளும் ஓருவரே என்றும், ஒத்த வரே என்றும், மும்மூர்த்திகளிலும மேற்பட்டதொன்றே பரம் பொருள் எனறும் மும்மூர்த்திகளிலும் பிரமனோ சிவனோ காரண மென்றும் கூறும் பக்ஷங்கள் தள்ளப்பட்டவையாகின்றன. இதனாலேயே "ஸ உத்தம: புருஷ:" [சாந் 8-12-3] என்று ச்ருதியிலும், "உத்தம: புருஷஸ்த்வந்ய:" [கீதை 15-17] என்று தொடங்கி இந்த கீதை யிலும் புருஷோத்தமன் என்று கோஷிக்கப்படுகிறானிவன்.

இவனைப் பெறுவதற்கு ஜ்ஞாநகர்மங்களின் கூட்டரவு உபாய மென்று சிலரும் ஞானமாத்திரம் அல்லது கர்மமாத்திரம் உபாய மென்று சிலரும் கூறுவர். அப்பக்ஷங்கள அனைத்தும் பொருந்த மாட்டா. ஜ்ஞாநகர்மங்களை அங்கமாகக் கொண்ட பக்தியே இவனைப் பெற உபாயம் என்று வேதாந்தங்களிலே பரக்கப் பேசப்பட்டிருக்கிறது. "ப்ரஹ்மவேத3" "புருஷம்வேத3" முதலான விடங்களில் * வேத3நம் (அறிதல்) என்றும், "உபாஸீத" என்று

பலவிடங்களில் * உபாஸனம் என்றும், "த்$_4$யாயுத$_2$" என்று பல விடங்களில் * தியானம் என்றும் படிப்படியாக * ஸாமாந்யவிஶேஷ ஶப்தங்களாலே கூறப்படுவது இந்த * பக்தியே. "வேத$_3$ாஹமேதம்–நாந்ய: பந்த$_2$ா: வித்$_3$யதேயநாய" முதலான விடங்களில் இந்த பக்தியே இவனையடைய உபாயம என்றும், முற்கூறிய ஜ்ஞாந கர்மஸமுச்சயம் முதலானவை இவனையடைய உபாயமாகமாட்டா என்றும கோஷிக்கப்பட்டிருக்கிறது. மற்ற தேவதைகளையும், மற்ற பலன்களையும் கைவிட்டு ப்ராப்யமாகவும உபாயமாகவும் உள்ள பரமபுருஷன் ஒருவனையே பற்றியிருப்பதாய்–ஐகாந்திகமாய்–இருக்கிறது இந்த பக்தி.

"ப்$_3$ரஹ்மாணம் ஶிதிகண்ட$_2$ஞ்ச யாஶ்சாந்யா தே$_3$வதா: ஸ்ம்ருதா: ।
ப்ரதிபு$_3$த்$_3$த$_4$ா ந ஸேவந்தே யஸ்மாத் பரிமிதம் ப$_2$லம் ॥"
[ பார-சாந்தி 350-36 ]

[ பிரமனையும், சிவனையும், மற்றுமுள்ள தேவதைகளையும் அறிவாளிகள் உபாஸிப்பதில்லை; ஏனெனில்: அவர்களிடமிருந்து அளவு பட்ட பலன்களேயன்றோ கிடைக்கும்.] என்று மற்ற தேவதைகளையும் மற்ற பலன்களையும் மோக்ஷார்த்திகள் கைவிட வேண்டுமென்று மஹாபாரதத்திலும் பேசப்பட்டது. "ப$_4$க்த்யா த்வநந்யயா" [11-58] "மயி சாநந்யயோகே$_3$ந ப$_4$க்திரவ்யபி$_4$சாரிணீ" [13-10] என்று கீதையிலும் இவ்விஷயம் பின் அத்தியாயங்களில் வருகிறது. இந்த பக்தியானது மோக்ஷநிலையிலும் தொடர்ந்து வருவது; இவ்வண்ணமாக 'அந்தம்' எனப்படும் விநாஶமற்றிருக்கையால் இது ஆத்யந்திக பக்தி என்று கூறப்படுகிறது. இப்படியாக பக்தி ஒன்றே உபாயதசை தொடங்கிப் பலதசையீருக மேன்மேலும் வளர்ந்து எல்லையற்றதாகிறது. இந்த பக்தியை ஏழாவது அத்தியாயம் தொடங்கிப் பனிரண்டாவது அத்தியாயம் முடியவுள்ள மத்$_4$யம ஷட்கத்தில் (நடுவிலுள்ள ஆறு அத்தியாயங்களில்) உபதேசிக்கப் போகிருன் கண்ணன். இந்த பக்திக்கு அங்கமாயிருப்பது "ய ஆத்மாபஹதபாப்மா" [ சாந் 8-7-1 ] என்று தொடங்கும் ப்ரஜாபதி வாக்யத்தில் சொல்லப்படுவதான (ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை உள்ளபடி காண்பதாகிற) ஆத்மதர்ஶனமென்றும், அவ்வாத்மாவின உண்மையறிவை முனனிட்டுக்கொண்டு பற்றற்ற கர்

* வேத$_3$னமாவது–அறிதல்; உபாஸனமாவது–அடிக்கடி அறிதல்; த்$_4$யாநமாவது–இடைவிடாமல் அறிதல்; பக்தியாவது–ப்ரீதியோடு இடைவிடாமல் அறிதல்; ஆகையாலேயே இவை படிப்படியாக ஸாமாந்யவிஶேஷ ஶப்தங்களாகின்றன.

प्रजापतिवाक्योदितं प्राप्तुरात्मनो याथात्म्यदर्शनं तन्नित्यताज्ञानपूर्वका-सङ्गकर्मनिष्पाद्यज्ञानयोगसाध्यमुक्तम्। प्रजापतिवाक्ये हि दहरवाक्यो-दितपरविद्याशेषतया प्राप्तुरात्मनस्स्वरूपदर्शनं * यस्तमात्मानमनुविद्य विजानाति (छा. ८. ७. १) इत्युक्त्वा जागरितस्वप्नसुषुप्त्यतीतं प्रत्यगात्मस्वरूपमशरीरं प्रतिपाद्य * एवमेवैष संप्रसादोऽस्माच्छरीरात्स-मुत्थाय परं ज्योतिरुपसंपद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते (छा. ८. १२. २)

---

மங்களை அனுஷ்டிப்பதாகிற கர்மயோகத்தாலே அவ்வாத்மாவிலே நிலைநிற்கையாகிற ஜ்ஞானயோகமுண்டாகி, அந்த ஜ்ஞாநயோகத் தாலே அவ்வாத்மதர்சனம ஏற்படுகிறது எனறும சென்ற அத்தி யாயத்தில் கூறி முடிக்கப்பட்டது.

பகவத்பக்திக்கு ஆத்மதர்ஶனம் அங்கமாகும் என்றது எப்படி யெனில்: சாந்தோக்ய உபனிஷத்தில் எட்டாவது ப்ரபாடகத்தின முதல் கண்டத்திலிருந்து ஆறுவது கண்டம் முடியவுள்ள ஆறு கண்டங்களில் பகவதுபாஸனத்தைச் சொல்லும் முப்பத்திரண்டு வித்யைகளில் ஒன்றான தஹரவித்யை விவரிக்கப்பட்டது. ஏழா வது கண்டத்திலிருந்து தொடங்கியுள்ள ப்ரஜாபதி வாக்யத்தில் ''ஸ ஸர்வாந் லோகாநாப்நோதி ஸர்வாம்ஶ்ச காமாந் யஸ்தமாத்மாந மநுவித்₃ய விஜாநாதி' [சாந் 8-7-1] [எவன் அவ்வாத்மாவை சாஸ்திர வாக்கியங்களிலிருந்து அறிந்து, தியானிக்கிறானோ, அவன் எல்லா உலகங்களையும், காமங்களையுமடைகிறான்] என்று தொடங்கி ப்ரத்யகா₃த்மவித்யை விவரிக்கப்படுகிறது. ஜீவாத்ம ஸ்வரூபத்தை அறிவதற்காக தேவர்களில் இந்திரனும், அஸுரர் களில் விரோசனனும பிரஜாபதியாகிற பிரமனை அடைந்தனர்; முதலில் அவர் நீரில் தோன்றும் பிரதிபிமபமே ஆத்மா என்று உபதேசித்து அவர்களை அனுப்பினார். விரோசனன் இதில் திருப்தி யடைந்து விட்டான; தேஹத்தினுடைய இந்தப் பிரதிபிமபம ஆத்மாவாயிருக்கமுடியாது எனறு ஐயமுற்ற இந்திரன் திரும்பவும பிரஜாபதியிடம் வந்து தான் இதை இனியதாகக் கருதவில்லை என்று கூறினான். அதற்குப்பின் படிப்படியாக விழிப்புநிலை, ஸ்வப்நநிலை, தூங்கும்நிலை ஆகியவற்றிலிருக்கும் ஜீவாத்மாவை உபதேசித்தார்; இவையெல்லாம் இனியவையல்ல எனறு இந்திரன் கூற, அவனுடைய தகுதியை அறிந்து பிரமன ''அஶரீரம் வாவ ஸந்தம் ந ப்ரியாப்ரியே ஸ்ப்ருஶத:'' [சாந் 8-12-1] [கர்மத்தாலேற் படும் சரீரமற்றிருப்பவனை ஸுகதுக்கங்கள் தொடமாட்டா] என்று

ஜீவாத்மாவின் பரிசுத்தமான ஸ்வரூபத்தை உபதேசித்தான். கடைசியில் "ஏவமேவைஷ ஸம்ப்ரஸாதே₃ாஸ்மாச்சரீராத் ஸமுத்த₂ாய பரம் ஜ்யோதிருபஸம்பத₃ய ஸ்வேந ரூபேணாபி₄நிஷ்பத்₃யதே [சாந் 8-12-2] [இப்படியே இந்த ஜீவன் இந்த சரீரத்திலிருந்து கிளம்பிப் பரஞ்சோதியை அடைந்து தன் ஸ்வரூபவிளக்கம் பெறுகிறுன்.] என்று பலனும் ஓதப்பட்டது. இந்த ப்ரஜாபதிவாக்யமானது தஹரவித்யாப்ரகரணத்தில் உள்ளது; ப்ரஜாபதி வாக்யத்தில் கூறப்படும் ஜீவாத்மதர்ஶனத்திற்கு இந்தக் கடைசி வாக்யத்தில் கூறப்படும் பரமாத்மப்ராப்தியைத் தவிர வேறு பலன் எதுவும ஓதப்படவில்லை. ஜீவாத்மதர்ஶனத்திற்கே பரமாத்மப்ராப்தி பல மாகக் கூறப்படுகிறதென்று கொண்டால், "யதே₂ாபாஸநம் ப₂லம்" [எதை உபாஸிக்கிறுனே அதுவே பலனுகக்கிடைக்கும்] என்னும தத்க்ரதுந்யாயவிரோதமும், "வேத₃ாஹமேதம் புருஷம் மஹாந்தம்–நாந்ய: பந்த₂ா வித்₃யதேயநாய" [பு-ஸூ] [இந்த மஹாபுருஷனை உபாஸிக்கிறேன்; மோக்ஷமடைய வேறு வழியில்லை.] என்று பகவதுபாஸநமே அவனையடைய வழி என்று கோஷிக்கும் வாக்கி யங்களின் விரோதமும் ஏற்படும். "பரம் ஜ்யோதிருபஸம்பத்₃ய" என்று பரஞ்சோதியை இந்த ஜீவன் அடைவதாக இங்கு கூறுகை யாலும "நாராயணபரோ ஜ்யோதி:" என்று பரமாத்மாவான நாராயணனையே பரஞ்சோதியாக மற்ற வேதவாக்யங்கள் கூறு கையாலும், தஹரவித்யையில் முன்னுள்ள (8-3-4) வாக்கியத்தி லும் பரமாத்மாவையே பரஞ்சோதியென்கையாலும், இவ்வாக்யத் தில் ஜீவனே பரஞ்சோதி எனப்பவதாகக்கொண்டு ஜீவாத்ம ப்ராப்தியே பலனுகக் கூறப்படுகிறது என்றும் கொள்ளமுடியாது. மேலும், ஜீவன் பரமனை அடைகிறுன் என்று கூறுகையாலே அடைபவனுன ஜீவனைக்காட்டிலும், அடையப்படுபவனுன பரமன் வேறுபட்டவனுகவேயிருக்கவேண்டும். ஜீவன், பரமபுருஷனை அடைந்தவுடன் நித்யமுக்தர்கள் அடையும் எல்லையற்ற ஸ்வா ராஜ்யபோகம், துன்பமின்மை முதலானவற்றைப் பெறுவதாக வும ஓதப்படுகிறது. ஆகையால் இங்கு ஜீவாத்மப்ராப்தியே பலன் என்று கூறமுடியாது. ஆகையால முதலில் படிக்கப்பட்ட ப்ரஹ்மவித்யையான தஹரவித்யையின் பலனே, ப்ரஜாபதிவாக் யத்தில் ப்ரத்யக₃ாத்மவித்யையின் பலனுகப்படிக்கப்படுகிறது என விளங்குகிறது. ஆக, இந்த ப்ரத்யகாத்மவித்யைக்குத் தனித்து ஒரு பலன் படிக்கப்படவில்லை. ஆகையால், "ப₂லவத் ஸந்நிதா₂ாவ ப₂லம் தத₃ங்க₃ம்" [பலனையுடைய ஒன்றின் அருகில் படிக்கப்படும் பலனற்ற மற்றென்று முனனதின் அங்கமாகும்.] என்னும் பூர்வ மீமாம்ஸாநியாயப்படி ப்ரஹ்மப்ராப்தியைப் பலனுக உடைய தஹர வித்யையின் அருகில் படிக்கப்படுவதாய், தனிப்பலனற்றதான

इति दहरविद्याफलेनोपसंहृतम्। अन्यत्रापि * अध्यात्मयोगाधिगमेन देवं मत्वा धीरो हर्षशोकौ जहाति (क. २. १२) इत्येवमादिषु देवं मत्वेति विधीयमानपरविद्याङ्गतया अध्यात्मयोगाधिगमेनेति प्रत्यगात्म-ज्ञानमपि विधाय * न जायते म्रियते वा विपश्चित् (१८) इत्यादिना

---

ப்ரத்யகாத்மவித்யை தஹரவித்யைக்கு அங்கம் என விளங்குகிறது. ஆகையால் ஆத்மதர்ஶநம், பகவத்பக்திக்கு அங்கம என்னக் குறையில்லை.

" ந ஜாயதே ம்ரியதே " முதலான பல ஸமாநஶப்தார்த்தங்களையுடைய வாக்யங்களைக்கொண்டதாகையால் கீதைக்கு * உபப்ரும்ஹ்யம் என்று நிர்ணயிககத்தக்க கடவல்லியிலிருந்தும் பகவத் பக்திக்கு ஆத்மதர்ஶனம் அங்கம் என்று அறியத்தக்கதாயிருக்கிறது. " அத்$_4$யாத்மயோக$_3$ாதி$_4$க$_3$மேந தே$_3$வம் மத்வா தீ$_4$ரோ ஹர்ஷஶோகௌ ஜஹாதி " [கட 2-12] [மனத்தை ஆத்மாவில் நிறுத்துவதன் மூலம ஜீவாத்ம தர்சனத்தை அடைந்து அதன் பலனுகப் பரமபுருஷனை உபாஸித்து, உபாஸகன் இவ்வுலக இனபதுன்பங்களைக் கைவிடுகிருன்.] என்பது கடவல்லியிலுள்ளதொரு மந்திரம. இங்கு, அத்$_4$யாத்மயோக$_3$ாதி$_4$க$_3$மேந " என்று பரமாத்ம ஜ்ஞானத்தைச் சொல்லுவதாகக்கொண்டால் "தே$_3$வம மத்வா" எனறு பரமாத்ம ஜ்ஞானத்தை அதனுல் ஸாதிக்கப்படுவதாகக் கூறுவது ஒட்டாது, ஶாஸ்திரத்தினுல் ஏற்படும் அறிவை யோகம் என்று கூறுவதில்லையாகையால், " அத்$_4$யாத்மயோக$_3$ாதி$_4$க$_3$மேந " என்று அவ்வறிவைக் கூறுவதாகவும் கொளளமுடியாது. "(ஶாஸ்த்ரேண) தே$_3$வம் மத்வா அத்$_4$யாத்மயோக$_3$ாதி$_4$க$_3$மேந" [(சாஸ்திரத்தினுல்) தேவனை அறிந்து, பரமாத்மஜ்ஞானத்தினுல் (இன்பதுன்பங்களை விடுகிருன்)] எனறு பொருளகொள்வதில அந்வயத்தைத் தலைகீழாக மாற்றுவது, அத்யாஹாரம் முதலான தோஷங்கள் உள்ளன. பரமாத்மாவைப் போலே ஜீவனைப்பற்றிய விசாரமும் இப்ரகரணத்தில் ஏற்பட்டுள்ளது. ஆகையால, " தே$_3$வம் மத்வா " என்று விதிக்கப்படும் பரவிதயைக்கு அங்கமாக, " அத்$_4$யாத்மயோக$_3$ாதி$_4$க$_3$மேந " என்று ஜீவாத்மதர்ஶனம விதிக்கப்படுவதாகக் கொள்ளுவதே பொருத்தம்.

---

* உபப்ரும்ஹ்யம்:— விளக்கப்படும் வேதபாகம்; உபப்ரும்ஹணம்- அவ்வேதபாகத்தை விளக்கும் ஸ்ம்ருதி,

प्रत्यगात्मस्वरूपं विशोध्य * अणोरणीयान् इत्यारभ्य (२०) * महान्तं विभुमात्मानं मत्वा धीरो न शोचति (२२) * नायमात्मा प्रवचनेन लभ्यो न मेधया न बहुना श्रुतेन। यमेवैष वृणुते तेन लभ्यस्तस्यैष आत्मा विवृणुते तनूं स्वाम्॥(२३) इत्यादिभिः परस्वरूपं तदुपासनमुपासनस्य च भक्तिरूपतां प्रतिपाद्य * विज्ञानसारथिर्यस्तु मनःप्रग्रहवान्नरः। सोऽध्वनः पारमाप्नोति तद्विष्णोः परमं पदम्॥ (३. ९) इति परविद्याफलेनोपसंहृतम्। अतःपरमध्यायचतुष्टयेनेदमेव प्राप्तुः प्रत्यगात्मनो दर्शनं ससाधनं प्रप[ञ्च्यते]ञ्चयति—

---

இப்ரகரணத்தில், "ந ஜாயதே ம்ரியதே வா விபஶ்சித்" [2-18] [ஜீவன் பிறப்பதுமில்லை; இறப்பதுமில்லை.] என்று தொடங்கி ஜீவஸ்வரூபத்தை நன்கு விளக்கி, "அணோரணீயாந்" [2-20] [அணுவைக் காட்டிலும் அணுவாயிருப்பவன் பரமாத்மா] என்று தொடங்கிப் பரமாத்மஸ்வரூபத்தை விளக்கி, "மஹாந்தம்விபு$_4$மாத்மாநம மத்வா தீ$_4$ரோ ந ஶோசதி" [2-22] [பெரிய வைபவத்தையுடைய பரமாத்மாவை உபாஸிக்கும் உபாஸகன் துன்பமடைவதில்லை.] என்று உபாஸனத்தைச் சொல்லி, * "நாயமாத்மா ப்ரவசநேந லப்$_4$யோ ந மேத$_4$யா ந ப$_3$ஹுநா ஶ்ருதேந। யமேவைஷ வ்ருணுதே தேந லப்$_4$யஸ் தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம॥" [2.23] [இப்பரமாத்மாவானவன் கேவல மநந த்$_4$யாந ச்ரவணங்களாலே அடையத்தக்கவனல்லன்; * (தன்னிடத்தில ப்ரீதியுடைய) எவனை இவன் வரிக்கிறானோ, அவனாலேயே அடையத்தக்கவன்; அவனுக்கு இப்பரமாத்மா ஸ்வரூபத்தைக் காட்டுகிறான்.] என்று அவ்வுபாஸநம் "ஸ்நேஹ பூர்வமநுத்$_4$யாநம ப$_4$க்திரிதயபி$_1$தீ$_4$யதே" [ப்ரீதியுடன் கூடிய தியானமே பக்தியெனப்படுகிறது] எனகிற படியே * பக்திரூபமாயிருப்பது என்று விவரித்து, "விஜ்ஞாந ஸாரதி$_2$ர் யஸ்து மந:ப்ரக்$_3$ரஹவாந் நர:। ஸோத்$_4$வந: பாரமாப்நோதி தத்$_3$விஷ்ணோ: பரமம் பத$_3$ம்॥" [அறிவைத் தேரோட்டியாகவும், மனத்தைக் கடிவாளமாகவும் கொண்டமனிதன் ஸம்ஸாரத்திற்கு அக்கரையான விஷ்ணுவின பரமபதத்தை அடைகிறான்.] என்று

---

* இம்மந்த்ரத்தில் பக்தி விதிக்கப்படுகிறது எனபது ஜிஜ்ஞாஸாதிகரணபாஷ்யத்தில் விளக்கப்பட்டது.

॥ श्रीभगवद्गीतायां तृतीयोऽध्यायः ॥

अर्जुन उवाच—

ज्यायसी चेत्कर्मणस्ते मता बुद्धिर्जनार्दन ।
तत्किं कर्मणि घोरे मां नियोजयसि केशव ॥ १ ॥

व्यामिश्रेणैव वाक्येन बुद्धिं मोहयसीव मे ।
तदेकं वद निश्चित्य येन श्रेयोऽहमाप्नुयाम् ॥ २ ॥

அர்ஜுந உவாச—

1. ஜ்யாயஸீ சேத் கர்மணஸ்தே மதா பு₃த்₃தி₄ர் ஜநார்த்த₃ந ।
தத் கிம் கர்மணி கோ₄ரே மாம் நியோஜயஸி கேஶவ ॥

2. வ்யாமிஶ்ரேணைவ வாக்யேந பு₃த்₃தி₄ம் மோஹயஸீவ மே ।
ததே₃கம் வத₃ நிஶ்சித்ய யேந ஶ்ரேயோऽஹமாப்நுயாம் ॥

ஜநார்த்த₃ந—*ஜநார்த்தனனே!* **கேஶவ!**—*கேசவனே!* **கர்மண:** — *கர்மயோகத்தைக்காட்டிலும்,* **பு₃த்₃தி₄:** — *ஞான நிஷ்டை,* **ஜ்யாயஸீ**—*சிறந்ததாக,* **தே**—*உனக்கு,* **மதா சேத்**—*உறுதியான கருத்தெனில்,* **தத்**—*அப்போது,* **கோ₄ரே**—*பயங்கரமான்.* **கர்மணி**—*யுத்தம் முதலிய கர்மங்களில்.* **கிம்**—*எதற்காக.* **மாம்**—*என்னை,* **நியோஜயஸி**—*ஏவுகிறாய்?* **வ்யாமிஶ்ரேண**—*ஒன்றுக்கொன்று முரண்பட்ட,* **வாக்யேந ஏவ**-

---

பரவித்யையின் பலமான பரப்ரஹ்மப்ராப்தியைச் சொல்லி முடித்தது. இங்கும், பலனுள்ள பரவித்யையின் நடுவில் அப்பர வித்யைக்குக் காரணமாய் வேறு பலனற்றதாகப் படிக்கப்படும் ஆத்மதர்சனம் பரவித்யையான பக்திக்கு அங்கமென்று விளங்குகிறது. ஆகையால், உபப்ரும்ஹணமான கீதையிலும் ஆத்ம தர்ஶனத்தை பக்திக்கு அங்கமாகச் சொன்னதில் குறையில்லை.

இனி மூன்றுமத்தியாயம் தொடங்கி ஆறுமத்தியாயம் முடிய வுள்ள நாலு அத்தியாயங்களிலே இந்த ஜீவாத்மதர்ஶனம் அதன் ஸாதனங்களான கர்மஜ்ஞானங்களோடு கூட மேலும் விரிவாக விளக்கப்படுகிறது.

வாக்கியத்திலேயே, **மே**—என்னுடைய, **புத்$_3$தி$_4$ம்**—அறிவை. **மோஹயஸி இவ**—மயக்குகிறாய்போல் தோன்றுகிறது; **தத்**—ஆகையால். **யேந**—எந்த வாக்யத்தினால். **அஹம் நிஶ்சித்ய**—நான் அனுஷ்டிக்கவேண்டிய அர்த்தத்தை நிச்சயித்து. **ஶ்ரேய:**—மேலான புருஷார்த்தத்தை, **ஆப்நுயாம்**—அடைவேனோ, **ஏகம் வத$_3$**— (அத்தகைய முரண்படாத) ஒரு வார்த்தையைச் சொல்லு.

---

**1. நாதா கருமத்தி னன்றுகிற் புத்தியெனை**
**யேதாக விக்கருமத் தேவுதி—சூதார்ந்த**
**வுன்னுரையென் னுள்ளமயக்கு மொன்றுரையென் னன்றியெனத்**
**தன்னுரைசெய் தான்விசயன்றான்.**

**நாதா**—ஸ்வாமியே! **கருமத்தில்**—கர்மயோகத்தைக் காட்டிலும். **புத்தி**—ஞானயோகம். **நன்று ஆகில்**—சிறந்தது என்றால். **எனை**—என்னை, **இக்கருமத்து**—கொடியதான இக் கருமத்தில். **ஏதாக ஏவுதி**—எதற்காக ஏவுகிறாய்? **சூது ஆர்ந்த**-வஞ்சனை நிறைந்ததுபோல் தோன்றும். **உன் உரை**—உன் வாக்கியம். **என் உள் மயக்கும்**—என் அறிவை மயக்கும்; **என் நன்றி ஒன்று**—எனக்கு நல்லதை அடைவிக்கும் முரண்படாத ஒரே வாக்கியத்தை. **உரை**—சொல்லுவாய்; **என**—, என்று. **விசயன் தான்**—அர்ஜுனன் தான். **தன உரை செய் தான்**—தன் நெஞ்சில் சரியெனப்பட்ட வார்த்தையைச் சொன்னான்.

---

1-2. போர் புரிவதினின்றும் நீங்கும் மனநிலை முழுவதும் நீங்கப்பெறாதவனாயிருந்த அர்ஜுனனுக்குக் கர்மயோகம ஜ்ஞான யோகம் ஆகிய இரண்டும் ஒன்றன்பின் ஒன்றாக உபதேசிக்கப் பட்டுக் கடைசியாக ஜ்ஞானயோகத்தின் சிறப்பு சொல்லப்பட்ட வளவில், அர்ஜுனன ப்ரவ்ருத்தி மார்க்கமான கர்மயோகத்தைக் காட்டிலும், நிவ்ருத்திமார்க்கமான ஜ்ஞானயோகத்திலேயே ஈடு பட்டவனாய்க் கேள்விகேட்கிறான் இவ்விரண்டு ச்லோகங்களில். (கர்மண: பு$_3$த்$_3$தி$_4$: ஜ்யாயஸீ சேத்) கர்மயோகத்தைக் காட்டிலும் ஜ்ஞானயோகமே சிறந்ததென்று உனக்கு உறுதியான கருத்தாகில்.

॥ भा ॥ यदि कर्मणो बुद्धिरेव ज्यायसीति ते मता, किमर्थं तर्हि घोरे कर्मणि मां नियोजयसि। एतदुक्तं भवति—ज्ञाननिष्ठै- वात्मावलोकनसाधनम्; कर्मनिष्ठा तु तस्याः निष्पादिका; आत्माव- लोकनसाधनभूता च ज्ञाननिष्ठा सकलेन्द्रियमनसां शब्दादिविषयव्या- पारोपरतिनिष्पाद्येत्यभिहिता। इन्द्रियव्यापारोपरतिनिष்पाद्यमात्मावलोकनं

---

'சேத்' என்னும் பதம் நிச்சயமாகில எனனும் பொருளேயுடையது. இக்கருத்தை எங்கு தெரிவித்திருக்கிருன கண்ணன்? எனில்: ஸ்திதப்ரஜ்ஞன் எனப்படும் ஜ்ஞானயோகநிஷ்டனைப் பற்றிக் கூறும ப்ரகரணத்தில கர்மயோகத்தால் ஜ்ஞானயோகம் உண்டா கிறது எனறு கூறப்பட்டது. அதற்குப்பின அந்த ஜ்ஞானயோகத் திலிருநது ஆத்மஸாக்ஷாதகாரம ஏற்படுகிறது என்று கூறப் பட்டது. ஆக, ஆத்மஸாக்ஷாத்காரததிற்கு நேரே ஸாதனமான ஜ்ஞானயோகம, பரமபரயா ஸாதனமான கர்மயோகததைக் காட்டிலும் சிறப்புற்றது எனறு கூறியிருக்கிருன் கண்ணன. இதை நினைதது இப்படிக் கேட்கிருன் அர்ஜுனன. (தத் கோரே கர் மணி கிம மாம நியோஜயஸி) இப்படி ஞானயோகமே சிறந்த தாகில், அதனிலும் தாழ்ந்ததாய், ப்ரவ்ருத்திருபமானதாகையாலே பயங்கரமானதான கர்மயோகத்தில் என்னை ஏன ஏவுகிருய்? இதன் கருத்தை விளக்குவோமினி,—ஆத்மதர்ஶனத்துக்கு நேரே ஸாதனமான ஜ்ஞானயோகம கர்மயோகத்தைக்காட்டிலும் சிறப் புற்றதானுலும், உனக்குக் கர்மயோகத்திலேயே அதிகாரமாகை யாலே அதில் உன்னை ஏவுகிறேன எனறு கண்ணன கூறக்கூடு மாகையாலே, இந்திரிய நிவ்ருத்திரூபமான ஜ்ஞானயோகத்துக்கு முரண்பட்டதாய் ப்ரவ்ருத்திரூபமான கர்மயோகம அதற்கு ஸாதன மாக ஆகமுடியாது; ஆகையால் கர்மத்தில் என்னை ஏவுவது பொருத்தமற்றது என்று அதற்கு பதில கூறும் முகமாக அர்ஜுனன் இககேள்வியைக் கேட்கிருன என்றுகொள்ளவேண்டும். அதாவது:- "யதா ஸம்ஹரதே" [2-58] முதலான ச்லோகஙகளில் நீயே விளக்கியபடியே, ஆத்மதர்ஶனத்துக்கு ஸாதனமான ஞானநிஷ்டை யானது, எல்லா இந்திரியஙகளேயும மனத்தையும் சப்தாதிவிஷ யங்களில் செல்வதிலிருந்து திருப்புவதால் ஏற்படுவது. இந்திரி யங்களின் தொழில்களை அடக்குவதால் ஏற்படும் ஞானயோகத் திஞல், ஆத்மதர்ஶனம் உண்டாகுமாஞல், பற்றற்ற கர்மத்தோடு,

चेत्सिषाधयिषितं, सकलकर्मनिवृत्तिपूर्वकज्ञाननिष्ठायामेवाहं नियोजयितव्यः। किमर्थं घोरे कर्मणि सर्वेन्द्रियव्यापाररूपे आत्मावलोकनविरोधिनि

---

பற்றுள்ள கர்மத்தோடு வாசியற எல்லாக்கர்மங்களினின்றும் நீங்குவதை முன்னிட்டுக்கொண்டிருக்கும் ஞானநிஷ்டையிலேயே நீ என்னை ஏவவேண்டும்; அப்படியிருக்க, எல்லா இந்திரியங்களும் தொழில்படுவதை அபேக்ஷிப்பதாய், அதனாலேயே ஆத்மதர்ஶனத்துக்கு விரோதியான கர்மத்தில் ஏன் என்னை ஏவுகிறாய்? என்கிறான் என்றபடி. (கிம்) க்ஷேபப் பொருளையுடையது. நீ என்னை ஏவுவது சரியல்ல என்று கருத்து. (ஜநார்த்த₃ந கேஶவ மாம கிம் நியோஜயஸி) ஜநார்த்தனன [ஜனியெனப்படும பிறப்பைப்போககடிப்பவன்] என்றும, கேஶவன் [பிரமன் உருத்திரன் முதலான அனைவாககும காரணன்] என்றும் பெயர்களைப் பெற்றிருக்கும நீ என்னை ஸம்ஸாரபந்தத்துக்குக் காரணமான கர்மத்தில் ஏவுவது பொருத்தமற்றது. 1. பிறப்பைப போக்கடிக்கும் இயல்வையுடைய ஜனார்த்தனன நீ, இவ்வுலப் பலன்களில் ஒன்றைக் கொடுப்பதற்காக எனனைக கர்மத்தில் ஏவுவது பொருந்தாது. 2. மண்ணின் பாரம் நீககுதற்கே வடமதுரைப் பிறந்தவனுகையாலே, மண்ணிற்கு பாரமாயிருக்கும துரியோதனாதியரைக் கொல்லுவதற்காக எனனைப் போர்புரியச் சொல்லி வஞ்சிக்கிறாய் என்று கொள்ளலாமோவெனில், அனைத்துலகுககும் தந்தையாய்க் கேஶவனென்று பெயர் பெற்றிருக்கும் நீ, உன் திருவடியிலே சரணமடைந்த என்னை வஞ்சிபபது பொருந்தாது. 3. ஆத்மதர்ஶனமெனும பலத்தை விரைவில பெறுவதற்காகக் கர்மத்தில் ஏவுகிறாய் எனறு கொள்ளலாமோவெனில்: கர்மயோகத்திற்குப்பிறகு ஜ்ஞானயோகம ஏற்பட்டு அதற்குப்பிறகே ஆத்மதர்ஶனமென்னும் அப்பலம் ஏற்படுமெனறு முன்னமே கூறப்பட்டிருக்கிறபடியால், அதுவும் பொருந்தாது. 4. அனுஷ்டிக்க சுலபமானது என்பதை உத்தேசித்தோ, இதைச் செய்யாவிட்டால் தோஷம் ஏற்படும் என்னும் கருத்தினாலேயோ கர்மத்தில் ஏவுவதாகக் கொள்ளலாமோவெனில், எல்லா இந்திரியங்களும தொழில் படுவதை அபேக்ஷிக்கும் இக்கர்மம, முற்கூறியபடி இந்திரியவ்யாபாரத்தை அடக்குவதால் உண்டாகும் ஆத்மதர்ஶனத்துக்கு விரோதியாயிருந்து கொண்டு, முமுக்ஷுவான எனக்கு பயங்கரமாயிருக்கையால் இதுவும் பொருந்தாது. 5. தன் அனுஷ்டானத்தின் மூலம் உலகை

कर्मणि मां नियोजयसीति अतो मिश्रवाक्येन मां मोहयसीव प्रतिभाति। तथा ह्यात्मावलोकनसाधनभूतायास्सर्वेन्द्रियव्यापारोपरतिरूपायाः ज्ञाननिष्ठायास्तद्विपर्ययरूपं कर्म साधनं तदेव कुर्विति वाक्यं विरुद्धं व्यामिश्रमेव; तस्मादेकममिश्ररूपं वाक्यं वद; येन वाक्येनाहमनुष्ठेयरूपं निश्चित्य श्रेयः प्राप्नुयाम्॥ १॥ २॥

---

நலவழிப்படுத்துவதாகிற லோகஸங்க்ரஹத்திற்காகவோவெனில்; உலகிற்கும உண்மையை உபதேசிப்பதே பொருத்தமாகையால இதுவும பொருந்தாது. ஆகையால், "மம ப்ராணா ஹி பாண்ட₃வா:" எனறு உனக்குப் பிராணனையொத்தவனுக உனனுலேயே உத்கோஷிக்கப்பட்டவனுன எனனை உன் திருவுளளததுக்கே இசையாததான கர்மததில நீ ஏவுவது பொருத்தமற்றது எனறு கருத்து.

இப்படி எனக்கு ஏற்பட்டிருக்கும் குழப்பம் நீங்கும்படியான வகையில் நீ வார்த்தை சொலலவேண்டும என்கிருன் இரண்டாவது ச்லோகத்தில்: (வ்யாமிஶ்ரேண வாக்யேந ஏவ மே பு₃த்₃தி₄ம் மோஹயஸி இவ) இந்திரிய வ்யாபாரங்களிலிருந்து நீங்குவதால் ஏற்படுவது ஆத்ம தர்ஶனம் என்று கூறுகிருய்; ஆனுல், இந்திரிய வ்யாபார ரூபமாகவேயிருக்கும கர்மயோகத்தை அதற்கு ஸாதனமென்றும கூறுகிருய்; இப்படி ஒன்றுக்கொன்று முரண்பட்ட வாக்யத்தாலே என் அறிவை நீ மயக்குவதாகவே எனக்குப்படுகிறது. (மே பு₃த்₃தி₄ம் மோஹயஸி) என் அறிவை மயக்குகிருய். அறிவை மயக்குகிருய் என்று பொருளானுலும், அசேதனமான அறிவை மயக்குவது ஒட்டாதாகையாலே என்னை மயக்குகிருய் என்றே கருத்து. (மோஹயஸி இவ) மயக்குகிருய்போல் தோன்றுகிறது. ஸர்வஜ்ஞனுய், என்னிடம வாத்ஸல்யாதிகுணங்களோடு கூடியிருக்கும நீ உண்மையில என்னை மயககுவதற்கு இடமில்லை. புத்திக்குறைவினுல் நீ என்னை மயக்குவதாக நான் எண்ணுகிறேன் என்று கருத்து. (தத் ஏகம வத₃) இப்படி நான் எண்ணுவதற்கு இடமளிக்காதவகையில் ஒன்றுக்கொன்று முரண்படாத ஒரு வார்த்தையைச் சொல்லுவாயாக. ஜ்ஞானகர்மங்கள் இரண்டில் ஒன்ருன கர்மயோகத்தையே உபதேசித்திருக்கிருனுகையாலே, 'ஜ்ஞானகர்மங்களில ஒன்றைச் சொல்லு' எனறு இதற்குப் பொருளாகமுடியாது. ஆகையால், முன் ச்லோகத்தில உள்ள வ்யாமிச்ரவாக்ய சப்தங்களுக்கு எதிர்த்தட்டாக 'ஏகம் (வாக்யம்)' என்று கூறப்படுவ

श्रीभगवानुवाच—
लोकेऽस्मिन् द्विविधा निष्ठा पुरा प्रोक्ता मयाऽनघ।
ज्ञानयोगेन साङ्ख्यानां कर्मयोगेन योगिनाम्॥ ३॥

ஸ்ரீப₄க₃வாநுவாச—

3. லோகேऽஸ்மிந் த்₃விவித₄ா நிஷ்ட₂ா புரா ப்ரோக்தா மயாநக₄।
ஜ்ஞாநயோகே₃ந ஸாங்க்₂யாநாம் கர்மயோகே₃நயோகி₃நாம்॥

**அநக₄!**—*பாபமற்றவனே!* **அஸ்மிந் லோகே**—*விதவிதமான அதிகாரிகள் நிறைந்த இவ்வுலகில்.* **மயா**—*பெருங் கருணை நிறைந்தவனாய், உள்ளதை உள்ளபடி சொல்லுபவனான என்னால்.* **த்₃விவித₄ா**—*இரண்டுவிதமான.* **நிஷ்ட₂ா**—*நிலை.* **புரா**—*முன் அத்தியாயத்தில்.* **ப்ரோக்தா**—*சிறப்புடன் கூறப்பட்டது; (அவையாவன:-)* **ஸாங்க்₂யாநாம்**—*(சப்தாதி விஷயங்களால் இழுக்கப்படாததாய். ஆத்மாவையே விஷயமாகக் கொண்டதான) புத்தியை உடையவர்களுக்கு,* **ஜ்ஞாநயோகே₃ந (நிஷ்ட₂ா)**-*ஞானயோகத்தில் நிலை;* **யோகி₃நாம்**—*(விஷயங்களில் ஈடுபடும் அறிவையுடையவர்களாகையாலே) கர்மயோகத்திலேயே அதிகாரம் உடையவர்களுக்கு,* **கர்மயோகே₃ந (நிஷ்ட₂ா)**—*கர்மயோகத்தில் நிலை. (இப்படி அதிகாரிபேதத்தாலே இரண்டு நிலைகளை நான் பிரித்துக் கூறியிருக்கையாலே என் வார்த்தையில் முரணில்லை என்று கருத்து.)*

---

தாகக் கொள்ளுவதே பொருத்தமுடையது. (யேந நிஶ்சித்ய, அஹம் ஶ்ரேய: ஆப்நுயாம) எந்த வாக்யத்தாலே அநுஷ்டிக்கவுரியதை நிச்சயித்து நான் நன்மையைப்பெறுவேனோ, அத்தகைய ஒரு வார்த்தையைச் சொல் என்று முன்னோடு கூட்டிக்கொள்வது. ஸர்வஜ்ஞனை பரமபுருஷனுக்கு எப்போதும் நிச்சயமிருக்கிறபடியால் 'நிஶ்சித்ய வத₃' என்று முன்னோடு கூட்டிப் பொருள்கொள்வது பொருத்தமற்றது. அர்ஜுனன் குழப்பமுடையவனாயிருக்கையால், "அஹம் நிஶ்சித்ய" என்று கூட்டிப் பொருள்கொள்வதிலேயே பொருத்தமுண்டு. 1-2.

॥भा॥ पूर्वोक्तं न सम्यगवधृतं त्वया। पुरा ह्यस्मिन् लोके विचित्राधिकारिपूर्णे, द्विविधा निष्ठा ज्ञानकर्मविषया यथाधिकारमसङ्कीर्णैव

2. அண்ணலவன் கேட்க வதனியல்க ளங்குரைத்தா
னெண்ணமருஞ் சாங்கியருக் கின்னிறிவு-வண்ணநிகழ்
சீருடைய யோகியர்க்குச் செய்கரும மென்றிரண்டும்
பேருலகிற் சொன்னேன பிரித்து.

அவன கேட்க—*அவ்வர்ஜுனன் இப்படிக்கேட்க.* **அண்ணல**—*ஸ்வாமியான கண்ணன.* **அதன் இயல்கள்**—*ஜ்ஞான கர்மங்களின் தன்மைகளே.* **அங்கு**—*அவ்விடத்தில்.* **உரைத்தான்**—*அருளிச்செய்தான்:-* **பேர் உலகில**—*(பலவித அதிகாரிகளையுடைய) பெரிய உலகில.* **எண் அமரும் சாங்கியருக்கு**—*( ஆத்மாவிலேயே ) தங்கள் அறிவு பொருந்தப் பெற்ற ஞானயோகிகளுக்கு.* **இன் அறிவு**—*இனிய ஞான யோகமும்.* **வண்ணம் நிகழ் சீர் உடைய யோகியர்க்கு**—*ரூபம் முதலிய விஷயங்களிலே ஈடுபடும் இயல்பையுடைய கர்மயோகிகளுக்கு.* **செய் கருமம்**—*கிரியா ரூபமான கர்ம யோகமும்.* **என்று இரணடும்**—*என்று இவ்விரண்டையும.* **பிரித்து சொன்னேன்**—*(அதிகாரிகளுக்குத் தக்கபடி) வெவ்வேறாகவே சொன்னேன்.* *(ஆகையால் நான சொன்னதில் குழப்பமில்லை என்று கருத்து.)*

---

3. 'ஒன்றுக் கொன்று முரண்படாத வாக்யத்தைச் சொல்ல வேணும்' எனறு அர்ஜுனன சென்ற இருச்லோகங்களில கேட்ட வுடன, தான் முன் சொனன வார்ததைகளே முரண்படாதவை தான் எனறு விளக்குகிருன் பகவான இந்தச்லோகத்தில்: (அஸ்மிந் லோகே) பலவகைபபட்ட அதிகாரிகள நிறைந்த இவ்வுலகில. இத்தால் கர்மயோகத்துக்கு அதிகாரிகள் வேறெனறும், ஜ்ஞாநயோகத்துககு அதிகாரிகள் வேறெனறும காட்டப்படுகிறது. வாணாச்ரமங்களும, தேசமும, காலமும், விருப்பமும் நிமித்தம் முதலானவையும வேறுபடுமபோது, இந்த இந்த வேறுபாடுகளையுடைய வெவ்வேறு அதிகாரிகளுக்கு ஒன்றுக்கொன்று முரணான தாமஙகள சாஸ்திரஙகளில் விதிக்கப்படுவதுபோலே, ஒனறுக்கொனறு முரணான கர்மயோகமும, ஜ்ஞாநயோகமும வெவ்வேறு அதிகாரிகளுக்கு விதிககப்படலாம் எனறு கருததது.

मयोक्ता। न हि सर्वो लौकिकः पुरुषस्संजातमोक्षाभिलाषस्तदानीमेव ज्ञानयोगाधिकारे प्रभवति ; अपि त्वनभिसंहितफलेन केवलपरम -

---

(த்₃விவித₄ா நிஷ்டா₂ா புரா ப்ரோக்தா) ஜ்ஞாநயோகம் கர்மயோகம் என்னும் இரண்டு நிலைகள் முன் அத்தியாயத்தில் அதிகாரநு குணமாகப் பிரித்தே சொல்லப்பட்டது. (ப்ரோக்தா) ப்ரகர்ஷேண உக்தா. சிறப்புடன் சொல்லப்பட்டது. அதிகாராநுகுணமாகப் பிரித்துச்சொல்லப்படுகையே இங்கு சிறப்பு. (மயா) என்னல். நோயாளியின் உடல் நிலைக்குத்தக்கபடி மருந்தளிக்கும் வைத்தியனைப்போலே, பிறவி என்னும் பெருநோய்க்கு மருத்துவனை நானும் அந்தந்த அதிகாரிகளையறிந்து, அவரவர்க்கு நல்லதாயிருக்கும் நிலைகளை உபதேசிப்பேன் என்று கருத்து. (மயா) இருள் துயக்கு மயக்கு மறப்புக்களற்றவனாய், அஶக்தியின நாற்றமும் அற்றவனை எனனல் என்றுமாம். (அநக₄) பாபமற்றவனே! ஸம்ஸாரஸங்கங்களிலேயே ஈடுபடும் பாபிகளைப்போலல்லாமல், பாபமற்றவனை நீ மோக்ஷத்துக்கு அதிகாரமுள்ளவனுயிருப்பது போல், அநக₄னுயிருக்கையாலே கர்மயோகத்திற்கு அதிகாரமுள்ள உனனிலும் பாபமற்ற அநக₄தரர்களுக்கு ஜ்ஞாநயோகததில் அதி₄காரமிருப்பது பொருந்தும என்று கருத்து. 'மோக்ஷத்தில் இச்சை அர்ஜுனனுக்குமிருக்கும்போது, நேரே ஸாதனமான ஜ்ஞாநயோகத்தில் இழிவதே பொருத்தமாயிருக்க, அதற்கு ஸாதனமான கர்மயோகத்தில் இவனை இழியச்செய்வானேன' எனில்: இவ்வுலகில் வாழும் எல்லாப்புருஷர்களுக்குமே, மோக்ஷத்தில் இச்சை ஏற்பட்டவுடன் ஜ்ஞானயோகத்தில் அதிகாரம் ஏற்பட்டு விடாது; ஒரு விஷயத்தில் அதிகாரம் ஏற்படுவதற்கு அர்த்தி₂த்வம் (இச்சை) ஸாமர்த்₂யம் (சக்தி) என்னும் இரண்டும் வேண்டும்; பலருக்கு இச்சையிருந்தபோதிலும, விஷயாநுபவத்திலிருநது இந்திரியங்களை மீட்டு ஜ்ஞாநயோகத்தை அநுஷ்டிப்பதற்கு சக்தியிருப்பதில்லை. நூற்றுக்கணக்கான ஜன்மங்களில் நற்கருமங்களைச் செய்து பாபங்கள் நீங்கப்பெற்ற சிலர்க்கே ஜ்ஞாநயோகத்தை அநுஷ்டிக்க சக்தியும், அதடியாக அதிகாரமும உள்ளது. 'சக்தியில்லையாகில, அவர்களுக்கு ஒருநாளும ஜ்ஞாநயோகத்தில் அதிகாரமிலலாமற்போகவேண்டிவருமே; அந்த சக்தியை அளிப்பதாகச் சொலலப்படும் கர்மயோகம் ஜ்ஞானயோகத்திற்கு முரண்பட்டதாகவன்றோவுள்ளது' எனில்: ஜ்ஞாநயோகத்துக்கும கர்ம

पुरुषाराधनवेषेणानुष्ठितेन कर्मणा विध्वस्तस्वान्तमलः, अव्याकुलेन्द्रियो ज्ञाननिष्ठायामधिकरोति। * यतः प्रवृत्तिर्भूतानां येन सर्वमिदं ततम्। स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानवः। (१८. ४६) इति परमपुरुषाराधनैकवेषता कर्मणां वक्ष्यते। इहापि * कर்मण्येवाधिकारस्ते

---

யோகத்துக்கும் முரண்பாடில்லையென்பதோடன்றியில், கர்மயோகம் ஜ்ஞாநயோகத்துக்கு உதவுவதாகவேயுள்ளது. எப்படியெனில்:

''வர்ணாஶ்ரமாசாரவதா புருஷேண பர: புமாந்।
விஷ்ணுராராத்₄யதே பந்தா₂: நாந்யஸ் தத்தோஷகாரக:॥''
[வி.பு 3.8.9]

[தன் வர்ணாச்ரமங்களுக்குரிய அநுஷ்டானத்தையுடைய புருஷனாலேயே பரமபுருஷனான விஷ்ணு ஆராதிக்கப்படுகிறார்; அவருக்கு உகப்பையளிக்க வேறுவழியில்லை.] என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலும,

''யத: ப்ரவ்ருத்திர் பூ₄தாநாம் யேந ஸர்வமித₃ம் ததம்।
ஸ்வகர்மணா தமப்₄யர்ச்ய ஸித்₃தி₄ம் விந்த₃தி மாநவ:॥''
[18.46]

[எவனிடமிருந்து ஜீவராசிகளுக்கு உத்பத்தி முதலானவை ஏற்படுகிறதோ, எவனால் இவ்வுலகம் முழுவதும் வியாபிக்கப்பட்டு விளங்குகிறதோ, அவனைத் தனக்குரிய கர்மத்தாலே ஆராதனம் செய்து மனிதன ஸித்தியடைகிறான.] என்று கீதையிலேயே பதினெட்டாமத்தியாயத்திலும் சொல்லுகிறபடியே பலனில் பற்றற்று அனுஷ்டிக்கப்படும் கர்மங்கள் பரமபுருஷனுக்கு ஆராதனமாகவேயிருக்கின்றன; இத்தகைய கர்மத்தினால் ஆராதிக்கப்பட்டவனாய், ஸர்வஜ்ஞனாய், ஸர்வஶக்தியாய், கருணைக்கோர் இருப்பிடமாயிருக்கும் பரமபுருஷனின் பிரீதியாலே, அநாதிபாபம் காரணமாக இச்சேதனன் நெஞ்சில் தங்கியிருக்கும் ரஜஸ்தமங்கள் குறைந்து ஸத்வகுணம் வளர்கின்றது; இதனால் இவன் ஜ்ஞானயோகத்தில் ஈடுபட விரோதியாயிருந்த விஷயராகம நீங்குகிறது; இவனும் ஞானயோகத்திற்கு அதிகாரியாகிறான். இவ்வண்ணமாக ஞான நிஷ்டைக்கு ஹேதுவான விஷயாநுப₄வஶாந்திக்குக் காரணமாயிருக்கையாலே கர்மயோகம் ஞானயோகத்திற்கு அநுகூலமாயிருக்கிறதேயொழியப் பிரதிகூலமாயில்லை என்றதாயிற்று. 'ப்ரத்யக்ஷத்தில் : இந்திரியவ்யாபாரரூபமாயிருக்கும் கர்மயோகத்திற்கும்

(२. ४७) इत्यादिना अनभिसंहितफलं कर्मानुष्ठेयं विधाय, तेन विषयव्याकुलतारूपमोहादुत्तीर्णबुद्धेः * प्रजहाति यदा कामान् (२. ५५) इत्यादिना ज्ञानयोग उदितः। अतस्साङ्ख्यानामेव ज्ञानयोगेन स्थितिरुक्ता। योगिनां तु कर्मयोगेन। सङ्ख्या बुद्धिः, तद्युक्तास्साङ्ख्याः—आत्मैक-

---

இந்திரியங்கள் அடங்குவதாலுண்டாகும் ஞானயோகததிற்கும் முரணபாடு இருக்குமபோது முன்னது பின்னதற்கு எப்படி ஸாதனமாகும' என்பது அர்ஜுனனின் ஐயம். "அஸ்மிந் லோகே" எனற பதங்களால், அப்₄யுபக₃ம்யவாத₃ரீதியிலே முரண்பாட்டை ஒப்புககொண்டு, "முரணான கர்மயோகமும், ஜ்ஞாநயோகமும் வெவ்வேறு அதிகாரிகளுக்கு விதிக்கப்படலாம்" என்று உணர்த்தப் பட்டது. இங்கு, த்₃ருஷ்டத்தில் (ப்ரத்யக்ஷத்தில்) கர்மஜ்ஞான யோகங்களுக்கு முரண்பாடு மேலெழத் தோன்றிய போதிலும், பரமபுருஷப்ரீதியாகிற அத்ருஷ்டத்தினமூலம் கர்மயோகம் ஜ்ஞான யோகத்திற்கு உதவியே புரிகிறது என்று ஸ்தாபிக்கப்படுகிறது. கர்மயோகியின் இந்திரியவ்யாபாரம சப்தாதி விஷயங்களைப் பற்றியிராமல் பகவத்விஷயத்தைப் பற்றியிருக்கையால், சப்தாதிவிஷயங்களிலிருந்து நீங்குவதாலுண்டாகும் ஞானநிஷ்டையோடு கர்மயோகத்திற்கு த்₃ருஷ்டத்திலும் எவ்விதமான முரண்பாடுமில்லையென்று அறியத்தக்கது. இதனாலேயே, "த₄ர்மேண பாபமபநுத₃தி" [தை-நா 50] [கர்மத்தினால் பாபத்தைப் போக்குகிறான] என்று வேதமும சொல்லிற்று. இக்காரணத்தாலேயே இரண்டாமத்தியாயத்தில், "கர்மண்யேவாதி₄காரஸ்தே மா ப₂லேஷு கதா₃சந" [2-47] என்று பலனில் பற்றில்லாமல் கர்மத்தை அநுஷ்டிக்க வேண்டும் என்று கூறி, "யதா₃ தே மோஹகலிலம் பு₃த்₃தி₄ர் வ்யதிதரிஷ்யதி" [2-52] என்று அக்கர்மாநுஷ்டானத்தால விஷயங்களில் ஈடுபாடாகிற மயக்கத்திலிருந்து இவன் நீங்கப்பெறுவான் என்று உரைத்து, "ப்ரஜஹாதி யதா₂ காமாந்" [2-55] என்று தொடங்கி ஜ்ஞாநயோகம் உபதேசிக்கபபட்டது என்பதை "புரா மயா ப்ரோக்தா" என்னும் பதங்களால் உணர்த்துகிறான கண்ணன். இதை விவரிக்கிறான் மேலே: (ஜ்ஞாநயோகே₃ந ஸாங்க்₂யாநாம்) ஆத்மாவிலேயே ஈடுபடுகிற அறிவையுடையவர்களுக்கு ஜ்ஞாநயோகத்தில் நிஷ்டை என்று முன் கூறப்பட்டது. (ஸாங்க்யாநாம்) ப்ரகரணத்திற்குப் பொருந்தாமையாலே ஸாங்க்ய மதநிஷ்டர்கள் இங்கு சொல்லப்படவில்லை. 'ஸங்க்₂யா' என்னும்

विषयया बुद्ध्या संबन्धिनस्साङ्ख्याः ; अतदर्हाः कर्मयोगाधिकारिणो योगिनः। विषयव्याकुलबुद्धियुक्तानां कर्मयोगेऽधिकारः, अव्याकुलबुद्धीनां तु ज्ञानयोगेऽधिकार उक्त इति न किंचिदिह विरुद्धं व्यामिश्रमभिहितम्॥ ३॥

॥ भा॥ सर्वस्य लौकिकस्य पुरुषस्य मोक्षेच्छायां जातायां सहसैव ज्ञानयोगो दुष्कर इत्याह—

न कर्मणामनारम्भान्नैष्कर्म्यं पुरुषोऽश्नुते।
न च संन्यसनादेव सिद्धिं समधिगच्छति॥ ४॥

4. ந கர்மணுமநாரம்ப₄ாந் நைஷ்கர்ம்யம் புருஷோ஽ஶ்நுதே।
ந ச ஸந்ந்யஸநாதே₃வ ஸித்₃தி₄ம் ஸமதி₄க₃ச்ச₂தி॥

புருஷ:—(இவ்வுலகில் வாழும்) எந்த மனிதனும், கர்மணும் அநாரம்ப₄ாத்—கர்மயோகத்தைத் தொடங்காமலிருப்பதாலேயே, நைஷ்கர்ம்யம்—ஞானயோகத்தை, ந அஶ்நுதே—அடைவதில்லை; ஸந்ந்யஸநாத் ஏவ—(தொடங்கிய கர்மயோகத்தைக்) கைவிடுவதாலேயே ஸித்₃தி₄ம்—(கர்மயோகத்தின்) பயனான ஞானயோகத்தை, ந ச ஸமதி₄க₃ச்ச₂தி—

---

பதம் புத்தியைக் குறிக்கிறது. இங்கு, பிரகரணுநுகுணமாக ஆத்மாவிலேயே ஈடுபடும் அறிவைச்சொல்லுகிறது. அவ்வறிவையுடையவர்கள் ஸாங்க்யர்கள் எனப்படுகிறுர்கள். (யோகி₃நாம் கர்மயோகே₃ந) இப்படி ஆத்மாவிலேயே ஈடுபடாமல் விஷயங்களிலும் ஈடுபடுகையாலே கர்மயோகத்திற்கே அதிகாரமுள்ளவர்களுக்குக் கர்மயோகததிலேயே நிஷ்டை என்று முன் கூறப்பட்டது. (யோகி₃நாம்) யோக₃ஶப்₃தம் பிரகரணத்தையொட்டிக் காமயோகத்தைக் குறிக்கிறது. அதற்கே தகுதியுள்ளவர்கள் யோகிகள் எனப்படுகின்றனர். ஆக விஷயங்களால் கலங்கியிருக்கும் அறிவையுடையவர்களுக்குக் கர்மயோகத்தில் அதிகாரமும், அவற்ருல் கலங்காத அறிவையுடையவர்களுக்கு ஜ்ஞாநயோகத்தில் அதிகாரமும் முன அத்தியாயத்தில் கூறப்பட்டதாகையால, நான் கூறியதில் முரண்பாடும் குழப்பமும் இல்லையென்று கருத்து. 3.

அடைவதுமில்லை. (விஷயங்களால் கலங்கிய மனத்தை யுடையவனுக்குப் பரமபுருஷாராதனமான கர்மயோகத்தை அநுஷ்டித்தபின்பே அக்கலக்கம் நீங்கி ஞானநிஷ்டை யுண்டாகும் என்று கருத்து.)

---

**3. *இட்டத்தாற் கன்மத் திழியார் வினையொழியார்
விட்டத்தாற் பேறதனை மேலடையார்—தொட்டொன்
செய்யாரிறைப்பொழுது நில்லார் செறிந்தியல்வர் [றைச்
மெய்யார் குணத்தெவரு மிக்கு.**

**இட்டத்தால்**—தம் விருப்பப்படி. **கன்மத்து இழியார்**—கர்மயோகத்தைத் தொடங்காமலிருப்பவர்கள். **வினை ஒழியார்**—(ஞானயோகவிரோதியான) பாபங்கள் நீங்கப்பெறார் கள்; (ஆகையால் ஞானயோகத்தை அடையமாட்டார்கள்.) **விட்டத்தால்**—(தொடங்கிய கர்மயோகத்தைக்) கைவிட்ட தாலும். **பேறு அதனை**—அந்த ஞானயோகத்தை. **மேல் அடையார்**—மேல்வரும் காலத்தில் பெறமாட்டார்கள். **இறைப்பொழுதும்**—ஒரு க்ஷணநேரமும். **ஒன்றைத் தொட்டுச் செய்யார்**—ஒரு கர்மத்தைத் தொடங்கிச் செய்யாமலிருப்ப வர்கள். **நில்லார்**—இருக்கமுடியாது; **எவரும்**—எந்த மனித ரும். **மெய் ஆர் குணத்து**—பிரகிருதிகார்யமான சரீரத்தி லுள்ள ஸத்வரஜஸ்தமோகுணங்களில். **செறிந்து**—அழுந்தி. **மிக்கு இயல்வர்**— (அந்த குணங்களுக்குரிய) செயல்களில் (தம்மையறியாமலே) மிகவும் ஈடுபட்டே தீருவர்.

---

4. 'மோக்ஷத்தில் விருப்பம் தானே கர்மயோகத்திலும் முமுக்ஷுவைத் தூண்டுகிறது; அவ்விருப்பமே ஆத்மதர்சனத் திற்கு நேரே உபாயமான ஜ்ஞாநயோகத்திலேயே அவனைத் தூண்டக்கூடாதோ?' என்னும் சங்கைக்கு, 'மோக்ஷத்தில் விருப்ப மிருந்தாலும், இவ்வுலகில் விஷயங்களால் கலங்கியிருக்கும் எல்லா மனிதனும், அக்கலக்கம நீங்காமலிருக்கையில் கர்மயோகத்தைச் செய்யாமலே ஞானயோகததைச் செய்யமுடியாது' என்று ஸமா தானம் கூறுகிறான் இந்த ச்லோகத்தில்: (கர்மணாம் அநாரமப₄ாத்)

---

* இப்பாட்டு 4, 5 ச்லோகங்களுக்கு மொழி பெயர்ப்பு.

॥भा॥ न शास्त्रीयाणां कर्मणामनारम्भादेव, पुरुषो नैष्कर्म्य-ज्ञाननिष्ठां प्राप्नोति। न चारब्धस्य शास्त्रीयस्य त्यागात्; यतोऽनभिसंहितफलस्य परमपुरुषाराधनवेषस्य कर्मणस्सिद्धिस्सा; अतस्तेन विना

---

சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களைத் தொடங்காமலிருப்பதாலேயே; கர்மயோகத்தைத் தொடங்காமலிருப்பதாலேயே என்று கருத்து. (புருஷ: நைஷ்கர்மயம் ந அஶ்நுதே) நைஷ்கர்ம்யத்தை மனிதன் அடைந்துவிடமாட்டான். 'கர்மயோகத்தைத் தொடங்காமலிருப்பது நைஷ்கர்ம்யமின்மைக்குக் காரணம' என்றோ, 'கர்மயோகத்தைத் தொடங்காமலிருப்பதால் நைஷ்கர்மயம் ஏற்படும் என்பது தவறு' எனறோ பொருளகொளளலாம். நைஷ்கர்ம்யம் என்னும் பதத்திற்கு 'கர்மாநுஷ்டானமின்மை' என்று கொண்டால் முதல பொருளில், 'கர்மத்தைத் தொடங்காமை கர்ம யோகமின்மைக்குக் காரணம்' என்று ஸாதனமும் ஸாத்யமும ஒன்றுகிறது. இரண்டாவது பொருளில் 'கர்மத்தைத் தொடங்காமையால் கர்மமின்மை ஏற்படும் எனபதிலலை; அதாவது கர்மமே ஏற்படும' என்று முரண்பாடு ஏற்படுகிறது. ஆகையால் நைஷ்கர்ம்யசப்தத்திற்கு வேறு பொருளே கொளளவேண்டும. இங்கு 'நிஷ்கர்மா' என்று, நிஷ்க்ராந்தகர்மயோகனை (கர்ம யோகத்தைச் செய்து முடித்தவனை) ஜ்ஞாநயோகநிஷ்டனைச் சொல்லுகிறது; நைஷ்கர்மயம என்று, அவனுடைய நிலையான ஞானநிஷ்டை சொல்லப்படுகிறது என்று கொள்வதே பொருத்தம. (ஸந்யஸநாதே₃வ ச ஸித்₃தி₄ம் ந ஸமதி₄க₃ச்ச₂தி) ஸந்யஸந ஶப்தத்தாலே ஸந்யாஸாஶ்ரமத்தைக் கூறுவதாகக் கொள்ளுவது பிரகரணத்திற்குப் பொருந்தாதாகையால் முன்பாதியில் உள்ள 'கர்மணாம்' எனனும பதத்தைச் சேர்த்துக்கொண்டு, கர்மங்களை விடுவது என்று பொருளகொள்வதே பொருத்தமுடையது. ஆக, "தொடங்கிய கர்மத்தை விடுவதாலும் ஸித்தியை அடையமாட்டான்" என்று ச்லோகத்தின் பிற்பாதிககுப் பொருள் தேறுகிறது. 'உன் தர்மமான யுத்தத்தைத் தொடங்கி, அதில் நின்றும் நீ மீளப் பார்ப்பது தவறு' என்று அர்ஜுனனுக்கு உணர்த்துகிறான். (ஸித்₃தி₄ம்) கர்மயோகத்தின் பலனாயிருக்கும் ஞானயோகத்தை. ஞானநிஷ்டையைக் குறிக்கும் நைஷ்கர்ம்யசப்தத்தையே பிற்பாதியிலும் வருவித்துப் பொருள்கொளளலாமாயிருக்க, தனியாக அதே பொருளில் ஸித்தி ஶப்தத்தைப பிரயோகித்தது, பலனில்

तां न प्राप्नोति। अनभिसंहितफलैः कर्मभिरनाराधितगोविन्दैरविनष्टानादिकालप्रवृत्तानन्तपापसञ्चयैरव्याकुलेन्द्रियतापूर्विकाऽऽत्मनिष्ठा दुस्संपादा॥ ४॥

॥ भा॥ एतदेवोपपादयति—

न हि कश्चित् क्षणमपि जातु तिष्ठत्यकर्मकृत्।
कार्यते ह्यवशः कर्म सर्वः प्रकृतिजैर्गुणैः॥ ५॥

5. ந ஹி கஶ்சித் க்ஷணமபி ஜாது திஷ்ட₂த்யகர்மக்ருத்।
கார்யதே ஹ்யவஶ: கர்ம ஸர்வ: ப்ரக்ருதிஜைர் கு₃ணை:॥

---

பற்றற்றுப் பரமபுருஷாராதனரூபமாக அநுஷ்டிக்கப்படும் கர்மயோகத்தின் பலனுயிருப்பது ஞானயோகம் என்று காட்டுவதற்காகவேயாகும். ஆக, ச்லோகத்தின இரண்டு பாதிகளாலும், 'சாஸ்திரவிஹிதமான கர்மயோகத்தைத் தொடங்காமலிருப்பதாலேயோ, தொடங்கியதை விடுவதாலேயோ ஞானயோகம் ஸிததிக்காது' என்று சொல்லப்பட்டது. 'கர்மயோகமினமையால் ஞானயோகமின்மை ஏற்படும' எனறே, 'கர்மயோகமின்மையால் ஞானயோகம ஏற்படும் என்பது தவறு' என்றே கருத்து. ஆக இவ்வளவால், "அநாராதி₄த கே₃ாவிந்த₃ா யே நரா து₃:க்க₂ாப₄ாகி₃ந :" [விஷ்ணு தர்மம் 29-13] [கோவிந்தனை (பலனில் பற்றற்ற கர்மங்களாலே) ஆராதிக்காத ஜனங்கள் துன்பத்தையே அடைவார்கள.] என்கிறபடியே பலனில் பற்றற்ற கர்மத்தால் பரமபுருஷனை ஆராதிக்காவிடில், மோக்ஷமடைய அவசியமான பரமபுருஷனின் பிரீதி ஏற்படாதென்றும், அதில்லையாகில் பாபங்கள் நீங்கமாட்டாவென்றும், அது நீங்காவிடில் மனத்திலுள்ள ரஜஸ்தமங்களாகிற அழுக்குகள் அழியாவென்றும், அவையழியாவிடில் அவைகளாலுண்டாகும் ராகத்வேஷங்கள் சிரஞ்சீவியாயிருக்குமென்றும், அவையிருக்குமளவும் இந்திரியங்களின் கலக்கம தெளியாதென்றும், இப்படி இந்திரியங்கள் தெளிவடையாமல் சப்தாதிவிஷயங்களையே பற்றி நின்றல் ஆத்மவிஷயத்தில் புகமாட்டாவென்றும் உணர்த்துவதன் மூலம், காமயோகத்தைக் கைவிட்டு, ஞானயோகத்தைக் கைக்கொள்ளப் பார்க்குமவன், ஏழு அடுக்கையுடைய கோபுரத்தைக்கட்ட நினைத்து, முதலில் ஏழாவது அடுக்கைக் கட்டத்தொடங்கநினைப்பவனைப் போலே பரிஹஸிக்கத்தக்கவன் என்று காட்டுகிறதாயிற்று 4.

ஹி—ஏனெனில், கஶ்சித்—எந்த மனிதனும், ஜாது—எக்காலத்திலும். க்ஷணம் அபி-ஒரு கணங்கூட. அகர்மக்ருத்-கர்மத்தைச் செய்யாமல், ந திஷ்டதி-இருப்பதில்லை; ஸர்வ:-(ஒன்றையும் செய்வதில்லை என்று உறுதிபூண்டவனையுள்ளிட்ட) எல்லாப்புருஷரும், ப்ரக்ருதிஜை: — ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் வளரும், குணை:—ஸத்வரஜஸ்தமோ குணங்களால், கர்ம—அவ்வவற்றுக்குரிய செயலைக்குறித்து, அவஶ:—தம்மையறியாமலே, கார்யதே ஹி—தூண்டப்படுகிறாரல்லவோ; (ஆகையால் கர்மயோகத்தாலே ரஜஸ் தமோகுணங்களைக்குறைத்து, ஸத்வத்தை வளரச்செய்தாலல்லது ஞானயோகம ஏற்படாது என்று கருத்து.)

॥भा॥ न ह्यस्मिन् लोके वर्तमानः पुरुषः कश्चित्कदाचिदपि कर्माकुर्वाणस्तिष्ठति ; न किंचित्करोमीति व्यवसितोऽपि सर्वः पुरुषः

---

5. பரமபுருஷாராதனமான கர்மயோகததை விட்டால், ஞான நிஷ்டையை அடைவது அரிது என்று முன் ச்லோகத்தில் சொன்னதையே விவரிக்கிறான இந்த ச்லோகத்தில். (ஹி) ஏனெனில். முன் ச்லோகத்தில் சொனனதை விவரிக்கிறான் என்பதைக் காட்டுகிறது. (கஶ்சித்) "அஸ்மிந் லோகே" [2-3] என்று சொல்லப்பட்ட பலவிதமான அதிகாரிகள் வாழும இவ்வுலகிலுள்ள எந்த மனிதனும். (ஜாது) எக்காலத்திலும். நாள் முதலான பெரிய காலத்தைக் காட்டுகிறது. (க்ஷணமபி) ஒரு கணத்திலும. "க்ஷணோ வ்யாபாரவைகல்யே காலபேதால்பகாலயோ:" [வைஜயந்தி-த்வ்யக்ஷரகாண்டம்-புல்லிங்காத்யாயம்-11] என்கிற நிகண்டுவின்படி சிறிய காலத்தைக் காட்டுகிறது க்ஷணஶப்தம. ஆகையாலே ஜாது ஶப்தத்தோடு புநருக்தியில்லை. (ஜாது க்ஷணமபி) பெரியகாலத்தோடு சிறியகாலத்தோடு வாசியற எக்காலத்திலும. ஜீவன் அசேதனஸமமாயிருக்கும் ப்ரளய காலம் தவிர்ந்த எல்லாக்காலத்திலும் என்று கருத்து. (அகர்மக்ருத் ந திஷ்டதி) கர்மம் செய்யாதவனாயிருப்பதில்லை. தூங்கும்போதும் தூக்கமாகிற செயலைச் செய்துகொண்டேயன்றோ இருக்கிறான். தூக்கமும் ஒரு கர்மமாயிருப்பதாலன்றோ, "இன்ன தேசகாலங்களில் தூங்கலாம்; இன்னதேசகாலங்களில் தூங்கலாகாது" என்று அதைப் பற்றி சாஸ்திரங்களில விதிநிஷேதங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

**प्रकृतिसंभवैस्सत्त्वरजस्तमोभिः प्राचीनकर्मानुगुणं प्रवृद्धैर्गुणैः स्वोचितं कर्म प्रति अवशः कार्यते–प्रवर्त्यते। अत उक्तलक्षणेन कर्मयोगेन प्राचीनं पापसञ्चयं नाशयित्वा गुणांश्च सत्त्वादीन् वशे कृत्वा निर्मलान्तःकरणेन संपाद्यो ज्ञानयोगः॥ ५॥**

---

*(ஹி) முன பாதியில் சொன்ன அர்த்தத்தை விவரிப்பது பின் பாதி என்று காட்டுகிறது. (ஸர்வ:) எல்லாப் புருஷரும்; நான் ஒரு காரியமும் செய்யமாட்டேன் என்று உறுதிபூண்டிருப்பவனை யுள்ளிட்ட எல்லா மனிதரும். கர்மேந்திரியங்களை முயன்று அடக்கினுலும், மனம் விஷயங்களை நினைப்பதாகிற செயலைச்செய்து கொண்டேயிருக்குமாகையால், ஒரு செயலைப்புரியாமல் எவனுலும் இருக்கமுடியாது என்று கருத்து. "கர்மேந்த்₃ரியாணி" என்று தொடஙகும் அடுத்த ஶ்லோகத்தில் இவ்வர்த்தமே விவரிக்கப்படுகிறது. (ப்ரக்ருதிஜை: கு₃ணை:) ப்ரக்ருதியிலிருந்து உண்டான ஸத்வம, ரஜஸ், தமஸ் எனனும் குணங்களாலே. ப்ரக்ருதியிலிருந்து உண்டான சரீரத்தில் இக்குணங்கள் பூர்வகர்மங்களுக்கு அனுகுணமான ஏற்றத்தாழ்வுகளை உடையதாய்ப் பெருகையாலே, ப்ரக்ருதியிலிருந்து உண்டான குணங்கள எனப்படுகின்றன. பிரகிருதியிலே நித்யமாகவேயிருக்கும் இக்குணங்கள் அதிலிருந்து ஒருகாலத்தில் உண்டாவதில்லையே இக்குணங்கள் கர்மாநுகுணமாக மாறக்கூடியவையெனபது, " கர்மவஶ்யா கு₃ணாஶ்சைதே ஸத்வாத்₃யா: ப்ருதி₂வீபதே"[வி-பு 2-13-70] [அரசனே! ஸத்வம் முதலான இக்குணங்கள் கர்மத்தாலுண்டாகும் ஏற்றத்தாழ்வுடையவை] என்று விஷ்ணுபுராணத்தில் சொல்லப்பட்டது. (கு₃ணை: கர்ம கார்யதே) வளர்ந்திருக்கும ரஜஸ்தமோ குணஙகளாலே அந்தந்த குணங்களுக்குரிய கர்மஙகளைச் செய்யும்படி இவன் தூண்டப்படுகிறுன். (அவஶ: கார்யதே) இவனையும் மீறி குணங்களாலே இவன் ஆட்டி வைக்கப்படுகிறுன. கர்மயோகத்தைச்செய்து ரஜஸ்தமோ குணங்களைக் குறைத்துக்கொண்டவனை அக்குணங்கள் இப்படி ஆட்டிவைக்கமுடியாது. அப்படிக் கர்மயோகத்தை அநுஷ்டிக்காதவனை, வளர்நது நிற்கும் ரஜஸ்தமோகுணங்கள தம் வழிப்படி செயல்புரியும்படி, ஆட்டிவைக்கின்றன என்று கருத்து.*

ஆக, முன் ச்லோகத்தாலும், அதற்கு விவரணமான இந்த ச்லோகத்தாலும், முக்குணங்களுக்கு வசப்பட்டிருக்கும் மனிதன்

भा॥ अन्यथा ज्ञानयोगाय प्रवृत्तो मिथ्याचारो भवतीत्याह—
कर्मेन्द्रियाणि संयम्य य आस्ते मनसा स्मरन्।
इन्द्रियार्थान्विमूढात्मा मिथ्याचारः स उच्यते॥ ६॥

6. கர்மேந்த்₃ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மநஸா ஸ்மரந் |
இந்த்₃ரியார்த்த₂ாந் விமூட₄ாத்மா மித்₂யாசார: ஸ உச்யதே ||

ய:—ஞான நிஷ்டனுன எவனொருவன், கர்மேந்த்₃ரியாணி—(வாக்கு, கை, கால் முதலான) கர்மேந்திரியங்களை, ஸம்யம்ய-(எக்காரியத்திலும் ஈடுபடாதபடி) நன்ருக அடக்கி, விமூட₄ாத்மா — ஆத்மஞானமற்ற நெஞ்சையுடையவனுய், மநஸா— (அந்த) நெஞ்சாலே, இந்த்₃ரியார்த்த₂ாந்—இந்திரியங்களுக்கு இரையான சப்தாதிவிஷயங்களை, ஸ்மரந் ஆஸ்தே—தியானித்துக்கொண்டிருக்கிருனே. ஸ:—அவன், மித்₂யாசார:—பொய்யொழுக்க முடையவனுக, உச்யதே—கூறப்படுகிருன்.

---

ரஜஸ்தமங்களைக் குறைத்து ஸத்வத்தை வளரச்செய்யும் கர்மயோகத்தை அனுஷ்டிக்காமல் ஞானயோகத்தை அடைவது அரிதாகையால், அத்தகைய கர்மயோகத்தை அநுஷ்டித்து, ரஜஸ்தமங்களை வளர்க்கும் அநாதிபாபங்களை அழிதது, அதன்மூலம் ரஜஸ்தமங்களையும் குறைத்து ஸத்வகுணத்தை வளர்த்து ராகத்வேஷங்கள் நீங்கப்பெற்ற மனத்தையுடையவனுகி 'இவ்வழியாலே மோக்ஷத்திற்கான முயற்சியை எளிதாக்கிக்கொணடால்தான் இவனுக்கு ஞானயோகம் கைகூடும் என்று சொல்லப்பட்டதாயிற்று. 5.

6. முன் ச்லோகங்களில் கூறியபடி கர்மயோகத்தை அநுஷ்டிக்காமல் நேரே ஞானயோகத்தில் இழிபவன பொய்யொழுக்க முடையவனுகிருன் என்கிருன். (கர்மேந்த்₃ரியாணி ஸம்யம்ய) கர்மயோகத்தில் வெறுப்பாலும, ஞானயோகத்தில் ஈடுபட்டாலும, 'ஒரு காரியமும் செய்யமாட்டேன்' என உறுதிபூண்டு கைகால முதலிய கர்மேந்திரியங்களை எக்காரியத்திலும ஈடுபடாதபடி அடககி. (ய: மநஸா இந்த்₃ரியார்த்த₂ாந் ஸ்மரந் ஆஸ்தே) எவனொருவன இந்திரியங்களுக்கு இரையான சப்தாதிவிஷயங்களை மனத்தாலே நினைத்துக்கொண்டிருக்கிருனே, பகவானுக்கு ஆராதனமான கர்மயோகத்தை அநுஷ்டிக்காமையால் இவனுக்குப் பாபம நீங்குவதில்லை; அதனுல்

भा॥ अविनष्टपापतया अजितान्तःकरणः आत्मज्ञानाय प्रवृत्तो विषयप्रवणतया आत्मनि विमुखीकृतमनाः विषयानेव स्मरन् य आस्ते, अन्यथासंकल्प्य अन्यथा चरतीति स मिथ्याचार उच्यते; आत्मज्ञानायोद्युक्तो विपरीतो विनष्टो भवतीत्यर्थः॥ ६॥

---

4. கருமக் கரணங்கள் கட்டித்தன் னெஞ்சில்
வருமப் பொருணினைந்து மன்னிப்—பெருமைவினைக்
கைம்மையினாற் பாவிக்குங் கள்ளக் கருத்துடையான்
பொய்ம்மையினா னென்றே புகல்.

**கருமக் கரணங்கள் கட்டி**—*கர்மேந்திரியங்களை (எக்காரியத்தையும் செய்யாமல்) அடக்கி.* **தன் நெஞ்சில் வரும்**—*தன் நெஞ்சில் (பூர்வவாஸனையாலே) காட்சியளிக்கும்.* **அப் பொருள்**—*அந்த சப்தாதி விஷயங்களை.* **பெருமை வினை கைம்மையினால்**—*பெரியதாய் அடர்ந்திருக்கும் புண்யபாப தோஷத்தினால்.* **நினைந்து**—*நினைத்து.* **மன்னி**—*(அவற்றிலேயே) ஈடுபட்டு.* **பாவிக்கும்**—*(அவற்றையே) தியானிக்கும்.* **கள்ளக் கருத்துடையான்**—*வஞ்சனை நினைவையுடையவன்.* **பொய்ம்மையினான்**—*பொய்யொழுக்கமுடையவன்.* **என்றே புகல**—*என்றே கூறப்படுவான்.*

---

*மனத்திலுள்ள ரஜஸ்தமஸுகள் குறையாமையால், மனம் இவனுக்கு வசப்பட்டு நிற்பதில்லை; ஆகையால் இவன் எவ்வளவு தான் முயன்றாலும் இந்த மனம் இவன் மறக்கக்கருதும் விஷயங்களையே நினைக்கிறது என்று கருத்து. (விமூட₄ாத்மா ஸ:) இவ்வண்ணமாக விஷயங்களையே நினைக்கையாலே ஆத்மாவில் ஈடுபடாமலிருக்கும் மனத்தையுடைய இவன். இங்கு ஆத்மசப்தம் மனத்தைக்குறிக்கிறது. (மித்₂யாசார உச்யதே) பொய்யொழுக்கமுடையவனாகச் சொல்லப் படுகிறான். நினைவொன்றாகவும் செயலொன்றாகவுமிருப்பவன பொய் யொழுக்கமுடையவன் எனப்படுகிறான். இங்கு இவன் ஞான யோகத்தை அநுஷ்டிக்க நினைத்து, அதற்கு நேர்மாறான விஷயங் களில் ஈடுபடுகையாலே இவன் பொய்யொழுக்கமுடையவன் எனத் தக்கவன். "உச்யதே" [கூறப்படுகிறான்] என்றபோதிலும் பொய்*

यस्त्विन्द्रियाणि मनसा नियम्यारभतेऽर्जुन।
कर्मेन्द्रियैः कर्मयोगमसक्तस्स विशिष्यते ॥ ७ ॥

7. யஸ்த்விந்த்₃ரியாணி மநஸா நியம்யாரப₄தேऽர்ஜுந ।
கர்மேந்த்₃ரியை: கர்மயோக₃மஸக்தஸ் ஸ விஶிஷ்யதே ॥

**அர்ஜுந**—*அர்ஜுனா!* **ய: து**—*யாவனொரு புருஷனோ வெனில்,* **மநஸா**— *(ஆத்மாவில் ஈடுபட்ட) மனத்தாலே,* **இந்த்₃ரியாணி**–*இந்திரியங்களை,* **நியம்ய**–*(அவற்றுக்குப் பள்ளமடையான) சாஸ்த்ரீயகர்மங்களில ஈடுபடுத்தி,* **அஸக்த:**—*பலனில பற்றற்றவனாய்,* **கர்மேந்த்₃ரியை:**—*கர்மத்தில் ஈடுபடும் இயல்வையுடைய கர்மேந்திரியங்களாலே,* **கர்மயோக₃ம் ஆரப₄தே**–*கர்மயோகத்தைத் தொடங்குகிறானோ,* **ஸ:**–*அவன்,* **விஶிஷ்யதே**-*(ஞானநிஷ்டனைக்காட்டிலும்)சிறந்தவனாகிறான்.*

---

5. நெஞ்சாற் புலனடக்கி நேர்கரும யோகத்தை
யெஞ்சா துழல்கரும விந்தியத்தாற்—றுஞ்சாது
தான்றொடங்கி நன்றியலுந் தன்மையுடன் றொத்தற்றான்
வான்றொடர்ந்த வண்புகழான மற்று.

**மற்று**-*முற்கூறியவனிலும் வேறுபட்டவனாய்,* **நெஞ்சால்**-*மனத்தாலே,* **புலன்**—*இந்திரியங்களை,* **அடக்கி**—*(தனக்குப் பள்ளமடையான) சாஸ்தரீயகர்மங்களில் ஈடுபடுத்தி,* **எஞ்சாது உழல் கரும இந்தியத்தால்**–*இடைவிடாமல கர்மங்களில் ஈடுபடும் கர்மேந்திரியங்களால்,* **நேர் கருமயோகத்தை**—*(தனக்குப்) பொருந்திய கர்மயோகத்தை,* **துஞ்சாது**-*சோம்பலில்லாமல்,* **தான் தொடங்கி**—*தானே தொடங்கி,* **நன்று**

---

யொழுக்கமுடையவனாகிறான என்றே கருத்து. ஞானயோகத்தை அனுஷ்டிக்கமுயன்று அதற்கு நேர்மாறான விஷயதியானத்தினால் தனக்கு உபாயமான ஞானயோகம் கைவரப்பெறாமல், அதனாலேயே தான் விரும்பும பலனை இழந்தவனாகிறான் என்று தேறுகிறது. விஷயதியானத்தினால் இவன் பேற்றை இழக்கும் பிரகாரம், " த்₄யாயதோ விஷயாந் " [2-62,63] என்று தொடங்கி முன்னமே விரிவாகச் சொல்லப்பட்டது. 6.

भा ।। अतः पूर्वाभ्यस्तविषयसजातीये शास्त्रीये कर्मणि इन्द्रियाण्यात्मावलोक[ने]नप्रवृत्तेन मनसा नियम्य तैस्स्वत एव कर्मप्रवणैरिन्द्रियैरसङ्गपूर्वकं यः कर्मयोगमारभते; सोऽसंभाव्यमानप्रमादत्वेन ज्ञाननिष्ठादपि पुरुषाद्विशिष्यते ।। ७ ।।

---

**இயலும் தன்மையுடன்**—*நன்றான ஆத்மாவில் ஈடுபடும் தன்மையுடன்*. **தொத்தற்றான்**—*(மற்றவிஷயங்களில்) பற்றில்லாதவனாயிருப்பவன்*, **வான்தொடர்ந்த வண் புகழான்**—*ஆகாயமளாவிய பெரும்புகழாளனாவான்*.

---

7. கர்மயோகத்தை அநுஷ்டிக்காமல் முதலிலேயே ஞானயோகத்தில் இழியவிரும்புகிறவனை நிந்தித்தான் சென்றச்லோகத்தில். கர்மயோகத்தை அநுஷ்டிப்பவனைப் புகழ்கிறான் இந்தச்லோகத்தில். (யஸ்து) எவனேவெனில். துஶப்தம் முன் ச்லோகத்தில் கூறப்பட்டவனைக் காட்டிலும் இவன் வேறானவன் என்று உணர்த்துகிறது. (இந்த்₃ரியாணி நியம்ய) இந்திரியங்களை அவற்றுக்கும, தனக்கும் பள்ளமடையான ஶாஸ்த்ரீயகர்மங்களில் ஈடுபடுத்தி. இந்திரியங்களும் அவற்றையுடைய சேதனனும் நெடுநாள் பழகிப்போந்தது கர்மங்களிலேயேயாகையாலே, அத்தகைய ஶாஸத்ரீயகர்மங்களில் இந்திரியங்களை ஈடுபத்துவது எளிது என்பதை 'நியம்ய' எனனும் பதத்தில் உபஸர்க்கத்தாலே காட்டுகிறார். "நஹி கஶ்சித்" என்னும் ஶ்லோகத்திலே, இவன் கர்மஙகளிலேயே நெடுநாள் பழகிப்போந்தானைகயால் இவனுக்கு ஞானயோகத்தை அனுஷ்டிப்பது அரிது எனறு காட்டினார். இங்கு அக்காரணத்தாலேயே இவனுக்குக் கர்மயோகத்தை அநுஷ்டிப்பது எளிது என்று உணர்த்துகிறார். இந்திரியங்களைக் கர்மங்களில் இவன ஈடுபடுத்துவதற்கு உபகரணமாய் (கருவியாய்) இருப்பது ஏதென்னில்: (மநஸா) ஆத்மாவைக்காணமுயலும மனமே உபகரணம் என்கிறார். இவன் நெடுநாள் பழகிப்போந்தது நிஷித்த கர்மங்களிலேயாகையாலே, அநாதிவாஸநாபலத்தாலே அவற்றிலேயன்றோ இவன் எளிதில் ஈடுபடுவான் என்னும் ஐயம் எழக்கூடும், இவன் ஆத்மதர்ஶனத்தைப் பெறவிரும்பும் அதிகாரியாகையாலும், நிஷித்தகர்மங்கள் ஆத்மதர்ஶனத்துக்கு விருத்தமானவை எனபதை அறிவானாகையாலும், "அஸக்த:" என்று இவனுக்குப் பலாந்தரங்களில் பற்றில்லையென்று கூறுகையாலும், அவ்வநாதி வாஸனை

नियतं कुरु कर्म त्वं कर्म ज्यायो ह्यकर्मणः।
शरीरयात्राऽपि च ते न प्रसिद्ध्येदकर्मणः॥८॥

8. நியதம் குரு கர்ம த்வம் கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண: ।
ஶரீர்யாத்ராபி ச தே ந ப்ரஸித்₃த்₄யேத₃கர்மண: ॥

**நியதம்**—*அநாதிகாலமாகப் பழகிப்போந்த.* **கர்ம**—*கர்மயோகத்தையே;* **த்வம**—*நீ.* **குரு**—*செய்வாய்.* **ஹி**—*ஏனெனில்.* **அகர்மண:**-*ஞானநிஷ்டையைக் காட்டிலும்.* **கர்ம**—*கர்மயோகமே,* **ஜ்யாய:**—*சிறந்தது;* **அகர்மண:**—*எக்கர்மத்தையும் செய்யாத,* **தே**—*(ஞானநிஷ்டனை) உனக்கு.* **ஶரீர யாத்ரா அபி**—*(ஞானநிஷ்டைக்கும் வேண்டிய)தேஹதாரணமும்.* **ந ப்ரஸித்₃த்₄யேத்**—*கை கூடாது.*

---

யைத் தன் மனவுறுதியாலே ஜயித்து விடுகிறுன; ஆகையாலே இவ்வையத்திற்கு இடமில்லை. அதனுலேயே, "மநஸா" என்னும் பதத்திற்கு 'ஆத்மாவைக் காணமுயலும் மனத்தாலே' என்று பொருள் கொள்ளப்பட்டது. (கர்மேந்த்₃ரியை: கர்மயோக₃ம் ஆரப₄தே) கர்மத்தில் ஈடுபடும் இயல்வையுடைய கர்மேந்திரியங்களாலே எவனொருவன் கர்மயோகத்தைத் தொடங்குகிறுனே. (அஸக்த: ஆரப₄தே) அப்படிக் கர்மயோகத்தைத் தொடங்கும் போது ப₂லாந்தரங்களில் பற்றற்றவனுய் எவனொருவன் காமயோகத்தைத் தொடங்குகிறுனே. கர்மயோகத்தைத் தொடங்கும போதே பலனில் பற்றின்மை வேணடுகையாலே, "ய: ஆரப₄தே அஸக்தஸ் ஸ: விஶிஷ்யதே" என்றல்லாமல் "அஸக்த: ய: ஆரப₄தே" என்று கூட்டிப்பொருள் கொள்ளப்பட்டது. (நியம்ய அஸக்த: கர்மயோக₃ம் ஆரப₄தே) மற்ற் பலனில் பற்றற்றவனுய், சாஸ்த்ரீய கர்மங்களில் இந்திரியங்களை ஈடுபடுத்துவதே கர்மயோகம் என்று கருத்து. (ஸ விஶிஷ்யதே)அவன முன ச்லோகத்தில் சொல்லப்பட்டவனைக்காட்டிலும் சிறப்புற்றவனுகிருன். முன ச்லோகத்தில் சொல்லப்பட்டவன் கர்மயோகத்தைத் தொடங்காமல் முதலிலேயே ஞானயோகத்தில் இழிகையாலே, அவன் முன் சொன்ன ரீதியில் நழுவ (உபாயபலங்களைப்பெருமற்போக)இடமுண்டு. இவன் முதலிலேயே கர்மயோகத்தில் இழிகையாலே இவன் உபாயபலங்களையடையாமல் நழுவ இடமேயில்லை. ஆகையால் அவனைவிட இவன் சிறந்தவன் என்று கருத்து. 7.

भा॥ नियतं—व्याप्तम्; प्रकृतिसंसृष्टेन [अभि]हि व्याप्तं कर्म; [अनादिवासनया प्रकृतिसंसृष्टस्त्वं नियतत्वेन] प्रकृतिसंसृष्टस्त्वमनादि -

6. நின்றுநீ செய்யு நியதக் கருமத்தை
யென்றுமிது மற்றறிவி லேற்றமுடைத்—துன்ற
னுடனடப்பு மோடா தொருகரும மற்ரு
லட்லடர்த்த் தோளா யறி.

**நியதக் கருமத்தை**—*அநாதிகாலமாகப் பழகிப்போந்த கர்மங்களை*. **நின்று நீ செய்**—*நீ நிலையாகச் செய்வாய்;* **என்றும்**—*எப்போதுமே*. **இது**—*இக்கர்மயோகம்*. **மற்று அறிவில்**—*இதனிலும் வேறுபட்ட ஞானயோகத்தைக் காட்டிலும்*. **ஏற்றம் உடைத்து**—*சிறப்பை உடையது;* **ஒரு கருமம் அற்ருல்**—*(நீ) ஒரு கருமத்தையும் செய்யாவிடில்,* **உன்றன் உடல் நடப்பும் ஓடாது**—*உன்னுடைய தேஹம் தரித்து நிற்பதும் நடைபெருது;* **அடல் அடர்த்த் தோளாய்**—*எதிரிகளை வென்ற தோளையுடையவனே!.* **அறி**—*இதை அறிவாயாக.*

8. எளிதாகச் செய்யத்தக்கதாயிருக்கை, நழுவ இடமில்லாமலிருக்கை, விடமுடியாததாயிருக்கை முதலான காரணங்களால் கர்மயோகம் ஞானயோகத்தைக் காட்டிலும் சிறந்ததாயிருக்கிறது என்று காட்டிக்கொண்டு, இவ்வத்தியாயத்தின் தொடக்கத்தில் அர்ஜுனன் கேட்டகேள்விக்கு நேரே பதிலுரைக்கிருன் இந்த ச்லோகத்தில். (நியதம் கர்ம குரு) அநாதிகாலமாகப் பழகிப்போந்த கர்மத்தையே நீ செய்வாய். பிரகிருதிகார்யமான சரீரத்தோடு அநாதிகாலமாகக் கூடியிருக்கும் நீ, அவ்வநாதிவாஸனையாலே பழக்கமானதாயிருக்கையாலே உனக்குச்செய்ய எளிதாயிருப்பதாய், முன்சொன்ன ரீதியில் நழுவுதல் ஏற்பட இடமில்லாமலிருப்பதான கர்மத்தையே செய்வாயாக. கர்ம நியதம் குரு'[கர்மத்தை எப்போதும் செய்] என்று நியதசப்தத்தை க்ரியாவிசேஷணமாக்கிப் பொருள் கொள்வதைக்காட்டிலும், "நியதம் கர்ம குரு" [அநாதிகாலமாகப் பழகிப்போந்த கர்மத்தைச் செய்வாய்] என்று கர்மசப்தத்தோடு ஸமாநாதி₄கரணமாக்கிப் பொருள் கொள்வதில் பயன் அதிகமாகையால் அப்படிப் பொருள் கொள்வதே உசிதம். (நியதம் கர்ம) இயற்கையிலேயே இவனுக்குப் பழகிப்போருவதாகவும், சாஸ்திர

वासनया नियतत्वेन सुशकत्वादसंभावितप्रमादत्वाच्च कर्मणः, कर्मैव कुरु; अकर्मणो ज्ञाननिष्ठाया अपि कर्मैव ज्यायः। नैष्कर्म्यं पुरुषोऽश्नुते (३.४) इति प्रक्रमादकर्मशब्देन ज्ञाननिष्ठैवोच्यते। ज्ञाननिष्ठाधिकारिणोऽप्यनभ्यस्तपूर्वतया ह्यनियतत्वेन दुश्शकत्वात्सप्रमादत्वाच्च ज्ञाननिष्ठायाः कर्मनिष्ठैव ज्यायसी; कर्मणि क्रियमाणे च आत्मयाथात्म्यज्ञानेनात्मनोऽकर्तृत्वानुसन्धानमनन्तरमेव वक्ष्यते। अत आत्मज्ञानस्यापि कर्मयोगान्तर्गतत्वात्स एव ज्यायानित्यर्थः।

---

விதியினுல் இவனுக்குப் பழகிப்போருவதாகவும் கர்மங்கள் இருக்கும. கர்மங்கள் சாஸ்திரவிதியினுல் இவனுக்குப் பழகிப்போருமவை யென்பதை ஶ்லோகத்தின் பிற்பகுதி காட்டப்போகிறதாகையாலே, இங்கு இயற்கையிலேயே கர்மங்கள் இவனுககுப் பழகிப்போருமவை என்று காட்டப்படுவதாககொளவது உசிதம. முன இரண்டு ச்லோகங்களில் ஞானநிஷ்டையில நழுவுதல ஏற்பட இடமிருக்கையாலே அது அநுஷ்டிக்க அரிது என்றும, கர்மயோகத்தில் அதற்கு இடமில்லாமையாலே அது செய்ய எளிது என்றும் காட்டினுன். இங்கு மேலும் சில காரணங்களைக் காட்டி கர்மயோகமே அநுஷ்டிக்க எளிது என்று நிரூபிக்கிருன். (அகர்மண: கர்ம ஜ்யாயோஹி) கர்மநிஷ்டையிலும வேறுபட்ட ஞானநிஷ்டையைக் காட்டிலும் கர்மயோகமே சிறந்ததன்றே. அகர்மமப்தம் கர்மயோகத தைக் காட்டிலும் வேறுபட்ட ஞானயோகத்தைக் காட்டுகிறது. "மா தே ஸங்கோ₃ஸத்வகர்மணி" [2-47] என்றவிடத்திற்போலே கர்மாநுஷ்டானமின்மையைக காட்டக்கூடாதோ? எனில்: இவ்வத்தியாயத்தின் தொடக்கத்தில கர்மயோக ஜ்ஞானயோகஙகளின் தாரதம்யமே ப்ரஸ்துதமாயிருக்கிறது. ஆகையால் "நைஷ்கர்ம்யம்" [3-4] என்று அத்தியாயாரம்பத்தில சொல்லப்பட்ட ஞானநிஷ்டையே இங்கும் அகர்மமப்தத்தாலே கூறப்படுவதாகக் கொள்வதே உசிதம்: அங்கு நைஷ்கர்ம்யமப்தம ஞானநிஷ்டையைக் காட்டுமே யொழியக் காமமினமையைக் காட்டாது என்பது அவ்விடத்திலேயே நிரூபிக்கப்பட்டது. (ஹி) ஞானயோகத்தைக் காட்டிலும, கர்மயோகம் சிறந்தது என்பதற்கு முன சொல்லப்பட்டவையும, இங்கு சொல்லப்படுகினறவையும், இனிச்சொல்லப்போகினறவையுமான எல்லா ஹேதுக்களையும் காட்டுகிறது. அவையாவன;—

कर्मणो ज्ञाननिष्ठाया ज्यायस्त्ववचनं ज्ञाननिष्ठायामधिकारे सत्येवोपपद्यते यदि सर्वं कर्म परित्यज्य केवलं ज्ञाननिष्ठायामधिकरोषि, तर्ह्यकर्मणस्ते ज्ञान-। निष्ठस्य ज्ञाननिष्ठोपकारिणी शरीरयात्राऽपि न सेत्स्यति । यावत्साधनसमाप्ति

(1) ஜ்ஞாநயோகம் விஷயங்களில் பற்றின்மையை எதிர்பார்க்கிற படியாலும், பழகிப்போந்ததல்லாமையாலும் அதில் அதிகாரம் உள்ளவனுக்கும் எளிதாக அநுஷ்டிக்கமுடியாதது; கர்மயோகம அப்பற்றின்மையை எதிர்பாராமையாலும், பிரகிருதிஸம்பந்தமுள்ள வனுக்கு அநாதிகாலமாகப் பழகிப்போந்ததாகையாலும் அனை வர்ககும எளிதாக அநுஷ்டிக்கத்தக்கது. (2) ஜ்ஞானயோகம் நழுவ இடமுடையது; கர்மயோகம நழுவ இடமில்லாதது. (3) கர்யயோகம் செய்யும்போது, ஆத்மாவைப்பற்றிய உண்மையறி வாலே 'ஆத்மாவானது ஸ்வதந்த்ரமாகக் காரியங்களைச் செய்வ தன்று' எனனும் நினைவுடன் செய்யவேண்டும் என்று (3-26, 27 முதலான ச்லோகஙகளில்) விவரிக்கப்படப்போகிறதாகையால் ஆத்மஜ்ஞானமும் கர்மயோகத்தில் அடங்கியிருக்கிறது. இக் காரணத்தாலும் அதுவே சிறந்தது. (4) சாஸ்திரங்களிற்சொன்ன ரீதியில் சரீரத்தை ரக்ஷிக்க வேண்டிய எவனுக்கும் கர்மங்கள் விடமுடியாதவையாகையாலும கர்மயோகமே சிறந்தது. இக காரணங்களால் ஞானயோகத்தை அனுஷ்டிக்க சக்தியுடையவனுக் கும கர்மயோகாநுஷ்டானமே சிறந்ததென்று தேறுகிறது.

கீழ் எடுக்கப்பட்ட காரணங்களில் கடைசியானதை (நானகா வதை) விவரிக்கிறது உத்தரார்த்தம். (அகர்மண: தே ஶரீரயாத் ராபி ந ப்ரஸித்₃த்₄யேத்) கர்மமொனறும் செய்யாத உனக்கு தேஹ யாத்ரையும நடைபெருது; 'தே' [உனக்கு] என்னும பதத்தோடு ஒரே வேற்றுமையை உடையதாயிருக்கையாலும. பூர்வார்த்தத்திற் போலே ஞானநிஷ்டையைச் சொலலுவதில் பொருத்தமில்லாமையா லும்,இங்கு 'அகர்ம' ஶப்தம ''ந வித்₃யதே கர்ம யஸ்ய ஸ:'' எனனும வ்யுத்பத்தியாலே கர்மமில்லாதவனைக குறிககிறது. எலலாக் கர்மங் களையும் விட்டு ஞானநிஷ்டையிலேயே ஈடுபட நீ முயன்ருலும், அத தகைய உனக்கு அந்த ஞானநிஷ்டைககும் வேண்டிய தேஹயாத்ரை யும நடக்காது என்றபடி. பணம்சம்பாதித்து சரீரத்தைப் போஷிககா விடில் ''ஶீர்யதே—இதி ஶரீரம்'' என்கிறபடியே அழிவதையே இயல் வாகக்கொண்ட சரீரம் அழிந்துவிடும் என்று கருத்து. ''அழிந்தால்

शरीरधारणं चावश्यं कार्यम्; न्यायार्जितधनेन महायज्ञादिकं कृत्वा तच्छिष्टाशनेनैव शरीरधारणं कार्यम्, *आहारशुद्धौ सत्त्वशुद्धिस्सत्त्वशुद्धौ ध्रुवा

---

அழியட்டுமே; இவனே ஞானயோகமாகிற ஸாதனத்தில் இழிந்து விட்டான; ஆகையால், விரோதியான சரீரம் கழிந்தவுடன மோக்ஷம் தன்னடையே கிடைத்துவிடுகிறது" எனில்: ஞானயோக மாகிற ஸாதனத்தில் இழிந்துவிட்டதால் மாத்திரம் மோக்ஷம் கிடைத்துவிடாது; ஸாதனம் பூர்த்தியடைந்த பினபே மோக்ஷம கிடைக்கும. அதுவும் நாலைந்து நாளில் பூர்த்தியடைந்துவிடாது; நீண்டகாலத்தில்தான நிறைவுபெறும். ஸாதனத்தைப் பூர்த்தி செய்ய சரீரமும் இனறியமையாதது. ஆகையால் ஸாதனம நிறைவுபெறும் வரையில் சரீரத்தை ரக்ஷித்தே தீரவேண்டும். ஸாதனம நிறைவேருமலிருக்கையில் சரீரத₄ாரணத்தை அலட்சியம் செய்து சரீரத்தை அழித்துக் கொண்டால தோஷமும் ஏற்படும எனக. இனி மற்றுமோர் ஆக்ஷேப ஸமாதானம்: "சரீரரக்ஷணம செய்ய வேண்டியதாகவேயிருநதாலும, அது இவனுடைய விருப்பத்தினுல் நெடுநாள் செய்யமுடியாததொனருயிற்றே. இவன அலட்சியமா யிருநத மாத்திரததால் சரீரம அழிநதுவிடும என்றும் கூற முடியாது. ஒவ்வொரு சரீரமும உண்டாகுமபோதே இது இத்தனை நாளிருக்கும் என்று நிச்சயிக்கப்பட்டுவிடுகிறது. "விவாஹோ ஜந்ம மரணம்" [ இதிஹாஸ ஸமுச்சயம்-3 ] என்று தொடங்கி சாஸ்திரங்களிலும விவாஹமும, பிறப்பிறப்புகளும முன்னமே நிர்ணயிக்கபபட்டுவிடுகின்றன என்று கூறப்படுகிறது. ஆகையால் சரீரரக்ஷணம் இவனதீனமன்று. அப்படியே இவனதீனமாயிருந் தாலும் ஏதாவதொரு லௌகிககர்மத்தைச் செய்து பணம் சம் பாதித்து சரீரரக்ஷணத்தைச் செய்து கொள்ளலாமாகையாலே, சாஸதிரீய கர்மங்களைச் செய்துதான் சரீரரக்ஷணத்தைச் செய்ய வேண்டுமெனறு நிர்ப்பந்தமென்ன?" எனில்: கர்மபலம் நியதம் என்றும், அநியதம் எனறும் இருவகைப்படும். பிரபலமான சாபம் முதலானவற்ருல் உண்டான பலம் இனன தேசத்தில் இனன காலத்தில் பலிக்கும் என்னும் நியதியை உடையதாகையால் நியதம் எனப்படும; அப்படியல்லாதது இனன தேசகாலங்களில் பலிக்கும் என்னும் நியதியில்லாமையாலே அநியதம் எனப்படும். இவ்வநியத கர்மங்களும் ஏதோவொரு தேசகாலத்தில பலன் கொடுத்தே தீருமாகையால் நிஷ்பலமாவதில்லை. ஆகையால் நம் முடைய சரீரரக்ஷணம் மரணம் முதலானவை அநியதமாயிருக்கலா

स्मृतिः (छा. ७. २६. २) इत्यादिश्रुतेः ; *ते त्वघं भुञ्जते पापा ये पचन्त्यात्मकारणात् (३. १३) इति वक्ष्यते। अतो ज्ञाननिष्ठस्यापि

மாகையாலே தன் முயற்சிக்குட்பட்டிருக்கும் அவற்றைக்குறித்து மந்திரம், ஔஷதம், பிராயச்சித்தம், நீதி ஶாஸ்திரஙகள முதலான வற்றைப் பிரயோகித்து சரீரரக்ஷணம் முதலான இஷ்டங்களைச் செய்து கொள்வதிலும், மரணம் முதலான அநிஷ்டங்களைத தவிர்த்துக்கொள்வதிலும் தவறில்லை. இப்படி ஒப்புக்கொள்ளாமல் எல்லாக்கர்மங்களும இன்னதேசகாலங்களில் பலனளிக்கும் என னும நியதியுடையவையே என்று கொணடோமானல், எதிரிகள் போரிடவரும்போது, வெற்றிதோல்விகள் முன்னமே முடிவுகட்டப் பட்டவையென்னும் நினைவாலே, சதுரங்கசேனையைத் திரட்டா மலிருக்க வேண்டிவரும். 'கர்மநியதிப்படி வருவது வந்தே தீரும்' என்னும நினைவாலே, வியாதியால் பீடிக்கப்பட்டவர்கள் மருந்து சாப்பிடாமலிருக்க வேண்டிவரும். பரமாத்மாவின் நித்யஸங்கல் பத்தால் இவனுக்கு ஏற்பட்டிருக்கும ஸ்வாதந்திரியபுததியாலே சில காரியங்களையாவது இவன் செய்கிருன் என்று ஒப்புக்கொள்ளா விடில, இவன் செய்வது ஒன்றுமில்லையாகையால், சாஸ்திரம 'இதைச் செய்; அதைச்செயயாதே' எனறு விதிநிஷேதங்களாலே இவனை நியமிப்பதும் பொருந்தாமற்போய்விடும். உலகம கர்மவசப் பட்டதன்று எனறே ஆகிவிடும். இப்படியெல்லாம் ஆகாமைக்காக அநியதகர்மங்கள் உண்டு என்று ஒபபுக்கொள்ளவேண்டுமாகை யால், சரீரரக்ஷணத்திற்கு இவன முயல்வது பொருந்தும என்றே கொள்ளவேண்டும். லௌகிககர்மத்தைச் செயது, பணம் சம்பா தித்து சரீரரக்ஷணத்தைச் செய்து கொள்ளலாமாகையால், சாஸ் திரீயகர்மங்களைச் செய்துதான் சரீரரக்ஷணத்தைச் செய்துகொள்ள வேண்டும் எனனும் நிர்ப்பந்தமிலலை என்றதும் முமுக்ஷுவுக்குப் பொருந்ாது. "ஆஹாரஶுத்₃தௌ₄ ஸத்வஶுத்₃தி₄: ஸத்வஶுத்₃தௌ₄ த்₄ருவா ஸ்ம்ருதி:" [சாந் 7-26-2] [ஆஹாரம் சுத்தமாயிருந் தால்தான் மனம் சுத்தமாகும்; மனம் சுத்தமாலதான தொடர்ந்த நினைவான உபாஸனம் ஏற்படும்.]என்னும் வேதவாக்யம் ஆஹாரம் சுத்தமாயிருந்தால் தான் மோக்ஷஸாதனமான ஞானயோகமும் உபாஸனமும் கைக்கூடும் என்று கூறிற்று. நியாயமான வழிகளில் சம்பாதித்த பணத்தைக் கொண்டு பஞ்சமஹாயஜ்ஞங்கள முதலான சாஸ்திரீயகர்மங்களைச்செய்து, அந்தயஜ்ஞங்களில் எஞ்சி நிற்கும் உணவை உட்கொள்வது தான் சுத்தமான ஆஹாரமாகும்.

कर्माकुर्वतो 'देहयात्राऽपि न सेत्स्यति। यतो ज्ञाननिष्ठस्यापि ध्रियमाण-शरीरस्य यावत्साधनसमाप्ति महायज्ञादिनित्यनैमित्तिकं कर्मावश्यं कर्त-व्यम्; यतश्च कर्मयोगेऽप्यात्मनोऽकर्तृत्वभावनयाऽऽत्मयाथात्म्यानुसन्धान-मन्तर्भूतम्; यतश्च प्रकृतिसंसृष्टस्य कर्मयोगस्सुशकोऽप्रमादश्च; अतो

---

"யஜ்ஞஶிஷ்டாஶிந: ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பி₃ஷை:।
தே த்வக₄ம் பு₄ஞ்ஜதே பாபா யே பசந்த்யாத்மகாரணாத்॥"
[3-13]

[யஜ்ஞத்தில் எஞ்சிநிற்பதைப் புசிக்கும் நல்லவர்கள் எல்லாப் பாபங்களினின்றும விடுபடுகிறார்கள். எவர்கள் தமக்காகவே சமைத்து உண்கிறார்களோ, அவர்கள் பாபத்தையே உண்கிறார்கள்.] என்று இவ்விஷயம் இப்பிரகரணத்திலேயும் விவரிக்கப்படப் போகிறது. ஆகையால் நியாயவழியில் ஈட்டிய பொருளைக்கொண்டு செய்யப்படும் மஹாயஜ்ஞம் முதலான சாஸ்திரீயகர்மங்களில் மிகுந்ததைக்கொண்டே தே₃ஹத₄ாரணத்தைச் செய்யவேண்டும் என்பது நியமவிதி₄யாகும். ஆகையால், முமுக்ஷுவான ஞான நிஷ்டனும் சாஸ்திரீயகர்மங்களைச் செய்யாமலிருந்தானாகில் அவனுக்கு சரீரயாத்திரையும் ஸித்திக்காது என்று சொன்னது பொருத்தமேயாகும. 'தே' என்று இவன முமுக்ஷுவேயென்பதைக்காட்டி, அப்படிபபட்ட முமுக்ஷுவான உனக்குக் கர்மங்களை விட்டால் சரீரயாத்ரையும் ஸித்திக்காது என்று சொன்னதற்குக் கருத்து இதுவேயாகும். 'த்வம் குரு' என்று பூர்வார்த்தத்திலுள்ள த்வம் பதம் இரண்டுவிதமாகப் பொருளபட இடமுண்டு. (1) அர்ஜுனனை ஞானயோகத்தை அநுஷ்டிக்க சக்தியுடையவனாகக் கொண்டால், "ஜ்ஞானநிஷ்டையில் அதிகாரமுடையவனுக்கும் (முற்கூறியகாரணங்களால்) கர்மயோகமே சிறந்தது; ஆகையால் ஞானநிஷ்டையில அதிகாரமுடைய நீ கர்மயோகத்தையே செய்" என்று பொருள் படுகிறது. (2) அர்ஜுனனை ஞானயோகத்தை அநுஷடிக்க சக்தியற்றவனாகக்கொணடால், "ஞானயோகத்தில் அதிகாரமுடையவனுக்கே கர்மயோகாநுஷடானம சிறந்ததாயிருக்கும்போது, அதில் அதிகாரமற்ற நீ கர்மயோகத்தையே அநுஷ்டிககவேண்டுமென்பதைச் சொல்லவும் வேண்டுமோ" என்று பொருள்படுகிறது,

ज्ञाननिष्ठायोग्यस्यापि ज्ञानयोगात्कर्मयोगो ज्यायान्। तस्मात्त्वं कर्मयोगमेव कुर्वित्यभिप्रायः ॥ ८ ॥

॥ भा ॥ एवं तर्हि द्रव्यार्जनादेः कर्मणोऽहङ्कारममकारादिसर्वेन्द्रियव्याकुलतागर्भत्वेनास्य पुरुस्य कर्मवासनया बन्धनं भविष्यतीत्यत्राह—

यज्ञार्थात्कर्मणोऽन्यत्र लोकोऽयं कर्मबन्धनः।
तदर्थं कर्म कौन्तेय मुक्तसङ्गस्समाचर ॥ ९ ॥

9. யஜ்ஞார்த்த₂ாத் கர்மணோऽந்யத்ர லோகோऽயம்
கர்மப₃ந்த₄ந: ।
தத₃ர்த்த₂ம் கர்ம கௌந்தேய முக்தஸங்க₃: ஸமாசர ॥

**யஜ்ஞார்த்த₂ாத் கர்மண: அந்யத்ர**—*யஜ்ஞத்துக்காக ஏற்பட்ட கர்மங்களைத்தவிர மற்ற கர்மங்கள் செய்யும்போது தான்,* **அயம் லோக:**—*இவ்வுலகம்,* **கர்மப₃ந்த₄ந:**—*கர்மத்தால் கட்டப்படுகிறது. (ஆகையால்)* **ஹே கௌந்தேய**—*அர்ஜுனா!,* **தத₃ர்த்த₂ம்**—*யஜ்ஞத்திற்கு சேஷமான,* **கர்ம**—*கர்மங்களை,* **முக்தஸங்க₃:**—*பற்றற்றவனாய்,* **ஸமாசர**—*செய்வாயாக.*

---

ஆக இந்த ச்லோகத்தால், "ஞானநிஷ்டனுக்கும் சரீரத்தை தரிக்கச்செய்வதற்காக மோக்ஷஸாதனம நிறைவேறும் வரையில் மஹாயஜ்ஞம் முதலான நித்யநைமித்திக கர்மங்கள் அவசியம் செய்ய வேண்டியவையாயிருக்கையாலும், ஆத்மாவானவன் ஸ்வதந்த்ர கர்த்தாவல்லன் என்னும் நினைவோடேயே கர்மயோகத்தைச் செய்ய வேண்டியிருக்கையால் கர்மயோகத்திலும் ஆத்மதத்வாநுஸந்தானம் அடங்கியிருக்கையாலும், பிரகிருதி ஸம்பந்தத்தையுடையவனுக்குக் கர்மயோகம் செய்ய எளிதாயிருக்கையாலும், நழுவ இடமில்லாமலிருக்கையாலும் ஞானநிஷ்டையில் தகுதியுடையவனுக்கும் ஞானயோகத்தைக்காட்டிலும் கர்மயோகமே சிறந்தது; ஆகையால் நீ கர்மயோகத்தையே செய்வாயாக" என்னும் கருத்தைக் கண்ணன் அர்ஜுனனுக்குத் தெரிவித்திருக்கிறுன் என்று விளங்குகிறது. 8.

॥ भा ॥ यज्ञादिशास्त्रीयकर्मशेषभूताद्द्रव्यार्जनादेः कर्मणोऽन्य - त्रात्मीयप्रयोजनशेषभूते कर्मणि क्रियमाणेऽयं लोकः कर्मबन्धनो भवति।

---

7. ஐவகைய வேள்வியினுக் காகாக் கருமங்கண்
மெய்வகையே கட்டு மிகவுலகை—யிவ்வகையா
யாங்கதனுக் காக வமைந்துன் னசையைவிடுத்
தீங்கிதனே நின்றே யியற்று.

**ஐவகைய வேள்வியினுக்கு**—*பஞ்சமஹாயஜ்ஞங்களுக்கு*, **ஆகா கருமங்கள்**—*உபயோகப்படாத செயலகள்*, **உலகை**—*இவ்வுலகை*, **மெய்வகையே**—*உண்மையாகவே*, **மிக கட்டும்**—*மிகவும் கட்டிவிடும்*, **இவ்வகையால்**—*இப்படியிருக்கையால்*, **ஆங்கு**—*கர்மம் செய்யும்போது*, **அதனுக்காக அமைந்து**—*அந்தப் பஞ்சமஹாயஜ்ஞம முதலான சாஸ்த்ரீயகர்மங்களுக்கு உறுப்பான கர்மங்களிலேயே ஈடுபட்டு*, **உன் நசையை விடுத்து**—*உன் பற்றை விட்டு*, **ஈங்கு இதனே**—*இங்கு சொல்லப் பட்ட (யஜ்ஞாதிஶேஷமான) கர்மங்களையே*, **நின்று இயற்று**—*நிலையாகச் செய்வாய்*.

---

9. 'முன ச்லோகத்தில் சொன்னது போல ஶாஸ்த்ரீயகர்மங் களைச் செய்யவேண்டுமாகில், அதற்காகப் பணம் சம்பாதிப்பது முதலான காரியங்களைச் செய்யவேண்டிவருமே; இக்காரியஙகளைச் செய்வதால் நான் எனது என்னும் அஹங்காரமமகாரங்கள், விருப்பு வெறுப்புகள், அபி₄நிவேஶவசனங்கள், தானம் வாங்குவது, ஸஞ்சாரங்கள் முதலானவை ஏற்படுமே; இவை எல்லா இநதிரி யங்களையும் பலகாரியங்களில் ஈடுபடுத்திச் சிதறச்செய்துவிடுமே; ஏற்கனவே அநாதிகாலமாகத் தொடர்ந்து வரும் கர்மவாஸனை முமுக்ஷுவான இவனுக்கும் இவைகளால் மேலும் வளர்ந்துவிடுமே; இதனல் மேன்மேலும் ஶரீரபந்தங்கள் ஏற்பட்டு இவன நித்யஸம் ஸாரியாகவேண்டிவருமே' என்னும் ஶங்கையெழ, எத்தகைய கர்மங் களால் இவ்வநர்த்தங்கள் வரும் எனபதும், எத்தகைய கர்மங்க ளால் இவை வாரா என்பதும் பிரித்துக் காட்டப்படுகிறது இந்த ஶ்லோகத்தில். (யஜ்ஞார்த்த₂ாத் கர்மண: அந்யத்ர) யஜ்ஞங்கள முதலான ஶாஸ்த்ரீய கர்மங்களுக்கு உறுப்பான (பணம் சம்பா திப்பது முதலான) கர்மங்களைத் தவிர்ந்த மற்ற கர்மங்களைச் செய்யும்போதுதான். இங்கு யஜ்ஞம் என்றது ஶாஸ்த்ரீயகர்மங்கள்

अतस्त्वं यज्ञार्थं द्रव्यार्जनादिकं कर्म समाचर। तत्रात्मप्रयोजनसाधन-तया यस्सङ्गः, तस्मात्सङ्गान्मुक्तस्तत्समाचर। एवं मुक्तसङ्गेन यज्ञा-

---

எல்லாவற்றுக்கும் உபலக்ஷணம். யஜ்ஞார்த்த₂ கர்மம் என்பது இந்த ஶாஸ்த்ரீயகர்மங்களுக்கு உறுப்பாகப் பொருள் ஈட்டுவது முதலான செயல்களைக்குறிக்கும். இங்கு "யஜ்ஞோ வை விஷ்ணு: இதி ஶ்ருதே: யஜ்ஞ ஈஶ்வர:" [யஜ்ஞம் எனப்படுபவன் விஷ்ணுவே- என்னும் ஶ்ருதியிலிருந்து இங்கு யஜ்ஞம் எனப்படுகிறவன் ஸர் வேஶ்வரனே என்று விளங்குகிறது] என்று யஜ்ஞஶப்தத்திற்குப் பொருள்கொண்டார் சங்கரர். இப்பொருளில் நமக்கும் விரோத மில்லை. இருந்தபோதிலும், அடுத்துவரும் ஶ்லோகங்களில் யாகம் என்னும் பொருளிலேயே யஜ்ஞஶப்தம் பலதடவை படிக்கப் பட்டிருக்கிறபடியால், பிரகரணாநுகுணமாக இங்கும் அப்பொருளைக் கொள்வதே உசிதம். (யஜ்ஞார்த்த₂ாத்) யஜ்ஞத்தைப் பயனாகக் கொண்டது; யஜ்ஞஶேஷபூ₄தமானது என்று கருத்து. (அந்யத்ர) கர்மணி கரியமாணே என்பதை வருவித்துக் கொள்க. யஜ்ஞஶேஷ பூ₄தமான கர்மங்களைக் காட்டிலும் வேறுபட்டதாய், சுயநலத்துக் காகச் செய்யபடுவதான பொருளீட்டல் முதலான காரியங்களைச் செய்யும்போது தான் என்று பொருள். (அயம் லோக:) இவ் வுலகிலுள்ள ஸம்ஸாரிசேதனர். கட்டுப்படுவதாகக் கூறுகையாலே, இங்கு லோகஶப்தம கட்டுப்பட யோக்யதையுள்ள ஸமஸாரி சேதனரைக் கூறுகிறது. (கர்மப₃ந்த₄ந:) "கர்மைவ ப₃ந்த₄நம் யஸ்ய ஸ:" [கர்மமாகிற கட்டை உடையது] என்றோ, "கர்மணா ப₃ந்த₄நம் யஸ்ய ஸ:" [கர்மத்தால் ஏற்படும் ஸம்ஸாரவிருத்தியாகிற கட்டை உடையது] என்றோ பொருள்கொள்ளலாம். சுயநலத்துக் காகப் பொருளீட்டுவது முதலானவற்றைச் செய்தால்தான் அஹங் காரமமகாரங்கள், விருப்புவெறுப்புக்கள், அஹங்காரவசனங்கள், தானம் வாங்குவது, ஸஞ்சாரங்கள் முதலியவை ஏற்பட்டு, எல்லா இந்திரியங்களும் சிதறிப்போய், கர்மவாஸனை மேலும மேலும் வளர்ந்து, மேன்மேலே சரீரபந்தங்கள் ஏற்பட்டு இவன் ஸம் ஸாரத்தில் உழலவேண்டிவரும்; சாஸ்திரீய கர்மங்களுக்கு உறுப் பாகப் பொருளீட்டுதல் முதலானவற்றைச் செய்யும்போது சுயநலம் கருதாமல் பகவதாராதனத்துக்கு உறுப்பாகச் செய்கிறுணுகையாலே இவ்வனர்த்தங்கள் ஏற்பட இடமில்லை என்று கருத்து. (தத₃ர்த் த₂ம் கர்ம ஸமாசர) யஜ்ஞார்த்தமான கர்மம் இவனைக கட்டுவ தல்லவாகையால், யஜ்ஞார்த்தமான செயல்களையே செய்வாயாக. யஜ்ஞார்த்த₂மாகப் பொருளீட்டுவதையும், அதற்கு உறுப்பாகப்

र्थतया कर्मणि क्रियमाणे यज्ञादिभिः कर्मभिराराधितः परमपुरुषोऽस्यानादिकालप्रवृत्तकर्मवासनामुच्छिद्याव्याकुलात्मावलोकनं ददातीत्यर्थः ॥ ९ ॥

---

போர்புரிவதையும் செய்வாயாக என்று கருத்து. யஜ்ஞார்த்தமாகப் பொருளீட்டுவது முதலான காரியங்களைச் செய்யும்போது யஜ்ஞத்திற்கு மாத்திரமல்லாமல இவை நமக்கும் பயன்படும என்னும் எண்ணத்தோடுசெய்யலாமோ எனில்: (முக்த ஸங்க₃: ஸமாசர) 'நமக்கும் பயன்படும்' என்னும பற்றையும் விட்டு இக்கர்மங்களைச் செய்வாயாக. 'நமக்கும் பயன்படும்'என்று நினைத்தாலும் கர்மபந்தனம் ஏற்படும்என்றுகருத்து கர்மங்களைச் செய்யும்போது, அவற்றின ப₂லனில் விருப்பமில்லாமல் செய்வதாகிற ப₂லத்யாகம் முனனமே சொல்லப் பட்டது. 'நான் ஸ்வதந்த்ரகர்த்தாவல்லன்' என்னும் நினைவோடு செய்வதாகிற கர்த்ருத்வத்யாகம் [3-27, 28 ச்லோகங்களில்] சொல்லப்படப் போகிறது. இங்கு, யஜ்ஞார்த்தமான கார்யங்கள் நமக்கும் பயனபடும எனறு நினைப்பதாகிற ஸங்க₃த்தைத் தவிர்க்கையாகிற ஸங்க₃த்யாகம் சொல்லப்படுகிறது. இவை மூன்றையும் சேர்த்துப் ப₂லஸங்க₃கர்த்ருத்வத்யாகம் என்று வழங்குவதுண்டு. "ப்ரயோஜநமநுத்₃தி₃ஶ்ய ந மந்தோ₃ऽபி ப்ரவர்த்ததே" [ஒரு பயனை விருமபாமல மூடனகூட ஒரு காரியத்தில் ஈடுபடமாட்டான்] என்னும் நியாயப்படி, ஒரு பயனை விருமபாமல் எவனும் எச்செயலிலும் ஈடுபடமாட்டான எனபது உண்மையாயிருக்க, இங்கு இவன ஒரு பயனையும் கருதாமல பகவதாராதனத்துக்கு உறுப்பு என்னும ஒரே எண்ணத்தோடு கர்மங்களில் ஈடுபடமுடியுமோ? எனில்: நல்லோர்கள் நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் உபசாரம் செய்யும்போது ஒரு பயனைக்கருதி உபசாரம் செய்வதில்லையே; உபசாரம் செய்வதையே ஸ்வயம் ப்ரயோஜனமாக எண்ணியேயன்றோ செய்கிறார்கள். அதுபோலே, "மாதா பிதா ப்₄ராதா நிவாஸ: ஶரணம் ஸுஹ்ருத்₃ க₃திர் நாராயண:" [ஸுபால] என்று உபநிஷத் ஓதியபடியே இவனுக்கு இயற்கையிலேயே நண்பனாகவும, எல்லாவுறவையும் உடையவனாகவுமிருக்கும் நாராயணனுக்கு ஆராதனமாக ஸ்வயம ப்ரயோஜன புத்தியுடன் இக்கர்மங்களைச் செய்யத்தட்டில்லை. இப்படிப்பற்றிலலாமல் யஜ்ஞாதிகளுக்காகவே பொருளீட்டுதல் முதலானவற்றைச் செய்தால, அந்த யஜ்ஞாதிகர்மங்களால ஆராதிக்கப்படும் பரமபுருஷன், இச்சேதனனுக்கு அநாதிகாலமாகத் தொடர்ந்துவரும கர்மவாஸனையைப் போக்கடித்து. மனம் முதலான இந்திரியங்களை ஆத்மாவிலேயே ஈடுபடுத்துவதன்மூலம் ஆத்மதர்ஶனமாகிற பயனைத் தந்தருள்வான் என்பது ச்லோகத்தின் கருத்து.

॥ भा ॥ यज्ञशिष्टेनैव सर्वपुरुषार्थसाधननिष्ठानां शरीरधारणकर्तव्यतामयज्ञशिष्टेन शरीरधारणं कुर्वतां दोषं चाह—

सह यज्ञैः प्रजाः सृष्ट्वा पुरोवाच प्रजापतिः।
अनेन प्रसविष्यध्वमेष वोऽस्त्विष्टकामधुक्॥ १० ॥

10. ஸஹ யஜ்ஞை: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி:।
அநேந ப்ரஸவிஷ்யத்$_4$வம் ஏஷ வோऽஸ்த்விஷ்ட காமது$_4$க்॥

ப்ரஜாபதி:—*ஸர்வேஶ்வரனை பரமாத்மா*, புரா—*ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில்*, யஜ்ஞை: ஸஹ— (*தனக்கு ஆரா*

---

''விக்$_3$ரஹோ ஹவிராத$_3$ாநம் யுக$_3$பத்கர்மஸந்நிதி$_4$:।
ப்ரீதி: ப$_2$லப்ரத$_3$ாநம ச தே$_3$வதாநாம் ந வித்$_3$யதே॥''

[(1) விக்ரஹம் (சரீரம்), (2) ஹவிஸ்ஸை ஏற்றுக்கொள்வது, (3) ஒரே சமயத்தில் எல்லாக்கர்மங்களிலும் ஸாந்நிதயம, (4) பிரீதி, (5) பலமளித்தல் ஆகியவற்றில் எதுவும் தேவதைகளுக்குக் கிடையாது [என்கிற மீமாம்ஸககாரிகையின்படியே தேவதைகளுக்கு விக்ரஹாதிபஞ்சகங்களும கிடையாது என்றும், இநத்$_3$ராதி$_3$ஶப்தங்களைத்தவிர தேவதைகள் வேறு கிடையாதெனறும், கர்மங்களினல் ஏற்படும் அபூர்வம் எனனும பொருளே கர்மங்களுக்குப் பலனளிக்கிறது என்றும் கூறும் பூர்வமீமாம்ஸகர்களின் மதம் -இந்த ஶ்லோகபாஷ்யத்தால் தள்ளப்பட்டதாயிற்று. ஒரு பிரமாணத்தாலும ஸித்திக்காத அபூர்வம பலனளிக்கிறது என்று கொள்வதைக்காட்டிலும, எல்லாப் பிரமாணங்களாலும் அறியப்படும் விக்ரஹாதி பஞ்சகங்களையுடைய தேவதைகளின் மூலமாகவும் நேராகவும் பரமபுருஷனே பலனளிக்கிறுன் என்று கொள்வதே பொருத்தம் என்று கருத்து. பாஷ்யத்தில், ''கர்மபி$_4$ராராதி$_4$த:'' [காமங்களால் ஆராதிக்கப்படுபவன்] எனறு, ஹவிஸ்ஸை ஏற்றுக்கொள்வதும், அதனுல் பிரீதியடைவதும, 'பரமபுருஷ:'' என்று, புருஷஸூக்தஸித்தமான ஆதித்யவர்ணமான திவ்யமங்களவிக்ரஹமும், உலகம் முழுவதிலும் ஒரே சமயத்தில் நடக்கும் கர்மங்களில் ஸாந்நித்ய சக்தியும், ''த$_3$த$_3$ாதி'' என்று, ப$_2$லப்ரத$_3$ானஶக்தியும் ஆகிய விக்$_3$ரஹாதிபஞ்சகமும் தேவாதிதேவனை பரமபுருஷனுக்கும உண்டென்று உணர்த்தப்பட்டது. 9.

*தனமான)* யஜ்ஞங்களோடு கூட. **ப்ரஜா:**—பிரஜைகளை, **ஸ்ருஷ்ட்வா**—ஸ்ருஷ்டித்து. **உவாச**—(பின் வருமாறு) கூறினர். "**அநேந**—இந்த யஜ்ஞத்தினுல், **ப்ரஸவிஷ்யத்₄வம்**—ஸம்ருத்தியைப் பெறுங்கள்; **ஏஷ:**—இந்த யஜ்ஞம், **வ:**—உங்களுக்கு, **இஷ்டகாமது₄க்**—மோக்ஷத்தையும், அதற்கு வேண்டியவைகளையும் கொடுப்பதாக, **அஸ்து**—ஆகட்டும்"

**।। भा ।। * पतिं विश्वस्य (ना) इत्यादिश्रुतेर्निरुपाधिकः प्रजापतिशब्दः सर्वेश्वरं विश्वस्य स्रष्टारं विश्वात्मानं परायणं नारायणमाह।**

---

**8. வேள்வியுடன் மானிடரை வேதாப் படைத்துமுனங்**
**கேள்வி யவர்க்குரைத்தான் கேண்மையுட—னூழ்வி**
**மித்தாலே துய்பய னுற்றிடுமி னுங்களுக்கிங் [னையா**
**கெத்தாலு மின்பளிக்கு மீது.**

**வேதா** — ஸர்வேஸ்வரன், **முன்னம்** — ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில், **வேள்வியுடன்**—யஜ்ஞத்தோடு கூட, **மானிடரை**—மனிதர்களை, **படைத்து**—ஸ்ருஷ்டித்து, **அவர்க்கு**—அவர்களுக்கு, **கேண்மையுடன்**—அன்புடன், **கேள்வி உரைத்தான்**—வேதார்த்தமான பின்வரும் வாக்கியத்தை உரைத்தான்.. **ஊழ் வினையாம இத்தாலே**—பழமையான இந்த யஜ்ஞத்தாலே, **துய்பயன் உற்றிடுமின்** — ஸம்ருத்தியைப் பெறுங்கள்; **ஈது**—இந்த யஜ்ஞம், **உங்களுக்கு**-உங்களுக்கு, **இங்கு**—ஸாதனதசையில, **எத்தாலும இன்பு அளிக்கும்**—எல்லா வகையிலும் இன்பத்தை அளிக்கும்.

---

*10.* அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாலு புருஷார்த்தங்களை விரும்புகிறவர்களும், யஜ்ஞத்தில் எஞ்சி நிற்பதைக் கொண்டே தேஹயாத்ரையை நடத்தவேண்டும் எனபதையும், அப்படி நடத்தாதவர்களுக்கு உண்டாகும் தோஷத்தையும அவ்வவர்களைப் புகழ்வதன மூலமும் இகழ்வதன் மூலமும இது முதல் ஏழு ஶ்லோகங்களாலே காட்டுகிருன். (ப்ரஜாபதி:) எலலாச் சேதனர்களுக்கும் தலைவனை ஸர்வேஶ்வரன. உடையவனைகயாலே தன உடைமைப் பொருள்களின நன்மையை விரும்பிச்

சொன்னான் என்று கருத்து. "பதிம் விஶ்வஸ்ய—விஶ்வாத்மாநம் பாராயணம் நாராயணம்" [ (பிரமனையுள்ளிட்ட) அனைவர்க்கும் பதியாய், ஆத்மாவாய், ப்ராப்யப்ராபகமாயிருப்பவன் நாராயணன் ] என்று நாராயணாநுவாகம் கோஷிக்கையாலே, பிரமனிடத்திலே பிரஸித்தியையுடையதாயினும் இங்கு ப்ரஜாபதிஶப்தம் இயற்கையாகவே அப்பிரமனையுள்ளிட்ட அனைவரையும் படைப்பவனாய், அனைவர்க்கும் அந்தர்யாமியாய், ஈஶ்வரனாய், ப்ராப்யப்ராபகங்களாயிருக்கும் நாராயணனையே சொல்லுகிறது. நாராயணன் அந்தர்யாமியாயிருப்பதாலே, அண்டத்தினுள்ளிருப்பவற்றை மாத்திரம் படைக்கும் பிரமனைக் காட்டிலும், தானே அனைத்தையும படைக்கும் நாராயணனே ப்ரஜாபதி ஶப்தத்திற்கு முக்கியார்த்தமானவன. இதனாலேயே புருஷஸூக்த நாராயணவல்லிகள "ப்ரஜாபதிஶ்சரதி க₃ர்ப்பே₄ அந்த:" என்று ஶ்ரிய:பதியான நாராயணனைக் குறித்துப் பிரஜாபதிஶப்தத்தைப் பிரயோகித்தன. "ஆபோ வா இத₃மக்₃ரே ஸலிலமாஸீத்। தஸ்மிந் ப்ரஜாபதிர் வாயுர் பூ₄த்வா அசரத்। ஸ இமாமபஶ்யத்। தாம் வராஹோ பூ₄த்வா அஹரத்" [யஜுஸ-கா 7-1-5] [ இவ்வுலகம் முதலில நீராகவேயிருந்தது; அதில ப்ராஜபதியானவர் வாயுரூபமாய் ஸஞ்சரித்தார்; அவர் (ஜலத்தில் முழுகியிருந்த) பூமியைப் பார்த்தார். இந்த பூமியை வராஹரூபியாய் எடுத்தார்.] எனறு க்ருஷ்ண யஜுர்வேதத்திலும், "இயதீ ஹ வா இயமக்₃ரே ப்ருதி₂வ்யாஸ ப்ராதே₃ஶமாத்ரீ। தாம் ஏமூஷ இதி வராஹ உஜ்ஜக₄ாந। ஸோஸ்யா: பதி. ப்ரஜாபதி:" [சதபதம்-கா 14-1-2] [இந்த பூமி முதலில் இவ்வளவு பட்டதாகவன்றோ இருந்தது; (கடலில்) சிறிய இடத்தை அடைப்பதாகவே இருந்தது; அந்த பூமியை வராஹரூபியான பரம்பொருள 'அடி பூமி! எங்கு ஒளிகிறாய்' என்று கூறி உயரத்தூக்கினர். அவரே இவளுக்குக் கணவராய் ஜீவர்களுக்கெல்லாம் தநதையாயிருக்கையாலே ப்ரஜாபதியெனப்படுபவர.] என்று சுகலயஜுர் வேதத்திலும் வராஹரூபியான விஷ்ணுவைக்குறித்து ப்ரஜாபதிஶப்தம் பிரயோகிக்கப்பட்டது. இதை அடியொற்றியே

"தோயாந்தஸ்ஸ்த₂ாம் மஹீம் ஜ்ஞாத்வா ஜக₃த்யேகார்ணவீக்ருதே।
அநுமாநாத் தது₃த்₃த₄ாரம் கர்த்துகாம: ப்ரஜாபதி:" [வி-பு-1-4-7]

[உலகம் ஒரே சமுத்திரமயமாயிருந்தபோது பூமி ஜலத்தின அடியில் இருப்பதை அடையாளத்தால் அறிந்து ப்ரஜாபதியான

பகவான் அதை எடுப்பதற்காக வராஹரூபத்தை மேற்கொண்டார்] என்று ஸ்ரீவிஷ்ணுபுராணததில் பராசரமஹர்ஷியும்,

"வராஹரூபஸ் ஸ பதி: ப்ரஜாபதிர்
மமாஸ்து மாங்க₃ள்யவிவ்ருத்₃த₄யே ஹரி:" [மாங்கள்யஸ்தவம்]

என்று ஸ்ரீவிஷ்ணுதர்மத்தில் ஶௌநகபகவானும் வராஹப் பெருமானிடம பிரஜாபதி ஶப்தத்தைப் பிரயோகித்தனர். மேலும், யஜுர்வேதத்தில் வாஜபேய யாகத்திற்கு விதிக்கப்பட்ட ப்ராஜா பத்ய பசுவை வர்ணிக்கும்போது. "ஸப்தத₃ஶ ப்ராஜாபத்யாந் பஶூ நாலப₄தே" [யஜுர்·அஷ்ட 1-3-24-25] எனறு தொடங்கி, "ஶ்யாமா ஏகரூபா ப₄வந்தி—ஏவமிவ ஹி ப்ரஜாபதி:" [(ப்ரஜா பதியை தேவதையாகக் கொண்ட பசுக்கள்) கருநிறமுள்ளவை யாயும, ஒருபடிப்பட்ட உருவத்தையுடையவையாகவும் இருக்க வேண்டும்; பிரஜாபதியும் இப்படியே (கருநிறமுள்ளவராகவும் ஒருபடிப்பட்ட உருவத்தை உடையவராகவும், இருக்கின்றாரன்றோ.] என்று கூறுகையாலே கருநிறமுடையவனை திருமாலே ப்ரஜாபதி யென்று வேதத்தில் வழங்கப்படுபவன் எனறு விளங்குகிறது. "ப்ரஜா பதே: ஸப₄ாம் வேஶ்ம ப்ரபத்₃யே" [சாந் 8-14-1] [பிரஜாபதியின் ஸபையாகிற ஸ்தானத்தை அடைகிறேன.]எனறவிடத்தில் பிரஜாபதி யெனப்பட்டவன் பரமாத்மாவேயொழியப பிரமனல்லன என்பதை "ந ச கார்யே ப்ரத்யபி₁ஸந்தி₄:" [4-3-13] [ஸ்ருஷ்டிக்கப்பட்டவனை ஹிரண்யகர்ப்பனைப்பற்றிய அநுஸந்தானம் இல்லை] எனற ஸூத்ரத்தில் பரஹ்மஸூத்ரகாரரும் நிர்ணயித்தார்.

"பூர்வே ப்ரஜாவிஸர்க்கே₃ த்வாமாஹூரேகம் ப்ரஜாபதிம்" [முதலில் ஸ்ருஷ்டி செய்த காலத்தில் உன்னையே ப்ரஜாபதியென் கின்றனர்] எனறும்,

"ராஜாதி₄ராஜஸ் ஸர்வேஷாம் விஷ்ணுர் ப்₃ரஹ்மமயோ மஹாந்।
ஈஶ்வரம் தம் விஜாநீமஸ் ஸ பிதா ஸ ப்ரஜாபதி:॥"

[அனைவர்க்கும் அரசர்க்கரசராய் விளங்குபவரும், ப்ரஹ்மஸ்வ ரூபியும், பெரியவருமாயிருப்பவர் விஷ்ணு; ஈஶ்வரரான அவரை அறிகிறோம்; அவரே தந்தையாகவும, பிரஜாபதியாகவும் இருப்பவர்.] என்றும்,

"ஶுசிம் ஶுசிஷத₃ம் ஹம்ஸம் தத்பரம் பரமேஷ்டி₂நம்।
யுக்த்வா ஸர்வாத்மநாத்மாநம் தம் ப்ரபத்₃யே ப்ரஜாபதிம்॥

[சுத்தமானவனும், சுத்தமான பரமபதத்தில் வஸிப்பவனும், ப்ர காசிப்பவனும், மேலானவனும், மேலான ஸ்தானத்திலுள்ளவனும் ப்ரஜாபதியுமான அவனை எல்லாமாக அனுஸந்தித்து சரணடை கிறேன்.] என்றும்,

''அதிவாய்விந்த்₃ரகர்மாணம் அதிஸூர்யாக்₃நி தேஜஸம்।
அதிபு₃த்₃தீ₄ந்த்₃ரியாத்மாநம் தம் ப்ரபத்₃யே ப்ரஜாபதிம்॥''

[வாயுவையும் இந்திரனையும் விஞ்சிய செயலையுடையவனும், ஸூர்யாக்னிகளை விஞ்சிய ஒளியுடையவனும். புத்தி, இந்திரியங் கள், ஜீவன் இவர்களுக்கு எட்டாமலிருப்பவனுமான ப்ரஜாபதியை சரணமடைகிறேன்.] எனறும் மஹாபாரதத்திலும்,

''புத்ரௌ ப்ரஜாபதிம் தே₃வம் ப₄க்த்யாராத₄யதம் பரம்।
நாராயணம் ஸ வோ தா₃தா வ்ருத்தேர் நூநம் ப₄விஷ்யதி॥''

[புத்திரர்களே! மேலானவனும், ப்ரஜாபதி என்று சொல்லப்படு பவனுமான நாராயணனை பக்தியுடன பூஜியுங்கள்; உங்களுக்கு வேண்டியதை அவன் தருவான்.] என்றும்,

''ஏவம் ஸ்துதஸ் ததஸ் தாப்₄யாமஶ்விப்₄யாம் ஸ ப்ரஜாபதி:''

[அந்த ப்ரஜாபதியானவர் அந்த அஶ்விநீதேவர்களால் துதிக்கப் பட்டவராய்...] என்றும் வராஹபுராணத்திலும்.

''யத்தத் ஸத்யஞ்ச பரமம் அஹமேக: ப்ரஜாபதி:''

[யாதொன்று ஸத்யமாயும், மேலானதாயுமிருககிறதோ, அது முக்கிய ப்ரஜாபதியாகிற என்னுடைய அம்ஶத்தைப் பெற்றது.] என்று மாத்ஸ்யபுராணத்திலும்.

''பரம் பராணுமபி காரணம் ஹரிம்
மஹீத₄ரம் லோககு₃ரும் ப்ரஜாபதிம்''

[மேலானவற்றைக்காட்டிலும் மேலானவனும் காரணபுருஷனும், பூமியை தரிப்பவனும், லோகஸ்வாமியும்,ப்ரஜாபதியுமான ஹரியை...] என்று நரஸிம்ஹபுராணத்திலும் மற்றும பலவிடங்களிலும். பரம புருஷனை நாராயணனைக்குறித்து ப்ரஜாபதி ஶப்தம் பிரயோகிக்கப் பட்டதையும் கண்டுகொள்வது. ஆகையால், இங்கும் ப்ரஜாபதி ஶப்தம் பரமபுருஷனை அவனையே குறிக்கிறது. பிரமனையே குறிக் கினறது என்று கொண்டாலும், ''ஸ்ருஷ்டிம் தத: கரிஷ்யாமி

पुरा—सर्गकाले स भगवान् प्रजापतिरनादिकालप्रवृत्ताचित्संसर्गविवशा उपसंहृतनामरूपविभागास्स्वस्मिन् प्रलीनाः सकलपुरुषार्थानर्हाश्चेतनेतरकल्पाः प्रजास्समीक्ष्य परमकारुणिकस्तदुज्जिजीवयिषया स्वाराधनभूत-

---

த்வாமாவிஸ்ய ப்ரஜாபதே" [வி-த 68-51] [ப்ரஜாபதியான பிரமனே! உனக்குள் நுழைந்து ஸ்ருஷ்டியை நானே செய்கிறேன.] என்று விஷ்ணு தர்மததிற சொன்னபடியே. பிரமனுக்கு அந்தர்யாமியான நாராயணனேயே சொல்லும். இப்ரகரணத்தில் சொலலப்படும் தேவர்களைக் குறித்த ப₄ாவனை முதலானவை அவர்கட்கு அந்தர் யாமிவரையிலும் செலலும எனபது "அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்₄தா" [9-24] [நானே எலலா யஜ்ஞஙகளையும் அனுபவிப் பவன்] எனறு கீதையிலேயே நிர்ணயிக்கப்பட்டது. ஆகையால், நேரேயோ, பிரமனுக்கு அந்தர்யாமியாகவோ ஸர்வபூதாந்தராதமா வான நாராயணனேயே குறிக்கிறது இஙகுள்ள ப்ரஜாபதிஸப்தம் (புரா) ப்ரளயத்திற்குப் பிறபட்ட காலததில. பிரமனும் படைக்கப் படாத இக்காலத்தைச் சொல்லுகையாலும் இங்கு கூறப்படும ப்ரஜாபதி நாராயணனே எனபது விளஙகும். 'ஏகோ ஹவை நாராயண ஆஸீத்—ந ப்₃ரஹ்மா நேஸாந:" [நாராயணன ஒருவனே ஆதியில் இருநதான்; பிரமனுமிலலை; சிவனுமில்லை] என்று தொடங்கி, "தத்ர ப்₃ரஹ்மா சதுர்முகோ₂ஜாயத...த்ர்யக்ஷ: ஸூல-பாணி: புருஷோஜாயத" [அதில நான்முகனுன பிரமன உண்டானுன. முக்கண்ணனும், சூலமேந்திய தேவன் உண்டானுன்.] என்று மஹோபனிஷத்தில் ப்ரளயத்திற்குப்பின் பிரமனும் சிவனுமில்லை யென்றும், நாராயணன் ஒருவனே இருந்தான் என்றும, பிரம ருத்திரர்கள் பிறகே ஸ்ருஷடிக்கப்பட்டனர் என்றும கோஷிக்கப் பட்டதன்றோ. (ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா) சேதனர்களை ஸ்ருஷ்டித்து. ஸங்கோசம் செய்வதற்கு ஹேதுவொன்றும் இல்லாமையாலே, ப்ரஜாஸப்தம்

"ஆப்₃ரஹ்மஸ்தம்ப₃பர்யந்தா ஜக₃த₃ந்தர்வ்யவஸ்தி₂தா: |
ப்ராணிந: கர்மஜநித ஸம்ஸாரவஸவர்த்திந: ||" [வி-தா 104-23]

[பிரமன் முதல் புல்லீருக உலகிலுள்ள பிராணிகள அனைவரும கர்மத்தினுல் உண்டாகும் ஸம்ஸாரத்தின வ்சத்திலிருப்பவர்கள்.] என்கிறபடியே கர்மானுகுணமாக ஸ்ருஷடிக்கப்படும் பிரமன முதலிய எலலா ஜீவர்களையும குறிக்கிறது. உபகரமத்தில (தொடக்

கத்தில்) உள்ள பரஜாஸப்தம் பிரமன் முதலான ஜீவர்கள் அனை வரையும் குறிக்கிறபடியால் அதையொட்டிப் பின்புள்ள ப்ரஜாபதி ஸப்தமும் ரூடியைத்தவிர்ந்து, பிரமன் முதலான அனைவரையும் படைக்கும் நாராயணனையே யோகத்தாலே குறிப்பதாகக் கொள்ள வேண்டும என்பது உபக்ரமநயாயத்தால் தேறும். (ப்ரஜா: ப்ரஜாபதி: ஸ்ருஷ்ட்வா) உடையவனுகையாலே, உடைமைப் பொருள் களான இவை தான் கொடுத்த தேஹேந்திரியங்களைக் கொண்டு தவருன வழியில் செல்வதைக்கண்டு, கோலாலே கண்ணைக் கிளறிக் கொள்ள முயலும குழந்தையின் கையிலிருந்து கோலைப் பிடுஙகி வைக்கும தாயைப் போலே தேஹேந்திரியஙகளை ஸம் ஹரித்து வைக்கிருன்; மேலும், நெடுங்காலம் இன்பதுனபங்க ளால் ஏற்பட்ட களைப்பை ஆற்றுவதற்காகவும், சேதனரைத் தன்னிடத்தில் லயமடையச் செய்கிருன். இதற்குப்பின் நெடுங்காலம் போ₄க₃மோக்ஷங்களுக்குத் தகுதியில்லாமல் நாமரூபப்பிரிவற்றவர் களாய், அசேதனகல்பராக இவர்கள இருபபதைக்கண்டு வருந்தி, பரமகாருணிகனுகையாலே இவர்கள உய்வதற்காகவே இவர்களுககு சரீரேந்திரியங்களைக் கொடுத்து மறுபடியும் ஸ்ருஷ்டிக்கிருன் எனறு கருத்து. ஸ்ருஷ்டியில் ஏற்றத் தாழ்வுகளால் வைஷம்யநைர்க்₄ருண் யம் (பக்ஷபாதமுடையவனுயிருக்கையும், கருணையற்றவனுயிருக்கை யும்) வாராதோ? என்னில்: ஜீவனுக்கு முதலில் பரமாத்மாவால் கொடுக்கப்பட்ட ஸ்வாதந்திரியபுத்தியாலே இவன் செய்யும் கர்மங்களை அனுஸரித்தே ஈஶ்வரன் ஏற்றத்தாழ்வுகளுடன் ஸ்ருஷ்டிக் கிருனுகையாலே இந்த தோஷங்கள் இல்லை. **"வைஷம்ய நைர்க்₄- ருண்யே ந ஸாபக்ஷத்வாத் தத₂ா ஹி த₃ர்ஶயதி"** [2-1-34] **"ந கர்மாவிப₄ாகாதி₃தி சேந்நாநாதி₃த்வாது₃பபத்₃யதே சாப்யுபலப்₄யதே ச"** [2-1-35] **"க்ருதப்ரயதநாபேக்ஷஸ்து விஹிதப்ரதிஷித்₃த₄ாவையர்த்₂ யாதி₃ப்₄ய:"** [2-3-49] என்னும ஸூத்ரங்களில் ஸூதரகாரரும் இவ்விஷயங்களை ஸ்தாபித்தார். (ப்ரஜாபதி: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா) மநுஸ்ம்ருதியில், **"ஆஸீதி₃த₃ம் தமோபூ₄தம்"** [1-5] என்று ப்ரளயத்தைச்சொல்லி, **"ஸிஸ்ருக்ஷுர் விவித₄ா: ப்ரஜா:"** [1-8] என்று ஸ்ருஷ்டியின தொடககத்தை உரைத்து, **"ஸவயமபூ₄ர் ப₄க₃வாந்"** [1-6] **"தேந நாராயண: ஸ்ம்ருத:"** [1-10] என்று ஸர்வஸ்ரஷ்டா பகவானுன நாராயணனேயென்று கூறி, **"தஸ்மிந் ஜஜ்ஞே ஸ்வயம் ப்₃ரஹ்மா"** [1-9] என்று பிரமனை அவனுல் ஸ்ருஷ்டிக்கப்பட்ட பிரஜையாக கோஷித்ததை அநுஸந்திப்பது. (ப்ரஜாபதி: உவாச) ப்ரஜாபதி நியமித்தார். நியமிப்பவனுக

यज्ञनिर्वृत्तये यज्ञैस्सह तास्सृष्टैवमुवाच—अनेन यज्ञेन प्रसविष्यध्वम्, आत्मनो वृद्धिं कुरुध्वम्; एष वो यज्ञः परमपुरुषार्थलक्षणमोक्षाख्यस्य कामस्य तदनुगुणानां च कामानां प्रपूरयिता भवतु॥ १०॥

---

இங்கு குறிககப்படுபவன் ஸ்வதந்திரனுன நாராயணனுக முடியுமே யொழியக் கர்மவசப்பட்டவனுன பிரமனுகமுடியாது என்பது விளங்கும. (யஜ்ஞை: ஸஹ ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா) பிரஜைகளுக்கு உய்வதற்குபாயமாய், தனக்கு ஆராதனமான யஜ்ஞங்கள் நிறைவேறுவதற்காக யஜ்ஞங்களோடு கூடப் பிரஜைகளை ஸ்ருஷ்டித்தார் எனறு கருத்து "தஸ்மாத₃ யஜ்ஞாத் ஸர்வஹுத:" [பு-ஸூ]என்று தொடங்கி யஜ்ஞங்களோடு கூட அதிகாரிபுருஷனுன பிரமனையுள்ளிட்ட அனைவரையும படைத்தவனுகப் புருஷஸூக்தத்தில் கோஷிக்கப்பட்ட முடிகளாயிரம், கண்களாயிரம் தாள்களாயிரமுடைய பரமபுருஷனே இவன் என்று இதிலிருந்தும் விளங்குகிறது. "ஸஹயஜ்ஞா:" என்னும ஶங்கரயாத₃வப்ரகாஶீயபாடம் அப்ரஸித்தமாகையாலே அநாதரிககப்பட்டது எனறு தாத்பர்ய சந்த்ரிகை. (ப்ரஜாபதிருவாச) 'ப்ரஜாபதியான நானே சொன்னேன்' எனறு மறறும் பலவிடங்களிற்போலே தன்மையில் சொல்லவேணடியிருக்க, 'ப்ரஜாபதி கூறினர்' என்று படர்க்கையில் பேசியிருப்பது. ஸாரதியான தன்னைக்காட்டிலும் மூலமூர்த்தியான நாராயணனுக்கு விக்ரஹாதிகளில் உள்ள சிறிது வேற்றுமையைக் கருத்திற்கொண்டு ஔபசாரிகமாகப்பேசியபடி. கீதையில் மேலே மற்றும் பல ச்லோகங்களில் படர்க்கையில் பேசியிருப்பதை இவ்வாறே நிர்வஹித்துக்கொள்வது.

இனி, ச்லோகத்தின் பிற்பாதியிலும் பின்னிரண்டு ஶ்லோகங்களிலும் ப்ரஜாபதியான நாராயணனின வாக்யத்தை அநுவதிக்கிறுன் கண்ணன். (அநேந ப்ரஸவிஷ்யத்₄வம்) இந்த யஜ்ஞத்தினுல் உங்களுக்கு விருத்தியைச் செய்துகொள்ளுங்கள். (அநேந) யஜ்ஞங்கள் பலவிதமானவை என்று காட்டுவதற்காக முற்பாதியில் "யஜ்ஞை:" என்று பன்மையில பிரயோகிக்கப்பட்டது; இங்கு ஒருமை ஜாத்யேகவசநமாகும். (ப்ரஸவிஷ்யத்₄வம) "ஷூஞ் ப்ராணிப்ரஸவே" "ஷூங் க₃ர்ப்ப₄விமோசநே" எனனும தாதுக்களிலிருந்து தோன்றிய இந்தஶப்தம் பிராணிகள் கர்பபத்திலிருந்துபிறப்பதையே கூறுமாயினும், எல்லா யஜ்ஞங்களுக்கும் பிள்ளைபெறுவது மாத்திரம பலமல்லவாகையாலே, பிள்ளைபெறுவது முதலான உங்களுடைய விருத்தியைச் செய்து கொள்ளுங்கள் என்று பொருள்படுகிறது.

॥ भा ॥ कथम् ?

देवान् भावयतानेन ते देवा भावयन्तु वः।
परस्परं भावयन्तः श्रेयः परमवाप्स्यथ ॥ ११ ॥

11. தே₃வாந் ப₄ாவயதாநேந தே தே₃வா ப₄ாவயந்து வ:।
பரஸ்பரம் ப₄ாவயந்த: ஶ்ரேய: பரமவாப்ஸ்யத₂ ॥

"(பிரஜைகளே!) அநேந—இத்த யஜ்ஞத்தினுல், தே₃வாந்—(என்னை அந்தர்யாமியாகக்கொண்ட) தேவர்களை,

---

(ஏஷ:) உங்களுக்கு உஜ்ஜீவநோபாயமாக என்னுல் ஸ்ருஷ்டிக்கப் பட்ட இந்த யஜ்ஞம். (வ·) என்னை அடைவதையே மேலான ப்ராப்யமாகக்கொள்ளவேண்டிய உங்களுக்கு. (இஷ்டகாமது₄க்) என்னை அடைவதாகிற மோக்ஷமென்னும் பரமபுருஷார்த்தத்தையும், அதற்கு அனுகுணமாக நீங்கள் விரும்பும் மற்ற காமங்களையும் கொடுக்கட்டும். மோக்ஷத்திற்கு அநுகுணமான விருப்பங்கள், அவரவர்களுடைய ருசிபேதத்தாலே வேறுபடுமாகையாலே, காம ஶப்தத்தை இஷ்டஶப்தத்தாலே விஶேஷிக்கிருர். யஜ்ஞத்தால் உண்டாவதாகச் சொல்லப்படும் காமங்கள், சாஸ்திரததில் நிஷே திக்கப்படாததாய், தர்மத்திற்குப்புறம்பல்லாததான எல்லாக்காம்யங் களையும் குறிக்குமாயினும், மோக்ஷத்திலேயே நோக்குடைய நாரா யணனின் வார்த்தையாகையாலே மோக்ஷத்தையும், அதற்கு அநு குணமான காமஙகளையும் மாத்திரம இஙகு குறிக்கிறது. "அபி த்ரைலோக்ய ராஜ்யஸய' [1-35] "ஸுராணுமபி சாதி₄பத்யம்" [2-8] என்று ஸ்வர்க்கத்தையும துச்சமாக மதிக்கும் அர்ஜுனனின் பொருட்டு இவ்வாக்யம இங்கு அநுவதிக்கப்படுகிறதாகையாலும், "மா ப₂லேஷு" [2-47] "ஶ்ரேய: பரம்" [2-11] என்னும் முன்பின் ப்ரகரணங்களுக்கு ஒட்டியிருக்கவேண்டுமாகையாலும் இப்படிக் கொள்வதே பொருத்தம். (இஷ்டகாமது₄க்) "து₃ஹ ப்ரபூரணே" என்னும் பால்கறப்பதை உணர்த்தும் தாதுவாகையாலே, பசுவின் ஸ்தானத்திலேயுள்ள பரமபுருஷனிடமிருந்து இடையனின் ஸ்தா னத்திலுள்ள யஜ்ஞங்கள், பாலின் ஸ்தானத்திலுள்ள காமங்களைக் கறந்து உங்களுக்குக் கொடுக்கட்டும் என்றதாகிறது. யஜ்ஞங் களால் நீங்கள் என்னை ஆராதித்தீர்களானுல், நான் உங்களுக்கு மேலான பலன்களை அளிப்பேன் என்று கருத்து. 10.

பா₄வயத—ஆராதியுங்கள்; தே தே₃வா:—(இப்படி ஆராதிக்கப்பட்ட) அந்த தேவர்கள், வ:—உங்களை, பா₄வயந்து—(அந்நபாநாதிகளைக் கொடுத்துப்) போஷிக்கட்டும்; பரஸ்பரம்—ஒருவர்க்கொருவர், பா₄வயந்த: — இவ்வண்ணமாக உதவுகின்றவர்களாய், பரம் ஶ்ரேய:—மேலான நன்மையான மோக்ஷத்தை, அவாப்ஸ்யத₂—அடைவீர்களாக.''

---

11. சென்ற ஶ்லோகத்தில யஜ்ஞங்களால உங்களுக்கு விருத்தியைச் செய்து கொள்ளுங்கள் என்று கூறினான் பரமபுருஷன. இனி, (1) ''யஜ்ஞங்களால் பிரஜைகளுக்கு எப்படி விருத்தியுண்டாகும? (2) கணத்தில் அழியும செயலாயிருக்கும் யஜ்ஞம் நெடுங்காலத்திற்குப் பின எப்படிப் பலனை அளிக்கமுடியும்? (3) ''தமேவம் வித்₃வாநம்ருத இஹ ப₄வதி, நாந்ய: பந்தா₂ அயநாய வித்₃யதே'' [பு-ஸூ] [அப்பரமபுருஷனை இங்கு இப்படி அறிபவனே மோக்ஷமடைவான்; மோக்ஷத்தை அடைய வேறு வழியில்லை.] என்று ஞானத்தாலேயே மோக்ஷம என்று கூறியிருக்கும்போது ஸ்வர்க்கம் முதலானவற்றை ஸாதிப்பதற்காக விதிக்கப்பட்ட யஜ்ஞமாகிற கர்மம எப்படி மோக்ஷஸாதனமாக முடியும்? ''கர்மணா ப₃த்₄யதே ஜந்துர் வித்₃யயா ச விமுச்யதே। தஸ்மாத் கர்ம ந குர்வந்தி யதய: பாரத₃ர்ஶிந:॥'' [பார-மோக்ஷ 147-7] [கர்மத்தால் ஜீவன் கட்டுப்படுகிறான்; ஞானத்தாலேயே விடுபடுகிறான; ஆகையாலேயே அறிவின் கரைகண்ட முனிவர்கள் கர்மத்தைச் செய்வதில்லை.] ''நைவ த₄ர்மீ ந சாத₄ர்மீ...ஸ விமுச்யதே'' [பார-ஆஶ்வ 20-7] [தாமமாகிற நல்ல கர்மங்களையும் அநுஷ்டிக்காதவனாய், அதர்மங்களாகிற தீய செயல்களையும் செய்யாதவனே முக்தியடைகிறான்.] ''ஜ்ஞாநம ஸந்ந்யாஸலக்ஷணம்'' [பார-ஆஶ்வ 43-26] [கர்மங்களை விடுவதை அடையாளமாகக் கொண்டிருப்பது ஞானம] என்று ஸ்வர்க்காதிஸாதனமான கர்மங்களால் ஸம்ஸாரபந்தமே ஏற்படும் என்று மஹாபாரதத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறதே! (4) மோக்ஷத்தைக்காட்டிலும வேறுபட்ட விதவிதமான ஸாமஸாரிக காமங்களை மோக்ஷத்திற்கு அனுகுணமானவை என்று சென்ற ஶ்லோகத்தில காமதுக்ஶப்தத்தை வியாக்கியானம் செய்யும்போது கூறியது எப்படி ஒட்டும?'' என்னும கேள்விகள் எழக்கூடும. இக்கேள்விகளுக்கு பதிலளிக்கிறது இந்த ஶ்லோகம். (அநேந தே₃வாந் பா₄வயத) ''யஜ தே₃வபூஜாயாம்'' என்று தா₄துவாகையாலே, தே₃வதாராத₄னமாயிருக்கும் இந்த யஜ்ஞத்தாலே, 'யஸ

॥ भा ॥ अनेन देवताराधनभूतेन देवान् मच्छरीरभूतान् मदात्मकानाराधयत। * अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च

9. இவ்வேள்வி யானீ ரிறைஞ்சிடுமின் வானோரை
யவ்வேள்வி யாலவரு மாக்கத்தா—லெவ்வாறு
மும்மை யளிப்ப ரொருவர்க் கொருவர்நீ
ரிம்மை மறுமையுறு மிங்கு.

இவ்வேள்வியால்—(எனக்கு ஆராதனமான) இந்த யஜ்ஞத்தால், நீர்—(என் பிரஜைகளாகிற) நீங்கள், வானோரை—(என் சரீரமான) தேவர்களை, இறைஞ்சிடுமின்—

யாத்மா ஶரீரம்" "அங்கா₃ந்யந்யா தே₃வதா:" என்கிறபடியே எனக்கு ஶரீரமாய், என்னை அந்தர்யாமியாகக்கொண்ட தேவர்களை ஆராதியுங்கள். சரீரமான இவர்களை ஆராதிப்பது என்னை ஆராதிப்பதாகவே ஆகும என்று கருத்து. "அஹம் ஹி ஸர்வ யஜ்ஞாநாம் போ₄க்தா ச ப்ரபு₄ரேவ ச" [9-24] [எல்லா யஜ்ஞங்களையும அனுபவிப்பவனும், அவற்றுக்குப் பலனையளிப்பவனும் நானேயன்றோ.] என்று கீதையிலும் மேலே சொல்லப்படுகிறதன்றோ. தேவதையை ஆராதிப்பதே ஆராதிப்பவனுக்கு ஏற்றமாகையாலே, அவ்வாராதனத்தை விதிக்கும இந்த முதற்பாதத்தால், 'யஜ்ஞங்களால் பிரஜைகளுக்கு எப்படி விருத்தியுண்டாகும்' என்னும முதற்கேள்வி பதிலுரைக்கப்பட்டதாகிறது. இந்த யஜ்ஞம் பரமபுருஷனுக்கு ஆராதனம் என்னும் எண்ணத்தோடு ஸ்வார்ககாதிபலன்களில் விருப்பமற்று அனுஷ்டிக்கப்பட்டதாகில் மோக்ஷஸாதனமான ஞானத்திற்கு அங்கமாயிருந்துகொண்டு மோக்ஷஸாதனமாகிறது என்று முன்னமே நிரூபிக்கப்பட்டிருக்கிறதாகையால, 'யஜ்ஞம் எப்படி மோக்ஷஸாதனமாக முடியும்?' என்னும் மூன்றுவது கேள்வியும் பதிலுரைக்கப்பட்டதாகிறது. மஹாபாரதத்தில் மோக்ஷதர்மத்திலிருந்தும், ஆஶ்வமேதிகபர்வத்திலிருந்தும் எடுக்கப்பட்ட வசனங்கள் 'பலனில் விருப்பத்துடன் செய்யப்படும் கர்மங்கள் இவனை ஸம்ஸாரத்தில் கட்டுபவை; ஆகையால் அவற்றை விடவேண்டும்' என்னும் கருத்தையுடையவையாகையாலே விரோதமில்லை. (ப₄ாவயத) 'பூ₄ஸத்தாயம்' என்று தாதுவாகையாலே 'ஸத்தை பெறச்செய்யுங்கள்' என்று பொருளா

(९. २४) इति हि वक्ष्यते। यज्ञेनाराधितास्ते देवा मदात्मकाः स्वाराधनापेक्षितान्नपानादिकैर्युष्मान् पुष्णन्तु। एवं परस्परं भावयन्तः परं श्रेयो मोक्षाख्यमवाप्स्यथ ॥ ११ ॥

---

*ஆராதியுங்கள்;* **அவ்வேள்வியால் அவரும்**—*அந்த யஜ்ஞத்தால் ஆராதிக்கப்பட்ட அவர்களும்,* **ஆக்கத்தால்**—*(அந்ந பாநாதிகளைக்) கொடுப்பதன் மூலம்,* **எவ்வாறும்**—*எல்லா வகையிலும்,* **மும்மை**—*அறம் பொருள் இன்பங்களை,* **அளிப்பர்**—*(உங்களுக்கு) வளரச் செய்வர்;* **இங்கு**—*(இவ் வண்ணமாக) இவ்வுலகில்,* **நீர்**—*நீங்களும் தேவர்களும்,* **ஒருவர்க்கு ஒருவர்**—*ஒருவருக்கு ஒருவர்,* **இம்மை மறுமை உறும்**—*இம்மைப் பலன்களையும், அதன் மூலம் மறுமைப பலனான மோக்ஷத்தையும் அடைவீர்களாக.*

---

யினும, இங்கு 'ஸந்தோஷத்தை அடைந்துள்ளவர்களாகச் செய்யுங்கள்' என்று பொருள்படுகிறது. ஆராதியுங்கள் என்று கருத்து. "தஸ்மாதி₃த: ப்ரத₃ாநம் தே₃வா உபஜீவந்தி" [யஜுஸம் 3-2-9-5] என்று தேவர்கள் மனிதாகளிடமிருந்து ஹவிஸ்ஸைப் பெறுவதாகக் கூறிய வேதவாக்யத்திற்கும் கருத்து இதுவேயாகும். (தே தே₃வா: வ: ப₄ாவயநது) இப்படி யஜ்ஞத்தினுல் ஆராதிக்கப் பட்டவர்களாய், என்னை அந்தர்யாமியாகக் கொண்டவர்களான தேவர்கள் உங்களைப் போஷிக்கட்டும. ஆக, இத்தால் யஜ்ஞாதி கர்மங்கள் க்ஷணிகமாயிருந்தபோதிலும், அந்தக் கர்மங்களால் ஆராதிக்கப்பட்ட தேவர்களின் ப்ரீதி நெடுங்காலம் நின்று பலனளிக்கக் கூடுமாகையாலே இரண்டாவது கேள்வியும பதிலுரைக்கப்பட்டதாகிறது. தேவதாப்ரீதியைத்தவிர மீமாமஸகர்கள் கூறுவதுபோலே வேறெரு அபூர்வம கிடையாது என்பதும் குறிக் கொள்ளத்தக்கது. மஹாப்ரளயத்தில் இந்த தேவர்களும் லய மடைந்தபின், இந்த யஜ்ஞங்களுக்கு யார் பலனளிக்கமுடியும்? எனில்: அவர்களுக்கும அந்தர்யாமியாயிருந்து முக்₂யயஜ்ஞ போ₄க்தாவாய் நின்ற பரமபுருஷனே பலனளிக்கக் கூடுமாகையால் விரோதமில்லை. (ப₄ாவயந்து) தங்களுடைய ஆராதனத்திற்கு வேண்டியவையான அந்நபாநாதிகளை உங்களுக்குக் கொடுப்பதன்

इष्टान् भोगान् हि वो देवा दास्यन्ते यज्ञभाविताः।
तैर्दत्तानप्रदायैभ्यो यो भुङ्क्ते स्तेन एव सः॥१२॥

12. இஷ்டாந் பே₄ாக₃ாந் ஹி வோ
தே₃வா த₃ாஸ்யந்தே யஜ்ஞபா₄விதா:।
தைர் த₃த்தாநப்ரத₃ாயைப்₄யோ
யோ பு₄ங்க்தே ஸ்தேந ஏவ ஸ:॥

"யஜ்ஞபா₄விதா: தே₃வா:—யஜ்ஞங்களால் ஆராதிக்கப்பட்ட தேவர்கள். வ:—உங்களுக்கு. இஷ்டாந்—(மேலே தங்களுடைய ஆராதனத்துக்கு) வேண்டியவையான, பே₄ாக₃ாந்—அநுபவிக்கத்தக்க பொருள்களை. த₃ாஸ்யந்தே—கொடுப்பார்கள்; தை:—அந்த தேவர்களால், த₃த்தாந்—(தங்களை ஆராதிப்பதற்காகக்) கொடுக்கப்பட்ட அப்பொருள்களை. ஏப்₄ய:—இந்த தேவர்களுக்கு. அப்ரத₃ாய—(அவர்களுக்கு ஆராதனமான யஜ்ஞங்களைச் செய்வதன் மூலம்) கொடுக்காமல். ய:—எவனொருவன். பு₄ங்க்தே—தானே அனுபவிக்கிறானோ. ஸ:—அவன். ஸ்தேந: ஏவ—திருடனேயாவன்."

॥भा॥ यज्ञभाविताः—यज्ञेनाराधिताः मदात्मका देवाः इष्टान् भोगान् वो दास्यन्ते—(उत्तमपुरुषार्थलक्षणं मोक्षं साधयतां ये इष्टा

---

மூலம் தேவர்கள் உங்களைப் போஷிக்கட்டும் என்று கருத்து. அந்நபாநாதிகளான ஸாம்ஸாரிகபலன்களும் மோக்ஷஸாதநாநுஷ்டானத்துக்கு உதவுவனவாகையாலே அவை மோக்ஷத்திற்கு அனுகுணமானவை என்று கூறியதிலும் தவறில்லை. ஆகையாலே நாலாவது கேள்வியும் பதிலுரைக்கப்பட்டதாகிறது. இப்படி ஒருவர்க்கொருவர் உதவினால், இருவருமே மோக்ஷமடையலாம் என்பதை உணர்த்துகிறது உத்தரார்த்தம். (பரஸ்பரம பா₄வயந்த:) இப்படி ஒருவர்க்கொருவர் உதவுவதன் மூலம் (பரம் ஶ்ரேய: அவாப்ஸ்யத₂) மேலான நன்மையான மோக்ஷத்தைப் பெறுவீர்களாக. நன்மையைச் சொல்லும 'ஶ்ரேய:' என்பதைப் பரமபதத்தாலே விஶேஷிக்கையாலே, ஸ்வர்க்காதிகளைக் காட்டிலும் மேலான நன்மையான மோக்ஷமே இங்கு கூறப்படுகின்றது என்று விளங்குகிறது. 11.

भोगास्तान् भोगान् पूर्वपूर्वयज्ञभाविता देवा दास्यन्ते,)* उत्तरोत्तराराधनापेक्षितान् सर्वान् भोगान् वो दास्यन्ते इत्यर्थः। स्वाराधनार्थतया तैर्दत्तान्

10. அன்னபெரு வேள்வியா லாங்கிறைஞ்சப் பட்டமரர்
மன்ன பெரியவள மற்றளிப்ப—ரின்னே
யவர்தந்த போக மவர்ககளியா துண்பான்
கவர்கின்ருன் கள்வனே காண்.

அமரர்—தேவர்கள், அன்ன பெரு வேள்வியால்—*அத்தகைய பெரிய யஜ்ஞங்களால்.* ஆங்கு—*அந்த யஜ்ஞ*

12. சென்ற ஶ்லோகத்தில் "தே தே₃வா ப₄ாவயந்து வ:" என்று கூறப்பட்ட போஷணம் எத்தகையது என்பதைப் பூர்வார்த்தத்திலும், "தே₃வாந் ப₄ாவயத" என்று கூறப்பட்ட தேவதாராதனமான யஜ்ஞங்களைச் செய்யாவிட்டால் வரும் தோஷத்தை உத்தரார்த்தத்திலும் விவரிக்கிருன பரமபுருஷன இநத ஶ்லோகததில்: (யஜ்ஞ ப₄ாவிதா: தே₃வா:) யஜ்ஞங்களால் ஆராதிககப்பட்டவர்களாய், எனனை அந்தர்யாமியாகக் கொண்டவர்களான தேவர்கள். (வ:) அப்படி ஆராதித்த உங்களுக்கு. (இஷ்டாந் பே₄ாகா₃ந் தா₃ஸ்யநதே) விருப்பமான போக்யப் பொருள்களைக் கொடுப்பார்கள்; முன்னுல் செய்யப்பட்ட யஜ்ஞங்களால் ஆராதிக்கப்பட்ட தேவர்கள் மேன்மேலும் தங்களுக்கு ஆராதனமான யஜ்ஞங்களுக்கு வேண்டிய எல்லாப்பொருள்களையும் கொடுப்பார்கள் எனறு கருத்து. (தா₃ஸ்யந்தே) ஆத்மநேபதமாகையாலே, இவர்கள் கொடுப்பது மேலும் யஜ்ஞங்கள் மூலம் தாங்கள் பயனடையவே என்று விளங்குகிறது. இக்கருத்துடன் இவர்கள கொடுப்பதாலேயே இதை நிறைவேற்ருதவர்களைத திருடர்கள் என்கிறது உத்தரார்ததமும்: (தை:—த₃த்தாந்) தங்களுக்கு ஆராதனமான யஜ்ஞங்களுக்குப பயன்படவேண்டும் என்னும் கருத்துடனேயே அவாகளால் கொடுக்கப்பட்ட அந்நபாநாதி போக்யஙகளை. (ஏப்₄ய: அப்ரதா₃ய) அவர்களுக்கு ஆராதனமான

* ( ) இவ்வடைப்பினுள் இருக்கும் ப₄ாஷ்யபங்க்திகள், தாத்பர்யசந்த்₃ரிகையில் வ்யாக்யானம் செய்யப்படாமையாலும், 'உத்தரோத்தர' என்று தொடஙகும் ப₄ாஷ்யபஙகதிகளோடு புநருக்தி ஏற்படுகையாலும், ப்ரக்ஷிப்தஙகள் எனபா.

भोगान् तेभ्योऽप्रदाय यो भुङ्क्ते चोर एव सः। चौर्यं हि नाम–अन्यदीये तत्प्रयोजनायैव परिक्लृप्ते वस्तुनि स्वकीयताबुधिं कृत्वा

---

பூமிகளிலே, **இறைஞ்சப்பட்டு**—ஆராதிக்கப்பட்டவர்களாய், **மற்று மன்ன**—மேலே தங்களுடைய ஆராதனம் தொடர்ந்து நடைபெறுவதற்காக, **பெரிய வளம்**--பெரிய போக்கியப் பொருள்களை, **அளிப்பர்**— கொடுப்பார்கள்; **இன்னே**—இப்படியாக, **அவர் தந்த போகம்**–அந்த தேவர்கள் கொடுத்த அப்பொருள்களை, **அவர்க்கு அளியாது**—( யஜ்ஞங்களைச் செய்வதன் மூலம்) அவர்களுக்குக் கொடுக்காமல, **உண்பான்**–தானே சாப்பிடுகின்றவன், **கவர்கின்ருன்**—அவர்களுடைய சொத்தை அபஹரிப்பவனுய், **கள்வனே காண்**—திருடனேயாவான்.

---

யஜ்ஞங்களை செய்வதன்மூலம அவர்களுக்குத் திருப்பிக்கொடுக் காமல். (ய: பு$_4$ங்க்தே) எவன தனக்கேயாக நினைத்து அநுபவிக் கிருனே. (ஸ: ஸ்தேந ஏவ) அவன் திருடனேயாவான். இங்கு பின் வருமாறு ஓர் ஆக்ஷேபம் ஏற்படுகிறது: "இது எப்படி திருட்டாகும்? தேவர்களுடைய போகத்தை அவர்களுக்குத தெரியாமலோ, தெரிந்து பலாத்காரமாகவோ இவன திருடவில்லையே; அவர்கள் கொடுத்துத் தான் அடைந்ததை அனுபவிப்பதால் திருட்டுத்தனம் வந்துவிடாதே; ஸேவகர் ராஜஸேவையினுல் அடைந்த திரவியத்தைத் தஙகளுக்குப் பயன்படுத்திக்கொள்வதால் திருடர்கள் என்று தண்டிக்கப்படுவ தில்லையே ; இவர்களைத் திருடர்களாகக் கொண்டால் யஜ்ஞாதி களின் பலனுன அந்நபாநாதிகளைப் புசிக்கும் எல்லாப்பிரஜைகளை யும் திருடர்களாகச் சொல்லவேண்டிவருமே!" என்பது ஆக்ஷேபம். இதற்கு ஸமாதானமாவது:— ராஜஸேவகர்களுக்கு அரசன் கொடுக் கும் திரவியம ஸேவகர்கள் தங்களுக்கே உபயோகப்படுத்திக் கொள்ளவேண்டும் என்னும் கருத்துடன் கொடுக்கப்படுகிறது. இங்கோவெனில், தேவர்களால கொடுக்கப்படும் பொருள்கள் பிரஜைகள் யஜ்ஞங்களைச் செய்வதன்மூலம் தங்களுக்குப் பயன் படுத்தவேண்டும் என்னும் கருத்துடன் அளிக்கப்படுகின்றன. ஆகையால், பிறருடைய பயனுக்காகவே உள்ள பிறர்பொருளைத் தனக்கானதாக நினைத்து அதைக்கொண்டு தன்னைப் போஷித்துக்

तेन स्वात्मपोषणम्। अतोऽस्य न परमपुरुषार्थानर्हतामात्रम्; अपि तु निरयगामित्वं च भविष्यतीत्यभिप्रायः॥ १२॥

॥भा॥ तदेव विवृणोति—

यज्ञशिष्टाशिनस्सन्तो मुच्यन्ते सर्वकिल्बिषैः।
ते त्वघं भुञ्जते पापा ये पचन्त्यात्मकारणात्॥ १३॥

13. யஜ்ஞஶிஷ்டாஶிந: ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பி₃ஷை:।
தே த்வக₄ம் பு₄ஞ்ஜதே பாபா: யே பசந்த்யாத்மகாரணாத்॥

**யஜ்ஞஶிஷ்டாஶிந:**—*(பரமபுருஷாராதனமான) யஜ்ஞத்தில் எஞ்சிநிற்பதைப் புசிப்பவர்களான,* **ஸந்த:**-*நல்லோர்கள்,* **ஸர்வகில்பி₃ஷை:**—*(ஆத்மத₃ர்ஶனத்திற்குத் தடையான) எல்லாப்பாபங்களினின்றும்,* **முச்யந்தே**—*விடுபடுகிறார்கள்;* **யே**—*எவர்கள்,* **ஆத்மகாரணாத்**—*தங்கள் பசியாறுவதற்காக மாத்திரமே,* **பசந்தி**—*சமைத்துண்கிறார்களோ,* **தே து**—*அவர்களோவெனில்,* **பாபா:**—*பாபிகளாய்,* **அக₄ம் பு₄ஞ்ஜதே**—*பாபத்தையே புசிக்கிறார்கள்.*

---

கொள்வதாகிற திருட்டு யஜ்ஞம் செய்யாத பிரஜைகளுக்கு ஏற்படுகிறது. "தே₃ஹி மே த₃தா₃மி தே" [நீ எனக்கு ஹவிஸ்ஸு முதலானவைகளைக் கொடு; நான் உனக்குப் பலன்களை அளிக்கிறேன.] என்னும் எணணமுடைய தேவர்கள், கர்மங்களால் ஆராதிக்கப்பட்டபோதிலும், மேன்மேலே யாகம் செய்து தங்களுக்கு ஹவிர் பாகத்தைக் கொடுக்கவேணடும் என்னும் கருத்தினாலேயே பலனை அளிககிறார்கள். அப்படிக் கொடுக்காவிடில், வரி வசூலிக்க வேண்டும என்னும் எண்ணத்துடன அரசர்களால் கொடுக்கப்பட்ட நிலங்களுக்கு வரிசெலுத்தாதவர்களைப் போலே இவர்களும் தண்டிக்கத்தக்கவர்களே எனறு கருதது. இப்படி இவர்கள் திருடர்களைப்போலே தண்டிக்கத்தக்கவர்களாகிறபடியால், இவர்கள் பரமபுருஷார்த்தமான மோக்ஷத்திற்குத் தகுதியற்றவர்களாகப் போவதோடன்றியில், மறுமையில் நரகத்தையும் அடைவார்கள் என்று ஏற்படுகிறது. ஆகையால், யஜ்ஞம் செய்ய அதிகாரமுடையவர்கள் அவசியம் அதைச் செய்யவேண்டும் எனறு சொல்லப்பட்டதாயிற்று. 12.

|| भा || इन्द्राद्यात्मनावस्थितपरमपुरुषाराधनार्थतयैव द्रव्याण्युपादाय विपच्य तैर्यथावस्थितं परमपुरुषमाराध्य तच्छिष्टाशनेन ये शरीरयात्रां

---

11. வேள்வியினின் மிக்கதனை யுண்பார் விடப்படுவ
ரூழ்வினைக ளின்றொடர்ச்சி யுண்ணின்றுங்–கேள்வியி
தன்னுடம்புக் காகச் சமைத்துண்பார் பாவத்தை [லாத்
முன்னுடனே யுண்பார் முயன்று.

**வேள்வியினில் மிக்கதனை** — *(பரமபுருஷாராதனமான) யஜ்ஞத்தில் எஞ்சிநிற்பதை.* **உண்பார்**—*புசிப்பவர்கள்.* **ஊழ்வினையின் தொடர்ச்சியுள் நின்றும் விடப்படுவர்**—*(ஆத்ம தர்சனத்துச்குத் தடையாக) அநாதிகாலமாகத் தொடர்ந்து வரும் பாபங்களினின்றும் விடுபடுவர்.* **கேள்வி இலா**—*சாஸ்திரத்தை மீறுகிறவர்களாய்,* **தன் உடம்புக்காக முயன்று சமைத்து உண்பார்**—*தன் சரீரத்தைப் போஷிப்பதற்காக மாத்திரம் முயறசியுடன் சமைத்துச் சாப்பிடுகிறவர்கள்.* **முன் உடனே**—*விரைவிலேயே.* **பாவத்தை உண்பார்**—*பாவத்தையே புசிக்கிறார்கள். (பாபபலமான நரகத்தையே அடைவார்கள் என்றபடி.)*

---

*13. சென்ற இரண்டரை ஶ்லோகங்களில் அநுவதிக்கப்பட்ட ப்ரஜாபதியான நாராயணனின் வார்த்தையை இந்த ஶ்லோகத்தி லிருந்து விவரிக்கிறான் கண்ணன். அதில் இந்த ஶ்லோகத்தின் முற்பாதி "ஶ்ரேய: பரமவாப்ஸ்யத₂" [3-11] என்றதை விவரிக் கிறது. பிற்பாதி, "தைர்த₃த்தாந்" என்று தொடங்கிச் சென்ற ஶ்லோகத்தில் கூறியதை விளக்குகிறது. (யஜ்ஞஶிஷ்டாஶிந:) "யஜ்ஞஶிஷ்டம் அஶிதும் ஶீலம் யேஷாம் தே" [யஜ்ஞத்தில் எஞ் யதைப் புசிப்பதையே இயல்வாகக் கொண்டவர்கள] என்று வ்யுத்பத்தி. தனக்காகவோ, இந்திரன் முதலான தேவர்களுக்காகவோ செய்வதாக எண்ணுமல, இந்திரன் முதலான தேவதைகளுக்கு அந்தர்யாமியாயிருக்கும் பரமபுருஷனுக்கு ஆராதனம் இது என்னும் நினைவுடனேயே திரவியங்களை ஸம்பாதித்து, அவற்றைக்கொண்டு சமையல் செய்து, அதைக்கொண்டு இந்திராதிதேவர்களுக்கு*

कुर्वते, ते त्वनादिकालोपार्जितैः किल्बिषैरात्मयाथात्म्यावलोकनविरोधिभिस्सर्वैर्मुच्यन्ते। ये तु परमपुरुषेणेन्द्राद्यात्मना स्वाराधनाय दत्ता-

---

அந்தர்யாமியான பரமபுருஷனைக்குறித்து யஜ்ஞங்களைச்செய்து, அதில் மிகுந்ததைத்தாங்கள் உண்டு தேஹதாரணம் செய்பவர்கள் என்று கருத்து. (ஸந்த:) இப்படியிருப்பவர்கள். 'நல்லோர்களா' என்றுமாம். பிற்பாதியில் 'பாபா:' என்று சொல்லப்பட்டவர் களுக்கு எதிர்த்தட்டாக இவர்களை நல்லவர்கள என்கிறது. (ஸர்வகில்பி₃ஷை: முச்யந்தே) பாபத்தை மேன்மேலும் ஸம்பாதித்துக் கொள்பவர்களாகப் பிற்பகுதியில் கூறப்படும அவர்களைப்போலல்லா மல், இவர்கள் ஆத்மாவைப்பற்றிய உண்மையறிவுக்குத் தடையாக அநாதிகாலமாகத தாங்கள சேர்த்து வைததிருக்கும ஸமஸ்த பாபங்களினின்றும விடுபடுகிறார்கள் (கில்பி₃ஷை:) பாபங்களினின்றும "அஶ்வ இவ ரோமாணி விதூ₁ய பாபம" என்னும் ஶ்ருதியிற்போலே, இங்கும பாபம்போலே புண்யமும் விரோதியாயிருக்கையாலே கில்பி₃ஷஶப்தம் அதையும் குறிக்கிறது. (ஸர்வகில்பி₃ஷை:) எல்லாப் பாபங்களினின்றும்.

"பஞ்ச ஸூநா க்₃ருஹஸ்த₂ஸ்ய சுள்ளீ பேஷண்யுபஸ்கர: |
கண்ட₃நீ சோத₃கும்ப₄ஶ்ச ப₃த்₄யதே யாஸ்து வாஹயந் ||
தாஸாம் க்ரமேண ஸர்வாஸாம் நிஷ்க்ருத்யர்த்த₂ம் மஹர்ஷிபி₄: |
பஞ்ச க்லுப்தா மஹாயஜ்ஞா: ப்ரத்யஹம் க்₃ருஹமேதி₄நாம் ||"
[3-68, 69]

[ (1) அடுப்பு, (2) அம்மி, (3) விளக்குமாறு, (4) உரலுலக்கைகள், (5) ஜலபாத்ரங்கள ஆகிய ஐந்தும் ஒவ்வொரு கிருஹஸ்தனுக்கும் ஸூநைகள் (ஜீவவதம் ஏற்படக்கூடிய இடங்கள்;) அவைகளை உபயோகப்படுததும கிருஹஸ்தன பாபமடைகிறான். அந்த ஐந்து விதமான பாபத்தையும கிரமமாகப் போக்கடிப்பதற்காக, கிருஹஸ்தர்கள தினந்தோறும் (1) ப்ரஹ்மயஜ்ஞம, (2) பித்ரு யஜ்ஞம, (3) தைவயஜ்ஞம். (4) பூ₄தயஜ்ஞம், (5) மனுஷ்யயஜ்ஞம என்னும் ஐந்து மஹாயஜ்ஞங்களைச் செய்யவேண்டும என்று மஹர்ஷிகள் விதித்திருக்கின்றனர்.] என்கிறபடியே பஞ்சஸூநை களில் ஏற்படும பாபங்களைமாத்திரம போக்கடிக்கும் பஞ்சமஹா யஜ்ஞங்களைப்போலன்றிக்கே, யஜ்ஞஶிஷ்டத்தைப் புசிப்பது

न्यात्मार्थतयोपादाय विपच्याश्नन्ति ते पापामानोऽघमेव भुञ्जते। अघपरिणामित्वादघमित्युच्यते। आत्मावलोकनविमुखाः नरकायैव पचन्ते॥ १३॥

---

ஆத்மத₃ர்ஶனத்துக்குத்தடையான எல்லாப்பாபங்களையும போக்கடிக்கும் என்று கருத்து. இங்கு "ஸர்வபாபேப்₄யோ மோக்ஷயிஷ்யாமி" [கீதை 18-66] [எல்லாப்பாபங்களினின்றும விடுவிககிறேன்.] முதலானவிடங்களிற்போலே போயபிழையான பூர்வாக₄ம் முழுவதையும், புகுதருவான் நினறனவான உத்தராக₄த்தையும் ஸர்வஶபதத்திற்குப் பொருளாகக் கொளளக்கூடாது; பக்திப்ரபத்திகளுக்கே போயபிழைகளனைத்தையும் புகுதருவான் நின்றனவற்றையும் தீயினில் தூசாக்கும் திறமையுண்டாகையாலும், இது அப்ரகரணமல்லாமையாலும் முற்கூறியவாறு மோக்ஷஸாதனமான பக்திக்கு ஸாதனமான ஆத்மத₃ர்ஶனத்திற்கு விரோதியான பாபமென்று ஸங்கோசப்படுததியே பொருள்கொளளவேண்டும்.

" ஜ்ஞாநமுத்பத்₃யதே பும்ஸாம் க்ஷயாத் பாபஸ்ய கர்மண:|
யதா₂தர்₃ஶதலே ப்ரக்₂யே பஶ்யத்யாத்மாநமாத்மநி ||"

[பா₄ர-மோக்ஷ 202-9]

[பாபம் நீங்கினவளவில் மனிதர்களுக்கு ஆத்மதர்ஶனம் உண்டாம். அழுக்கு நீககிய கண்ணுடியில் தன் பிரதிபிமபத்தைப்பார்ப்பது போலே, தன்னைத்தன்னில் காண்கிறுன.] எனறு தடையாயிருக்கும் பாபங்கள நீங்கினவுடன் ஆத்மதர்ஶனம் ஏற்படும் எனறு சொல்லப்பட்டதும் இங்கு அநுஸந்திக்கத்தக்கது. இப்படி பரம்பரயா மோக்ஷஸாதனமாயிருக்கையாலேயே கீதையில் (4-30) யஜ்ஞஶிஷ்டாம்ருதம் என்று யஜ்ஞததில் எஞ்சிய உணவு அமுதாகக் கூறப்படுகிறது என்பதும் அறியத்தக்கது. (யேது ஆத்மகாரணுத் பசந்தி) இந்திராதிதேவர்களுக்கு அந்தர்யாமியான தன்னுடைய ஆராதனத்திற்கெனறே பரமபுருஷனல் கொடுக்கப்பட்டபொருள்களை எவர்கள் தங்களுக்காகவே சமைக்கின்றுர்களோ. இங்கு துஶப்தம முற்பாதியில் கூறப்பட்ட அதிகாரியைக்காட்டிலும இவ்வதிகாரிக்குள்ள வேற்றுமையைக் காட்டுகிறது. (ஆத்மகாரணுத்) இங்கு, 'காரணுத்' என்பது சமையலுக்குக் காரணமாகும் பயனைக்குறிக்கினறதாகையாலே, 'தன பயனுக்காக, என்று பொருள்படுகிறது. (பசந்தி) சமைப்பது மாத்திரம் குற்றமாகாதாகையாலும், 'தனக்காகச் சமைக்கிருன்' எனறு சொல்லுகையாலும், 'சமைத்துப் புசிக்கிறுர்களோ' என்றவளவும பொருள்

॥भा॥ पुनरपि लोकदृष्ट्या शास्त्रदृष्ट्या च सर्वस्य यज्ञमूलत्वं दर्शयित्वा यज्ञानुवर्तनस्यावश्यकार्यतामननुवर्तने दोषं चाह—

अन्नाद्भवन्ति भूतानि पर्जन्यादन्नसंभवः।
यज्ञाद्भवति पर्जन्यो यज्ञः कर्मसमुद्भवः॥ १४॥

कर्म ब्रह्मोद्भवं विद्धि ब्रह्माक्षरसमुद्भवम्।
तस्मात्सर्वगतं ब्रह्म नित्यं यज्ञे प्रतिष्ठितम्॥ १५॥

एवं प्रवर्तितं चक्रं नानुवर्तयतीह यः।
अघायुरिन्द्रियारामो मोघं पार्थ स जीवति॥ १६॥

14. அந்நாத்$_3$ ப$_4$வந்தி பூ$_4$தாநி பர்ஜந்யாத$_3$ந்நஸம்ப$_4$வ:।
யஜ்ஞாத்$_3$ ப$_4$வதி பாஜந்யோ யஜ்ஞ: கர்மஸமுத்$_3$ப$_4$வ:॥

15. கர்ம ப்$_3$ரஹ்மோத்$_3$ப$_4$வம் வித்$_3$தி$_4$ ப்$_3$ரஹ்மாக்ஷரஸமுத்$_3$ [ப$_4$வம்।
தஸ்மாத் ஸர்வக$_3$தம் ப்$_3$ரஹ்ம நித்யம் யஜ்ஞே
ப்ரதிஷ்டி$_2$தம்॥

---

கொள்ளவேண்டும்; இல்லையாகில, 'அக$_4$ம பு$_4$ஞ்ஜதே' [பாபத்தைப் புசிக்கிறார்கள்] என்று கூறுவது ஒட்டாது. (தே பாபா:) பாபத்தையே இயற்கையாகக்கொண்ட அவர்கள். "தத்$_3$கு$_3$ணஸாரத்வாத்து தத்$_3$ வ்யபதே$_3$ஶ:" [2-3-29] என்னும் ப்ரஹ்மஸூத்ரத்தில சொன்ன நியாயப்படி பாபகுணம நிறைந்திருக்கையாலே பாபிகளான இவர்களைக்காட்ட 'பாபா:' என்று புலலிங்க ப்ரயோகம் செய்யப்படுகிறது. (அக$_4$ம் பு$_4$ஞ்ஜதே) பாபத்தையே புசிக்கிறார்கள். அந்நத்தைப் புசிப்பவர்களாயிருந்தபோதிலும், உண்மையில் இதனால் பாபமே ஏற்படுகிறதாகையால், 'பாபத்தையே புசிக்கிறார்கள்' என்று ஔபசாரிகமாகக் கூறப்படுகிறது. தனக்காகவே சமைத்துப் புசிப்பவனுக்கு ஆத்மதாஶனத்துக்குத் தடையான பழைய பாபங்கள் நீங்கவில்லையாகையால ஆத்மதர்ஶனம ஏற்படாது என்றும், "கேவலாகே$_4$ா ப$_4$வதி கேவலாதீ$_3$" [ருக்-அஷ்டகம் 8-6-23; மண்டலம் 10-10-117-6; யஜுர் அஷ்ட 2-8-8-3] [தேவதைகளுக்குக் கொடுக்காமல் சாப்பிடுபவன் பாபத்தையே அடைகிறான்.] என்று ஶ்ருதியில் சொன்ன ரீதியிலே மேன்மேலே பாபம சேருவதினால் இவன் நரகத்தையே அடைவான் என்றும் கருத்து. 13.

**16. ஏவம் ப்ரவர்த்திதம் சக்ரம் நாநுவர்த்தயதீஹ ய:।**
**அக₄ாயுரிந்த்₃ரியாராமோ மோக₄ம் பார்த்த₂ ஸ ஜீவதி ॥**

**அந்நாத்**—*அன்னத்திலிருந்து*, **பூ₄தாநி**-*தேவர் மநுஷ்யர் முதலான எல்லா ஜீவராசிகளும்*, **ப₄வந்தி**—*உண்டாகின்றன;* **பர்ஜந்யாத்**—*மழையிலிருந்து*, **அந்நஸம்ப₄வ: (ப₄வதி)**—*அன்னத்தின் உற்பத்தி (ஏற்படுகிறது;)* **யஜ்ஞாத்**—*யஜ்ஞத்திலிருந்து*, **பர்ஜந்ய:**—*மழை*, **ப₄வதி**—*ஏற்படுகிறது;* **யஜ்ஞ:**-*யஜ்ஞம்*, **கர்மஸமுத்₃ப₄வ: (ப₄வதி)** — *கர்மங்களிலிருந்து பிறப்பை உடையது (ஆகிறது;)* **கர்ம**—*கர்மத்தை*, **ப்₃ரஹ்மோத்₃ப₄வம்**—*சரீரத்திலிருந்து பிறப்பதாக*, **வித்₃தி₄**—*அறிவாயாக;* **ப்₃ரஹ்ம**—*சரீரம்*, **அக்ஷரஸமுத₃ப₄வம் (ப₄வதி)**-*ஜீவனிடமிருந்து பிறக்கிறது;* **தஸ்மாத்**—*ஆகையால்*, **ஸர்வக₃தம்**-*எல்லா அதிகாரிகளிடமும் இருக்கின்றதான*, **ப்₃ரஹ்ம**—*சரீரம்*, **நித்யம்**—*எப்போதும்*, **யஜ்ஞே ப்ரதிஷ்டி₂தம்**—*யஜ்ஞத்தை மூலமாகக்கொண்டது;* **பார்த்த₂**—*குந்திபுத்திரனே!* **ஏவம்**—*இவ்வண்ணமாக*, **ப்ரவர்த்திதம்**—*(பரமபுருஷனுல்) ஒன்றுக்கொன்று காரணமாகச் சுழன்று வரும்படி செய்யப்படும்*, **சக்ரம்**-*சக்கரம்போன்ற கார்யகாரண நடைமுறையை*, **இஹ**—*ஸாதநாநுஷ்டான நிலையிலுள்ள*, **ய:**-*எவனொருவன்*, **ந அநுவர்த்தயதி**—*(தானும் யஜ்ஞம் செய்வதன் மூலம்) சுழலச்செய்வதில்லையோ*, **ஸ:**—*அவன்*, **அக₄ாயு:**—*பாபஸம்பந்தமுள்ள வாழ்நாளையுடையவனும்*, **இந்த்₃ரியாராம:**—*ஐம்புலன்களிலேயே ரமிப்பவனும்*, **மோக₄ம்**—*வீணுகவே*, **ஜீவதி**—*உயிர்வாழ்கிறுன்.*

---

*14, 15, 16.* லோகத்₃ருஷ்டியாலும், சாஸ்திரதிருஷ்டியாலும் சரீரங்களெல்லாம் யஜ்ஞத்தை மூலமாகக்கொண்டவை என்பதைக் காட்டுவதன் மூலம், யஜ்ஞம் செய்வதின அவசியத்தையும், செய்யாவிடில் ஏற்படும் தோஷத்தையும் மறுபடியும் இமமூன்று ஶ்லோகங்களாலே விளக்குகிறுன் கண்ணன். ஆதரத்தாலே பிரமாணங்களைக் காட்டி விளக்குகிறுனைகயாலே புநருக்திதோஷமில்லை. (அந்நாத் பூ₄தாநி ப₄வந்தி) அன்னத்தினின்றும் ஜீவராசிகள்

॥भा॥ अन्नात्सर्वाणि भूतानि भवन्ति, पर्जन्याच्चान्नसंभव इति सर्वलोकसाक्षिकं। यज्ञात्पर्जन्यो भवति इति च शास्त्रेणावगम्यते * अग्नौ

12. அன்னத்தாற் பூதங்க ளுண்டாகு மன்னந்தான்
மின்னத்தாழ் மாரியான் மிக்கியலு—மன்னத்தான்
மாரியது வேள்வியால் வந்தியலு மவ்வேள்வி
காரியம தாலாகுங் காண்.

**அன்னத்தால்** — உணவிலிருந்து, **பூதங்கள்** — தேவர், மனிதர் முதலான ஜீவராசிகள். **உண்டாகும**—பிறக்கும்;

உண்டாகின்றன. பூ₄தப்ரேத பிஶாசவேதாளங்களிற்சேர்ந்த பூதங களை இங்கு குறிப்பதில் உபயோகமில்லையாகையாலும, "பூ₄—ஸத்தாயாம்" என்னும் தாதுவின்படி பூ₄தஶப்தத்தாலே காட்டப்படும ஸத்தையுள்ள எல்லாப்பொருள்களும், பஞ்சபூதங்களும் அந்நத தால் உண்டாவதில்லையாகையாலும், ஜீவனில்லாத கேவலஶரீரமும, நித்யஞான கேவலஜீவனும் உண்டாவதில்லையாகையாலும, ஶிலாதி₃ ஶரீரங்கள் அந்நத்தால் உணடாவதில்லையாகையாலும, இங்கு பூ₄தஶப்தம் அந்நத்தால் வளரும சரீரத்தோடு கூடிய ஜீவராசி களைக் குறிப்பதாகக் கொள்வதே உசிதம. அந்த ஜீவராசிகளின சரீராம்ஶம் அந்நத்தாலே உண்டாவதையிட்டு, அவை அந்நத்தால் உண்டாவதாக இங்கு கூறபபடுகின்றன. ஜீவனால் அதி₄ஷ்டிக்கப் படாவிடில ஶரீரமே ஸித்திககாதாகையால், ஜீவஸஹிதமான ஶரீரமே பூ₄தஶப்தத்தால் எடுக்கப்பட்டு அந்நத்தால உண்டாவ தாகச் சொல்லப்படுகிறது. (பர்ஜந்யாத அந்நஸம்ப₄வ:) மழை யினால் அன்னம் உண்டாகிறது; மழைக்கு அதி₄தே₃வதையைச் சொல்லும் பர்ஜந்யஶப்தம இங்கு, அவனால் உண்டாகும் மழையை லக்ஷணையாலே சொல்லுகிறது. இப்படிக கொள்ளாவிடில, அடுத்த படியாக யஜ்ஞத்தால் பர்ஜன்யன் உண்டாவதாகக்கூறியது பொருந்தாது. ஆக, அந்நத்தினால் பூதங்கள் உண்டாகின்றன என்றும், மழையினால் அன்னம் உண்டாகிறது எனறும அனைத் துலகும் நேரே காணும் விஷயங்கள் அநுவதிக்கப்பட்டன. இப்படி லோகத்₃ருஷ்டியால் ஸித்திக்காமல், ஶாஸ்திரமாகிய கண்ணாலேயே ஸித்திக்கும் விஷயம் அடுத்தபடியாக விவரிக்கப் படுகிறது. (யஜ்ஞாத் பர்ஜந்யோ ப₄வதி) யஜ்ஞத்தினினறும மழை உண்டாகிறது. இது ப்ரத்யக்ஷத்தால அறியக்கூடிய விஷயமலல;

प्रास्ताहुतिस्सम्यगादित्यमुपतिष्ठते। आदित्याज्जायते वृष्टिः (मनु ३-७६) इत्यादिना। यज्ञश्च द्रव्यार्जनादिकर्तृव्यापाररूपकर्मसमुद्भवः, कर्म च

---

**அன்னம்தான்**—*அவ்வுணவோவெனில்,* **மின்ன தாழ் மாரியால்**—*மின்னிக்கொண்டு விழும் மழையால்,* **மிக்கு இயலும்**—*மிகவும் உண்டாகும்;* **மாரி அது**—*அந்தமழை,* **வேள்வியால் தான்**—*யஜ்ஞத்தாலேயே,* **மன்ன வந்து இயலும்**—*நிலையாகப் பொழியும்;* **அவ்வேள்வி**—*அந்த யஜ்ஞம்,* **காரியம் அதால்**—*கர்மங்களெனப்படும் செயல்களால்,* **ஆகும் காண்**—*உண்டாகும் என்று அறிவாய்.*

---

"அக்₃நௌ ப்ராஸ்தாஹுதி: ஸம்யகா₃தி₃த்யமுதிஷ்ட₂தே।
ஆதி₃த்யாத் ஜாயதே வ்ருஷ்டிர் வ்ருஷ்டேரந்நம் தத: ப்ரஜா: ||
[மநு 3-76]

[யாகாக்னியில் நன்றாக ஹோமம் செய்யப்பட்ட ஆஹுதி ஆதித்யனை அடைகிறது; ஆதித்யனிடமிருந்து மழை உண்டாகிறது. மழையிலிருந்து அன்னமும், அன்னத்திலிருந்து ஜீவராசிகளும் உண்டாகின்றன.] முதலான சாஸ்திரவசனங்களாலேயே அறியக்கூடியது. (யஜ்ஞ: கர்மஸமுத்₃ப₄வ:) யஜ்ஞமானது பொருளீட்டுவது, சமைப்பது முதலான செயல்களாலேயே உண்டாவது; இது லோகத்₃ருஷ்டியால் அறியக்கூடியது. இங்கு யஜ்ஞஶப்தத்திற்கு முக்கியார்த்தமான யாகத்தையே பொருளாகக்கொள்வது பொருந்தியிருக்க, "யஜ்ஞ: அபூர்வம்" என்று யஜ்ஞத்தினால் உண்டாவதாகச் சொல்லப்படும் அபூர்வத்தை லக்ஷணையாலே பொருளாக சங்கரர் உரைத்தது அஸ்வரஸம். (கர்ம ப்₃ரஹ்மோத்₃ப₄வம் வித்₃தி₃) கர்மத்தை ப்₃ரஹ்மம் எனப்படும் மூலப்ரக்ருதியின் பரிணாமமான சரீரத்தால் உண்டாவதாக அறிவாயாக. இதுவும் லோகத்₃ருஷ்டியால் அறியக்கூடியது. சாஸ்திரங்களில் பலவிடங்களில ப்₃ரஹ்மஶப்தம் மூலப்ரக்ருதியைக் குறிப்பதைக் காண்கிறோம். "ய: ஸர்வஜ்ஞ: ஸர்வவித் யஸ்ய ஜ்ஞாநமயம் தப:। தஸ்மாதே₃தத்₃ ப்₃ரஹ்ம நாம ரூபமந்நஞ்சஜாயதே ||" [முண்ட 1-1-9] [எவனொருவன் எல்லாப் பொருள்களின் ஸ்வரூபஸ்வபாவங்களை அறிகிறானோ, எவனுடைய ஸ்ருஷ்டி ஸங்கல்பம் ஞானமயமானதோ, அப்பரமாத்மாவிடமிருந்து, (பெரிதாயிருக்கையாலே) ப்ரஹ்மம எனப்படும் இந்த மூலப்ரக்ருதி

ब्रह्मोद्भवम्। अत्र च ब्रह्मशब्दनिर्दिष्टं प्रकृतिपरिणामरूपं शरीरम्। *तस्मादेतद्ब्रह्म नामरूपमन्नं च जायते (मु. १-९-९) इति ब्रह्मशब्देन प्रकृतिर्निर्दिष्टा; इहापि *मम योनिर्महद्ब्रह्म इति हि वक्ष्यते। अतः कर्म ब्रह्मोद्भवम् इति प्रकृतिपरिणामरूपशरीरोद्भवं कर्मेत्युक्तं भवति।

---

**13.** இக்கருமங் காயமெனச் சேர் பிரமத் தாலா
மக்கருமஞ் சீவனு லாங்கதுவாஞ்—சிக்கெனவே
யெங்கு நிகழ்வுடலா மிப்பிரமம் வேள்வியிலே
தங்கு நிலையமருந் தான்.

**இக்கருமம்**—*கருமமாகிற இது.* **காயம என சேர் பிரமத்தால் ஆம்**-*உடம்பாகிற நிலையையடைந்த மூலபரகருதியால உண்டாவது;* **அக்கருமம் அது**—*அக்கருமத்துக்குக காரணமான அந்த உடமபு.* **ஆங்கு சீவனுல் ஆம்**—*அந்ந பாநாதிகளால் திருப்தியடையும் ஜீவாத்மாவால ஏறபடுவது;* **எங்கும் நிகழ்வு உடலாம் இப்பிரமம் தான்**—*எல்லா அதிகாரிகளிடமும் இருக்கும் உடலாகிற நிலையை அடைந்த இந்த மூலப்ரக்ருதியானது.* **சிககெனவே**—*நிலையாக.* **வேள்வியிலே தங்கும் நிலை அமரும்**—*(இவ்வாருக) யஜ்ஞத்தை மூலமாகக் கொண்டதாகும்.*

---

நாமருபபபிரிவுகளேககொண்டதாகவும, சேதனபோக்யமாகவும்பிறக்கிறது.] எனகிற ஶ்ருதியிலே பரமாத்மா விடமிருந்து பிறப்பதாகக் கூறப்படுகையால, அவனேக்காட்டிலும் வேறுபட்டதாய், நாமரூபப் பிரிவுகளே உடையதாகவும, அந்நமென்கையாலே போக்யமெனறும் அறியப்படுகையாலே ஜீவாகளேக்காட்டிலும் வேறுபட்டதான மூலப்ரக்ருதி ப்ரஹ்மமென்று கூறப்பட்டதனரே. "மம யோனிர் மஹத்ப்ரஹ்ம" [கீதை 14-3] என்று கீதையிலும் பரமாத்மாவைக் காட்டிலும வேறுபட்டதாகவும், 'யோநி' என்று உபாதானமாகவும் குறிக்கப்படுகையாலே மூலப்ரக்ருதியென்றே நிஶ்சயிக்கத்தக்க தத்துவம் ப்ரஹ்மஶப்தத்தாலே குறிக்கப்பட்டதனரே. மூலப்ரக்ருதியிலிருநது நேரே கர்மம் உண்டாகிறதென்று கூறமுடியாதாகையாலே, இங்கு மூலப்ரகருதியின் காரயப் பொருளாய், கர்மம் செய்வதான ஶரீரம் ப்ரஹ்மஶப்ததால குறிக்கப்பவதாகக் கொளவதே பொருத்தமுடையதாயிருக்கும்.

* ब्रह्माक्षरसमुद्भवम् इत्यत्राक्षरशब्दनिर्दिष्टो जीवात्मा; अन्नपानादिना तृप्ताक्षराधिष्ठितं शरीरं कर्मणे प्रभवतीति कर्मसाधनभूतं शरीरमक्षरसमुद्भवम्;

---

இங்கு ப்ரஹ்மஶப்தத்தால, முக்யார்த்தமான பரமாத்மாவோ, ஞானம் முதலான பெருமைகளையுடைய ஜீவதத்துவமோ குறிககப் படுவதாகக் கொள்ளலாகாதோ? எனில்: எல்லாப்பொருளகளுக்கும் காரணமான பரப்ரஹ்மத்தை இஙகு கர்மத்திற்குக் காரணமாகக் குறிப்பிட்டுக் கூறுவதில் பயன் ஒனறுமில்லை. மேலும "ப்ரஹ்மம் அக்ஷரத்திலிருந்து உண்டாகிறது' என்று அடுத்தபடியாகக் கூறு வதும பரப்ரஹ்மவிஷயததில பொருந்தாது. ப்ரஹ்மஶப்தம் ஜீவனைக் குறிக்கிறது என்று கொண்டாலும், நித்யனை அவனை அக்ஷரத்திலிருந்து உண்டாவதாகக் கூறுவது ஒட்டாது. ப்ரஹ்ம ஶப்தம் வேதத்தையும், அக்ஷரஶப்தம் பரமாத்மாவையும் குறிப்ப தாக சங்கரர் விவரித்நதும், "ஏவம் ப்ரவர்த்திதம் சக்ரம்" [3-16] என்று சக்ரமாகக கூறியிருப்பதற்குப் பொருந்தாது. ப்$_3$ரஹ்ம ஶப்தம் வையாகரணர்கள் கூறும் ஸ்பே$_2$ாடப்$_3$ரஹ்மத்தைக கூறுவ தாகவும், அக்ஷரஶப்தம அநத ப்ரஹ்மத்தை உணர்த்தும் அக்ஷரங் களைக் கூறுவதாகவும் யாதவப்ரகாஶர் முதலானூர் கூறியதும் ஸ்பே$_2$ாட ப்$_3$ரஹ்மம என்று ஒரு பொருளே கிடையாதெனறு ஆசாரியர்கள் நிரூபிககையாலே தள்ளப்பட்டது. "ஸ்பே$_2$ாடஸ் த்வம் வர்ண ஸம்ஶ்ரய:" [ஹரிவமஶம் ப$_4$விஷ்யபர்வம் 88-55] [வர்ணங்களை ஆஶ்ரயித்திருக்கும் ஸ்பே$_2$ாடம் நீயே] எனறு கிருஷ்ணபகவானைக் குறித்து சிவன் செய்த துதியில் பரம பொருளை ஸ்பே$_2$ாடம் எனறு கூறியிருப்பதும் வர்ணங்கள் தங்களுடைய பொருளை ஸ்பு$_2$டப் படுத்தும் (தெளிவுபடுத்தும்) சக்தியானது பகவத்$_3$தீ$_4$னம் என்ற தாகுமேயொழிய வையாகரணர்களின் ஸ்பே$_2$ாடத்தைக் கூறிய தாகாது. ஆகையால், முக்$_2$யார்தத$_2$மும, வேறு பொருள்களும் பொருந்தாமையாலே, இஙகு ப்ரகரணுதிபலத்தாலே ப்$_3$ரஹ்ம ஶப்தம் சரீரத்தைக குறிக்கிறது எனறே கொள்ளவேண்டும். ஆக, பொருளீட்டுதல முதலான கர்மங்கள் மூலப்ரக்ருதியின் பரிணமரூபமான சரீரத்திலிருந்து உண்டாகின்றன என்று கூறிய தாயிற்று. (ப்$_3$ரஹ்ம அக்ஷரஸமுத்$_3$ப$_4$வம்) முற்கூறிய கர்மங்களைச் செய்யும் சரீரம் 'அக்ஷரம்' எனப்படும் ஜீவனிடமிருந்து உண்டா கிறது. ப்ரஹ்மஶப்தம ஶரீரத்தைக்குறிக்கிறதாகையாலே, அக்ஷர

तस्मात् सर्वगतं ब्रह्म सर्वाधिकारिगतं शरीरं नित्यं यज्ञे प्रतिष्ठितं यज्ञमूलमित्यर्थः। एवं परमपुरुषेण प्रवर्तितमिदं चक्रम्—अन्नात्

—ரபதம் சரீரத்தோடு சேர்ந்து நிற்கும ஜீவனைக்குறிப்பதே உசிதம். "க்ஷரம் ப்ரத₄ாநம் அம்ருதாக்ஷரம் ஹர:" [ஶ்வே 1-10] [அழிவதாகை யால் க்ஷரம் எனப்படுவது மூலபரக்ருதி; அழியாததாகையால் அக்ஷரம் எனப்படுபவன் ஜீவன்.] என்று ஶ்ருதியிலும், "கூட ஸ்தேஹாக்ஷர:" [கீதை 15-13] என்று கீதையிலும் ஜீவனை அக்ஷர ஶப்தத்தால் கூறியது காணத்தக்கது. சரீரம ஜீவனிடமிருந்து உண்டாகிறது என்று கூறியது எப்படியெனில்: கேவலஶரீரம ஜீவனிடமிருந்து உண்டாகிறது என்று இங்கு பொருளல்ல: ஜீவனே ஶரீரத்தைக் கர்மம செய்யும்படி தூண்டுகிறுனகையாலே, கர்மம் செய்யும் ஶரீரம் ஜீவனிடமிருநது உண்டாகிறது என்பதே இவ்வாக்யத்திற்குப் பொருள. இது ஶாஸ்திரக்கண்ணுல் அறியத் தக்கது. பூ₄தங்களுக்கு அந்நம் காரணமாகவும், அந்நத்திற்கு மழை காரணமாகவும, மழைககு யஜ்ஞம காரணமாகவும், யஜ்ஞத் திற்குக் கர்மம் காரணமாகவும், காமத்திற்கு சரீரம காரண மாகவும, (கர்மம் செய்யும்) சரீரத்திற்கு ஜீவன காரணமாகவும் இருநதபோதிலும, ஜீவனுககு மறுபடியும அநநம காரணமாகாமை யாலே 'சக்ரம' நிறைவு பெறவிலலையே எனில்: அக்ஷரம எனப் படும் ஜீவாத்மா அந்நபாநாதிகளால திருப்தியடைந்தே ஶரீரத்தை அதிஷ்டித்து நிற்கிறுனகையாலே அந்நம, மழை, யஜ்ஞம, கர்மம், சரீரம், ஜீவன் எனனும் ஆறு பொருளகளாலும சக்ரம நிறைவு பெறுகிறது. அன்றிக்கே, கர்மமானது ஜீவனுல் அதிஷ்டிக்கப்பட்ட ஶரீரத்தால் உணடாகிறது எனறும, ஜீவனுல் அதிஷ்டிக்கப்பட்ட ஶரீரம் அன்னத்தால் உண்டாகிறது எனறும் கூறலாமாகையாலே ஐந்து பொருள்களாலே சக்கரம் பொருந்திவிடுகிறது எனறும் கொள்ளலாம். "பூ₄தாநி" என்று "ப்₄ராமயந் ஸர்வபூ₁தாநி" [கீதை 18-61] முதலான விடங்களிற்போலே ஜீவாதி₄ஷ்டி₂தமான ஶரீரத்தை எடுத்து, "அந்நாத்₃ப₄வந்தி" என்று அது அனனத் தால் உண்டாகிறது எனறு கூறியதும இப்படிச் சககரத்தைப் பூர்த்தி செய்யவே எனறு விளங்குகிறது. (தஸ்மாத்) இப்படி சரீரமானது அனனத்தாலும, அன்னம மழையாலும், மழை யஜ்ஞத தாலும் உண்டாவதாயிருக்கையால். (ஸர்வக₃தம் ப்₃ரஹ்ம) கர்ம யோகாதிகாரியோடு ஞாநயோகாதிகாரியோடு வாசியற எல்லா

भूतशब्दनिर्दिष्टानि सजीवानि शरीराणि, पर्जन्यादन्नम्, यज्ञात्पर्जन्यः, यज्ञश्च कर्तृव्यापाररूपात्कर्मणः, कर्म च सजीवाच्छरीरात्, सजीवं शरीरं पुनरप्यन्नात्—इत्यन्योन्यकार्यकारणभावेन चक्रवत्परिवर्तमानम्, इह साधने वर्तमानो यः कर्मयोगाधिकारी ज्ञानयोगाधिकारी वा नानु-

---

அதிகாரிகளுக்கும் உள்ள சரீரம. ஸர்வவ்யாபியான சரீரம் என்று கொளளலாகாதோ? எனில்: அளவுபட்டதான சரீரம் ஸர்வவ்யாபக மாயிருககமுடியாதாகையால், கூடாது; ஆகையால் சற்று முன் எடுக்கப்பட்ட அக்ஷரஸமூஹம் ஸர்வஶப்தத்தால எடுக்கப்படுவதாகக் கொண்டு பொருள கூறியதே உசிதம; 'ஜீவகதம்' என்று கூருமல், 'ஸர்வகதம' என்றது ஜீவர்களிடையேயுள்ள அதிகாரி வைசித்ரியத்தைக் காட்டுவதற்காக. நீ கர்மயோகாதிகாரியாகவோ, அலலது ஜ்ஞாநயோகாதிகாரியாகவோ, அல்லது இவர்களிலும் சிறந்த அதிகாரியாகவோ இருந்தாலும் உன சரீரமும் யஜ்ஞம் செய்தே ரக்ஷிக்கப்படவேண்டியது என்று கருத்து. (நித்யம் யஜ்ஞே ப்ரதிஷ்டிதம) எப்போதும் யஜ்ஞத்தையே மூலமாகக் கொண்டது. யஜ்ஞம் செய்து மிகுந்ததைக் கொண்டே ரக்ஷிக்கப்படவேணடியது எனறபடி. ஆக, இவ்விரணடு ஶ்லோகங்களாலும யஜ்ஞம் அவசியம் செய்யவேண்டியது எனறு நிரூபிக்கப் பட்டதாயிற்று. இனி, மூன்றும் ஶ்லோகத்தாலே யஜ்ஞம் செய்யாவிடில் ஏற்படும தோஷம் விளக்கப்படுகிறது. (ஏவம் ப்ரவர்த்திதம் சக்ரம்) முன இரணடு ஶ்லோகஙகளாலும் விவரிக்கப்பட்டதாய்; "அநேந ப்ரஸவிஷ்யத்வம்" என்று தொடங்கி யஜ்ஞம் செய்யும்படி நியமிதத ப்ரஜாபதியால் முதன முதலில் சுழலச் செய்யப்பட்டதான சக்கரம் போலே சுழனறுவரும கார்யகாரண நடைமுறையை. (சக்ரம) சக்கரம் போலே மாறிமாறிச் சுழனறுவரும் நடைமுறை இங்கு சக்ர ஶப்தத்தாலே ஔபசாரிகமாகக் கூறப்படுகிறது. அதாவது:— அனனத்தால் பூதஙகள் எனப்படும ஜீவனோடு கூடிய ஶரீரங்கள்; மழையால் அனனம்; யஜ்ஞத்தால் மழை; கர்த்தாவின செயலாகிற கர்மத்தால் யஜ்ஞம்; ஜீவனோடு கூடிய சரீரத்தால கர்மம்: மறுபடியும அன்னத்தால ஜீவனோடு கூடிய ஶரீரங்கள் எனறு இவ்வாறாக பூதங்கள், அன்னம, மழை, யஜ்ஞம், கர்மம, பூதங்கள் ஆகிய ஒவ்வொன்றும் முந்தியதற்குக் காரண மாகவும், பிந்தியதற்குக் கார்யமாகவும் ப்ரகருதிமண்டலம் உள்ள

14. இப்படியே யீங்கமைந்த சக்கரத்தை யேவன்றுன்
மெய்ப்படியே தான்சென்று மேவலுரு—னெப்படியும்
பாவியுயி ராகிப் பழுதே படர்பொறிப்பட்
டாவி சுமப்பா னவன்.

**இப்படியே** — *இவ்வாருக,* **ஈங்கு அமைந்த**—*இவ்விஷயத்தில் பொருந்திய,* **சக்கரத்தை**—*சக்கரம்போன்ற கார்ய காரண நடைமுறையை,* **ஏவன்தான்**—*எவனொருவன்,* **மெய் படியே**—*முற்கூறிய உண்மையின் படி (யஜ்ஞங்களைச்செய்து)* **தான் சென்று மேவல் உருன்**—*தானும் பொருந்திச் சுழலச் செய்யாமலிருக்கிருனே,* **அவன்**—*அவன்,* **எப்படியும்**–*எல்லா வகையிலும்,* **பாவி உயிர் ஆகி**—*பாவ சம்பந்தமுடைய ஆயுளை உடையவனுய்,* **படர் பொறி பட்டு** – *(விஷயங்களில) படர்ந்துசெல்லும் இந்திரியங்களில் அகப்பட்டு,* **பழுதே ஆவி சுமப்பான்**—*வீணுக உயிரைச் சுமந்து திரிவான்.*

---

வரையில் சுழன்று வருமு நடைமுறையே இங்கு 'சகரம்' எனப் படுகிறது. (இஹ ய:) ஸாதநாநுஷ்டான நிலையிலுள்ள எவ ஞெருவன்; 'இவ்வுலகிலிருக்கும் எவஞெருவன' என்று பொதுவாகப் பொருள் கொள்வதைக் காட்டிலும, பிரகரணுநுகுணமாக கர்ம யோகாதிகாரியாகவோ, ஜ்ஞாநயோகாதிகாரியாகவோ ஸாதநா நுஷ்டானநிலையிலுள்ள எவனும என்று பொருள்கொளவதே உசித மானது. (ய: ந அநுவர்த்தயதி) பரமபுருஷனுல் முதன்முதலில் சுழலச் செய்யபபட்ட சக்கரத்தை, எவஞெருவன யஜ்ஞத்தைத் தானும் அனுஷ்டிப்பதன் மூலம் தொடர்ந்து சுழலச் செய்யாமலிருக் கிருனே. முதன்முதலில பரமபுருஷன் சுழற்றுவது ப்ரவர்த்தனம்; தொடர்ந்து ஜீவர்கள சுழற்றுவது அநுவர்த்தனம். அனறிக்கே, சக்கரத்தை ஓரிடததில் சுழற்றிவிட்டால் தொடர்ந்து எல்லாவிடங் களும் சுழல்வதுபோலே, அதிகாரியானவன் யஜ்ஞத்தை அநுஷ்டித் தால், அதிலிருந்து மழையும், அதிலிருந்து அன்னமும், அதிலிருந்து பூதங்களும, அவற்றிலிருந்து கர்மமும, அதிலிருந்து யஜ்ஞமும், மேலும் தொடர்ந்து மழை முதலானவையும் ப்ரவாஹரூபமாக ஏற்படும் என்னும் கருத்தாலே 'அநுவர்த்தயதி' என்கிறதாகவுமாம். இப்படி யஜ்ஞத்தை அநுஷ்டித்து அதில் எஞ்சிய உணவாலே

र्त्तयति—न प्रवर्त्तयति, यज्ञशिष्टेन देहधारणमकुर्वन् सोऽघायुर्भवति; अघारम्भायैव यस्यायुरघपरिणतं वोभयरूपं वा सोऽघायुः; अत एवन्द्रियारामो भवति, नात्मारामः; इन्द्रियाण्येवास्योद्यानानि भवन्ति; अयज्ञशिष्टवर्धितदेहमनस्त्वेनोद्रिक्तरजस्तमस्क आत्मावलोकनविमुखतया विषयभोगैकरतिर्भवति। अतो ज्ञानयोगादौ यतमानोऽपि निष्फलप्रयत्नतया मोघं पार्थ स जीवति॥ १४॥ १५॥ १६॥

---

தேஹத்தைத் தரிக்கச் செய்யாமலிருப்பவனுக்கு ஏற்படும் தோஷத்தைக் கூறுகிறது உத்தரார்த்தம். (ஸ:) முற்கூறியபடி யஜ்ஞம் செய்து சக்கரத்தைச் சுழலச் செய்யாமலிருப்பவன். (அக₄ாயு:) பாபமான ஆயுளை உடையவனாகிறான். பாபம் செய்வதற்காகவே ஏற்பட்ட ஆயுளை உடையவனாகிறான் என்றோ, பாபத்தினால் ஏற்பட்ட வாழ்நாளை உடையவனாகிறான என்றோ, இப்படிப் பாபமே இவனுடைய வாழ்நாளுக்குக் காரணமாகவும் கார்யமாகவுமிருக்கையாலே பாபஸம்பந்தம் உடைய வாழ்நாளை உடையவனாகிறான் என்றோ கருத்து. பாபகாரணமாயும், பாபகார்யமாயும், கார்யரூபமாகவோ, காரணரூபமாகவோ பாபஸம்பந்தியாகவும் இருப்பதையிட்டு முறையே மூன்று பொருளிலும் லக்ஷணையாலே பாபஶப்தத்தால் ஆயுள் குறிக்கப்படுகிறது. (இந்த்₃ரியாராம:) இந்திரியங்களையே விளையாடும் தோட்டமாகக் கொண்டவனாகிறான். முற்கூறியபடி பாபாயுஸ்ஸை உடையவனாயிருக்கையால், விரோதி பாபங்கள் நீங்கப் பெறாமையாலே ஆத்மாவில் ரமிக்காமல், இந்திரியங்களிலேயே ரமிப்பவனாகிறான் என்றபடி. முற்கூறியபடி யஜ்ஞத்தில் மிகுந்ததல்லாத சோற்றைக்கொண்டு உடலை வளர்க்கையாலே, உடலிலும் மனத்திலும் ரஜஸ்தமோ குணங்கள் ஓங்கப் பெற்று, ஸத்வம் குறையப்பெற்று, அதனாலேயே ஆத்மதர்ஶனத்தில் நெஞ்சு செல்லாமல் ஶப்தாதி விஷயங்களை அனுபவிப்பதிலேயே ஈடுபட்டவனாகிறான் என்று கருத்து. (ஸ: மோக₄ம் ஜீவதி) இப்படி விஷயபோகங்களிலேயே ஈடுபட்டவனாகையாலே, ஜ்ஞாநயோகாதிகளைப்பெற முயற்சி செய்கின்றவனாயிருந்தபோதிலும், முயற்சி பலனளிக்காதாகையாலே வீணாகவே வாழ்கிறான். (பார்த்த₂)என் அத்தைபிள்ளையான நீ இப்படிப்பட்டவனாகலாமோ? என்கை. 14, 15, 16.

॥ भा ॥ असाधनायत्तात्मदर्शनस्य *मुक्तस्यैव महायज्ञादिवर्णाश्रमोचितकर्मानारम्भ इत्याह—

यस्त्वात्मरतिरेव स्यादात्मतृप्तश्च मानवः ।
आत्मन्येव च संतुष्टस्तस्य कार्यं न विद्यते ॥ १७ ॥
नैव तस्य कृतेनार्थो नाकृतेनेह कश्चन ।
न चास्य सर्वभूतेषु कश्चिदर्थव्यपाश्रयः ॥ १८ ॥
तस्मादसक्तस्सततं कार्यं कर्म समाचर ।
असक्तो ह्याचरन्कर्म परमाप्नोति पूरुषः ॥ १९ ॥

17. யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாத₃ாத்மத்ருப்தஶ்ச மாநவ: ।
ஆத்மந்யேவ ச ஸந்துஷ்டஸ் தஸ்ய கார்யம ந வித்₃யதே ।
18. நைவ தஸ்ய க்ருதேநார்த்தே₂ா நாக்ருதேநேஹ கஶ்சந ।
ந சாஸ்ய ஸர்வபூ₄தேஷு கஶ்சித₃ர்த்த₂வ்யபாஶ்ரய: ॥
19. தஸ்மாத₃ஸக்த: ஸததம் கார்யம் கர்ம ஸமாசர ।
அஸக்தோ ஹ்யாசரந் கர்ம பரமாப்நோதி பூருஷ: ॥

ய: து மாநவ:—எந்த மனிதனேனெனில், ஆத்மரதி: ஏவ—ஆத்மாவிலேயே ஈடுபட்டவனாகவும், ஆத்மத்ருப்த:ச (ஏவ)—ஆத்மாவினாலேயே திருப்தியடைந்தவனாகவும், ஆத்மநி ஏவ ச—ஆத்மாவிலேயே, ஸந்துஷ்ட:-ஸந்தோஷம் அடைந்தவனாகவும். ஸ்யாத்—இருக்கிறானோ, தஸ்ய—அவனுக்கு, கார்யம்—செய்யத்தக்க கர்மம், ந வித்₃யதே—இல்லை; இஹ—ஆத்மதர்ஶனத்தைப்பெற்றுள்ள நிலையிலிருக்கும், தஸ்ய—

* இங்கு, 'முக்தஸ்யேவ' என்று பாடம் காண்கிறது. மாமுனிகள் அருளியதாக வழங்கும பதவுரையில் இந்தஶ்லோகத்தின அவதாரிகையில் 'முக்தஸ்யைவ' எனறே உள்ளது; இந்த ஶ்லோகத்தின் பாஷ்யத்தில், "ஸ ஹி முக்த ஏவ" என்று உள்ளதிலிருந்தும், அவ்விடத்திற்கும், அவதாரிகையிலுள்ள முக்தஶப்தத்திற்கும் தாத்பர்ய சந்த்₃ரிகையில் தேசிகர் அருளியுள்ள வியாக்கியான ஸ்ரீஸூக்திகளிலிருந்தும் 'முக்தஸ்யைவ' என்னும பாடமே சரியானது என விளங்கும.

அவனுக்கு. **க்ருதேந**—*செய்த கர்மத்தினுல்.* **அர்த்த:2 ந**—*பயன் ஒன்றுமில்லை;* **அக்ருதேந**—*செய்யாத கர்மத்தினுல்.* **கஶ்சந (அநர்த்த:)** ந—*யாதொரு தீங்கும் உண்டாவதில்லை.* **அஸ்ய**—*இவனுக்கு,* **ஸர்வ பூ4தேஷு**—*(பிரகிருதி பரிணமமான) எல்லாப் பொருள்களிலும்.* **அர்த்த2வ்யபாஶ்ரய:**—*பயனுகப்பற்றத்தக்கது.* **கஶ்சித்**—*யாதொன்றும்.* **ந ச (அஸ்தி)**-*இல்லை.* **தஸ்மாத்**—*(முற்கூறிய) எல்லாக்காரணங்களாலும்.* **அஸக்த:**—*பற்றற்றவனுய்,* **ஸததம்**—*(ஆத்மாவைக் காணும் வரையில்) இடைவிடாமல்.* **கார்யம் (இத்யேவ)**—*அவசியம் செய்யவேண்டியதென்றே.* **கர்ம**—*கர்மயோகத்தை.* **ஸமாசர**—*செய்வாயாக;* **அஸக்த:** — *பற்றற்றவனுய்.* **கர்ம** — *கர்மயோகத்தை.* **ஆசரந்**—*செய்யும்,* **புருஷ:**—*மனிதன்.* **பரம்**—*(பிரகிருதியைக் காட்டிலும் மேலான) ஆத்மாவை.* **ஆப்நோதி**—*அடைகிருன்.*

---

*17, 18, 19.* ஆத்மத3ர்ஶனத்தை ஸாதநாநுஷ்டானத்தாலே ஸாதிக்கவேண்டிய அவசியமில்லாதபடி, ஏற்கனவே அவ்வாத்ம த3ர்ஶனம் கைவரப்பெற்ற முக்தனை கைவல்யநிஷ்டனே பஞ்சமஹாயஜ்ஞம் முதலான வர்ணுஶ்ரமங்களுக்குரிய கர்மங்களைத் தொடங்காமலிருக்கலாம என்று முதலிரண்டு ஶ்லோகங்களால் கூறி, அப்படி ஆத்மத3ர்ஶனம் கைவரப்பெருத நீ, முற்கூறிய எல்லாக்காரணங்களாலும் கர்மயோகத்தையே அனுஷ்டித்து ஆத்மத3ர்ஶனத்தைப் பெறவேணும் என்று மூன்றும் ஶ்லோகத்தாலே முடிவுகட்டுகிருன. முந்திய ஶ்லோகங்களில ஞானயோகாதிகாரியும் கர்மயோகத்தையே செய்யவேண்டும் என்று கூறிவிட்டபடியாலும, இங்கும் மூன்ருவது ஶ்லோகத்தில் அதையே கூறுகிறபடியாலும, முதலிரண்டு ஶ்லோகங்கள் ஞானயோகாதிகாரி முதலானுரைப் பற்றியதாகமுடியாது; ஆத்மத3ர்ஶனம் கைவரப்பெற்றவனைப் பற்றியதேயாகவேண்டும். " அப4யம் ஸர்வபூ4தேப்4யோ த3த்வா நைஷ்கர்ம்யமாசரேத் " [பார- ஆஶ்வ 46-18] [(பஞ்ச ஸூநை முதலான விடங்களில் பிராணி ஹிம்ஸையைத் தவிர்ப்பதன்மூலம்) எல்லாப்பிராணிகளுக்கும அப4யமளித்து, பஞ்சமஹாயஜ்ஞம் முதலான கிருஹஸ்தாஶ்ரமத்துக்குரிய கர்மங்களை விட்டு ஸந்யாஸியாகக் கடவன்.] முதலான விடங்களில் கூறப்பட்ட ஸந்யாஸியைப்பற்றியவை முதலிரண்டு ஶ்லோகங்களும் என்று ஶங்கரர் முதலானுர் வியாக்கியானம் செய்ததும

॥भा॥ यस्तु ज्ञानयोगकर्मयोगसाधननिरपेक्षः स्वत एवात्मरतिरात्माभिमुखः, आत्मनैव तृप्तो नान्नपानादिभिरात्मव्यतिरिक्तैः, आत्मन्येव च सन्तुष्टो नोद्यानस्रक्चन्दनगीतवादित्रनृत्तादौ, धारणपोषणभोग्यादिकं सर्वमात्मैव यस्य, तस्यात्मदर्शनाय कर्तव्यं न विद्यते,

---

*15. தன்விரும்பித் தன்னுகந்து தன்னமைந்த ஞானிக்குப்
பின்விரும்பிச் செய்கருமம் பெற்றில்லை—முன்விரும்பிச்
செய்தத்தா லொனறிலலை செய்யாத தாலில்லை
வையத்தா தும்பயனின் மற்று.

**தன் விரும்பி**—*தன் ஆத்மாவிலேயே ஈடுபட்டு.* **தன் உகந்து**—*அதனுலேயே திருப்தியடைந்து.* **தன் அமைந்த**—*அதிலேயே ஸந்தோஷமடைந்த,* **ஞானிக்கு**—*ஆத்ம தர்ஶனம் கைவந்தவனுக்கு.* **பெற்று பின**—*ஆதம தர்ஶனம் பெற்ற பின்.* **விரும்பிசெய் கருமம இலலை**—*ஆசைப்பட்டுச் செய்யககூடிய கருமம் ஒன்றும் இல்லை;* **முன் விரும்பி**—*மேல் விழுந்து ஆசைப்பட்டு.* **செய்தத்தால்**—*செய்த கருமத்தால்,* **ஒன்று இல்லை**—*ஒருபயனும் இலலை;* **செய்யாததால்**—*( கருமங் களைச் ) செய்யாததால்,* **இல்லை**—*தீங்கு இலலை;* **மற்று**—*மேலும்.* **வையத்து**—*இவ்வுலகிலுள்ள பிராகிருதப்பொருள் களுள்.* **ஆதும்** — *எதுவும்.* **பயன இல்**— *(அவனுககுப்) பயனுக ஆகாது.*

---

ஒட்டாது; ஸந்யாஸிக்கும் தனக்குரிய ஆஶ்ரமகர்மஙகள் உண்டாகை யாலே, "தஸ்ய கார்யம் ந வித்₃யதே" என்று, இங்கு ஆத்ம தர்ஶனத்துக்காக ஒரு கர்மமும செய்யவேண்டியதில்லை எனறு கூறுவது ஒட்டாது. ஆகையாலே, வர்ணுஶ்ரமாதி₃நாமரூபங்களி லிருந்து விடுபட்டவனுகையாலே வர்ணுஶ்ரமதர்மங்களை அநுஷ்டிக்க வேணடிய அவசியமில்லாத கைவல்யநிஷ்டனையே முதலிரண்டு ஶ்லோகங்களில் கூறுகிறது எனறு கொளவதே பொருந்தும்.

---

* இப்பாட்டு 17, 18 ஶ்லோகங்களுக்கு மொழிபெயபபு.

(யஸ்து மாநவ:) எந்த மனிதனேவெனில்; இதுவரை கூறப்பட்டுவந்த ஸாத₄நநிஷ்டனைக் காட்டிலும் வேறுபட்டவன் இவன் என்று உணர்த்துகிறது துஶப்தம். ஸாத்₄யமான ஆத்மத₃ர்ஶநம கைவரப் பெற்றவனுகையாலே, ஸாத₄நமான கர்மஜ்ஞாநயோகங்கள் இவனுக்குத் தேவையில்லை என்று கருத்து. ஸாத₄னமில்லாவிடில ஸாத்யம் எப்படிக் கைவந்தது எனில: இங்கு ஸாத்₄யம் இவனுடைய ஆத்மத₃ர்ஶனமேயாகையாலே இவனுக்கு ஸ்வத:ப்ராப்தமாய் (இயற்கையிலேயே கைவந்ததாய்) இருக்கிறது. தன் ஆத்மாவைத் தான் அனுபவிக்கமுடியாதபடி செய்யும் பாபங்களாகிற தடையை நீக்குவதே ஸாதனங்களால் செய்யப்படுகிறது. இத்தடை நீங்குதல் இவனுக்கு ஏற்கனவே ஏற்பட்டிருக்கவேண்டும் என்று கருதது. (ஆத்மரதிரேவ ஸ்யாத்)ஆத்மாவிலேயே ஈடுபட்டவனுயிருக்கிருனே. தன்ஆத்மானுபவத்தையே தனக்கு த₄ாரகமாகக்கொண்டிருக்கிருனே என்றபடி. ஶப்₃தா₃தி₃விஷயாநுப₄வத்தையே த₄ாரகமாகக் கொண்டிருக்கும் ஸமஸாரிகளிலும் வேறுபட்டவன் இவன என்று விளங்குகிறது. (ஆத்மத்ருப்தஶ்சைவ ஸ்யாத்) ஆதமாவையே போஷகப் பொருளாகக் கொண்டிருக்கிருனே. "ஆத்மரதிரேவ" "ஆத்மந்யேவ" எனறு முனனும் பினனும ஏவகாரமிருக்கையாலே, இங்கும ஏவகாரத்தைக்கொள்ளவேணும், முன்னும்பினனும் போலே இந்த ஏவகாரமும் அந்யயோக₃வ்யவச்சே₂த₃த்தைச் செய்வது. ஸம்ஸாரிகளுக்குப் போஷகமான அந்நபாநாதிகளாலே திருப்தியடைவதில்லையிவன்; ஆத்மாவையே போஷகமாகக்கொண்டவன் இவன என்று கருத்து. (ஆத்மந்யேவ ச ஸந்துஷ்ட:) ஆத்மாவையே போ₄ாக்₃யப்பொருளாகக் கொண்டிருக்கிருனே. ஸமஸாரிகளைப் போலே தோட்டம், மாலை, சந்தனம், பாட்டு, வாத்தியம், நாட்டியம் முதலானவைகளை போக்கியமாகக் கொள்வதில்லை எனறு கருத்து. ஆக இவ்வளவால், த₄ாரகபோஷகபோ₄ாக்₃யங்கள் மூனறும் இவனுககு ஆத்மாவே எனறு சொல்லப்பட்டதாயிற்று. இவனுடைய உண்ணுஞ்சோறு பருகும் நீர் தின்னும வெற்றிலைகளிருக்கிறபடி. இங்கு த₄ாரகபோஷகபோ₄ாக்₃யஙகளைச் சொன்னது போ₄ாக₃ஸ்த₂ாநம், போ₄ாகோ₃பகரணம் முதலான அனைத்துக்கும் உபலக்ஷணம். "வாஸுதே₃வஸ ஸர்வம்" [கீதை 7-19] "எல்லாம் கண்ணன்" [திருவாய் 6-7-1] எனறு ஸாத₄நப₄க்தியோ ஸாத்₄யப₄க்தியோ கைவரப்பெற்றவர்களுக்கு எல்லாம் கண்ணனுயிருப்பதுபோலே இவனுக்கு எல்லாம் தன் ஆத்மாவாகவேயிருக்கிறபடி. (தஸ்ய

स्वत एव सर्वदा दृष्टात्मस्वरूपत्वात्। अत एव तस्यात्मदर्शनाय कृतेन तत्साधनेन नार्थः—न किंचित्प्रयोजनम्; अकृतेनात्मदर्शनसाधनेन

---

கார்யம் ந வித்₃யதே) முற்கூறியபடி இயற்கையாகவே எப்போதும் இவன் ஆத்மாவைக்காணகிறுகையாலே, இவனுக்கு ஆத்ம த₃ர்ஸனம உண்டாவதற்கோ, உண்டான அது அழியாமல் தொடர்ந்து நிலைநிற்பதற்கோ செய்யவேண்டியது ஒன்றுமில்லை. ஆத்மத₃ர்ஸனம் கைவரப்பெருதவர்களாய், அதனுலேயே அந்ந பாநாதிகளையே த₄ாரகபோஷகபோ₄க்₃யங்களாகக் கொண்டவர்களான கர்மயோகநிஷ்டனுக்கும, ஜ்ஞாநயோகநிஷ்டனுக்குந்தான் செய்யத்தக்கது உண்டு என்று கருத்து. (கார்யம் ந வித்₃யதே) "ந தஸ்ய கார்யம்" [ஶ்வே 6-8] [ பரமபுருஷனுக்குக் கார்யம் எனப்படும் சரீரம் கிடையாது ] என்ற ஶ்ருதியிற்போலே இவனுக்கு ஶரீரம கிடையாது என்று பொருள்கொள்வது அர்ஜுனனைக் கர்மம் செய்யத்தூண்டும இப்ரகரணத்திற்குப் பொருந்தாது. ஆகையால், ஆதமத₃ர்ஸனம உண்டாவதனபொருட்டோ,அழியாமல் காக்கும் பொருட்டோ, இவன் செய்யவேண்டியது ஒன்றுமில்லை என்று பொருள் கொள்வதே உசிதம. ஆத்மதர்ஸனத்தினபொருட்டு இவன ஏன் ஒன்றும் செய்யவேணடியிருப்பதில்லை என்னும் கேள்விகளுக்கு பதில் கூறுகிறது அடுத்தபடியாக: (நைவ தஸ்ய க்ருதே நார்த்த₂:) ஏற்கனவே அவன் ஆத்மாவைப் பெற்றிருக்கிருகையாலே, ஆதமப்ராப்தியின்பொருட்டு அவன எது செய்தாலும் அதனுல் பயனில்லை. அர்தத₃ஶப்₃த₃ம பயனைக்குறிக்கிறது; இவனுக்கு ஓரே பயன ஆத்மத₃ர்ஶனமேயாகையாலும், ஏற்கனவே இவன் அதைப்பெற்றிருக்கையாலும, ஆத்மப்ராப்தியின்பொருட்டு இவன் எது செய்தாலும, அதனுல் இவனுக்குப் புதிதாக ஒரு பயன் விளையப்போவதில்லை என்று கருதது. (அக்ருதேந ந கஶ்சந) ஆத்மப்ராப்தியின பொருட்டு இவன் எதைச் செய்யாவிட்டாலும அதனுல் அநர்த்த₂ம் எதுவும் ஏற்படாது. அர்த்த₂ ஶப்த₃த்தையே இங்கும் கொண்டு, 'செய்யாவிட்டாலும் பயனில்லை' என்று பொருள கொள்வது பொருந்தாதாகையாலே 'அநர்த்த₂:' என்னும் ஶப்தத்தை வருவித்துக்கொண்டு பொருள் கொளவதே உசிதம். இவனுக்கு அநர்த்த₂ம அர்த்தஶப்தத்தால் சொல்லப்பட்ட ஆத்மப்ராப்தியை இழக்கையேயாகையாலும், அவ்வாத்மப்ராப்தியை இவன் நழுவுதலில்லாதபடி பெற்றிருக்கிருகையாலும், ஆத்ம

न कश्चिदनर्थः ; असाधनायत्तात्मदर्शनत्वात् । स्वत एवात्मव्यतिरिक्तसकलाचिद्वस्तुविमुखस्यास्य सर्वेषु प्रकृतिपरिणामविशेषेष्वाकाशादिभूतेषु सकार्येषु न कश्चित्प्रयोजनतया व्यपाश्रयः ; यतस्तद्विमुखीकरणाय

---

ப்ராப்தியின் பொருட்டு இவன எது செய்யாவிட்டாலும அநர்த்தமில்லை என்று கருத்து. இப்படி ஆத்மப்ராப்தியின பொருட்டு இவன் எது செய்தாலும் பயனிலலாதபடியும, எது செய்யாவிட்டாலும அநர்த்தமில்லாதபடியுமிருக்கக் காரணமெனனவெனில்: (இஹ) ஒரு ஸாதனத்தை அனுஷ்டித்து ஆத்மாவைப் பெற வேண்டாதபடி ஏற்கனவே ஆத்மாவைப் பெற்றிருக்கும் கைவல்ய நிலையில் இவனிருக்கையே எனகிறுர். இந்நிலையில் இருந்தபோதிலும், பிராகிருத விஷயங்களில் இவனுக்குப் பற்று இருந்ததாகில், அதைப் போக்கிக்கொளள இவன ஸாத₄நாநுஷ்ட₂ாநம் பண்ண வேண்டியிருக்குமேயெனில, அப்பற்றுமில்லாமையாலே, அதற்காகவும் இவன செய்யவேண்டியது ஒன்றுமில்லையென்று காட்டுகிறுர். மேலே: (அஸ்ய) ஆதமாவையே உண்ணுஞ்சோறு பருகும் நீர் தின்னும வெற்றிலையாகக்கொண்டிருக்கையாலே, ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்ட எல்லா அசேதனப பொருளகளிலும் இயற்கையிலேயே வெறுப்புள்ள இவனுக்கு. (ஸர்வபூ₄தேஷு) பிராகிருதமான எல்லாப் பொருள்களிலும். 'பூ₄ஸத்தாயாம்'' என்னும தாதுவிலிருந்து உண்டானதாகையாலே பூதஶப்தம் ஸத்தையுள்ள சேதநாசேதனங்கள் அனைத்தையும் குறிக்குமாயினும், இவன் ஆத்மாவை உகந்திருப்பவனுகையாலே, இங்கு பிராகிருதமான அசேதனப்பொருளகளை மாத்திரம குறிககிறது. அன்றிக்கே, பூ₄தஶப்தம் பிரகிருதி பரிணமமான ஆகாசம் முதலான பஞ்சபூ₄தஙகளைச் சொலலி அவற்றின் கார்யமான எல்லா அசேதனப பொருளகளையும குறிக்கிறதாகவுமாம். அன்றிக்கே, 'ப₄வதீதி பூ₁தம்' எனறு உண்டாகின்ற பொருளைச் சொலலுகையாலே, பிரகிருதியிலிருந்து உண்டாகும் எல்லா அசேதனப் பொருள்களையும் குறிக்கிறதாகவுமாம். முதற்பொருளில் ஸர்வஶப்தததிற்கு ஸஙகோசம்; மற்ற இரண்டு பொருள்களிலும் ஸர்வஶபதத்திற்கு ஸஙகோசமில்லை. (அர்த்த₂வ்யபாஶ்ரய: கஶ்சித் ந) பயனுகப் பற்றத்தக்கது ஒன்றும் இல்லை. '' அர்த்த₂த்வேந வ்யபாஶ்ரய:'' எனறு ப₄ாவப்ரத₄ாந நிர்த்தே₃ஶமாகக்கொணடால வ்யபாஶ்ரய ஶபத₃ம் பற்றுவதைக் குறிக்கிறது. ''அர்த்த₂ ஏவ

साधनारम्भः; स हि मुक्त एव। यस्मादसाधनायत्तात्मदर्शनस्यैव साधना-प्रवृत्तिः, यस्माच्च साधने प्रवृत्तस्यापि सुशकत्वादप्रमादत्वादन्तर्गतात्म-

---

வ்யபாஶ்ரய:" [பயனாய், பற்றத்தக்கதாயிருப்பது.] என்று கொண்டால் வ்யபாஶ்ரயஶப்தம் பற்றத்தக்க பொருளாக குறிககிறது. இப்படி ஸ்வரஸமான தத்புருஷஸமாஸத்தைக் கொள்ள இடமிருக்கும்போது "பரயோஜந நிமித்தோ வ்யபாஶ்ரய:" என்று அஸ்வரஸமான பஹுவ்ரீஹியைக்கொண்டு ஶங்கரர் வியாக்கியானம் செய்தது அஸ்வரஸம். இக்கைவல்யநிஷ்டன் முக்தனேயாகையால், பிராகிருதப்பொருள்களில் இவன பற்றுவது ஒன்றுமில்லை எனறு கூறப்படுகிறது இங்கு. ஆத்மாவையே தாரகாதிகளாகக் கொண்டிருப்பவன் என்றும், ஆத்மப்ராப்தி உண்டாதவன் பொருட்டோ, அழியாமல் காக்கும பொட்டோ இவன் செய்யவேண்டியதில்லை யென்றும் கூறுவதிலிருந்தும் இவன் முக்தனேயென விளங்குகிறது. தெனாசார்யர்களின் பக்ஷத்தில், ப்ரக்ருதி விநிர்முக்தமான ஆத்மாவை இவன் நித்யமாக அடைந்துவிடுகிறானகையாலே இவனை முக்தன் என்னத்தட்டில்லை. வேதாந்ததேசிகருடைய பக்ஷத்தில், ஆத்மாவைச் சிலகாலம் அநுபவித்தபின், பகவத்ப்ராப்தியையே இவன் அடைந்துவிடுகிறானகையாலும், இவன் அடைந்த ஆத்மப்ராப்திக்கு என்றும அழிவில்லையாகையாலும் இவனை முக்கதன் என்னக்குறையில்லை. ஆழ்வார் இக்கைவல்ய பதவியை 'வீடு' எனறே பலவிடங்களில் குறித்திருப்பதும, "ஆத்மாநுபூதிரிதி யா கில முக்திருக்தா" என்று கூரத்தாழ்வான் இதை முக்தியாகப்பேசியிருப்பதும இவ்விடத்தில் காணத்தக்கது. இனி, மூன்றுவது ஶ்லோகத்தில், இபபடி முக்தனயிருப்பவனுக்குத் தான் ஆத்மப்ராபதியின் பொருட்டுக் கர்மயோகம் செய்ய வேண்டிய அவசியமில்லாமலிருக்கையால், முக்தனல்லாத நீ முற்கூறிய காரணங்களாலே கர்மயோகத்தையே செய்யவேண்டும் என்கிறான்: (தஸ்மாத்) முற்கூறிய காரணங்கள் அனைத்தையும் காட்டுகிறது. ஸாதநாநுஷ்டானம் செய்து ஆத்மதர்ஶனத்தை ஸம்பாதிக்கவேண்டிய அவசியமில்லாத முக்தனுக்கே ஸாதநாநுஷ்டானம் தேவையில்லையாகையாலும, ஸாதநத்தை அனுஷ்டிப்பவனுக்கும், செய்வதற்கெளிதாயிருக்கையாலும, நழுவ இடமில்லாமலிருக்கையாலும், ஆத்மதத்வாநுஸந்தானத்தை உள்ளடக்கியிருக்கையாலும், ஞானயோகிக்கும் தேஹதாரணத்தின் பொருட்டுக்

याथात्म्यानुसन्धानत्वाच्च ज्ञानयोगिनोऽपि मात्रया कर्मानुवृत्त्यपेक्षत्वाच्च कर्मयोग एवात्मदर्शननिर्वृत्तौ श्रेयान्, तस्मादसङ्गपूर्वकं कार्यमित्येव

---

16. ஆதலினுற் பற்றற் றமரியற்பாய் நின்கரும
நீதகவு தன்னுடனே நின்றியல்வாய்—மீததனைப்
பற்றற் றியன்ருற் பரமா முயிரினையே
பெற்றத்தை நின்றுய்யும் பின்.

**ஆதலினுல்**—*முற்கூறிய காரணங்களால்,* **பற்றற்று அமர் இயல்பாய்**—*பற்றில்லாமல் (கர்மங்களில்) பொருந்திநிற்கும் தன்மையை உடையவனுய்,* **நின் கருமம்**—*உன் வர்ணுஶ்ரம தர்மங்களை,* **நீ**—*நீ,* **தகவுதன்னுடனே**—*'இது செய்யத்தக்கது' என்னும் நினைவுடனேயே,* **நின்று இயல்வாய்**—*(ஆத்மாவைப் பெறும் வரையில்) இடைவிடாமல் செய்வாய்;* **மீது அதனை**—*சிறந்ததான அக்கர்மயோகத்தை,* **பற்றற்று இயன்ருன்**—*பற்றில்லாமல் செய்பவன்,* **பின்**—*அதற்குப்பின்,* **பரமாம்**—*(பிரகிருதியைக்காட்டிலும்) மேலான,* **உயிரினையே**—*ஆத்மாவையே,* **பெற்று**—*அடைந்து,* **அத்தை நின்று**—*அதிலேயே நிலைநின்று,* **உய்யும்**—*உய்வான்*

---

கர்மங்களை விடமுடியாமையாலும் கர்மயோகமே ஆத்மதர்ஶனத்தைத் தலைக்கட்டித் தருவதில் சிறந்ததாகையால் என்று கருத்து. (அஸக்த: கர்ம.ஸமாசர) முற்கூறிய ஸங்கத்யாகத்தோடு கர்மத்தைச் செய்வாயாக. (கார்யம் கர்ம ஸமாசர) செய்யத்தக்கது என்னும் நினைவுடன் கர்மத்தைச் செய்வாய். 'கர்மத்தைச் செய்வாய்' என்று கூறினுலே கர்மம் செய்யத்தக்கது என்று விளங்கிவிடுமாகையால், அதைச் சொல்லுவதற்காக 'கார்யம்' என்று விஶேஷிக்கவேண்டிய அவசியமில்லை. ஆகையால், 'கார்யமித்யேவ' என்று கொண்டு, 'செய்யத்தக்கது என்னும் நினைவுடனேயே செய்வாய்' என்று பொருள்கொள்வதே உசிதம். 'இது செய்யத்தக்கது' எனனும் நினைவுடனேயே செய்யவேண்டுமாகையால், அக்கர்மங்களான பலனை ஸ்வர்க்கம் முதலானவற்றில் பற்று வைககக்கூடாது என்று கருத்து. ஆக, இப்பதத்தால் ப₂லத்யாக₃மும் கூறப்பட்டாதாகிறது. ஆக, இரண்டுபதங்களாலே ப₂லஸங்க₃த்யாகத்தைச் சொன்னது,

सततं यावदात्मप्राप्ति कर्मैव समाचर। असक्तः, कार्यमिति, वक्ष्यमाणा कर्तृत्वानुसन्धानपूर्वकं च कर्माचरन् पुरुषः कर्मयोगेनैव परमाप्नोति *आत्मानं प्राप्नोतीत्यर्थः॥१७॥१८॥१९॥

---

இனிச் சொல்லப்போகும் கர்தருத்வ த்யாக₃த்திற்கும் உபலக்ஷணம. (ஸததம் கர்ம ஸமாசர) ஆதமாவை அடையும் வரையில் இடைவிடாமல் கர்மத்தைச் செய்வாய். ஶ்லோகத்தின் பிற்பாதியில் இவனுக்கு ஆத்மப்ராப்தியையே ப₂லனகச் சொல்லுகையாலும, அதைக் கர்மயோகத்தாலேயே ஸாதிக்கலாம் என்று கூறுகையாலும, ஸததஶப்தத்திற்கு 'ஆத்மாவை அடையும் வரையில்' எனறே பொருள்கொள்ளவேண்டும். (அஸக்த: கர்ம ஆசரந் பூருஷ:) முற்கூறியபடி பற்றற்றவனும், செய்யத்தக்கது என்னும் நினைவுடனும அகர்த்ருத்வாநுஸந்தானத்துடன கர்மத்தைச் செய்யும மனிதன. (கர்ம ஆசரந் பரம ஆபநோதி) கர்மத்தை அநுஷ்டிப்பவன, ஜ்ஞாநயோகத்தை அநுஷ்டிக்கவேண்டிய அவசியமில்லாமல கர்மயோகத்தாலேயே ஆத்மாவை அடைகிறுன். (பரம் ஆப்நோதி) மேலான ஆத்மாவை அடைகிறுன. தேஹத்தைக்காட்டிலும் வேறுபட்ட ஆத்மாவை அடையும் பிரகரணமாகையால், இங்கு 'பர:' [மேலானவன்] என்னும் ஶப்தம், பிரகிருதியைக் காட்டிலும் மேலான ஆத்மாவைக் குறிககிறது. ஆக, ஆத்மாவைப்பற்றிய உண்மையறிவுடனும் ப₂லஸங்க₃காத்ருத்வத்யாகத்துடனும் செய்யப்படும் கர்மயோகமே ஆதமப்ராபதிஸாத₄னம் எனறு கூறப்பட்டதாயிற்று. 17, 18, 19.

20. *பூர்வார்த்தம். கர்மயோகமே ஞானயோகத்தைக்காட்டிலும் சிறந்தது என்னும விஷயத்தை சிஷ்டாசாரத்தினமூலம காட்டுகிறுன. (ஜநகாத₃யோ ஹி) ஞானிகளில் தலைவர்களான ஜநகர் முதலான ராஜரிஷிகள் கூட. பொதுவாக ராஜாக்கள் பரந்த ஆழ்ந்த மனத்தையுடையவர்கள்; அதிலும் ரிஷிகளாகையாலே இநதிரியங்களுக்கு எட்டாத பொருள்களையும் நேரில் கணடவர்கள்; அதிலும் "மிதி₂லாயாம் ப்ரதீ₃ப்தாயாம் ந மே கிஞ்சித் ப்ரத₃ஹ்யதே" [பற்றி

---

* ஶ்லோகத்தின் முற்பாதி மாத்திரம் முன் சொனனதற்கு விவரணமாயிருக்கையாலும், பிற்பாதியில் புதியவிஷயம் தொடஙகப் படுகையாலும் முற்பாதி தனியாக விவரிக்கப்படுகிறது.

कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादयः।

20. கர்மணைவ ஹி ஸம்ஸித்$_3$தி$_4$மாஸ்தி$_2$தா ஜநகாத$_3$ய:।

ஜநகாத$_3$ய:—*ஜனகர் முதலானோர்,* கர்மணு ஏவ—*(ஜ்ஞாந யோகத்தாலல்லாமல்) கர்மயோகத்தாலேயே,* ஸம்ஸித்$_3$தி$_4$ம்—*ஆத்மப்ராப்தியாகிய பயனை,* ஆஸ்தி$_2$தா: ஹி—*பெற்றார்களன்றோ.*

॥भा॥ यतो ज्ञानयोगाधिकारिणोऽपि कर्मयोग एवात्मदर्शने श्रेयान्; अत एव हि जनकादयो राजर्षयो ज्ञानिनामग्रेसराः कर्म-योगेनैव संसिद्धिमास्थिताः—आत्मानं प्राप्तवन्तः॥

17. முன்னஞ் சனகாதி யோகியரு மூண்டியன்ற
வன்ன கருமத்தா லானபயன்—மன்னினர்கா
ணிந்த வுலக மிசைவகையும பார்த்தியலா
யந்த வுயர்கரும மாய்ந்து.

முன்னம்—*முற்காலத்தில்,* சனகாதியோகியரும்–*சனகர் முதலான ஞானிகளும்,* மூண்டு இயன்ற அன்ன கருமத்தால்–*குறிக்கொண்டு செய்யப்படும் முற்கூறிய கர்மயோகத்தாலேயே,* ஆனபயன்— *(ஞானயோகத்தின்) பயனான ஆத்ம*

*யெரியும் மிதிலையிலே என்னுடையது ஒன்றும் எரியவில்லை.]* என்று சொல்லக்கூடிய ஆத்மஜ்ஞானிகள; அதிலும், இயற்கையிலேயே புலன்களை அடக்கி ஸத்வகுணம் நிரம்பப்பெற்றவர்களாகையாலே ஞானிகளுள் சிறந்தவர்கள். ஆகையாலே ஞான யோகத்தை அனுஷ்டிக்க அதிகாரம் உடையவர்கள் என்று காட்டுகிறது ஹிஶப்தம். (கர்மணைவ) கர்மயோகததாலேயே. ஏவகாரம் ஞானயோகத்தில் ஶக்தியிருந்தபோதிலும் ஞானயோகத்தை இடையிடாமலே கர்மயோகத்தாலேயே பலனைப்பெற்றார்கள் என்று காட்டுகிறது. (ஸம்ஸித்$_3$தி$_4$ம் ஆஸ்தி$_2$தா:) ஞானயோகத்தால் பெறக்கூடிய ஆத்மப்ராப்தியைப் பெற்றார்கள். முன் ஶ்லோகத்தில் சொன்னதற்கு த்$_3$ருஷ்டாந்தம் காட்டவே இவ்வர்த்த$_4$ம் தோன்றியிருக்கையால் "பரம் ஆப்நோதி" என்று அங்கு சொல்லப்பட்ட ஆத்மப்ராப்தியே இங்கு ஸம்ஸித்$_3$தி$_4$ ஶப்தத்தால் கூறப்படுகிறது என்று விளங்குகிறது.

॥ भा ॥ एवं प्रथमं मुमुक्षोर्ज्ञानयोगानर्हतया कर्मयोगाधिकारिणः कर्मयोग एव कार्य इत्युक्त्वा ज्ञानयोगाधिकारिणोऽपि ज्ञानयोगात्कर्मयोग एव श्रेयानिति सहेतुकमुक्तम्। इदानीं शिष्टतया व्यपदेश्यस्य सर्वथा-कर्मयोग एव कार्य इत्युच्यते—

लोकसंग्रहमेवापि संपश्यन् कर्तुमर्हसि ॥ २० ॥
यद्यदाचरति श्रेष्ठस्तत्तदेवेतरो जनः।
स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते ॥ २१ ॥

**லோகஸங்க்₃ரஹமேவாபி ஸம்பஶ்யந் கர்த்துமர்ஹஸி ॥**
**21. யத்₃யதா₃சரதி ஶ்ரேஷ்ட₂ஸ் தத்ததே₃வேதரோ ஜந:।**
**ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்தத₃நுவர்த்ததே ॥**

**லோகஸங்க்₃ரஹம் ஏவ**—(*ஸாமாந்யஜனங்களை இசைய வைக்கும் வழியாகிய) லோகஸங்க்₃ரஹம் ஒன்றையே,* **ஸம்பஶ்யந் அபி**—*கருத்திற்கொண்டும்,* **கர்த்தும் அர்ஹஸி**—*நீ கர்மத்தையே செய்வது தக்கது;* **ஶ்ரேஷ்ட₂:**—*(ஞானம் அநுஷ்ட்டானம் இவற்றால்) சிறந்தவன்,* **யத் யத்**—*எந்த எந்தக் கர்மங்களை,* **ஆசரதி**—*அநுஷ்டிக்கிறானோ,* **தத் தத் ஏவ**—*அந்த அந்தக் கர்மங்களையே,* **இதர: ஜந:**—*ஸாமாந்யஜனமும்,* **ஆசரதி**—*செய்கின்றது.* **ஸ:**—*அந்தச்சிறந்தவன்,* **யத்ப்ரமாணம்**—*(அக்கருமத்தை) எவ்வளவினனதாக,* **குருதே**—*செய்கின்றானோ,* **லோக:**—*ஸாமாந்யஜநமும்,* **தத் (ஏவ)**—*அவ்வளவினதாகவே,* **அநுவர்த்ததே**—*அனுஷ்டிக்கிறது.*

---

*த₃ர்ஶனத்தை,* **மன்னினர் காண்**—*பெற்றனர் காண்,* **இந்த உலகம் இசைவகையும் பார்த்து**—*இவ்வுலகிலுள்ள ஸாமாந்ய ஜனங்களையும் இசையவைக்கும் வழியாகிற லோகஸங்க்₃ரஹத்தைக் கணிசித்தும்,* **ஆய்ந்து**—*(ஞானயோகத்தைக் காட்டிலும் கர்மயோகத்துக்குள்ள சிறப்பை) ஆராய்ந்தும்,* **அந்த உயர் கருமமும்**—*(ஞானயோகத்திலும்) சிறந்த அத்தகைய கர்மயோகத்தை,* **இயலாய்**—*செய்வாயாக.*

20. **உத்தரார்த்த₄ம்.** இவ்வண்ணமாக, கர்மயோகத்திலேயே அதிகாரமுள்ள முமுக்ஷுவானவன, ஞானயோகத்தை அனுஷ்டிக்க முடியாதாகையாலே, அவன கர்மயோகத்தையே செய்யவேண்டும் என்று முந்துறமுன்னம் விளக்கப்பட்டது; அதற்குப்பிறகு, பல காரணங்களைக் காட்டி, ஞானயோகாதிகாரிக்கும் ஞானயோகத்தைக் காட்டிலும் கர்மயோகமே அனுஷ்டிககவுரியது என்று நிரூபிக்கப் பட்டது. இனி, "லோகஸங்க்₃ரஹம" என்று தொடங்கி, "வித்₃வாந் யுக்த: ஸமாசரந்" [3-26] என்பதீருக, "சிஷ்டன் (நல்லொழுக்க முள்ளவன்) என்று புகழ் பெற்றவன், உலகினரை ரக்ஷிப்பதன் பொருட்டும, ஞானயோகமனுஷ்டிக்கமுடியாத உலகினரைத்தன் ஞானயோகானுஷ்டானத்தால் கலக்குவதன்மூலம தனக்குண்டாகும் பாபத்தால் தனக்குரிய ஞானயோகத்தினின்றும நழுவி, கர்ம யோகத்தையும கைவிட்டு இரணடுங்கெட்டானுய்த் தான் நசிக்காம லிருப்பதற்காகவும் கர்மயோகத்தையே அனுஷ்டிக்கவேணடும" என்று உபபாதிக்கப்படுகிறது. (லோகஸங்க்₃ரஹம்) உயர்ந்த நிலையிலிருப்பவன் தனனிலைக்குரியதை அனுஷ்டிப்பதனுல் தாழ்ந்த நிலையிலிருப்பவனும தனனைப் பின்பற்றி நசிக்காமலிருப்பதற்காக, அவனுடைய நிலைக்குத் தாழ்ந்து, அவனுல் அனுஷ்டிக்கத்தக்கதையே அனுஷ்டித்து அவனை ரக்ஷிபபதே லோகஸங்க்ரஹம எனப்படும். (லோகஸங்க்₃ரஹம ஸம்பஶ்யந்நபி) லோகஸங்க்ரஹத்தைப் பார்த் தாலும். "லோகஸங்க்₃ரஹமபி ஸம்பஶ்யந்" [லோகஸங்க்ரஹத்தை யும் பார்த்து] என்று கூட்டிப் பொருள்கொண்டால், லோக ஸங்க்₃ரஹம் முற்கூறிய காரணங்களைக காட்டிலும் அப்ரத₄ான மானது என்று தோற்றும். ஆகையால், "லோகஸங்க்₃ரஹம ஒன்றையே பார்த்தாலும் நீ கர்மயோகத்தையே அனுஷ்டிக்க வேண்டும" என்று லோகஸங்க்ரஹம் ப்ரத₄ானஹேதுவென்று காட்டும்படியாக "லோகஸங்க்₃ரஹம் ஸம்பஶ்யந்நபி" என்று கூட்டிப் பொருள் கொள்வதே சிறக்கும். (ஸம்பஶ்யந்நபி) 'ஸம்' என்னும் உபஸர்க்கம், "பலகால் விசாரித்து ஆராய்ந்தாலும்" என்னும் பொருளைக் காட்டுகிறது. (கர்த்துமேவ அர்ஹஸி) கர்ம யோகத்தையே செய்ய உரியவனுகிருய் நீ; ஏவகாரத்தாலே, ஞான யோகத்தைச் செய்யக்கூடாது என்று கருத்து. அன்றிக்கே, (லோக ஸங்க்ரமேவ ஸம்பஶ்யந்நபி-லோகஸங்க்ரஹத்தையே பாாத்தாலும்) என்று கூட்டி ஏவகாரத்தாலே சிஷ்டன் ஞானயோகத்தைக் கை விடுவதற்கு லோகஸங்க்ரஹமாகிற காரணம் ஒனறே போதுமானது

॥भा॥ लोकसंग्रहं पश्यन्नपि कर्मैव कर्तुमर्हसि; श्रेष्ठः कृत्स्न-शास्त्रज्ञतयाऽनुष्ठातृतया च प्रथितो यद्यदाचरति, तत्तदेवाकृत्स्नविज्जनोऽ-

---

என்று உணர்த்துவதாகவும் கொள்ளலாம். அப்போது "கர்த்துமர்ஹஸி" என்றவிடத்தில் ப்ரகரணப$_3$லத்தாலே 'கர்மயோகத்தையே செய்யவேண்டும்' என்று ஏவகாரத்தைக்கூட்டிககொண்டு ஞான யோகத்தைத் தவிர்க்கவேணும என்கை. (கர்த்தும் அர்ஹஸி) கர்மயோகத்தையே செய்ய உரியவனுகிருய்; 'உரியவனுகிருய்' என்ற தாலே, சிஷ்டர்களில் தலைவர்களான பாண்டுவுக்கும, குந்திக்கும் பிள்ளையாகப் பிறந்திருப்பதாலும, யுதிஷ்டிரனின் தம்பியாயிருப்ப தாலும, தானும ஊாவசியையும் உபேக்ஷிக்கவல்ல உயர்ந்தோனு யிருப்பதாலும் அர்ஜுனன் லோகஸங்க்ரஹத்தைக்கருதிக் கர்ம யோகத்தையே செய்யவேணடும; ஞானயோகத்தைச் செய்ய நினைக்கவும் கூடாது என்று உணர்த்தப்படுகிறது. இனி, இவ் விஷயம் பின்வரும் ஆறுஸ்லோகஙகளாலே விவரிக்கப்படுகிறது. 20.

21. இந்த ஶ்லோகத்தில் சிறந்தவனுடைய அனுஷ்டானத் தையே தாழ்ந்தவர்கள் பின்பற்றுகிருர்கள் என்கிருன். (ஶ்ரேஷ்ட$_2$:) "ப்ரஶஸ்யஸ்ய ஶ்ர:" [அஷ்டா 5-3-60] எனகிற ஸூத்ரத்தின்படி 'ஶ்ரேஷ்ட$_2$' ஶப்$_3$த$_3$ம் மிகமிகப்புகழத்தக்கவனைக் குறிக்கிறது. சாஸ் திரம முழுவதையும் அறிந்து அதன்படி நடப்பவனுகப் புகழ் பெற்றவன் என்று கருத்து. "தாநக்ருதஸ்நவிதோ$_3$ மந்தா$_3$ந் க்ருத் ஸ்நவிந்ந விசாலயேத்" [சாஸ்திரம முழுவதையும் அறியாத புல்லறி வாளர்களை, சாஸ்திரம் முழுவதையும் அறிந்தவன் நிலை பெயரும்படி செய்யக்கூடாது.] என்று மேலே சொல்லப்போகிறதன்றோ. சாஸ் திரத்தை அறிந்தவன் புகழத்தக்கவன் (ப்ரஶஸ்யன்); அதன்படி அனுஷ்டிப்பவன் மிகப்புகழத்தககவன் (ப்ரஶஸ்யதரன்); அறிந்து அநுஷ்டிப்பவனுகப் புகழ்பெற்றவன் மிகமிகப்புகழத்தக்கவன் (ப்ர ஶஸ்யதமன்). அவனே இங்கு ஶ்ரேஷ்ட$_2$ன் எனப்படுகிருன் என்று கொள்ளவேண்டும். (ஶ்ரேஷ்ட$_2$: யத்$_3$யதா$_3$சரதி தத்ததே$_3$வே தரோ ஜந:) ஜ்ஞாநாநுஷ்டானங்களில் சிறந்தவனுகப்புகழ்பெற்றவன் எந்த எந்தக்கர்மங்களை அனுஷ்டிக்கிருனே, அந்த அந்தக்கர்மங் களையே மற்ற ஸாமான்யஜனமும அனுஷ்டிக்கின்றது. (ஶ்ரேஷ்ட$_2$: யத்$_3$யதா$_3$சரதி) இதைப்பின்பற்றியே ஆண்டாளும் "மேலையார் செய்வனகள்" [திருப்பாவை 26] என்று அருளினுள். ப்ரதா$_4$ன கர்மமான அங்கிவிஷயத்தில் இப்படியானலும், அப்ரதா$_4$னமான

प्याचरति; अनुष्ठीयमानमपि कर्म श्रेष्ठो यत्प्रमणं यदङ्गयुक्तमनुतिष्ठति तदङ्गयुक्तमेवाकृत्स्नविल्लकोऽप्यनुतिष्ठति। अतो लोकरक्षार्थं शिष्टतया

18. மேலொருவன் செய்த மிகுகருமந் தானெதுவென்
றேலுமதின் மற்றிங் கியல்சனமுஞ—சாலவவன்
யாதைத்தன னங்க மெனவியலு மிவ்வுலக
மாதைப்பின செல்லு மமர்ந்து.

**இங்கு**—*இவ்வுலகில்.* **மேல் ஒருவன்**—*( ஞானம் அனுட்டானம் புகழ்ஆகியவற்ருல) சிறந்த ஒருவன்.* **செய்த**—*அனுஷ்டித்த.* **மிகு கருமம் தான்**—*சிறந்த கர்மம் தான்,* **எதுவென்றேலும்**—*எதாயிருந்தாலும்.* **மற்று சனமும்**—*மற்ற ஸாமாந்யஜனங்களும்.* **அதில் இயல்**—*அதிலேயே ஈடுபடுவார்கள்.* **அவன்**—*அச்சிறந்தவன்.* **யாதை**—*யாதொன்றை.* **தன் அங்கம் என**—*தான் அனுஷ்டிக்கும் கர்மத்திற்கு அங்கம் என்று.* **சால இயலும**—*நன்ருக அனுஷ்டிக்கிருனே.* **ஆதை**—*அதையே.* **இவ்வுலகம்**—*இந்த உலகினரும்.* **அமர்ந்து பின் செல்லும்**—*பொருந்தி அனுஷ்டிப்பர்.*

அங்கங்கள் விஷயததில் ஶ்ரேஷ்டரநுஷ்டானத்தை மற்றமனிதன் பின்பற்றுவதில்லையோ எனில், அதிலும அவனுடைய அனுஷடானத்தையே பின் செல்லுகிருன் எனகிறது ஶ்லோகத்தின பிற்பாதி: (ஸ:) அந்த ஶ்ரேஷ்டன. (யத்ப்ரமாணம குருதே) எவ்வளவினதாக அவ்வககர்மத்தை அனுஷடிக்கிருனே. (லோக: தத் அநுவர்த்ததே) முழுதுமறியாத ஸாமாந்யலோகமும் அவ்வளவினதாகவே அதைப் பின்பற்றுகிறது. அதாவது,—ஶ்ரேஷ்டன் எந்த அங்கங்களோடு கூடியதாக அவ்வக்கர்மத்தை அனுஷ்டிக்கிருனே, அந்த அஙகங்களோடு கூடியதாகவே மற்றவனும அவ்வக் கர்மத்தை அனுஷ்டிக்கிருன் என்று கருத்து. 'ஸ யத் ப்ரமாணம் குருதே' என்னும் தொடருக்கு, 'ஶ்ரேஷ்டன் எந்த சாஸ்திரங்களைப் பிரமாணமாக அறிகிறுனே' எனறு பொருள்கொளளக் கூடாதோ? எனில்: கூடாது. 'கர்த்துமர்ஹஸி' எனறு முன ஶ்லோகத்தில் இருப்பதையொட்டி, இங்கும் 'குருதே' என்னும் பதத்தைக் கர்மானுஷ்டான பரமாகப் பொருள் கொள்வதே உசிதம. 'ப்ரமாணம குருதே' என்பதற்கு 'ப்ரமாணமாக அறிகிருனே' என்று பொருள்கொள்வதில் லக்ஷணுதோஷம் ஏற்படுகிறது. முன் ஶ்லோகத்தில், கர்மாநுஷ்டானத்தைப் பற்றியபேச்சு உள்ளதே

प्रथितेन श्रेष्ठेन स्ववर्णाश्रमोचितं कर्म सकलं सर्वदाऽनुष्ठेयम् ; अन्यथा लोकनाशजनितं पापं ज्ञानयोगादप्येनं प्रच्यावयेत् ॥ २१ ॥

---

யொழிய எந்த சாஸ்திரங்களை ப்ரமாணமாகக் கொள்வது என்பது பற்றிய பேச்சில்லை. 'ஶ்ரேஷ்ட₂ன எந்த சாஸ்திரத்தைப் பிரமாண மாக அறிகிருனோ, அந்த ஶாஸ்திரத்தையே மற்றவனும் பின்பற்று கிருன்' என்று பொருள்கொள்ளுமபோது, சாஸ்திரத்தைப்பின பற்றுவதாவது அதிற்சொன்ன அர்த்தங்களை அனுஷ்டிப்பதேயாகை யால், ஶ்லோகத்தின முற்பாதியோடு பிற்பாதிககுப் புநருக்தி ஏற்படுகிறது. முற்பாதியில அங்கியைப்பற்றிப்பேசியிருப்பதால், பிற்பாதியில் அங்கங்களைப்பற்றிப் பேசுவதாகக் கொள்வதில் ஔசித்யமும் உண்டு. ப்ரமாணஶப்தம் 'அவதி₄' எனப்படும் எல்லை யளவை காட்டும. அநுஷ்டிககத்தக்க கர்மஸ்வரூபத்தின் அவதி₄ யாவது அதன அங்கஙகளே. அதனுலேயே பூர்வமீமாம்ஸகர்கள வித்₄யந்தம் [ விதிக்கப்படுவதின எல்லை ] என்னும் பதத்தாலே அங்கங்களைக் கூறுகிருர்கள. ஆகையால், 'யத்ப்ரமாணம் குருதே' என்றதற்கு எந்த அங்கங்களையுடையதாக அவ்வக்கர்மத்தைச் செய்கிருனோ என்று பொருள் கொள்வதே பொருந்தும். ( யத் ப்ரமாணம் குருதே தத் அநுவர்ததே ) 'ஶ்ரேஷ்ட₂ன் எந்த அங்கங்களோடு கூடியதாகக் கர்மத்தைச் செய்கிருனோ, அவ்வங்கங் களையே ஸாமாந்யலோகம்அனுஷ்டிக்கிறது என்றுஶப்தார்த்தம; அவ் வங்கங்களோடு கூடியதாகவே அவ்வக்கர்மங்களை அனுஷ்டிக்கிறது என்று தாத்பர்யார்த்₂ம. இவ்வணணமாக நல்லொழுக்கமுடையவனு கப்புகழ்பெற்ற ஶ்ரேஷ்ட₂னைவன் உலகினர்தன் அனுஷ்டானத்தைப் பின்பற்றும் நிலையில் இருக்கையால், அவ்வுலகினரைக் காப்பாற்று வதற்காக, தன் வர்ணுஶ்ரமங்களுக்குரிய கர்மம் அனைத்தையும தன் ஆத்மாவைப்பெறும் வரையில் எப்போதும் அனுஷ்டிக்கவேண்டும் என்றும், தன்னை ஞானயோகாதிகாரியாக எண்ணி அவன் கர்ம யோகத்தை அனுஷ்டிக்காவிடில் அவ்வுலகினரைக் கெடுத்ததால் உண்டான பாபம் ஞானயோகத்தினின்றும் அவனை நழுவச் செய்து விடும என்றும் ஶ்லோகததின் கருத்தாகும். "யே தத்ரப்₃ராஹ்மணு: ஸம்மர்ஶிந:, யுக்தா ஆயுக்தா:, அலூக்ஷா த₄ர்மகாமா: ஸ்யு:, யத₂ா தே தத்ர வர்த்தேரந், தத₂ா தத்ர வர்த்தேத₂ா:" [ தை-ஶீக்ஷா 11 ] [ஆராய்ச்சியில் வல்லவர்களாய், சாஸ்திரலோகங்களை அறிந்தவர் களாய், காமகரோத₄ாதி₃களற்றவராய். அறத்தில் விருப்பமுள்ள வரான வைதிகர்கள் நடக்கிற வழியிலே நீயும் நடப்பாயாக.] என்னும் வேதவிதியைத் திருவுள்ளத்திற்கொண்டு அருளிச் செய்யப் பட்டது இந்த ஶ்லோகம். 21.

न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किंचन।
नानवाप्तमवाप्तव्यं वर्त एव च कर्मणि॥२२॥

22. ந மே பார்த்தா₂ஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந।
நாநவாப்தமவாப்தவ்யம் வர்த்த ஏவ ச கர்மணி॥

**ஹே பார்த்த₂**—*குந்தீ புத்திரனே!* **த்ரிஷு லோகேஷு**—*மூவகைப்பட்ட யோனிகளில் (அவதரித்து நிற்கும்).* **மே**—*ஸர்வேஶ்வரனான எனக்கு,* **கர்த்தவ்யம்**—*செய்யத்தக்க கர்மம்.* **கிஞ்சந**—*எதுவும்.* **ந அஸ்தி**—*இல்லை; (ஏனெனில்).* **அநவாப்தம**-*இதுவரையில் கிடைக்காதிருப்பதாய்,* **அவாப்தவ்யம்**—*( ஒரு கர்மம் செய்து ) பெறத்தக்கதாயிருப்பது.* **கிஞ்சந**—*எதுவும்.* **ந அஸ்தி**—*இல்லை.* **ச**—*அப்படியிருந்த போதிலும்.* **கர்மணி**—*(நான் அவதரித்திருக்கும் வர்ணாஶ்ரமங்களுக்குரிய) கர்மத்தில.* **வர்த்த ஏவ**—*நான் நிலை நிற்கவே செய்கிறேன்.*

---

19. மூவுலகந் தன்னுள்ளு முன்பெய்தா தாய்ப்பின்பு
மேவுமியல் பாலெய்த வேண்டுவதொன்—றுவதெனக்
கில்லையா யேயிருக்க வெல்லாக் கருமத்து
மொல்லையா னின்றியல்வ னோர்ந்து.

**மூவுலகம் தன்னுள்ளும்**—*மூவகையான யோனிகளிலும் (அவதரித்துநிற்கும்)* **எனக்கு**—*(ஸர்வேஶ்வரனான) எனக்கு,* **முன்பு எய்தாதாய்**—*இதுவரையில் கிடைக்காததாய்.* **பின்பு**—*பிறிதொருகாலத்தில்,* **மேவும் இயலபால்**—*செய்யத்தக்க கர்மத்தால்.* **எய்த வேண்டுவது ஒன்றுவது**—*பெற வேண்டிய ஒரு பயனுவது.* **இல்லையாயே இருக்க**—*இல்லாமலேயிருக்க.* **ஒல்லை யான்**—*அநாதி புருஷனான நான்.* **ஓர்ந்து**—*லோக ரக்ஷணத்தை ஆராய்ந்து.* **எல்லாக் கருமத்தும்**-*(எனக்குரிய) எல்லா வர்ணாஶ்ரமகர்மங்களையும்.* **நின்று இயல்வன்**—*நிலையாகச் செய்வேன்.*

॥भा॥ न मे सर्वेश्वरस्यावाप्तसमस्तकामस्य सर्वज्ञस्य सत्यसङ्कल्पस्य त्रिषु लोकेषु देवमनुष्यादिरूपेण स्वच्छन्दतो वर्तमानस्य किंचिदपि कर्तव्यमस्ति, यतोऽनवाप्तं कर्मणाऽवाप्तव्यं न किंचिदप्यस्ति; अथापि लोकरक्षायै कर्मण्येव वर्ते॥२२॥

22. ஓரபேக்ஷையில்லாதவனாய், உலகத்தைக் கலக்கினாலும் அதனால் ஒரு தோஷத்தை அடையாதவனான நானே பரமகருணையாலே உலகைக் காப்பதற்காகக் கர்மத்தையே அனுஷ்டிக்கிறேன்; அப்படியிருக்கும்போது பல அபேக்ஷைகளை உடையவனாய், லோகஸங்க்ரஹம செய்யாவிடில தோஷமடைபவனான நீ கர்மத்தைச் செய்யவேண்டும் என்பதைச் சொல்லவேண்டுமோ எனகிறான் இனி மூன்று ஶ்லோகங்களினால். அதில், கர்மம் செய்யவேணடிய அவசியமில்லாத நான் உலகத்தை ரக்ஷிப்பதையே கருத்திற்கொண்டு கர்மத்தை செய்கிறேன் என்கிறான் இநத ஶ்லோகத்தில். (பார்த்த₂) என் அத்தை பிள்ளையான அர்ஜுன! உனக்குள்ள உறவைநோக்கி உண்மையைச் சொல்லுகிறேன் கேள். (மே) ஸர்வேஶ்வரனான எனக்கு. என்னுடைய ஆஜ்ஞைகளான ஶ்ருதிஸ்ம்ருதிகளுக்குப் பிறர் கட்டுப்படவேண்டுமேயொழிய, நான் அவற்றுக்குக் கட்டுப்படவேண்டியதில்லை; நான் அனைவர்க்கும் ஈச்வரனாயிருப்பதுபோலே எனககு ஒரு ஈச்வரனில்லாமையாலே, எவர்க்கும பயந்து கர்மம் செய்யவேண்டியதும் எனக்கில்லை என்று கருத்து. (மே) அவாப்தஸமஸ்தகாமனான (பெறவேண்டியதையெல்லாம் பெற்றிருப்பவனான) எனக்கு. இதுவரையில் நான் பெற்றிராதது ஏதாவது ஒன்றிருந்ததாகில் அதைப்பெறுவதற்கு நான கர்மம் செய்யவேணடும். அதில்லாமையாலும, நான கர்மம் செய்யவேண்டியதில்லை. (மே) ஸர்வஜ்ஞனும், ஸத்யஸங்கல்பனுமான எனக்கு. தேவமநுஷ்ய திர்யக்ஜனமங்களில் நான் அவதரித்தபோதிலும அவ்வப்பிறப்பைப் புண்யபாபகர்மத்தாலே அடையும் மற்றவாகளுக்குப்போலே எனக்கு ஞானஸங்கோசமோ, விருப்பம் தடைபடுதலோ ஏற்படுவதில்லை; ஆகையால், அவர்களைப்போல் இவை நீங்குவதற்காகவும் நான் கர்மம் செய்யவேண்டியதில்லை. (த்ரிஷு லோகேஷு மே கர்த்தவ்யம் கிஞ்சந நாஸ்தி) மூவகையோனிகளாகிற தேவமநுஷ்யதிர்யக்ஜனமங்களில் நான் பிறந்தபோதிலும், கர்மத்தாலல்லாமல் என் இச்சையாலேயே நான் பிறக்கையால் எனக்குச் செய்யவேண்டிய கர்மம் யாதொன்றுமில்லை. லோகஶப்தம் ப்ரகரணஸ்வாரஸ்யத்தாலே யோனிகளைச் சொல்லுகிறது. ஸ்தா₂வரஜன்மத்துக்குக் கர்த்தவ்யமில்லாமையால், அதைவிட்டு மற்ற மூன்று யோனிகளைச் சொல்லுகிறான.

यदि ह्यहं न वर्तेयं जातु कर्मण्यतन्द्रितः।
मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः॥ २३॥

उत्सीदेयुरिमे लोका न कुर्यां कर्म चेदहम्।
सङ्करस्य च कर्ता स्यामुपहन्यामिमाः प्रजाः॥ २४॥

**23.** யதி₃ ஹ்யஹம் ந வர்த்தேயம் ஜாதுகர்மண்யதந்த்₃ரித:।
மம வர்த்மாநுவர்த்தந்தே மநுஷ்யா: பார்த்த₂ ஸர்வஶ:॥

---

"ஸமஸ்தஶக்தி ரூபாணி தத் கரோதி ஜநேஶ்வர।
தே₃வதிர்யங்மநுஷ்யாக்₂யாசேஷ்டாவந்தி ஸ்வலீலயா॥
ஜக₃தாமுபகாராய ந ஸா கர்மநிமித்தஜா।
சேஷ்டா தஸ்யாப்ரமேயஸ்ய வ்யாபிந்யவ்யாஹதாத்மிகா॥"
*[வி-பு 6-7-71, 72]*

*[அரசனே! எல்லாசக்திகளையும் உடைய அப்பரம்பொருளானது. தேவதிர்யங்மநுஷ்யஜாதிப்பெயர்களையும் அந்தந்த ஜாதிகட்குரிய செயல்களையும் உடைய பல உருவங்களை விளையாட்டாக எடுத்துக் கொள்கிறது. அவனுடைய ஆக்₂யாசேஷ்டைகள் (பெயரும் செயலும்)உலகின் உபகாரத்தின்பொருட்டேயொழியக் கர்மம் காரணமாக ஏற்படுவதல்ல. அளத்தற்கரியவனை அப்பெருமானின் செயல் எங்கும் பரந்து தடையற்று விளங்குகின்றது.]* என்று சொல்லப் பட்டதன்றே. செய்யவேண்டிய கர்மம் ஒன்றுமில்லாமலிருக்கைக்குக் காரணங்களில் ஒன்றை வெளிப்படையாக விவரிக்கிறான் மேலே,– (அநவாப்தம் அவாப்தவ்யம் நாஸ்தி) எனக்கு இதுவரை கிடைக்கப் பெறாததாய், இனிக் (கர்மம் செய்து) கிடைக்கவேண்டியதாக ஒன்றில்லையாகையால், அதைப்பெறுவதற்காகச் செய்யவேண்டிய கர்மமும் ஒன்றில்லை என்று கருத்து. (ச) அபிஶப்தப்பொருளிலே சகாரம். அப்படியிருந்தபோதிலும். (கர்மணி வர்த்த ஏவ) கர்மாநுஷ்டானத்தில் நான நிலைநிற்கவே செய்கிறேன். கர்மத்தைவிட்டு ஞானயோகத்தை எப்போதும் அனுஷ்டிப்பதில்லை என்று கருத்து. அன்றிக்கே, (கர்மண்யேவ வர்த்தே) என்று கூட்டி, கர்மாநுஷ்டானத்திலேயே நிலைநிற்கிறேனேயொழிய ஞானத்தில் நிலைநிற்பதில்லை என்று சொற்பொருளாகவே கொள்ளலாம். 22.

24. உத்ஸீதே₃யுரிமே லோகா ந குர்யாம் கர்ம சேத₃ஹம் ।
ஸங்கரஸ்ய ச கர்த்தா ஸ்யாமுபஹந்யாமிமா: ப்ரஜா: ॥

**பார்த்த₂**—*அர்ஜுநு !* **அஹம் ஹி**—*ஸர்வேஶ்வரனுன நான*, **கர்மணி**—*(நான் அவதரித்த குலத்துக்குரிய) கர்மங்களில்*, **ஜாது**-*ஒருபோதும்*, **அதந்த்₃ரித:**-*சோம்பலில்லாமல்*, **யதி₃ ந வர்த்தேயம்**—*நிலேநில்லாமலிருந்தேனுகில்*, **மநுஷ்யா:**—*ஸாமாந்யமனிதர்கள்*, **ஸர்வஶ:**—*எல்லாப்படியாலும்*, **மம வர்த்ம**—*என் வழியையே*, **அநுவர்த்தந்தே**—*பின்பற்றுவார்கள்*. **அஹம்**—*நான்*, **கர்ம**—*( என் குலத்துக்குரிய ) கர்மத்தை*, **ந குர்யாம் சேத்**—*செய்யவில்லையாகில்*, **இமே லோகா:**—*(என் ஒழுக்கத்தைப் பின்பற்றும்) இவ்வுலகினர்*, **உத்ஸீதே₃யு:**—*( கர்மம் செய்யாமல் ) அழிந்துவிடுவார்கள்;* **ஸங்கரஸ்ய** — *( சிஷ்டகுலங்களின் ) கலப்பை*, **கர்த்தா ச ஸ்யாம்** — *செய்தவனுகவும் நான ஆகிவிடுவேன்; (அதனுலேயே)* **இமா: ப்ரஜா:**-*இந்த ஜனங்களே*, **உபஹந்யாம்**-*(பிற்காலத்திலும்) உய்வற்றவர்களாக ஆக்கிவிடுவேன்.*

---

**20. யானியலா திங்கொழியி லென்வழியைப் பின்செல்வர்**
**மானிடர்மற் றிவ்வுலக மாயுமாற்—றுனிலேசேர்**
**நன்மரபு தான்கலக்கி நானே யிவர்தம்மைப்**
**புன்மையினி லுய்த்தேனுய்ப் போம்.**

**இங்கு**—*இவ்வுலகில்*, **யான் இயலாதொழியில்**—*நான் கர்மம் செய்யாவிடில்*, **மானிடர்**—*ஸாமாந்ய மனிதர்*, **என் வழியைப் பின் செல்வர்**—*என் நடத்தையைப் பின்பற்றுவர்;* **மற்று**-*அதற்குமேலே*, **இவ்வுலகம்**-*இவ்வுலகினர்*, **மாயுமால்**-*அழிவர் அந்தோ !* **நானே**—*( நல்வழிகாட்டவேண்டிய ) நானே*, **இவர் தம்மை**—*இவர்களே*, **தான் நிலேசேர் நன் மரபு தான் கலக்கி**—*தமக்குரிய நிலேயில் நிற்கவேண்டிய நல்வழியைக் கலங்கச்செய்து*, **புன்மையினில் உய்த்தேனுய்ப்போம்**—*எப்போதும் உய்வற்றவர்களாயிருக்கும் தாழ்நிலேயை அடையச்செய்தவனுவேன்.*

॥भा॥ अहं–सर्वेश्वरस्सत्यसङ्कल्पः स्वसङ्कल्पकृतजगदुदयविभव-लयलीलश्छन्दतो जगदुपकृतिमर्त्यो जातोऽपि मनुष्येषु शिष्टजनाग्रेसर-

23-24. 'அடையவேண்டிய பயனில்லாமையால் செய்ய வேண்டிய காரியம் உனக்கு ஒன்றுமில்லாவிடில் நீ ஏன் கர்மம் செய்கிறாய்' என்னும் கேள்வியெழ, இரண்டு ஶ்லோகங்களாலே பதில் உரைக்கிறான். "தரிஷு லோகேஷு" என்று கூறுகையாலே, சென்ற ஶ்லோகத்தில் மூவகை யோனிகளிலும் இவன் எடுக்கும் எல்லா அவதாரங்களையும்பற்றிப் பேசப்பட்டது. "மநுஷ்யா:" என்று கூறுகையாலே, மனிதர்களில் ஒருவனாய்ப் பிறந்த கிருஷ்ணாவதாரத்தைப்பற்றிப் பேசுகின்றன இவ்விருஶ்லோகங்களும். (அஹம்) ஸர்வேஶ்வரனாய், ஸர்வஜ்ஞனாய், ஸத்யஸங்கல்பனாய், தன ஸங்கல்பத்தாலேயே உலகனைத்தினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை விளையாட்டாகச் செய்பவனாய், உலகிற்கு உபகரிப்பதற்காகவே தன் விருப்பத்தாலேயே மனிதனாய் அவதரித்த நான். (அஹம் யதி₃ கர்மணி ந வர்த்தேயம்) நான ஸர்வேஶ்வரனாயிருக்கையாலே, 'என்னுடைய ஆஜ்ஞைகளான ஶ்ருதிஸ்ம்ருதிகளுக்குப் பிறர் கட்டுபபடவேண்டுமேயொழிய நான்கட்டுப்படவேண்டியதில்லை' என்னும எண்ணத்தாலோ, 'நான் அனைவர்க்கும் ஈஶ்வரனாயிருப்பது போலே, எனக்கு ஒரு ஈஶ்வரனில்லாமையாலே எவர்க்கும் பயந்து கர்மம் செய்யவேண்டியதும் எனக்கில்லை' எனனும எண்ணத்தாலோ, நான் ஸர்வஜ்ஞனாகவும், ஸத்யஸங்கல்பனாகவுமிருக்கையாலே, 'மனிதனாய் அவதரித்தபோதிலும் கர்மத்தால் மனிதப் பிறவியை அடையும் மற்றவர்களைப்போலே எனக்கு ஞான ஸங்கோசமோ, விருப்பம் தடைபடுதலோ இல்லாமையாலே இவை நீங்குவதற்காக நான் கர்மம் செய்யவேண்டியதில்லை' என்னும் எண்ணத்தாலோ, என் ஸங்கல்பத்தாலேயே உலகனைத்தின் ஸ்ருஷ்ட்யாதிகளை விளையாட்டாகச் செய்வதனமூலம எல்லாவிருப்பங்களையும் பெற்றிருப்பவனாகையாலே, 'நான் பெறவேண்டியது ஒன்று இல்லாமையாலே ஒன்றைப்பெறுவதற்காகக கர்மம செய்யவேண்டியதில்லை' என்னும் எண்ணத்தாலோ நான் கர்மம் செய்யாமலிருந்தேனாகில. 'ஸர்வேஶ்வரனான உனக்கு வர்ணாஶ்ரமங்களோ, கர்மாநுஷ்டானத்துக்குரிய மனுஷ்யத்வாதிகளோ உண்மையில் இல்லையாகையால் நீ எப்படிக் கர்மயோகம் செய்யமுடியும்' என்னில்: (அஹம் கர்மணி யதி₃ ந வர்த்தேயம்) ஸங்கல்பமாத்திரத்தாலே

எல்லாக்காரிங்களேயும் ஸாதிக்க வல்லவனுயிருந்தபோதிலும், சேதனாக்கு அறிவையளிப்பது நற்கருமங்களே அனுஷ்டிக்கச் செய்வது முதலான சிலகாரியங்களே அவர்களே ஆவேசித்து நின்று செய்தேனுகில் அதனுல் வரும் பலன் அவர்களுக்கு ஏற்படா தாகையால், அவர்களில் ஒருவனுகவே பிறந்து என் அநுஷ்டானத் தின் மூலமும் கீதாசாஸ்திரம முதலான ஶாஸ்திரங்களே அருளுவதன மூலமும் அவர்களேத் திருத்துவதற்காக மனிதர்களிலே சிஷ்ட ஜனங்களில் மிகச்சிறந்தவராகப் பிரஸித்திபெற்ற வஸுதேவருடைய விட்டிலே அவதரித்திருக்கையாலே, "குலோசிதமதி: க்ஷாத்ரம் த₄ர்மம் ஸ்வம் ப₃ஹுமந்யதே" [ரா-அ 1-16] [குலத்திற்குத்தக்க அறிவை யுடையவனுய், தன க்ஷத்ரிய தர்மத்தை மதிக்கிருன் இராமன்] எனகிற ரீதியிலே வஸுதேவகுலோசிதமான கர்மத்தை அநுஷ்டிக்கை எனக்கும் ஒட்டும் என்று கருத்து. "அஜாயமானோ ப₃ஹுதா₄ விஜாயதே" [பு-ஸூ] [பிறப்பற்றவனுயிருந்தும் பலபடி யாகப் பிறக்கிருன் பரமபுருஷன்.] "பிதா புத்ரேண பித்ருமாந் யோநி யோநௌ நாவேத₃விந்மநுதே தம் ப்₃ருஹந்தம்" [யஜுர்வேதம்] [ஸர்வலோகபிதாவானவன தன பிள்ளையொருவனேப் பிதாவாகக் கொண்டு எல்லா யோனிகளிலும் பிறககிருன். வேதமறியாதவன் அவனேப பெரியோனென்று அறியமாட்டான்.] "க்ருஷ்ணுய தே₃வகீபுத்ராய" [சாந்தோக்யம்] [தேவகீபுத்திரனுன கிருஷண னுக்கு (ஸமர்ப்பிக்கப்பட்டது).] "நாகாரணுத் காரணுத₃வா காரணு காரணுந் ந ச। ஶரீரக்₃ரஹணம் வ்யாபிந் த₄ர்மத்ராணுய கேவலம்॥" [வி-பு 5-1-51] [ஸர்வவ்யாபியே! நீ சரீரமெடுப்பது புண்யபாபங் கள காரணமாகவன்று; அறத்தை நிலேநிறுத்துவதற்காகவே யாகும.] "இச்சா₂க்₃ருஹீதாபி₄மதோருதே₃ஹ:" [வி-பு 6-5-84] [தன விருப்பத்தாலேயே எடுக்கப்படும் இனிய பல தேஹங்களேயுடைய வன] "மநுஷ்யதே₃ஹிநாம் சேஷ்டாமித்யேவமநுவர்த்ததே। லீலா ஜக₃த்பதேஸ் தஸ்ய ச₂ந்த₃த: ஸம்ப்ரவர்த்ததே" [வி-பு 5-22-18] [இவ்வண்ணமாக மனிததேஹமெடுததவர்களின் செயலேயே இவ னும பினபற்றுகிருன். இவ்விளேயாட்டு லோகநாதனுன அவன் விருப்பத்தாலேயே ஏற்படுவது.] "ஸவேச்ச₂யைநம் ஜக₃து₃பக்ருதி மர்த்யம் கோ விஜேதும் ஸமர்த்த₂:" [வி-பு 5-30-80] [தன இச்சை யாலேயே உலகின உபகாரத்தின்பொருட்டு மனிதவுருககொண்ட வனே எவனுல் வெல்லமுடியும?] முதலான பிரமாணங்களில் இவ னுடைய பிறப்பின் பெருமையும், இவன் உலகின உபகாரத்தின் பொருட்டே கர்மங்களே அனுஷ்டிக்கிருன் என்பதும் பேசப்பட்ட

वसुदेवगृहेऽवतीर्णस्तत्कुलोचिते कर्मण्यतन्द्रितस्सर्वदा यदि न वर्तेय, मम शिष्टजनाग्रेसरवसुदेवसूनोर्वर्त्म अकृत्स्नविदशिशष्टास्सर्वप्रकारेणायमेव धर्म इत्यनुवर्तन्ते; ते च स्वकर्तव्याननुष्ठानेनाकरणे प्रत्यवायेन चात्मा-

---

தன்ருே. (அஹம் ஹி) என்றவிடத்தில ஹி ஶப்தததாலே சிஷ்டர் களில் தலைசிறந்தவரான வஸுதேவரின பிள்ளையாகத் தான அவதரித்திருக்கும் பிரஸித்தியைக் காட்டுகிருன். இத்தால், ஸாமாந்ய ஜனங்கள் தன் செயலைப் பினசெல்வார்களாகையாலே தானும் அவர்களை ரக்ஷிப்பதற்காகக் கர்மங்களை அனுஷ்டிக்கவேண்டி யிருக்கிறது என்று உணர்த்தப்படுகிறது. (வர்த்தேயம) "வர்ததேய" என்று ஆத்மநேபத₃மாக இருக்கவேணடியது பரஸ்மைபத₃மா யிருப்பது ஆர்ஷம. (அதந்த்₃ரித: காமணி யதி₃ ந வர்த்தேயம்) சோம்பலில்லாமல் நான் கர்மானுஷ்டானம் செய்யவில்லையாகில். (ஜாது யதி₃ ந வர்த்தேயம்) ஜாது—ஜாத்வபி; ஒருகாலாகிலும் நான் கர்மாநுஷ்டானம் செய்யாமலிருந்தேனுகில்; எலலாக்காலத் திலும் நான் கர்மாநுஷ்டானம் செய்யவேண்டும் என்று கருத்து. (மம வர்த்ம) சிஷ்டஜனங்களில் தலைசிறந்தவரான வஸுதேவரின் பிள்ளையான என்னுடைய வழியாகிற கர்மம் செய்யாமையை. (மநுஷ்யா:) ஶிஷ்டர்களாகையாலே நல்வழியில் நிற்க விரும்புகிற வர்களாய், 'எது நல்வழி' என்பதைப் பூர்ணமாக அறியாத மனிதர்கள். (ஸர்வஶ: அநுவர்த்தந்தே) எல்லாப்படியாலும் பின பற்றுவார்கள். "த₄ர்மஜ்ஞ ஸமய: ப்ரமாணம் வேத₃ாஶ்ச" [ஆப ஸ்தம்பதர்மம] [தருமமறிந்தவர்களின் ஆசாரம் வேதததைக் காட்டிலும் சிறந்த பிரமாணம] என்கிறபடியே என்னுடைய ஆசாரத்தையே பரமப்ரமாணமாக நம்பி அனுஷ்டிப்பார்கள். அங்கி₃ விஷயத்தில் மாத்திரமல்லாமல் அங்கங்கள் விஷயத்திலும் என் ஆசாரத்தையே பின்பற்றுவார்கள் என்றுமாம. (அநுவர்த் தந்தே) "அநுவர்த்தேரந்" [பின்பற்றுவார்கள்] என்று பிரயோகிக்க வேண்டியிருகக, "அநுவர்த்தந்தே" [பின்பற்றுகிருர்கள்] என்று பிரயோகித்தது ஏற்கவே தன்னைப் பலர் பின்பற்றிக்கொண்டிருப் பதைக் கருத்தில் கொண்டு. ஆக, "நான் கர்மம் செய்யாவிடில், அவர்களும் தாங்கள் செய்யவேண்டிய கர்மத்தைச் செய்யாம லிருந்து விடுவார்கள்; இதனுல் செய்யவேண்டியதைச்செய்யாததால் உணடாகும தோஷம் அவர்களை வந்தடையும்; அப்பாபம் அவர் களுக்கு ஆத்மத₃ர்ஶனம் கைகூடாதபடி செய்துவிடும்; கடைசியில நர கத்தையே அடைவித்துவிடும்' என்று முதல் ஶ்லோகத்தின் கருத்து.

नमलब्ध्वा निरयगामिनो भवेयुः ; अहं कुलोचितं कर्म न चेत्कुर्याम्, एवमेव सर्वे शिष्टलोका मदाचारायत्तधर्मनिश्चयाः अकरणादेवोत्सीदेयुः– नष्टा भवेयुः। शास्त्रीयाचारानतुपालनात्सर्वेषां शिष्टकुलानां संकरस्य च कर्ता स्याम्। अत एवेमाः प्रजाः उपहन्याम्। एवमेव त्वमपि

---

'உன் அனுஷ்டானத்தைக் கணிசியாமல், ஶாஸ்திரவசனங்களைப்பார்த்து அவர்கள் கர்மத்தை அனுஷ்டிக்கமாட்டார்களோ?' என்று அர்ஜுனனுக்கு ஐயமெழ, ஶாஸ்திரங்களை அனுதரித்து என்னையே பின்பற்றுவார்கள் என்பதை வலியுறுத்துகிறுன இரண்டாம் ஶ்லோகத்தாலே. (அஹம் கர்ம ந குர்யாம் சேத்) நான் என் குலத்துக்குரிய கர்மத்தை செய்யாமலிருந்தேனுகில். (இமே லோகா:) விஸ்தாரமான சாஸ்திரங்களின் கருத்து இனனதென்று நிச்சயிப்பது அனைவர்க்கும் அரிதாகையாலே என் ஒழுக்கத்தைக் கொண்டே தர்மம் இன்னது என்று நிச்சயிக்கும் சிஷ்ட ஜனங்களன்றோ இவர்கள். ஆகையால்,இவர்கள் அனைவரும் சாஸ்திரத்தைக் காட்டிலும் என் ஒழுக்கத்தையே பின்பற்றுவார்கள் என்று கருத்து. (உத்ஸீதே₃யு:) என்னைப் பார்த்துத் தாங்களும் கர்மத்தை அனுஷ்டிக்காமலிருந்து பாபத்தையும் அதன் பலமான நரகத்தையும அடைந்து ஆத்மத₃ர்ஶனத்தைப் பெருமல் நசிப்பார்கள். "அஸந்நேவ ஸ ப₄வதி" [தை ஆ 6] [அவன் இல்லாப்பொருளாகவே ஆகிறுன்.] என்ருற்போலே, பெறவேண்டிய ஆத்மத₃ர்ஶனத்தைப்பெருமல், பெறத்தகாத நரகத்தைப் பெறுகையாகிற பெருந்தீங்கை அடைவார்கள் என்று கருத்து. (ஸங்கரஸ்ய ச கர்த்தா ஸ்யாம்) சாஸ்திரங்களில் சொன்ன ஒழுக்கத்தை நான் பின்பற்ருமையாலே வர்ணக்கலப்பையும் உண்டாக்கிவிடுவேன். வர்ணக்கலப்பாவது,– பிராம்மணவர்ணத்தின் ஆசாரமான போர்புரியாமையை க்ஷத்ரிய வர்ணத்தைச் சேர்ந்தவர்கள் அனுஷ்டிக்கும்படி செய்வது முதலானது. போர்புரியாமையாகிற ப்ராஹ்மணதர்மத்தை நான் அனுஷ்டித்தால், என்னைப்பார்த்து மற்ற க்ஷத்ரியர்களும் தஙகள் தர்மமாகிற போர்புரிதலைவிட்டு ப்ராஹ்மணதர்மங்களை மேற்கொள்வர்; இதனுல் மேலும் மேலும் வர்ணக்கலப்பு ஏற்பட்டு அனைவரும் அழிந்து விடுவர் என்று கருத்து. இவ்வளவேயோ? (இமா: ப்ரஜா: உபஹந்யாம்) இந்த ஶிஷ்டஜனங்களைக் காலாந்தரத்திலும் கர்மம் செய்யத் தகுதியில்லாதவர்களாககி உய்வதற்கு

शिष्टजनाग्रेसरपाण्डुतनयो युधिष्ठिरानुजोऽर्जुनस्सन् यदि ज्ञाननिष्ठाया-मधिकरोषि, ततस्त्वदाचारानुवर्तिनोऽकृत्स्नविदशिशष्टा मुमुक्षवः स्वाधि-कारमजानन्तः कर्मनिष्ठायां नाधिकुर्वन्तो विनश्येयुः। अतो व्यपदेश्येन विदुषा कर्मैव कर्तव्यम्॥ २३, २४॥

सक्ताः कर्मण्यविद्वांसो यथा कुर्वन्ति भारत।
कुर्याद्विद्वांस्तथाऽसक्तश्चिकीर्षुर्लोकसंग्रहम्॥ २५॥

---

இடமேயில்லாமற்போகையாகிற ஆத்மநாஶத்தை விளைத்து விடுவேன். "ஸங்கரோ நரகாயைவ" [1-42] என்று தொடங்கி அர்ஜுனனாலேயே வர்ணஸங்கரத்தினால் விளையும் கேடுகள் பேசப்பெற்றனவன்றோ. (பார்த்த₂) "விபத₃: ஸந்து ந: ஶஶ்வத்" [உன்னை நினைக்கைக்குறுப்பான ஆபத்துக்கள் எங்களுக்கு அடிக்கடி உண்டாகட்டும்] என்று கூறும ஞான பரிபாகமுடைய குந்தியின் பிள்ளையன்றோ நீ. இங்கு தாயின உறவைச் சொன்னது தந்தை முதலானாரின் மற்ற உறவுகளுக்கும உபலக்ஷணம். வீரபுத்திரர்கள் ஐவரைப்பெற்ற அக்குந்தியைக் கைப்பிடித்த மஹாவீரனான பாண்டுவன்றோ உன் தந்தை. 'யுதி₄ஷ்டி₂ரன்' [யுத்தத்தில் நிலைநிற்பவன்] என்று பெயர்பெற்றிருப்பவனன்றோ உன் தமயன. பீமன் முதலான மற்ற ஸஹோதர்களின் ஶௌர்யவீர்யபராக்ரமங்களைத் தான் அளவிடமுடியுமோ? இவர்களெல்லாம் கிடக்கட்டும; நீ தான் ஸாமான்யமானவனா? ஊர்வஶி, உத்தரை முதலான பேரழகிகளையும் உபேக்ஷித்துநின்ற உத்தமஜிதேந்திரியனன்றோ நீ; வில்லுக்கு ஓர் அர்ஜுனன் என்று பெயர் பெற்றவனன்றோ; இப்படிக் கட்டடங்க ஶிஷ்டர்கள் நிறைந்த குலத்திலே உதித்த நீ ஞான யோகத்தை அனுஷ்டித்தீர்யாகில், உன்னைப்போல் ஞானயோகத்தை அனுஷ்டிக்கத்தக்க ஞானசக்திகள் அற்றவர்களாய், ஶிஷ்டர்களாய், உன ஒழுக்கத்தைப் பின்பற்றுகிறவர்களான முமுக்ஷுக்கள், தங்களுக்கு ஞானயோகத்தில் அதிகாரமில்லை, கர்மயோகத்திலேயே அதிகாரம் உள்ளது என்று அறியாதவர்களாய், கர்மயோகத்தைக் கைவிட்டு அழிவார்கள். ஆகையால், ஶிஷடனாகப் புகழ்பெற்ற அறிவாளியால், ஞானயோகத்தில் அதிகாரமிருந்தபோதிலும் கர்ம யோகமே அநுஷ்டிக்கத்தக்கது என்று கூறப்பட்டதாயிற்று. 23-24.

न बुद्धिभेदं जनयेदज्ञानां कर्मसङ्गिनाम्।
जोषयेत्सर्वकर्माणि विद्वान् युक्तस्समाचरन्॥ २६॥

25. ஸக்தா: கர்மண்யவித்₃வாம்ஸோ யதா₂ குர்வந்தி பா₄ரத।
குர்யாத்₃ வித்₃வாம்ஸ்ததா₂ऽஸக்தஶ் சிகீர்ஷுர் லோகஸங்க்₃ரஹம்॥

26. ந பு₃த்₃தி₄பே₄த₃ம் ஜநயேத் அஜ்ஞாநாம் கர்மஸங்கி₃நாம்।
ஜோஷயேத் ஸர்வகர்மாணி வித்₃வாந் யுக்த: ஸமாசரந்॥

பா₄ரத—*பரத்குலத்துதித்தவனே!* கர்மணி ஸக்தா:—*கர்மத்தில் தவிர்க்கவொண்ணாத தொடர்பையுடையவர்களாய்,* அவித்₃வாம்ஸ:—*ஆத்மஸ்வரூபத்தைக்குறைவற அறியாதவர்கள்,* யதா₂ குர்வந்தி—*எப்படி (ஆத்மதர்ஶனத்தின்பொருட்டுக்) கர்மயோகத்தைச் செய்வார்களோ,* ததா₂—*அவ்வண்ணமாக,* அஸக்த:—*கர்மத்தில் பிணைப்பற்றவனாய்,* வித்₃வாந்—*ஆத்மஸ்வரூபத்தைக் குறைவற அறிந்தவனாய்,* லோகஸங்க்₃ரஹம் சிகீர்ஷு:—*லோகரக்ஷணத்தைச் செய்ய விரும்பியவன்,* குர்யாத்—*கர்மயோகத்தைச் செய்யக்கடவன்.* அஜ்ஞாநாம்—*ஆத்மாவைக் குறைவற அறியாதவர்களாய்,* கர்மஸங்கி₃நாம்—*கர்மத்திலேயே பிணைப்பையுடைய முமுக்ஷுக்களுக்கு,* பு₃த்₃தி₄பே₄த₃ம்—*(கர்மயோகத்தைக் காட்டிலும் ஆத்மதர்ஶனத்திற்கு வேறொரு ஸாதனம் உள்ளது என்னும்) புத்தி மாறாட்டத்தை,* ந ஜநயேத்—*உண்டு பண்ணக்கூடாது;* வித்₃வாந்—*ஆத்மாவைக் குறைவற அறிந்தவனும்,* யுக்த:—*(ஞானயோகத்தை இடையிடாமல், கர்மயோகமே ஆத்மத₃ர்ஶனத்துக்கு ஸாதனமாகிறது என்னும்) அறிவுடன் கூடியவனாய்,* ஸமாசரந்—*கர்மயோகத்தை நன்கு அனுஷ்டித்துக்கொண்டு,* ஸர்வகர்மாணி ஜோஷயேத்—*(கர்மயோகாதிகாரிகளுக்கு) எல்லாக்கர்மங்களிலும் உகப்பை உண்டாக்கவேண்டும்.*

---

21. நகையுடையார் செய்கைபோல் ஞானி நகையின்றி
யிகையுலகுக் காக வியல்வான்—பகைகருமத்
தானவறி வில்லார்க் கதினெஞ்சைப் பேதியேற்
றுனிசைவு செய்கவதிற் சார்ந்து.

॥ भा ॥ अविद्वांसः–आत्मन्यकृत्स्नविदः, कर्मणि सक्ताः–कर्मण्यवर्जनीयसंबन्धाः आत्मन्यकृत्स्नवित्तया तदभ्यासरूपज्ञानयोगेऽनधिकृताः

---

**நசையுடையார்**—(ஆத்மஜ்ஞானம் குறைவற இன்மையால்) கர்மத்தில் பற்றுடையவர்கள், **செய்கைபோல்**—(ஆத்ம த₃ர்ஶனத்தின் பொருட்டுக்) கர்மயோகத்தைச் செய்யும்படி. **நசை இன்றி**—(கர்மத்தில்) பற்றில்லாதவனாய். **ஞானி**—ஆத்மஞானத்தைக் குறைவற உடையவன், **இசை உலகுக்காக இயல்வான்**—தன்னைப் பின்பற்றும் ஶிஷ்டலோகத்திற்காகத் தானும் கர்மத்தை அனுஷ்டிப்பான்; **கருமத்து பசை ஆன**—கர்மத்தில் பற்று உள்ளவர்களாய், **அறிவில்லார்க்கு** — ஆத்மாவில் குறைவற்ற அறிவை அடையாதவர்களுககு, **அதில் நெஞ்சை**—அக்கர்மத்தில் ஈடுபடும் மனத்தை, **பேதியேல்**—மாறுபடுத்தாதே; **அதில்**—அக்கர்மயோகத்தில, **தான்**—ஆத்மஞானம் குறைவறப்பெற்ற தானும், **சார்ந்து**—ஈடுபட்டு, **இசைவு செய்க**—(அவ்வறிவில்லாதவர்களையும்) அதை அனுஷ்டிக்கச்செய்வாயாக.

---

25-26. ஆத்மஜ்ஞானத்தைக் குறைவறப் பெற்றிருப்பவர்களுக்கே ஜ்ஞானயோகத்தில் அதிகாரம் என்றும, மற்றவாகளுக்குக் கர்மயோகத்திலேயே அதிகாரம என்றும், ஶிஷ்டனாகப்புகழ்பெற்ற ஜ்ஞாநயோகா₃தி₄காரி தன் அதி₄காரத்தைக்கைவிட்டு மற்றவனின் அதி₄காரத்தையொட்டி நடப்பதே லோகஸங்க்₃ரஹம எனறும் கூறப்படுகிறது இவ்விரண்டு ஶ்லோகஙகளிலே. (அவித்₃வாமஸ:) அறிவற்றவர்கள்; பிரகரணஸ்வாரஸ்யத்தாலே ‘ஆத்மவிஷயத்தில் குறைவற்ற அறிவைப் பெறுதவர்கள’ என்று பொருள்படுகிறது. ஸமஸாரிகளைப்போலே அடியோடு ஆத்மஜ்ஞானமில்லாதவர்களுமல்ல ; ஜ்ஞாநயோகாதிகாரியைப்போலே ஆத்மஜ்ஞானத்தைப் பரிபூர்ணமாகப் பெற்றிருப்பவாகளுமல்ல என்று கருத்து. (கர்மணி ஸக்தா:) பிரகிருதிஸமபந்தத்தாலே கர்மத்தில் தவிர்க்க வொண்ணுதபடி பிணைக்கப்பட்டிருப்பவர்கள். ஆத்மஜ்ஞானத்தைக் குறைவறப்பெறுதவர்களாகையாலே, அவ்வாத்மவிஷயத்தில் பயற்சியாயிருககும் ஞானயோகத்தில் இவர்களுக்கு அதி₄காரமில்லையென்றும், இயற்கையிலேயே கர்மத்தோடு பிணைக்கப்பட்டிருக்கையாலே கர்மயோகத்திலேயே இவர்களுக்கு அதிகாரம் என்றும் உணர்த்தப்படுகிறது. இவ்விரண்டு பதங்களும் ஸாம்ஸாரிக

कर्मयोगाधिकारिणः कर्मयोगमेव यथा आत्मदर्शनाय कुर्वते, तथा आत्मनि कृत्स्नवित्तया कर्मण्यसक्तो ज्ञानयोगाधिकारयोग्योऽपि व्यपदेश्यशिष्टो लोकरक्षार्थं स्वाचारेण शिष्टलोकानां धर्मनिश्चयं चिकीर्षुः, कर्मयोगमेव कुर्यात्।

---

கர்மத்தைச் செய்யும் ஸம்ஸாரிகளைக் குறிப்பதாகக் கொண்டால், ஞானயோகாதிகாரியும் ஸாமஸாரிக கர்மங்களையே அனுஷ்டித்து ஸம்ஸாரியாகவேண்டும் எனறு மேலே உபதேசிப்பதாகத் தேறி விடுமாகையால், அப்படிப் பொருள்கொளளாமல் கீழ்ச்சொன்ன படியே பொருள்கொள்ளவேண்டும். அடுத்த ஶ்லோகத்திலுள்ள "அஜ்ஞாநாம் கர்மஸங்கி₂நாம்" என்ற பதங்களுக்கும இதே நியாயத்தாலே இவர்களே பொருளாவர். (அவித்₃வாமஸ: யதா₂ குர்வந்தி, வித்₃வாந் ததா₂ குர்யாத்) அவித்வான்கள் எவ்வண்ண மாக (ஆத்மத₃ர்ஶனத்தின பொருட்டுக்) கர்மயோகத்தையே செய் வார்களோ, அவ்வண்ணமாக வித்வானும் கர்மயோகத்தைச் செய்யக்கடவன். தன் அனுஷ்டானத்தைப்பார்த்து அவித்வான் களும் கர்மயோகத்தை அனுஷ்டிக்கலாமபடி வித்வானும் கர்மயோகத தைச் செய்யக்கடவன் எனறு கருத்து. (ஸக்தா: கர்மணி யதா₂ குர்வந்தி–அஸக்த: ததா₂ குர்யாத்) கர்மத்தில் இயற்கையிலேயே பிணைக்கப்பட்டவர்கள கர்மயோகத்தையே அனுஷ்டிக்கலாமபடி, கர்மத்தில் அப்படிப் பிணைக்கப்படாத ஞானயோகாதிகாரியும் கர்மயோகத்தைச் செய்யக்கடவன் எனறு கருத்து. இப்படிக் கருத் துரைக்காமல், 'கர்மயோக₃ாதி₄காரி செய்கிறபடி ஞானயோகாதி காரி செய்யவேண்டும'என்று பொருள் கூறினல், மேலே "சிகீர்ஷுர் லோகஸங்க்₃ரஹம்" என்று லோகஸங்கிரஹத்தைச் செய்வதற்காகக் கர்மயோகத்தைச் செய்யக்கடவன் என்று கூறியது பொருந்தாமற் போய்விடும். (லோகஸங்க்₃ரஹம் சிகீர்ஷு: குர்யாத்) "லோகஸ்ய ஸங்க்₃ரஹணம் ஏகீக்ருத்ய ஸ்வீகரணம் ஸ்வாநுஷ்டா₂நே ஸமாநாபி₄ ப்ராயதயா ஸயூத்₂யதாபாத₃நமித்யர்த்த₂:" [லோகத்தை ஸங்க்ரஹிப்ப தாவது– தன் ஒழுக்கத்தில் ஒத்த கருத்துடையவர்களாய், தன் னேடு ஒரே குழுவில் சேர்ந்தவர்களாம்படி செய்கை.] என்று லோகஸங்க்₃ரஹஶப்தத்தின் பொருள் தாத்பர்யசந்த்₃ரிகையில் அருளிச்செய்யப்பட்டது. ஞானயோகத்தில் அதிகாரம் உடையவனு யிருந்தபோதிலும், ஶிஷ்டனுகப் புகழ்பெற்றவன் ஞானயோக₃ாதி₄ காரமற்ற மற்ற ஜனங்களை ரக்ஷிபபதன்பொருட்டு, தன் ஒழுக் கத்தாலே அவர்களுக்கு அனுஷ்டிக்கவேண்டிய தாமம் இன்னது என்னும் தெளிவைப் பிறப்பிக்க விருப்பங்கொண்டு கர்மயோகத் தையே செய்யவேண்டும் எனறு முதல் ஶ்லோகத்தின கருத்து.

अज्ञानामात्मन्यकृत्स्नवित्तया ज्ञानयोगोपादानाशक्तानां मुमुक्षूणां कर्मसङ्गिनामनादिकर्मवासनया कर्मण्येव नियतत्वेन कर्मयोगाधिकारिणां कर्मयोगादन्यदात्मावलोकनसाधनमस्तीति न बुद्धिभेदं जनयेत्। किं तर्हि? आत्मनि कृत्स्नवित्तया ज्ञानयोगशक्तोऽपि पूर्वोक्तरीत्या कर्मयोग एव

---

லோகஸங்க்ரஹப்ரகாரத்தை விவரிக்கிறுன் இரண்டாவது ஶ்லோகத்தாலே: (அஜ்ஞாநாம) முன் ஶ்லோகத்தில் 'அவித்₃வாம்ஸ:' என்றவிடத்திற்போலே ஆத்மவிஷயத்தில் பரிபூர்ணஜ்ஞாந மில்லாமையாலே, ஞானயோகத்தை அனுஷ்டிக்க ஶக்தியற்றவர்களுககு என்று கருத்து. (கர்மஸங்கி₃நாம்) முன் ஶ்லோகத்தில் 'கர்மணி ஸக்தா:' என்றவிடத்திற்போலே 'கர்மத்தில் தவிர்க்க வொண்ணுத பிணைப்பையுடையவர்களுக்கு' என்று பொருள். அநாதி₃யாகத் தொடர்ந்துவரும் காமவாஸநையாலே கர்மத்தில் தவிர்க்கவொண்ணுத பிணைப்பையுடையவனுகிறுன் என்று கருத்து. கர்மவாஸநையாவது:— மேன்மேலே இவனைப் புண்யபாப கர்மங்களைச் செய்யத்தூண்டுவதான முன் முன் புண்யபாபகர்மங்களினுல் மனத்தில் ஏற்படும் ஒருவகையான ஸம்ஸ்காரம். அன்றிக்கே, வாத்தியம் முதலானவற்றை வாசிப்பவர்களுக்கு, நீண்டகாலம் வாசிப்பதினுல ஏற்படும் பழக்கம்போலே, நீண்டகாலம் புண்ய பாபச்செயல்களைச் செய்து வந்தமையால், சரீரத்திற்கு ஏற்படும் ஒருவகைப் பழக்கமாகவுமாம். (அஜ்ஞாநாம கர்மஸங்கி₃நாம்) இவ்விரண்டு பதங்களாலும் இவர்கள் ஞானயோகத்தில் அதிகாரமற்றுக் கர்மயோகத்திலே அதிகாரமுடையவர்கள் என்று உணர்த்தப்படுகிறது. (பு₃த்₃தி₄பே₄த₃ம் ந ஜநயேத்) 'ஆத்மத₃ர்ஶனத்துக்குக் கர்மயோகம ஸாதனம' எனனும அறிவையுடைய இவர்களுக்கு 'ஆத்மத₃ர்ஶனத்துககுக் கர்மயோகத்தைக் காட்டிலும் வேறுபட்டதொரு ஸாதனம் உண்டு' என்னும் அறிவுமாருட்டத்தை ஞானயோகா₃தி₄காரியானவன் தான் ஞானயோகத்தை அனுஷ்டிப்பதன் மூலம விளைக்ககூடாது. ஆக, இந்த ஞானயோகாதிகாரியானவன் ஞானயோகத்தை அனுஷ்டிப்பதனமூலம் கர்மயோகாதிகாரிகளுக்கு புத்திமாருட்டத்தை விளைக்ககூடாது என்றது பூர்வார்த்தம்; கர்மயோகத்தை அனுஷ்டிப்பதன்மூலம் அவர்களுக்குக் கர்மத்தில் உகப்பையும் உண்டுபண்ணவேணடும் என்கிறது உத்தரார்த்தம்: (வித்₃வாந்) முற்கூறிய ஞானயோகாதிகாரி. (யுக்த:) பு₃த்₃த்₄யா

ज्ञानयोगनिरपेक्ष आत्मावलोकनसाधनमिति बुद्ध्या युक्तः कर्मैवाचरन् सकलकर्मस्वकृत्स्नविदां प्रीतिं जनयेत् ॥ २५ ॥ २६ ॥

॥ भा ॥ कर्मयोगमनुतिष्ठतो विदुषोऽविदुषश्च विशेषं प्रदर्शयन् कर्मयोगापेक्षितमात्मनोऽकर्तृत्वानुसन्धानप्रकारमुपदिशति—

प्रकृतेः क्रियमाणानि गुणैः कर्माणि सर्वशः ।
अहङ्कारविमूढात्मा कर्ताऽहमिति मन्यते ॥ २७ ॥

तत्त्ववित्तु महाबाहो गुणकर्मविभागयोः ।
गुणा गुणेषु वर्तन्त इति मत्वा न सज्जते ॥ २८ ॥

27. ப்ரக்ருதே: க்ரியமாணுநி குணை: கர்மாணி ஸர்வஶ: ।
அஹங்கார விமூடாத்மா கர்த்தாஹமிதி மந்யதே ॥

28. தத்த்வவித்து மஹாபாஹோ குணகர்மவிபாகயோ: ।
குணு குணேஷு வர்த்தந்த இதி மத்வா ந ஸஜ்ஜதே ॥

அஹங்காரவிமூடாத்மா—(ஆத்மாவல்லாத தேஹத்தில் ஆத்மாவென்னும் எண்ணமாகிற) அஹங்காரத்தாலே மறைக்கப்பட்ட ஆத்மஸ்வரூபத்தையுடையவன், ப்ரக்ருதே: குணை:—பிரகிருதியைச் சேர்ந்த ஸத்வரஜஸ்தமங்களாகிற

---

யுக்த: ஒருவிதமான அறிவோடு கூடியவனுய்; அதாவது;—தான் பூர்ணமான ஆத்மஜ்ஞானத்தைப் பெற்றிருக்கையாலே ஞான யோகத்தை அனுஷ்டிக்க சக்தியுடையவனுயிருந்தபோதிலும், முன் சொன்ன ரீதியில் கர்மயோகமே ஞானயோகத்தையிடையிடாமல் ஆத்மதர்ஶனத்துக்கு ஸாதனமாகிறது என்னும் அறிவோடு கூடிய வனுய் என்று ப்ரகரணபலத்தாலே பொருள் படுகிறது. (ஸமாசரந்) கர்மயோகத்தையே செய்பவனுய். (கர்மாணி ஜோஷயேத்) கர்மத் தில் பிணைப்புடைய இவர்களைக் கர்மயோகத்தில் உகப்புடையவர் களாகச் செய்யவேண்டும். "ஜுஷீ ப்ரீதிஸேவநயோ:" என்றன்றோ தாது. (பாரத) வித்வான்களும், அஸக்தர்களும் நிறைந்த பரத குலத்துதித்தவனுகையாலே நீ லோகஸங்க்ரஹத்திற்காகக் கர்ம யோகத்தை அனுஷ்டித்தே தீரவேண்டும் என்று கருத்து. 25-26.

குணங்களாலே. **ஸர்வஶ: க்ரியமாணுதி**—(அந்தந்த குணங்களுக்குரிய) பலவகைகளில் செய்யப்படும். **கர்மாணி (ப்ரதி)**—கர்மங்களைக்குறித்து. **'அஹம் கர்த்தா' இதி**—'நானே செய்பவன்' என்று. **மந்யதே**—மயங்குகிருன். **மஹாபா₃ஹோ**—தடக்கையனே! **கு₃ணகர்மவிபா₄க₃யோ: தத்த்வவித் து**-குணப்பிரிவுகள். கர்மப்பிரிவுகள் ஆகியவைபற்றி உண்மையை அறிந்தவனேவெனில். **'கு₃ணு:**-ஸத்வரஜஸ்தமோகுணங்கள். **கு₃ணேஷு**—தம்காரியங்களில். **வர்த்தந்தே**—ஈடுபடுகின்றன' **இதி**—என்று. **மத்வா**—எண்ணி. **ந ஸஜ்ஜதே**—(கர்மங்களை நானே செய்பவன் என்னும்) ஸங்கத்தை அடைவதில்லை.

---

**22.** **மெய்க்கருமங் தன்குணத்தான் மேவிவரும் வேறறியா னிக்கருமம் யான்செய்தே னென்றிருக்கு—மக்கருமத் தேயகுணம் வேறறிவா னிக்குணங்க டன்னிற்ரு ஞயவென வுன்னுநசை யற்று.**

**கருமம்**—செயல்கள், **மெய்தன் குணத்தால்**— (பிரகிருதி கார்யமான) சரீரத்திலுள்ள ஸத்வரஜஸ்தமோகுணங்களால், **மேவி வரும்**—அவ்வக்குணத்திற்குரியபடி உண்டாகும். **வேறு அறியான்**—(சரீரத்தைக்காட்டிலும்) வேருன ஆத்மாவை அறியாதவன். **இக்கருமம்**—இக்காரியங்களை, **யான் செய்தேன் என்று இருக்கும்**—'நானே செய்தேன்' என்று நினைத்திருப்பான். **அக்கருமத்து ஏய குணம் வேறு அறிவான்**—அவ்வக் கருமங்களின் பிரிவையும் அவற்ரேடு பொருந்திய குணங்களின் பிரிவையும் அறிகின்றவன். **நசை அற்று**-(கர்மங்களைச் செய்பவன் நானே என்னும்) பற்று இல்லாமல். **இக்குணங்கள்**—இந்த ஸத்வரஜஸ்தமோ குணங்கள். **தன்னில் தான் ஆய**—தம்காரியங்களில் தாம் ஈடுபடுகின்றன. **என**—என்று. **உன்னும்**-நினைப்பான்.

---

27-28. " **அஸக்த்யா லோகரக்ஷாயை ...த்ருதீயே கர்மகார்யதா உக்தா** " [கீதார்த்தஸங்க்ரஹம் 7] [(**ஸ்வர்க்காதிபலன்களில்**) பற்றற்று, **லோகரக்ஷணத்தின் பொருட்டுக் கர்மம் செய்யவேண்டும்**

॥भा॥ प्रकृतेर्गुणैस्सत्त्वादिभिः स्वानुरूपं क्रियमाणानि कर्माणि प्रति अहङ्कारविमूढात्माऽहं कर्तेति मन्यते; अहङ्कारेण विमूढ आत्मा

---

என்று மூன்றுமத்தியாயத்தில் கூறப்பட்டது.] என்று கீதார்த்த ஸங்கிரஹத்தில் அருளிச்செய்யப்பட்ட அம்ஶம் இதுவரையில் விவரிக்கப்பட்டது. இனி, "கு₃ணேஷ்வாரோப்ய கர்த்ருதாம்। ஸர்வேஶ்வரே வா ந்யஸ்யோக்தா த்ருதீயே கர்மகார்யதா" [ஷை] [கர்த்ருத்வத்தை குணங்களிலோ, ஸர்வேஶ்வரனிடமோ ஏறிட்டுக் கர்மங்கள் செய்யவேண்டும என்று மூன்றுமத்தியாயத்தில் கூறப் பட்டது] என்னும் அம்ஶம் விவரிக்கப்படுகிறது. இது முதல் நான்கு ஶ்லோகங்களில் கர்மயோகத்தை அனுஷ்டிக்கும வித்வா னுக்கும் அவித்வானுக்கும உள்ள வாசியைக காட்டிக்கொண்டு, கர்மயோகானுஷ்டானத்துக்குத் தேவையான அநுஷ்டா₂தாவின் அகர்த்ருத்வானுஸந்தானமுறையை உபதேசிக்கிருன. அதில அவித் வானுன கர்மயோக₃நிஷ்டனின தனமை முதல் ஶ்லோகத்திலும, வித்வானின் தன்மை இரண்டாவது ஶ்லோகத்திலும் விவரிக்கப் படுகின்றன. (ப்ரக்ருதே: கு₃ணை:) மூலப்ரக்ருதியினுடையதாகப் பிரஸித்தி பெற்ற ஸத்வரஜஸ்தமோகுணங்களாலே. ஶப்₃த₃ாதி₃ கு₃ணங்கள் 'நான்கர்த்தா' என்று மயங்குவதற்குக் காரணமாகாமை யாலே, அவற்றை இங்கு எடுப்பது உசிதமல்ல. இங்கு ப்ரக்ருதி யென்றது அதன் கார்யமான சரீரத்தையே என்பதை 'மெய் தன் குணத்தால்' என்று வாதிகேஸரி ஜீயர் விளக்கிஞர். பிரகிருதி கார்யமான சரீரத்தாலன்ருே இவன் கட்டுண்டு கிடக்கிருன். (ஸர்வஶ: க்ரியமாணுநி கர்மாணி) மேலே பதினெட்டாம் அத்தி யாயத்திலே பத்தொன்பதாவது ஶ்லோகம் தொடங்கி, நாற்பத்து நாலாவது ஶ்லோகமீருகச் சொல்லப்படும் ரீதியிலே ஸத்வரஜஸ் தமோகுணங்களாலே தத்தமக்குரிய முறையிலே செய்யப்படும் கர்மங்களை. (கர்மாணி கர்த்தா அஹமிதி மந்யதே) 'கர்மாணி ப்ரதி கர்த்தா' என்று ப்ரதிஶப்தத்தை வருவித்துக்கொண்டு, 'கர்மங்களைக் குறித்துக் கர்த்தா நானே என மயங்குகிருன்' என்று பொருள்கொள்ளவேண்டும். இல்லாவிடில், 'கர்த்தா' என்னும் த்ருஜந்தபதத்தையொட்டி 'கர்மணும்' என்று ஆரும் வேற்றுமை யிருக்கவேண்டுமாகையாலே 'கர்மாணி' என்னும் இரண்டாம் வேற்றுமை பொருந்தாது; மேலும் 'கர்மங்கள், கர்த்தாவாகவும, நாஞகவும் இருக்கின்றன என்று மயங்குகிருன்' என்னும் அவப் பொருளும் ஏற்பட்டுவிடும்; ஆகையால், ப்ரதிஶப்தத்தைக்கூட்டியே

यस्यासावहङ्कारविमूढात्मा; अहङ्कारो नाम अनहमर्थे प्रकृतावहमभिमानः; तेन अज्ञात[त्म]स्वरूपो गुणकर्मसु अहं कर्तेति मन्यत इत्यर्थः। गुण-

---

பொருள்கொள்ளவேண்டும். 'கர்த்தா' என்பது த்ருந்நந்தமாகில் 'கர்மங்களை இயற்கையாகச் செய்பவர் நான் என மயங்குகிறான்' என்று பொருள். (கர்த்தா) 'ஜ்ஞாநசிகீர்ஷா ப்ரயத்நாஶ்ரய: கர்த்தா' ['நான் அறிகிறேன்; அறிந்தபடி செய்ய விரும்புகிறேன; அதைச் செய்ய முயல்கின்றேன்' என்று இவன் கூறலாம்படி ஜ்ஞாநம, சிகீர்ஷை (செய்வதில்விருப்பம), ப்ரயத்னம் (முயற்சி) ஆகியவற்றுக்கு இருப்பிடமாயிருப்பவன் கர்த்தா] எனபது கர்தருலக்ஷணம. (கர்த்தா அஹமிதி மந்யதே) நானே கர்த்தா என்று மயங்குகிறான. "அதி₄ஷ்டா₂நம் தத₂ா கர்த்தா" [கீதை 18-14] என்று தொடங்கும் ஶ்லோகத்தில் கர்மகாரணமான ஐந்துபொருளகளில் ஜீவனையும் ஒருவனாக எடுக்கையாலும் அவனைக் 'கர்த்தா'என்றே நிர்த்தேஶிக்கையாலும், "கர்த்தா ஶாஸ்த்ரார்த்த₂வத்த்வாத்" [ப்ர-ஸூ 2-3-33] [விதி₄நிஷேத₄ஶாஸ்திரங்கள் பொருளுடையனவாவதற்காக ஜீவனைக் கர்த்தா என்று ஒப்புக்கொள்ளவேண்டும்.] என்று ப்ரஹ்மஸூத்ரத்திலும் ஜீவனுக்குக் கர்த்ருத்வம நிரூபிக்கப்படுகையாலும், இங்கு இவனுக்குக் கர்த்ருத்வம் மறுக்கப்படுவதாகக் கொள்ளமுடியாது, ஆகையால் 'அஹமேவ கர்த்தா இதி மந்தே' [நானே கர்த்தா என மயங்குகிறான்]என்று ஏவகாரத்தைக்கூட்டி, இவனுடைய கர்த்ருத்வம், குணம் முதலான பல காரணங்களால் ஏற்படுவதாயிருக்கத் தன்னையே ஸ்வதந்த்ரகர்த்தாவாக மயங்குகிறான் எனறே பொருள் கொள்ளவேண்டும். இவன் இப்படி மயங்கக்காரணமென்ன? எனில்: (அஹங்காரவிமூட₄ாத்மா) அஹங்காரத்தாலே மறைக்கக்கப்பட்ட ஆத்மஸ்வரூபத்தை உடையவனிவன்; அதனாலேயே இப்படி மயங்குகிறான் என்கிறது. "அஹங்காரேண விமூட₄ ஆத்மா யஸ்ய, அஸௌ அஹங்கார விமூட₄ாத்மா" என்று வ்யுத்பத்தி. ஆத்மஸ்வரூபத்தை மறைப்பதல்லாமையாலும், அதனுள்ளேயே இருப்பதாகையாலும் 'நானென்னும் தன்மை' இங்கு அஹங்கார ஶப்தத்தால் குறிக்கப்பட முடியாது. மஹானின் கார்யமான அஹங்காரமென்னும் அசேதன தத்துவமும், தேஹாத்மமயக்கததை விளைக்காமல் நேரே ஆத்மாவை மறைக்கமுடியாதாகையால் அஹஙகாரஶப்தம அதைககுறிப்பதாகக் கொள்ளுவதும் ஸ்வரஸமன்று; உயர்ந்தோரை அவமதிப்பது முதலானவற்றுக்குக் காரணமாகக் குறிக்காமையாலே, அஹங்கார

**कर्मविभागयोः—सत्त्वादिगुणविभागे तत्तत्कर्मविभागे च तत्त्ववित् गुणास्सत्त्वादयः स्वगुणेषु स्वेषु कार्येषु वर्तन्त इति मत्वा गुणकर्मसु अहं कर्तेति न सज्जते॥ २७॥ २८॥**

---

மென்று இங்கு கூர்வத்தைக் குறிப்பதாகக்கொள்வதும் பொருத்தமன்று. ஆகையால், ஆத்மஸ்வரூபத்தை நேரே மறைப்பதாய், 'அஹம்' ஶப்தத்தால் கூறப்படும் ஆத்மாவிலும வேறுபட்ட ப்ரக்ருதி ப்ராக்ருதங்களில், 'அஹம' [நான்] எனனும் அபி₄மானரூபமாயிருப்பதான தேஹாத்மமயக்கமே அஹங்காரஶப்தத்தால இங்கு குறிக்கப்படுகிறது என்று கொள்ளவேண்டும். (விமூட₄ாத்மா) 'அஹங்காரத்தால் மயங்கிய ஆத்மாவை உடையவன்' எனறு பொருள் கொண்டால், எதைப்பற்றி மயஙகுகிருன் என்று விளங்காதாகையாலே, 'அஹங்காரத்தால் மறைக்கப்பட்ட ஆத்மஸ்வரூபத்தை உடையவன்' என்று பொருள்கொள்வதே சிறககும். ''தி₃ஶோ விமுஹ்யேயு:'' [திக்குகள் மறைக்கப்படும] முதலானவிடங்களில் விமூட₄ஶப்தம் மயங்கியவனைக் காட்டாமல், மறைக்கப்பட்டதைக் காட்டுகின்றதன்றே; அதுபோல் இங்கும் கொள்வது. (கு₃ண கர்மவிப₄ாக₃யோ: தத்த்வவித் து) ஸத்வம், ரஜஸ், தமம் என்னும் குணப்பிரிவுகள்,அவ்வவற்றிற்குரிய கர்மப்பிரிவுகள் ஆகியவை பற்றி உணமையை அறிந்தவனேவெனில. இவ்வறிவு இல்லாமையாலேயே முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்டவன அஹங்காரவிமூடாத்மாவாயிருக்கிருன் என்று கருத்து. 'விப₄ாக₃யோ:' எனறதை ஆருும் வேற்றுமையாககொண்டு, ''குணகர்மப்பிரிவுகளின் உண்மையை அறிந்தவன்'' என்று கூறுவதில் ஏகதே₃ஶாந்வயம் என்னும் அஸ்வாரஸ்யம் ஏற்படுகிறதாகையாலே, அப்பதத்தை ஏழாம் வேற்றுமையாகக்கொண்டு, ''குணகர்மப்பிரிவுகள் விஷயத்தில் உண்மையை அறிந்தவன்'' என்று பொருள் கொளவதே உசிதம். (தத்த்வவித்து மஹாபா₃ஹோ) தடக்கைகள் முதலான உன் சரீர லக்ஷணத்தைப் பார்த்தாலே நீ தத்துவவித்துக்களின் குழுவில் சேர்ந்தவனுகவன்றே காண்கிருய் என்றுகருத்து.(கு₃ணா கு₃ணேஷு வர்த்தந்தே) முற்கூறிய ஸத்வரஜஸ்தமோகுணங்கள் தம் கார்யமான ஸாத்விகராஜஸதாமஸகர்மங்களில் ஈடுபடுகின்றன. இங்கு 'இந்திரியங்கள் தத்தம் விஷயங்களில் ஈடுபடுகின்றன' என்று சங்கரர் பொருள்கொண்டார். இப்படிக்கொண்டால், இரண்டு கு₃ணஶப்தங்களுக்கும் அமுக்கியமான பொருளே ஏற்படுகிறது.

प्रकृतेर्गुणसंमूढास्सज्जन्ते गुणकर्मसु।
तानकृत्स्नविदो मन्दान् कृत्स्नविन्न विचालयेत्॥ २९॥

**29.** ப்ரக்ருதேர் கு₃ணஸம்மூட₄ாஸ் ஸஜ்ஜந்தே கு₃ணகர்மஸு।
தாநக்ருத்ஸ்நவிதே₃ா மந்த₃ாந் க்ருத்ஸ்நவிந் ந விசாலயேத்॥

**ப்ரக்ருதே:**— *(சரீரமாகப் பரிணமித்து நிற்கும்) மூல ப்ரக்ருதியினுடைய,* **கு₃ணஸம்மூட₄ா:**—*குணங்களான ஸத்வ ரஜஸ்தமங்களாலே ஆத்மாவையறியாமல் மயங்கி நிற்பவர்கள்.* **கு₃ணகர்மஸு**—*குணங்களால் செய்யப்படும் கர்மங்களில்,* **ஸஜ்ஜந்தே**-*எப்போதும் ஈடுபாடுகொள்கின்றனர்;(அக்குணங்களற்ற ஆத்மஸ்வரூபத்தில் ஈடுபாடு கொள்வதில்லை.)* **மந்த₃ாந்**—*புலலியர்களாய்,* **அக்ருத்ஸ்நவித₃:**—*ஆத்ம ஸ்வரூபத்தை முழுவதும் அறியாதவர்களான,* **தாந்**—*அவர்களை,* **க்ருத்ஸ்நவித்**—*ஆத்ம ஸ்வரூபத்தை முழுதும் அறிந்தவன்,* **ந விசாலயேத்**-*(கர்மயோகத்தினின்றும்)நழுவச்செய்யக்கூடாது.*

---

**23.** முக்குணத்தான் மூடரா மாந்தர் முயல்கரும
மக்குணத்து நாளு மமர்வுறுவர்—மிக்க
வறிவுடையாரல்லாரை யாங்கசைவு செய்யார்
செறிவுடைய ஞானத்திற் சேர்ந்து.

**முக்குணத்தால் மூடராம் மாந்தர்**— *(மூலப்ரக்ருதியினுடைய) ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று குணங்*

---

ஆகையால், முதல் கு₃ணஶப்தம் முந்திய ஶ்லோகத்தில் எடுக்கப்பட்ட முக்₂யார்த்தமான ஸத்வாதி₃கு₃ணங்களைக் குறிப்பதாகவும், இரண்டாவது கு₃ணஶப்த₃ம் 'கு₃ணை: க்ரியமாணநி கர்மாணி' என்று முந்திய ஶ்லோகத்தில் குணங்களின் கார்யமாக எடுக்கப்பட்ட கர்மங்களை ஔபசாரிகமாகக் கூறுவதாகவும் கொள்வதே உசிதம். அன்றிக்கே, 'கு₃ணேஷு' என்னும் பதம் காரணத்தைக் காட்டிலும் அப்ரத₄ானமான கார்யத்தை முக்கியமாகவே குறிப்பதன் மூலம் ஸத்வாதி₃கு₃ணகார்யமான கர்மங்களை இங்கு குறிப்பதாகவும் கொள்ளலாம். (இதி மத்வா ந ஸஜ்ஜதே) 'ஸத்வாதி₃கு₃ணங்கள் தத்தம் கார்யங்களான கர்மங்களில் ஈடுபடுகின்றனவேயொழிய நாம் ஸ்வதந்திரமாகக் கர்மங்களில் ஈடுபடவில்லை' என்று நினைதது அக்கர்மங்களில் 'நானே கர்த்தா' என்னும் பற்றை வைப்பதில்லை. 27-28.

॥भा॥ अकृत्स्नविदस्स्वात्मदर्शनाय प्रवृत्ताः प्रकृतिसंसृष्टतया प्रकृतेर्गुणैर्यथावस्थितात्मनि संमूढा गुणकर्मसु क्रियास्वेव सज्जन्ते, न तद्विविक्तात्मस्वरूपे; अतस्ते ज्ञानयोगाय न प्रभवन्तीति कर्मयोग एव तेषामधिकारः।

---

களால் ஆத்மாவை அறியாமல் மயங்கிநிற்கும் மனிதர். **அக் குணத்து முயல் கருமம்**—அவ்வக்குணங்களால் உண்டாகும் கருமங்களில். **நாளும் அமர்வுறுவர்**—எப்போதும் ஈடுபடுவர். **மிக்க அறிவுடையார்**—ஆத்ம ஸ்வரூபத்தை முழுவதும் அறிந்தவர்கள். **செறிவுடைய ஞானத்தில் சேர்ந்து**—(ஆத்மாவைப் பற்றிய) இடைவிடாத சிந்தனமாயிருக்கும் ஞானயோகத்தைத் தாம் அனுஷ்டிப்பதன் மூலம், **அல்லாரை**—ஆத்ம ஸ்வரூபத்தை முழுதும் அறியாதவர்களை, **ஆங்கு**—அவர்கட்குரிய கர்மயோகத்தினின்றும், **அசைவு செய்யார்**—நழுவச் செய்யமாட்டார்கள்.

---

29. முன்னிரண்டு ஸ்லோகங்களைத் தெளிவுபடுத்திக்கொண்டு, ஆத்மஸ்வரூபஜ்ஞானத்தைக் குறைவறப் பெற்றிருப்பவன் தான் ஞானயோகததை அனுஷ்டிப்பதன மூலம் மற்றவர்களைக் கர்மயோகத்தினின்று நழுவச்செய்யக்கூடாது என்று அருளிச்செய்கிருன். (ப்ரக்ருதேர்கு₃ண ஸம்மூட₄ா:)மூலப்ரக்ருதியினுடைய குணங்களான ஸத்வம் முதலானவற்ருலே ஆத்மவிஷயத்தில் மயங்கி நிற்பவர்கள். "தே₃வத₃த்தஸ்ய கு₃ருகுலம்" [தேவதத்தனுடைய ஆசார்யனுடைய ஸ்தானம்] முதலான விடங்களிற்போலே, வேறு வழியில்லாமையால் 'ப்ரக்ருதேர்கு₃ணஸம்மூட₄ா:' என்றவிடத்தில் ஏகதே₃ஶாந்வயம் கொள்ளப்படுகிறது. (கு₃ணகர்மஸு ஸஜ்ஜந்தே) அந்த குணங்களால் ஏற்படும் கர்மங்களிலேயே ஈடுபடுவார்கள்; அந்த குண கர்மங்களற்ற ஆத்மஸ்வரூபத்தில் ஈடுபடமாட்டார்கள் என்று கருத்து. இங்கு 'கர்மஸு' என்று நிஷித்தகர்மங்களைக் கூறுவதாகக் கொண்டால், பிற்பாதியில் 'அவர்களைக் (கர்மங்களினின்றும்) நழுவச்செய்யக்கூடாது' என்றது ஒட்டாமற்போய்விடும். ஆகையால் ஒரு புருஷார்த்த ஸாதனமான கர்மங்களையே கூறுவதாகக் கொள்ள வேண்டும். இப்ரகரணத்தில் ஆத்மத₃ர்ஶனமே புருஷார்த்தமாகக் கூறப்படுகிறபடியால், அதற்கு ஸாதனமான கர்மயோகத்தையே இங்கு குறிப்பதாகக் கொள்வது உசிதம். ஆக, இப் பூர்வார்த்த₄த்தில், ஆத்மவிஷயத்தில் நிறைந்த அறிவைப்பெருத அதி₄காரிகளுக்கு ஞானயோகத்தில் திறமை இல்லையென்றும், கர்மயோகத்திலேயே அதிகாரம உண்டென்றும் காட்டப்பட்டது.

एवंभूतांस्तान् मन्दानकृत्स्नविदः कृत्स्नवित् स्वयं ज्ञानयोगावस्थानेन न विचालयेत्। ते किल मन्दाः श्रेष्ठजनाचारानुवर्तिनः कर्मयोगादुत्थितमेनं दृष्ट्वा कर्मयोगात् प्रचलितमनसो भवेयुः। अतश्श्रेष्ठस्स्वयमपि कर्मयोगे तिष्ठन्नात्मयाथात्म्यज्ञानेनात्मनोऽकर्तृत्वमनुसन्दधानः, कर्मयोग एवात्माव-

---

(அக்ருத்ஸ்நவித₃: தாந்) 'கு₃ணஸம்மூட₄ா:' என்று பூர்வார்த்தத்தில் சொன்னபடியே ஸத்வரஜஸ்தமங்களாலே மயங்கி நிற்பவர்களாகையாலே, ஆத்மஸ்வரூபத்தை முழுவதும் அறியாதவர்களான அவர்களை; அதனாலேயே ஆத்மஸ்வரூபசிந்தநரூபமாயிருக்கும் ஞானயோகத்தில் திறமையற்ற அவர்களை என்று கருத்து. திறமையற்றவர்களாயிருந்தபோதிலும், தங்கள் திறமையின்மையை அறிந்து ஞானயோகத்தில் கைவைக்காமலிருக்கலாமே எனில்: (மந்த₃ாந்) தங்களுக்கு ஞானயோகத்தில் திறமையில்லை என்பதையும் அறிய இயலாத புலலியர்களன்றோ இவர்கள்; ஆகையாலே உயர்ந்தோருடைய ஆசாரத்தையே பினபற்றுகின்றவர்களாய், உயர்ந்தவன் கர்மயோகத்தைவிட்டு ஞானயோகத்தை அனுஷ்டிப்பதைப்பார்த்துத் தாங்களும் கர்மயோகத்தை விட்டு நெகிழும் நெஞ்சுடையவராவர். மந்தத்தன்மையாவது.— தங்கள் திறமைக்குத் தக்கபடி தாங்கள் எதை அநுஷ்டிக்கலாம என்பதை அறிய வல்லமையினமை; பிறரால் தம நிலையைவிட்டு நழுவச்செய்யக்காரணமாய், ஆதமஸ்வரூபத்தை முழுதும் அறியாமையால் ஏற்பட்டதான அதைர்யமாகிற அல்பத்வம் (புலலிமை) என்றுமாம. "மூட₄ால்பாபடு நிர்ப்ப₄ாக்₃யா மந்த₃ா ஸ்யு:" [அமர 3-3-95] என்று நிகண்டுக்களில் சொல்லப்பட்ட நாலு பொருள்களில் மூட₄ன் என்னும் பொருள் 'அக்ருத்ஸ்நவித்' எனனும பதத்தால் சொல்லப்பட்டு விட்டதாகையாலும், நிர்பப₄ாக்₃யன் என்னும் பொருள் பிரகரணத்திற்கு ஒட்டாதாகையாலும மற்ற இரண்டு பொருள்களுமே கீழ்க் கூறியவகையில் பொருந்தும. (க்ருத்ஸ்நவித் ந விசாலயேத்) ஆத்மஸ்வரூபத்தை முழுவதும அறிந்தவன், அப்படி அறியாதவர்களான மந்தர்களைத்தான ஞானயோகத்தை அனுஷ்டிப்பதன் மூலம் கர்மயோகத்தினின்றும் நழுவச்செய்யக்கூடாது. உயர்ந்தவனயிருப்பவன், தானும் கர்மயோகத்தையே அனுஷ்டித்துக் கொண்டு, கர்மம் ப₃ந்த₄கமாகாமைக்காக, முன்னிரண்டு ஶ்லோகங்

लोकने निरपेक्षसाधनमिति दर्शयित्वा तानकृत्स्नविदो जोषयेदित्यर्थः। ज्ञानयोगाधिकारिणोऽपि ज्ञानयोगादस्यैव ज्यायस्त्वं पूर्वमेवोक्तम्। अतो व्यपदेश्यो लोकसंग्रहायैतमेव कुर्यात्। प्रकृतिविविक्तात्मस्वभावनिरूपणेन गुणेषु कर्तृत्वमारोप्य कर्मानुष्ठानप्रकार उक्तः। गुणेषु कर्तृत्वानुसन्धानं

---

களில் சொன்னபடி ஆத்மாவைப்பற்றிய உண்மையறிவாலே தான் ஸ்வதந்த்ரகர்த்தாவல்லன் என்று அனுஸந்தித்துக்கொண்டு, இப்படி அனுஷ்டிக்கப்பட்ட கர்மயோகமே ஆத்மத₃ர்ஶனத்துக்கு நேரே ஸாத₄னமாகிறது என்று முற்பாதியில் கூறப்பட்ட மந்த₃ாதி₄ காரிகளுக்குக் காட்டிக்கொண்டு. "ஜோஷயேத் ஸர்வகர்மாணி" [3-26] என்று சொன்ன ரீதியிலே அவர்களை உகப்பிக்கவேண்டும் என்று கருத்து. இப்படித் தாழ்ந்தவன் அனுஷ்டிக்கவேண்டியதை உயர்ந்தவன் அனுஷ்டிப்பதால் அவனுக்குத் தாழ்வு வாராதோ? எனில்: ஞானயோகாதிகாரியாகிற உயர்ந்தவனுக்கும், ஞான யோகத்தைக்காட்டிலும் கர்மயோகமே சிறந்தது என்று முன்னமே நிரூபிக்கப்பட்டதாகையாலே, தாழ்வு வாராது. ஆக இப்படித் தனக்குச் சிறந்ததாயிருப்பதோடன்றியில், பிறருக்கும் நன்மை பயப்பதாயிருக்கையாலே, ஶிஷ்டனாயிருப்பவன் லோகஸங்க்ரஹத்தின் பொருட்டுக் கர்மயோகத்தையே அனுஷ்டிக்கவேண்டும். அப்படிக் கர்மயோகத்தை அனுஷ்டிக்கும்போது கர்த்ருத்வ த்யாகத்தோடு அனுஷ்டிக்கவேண்டும். அதாவது:- முன் ஶ்லோகங்களில் சொன்ன படி ஆத்மஸ்வரூபமானது பிரகிருதியைக் காட்டிலும் வேறுபட்டது என்று இவன் நிரூபித்திருக்கையாலே, ஆத்மாவுக்கு இயற்கை யாகப் புண்யபாப கர்த்ருத்வம் கிடையாதாகையாலே, பிரகிருதி குணங்களான ஸத்வாதிகளில் கர்த்ருத்வத்தை அனுஸந்தித்துக் கர்மத்தை அனுஷ்டிக்கையேயாகும். அசேதனமான குணங்களுக்கு ஜ்ஞானம், சிகீர்ஷை (செய்யவிருப்பம்), ப்ரயத்னம் (முயற்சி) ஆகியவற்றுக்கு ஆஶ்ரயமாயிருக்கையாகிற கர்த்ருத்வம் எப்படி ஒட்டும் எனில்: இங்கு குணங்களிடம் கர்த்ருத்வத்தை அநுஸந்திக்கையாவது இதுவேயாகும்:— 'புண்யபாபச் செயல்களைச் செய்கையாகிற இந்தக்கர்த்ருத்வம் ஆத்மாவுக்கு இயற்கையில் ஏற்படுவதன்று; ஸத்வாதி₃கு₃ணஸம்பந்தத்தாலே ஏற்படுவதே' என்று அந்வயவ்யதிரேகங்களாலே ஆராய்ந்து ஆத்மாவுக்குள்ள கர்த்ருத்வத்தை குணங்களால் ஏற்படுவதாக அனுஸந்திக்கையே

चेदमेव–आत्मनो न स्वरूपप्रयुक्तमिदं कर्तृत्वम्, अपि तु गुणसम्पर्ककृत-मिति प्राप्ताप्राप्तविवेकेन गुणकृतम्—इत्यनुसन्धानम् ॥ २९ ॥

॥ भा ॥ इदानीमात्मनां परमपुरुषशरीरतया तन्नियाम्यत्वस्वरूप-निरूपणेन भगवति पुरुषोत्तमे सर्वात्मभूते गुणकृतं च कर्तृत्वमारोप्य कर्मकर्तव्यतोच्यते—

मयि सर्वाणि कर्माणि संन्यस्याध्यात्मचेतसा ।
निराशीर्निर्ममो भूत्वा युध्यस्व विगतज्वरः ॥ ३० ॥

30. மயி ஸர்வாணி கர்மாணி ஸங்ந்யஸ்யாத்$_4$யாத்ம சேதஸா ।
நிராஶீர் நிர்மமோ பூ$_4$த்வா யுத்$_4$யஸ்வ விக$_3$தஜ்வர: ||

அத்$_4$யாத்மசேதஸா—*ஆத்மாவைப்பற்றிய அறிவோடு (அனுஸந்தானத்தோடு)* ஸர்வாணி கர்மாணி—*எல்லாக் கர்மங்களையும்,* மயி—*ஸர்வாந்தர்யாமியான என்னிடத்தில,* ஸங்ந்யஸ்ய—*நன்கு வைத்து,* நிராஶீ:—*கர்மபலத்தில் விருப் பற்றவனுகவும்,* நிர்மம:-*கர்மங்களில் மமகாரமுமற்றவனுகவும்;* பூ$_4$த்வா—*ஆகி,* விக$_3$தஜ்வர:—*அநாதி$_3$ பாபத்தைப்பற்றிக் கவலைப்படாதவனுய்,* யுத$_4$யஸ்வ—*போர்புரிவாயாக.*

---

யாகும். இத்தால், கர்த்ருத்வம் குணங்களுக்கே; ஆத்மாவுக்கு அடியோடு இல்லை என்னும் ஸாங்க்யமதம் தள்ளப்பட்டதாயிற்று. 'கர்த்தாஹமிதி மந்யதே' *[3-27]* என்றவிடத்தில் கர்த்ருத்வமே ஆத்மாவுக்கு இல்லையென்று கூறப்படுவதுபோல் தோன்றினுலும், அது முற்கூறிய ரீதியில் பூர்வாபரவிருத்தமாகையாலே, பிரகரணத்தையொட்டி, முன் சொன்னவழியில் ஆத்மர்வுக்கு இயற்கையில் கர்த்ருத்வமில்லை எனறு அநுஸந்திக்கவேண்டும என்றே கொள்ளவேண்டும். இதனுல் "கர்த்தா ஶாஸ்த்ரார்த்த$_2$வத்த்வாத்" *[ப்ர-ஸூ 2-3-33]* [சாஸதிரம் பொருளுடையதாவதற்காக ஆத்மாவைக் கர்த்தா என்று ஒப்புக்கொள்ளவேண்டும்] எனறு தொடங்கும் அதிகரணத்தின் அர்த்தம் உணர்த்தப்பட்டது. *29.*

24. என்னிடையே யிக்கரும மெல்லா மினிதிருத்தி
நின்னிடையின் மிக்கமர்ந்த நெஞ்சினுன்-மன்னியபே
ராசையுட னீமமதை யற்றங் கமர்முயல்வா
யாசையுட னுள்வெதுப்பற் றார்ந்து.

**நின்னிடையில் மிக்கு அமர்ந்த நெஞ்சினல்**—*உன் ஆத்மாவைப்பற்றிய நன்கு பொருந்திய ஞானத்தினலே.* **இக்கருமம் எல்லாம்**—*இந்த எல்லாக்கருமங்களையும்.* **என்னிடையே இனிது இருத்தி**—*என்னிடத்திலேயே பிரீதியுடன் வைத்து,* **நீ**—*நீ,* **மன்னிய பேர் ஆசையுடன்**—*கர்மபலத்தில் நிலைநிறகும் பேராசையோடு கூட,* **மமதை அற்று**—*'இக்கர்மங்கள் என்னுடையவை' என்னும் மமகாரமும் அற்றவனுய்,* **உள் வெதுப்பு அற்று**—*(அநாதிபாபங்களைப்பற்றிக்) கவலைப் படாதவனுய்,* **ஆர்ந்து**—*பொருந்தி,* **ஆசையுடன்**—*விருப்புடன்,* **அமர் முயல்வாய்**—*யுத்தம செய்வாயாக.*

---

30. இனி, கீழ் எடுத்த அதிகரணத்திற்கு அடுத்ததான "பராத் து தச்ச்₂ருதே:" [ப்ர-ஸூ 2-3-40] [அந்தக் கர்த்ருத்வமும் பரமபுருஷாதீனமே; ஶ்ருதி அப்படிககூறுகையால்]என்றுதொடங்கும் அதிகரணத்தின் அர்த்தத்தை விளக்குகிறது இந்த ஶ்லோகம். அதாவது:— ஆத்மாக்கள் பரமபுருஷனுக்கு சரீரமாய், அவனல் நியமிக்கப்படுகையையே ஸ்வரூபநிரூபகமாயுடையவர்களாயிருக்கையாலே, முன் ஶ்லோகங்களில் கூறியபடி தனக்குள்ள் கு₃ணதீ₄னமான கர்த்ருத்வத்தையும, நியந்த்ருத்வம, உபாஸ்யத்வம், ப₂ல ப்ரத₃த்வம் முதலான கல்யாணகுண ஸமூஹத்தையுடையவனுய், தாழ்நத குணஙகளற்றவனுய், அதனலேயே ப₄க₃வச்ச₂ப்₃த₃முக்₂யார்த்த₂பூ₄தனுய், நியமனத்திற்காக அனைத்தையும் வியாபித்த போதிலும் தாழ்வின வாஸனையாலும் தொடப்பெருத புருஷோத்தமனுய், ஸத்வாதி குணங்களையுடைய மூலப்ரக்ருதியையும நியமிக்க வலல ஸர்வாத்மபூ₄தனுன ஸர்வேஶ்வரனிடம ஏறிட்டுக் கர்மத்தைச் செய்யவேண்டுமென்று கூறுகிறது இந்த ஶ்லோகம். "ஸர்வேஶ்வரே வா ந்யஸ்ய...கர்மகார்யதா உக்தா" [ கீதார்த்த ஸங்க்ரஹம்-7 ] [ ஸர்வேஶ்வரனிடத்தில் கர்த்ருத்வத்தை ஏறிட்டுக் கர்மம் செய்ய வேண்டும் என்று மூன்றுமத்தியாயத்தில் கூறப்பட்டது. ] என்று

॥ भा ॥ मयि सर्वेश्वरे सर्वभूतान्तरात्मभूते सर्वाणि कर्माण्यध्यात्मचेतसा संन्यस्य, निराशीर्निर्ममश्च विगतज्वरो युद्धादिकं सर्वं चोदितं कर्म कुरुष्व। आत्मनि यच्चेतस्तदध्यात्मचेतः, आत्मस्वरूपविषयेण श्रुतिशतसिद्धेन ज्ञानेनेत्यर्थः। * अन्तः प्रविष्टश्शास्ता जनानां सर्वात्मा... अन्तः प्रविष्टं कर्तारमेतम् (यजु. आ. ३. ११. २१, २३) * य आत्मनि तिष्ठन्नात्मनोऽन्तरो यमात्मा न वेद यस्यात्मा शरीरं य आत्मानमन्तरो

---

இதைக் கருத்திற்கொண்டே ஆளவந்தார் அருளினர். (ஸர்வாணி கர்மாணி) எல்லாக் கர்மங்களையும்; குணங்களால தூண்டப் பட்டுத் தான் செய்யும் கர்மங்களையும், அப்படித் தூண்டப்படாமல் செய்யும் கர்மங்களையும். (மயி ஸந்ந்யஸ்ய) "ஈஶ்வரஸ் ஸர்வ பூ₄தாநாம்" [18-61] என்கிறபடியே ஸர்வேஶ்வரனாய (ஸர்வ நியந்தாவாய்), அப்படி அனைவரையும் நியமிப்பதற்குறுப்பாக எல்லாப் பொருள்களுக்கும் அந்தராத்மாவாயிருக்கும பரமபுருஷனை என்னிடத்தில் நன்கு வைத்து. (அத்₄யாத்மசேதஸா ஸந்ந்யஸ்ய) ஆத்மவிஷய ஜ்ஞானத்தாலே நன்கு வைத்து. அத்₄யாத்மபத₃ம் ஸப்தம்யர்த்தே₂ ஸமாஸமாகும். ஆத்மநி (ஆத்மாவைப்பற்றிய) என்றபடி. 'சேத:' என்னும் மனத்தைக்குறிக்கும் ஶப்தம், இங்கு மனத்தின் மூலம் வெளிவரும் ஞானத்தைக் குறிக்கிறது. ஆக இவ்வளவால், ஆத்மஸ்வரூபவிஷயமாக நூற்றுக்கணக்கான ஶ்ருதி ஸ்ம்ருதிகளிலிருந்து உண்டாகும் ஞானத்தாலே என்னிடத்தில் எல்லாக்கர்மங்களையும் நன்கு வைத்து என்றதாயிற்று. அத்தகைய ஞானத்திற்குக் காரணமான ஶ்ருதிஸ்ம்ருதிகள்தான் யாவையெனில்; "அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா" [யஜு-ஆ 3-11-21] [(நியமனமாத்ரத்தைச்செய்யும் அரசன்முதலானோரைப் போலவும், வ்யாப்திமாத்ரத்தையுடைய ஆகாஶம் முதலானவற்றைப் போலவுமல்லாமல்) ஜனங்களை உள்நுழைந்து நியமிப்பவனாய் அதனாலேயே ஸர்வாத்மாவாயிருப்பவன்] "அந்த: ப்ரவிஷ்டம் கர்த்தாரமேதம்" [யஜு-ஆ 3-11-23] [ஜனங்களின் உள்நுழைந்து நியமனத்தைச் செய்பவனாய் (அல்லது அவர்கள் செய்யும் செயல களைச் செய்விப்பவனாய்) இருக்கும் ஸர்வேஶ்வரனை] "ய ஆத்மநி திஷ்ட₂ந் ஆத்மநோந்தரோ யமாத்மா ந வேத₃ யஸ்யாத்மா ஶரீரம் ய ஆத்மாநமந்தரோ யமயதி ஸ த ஆத்மாந்தர்யாம்யம்ருத:" [ப்₃ருஹ

यमयति स त आत्मान्तर्याम्यमृतः (बृ. ५. ७. २३) इत्येवमाद्याः श्रुतयः परमपुरुषप्रवर्त्यं तच्छरीरभूतमेनमात्मानम्, परमपुरुषं च प्रवर्तयितार-माचक्षते। स्मृतयश्च * प्रशासितारं सर्वेषाम् (मनु. १२. १२२.) इत्याद्याः। * सर्वस्य चाहं हृदि सन्निविष्टो मत्तः स्मृतिर्ज्ञानमपोहनं

---

5-7-23] [எவனொருவன் (வேதியில் அக்னி போலே) ஆத்மாவின் வெளிப்புறத்திலும நிற்கிருனே, (எள்ளினுள் எண்ணெய்போலே) ஆத்மாவின உட்புறத்திலுமிருக்கிருனே, எவனே ஆத்மா அறியாதோ, எவனுக்கு ஆத்மா ஶரீரமோ, எவன ஆத்மாவை உள் நுழைந்து நியமிக்கிருனே அவனே உனக்கு ஆத்மாவாய், அந்தர்யாமியாய், அழிவற்றவனுயிருப்பவன்.] " ஏஷ ஸர்வ பூ₄தாந்தராத்மா அபஹதபாப்மா தி₃வ்யோ தே₃வ ஏகோ நாராயண: " [ஸுபால] [பரமபதத்திலிருக்கும் தோஷமற்ற ஒப்பற்றநாராயணனு கிற இந்த தேவனே எல்லாபூதங்கட்கும் அந்தராத்மாவாயிருப்பவன்] முதலான ஶ்ருதிகள் பரமபுருஷனுல் நியமிககப்படுபவனுகவும், அவனுக்கு ஶரீரமாயிருப்பவனுகவும் ஆத்மாவையும, ஜீவாத்மாக்களே நியமிப்பவனுகப் பரமபுருஷனேயும் கூறுகின்றன. ஶ்ருதியை உபப்₃ரும்ஹணம் செய்யும் ஸ்ம்ருதிகளும, " ப்ரஶாஸிதாரம ஸாவே ஷாம் அணீயாம்ஸமணீயஸாம்। ருக்மாப₄ம் ஸவப்நதீ₄க₃ம்யம் வித்₃ யாத்து புருஷம் பரம்॥ " [மநு 12-122] [அனைவரையும நியமிப்ப வனுய், (அதற்குறுப்பாக) அணுக்களான ஜீவர்களேக்காட்டிலும் அணுவாயிருப்பவனுய், பொனபோன்று ஒளிவீசும் திருமேனியை உடையவனுய், ஸ்வப்நம்போன்ற மானஸஸாக்ஷாத்கார த்திலே அறியப்படுகினறவனுகப் பரமபுருஷனே அறியக்கடவன்.] " தத் ஸர்வம் வை ஹரேஸ் தநு: " [வி-பு 1-22-38] [இவையெல்லாம் ஹரியின சரீரமே] " தாநி ஸர்வாணி தத₃வபு: " [வி-பு 1-22-86] [இவையெல்லாம் அவனுடைய சரீரமே] "ஜக₃த் ஸர்வம் ஶரீரம தே" [ரா-யு 120-25] [உலகனைத்தும் உனக்கு சரீரமே] முதலான விடங் களில இவ்வர்ததத்தையே கோஷிக்கின்றன. இந்த கீதா ஶாஸ்தி ரத்திலும், " ஸர்வஸய சாஹம் ஹ்ருதி₃ ஸந்நிவிஷ்ட:। மதத: ஸ்ம்ரு திர் ஜ்ஞாநமபோஹநஞ்ச॥ " [கீதை 15-15] [எல்லா ஜீவராசிகளின் நெஞ்சிலும் நான் ஆத்மாவாய் விளங்குகிறேன். எனனிடமிருந்தே நினைவும், நிச்சயரூபமான அறிவும், ஞானத்தின் அழிவும் விளே கின்றன.] " ஈஶ்வரஸ் ஸர்வபூ₄தாநாம் ஹ்ருத்₃தே₃ஶேர்ஜுந திஷ்ட₂தி।

च (१५. १५) * ईश्वरस्सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति। भ्रामयन् सर्वभूतानि यन्त्रारूढानि मायया ॥ (१८.६१) इति वक्ष्यते। अतो मच्छरीरतया मत्प्रवर्त्यात्मस्वरूपानुसन्धानेन सर्वाणि कर्माणि मयैव क्रियमाणानीति मयि

---

ப்₄ராமயந் ஸர்வபூ₄தாநி யந்த்ராரூட₄ாநி மாயயா ॥" [கீதை 18-61] [அர்ஜுநா! ஸர்வேஶ்வரனான வாஸுதேவன் தேஹமாகிற யந்திரத்திலிருக்கும் எல்லா ஜீவராசிகளையும் ஸத்வாதிகுணமயியான மாயையாலே ஆட்டி வைத்துக்கொண்டு எல்லா ஜீவராசிகளின் நெஞ்சிலும் நிற்கிறான்] "மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே" [கீதை 10-8] [எல்லாம் என்னாலேயே ஆட்டிவைக்கப்படுகிறது] முதலான பலவிடங்களில் இவ்வர்த்தமே கோஷிக்கப்படுகிறது. ஆகவிந்த ஶ்ருதிஸ்ம்ருதி முதலானவற்றில் பிரஸித்தமாயிருக்கையால், எனக்கு சரீரமாய், என்னால் ஆட்டிவைக்கப்படுவதாயிருப்பது ஆத்மஸ்வரூபம் என்னும் ஞானத்தாலே அத்தகைய அனுஸந்தானத்துடன் என்னிடத்தில் எல்லாக்கர்மங்களையும் வைக்கவேண்டும் என்று கருத்து. (ஸந்ந்யஸ்ய) நன்கு வைத்து. பரமபுருஷனிடம் நன்கு வைக்கையாவது என்னென்னில்: ஸர்வேஶ்வரனால் ஆட்டிவைக்கப்படுவதாக மூலப்ரக்ருதியும் இவ்வாத்மஸ்வரூபமுமிருக்கையாலே எல்லாக்கர்மங்களும நேரேயும், ஸத்வாதிகுணங்களையிடையிட்டும் அவனாலேயே செய்விக்கப்படுகின்றன என்னும் அனுஸந்தானத்துடன் அவனிடம் அக்கர்மங்களை ஸமர்ப்பிக்கையே அவனிடம் நன்கு வைக்கையென்று இங்கு கூறப்படுகிறது. இதுவே கர்த்ருத்வத்யாகம் எனப்படுகிறது. முன ஶ்லோகங்களில் புண்ய பாபகர்மங்களை இவன் ஸத்வாதி குணங்களால் தூண்டப்பட்டுச் செய்கிறானேயொழியத் தானே செய்வதில்லை என்னும் கர்த்ருத்வ த்யாகத்தின் ஓரம்ஶம், அவ்வளவாலும் தேஹாத்மவிவேகம ஏற்படும் என்னும் கருத்தாலே சொல்லப்பட்டது. இந்த ஶ்லோகத்தில், அப்படி குணங்களைக் கொண்டு தன்னைத் தூண்டிப் புண்யபாபகர்மங்களையும, நேரே தன்னைத் தூண்டி மற்ற கர்ம கர்மங்களையும் செய்விப்பவன் ஸர்வேஶ்வரனேயாகையாலே தனக்கு ஸ்வதந்த்ரகர்த்ருத்வம் கிடையாது என்னும் கர்த்ருத்வத்யாகத்தின் முக்கியமான அம்ஶம் கூறப்படுகிறது. இனி, கர்த்ருத்வம் (கிரியைகளைச் செய்கை) ருத்விக்குகளிடமிருந்தபோதிலும், அதன் பலனில் விருப்பம் யஜமானனிடமிருப்பதுபோலே, கர்த்ருத்வம் ஈஶ்வரனிடமிருந்தபோதிலும், இந்த ஜீவன் கர்மபலனில் ஆசைவைக்கலாமோ?

परमपुरुषे संन्यस्य तानि च केवलं मदाराधनानीति कृत्वा तत्फले निराशीः तत एव तत्र कर्मणि ममतारहितो भूत्वा विगतज्वरो युद्धादिकं कुरुष्व।

---

எனில், அதுவும் கூடாது என்கிறது அடுத்தபடியாக,—(நிராஶீ:) கர்மபலனில் ஆசையற்றவனுயிருக்கவேண்டுமிவன என்கிறது. இக்கர்மங்கள் பரமபுருஷனுக்கு ஆராத₄னமாகவேயிருக்கின்றன என்னும் நினைவோடேயே முமுக்ஷுவான் இவன் இக்கர்மங்களைச் செய்யவேண்டுமாகையாலே, இவன அவற்றின் பலனிலும ஆசை வைக்கக்கூடாது என்று ஏற்படுகிறது. இதுவே ப₂லத்யாகம் எனப்படுவது. இதிலிருந்து, தனக்கு ஆராத₄னமாகவே பரம புருஷன் இக்கர்மங்களைச் செய்விக்கிருன் என்னும் நினைவாகிற கர்த்ருத்வ த்யாகத்திஞல் ப₂லத்யாகம ஏற்படுகிறது என விளங்கு கிறது. (நிர்மம:) 'இக்கர்மம என்னுடையது' என்னும் மமகாரமும் அற்றவனுயிருக்கவேண்டும என்கிறது. இதுவே (தன்னுடையது என்னும் ஸங்க₃த்தை விடுகையாகிற) ஸங்க₃த்யாகம் எனப்படுகிறது. 'எனக்கு விருப்பமான பலனுக்கு ஸாதனமாயிருப்பதால், எனக் காக ஏற்பட்டது இககர்மம்' என்று கர்மத்துக்குத்தன்னை உடையவனுக எண்ணுகையே அதி₄காரம் எனப்படுகிறது; ஆகையால் பலன் மூலமாகவே கர்மத்தில் 'என்னுடையது' என்னும் மமகாரம் ஏற்படுகிறது; ஆகையால் ப₂லத்யாக₃த் தாலேயே ஸங்க₃த்யாக₃மும ஏற்படுகிறது என்று அறியத் தக்கது. ஆக, கர்த்ருத்வத்யாக₃ம், ப₂லத்யாக₃ம், ஸங்க₃த்யாக₃ம் என்னும் மூன்றிலும் முனனுலிருப்பது பினனுலிருப்பதற்குக்காரணம் என்னும் ஹேதுவாலேயே மூனறும் அடுத்தடுத்துப்படிக்கப்பட்டது எனவிளங்கிகுறது.(ஸந்நயஸ்ய நிராஶீர் நிர்மமோ பூ₄த்வாயுத்₄யஸ்வ) முற்கூறிய மூன்றுவிதமான த்யாகங்களையும் செய்பவனுகி, யுத்தம் முதலான ஶாஸ்த்ரீயகர்மங்களைச் செய்வாயாக. இங்கு யுத்தம் என்றது சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட எல்லாக்கர்மங்களுக்கும் உபலக்ஷணம். (விக₃தஜ்வர: யுத்₄யஸ்வ) 'அநாதிகாலமாக ஏற் பட்டதாய், பழையதாய், அளவற்றதான பாபங்களாலே நான் என்படுவேனே!' என்னும் உள்வெதுப்பினின்றும் விடுபட்ட வனுய், 'இக்கர்மங்களால ஆராதிக்கப்பட்ட பரமபுருஷனே எல்லாக்கட்டினின்றும் நம்மை விடுவிப்பான் என்று தேறுத லடைந்து ஆயாஸமில்லாமல் கர்மயோகத்தையே செய்வாயாக.

स्वकीयेनात्मना कर्त्रा स्वकीयैश्चोपकरणैस्स्वाराधनैकप्रयोजनाय परमपुरुषस्सर्वशेषी सर्वेश्वरः स्वयमेव स्वकर्माणि कारयतीत्यनुसन्धाय कर्मसु ममतारहितः प्राचीनेनानादिकालप्रवृत्तानन्तपापसञ्चयेन कथमहं भविष्यामीत्येवंभूतान्तर्ज्वरविनिर्मुक्तः परमपुरुष एव कर्मभिराराधितो बन्धान्मो-

---

இதற்குமேல் சில ஆக்ஷேபங்கள் எழக்கூடும்:- (1) கர்த்ருத்வத்தை ஈஶ்வரனிடம வைதது விட்டால், இங்கேயே 'போர் புரிவாயாக' என்று ஜீவனைக் கர்த்தாவாகச் சொல்லுவது எப்படி ஓட்டும்? (2) பலனில் ஆசைவைக்காவிடில், பரமபுருஷனுக்கு ஆராதநரூபமாயிருக்கும் கர்மத்தில்தான் இவன் எப்படி ஈடுபடமுடியும்? (3) 'கர்மம் என்னுடையது' என்னும் மமகாரம் இல்லையானல், தனனுடைய கடமையாக நினைத்து இவன் எப்படிக் கர்மத்தை செய்ய முடியும்? (4) எந்த வ்யாபாரமும் (செயலும) தனக்குக் கிடையாது என்று நினைத்தானுகில், த்யாகரூபமான செயலைத்தான் இவன் எப்படிச்செய்யமுடியும்? (5) இப்படி த்யாகமில்லாமையால 'விகதஜ்வர:' [ஜ்வரம நீங்கப் பெற்றவன்] என்று மேலே சொல்லுவதும் பொருந்தாமற்போய்விடுமே—எனபவை அவ்வாக்ஷேபங்கள். இனி, இவ்வாக்ஷேபங்களுக்குப் பரிஹாரம வருமாறு:- (1) ஜீவனுக்கு ஸ்வதந்த்ரகர்த்ருத்வம நிஷேதிக்கப்படுகிறதேயொழியக் கர்த்ருத்வமே அடியோடு நிஷேதிக்கப்படவில்லையாகையால் முதல் ஆக்ஷேபம் எழ இடமில்லை. (2) பலனில ஆசையின்மையென்று மோக்ஷவிரோதியாய், தாழ்ந்ததாய், அழியக்கூடியதான ஸ்வர்க்காதி பலன்களில ஆசையின்மையே கருதபபடுகிறதேயொழிய, பகவத்ப்ரீதியாகிற பலனில் ஆசையினமை கருதப்படவில்லை; ஆகையால் பகவத்ப்ரீதிக்குறுப்பாக பகவதாராதனமான கர்மங்களைச் செய்யத் தட்டிலலையாகையால் இரண்டாவது ஆக்ஷேபம எழ இடமில்லை. (3) முற்கூறியபடி இவனுக்கு பகவதப்ரீதி பலமாகிறபடியாலே அதற்குறுப்பாகத் தன் கடமையாக நினைத்துக் கர்மம செய்யத் தட்டில்லையாகையால் மூன்றுவது ஆக்ஷேபம எழ இடமில்லை. இம்மூன்று பரிஹாரங்களாலேயே (4) (5) ஆக்ஷேபங்களும் பதிலுரைக்கப்பட்டவையாகின்றன. முற்கூறிய மூன்று த்யாகங்களோடு கர்மத்தை அனுஷ்டிக்கையாவது,- தனக்கு ஶேஷமான ஜீவாத்மாவாகிற (ப்ரயோஜ்ய) கர்த்தாவைக்கொண்டு, தனக்கு ஶேஷமான

चयिष्यतीति सुखेन कर्मयोगमेव कुरुष्वेत्यर्थः। * तमीश्वराणां परमं महेश्वरं तं दैवतानां परमं च दैवतम् (श्वे. ६. ७), * पतिं विश्वस्य (ना.), * पतिं पतीनाम् (श्वे. ६. ७) इत्यादिश्रुतिसिद्धं हि सर्वेश्वरत्वं सर्वशेषित्वं च। ईश्वरत्वम्–नियन्तृत्वम्, शेषित्वम्–पतित्वम्॥ ३०॥

॥भा॥ अयमेव साक्षादुपनिषत्सारभूतोऽर्थ इत्याह—

ये मे मतमिदं नित्यमनुतिष्ठन्ति मानवाः।
श्रद्धावन्तोऽनसूयन्तो मुच्यन्ते तेऽपि कर्मभिः॥ ३१॥

---

கருவிகளைக்கொண்டு, தனக்கு ஆராதனமாகிற ஒரே பயனின் பொருட்டு, ஸர்வேஶ்வரனும், ஸர்வஶேஷியுமான பரமபுருஷன் தானே தனக்கு ஆராதனமான கர்மங்களை ஜீவனை ஶாஸ்த்ரவஶ்யனுகவும், கர்மப₂லபே₄ாக்தாவாகவும் ஆக்குவதற்காகவும், அவனுடைய ஶேஷத்வத்தை நிறமபெறச்செய்வதற்காகவுமே செய்விக்கிருன் என்று நினைத்துக கர்மங்களைச் செய்கையேயாகும. "தமீஶ்வராணும் பரமம் மஹேஶ்வரம் தம் தை₃வதாநாம் பரமம் ச தை₃வதம்" [ஶ்வே 6-7] [ஈஶ்வரர்களுக்கெல்லாம் மேலான ஈஶ்வரனும, தேவதைகளுக்கெல்லாம மேலான தேவதையுமான அவனை] "பதிம் விஶ்வஸ்ய" [தை-நா] [உலகிற்குப பதியாயிருப்பவன் நாராயணன்] "பதிம் பதீநாம்" [ஶ்வே 6-7] [பதிகளுக்கெல்லாம் பதியாயிருப்பவனை] முதலான ஶ்ருதிகளில பரமபுருஷனே ஸர்வேஶ்வரனுகவும், ஸர்வஶேஷியாகவும் இருக்கிருன என்று கோஷிக்கப் பட்டுள்ளது இங்கு அனுஸந்திக்கத்தக்கது. ஈஶ்வரனுயிருக்கையாவது-அவரவர்களைச் செயல்புரியும்படி நியமிப்பவனுயிருக்கையேயாகும். ஶேஷியாயிருக்கும் சேதனனைப் பதியென்றே சொல்லுவதாகையாலே ஶ்ருதி பதியென்றே கோஷித்தது. "பரக₃தாதிஶயாத₄ாநேச்ச₂யா உபாதே₃யதவமேவ யஸ்ய ஸ்வரூபம் ஸ ஶேஷ: பர: ஶேஷீ" [பிறனிடம் ஒரு பெருமையை விளைக்கவேண்டும் என்னும் விருப்பத்தாலேயே கைக்கொள்ளத்தக்கதாயிருக்கையே எதற்கு ஸ்வரூபமோ அது ஶேஷம்; பிறன ஶேஷி] என்று வேதார்த்த ஸங்க்ரஹத்திலே ஶேஷஶேஷிலக்ஷணம் உரைக்கப்பட்டதும் காணத்தக்கது. 30.

**31.** யே மே மதமித$_3$ம் நித்யமநுதிஷ்ட$_2$ந்தி மாநவா: |
ஶ்ரத்$_3$த$_4$ாவந்தோऽநஸூயந்தோ முச்யந்தே தேऽபி கர்மபி$_4$: ||

**யே மாநவா:**—*எந்த அதிகாரிகள்*, **இத$_3$ம்**—*இந்த*, **மே மதம்**—*என் ஸித்தாந்தத்தை*, **நித்யம் அநுதிஷ்ட$_2$ந்தி**—*எப்போதும் அனுஷ்டிக்கிறார்களோ*. **யே ஶ்ரத்$_3$த$_4$ாவந்த:**—*(அனுஷ்டிக்காவிடிலும்) எவர்கள் ஶ்ரத்தையுடையவர்களாகவாவது இருக்கிறார்களோ*. **யே அநஸூயந்த:**—*(சிரத்தையில்லாதவர்களாயினும்) எவர்கள் இதில பொறாமையற்றவர்களாகவாவது இருக்கிறார்களோ*. **தே அபி**—*இவர்கள் மூவரும்*. **கர்மபி$_4$: முச்யந்தே**—*எல்லாப் புண்யபாப கர்மங்களினின்றும் விடுபடுகிறார்கள்*.

---

31. உபனிஷத்துக்களில் பரமபொருளாக உத்கோஷிக்கப்பட்ட என்றால் கீழ்க்கூறப்பட்டதே, உபனிஷத்துக்களிலும முக்கியமாகக் காட்டப்படும் அர்த்தமாகும் என்று கூறுவதன் மூலம கர்மயோகம் ஞானயோகத்தைக்காட்டிலும் சிறந்தது என்று புகழ்கிறான். (யே மாநவா:) எந்த அதிகாரி புருஷர்கள். மாநவ ஶப்தமானது கர்மயோகா$_3$தி$_4$காரிகளைக் குறிப்பதோடன்றியில், அதில் அதி$_4$காரமில்லாத ஶூத்$_3$ரன் முதலானோரையும், ஸ்வதந்த்ரப்ரபத்திநிஷ்டனையும் குறிக்கக்கூடியது; தேவர் முதலானோரைக் குறிக்கமாட்டாதது. ஆயினும், பிரகரணத்தையொட்டி, இங்கு ஶூத்ராதிகளையும், ப்ரபன்னனையும் தவிர, இந்தக் கர்மயோகத்தில் அதிகாரமுள்ள மற்ற எல்லாமனிதர்களையும், தேவர்களையும் குறிக்கிறது. (மே மதம் இத$_3$ம் அநுதிஷ்ட$_2$ந்தி) இதுவரையில் நான கூறிவந்த இவ்வர்த்தமே ஸகல ஶாஸ்திரங்களிலும ஸாரமானது (முக்கியமானது) என்று அநுஸந்தித்து அனுஷ்டிக்கிறார்களோ. ஸித்தவஸ்துவாயிருக்கும பிறனுடைய அறிவு எவராலும் அனுஷ்டிக்கப்படமுடியாதாகையால், ''என்று அனுஸந்தித்து'' என்பதைக் கூட்டிக்கொண்டே பொருள்கொள்ளவேண்டும். (நித்யமநுதிஷ்ட$_2$ந்தி) எப்போதும அனுஷ்டிக்கிறார்களோ. என்னுடைய கருத்தாகிற இக்கர்மயோகாநுஷ்டானமே எல்லா உபனிஷத்துக்களின் ஸாரமானது எனனும் நிஶ்சயத்தாலே இவர்கள எப்போதுமே கர்மயோகத்தை அனுஷ்டிக்கிறார்கள் என்று கருத்து. (யே ஶ்ரத்$_3$த$_4$ாவந்த:) முற்கூறியபடி நிஶ்சயித்து அனுஷ்டிக்காவிடிலும், எவர்கள்

॥भा॥ ये मानवाश्शास्त्राधिकारिणोऽयमेव शास्त्रार्थ इत्येतन्मे मतं निश्चित्य तथाऽनुतिष्ठन्ति, ये चाननुतिष्ठन्तोऽप्यस्मिन् शास्त्रार्थे श्रद्दधाना भवन्ति, ये चाश्रद्दधाना अपि, एवं शास्त्रार्थो न संभवतीति नाभ्यसूयन्ति-अस्मिन् महागुणे शास्त्रार्थे दोषमनाविष्कुर्वन्तो भवन्तीत्यर्थः; ते सर्वे बन्धहेतुभिरनादिकालारब्धैस्सर्वैः कर्मभिर्मुच्यन्ते। तेऽपि कर्मभिः

---

இந்த ஶாஸ்த்ரார்த்தத்தில் சிரத்தையுடையவர்களாக ஆகிறார்களோ. (யே அநஸூயந்த:) முற்கூறியபடி சிரத்தையுடையவர்களாயில்லாவிடினும், 'இப்படி ஒரு ஶாஸ்த்ரார்த்தம் இருக்க முடியாது' என்று கூறிக்கொண்டு, மிக்க குணமுள்ள இந்த சாஸ்திரார்த்தத்தில் தோஷத்தை ஏற்றிட்டு அஸூயை (பொறாமை) படுகிறவர்களின் குழுவில் எவர்கள் சேராமலிருக்கிறார்களோ. (தேபி கர்மபி$_4$: முச்யந்தே) இப்படி மூன்று வகைப்பட்ட இவர்கள் அனைவரும் புண்யபாபகர்மங்களினின்றும் விடுபடுகிறார்கள்; அநாதிகாலமாக இவர்கள் செய்ததாய், இவர்களை ஸம்ஸாரத்தில் கட்டுப்படுத்தி வந்ததான எல்லாக் கர்மங்களினின்றும் விடுபடுகிறார்கள் என்று கருத்து. இங்கு ஓர் ஆக்ஷேபம் எழக்கூடும்:— "அநஸூயந்த:, ஶ்ரத்$_3$த$_4$ாவந்த: யே அநுதிஷ்ட$_2$ந்தி" என்று ஏகவாக்யமாகக்கொண்டு ஒரே விதமான அதிகாரியைக் குறிப்பதாகவே கொள்ளலாமாயிருக்க, மூன்று விதமான அதிகாரிகளைக் குறிப்பதாக வாக்யபே$_4$த$_3$ம் செய்து பொருள்கொள்வது, 'ஸம்ப$_4$வத்யேகவாக்யத்வே வாக்யபே$_4$த$_3$ஶ்ச நேஷ்யதே' [ஏகவாக்யமாகப் பொருள்கொள்ளக்கூடிய இடத்தில் வாக்யபேதம் செய்வது விரும்பத் தக்கதல்ல.] என்னும் நியாயத்திற்கு முரண்பட்டதல்லவா? மேலும், 'சிரத்தையுடையவர்களாய்' 'அஸூயையில்லாதவர்களாய்' என்னும் பதங்களோடு 'இருக்கிறார்களோ' என்னும் பதத்தைக் கூட்டிக் கொண்டு பொருள் கொள்ளவேண்டிய அஸ்வாரஸ்யமும் ஏற்படுகிறதே; அதோடு, ஒருதரம் படிக்கப்பட்டுள்ள 'யே' என்னும் பதத்தை 'யே அநுதிஷ்ட$_2$ந்தி' 'யே ஶ்ரத்$_3$த$_4$ாவந்த:' 'யே அநஸூயந்த:' என்று பலதரம் ஆவ்ருத்தி செய்து கொள்ளவேண்டியுமிருக்கிறதே என்பதே அவ்வாக்ஷேபம். இதற்கு ஸமாதானம் பின்வருமாறு:— இங்கு ஒரே வாக்யமாகக் கொள்ளும் பக்ஷத்தில் அபிப்ராயம் ஒட்டாது. எப்படியெனில்: (1) இவ்வதிகாரிகளோடு மற்ற அதிகாரிகளைக் கூட்டிக்கொள்வது, (2) இந்த ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட அதிகாரிகளுக்குத் தாழ்வைக் காட்டுவது என்னும் இரண்டு பொருள்

इत्यपिशब्दादेषां पृथक्करणम्। इदानीमननुतिष्ठन्तोऽप्यस्मिन् शास्त्रार्थे श्रद्दधाना अनभ्यसूयवश्च श्रद्धया चानसूयया च क्षीणपापा अचिरेणेममेव शास्त्रार्थमनुष्ठाय मुच्यन्त इत्यर्थः ॥ ३१ ॥

---

களே அபிப்ராயத்துக்கு இங்கு பொருந்தும். அதில் முதற்பொருளைக் கொண்டு, 'கர்மயோகாதிகாரிகளோடன்றியில் ஞானயோகாதிகாரிகளும் எல்லாக்கர்மங்களினின்றும விடுபடுகின்றனர்' என்று ஞாநயோகாதிகாரியைக் கூட்டிக்கொளவது இப்ரகரணத்திற்கு அவசியமில்லாதது; கர்மயோகத்திற்கு ஞானயோகத்தைக் காட்டிலும் சிறப்பைச் சொல்லும் இப்ரகரணத்திற்கு முரண்பட்டதுமாகும். இனி, இரண்டாவது பொருளைக்கொண்டு, ' இக்கர்மயோகாதிகாரிகளும் மோக்ஷமடைகிறார்கள் ' என்று அபிப்ராயம் கர்மயோகாதிகாரிகளுக்குத் தாழ்வைக் காட்டுவதாகக் கொளவது, அவர்களுக்கு உயர்வையே சொல்லும் பிரகரணத்திற்கு அடியோடு பொருந்தாது. மேலும், ' நித்யமநுதிஷ்டந்தி ' [எப்போதும அநுஷ்டிக்கிறார்கள்] என்று எடுத்தபின்பு. 'சிரத்தையுடையவர்கள' 'அஸூயையற்றவர்கள்' என்று இவர்களை விசேஷிப்பதும் பயனற்றதாகும். எப்போதும் அனுஷ்டிப்பவர்கள் சிரத்தையற்றவர்களாய் அஸூயையுடையவர்களாயிருக்க முடியாதன்றோ. ஆகையால், இந்த ஶ்லோகத்திலேயே மூன்று அதிகாரிகளைக் குறிப்பதாகக்கொண்டு 'இம்மூவரும் மோக்ஷமடைகிறார்கள' என்று அபிப்ராயத்துக்கு ஸமுச்சயப்பொருளைக்கொண்டோ, ' அநுஷ்டிக்காவிடிலும, சிரத்தையுடையவர்களும், பொறுமையற்றவர்களுங்கூட மோக்ஷமடைகிறார்கள் ' என்று அபகர்ஷ (தாழ்வுப்) பொருளைக் கொண்டோ பொருளுரைப்பதே பொருந்தும். 'அனுஷ்டிக்கின்றவர்களுக்கும், அனுஷ்டிக்காதவர்களுக்கும பலன் ஒன்றாகில், ஒருவரும் அனுஷ்டிக்க மாட்டார்களே' எனில்: இப்போது அனுஷ்டிக்காதவர்களாயினும் இந்த ஶாஸ்திரத்தில் சிரத்தையுடையவர்களாகவோ, பொறுமையற்றவர்களாகவோ இருந்தார்களாகில், " த₁ர்ம: ஶ்ருதோ வா த்₃ருஷ்டோ வா ஸ்ம்ருதோ வா கதி₂தோபி வா। அநுமோதி₃தோ வா ராஜேந்த₃ர புநாதி புருஷம் ஸதா₃॥" [பார-ஆஶ்வ 96-31] [அரசனே! தர்மமானது கேட்கப்பட்டாலோ, காணப்பட்டாலோ, நினைக்கப்பட்டாலோ, சொல்லப்பட்டாலோ, ஆமோதிக்கப்பட்டாலோ, (இப்படி எதைச் செய்தாலும்) மனிதனை எப்போதும் பரிசுத்தப்படுத்துகிறது.] என்கிறபடியே அந்த ஶ்ரத்தையாலும் பொறுமையின்மை

॥ भा ॥ भगवदभिमतमौपनिषदमर्थमननुतिष्ठतामश्रद्दधानानामभ्य-सूयतां च दोषमाह—

ये त्वेतदभ्यसूयन्तो नानुतिष्ठन्ति मे मतम्।
सर्वज्ञानविमूढांस्तान् विद्धि नष्टानचेतसः ॥ ३२ ॥

32. யே த்வேதத₃ப்₄யஸூயந்தோ நாநுதிஷ்ட₂ந்தி மே மதம் ।
ஸர்வஜ்ஞாநவிமூட₄ாம்ஸ்தாந் வித்₃தி₄ நஷ்டாநசேதஸ: ॥

யே து-*எவர்களோவெனில்,* ஏதத-*இந்த,* மே மதம்-*என ஸித்தாந்தத்தை,* ந அநுதிஷ்ட₂ந்தி—*அநுஷ்டிப்பதில்லையோ.* *(எவர்கள் இதில் ஶ்ரத்தையில்லாமலிருக்கிறார்களோ)* யே அப்₄யஸூயந்த:-*எவர்கள் இதில் பொறாமைப்படுகிறார் களோ,* தாந்—*அவர்கள் மூவரையும்,* ஸர்வஜ்ஞாநவிமூட₄ாந்—*எல்லா அறிவுகளிலும் விசேஷமாக மயங்கி நிற்பவர்களென்றும்,* நஷ்டாந்—*(அதனாலேயே) அஸத்ப்ராயரென்றும்,* அசேதஸ:-*(உண்மையறிவற்றவராகையாலே) நெஞ்சு படைத்த பயன்பெறாதவரென்றும்,* வித்₃தி₄-*அறிவாயாக.*

---

*25. ஏவர் விருப்போ டிழவின்றி யென்மதததை
மேவி முயலவார் விடப்படுவார்—பாவத்தா
லாங்கவர்க ளல்லா ரறிவழிந்து மூடராய்த்
தீங்கமர்வ ரெனறே தெரி.

ஏவர் என் மதத்தை—*எவர்கள் என் ஸித்தாந்தத்தை,* விருப்போடு இழவின்றி மேவி முயல்வார்—*பொருந்தி அனுஷ்டிக்கிறார்களோ,* *(எவர் அதில்) சிரத்தையுடனிருக்கிறார் களோ.* *(எவர் அதில்) பொறாமையற்றிருககிறார்களோ.*

---

யாலுமே கர்மயோகத்துக்குத் தடையாயிருக்கும பாபம் நீங்கப் பெற்று, விரைவிலேயே இக்கர்மயோகத்தை அனுஷடித்து, அதனல் பக்தியோகம ஸித்திக்கப்பெற்று மோக்ஷத்தை அடைவார்கள் என்றே இங்கு கருத்தாகையாலே 'ஒருவரும அனுஷ்டிக்கமாட்டார் கள்' என்னும் தோஷம் வாராது. ஆகையாலே எக்குறையுமில்லை. 31.

---

* இப்பாட்டு 31, 32 ஶ்லோகங்கட்கு மொழி பெயர்ப்பு.

॥ भा ॥ ये त्वेतत्–सर्वमात्मवस्तु मच्छरीरतया मदाधारं मच्छेषभूतं मदेकप्रवर्त्यमिति—मे मतं नानुतिष्ठन्ति—नैवमनुसन्धाय सर्वाणि कर्माणि

---

(அவர்) பாவத்தால் விடப்படுவார்—அவர்கள் அனைவரும் பாபங்களினின்றும் விடுபடுவர். ஆங்கு அவர்கள் அல்லார்—இந்த ஸித்தாந்தத்தில் இப்படிப் பொறுமையின்மையோ, சிரத்தையோ, அனுஷ்டானமோ இல்லாதவர்கள். அறிவு அழிந்து— (நெஞ்சு படைத்த பயனை) எல்லா அறிவுகளும் அழியப்பெற்று. மூட₄ராய்—விபரீதஜ்ஞானமுடையவராய். தீங்கு அமர்வர்—(ஸத்தையை இழக்கையாகிற) பெருந் தீமையை அடைவர். என்றே தெரி—என்றே நீ அறிந்து கொள்வாயாக.

---

32. பரமபுருஷனுக்கு இஷ்டமாய், உபநிஷத்துக்களின் ஸாரமான இவ்வர்த்தத்தை அனுஷ்டிக்காமலிருப்பவர்களும், இதில் சிரத்தையில்லாமலிருப்பவர்களும், பொறுமை கொண்டிருப்பவர்களும் பெரும தோஷத்தை அடைகிறார்கள் என்கிறான் இந்த ஶ்லோகத்தில். கர்மயோகத்தை அனுஷ்டிப்பார் முதலானோரைப் புகழ்வதன் மூலம் சென்ற ஶ்லோகத்தில் கர்மயோகம் புகழப்பட்டது. அதை அனுஷ்டியாதார் முதலானோரை இகழ்வதன் மூலம் இந்த ஶ்லோகத்தில் கர்மயோகம் அதிகமான புகழுக்கு உரியதென்று காட்டப்படுகிறது. (யே) இக்கர்மயோகத்திற்கு அதிகாரிகளாயிருக்கும் எவர்கள். இப்பதம் ஸகலஜீவர்களையும் குறிக்கக் கூடியதாயினும், முன் ஶ்லோகத்திற்போலவே இக்கர்மயோகத்தில் அஜ்ஞானம், அஶக்தி முதலானவற்றால் அதிகாரமற்ற ப்ரபன்னர் முதலானோரைத் தவிர்ந்த மற்ற ஜீவர்களையே குறிக்கிறது. ஆகையால் இந்த ஶ்லோகத்தில் சொல்லப்படும நிந்தை அவர்களைத் தொடாது. (து) ஶப்தம் முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்டவர்களுக்கு நேர் மாறுபட்டவர்களிவர்கள் என்று காட்டுகிறது. (மே மதம் ஏதத்) எனக்குப் பிரியமானதாய் உபனிஷத்ஸாரமான இந்த ஸித்தாந்தத்தை. (நாநுதிஷ்ட₂ந்தி) இந்த ஆத்மவஸ்துக்களனைத்தும் என்னையே ஆதாரமாகக்கொண்டதாய், எனக்கு ஶேஷபூ₄தமாய், என்னொருவனாலேயே ஆட்டிவைக்கப்படுவதாய், அதனாலேயே எனக்கு ஶரீரமாய், எனக்கு அதீ₄னமான ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகளையுடையதாயிருக்கின்றது என்னும் காரணத்தாலே முற்கூறிய

कुर्वते, ये च न श्रद्दधते, ये चाभ्यसूयन्तो वर्तन्ते; तान् सर्वेषु ज्ञानेषु विशेषेण मूढांस्तत एव नष्टानचेतसो विद्धि; चेतःकार्यं हि वस्तुयाथात्म्यनिश्चयः; तदभावादचेतसो विपरीतज्ञानास्सर्वत्र विमूढाश्च ॥ ३२ ॥

---

அகர்த்ருத்வானுஸந்தானத்தோடு கூட எனக்கு இஷ்டம என்று நிஶ்சயித்துக் கர்மங்களனைத்தையும் அனுஷ்டிக்கையாகிற கர்ம யோகத்தை அனுஷ்டிக்கவில்லையோ. முன ஶ்லோகத்திற்போலவே, பிறருடைய அறிவை அனுஷ்டிக்கமுடியாதாகையால், "(மே மதம்) இதி அநுஸந்த₄ாய" [(எனககு இஷ்டம) என்று அனுஸந்தித்துக கொண்டு] எனறு அத்₄யாஹாரம செய்துகொண்டே பொருள கொள்ளவேண்டும. முன ஶ்லோகத்தில சொல்லபபட்டவர்களுககு எதிர்த்தட்டானவர்களையே இங்கு சொல்லுகிறதாகையாலே (யே ச ந ஶ்ரத்₃த₃த₄தே) [எவர்கள இந்த சாஸ்திரார்த்தத்தில் சிரத்தை கொள்ளுவதில்லையோ] என்றும் கூட்டிக்கொள்ளவேண்டும். 'யே நாநுதிஷ்ட₂ந்தி' 'யே ந ஶ்ரத்₃த₃த₄தே' 'யே அப்₄யஸூயந்த:' என்று "யே" எனனும பதத்தையும ஆவ்ருததி செய்துகொள்ளவேண்டும. (யே (ச) அப்₄யஸூயந்தோ ) வர்த்தந்தே என்று கூட்டிக்கொள்க; எவர்கள் இதில் அஸூயைப்பட்டுக்கொணடிருக்கிறார்களோ என்றபடி. ( ஸர்வஜ்ஞாநவிமூட₄ாந் தாந் ) எல்லா அறிவுகளிலும விசேஷித்து மூடர்களான அவர்களை; ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி அறியாமையாலே, 'நான்' 'என்னுடையது' எனனும் வழக்கு கலசியே வரும் எல்லா அறிவுகளிலும் அறியப்படும் எலலாப் பொருள்களின் உண்மையான ஸ்வரூபஸ்வாப₄ாவங்களை அறியாதவர்களான அவர்கள் மூவகையினரையும் எனறு கருத்து. இவ்வஜ்ஞானத்தின் விளைவைச் சொல்லுகிறது இனி: (நஷ்டாந் வித்₃தி₄) பரமபுருஷார்த்தமான மோக்ஷத்தைப் பெறத்தகுதியற்றவர்களாகையாலே "அஸந்நேவ" [இல்லாதவனுகவேயாகிறுன] என்று ஶ்ருதி சொன்ன ரீதியிலே அஸத்ப்ராயராகிறுர்கள் இவாகள் எனறு அறிவாயாக. ( அசேதஸ: வித்₃தி₄ ) மனமற்றவர்களென்று அறிவாயாக. மனம் படைத்த பயனுக வஸ்துக்களைப்பற்றிய உண்மையறிவைப் பெருதவர்களாகையாலே, மனமற்றவர்கள் என்று ஔபசாரிகமாகக் கூறப்படுகிறுர்கள். ஆக, என மதமான கர்ம யோகத்தை அனுஷ்டியாதார் முதலானுர் விபரீதஜ்ஞானமுடையவர்களாய், எல்லாவிஷயங்களிலும உண்மையறிவு இல்லாதவர்களாயிருப்பார்கள் என்றதாயிற்று. 32.

॥ भा ॥ एवं प्रकृतिसंसर्गिणस्तद्गुणोद्रेककृतं कर्तृत्वं, तच्च परमपुरुषायत्तमित्यनुसन्धाय, कर्मयोगयोग्येन ज्ञानयोगयोग्येन च, कर्मयोगस्य सुशकत्वादप्रमादत्वादन्तर्गतात्मज्ञानतया निरपेक्षत्वात्, इतरस्य दुश्शकत्वात् सप्रमादत्वात् शरीरधारणाद्यर्थतया कर्मापेक्षत्वात्कर्मयोग एव कर्तव्यः; व्यपदेश्यस्य तु विशेषतस्स एव कर्तव्यः इति चोक्तम्। अतःपरमध्यायशेषेण ज्ञानयोगस्य दुश्शकतया सप्रमादतोच्यते—

सदृशं चेष्टते स्वस्याः प्रकृतेर्ज्ञानवानपि।
प्रकृतिं यान्ति भूतानि निग्रहः किं करिष्यति॥ ३३॥

---

33. ஆக இதுவரையில், ப்ரக்ருதிஸம்பந்தமுடையவனுக்கு, ப்ரக்ருதியின் குணங்களான ஸத்வரஜஸ்தமங்களின் தூண்டுதலாலேயே கர்த்ருத்வம் ஏற்படுகிறதென்றும், அதுவும் காரயிதாவான பரமபுருஷன் ஸத்வாதி$_3$குணங்களைக்கொண்டும் நேரேயும் இவனை நியமிப்பதாலேயே ஏற்படுகிறதென்றும் அனுஸந்தித்துக் கொண்டு கர்மயோகம் செய்யவேண்டுமென்றும், கர்மயோகமானது செய்வதற்கெளியதாகையாலும், தவறு ஏற்பட இடமில்லாததாகை தாகையாலும், ஆத்ம தத்வஜ்ஞானத்தை உள்ளடக்கியிருக்கையாலே ஞானயோகத்தை இடையிடாமலே ஆத்மத$_3$ர்ஶனத்தை விளைப்பதாகையாலும், ஞானயோகமானது செய்யவரிதாகையாலும், தவறு ஏற்பட இடமுள்ளதாகையாலும், ஶரீரத$_4$ாரணம் முதலானவற்றுக்காகக் கர்மத்தை அபேக்ஷிப்பதாகையாலும் கர்மயோக$_3$ாதி$_4$காரியோடு ஜ்ஞாநயோக$_3$ாதி$_4$காரியோடு வாசியற அனைவர்க்கும் கர்மயோகமே செய்யத்தக்கதென்றும், அதிலும் ஶிஷ்டனென்கிற புகழ் பெற்றவனால் கர்மயோகமே குறிக்கொண்டு செய்யத்தக்கதென்றும் கூறப்பட்டது. இனி, இம் மூன்றுமத்தியாயத்தின், எஞ்சியபகுதியில், ஞானயோகம் செய்வதற்கரிதென்றும், தவறு ஏற்பட இடமுள்ளதென்றும் முன் கூறப்பட்ட அர்த்தம் ஸமர்த்திக்கப்படுகிறது. அதில், 'நாநுதிஷ்ட$_2$ந்தி என்று முன் ஶ்லோகத்தில் கூறியபடியே சிலர் கர்மயோகத்தை அனுஷ்டிக்காமலிருப்பதற்குக் காரணத்தையும் காட்டுகிறது இந்த ஶ்லோகம்.

33. ஸத்₃ருஶம் சேஷ்டதே ஸ்வஸ்யா: ப்ரக்ருதேர் ஜ்ஞாநவாநபி|
ப்ரக்ருதிம் யாந்தி பூ₄தாநி நிக்₃ரஹ: கிம் கரிஷ்யதி ||

**ஜ்ஞாநவாந் அபி**—*(ஶாஸ்திரங்களினால் ஏற்படும் ஆத்ம தத்வ)ஜ்ஞானத்தை உடையவனும்,* **ஸ்வஸ்யா: ப்ரக்ருதே: ஸத்₃ருஶம்**—*தன்னுடைய அநாதியான விஷயவாஸனைக்குத் தக்கபடி,* **சேஷ்டதே**—*(ப்ராக்ருத விஷயங்களிலேயே) பழகு கிறான்; ( ஏனெனில்; )* **பூ₄தாநி**—*அசேதனத்தோடு சேர்ந் திருக்கும் சேதனர்கள்,* **ப்ரக்ருதிம்**—*அநாதிவாஸனையையே,* **யாந்தி**—*பின் செல்கின்றன. (***தாநி**—*அவர்களை),* **நிக்₃ரஹ:**—*ஶாஸ்திரம் செய்யும் நியமனம்,* **கிம் கரிஷ்யதி**—*என்ன செய்துவிடமுடியும்?*

**|| भा || प्रकृतिविविक्तमीदृशमात्मस्वरूपं, तदेव सर्वदाऽनुसन्धेयमिति च शास्त्राणि प्रतिपादयन्तीति ज्ञानवानपि स्वस्याः प्रकृतेः प्राचीन-**

---

26. தன்னியல்வுக் கீடாகத் தானியலும் பேரறிவு
மன்னியவ னானவனு மற்றெவையு—மந்நிலையே
தன்செய்தி யாகுதலாற் றன்விலக்க நூலுரைப்ப
தென்செய்வ தாக விசைந்து.

**பேர் அறிவு மன்னியவன் ஆனவனும்**—*ஆத்மாவைப் பற்றிய சிறந்த அறிவு பொருந்தப்பெற்ற அறிவாளியும்,*

---

( ஜ்ஞாநவாநபி ) 'அசேதனமான மூலப்ரக்ருதியைக்காட்டிலும் வேறுபட்ட ஆத்மஸ்வரூபமானது பரமபுருஷனுக்கு ஶேஷமாயும் ஜ்ஞாநாநந்தமயமாயுமிருப்பது; விஷயங்களைக் கைவிட்டு, இவ் வாத்மாவே ஆத்மத₃ர்ஶனமாகிற பலன் கிட்டும் வரையில் இடை யறாது அனுஸந்திக்கத்தக்கது' என்று ஶாஸ்திரங்கள் கூறுகின்றன வென்னும் அறிவையுடையவனும். 'இப்படிப்பட்ட அறிவாளியும் வாஸனையின் வழியே நடக்கிறான்' என்று இங்கு கூறுகையாலே, அவ்வழியில் நடப்பதற்கு ப்ரதிகூலமாயிராத லௌகிகஜ்ஞானம் இங்கு கூறப்படவில்லை. அதுவே கூறப்படுவதாகக்கொண்டால் விரோதத்தைக் காட்டும் 'அபி' ஶப்தம் ஒட்டாது. ஞானயோகமோ, ஆத்மஸாக்ஷாத்காரமோ கைவந்தவன் விஷயவாஸனையின் வழியில்

वासनायास्सदृशं प्राकृतविषयेष्वेव चेष्टते; कुतः? प्रकृतिं यान्ति भूतानि— अचित्संसृष्टा जन्तवोऽनादिकालप्रवृत्तवासनामेव यान्ति; तानि वासनानुयायीनि भूतानि [प्रति] शास्त्रकृतो निग्रहः किं करिष्यति॥ ३३॥

---

**தன் இயல்வுக்கு ஈடாக**—*தன்னுடைய அநாதிவாஸனைக்குத் தக்கபடி.* **தான் இயலும்**—*(பிராகிருத விஷங்களிலேயே) தான் பழகுகிறான்.* **மற்றெவையும்**—*(சரீரத்தோடு கூடிய) மற்ற எல்லா ஜீவராசிகளும்.* **அங்ஙிலேயே தன் செய்தி ஆகுதலால்**—*அவ்வண்ணமே தம் அநாதிவாஸனையையே பின்*

---

நடக்கமாட்டானுகையால், அந்த அறிவும் இங்கு 'ஜ்ஞாந'ஶப்தத்தால் கூறப்படவில்லை. ஆகையால், ஞானயோகத்தைத் தொடங்குவதற்கு அடிப்படையாயிருப்பதாய், ஶாஸ்திரங்களாலுண்டாவதான ஆத்மதத்வஜ்ஞானமே இங்கு ஜ்ஞாநஶப்தத்தால் கூறப்படுகிறது என்று கொள்வதே தக்கது. (ஸ்வஸ்யா: ப்ரக்ருதே: ஸத்₃ருஶம் சேஷ்டதே) தனக்கு இயல்வாயுள்ள பழையதான வாஸனைக்குத் தக்கபடி ப்ராக்ருத விஷயங்களிலேயே பழகுகிறான். சேதனனுடைய செயல்களுக்கு நேரே காரணங்களான ராகத்வேஷங்கள் அடுத்த ஶ்லோகத்தில் கூறப்படப்போகின்றன. அந்த ராகத்வேஷங்களுக்குக் காராணமாயிருப்பதாய், 'ப்ரக்ருதி' (இயல்வு) என்று கூறத்தக்கதான அநாதிவாஸனையே ப்ரக்ருதிஶப்தத்தால் இங்கு கூறப்படுவதாகக் கொள்வதே தகும். ஆகப்பூர்வார்த்தத்தால், ஶாஸ்திரத்தால் ஏற்பட்ட ஆத்மததவஜ்ஞானமுடைய மனிதனும், ஶப்தாதிவிஷயங்களில் அநாதிகாலமாகவுள்ள வாஸனையாலே அவற்றிலேயே பழகிப்போருகிறான் என்று கூறப்பட்டதாயிற்று. இனி, 'ஞானமுடைய மனிதனுகில், அந்த ஞானத்துக்குத் தக்கபடி செயல்புரியாமல், அநாதிவாஸனைக்குத் தக்கபடி செயல்புரிவானேன்' என்னும் கேள்விக்கு பதிலுரைக்கிறது உத்தரார்த்தம். (ப்ரக்ருதிம் யாந்தி பூ₄தாநி) அசேதனமான ப்ரக்ருதிப்ராக்ருதங்களோடு அநாதிகாலமாகச் சேர்ந்து கிடக்கும் இந்த ஜீவராசிகள், அவ்வநாதிகாலமாக மண்டிகிடக்கும் விஷயவாஸனையையே பின்செல்கின்றன. பூ₄தஶப்தம் அசித்தோடு ஒன்றிக்கிடக்கும் சேதனரைக் குறிக்கிறது. (நிக்₃ரஹ: கிம் கரிஷ்யதி) இப்படி அநாதிவாஸனையைப் பின்பற்றி நிற்கும் ஜீவராசிகளை ஶாஸ்திரம் செய்யும் நியமனம் என்ன செய்ய

॥ भा ॥ प्रकृत्यनुयायित्वप्रकारमाह—

इन्द्रियस्येन्द्रियस्यार्थे रागद्वेषौ व्यवस्थितौ ।
तयोर्न वशमागच्छेत्तौ ह्यस्य परिपन्थिनौ ॥ ३४ ॥

34. இந்த்₃ரியஸ்யேந்த்₃ரியஸ்யார்த்தே₂ ராக₃த்₃வேஷௌ வ்யவஸ்தி₂தௌ ।
தயோர் ந வஶமாக₃ச்சே₂த் தௌ ஹ்யஸ்ய பரிபந்தி₂னௌ ॥

**இந்த்₃ரியஸ்ய**—*(காது முதலான) ஞானேந்திரியங்களுடையவும்.* **இந்த்₃ரியஸ்ய**—*(வாக்கு முதலான) கர்மேந்திரியங்களுடையவும்.* **அர்த்தே₂**-*(முறையே) விஷயங்களான ஶப்தம் முதலானவற்றிலும், வசனம் முதலானவற்றிலும்.* **ராக₃த்₃வேஷௌ**— *காமக்ரோத₄ங்கள்,* **வ்யவஸ்தி₂தௌ**—*தவிர்க்கவொண்ணுதபடி நிலைநிற்கின்றன.* **தயோ:**—*அந்தக் காமக்ரோத₄ங்களுக்கு,* **வஶம் ந ஆக₃ச்சே₂த்**—*வசப்பட*

---

*பற்றுவதால்.* **தான் விலக்க**—*அப்படிப்பட்ட இவர்களை அவ்வாஸனையிலிருந்து விலக்குவதற்கு,* **நூல் விசைந்து உரைப்பது**—*சாஸ்திரம் உறுதியுடன் நியமிப்பது,* **என் செய்வதாக**–*என்ன பயனின் பொருட்டு? (ஒன்றுமில்லையென்றபடி.)*

---

முடியும்? அநாதிகாலமாகவுள்ள அசித்ஸம்பந்தத்தாலேயுண்டானதாய், ப்ரத்யக்ஷமானதாய், எத்தனை தடுத்தாலும் தொலையாததான தேஹாத்மமயக்கத்தால் தூறு மண்டிக்கிடக்கும் விஷயவாஸனையை, இன்றே ஏற்பட்டதாய், அப்ரத்யக்ஷமானதாய், ஶாஸ்திரத்தினுல் உண்டானதான ஞானம் உடனே தொலைத்துவிட முடியுமோ? அவ்வாஸனையில் ஒரு சிறுபகுதியைக்கூட இவ்வறிவால் சடக்கென அழிக்கமுடியாது என்று கருத்து. நிக்₃ரஹஶப்தத்தோடு 'மம வா அந்யஸ்ய வா' [என்னுடைய அல்லது வேறொருவனுடைய நியமனம்] என்று கர்த்ருபதத்தை அத்₄யாஹாரம் செய்துகொண்டு பொருள் கொண்டார் ஶங்கரர். இதுபொருந்தாது; 'ஜ்ஞாநவாநபி' என்று பூர்வார்த்தத்திலும், 'அநிச்ச₂ந்நபி' என்று அடுத்துள்ள ஶ்லோகத்திலும் உணர்த்தப்படும் பொருளையொட்டி ஶாஸ்திரத்தால் ஏற்படும் நியமனம் என்று கொள்வதே பொருந்தும். 33.

லாகாது; தௌ—அந்தக் காமக்ரோதங்கள். அஸ்ய—ஜ்ஞாநயோகநிஷ்டனான முமுக்ஷுவுக்கு, பரிபந்திநௌ ஹி—வெல்லவரிய எதிரிகளன்றோ.

॥ भा ॥ श्रोत्रादिज्ञानेन्द्रियस्यार्थे शब्दादौ, वागादिकर्मेन्द्रियस्य चार्थे वचनादौ प्राचीनवासनाजनिततदनुबुभूषारूपो यो रागोऽवर्जनी-

**27.** உற்றபொரு டோறு முகப்பு வெறுப்பவைதாம்
பெற்ற நிலையினவாம் பேசுங்கான்—மற்றவற்றை
யாங்கணைவா னல்ல னவையிவனுக் கெவ்வாறுந்
தீங்கமைக்குஞ் சேரச் செறிந்து.

உற்ற பொருள் தோறும்—(கர்மஜ்ஞாநேந்திரியங்கள்) சென்றடையும் விஷயங்கள் அனைத்திலும். உகப்பு வெறுப்பு அவை தாம்—ராகமும் த்வேஷமும், பெற்ற நிலையினவாம்—

34. ஜீவராசிகள் அநாதிவாஸனையைப் பின்செல்வது எவ்வகையாலே எனபதை விவரிக்கிறது இந்த ஶ்லோகம். அதாவது—வாஸனை ராகத்வேஷங்களை விளைத்தே ஜீவராசிகளை ஆட்டிவைக்கிறது என்கிறது. (இந்த்ரியஸ்ய இந்த்ரியஸ்ய அர்த்தே) ஶ்ரோத்ரம் (செவி), த்வக் (மெய்), சக்ஷுஸ்ஸு (கண்), ஜிஹ்வா(நாக்கு), க்ராணம் (மூக்கு) என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்துக்கும் விஷயமாகும் (புலனாகும்) ஶப்தஸ்பர்ஶரூபரஸகந்தங்களிலும், வாக்(வாய்), பாணி(கை), பாதம்(கால்), பாயு(ஆஸநவாய்), உபஸ்தம்(குறி) என்னும் கர்மேந்திரியங்கள் ஐந்துக்கும் (வ்யாபார) விஷயமான வசநம் (பேசுதல்), ஆதாநம் (எடுத்தல்), கமநம் (நடத்தல்), மலவிஸர்ஜனம் (மலங்கழித்தல்), மைதுநம் (சிற்றின்பமனுபவித்தல்) என்னும் ஐந்தொழில்களிலும். 'இந்த்ரியஸ்ய' என்னும் பதத்தை இரண்டு தடவை படித்திருப்பது கர்மேந்த்ரியம், ஞானேந்திரியம என்னும் இருவகையான இந்திரியங்களையும் எடுப்பதற்காக. அர்த்த ஶப்தம் 'விஷயம்' என்னும் பொருளையுடையது. ஞானேந்திரியங்களின் மூலம் உண்டாகும் அறிவுக்கு விஷயமான ஶப்தம் முதலானவற்றையும், கர்மேந்திரியங்கள் மூலம் உண்டாகும் வ்யாபாரத்துக்கு விஷயமான வசனம் முதலானவற்றையும் குறிக்கிறது. (ராகத்வேஷௌ வ்யவஸ்திதௌ) உத்தரார்த்தத்தில் 'தயோ:' என்றிருப்பதையொட்டி 'யௌ' என்னும் பதத்தைக் கூட்டிக்கொள்ளவேண்டும்.

योऽवस्थितः ; तदनुभवे प्रतिहते चावर्जनीयो यो द्वेषोऽवस्थितः ; तावेवं ज्ञानयोगाय यतमानं नियमितसर्वेन्द्रियं स्ववशे कृत्वा प्रसह्य स्वकार्येषु संयोजयतः ; ततश्चायमात्मस्वरूपानुभवविमुखो विनष्टो भवति । ज्ञान-

---

*நிலைபெற்றிருக்கின்றன.* **பேசுங்கால்**-*உண்மையைச் சொல்லப் புகில்,* **ஆங்கு**—*ஞானயோகத்தை அனுஷ்டித்து,* **மற்றவற்றை**—*அந்த ராகத்வேஷங்களை,* **அணைவானல்லன்**—*உண்டாக்கிக் கொள்ளக்கூடாது;* **சேர செறிந்து**—*இவனோடு மிக நெருங்கிநின்று,* **அவை**—*அந்த ராகத்வேஷங்கள்.* **இவனுக்கு**—*இந்த ஞானயோக நிஷ்டனுக்கு,* **எவ்வாறும் தீங்கு அமைக்கும்**—*எவ்வகையிலும் தீமையே செய்யும்.*

---

யாதொரு ராகத்வேஷங்கள் தவிர்க்கவெண்ணுமல் நிலைநிற்கினறனவோ. இந்திரியவிஷயங்களான ஶப்த₃ாதி₃களிலும், வசநாதிகளிலும் அநாதிவாஸனையாலே அவற்றில் இழிய விருப்பம் யாதொன்று உண்டாகிறதோ அதுவே ராக₃ம் எனப்படுகிறது. அது தடைப்படும்போது அத்தடைக்குக் காரணமான பொருள்களில் வெறுப்பு யாதொன்று உண்டாகிறதோ, அது த்₃வேஷம் எனப்படுகிறது. (வ்யவஸ்தி₂தௌ) விஶேஷண அவஸ்தி₂தௌ; தவிர்க்கவொண்ணுதபடி ராகத்வேஷங்கள் நிலைநிற்கின்றன என்றபடி. 'ப்ரக்ருதே: ஸத்₃ருஶம் சேஷ்டதே' என்று சென்ற ஶ்லோகத்தில் வாஸனையாலேயே செயல்கள் உண்டாகின்றன என்று காட்டப்பட்டது; இங்கு ராக₃த்₃வேஷங்களாலேயே செயல்கள் உண்டாகின்றன என்று காட்டப்படுகிறது. ஆக இரண்டு ஶ்லோகத்தாலும் வாஸனையானது ராகத்வேஷங்களை விளைத்துச் சேதனனைச் செயல்புரிய வைக்கின்றது என்றதாயிற்று இப்படி வாஸனையானது விருப்பத்தை விளைத்தே சேதனனுடைய செயல்களுக்குக் காரணமாகிறபடியால், ஜ்ஞாநவாஸனை கர்மவாஸனை என்று இரண்டு வாஸனைகள் கிடையாதென்றும், ஜ்ஞாநவாஸனையே கர்மத்தை விளைக்கும்போது கர்மவாஸனையென்று கூறப்படுகிறது என்றும் உணர்த்தப்படுகிறது. (தயோர் ந வஶமாக₃ச்சே₂த்) அந்த ராக₃த்₃வேஷங்களுக்கு வசப்படலாகாது. 'ஜ்ஞாநயோகத்தை அனுஷ்டிப்பதற்குறுப்பாக ராகத்வேஷங்களின் வசப்படாதே' எனறு ஜ்ஞாநயோகாநுஷ்டானத்துத்துக்கு அங்கமாக ராக₃த்₃வேஷங்களைப்

योगारम्भेण रागद्वेषवशमागम्य न विनश्येत्; तौ हि रागद्वेषावस्य दुर्जयौ शत्रू ज्ञानाभ्यासं वारयतः ॥ ३४ ॥

श्रेयान् स्वधर्मो विगुणः परधर्मात् स्वनुष्ठितात्।
स्वधर्मे निधनं श्रेयः परधर्मो भयावहः ॥ ३५ ॥

35. ஶ்ரேயாந் ஸ்வத₄ர்மோ விகு₃ண:பரத₄ர்மாத்ஸ்வநுஷ்டி₂தாத்।
ஸ்வத₄ர்மே நித₄நம் ஶ்ரேய: பரத₄ர்மோ ப₄யாவஹ:॥

---

பரிஹத்து நிற்கையைக கூறுவதுபோலேயிருக்கிறதே எனில்: ஞான யோக₃ாதி₄காரியும் அந்த யோகத்தை அனுஷ்டிக்கலாகாது என்று கூறும் முன்பின் பிரகரணங்களுக்கு முரண்படுகையாலே அப்படிப் பொருள் கொள்ளக்கூடாது. அப்போது இதற்குக் கருத்தென்ன? எனில்: "ஞானயோகத்திற்காக, எல்லா இந்திரியங்களையும் பலாத் கரித்து விஷயங்களில் செல்லாதபடி தடுக்க முயல்கின்றவனை, முன் ஶ்லோகத்தில் சொன்னரீதியில் வாஸனையைப் பின்செல்கின்றவனாக அவனிருக்கிறபடியால, இந்த ராக₃த்₃வேஷங்கள் தம் வசப்படுத்தி பலாத்கரித்து இழுத்துச்சென்று தம் கார்யங்களான ஶப்தாதி பஞ்ச விஷயாநுபவங்களிலும், வசநம் (பேசுதல்) ஆத₃ாநம் (எடுத்தல்) முதலான ஐந்தொழில்களிலும் ஈடுபடுத்திவிடும்; அதற்குப்பின், 'த்₄யாயதோ விஷயாந்...விநஶ்யதி' [2-62, 63] என்று முன் சொன்ன ரீதியிலே இவன் ஆத்மஸ்வரூபத்தை அனுபவிப்பதில் ஈடுபாடற்ற வனாய் நசித்துப்போவான். ஆகையால், ஞானயோகத்தை ஆரம்பித்து இவ்வண்ணமாக ராகத்வேஷங்களுக்கு வசப்பட்டு நசித்துப் போகாதே" என்பதே இத்தொடருக்குக் கருத்தாகும். இந்த ராக₃ த்₃வேஷங்கள் அவ்வளவு கொடியவையோ? எனில்: (அஸ்ய தௌ பரிபந்தி₂நௌ ஹி) மோக்ஷமடையவிரும்புகின்றவனுக்கு இந்த ராகத்வேஷங்கள் வெல்லவரிய எதிரிகளாய்நின்று, இவனுடைய ஜ்ஞாநயோக₃ாப்₄யாஸத்தைத் தடுத்துவிடுமன்றோ. 'மோக்ஷப்பெரு வழியில் வழிப்பறிக்கொள்ளைக்காரர்களைப்போலே நிற்பவையன்றோ இவை; ஆகையாலே இக்கொள்ளைக்காரர்களிடம் அகப்பட்டு உள்ளதையும் பறிகொடுக்க இடமளிக்கும் ஜ்ஞாநயோக₃ப் பெரு வழியில் செல்லாமல், வழிப்பறிக்கொள்ளைக்காரர்களுக்கு இடமே யில்லாத 'கர்மயோக ராஜபாட்டையில் செல்வாயாக' என்று கருத்து. 34.

**ஸ்வத₄ர்ம:**-(ப்ரக்ருதியோடு சேர்ந்திருக்கும் புருஷனுக்கு) இயற்கையில் உரியதாயிருக்கும் உபாயமான கர்மயோகம். **விகு₃ண:** **(அபி)**—அங்கங்களில் குறையுடையதாக அனுஷ்டிக்கப்பட்டபோதிலும், **ஸ்வநுஷ்டி₂தாத்**—குறைவற அனுஷ்டிக்கப்பட்ட, **பரத₄ர்மாத்**—(இதுவரையில் பழகிப்போராததாகையாலே) பிறர்க்குரிய உபாயமான ஞானயோகத்தைக் காட்டிலும், **ஶ்ரேயாந்**—சிறந்தது. **ஸ்வத₄ர்மே (வர்த்தமாநஸ்ய)**—தனக்குரிய உபாயமான கர்மயோகத்தை அனுஷ்டித்துக்கொண்டு, **நித₄நம்**-(அந்தப்பிறப்பில் பலனடையாமல்) மரணமடைவதும், **ஶ்ரேய:**—சிறந்தது, **பரத₄ர்ம:** **(து)**—பிறர்க்குரிய உபாயமான ஜ்ஞாநயோகமோவெனில், **ப₄யாவஹ:**—(தவறு ஏற்பட்டு அழிவடைய இடமுள்ளதாகையால்) பயத்தை அளிக்கக்கூடியது.

---

**28. குறைந்திடினுந் தன்தருமங் குற்றமில் மேலா(ம்)**
**நிறைந்தியலு மற்றையதி னேரே—மறைந்திறந்து**
**தனதருமத் தைச்செயினுந் தானன்று வேருன**
**வன்தருமத் தச்சம் வரும்.**

**குறைந்திடிலும்**-(அங்கங்களில்) குறைவோடு அனுஷ்டிக்கப்பட்டாலும், **தன் தருமம்**-(ப்ரக்ருதியோடு கூடியவனுக்கு) இயற்கையில் உரியதாயிருக்கும் உபாயமான கர்மயோகம், **குற்றம் இல்**—குற்றமற்றது; **நிறைந்து இயலும் மற்றையதில்**—(அங்கங்களில்) குறைவற விளங்கும் பிறர்க்குரிய உபாயமான ஜ்ஞாநயோகத்தைக் காட்டிலும், **நேரே மேலாம்**—நேரே சிறந்ததாகவும் விளங்குகிறது; **மறைந்து இறந்து தன் தருமத்தை செயினும் தான்**—தனக்குரிய உபாயமான கர்மயோகத்தைச் செய்து (இந்த ஜன்மத்தில் பலனையடையாமல்) மரணமடைந்து மறைந்துபோனாலும், **நன்று**—அது நல்லது; **வேருன**—தனக்குரியதல்லாததாய், **வன்**—செய்யவரியதான, **தருமத்து**—உபாயமான ஜ்ஞானயோகத்தினுல், **அச்சம் வரும்**—(தவறு ஏற்பட்டு அழிந்துபோகையாகிற) பயம் ஏற்படும்.

35. 'பற்பல அங்கங்களோடு கூடிய பல கர்மங்களை உள்ளடக்கிய கர்மயோகத்தைச் சரிவர அனுஷ்டிப்பது மிகவும் சிரமஸாத்₄ய மாயிற்றே; அங்கங்களில் குறையேற்படக் கூடுமே' என்னும அர்ஜுனனின கருத்தையறிந்து, அதற்கு பதிலுரைக்கிருன் இந்த ஶ்லோகத்தில். இந்த ஶ்லோகத்தில் ஸ்வத₄ர்மமென்றும், பரத₄ர்மமென்றும் கூறப்படுவது முறையே தனக்கும், பிறர்க்குமுரிய வர்ணாஶ்ரமத₄ர்மங்கள் என்று கொள்ளககூடாதோ? எனில்: பிறர்க் குரிய வர்ணாஶ்ரமத₄ர்மங்களை அனுஷ்டிப்பது அஶாஸ்த்ரீயமாகை யாலே அதை இங்கு எடுத்துக்கழிப்பதும் தகாது; மேலும், 'பிறர்க் குரிய த₄ர்மத்தைக்காட்டிலும், தனக்குரிய த₄ர்மத்தை அனுஷ்டிப்பது மிகச்சிறந்தது' என்று இங்கு கூறுகையாலே, பிறர்க்குரிய த₄ர்மத்தை அனுஷ்டிப்பதும் சிறப்புடையதென்று தோற்றுகிறது. பிறர்க்குரிய த₄ர்மததை எப்புடி அனுஷ்டித்தாலும் அது அத₄ர்ம மென்றும், இகழத்தக்கதெனறும் சாஸ்திரங்கள் கூறுகையாலே, அதைச் சிறப்புடையதென்று கூறுவதே ஒட்டாது. இனி, "க்ஷத்ரிய த₄ர்மமான யுத்தத்தைக் கைவிடுவதில் ஊற்றமுடையவனுயிருக்கும் அர்ஜுனனிடம், அவனுடைய தர்மமான போர்புரிகை புகழப் படுகிறதெனறும ப்₃ராஹ்மணத₃த₄ர்மமான யுத்₃த₄பரித்யாக₃ம் இகழப்படுகிறதென்றும கொளளக்கூடாதோ?" எனில், இப்படிக் கொள்ள இப்ரகரணத்தில் இடமிருந்தபோதிலும் ப்ராஹ்மணதி₃ த₄ர்மமான யுத்₃த₄பரித்யாக₃ம் க்ஷத்ரியனுக்கு ப்ரஶஸ்யம் (சிறந்தது) எனறு கூறுவது ஒட்டாது. மேலும், அர்ஜுனன போர் புரியாமையையே தன த₄ர்மமாக மயஙகிநிற்கிருனேயொழியத் தன் தர்மத்தை விட்டுப் பிறர்த₄ர்மத்தை அனுஷ்டிக்க எண்ணவில்லை யாகையால் 'பிறர்க்குரிய தர்மத்தைக் காட்டிலும் தனக்குரிய த₄ர்மத்தைச் செய்வது சிறந்தது' என்று உபதேசிப்பது ஒட்டாது. பிறர்க்குரிய த₄ர்மமாகிற போர்புரியாமையைத் தன் த₄ர்மமாக மயங்கிநிற்கும் இவனுக்கு, 'அது பிறர் த₄ர்மமேயொழிய உன் தர்மமல்ல' என்று உணர்த்தப்படுவதாகக் கொள்ளலாமே எனில்: அப்போது 'போர்புரியாமை உனக்கு தர்மமல்ல' என்றே சொல்ல வேண்டுமேயொழிய, 'நன்கு அனுஷ்டிக்கப்பட்ட பிறர்க்குரிய த₄ர்ம மாகிற போர்புரியாமையைக் காட்டிலும் நன்கு அனுஷ்டிக்கப்படாத உன் தர்மம் சிறந்தது' என்று போர் புரியாமையை விஶேஷண மிட்டு அனுவதித்திருப்பது பொருந்தாது. போர் புரியாமை பிறர்க்குரியது என்று அர்ஜுனனும இசைந்திருந்தால்தான்

॥भा॥ अतस्सुशकतया स्वधर्मभूतः कर्मयोगो विगुणोऽप्य-प्रमादगर्भः प्रकृतिसंसृष्टस्य दुश्शकतया परधर्मभूतात् ज्ञानयोगात्सगुणादपि

---

இப்படி அனுவதித்திருப்பது பொருந்தும். அதிலும போர்புரியாமை பிறர்க்குரியது என்று உணர்த்துவது பயனற்றது. ஆகையால், முன் ப்ரகரணத்தையொட்டி 'சிறந்ததாயிருந்தபோதிலும் பிறர்க் குரியதாகையாலே அநாதரிக்கத்தக்கதான ஜ்ஞானயோகத்தைக் காட்டிலும் உனக்குரிய கர்மயோகமே மிகச்சிறந்தது" என்று கூறுவதாகக் கொள்வதே ஓட்டும். இப்படிக்கொணடால்தான முன் இரு ஶ்லோகங்களில் விஷயவாஸனையையே பின் செல்லு மிவனுக்குக் கர்மயோகமே ஞானயோகத்திலும சிறந்தது என்று கூறியிருப்பது பொருந்தும்; மேல் ஶ்லோகங்களில், 'விருமபா விடிலும இச்சேதனன் ஏன் விஷயங்களை அனுபவிக்கிருன்' என்று அர்ஜுனன் கேட்பதும், 'காமகரோத₄ங்களால் பீடிக்கப்பட்ட இவனுக்கு ஜ்ஞானயோகம் செய்யவரியது' என்று கண்ணன பதிலுரைப்பதும் பொருந்தும். 'விரும்பாவிடிலும், நான் யுத்₃த₄ த்யாக₃த்தில் ஒருப்பட்டுநிற்பது எத்தாலே' என்று அடுத்த ஶ்லோகத்திலுள்ள ப்ரஶ்னத்துககுக் கருததானுலென்ன? எனில்; யுத்₃த₄த்யாக₃த்தை இவன் விரும்பியே செய்ய நினைக்கிருனுகை யாலே இதுவும் ஓட்டாது. காமக்ரோத₄ங்களாலன்றியே, கருணை யாலேயே இவன் போர்புரிதலைக கைவிட நினைக்கிருனுகையாலே 'காமக்ரோதங்களாலே இவன் பாபம் புரிகிருன்' என்று பதி லுரைப்பதும் பொருந்தாது. ஆகையாலே, தனக்குரிய கர்ம யோக₃மே இங்கு ஸ்வத₄ர்மமென்றும், பிறர்க்குரிய ஜ்ஞாநயோகமே இங்கு பரத₄ர்மமென்றும் கூறப்படுவதாகக் கொள்வதே பொருதத முடையது. ஆகையால், 'விஸ்தாரமான கர்மங்களை உள்ளடக்கிய கர்மயோகத்தை அனுஷ்டிக்குமபோது கர்மாஙகங்களில் சில குறை களுண்டானுலும், நன்கு அனுஷ்டிக்கப்பட்ட ஞானயோகத்தைக காட்டிலும் அக்கர்மமே சிறந்தது' என்று ஶ்லோகதாத்பர்யம் கொள்வதே தக்கது. (ஸ்வநுஷ்டித₂ாத் பரத₄ர்மாத் விகு₃ண: ஸ்வத₄ர்ம: ஶ்ரேயாந்) முன் ஶ்லோகங்களில் கூறியபடி இச்சேதனன் அநாதிவிஷயவாஸனையைப் பின் செல்கின்றவனுகையாலே, இவன் இதுவரையில் பழகிப்போராததாகையாலே செய்யவரிய பரத₄ர்ம மாகிற ஞானயோகமானது நழுவ இடமுள்ளதாகையாலே சில காலம் அங்கங்களில் குறைவற அனுஷ்டிக்கப்படுவதைக் காட்டிலும்,

किंचित्कालमनुष्ठितात् सप्रमादाच्छ्रेयान्; स्वेनैवोपादातुं योग्यतया स्वधर्मभूते कर्मयोगे वर्तमानस्यैकस्मिन् जन्मन्यप्राप्तफलतया निधनमपि

---

இவன் நெடுங்காலம் பழகிப்போந்ததாகையாலே செய்யவெளியதாய், நழுவ இடமில்லாத ஸ்வத₄ர்மமான கர்மயோகம், அங்கங்களில் சிறிது குறையோடாவது அனுஷ்டிக்கப்படுவது சிறந்தது. (ஸ்வநுஷ்டி₂தாத்)என்னும்பதத்தில்க்தப்ரத்யயம் இறந்தகாலத்தைக் காட்டுவதாகையாலே, இந்த ஜ்ஞானயோகமானது நன்கு அனுஷ்டிக்கப்பட்டாலும், இவன் பழகிப் போராததாகையாலே சிறிது காலத்தில் கைவிடப்பட்டுவிடும் என்று காட்டுகிறது. இப்படி இடையில் இது கைவிடப்பட்டதாகப் பொருள் கொள்ளாமல், பரிபூர்ணமாக அனுஷ்டிக்கப்பட்டதாகக் கொண்டால் குறைவற அனுஷ்டிக்கப்பட்ட இது ப₂லத்தைக் கொடுத்தே தீருமாகையால், குறைவுடைய கர்மயோகத்தை இதைக்காட்டிலும் சிறந்ததெனக் கூறுவது ஓட்டாது. (ஸ்வநுஷ்டி₂தாத் பரத₄ர்மாத்- விகு₃ண: ஸ்வத₄ர்ம: ஶ்ரேயாந்) அங்கங்களில் குறைவற அனுஷ்டிக்கப்பட்ட ஞானயோகத்தைக்காட்டிலும் அவற்றில் குறைவோடு அனுஷ்டிக்கப்பட்ட கர்மயோகம் எப்படிச் சிறந்ததாகமுடியும்? எனில்: கர்மயோகத்தில அங்கஙகளில் குறையேற்பட்டாலும் நழுவ இடமில்லாததாகையாலே அங்கி₃யானது இடையில் தடைபடாது; ஞானயோகமானது அங்கங்களில் குறையில்லாமல் அனுஷ்டிக்கப்பட்டபோதிலும், நழுவ இடமுள்ளதாகையாலே அங்கியே இடையில தடைபட்டுப்போகும். ஆகையாலே, ஸகு₃ணமான ஞானயோகத்தைக் காட்டிலும் விகு₃ணமான கர்மயோக₃ம் சிறந்தது என்று கூறியதில் குறையில்லை. இனி, "ஆத்மஸாக்ஷாத்காரத்தை உத்தேசித்து விதிக்கப்பட்ட இக்கர்மயோக₃ம் ஒரு காம்ய கர்மந்தானே; 'ஸர்வாங்கோ₃பஸம்ஹாரே காம்யம் கர்ம ப்ரஸித்₃த்₄யதி' [எல்லா அங்கங்களும் குறைவறக் கூடியிருந்தால்தான் காம்யகர்மமானது பலனளிக்கும்] என்னும் நியாயப்படி, அங்கங்களில் குறையிருந்தால் இக்கர்மயோக₃மும் நிஷ்ப₂லமாகவேண்டியதுதானே"என்னும் ஆக்ஷேபத்திற்கு பதிலுரைக்கிறது மூன்றுவது பாதம். (ஸ்வத₄ர்மே நித₄நம் ஶ்ரேய:) ப்ரக்ருதிகார்யமான சரீரத்தோடு கூடியிருப்பவனுயிருக்கையால் செயல்புரிந்துகொண்டேயிருக்கும் இந்திரியங்களை உடையவனை இவனுலே இயல்பாகவே ஏற்றுக்கொள்ளத்தக்கதாயிருக்கையாலே, இவனுக்கு ஸ்வத₄ர்மம் எனத்தக்க கர்மயோக₃த்தை

श्रेयः, अनन्तरायहततयाऽनन्तरजन्मन्यप्यव्याकुलकर्मयोगारम्भसंभवात् । प्रकृतिसंसृष्टस्य स्वेनैवोपादातुमशक्यतया परधर्मभूतो ज्ञानयोगः प्रमाद-गर्भतया भयावहः ॥ ३५ ॥

---

அனுஷ்டிக்கும்போது அங்கங்களில் குறைவு ஏற்படுகையாலே கர்மயோக₃ம நிறைவு பெருமையாலே ஆதமத₃ர்ஶனமாகிற பலனை இந்த ஜன்மத்திலேயே பெருமல் இவன் இறந்துவிடினும நன்று. எப்படியெனில்: இவனுடைய இந்திரியங்கள் ஏற்கனவே இயற்கை யிலேயே கர்மங்களிலேயே ஈடுபட்டு வந்திருக்கின்றன; ஆகையால், அந்த வாஸநாப₃லத்தாலே கர்மயோகத்தை அடுத்த ஜனமததில தொடர்ந்து நடத்துவதற்குத் தடையின்றியிருக்கையால், நிறைந்த அங்கஙகளோடு கூடிய கர்மயோகம் அந்த ஜன்மத்திலேயோ, அதற்கடுத்த ஜன்மஙகளில் ஒன்றிலேயோ நிறைவுபெற்றுப் பல ஸித்தியும உண்டாவதற்கு இடமிருக்கிறதன்றோ. காம்யகர்மமான இதற்கு அங்கங்களில் குறையேற்பட்டால் பலனேற்படாது எனறு சஙகிக்கவொண்ணுது; இக்கர்மயோக₃மும் ஆதமஸாக்ஷாத்காராதி₃ ப₂லத்துக்காக அனுஷ்டிககப்படும் காமயகர்மமேயாயினும், ப்ராக்ருத ப₂லஸாத₄கமான காமயகர்மங்களைக் காட்டிலும் இதற்கு ஓர் சிறப்புண்டு. அதாவது,— இக்கர்மயோகம் அங்கங்களில குறை வுடன இந்த ஜன்மததில் அனுஷ்டிக்கப்பட்டாலும, மறு ஜனமங் களில் ஒனறில் குறைவற அனுஷடிக்கப்பட்டுப் பலனைப் பெறு விப்பதாகவே இருக்கையேயாம. அங்கங்களில் ஏற்பட்ட குறை யினுல் பலத்தில் காலதாமதம் மாத்திரம் ஏற்படுகிறதேயொழிய, ப்ராக்ருதகாம்ய கர்மங்களிற்போலே ப₂லமிலலாமற்போகவில்லை என்பது குறிக்கொள்ளத்தக்கது. இவ்விஷயம் அனைத்தும் "நேஹாபி₄க்ரமநாஶோஸ்தி" [2-40] என்று தொடங்கும் ஶ்லோகத் திலே விளக்கப்பட்டது. "பார்த்த₂ நைவேஹ நாமுத்ர" [6-40] என்று தொடங்கும் ஶ்லோகத்திலும் விவரிக்கப்படவிருக்கிறது. இப்படிக் குறையுடைய கர்மயோகம் பின் ஜன்மமொன்றில் நிறைவு பெறுகையால் நன்றேயாகில், ஞானயோக₃மும் இம்முறையில் ஏன் நன்ருகக் கூடாது? என்னும் கேள்விக்கு பதிலுரைக்கிறது நாலாவது பாத₃ம—(பரத₄ர்மோ ப₄யாவஹ:) ப்ரக்ருதிகார்யமான சரீரத்தோடு கூடியவனுக்கு இயற்கையாக ஏற்றுக்கொள்ள முடியாததாகையாலே பரத₄ர்மம் எனத்தக்க ஜ்ஞானயோகமானது, தவறு ஏற்பட இட மிருக்கையால் ஸம்ஸாரபயத்தையே அளிக்கிறது. கர்மயோகத்திற்கு

अर्जुन उवाच—

अथ केन प्रयुक्तोऽयं पापं चरति पूरुषः।
अनिच्छन्नपि वार्ष्णेय बलादिव नियोजितः॥ ३६॥

அர்ஜுந உவாச—

36. அத₂ கேந ப்ரயுக்தோऽயம் பாபம் சரதி பூருஷ:।
அநிச்சந்நபி வார்ஷ்ணேய ப₃லாதி₃வ நியோஜித:॥

**வார்ஷ்ணேய**—*வ்ருஷ்ணிகுலத்துதித்தவனே!* **அயம்**—*ஜ்ஞானயோகத்தை அனுஷ்டிக்க முயலும் இந்த மனிதன்.* **அநிச்சந் அபி**—*விஷயங்களை அனுபவிப்பதில் விருப்பமில்லாதவனாயினும்.* **கேந ப்ரயுக்த:**—*எந்தக் காரணத்தினால் தூண்டப்பட்டு.* **ப₃லாத நியோஜித: இவ**—*ப₃லாத்காரமாகத் தள்ளப்பட்டவனைப்போலே.* **பாபம்**—*விஷயாநுப₄வமாகிற அநர்த்தத்தை.* **சரதி**—*செய்கிறான்?*

---

29. பின்பு விசயன் பெருமானே பாவத்தை
யன்பிலனே லும்புருட னாங்கெததால்—வன்பதனி
லேவுற்றான் போல வியலு மெனவவனுக்
காவுற்றான் சொன்னனைமந்து.

**பின்பு**—*இவ்வாறு கண்ணன் உரைத்ததன் பின்,* **விசயன்**—*அர்ஜுனனானவன்.* **'பெருமானே**—*எம்பிரானே!* **புருடன்**—*ஞானயோகத்திலிழிந்த மனிதன்.* **ஆங்கு**—*ஞானயோகத்தை அனுஷ்டிக்கும்போது,* **அன்பிலனேலும்**—*(விஷயானுபவத்தில்) விருப்பமில்லாதவனாயினும்.* **எத்தால்**—*எக்காரணத்தால் தூண்டப்பட்டு,* **ஏவுற்றான் போலே**—

---

அங்கங்களில் குறையேற்பட்டாலும், அங்கி₃யான கர்மயோக₃ ஸ்வரூபம் தொடர்ந்து நடத்தக்கூடியதாயிருக்கையாலே ஜன்மாந்தரத்தில் நிறைவுபெற்றுப் பலனளிக்கக்கூடும்; ஜ்ஞான யோகத்துக்கோவெனில் அங்கி₃ஸ்வரூபத்துக்கே தடையேற்படுகையாலே ஜன்மாந்தரத்திலும் தொடர்ச்சியின்றியே பலனில்லாமற் போகிறபடியால் கர்மயோக₃ம்போல் நன்றாகாது என்று கருத்து. 35.

॥भा॥ अथायं ज्ञानयोगाय प्रवृत्तः पुरुषः स्वयं विषयाननु-भवितुमनिच्छन्नपि केन प्रयुक्तो विषयानुभवरूपं पापं बलान्नियोजित इव चरति?॥ ३६ ॥

---

பலாத்காரமாகத் தள்ளப்பட்டவனைப்போலே. வன்பு அதனில்—அனர்த்தமான விஷயானுபவத்தில், இயலும்—ஈடுபடுகிறான்?' என—என்று கேட்க, அவனுக்கா உற்றான்—அவனுக்கு எல்லாவுறவுமான கண்ணன். அமைந்து சொன்னான்—நெஞ்சிற்படும்படி பதில் சொன்னான்.

---

36. " 'ஸத்₃ருஶம் சேஷ்டதே' [33] என்னும் ஶ்லோகத்திலே, மனிதன் அநாதி வாஸனையைப் பின் செல்கின்றான் என்று கூறப் பட்டது; அந்த வாஸனையும் அவனுக்கு ஒன்றில் விருப்பத்தை விளைத்தே அதில் ஈடுபடுத்தும்; இப்படியிருக்கும்போது ஒரு மனிதன் ஞானயோகத்திலேயே விருப்பங்கொண்டு, அதற்கு விரோதியான விஷயாநுபவத்தில் விருப்பமற்று இருக்கும்போதும் வாஸனையானது எவ்வழியாலே அவனை விஷயாநுப₄வங்களில் மூட்டுகிறது?" என்று அர்ஜுனன் கேட்கிறான் இந்த ஶ்லோகத்தில். (அத₂) கேள்வி கேட்பதைக் காட்டும் பதமாகவுமாகவுமாம; (அத₂ பாபம் சரதி) என்று கூட்டி, பாபத்தைப் பத்தும் பத்தாக (பரி பூர்ணமாக) அனுஷ்டிப்பதைக் காட்டுகிறதாகவுமாம். (அயம) 'ஜ்ஞாநவாநபி' [33] என்று இப்ரகரணத்தில் குறிக்கப்பட்டவனாய், ஜ்ஞாநயோகத்தில் இழியமுற்பட்டவனைக் காட்டுகிறது இந்த ஶப்தம். (புருஷ:) இவன் சேதனனாயிற்றே! அப்படியிருக்கும் போது இவன் விருமபாத விஷயாநுபவத்தில் வாஸனைதான் இவனை எப்படி ஈடுபடுத்தமுடியும் என்று கருத்து. (அநிச்ச₂ந் அபி) விஷயங்களை அனுபவிப்பதில் விருப்பமில்லாதவனாயினும். இவன் ஜ்ஞாநயோகத்தில் இழிந்தவனாகையாலே அதற்குத்தடையான விஷயாநுபவமே மேலே பாபம் எனப்படுகிறதாகையாலே அதுவே இங்கும் அநிச்சைக்கு விஷயமாகவேணும். (ப₃லாத் நியோஜித: இவ கேந ப்ரயுக்த:) விரும்பாவிடிலும் புயற்காற்றாலும் பெருவெள்ளத்தாலும் அடித்துத் தள்ளப்படும் ஒருவனைப்போலே, இவனும் எக்காரணத்தாலே தூண்டப்பட்டுத் தான் விரும்பாத இச்செயலைச்செய்கிறான்? அச்செயல் தான் யாது எனில்: (பாபம்

श्रीभगवानुवाच—

काम एष क्रोध एष रजोगुणसमुद्भवः।
महाशनो महापाप्मा विद्ध्येनमिह वैरिणम्॥ ३७॥

ஸ்ரீப₄க₃வாநுவாச—

37. காம ஏஷ க்ரோத₄ ஏஷ ரஜோகு₃ணஸமுத்₃ப₄வ:।
மஹாஶநோ மஹாபாப்மா வித்₃த்₄யேநமிஹ வைரிணம்॥

**ஏஷ:**—*நீ கேட்ட (விஷயாநுப₄வ) காரணம்,* **ரஜோகு₃ணஸமுத்₃ப₄வ:**-*ரஜோகுணத்தால் உண்டாவதாய்,* **மஹாஶந:**—*பெரும் தீனி தின்னும்,* **காம: ஏவ**—*காமமேயாகும்;* **ஏஷ:**—*இக்காமமே (தடைசெய்யப்பட்டபோது),* **மஹாபாப்மா**—*(தடைசெய்தவர்களைக் குறித்துப்) பெரும் பாவச் செயல்களையும் புரியும்,* **க்ரோத₄:(ப₄வதி)**—*கோபமாகப் பரிணமிக்கிறது.* **ஏநம்**—*(ரஜோ குணத்தாலுண்டாவதாய், கோபமாகப் பரிணமிப்பதான) இக்காமத்தையே,* **இஹ**—*இந்த ஜ்ஞாநயோகத்திற்கு,* **வைரிணம் வித்₃தி₄**—*விரோதியென்றறிவாயாக.*

---

30. காம மிதுதான் கடுங்கோ பமுமாகித்
தீமை நடுக்குணத்துச் சேர்ந்துதிக்கு—மாமதெல்லாம்
வாரி யுடன்புசிக்கு மாபாவ மாமிதனை
வைரி யெனவே மதி.

---

*சரதி) தனக்கு அனர்த்தமான விஷயாநுப₄வத்தையன்றோ தான் விரும்பாமலிருக்கச்செய்தே இவன் செய்கிறான்; விரும்பாமலிருக்கும் போதே மனிதனை அடித்துச்செல்லும் புயற்காற்றையும், பெரு வெள்ளத்தையும்போலே, இங்கு இவனை விஷயாநுபவத்தை நோக்கி இழுத்துச் செல்வது யாது? என்று கேள்விக்குக் கருத்து. (வார்ஷ்ணேய) "யஸ்ய மந்த்ரீச கோ₃ப்தா ச ஸுஹ்ருச்சைவ ஜநார்த்த₃ந:' "ஸம்ப₃ந்தீ₄ தே ஜநார்த்த₃ந:" என்கிறபடியே எனக்கு எல்லா வுறவுமாக வ்ருஷ்ணிகுலத்தில் அவதரித்திருக்கும் நீயே என் ஐயத்தைப் போக்கவேணும் என்று கருத்து.* 36.

॥ भा ॥ अस्योद्भवाभिभवरूपेण वर्तमानगुणमयप्रकृतिसंसृष्टस्य ज्ञानायारब्धस्य रजोगुणसमुद्भवः प्राचीनवासनाजनितश्शब्दादिविषयः कामो महाशनः शत्रुः विषयेष्वेनमाकर्षति; एष एव प्रतिहतगतिः प्रतिहतिहेतुभूतचेतनान् प्रति क्रोधरूपेण परिणतो महापाप्मा परिहिंसादिषु प्रवर्तयति।

---

**இதுதான்**—நீகேட்ட (விஷயாநுப₄வ) காரணம்தான், **காமம்**—காமமேயாகும்; (இதுதான்—இக்காமமே), **கடும் கோபமும் ஆகி**— (தடைபட்டபோது தடைசெய்தவர்களிடம்) கடுமையான கோபமாகவும் உருவெடுத்து, **தீமை நடுக் குணத்து சேர்ந்து உதிக்கும்**—(முக்குணங்களில்) தீமை செய்யும் நடுக்குணமான ரஜோ குணத்திலிருந்து உண்டாகும். **ஆமது எல்லாம் வாரி உடன் புசிக்கும**—(இக்காமமானது) கிடைக்கும் விஷயங்கள் அனைத்தையும் வாரி வாரி விழுங்கிக் கொண்டேயிருக்கும்; **மா பாவம் ஆம்**—(தடைபட்டுக் கோபமாக உருவெடுக்கும் போது) பெரும் பாவச்செயல்களையும் புரியும். **இதனை**—(ரஜோகுணத்தால் உண்டாவதாய், கோபமாக உருவெடுப்பதான) இக்காமத்தை, **வைரி எனவே மதி**—(இந்த ஜ்ஞானயோகத்திற்கு) எதிரி என்றே எண்ணுவாயாக.

---

37. புயற்காற்றைப்போலவும், பெருவெள்ளத்தைப்போலவும் இவனை பலாத்காரம் செய்து, விஷயங்களை நோக்கி இழுத்துச் செல்வது காமமே என்று கண்ணன் பதிலுரைக்கிறான் இந்த ஶ்லோகத்தில்; "இந்த்₃ரியஸ்ய" [34] என்று தொடங்கும் ஶ்லோகத்தில் சுருங்கச் சொல்லப்பட்ட ராக₃த்₃வேஷங்களே காமக்ரோதங்களாக முற்றி, நீ கேட்ட விஷயாநுப₄வகாரணமாகின்றன என்று அவற்றை விவரிக்கிறான் என்றபடி. (ஏஷ:) நீ கேட்ட விஷயாநுப₄வ காரணம். (ரஜோகு₃ணஸமுத்₃ப₄வ: காம:) ரஜோகுணத்தால் உண்டாகும் காமமேயாகும். (மஹாஶந:) இது எத்தனை விஷயத் தீனிகளையிட்டாலும் வாரி விழுங்கக்கூடிய பெருவயிறு படைத்தது. அநாதி₃விஷயவாஸனையாகிற விதை, ரஜோகுணமாகிற நீரும் எருவும் இடப் பெற்று, காமக்ரோத₄ங்களாகிற முளையாகி, விஷயாநுப₄வமாகிற விஷவ்ருக்ஷமாகப் பரிணமிக்கிறது என்று கருத்து.

இங்கு ஓர் ஐயம் எழக்கூடும். நம்முடைய மதத்தில் காமமும் க்ரோத₄மும ஆத்மாவின் த₄ர்மமாயிருக்கும் ஜ்ஞானத்தின் பரிணும விஶேஷமேயாகும்; இது ப்ரக்ருதியிலிருக்கும் ரஜோகுணத்தால் எப்படி உண்டாக முடியும்? என்பதே அவ்வையம். "உஷ்ணத்தையுடைய நெருப்பு பட்டால் கையில் கொப்புளமுண்டாவதுபோலே, முக்குணமயமான ப்ரக்ருதியின் கார்யமான சரீரத்தோடு இவன் சேர்ந்திருக்கையாலே, அதன் குணங்கள் இவனுடைய ஞானத்தில் மாறுதலை விளைக்கமுடியும" என்பது இவ்வையத்திற்கு ஸமாதானம், அப்படியானல் சரீரத்திலுள்ள ரஜோகுணத்தால் காமாதிகள் உண்டாவதுபோலே, அதிலுள்ள ஸத்வ குணத்தால் ஜ்ஞாநாதி₃களும் அப்போதே உண்டாகலாமே எனில: ஸத்வ குணத்தைக் காட்டிலும் பெரும்பாலும் ரஜோகுணமே அதில் விஞ்சியிருக்கையாலே ஜ்ஞாநாதிகளுண்டாகாமல் காமாதிகளே உண்டாகக் குறையில்லை; சரீரத்தில் ரஜோகுணமே விஞ்சியிருக்குமாகில், ஸத்வகார்யமான ஜ்ஞானயோகத்தை இவன் தொடங்கத்தான முடியுமோ? எனில்; ஸத்வாதி குணங்களில் ஒவ்வொன்று ஒவ்வொரு சமயத்தில் தலையெடுப்பதும், மற்றவை தலைசாய்வதுமுண்டாகையாலே ஸத்வம் தலையெடுத்த தொரு நேரததல் இவன் ஜ்ஞானயோகத்தைத் தொடங்கவும் கூடும்; ரஜோகுணம தலை யெடுத்த நேரத்தில் காமாதிகள் உண்டாகி அதனால் விஷயானுபவம ஏற்பட்டு ஜ்ஞாந யோகம் தடைபடவும் கூடும. ஆகவித்தால், முன ஶ்லோகத்தில் ஜ்ஞான யோகத்தைத் தொடங்கியவனும். விஷயானுப₄வத்தை விரும்பாமலே செய்கின்றவனுகக் கூறப்பட்ட அதிகாரி ஒவ்வொரு காலத்தில் ஏறியும் தாழ்ந்தும் வரும் ஸத்வாதி குணங்களோடு கூடிய ப்ரக்ருதிகார்யமான சரீரத்தோடு சேர்ந்திருக்கையாலேயே தொடங்கிய ஜ்ஞாந யோகம நிறைவுபெறு தபடி, "ஸத்₃ருஶம் சேஷ்டதே" [33] "இந்த்₃ரியஸ்ய" [34] எனனும் ஶ்லோகங்களில் விவரிககப்பட்ட ரீதியில் அநாதி வாஸனையால் உணடாகும் ஶப்தாதி விஷய காமமாகிற பெருவயிறு படைத்த எதிரியாலே விஷயங்களை நோககி இழுத்துச் செல்லப்படுகிருன் என்றதாயிற்று. (ஏஷ மஹாபாப்மா க்ரோத₄:) இக்காமமே பெரும் பாவங்களைப் புரியும் கோபமாகப் பரிணமிக்கிறது. "காம ஏஷ: க்ரோத₄ ஏஷ:" என்று ஏதச்ச₂ப்தத்தை இரண்டு தடவை படித்திருக்கையாலே கீழ் எடுத்தபடி இரண்டு வாக்கியங்களாகவே கொள்ள வேண்டுமென்று விளங்குகிறது. ஆயினும், இரண்டு

एनं रजोगुणसमुद्भवं सहजं ज्ञानयोगविरोधिनं वैरिणं विद्धि ॥ ३७॥

வாக்கியங்களிலும் சொல்லப்படும் கருத்து ஒன்றே. ஏனெனில்: 'எதனுல் ஏவப்பட்டுப் பாவம் புரிகிருன்' என்பது அர்ஜுனனின் கேள்வி. அதற்கு பதில் கூறும்போது 'காமத்தினுலும், கோபத்தினுலும் ஏவப்பட்டு இவன் பாவம் புரிகிருன். என்றும், 'இவையிரண்டும் எதிரிகளென அறிவாயாக' என்றும கூருமல், 'இவன பாவம புரிவதற்குக் காரணம் இக்காமமே; இதுவே கோபமாகும். இதையே விரோதியென அறிவாயாக' என்று பதில் கூறுகிறபடியால் இரு வாக்கியங்களுக்கும் கருத்து ஒன்றே எனக் கொள்ளவேண்டும். மேல் வரும் ஆறு ஶ்லோகங்களிலும், 'தேந' [38] 'ஏதேந' 'காமரூபேண' [39] 'அஸ்ய' [40] 'ஏநம்' [41] 'ய:' [42] காமரூபம்' [43] என்று ஒரே ரீதியாக ஒருமையிலேயே படிக்கப்படுகிறது. அதிலும் காமமே எடுக்கப்படுகிறது. காமத்தைக் காட்டிலும் கோபத்தை வேருக எடுக்கவில்லை. ஆகையால், காமமே வேருெரு நிலையை அடைந்து கோபமாகிறது என்னும் கருத்தே இங்கு கொள்ளத்தக்கது ஒன்றுக்கே காமம் கோபம் என்னும் இருநிலைகள் உள்ளதைப்பற்றி இருவாக்கியங்கள் அமைக்கப்பட்டுள்ளன. காமம கோபம் முதலான பலவாகப் பரிணமிப்பது ஆத்மாவின் குணமான (த₄ர்மபூ₄தமான) ஜ்ஞானமே என்னும் நம் ஸித்தாந்தத்திற்கே இந்த கீதா ஶ்லோகம பொருந்தியிருக்கிறதென்பது குறிக்கொள்ளத் தக்கது.

"ந ஜாது காம: காமாநாம் உபபோ₄கே₃ந ஶாம்யதி|
ஹவிஷா க்ருஷ்ணவர்த்மேவ பூ₄ய ஏவாபி₄வர்த்த₄தே||"

[பாரதம்]

[காமிகளின் காமம் ஒருபோதும் அனுபவித்து அடங்காதது; விரகிட விரகிட மேன்மேலும எரியும் அக்னிபோலே, அனுபவிக்க அனுபவிக்க மேனமேலும் வளரும்.] என்கிறபடியே பெருந்தீனி தின்பது காமமேயாகையாலே 'மஹாஶந:' என்பது அதற்கு விஶேஷணமாகக் கொள்ளப்பட்டது.

"க்ருத்₃த₄: பாபம் ந குர்யாத் க: க்ருத்₃தே₄ா ஹந்யாத்₃கு₃ரூநபி|
க்ருத்₃த₄: பருஷயா வாசா நர: ஸாதூ₄நதி₄க்ஷிபேத் ||
வாச்யாவாச்யம் ப்ரகுபிதோ ந விஜாநாதி கர்ஹிசித் |
நாகார்யமஸ்தி க்ருத்₃த₄ஸ்ய நாவாச்யம் வித்₃யதே க்வசித்||"

[ரா—ஸு 55-56]

[கோபமடைந்த எவன்தான் பாவம் புரியமாட்டான்? கோபமடைந்தவன் பெரியோர்களையும் கொன்றுவிடுவான். கோபங்கொண்ட மனிதன் கடுஞ் சொற்களாலே நல்லோர்களைப் பழிப்பான். சொல்லத்தக்கது எது, சொல்லத்தகாதது எது என்னும் பாகுபாட்டை ஒருபோதும் அறியான். கோபங்கொண்டவனுக்குச் செய்யத்தகாததும், சொல்லத்தகாததும் எதுவுமில்லை.] என்கிறபடியே பெரும்பாவங்களையும் புரிவது கோபமேயாகையாலே 'மஹாபாப்மா' என்பது க்ரோத$_4$த்துக்கு விஸேஷணமாகக் கொள்ளப்பட்டது 'மஹாந் பாப்மா (கார்யதயா) யஸ்யாஸ்தீதி ஸ மஹாபாப்மா' [பெரும்பாபம் எதற்கு (கார்யமாக) இருக்கிறதோ அது மஹாபாப்மா] என்று வ்யுத்பத்தி. "காம ஏஷ: க்ரோத$_4$ ஏஷ:" "மஹாஸநோ மஹாபாப்மா" என்னும் பாட$_2$ க்ரமமும் மஹாஸநமஹாபாப்மஸப்$_3$த$_3$ங்கள் முறையே காமக்ரோத$_4$ங்களுக்கு விஸேஷணங்கள் என்று உணர்த்துகிறது. காமம கோபமாகப் பரிணமிக்கும் வழி எப்படியெனில்: ஒருவனுக்கு ஒரு விஷயத்தில் காமம் உண்டானபின், அக்காமம் நிறைவேறுதபடி சில சேதனர்கள் தடுத்தால், அவர்களைக்குறித்து அவனுக்குக் கடுங் கோபம் உண்டாகி, தடுத்தவர்களை அவன் நலியத் தொடங்குவதை உலகில் நாம் காண்கிறோம். இத்தகையவிடங்களில் காமமே தடைபடும்போது கோபமாகப் பரிணமிக்கிறது என விளங்குகிறது. "ப்ரியவிஸ்லேஷாப்ரியாக$_3$மந ஹேதுபூ$_4$த சேதநாந்தரக$_3$த து$_3$:க்க$_2$ஹேதுபூ$_4$த ஸவமநோவிகார: க்ரோத$_4$:" [கீதாபாஷ்யம் 2-56] என்ற கீதாபாஷ்ய வாக்யத்தில் க்ரோத$_4$லக்ஷணம உரைக்கப்பட்டது. அவ்விடத்தில் கீதார்த்த விவரணத்தில் விரிவு காண்க. (ஏநம்) 'ரஜோகு$_3$ணஸமுத்$_3$ப$_4$வ:' என்று பூர்வார்த்தத்தில கூறப்பட்டபடியே ரஜோகுணத்தால் உண்டாவதாய், "ஸ்வஸ்யா: ப்ரக்ருதே: ஸத்$_3$ருஸம் சேஷ்டதே" [3-33] என்னும் ஸ்லோகத்தில் சொல்லப்பட்ட அநாதிவாஸனையினால் இவனுக்கு இயற்கையாகவே ஏற்பட்டிருப்பதான இக்காமத்தை. (இஹ) இந்த ஜ்ஞானயோக விஷயத்தில். ஞானயோகம் நழுவ இடமுள்ளது என்பதை விவரிக்கும் பிரகரணமாகையாலே, இந்த இஹஸப்தம் ஞானயோகத்தைக் குறிப்பதாகக் கொள்வதே பொருத்தம். (ஏநம் இஹ வைரிணம் வித்$_3$தி$_4$) இக்காமத்தை ஞானயோகத்துக்கு விரோதியென்று அறிவாயாக. விடாமுயற்சியையுடைய விஸ்வாமித்ரரையே, காமமாகவும் க்ரோத$_4$மாகவும் நிற்குமிது பல தடவை தவத்தைக் கெடுத்திருக்கிறதென்றால், ஸாமாந்யாதி$_4$காரிகளுக்கு இது ஜ்ஞாநயோக விரோதி$_4$யாகுமென்பதைச் சொல்லவும் வேண்டுமோஎன்று கருத்து. 37.

धूमेनाव्रियते वह्निर्यथाऽऽदर्शो मलेन च।
यथोल्बेनावृतो गर्भस्तथा तेनेदमावृतम्॥ ३८॥

38. தூ4மேநாவ்ரியதே வந்ஹிர் யதா2தா3ர்ஶோ மலேந ச।
யதோ2ல்பே3நாவ்ருதோ க3ர்ப4ஸ் ததா2 தேநேத3
மாவ்ருதம் ||

**வந்ஹி :–** *அக்னியானது,* **யதா2 தூ4மேந ஆவ்ரியதே—** *எப்படிப் புகையால் மூடப்படுகிறதோ,* **ஆத3ர்ஶ:–***கண்ணாடி,* **(யதா2)ச மலேந (ஆவ்ரியதே)**–*எப்படி அழுக்கால் மூடப்படுகிறதோ,* **க3ர்ப4:–** *கருவானது,* **யதா2(ச) உல்பே3ந**—*எப்படிக் கருப்பையால்,* **ஆவ்ருத:–** *மூடப்பட்டுள்ளதோ,* **ததா2**–*அப்படியே,* **தேந**—*இக்காமத்தால்,* **இத3ம்**—*இச்சேதந ஸமூஹம்,* **ஆவ்ருதம்**—*மூடப்பட்டுள்ளது.*

---

**31. தூமத்தா லங்கி சுணையழுக்காற் கண்ணாடி
காமக் கருவுற்பக் கட்டதனா—லேமத்துச்
சூழ்வுற்ற தென்னவே சூழப்பட்டிங்கதனாற்
றாழ்வுற்ற திச்செந்துத் தான்.**

**தூமத்தால் அங்கி**-*புகையால நெருப்பும்,* **சுணை அழுக்கால் கண்ணாடி**—*சுணை அழுக்கு முதலானவற்றால் கண்ணாடியும்,* **காமக்கரு**-- *ஆண் பெண் காமத்தால் உண்டான கர்ப்பம்,* **உற்பக்கட்டு அதனால்**– *கருப்பையாகிற கட்டினாலும்,* **ஏமத்து சூழ்வுற்றது என்னவே**– *நன்றாக மூடப்பட்டிருப்பதுபோலே,* **இச்செந்துதான்** — *இந்தச் சேதனவஸ்துவானது,* **இங்கு**– *இந்த ஸம்ஸார மண்டலத்தில்,* **அதனால்**—*(முற்கூறிய) காமத்தால்,* **சூழப்பட்டு**—*மூடப்பட்டு,* **தாழ்வுற்றது**-- *தாழ்வை அடைந்துள்ளது.*

---

38. ஞானயோகத்துக்குக் காமம் எப்படி விரோதியாயிருக்கிறது என்பதை இரண்டு ஶ்லோகங்களாலே விவரிக்கிறான். (யதா2 தூ4மேந வந்ஹி: ஆவ்ரியதே) எப்படிப் புகையாலே அக்னியானது சூழப்படுகிறதோ; அப்படியே காமத்தால் இந்தச் சேதநஸமூஹம்

॥ भा ॥ यथा धूमेन वह्निरात्रियते; यथाऽऽदर्शो मलेन यथा चोल्बेनावृतो गर्भः; तथा तेन—कामेन इदं जन्तुजातमावृतम् ॥ ३८ ॥

---

சூழப்பட்டுள்ளது என்று கடைசிப்பாதத்தோடு அந்வயித்துக் கொள்ளவேணும். மற்றஇரண்டு திருஷ்டாந்தங்களிலும் இப்படியே. மூன்று திருஷ்டாந்தங்கள் எதற்கு? எனில்: மூன்று திருஷ்டாந்தங்களும் மூன்றுகருத்துக்களைத்தெரிவிக்கின்றனவாகையாலே மூன்றும் வேணும். புகையெப்படிநெருப்பினல் உண்டாகி, அத்துடன் எப்போதும கூடியிருக்கிறதோ, அப்படியே காமமும் அநாதி வாஸனையாலே உண்டாகி, அவ்வாஸனையையுடைய சேதனரோடு எப்போதும் கூடியிருக்கிறது என்னும் கருத்தைக் காட்டுகிறது இந்த முதல் திருஷ்டாந்தம். (யத₂ா ச மலேந ஆதர்₃ஶ: ஆவ்ரியதே) சகாரத்தினல் யத₂ாஶப்தத்தையும, 'ஆவ்ரியதே' என்பதையும் இங்கும அநுஷங்கம் செய்து கொள்ளவேண்டும என விளங்குகிறது. எப்படிக் கண்ணுடியானது அழுக்கினல் சூழப்படுகிறதோ; கண்ணுடியில் அழுக்கை அடிக்கடி துடைத்தாலும், காற்றடிப்பது முதலான காரணங்களாலே மறுபடியும் மறுபடியும் அழுக்கு சேருவதுபோலே, காமத்தை எவ்வளவுதான கழற்றினலும், விஷயத₃ர்ஶனம முதலான காரணங்களாலே மறுபடியும் மறுபடியும் அது வந்து சேரும் என்று காட்டுகிறது இவ்விரண்டாவது திருஷ்டாந்தம். (யத₂ா உல்பே₃ந க₃ர்ப்ப₄: ஆவ்ருத:) தாயின் வயிற்றிலிருககும் கருவானது எப்படிக கருப்பையால் சூழப்பெற்றுள்ளதோ. கருவானது தன் இச்சையாலே கருபபையாகிற ஆவரணத்தை நீக்கிக்கொள்ள முடியாததுபோலே, இச்சேதனனும் காமத்தைத் தன இச்சையாலே நீக்கிக் கொள்ள முடியாது என்று காட்டுகிறது இந்த மூன்ருவது திருஷ்டாந்தம். (தத₂ா தேந இத₃ம் ஆவ்ருதம்) அப்படியே காமத்தால் இச்சேதனஸமூஹம் சூழப்பட்டுள்ளது. முன் ஶ்லோகத்தில் கோபமாகப் பரிணமிப்பதாக எடுக்கப்பட்ட காமமே, மேல் ஶ்லோகங்களில் 'காமரூபேண' 'காமரூபம்' என்று எடுக்கப்படுகையாலே, இடையிலுள்ள 'தேந' என்னும் பதத்தாலும் கோபம் எடுக்கப்படாமல், இக்காமமே எடுக்கப்படுகிறது என்று கொள்வதே தக்கது. 'இத₃ம்' என்னும் பதம் அசித்தைக் குறிப்பதில் ஔசித்யமில்லை. 'சேதனரனைவரையும் காமம் சூழ்ந்திருக்கையாலே ஞானயோகத்தை அனுஷ்டிப்பது அரிது' என்று கூறுவதில் பிரகரணஸ்வாரஸ்யமுள்ளதாகையாலும், 'ஆவ்ருதம் ஜ்ஞாநமேதந' என்று அடுத்த ஶ்லோகத்தில் கூறப்படும் ஜ்ஞானத்தை முன் கூட்டியே

आवरणप्रकारमाह—

आवृतं ज्ञानमेतेन ज्ञानिनो नित्यवैरिणा॥
कामरूपेण कौन्तेय दुष्पूरेणानलेन च॥३९॥

39. ஆவ்ருதம் ஜ்ஞாநமேதேந ஜ்ஞாநிநோ நித்யவைரிணா।
காமரூபேண கௌந்தேய து₃ஷ்பூரேண அநலேந ச ॥

கௌந்தேய-குந்தீ புத்திரனே! து₃ஷ்பூரேண—அடைய முடியாத விஷயங்களை ஆசைப்படுவதும், (அநலேந—அடையக் கூடிய விஷயங்களிலும்) போதும் என்னும் நிலையில்லாததும், நித்யவைரிணா-(அறிவுக்கு) என்றும் சத்துருவாயிருப்பதுமான, ஏதேந காமரூபேண—காமம் என்னும் இதனால், ஜ்ஞாநிந: ஜ்ஞாநம்—அறிவையே இயல்வாகக்கொண்ட ஜீவனுடைய அறிவு, ஆவ்ருதம்—மறைக்கப்பட்டுள்ளது.

---

'இத₃ம்' என்று எடுப்பனதக்காட்டிலும, லோகப்ரஸித்தமான சேதந ஸமூஹத்தை அப்பதத்தால் எடுப்பதே பொருந்துமாகையாலும், 'இத₃ம்' ஶப்தம் சேதநஸமூஹத்தையே குறிக்கிறது,

"அவித்₃யா கர்மஸம்ஜ்ஞாऽந்யா த்ருதீயா ஶக்திரிஷ்யதே।
யயா க்ஷேத்ரஜ்ஞஶக்திஸ் ஸா வேஷ்டிதா ந்ருப ஸர்வக₃ா॥"
[வி-பு 6-7-62]

[அரசனே! அவித்யையென்றும், கர்மம் என்றும் கூறப்படும் பொருள் மூன்றாவது விஷ்ணுசக்தியாகும். இதனால் எங்கும் பரவியுள்ள ஜீவஶக்தியானது சூழப்பட்டுள்ளது.] என்றவிடத்தில் கர்மம் சேதனஸமூஹத்தைச் சூழ்ந்துள்ளது என்று கூறியதுபோலே, இங்கு காமம் சேதனஸமூஹத்தைச் சூழ்ந்துள்ளது என்று கூறத் தட்டில்லையன்றோ. ஆத்மாவைக் காமம் எப்படிச் சூழமுடியும்? எனில்: கர்மத்தினுலுண்டான சரீரத்தோடு சேர்ந்துள்ள ஆத்மாவைச் சூழமுடியுமாகையாலே குறையில்லை. இத₃ம் என்னுமிடத்தில் நபும்ஸகப்ரயோக₃ம் ஸாமாந்யே நபும்ஸகமாகையாலே, சேதந ஸாமாந்யத்தை இப்பதம் குறிக்கிறது. இக்கருத்தாலேயே இத₃ம் ஶப்தத்துக்கு பாஷ்யமிடும்போது ஜந்துஜாதமெனறருளினர் பாஷ்யகாரர். 38.

॥भा॥ अस्य जन्तोः ज्ञानिनो ज्ञानस्वभावस्यात्मविषयं ज्ञानमेतेन—कामाकारेण विषयव्यामोहजननेन नित्यवैरिणा आवृतम्; दुष्पूरेण—प्राप्त्यनर्हविषयेण, अनलेन च—पर्याप्तिरहितेन ॥ ३९ ॥

32. மன்னறிவினுக்கென்றும் வைரியாய்க் காமமெனு
மன்னவுரு மேவியதா யாங்கனைத்துந்—துன்னவிடும்
போதுநிறை யாதமையாப் பொல்லாங் கிதனுலே
மீதுணர்வு சூழ்ச்சியுறும் மிக்கு.

**மன்னு அறிவினுக்கு என்றும் வைரியாய்.**-*நிலையாயிருக்கும் அறிவுக்கு எப்போதும் சத்துருவாய்,* **காமம் எனும் அன்ன உரு மேவியதாய்**—*காமம் என்னும் முற்கூறிய நிலையை அடைந்திருப்பதாய்.* **துன்ன இடும்போதும்**—*நிறைய விஷயங்களை உணவாக இடும்போதும்.* **நிறையாது**-(*வயிறு*) *நிறையாது.* **அமையா**-'*போதும்*' *என்னும் நிலை ஏற்படாததான.* **பொல்லாங்கு இதனுலே**-*இத்தீய பொருளாலே* **மீதுணர்வு**—*பெருமையுடையதான ஆத்மாவைப்பற்றிய அறிவு.* **மிக்கு சூழ்ச்சி உறும்**—*மிகவும் சூழப்பட்டு உள்ளது.*

39. முன் ச்லோகத்தில் காமம் ஆத்மவஸ்துவை மறைக்கிறது என்ருன். இங்கு அவ்வாத்மவஸ்துவின் அறிவை மறைப்பதன்மூலமே அது ஆத்மாவை மறைக்கிறது என்கிருன். ஆகையாலே புநருக்தியில்லை. 'காமத்திஞல் இது மறைக்கப்பட்டது' என்று முன் ஶ்லோகத்தில் கூறப்பட்டது. 'எது மறைக்கப்பட்டது?' என்பதை ப்ரகரணம் முதலானவற்ருல் அறியலாமாகையாலே, 'எப்படி மறைக்கப்பட்டது' என்னும் கேள்விக்கு பதிலாக இந்த ஶ்லோகத்தைக் கொள்வதே உசிதம். (ஜ்ஞாநிந: ஜ்ஞாநம்) ஞானத்தை இயல்வாகவுடைய ஜீவனின் அறிவு. இங்கு ஞானியென்று ஜ்ஞாநயோகம் கைவந்தவனைக் கூறுவது ஒட்டாது. அவனுடைய ஞானமானது காமத்தால் மறைபடக் கூடியதல்லவே. ஆகையாலே முன் ஶ்லோகத்திற்போலே சேதனஸாமாந்யத்தைக் குறிப்பதாகக் கொள்வதே உசிதம். 'ஜ்ஞாநீ' என்ற பதத்தில் 'இநிச்' ப்ரத்யயம் இச்சேதனன் இயல்பாகவே அறிவுடையவன் என்றும், காமம் இவ்வறிவை மறைப்பது ஔபாதி$_4$கம் என்றும் காட்டுகிறது. (ஜ்ஞாநம் ஆவ்ருதம்) ஆத்ம விஷயஜ்ஞானமானது மறைக்கப்பட்டுள்ளது. இங்கு பொதுவாக ஜ்ஞாநமென்றிருந்தாலும், சப்தாதி விஷய ஜ்ஞானம் இந்த ஸம்ஸாரி ஜீவனுக்கு மறைக்கப்படுவதில்லையாகை

யால், 'ஆத்ம விஷயஜ்ஞானம்' என்று பொருள்கொள்வதே தகும். (ஏதேந காமரூபேண ஆவ்ருதம) முன் ஶ்லோகங்களில் கூறப்பட்ட காமத்தாலே மறைக்கப்பட்டுள்ளது. காமரூபமப்தமானது இஷ்டப் படி உருவெடுத்துக் கொள்வதைக் குறிப்பதாக உலகில் பிரஸித்தமா யினும், இங்கு, அதைச் சொல்லுவதில் பயனில்லாமையாலும், 'ஏதேந' என்று முன் ஶ்லோகத்தில் கூறப்பட்டதாக விசேஷித் திருக்கையாலும், முன ஶ்லோகத்தில் கூறப்பட்ட காமம் எனனும் நிலையை அடைந்த அறிவையே குறிக்கிறது. ஓரறிவு மற்றோர றிவை மறைக்கமுடியுமோ ? எனில்: அறிவானது சூழ்நிலைக் கேற்பப் பல நிலைகளை அடைகின்றது. அதில் விஷயங்களில் மிகுந்த ஈடுபாட்டை விளைக்கும் காமம் என்னும் நிலையை அடையும்போது, ஆத்மாவைப்பற்றிய அறிவாயிருக்கும் நிலை அடியோடு அழிந்து விடுகிறது. இதுவே காமம் ஆத்மாவைப்பற்றிய அறிவை மறைக் கிறது என்று கூறபபடுகிறது. (நித்யவைரிணா) ஆத்மஸாக்ஷாத் காரம் ஏற்படும் வரையில் அநாதிகாலமாக ஆத்மஜ்ஞானத்திற்கு இக்காமம் விரோதியாயிருககிறது என்று கருத்து. 'நித்யஸம்ஸாரி கள்' என்று சிலரை ஒபபுககொள்ளும் பக்ஷத்தில் முற்கூறியபடி நித்யஶப்தத்தை ஸங்கோசப்படுத்தாமல் அவர்களுக்கு ஆதியந்த மில்லாமல் எப்போதுமே விரோதியாயிருக்கிறது காமம என்று கொள்ளலாம். (து₃ஷ்பூரேண) அடையமுடியாத பொருள்களை ஆசைப்படுவதே இதன் இயல்வாயிருக்கையாலே, நிறைவிக்க முடி யாதது இக்காமம் என்று கருத்து. (அநலேந ச) அடையக்கூடிய பொருள்களில் எதையிட்டாலும் 'போதும்' என்னும் நிலை ஏற்படாதது இக்காமம் என்று கருத்து.

" த்ருஷ்ணை க₂நிரக₃ாதே₄யம் து₃ஷ்பூரா கேந பூர்யதே|
யா மஹத்₃பி₄ரபி க்ஷிப்தை: பூரணைரேவ க₂ந்யதே||"

[நிறைவிக்கமுடியாத ஆழமுடைய ஆசையாகிற பள்ளத்தை எவ னால்தான் நிறைவிக்கமுடியும் ? எத்தனை பெரிய பொருளை இட்டா லும், இப்பள்ளம் நிறைவிக்கப்படாமல் வெட்டப்படுவதாயன்றோ இருககிறது.] என்று சொல்லப்படுகிறதன்றோ. அன்றிக்கே, அநலஶப்தத்திற்கு நெருப்பென்றே பொருள்கொண்டு, 'எத்தனை விரகிட்டாலும் போதாத பெரு நெருப்பாயிருக்கும் காமத்தாலே' என்று காமத்தையே நெருப்பாக உபசரிக்கிறதாகவுமாம். ஆக, இவ்விரண்டு ஶ்லோகத்தாலும், ஆத்மஜ்ஞானத்தை மறைப்பதன் மூலம் ஞானயோகத்துக்குக் காமம விரோதியாயிருக்கிறது என்று நிருபிக்கப்பட்டதாயிற்று. 39.

कैरुपकरणैरयं काम आत्मानमधितिष्ठतीत्यत्राह—
इन्द्रियाणि मनो बुद्धिरस्याधिष्ठानमुच्यते ।
एतैर्विमोहयत्येष ज्ञानमावृत्य देहिनम् ॥ ४० ॥

40. இந்த்₃ரியாணி மநோ பு₃த்₃தி₄ ரஸ்யாதி₄ஷ்டா₂ந முச்யதே ।
ஏதைர் விமோஹயத்யேஷ ஜ்ஞாநமாவ்ருத்ய தே₃ஹிநம் ॥

**அஸ்ய**-*இக்காமத்திற்கு*, **இந்த்₃ரியாணி**-*இந்திரியங்களும்*, **மந:**-*மனமும்*, **பு₃த்₃தி₄:**-*(விஷயாநுபவத்தில்) உறுதியும்*, **அதி₄ஷ்டா₂நம்**-*(ஆத்மாவைப்) பற்றிநிற்பதற்கு உபகரணமாக*, **உச்யதே**-*கூறப்படுகிறது*. **ஏஷ:**-*இக்காமம்*, **ஏதை:**-*இந்திரியங்கள், மனம், உறுதி என்றும் இம்மூன்று உபகரணங்களாலும்*, **ஜ்ஞாநம்**-*(ஆத்மஸ்வரூபத்தைப்பற்றிய) உண்மையறிவை*, **ஆவ்ருத்ய**-*மறைத்து*, **தே₃ஹிநம்**-*சரீரத்தோடுகூடிய ஜீவனை*, **விமோஹயதி**-*பலவகையில் மயங்கச்செய்கிறது*.

---

33. புலன்கண் மனமதுவாம் புத்திநிலை யாகு
மலங்கொளிதற் கென்பர் மதித்தோர்—சலங்கிளரு
மின்னவிது தானிவற்ருலீங்கிவனைத் தான்மயக்கு
மன்னறிவு தன்னை மறைத்து.

**மதித்தோர்**—*அறிவாளிகள்*, '**மலங் கொள் இதற்கு**—*தாழ்ந்த விஷயங்களை விழுங்கும் இக்காமத்திற்கு*, **புலன்கள்**—*இந்திரியங்களும்*, **மனம் அதுவாம்**—*அவ்விந்திரியங்களை நியமிக்கும் மனமும்*, **புத்தி**—*(விஷயாநுபவத்தில்) உறுதியும்*, **நிலையாகும்**—*(ஆத்மாவைப்) பற்றி நிற்பதற்கு உபகரணங்களாகும்*' **என்பர்**—*என்று கூறுவர்*; **சலம் கிளரும் இன்ன இது தான்**—*தோஷம் பொங்கியெழும் இத்தகைய இக்காமமே*, **ஈங்கு**—*சரீரத்தோடு இவன் கூடியிருக்கும் நிலையில்*, **இவனைத் தான்**—*இந்த ஜீவனையே*, **இவற்ருல்**—*இந்திரியங்கள், மனம், உறுதி என்னும் இம் மூன்று கருவிகளாலும்*, **மன் அறிவு தன்னை மறைத்து**—*நிலையான ஆத்மாவைப்பற்றிய அறிவை மறைத்து*, **மயக்கும்**—*மயங்கச் செய்யும்*.

||भा|| अधितिष्ठत्येभिरयं काम आत्मानमितीन्द्रियाणि मनो बुद्धिरस्याधिष्ठानम्; एतैरिन्द्रियमनोबुद्धिभिः कामाधिष्ठानभूतैर्विषय-

40. காமம் ஞானத்தை மறைப்பதன் மூலமே ஆத்மாவை மறைக்கிறது என்று சென்ற ஶ்லோகத்தில் கூறப்பட்டது. பின் ஶ்லோகங்களில் காமத்தை வெல்லும் வழியை உபதேசிப்பதற்காக, இக்காமம் ஆத்மாவை எவ்வுபகரணங்களாலே பற்றி நின்று ஞானத்தை மறைக்கிறது என்பதை உபதேசிக்கிறுன் இந்த ஶ்லோகத்தில. (இந்த்₃ரியாணி மந:) மனத்தைத் தனியே எடுக்கையாலே, கோ₃பு₃லீவர்த்த₃ந்யாயத்தாலே இங்கு இந்த்₃ரியஶப்தம வெளி இந்திரியங்களை மாத்திரம் குறிக்கிறது. உள்ளிந்திரியமான மனம் வெளி இந்திரியங்களை ஆட்டிப்படைக்கையாலே அதைத் தனியே எடுக்கிறது. "ஏதஸ்மாத் ஜாயதே ப்ராணோ மந: ஸர்வேந்த்₃ரியாணி ச" [இப்பரம்பொருளிடமிருந்தே ப்ராணன்களும், மனமும், எல்லா இந்திரியங்களும் உண்டாகின்றன.] என்ற ஶ்ருதியிலும் இக்கருத்தாலேயே மனம் இந்திரியங்களைக்காட்டிலும் தனியே எடுக்கப்பட்டதன்றோ. (பு₃த்₃தி₄:) பொதுவாக புத்திசப்தம அறிவைக்குறிக்கக் கூடியதாகிலும், இங்கு காமத்துக்கு உபகரணமாக எடுக்கையாலே, 'விஷயங்களை அனுபவிக்க வேணும' என்னும் உறுதியாகிற பு₃த்₃தி₄ விஶேஷத்தைக் குறிக்கிறது. (அஸ்ய) முன் ஶ்லோகங்களில, 'ஏஷ:' 'தேந' 'ஏதேந காமரூபேண' என்று குறிக்கப்பட்ட காமத்திற்கு. (அதி₄ஷ்டா₂நம் உச்யதே) "அதி₄திஷ்ட₂த்யேபி₄: அயம காம: ஆத்மாநம" [இவ்விந்திரியமநோ புத்திகளாலே இக்காமம ஆத்மாவைப் பற்றி நிற்கிறது] என்னும் கரணவ்யுத்பத்தியாலே, காமம் ஆத்மாவைப்பற்றி நிற்பதற்குக் கருவிகளாயிருப்பவற்றை அதி₄ஷ்டா₂ந ஶப்தம் குறிக்கிறது. காமம் ஆத்மாவை அதி₄ஷ்டி₂க்கை (பற்றிநிற்கை) யாவது என? எனில்: காமம் தனக்கு வசப்படாமலிருந்த இந்த ஜீவனை வெற்றிகொண்டு தனக்கு வசப்படுத்துகையே இங்கு அதி₄ஷ்டி₂க்கை எனப்படுகிறது. 'இப்படிக் காமம இந்த ஜீவனைத் தன் வசப்படுத்துகைக்குக் கருவிகளாயிருப்பவை இவ்விந்திரியமநோ புத்திகள்' என்று அறிவாளிகளால் கூறப்படுகிறது என்பது பூர்வார்த்த₄த்தின் திரண்டபொருள். அதி₄ஷ்டா₂ந ஶப்தத்திற்கு 'இருப்பிடம்' முதலான வேறு பொருள்களும் உண்டாயினும், முன் பின் பிரகரணங்களுக்கு அவை பொருந்தாவாகையாலும், உத்தரார்த்தத்தில், 'ஏதைர் விமோஹயத்யேஷ:' என்று இந்திரியமநோ புத்திகளைக் காமம் ஆத்மாவை மயக்கவுதவும் கருவிகளாகவே கூறுகை

प्रवर्णैर्देहिनं प्रकृतिसंसृष्टं ज्ञानमावृत्य विमोहयति—विविधं मोहयति, आत्मज्ञानविमुखं विषयानुभवपरं करोतीत्यर्थः॥ ४०॥

तस्मात्त्वमिन्द्रियाण्यादौ नियम्य भरतर्षभ।
पाप्मानं प्रजहि ह्येनं ज्ञानविज्ञाननाशनम्॥ ४१॥

41. தஸ்மாத் த்வமிந்த்₃ரியாண்யாதௌ₃ நியம்ய ப₄ரதர்ஷப₄।
பாப்மாநம் ப்ரஜஹி ஹ்யேநம் ஜ்ஞாநவிஜ்ஞாந நாஶநம்॥

**ஹே ப₄ரதர்ஷப₄**–*பரதகுலத்தலைவனே!* **தஸ்மாத்ஹி**–*முற்கூறியபடி ஞானயோகம் செயற்கரியதாகையாலேயே.* **த்வம்**–*(ப்ரக்ருதி ஸம்பந்தமுடையவனுகையாலே இந்திரியவ்யாபாரத்திலேயேஇயற்கையில் இழியும்) நீ.* **ஆதௌ₃**–*மோக்ஷோபாயத்தைத் தொடங்கும்போதே.* **இந்த்₃ரியாணி**–*இந்திரியங்களை.* **நியம்ய**—*(கர்மயோகத்திலேயே) ஈடுபடுத்தி.* **ஜ்ஞாந விஜ்ஞாந நாஶநம்**—*ஆத்மாவின் ஸ்வரூபஸ்வபாவங்களைப் பற்றிய அறிவை அழிப்பதான.* **ஏநம்**—*இக்காமரூபமான.* **பாப்மாநம**–*எதிரியை* **ப்ரஜஹி**–*அழிப்பாயாக.*

---

யாலும், கரணவ்யுதபத்தியே கொள்ளவேண்டும். (ஏதை:) காமத்துக்கு அதிஷ்டானமான இவ்விந்திரிய மநோபுத்திகளாலே, (விமோஹயதி) விஷயங்களில் ஈடுபாட்டை விளைப்பதன் மூலம் விதவிதமாக மயங்கச் செய்கிறது. "அநாத்மந்யாத்ம பு₃த்₃தி₄ர் யா சாஸ்வே ஸ்வமிதி யா மதி:" [தானல்லாததில் தான் என்னும் அறிவும், தன்னுடையதல்லாததில் தன்னுடையது என்னும் அறிவும்] என்று சொல்லப்பட்ட தே₃ஹாத்மப்₄ரமம், ஸவத்ந்த்ராத்மப்₄ரமம் முதலான விதவிதமான மயக்கங்களை விஶதம் காட்டுகிறது (தே₃ஹிநம் விமோஹயதி) ப்ரக்ருதிகார்யமான தேஹத்தோடு கூடியிருக்கையாலே, இந்திரியங்களுக்கு வசப்படுகை இவனுல் தவிர்க்கவொண்ணுதென்றும், முக்குணங்களுக்கு இவன்வசப்பட்டே தீருவான் என்றும் உணர்த்தப்படுகிறது. (ஏஷ: ஜ்ஞாநமாவ்ருத்ய விமோஹயதி) இக்காமமானது தேஹாத்மப்₄ரமம் ஸ்வதந்த்ராத்மப்₄ரமம் முதலானவற்றை இவ்வாத்மாவுக்கு விளைத்து, அதன்மூலம் ஆத்மஜ்ஞானத்தை மறைத்து, இனியதான தன ஆத்மாவில் இனியதல்லஎன்னும் எண்ணத்தையும், இனியவையல்லாத ஶப்தாதிஷயங்களில்இனியவை என்னும் எண்ணத்தையும் விளைத்து இவனை ஆத்மஜ்ஞானமற்றவனுகவும் விஷயாநுபவத்தில் ஈடுபட்டவனுகவும் செய்துவிடும் என்று கருத்து.

॥भा॥ यस्मात्सर्वेन्द्रियव्यापारोपरतिरूपे ज्ञानयोगे प्रवृत्तस्यायं कामरूपश्शत्रुः विषयाभिमुख्यकरणेनात्मनि वैमुख्यं करोति, तस्मात्

34. ஆதலா னீபரதா வாதியிலே வைம்புலனேக்
காதி யுனதறிவு கட்டழித்து—மீதியலிப்
பாவத்தை நீக்கும் படிபா ரதுதன்ஞ
லாவத் தவைதரா வாங்கு

பரதா—*பரதகுலத்துதித்தவனே!* ஆதலால் - *முற்கூறிய படி ஞானயோகம் செயற்கரியதாகையால்,* நீ-*(பரக்ருதி ஸம்பந்தமுடையவனுகையாலே இந்திரியவ்யாபாரத்திலேயே இயற்கையில் இழியும்) நீ,* ஆதியிலே—*மோக்ஷோபாயத்தைத் தொடங்கும்போதே,* ஐம்புலனே-*ஐந்து ஞானேந்திரியங்களே யும்,* காதி-*(கர்மயோகத்தில்) ஈடுபடுத்தி,* உனது அறிவு கட்டழித்து மீது இயல் இப்பாவத்தை—*உன்னுடைய ஆத்ம ஜ்ஞானத்தை அடியோடு அழித்து உன்னை வெற்றிகொண்டு வரும் எதிரியான இக்காமத்தை,* நீக்கும் படி பார்—*அழிக்கும் வழியைக் காண்பாயாக.* அது தன்ஞல்—*இதை அழித்து விட்டால்,* ஆங்கு-*மோக்ஷோபாயாநுஷ்டானத்தில்,* ஆவத்து அவை தரா-*முற்கூறிய ஆபத்துக்கள் ஏற்படமாட்டா.*

---

41. காமம் ஆத்மாவை அதி₄ஷ்டிக்கும் உபகரணங்களாகச் சென்ற ஶ்லோகத்திற் கூறப்பட்ட இந்திரியமநோபுத்திகள் மூன்றும் ஞான விரோதம் செய்வதில் முந்தியதைக் காட்டிலும் பிந்தியது ப்ரதா₄னமானது என்று அடுத்த ஶ்லோகத்தில் சொல்ல முற்பட்டு, அதற்குப் பீடிகையாக, காமத்தை வெல்லுவதற்கு முதலில் இந்திரி யங்களை வெல்லவேண்டும் என்கிறுன் இந்த ஶ்லோகத்தில். (தஸ்மாத்) இதுவரையில் கூறிய காரணத்தால். அதாவது,-எல்லா இந்திரியவ்யாபாரங்களையும அடக்குவதை அபேக்ஷிக்கும் ஞான யோகத்தில் இழிந்தவனைக் காமமென்னும் இந்த சத்துரு, விஷயங் களில் ஈடுபாட்டை விளைப்பதன்மூலம் ஆத்மாவில் வெறுப்படையச் செய்கிறது என்று இதுவரையில் கூறிய காரணத்தால். (த்வம்) ப்ரக்ருதிகார்யமான சரீரத்தோடு ஸம்பந்தப்பட்டிருக்கையால், இந்திரியவ்யாபாரத்தில் இயல்வாகவே ஈடுபடும் நீ. (ஆதௌ₃)

प्रकृतिसंसृष्टतयेन्द्रियव्यापारप्रवणस्त्वमादौ — मोक्षोपायारम्भसमय एव, इन्द्रियव्यापार[ानु]रूपे कर्मयोगे इन्द्रियाणि नियम्य एनं ज्ञानविज्ञान-

மோக்ஷோபாயத்தைத் தொடங்கும்போதே. (இந்த்₃ரியாணி நியம்ய) உனக்குப்பள்ளமடையான இந்திரியவ்யாபாரரூபமாயிருக்கும் கர்ம யோகத்தில் இந்திரியங்களை ஈடுபடுத்தி. 'இந்த்ரியாணி நியம்ய' என்று, இந்திரியங்களைச் செயல்புரியாதபடி அடக்குவதை இங்கு கூறமுடியாது; 'ஆதௌ' என்று சொல்லப்படும் மோக்ஷோபாயத்தின் ஆரம்ப சமயத்தில் இந்திரியங்களை அடியோடு அடக்கமுடியா தாகையால். இவ்விஷயம் முன்னமேயும் விளக்கப்பட்டது. 'யஸ்த் விந்த்₃ரியாணி மநஸா' [3-7] என்று இப்ரகரணத்தின் உபக்ரமத்தில் இந்த்ரியங்களைக் கர்மயோகத்தில் ஈடுபடுத்துவதே இந்த்ரிய நியமனமாகக் கூறப்பட்டது. உபஸம்ஹாரமான இங்கும் இப்படிக் கொள்வதே உசிதம். (ஜ்ஞாநவிஜ்ஞாநநாஶநம் ஏநம்) ஆத்மாவைப் பற்றிய ஸ்வரூபஜ்ஞானத்தையும், விசேஷஜ்ஞானத்தையும் அழிக்கும் இக்காமத்தை. ஸ்வரூபஜ்ஞானமாவது,—ஸ்வரூபநிரூபகத₄ர்மங்களோடு கூடியதாக அறிவது; இங்கு ஆத்மஸ்வரூபத்தை நிரூபித்துத் தரும ப்ரத்யக்த்வம் (தனக்குப் பிரகாசிப்பதாயிருக்கை), ஜ்ஞாநத்வம் (தானே பிரகாசிப்பதாயிருக்கை) ஆநந்த₃த்வம (அநுகூலமாயிருக்கை) முதலான தன்மைகள் ஸ்வரூபநிரூபக த₄ர்மங்களாகும. விசேஷஜ்ஞானமாவது,–நிரூபிக்கப்பட்ட ஸ்வரூபத்தில் உள்ள மற்ற விஶேஷணங்களோடு கூடியதாக அறிகை; இங்கு, 'அணுவாயிருக்கை' 'நித்யமாயிருக்கை' 'அறிவுள்ளவனாயிருக்கை' 'அநுபவிப்பவனாயிருக்கை' 'செயல்புரிபவனாயிருக்கை' முதலிய தன்மைகள் அத்தகைய விஶேஷணங்கள். அன்றிக்கே ஜ்ஞாநவிஜ்ஞாநங்களை வேறுவிதமாகவும் கொள்ளலாம். அதாவது,—'தேஹத்தைக்காட்டிலும் வேறுபட்ட ஆத்மா ஒருவனிருக்கிறான' என்று அறிவதை (ஸ்வரூப) ஜ்ஞாநமாகவும், முற்கூறிய ப்ரத்யக்த்வம் முதலானவற்றோடும், அணுத்வம் முதலானவற்றோடும் கூடியதாக அறிவதை வி(ஶேஷ)ஜ்ஞானமாகவும் கொள்ளலாம். அன்றிக்கே முற்கூறிய தேஹாதிரிக்தத்வமுள்ளிட்ட எல்லாத் தன்மைகளையும் (ஸ்வரூப)ஜ்ஞாநமாகவும், இந்த ஞானத்தை விளைவிக்கும் சாஸ்திரத்தை விஜ்ஞானமாகவும கொள்ளலாம். இப்பக்ஷத்தில் ப்ரமாணப்ரமேயங்களிரண்டையுமழிப்பது காமம் என்றதாயிற்று. சாஸ்திரத்தைக் காமம் அழிப்பதாகக் கூறுவது, தனக்கு வசப்பட்டவர்களை சாஸ்திரத்தை மீறி நடக்கும்படியாகச் செய்வதன் மூலம் அதைப் பயனற்றதாக்குவதேயாகும். (ஏநம் பாப்மாநம் ப்ர

नाशनम्—आत्मस्वरूपविषयस्य ज्ञानस्य तद्विवेकविषयस्य च नाशनं पाप्मानं कामरूपं वैरिणं प्रजहि—नाशय ॥ ४१ ॥

ज्ञानविरोधिषु प्रधानमाह—

इन्द्रियाणि पराण्याहुरिन्द्रियेभ्यः परं मनः ।
मनसस्तु परा बुद्धिर्यो बुद्धेः परतस्तु सः ॥ ४२ ॥

---

ஜஹி) ஆத்மாவைப்பற்றிய ஜ்ஞாநவிஜ்ஞானங்களை அழிப்பதன மூலம் உனக்கு சத்துருவாயிருக்கும் இக்காமத்தை அழிப்பாயாக. இங்கு 'பாப்ம'ஶப்தத்தால் காமத்தைக் குறிப்பதாகக் கொள்வது எப்படியெனில்: இதற்கு விஶேஷணமான 'ஏநம்'என்னும் அந்வாதேஶத்தால், 'ஏஷ:' என்று சென்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட காமமே எடுக்கப்படுகிறதாகையால, பாப்மஶப்தம் காமத்தையே குறிக்கிறது. சாஸ்திரத்தால் நிஷேதிக்கப்பட்டிருபபதாய், அநிஷ்ட பலத்தைக் கொடுப்பதாயிருப்பது பாபம் எனப்படுகிறது. இங்கு சப்தாதி விஷயங்களைப்பற்றிய காமம சாஸ்திரத்தால் முமுக்ஷுவுக்கு நிஷேதிக்கப்பட்டுமிருக்கிறது; ஜ்ஞாநவிரோதியாயிருக்கையாலே ஜ்ஞாநவிஜ்ஞானங்களை அழிக்கையாகிற அநிஷ்டபலத்தைகொடுப்பதாயுமிருக்கிறது. ஆகையாலே இதைப் பாபம் எனனத்தட்டில்லை. (ப்ரஜஹி) மேலே, 'ஜஹி ஶத்ரும்' [3-43] என்றிருப்பதை யொட்டியும் இங்கும் பாப்மஶப்தத்தாலே எடுக்கப்பட்டதாய், அநிஷ்டத்தை விளைப்பதான காமத்தை சத்துருவெனறே கொள்ளவேண்டியிருப்பதையொட்டியும், 'ப்ரஜஹி' என்பதை 'ஹந–ஹிமஸாயாம்' என்னும் தாதுவின் லோட்–மத்யமபுருஷ ஏகவசநரூபமாகக் கொண்டு,'ஹிம்ஸிப்பாயாக' அல்லது 'அழிப்பாயாக' என்று பொருள்கொள்வது உசிதம். 'ஹி' என்னும் ப்ரஸித்தியைக் காட்டும்பதத்தை 'தஸ்மாத்' என்னும் பதத்தோடு சேர்த்து, ப்ரகரணத்தில் ப்ரஸித்தமாயுள்ள ஞானயோகத்தின் செயற்கரிய தன்மையைக் காட்டுகிறார் எனக் கொள்வது. இந்த ஸ்வாரஸ்யங்களில்லாமையாலே, 'ப்ரஜஹிஹி' என்று ஒரே பதமாகக் கொண்டு, 'ஓஹாக் த்யாகே' என்னும் தாதுவின் லோட்மத்யமபுருஷ ஏகவசநமாகக் கொண்டு 'கைவிடுவாயாக'என்று சங்கரர் பொருள் கொண்டிருப்பது அஸ்வரஸம். (பரதர்ஷப)உயர்குலத்திலுதித்தவனை நீ சாஸ்திர நிஷித்தமாய், அநிஷ்ட பலத்தையளிப்பதான இக்காமத்தை அழிக்கவேண்டாவோ? என்று கருத்து. 41.

42. இந்த்₃ரியாணி பராண்யஹு:ரிந்த்₃ரியேப்₄ய: பரம் மந:|
மநஸஸ்து பரா பு₃த்₃தி₄ர் யோ பு₃த்₃தே₄: பரதஸ்து ஸ: ||

இந்த்₃ரியாணி— *பத்து இந்திரியங்களும்,* பராணி— *(ஞானத்தைத் தடைசெய்வதில்) முக்கியமானவையாக,* ஆஹு:—*கூறுகின்றனர்;* இந்த்₃ரியேப்₄ய:—*இந்திரியங்களைக் காட்டிலும்,* மந:—*மனத்தை,* பரம (ஆஹு:)—*முக்கிய மானதாகக் கூறுகின்றனர்.* மநஸ:து—*மனத்தைக்காட்டிலும்,* பு₃த்₃தி₄:-*(விஷயாநுபவத்தில்) உறுதியானபுத்தி,* பரா—*முக்கியமானது;* ய: து பு₃த்₃தே₄: பரத:-*புத்தியைக்காட்டிலும் எது மேலானதோ,* ஸ: (காம:)—*அது காமமேயாகும்.*

---

35. புலன்கண்மே லாமென்பர் போதஞ் செறுக்க
வலங்கொண் மனமதன்மேன் மன்னும்—புலங்கிளரும்
புந்தியதின் மேலாகும் புந்திதனிற் காமந்தான்
குந்திசிறு வாபரமாக் கொள்.

குந்தி சிறுவா—*குந்தியின் பிள்ளையே!* போதம் செறுக்க—*ஆத்ம ஞானத்தைத் தடை செய்வதில்,* புலன்கள் மேலாம் என்பர்—*இந்திரியங்கள் முக்கியமானவை என்று கூறுவர்;* வலம் கொள் மனம்—*வலிமை மிக்க மனம்,* அதன் மேல் மன்னும் (என்பர்)— *அவ்விந்திரியங்களைக்காட்டிலும் முக்கிய மானவை எனக் கூறுவர்.* புலம் கிளரும் புந்தி—*விஷயங்களை அநுபவிக்க இழியும் உறுதியான அறிவு,* அதின் மேலாகும்—*அந்த மனத்தைக் காட்டிலும் முக்கியமாகும்.* புந்தி தனில்—*அந்த உறுதியான அறிவைக் காட்டிலும்,* காமம் தான்—*காமம் தன்னையே,* பரமாக் கொள்—*முக்கியமாக அறிவாயாக.*

---

42. இந்திரியம், மனம், புத்தி, காமம் என்ற நாலும் ஆத்ம ஜ்ஞானத்திற்கு விரோதம்செய்பவையென்றும், அவற்றில் முதல் மூன்றும்நாலாவதான காமத்திற்கு, ஆத்மஜ்ஞானத்தைத் தடுப்பதில் உபகரணமாயிருப்பவையென்றும், முதலாவதான இந்திரியங்களைக் கர்மயோகத்தில் ஈடுபடுத்துவதன் மூலம் காமத்தை ஜயிக்கவேண்டுமென்றும் முன் இரண்டு ஸ்லோகங்களில் கூறப்பட்டது. 'இப்படி

॥भा॥ ज्ञानविरोधे प्रधानानीन्द्रियाण्याहुः, यत इन्द्रियेषु विषयव्यापृतेषु आत्मनि ज्ञानं न प्रवर्तते। इन्द्रियेभ्यः परं मनः—इन्द्रियेषु उपरतेष्वपि मनसि विषयप्रवणे आत्मज्ञानं न संभवति।

---

இந்திரியங்களை அடக்கினால் மாத்திரம் போதாது; மநோ புத்திகளை யும் அடக்கினால்தான் காமத்தை அடக்க முடியும்' என்று அடுத்த ஶ்லோகத்தில் காட்டுவதற்காக, இந்திரியம், மனம், புத்தி, காமம் என்னும் நானகினுள் முந்தியதைக் காட்டிலும் பிந்தியது ஞான விரோதம் செய்வதில் முக்கியமானது என்று கூறுகிறான் இந்த ஶ்லோகத்தில்.(இந்த்₃ரியாணி பராணி ஆஹு:)ஆத்மஜ்ஞானத்தைத் தடைசெய்வதில் இந்திரியங்களை முக்கியமானவையாகக் கூறுகின்ற னர். இந்திரியங்கள் விஷயங்களில் ஈடுபட்டிருந்தால் ஞானம் ஆத்மவிஷயத்தில் செல்லாதாகையால் இப்படிக் கூறுகின்றனர் என்று கருத்து. (பராணி) ஆத்மஜ்ஞாந விஷயத்தில் பலருக்குத் தடைசெய்பவையாகையாலே பொதுவான விரோதிகளாயிருக்கும் தேசம, காலம் முதலானவற்றைக்காட்டிலும, குறிப்பிட்டு இவனுக்கே விரோதம் செய்கையாலே இந்திரியங்கள் இவனுக்கு முக்கிய விரோதி களாகக் கூறப்படுகின்றன என்று கருத்து அன்றிக்கே, ஸ்தூல மாய், அறியத்தக்கதாயிருக்கும் சரீரத்தைக் காட்டிலும், ஸூக்ஷ்மமாய், அறியத்தகாத அதீந்த்₃ரியப் பொருள்களாயிருக்கும இந்திரியங்கள் ஜ்ஞானத்தைத் தடைசெய்வதில் முக்கியமானவை என்று கூறுகிற தாகவுமாம். பரஸ்பத்த்திற்குக் காரணத்வம், வேறுபட்டிருக்கை முதலான பொருள்கள் இங்கு பொருந்தாவாகையாலே, 'முக்கிய மானவை' என்றே பொருள் கொள்ளவேண்டும். (ஆஹு:) மனு முதலான அறிவாளிகள் கூறுகின்றனர்.

''இந்த்₃ரியாணாம் ஹி ஸர்வேஷாம் யத்₃யேகம் க்ஷரதீந்த்₃ரியம்।
தேநாஸ்ய க்ஷரதி ப்ரஜ்ஞா த்₃ருதே: பாத₃ாதி₃வோத₃கம்॥''
[மநு 2-99]

[எல்லா இந்திரியங்களுள் ஏதாவது ஒரு இந்திரியம் ஶப்தாதி விஷ யங்களில் ஈடுபடத் தொடங்கினாலும், அதனால், இவனுடைய அறிவு முழுவதும் துருத்தியின் துவாரத்திலிருந்து ஒழுகும நீர்போல் அழி கிறது.] என்று ஶப்தாதி விஷயங்களில் ஈடுபடும் இந்திரியங்கள் இவ னுடைய ஆத்மஜ்ஞானத்தை அழிக்கும் எனக்கூறினாரன்றோ மனுவும்.

मनसस्तु परा बुद्धिः-मनसि वृत्त्यन्तरविमुखेऽपि विपरीताध्यवसायप्रवृत्तौ

---

(இந்த்₃ரியேப்₄ய: பரம் மந:) 'ஆஹு:' என்பதை இங்கும் கூட்டிக் கொள்வது: ஆத்மஜ்ஞானத்தைத் தடைசெய்வதில் இந்திரியங்களைக் காட்டிலும் மனம் முக்கியமானது என்று கூறுகின்றனர். ஏனெனில்: விஷயமில்லாமையாலோ, கட்டாயப்படுத்தி இந்திரியங்களைச் செயல் புரியாமல் செய்வதாலோ வெளி இந்திரியங்கள் அடங்கியிருந்தாலும், மனமானது விஷயங்களையே சிந்தித்துக்கொண்டு அவற்றில் ஈடுபட்டிருந்ததாகில் ஆத்மஜ்ஞானம ஏற்படாதன்றோ. இப்படி வெளியிந்திரியங்கள் அடங்கியிருக்கும் காலத்திலும், மனம் ஆத்மஜ்ஞானததைத் தடைசெய்கையால் இந்திரியங்களைக்காட்டிலும் மனத்தை முக்கியமானதாகக் கூறுகின்றனர் என்று கருத்து. (ஆஹு:) "வஶே க்ருத்வேந்த்₃ரிய க்₃ராமம் ஸம்யம்ய ச மநஸ்தத₂ா" [2-100] [இந்திரியஸமூஹத்தை வசப்படுத்தி, மனத்தையும் வசப்படுத்தி] முதலான விடங்களில மனுமுதலானோர் கூறியிருக்கின்றனர் எனறு கருத்து. (மநஸஸ்து பரா பு₃த்₃தி₄:) ஆத்மஜ்ஞானத்தைத் தடைசெய்யும் விஷயத்தில் மனத்தைக் காட்டிலும், 'ஶப்தாதி விஷயங்களை அனுபவிக்கவேணும' எனனும உறுதியே முக்கியமானதாகும. ஏனெனில், மனமானது ஶப்தாதிவிஷயங்களில் ஈடுபடாமலிருந்தாலும், முற்கூறிய உறுதியான புததியிருந்ததாகில் ஆத்மஜ்ஞானம ஏற்படாதன்றோ. இஙகு ஓராக்ஷேபம் எழக்கூடும்:—மனமானது விஷயாந்தரங்களில் அடியோடு ஈடுபடாமலிருந்ததாகில், அந்த விஷயாந்தரங்களைப்பற்றிய உறுதியான புத்தி எப்படி ஏற்பட முடியும்? மனத்தினாலே ஒரு விஷயத்தைப்பற்றி நின்றபின்பன்றோ 'இதை அனுபவிப்பேன்' அல்லது 'இதை அனுபவிக்கமாட்டேன்' என்னும் உறுதி ஏற்படும். ஆகையால் மனத்தைக்காட்டிலும் புத்தி முக்கியமானது என்று கூறியது ஒட்டாதே என்பது அவ்வாக்ஷேபம. இதற்கு ஸமாத₄ானமாவது—மநோவ்யாபாரத்தை அடியோடு அடக்கினவனலலனிவன்; எவ்வளவு முயன்றாலும் தடுக்கமுடியாததாய். விஷயாந்தரங்களிலேயே இயல்பாக மண்டி இழியச்செய்வதான நிலையை அடையாமலிருப்பவனேயிவன். இப்படி இவன் இந்நிலையை அடையாமலிருப்பது இவனுடைய முயற்சியாலல்ல; யத்₃ருச்சையாகவோ, தூக்கத்தாலோ, சோம்பலாலோ இவன் இந்நிலையை அடையாமலிருக்கிறானித்தனை. இந்த ரீதியில இவனுக்கு விஷயங்களில் ஈடுபாடு இல்லாமலிருந்தபோதிலும், மநோவ்யாபார

मत्यां ज्ञानं न प्रवर्तते। सर्वेषु बुद्धिपर्यन्तेषु उपरतेष्वपीच्छापर्याय:

---

மிருக்கிறபடியால், ஒரு தாழ்ந்த விஷயத்தை அனுபவிக்கவேணும் என்னும் உறுதியிருந்ததாகில், அவ்வுறுதியே இவனை அவ்விஷயத்தில் மண்டியிழியச் செய்துவிடும். ஆகையாலே ஆத்மஜ்ஞானத்தைத் தடுப்பதில் மனத்தைக்காட்டிலும விபரீதாத்₁யவஸாயமாகிற புத்தி (உறுதி) முக்கியமானது என்று கூறியது மிகபொருந்தும். துஸப த₃ம் இந்த ஆக்ஷேபஸமாதா₄னத்தையே காட்டுகிறது. அலலது புத்திக்குளள இவ்வேறுபாட்டைக் காட்டுகிறதாகவுமாம. (யோ பு₃த்₃தே₄:பரதஸ்து ஸ:) பு₃த்₃தே₄: (அபி)ய: பர: ஸ: (காம:) எனறு அத்₁யாஹாரம் செய்து அநவயிக்க வேணடும. முன் மூனறு பாதங களிலும் முதல் வேற்றுமைலேயியே பரஸப்தத்தைப் படிததிருக்கை யால இங்கும் 'ஸார்வவிப₄க்திகஸ் தஸில்' என்பதையொட்டி 'பரத:' என்பதை 'பர:' என்று முதல் வேற்றுமையாகவே கொள்ள வேண் டும். புத்தியைக்காட்டிலும (ஆத்மஜ்ஞானத்தைத் தடை செய்வதில்) முககியமானது காமமே என்றபடி. இந்திரியமநோபுத்திகள் விஷயங் களில் ஈடுபடாமல் அடஙகியிருந்தாலும், இச்சையெனப்படுவதாய் ரஜோகுணத்தால் உண்டாவதான காமம் இருந்ததாகில், அதுவே இவ்விந்திரிய மநோபுத்திகளைத்தான பற்றி நிற்கும் ஸப்தாதி விஷ யங்களிலேயே ஈடுபடுத்தி ஆத்மஜ்ஞானத்தைத் தடை செய்து விடு மாகையால், இந்திரியம் முதலிய மூன்றைக்காட்டிலும் காமமே முக்கியமானது என்று கருத்து. இந்திரியம், மனம், புத்தி ஆகிய மூன்றும் அடங்கியிருக்கும்போது ஸப்₃த₃ாதிவிஷயங்களில காமம் என்னும விருப்பம் எப்படி உண்டாக முடியும்? எனில்: அநாதி காலமாக இவன் செய்திருக்கும் கர்மமானது ரஜோகு₃ணத்தைத் தலைதூக்கச் செய்கிறது. அதனாலே மனம் கெட்டு விடுகிறது. அந்த மனத்தில் ப்ராசீநவாஸனையினாலே ஸப்தாதிவிஷயங்களைப்பற்றிக் காமமானது உண்டாகி விடுகிறது. ஆக, முற்கூறியவாறு இந்திரிய மநோ புத்திகள் அடங்கியிருந்தாலும் ரஜோகுணத்தால் மனத்தில் காமமுண்டாகக் குறையில்லை. இந்திரிய மநோ புத்திகள் மூன்றும் அடங்கியிருக்கும்போது, ரஜோகுணத்தால் விஷயங்களில் இச்சை உண்டானாலும, ஆத்மாவைப்பற்றிய இச்சையும் இவனுக்கு இருக் கிறதாகையாலே, அந்த இச்சை தனக்கனுகுணமாக ஆதம விஷயத் திலேயே இந்திரிய மநோ புத்திகளை ஈடுபடுத்தலாமே எனில்: ஆத் மேச்சை இருந்தபோதிலும, அது எப்போதாவது ஏற்படும அற்ப மான ஸத்வகுணத்தால் உணடாவது; விஷயேச்சையோவெனில்

நெடுநாளாக ஏராளமாகச் சேர்ந்து கிடக்கும் கர்மத்தாலுண்டாவ தாய், எப்போதும் தொடர்ந்து வருவதான வலிமைமிக்க ரஜோ குணத்தாலுண்டாவது. ஆகையால், ஆத்மேச்சையானது தனக்கனு குணமாக ஆத்மத₃ர்ஶனத்தில் உறுதியை உண்டுபண்ணுவதற்குள் அதிலும் வலிமைமிக்க விஷயேச்சை தனக்கனுகுணமாக விஷயங் களில் உறுதியை உண்டுபண்ணி விடுகிறது என்று கருத்து. இத்த கைய காமமானது, ஶப்தாதிவிஷயங்களில் உறுதியாகிற புத்தியை விளைத்து, மனத்தையும் இந்திரியங்களையும் அவ்விஷயங்களில் மண்டியிழியச் செய்கிறதாகையால் புத்திவரையிலுள்ள மூன்றினும் இதுவேமுக்கியமானது என்னக் குறையில்லை. காமத்துக்குள்ள இந்த ப்ராத₄ாந்யத்தையே காட்டுகிறது கடைசிப்பாதத்திலுள்ள துஶப்தம்.

இங்கு இந்த ஶ்லோகத்தின் பொருளைப்பற்றி ஓர் ஆக்ஷேப ஸமாத₄ானம் அறியத்தக்கது. ஆக்ஷேபமாவது,—

"இந்த்₃ரியேப்₄ய: பரா ஹ்யர்த்த₂ா அர்த்தே₂ப்₄யயஶ்ச பரம் மந:|
மநஸஶ்ச பரா பு₃த்₃தி₄ர் பு₃த்₃தே₄ராத்மா மஹாந் பர: ||
மஹத: பரமவ்யக்தம் அவ்யக்தாத புருஷ: பர: |
புருஷாந் ந பரம் கிஞ்சித் ஸா காஷ்ட₂ா ஸா பரா க₃தி: ||"

[கட 3-10; 11]

[ஜீவனால் வசீகரிக்கத்தக்கவைகளுள் இந்திரியங்களைக்காட்டிலும் ஶப்த₃ாதி₃களான விஷயங்கள் மேலானவை; விஷயங்களைக்காட்டி லும் மனம் மேலானது; மனத்தைக்காட்டிலும் புத்தி மேலானது; சிறந்தவனான ஆத்மா புத்தியைக்காட்டிலும மேலானவன; சிறந்த வனான அவ்வாத்மாவைக்காட்டிலும் ப்ரக்ருதிகார்யமான சரீரம் மேலானது; சரீரத்தைக்காட்டிலும் புருஷனெனப்படும் பரமாத்மா மேலானவன். அப்புருஷனைக்காட்டிலும மேலானதொன்றுமில்லை; அவனே மேலான ப்ராப்யப்ராபகங்களாயிருப்பவன்.] என்று கட வல்லியில் வஶீகார்யபரம்பரை சொல்லப்படுகிறது. இம்மந்திரங்கள 'ஆநுமாநிகமப்யேகேஷாம்' [ப்ர-ஸூ 1-4-1] என்று தொடங்கும் அதிகரணத்தில் வியாக்கியானம் செய்யப்பெற்றன. இம்மந்திரங்களே இங்கு உபப்₃ரும்ஹணம் செய்யப்படுவதாக விளங்குகிறது. இந் திரியங்களுக்கும் மனத்திற்கும் நடுவில் ஶ்ருதியில் காணப்படும் விஷயங்கள் இந்த ஶ்லோகத்தில் இல்லாமையாலும் 'மஹத: பரம

वर्तयित्वा आत्मज्ञानं निरुणद्धि ; तदिदमुच्यते * यो बुद्धेः परतस्तु

வ்யக்தம்' என்று தொடங்கும் இரண்டாவது மந்திரத்திலுள்ள அவ்யக்தமும், புருஷனும் கீதாஸ்லோகத்தில் எடுக்கப்படாமையாலும் இந்த கீதாஸ்லோகம அந்த மந்திரங்களுக்கு உபப்ரும்ஹணமாகா தென்று கூறமுடியாது; ஸ்ருதியில் விஸ்தாரமாகச் சொன்னதை கீதையில் ஸங்க்ரஹமாகச் சொல்லுகிறது என்று கூறிவிடலாமன்றோ. ஸ்ருஷ்டிப்ரகரணங்களில் சில விடங்களில் தமஸ்ஸிலிருந்து தொடங்கிச் சொல்லாமல் தேஜஸ்ஸிலிருந்து தொடங்கிச்சொன்ன போதிலும் 'ஸங்க்₃ரஹமாகச் சொன்னவிது தமஸ் தொடங்கியுள்ள ஸகல பதார்த்த ஸ்ருஷ்டிககும உபலக்ஷணம' என்று கொள்வது போலே இங்கும் கொள்ளலாம. கீதையில், 'ஆஹு:' என்று கூறுவதி லிருந்தும் உபனிஷத்தில் சொன்ன அர்த்தமேயிது என்று உறுதி யாகிறது. ஆகவிப்படி இந்த கீதாஸ்லோகம் கடஸ்ருதியில் சொன்ன தையேகூறுகிறது என்று தேறியவளவில், 'யோ பு₃த்₃தே₄: பரதஸ்து ஸ:'என்று கீதையில் புத்திக்கு மேற்பட்டதாகச் சொல்லப்படும் தத்து வம் 'பு₃த₃தே₃ராத்மா மஹாந் பர:' என்ற கட₂ஸ்ருதியையொட்டி ஆத்மதத்வமேயாக முடியும். அடுத்த ஸ்லோகத்தில் 'ஏவம பு₃த்₃தே₄: பரம் ஆத்மாநம்' என்று கூறியிருப்பதும் இதையே வலியுறுத்து கிறது. இப்படியிருக்கும்போது 'ஸ:' என்று காமத்தைச் சொல்லு வதாகக் காமபதத்தை அத்₄யாஹாரம் செய்து பொருள் கொள்வது எப்படி ஒட்டும்?—என்பது (ஆக்ஷேபம்.)

இனி, இதற்கு ஸமாத₄ானமாவது,—ஸ்ருதியில் சொன்ன (1) இந்திரியம், (2) விஷயம் (3) மனம் (4) புத்தி (5) ஆத்மா (6) அவ்யக்தம (சரீரம்) (7) புருஷன் (பரமாத்மா) என்னும் ஏழு விஷயங் களில் மூன்றே இந்த ஸ்லோகத்தில் தெளிவாக எடுக்கப்பட்டுள்ளது. ஆயினும ஸ்ருதியிலுள்ள க்ரமம்இங்கு பின்பற்றப்படவில்லை. 'இந்த்₃ரி யாணி மநோ பு₃த்₃தி₄:' என்னும் நாற்பதாவது ஸ்லோகத்தில் ஆத்ம ஜ்ஞானத்திற்குத் தடை செய்பவையாகக் கூறப்பட்ட இந்திரியம, மனம், புத்தி, காமம் என்னும் நான்கினிடையேயுமுள்ள ஏற்றத் தாழ்வே இந்த நாற்பத்திரண்டாவது ஸ்லோகத்தில் கூறப்படுகிறது என்று கொள்வதே உசிதம், இந்திரியம், மநம், புத்தி என்னும் கிரமம் இவ்விரண்டு ஸ்லோகங்களிலும் ஏகரீதியாகக் காணப்படுவது இதை வலியுறுத்துகிறது. கடவல்லியிற் சொன்ன பொருளையே சொல்லுகிறதெனில், அங்குள்ள அர்த்த₂மெனப்படும் ஶப்₃த₃ாதி₃

सः इति। बुद्धेरपि यः परस्स काम इत्यर्थः॥ ४२॥

விஷயங்கள் இங்கு எடுககப்படவில்லையாகையால் க்ரம $ப_4$ங்க$_3$ம் ஏற்படும். இந்த ஶ்லோகத்திற்கு முன்னும் பின்னுமுள்ள ஶ்லோகங்களில் காமமே ஜயிக்கவேண்டிய ஆத்மஜ்ஞான விரோதிகளில் தலையானதாக எடுக்கப்படுகிறது. ஆகையால், அதையே 'யோ $பு_3$த்$_3$தே$_4$: பரதஸ்து ஸ:' என்று புத்தியைக்காட்டிலும் ஆத்ம ஜ்ஞானத்திற்கு முக்கியமான விரோதியாகச் சொல்வது உசிதம். 'ஸ:' என்னும் பதந்திற்கு உபனிஷத்திலுள்ள (தூ$_3$ரஸ்த$_2$மான) ஆத்ம ஶப்தத்தை விஶேஷ்யமாகக் கொள்ளுவதைக்காட்டிலும், இப்ர கரணத்திலுளள (ஸமீபஸ்த$_2$மான) காமஶப்தத்தை விஶேஷ்யமாகக் கொள்வதே தக்கது. 'ஸ:' என்று இங்கு ஆத்மாவும் நியமிக்கத் தக்கதாகக் கருதப்பட்டிருந்ததாகில், அப்போது 'இந்த்$_3$ரியாணி மநோ $பு_3$த்$_3$தி$_4$:' எனனும் ஶ்லோகத்தில், இந்த்ரிய மநோ புத்திகளைப்போலே ஆத்மாவும் காமத்துக்கு அதி$_4$ஷ்ட$_2$ாநமாகச் சொல்லப்பட்டிருக்க வேணடும்; அப்படிச் சொல்லப்படாததோடன்றியில், இந்திரியம், மனம், புத்தி, காமம் என்னும் நாலாலும் மயக்கப்படுபவனாகவே ஆத்மா சொல்லப்படுகிறன். ஆகையால், அந்த ஶ்லோகத்தில் ஆத்மாவை மயக்குபவையாகச் சொல்லப்பட்ட நாலையும் இவன் நியமிக்கவேண்டுமென்றே இந்த ஶ்லோகத்தில் சொல்லப்படுவதாகக் கொள்ளவேண்டும். ஆகையால் 'ஸ:' என்பது நாலாவதான காமத்தையே குறிக்க வேண்டும். இப்படியானவளவில், 'ஆத்மாநம்' என்று மேல் ஶ்லோகத்தில் உள்ளதை இதற்கு அனுகுணமாகவே பொருள் கொள்ள வேண்டும். 'ஏவம் $பு_3$த$_3$தே$_4$: பரம்' என்று தொடங்குகையால் முன் ஶ்லோகத்தில் சொன்ன அர்த்தமே அங்கு அநுவதிககப்படுகிறது என விளங்குகிறது. மேலும், அந்த ஶ்லோகத்தின் முதல் பாதத்தில் '$பு_3$த்$_3$த்$_4$வா' என்னும் ஒரு க்ரியையும், இரண்டாம் பாதத்தில் 'ஸம்ஸ்தப்$_4$ய' என்னும் வேறொரு க்ரியையும், இருக்கையாலே '$பு_3$த்$_3$தே$_4$: பரம்' 'ஆத்மாநம்' என்னும் இரண்டும் அந்த க்ரியைகளுக்கு வெவ்வேறான இரண்டு கர்ம(விஷய)ங்களைக் குறிக்கின்றன என்று கொள்வதே உசிதம். ஆகையால், '$பு_3$த்$_3$தே: பரம ஆத்மாநம்' என்று கூட்டுவது தகாது. இப்படித் தேறினவளவில் அந்த ஶ்லோகத்தின் இரண்டாவது பாதத்திலுள்ள 'ஆத்மாநம்' 'ஆத்மநா' என்னும பதங்கள் முன் ஶ்லோகஙகளில் அடக்கத தககவையாகக் கூறப்பட்ட மனத்தையும, அதை நியமிக்கும் புத்தியையுமே முறையே கூறுவதாகக் கொள்ளவேண்டும். 'ஆஹு:' என்று கடோ$_2$பனிஷத்தையே கருத வேண்டுமென்று நிர்ப்பந்தமில்லை. வியாக்கியானத்தில் எடுக்கப்பட்ட 'இந்த்ரியாணும் ஹி ஸர்வேஷாம' முதலான வசனங்களையொட்டி 'மநுமுதலானுர் கூறுகிருர்கள்'

एवं बुद्धेः परं बुद्ध्वा संस्तभ्यात्मानमात्मना ।
जहि शत्रुं महाबाहो कामरूपं दुरासदम् ॥ ४३ ॥

॥ इति श्रीभगवद्गीतासूपनिषत्सु कर्मयोगो नाम तृतीयोऽध्यायः ॥ ३ ॥

43. ஏவம் பு₃த்₃தே₄: பரம் பு₃த்₃த்₄வா ஸம்ஸ்தப்₄யாத்மாந மாத்மநா ।
ஜஹி ஶத்ரும் மஹாபா₃ஹோ காமரூபம் து₃ராஸத₃ம் ॥

மஹாபா₃ஹோ—*தடக்கையனே !* ஏவம்—*இவ்வண்ணமாக,* பு₃த்₃தே₄: பரம்–*(ஆத்மஞானத்தைத் தடைசெய்வதில்) புத்தியைக் காட்டிலும் மேலான காமத்தை.* பு₃த்₃த்₄வா—*அறிந்து.* ஆத்மாநம—*மனத்தை.* ஆத்மநா—*உறுதியான அறிவாலே.* ஸமஸ்தப்₄ய—*(கர்மயோகத்தில் ஈடுபடுத்துவதாகிய) நியமனத்தைச்செய்து,* து₃ராஸத₃ம்—*வெல்லவரிய.* காமரூபம ஶத்ரும்—*காமம் என்னுட சத்ருவை.* ஜஹி—*அழிப்பாயாக.*

---

36. புந்திக்கு மேற்காமம புந்தித்துப் புந்தியாற்
சந்தித் தறத்துமனஞ் சார்த்திநீ—வந்தியலுஞ்
சேமமிக வீழ்ததுந தீங்கியற்றும் வன்பகையாங்
காமமது நீததல் கடன்.

நீ—*நீ.* புந்திக்கு மேல் காமம் புந்தித்து—*(முற்கூறியபடி) உறுதியான அறிவுக்கு மேற்பட்டதாகக் காமத்தை அறிந்து.* புந்தியால்—*உறுதியான அறிவாலே.* அறதது மனம் சந்தித்து சார்த்தி-*கர்மயோகத்திலே மனத்தைச் சேர்த்து ஈடுபடுத்தி,* வந்து இயலும சேமம் மிக வீழ்த்தும் தீங்கு இயற்றும் வன் பகையாம் காமம் அது—*உன்னிடம் வந்து பொருந்தியிருப்பதாய், உனக்கு வரும் நன்மைகளை மிகவும் அழிப்பதாய், தீமைகளைச் செய்வதாய், வலிய எதிரியாயிருப்பதான அக்காமத்தை.* நீத்தல் கடன்—*அழிப்பது உன் கடமை.*

---

என்றே கொள்ளலாம். ஆகையால் 'யோ பு₃த்₃தே₄: பரதஸ்து ஸ:' என்னும் கடைசிப்பாதத்தாலே, ஆத்மஜ்ஞாநவிரோதம செய்வதில் இந்திரிய மநோ புத்திகளைக்காட்டிலும் காமமே முக்கியமானது என்றே இங்கு கூறப்படுகிறது என்று கொள்ளத்தட்டில்லை. 42.

॥ भा ॥ एवं बुद्धेरपि परं कामं ज्ञानयोगविरोधिनं वैरिणं बुद्ध्वा

43. ‘ஸத்₃ருஶம் சேஷ்டதே’ [3-3] என்னும் ஶ்லோகத்தி லிருந்து தொடங்கி, ஞானயோகம் நழுவுதற்கிடமுள்ளது என்று விளக்கிவந்ததை முடித்துக்கொள்வதனமூலம், மனத்தைக் கர்ம யோகத்திலேயே நிலைநிறுத்தவேண்டும என்னும் அத்தியாயத்தின் ஸாரார்த்தத்தையும் சொல்லி அததியாயத்தை முடிக்கிறுன் இந்த ஶ்லோகத்தில். (ஏவம) இவ்வணணமாக பு₃த் த்₄வா (அறிந்து) ‘ஸம்ஸ்தப்₄ய’ (அடக்கி) ‘ஜஹி’ (அழிப்பாயாக) என்று அநவயிககவேண்டும். அத்தியாயத்தில் சொன்ன முக்கியமான அர்த்தஙகளையெல்லாம ‘ஏவம்’ என்று தொடங்கி அநுவதிக்கிறது. (ஏவம பு₃த்₃தே₄: பரம பு₃த்₃த்₄வா) முன ஶ்லோகத்தில் கூறியபடி புததியைககாட்டிலும் முக்கியமான காமத்தை ஜ்ஞானயோகத்திற்கு எதிரியான சத்துருவென அறிந்து. இனி, இக்காமத்தை வெல்லும் வழியைக்காட்ட முற்பட்டு, அதில் ஒரு பகுதியான இந்திரியநிய மனத்தை நாற்பத்தோராவது ஶ்லோகத்தில் சொல்லிவிட்டமை யாலே, எஞ்சியுள்ள மநோபுத்திநியமனங்களை இரண்டாம் பாதத் தில கூறுகிறுன்,— (ஆத்மாநம் ஆத்மநா ஸம்ஸ்தப்₄ய) முற்கூறிய இந்திரியங்களை நியமிக்கும் மனத்தை, அதையும் நியமிக்கும் உறுதியான புத்தியாலே கர்மயோகத்தில் ஈடுபடுத்துவதாகிற நியமனத்தைச்செய்து. (ஆத்மாநம ஆத்மநா) ‘அத ஸாதத்ய க₃மநே’ எனனும் த₄ாதுவிலிருநதுணடான ஆத்மசப்தத்திற்கு “ஆத்மா கலேவரே யத்நே ஸ்வப₄ாவே பரமாத்மநி। சித்தே த்₄ரு தௌ ச பு₃த்₃தௌ₄ ச பரவ்யாவர்த்தநேபி ச ॥” [தரணி] முதலான நிகண்டுக்களில சஞ்சலமான மனமும், எங்கும பரவக்கூடிய புத்தியும் பொருளாகக் கூறப்பட்டிருப்பது அறியத்தக்கது. (ஆத்மாநம் ஆத்மநா ஸம்ஸ்தப்₄ய) ‘தஸ்மாத் த்வமிந்த்₃ரி யாண்யாதௌ₃’ என்னும ஶ்லோகத்தில் இந்திரியங்களைக் கர்ம யோகத்தில் ஈடுபடுத்தி விஷயங்களில் பட்டிமேயாதபடி பார்த்துக் கொள்ளவேண்டும் என்று கூறப்பட்டது. அடுத்த ஶ்லோகத்தில் ஆத்மஜ்ஞானத்தைத் தடைசெய்வதில் இவ்விந்திரியங்களைக்காட்டி லும மனம் முக்கியமானது என்றும், அதைக்காட்டிலும் விபரீதாத்₄யவஸாயமாகிற புத்தி முக்கியமானது எனறும் கூறப் பட்டது. ஆக, முற்கூறியபடி இந்திரியங்களை மாத்திரம் அடக்கினுல் போதாது; மநோபுத்திகளையும் அடக்கவேண்டுமென்று உணர்த் தப்பட்டதாயிற்று; இங்கு, ஶப்தாதி விஷயங்களைப்பற்றிநிற்கும்

आत्मानं—मनः आत्मना—बुद्ध्या कर्मयोगेऽवस्थाप्य एनं कामरूपं दुरासदं शत्रुं जहि—नाशय ॥ ४३ ॥

॥ इति श्रीभगवद्रामानुजविरचिते श्रीमद्गीताभाष्ये तृतीयोऽध्यायः ॥ ३ ॥

புத்தியைக் கர்மயோகத்தைப் பற்றச்செய்து, அதைக்கொண்டு விஷயங்களில் பட்டிமேயும்மனத்தையும் கர்மயோகத்தில்நிலைநிறுத்த வேண்டும் என்று கூறுவதன்மூலம மநோபுத்திகளை அடக்கும் வழி காட்டப்படுகிறது. (ஆத்மாநம் ஸம்ஸதப்₄ய) மனத்தைக் கர்ம யோகத்தில் நிலைநிறுத்துவதாகிற நியமனத்தைச் செய்து. காமத்தை ஜயிப்பதற்கு முன் மனத்தை அடியோடு ஜயிககமுடியாதாகையாலே, முற்கூறியபடி இங்கும மனத்தைக் கர்மயோகத்தில் நிலைநிறுத்து வதன்மூலம் விஷயங்களினின்றும் திருப்புவதே ஸமஸ்தம்ப₄நம் செய்வதாகக் (அடக்குவதாகக்) கூறப்படுகிறதென்று கொள்ள வேண்டும். இப்படி புத்தியைக்கொண்டு மனத்தையும், மனத்தைக் கொண்டு இந்திரியங்களையும் கர்மயோகத்தில் ஈடுபடுத்துவதே பரமவிரோதியான காமத்தை வெல்லும வழியாகும் எனறு காட்டு கிறது உத்தரார்த்தம்: (ஸமஸ்தப்₄ய காமரூபம் ஜஹி) புத்தியைக் கொண்டு இந்திரியங்களோடு கூடிய மனத்தைக கர்மயோகத்தில் ஈடுபடுத்தினுயானல், அநாதிகாலமாகக் குவிநதுகிடக்கும பாபங்கள் நீங்கும்; அதனாலே ரஜோகுணம குறைந்து ஸத்வகுணம் அபி வ்ருத்தியாகும்; அதனாலே ரஜோகுணத்தின மிகுதியால உண்டா கும் காமம் அழியும் என்று கருத்து. (து₃ராஸத₃ம ஶத்ரும் காம ரூபம்) இவ்வாறுக்க் கர்மயோகத்தை அநுஷ்டிக்காதவர்களாய், அதனாலே பாபம் நீஙகப்பெறுதவர்களாய், அதனாலே ரஜோகுணம் குறையப்பெற்று, ஸத்வகுணமாகிற உறுதியான கவசத்தை அணி யாதவர்களாலே, இதன் தோஷத்தைக் கண்டாலும அழிக்க முடியாதபடியிருக்கும் காமம் என்னும் எதிரியை. (ஜஹி) அழிப்பா யாக. முற்கூறியபடி 'ஹந-ஹிம்ஸாயாம்' என்னும் தாதுவிலிருந்து தோன்றிய இப்பதம் ஹிம்ஸாமாத்ரதையே காட்டுமாயினும், இங்கு விநாஶபர்யந்தமான ஹிம்ஸையைக் கூறுகிறதாய், ஶத்ருவாக உருவகப்படுத்தப்பட்ட காமத்தை அழிப்பதையே காட்டுகிறது. (மஹாபா₃ஹோ) இதுவரையில் வெளியிலுள்ள எதிரிகளை அழிப் பதன் மூலம் தோள்வலிமிக்கவன என்று புகழ்பெற்ருய்; இனி, உனக்குள்ளேயே இருக்கும எதிரியான காமத்தையும் நீ ஜயித்தால் தான் உன்னுடைய தோள்வலி வீறுபெறும் எனறு கருத்து. 43.

ஸ்ரீ க்ருஷ்ணஸ்வாமிது₃ாஸன் இயற்றிய

கீதார்த்த விவரணத்தில் மூன்ருமத்தியாயம் நிறைவு பெற்றது.

## பகவத் கீதை வெண்பா

(மூன்றுமத்தியாயத்தின் ஸாரத்தைக் கூறும் பாசுரம்)

மெய்யமரும் புத்தி விடாதென்று நின்றிவனுஞ்
செய்யும் கருமச் சிறப்பதனை—வையத்து
வாய்ந்தபுகழ்க் கீதை வளர்மூன்று மோத்துரைத்த
வேய்ந்த பொருண்முடிந்த திங்கு.

வாதிகேஸரி ஜீயர் அருளிய பகவத்கீதை வெண்பாவில்
மூன்றுமத்தியாயம் முற்றிற்று.

இவனும்–*இவ்வுலகத்திலும்*, மெய் அமரும் புத்தி விடாது–*(ஆத்மாவைப்பற்றிய) உண்மையைப் பொருந்திநிற்கும் அறிவை விடாமல்*. என்றும் நின்று—*என்றும் நிலைநின்று*, செய்யும் கருமச் சிறப்பு அதனை—*(இச்சேதனன்) அனுஷ்டிக்கும் கர்மயோகத்தின் பெருமையை*. வையத்து வாய்ந்த புகழ் கீதை—*உலகில் விளங்கும் புகழையுடைய கீதையின்*, வளர் மூன்றும் ஓத்து உரைத்த—*வளர்ந்துநிற்கும் மூன்றும் அத்தியாயம் உபதேசிக்கும்*. ஏய்ந்த பொருள்–*பொருந்திய அர்த்தம்*, இங்கு முடிந்தது—*இத்துடன் நிறைவுபெற்றது*.

## கீதார்த்த சங்கிரகம்

(ஸ்ரீவேதாந்த தேசிகர்)

மூன்றுமத்தியாயத்தின் ஸாரப்பொருள்

4. சங்கத் தவிர்ந்து சகஞ்சதிர் * பெற்ற தனஞ்சயனே
பொங்குங் குணங்கள் புணர்ப்பனைத் தும்புக விட்டவற்று
ணங்கண் ணுரைத்த கிரிசை யெலாமென வுந்நவின்று
ரெங்கும் மறிவர்க ளேயென்று நாத னியம்பினனே.

---

* *(பா) பெறத்; பற்றத்;*

**நாதன்**—ஸர்வேஶ்வரனான கண்ணன், '**சகம்**—உலகத்திலே, **சதிர் பெற்ற**—(சான்றோன் எனப்) புகழ்பெற்ற, **தனஞ்சயனே**—அருச்சுனனே!, **சங்கம தவிர்ந்து**—(கர்மபலன்களில்) பற்றை விட்டு, **பொங்கும் குணங்கள்**—(மாறி மாறி) மிகுதியடைகின்ற (ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று) குணங்களின், **புணர்ப்பு அனைத்தும்**—தொடர்பால் ஏற்படும் எல்லாக் காரியங்களையும், **அவற்றுள் புகவிட்டு**—அந்த குணங்களுக்கே சேர்ந்தவையென அநுஸந்தித்தும், **உரைத்த கிரிசை எல்லாம்**—(சாஸ்திரங்கள்) கூறும் எல்லாக் கர்மங்களையும், **நங்கண் எனவும்**—என்னால் ஏற்படுபவை என்று அநுஸந்தித்தும், **நவின்றார்**—அனுஷ்டிக்கின்ற பெரியோர்கள், **எங்கும் அறிவர்களே**—கர்மயோகதசையிலும் ஞானயோகிகளேயாவர்' **என்று**—என்று, **இயம்பினன்**—உபதேசித்தான்.

## கீதாச்லோகார்த்தச் சுருக்கம்

### மூன்றாமத்தியாயம்

ச்லோ. அர்த்தம்.

1–2. ப்ரவ்ருத்தி மார்க்கமான கர்மயோகம் ஆத்மதர்ஶனத்திற்கு நேரே காரணமன்று; நிவ்ருத்தி மார்க்கமான ஜ்ஞாநயோகமே அதற்கு நேரே காரணம். இப்படி ஞானயோகமே சிறந்ததாயிருக்கக் கர்மயோகத்தில் ஏன் என்னை ஏவுகிறாய் என்று அர்ஜுனன் கேட்கிறான.

3–8. எளிதாகச் செய்யத்தக்கதாயிருக்கை, நழுவ இடமில்லாததாயிருக்கை, விடமுடியாததாயிருக்கை முதலான காரணங்களால் கர்மயோகம் ஞானயோகத்தைக்காட்டிலும் சிறந்தது.

9–16. பகவதாராதனமான யஜ்ஞத்திற்கு உறுப்பாகாத கர்மங்களே இவனை ஸம்ஸாரத்தில் கட்டுப்படுத்தும்: அதற்கு உறுப்பான கர்மங்கள் புருஷார்த்த ஸாதனமாகுமேயொழிய இவனைக் கட்டுப்படுத்தாது.

17–19. ஆத்மதர்ஶனம் கைவரப்பெற்ற முக்தனான கைவல்யநிஷ்டனே வர்ணாஶ்ரமதர்மங்களைச் செய்யாமலிருக்கலாமாகை

யால், அப்படி முக்தனல்லாத நீ கர்மயோகத்தை அனுஷ்டித்தே ஆத்மத$_3$ர்ஶனத்தைப் பெறவேணும்.

* 20. ஜனகர் முதலானோர் கர்மயோகத்தாலேயே ஆத்மத$_3$ர்ஶனத்தைப்பெற்றனர்.

20*-26. சான்றோனாகப் புகழ் பெற்றவன், தான் ஜ்ஞாநயோக$_3$ாதி$_4$காரியாயினும், அதில் அதி$_4$காரமில்லாதவர்களை ரக்ஷிப்பதற்காகவும், அவர்களைக் கலக்குவதன்மூலம் தனக்குண்டாகும் அநர்த்தத்தைத் தவிர்ப்பதற்காகவும் கர்மயோகத்தையே அநுஷ்டிக்கவேண்டும்.

27-30. 'ஸர்வேஶ்வரனால் தூண்டப்பட்டு, ஸத்வாதிகுணங்களுக்கு வசப்பட்டவனாகவே நான் கர்மம் செய்கிறேன்' என்னும் அகர்த்ருத்வாநுஸந்தானத்தோடு கூடவே கர்மங்களைச் செய்யவேண்டும். இப்படிக் கர்மயோகத்தில் ஞானம கலந்திருக்கையால், ஞானயோகத்தையிடையிடாமல் அதுவே நேரே ஆத்மத$_3$ர்ஶனத்துக்கு உபாயமாகும. ஆகையால், அது ஞானயோகத்தைவிடத் தாழ்ந்ததல்ல.

31-32. கர்மயோகத்தை அநுஷ்டிப்பாரின் சிறப்பு; அதை அநுஷ்டியாதாரின் தாழ்வு.

33-43. எத்தகைய சிறந்த ஞானயோகாதிகாரியையும், அநாதிவாஸனையும் அதுகாரணமாக வரும் காமக்ரோதங்களும் ஜ்ஞாநயோகத்தினின்றும் நழுவச்செய்துவிடும். அநாதிவாஸனை முதலானவற்றுக்கு அடியான பாபங்களைப் போக்கும் கர்மயோகத்தில் ஈடுபடுவதன் மூலமே இவற்றை வெல்லமுடியும். ஆகையால் நழுவதற்கிடமுள்ளதாய், செயற்கரியதான ஜ்ஞானயோகத்தைக் காட்டிலும், நழுவுதற்கிடமற்றதாய், செயற்கெளியதான கர்மயோகமே ஜ்ஞாநயோக$_3$ாதி$_4$காரியோடு, கர்மயோக$_3$ாதி$_4$காரியோடு வாசியற அனைவராலும் கைக்கொள்ளத் தக்கது.



## ஆளவந்தார் அருளிய
# கீதார்த்த ஸங்க்ரஹம்
[ நாலாவது அத்தியாயத்தின் சுருக்கம் ]

प्रसङ्गात्स्वस्वभावोक्तिः कर्मणोऽकर्मताऽस्य च ।
भेदाः, ज्ञानस्य माहात्म्यं चतुर्थाध्याय उच्यते ॥ ८ ॥

*8. ப்ரஸங்கா₃த் ஸ்வஸ்வபா₄வோக்தி: கர்மணோऽகர்மதாஸ்ய ச |*
*பே₄தா₃:, ஜ்ஞாநஸ்ய மாஹாத்ம்யம் சதுர்த்தா₂த்₄யாய உச்யதே ||*

**சதுர்த்தா₂த்₄யாயே**—*நான்காமத்தியாயத்தில்.* **கர்மண: அகர்மதா உச்யதே**—*(ஞானமடங்கிய) கர்மயோகம் ஞான யோகமாகவேயிருத்தல் சொல்லப்படுகிறது;* **அஸ்ய பே₄தா₃: ச (உச்யந்தே)**—*கர்மயோகத்தின் (ஸ்வரூபமும்) பிரிவுகளும் சொல்லப்படுகின்றன;* **ஜ்ஞாநஸ்ய மாஹாத்ம்யம் (உச்யதே)**—*(கர்மயோகத்தில் அடங்கிய) ஞானபாகத்தின் பெருமையும் கூறப்படுகிறது;* **ப்ரஸங்கா₃த**—*(தான் சொலலுமர்த்தம் ப்ராமாணிகமானது என்று நிரூபிக்கவேண்டிய) ப்ரஸங்கம் ஏற்பட்டபடியாலே.* **ஸ்வஸ்வபா₄வோக்தி:**—*(அவதார தசையிலும் மாறாத) தன் தன்மையைப்பற்றிய பேச்சும் (முதலில் உள்ளது).*

---

### ஸ்ரீ க்ருஷ்ணஸ்வாமி தாஸன் இயற்றிய
### கீதார்த்த விவரணம் நாலாமத்தியாயம்

**நாலாவது அத்தியாயார்த்தச் சுருக்கம்:**— "அஸக்த்யா லோக ரக்ஷாயை" [7] என்று தொடங்கும் கீதார்த்த ஸங்க்ரஹ ஶ்லோகத்திற்சொன்னபடி, ப்ரக்ருதி ஸம்பந்தமுள்ள முமுக்ஷுவுக்குச் சடக்கென ஞானயோகத்தில் இழிய சக்தி கிடையாதாகையாலே கர்ம யோகமே கைக்கொள்ளதக்கதென்றும், ப்ரக்ருதிவாஸனையை ஜயித்திருக்கையாலே ஜ்ஞானயோகத்தில் அதிகாரமுள்ளவனுக்கும் நழுவுதற்கிடமுள்ளதாயிருக்கை முதலான தோஷங்களையுடைய

## வாதிகேஸரி ஜீயர் அருளிய
# பகவத்கீதை வெண்பா—அத்தியாயம் 4.
## ஞான (விபாக) யோகம்
### அத்தியாயப்பொருளின் சுருக்கம்

*நாரா யணன்கீதை நாலாமோத் திற்றனது*
*சீரார் பிறவிச் சிறப்புடனே—யேராரும்*
*யோகத் துடன்கரும முற்றியலு மாறுரைக்கு*
*மேகப் பலபரிசா வேய்ந்து.*

*நாராயணன்*—(கண்ணனாய் அவதரித்த) நாராயணன், ***கீதை நாலாம் ஒத்தில்***—கீதையின் நாலாம் அத்தியாயத்தில், ***தனது சீர் ஆர் பிறவி சிறப்புடனே***—பெருமை மிகுந்த தன் அவதாரச் சிறப்போடு கூட, ***ஏர் ஆரும் யோகத்துடன்***—சிறப்புற்ற ஞானத்தோடு, ***ஏகம் கருமம்***—ஒன்றான கருமம், ***பல பரிசா ஏய்ந்து***—பல வகைகளாக இருந்துகொண்டு, ***முற்று இயலும் ஆறு***—(ஜ்ஞான யோகத்தை இடையிடாமலே) பரிபூர்ண ஸாதனமாயிருக்கும் வகையை, ***உரைக்கும்***—உபதேசிக்கிறான்.

---

ஜ்ஞாநயோகத்தைக் காட்டிலும், அந்த தோஷங்களற்றதாய், அகர்த்ருத்வாநுஸந்தானத்தோடு கூடியதான கர்மயோகமே சிறந்ததென்றும், அதிலும் சான்றோனாகப் புகழ்பெற்றவன சக்தியுடையவனாயினும், இல்லாதவனாயினும் தன பொருட்டும் பிறரை ரக்ஷிப்பதன் பொருட்டும கர்மயோகத்தையே அனுஷ்டிக்கவேண்டும் என்றும் ஆகவிப்படி சக்தியில்லாதவனுக்கும், சக்தியிருந்தபோதிலும் அப்ரஸித்தனாய் ஸவார்த்த₂நிபுணனாயிருப்பவனுக்கும, சக்தியிருந்தாலும் இல்லாவிட்டாலும் ப்ரஸித்தனாயிருப்பவனுக்கும் கர்மயோகமே கைக்கொள்ளத்தக்கது என்று நிலைநிறுத்துவதன்மூலம் மூன்றாமத்தியாயத்தில் கர்மயோகத்திற்கு அதிகாரியும ஜ்ஞானயோகத்தைக் காட்டிலும் கர்மயோகத்திற்குச் சிறப்பும் கூறப்பட்டது. இனி, இந்த நாலாம் அத்தியாயத்தில், "ப்ரஸங்க₃ாத்" [8] என்று தொடங்கும் கீதார்த்த ஸங்க்ரஹஶ்லோகத்திற் சொன்னபடி, முன் அத்தியாயத்தில் அனுஷ்டிக்கத்தக்கதாகச் சொல்லப்பட்ட கர்மயோகம் உலகனைத்தும உய்யும்பொருட்டு மந்வந்தரத்தின் ஆதியிலேயே உபதேசிக்கப்பட்டதாகையாலே அவசியம் அனுஷ்டிக்கத் தக்கதேயென்று கூறுவதன்மூலம் அதன் ப்ராமாணிகத்வமும் (1)

# अथ चतुर्थोऽध्यायः ॥

॥ भा ॥ तृतीयेऽध्याये प्रकृतिसंसृष्टस्य मुमुक्षोस्सहसा ज्ञानयोगेऽनधिकारात् कर्मयोग एव कार्यः ; ज्ञानयोगाधिकारिणोऽप्यकर्तृत्वानुसन्धानपूर्वककर्मयोग एव श्रेयानिति सहेतुकमुक्तम् ; शिष्टतया व्यपदेश्यस्य तु विशेषतः कर्मयोग एव कार्य इति चोक्तम्। चतुर्थेनेदानीमस्यैव कर्मयोगस्य निखिलजगदुद्धरणाय मन्वन्तरादावेवोपदिष्टतया कर्तव्यतां द्रढयित्वा अन्तर्गतज्ञानतयाऽस्यैव ज्ञानयोगाकारतां प्रदर्श्य, कर्मयोगस्वरूपम् , तद्भेदाः, कर्मयोगे ज्ञानांशस्यैव प्राधान्यं चोच्यते। प्रसङ्गाच्च भगवदवतारयाथात्म्यमुच्यते।

---

ஞானத்தை உள்ளடக்கியதாகையால், இக்கர்மயோகம் ஞான யோகமாகவே உள்ளதெனனும அர்த்தமும் (2), கர்மயோக ஸ்வரூபமும் (3), அதன வகைகளும் (4), கர்மயோகத்தில் ஜ்ஞா நாம்ஶமே முக்கியமானது என்பதும் (5), தான் சொல்லும் அர்த்தம் ப்ராமாணிகமானது என்று நிரூபிக்கவேண்டிய ப்ரஸங்கம் ஏற் பட்டபடியாலே. அவதாரதசையிலும் அகர்மவஶ்யத்வம முதலான பெருமைகள் குலையாதவன் தான என்பதும் (6) ஆகவிப்படி ஆறு அர்த்தங்கள் கூறப்படுகின்றன. (1) தன் அவதாரப்பெருமை (2) கர்மயோகமே ஜ்ஞாநாகாரமாயிருப்பது (3) கர்மயோகத்தின் வகைகள் (4) கர்மயோகத்திலுள்ள ஜ்ஞாநாமஶத்தின் பெருமை என்னும் நாலு அர்த்தங்களே ஸங்க்ரஹத்தில் சொல்லப்பட்டிருந்த போதிலும், 'ப்ரஸங்க₃ாத்' என்று ப்ராமாணிகத்வப்ரஸங்கத்தைக் கூறுகையால் ப்ராமாணிகத்வமும். 'அஸ்ய ச பே₄த₃ா:' என்று கர்மயோகத்தின் வகைகளைச் சொல்லுமிடத்தில், ஸ்வரூபத்தை யறியாமல் வகைகளை அறியமுடியாதாகையாலே ஆர்த்தமாகவோ, அநுக்தஸமுச்சாயகமான சகாரத்தாலோ கர்மயோக ஸ்வரூபமும் உணர்த்தப்படுகிறதாகையாலே ஸங்க்ரஹத்திலும் ஆறு அர்த்தங் களே எடுக்கப்படுகின்றன என்னக் குறையில்லை. இவ்வத்தி யாயத்தில் ஞானத்தையுள்ளடக்கிய கர்மயோகம் ஜ்ஞானயோக மாகவேயுள்ளது என்று கூறுகையாலும், கர்மயோகத்தில் அடங்கிய ஜ்ஞாநாம்ஶத்தின் ப்ராதா₄ந்யத்தைக் கூறுகையாலும், இது ஜ்ஞாந யோகம் எனப்படுகிறது என்று அறியத்தக்கது.

॥ श्रीमद्भगवद्गीतायां चतुर्थोऽध्यायः ॥

श्रीभगवानुवाच—

इमं विवस्वते योगं प्रोक्तवानहमव्ययम् ।
विवस्वान्मनवे प्राह मनुरिक्ष्वाकवेऽब्रवीत् ॥ १ ॥

एवं परम्पराप्राप्तमिमं राजर्षयो विदुः ।
स कालेनेह महता योगो नष्टः परन्तप ॥ २ ॥

स एवायं मया तेऽद्य योगः प्रोक्तः पुरातनः ।
भक्तोऽसि मे सखा चेति रहस्यं ह्येतदुत्तमम् ॥ ३ ॥

ஸ்ரீபகவாநுவாச—

1. இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்தவாநஹமவ்யயம்।
விவஸ்வாந் மநவே ப்ராஹ மநுரிக்ஷ்வாகவேऽப்ரவீத்॥

2. ஏவம் பரம்பராப்ராப்தமிமம் ராஜர்ஷயோ விது:।
ஸ காலேநேஹ மஹதா யோகோ நஷ்ட: பரந்தப॥

3. ஸ ஏவாயம் மயா தேऽத்ய யோக: ப்ரோக்த: புராதந:।
பக்தோऽஸி மே ஸகா சேதி ரஹஸ்யம் ஹ்யேதது₃த்தமம்॥

அஹம்—*நான்*. அவ்யயம்—*அழியாததான*. இமம் யோகம்—*முன் அத்தியாயத்திற் சொன்ன இந்தக் கர்ம யோகத்தை*. விவஸ்வதே—*ஸூர்யனுக்கு*. ப்ரோக்தவாந்—*(வைவஸ்வத மந்வந்தரத்தின் ஆதியில்) உபதேசித்தேன்*. விவஸ்வாந்—*ஸூர்யன்*. மநவே—*(வைவஸ்வத) மனுவுக்கு*. ப்ராஹ—*உபதேசித்தான்*. மநு:—*அந்த மனு*. இக்ஷ்வாகவே—*(தன் புத்திரனான) இக்ஷ்வாகுவுக்கு*. அப்ரவீத்—*உபதேசித்தான்*. பரந்தப—*எதிரிகளைத் தவிக்கச் செய்யும் வீரனே!*

---

இவ்வாறு அர்த்தங்களில், அநுஷ்டிக்கவேண்டியதாகச் சொல்லப்படும் கர்மயோகத்தின் ப்ராமாணிகத்வத்தைச் சொன்னால் தான், அர்ஜுனனுக்கு இதைக்கேட்பதில் ருசியுண்டாகுமாகையாலே, அதைக் கூறுகிறான் பகவான் முதல் மூன்று ஸ்லோகங்களாலே.

**ஏவம்**–*இவ்வண்ணமாக.* **பரம்பராப்ராப்தம்**— *புத்ரபௌத்ர பரம்பரையாக உபதேசித்தறியப்பட்ட,* **இமம்**—*இக்கர்ம யோகத்தை.* **ராஜர்ஷய:**—*ஜநகர் முதலான ராஜரிஷிகள்.* **விது₃:**—*அறிந்தவராயிருந்தனர்;* **ஸ:**–*அக்கர்மயோகம்.* **இஹ**–*இவ்வுலகில்.* **மஹதா காலேந**—*காலத்தின் நெடுமையாலே.* **நஷ்ட:**–*(உபதேசபரம்பரையில்லாமையாலே) அழிந்துவிட்டது.* **புராதந:**—*பழையதாய்.* **ஸ: ஏவ அயம் யோக₃:**—*(இப்படி உபதேசபரம்பரையினால் ரக்ஷிக்கப்பட்டு வந்த) அத்தகைய இந்தக்கர்மயோகமே.* **மே**–*எனக்கு.* **ப₄க்த:**–*பக்தனாக வும்.* **ஸகா₂**–*நண்பனாகவும்.* **அஸி**–*இருக்கிறாய்.* **இதி**– *என்னும் காரணத்தினால்,* **தே**–*(ப்ரபன்னனான) உனக்கு.* **அத்₃ய**–*இன்று.* **மயா**–*என்னால்.* **பரோக்த:**–*விரிவாக உபதேசிக்கப் பட்டது.* **ஏதத**—*இது.* **உத்தமம் ரஹஸ்யம் ஹி**—*மேலான வேதாந்த ரஹஸ்யமன்றோ.*

---

1. இந்தயோ கத்தை யிரவிக்கு யானுரைத்தேன்
வந்த வவன்மனுவுக் காங்குரைத்தான்—மைந்தனு
மிக்குவா குக்கவனு மேன்றுரைத்தா னிப்படியாற்
றக்குவாய்ந் துற்றது தான்.

**இந்த யோகத்தை**—*இந்த கர்மயோகத்தை.* **இரவிக்கு**–*ஸூர்யனுக்கு.* **யான்**–*(பரமபுருஷனான) நான்,* **உரைத்தேன்**–*(முற்காலத்தில்) உபதேசித்தேன்;* **வந்த அவன்**—*(இவ்வுபதேசம்) கைவந்த அந்த ஸூர்யன்.* **மனுவுக்கு**–*(தன் பிள்ளையான) வைவஸ்வதமனுவுக்கு.* **ஆங்கு**— *அக்காலத்தில்.* **உரைத்தான்**—*உபதேசித்தான்;* **அவனும்**—*அந்த மனுவும்.* **மைந்தன் ஆம் இக்குவாகுக்கு**—*தன் பிள்ளையான இக்ஷ்வாகுவுக்கு.* **ஏன்று உரைத்தான்**—*நன்கு உபதேசித்தான்;* **இப்படியால்**—*இவ்வண்ணமாக.* **தான்**–*இக்கர்மயோகம்.* **தக்கு வாய்ந்து உற்றது**—*தக்கபடி தகப்பன் பிள்ளை என்னும் பரம்பரையாலே உபதேசிக்கப்பெற்று வந்தது.*

॥भा॥ योऽयं तवोदितो योगः स केवलं युद्धप्रोत्साहनायेदानीमुदित इति न मन्तव्यम्। मन्वन्तरादावेव निखिलजगदुद्धरणाय परमपुरुषार्थलक्षणमोक्षसाधनतयेमं योगमहमेव विवस्वते प्रोक्तवान्। विव-

*1-3.* (இமம் யோக₃ம்) மிகச்சிறந்த புருஷார்த்தமான மோக்ஷத்திற்கு ஸாதனமாக நான் இப்போது உபதேசித்த இந்தக் கர்மயோகத்தை. இங்கு ஞானயோகமே சொல்லப்படுகிறது என்று சங்கரர் வியாக்கியானம் செய்தது கர்மயோகத்திற்கே ஏற்றத்தைச் சொல்லிப்போந்த முன் பிரகரணத்திற்கு முரண்பட்டதாகும். "குரு கர்மைவ தஸ்மாத் த்வம்" [4-15] என்று இவ்வத்தியாயத்தில் அடுத்தபடி சொல்லப்போவதற்தும முரண்பட்டது. (அவ்யயம் யோக₃ம்) அழிவற்ற யோகத்தை. எப்போதும் இதை தரித்து நிற்கும் எனறுலே சொல்லப்பட்டதாகையாலே இக்கர்மயோகத திற்கு அழிவில்லை என்று கருத்து. இதன் பலனுகிற மோக்ஷம் அழிவற்றதாகையாலே, இது அழிவற்றதாகக் கூறப்படுகிறது எனறும் கொளளலாம். (அஹம விவஸ்வதே ப்ரோக்தவாந்) எப்போதும் எலலாமறிந்தவனுயிருப்பவனுய், எல்லா உயிர்களையும் உடையவனுகையாலே. அவ்வுயிர்கள் உய்யும் பொருட்டு இந்த வைவஸ்வதமந்வநதரத்தின ஆதியிலேயே பரமபுருஷார்த்தமாயிருக்கும் மோக்ஷத்திற்கு ஸாதனமாக இந்தக் கர்மயோகத்தை நானே வைவஸ்வத மனுவுக்கும் தந்தையாகிற விவஸ்வானுகிற ஸூர்யனுக்கு உபதேசிததேன. ஆகையால், இப்போது உன்னைப் போரில் ஈடுபடச் செய்வதற்காக இந்தக் கர்மயோகத்தை நான் கூறியிருப்பதாக நீ நினைக்கலாகாது என்று கருத்து. 'விவஸ்வதே ப்ரோக்தவாந்' எனறு வைவஸ்வத மனுவுக்கும் தந்தையான விவஸ்வானுக்குச் சொன்னதாகக கூறுகையாலே, வைவஸ்வதமந்வந்தரத்தின் ஆதியில் சொனனதாக விளங்குகிறது. இப்படி ஆதியிலேயே சொல்லப்பட்டதாகையாலே, இது உலகனைத்தும் உய்யும்பொருட்டே உபதேசிக்கப்பட்டது என விளங்குகிறது. 'அஹம் ப்ரோக்தவாந்" (நான் சொன்னேன்) என்கையாலே, மந்வந்தரத்தின் ஆதியிலும, மஹாகல்பத்தின ஆதியிலும், இந்த பாரதயுத்தத்தின் ஆரமபத்திலும என்னைத்தவிர வேறொருவன் இந்தயோகத்தை உளளபடி அறியவோ, சொல்லவோ முடியாது என்று கருத்து. 'ஸர்வம் வாக்யம ஸாவத₄ாரணம்" என்னும் நியாயத்தையொட்டி, 'அஹம் ப்ரோக்தவாந்'

2. இன்னே பரம்பரையா லேய்ந்ததனை யீங்கறிவர்
முன்னே யரைச முனிவாகள—பின்னேபோய்க்
காலத்தி ஞன்மறைநது கைகழிந்து விட்டதே
ஞாலததில் யோக நலம்.

**இன்னே**—*இவ்வண்ணமாக.* **பரம்பரையால் ஏய்ந்ததனை**—*உபதேச பரம்பரையாக அடையப்பட்டு வந்த இக்கர்ம யோகத்தை.* **முன்னே அரைச முனிவர்கள்**—*முற்காலத்தி லிருந்த (ஜனகர் முதலிய) ராஜரிஷிகள்.* **ஈங்கு அறிவர்**—*இவ்வுலகில் அறிந்து வந்தனர்.* **பின்னே**-*பிற்காலத்தில,* **யோக நலம்**-*இத்தகைய சிறப்புடைய கர்மயோகம்.* **ஞாலத்தில்**—*இவ்வுலகில.* **காலததிஞல் மறைநது போய் கைகழிநது விட்டதே**—*காலததின் நெடுமையிஞல (உபதேசபரம்பரை யில்லாமல) மறைந்து போய் அழிந்து விட்டது.*

---

எனறதை 'அஹமேவ ப்ரோக்தவாந்' [நானே கூறினேன்] என்று ஏகாரத்தோடு கூடியதாகப்பொருள கொள்ளவேண்டும. இபபடிக் கூறுவதன மூலம், 'இபபோது நம காலத்திலிருக்கும இவன விவஸ்வானுககு ஆதிகாலத்தில் எப்படி உபதேசிக்கமுடியும?' எனனும சங்கையை எழுப்பி, ப்ராஸங்கிகமாக அவசியம அறிய வேண்டிய தன் அவதாரப பெருமையைச் சொல்ல நினைக்கிருன் எனறு அறியத்தக்கது. (அஹம ப்ரோக்தவாந்) ஸர்வஜ்ஞனை நான சொல்லுகையாலே, ப்ரமம, ப்ரமாதம முதலானவற்றுக்கு இடமிலலை. (விவஸ்வதே பரோக்தவாத்) புததாவதாரம் முதலான வற்றிற்போலே, அஸுரர்களை மயக்குவதற்காக அவர்களுககு உபதேசிக்கபபட்ட அர்த்தமனறு இது; ஸர்வவேதஸ்வரூபியாக உபனிஷத்துக்களில் உத்கோஷிக்கப்படும ஸூர்யனுககு உப தேசிக்கப்பட்டதாகையாலே, அங்குபோலே விப்ரலிப்ஸை (வஞ்சிக்கும விருப்பம) எனனும் தோஷத்திற்கும் இடமிலலை என்று கருத்து. (விவஸ்வாந மநவே ப்ராஹ) ஸூர்யன் தன பிளளையான மனுவுக்கு உபதேசித்தான்; (மநவே) "யத்வை கிஞ்ச மநுரவதத் தத்பேஷஜம்" [யஜு 2-2-10-54] [மனு சொன்னதனைத்தும் மருந் தாகும்] எனறு அனைத்துயிர்க்கும் மருந்துபோன்ற வார்த்தையைச் சொல்லுகிறவர் என்று வேதத்தாலும புகழப்பெற்ற ஸ்ம்ருதி கர்த்தாவான மனுவுக்கு உரைத்தான். (மநு: இக்ஷ்வாகவே

स्वांश्च मनवे, मनुरिक्ष्वाकवे; इत्येवं संप्रदायपरम्परया प्राप्तमिमं योगं पूर्वे राजर्षयो विदुः। स महता कालेन तत्तच्छ्रोतृबुद्धिमान्द्याद्विनष्ट-

---

அப்₃ரவீத்) மநுவானவர் தன் பிள்ளையாய், ரவிகுலதிலகரான இக்ஷ்வாகுவுக்கு இதை உபதேசித்தார்.

(ஏவம் பரமபராப்ராப்தம் இமம்) இவ்வண்ணமாக, பரம்பரையாக உபதேசிக்கப்பெற்று அடையப்பெற்ற இதை. அனைத்துயிர்க்கும் மருந்துபோன்ற வார்த்தையை உடையவர்களாய்ப பிரஸித்தி பெற்றவர்களாய், லோகமர்யாதைகளை நிலைநிறுத்துகினறவர்களாகப் பெயர்பெற்ற அதிகாரி புருஷர்களாலான பிதருபுத்ர பரம்பரம்பரை வழியாக உபதேசக்ரமமாக இக்கர்மயோகம் இவ்வுலகில பரவியிருக்கிறதாகையாலும, விப்ரலிப்ஸைக்கு இடமளிக்கும் வஞசகர்களான பாஷண்டிகளின ஸமபந்தம இப்பரமபரையில் இல்லையாகையாலும் இக்கர்மயோகம நலலோர்களால் மிகவும் ஆதரிக்கத்தக்கது என்று கருத்து. (பூர்வே ராஜர்ஷயோ விது₃:) இக்கர்மயோகத்தை க்ருதத்ரேதாயுகங்களில் இருந்த ராஜரிஷிகள் அறிந்தவராயிருந்தனர். (ராஜர்ஷய:) ராஜாக்களாவார், கடல் போன்று ஆழ்ந்து பரந்த மனத்தை உடையவர்கள். அதிலும ரிஷிகளாகையாலே இந்திரியங்களுக்குப் புலப்படாத பொருள்களையும அறியவல்லவர்கள. அவர்களும சிலரல்லர்; அஸ்வபதி, ஜனகர், அம்பரீஷா முதலான பலராவர். இப்படிப்பட்ட பல பெரியோர்கள் கருத்து வேறுபாடில்லாமல் இக்கர்மயோகத்தையே அறிந்து அநுஷ்டித்து வந்தமையால், உத்தம க்ஷத்திரியனன உனக்கு இதுவே கைக்கொள்ளத்தக்கது என்று கருத்து. இப்படிப் பித்ருபுத்ரபரமபரையாக உபதேசிக்கப்பட்டு வந்ததாகில் எனக்கும் உபதேசிக்கப்பட்டிருக்கவேணுமே? என்று அர்ஜுனன் சங்கிக்கக் கூடுமாகையால், இப்போது இவ்வுபதேசபரம்பரை மிகவும் மலினமாகிவிட்டது என்கிருன் அடுத்தபடியாக,— (ஸ: யோக₃:) அத்தகைய கர்மயோகம், (இஹ) விசித்திரமான அதி₄காரிகள் நிறைந்த இவ்வுலகில். (மஹதா காலேந நஷ்ட:) காலத்தின் நெடுமையினுல் பெரும்பாலும் அழிந்துவிட்டது. க்ருதயுகததில் இருந்த புத்தி, சக்தி, அநுஷ்டானம் முதலானவை த்ரேதாயுகத்தில் குறைந்துவிட்டன எனறும், த்₃வாபரயுகத்தில் மேலும் குறைந்துவிட்டனவென்றும காணகிருேமாகையாலும, கேள்விப்படுகிருேமாகையாலும, இத்தகைய புத்தி சக்தி அநுஷடானங்களின குறைவினுலே காலம

3. போதமிகு மிந்தப் புராதனமாம் யோகத்தை
யேத மறவுனக்கிங் கியானுரைத்தேன்—காதலமர்
பத்தனுமாய்த் தோழனுமாம் பண்பான் மறைப்பொருளா
முத்தமமீ தென்றோர்ந் துகந்து.

**போதம மிகும்**—(*ஆத்மஸ்வரூபஜ்ஞானத்தோடு*) *மிகக் கலந்த*, **புராதனமாம் இந்த யோகத்தை**—*பழையதான இக் கர்மயோகத்தை*, **மறைப்பொருளாம் உத்தமம் ஈது என்று ஓர்ந்து**—*வேதத்தில் பொதிந்துள்ள சிறந்த ரஹஸ்யம் இது என்று ஆராய்ந்து*, **காதல அமர் பத்தனுமாய்**—(*என்னிடம் நீ*) *காதல் நிறைந்த பக்தனுமாய்*, **தோழனும் ஆம் பண்பால**—*தோழனுமாயிருக்கும் தன்மையை நோக்கி*, **உகந்து**-*ப்ரீதியுடன்*, **உனக்கு**-*உனக்கு*, **இங்கு**-*இப்போது*, **ஏதம் அற**-*குறைவில்லாமல்*, **யான் உரைத்தேன**-*நான் உபதேசித்தேன்*.

---

*செல்லச் செல்ல இக்கர்மயோகம மலினமாயிற்று என்று கருத்து.* (நஷ்ட:) *பாரதயுத்தஸமயத்திலும் வியாஸர், பீஷ்மர், அக்ரூரர் முதலானோர் இதை அநுஷ்டிக்கிறார்களாகையாலே, 'அடியோடு அழிந்துவிட்டது' என்று பொருள் கொள்ளாமல் 'பெருமபாலும அழிந்துவிட்டது' என்று பொருள் கொள்ளவேண்டும்.* (பரந்தப) *போரில் எதிரிகளைத்தவிக்கச் செயயவல்ல வீரனாகையாலே, உனனுடைய ஸ்வதர்மமான யுத்தத்தைப் பற்றற்றுக் கர்மயோகமாக அநுஷ்டிப்பதன்மூலம் மலினமான இந்த யோகத்திற்கு நீ புத்துயிர் அளிக்கலாம் எனறு கருத்து.*

(ஸ ஏவ அயம் புராதநோ யோக:) *பழையதான அத்தகைய இந்தக் கர்மயோகமே; 'ஸோऽயம்' என்ற பரத்யபிஜ்ஞையாலும் ஏவகாரத்தாலும், ஆதியில் உபதேசிக்கப்பட்ட கர்மயோகத்திற்கும் இப்போது நான் உபதேசிப்பதற்கும் சிறிதும் வேறுபாடு இல்லை என்று உணர்த்தப்படுகிறது.* (புராதந: அத்ய மயா ப்ரோக்த:) *பழையதான அதுவே இன்று என்னால் உபதேசிக்கப்பட்டது. அனறைக்கும் இன்றைக்குமிடையே நெடுங்காலமிருந்தபோதிலும் இரண்டுகாலத்திலும உபதேசித்தவன் நானேயாகையாலே, உபதேசிக்கப்பட்ட கர்மயோகத்தின் ஸ்வரூபத்திலோ, அங்கங்களிலோ காலபேதத்தினால் யாதொரு பேதமும் ஏற்படவில்லை என்று கருத்து.* (மே பக்தோऽஸி-ஸகா சாஸி இதி தே ப்ரோக்த:) *என்று இதை*

प्रायोऽभूत्। स एवायमस्खलितस्वरूपः पुरातनो योगः सख्येनाति-मात्रभक्त्या च मामेव प्रपन्नाय ते मया प्रोक्तः—सपरिकरस्सविस्तर-मुक्त इत्यर्थः। मदन्येन केनापि ज्ञातुं वक्तुं चाशक्यम्, यत इदं वेदान्तोदितमुत्तमं रहस्यं ज्ञानम्॥१॥२॥३॥

---

உபதேசிக்கலாம்படி சிஷ்யலக்ஷணபூர்த்தி அர்ஜுனனுக்கு உள்ள தெனக் காட்டுகிருன். (மே·ப₄க்தோ஽ஸி) என்னிடம் பக்தனுயிருக் கிருய்; உயர்ந்தவனிடம் தாழ்ந்தவனுக்கு உள்ள அன்பு பக்தியெனப் படுகிறது. சாஸ்திரங்களாலும், பீ₄ஷ்மாதிகளின் உபதேசங்களாலும் கண்ணனைப் பரமனென்று அறிந்து அர்ஜுனன் அவனிடம் மிக வும் அனபு செலுத்துகிருனுகையால், உபதேசிக்கத்தக்கவனுகிருன் என்று கருத்து. 'அஸி' என்னும வர்த்தமான (நிகழ்கால) நிர்த் தேசத்தாலே, இந்த பக்தி அழியாமல் நித்யமாயிருப்பது; அதனு லேயே மிக அதிகமாயிருப்பது என்று உணர்த்தப்படுகிறது. (ஸக₂ா சாஸி) நண்பனுகவும் ஆகிருய். அவதாரத்திற் கண்ட ஸௌலப்₄ யத்தாலே நட்புறவும் பூண்டு நம்பிக்கையுடையவனுகவுமிருக்கிரு னுகையால் மிகவும் உபதேசிக்கத்தக்கவனுகிருன என்று கருத்து. (இதி) இப்படி பக்தியும், நட்பும் கொண்டவனுயிருக்கும் காரணத் தினுல். (தே மயா ப்ரோக்த:) "ஶிஷ்யஸ்தே஽ஹம் ஶாதி₄ மாம் த்வாம் ப்ரபந்நம்" [கீதை 2-7] [நான உனக்கு சீடனுகிறேன; ப்ரபன்ன னுன என்னை நியமிப்பாய்] என்று சிஷ்யனுய் என்னையே சர ணடைந்த உனக்கு, சரண்யனுன என்னுல் உபதேசிக்கப்பட்டது. (ப்ரோக்த:) ப்ரகர்ஷேண உக்த:—விஸ்தாரமாகவும், அங்கோபாங கங்களோடு கூடவும் உபதேசிக்கப்பட்டது. 'அஹம் ப்ரோக்தவாந்' 'மயா தே அத்₃ய ப்ரோக்த:' என்று கூறுவதனமூலம், "இதை உள்ளபடி அறிவதற்கும் உபதேசிப்பதற்கும் நானே வல்லமை யுடையவன்; ப்ரளயத்தாலோ, யுகம் முதலானவற்றின் ஸ்வப₄ாவத் தாலோ உபதேச பரமபரை அழிந்தபோது மறுபடியும் நானே உப தேசித்து இதன ஸம்ப்ரதாய பரம்பரையை ஏற்படுத்துவேன்; இந்திரியங்களினுல் ஏற்படும் அறிவையுடைய பிரமன முத லான எல்லா ஜீவர்களும் என்னிடம் உபதேசம் பெருமல் இதை அறியவோ, உபதேசிக்கவோ முடியாது" என்று உணர்த்துகிருன். இவ்வண்ணமாக நட்பு, பக்தி, ப்ரபத்தி முதலான குணப்பெருமை களை உடையவனே உபதேசிக்கத்தக்கவனுயிருப்பதற்கும், பரம புருஷனுன தன்னைத்தவிர வேறு ஒருவனும் இதையறிந்து உப

॥ भा ॥ अस्मिन् प्रसङ्गे भगवदवतारयाथात्म्यं यथावत् ज्ञातुमर्जुन उवाच—

अर्जुन उवाच—

अवरं भवतो जन्म परं जन्म विवस्वतः।
कथमेतद्विजानीयां त्वमादौ प्रोक्तवानिति ॥ ४ ॥

அர்ஜுந உவாச—

4. அவரம் ப₄வதோ ஜந்ம பரம் ஜந்ம விவஸ்வத:।
கத₂மேதத்₃ விஜாநீயாம் த்வமாதௌ₃ ப்ரோக்தவாநிதி॥

ப₄வத: ஜந்ம—*உம்முடைய பிறப்பு,* அவரம்—*(காலத்தால்) பிற்பட்டது;* விவஸ்வத: ஜந்ம—*ஸூர்யனுடைய பிறப்பு,* பரம்—*(காலத்தால) முற்பட்டது.* (*அப்படியிருக்க*) த்வம்—*நீயே,* ஆதௌ₃—*மந்வந்தரத்தின் ஆதியில்,* ப்ரோக்தவாந்—*(ஸூர்யனுக்கு) உபதேசித்தாய்,* இதி ஏதத்—*என்னும் இந்த (பொருந்தாத) அர்த்தத்தை,* கத₂ம விஜாநீயாம்—*எப்படி (உண்மையென) அறிவேன்?*

---

தேசிக்க முடியாமலிருப்பதற்கும காரணத்தைக்காட்டுகிறுன கடைசிப் பாதத்தாலே,—(ஏதத் உத்தமம ரஹஸ்யம் ஹி) இந்த ஜ்ஞாநம வேதாநதங்களிற் சொல்லப்பட்ட சிறநத ரஹஸ்யமாயிருப்பதனறே. 'ஹி' ஶப்தம ஹேதுப்பொருளது, ரஹஸ்யமாயிருக்கையால் சிஷ்ய லக்ஷணபூர்த்தியுள்ளவனுக்கே உபதேசிக்கவேணடும்; உத்தம ரஹஸ்யமாகையாலே பரமாத்மாவான என்னைத்தவிர வேறொருவனுல் அறியவோ உபதேசிககவோ முடியாது என்று கருத்து. (உத்தமம் ரஹஸ்யம்) வேதாந்தங்களில் ஒரு மிடமுக இதுவே ரஹஸ்யமாக ஓதப்படுகையால், இதுவே சிறந்த ரஹஸ்யமாகும் என்று கருத்து. "அவித்₃யயா ம்ருத்யும் தீர்த்வா" [ஈசாவாஸ்யம் 11] [கர்மயோகத்தாலே ஸம்ஸாரகாரணமானபுண்யபாபங்களைக்கடத்து]"யஜ்ஞேந தா₃நேந தபஸாऽநாஶகேந விவிதி₃ஷந்தி" [ப்₃ருஹ 6-4-22] [யஜ்ஞதான தபஸ்ஸுக்களால் ப்ராஹ்மணர்கள் அப்பரமனை அறிய விரும்புகின்றனர்] முதலான உபனிஷத்துக்களிலே கர்மயோகமானது பரம்பரயா மோக்ஷஸாதனமாக உத்கோஷிக்கப்பட்டதன்றே. 1-3.

॥ भा ॥ कालसङ्ख्यया अवरम्, असज्जन्मसमकाले हि भवतो जन्म ।

4. ஆங்கு விசயன்ரு ஞதித்தன் முன்பிறந்தா
னீங்குநீ பின்பிறநதா யெங்ஙனநான—பாங்கினினீ
முன்னுரைசெய் வணணமிது முற்றுணர்வ னென்றுரை
க்கத்
தன்னுரைசெய் தான்பரமன் ருன்.

**ஆங்கு**—*அந்த சமயத்தில,* **விசயன் தான்**—*அர்ஜுன ஞனவன.* "**ஆதித்தன்**—*ஸூர்யன்.* **ஈங்கு**—*இவ்வுலகில.* **முன பிறந்தான்**—*முதலில் பிறந்தான்;* **நீ**—*(கண்ணனுகிய) நீ.* **பின் பிறந்தாய்**—*பிற்காலததில பிறந்தாய். ( அப்படியிருக்க. )* **பாங்கினில்**—*அழகாக.* **முன் நீ உரைசெய் வண்ணம இது**—*முற்காலத்தில் (ஸூர்யனுக்கு) நீ உபதேசித்தாயென்கிற இவ்வர்த்தத்தை.* **எங்ஙனம்**—*எவ்வண்ணமாக.* **நான**—*நான்,* **முற்று உணர்வன்**—*முழுவதும் உணர்வேன்"* **என்று உரைக்க**—*என்று கேட்க.* **பரமன் தான்**—*பரமாத்மாவான கண்ணன்.* **தன் உரை செய்தான்**—*தன்னைப்பற்றிய உண்மையைக் கூறலுற்ருன்.*

---

4. இவ்வண்ணமாக, கர்மயோகம் அவசியம செய்யவேண்டிய தொன்று என்பதை உறுதிப்படுத்துவதற்காகக் கண்ணன் ஆதி காலத்திலேயே அதைத் தான் ஸூர்யனுக்கு உபதேசித்ததாகக் கதாப்ரஸங்கம் செய்தவளவில், பகவானுடைய அவதாரமானது மற்றுள்ளாருடைய பிறப்புக்களைப்போலே கர்மத்தால் ஏற்படுவதா அல்லவா என்பதையும், அது இந்திரஜாலம்போலே பொய்யானதா அல்லது மெய்யானதா எனபதையும், மற்றும அவதாரப்ரயோஜனம் முதலானவற்றையும் ப்ரமாணயுக்திகளோடு கண்ணனிடமிருந்து உள்ளபடி அறிவதற்காக அர்ஜுனன் கேள்விகேட்கிருன் இந்த ஶ்லோகத்தில். (அவரம் பவதோ ஜந்ம) கண்ணனுகிய உமமுடைய பிறப்பு காலத்தினுல் ஸூர்யனுடையதைக் காட்டிலும் பிற்பட்டது; உம்முடைய பிறபபு எங்களுடைய பிறப்புக்கு ஏறக்குறைய, ஸம காலத்தில வைவஸ்வதமந்வந்தரத்தின் இருபத்தெட்டாவது சதுர் யுகத்திலுள்ள இந்த த்வாபரயுகத்தில் ஏற்பட்டதன்றோ என்று கருத்து. (விவஸ்வத: ஜந்ம பரம்) ஸூர்யனுடைய பிறப்பு காலத்

विवस्वतश्च जन्म कालसङ्ख्यया परम्–अष्टाविंशतिचतुर्युगसङ्ख्यासङ्ख्यातम्। त्वमेवादौ प्रोक्तवानिति कथमेतदसंभावनीयं यथार्थं जानीयाम्?

---

தால் முற்பட்டது. வைவஸ்வத மந்வந்தரத்தின ஆதியில் இருபத் தெட்டு சதுர்யுகங்களுக்கு முன ஏற்பட்டதனறோ ஸூர்யனின் பிறப்பு என்று கருதது. இங்கு, 'பரம் ஜந்ம' 'அவரம் ஜந்ம' என்னுமிடங்களில் ஜந்மபதம் ஜாதிவாசகமாய், ஸூர்யனுடைய தான தே₃வதாஜாதி உயர்ந்ததென்றும், கண்ணனுடையதான மனித ஜாதி தாழ்ந்ததென்றும் காட்டுவதாகக் கூடாதோ? எனில்: கூடாது. (1) அப்படிக்கொண்டால், மனிதஜாதியிற் பிறந்தவன் தேவஜாதியிற் பிறந்தவனுக்கு உபதேசிக்கக்கூடாது என்று இந்த ஶ்லோகத்திற் சொனனதாக ஆகும். அறிந்தவன எவ்வளவு தாழ்ந்த ஜாதியைச் சேர்ந்தவனுயிருந்தவனுயிருந்தபோதிலும், எத்தனையேனும் உயர்ந்த ஜாதியைச் சேர்ந்த அறியாதவனுக்கு உப தேசிக்கலாம் என்பதே சாஸ்திரார்த்தமாகையால, இது பொருந்தாது. (2) மேலும், கண்ணன தேவர்களுக்கும் தேவனான பரமாத்மாவாகை யாலே ஸூர்யனைக்காட்டிலும உயாந்த ஜாதியைச் சேர்ந்தவனே யொழியத் தாழ்ந்த ஜாதியைச் சேர்ந்தவனல்லன். இதை அர்ஜுன னும் அறிவான் எனபது பாரதத்தில் பலவிடங்களில் காட்டப்பட் டது. (3) மேலும், ஜந்மஶப்தம நேரே பிறப்பையே காட்டும்; ஜாதியை நேரே காட்டாது. (4) 'ஆதௌ₃ ப்ரோக்தவாந்' எனறு இந்த ஶ்லோகத்தின் பிற்பகுதியிலேயே காலவிரோத₄த்தையே அர் ஜுனன் கருதுகிருன் என்று தெளிவாக விளங்குகிறது. (5) கண்ணனுடைய பதிலிலும் "ப₃ஹூநி மே ஜந்மாநி" "யதா₃ யதா₃ ஹி" "யுகே₃ யுகே₃" என்று காலவிரோதத்திற்கே பரி ஹாரமுரைக்கப்பட்டது; ஜாதிவிரோதத்தைப்பற்றிய பேச்சேயில்லை. ஆகையால், பராவரஶபதங்கள் ஸூர்யக்ருஷ்ண ஜந்மங்கள்முறையே காலத்தால் முற்பட்டும், பிற்பட்டுமிருப்பதையே காட்டுகின்றன எனறு கொள்வதே பொருத்தம். இனி, ஶ்லோகத்தின் பிற்பாதி யாலே, காலத்தால் முற்பட்டவனுக்குக் காலத்தால் பிற்பட்டவன் எப்படி உபதேசிக்கமுடியும்? என்று கேட்கிருன்,—(த்வம்) இக் காலத்திலிருக்கும் நீயே. (ஆதௌ₃ ப்ரோக்தவாந் இதி ஏதத்) வைவஸ்வத மநவந்தரத்தின் ஆதிகாலத்திலேயே (ஸூர்யனுக்கு) உபதேசித்தாய் எனபதை. 'விவஸ்வதே ப்ரோக்தவாந்' [ஸூர்யனுக்கு உபதேசித்தாய்] எனறு எடுத்தால், இப்போது மிருக்கும் ஸூர்யனுக்கு இப்போது உபதேசிப்பதில் விரோதம ஒன்றுமில்லையாகையால், 'ஆதௌ₃ ப்ரோக்தவாந்' [(ஸூர்ய னுக்கு) ஆதிகாலத்தில் உபதேசித்தாய்] என்று எடுக்கிருன்.

ननु जन्मान्तरेणापि वक्तुं शक्यम्, जन्मान्तरकृतस्य महतां स्मृतिश्च युज्यत इति नात्र कश्चिद्विरोधः। न चासौ वक्तारमेनं वसुदेवतनयं सर्वेश्वरं न जानाति, य[त] एवं वक्ष्यति * परं ब्रह्म परं धाम पवित्रं

தான் ஸூர்யனுக்கு உபதேசித்ததாகவும், ஸூர்யன் தன பிள்ளையான மனுவுக்கு உபதேசித்ததாகவும், மனு தன் பிள்ளையான இக்ஷ்வாகுவுக்கு உபதேசித்ததாகவும், இப்படியே பரம்பரையாக நெடுங் காலம் உபதேசிக்கப்பட்டுவந்ததாகவும், காலத்தின் நெடுமையால இக்கர்மயோகம பெரும்பாலும் அழிந்துவிட்டதென்றும கண்ணன் கூறுவதிலிருந்தும ஸூர்யனுக்கு உபதேசித்தது மன்வந்தரத்தின் ஆதியிலேயே எனறு விளங்குகிறதனரோ. (கதஂம் விஜாநீயாம) இருபத்தெட்டாவது சதுர்யுகத்தின் த்வாபரயுகத்தின் கடைசியில் பிறந்த நீ, முதல் சதுர்யுகத்தின் தொடக்கத்திலேயே உபதேசித்தாய் எனனும் இபபொருந்தாத அர்த்தத்தை உண்மையானதென்று எப்படி நான அறிவேன? 'ஜாநீயாம்' என்னுமல், 'விஜாநீயாம எனறதால், இதை உண்மையென அறியமுடியாது என்றதாகிறது.

இவ்விடததில், இந்தக்கேள்வியே பொருந்தாது என்னும் வலிதான ஆக்ஷேபம் ஒனறு எழுகிறது. அதாவது:—அர்ஜுனன வேறு ஜன்மமுண்டு என்பதை அறியாதவனல்லன். அப்படியிருக்கும்போது 'காலத்தால் பிற்பட்ட நீ, காலத்தால் முற்பட்ட ஸூர்யனுக்கு எப்படி உபதேசிக்கமுடியும?' என்று அவன் எப்படிக் கேள்விகேட்கமுடியும? (1) முற்பிறப்பே கிடையாது என்று நினைத்தாலாவது, (2) முற்பிறப்பில் நடந்த காரியங்களைப் பிற்பிறப்பில் நினைவுகூரமுடியாது என்று நினைத்தாலாவது, (3) உபதேசிப்பவனான கண்ணனுக்குப் பிற்பிறவியில் முற்பிறவிநினைவு கூடாது என்று நினைத்தாலாவது அர்ஜுனன இப்படிக் கேள்விகேட்பது பொருந்துமேயொழிய வேறு விதத்தில் இக்கேள்வி பொருந்தமுடியாது. இங்கு இம்மூன்று விதமாகவும் அர்ஜுனன் ஸந்தேஹிக்கவே இடமில்லையாகையால் இக்கேள்வி பொருந்தவே வழியில்லை. எப்படியெனில்: (1) சாஸ்திரங்கள் முற்பிறவியுண்டென்று கூறுகையாலும், கண்ணன் இந்த ஜன்மத்தில் மந்வந்தராதியில் உபதேசிக்கமுடியாதாகிலும முற்பிறவியொன்றில் உபதேசிக்கலாமாகையாலும் முதல் ஸந்தேஹம் கூடாது.

परमं भवान्। पुरुषं शाश्वतं दिव्यमादिदेवमजं विभुम्। आहुस्त्वा-मृषयस्सर्वे देवर्षिर्नारदस्तथा। असितो देवलो व्यासः स्वयं चैव ब्रवीषि मे।

---

(2)''வேத₃ாப்₄யாஸேந ஸததம் ஶௌசேந தபஸைவ ச|
அத்₃ரோஹேண ச பூ₄தாநாம் ஜாதிம் ஸ்மரதி பௌர்விகீம்||''
[மனு 4–148]

[எப்போதும் வேதாப்₄யாஸம் செய்வதாலும், (உள் வெளி) சுத்தியாலும், தவத்தினாலும், எல்லா ஜீவராசிகளுக்கும ஹிம்ஸை செய்யாமலிருப்பதாலும் பூர்வஜன்ம நினைவு ஏற்படுகிறது.] என்று மனு முதலான ஸ்ம்ருதிகள் கூறுகையாலும், வேதங்களிலும, இதிஹாஸங்களிலும முற்பிறவி நினைவு பற்றிய விருத்தாந்தங்கள் காணப்படுகையாலும் மஹானகளுககுப் பூர்வஜன்ம நினைவு கூடும் என்பதையும அர்ஜுனன் அறிநதிருக்கிறுனுகையாலே இரண்டாவது ஸந்தேஹமும கூடாது. அனறு பிறநத குழந்தை முன ஜன்ம ஸம்ஸ்காரத்தின் வசத்தாலே தாய்ப்பால் குடித்தால் தாகமடங்கும் என்னும் நினைவு ஏற்பட்டுப் பால்குடிக்கத்தொடங்குவதுபோலே, முன ஜன்மத்தின் அனுபவத்தால் ஏற்பட்ட ஸம்ஸ்காரம் புண்ணிய விசேஷத்தால் நினைவை ஏற்படுத்தக் கூடுமாகையால் இதில் காலத்தின் நெடுமை, காரணமின்மை முதலானவற்ருல் உண்டாகக் கூடிய யுக்தி விரோதமுமில்லை. (3) மேலும், ஜ்ஞாநவ்ருத்₃த₄ர்கள் பலரிடமிருந்து பலகால் பல விஷயங்களைக் கேட்டிருக்கும் இவ்வர்ஜுனன, ஸூர்யனுக்கு உபதேசிததவனுன இக்கண்ணன, வஸுதேவனின பிள்ளையாகப்பிறந்து தன் பரத்துவத்தை மறைத்துக் கொண்டவனுயிருந்தபோதிலும், கோவர்த்தனமலையைத் தூக்குவது முதலான அதிமானுஷச்செயல்களாலேயும், அவதாரதசையிலேயே சங்கசக்ராதிகளை தரித்த நானகு புஜங்களோடு விளங்கிய படியினுலும் ஸூர்யன் முதலானுர்க்கும் ஈஶ்வரனுன பரமாத்மாவே என்று அறிந்தேயிருக்கிறுனுகையாலே மூன்ருவது ஸந்தேஹம் ஏற்படவும் இடமில்லை. இவன் இப்படிக் கண்ணனின் பரத்துவத்தை அறிந்தேயிருக்கிருன் என்பது, இவ்வறிவு காரணமாக கீதையில் இவன் சொல்லும் வாக்யத்திலிருந்தும், இவ்வறிவுக்குக் காரணமாக இவன் பெற்றிருக்கும் உபதேசங்களிலிருந்தும் விளங்குகிறது. அதாவது:– ''தேவரீரே பரப்ரஹ்மம், பரஞ்சோதி, மேலான பரிசுத்தப்படுத்தும் பொருள் (என்று வேதங்கள் அறைகின்றன.) எப்போதுமிருக்கும் அப்ராக்ருதனுன புருஷனுகவும், ஆதிதேவனுக

(१०. १२, १३) इति। युधिष्ठिरराजसूयादिषु भीष्मादिभ्यश्चासकृच्छ्रुतं * कृष्ण एव हि लोकानामुत्पत्तिरपि चाप्ययः। कृष्णस्य हि कृते भूतमिदं विश्वं चराचरम्॥ (भा. स. ३८. २६.) इत्येवमादिषु। कृष्णस्य हि कृते इति कृष्णस्य शेषभूतमिदं कृत्स्नं जगदित्यर्थः। अत्रोच्यते—जानात्येवायं भगवन्तं वसुदेवसूनुं पार्थः। जानतोऽप्य-

---

வும், பிறப்பற்றவனாகவும், விபு₄வாகவும் உன்னை தேவரிஷியான நாரதரும், அஸிதரும், தேவலரும, மற்றுமுள்ள எல்லா ரிஷி களும் கூறுகினறனர். நீயும் உன்னைப்பற்றி (இப்படியே) என்னிடம் கூறிக்கொள்ளுகிறுய்'' [கீதை 10-12, 13] எனறு, ஆப்த தமர்களான பல மஹான்கள் உபதேசித்திருக்கையாலே நீயே மறை கள் முறையிடும் பரம்பொருள் என்று இவ்வர்ஜுனனே உத்கோஷிக் கிருன. மேலும, யுதிஷ்டிரராஜஸூயம் முதலான ப்ரகரணங்களில் பீஷ்மர் முதலானுர் "கண்ணன் ஒருவனே சேதநாசேதநாத்மக மான அனைத்துலகங்களையும் படைத்து அளித்து அழிப்பவன என்பது ஸகலவேதாந்தப்ரஸித்தமான அர்த்தம்; அசைவனவும், அசையாதனவுமடங்கிய இவ்வுலகனைத்தும் கண்ணனுக்கு இயல் வாகவே அடிமைப்பட்டிருப்பது'' [பார-ஸபா38-26] முதலானவிடங் களில் இவனுக்குப் பலகால் உபதேசம் செய்திருப்பதையும் காண்கிறோம். ஆகவிப்படி மூன்று வகையிலும் ஸந்தேஹமேற்பட இடமில்லையாகையால் அர்ஜுனனின் இக்கேள்வி பொருந்தவே மாட்டாது என்பது ஆக்ஷேபம்.

இனி, இதற்கு ஸமாத₄ானமாவது,- இவ்வாக்ஷேபம் பொருத்த முடையதேயாகும்; கண்ணன் அர்ஜுனனுடைய மாமனை வஸுதேவனின் பிள்ளையாகவும், அர்ஜுனன் கண்ணனுடைய அத்தையான பிருதை₂(குந்தி)யின் பிள்ளையாகவுமிருந்தபோதிலும், புண்ணியவசத்தாலும், மஹான்களின் உபதேசவசத்தாலும அர்ஜுனன் கண்ணனே பகவான் (பரமாத்மா) என்று அறிந்தே யிருக்கிருன். அப்படி அறிந்திருந்தபோதிலும், பணிவினுலே அறியாதவனைப்போலே இப்படிக் கேள்விகேட்கையாலே அர்ஜுன னுக்கு உட்கருத்து ஒனறு இருக்கிறது என விளங்குகிறது. பகவா னுடைய பிறப்பைப்பற்றி இவனுக்குச் சில விஷயங்கள் தெரிந்தி ருந்தபோதிலும், சில விஷயங்கள் தெரியாமலுமிருக்கையாலே, அவற்றைத் தெரிந்துகொள்வதற்காகவே இப்படிப் பணிவுடன்

जानत इव पृच्छतोऽयमाशयः—निखिलहेयप्रत्यनीककल्याणैकतानस्य

ஒன்றுமறியாதவனைப்போலே கேள்வி கேட்கிறான் என்று கொள்ள வேண்டும். கண்ணன் கூறும் பதிலிலிருந்து அர்ஜுனன் என்ன என்ன விஷயங்களைத் தெரிந்துகொள்வதற்காக இப்படிக் கேள்வி கேட்டான் என்பதை நாம் உய்த்துணரவேண்டும். இல்லாவிட்டால் அர்ஜுனன் எதையோ கேள்விகேட்க, கண்ணன் எதையோ பதிலாகச் சொல்லுகிறான் என்னும் தோஷம் ஏற்படும். ஆக, கண்ணனின் பதிலுரைகளைப் பார்த்தால், "ப₃ஹூநிமே" என்னும் முதல் ஶ்லோகத்தாலே தன் பிறப்பு உண்மையானதே என்று கண்ணன் கூறுகிறான் என்றும், "அஜோऽபி ஸந்" என்னும் இரண்டாவது ஶ்லோகத்தாலே அவதாரத்தின் பரகாரத்தையும், தன் தேஹத்தின் ஸ்வரூபத்தையும், பிறப்பின் ஹேதுவையும் கூறுகிறான் என்றும், "யதா₃ யதா₃" என்னும் மூன்றாவது ஶ்லோகத்தாலே தன் பிறப்பின் காலத்தைக் கூறுகிறான் என்றும், "பரித்ராணாய" என்னும் நாலாவது ஶ்லோகத்தாலே தன் பிறப்பின் பயனைக்கூறுகிறான் என்றும் தெளிவாக விளங்குகிறது. ஆகை யால், தான் அறியாத இவ்விஷயங்களைக் கண்ணனிடமிருந்து அறிந்துகொள்வதற்காகவே அர்ஜுனன் இப்படி ஒன்றும் அறியாதவன் போலே கேள்வி கேட்கிறான் என்று கொள்ளவேண்டும்.

இனி, இக்கேள்விபதில்களை ஆராய்ந்தால் பல மஹான்களிட மிருந்து அர்ஜுனன் கேட்டறிந்த விஷயம் பரமபுருஷனுடைய பரத் வத்துக்குறுப்பான தன்மைகளே என்றும், அவனுடைய அவதாரத் தின் உண்மையைப்பற்றி இவன் உள்ளபடி அறியவில்லை என்றும் விளங்குகிறது. அதாவது:—கண்ணனாகிற பரமாத்மா நிகி₂லஹேய ப்ரத்யநீகன் (எல்லாத்தாழ்வுகளுக்கும் எதிர்த்தட்டாயிருப்பவன்) என்று அர்ஜுனன் கேட்டறிந்திருக்கிறான். தன்னிடம் தாழ்வில்லாத தோடன்றியில் பிறருடைய பிறவி முதலான தாழ்வுகளையும் போக்க டிக்கக்கூடியவனுக்குத் தாழ்வைத் தரக்கூடிய பிறப்பு எப்படி உண் டாகமுடியும்? என்று எண்ணுகிறான் அர்ஜுனன். கண்ணன் கல்யாணங்களுக்கு (நன்மைகளுக்கு) ஒரே இருப்பிடமாயிருப்பவன் என்று கேள்விப்பட்டிருக்கிறான். இப்படித் தன் ஆநந்தமயஸ்வரூபத் தினாலேயே திருப்திபெற்றிருப்பவனுக்குப் பிறப்பு எதற்கு என்னும் ஐயம் அவனுக்கு ஏற்படுகிறது. கண்ணனே அனைவர்க்கும் ஈஶ் வரனாய், தனக்கு ஓர் ஈஶ்வரனில்லாத பரமன் என்று அர்ஜுனன் கேட்டறிந்திருக்கிறான். இதனாலேயே. "இவனையும் நியமிக்கவல்ல வன் ஒருவன் இல்லாதபோது இவனுக்குப் பிறப்பு முதலானவை எப்படிப் பொருந்தும்" என்னும் ஐயம் ஏற்படுகிறது. கண்ணன்

सर्वेश्वरस्य सर्वज्ञस्य सत्यसङ्कल्पस्यावाप्तसमस्तकामस्य कर्मपरवशदेव-मनुष्यादिसजातीयं जन्म किमिन्द्रजालादिवन्मिथ्या? उत सत्यम्?

எல்லாமறிந்தவன் என்று அர்ஜுனன் கேட்டு அறிந்திருக்கிறான். அதனாலேயே, "தனக்கு நன்மைதீமை அறியாதவனாகில், குழந்தை தீயைத் தொடுவதுபோலே இவனும் தாழ்வைத்தரும் பிறப்பு முதலானவற்றை ஏற்றுக்கொள்ளக்கூடும்; எல்லாமறிந்த இவன் எப்படிப் பிறப்பு முதலானவற்றை ஏற்றுக்கொள்ளலாம்?" என்னும் ஐயம் ஏற்படுகிறது. கண்ணன் ஸத்யஸங்கல்பன் (தடையற்ற ஸங்கல்பத்தையுடையவன) என்று கேள்விப்பட்டிருக்கிறான் அர்ஜுனன். அதனாலேயே, "நன்மை தீமைகளறிந்தவனாயினும். வெறுந்தரையில் குதிக்க நினைத்துச் சேற்றில் விழும் லௌகிகர்களைப்போலே தடைபடும் ஸங்கல்பத்தையுடையவனாகில் தனக்குத் தாழ்வைத்தரும் பிறப்பு முதலானவற்றை அடையலாம். இவன் ஸத்யஸங்கல்பனாகையாலே அவ்வகையிலும இவன் பிறப்பு முதலானவற்றை அடையமுடியாதே" எனனும் ஐயம் உண்டாகிறது. மேலும், ஸத்யஸங்கல்பனான இவன் ஸங்கல்பத்தாலேயே உலகை ரக்ஷிக்க வல்லவனாயிருக்க, உலகை ரக்ஷிப்பதற்காகப் பிறப்பெடுக்க வேண்டியதில்லையே என்னும் ஐயமும் உண்டாகிறது. கண்ணன் அவாப்தஸமஸ்தகாமன் (எல்லா விருப்பங்களும் என்றும் நிறைவேறப்பெற்றிருப்பவன்) என்றும் கேள்விப்பட்டிருக்கிறான் அர்ஜுனன். இதனாலேயே, இவன் பிறப்பெடுத்துப் பெறவேண்டிய பயன் ஒன்றுமில்லையாகையாலே, ஒரு பயனைப்பெறுவதற்காகப் பிறப்பெடுக்க வேண்டியதில்லை என்னும் ஐயம் ஏற்படுகிறது. ஆனால், இவனே கர்மவசப்பட்ட தேவர் மனிதர் முதலானாரைப்போலே பிறப்புக்களை எடுத்திருப்பதும் அர்ஜுனனுக்கு ப்ரத்யக்ஷமாக விளங்குகிறது. நிகிலஹேயப்ரத்யநீகனாயிருக்கை முதலான பரத்வத்துக் குறுப்பான முற்கூறிய குணங்களும், மனிதரைப்போலே இவன் பிறப்பெடுத்திருப்பதும் ஒன்றோடொன்று முரண்படுகின்றன. ஆகையால் 'இவற்றில் ஒன்றே உண்மையாயிருக்கமுடியும். பிறப்பை உண்மையெனக்கொண்டால், பிறப்பெடுக்கும் மற்ற ஜீவர்களைப் போலே இவனும கர்மத்திற்கு வசப்பட்டவனாகவும், ஸர்வேஶ்வரனல்லாதவனாகவும், எல்லாமறியாதவனாகவும, தடைபடும் ஸங்கல்பத்தை உடையவனாகவும், நிறைவேறாத விருப்பங்களை உடையவனாகவும், ஆகவேண்டிவரும். இப்படி ஒப்புக்கொண்டால் வேதங்களும், ஆப்தர்களும் செய்த உபதேசங்கள் பொய்யாகவேண்டிவருமாகையாலே, இவ்வுபதேசங்களின்படி அகிலஹேயப்ரத்யநீகனாயிருக்கை முதலானவற்றையே மெய்யாகக்கொண்டு, இவனெடுக்கும் பிறப்பைப் பொய்யாகக் கொள்வதே பொருந்தும் எனபது

सत्यत्वे च कथं जन्मप्रकारः? किमात्मकोऽयं देहः? कश्च जन्महेतुः? कदा च जन्म? किमर्थं च जन्मेति परिहारप्रकारेण प्रश्नार्थो विज्ञायते ॥४॥

---

அர்ஜுனனின் ஐயம். இவ்வையத்தையும், ஒருகால் பிறப்பு மெய்யாகவேயிருந்தால் அதைப்பற்றிய மற்றும் சில ஐயங்களையும தெளிந்துகொள்வதற்காக அர்ஜுனன் இப்படிக் கேள்விகேட்கிறான் என்று கண்ணனின் பதிலிலிருந்து விளங்குகிறது. பதிலில் முதன் முதலில் (ஐந்தாம்ஸ்லோகத்தில்) அர்ஜுனனைப்போலத் தனக்கும பலபிறப்புக்கள உண்டென்று கூறுவதன்மூலம் தன் பிறவிகளை உண்மையானவை என்று கண்ணன் காட்டுகிறானுகையால் (1) உன் பிறப்புகள் மெய்யானவையா? இந்திரஜாலம்போலே பொய்யானவையா? என்பதே முதல் கேளவியாயிருக்க வேண்டும். அடுத்தபடி, "என்னுடைய பரத்வத்துக்குரிய குணங்களை விடாமலே, என் அப்ராக்ருதத் திருமேனியுடன், என் ஸங்கல்பத்தாலேயே பிறக்கிறேன்" என்று (6-வது ஶ்லோகத்தில்) கண்ணன் பதில் கூறுகையாலே, (2) உன்னுடைய பிறப்பு உண்மையாளுல் பிறக்கும்போது மேன்மைக்குரிய உன் குணங்கள்அழிந்துவிடுகின்றனவா அல்லவா? (3)எங்களுடையதைப் போல் தோன்றும் உன்னுடையதேஹும் எங்களுடையதைப்போலே முக்குணமயமானதா அப்ராக்ருதமானதா? (4)நீயே ஏறிட்டுக்கொண்ட புண்ய பாபகர்மத்தால் பிறக்கிறுயா? அல்லதுஸங்கல்பமாத்ரததால் பிறக்கிறுயா? என்னும் கேள்விகளையும் அர்ஜுனன் கருதியிருக்கிறுன் என்று விளங்குகிறது. அடுத்தபடி, 'அறம் நலிவடைநது, மறம் தலை தூக்கும்போது பிறக்கிறேன' என்று (ஏழாவது ஶ்லோகத்தில்) கண்ணன் பதில் கூறுகையால், (5) உன் பிறவிக்காலம் எது? நீயே ஏறிட்டுக்கொண்ட புண்யபாபங்கள் பரிபக்குவமடையும் காலமா? அல்லது தர்மம் தலைசாய்ந்து அதர்மம் தலையெடுக்கும் காலமா? என்பது அர்ஜுனனின் ஐந்தாவது கேள்வியென விளஙகுகிறது. அடுத்தபடி, "நல்லோர்களைக் காப்பதற்கும். தீயவர்களை அழிப்பதற்கும், தர்மத்தை நிலைநாட்டவும் யுகந்தோறும் பிறக்கிறேன்" என்று (எட்டாவது ஶ்லோகக்தில்) கண்ணனின் பதில் காண்கிறபடியால், இதற்குச்சேர (6)"உன் பிறப்பு நீ ஏறிட்டுக்கொண்ட புண்யபாபங்களின் பயனுக இன்பதுன்பங்களை அனுபவிப்பதற்காகவா? அல்லது நல்லோர் களைக் காப்பது முதலானவற்றுக்காகவா?" என்பதே அர்ஜுனனின் ஆருவது கேள்வியாக இருக்கவேண்டும். ஆக, கண்ணனின் பதிலிலிருந்து, இவ்வாறு ப்ரஶ்னங்களை அர்ஜுனன் இந்த ஶ்லோகத்தில் கருதியிருக்கிறுன் என்றும், 'பரிப்ரஶ்நேந' என்ற ரீதியிலே தன் பணிவுதோற்ற அதை மறைத்துக்கேட்கிறுன் என்றும் விளங்குகிறது.

4.

श्रीभगवानुवाच—

बहूनि मे व्यतीतानि जन्मानि तव चार्जुन।
तान्यहं वेद सर्वाणि न त्वं वेत्थ परन्तप॥५॥

ஸ்ரீப4க3வாநுவாச—

5. ப3ஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந |
தாந்யஹம் வேத3 ஸர்வாணி ந த்வம் வேத்த2 பரந்தப ||

ஹே அர்ஜுந—*அர்ஜுனா!* தவ ச-*உனக்குப்போலே,* மே-*எனக்கும்,* ப3ஹூநி—*கணக்கற்றவையான,* ஜந்மாநி— *பிறப்புக்கள்,* வ்யதீதாநி—*கடந்துவிட்டன;* ஹே பரந்தப—*எதிரிகளைத் தவிக்கச்செய்பவனே!* தாநி ஸர்வாணி—*உன்னுடையவையும், என்னுடையவையுமான எல்லாப்பிறப்புக்களையும்,* அஹம்—*நான்,* வேத3-*அறிவேன;* த்வம்—*நீ,* ந வேத்த2—*(அவற்றை) அறியமாட்டாய்.*

---

5. என்பிறவி யான தியம்பிற் பலவாகு
முன்பிறவி யானவையு மொக்குமவை—தன்படியை
யானறிவ னெல்லா மிகல்விசயா விங்குநீ
தானறியா யத்தகைமை தான்.

இயம்பில்—*சொல்லப்புகில்,* என் பிறவியானது—*என்னுடைய பிறப்புக்கள்,* பலஆகும்-*பலவாயிருக்கின்றன.* அவை-*அப்பிறவிகள்,* உன் பிறவியானவையும் ஒக்கும்-*உன்னுடைய பிறவிகளைப்போலே கணக்கற்றவையாகவும் உண்மையாகவும் உள்ளன;* தன் படியை எல்லாம்—*இப்பிறவிகளின் தன்மைகள் அனைத்தையும்,* யான் அறிவன்-*நான் அறிவேன்;* இகல் விசயா-*போரில் வெற்றியே பெறும் அர்ஜுனா!* இங்கு-*இப்பிறவியில்.* நீதான்—*நீயோவெனில்.* அத்தகைமைதான்—*அப்பிறவிகளின் தன்மைகளை.* அறியாய்—*அறியமாட்டாய்.*

---

5. 'உன் பிறப்புகள் மெய்யானவையா? இந்திரஜாலம் போல் பொய்யானவையா?' என்னும் முதல் கேள்விக்கு பதில் உரைக்கிறுன் இந்த ஶ்லோகத்தில். (பரந்தப அர்ஜுந) போரில் எதிரிகளைத் தவிக்கச் செய்யும் அர்ஜுனு! போரில் வல்லவனு

॥भा॥ अनेन जन्मनस्सत्यत्वमुक्तम्, बहूनि मे व्यतीतानि जन्मानीति वचनात्, तव चेति दृष्टान्ततयोपादानाच्च॥५॥

---

யிருப்பதுபோலே நீ கேள்விகேட்பதிலும் வல்லவனாயிருக்கிறாய். உன பரிப்ரஶ்னத்தின உட்கருத்தை நான் உணர்ந்துகொண்டேன் என்று கருத்து. (ப₃ஹூ₂நி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ ச) தன் பிறப்பைப்பற்றியே கேள்வி ஏற்பட்டிருக்குமபோது, அர்ஜுனனின பிறப்பைப்பற்றிப்பேசுவது தன பிறப்புக்கு திருஷ்டாந்தமாயிருக் கிறது அர்ஜுனனின் பிறப்பு என்னும் கருத்திலேயே ஆகமுடியு மாகையாலே, 'தவ ச' என்றவிடத்தில் சகாரத்துக்கு 'இவ' என்னும சப்தத்தின் பொருளைக்கொள்ளவேண்டும். 'உனக்குப் போலே எனக்கும் பல பிறப்புக்கள் கடந்துவிட்டன' என்றபடி. 'ப₃ஹு₄தா₄ விஜாயதே' [பு-ஸூ] [பலபடியாகப் பிறக்கிறான்.] முதலான வேதவாக்யங்களும், 'சன்மம் பல பல செய்து' [திருவாய் 3-10-1] 'பல பிறப்பாய்' [திருவாய் 1-3-2] முதலான தத்வத₃ர்ஶி வசனங்களும் இங்கு அநுஸந்திக்கவுரியவை. 'உனக்குப்போலே' என்னும் திருஷ்டாந்தஸ்வாரஸ்யத்தாலும், 'பல ஜன்மங்கள் கடந்து விட்டன' என்று கூறுவதிலிருந்தும், உன்னுடைய கணக்கற்ற ஜன்மங்கள் எப்படி உண்மையானவையோ, அப்படியே எனக்கும் கணக்கற்ற உண்மையான பிறப்புக்கள் கடந்துவிட்டன என்று கூறியதாகிறது 'பல' 'பிறவிகள்' 'கடந்துவிட்டன' என்னும பதங்கள் பிறவிகள் மெய்யாயிருந்தால் பொருந்துமேயொழியப் பொய்யாயிருந்தால் பொருந்தமாட்டா; பொய்யாகில், 'ஜந்மப்ரதி பா₄ஸா:' [பிறவித்தோற்றங்கள்] என்னவேண்டுமேயொழிய, 'ஜந்மாநி'[பிறவிகள்] என்பது பொருந்தாது; அர்ஜுனனின் பிறவி யும்உண்மையாகையாலும,அவனும் தன்பிறவியைஉண்மையென்றே அறிகிறானாகையாலும், 'உனக்குப்போலே' என்னும திருஷ்டாந்தமும் ஒட்டாது. அப்படியாகில் எனக்கும் உனக்கும் வேற்றுமையே யில்லையோ? எனில்; முக்கியமான வேற்றுமையைக் கூறுகிறான் பிற்பாதியாலே: (அஹம்) கர்மவசப்படாதவனாய், ஸர்வஜ்ஞனான நான் (தாநி ஸர்வாணி வேத₃) உன் பிறவியோடு என் பிறவி யோடு வாசியற அனைத்தையும் அறிவேன்; இதிலிருந்தும பிறவி கள் உண்மையானவை என்பது வலியுறுத்தப்படுகிறது. (த்வம) கர்மவசப்பட்டவனாய், அளவுபட்ட அறிவுடையவனான நீ,(ந வேத்த₂) அவற்றை அறியமாட்டாய்; இவ்வளவே வாசியேயொழிய, உன் பிறப்புக்களைப்போலே என் பிறவிகளும் கணக்கற்றவை, உண்மை யானவை என்னும் அம்ஶத்தில் வாசியில்லையென்கை. 5.

भा॥ अवतारप्रकारम्, देहयाथात्म्यम्, जन्महेतुं चाह—

अजोऽपि सन्नव्ययात्मा भूतानामीश्वरोऽपि सन्।
प्रकृतिं स्वामधिष्ठाय संभवाम्यात्ममायया॥

6. அஜோऽபி ஸந் அவ்யயாத்மா பூ₄தாநாமீஶ்வரோऽபி ஸந்।
ப்ரக்ருதிம் ஸ்வாமதி₄ஷ்டா₂ய ஸம்ப₄வாம்யாத்மமாயயா॥

அஜ: அபி ஸந்—*(கர்மத்தால் ஏற்பட்ட) பிறப்பு அற்றவனுயிருந்துகொண்டே,* அவ்யயாத்மா (அபி ஸந்)—*(கர்மத்தால் ஏற்பட்ட) அழிவும் இல்லாதவனுயிருந்துகொண்டே,* பூ₄தாநாம்—*எல்லாப்பொருள்களுக்கும்,* ஈஶ்வர: அபி ஸந்—*ஈஶ்வரனுகவும் இருந்துகொண்டே,* ஸ்வாம் ப்ரக்ருதிம்—*தனக்கேயுரிய (அப்ராக்ருதத்) திருமேனியை,* அதி₄ஷ்டா₂ய—*தரித்துக்கொண்டே,* ஆத்மமாயயா—*தன் ஸங்கல்பத்தாலேயே,* ஸம்ப₄வாமி—*பலபடியாகப் பிறக்கிறேன்.*

---

6. மேவுபிறப் பில்லனுமாய் மெய்த்தன்மை குன்றுனய்
மூவுலகுக் கெண்ணு முறையிறையாந்—தேவுடனே
யென்னுடைய மூர்த்தியினையெய்தியே யென்னினைவு
தன்னியல்வா லேபிறப்பன் சார்ந்து.

மேவு பிறப்பு இல்லனுமாய்—*(கர்மத்தால்) ஏற்படும் பிறப்பு இல்லாதவனுய்,* மெய் தன்மை குன்றுனய்—*அழியாதிருக்கும் இயல்வை விடாதவனுய்,* மூவுலகுக்கு எண்ணும் முறை இறையாம்—*மூவுலகத்திற்கும் ஒருவனுக எண்ணப்படும் இயற்கையான ஈஶ்வரனுயிருக்கும்,* தேவுடனே—*பரத்வத்துக்குரிய தன்மைகளோடு கூடவே,* என்னுடைய மூர்த்தியினை எய்தியே—*எனக்கேயுரிய அப்ராக்ருதத் திருமேனியை தரித்துக்கொண்டே,* என் நினைவு தன் இயல்வாலே—*என்னுடைய ஸங்கல்பமாகிற தன்மையைக் கொண்டே,* சார்ந்து பிறப்பன்-*எல்லா விதமான பிறப்புக்களையும்* எடுத்துக் *கொள்கிறேன்.*

॥भा॥ अजत्वाव्ययत्वसर्वेश्वरत्वादि सर्वं पारमेश्वरं प्रकार-मजह्देव स्वां प्रकृतिमधिष्ठाय आत्ममायया संभवामि। प्रकृतिः—

6. சென்ற ஸ்லோகத்தில், தன் பிறப்புக்கள் மெய்யானவையே என்று காட்டினன. இதற்குமேல், பிறப்பிறபபற்றவனென்றும், ஸர்வலோகேஸ்வரனென்றும் புகழ்பெற்ற நீ தேவர், மனிதர் முதலானுரோடொக்கப்பிறப்பது மெய்யானல், (1) நீ பிறக்கும்போது உன் மேனமைக்குரிய குணஙகள அழிந்துவிடுகின்றனவா, அல்லவா? (2) எங்களுடையதைபபோலவே தோனறும் உனனுடைய தேஹம் எங்களுடையதைப்போலே முககுணமயமானதா? அல்லது அப்ராக்ருதமானதா? (3) நீயே ஏறிட்டுக்கொண்ட புண்ய பாபகர்மத்தால் பிறக்கிருயா? அல்லது ஸஙகல்பமாத்திரததால் பிறக்கிருயா? எனனும மூன்று கேள்விகள் உடனே எழுகினறன. அக்கேள்விகளுக்கு பதிலுரைக்கிருன இந்த ஸ்லோகத்தில். அதில் முதற்கேள்விக்கு பதில் பூர்வார்த்தத்திலும, இரண்டாம் கேள்விக்கு பதில் மூன்ரும் பாதத்திலும், மூனரும் கேளவிக்கு பதில நாலாம் பாதத்திலும உரைக்கப்படுகிறது. (அஜோऽபி ஸந்–ஸம்ப$_4$வாமி)பிறப்பறறவனுயிருந்துகொணடே பலபடியாகப் பிறக்கிறேன. பிறப்பற்றவனுயிருக்கையும பலபடியாகப் பிறக்கையும ஒனறுக்கொன்று முரணுயிருக்கிறதே? எனில்: உதஸர்க்க$_3$ாபவாத$_3$ந்யாயத்தைக்கொண்டு பார்க்குமபோது, "பிறப்பற்றவன்" எனனும் ஸாமாந்ய நிஷேதம், 'பலபடியாகப்பிறக்கிறேன்' என்றவிடததில் குறிப்பிட்டு விதிக்கப்பட்ட அவதாரரூபமான பிறப்பைத்தவிர மற்ற பிறப்புக்களைப்பற்றியதே என்று கொள்ளவேண்டும். அதாவது,- கர்மம் காரணமாக ஏற்படாத அவதார ரூபமான பிறப்புக்களை உடையவனிவன என்று "ஸம்ப$_4$வாமி" என்னும் பகுதியாலே இவ்வாக்கியத்திலேயே விதிக்கப்படுகையாலே, "அஜ:" என்னும் பதம் இவனுக்குக் கர்மம் காரணமாக ஏற்படும பிறப்பு இல்லை என்று கூறுவதாகவே கொள்ளவேண்டும். ஆக, 'அஜோऽபி ஸந் ஸம்ப$_4$வாமி' எனறு கர்மம் காரணமாக ஏற்படும பிறபபற்றவனுயிருந்துகொண்டே அவதரிக்கிறேன் என்றதாயிற்று. இதையே "அஜாயமானோ ப$_3$ஹுதா$_4$ விஜாயதே" [பு. ஸூ] [பிறப்பற்றவனுயிருந்த போதிலும பலபடியாகப் பிறக்கிருன்,] எனறு பண்டைமறையும, "பிறப்பில் பல்பிறவிப் பெருமான்" [திருவாய்2-9-5] எனறு தமிழ்மறையும உத்கோஷித்தன. (அவ்யயாத்மா) 'அபி ஸந்' எனனும பதங்கள் முனனும் பின்னும் இருப்பதையொட்டி இங்கும கூட்டிக்கொள்ள

வேணும். இங்கு ஆத்மஶப்த₃ம * தேஹத்தைச் சொல்லுகிறது. அழிவற்ற தேஹத்தை உடையவனுயிருந்துகொண்டே பிறக்கிறேன் என்றபடி. முன்போலவே கர்மம் காரணமாக ஏற்படும் அழிவை யுடைய தேஹத்தை உடையவனுயிராமல் பிறக்கிறேன் என்று கருத்துக்கொள்ளவேண்டும். ஆக, கர்மம் காரணமாக ஏற்படும் பிறப்பிறப்புக்களை உடையவனுயிராமலே பிறக்கிறேன் என்றதாயிற்று. அன்றிக்கே, (அஜ:) என்றவிடத்தில் பிறப்பைச் சொனனதை இறப்பு முதலான எல்லா ஸ்வரூப விகாரங்களுக்கும் உபலக்ஷணமாகக் கொண்டு, ப்ரக்ருதி ப்ராக்ருதங்களான அசேதனப் பொருள்களைப்போலே ஸ்வரூபவிகாரமுடையவனுயிராதவன் என்றும், (அவ்யயாத்மா) என்று அழிவற்ற *ஸ்வபாவத்தை உடையவன் என்றது. த₄ர்மபூ₄தஜ்ஞானமாகிற ஸ்வபா₄வத்தில் ஏற்றத்தாழ்வுள்ள ஸம்ஸாரிஜீவனைக்காட்டிலும் சிறப்புடையவன என்றும் காட்டுகிறதாகவுமாம. ஆக, "அஜ: அவ்யயாத்மா" என்று பரமனுக்கேயுரிய உப₄யலிங்க₃ங்களில் (இரு அடையாளங்களில்) ஒன்றான ஹேய ப்ரத்யநீகனுயிருக்கை (தாழ்வுகளுக்கெல்லாம் எதிர்த்தட்டாயிருக்கை) என்னும் பெருமை பேசப்பட்டது. இனி, மற்றேரடையாளமான ஸகலகல்யாணகுணங்களையுமுடையவனுயிருக்கையாகிற பெருமை சொல்லப்படுகிறது,-(பூ₄தாநாம ஈஶ்வரோபி ஸந்) எல்லாப் பொருள்களுக்கும ஈஶ்வரனுயிருந்துகொண்டே பிறககிறேன். 'பூ₄-ஸத்தாயம' என்று தா₄துவாகையாலே பூ₄தஶப்₃த₃ம் ஸத்தையுடைய எல்லாப் பொருள்களையும் குறிக்கிறது. அவ்வெல்லாப் பொருள்களுக்கும் ஈஶ்வரனுயிருக்கையாகிற குணத்தைச்சொன்னது அந்த ஈஶ்வரத்வத்திற்கு உறுப்பான ஸர்வஜ்ஞத்வம், ஸத்யஸங்கல்பத்வம், அவாப்த ஸமஸ்தகாமத்வம் முதலான எல்லாக்கல்யாணகுணங்களுக்கும் உபலக்ஷணம். 'அபி ஸந்' 'அபி ஸந' என்று நிகழ்காலத்தில் படிக்கையாலே, த₃ஹரவித்₃யை, ஸுபா₃லோபனிஷத் முதலானவற்றில் கோஷிக்கப்பட்ட அபஹதபாப்மத்வம் (தோஷங்களுக்கு எதிர்த்தட்டாயிருக்கை) எல்லா குணஙகளுக்கும இருப்பிடமாயிருக்கை என்னும் மேனமைக்குரிய இயல்வுகள் அனைத்தையும பிறக்கும்போதும் கைவிடாமலிருக்கிறேன் என்று சொல்லப்பட்டதாயிற்று. அன்றிக்கே, 'அஜ:' (பிறப்பற்றவன்) என்று ஸ்வரூபத்தால் பிறப்பையுடைய அசேதனப்பொருள்களையும சரீர ஸம்பந்தத்தின்மூலம் பிறப்பையுடைய ஸம்ஸாரி ஜீவர்களையும காட்டிலும் சிறப்பும, 'அவ்யயாத்மா' என்னுமிடத்தில் * ஆத்மஶப்₃தம் ஸ்வபா₄வமான த₄ர்மபூ₄தஜ்ஞானத்

* "ஆத்மா ஜீவே த்₄ருதௌ தே₃ஹே ஸ்வபா₄வே" என்கிற வைஜயந்தீநிகண்டுவின்படி ஆத்மஶப்தம் தேஹத்தையும் ஸ்வபா₄வத்தையும் குறிக்கும் என்பது காணத்தக்கது.

स्वभावः, स्वमेव स्वभावमधिष्ठाय स्वेनैव रूपेण स्वेच्छया संभवामीत्यर्थः ।

தையும 'நஞ்' அதயநதாபூாவததையும் காட்டுகையாலே 'எனறுமே அழியாத ஜ்ஞானத்தையுடையவன்' என்று கூறுவதனமூலம் ஒரு காலத்தில ஏற்றத்தாழ்வை உடைய ஜ்ஞானத்தைப் பெற்றிருந்த முக்தாத்மாவைக்காட்டிலும் சிறப்பும, ஈஶ்வரபத்தாலே, எப்போதுமே தாழ்வற்ற ஞானத்தை உடையவராயிருந்தபோதிலும், ஸர்வபூ₄த நியமனப் பெருமையற்ற நித்யஸூரிகளைக்காட்டிலும் சிறப்புமம காட்டப்படுகின்றன என்றும கொள்ளலாம். ஆக, ஶ்லோகத்தின் முற்பாதியால் பரமேஶ்வரனை தன் மேனமைக்குரிய குணங்களை விடாமலே பிறக்கிறேன என்று பதில் கூறுவதன்மூலம அவதார ப்ரகாரத்தைப்பற்றிய கேள்விக்கு பதில் சொல்லப்பட்டதாயிற்று. அந்தந்த அவதாரங்களில் சிற்சிலசமயங்களில் தன் மேன்மையைத் தன் இச்சையாலே மறைத்துக்கொள்கின்றுனேயொழிய, எந்த அவதாரத்திலும் மேன்மை இல்லாமலில்லை என்றும இதிலிருந்து விளங்குகிறது.

''ஈஶாநபி மஹாயோகீ₃ ஸர்வஸ்ய ஜக₃தோ ஹரி: ।
கர்மாண்யாரப₄தே கர்த்தும் கீநாஶ இவ து₃ர்ப்ப₃ல: ॥
[பார-உத் 67-14]

[பெரிய குணங்களையுடையவராய் எல்லா உலகையும் நியமிப்பவராயிருந்தபோதிலும் பகவான், வலிமையற்ற உழவனைப் போலே தொழில் புரியத் தொடங்குகிறுன்.] * ''க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாம் உத்பத்திரபி சாப்யய: । க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூ₄தமித₃ம் விஶ்வம் சராசரம் ॥'' [பார-ஸபா 38-26]

''வ்யக்தமேஷ மஹாயோகீ₃ பரமாத்மா ஸநாதந: ।
அநாதி₃மத்₄யநித₄நோ மஹத: பரமோ மஹாந் ॥''
[ரா-யு 114-14]

[இந்த ராமபிரான் பெரிய குணயோகத்தையுடையவராகவும், பழைமையானவராகவும், முதல், நடு, முடிவில்லாதவராகவும, மஹத்தைக் காட்டிலும் மேலானவராகவும் பெரியவராகவுமிருக்கும் பரமாத்மாவேயென்பது தெளிவு.] என்று அவதாரங்களிலும், தெளியக்கண்டவர்கள் இவனுடைய பரமேஶ்வரத்தன்மையை உத்கோஷிக்கின்றுர்களன்றே.

* இதன் பொருள் 495-ம் பக்கத்தில் விவரிக்கப்பட்டிருக்கிறது.

"கு₃ணை: ஷட்₃பி₄ஸ் த்வேதை: ப்ரத₂மதரமூர்த்திஸ் தவ ப₃பௌ₄ள
ததஸ் திஸ்ரஸ் தேஷாம் த்ரியுக₃ யுக₃ளைர் ஹி த்ரிபி₄ரபூ₄:।
வ்யவஸ்த₂ா யா சைஷா நநு வரத₃ ஸாऽऽவிஷ்க்ருதிவஶாத்
ப₄வாந் ஸர்வத்ரைவ த்வக₃ணிதமஹாமங்க₃ளகு₃ண:॥"

*[வரதராஜஸ்தவம்-16]*

*[ஜ்ஞாந ப₃லைஶ்வர்ய வீர்யஶக்தி தேஜஸ்ஸுக்களாகிற மூவிரண்டு குணங்களையுடைய வரதராஜனே! உன்னுடைய முதல் மூர்த்தியான பரவாஸுதேவமூர்த்தியானது கீழ்ச்சொன்ன ஆறுகுணங்களாலும் விளங்கிற்று. அதற்குமேல் ஸங்கர்ஷணன், ப்ரத்யும்னன், அநிருத்தன் என்னும் மூன்று வ்யூஹமூர்த்திகள் அந்த ஆறுகுணங்களில் முறையே இரண்டிரண்டு குணங்களைக்கொண்டு பிரகாசித்தன. இந்த வரம்பானது குணங்களை வெளியிடுவது பற்றியேயாம்; தேவரீர் எல்லாமூர்த்திகளிலும் எண்ணிறந்த சிறந்த கல்யாணகுணங்களை உடையவராகவேயிருக்கிறீர்.] என்று கூரத்தாழ்வானும் அவதாரதசையில் சிற்சில குணங்களை வெளியிடுவதும், சிலவற்றை மறைத்துக்கொள்வதும் செய்கின்றனேயொழிய எல்லா அவதாரங்களிலும் எல்லா குணங்களும் இருக்கவே செய்கின்றன என்று அருளிச்செய்தாரன்றே.*

இனி, 'எங்களுடையதைப்போல் தோன்றும் உன்னுடைய உடம்பு முக்குணமயமானதா? அல்லது அப்ராக்ருதமானதா?' என்னும் கேள்விக்கு பதில் உரைககப்படுகிறது மூன்றும் பாதத்தாலே: (ஸ்வாம் ப்ரக்ருதிம் அதி₄ஷ்ட₂ாய) எனக்கேயுரிய ஸ்வப₄ாவமான அப்ராக்ருதததிருமேனியை தரித்துக்கொண்டு, "ப்ரக்ருதிமஸ்வாமவஷ்டப்₄ய விஸ்ருஜாமி" *[கீதை 9-8]* [என்னுடையதான மூலப்ரக்ருதியைப்பரிணமமடையச்செய்து விதவிதமாகப் படைக்கிறேன்.] என்றவிடத்திற்போலே இங்கும் மூலப்ராக்ருதியையே பரக்ருதிஶப்₃த₃த்தால் குறிப்பதாகக் கொள்ளலாகாதோ? எனில்:

"ந பூ₄தஸங்க₄ஸம்ஸ்த₂ாநோ தே₃ஹோऽஸ்ய பரமாத்மந:"

*[பாரதம் சாந்திபர்வம் 206-60]*

[இந்தப் பரமாத்மாவின் தேஹம பஞ்சபூதங்களின கூட்டரவால் ஏற்பட்டதன்று.]

"ந தஸ்ய ப்ராக்ருதா மூர்த்திர் மாம்ஸமேதே₃ாऽஸ்தி₂ஸம்ப₄வா"

*[வாயுபுராணம்-பூர்வ-34-40, வராஹ 14-41]*

स्वरूपं हि * आदित्यवर्णं तमसः परस्तात् * क्षयन्तमस्य रजसः

---

[மாம்ஸம், தசை, எலும்பு ஆகியவற்றால் உண்டான ப்ராக்ருதசரீர மன்று அவன் திருமேனி] என்று பரமபுருஷனுக்கு அவதாரநிலை யிலும் முக்குணமயமான ப்ராக்ருதசரீரம் கிடையாதென்று சாஸ் திரங்கள் கோஷிக்கையாலே, இங்கு ப்ரக்ருதிஶப்₃த₃ம் மூலப்ரக்ருதி யைக் குறிக்கமுடியாது. "ப்ரக்ருதி: பஞ்சபூ₁தேஷு ஸ்வப₄ாவே மூல காரணே" [வைஜயந்தி-த்ரயக்ஷரகாண்ட-ஸ்தரீலிங்காத்யாயம-12] [பரக்ருதிஶப்தமானது ஐந்து பூதங்களையும, ஸ்வப₄ாவத்தையும், மூலகாரணத்தையும் குறிக்கும்.] எனகிற வைஜயந்தீ நிகண்டுவின படி ப்ரகருதிஶப்தம் ஸ்வப₄ாவத்தையும் குறிக்குமாகையாலும, "நித்யா லிங்க₃ா ஸ்வப₄ாவஸம்ஸித்₃தி₄:" [ரஹஸ்யாமநாயம்] [நித்தியமாய், ப்ராக்ருதமான குறிகளற்றதாய், ஸ்வப₄ாவமாகவே (இயலவாகவே) ஸித்தித்திருப்பதான திருமேனி] என்று ஏகாயநஶாகையில் இயல வாகவே பரமனுக்குரிய ஸ்வப₄ாவமாயிருப்பதாகத் திருமேனி எடுக் கப்படுகையாலும அதையே இங்கு பரக்ருதிஶப்தத்தாலே எடுப்ப தாகக் கொள்வதே உசிதம். ஸ்வப₄ாவஶப்த₃ம் பகவானுடைய குணங் களையும் குறிக்குமாயினும், குணங்கள் பூர்வார்த்தத்தில் எடுக்கப் பட்டுவிட்டபடியால் இங்கு கோ₃ப₃லீவர்த்த₃ந்யாயத்தாலே, திரு மேனியாகிற ஸ்வப₄ாவத்தைக் குறிப்பதாகக் கொள்வதே தக்கது. (ஸ்வாம் ப்ரக்ருதிம் அதி₄ஷ்டாய) தனக்கேயுரியதான அப்ராக்ருதத் திருமேனியை தரித்துநின்று. ப்ரக்ருதியெனருலே தன்னை விட்டுப் பிரியாத ஸ்வப₄ாவமான திருமேனியைக்குறிக்குமாயினும், ஸம்ஸாரி களுக்குளளதான ப்ராக்ருதஶரீரம்போல றதன்று, தனக்கேயுரிய அப்ராக்ருதஶரீரமேயிது என்று காட்டுவதற்காக 'ஸ்வாம' என்று விஶேஷிக்கிருன். (அதி₄ஷ்ட₂ாய) தரித்துநின்று எனகையாலே இங்கு ப்ரக்ருதிஶப்தம் தரிக்கப்படும் விக்ரஹத்தையே குறிக்கிறதென் றும, அதைக் கர்மம்காரணமாகவல்லாமல இச்சையாலேயே தரிக்கி ருன என்றும் உணர்த்தப்படுகிறது. நாலாவது பாதத்தில தெளிவு படுத்தப்படும். இததகைய அப்ராக்ருதத்திருமேனி இவனுக்கு உண்டென்பது பல வேதவாக்யங்களிலிருந்து ஸிததிக்கிறது. "ஆதி₃த்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்" [பு. ஸூ] [ஸூர்யனைப்போல் ஒளியுடையவனுய், தமஸ்ஸுக்கு மேற்பட்ட மஹாபுருஷனை] என் னும் புருஷஸூக்தவாக்யமானது பரமபுருஷனுககு அப்ராக்ருதமான தாய், சிறந்த ஒளியுடையதான திருமேனியுண்டென்று காட்டுகிறது. அந்த ப்ரகரணத்தில் "மரீசீநாம் பத₃ம்" [பு.ஸூ] [நித்யஸூரி

களின் நாடு] "ருசம் ப்₃ராஹ்மம் ஜநயந்த: தே₃வா அக்₃ரே தத₃ப்₃ருவந்" [பு.ஸூ] [ப்ரஹ்மத்திற்கு முகமலர்த்தி உண்டாவதற்காக நித்ய ஸூரிகள் ஆதிகாலத்தில் 'நம:' என்றனர்.] "ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ" [பு.ஸூ] [உனக்கு ஸ்ரீபூமிதேவிகள் பத்னிகள்] என்று எம்பெருமான் ஒரு திருநாட்டிலே எழுந்தருளியிருக்கிறன் என்றும், நித்யஸூரிகள் அவனுக்குக் கைங்கர்யம செய்கிறார்களென்றும், லக்ஷ்மீநாதனுக அவன் காட்சியளிக்கிறன என்றும் கூறியதிலிருந்து இவ்வாக்யம ஸ்ரீமந்நாராயணனுடைய திருமேனி 'தமஸ்'எனப்படும் முக்குணமயமான மூலப்ரக்ருதிக்கு மேற்பட்டதாய், அப்ராக்ருதமாயிருப்பதொன்று என்று கோஷிக்கிறது என விளங்குகிறது. ருக் வேதத்திலும் [மண்டலம் 7-6-99] ஸாமவேதத்திலும [உத்தரப்ர பாடகம் 17-2-4-2] படிக்கப்படும் "க்ஷயந்தமஸ்ய ரஜஸ: பராகே" ['ரஜஸ்'எனப்படும் மூலப்ரக்ருதிக்கு மேற்பட்டஉலகில் வஸிப்பவன்] என்னும் வாகயத்திலும் இவ்விஷயம் வலியுறுத்தப்படுகிறது. 'தமஸ்' என்று தமோகுணத்தையுடைய மூலப்ரக்ருதியைப் புருஷஸூக்தம் குறித்ததுபோலே, 'ரஜஸ்' என்று ரஜோகுணமுடைய மூலப்ரக்ருதியைக் குறிக்கிறது இவ்வாக்கியம். ஸத்வகுணம் ஶுத்₃த₄ஸத்வத்₃ரவ்யத்திற்குமிருப்பதொன்ருகையாலும், ரஜஸ்ஸும், தமஸ்ஸும் மூலப்ரக்ருதியிலேயே இருப்பவையாகையாலும், 'ரஜஸ்' என்றும், 'தமஸ்' என்றும் மூலப்ரக்ருதியைக் குறிக்கிறது வேதம். 'க்ஷயந்தம்' [வஸிப்பவனை] என்று கூறுகையால் இவ்வாக்கியத்திலிருந்தும் எம்பெருமானுக்குத் திருமேனியுண்டென்று விளங்குகிறது. ஆக, இவ்விரண்டு வாக்கியங்களிலிருந்தும் பரமபதத்தில் எம்பெருமான் நித்யவிக்ரஹத்தோடு விளங்குகிறன் என்று தேறிற்று. இந்த விக்₃ரஹம் பலவிதமான அவதார நிலைகளை அடைகின்றதென்பதையும் பல வேதவாக்கியங்கள் காட்டுகின்றன: "ய ஏஷோऽந்தராதி₃த்யே ஹிரண்மய: புருஷ:" [சாந்-1-6-6] [ஸூர்யனுக்கு நடுவில் பொன்மயமான புருஷன் யாவனொருவன் இருக்கிறனே] என்னும் வாக்யம் ஸூர்யமண்டலத்தின் நடுவில் உபாஸகர்கள் உபாஸிப்பதற்காகப் பரமபுருஷனுல் எடுத்துக்கொள்ளப்பட்ட திவ்யமங்கள விக்ரஹமொன்றைக்காட்டுகிறது."ஆதி₃த்யவர்ணம்" "ஹிரண்மய:" என்று ஸூர்யன்போலவும், பொன்போலவுமிருப்பவன் என்றது, "கதிர் மதியம்போல் முகத்தான்" [திருப்பாவை-1] என்றருளியதுபோலே ப்ரதிகூலர்களுக்கு ஸூர்யன்போலப் பொறுக்கவொண்ணுதவனு

யிருப்பானென்றும்,அனுகூலர்க்குப் பொன்போலே குளிரக்கடாக்ஷிப்பான் என்றும் காட்டுவதற்காகவாகும். ஆகையாலே ஸர்வேஸ்வரனுடைய நிறம் ஸூர்யனையும், பொனனையும போலிருப்பது என்று கொள்ளவேண்டியதில்லே. "ஹிரண்மய இதிரூபஸாமாந்யாத் சந்த்₃ர முக₂வத்" [சந்திரன போன்ற முகம் என்று கூறுமிடங்களிற் போலே உருவத்தின் அழகைக்காட்டுவதற்காகப் பொன்மயமானவன் என்கிறது.] என்றார் வாக்யகாரரும். "மயூரகண்ட₂ச்ச₂வி ஶுத்₃த₄ஹேமம:" [மயில் கழுத்தின ஒளிபோன்ற சுத்தமான பொன்] எனறு சிலபசாஸ்திரத்தில் சொன்னதுபோலே 'பசும் பொன' என்று கூறப்படும் சுத்தமான தங்கம் மயில் கழுத்தின் நிறம்போல ஶ்யாமளமாகவே இருக்குமாகையால் எம்பெருமானுடைய நிறத்துக்கு உபமானமாகவும குறையில்லே. அன்றிக்கே,

"பாலின் நீர்மை செம்பொன் நீர்மை பாசியின் பசும்புறம்
போலும் நீர்மை பொற்புடைத் தடத்து வண்டு விண்டுலாம்
நீல நீர்மை என்றிவை நிறைந்த காலம் நான்குமாய்"
[திருச்சந்த 44]

"நிகழ்ந்தாய் பால் பொன் பசுப்புக் கார்வண்ணம நான்கும்"
[நான்-திருவ 24]

"க்ருதே ஶுக்லஶ்சதுர்பா₃ஹு:" "த்ரேதாயாம் ரக்தவர்ணோऽஸௌ" "த்₃வாபரே பீ₄த₃வாந் ஶ்யாம:" "கலௌ க்ருஷ்ணம் த்விஷா க்ருஷ்ணம்" [ஸ்ரீபாகவதம 11-5-20] என்று உபப்₃ருஹ்மணங்களிலே நாலு யுகங்களிலும்ஒவ்வொருவிதமான நிறத்தோடு எம்பெருமானவிளங்குகிறான என்றும், வ்யூஹமூர்த்திகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு நிறம எனறும்கூறுவதையொட்டித் திரேதாயுகத்தில் செமபொன்னைப் போனற நிறமுடையவனுயிருப்பதையோ, செமபொன நிறமுடைய வ்யூஹவிஶேஷத்தையோ குறிப்பதாகவும் கொள்ளலாம. ஆகையால், ஆதித்யவர்ணனென்றும் பொன்நிறமெனறும் சொன்னதில் எக்குறையுமில்லே. "தஸ்மிந்நயம் புருஷோ மநோமய: அம்ருதோ ஹிரண்மய:" [தைத்-ஶீக்ஷா 6-1] [அநத ஹ்ருதயத்தில் பரிசுத்தமான மனத்தால் அறியத்தக்கவனுய், மரணமற்றவனுய், பொன்மயமானவனுன புருஷனிருக்கிறுன்.] என்று ஹ்ருதயத்தின் நடுவில உபாஸநத்தின்பொருட்டு அந்தர்யாமி ரூபத்துடன் இவன் எழுந்தருளியிருப்பதையும் ஒரு வேதவாக்யம் உத்கோஷித்தது.

(शीक्षा. ६. १) * सर्वे निमेषा जज्ञिरे विद्युतः पुरुषादधि (ना. ६. १. ८) * भारूपस्सत्यसङ्कल्प आकाशात्मा सर्वकर्मा सर्वकामस्सर्वगन्धस्सर्वरसः (छा. ३. १४. २) * माहारजनं वासः (बृ. ४. ३. ६) इत्यादिश्रुतिसिद्धम्।

''ஸர்வே நிமேஷா ஜஜ்ஞிரே வித்₃யுத:புருஷாத₃தி₄''[தை-நா-1-8][காலங்கள்அனைத்தும் மினனல் போன்ற புருஷனிடமிருந்து உண்டாயின ] என்னும் வேதவாக்யம் ஸர்வகாரணப்பொருளுககே திருமேனி உண்டென்று காட்டிற்று. இங்கு மின்னல் என்றது நீலமேகத்தோடு சேர்ந்த மின்னலையே என்பதை இந்த நாராயணவல்லியே மேலே ''நீலதோயத₃மத்₄யஸ்த₂ா வித்₃யுல்லேகே₂வ ப₄ாஸவரா'' [தை-நா 11] [நீலமேகம் நடுவிலுள்ள மினனற்கொடிபோல் ஒளிவிடுவது]என்னுமிடத்தில் காட்டி, இத்திருமேனியை உடையவன் பிரமனையும உருத்திரனையும் விபூ₄தியாகக்கொண்ட நாராயணனே எனறு நிர்ணயித்தது. ''நீலமுண்டமின்னன்ன மேனிப்பெருமான்''[திருவிருத்தம் 29]எனறு வேதம தமிழ்செய்த மாறனும் இவ்வாக்கியத்தைத தமிழ்ப்படுத்தினர். திருமேனியில் நீலநிறத்தையும், பிராட்டி, திவ்யாயுதங்கள், திருவாபரணங்களில் மின்னல் நிறத்தையும், கண் கை கால் வாய்களில் செந்தாமரை நிறத்தையும கொண்ட இத்திருமேனியையே ''வித்₃யுமதீஸர்வவர்ண புருஷதை₃வத்யா'' என்று அத₂ர்வஶிகை₂ ஸர்வ வர்ணங்களையுமுடையதாகப் பேசிற்று. ''ஶாந்த உபாஸீத'' [சாந் 3-14-1] என்று சொன்ன உபாஸனத்தையே ''ஸ க்ரதும் குர்வீத'' என்று அநுவாதம் செய்து, அவ்வுபாஸனத்தின் பொருட்டு உண்மையான குணங்களை விதிக்கும்போது ''ப₄ாரூப: ஸத்யஸங்கல்ப ஆகாஶாத்மா ஸர்வகர்மா ஸர்வகாம: ஸர்வக₃ந்த₄: ஸர்வரஸ:'' [சாந் 3-14-2] என்னும் வேதவாக்யம் ''ப₄ாரூப:'' [ஒளிமயமான உருவையுடையவன்] என்று விக்ரஹத்தையும சேர்த்துப்படித்தபடியால் இவ்வுருவம உண்மையானதே என விளங்குகிறது.''தஸ்ய ஹைதஸ்ய புருஷஸ்ய ரூபம் யத₂ா மாஹாரஜநம் வாஸோ யத₂ா பாண்ட₃வாவிகம் யதே₂ந்த்₃ரகோ₃பே யத₂ாக்₃ந்யார்ச்சிர் யத₂ா புண்ட₃ரீகம் யத₂ா ஸக்ருத₃ வித்யுத்தம்'' [ப்ருஹ 4-3-6] [அப்படிப்பட்ட இந்தப் புருஷனுடைய உருவமானது, பொன்னிறவாடைபோலவும், வெள்ளைக்கம்பளம் போலவும், இந்திரகோபம் எனனும் புழுவைப்போலவும, அக்னியின ஒளியைப்போலவும், தாமரையிலையைப்போலவும, ஒன்றாக மின்னும மின்னலைப்போலவும்நிறமுள்ளது.]என்னும்வாக்யம பரமபுருஷனின

आत्ममायया—आत्मीयया मायया * माया वयुनं ज्ञानम् इति ज्ञानपर्यायोऽत्र मायाशब्दः। तथाचाभियुक्तप्रयोगः—* मायया सततं वेत्ति प्राणिनां च शुभाशुभम् इति। आत्मीयेन ज्ञानेन—आत्मसङ्कल्पेनेत्यर्थः।

---

திருமேனி நிறங்களுக்கும் உபமானமிட்டது. இப்படி ஒவ்வொரு ஸ்தானத்திலிருக்கும பரம்பொருளை வர்ணமுடையவனுக வும், புருஷனென்றும வேதவாக்யங்கள் படிக்கையால், புருஷஸூக் தத்தில் சொன்ன பரம்பொருளான நாராயணனுக்கு அப்ராக்ருத மாய், உண்மையான திருமேனியுண்டென்று தேறிற்று. அதுவே இங்கு மூன்ரும் பாதத்தில் சொலலப்படுகிறது.

இனி, 'நீயே ஏறிட்டுக்கொண்ட கர்மத்தால் பிறக்கிருயா, அல்லது ஸங்கல்பமாத்திரத்தால் பிறக்கிருயா' என்னும் கேள்விக்குக் கடைசிப் பாதத்தாலே பதிலளிக்கிருன். (ஆத்மமாயயா) என்னு டையதான மாயையாலே. "ஆத்மந: மாயா ஆத்மமாயா" என்று விக்₃ரஹம். ஸம்ப₃ந்த₄ஸாமாந்யத்தைக் குறிக்கும் ஆரும் வேற்றுமை, இங்கு உடையவனுக்கும் உடைமைக்குமுள்ள ஸம்பந்தத்தைக் குறிக் கிறது. மாயாஶப்தம் பொதுவாக ஆஶ்சர்யத்தை விளக்கும பொருள் களைக் குறிக்கும். அந்தந்தப்பிரகரணத்திற்குத் தக்கபடி எந்தப் பொருள் என்று நிச்சயித்துக்கொள்ளவேண்டும். இங்கு, "மாயா வயுநம் ஜ்ஞாநம்" [வேதநிகண்டு-தர்மவர்க்கம்22] [மாயை, வயுநம் என்னும் சப்தங்கள் ஜ்ஞானத்தைச் சொல்லும்]என்கிற வேதநிகண்டு வினபடி, மிகுந்த ஆஶ்சர்யத்தை விளக்கும் அறிவைக்குறிக்கிறது என்று கொள்வதே பொருத்தம்."இச்ச₂ாக்₃ருஹீதாபி₄மதோருதே₃ஹ:' [வி-பு 6-5-84] [தன் இச்சையாலேயே எடுத்துக்கொள்ளப்பட்ட இனிய பெரிய தேஹங்களையுடையவன] முதலான ப்ரமாணங்களை யொட்டித் தன விருப்பத்தாலேயே அவதரிப்பதைக் கூறும் பிரகரண மாகையாலே அறிவுமயமான அந்த விருப்பத்தை இங்கு மாயை என்பதாகக் கொள்ளவேண்டும். வெறும் அறிவாலே அவதரிப்ப தாகக கொண்டால், எப்போதும் அறிவையுடைய இவன எப்போ தும் அவதரித்துக்கொண்டேயிருக்கவேண்டிவருமாகையாலும் ஸங் கல்பரூபமான அறிவையே இங்கு மாயாஶப்தம் குறிப்பதாகக் கொள்ளவேண்டும. "மாயயா ஸததம வேத்தி ப்ராணிநாம் ச ஶுப₄ா ஶுப₄ம்" [மாயை எனப்படும அறிவினுல், பிராணிகளுக்கு நனமை தீமைகளை எப்போதும் அறிகிருன் ] என்று அபி₄யுக்தர்களும் மாயா ஶப்தத்தை அறிவு என்னும பொருளிலே பிரயோகித்தார்கள்.

"யாவந்த: பாம்ஸவோ பூ₁மேஸ் ஸங்க்₂யாதா தே₃வமாயயா" [தேவனின அறிவாலே கணக்கிடப்பெற்ற பூமியின் துகள்கள் எத்தனையிருக்கின்றனவோ] எனனும் ஶ்ருதியிலும மாயாஶப்தம் அறிவு எனனும் பொருளிலேயே பிரயோகிக்கப்பட்டது. இவ்விடங்களில் அத்வைதிகள் கருதும மாயையைப் பொருளாகக கொண்டால், அறிவை மறைக்கக்கூடிய அந்த மாயையாலே அறிவதாகவும் கணக்கிடுவதாகவும் சொல்லுவது ஓட்டாதாகையால் அதை இங்கு பொருளாகக் கூறமுடியாது. மாயாஶப்தத்திற்குப் பொருளாக வேதநிகண்டுவில் சொல்லப்பட்ட அறிவே இவ்விடங்களில் பொருளாகமுடியும். அதுபோலவே, ப்ரகரணத்தையும் இதரப்ரமாணங்களையும் பார்க்கும்போது, இங்கும் மாயாஶப்தத்திற்கு அறிவையே பொருளாகக் கொள்ளவேண்டும் எனறும். மாயாஶப்தத்திற்குப் பொய்யென்றும் ப்ரக்ருதிஶப்தத்திற்கு முக்குணப்ரக்ருதியென்றும் சங்கரர் பொருள் கொண்டது பொருந்தாது என்றும் விளங்கும். "ஆத்மமாயயா" என்னும் பதத்திற்கு வ்யாக்யானம் செய்யும்போது, "ஆத்மநோ மாயயா, ந பரமார்த்த₂தோ வோகவத்" [என் மாயையாலே (பிறக்கிறேன்); உலகிற்போலே உண்மையாகப் பிறக்கவில்லை] எனறு அவர் உரையிட்டதும் பொருந்தாது. மற்றுள்ளாருடைய பிறப்பும் அவர் மதத்தினபடி பொய்யேயொழிய மெய்யல்லவே! (ஸம்ப₄வாமி) முற்கூறிய என்னுடைய அப்ராக்ருதத்திருமேனியையே தேவர், மனிதர், திர்யக்முதலானரோடு இணைந்திருக்கும் உருவை உடையதாக ஆக்கிக்கொணடு பல படியாகப்பிறக்கிறேன. "பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநௌ" [யஜுஸ்-காடகம்3-9] [அனைத்துலகுக்கும் தநதையானவன தன் பிள்ளையொருவனைத் தந்தையாகக்கொண்டு எல்லாயோனிகளிலும் பிறக்கிறான்.] எனறு வேதபுருஷனும்,

"ஸமஸ்தஶக்திரூபாணி தத் கரோதி ஜநேஶ்வர।
தே₃வதிர்யங்மநுஷ்யாக்₂யாசேஷ்டாவந்தி ஸ்வலீலயா॥"
[ஸ்ரீவிஷ்ணுபுராணம் 6-7-71]

[அரசரே! தேவர், திர்யக, மனிதர் ஆகிய யோனிகளுக்குரிய பெயர்களையும், தொழில்களையும் உடையனவாய், எல்லா சக்திகளையும் வெளிப்படுத்துவனவான உருவங்களைத் தன் விளையாட்டின் பொருட்டு அப்பரம்பொருள் எடுததுக்கொள்கின்றது.] முதலான விடங்களில் பராசராதிபரமரிஷிகளும, "எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்" [திருவிருத்தம்-1] "இனைவனும் எப்பொருட்கும்" [திருவாய் 2-8-1] "மாவாகி ஆமையாய் மீனாகி மானிடமாம் தேவாதிதேவபெரு

अतोऽपहतपाप्मत्वादिसमस्तकल्याणगुणात्मकत्वं सर्वमैशं स्वभावमजहत् स्वमेव रूपं देवमनुष्यादिसजातीयसंस्थानं कुर्वन्नात्मसङ्कल्पेन देवादिरूपः संभवामि इत्यर्थः। तदिदमाह—* अजायमानो बहुधा विजायते (पु.) इति श्रुतिः। इतरपुरुषसाधारणं जन्माकुर्वन्देवादिरूपेण स्वसङ्कल्पेनोक्त-प्रक्रियया जायत इत्यर्थः। * बहूनि मे व्यतीतानि जन्मानि तव चार्जुन।

---

மான்" [திருவாய் 2-8-5] என்று தத்வத₃ர்ஶியான ஆழ்வாரும் இவ்வர்த்தத்தை அறிவித்தனரன்றோ ஆக, ஸுபாலோபனிஷத முதலானவற்றில் சொன்னபடி பாபம், கிழத்தனம், மரணம, சோகம், பசி, தாகம் என்னும் தாழ்வுகள் அனைத்துமற்றவனும், ஸத்யகாமத்வம், ஸத்யஸங்கல்பத்வம முதலான எல்லாக்கல்யாணகுணங்களையும் உடையவனும், இப்படி (ஹேயப்ரத்யநீகனுயிருக்கை, கல்யாணகுணைகதானுயிருக்கை என்னும) உப₄யலிங்க₃ங்களாகிற ஈஶ்வரஸ்வப₄ாவம் முழுவதையும் விடாமலே தனக்கேயுரிய அப்ராக்ருதத்திருமேனியை தேவர் மனிதர் முதலானரைப்போலே ஆக்கிக்கொண்டு தன ஸங்கல்பமாத்திரத்தாலேயே தேவர் முதலான யோனிகளில் பிறக்கிறேன் என்பது இந்த ஶ்லோகத்தின் திரண்ட பொருள். 'அஜாயமானோ ப₃ஹுதா₄ விஜாயதே" [பு.ஸூ] என்ற ஶ்ருதியில் இவ்வர்த்தமே சொல்லப்பட்டதெனபதை முன்னமே காட்டினோம். "ப₃ஹுஸ்யாம்" [சாந் 6-2-3] முதலானவிடங்களில் பல பொருள்களாகப் பரம்பொருள் தன்னைத்தானே ஸ்ருஷ்டித்துக்கொள்வதாகக் கூறியதுபோலே இங்கும் கொள்ளலாகாதோ? எனில்: அப்படிக் கொண்டால்,"தஸ்யா தீ₄ரா. பரிஜாநந்தி யோநிம் மரீசிநாம பத₃மிச்ச₂ந்தி வேத₄ஸ:" [பு.ஸூ] [அப்பரமபுருஷனுடைய பிறப்பை அறிவாளிகளே அறிகிறார்கள்; பரமபொருளின் இருப்பிடமான வானவர் நாட்டை அவர்கள் விரும்புகிறார்கள்.] என்று அடுத்த வாக்கியத்தில் இப்பிறப்பை அறிபவர்களுக்கு மோக்ஷமுண்டென்று கூறுகையாலே, மோக்ஷமளிக்கும் அவதாரரஹஸ்யஜ்ஞாநமே அங்கு கூறப்படுகிறது என விளங்குகிறது. அதையொட்டி இவ்வாக்யத்தில், 'ஸம்ஸாரிகளைப்போலே கர்மத்தால் பிறக்காவிடிலும் தேவர், மனிதர் முதலான உருவங்களோடு தன் ஸங்கல்பத்தாலேயே பிறக்கிறான என்று அவதாரரூபமான பிறப்பு சொல்லப்படுகிறது என்று கொள்வதே பொருந்தும். "அஜோऽபி ஸந் அவ்யயாத்மா" என்று உண்மையில் பிறப்பிறப்பு அற்றவன என்றும் "ஸம்ப₄வாமி" என்று அப்படி

तान्यहं वेद सर्वाणि * तदाऽऽत्मानं सृजाम्यहं * जन्म कर्म च मे दिव्यमेवं यो वेत्ति तत्त्वतः इति पूर्वापराविरोधाच्च ॥ ६ ॥

भा॥ जन्मकालमाह—

यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत।
अभ्युत्थानमधर्मस्य तदाऽऽत्मानं सृजाम्यहम्॥ ७॥

---

யிருந்தபோதிலும் பொய்யான பிறப்பையுடையவன் என்றும் கூறுவதாகக் கொள்ளலாமே? 'ப்ரக்ருதி' ஶப்தத்திற்கு ஸுப்ரஸித்தமான மூலப்ரக்ருதியைப் பொருளாகக் கொள்வதை விடுத்து, அப்ரஸித்தமான விக்ரஹம் என்னும் பொருளைக் கொள்வதும, மாயா ஶப்தத்திற்கு உலகில் பிரஸித்தமான 'பொய்' எனும் பொருளைக் கைவிட்டு, அப்ரஸித்தமான அறிவு என்னும் அர்த்தத்தைககொள்வதும் அஸ்வரஸமல்லவா? எனில: இப்படிப் பொருள்கொள்வது மற்ற ப்ரமாணங்களுக்கு விருத்தமாயிருப்பதோடன்றியில், இங்கு முனபின பிரகரணத்திற்கும் முரண்படுகிறது. முன் ஶ்லோகத்தில "அர்ஜுந! உனக்குப்போலே எனக்கும் பல ஜந்மங்கள் கடந்து விட்டன. நான் அவை அனைத்தையும் அறிவேன்" என்கிருன் கண்ணன். ஜந்மங்கள் எனபது ஜந்மத்தோற்றத்தைக் குறிக்காது. "கடந்துவிட்டன" என்னும் பதம் 'பொய்த்தோற்றம் மறைந்து விட்டது' என்று பொருள்படாது. பொய்த்தோற்றத்தை 'அனைத்தையும் அறிவேன்' என்பதும் ஒட்டாது. பின ஶ்லோகங்களிலும், "அப்போது என்னை நானே படைத்துக்கொள்கின்றேன்" [4-7] "என்னுடைய திவ்யமான பிறப்பையும் செயலையும் எவன் உள்ளபடி அறிகிருனே" [4-9] எனறு கண்ணன் கூறுவதும் ஒட்டாது. பொய்யைப்படைக்கமுடியாது. முக்குணமயமான தேஹத்தோடு பிறப்பது திவ்யமான பிறப்பாகாது. ஆகையால், கணணனுடைய பிறப்பை முக்குணமயமான தேஹத்தையுடைய பொய்ப்பிறப்பாகக் கொள்ளாமல், தன ஸங்கல்பமாத்திரத்தால் ஏற்பட்ட அப்ராக்ருதமான மெய்ப்பிறப்பாகவே கொள்ளவேண்டும். ஆக, "அவரம் பவதோ" [4-4] என்ற ஶ்லோகத்தில் அர்ஜுனன கருதிய ஆறு கேள்விகளில் முதற் கேள்விக்கு முந்திய ஶ்லோகத்திலும், இரண்டாவது மூன்ருவது நான்காவது கேள்விகளுக்கு இந்த ஶ்லோகத்திலும் பதிலுரைக்கப்பட்டதாயிற்று.

6.

**7.** யதா₃ யதா₃ ஹி த₄ர்மஸ்ய க்₃லாநிர் ப₄வதி பா₄ரத ।
அப்₄யுத்தா₂நமத₄ர்மஸ்ய ததா₃த்மாநம் ஸ்ருஜாம்யஹம் ॥

**பா₄ரத**—*பரதகுலத்துதித்தவனே!* **யதா₃ யதா₃ ஹி**—*எந்த எந்தக் காலங்களில்,* **த₄ர்மஸ்ய**—*அறத்திற்கு,* **க்₃லாநி: ப₄வதி**-*வாட்டம் ஏற்படுகிறதோ,* **அத₄ர்மஸ்ய**-*அறத்திற்கு எதிரான மறத்திற்கு,* **அப்₄யுத்தா₂நம் (ப₄வதி)**—*எழுச்சி ஏற்படுகிறதோ,* **ததா₃**—*அந்தந்தக் காலங்களில்,* **அஹம**—*நான்,* **ஆத்மாநம்**—*என்னையே,* **ஸ்ருஜாமி**—*படைத்துக் கொள்கின்றேன்.*

---

**7.** அறந்தளரு மக்கால மெக்கால மாங்கே
மறங்கிளர்ந்து பாவம வளரும்—பிறங்கரசர்
வெந்நைத் தருவிக்கும் வில்விசயா வக்காலத்
தெனனைப் பிறப்பிப்பன் யான்.

**பிறங்கு அரசர் வெந்நைத் தருவிக்கும் வில்விசயா**—*பகையரசர்கள் முதுகுகாட்டி ஓடும்படி செய்கின்ற வில்லை யுடைய அர்ஜுனனே!* **எக்காலம**—*எந்தக் காலத்தில்,* **அறம தளரும்**—*தர்மத்திற்கு வாட்டம் ஏற்படுமோ,* **அக் காலம்**—*அக்காலத்திலும்,* **மறம் கிளர்ந்து பாவம் வளரும்**—*( எந்தக்காத்தில் ) அதர்மம் எழுச்சிபெற்றுப் பாபங்கள் அதிகமாகுமோ,* **அக்காலத்து**-*அந்தக் காலத்திலும்,* **என்னை**-*என்னையே,* **யான்**—*நான்,* **பிறப்பிப்பன்**—*அவதரிக்கும்படி செய்துகொள்வேன்.*

---

7. இந்த ஶ்லோகத்தில், பிறக்கும் காலம் பற்றிய ஐந்தாவது கேள்விக்கு பதில் கூறுகிறுன் கண்ணன். ( யதா₃ யதா₃ ) எப் பொழுது எப்பொழுது. இப்படிப் பொதுவாகக் கூறுகையாலே, இன்ன காலத்தில்தான அவதரிப்பது என்னும் காலநியமம் இல்லை என்று காட்டுகிறுன். ஜீவனுடைய பிறப்பு புண்ணியபாபங்கள் பரிபகுவமடையும் காலத்தில் ஏற்படும். இவனுக்குப் புண்ய பாபங்களில்லாமையால் அத்தகைய காலநியமமில்லை. அதுதவிர, 'இன்ன காலத்தில்தான் அவதரிப்பேன்' என்று இவன் ஸங்கல்ப மும் செய்துகொளவதுமில்லை. ஆகையால் இத்தகைய கால

॥भा॥ न कालनियमोऽस्तत्संभवस्य; यदा यदा हि धर्मस्य वेदोदितस्य चातुर्वर्ण्यचातुराश्रम्यव्यवस्थयाऽवस्थितस्य कर्तव्यस्य ग्ला-

---

நியமங்கள் இல்லை என்கிறுன். அடுத்த ஶ்லோகத்தில், "ஸம்ப₄வாமி யுகே₃ யுகே₃" என்று, 'இன்னயுகத்தில்தான் நான் பிறபபேன்' என்னும் யுகநியமம் இல்லை என்று கூறப்போகிறுனகையால், இங்கு யுகத்தை காட்டிலும் சிறிதும் பெரிதுமான காலங்களில் 'இன்ன மஹாகல்பத்தில் இன்ன மந்வந்தரத்தில் இன்ன வருஷ மாஸ திதி நக்ஷத்திரத்தில்தான் பிறப்பேன்' என்னும் நியமம இல்லை என்று கூறுவதாகக் கொள்ளவேண்டும். (த₄ர்மஸ்ய க்₃லாநி: ப₄வதி) அறத்திற்கு வாட்டம் ஏற்படுகிறதோ. "சோத₃நா லக்ஷுணார்த்தோ₂ த₄ர்ம:" [ வேதத்தால் விதிக்கப்பட்டது தர்மம ] என்கிற தர்மலக்ஷணத்தின் படியே, 'இன்னதைச் செய்; இன்னதைச் செய்யாதே' என்று வேதத்தால் விதிக்கப்பட்ட ப்ரவ்ருத்திநிவ்ருத்தி ரூபமான தர்மமே த₄ர்மமெனத்தக்கது. அதுதான் நாலுவர்ணங் களைப் பற்றியதாகவும், நாலு ஆஶ்ரமங்களைப் பற்றியதாகவுமுள்ள வரம்புகளைக்கூறுவதாயிருக்கும். இந்தவேததர்மத்திற்கு முரண்பட்ட பௌத்தம் முதலான புறச்சமயங்களில் கூறப்பட்ட தர்மமும், சைவம் முதலான குத்₃ருஷ்டிமதஙகளில் கூறப்பட்ட தர்மமும் தர்மம் எனத் தக்கவையல்ல. இந்த த₄ர்மஸ்வரூபத்திற்குக் குறைகள் ஏற்படுவதன் மூலமோ, இந்த த₄ர்மத்திற்கு மூலமான வேதத்தின் பிரசாரம் மலினமாவதன்மூலமோ, இந்த வைதிகதர்மத்திற்கு வாட்டம் ஏற் படக்கூடும். 'இப்படிச் சேதநரால் அநுஷ்டிக்கத்தக்க இந்த வேத தர்மத்திற்கு எவ்வெப்பொழுது இத்தகைய வாட்டம் ஏற்படு கிறதோ' என்று பூர்வார்த்தத்தின் திரண்டபொருள். இனி, தராசின் ஒரு தட்டு உயர்ந்தால் மற்றொரு தட்டு தாழ்வதுபோலே, த₄ர்மத்திற்கு வாட்டம் ஏற்பட்டவுடன் தன்னடையே ஏற்படும் அத₄ர்மத்தின் எழுச்சியைச் சொல்லுகிறுன் மூன்றுவது பாதத்தில்,- ( அப்₄யுத்தா₂நம் அத₄ர்மஸ்ய ) யதா₃ யதா₃ ப₄வதி என்று பூர்வார்த்தத்திலிருந்து கூட்டிப் பொருள் கொள்ளவேண்டும். அதர்மத்திற்கு எழுச்சி எவ்வெப்பொழுது ஏற்படுகிறதோ.'அத₄ர்மம்' என்னும் பதத்தில் விரோதா₄ர்த்த₂த்தில் 'நஞ்' பிரயோகிக்கப்பட்டி ருக்கிறபடியால், அது முற்கூறிய தர்மததிற்கு நேர்மாறுனதைக் கூறுகிறது. அதாவது,— வேதத்திற்கு முரணுன ஆகமங்களில் சொல்லப்பட்டவையாய், வர்ணுஶ்ரமங்கள் முதலான வைதிக வரம்புகள் அற்றவையாய், அதனுலேயே அநுஷ்டிக்கத்தகாதவை

निर्भवतिः यदा यदा च तद्विपर्ययस्याधर्मस्याभ्युत्थानं तदाऽहमेव स्वसङ्कल्पेनोक्तप्रकारेणात्मानं सृजामि ॥ ७ ॥

யான ப₃ாஹ்யகுத்₃ருஷ்டிமத த₄ர்மங்கள் இங்கு அத₄ர்மம் எனப படுகின்றன. ( த₄ர்மஸ்ய க்₃லாநி: அத₄ர்மஸ்ய அப்₄யுத்த₂ாநம ) த₄ர்மம வாட்டமடைவதைககூட நான் பொறுக்கமாட்டேன்; அப்படி யிருக்கும்போது த₄ர்மம அடியோடு அழிவதைப் பொறுப்பேனே? அத₄ர்மம் எழுச்சிபெறுவதையே நான பொறுக்கமாட்டேன்; அப்படியிருக்குமபோது அது கொழுந்துவிட்டுப் படர்வதைப் பொறுப்பேனே? எனறு கருத்து. (தத₃ா) 'யத₃ா யத₃ா" எனறதை யொட்டி இதையும 'தத₃ா தத₃ா' என்று கொள்ளவேண்டும். அவ் வப்பொழுது எனறபடி. (அஹம ஆத்மாநம ஸ்ருஜாமி) நானே என்னைப் படைத்துக்கொள்கிறேன். முற்கூறியபடி என ஸங்கல்பத் தாலேயே அவதரிக்கிறேன எனறபடி. 'நான் படைத்துககொள்கி றேன்'என்றவிடத்தில்'இனனதைத்துணைகொண்டுபடைத்துக்கொள் கிறேன்' என்று கூருமையால, இவன் அவதரிப்பததகுக் காலம் முதலான எப்பொருளின துணையும தேவையில்லை என்று சொல் லப்பட்டதாயிற்று. காலம முதலான அனைத்தையும ஆட்டிவைபபவ னன்றோ இவன். ஸ்வரூபம் நித்யமாகையாலும ஏற்கனவேயிருக் கும் தன்னைப்படைத்துக்கொள்ளவேண்டிய அவசியமில்லையாகை யாலும் 'ஆத்மாநம் ஸ்ருஜாமி' என்றது 'என ஸ்வரூபத்தைப் படைத்துக்கொள்கிறேன்' என்று பொருள்படமாட்டது; தன் பிறப் பைப்பற்றியே இப்பிரகரணத்தில் கேளவிகள் எழுந்திருக்கையால், 'ஜீவனைப் படைக்கிறேன' எனறும் பொருள்படாது; பரரூபம் நித்ய மாகையால், 'பரரூபத்தோடுக்கூடிய என்னைப்படைத்துக்கொள் கிறேன' என்றும் பொருள்தராது. ஆகையால், 'அவதாரத்திரு மேனியோடு கூடிய என்னைப் படைத்துக்கொள்கின்றேன' எனறே பொருள் கொள்ளவேண்டும். (ஹி) ''த்ரீணி பத₃ா விசக்₃ரமே விஷ் ணுர் கோ₃பா அத₃ாப்₄ய: அதோ த₄ர்மாணி த₄ாரயந்'' [ருக் மண் டலம் 1-5-22] [ஸர்வரக்ஷகனும, வெல்லமுடியாதவனுமான விஷ்ணு பகவான் மூன்று அடிகளால் உலகளந்தான்; இதன் மூலம் தர்மங் களை நிலைநிறுத்தினுன்.] முதலான ஶ்ருதிகளிலே த₄ர்மத்தை நிலை நிறுத்தவே நான் அவதரிக்கிறேன எனபது பிரஸித்தம என்று கருத்து. (ப₄ாரத) என்னேடு உறவுள்ள ப₄ரதகுலத்துதித்த நீயும யுத்தமாகிற உன தர்மத்தை நிலைநிறுத்தவேண்டாவோ? என்று கருத்து. 7.

भा॥ जन्मनः प्रयोजनमाह—

परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम्।
धर्मसंस्थापनार्थाय संभवामि युगेयुगे॥ ८॥

8. பரித்ராணாய ஸாதூ₄நாம் விநாஶாய ச து₃ஷ்க்ருதாம் |
தர்₄மஸம்ஸ்த₂ாபநார்த்த₂ாய ஸம்ப₄வாமி யுகே₃ யுகே₃ ||

**ஸாதூ₄நாம் பரித்ராணாய**—*நல்லோர்களை நன்கு ரக்ஷிப்பதன் பொருட்டும்,* **து₃ஷ்க்ருதாம் விநாஶாய**—*தீயவர்களை சித்ரவதைசெய்து அழிப்பதன் பொருட்டும்,* **த₄ர்மஸம்ஸ்த₂ாபநார்த்த₂ாய ச**—*அறத்தை நன்கு நிலைநிறுத்துவதன்பொருட்டும்,* **யுகே₃ யுகே₃**—*அந்தந்த யுகங்களில்,* **ஸம்ப₄வாமி**—*பலபடியாகப் பிறக்கிறேன்.*

---

8. நல்லார்க டம்மை நலம்புரிந்து காத்தற்கும்
பொல்லாரைப் பொன்றுநெறி போக்கற்குஞ்—சொல்
முந்தை யறநாட்ட முய்த்தற்கு நான்பிறப்ப [லாரு
னிந்தவுகந் தோறு மிசைந்து.

**நல்லார்கள் தம்மை**—*நல்லவர்களை,* **நலம் புரிந்து**—*என்ருபகுணச்செயல்களை அளித்து,* **காத்தற்கும்**-*ரக்ஷிப்பதற்கும்,* **பொல்லாரை**—*தீயவர்களை,* **பொன்று நெறி போக்கற்கும்**—*அழியும் வழியிலே செலுத்துவதற்கும்,* **சொல் ஆரும்**—*வேதங்களில் சொல்லப்பட்ட,* **முந்தை அறம்**-*பழையனவான தர்மாநுஷ்டானங்களை,* **நாட்டம் உய்த்தற்கும்**— *நிலைபெறச் செய்வதற்கும்,* **நான்**—*ஸர்வேஶ்வரனான நான்,* **இந்த உகம் தோறும்**—*கிருதம், த்ரேதா, த்வாபரம், கலி என்னும் இந்த நாலு யுகத்திலும்,* **இசைந்து**-*பலவகையான உருவங்களையும் ஏற்றுக்கொண்டு,* **பிறப்பன்**—*அவதரிப்பேன்.*

---

8. "நீயே ஏறிட்டுக்கொண்ட புண்யபாபகர்மங்களின் பயனை அனுபவிப்பதற்காகப் பிறப்பெடுக்கிறாயா அல்லது உன பிறப்பிற்கு வேறு பயனுண்டா?" என்னும் ஆறாவது கேள்விக்கு பதிலுரைக்கிறான். (ஸாதூ₄நாம் பரித்ராணாய) நல்லோர்களை நன்கு ரக்ஷிப்பதன் பொருட்டு. ஸாது₄ஶப்₃த₃ம் நல்லோர்களையும், ஸாமர்த்₂யமில்லாதவனையும் குறிக்கும். இங்கு, 'து₃ஷ்க்ருதாம' எனறு சொலலப்பட்ட

||भा|| साधव उक्तलक्षणधर्मशीला वैष्णवाग्रेसरा मत्समाश्रयणे

தீயவர்களுக்குஎதிர்த்தட்டாக எடுக்கப்படுகையால். நல்லோர்களையே குறிக்கிறது. வேதத்தில் சொல்லப்பட்டதாய், நாலு வர்ணங்களுக்கும், ஆஶ்ரமங்களுக்குமுரிய ஒழுக்கஙகளை விதிபபதாய், அநுஷ்டிக்கத்தக்கதாக முன ஶ்லோகத்தில சொல்லப்பட்ட த₄ர்மததை அநுஷ்டிப்பதையே இயல்வாக உடையவர்கள் இங்கு ஸாதுக்கள் எனப்படுகிறார்கள். வேத₃த₄ர்மநிஷ்ட₂ர்களிலும் அவதாரத்தை அபேக்ஷியாதவர்கள் உண்டு. அவர்களாவார்,—முற்கூறிய வேத தர்மத்தாலே சிவன், இந்திரன, ஸூர்யன் முதலான தே₃வதாந்தரங்களையே உபாஸிக்கும் அவைஷ்ணவர்களும, பரமபுருஷனையே உபாஸித்தபோதிலும் ப்ரதர்த்த₃நவித்₃யை, அத₂ர்வஶிரஸ்ஸிற் சொன்ன ருத்₃ராந்தர்யாமி ப₄க₃வது₃பாஸநம் முதலானவற்றில் அந்த ந்த தேவதைகளுக்கு அந்தர்யாமியான பரமபுருஷனை உபாஸிக்கும் வைஷ்ணவர்களும். முதலிற் குறிப்பிடப்பட்டவர்களுக்கு அவதார ரூபத்தைககாட்டவேண்டியதேயில்லை. இரண்டாமவர்களுக்குத் தன் அவதாரரூபத்தைக்காட்டவேண்டும் என்னும் நிர்ப்பந்தமில்லை. அந்தந்த தேவதைகளுக்கு அந்தர்யாமியாயிருந்துகொண்டே அவர்கள் விரும்பும் அவ்வப்பலன்களை அளிக்கலாம். ஆகையால், இங்குள்ள ஸாது₄ஶப்₃த₃ம இவர்களைக் குறிக்காமல், வைஷ்ணவர்களிலு மிகச்சிறந்தவர்களாய், பரமபுருஷனை நேரே உபாஸிப்பவர்களையும அவனையே உபாயமாகக்கொண்ட ப்ரபந்நர்களையும் குறிக்கிறது. சிறப்புற்ற ப்ராப்யப்ராபகங்களைப்பற்றியவர்களே ஸாதுககள் என்றதாயிற்று. வர்ணாஶ்ரமாசாரங்களின்படி ஒழுகும் வைஷ்ணவோத்தமர்களே ஸாதுக்கள் என்றும் உணர்த்தப்பட்டது.

"ந சலதி நிஜவர்ணத₄ர்மதோ ய:
ஸமமதிராத்மஸுஹ்ருத்₃விபக்ஷபக்ஷே।
ந ஹரதி ந ச ஹந்தி கிஞ்சிது₃ச்சை:
ஸிதமநஸம் தமவேஹி விஷ்ணுப₄க்தம்॥" [வி-பு 3-7-20]

[எவனொருவன் தன் வர்ணத்திற்குரிய தர்மத்தினின்றும் நழுவாதவனாய், தன் நண்பனுடையவும் எதிரியினுடையவும் பக்ஷங்களில் ஒருபடிப்பட்ட (விருப்பு வெறுப்பற்ற) புத்தியை உடையவனாய் எதையும திருடாதவனாய், எதையும் ஹிம்ஸிக்காதவனாய், (இக்காரணங்களாலேயே) மிகவும் வெள்ளை மனத்தினனாயிருப்பவனோ அவனையே விஷ்ணுபக்தனென்று அறிவாயாக.]

"வர்ணாஶ்ரமாசாரவதா புருஷேண பர: புமாந்।
விஷ்ணுராராத்₄யதே பந்தா₂ நாந்யஸ் தத்தோஷகாரக:॥"
[வி-பு 3-8-9]

प्रवृत्ता मन्नामगुणकर्मस्वरूपाणां वाङ्मनसागोचरतया मद्दर्शनेन विना स्वात्म-

[வர்ணாஶ்ரமங்களுக்குரிய கர்மங்களை அனுஷ்டிக்கும மனிதனாலேயே பரமபுருஷனான விஷ்ணு ஆராதிக்கப்படுகிறான்; (இககர்மங்களை விட்டு நாமஸங்கீர்த்தனாதிகளைச் செய்வது முதலான) வேறு வழிகள் அவனை உகப்பிக்கமாட்டா.] என்று ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் கோஷிக்கப்பட்டதன்றோ. "சந்தி வேள்வி சடங்கு நான்மறை ஓதி ஓதுவித்து ஆதி யாய் வரும் அந்தணாளர் அறா அணியாலி' [பெரியதிரு 3-5-6] முதலானவிடங்களில ஆழ்வார்களும் இவ் வர்த்தத்தை உணர்த்தினர். (பரித்ராணாய) நன்கு ரக்ஷிப்பதற்காக. த்ராணம் (ரக்ஷணம) என்பது இஷ்டத்தைத்தருவது என்றும், அநிஷ்டத்தைப் போக்குவது என்றும் இருவகைப்படும். பரித்ராணமாவது-விதவிதமான அநிஷ்டங்களைப் போக்குவதும், விதவிதமான இஷ்டங்களை அளிப்பதுமாகும். இந்த வைஷ்ணவஶ்ரேஷ்டர்கள் எப்படிப்பட்டவர்கள் என்பதை ஆராய்ந்தால் இவர்களுக்கு அநிஷ்டங்கள் எவை, இஷ்டங்கள எவை என்பது விளங்கும. " அடியிணை அடைந்தேன் " [பெரியதிரு 5-8] என்றும், " துயரறு சுடரடி தொழுதொழு " [திருவாய் 1-1-1] என்றும் பரமபுருஷனை ஆஶ்ரயிப்பதிலேயே ஈடுபட்டவர்கள் இவர்கள். " நெஞ்சால் நினைப் பரிதால் வெண்ணெ ஊண் என்னும் ஈனச்சொல்லே " [திருவிருத்தம 98], 'யானுமேத்தி ஏழுலகும் முற்றும் ஏத்திப் பின்னையும் தானும் ஏத்திலும் தனனை ஏத்த ஏத்த எங்கெய்தும் " [திருவாய் 4-3-10] என்கிறபடியே பரமபுருஷனுடைய நாமங்கள், குணங்கள், செயல்கள, ரூபம் ஆகியவை எத்தனையனுபவித்தாலும் அநுபவித்து முடிக்கவொண்ணாதவையாகையாலே. அவற்றில் பெறாத அம்ஶத்தை நினைக்கும்போது பெற்ற அம்ஶம் அஸத்ஸமமாயிருப்பதைக்கண்டு நோவுபடடு மயங்குகிறவர்கள். " உண்ணும் சோறு பருகும்நீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் எம்பெருமான் " [திருவாய் 6-7-1] என்கிறபடியே வாஸுதேவனையே தாரகபோஷகபோக்யங்கள் அனைத்துமாக எண்ணியிருக்கும் மஹாத்மாக்களாகையாலே, " தொல்லை மாலைக் கண்ணாரக் கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதலே " [திருவிருத்தம் 97] " காணவாராய் என்றெனறு கண்ணும் வாயும் துவர்ந்து " [திருவாய் 3-5-2] " கூராராழி வெண்சங்கேந்திக் கொடியேன் பால் வாராய் " [திருவாய் 6-9-1] "அவனைவிட்டகன்றுயிராற்ற கில்லா" [திருவாய் 9-9-11] என்கிறபடியே அவனைக்காணாவிடில் தாரகபோஷகபோக்யங்களைப் பெறாதவர்களைப்போலே தவிப்பவர்கள். ''த்ருடி யுகாயதே த்வாமபஶ்யதாம" [பாகவதம் 10-31-15] [உன்னைக காணாதவர்களுககு ஒரு நொடியும் யுகமாகும்.] "ஒரு பகல் ஆயிரம் ஊழியாலோ" [திரு

धारणपोषणादिकमलभमानाः क्षणमात्रकालं कल्पसहस्रं मन्वानाः प्रशि-

வாய் 10-3-1] "ஊழியில் பெரிதால் நாழிகை என்னும்" [பெரிய திரு 2-7-4] "ஓயும் பொழுதின்றி ஊழியாய் நீண்டதால்" [திருவாய்5-4-3] என்கிறபடியே அவனைவிட்டுப்பிரிந்திருக்கும் ஒவ்வொரு கணத்தையும் ஆயிரம் ஊழிகாலமாக நினைப்பவர்கள்; அவனுடைய அனுபவத்தில் ஒரு சிறிது குறைந்தாலும் "காலாழும் நெஞ்சழியும் கண் சுழலும்" [பெரியதிருவ 34] "காலுமெழா கண்ணநீரும் நில்லா உடல் சோர்ந்து நடுங்கிக் குரல் மேலுமெழா மயிர்க்கூச்சுமறு எனதோள்களும் வீழ்வொழியா" [பெரியாழ்திரு 5-1-5] "உள்ளெலாம் உருகிக் குரல் தழுத்து ஒழிந்தேன் உடம்பெலாம் கண்ணநீர் சோர" [பெரியதிரு1-1-5] "காணலாங்கொல் என்றுஆசையினாலே, உள்ளஞ்சோர உகந்து எதிர் விம்மி உரோமகூபங்களாய்க் கண்ணநீர்கள் துள்ளம் சோரத்துயிலணை கொள்ளேன்" [பெரியாழ்திரு 5-1-7] "கங்குலும் பகலும கண் துயிலறியாள் கண்ணநீர் கைகளாலிறைக்கும் சங்கு சக்கரங்களென்று கைகூப்பும் தாமரைக்கண்ணென்றே தளரும், எங்ஙனே தரிக்கேன் உன்னை விட்டெனனும் இருநிலம் கைதுழாவிருக்கும்" [திருவாய் 7-2-1] "இட்ட கால் இட்டகைகளாயிருக்கும எழுந்துலாய் மயங்கும் கைகூப்பும், கட்டமே காதல் என்று மூர்ச்சிக்கும்" [திருவாய் 7-2-4] "ஆஹ்லாதஶீதநேத்ராம்பு:புளகீக்ருதகா₃த்ரவாந்। ஸதா₃ பரகு₃ணாவிஷ்டோ த்₃ரஷ்டவ்ய: ஸர்வதே₃ஹிபி₄:॥" [ஸ்ரீவிஷ்ணுதத்வம்] [ஆநந்ததாலே குளிர்ந்து பெருகும் கண்ணீரையுடையவனும் உடம்பெஙகும மயிர்ககூச்செறியப்பெற்றவனும், எப்போதும் பரமாத்மாவின் குணங்களால் ஆட்கொள்ளப்பெற்றவனுமான பரமபாகவதன் சரீரம் படைத்த அனைவராலும் காணத்தக்கவன்] என்கிறபடியே எல்லா அவயவங்களிலும் தளர்ச்சியை அடைபவர்கள். "கோவிந்தற்கோர் குற்றேவல் இம்மைப் பிறவி செய்யாமே இனிப்போய்ச் செய்யும் தவந்தான் என்?" [நாச்-திரு 13-9] "அச்சுவை பெறினும் வேண்டேன்" [திருமாலை 2] "உலகம் மூன்றினொடு நல்வீடு பெறினும் கொள்வதெண்ணுமோ தெள்ளியோர் குறிப்பே" [திருவாசிரியம 2] "சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லாத் தன்மை தேவபிரானறியும்" [திருவாய் 7-10-10] "ப₄ாவோ நாந்யத்ர க₃ச்ச₂தி"[ரா-உ-40-15] [என் நினைவு ராமபிரானைவிட்டு வைகுண்ட நாதனிடமும் செல்வதில்லை.] என்கிறபடியே மோக்ஷவின்பத்தையும் உபேக்ஷித்து இவ்வுலகில் இவ்வுடம்போடே அவனுடைய செயல்களைக்காணவேணும், அவனோடு பேசவேணும் அவனை அணைக்க வேண்டும் என்று பாரித்திருக்கிறவர்கள். இவர்களுக்கு மோக்ஷாநந்தமும் இஷ்டமன்று; அவனை இவ்வுலகில் இவ்வுடம்போடே கண்டு களித்துப் பேசித்தழுவிமுழுசிப்புகுந்து சுற்றிச்சுழன்று பரிமாறும் பரிமாற்றங்களே இவர்களுக்கு இஷ்டங்கள். இவ்விஷ்டங்

களை இவர்கள் அடையத் தடையாயிருப்பவை இவர்களுக்கு அநிஷ்டங்கள். இவ்வநிஷ்டங்களைப் போக்கி இஷ்டஙகளைக் கொடுப்பது என்பது எம்பெருமான் அவதரித்தாலொழிய நிறைவேருது. மேலே சொல்லப்போகும் துஷ்டவிநாஶத்தை ஸங்கல்பத்தால் பெரும்பாலும் ஸாதித்துவிடலாம்; தர்மஸமஸ்தாபனத்தை சாஸ்திரப்ரதானம் முதலானவற்ருல் பெரும்பாலும் செய்துவிடலாம். இந்த ஸாது₄பரித்ராணத்தை அவதரித்தல்லது வேறு எவ்வகையாலும் சிறிதும் செய்ய முடியாது. இத்தகைய ஸாதுக்களை ஸம்ரக்ஷிப்பதற்காக எம்பெருமான் அவதாரங்களைச் செய்யாமல் ஸங்கல்பாதிமாத்ரத்தாலே அவர்களை ரக்ஷிக்கத்தொடங்கினுகில்,

"மழுங்காத வைந்நுதிய சக்கரநல் வலத்தையாய்
தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே
மழுங்காத ஞானமே படையாக மலருலகில்
தொழும்பாயார்க்(கு) அளித்தால் உன் சுடர்ச்சோதி மறை
யாதே" *[திருவாய் 3-1-9]*

என்று நம்மாழ்வார் அருளிச்செய்த ரீதியிலே அவனுடைய திவ்ய மங்கள விக்₃ரஹமே இல்லையாய்விடும். இப்பெரியதோஷம் தனக்கு வராமலிருப்பதற்கும், தன் உயிரிலுமினிய ஸாதுக்களின் விருப்பத்தை நிறைவேற்றவும் எம்பெருமான் அவதரித்தே தீரவேண்டியுள்ளது என்று தேறிற்று. ஆக இப்படி அவதாரத்திற்கு ஸாது₄பரித்ராணமே முக்₂யப்ரோஜனமாகையால் அதை முற்படச் சொன்னுன் என்று விளங்குகிறது.

இனி, இந்த ஸாதுக்களுக்குத் தீங்கிழைக்கும் தீயவர்களை அழித்தாலொழிய முற்கூறிய ஸாது₄பரித்ராணம் நிறைவேருதாகையாலே, அவதாரத்துக்கு ஆநுஷங்கி₃கப்ரயோஜனமான துஷ்டவிநாஶத்தை இரண்டாம பாதத்தாலே காட்டுகிருன்,—(து₃ஷ்க்ருதாம் விநாஶாயச) "நக்ஷமாமி" [வராஹபுராணம்] என்கிறபடியே என்னுலும் பொறுக்கவொண்ணுத தீயசெயலான ப₄ாக₃வதாபசாரத்தைச் செய்பவர்களைச் சித்ரவதம் செய்வதற்காகவும். "கோபமாஹாரயத் தீவ்ரம் வத₄ார்த்தம் ஸர்வரக்ஷஸாம்" [ரா-ஆ 24-34] [எல்லா அரக்கர்களையும் அழிப்பதற்காகக் கடுங்கோபத்தை வரவழைத்துக் கொண்டான் இராகவன்] என்கிறபடியே தன் விஷயத்தில் அபசாரப்பட்டவர்களைக் குறித்துக் கோபத்தை நிர்ப்பந்தித்து வரவழைத்துக் கொண்டவன்,

परित्राणाय तद्विपरीतानां विनाशाय च क्षीणस्य वैदिकस्य धर्मस्य मदारा-

''ததோ ராமோ மஹாதேஜா ராவணேந க்ருதவ்ரணம்।
த்₃ருஷ்ட்வா ப்லவக₃ஶார்த்தூ₃லம் கோபஸ்ய வஶமேயிவாந்॥''
[ரா-யு 59-136]

[பெருத்த தேஜஸ்ஸையுடைய ராமபிரான் ராவணனால் காயமடைந்த வானரர் தலைவனை அனுமனைப் பார்த்துக் கோபத்திற்கு வசப் பட்டான்.] எனகிறபடியே தனனடியார்கள் திறத்தில் அபசாரப் பட்டவர்களைக்குறித்துக் கோபவசப்பட்டானன்றோ. சகாரம் அப் ராதா₄ந்யப்பொருளில் வந்ததாகையாலே, ஸாது₄பரித்ராணமே முக்₂யப்ரயோஜனம, துஷ்டவிநாஶம் அதற்குறுப்பாக ஏற்படுவது என்று காட்டுகிறது. 'பரித்ராணாய' என்றவிடத்தில சொலலப்பட்ட அநிஷ்டநிவர்ததநம் உட்பகைகளை ஒழிப்பதையும், இங்கு சொல்லப் படும் துஷ்டவிநாஶம் வெளிப்பகைகளை ஒழிப்பதையும காட்டுகிற தாகையாலே புநருக்தியில்லை. (விநாஶாய ச) விஷேமாக அழிப்ப தன் பொருட்டும். ''க₃ச்ச₂ாநுஜாநாமி'' [ரா-யு 59-143] [இன்று போய் நாளை வா] என்கிறபடியே எதிரிகளையும் திருத்த எண்ணும் இவன அவர்களை அடியோடு அழிக்கமாட்டானாகையாலே விநாஶ ஶப்தத்திற்கு அப்படிப் பொருள்கொள்ளக்கூடாது. அப்படியானால் விஶேஷமாக அழிப்பது என்றதன் பொருள் எனனவெனில்: ஹிரண்யன், ராவணன், கம்ஸன் முதலான இத்தீயவர்கள் செய் திருக்கும் பாகவதாபசாரங்களைப் பார்க்கும்போது, ஸங்கல்ப மாத்ரத்தால் இவர்களை அழித்து இவர்களுக்கு நல்ல சாவாக ஏற்படவிடலாகாதென்றுதிறநதெரிகானற பிலவாயையும்,எரிவட்டக் கண்களையும், கையும் வில்லுமாக நிற்கும நிலையையும், மல்லாண்ட திண்டோளையும் காட்டி, இவர்களுக்கு இதைக்காட்டிலும் வெந் நரகம் வேறில்லை என்னும்படி சித்ரவத₄ம் செய்து அழிப்பதைச் சொல்லுகிறது. '' வெந்நரகம் சேராவகையே சிலைகுனித்தான் '' [சிறியதிருமடல்] ''தரிக்கிலானாகித் தான் தீங்கு நினைந்த கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்ற நெடுமாலே'' [திருப்பாவை 25] ''எங்குமுளன் கண்ணன் என்ற மகனைக் காய்ந்து இங்கில்லையால் என்று இரணியன் தூண்புடைப்ப, அங்கு அப்பொழுதே அவன் வீயத் தோன்றிய என் சிங்கப்பிரான்'' [திருவாய் 2-8-9] என்கிறபடியே இவன இவர்களைச் சித்ரவதமசெய்தபடியை ஆழ்வார் கள் பேசினார்களன்றோ. இப்படிச் சிதரவதம செய்து அழிப்பதும ஸங்கல்பமாத்திரத்தால் ஸாதிக்க முடியாததொனறாகையாலே, அதையும் ஓர் அவதாரப்ரயோஜனமாக எடுத்ததில் குறையில்லை. இதனாலேயே, ''சாது சனத்தை நலியும் கஞ்சனைச் சாதிப்பதற்கென்று ஆதியஞ்சோதியுருவை அங்குவைத்து இங்குப் பிறந்த வேதமுதல்வன்''

[திருவாய் 3-5-5] "மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தான்" [திருவாய் 9-1-10] என்று ஆழ்வார்களும், 'ஈச்ரவன் அவதரித்துப்பண்ணின ஆனைத்தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறுமை என்று ஜீயர் அருளிச் செய்வர்" [ஸ்ரீவசநபூஷணம்] என்று ஆசார்யர்களும அருளிச்செய்தனர்.

இனி, தனக்கு ஆராதனமாயிருக்கும் தர்மத்தை நன்கு நிலை நிறுத்துவதாகிற மூன்றுவது அவதார ப்ரயோஜனத்தை மூன்றும் பாதத்தாலே கூறுகிறுன்,— (த₄ர்ம ஸம்ஸ்த₂ாபநார்த்த₂ாய) எனக்கு ஆராத₄னமாயிருப்பதாய், வேதத்தில் சொல்லப்பட்டதாய், முன ஶ்லோகத்தில் சொன்னபடி வாட்டமடைந்திருப்பதான யஜ்ஞாதி த₄ர்மங்களை நன்கு நிலைநிறுத்துவதாகிற பயனின் பொருட்டும். ஸ்த₂ாபநமாவது,-தான் அனுஷ்டிப்பதன மூலமும், பிறர்க்கு உப தேசிப்பதன் மூலமும் த₄ர்மங்களைப் பரவச்செய்வது; இச்செயலை வ்யாஸர் முதலான ஜீவர்களை அதி₄ஷ்டித்து நின்றும் செய்யலாம். ஸம்ஸ்த₂ாபநமாவது,-ஆராத₄னமான இக்கர்மங்களால் ஆராதிக்கப் படும் திவ்யமங்கள விக்ரஹத்தோடு கூடிய தன்னைக் காட்டி பக்தியை உண்டு பண்ணுவது. இது அவதாரமெடுத்தே செய்ய வேண்டியதொன்ருகையால், இதைத் தனியானதொரு அவதார ப்ரயோஜனமாகக் கூறுகிறுன். "ரூபௌதா₃ர்யகு₃ணை: பும்ஸாம் த்₃ருஷ்டிசித்தாபஹாரிணம்" [ரா-அ 3-29] [வடிவழகு, வண்மை, சீலகுணம் ஆகியவற்றுல் ஆண்களின் கண்ணையும் நெஞ்சையும் இழுப்பவன்] என்கிறபடியிருக்கையாலே, இடக்கையும், வலக்கையு மறியாத இடைச்சி (சிந்தயந்தி), பே₄ாக்₃யமான பூவை விற்று வயிறு வளர்க்கும் மாலாகாரர் முதலானுர்க்குத் தன்னிடம் தலை சிறந்த ஈடுபாட்டை விளைத்து, அதுவே கருவியாக இதரவிஷய விரக்தியை விளைத்தும், * பல பல நாழம் சொல்லிப் பழித்த பழம் பகைவனை சிசுபாலனுக்கும் அந்திமஸமயத்தில், 'அலவலமை தவிர்த்த அழகன் [பெரியாழ்திரு 4-3-5] என்கிறபடியே தன் அழ காலே துவேஷம் நீங்கி பக்தியுண்டாம்படி திருத்தி "கேட்பார் செவி சுடு கீழ்மை வசவுகளே வையும் சேட்பால் பழம்பகைவன் சிசுபாலன், திருவடி தாட்பாலடைந்த தன்மை" [திருவாய்7-5-3] என்கிறபடியே சேர்த்துக்கொண்டும் ஸர்வேஶ்வரன் மோக்ஷமளிப்பதற்கு உதவுவது அவதாரவிக்ரஹமேயன்றே. ஆக, த₄ர்மத்தைத் தனக்கு ஆராத₄ன மாக நிலைநிறுத்துவதாகிற தர்ம ஸம்ஸ்த₂ாபனத்தின் பொருட்டுப் பிறக்கிறேன் என்று அருளினுன் என்று விளங்குகிறது. 'த₄ர்ம ஸம்ஸ்த₂ாபநார்த்த₂ாய' என்றவிடத்தில் அர்த்த₂ஶப்தம் 'ப்ரயோ ஜனம்' என்னும் பொருளைக்காட்டும். 'பரித்ராணுய' 'விநாஶாய'

संभवामि; कृतत्रेतादियुगविशेषनियमोऽपि नास्तीत्यर्थः ॥८॥

என்றவிடங்களில் அர்த்த₂ஶப்தத்தைப் பிரயோகிக்காமல் இங்கு மாத்திரம பிரயோகித்தது. ஸாதுபரித்ராணமும், து₃ஷ்டவிநாஶமும் உண்மையில் த₄ர்மஸம்ஸ்த₂ாபனத்தில் அடங்கியவையே என்று காட்டுவதற்காக. "ஏதத்₃வ்ரதம் மம" [ரா-யு18-33] எனகிறபடியே பரமபுருஷன் ஸாது₄ஸம்ரக்ஷணத்தையே மேலான விரதமாகக் கொண்டிருப்பவனுகையாலே, அது த₄ர்மஸம்ஸ்த₂ாபனத்தில் அடங்கும் என்பதை விளக்கத் தேவையில்லை. துஷ்டவிநாஶம் த₄ர்மஸம்ஸ்த₂ாபனத்தில் அடங்குவது எப்படியெனில்: ஸாது₄பரித்ராணத்திற்குக் களையெடுக்கும் முறையில் அமைந்திருப்பதாலேயே இது த₄ர்மஸம்ஸ்த₂ாபனத்தில் அடங்கும்; மேலும், "ரிபூணுமபி வத்ஸலம"[ரா-அ 21-6] [எதிரிகளுக்கும் வாத்ஸல்யம மிகுந்தவனை] "மச்சரைஸ்த்வம் ரணே ஶாந்தஸ் தத: பூதோ ப₄விஷ்யஸி" [ரா-யு 41-71] [என் அம்புகளாலே யுத்தத்தில் மரணமடைவிக்கப்பெற்று. அதற்குப்பின் பரிசுத்தனுவாய்.] என்கிறபடியே துஷ்டர்களிடமும் கருணைமிக்கவனுய், அவர்கள் தீமைசெய்யக் கருவியாயிருந்த ராக்ஷஸாதி ஶரீரத்தைப் போக்கி, அவர்களையும் தா₄ர்மிகர்களாக்குவதே து₃ஷ்டவிநாஶத்திற்குக் கருத்தாகையாலே, து₃ஷ்டவிநாஶம் நேரேயும த₄ர்மஸம்ஸ்த₂ாபனத்தில் அடங்கக்குறையில்லை. ஶ்லோகத்தின் முற்பாதியில் ஸாது₄பரித்ராணத்தையும, துஷ்டவிநாஶத்தையும் தனியே எடுததது மற்ற த₄ர்மஸம்ஸ்த₂ாபனங்களைக்காட்டிலும் அவற்றின் ப்ராத₄ான்யததைக் கருத்தில் கொண்டு என்று கொள்ளவேண்டும். (யுகே₃ யுகே₃ ஸம்ப₄வாமி) எந்த யுகத்திலும் பிறக்கிறேன. க்ருதம், திரேதா, த்வாபரம், கலிஎன்னும நாலுயுகங்களில் இன்னயுகத்தில்தான பிறப்பது என்னும் நியமமும, ஒவ்வொரு யுகத்திலும் பிறந்தே தீரவேண்டும என்னும் நிர்ப்பந்தமும இல்லை என்று கருத்து. (ஸம்ப₄வாமி) தேவர், மனிதர், திர்யக், ஸ்தாவரம் என்னும் நாலு யோனிகளிலும் பிறக்கும்போதும, கர்மம் காரணமாகப் பிறக்கும் ஜீவர்களைப் போலே பிறக்கப்பிறக்க ஒளி மழுங்கிப்போகாமல், என் இச்சைகாரணமாகப் பிறக்கும் நான் பிறக்கப்பிறக்க ஒளிவிஞ்சி நிற்கிறேன். "விஜாயதே" [பு-ஸூ] [விஶேஷமாகப் பிறக்கிருன்] "ஸ உ ஶ்ரேயாந் ப₄வதி ஜாயமாந:" [யஜுர்-அஷ்டகம் 3-6-1-3] [அவன் பிறக்கப் பிறக்கவே பெருமை பெறுகிருன்] "நிலவரம்பில பல பிறபபாய் ஒளி வரும் முழுநலம்" [திருவாய் 1-3-2] என்கிறபடியே பரமஸாம்யத்தையடைந்தார் நிறைந்த பரமபதத்தில் பகல் விளக்குப்போலே மங்கியிருக்கும் ஸௌஶீல்யஸௌலப்₄ய வாத்ஸல்யாதி₃குணங்கள் இருட்டறையில் விளக்குப்போலே பிரகாசிப்பது இவ்விருள்தருமாஞாலத்திலேயேயாகையாலும், துஷ்டர்கள் நிறைந்த இவ்வுலகிலேயே ஶௌர்யவீர்யாதிகுணங்களும் நிறம பெறுமாகையாலும், பிறந்தே பெருமை பெறுகிறேன என்று கருததது.

जन्म कर्म च मे दिव्यमेवं यो वेत्ति तत्त्वतः।
त्यक्त्वा देहं पुनर्जन्म नैति मामेति सोऽर्जुन॥९॥

9. ஜந்ம கர்ம ச மே தி₃வ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத:।
த்யக்த்வா தே₃ஹம் புநர் ஜந்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந॥

அர்ஜுந— *அர்ஜுனனே!* மே—*என்னுடைய.* தி₃வ்யம்—*அப்ராக்ருதமான.* ஜந்ம—*பிறப்பையும்.* கர்ம—*செயலையும்.* ய:-*எவனொருவன்.* ஏவம்-*முற்கூறியபடி.* தத்த்வத:-*உள்ளபடி,* வேத்தி—*அனுஸந்திக்கிறனோ,* ஸ:—*அம்மனிதன்.* தே₃ஹம்—*இப்போதுள்ள சரீரத்தை.* த்யக்த்வா—*கைவிட்டு.* புந:—*மறுபடியும்.* ஜந்ம-*(மற்றொரு சரீரத்தை எடுத்துக்கொள்ளுகையாகிற) பிறப்பை.* ந ஏதி—*அடைகிறனல்லன்: (ஆனால்)* மாம் ஏதி-*என்னையே அடைகிறன்.*

---

9. என்பிறவி யென்கரும மிவ்வண்ணந் திவ்வியமென்
றன்பினொடு முண்மை யறிவுற்றான்—முன்பிறவி
யேய்ந்த வுடல்விட்டே யெதிர்ப்பிறவி யேலாதே
யாய்ந்தெனையே யெய்து மவன்.

---

(பரித்ராணாய ஸாதூ₄நாம்...ஸம்ப₄வாமி) பரமபதத்தில் நித்யமுக்தர்களை ரக்ஷிப்பது மீனுக்குத்தண்ணீர் வார்ப்பதுபோன்றது; இங்குள்ள ஸாதுக்களை ஸமரக்ஷிப்பது பாலைவனத்தில் தண்ணீர்ப்பந்தல் வைப்பது போன்றது. அங்கு தீயவர்களில்லாமையாலே துஷ்ட விநாஶத்திற்குப்ரஸக்தியில்லை; தீயவர் நிறைந்த இங்கு அதற்கு ஏராளமான இடமுண்டு. அங்கு அனைவரும் ஸாத்₄யம் கைவரப் பெற்றவர்களானையாலே ஸாத₄நத₄ர்மஸம்ஸ்த₂ாபனத்திற்கும் இடமில்லை; ஸாத₄நாநுஷ்டா₂ன ஸ்₂தலமான இங்குதான் அதற்கும் அவகாஶமுண்டு. ஆகவிப்படியாக ஸாது₁ஸம்ரக்ஷணம், து₃ஷ்ட விநாஶம், த₄ர்மஸம்ஸ்த₂ாபனம் என்னும் மூன்றும் இங்கு அவதரித்தாலொழிய நிறைவேறுதாகையாலே அதற்காகப் பிறந்தே தீரவேண்டியுள்ளது என்று ஶ்லோகத்தின் திரண்டபொருள். ஆக, இவ்வளவால் அர்ஜுனன் கருதிய ஆறு கேள்விகளுக்கும் பதில் உரைக்கப்பட்டதாயிற்று. 8.

என் பிறவி — என்னுடைய பிறவியும். **என் கருமம்**— என்னுடைய செயலும். **இவ்வண்ணம்**–முற்கூறியவகையில். **திவ்வியம் என்று**–அப்ராக்ருதமானது என்று. **அன்பினேடும்**– என்னிடம் பக்தியோடு கூடியவனுய். **உண்மை அறிவு உற்ருன் அவன்**—உள்ளபடியாயிருக்கும் அறிவை அடைந்த மனிதன். **முன்பிறவி ஏய்ந்த உடல் விட்டே**-முன்னமே பிறவியைப்பெற்று விட்டதான இவ்வுடலைக்கைவிட்டு. **எதிர் பிறவி ஏலாதே**–இது போன்ற மறு பிறப்பை அடையாமல். **ஆய்ந்து**–(என்னுடைய அப்ராக்ருதமான பிறவியையும் செயலையும்) அறிந்ததனுலேயே. **எனையே எய்தும்**— என்னையே அடைவான்.

**।। भा ।। एवं कर्ममूलहेयत्रिगुणप्रकृतिसंसर्गरूपजन्मरहितस्य सर्वेश्वरत्वसार्वज्ञ्यसत्यसङ्कल्पत्वादिसमस्तकल्याणगुणोपेतस्य साधुपरित्राणमत्समा-**

---

9. இதுவரையில் ப்ராஸங்கிகமாக விவரிக்கப்பட்ட அவதார ரஹஸ்ய ஜ்ஞானம் பக்தி நிஷ்டனுக்கு இந்தப்பிறப்பிலேயே மோக்ஷத்தை அளிக்கவல்லது என்று கூறுகிருன் இந்த ஶ்லோகத்தில். (ஏவம் மே ஜந்ம கர்ம ச தி₃வ்யம் யோ வேத்தி) என்னுடைய பிறப்பும் செயலும் அப்ராக்ருதமானது என்று முற்கூறியபடி எவன் அறிகிருனே. (ஏவம் மே) ''அஜோऽபி ஸந்'' [4–6] முதலான ஶ்லோகங்களிற் சொல்லியபடியே, கர்மம் காரணமாக ஏற்படுவதாய், தாழ்ந்ததாய், முக்குணமயமான ப்ரக்ருதிஸம்பந்த ரூபமாயிருப்பதான பிறப்பற்றவனுய், அனைவர்க்கும் ஈஸ்வரனுயிருக்கை, எல்லாமறிந்தவனுயிருக்கை, தடைபடாத ஸங்கல்பத்தை உடையவனுயிருக்கை முதலான எல்லாக் கல்யாணகுணங்களோடும் கூடியவனுன என்னுடைய. (ஜந்ம) நல்லோர்களை ரக்ஷிப்பதையும், அவர்கள் என்னை ஆஶ்ரயிக்கச்செய்வதையுமே பயனுகக்கொண்ட பிறப்பு. (மே ஜந்ம) எனக்கேயுரிய தனிப்பிறப்பு. 'என் பிறப்பு ஸம்ஸாரிகளுடையதைப் போலே கர்மத்தால் ஏற்படுவதன்று; என் இச்சையாலே ஏற்படுவது' என்று. ''ஆத்மமாயயா ஸம்ப₄வாமி'' [4-6] என்று சொன்ன அர்த்தத்தைஅதை அறிந்தார்க்குப்பலனை விதிப்பதற்காக அநுவதிப்பதாகவும் கொள்ளலாம்; அனறிக்கே, ''ப₃ஹு ஸ்யாம் ப்ரஜாயேய'' [சாந்6–2–3] [நானே பலவாகக்கடவேன்; அதற்காக தேவர், மனிதர் முதலான பல பொருள்களாகப் பிறக்கக்கடவேன்.] என்று ஸ்ருஷ்டி

ஸங்கல்பம் செய்து பிறக்கும்போது, தனக்கு சரீரமாய், தேவமநுஷ்யாதிரூபமாகப் பிறக்கும் சேதனருடைய பிறப்பையே தன் பிறப்பாக அபி₄மானிக்குமிடத்திற்போலே அவர்களுக்கும் தனக்கும் பொதுவான பிறப்பாயிராமல், தனக்கேயுரிய பிறப்பு இது என்கிறுனாகவுமாம். (தி₃வ்யம் ஜந்ம) அப்ராக்ருதமான பிறப்பு அவர்களைப் போலே ப்ராக்ருதமான சரீரத்தோடு பிறக்கும பிறப்பல்ல இது; "ந தஸ்ய ப்ராக்ருதா மூர்த்திர் மாம்ஸமேதோ₃ஸ்தி₂ஸம்ப₄வா" [வாயு–பூர்வ34–40; வராஹ14–41] [அந்தப் பரமபுருஷனுடைய திருமேனி மாம்ஸம், தசை, எலும்புகளாலானதன்று] "ந பூ₄தஸங்க₄ஸம்ஸ்தா₂நோ தே₃ஹோऽஸ்ய பரமாத்மந:" [பாரதம்] [இப்பரமாத்மாவின் திருமேனி பஞ்சபூ₄தங்களின் சேர்த்தியாலுண்டானதன்று.] எனகிறபடியே ப்ரக்ருதிமயமான சரீரத்திலும் வேறுபட்டதொரு தி₃வ்யசரீரத்தோடு பிறக்கும் பிறப்பு இது என்று கூறுவதன்மூலம் "ப்ரக்ருதிம் ஸ்வாமதி₄ஷ்டா₂ய" [4–6] என்றவிடத்தில் சொன்ன அர்த்தத்தையே அநுவதிக்கிறுனாகவுமாம. அன்றிக்கே, அவர்களுடைய பிறப்பைப போலே தாழ்ந்ததாய், நினைக்கவும அருவருப்பையளிப்பதாய், ப₃ந்த₄கமானதாயிராமல், மிகச்சிறந்ததாய், நினைக்க நினைக்க இனிப்பதாய் தான் ப₃ந்த₄கமாயிராததோடன்றியில், இதையநுஸந்திப்பார் ப₃ந்த₄த்தை அறுப்பதாயுமிருக்கும் சிறப்பை 'தி₃வ்யம' என்று கூறுகிறுனாகவுமாம். "ஸ உ ஶ்ரேயாந் ப₄வதி ஜாயமாந:" [யஜுர்-அஷ்டகம 3-6-1-3] [அவன பிறக்கப்பிறக்கவே பெருமை பெறுகிறுன] "விஜாயதே" [பு. ஸூ.] [விசேஷமாகப் பிறக்கிறுன்] "பலபிலபல பிறப்பாய் ஒளிவரும் முழுநலம்' [திருவாய் 1-3-2] என்று உப₄யவேதா₃ந்தங்களிலும் உணர்த்தப்பட்டதாய், 'ஸம்ப₄வாமி'' என்று தனனாலும முன் ஶ்லோகங்களில் ஸூசனம் செய்யப்பட்டதான சிறப்பை விவரிக்கிறபடி. "என்னுடைய ஜந்மங்கள் கர்மமடியாக வன்று; இச்சையடியாகவாயிருக்கும்; நாம் பிறவா நிற்கச்செய்தே பிறவாமையும் கிடக்கும: தாழநின்ற நிலையிலே மேன்மையும் கிடக்கும். அப்ராக்ருத ஸம்ஸ்தா₂னத்தை இதரஸஜாதீயமாகக்கொண்டு பிறப்புதோம; இவற்றிலே ஒன்றை அறிந்தவர்களுக்குப் பின்னை ஜந்மமில்லை" [1-3. ப்ரவேஶம்] என்று இந்த ஶ்லோகத்தின் கருத்தை விவரிக்கும் நம்பிள்ளையின் ஈட்டிலுள்ள ஸ்ரீஸூக்திகள் இங்கு அநுஸந்திக்கவுரியவை. இச்சிறப்பைப்பற்றவன்றே, 'எத்திறம்'' [திருவாய் 1-3-1] "பிறந்தவாறும்" [திருவாய் 5-10-1] என்று ஆழ்வார் இப்பிறப்பை அநுஸந்தித்தவுடன் பலமாஸங்கள் மயங்கிக் கிடந்தார். (தி₃வ்யம) பிறராலும், தன்னாலும் அளவிட்டு அறிய

श्रयणैकप्रयोजनं दिव्यम्—अप्राकृतं मदसाधारणं मम जन्म चेष्टितं

முடியாமலிருக்கும் பெருமையை 'தி₃வ்யம்' என்பதாகவும் கொள்ள லாம். "வேத₃ாஹமேதம் புருஷம்" [பு. ஸூ] என்று அவனுடைய அவதாரஸௌலப்₄யத்தை அறிந்ததாகச் சொன்ன வேதமும, அறிந்த படியெப்படியென்னும கேள்வியெழ, 'மஹாந்தம்' என்று அளவிட் டறியமுடியாதபடி பெரிதாயிருப்பது அது என்றே கூறிற்று. "பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநௌ" [காடக3-9-55] [ஸர்வலோக பிதாவானவன் தன் பிள்ளையொருவனைப் பிதாவாகக்கொண்டு யோனிகள்தோறும் பிறக்கிறுன்.] என்று இவனுடைய அவதார நீர்மையை அநுஸந்தித்த மற்றேரிடத்திலும், "நாவேத₃விந் மநுதே தம் ப்₃ருஹந்தம்" [காடக 3-9-55] [வேதமறியாதவன் அவனைப் பெரியோனென அறியமாட்டான்.] என்று அந்நீர்மை வேதமறியாத வர்களின் வாக்குக்கும் மனத்துக்கும் எட்டமுடியாதபடி பெரிதா யிருப்பது எனறு வாய்வெருவிற்று வேதம். "அமைவுடை நாரணன் மாயையை அறிபவர் யாரே" [திருவாய்1-3-3] என்று தமிழ் மறையும் இவ்வர்த்தத்தையே பேசிற்று. அவ்விடத்து நம்பிள்ளையீட்டில். "இவனுடைய அவதாரரஹஸ்யம் ஒருவர்க்கும் அறிய நிலமல்ல என் கிருர். ப்ரகாரியான தான், ப்ரகாரமான வஸ்துவிலே ஒன்று 'என் மகன்' என்று அபி₄மானிக்கும்படி வந்துபிறந்த இவ்வாஶ்சர்யம் ஒருவர்க்கும் நிலமல்ல வென்கிருர்......நித்யஸூரிகள் பரத்வாநு ப₄வம் பண்ணுகையாலே அறியார்கள்; ஸம்ஸாரிகள் நாஸ்திகராகை யாலே அறியார்கள்; ப்ரஹ்மாதி₃கள் தந்தாமறிவாலே அறிய இருக் கிறவர்களாகையாலே அறியார்கள்; மயர்வற மதிநலமருளப் பெற்ற வர்கள் மோஹிததுக்கிடப்பர்கள்; ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனை தானும் 'ஜந்ம கர்ம ச மே தி₃வ்யம்' என்னுமாகையாலே ஒருவர்க்கும் நில மல்ல என்கிருர்." என்று அருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்திகள் இங்கு அநுஸந்திக்கத்தக்கவை. (மே கர்ம ச) என் செயலும் இப்படிப் பட்டதே. 'ஜந்ம கர்ம ச' என்னும் சொற்சேர்த்தியைப் பார்க்கும் போது, ஜன்மத்தைப்போலே, அதற்குக் காரணமான புண்யகர்மமும் உண்டு என்று சொல்லுவதாகச் சிலர் ஐயமுறக்கூடும்; இது சரியல்ல: 'ஸம்ப₄வாமி ஆத்ம மாயயா' என்னுமிடத்தில் தன் பிறப்புக்குத் தன் இச்சையே காரணமேயொழியக் கர்மம் காரணமன்று என்று இப்ர கரணத்திலேயே நிலைநிறுத்தப்பட்டிருக்கிறபடியால், கர்மஶப்தத் திற்குப் புண்யமென்று பொருள்கொள்ளாமல், சேஷ்டிதம் (செயல்) என்றே பொருள்கொள்ளவேண்டும். (தி₃வ்யம் கர்ம) அப்

ராக்ருதமான செயல்கள். கர்மபந்தம் ஜாத்யேகவசநம். கர்மம் அப்ராகருதமாகையாவது,— ப்ராகிருத ஜீவர்களுடைய செயலைப் போலே தாழ்ந்ததாய், நினைக்கவும் அருவருப்பை அளிப்பதாய், ப₃ந்த₄கமானதாயிராமல், மிகச்சிறந்ததாய், நினைக்க நினைக்க இனிப்பதாய், தான் ப₃ந்த₄கமாயிராததோடன்றியில இதையநுஸந்திப்பார் பந்தத்தை அறுப்பதாயுமிருக்கும் சிறப்பை உடைத்தாயிருக்கையே யாகும். அன்றிக்கே, பிறராலும், தனனாலும அளவிட்டு அறிய முடியாமலிருக்கையையே இங்கும 'தி₃வ்யம' என்பதாகக் கொள்ளலாம். "விஷ்ணோ: கர்மாணி பஶ்யத" [ருக்-அஷ்ட 1-2-7] [விஷ்ணுவின் கர்மங்களைப் பாருங்கள்!] என்று வேதபுருஷனும் இவனுடைய கர்மங்களின் தி₃வ்யத்தனமையில் ஈடுபட்டானன்றோ. 'தி₃வ்யம் கர்ம' என்று ஏகவசனத்தில் (ஒருமையில்) படித்தது இவனுடைய ஒவ்வொரு செயலுமே முற்கூறிய பெருமையை உடையதாய், எவராலும் நெஞ்சாலும் நினைப்பரியதாயிருக்கும் என்பதைக் காட்டுகிறது. "இமையோர் தமக்கும் நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெய் ஊண் என்னும் ஈனச்சொல்லே" [திருவிருத்தம 98] "எத்திறம் உறலினோடுஇணைந்திருந்து ஏங்கிய எளிவே" [திருவாய்1-3-1] "வளர்ந்தவாறும் பெரியபாரதம் கைசெய்து ஐவர்க்குத் திறங்கள் காட்டியிட்டுச் செய்துபோன மாயங்களும நிறந்தனூடுபுக்கு எனதாவியை நின்று நின்றுருககி உண்கின்ற" [திருவாய்5-10-1] "வதுவை வார்த்தையுள் ஏறு பாய்ந்ததும் மாயமாவினை வாய்பிளந்ததும், மதுவைவார் குழலார் குரவை பிணைந்த குழகும், அது இது உது என்னலாவன அல்ல என்னை உன் செய்கை நைவிக்கும்" [திருவாய் 5-10-2] "பெய்யும் பூங்குழல் பேய் முலையுண்ட பிள்ளைத்தேற்றமும் பேர்ந்தோர் சாடிறச்செய்ய பாதமொன்றால் செய்த நின் சிறுச்சேவகமும், நெய்யுண் வார்த்தையுள் அன்னை கோல்கொள்ள நீ உன் தாமரைக் கண்கள் நீர்மல்கப் பையவே நிலையும் வந்து என் நெஞ்சை உருக்குங்களே" [திருவாய் 5-10-3] "கள்ள வேடத்தைக் கொண்டுபோய்ப் புரம் புக்கவாறும் கலந்து அசுரரை உள்ளம் பேதம் செய்திட்டு உயிருண்ட உபாயங்களும், வெள்ளநீர்ச்சடையானும் நின்னிடை வேறலாமை விளங்கநின்றதும் உள்ளமுள்குடைந்து என்னுயிரை உருக்கி உண்ணுமே" [திருவாய்5-10-4] "உண்ண வானவர்கோனுக்கு ஆயர் ஒருப்படுதத அடிசில் உண்டதும், வண்ணமால் வரையை எடுத்து மழைகாத்ததும், மண்ணை முன் படைதது உண்டு உமிழ்ந்து கடந்து இடந்து மணந்த மாயங்கள் எண்ணுந்தோறும் என் நெஞ்சு எரிவாய் மெழுகொககும் நின்றே" [திருவாய் 5-10-5] "நின்றவாறும, இருந்தவாறும், கிடநதவாறும நினைப்பரியன ஒன்றலாவுருவாய் அருவாய நின் மாயங்கள், நின்று நின்று நினைக்கின்றேன், உன்னை எங்ஙனம் நினைகிற்பன்?' [திருவாய் 5-10-6] "ஒண்சுடரோடு இருளுமாய் நின்றவாறும் உண்மையோடு இன்மையாய் வந்து, என் கண்கொளா

च तत्त्वतो यो वेत्ति, स वर्तमानं देहं परित्यज्य पुनर्जन्म नैति,

வகை நீ கரந்து என்னைச்செய்கின்றன எண் கொள் சிந்தையுள் நைகின் றேன் என் கரியமாணிக்கமே!" [திருவாய்5-10-7] "திருவுருவு கிடந்த வாறும் கொப்பூழ்ச் செந்தாமரைமேல் திசைமுகன் கருவுள் வீற்றிருந்து படைத்திட்ட கருமங்களும், பொருவில் உன் தனிநாயகமவை கேட்குந் தோறும் என் நெஞ்சம நின்று நெக்கு அருவிசோரும கண்ணீர் என் செய்கேன் அடியேனே" [திருவாய்5-10-8] "அடியை மூன்றை இரந்த வாறும் அங்கேநின்று ஆழ்கடலும் மண்ணும் விண்ணும் முடிய ஈரடியால் முடித்துக்கொண்ட முக்கியமும் நொடியுமாறு அவை கேட்குந்தோறும எனநெஞ்சம் நின்றனக்கே கரைந்துகும்" [திருவாய்5-10-9] "கூடி நீரைக் கடைந்தவாறும் அமுதம தேவருண்ண அசுரரை வீடுமவண்ணங் களே செய்துபோன வித்தகமும் ஊடுபுக்கு எனதாவியை உருக்கி உண் டிடுகின்ற" [திருவாய்5-10-10] என்று ஆழ்வாரும, "இங்கிதம் நிமிஷிதம் ச தாவகம் ரம்யமத்₃பு₄த மதிப்ரியங்கரம்" [ஸௌந்தரபாஹு ஸ்தவம115] [உன்னுடைய அங்க அசைவுகளும், கண்ணசைவுகளுங கூடஅழகாகவும்,அற்புதமாகவும,மிகவினியதாகவுமுளளன,]" தூ₄ர்த தாயிதம் தவஹி யத்கில ராஸகோ₃ஷ்ட₂யாம் தத்கீர்த்தநம் பரமபாவநமா மநந்தி" [அதிமாநுஷ53] [ராஸலீலையில் நீ கோபிகளோடு தழுவி முழுசிப் புகுந்து சுற்றிச்சுழன்று பரிமாறிய தூ₄ர்த்தச்செயல்களும அனைவரையும மிகவும் பரிசுத்தப்படுத்தக்கூடியவை என்று ஞானிகள் கூறுகின்றனர்] என்று ஆழ்வானும் இவனுடைய ஒவ்வொருசெயலும் எவராலும் நெஞ்சாலும நினைப்பரியதாகவும், மிகச்சிறந்ததாக வும, நினைக்க நினைக்க இனிப்பதாகவும் பிறருடைய ஸம்ஸாரபந் தத்தை அறுப்பதாகவும் உள்ளது என்று அநுஸந்தித்து உருகினா ரன்றே. 'ஜநம எனறு பிறப்பை ஒருமையில் படித்ததும்இதே கருத திலேயே ஆகும். உலகில் நாம் காணும் பிறப்பு அனைத்தும கர்மம காரணமாக ஏற்படுவதாகவும், மிகததாழ்த்ததாகவுமே காணப்படு கிறது. திருடுவது, தூர்த்தச்செயல்கள் முதலான செயல்களும நல் லோர்களால்இகழப்படுகினறவையாகவே உள்ளன. அப்படியிருக்க, இவனுடைய பிறப்பும் இச்செயல்களும மாத்திரம் தாழ்ச்சியற்றவை யெனறும், இகழத்தகாதவை என்றும எப்படிக்கொள்வது என்னும் ஆக்ஷேபம இங்கு எழுகிறது. பிறரிடம்உள்ள ஜந்மசேஷ்டிதங் கள் தாழ்ந்தனவாகவும இகழத்தக்கனவாகவுமே காணப்படாநிற்க. கண்ணனிடம மாத்திரம் அவை சிறநதவையாகவும புகழக் தக்கவையாகவும் கொள்ளப்படுவது எப்படி என்பது இவ்வாக்ஷேபத்

தின் ஸாரம். இவ்விஷயத்தில் ஒரு லோகத்ருஷ்டாந்தத்தைக் கொண்டு ஸமாதானம் பின்வருமாறு உரைக்கப்படுகிறது:— நெருப்பைத் தவிர வேறு எப்பொருளிலுமே காணப்படாத உஷ்ணத் தன்மை (வெம்மை) என்னும் தன்மையை நெருப்பில் மாத்திரம் எப்படி ஒப்புக்கொள்வது என்று ஆக்ஷேபிப்பதை ஒக்கும் இவ்வாக்ஷேபம். நெருப்பு எனனும் பொருள் ப்ரத்யக்ஷ ப்ரமாணத் தாலேயே ஸித்திக்கிறது; அப்படி ஸித்திக்கும்போதே உஷ்ணத் தன்மையை உடையதாகவே ஸித்திக்கிறது; இதை ஒரு தர்க்கத்தைக் கொண்டு இல்லைசெய்ய முடியாது. இநத லோகத்ருஷ்டாந்தத்திற் போலவே க்ருஷ்ணன் என்னும் தத்துவம் சாஸ்திர ப்ரமாண மொன்றாலேயே ஸித்திப்பதொன்றாகையால், அப்படி ஸிததிகும் போது தி₃வ்யமான ஜந்மசேஷ்டிதங்களையுடையதாகவே ஸித்திக் கிறது; இதை ஒரு தர்க்கததாலே இல்லைசெய்யமுடியாது. கண்ணனை சாஸ்திரம் காட்டும்போது தி₃வ்யமான ஜந்மசேஷ்டிதங்களை உடைய பரமாத்மாவாகவே காட்டுகிறபடியால் ஜீவாத்மாக்களிடமே செல்லுபடியாகும் தர்க்கங்களைக்கொண்டு இப்பெருமையை இலலை செய்யமுடியாது என்று கருத்து. கண்ணன் வெண்ணெயைத் திருடியதாகவும, பெண்களைக் களவு கண்டதாகவும் காண்கிறோம். உண்மையில் உபய₄விபூ₄திநாத₂னை கண்ணனின் உடைமை களாகவே அவ்வெண்ணெயும, அப்பெண்களுமிருப்பதை சாஸ் திரங்களிலிருந்து அறிகிறோம். இதனாலேயே, இபபெருமையில்லாத மற்றவர்கள் செய்யும் இதே செயல்கள் குற்றமாகவும், இப் பெருமையுள்ள கண்ணன் செய்வது குற்றமற்றதாகவுமாகிறது. ஆக இவ்வழியிலே இவனுடைய ஜந்மகர்மங்கள் குற்றமற்றவை யாய், திவ்யங்களாகவே ஆகின்றன என்று கண்டுகொள்வது. (ஏவம் யோ வேத்தி தத்த்வத:) முற்கூறியபடி எவனொருவன் என் னுடைய ஜந்மகர்மங்களைதி₃வ்யங்களாகவே உள்ளபடி அறிகிறானோ. (தத்த்வத:வேத்தி) உள்ளபடி அறிகிறானோ; ஸம்ஶயவிபர்யயங்கள் (ஐயம் திரிபுகள்) இல்லாதபடி அறிகிறானோ என்று கருத்து. ஐயமாவது,— 'இவனுடைய ஜந்மசேஷ்டிதங்கள் திவ்யமோ அலலவோ' என்று ஸந்தே₃ஹப்படுகை. திரிபாவது,— 'இவ னுடைய ஜந்ம சேஷ்டிதங்கள் தி₃வ்யங்களல்ல' என்றே அறிவது. இவ்விரண்டு தோ₃ஷங்ககளுமில்லாமல், 'இவனுடைய ஜந்ம சேஷ்டிதங்கள் தி₃வ்யங்களே' என்று உறுதியாக அறிவதே இங்கு உள்ளபடி அறிவது எனப்படுகிறது. இந்த அவதாரரஹஸ்ய ஜ்ஞானம் ப₄க்தியோகத்திற்கு அங்கமானபடியால், 'யோ வேத்தி'

मामेव प्राप्नोति, मदीयदिव्यजन्मचेष्टितयाथात्म्यविज्ञानेन विध्वस्त-समस्तमत्समाश्रयणविरोधिपापोऽस्मिन्नेव जन्मनि यथोदितप्रकारेण मामा-श्रित्य मदेकप्रियो मदेकचित्तो मामेव प्राप्नोति ॥ ९ ॥

---

என்றதற்கு, 'எவனொருவன் அநுஸந்திக்கிருனே' என்று பொருள் கொள்ளவேண்டும. இனி, ப₄க்திநிஷ்ட₂னுனவன் இந்த அவதார ரஹஸ்யத்தை அநுஸந்தித்தானுகில் அவனுக்கு ஏற்படும் பலனை உத்தரார்த்ததாலே கூறுகிருன,— (த்யக்த்வா தே₃ஹம் புநர் ஜந்ம நைதிஸ:)அவன் இவ்வுடலே விட்டபின்,மறுபடியும் ஒருடலே எடுத்துக் கொள்வதாகிய பிறப்பை அடையமாட்டான். உபாஸகனுக்குப் பல ஜன்மஙகளில் அனுபவிக்கவேண்டியதான ப்ராரப்₃த₄கர்மம் எந்த ஜன்மத்தில் முடிகிறதோ அந்த ஜந்மத்திலதான் உபாஸனம் பூர்த்தியாகி, அவன மோக்ஷமடைவான் என்று சாஸ்திரங்களில் கூறப்படுவது இவன் விஷயத்திலில்லே; அவதாரரஹஸ்யத்தை அநு ஸந்தித்துககொண்டு உபாஸிககும் இவனுக்கு இந்த ஜன்மத்திலேயே உபாஸனம பூர்ததியாகி மோக்ஷம கிடைத்துவிடும் என்று கருத்து. சாரீரகசாஸ்திரத்தில் ப்ராரப்தகர்மம் முடிந்த ஜனமத்தில்தான இவ னுககு மோக்ஷம என்று கூறியிருக்க, இங்கு இப்படிச் சொல்லுவது பொருந்துமோ? எனில்: ப்ராரப்த கர்மமானது ஒரு ஜன்மத்துக்கு மேல் இருந்ததாகில் அது அந்த உபாஸகனுடைய உபாஸனம அந்த ஜன்மத்தில் நிறைவேற முடியாதபடி தடுக்கிறது. இந்த அவதார ரஹஸ்யஜ்ஞானமானது அத்தடையை நீக்கி உபாஸனத்தை அந்த ஜன்மத்திலேயே பூர்ததியடையும்படி செய்கிறது.

"விநிஷ்பந்நஸமாதி₄ஸ்து முக்திம் தத்ரைவ ஜந்மநி ।
ப்ராப்நோதி யோகீ₃ யோக₃ாக்₃நித₃க்₃த₄கர்மசயோऽசிராத் ॥"
[வி. பு 6-7-35]

[உபாஸனம் நிறைவேறப்பெற்றவன் உபாஸநமாகிற நெருப்பாலே எரிக்கப்பட்ட கர்மங்களேயுடையவனுய், அந்த ஜன்மத்திலேயே விரை வில் முக்தியை அடைகிருன்.] என்கிறபடியே உபாஸனம் பூர்த்தி யடைந்துவிட்டால் உடனே மோக்ஷம் ஸித்திக்கும் என்பது சாஸ்திர ஸித்தம். ஆகையால், அவதாரரஹஸ்யஜ்ஞானத்துடன் உபா ஸனத்தை அநுஷ்டிப்பவனுக்கு அந்த ஜன்மத்திலேயே மோக்ஷம் கிடைக்கும் என்றதில் குறையில்லே. புருஷஸூக்தத்திலும "வேத₃ாஹ மேதம்—தமேவம்வித்₃வாந்" என்று அவதாரரஹஸ்யஜ்ஞானத்தோடு உபாஸிப்பவனே எடுத்து, "அம்ருத இஹ ப₄வதி" என்று அவன் இந்த ஜன்மத்திலேயே மோக்ஷமடைகிருன் என்று கூறப்பட்டதன்ரு.

ப்ரபன்னனுக்கோவெனில், அர்ச்சாவதாரபர்யந்தமான கு₃ண பூர்த்தியுள்ள அவதாரங்களிலேயே ப்ரபத்திசெய்யவேண்டும் என்னும் நியமம் இருக்கையாலே, அவதார ரஹஸ்யஜ்ஞானம் இன்றியமையாதது, ப்ரபன்னனுக்கு இந்த ஜன்மத்திலேயே மோக்ஷம் ஏற்படுகிறது என்பது சாஸ்திரஸித்தம். ஆக, ப₄க்தி நிஷ்ட₂னோடு ப்ரபன்னனோடு வாசியற அவதாரரஹஸ்யாநுஸந்த₄ான முடையவனுக்கு இந்த ஜன்மத்திலேயே மோக்ஷம் ஏற்படும் என்றதாயிற்று. இப்படியானால், எல்லோரும் ப்ரபத்தியிலேயோ, அவதாரரஹஸ்யாநுஸந்த₄ானத்தோடு கூடிய ப₄க்தியிலேயோ இழி வார்களேயொழிய, பல ஜன்மங்கள் ஸம்ஸாரத்தில் இழுத்தடிக்கக் கூடிய கேவல ப₄க்தியில் இழியமாட்டார்களே;' ஆகையால், கேவல ப₄க்தியை விதி₄க்கும் சாஸ்திரமானது அனுஷ்டிப்பார் எவரும் இல்லாததாய், வீணாகிவிடுமே? எனில்: உலகில் சாஸ்திரவிதி₄யினு லும், ருசிபே₄த₃த்தாலும், ஞானசக்திகளில் தாரதம்யத்தாலும் அதி₄காரிகள் பலதரப்பட்டவர்களாயிருக்கையால், சில வகையான அதி₄காரிகள் கேவலப₄க்தியிலும் இழிவார்களாகையாலே இக்குறை வாராது; எப்படியெனில்: முதல் மூன்று வர்ணத்தில் பிறந்த ஆண்களே பக்திக்கு அதிகாரிகள்; ஸ்த்ரீஶூத்₃ரர்கள் அதற்கு அதி₄காரிகளல்லர் என்பது சாஸ்திரவிதி₄யினால் ஏற்பட்ட ஒரு அதி₄காரி விப₄ாக₃ம். முதல் மூனறு வர்ணத்தில் பிறந்த ஆண் களானபோதிலும், கர்மஜ்ஞானயோகங்களை அங்கமாகக்கொண்ட ப₄க்தியை அறிந்து அநுஷ்டிக்கைக்குவேண்டிய ஜ்ஞானமின்மை யாலும், ஶக்தியின்மையாலும் நம்மைப்போன்றவர்கள் கர்மஜ்ஞாந ப₄க்தியோகங்களைச் சரிவர அனுஷ்டிக்க முடியாது; இத்தகைய அஜ்ஞாநாஶக்திகள் இல்லாவிடினும், "காலாழும் நெஞ்சழியும் கண் சுழலும்" [பெரிய திருவ 34] "என்றனளவன்றால் யானுடைய அன்பு" [இர-திருவ 100] "சித்தமும் செவ்வை நில்லாது" [திருக்குறுந் தாண்டகம் 10] என்கிறபடியே எம்பெருமானைப்பற்றிச் சிந்தித்த மாத்திரத்தில் அங்கங்களிலும், மனத்திலும் தளர்வேற்படும் தன்மையை உடைய ஆழ்வார்களைப்போன்றவர்களும், இக் காரணத்தினலேயே ப₄க்தியை த₄ரித்துநின்று அனுஷ்டிக்க முடியாது. முற்கூடிய அஜ்ஞாநாஶக்திகளும், ப₄க்திபாரவஶ்யத்தி னால் ஏற்படும் தளர்வும் இல்லாவிடினும், 'ஆத்மவஸ்துவானது பரமபுருஷனுக்கு அசித்தைப்போலே அத்யந்தபரதந்திரமாகை யாலே தன் முயற்சியாலே அவனைப் பெற நினைப்பதும் தகாது'

என்னும் சிறந்த ஜ்ஞானமுடைய ஆசார்யர்களும் ப்ரபத்திக்கே அதி₄காரிகள். இந்த ஜ்ஞானம் ப்ரபன்னர்கள் அனைவர்க்குமே இருக்கவேண்டியதொன்று. இந்த ஜ்ஞானமில்லாத த்ரைவர்ணிக புருஷர்கள் அனைவரும் ப₄க்திக்கு அதி₄காரிகள். அவர்களிலும், "நின் புகழில் வைகும் தம் சிந்தையிலும் மற்றினிதோ நீ அவர்க்கு வைகுந்தம் என்றருளும் வான்" [பெரிய திருவ 52] "நேரிய காதல் அன்பின் இன்பு ஈன் தேறல் அமுதவெள்ளத்தாநும் சிறப்பு விட்டு... உலகம் மூன்றினொடு நல்வீடு பெறினும் கொள்வதெண்ணுமோ தெள்ளியோர் குறிப்பே" [திருவாசிரியம் 2] என்கிறபடியே மோக்ஷத்தை அடைவதைக் காட்டிலும், இவ்வுலகில் ப₄க்திஸுக₂த்தை அநுப₄விப்பதே இனிது என்னும் மனப்பான்மையுடையவர்கள் கேவல ப₄க்திக்கு அதி₄காரிகள். "கூவிக்கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ" [திருவாய் 6-9-9] எனகிறபடியே ஸம்ஸாரத்தில் அடிக்கொதிப்பாலே இந்த ஜன்மத்திலேயே மோக்ஷமடையவேணும் என்று துடிக்கும் ப₄க்திநிஷ்ட₂ர்கள் அவதாரரஹஸ்யாநுஸந்தா₄னத்தோடு ப₄க்தியோகத்தை அனுஷ்டிக்க அதி₄காரிகள். ஆகவிப்படி சாஸ்திரவிதி₄யாலும், ருசிபே₄த₃த்தாலும், ஜ்ஞாநஶக்திகளில் தாரதம்யத்தாலும் ப்ரபத்தியையும், கேவலப₄க்தியையும், அவதார ரஹஸ்யாநுஸந்தா₄னத்தோடு கூடிய ப₄க்தியையும் அனுஷ்டிக்கக் கூடியவர்கள் வெவ்வேறாகத் தேறுகையாலே, கேவலப₄க்தியை விதி₄க்கும் சாஸ்திரம் பயனற்றுப்போகாது என்று அறியலாம். ப்ரபன்னர்க்கு ப்ரபத்தி செய்யத்தக்க விஷயத்தைத் தெரிவிப்பதற்காகவும், இந்த ஜன்மத்திலேயே மோக்ஷமடைய விரும்பும் ப₄க்தனுக்கு உபாஸனத்துக்கு அங்கமாகவும் ஆகிறது அவதாரரஹஸ்ய ஜ்ஞானம் என்பதும் இங்கு அறியத்தக்கது. ஆக, இப்படி ப்ரபன்னர்க்கும், ப₄க்தர்க்கும் பொதுவாயிருந்தபோதிலும், "க்ஷுத்₃ரம் ஹ்ருத₃ய தௌ₃ர்ப₃ல்யம் த்யக்த்வோத்திஷ்ட₂ பரந்தப" [கீதை 2-3] [எதிரிகளை அடக்குகிறவனே! மிகத்தாழ்ந்ததான மன வலிமையின்மையைக் கைவிட்டுப் (போர்புரிய) எழுந்திராய்!] என்று கண்ணன் உரைத்தவுடன். 'அப்படியே' என்று கூறாமல், 'ந யோத்ஸ்யே' [கீதை2-9] [நான் போர்புரியமாட்டேன்] என்று மறுத்துரைத்தமையாலே, 'ஆத்மா அச்யுதனுக்கு அத்யந்தபரதந்த்ரமானது' என்னும் அறிவு அர்ஜுனனுக்கு இல்லையென உணர்ந்து, கண்ணன் அவனுக்கு பக்தியோகத்தையே உபதேசிககிறுகையாலே, இங்கு பக்தியோகத்துக்கு அங்கமாகவே அவதாரரஹஸ்யஜ்ஞானம் அர்ஜுனனுக்கு உபதேசிக்கப்படுகிறது என்று கொள்ளவதே பொருத்தம்.

(மேதி₃வ்யம் ஜந்ம ஏவம் யோ வேத்தி ஸ புநர் ஜந்ம நைதி) என்னுடைய தி₃வ்யமான ஜன்மத்தை அறிபவன் மறுபடியும் பிறப்பை அடையமாட்டான். "என்னுடைய ஜந்மங்கள் கர்மமடியாகவன்று., இச்சையடியாகவாயிருககும்......இவற்றிலே ஒ ன றை அறிந்தவர் களுக்குப் பினனை ஜந்மமில்லை; நானும் பிறந்து அவர்களும பிறக்க வேணுமோ? ஈரிறையுண்டோ?" எனறு இந்த ஶ்லோகத்தின் கருத்தை நம்பிள்ளை ஈட்டிலே (1-3ப்ரவேசம்) அருளிச்செய்தார். (மே தி₃வ்யம் கர்ம யோ வேத்தி ஸ புநர் ஜந்ம நைதி) என்னுடைய தி₃வ்யமான கர்மத்தை எவன் அறிகிருனே அவன மறுபிறப்பை அடையமாட்டான். மத்துறுகடைவெண்ணெய் களவினில் உறவிடை ஆப்புண்டு உரலினேடு இணைந்திருந்து ஏங்கிய இவனுடைய ஒரு தி₃வ்யகர்மத்தை அனுஸந்தித்தவர்களுக்கும் ஸம்ஸாரப₃ந்த₄மே அறுந்துபோம் என்று மஹானகள் அநுஸந்திததனர்.

"ஸ்வமாது: ஸ்விந்நகா₃த்ராயா: விஸ்ரஸ்தகப₃ரஸ்ரஜ: ।
த்₃ருஷ்ட்வா பரிஶ்ரமம் க்ருஷ்ண: க்ருபயாऽऽஸீத்
ஸ்வப₃ந்த₄நே ॥
ஏவம் ஸந்த₃ர்ஶிதா ஹ்யங்க₃ ஹரிணா ப்₄ருத்யவஶ்யதா ।
ஸ்வவஶேநாபி க்ருஷ்ணேந யஸ்யேத₃ம் ஸேஶ்வரம் வஶே ॥
நேமம விரிஞ்சோ ந ப₄வோ ந ஶ்ரீரப்யங்க₃ஸம்ஶ்ரயா ।
ப்ரஸாத₃ம் லேபி₄ரே கோ₃பீ யத் தத ப்ராப விமுக்திதா₃த் ॥"
[பாகவதம் 10–9–18, 19, 20]

[வேர்த்த உடம்பையுடையவளாய், குழலில் வைத்த பூ நழுவப் பெற்றவளாகிய தாயாகிய யசோதையின் சிரமத்தைக் கண்டு, கண்ணன் கருணையாலே தானே கட்டுப்பட இசைந்தான். ஈஶ்வரர் களையுடைய உலகனைத்தையும் தன் வசத்திற்கொண்டவனாய், தான் எவர்க்கும் வசப்படாதவனை ஹரியினால் தன் அடியார்களுக்குப் பரதந்திரனாயிருக்கும் மஹாகுணம் இவ்வண்ணமாகக் காட்டப்பட்டதன்றோ! மோக்ஷத்தையளிக்கும் அவனிடமிருந்து ஓர் இடைச்சி பெற்ற இவ்வருளைப் பிரமனும், சிவனும், திருமார்பில் வாழும் ஶ்ரீதேவியுங்கூடப் பெற்றார்களில்லை,] என்று சுகப்₃ரஹ்மரிஷியானவர் கண்ணிநுண்சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்பண்ணிய பெருமாயனுடைய இச்செயலை அநுஸந்தித்தார்க்கு மோக்ஷம் ஏற்படும் என்று உணர்த்தினர். "ஸம்ஸாரப₃ந்த₄ ஸ்தி₂திமோக்ஷஹேதுவான தானிறே இப்படி கட்டுண்டிருக்கிறான்; ப்₃ரஹ்மாதி₃களைத் தன்

ஸங்கல்பத்தாலே கட்டுவது விடுவதாகிறவனிறே இப்போது ஒரு அப₃லை கையாலே கட்டுண்டிருக்கிறுன்; த்யக்த்வா தே₃ஹம் புநர் ஜந்ம நைதி என்கிறபடியே நமமுடைய கட்டை அவிழ்க்கவிறே தான் கண்டுண்டிருக்கிறது'' என்று திருவாய்மொழி (1-3-1) ஈட்டிலே நம்பிள்ளை அருளிச்செய்தார்.

''ப₃த்₃த₄ம் தத₂ா ப₄ாவயதாம் முகுந்த₃மயத்நவிச்சே₂தி₃நி கர்மப₃ந்தே₄ ।
தபஸ்விநீ தத்க்ரது நீதிராத்₃யா ஸவ்ரீட₃ மாரண்யகத₂ாஸ தஸ்தௌ ॥'' [4-35]

[உரலில் கட்டுண்ட முகுந்தனை தியானிப்பவர்களுக்குக் கர்மக்கட்டு அனைத்தும் எளிதில் விட்டுப்போவதைக்கண்ட பழைய தத்க்ரது நீதி யாகிற பெண்பிள்ளை 'இவன கட்டுப்பட்டதை தியானிப்பார் (தத்க்ரதுந்யாயப்படி கட்டுப்படவேண்டியிருக்க அப்படிக்) கட்டுப் படாமலிருப்பதோடன்றியில் கட்டுவிடுபடவும் பெறுவதே!' என்று லஜ்ஜைகொண்டு, வருந்தத்தக்கநிலையை அடைந்தவளாய், (வெட்க முற்றூர் கண்காணுத காடுகளில் சென்று ஒளிவதுபோலே) வேதத்தி லுள்ள ஆரண்யகங்களிலே ஒளிந்தனள்.] என்று ஸ்ரீவேதாந்த தேசிகரும் யாத₃வாப்₄யுத₃யத்திலே அருளிச்செய்தார். (புநர்ஜந்ம நைதி மாமேதி) ''ஜராமரண மோக்ஷாய''[கீதை7-29] ''பிறவித்துயரற'' [திருவாய்1-7-1] என்கிறபடியே கைவல்யநிஷ்ட₂னைப்போலே பிற வித் துயரற்றவுடன் ஸ்வாத்மாநுப₄வமாத்ரமான மோக்ஷத்திலிழி யாதே, என்னுடைய இனிமையை அறிந்த இவன் என்னையே அடைகிறுன் என்று கருத்து.

ஆக, இந்த ஶ்லோகத்தில், தன்னுடைய தி₃வ்யமான பிறப்பு களையும், செயல்களையும், உள்ளபடி அநுஸந்திப்பதால், உபாஸக னுனவன் உபாஸனவிரோதி₄பாபங்களனைத்தும் இந்த ஜன்மத்தி லேயே கழியப்பெற்று, சாஸ்திரங்களிற் சொல்லியபடி என்னை நன்கு தியானித்து, அந்த தியானம் அன்போடு கூடியதாயிருக்கையாலே பக்திநிலையை அடையப்பெற்று, என்னிடமே நெஞ்சு செலுத்தும் ஸமாதி₄நிலையும் கைவரப்பெற்று என்னையே அடைகிறுன் என்று கூறப்பெற்றதாயிற்று. தன் பிறப்பை அநுஸந்திப்பார்க்கு மோக்ஷ மளிக்கையாகிற இதுவும் ஸாது₄பரித்ராணத்திலே சேர்கின்றதாகை யாலே, முற்கூறிய அவதார ப்ரயோஜனமும் இந்த ஶ்லோகத்தில் விளக்கப்பட்டதாயிற்று. 9.

भा॥ तदाह—

वीतरागभयक्रोधा मन्मया मामुपाश्रिताः।
बहवो ज्ञानतपसा पूता मद्भावमागताः॥ १०॥

10. வீதராக₃ப₄யக்ரோத₄ா மந்மயா மாமுபாஶ்ரிதா:।
பஹ₃வோ ஜ்ஞாநதபஸா பூதா மத்₃ப₄ாவமாக₃தா:॥

**ஜ்ஞாநதபஸா பூதா:**-*முற்கூறிய அவதாரரஹஸ்யஜ்ஞான மாகிற தவத்தினுலே உபாஸனவிரோதிபாபம் கழியப்பெற்ற,* **ப₃ஹவ:**-*பலர்,* **மாம் உபாஶ்ரிதா:**—*என்னை தியானிப்பவர்களாய்,* **வீதராக₃ப₄யக்ரோத₄ா:**-*மற்ற (விஷயங்களில்) விருப்பமும், (அவ்விஷயங்களை அடையத்தடையேற்படுமோ என்னும்) பயமும், (தடைசெய்வாரிடம்) கோபமும் அற்றவர்களாய்,* **மந்மயா:**-*என்னிடமே நெஞ்சு செலுத்தியவர்களாய்,* **மத்₃ப₄ாவம் ஆக₃தா:**— *என்னைப்போன்ற ஸ்வப₄ாவத்தை உடையவராகையாகிற மோக்ஷநிலையை அடைந்தனர்.*

---

**10. நேயம் பயம்வெகுளி நீங்கியென் றன்மையரே
யாய திறத்தா லடைந்தென்னைத்—தூய
வறிவாந் தவத்தா லனேகரென் றன்மை
செறிவார்கள் பூதராய்ச் சேர்ந்து.**

**தூய அறிவாம் தவத்தால்**-*(முற்கூறிய) அவதாரரஹஸ்ய ஜ்ஞானமாகிற தவத்தினுலே,* **பூதராய் சேர்ந்து**- *(உபாஸந விரோதி₄) பாபம் கழியப்பெற்றவர்களாய் என்னிடம் ஈடுபட்டு,* **அநேகர்**—*பலர்,* **என்னை அடைந்து**—*என்னை தியானித்து,* **நேயம் பயம் வெகுளி நீங்கி**— *(மற்ற விஷயங்களில்) விருப்பமும், (அவ்விஷயங்களை அடையத்தடை ஏற்படுமோ என்னும்) ப₄யமும், (தடை செய்வாரிடம்) கோபமும் அற்றவர்களாய்,* **என் தன்மையரே ஆய திறத்தால்**—*என்னிடமே நெஞ்சு செலுத்தி ஸமாதி₄நிலையை அடைந்தமையால்,* **என் தன்மை செறிவார்கள்**— *(மோக்ஷத்தில்) என்னைப்போன்ற தன்மையை உடையவராவார்கள்.*

॥भा॥ मदीयजन्मकर्मतत्त्वज्ञानाख्येन तपसा पूता बहव एवं

10. அவதாரரஹஸ்யஜ்ஞானமானது ப₄க்திநிஷ்டனுக்கு ப₄க்தி விரோதி₄பாபங்களைப்போக்கி ப₄க்தியைப் பூர்த்தி செய்வதனமூலமே மோக்ஷத்தை அளிக்கிறது என்று சென்ற ஶ்லோகத்திற் சொல்லப் பட்ட அர்த்தத்தை விளக்குகிறுன். (ஜ்ஞாந தபஸா பூதா:) முன் ஶ்லோகத்தில், 'ஜந்ம கர்ம ச மே தி₃வ்யம் ஏவம் யோ வேத்திதத்வத:' என்று சொல்லப்பட்ட என்னுடைய பிறப்புக்களையும், செயலகளையும் உள்ளபடி அறிவதாகிற தவத்தாலே பரிசுத்தப்படுத்தப்பட்டவர் களாய். 'யஸ்ய ஜ்ஞாநமயம் தப:' [முண்டகம்1-1-10] [எந்தப் பரமாத்மாவினுடைய (ஜகதஸ்ருஷ்டியைப்பற்றிய) தவம ஸங்கல்ப ரூபமான அறிவு மயமாயிருககிறதோ] என்றவிடத்திற்போலே இவ் விடத்திலும் 'தப ஆலோசநே' என்னும் தா₄துவிலிருந்து உண்டான தபஶ்ஶப்₃த₃ம், அவதாரரஹஸ்யஜ்ஞானம் கேவலஜ்ஞானமாத்ர மன்று, சிந்தனரூபமாயிருபபது என்று காட்டுகிறது. இத்தால், இந்த ஜன்மத்திலேயே மோக்ஷத்தைப்பெற விரும்பினுல் அவதார ரஹஸ்யத்தை ப₄க்தியோகத்திற்கு அங்கமாக அநுஸந்திக்கவேண் டும் என்று உணர்ததப்படுகிறது. 'ஜ்ஞாநதபஸா' எனறது சிந்தன ரூபமான ஜ்ஞானத்தாலே என்றபடி. அன்றிக்கே, 'பூதா:' (பரி சுத்தப்படுத்தப்பட்டவர்கள்) என்னும் பத₃ஸ்வாரஸ்யத்தை அநு ஸரித்து, தபஶ்ஶப்₃த₃த்தை ப்ராயஶ்சிததம் என்னும் பொருளையுடைய தாககொண்டு, 'ஜ்ஞாந தபஸா பூதா:' என்று, அவதாரரஹஸ்ய ஜ்ஞானமாகிற ப்ராயஶ்சித்தத்தாலே என்விஷயமான பக்திக்குத்தடை யாயிருக்கும் பாபங்கள் நீங்கப்பெற்றவர்கள் என்று பொருளுரைக்கவு மாம். (ப₃ஹவ:) இப்படி அவதாரரஹஸ்யத்தை அநுஸந்தித்தவர் கள் வஸிஷ்டர், வாமதே₃வர், பராஶரர் முதலான பலர் உளர் என்ற படி. (மாம உபாஶ்ரிதா:) அவதாரரஹஸ்யாநுஸந்தானத்தாலே ப₄க்திக்குத் தடையான பாபம் அழிகையாலே நிறைவுபெற்ற பக்தி யோகத்தை உடையவர்களாகிருர்கள் இவர்கள் என்று கருத்து. (வீதராக₃ப₄யக்ரோதா₄:) அந்த பக்தியானது என்னிடமே ப்ரீதி ரூபமாயிருக்கையால், சப்₃த₃ாதிவிஷயங்களில் ப்ரீதியாகிற ராக₃ம், விருமபும் விஷயங்களை அனுப₄விக்கத் தடையேற்படுமோ என்றும், விரும்பாத விஷயாநுப₄வம் வந்து சேர்ந்துவிடுமோ என்றும் அதிஶங்கிப்பதாகிற ப₄யம், விரும்பும் விஷயாநுப₄வத்தைத் தடை செய்வாரிடமும், விரும்பாத விஷயங்களை அநுப₄விகக்ச் செய்வா ரிடமும் அவர்களை நிரஸிக்கவேண்டும் என்னும் கோபம், ஆகிய

மூன்றும் அற்றவர்களாகிருர்கள் இவர்கள் என்று கருத்து. "பரமாத் மநி யோ ரக்த:" [பார்ஹஸ்பத்யஸ்ம்ருதி] "மாற்பால் மனம்சுழிப்ப" [மூன்திருவ14]என்கிறபடியே பகவத்விஷயத்தில் பிரீதி ஏற்பட்டால் "விரக்த: அபரமாத்மநி' [பார்ஹஸ்பத்யஸ்ம்ருதி]"மங்கையர்தோள் கை விட்டு" [மூன்திருவ 14] என்கிறபடியே மற்ற விஷயங்களில் வைராக்₃யம் தன்னடையே உண்டாகும்; இப்படி இதரவிஷயராக₃ மில்லாமையால், அதைத்தடைசெய்வாரும் இல்லையாகையால், கோப முண்டாகவுமிடமில்லை; பரமாத்மாவை அடைவதையும், அடையா மையையும் தவிர வேறு இஷ்டாநிஷ்டங்கள் இவர்களுக்கில்லாமை யாலே அவைபற்றிய ப₄யம் உண்டாகவும் இடமில்லை. இவ்விஷயம்,

"ந க்ரோதோ₄ ந ச மாத்ஸர்யம் ந லோபோ₄ நாஶுபா₄ மதி: |
ப₄வந்தி க்ருதபுண்யாநாம் ப₄க்தாநாம் புருஷோத்தமே ||"
[விஷ்ணுஸஹஸ்ரநாமப₂லஶ்ருதி]

[புருஷோத்தமனிடம் பக்தி செய்யும் பாக்கியசாலிகளுக்குக் கோப மும், மாத்ஸர்யமும், பேராசையும், தீய எண்ணமும் ஏற்படுவ தில்லை] என்று ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாமாத்யாயத்திலே [134-வது ஶ்லோகம்] உத்கோஷிக்கப்பட்டது. (மந்மயா:) என்னிடமே ஈடுபட்டவர்களாகையாலே, தியானநிலையில் என்னைத் தவிர வேறொன்றை அறியாதவர்கள் என்று கருத்து.

"ஸ த்வாஸக்தமதி: க்ருஷ்ணே த₃ஶ்யமானோ மஹோரகை₃: |
ந விவேதா₃த்மனோ கா₃த்ரம் தத்ஸ்ம்ருத்யாஹ்லாத₃
ஸம்ஸ்தித:||" [வி-பு 1-17-39]

[கண்ணனிடம் ஈடுபட்ட அறிவையுடைய பிரஹ்லாதன் அப்பரம புருஷனின் நினைவாலுண்டான இன்பத்தில் மூழ்கிநின்றவனாய், பெரும்பாம்புகளால் கடிக்கப்பட்டபோதும் தன் உடம்பையும் அறிந்தானல்லன்.] என்றும்,

"ஏவம் ஸஞ்சிந்தயந் விஷ்ணும் அபே₄தே₃நாத்மனோ த்₃விஜ |
தந்மயத்வமவாப்யாக்₃ர்யம் மேநே சாத்மாநமச்யுதம் ||
விஸஸ்மார தத₃ாऽऽத்மாநம் நாந்யத் கிஞ்சித₃ஜாநத |
அஹமேவாவ்யயோऽநந்த: பரமாத்மேத்யசிந்தயத் ||"
[வி-பு 1-20-22]

[இவ்வண்ணமாக விஷ்ணுவைத் தன்னிலும் வேறுபடாதவனாகச் சிந்தித்துக்கொண்டிருந்த அந்த ப்ரஹ்லாதன் அவனையே

संवृत्ताः। तथा च श्रुतिः * तस्य धीराः परिजानन्ति योनिम् इति।

---

தியானிக்கும் சிறந்த நிலையை அடைந்தவனும், தனனேயே மறந்தான்; வேறு எப்பொருளேயும் அறியவுமில்லே. அழிவற்ற வனும், அநந்தனை பரமாதமா நானே என நினைத்தான்} என்றும இந்நிலே ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில பிரஹ்லாதனுக்குப் பேசப் பட்டதனறே. (மந்மயாঃ) 'மயட்' ப்ரதயயத்திற்கு மூன்றுபொருளகள் உண்டு. அனனமயமானது உடமபு என்பது போன்றவிடத்தில் 'அன்னவிகாரமாயிருப்பது உடமபு' என்றே பொருளாகையால், 'மயட்' விகாரமாகிற பொருளைக் குறிக்கிறது. 'யஸ்ய ஜ்ஞாநமயம் தப:'' [முண்டகம்1-1-10] [எவனுடைய தவமானது ஞானரூபமோ] முதலானவிடங்களில் 'மயட்' ப்ரத்யயம் தாதா₃த்மயம் அல்லது ஸ்வரூபைக்யப்பொருளை உடையதாயிருக்கிறது. 'பரமாத்மா ஆநந்த மயன்' 'அன்னமயமானது யஜ்ஞம்' முதலானவிடஙகளில் 'மயட்' ப்ரத்யயம, ப்ராசுர்யம் (மிகுதி) என்னும் பொருளைக் காட்டுவது. இங்கு, ஆத்மாவைப் பரமாத்மாவின விகாரமாகவோ, பரமாத்மா வோடு ஸ்வரூபைக்யத்தை உடையவனுகவோ கொள்வது, பரமாத்மாவை நிர்விகாரனுகவும், ஜீவபி₄ன்னனுகவும் உத்₃கோ₄ஷிக்கும் ஶாஸ்திரங்களுக்கும் 'ந த்வேவாஹம' என்பது முதலான இந்த கீதாஶாஸ்த்ர ப்ரகரணங்களுக்கும் முரண்படுமாகையாலே, இங்கு மயட்' ப்ரத்யயம் முதலிரண்டு பொருள்களைக் குறிக்காமல் 'ப்ராசுர்யம்' (மிகுதி) என்னும் பொருளையே குறிப்பதாகக் கொள்ள வேண்டும். அதிலும், 'என்னை அந்தர்யாமியாகக் கொண்ட வர்கள்' என்று கூறுவது அனைவர்க்கும் பொதுவாகையாலே, பக்தர்களின் பெருமையைக் காட்டவந்த இந்த ப்ரகரணத்திற்குப் பொருந்தாதாகையாலே, அறியப்படுபவனை என்னையே மிகவும் நெஞ்சிற்கொண்டவர்கள் என்னும் பொருளே பொருத்தமுடையது. இத்தால், 'மந்மயா:' என்றதற்கு 'ஈஶ்வரனேடு அபே₄த₃த்தைக் (ஸ்வரூபைக்யத்தைக்) காண்பவர்கள்' என்று சங்கரர் பொருளுரைத்தது பொருத்தமன்று என விளங்கும். (மத்₃பா₄வமாக₃தா:) என் ஸ்வபா₄வததைப் பெறுகையாகிற மோக்ஷத்தை அடைந்தனர். அபஹதபாப்மத்வம் (பாபமற்றிருக்கை), 'விஜரத்வம்' (கிழத்தன மற்றிருக்கை), விம்ருத்யுத்வம் (மரணமற்றிருக்கை), 'விஶோகத்வம்' (வருத்தமற்றிருக்கை), 'விஜிக₄த்ஸத்வம்' (பசியற்றிருக்கை), 'அபிபா ஸத்வம்' (தாஹமற்றிருக்கை) 'ஸத்யகாமத்வம்' (எல்லா விருப்பங் களும்நிறைவேறப்பெற்றிருக்கை), 'ஸத்யஸங்கல்பத்வம்'(நினைத்ததை நிறைவேற்றவல்லவனுயிருக்கை) என்னும் என்னுடைய தன்மைகளை இவர்களும்பெற்று முக்தராஞர்கள் என்றுகருத்து.''மாம் ஏதி''[என்னை அடைகிருன்] என்று முன் ஶ்லோகத்திற்சொன்னதை விளக்கியபடி.

धीराः-धीमतामग्रेसराः एवं (एव) तस्य जन्मप्रकारं जानन्तीत्यर्थः ॥ १० ॥

---

இங்கும் 'மத்₃பா₄வம் ஆக₃தா:' என்றதற்கு என்னோடு ஸ்வரூபைக்யத்தை அடைகிறார்கள் என்று பொருள் கொள்வது ஒட்டாது. அப்படிப் பொருள்கொண்டால், "பரமம் ஸாம்ய முபைதி" [முண்ட 3-1-3] [முக்தியில் ஜீவன் பரமனோடு மேலான ஒற்றுமையை அடைகிறான்] முதலான ஶ்ருதிகளுக்கும், "அந்யத்₃த்₃ரவ்யம் ஹி நைதி தத்₃த்₃ரவ்யதாம்" [வி-பு 2-14-27] [ஒரு திரவியம் வேறொரு திரவியமாக ஆகாதன்றோ.] முதலான ஸ்ம்ருதிகளுக்கும், இந்த ஶ்ருதிஸ்ம்ருதிகளோடு ஒட்டிய யுக்தி களுக்கும், முக்திதசையில் ஜீவனுக்கு ஜகத்ஸ்ருஷ்டி முதலான பரமாத்மாவுக்கேயுரிய பெருமைகள் கிடையாதென்றும், அநுபவம் ஒன்றிலேயே ஜீவபரமருக்குள் ஒற்றுமை என்றும் உத்கோஷிக்கும் "ஜக₃த்₃வ்யாபார வர்ஜம்" "போ₄க₃மாத்ர ஸாம்யலிங்கா₃ச்ச" முதலான ப்ரஹ்மஸூத்ரங்களுக்கும் விரோத₄ம் வரும்; முன் ஶ்லோகத்தில் "மாம் ஏதி" என்று ஜீவனை அடைபவனாகவும், பரமனை அடையப் படுபவனாகவும் கூறியிருப்பதும், 'மம ஸாத₄ர்ம்யமாக₃தா:' [கீதை 14-2] [என்னோடு ஒரே ஸ்வபா₄வத்தை உடையவர்களாகிறார்கள்] என்று பின்னால் கூறப்போவதும் பொருந்தாமற்போய்விடும். ஆகை யால், 'என்னோடு ஸ்வபா₄வத்தில் பரமஸாம்யத்தை அடைகிறார்கள்' என்றே பொருள்கொள்ளவேண்டும். அன்றிக்கே, 'நானாகவே ஆகி றார்கள்' என்றே பொருளுரைத்தாலும், முற்கூறிய ஶ்ருதிமுதலானவை முரண்படாமலிருப்பதற்காக. "ப்₃ரஹ்மைவ ப₄வதி" [முண்ட 3-2-9] [ப்ரஹ்மமாகவே ஆகிறான்] முதலானவிடங்களிற்போலே, மேலான ஒற்றுமையைக் கருத்திற்கொண்டே தானாகவே ஆவதாகக் கூறுவ தாகக் கொள்ளவேண்டும். நிற்க, இந்த அவதாரரஹஸ்யம் அறியத் தக்கதென்பதை "தஸ்ய தீ₄ரா: பரிஜாநந்தி யோநிம்" [பு.ஸூ-உத்த ராநுவாகம்] [அப்பரமபுருஷனுடைய அவதாரரஹஸ்யத்தை அறிவாளிகளில் தலைசிறந்தவர்களே முழுவதும் அறிகிறார்கள்] என்று ஶ்ருதியும் உத்கோஷித்தது. "தி₄ய: ஈரயந்தி இதிதீ₄ரா:" [பிற ருடைய அறிவுகளையும் தூண்டுகிறவர்களாகையால் தீ₄ரர்கள் எனப் படுகின்றனர்] என்கிற வ்யுத்பத்தியின்படியே தீ₄ரஶப்தம், பிறருடைய அறிவுகளையும் கூர்மையாக்கவல்ல தலைசிறந்த அறிவாளிகளைக் குறிக்கிறது. இப்படி அறிவாளிகளின் குழுவிலே முன்னணியில் நிற்பவர்களாகையாலே, பரமபுருஷனை அடையும் வரையில் குறை

ये यथा मां प्रपद्यन्ते तांस्तथैव भजाम्यहम्।
मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः॥ ११॥

11. யே யதா₂ மாம் ப்ரபத்₃யந்தே தாம்ஸ்ததை₂வ ப₄ஜாம்யஹம்|
மம வர்த்மாநுவர்த்தந்தே மநுஷ்யா: பார்த்த₂ ஸர்வஶ:||

யே— *எவர்கள்*, மாம்—*என்னை*, யதா₂—*எவ்வண்ணம் ஸங்கல்பித்து*, ப்ரபத்₃யந்தே—*ஆஶ்ரயிக்கிறார்களோ*, ததா₂ எவ—*அவர்கள் ஸங்கல்பித்த வண்ணமாகவே (என்னை ஆக்கிக்*

---

*யர்த* ப₄க்திரூபமான ஞானத்தை உடையவர்களிவர்கள் என்று உணர்த்தப்படுகிறது. 'பரிஜாநந்தி' என்று முழுவதும் அறிவதாகக் கூறுகையாலே, இந்த கீ₃தாப்ரகரணத்தில் பரமபுருஷனுடைய அவதாரத்திற்கு விவரிக்கப்பட்ட எல்லாப் பெருமைகளையும், 'பிறந்த வாறும்'[5-10] என்னும் திருவாய்மொழியில் ஆழ்வார் அநுஸந்தித்து உருகிய எல்லா ப்ரகாரங்களையும், அவதாரமூர்த்திகளின் இங்கி₃த நிமிஷித ஹஸித பா₄ஷிதங்களையுங்கூட—(அங்க அசைவுகள், கண் அசைவுகள், சிரிப்பு, பேச்சு ஆகியவற்றைக்கூட)—ஒன்றுவிடாமல் ஸாக்ஷாத்கரிக்கிறார்கள் இவர்கள் என்றதாகிறது. 'ஸர்வம் வாக்யம் ஸாவதா₄ரணம்'[எல்லா வாக்கியங்களும் ஏகாரத்தோடு கூடியவையே] என்னும் நியாயத்தையொட்டிப் பார்க்கும்போது, "அறிவாளிகளில் தலைசிறந்தவர்களே இவனுடைய அவதாரரஹஸ்யததை அறிவார் களேயொழிய மற்றுள்ளார் அறியமாட்டார்கள்" என்னும் பொருளும் தொனிக்கிறது. "பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநௌ நாவேத₃ விந்மநுதே தம் ப்₃ருஹந்தம்" [காடகம்3-9-55] [ஸர்வலோகபிதா வானவன் தன் பிள்ளையொருவனைப் பிதாவாகக்கொண்டு யோனிகள் தோறும் பிறக்கிறான்; வேதமறியாதவன் அவனைப் பெரியோனென அறியமாட்டான்] என்று இவ்வர்த்தத்தைத் தெளிவாகவே மற்றொரு வேதவாக்யம் உத்கோஷித்தது. "அவஜாநந்தி மாம் மூடா₄:" [கீதை-11] [அறிவிலிகள் (அவதாரமெடுத்த) என்னை அவமதிக்கிறார்கள்] என்று தொடங்கி கீதையில் கண்ணனும் இவ்வர்த்தத்தைக் காட்டினான். நிற்க. பாட₂க்ரமத்தைக்காட்டிலும் அர்த்த₂க்ரமமே வலிமை மிக்கதாகையாலே, "ஜ்ஞாநதபஸா பூதா; ப₃ஹவ: மாமுபாஶ்ரிதா: வீதராக₃ப₄யக்ரோத₄: மந்மயா: மத்₃பாவமாக₃தா:" என்று அந்வயித்து இந்தஶ்லோகத்திற்குக்கீழ்க்காட்டியபடி பொருள்கொள்வதே பொருத்தமானது என்று அறியலாம். *10.*

கொண்டு) அஹம்-நான், தாந்-அவர்களை, ப₄ஜாமி-அடை கிறேன்; பார்த்த₂-குந்திபுத்ரனே! மநுஷ்யா:—எல்லா மனிதர் களும், மம வர்த்ம— என் தன்மைகளை, ஸர்வஶ:— (தாம் விரும்பும்) எல்லாப்படியாலும், அநுவர்த்தந்தே-அனுபவித்து வாழ்கின்றனர்.

---

11. என்னையெவ ரெவ்வா றடைந்தியல்வர் யானவரை
யன்னவகை யான்மிகவு மன்புற்றே—பின்னடைந்து
காட்டுவன்மற் றாதலினு லென்னெறியைக் காதலினு
னாட்டெவரும பின்செல்வர் நன்கு.

எவர்— எவர்கள், என்னை—என்னை, எவ்வாறு—எவ் வண்ணம் ஸங்கல்பித்து, அடைந்து இயல்வர்—ஆஶ்ரயிப்பார் களோ, அன்னவகையால்— அவ்வண்ணமாகவே (என்னை ஆக்கிக்கொண்டு), யான்-நான், மிகவும் அன்புற்றே-மிகவும் அன்புகொண்டவனாய், அவரை—அவர்களை, பின்-அவர்கள் ஸங்கல்பித்து ஆஶ்ரயித்த பின்பு, அடைந்து காட்டுவன்— அடைந்து (என் திருமேனி முதலானவற்றைக்) காட்டுவேன். ஆதலினால்—இப்படி நான் காட்டுகிறபடியாலே, நாட்டு எவரும்—நாட்டிலுள்ள எல்லா மனிதரும், என் நெறியை— என் தன்மைகளை, காதலினால்—அன்போடு, நன்கு பின் செல்வர்—எல்லாப்படியாலும் அனுபவிப்பார்கள்.

---

11. இதுவரையில், நல்லோர்களைக் காப்பது முதலான பயன் களுக்காக, தேவர், மனிதர் முதலானவரோடு ஒக்கத் தன் இச்சை யாலே அவதரிப்பதை தவர்ணிப்பதன்மூலம் உபாஸனத்துக்கு உறுப் பான விப₄வாவதார ஸௌலப்₄யத்தைக்கூறினான். இந்தஶ்லோகத்தில் அந்த அவதாரஸௌலப்₄யத்தின் எல்லை நிலமான அர்ச்சாவதார ஸௌலப்₄யத்தை அருளிச்செய்கிறான். 'மாம்' என்று க்ருஷ்ணா வதாரத்தைக் கூறியபோதிலும், 'யே யதா₂' முதலான பத₃ஸ்வாரஸ் யத்தாலே, அவ்வவதாரத்தோடு ஒத்த திருமேனியையும், தன்மை களையும் உடைய, அர்ச்சாவதாரமும் இந்த ஶ்லோகத்தில் கருதப் படுகிறது என்று கொள்ளவேண்டும். (யே) முற்கூறிய உபாஸகர் களைப்போலே ஜ்ஞானம் சக்தி முதலான தகுதிகளில்லாமல், எத்தனை

யேனும் தாழ்ந்தவர்களான அதி₄காரிகளும். 'யே-தே' என்று பொதுப்படையாகக் கூறுகையாலே, முன் ஶ்லோகங்களிற்போலே ஜ்ஞாநஶக்திகளில் மிக்க உபாஸகர்களை மாத்திரம் கருதாமல், இந்த ஶ்லோகத்தில் அவற்றில் குறைவுடைய அதி₄காரிகளையும் கருதுகிறான் என்று தோற்றுகிறது. ''ப்ரதிமாஸ்வப்ரபு₃த்₃த₄நாம்'' [அறிவில் குறைந்தவர்களுக்கும் அர்ச்சாவதாரத்தில் காட்சியளிக்கிறான்.] என்று ரிஷிகளும் ஜ்ஞாநஶக்திகளில் குறைந்தவர்களுக்கும் காட்சியளிப்பது அர்ச்சாவதாரத்திலேயே என்று கூறினார்களன்றோ. ''அக்₃நௌ திஷ்ட₂தி விப்ராணாம்'' என்று வேதாத்யயனம் செய்து, அக்₃நிபரிசர்யை செய்யவல்ல அந்தணர்களுக்கு அக்னியில் காட்சியளிக்கிறான் என்றும், ''ஹ்ருதி₃ திஷ்ட₂தி யோகி₃நாம்'' என்று உபாஸனம் செய்யவல்ல யோகிகளுக்கு இருதயத்தில் காட்சியளிக்கிறான் என்றும் ஶ்லோகத்தின் முற்பாதியிலும், ''ஸர்வத்ர ஸமத₃ர்ஶிநாம்'' என்று உபாஸனம் நிறைவேறப்பெற்று நிற்கின்றதெல்லாம் நெடுமால் என்று காணவல்லவர்களுக்கு எல்லாவிடத்திலும் காட்சியளிக்கிறான் என்று ஶ்லோகத்தின் கடைசிப்பாதத்திலும் ஜ்ஞாநஶக்திகளில் மிக்கவர்களை எடுத்து, இடையே மூன்றாம் பாதத்தில் ''ப்ரதிமாஸ்வப்ரபு₃த்₃த₄நாம்'' என்று முன்னும் பின்னும் சொல்லப்பட்டவர்களுக்குள்ள ஜ்ஞாநஶக்திகள் இல்லாதவர்களை எடுக்கையாலே, ''அப்ரபு₃த்₃த₄நாமபி ப்ரதிமாஸு'' என்று அபிப்ராயத்தைக் கூட்டிக்கொண்டு, ''அத்தகைய ஜ்ஞாநஶக்தி பூர்த்தியற்ற ஸாமாந்யாதி₄காரிகளுக்கும் அர்ச்சையில் காட்சியளிக்கிறான்'' என்றே பொருள் வேண்டும். இப்படியல்லாமல், ''அப்ரபு₃த்₃த₄நாமேவ ப்ரதிமாஸு திஷ்ட₂தி'' [அறிவற்றவர்களுக்கே அர்ச்சையில் நிற்கிறான்] என்று ஏவகாரத்தைக் கூட்டிக்கொண்டு பொருள் கொண்டால்,

''ஆஸ்தாம் தே கு₃ணராஶிவத்₃கு₃ணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம்
ஸங்க்₂யா பௌ₄ம நிகேதநேஷ்வபி குடீகுஞ்ஜேஷு ரங்கேஶ்வர।
அர்ச்ய: ஸர்வஸஹிஷ்ணுரர்ச்சக பராதீ₄நாகி₂லாத்மஸ்தி₂தி:
ப்ரீணீஷே ஹ்ருத₃யாலுபி₄ஸ் தவ ததஶ்ஶீலாத் ஜடீ₃பூ₄யதே॥''
[ஸ்ரீரங்கராஜஸ்தவம் 2-74]

[ஸ்ரீரங்கநாதனே! தேவரீருடைய குணஸமூஹங்களுக்குப்போலே, அந்த குணங்களுக்குப் போக்குவீடாயிருக்கும் அவதாரங்களுக்கும் எண்ணிக்கை கிடையாது என்பது ஒருபுறமிருக்க; இந்நிலவுலகிலுள்ள கோயில்களிலும், வீடுகளிலும், ஆஶ்ரமங்களிலும்

ஆராதிக்கவுரியவராகவும், (ஆராத₄கர்களுடைய) எல்லாக் குற்றத்தையும் ஸஹிப்பவராகவும், அவர்களுக்கு மிகவும் வசப் பட்டிருக்கும் எல்லா நிலைகளையும் உடையவராகவும் (அர்ச்சா வதாரங்களை) உகந்தருளாநின்றீர். அப்படிப்பட்டதான தேவரீ ருடைய சீலகுணத்தால் நன்னெஞ்சினர் மயங்குகின்றனர்.] என்கிற படியே ஞானிகளில் தலைசிறந்தவர்களான ஆழ்வார்களுக்கும் எம்பெருமான் அர்ச்சாவதாரத்தில் காட்சியளிப்பது பொருந்தாமற் போய்விடும். "ஸர்வத்ர ஸமத₃ர்ஶிநாம்" என்று, நிற்கின்றதெல்லாம் நெடுமாலென்று காணும் ஸமத₃ர்ஶிகளுக்கு அர்ச்சையையுள்ளிட்ட எல்லாவிடத்திலும் காட்சியளிக்கிறுன் என்று மேலே கூறியதும் விரோதிக்கும். ஆகையால், 'அறிவுகுறைந்தவர்களுக்கும் அர்ச்சை யில் நிற்கிறுன்' என்றே பொருள்கொள்ளவேண்டும். அன்றிக்கே, 'ப்ரதிமாஸு' என்று சாஸ்திரரீதியிலான ப்ரதிஷ்டையேற்படாத நவராத்ரிபொம்மைகள் போன்ற உருவங்களை எடுக்கிறதாய், 'அறிவிலிகளுக்கு அவ்வுருவங்களாகவே தோற்றுகிறுன்' என்று கூறுகிறதாகவுமாம். நிற்க; முன் ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட உபாஸனத்துக்குப்போலே, இங்கு சொல்லப்படும் அர்ச்சாவதார ஸமாஶ்ரயணத்திற்கு அதி₄காரி நியமம் கிடையாது என்று 'யே' என்னும் பதத்தால் உணர்த்தப்பட்டது; இனி, (யதா₂ மாம் ப்ரபத்₃யந்தே) என்று அவர்களுக்குப்போலே அநுஷ்டான ப்ரகாரம் முதலான நியமமும் இவர்களுக்குக் கிடையாது என்று கூறப்படுகிறது. (யே யதா₂ மாம் ப்ரபத்₃யந்தே தாந் ததை₂வ ப₄ஜாமி) தம் விருப்பத்துக்கு அநுகுணமாக எவர் எவ்வண்ண மாக என்னை ஸங்கல்பித்து ஆஶ்ரயிக்கின்றுர்களோ, அவர்களை அவ்வண்ணமாகவே நான அடைகிறேன். அவ்வண்ணமாக அவர் களுக்கு என்னை நான் காட்டுகிறேன் என்று கருத்து. விப₄வாவ தார விஷயமானபோது, கோபிகளையும், நம்மாழ்வாரையும், திருமங்கையாழ்வாரையும்போலே என்னை நாயகனுக அனுபவிக்க நினைப்பார்க்கு நாயகனுகவும், தசரத வஸுதே₃வ நந்தகோப யஶோதைகளையும், பெரியாழ்வாரையும்போலே பிள்ளையாக அனு பவிக்க நினைப்பார்க்குப் பிள்ளையாகவும், உன்னையும், உன் ஸஹோத₃ரர்களையும்போலே தூதனுகவும், ஸாரதி₂யாகவும் ஆக்கி என்னை அனுபவிக்கவிரும்புவார்க்கு அவ்வண்ணமாகவும் ஆகி அவர்களை அநுப₄விக்கச்செய்கிறேன் என்று கருத்து. இவ்விஷயம் ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில்

||भा|| न केवलं देवमनुष्यादिरूपेणावतीर्य मत्समाश्रयणा-पेक्षाणां परित्राणं करोमि, अपि तु ये मत्समाश्रयणापेक्षा यथा–येन

---

பாபம் ஹரதி யத் பும்ஸாம் ஸ்ம்ருதம் ஸங்கல்பநாமயம் ।
தத் புண்டரீகநயநம் விஷ்ணோர் த்ரக்ஷ்யாம்யஹம் முகம் ॥
[வி-பு 5-17-4]

[அடியார்களின் ஸங்கற்பப்படி தன்னை ஆக்கிவைப்பதாய், அவர்களுடைய பாபத்தைப் போக்கடிப்பதாய், தாமரைக்கண்ணையுடையதான விஷ்ணுவின் திருமுகமண்டலத்தை நான் காணக்கடவேன்.] என்று கூறப்பட்டது. அந்தர்யாமிரூபமான அவதாரத்திலும், யோகிகளின் ஸங்கற்பத்திற்கு அனுகுணமாகத் தன்னை ஆக்கி வைக்கிறான் இவன் என்னும் விஷயம். "ஹ்ருதா மநீஷா மநஸாऽபிக்லுப்த:" [கட 2-6 9] [தரிப்பும் (உறுதியும்), பக்தியுமுடைய மனத்தினாலே ஸங்கல்பிக்கப்பட்டவன்] என்று ஶ்ருதியிலும்,

"ஹ்ருதி ஸங்கல்ப்ய யத்ரூபம் த்யாநேநார்ச்சந்தி யோகிந: ।
பாவபுஷ்பாதிநா நாத: ஸோऽர்ச்யதே வா கதம் மயா ॥"
[வி-பு 5-7-69]

[யோகிகள் எவனுடைய உருவத்தை ஹ்ருதயத்தில் தியானத்தினால் ஸங்கல்பித்து (அஹிம்ஸை, இந்திரியநிக்ரஹம், எல்லாவுயிர்களிடத்தும் கருணை, பொறுமை, ஜ்ஞானம், தபஸ், தியானம், ஸத்யம் என்னும் எட்டு) பாவபுஷ்பங்கள் முதலானவற்றால் (அவனை) அர்ச்சிக்கிறார்களோ, அவன் என்னால் எப்படி அர்ச்சிக்கப்படுவான்?] என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலும் கோஷிக்கப்பட்டது. (யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ் ததைவ பஜாம்யஹம்) முற்கூறியபடி அர்ச்சாவ்தாரவிஷயமாம்போது, தேவமநுஷ்யாதிரூபத்தோடு அவதரித்து என்னை ஆஶ்ரயிக்க விரும்புவார்க்கு ரக்ஷணத்தைச் செய்வதோடல்லாமல் அக்காலத்தில் பிறக்காதவர்களும் இழவாதபடி, தாம் விரும்பும் எந்த அர்ச்சாரூபத்தை ஸங்கல்பித்து என்னை ஆஶ்ரயிக்க விரும்புகிறார்களோ, அவர்களுக்கு அவர்கள் விரும்பும் அந்த அர்ச்சாரூபத்திலேயே என்னை நான் காட்டுகிறேன் என்று கருத்தாகிறது. இவ்வர்த்தம்,

"பஹிராராதநார்த்தம் து யா மூர்த்திரவதிஷ்டதே ।
ததாகாரம் விசிந்த்யாத யஜேத் ஸர்வேஶ்வரம் ஹரிம் ॥"

[வெளிப்படையான ஆராதனத்திற்காக யாதொரு அர்ச்சாமூர்த்தியானது எழுந்தருளியிருக்கிறதோ, அதே அமைப்பை உடையவனாக ஸர்வேஸ்வரனை ஹரியை தியானித்து ஆராதிக்கவேண்டியது.] என்று ஹ்ருத்யோகத்தில் கூறப்பட்டதாக எங்களாழ்வான் [வி.பு 5-17-4] விஷ்ணுசித்தீயவ்யாக்யானத்தில் காட்டினார்.

''தமருகந்ததெவ்வுருவம் அவ்வுருவம் தானே
தமருகந்ததெப்பேர் மற்(று) அப்பேர்—தமருகந்து
எவ்வண்ணம் சித்தித்து இமையாதிருப்பரே
அவ்வண்ணம் ஆழியான் ஆம்'' [முதல்திருவ 44]

என்று பொய்கையாழ்வாரும்,

''தஞ்சமாகிய தந்தை தாயொடு தானுமாய் அவை அல்லனாய்,
எஞ்சலில் அமரர் குலமுதல் மூவர்தம்முளும் ஆதியை
அஞ்சி நீர் உலகத்துள்ளீர்கள் அவன் இவன் என்று கூழேன்மின்
நெஞ்சினால் நினைப்பான் யவன் 'அவனாகும் நீள்கடல்வண்ணனே'' [திருவாய் 3-6-9]

என்று நம்மாழ்வாரும் இதையே விவரித்தனர். ''யே'' என்றதை ''தமர்'' என்றும், ''உலகத்துள்ளீர்கள்'' என்றும், ''யதா ததா ஏவ'' என்றதை ''எவ்வுருவம் அவ்வுருவம்—எப்பேர் அப்பேர்—எவ்வண்ணம் அவ்வண்ணம்'' என்றும், ''யவன் அவன்'' என்றும் ''மாம்'' என்றதை, ''ஆழியான்'' என்றும் ''தஞ்சமாகிய...ஆதியை...நீள்கடல்வண்ணன்'' என்றும், ''ப்ரபத்யந்தே'' என்றதை 'உகந்து—சிந்தித்து இமையாதிருப்பர்'' என்றும், ''நெஞ்சினால் நினைப்பான்'' என்றும், ''பஜாமி'' என்றதை, ''ஆம்'' ''ஆகும்'' என்றும் இவ்விருஆழ்வார்களும இந்தஶ்லோகார்த்தத்தைப் பதம் பதமாக விவரித்திருப்பது குறிக்கொள்ளத்தக்கது. அவ்விடத்து வியாக்கியானங்களில், பெரியவாச்சான்பிள்ளையும், நம்பிள்ளையும் ''நமக்கு நல்லவர்கள் இன்னாரென்றுமில்லை, இன்னபடி பஜிப்பாரென்றுமில்லை; அவர்கள் நின்ற நிலையிலே, அவர்கள் பஜித்தபடியே அவர்களைப் பற்றுவேன் என்கிறது; தமரானவர்கள் ப்ராக்ருத த்ரவ்யங்களிலே ஒன்றை 'உனக்குத் திருமேனியாகக் கொள்ள வேணும்' என்றால், அத்தைத் திருமேனியாகக் கொள்ளும்......

प्रकारेण स्वापेक्षानुरूपं मां संकल्प्य प्रपद्यन्ते — समाश्रयन्ते ;

---

நல்லவர் 'சதங்கையழகியார்' என்று திருநாமம் சாத்தினாராகில், நாராயணாதிநாமத்தைக் காட்டிலும் அத்தை விரும்பும்......நல்லவர் உகந்து, 'யே யதா₂' எனனுமபடி யாதொரு ப்ரகாரத்திலே உகந்து ஸாவதா₄நராயிருப்பர்கள், அந்த ப்ரகாரத்திலே அத்தை உடையனும்......இவர்கள் நினைத்தபடியாகத் தன்னை அமைத்துக் கொடுக்கும்'' [முதல் திருவந்தாதி-44-வ்யாக்கியானம்] எனறும், "ஜகத்துக்கு ஸர்வவித₄ப₃ந்து₄வுமாயிருக்கிறவனை நமமாலே கிட்டப்போமோ? நித்யஸூரிகளுக்கு ஸத்தாஹேதுவாயிருக்கிறவனை நம்மாலே கிட்டப்போமோ? எனறு இங்ஙனே அஞ்சி, லௌகிகரான நீங்கள், 'அவனாகிறான் தே₃சகாலவஸ்துக்களால் அபரிச்சி₂ந்நனாய், அஸாதா₄ரணவிக்₃ரஹத்தோடே நித்யஸூரிகளுக்கு அநுப₄ாவ்யனாய்க் கொண்டு இருக்கிறான் ஒருவன்: இவனாகிறான் தேசகால வஸ்துக்களால் பிற்பட்டு நாம் உகந்ததொரு த்ரவ்யத்தைத் தனக்குத் திருமேனியாகக் கொண்டு இவ்வழியாலே நம் புத்₃த்₄யதீ₄நனாயிருப்பானொருவன்; ஆனபின்பு, அவன் அபரிச்சி₂ந்நன், இவனை பரிச்சிந்நன்' என்று இங்ஙனே ஸம்ஶயாக்ராந்தராகாதே கொள்ளுங்கோள்; மநஸ்ஸாலே யாதொன்றைக் கோலினிகோள், அபரிச்சே₂த்₃ய மஹிமனான ஸர்வேஶ்வரன அத்தையே தனக்கு அஸாதா₄ரண விக்₃ரஹமாகக்கொண்டு விரும்பும......அஸாதா₄ரணவிக்₃ரஹநதை நாம் ஆதரிக்கிறதும் 'அவன பரிக்₃ரஹித்தது' என்றிறே; அவ்வோபாதி இதுவும அவன் பரிக்₃ரஹித்ததாலல் ஆதரிக்கத் தட்டில்லையிறே. முதல் தன்னிலே அவன் திருமேனியைப் பரிக்₃ரஹித்ததும் 'ப₄க்தாநாம்' [ஜிதந்தே] என்கிறபடியே ஆஶ்ரிதார்த்த₂மாகவிறே; அது கார்யகரமாமிடத்திலேயிறே மிகவும் உரைக்க இருப்பது; ஆகையாலே நீள்கடல் வண்ணன் அவனாகும'' [திருவாய் 3-6-9 நம்பிள்ளையீடு] என்றும அருளிச்செய்த ஸ்ரீஸூக்திகள் இங்கு அநுஸந்திககத்தக்கவை. முதல்திருவந்தாதி (44) வ்யாக்யானத்தில் பெரியவாச்சான்பிள்ளை எடுத்த சில ஐதிஹ்யர்களும் இங்கு கரணத்தக்கவை. அவையாவன:— (1) எம்பெருமானார் மாது₄கரத்திற்கு (உஞ்சவ்ருத்திக்கு) எழுந்தருளும் போது, சில பிள்ளைகள் காலாலே கீறி, 'உம்முடைய எம்பெருமான திருமேனி' என்று காட்ட, பாத்ரத்தை வைத்து தண்டனிட்டருளினார்.

(2) "கோயிலிலே சில பிள்ளைகள் விளையாடும்போது, திருவீதியிலே பெருமாளும் நாய்ச்சிமாரும, பெரியதிருமண்டபமும் கற்பித்துப் பெரியதிருப்பாவாடையும் அமுதுசெய்வித்து, "எம்பெருமானார் ப்ரஸாதப்படும்' என்று மணலைக் கையாலே முகந்தெடுக்க, அப்போது மாது₄கரத்திற்கு எழுந்தருளிய உடையவர், அவ்விடத்திலே அதுகேட்டருளி தண்டனிட்டு, அவர்கள் எடுத்த ப்ரஸாதத்தைப் பாத்ரத்திலே ஏற்றார்" என்று நஞ்சீயர் அருளிச்செய்தார். (3) நஞ்சீயருடைய திருவாராதனப் பெருமாளுக்குப் பெயர் 'ஆயர்தேவு' என்பது; இப்பெயரைத் தான் மிகவுகந்திருப்பதைக் காட்ட, அப்பெருமான் ஓர் ஆச்சரியமான செயலைச்செய்தான்; விஷ்ணுபுராண வ்யாக்₂யாதாவான விஷ்ணுசித்தரென்னும் எங்களாழ்வானுடைய ஸ்வப்னத்திலே இப்பெருமான் தோன்றி, நாவற்பழம் வேண்டினை; 'நீ யார்' என்று அவர் கேட்க, 'ஜீயர் மகனை ஆயர்தேவு' என்று அருளிச்செய்தான்; அவருகந்த பெயரைத் தான் உகந்ததோடன்றியில், அப்பெயருக்கேற்ப நாவற்பழமும் இரந்து சென்ற நீர்மையைக் கண்ட எங்களாழ்வான் நஞ்சீயரைக் கண்டபோது, 'உம்முடைய பிள்ளை எங்களைக் குடியிருக்க விடமாட்டேனென்கிறான்; நாவற்பழத்தைக் கொடு; வெண்ணையைக்கொடு; அதைக்கொடு; இதைக்கொடு என்று துன்புறுத்திக்கொண்டேயிருக்கின்றான்" என்று கூறி வியந்தார். இவ்வைதிஹ்யங்களில் காணப்படும் அர்ச்சாமூர்த்தியின் ஆஸ்ரிதபாரதந்த்ரியமே "யே யதா₂ மாம் ப்ரபத்₃யந்தே தாம்ஸ்ததை₂வ ப₄ஜாம்யஹம்" என்று இங்கு கூறப்படுகிறது என்பது தெளிவு. 'எவர் எப்பலனை விரும்புகின்றாரோ அவர்க்கு அப்பலனை அளிக்கிறேனாகையாலே எனக்குப்பக்ஷபாதமில்லை' என்று இங்கு கூறப்படுவதாக சங்கரர் வியாக்கியானம் செய்தார். இது, அவதாரப்பெருமைய்யைக்கூறும் முன் பிரகரணத்திற்கும், கர்மயோக₃ாதி₄காரியின் அருமையைக்கூறும் பின் பிரகரணத்திற்கும், அவ்வளவாகப் பொருந்தாது. மேலே உள்ள 'சாதுர்வர்ண்யம்' [13] என்னும் ஶ்லோகத்தில் உள்ள 'கர்மவிப₄ாக₃ஶ:' என்றதோடு பொருள்வழியிலே புநருக்தியும் ஏற்படும். ஆகையால் அர்ச்சாவதார பர்யந்தமான அவதார ஸௌலப்₄யத்தைக் கூறுவதாகப் பொருள் கொள்வதே பொருத்தம். இனி, 'பலசொல்லியென்! இப்படி அவர்கள் நினைவே நமக்கு நினைவாம்படியிருக்கையாலே, அவர்களெல்லாம் நம் வழி போனாராவர்களனறோ' எனகிறான் ஶ்லோகத்தின் பிற்பகுதியில்: (மம வர்த்ம அநுவர்த்தந்தே) என் ஸ்வப₄ாவத்தை

तान् प्रति तथैव तन्मनीषितप्रकारेण भजामि—मां दर्शयामि। किमत्र बहुना, सर्वे मनुष्याः मदनुवर्तनैकमनोरथा मम वर्त्म—मत्स्वभावं सर्वं योगिनां वाङ्मनसागोचरमपि स्वकीयैश्चक्षुरादिकरणैस्सर्वशस्स्वापेक्षितैस्सर्वप्रकारैरनुभूय वर्तन्ते॥ ११॥

---

அநுபவித்து வாழ்கின்றனர். இங்கு 'வர்த்ம' (வழி) என்னும் சொல் விதி₄ஶிவஸநகாதி₃யோகிகளின வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாத ஸௌலப்₄யமாகிற ஸ்வப₄ாவததைச் சொல்லுகிறது. 'வர்த்ம' ஶப்₃த₃த்தை 'வழி' (நடைபாதை) என்று கொண்டால் பொருள் பொருந்தாது. ''ஏவம் ப்ரவர்த்திதம் சக்ரம்'' [கீதை3-16] ''தேநைவ ஸ்த₂ாபிதா ப்₃ரஹ்ம மர்யாத₃ா லோகப₄ாவிநீ'' [உலகத்தை உய்விக்கும் வேதவரமபு அவராலேயே நிலைநிறுத்தப்பட்டது] என்ற விடங்களிற் போலே சாஸ்திரவரம்பின்படி ஒழுகுவதை இங்கு சொல்லுவதாகக் கூறுவதும் முன்பின்பிரகரணங்களுக்கு ஒட்டாது. ''யதி₃ஹ்யஹம் ந வர்த்தேயம்'' [கீதை 3-23] என்று தொடங்கி லோகஸங்க்₃ரஹத் திற்காகத் தான் கர்மங்களை அநுஷ்டிப்பதைக் கூறும் ஶ்லோகத்தில ''மம வர்த்மாநுவர்த்தந்தே மநுஷ்யா: பார்த்த₂ஸர்வஶ:'' என்னும் இதே பதங்களின் அமைப்பு இருந்தபோதிலும், அங்கு அநுஷ்டானத் தைக்காட்டும் ப்ரகரணமாகையாலே 'வர்த்ம'ஶப்தம ஆசாரபரமாகப் பொருள்கொள்ளப்பட்டது. இஙகு அவதாரஸௌலப்₄யத்தை அநு பவிப்பவர்களைப்பற்றிய பேச்சே முன் ஶ்லோகங்களிலிருப்பதால் ஸௌலப்₄யமாகிறஸ்வப₄ாவததைக் கூறுவதாகக்கொள்ளவேண்டும். ''கோSயம் பந்த₂ா யத₃ஸிவிமுகே₂ா மந்த₃ப₄ாக்₃யே மயீத்த₂ம்'' [பாககிய மற்றவனுன என்னிடம் பார₍ாமுகமாயிருக்கும் இவ்வழியை என்னெனறு சொல்லுவேன்?] முதலானவிடங்களில் வைமுக்₂யம முதலான ஸ்வ ப₄ாவங்களைக்குறிக்க வழியைக்குறிக்கும் சொற்கள் பிரயோகிக்கப் படுவதையும் காண்கிறோமாகையாலே, இங்கும் அவதாரஸௌலப்₄ யத்தை உபதேசிக்கும் பிரகரணத்தையொட்டி 'வர்த்ம' சப்தம் அறிவிற் சிறந்தவர்களனைவரும் 'எத்திறம்' என்று மயங்கும் ஸௌலப்₄யமாகிற ஸ்வப₄ாவத்தையும், அதோடுசேர்ந்த ஸௌஶீல் யம், வாத்ஸல்யம் முதலான குணங்களையும், அவதாரவிக்ரஹங் களின் சேஷ்டிதங்களையும் குறிப்பதாகக்கொள்ளுவதே பொருத்தம். (அநுவர்த்தந்தே) அநுப₄வித்துக்கொண்டு வாழ்கிறார்கள்; யோகி களின் வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாத இத்தன்மைகளையும் செயல்களையும் மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் வெளி

யிந்திரியங்களாலும் அனுபவித்து வாழ்கிறார்கள். (ஸர்வஶ: அநுவர்த்தந்தே)விருப்பும்எல்லாப்படியாலும் அனுபவித்துவாழ்கிறார்கள். ‘முடியானே’ [திருவாய் 3-8] என்னும் திருவாய்மொழியிற்போலே ஓரிந்திரியத்தாலே மற்றோரிந்திரியத்தின் அநுபவத்தையும் பெறுகிறார்கள். அன்றிக்கே. நாயகனாகவும், தந்தையாகவும், பிள்ளையாகவும், நண்பனாகவும், தமயனாகவும், தமபியாகவும், தூதனாகவும், ஸாரதி₂யாகவும் தாங்கள் விரும்பியபடியெல்லாம் அநுப₄வித்து வாழ்கிறார்கள் என்றும் கொள்ளலாம். அன்றிக்கே, அர்ச்சாமூர்த்தியை அலங்கரிப்பது, வீதிகளில் எழுந்தருளப்பண்ணுவது, உத்ஸவங்களை ஸேவிப்பது முதலான எல்லாப்படிகளாலும் அனுபவித்து வாழ்கிறார்கள் என்றும கொள்ளலாம். அன்றிக்கே, அர்ச்சாரூபத்திலேயே, யோகிகளுடைய வாக்குக்கும், மனத்துக்கும் அப்பாற்பட்ட பரரூபத்தையும, வ்யூஹரூபங்களையும், விப₄வரூபங்களையும் அநுப₄வித்து வாழ்கிறார்கள் என்றும் கொள்ளலாம்.

“ஸுரூபாம் ப்ரதிமாம் விஷ்ணோ: ப்ரஸந்நவத₃நேக்ஷணாம் |
க்ருத்வாத்மந: ப்ரீதிகரீம் ஸுவர்ணரஜதாதி₃பி₄: ||
தாமர்ச்சயேத் தாம் ப்ரணமேத் தாம் ப₄ஜேத் தாம் விசிந்தயேத்|
விஶத்யபாஸ்ததோ₃ஷஸ்து தாமேவ ப்₃ரஹ்மரூபிணீம் ||”
[விஷ்ணுதர்மம் 103-30]

[அழகிய உருவமுள்ளதும், மலர்ந்த திருமுகமண்டலத்தையும், திருக்கண்களையுமுடையதும், தனக்கு ஆநந்தத்தை விளைப்பதுமான பகவத்விக்₃ரஹத்தைப் பொன், வெள்ளி முதலிய உலோகங்களால் செய்து, பரரூபமாக அனுஸந்தித்து அதை அர்ச்சிக்கக்கடவன்; அதை வணங்கக்கடவன்; அதை ப₄ஜனம் செய்யக்கடவன்; (இப்படிச் செய்தால்) தோஷம் நீங்கப்பெற்றவனாய், அதையே அடைகிறான்.] என்று ஸ்ரீவிஷ்ணுத₄ர்மத்தில் அர்ச்சாரூபத்தைப் பரரூபமாக அனுஸந்திக்கவேணும் என்று காட்டப்பட்டது.

பு₄ஜைஶ் சதுர்ப்பி₄: ஸமுபேதம் மமேத₃ம்
ரூபம் விஶிஷ்டம் ஜீவிதம் ஸம்ஸ்தி₂தம் ச |
பூ₄மௌ க₃தம் பூஜயதாப்ரமேயம்
ஸதா₃ ஹி தஸ்மிந் நிவஸாமீதி தே₃வா: ||
[பார-மௌஸல 5-34]

[தேவர்களே ! நான்கு கைகளோடு கூடியதும், ( அடியார்க்கு ) உயிராயிருப்பதும், நிலையாயிருப்பதும், பூமியில் உள்ளதும ( பரரூபத்தைப்போல் ) அளத்தற்கரியதும், மிகச்சிறந்ததுமான என்னுடைய இந்த ரூபத்தை, அதில் நான் எப்போதும வாழ்கிறேன் எனனும் அநுஸந்தானத்துடன் பூஜிப்பீர்களாக.] என்று கண்ணனும் பரமபதம் செல்லும்போது தன ரூபத்தைப் பரரூபமாக அனுஸந்திக்கவேண்டும் என்று காட்டினன். (மநுஷ்யா: அநுவர்த்தந்தே) ஸ்தரீஶூத்ரர்கள் உள்பட எல்லா மனிதர்களும குணபூர்த்தியுள்ள அர்ச்சாவதாரத்தையே அநுபவித்து வாழ்கிருர்கள். பரரூபமானது ஆவரணஜலம்போலேயும், வ்யூஹ ரூபமானது திருப்பாற்கடல்போலேயும், அந்தர்யாமிரூபமானது பூ₄மியினடியிலிருக்கும் ஜலம் போலேயும், விப₄வாவதாரங்கள் ஒருகாலத்தில் ஓடிய காட்டாறுகள் போலேயும் அனைவர்க்கும் கைக்கொள்ள அரிதாயிருக்கையாலே, காட்டாறுகளில் தேங்கின மடுக்கள் போன்ற அர்ச்சாவதாரமே எல்லா மனிதர்க்கும் கைக்கொள்ளத்தக்கது என்று காட்டுகிருன். இவ்விடத்தில் "பூர்த்தியுள்ளதும்-அர்சாவதாரத்திலே. ஆழ்வார்கள் பலவிடங்களிலும் ப்ரபத்திபண்ணிற்றும் அர்சாவதாரத்திலே. * "பூர்ணம்" என்கையாலே, எல்லா கு₃ணங்களும் புஷ்கலங்கள. ப்ரபத்திக்கு அபேக்ஷிதங்களான ஸௌலப்₄யாதிகள்-இருட்டறையில் விளக்குப் போலே ப்ரகாஶிப்பது இங்கே. பூர்த்தியையும், ஸ்வாதந்த்ர்யத்தையும் குலைத்துக்கொண்டு, தன்னை அநாத₃ரிக்கிறவர்களைத் தான் ஆத₃ரித்து நிற்கிறவிடம. பூ₄க₃த ஜலம்போலே-அந்தர்யாமிதவம். ஆவரண ஜலமபோலே-பரத்வம். பாற்கடல்போலே-வ்யூஹம். பெருக்காறுபோலே-விப₄வங்கள். அதிலே தேங்கின மடுக்கள் போலே-அர்சாவதாரம். இதுதான் ஶாஸ்த்ரங்களால் திருத்தவொண்ணுதே விஷயாந்தரங்களிலே மண்டி, விமுக₂ராய்ப்போரும் சேதநருக்கு வைமுக்₂யத்தைமாற்றி, ருசியை விளைக்கக்கடவதாய், ருசிபிறந்தாலுபாயமாய், உபாயபரிக்₃ரஹம்பண்ணினல் போ₄க்₃யமுமாயிருக்கும" என்னும் ஸ்ரீவசனபூ₄ஷண ஸூத்ரங்கள் அநுஸந்திக்கத்தககவை. ( பார்த்த₂ ) பார்த்த₂ஸாரதி₂யான என் ஸௌலப₄யத்தை நீ ப்ரத்யக்ஷமாக அனுபவிக்கிருயனறே எனறு கருத்து. ஆக, இவ்வேழு ஶ்லோகங்களாலும், தூதனுயிருப்பது, ஸாரதியாயிருப்பது முதலானவற்ருல தன்னுடைய ஸௌலப்யப் பெருமையை அர்ஜுனன் நேரில் கண்டவனுயிருந்தபோதிலும,

* ஶதபதப்ரா-14-காண்டம், 6-ப்ர, 7-அத்யா, 4-ப்ரா, 1-வாக்யம்.

தன்னை உபாஸிப்பதில் அவனுக்கு மிக்க விருப்பம் ஏற்படுவதற்காகத் தன் அத்தை பிள்ளையான அவனுக்குத் தன் ஸௌலப்$_4$யத்தைத் தன் சோதிவாய் திறந்து உபதேசித்தான் என்று தேறிற்று.

இனி, இந்த அத்தியாயம நாலாவது ஸ்லோகத்தின் வியாக்கியானத்தில் (பக்கம் 496-498) எழுப்பப்பட்ட ஆறு ஐயங்களுக்கு, இந்த ஏழு ஸ்லோகங்களில் என்ன பரிஹாரம் உரைக்கப் பட்டுள்ளது என்பதை விளக்குவோம். (1) கண்ணனுகிற பரமாத்மா நிகி$_2$லஹேயப்ரத்யநீகனுய் (எல்லாத்தாழ்வுகளுக்கும் எதிர்த்தட்டா யிருப்பவனுய்) இருக்கும்போது தாழ்வைத்தரும் பிறப்பை எப்படி ஏற்றுக்கொள்ளலாம என்பது முதல் ஐயம். இதற்கு ஸமாதானம்:- கண்ணனுடைய பிறப்பானது கர்மத்தினுல் ஏற்படாததாகையாலும், அப்ராக்ருதமானதாகையாலும், தன் இச்சையாலேயே ஏற்படுவதாகையாலும், ஸௌசீல்யாதி$_3$கு$_3$ணங்களை விளங்க வைப்பதன் மூலம் அவனுக்குச் சிறப்பையே தருவதாகையாலும் தாழ்வை விளைக்காது. (2) எல்லாக கல்யாணங்களுக்கும் (நன்மைகளுக்கும்) இருப்பிடமானவனுகையாலே தன் ஆநந்தமயஸ்வரூபத்திலேயே திருப்திபெற்றிருப்பவன் பிறப்பினுல் அடையும் பயன என்ன? எனபது இரண்டாவது ஐயம். லீலையே இவனடையும் பயன் என்பது இதற்கு ஸமாத$_4$ானம். (3) அனைவர்க்கும் ஈஸ்வரனுய், தனக்கு ஒரு ஈஸ்வரனற்றவனுகையாலே புண்யபாபங்களற்றவன் எதால் அல்லது யாரால் ஏவப்பட்டுப் பிறக்கிருன் என்பது மூன்ருவது ஐயம். தன் இச்சையாலேயே பிறக்கிருன் என்பது இதற்கு ஸமாதானம். (4) எல்லாமறிந்தவன், நன்மைதீமை யறியாதவனைப்போலே, தீமையைத்தரும் பிறப்பை எப்படி ஏற்க முடியும் என்பது நாலாவது ஐயம். இவன் பிறப்பு முற்கூறியபடி நன்மையை விளைப்பதேயொழிய தீமையைத் விளைக்காதாகையால் பிறப்பை ஏறகலாம் என்பது இதற்கு ஸமாதானம. (5) ஸத்ய ஸங்கல்பனுயிருப்பவன், வெறுந்தரையில் குதிக்க நினைத்துச் சேற்றில் விழுகிறவனைப்போலே எப்படித் தாழ்வைத்தரும் பிறப்பை ஏற்கமுடியும் என்று ஐந்தாவது ஐயம். முற்கூறியபடி பிறப்பு சிறப்பையே தருவதாகையாலே, ஸத்யஸங்கல்பனுய், ஸர்வ ஶக்தனுன இவன் பிறப்பை ஏற்கலாம் என்பது இதற்கு ஸமாதானம். இவ்விடத்தில் ஸத்யஸங்கல்பனுன இவன் ஸங்கல் பத்தாலே இருந்தவிடத்திலிருந்தே உலகை ரக்ஷிக்கவல்லவனு யிருக்க, அதற்காகப் பிறப்பெடுக்கவேண்டிய அவசியமில்லையே என்று எழும் ஐயத்திற்கு, "பரித்ராணுய" [கீதை 4-8] என்னும்

ஶ்லோகத்தில் விரிவாக பதிலுரைக்கப்பட்டது. அடியார்களுக்குத் தன் திருமேனியை அனுபவிக்கக்கொடுப்பதும, அவர்களுடைய விரோதிகளை நேரே நின்று சித்ரவதை செய்வதும், தர்மங்களைத் தான் அனுஷ்டித்துக் காட்டிப் பிறரை அனுஷ்டிக்கச் செயவதும் அவதரித்தாலொழியக் கைகூடாதாகையாலே இப்படி ஸாதுக்களைப் பரித்ராணம் செய்வதற்காகவும், துஷ்டர்களை விநாஶமடையச்செய்ய -வும், தர்மத்தை ஸம்ஸ்தாபனம் செய்யவும் அவதரித்தே தீரவேண்டி யுள்ளது என்பது அந்த பதிலுரையின் ஸாரமாகும. (6) அவாப்த ஸமஸ்தகாமனுய் (எல்லா விருப்பங்களும் எனறும் நிறைவேறப் பெற்றிருப்பவனுய்) உளளவன பிறப்பெடுத்துப் பெறவேண்டிய பயன் இல்லையாகையாலே, இவன பிறபபை எப்படி ஏற்கமுடியும என்பது ஆறுவது ஐயம். இதற்கு ஸமாத₄ானமும "பரித்ராணய" எனறு தொடங்கும் ஶ்லோகத்திலேயே விரிவாக உரைக்கப்பட்டது. "யே யத₂ா" [4-11] எனனும ஶ்லோகத்திலும், எலலா மனிதர்க்கும தன் ஸௌலப்₄யத்தின எல்லை நிலமான அர்ச்சாவதாரத்தின பெருமையைக் காட்டிக்கொடுப்பது என்பதும் அவதார ப்ரயோஜனம் என்று விளக்கப்பட்டது. ஆக், லீலையே அவதாரங்களால் பரமபுருஷன் அடையும் பயன் என்றும், திருமேனியை அனுபவிப்பது முதலானவை பிறர் அடையும பயன் என்றும் சொல்லிற்றுயிற்று. இவ்விடத்தில் மற்றோர் ஆக்ஷேபம எழக்கூடும். அதாவது:— இவனுடைய அவதாரத்திற்குப் பயன இவ்வண்ணமாக ஏற்படுகிறதாகில, இப்பயன அவதாரம எடுப்ப தற்கு முன்பு இல்லையாகையாலே இவன் எப்படி அவாப்த ஸமஸ்தகாமனுகமுடியும் எனபதே அவ்வாக்ஷேபம். இதற்கு ஸமாதானம் பின்வருமாறு:— எப்போதும எல்லா விருப்பங்களையும் அடைந்திருப்பதே அவாப்தஸமஸ்தகாமத்வம் என்று எண்ண லாகாது; எந்த விருப்பத்தையும், எப்போது வேண்டுமாஞலும் நினைத்த மாத்திரத்தில் அடையலாம் என்னும் நிலையே அவாப்த ஸமஸ்தகாமத்வம் அல்லது பூர்ணத்வம் எனப்படுகிறது. மேலும், பிற்காலத்தில், இனன ஸமயத்தில் இன்ன ஸுகம் ஏற்படப் போகிறது என்பது இவனுக்கு முற்காலத்திலேயே தெரியுமாகை யால், முற்காலத்திலும் அந்த ஸுகாநுபவத்தை இவன் ஒரு வகை யில் பெற்றேயிருக்கிருனுகையாலே இவனுடைய பூர்த்திக்கு எவ் விதமான குறையுமில்லை. பிற்காலத்தில் வரப்போகும் ஸுகம் முற்காலத்திலேயே இவ்வண்ணமாக உள்ளதாஞல், அந்த ஸுகத்தை இவன் விரும்புவானேன்? எனில்: அந்த ஸுகம்

भा ।। इदानीं प्रासङ्गिकं परिसमाप्य प्रकृतस्य कर्मयोगस्य ज्ञानाकारताप्रकारं वक्तुं तथाविधकर्मयोगाधिकारिणो दुर्लभत्वमाह—

काङ्क्षन्तः कर्मणां सिद्धिं यजन्त इह देवताः ।
क्षिप्रं हि मानुषे लोके सिद्धिर्भवति कर्मजा ।। १२ ।।

12. காங்க்ஷந்த: கர்மணும் ஸித்₃தி₄ம் யஜந்த இஹ தே₃வதா: ।
க்ஷிப்ரம் ஹி மாநுஷே லோகே ஸித்₃தி₄ர் ப₄வதி கர்மஜா ॥

இஹ-*இவ்வுலகில் (எல்லா மனிதர்களும்),* கர்மணும்-*கர்மங்களுக்கு,* ஸித்₃தி₄ம்-*பலனை,* காங்க்ஷந்த:-*விரும்பியவர்களாய்,* தே₃வதா:-*இந்திரன் முதலான தெய்வங்களையே,* யஜந்தே-*(கர்மங்களால்)ஆராதிக்கிருர்கள். (பலனை விரும்பா*

---

உண்டாவதற்காகவே விரும்புகிருறுகையாலே விரும்பத்தடையில்லை. உண்டாவதற்குப் பயன் என்னவெனில்: உண்டாவதே பயனுகும். அப்படியாகில் முன்னும் பின்னும் இந்த ஸுகம் உண்டாகவில்லை என்று ஏற்படுவதால் பூர்த்திக்குக் குறையில்லையோ? எனில்: இன்னகாலத்தில் இது உண்டாகப்போகிறது என்று எக்காலத்திலும் அறிந்திருக்கிறபடியால் இக்குறையில்லை. உலகில் ஒருவன் ஒன்றை விரும்புகிறவிடத்தில், அது இல்லாமையால் ஏற்படும் துன்பத்தைப் போக்கிக்கொள்ளவே விரும்புவதைப் பார்க்கிறோம். இவனுக்கும் அப்படியாகாதோ? எனில்: சக்தியில்லாதவன் விஷயத்திலேயே இவ்வாக்ஷேபம் ஏற்படுமாகையாலும், எதையும் எப்போதும நினைத்தால் பெற வல்லமையுடைய இவன திறத்தில் ஒரு பொருள் இல்லாமையால் ஏற்படும் துன்பமேயில்லையாகையால் இவ்வாக்ஷேபம் எழமாட்டாதாகையாலும் இவனுடைய பூர்த்திக்கு எக்குறையுமில்லை. ஆக, இந்தச் சோத்₃யபரிஹாரங்களால் ஸர்வேஶ்வரனுடைய பிறப்பு செயல், ஸ்வபா₄வங்கள் முதலானவை உண்மையானவை என்றும், அவற்றைக்கூறும் சாஸ்திரங்களும் பிரமாணமானவையே என்றும் நிரூபிக்கப்பட்டதாயிற்று. இந்த ஶ்லோகத்தின் கீழும், நாலாவது ஶ்லோகத்தின் கீழும் ஸ்ரீவேதா₃ந்ததேசிகரால் தாத்பர்ய சந்திரிகையில் இவ்விஷயமாக (1)சோத்₃யங்கள் (2) அநுமானங்கள் (3) தர்க்கங்கள் ஆகிய அனைத்தையும் காட்டி, விரிவாகப் பரிஹாரமுரைக்கப்பட்டது. தர்க்க ரஸிகர்கள் அவற்றை அங்கு கண்டு பயனடையலாம். 11.

மல் என்னை ஆராதிப்பாரில்லை.) ஹி-ஏனெனில்; மாநுஷே லோகே-மனிதவுலகில், கர்மஜா-கர்மத்தினால் உண்டாகும், ஸித்₃தி₄:—(புத்ரன், பசு, அன்னம் முதலான) பலன்கள், க்ஷிப்ரம்—விரைவிலேயே, ப₄வதி—ஏற்படுகிறது.

---

**12. கருமபயன் காமித்தார் காமத்தா லிங்கே**
**யொருமையுடன் றேவருட னொன்றி—யருமையினாற்**
**றாங்கியிறைஞ் சாநிற்பர் தாழா துலகுதனி**
**லாங்கருமத் தானபய னார்ந்து.**

**இங்கே**— இவ்வுலகில், **கருமபயன் காமித்தார்**—கர்மங்களின் பயனை விரும்புகிறவர்கள், **காமத்தால்**-அவ்விருப்பத்தால், **தேவருடன்**—இந்திரன் முதலான தேவர்களிடத்தில், **ஒருமையுடன் ஒன்றி**—ஓரே மனத்தினராய் ஈடுபட்டு, **அருமையினால் தாங்கி**-(அவர்களையே) கிடைத்தற்கரியவர்களாக நினைத்துப் போற்றி, **உலகுதனில்**—இவ்வுலகில், **ஆம் கருமத்து ஆன பயன் ஆர்ந்து**—செய்யப்படும் கர்மங்களால் ஏற்படும் (தாழ்ந்த) பலன்களிலேயே திருப்திபெற்று, **இறைஞ்சாநிற்பர்**-(முற்கூறிய தேவதைகளையே) ஆராதித்து நிற்கின்றனர்.

---

12. ஆக, இந்த நாலாமத்தியாயத்தில கூறப்படுபவையாகச் சொல்லப்பட்ட ஆறு அர்த்தங்களில் ப்ராஸங்கிகமாக எழுந்த பரமபுருஷனுடைய அவதாரபெருமையும, அந்த ப்ரஸங்கம் எவ்வாறு எழுந்தது எனபதும் பதினொரு ஸ்லோகங்களால் உரைக்கப்பட்டன. இனி, ப்ரக்ருதமான கர்மயோகமானது ஞானததை உளளடக்கியது என்று கூறத்தொடங்கி அதற்குப் பீடிகையாக ஆறு ஸ்லோகங்களை இடுகிறான். அவற்றில் அததகைய கர்மயோகத்தை அநுஷ்டிக்கும் அதி₄காரியின் அருமையை முதல நாலு ஸ்லோகங்களிலும், கர்ம ஸ்வரூபத்தைப்பற்றிப் பின்னிரண்டு ஸ்லோகங்களிலும் பேசுகிறான். இப்பனிரண்டாம் ஸ்லோகத்தில், தாழ்ந்த பலன்களில் விருப்பமற்ற கர்மயோக₃ாதி₄காரியின் அருமையைக் காட்டுவதற்காக, உலகில் கர்மங்களைச்செய்து தேவதைகளை ஆராதித்து க்ஷுத்₃ர ப₂லன்களை விரும்புவாரே நிறைந்துள்ளனர் என்று கூறுகிறான்.

॥ भा ॥ सर्व एव पुरुषाः कर्मणां फलं काङ्क्षमाणाः इन्द्रादिदेवतामात्रं यजन्ते—आराधयन्ति, न तु कश्चिदनभिसंहितफलः इन्द्रादिदेवतात्मभूतं

---

(கர்மணும் ஸித்₃தி₄ம் காங்க்ஷந்த:) கருமபலன்களை விருமபுகிறவர் கள். விரும்பும் இன்னுர் என்று விஶேஷியாமையாலே, கருமபலன்களை விரும்பும் அனைவரையுமே இப்பதம் குறிக்கிறது. பிற்காலத்தில் முமுக்ஷுக்களாக ஆகப்போகிறவர்களும், முற்காலத்தில் அறம பொருளின்பங்களாகிற கர்மபலன்களை விரும்பிப்போந்தவர்களே யன்றோ. (கர்மணும் ஸித்₃தி₄ம) கர்மங்களின பலனை. கர்மங்களின் பலன்களாகிற புருஷன், பசு, தகுந்த உணவு முதலியவையே இவர்களுக்கு முக்கியலக்ஷ்யமாகையாலே, இங்கு ஸித்₃தி₄பத₃ம் அவாந்தரலக்ஷ்யமான கர்மஸ்வரூபஸித்தியைக் குறிக்காமல் முற் கூறிய பலன்களாகிற ஸித்தியையே குறிக்கக்கடவது. (இஹதே₃வதா: யஜந்தே) இவ்வுலகிலுள்ள தேவர்களையே ஆராதிக்கிருர்கள். 'இஹ தே₃வதா:' [இவ்வுலகிலுள்ள தேவர்கள்] என்று விஶேஷிக்கையாலே, "பூர்வே ஸாத₄யா:...தே₃வா:" என்று பண்டைமறையிலும், "அயர் வறும அமரர்கள்" [*திருவாய் 1-1-1*] "வைகுந்தத்தமரரும" [*திருவாய் 10-9-9*] என்றுதமிழ்மறையிலும்வைகுந்தமாகிறநித்யவிபூ₄தியிலுள்ள வர்களாகக் குறிக்கப்பட்ட நித்யர்களான தேவர்களையல்லாமல், இந்த ஸம்ஸாரமண்டலத்திலுள்ள அழியக்கூடிய இந்திரன் முதலான தேவர்களையே இங்கு குறிக்கிறது. அன்றிக்கே, "தே₃வதா: யஜந்தே" என்றதிஞலேயே வேதபூர்வபாகங்களில் யாக₃தே₃வதை களாகக் குறிக்கப்படும் இந்திராதிதேவர்களையே இங்கு குறிப்ப தாகத் தேறிவிடுமாகையால், 'இஹ காங்க்ஷமாணு:" என்ரு 'இஹ யஜந்தே' என்ரு கூட்டியும் பொருள் கொள்ளலாம். (இஹ காங் க்ஷந்த:) நித்யவிபூ₄தியில் சென்று அடைவதாகக் கூறப்படும் மோக்ஷத்தைக் காட்டிலும், இங்கு அடையும் இப்பலன்களே சிறந்தவை என்று இவர்களுக்குக் கருத்து. 'மாநுஷே லோகே' என்று உத்த ரார்த்தத்தில் இது விவரிக்கப்படப் போகிறதாகையாலே. முந்திய பொருளே சிறந்தது. (யஜந்தே) யஜ-தே₃வபூஜயாம்' என்று த₄ாது வாகையாலே, ஆராதிக்கிருர்கள் என்று பொருள். யாகம், தானம், ஹோமம் முதலான எல்லாக் கருமங்களாலும், அக்கருமங்களின் பலன்களாக சாஸ்திரங்களில் கூறப்படும் புத்ரன், பசு முதலான வற்றை விரும்பி, அவற்றைத் தருகிறவர்களாக இந்திரன முதலான

सर्वयज्ञानां भोक्तारं मां यजते। कुत एतत्? यतः क्षिप्रमस्मिन्नेव मानुषे लोके कर्मजा पुत्रपश्वन्नाद्यादिसिद्धिर्भवति। मनुष्यलोकशब्द-स्स्वर्गादीनामपि प्रदर्शनार्थः। सर्व एव लौकिकाः पुरुषा अक्षीणा-नादिकालप्रवृत्तानन्तपापसंचयतयाऽविवेकिनः क्षिप्रफलाकाङ्क्षिणः पुत्र-

---

தேவர்களேயே நினைத்து, அவர்களேயே உலகினர் பெரும்பாலும் ஆராதிக்கிருர்களேயொழிய "ஸ ஆத்மா அங்க₃ாந்யந்யா தே₃வதா:" [தைத்-சீக்ஷா5] [அவன் எல்லா தேவதைகளுக்கும் ஆத்மாவா யிருக்கிருன்; மற்ற எல்லா தேவதைகளும் அவனுடைய அங்கங் களாயிருக்கின்றனர்.] என்கிறபடியே அந்த இந்திரன் முதலான தேவர்களுககு ஆத்மாவாய், "அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போ₄க்தா ச ப்ரபு₄ரேவ ச" [கீதை 9-24] [நானேயன்ருே எல்லா யஜ்ஞங்களே யும் அநுபவிப்பவனும், அவற்றுக்குப்பலனளிப்பவனுமாயிருக் கிறேன்.] "போ₄க்தாரம் யஜ்ஞதபஸாம்" [கீதை 5-29] யஜ்ஞம், தபஸ் ஆகியவற்றை அனுபவிப்பவஞன என்னே] என்கிறபடியே யஜ்ஞம் முதலான எல்லாக்கருமங்களாலும் ஆராதிக்கப்படுபவனுய், அவற்றுக்குப்பலனளிப்பவஞன என்னே, முற்கூறிய தாழ்ந்த பலன் களில் பற்றற்று ஆராதிப்பதில்லேயே என்று வருந்துகிருன் பரம புருஷன். இனி உத்தரார்த்தத்தாலே, பெரும்பலஞன மோக்ஷமிருக் கும்போது தாழ்ந்த பலன்களே இவர்கள விரும்புவதற்கு இரு ஹேதுக்களேக்காட்டுகிருன்,–(ஹி) ஏனெனில்: ஹிஸப்தம் ஹேதுவைக் காட்டும். (மாநுஷேலோகே ஸித்₃தி₄ர் ப₄வதி) இம்மனிதவுலகிலேயே இவர்களுக்கு ஸித்தி ஏற்படுகிறது. வெகுதூரத்திலுள்ள நித்ய விபூதியில் சென்று அடையப்படுவதாகக் கூறப்படும் மோக்ஷத்தைக் காட்டிலும், இவ்வுலகிலேயே அடையப்படும் புத்திரன், பசு முதலான பலன்களே சிறந்தவை என்று இவர்களுக்குக் கருத்து. மோக்ஷம் தவிர்ந்த பலன்களில், புத்திரன், பசு முதலானவற்ருேடு ஸ்வர்க்க லோகம் முதலான ஸம்ஸார மண்டலத்திலுள்ள மறுமைப்பலன்களேயும் இவர்கள் விரும்புகிருர்களாகையாலே, இங்கு மனிதவுலகைச் சொன் னது, ஸம்ஸாரமண்டலத்திலுள்ள ஸ்வர்க்கம் முதலான மற்றவுலகங் களுக்கும் உபலக்ஷணம். (க்ஷிப்ரம் ஸித்₃தி₄ர் ப₄வதி) இவ்வுல கிலேயே ஏற்படுவதோடல்லாமல், விரைவிலேயும் இவர்களுக்கு ஸித்தி ஏற்படுகிறது. அதனுலேயே, "வரமத்₃ய காக: ஶ்வோ மயூராத்" [இன்று கிடைக்கும் (தாழ்ந்ததான) காக்கை மாமிசம், நாளேக் கிடைக்கும் (உயர்ந்ததான)மயில் மாமிசத்தைக் காட்டிலும் சிறந்தது]

पश्वन्नाद्यस्वर्गाद्यर्थतया सर्वाणि कर्माणीन्द्रादिदेवताराधनमात्राणि कुर्वते; न तु कश्चित्संसारोद्विग्नहृदयो मुमुक्षुरुक्तलक्षणं कर्मयोगं मदाराधनभूतमारभत इत्यर्थः॥१२॥

---

என்னும் நியாயப்படி, ப்ராரப்தகர்மம் கழிந்தபின் நீண்ட நாளைக்குப் பின்னர் கிடைக்கக்கூடிய மோக்ஷமாகிற உயர்ந்த பலனைக்காட்டிலும் உடனே கிடைக்கக்கூடிய தாழ்ந்த பலன்களை இவர்கள் விரும்புகின்றனர் என்று கருத்து. (க்ஷிப்ரம்) "வாயவ்யம் ஶ்வேதமாலபேத பூதிகாம:, வாயுர்வை க்ஷேபிஷ்டா தேவதா, வாயுமேவ ஸ்வேந பாகதேயேந உபதாவதி, ஸ ஏவைநம் பூதிம் கமயதி" [யஜுர்-காண்டம் 2-1-1] [ஐஶ்வர்யத்தை விரும்புமவன், வாயுவை தேவதையாகக்கொண்டதாய், வெள்ளை நிறப்பசுவை யாகபசுவாகக்கொண்டதான யாகத்தைச்செய்யக்கடவன்; வாயுவே மிகமிகவிரைவில் செல்லக் கூடியவன் (ஆகையால் நமக்குப் பலனை மிகமிக விரைவில் அளிப்பான்) ஆகையால், வாயுவுக்கே அவனுக்கினிய வெளளைப்பசுவை யஜமானன அளிககிறான. அந்த வாயுவே இந்த யஜமானனுக்குச் செல்வத்தை அடைவிக்கிறான்,] என்று வேதஙகளில் செல்வம் முதலான இவ்வுலகப்பலனகள் வாயு முதலான தேவதைகளால மிக விரைவில் அளிக்கப்படுவதாகக் கூறப்படுகிறதன்றோ. (ஸித்திர் பவதி) 'கர்மணும் ஸித்திம்' என்று பூர்வார்த்தத்திலும், இங்கும் ஸித்தி ஶப்தத்தைப் பிரயோகித்திருப்பதிலிருந்து, "கர்மணைவ ஹி ஸம்ஸித்திம் ஆஸ்திதா:" [கீதை3-20] என்றவிடத்தில ஸம்ஸித்தி ஶப்தத்தால் உணர்த்தப்பட்ட ஆத்மப்ராப்தியிலும் தாழ்ந்ததான க்ஷுத்ரபலன்களை அடைவதே இங்கு ஸித்திஶப்தத்தால் கருதப் படுகிறது என விளங்குகிறது. ஆக, எஙகேயோ எபபோதோ கிடைக்கக்கூடிய பெரும்பலனைக்காட்டிலும், இஙகேயே இப்போதே கிடைக்கக்கூடிய அற்பபலனே போதுமென்று நினைப்பதே மனுஷ்ய ஸ்வபாவமாகையாலே உலகில் பெரும்பாலான ஜனங்கள் க்ஷுத்ர பலன்களையே விருமபுகிறார்கள் எனறு உத்தரார்த்தத்தின் கருத்து. ஶ்லோகத்தின் திரண்ட பொருளாவது,— உலகிலுள்ளார் பெரும்பாலும் அறம் பொருளின்பங்களாகிற தாழ்ந்த புருஷார்த்தங் களிலேயே பற்றுள்ளவர்களாயிருக்கிறார்கள்; இப்படியிருப்பதற்கு, அநாதிகாலமாக ஏற்படுகிறவையாய், அளவற்றவையாய், அழியாதவையான பாபங்களால் இவர்கள் நன்மை தீமைகளை ஆராய்ந்தறியும திறனற்றிருக்கையே காரணமாகும்; இதனாலேயே இவர்கள் இவ்

॥भा॥ यथोक्तकर्मयोगारम्भविरोधिपापक्षयहेतुमाह—

चातुर्वर्ण्यं मया सृष्टं गुणकर्मविभागशः।
तस्य कर्तारमपि मां विद्ध्यकर्तारमव्ययम्॥१३॥

13. சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் கு₃ணகர்ம விப₄ாக₃ஶ:।
தஸ்ய கர்த்தாரமபி மாம் வித்₃த்₄யகர்த்தாரமவ்யயம்॥

**சாதுர்வர்ண்யம்**— *நாலு வருணங்களை முன்னிட்ட உலகனைத்தும்,* **மயா**—*ஸர்வேஶ்வரனான என்னாலே,* **கு₃ணகர்மவிப₄ாக₃ஶ:**—*(ஸத்வம் முதலான) குணப்பிரிவுகளையும், (ஶமம் முதலான) செயல் பிரிவுகளையும் ஒட்டி,* **ஸ்ருஷ்டம்**-*ஸ்ருஷ்டிக்கப்பட்டது;* **தஸ்ய**—*இத்தகைய விசித்திரமான உலகப்படைப்பு முதலானவற்றுக்கு,* **கர்த்தாரம் அபி**—*கர்த்தாவாய் (செய்பவனாய்) இருந்தபோதிலும்,* **அகர்த்தாரம்**-*(படைப்பது முதலானவற்றிலுள்ள ஏற்றத்தாழ்வுகளுக்கு) கர்த்தாவாகாதவனாகவும், (அதனாலேயே)* **அவ்யயம**—*(படைப்பது முதலானவற்றால்) தோஷமற்றவனாகவும்,* **மாம்**-*என்னை,* **வித்₃தி₄**—*அறிவாயாக.*

---

வுலகப்பலன்கள் தாழ்ந்தவையாகவும், துன்பத்தோடு கலந்தவையாகவுமிருந்தபோதிலும், அந்த தோஷங்களைக் கணிசியாமல், பிறகு கிடைக்கும் பெருநிதியைவிட இன்று கிடைக்கும் கால் பணமே மேல் என்ற ரீதியிலே நினைப்பவர்களாய், அற்பமும் அஸ்தி₂ரமுமான முற்கூறிய ஸாம்ஸாரிகப₂லன்களையே விரும்பி, அவற்றைப் பெறுவதற்காக முற்கூறிய எல்லாக் கர்மங்களையும் இந்திரன் முதலிய தேவதைகளுக்கே ஆராத₄னமாக நினைத்துச் செய்கிறார்களேயல்லாமல், ஸம்ஸாரத்தை வெறுக்கும் நெஞ்சையுடையவனாய், மோக்ஷத்தை விரும்பியவனாய், அதைப்பெறும்பொருட்டு முற்கூறிய கர்மயோகத்தை எனக்கு ஆராத₄னமாகச் செய்ய எவனும் இழிவதில்லை என்று கூறுவதன் மூலம், கர்மயோகா₃தி₄காரியின் அருமையைக் கூறினாயிற்று. 12.

13. வண்ணங்க ளுலு மருவுங் குணங்களுடன்
பண்ணுங் கருமம் பலவகையா—வெண்ணி
வகுத்தேயான் செய்திடினு மற்றதுசெய் யேனு
மிகுத்தே யெனைநீ * வெறு.

**வண்ணங்கள் நாலும்**—*நாலு வருணங்களை முன்னிட்ட உலகனைத்தையும்.* **மருவும் குணங்களுடன்**—*அவ்வவற்றுக்குப் பொருந்திய (ஸத்வம் முதலான) குணங்களோடும்.* **பண்ணும் கருமம்**—*(அவையவை) செய்யவேண்டிய செயல்களோடும்.* **பலவகையா வகுத்தே**— *பல வகைப்பட்டதாகப்பிரித்தே.* **எண்ணி**—*ஸங்கல்பித்து.* **யான்**—*ஸர்வேஶ்வரனை நான்.* **செய்திடினும்**—*செய்தபோதிலும்.* **மற்று அது**—*அப்படைப்பு முதலானவற்றை.* **செய்யேனு**-*செய்யாதவனுகவும்.* **மிகுத்தே**-*(அவற்றைச் செய்வதால் தோஷமின்மையாகிற)பெருமையை யுடையவனுகவும்.* **எனை**-*என்னை,* **நீ**-*நீ.* *** வெறு**—*மனத்திற் கொள்வாய்.*

---

13. அழியாத அளவற்ற பாபங்களை உடையவராயிருப்பதால் பகுத்தறிவை இழந்து தாழ்ந்த பலன்களைப் பெரும்பாலான உலகினர் விரும்புகின்றனர் என்று சென்ற ஶ்லோகத்தில் உரைக்கப் பட்டது; இத்தகைய பாபங்கள் உலகில் அனைவர்க்குமே பொதுவா யிருப்பதால், எல்லாருமே இப்படிப் பகுத்தறிவிழந்து க்ஷுத்3ர ப2லன்களை விரும்பி நிற்பார்களாகையாலே மோக்ஷத்தை விரும்பு வார் ஒருவருமே இல்லாமற்போய், மோக்ஷஸாதனத்தை விதிக்கும் சாஸ்திரம் அநுஷ்டானமின்மையால் ஏற்படும் அப்ராமாண்யத்தை அடைந்துவிடுமே என்னும் ஐயம், முற்கூறிய கர்மயோகாரம்பத்திற்கு விரோதியாயிருக்கும் பாபங்கள் நீங்குவதற்கு வழிகாட்டுவதன் மூலம் இனிவரும் இரண்டு ஶ்லோகங்களால் தவிர்க்கப்படுகிறது. அவ்வழியானது இந்த ஶ்லோகத்தில் சுருக்கமாகவும், அடுத்த ஶ்லோகத்தில் விளக்கமாகவும் காட்டப்படுகிறது. (சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம்) நாலு வருணங்களை முன்னிட்டுக்கொண்டிருக்கும்

---

* "உரை செல வெறுத்தவன்" [மூதூர் மாலை] என்னுமிடத்து வெறு—என்பது பொருந்துதல் என்னும் பொருளில் பயின்று வருதலை அறிக—என்று பழைய பதிப்பில் குறிப்புரை கூறும்.

॥भा॥ चातुर्वर्ण्यप्रमुखं ब्रह्मादिस्तम्बपर्यन्तं कृत्स्नं जगत् सत्त्वादिगुणविभागेन तदनुगुणशमादिकर्मविभागेन च विभक्तं मया सृष्टम्।

---

பிரமன் முதல் புல்லீருகவுள்ள அனைத்துலகும் ஸர்வேஶ்வரனை என்னுல் படைக்கப்பட்டது. இந்த ஶ்லோகத்திலும், அடுத்த ஶ்லோகத்திலும் ஏற்றத்தாழ்வுகளுடன் சேதனர்களைப் படைப்பதினுல் ஸர்வேஶ்வரனுக்கு தோஷம் வராது என்று நிரூபிக்கப்படுகிறது; இப்படி ஏற்றத்தாழ்வுகளுடன் சேதனர்களைப் படைப்பது வ்யஷ்டி ஸ்ருஷ்டியிலேயே செய்யப்படுகிறது. ஆகையால், இங்கு வ்யஷ்டிஸ்ருஷ்டியிலடங்கிய நாலு வர்ணங்களைப் படைப்பதாகச் சொன்னது, வ்யஷ்டிஸ்ருஷ்டிமுழுவதற்குமே உபலக்ஷணம். ஏற்றத் தாழ்வுகள், படைப்பதில் மாத்திரமல்லாமல், காப்பதிலும் அழிப்ப திலும் உள்ளதாகையால், இங்கு படைப்பதைச் சொன்னது அளிப்பதற்கும், அழிப்பதற்கும் உபலக்ஷணம். வ்யஷ்டி ஸ்ருஷ்டியிலடங்கிய எல்லா உலகும் என்னுலேயே படைத்து அளித்து அழிக்கப்படுகின்றன என்றபடி. மற்ற சாஸ்திரங்களிலும் உலகனைத்தையும் படைத்தளித்து அழிப்பவன இவன ஒருவனே என்று கோஷிக்கப்படுகிறதன்ருே. ஸ்ருஷ்டி முதலானவற்றிலுள்ள ஏற்றத்தாழ்வுகளைக் காட்டுகிருன் இரண்டாவது பாததில்,— (கு₃ணகர்மவிப₄ாக₃ஶ:) ஸத்வம் முதலான குணப்பிரிவுகளோடும், அதையொட்டிய சமம் முதலான செயல்பிரிவுகளோடும் கூடியதாக என்னுல் ஸ்ருஷடிக்கப்பட்டது என்று முன் பதங்களோடு கூட்ட வேணும். கு₃ணகர்மப்பிரிவாவது,— ஸத்வகுணத்தை முக்கிய குணமாகவும், அதையொட்டிய ஶமம் (மனத்தை அடக்குதல்) த₃மம் (வெளியிந்திரியங்களை அடக்குதல்) அவற்றுக்குறுப்பான காரியங்கள் முதலானவற்றைச் செயல்களாகவும கொண்டது ப்ராஹ்மணவர்ணம்; ரஜோகுணத்தை முக்கியகுணமாகவும், அதையொட்டிய யுத்தம் முதலானவற்றைச் செயலகளாகவும் கொண்டது க்ஷத்ரியவர்ணம்; ரஜஸ்தமோகுணங்களிரண்டையும் முக்கிய குணங்களாகவும், அவற்றையொட்டிய உழவுத்தொழில், வாணிபம் முதலானவற்றைச் செயல்களாகவும் கொண்டது வைஶ்யவர்ணம்; தமஸ்ஸை முக்கியமான குணமாகவும், முந்திய வர்ணங்களுக்கு வேலை செய்வது முதலானவற்றைச் செயல் களாகவும கொண்டது சூத்ரவர்ணம் என்னும் பிரிவேயாகும். நாலு வர்ணங்களுக்கும் "தம: ஶூத்₃ரே ரஜ: க்ஷத்ரே ப்₃ராஹ்மணே ஸத்வமுத்தமம்" [பார-ஆஶ்வ 39-11] முதலானவிடங்களில குணப்

सृष्टिग्रहणं प्रदर्शनार्थम्; मयैव रक्ष्यते, मयैव चोपसंह्रियते। तस्य— विचित्रसृष्टयादेः कर्तारमप्यकर्तारं मां विद्धि॥१३॥

---

பிரிவு சொல்லப்பட்டது; "ப்₃ராஹ்மண க்ஷத்ரிய விஶாம்" [கீதை 18-41] என்று தொடங்கி நாலு ஶ்லோகங்களில் கீதையிலேயே கர்மப்பிரிவு விவரிக்கப்பட்டது. இவ்வண்ணமாகவே தேவர், மனிதர், திர்யக்குகள் முதலான ஜாதிகளிலும், வராஹகல்பம, பாத்மகல்பம், ஈஶானகல்பம் முதலான பலவிதமான கல்பங்களிலும் அந்தந்த குணங்களின மிகுதியினுல் ஏற்படுவனவாகப் புராணங்கள் முதலானவற்றில் சொல்லப்படும் பலவிதமான படைப்புகளின் ஏற்றத்தாழ்வுகள் இங்கு அனுஸந்திக்கத்தக்கவை. இனி, ஶ்லோகத்தின் உத்தரார்த்த₄த்தாலே, 'இப்படி விசித்திரமான உலகை நான் படைத்தபோதிலும், அதிலுள்ள ஏற்றத்தாழ்வுகளுக்கு நான் காரணமல்லவாகையால், எனக்கு தோஷமில்லை' என்று காட்டுகிருன். (தஸ்ய கர்த்தாரம் மாம்) முற்பாதியில் கூறியபடி விசித்ரமான வ்யஷ்டிஸ்ருஷ்டிஸ்தி₂திலயங்களைச் செய்பவனுன என்னை. இத்தால் ஸ்ருஷ்டியைப் பிரமன் செய்கிருன், ஸம்ஹாரத்தை சிவன் செய்கிருன் என்றும் கூறும் மதங்கள் தள்ளப்பட்டன. "ஸ்ருஷ்டிம் தத: கரிஷ்யாமி த்வாமாவிஶ்ய ப்ரஜாபதே!" [விஷ்ணுத₄ர்மம் 68-51] [பிரஜாபதியே! உன்னுள் நுழைந்து நான் ஸ்ருஷ்டியைச் செய்கிறேன்.] முதலான சாஸ்திரங்களிலும். "ஜந்மாத்₃யஸ்ய யத:" [ப்ர-ஸூ 1-1-2] [இவ்வுலகின் ஸ்ருஷ்டிஸ்தி₂தி லயங்கள் எந்தப் பரம்பொருளால் செய்யப்படுகின்றனவோ] "ஸம்ஜ்ஞாமூர்த்தி க்லுப்திஸ்து த்ரிவ்ருத்குர்வத உபதே₃ஶாத்" [ப்ர-ஸூ 2-4-17] [நாமரூபவ்யாகரணமானது த்ரிவ்ருத்கரணம் செய்யும் பர ப்ரஹ்மத்திற்கே கூறப்படுகிறதேயொழிய ஹிரண்யக₃ர்ப்ப₄னுக்கல்ல;' சாஸ்திரம் அப்படியே உபதேசிக்கிறபடியால்.] முதலான ஸூத்ரங்களிலும் முத்தொழிலையும் செய்யும் முதல்வன் ஒருவனே என்று கோஷிக்கப்பட்டதன்றே. "அரன் அயன் என உலகு அழித்து அமைத்துளனே" [திருவாய் 1-1-8] என்று நம்மாழ்வாரும் பிரமனையும், சிவனையும் சரீரமாகக்கொண்டு வ்யஷ்டிஸ்ருஷ்டியையும், வ்யஷ்டி ஸம்ஹாரத்தையும் செய்பவன் நாராயணனே என்று காட்டினர். இத்தால், முன் ஶ்லோகத்தில் இந்திரன் முதலான தெய்வங்களால் கொடுக்கப்படுவனவாகச் சொல்லப்படும் புத்திரன், பசு முதலிய க்ஷுத்₂ரப₂லன்களும், ஸர்வாத்மாவாய், ஸர்வ கர்த்தாவான இவனுலேயே அவர்கள் மூலம் கொடுக்கப்படுபவை

॥भा॥ कथमित्यत्राह—

न मां कर्माणि लिम्पन्ति न मे कर्मफले स्पृहा।
इति मां योऽभिजानाति कर्मभिर्न स बध्यते॥१४॥

14. ந மாம் கர்மாணி லிம்பந்தி ந மே கர்மப₂லே ஸ்ப்ருஹா।
இதி மாம் யோऽபி₄ஜாநாதி கர்மபி₄ர் ந ஸ ப₃த்₄யதே॥

கர்மாணி— *ஸ்ருஷ்டி முதலான செயல்கள்,* மாம்— *(ஸர்வேஶ்வரனான) என்னை,* ந லிம்பந்தி—*கட்டுப்படுத்துவதில்லை;* மே—*(அவாப்தஸமஸ்தகாமனான) எனக்கு,* காமப₂லே—*படைத்தல் முதலான செயல்களின பயனில்,* ந ஸ்ப்ருஹா—*ஆசையில்லை.* இதி-*இவ்வண்ணமாக,* மாம்— *என்னை,* ய:-*எவனொருவன்,* அபி₄ஜாநாதி-*நன்கு அறிகிறானோ,* ஸ:-*அவன்,* கர்மபி₄:-*(கர்மயோகாரம்பத்திற்குத் தடையான) பாபங்களால்,* ந ப₃த்₄யதே—*கட்டுப்படுவதில்லை (அப்பாபங்களினின்றும் விடுபடுகிறான் என்றவாறு.)*

---

என்று உணர்த்தப்பட்டதாயிற்று. (கர்த்தாரம் அபி அகர்த்தாரம வித்₃தி₄) முற்கூறியபடி விசித்திரமான ஸ்ருஷ்டி முதலானவற்றைச் செய்பவனாயிருந்தபோதிலும், அவற்றைச் செய்யாதவனாகவும் அறிவாயாக; ஸ்ருஷ்டி முதலானவற்றில சேதனர்களுக்கு ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளுக்குச் சேதனர் செய்யும் கர்மங்களே காரணங்களாகையாலே, அவற்றுக்கு நான் காரணமல்லாதவனாயிருக்கிறேன் என்று கருத்து. இவ்விஷயம் அடுத்த ஶ்லோகத்தில் விவரிக்கப் படும. (அகர்த்தாரமவ்யயம் வித்₃தி₄) இப்படிப் படைப்பு முதலானவற்றில் உள்ள ஏற்றத்தாழ்வுகளுக்கு நான் காரணமலலவாகையால், ஒருவனை உயர்ந்தவனாகவும், ஒருவனைத் தாழ்ந்தவனாகவும் படைப்பதால் ஏற்படும் வைஷம்யம் (பக்ஷபாதம்), சேதனரைத் துன்பங்களை அனுபவிக்கச் செய்வதால் ஏற்படும நைர்க்₄ருண்யம் (கருணையின்மை) ஆகிய தோஷங்கள் என்னைத் தொடமாட்டா என்றும் அறிவாயாக. ப்ரகரணத்தையொட்டி வ்யயஶப்₃த₃ம் வைஷம்யநைர்க்₄ருண்யங்களாகிற தோஷங்களைக் குறிக்கிறது. அந்த தோஷங்களற்றவனாக என்னை அறிந்தால் கர்மயோகா₃ரம்ப₄ விரோதி₄பாபங்கள் அழியும் என்று அடுத்த ஶ்லோகத்தில் கூறப் போகிறானாகையாலே, ஸர்வகாரணனாயிருந்தபோதிலும், அந்த தோஷஙகளற்றவனாக நீ என்னை அறிவாயாக என்று முதலில் அர்ஜுனனை நோக்கி விதிககிறான் இந்த ஶ்லோகத்தில். 13.

**14. ஏது மிழிசா வெனேக்கரும மென்றெனக்கிங்**
**கோது பயனுசை யொன்றிலேயென்—றீ துணர்ந்தே**
**யென்னே மிகவறிவான் யாவ னவன்கண்டாய்**
**முன்னே வினேயகலவான் முற்று.**

**கருமம்**—*படைத்தல் முதலான செயல்கள்.* **எனே**—*(ஸர்வேஶ்வரனுன) என்னே.* **ஏதும் இழிசா**—*ஒரு சிறிதும் கட்டுப்படுத்தமாட்டா,* **என்று**—*என்றும்.* **எனகு**—*(அவாப்த ஸமஸ்தகாமனுன) எனக்கு.* **இங்கு ஓது பயன் ஆசை ஒன்று இல்லே என்று**—*இச்செயல்களுக்குச் சொல்லப்படும் பயனில் விருப்பம் சிறிதும் இல்லே என்றும்.* **ஈது உணர்ந்தே**—*இவ்விரண்டையும் அறிந்து.* **என்னே**—*என்னே.* **மிக அறிவான்**-*நன்கு அறிகிறவன்.* **யாவன்**—*எவனே.* **அவன்**—*அவனே.* **முன்னே வினே**—*அநாதிகாலமாக (கர்மயோகத்தின் தொடக்கத்திற்குத் தடையாக) உள்ள பாபங்களினின்றும்.* **முற்று**-*முழுவதும்.* **அகல்வான் கண்டாய்**—*விடப்படுவான்கிடாய்!*

---

14. கர்மயோகத்தைத் தொடங்குவதற்குத் தடையாயிருக்கும் பாபங்கள் அழிவதற்கு, இரண்டு ஶ்லோகங்களாலே வழிகாட்ட எண்ணி, சென்ற ஶ்லோகத்தில் 'உலகத்தை விசித்திரமாக ஸ்ருஷ்டித்தபோதிலும, நான் ஸ்ருஷ்டிக்காதவனுகவே ஆவேன்' என்று கூறினை; அதற்குமேல், 'உலகைப்படைப்பதாகிற ஓரே செயலேச் செய்பவனுகவும, செய்யாதவனுகவும் எப்படி ஆக முடியும்?' என்னும் கேள்விக்கு பதிலுரைத்துக்கொண்டு, கர்மயோகத்தைத் தொடங்குவதற்குத் தடையாயிருக்கும பாபங்கள் அழிவதற்கு வழியைக் காட்டுகிருன் இந்த ஶ்லோகத்தில். (ந மாம் கர்மாணி லிம்பந்தி) முன் ஶ்லோகத்தில் சொன்ன உலகைப் படைப்பது முதலான செயல்கள் எனக்கு தோஷத்தை விளேக்க மாட்டா. இந்த ப்ரகரணத்தில் ஸர்வேஶ்வரனுன கண்ணன் கர்மவசப்பட்டவனு அல்லனு என்னும் ஐயம் ஏற்படவில்லே; ஸ்ருஷ்டிக்குக் கர்த்தாவாகவும், அகர்த்தாவாகவும் ஒருவனே எப்படி ஆகமுடியும் என்னும் ஐயமே ஏற்பட்டுள்ளது; ஆகையால் அதற்குப் பரிஹாரமுரைப்பதே நியாயமேயொழிய, இங்கு ப்ரக்ருத

॥भा॥ यत इमानि विचित्रसृष्ट्यादीनि कर्माणि मां न लिम्पन्ति—न मां संबध्नन्ति; न मत्प्रयुक्तानि तानि देवमनुष्यादि-वैचित्र्याणि, सृज्यानां पुण्यपापरूपकर्मविशेषप्रयुक्तानीत्यर्थः। अतः

---

மல்லாத புண்யபாபங்களைப்பற்றிப் பேச இடமில்லை. ஆகையால் இங்கு கர்மபந்தம் புண்யபாபங்களைக் குறிக்காமல், முன் ஸ்லோகத்தில் சொன்ன விசித்திரமான ஸ்ருஷ்டி முதலான செயல்களையே குறிக்கிறது. 'லிப-உபதே₃ஹே' என்னும் தா₄து உபதே₃ஹமாகிற பூச்சு முதலான வ்ருத்₃தி₄யையே முக்கியமாகக் குறிக்குமாயினும், அப்பொருள் பொருந்தாதாகையால், லக்ஷணையாலே தோஷங்களை விளைத்துக் கட்டுப்படுத்துவதாகிற பொருளைக் குறிக்கிறது. படைக்கப்படுவனவற்றின ஏற்றத் தாழ்வுகளாலே, வைஷம்யம் எனப்படும் பக்ஷபாதமும், நைர்க்₄ருண்யம் எனப்படும் கருணையின்மையுமே ஸ்ருஷ்டிப்ரக்ரணத்தில் இவனுக்கு ஸங்கிக்கக் கூடிய தோஷங்களாகையாலே, (ந மாம் கர்மாணி லிம்பந்தி) என்று, விசித்திரமான ஸ்ருஷ்டி முதலான செயல்கள் எனக்கு வைஷமய நைர்க₄ருணயஙகளாகிற தோஷங்களை விளைக்கமாட்டா என்றதாகிறது. எப்படியெனில், படைக்கப்படும் ஜீவர்களிடமுள்ள தேவர் மனிதர் முதலான விசித்திரமான ஏற்றததாழ்வுகளுக்கு, அந்தந்த ஜீவர்கள் செய்த புணயபாபரூபமான கர்மங்கள் காரணமேயொழிய, நான் காரணமல்லனுகையால் என்னை வைஷம்யநைர்க்₄ருண்யங்கள் தொடமாட்டா என்றபடி. ஆக, சென்ற ஸ்லோகத்தில் 'கர்த்தாரம்' என்று சொன்னது ஸ்ருஷ்டி முதலானவற்றுக்கு ஸாமாந்ய (பொதுவான) காரணமாயிருப்பவன் என்னும் கருத்திலேயென்றும், 'அகர்த்தாரம்' என்று சொன்னது, அந்த ஸ்ருஷ்டி முதலானவற்றிலுள்ள ஏற்றத் தாழ்வுகளுக்குத்தான விஸேஷகாரணமாயில்லாமலிருப்பவன் என்னும் கருத்திலேயென்றும சொல்லிற்றுயிற்று. கர்த்ருத்வமே முக்கியமென்றும், ஏற்றத் தாழ்வுகளுக்குக் காரணமாயிராமையையிட்டு அகர்த்ருத்வம் கூறப்படுகிறது என்றும் கருத்து. இவ்விடத்தில் ஒரு திருஷ்டாந்தம் உண்டு. அவரை, துவரை முதலான முளைகளுக்கு, பூமி, ஜலம், எரு முதலானவை ஸாமாந்ய காரணங்களாகின்றன; அவற்றிலுள்ள வேறுபாட்டுக்கு அவரை விதையிலும், துவரை விதையிலுமுள்ள வேறுபாடே காரணமாகிறது. அதுபோலவே ஜீவர்களை தேவாதிஸரீரங்களோடு படைப்பவன் ஸர்வேஸ்வரனேயென்று

प्राप्ताप्राप्तविवेकेन विचित्रसृष्ट्यादेर्नाहं कर्ता। यतश्च सृष्टाः क्षेत्रज्ञाः सृष्टिलब्धकरणकलेबराः सृष्टिलब्धं भोग्यजातं फलसङ्गादिहेतुस्वकर्मानुगुणं भुञ्जते; सृष्ट्यादिफले कर्मफले च तेषामेव स्पृहेति न मे स्पृहा।

---

சாஸ்திரங்களிலிருந்து அறிகிறோமாகையால் அவன் அப்படைப்புக்கு ஸாமாந்ய காரணமாகிறான்; அவர்களுடைய புண்யபாபங்களின் ஏற்றத் தாழ்வுகளையொட்டியே அவர்களுக்கு தேவாதி ஶரீரங்கள், அவை காரணமாக ஏற்படும் ஸுகம். துக்கம் முதலான ஏற்றத் தாழ்வுகள ஆகியவை ஏற்படுகின்றனவென்று அந்த ஶாஸ்திரங் களிலிருந்தே அறிகிறோமாகையால் புண்யபாபங்களே ஜீவா களின் ஏற்றதாழ்வுகளுக்கு விஶேஷகாரணமாகின்றன எனறபடி. ஆக, முதல பாதத்தால ஸ்ருஷ்டிகளில் ஏற்றத்தாழ்வுகளுககு ஜீவர்களின கர்மஙகள காரணமேயொழியத் தான காரணமலலன் எனறு கூறுவதன் மூலம் தனக்கு அகர்த்ருத்வத்தைக் கூறினன; இனி, கர்மபலமான ஸுகம் முதலானவற்றிலும அந்த ஜீவர் களுககே விருபபமுள்ளதேயொழியத் தனக்கு விருப்பமில்லையாகை யாலும் தனக்கு அகர்த்ருதவததைக கூறுகிறான இரணடாவது பாததத்ாலே,— (ந மே கர்ம ப₂லே ஸ்பருஹா) தே₃வாதி₃ரூப விசித்ர ஸ்ருஷ்டி முதலான செயலகளின் ப₂லமான புண்யபாபரூப கர்மங்களின பலனை ஸுகம முதலானவற்றில எனக்கு விருப்ப மில்லை. எனககு விருப்பமில்லை என்றதினல், ஜீவர்களுக்கே விருப்பமுள்ளதென்பதும உணர்த்தப்படுகிறது. கர்மப₂லத்தை அநுப₄விப்பவர்களான ஜீவர்கள் அவ்வநுப₄வத்திற்கு உறுப்பான தேஹேந்திரியஙகளோடு படைககப்படுகிறார்கள். அபபடியே அவர்களனுபவிப்பதற்காகப் படைக்கப்பட்டுக கிடைத்த போக்₃யப பொருள்களைப் ப₂லத்தில் விருப்பத்தால ஏற்படுவனவும் அதை மேனமேல் உண்டாக்குவனவுமான தம் கர்மங்களுக்கு அனுகுண மாக அனுபவிக்கிறார்களேயொழிய, அக்கர்மங்களை எதிர்பாராத என் ஸஙகல்பத்தால் அனுபவிப்பதில்லை; அநாதி ப்ரவாஹமாய் வரும வாஸனையாலே ஒவ்வொரு ஜீவன் ஒவ்வொரு பலனை விருமபு கிறான்; அவ்விருப்பம சாஸ்திரங்களில் அனுமதிக்கப்பட்ட புண்ய கர்மத்திலோ, சாஸ்திரங்களில் நிஷேதிக்கப்பட்ட பாபகர்மத்திலோ இவனைத் தூண்டக்கூடும். அந்த இச்சைககு அநுகுணமாக அவனை நியமிக்கும்போது, அந்தந்த இச்சையோடு ஜீவன செய்யும் புண்ய பாபங்களையொட்டி அந்தந்த ஜீவனுக்குப

तथाऽऽह सूत्रकारः-* वैषम्यनैर्घृण्ये न सापेक्षत्वात् (२. १. ३४.) इति। तथा च भगवान् पराशरः— * निमित्तमात्रमेवायं सृज्यानां सर्गकर्मणि।

---

பலனளிக்கிறேனேயொழிய என் விருப்பப்படி பலனளிப்பதில்லை; என்னுடைய நிரங்குஶஸ்வாதந்திரிய மாத்திரத்தாலே ஏற்றத் தாழ்வுள்ள பலன்களை நான் அளிப்பதுமில்லை; என்னுடைய பயனுக்காகப் பிறரை நான் வருத்துவதுமில்லை என்று கருத்து. ஆக, ஸ்ருஷ்டியில் ஏற்றத்தாழ்வுகள் என்னால் ஏற்படுவதில்லை என்று முதல் பாதத்தாலும், ஸ்ருஷ்டிப₂லத்தில் ஏற்றத்தாழ்வுகள் என்னால் ஏற்படுவதிலலை என்று இரண்டாம் பாதத்தாலும் சொல்லிற்றாயிற்று. "அத்ரோபநிஷத₃ம் புண்யாம் க்ருஷ்ணத்₃வை பாயநோSப்₃ரவீத்" [பார-ஆதி 1-279] என்று ஐந்தாம் வேதமான பாரதத்தில் கீதோபனிஷத்தைத் தொகுத்தருளிய வேதவ்யாஸரே, தமது ப்ரஹ்மஸூத்ரத்தில் "வைஷம்ய நைர்க்₄ருண்யே ந ஸாபேக்ஷ த்வாத்" [ப்ர-ஸூ 2-1-34] [(ஏற்றத்தாழ்வுடன உலகைப் படைப்ப தால் பரமபொருளுக்கு) வைஷம்யநைர்க்₄ருண்யங்கள் ஏற்பட மாட்டா; (ஜீவர்களின் கர்மங்களை) எதிர்பார்த்தே உலகைப் படைப்பதால்.] என்று இவ்விஷயத்தை அறுதியிட்டார். இவருக்கும் தந்தையாய், வஸிஷ்ட₂புலஸ்தயர்களின் வரதானத்தாலே பரம் பொருளறிவைப் பெற்றவரான பராசரமஹரிஷியும், "நிமித்த மாத்ரமேவாயம் ஸ்ருஜ்யாநாம் ஸர்க்க₃கர்மணி। ப்ரத₄ாநகரணீபூ₄தா யதோ வை ஸ்ருஜ்ய ஶக்தய:॥ நிமித்த மாத்ரம் முக்த்வேத₃ம் நாந்யத் கிஞ்சித₃பேக்ஷதே। நீயதே தபதாம் ஶ்ரேஷ்ட₂ ஸ்வஶக்த்யா வஸ்து வஸ்துதாம்॥" [வி. பு. 1-4-51, 52] என்னும ஶ்லோகங்களில் ஸ்ருஷ்டிகளில் உள்ள ஏற்றத்தாழ்வுகளுக்குக் கர்மமே முக்கிய காரணம் என்று நிலைநாட்டினார். இந்த இரு ஶ்லோகங்களிலும ஸ்ருஜ்ய ஶப்தத்தால் தேவர், மனிதர் முதலான படைக்கப்படும ஜீவர்களும், ஶக்திஶப்தத்தால் அவரவர்களுடைய கர்மங்களும் குறிக்கப்படுகின்றன என்பது முன்பின் பிரகரணங்களை ஆராய்ந் தால் வெளியாகும். எப்படியெனில்: விஷ்ணுபுராணம் முதல் அம்சம் நாலாமத்தியாயத்தில் வராஹாவதாரத்தை வர்ணித்து விட்டு, "பூ₄ராத்₃யாம்ஶ்சதுரோ லோகாந் பூர்வவத் ஸமகல்பயத்" [வி. பு. 1-4-49] [(கீழுலகஙகளோடு கூடிய) பூமி முதலான நாலு மேலுலகங்களையும் முன்போலவே நிலைநிறுத்தினார்.] என்பதிலாக உலகை ஸமுத்ரத்தினின்றும் தூக்கியெடுத்து, பூமி, மலை முதலான பிரிவுகளையும் லோகவிபாகங்களையும் செய்ததைக் கூறி,

"ப்3ரஹ்மரூபத4ரோ தே3வஸ்ததோऽஸௌ ரஜஸா வ்ருத:। சகார ஸ்ருஷ்டிம் ப4க3வாந் சதுர்வக்த்ரத4ரோ ஹரி:॥" [வி. பு. 1-4-50] [பிரமனை உருவாகக் கொண்டவனாய், (அதனாலேயே) நான்கு முகங்களை உடையவனாய், ரஜோகுணம் மிக்க சரீரத்தை உடையவனான பகவான் ஹரி படைப்புத் தொழிலைச் செய்தார்.] என்று பிரகிருதஸ்லோகங்களுக்கு முன் ஸ்லோகத்தில் சுவர்க்கம் பூமி முதலானவற்றிலுள்ள ஜீவர்களைப் பிரமனை சரீரமாகக்கொண்டு படைத்ததைப் பற்றியே பேசியுள்ளது. பிரகிருத ஸ்லோகங்களுக்குப் பின்னுள்ள ஐந்தாமத்தியாயத்திலும். "யதா2 ஸஸர்ஜ தே3வோऽயம் தே3வர்ஷிபித்ருதா3நவாந்। மநுஷ்யதிர்யக்3வ்ருக்ஷாதீ3ந் பூ4வ்யோம ஸலிலௌகஸ:॥...தந்மமாசக்ஷ்வ விஸ்தராத்॥' [வி. பு. 1-5-1, 2] [பூமி, ஸ்வர்க்கம, கடல் முதலானவற்றை இருப்பிடமாகக்கொண்ட தேவர்கள், ரிஷிகள், பித்ருக்கள், அரக்கர்கள், மனிதர்கள், ஊர்வன, ஸ்தா2வரங்கள முதலானவற்றை இந்த பகவான் எப்படிப் படைத்தார் என்பதை விரிவாகச் சொல்லவேண்டும்.] என்னும் ஸ்லோகங்களில் தேவர் முதலான ஏற்றத்தாழ்வுள்ள ஸ்ருஷ்டியைப்பற்றியே மைத்ரேயர் கேள்வி கேட்டிருக்கிறார். இதற்கு பதிலுரைத்த பராசர பகவான். "மைத்ரேய கத2யாம்யேதத் ஸ்ருணுஷ்வ ஸுஸமாஹித:। யதா2 ஸஸர்ஜ தே3வோऽஸௌ தே3வாதீ3ந் நகி3லாந் விபு4:॥" [வி. பு. 1-5-3] [மைதரேயரே! தலைவனான இந்த தேவன் தேவர் முதலான எல்லாப் பொருள்களையும் எப்படிப் படைத்தார் என்பதைச் சொல்லுகிறேன். கவனமாகக கேட்பீராக.] என்று தொடங்கி இருபத்துநாலு ஸ்லோகங்களால தேவர் முதலானரின ஸ்ருஷ்டியைப்பற்றிச் சிறிது விரிவாகச் சொல்லி, 'இன்னும் என்ன கேட்க விரும்புகிறீர்?' என்று கேட்க, 'இதையே இன்னும் விரிவாகக் கேட்க விரும்புகிறேன்' என்று மைத்ரேயர் பதில்கூற, "கர்மபி4ர் பா4விதா: பூர்வை: குஸலா: குஸலேஸ்து தா:। க்2யாத்யா தயாப்யநிர்முக்தா: ஸம்ஹாரேऽப்யுப ஸம்ஹ்ருதா:॥ ஸ்தா2வராந்தா: ஸுராத்3யாஸ்ச ப்ரஜா ப்3ரஹ்மம் ஸ்சதுர்வித4ா:॥" [வி. பு. 1-5-28] [அந்தணரே! தேவர்கள் தொடக்கமாக, (மனிதர், திர்யக் நடுவாக) ஸ்தாவரங்களீறாகவுள்ள நாலுவிதமான அந்த ஜ்ஞானஸ்வரூபரான ஜீவர்களும, (பலன் கொடுக்காமல்) பழுதாகாத பூர்வகர்மங்களாலே சூழப்பெறறவர்களாய், ஸம்ஹாரகாலத்தில் ஸம்ஹரிக்கப்படும்போதும், அந்த வாஸனையாலே விடப்படாதவர்களாய் உள்ளனர்.] என்று தொடங்கிப் பராசரர் கூறும் பதிலில் ஜீவர்களின் விதவிதமான கர்மத்தாலே

प्रधानकरणीभूता यतो वै सृज्यशक्तयः ।। निमित्तमात्रं मुक्त्वेदं नान्यत्किंचिदपेक्षते। नीयते तपतां श्रेष्ठ स्वशक्त्या वस्तु वस्तुताम् ।। (वि. १. ४. ५१, ५२) इति। सृज्यानां देवादीनां क्षेत्रज्ञानां सृष्टेः

---

தேவர் முதலான ஏற்றத்தாழ்வுள்ள ஸ்ருஷ்டியே விவரிக்கப்படுகிறது. ஆகையால் முன்பின பிரகரணங்களை ஆராய்ந்தால் பிரகிருத ஶ்லோகங்களில் ஸ்ருஜ்யஶப்தத்தாலே படைக்கப்படும தேவர், மனிதர் முதலான ஜீவர்களும, ஶகதிஶப்தத்தால் அவர்களுடைய கர்மங்களுமே கூறப்படுகின்றன என விளங்கும. "அவித்₃யா கர்மஸம் ஜ்ஞாந்யா த்ருதீயா ஶக்திரிஷ்யதே, யயா க்ஷேத்ரஜ்ஞஶக்திஸ்ஸா வேஷ்டிதா ந்ருப ஸர்வகா₃' [வி-பு 6-7-61] [கர்மம என்று கூறப்படும அவித்யை (பரமபுருஷனின) மூன்றுவது சக்தியாகக் கருதப்படுகிறது. இதனலை, பரமபுருஷனின இரண்டாவது ஶக்தியான எங்குமுள்ள ஜீவதத்துவம சூழப்பட்டுள்ளது.] முதலானவிடங்களில் ஸ்ரீபராசரரே கர்மத்தை சக்திசப்தத்தாலே குறிபபிட்டிருப்பதையும் காண்கிறோம். ஆகையால், ஶக்திஶப்தத்தால கர்மததையே இங்கும குறிக்கத்தடையில்லை. இனி, பிரகிருதஶ்லோகங்களிரண்டையும விவரிப்போம், (ஸ்ருஜ்யாநாம் ஸாக்க₃கர்மணி நிமித்தமாதரமேவ அயம) படைக்கப்படும் தேவர் முதலான ஜீவர்களைப் படைக்கும செயலில் இந்த ப₄க₃வான் பொதுவான காரணமாததிரமாகவே யிருக்கிறான். அப்படியானல் தேவாதிரூபமான ஏற்றத்தாழ்வுககு விஶேஷகாரணமாயிருப்பது எது எனில்,—(ப்ரத₄ாநகரணீபூ₄தா யதோ வை ஸ்ருஜ்யஶக்தய:) தேவர் முதலான ஏற்றததாழ்வுகள் விஷயத்தில் கரணங்களான ப்ராசீந கர்மங்களேயன்றோ ப்ரத₄ானங்களாய் (விஶேஷகாரணங்களாய்) இருக்கின்றன. இநத ஶ்லோகத்தில் ஸ்ருஷ்டியில் நிமித்தமாத்ரமாகப் பரமபுருஷனைச் சொல்லுவது, அவன் உபாதான காரணமாகவில்லை என்று நிஷேதிப்பதில் கருத்தையுடையது என்று பொருள்கொண்டால், அவனை உபாதான காரணமாகவும் கூறும் ஶ்ருதிஸ்ம்ருதிஸந்தரங்களும், விஷ்ணுபுராணத்தின் முன்பின் பிரகரணங்களும்முரண்படும். ஆகையால், முனபின் பிரகரணங்களிலிருந்து, படைக்கப்படும ஜீவர்களின ஏற்றத்தாழ்வுகளுக்கு அவரவர் கர்மங்களே ப்ரத₄ானகாரணமாயிருக்கினறன என விளங்குவதால், அவ்வேற்றத்தாழ்வுகளுக்கு ஸர்வேஶ்வரன் ப்ரத₄ானகாரணமாயிராமல், நிமித்தமாத்ரமாகவே (அப்ரதான காரணமாகவே) இருப்பதாகக் கூறுவதாகவே கொள்ளவேண்டும்.

कारणमात्रमेवायं परमपुरुषः; देवादिवैचित्र्ये तु प्रधानकारणं सृज्य भूतक्षेत्रज्ञानां प्राचीनकर्मशक्तय एव। अतो निमित्तमात्रं मुक्त्वा—सृष्टेः

---

"மயைவைதே நிஹதா: பூர்வமேவ நிமித்தமாத்ரம் ப₄வ ஸவ்யஸாசிந்" *[கீதை 11-33] [ஸவ்யஸாசியான அர்ஜுனனே! இவர்கள் என்னால் முன்னமே கொல்லப்பட்டுவிட்டார்கள். நீ நிமித்தமாத்ரமாக (அப்ரத₄ானகாரணமாக) ஆவாயாக]* முதலானவிடங்களில், நிமித்த மாத்ரஶப்தம் அப்ரத₄ானகாரணவிஷயத்தில் பிரயோகிக்கப்பட்டிருப்பதையும் காண்கிறோமன்றோ. இங்கும், மற்றொரு காரணமான கர்மங்களை ஶ்லோகத்தின் பிற்பாதியில் எடுக்கும்போது 'ப்ரத₄ாநகரணீபூ₄தா:' என்று ப்ரத₄ானமாக எடுத்திருப்பதிலிருந்தும், நிமித்தமாத்ரஶப்தம் அப்ரத₄ானகாரணம் என்னும் பொருளையே உடையதென விளங்கும். "அப்படியானால், ஈஶ்வரன் அப்ரத₄ானகாரணமென்பது ஸூத்ரம் முதலானவற்றுக்கு முரண்படுகிறதே; 'ஸ்வதந்த்ர: கர்த்தா' [அஷ்டாத்யாயீ 1-4-54] எனனும் பாணினி ஸூத்ரம தொழில்களைச் செய்யும் கர்த்தாவையே ப்ரத₄ானனாகச் சொல்லுவதும் ஓட்டாதே; ஆகையால ஶ்லோகத்தின முற்பாதியில நிமித்தஶப்தம் நிமித்த காரணத்தையும, பிற்பாதியில் ப்ரத₄ாநகரணஶப்தம் உபாதானகாரணத்தையுமே குறிப்பதாகக் கொள்வது உசிதம்" எனில்,—ஸர்வேஶ்வரனே நிமித்தகாரணமாகவும், உபாத₃ாநகாரணமாகவும் ஆகிறான் என்று கோஷிக்கும் ஶ்ருதிஸ்ம்ருதி ஸூத்ரங்கள் முதலான ப்ரமாணங்களனைத்தும் முரண்படுமாகையாலும், உபாத₃ானத்தைக் கரணம் என்பது உசிதமல்லவாகையாலும் இவ்வாக்ஷேபம் பொருந்தாது. ஸ்ருஷ்டியில் ஏற்றத்தாழ்வுகளுக்கு முக்கியஹேதுவாயிருக்கையாலே ப்ரத₄ானகரணமெனப்படும் கர்மங்களுடைய ஸ்வரூபஸ்தி₂தி ப்ரவ்ருத்திகளும் ஈஶ்வரனாலேயே ஏற்படுகின்றனவாகையால், ஈஶ்வரனுக்குள்ள ஸ்வாதந்த்ர்யமும் குலையாது. இதனாலேயே, இரண்டாவது ஶ்லோகத்திலும் கர்மங்கள் பொதுக்காரணமாக ஈஶ்வரன ஒருவனையே அபேக்ஷிக்கின்றனவென்றும், தனிக்காரணமாகவேறொன்றையும் அபேக்ஷிப்பதில்லையென்றும கூறப்படுகிறது. (இத₃ம்வஸ்து) இந்த க்ஷேத்ரஜ்ஞவஸ்து. முன் பின்பிரகரணங்களிலிருந்து இங்கு வஸ்துவென்று ஸ்ருஷ்டிக்கப்படும ஜீவர்களையே குறிக்கிறது என விளங்கும். (நிமித்தமாத்ரம் முக்த்வா) ஸ்ருஷ்டியைச் செய்யும ஸர்வேஶ்வரனைத்தவிர (நாந்யத் கிஞ்சித் அபேக்ஷதே) நிமித்தமாத்ரமாக வேறு எக்காரணத்தையும் தேவாதி

कर्तारं परमपुरुषं मुक्त्वा इदं क्षेत्रज्ञवस्तु देवादिविचित्रभावे नान्यदपेक्षते; स्वगतप्राचीनकर्मशक्त्यैव हि देवादिवस्तुभावं नीयत इत्यर्थः।

---

ரூபமான ஏற்றத்தாழ்வுகள் விஷயத்தில் எதிர்பார்ப்பதில்லே. (ஸ்வ ஶக்த்யா வஸ்து வஸ்துதாம் நீயதே) தன்னிடத்திலுள்ள (விஷ்ணு) சக்தியெனப்படும். ப்ராசீனகர்மத்தாலேயே ஜீவதத்துவமானது தேவர் முதலான நிலேயை அடைவிக்கப்படுகிறது. ப்ரளயகாலத்தில் கரணகளேபரங்களற்றவர்களாயிருந்த ஜீவர்கள் ஸ்ருஷ்டிகாலத்தில் கர்மத்தாலேயே தேவர் முதலான ஏற்றத்தாழ்வுள்ள சரீரங்களோடும், இந்திரியங்களோடும் படைக்கப்படுகிறார்கள் என்று கருத்து. இப்படிக்கொள்ளாமல், "ஸ்வஶக்தயா அவஸ்து வஸ்துதாம" என்று பதம் பிரித்து முன் இல்லாத வஸ்து உண்டாகிறது என்று பொருள் கொண்டால், விஷ்ணுபுராணத்தில் பலவிடங்களில் உள்ள பொருளே உண்டாகமுடியும் என்னும் ஸத்கார்ய வாதத்தை ஸித்தாந்தம் செய்திருப்பதற்கு முரணபடும். வஸ்துவென்றே பதம் பிரித்து, 'வஸ்துவானது வஸ்துத்தன்மையை அடைகிறது' என்று பொருள் கொண்டால் தன்னுலேயே தானுவது என்னும் ஆத்மாஶ்ரய தோஷம உண்டாகிறது. ஆகையால, முற்கூறியபடி ப்ரளயகாலத்தில் சரீரமற்றிருந்த நிலேயிலிருந்த ஜீவர்கள் ஸ்ருஷ்டியின்போது சரீரத்தோடு கூடிய நிலேயை அடைவிக்கப்படுகிறார்கள் என்றே பொருள கொள்ளவேண்டும். 'ப்ரளயகாலத்தில் ப்ரஹ்மம் ஒன்றேயிருந்தது என்று ப்ரமாணங்கள் கூறுகையால், ஜீவர்கள் இல்லே யென்றனரே தோன்றுகிறது' எனில்,— "ந ஜாயதே ம்ரியதே வா விபஶ்சித்" [கட 1-2-18] [அறிவுடைய ஜீவன பிறப்பதுமில்லே; அழிவதுமில்லே] முதலான ஶ்ருதிகள் ஜீவன் நித்யமானவன் என்று கோஷிக்கையால், 'ப்ரஹ்மம் ஒன்றேயிருந்தது' என்று ஶ்ருதிகள் கூறுவது நாமரூபப்பிரிவற்ற சரீரத்தை உடையதாயிருந்தது என்னும் கருத்தையே உடையது என்பதை, "ந கர்மாவிப₄ாக₃ாதி₃தி சேந்நாநாதி₃த்வாது₃பபத்₃யதே சாப்யுபலப்₄யதே ச ||" [ப்ர·ஸூ 2-1-35] ["(ஸ்ருஷ்டி காலத்தில்) கர்மமில்லே; (அக்காலத்தில்) ப்ரஹ்மம் தவிர்ந்த வேறென்றில்லேயென ஶ்ருதி கூறுவதிலிருந்து (ஜீவனில்லே என்று தேறுகிறபடியால்)" என்று கூறினல், அது சரியல்ல; ஜீவன் அநாதியாகையால்; (அநாதியாயினும், ப்ரஹ்மம் ஒன்றே இருந்தது என்ற ஶ்ருதியும்) பொருந்தும. (ஜீவன் அநாதி என்று ஶ்ருதியிலும்) காணப்படுகிறது.] என்னும ஸூத்ரத்திலே வேதவ்யாஸர் விளக்கினர். ஆகையால், எக்குறையுமில்லே.

एवमुक्तेन प्रकारेण सृष्ट्यादेः कर्तारमप्यकर्तारं सृष्ट्यादिकर्मफलसङ्गरहितं च यो मामभिजानाति; कर्मयोगारम्भविरोधिभिः फलसङ्गादिहेतुभिः प्राचीनकर्मभिर्न स बध्यते—मुच्यत इत्यर्थः ॥ १४ ॥

---

ஆக, ஶ்லோகத்தின் முற்பாதியால், தானே கர்த்தாவாகவும், அகர்த்தாவாகவுமிருப்பதில் விரோதமில்லை என்று காட்டப்பட்டது, இனி உத்தரார்த்தத்தாலே, இவ்விஷயத்தை அநுஸந்திப்பவன கர்மயோகம் தொடங்குவதற்குத் தடையாயிருக்கும் பாபங்களினின்றும் நீங்கப்பெறுவான் என்கிறுன். (இதி மாம யோऽபி$_4$ஜாநாதி) 'சாதுர்வர்ண்யம்' என்று தொடங்கி ஒனறரை ஶ்லோகத்திற் சொன்னபடி, ஸ்ருஷ்டி முதலானவற்றுககுப் பொதுக்காரணமாயிருந்தபோதிலும், அவற்றிலுள்ள ஏற்றத்தாழ்வுகளுக்கு விஶேஷ காரணமாயிராதவனுகவும், ஸ்ருஷ்டி முதலானவற்றின் பலத்திலும் பற்றற்றிருப்பவனுகவும் என்னை எவன் அநுஸந்திக்கிருனே; 'ஜாநாதி' என்னுமல், 'அபி$_4$ஜாநாதி' என்றதால், கர்மயோகத்திற்கு அங்கமாக இப்படி அநுஸந்திக்கவேண்டும் என்று காட்டுகிருன். (கர்மபி$_4$ர் ந ஸ ப$_3$த்$_4$யதே) கர்மயோகத்திற்குத் தடையாயிருக்கும் ப்ராசீனமான புண்யபாபகர்மங்களால் அவன் கட்டுப்படுவதில்லை. மேலே, பக்திருபமான ஜ்ஞானத்நாலேயே ஸர்வகர்மங்களும் விடுபடும் என்று சொல்லப்போகிறதாகையாலே, இங்கு 'கர்மபி$_4$:' என்று ஸர்வகர்மங்களையும் குறிக்கமுடியாது, பக்தியோகம் கைவந்த பின்பே புகுதருவான் நின்றனவான உத்தராக$_4$ங்கள் ஓட்டாமலிருக்குமாகையால், 'கர்மபி$_4$:' என்று அவற்றையும் குறிக்கமுடியாது அடுத்த ஶ்லோகத்தில் 'இவ்வண்ணமாக அறிந்து முனனோர்களான முமுக்ஷுக்கள் கர்மயோகத்தையே செய்தார்கள்' எனறு கர்மயோகத்தைச் செய்ய ஹேதுவாக இவ்வநுஸந்தானம் கூறப்படுகிறதாகையால், பிரகரணத்தையொட்டி, கர்மயோகத்திற்குத்தடையாயிருக்கும் கர்மங்களே இவ்வநுஸந்தானத்தால் விடுபடுவதாகக் கொள்ள வேண்டும். இக்கர்மங்கள் கர்மயோகத்தைத் தடை செய்வது எப்படி? எனில்: ப$_2$லன்களில் பற்றை விளைத்து நிஷ்காம கர்மயோகத்தைத் தடை செய்கினறன என்று கண்டு கொள்வது. அன்றிக்கே, இப்ராசீனகர்மங்கள் க்ஷுத்$_3$ரப$_2$லன்களில் பற்றிலுலே செய்யப்பட்டவையாகையால், அந்த க்ஷுத்$_3$ரப$_2$லன்களையே இவனுக்குக் கொடுத்து இவனை நிஷ்காமகர்மயோகத்தில் ஈடுபடமுடியாதபடி

एव ज्ञात्वा कृत कर्म पूर्वैरपि मुमुक्षुभिः।
कुरु कर्मैव तस्मात्त्व पूर्वैः पूर्वतर कृतम्॥१५॥

15 ஏவம ஜ்ஞாதவா கருதம காம பூாவைரபி முமுக்ஷுபி₄ ।
குரு காமைவ தஸமாத தவம பூாவை பூாவதரம கருதம॥

ஏவம ஜ்ஞாதவா—*இவவணணமாக (எனனை) அறிநது (பாபம நீஙகப பெறற)* பூாவை முமுக்ஷுபி₄ அபி-*முனனோ களான முமுக்ஷுககளாலும* காம-*முறகூறிய காமயோகம* கருதம-*செயயபபடடது* தஸமாத-*ஆகையால* தவம—*நீயும (எனனைபபறறிய முறகூறிய அறிவினல பாபம நீஙகப பெறறு)* பூாவை-*ஸூாயன மனு முதலான முனனோ களால* கருதம-*செயயபபடடதான* பூாவதரம *பழையதான,* காம ஏவ-*காமயோகததையே* குரு-*செயவாயாக*

---

15 இனனே யறிநது கருமததை யேனறியனரூா
முனனேவீ டெயத முயலவாரு—மனனேநீ
தொலலையாா தாமுயனற தொலகருமங தனனையே
யொலலையாய நினறியலவா யுறறு

இனனே அறிநது—*இவவணணமாக (எனனை) அறிநது* முனனே வீடு எயத முயலவாரும—*முறகாலததில மோக்ஷ மடைய முயனறவாகளும* கருமததை ஏனறு—*காமயோகத தையே ஏறறுககொணடு* இயனரூா-*(அதை) முடிய அநுஷ டிததாாகள்* அனனே—*அவவணணமாகவே* நீ-*நீயும* தொலலையாா தாம முயனற தொல கருமம தனனையே—*(ஸூாயன மனு முதலான) முனனோாகள தாமே அநுஷடிதத பழையதான காமயோகததையே* உறறு நினறு-*ஏறறுக கொணடு* ஒலலையாய இயலவாய-*விரைவில அநுஷடிபபாய*

---

செயகினறன எனறும கொளளலாம (ந ப₃த₄யதே) கடடபபடுவ திலலை இநத பராசீனகாமஙகளால ஏறகனவே கடடபபடடிருபபவா அவறறினினறும விடுபடுகிறான் எனறு கருதது ஆக இரணடு ஸலோகஙகளாலும காமயோகததின தொடககததிறகுத தடையா யிருககும பாபஙகள நீஙகுவதறகு வழிகாடடினுைறது 14

॥भा॥ एव मा ज्ञात्वा विमुक्तपापै पूर्वैरपि मुमुक्षुभिरुक्तलक्षण कर्म कृतम्। तस्मात्त्वमुक्तप्रकारमद्विषयज्ञानविधूतपापः पूर्वैर्विवस्वन्म -

15 முனனிரணடு ஶலோகஙகளிறசொன்ன அனுஸநதானததோடு கூடவே முனனோாகள காமயோகததை அநுஷடிததாாகள எனறு கூறுவதனமூலம ஶிஷடாசாரததைககாடடிக காமயோகமே செயயததககது எனறு வலியுறுததி அாஜுனனையும அககாமயோகததையே செயயுமபடி நியமிககிருன (ஏவம ஜஞாதவா) முனனிரணடு ஶலோகஙகளிற சொனனபடி ஜகதஸருஷடி முதலானவறறுககுக காரணமாகவும அவறறில ஏறறததாழவுகளுககுக காரணமலலாதவனுகவும அவறறின பலனில பறறறறவனுகவும எனனை அறிநது (ஜஞாதவா காம கருதம) இவவனுஸநதானததோடு கூடவே காமயோகததைச செயதாாகள ஜஞாதவா காம கருதம எனகையாலே இவவறிவு காமயோகததைத தொடஙகுவதறகு ஹேது எனறு உணாததபபடுகிறது காமபி₄ா ந ஸ பத₄யதே எனறு முன ஶலோகததில இபபடி அறிநது அனுஸநதிபபவனுககுச சில பாபஙகள நீஙகும எனறு கூறபபடடது ஆகையால காமயோகததைத தொடஙகுவதறகுத தடையான பாபஙகளை நீககுவதனமூலம இவவறிவு காமயோகததிறகு ஹேதுவாகிறது எனறு உணாததபபடுகிறது இபபடிக் காமயோகததைச செயதவாகள தான யாரெனனில (பூாவை அபி முமுக்ஷுபி₄) இமம விவஸவதே எனறு தொடஙகி இவவததியாயததின தொடககததில சொலலபபடட ஸூாயன மனு முதலான முமுக்ஷுககளால காமயோகம செயயபபடடது (முமுக்ஷுபி₄ காம கருதம) முமுக்ஷுககளால செயயபபடடதாகக கூறபபடுகையால இஙகு காமபதம முன ஶலோகததில சொலலபபடட புணயபாபகாமஙகளைககூறுமல அதறகு முன மோக்ஷஸாத₄னமாகக கூறபபடடதாய இநதப பிரகரணததின முககியபரமேயமான காமயோகததையே சொலலுகிறது ஆகபபூாவாாததததாலே காமயோகததிறகு சிஷடாசாரததைககாடடினுயிறறு இபபடி முனனோாகளான முமுக்ஷுககளால செயயபபடட காமயோகததையே நீயும செயவாயாக எனறு அாஜுனனை நியமிககிருன உததராாததததாலே –(தவம) எனனிடமிருநது எனனைபபறறிய முறகூறிய அறிவைப பெறறவனுகையாலே காமயோகததைததொடஙகத தடையாயிருககும பாபஙகள நீஙகப பெறற நீ (பூாவை கருதம காமைவ) முனனோாகளான முமுக்ஷுகக

न्वादिभिः कृतं पूर्वतरं—पुरातनं तदानीमेव मयोक्तं वक्ष्यमाणाकारं कर्मैव कुरु॥ १५॥

॥ भा॥ वक्ष्यमाणस्य कर्मणो दुर्ज्ञानतामाह—

किं कर्म किमकर्मेति कवयोऽप्यत्र मोहिताः।
तत्ते कर्म प्रवक्ष्यामि यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात्॥ १६॥

16. கிம் கர்ம கிமகர்மேதி கவயோSப்யத்ர மோஹிதா:।
தத் தே கர்ம ப்ரவக்ஷ்யாமி யத் ஜ்ஞாத்வா
மோக்ஷ்யஸேSஶுப₄ாத்॥

கவய: அபி—*அறிவாளிகளும்,* கிம் கர்ம—*(முமுக்ஷுவினால் அனுஷ்டிக்கத்தக்க) கர்மம் எது,* அகர்ம கிம்—*(அதிலடங்கிய) ஞானம் எது,* இதி அத்ர—*என்னும் இரண்டு விஷயத்திலும்,* மோஹிதா:—*(அறிவின்மையாலே) மயங்கி நிற்கிறார்கள்;* யத்—*எதை,* ஜ்ஞாத்வா—*அறிந்து (அநுஷ்டித்து),* அஶுப₄ாத்—*அமங்களமான ஸம்ஸாரக்கட்டினின்றும்,* மோக்ஷ்யஸே—*விடுபடுவாயோ,* தத்—*அத்தகையதான,* கர்ம—*(ஞானத்தோடு கூடிய) கர்மத்தை,* தே—*உனக்கு,* ப்ரவக்ஷ்யாமி—*நன்கு சொல்லப்போகிறேன்.*

---

16. ஏது கருமமாங் கேதுணர்வா மென்றறியார்
மூதுணர்வி னின்ருரு மோகிப்பர்—மீதுனக்கிங்
கக்கருமந் தன்னை யமர்ந்துரைக்கே னுங்கதனை
மிக்குணர்ந்தே தீங்ககல்வை விட்டு.

---

*ளால் செய்யப்பட்ட கர்மயோகத்தையே. (பூர்வதரம் கர்மைவ) இந்த யுகத்தின் தொடக்கத்திலேயே ஸூர்யனுக்கு என்னால் உபதேசிக்கப் பட்ட பழையதான கர்மயோகத்தையே. (கர்மைவ குரு) "கர்மண்ய கர்ம" [4-18] என்று தொடங்கி இவ்வத்தியாயத்தில் சொல்லப் போகும் கர்மயோகத்தையே செய்வாயாக—என்று கருத்து. இவ் வத்தியாயத்தில் பதினேழாவது ஶ்லோகம் முடியக் கர்மயோகத்தைப் பற்றிய உபதேசத்திற்கு உபோத்₃க₄ாதமே என்பதும், அதற்கு மேலேயே கர்மயோகத்தின் ஸ்வரூப ஸ்வப₄ாவங்கள் உபதேசிக்கப் படுகின்றன என்பதும் அறியத்தக்கது.* 15.

॥भा॥ मुमुक्षुणाऽनुष्ठेयं कर्म किंरूपम्, अकर्म च किम्; अकर्मेति कर्तुरात्मनो याथात्म्यज्ञानमुच्यते; अनुष्ठेयं कर्म तदन्तर्गतं

---

**மூதுஉணர்வின் நின்றாரும்**—முன்னோர்களான அறிவாளிகளும், **ஏது கருமம்**—(முமுக்ஷுவினால் அனுஷ்டிக்கத்தக்க) கருமம் எது, **ஆங்கு**-அக்கர்மத்தில் அடங்கிய, **உணர்வு ஏதாம்**-அறிவு எதுவாகும், **என்று**-என்னும் விஷயத்தை, **அறியார் மோகிப்பர்**— அறியாமல் மயங்குவர்; **இங்கு**—இப்போது இவ்விடத்திலேயே, **உனக்கு**-உனக்கு, **மீது அக்கருமம் தன்னை**-(ஞானத்தோடு கூடியிருக்கையால்) சிறந்து நிற்கும் அக்கருமத்தையே, **அமர்ந்து உரைக்கேன்**-நன்றாக உபதேசிக்கப்போகிறேன்; **ஆங்கு அதனை**— அத்தகைய கர்மத்தை, **மிக்கு உணர்ந்தே**—நன்றாக அறிந்து (அநுஷ்டித்து), **தீங்கு**-தீயதான ஸம்ஸாரக்கட்டுதனை, **விட்டு அகல்வை**—கைவிட்டு அகன்றிடுவாய்.

---

16. சொல்லப்போகும் கர்மயோகம் அறிய அரிது என்று காட்டுகிறான் இந்த ஶ்லோகத்தில். (கிம் கர்ம) முமுக்ஷுவினால் அனுஷ்டிக்கத்தக்க கர்மம் எது. "க்ருதம் கர்ம பூர்வைரபி முமுக்ஷுபி₄:" முதலான பிரகரணத்தையொட்டியும், இந்த ஶ்லோகத்திலேயே 'மோக்ஷ்யஸேऽஶுபா₄த்' என்று கூறியிருப்பதாலும், இங்கு கர்மஶப்தம் முமுக்ஷுவினால் அநுஷ்டிக்கத்தக்க கர்மத்தையே குறிக்கிறது. (கிம் அகர்ம) கர்மத்தைக் காட்டிலும் வேறுபட்ட ஞானம எது. கீதையில் பலவிடங்களில் கர்மத்தைக் காட்டிலும் வேறுபட்ட ஜ்ஞானம அகர்மஶப்தத்தால் குறிக்கப்படுவதைக் காண்கிறோம். இங்கு எத்தகைய ஜ்ஞானம் குறிக்கப்படுகிறது என்று ஆராயுமளவில், முற்கூறிய கர்மத்தில் அடங்கிய ஆத்மாவைப்பற்றிய உண்மையறிவே 'அகர்ம' என்று இங்கு சொல்லப்படுவதாகக் கொள்ளவேண்டும். ஏனெனில்: பதினெட்டாவது ஶ்லோகத்தில் 'கர்மண்யகர்ம ய: பஶ்யேத்' என்று கர்மமும், அகர்மமும் ஒன்றான கர்மயோகத்தின் அம்சங்களே என்று கூறப்படுகிறது. அந்த ஶ்லோகத்திலேயே உத்தரார்த்தத்தில் 'தத் தே கர்ம ப்ரவக்ஷ்யாமி' எனறு, அகர்மமும் கர்மமும் கர்மஶப்தத்தாலே அநுவதிக்கப்படுகின்றன. ஆகையால், இங்கு கர்மத்தில் அடங்கிய

ज्ञानं च किंरूपमित्युभयत्र कवयः—विद्वांसोऽपि मोहिताः—यथावन्न जानन्ति। एवमन्तर्गतज्ञानं यत्कर्म तत्ते प्रवक्ष्यामि; यत् ज्ञात्वाऽनुष्ठाय अशुभात्—संसारबन्धात् मोक्ष्यसे; कर्तव्यकर्मज्ञानं ह्यनुष्ठानफलम्॥ १६॥

---

தாய், கர்த்தாவான தன்னைப்பற்றிய ஆத்மயாத்₂ாத்ம்யஜ்ஞானமே (ஆத்மாவைப் பற்றிய உண்மையறிவே) அகர்மஶப்தத்தால் குறிக்கப்படுகிறது என்று தெளிவாகிறது. (இத்யத்ர) அநுஷ்டிக்கத் தக்க கர்மமும், அதிலடங்கிய அறிவும் ஆகிய இரண்டும் எத்தகையது என்னும் விஷயத்தில். (கவயோபி மோஹிதா:) அறிவாளிகளும் மயங்குகிருர்கள். "கவய: க்ராந்தத₃ர்ஶிந:" [(புலனகளுக்கு) அப்பாற்பட்ட விஷயங்களையும் காணபவர்கள் கவிகள.] என்று பிரஸித்தியுள்ளதாகையாலும், கவிபாடும கவிகளைப்பற்றி இங்கு சொல்லுவதில் பயனில்லையாகையாலும இங்கு கவிஶப்தம பேரறிவாளர்களைக் குறிக்கிறது. (மோஹிதா:) சாஸ்திரவசனங்கள் பலவாறு இருப்பதாலே கர்மாகர்மங்களைப் பற்றிய அஜ்ஞானத்தாலும் (அறியாமையாலும்), அயதா₂ஜ்ஞானத்தாலும் (ஸ்வரூபஸ்வபா₄வங்களைத் தவருக அறிவதாலும) மயங்கி நிற்கிருர்கள் என்று கருத்து. (தத் தே கர்ம ப்ரவக்ஷ்யாமி) முற்கூறியபடி அறிவை உள்ளடக்கிய கர்மத்தை உனக்கு நானு உபதேசிக்கப்போகிறேன். முற்பாதியில் "கிம் கர்ம கிமகர்ம" என்று கர்மாகர்மங்களிரண்டைப்பற்றியும் பேசிவிட்டு இங்கு 'தத் கர்ம' என்று ஒன்றையே எடுப்பதிலிருந்தும், முன் ஶ்லோகத்தில் 'குரு கர்மைவ' என்றும், பின ஶ்லோகத்தில் 'க₃ஹநா கர்மணோ க₃தி:" என்று கர்மத்தைப்பற்றியே பேசுகையிலிருந்தும் கர்மமே ப்ரதானமானது, ஜ்ஞானம் அதில் அடங்கியதாகையாலே அப்ரதா₄னமானது என்று தேறுகிறபடியால், 'தத் கர்ம' என்று முற்கூறிய ஜ்ஞானத்தோடு கூடிய கர்மம என்றே பொருள்கொள்ள வேண்டும். (யத்₃ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽஶுபா₄த) யாதொரு கர்மத்தை அறிந்தால, நீ அமங்களமான ஸம்ஸாரக்கட்டினின்றும் விடுபடுவாயோ, அத்தகைய கர்மத்தை உனக்குச் சொல்லப் போகிறேன் என்று கீழோடு அந்வயம். கர்மயோகம் நிறைவடைந்து பக்தியோகம் உண்டாகி, அது நிறைவடைந்தபின் உண்டாகும் ஸம்ஸாரப₃ந்த₄ மோக்ஷத்திற்குக் கர்மயோகமே பரம்பரயா காரணமாகிறதாகையால் கர்மத்திலிருந்து ஸம்ஸார ப₃ந்த₄மோக்ஷம் உண்டாவதாக இங்கு கூறப்படுகிறது. (யத்

॥ भा ॥ कुतोऽस्य दुर्ज्ञानतेत्यत्राह—

कर्मणो ह्यपि बोद्धव्यं बोद्धव्यं च विकर्मणः।
अकर्मणश्च बोद्धव्यं गहना कर्मणो गतिः॥१७॥

**17.** கர்மணோ ஹ்யபி போ₃த்₃த₄வ்யம் போ₃த்₃த₄வ்யஞ்ச விகர்மண: ।
அகர்மணஶ்ச போ₃த்₃த₄வ்யம் க₃ஹநா கர்மணோ க₃தி: ॥

ஹி-ஏனெனில்; கர்மண: அபி— *கர்மஸ்வரூபவிஷயத்திலும்,* போ₃த்₃த₄வ்யம்-*அறியத்தக்கது உள்ளது;* விகர்மண: ச-*விதவிதமான கர்மங்களிலும்,* போ₃த்₃த₄வ்யம்— *அறியத்தக்கது உள்ளது.* அகர்மண: ச— *(கர்மத்தில் அடங்கிய) ஜ்ஞானத்திலும்,* போ₃த்₃த₄வ்யம்—*அறியத்தக்கது உள்ளது.* *(ஆகையால்),* கர்மண: க₃தி:-*கர்மத்தில் அறியத்தக்க அம்ஶம்,* க₃ஹநா-*அறிய அரிதாய் உள்ளது.*

---

**17.** இக்கருமத் துக்கு மிதில்விவித மானதுக்கு
மக்கரும மல்லா வறிவுக்கும்—மிக்க
வறிவுடைமை வேண்டு மதுவுரைக்கி லாங்குப்
பிறிதுணர்வு தானரிது பின்.

இக்கருமத்துக்கும்—*இந்தக் கர்மஸ்வரூபவிஷயத்திலும்,* இதில் விவித்மானதுக்கும்—*கர்மத்தில் பலவகைப்பட்டிருக்கு*

---

ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸே) எந்தக் கர்மத்தை அறிந்து அநுஷ்டித்தால் நீ மோக்ஷமடைவாயோ. கர்மத்தை அறிவது அதை அநுஷ்டிப்பதற்கேயாகையாலும், முன் ஶ்லோகத்தில் 'குரு கர்மைவ' என்று கர்மத்தை அநுஷ்டிக்கச் சொல்லுகிறபடியாலும், கர்மத்தை அறிவதால் மாத்திரம் மோக்ஷமுண்டாகுமாகில் அதை அநுஷ்டிக்கச் சொல்லும் விதி பயனற்றுப் போகுமாகையாலும், இங்கு அறிவதைச் சொன்னது, அஜ்ஹல்லக்ஷணையாலே அறிந்து அநுஷ்டிப்பதைக் குறிக்கிறது. ஆக, இந்த ஶ்லோகத்தால், ஆத்ம யாதா₂த்ம்ய ஜ்ஞானத்தோடு கூடிய கர்மத்தைப் பேரறிவாளர்களும் சரியாக அறியமாட்டார்கள் என்று கூறுவதன்மூலம் கர்மயோகம் அறிதற்கரிது என்று காட்டப்பட்டதாயிற்று. 16.

॥ भा ॥ यस्मान्मोक्षसाधनभूते कर्मस्वरूपे बोद्धव्यमस्ति, विकर्मणि च। नित्यनैमित्तिककाम्यरूपेण, तत्साधनद्रव्यार्जनाद्याकारेण च विविधता[मा]पन्नं कर्म विकर्म। अकर्मणि—ज्ञाने च बोद्धव्यमस्ति।

---

மவற்றின் விஷயத்திலும், **அக்கருமம் அல்லா அறிவுக்கும்**— அந்தக் கர்மத்தைக் காட்டிலும் வேறுபட்ட அறிவு விஷயத்திலும், **மிக்க அறிவுடைமை வேண்டும்**—அறியவேண்டியது மிகவும் உண்டு, **பின்**—இப்படியானபின்பு, **அது உரைக்கில்**— அக்கர்மத்தைப்பற்றிப் பேசப்புகுந்தால், **ஆங்கு**—அவ்விஷயத்தில்; **பிறிது உணர்வுதான் அரிது**— அறியத்தக்கதை அறிவது மிகவும் அரியதாகும்.

---

17. கர்மயோகம் அறிவாளிகளுக்கும் அறிய அரிது என்றான் முன் ஶ்லோகத்தில்; அது அறிவரிதாயிருப்பதற்குக் காரணத்தை விளக்குகிறான் இந்த ஶ்லோகத்தில். (ஹி) முன் ஶ்லோகத்தில் சொன்ன அறிதற்கருமைக்குக் காரணம் இந்த ஶ்லோகத்தில் விளக்கப்படுகிறது என்று கருத்து. (கர்மண: அபி போ₃த்₃த₄வ்யம) மோக்ஷஸாத₄னபூ₄தமான கர்மவிஷயத்திலும அறியத்தக்க அம்ஶம உள்ளது. 'கர்மண:' என்றவிடத்தில் ஸம்ப₃ந்த₄ஸாமாந்யார்தத₂த்தில் ஷஷ்டி (ஆறாவது வேற்றுமை) பிரயோகிக்கப்பட்டுள்ளது. மேலே, நாலாம் பாதத்தில் 'கர்மண: க₃தி:' என்று கர்மத்தில் அறியத்தக்க அம்ஶம் கூறப்படுகிறதாகையால், இங்கும அவ்வம்ஶத்தைப் பற்றியே கூறுவதாகக்கொள்ளவேண்டும். (விகர்மண: ச போ₃த்₃த₄வ்யம்) நித்யம், நைமித்திகம், காம்யம் என்று மூவகைப்பட்டிருப்பதாய், அம்மூவகைப்பட்ட கர்மங்களுக்கும் ஸாதனமான பொருள்களை ஸம்பாதிப்பது, அவற்றை ரக்ஷிப்பது, இவற்றுக்குறுப்பான உபாயங்களில் ஈடுபடுவது என்று இப்படிப் பலவகைப்பட்டிருக்கும் கர்மமாகையாலே விகர்மமெனப்படும் அதுவிஷயத்திலும் அறியத்தக்க அம்ஶம் உள்ளது. "பாஷண்டி₃நோ விகர்மஸ்த₂ாந்" [வி. பு. 3-18-97] முதலானவிடங்களில் கூறப்படும் விருத்தகர்மத்தை இங்கு விகர்மமாகக் கூறுவதில் பயனில்லையாகையால், விதவிதமான கர்மத்தையே 'விகர்ம' எனபதாகக் கொள்ள வேண்டும். (அகர்மண: ச போ₃த்₃த₄வ்யம்) முன் ஶ்லோகத்தில் சொன்னபடி கர்மயோகத்திலடங்கிய ஆத்மயாத₂ாத்ம்யஜ்ஞான மாகிற அகர்மவிஷயத்திலும் அறியத்தக்க அம்ஶம் உள்ளது.

गहना—दुर्विज्ञाना मुमुक्षोः कर्मणो गतिः। विकर्मणि बोद्धव्यं—नित्यनैमित्तिककाम्य(तत्साधन)द्रव्यार्जनादौ कर्मणि फलभेदकृतं वैविध्यं परित्यज्य मोक्षैकफलतयैकशास्त्रार्थत्वानुसन्धनम्। तदेतत् *व्यवसायात्मिका बुद्धिरेका (२. ४१) इत्यत्रैवोक्तमिति नेह प्रपञ्च्यते॥ १७॥

---

இங்கு 'விகர்ம' ஶப்தத்தால், (சாஸ்திரங்களால்) தடுக்கப்பட்ட கர்மம் சொல்லப்படுவதாகவும், 'அகர்ம'ஶப்தத்தால் கர்மம் செய்யாமல் க்ஷமமாயிருப்பது சொல்லப்படுவதாகவும் சங்கரர் வியாக்கியானம் செய்தார். இப்படியாகில், 'க₃ஹநா கர்மணோ க₃தி:' என்று இந்த ஶ்லோகத்தின் கடைசிப்பாதத்தில் 'கர்மத்தில் அறியத்தக்க அம்ஶம் அறிவரிதாய் உள்ளது' என்று கர்ம விகர்ம அகர்மஶபதங்கள் மூன்றையும் கர்மஶப்தத்தாலேயே அநுவாதம் செய்திருப்பது பொருந்தாது. அகர்மவிகர்மங்களையும் கர்மஶப்தம் உபலக்ஷணமுறையிலே காட்டுகிறது என்று நிர்வஹிப்பதைக்காட்டிலும், அகர்மவிகர்மங்கள் கர்மத்தில் அடங்கியவையே என்று நிர்வஹிப்பது சிறந்தது. ஆகையால், அகர்மவிகர்மங்களடங்கிய கர்மம மிக அறிவரிது என்று ஶ்லோகத்தின் கடைசிபாதத்தில் நிக₃மனம் செய்கிறுன என விளங்குகிறது. (கர்மணோ க₃தி: க₃ஹநா) இவ்வண்ணமாகக் கர்மஸ்வரூபத்தைப்பற்றியும அதிலடங்கிய விதவிதமான கர்மங்களைப் பற்றியும், ஜ்ஞானத்தைப்பற்றியும அறியவேண்டிய அம்ஶங்கள் உள்ளனவாகையால், முமுக்ஷு அநுஷ்டிக்கவேண்டிய கர்மத்தில் அறியவேண்டிய அம்ஶம அறிவரிதாயுள்ளது. (க₃ஹநா) (ஞானத்தினுல்) நுழைய அரிது; அறிவரிது என்று கருத்து. (க₃தி:) அடுத்த ஶ்லோகததில் கர்மாகர்மங்களில் அறியவேண்டிய அம்ஶததைபபற்றியே பேசுகிறுனகையாலே, இங்கு 'க₃தி' ஶப்தம் அறியவேண்டிய அம்ஶத்தையே குறிக்கிறது. இனி, 'அடுத்த ஶ்லோகத்தில கர்மாகர்மங்களைப்பற்றிப்பேசியிருக்கிறதேயொழிய விகர்மத்தைபபற்றிப் பேசவில்லையே' என்னும கேள்வியும, 'மோக்ஷத்தை விரும்பும் கர்மயோகநிஷ்டனுக்குப் பலாந்தரங்களைப் பற்றிநிற்கும் விகர்மங்களில் அறியத்தக்கது என்ன இருக்கிறது' என்னும கேள்வியும எழுகின்றன. இதற்கு ஸமாதானமாவது,—நித்யம், நைமித்திகம், காம்யம், இக்கர்மங்களுக்கு ஸாதனமான பொருள்களை ஸம்பாதிப்பது முதலான பலவகைப்பட்ட கர்மங்களுக்குக் கூறப்படும் பலன்களில் ஆசையைக்

॥भा॥ कर्माकर्मणोर्बोद्धव्यमाह—

कर्मण्यकर्म यः पश्येदकर्मणि च कर्म यः।
स बुद्धिमान्मनुष्येषु स युक्तः कृत्स्नकर्मकृत्॥१८॥

18 காமணயகாம ய பஶயேத₃காமணி ச காம ய ।
ஸ பு₃த்₃தி₄மாந மநுஷயேஷு ஸ யுகத கருதஸநகாமகருத॥

காமணி—(செயயபபடும) காமததில அகாம—காமத தைக காட்டிலும வேறுபட்ட ஆதமஜஞானததை ய—எவனொருவன பஶயேத—காணகிறானோ அகாமணி ச—ஆதமஜஞானததிலும காம—காமததை ய (பஶயேத)—எவன காணகிறானோ ஸ—அவனே பு₃த்₃தி₄மாந—ஶாஸதிராாததம முழுவதையும அறிநதவன ஸ—அவனே மநுஷயேஷு—மனிதாகளுககுள யுகத—மோக்ஷததிறகுத தகுநதவன (ஸ—அவனே) கருதஸநகாமகருத—காமம முழுவதையும செயபவன

18 கனமததின ஞானததைக காணு மவனெவனாுன
கன்மத்தை ஞானத்திற கணடியலவான—நன்மைக்கே
தககபெரும புததி சமைநதா னவனவனே
யெக்கருமஞ் செயதானு மிஙகு

எவன தான—எவனொருவன கனமததில—(செயயபபடும) காமததில ஞானததை—ஆதமஜஞானததை காணுமவன—காணகிறானோ ஞான்ததில—ஆதமஜஞான்ததில கனமததை—காமததை கணடு—கணடு இயலவான—அனுஷடிககிறானே அவன—அவனே நனமைககே தகக—

கைவிடடு மோக்ஷமொன்றுக்கே ஸாதனமாக ஒரே சாஸதிராாததமாக அவறறை அநுஸநதிககையே விகாமததில முமுக்ஷுவுககு அறியததகக அமஶமாகும இவவிஷயம வயவஸாயாதமிகா பு₃த்₃தி₄ ரேகா [கீதை 2 41] எனனும ஶ்லோகததில ஏறகனவே சொலலப பட்டுவிட்டதால கணணன மேல ஶ்லோகஙகளில இதை விவரிககவிலலை எனகை

॥भा॥ अकर्मशब्देनात्र कर्मेतरत्प्रस्तुतमात्मज्ञानमुच्यते। कर्मणि क्रियमाण एवात्मज्ञान य· पश्येत्, अकर्मणि चात्मज्ञाने वर्तमान

மோக்ஷததிறகே உரிய பெரும புதகி சமைநதான—பேரறிவைப பெறறிருபபவன அவனே–அவனே இஙகு—இவவுலகில எககருமம செயதானும—காமம முழுவதையும செயதவனும ஆவான

18 முன ஸலோகம வரையில காமயோகோபதேஸததிறகுப பீடிகையாயமைநதது இனி காமயோகம உபதேசிககபபடுகிறது அதில இநத ஸலோகததின முதலபாதததாலே காமகதில அறியத் தக்கதையும இரணடாம பாதததாலே ஞானததில அறியததக்கதையும உபதேசிககையாலே இநத ஸலோகம முன ஸலோகததிற்கு விவரணமாகவுமிருககிறது (காமணி அகாம ய பஸயேத) காமம செயயுமபோதே அதில ஆதமஜஞானததை - எவன காணகிறுனே இஙகு அகாமஸபதமானது காமமினமையைக் காடடுவதாகச சிலரும ஜஞாநயோகததைக காடடுவதாகச சிலரும வியாககியானம செயதனா முனபின பிரகரணஙகளுககு முரணபடுமாகையாலே அநத வியாககியானஙகள பொருநதமாடடா பரகரணததை ஓடடிய் பொருளை எப்படி நிஷகாஷிபபது எனில அகாம எனறது ந–காம என்று பிரியும முதலிலுள்ள நஞ்ஞிறகு உள்ள பல பொருளகளில தத்₃நயதவம (அதிலும வேறு பட்டிருககை) எனபதும ஒனறு இபபொருளைக கொளளுமபோது அகாமஸபதம காமததிலும வேறுபடட ஒனறைக காட்டுகிறது வேறுபடடது எது எனனும கேளவியெழுநதவளவில சாஸதிரங களில காமஜஞான்ஙகள எனறு சோதிதே எடுககபபடும இரணடில காமததைக காட்டிலும வேறுபடடதான ஜஞானமே இஙகு அகாமமெனபபடுகிறது எனறு கொளவதே பொருநதும கீதையில பலவிடஙகளில காமததிலும வேறுபடட ஜஞானம அகாமஸபதததால குறிககபபடுவதையும காணகிறோம இஙகு எததகைய ஜஞானம குறிககபபடுகிறது எனறு ஆராயுமளவில காமததில அடஙகியதாய கீதையின இரணடாமததியாயததிலேயே விரிவாகக கூறபபடடதான ஆதமாவைபபறறிய உணமையறிவே அகாம எனறு இஙகு கூறபபடுவதாகக கொளளவேணடும ஜஞானயோகம முதலானவறறைக கொளளககூடாதோ எனில காமததில

एव यः कर्म पश्येत्। किमुक्तं भवति? क्रियमाणमेव कर्मात्म-याथात्म्यानुसन्धानेन ज्ञानाकारं यः पश्येत्, तच्च ज्ञानं कर्म[योगा]ण्यन्तर्गत-

---

அகர்மத்தை எவன் காணகிருனே' என்று இங்கு சொல்லப்படும் ஜ்ஞானம் கர்மத்தில் அடங்கியதாகக் கூறப்படுகையாலே, கர்மத்தில அடங்காததான ஜ்ஞானயோகம முதலானவை பொருளாகமாட்டா; பதினுருவது ஶ்லோகத்தில் 'கிம கர்ம கிமகர்ம' என்று கர்மாகர்மங்களைப்பற்றிப் பேசிவிட்டு, 'தத் தே கர்ம ப்ரவக்ஷ்யாமி' என்று இரண்டையும் கர்மஶப்தத்தாலேயே அநுவதித்திருப்பதிலிருந்தும் 'குரு கர்மைவ' என்று பதினைந்தாம ஶ்லோகத்தில் கர்மமே செய்யத்தக்கதெனறு கூறியிருப்பதிலிருந்தும, கர்மாகர்மவிகர்மங்களைப்பற்றிப் பேசிவிட்டு, 'க₃ஹநா கர்மணோ க₃தி:' என்று பதினேழாவது ஶ்லோகத்தில் கர்மஶப்தத்தாலே அவற்றை அநுவதிததிருப்பதிலிருந்தும, கர்மயோகத்தை உபதேசிக்கும பிரகரணமான இங்கு 'கர்மத்தில் அடங்கிய ஆத்மஜ்ஞானமே அகர்மஶப்ததால் குறிக்கப்படுகிறது' என்று நிர்ணயிக்கத்தட்டிலலை. (அகர்மணி ச கர்ம: ய: பஶ்யேத்) அகர்மமான ஆத்மஜ்ஞானத்திலும் அது உள்ளபோதே எவன் கர்மத்தைக் காண்கிருனே. இவ்விடத்தில் சில ஆக்ஷேபங்கள் எழக்கூடும்,—கர்மத்தை அநுஷ்டிக்குமபோது, அதிலும் வேறுபட்ட ஞானத்தை அதில் காண்பது தேவையில்லாத ஒன்றலலவா? ஒனறை அநுஷ்டிக்குமபோது மற்றொனறைக் காண்பது முடியாத காரியமலலவா? ஞானத்தை அனுஸந்தித்துக் கொண்டிருந்தால் அதிலும் வேறுபட்ட கர்மத்தை அனுஷ்டிப்பதும் இயலாததல்லவா? முதலாவதொனறில் அதிலும் வேறுபட்ட இரண்டாவதைக் கண்டால் முதலாவது அடிபட்டுப் போகாதா? என்பவை அவ்வாக்ஷேபங்கள். இவ்வாக்ஷேபங்களுக்கு ஸமாதானம் இனி உரைககப்படுகிறது. கர்மாநுஷடானமும், ஆத்மஜ்ஞாநாநுஸந்தானமும் முமுக்ஷுவான கர்மயோக நிஷ்டனுக்குத் தேவையானவை என்பது முன்பின பிரகரணங்களில் பலகால் நிரூபிக்கப்பட்டிருக்கிறது; இரண்டையும் ஒரே சமயததில செய்யமுடியாது என்னும் ஆக்ஷேபத்தை ஆராயுமளவில், இரண்டும் வெவ்வேறு ஶாஸ்திரார்த்தமாகையால் செய்யமுடியாது என்று ஆக்ஷேபமா இரணடும் ஒரே சாஸ்திரார்த்தமாயிருந்தாலும் செய்யமுடியாது என்று ஆக்ஷேபமா என்று இரு கேள்விகள் எழுகின்றன. முதல் கேள்விக்கு பதில் பின்வருமாறு:— ஆத்மஜ்ஞானத்தோடு கூடிய

तया कर्माकारं यः पश्येदित्युक्तं भवति। क्रियमाणे हि कर्मणि कर्तृभूतात्मयाथात्म्यानुसन्धाने सति तदुभयं संपन्नं भवति। एव-

---

கர்மமே உபாயமாக சாஸ்திரங்களில் விதிக்கப்படுவதால், இரண்டும் ஒன்றோடொன்று சேர்ந்திருக்கையாலே இரண்டும் வெவ்வேறு சாஸ்திரார்த்தமல்லவாகையாலே இக்கேள்விக்கு இடமில்லை என்றபடி. ஆக, செய்யப்படும் கர்மத்தையே ஆத்ம யாதாத்மயாநுஸந்தானத்தினால் ஜ்ஞாநாகாரமாகக் காணவேணும் என்று முதல் பாதத்திலும், அந்த ஜ்ஞானமும் கர்மத்தில் அடங்கியிருக்கிறபடியாலே அதைக் கர்மாகாரமாகக் காணவேணும் என்று இரண்டாவது பாதத்திலும் சொல்லப்படுவதாக விளங்குகையால வெவ்வேறு சாஸ்திரார்த்தமாகையாலே இரண்டையும் சேர்த்துச் செய்ய முடியாது என்றும், ஒன்று ஒன்றைத் தள்ளிவிடும் என்றும் எழுந்த ஆக்ஷேபங்கள் பொருந்தமாட்டா என்றதாயிற்று. இனி, இரண்டும் ஒரே சாஸ்திரார்த்தமாயிருந்தாலும் இரண்டையும் ஒரே சமயத்தில் செய்யமுடியாது என்னும் ஆக்ஷேபத்தை ஆராய்வோம். ஒரு மனிதனே ஒரே சமயத்தில் காண்பது, நடப்பது, பேசுவது முதலான பல செயல்களைச் செய்வதைக் காண்கிறோமாகையாலே, கர்மாநுஷ்டானம், ஜ்ஞாநாநுஸந்தானம் எனனும் இருவேறு செயல்களை ஒருவன் ஒரு சமயத்தில் செய்யமுடியாது என்று சொல்ல இடமில்லை. ஒன்றுக்கொன்று முரண்பட்ட இருவேறு செயல்களை ஓரே சமயத்தில் செய்யமுடியாதென்பதை உலகிற் காண்கிறோமாகையால், அப்படி முரண்பட்ட கர்மாநுஷ்டானத்தையும் ஜ்ஞாநாநுஸந்தானத்தையும் ஓரே சமயத்தில் செய்யமுடியாது என்று சொல்லப்பார்த்தால், நிற்பதும் நடப்பதும்போலே, அறிவதும், அநுஷ்டிப்பதும் ஒன்றுக்கொன்று முரண்பட்டவையல்லவாகையாலே இப்படிச் சொல்லமுடியாது. கர்மம் செய்யும் போது ஞானத்துக்கு உபயோகமில்லையே என்றதும் பொருந்தாது; பாம்பு முதலான ஜந்துக்கள் கடித்தபோது கருடன் முதலானோரை தியானித்துக்கொண்டு சில சேஷ்டைகளையும், ஜபங்களையும் செய்து விஷத்தை எடுக்குமிடத்திற்போலே, இங்கும் கர்மம் செய்யும்போது ஞானம் உபயோகப்படலாம். ஆகையால், கர்மம் செய்யும்போதே கர்த்தாவான தன்னைப்பற்றிய உண்மையறிவையும் அநுஸந்தித்தானாகில், கர்மத்தைஜ்ஞாநாகாரமாகவும் ஜ்ஞானத்தைக் கர்மாகாரமாகவும் காணத்தட்டில்லையாகையாலே இங்கு எவ்வித

मात्मयाथात्म्यानुसन्धानगर्भं कर्म यः पश्येत्, स बुद्धिमान्—[स] कृत्स्नशास्त्रार्थवित्, मनुष्येषु स युक्तः—मोक्षायार्हः, स एव कृत्स्न-कर्मकृत्—कृत्स्नशास्त्रार्थकृत् ॥ १८ ॥

---

மான ஆக்ஷேபத்திற்கும் இடமில்லை. இனி, ஶ்லோகத்தின் பிற்பாதியாலே இவ்வதிகாரியே ஜ்ஞாநாநுஷ்டானங்களைப் பூர்ணமாக உடையவனுகையாலே மோக்ஷத்திற்கு உரியவன் என்று கூறுவதன்மூலம் ஆத்மஜ்ஞானத்துடன் கர்மத்தை அநுஷ்டிக்கும் அதிகாரியின் சிறப்பைக் கூறுகிறுன,— (ஸ: பு₃த்₃தி₄மாந்) அவனே சிறந்த அறிவாளி;

"பூ₄மநிந்த₃ாப்ரஶம்ஸாஸு நித்யயோகே₃ऽதிஶாயநே ।
ஸம்ஸர்க்கே₃ऽஸ்திவிவக்ஷாயம் ப₄வந்தி மதுப₃ாத₃ய: ॥"
[அஷ்டாத்யாயீ-வார்த்திகம 5-2-94]

[(1) அதிகம் (2) நிந்தை (3) புகழ்ச்சி (4) எப்போதும் சேர்ந்திருந்தல் (5) அதிசயத்திருத்தல் (6) தொடர்புடையதாயிருத்தல் (7) உள்ளது என்று கூறல் ஆகிய பொருள்களில 'மதுப்' முதலான ப்ரத்யயங்கள் ஏற்படுகின்றன.] என்கிற அர்த்தங்களில், புகழத்தக்கதாயிருத்தல் எனனும் பொருளே 'புத்திமாந்' என்றவிடத்தில் பொருந்துமாகையால், சிறந்த அறிவையுடையவன என்று பொருள். மேலே அநுஷ்டானத்தைச் சொல்லும்போது 'கருத்ஸ்நகர்மக்ருத்' என்று எல்லாக் கர்மங்களையும் செய்பவனுக இவனைக் கூறுகையாலே, அநுஷ்டானத்துக்கு உறுப்பான ஜ்ஞானத்தைச் சொலலும் இங்கும், மோக்ஷோபாயஶாஸ்திரார்த்தம் அனைத்தையும் அறிந்தவன் எனறு கருத்து கொள்ளவேண்டும். (ஸ க்ருதஸ்நகர்மக்ருத்) ஜ்ஞானம் மாத்திரமல்லாமல, அறிந்த ஶாஸ்திரார்த்தமான எலலாக் கர்மங்களையும் அனுஷ்டிப்பவன என்றபடி. ஆக, கர்மயோகவிஷயத்தில் ஞானத்தையும அனுஷ்டானத்தையும் பூர்ணமாகப் பெற்றிருப்பவன் எனறதாயிற்று. (மநுஷ்யேஷு ஸ யுக்த:) உலகிற்காணும் எல்லா மனிதரினுள்ளும் அவனே மோக்ஷத்திற்குத் தக்கவன். மற்ற இரண்டு பதங்களாலும் ஜ்ஞாநாநுஷ்டானங்கள் சொல்லப்படுகின்றனவாகையால், இங்கு, அவற்றினுல் ஏற்படும் ப²லமான மோக்ஷத்திற்கு யோக்யதையே (தகுதியே) யுக்த ஶப்தத்தால் சொல்லப்படுவதாகக கொள்ளவேண்டும். 'ஸ பு₃த்₃தி₄மாந்' 'ஸ யுக்த:' என்று இரண்டு வாக்யங்களாலே அதிகாரியின் ஞானப்

॥भा॥ प्रत्यक्षेण क्रियमाणस्य कर्मणो ज्ञानाकारता कथमुपपद्यत इत्यत्राह—

यस्य सर्वे समारम्भाः कामसङ्कल्पवर्जिताः।
ज्ञानाग्निदग्धकर्माणं तमाहुः पण्डितं बुधाः॥१९॥

19 யஸய ஸாவே ஸமாரமப₄ா காமஸஙகலபவாஜிதா ।
ஜஞாஙாக₃நித₃க₃த₄கூாமாணம தமாஹு பணடி₃தம பு₃த₄ா ॥

யஸய-(முமுக்ஷுவான) எவனுககு ஸாவே ஸமாரமப₄ா – நிதயம நைமிததிகம காமயம முதலான எலலாக காமங களைபபறறிய முயறசிகளும காமஸஙகலபவாஜிதா —பலன களிலபறறறறவையாகவும தேஹாதமமயககமாகிற ஸஙகலப மறறவையாகவுமிருககினறனவோ தம பணடி₃தம-அறிவாளி யான அவனையே, ஜஞாஙாக₃நித₃க₃த₄காமாணம—(காமத தில அடஙகிய) ஜஞானமாகிற நெருபபால எரிககபபடட புணயபாபகாமஙகளை உடையவனாக பு₃த₄ா –தததுவமறிநத வாகள ஆஹு –கூறுகினறனா

---

19 எலலா முயறசியுமொன றிசசியா தோாநதியல
வலலானைப பணடிதனு யாயநதுரைபபா—நலலா
ரறிவா லவனவினைக ளெலலா மழிநதே
பொறிவாயிற பஞசெனவே போம

---

பெருமையையும பலபபெருமையையும கூறிவிடடு 'கருதஸ்ந காம கருத எனறு அனுஷடானபபெருமையைக கூறுகையால ஸ எனபதை இஙகும கூட்டிக்கொணடு தனிவாக்யமாக்க கொளவதே பொருததமுடையது ஜஞானபலபபெருமைகளைபபோலே அனுஷ டானபபெருமையும இவனுடைய சிறபபைககாடடுவதில பரத₄ான ஹேதுவாகிறதனறோ ஆக இநத ஸலோகததால ஆதமயாதமாதம யாநுஸநத₄ானததுடன கூடவே காமததை அனுஷடிககவேணடும எனனும காமாநுஷடான' முறையைககாடடிகொணடு இபபடி அநுஷடிபபவனின சிறபபையும காடடிஞுயிறறு 18

**எல்லா முயற்சியும்**—எல்லா விதமான (கர்மங்களைப் பற்றிய) முயற்சிகளும் **ஒன்று இச்சியாது**—பலன்களில் பற்றற்று, **ஓர்ந்து**—(ஆத்மாவானது சரீரத்தைக்காட்டிலும் வேறுபட்டது என்று) அறிந்து, **இயலவல்லானை**—செய்ய வல்லவனை, **நல்லார்**-அறிவாளிகள், **ஆய்ந்து**-ஆராய்ச்சி செய்து, **பண்டிதனுய் உரைப்பர்**-அறிவாளி என்று உரைப்பர்; **அறிவால்**-(முற்கூறிய) ஆத்மஜ்ஞானத்தால, **அவன் வினைகள எல்லாம**-அவனுடைய புண்யபாபகர்மங்கள் முழுவதும், **பொறிவாயில் பஞ்சு எனவே**—நெருப்புப்பொறியின வாயில் பட்ட பஞ்சு என்னலாம்படி, **அழிந்தே போம்**—முழுவதும் அழிந்துவிடும்.

---

19. சென்ற ஸ்லோகததில், கர்மத்தை ஜ்ஞாநாகாரமாகக கணடு அனுஷ்டிக்கவேண்டும எனறு கூறப்பட்டது. அதனமேல் ஏற்படும் ஆக்ஷேபமொனறைப் பரிஹரிககிறது இந்த ஸ்லோகம். அதாவது,— "ப்ரத்யக்ஷத்திற்கு முரண்பட்டதொரு விஷயத்தை சாஸ்திரத்தினுலோ யுக்திகளாலோ நிலைநிறுத்த முடியாது. கர்மம் செயலுருவாயிருப்பது எனபதை அதைச் செய்யும்போதே காண்கிறோம். பல நாட்களுக்கு முன் செய்யப்பட்டு அழிந்து, இப்போது நினைவுருவாகவேயிருககும் செயலை, அதையிட்டு ஜ்ஞாநாகாரமென்று கூறினுலாவது பொருந்தலாம் இங்கோவெனில், கர்மம் செய்யப்படுமபோதே அதை ஜ்ஞாநாகாரமாக அநுஸந்திக்க வேண்டும் எனறு கூறப்படுகிறது; இது எப்படிப் பொருநதும்? மேலும, கர்மமானது ஜ்ஞானத்திற்கு விஷயமாகவும, கார்யமாகவும் இருக்கிறது; அதாவது ஞானத்தினுல் அறியப்படுவதாகவும், அனுஷ்டிக்கப்படுவதாகவும இருக்கிறது. இத்தகைய கர்மம ஞானத்தோடு எப்படி ஒன்ருகமுடியும? "மநோ ப்$_3$ரஹ்மேத்யுபாஸீத" [மநஸ்ஸை ப்ரஹ்மமாக உபாஸிக்கவேண்டும], முதலான த்$_3$ருஷ்டிவிதி$_4$ஸ்த$_2$லஙகளிற்போலே, 'கர்மத்தை ஜ்ஞானமாக ப$_4$ாவிக்கவேண்டும்' எனறு கூறுவதானுல் இது ஒருவாறு பொருந்தலாம்; இங்கு அப்படிக்கூருமல, 'ஆத்மாவைபபற்றிய உண்மையறிவை உளளடக்கியிருக்கையால் கர்மம ஜ்ஞாநாகாரமாகவே ஆகிறது' எனறு கூறுவது எவ்வகையிலும் பொருந்தாதே!" என்னும் ஆக்ஷேபம் இந்த ஸ்லோகத்தால் பரிஹரிக்கப்படுகிறது.

॥भा॥ यस्य मुमुक्षोस्सर्वे द्रव्यार्जनादिलौकिककर्मपूर्वकनित्य-नैमित्तिककाम्यरूपकर्मसमारम्भाः कामवर्जिताः—फलसङ्गरहिताः सङ्कल्प-

---

(யஸ்ய) முமுக்ஷுவான எவனுக்கு. மோக்ஷத்தை விரும்பிக் கர்ம யோகத்தை அநுஷ்டிப்பவனைப் பற்றிய ப்ரகரணமாகையாலே முமுக்ஷுவைக்குறிக்கிறது இப்பதம. (ஸர்வே ஸமாரம்ப₄ா:) என்றது நித்யம், நைமித்திகம், காம்யம் என்னும் மூவகைப்பட்ட கர்மங்களைப்பற்றிய முயற்சிகளைக் குறிக்கிறது. விசேஷணமான ஸர்வஶப்₃த₃த்திற்கு ஸங்கோசமில்லாமையாலே, இம்மூவகைப்பட்ட கர்மங்களுக்கும் ஸாத₄னமான பணம ஸம்பாதித்தல் முதலான எல்லா லௌகிக கர்மங்களையும் அது குறிக்கிறது. ஆக, 'பணம் ஸம்பாதித்தல் முதலான லௌகிக கர்மங்களை முன்னிட்டுக்கொண்டிருக்கும் நித்யநைமித்திக காம்யகர்மங்களைப்பற்றிய முயற்சிகள்' என்றபடி. (காமஸங்கல்பவர்ஜிதா:) காமஸங்கல்பங்கள் நீங்கப் பெற்றவைகளோ. "காம ஏவ ஸங்கல்ப:" [காமமாகிற ஸங்கல்பம்] என்று ஸமாஸங்கொண்டால், ஒரு பதமே போதுமாயிருக்க ஒரே பொருளையுடைய இரு பதங்களையிட்டதாகிற தோஷம் வரும். "காமாநாம் ஸங்கல்ப:" [காமங்களின ஸங்கல்பம்] என்று தத்புருஷ ஸமாஸமாகக்கொள்வதைக்காட்டிலும், "காமஶ்ச ஸங்கல்பஶ்ச காம ஸஙகல்பௌ" என்று த்₃வந்த்₃வ ஸமாஸமாகக் கொள்வது சிறந்தது. இரண்டு பதங்களில் ஒன்றுக்கே முக்கியத்துவமளிக்கும் தத்புருஷம் முதலான ஸமாஸங்களைக் காட்டிலும, இரண்டு பதங்களுக்கும் முக்கியத்துவமளிக்கும் த்₃வந்த்₃வஸமாஸமே சிறந்தது என்பது வடமொழியிலக்கணமறிந்தவர்களின் கொள்கையாகும். காமம் ஸங்கல்பம் ஆகிய இரண்டுமே நீங்கியிருத்தலைச் சொல்லவேண்டியது இப்ரகரணத்தில் அவசியமாகவுமிருக்கிறது. ஆகையால், "காமஶ்ச ஸங்கல்பஶ்ச காமஸங்கல்பௌ; தாப்₄யாம் வர்ஜிதா: காமஸங்கல்ப வர்ஜிதா." [காமமும், ஸங்கல்பமும் காமஸங்கல்பங்கள்; அவைகளினின்றும் நீங்கப்பெற்றவை காமஸங்கல்பவர்ஜிதங்கள்] என்று ஸமாஸம் கொள்வதே உசிதம். இனி, காமபதமும், ஸங்கல்பபதமும் எதைக்குறிக்கின்றன என ஆராய்வோம். கர்மப்ரகரணமாகையாலே, காமஶப்தம் பலன்களில் பற்றையே குறிக்கிறது என்று தெளிவு; ஆகையாலே 'காம வர்ஜிதா:' என்றது முமுக்ஷுவான இவனுடைய எல்லா முயற்சிகளும் அவ்வவற்றுக்குரிய க்ஷுத்₃ரப₂லங்களில

वर्जिताश्च—प्रकृत्या तद्गुणैश्चात्मानमेकीकृत्यानुसन्धानं सङ्कल्पः; प्रकृतिवियुक्तात्मस्वरूपानुसन्धानयुक्ततया तद्रहिताः; तम्—एवं कर्म

---

பற்றற்றவையாயிருக்கின்றன என்கிறது. ஸங்கல்ப ஶப்தம் இங்கு கர்மாநுஷ்டான ஸங்கல்பத்தைக குறித்ததாகில், 'ஸங்கல்பவர்ஜிதா: ஸமாரம்ப₄ா:' [கர்மாநுஷ்டான ஸங்கல்பமற்ற முயற்சிகள்] என்னும் பதங்கள்கர்மாநுஷ்டானமே கூடாது என்று சொல்லுகின்றவையாகும். இதுபிரகரணத்திற்கு முரணபட்டது.ஸங்கலபஶப்தம் ப₂லஸங்கல்பத்தைக் குறிப்பதாகில்'ஸங்கல்பவர்ஜிதா:'என்றது ப₂லஸங்கல்பமின்மையைக் காட்டுகையால், 'காமவர்ஜிதா:' [பலன்களில் பற்றற்றவை] எனறதோடு புநருக்தி வரும். ஆகையால், ப்ரக்ருதிஸம்பந்தமற்ற ஆத்மாவைப்பற்றிய உபதேசம் இபரகரணத்தில் ஏற்கனவே செய்யப்பட்டிருக்கிறதாகையால், அதையொட்டிய பொருளொனறை உரைப்பதே உசிதமாகும். அதாவது,—கல்பஶப்₃த₃ம் கற்பனையாகிற மயக்கத்தைக்குறிக்கிறது; 'ஸம்' என்பது இரண்டு பொருள்களை ஒன்றுபடுத்துவதைக் குறிககிறது. ஆக, ஸங்கல்பமென்று, ஒன்றை மற்ெறான்றாக நினைத்து மயங்குவதைச் சொல்லுகிறது. அதுதான யாதென்று ஆராயுமளவில்,

"அநாத்மந்யாத்மபு₃த்₃தி₄ர்யா அஸ்வே ஸ்வமிதி யா மதி:।
அவித்₃யாதருஸம்பூ₄திபீ₃ஜமேதத் த்₃விதா₄ ஸ்தி₂தம்॥"

[ஆத்மாவல்லதான தேஹத்தில் ஆத்மாவென்னும மயக்கமும், அவ்வாத்மாவைச் சேராததான சரீரத₄ர்மங்களில் ஆத்மகுணமெனனும் மயக்கமுமாகிற இவ்விரண்டும் அஜ்ஞானமெனும் மரத்தின் பெருக்கத்திற்குக் காரணமாகவிருக்கும் இருபகுதிகளையுடைய விதையாகும்.] எனறு சாஸ்திரங்களில் சொல்லப்படும இரண்டு விதமான மயக்கமே எனறு நிச்சயிக்கலாம். அதாவது,—ப்ரக்ருதிகார்யமாய், ஆதமாவல்லாததான சரீரத்தை ஆதமாவெனறு மயங்குகையும், அந்த ப்ரக்ருதிகுணமான ஸத்வ ரஜஸ்தமங்களையும், அந்த சரீரத்தின் அமைப்புகளான தேவர், மனிதர் முதலான அமைப்புகளையும், சரீரகுணங்களான கறுப்பு, சிவப்பு, பெருத்திருக்கை, சிறுத்திருக்கை முதலானவற்றையும் ஆத்மத₄ர்மங்களாக மயங்குகையுமேயாகும். தன்னதல்லாத வீடு, நிலம், மனைவி, மக்கள், முதலானுரைத் தன்னதாக மயங்குகையும் இங்கு ஸங்கல்பஶப்தத்திற்குப் பொருளாகக் கொள்ளத்தகும்.

कुर्वाणं पण्डितं कर्मान्तर्गतात्मयाथात्म्यज्ञानाग्निना दग्धप्राचीनकर्माण-माहुस्तत्त्वज्ञाः। अतः कर्मणो ज्ञानाकारत्वमुपपद्यते ॥ १९ ॥

---

ப்ரக்ருதிகுணங்களோடு தன்னை ஒன்றுபடுத்தி அநுஸந்திக்கை யாவது,— ப்ரக்ருதி குணங்களான ஸத்வரஜஸ்தமங்களால் செய்யப்படும் செயல்களைத் தன்னால் செய்யப்படுவதாக மயங்குகை என்றும் கொள்ளலாம். இவ்விருவிதமான மயக்கங்களும் கர்ம யோக நிஷ்டனுக்குக் கூடாது என்று இப்ரகரணத்தின் தொடக் கத்திலிருந்தே சொல்லப்பட்டு வந்திருக்கிறபடியால், அதுவே இங்கு 'ஸங்கல்பவர்ஜிதா:' என்று அநுவதிக்கப்படுவதாகக் கொள்வதே உசிதம். இனி, கர்மங்களை இவ்வண்ணமாகக் காமஸங்கல்பங்களற்று அநுஷ்டிப்பதற்குக் காரணத்தையும், அதனால் ஏற்படும் பலத்தையும் உத்தரார்த்த$_4$த்தில் சொலலுகிறது; அதில் காரணத்தைச் சொல்லியபிறகு ப$_2$லத்தைச் சொல்லுவதே உசிதமாகையால், (தம் பண்டி$_3$தம் ஜ்ஞாநாக்$_3$நித$_3$க்த$_4$கர்மாணம் ஆஹு:) என்று பதங்களை மாற்றி உத்$_3$தேஶ்ய விதே$_4$யங்களைக் கொள்ளவேணும். (தம பண்டி$_3$தம்) அத்தகைய அறிவாளியை; 'பண்டா$_3$' எனபது தாழ்ந்ததைத் தள்ளிச் சிறந்ததைக்கொள்ளும் அறிவைக் குறிக்குமாகையாலே, 'பண்டி$_3$தம' என்றது அத்தகைய அறிவாளியைக் குறிக்கிறது. இங்கு, 'கர்மங்களைக் காம ஸங்கல்பங்களற்று அநுஷ்டிப்பதற்கு உறுப்பாக ப்ரக்ருதி வியுக்தமான ஆத்மஸ்வரூபத்தை அநுஸந்தித்து, தாழ்ந்ததான தேஹத்தைத்தள்ளி, சிறந்ததான ஆத்மாவைக் கொள்ளும் அறிவை உடையவனைச் சொல்லுகிறது. ஆக, கர்மங்களைக் காம ஸங்கல்பங்களற்று அநுஷ்டிக்கைக்குக் காரணம இவனுடைய அறிவே என்று சொல்லப்பட்டது. இனி, இப்படி அநுஷ்டிப்ப தால் ஏற்படும் பலம் சொல்லப்படுகிறது — (ஜ்ஞாநாக்$_3$நித$_3$க்$_3$த$_4$ கர்மாணம் ஆஹு:) இத்தகைய ஞானமாகிற நெருப்பாலே "தீயினில் தூசாகும்" [திருப்பாவை 5] என்றுப்போலே எரித்தழிக்கப்பட்ட ப்ராசீன கர்மங்களை உடையவனாகக் கூறுகின்றனர். செய்யப்படும் கர்மமே எரித்தழிக்கப்படுகிறது என்று கூறினால் பலனே கிடைக் காமற்போகும். பக்தியோகம் கைவந்தபின் அழிவன புகுதருவான் நின்றனவான உத்தராக$_4$ங்கள். ஆகையால், இங்கு கர்மஶப்தம போயபிழைகளான பூர்வாக$_4$ங்களை (பழைய கர்மங்களைக்) குறிப்ப தென்று கொள்வதே பொருந்தும். இவனுக்கு இப்பெருமையைச்

॥ भा ॥ एतदेव विवृणोति—

त्यक्त्वा कर्मफलासङ्गं नित्यतृप्तो निराश्रयः।
कर्मण्यभिप्रवृत्तोऽपि नैव किंचित्करोति सः॥ २०॥

20. த்யக்த்வா கர்மப₂லாஸங்க₃ம் நித்யத்ருப்தோ நிராஶ்ரய:।
கர்மண்யபி₄ப்ரவ்ருததோऽபி நைவ கிஞ்சித் கரோதி ஸ:॥

கர்மப₂லாஸங்க₃ம்– *கர்மங்களினுடைய பலனில் பற்றை,* த்யக்த்வா—*கைவிட்டு,* நித்யத்ருப்த:—*நித்யமான ஆத்மாவில் திருப்திபெற்றவனாய்* நிராஶ்ரய:– *(அநித்யமான) சரீரத்தில் 'ஆஶ்ரயிக்கத்தக்கது' என்னும் அறிவற்றவனாய், (எவனொருவன் கர்மம் செய்கிறானோ)* ஸ:–*அவன்,* கர்மணி–*கர்மங்களில்,* அபி₄ப்ரவ்ருத்த: அபி— *ஒருமுகமாய் ஈடுபட்டவனாயினும்.* கிஞ்சித் நைவ கரோதி— *எக்கருமத்தையும் செய்யாதவனே யாவான்.*

---

20. கருமப் பயனசையைக் கைவிட்டே யென்று
மொருமித் துகந்துபுறத் தொட்டடாப்-பெருமையோன்
மெய்யார் கருமத்து மேலியன்றா னேலுமவன்
செய்யா னதொன்றுஞ் செறிந்து.

---

*சொல்லுகிறவர்கள்தான் ஆரென்னில்,— (பு₃த₄ா:) அறிவாளிகள் கூறுகின்றனர். அடைபவனாகவும், அடையத்தக்கதாகவுமிருக்கும் ஆத்மாவினுடையவும் அடைவதற்கு ஸாதனமான கர்மயோகத்தினுடையவும் ஸ்வரூபங்களை ஐயம் திரிபற உணர்ந்தவர்கள் என்றபடி. இந்த ஶ்லோகத்தில் சொல்லிய ஜ்ஞானமே கர்மாநுஷ்டானத்தின்போது இவனுடைய நெஞ்சில் நிறைந்திருக்கிறதாகையால் கர்மம் ஜ்ஞாநாகாரமெனப்படுகிறது; ஆகையால் 'கர்மம் ஜ்ஞாநாகாரம் என்பது ப்ரத்யக்ஷத்திற்கு முரண்பட்டது' முதலான ஐயங்களுக்கு இடமேயில்லை என்றபடி.* 19.

**கருமப் பயன் நசையைக் கைவிட்டே**—கருமங்களினுடைய பலனில் பற்றைக் கைவிட்டவனாய். **என்றும் ஒருமித்து உகந்து**—(ஆத்மாவில்) எப்போதும் ஒருபடிப்பட ஈடுபட்டவனாய். **புறத்து ஒட்டாப் பெருமையோன் அவன்**— (ஆத்மாவிலும்) வேறுபட்ட சரீரத்தில் பற்றற்றவனாயிருக்கும் பெருமையை உடையவனானவன், **மெய்யார் கருமத்து மேல் இயன்றானேலும்**-சரீரத்தினால் செய்யப்படும் கருமங்களில் ஒரு முகமாய் ஈடுபட்டவனாயிலும். **அது ஒன்றும் செறிந்து செய்யான்**—அக்கருமம் ஒன்றையும் நெருங்கிச் செய்யாதவனேயாவான்.

**॥ भा ॥ कर्मफलसङ्गं त्यक्त्वा नित्यतृप्तः—नित्ये स्वात्मन्येव तृप्तः निराश्रयः—अस्थिरप्रकृतावाश्रयबुद्धिरहितो यः कर्माणि करोति,**

---

20. முன் ஶ்லோகத்தில் கர்மங்கள் ஜ்ஞாநாகாரமாகவே ஆகின்றன என்று சொன்னதையே இந்த ஶ்லோகத்தில் விவரிக்கிறான். (கர்மபலஸங்கம் த்யக்த்வா) கர்மங்களின பலனிற்பற்றைக் கைவிட்டு. அநித்யமான கர்மபலங்களைக் கைவிடுகையைக் கூறும் இத்தால், முன் ஶ்லோகத்தில 'காமவர்ஜிதா:' என்று கூறியது விவரிக்கப்பட்டதாயிற்று. இனி நித்யபலனைக் கைக்கொள்ளுகையைக் கூறுவதன மூலம் 'ஸங்கல்பவர்ஜிதா:' என்னும் பதம் விவரிக்கப்படுகிறது,— (நித்யத்ருப்த:) நித்யமான ஆத்மாவிலேயே திருப்திபெற்றவனாய், 'எப்போதும் திருப்திபெற்றவன்' என்று பொருள் கொண்டால் எதில் திருப்திபெற்றிருப்பவன் என்னும் கேள்விக்கு விடை கிடைக்காதாகையால், நித்யமான ஆத்மாவில் திருப்தி பெற்றவன் என்று பொருள் கொள்வது பொருத்தமுடையது. நிலையற்ற கர்மபலங்களில் பற்றைக் கைவிட்டு, நித்யமான ஆத்மாவில் ஈடுபட்டிருக்கைக்குக் காரணத்தைச் சொல்லுகிறது அடுத்தபடியாக,— (நிராஶ்ரய:) நிலையற்றதாய், ப்ரக்ருதி கார்யமான சரீரத்தில் 'ஆஶ்ரயம்' (ஆஶ்ரயிக்கத்தக்கது) என்னும் அறிவு அற்றவனாய். இருப்பிடமான தேசம், வீடு முதலானவற்றையும் ஆஶ்ரயஶப்தம் குறிக்குமானாலும் அவற்றைக் கைவிடுவது இயலாதாகையாலே இங்கு ஆஶ்ரயஶப்தம் ஆஶ்ரயிக்கத்தக்கதைக் குறிப்பதாகக் கொள்வதே பொருந்தும். 'ஸ:' என்று உத்த

स कर्मण्याभिमुख्येन प्रवृत्तोऽपि नैव किंचित्कर्म करोति—कर्मापदेशेन ज्ञानाभ्यासमेव करोतीत्यर्थः॥ २०॥

॥भा॥ पुनरपि कर्मणो ज्ञानाकारतैव विशोध्यते—

निराशीर्यतचित्तात्मा त्यक्तसर्वपरिग्रहः।
शारीरं केवलं कर्म कुर्वन्नाप्नोति किल्बिषम्॥ २१॥

---

ரார்த்த₄த்திலிருக்கையாலே 'ய:' என்பதைப் பூர்வார்த்த₄த்தில் கூட்டிக்கொண்டு, 'எவன் கர்மங்களைச் செய்கிறானோ' என்று பொருள் கொள்வது. (ஸ:) அவன். (கர்மணி அபி₄ப்ரவ்ருத்த: அபி) கர்மங்களில் ஒருமுகமாக ஈடுபட்டவனாகிலும். (நைவ கிஞ்சித் கரோதி) எக்கருமத்தையும் செய்யாதவனாகவே ஆகிறான. 'கிஞ்சித்' என்றது ஜ்ஞானத்தையும குறிக்குமாயினும், ப்ரகரணத்தை யொட்டியும், 'கரோதி' எனனும் ஶப்தத்தின் ஸ்வாரஸ்யத்தை யொட்டியும கருமத்தை மாத்திரம் பொருளாகக் கொண்டதாகும். 'ஒருமுகமாகக் கருமத்தில் ஈடுபட்டவனாயினும், எக்கருமத்தையும செய்யாதவனாகவே ஆகிறான' என்பது முன்னுக்குப்பின் முரணா யில்லையோ? எனில்: செய்வது கருமமாயிருந்தாலும, நெஞ்சில் நிறைந்திருப்பது ஜ்ஞானமேயாகையால், கர்மாநுஷ்டானமெனும் வியாஜத்தினால் ஜ்ஞாநாப்₄யாஸத்தையே செய்கிறான. இயல்வாக விபரீத விஷயங்களிலேயே ஸஞ்சரிக்கையாலே, ஜ்ஞாநாப்₄யாஸத் திற்குத் தடையாயிருக்கும இந்திரியங்களை அநுகூல விஷயங்களில் ஸஞ்சரிக்கச்செய்வதே கர்மயோகமாகையாலே அத்தகைய கர்ம யோக₃நிஷ்டனான இவனுக்குக் கர்மாம்ஶம் இல்லையென்றே சொல்லலாம்படி அஸத்கல்பமாய், ஜ்ஞாநாம்ஶமே விஞ்சிநிற்கிறது என்று கருதது. ஶ்ரீபராஶரபட்டரும்

"நித்யம் காம்யம் பரமபி கதிசித்
த்வய்யத்₄யாத்மஸ்வமதிபி₄ரமமா:।
ந்யஸ்யாஸங்கா₃ வித₃த₄தி விஹிதம்
ஶ்ரீரங்கே₃ந்தே₃ா வித₃த₄தி ந ச தே॥ [ர-ஸ்த2-84]

[ஶ்ரீரங்கநாதனே! கர்மயோகநிஷ்டர் சிலர், தம் ஆத்மஜ்ஞானத் தாலே மமகாரமற்றவர்களாய், ப₂ல ஸங்கமற்றவராய், தேவரீரிடம் கர்த்ருத்வத்தை அநுஸந்தித்து, நித்யநைமித்திககாமயரூபமான விஹிதகர்மங்களை அநுஷ்டிக்கிறார்கள். (இப்படிப்பட்ட ஜ்ஞாநாநு ஸந்தானங்கள் நிறைந்திருக்கையால்) அவர்கள் அநுஷ்டிக் கிறார்களுமல்லர்.] என்று இவ்வர்த்தத்தை அநுஸந்தித்தார். 20.

**21. நிராஶீர்யதசித்தாத்மா த்யக்தஸர்வபரிக்₃ரஹ:।**
**ஶாரீரம் கேவலம் கர்ம குர்வந் நாப்நோதி கில்பி₃ஷம்॥**

**நிராஶீ:**—*பலன்களில் ஆசையற்றவனாய்,* **யதசித்தாத்மா**—*(மற்ற விஷயங்களைப் பற்றிய) சிந்தையை அடக்கிய மனத்தையுடையவனாய்,* **த்யக்தஸர்வபரிக்₃ரஹ:**—*பிராகிருதமான எல்லாப் பொருள்களிலும் 'என்னுடையது' என்னும் பற்று அற்றவனாய்,* **ஶாரீரம்**—*ஶரீரமுள்ளவனால் கைவிட முடியாத,* **கர்ம கேவலம்**—*கர்மத்தை மாத்திரம்,* **குர்வந்**—*செய்வதாலேயே,* **கில்பி₃ஷம்**—*ஸம்ஸாரத்தை,* **ந ஆப்நோதி**—*அடையமாட்டான்.*

---

**21. ஆசைதுறந் துள்ள மமைந்த வுணர்வினனாய்ப்**
**பாசமுட னெப்பொருளின் பற்றற்றுப்—பேசியதன்**
**சாரீர கன்மமே சார்ந்தியல்வான் போந்தணையான்**
**சேரீரு பாவமுஞ் சென்று.**

**ஆசை துறந்து**—*(பலன்களில்) ஆசையற்றவனாய்,* **உள்ளம் அமைந்த உணர்வினனாய்**—*(மற்ற விஷயங்களைப்பற்றிய) சிந்தையை அடக்கிய மனத்தையுடையவனாய்,* **எப்பொருளின் பற்று பாசமுடன் அற்று**—*பிராகிருதமான எல்லாப்பொருள் களிலும் 'என்னுடையது' என்னும் பற்றும் (அதனால் அவற்றின்மேல் ஏற்படும்) பாசமும் அற்றவனாய்,* **பேசிய தன் சாரீர கன்மமே சார்ந்து இயல்வான்**—*முன் சொல்லப் பட்டதாய், தனக்குரியதாய், சரீரமுள்ளவனால் கைவிட முடியாததான கர்மயோகத்தையே பொருந்திச் செய்பவன்,* **சென்று சேர்**—*ஸம்ஸாரத்தில் சென்று சேர்விக்கும்,* **ஈரு பாவமும்**—*புண்யபாபங்களாகிற இருவகைக் கருமங்களையும்,* **போந்து அணையான்**—*அடையமாட்டான்.*

---

21. "**யஸ்ய ஸர்வே**" [19] என்னும் ஶ்லோகத்தாலே கர்ம யோகம் ஜ்ஞாநாகாரமாயிருப்பது என்று விளக்கப்பட்டது; "**த்யக்த்வா**" [20] என்று தொடங்கும் ஶ்லோகத்தாலே அவ்விஷயம் விவரிக்கப்பட்டது. இனி, இந்த ஶ்லோகம் முதலாக மூன்று ஶ்லோகங் களில் அவ்விஷயமே நன்கு சோதிக்கப்படுகிறது. சொல்லப்படும

||भा|| निराशीः-निर्गतफलाभिसन्धिः; यतचित्तात्मा-यतचित्तमनाः;

அர்த்தம் அறிய அரியதாயிருக்கையாலே, அதைத் தெளிவாக அறிவிப்பதற்காகவும், முன் ப்ரகரணங்கள் பலவற்றில் ஆங்காங்கு சொல்லப்பட்ட அர்த்தங்களைச் சேர்த்துப்பிடித்துச் சொல்லுவதற்காகவும், இவ்வர்த்தம் தான் மிகவும் உகந்தது என்று உணர்த்துவதற்காகவும் முன்னிரண்டு ஶ்லோகங்களில் சொன்ன அர்த்தமே இது தொடங்கி மூன்று ஶ்லோகங்களிலும் விளக்கமாக உரைக்கப் படுகிறது என்றபடி. (நிராஶீ:) ஆசையற்றவன். இங்கு ஆசையென்று பொதுவாகச் சொன்னாலும், 'நமது கர்மயோகம் நிறைவேறவேணும்' முதலான கர்மயோகத்துக்கு உறுப்பான ஆசைகள் இவனுக்கும் வேண்டுமாகையால், அவற்றைக்குறிக்காமல், கர்மங்களுக்குச் சொல்லப்படும் க்ஷுத்ரபலன்களில் ஆசையையே அறத்தக்கவையாகச் சொல்லுகிறது. இப்படி ஆசை அறுவதற்கு இவன் செய்தது என்னவெனில்: (யதசித்தாத்மா) அடக்கப்பட்ட சித்தரூபமான மனத்தை உடையவன். அடக்கப்பட்டதாகச் சொல்லுகையாலே ஆத்மசப்தம் அடக்குபவனான ஜீவாத்மாவைச் சொல்லுவது பொருத்தமன்று; சித்தாத்மா என்பதற்கு சித்தஸ்வரூபம் முதலான பொருள்களைக்கொண்டால் ஆத்மஶப்தம் பொருளற்றதாகிறது. ஆகையால், இந்த ப்ரகரணத்தில் மனத்தையடக்குவதையே யோகிக்கு மிகவும் முக்கியமாகப் பலவிடங்களில் சொல்லப்படுவதை அநுஸரித்து, ஆத்மஶப்தம் மனத்தைக் குறிப்பதாகக் கொள்வதே பொருத்தமுடையது. ஆக, ஆத்மஶப்தம் மனத்தைக் குறித்தவளவில், சித்த ஶப்தம் சிந்தித்தலாகிற அதன் நிலையைக் குறிக்கிறது என்று தெளிவாக விளங்குகிறது. ஆக, 'யதசித்தாத்மா' என்றதற்கு (விஷயாந்தரங்களையே) சிந்தித்துக்கொண்டிருக்கும் மனத்தை அடக்கியவன் என்று பொருளாகிறது. "அத்₄யவஸாய அபி₄மாந சிந்தா வ்ருத்திபே₄தா₃த் மந ஏவ பு₃த்₃த்₄யஹங்காரசித்தஶப்₃தை₃ர் வ்யபதி₃ஶ்யதே" [உறுதி, தன்னதென்னும் அபி₄மானம், நினைத்தல் என்னும் காரியங்களின் வேறுபாட்டால் மனமே (முறையே) புத்தி, அஹங்காரம், சித்தம் என்னும் ஶப்தங்களால் சொல்லப்படுகிறது.] என்று ஸ்ரீபா₄ஷ்யத்தில் [2-4-5] மனத்தின் மூன்று நிலைகள் விவரிக்கப்பட்டது இங்கு அநுஸந்திக்கத்தக்கது. (யதசித்தாத்மா) என்றவிடத்தில் மனத்தின் விஷயாந்தர சிந்தையாகிற ஒரு நிலையைச் சொன்னது, விஷயாநுப₄வத்தில் உறுதியாகிற அத்₄யவஸாய நிலைக்கும், விஷயாந்தரங்களில் அபி₄மானமாகிற அஹங்கார நிலைக்கும் உபலக்ஷணம். விஷயாநுப₄வத்தில் உறுதியையும், விஷயங்களில் தன்னதென்னும் அபிமானத்தையும், அவற்றைப்பற்றிய நினைவையும் அடக்கியவன் என்றதாயிற்று.

त्यक्तसर्वपरिग्रहः—आत्मैकप्रयोजनतया प्रकृतिप्राकृतवस्तुनि ममतारहितः यावज्जीवं केवलं शारीरमेव कर्म कुर्वन् किल्बिषं—संसारं नाप्नोति, ज्ञाननिष्ठाव्यवधानरहितकेवलकर्मयोगेनैवंरूपेणात्मानं पश्यतीत्यर्थः ॥ २१ ॥

---

(த்யக்தஸர்வ பரிக்₃ரஹ:) எல்லாப்பொருள்களைப் பற்றியுமிருக்கும் அபி₄மானத்தை விட்டவன். ஆத்மாவையே பயனாகக்கொண்டவனாகையாலே, அதுதவிர்ந்த ப்ரக்ருதி ப்ராக்ருதவஸ்துக்களில் அபி₄மானமற்றவன என்றபடி, ஸர்வஶப்தத்தாலே பே₄ாக்₃யம். பே₄ாகோ₃பகரணம். பே₄ாக₃ஸ்த₂ானம் என்று மூவகைப்பட்டிருக்கும் ப்ராக்ருதவஸ்துக்கள் அனைத்தையும் எடுக்கிறது.

''பர்யாப்தௌ ச பரீவார ஆலவாலே பரிச்ச₂தே₃ ।
பத்நீஸ்வீகாரஶபத₂மூல்யேஷ்வபி பரிக்₃ரஹ: ॥''

*[வைஜயந்தீ–ஶேஷகாண்டம்–புல்லிங்காத்யாயம் 29]*

[1. திருப்தி 2. பரிஜனங்கள் 3. பாத்தி 4. (குடை, ஆடைமுதலான) பரிச்ச₂த₃ங்கள் 5. பத்னி 6. (தன்னதல்லாததைத்தன்னதாக) அபிமானிப்பது 7. சபதம் 8. விலை ஆகிய பொருள்களில் பரிக்₃ரஹஶபதம் பிரயோகிக்கப்படுகிறது.] என்கிறபடியே பரிக்₃ரஹஶப்தமானது தன்னதல்லாததைத் தன்னதாக அபி₄மானிப்பதாகிற 'ஸ்வீகாரம்' என்னும் பொருளை இங்கு குறிக்கிறது ஆக, 'த்யக்த ஸர்வபரிக்₃ரஹ:' என்றது ஸர்வவிஷயமான அபி₄மானத்தையும் கைவிட்டவன் என்றதாகிறது. (ஶாரீரம் கர்ம குர்வந்) சரீரஸம்பந்தியான கர்மத்தைச் செய்வதனாலே. ஶரீரஸம்பந்தியான கர்மமாகையாலே, சரீரமிருக்கும் வரையில் செய்யவேண்டும் என்று தோற்றுகிறது. ஶரீரஸம்பந்தியான கர்மம என்பதற்குப் பினவருமாறு பல வகையாகப்பொருள் கொள்ளலாம. 1 சரீரமுடையவனால் விடவொண்ணாத கர்மம். 2.ஸ்வர்க்கம் முதலான பலன்களில் பற்றுவைத்தவனுக்குப்போலே.அப்பற்றாகிற புத்தி வ்யாபாரம் இவனுக்கு இல்லாமையாலே₂ ஶரீரவ்யாபாரமாத்ரமாகவேயிருக்கும் கர்மம். 3. ஸ்வர்க்க₃ம் முதலான பலன்களை உத்தேசித்துச் செய்யப்படாமல், சரீரத₄ாரணத்திற்காகவே செய்யப்படும் கர்மம். 4 ஜ்ஞாநயோகத்தைப்போல் அதிகமாக மநோநியமனத்தை எதிர்பாராமல், சரீரநியமனத்தையே அதிகமாகக் கொண்ட கர்மம. இப்படி நாலுவிதமாக ஶாரீரஶப்தத்திற்கு ப்ரகரணத்தை

यदृच्छालाभसंतुष्टो द्वन्द्वातीतो विमत्सरः।
समः सिद्धावसिद्धौ च कृत्वाऽपि न निबध्यते ॥ २२ ॥

22. யத்₃ருச்ச₂ாலாப₄ஸந்துஷ்டோ த்₃வந்த்₃வாதீதோ விமத்ஸர:।
ஸம: ஸித்₃தா₄வஸித்₃தௌ₄ ச க்ருத்வாऽபி ந நிப₃த்₄யதே॥

யத்₃ருச்ச₂ாலாப₄ஸந்துஷ்ட:-(சரீரதா₄ரணத்தின்பொருட்டு எதிர்பாராமல் கிடைத்த பொருள்களைக்கொண்டு திருப்தி பெற்றவனாய், த்₃வந்த்₃வாதீத:-(தவிர்க்கவொண்ணாத ஸுக துக்கம், சீதோஷ்ணம் முதலான) இரட்டைகளைப் பொறுத்துக் கொள்பவனாய், விமத்ஸர:-(பிறரிடம்) மாத்ஸர்ய மற்றவனாய், ஸித்₃தௌ₄ — (போர் முதலியனவற்றில வெற்றி முதலான வற்றின்) ஸித்தியிலும், அஸித்₃தௌ₄ ச—(அவற்றின) அஸித்தியிலும், ஸம:—ஒருபடிப்பட்ட நெஞ்சையுடையவனானவன், க்ருத்வா அபி—(ஜ்ஞாந யோகமின்றிக்கே) கர்மத்தையே செய்தபோதிலும், ந நிப₃த்₄யதே — (ஸம்ஸாரபந்தத்தால்) கட்டுப்பட மாட்டான்.

---

யொட்டிப் பொருள்கொள்ளலாம்படியிருக்கையில், 'திரவியம், அக்னி ஆகியவற்றால் ஸாதிக்கப்படும கிருஹஸ்தனுடைய கர்மம் போலல்லாமல், சரீரப்ரயாஸமாத்ரத்தாலே ஸாதிக்கப்படும் ஸந்யாஸியின்கர்மம்' என்று சங்கரர் முதலானோர் பொருள்கொண்டது, இப்ரகரணத்தில் ஸந்யாஸியைப்பற்றிய பேச்சே இல்லையாகையால் பொருந்தாது. (கில்பி₃ஷம் நாப்நோதி) பாபப₂லமான ஸம்ஸாரத்தை அடைய மாட்டான்; ஆத்மத₃ர்ஶனத்தையே பெறுவான் என்று கருத்து. 'கில்பி₃ஷம்' என்னும் ஶப்தம் பாபத்தையே குறிக்குமாயினும், இங்கு அதன் ப₂லமான ஸம்ஸாரததைக் குறிக்கிறது. (ஶாரீரம் கர்ம கேவலம் குர்வந் கில்பி₃ஷம் நாப்நோதி) ஶரீரஸம்பந்தியான கர்மயோக மாத்ரத்தைச் செய்வதாலேயே ஸம்ஸாரத்தை அடையாமல், ஆத்மாவைக் காண்பான். கேவலஶப்தத்தாலே ஜ்ஞாநயோகத்தை இடையிடாமல் கர்மயோகத்தாலேயே பலனைப்பெறுவான் என்று காட்டப் படுகிறது. இதுவே இப்ரகரணத்திற்குப் பொருந்திய பொருள். கேவல ஶப்தத்தாலே யஜ்ஞாதிகர்மங்கள் தேவையில்லை என்று கூறுவதாகப் பொருள் கொள்வது ப்ரகரணவிருத்தமாகையாலே பொருந்தாது. 21.

॥ भा ॥ यदृच्छोपनतशरीरधारणहेतुवस्तुसन्तुष्टः, द्वन्द्वातीतः—यावत्साधनसमाप्ति अवर्जनीयशीतोष्णादिसहः, विमत्सरः—अनिष्टोप -

---

22. பேறிழவி லொத்திருந்து பெற்றத்தா லுள்ளமைந்து
கூறு மிருதுயரிற் கூடாதே—வேறொருவன்
தன்பாற் பொருமையிலான் றன்கருமஞ் செய்திடினு
மன்பாற் பிணிப்புண்ணா னங்கு.

**பேறு இழவில் ஒத்திருந்து**—(வெற்றிமுதலானவற்றை) அடைவதிலும், அடையாமையிலும் ஒத்த மனத்தினனாய், **பெற்றத்தால் உள் அமைந்து**—(சரீரம் தரிப்பதற்குத்) தானாகக் கிடைப்பதைக்கொண்டு திருப்திபெற்றவனாய், **கூறும்**—சாஸ்திரங்கள் சொல்லும், **இருதுயரில்**—(ஸுகம் துக்கம், சீதம் உஷ்ணம் முதலான) துயர்விளைக்கும் இரட்டைகளில், **கூடாதே**—விகாரமற்றவனாய், **வேறொருவன் தன்பால் பொருமை இலான்**—(தீங்குவிளைக்கும்) சத்துருவிடமும் (நம்கர்மம் காரணமாகவே, இவன் தீங்குசெய்கிறான் என்றறிந்து) பொருமையற்றிருப்பவன், **தன் கருமம் செய்திடினும்**—(ஜ்ஞானயோகமின்றிக்கே) தனக்குரிய கர்மத்தையே செய்தபோதிலும், **அங்கு அன்பால் பிணிப்புண்ணான்**—ஸம்ஸாரத்தில் பற்றாலே கட்டுப்பட மாட்டான்.

---

22. சென்ற ச்லோகத்தில், சரீரதாரணத்தின் பொருட்டான கர்மங்களைச் செய்வதாகக் கூறப்பட்டது. அத்தகைய கர்மங்களைச் செய்ய திரவியம் சம்பாதிப்பது முதலியவற்றில் அவசியம் ஈடுபடவேண்டும். அம்முயற்சிகளைச் செய்யும்போது, குளிர்காற்று, உஷ்ணக்காற்று, மலர் அம்பு முதலானவை படுவதால் சீத ஸ்பர்சம், உஷ்ண ஸ்பர்சம், ஸுகம் துக்கம் முதலானவை தவிர்க்கவொண்ணாதபடி மாறி மாறி ஏற்படும். எவ்வளவு திரவியம ஸம்பாதித்தாலும் போதாது என்னும் மனநிலை ஏற்படும்; திரவியம் சம்பாதிப்பது முதலிய முயற்சிகளைத் தடுப்பார் மீது மாத்ஸர்யம் ஏற்படும்; முயற்சிகள் தடைபட்டால் "திரவியம

निपातहेतुभूतस्वकर्मनिरूपणेन परेषु विगतमत्सरः, समस्सिद्धावसिद्धौ च-युद्धादिकर्मसु जयादिसिद्ध्यसिद्ध्योस्समचित्तः, कर्मैव कृत्वाऽपि-ज्ञाननिष्ठां विनाऽपि, न निबध्यते—न संसारं प्रतिपद्यते॥ २२॥

---

கிடைக்கவில்லையே' என்னும் வருத்தமும், முயற்சிகள் ஈடேறி திரவியம் கிடைத்தால் ஸந்தோஷமும ஏற்படும். ஆக இவ்வண்ண மாகக் கர்மயோகமே ஆத்மத₃ர்ஶனத்திற்குத் தடையான எல்லா வற்றையும் உண்டாக்கிவிடும்போலிருக்கிறதே என்னும் ஐயம் ஏற்பட, இவ்வுலகப் பலன்களில் பற்றில்லாமலே இவன் கர்ம யோகம் செய்கிருனுகையாலே இவையித்தனையும் ஏற்படாது என்று கூறுவதன்மூலம் கர்மயோகம் ஜ்ஞாநாகாரமாயிருப்பதே என்று வலியுறுத்தப்படுகிறது இநத ஶ்லோகத்தில். (யத்₃ருச்சா₂லாப₄ ஸந்துஷ்ட:) தானுகக் கிடைக்கும் பொருளைக்கொண்டு திருப்தி பெறுபவன். சரீரதாரணத்தின் பொருட்டு திரவியம் சம்பாதிக்க முயலுமபோது தானுகக் கிடைத்த பொருளைக்கொண்டே திருப்தி பெற்று, அதைவிடச் சிறந்த பொருளைத்தேடி அலைவதில்லை இவன் என்று கருத்து. ஆக, இவ்வுலகப் பலனில் பற்றுடன் செய்யப் படும் செயல் எதுவுமே இவனுக்கு இல்லையாகையால், திரவியம் முதலானவற்றைச் சம்பாதிகும் வியாபாரங்கள் 'போதாது' என்னும் மனநிலையை ஏற்படுத்தி இவனைக் கட்டுப்படுத்தமாட்டா என்றதாகிறது. 'யத்₃ருச்சா₂ லாப₄ ஸந்துஷ்ட:' என்றதற்கு ஒரு வியாபாரமும் செய்வதில்லை என்று பொருள்கொண்டால், தானே கிடைத்த உணவை விழுங்குவதைக்கூட இவன் செய்யாமலிருக்க நேரிடுமாகையால் சரீரதாரணமே ஸித்திக்காது. ஆகையால், தேஹதாரணத்தின் பொருட்டு திரவியம் ஸம்பாதிப்பது முதலிய வற்றைச் செய்யும்போது, இவ்வுலகப் பலன்களில் பற்றில்லாமலே அச்செயல்களைச் செய்கிருன் என்பதே இப்பதத்திற்குப் பொரு ளாகவேண்டும். (த்₃வந்த₃வாதீத:) இரட்டைகளைக் கடந்தவன்; "மாத்ராஸ்பர்ஶாஸ்து" [கீதை 2-1-14] என்ற ஶ்லோகத்தில் சொன்ன ரீதியில், ஸாத₄னம் நிறைவேறும் வரையில் திரவியம் சம்பாதிப்பது முதலியவற்றைச் செய்யும்போது தவிர்க்கவொண் ணுதபடி மாறிமாறி ஏற்படும் சீதம், உஷ்ணம், ஸுகம, துக்கம் முதலான இரட்டைகளைப் பொறுத்துக் கொள்ளுகிருனுகையாலே, அவ்விரட்டைகளும் இவனுடைய ஆத்மத₃ர்ஶனத்தைத தடை செய்யமாட்டா என்று கருத்து. (விமத்ஸர:) திரவியம் சமபா

गतसङ्गस्य मुक्तस्य ज्ञानावस्थितचेतसः।
यज्ञायाचरतः कर्म समग्रं प्रविलीयते॥२३॥

---

திப்பது முதலானவற்றைத் தடுப்பார் மீது மாத்ஸர்யமற்றவன். 'நமது கர்மம் காரணமாகவே சூரியன நம்மைக் கொளுத்துகிறுன்' என்றறிந்து சூரியன்மேல் கோபப்படாமல், குடை முதலானவற்ருல் அவன் செய்யும் தாபத்தைத் தடுத்துக் கொளவதை மாத்திரம் செய்வதுபோலே, 'திரவியம் சம்பாதிப்பதைத் தடுப்பவனும் நமது கர்மம் காரணமாகவே அதைத் தடுககிருன்' என்றறிந்து, அவன் மீது கோபப்படாமல் அவன் செய்யும் தடையை நீக்கிக் கொள்ளவே முயல்வானிவன்: ஆகையால் பிறர்மீது மாத்ஸர்யம ஏற்பட்டு இவனுடைய ஆத்மதர்ஶனம் தடைபடாது என்று கருதது. (ஸித்தௌ அஸித்தௌ ச ஸம:) திரவியம் முதலானவற்றை சம்பாதிக்கப் போர் முதலியவற்றைச் செய்யும்போது, வெற்றியும், ராஜ்யம் முதலானவையும் கிடைத்தாலும், கிடைக்காவிட்டாலும் ஒரு படிப்பட்ட மனத்தை உடையவனுயிருப்பவன். "ஸுகது:க்கே ஸமே க்ருத்வா" [கீதை 2-38] "ஸித்த்யஸித்த்யோ: ஸமோ பூத்வா" [கீதை 2-48] என்னுமிடங்களில் சொல்லியதுபோலே வெற்றி தோல்விகளிலும், லாபாலாபங்களிலும், ஸுகதுக்கங்களிலும் இவன் விகாரமடையாமல் ஒருபடிப்பட்ட மனத்தையுடையவனுயிருக்கிருனுகையாலே, இவையும் இவனுடைய ஆத்மதர்ஶனத்திற்குத் தடையாகமாட்டா என்று கருத்து. (க்ருத்வாऽபி) கர்மயோகத்தைச் செய்த மாத்திரத்தாலேயே, கர்மயோகத்தின் பலனுக ஏற்படும் ஞானயோகத்தை எதிர்பாராமலேயே என்று கருத்து. (ந நிபத்யதே) ஸம்ஸாரத்தில் கட்டுப்படமாட்டான். ஸ்வதந்த்ர ஜ்ஞானயோகத்தின் பலனுக ஏற்படும் ஆத்மதர்ஶனத்தைக் கர்ம யோகத்தாலேயே அடைவான் என்று கருத்து. 'க்ருத்வாऽபி ந நிபத்யதே' என்றதற்கு "ஶரீரதாரணத்தின் பொருட்டுக் கர்மம் செய்தபோதிலும் ஆத்மதர்ஶன்த்திற்குத் தடைகளை அடைய மாட்டான" என்று பொருள் கூறலாமாயினும், அப்பொருள் 'யத்ருச்சாலாபஸந்துஷ்ட:' முதலிய பதங்களிலிருந்தே அர்த்த பலத்தால் கிடைககுமாகையாலே, இங்கு அதனுல் ஏற்படும பரம பலத்தைச் சொல்லுவதாகக் கொள்வதே உசிதம. ஆக, 'யத்ருச்சாலாப ஸந்துஷ்ட:' முதலான நாலு தொடர்களாலும், இவனுடைய கர்மயோகம் ஜ்ஞாநாகாரமே என வலியுறுத்தப்பட்டது. 22.

23. கதஸங்கஸ்ய முக்தஸ்ய ஜ்ஞாநாவஸ்திதசேதஸ: |
யஜ்ஞாயாசரத: கர்ம ஸமக்ரம் ப்ரவிலீயதே ||

ஜ்ஞாநாவஸ்திதசேதஸ. – ஆத்மஜ்ஞானத்திலேயே நிலை நிற்கும் நெஞ்சை உடையவனாய், கதஸங்கஸ்ய— (அதனாலேயே) மற்ற விஷயங்களில் பற்றற்றவனாய், முக்தஸ்ய—(அதனாலேயே) மற்ற விஷயங்கள் அனைத்தினின்றும் விடுபட்டவனாய், யஜ்ஞாய—யஜ்ஞம் முதலான கர்மங்களின் பொருட்டு. ஆசரத:—செயலகளைச் செய்கின்றவனுக்கு, கர்ம—புண்யபாபகர்மம் முழுவதும், ஸமக்ரம் ப்ரவிலீயதே—மிகுதியில்லாமல் அடியோடு அழிகிறது.

|| भा || आत्मविषयज्ञानाधस्थितमन[स्कत्वे]स्त्वेन निर्गततदितर-सङ्गस्य तत एव निखिलपरिग्रहविनिर्मुक्तस्य उक्तलक्षणयज्ञादिकर्मनिर्वृत्तये

23. போன நசையினனாய்ப் புன்புலனின் முத்தனாய்
ஞான நிலைகொண்ட நன்னெஞ்சா—யானதொழில்
வேள்வியினுக் காக விரும்பி முயல்வானுக்
கூழ்வினையெல் லாம்போ முடைந்து.

ஞானம் நிலை கொண்ட நல் நெஞ்சாய்—ஆத்ம ஜ்ஞானத்திலேயே நிலைநிற்கும் நல்ல நெஞ்சை உடையவனாய், புன் புலனில் போன நசையினனாய்—(அதனாலேயே) மற்ற தாழ்ந்த விஷயங்களில் பற்றற்றவனாய், புன் புலனில் முத்தனாய்—(அதனாலேயே) தாழ்ந்த விஷயங்களினின்றும் விடுபட்டவனாய், வேள்வியினுக்காக—யஜ்ஞம் முதலான கர்மங்களின் பொருட்டு. ஆன தொழில் விரும்பி முயல்வானுக்கு — செய்யவேண்டிய செயல்களை விருப்பத்துடன் செய்பவனுக்கு. ஊழ்வினை எல்லாம்—அநாதியான புண்ய பாபகர்மங்கள் முழுவதும், உடைந்து போம்—உருக்குலைந்து அழியும்.

23. 'த்யக்த்வா கர்மபலாஸங்கம்' [கீதை 4-20] 'த்யக்தஸர்வபரிக்ரஹ:' [கீதை 4-21] 'யதசித்தாத்மா' [கீதை 4-21] என்னும் பதங்களாலே

वर्तमानस्य पुरुषस्य बन्धहेतुभूतं प्राचीनं कर्म समग्रं प्रविलीयते—निश्शेषं क्षीयते॥ २३॥

---

முன் ஸ்லோகங்களில் புத்₃தி₄பூர்வமாக முயன்று இவனால் ஸம்பாதிக்கப்படுபவையாகச் சொல்லப்பட்ட மூன்று பெருமைகளும், காலக்ரமத்தில், யஜ்ஞாதிகளின் பொருட்டு திரவியம் ஸம்பாதிப்பது முதலான செயல்களில் ஈடுபட்டுக் கொண்டேயிருந்தாலும் இவனுக்கு இயல்வாகவே ஏற்பட்டுவிடும் என்று முற்பாதியின் மூன்று பதங்களால் சொல்லிக்கொண்டு, பிற்பாதியில் இத்தகையவனுக்குள்ள அளவற்ற விரோதிகர்மங்கள கர்மயோகப்ரபா₄வத்தாலேயே அழிந்துவிடும் என்று கூறுகிறது இந்த ஸ்லோகம். (ஜ்ஞாநாவஸ்தி₂த சேதஸ:) ஆத்மஜ்ஞானத்தில் நிலைநிற்கும நெஞ்சுடையவனுக்கு. முன் ஸ்லோகங்களில்கூறியபடி புத்திபூர்வகமாக இவன கர்மபலனகளை விட்டு, ஸர்வபரிக்ரஹங்களையும் விட்டு, மனத்தையும் அடக்கிவந்திருக்கையாலே இப்போது ஆத்மஜ்ஞானத்தில மனமானது இயல்வாகவே நிலைநிற்கிறது, ஆகையால் மனத்தை முயன்று அடக்கவேண்டிய தேவையில்லை என்று கருத்து (க₃தஸங்க₃ஸ்ய) மற்ற விஷயங்களில் பற்றற்றவனுக்கு. முன் பதத்திற்கூறியபடி ஆத்மஜ்ஞானத்தில் மனம் நிலைநிற்கையாலே. மிகச்சிறந்த இனிமையுடைய ஆத்மாவின அநுஸந்தானத்தாலே மற்ற விஷயங்களில் பற்று தானாகவே கழன்றுவிடுகிறது என்று கருத்து. (முக்தஸ்ய) ஸர்வபரிக்ரஹங்களினின்றும் விடுபட்டவனுக்கு; முன் பதத்திற் கூறியபடி மற்ற விஷயங்களில் பற்று கழன்றவுடன், அவ்விஷயங்களை இவனாக முயன்று விடவேண்டியதில்லை; அவை தாமாகவே விட்டுப்போம் என்று கருத்து. ஆக, ஸ்லோகத்தின் முற்பாதியாலே, ஜயிக்கவேண்டியவை அனைத்தையும் ஜயித்துவிட்டான் இவன் என்று காட்டப்பட்டது; ஆகையாலே, யாதொரு தடையுமில்லாமல் கர்மயோகத்தை அநுஷ்டித்து, ஆத்மத₃ர்ஸனத்துக்கும், ஆத்மப்ராப்திக்கும் விரோதியான ப்ராசீனமான எல்லாக் கர்மங்களும் நீங்கப்பெறுகிறான் என்கிறது பிற்பாதி,- (யஜ்ஞாய ஆசரத:) முற்கூறிய யஜ்ஞம் முதலான கர்மங்களின் பொருட்டு திரவியம் சம்பாதிப்பது முதலான செயல்களைச் செய்பவனுக்கு, தன் வயிறு நிரம்புவதற்காகக் காரியம் செய்பவனல்லன் இவன் என்று கருத்து, 'ஆசரத.' என்னும பதத்தாலேயே செயல்களைச் செய்பவன என்னும பொருள் ஸ்வரஸமாகக் கிடைத்துவிடுமாகையாலும், 'எல்லாம் அழிகிறது' என்று கூறும் கடைசிப்பாதத்தில்

॥भा॥ प्रकृतिवियुक्तात्मस्वरूपानुसन्धानयुक्ततया कर्मणो ज्ञाना-कारत्वमुक्तम्, इदानीं सर्वस्य सपरिकरस्य कर्मणः परब्रह्मभूतपरमपुरुषात्मकत्वानुसन्धानयुक्ततया ज्ञानाकारत्वमाह—

ब्रह्मार्पणं ब्रह्म हविर्ब्रह्माग्नौ ब्रह्मणा हुतम्।
ब्रह्मैव तेन गन्तव्यं ब्रह्मकर्मसमाधिना॥

24. ப்₃ரஹ்மார்ப்பணம் ப்₃ரஹ்ம ஹவிர் ப்₃ரஹ்மாக்₃நௌ ப்₃ரஹ்மணா ஹுதம்।
ப்₃ரஹ்மைவ தேந க₃ந்தவ்யம் ப்₃ரஹ்மகர்மஸமாதி₄நா ॥

---

'எது அழிகிறது' என்னும் கேள்விக்கு விடையில்லாமற்போகுமாகையாலும், கர்மஶப்தத்தை 'ஆசரத:' என்பதோடு கூட்டாமல், 'ப்ரவிலீயதே' என்பதோடு கூட்டுவதே பொருத்தம். (கர்ம ஸமக்₃ரம ப்ரவிலீயதே) ஆத்மத₃ர்ஶனததிற்கும், ஆத்மப்ராப்திக்கும் விரோதியான புண்யபாபகர்மங்கள் அனைத்தும அடியோடு அழிகிறது. ஆத்மத₃ர்ஶநப்ராப்திகளைப் பற்றிய ப்ரகரணமாகையாலே அவற்றுக்கு விரோதி₄களான கர்மங்களை மாத்திரம் கர்மஶப்தம் காட்டுகிறது. "ஸஹ அக்₃ரேண ப₂லேந வர்த்ததே—இதி ஸமக்₃ரம்" (அக்₃ரம் எனத்தக்க பலத்தோடு கூடியிருப்பது ஸமக்₃ரம) என்று ஸமக்₃ரஶப்தத்துக்கு வ்யுத்பத்திகாட்டி 'கர்மம் ப₂லத்தோடு அழிகிறது' என்று பொருள்கொண்டார் சங்கரர். இப்பொருளில் வ்யுத்பத்தியின்படி 'ஸாக்₃ரம்' என்றே ரூபம் கிடைக்குமாகையால். 'ஸமக்₃ரம்' என்பதை ஆர்ஷமாகக்கொள்ளவேண்டிவருகிறது; மேலும், 'ஸமக்₃ரம்' என்பதற்கு 'பூர்ணம்' என்னும பிரஸித்தமான பொருளிருக்க, 'பலத்துடன்கூடியது' என்னும் அப்ரஸித்தமான பொருளைக்கொள்ளும் அஸ்வாரஸ்யமும ஏற்படுகிறது. 'கர்மம் அழிகிறது' என்றாலே 'கர்மபலன் அழிகிறது' என்பது கிடைக்குமாகையாலே, அதற்காக ஸமக்₃ரம் என்னும பதமிடவேண்டிய அவசியமில்லை என்னும் அஸ்வாரஸ்யமும ஏற்படுகிறது. ஆகையாலே, 'ஸமக்₃ரம் ப்ரவிலீயதே' என்பதற்கு மீதியில்லாமல் அழிகிறது என்று பொருள்கொள்வதே பொருத்தம. லீத₄ாதுவானது ஶ்லேஷம்(சேர்த்தி) காரணநிலையை அடைவது, அழிவது என்னும மூன்று பொருள்களில பிரயோகிக்கப்படுகிறது; இங்கு முதலிரண்டு பொருள்கள பொருந்தாவாகையால, கடைசிபபொருளே கொள்ளப்படுகிறது. ஆக, இம மூன்று ஶ்லோகங்களாலும், கர்மயோகம் ஜ்ஞாநாகாரமாயிருப்பது என்னுமர்த்தம் நனகு ஶோதிக்கப்பட்டது. 23.

**ப்₃ரஹ்மார்ப்பணம்**—*ப்₃ரஹ்மமாயிருக்கும் ஸ்ருக் முத லான ஹோமஸாதனங்களால் ஸமர்ப்பிக்கப்படுவதான.* **ப்₃ரஹ்ம ஹவி:**—*ப்₃ரஹ்மரூபமான ஹவிஸ்ஸு,* **ப்₃ரஹ்மணு**—*ப்ரஹ்மமாயிருக்கும் ஹோமம் செய்பவனால்.* **ப்₃ரஹ்மாக்₃ நௌ**—*ப்ரஹ்மமான அக்னியில்.* **ஹுதம்**—*ஹோமம் செய் யப்பட்டது.* **ப்₃ரஹ்மகர்மஸமாதி₄நா**—*(இவ்வண்ணமாக) ப்₃ரஹ்மமாகக் கர்மத்தை அநுஸந்திப்பவனுல்.* **தேந ஏவ**—*அவனாலேயே,* **ப்₃ரஹ்ம க₃ந்தவ்யம்** — *ப்ரஹ்மமான ஜீவாத்மா அடையத்தக்கதாகிறது.*

---

**24. செய்யுந் தொழில்கண்மணஞ் சேரும் விதியதனிற்**
**பெய்யு மவியிற் பெறுந்தொழிலன்—மெய்யணைந்து**
**தான்பிரம மென்றுன்னித் தன்பிரம கன்மத்தால்**
**வான்பிரமத் தன்மையுறும் வாய்ந்து.**

**செய்யும் தொழில் கண்**—*தான் செய்யும் கிரியையின் ஸாதனங்களிலும்.* **மணம் சேரும் விதி அதனில**—*மணம் பொருந்திய ஹோமாக்னியிலும்,* **பெய்யும் அவியில்**—*(அதில) ஹோமம் செய்யப்படும் ஹவிஸ்ஸிலும்,* **பிரமம் என்று உன்னி**—*ப்ரஹ்மம் என்னும் நினைவைவைத்து.* **தான் பிரமம என்று உன்னி**—*(ஹோமம் செய்யும்) தன்னையும் ப்ரஹ்ம மாக நினைத்து.* **மெய் அணைந்து பெறும் தொழிலன்**—*சரீரத்தோடு பொருந்தி அடைந்த கர்மங்களைச் செய்பவன்.* **தன பிரம கன்மத்தால் வாய்ந்து**—*தனக்குரிய கர்மத்தை ப்ரஹ்மமாக அனுஸந்தித்து.* **வான் பிரமத் தன்மை உறும்**—*சிறந்தப்ரஹ்மமாயிருக்கும் தன்மையைப் பெறுவான்.*

---

24. ப்ரக்ருதி கார்யமான சரீரத்தின் தொடர்பற்ற ஆத்மஸ்வரு பத்தின் அநுஸந்தானததோடு கூடியிருக்கையாலே, கர்மயோக மானது ஜ்ஞாநாகாரமாகவேயிருப்பது என்று இதுவரையில் கூறப்பட்டது. இந்த ஶ்லோகத்தில், நித்யம் நைமித்திகம் முதலான எல்லாக்கருமங்களும், அவற்றுக்குரிய உபகரணங்களான ஸ்ருக், ஸ்ருவம், ஹவிஸ் முதலானவையும பரப்₃ரஹமமான பரம

॥भा॥ ब्रह्मार्पणमिति हविर्विशेष्यते, अर्प्यतेऽनेनेत्यर्पणं स्रुगादि तद्ब्रह्मकार्यत्वाद्ब्रह्म, ब्रह्म यस्य हविषोऽर्पणं तद्ब्रह्मार्पणम्, ब्रह्म

---

புருஷனின் கார்யமாகவும், அவனை அந்தர்யமியாகக் கொண்ட வையாயுமிருப்பவை என்னும் அநுஸந்தானத்தோடு கூடியிருக்கை யாலும், கர்மயோகமானது ஜ்ஞாநாகாரமாயிருப்பது என்பதை நிரூ பிக்கிறார். கர்மயோகத்தின வகைகளை நிரூபிக்கும் அடுத்துள்ள ஶ்லோகங்கள் போலே, இந்த ஶ்லோகமும் கர்மயோகததின ஒரு வகையைக்குறிக்கிறது என்று கொள்ளலாகாதோ? எனில: அடுத் துள்ள ஶ்லோகங்களில் 'அபரே' 'அந்யே' முதலான ஶப்தங்களிருக்கை யால், அவை கர்மயோகத்தின் வகைகளைக் காட்டுகின்றன என்று நிர்ணயிக்கிறோம். இங்கு அத்தகைய ஶப்தங்களில்லையாகையாலும, 'ப்₃ரஹ்மகர்மஸமாதி₄நா' [ப்ரஹ்மமாகக்கர்மத்தை அநுஸந்திப்ப வனால்] என்று பொதுவாகச் சொல்லுகையாலும், அனைததையும் ப்₃ரஹ்மாத்மகமாய் அநுஸந்திக்கவேண்டியது எல்லாக்கர்மயோகி களுக்குமே அவசியமாகையாலும், எலலாக்கர்மயோகிகளுக்கும் பொதுவான ப்ரஹ்மாத்மகத்வாநுஸந்தானமே இந்த ஶ்லோகத்தில் கூறப்படுகிறது என்று கொள்வதே பொருத்தம். (ப்₃ரஹ்மார்ப் பணம் ப்₃ரஹ்மஹவி:) ப்₃ரஹ்மகார்யமாகவும், ப்ரஹ்மத்தை அந்தர் யாமியாகக் கொண்டதாயுமிருக்கையாலே ப்ரஹ்மமென்றே வழங்கத் தக்கதாயிருக்கும் ஸ்ருக் ஸ்ருவம் முதலான அர்ப்பண (ஹோம) ஸாத₄னங்களைக் கொண்டதாய், முற்கூறிய காரணத்தாலே தானே ப்₃ரஹ்மமென்றுவழங்கத்தக்கதான ஹவிஸ்ஸு. ப்₃ரஹ்மஶப்தமானது நாராயணனிடமே முக்கியமான பிரயோகத்தையுடையது எனபது 'நாராயணபரம் ப்₃ரஹ்ம' முதலான வேதாந்தவாக்கியங்களில் முடிவுகட்டப்பட்ட விஷயம். ஸ்ரீபாஷ்யத்தின் தொடக்கத்தில் இவ் விஷயம் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இவ்விடத்தில் அந்த முக்கியப் பொருளையே கொண்டு நிர்வஹிக்க இடமிருக்குமபோது, ஔப சாரிகப் பொருள்களான ஜீவாத்மா, பரக்ருதி முதலானவற்றைக் கொள்வது அஸ்வரஸம். யோகிகள் அனைத்தையும் ப்₃ரஹ் மாத்மகமாய் அநுஸந்திக்கவேண்டும் என்பது சாஸ்திரஸித்தமானது. "மந்த்ரோSஹம் அஹமேவாஜ்யமஹமக்₃நிரஹம் ஹுதம்" [கீதை 9-16] [நானே மந்திரம்; (ஹோமம் செய்யப்படும் ஹவிஸ்ஸான) நெய் முதலானவையும் நானே; நானே அக்னி; ஹோமமும் நானே.] என்று கீதாசார்யன் தானும் இவ்வர்த்தத்தைச் சொல்லப்போகிறான். ஆகையால், இங்கு உள்ள ப்₃ரஹ்மஶப்தங்கள் அனைத்தும் பரம

புருஷனைச் சொல்லுவதாகக்கொண்டு, அவனுக்குக் கார்யமாகவோ, சரீரமாகவோ இரண்டுமாகவோ இருப்பதால் ஸ்ருக் ஸ்ருவம் முதலானவற்றைச் சொல்லுவதாகக் கொள்ளுவதே பொருத்தம். ப்ரத்யக்ஷம முதலான ப்ரமாணங்களுக்கு முரண்பட்டதாகையாலும், பிரகரணத்திற்குப் பொருந்தாதாகையாலும், ப்ரஹ்மம் தவிர்ந்த ஹவிஸ் முதலானவை பொய்யென்று கூறுவதாகவும், ப்ரஹ்மத்தையே யஜ்ஞமாகக் கற்பிப்பதாகவும் சங்கரர் முதலானோர் வியாக்கியானம செய்தது பொருந்தாது. பூர்வார்த்த₄ம் முழுவதையும ஒரே வாக்கியமாகக் கொள்ள இடமிருக்கும் போது, அதைப் பல வாக்கியங்களாகச் சிலர் கொள்வதும் அஸ்வரஸம்; ஆகையால், 'ப்₃ரஹ்மார்ப்பணம் ப்₃ரஹ்ம' எனனும் இரண்டு பதங்களையும் 'ஹவி:' என்னும ஶப்தத்திற்கு விஶேஷணமாகக் கொள்ளவேண்டும்: "அர்ப்யதே அநேந இதி அர்ப்பணம்" [எதனால் அர்ப்பணம் செய்யப்படுகிறதோ அது அர்ப்பணமாகிறது] எனனும் கரணவ்யுத்பத்தியரல அர்ப்பணம் செய்வதற்கு உபகரணமாயிருக்கும் ஸ்ருக். ஸ்ருவம் முதலியவை இங்கு அர்ப்பணஶப்தத்தால் குறிக்கப்படுகின்றன. 'ப்₃ரஹ்ம அர்ப்பணம் யஸ்ய தத்' [ப்ரஹ்மரூபமாயிருக்கும் ஸ்ருக் முதலானவற்றை உடையது ப்ரஹ்மார்ப்பணமாகிறது.] எனனும ஸமாநாதி₄கரண ப₃ஹுவ்ரீஹிஸமாஸத்தைக்கொண்டு, ப்₃ரஹ்மார்ப்பண ஶப்தத்தை ஹவிஶ்ஶப்தத்துக்கு விஶேஷணமாகக் கொள்ளவேண்டும். வ்யதி₄கரண ப₃ஹுவ்ரீஹியைக் காட்டிலும, ஸமாநாதி₄கரண ப₃ஹுவ்ரீஹியே சிறந்தது என்பது வடமொழியிலக்கண வழக்காகையால், "ப்₃ரஹ்மணி அர்ப்பணம் ப்ரக்ஷேப: யஸ்ய தத்" [ப்ரஹ்மத்திடம் எந்த ஹவிஸ்ஸானது அர்ப்பிக்கப்படுகிறதோ அது ப்₃ரஹ்மார்ப்பணம்] என்று வ்யுத்பத்தி கொள்வது அஸ்வரஸம்; மேலும, இப்படிக் கொள்ளும்போது, 'ப்₃ரஹ்மாக்₃நௌ ஹுதம்" [ப்₃ரஹ்மமாகிற அக்னியில் ஹோமம் செய்யப்பட்டது] எனறு அடுத்தபடி சொல்லும் அர்த்தத்தோடு புநருக்தியும் ஏற்படுகிறது. 'ஆப்யதே அஸ்மிந் இதி அர்ப்பணம்' [அக்னியில் அர்ப்பிக்கப்படுகிறதாகையால் அர்ப்பணம் எனப்படுகிறது] என்று அர்ப்பண ஶப்தத்திற்கு அதி₄கரணவ்யுத்பத்திகொண்டாலும் ப்₃ரஹ்மார்ப்பண ஶப்தத்திற்கு ப்ரஹ்மமாகிற அக்னியில் ஹோமம் செய்யப்படும ஹவிஸ் எனறே பொருளாவதால், இதே புநருக்தி ஏற்படும. ஆகையால், முற்கூறியவாறு அர்ப்பண ஶப்தத்திற்குக் கரணவ்யுத்பத்தி கொண்டு, ப்ரஹ்மார்ப்பண ஶப்தத்தை ஸமாநாதி₄கரண ப₃ஹுவ்ரீஹியாகக்கொண்டு ஹவிஶ்ஶப்தத்துக்கு விஶேஷணமாக்கிப்

हविः-ब्रह्मार्पणं हविस्स्वयं च ब्रह्मभूतम्, ब्रह्माग्नौ—ब्रह्मभूते अग्नौ ब्रह्मणा कर्त्रा हुतमिति सर्वं कर्म ब्रह्मात्मकतया ब्रह्ममयमिति यस्समाधत्ते, स ब्रह्मकर्मसमाधिः। तेन ब्रह्मकर्मसमाधिना ब्रह्मैव गन्तव्यम्। ब्रह्मात्मकतया ब्रह्मभूतमात्मस्वरूपं गन्तव्यम्। मुमुक्षुणा क्रियमाणं

---

பொருள் கொள்வதே பொருத்தம். 'ப்₃ரஹ்மார்ப்பணம்' என்றவிடத்திற்போலே, இந்த ஶ்லோகத்தில் பின்வரும் எல்லா இடங்களிலுமே ப்₃ரஹ்மத்திற்குக் கார்யமாகவோ, அதற்கு சரீரமாகவோ இருக்கையால் எல்லாப் பொருள்களும் ப்ரஹ்மம் எனப்படுவதாகக் கொள்ள வேண்டுமாகையால், ஸ்ருக் முதலானவற்றை ப்ரஹ்மமாக உபாஸிக்க வேண்டும் என்று த்₃ருஷ்டிவிதி₄யாகக்கொள்வது அஸ்வரஸம். (ப்₃ரஹ்மாக்₃நௌ ஹுதம்) முற்கூறிய காரணத்தாலே ப்ரஹ்மமாகவேயிருக்கும் அக்னியில் (முற்கூறிய) ஹவிஸ்ஸு ஹோமம் செய்யப்பட்டது. யாரால் ஹோமம் செய்யப்பட்டது? எனில்: (ப்₃ரஹ்மணா ஹுதம்) முற்கூறியபடி ப்₃ரஹ்மமாகவேயிருக்கும் கர்த்தாவால் ஹோமம் செய்யப்பட்டது. 'ப்₃ரஹ்மார்ப்பணம்' 'ப்₃ரஹ்மஹவி:' 'ப்₃ரஹ்மாக்₃நௌ' என்றவிடங்களிற்போலே ப்ரஹ்மாத்மகமாயிருக்கும் பொருள் எது என்பதைக்காட்டும் விஶேஷ்யபதமில்லாவிடிலும், ஹோமம் செய்யும் உபகரணத்தை அர்ப்பணஶப்தத்தால் சொல்லிவிட்டபடியால், ஹோமம் செய்பவனை கர்த்தாவையே 'ப்₃ரஹ்மணா' என்னும் பதத்தால் சொல்லுவதாகக் கொள்ளவேண்டும். 'கர்த்தரித்ருதீயா.' இந்த ஶ்லோகத்தில் சொல்லப்படும் ப்₃ரஹ்மாத்மகத்வாநுஸந்தானம் எல்லாக் கர்மயோகங்களுக்கும் பொதுவாகையாலே, இங்கு கர்மஸாதனங்கள் சிலவற்றைச் சொன்னது எல்லாக் கர்மஸாத₄னங்களுக்கும் உபலக்ஷணம். அவ்ரவர் தம்தம் கர்மங்களையும், அவற்றின் பரிகரங்களையும் ப்₃ரஹ்மாத்மகமாக அநுஸந்திக்கவேணும் என்றபடி. இனி, இப்படி எல்லாவற்றையும் ப்₃ரஹ்மாத்மகமாக அனுஸந்திப்பவனுக்குப் பலனைச் சொல்லுகிறது உத்தரார்த்த₄ம். (ப்₃ரஹ்மகர்மஸமாதி₄நா தேந) முற்பாதியில் சொன்ன ரீதியிலே, நித்யம் நைமித்திகம் முதலான எல்லாக் கர்மமும் முன் சொன்ன முறையில் ப்₃ரஹ்மாத்மகமாயிருக்கையால் ப்₃ரஹ்மமாகவேயிருப்பது என்று அநுஸந்திப்பவனால். இங்கு ஸமாதி₄ஶப்தம் அநுஸந்தானம் என்னும் பொருளை உடையது. வேறு வழி

कर्म परब्रह्मात्मकमेवेत्यनुसन्धानयुक्ततया ज्ञानाकारं साक्षादात्मावलोकन-साधनम्ः न ज्ञाननिष्ठाव्यवधानेनेत्यर्थः ॥ २४ ॥

॥ भा ॥ एवं कर्मणो ज्ञानाकारतां प्रतिपाद्य कर्मयोगभेदानाह—

दैवमेवापरे यज्ञं योगिनः पर्युपासते ।
ब्रह्माग्नावपरे यज्ञं यज्ञेनैवोपजुह्वति ॥ २५ ॥

---

யில்லாமையாலே "ப்3ரஹ்மாத்மகமாகையாலே ப்ரஹ்மமாயிருக்கும் கர்மவிஷயத்தில ஸமாதி4யாகிற அநுஸந்தானத்தை உடையவன் ப்3ரஹ்மகர்மஸமாதியாகிறான்" எனும வ்யதி4கரணப3ஹுவ்ரீஹி ஸமாஸம் இங்கு கொள்ளப்பட்டது. "ஸமாத4த்தே இதி ஸமாதி4:" எனனும் வ்யுத்பத்தியாலே, அநுஸந்தானம் செய்பவனை ஸமாதி4 ஶப்தம் குறிப்பதாகவும் கொள்ளலாம். "ஸர்வம் க2ல்விதம்3 ப்3ரஹ்ம தஜ்ஜலாந்" [ப்3ரஹ்மத்திடம தோன்றி லயிக்கையால் ப்3ரஹ்ம கார்யமாகையாலும, ப்3ரஹ்மத்தால் அந்தர்யாமியாயிருந்து ரக்ஷிக்கப் படுகையாலும் இவையனைத்தும ப்ரஹ்மமே] என்று ஶ்ருதியிலும், "ஸர்வம் ஸமாப்நோஷி ததோऽஸி ஸர்வ:" [கீதை 11-40] [அனைத்தையும் வியாபித்திருக்கையால் நீயே அனைத்துமாகிறாய்] என்று கீதையிலும சொல்லியிருக்கையாலே, ப்3ரஹ்மகார்யமாகவும், ப்3ரஹ்மஶரீரமாகவுமிருக்கையாலேயே இங்கு மற்ற பொருள்களை ப்ரஹ்மமாகச் சொல்லுவதாகக் கொள்ளவேண்டும். ஸ்வரூபைக்யப் பொருள் ஶ்ருதி, ப்ரத்யக்ஷம் முதலான எல்லாப் பிரமாணங்களுக்கும முரண்பட்டது. (ப்3ரஹ்ம க3ந்தவ்யம) ப்3ரஹ்மாத்மகமாகையாலே ப்ரஹ்மம் எனத்தக்க ஆத்மஸ்வரூபம் அடையத்தக்கது. கர்மயோகத்திற்குப் பலன் சொல்லுகையாலே, ஆத்மஸ்வரூபமே இங்கு ப்ரஹ்மஶப்தத்திற்குப் பொருளாகக்கடவது. 'ப்3ரஹ்மார்ப்பணம்' முதலானவிடங்களிற்போலே இங்கும் ப்ரஹ்மாத்மகனாகையாலே ஜீவன் ப்ரஹ்மமெனப்படுகிறான என்று கண்டுகொள்வது. (ப்ரஹ்மகர்ம ஸமாதி4நா தேனைவ க3ந்தவ்யம்) முற்கூறியபடி கர்மயோகத்தை அநுஷ்டிப்பவனாலேயே அடையத்தக்கது. முமுக்ஷுவால் செய்யப்படும் கர்மம் 'பரப்ரஹ்மாத்மகமே' என்னும் அநுஸந்தானத்தோடு கூடியிருக்கையால், ஜ்ஞாநாகாரமாயிருந்து கொண்டு ஜ்ஞாநயோகத்தை இடையிடாது தானே ஆத்மஸாக்ஷாத்காரத்திற்கு நேரே ஸாத4நமாகிறது என்று ஏவகாரத்திற்குக்கருத்து. 24.

25. தை₃வமேவாபரே யஜ்ஞம் யோகி₃ந: பர்யுபாஸதே ।
ப்₃ரஹ்மாக்₃நாவபரே யஜ்ஞம் யஜ்ஞேநைவோபஜுஹ்வதி ॥

அபரே யோகி₃ந:—*ஒருவகைக் கர்மயோகிகள்*. தை₃வம்—*தேவரைப் பூஜிப்பதாகிற*. யஜ்ஞம் ஏவ—*யாகத்தையே*, பர்யுபாஸதே — *விசேஷமாகச் செய்கிறார்கள்*. அபரே—*மற்றொரு வகைக் கர்மயோகிகள்*. ப்₃ரஹ்மாக்₃நௌ-*ப்ரஹ்மமாயிருக்கும் அக்னியில்*. யஜ்ஞம் — *யஜ்ஞஸாதனமான ஹவிஸ்ஸை*, யஜ்ஞேந—*யஜ்ஞோபகரணமான ஸ்ருக் முதலானவைகளால*. உபஜுஹ்வதி ஏவ—*ஹோமம் செய்வதிலேயே ஊன்றிநிற்கிறார்கள்*.

---

25. வேறுசில யோகியர்கண் மேலான தேவரிடைக்
கூறுபடு மெச்சங் குறித்தியல்வ—ரீறில்
பிரமமா மங்கிப் பிறரெச்ச முய்ப்பா
ருரமத்தா லெச்சவுறுப் புற்று.

வேறு சில யோகியர்கள்—*கர்மயோகிகளில் ஒருவகைப் பட்டவர்கள்*, மேலான தேவரிடைக் கூறுபடும்—*(மனிதரிலும்) மேலான தேவர்களிடம் (அர்ச்சனம் முதலான) அடிமைகளைச் செய்யும்*. எச்சம்—*யாகத்தை*. குறித்து இயல்வர்—*ஊன்றிச் செய்வர்;* பிறர்—*மற்றொரு வகைக் கர்மயோகிகளோவெனில்*, எச்ச உறுப்பு உற்று—*யஜ்ஞத்திற்குரிய உபகரணங்களை ஸம்பாதித்து*. உரம் அத்தால்—*அவற்றைக்கொண்டு*, ஈறு இல் பிரமமாம் அங்கி—*அழிவில்லாத ப்₃ரஹ்மமாகவேயிருக்கும் அக்னியிலே*. எச்சம் உய்ப்பர்—*யஜ்ஞஸாதனமான அவியைப் பெய்வர்*.

---

25. "ப்ரஸங்கா₃த் ஸ்வஸ்வபா₄வோக்தி: கர்மணோSகர்மதா" [கீதார்த்த ஸங்க்ரஹம்-8] [ப்ராஸங்கிகமாகத் தன் அவதாரப் பெருமையைச்சொல்லி, அதற்குப்பின கர்மயோகம் ஜ்ஞாநாகாரமாயிருப்பது என்பதைச்சொல்லி,]' என்று கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹத்தில ஆளவந்தார் அருளிய இரண்டு அர்த்தங்களை இதுவரையில் உபதேசித்து, "அஸ்ய ச பே₄த₃ா: ஜ்ஞாநஸ்ய மாஹாத்ம்யம் சதுர்த்த₂ாத்₄யாய உச்யதே" [கீதார்த்த-8] [அதற்குப்பின் கர்மயோகத்தின்

॥ भा ॥ दचम्—देवार्चनरूपं यज्ञम् अपरे कर्मयोगिनः पर्युपासते—

---

வகைகளைச் சொல்லி, (கர்மயோகத்திலடங்கிய) ஜ்ஞானத்தின பெருமை (கடைசியாக) நாலாம் அத்தியாயத்தில் உபதேசிக்கப் படுகிறது.] என்று அவரே அருளிய மற்ற இரண்டு விஷயங்களைச் சொல்லத் தொடங்கியவனாய், இந்த ஶ்லோகம முதலாகக் கர்ம யோகத்தின் வகைகளைச்சொல்லத் தொடங்குகிறான்(அபரே யோகி₃ந.) ஒருவகைக் கர்மயோகிகள. 'கர்மயோகே₃ந யோகி₃நாம்' [3-3] என்று இப்ரகரணத்தின் தொடக்கத்தில் சொன்னது போலே இங்கும் யோகி₃ ஶப்₃த₃ம் கர்மயோகி₃களைக் குறிக்கிறது "முன் ஶ்லோகத்தில் யாக ஹோமங்களுக்கேயுரிய அர்ப்பணம், ஹவிஸ்ஸு, அக்னி ஆகியவற் றைச்சொல்லி "ப்₃ரஹ்ம கர்மஸமாதி₄நா தேந' என்று எல்லாம் ப்₃ரஹ் மாத்மகமென்னும் அநுஸந்தானத்துடன் யாகஹோமங்களில் ஊன்றி நிற்கும் ஒருவகைக் காமயோகியைச் சொலுவதாகவும், 'அபரே' என்று, இங்கு அவர்களைக் காட்டிலும் வேறுவகைக் கர்மயோகியைச் சொல்லுவதாகவும் கொள்வது 'அபரே' எனும் ஶப்தத்துக்குப் பொருந்தியதாகத் தோன்றுகிறதே" என்னும ஆக்ஷேபம் இவ்விடத் தில் எழக்கூடும்;'ப்₃ரஹ்மமாகக் கர்மத்தைஅநுஸந்திப்பவனல'என்று முன் ஶ்லோகத்தில் பொதுவாகச் சொல்லியிருப்பதாலும், 'அபரே' என்பதற்கு ப்ரதியோகி₃யாக 'ஏகே' என்பதுபோன்ற ஶப்தமில்லாமை யாலும், கர்மம் முழுவதையும் ப்₃ரஹ்மாத்மாக அநுஸந்திக்க வேண்டியது எல்லாக் கர்மயோகிகளுக்குமே தேவையாகையாலும், அங்கு சில கர்மஸாத₄னங்களைச் சொன்னது எல்லாக் கர்மஸாதனங் களுக்குமே உபலக்ஷணம் என்று சென்ற ஶ்லோகத்திலேயே நிர்ண யித்தோம்; மேலும், இந்த ஶ்லோகத்தின் பிற்பாதியில் 'ப்₃ரஹ் மாக்₃நௌ' என்று தொடங்கி யாகஹோமங்களில் ஊன்றிநிற்ப வனைத் தனியே எடுத்திருக்கையால், அந்த ஶ்லோகத்தைக் கர்ம யோகத்தின வகையைச் சொல்லும் ஶ்லோகமாகக் கொண்டால் புநருக்திவரும். ஆகையால், இவ்வாக்ஷேபத்திற்கு இடமில்லை. (தை₃வம் யஜ்ஞம் ஏவ பர்யுபாஸதே) "யஜ தே₃வபூஜாயாம்" என்று த₄ாது வாகையால், தேவர்களைப் பூஜிப்பதாகிற யாகததிலேயே ஊன்றி நிற்கிறார்கள. இங்கு, "தை₃வம ஏவ" என்ற அவத₄ாரணத்தாலும், 'அபரே' என்னும் ஶப்தத்தாலும், 'பர்யுபாஸதே' என்றவிடத்தில் உபஸர்க்கத்தாலும் பின் சொல்லப்போகும் யாகஹோமநிஷ்டர் முதலான கர்மயோகிகளைக் காட்டிலும் வேறுபட்ட ஒருவகைக் கர்மயோகிகளே கூறப்படுகின்றனர் என்பது விளங்குகின்றது. யஜ்ஞ ஶப்தமும் தேவபூஜை என்னும் பொருளில் பிரஸித்தியுடையது; ஆகையால், தேவஸம்பந்தத்தைக் குறிக்கும் தை₃வஶப்தம பூஜை

सेवन्ते, तत्रैव निष्ठां कुर्वन्तीत्यर्थः। अपरे ब्रह्माग्नौ यज्ञं यज्ञेनैवोपजुह्वति;

---

யாகிற ஸம்ப₃ந்த₄விஶேஷத்தை இங்கு குறிப்பதாகக் கொள்ள வேண்டும், யாகம் முதலானவையும் தேவபூஜையேயாயினும், அவை ஶ்லோகத்தின் பிற்பாதியில் சொல்லப்படப்போகின்றனவாகை யாலும், அந்தந்த தேவதைகளின் உருவத்திற்குச் செய்யும் அர்ச் சனம். வந்தனம முதலான கைங்கர்யங்களிலேயே பூஜாஶப்தம் பிரஸித்தமாகையாலும் இங்கு அத்தகைய பூஜைகளில் ஊன்றி நிற்கும் கர்மயோகிகளைக் கூறுவதாகக் கொள்வதே பொருத்தம். (பர்யுபாஸதே) விசேஷமாக ஸேவிக்கிறார்கள்; ஊன்றிநிற்கிறார்கள் என்றபடி. 'ஸேவா ப₄க்திருபாஸ்தி:' என்று நிகண்டுக்களில் உபா ஸனஶப்தம நிரந்தரமான அநுஷ்டானம் என்னும் பொருளில் அதிகமாக வழங்கும ஸேவாஶப்தத்தோடு பர்யாயமாகப் பிரயோகிக் கப்பட்டிருப்பதைக் காண்கிறோம். ஆகையால், இங்கு தியான மாத்திரததைக் குறிக்காமல், முக்கரணங்களாலும் இடைவிடாமல் கைங்கர்யங்களைச் செய்வதைக் குறிககிறது உபாஸனஶப்தம். இப்படி முக்கியமாகப் பொருள் கொள்ள இடமிருக்கும்போது, தைவத்தை யஜ்ஞமாகக் கண்டு உபாஸிப்பதாகிற த்₃ருஷ்டி விதி₄யை இங்கு சொல்லுவதாகக் கொளவது பொருந்தாது. "தேவதாப்₄யர்ச்சநம் சைவ ஸமித₃ாத₄ாநமேவ ச' [மநு2-176] என்று மனுஸ்ம்ருதி முதலானவற்றில் தேவபூஜையை எல்லாக் கர்ம யோகிகளுக்குமுரிய நித்யகர்மமாகக் கூறியிருக்கும்போது, இங்கு அதை ஒருவகைக் கர்மயோகிகளுக்கே உரியதாகக் கூறலாமோ? எனில்: பலவிதமான கர்மங்களுக்குள் அந்த தேவபூஜனத்தில ஊன்றி நிற்பவர்கள் இவர்கள் எனபதை ஏவகாரமும 'பரி' எனனும் உபஸர்க்கமும காட்டுகின்றனவாகையால், இவர்களைக் கர்மயோகி களில் ஒருவகையாகக் குறிப்பதில் குறையில்லை. நித்ய நைமித்தி காதிகர்மஙகளில் ஒவ்வொனறில் ஊன்றி நிறபவர்களையேயனறோ இப்ரகணததில ஒவ்வொருவகைக் கர்மயோகியாகக் கூறுகின்றது. இக்காரணங்களால், "நிவ்ருத்தி லக்ஷணமான யஜ்ஞத்தைப் பற்றிய ப்ரஸக்தி முன் ஶ்லோகத்தில் ஏற்பட்டிருககையால், 'தை₃வமேவாபரே' எனறு தொடங்கி ப்ரவ்ருத்தி லக்ஷணமான யஜ்ஞம் கூறப்படுகிறது" என்று சிலர் வியாக்கியானம் செய்வது பொருந்தாது என்று காட்டப்பட்டதாயிற்று. கர்மயோகநிஷ்டன, முமுக்ஷுவாகையாலே, "தை₃வம்" என்றது மற்ற தேவர்களைப் பற்றிய பூஜையைக் குறிக்குமபோது, 'அவர்களுக்கு அந்தர் யாமியான பரமபுருஷனுக்குப் பூஜையாகவே ஆகிறது அப் பூஜை' என்னும அனுஸந்தானத்துடன செய்யப்படவேண்டும.

अत्र यज्ञशब्दो हविस्स्रुगादियज्ञसाधने वर्तते ; * ब्रह्मार्पणं ब्रह्म हविरिति न्यायेन यागहोमयोर्निष्ठां कुर्वन्ति ॥ २५ ॥

இனி, உத்தரார்த்தத்தாலே யாகஹோமங்களில் ஊன்றிநிற்கும் கர்மயோகிகளைச் சொல்லுகிறது. (அபரே) வேறு சில கர்ம யோகிகள். (ப்₃ரஹ்மாக்₃நௌ) ப்₃ரஹ்மமாகிற அக்னியில்; முன் ஶ்லோகத்திற்போலே ப்₃ரஹ்மாத்மகமான அக்னியில் என்றபடி. (யஜ்ஞம யஜ்ஞேநைவ உபஜுஹ்வதி) முன் ஶ்லோகத்தில சொல்லியபடி யஜ்ஞஸாத₄னமான ஹவிஸ்ஸை, ஹோமத்துக்கு உபகரணங்களான ஸ்ருக் முதலானவைகளால் ஹோமம் செய்கிறார்கள். 'யஜ்ஞத்தை யஜ்ஞத்தினாலேயே ஹோமம் செய்கிறார்கள்' என்று ஶ்லோகத்தில் இருந்தபோதிலும், யஜ்ஞஸ்வரூபமோ, யஜ்ஞஶப்₃த₃வாச்யனை பரமாத்மாவோ ஹோமம் செய்யத்தக்கதாகவும் ஹோமத்துக்கு உபகரணமாகவும இருக்க முடியாதாகையாலும், சென்ற ஶ்லோகத்தில் படிக்கப்பட்ட 'ப்₃ரஹ்மாக்₃நௌ' என்னும் பதம் இங்கும் படிக்கப்படுகையாலும், அங்கு 'ப்₃ரஹ்மஹவி:' என்று சொல்லப்பட்டதாய், ஹோமம் செய்யத்தக்கதான ஹவிஸ்ஸும் அங்கு 'ப்₃ரஹ்மார்ப்பணம்' என்று சொல்லப்பட்டதாய், ஹோமத்திற்கு உபகரணமான ஸ்ருக் முதலானவையும் யஜ்ஞஸாதனங்களாகையாலே (முறையே) 'யஜ்ஞம' என்றும், 'யஜ்ஞேந' என்றும் கூறப்படுகின்றன என்று கொள்வதே பொருத்தம். 'ப்₃ரஹ்மாக்₃நௌ' என்று அக்னியை ப்₃ரஹ்மாத்மகமாகப் படிக்கையாலே, ஹவிஸ், ஸ்ருக் முதலானவற்றையும் ப்₃ரஹ்மாத்மகமென்றே கொள்ளவேண்டும். ஆக, சென்ற ஶ்லோகத்திற்போலே எல்லாம் ப்₃ரஹ்மாத்மகம் என்னும் அநுஸந்தானத்துடன் யாகஹோமங்களைச் செய்கின்றவர்கள் என்றபடி. அப்படியானால் புநருக்தியாகாதோ? எனில்: சென்ற ஶ்லோகத்தில் யாகஸாதனங்களைச் சொன்னது எல்லாக் கர்ம ஸாதனங்களுக்கும் உபலக்ஷணம் என்று முன்னமே நிரூபித்தோம. இங்கு 'ஏவ'காரத்தால் யாகஹோமங்களிலேயே ஊன்றிநிற்கும் கர்மயோகிகளைச் சொல்லுகிறது என விளங்குகிறது. ஆகையாலே புநருக்தியில்லை. அக்னியாகக் கற்பிக்கப்பட்ட ப்ரஹ்மத்திடம் யஜ்ஞஶப்தத்தால் சொல்லப்படும ஜீவனையோ, அபூர்வத்தையோ ஹவிஸ்ஸாகக் கற்பித்து ஹோமம் செய்கின்றனர் – என்று சிலர் வியாக்கியானம் செய்கினறனர். யஜ்ஞஶப்தம ஜீவனையோ,

श्रोत्रादीनीन्द्रियाण्यन्ये संयमाग्निषु जुह्वति।
शब्दादीन्विषयानन्य इन्द्रियाग्निषु जुह्वति॥ २६॥

26. ஶ்ரோத்ராதீ₃நீந்த்₃ரியாண்யந்யே ஸம்யமாக்₃நிஷு
ஜுஹ்வதி।
ஶப்₃தா₃தீ₃ந் விஷயாநந்யே இந்த்₃ரியாக்₃நிஷு ஜுஹ்வதி॥

அந்யே—*மற்றும் சில கர்மயோகிகள்,* ஶ்ரோத்ராதீ₃நி இந்த்₃ரியாணி—*செவி முதலான இந்திரியங்களை,* ஸம்யமாக்₃நிஷு—*புலனடக்கமாகிற அக்னியில்,* ஜுஹ்வதி—*ஹோமம் செய்கிறார்கள்;* அந்யே—*பிறிது சில கர்மயோகிகள்,* ஶப்₃தா₃தீ₃ந் விஷயாந்—*ஶப்தம் முதலான விஷயங்களை,* இந்₃த்ரியாக்₃நிஷு — *இந்திரியங்களாகிற அக்னிகளில்,* ஜுஹ்வதி—*ஹோமம் செய்கிறார்கள்.*

---

26. அறிபொறியை யான்றமைத லாமனலிற் பெய்வர்
பிறிதுசில ரோமமெனப் பேணிப்—பொறியனல்வாய்
வந்தியலு மைமபயனை வாரியுட னோமிப்பர்
செந்தொழிலி னின்றார் சிலர்.

பிறிது சிலர்–*வேறு சில கர்மயோகிகள்,* அறி பொறியை–*(செவி முதலான) ஞானேந்திரியங்களை,* ஆன்று அமைதலாம் அனலில—*முயன்று அடக்குவதாகிற நெருப்பில,* ஓமம் என பேணி–*ஹவிஸ்ஸாக நினைத்து,* பெய்வர்–*ஹோமம் செய்வர்.* செந்தொழிலின் நின்றார் சிலர்—*நன்மைமிக்க கர்மயோகத்தில் ஊன்றினர் வேறு சிலர்,* பொறி அனல் வாய்—*இந்திரியங்களாகிற அக்னியிலே,* வந்து இயலும் ஐம்பயனை—*அவற்றில் வந்துசேரும் ஶப்தம் முதலிய ஐந்து விஷயங்களை,* வாரி உடன் ஓமிப்பர்—*ஒன்றாகச் சேர்த்து ஓமம் செய்வர்.*

---

அபூர்வத்தையோ சொல்லுவது க்லிஷ்டமாகையாலே இது பொருந்தாது. இந்த ப்ரகரணம் முழுவதும் மாநஸமான யஜ்ஞத்தைச் சொல்லுவதாகச் சிலர் உரையிடுகின்றனர். கர்மயோகப்ரகரணமாகையாலே அதுவும் பொருந்தாது. 25.

॥ भा ॥ अन्ये श्रोत्रादीनामिन्द्रियाणां संयमने प्रयतन्ते। अन्ये

26. இந்த ஶ்லோகமும் கர்மயோக வகைகளைக் கூறுகிறது. (அந்யே) மற்றும் சிலவகைக் கர்மயோகிகள். (ஶ்ரோத்ராதீ₃நி இந்த்₃ரியாணி) செவி முதலான இந்திரியங்களை. (ஸம்யமாக்₃நிஷு ஜுஹ்வதி) ஹவிஸ்ஸை யாகாக்னியில் ஹோமம் செய்வதுபோல, புலனடக்கம் என்னும் நெருப்புகளிலே ஹோமம செய்வர். புலனடக்கம் நேரே நெருப்பாகமாட்டா தாகையாலும, இந்திரியங்களும் ஹோமம் செய்யத்தக்க அவியாகமாட்டாவாகையாலும, "இக்கர்மயோகிகள் செவி முதலான இந்திரியங்களை அடக்குவதாகிற கர்மத்தில் ஊன்றி நிற்கிறார்கள்" என்று கருத்து உரைக்கவேண்டும். அவியைச் சுட்டழிக்கும் அக்னிபோலே, இங்கு அவியாகச் சொல்லப்படும செவி முதலிய இந்திரியங்களைச் செயலற்றதாக்குகிறதாகையாலே, புலனடக்கம் இங்கு அக்னியாக உருவகப்படுத்தப்படுகிறது, முன ஶ்லோகத்திற்போலே ஏவகாரமில்லாவிடிலும், ப்ரகரணப₃லத்தாலே இந்த ஶ்லோகத்திலும், கர்மயோகவகைகளைச் சொல்லும பின் ஶ்லோகங்களிலும 'அவ்வக் கர்மங்களிலே ஊன்றிநிற்கிறார்கள்' என்று பொருள கொள்ளவேண்டும; ஒவ்வொரு இந்திரியத்தையும் அடக்குவது வேறுபட்டிருக்கையால் 'புலனடக்கமாகிற அக்னிகள்' என்று பன்மை பிரயோகிக்கப்பட்டது. இந்திரிய நியமனம் எல்லாக் கர்மயோகிகளுக்குமே தேவையானதொன்று ஆனாலும், இவர்கள் அதில் ஊன்றிநிற்கையாலே, மற்றவகைக்கர்மயோகிகளைக் காட்டிலும் இவர்களுக்கு வேறுபாடு தேறுகிறது. இப்படியே பினனுள்ள கர்மயோகிகள் விஷயத்திலும கண்டுகொள்வது. இக்கருத்தை விளக்கவே பாஷ்யத்தில் இந்த ஶ்லோகத்திலும, அடுதத ஶ்லோகத்திலும் 'ப்ரயதந்தே' என்னும் ஶப்₃த₃மும், முன்பின் ஶ்லோகங்களில் 'நிஷ்ட₂ாம் குர்வந்தி' என்னும் தொடரும் இடப்பட்டிருக்கின்றன என்பதைக்காணலாம. (அந்யே) பிறிதொரு வகைக் கர்மயோகிகள். (ஶப்₃தா₃தீ₃ந் விஷயாந் இந்த்₃ரியாக்₃நிஷு ஜுஹ்வதி) ஶப்தம் முதலான விஷயங்களை இந்திரியங்களாகிற அக்னிகளில் ஹோமம் செய்கிறார்கள். இங்கும் ஶப்தம் முதலானவை நேரே அவியாகவும், இந்திரியங்கள் நேரே அக்னிகளாகவும் ஆகமாட்டாவாகையால், "இந்திரியங்கள் ஶப்தம் முதலான விஷயங்களில் ஈடுபடாதபடி செய்கிறார்கள்" என்றே கருத்து உரைக்கவேண்டும். ஶ்லோகத்தின் முற்பாதியில் இந்திரியங்களின் நியமனம உரைக்கப்பட்டது. 'இந்த்₃ரியேப்₄ய: பரா ஹ்யர்த்தா₂ அர்த்தே₂ப்₄யஶ்ச பரம் மந:'

योगिनः इन्द्रियाणां शब्दादिविषयप्रवणतानिवारणे प्रयतन्ते ॥ २६ ॥

[கட 1-3-10] [அடக்கத்தககவைகளுள இந்திரியங்களைக் காட்டிலும் விஷயங்கள் மேலானவை; விஷயங்களைக் காட்டிலுமம மனம் மேலானது.] என்று உபனிஷத்தில் வசீகரிக்கத்தக்கவைகளுள் இந்திரியஙகளைக் காட்டிலும் சிறந்தவையாகச் சொல்லப்பட்ட விஷயங்களின நியமனம இந்த ஶ்லோகத்தின் பிற்பாதியிலும், விஷயங்களிலும் சிறந்தவையாகச் சொல்லப்பட்ட மனத்தின் நியமனம் அடுத்த ஶ்லோகத்திலும் கூறப்படுவதாகக் கொள்வது பொருத்தமானது. இங்கு விஷயங்களை நியமிபபது (அடக்குவது) யாதெனில்: அவற்றை விலக்குவதே நியமிப்பதாகிறது. விஷயங்கள் இந்திரியங்களுக்கு இலக்காகாமல் தவிர்க்கிறார்கள் இவர்கள் எனறு கருத்து. அப்படியானால் 'விஷயங்களை இந்திரியநெருப்பில் ஹோமம் செய்கிறார்கள்' என்பது பொருந்தவில்லையே! எனில: ஹோமத்தினால் ஹவிஸ் அழிக்கப்படுவதுபோல், இந்திரியங்களோடு ஶப்தாதிகளின் தொடர்பு அழிக்கப்படுவதே இஙகு ஶப்தாதி விநாஶமாகக்கருதப்படுகிறதாகையாலே பொருந்துகிறது. ஶப்தாதிகளை ஜயிப்பதே கர்மயோகப்ரகரணத்தில் சொல்லவேண்டிய தாகையால், 'ஶப்தாதி விஷயங்களாகிற ஹவிஸ்ஸை இந்திரியங்களாகிற நெருப்பில் ஸமர்ப்பித்து அநுபவிக்கச் செய்கிறார்கள்' என்று பொருள் கொள்வது ப்ரகரண விருத்தமாகுமாகையாலே முற்கூறியவாறே பொருள் கொள்ளவேண்டுமம. ஆக, ஶ்லோகத்தின் பிற்பாதியில், விஷயங்கள் இநதிரியங்களின் அருகில் செல்லாமல் தவிர்ப்பதும், முற்பாதியில் அருகில் சென்றாலும அவற்றால் எதுவும் செய்யமுடியாதபடி இந்திரியங்களை அடக்குவதும் சொல்லப்படுகின்றதாகையாலே இரண்டினிடையே பேதமும் உள்ளது. அன்றிக்கே, முற்பாதியில் இந்திரியங்களுக்கு விஷயங்கள் இலக்காகதபடி தவிர்ப்பதும், பிற்பாதியில் இலக்கானாலும் விஷயங்களை ஒன்றும் செய்ய முடியாதபடி ஆக்குவதும் சொல்லப்படுவதாகவும் கொள்ளலாம். ஶ்லோகத்தின் பிற்பாதிக்கு இந்த நிர்வாகம மிகப்பொருந்தியுள்ளது. இந்திரியங்கள் எந்த விஷயத்திலுமே செல்லாதபடி அடக்கிவிட்டால், உணவு உண்பது முதலானவற்றைக் கூடச் செய்ய முடியாதாகையாலே, உயிரோடு இருப்பதே முடியாது. ஆகையால், அறத்துக்குப் புறம்பான விஷயங்களில் அடியோடு செல்லாதபடியும், அறத்தையொட்டிய விஷயங்களில் மிகவும் ஈடுபாடு கொள்ளாதபடியும் அடக்குவதே இங்கு சொல்லப்படுவதாகக் கொள்ளவேண்டும். 26.

सर्वाणीन्द्रियकर्माणि प्राणकर्माणि चापरे।
आत्मसंयमयोगाग्नौ जुह्वति ज्ञानदीपिते॥ २७॥

**27.** ஸர்வாணீந்த்₃ரியகர்மாணி ப்ராணகர்மாணி சாபரே।
ஆத்மஸம்யமயோகா₃க்₃நௌ ஜுஹ்வதி ஜ்ஞாநதீ₃பிதே॥

**அபரே**—*மற்ற சில கர்மயோகிகள்,* **ஜ்ஞாநதீ₃பிதே**—*அறிவாகிற விளக்கால் கொளுத்தப்பட்ட,* **ஆத்ம ஸம்யம யோகா₃க்₃நௌ**—*யோக₃ஸாத₄னமாகிய மனவடக்கமெனும் நெருப்பில்,* **ஸர்வாணி இந்த்₃ரியகர்மாணி**—*இந்திரியங்களின் செயல்கள் அனைத்தையும்,* **ஸர்வாணி ப்ராணகர்மாணி ச**—*ப்ராணன்களின் செயல்கள் அனைத்தையும்,* **ஜுஹ்வதி**—*ஹோமம் செய்கிறார்கள்.*

---

**27.** எல்லாப் புலனி னியல்வும் பிராணனாற்
செல்லா வியலுஞ் செயலனைத்துஞ்—சொல்லாரு
முள்ளமைந்த யோகவன லுய்ப்பர் சிலருணர்விற்
கொள்ளவது மேல்விளக்கிற் கொண்டு.

**சிலர்**—*சில கர்மயோகிகள்,* **உணர்வின் விளக்கில் கொண்டு**—*ஶுத்தாத்மஜ்ஞானமாகிற விளக்கைக்கொண்டு,* **அது மேற்கொள்ள**—*அதனால் கொளுத்தப்பட்ட,* **சொல் ஆரும் உள் அமைந்த யோக அனல்**—*யோக ஸாதனமாகப் புகழப்படும் உள்ளமாகிற மனத்தின் அடக்கமாகிற நெருப்பில்,* **எல்லா புலன் இயல்வும்**—*இந்திரிய கர்மங்கள் அனைத்தையும்,* **பிராணனால் செல்லாவியலும் செயல் அனைத்தும்**—*பிராணனால் நடத்தப்பெறும் கர்மங்கள் அனைத்தையும்,* **உய்ப்பர்**—*ஹோமம் செய்வர்.*

---

27. "அர்த்தே₂ப்₄யஶ்ச பரம் மந:" [விஷயங்களை அடக்குவதைக் காட்டிலும் மனத்தை அடக்குவது சிறந்தது.] என்று உபனிஷத்தில் சொன்ன முறையிலே, விஷயங்களை அடக்குவதில் ஊன்றி நிற்கையாகிற கர்மயோகத்தைச் சென்ற ஶ்லோகத்தில்

॥भा॥ अन्ये ज्ञानदीपिते मनस्संयमयोगाग्नौ सर्वाणीन्द्रिय-कर्माणि प्राणकर्माणि च जुह्वति; मनस इन्द्रियप्राणकर्मप्रवणतानिवारणे प्रयतन्त इत्यर्थः ॥ २७ ॥

---

சொல்லி, இந்த ஶ்லோகத்தில் மனத்தை அடக்குவதில் ஊன்றி நிற்கையாகிற கர்மயோகத்தைச் சொல்லுகிறது. (அபரே) மற்றும் சில கர்மயோகிகள். (ஆத்மஸம்யமயோகாக்நௌ) மனத்தை அடக்குவதெனும் யோகமாகிற நெருப்பில். முற்கூறியபடி விஷயங்களை அடக்குவதைச் சென்ற ஶ்லோகத்தில் கூறியபின் மனத்தை அடக்குவதைச் சொல்லுவதே உசிதமாகையாலே ஆத்மஶப்தம இங்கு மனத்தைச் சொல்லுகிறது. கீதையில் மற்றும் பலவிடங்களில் ஆத்மஶப்தம் மனத்தைச் சொல்லுவதைக் கண்டிருக்கிறோம். ஆத்ம ஸாக்ஷாத்காரமாகிற யோகத்திற்கு ஸாதநமாகையால் மன வடக்கம் 'யோகம்' எனப்படுகிறது. அன்றிக்கே, யோகஶப்தம் அடைதலைச் சொல்லுமாகையால், மநஸ்ஸம்யமயோகம் என்று மனவடக்கத்தை அடைதலைச் சொல்லுகிறதாகவுமாம். மனவடக்க யோகமாகிற இந்த நெருப்பைக் கொளுத்திய விளக்கு எது எனில்,— (ஜ்ஞாநதீபிதே மநஸ்ஸம்யம யோகாக்நௌ) அறிவினால் கொளுத்தப்பட்டது முற்கூறிய மனவடக்கமாகிற நெருப்பு எனகிறது. தேஹத்தைக்காட்டிலும் வேறுபட்ட ஶுத்தமான ஆத்மஸ்வரூபத்தை அநுஸந்திப்பதாகிற அறிவாலேயே, அல்பாஸ்திரமானதேஹம் முதலானவற்றில் ஈடுபடாமையாகிற மனவடக்கம் உண்டாகிறதாகையால், அவ்வறிவை மனவடக்கமாகிற நெருப்பை எரியவைக்கும் விளக்காக உருவகப்படுத்துகிறது. இந்த நெருப்பில் ஹோமம் செய்யப்படுவது எது? எனில்: (ஸர்வாணி இந்த்ரியகர்மாணி ப்ராணகர்மாணி ச ஜுஹ்வதி) காண்பது, தொடுவது, கேட்பது முதலான ஐந்து ஞானேந்திரியங்களின் செயல்களையும், பேசுவது, எடுப்பது. நடப்பது முதலான ஐந்து கர்மேந்திரியங்களின் செயல்களையும், மூச்சு விடுவது, மூச்சிழுப்பது முதலான ப்ராணனின் செயல்களையும் ஹோமம செய்கிறார்கள். இங்கு, இந்திரிய கர்மங்களை ஹோமம் செய்வது என்று அவற்றை அடக்குவதைச் சொன்னால், சென்ற ஶ்லோகத்தில் இந்திரியங்களை அடக்குவதைச் சொன்னதோடு புநருக்திவரும். ஆகையாலே, மனத்தை இந்திரியப்ராண கர்மங்களில் மிகவும் ஈடுபடாமல் தடுப்பதில் ஊன்றிநிற்கிறார்கள் இவர்கள் என்றே கொள்ளவேண்டும். மனவடக்க நெருப்பில் ஹோமம்

द्रव्ययज्ञास्तपोयज्ञा योगयज्ञास्तथाऽपरे।
स्वाध्यायज्ञानयज्ञाश्च यतयः संशितव्रताः ॥ २८ ॥

28. த்₃ரவ்யயஜ்ஞாஸ் தபோயஜ்ஞா: யோக₃யஜ்ஞாஸ் ததா₂ऽபரே।
ஸ்வாத்₄யாயஜ்ஞாநயஜ்ஞாஶ்ச யதய: ஸம்ஶிதவ்ரதா: ॥

யதய:—முயற்சியுடையாரும், ஸம்ஶிதவ்ரதா:—உறுதியான ஸங்கல்பமுடையாருமான, அபரே—சில கர்மயோகி

---

28. பொருளெச்சம் பொன்றாத் தவவெச்சம் யோகத்
தெருளெச்சம் சேர்வர் சிலர்கள்—மருளற்ற
வாய்ந்த மறையுணர்வர் மன்னெச்ச மேவுவரே
வேய்ந்த வெதிவிரத ரிங்கு.

---

செய்யப்படுவதாகச் சொல்லப்படுகையாலே, இந்திரியப்ராணகர்மங்கள் அழிந்து விடுவதாகத் தேறுகிறதாகையாலே, அவை அஸத்கல்பமாமபடி மனம் அவற்றில் ஈடுபடாமலிருக்கிறது என்று கருத்து. இந்திரியப்ராண கர்மங்களில் மனம் அடியோடு ஈடுபடாமலிருப்பது இயலாதாகையாலே, சென்ற ஶ்லோகத்திற்சொன்னதுபோலே அறத்துக்குப்புறம்பானவற்றில் அடியோடு ஈடுபடாமலும், அறத்தை ஓட்டியவற்றில் மிகவும் ஈடுபடாமலும் தடுப்பதையே இங்கு சொல்லுகிறது. அன்றிக்கே, "ஶ்ரோத்ராதீ₃நி இந்த்₃ரியாணி" என்று சென்ற ஶ்லோகத்தில் செவி முதலான ஞானேந்திரியங்களையே எடுத்திருக்கையாலே அந்த ஶ்லோகத்தை ஞானேந்திரிய மாத்ர நியமனபரமாகக்கொண்டு இந்த ஶ்லோகத்தைக் கர்மேந்திரியங்களை அடக்குவதைச் சொல்லுவதாகக் கொள்ளலாமாகையாலே புநருக்தியில்லை என்றும் நிர்வஹிக்கலாம். ப்ராணகர்மங்கள் என்று எப்போதுமேயுள்ள மூச்சுவிடுவதிழுப்பதைச் சொல்லுகையாலே, இருபத்தொன்பதாவது ஶ்லோகத்தில் சொல்லப்போகும் ப்ராணாயாமத்தோடு புநருக்தியேற்படாது. அன்றிக்கே, உபனிஷத்தில் உள்ள இந்திரியப்ராண ஸம்வாதத்தில் சொல்லப்பட்டபடியே இந்திரியங்கள் செயல்புரிவதற்குறுப்பான ப்ராணனின் ஸூக்ஷ்மமான சில செயல்கள் இங்கு ப்ராணகர்மங்கள் என்று சொல்லபபடுகையாலே, ப்ராணாயாமத்தோடு புநருக்தியில்லை என்றும் கொள்ளலாம. 27.

கள். த்₃ரவ்யயஜ்ஞா:—(நல் வழியில் சேர்த்த) திரவியத்தைக் கொண்டு (தானம் முதலிய நற்காரியங்களாகிய) யஜ்ஞங்களைச் செய்பவர்கள்; (அபரே) தபோயஜ்ஞா:—மற்றும் சிலர் (உடலை வருத்திச்செய்யும்) தவங்களாகிற யஜ்ஞங்களைச் செய்பவர்கள்; ததா₂ (அபரே) யோக₃யஜ்ஞா:—அதுபோல் வேறு சிலர் (புண்யதீர்த்த₂ம் புண்யதே₃ஶம் முதலானவற்றை) அடைதலாகிற யஜ்ஞத்தைச் செய்பவர்கள்; (அபரே) ஸ்வாத்₄யாய ஜ்ஞாநயஜ்ஞா: ச—பிறிது சிலர் வேதாத்யயனம் செய்தலாகிற யஜ்ஞத்தைச் செய்பவர்களாயும் (மேலும் சிலர்) (வேதத்தின் பொருளை) அறிவதாகிற யஜ்ஞத்தைச் செய்பவர்களாகவும் உள்ளனர்.

---

இங்கு—இவ்வுலகில். ஏய்ந்த எதிவிரதர் (சிலர்கள்)—பொருந்திய முயற்சியையும். உறுதியான ஸங்கல்பத்தையுமுடைய சில கர்மயோகிகள். பொருளெச்சம் (சேர்வர்)—(நல்வழியில் சேர்த்த) பொருளைக்கொண்டு (தானம் முதலிய நற்காரியங்களாகிய) யஜ்ஞங்களைச் செய்பவர்கள்; (சிலர்கள்) பொன்ரு தவ எச்சம் (சேர்வர்)—வேறு சிலர் (உடலை வருத்திச் செய்யும்) அழியாத தவங்களாகிற யஜ்ஞங்களைச் செய்பவர்கள்; (சிலர்கள்) யோகத்தெருள் எச்சம் சேர்வர்-மற்றும் சிலர் (புண்யதீர்த்தம். புண்யதேஶம் முதலானவற்றை) அடைதலாகிற தெளிந்த யஜ்ஞத்தைச் செய்பவர்கள்; சிலர்கள் மருளற்ற வாய்ந்த மறை உணர்வர்—பிறிது சிலர் ஞானத்தில் கலக்கமற்றுப் பொருந்திய வேதத்தை ஓதுவதாகிற யஜ்ஞத்தைச் செய்பவர்கள்; (சிலர்கள்) மன் எச்சம் மேவுவரே — மேலும் சிலர் நிலைநிற்கும் வேதப்பொருளை அறிதலாகிற யஜ்ஞத்தையே செய்பவர்கள்.

---

28. இந்த ஶ்லோகத்தின பல பதங்களில் தனித்தனியாக யஜ்ஞஶப்தத்தைப் பிரயோகிக்கையால், பலவிதமான கர்மயோகிகளைக் கூறுகிறது இந்த ஶ்லோகம். அதனாலேயே அப்பதங்கள் ஒவ்வொன்ருேடும் அபரஶப்தத்தைக் கூட்டிக்கொள்ளவேணும்.

॥भा॥ केचित्कर्मयोगिनो द्रव्ययज्ञाः—न्यायतो द्रव्याण्युपादाय देवतार्चने प्रयतन्ते, केचिच्च दानेषु, केचिच्च यागेषु, केचिच्च होमेषु, एते सर्वे द्रव्ययज्ञाः। केचित्तपोयज्ञाः कृच्छ्रचान्द्रायणोपवासादिषु

---

(த்₃ரவ்ய யஜ்ஞா:) "த்₃ரவ்யைர் யஜ்ஞா யேஷாம் தே த்₃ரவ்ய யஜ்ஞா:" [திரவியங்களாலே செய்யப்படும் யஜ்ஞங்களைச் அனுஷ்டிப்பவர்கள த்₃ரவ்யயஜ்ஞர்கள்] என்றே. "த்₃ரவ்யாத்மகா யஜ்ஞா யேஷாம் தே" [திரவியமயமான யஜ்ஞத்தைச் செய்பவர்கள்] என்றே கொண்டு, அறவழியில் பொருளீட்டி தேவார்ச்சனம், யாகம், ஹோமம், தா₃னம ஆகியவற்றைச் செய்பவர்களை த்₃ரவ்ய யஜ்ஞர்கள் என்பதாகக் கொள்ளலாம். தேவார்ச்சனம், தானம, யாகம, ஹோமம ஆகிய நாலுமே திரவியத்தைக்கொண்டு ஸாதிக்கப்படுமவையாகையாலே, அவை நாலினுள் ஓவ்வொன்றில் ஊன்றி நிற்கும நாலுவகைக் கர்மயோகிகளையும் இங்கு ஒருவகைப்படுத்திச் சேர்த்துச் சொல்லுகிறது. தேவார்ச்சனம், யாகம், ஹோமம் ஆகியவற்றில் ஊனறி நிற்பவர்களை முனனமே சொல்லியிருந்த போதிலும, தானத்தை முன் சொல்லாமையாலும், நால்வரையும ஒருவகைப்படுத்திச் சொல்லி, பின் சொல்லபபோகும் தபோயஜ்ஞர்கள் முதலானவர்களைக் காட்டிலும் வேறுபாட்டை உணர்த்துவதிலும இவர்கள் நால்வரும அறவழியில் ஈட்டிய பொருளைக்கொண்டே அவ்வக்கர்மங்களைச் செய்யவேணடும எனறு அறிவிப்பதிலுமே இஙகு நோக்காகையாலும் புநருக்தியில்லை. அன்றிக்கே, தேவார்ச்சனம், யாகம், ஹோமம் ஆகியவற்றை முந்திய ஶ்லோகத்தில் யஜ்ஞங்களாகவும், அவற்றின பொருட்டு அறவழியில் பொருளீட்டுவதை இங்கு யஜ்ஞமாகவும் சொல்லுவதாகக் கொள்ளலாமாகையாலே புநருக்தியில்லை. (தபோ யஜ்ஞா:) சிலர் உடலை வருத்திச் செய்யும் தவங்களாகிற யஜ்ஞங்களில ஊன்றிநிற்பவர்கள. சாஸ்திரவிதிகளுக்கு முரண்படாத வகையில் போகங்களைச் சுருக்கிக் கொள்வதைக் குறிக்கும் தபஶ்ஶப்₃த₃ம, இவ்விடத்தில் க்ருச்₂ரம சாந்த்₃ராயணம், உபவாஸங்கள் முதலானவற்றையும, காடுசென்று ஊனவாட உண்ணாது உயிர்காவலிட்டே உடலிற் பிரியாப் புலனைந்தும் நொந்து, தாம் வாடவாடத் தவம் செய்வதையும், காயோடு நீடு கனியுண்டு வீசு கடுங்கால் நுகர்ந்து நெடுங்காலம் ஐந்து தீயோடு நின்று தவம செய்வதையும் குறிக்கிறது. (தத₂ா அபரே யோக₃யஜ்ஞா:) அவ்வண்ணமே சிலர் யோக₃மாகிற

निष्ठां कुर्वन्ति। योगयज्ञाश्चापरे पुण्यतीर्थपुण्यस्थानप्राप्तिषु निष्ठां कुर्वन्ति। इह योगशब्दः कर्मनिष्ठाभेदप्रकरणात्तद्विषयः। केचित्स्वाध्यायाभ्यासपराः।

---

யஜ்ஞத்திலே ஊன்றிநிற்பவர்கள். யோகஶப்தம் ஸம்யோகமாகிற ப்ராப்தியைக் (அடைதலைக்) குறிக்கிறது. இங்கு காவேரி, கங்கை முதலான புண்யதீர்த்தங்களையும், கண்டியூர் அரங்கம் மெய்யம் கச்சி பேர் மலலை வடதிசை மதுரை சாளக்கிராமம் முதலான திவ்யதேசங்களையும், பரத்வாஜாஶ்ரமம் போன்ற மஹர்ஷிகளின் ஆஶ்ரமங்களையும், மற்றும் இதிஹாஸபுராணங்களில் புண்ய ஸ்தானங்களாகக் குறிக்கப்படுமவற்றையும் அடைதலைக் குறிக்கிறது. யோகஶப்தம் முக்கியார்த்தமான ஆத்மப்ராப்தியையோ கர்மயோக ஸாமாந்யத்தையோ குறிப்பதாகக் கொள்ளலாகாதோ? எனில்; கர்மநிஷ்டாப்ரகரணமாகையாலே கர்மநிஷ்டையின் பலனை ஆத்மப்ராப்தியை யோகஶப்தம் குறிப்பதாகக் கொள்வது பொருந்தாது. முன்னும் பின்னும் கர்மயோக வகைகளைக் காட்டும் ப்ரகரணமாகையாலே, கர்மயோக ஸாமாந்யத்தைக் குறிப்பதாகக் கொள்வது ஓட்டாது. ஆகையால், ப்ராப்தியைச் சொல்லும் யோகஶப்தம் கர்மயோக வகைகளில் முன்னும் பின்னும் சொல்லப் படாத புண்யதீர்த்த புண்யஸ்தான ப்ராப்திகளைச் சொல்லுவதாகக் கொள்ளுவதே பொருத்தம். இவ்விஷயத்தையே பரமாசார்யரான ஆளவந்தாரும், "கர்மயோகஸ்தபஸ் தீர்த்ததாந யஜ்ஞாதி ஸேவநம்" [கீதார்த்த-23] [கர்மயோகமாவது, தவம், தீர்த்தம், தானம், யாகம் முதலானவற்றை ஸேவிப்பதாகும்] என்று உணர்த்தியருளினர். (ஸ்வாத்யாய ஜ்ஞாநயஜ்ஞாஶ்ச) சிலர் வேதமோதுதலாகிற யஜ்ஞத்திலும், சிலர் அதன் பொருளை அறிதலாகிற யஜ்ஞத்திலும் ஊன்றிநிற்பவர்கள். "த்வந்த்வ: ஸாமாஸிகஸ்ய ச" [கீதை 10-33] [ஸமாஸங்களுள் நான் த்வந்த்வமாவேன்] என்கிறபடியே த்வந்த்வஸமாஸமே மற்ற ஸமாஸங்களைக் காட்டிலும் சிறந்ததாகையாலும், த்வந்த்வ ஸமாஸத்தில் இரண்டு பதார்த்தங்களுக்கும் ப்ராதாந்யமாகையாலும், வேதமோதுதலும், அதன் பொருளை அறிதலும் தனித்தனி தர்மங்களாகையாலும் இங்கு இவற்றை இருவகைக் கர்மயோகமாகக் குறிப்பதே பொருந்தும். 'ஜ்ஞாந யஜ்ஞா:' என்று பொதுவாகச் சொல்லியிருந்தபோதிலும், ஆத்மஜ்ஞாநம் எல்லாக் கர்மயோகிகளுக்கும் பொதுவாகையால், வேதமோதுதலோடு கூடப் படிக்கப்படும் ஜ்ஞாநஶப்தம், ஓதிய அர்த்தத்தை அநுஷ்டிப்ப

केचित्तदर्थज्ञानाभ्यासपराः। यतयः—यतनशीलाः, संशितव्रताः—दृढसङ्कल्पाः ॥ २८ ॥

अपाने जुह्वति प्राणं प्राणेऽपानं तथाऽपरे।
प्राणापानगती रुद्ध्वा प्राणायामपरायणाः ॥ २९ ॥
अपरे नियताहाराः प्राणान्प्राणेषु जुह्वति ।

29. அபாநே ஜு ஹ்வதி ப்ராணம் ப்ராணேऽபாநம் ததா₂ऽபரே।
ப்ராணாபாநக₃தீ ருத்₃த்₄வா ப்ராணாயாம பராயணா:॥
30 அபரே நியதாஹாரா: ப்ராணாந் ப்ராணேஷு ஜுஹ்வதி।

29. மற்றும்பி ராணயா மத்தியல்வார வாயுகதி
யுற்றுத் தகைநதங் குடனக்கச்—செற்றுப்
பிராண னபானனிடைப் பெய்வ ரபானன்
பிராணனிலுய்த் தோமிப்பர் போர்தது.
30. உண்ணு வவர்நியத மொல்லைப் பிராணனவை
திண்ணுர வங்கவற்றிற் சேர்விப்ப—ரெண்ணூர்ந்த
வெல்லாரு மெச்ச மவரறிவ ரெச்சத்தாற்
பொல்லா வினையொழியப் போந்து.

தற்கு உறுப்பான வேதா₃ர்த்த₂ ஜ்ஞானத்தைக் குறிப்பதாகக் கொள்வதே பொருத்தம். இனி, கடைசியில் யஜ்ஞஶப்தத்தோடு சேர்ந்திராத இரண்டு பதங்களாலே எல்லாக் கர்மயோகிகளுக்கும அவசியம இருக்கவேண்டிய இருதன்மைகளை கூறுகிறது.— (யதய:) முயற்சி செய்வதையே இயல்வாகக் கொண்டவர்கள். கர்மயோகிகள் ஸந்யாஸிகளாயிருக்கவேண்டும் என்னும அவஶ்யமில்லாமையாலே யதிஶப்தம் அவர்களைக் குறிக்கமுடியாது. ஆகையால், யத்னத்தைக்காட்டும் யதத₄ாதுவிலிருந்து தோன்றி இகாராந்தமாயிருக்கும் யதிஶப்தம் முயற்சி செய்வதையே இயல்வாகக் கொண்டுள்ளவர்கள் எல்லாக் கர்மயோகிகளும் என்று காட்டுகிறது. (ஸம்ஶிதவ்ரதா:) உறுதியான ஸங்கல்பமுடையவர்கள். ஸம்ஶித ஶப்தம் தடைபடாமையைச் சொல்லுவதாகையால் உறுதியைக் காட்டுகிறது. வ்ரதஶப்தம் எல்லாக் கர்மயோகிகளுக்கும் இருக்க வேண்டிய ஸங்கல்பத்தைக் காட்டுகிறது. தத்தம் கர்மயோகத்தை அநுஷ்டிப்பதில், குலைக்கமுடியாத ஸங்கல்பத்தை உடையவர்கள் எல்லாக் கர்மயோகிகளும் என்று கருத்து. 28.

ப்ராணுயாம பராயணு:—ப்ராணுயாமத்தில் ஊன்றி நிற்பவர்களாய். நியதாஹாரா:—ஆஹாரநியமமுடையவர்களான, அபரே—சில கர்மயோகிகள், அபானே ப்ராணம் ஜுஹ்வதி—அபானவாயுவோடு ப்ராணவாயுவை ஒன்று படுத்துவதாகிற பூரகத்திலே ஊன்றிநிற்கிருர்கள்; ததா₂ அபரே—அத்தகைய மற்றும் சில கர்மயோகிகள், ப்ராணே அபானம் ஜுஹ்வதி—ப்ராணவாயுவோடு அபானவாயுவை ஒன்றுபடுத்துவதாகிற ரேசகத்திலே ஊன்றிநிற்கிருர்கள்; ததா₂ அபரே—அத்தகைய மற்றும் சில கர்மயோகிகள், ப்ராணுபானகதீ₃—ப்ராணன் உயரச்செல்வதையும், அபானம் கீழ்ச்செல்வதையும், ருத்₃த்₄வா—தடுத்து, ப்ராணேஷு ப்ராணுந் ஜுஹ்வதி—ப்ராணனகள் அனைத்தையும் அவற்றிலேயே ஒன்றுபடுத்துவதாகிற கும்பகத்திலே ஊன்றி நிற்கிருர்கள்.

---

மற்றும் பிராணுயாமத்தியல்வார்—பிராணுயாமத்தில் ஊன்றிநிற்கும் வேறுசிலர், நியதம் உண்ணு அவர்—நியமத்தோடு சாப்பிடுகிறவர்களாய், அங்கு உடஞக்க—வாயுக்களில் ஒன்றை மற்ருென்ருேடு சேர்ப்பதற்காக, வாயுகதி உற்றுத்தகைந்து—ப்ராணன அபானம் முதலிய வாயுக்களின் போக்கைத் தடுத்து, பிராணன் செற்று அபானனிடைப் பெய்வர்—(சிலர்) பிராணவாயுவை மேற்செல்லாமல் தடுத்து அபானவாயுவோடு ஒன்ருக்குவதாகிற பூரகத்தில் ஊன்றி நிற்பர்; அபாணன்பேர்த்து பிராணனில் உய்த்து ஓமிப்பர்—(சிலர்) அபானவாயுவைக் கீழ்ச்செல்லாமல் தடுத்துப் பிராணவாயுவோடு ஒன்ருக்குவதாகிற ரேசகத்தில் ஊன்றி நிற்பர்; ஒல்லே பிராணன் அவை திணுர அங்கு அவற்றில் சேர்விப்பர்—(மற்றும் சிலர்) பழமையான பிராணன்கள் அனைத்தையும் அவற்றிலேயே உறுதியாக ஒன்று படுத்துவதாகிற கும்பகத்திலே ஊன்றிநிற்பர். எண் ஆந்த அவர் எல்லாருமு—இதுவரை எண்ணப்பட அந்த எல்லாக் கர்மயோகிகளும், எச்சத்தால் பொல்லா விளே ஒழியப்

॥ भा ॥ अपरे कर्मयोगिनः प्राणायामेषु निष्ठां कुर्वन्ति। ते च त्रिविधाः पूरकरेचककुम्भकभेदेन: अपाने जुह्वति प्राणमिति पूरकः,

---

**போந்து**—( நித்யநைமித்திககர்மரூபமான ) யஜ்ஞத்தால் பொல்லாத புண்யபாபங்கள் அழியப்புகுகிறவராய், **எச்சம் அறிவர்**—(நித்யநைமித்திககர்மமாகிற) யஜ்ஞத்தை அறிந்து அனுஷ்டிப்பர்.

---

29-30. இனி, ஒன்றரை ஶ்லோகங்களாலே ப்ராணாயாமத்தில் பூரக ரேசக கும்பகங்கள் எனனும மூன்றில் ஓவ்வொன்றில் ஊன்றிநிற்கும் மூவகைக் கர்மயோகிகள் விவரிக்கப்படுகிறார்கள். காற்றை நாசிதுவாரம் வழியாக உள்ளே இழுப்பது பூரகம்; அதை உள்ளே நிறுத்துவது கும்பகம்; வெளியே விடுவது ரேசகம். ( ப்ராணாயாம பராயணா: ) இங்கு சொல்லப்படும் மூவகைக் கர்மயோகிகளும் ப்ராணாயாமத்தில் ஊன்றிநிற்பவர்கள். ( நியதாஹாரா: ) ஆஹாரநியமம் உடையவர்கள். இதுவும் த்₃ருஷ்டாத்₃ருஷ்டவகைகளாலே மூவகைக் கர்மயோகிகளுக்கும் உபகாரம் செய்வதாகையாலே மூவர்க்கும் பொதுவானது. ஆஹார நியமமாவது,— ஜாதி, ஆஶ்ரயம, நிமித்தம முதலானவற்றால் குற்றமற்ற ஸாத்விகாஹாரத்தை

"த்₃வௌ பா₄கௌ₃ பூரயேத₃ந்நைஸ் தோயேநைகம் ப்ரபூரயேத் ।
மாருதஸ்ய ப்ரசாரார்த்த₂ம் சதுர்த்த₂மவஶேஷயேத் ॥"

[வயிற்றில் நாலில் இரண்டு பகுதியை அன்னத்தால் நிறைக்க வேண்டும; தண்ணீரால் ஒரு பகுதியை நிறைக்கவேண்டும்; காற்று ஸஞ்சரிப்பதற்காக ஒரு பகுதியைக் காலியாக வைத்திருக்க வேண்டும் ] என்று கூறப்பட்டபடி அளவோடு புசிக்கை. இனி, மூவகைக் கர்மயோகிகளையும் தனித்தனியாகக் கூறுகிறது.— ( அபரே ) ப்ராணாயாமத்தில் பூரகத்தில் ஊன்றிநிற்பவர்கள். ( அபாநே ப்ராணம் ஜுஹ்வதி ) அபாநவாயுவாகிற அக்னியில் ப்ராணவாயுவாகிற ஹவிஸ்ஸை ஹோமம செய்கிறார்கள். காற்றை உள்ளே இழுப்பதாகிற பூரகக்ரியையில், மேல்நோக்கிச் செல்வதை இயல்வாகக் கொண்ட ப்ராணவாயு தன் இருப்பிடமான இருதயத்திலிருந்து கீழ்நோக்கித் தள்ளப்பட்டு கு₃த₃த்திலுள்ள அபாநவாயுவோடு ஒன்றாக்கப்படுகிறது. ஆகையால் அபாநவாயு

प्राणेऽपानमिति रेचकः, प्राणापानगती रुद्ध्वा...प्राणान् प्राणेषु जुह्वति इति कुम्भकः। [सप्राणायामेषु] प्राणायामपरेषु त्रिष्वप्यनुषज्यते नियताहारा इति ॥ २९ ॥

---

அக்னியாகவும். அதனுடன் ஒன்றுக்கப்படும் பிராணவாயு ஹவிஸ்ஸாகவும், ஒன்றுகக்கும் பூரகக்கிரியை ஹோமமாகவும் இவர்களால் பா₄விக்கப்படுகிறது என்று கருத்து. ஆக, பூரகக்ரியையிலே ஊன்றிநிற்பவர்கள இக்கர்மயோகிகள என்றதாயிற்று. (தத₂ா அபரே) முற்கூடியபடி ப்ராணாயாமபராயணர்களாய், நியதாஹாரர்களாய் ரேசகத்தில் ஊன்றிநிற்கும் மற்றும் சில கர்மயோகிகள். (ப்ராணே அபாநம் ஜுஹ்வதி) ப்ராணவாயுவாகிற அக்னியில், அபாநவாயுவாகிற ஹவிஸ்ஸை ஹோமம் செய்கின்றனர். காற்றை வெளியே தளளுவதாகிற ரேசகக்ரியையில் கீழ்நோக்கிச் செல்வதை இயல்வாகக்கொண்ட அபாநவாயு தன இருப்பிடமான கு₃த₃த்திலிருந்து மேல்நோக்கித் தள்ளப்பட்டு இருதயத்திலுள்ள ப்ராணவாயுவோடு ஒன்றுகப்படுகிறது. ஆகையால் பராணவாயு அக்னியாகவும, அத்துடன் ஒன்றுகக்படும அபானவாயு ஹவிஸ்ஸாகவும, ஒன்றுகக்கும் ரேசகக்ரியை ஹோமமாகவும் இவர்களால பா₄விக்கபபடுகிறது என்று கருத்து. ஆக. ரேசகக்ரியையில் ஊன்றிநிற்பவாகள் இககர்மயோகிகள் என்றதாயிற்று. (தத₂ா அபரே) முற்கூறியபடி ப்ராணாயாமபராயணர்களாய், நியதாஹாரர்களாய், கும்ப₄கத்தில ஊன்றிநிற்கும் மற்றும சில கர்மயோகிகள். (ப்ராணாபாநக₃தீ ருத்₃த₄வா) ப்ராணவாயு உயரச் செல்வதையும், அபாநவாயு கீழ்ச்செலவதையும் தடுத்து. இது வ்யானன் முதலான மற்ற வாயுக்களின கதிகளைத் தடுப்பதற்கும் உபலக்ஷணம். (ப்ராணாந் ப்ராணேஷு ஜுஹ்வதி) ப்ராணஶப்தத்தால் குறிக்கப்படும் ப்ராணன, அபாநன், வ்யானன், உதானன், ஸமானன் என்னும் ஐவகை வாயுக்களாகிற அக்னியில் அந்த ஐவகை வாயுக்களாகிற ஹவிஸ்ஸுக்களையே ஹோமம் செய்கின்றனர். காற்றை உள் நிறுத்துவதாகிற கும்ப₄கக்ரியையில் ஐவகைப் பிராணன்களும் அவ்வவற்றின இயல்வான கதிகளினின்றும தடுக்கப்பட்டு ஒன்றுக் கப்படுகின்றனவாகையால், அந்த ப்ராணன்களே அக்னியாகவும், அவற்றோடு ஒன்றுக்கப்படும் அந்த ப்ராணன்களே ஹவிஸ்ஸுக்களாகவும், ஒன்றுக்கும் கும்ப₄கக்ரியை ஹோம

सर्वेऽप्येते यज्ञविदो यज्ञक्षपितकल्मषाः ॥ ३० ॥
यज्ञशिष्टामृतभुजो यान्ति ब्रह्म सनातनम् ।

**ஸர்வேऽப்யேதே யஜ்ஞவிதோ₃ யஜ்ஞக்ஷபிதகல்மஷா: ॥**
**31. யஜ்ஞஶிஷ்டாம்ருத பு₄ஜோ யாந்தி ப்₃ரஹ்ம ஸநாதநம் ।**

**ஏதே ஸர்வே அபி**—*முற்கூறிய தைவயஜ்ஞம் தொடக்கமாக ப்ராணாயாமமீறாகவுள்ள கர்மயோகங்களில் ஈடுபட்டிருப்பவர்கள் அனைவரும்.* **யஜ்ஞவிதஃ₃**:—*பஞ்சமஹாயஜ்ஞங்களை முன்னிட்ட நித்யநைமித்திககர்மங்களாகிற யஜ்ஞங்களை அறிந்து அனுஷ்டிப்பவர்கள்;* **யஜ்ஞக்ஷபிதகல்மஷா:**—*அந்த யஜ்ஞங்களாலே பாபம் நீங்கப் பெற்றவர்கள்;* **யஜ்ஞஶிஷ்டாம்ருதபு₄ஜ:**—*யஜ்ஞத்தில் எஞ்சிய அன்னம் முதலிய அமுதையே புசிப்பவர்கள்;* **ஸநாதநம்**—*பழைய தான.* **ப்₃ரஹ்ம**—*ப்ரஹ்மாத்மகமான ஆத்மஸ்வரூபத்தை.* **யாந்தி**—*அடைகிறார்கள்.*

**॥ भा ॥ दैवयज्ञप्रभृतिप्राणायामपर्यन्तेषु कर्मयोगभेदेषु स्वसमीहितेषु प्रवृत्ता एते सर्वे *सह यज्ञैः प्रजाः सृष्ट्वा (३. १०) इत्यभिहितमहायज्ञपूर्वक-**

---

மாகவும் இவர்களால் பாவிக்கப்படுகிறது என்று கருத்து. ஆக, கும்ப₄கக்ரியையில் ஊன்றிநிற்பவர்கள் இக்கர்மயோகிகள் என்றதாயிற்று. ஆக, "தை₃வமேவ" என்று தொடங்கி இவ்வளவாக, கர்மயோகங்களில் பலவிதமான வகைகள் காட்டப்பட்டன. 29-*30.

*30*-*31.* இனி, முற்கூறிய பலவகைக் கர்மயோகிகளுக்கும் பலனில் பேதமுண்டா எனனும் ஐயமும், ப்ராணயாமம் முதலான ஒவ்வொருவகைக் கர்மத்தில் ஊன்றிநிற்கும் கர்மயோகிகளுக்கு நித்யநைமித்திக கர்மங்கள் கைவிடத்தக்கவையாகி விடுகின்றனவோ எனனும ஐயமும் எழக்கூடும். அவ்விரண்டு ஐயங்களும் இந்த ஶ்லோகத்தில் தவிர்க்கப்படுகின்றன. (ஏதே ஸர்வே அபி) "தை₃வ மேவ" என்று தொடங்கிச் சொல்லப்பட்ட தே₃வார்ச்சனம் தொடக்கமாக, ப்ராணயாமமீறாகச் சொல்லப்பட்ட கர்மயோக வகைகளில் தாம் விரும்பும் ஒவ்வொன்றில் ஈடுபட்டுநிற்கும் எல்லாக் கர்மயோகிகளும். இதில், ஒவ்வொருவகைக் கர்மயோகத்திற்கும் இங்கு சொல்லப்போகும் பலன் ஸமானமேயாகையால்

नित्यनैमित्तिककर्मरूपयज्ञविदः तन्निष्ठाः तत एव क्षपितकल्मषाः यज्ञशिष्टामृतेन शरीरधारणं कुर्वन्त एव कर्मयोगे व्यापृताः सनातनं ब्रह्म यान्ति ॥ ३० ॥

---

31. ஆங்கெச்ச மிச்ச மமுதூண் விரும்புமவ
ரோங்குபிர மத்தை யுற்றணைவர்—பாங்காக
விவ்வுலக மில்லெச்ச மில்லார்க்கு மேலாகு
மவ்வுலக மெததாலுண டாம்.

**ஆங்கு**—*அந்த யஜ்ஞங்களில்.* **எச்ச மிச்சம் அமுது ஊண் விரும்புமவர்**—*யஜ்ஞத்தில் எஞ்சிய அன்னம் முதலிய அமுதையே விரும்பி உண்பவர்களான அவர்கள்.* **ஓங்கு பிரமத்தை உற்று அணைவா**—*மிகச்சிறந்த ப்ரஹ்மாத்மகமான தம் ஆத்மாவைப் பொருந்தி அணையப் பெறுவர்;* **எச்ச மில்லார்க்கு**—*யஜ்ஞங்களை அனுஷ்டிக்காதவருக்கு.* **பாங்காக இவ்வுலகம் இல்**—*( அறம் பொருளின்பங்களை விளைக்கும் ) அழகிய இவ்வுலகமே கிடையாது;* **மேல் ஆகும் அவ்வுலகம் எத்தால் உண்டாம**—*மேலான மோக்ஷபுருஷார்த்ததைதை விளைககும் அப்ராக்ருதலோகம் எபபடிக கிடைக்கும்?*

---

அவரவர் விருப்பமே ஒவ்வொருவரைக் கர்மயோகத்தில் ஈடுபடக் காரணம என்று உணர்த்தப்படுகிறது. ( யஜ்ஞவித₃: ) "ஸஹ யஜ்ஞை: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா" [கீதை 3-10] என்று சொல்லப்பட்ட பஞ்சமஹாயஜ்ஞங்களை முனனிட்டுக்கொண்டு செய்யப்படும் நித்ய நைமித்திக கர்மங்களாகிற யஜ்ஞங்களை அறிந்து அனுஷ்டிபப வர்கள். அறிவது அநுஷ்டிப்பதற்கேயாகையாலே, 'யஜ்ஞததை அறிபவர்கள்' எனறது, அநுஷ்டிப்பதையும சொன்னபடி. திரவிய யஜ்ஞம், தபோயஜ்ஞம் எனறுப்போலே விசேஷிக்காமையாலே, யஜ்ஞஶப்தம முன் சொன்ன நித்யநைமித்திக கர்மஙகளையே குறிக்கிறது என விளங்குகிறது. 'யஜ்ஞக்ஷபிதகல்மஷா:' 'யஜ்ஞஶிஷ்டாம்ருதபு₄ஜ:' என்னும பதங்கள், 'யஜ்ஞஶிஷ்டாஶிந: ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பி₃ஷை:" [கீதை 3-13] என்னும பதங்களை நினைவுபடுத்துகினறனவாகையாலே, அங்கு யஜ்ஞமாகக் கூறப்பட்ட நிதயநைமிததிக கர்மஙகளே இஙகும யஜ்ஞமாகக் கூறப்படுகினறன என்பதை வலியுறுத்துகின்றன. (யஜ்ஞக்ஷபிதகல்மஷா:) முற்கூறியவாறு நித்யநைமித்திக கர்மஙகளை அறிந்து அனுஷ்டிப்பதாலேயே பாபம் நீங்கப்பெறுகிறுர்கள் இவர்கள் என்று கருத்து.

नायं लोकोऽस्त्ययज्ञस्य कुतोऽन्यः कुरुसत्तम ॥ ३१ ॥

நாயம் லோகோऽஸ்த்யயஜ்ஞஸ்ய குதோऽந்ய: குருஸத்தம||

குருஸத்தம—குருகுலத்துதித்தவர்களில் சிறந்தவனே! அயஜ்ஞஸ்ய—நித்யநைமித்திக கர்மமற்றவனுக்கு. அயம் லோக: ந—இந்த ப்ராக்ருதலோகத்தில் அடையப்படும் புருஷார்த்தங்களே கிடைக்காது; அந்ய: குத:—அப்ராக்ருத லோகத்தில் அடையப்படும் மோக்ஷபுருஷார்த்தம் எப்படிக் கிடைக்கும்?

---

(யஜ்ஞஶிஷ்டாம்ருதபு₄ஜ:) யஜ்ஞத்தில் எஞ்சிநிற்கும் அமுதை உண்டு சரீரத₄ாரணத்தைச் செய்பவர்கள். யஜ்ஞஶிஷ்டாம்ருத ஶப்தத்தாலே, முன அத்தியாயத்திலுள்ள "யஜ்ஞஶிஷ்டாஶிந:" [3-13] என்னும் பதம உணர்த்தப்படுகிறதாகையாலும், அந்த ப்ரகரணத்தில், "ஶரீரயாத்ராऽபி ச தே ந ப்ரஸித்₃த்₄யேத₃கர்மண:" [3-8] [கர்மத்தைக் கைவிட்டு ஜ்ஞாநநிஷ்டையில் ஈடுபட்டால் உனக்கு சரீரயாத்திரை கூட ஸித்திக்காது.] என்று யஜ்ஞ ஶிஷ்டத்தை உண்பது சரீரதாரணத்திற்காக என்று கூறப்படுகிற தாகையாலும, இத்தகைய சரீரதாரண வ்யாபாரம் ஆத்மத₃ர்ஶனத் துக்குத் தடைசெய்யாததோடன்றியில் உதவியும் புரியும: இப்படி சரீரதாரணத்தைச் செய்யாவிடில் எத்தொழிலும் செய்யமுடியாது என்று அந்த ப்ரகரணத்தில் நிரூபிக்கப்பட்டது இங்கும அநு ஸந்திக்கத்தக்கது. ஆக, இத்தால் ப்ராணாயாமம் முதலானவற்றில் ஊன்றிநின்றபோதிலும நித்யநைமித்திக கர்மங்கள் எல்லாக் கர்மயோகிகளுக்கும் அவசியம் அநுஷ்டிக்கத்தக்கவை என்றும் காட்டப்பட்டது. (ஸநாதநம் ப்₃ரஹ்ம யாந்தி) "ப்₃ரஹ்மைவ தேந க₃ந்தவ்யம்" [4-24] என்று முன் சொன்னபடியே, பழைமை யானதாய் ப்ரஹ்மாத்மகமான ஆத்மஸ்வரூபத்தை அடைகிறார்கள் என்று கருத்து. ப்ரகரணவசத்தால், இங்கு ப்ரஹ்மஶப்தம ப்ரஹ்மாத்மகமாகையாலே ப்ரஹ்மமெனத்தக்க ஜீவாத்மஸ்வரூபத் தைச் சொல்லுகிறது. ஆத்மஸ்வரூபத்தை அடைகையாவது, அதைக் காண்கையேயாகும். ஆக, பலவகைக் கர்மயோகிகளுக்கும் பலனில பேதமில்லையென்றும் நிர்ணயிக்கப்பட்டதாயிற்று. 30--31.

॥ भा ॥ अयज्ञस्य — महायज्ञपूर्वकनित्यनैमित्तिककर्मरहितस्य, नायं लोकः—न प्राकृतलोकः, प्राकृतलोकसंबन्धिधर्मार्थकामाख्यः पुरुषार्थो न सिद्ध्यति। कुत इतोऽन्यो मोक्षाख्यः पुरुषार्थः? परम-पुरुषार्थतया मोक्षस्य प्रस्तुतत्वात्तदितरपुरुषार्थः अयं लोकः इति निर्दिश्यते; स हि प्राकृतः॥ ३१॥

---

31*. கர்மயோகங்களில ஒனறில் ஊன்றிநிற்கிறேம என்னும் அபிமானத்தால், அனைவர்க்கும் பொதுவான நித்யநைமிததிக கர்மங்களைக கைவிடுபவர்களுக்கு எப்புருஷார்த்தமும் ஸித்திக்காது என்று காட்டப்படுகிறது இந்த ஶ்லோகார்த்தத்தில். (அயஜ்ஞஸ்ய) பஞ்சமஹாயஜ்ஞங்களை முனனிட்டுக் கொண்டிருக்கும நித்ய நைமித்திககர்மங்களைச் செய்யாதவனுக்கு. (அயம லோக: ந) ப்ராக்ருதமான இவ்வுலகமிலலை, 'அயம்' என்று கண்ணெதிரே காணப்படும் ப்ரக்ருதிகார்யமான உலகம் சொல்லப்படுகிறது. 'இவ்வுலகமே இல்லை' எனறு கூறுவது முன்பின ப்ரகரணங் களுக்கும், இதர சாஸ்திரங்களுக்கும முரண்படுமாகையால், "இவ்வுலகத்தோடு தொடர்புள்ள அறம, பொருள, இனபம் எனனும மூவகைப் புருஷார்த்தமும அவனுக்குக் கிடைக்காது" எனறு கருததுரைக்கவேண்டும. (அந்ய: குத:) இவ்வுலகிலும் வேறு பட்ட அப்ராக்ருதலோகத்தில் அடையப்படும மோக்ஷம எனனும புருஷார்த்தம் அவனுக்கு எப்படிக் கிடைக்கும்? "அயம் லோக:" என்று நேரே காணும இவ்வுலகத்தையும், "அநய: லோக:" எனறு கண்ணுல் காணுத ஸ்வர்க்கம் முதலான உலகஙகளையும், (அதாவது,— அவ்வவற்றில் பெறும் புருஷாாத்தஙகளையும்) குறிப்ப தாகக் கொள்ளக்கூடாதோ? எனில: இங்கு மோக்ஷம் பரம புருஷார்த்தமாகவும் யஜ்ஞம் அதையடைய உபாயமாகவும் கூறப் படுகிறதாகையால், அதை விட்டவனுக்கு மோக்ஷம் கிடைக்காது என்று கூறினுல்தான் முமுக்ஷுவுககு இது கைக்கொளளத்தக்க தாகும. ஆகையால், 'அந்ய: லோக:' எனறு மோக்ஷததையடை யும் உலகமான அப்ராக்ருதலோகத்தைக் குறிப்பதே பொருததம் ஆகையால், அதற்கு ப்ரதிகோடியான 'அயம லோக:' எனனும பதம ப்ராக்ருதமான பூமி, ஸ்வர்க்கம் முதலிய எல்லா உலகங் களிலும் கிடைபபவையாக ப்ரத்யக்ஷமாகவும் சாஸ்திரத்திலுைம அறியப்படும் அறம் பொருள் இனபங்களாகிற மூவகைப் புருஷார்த்தங்களைக் குறிக்கிறது என்று கொளவதே பொருதத

एवं बहुविधा यज्ञा वितता ब्रह्मणो मुखे।
कर्मजान्विद्धि तान्सर्वानेवं ज्ञात्वा विमोक्ष्यसे॥ ३२॥

32. ஏவம் ப₃ஹுவித₄ா யஜ்ஞா விததா ப்₃ரஹ்மணோ முகே₂।
கர்மஜாந் வித்₃தி₄ தாந் ஸர்வாநேவம் ஜ்ஞாத்வா
விமோக்ஷ்யஸே ॥

ஏவம்—*இவ்வண்ணமாக*, ப₃ஹுவித₄ா:—*பலவிதமான*, யஜ்ஞா:—*கர்மயோக வகைகள்*, ப்₃ரஹ்மண: முகே₂—*ஆத்மாவையடைய உபாயமான கர்மயோகத்தில்*, விததா:—*பரந்துள்ளன*. தாந் ஸர்வாந்—*அந்தக் கர்மயோகங்கள் அனைத்தையும்*, கர்மஜாந்—*நித்யநைமித்திக கர்மங்களினால் உண்டாகின்றவையாக*. வித்₃தி₄—*அறிவாயாக*. ஏவம்—*இவ்வண்ணமாக*, ஜ்ஞாத்வா — *அறிந்து அநுஷ்டித்து*, விமோக்ஷ்யஸே—*ஸம்ஸாரத்திலிருந்து விடுபடுவாய்*.

---

32. இன்னே பலவகையா லெச்சம் பிரமத்து
முனனே பரந்த முகஞ்செய்தே—யன்னவை
தான்கருமத் தானவெனச் சார்ந்தறிநீ யாங்குனக்கு
வான்கருது முத்திவரு மற்று.

இன்னே—*இவ்வண்ணமாக*, பலவகையால் எச்சம்—*பலவகைப்பட்ட கர்மயோக வகைகள்*. பிரமத்து முகம் செய்தே—*ஆத்மாவையடைய உபாயமான கர்மயோகத்தில*, முன்னே பரந்த—*அநாதிகாலமாகப் பரந்துள்ளன*. அன்னவை தான்—*அந்தக் கர்மயோகங்களானவை*, கருமத்து ஆன என—*நித்யநைமித்திக கர்மங்களினால் உண்டாகின்றவை என்று*, நீ—*நீ*, சார்ந்து அறி—*அறிந்து அநுஷ்டிப்பாய்;* ஆங்கு—*இப்படி அநுஷ்டித்தாயானால்*, உனக்கு—*உனக்கு*, வான் கருதும் முத்தி வரும்—*பரமபதத்தில் பெறலாகும் மோக்ஷம் கிடைக்கும்*.

---

முடையது. ஆக, நித்யநைமித்திக கர்மங்களைக் கைவிடுபவன் கர்மயோக வகையொன்றில் ஊன்றிநின்றாலும், அவனுக்கு நாலு புருஷார்த்தங்களில் எதுவும் கிடைக்காது என்றதாயிற்று (குருஸத்தம) கர்மாநுஷ்டான நிரதர் நிறைந்த குருகுலஶ்ரேஷ்டனை உனக்குநான் இதைச்சொல்லவும வேண்டுமோ எனறு கருத்து. 31*.

॥भा॥ एवं हि बहुप्रकाराः कर्मयोगाः ब्रह्मणो मुखे वितताः आत्मयाथात्म्यावाप्तिसाधनतया स्थिताः; तान्—उक्तलक्षणानुक्तभेदान्

32. ஆக, இருபத்தைந்தாவது ஶ்லோகம் தொடக்கமாகச் சென்ற ஶ்லோகம் வரையில கர்மயோகத்தின் வகைகள் விவரிக்கப் பட்டு, அவற்றில் ஒவ்வொனறை அநுஷ்டிப்பவர்களுக்கும் நித்யநைமித்திக கர்மங்கள் அவசியம் அநுஷ்டிககவேணடியவையே என்று காட்டி, அந்த நித்யநைமித்திக கர்மங்களை அநுஷ்டியாதவர்களுக்கு ஏற்படும் தீமையும் காட்டப்பட்டது இந்த ஶ்லோகத்திஞல் இதே அர்த்தம் வலியுறுத்தப்பட்டு இப்ரகரணம முடிவு கட்டப்படுகிறது (ஏவம் ப₃ஹு₂விதா₄ யஜ்ஞா:) முற்கூறியபடி பலவகைப்பட்டிருககும கர்மயோக வகைகள். பலவகைப்பட்ட கர்மயோகங்களை உபதேசித்தபின் 'இவ்வண்ணமாகப் பலவிதமான யஜ்ஞங்கள' என்று கூறுகிறபடியால், முற்கூறப்பட்ட பலவகைப்பட்ட கர்ம யோகங்களே இங்கு ப்₃ஹு₂வித₄யஜ்ஞங்களாகச் சொல்லப்படு கின்றன எனவிளஙகுகிறது. (ப்₃ரஹ்மண: முகே₂ விததா:) ஆத்மாவை யடைய உபாயமான கர்மயோகத்தில் பரநதுள்ளன. இநத ப்ரகரணத்தில் பலவிடங்களில் ப்₃ரஹ்மஶப்தம ஆதமஸ்வரூபத்தைக் குறிப்பதைக் காண்கிஜேம.

"முக₂ம் து வத₃னே முக்₂யே தாம்ரே த்₃வாராப்₄யுபாயயோ:"
[வைஜயந்தீ-த்₃வ்யக்ஷர-நபுமஸக-25]

[முக₂ஶப்தம் (சரீர) முகம், முக்₂யம், த்₃வாரம், தாம்ரம், வாசல், உபாயம் என்னும் பொருள்களில் பிரயோகிக்கப்படுகிறது] என்னும நிகண்டுவின்படி முக₂ஶப்₃த₃ம் உபாயத்தைக் குறிக்கும ஆக, 'ப்₃ரஹ்மஞே முகே₂ விததா:' என்றது ஆத்மாவையடைய உபாயமான கர்மயோகத்தில் (முற்கூறிய வகைகள) அவாந்தர பேதங்களாகப் பரந்துள்ளன என்று பொருள்படுகிறது. ப்₃ரஹ்ம ஶப்தம் வேதத்தையும், முக₂ஶப்₃த₃ம் அதன் முக்₂கியபா₄க₃மான வேதாந்தத்தையும் குறிப்பதாகக் கொண்டு கீதார்த்த₂ஸங்க₃ரஹ தீபிகையில் 'வேதாந்தங்களில் முற்கூறிய பலகைப்பட்ட கர்ம யோகங்கள் விவரிக்கப்பட்டன' எனறு பொருள் உரைககப் பட்டது. இனி, உத்தரார்த்தத்தில், நித்யநைமித்திககர்மங்களா லேயே அவ்வக்கர்மயோக வகைகள் ஸித்திக்கும் என்பதைக் காட்டிக்கொண்டு, இதை அறிந்து அநுஷ்டிப்பதால் மோக்ஷ மடையலாம் என்று பலனுரைக்கப்படுகிறது. (தாந் ஸர்வாந்) இவ்வத்தியாயத்தின முற்பகுதியில் சொல்லியபடி ஜ்ஞானததை

कर्मयोगान्सर्वान्कर्मजान्विद्धि — अहरहरनुष्ठीयमाननित्यनैमित्तिककर्मजान् विद्धि। एवं ज्ञात्वा यथोक्तप्रकारेणानुष्ठाय मोक्ष्यसे ॥ ३२ ॥

---

உள்ளடக்கியிருக்கையாலே ஜ்ஞாநாகாரமாயிருப்பவையாய், பிற்பகுதியில சொல்லியபடி பலவகைப்பட்டிருப்பவையான எல்லாக் கர்மயோகங்களையும். 'தாந்' என்று கர்மயோகத்திற்கு கீதாஶாஸ்திரத்தில முதலிலிருந்து சொல்லப்பட்ட எல்லாத்தனமைகளையும் கூறுகிறது எனறும் கொள்ளலாம. 'தாந்' என்று, ஶ்லோகத்தின முற்பாதியில 'ஏவம' ஶப்தத்தால் சொல்லப்பட்ட அர்த்ததத்தையும, 'ஸர்வாந்' எனறு, ப₃ஹுவித₄ஶப்₃த₃த்தால சொல்லப்பட்ட அர்த்தத்தையும் அநுவதிக்கிறது எனறும கொள்ளலாம. ஆக, நாலாவது அத்தியாயத்தின கீ₃தாபா₄ஷ்ய அவதாரிகையில் இவ்வததியாயத்தில் சொலலப்படுகினறவையாக விவரிக்கப்பட்ட ஆறு அர்த்தங்களில் 'கர்மயோகஸ்வரூபம' எனனும் அர்த்தம் கர்மயோகத்திற்கு ப்ரஸ்துதமான எல்லா ஆகாரங்களையும் காட்டும் 'தாந்' என்னும் பதத்தாலும், 'கர்மயோகவகைகள்' என்னுமர்த்தம் 'ஸர்வாந்' என்பதாலும உணர்ததப்படுகினறன என்று அறியத்தக்கது. (கர்மஜாந் வித்₃தி₄) முற்கூறிய கர்மயோகவகைகள் எல்லாமே நித்யநைமித்திககர்மஙகளாலேயே ஸ்வரூபஸித்தி பெறுகின்றவை என அறிவாயாக. ப்ராணாயாமம் முதலான ஒவ்வொரு கர்மங்களில் ஊன்றிநிற்கும ஒவ்வொருவகைக் கர்மயோகிகளுக்கு அந்த ப்ராணாயாமம் முதலானவை ப்ரத₄ானமாக அநுஷ்டிக்கத்தக்கவை என்றும, மற்ற நித்ய நைமித்திக கர்மங்கள் அநத ப்ரத₄ானகர்மத்தின் ஸ்வரூபஸித்திக்காக அநுஷ்டிக்கத்தக்கவை என்றும் உணர்த்தப்படுகிறது. அந்த நித்யநைமித்திக கர்மங்களை அநுஷ்டிக்காவிடில், ப்ராணாயாமம முதலிய எதையுமே அநுஷ்டிக்கத் தகுதியற்றவனாகிறான்; மேலும், நித்யநைமிததிக கர்மங்கள் தினந்தோறும அநுஷ்டிக்கப்பட்டால் அவ்வப்போது செய்யும் பாபங்களைப் போக்கி, மேனமேலே ஸத்வகுணத்தை அபிவிருத்திசெயகையாலே, ப்ராணாயாமம் முதலான ப்ரத₄ான கர்மங்களுக்கு ஸ்வரூபஸிததியையும பூர்த்தியையும் விளைக்கின்றனவாகையாலே, ப்ரத₄ான கர்மங்களுக்கு நித்யநைமித்திக கர்மஙகள் மிகவும் உதவிபுரிகினறன; ஆகையால் பலனைப் பெறும்வரையில் அநுஷ்டிக்கத்தக்கவை என்று காட்டப்படுகிறது. (ஏவம் ஜ்ஞாத்வா விமோக்ஷ்யஸே) இவ்வண்ணமாக அறிந்து அநுஷ்டித்துப் பரம்பரயா

॥ भा ॥ अन्तर्गतज्ञानतया कर्मणो ज्ञानाकारत्वमुक्तम् ; तत्रान्तर्गतज्ञाने कर्मणि ज्ञानांशस्यैव प्राधान्यमाह—

श्रेयान् द्रव्यमयाद्यज्ञात् ज्ञानयज्ञः परन्तप ।
सर्वं कर्माखिलं पार्थ ज्ञाने परिसमाप्यते ॥ ३३ ॥

33. ஶ்ரேயாந் த்₃ரவ்யமயாத் யஜ்ஞாத் ஜ்ஞாநயஜ்ஞ: பரந்தப।
ஸர்வம் கர்மாகி₂லம் பார்த்த₂ ஜ்ஞாநே பரிஸமாப்யதே ॥

பரந்தப—*எதிரிகளை அழிப்பவனே!* த்₃ரவ்யமயாத்—*திரவிய ஸாத்₄யமான கிரியைகளை முக்கியமாகக்கொண்ட*, யஜ்ஞாத்—*கர்மயோகாம்ஶத்தைக் காட்டிலும்*, ஜ்ஞாநயஜ்ஞ:—*கர்மயோகத்தில் உள்ள ஜ்ஞாநாம்ஶம்*, ஶ்ரேயாந்—*சிறந்தது;* பார்த்த₂—*குந்தீ புத்ரனே!* ஸர்வம—*எல்லா ப்ரகாரங்களோடும் கூடியதாய்*, அகி₂லம்—*எல்லா அங்கங்களோடும் கூடியதான*, கர்ம—*கர்மரூபமான அம்ஶம்*, ஜ்ஞாநே—*(ஸாத்₄யமான) ஆத்மயாதா₂த்ம்ய ஜ்ஞாநத்தில்*, பரிஸமாப்யதே—*முடிவடைகின்றதன்றோ*.

---

33. பொருண்மயமா மெச்சத்திற் போதமிகு மெல்லாந்
தெருணமயமா மெச்சந் தெளிதாந்—கருமமெல்லாம்
ஞானத்து வந்து முடிநதே நலமபயக்கு
மானத்தைப் பார்த்தான் மதித்து.

பொருள் மயமாம் எச்சத்தில்—*திரவியத்தைச் செலவிட்டுச் செய்யப்படும் கிரியைகளை முக்கியமாகக் கொண்ட கர்மயோகாம்ஶத்தைக் காட்டிலும்*. எல்லாம் தெருள் மயமாம் எச்சம்—*முழுவதும் ஞானமயமாயிருக்கும் கர்மயோகாம்ஶம்*. போத மிகும்—*மிகவும் சிறந்தது*. ஆனத்தை மதிததுப்பார்த்தால்-*அக்கர்மயோகத்தை ஆராய்ந்துபார்த்தால்*

---

*பரமப₂லமான* மோக்ஷத்தைப் *பெறுவாய்* என்று கருத்து. ஆக, இவ்வளவால், '*அஸ்ய ச பே₄த₃ா:*' என்று கீதார்த்த ஸங்க்ரஹத்தில் சொல்லப்பட்ட கர்மயோகஸ்வரூபமும், அதன் வகைகளும் இந்த ஶ்லோகத்துடன் விவரிக்கப்பட்டதாயிற்று. *32.*

**தெளிதாம் கருமம் எல்லாம்**—எல்லாத் தன்மைகளோடும், அங்கங்களோடு கூடிய கர்மாம்ஶம் அனைத்தும், **ஞானத்து வந்து முடிந்தே நலம் பயக்கும்**—( ஸாத்₄யமான ) ஆத்ம யாத₂ாத்ம்ய ஜ்ஞானத்தில் வந்தே முடிவடைகின்றதன்றோ.

---

33. இனி, " ஜ்ஞாநஸ்ய மாஹாத்ம்யம் " என்று கீதார்த்த ஸங்க்₃ரஹத்தில் சொல்லப்பட்டதாய், கர்மயோகத்தில் அடங்கிய ஜ்ஞாநாம்ஶத்தின் பெருமையை விளக்குவதான கடைசி ப்ரகரணம் இந்த ஶ்லோகத்திலிருந்து தொடங்குகிறது. கர்மயோகவகைகளைக் காட்டும் முன ப்ரகரணத்திற்கும் முன்னால், கர்மயோகம் ஜ்ஞாநாகாரமாயிருப்பது எனறு விளக்கப்பட்டது. அக்கர்மயோகத்தில் அடங்கிய கர்மாமஶத்தைக் காட்டிலும், ஜ்ஞாநாம்ஶம் சிறந்தது என்று விளக்குகிறது இங்கு. 'இவ்விடத்தில் ஞானயோகததின பெருமையே சொல்லப்படுவதாகத் தோன்றுகிறதே' என்று ஓர் ஆக்ஷேபமும், அதற்கு ஸமாதானமும் இங்கு அறியதக்கவை. ஆக்ஷேபம் பின்வருமாறு:— இந்த முப்பத்து மூனறும ஶ்லோகத்தின் முற்பாதியில் " திரவியமயமான யஜ்ஞத்தைக் காட்டிலும் ஜ்ஞாநயஜ்ஞம் சிறநதது' என்று கூறப்படுகிறது. இதற்கு 'கர்மயோகத்தைக் காட்டிலும், ஆத்மத₃ர்ஶனததிற்கு அந்தரங்கமான ஜ்ஞானயோகம் சிறந்தது' எனறு கருத்துரைப்பதே ஸ்வரஸம். இந்த ஶ்லோகத்தின் பிற்பாதியில் 'கர்மம் அனைத்தும் ஞானத்தில் முடிகிறது' எனறு கூறியிருப்பதும் கர்மயோகத்தினால் ஞானயோகம் உண்டாவதைக் குறிக்கிறது, முப்பதாவது ஶ்லோகத்தில், " எத்தனை பாவம் செய்தவனானாலும் ஞானமாகிற ஓடத்தினாலேயே அதைக் கடப்பாய் " எனறும், முப்பத்தேழில் " ஞானநெருப்பு எல்லாக்கர்மங்களையும சாம்பலாக்குகிறது " என்றும, நாற்பத்தொன்றில, " (ஜ்ஞாந) யோகத்தினால் கர்மத்தைக் கைவிட்டவனை " என்றும் சொல்லியிருப்பது கர்மயோகத்தோடு சிறிதும் பொருந்ாதவை. முப்பத்தெட்டில் " ஞானத்திற்கு ஸமானமான ஶுத்திகரமான உபாயம் இவ்வுலகிலில்லை " என்று கூறியிருப்பதிலிருந்தும் கர்மயோகத்தைக் காட்டிலும ஞானயோகம் பவித்திரமானது எனறு சொல்லுவதாகவே தோனறுகிறது. முப்பத்தொனபதில் 'ஞானத்தையடைந்தால் மேலான சாந்தியை விரைவிலேயே அடைவான்' என்று கூறியிருப்பதிலிருந்து, ஞானயோகம் ஆதமத₃ர்ஶனத்துக்கு நேரே ஸாதனமாகையாலே கர்மயோகத்தைக் காட்டிலும் விரைவில் பலனளிப்பது எனறு

உணர்த்தப்படுகிறது. முப்பத்தைந்தில் எல்லா ஆத்மாக்களேயும் ஞானஸ்வரூபமாகக் காண்பதைப் பலனுகக் கூறியிருப்பதாலும் இங்கு ஞானயோகமே கூறப்படுகிறதென விளங்குகிறது. கர்ம யோகத்தில அடங்கிய ஞானத்தால் ஸர்வாத்மஸாக்ஷாத்காரம் ஏற்படாதன்றே. இருபத்தெட்டாம் ஶ்லோகத்தில், "ஸ்வாத்₄யாய ஜ்ஞாநயஜ்ஞாஶ்ச" என்று திரவியயஜ்ஞம் முதலான கர்மயோக வகைகளைக் காட்டிலும் ஜ்ஞானயோகம் வேறாக எடுக்கப்பட்டது. ஆகையால் ஞானயோகத்தைப் புகழும் ப்ரகரணமே இது என்று தேறுகிறது என்பது ஆக்ஷேபம். இதற்கு ஸமாதானம் பின்வருமாறு:- இந்த ஶ்லோகத்தில ஞானயஜ்ஞம் சிறந்தது என்று சொல்லி யிருப்பது கர்மயோகத்தில் ஜ்ஞாநாம்ஶம சிறந்தது என்னும் கருத்தையுடையதேயொழிய ஜ்ஞாநயோகம் சிறந்தது என்னும் கருத்தை உடையதன்று. "கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண:" [3-8] முதலானவிடங்களில் முன் ப்ரகரணத்திலும, அடுத்த அத்தியாயத்தில, "தயோஸ்து காமஸந்யாஸாத் கர்மயோகோ₃ விஶிஷ்யதே" [5-2] என்று தொடங்கிப் பின் ப்ரகரணத்திலும் ஞானயோகத்தை விடக் கர்மயோகமன்றே சிறந்ததாகக் கூறப்பட்டுள்ளது. இடையில் இப்ரகரணத்தில அதற்கு முரணுக ஞானயோகம சிறந்ததென எப்படிச் சொல்லமுடியும? ஆகையால் ஜ்ஞாநயஜ்ஞஶப்தம் இங்கு கர்மயோகத்தில் அடங்கிய ஞாநாம்ஶத்தைச் சொல்லுகிறது என்றே கொள்ளவேண்டும். "ஸ்வாத்₄யாய ஜ்ஞாநயஜ்ஞாஶ்ச" என்றவிடத்திலும் கர்மயோக வகைகளைக் காட்டும் ப்ரகரணமாகையால் வேதா₃ர்த்த₂ ஜ்ஞானத்தை அப்₄யஸிக்கும் கர்மயோக வகையைக் காட்டுகிறதேயொழிய ஞானயோகத்தைக் குறிப்பதல்ல என்பது அவ்விடத்து வியாக்கியானத்திலேயே நிரூபிக்கப்பட்டது. கர்மயோகத்தில் அடங்கிய ஆத்மயாதா₂த்ம்யஜ்ஞானமும வேதா₃ர்த்த ஜ்ஞானமாயிருக்கையால் இதில அடங்கும். இவ்வத்தியாயத்தின கடைசி ஶ்லோகத்தில் ஞானமாகிற கத்தியால ஐயத்தை அறுத்துப் போர்புரிய எழுவாய் என்று அழைத்திருப்பதும் கர்மயோகத்தையும், அதிலடங்கிய ஞானத்தையுமே இங்கு குறிப்பதாகக் காட்டுகிறது. ஞானயோகம் சிறந்ததாகையால போர்புரிய எழுவாய் என்று அழைப்பது ஒட்டாதே. மேலும். இங்கு "ஸர்வம் கர்மாகி₂லம பார்த்த₂ ஜ்ஞாநே பரிஸமாப்யதே" என்று கூறியிருப்பதும் கர்மயோகத்தில உள்ளடங்கிய ஜ்ஞாநாம்ஶத்திற்கு ப்ராதா₄ந்யத்தைக் காட்டுவதற்கே தவிர, முற்கூறியபடி ப்ரகரணவிருத்தமாகையாலே ஜ்ஞாநயோகத்தைப் பற்றியதல்ல.

॥भा॥ उभयाकारे कर्मणि द्रव्यमयादंशात् ज्ञानमयोंऽशश्श्रेयान् ; सर्वस्य कर्मणस्तदितरस्य चाखिलस्योपादेयस्य ज्ञाने परिसमाप्तेः। तदेव

"அபி சேத₃ஸி" [4-36] "ஜ்ஞாநாக்₃நி: ஸர்வகர்மாணி" [4-37] "நஹி ஜ்ஞாநேந ஸத்₃ருஶம்"[4-38] முதலான மேல்வரும் ஶ்லோகங்களிலும், கர்மயோகத்திலடங்கிய ஜ்ஞாநாம்ஶம் உபாயவிரோதி பாபததைப் போக்கவல்லதென்று அதைப்பற்றிய பெருமையே பேசப்படுகிறதாகையால், அவ்விடங்களிலும் ஜ்ஞாநயோகத்தைப் பற்றிப் பேசப்படுவதாகக் கொள்ளவேண்டிய நிர்ப்பந்தமில்லை. இவைகளையொட்டிப்பார்க்கும்போது, "யோக₃ஸந்ந்யஸ்தகர்மாணம்" [4-4] எனனுமிடத்திலும கர்மத்தை ஜ்ஞாநாகாரமாகப் பார்க்கும் புத்தியோகத்தால், கர்மமானது ப₂லஸங்கம் முதலியவையற்றிருக்கையாலே ஜ்ஞாநாகாரமாகவே மாறிவிடுகிறதாகையால் கேவல கர்மம கைவிடப்பட்டதாகிறது என்றே கருத்துரைக்கவேண்டும். "ஜ்ஞாநம் லப்₃த்₄வா பராம் ஶாந்திம்" [4-39] எனனும் ஶ்லோகத்தில் கர்மயோகத்திலடங்கிய ஜ்ஞாநாம்ஶமே ஆத்மஸாக்ஷாத்காரமாகப் பழுக்கிறது என்று அதன் முற்றியநிலை கூறப்படுகிறது. இதற்குச் சற்றுமுன், "தத் ஸ்வயம் யோக₃ ஸம்ஸித்₃த₄: காலேநாத்மநி விந்த₃தி" [4-39] என்றும், "ஶ்ரத்₃த₄ாவாந் லப₄தே ஜ்ஞாநம்" [4-39] என்றும் காலக்ரமத்தில் இந்த ஜ்ஞானம் பழுக்கும் முறை விளக்கப்பட்டிருக்கிறதன்றோ. இவ்வளவால், "யேந பூ₄தாந்யஶேஷேண த்₃ரக்ஷ்யஸ்யாத்மந்யதே₂ா மயி" என்னும் ஶ்லோகத்திலும், கர்மயோகத்திலடங்கிய ப்ரக்ருதிவியுக்தமான ஆத்மஜ்ஞானத்தினுல், காலக்ரமத்தில் எல்லா ஆத்மாக்களும், பரமாத்மாவும் ஜ்ஞாநாகாரமாயிருக்கையால் ஸமமானவர்களென அறியப்படுகிருர்கள் எனறே சொல்லப்படுவதாக விளங்கிறது. ஆக, ஆக்ஷேபஸமாத₄ானம் விளக்கப்பட்டது. இனி, ஶ்லோகத்தைக் காண்போம். (பரந்தப) எதிரிகளைப் போரில் தவிக்கச் செய்யும் நீ உன வர்ணத₄ர்மம் கர்மரூபமாயிருந்தபோதிலும் ஜ்ஞாநாகாரமாகவேயிருந்து பெருமைபெறுகிறது என்பதை அறியவேண்டாவோ? எனறு கருத்து. (த்₃ரவ்யமயாத் யஜ்ஞாத் ஜ்ஞாநயஜ்ஞ: ஶ்ரேயாந்) கர்மாம்ஶமும், ஜ்ஞாநாம்ஶமும் அடங்கியதாக இதுவரையில் நிரூபிக்கப்பட்ட கர்மயோகத்தில், அம்பு, வில், தேர், குதிரை முதலான திரவியமயமாகவும், அதனுல்

सर्वैस्साधनैः प्राप्यभूतं ज्ञानं कर्मान्तर्गतत्वेनाभ्यस्यते, तदेव [हि] अभ्यस्यमानं क्रमेण प्राप्यदशां प्रतिपद्यते॥ ३३॥

तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया।
उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनस्तत्त्वदर्शिनः॥ ३४॥

34. தத்₃வித்₃தி₄ ப்ரணிபாதேந பரிப்ரஶ்நேந ஸேவயா।
உபதே₃க்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ் தத்வத₃ர்ஶிந:॥

34. அந்த வறிவை யறிநீ யடிவணங்கிச்
சிந்தை யுடன்கேட்டுச் சேவிததே—முந்தறிவை
யொத்துபதே சிப்ப ருனககுணர்ந் தோராய்த
தத்துவத்தைக் கண்டிருப்பார் தாம்.

ஸாதிக்கப்படும் கர்மமயமாகவுமிருக்கும் அம்ஶத்தைக் காட்டிலும், "இந்த யுத்தரூபமான கர்மத்தில் அநித்யமான சரீரத்திற்கு அழிவேயொழிய நித்யமான ஆத்மாவிற்கு அழிவே கிடையாது; பகவதாராதனமாக இதைச் செய்தவால் மோக்ஷபர்யந்தமான சிறப்பே ஆத்மாவிற்கு ஏற்படும்" என்னும் ஜ்ஞாநமயமான அம்ஶம் சிறந்தது. கர்மயோகத்தைச் சொல்லும யஜ்ஞஶப்தம் இங்கு அதன அம்ஶமான கர்மத்தை முதற்பாதத்திலும, ஞானததை இரண்டாம் பாதத்திலும் சொல்லுகிறது. (ஸர்வம் அகி₂லம் கர்ம) எல்லாக் கர்மமும்,அதைக்காட்டிலும வேறுபட்டதாய், அதற்கு அங்கமாக ஏற்றுக் கொள்ளத்தக்க எல்லாமும். ஸர்வஶப்தம் முற்கூறப்பட்ட கர்மயோக வகைகளைக் காட்டுகிறது. அகி₂லஶப்தம அவற்றின அங்கங்களைக் காட்டுகிறது. (ஜ்ஞாநே பரிஸமாப்யதே) அங்கங்களோடு கூடிய முற்கூறிய எல்லாக்கர்மமும் ஞானத்தில் முடிகினறது. எல்லா அங்கங்களோடும் கூடிய கர்மயோகத்தால் அடையப்படும் ஆத்மயாத₂ாம்யஜ்ஞானம், கர்மத்திலடங்கியதாக அப்₄யஸிக்கப்படுகிறது, அப்படி அப்₄யஸிக்கப்படும் அதுவே காலக்ரமத்தில் முற்றிப்பழுத்து ஆத்மாவை நேரே காண்கையாகிற ஆத்மஸாக்ஷாத்காரநிலையை அடைகிறது என்று கருத்து. பரிபக்வமடையாத ஆத்மஜ்ஞானம் ஸாதனமான கர்மத்திலடங்கியதாகவும், ஆத்மஸாக்ஷாத்காரமாகப் பரிபக்வமடைந்த அதுவே ஸாத்₄யமாகவுமாகிறது என்றபடி. கர்மமானது தனக்குள்ளடங்கிய ஞானத்தில் முடிவடைவதாவது,— அந்த ஞானம ஸாத்₄யமான ஆத்மஸாக்ஷாத்காரநிலையை அடைவதேயாகும். 33.

**ப்ரணிபாதேந**—நன்கு வணங்குவதாலும், **பரிப்ரஶ்நேந**—சூழ்ந்து நின்று கேட்பதாலும். **ஸேவயா**—கைங்கர்யத்திலும். **தத்**—அந்த ஆத்மஜ்ஞானத்தை, **வித்₃தி₄**—(ஞானிகளிடமிருந்து) அறிவாயாக; **தத்வத₃ர்ஶிந:**—ஆத்மஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரித்த. **ஜ்ஞாநிந:**—ஞானிகள். **தே**—உனக்கு. **ஜ்ஞாநம்** — ஆத்மாவைப்பற்றிய அறிவை, **உபதே₃க்ஷ்யந்தி**—(வணங்குதல் முதலானவற்ருல் உகந்து) உபதேசிப்பார்கள்.

---

**அடிவணங்கி**—(ஆசார்யனின்) திருவடிகளை வணங்கியும். **சிந்தையுடன் கேட்டு** — ஆலோசித்துக் கேட்டும். **சேவித்தே**—கைங்கரியம் செய்தும். **நீ**—(சீடனை) நீ. **அந்த அறிவை**—ஆத்மாவைப்பற்றிய அவ்வறிவை. **அறி**—அறிவாய்; **உணர்ந்தோராய்**—ஞானிகளாய், **தத்துவத்தை கண்டிருப்பார் தாம்**—ஆத்மதத்துவத்தை நேரே ஸாக்ஷாத்கரித்திருப்பவர்கள். **முந்தறிவை**—பழைமையான அவ்வாத்மஜ்ஞானத்தை. **ஒத்து உபதேசிப்பர்**—உன்னேடு பொருந்தி நின்று உபதேசிப்பார்கள்.

---

34. தனுல் உபதேசிக்கப்பட்ட ஆத்மஜ்ஞானத்தை, அந்தந்தப் பக்குவநிலைக்கேற்ப அவ்வப்போது தெளிவு ஏற்படுவதற்காக மறுபடியும் மறுபடியும் பல ஞானிகளிடம் கேட்கவேண்டும் என விதிக்கிருன் இந்த ஶ்லோகத்தில். (தத் வித்₃தி₄) அதை அறிவாயாக. "அவிநாஶிது தத்₃ வித்₃தி₄" [2-17] என்று தொடங்கி, "ஏஷா தேऽபி₄ஹிதா ஸாங்க்₂யே" [2-39] என்பதீருக என்னுல் உபதேசிக்கப்பட்ட ஆத்மஜ்ஞானத்தை அறிவாயாக. 'தத்' [அது] என்று பரோக்ஷமாகச் சொல்லுகையாலே, இப்ரகரணத்தின் தொடக்கத்தில் சொல்லப்பட்ட ஆத்மஜ்ஞானமே இங்கு பொருளாகத்தக்கது. இப்ரகரணத்திற்கும பொருந்தியது. தான் சொன்னதையே ஞானிகளிடம் மேலும் தெளிந்தறியவேணும் என்கிருனுகையாலே, இதற்கு முன் சொல்லாததொன்றை ஞானிகளிடம் அறியச்சொல்லுவதாகக் கொள்ளுவது உசிதமன்று. (வித்₃தி₄) அந்த ஞானத்தோடு கலந்த கர்மயோகத்தைப் பயிலும நீ, அந்தந்தப் பக்குவநிலைகேற்ப அவ்வப்போது அந்த ஞானத்தில் தெளிவு ஏற்படுவதற்காக ஞானிகளைக் கேட்டறிவாய்.

तदात्मविषयं ज्ञानं * अविनाशि तु तद्विद्धि (२. १७) इत्यारभ्य * एषा तेऽभिहिता (२. ३९) इत्यन्तेन मयोपदिष्टम्।

---

ஞானிகளைக் கேட்டறியவேண்டிய முறை யாதெனில்: (ப்ரணிபாதேந) நனகு வணஙகுவதன்மூலமும். மனம், புத்தி, அபி₄மானம் ஆகியவற்றையடக்கி, இருகைகள, இருபாதங்கள், தலை ஆகிய ஐந்து அஙகங்களும தரையில படியுமபடியாக வணங்கி. பாதம அல்லது, பதநமாவது உடலின் எல்லா அவயவங்களும தரையிலே பொருந்தும்படி விழுவது. நிபாதமாவது,— உளளே யிருக்கும் 'நான் எனது' எனனும் அபி₄மானமும் அழிநதுவிழுகை. ப்ரணிபாதமாவது,— 'இப்படி விழும்படி சாஸ்திரம சொல்லுகை யாலே விழுகிறோம்' எனறிராமல், 'வகுத்த ஸ்வாமியாகையாலே இது நம் ஸ்வரூபம்' எனறு உகப்புடன் காலில் விழுகை—என்பர் (பாரதாதி தனிஸ்லோகத்தில்) வியாக்கியான சக்ரவர்த்தியான பெரியவாச்சான்பிள்ளை "ப்ரகர்ஷேண நீசை: பதநம் ப்ரணியாத:; ப்ரஶ்நபூர்வாங்க₃பூ₄த: ப்ரணமோபஸங்க்₃ரஹணாதி₃ர் விவக்ஷித:" [மிகத்தாழ்ந்து விழுதல் ப்ரணிபாதமாகும்; ப்ரஶ்னத்திற்குப் பூர்வாங்கமாகக் காலில் விழுவது, காலைப்பிடிப்பது முதலானவை கருதப்படுகின்றன.] எனபர் தாத்பர்யசந்த்ரிகையில வேதாந்த தேசிகன். (பரிப்ரஶ்நேந) பரிப்ரஶ்னம் செய்வதன்மூலமும். மூன்று விதமாகப் பொருள்கொள்வர் பெரியவாச்சான்பிளளை. (1) பக்கத்தி லிருந்து கேட்பது. பரிஸரத்தில் (அருகில்) நின்று கேட்பது பரிப்ரஶ்னமாகிறது. ஆசாரியனிடம் சிஷ்யன் ஒரு வார்த்தை சொல்லவேண்டியிருக்கும்போது, கண்ணுக்குத் தோன்றாதபடி பின்னேயிருக்கவும் கூடாது; ஸமப்ராத₄ாந்யமுள்ளவன்போல் நேர்முன்னேயிருக்கவும் கூடாது; ஆசார்ய கடாக்ஷம விழுமபடி யாகவும், தன் அப்ராத₄ானயம் தோனறும்படியாகவும் பக்கத்திலே யிருந்து கேட்கவேண்டும் என்று கருத்து. (2) போதுமான அளவு கேட்பது. "பர்யாப்தம் யத₂ா தத₂ா ப்ரஶ்ந:–பரிப்ரஶ்ந:" [எவ்வளவு கேட்டால் போதுமானதோ அவ்வளவு கேட்பது பரிப்ரஶ்னமாகிறது.] என்னும் வ்யுத்பத்தியாலே, தான் கேட்க நினைத்த பொருளை ஆசாரியன் விசேஷமாகப் பொழியும்படி, கேட்கவேண்டியதனைத்தையும் கேட்கவேண்டும்; தன் அபி₄நிவேஶம் தோற்றும்படி அளவுக்குமேல் கேட்பதும் கூடாது என்று கருத்து. அதாவது,—

''யந்மயம் ச ஜகத் ப்₃ரஹ்மந் யதஸ்சைதத் சராசரம் |
லீநமாஸீத் யதா₂ யத்ர லயமேஷ்யதி யத்ர ச ||'' [வி-பு 1-1-5]

[அந்தணரே! இவ்வுலகம் எவர் மயமாயிருந்தது? அசைவனவும் அசையாதனவுமான பொருள் எங்கிருந்து தோன்றுகின்றன? எங்கு எப்படி ஒடுங்கியிருந்தன? எங்கே லயமடைகின்றன?] என்று பொதுவிலே போதுமானவரையில் கேள்விகேட்டு,

''விஷ்ணோ: ஸகாஶாது₃த்₃பூ₄தம் ஜக₃த் தத்ரைவ ச ஸ்தி₂தம் |
ஸ்தி₂திஸம்யமகர்த்தாऽஸௌ ஜக₃தோऽஸ்ய ஜக₃ச்ச ஸ: ||
[வி-பு 1-1-11]

[உலகம் விஷ்ணுவிடமிருந்தே உண்டாயிற்று; அவரிடமே நிலை நிற்கிறது; இவ்வுலகிற்கு ரக்ஷணத்தையும் நியமனத்தையும் அவரே செய்கிறார். இவ்வுலகமும் அவரே (ஸர்வம் விஷ்ணுமயமே என்று கருத்து.)] என்று விஷ்ணுவாகிற தேவதாவிஶேஷமே ஜகத் காரணம என்று விசேஷத்திலே பதிலாம்படி போதுமான அளவு கேள்விகேட்கவேணடும்; அபி₄நிவேஶம் தோற்றும்படி அளவுக்கு மேல் கேட்கவும் கூடாது என்றபடி. தன அபி₄நிவேஶம் தோற்றுமபடி 'லிங்கத்தின் பெருமையைச் சொல்லு' என்று கேள்வி கேட்டு, அதைப் போரப்பொலியச் சொல்லும லிங்கபுராணத்தை பதிலாகப் பெற்றவிடத்திற்போலே அளவுக்குமீறிக் கேள்விகேட்கக் கூடாது என்பதும் குறிக்கொள்ளததக்கது. 3, ஸகலார்த்தங்களை யும் கேட்பது. ''பரி—ஸாகல்யே'' எனறு ஸாகலயத்தைச் சொல்லுவதாய், அறியவேண்டியவை அனைத்தையும் கேட்பது பரிப்ரஶ்னம் என்றும் பொருள்கொள்ளலாம். தாத்பர்யசந்த்ரிகை யில் காட்டப்பட்டபொருளாவது,— ''பரிப்ரஶ்ந:- ஸ்வபு₃த்₃தி₄மத்தாதி ரேக கூ₃ஹநேந அஜாநத இவ ஸாக்ஷாத்ப்ரஷ்டவ்யாநபி₄தா₄நேந தத₃நுப₃ந்தி₄ விஷய: ப்ரஶ்ந:| ப்ரதிவாதி₃வத் குயுக்திபி₄: ப்ரத்ய வஸ்தா₂நம் ந கர்த்தவ்யமிதி பா₄வ:|'' [பரிப்ரஶ்னமாவது,— தன் அறிவின சிறப்பை மறைத்துக்கொண்டு, அறியாதவன்போல நேரே கேட்கவேண்டியதைக் கேட்காமல், அதோடு ஸம்பந்தப் பட்ட விஷயங்களைக் கேட்பது. ப்ரதிவாதியைபபோலே மறுத்துப் பேசக்கூடாது எனறு கருத்து.]என்பது. அவதாரரஹஸ்ய ஜ்ஞாந விஷயமான ப்ரஶ்னத்தில், அர்ஜுனன் அறியாதவன்போலே இபபடிப் பரிப்ரஶ்னம் செய்ததைக் கண்டோமன்றோ. (ஸேவயா) ஸேவை எனப்படும் பக்தி அல்லது நீண்டநாள் கைங்கர்யத்தின்

तद्युक्तकर्मणि वर्तमानस्त्वं विपाकानुगुणं कालेकाले प्रणिपातपरिप्रश्न-सेवादिभिर्विशदाकारं ज्ञानिभ्यो विद्धि। साक्षात्कृतात्मस्वरूपास्तु

மூலமும். ஆத்மஜ்ஞானவிஷயததில் அப்$_4$யாஸம் வளர வளர உன் பக்குவத்திற்கேற்ப அவ்வப்போது ஏற்படும் ஐயங்களை ப்ரணிபாதபரிப்ரஶ்நஸேவைகளாலே ஞானிகளை அநுவர்த்தனம் செய்து தெளிவித்துக் கொள்வாயாக எனபது பூர்வார்த்தத்தின் திரண்ட பொருளாகும. ப்ரணிபாதபரிப்ரஶ்நஸேவைகள என்று இங்கு சொல்லப்பட்டவையே ஸ்ரீவிஷ்ணுபுராணத்தின தொடக்கத்தில், "மைத்ரேய: பரிபப்ரச்ச$_2$ ப்ரணிபத்யாபி$_4$வாத்$_3$ய ச" [மைத்ரேயர் ப்ரணிபாதமும், அபி$_4$வாத$_3$னமும் செய்து, பரிப்ரஶ்நம பண்ணினார்.] என்று காட்டப்பட்டது. "ப்ரணிபாதேந—ப்ரணிபத்ய" "பரிப்ரஶ்நேந—பரிபப்ரச்ச$_2$" "ஸேவயா—அபி$_4$வாத்$_3$ய ச" என்ற பதங்களின் ஒற்றுமை காணத்தக்கது. இங்கு ஓராக்ஷேபம் எழுகிறது,— பகவான ஆத்மதத்வஜ்ஞானத்தை அர்ஜுனனுக்குத் தெளிவாகத்தானே உபதேசித்திருக்கிறான. மஹாமேதாவியான அர்ஜுனனும் தெளிவாகத்தானே அறிந்திருக்கிறான. அப்படியிருக்கும்போது எதற்காகப் பிறர் காலிலே விழுந்து துவள வேணும? என்பது அவ்வாக்ஷேபம. இதற்கு ஸமாத$_4$ானம் பின்வருமாறு,— பகவான் தெளிவாகவேதான் உபதேசித்திருக்கிறான். அர்ஜுனனும் கவனமும், அறிவுமுள்ளவனே. ஆயினும், அநாதி கர்மத்தால் ஏற்பட்ட அநந்தமான பாபக்கதவுகளாலே, தத்வ ஜ்ஞானம் வெளிப்படும் மனமெனும துவாரம் மறைக்கப்பட்டிருக்கையால் இப்போது மிகுந்த தெளிவு ஏற்படவில்லை. "பித்தக்$_4$நமஞ்ஜநமநாப்நுஷி ஜாது நேத்ரே நைவ ப்ரப$_4$ாபி$_4$ரபி ஶங்க$_2$ ஸிதத்வபு$_4$த்$_3$தி$_4$:" [ஸ்ரீவைகுண்டஸ்தவம 16] [பித்தத்தைப் போக்கும் அஞ்ஜனம தீட்டாதவரையில் ஒளியிருந்தாலும் 'சங்கம் வெளுப்பு' என்னும அறிவு ஏற்படாதன்றோ.] என்று ஆழ்வான் அருளிச்செய்ததுபோலே அநாதிபாபமாகிற பித்தமிருக்குமவரையில் ஆத்மஜ்ஞானத்தில் தெளிவு ஏற்படாதன்றோ. கர்மயோகத்தை உள்ளபடி அநுஷ்டிப்பதால இப்பாபங்கள் சிறிது சிறிதாக நீங்கும். பாபங்கள் நீங்க நீங்கத் தெளிந்த அறிவை ஏற்கததக்க பக்குவநிலை ஏற்படும். அப்போது முன பொதுவாகக் கேட்டறிந்த அர்த்தத்தை வலியுறுத்திக கொள்வதற்காகவும், ஏற்கனவே கேட்டறியாத அர்த்தத்தை அறிவதற்காகவும, கேட்டதில் மறந்ததை நினைவுபடுத்திக்கொளளவதற்காகவும ஞானிகளிடம் கேட்டறிய

ज्ञानिनः प्रणिपातादिभिस्सेविताः ज्ञानबुभुत्सया परितः पृच्छतस्तवाशयमालक्ष्य ज्ञानमुपदेक्ष्यन्ति ॥ ३४ ॥

---

வேண்டியதே என்றபடி. இதனாலேயே ஶாஸ்திரமும் "ஸ கு₃ருமேவாபி₄க₃ச்சே₂த்" [ முண்ட 1-2-12 ] [அவன் ( ஞானத்தெளிவு பெறுவதற்காக ) குருவையே அடையவேண்டும்.] என்று விதித்தது. தான் கீதையில் கேட்ட அர்த்தத்தை இவ்வர்ஜுனனே சிறிது காலத்தில் மறந்து மறுபடியும் கண்ணனால் அநுகீதையுபதேசம் பெற்றானன்றோ. ஆகையாலே ஞானிகளிடம கேட்டறியவேண்டியது அவசியமே என்று நிலைநாட்டப்பட்டதாயிற்று. "நாஸம்வத்ஸரவாஸிநே ப்ரப்₃ரூயாத் ந விநயாதி₃ ரஹிதாய ச வக்தவயம்" [ ஒரு வருடமாவது ஶுஶ்ரூஷை செய்யாதவனுக்கும் விநயம் முதலானவையற்றவனுக்கும் உபதேசிக்கலாகாது ;] என்று, இவனுக்குத் தெளிந்த அறிவை ஏற்கத்தக்க பக்குவநிலை உண்டாவதற்காக ப்ரணிபாதம் ஸேவை முதலானவற்றை சாஸ்திரம் விதிக்கையாலேயே, ஞானிகள் அவை செய்தபின்பே சிஷ்யனுக்குத் தத்துவத்தை உபதேசிக்கிறார்கள் என்பதும் அறியத்தக்கது. இனி, இப்படி ப்ரணிபாதபரிப்ரஶ்நஸேவைகளைச் செய்தால் ஞானிகள் அவசியம் ஆத்மஜ்ஞானத்தை உபதேசிப்பார்கள் என்கிறது உத்தரார்த்தம. ( தத்வ த₃ர்ஶிந: ஜ்ஞாநிந: ) ஆத்மதத்வஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரித்த ஞானிகள். 'தத்வத₃ர்ஶிந:' என்று விசேஷிக்கையாலே, ஆத்மஜ்ஞானத்தை உபதேசிப்பதற்கு இவர்களுக்குள்ள தகுதி காட்டப்படுகிறது. இவனுக்கு அவ்வப்போது ஏற்படும பக்குவநிலைகளுக்கு ஏற்ப உண்டாகும் ஐயங்களும் பல விதமாயிருக்குமாகையாலே, "ப₃ஹுப்₄ய: ஶ்ரோதவ்யம். ப₃ஹுதா₄ ஶ்ரோதவ்யம், ப₃ஹு ஶ்ரோதவ்யம்" [பலரிடம் பலகால் பல விஷயங்களைக் கேட்கவேண்டும்] என்கிறபடியே பலரிடம் கேட்க வேணடும் என்பதை'ஜ்ஞாநிந:'என்பதில் பன்மை உணர்த்துகிறது. ( ஜ்ஞாநிந: ) கீதாசார்யனான நானும், பீஷ்மர், மார்க்கண்டேயர் முதலான மற்றவர்களும் உபதேசிக்கப்போகிறோம் என்று கருத்து. (தே) ஆத்மஜ்ஞானத்தைப் பெறவிரும்பி, ப்ரணிபாதம் முதலானவற்றை முன்னிட்டுக்கொண்டு பரிப்ரஶ்னம் செய்யும உனக்கு. ( ஜ்ஞாநம் உபதே₃க்ஷ்யந்தி ) "தஸ்மை ஸ வித்₃வாந உபஸந்நாய ஸம்யக்...ப்ரோவாச தாம் தத்வதோ ப்₃ரஹ்ம வித்₃யாம்" [முண்ட 1-2-1] [நன்கு வந்தடைந்த அந்த சீடனுக்கு அறிவாளியான அவ்வாசார்யன ப்ரஹ்மவித்யையை உள்ளபடி உபதேசிக்கவேண்டும்.] என்கிற சாஸ்திரவிதியை அறிந்தவர்களாகையாலே, ப்ரணிபாதம முதலானவற்றை முன்னிட்டுக்கொண்டு பரிப்ரஶ்னம் செய்யும் உன்

॥भा॥ आत्मयाथात्म्यविषयस्य ज्ञानस्य साक्षात्काररूपस्य लक्षणमाह—

यज्ज्ञात्वा न पुनर्मोहमेवं यास्यसि पाण्डव।
येन भूतान्यशेषेण द्रक्ष्यस्यात्मन्यथो मयि॥

**35.** யஜ்ஜ்ஞாத்வா ந புநர்மோஹம் ஏவம் யாஸ்யஸி பாண்ட₃வ।
யேந பூ₄தாந்யஸேஷேண த்₃ரக்ஷ்யஸ்யாத்மந்யதோ₂ மயி॥

**யத்**—*எந்த அறிவை.* **ஜ்ஞாத்வா**—*அறிந்து.* **புந:**—*மறுபடியும்,* **ஏவம்**—*இவ்வண்ணமாக.* **மோஹம்**—*(தேஹாத்மாபி₄மானம் முதலான) மயக்கத்தை.* **ந யாஸயஸி**—*அடையமாட்டாயோ.* **யேந**—*எந்த அறிவினுல்.* **பூ₄தாநி**—*ஜீவராசிகளை,* **அஶேஷேண**—*ஒன்றுவிடாமல்.* **ஆத்மநி**—*தனக்கு ஸமமாகவும்.* **அதோ₂ மயி**—*எனக்கும் ஸமமாகவும்.* **த்₃ரக்ஷ்யஸி**—*காண்பாயோ.* (**தத் வித்₃தி₄**—*அந்த அறிவைப் பெறுவாயாக—என்று கீழ் ஶ்லோகத்தோடு அந்வயம்*)

---

**35.** யாததனை யிங்கறிந்தா லிவ்வண்ண மோகியா
யாததனு லுன்னிடத்து மென்னிடத்து—மேதமறப்
பூதங்க ளெல்லாம் பொருந்துநெறி காண்டிநீ
யாதங் கறிவென் பதம்.

**யாததனை**—*எந்த ஞானத்தை.* **இங்கு அறிந்தால்**—*இவ்வுலகில் பெற்றுயானுல்.* **இவ்வண்ணம் மோகியாய்**—*இம்மாதிரியாக (தேஹத்தை ஆத்மாவாக எண்ணி) மயங்கமாட்டாயோ.* **யாததனுல்**—*எந்த ஞானத்தினுல்,* **உன்னிடத்தும் என்னிடத்தும**—*உன்னிடமும் என்னிடமும்.* **பூதங்கள் எல்லாம்**—*எல்லா ஜீவராசிகளும்.* **ஏதம் அற**—*வேற்றுமையில்லாமல்.* **பொருந்தும நெறி**—*ஸமமாயிருக்கும் நிலையை,* **நீ காண்டி**—*நீ காண்பாயோ.* **ஆது**—*அவ்வறிவே.* **அங்கு**—*ப்ராப்யதசையில்.* **அறிவு என் பதம்**—*அறிவுமயமான ஆத்மஸாக்ஷாத்காரமாகும்.*

---

கருத்தை அறிந்து ஞானிகள் அவசியம் உனக்கு ஆத்மதத்வ ஜ்ஞானத்தை உபதேசிப்பார்கள். ஆக, அவ்வப்பக்குவநிலைக்கேற்ப ஆத்மதத்வஜ்ஞானத்தைப் பல ஞானிகளிடம் பலகால்கேட்டுத் தெளிவு பெறவேணடும் என்று விதிக்கப்பட்டதாயிற்று. 34.

॥भा॥ यत् ज्ञानं ज्ञात्वा पुनरेवं—दे[वा]हाद्यात्माभिमानरूपं तत्कृतं ममताद्यास्पदं च मोहं न यास्यसि, येन च देवमनुष्याद्याकारेणानुसंहितानि सर्वाणि भूतानि स्वात्मन्येव द्रक्ष्यसि, यतस्तवान्येषां

35. கர்மயோகத்திலடங்கிய ஜ்ஞாநாம்ஶத்தின் ப்ராதா₄ன்யம் முப்பத்துமூனருவது ஶ்லோகத்திலும், அது காலம் செல்லச்செல்ல ஜ்ஞாநிஸேவையாலே பக்குவமடையும் என்று சென்ற ஶ்லோகத்திலும் கூறப்பட்டது; அந்த ஆத்மாவைப்பற்றிய உண்மையறிவு முற்றிப் பழுத்து ஸாக்ஷாத்கார நிலையை அடையும்போது அதன் ஸ்வரூபம் எத்தகையதாயிருக்கும் எனபது இந்த ஶ்லோகத்தில் விவரிககப் படுகிறது. (யத் ஜ்ஞாத்வா) எந்த ஆத்மஜ்ஞானத்தை நேரே பெறுமபோது; ஆதமஜ்ஞானமானது ஜ்ஞானிகளை ப்ரணிபாத பரிப்ரஶ்நஸேவைகள் பண்ணுவதாலே முற்றிப்பழுத்து ஸாக்ஷாத்கார நிலையை அடையும்போது என்றபடி (புந: ஏவம் மோஹம் ந யாஸ்யஸி) இப்ரகரணத்தின் தொடக்கத்தில் தேஹத்தையே ஆத்மா வென்று மயங்கியது, அதனுலே தேஹத்தைச்சேர்ந்த உறவினர் முதலானவற்றை ஆத்மாவோடு தொடர்புடையவையாக மயங்கியது முதலான மயக்கத்தை மறுபடியும் நீ இவ்வண்ணம் அடைய மாட்டயோ. ப்ரக்ருதியைக்காட்டிலும் வேறுபட்டதாய், ஜ்ஞாநா நந்தமயமன ஆத்மாவை நேரே கண்டபின்பு, தேவாதிதேஹமே ஆத்மாவெனும் அஹங்காரமும்,தேஹாநுபந்திகளைத்தன்னுடையவை யாக நினைக்கும மமகாரமும ஏற்பட இடமில்லையன்றே. (பாண்ட₃வ) பாண்டுபுத்திரனை நீ மோஹமற்ற அந்நிலையை அடையவேண்டா வோ என்று கருத்து. இனி, உத்தரார்த்தத்தாலே அந்நிலையில் எல்லா ஆத்மாக்களும் பரமாத்மாவைப்போலே ஜ்ஞாநாகாரமாயிருப் பவர்களாகக் காணப்படுவர் என்கிருன்: (யேந) எந்த ஜ்ஞானத்தி ஞலே. (அஶேஷேண பூ₄தாநி ஆத்மநி த்₃ரக்ஷ்யஸி) தேவர், மனிதர், திர்யக் (ஊர்வது), ஸ்தாவரம் (நிற்பது) என்று நாலுவகைப் பட்ட எல்லா ஜீவராசிகளையும் தன்னிடமே காண்பாயோ. ப்ரக்ருதி கார்யமான சரீரத்தைக் காட்டிலும் வேறுபட்ட மற்ற ஜீவர்களும், நீயும் ஓரே ரீதியில் ஜ்ஞாநாகாரமாயிருந்துகொண்டு ஸமமா யிருப்பதால், உன்னை நேரே காணும்போது அவற்றையும் கண்ட தாகவேயாகிறபடியால், உன்னிடமே அவற்றைக் காண்கிருய் என்று கருத்து. இவ்வர்த்தமே,

च भूतानां प्रकृतिवियुक्तानां ज्ञानैकाकारतया साम्यम्, प्रकृतिसंसर्ग-दोषविनिर्मुक्तमात्मस्वरूपं सर्वं सममिति च वक्ष्यते * निर्दोषं हि समं

"வித்₃யாவிநய ஸம்பந்நே ப்₃ராஹ்மணே க₃வி ஹஸ்திநி|
ஶுநி சைவ ஶ்வபாகே ச பண்டி₃தா: ஸமத₃ர்ஶிந:||"

[கல்வியும் அடக்கமும கூடிய அந்தணனிடமும், - (அவையற்ற) அந்தணனிடமும, பசுவிடமும், யானையிடமும, நாயிடமும, நாயைத்தினனும் சண்டாளனிடமும் (ஆத்மா ஜ்ஞாநாகாரமாகவே யிருப்பதால்) ஆத்மஜ்ஞானிகள் ஸமமானவை எனனும அறிவையே உடையவர்கள்.] எனறு அடுத்த அத்தியாயத்தில் சொல்லப்படுகிறது. பூ₄தஶப்தம் அந்தணன், பசு, யானை முதலான சரீரத்தோடு கூடிய ஜீவர்களைக் காட்டுகிறது. இப்படி சரீரத்தால வேறுபட்டிருந்தபோதிலும் அவ்வேறுபாடு கர்மம காரணமாக ஏற்பட்டதாகையாலும் உளளேயிருக்கும் ஆத்மஸ்வரூபம இயல்வாகவே பரிசுத்தமாய், ஜ்ஞாநாகாரமாய் ஸமமாகவேயிருப்பதாகையாலும, ஒருபானை சோற்றுக்கு ஒருசோறு பதம் எனனும ஸ்தாலீபுலாக ந்யாயத்தாலே உனனிடமே எல்லா ஜீவர்களையும் காணலாம் என்று கருத்து. 'பூ₄தாநி ஆத்மநி மயி த்₃ரக்ஷ்யஸி' [எல்லா ஜீவர்களையும் அந்தராத்மாவான என்னிடம் காண்பாய்] எனறு பொருள் கொள்ளலாகாதோ? எனில்: கூடாது. இப்ரகரணத்தில் ஜீவாத்ம ஸாக்ஷாத்காரத்தைப்பற்றிப் பேசப்படுகிறதேயொழியப் பரமாத்மஸாக்ஷாத்காரத்தைப்பற்றிப் பேசப்படவிலலை; 'ஆத்மநி அதோ₂ மயி' என்றவிடத்தில் இடையில் உளள அதோ₂ ஶப்தம் 'ஆத்மநி' என்பதையும 'மயி' என்பதையும் விஶேஷணவிஶேஷயங்களாகக் கொள்வதைத் தடைசெய்து வேறு பொருளை உணர்த்துகிறது. எல்லா ஆத்மாக்களையும் ஜ்ஞாநாகாரமாக ஒன்றாகக்காணும் நிலை முற்றிலை, எல்லாவற்றையும் ஜ்ஞாநாகாரனை பரமனோடும் ஒன்றாகக் காணும நிலை ஏற்படும் எனறு கீதையில் மேலே விவரிக்கப்படப்போகிறது. ஆகையால் 'அதோ₂ மயி' எனறதைத் தனி வாக்கியமாக்கி, அந்நிலையைக் குறிப்பதாகக் கொள்வதே உசிதம. 'எல்லா பூதங்களையும உன்னிடமும், ஸர்வேஶ்வரனிடமும் காண்பாய்' என்றால், எலலா பூதங்களுக்கும் தன் ஆத்மாவும ஸர்வேஶ்வரனும் ஆதாரமாகிறார்கள் எனனும பொருளன்றோ ஸ்வரஸமாகத் தோற்றுகிறது எனில்: ஜீவனுடைய ஆத்மா அனைத்துக்கும் ஆதாரமாயிருப்பது பொருந்தாதாகையால அப்படிப்

ब्रह्म तस्माद्ब्रह्मणि ते स्थिताः (५.१९) इति। अथो मयि सर्वभूतान्यशेषेण द्रक्ष्यसि, मत्स्वरूपसाम्या[च्च]त् परिशुद्धस्य सर्वस्यात्म-

பொருள் கொள்ளக்கூடாது. அந்தர்யாமியான பரமாத்மாவைக் கருத்திலகொண்டு ஜீவன் எல்லா பூதங்கட்கும் ஆதாரமாயிருப்ப தாகக கூறப்படுவதாகக் கொள்ளக்கூடாதோ? எனில்; ஜீவ சிந்தனமே இப்ரகரணத்தின் பொருளாகையால், ஆத்மஶப்தத்தைப் பரமாத்மபர்யந்தமாகக் கொள்வது ப்ரகரணவிருத்தமாகும். ஆகை யால், தன்னிடம் எல்லா பூதங்களைக் காண்பதாவது, கர்மம் காரண மாக ஏற்பட்ட சரீரத்தினுலுண்டான வேறுபாடுகளைத்தள்ளி, இயல் வாக ஆதமாக்கள் எல்லாம் ஜ்ஞாநாகாரமாகையாலே ஸமம் என்று அநுஸந்திப்பதேயாகும.

'புமாந் ந தே₃வோ ந நர: ந பஶுர் ந ச பாத₃ப:।
ஶரீராகருதிபே₄த₃ாஸ்து பூ₄பைதே கர்மயோநய: ॥''
[வி-பு 2-13-98]

[ஆத்மாவானவன் புருஷனோ, தேவனோ மனிதனோ பசுவோ, மரமோவலலன்; அரசனே! காமம காரணமாக ஏற்பட்ட சரீரத் தின் அமைப்பின வகைகளே புருஷன முதலானவையாகும்.]

''நாயம் தே₃வோ ந மர்த்யோ வா ந திர்யக் ஸ்த₂ாவரோऽபி வா।
ஜ்ஞாநாநந்த₃மயஸ்த்வாத்மா ஶேஷோ ஹி பரமாத்மந: ॥''

[இவ்வாதமா தேவனோ, மனிதனோ, திர்யக்கோ, ஸ்தாவரமோ வலலன்; இயலவாகவே ஜ்ஞாநாநந்தமயனுன ஆத்மா பரமாத்மா வுக்கு அடிமைப்பட்டவனுவான்] என்று இதரஶாஸ்திரங்களிலும்,

''நிர்த்தே₃ாஷம் ஹி ஸமம் ப்₃ரஹ்ம தஸ்மாத் ப்₃ரஹ்மணி தே ஸ்தி₂தா:'' [5-19]

[ப்ரக்ருதிஸம்ஸர்க்கமாகிற தோஷமற்றிருக்கையாலே ஸமமாயிருக் கும் எல்லா ஆதமவஸ்துவும் ப்ரஹ்மமாகிறது; ஆகையால் ஆத்ம ஸாமயத்தை அநுஸந்திப்பவர்கள் ப்ரஹ்மத்தில் நிலைநிற்பவர்களே யாவர்.] என்று கீதையில் அடுத்த அத்தியாயத்திலும் ப்ரக்ருதி ஸமஸர்க்கமாகிற தோஷம நீங்கப்பெற்ற ஆத்மஸ்வரூபம் அனைத் தும் ஜ்ஞாநாநந்தமயமாயிருக்கையாலே ஸமம் எனறு சொல்லப படுகிறதன்றோ. (அதோ₂ மயி அஶேஷேண பூ₄தாநி த்₃ரக்ஷ்யஸி) மேலும், என்னிடத்தில் எல்லா பூதங்களையும் காணப்போகிருய்.

वस्तुनः ; ※ इदं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागताः (१४. २) इति हि वक्ष्यते; तथा ※ तदा विद्वान् पुण्यपापे विधूय निरञ्जनः परमं साम्यमुपैति (मु. ३. १. ३१) इत्येवमादिषु नामरूपविनिर्मुक्तस्यात्मवस्तुनः परस्वरूपसाम्यमवगम्यते; अतः प्रकृतिविनिर्मुक्तं सर्वमात्मवस्तु परस्परं समं सर्वेश्वरेण च समम् ॥ ३५ ॥

---

நான் ஈஶ்வரனுகவும் அகர்மவஶ்யனுகவும் அவை நேர் எதிராகவுமிருந்தபோதிலும் பரிசுத்தமான எல்லா ஆத்மவஸ்துக்களும் என் ஸ்வரூபத்தோடும் ஜ்ஞாநாகாரமாயிருக்கும் அம்ஶத்தில் ஒத்திருக்கையாலே, எல்லா பூதங்களையும் ஜ்ஞாநாகாரமாயிருக்கையாலே என்னேடு ஸமமாகக் காணப்போகிருய் என்று கருத்து. இவ் விஷயமும்,

"இதம் ஜ்ஞாநமுபாஶ்ரித்ய மம ஸாதர்ம்யமாகதா:" [14-2]

*[இவ்வறிவைப்பெற்று எனனேடு ஸாமயத்தை அடைந்தவர்கள்.] எனறு கீதையில் சொல்லப்படப்போகிறது.*

"ததா வித்வாந் புண்யபாபே விதூய
நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" *[முண்ட 3-1-36]*

*[அப்போது உபாஸகன் புண்யபாபங்களைவிட்டு, அதனல் ஏற்படும ப்ரக்ருதிஸம்பந்தமும், அதனல் ஏற்படும் க்லேஶகர்மவிபாகாஶயங்களுமற்றவனுய் ஸர்வேஶ்வரனேடு மேலான ஸாமயத்தை அடைகிருன்]* என்று ஶ்ருதியிலும ப்ராக்ருதமான நாமரூபங்களற்ற ஆத்மவஸ்துவுக்குப் பரமாத்ம ஸ்வரூபத்தோடு ஸாம்யம சொல்லப் பட்டது. ஆக, 'அதேஶ மயி' எனறதால் ஶ்ருதி முதலான சாஸ்திர ஸித்தமான ஈஶ்வர ஸாம்யத்தாலேயே ஜீவர்கள் ஒருவர்க்கொருவர் ஸமராகிருர்கள் என்பதும் ஸித்திக்கிறது. இப்படி ஸாம்யமே கீதையிலும் மற்ற சாஸ்திரங்களிலும் கூறப்படுகையால், இவ்விடத்தில் ஜீவர்களுக்குள்ளும், பரமபுருஷனுக்கும் ஜீவர்களுக்கும் ஐக்யம சொல்லப்படுகிறது என்று கூறுவது பொருந்தாது என்று நிரூபிக்கப்பட்டதாயிற்று. ஆக, தேஹாத்மாபிமானம் முதலான மயக்கமற்று, எல்லா ஆத்மாக்களையும், ஈஶ்வரனைப்போலே ஜ்ஞாநாகாரமாயிருப்பதாக அறியும் நிலையே ஆத்மஸாக்ஷாத்காரநிலையாகும் என்று இந்த ஶ்லோகத்தில் விளக்கப்பட்டது. 35.

अपि चेदसि पापेभ्यः सर्वेभ्यः पापकृत्तमः।
सर्वं ज्ञानप्लवेनैव वृजिनं संतरिष्यसि ॥ ३६ ॥

**36.** அபி சேத₃ஸி பாபேப்₄ய: ஸர்வேப்₄ய: பாபக்ருத்தம:।
ஸர்வம் ஜ்ஞாநப்லவேநைவ வ்ருஜிநம் ஸந்தரிஷ்யஸி ॥

ஸர்வேப்₄ய: பாபேப்₄ய:-*எல்லாப் பாவிகளைக் காட்டிலும்,* பாபக்ருத்தம: அபி சேத அஸி—*மஹாபாபியாக நீ இருந்தாலும்,* ஸர்வம வ்ருஜிநம்—*அந்த எல்லாப் பாபக்கடலையும்,* ஜ்ஞாநப்லவேந ஏவ—*ஆத்ம ஜ்ஞானமாகிற ஓடத்தினுலேயே,* ஸந்தரிஷ்யஸி—*கடந்து விடுவாய்.*

---

**36.** பாவிகளெல் லாரினுநீ பாவத்தை மிக்கியன்று
மேவுதி யாகிலுமிம் மெய்யுணர்வாம்—தாவிவருந்
தெப்பத்தை மேற்கொண்டு தீவினையாம் வெங்கடலைத்
தப்பக் கடப்புதிநீ தான்.

பாவிகள் எல்லாரினும்—*எல்லாப் பாவிகளைக் காட்டிலும்,* நீ—*நீ,* பாவத்தை மிக்கு இயன்று மேவுதியாகிலும்—*பாபத்தை மிகவும செய்துவிட்டு இருக்கின்றுயானுலும்,* தீவினையாம் வெம கடலை-*அப்பாவங்களாகிற கொடிய கடலை,* இம்மெய் உணர்வாம்—*(ஆத்மாவைப்பற்றிய) இவ்வுண்மை யறிவாகிற,* தாவிவரும் தெப்பத்தை மேற்கொண்டு-*வேகமாகச் செலலும் தெப்பத்தின்மேல் ஏறி,* நீ தான்—*(இதுகாறும் அக்கடலில் தத்தளித்துப் போந்த) நீதானே,* தப்பக் கடப்புதி—*முழுவதும் கடந்து விடுவாய்.*

---

36. கர்மயோகத்திலடல்கிய ஜ்ஞாநாம்ஶத்தின் ப்ராத₄ான்யமும் பக்குவத்திற்கு அனுகுணமாக அது முற்றிப்பழுக்கும் வழியும், முற்றிப்பழுத்து ஸாக்ஷாத்காரநிலையை அடைந்த அதன் லக்ஷணமும் சென்ற மூன்று ஶ்லோகங்களில் விவரிக்கப்பட்டது. இந்த ஶ்லோகத்தில் அந்த ஞானமானது வலிய விரோதியையும் அழிக்கும் வல்லமையுடையது என்று கூறுவதன் மூலம் அதன் பெருமை காட்டப்படுகிறது. (ஸர்வேப்₄ய: பாபேப்₄ய: பாபக்ருத்தம: அபி சேத் அஸி) எல்லாப் பாவிகளைக் காட்டிலும் பெரும்பாவியாக

॥भा॥ यद्यपि सर्वेभ्यः पापेभ्यः पापकृत्तमोऽसि, सर्वं पूर्वार्जितं वृजिनरूपं समुद्रमात्मविषयज्ञानरूपप्लवेनैव संतरिष्यसि॥ ३६॥

यथैधांसि समिद्धोऽग्निर्भस्मसात्कुरुतेऽर्जुन।
ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा॥ ३७॥

37. யதை₂தா₄ம்ஸி ஸமித்₃தோ₄Sக்₃நிர் ப₄ஸ்மஸாத்
குருதேSர்ஜுந ।
ஜ்ஞாநாக்₃நி: ஸர்வகர்மாணி ப₄ஸ்மஸாத் குருதே தத₂ா ॥

---

*37. அங்கிவிற கெல்லா மெரிப்பதுபோ லவ்வறிவு
பொங்கிவரு கன்மம் பொடியாக்கு—மிங்கிலலே
மெய்யறிவிற் றூயதுதான் மிக்கவதும் யோகிதான்
பையவெய்து(ம) நெஞ்சிற் பயின்று.

---

நீ இருந்தாலும். 'பாபக்ருத்தம:' [பெரும்பாவி] எனனும் பதத்திற்கு ப்ரதிகோடியாக இருககையாலே இவகுள்ள பாபமபதம் பாவம் செய்யும பாவியைக் குறிக்கிறது. அன்றிக்கே, 'ஹேதௌ பஞசமி'யாய், 'பாபமகாரணமாகப் பெரும்பாவியாக நீ இருந்தாலும' என்றும் பொருள கொள்ளலாம். 'அபி', 'சேத' 'யதி₃' என்னும் மூன்று பதங்களும் ஓரே பொருளை உடையவையாகையாலே, 'அபி சேத்' எனறது 'யத்₃யபி' [இருந்தபோதிலும] என்று பொருள்படுகிறது. (ஸர்வம் வ்ருஜிநம் ஜ்ஞாநப்லவேநைவ ஸந்தரிஷ்யஸி) அந்த எலலாப் பாபஙகளாகிற கடலே முற்கூறிய ஆத்மஜ்ஞானமாகிற ஓடத்தாலேயே கடந்துவிடுவாய். ஓடத்தால் கடப்பாய்' எனறு கூறுகையாலும், அநாதிகாலமாகச் சேர்ந்திருக்கும் பாபம் கடல்போலே பரந்திருக்கையாலும் 'எல்லாப் பாபங்களாகிற கடலே' என்று வருவித்துப் பொருள கூறப்பட்டது. ஆக, ஆத்ம ஜ்ஞானமானது உபாய விரோதியான அநாதிபாபங்களைப் போக்கடிக்க வல்லமையுடையது என்று காட்டப்பட்டதாயிற்று. 36.

---

* இபபாட்டு 37, 38 ஆகிய இருஸ்லோகங்களுக்கும் மொழி பெயர்பபாயுள்ளது.

அர்ஜுந—*அர்ஜுநா!* ஸமித்₃த₄: அக்₃நி:—*கொழுந்து விட்டெரியும் நெருப்பு.* ஏத₄ாம்ஸி—*விறகுகளை.* யதா₂ ப₄ஸ்மஸாத் குருதே—*எப்படிச் சாம்பலாக்குகிறதோ.* ததா₂—*அப்படியே.* ஜ்ஞாநாக்₃நி:—*ஞானமாகிற நெருப்பு.* ஸர்வ காமாணி—*எல்லாக் கர்மங்களாகிற விறகுகளையும்.* ப₄ஸ்ம ஸாத் குருதே—*சாம்பலாக ஆக்குகிறது.*

|| भा || सम्यक्प्रवृद्धोऽग्निरिन्धनसञ्चयमिवात्मयाथात्म्यज्ञानरूपोऽग्निर्जीवात्मगतमनादिकालप्रवृत्तानन्तकर्मसञ्चयं भस्मीकरोति || ३७ ||

---

அங்கி—*நெருப்பானது.* விறகு எல்லாம் எரிப்பதுபோல்—*எல்லா விறகையும் எரிப்பதுபோல்.* அவ்வறிவு—*அந்த ஆத்மஜ்ஞானமானது.* பொங்கி வரு கன்மம் பொடி ஆக்கும்—*மேன்மேலே பொங்கிவரும் புண்யபாபகர்மத்தைச் சாம்பலாக்கும்.* மெய் அறிவில் தூயதுதான் — *(ஆத்மாவைப் பற்றிய) உண்மையறிவைக் காட்டிலும் பரிசுத்தமானது.* இங்கு இல்லை—*இவ்வுலகில் இல்லை.* மிக்க அதும்—*சிறப்புடைய அவ்வறிவை.* யோகிதான்—*கர்மயோக ஸித்தி பெற்றவன்,* நெஞ்சில் பயின்று — *நெஞ்சில் அவ்வாத்ம ஜ்ஞானத்தைப் பலகால அநுஸந்தித்து.* பைய எய்தும்—*சில காலத்தில் அடைவான்.*

---

37. 'ஞானமாகிற ஓடத்தினாலே பாபமாகிற கடலைத் தாண்டுவாய்' என்று சென்ற ஶ்லோகத்தில் சொன்ன தருஷ்டாந்தத்தின் மேல இரண்டு ஐயங்கள் எழுகின்றன; அவையாவன:— (1) ஓடத்தால் கடலைத் தாண்டியவன மறுபடியும் அக்கடலை அடைய இடமுண்டு; அதுபோலே இங்கும் பாபக்கடலைத் தாண்டியவன் மறுபடியும அதை அடைய இடமுண்டோ? எனபது முதல் ஐயம். (2) "அவஶ்யமநுபோ₄க்தவ்யம் க்ருதம் கர்மஶுபா₄ஶுப₄ம் | நாऽபு₄க்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடிஶதைரபி ||" [ப்ரஹ்மவைவர்த்தம்-ப்ர-26-70] [ஒரு சேதனன தான் செய்த நல்வினை தீவினைகளின் பயனை அவசியம் அநுபவித்தே தீரவேண்டும். நூறு கற்பகோடி காலமானாலும் கர்மம பலனை அநுபவியாமல் கழியாது] என்று சாஸ்திரங்கள் சொல்லியிருக்கையில, ஒன்றான ஆத்மஜ்ஞானம் அநாதி

न हि ज्ञानेन सदृशं पवित्रमिह विद्यते।
तत्स्वयं योगसंसिद्धः कालेनात्मनि विन्दति॥ ३८॥

38. நஹி ஜ்ஞாநேந ஸத்₃ருஶம் பவித்ரமிஹ வித்₃யதே।
தத் ஸ்வயம் யோக₃ஸம்ஸித்₃த₄: காலேநாத்மநி விந்த₃தி॥

**இஹ** — இவ்வுலகில். **ஜ்ஞாநேந ஸத்₃ருஶம்** — ஆத்ம ஜ்ஞானத்தை ஒத்ததாக. **பவித்ரம்**—சுத்தியளிப்பதாக. **ந வித்₃யதே**—(வேறொன்று) இல்லை. **தத்**—அத்தகைய ஜ்ஞானத்தை. **யோக₃ ஸம்ஸித்₃த₄:**—(முற்கூறிய) கர்மயோக ஸித்திபெற்றவன். **காலேந**—காலக்ரமத்தில். **ஆத்மநி**—தன் ஆத்மாவில். **விந்த₃தி**—அடைகிறான்.

---

யான அநந்த பாபங்களை அழித்துவிடும் என்பது எப்படிப் பொருந்தும் என்பது இரண்டாவது ஐயம். இவ்விரண்டு ஐயங்களையும் தவிர்ப்பதற்காக மற்றொரு திருஷ்டாந்தத்தைக் காட்டுகிறது இந்த ஸ்லோகம். (ஸமித்₃த₄: அக்₃நி: ஏத₄ாமஸி யத₂ா ப₄ஸ்மஸாத் குருதே) கொழுந்துவிட்டெரியும் நெருப்பு, விறகுகளை எப்படிச் சாம்பலாக்குகிறதோ. நெருப்பு ஒன்றாயிருந்தபோதிலும், சுமை சுமையாயிருக்கும் விறகுகளை அவற்றைப்போடப்போடக் கொழுந்துவிட்டெரியும் தன் வல்லமையாலே எப்படிச் சாம்பலாக்குகிறதோ, அப்படியே ஜ்ஞானம் ஒன்றாயிருந்தபோதிலும் அநந்தமான அநாதி கர்மங்களையும் சாம்பலாக்கிவிடும் என்று கருத்து. இதனால் இரண்டாவது ஐயம் தவிர்க்கப்பட்டது. 'சாம்பலாக்கிவிடும்' என்றதால், முந்திய ஸ்லோகத்தில் கடலைத் தாண்டும் திருஷ்டாந்தத்திற்போலே மறுபடியும் பாபம் உண்டாகுமோ என்ற முதல் ஐயத்திற்கும் இடமில்லை என்று காட்டப்படுகிறது. (தத₂ா ஜ்ஞாநாக்₃நி: ஸர்வகர்மாணி ப₄ஸ்மஸாத் குருதே) அவ்வண்ணமே ஜ்ஞானமாகிற நெருப்பு எல்லாக் கர்மங்களையும் சாம்பலாக்குகிறது. 'எல்லாக் கர்மங்களையும்' என்றதால் உபாய விரோதியான புண்ணியத்தோடு பாபத்தோடு வாசியற எல்லாக்கர்மங்களையும் அழிக்கிறது என்று காட்டப்படுகிறது. கர்மங்களைச் சாம்பலாக்குவதாவது,— அவை தம் கார்யத்தைச் செய்யமுடியாதபடி பண்ணுகை. 'கர்மமானது அநுபவியாமல் கழியாது' என்ற ப்ரஹ்மகைவர்த்த வசனம் ஆத்மஜ்ஞானமற்றவனுடைய கர்மத்தைப் பற்றியதாகையாலே விரோதமில்லை. இப்படி ஸங்கோசப்படுத்திக்கொள்ளாவிடில் பாபங்கள் பிராயச்சித்தத்தால் அழிகின்றன என்று விதிக்கும் வசனங்களும் விரோதிக்கும். ஆக, ஆத்மஜ்ஞானத்தால் உபாய விரோதிபாபங்கள் மறுவலிடாதபடி அழிகின்றன என்றதாயிற்று. 37.

॥भा॥ यस्मादात्मज्ञानेन सदृशं पवित्रं शुद्धिकरमिह जगति वस्त्वन्तरं न विद्यते, तस्मादात्मज्ञानं सर्वपापं नाशयतीत्यर्थः। तत्-

38. சென்ற ஶ்லோகத்தில், 'நெருப்பு விறகுகளை எரிப்பது போல் ஆத்மஜ்ஞானம் பாபங்களை எரிக்கிறது' என்று லோகத்₃ருஷ்டாந்தம் காட்டி ஆத்மஜ்ஞானத்தின பெருமை விளக்கப்பட்டது. '(நெருப்பைப்போலே) மிகச் சிறந்த பரிசுத்தப் படுத்தும் தன்மை ஆத்மஜ்ஞானத்துக்கு உள்ளது' என்று காட்டுவதன்மூலம் அவ்வர்த்தமே மேலும் வலியுறுத்தப்படுகிறது. (ஹி) ஏனெனில்; முன் ஶ்லோகத்தில ஆத்மஜ்ஞானமானது எல்லாப்பாபங்களையும் அழிக்கிறது என்று சொனனதற்குக் காரணம் இந்த ச்லோகத்தின் முற்பாதியில் காட்டபபடுகிறது என்றபடி. (ஜ்ஞாநேந ஸத்₃ருஶம் பவித்ரம இஹ ந வித்₃யதே) ஆத்மஜ்ஞானத்தைப்போலே பரிசுத்தப்படுத்தும பொருள் இவ்வுலகில் வேறு இலலே. ஆகையாலே, அவ்வாத்மஜ்ஞானம எல்லாப் பாபங்களையும் அழிக்கிறது என்று முன் ஶ்லோகத்தில் சொன்னது பொருத்தமே எனறு பொருள. நெருப்பானது சில பொருள்களை அழிக்கும சக்திபெற்றிருப்பதுபோலே, சில பொருள்களைப் பரிசுத்தப்படுத்தும் சக்தியும் பெற்றிருக்கிறது; அதுபோலவே பாபங்களை அழிக்கும சக்தி பெற்றிருககும ஆத்மஜ்ஞானமும், ஆத்மாவைப் பரிசுத்தப்படுத்தும் சகதியும் பெற்றிருக்கிறது; இப்படி இருவிதங்களிலும ஆத்மஜ்ஞானம் நெருப்பை ஒத்திருக்கிறது எனறு கருத்து. 'ஆத்மஜ்ஞானத்தைப்போலே பவித்திரமானது வேறு எதுவுமே இல்லே' எனறு இங்கு சொல்லப்பட்டபோதிலும்,

"க்ஷேத்ரஜ்ஞஸ்ய ஈஶ்வரஜ்ஞாநாத் விஶுத்₃தி₄: பரமா மதா"
[யாஜ்ஞவலக்யஸ்ம்ருதி 3-1]

[ஜீவனுக்கு ஈஶ்வர ஜ்ஞானத்தாலேயே மேலான சுத்தியேற்படுவதாகக் கருதப்படுகிறது.]

"பாவந: ஸர்வலோகாநாம் த்வமேவ ரகு₄ நந்த₃ந"
[ரா-உ-82-9]

[ராகவரே எல்லாவுலகையும் பரிசுத்தப்படுத்துபவர் தேவரீரே.]

"பவித்ராணும் ஹி கோ₃விந்த₃: பவித்ரம் பரமுச்யதே"

[பரிசுத்தப்படுத்துகின்றவைகளில் கோவிந்தனே மேலான பரிசுத்தப் படுத்தும் பொருளாகக் கூறப்படுகிருன்.]

**तथाविधं ज्ञानं यथोपदेशमहरहरनुष्ठीयमानज्ञानाकारकर्मयोगसंसिद्धः कालेन स्वात्मनि स्वयमेव लभते ॥ ३८ ॥**

---

"பவித்ராணாம் பவித்ரம் யோ மங்க3ளாநாம் ச மங்க3ளம்"

[பாரதம்-விஷ்ணுஸஹஸ்ரநாமாத்யாயம்]

[பரிசுத்தப்படுத்தப்படுத்துமவற்றுள் எவர் மிகச்சிறந்த பரிசுத்தப் படுத்தும பொருளாகவும், மங்களமான பொருள்களுள் எவர் மிகச்சிறந்த மங்களமான பொருளாகவுமிருககிறுரோ] என்று பற்பல ஶாஸ்திரங்களில். ஸர்வேஶ்வரனும், அவனைப் பற்றிய ஜ்ஞானமுமே மிக மிகச்சிறந்த பவித்ரங்கள் என்று கூறப்படுகிற படியால், அவையொழிந்த பொருளகளில் ஆத்மஜ்ஞானமே மிகச் சிறந்த பவித்திரப்பொருள் எனறு இங்கு கூறப்படுவதாகக் கொள்ளவேண்டும். ஞானமற்றவனுக்குள்ள கர்மம், திவ்யதேஶ வாஸம், திருநாம ஸங்கீர்த்தனம் முதலானவற்றைக் காட்டிலும இவ்வுலகில் ஆத்மஜ்ஞானம மிகச்சிறந்த பரிசுத்தப்பொருள் என்பது முற்பாதியின திரண்ட பொருள். இனி, "'இப்போது ஆத்ம ஜ்ஞானத்தை அடையக்கடவேன்' என்று ஸங்கல்பம் செய்து ஒருவன் எவ்வளவு முயனருலும் அது இவ்வுலகில் அடையப்படுவ தாகத் தெரியவில்லையே; இப்படிப் புருஷனல் முயனறு ஸாதிக்க முடியாததாயிருக்குமபோது அதை அடையவேண்டும் எனறு சாஸ்திரம் எப்படி விதிக்கமுடியும?" என்னும் ஐயம் எழக்கூடும; அந்த ஸந்தேஹம் ஶ்லோகத்தின் பிற்பாதியாலே தவிர்க்கப்படு கிறது. (தத்) முற்றிப்பழுத்த நிலையிலிருக்கும் அவ்வாத்ம ஜ்ஞானத்தை. (யோக3 ஸமஸித்3த4:) சாஸ்திரங்களில் சொல்லப் பட்டதாய், நித்யநைமித்திககர்மாநுஷ்டானத்தோடு கூடியதாய், அவ்வப்போது பக்குவத்திற்குத் தக்கபடி ஞானிகளால் உபதேசிக் கப்படும் ஆத்மஜ்ஞானத்தோடு சேர்ந்திருப்பதாக முன் உபதேசிக் கப்பட்டதாய், தினந்தோறும அனுஷ்டிக்கப்படுவதான ஜ்ஞாநாகார கர்மயோகத்தில் நன்கு ஸித்திபெற்றவன்.

"கஷாயபக்தி: கர்மாணி ஜ்ஞாநம் து பரமா க3தி: |
கஷாயே கர்மபி4: பக்வே ததோ ஜ்ஞாநம் ப்ரவர்த்ததே ||"

[பாரதம்]

[கர்மங்கள் (ஞானத்திற்குத் தடையாயிருக்கும்) பாபத்தை அழிக் கின்றன; அதன் பரமபலமாக ஞானம் ஏற்படுகிறது; பாபம

॥ भा ॥ तदेव विस्पष्टमाह—

श्रद्धावान् लभते ज्ञानं तत्परः संयतेन्द्रियः।
ज्ञानं लब्ध्वा परां शान्तिमचिरेणाधिगच्छति ॥ ३९ ॥

39 ஶ்ரத்₃தா₄வாந் லப₄தே ஜ்ஞாநம் தத்பர: ஸம்யதேந்த்₃ரிய: ।
ஜ்ஞாநம் லப்₃த்₄வா பராம் ஶாந்திமசிரேணாதி₄க₃ச்ச₂தி ॥

38 ஆதரவு மிக்கா னறிவுபெறு மாங்கதனின்
மீதமருந் தன்மையான் வென்றுபுலன்—போதமது
பெற்றொல்லை யாங்கே பெரிதான சாந்தியினை
யுற்றெய்தும் யோகி யுணர்ந்து

காமங்களால் அழிக்கப்பட்டவுடன் ஞானம் தன்னடையே ஏற்படு கிறது ] என்று கூறப்பட்டபடியே ஆத்மஜ்ஞானத்தை அப்ய ஸித்துக்கொண்டு முற்கூறிய கர்மயோகத்தை அநுஷ்டித்து வந்தால் ஸம்ஸ்காரமிகுதியாலும் விரோதிபாபங்கள் கழிகையாலும் அவ் வாத்மஜ்ஞானம் தானே முற்றிப்பழுக்கும் என்று கருத்து (காலேந) காலக்கிரமத்தில் ஆத்மஜ்ஞாநஸ்வரூபம் நேரே தன் முயற்சிக்கு விஷயமாகாதபோதிலும் அதற்குக் காரணமாக முற்கூறப்பட்ட கர்மயோகாநுஷ்டானத்தின்மூலம் காலக்கிரமத்தில் அதை அடைய லாமாகையாலே அதை சாஸ்திரம் விதிப்பதில் குறையில்லை என்று கருத்து (ஆத்மநி விந்த₃தி) ஆத்மாவில் என்றது விஷயஸப்தமியாய் ஆத்மவிஷயமான அந்த ஸாக்ஷாத்காரத்தை அடைகிறான் என்று பொருளாகிறது அல்லது அதி₄கரண ஸப்தமியாகக்கொண்டு இப்போது ஆத்மாவில் ஜ்ஞானமில்லா விடினும் காலக்கிரமத்தில் அதில் ஞானம் ஏற்பட்டுவிடும் என்றும் கொள்ளலாம் அல்லது ஆத்மஸாக்ஷிகமாக (தானே உணரும் படியாக) அவ்வறிவைப் பெற்றுவிடுவான் என்றும் பொருள் கொள்ளலாம் (ஸ்வயம் விந்த₃தி) அப்போதாகச் சில உபதேசங்களை எதிர்பாராமல் தானே முற்றிப்பழுத்த ஆத்மஜ்ஞானத்தை அடைந்து விடுவான் ஆக ஆத்மஜ்ஞானம் மிகச்சிறந்த பவித்திரப்பொருள் என்றும் ஜ்ஞாநாகாரகர்மயோக ஸித்திபெற்றவன் காலகரமத்தில் தன் ஆத்மாவிலேயே அதன் முற்றியநிலையை அநுபவிப்பான் என்றும் கூறப்பட்டதாயிற்று 38

**ஶ்ரத்₃த₄வாந்** — ( *ஆத்மஜ்ஞானத்தை வளர்ப்பதில்* ) *ஆவல் மிக்கவனுய்*. **தத்பர:**—*அதிலேயே ஈடுபட்ட நெஞ்சை யுடையவனுய்*. **ஸம்யதேந்த்₃ரிய:**-(*மற்ற விஷயங்களினின்றும்*) *இந்திரியங்களை அடக்கியவன்*, **ஜ்ஞாநம் லப₄தே**—(*முற் கூறியபடி முற்றிப் பழுத்த*) *ஆத்மஜ்ஞானத்தை* (*விரைவில்*) *அடைவான்*. **ஜ்ஞாநம்**-*அவ்வாத்ம ஜ்ஞானத்தை*. **லப்₃த்₄வா**-*அடைந்து*. **அசிரேண**—*விரைவிலேயே*, **பராம் ஶாந்திம்**—(*விஷயாநுபவங்களினின்றும் நீங்கப்பெற்று ஆத்மாவை அநுபவிப்பதாகிற*) *மேலான சாந்தியை*. **அதி₄க₃ச்ச₂தி**—*அடைகிருன்*.

---

**ஆதரவு மிக்கான்**—(*ஆத்மஜ்ஞானத்தை வளர்ப்பதில்*) *ஆவல் மிகுந்தவனுய்*. **ஆங்கு அதனில் மீது அமரும் தன்மை யான்**—*அத்தகைய ஆத்மஜ்ஞானத்திலேயே ஈடுபடும் இயல்வை உடையவனுனவன*, **' புலன் வென்று**—( *மற்ற விஷயங்களினின்றும்* ) *இந்திரியங்களை அடக்கி*, **அறிவு பெறும்**-(*முற்கூறியபடி முற்றிப் பழுத்த*) *ஆத்மஜ்ஞானத்தை அடைவான்*. **போதம் அது ஒல்லை பெற்று**—*அவ்வாதம ஜ்ஞானத்தை விரைவில் அடைந்தபின்*. **யோகி**—*அக்கர்ம யோகியானவன்*. **உணர்ந்து** — *ஆத்மஸாக்ஷாத்காரத்தை அடைந்து*, **ஆங்கே**—*அப்போதே*. **பெரிதான சாந்தியினை உற்று எய்தும்**—(*விஷயாநுபவங்களினின்றும் நீங்கப்பெற்று ஆத்மாவை அநுபவிப்பதாகிற*) *மேலான சாந்தியை அடையப்பெறுவான்*.

---

39. முன் ஶ்லோகத்தில் பிற்பாதியால் சொன்னதை முற்பாதி யாலும், முற்பாதியால் சொன்னதைப் பிற்பாதியாலும் விளக்கு கிறது இந்த ஶ்லோகம். அதில், 'கர்மயோகஸமஸித்தன் முற்றிப் பழுத்த ஆத்மஜ்ஞானத்தைத் தன்னடையே பெறுவான' என்று சென்ற ஶ்லோகத்தின் பிற்பாதியில் சொன்னது பு₃த்₃தி₄ஸ்த₂மாயிருக் கையாலே, அதை முதலில் முற்பாதியால் விளக்குகிருன். (ஶ்ரத்₃த₄வாந்) முற்கூறியபடி உபதேசத்தாலே ஞானததை அடைந்து, அவ்வறிவை வளர்ப்பதில் த்வரையுடையவன். இவனுக்கு

॥भा॥ एवमुपदेशात् ज्ञानं लब्ध्वा चोपदिष्टज्ञानवृद्धौ श्रद्धावान् तत्परः—तत्रैव नियतमनास्तदितरविषयात्संयतेन्द्रियोऽचिरेण कालेनोक्त-

---

எதிர்த்தட்டாயிருப்பவனை அடுத்த ஶ்லோகத்தில எடுக்குமபோது "அஜ்ஞஶ்ச அஶ்ரத்₃த₃தா₄நஶ்ச" என்று எடுகையாலே. இங்கும் ஶ்ரத்தையைச் சொன்னது அதற்கு முனனோடியான ஞானத்தையும் சொல்லுவதாகக்கொள்ளவேண்டும். பக்குவாநுகுணமாக ஞானி களின் உபதேசத்தாலே ஞானம் அடைந்தவனுக்கேயன்றோ அதை வளர்ப்பதில் த்வரை ஏற்படும். அடுத்த ஶ்லோகத்தில் 'அஶ்ரத₃த₃ தா₄ந:' எனனும் பதத்திற்கு 'அத்வரமாண:' என்று பாஷ்யத்தில் வியாக்கியானம் செய்கையாலே, ஶ்ரத்தையென்று இங்கு த்வரை யாகிற ஆவலைக்காட்டுகிறது. 'ஶ்ரத்₃தா₄வாந்' என்று இந்த ஆவல் மிக்கிருப்பதைக் காட்டுகிறது. (தத்பர:) "ததே₃வ பரம் அபி₄ஸந்த்₄யாஸ்பத₃ம் யஸ்ய ஸ:" [அதுவே ஈடுபாட்டுக்குரியதான பரமாக எவனுக்கு ஆகிறதோ அவன் தத்பரன] எனனும வ்யுத் பத்தியாலே தத்பரஶபதம் அந்த ஆத்மஜ்ஞானத்திலேயே ஈடுபட்ட நெஞ்சையுடையவனைக குறிக்கிறது. (ஸம்யதேந்த்₃ரிய:) இப்படி ஆத்மஜ்ஞானத்திலேயே ஈடுபட்ட நெஞ்சையுடையவனுகையாலே இந்திரியங்களைச் சிறிது சிறிதாக சப்தாதி விஷயங்களில் செல் லாதபடி நனகு அடக்கிவிடுகிறுன் இவன். (அசிரேண ஜ்ஞாநம் லப₄தே) விரைவிலேயே முற்கூறியபடி முற்றிப்பழுத்த நிலையிலிருக் கும ஆத்மஜ்ஞானத்தைப் பெறுகிறுன. செனற ஶ்லோகத்தில் 'காலேந விந்த₃தி' எனறு கூறியதால, 'பல ஜன்மங்கள் கழிததுத் தான முற்றிபபழுதத ஜ்ஞானம ஏற்படுமோ?' என எழக்கூடிய ஐயத்தைத் தவிர்ப்பதற்காக, பிற்பாதியிலுள்ள 'அசிரேண' என்னும் பதத்தை முற்பாதியிலும் கூட்டிக்கொள்ளவேணும. சென்ற ஶ்லோகத்தில் 'காலேந விந்த₃தி' [நீணடகாலத்தில் ஆத்ம ஜ்ஞானத்தை அடைகிறுன்] எனறதற்கும. இங்கு 'அசிரேண விந்த₃தி' [விரைவிலேயே அறிவை அடைகிறுன்] எனறதற்கும முரண்பாடு இருப்பதுபோல் தோன்றுகிறதே? எனில்: முன ஶ்லோகத்தில, 'இரண்டு மூன்று நாட்களில் ஆத்மஜ்ஞானம முற்றிப் பழுதது விடுமோ?' எனனும ஐயத்தைத் தவிர்ப்பதற்காக, 'காலேந விந்த₃தி' [நீண்டகாலத்தில் அறிவை அடைகிறுன] எனருன; அப்படியானுல் பல ஜன்மங்கள் கழிந்தபின்போ, ஜ்ஞானயோக மும் கைகூடிய பினனரோதான் ஆத்மஜ்ஞானம் முற்றிப்பழுக்குமோ?' என்னும் ஐயத்தைத தவிர்ப்பதற்காக இங்கு 'அசிரேண விந்த₃தி'

लक्षणविषाकदशापन्नं ज्ञानं लभते, तथाविधं ज्ञानं लब्ध्वा परां शान्तिमचिरेणाधिगच्छति—परं निर्वाणमाप्नोति ॥ ३९ ॥

अज्ञश्चाश्रद्दधानश्च संशयात्मा विनश्यति ।
नायं लोकोऽस्ति न परो न सुखं संशयात्मनः ॥ ४० ॥

40. அஜ்ஞஶ்சாஶ்ரத்₃த₃தா₄நஶ்ச ஸம்ஶயாத்மா விநஶ்யதி ।
நாயம் லோகோऽஸ்தி ந பரோ ந ஸுக₂ம ஸம்ஶயாத்மந: ॥

---

[விரைவில் அறிவை அடைகிறுன] என்கிருன். ஆகையாலே விரோதமில்லை. ப்ராரப்தகாமம கழிந்து பக்தியோகம் முற்றியபின் அடையும் மோக்ஷத்தை 'விரைவில் அடைகிருன்' என்று கூறமுடியா தாகையால், முற்கூறியபடி முற்றிப்பழுத்த ஆத்மஜ்ஞானமே இங்கு ஜ்ஞாநஶப்தத்தால் குறிக்கப்படுவதாகக் கொள்ளவேண்டும். இனி, இவ்வறிவைப் பெற்றபின விஷயாநுப₄வம் அடியோடு நீங்கி, ஆத்மாநுபவம் ஏற்படுகிறது என்று கூறுவதனமூலம், ஜ்ஞான மானது பவித்திரப்பொருள்களில் மிகச்சிறந்தது என்று சென்ற ஶ்லோகத்தின முற்பாதியில் கூறப்பட்ட விஷயம் இங்கு பிற்பாதி யில் விவரிக்கப்படுகிறது.— (ஜ்ஞாநம லப்₃த்₄வா) முற்கூறியபடி முற்றிப் பழுத்த ஆத்மஜ்ஞானத்தை அடைந்தபின். (பராம் ஶாந்திம் அசிரேண அதி₄க₃ச்ச₂தி) மேலான சாந்தியை விரைவிலேயே அடைவான. கர்மயோக₃ம் கைவந்தபின் ஏற்படும் பயனைக் குறிப்பிடுமிடமாகையால், கர்மயோகத்திற்கு அங்கமான 'ஶமம' என்னும் இந்திரியநிக்ரஹத்தை இங்கு ஶாந்தி ஶப்த்த்தால் குறிப்பிடுவதாகக் கொள்வது உசிதமல்ல. 'அசிரேண' என்றுவிரைவில் அடையப்படுவதாகக் கூறப்படுகையால், இது பரம புருஷர்த்தலக்ஷணமோக்ஷமுமாகாது. ஆகையால், இரண்டாமத்தி யாயத்தின கடைசியில், 'ஸஶாந்திமாப்நோதி' [2-70] "ஸ ஶாந்திமதி₄ க₃ச்ச₂தி" [2-71] என்று விஷயாநுப₄வநிவ்ருத்திரூபமாகையாலே ஶாந்தியென்றும், "நிர்வாணம் ருச்ச₂தி" என்று ஆத்மாநுபவாநந்தரூப மாகையாலே நிர்வாணம் என்றும் சொல்லப்பட்டதான ஆத்மாநுப₄வ நிலையே இங்கு சாந்திஶப்தத்தால் குறிக்கப்படுவதாகக் கொள்ள வேண்டும. ஆக இரண்டு ஶ்லோகங்களாலும் ஆத்மஜ்ஞானமே மேலான பவித்திரப் பொருள என்றும், கர்மயோகாநுஷ்டானத் தாலே அது முற்றிப்பழுத்து ஆத்மாநுபவ நிலையை அடையும் என்றும் விளக்கப்பட்டதாயிற்று. 39.

**அஜ்ஞ:** **ச**—(உபதேசத்தால் அடையக்கூடிய) ஆத்ம ஜ்ஞானமற்றவனும், **அச்ரத்3த3தா4ந:**—(அவ்வறிவை வளர்க்கும் உபாயத்தில்) ஆவலற்றவனும், **ஸம்சயாத்மா ச**—(உபதேசம் பெற்றாலும் அதில்) ஐயமுற்ற நெஞ்சினனுமான மனிதன், **விநச்யதி**—அழிந்து விடுவான்; **ஸம்சயாத்மந:**—ஐயமுற்ற மனத்தினனுக்கு, **அயம் லோக: நாஸ்தி**—இவ்வுலகில் புருஷார்த்தங்கள் கிடையாது; **ந பர: (அஸ்தி)**—பரலோக புருஷார்த்தமான மோக்ஷமும் கிடையாது; **ந ஸுக2ம் (அஸ்தி)**—ஆத்ம விஷயமான ஸுகலேசமும் கிடையாது.

---

**39. அறியானு யாதரவு மற்றே மயக்கஞ்**
**செறிவான் விநாசத்தைச் சேரும்—பொறிவாயில்**
**வந்தேலா திம்மை மறுமையுட னின்பந்தான்**
**சந்தேகப் பட்டான் றனக்கு.**

**அறியானும்**—(உபதேசத்தால் அடையப்படும்) ஆத்ம ஜ்ஞானமற்றவனும், **ஆதரவும் அற்றே**—(அவ்வறிவை வளர்ப்பதில்) ஆவலுமற்றவனும், **மயக்கம் செறிவான்**—(பெற்ற உபதேசத்திலும்) ஐயமுற்ற நெஞ்சினனுமான மனிதன், **பொறி வாயில் விநாசத்தைச் சேரும்**—இந்திரியங்களுக்கு வசப்பட்டு அழிந்து விடுவான். **சந்தேகப்பட்டான் தனக்கு**—ஐயமுற்ற மனத்தினனுக்கு, **இம்மை மறுமையுடன் இன்பம் தான்**—இவ்வுலகப் பலன்களும், மேலுலகப்பலனான மோக்ஷமும், ஸுகலேசமும், **வந்து ஏலாது**—வந்து அடையாது.

---

40. முன் ச்லோகத்தில் சொன்ன அர்த்தத்தை வ்யதிரேகத்தாலே (எதிர்மறையாலே) நிலைநிறுத்துகிறான் இந்த ச்லோகத்தில். (அஜ்ஞச்ச) முற்கூறியபடி பகவுவானுகுணமாக ஞானிகளின் சாஸ்திரோபதேசத்தாலே ஞானமடையாதவனும், அத்தகைய ஞானமடைந்தவனுக்கே அதை வளர்ப்பதில் த்வரை ஏற்படுமாகையாலும், அந்த த்வரையை அடுத்தபடி சொல்லப்போகிறதாகையாலும், மேலே ஐயமுடையவனாகவும் இவனைச் சொல்லுகையாலும் அடுத்தபடி சொல்லப்போகும் த்வரையின்மைக்குக் காரணமான சாஸ்திரஜந்யஜ்ஞாநமின்மையே இங்கு கூறப்படுவதாகக் கொள்ள

॥ भा ॥ अज्ञः — एवमुपदेशलब्धज्ञानरहितः, उपदिष्टज्ञान-वृद्ध्युपाये चाश्रद्दधानः—अत्वरमाणः, उपदिष्टे च ज्ञाने संशयात्मा—संशयमनाः विनश्यति—विनष्टो भवति। अस्मिन्नुपदिष्टे आत्मयाथात्म्यविषये ज्ञाने संशयात्मनोऽयमपि प्राकृतो लोको नास्ति, न च परः,

---

வேண்டும். (அஶ்ரத்₃த₄ாநஶ்ச) இப்படி சாஸ்திரஞானமில்லாமையாலே அதை வளர்க்கும உபாயங்களில் த்வரையில்லாதவனும். பொதுவாக ஶ்ரத்₃த₄ாஶப்தம் விஶ்வாஸத்தைக் குறிக்குமாயினும, இவனை ஸம்ஶயமுடையவனுக மேலே குறிப்பிடுகையால் விஶ்வாஸமின்மை அதிலிருந்தே ஸித்திக்குமாகையாலே, இங்கு ஶ்ரத்₃த₄ாஶப்தம் பேராவலாகிற த்வரையைக் குறிப்பதாகக் கொள்வதே உசிதம். ஆக, 'ஶ்ரத்₃த₄ாவாந்' என்று சென்ற ஶ்லோகத்தில் குறிப்பிடப்பட்டவனுக்கு எதிர்த்தட்டானவன் இவன என்றதாயிற்று. (ஸம்ஶயாத்மா) ஐயமுற்ற நெஞ்சினனுகவுமிருப்பவன. ஆத்மஶப்தம மனத்தைக் குறிக்கிறது. 'ஸம்ஶய்யதே அநேநேதி ஸம்ஶய:' [ஸம்ஶயமுறுவதற்குக் காரணமாயிருப்பது ஸம்ஶயஶப்தத்தால குறிக்கப்படுகிறது] என்கிற கரணேவ்யுத்பத்தியாலே ஸம்ஶயகாரணத்தைக் காட்டுகிறது ஸம்ஶயஶப்தம். ஆக, ஸம்ஶயாத்மா என்றது ஸம்ஶயகாரணமான மனத்தையுடையவன் எனறபடி. அன்றிக்கே, "ஸம்ஶயே மநோ யஸ்ய ஸ: ஸம்ஶயமநா:" [எவனுடைய மனம ஸம்ஶயத்தில் ஊன்றிநிற்கிறதோ அவன ஸம்ஶயமநாவாகிருன்] என்று ஸமாஸங்கொண்டு ஐயமுற்ற நெஞ்சினனைக் குறிப்பதாகவும கொள்ளலாம். இவ்வண்ணமாக ஶாஸ்திரத்தினுலுண்டாகும அறிவற்றவனுய், அதனுலேயே அறிவை வளர்ப்பதில் ஆவலும அற்றவனுய், அதனுலேயே 'இப்படியோ, அப்படியோ' எனறு ஐயமுற்றுக்கொண்டே இருப்பவனை அதிகாரிக்கு ஏற்படும் தீமையைச் சொல்லுகிறது அடுத்தபடியாக,—(விநஶ்யதி) அழிகிருன. நித்யமான ஆத்மவஸ்துவுக்கு அழிவு கிடையாதாகையாலே, அநாதிகாலமாயிருந்ததுவந்ததுபோலே தர்மார்த்தகாமமோக்ஷரூபமான எந்தப் புருஷார்த்தத்தையும பெருமல் ஸ்வரூபநாசம பெற்றவன்போலேயாகிருன் என்று கருத்துகொள்ளவேண்டும். "விநஷ்டா வா ப்ரணஷ்டா வா ம்ருதா வா"[ரா-ஸு 13-17]முதலானவிடங்களில்அழிவு தவிர்ந்த பொருள்களிலும நாஶஶப்தத்தைப் பிரயோகித்திருப்பது குறிக்கொள்ளத்தக்கது. இங்கு விநாஶஶப்தத்திற்குப் பொருள் யாதென்பதை இந்த ஶ்லோகததின் உத்தரார்த்த₄மும் விவரிக்கிறது.

धर्मार्थकामरूपपुरुषार्थाश्च न सिद्ध्यन्ति, कुतो मोक्ष इत्यर्थः; शास्त्रीय-
कर्मसिद्धिरूपत्वात्सर्वेषां पुरुषार्थानाम्, शास्त्रीयकर्मजन्यसिद्धेश्च देहाति-

---

(ஸம்ஶயாத்மந:) என்றால் உபதேசிக்கப்பட்ட ஆத்மயாதாத்ம்யத்தைப்பற்றிய அறிவில் ஐயமுற்ற நெஞ்சினனாயிருப்பவனுக்கு. ப்ரகரண பலத்தாலே இங்குள்ள ஐயம் ஆத்மதத்வஜ்ஞானத்தைப் பற்றியது எனத்தேறுகிறது (அயம லோகோ நாஸ்தி) மிகத்தாழ்ந்ததாக நாம் காணும் இவ்வுலகப் புருஷார்த்தங்களே கிடைக்கமாட்டா; (ந பர:) மிகவுயர்ந்த அப்ராக்ருதலோகத்தில் அடையப்பெறும் மோக்ஷபுருஷார்த்தம் எப்படிக் கிடைக்கும்? இங்கு முமுக்ஷுவைப் பற்றிய ப்ரகரணமாகையாலே, மோக்ஷபுருஷார்த்தம் கிடைக்க மாட்டாது என்று சொன்னாலே போதுமாயினும், கைமுதிகந்யாயத்தாலே, 'இதைவிடத் தாழ்ந்த மற்ற புருஷார்த்தங்களே கிடைக்காதபோது இது கிடைக்கவே மாட்டாது' என்று காட்டுவதற்காக, "நாயம் லோகோஸ்தி" என்று இவ்வுலகப் புருஷார்த்தங்களைப் பற்றி பரஸ்தாவிக்கபபட்டது.

"நாயம் லோகோऽஸ்த்யயஜ்ஞஸ்ய குதோऽந்ய: குருஸத்தம" [4-31]

[கௌரவஶ்ரேஷ்டனே! பஞ்சமஹாயஜ்ஞங்களை முன்னிட்டுக் கொண்டு நித்யநைமித்திக கர்மங்களைச் செய்யாதவனுக்கு இவ்வுலகப் புருஷார்த்தங்களான அறமபொருளினபங்களே கிடைக்காதபோது மேலுலகப் புருஷார்த்தமான மோக்ஷம் எப்படிக் கிடைக்கும?] என்றவிடத்திற்போலே, இங்கும் லோகஶப்தம் அவ்வவ்வுலகங்களிற்கிடைக்கும் புருஷார்த்தங்களைக் குறிப்பதாகவே கொள்ளப்படவேண்டும். இல்லாவிடில், 'இவ்வுலகமும் மேலுலகமும இல்லை' எனபது பொருந்ாதன்றோ. மோக்ஷப்ரகரணமாகையாலே, 'இவ்வுலகம்' 'அவ்வுலகம்' எனற பதங்களுக்கு முறையே பூமி, சுவர்க்கம என்று பொருள் கொள்வது பொருந்தாமையாலே, ப்ராக்ருதலோகம், அப்ராக்ருதலோகம் என்றே பொருள் கொள்ள வேண்டும. மோக்ஷோபாயமான ஆத்மஜ்ஞானத்தில் ஐயமுடையவனுக்கு அறம்பொருளின்பங்களும் கிடைக்கமாட்டா என்று கூறுவது பொருந்துமோ? எனில்: இவ்வுலகிலும் இவன் அறம் பொருளின்பங்களைப் பெறுவதற்கு ஶாஸ்திரங்களில் சொனன

रिक्तात्मनिश्चयपूर्वकत्वात्। अतस्सुखलवभागित्वमात्मनि संशयात्मनो न संभवति॥ ४० ॥

योगसंन्यस्तकर्माणं ज्ञानसंच्छिन्नसंशयम्।
आत्मवन्तं न कर्माणि निबध्नन्ति धनञ्जय॥ ४१ ॥

41. யோக₃ஸந்யஸ்தகர்மாணம் ஜ்ஞாநஸஞ்சி₂ந்ந ஸம்ஶயம்।
ஆத்மவந்தம் ந கர்மாணி நிப₃த்₄நந்தி த₄நஞ்ஜய ||

---

40. ஆனயோ கத்தா லமர்கருமத் தன்பற்று
ஞானயோகத் தான்மயக்க நன்கறுத்த—வானேயோர்
நெஞ்சன் றனேக்கரும நேர்பிணியா வாகியவத்
தஞ்சந் தனஞ்செயனே சார்.

---

கர்மங்களைச் செய்தேயாகவேண்டும். ஆயுர்வேதத்தைப்போலே எல்லா சாஸ்திரங்களும் இந்த தேஹத்திலேயே பெறும் பலனைச் சொல்லுவதில்லை; யஜ்ஞம முதலானவற்றை அநுஷ்டித்து, வேறு தேஹமெடுத்து ஸ்வர்க்கம் முதலான உலகங்களில் பெறும் புருஷார்த்தங்களையே பெரும்பாலும் சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. ஆகையால், அறம்பொருளின்பங்களாகிற புருஷார்த்தங்களைப் பெறவும் 'தேஹத்தைக் காட்டிலும் வேறுபட்ட ஆத்மா ஒன்று உண்டு' என்னும் ஆத்மதத்வஜ்ஞானம் அவசியம் வேண்டியதே யாகும். (ந ஸுக₂ம்) இப்படி எப்புருஷார்த்தமும் இல்லாமையாலே, சிறிது இன்பங்கூட இவனுக்கு ஏற்படமாட்டாது. ஸம்ஶயாத்மாக்களும் சில இன்பங்களை அநுபவிப்பதைக் காண்கிறோமே எனில்: சிலவற்றை அநுபவித்தாலும், கணக்கற்ற ஸுகதுக்காநுபவரூபமான இம்மை மறுமைப் பலன்களைப்பற்றி இவன ஸந்தேஹப் பட்டுக்கொண்டே இருக்கையால் இவனுக்கு ஏற்படும் மனவுளைச்சல், அநுபவிக்கும சிறிது இன்பத்தையும இல்லைசெய்துவிடும் என்று கருத்து. அன்றிக்கே, 'நாம் புருஷார்த்தங்களை அனுபவிக்கத் தகுதிபெற்றிருக்கிறோம்' என்னும் ஸாத்விகாபி₄மானத்தாலே ஏற்படும் ஸுகம் அவனுக்கு இல்லை என்று இங்கு கூறுவதாகவும் கொள்ளலாம். ஆக, ஆத்மதத்வஜ்ஞானத்தின் பெருமை அந்வய வ்யதிரேகங்களாலே ஸாதிக்கப்பட்டதாயிற்று. 40.

த₄நஞ்ஜய—அர்ஜுநு! யோக₃ஸந்யஸ்தகர்மாணம்—முற்கூறிய புத்தியோகத்தாலே கேவலகர்மத்தைகைவிட்டவனும், ஜ்ஞாநஸஞ்சி₂ந்நஸம்ஶயம்—ஆத்மஜ்ஞானத்தாலே அறுக்கப்பட்ட ஐயத்தையுடையவனும், ஆத்மவந்தம்—நன்னெஞ்சையுடையவனை மனிதனை, கர்மாணி ந நிப₃த்₄நந்தி—புண்ய பாப கர்மங்கள் கட்டுப்படுத்துவதில்லை.

|| भा || यथोपदिष्टयोगेन संन्यस्तकर्माणम्—ज्ञानाकारतापन्नकर्माणं यथोपदिष्टेन चात्मज्ञानेनात्मनि संच्छिन्नसंशयम्, आत्मवन्तम्—

---

ஆன யோகத்தால் அமர்கருமத்து அன்பற்று-முற்கூறிய புத்தியோகத்தால கேவலகர்மத்தில் பற்றற்றவனும், ஞான யோகத்தால் மயக்கம் நன்கு அறுத்து—ஆத்மஜ்ஞானத்தின் சேர்த்தியாலே ஐயம் அறுக்கப்பெற்றவனும், வானை ஓர் நெஞ்சன்தனை—மிக உயர்ந்த நெஞ்சையுடையவனை, கருமம் நேர் பிணியா—புண்ய பாப கர்மங்கள் கட்டுப்படுத்த மாட்டா; தனஞ்சயனே—அர்ஜுநு! ஆகிய அத் தஞ்சம்—இப்படிப்பட்ட மோக்ஷோபாயமான புத்தியோடுகூடிய கர்மயோகத்தை, சார்—நீ அனுஷ்டிப்பாயாக.

---

41. இவ்வத்தியாயத்தின் திரண்ட பொருள் இந்த ஶ்லோகத்தில் முடிவுறுத்தப் பெறுகிறது. (யோக₃ஸந்யஸ்த கர்மாணம்) "கர்மண்யகர்ம ய: பஶ்யேத்...ஸ யுக்த:" [4-18] முதலானவிடங்களில கூறப்பட்ட புத்தியோகத்தாலே கேவலகர்மத்தைக் கைவிட்டவனை. ஆத்மயாத₂ாத்மயஜ்ஞானத்தோடும், கர்மமனைத்தும் பரப்ரஹ்மாத்மாத்மகமானது எனனும் ஜ்ஞானத்தோடும் கூடியிருக்கையாலே, இந்த ஜ்ஞான்மற்ற கேவலகர்மத்தைக் கைவிட்டவனை என்றபடி. ப்ரகரணப₃லத்தாலே இங்கு யோக₃ஶப்தம ஆத்மஸாக்ஷாத்காரம் முதலானவற்றைக் காட்டாமல், முற்கூறிய புத்தியோகத்தைக் காட்டுகிறது. கர்மஸ்வரூபத்யாகம் முன் பின் ப்ரகரணத்திற்கு நேரே முரண்பட்டதாகையாலே, 'ஸந்யஸ்த கர்மாணம்' என்றது "கர்மண்யபி₄ப்ரவ்ருத்தோऽபி நைவ கிஞ்சித் கரோதி ஸ:" [4-20] எனறவிடத்திற்போலே கேவலகர்மத்தைக் கைவிட்டவன் எனறே பொருள்படுகிறது. ஆக, கர்த்ருத்வத்யாகம் முதலானவற்றை

मनस्विनम् उपदिष्टार्थे दृढावस्थितमनसं बन्धहेतुभूतप्राचीनानन्तकर्माणि न निबध्नन्ति ॥ ४१ ॥

तस्मादज्ञानसंभूतं हृत्स्थं ज्ञानासिनाऽऽत्मनः ।
छित्त्वैनं संशयं योगमातिष्ठोत्तिष्ठ भारत ॥ ४२ ॥

॥ इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ज्ञानयोगो नाम चतुर्थोऽध्यायः ॥ ४ ॥

42. தஸ்மாத₃ஜ்ஞாநஸம்பூ₄தம் ஹ்ருத்ஸ்த₂ம் ஜ்ஞாநாஸிநாऽऽத்மந: ।
சி₂த்த்வைநம் ஸம்ஶயம் யோக₃மாதிஷ்டோ₂த்திஷ்ட₂ பா₄ரத ॥

॥ இதி ஸ்ரீப₄க₃வத்₃கீ₃தாஸூபநிஷத்ஸு ஜ்ஞாநயோகோ₃ நாம சதுர்த்தோ₂ऽத்₄யாய: ॥

---

யுள்ளடக்கிகொண்டு ஜ்ஞாநாகாரமாகவே ஆகிவிட்டபடியால், இக்கர்மயோகத்திற்குக் கர்மாகாரத்வம் போய்விடுகிறது என்பதை 'ஸந்யஸ்தகர்மாணம' என்னும் பதம் காட்டுகிறது எனறதாயிற்று. (ஜ்ஞாநஸஞ்சி₂ந்நஸம்ஶயம்) முற்கூறியபடி ஆசார்யோபதேசத்தாலே அடையப்பெற்ற ஆத்மஜ்ஞானததாலே ஆதமவிஷயமான ஐயம் அறுக்கப்பெற்றவனை. 'தேஹமே ஆத்மாவோ?' முதலான ஐயங்கள் அறுக்கப்பெற்றவனை என்றபடி. ப்ரகரணத்தையொட்டி, இங்குள்ள ஜ்ஞாநஶப்₃த₃ம் ஜ்ஞாநயோகம் முதலானவற்றைக் காட்டாமல், ஆத்மஜ்ஞானத்தைக் காட்டுகிறது. (ஆத்மவந்தம) சிறந்த நெஞ்சையுடையவனை. ஆத்மஶப்தத்தாலே ஆத்மஸ்வரூபத்தைக் குறிப்பதாகக்கொண்டு 'ஆத்மஸ்வரூபத்தையுடையவனை' என்று கூறுவதில் ஸ்வாரஸ்யமில்லாமையாலும், கீதையில் ஆத்மஶப்தம் பல்விடங்களில் மனத்தைக் குறிப்பதைக் காண்கிறோமாகையாலும் சிறந்த நெஞ்சையுடையவனை எனறு பொருள் கொள்வதே பொருந்தும். இங்கு, அதிசயப்பொருளுடையது 'மதுப்'ப்ரத்யயம. நெஞ்சுக்குச் சிறப்பாவது,—உபதேசிக்கப்பட்ட பொருளில் அசைக்க முடியாதபடி உறுதியாக ஊன்றிநிற்கையேயாகும். (கர்மாணி ந நிப₃த்₄நந்தி) அநாதிகாலமாக இவனைக் கட்டுப்படுத்திவரும் அநந்தமான புண்யபாபகர்மங்கள் இனிவருங்காலத்தில் இவனைக் கட்டுப்படுத்தமாட்டா; கிரமமாக இவன் மோக்ஷத்தை அடைந்து விடுவானுகையாலே, ஸர்வகர்மநாஶம் இவனுக்குப் பரமப்ரயோஜனமாக ஏற்படும் என்று கருத்து. (த₄நஞ்ஜய) தநஞ்ஜயனுன நீ கர்மத்தையும் ஜயிக்கவேணுும என்று கருத்து. ,41.

பா₄ரத—பரதகுலத்துதித்தவனே! தஸ்மாத்—முற்கூறிய கர்மயோகத்தை அநுஷ்டியாமல் மோக்ஷமடைய முடியாதாகையாலே. அஜ்ஞாநஸம்பூ₄தம்—(தேஹத்திற்காட்டிலும் வேறுபட்ட ஆத்மா உண்டு என்னும்) அறிவு இன்மையினால் ஏற்பட்ட. ஹ்ருத்ஸ்த₂ம் ஏநம் ஆத்மந: ஸம்ஶயம்—நெஞ்சிலுள்ள இந்த ஆத்மவிஷயமான ஐயத்தை, ஜ்ஞாநாஸிநா—(என்னால் உபதேசிக்கப்பெற்ற) ஆத்மஜ்ஞானமாகிற கத்தியாலே. சி₂த்வா—அறுத்து. யோக₃ம் ஆதிஷ்ட₂—கர்மயோகத்தை அநுஷ்டிப்பாய். உத்திஷ்ட₂—(அதன் பொருட்டு) எழுந்திருப்பாய்.

---

41. ஆதலினு னீயுள் ளறியாமை யால்வந்த
போதமயக் கத்தைப் புகருடைய—மீதறிவாம்
வாளா லறுத்து வளர்கரும யோகத்து
மூளா வெழுநீ முயன்று.

ஆதலினால்—முற்கூறிய கர்மத்தை அநுஷ்டியாமல் மோக்ஷமடைய முடியாதாகையால். நீ—நீ, உள் அறியாமையால் வந்த—தேஹத்தின் உள்ளேயிருக்கும் ஆத்மாவை அறியாமையால் ஏற்பட்ட, போத மயக்கத்தை—ஆத்மவிஷயமான அறிவில் ஐயத்தை, மீது அறிவாம் வாளால் அறுத்து—அச்சிறந்த ஆத்மஜ்ஞானமாகிற கத்தியால் அறுத்து, வளர் கருமயோகத்து மூளா முயன்று — வளர்கின்ற கர்மயோகத்தில் உறுதியுடன் முயற்சி செய்வதற்காக. நீ எழு—நீ எழுந்திருப்பாயாக.

---

42. இவ்வண்ணமாக விரிவாக உபபாதிக்கப்பட்டு முடிக்கப்பெற்ற கர்மயோகமாகிற அர்த்தம், அர்ஜுனனால் அனுஷ்டிக்கத்தக்கதாக அறிவுறுத்தப்பெற்று, இந்த ஶ்லோகத்தோடு நாலாவது அத்தியாயம் முடிவுறுத்தப் பெறுகின்றது. (தஸ்மாத்) இதுவரை விரிவாகக் காட்டியபடி கர்மயோகத்தை அநுஷ்டிக்காமல பக்தியோகாதி₄காரியான நீ மோக்ஷமடைய முடியாதாகையாலே. (அஜ்ஞாநஸம்பூ₄தம ஸம்ஶயம்) தேஹத்தைக் காட்டிலும் வேறுபட்ட ஆத்மாவைப்பற்றிய அறியாமையாலுண்டான ஐயத்தை. (ஹ்ருத்ஸ்த₂ம் ஏநம் ஸம்ஶயம்) போர்புரிதல் உன் தர்மமாயிருந்து வைத்

॥ भा ॥ तस्मादनाद्यज्ञानसंभूतं हृत्स्थम् आत्मविषयं संशयं मयोपदिष्टेनात्मज्ञानासिना छित्त्वा मयोपदिष्टं कर्मयोगमातिष्ठ; तदर्थ-मुत्तिष्ठ भारतेति ॥ ४२ ॥

॥ इति श्रीभगवद्रामानुजविरचिते श्रीमद्गीताभाष्ये चतुर्थोऽध्यायः ॥ ४ ॥

---

தும், 'உறவினர்களைக் கொல்லலாமோ?' என்று நீ தயங்குகையாலே, உன் நெஞ்சிலுள்ளதாக அறியப்படும இந்த ஐயத்தை. (ஹ்ருத்ஸ்த₂ம) ஆத்மாவிலிருக்கும ஐயத்தை இருதயத்திலிருப்பதாகச் சொன்னது உன் நெஞ்சில முளபோலே உறுத்திக் கொண்டிருப்பதை என்னும் கருத்திலேயாம். அன்றிக்கே, ஹ்ருச்ச₂ப்₃த₃ம் உள்ளேயிருக்கும ஆத்மாவைக் குறிப்பதாய், ஆத்மாவிலிருக்கும் ஐயத்தை என்றும் பொருள் கொள்ளலாம. (ஆத்மந: ஸம்ஶயம்) ஆத்மவிஷயமான ஐயத்தை. அன்றிக்கே, 'ஹ்ருதஸ்த₂ம் ஸம்ஶயம்' என்பதிலிருந்தோ, 'ஏநம் ஸம்ஶயம' என்பதிலிருந்தோ ஆத்மவிஷயமான ஐயத்தை என்று ஸித்திக்குமாகையால், 'ஆத்மந: ஜ்ஞாநாஸிநா' என்று கூட்டியும் பொருள் கொள்ளலாம். 'ஆத்மந:' என்னும் பதத்தை காகாக்ஷிந்யாயத்தாலே முன்னும் பின்னும கூட்டியும் பொருள் கொள்ளலாம. (ஆத்மந: ஜ்ஞாநாஸிநா சித்₂வா) ஸர்வஜ்ஞனுய், பரமகாருணிகனுயிருக்கையாலே ஆப்ததமனை என்னுல் உபதேசிக்கப்பட்ட ஆத்மஜ்ஞானமாகிற கத்தியினுல் முற்கூறிய ஐயத்தை அறுத்து. (யோக₃மாதிஷ்ட₂) என்னுல் உபதேசிக்கப்பட்ட கர்மயோகத்தை அநுஷ்டிப்பாயாக. கர்மயோகத்தை உபதேசித்து முடிக்கும் ப்ரகரணமாகையாலே, இங்கு யோக₃ஶப்₃த₃ம் அதைக் குறிப்பதே உசிதம். (உத்திஷ்ட₂ பா₄ரத) பரதனென்னும் அரசனின் குலத்திலுதித்த நீ போருக்காக எழுந்திருப்பதே கர்மயோகத்தைத் தொடங்குவதாகும் என்று கருத்து. பரமகர்மயோகியான பரதராஜாவைப்போலே நீயும் உன தர்மமான யுத்தத்தைச் செய்து மோக்ஷமடையவேண்டும் என்றும் கருத்து. 42.

ஆக, இந்நாலாம் அத்தியாயத்தில், முதலில் ப்ராஸங்கிகமாகத் தன் அவதார ரஹஸ்யஜ்ஞானத்தையும், பிறகு கர்மயோகம ஜ்ஞாளுகாரமாயிருக்கிறது என்பதையும், கர்மயோகத்தின் வகைகளையும, கர்மயோகத்திலடங்கிய ஜ்ஞாநாம்ஶத்தின் ப்ராதா₄ந்யத்தையும் விளக்கியருளினுனயிற்று.

ஸ்ரீ க்ருஷ்ணஸ்வாமி தா₃ஸன் இயற்றிய
கீதார்த்த விவரணத்தில் நான்காமத்தியாயம் நிறைவு பெற்றது.

## பகவத் கீதை வெண்பா

(நாலாமத்தியாயத்தின் ஸாரத்தைக் கூறும் பாசுரம்)

என்று கரும மிகையுடனே யோகத்தை
நன்று புணர்வித்து நற்கீதை—யொன்றியவிந்
நாலாமோத் தாலுரைத்து நாதனருள் செய்தபொருள்
மேலாய் முடிந்ததிது மிக்கு.

வாதிகேஸரி ஜீயர் அருளிய பகவத்கீதை வெண்பாவில்
நான்காமத்தியாயம் முற்றிற்று.

என்று-இவ்வண்ணமாக. மிகையுடனே கருமயோகத்தை-*சிறந்ததான (புத்தியுடன் கூடிய) கர்மயோகத்தை,* நன்று புணர்வித்து—*நன்கு அறிவித்து.* நல்கீதை ஒன்றிய இந்நாலாம் ஓத்தால் உரைத்து—*நலமுடைய கீதையில் சேர்ந்த இந்த நாலாம் அத்தியாயத்தில் உரைத்து.* நாதன் அருள் செய்த பொருள் இது—*ஸர்வேஸ்வரனை கண்ணன் அருளிச்செய்த இந்த அர்த்தம்.* மிக்கு மேலாய் முடிந்தது—*மிகச்சிறப்புடன் முடிவுற்றது.*

## கீதார்த்த சங்கிரகம்

( ஸ்ரீ வேதாந்த தேசிகர் )

நாலாமத்தியாயத்தின் ஸாரப் பொருள்

5. பிறவாமை தந்திடத் தானே பிறக்கும் பெருமைகளும்
துறவாக் கிரிசைக டும்தி தன்னுற் றுலங்குகையும்
இறவா வுயிர்நன் னிலைகண் டிடுமுல கின்னிலையும்
மறைவாழு மாயவ னேயனுக் கன்றறி வித்தனனே.

மறைவாழும் மாயவன்—*வேதத்தில் (பொருளாய்) உறைகின்றவனாய். மாயையென்னும் பிரகிருதியை உடையவனான எம்பெருமான்.* பிறவாமை தந்திட—*(உயிர்களுக்குப் பிரகிருதி ஸம்பந்தத்தால் உண்டாகும்) மறுபிறவியின் இன்மையை அநுக்ரஹிப்பதற்காக.* தானே பிறக்கும் பெருமைகளும்—*(ஸர்வேஸ்வரனை) தானே (தன் இச்சை*

யால்) அவதரிக்கும் (அவதாரங்களின்) சிறப்புக்களும். **துறவா கிரிசைகள்**—ஞானியாலும் விடத்தகாத த்₃ரவ்ய யஜ்ஞம் முதலான கர்மங்கள் யாவும். **தூமதி தன்னுல் துலங்குகையும்** — தூய்மையான ஆத்மதத்வஜ்ஞானமும். ப்ரஹ்மாத்மகத்வஜ்ஞானமும் சேர்ந்து விளங்குவதையும். **இறவா உயிர் நல் நிலே**—அழியாத ஜீவனின் சுத்தமான தன்மையை. **கண்டிடும்**—(கர்மயோகம் முற்றியபின்) நேரே காணும். **உலகின்**—உயர்ந்தோரான கர்மயோகிகளின். **நிலேயும்**—சிறப்பையும். **நேயனுக்கு**—நண்பனுன அர்ஜுனனுக்கு, **அன்று**—அக்காலத்தில். **அறிவித்தனன்**—உபதேசித்தான.

## கீதாஸ்லோகார்த்தச் சுருக்கம்

### நாலாம் அத்தியாயம்

ஸ்லோ. அர்த்தம்.

1-3. கர்மயோகம் ஸாத்தபரம்பராப்ராப்தம்.

4. அர்ஜுனன் கேள்வி.

5-11. அவதார ரஹஸ்யம்.

12-24. கர்மயோகம் ஜ்ஞாநாகாரமாயிருப்பதை நிருபிப்பது.

25-*30. கர்மயோக வகைகள்.

30*-32. கர்மயோகிகளுக்கு நித்யநைமித்திக கர்மங்கள் அவஶ்யம் அநுஷ்டிக்கவேண்டியவையே; அவர்களிடையே ப₂லபே₄த₃ம் கிடையாது.

33-40. கர்மயோகத்தில் அடங்கிய ஜ்ஞாநாம்ஸத்தின் ப்ராத₄ாந்யம்.

41-42. முடிவுரை.



## ஆளவந்தார் அருளிய
## கீதார்த்த ஸங்க்₃ரஹம்
[ ஐந்தாமத்தியாயத்தின் சுருக்கம் ]

कर्मयोगस्य सौकर्यं शैघ्र्यं काश्चन तद्विधाः।
ब्रह्मज्ञानप्रकारश्च पञ्चमाध्याय उच्यते ॥ ९ ॥

*9. கர்மயோக₃ஸ்ய ஸௌகர்யம் ஶைக்₄ர்யம் காஶ்சந தத்₃விதா₄:।*
*ப்₃ரஹ்மஜ்ஞாநப்ரகாரஶ்ச பஞ்சமாத்₄யாய உச்யதே ||*

**கர்மயோக₃ஸ்ய**—*கர்மயோகத்தினுடைய.* **ஸௌகர்யம்**—*செயற்கெளிய தன்மையும்,* **ஶைக்₄ர்யம்**-*விரைவில் பலனளிக்கும் தன்மையும்.* **காஶ்சந தத்₃விதா₄:**—*அதற்குறுப்பான சில அங்கங்களும்.* **ப்₃ரஹ்ம ஜ்ஞாந ப்ரகார:** **ச**—*சுத்தாத்மாக்களை ஸமமாகக் காண்கைக்குறுப்பான நிலையும்.* **பஞ்சமாத்₄யாயே**—*ஐந்தாமந்தியாயத்தில்.* **உச்யதே**—*கூறப்படுகிறது.*

---

ஸ்ரீகருஷ்ணஸ்வாமி தாஸன் இயற்றிய
## கீதார்த்த விவரணம் ஐந்தாமத்தியாயம்

**ஐந்தாவது அத்தியாயார்த்தச் சுருக்கம்:**-கர்மயோகம் அநுஷ்டிப்பதற்கு எளியது எனபதும, ஜ்ஞானயோகத்தைக் காட்டிலும் விரைவில் ஆத்மஸாக்ஷாத்காரமாகிற பயனை அளிப்பது என்பதும், அந்தக் கர்மயோகத்தை அநுஷ்டிப்பவனுக்கு வேண்டிய அகர்த்ருதவாநுஸந்தான ப்ரகாரததையும், ஆத்மாக்களை ஸமமாகக் காண்கைக்கு உறுப்பான கர்மயோகியின் நிலையும் இவ்வைந்தாமத்தியாயத்தில் கூறப்படுகிறது. "ஸந்யாஸ: கர்மணாம்" என்று இவ்வத்தியாயத்தின தொடக்கத்தில் கர்மஸந்யாஸமாகிற ஜ்ஞாநயோகத்தைப்பற்றி ப்ரஸ்தாவிக்கிருனுகையாலும, 'கர்மங்களைச் செய்பவன் நானல்லன்' என்னும் அகர்த்ருத்வாநுஸந்தானத்தையும 'கர்மஸந்யாஸம' எனறு கூறலாமாகையாலும், அதுவே இவ்வத்தியாயத்தில் முக்கியமாகச் சொல்லப்படுகிறதாகையாலும், இவ்வத்தியாயம் கர்மஸந்யாஸயோகம் எனறு சொல்லப்படுகிறது எனறு கொள்ளலாம.

अर्जुन उवाच—

संन्यासं कर्मणां कृष्ण पुनर्योगं च शंससि।
यच्छ्रेय एतयोरेकं तन्मे ब्रूहि सुनिश्चितम्॥ १॥

அர்ஜுந உவாச—

1. ஸந்யாஸம் கர்மாணும் க்ருஷ்ண புநர்யோகம் ச ஶம்ஸஸி।
யச்ச்ரேய ஏதயோரேகம் தந்மே ப்ரூஹி ஸுநிஶ்சிதம்॥

க்ருஷ்ண! — *கண்ணு!* கர்மணும் ஸந்யாஸம் — *கர்ம யோகத்தை விட்டுச்செய்வதான ஞானயோகத்தையும்,* புந:— *மறுபடியும்,* (கர்மணும்) யோகம் ச—*கர்மயோகத்தையும்,* ஶம்ஸஸி—*ஆத்மப்ராப்தி ஸாதனமாகப் புகழ்கின்றாய்.* ஏதயோ:—*இவ்விரண்டினுள்,* யத் ஏகம்—*யாதொன்று,* ஶ்ரேய: ஸுநிஶ்சிதம்—*சிறந்ததென்று உன்னால் உறுதியாக எண்ணப்படுகிறதோ,* தத்—*அதை,* மே—*எனக்கு,* ப்ரூஹி—*சொல்லுவாயாக.*

---

1. கரும விடுமறிவுங் கண்ணவதற் பின்னு
மொருமையுடன் யோகு முரைத்தி—யிருமையிலு [யும்
மொன்றுரைப்பா யென்றுரைத்தான் பார்த்தனுயரிறை
நின்றுரைத்தா னிச்சயத்தை நேர்ந்து.

கண்ண!—*கண்ணனே!* கரும விடும் அறிவும்—*கர்ம யோகத்தை விட்டுச்செய்யும் ஜ்ஞாநயோகமே சிறந்த தென்றும்,* அதன் பின்னும்—*அதற்குப் பின்னும்,* ஒருமை யுடன் யோகும்—*கர்மயோகமே ஒப்பற்றது என்றும்,* உரைத்தி-*கூறுகிறாய்;* இருமையிலும்-*இவ்விரண்டினுள்ளும்,* ஒன்று உரைப்பாய்—*(எனக்குச் சிறந்தது) ஒன்றை உரைப் பாய்,* என்று—*என்று,* பார்த்தன்—*அர்ஜுனன்,* உரைத் தான்—*கேட்டான்;* உயர் இறையும்—*அனைவரிலும் உயர்ந்த ஸர்வேஶ்வரனும்,* நிச்சயத்தை நேர்ந்து நின்று—*(அர்ஜுன னுக்குச் சிறந்தது எது எனும்) நிச்சயத்தை முடிவுகட்டி,* உரைத்தான்—*கூறலானான்.*

॥ भा ॥ कर्मणां संन्यासं—ज्ञानयोगं, पुनः कर्मयोगं च शंससि। एतदुक्तं भवति—द्वितीयेऽध्याये मुमुक्षोः प्रथमं कर्मयोग एव कार्यः, कर्मयोगेन मृदितान्तःकरणकषायस्य ज्ञानयोगेनात्मदर्शनं कार्यमिति

---

1. "தத்₃வித்₃தி₄ ப்ரணிபாதேந பரிப்ரஶ்நேந" [4-34] என்று தெரியாத அம்ஶங்களைப் பெரியோர்களைக் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும என்று உபதேசித்ததையொட்டி, கர்மஜ்ஞாநயோகங்களில் தெரியாத அம்ஶங்களைத் தெரிந்துகொள்வதற்காக இவ்வத்தியாயத்தின் தொடக்கத்தில் ஒரு கேள்விகேட்கிறுன அர்ஜுநன். சென்ற அத்தியாயத்தின் தொடக்கத்தில் கேட்கப்பட்ட கேள்விபோலே, தெரியாதவனபோலே கேட்கப்படும் இக்கேள்வியும் 'பரிப்ரஶ்நம்' (சூழ்ந்து நின்று கேட்கை) எனப்படும் வகையைச் சேர்ந்ததாகும். (க்ருஷ்ண) கண்ணனே!

"க்ருஷிர் பூ₄வாசக: ஶப்₃தோ₃ ணஶ்ச நிர்வ்ருதிவாசக: |
விஷ்ணுஸ் தத்₃பா₄வயோகா₃ச்ச க்ருஷ்ண இத்யபி₄தீ₄யதே||"

[க்ருஷிஶப்தம கர்ஷிக்கப்படும் (உழப்படும்) பூமியைச் சொல்லுகிறது; ண ஶப்த₃ம் ஆநந்தத்தைக் குறிக்கும எழுத்தாகும். பூமிக்கு (உலகினர்க்கு) ஆனந்தத்தை அளிப்பவனுகையாலே க்ருஷ்ணன எனப்படுகிருர் விஷ்ணு.] எனகிறபடியே உலகிற்கே ஆனந்தத்தை அளிப்பவனுன நீ எனக்குக் குழப்பத்தை அளிக்காமல், சிறந்ததைச் சொல்லி ஆனந்தத்தை அளிப்பாய் என்று கருத்து. (கர்மணும் ஸந்யாஸம்) கர்மயோகத்தை விட்டுச் செய்யவேண்டிய ஞானயோகத்தை. கர்மயோகத்தின் பலனுக ஜ்ஞானயோகம ஏற்படுவதாகையாலே, "ஸாத்₄யபா₄வே மஹாபா₃ஹோ ஸாத₄நை: கிம் ப்ரயோஜநம்" [வி. பு. 1-19-36] [தடக்கையனே! ஸாதிக்க வேண்டியது ஒன்று இல்லாதபோது ஸாதனத்தால் பயன் எனன?] என்கிற ரீதியிலே ஸாத்₄யமான ஜ்ஞாநயோகம் கைவந்தபின் கர்மயோகத்தால் ஆவதொன்றில்லாமையாலே கர்மயோகத்தைக் கைவிட்டு அப்₄யஸிக்கவேண்டியதொன்று என்னும் பொருளை உடைய கர்மஸந்யாஸஶப்தத்தாலே ஜ்ஞானயோகம கூறப்படுகிறது. (கர்மணும ஸந்யாஸம் ஶம்ஸஸி) இரண்டாம் அததியாயததில் (38 முதல் 52-வது ஶ்லோகம் வரையில்) முமுக்ஷுவாயிருப்பவன் பலனில் பற்றற்று அகர்த்ருத்வாநுஸந்தானத்துடன தனக்குரிய கர்மங்களை அனுஷ்டிப்பதாகிற கர்மயோகத்தை முதலில செய்ய

प्रतिपाद्य, पुनस्तृतीयचतुर्थयोर्ज्ञानयोगाधिकारदशापन्नस्यापि कर्मनिष्ठैव ज्यायसी, सैव ज्ञाननिष्ठानिरपेक्षा आत्मप्राप्तौ साधनमिति कर्मनिष्ठां प्रशं-

---

வேண்டுமெனறு கூறி, அதற்குப்பின இக்கர்மயோகத்தால் மனம் பண்பட்டு ஜ்ஞாநயோகாரமப₄விரோதி₄பாபம் கழியப்பெற்றவ னுக்கு ஏற்படும ஜ்ஞாநயோகத்தாலே ஆத்மஸாக்ஷாத்காரத்தை அடையலாம் என்று விளக்கப்பட்டதை நிஃனவிற்கொண்டு பேசு கிருன். (புந:) மறுபடியும் மூன்ரும நாலாம் அத்தியாயங்களிலே. (கர்மணும் யோக₃ம் ச ஶம்ஸஸி) கர்மயோகத்தாலேயே ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை அடைந்து விடலாம என்றும் கூறுகிருய். மூன்ருவது நாலாவது அத்தியாயங்களிலே, ஜ்ஞாநயோகத்தில் அதி₄காரம உடையவனுக்கும பல காரணங்களால் கர்மயோகமே சிறந்தது; ஜ்ஞானயோகத்தை எதிர்பாராமலே அக்கர்மயோகம ஆத்மஸாக்ஷாத்காரத்தை உண்டாக்குகிறது என்று கூறியதை நிஃன விற்கொணடு பேசுகிருன. அடுததபடி கண்ணன பதிலுரைக்கும போது, ஸாங்க்₂ய யோக₃ஶப்₃த₃ங்களாலே ஜ்ஞாநயோகத்தையும், கர்மயோகததையும பற்றியே பேசுகையாலே, கேள்விகேட்குமிடமான இங்கும கர்மஸந்யாஸஶப்தத்தாலே ஜ்ஞாநயோகமும, யோகஶபதத் தாலே கர்மயோகமும் குறிக்கப்படுவதாகக் கொள்வதே பொருததம். 'கர்மணும' எனனும பதம் இடையில் இருந்துகொண்டு காகாக்ஷி ந்யாயததாலே முனனும பினனுமுள்ள 'ஸந்யாஸம்' 'யோக₃ம்' எனனும பதங்களோடு அந்வயிககிறது. இரண்டாமத்தியாயத்தில் கர்மயோகத்தைக் கைவிடவேணடும எனறு வெளிபபடையாகச் சொல்லாவிடிலும், ஜ்ஞாநயோகவிரோதி பாபம் போவதற்காகக் கர்மயோகம அநுஷ்டிக்கத்தக்கது எனறு ஐம்பதாவது ஶ்லோகத் தில் கூறியிருக்கிறபடியால், பாபம கழிந்தபின் கர்மயோகத்தைக் கைவிட்டு அதன் பலமான ஜ்ஞாநயோகத்தை அப்₄யஸிக்கவேணும், அதுவே ஆத்மஸாக்ஷாத்காரத்துக்கு நேரே ஸாதனம் எனபது தன்னடையே ஸித்திக்கும். ஆக, இரண்டாமத்தியாயத்தில கைவிடத்தக்கதாக உணர்த்தப்பட்ட கர்மயோகத்தை, மேல் இரு அத்தியாயங்களில் கைக்கொள்ளத்தக்கதாகக் கூறுவதும், இரண்டா மத்தியாயத்தில் கர்மயோக₃ஸாத்₄யமான ஜ்ஞானயோகத்தாலேயே கிடைப்பதாகக் கூறப்பட்ட ஆத்மஸாக்ஷாத்காரத்தை மேல் இரு அத்தியாயங்களிலும ஜ்ஞாநயோகத்தை இடையிடாத கர்மயோகத் தாலேயே அடையப்படுவதாகக் கூறுவதும் குழப்பத்தை விஃளப்பதா யிருக்கிறதே; ஒனறைக் காட்டிலும், மற்ருென்றுக்குப் பெருமை

सति—इति। तत्रैतयोर्ज्ञानयोगकर्मयोगयोरात्मप्राप्तिसाधनभावे यदेकं सौकर्याच्छैघ्र्याच्च श्रेयः—श्रेष्ठमिति सुनिश्चितम्, तन्मे ब्रूहि॥ १॥

श्रीभगवानुवाच—

संन्यासः कर्मयोगश्च निःश्रेयसकरावुभौ।
तयोस्तु कर्मसंन्यासात् कर्मयोगो विशिष्यते॥ २॥

---

யைச் சொல்லுவதைப் பார்த்தால், இரண்டில் ஏதாவதொன்றை அநுஷ்டிக்கலாம் என்றும் முடிவுகட்டமுடியவில்லையே என்று பூர்வார்த்தத்தில் தன குழப்பத்தை வெளியிட்டானாயிற்று. இனி, உத்தரார்த்தத்தாலே இவ்விரண்டில் எது எனக்குச் சிறந்ததென்று விளக்கி என குழப்பத்தைத் தெளிவிப்பாய் எனப்பிரார்த்திககிருன. (ஏதயோ: யத் ஏகம் ஶ்ரேய; ஸு நிஶ்சிதம் தத் மே ப்₃ரூஹி) இவ் வண்ணமாக, கர்மயோகம், ஜ்ஞாநயோகம் ஆகிய இரண்டுமே ஆத்மஸாக்ஷாத்காரத்துக்கு நேரே ஸாத₄னமாகில், இவ்விரணடி னுள் எளிமையாலும், விரைவில் பலனளிக்கும் தன்மையாலும எது ஆத்மஸாக்ஷாத்கார ஸாத₄னமாயிருப்பதில் சிறந்ததென்று உனனுல் முடிவுகட்டப்பட்டிருக்கிறதோ, அதை எனக்குக கூறு வாய். கர்மஸந்யாஸஶப்தமும், யோக₃ஶப்₁த₃மும் புல்லிங்கமா யிருக்க, 'ஏதயோரேகம்' என்று நபும்ஸகப்ரயோகம் செய்தது ஸாமாந்யே நபும்ஸகமாகவுமாம். அன்றிக்கே, 'ஏகம ஶ்ரேய:' என்று ஶ்ரேயஶ்ஶப்தத்துக்கு விஶேஷணமாகையாலே நபும்ஸக ப்ரயோகம் செய்யப்பட்டதாகவும் கொள்ளலாம். (ஶ்ரேய: ஸு நிஶ் சிதம) சிறந்தது என்று உறுதியாக முடிவுகட்டப்பட்டது. ஶ்ரேயஶ் ஶப்தம பலன முதலானவற்றையும் குறிக்குமாயினும், இங்கு ஒன்றைக் காட்டிலும் மற்றொன்றின் சிறப்பைக் காட்டுமிடமாகை யாலே 'மிகச்சிறந்தது' என்றே பொருள்படுகிறது. 'ஸுநிஶ்சிதம் ப்₃ரூஹி' [உறுதியாகக் கூறுவாய்] என்று கூட்டிப்பொருள் கொள்வ தில் ஸ்வாரஸ்யமில்லாமையாலே, 'ஶ்ரேய: ஸு நிஶ்சிதம' என்று கூட்டிபபொருள்கொள்வதே பொருத்தம். ஜ்ஞாநகர்மயோகங்கள் இரண்டுக்குமே பலன் ஒன்றுயிருக்கிறபடியால், பலனைக்கொண்டு இவற்றிலொன்றுக்குச் சிறப்பு கூறமுடியாதாகையால், செயற்கு எளிமை, விரைவில் பலனளிக்கும் தனமை ஆகியவற்றுல் சிறப்பு ஏற்படுவதாகக் கொள்ளவேண்டும். இரண்டில இவற்றுல் சிறந்தது எது? என்று கேள்வியின் கருத்து. 1.

ஸ்ரீப₄க₃வாநுவாச—

2. ஸந்யாஸ: கர்மயோக₃ஶ்ச நி:ஶ்ரேயஸகராவுபெள₄ |
தயோஸ்து கர்மஸந்யாஸாத் கர்மயோகே₃ா விஶிஷ்யதே ||

ஸந்யாஸ:-*ஞானயோகமும்,* கர்மயோக₃: ச-*கர்மயோகமும்,* உபெ₄ள—*ஆகிய இரண்டுமே,* நி:ஶ்ரேயஸகரௌ—*ஆத்மஸாக்ஷத்காரமாகிற சிறந்த பலனை நேரே அளிப்பவையே: (ஆயினும்,)* தயோ: — *அவ்விரண்டினுள்ளும்,* கர்ம ஸந்யாஸாத்-*ஜ்ஞாநயோகத்தைக் காட்டிலும்,* கர்மயோக₃: து-*கர்மயோகமே,* விஶிஷ்யதே-*(சில காரணங்களால்) சிறப்புறுகிறது.*

---

2. இக்கரும யோகமது விட்டுணர்வா மிவ்விரண்டும்
தக்கநலஞ் சாதிக்குஞ் சாதனமா—மக்கருமம்
விட்டிய றன்னின் மிகநன் றுதன்செயலிற
பட்டியலு மாறு பயினறு.

இக்கருமயோகம-*இததகைய சர்மயோகம்.* அதுவிட்டு உணர்வாம இவ்விரண்டும-*அதைவிட்டுச் செய்யப்படும் ஞானயோகம் ஆகிய இவ்விரண்டுமே,* தக்க நலம் சாதிக்கும் சாதனமாம-*நலல புருஷார்த்தமான ஆத்மஸாக்ஷாத்காரத்தை நேரே உண்டாக்கும் உபாயமாகும.* *(ஆயினும்)* அக்கருமம் விட்டு இயல் தன்னில்-*அக்கருமயோகத்தை விட்டுச் செய்யும் ஞானயோகத்தைக் காட்டிலும்.* தன் செயலில்பட்டு பயின்று இயலும் ஆறு-*தனக்குரிய கர்மங்களில் ஈடுபட்டுப் பழகி அநுஷ்டிக்கும் உபாயமான கர்மயோகம்.* மிக நன்று-*(சில காரணங்களால்) மிகச்சிறப்புற்றதாகும்.*

---

2. ஜ்ஞானயோகத்தில சக்தியுடையவனுய், லோகஸங்க்₃ரஹம் செய்யவேண்டுமபடியான ப்ரஸித்தியற்றவனுன அதி₄காரிக்கே கர்மயோகமானது ஜ்ஞானயோகததை இடையிட்டு ஸாத₄னமாகிறதாகையாலே, மற்றவர்கள் விஷயத்தில் இருயோகங்களுமநேரே ப₂லஸாத₄னமாகினறன என்று காட்டிக்கொண்டு, அக்காரணத்தாலேயே ஜ்ஞானயோகததில் அதிகாரமுள்ளவனுக்கும, எளிமையையும், விரைவில் பலனையும் விருமபினுைகில கர்மயோகமே கைக்கொள்ள த்தக்கது எனறு உறுதிப்படுத்துகிறவனுய் கணணன் பதில்கூறத்தொடங்குகிருன இரண்டாமஶ்லோகத்திலிருந்துதொடஙகி.

ஸ்ரீப₄க₃வாநுவாச—

2. ஸந்யாஸ: கர்மயோகஃ₃ஶ்ச நி:ஶ்ரேயஸகராவுபௌ₄ள |
தயோஸ்து கர்மஸந்யாஸாத் கர்மயோகோ₃ விஶிஷ்யதே ||

**ஸந்யாஸ:**-*ஞானயோகமும்,* **கர்மயோக₃:** *ச-கர்மயோகமும்,* **உபௌ₄ள**—*ஆகிய இரண்டுமே,* **நி:ஶ்ரேயஸகரௌ**—*ஆத்மஸாக்ஷாத்காரமாகிற சிறந்த பலனை நேரே அளிப்பவையே: ( ஆயினும், )* **தயோ:** *— அவ்விரண்டினுள்ளும்,* **கர்மஸந்யாஸாத்**-*ஜ்ஞானயோகத்தைக் காட்டிலும்,* **கர்மயோக₃: து**-*கர்மயோகமே,* **விஶிஷ்யதே**-*(சில காரணங்களால்) சிறப்புறுகிறது.*

---

2. இக்கரும யோகமது விட்டுணர்வா மிவ்விரணடும்
தககநலஞ சாதிக்குஞ் சாதனமா—மக்கருமம்
விட்டிய றன்னின் மிகநன் றுதன்செயலிற
பட்டியலு மாறு பயினறு.

**இக்கருமயோகம**-*இததகைய சர்மயோகம்,* **அதுவிட்டு உணர்வாம இவ்விரண்டும்**-*அதைவிட்டுச் செய்யப்படும் ஞானயோகம் ஆகிய இவ்விரண்டுமே,* **தக்க நலம சாதிக்கும் சாதனமாம**-*நல்ல புருஷார்த்தமான ஆத்மஸாக்ஷாத்காரத்தை நேரே உண்டாக்கும் உபாயமாகும். (ஆயினும்)* **அக்கருமம் விட்டு இயல் தன்னில்**-*அக்கருமயோகத்தை விட்டுச் செய்யும் ஞானயோகத்தைக் காட்டிலும்.* **தன் செயலில்பட்டு பயின்று இயலும் ஆறு**-*தனக்குரிய கர்மங்களில் ஈடுபட்டுப் பழகி அநுஷ்டிக்கும் உபாயமான கர்மயோகம்,* **மிக நன்று**-*(சில காரணங்களால்) மிகச்சிறப்புற்றதாகும்.*

---

2. ஜ்ஞானயோகத்தில் சக்தியுடையவனாய், லோகஸங்க்₃ரஹம் செய்யவேண்டுமபடியான ப்ரஸித்தியற்றவனை அதி₄காரிக்கே கர்மயோகமானது ஜ்ஞானயோகத்தை இடையிட்டு ஸாத₄னமாகிறதாகையாலே, மற்றவர்கள் விஷயத்தில் இருயோகங்களும நேரே ப₂லஸாத₄னமாகினறன எனறு காட்டிக்கொண்டு, அக்காரணத்தாலேயே ஜ்ஞானயோகத்தில் அதிகாரமுள்ளவனுக்கும், எளிமையையும், விரைவில் பலனையும் விரும்பினுைகில கர்மயோகமே கைகொள்ள த்தக்கது என்று உறுதிப்படுத்துகிறவனாய் கணணன் பதில்கூறத்தொடஙகுகிருன இரண்டாமஶ்லோகத்திலிருந்துதொடங்கி.

॥भा॥ संन्यासो ज्ञानयोगः कर्मयोगश्च ज्ञानयोगशक्तस्याप्युभौ निरपेक्षौ निःश्रेयसकरौ। तयोस्तु कर्मसंन्यासात्—ज्ञानयोगात् कर्मयोग एव विशिष्यते॥ २॥

(ஸந்யாஸ: கர்மயோகஃ₃ஶ்ச உபௌ₄ள) ஜ்ஞாநயோகமும், கர்ம யோகமுமாகிற இரண்டுமே. (நிःஶ்ரேயஸகரௌ) பலனுகிற ஆத்ம ப்ராப்தியை நேரே ஸாதித்துக்கொடுப்பவை. ஜ்ஞாநயோகத்தில் ஶக்தியில்லாதவன ஆத்மஜ்ஞானம் கலசாமல் கர்மயோகத்தை அநுஷ்டித்தாலுகில், அவனுக்குக் கர்மயோகம் நேரே ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை விளக்காது; ஆத்மஜ்ஞானத்தோடு கூடக் கர்ம யோகத்தை அநுஷ்டித்தாலுகில், அதுவே ஆத்மஸாக்ஷாத்காரத்தை விளக்கையாலே, ஜ்ஞாநயோகம் நேரே ஆத்மஸாக்ஷாத்காரத்தை விளக்காது. ஆகையால், இரு யோகங்களும் நேரே ப₂ல ஸாத₄னமாவதாகக் கூறுவது அவன் விஷயத்தில் பொருந்தாது; இங்கு இரண்டுமே நேரே ஸாத₄னமாவதாகக் கூறுகையாலே ஜ்ஞாநயோகத்தில் சக்தியுடைய அதி₄காரிக்கு ஜ்ஞாநயோகம போலே கர்மயோகமும் நேரே ப₂லஸாத₄னமாகிறது என்று கருத்து கொள்ளவேண்டும். நாலாம் ஶ்லோகததில், "கர்மயோகம் ஒன்றிலேயே நிற்பவனுயினும், கர்மஜ்ஞானயோகங்கள் இரணடின் பலனையும் அடைகிருன்" என்று கூறுவதும் இதையே வலியுறுத்து கிறது. (கர்மயோகஃ₃ஶ்ச) சகாரத்திற்கு நாலு பொருள்கள் உணடு; அவையாவன.–(1) ஸமுச்சயம் (ஒனறேடொன்று தொடர்பின்றியே பல பொருள்கள் ஓரே கிரியையில் அந்வயிக்குமிடம்) (2) அந்வாசயம (ஒனறு ப்ரத₄ானமாகவும் மற்ருென்று ஆநுஷங்கிகமாகவுமிருக்கு மிடம்) (3) இதரேதரயோகஃ₃ம் (பொருள்கள் ஒன்றுசேர்ந்து ஒருகிரியை யில் அந்வயிக்குமிடம்) (4) ஸமாஹாரம் (பல பொருள்களின் ஸமூஹம் ஒருகிரியையில் அந்வயிக்குமிடம்.) இங்கு ஜ்ஞாநகர்மயோகங்கள தனித்தனியே பலத்தை விளக்கின்றன என்று கூறுமிடமாகையால் முதற்பொருளான ஸமுச்சயார்த்தமே பொருந்தும்; மற்ற மூனறு பொருள்களும் பொருந்தமாட்டா. இப்படி இரண்டுமே நேரே ப₂லஸாத₄னமாகில் இரண்டில் ஏதாவதொன்றைக் கைக்கொள்ள லாம என்று கருத்தோ? எனில், இரண்டில் கர்மயோகத்திற்குச் சிறப்புண்டு என்கிருன் பிற்பாதியாலே,— (தயோஸ்து) அவ் விரண்டினுள்ளும்; துஶப்தம் இரண்டில் ஏதாவதொன்றைக் கைக் கொள்ளலாமோ எனும ஐயத்தைத் தவிர்க்கிறது. (கர்ம ஸந்யாஸாத் கர்மயோகோ₃ விஶிஷ்யதே) ஜ்ஞாநயோகத்தைக் காட்டிலும் கர்ம யோகமே சிறப்புறுகிறது. 2.

॥ भा ॥ कुत इत्यत्राह—

ज्ञेयस्स नित्यसंन्यासी यो न द्वेष्टि न काङ्क्षति।
निर्द्वन्द्वो हि महाबाहो सुखं बन्धात्प्रमुच्यते ॥ ३ ॥

3. ஜ்ஞேய: ஸ நித்யஸந்யாஸீ யோ ந த்₃வேஷ்டி ந காங்க்ஷதி।
நிர்த்₃வந்த்₃வோ ஹி மஹாபா₃ஹோ ஸுக₂ம் ப₃ந்த₄ாத்
ப்ரமுச்யதே ॥

மஹாபா₃ஹோ—*தடக்கையனே!* ய:—*கர்மயோகம் செய்யும் எவனொருவன்.* ந காங்க்ஷதி—*(ஶப்₃த₃ாதி₃விஷயங்களை) விரும்பாமலிருக்கிறானோ.* ந த்₃வேஷ்டி—*(அவ்விஷயங்களைத் தடை செய்வாரிடம்) வெறுப்பற்றிருக்கிறானோ, (அதனாலேயே)* நிர்த்₃வந்த்₃வ:—*(ஸுக துக்கங்கள் முதலிய) இரட்டைகளைப்பொறுத்துக்கொள்கின்றவனாக ஆகின்றானோ.* ஸ:-*அவன்.* நித்யஸந்யாஸீ-*எப்போதும் ஜ்ஞாநநிஷ்டனே யாவான்.* (ஸ:) ஹி—*அவனேயன்றோ,* ப₃ந்த₄ாத்—*ஸம்ஸாரக் கட்டினின்றும்,* ஸுக₂ம்—*எளிதில்,* ப்ரமுச்யதே—*நன்கு விடுபடுகிறான்.*

---

3. வெறுப்புநசை யற்றவவன் விட்டவனு மென்றும்
பொறுப்புடனே தன்னிருமை பூண்ட—செறுப்பகற்றி
நின்றான் விசயனே நீள்வினையின் கட்டுவிட்டுச்
சென்றான் சுகத்துச் சிறந்து.

விசயனே!—*அர்ஜுனா!* நசை வெறுப்பு அற்ற அவன்—*(விஷயங்களில்) பற்றும், (அதைத் தடுப்பாரிடம்) துவேஷமும் இல்லாதவனாய், (அதனாலேயே)* பொறுப்புடனே—*பொறுமையுடன்,* தன் இருமை பூண்ட செறுப்பு அகற்றி—*(இன்பம் துன்பம் முதலான) இரட்டைகளால் தனக்கு உண்டாகும் கிளர்ச்சியைப் போக்கி.* நின்றான்-*(கர்மயோகத்திலேயே) நிலை நின்றவன்,* என்றும் விட்டவனும்-*என்றும் கர்மயோகத்தை விட்டுச்செய்யும் ஞானயோகத்தில் நிலைநிற்பவனேயாவான்.* சுகத்து சிறந்து—*(அவன்) எளிதிலும் நன்றாகவும்.* நீள் வினையின் கட்டு விட்டு சென்றான்—*அநாதியான கர்மங்களினால் ஏற்படும் கட்டு நீங்கப்பெறுகிறான்.*

यः कर्मयोगी तदन्तर्गतात्मानुभवतृप्तस्तद्व्यतिरिक्तं किमपि न काङ्क्षति, तत एव किमपि न द्वेष्टि, तत एव द्वन्द्वसहश्च; स नित्य-

---

3. கர்மஜ்ஞாநயோகங்களிரண்டும் தனித்தனியே ஆத்ம ஸாக்ஷாத்காரமாகிற நன்மையை விளைப்பனவாயினும், கர்மயோகம் ஜ்ஞாநயோகத்தைக் காட்டிலும் சிறந்தது என்று சென்ற ஶ்லோகத்திற் கூறியதற்குக் காரணம் காட்டுகிருன் இந்த ஶ்லோகத்தில. 'நித்யஸந்யாஸீ' என்னும் ஶப்தத்தைப் பார்த்தால், இங்கு கூறப்படுகிறவன ஜ்ஞாநயோக₃நிஷ்ட்ட₂ன என்று தோற்றுகிறதே? எனில்: முன் ஶ்லோகத்தில் ஜ்ஞாநயோகத்தைக் காட்டிலும், கர்மயோகம் சிறந்தது என்று கூறிவிட்டு, அடுத்த ஶ்லோகத்தில் ஜ்ஞாநயோகநிஷ்ட்டன் எளிதில் முக்தியடைகிருன் என்று ஜ்ஞாநநிஷ்ட்டனுக்குப் பெருமையைச் சொல்லுவது பொருந்தாதாகையாலே, இங்கு கர்மயோகநிஷ்ட்டனேயே, என்றும் ஜ்ஞாநயோகநிஷ்ட்டனைக் கூறுகிறது என்று கொளவதே பொருந்தும். "ஸந்யாஸஸ்து மஹாபா₃ஹோ து₃:க்க₂மாப்துமயோக₃த:" [5-6] என்று அடுததபடியாகக் கர்மயோகமில்லாமல் ஜ்ஞாநயோகத்தை அடைவது அரிது என்று ஜ்ஞாநயோகத்தின் அருமையைக் கூறியிருப்பதும், இங்கு ஜ்ஞாநயோகத்தின் எளிமையைக் கூறுவதாகக் கொண்டால் முரண்படும். ஆகையால் கர்மயோகநிஷ்ட்டனைப் புகழ்வது இந்த ஶ்லோகம் எனறே கொள்ளவேண்டும். (ய:) யாவனெரு கர்மயோக₃நிஷ்ட்ட₂ன். (ந காங்க்ஷதி) ஶப்₃த₃ாதி₃ விஷயங்களில் விருப்பற்றிருக்கிருனே. தன் கர்மயோகத்தில் அடங்கிய ஆத்மாநுபவத்தில் திருப்தியுடையவனுயிருக்கையாலே, அவ்வநுப₄வத்தில் வேறுபட்ட விஷயாநுப₄வம் எதையும் விரும்புவதில்லை என்று கருத்து. (ந த்₃வேஷ்டி) அதனுலேயே வெறுப்புமற்றிருக்கிருனே: "காம ஏஷ க்ரோத₄ ஏஷ:" [3-37] என்றவிடத்திற்போலே ஶப்₃த₃ாதி₃காமம் தடைப்பட்டால் தடுத்தவர்களிடம் உண்டாகும் கோபம், வெறுப்பு முதலானவை ஶப்₃த₃ாதி₃காமமற்ற இவனுக்கு ஏற்படுவதில்லை என்று கருத்து. இந்த அர்தத₂ ஸ்வாரஸ்யத்தை நோக்கியே 'ந த்₃வேஷ்டிந காங்க்ஷதி' என்னும கிரமத்தை 'ந காங்க்ஷதி-ந த்₃வேஷ்டி' என்று மாற்றிப் பொருளுரைக்கப்பட்டது. இவ்வண்ணமாக ராக₃த்₃வேஷங்களில்லாமையாலே, குளிர், உஷ்ணம் முதலான இரட்டைகளையும் பொறுத்துக்கொள்ளுகிருன் இவன் என்கிருன் மேலே,— (நிர்த்₃வந்த்₃வ:) குளிர் உஷ்ணம, அவை காரணமாக வரும் இன்பம் துன்பம், வெற்றி

संन्यासी—नित्यज्ञाननिष्ठ इति ज्ञेयः। स हि सुकरकर्मयोगनिष्ठतया सुखं बन्धात्प्रमुच्यते ॥ ३ ॥

॥भा॥ ज्ञानयोगकर्मयोगयोरात्मप्राप्तिसाधनभावेऽन्योन्यनैरपेक्ष्यमाह-

सांख्ययोगौ पृथग्बालाः प्रवदन्ति न पण्डिताः।
एकमप्यास्थितस्सम्यगुभयोर्विन्दते फलम् ॥ ४ ॥

4. ஸாங்க்₂யயோகௌ₃ ப்ருத₂க்பா₃லா: ப்ரவத₃ந்தி ந பண்டி₃தா: ।
ஏகமப்யாஸ்தி₂த: ஸம்யக் உப₄யோர் விந்த₃தே ப₂லம் ॥

---

4. சாங்கியமும் யோகமதுந் தானறியார் வேறென்பா
ராங்கதனை நன்கறிவா ரஃதுரையா—ராங்கவற்றி
லொன்றுதனி னின்று முடனியல்வா னவ்விரண்டி
னின்றபய னெல்லா நிகழ்ந்து.

---

தோல்வி, அவை காரணமாகவரும் லாபம நஷ்டம் முதலான இரட்டைகளைப் பொறுத்துக் கொள்ளுகிறானே. அவ்விரட்டைகள் அடியோடு அழியமாட்டாவாகையாலே, நிர்த்₃வந்த்₃வ ஶப்தத்திற்கு இரட்டைகள் பயனற்றவையாம்படி அவற்றைப் பொறுத்துக்கொள்பவன என்றே பொருள்கொள்ளவேண்டும். (ஸ: நித்யஸந்யாஸீ) அவன் கர்மயோகமே செய்பவனாயினும், அவனுக்குள்ள இப்பெருமைகளைப்பார்த்தால் அவன என்றும் ஜ்ஞாநயோகநிஷ்ட்டனேயாவான். அவனுடைய கர்மயோகத்திலடங்கிய ஜ்ஞாநாம்ஶத்தின் பெருமையை நோக்கும்போது அவனை என்றும் ஜ்ஞாநயோகநிஷ்ட்டன் என்றே கூறலாம் என்று கருத்து. உண்மையில், ஜ்ஞாநயோகநிஷ்ட்ட₂னைக் காட்டிலும் அவன் சிறப்புமுற்றவன் எனகிறான் கடைசியாக,—(ஸ: ஹி ஸுக₂ம் ப₃ந்த₄ாத் ப்ரமுச்யதே) எளிதான கர்மயோகத்தில் நிலைநிற்பவனாகையாலே, அவன் ஜ்ஞாநயோகநிஷ்ட்டனைக் காட்டிலும் எளிதிலேயே ஸம்ஸாரககட்டினின்றும் விடுபடுகிறானன்றோ. ஆகையால் ப₃ந்த₄மோக்ஷ விஷயத்தில் அவனுக்கு ஜ்ஞாநயோக₃நிஷ்ட்ட₂னோடு ஸாம்யமுண்டானாலும், எளிதிலேயே பலனடையும் அமஶத்தில் அவனுக்கு ஜ்ஞாநயோகநிஷ்ட்டனைக் காட்டிலும் சிறப்புமுண்டு என்று கருத்து. (மஹாபா₃ஹோ) மஹாபுருஷலக்ஷணமுடைய நீ, இத்தகைய மஹாபுருஷனாகவேண்டாவோ? என்று கருத்து. 3.

**ஸாங்க்₂யயோகௌ₃** — *ஜ்ஞாநயோகத்தையும். கர்ம யோகத்தையும்,* **ப்ருத₂க்**—*(பலத்தில்) வேறுபட்டவையாக.* **பா₃லா:**—*அறிவு முதிர்ச்சியில்லாதவர்களாய்.* **நபண்டி₃தா:**—*நிறைந்த அறிவைப் பெருதவர்களாயிருப்பவர்களே.* **ப்ரவத₃ந்தி**—*கூறுகிருர்கள்;* **உப₄யோ:**—*அவ்விரண்டினுள்ளும்.* **ஏகம் அபி**—*ஒன்றையே.* **ஸம்யக் ஆஸ்தி₂த:**—*நன்கு பற்றி நிற்பவன்.* **( உப₄யோ: ) ப₂லம்**—*இரண்டின பலத்தையும்.* **லப₄தே**—*அடைகிருன்.*

---

**சாங்கியமும் யோகம் அதும் தான்**—*ஜ்ஞாநயோகத்தையும். கர்மயோகத்தையும்.* **அறியார்**—*அறிவு முதிர்ச்சியில்லாதவர்கள்.* **வேறு என்பார்**—*(பலத்தில்) வேறுபட்டவை என்று உரைப்பார்கள்;* **ஆங்கு அதனை**—*அப்பல விஷயத்தில் ஒன்றுபட்டவையே என்பதை.* **நன்கு அறிவார்**—*நன்கு அறிகின்ற பண்டிதர்கள்.* **அஃது**—*அவை (பலத்தில்) வேறு பட்டவையென.* **உரையார்**—*கூறமாட்டார்கள்;* **ஆங்கு அவற்றில்**—*அவ்விரண்டு யோகங்களினுள்ளும்.* **ஒன்று தனில் நின்றும்**—*ஒரு யோகத்திலேயே நிலைநின்ருலும்'* **அவ்விரண்டின் நின்ற பயன் எல்லாம் நிகழ்ந்து உடன் இயல்வான்**—*அவ்விரண்டினுலும் கிடைக்கும் எல்லாப்பயனையும் ஒருசேரப் பெறுவான் .*

---

4. மூன்ரும் ஶ்லோகத்தில் ஜ்ஞாநகர்மயோகங்கள் இரண்டுமே ஒன்றையொனறு எதிர்பாராமல் தனித்தனியே ஆத்மஸாக்ஷாத்காரத்தை விளைப்பவை என்று கூறியதை விவரிக்கிருன இந்த ஶ்லோகத்தில். (ஸாங்க்₂யயோகௌ₃) ஜ்ஞாநயோகத்தையும், கர்ம யோகத்தையும், இங்கு ஸாங்க்₂யயோக₃ ஶப்₃த₃ங்கள் ஸாங்க்₂ய மதத்தையும் யோக₃மதத்தையும குறிப்பதாக எண்ணலாகாது; ஏனெனில், இப்ரகரணத்தில் முன்னும பின்னும் அம்மதங்களைப் பற்றிய பேச்சே கிடையாது ; பேச்சில்லாததோடன்றியில் அவை பற்றிப்பேசுவது இப்பிரகரணத்திற்குப் பொருந்தவும் மாட்டாது. 'தயோஸ்து கர்மஸந்யாஸாத் கர்மயோகோ₃ விஶிஷ்யதே''[4-2] என்று முன்னும் ''ஸந்யாஸஸ்து மஹாபா₃ஹோ து₃:க்க₂மாப்துமயோக₃த: '' [4-6] என்று பின்னும் (கர்ம) ஸந்யாஸ ஶப்₃த₃த்தாலும், (கர்ம)

॥भा॥ ज्ञानयोगकर्मयोगौ फलभेदात्पृथग्भूतौ ये प्रवदन्ति, ते बालाः—अनिष्पन्नज्ञानाः; नपण्डिताः—अकृत्स्नविदः। कर्मयोगो

---

யோகஶப்₃த₃த்தாலும் ஸாங்க்₂யயோகஶப்த வாச்யங்களை எடுப்ப தாகவும் விளங்குகிறது. ஸாங்க்₂யயோகமதங்களை இப்படிக் குறிப்பதும் பொருந்தாது; கீதையில ப்ரமாணமாக எடுக்கப்படும் ப்₃ரஹ்மஸூத்ரத்திலும் ரசநாநுபபத்யதி₄கரணத்தில் [2-2-1] ஸாங்க்₃யமதமும, யோகப்ரத்யுக்தயதி₄கரணத்தில் [2-1-2] யோக மதமும் தள்ளப்படுகின்றன என்பதும் பிரஸித்தம் கீதையை உள்ளடக்கியிருக்கும மஹாபாரதத்திலும், மோக்ஷதர்மத்தில் (அத்யாயம் 351)

"ப₃ஹவ: புருஷா ராஜந் ஸாங்க்₂ய யோக₃விசாரணே।
நைததி₃ச்ச₂ந்தி புருஷமேகம குருகுலோத்₃வஹ॥
[பார-மோக்ஷ 360-2]

[குருகுலத்தலைவனை அரசனே! ஸாங்க்யயோக மதங்களைச் சேர்ந்த வர்கள் புருஷர்கள் பலர் உளர் எனகினறனர். இவர்கள் (ஆதமா வான) ஒரு புருஷனை ஒப்புக்கொளவதில்லை.] என்றும்.

"ஸமாஸேந து தத்₃வ்யாஸ: புருஷைகாத்ம்யமுக்தவாந்"
[பார-மோக்ஷ 360-7]

[அதனுல் வியாஸர் உலகமனைத்தும் ஓரே புருஷனை ஆத்மாவாக வுடையது என்று சுருக்கமாகக் கூறினர்.] என்று ஸாங்க்₂யயோக மதங்களில் தவறுன அர்த்தங்களிருப்பதாகக் கூறப்பட்டுள்ளது. ஆகையால், இங்கு அவற்றையெடுப்பது சிறிதும் பொருந்தாது; இங்குள்ள யோகஶப்தஸ்த₂ானத்தில் இரண்டாம் ஶ்லோகத்தில் கர்மயோக ஶப்தத்தையே இடுகையாலே அது கர்மயோகத்தைக் குறிக்கிறதென்பது தெளிவு; ஆகையால், ஸாங்க்₂யஶப்₃த₃ம், "ஸங்க்₂யயா பு₃த்₃த்₄யா அவத₄ாரணீயம் ஆத்மதத்வம் ஸாங்க்₂யம்; தத₃வத₄ாரணரூபம் ஸாங்க்₂யம்" [ஸங்க்₂யை எனப்படும அறிவால் அறியப்படும் ஆத்மததவம் ஸாங்க்₂யம எனப்படும; அவ்வாத்ம தத்துவத்தை அறிவதாயிருக்கும் ஜ்ஞாநயோகமும் ஸாங்க்யம எனப் படும்] என்னும் வ்யுத்பத்தியாலே, கர்மயோக ஸஹபடி₂தமாய், கர்மயோகத்தை விட்டுச்செய்வதாகையாலே கர்மஸந்யாஸ ஶப்₃த₃ வாச்யமாயிருக்கும் ஜ்ஞாநயோகத்தைக் குறிப்பதாகக் கொள்வதே

ज्ञानयोगमेव साधयति, ज्ञानयोग[एक एव]स्त्वेक आत्मावलोकनं साधयतीति तयोः फलभेदेन पृथक्त्वं वदन्तो न पण्डिता इत्यर्थः।

---

உசிதமாகும். (பா₃லா: நபண்டி₃தா: ப்ருத₂க் ப்ரவத₃ந்தி) அறிவு முதிர்ச்சி இல்லாதவர்களாய், முழுவதையும் அறியாதவர்களே இவ்விருயோகங்களையும் பலனில் வெவ்வேறுபட்டவையாகக் கூறுகின்றனர்; இவ்விரண்டையும் வெவ்வேறு பலனைத் தருபவையாகக் கூறுகின்றவர்கள் அறிவு முதிர்ச்சியில்லாதவர்களாகவும், முழுவதையும் அறியாதவர்களாகவும உள்ளனர் என்று கருத்து. பலனில் வெவ்வேறுபட்டவையாக இருயோகங்களையும் கூறுகின்றவர்களை நிந்திக்கும் வாக்யமாயிருக்கையாலே பா₃லத்வத்தையும், அபண்டி₃தத்வத்தையும் உத்₃தே₃ஶ்யமாகக் கொள்ளாமல் விதே₄யமாகவே கொள்ளவேண்டும். மேல் ஶ்லோகத்தில் இவர்களுக்கு எதிர்த்தட்டாயிருக்கும ஏகப₂லவாதிகளைப் புகழும்போதும "ஏகம் ஸாங்க்₂யஞ்ச யோக₃ஞ்ச ய: பஶ்யதி ஸ பஶ்யதி" [எவன் இருயோகங்களையும் பலனில் ஒன்றுபட்டவையாக அறிகிருனே. அவனே அறிவாளி] என்றல்லவோ உத்₃தே₃ஶ்யவிதே₄ய பதங்கள உள்ளன. 'ப்ருத₂க் ப்ரவத₃ந்தி' என்னுமிடத்தில் ஜ்ஞாநகர்மயோகங்களிரண்டும் உண்மையிலே வெவ்வேருனவையாகையாலே, அவை ஸ்வரூபத்தில வேறுபட்டவை எனறு கூறுவாரை நிந்திப்பதாகக் கொள்ள முடியாது; இரண்டும் தனித்தனியேயிருந்து பலனளிப்பதாகக் கூறுகினறவர்களை நிந்திப்பதாகக்கொண்டு, இரண்டும் சேர்ந்தே தான் ப₂லஸாத₄நமாகும் எனறு இங்கு விதிக்கப்படுவதாகக் கொள்வதும் பொருந்தாது; ஏனெனில்,— இந்த ஶ்லோகத்திலேயே பிற்பாதியில் ஒன்றை அநுஷ்டித்தாலே இரண்டின் பலனையும அடையலாம் என்று கூறப்படுகிறது; மேல் ஶ்லோகத்தில் ஜ்ஞாநயோகிகளடையும் பலனைக் கர்மயோகிகளும் அடைவர் என்று சொல்லப்படுகிறது; ஆறும்ஶ்லோகத்தில் கர்மயோகிதானே விரைவில் பலனை அடைவான எனறு உரைக்கப்படுகிறது. ஆகையால் கர்மஜ்ஞாநஸமுச்சயம ப₂லஸாத₄நம் என்று இங்கு பொருள்கூறமுடியாது. ஆகையால், இருயோகங்களும பலனில் வேறுபட்டவை என்று கூறுகிறவர்களை நிந்திபபதாகவே கொள்ளவேண்டும்; "கர்மயோகமானது ஜ்ஞாநயோகத்தையே ஸாதிக்கிறதேயொழிய எந்த அதி₄காரிக்கும் நேரே ஆத்மஸாக்ஷாத்காரத்தை ஸாதிக்க மாட்டாது; ஜ்ஞாநயோகமொனறே ஆத்மஸாக்ஷாத்காரத்தை நேரே ஸாதிக்கவல்லது" எனறு கர்மஜ்ஞாநயோகங்கள்

उभयोरात्मावलोकनैकफलयोरेकफलत्वेन एकमप्यास्थितस्तदेव फलं लभते ॥ ४ ॥

---

முறையே ஜ்ஞானயோகத்தையும், ஆத்மஸாக்ஷாத்காரத்தையும் ஸாதிப்பதன்மூலம பலனில் வேறுபட்டவையென்று கூறுகிறவர்கள் பாலர்களாகவும அபண்டிதர்களாகவும் உள்ளனர் என்பது பூர்வார்த்தத்தின திரண்ட பொருள். பாலஶப்தத்திற்குக் குழந்தைகள் என்று முக்கியப் பொருள் கூறமுடியாதாகையாலே, குழந்தைகளைப்போலே, யுக்திகளால் அடையப்படும் அறிவு முதிர்ச்சியிலலாதவர்கள் என்றே பொருளகொள்ள வேண்டும; நபண்டிதஶப்தம ஜ்ஞாநமேயிலலாதவர்களாய், இஷ்டப்படி திரிகின்றவர்களைக குறிப்பது இங்கு பொருந்தாதாகையாலே 'முழுவதையும் அறியாதவர்கள்' என்றே இங்கு பொருள் கொள்ளவேண்டும். பணடிதஶப்தம் "தஸ்மாத் ப்ராஹ்மண: பாண்டித்யம் நிர்வித்ய" [ப்ருஹ 5-5-9] [ஆகையால் அந்தணன் பாண்டித்யததை அடைந்து] முதலானவிடஙகளில் பிரஸித்தமானதாய், ஸதாசார்யனின அருளாலேயே கிடைப்பதான நிறைந்த அறிவையுடையவர்களைக குறிககிறதாகையாலே, நபண்டிதஶப்தம அததகைய நிறைநத அறிவில்லாதவர்களைக் காட்டுகிறது. பாலஶப்தம் யுக்திகளால் அடையப்படும அறிவுமுதிர்ச்சி இல்லாமையையும், நபண்டிதஶப்தம் முற்கூறிய நிறையறிவு இல்லாமையையும குறிககிறதாகையாலே புநருக்தியில்லை; வாக்யபேதம் செய்து பொருள்கொள்வதைக் காட்டிலும, ஏகவாக்யமாகவே கொண்டுபொருளுரைப்பதே சிறந்ததாகையாலே இப்படிப பொருள் கூறப்பட்டது; அபபடியல்லாமல் பகவத்கீதைவெண்பாவிற்போலே வாக்யபேதம் செய்து, "அறிவற்றவர்களே இவற்றை (பலனில்) வெவ்வேறுகக் கூறுவர்; அறிவாளிகள் அப்படிக் கூறமாட்டார்கள" என்று பொருள் கொணடாலும தாத்பர்யார்த்தம் இதுவேயாகும். இனி உத்தரார்த்தத்தாலே, இவ்விரு யோகங்களில் ஒன்றையே பற்றி நின்றாலும் இரண்டின் பலமான ஆத்மஸாக்ஷாத்காரத்தை அடைவான எனகிறான. (உபயோரேகமபி) இரண்டினுள் ஏதாவது ஒன்றையே. 'உபயோ:' என்றது நிர்த்தாரணே ஷஷ்டீ. (ஸம்யக ஆஸ்திதோऽபி) நன்கு அநுஷ்டிப்பவனும். 'ஸமயக் பலம்' என்று கூட்டி, நல்ல பலனான ஆத்மஸாக்ஷாத்காரததை என்று பொருள் கொள்ளவுமாம். (உபயோ: பலம்விந்ததே) இரண்டின் பலமான ஆத்மஸாக்ஷாத்காரத்தை அடைகிறான. இரண்டுககும் அவ்வாதம ஸாக்ஷாத்காரமே நேரே பலனாகிறதாகையாலே, இரணடில ஏதாவதொன்றை அநுஷ்டிததாலும அப்பலன கிடைக்கும் என்று கருத்து. 4.

॥भा॥ एतदेव विवृणोति—

यत्सांख्यैः प्राप्यते स्थानं तद्योगैरपि गम्यते।
एकं सांख्यं च योगं च यः पश्यति स पश्यति॥५॥

5. யத் ஸாங்க்₂யை: ப்ராப்யதே ஸ்த₂ாநம் தத்₃யோகை₃ரபி க₃ம்யதே।
ஏகம் ஸாங்க்₂யம் ச யோக₃ம் ச ய: பஶ்யதி ஸ பஶ்யதி॥

யத் ஸ்த₂ாநம்—*யாதொரு ஆத்மத₃ர்ஶநரூபமான பலம்,* ஸாங்க்₂யை:—*ஜ்ஞாநயோகநிஷ்டர்களால்,* ப்ராப்யதே—*அடையப்படுகிறதோ,* தத்—*அப்பலனே,* யோகை₃: அபி—*கர்மயோக₃நிஷ்டர்களாலும்,* க₃ம்யதே-*அடையப்படுகிறது;* ஸாங்க்₂யம் யோக₃ம் ச—*(இவ்வண்ணமாக ஒரே பலனை விளைப்பதாயிருக்கையாலே) ஜ்ஞாநயோகத்தையும், கர்ம யோகத்தையும்,* ஏகம்—*ஒன்ருக,* ய: பஶ்யதி—*எவன் காண்கிருனே,* ஸ: பஶ்யதி—*அவனே அறிவாளியாவான்.*

---

5. அறிவாராஞ் சாங்கியருக் காகுபயன் கன்மச்
செறிவாராம் யோகியர்க்குச் சேரும்—நெறியாலே
யொன்றெனவே சாங்கியமும் யோகமது முன்னினவ
னன்றெனவே கண்டா னலம்.

அறிவாராம் சாங்கியருக்கு—*ஜ்ஞாநயோகத்தில் நிற்கும் சாங்கியருக்கு,* ஆகு பயன்—*உண்டாகும் (ஆத்மத₃ர்ஶன மாகிற) பலன்,* கன்மச்செறிவாராம் யோகியர்க்குச் சேரும்—*கர்மயோகத்தில் ஈடுபடும் யோகிகளுக்கும் உண்டாகும்.* நெறியாலே ஒன்றெனவே—*(இவ்வண்ணமாகப்) பலத்தாலே ஒன்றுபட்டவை என்றே,* சாங்கியமும் யோகம் அதும் உன்னினவன்—*ஜ்ஞாநயோகத்தையும், கர்மயோகத்தையும் அறிந்தவன்,* நலம் நன்றெனவே கண்டான்—*உபாயபலங்களை உள்ளபடி உணர்ந்தவனுவான்.*

॥ भा ॥ साङ्ख्यैः—ज्ञाननिष्ठैः । यदात्मावलोकनरूपं फलं प्राप्यते, तदेव कर्मयोगनिष्ठैरपि प्राप्यते । एवमेकफलत्वेनैक—वैकल्पिकं साङ्ख्य

5 காமஜ்ஞாநயோகங்கள் இரண்டும் வெவ்வேறு பலனைக் கொடுப்பவையாகையாலே தனிப்பட்டவை என்று கூறுகிறவர்களை நிந்தித்தது சென்ற ஶ்லோகம். இவ்விரண்டு யோகங்களும் ஒரே பலனைக் கொடுப்பவையாகையாலே ஒன்றுபட்டவை என்று அறிகின்றவர்களைப் புகழ்வதன் மூலம் இந்த ஶ்லோகம் முற்கூறியதையே விவரிக்கின்றது. (ஸாங்க்₂யை:) ஜ்ஞாநயோக₃ நிஷ்டர்களாலே. இங்கு முன் பின் ப்ரகரணங்களில் ஸாங்க்₃ய யோக₃ மத நிஷ்டர்களைப்பற்றிய பேச்சேயில்லாமையாலே இங்குள்ள ஸாங்க்₂ய யோக₃ஶப்₃த₃ங்கள் அம்மதங்களைச் சேர்ந்தவர்களைக் கூறுகிறது என்று நினைக்க இடமேயில்லை என்று விளங்குகிறது. ஆகையால் முன் பின் ப்ரகரணங்களில் காமஸந்யாஸம் என்றும் காமயோகம் என்றும் கூறப்பட்ட ஜ்ஞாநயோகத்திலும் காமயோகத்திலும் நிலைநிற்பவர்களையே குறிக்கின்றன என விளங்குகிறது. ஸாங்க்₂யை: யோகை₃: என்று பன்மையில் படிக்கையாலே ஜ்ஞாந கர்மயோகங்களைக் குறிக்காமல் அந்த யோகங்களில் நிலைநிற்பவர்களைக் குறிப்பதே உசிதம் என்பதும் தெளிவு. ஸாங்க்₂ய ஶப்₃த₃ம் ஜ்ஞாநயோக₃நிஷ்டர்களைக் குறிப்பது எப்படியெனில் மூன்று விதமான வ்யுத்பத்திகளின் மூலம் இது ஜ்ஞாநயோக₃ நிஷ்டர்களைக் குறிக்கக்கூடும். (1) ஸங்க்₂யாஶப்₃த₃ம் 'க்₂யா ப்ரகத₂நே' என்னும் தா₄துவிலிருந்து தோன்றியதாகையாலே ப்ரகத₂நம் செய்யும் அறிவைக் குறிக்கிறது. இங்கு ப்ரகரணபலத்தாலே ஆத்மஜ்ஞானத்தைக் குறிக்கிறது. ஸாங்க்₂யஶப்₃த₃ம் ஆத்ம ஜ்ஞானஶாஸ்திரத்தைக் குறிக்கிறது. ஸாங்க்₂யா என்னும் பதம் அந்த ஶாஸ்திரத்தை அறிந்த ஜ்ஞாநயோக₃நிஷ்டர்களைக் குறிக்கும். (2) அன்றிக்கே, ஸங்க்₂யாஶப்₃த₃மே அறிவுமயமான ஜ்ஞாநயோகத்தைக் குறித்து அதில் நிலைநிற்பவர்களை ஸாங்க்₂ய ஶப்₃த₃ம் குறிக்கிறதென்றும் கொள்ளலாம். (3) அன்றிக்கே முற்கூறியபடி ஸங்க்₂யாஶப்₃த₃ம் ஜ்ஞானத்தையும் ஸாங்க்₂யஶப்₃த₃ம் ஜ்ஞாநமயமான ஆத்மாவையும் ஸாங்க்₂யாக்களென்று அவ்வாத்மாவை அறியும் ஜ்ஞாநயோக₃நிஷ்டர்களையும் குறிப்பதாகவும் கொள்ளலாம். (யத் ஸ்தா₂நம் ப்ராப்யதே) யாதொரு ஆத்ம த₃ர்ஶநரூபமான பலன் அடையப்படுகிறதோ ஜ்ஞாநயோக₃ நிஷ்டர்களுக்கென்று ஒரு லோகவிஶேஷத்தை அடையத்தக்கதாக

योगं च यः पश्यति, स पश्यति—स एव पण्डित इत्यर्थः ॥ ५ ॥

---

ஶாஸதிரஙகள கூறுமையாலே இஙகு ஸத₂ாநஶப₃த₃ம விநத₃தே ப₂லம என்ற முநதிய ஶலோகததிறபோலே ப₂லஜ்ஞச சொலலுகிறது என்றே கொளளவேணடும முனபின பரகரணஙகளில ஜ்ஞாநயோக₃ ப₂லமாகச செ லலபபடும ஆதமத₃ாஶநமே இஙகு ஸத₂ாந ஶபத₃த தால சொலலபபடுவதாகக கொளவதே உசிதம யத ஸாஙக₂யை பராபயதே ஸதா₂நம என்ற முதல பாததகின ஸதானததில யதே₃வ ஸாஙக யா பஶயநதி என்னும பாடம யாத₃வபரகாஶால ஆதரிககபபடடது அபபாடம மறற ப₄ாஷயகாராகளால ஆதரிக கபபடாமையாலே அதை ஏறகாமல பல பாஷயகாராகளால ஆதரிககபபடட பாடம இஙகு ஏறகபபடடது (தத யோகை₃ரபி க₃மயதே) அவவாதம ஸாக்ஷாதகாரரூபப₂லமே காமயோக₃ நிஷடட₂ாகளாலும அடையபபடுகிறது இஙகு யோக₃ஶப₃த₃ம முன பின பிரகரணஙகளையொட்டிக காமயோகததைக குறிததாலும ஜ்ஞாநயோக₃நிஷடடாகளுககுப பிரதிகோடியாக எடுககபபடுகை யாலே லக்ஷணையாலே காமயோகததில நிலைநிறபவாகளைக குறிககிறது என்று கொளளலாம அன்றிககே யோகை₃ என்னு மிடததில பரதயயவிஶேஷததாலேயே யோகமுடையவாகளான காமயோக₃நிஷடட₂ாகளைக குறிபபதாகவும கொளளலாம ஆக பூாவாாதத₄ததாலே காமஜ்ஞாநயோகஙகள இரணடுமே தனித தனியாக ஓரே பலனை அடைவிககககூடியவை என்று காடடப படடது இனி உததராாதத₄ததாலே இவவணணமாக அறிப வன புகழபபடுகிறான் — (ஸாஙக₂யம யோக₃ம ச ஏகம ய பஶயதி) ஜ்ஞாநயோகததையும காமயோகததையும இவவணணமாக ஓரே பலனை விளைககையாலே ஒன்றாக எவன அறிகிறானோ ஓரே ஶாஸதராாதத₂மாயிருககை முதலான காரணஙகளாலே ஜ்ஞாந காமயோகஙகளிரணடும ஒன்றாயிருபபதாகக கூறுவது பரமாண விருத₃த₄மாகையாலே ஶலோகததின முறபாதியில கூறபபடடபடி ஓரே பலனை விளைககையாலேயே இஙகு இரணடு யோகஙகளும ஒன்றெனக கூறபபடுவதாகக கொளளவேணடும இஙகு காம ஜ்ஞாநயோகஙகளிரணடும ஒன்று அஙகி₃யாகவும மறறொன்று அஙக₃மாகவுமிருபபவையலல இரணடும ஸமமாகச சோநது பலனை விளைபபவையுமலல ஆகையால இரணடும அதி₄காராநு கு₃ணமாகத தனித்தனியே அனுஷடிககபபடடு ஓரே பலனை விளைக ககககூடியவை என்று தேறுகிறது ஆக அநதநத அதி₄காரிகள

॥भा॥ इयान् विशेष इत्याह—

संन्यासस्तु महाबाहो दुःखमाप्तुमयोगतः।
योगयुक्तो मुनिर्ब्रह्म नचिरेणाधिगच्छति॥ ६॥

6. ஸந்யாஸஸ்து மஹாபா₃ஹோ து₃:க்க₂மாப்துமயோக₃த:।
யோக₃யுக்தோ முநிர் ப்₃ரஹ்ம நசிரேணாதி₄க₃ச்ச₂தி ॥

---

6. ஏலுந் துறவறிவிங் கெய்தவரி தாகுமுனே
கோலும்யோகத் தக்கருமங் கூடாமல்—மேலுந்தா
னுற்று னியோக முயர்முனிவன் றுழாமற்
பெற்றான் பிரமவுயிர்ப் பேறு.

---

தம் சக்தி, ருசி முதலானவற்றுக்கு அநுகு₃ணமாகக் கர்ம யோகத்தையோ, அல்லது ஜ்ஞாநயோக₃த்தையோ அநுஷ்டித்து ஆத்மஸாக்ஷாத்காரரூபமான ப₂லத்தைப் பெறலாம் என்றதாயிற்று. பக்தியோகத்தின் வகைகளான ப்₃ரஹ்மவித்₃யைகளின விஷயத்திலும் இவ்வண்ணமாக ஏதாவதொன்றை அநுஷ்டித்தாலே பலனைப் பெறுகையாலே விகல்பாநுஷ்ட்ட₂ானமே என்பதை "விகல்போऽவிஶிஷ்டப₂லத்வாத்" [ப்ரஹ்மஸூத்ரம் 3-3-57] [பலனில் வாசியில்லாமையாலே விகல்பாநுஷ்ட்ட₂ானமே தகும்] என்று ஸூத்ரகாரர் உணர்த்தினர். (ஸ: பஶ்யதி) முற்கூறியபடி ஜ்ஞாநகர்ம யோகங்களை ஒன்றாக அறிபவனே அறிவாளியாவான். முன் ஶ்லோகத்தில் ஜ்ஞாநகர்மயோகங்களை வெவ்வேறு பலன்களை விளைப்பவையாகக் கூறுகின்றவர்கள் 'நபண்டித₃ா:' என்று இகழப்பட்டனர்; இங்கு அவற்றை ஒரே பலனை விளைப்பவையாக அறிபவன் பண்டிதனாகப் புகழப்படுகிறான் என்று தேறுகிறது. அங்கு 'நபண்டி₃தா:' என்று பன்மையில் படிக்கையாலே அவ்வதி₄காரிகள் பலரென்றும், இங்கு 'ஸ பஶ்யதி' என்று ஒருமையில் படிக்கையாலே, 'ஒரொருவர் உண்டாகில் அத்தனைகாண்' [உபதேசரத்தினமாலை55] என்றவிடத்திற்போலே, இவ்வதி₄காரி தேடிக்கண்டு பிடிக்கவேண்டியவனாயிருப்பான் என்றும் உணர்த்தப்படுகிறது. 5.

**மஹாபாஹோ**—பெருங்கையனே! **ஸந்யாஸ: து**—ஜ்ஞாந யோகமோவெனில், **அயோகத:**—கர்மயோகத்தை முதலில் அநுஷ்ட்டிக்காமல், **ஆப்தும் து:க்கம்**—அடைய அரிதாகும்; **யோக யுக்த:**—கர்மயோகத்தை அநுஷ்ட்டிப்பவன், **முநி:**—(தானே) ஆத்மாவை மனனம்செய்து, **நசிரேண**—சிறிது காலத்திலேயே, **ப்ரஹ்ம**—பெரிதான ஆத்மாவை, **அதிகச்சதி**—எளிதில் அடைகிறான்.

---

**முனே கோலும் யோகத்து அக்கருமம் கூடாமல்**-(ஜ்ஞாந யோகத்திற்கு) முன்னதாகவே அவசியம் அனுஷ்டித்தாக வேண்டிய அக்கர்மயோகத்தை அநுஷ்டிக்காவிடில், **இங்கு**—இவ்வுலகில், **ஏலும் துறவறிவு**—தக்கதான ஜ்ஞாநயோகம், **எய்த அரிதாகும்**—அடைய அரிதாயிருக்கும்; **மேலும்**—இதற்குமேலே, **இயோகம் தான் உற்றான்**—கர்மயோகத்தை அநுஷ்டிப்பவன், **உயர்முனிவன்**—(தானே) ஆத்மாவை மனனம் செய்யும் உயர்முனிவனாகி, **பிரம உயிர்ப்பேறு**—பெரிதாகையாலே பிரமம் எனப்படும் ஆத்மாவைக் காண்கை யாகிற பலனை, **தாழாமல் பெற்றான்**—விரைவிலே அடைந்து விடுவான்.

---

6. இரண்டாம் ஶ்லோகத்தில் 'கர்மயோகமே சிறந்தது' என்று கூறப்பட்டது; சென்ற இரண்டு ஶ்லோகங்களில் இரண்டு யோகங்களில் எதை அநுஷ்ட்டித்தாலும ஆத்மஸாக்ஷாத்காரமாகிற பலனை அடைவதாகக் கூறப்பட்டது. பலன் ஒன்றாயிருக்கையில் கர்மயோகத்திற்குச் சிறப்பு எவ்வாறு? என்னும் கேள்விக்கு பதிலுரைக்கப்படுகிறது இங்கு. (ஸந்யாஸ: து) ஜ்ஞாநயோகமோ வெனில். "து" எனும் ஶப்தம் ஜ்ஞாநகர்மயோகங்களுக்குப் பரஸ்பரமுள்ள வாசியைக் காட்டுகிறது. (அயோகத: ஆப்தும் து:க்கம்) கர்மயோகத்தை முதலில் அநுஷ்ட்டிக்காமல் அடைய அரிதாகும்; கர்மயோகத்தை முதலில் அநுஷ்ட்டிக்காவிடில் முன் அத்தியாயங்களில் கூறியபடி மனப்பரிசுத்தி, இந்திரிய ஜயம் முதலானவை ஏற்படமாட்டாவாகையாலே, இவற்றை அபேக்ஷிக்கும் ஜ்ஞாநயோகத்தின் ஸ்வரூபமே ஸித்திக்காது என்று கருத்து. "ஶக்யமஞ்ஜலிபி: பாதும் வாதா:" [ரா-கி 28-8] என்றவிடத்தில்

॥भा॥ सन्यास'—ज्ञानयोगस्तु अयोगतः—कर्मयोगादृते प्राप्तुमशक्यः ; योगयुक्तः—कर्मयोगयुक्तः स्वयमेव मुनिः—आत्ममननशीलः सुखेन कर्मयोग साधयित्वा नचिरेण—अल्पेनैव कालेन ब्रह्माधिगच्छति—

---

வாதா பாதும ஶகயா எனறிலலாமல ஶகயம எனறிருபபது போல இஙகு ஸநயாஸ ஆபதும து3கக2ம எனறு பிரயோகிககப பட்டுளளது ஆக பூாவாாததததால காமயோகததை அநுஷடிககாமல ஜஞாநயோகததை அடையமுடியாது எனறு கூறுவதன மூலம ஜஞாநயோகம அடைதறகெளிதலல எனககாட்டபபடடது இனி உததராாத்த4ததால காமயோகம அடைவதிலும பலனை விளைபபதிலும எளிது எனககாடடபபடுகிறது (யோக3யுகத முநி) காமயோகததில ஈடுபடடவன அதிலடஙகிய ஆதமயாதா2தமய ஜஞானததைத தானே மனனம செயபவனுமான ஜஞாநயோகததை அபேக்ஷிககமாடடான ஆகையால காமயோகததோடு ஆதமஜஞானமும பெருமுயறசியிலலாமல இவனுககுத தனனடையே வநது சேரும எனறு கருதது (ப3ரஹம நசிரேண அதி4க3சச2தி) மிகுநத ஶரமபபடடு நீணடகாலததிறகுப பின பலனையும ஜஞாநயோக3 நிஷடனைபபோலலலாமல, இககாமயோக நிஷடன பெரியதாகையாலே பரஹமம எனபபடும ஆதமாவை விரைவிலேயே எளிதில பெறுவான ஜஞாநயோகம காமயோகததை எதிரபாாபபதுபோல காமயோகம ஜஞாநயோகததை எதிரபாராமையாலே காமயோக நிஷடன விரைவிலும எளிதிலும ஆதமஸாக்ஷாதகாரமாகிற பலனைப பெறுவான எனறு கருதது ஆதமஸாக்ஷாதகாரமே இவனுககுப பலனாகையாலே பரஹமஶபதம இஙகு பரமபொருளைக குறிககாமல பெரியதான ஆதமாவைக குறிககிறது ப3ரஹமஶபதததால ஸநயாஸததைக குறிககிறது எனறு சஙகரா பாஷயமிடடதும * ஸநயாஸ விஷயததில ப3ரஹமஶபதபரயோகமிலலாமையாலே பொருநதாது பரஹமததை அடைகிறான எனறதும இவனகைவலய நிஷடனலலாமையாலே ஆதமஸாக்ஷாதகாரததைப பெறுகிறான எனறே பொருளபடுகிறது சிரேண ந அதி4க3சச2தி எனறு அநவயிததால நெடுஙகாலமானாலும பரஹமததை அடையமாடடான எனறு

---

* நயாஸ இதி ப்3ரஹம எனனும ஶருதியை ஶஙகரா காடடியிருககிறாா அஙகு நயாஸஶப்3த3ம ஶரணாகதியையே குறிககிறது எனபது பரகரணஸித்3த4ம

आत्मानं प्राप्नोति। ज्ञानयोगयुक्तस्तु महता दुःखेन ज्ञानयोगं साधयति, दुःखसाध्यत्वादात्मानं चिरेण प्राप्नोतीत्यर्थः॥ ६॥

---

காமயோகத்திற்குச் சிறப்பைக் கூறும் ப்ரகரணத்திற்குப் பொருந்தாத பொருளும் தோற்றக்கூடுமாகையாலே நசிரேண என்றதை நைகம என்றாற்போலே ஸமஸ்தபதமாகக்கொண்டு விரைவிலேயே என்று பொருள்கொள்ளவேண்டும் ஆக கஷ்டப்பட்டு ஸாதிக்கத் தக்கதாகையாலே நீண்டகாலம் கழித்துப் பலனளிப்பது ஜ்ஞாநயோகமென்றும் எளிதில் ஸாதிக்கத்தக்கதாகையாலே விரைவிலேயே பலனளிப்பது காமயோகம் என்றும் இந்த ஶ்லோகத்தில் சொல்லப் பட்டது இப்படி ஜ்ஞாநயோகத்திற்குக் காமயோகத்தைக்காட்டிலும் சிறப்பைச் சொன்னால் ஏகம் ஸாங்க்₂யம் ச யோக₃ம் ச என்று இரண்டையும் ஒன்றாகச் சொன்ன ஶ்லோகத்தில் சொன்னது ஒட்டாதே எனில் இரண்டு யோகமும் தனித்தனியே ஆத்மத₃ர்ஶநமாகிற ஒரே பலனை விளைப்பதாகையாலே ஒன்றெனக் கூறியது சென்ற ஶ்லோகத்தில் ஜ்ஞாநயோகத்தைக்காட்டிலும் விரைவிலும் எளிதிலும் காமயோகம் பலனளிக்கிறது என்னும் சிறப்பு இங்குக் கூறப்படுகிறது ஆகையாலே விரோதமில்லை இப்படி ஜ்ஞாநயோகத்தைக் காட்டிலும் காமயோகம் விரைவிலும் எளிதிலும் பலனளிப்பதானால் எல்லோரும் அதையே கைக்கொண்டுவிடுவார்களாகையாலே ஜ்ஞாநயோகத்தை அநுஷ்டிப்பார் இல்லாகி அநுஷ்டிப்பாரின்மையால் ஏற்படும் அப்ராமாண்யம் அதற்கு ஏற்பட்டுவிடாதோ? எனில் காமயோகம் எளிதாகவும் விரைவில் பலனளிப்பதாகவுமிருந்தாலும் ஜ்ஞாந யோகத்தில் சக்தியுள்ளவனாய லோகஸங்க்₃ரஹஸ்தானத்திலிராத அப்ரஸித்₃த₄னான அதி₄காரி காமயோகத்திலிழியாமல் ஜ்ஞாந யோகத்திலேயே இழியவேண்டும் என்னும் நியமமிருப்பதால் ஜ்ஞாநயோகத்திற்கு அநுஷ்டிப்பாரின்மையால் ஏற்படும் அப்ராமாண்யம் ஏற்படாதாகையாலே எக்குறையுமில்லை (மஹாபா₃ஹோ) பெருமைபெற்ற கையை உடையவனே! இருகைகளாலும் அம்புவிடவல்ல ஸவ்யஸாசியாய வில்வீரர்களில் தலைவனாக லோகப்ரஸித்திபெற்றவனாகையாலே லோகஸங்க்₃ரஹஸ்தா₂னத்திலிருக்கும் நீ ஜ்ஞாநயோகத்தில் சக்தியுடையவனாயிருந்தாலும் காமயோகத்தையே அநுஷ்டிக்கவேண்டும் ஆகையால் அஸத்₃ருஶஸ்நேஹகாருண்யத்தையும் த₄ர்மாத₄ர்மப₄யத்தையும் கைவிட்டுப் போர் புரியவேண்டும் என்று கருத்து 6

योगयुक्तो विशुद्धात्मा विजितात्मा जितेन्द्रियः।
सर्वभूतात्मभूतात्मा कुर्वन्नपि न लिप्यते ॥ ७ ॥

**7. யோகஃயுக்தோ விஶுத்ஃதாத்மா விஜிதாத்மா ஜிதேந்த்ஃரிய: ।**
**ஸர்வபூஃதாத்ம பூஃதாத்மா குர்வந்நபி ந லிப்யதே ॥**

**யோகஃயுக்த:** — *கர்மயோகத்தை அநுஷ்டிப்பவனாய்.* **விஶுத்ஃதாத்மா** — *(அதனாலேயே) பரிசுத்திபெற்ற நெஞ்சை உடையவனாய்.* **விஜிதாதமா** — *(அதனாலேயே) எளிதில் ஜயிக்கப்பட்ட மனத்தையுடையவனாய்.* **ஜிதேந்த்ஃரிய:** — *(அதனாலேயே) இந்த்ரியங்களை ஜயித்தவனாய்.* **ஸர்வபூஃதாத்ம பூஃதாத்மா** — *தேவர் மனிதர் முதலான எல்லா பூதங்களுடைய ஆத்மாக்களோடு ஸமாநாகாரமாயிருக்கையாலே ஒன்றாக அநுஸந்திக்கப்பட்ட தன் ஆத்மாவையுடையவனாயிருப்பவன.* **குர்வந் அபி** — *எல்லாக் கர்மங்களையும் அநுஷ்ட்டித்து வந்த போதிலும்,* **ந லிப்யதே** — *சரீராத்ம மயக்கம் முதலானவற்றால் கட்டப்படுவதில்லை.*

---

**7. ஒன்றியயோ கத்தா லுளந்தெளிந்து தன்வசமாய்**
**வென்றுபுல னெவ்வுயிரு மேவினனாய்—நின்றவவ**
**னெல்லாக் கருமமியற்றிலு மப்பயன்கள்**
**செல்லா வவனிடையிற் சேர்ந்து.**

**ஒன்றிய யோகத்தால்** — *(தன்னால்) அநுஷ்ட்டிக்கப்படும் கர்மயோகத்தால்.* **உளம் தெளிந்து** — *பரிசுத்திபெற்ற நெஞ்சை உடையவனாய்.* **உளம் தன்வசமாய்** - *(அதனாலேயே) உள்ளத்தைத் தன்வசப்படுத்தினவனாய்.* **புலன்வென்று** - *(அதனாலேயே) எல்லா இந்திரியங்களையும் வெற்றிகொண்டவனாய்.* **எவ்வுயிரும் மேவினனாய் நின்ற அவன்** — *தேவர் மனிதர் முதலான சரீரங்களிலுள்ள எல்லா உயிர்களோடும் ஸமாநாகாரமாயிருக்கையாலே தன் உயிரை அவற்றோடு ஒன்றாக அநுஸந்திப்பவனாய் நிற்பவன்.* **எல்லா கருமம் இயற்றிலும்** — *எல்லாக் கருமங்களையும் அநுஷ்டித்து வந்தாலும்.* **அப்பயன்கள்** — *அக்கர்மங்களின் பலன்கள்.* **அவனிடையில் சேர்ந்து செல்லா** — *அவனிடத்தில் ஒட்டியிருக்கமாட்டா.*

॥भा॥ कर्मयोगयुक्तस्तु शास्त्रीये परमपुरुषाराधनरूपे विशुद्धे कर्मणि वर्तमानः तेन विशुद्धमनाः विजितात्मा स्वाभ्यस्ते कर्मणि व्यापृतमनस्त्वेन सुखेन विजितमनाः, तत एव जितेन्द्रियः, कर्तुरात्मनो

---

7. இதுவரையில் கர்மயோகம ஜ்ஞாநயோகத்தைககாட்டிலும செயற்பெளிதாகவும், விரைவில பலனளிப்பதாகவுமிருப்பது என்று காட்டப்பட்டது; இந்த ஶ்லோகம் இதற்குக் காரணத்தை விளக்குகிறது. (யோக₃யுக்த:) கர்மயோகத்தை அனுஷ்டிப்பவன. (விஶுத்₃த₄ாத்மா) பரிசுத்திபெற்ற மனததையுடையவன். முன் பதத்தில கூறியபடி சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டதாய், பரம புருஷனுக்கு ஆராத₄னமாயிருப்பதான பரிசுத்தமான கர்மத்தை அநுஷ்டிப்பவனுகையாலே பரமபுருஷனுடைய அருளாலே பரிசுத்திபெறற மனத்தையுடையவனுகிருன இவன் என்று கருத்து. மனத்திற்கு இங்கு சொலலப்படும பரிசுத்தியாவது எனனவெனில,– ரஜஸ்தமோகுணஙகள் நீங்குதலும், அவற்ருல் ஏற்படும ராக₃ம (சப்தாதிவிஷயங்களில் பற்று), துவேஷம் (அவ்விஷயஙகளின் அநுபவத்தைத் தடுப்பாரிடம வெறுப்பு) முதலான தோஷங்கள் நீங்குதலும் இஙகு பரிசுத்தியெனப்படுகிறது. (விஜிதாத்மா) முன் பதத்தில் கூறியபடி பரிசுததிபெற்ற மனத்தையுடையவனுகையாலே வெல்லப்பட்ட மனத்தை உடையவன். மனமானது பள்ளமடையான ஶப்₃த₃ாதி₃விஷயங்களில் ஈடுபடுவதை இயல்வாக உடையது; அதை நல்லவிஷயங்களில் ஈடுபடச்செய்வதன்மூலமே அவ்வியல்வைப் போக்கமுடியும். ஜ்ஞாநயோகம் நல்லவிஷயமானுலும் பழகிப்போநத தல்லாமையாலே அதில் மனத்தை ஈடுபடுத்துவது அரிது; கர்மமோ பழகிப்போந்ததாகையாலே அதில் மனத்தை ஈடுபடுத்துவது எளிது; ஆகையால் நல்ல விஷயமான கர்மயோகததில் மனத்தை ஈடுபடுத்துகிறவன், தாழ்ந்த விஷயங்களினின்றும எளிதில் அதைத் திருப்பி வெற்றிகொள்கின்ருன என்று கருதது. அடுத்துளள பதததில் இந்திரியங்களை வெற்றிகொள்வதைப்பற்றிப்பேசுகையாலே; அதற்கு முன இருபதங்களிலுமுள்ள ஆத்மஶப்₃த₃ம் கீதையில் மற்றும் பலவிடங்களிற்போலே இந்திரியங்களை நியமிக்கும மனத்தைக குறிப்பதே பொருத்தமுடையது; வெல்லவேண்டியவைகளில் முக்கியமான மனத்தை ஜயிப்பதைக்கூறவேண்டியது முககியமாகையாலும், கீதையில மனத்தைக்குறித்தே ஆத்மஶப்₃த₃ம் பலவிடங்களில்

याथात्म्यानुसन्धाननिष्ठतया सर्वभूतात्मभूतात्मा सर्वेषा देवादिभूतानाम् आत्मभूत आत्मा यस्यासौ सर्वभूतात्मभूतात्मा, आत्मयाथात्म्यमनु-सन्दधानस्य हि देवादीना स्वस्य चैकाकार आत्मा, देवादिभेदाना

பிரயோகிககபபடடிருககிறதாகையாலும விஜிதாதமா எனறதறகு விஜித தே₃ஹ எனறு சஙகரா வியாககியானம செயதது சுவையுடையதனறு இனி இநதிரியஙகளுககு மூலஸத₂ானமான மனம இவவணணமாக ஜயிககபபடடுவிடடபடியாலே அதனால நியமிககபபடும மறற இநதிரியஙகளும தனனடையே ஜயிககபபடடவையாகினறன எனறு காடடுகிறது அடுதத பதம—(ஜிதேநத₃ரிய) மெய வாய கண மூககு செவி எனனும ஞானேநதிரியஙகளையும வாக பாணி பாத₃பாயூபஸத₂ஙகளாகிற காமேநதிரியஙகளையும வெனறவன ஆக முறபாதியாலே காமயோகததின செயறகெளிமைககும விரைவில பலனளிககும தனமைககும இநதிரியமனஙகளை எளிதில ஜயிபபதே காரணம எனறு காடடபபடடது இனி காமமானது தே₃ஹாதமாபி₄மானம முதலானவறறை விளைதது இவனை ஸமஸாரியாககிவிடுமே எனனும ஐயம பிறபாதியாலே தவிரககபபடுகிறது (ஸாவபூ₄தாதமபூ₄தாதமா)தேவா திரயக முதலான எலலா பூ₄தஙகளுடைய ஆதமாககளோடு ஸமாநாகாரமாயிருககையாலே ஒனருக அநுஸநதிககபபடட தன ஆதமாவை உடையவனாயிருபபவன ஸாவபூ₄தஙகளுககும ஆதமாவாயிருககும பரமாதமாவைத தானும ஆதமாவாக உடையவன எனறு பொருள கொளவது ஜீவாதமயாத₂ாதமயாநுஸநத₄ான பரகரணததிறகுப பொருநதாது ஸாவபூ₄தஙகளிலும உளள ஆதமாவே தனனிடமும உளள ஆதமா எனறு ஸவரூபைகயததைக கூறி ஏகாதமவாத₃ததை விதிபபதாககக கொளளலாகாதோ? எனில ஆதமாககளின ஸவரூபைகயம பரதயக்ஷம அநுமானம ஶாஸதரம கீதையின முனபின பரகரணஙகள ஆகிய அனைததுககும முரணபடடது ஆகையால ஒரே ஆகாரததை உடைததாயிருககையாலே எலலா ஆதமாககளும ஒனருக அநுஸநதிககபபடுவதாகவே இநத பொருள கொளளவேணடும மறற வீடுகளிலுளள சமபாநெலலே நமமகததிலுமுளளது எனறு ஒருவன கூறினால அவவிடததில ஸவரூபைகயம தோறறுமல எலலா வீடுகளிலுமுளள நெறகளின ஏகாகாரதவமே தோறறுவது போலே இஙகும எலலா தேஹஙகளிலுமிருககும ஆதமா ஒனறே எனறு கூறியிருபபதறகு எலலா ஆதமாககளும ஒரே ஆகா

प्रकृतिपरिणामविशेषरूपतयाऽऽत्माकारत्वासंभवात् । प्रकृतिवियुक्तस्सर्वत्र देवादिदेहेषु ज्ञानैकाकारतया समानाकार इति * निर्दोषं हि समं ब्रह्म (२९)

ரத்தை உடையவையே.' என்றே பொருள்கொள்ளவேண்டும். இதன்மேல் பின்வருமாறு மற்றோர் ஆக்ஷேபம் எழுகின்றது,— தேவர் திர்யக் முதலான யோநிபேதத்தையும், ப்ராம்மணன் க்ஷத்ரியன் முதலான வர்ணபேதத்தையும், ப்ரஹ்மசாரி க்ருஹஸ்த₂ன் முதலான ஆஶ்ரமபேதத்தையும், பண்டிதன் அபண்டிதன் முதலான ஜ்ஞாநபேதத்தையும், சக்தியுடையவன் சக்தியற்றவன், பணக்காரன் ஏழை, முதியவன் இளையவன் முதலான மற்றும் பலவகையான கணக்கற்ற பேதங்களையும் உடைய ஆத்மாக்களை ஒன்றாக அநுஸந்திப்பது ப்ரத்யக்ஷாநுமானங்களுக்கும் "ப்₃ராஹ்மணோ யஜேத" [ஶதபத₂ ப்₃ராஹ்மணம் 5-1-5-2] [ப்ராஹ்மணன் யாகம் செய்யக்கடவன்] எனத்தொடங்கி வெவ்வேறுபட்டதாகவே ஆத்மாக்களைச் சொல்லும் சாஸ்திரங்களுக்கும் முரண்பட்டதாயிற்றே என்பது அவ்வாக்ஷேபம்; அதற்குப் பரிஹாரமாவது,— முற்கூறிய தேவர் திர்யக் முதலான வேற்றுமைகள் ஆத்மாக்களிடையே இருப்பது உண்மையே; ஆயினும் அந்தபேதங்கள் கர்மம் காரணமாக ஏற்பட்ட ப்ரக்ருதி பரிணாமமான சரீரங்களின் பேதங்களால் ஏற்பட்டவையேயொழிய ஆத்மஸ்வரூபத்திற்கு இயல்வாக ஏற்பட்டவையல்ல. ஆகவிப்படி தேஹபேதத்தால் ஏற்பட்ட இந்த பேதங்கள் ஆத்மாகாரமாகமாட்டாவாகையால், ஆத்மயாதா₂த்ம்யத்தை அநுஸந்திப்பவன் தேவாதிகளுக்கும் தனக்கும் உள்ள ஆத்மாக்களினுடைய ஸ்வரூபம் ஜ்ஞாநாநந்தமயமாய் ஒன்றாகவே உள்ளது என்று நினைப்பதில் குறையில்லை. "நிர்தோ₃ஷம் ஹி ஸமம் ப்₃ரஹ்ம" [5-19] என்று தொடங்கி இவ்வத்தியாயத்திலேயே தே₃வாதி₃ சரீரங்களினுள் அந்த சரீரஸம்பந்தத்தை நீக்கிப்பார்த்தால் ஆத்மாக்கள் அனைவரும் ஞானாகாரமாகவேயிருப்பதால் ஸமமானவரே என்று சொல்லப்படுகிறதும் இப்பொருளே இங்கு பொருத்தமானது என வலியுறுத்துகிறது. இனி, இப்படி ஆத்மாக்களை ஒருபடிப்பட்டதாக அநுஸந்திப்பவன் தேஹாத்மமயக்கம் முதலானவற்றாலே ஸ்பர்ஶிக்கப்படமாட்டான் என்று விதிக்கிறது கடைசிப்பாதம்,— (குர்வந்நபி ந லிப்யதே) கர்மயோகநிஷ்டனும், ஜ்ஞாநயோக₃நிஷ்ட₂னைப் போலே தேஹாத்மமயக்கம் முதலானவற்றால் தொடப்படமாட்டான். இத்தொடருக்கு, 'நிஷித்₃த₄கர்மங்களை அநுஷ்டித்தாலும்

इत्यनन्तरमेव वक्ष्यते। स एवंभूतः कर्म कुर्वन्नपि अनात्मन्यात्माभिमानेन न लिप्यते–न संबध्यते। अतोऽचिरेणात्मानं प्राप्नोतीत्यर्थः ॥ ७॥

॥ भा ॥ यतस्सौकर्याच्छैघ्र्याच्च कर्मयोग एव श्रेयान्, अतस्तद्-पेक्षितं श्रृणु—

नैव किञ्चित्करोमीति युक्तो मन्येत तत्त्ववित्।
पश्यञ्श्रृण्वन् स्पृशन् जिघ्रन्नश्नन् गच्छन् स्वपञ्श्वसन् ॥ ८॥

प्रलपन् विसृजन् गृह्णन्नुन्मिषन्निमिषन्नपि।
इन्द्रियाणीन्द्रियार्थेषु वर्तन्त इति धारयन् ॥ ९ ॥

8. நைவ கிஞ்சித் கரோமீதி யுக்தோ மந்யேத தத்வவித்।
பச்யந் ச்ருண்வந் ஸ்ப்ருசந் ஜிக்₄ரந்
அச்நந் க₃ச்ச₂ந் ஸ்வபந் ச்வஸந் ॥

---

அவற்றின பயனை அடையமாட்டான்' எனறு பொருள்கொண்டால் பல சாஸ்திரவசனங்கள் விரோதிக்கும். 'கர்மயோகத்தை அநுஷ்டித்தாலும் அதனுல் தொடப்படுவதில்லை' எனறு பொருள்கொண்டால் கர்மயோகத்தை அநுஷ்டிப்பதால் பயனில்லாமற்போகுமாகையாலே அதை அநுஷ்டிக்காமலேயிருக்கவேண்டிவரும். ஆகையால், ஜ்ஞாநயோகநிஷ்டனைப்போலே, கர்மயோகநிஷ்ட்டனும் ஆத்மஸாக்ஷாத்காரமாகிற பயனுக்கு விரோதி₄யான தேஹாத்மமயககம் முதலானவற்ருல் தொடப்படுவதில்லை எனறே பொருளகொள்ள வேண்டும். (ந லிப்யதே) ஆத்மாவல்லாததான தேஹம் முதலானவற்றை ஆத்மாவென அபி₄மானிப்பது முதலான தோஷங்களின் வாஸனைகூட இவனை அண்டுவதில்லை என்று கருத்து. 'நைவ கிஞ்சித் கரோமி' என்று தொடங்கும அடுத்த இரண்டு ச்லோகங்களில் இது விவரிக்கப்படுகிறது. "இப்படி ஆத்மஸாக்ஷாத்கார விரோதி₄கள் இவனையும் அண்டுவதில்லையாகையாகையாலே ஜ்ஞாந யோகநிஷ்ட்டனைப்போலே இவனும் ஆத்மஸாக்ஷாத்காரத்தைப் பெறுகிருன்; பூர்வார்த்த₄த்தில் சொன்ன ஹேதுக்களாலே எளிதிலும் விரைவாகவும் பெறுகிருன் என்பது இவனுக்குள்ள சிறப்பு" எனபது இந்த ச்லோகத்தின் திரண்ட பொருள். 7.

9. ப்ரலபந் விஸ்ருஜந் க்₃ருண்ஹந் உந்மிஷந் நிமிஷந்நபி।
இந்த்₃ரியாணீந்த்₃ரியார்த்தே₂ஷு வர்த்தந்த இதி
தா₄ரயந்॥

தத்வவித்-ஆத்மாவை உள்ளபடி அறிந்தவனை, யுக்த:- கர்மயோகநிஷ்ட்டன், பஶ்யந்—கண்ணாலே உருவத்தைக் கண்டாலும், ஶ்ருண்வந்—காதாலே சப்தத்தைக் கேட்டாலும், ஸ்பருஶந்—த்வகிந்திரியத்தாலே ஸ்பர்ஶத்தை உணர்ந்தாலும், ஜிக்₄ரந்—மூக்காலே நாற்றத்தை மோந்தாலும், அஶ்நந்—நாக்காலே சுவையை உணர்ந்தாலும், க₃ச்ச₂ந்—காலாலே நடந்தாலும், ஸ்வபந்—தூங்கினாலும், ஶ்வஸந்—மூச்சுவிட்டாலும், ப்ரலபந்—வாக்காலே பேசினாலும், விஸ்ருஜந்—பாயூபஸ்தங்களாலே மலமூத்ராதிகளை விட்டாலும், க்₃ருண்ஹந்—கையாலே எடுத்தாலும், உந்மிஷந—கண்களைத் திறந்தாலும், நிமிஷந் அபி-கண்களை மூடினாலும், இந்த்₃ரியார்த்தே₂ஷு-இந்திரியங்களுக்கு விஷயமான சப்தம் முதலானவற்றில, இந்த்₃ரியாணி—அந்தந்த இந்திரியங்களே, வர்த்தந்தே—ஈடுபடுகின்றன. இதி—என்று, தா₄ரயந்—உறுதிகொண்டவனாய், 'அஹம்—நான், கிஞ்சித்—(இங்கு கூறப்படும் இந்திரிய வ்யாபாரங்களில்) எதையுமே, நைவ கரோமி—செய்கின்றேனல்லேன்', இதி—என்று, மந்யேத—எண்ணக்கடவன். (கர்த்ருத்வத்தை இந்திரியங்களில் ஏறிட்டுத் தன்னை அகர்த்தாவாக அநுஸந்திக்கக்கடவன் என்று கருத்து.)

---

8. காட்சிமுத லைந்தின் கதிகண் டுயிலுயிர்த்தன்
மாட்சியுரை மற்றவையும் வன்புலன்க—ளாட்சியினிற்
றம் பயனிற் செல்லுமெனத் தான்மதித்து யானியலே
னென்பதறி வான்யோகி யிங்கு.

இங்கு யோகி—இவ்வுலகில் கர்மயோகத்தைச் செய்பவன், காட்சி முதல் ஐந்தின் கதி—கண்ணால் காண்பது, காதால் கேட்பது, மூக்கால் முகர்வது, நாவால சுவைப்பது, மெய்யால் ஸ்பர்ஶிப்பது என்னும் ஐந்து ஞானேந்திரிய

॥ भा ॥ एवमात्मतत्त्ववित् श्रोत्रादीनि ज्ञानेन्द्रियाणि, वागादीनि च कर्मेन्द्रियाणि, प्राणाश्च स्वविषयेषु वर्तन्त इति धारयन्—अनुसन्दधानो

---

வ்யாபாரங்கள். **கண் துயில் உயிர்த்தல்**—கண்ணை மூடுவது திறப்பது - தூங்குவது மூச்சுவிடுவது - ஆகிய ப்ராணவ்யாபாரங்கள். **மாட்சியுரை மற்றவையும்**—அழகாகப் பேசுவது முதலான கர்மேந்திரிய வ்யாபாரங்கள் ஆகியவற்றின் மூலம், **வன் புலன்கள்**—வலிமைமிக்க இந்திரியங்கள். **ஆட்சியினில் தம் பயனில்**—தமக்குரிய விஷயங்களில். **செல்லும்**—ஈடுபடுகின்றன. **என**-என்று. **தான் மதித்து**-தான் உறுதி கொண்டவனாய். **'யான இயலேன்' என்பது அறிவான்**—இவ்விஷயங்களில் நான ஈடுபடுகின்றேனல்லேன் என அநுஸந்திப்பான.

---

8-9. ஜ்ஞாநகர்மயோகங்களில் எது சிறந்தது என்னும் அர்ஜுனனின கேள்விக்கு யுக்தியுடன் கூடிய பதில் இதுவரையில் உரைக்கப்பட்டது; இனி, சிறந்ததான இக்கர்மயோகத்தையே அநுஷ்டிககவேணடும எனனும ருசியும, அதற்கு உறுப்பானவற்றைக் கேட்கவேண்டுமென்னும் விருப்பமும அர்ஜுனனுக்கு உண்டானதை அறிந்து, செயற்கெளிமையாலும், விரைவில் பலனளிக்கும தன்மையாலும் சிறந்ததென இதுவரையில் நிரூபிக்கப்பட்ட கர்மயோகத்திற்குறுப்பானதொனறைக் கூறத்தொடங்குகிறுன. (யுக்த:) கர்மயோகநிஷ்டன். (தத்வவித) அக்கர்மயோகத்திலடங்கியதாய், ஆதமாவைப் பற்றியதான உண்மையறிவை உடையவன். இனி, ஜ்ஞாநகர்மேந்திரியங்களின தொழில்களும், ப்ராணவ்யாபாரங்களும் முதல் ஶ்லோகத்தின பிற்பாதியாலும், இரண்டாம ஶ்லோகததின் முற்பாதியாலும் எடுக்கப்படுகினறன. இரண்டாம் ஶ்லோகத்தின் முற்பாதியின் கடைசியிலுள்ள அபிப்ராயத்தை 'ஶ்ருண்வந்' என்று தொடங்கியுள்ள பதினமூன்று பதங்களிலும் அந்வயித்துக்கொள்ளவேண்டும். இவற்றில் (பஶ்யந்) என்று கண்ணுல் காண்பதையும, (ஶ்ருண்வந்) என்று காதால் கேட்பதையும, (ஸ்ப்ருஶந்) எனறு த்வக்கால் தொடுவதையும, (ஜிக்₄ரந்) என்று மூக்கால் முகர்வதையும, (அஶ்நந்) என்று நாவால சுவைப்பதையும கூறுகையாலே மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து ஞானேந்திரியங்களின் தொழில்கள் உணர்ததப்பட்டன. (க₃ச்ச₂ந்) என்று காலால்

நடப்பதையும், (ப்ரலபந்) என்று வாக்கால் பேசுவதையும், (விஸ்ருஜந்) என்று பாயூபஸ்த₂ங்களால் மலமூத்ராதி₃களை விடுவதையும, (க்₃ருண்ஹந்) என்று கையினால் எடுப்பதையும் கூறுகையாலே, கர்மேந்திரியங்களின தொழில்கள கூறப்படுகின்றன.

"பாயூபஸ்தே₂ விஸர்க்கா₃ர்த்த₂மிந்த்₃ரியே துல்யகர்மணீ |
விஸர்க்கே₃ ச புரீஷஸ்ய விஸர்க்கே₃ சாபி₄காமத: ||"
[பார-மோக்ஷதர்மம்]

[பாயுவும், உபஸ்த₂மும் விஸர்ஜனமாகிற ஓரே கர்மத்தின் பொருட்டு ஏற்பட்ட புலன்கள்; மலவிஸர்ஜனததிற்குப்பாயுவும, காமவிஸர்ஜனத்திற்கு உபஸ்தமும் ஏற்பட்டவை] என்று பாரதத்தில் பாயூபஸ்தங்களை விஸர்ஜனமாகிற ஓரே கர்மத்தைச் செய்பவையாகக் கூறப்பட்டதையொட்டி 'விஸ்ருஜந்' எனனும் பதத்தாலே அவையிரண்டின கார்யம் எடுக்கப்பட்டது. இனி, 'ஸ்வபந்' 'ஶ்வஸந்' 'உந்மிஷந்' 'நிமிஷந்' என்னும் நாலு பதங்களால் ப்ராணவ்யாபாரங்கள் எடுக்கப்படுகின்றன. (ஸ்வபந்) என்று கூறப்படும் தூக்கம தமோகுணத்தின் கார்யமாகிலும், அது ப்ராணனுககு வசப்பட்டதாகையாலே ப்ராணவ்யாபாரமாகிறது. 'ஶ்வஸந்' எனறு பஞ்சப்ராணனகளில் 'ப்ராணன்' என்னும் முதல் ப்ராணனின் தொழிலான மூச்சுவிடுதல் கூறப்படுகிறது; 'உந்மிஷந்' 'நிமிஷந்' எனறு வ்யானன்' எனனும் பெயருடைய ப்ராணனின தொழிலான கண்திறத்தலும் மூடுதலும் கூறப்படுகினறன. "தத₃பாநேந அஜிக்₄ருக்ஷத் தத₃ாவயத் ஸ ய ஏஷோऽந்நஸ்ய க்₃ரஹோ யத்₃வாயு:" [ஐதரேய 1-3-10] என்று ஶ்ருதியில அந்நக்ரஹணம அபாநவாயுவின காரியமாகக் கூறப்படுகையாலே, 'க்₃ருண்ஹந்' எனனும் பதம் கையின் தொழிலைக்குறிப்பதோடு அபாநவாயுவின தொழிலையும் (தந்த்ரேண) குறிக்கிறது. இவை மற்ற ப்ராணனகளின் தொழில்களுக்கும் உபலக்ஷணம் ஆக, இப்பதின்மூன்று பதங்களாலும ஜ்ஞாநகர்மேந்திரியவ்யாபாரங்களும் பஞ்சப்ராணவ்யாபாரங்களும உணர்த்தப்பட்டன. இனி, இரண்டாவது ஶ்லோகத்தின் பிற்பாதியாலும், முதல் ஶ்லோகத்தின முற்பாதியாலும இந்த இந்த்₃ரியாதி₃வ்யாபாரங்கள் பற்றி இவன எப்படி அநுஸந்திககவேண்டும் என விதிக்கப்படுகிறது,— (இந்த₃ரியாணி இந்த்₃ரியார்த்தே₂ஷு வர்த்தந்தே இதி த₄ாரயந்) அந்தந்த இந்திரியங்களும், ப்ராணனகளும் தத்தம் விஷயங்களிலே ஈடுபடு

नाहं किंचित्करोमीति मन्येत; ज्ञानैकस्वभावस्य मम कर्ममूलेन्द्रियप्राण-संबन्धकृतमीदृशं कर्तृत्वं न स्वरूपप्रयुक्तमिति मन्येतेत्यर्थः ॥ ८ ॥ ९ ॥

---

கின்றன என்று உறுதிகொண்டு. உபநிஷத்துக்களில ப்ராணஸம் வாதம முதலானவிடங்களில் எல்லா இந்திரியங்களுடைய ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்குக் காரணமாகக கூறப்பட்ட முக்₂யப்ராணனையும் இந்தரியஶபதம அஜஹல்லக்ஷணையாலே காட்டுகிறது 'இந்த்₃ரி யார்த்தே₂ஷு' என்னும ஶப்தமும் ஶப்தாதிவிஷயங்களைக்காட்டுவ தோடு பராணவிஷயங்களையும அஜஹல்லக்ஷணையாலே காட்டு கிறது. (நைவ கிஞ்சித்கரோமீதி மந்யேத) அந்தந்த இந்திரியங் களும் ப்ராணனகளும் த த்த ம விஷயங்களில ஈடுபடுமித்தனை யொழிய, நான இச்செயல்களில் ஒன்றையும செயகின்றேனல்லேன் என்று நினைக்கக்கடவன. இவ்விடத்தில் ஓராக்ஷேபம எழுகின்றது.— "கர்த்தா ஶாஸ்த்ரார்த்த₂வதத்வாத்" [ப்ரஹ்மஸூத்ரம் 2-3-33] [சாஸ்திரங்களிலுள்ள விதி₄நிஷேத₄ங்கள் பயனுடையவையாவதற் காக ஜீவனைக் கர்த்தாவாக-ஒப்புககொள்ளவேண்டும] என்று ஆதமாவுக்கே கர்த்ருத்வம் சொல்லப்பட்டுள்ளது; இந்திரியங்கள் கர்த்தாவான ஜீவனுக்குக்கரணங்களாகக் கருதப்படுகின்றனவே யொழியக் கர்த்தாவாகக கருதப்படுவதில்லை; அப்படியிருக்கும போது, கரணஙகளான இந்திரியங்களைக் கர்த்தாவாகவும, கர்த்தா வான தனனைக் கர்த்ருத்வமற்றவனாகவும் அநுஸந்திப்பது ப்₄ரம மன்றோ? எனபது ஆக்ஷேபம. இதற்கு ஸமாதானம் பின்வருமாறு,— இங்கு தனக்குக் கர்தருத்வமில்லை, இந்திரியங்களுக்கே உள்ளது என்று கூறியதற்குக் கருத்தொன்று உண்டு. ஞானமே வடிவெடுத்த எனக்குப் புணயபாபரூபமான இத்தகைய கர்தருத்வம கர்மம் காரணமாக ஏறபட்ட இந்திரியபராணனகளுடைய ஸமபந்தத்தினால் உண்டானதேயொழிய இயல்வாக உண்டானதல்ல எனபதே இங்கு விதிககபபடும் அகர்த்ருத்வாநுஸந்தானத்தின் ஸாரமான கருத் தாகும். "கர்த்தா ஶாஸ்த்ரார்த்த₂வத்வாத்" முதலானவற்றில் ஜீவனுக்குச் சொலலப்படும சரீரேந்த்₃ரியங்களை அதி₄ஷ்டித்து நிறகையாகிற கர்தருத்வம் இங்கு நிஷேதிககப்படவுமில்லை, அதத கைய கர்த்ருத்வம் கரணஙகளான இந்திரியங்களுககு விதிக்கப் படவுமில்லை; ஆகையாலே எக்குறையுமில்லை—என்பது ஸமாதா₄நம். இங்கு, 'தததவித்' என்று நிருபாதி₄கஸ்வரூபத்தை அறிந்தவனுடைய அநுஸந்தானததைப்பற்றிக்கூறப்படுகிறதேயொழிய, "கார்யகாரண" [கீதை 13-20] என்று தொடங்கும் ஶ்லோகததிற்போலே சேதநா சேதநங்களின தொழில்களின பிரிவுகள் கூறப்படவில்லை எனபது முக்கியமாகக் குறிக்கொள்ளத்தக்கது. 8-9.

ब्रह्मण्याधाय कर्माणि सङ्गं त्यक्त्वा करोति यः।
लिप्यते न स पापेन पद्मपत्रमिवाम्भसा॥१०॥

10. ப்₃ரஹ்மண்யாத₄ாய கர்மாணி ஸங்க₃ம் த்யக்த்வா கரோதி ய:।
லிப்யதே ந ஸ பாபேந பத்₃மபத்ரமிவாம்ப₄ஸா॥

ய:—*எவனொருவன்.* ப்₃ரஹ்மணி—*பெரிதான பிரகிருதியின் பரிணாமமான இந்த்ரியங்களில்.* கர்மாணி—*(தான் செய்யும்) காண்பது முதலான கர்மங்களை.* ஆத₄ாய—*(முற்கூறிய முறையில்)* வைத்து *(அவற்றிலேயே கர்தருத்வத்தை அநுஸந்தித்து).* ஸங்க₃ம்—*பல ஸங்கத்தை.* த்யக்த்வா—*விட்டு.* கரோதி—*(நானாக ஒன்றும செய்கின்றேனலலேன் என்னும் அநுஸந்தானத்துடன்)* கர்மங்களைச் *செய்கிறானோ,* ஸ:—*அவன்.* அம்ப₄ஸா—*தண்ணீரினால்.* பத்₃மபதரம் இவ—*தாமரையிலைபோலே.* பாபேந—*(தேஹம. இந்திரியம் முதலானவற்றை ஆத்மாவாக அபிமானிப்பதாகிற) பாபத்தினால்.* ந லிபயதே—*தொடப்படமாட்டான்.*

---

9. காத லதுவிட்டுக் கருமம் பிரமமெனு
மூதுயிரிற் றனமைத்து முற்றியல்வான்—றீதான
பாவத்தின் மன்னான் பதுமத் திலைநீரின்
மேவப் படாததுபோன் மிக்கு.

காதல் அது விட்டு—*(அவ்வக்கர்மங்களின் பலன்களான சுவர்க்கம் முதலானவற்றில்) பற்றுகிற அதைவிட்டு,* கருமம—*(தான் செய்யும்) மூச்சுவிடல் முதலான கர்மங்களை.* பிரமம எனும் மூதுயிரில் தான் அமைத்து—*பெரிதாயிருக்கையாலே பிரமம் எனப்படும் பிரகிருதியின் காரியமான பழமையான பிராணன் முதலான (முற்கூறிய)* இந்திரியங்களில் *முற்கூறிய வகையில் வைத்து (அவற்றிலேயே கர்த்ருத்வத்தை அநுஸந்தித்து)* முற்று இயல்வான்—*(நானாக ஒன்றும் செய்*

॥भा॥ ब्रह्मशब्देन प्रकृतिरिहोच्यते। *मम योनिर्महद्ब्रह्म (१४. ३) इति हि वक्ष्यते। इन्द्रियाणां प्रकृतिपरिणामविशेषरूपत्वेन

---

கினறேனலலேன் என்னும் அநுஸந்தானத்துடன்) கர்மங்களில் முழுமூச்சுடன் ஈடுபடுகின்றவன், பதுமதது இலே—தாமரையின் இலே. நீரின் மிக்கு மேவப்படாதது போல்—நீரினுல் பசையுண்டாகுமளவுக்குத் தொடடபடாததுபோல். தீதான—ஸம்ஸாரத்தில் கட்டிவைக்கையாகிற தீமை பயக்கும். பாவத்தில் மனனுன்—தேஹாத்மமயக்கமாகிற பாவத்திலை தொடடப்படமாட்டான.

---

10. கர்மயோகததிறகு உறுப்பான அகர்க்ருத்வாநுஸந்த₄ானத்தில் ஒருவகையான 'இநதிரியஙகளில் கர்த்ருத்வத்தை ஏறிடுகை' சென்ற இரு ஶ்லோகங்களில் விவரிக்கப்பட்டது. இதனமேல் மூனறு ஆக்ஷேபஙகள விளேகின்றன:— (1) "நான ஒனறும செய்கினறேனல்லேன்" எனனும முற்கூறிய ப₄ாவனையுடன் சுவர்க்கம முதலான பலனகளில் ஆசைவைததுக் கர்மங்களைச் செய்தாலும் தத்வஜ்ஞானிக்கு தே₃ாஷமிலலாமற்போகலாம. (2) உண்மையில் தனக்கே கர்த்ருத்வம உளளதாயிருக்க, அது தேஹேந்திரிய ஸமபந்தத்தால் வந்ததேயொழியத் தானுக வந்ததலல எனறு அநுஸந்திபபதால் மட்டும பயன் எனன? (3) அப்படியே அநுஸந்தித்தாலும, இவனுல் விடமுடியாததான ப்ரக்ருதிஸம்பந்தமே இவனை தேஹாதமமயககத்தில் ஆழ்நதிவிடுமே-என்பவை அந்த மூனறு ஆக்ஷேபங்கள். இவற்றுக்கு ஸமாதானம் சொல்லுகிறது இந்த ஶ்லோகம். (ப்₃ரஹ்மணி கர்மாணி ஆத₄ாய) மூலப்ரக்ருதியின் பரிணுமமாயிருக்கும முற்கூறிய கர்மேந்திரியம், ஜ்ஞாநேந்திரியம பிராணன் ஆகியவற்றில் கர்மங்களை வைத்து. இங்கு ஜீவனுக்குக் கர்த்ருத்வமில்லை எனறு நிரூபிககும் பிரகரணமாகையாலே, 'ப்ரஹ்மத்தில் கர்மங்களை வைத்து' எனறவிடததில் ப்₃ரஹ்ம ஶப்தத்தால் ஜீவனைக் குறிககமுடியாது. ஜீவனுக்கு ஏதோவொன்றின் ஸம்பந்தத்தால ஔபாதி₄கமாகக் (செயற்கையாகக்) கர்த்ருத்வம் ஏற்படுகிறது என்று நிரூபிக்கும பிரகரணமான இதில், பரம்பொருளின ஸம்பந்தத்தால் அத்தகைய கர்த்ருத்வம் ஏற்படுகிறதெனக் கூறமுடியாதாகையால், இங்கு ப்₃ரஹ்ம ஶப்தத்திற்குப் பரம்பொருளும் பொருளாக முடியாது. மேலும பதின

इन्द्रियाकारेणावस्थितायां प्रकृतौ * पश्यञ्छृण्वन् इत्याद्युक्तप्रकारेण कर्माण्याधाय फलसङ्गं त्यक्त्वा नैव किंचित्करोमीति यः कर्माणि

---

மூன்ருவது ஶ்லோகத்தில் "ஸர்வகர்மாணி மநஸா" என்று தொடங்கி தேஹத்தில கர்த்ருத்வாநுஸந்தாநம செய்யவேண்டும் என்று கூறப்படுகிறது. முன ஶ்லோகமிரண்டிலும் இந்திரியங்களில் கர்த்ருத்வாநுஸந்தாநம கூறப்பட்டிருக்கிறது. ஆகையால், அத்தகைய இந்திரியங்களில கர்த்ருத்வாநுஸந்தானத்திற்குப் பலனைக் கூறுவதற்காகவே இந்த ஶ்லோகம எழுந்ததாகக் கொள்வதே உசிதமாகையால், இங்கு அவ்விந்திரியங்களையே ப்₃ரஹ்மபத₃ார்த்த₂மாகக் கொள்வதே உசிதமென விளங்குகிறது. இந்திரியங்களை ப்₃ரஹ்மஶப்₃தார்த்த₂மாகக் கொள்வது எப்படியெனில்: "மம யோநிர் மஹத்₃ ப்₃ரஹ்ம" [கீதை 14-3] என்னுமிடத்தில் கீதையிலேயே ப்₃ரஹ்மஶப்தத்தால் மூலப்ரக்ருதி சொல்லப்படுவதைக் காணகிருேம. "தஸ்மாதே₃தத்₃ ப்₃ரஹ்ம நாமரூபமந்நஞ்ச ஜாயதே" [முண்டகம 1-1-10] என்று பிரகிருதியின காரியப்பொருள்களிலும ப்ரஹ்மஶப்தப்ரயோகம உள்ளதை உபனிஷத்துக்களிலும காணகிருேம. கண்ணுல் காண்பது முதலான கர்த்ருத்வங்களை மூலப்ரக்ருதியில் அநுஸந்திப்பது ஓட்டாதாகையாலும, அவற்றை மூலப்ரக்ருதிகார்யமான இந்திரியங்களில அநுஸந்திப்பதே பொருந்துமாகையாலும், காரணத்தைச் சொல்லும ஶபதம், கார்யகாரண திரவியம ஒன்ருயிருக்கையாலே காரியத்தைச் சொல்லுவதை உலகில காண்கிருேமாகையாலும், இங்கு பெரிதாயிருக்கையாலும், பிரயோக மிகுதியாலும் மூலப்ரக்ருதியைச் சொல்லக்கூடிய ப₃ரஹ்மஶப்₃த₃ம் மூலப்ரக்ருதி கார்யமான முற்கூறிய இந்திரியங்களை உபசாரவழக்காலே குறிப்பதாகக் கொள்வதே பொருந்தும. (கர்மாணி) முன் ஶ்லோகங்களிரண்டிலும் சொல்லப்பட்ட காண்பது, கேட்பது முதலான கர்மங்களை. (ஆதா₄ய யः கரோதி) 'இவ்விந்திரிய ஸம்பந்தத்தால் நான இச்செயல்களைச் செய்கின்றேனேயொழிய நானுகயாதொன்றையும செய்கின்றேனல்லேன' என்று அனுஸந்திப்பதனமூலம முற்கூறிய கர்மங்களை இந்திரியங்களிலே ஏறிட்டு எவனொருவன செய்கின்ருனே. தன்னுடைய கர்த்ருத்வம இந்திரிய ஸம்பந்தத்தால் ஔபாதி₄கமாக ஏற்படுவது என்னும் அநுஸந்தானத்துடன் எவன் செய்கிருனே என்று கருத்து. இவ்வநுஸந்தானத்துடன் செய்தாலும், சுவாக்கம் முதலான பலன்களில பற்றுவைத்து

करोति, सः प्रकृतिसंसृष्टतया वर्तमानोऽपि प्रकृत्यात्माभिमानरूपेण बन्धहेतुना पापेन न लिप्यते। पद्मपत्रमिवाम्भसा—यथा पद्मपत्रमम्भसा संसृष्टमपि न लिप्यते तथा न लिप्यत इत्यर्थः॥ १०॥

விட்டால், தேஹாத்மமயக்கம வந்துவிடுமாகையாலே அப்பற்றையும் விடவேண்டுமெனகிருன,— (ஸங்க₃ம த்யக்த்வா ய: கரோதி) சுவர்க்கம் முதலான பலன்களில் பற்றைவிட்டு எவன் செய்கின்றுனே. இந்த ஶ்லோகத்தில் விதிக்கப்படும பாபம் ஒட்டாமையாகிற பலன் இவனுக்கும உண்டாகையாலே, முன அததியாயங்களில ப₃ந்த₄கமாகக் கூறப்பட்ட ஸ்வர்க்கா₃தி₃ப₂லஸங்க₃மே இங்கு விடத்தக்கதாகச் சொல்லப்படுகிறதெனக் கொள்ளவேண்டும. இதனுல் முதல ஆக்ஷேபத்திற்கு ஸமாத₄ானம் உரைக்கப்பட்டதாயிற்று. இனி உத்தரார்த்த₁ததாலே இவ்வகர்தருத்வா நுஸந்த₄ானத்திற்குப் பலனைக் கூறுவதனமூலம பின இரண்டு ஆக்ஷேபங்களுககும் ஸமாத₄ானம் உரைக்கபபடுகிறது. (ஸ: பாபேந ந லிபயதே) அவன பிரகிருதிஸம்பந்தத்துடன் கூடியவனுயிருந்தபோதிலும், ப₃ந்த₄கமான தேஹாத்மமயக்கமாகிற பாபத்தால் தொடப்படுவதில்லை. உலகநடைக்குப் புறமபானதாய், இஷ்டபலத்திற்குத் தனிககாரணமாயிருப்பது புண்யமெனறும், உலகநடைக்குப் புறம்பானதாய், அநிஷ்டப₂லததிற்குத தனிககாரணமாயிருப்பது பாபமென்றும் கூறப்படுகிறது. "ந ஸுக்ருதம் ந து₃ஷ்க்ருதம் ஸர்வே பாப்மாநோऽதோ நிவர்த்தந்தே" [சாந் 8-4-1] முதலானவிடங்களில் அநிஷ்டமாயிருக்கையாலே ப₂லஸங்கத்துடன செய்யப்படும புண்யகர்மமும, துஷ்கர்மத்தோடு ஒககப்பாபமென ஶ்ருதியிலும் வழங்கப்பட்டது. இவ்வண்ணமாக அநிஷ்டமாயிருப்பவை பாபமென வழங்கப்படுமிடங்கள் பலவுண்டு. ஆத்மாவுககு தேஹேந்திரிய ஸமபந்தத்தால் கர்த்ருத்வம் எற்படுகிறதேயொழியத் தானுக ஏற்படுவதல்ல என்று அநுஸந்திக்கும இந்தப் பிரகரணத்தில், இவ்வநுஸந்த₄ானத்திற்குத் தடையான தே₃ஹாத்மமயக்கமே பாபம எனத்தக்கதாகும.

"யோऽந்யதா₂ ஸந்தமாத்மாநம் அந்யதா₂ ப்ரதிபத்₃யதே।
கிம் தேந ந க்ருதம பாபம் சோரேணாத்மாபஹாரிணா ॥"

[பாரதம உத்யோக 42-35]

[எவனொருவன் தேஹத்திலும் வேறுபட்டதாய், பரமாத்மஶேஷமாயிருக்கும் ஆத்மாவை தேஹமாகவும், ஸ்வதந்திரமாகவும அறி

कायेन मनसा बुद्ध्या केवलैरिन्द्रियैरपि।
योगिनः कर्म कुर्वन्ति सङ्गं त्यक्त्वाऽऽत्मशुद्धये॥ ११ ॥

**11.** காயேந மநஸா பு₃த்₃த்₄யா கேவலைரிந்த்₃ரியைரபி।
யோகி₃ந: கர்ம குர்வந்தி ஸங்க₃ம்
த்யக்த்வாऽऽத்மஶுத்₃த₃யே ||

யோகி₃ந:—*கர்மயோகநிஷ்டர்கள்,* ஸங்க₃ம்—*சுவர்க்கம் முதலானவற்றில் பற்றை.* த்யக்தவா—*கைவிட்டு.* ஆத்மஶுத்₃த₄யே—*ஆத்மாவுக்கு ப்ராசீன கர்மங்கள் நீங்கி, ஶுத்தி ஏற்படும்பொருட்டு,* காயேந—*உடம்பாலும்.* மநஸா—*மனத்தாலும்.* பு₃த்₃த்₄யா—*அத்₄யவஸாயத்தாலும்,* கேவலை:—*மமகாரவிஷயமாகாத (எனதென்று அபிமானிக்கப்படாத)* இந்த்₃ரியை: அபி—*இந்திரியங்களாலும்.* கர்ம—*கர்மங்களை* குர்வந்தி—*செய்கின்றார்கள்.*

---

**10.** காயத்தா னெஞ்சாற் கருத்தமரும் புத்தியான
மாயத்துச் சேரா வரும்புலனு—னேயத்து
நீக்கத் துடன்கரும நின்றியல்வர் யோகியர்க
ளூக்கத் துளந்தெளிவை யுற்று.

---

*கிறுதே. ஆத்மாவையே திருடும் அத்திருடனால் செய்யப்படாத பாபம் எது உள்ளது?] என்று இந்த தேஹாதமமயக்கம் பெரும பாவமாக ஶாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளது. ஆகையால், இங்கு பாபம எனப்படுவது தேஹாத்மமயக்கம் என்று கொள்வதே உசிதம். இவன் தேஹஸம்பந்தமுடையவனுயிருந்தும, தேஹாத்ம மயக்கத்தால தொடப்படாமலிருக்கைக்கு திருஷ்டாந்தம ஒன்றைக் கூறுகிறுன் கடைசிப் பாதத்தாலே.— ( பத்₃மபத்ரம அமப₄ஸா இவ ) தாமரையிலை தண்ணீராலே தன்னிடம் பசையேற்படும் அளவுக்குத் தொடப்படாததுபோலே. தாமரையிலையின் பிறப்பு, இருப்பு முதலானவையனைத்தும் நீரிலேயேயிருந்தபோதிலும, தண்ணீரால பசையுண்டாமபடி நனைககப்படாமலிருப்பதுபோலே, பிரகிருதிகார்யமான தேஹேந்திரியங்களைகொண்டே * கண்டு கேட்டு உற்று மோந்து உண்டு உழன்றுவரும இவனுக்கு அதனுல் தேஹாதமமயக்கம் முதலானவை ஏற்படுவதில்லை என்று கருத்து. 10.*

---

* *திருவாய் 4-9-10.*

॥भा॥ कायमनोबुद्धीन्द्रियसाध्यं कर्म स्वर्गादिफलसङ्गं त्यक्त्वा

**யோகியர்கள்**—கர்மயோகிகள், **நேயத்து நீக்கத்துடன்**—சுவர்க்கம் முதலான பலன்களில் பற்றைவிட்டு, **உளம் தெளிவை உற்று**—உள்ளிருக்கும் ஆத்மாவானது ப்ராசீந கர்மங்களினின்றும் விடுபட்டுத் தெளிவடைவதற்காக. **காயத்தால்** — உடம்பாலும், **நெஞ்சால்** — மனத்தாலும், **கருத்து அமரும் புத்தியால்**—அறிவு ஊன்றியிருக்கையாகிற உறுதியாலும், **மாயத்துச் சேரா அரும் புலனால**—'எனது' என்னும் மயக்கத்துக்கு விஷயமாகாத அரிய இந்திரியங்களாலும், **கருமம்**—கர்மங்களை, **ஊக்கத்து நின்று இயல்வர்**—ஊக்கத்துடன் நின்று செய்வார்கள்.

11. முன் ஸ்லோகங்களில் சொன்ன அர்த்தத்தை உறுதிப்படுத்துவதற்காக, அவ்வர்த்தம் சிஷ்டர்களின் ஆசாரத்தினாலும் ஸித்திக்கிறது என்று கூறுகிறான் இந்த ஸ்லோகத்தில. (யோகி₃ந:) கர்மயோகம் செய்பவர்கள். பிரகரணபலத்தாலே இங்கு யோகி₃ ஸப்₃த₃ம் கர்மயோகி₃களைக் குறிக்கிறது. (காயேந காம குர்வந்தி) உடம்பினாலும் கர்மத்தையே செய்கிறார்கள். (மநஸா கர்ம குர்வந்தி) மனத்தினாலும் கர்மத்தையே செய்கிறார்கள். (பு₃த்₃த₄யா கர்ம குர்வந்தி) புத்தியினாலும் கர்மத்தையே செய்கிறார்கள். புத்தியாவது.— கர்மம் செய்யவேண்டும் என்னும் உறுதி. (கேவலை: இந்த்₃ரியை: அபி கர்ம குர்வந்தி) கர்த்ருத்வாபி₄மானமற்ற இந்திரியங்களாலும் கர்மத்தையே செய்கிறார்கள். அன்றிக்கே, 'கேவலை:' என்றது 'மமகார விஷயமாகாத' [எனதென்று அபி₄மானிக்கப்படாத] என்னும் பொருளை உடையதென்றும் கொள்ளலாம். அப்போது லிங்கவசனங்களை மாற்றி. 'கேவலேந காயேந' [எனதென்று அபிமானிக்கப்படாத உடம்பால்] 'கேவலேந மநஸா' [எனதென்று அபிமானிக்கப்படாத மனத்தினால்] 'கேவலயா பு₃த்₃த்₄யா' [எனதென்று அபி₄மானிக்கப்படாத புத்தியினால்] என்றும் கூட்டிப் பொருள் கொள்ளவேண்டும். அன்றிக்கே, காய ஸப்தத்தினாலேயே காயத்திலடங்கிய கர்மேந்திரியங்களையும் லக்ஷணையாலே எடுப்பதாகக் கொள்ளலாமாகையாலே, 'கேவலை: இந்த்₃ரியை:' என்றது ஜ்ஞானேந்திரியங்களை மாத்திரம் எடுப்பதாகவுமாம். அப்போது 'கேவலை:' என்றது, 'பேசுதல், எடுத்தல் முதலான

योगिन आत्मविशुद्धये कुर्वन्ति ; आत्मगतप्राचीनकर्मबन्धविनाशाय कुर्वन्तीत्यर्थः ॥ ११ ॥

---

காரியங்களைச் செய்யாத' என்று பொருள்படுகிறது. அக்காரியங்களைச் செய்யாத ஜ்ஞாநேந்திரியங்களால் கர்மத்தை எப்படி அநுஷ்டிக்கமுடியும்? அதன் பலனாக இந்த ஶ்லோகத்தின் கடைசிப் பாதத்தில் சொல்லுகிறபடி ஆத்மஶுத்தி எப்படி ஏற்படமுடியும்? எனில்:

"தர்ம: ஶ்ருதோ வா த்ருஷ்டோ வா கதிதோ வா
க்ருதோऽபி வா ।
அநுமோதிதோ வா ராஜேந்த்ர நயதீந்த்ரபதம் நரம் ॥"
[பாரதம்–ஆஶ்வமேதிகம் 96-31]

[அரசர் தலைவனே! ஒருவனால் செய்யப்படும் நற்கருமம் மற்றொருவனால் கேட்கப்பட்டாலும், காணப்பட்டாலும், சொல்லப்பட்டாலும், திருப்பிச் செய்யப்பட்டாலும், ஆமோதிக்கப்பட்டாலும் அப்புருஷனையும் நற்கதிக்கு அழைத்துச் செல்லும்] என்கிறபடியே ஜ்ஞாநேந்திரியங்களும் நற்கருமங்களாக கேட்பது, பார்ப்பது, ஆமோதிப்பது முதலானவற்றைச் செய்யலாம்; அவற்றுக்குப் பலனும் உண்டு என்று கண்டுகொள்வது. (ஸங்கம் த்யக்த்வா கர்ம குர்வந்தி) சுவர்க்கம் முதலான பலன்களில் பற்றைவிட்டுக்கர்மத்தைச் செய்கிறார்கள். "ப்ரயோஜநமநுத்திஶ்ய ந மந்தோऽபி ப்ரவர்த்ததே" [பயனைக் கருதாமல் மந்தனும் எக்காரியத்திலும் முயலமாட்டான்] என்கிறபடியே ஒரு பயனையும் கருதாமல் காரியம் செய்யமுடியாதாகையாலும், ஆத்மவிஶுத்தியாகிற பயன் இங்கே இவனுக்கே கூறப்படுகிறதாகையாலும், 'ஆத்மஸாக்ஷாத்கார விரோதியான ஸ்வர்க்காதிபலன்களில் பற்றை விட்டு' என்றே பொருள் கொள்ள வேண்டும். இப்படிக் கர்மம் செய்வதற்குப் பயன் என்னவெனில்: (ஆத்மவிஶுத்தயே) ஆத்மா தனக்கு சுத்தியடைவதற்காக. இயல்வாகவே சுத்தமான ஆத்மாவிற்கு தோஷமேது? தோஷமிருந்தாலல்லவோ சுத்தியைத் தேடவேண்டும்? எனில்: அநாதிகாலமாக ஆத்மஸாக்ஷாத்காரத்திற்குத் தடையாக இவன் செய்து வைத்திருக்கும் புண்ய பாப கர்மங்களே ஆத்மாவிற்கு தோஷமாகிறதாகையாலே, அந்த தோஷம் அழிவதன் பொருட்டுக் கர்மயோகத்தை அநுஷ்டிக்கக் குறையில்லை. 11.

युक्तः कर्मफलं त्यक्त्वा शान्तिमाप्नोति नैष्ठिकीम्।
अयुक्तः कामकारेण फले सक्तो निबध्यते॥१२॥

12. யுக்த: கர்மபலம் த்யக்த்வா ஶாந்திமாப்நோதி நைஷ்டிகீம் ।
அயுக்த: காமகாரேண பலே ஸக்தோ நிபத்யதே ॥

**யுக்த:**—*மற்ற விஷயங்களில் சாபல்யமற்று ஆத்மாவில் ஈடுபட்டவன்,* **கர்மபலம**—*கர்மங்களுக்குள்ள சுவர்க்காதி பலன்களை.* **த்யக்த்வா**—*விட்டு (கர்மத்தை அநுஷ்ட்டிப்பதன் மூலம்).* **நைஷ்ட்டிகீம**-*நிலையான.* **ஶாந்திம**—*ஆத்மாநுபவரூபமாகிற ஆனந்தத்தை,* **ஆப்நோதி**—*அடைகிறான்;* **அயுக்த:**—*மற்ற விஷயங்களில் ஈடுபட்டு ஆத்மாவில ஈடுபாடற்றிருப்பவன்,* **காமகாரேண**-*ஶப்தாதிவிஷய காமத்தாலுண்டாகும் முயற்சியாலே.* **பலே**—*சுவர்க்காதிபலங்களில்.* **ஸக்த:**—*ஈடுபட்டவனாய் (கர்மங்களை அனுஷ்ட்டித்து.)* **நிபத்யதே**—*ஸம்ஸாரியாகிறான்.*

---

11. ஏற்ற மிகும்யோகி யியல்கருமப் பேறுவிடுத்
தாற்ற னிலைமை யடைந்தியலு—மூற்றமில்லாக்
காமத்தா னாதக் கருமப் பலனசையாந்
தாமத்தாற் கட்டுண்ணுந் தான்.

**ஏற்றம் மிகும் யோகி**—*சிறப்பு நிறைந்த ஆத்மாவில் ஈடுபடுபவன்,* **இயல் கருமப் பேறு விடுத்து**—*செய்யும கர்மத்துக்குரிய சுவர்க்கம் முதலான பயன்களை விட்டு.* **ஆற்றல் நிலைமை**—*ஆறியிருக்கும் நிலையை (நிலையான ஆத்மாநுபவத்தை).* **அடைந்து**—*பெற்று.* **இயலும்**—*இன்புறுவான்.* **ஊற்றம் இலா காமததான் தான்**—*ஆத்மாவில் ஈடுபாடற்று மற்ற விஷயங்களில விருப்பமுள்ளவன்,* **அந்த கருமப்பலன் நசையாம தாமத்தால்**—*அந்தக் கர்ம பலன்களில் ஆசையாகிற கயிற்றினால்,* **கட்டுண்ணும்**—*ஸம்ஸாரத்தில் கட்டுப்படுவான்.*

॥भा॥ युक्तः—आत्मव्यतिरिक्तफलेष्वचपलः आत्मैकप्रवणः कर्मफलं त्यक्त्वा केवलमात्मशुद्धये कर्मानुष्ठाय नैष्ठिकीं शान्तिमाप्नोति–स्थिरामात्मानुभवरूपां निर्वृतिमाप्नोति। अयुक्तः—आत्मव्यतिरिक्तफलेषु चपलः आत्मावलोकनविमुखः कामकारेण फले सक्तः कर्माणि कुर्वन्

---

12. ஒரே கர்மம் ப₂லஸங்க₃த்துடன் செய்யப்படும்போது ப₃ந்த₄ஹேதுவாகவும், ப₂லஸங்க₃மில்லாமல் செய்யப்படும்போது மோக்ஷஹேதுவாகவும் ஆகக்குறையில்லை என்று காட்டுகிறான்.— (யுக்த:) நன்கு பழக்கப்பட்ட மனத்தையுடையவன். அதாவது,— மற்ற விஷயங்களில் சாபல்யமற்று, ஆத்மாவிலேயே ஈடுபடும்படி பழக்கப்பட்ட நெஞ்சை உடையவன் என்றபடி. (கர்மப₂லம் த்யக்த்வா) கர்மத்திற்குரிய ஸ்வர்க்கா₃தி₃ப₂லன்களில் நசையை விட்டு ஆத்மசுத்திக்காகவே கர்மத்தை அநுஷ்டித்து. கர்மப₂ல த்யாகத்தை மாத்திரம் இங்கு சொன்னபோதிலும், "யோகி₃ந: கர்ம குர்வந்தி ஸங்க₃ம் த்யக்த்வாऽऽத்மஶுத்₃த₄யே" என்று சென்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்டதாய், இங்கும் அர்த்த₂ப₃லத்தாலே ஸித்திக்கக்கூடியதாய், ஆத்மஶுத்திக்காக மாத்திரம் செய்யப் படுவதான கர்மத்தின் அநுஷ்டானத்தையும் இங்கு பொருளாகக் கொள்ளவேணும். (நைஷ்டி₂கீம் ஶாந்திம் ஆப்நோதி) நிலை யான ஆத்மாநுப₄வரூபமான ஆனந்தத்தை அடைகிறான். 'நிஷ்ட₂ாயாம் ப₄வதீதி நைஷ்டி₂கீ' என்னும் வ்யுத்பத்தியாலே 'நைஷ்டி₂கீ' என்னும் பதம் 'நிலையான' என்று பொருள்படு கிறது. ஶாந்திஶப்₃த₃ம் பரமமோக்ஷத்தைக் குறிப்பது ப்ரகரண விருத்தமாகையாலே, ப்ரகரணத்தையொட்டி ஆத்மாநுப₄வரூப மான ஆனந்தத்தையே இங்கு குறிப்பதாகக் கொள்ளவேணடும். (அயுக்த:) முற்கூறிய யுக்தனுக்கு நேர் எதிர்த்தட்டானவனாய், ஆத்மாவையொழிந்த மற்ற விஷயங்களில் ஈடுபட்டவனாய், ஆத்மாநுபவத்தில் ஈடுபாடற்றவனாயிருப்பவன். (காமகாரேண) ஶப்தாதிவிஷயகாமங்களால் உண்டான தூண்டுதலால். இந்த அயுக்தனும் ஶாஸ்த்ரவஶ்யனாகையால், காமகாரஶப்தத்திற்கு 'இஷ்டப்படி ஸஞ்சரிப்பது' என்று பொருள்கொள்ளக்கூடாது. ப்ரகரணத்தையொட்டி 'ஶப்₃தா₃தி₃ விஷயகாமத்தால் தூண்டப் படுவது' என்றே பொருள்கொள்ளவேண்டும். (காமகாரேண ப₂லே ஸக்த:) ஶப்₃தா₃தி₃விஷயகாமத்தால் தூண்டப்பட்டவனாய்,

नित्यं कर्मभिर्बध्यते—नित्यसंसारी भवति। अतः फलसङ्गरहितः इन्द्रियाकारेण परिणतायां प्रकृतौ कर्माणि संन्यस्य आत्मनो बन्धमोचनायैव कर्माणि कुर्वीतेत्युक्तं भवति॥ १२॥

॥भा॥ अथ देहाकारेण परिणतायां प्रकृतौ कर्तृत्वसंन्यास उच्यते—

सर्वकर्माणि मनसा संन्यस्यास्ते सुखं वशी।
नवद्वारे पुरे देही नैव कुर्वन्न कारयन्॥ १३॥

13. ஸர்வகர்மாணி மநஸா ஸந்ந்யஸ்யாஸ்தே ஸுகம் வஶீ।
நவத்₃வாரே புரே தே₃ஹீ நைவ குர்வந் ந காரயந்॥

தே₃ஹீ—தேஹத்தையுடையவனாய் வஶீ—(ஸ்வரூபத்தாலே) தன் வசத்திலிருப்பவனான ஜீவன். நவத்₃வாரே புரே—ஒன்பது வாசலுடைய பட்டணமான சரீரத்தில். ஸர்வகர்மாணி—எல்லாக்கர்மங்களையும். மநஸா—மனத்தினாலே. ஸந்ந்யஸ்ய—நன்கு விடுத்து. நைவ குர்வந்—தானும்

---

12. ஒன்பதெனும் வாச லுடையபுர மாமுடலிற்
றன்பயிலுஞ் செய்தியெனத் தானியலா—னென்பதனு
லேது மியலா னியற்றுன் சுகமிருக்கு
மோது புலன்வென்றே னுற்று.

---

தான் விரும்பும் ஸ்வர்க்கம முதலான பலன்களில ஈடுபட்டவனாய்க் கர்மங்களை அநுஷ்டித்து. (நிப₃த்₄யதே) மிகவும் ஸம்ஸாரத்தில் கட்டுப்படுகிறான். நித்யஸம்ஸாரியாகிறான் என்றபடி. 'நி' என்னும் உபஸர்க்கத்தாலும், 'ப₃த்₄யதே' என்னும் நிகழ்காலப் பிரயோகத்தாலும் 'எளிதில் மீளமுடியாதபடி ஸம்ஸாரத்தில் கட்டப்படுகிறான்' என்று உணர்த்தப்படுகிறது. ஆக, "நைவ கிஞ்சித் கரோமி" என்று தொடங்கி இதுவரையில், இதரப₂லன்களில் பற்றற்றவனாய், இந்திரியங்களாகப் பரிணமமடைந்த ப்ரக்ருதியில் கர்மங்களை ஏறிட்டு, அதாவது, ப்ரக்ருதியின் பரிணமமான இந்திரியங்களின் ஸம்பந்தத்தாலேயே இக்கர்மகர்த்ருத்வம் ஏற்படுகிறது என்று அநுஸந்தித்து, ஆத்மாவின் ஸம்ஸாரப₃ந்த₄ம் விடுவதற்காகவே கர்மங்களைச் செய்யவேண்டும் என்று கூறப்பட்டதாயிற்று. 12.

*செய்யாமலும்,* ந காரயந்—*தேஹத்தையும் செய்விக்காமலு மிருந்துகொண்டு,* ஸுகம் ஆஸ்தே-*இன்பமாய் வாழ்கிறான்.*

॥ भा ॥ आत्मनः प्राचीनकर्ममूलदेहसंबन्धप्रयुक्तमिदं कर्मणां कर्तृत्वम् , न स्वरूपप्रयुक्तमिति विवेकविषयेण मनसा सर्वाणि कर्माणि

---

ஒன்பதெனும் வாசல் உடைய புரமாம் உடலில்—*ஒன்பது வாசல்களையுடைய பட்டணம் போன்ற உடலில்.* தன பயிலும் செய்தி—*தன்னோடு தொடர்புள்ள (தன்) செயல்கள் (உள்ளன),* என—*என்று (மனத்தால்) நினைத்து.* தான் இயலான் என்பதனால்—*செய்யாதவனாகத் தன்னை நினைக்கிறானாகையால்.* ஏதும் இயலான்—*தானும் ஏதும் செய்யாதவனாய்.* இயற்றான்—*(தேஹத்தையும்) செய்விக்காதவனாய்.* ஓது புலன உற்று வென்றான—*சொல்லப்படும் புலன்களைத் தன் உடலிலேயே பெற்றிருந்தும் அவற்றை வசப்படுத்தினவனாய்.* சுகம் இருக்கும—*இன்பமாய் வாழ்வான்.*

---

*13. முன் ஶ்லோகங்களில், ஶரீரத்திலுள்ள இந்திரியப்ராணங்களில் கர்த்ருத்வத்தை அநுஸந்திக்கவேண்டும என்று கூறப்பட்டது. இந்த ஶ்லோகத்தில் அந்த ஶரீரத்திலேயே கர்த்ருத்வத்தை அநுஸந்திக்கவேண்டும் என்று கூறப்படுகிறது. (தேஹீ வஶீ)* தேஹத்தோடு கூடியிருந்தபோதிலும் தேஹத்தையும, *அதிலுள்ள* இந்திரியங்களையும வசப்படுத்தியிருப்பவனாகையாலே, *அவற்றை* ஆத்மாவாக *அபிமானிப்பது, அவற்றால்* இழுத்துச் செல்லப்படுவது *முதலான நிலைகளை அடையாதவன்.* தேஹத்தோடு கூடியவனாயிருந்த போதிலும், இவனுடைய *பரிஶுத்தஸ்வரூபத்தைப்பார்த்தால்* தன வசத்திலிருப்பவன் என்றுமாம். இப்படிப்பட்டவனாகையாலே, இவன தேஹத்தில் *கர்த்ருத்வஸந்யாஸம் செய்யக்குறையில்லை என்று கருத்து இந்தக் கர்த்ருத்வஸந்யாஸம செய்வதற்குக கரணமாய்* (முக்கியமான கருவியாய்) இருப்பது எது? எனில், மனமே என கிறது,- (மநஸா) மனத்தாலே. ஒரு வியாபாரமுடைய (தொழிலுடைய) முக்கியமான காரணமே கரணம் எனப்படுகிறது; இங்கு *வியாபாரம் யாதெனில்;* ''ஆத்மாவுக்குப் பழையதான கர்மத்தினால் உண்டான தேஹஸம்பந்தத்தால் ஏற்பட்டது இந்தக் கர்மகர்த்ரு

नवद्वारे पुरे संन्यस्य देही स्वयं वशी देहाधिष्ठानप्रयत्नमकुर्वन् देहं च नैव कारयन् सुखमास्ते ॥ १३ ॥

---

த்வம்; இயல்வாகவே ஏற்பட்டதல்ல" என்று பகுத்தறிவதே இங்கு கரணமான மனத்துக்குள்ள வ்யாபாரமாகும். இவன் ஸந்யாஸம் செய்வதுதான் எவற்றை? எனில்: (ஸர்வ கர்மாணி ஸந்யஸ்ய) தேஹஸம்பந்தத்தால் இவன் செய்யும் செயல்கள் அனைத்தையும் ஸந்யாஸம செய்கிறான். எதில் ஸந்யாஸம் செய்கிறான்? எனில்: (நவத்₃வாரே புரே) ஒன்பது வாசலுடைய பட்டணமான தேஹத்தில் இக்கர்மங்களை ஸந்யஸிக்கிறான். முகத்திலிருக்கும் இருகண்களை, இரு மூக்கு துவாரங்கள், இரு செவிகள், வாய் ஆகிய ஏழும், கீழேயுள்ள மலமூத்ரத்வாரங்கள் இரண்டும் ஆக ஒன்பது வாசலுடைய பட்டணமாக இந்த தேஹம ரூபணம் செய்யப்படுகிறது. பட்டணத்தில் கர்மங்களை விடுவது என்று ரூபணம செய்வதில் ப்ரகரணத்திற்குப் பொருந்திய கருத்து ஒன்றும இல்லாமையாலே, தேஹத்தை நவத்வாரபுரம் என்று ரூபணம செய்வதற்கு வேறு கருத்து உரைக்கவேண்டும். 'வஶீ' என்று ஆத்மாவைக் கூறியிருப்ப தோடு சேர்த்துப்பார்க்கும்போது பின்வரும் கருத்துகள் புலப்படும். அதாவது,—இந்த தேஹம் ஒன்பது வாசற்பட்டணம் போலே அவயவமுடையதாகையாலே விரோதிகளால் அழிக்கத்தக்கது; ஆத்மா அவயவமற்றதாகையாலே அழிக்கத்தகாதது. தேஹத்திற்கு ஒன்பது வாசல்களிருக்கையாலே அதில் எதன்மூலமும் விரோதிகள் புகுந்துவிடலாம்; ஆத்மா வாசலற்றதாகையாலே விரோதிகள் உட்புகமுடியாது. ஒன்பதுவாசற்பட்டணம்போல் பெரிதாயிருக்கை யாலே தேஹத்தைக் கட்டிக்காப்பது சிரமம்; முந்தானையில் முடிந்து காக்கலாம மணிபோலே சிறிதாயிருக்கையாலே ஆத்மாவை ரக்ஷிப் பது எளிது. தேஹம் கர்மபரதந்த்ரமாகையாலே இதை ரக்ஷிப்பது அரிது: ஆத்மா கர்மபரதந்த்ரமல்லாததாகையாலே அதை ரக்ஷிப் பது எளிது. எதிரிகள் பலரால் முற்றுகையிடப்படும் பட்டணம போலே தேஹம இந்திரியங்களாலும். மனத்தினாலும இழுத்துச் செல்லப்படுவதாகையாலே அதைக் காப்பது கடினம; இந்திரிய மனங்களை வசப்படுத்தியிருப்பவனாகையாலே ஆத்மாவைக்காப்பது ஸுலபம். இவைபோன்ற கருத்துக்களே இங்கு நவத்₃வாரபுரமாக தேஹத்தையும், வஶியாக ஆத்மாவையும் சொன்னதிலிருந்து புலப் படும். இக்கருத்துக்களைத் திருவுள்ளத்திற்கொண்டே திருமங்கை யாழ்வார்,

"ஊனிடைச் சுவர் வைத்து என்பு தூண் நாட்டி
உரோமம் வேய்ந்து ஒன்பது வாசல்
தானுடைக் குரம்பை பிரியும்போது உன்றன்
சரணமே சரணமென்றிருந்தேன்"

[பெரியதிருமொழி 1-6-9]

என்று இந்த சரீரத்தை ஊன் (மாம்ஸம) ஆகிற சுவரையும், எலும்புகளாகிற தூணகளையும், உரோமங்களாகிற கூரையையும், ஒன்பது வாசல்களையும உடையதொரு பிரியக்கூடிய குரம்பையாக (குடிசையாக) ரூபணம் செய்தருளினர். அவ்விடத்தில் வியாக்கியானத்தில் பெரியவாச்சான்பிள்ளை இந்த ஸ்லோகத்தைத் திருவுள்ளம்பற்றி, "'நவத்₃வாரே புரே' என்று எங்கேனும் புக்கு, எங்கேனும புறப்படலாம்படியிறே இச்சரீரந்தானிருப்பது. ராஜபுத்ரன் ஒரு குடிலிலே ஒதுங்கினாற்போலே, நிர்மலமாய், ஜ்ஞாநாநந்த₃லக்ஷணமாய், ஏகரூபமாயிருக்கிற ஆத்மவஸ்து கர்மத்தாலே ஜ்ஞாநஸங்கோசத்தைப் பிறப்பிப்பதான சரீரத்திலே அகப்பட்டதாயிற்று" என்று அருளிச்செய்தது இங்கு அநுஸந்திக்கத்தக்கது. இந்த ஸ்லோகத்திற்கு மூலமாகவுள்ளதான

"புரமேகாத₃ஶத்₃வாரம் அஜஸ்ய அவக்ரசேதஸ: |
அநுஷ்ட்₂ாய ந ஶோசதி விமுக்தஶ்ச விமுச்யதே ||"

[கட 2-5-1]

[பிறப்பற்றவனாய், தேஹாத்மாபி₄மானம் முதலானவற்றைச் செய்யும வக்ரமனம் (கோணல் நெஞ்சு) இல்லாதவனான ஜீவனுக்குப் பதினொரு வாசல் உள்ள பட்டணம் அமைந்துள்ளது. (இதில் கர்த்ருத்வ ஸந்யாஸத்தைச் செய்துகொண்டு) கர்மங்களை அநுஷ்டிக்கும் அந்த ஜீவன (இவ்வுலகிலிருக்கும்போதே) ஸம்ஸாரக்கட்டினால் வருந்தமாட்டான்; இத்தகைய தேஹஸம்பந்தம் விட்டு முக்தனானவுடன் ஸம்ஸாரபந்தத்தினின்றும அடியோடு விடுபடுகிறான்.] என்னும் உபநிஷந் மந்திரத்தில் பதினொரு வாசலையுடைய பட்டணமாக சரீரத்தையும், பிறப்பற்றவனாகவும், வக்ரமனமற்றவனாகவும் ஆத்மாவையும் சொல்லியிருப்பதும இக்கருத்துக்களைத் தெரிவிக்கவே என்பது தெளிவு. இமமந்திரத்தில் பதினொரு வாசல்களாகக் கூறியிருக்கிறதே; ஒனபது வாசல்களுக்கு மேலும் இரண்டு வாசலகள் எவை எனில்: பதினொரு இந்திரியங்களைப் பதினொரு வாசல்களாகக் கொண்டார் உபநிஷத்

பாஷ்யகாரரான ரங்கராமாநுஜ ஸ்வாமி. த்வக் (மெய்), நாக்கு, கை, கால், மனம ஆகியவற்றை ஒரு பட்டணத்தின் திறந்துகிடக்கும் வாசல்களாக ரூபணம் செய்வது அஸ்வரஸமாகையால், இப்பொருள் சிறப்புடையதன்று; கீதையில் சொல்லப்பட்ட நவ த்வாரங்களோடு, கர்ப்பததிலிருந்தபோது திறந்து கிடந்தவையாய், வெளிவருமுன் மெல்லியகதவுகளை வைத்து மூடப்பட்டவையான (தலையுச்சியிலுள்ள) ப்ரஹ்மரந்த்ரத்தையும, நாபி (கொப்பூழ்) ரந்த்ரத்தையும சேர்த்துப பதினொரு வாசல்களாகக் கூறுவதாகத் தாத்பர்யசந்த்ரிகையில் தேசிகன் அருளிய பொருளே சிறப்புடையது. இவன் தேஹத்தில் ஸர்வகர்மங்களையும் விடுகையாவதென்? எனில: (நைவ குர்வந் ந காரயந்) தானுக எதையும் செய்யாதவனுய், தேஹத்தையும் எதையும செய்விக்காதவனுயிருக்கையே தேஹத்தில் கர்மஸந்யாஸமாகும் என்கை. அதாவது— நாம், கர்மங்களுக்கு (ப்ராக்ருதக்ரியைகளுக்கு) மூலமான ப்ரயத்னங்களுக்கு ஆஶ்ரயமாயிருப்பதும், தேஹத்தை அவ்வக்கர்மங்களில் ஈடுபடும்படி ஆட்டிவைப்பதும தேஹஸமபந்தத்தால் ஏற்படுவதேயொழிய இயல்வாய் ஏற்படுவதல்ல என்னும நினைவுடனிருக்கையாலே. இயல்வாகத் தான ஒன்றும செய்யாதவன் என்றும், தேஹத்தை எக்கர்மத்தையும் செய்விக்காதவன் என்றும் அநுஸந்திக்கையே தேஹத்தில் கர்மஸந்யாஸமாகும் என்று கருத்து. இப்படி தேஹத்தில் கர்த்ருத்வஸந்யாஸம் செய்வதால் ஏற்படும் பலன யாதெனில்: (ஸுகம் ஆஸ்தே) இன்பமாக வாழ்கிறுன். எதிரிகளால் எப்போதும முற்றுகையிடப்படுவதாய், அழியக்கூடியதான ஒனபதுவாசல் பட்டணமான தேஹத்தையே ஆத்மாவாக நினைத்தானுகில் இவனுக்குத் துன்பமே ஏற்படும். இவனோவெனில், தேஹத்தில் கர்த்ருத்வஸந்யாஸம் செய்வதன் மூலம் தனக்கு வாழுமிடமான ஒன்பதுவாசல் பட்டணமாக சரீரத்தையும், அப்பட்டணத்தில் தன்னோடுகூட வாழ்பவர்களாக இந்திரியங்களையும், தன்னைச் சக்ரவர்த்தியான பரமாத்மாவுக்கு தாஸனுகவும், அப்பட்டணத்திற்கும் அதில் வாழும் குடிமக்களான தங்களுக்கும் அதிபதியான சக்ரவர்த்தியாகப் பரமாதமாவையும் கருதி வாழ்கின்றுனுகையாலே பட்டணத்தையோ, மற்ற குடிமக்களையோ, தனனையோ ரக்ஷிக்கவேண்டிய பொறுப்பு சிறிதுமில்லாதவனுய், 'தானே கர்த்தா' என்று அபிமானிப்பதால் வரும் கிலேசங்களும் அற்றவனுய் இன்பமாய் வாழ்கிறுன் என று கருத்து. 13.

॥ भा ॥ साक्षादात्मनस्स्वाभाविकं रूपमाह—

न कर्तृत्वं न कर्माणि लोकस्य सृजति प्रभुः।
न कर्मफलसंयोगं स्वभावस्तु प्रवर्तते॥ १४॥

14. ந கர்த்ருத்வம் ந கர்மாணி லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபு₄:।
ந கர்மப₂லஸம்யோக₃ம் ஸ்வப₄ாவஸ்து ப்ரவர்த்ததே ॥

ப்ரபு₄:-*கர்மவசப்படாததான ஜீவஸ்வரூபம்.* லோகஸ்ய-*விசித்ரமான ஜனஸமூஹத்திற்கு.* காத்ருத்வம் ந ஸ்ருஜதி-*கர்த்தாவாயிருக்கும் தன்மையை உண்டாக்குவதில்லை;* கர்மாணி ந ஸ்ருஜதி—*செயல்களையும் உண்டாக்குவதில்லை;* கர்மப₂லஸம்யோக₃ம் ந ஸ்ருஜதி—*(தேவர் முதலானோர்க்குரிய) கர்மபலன்களின் அநுபவத்தையும் உண்டாக்குவதில்லை.* ஸ்வப₄ாவ: து ப்ரவர்த்ததே— *ப்ரக்ருதிவாஸனையே இவையனைத்தையும் உண்டாக்குகிறது.*

---

13. கத்தாவா குந்தன்மை கன்மங்க ளாங்கவற்றி
லொத்தாம் பலனசே ருலகுக்குத்—தத்துவமா
நின்றவுயிர் தான்செய்யா னேர்நடக்கு மாறிதுதா
னொன்றியமுன் வாதனையா லுற்று.

தத்துவமா நின்ற உயிர்— *(கருமத்திற்கு வசப்படாத) சிறந்த தத்துவமாக நின்ற ஜீவஸ்வரூபம்.* உலகுக்கு— *விசித்ரமான ஜனஸமூஹத்திற்கு.* கத்தாவாகும் தன்மை— *கர்த்தாவாக (செயல்புரிபவனாக) இருக்கும் தன்மையையும்.* ஆங்கு கன்மங்கள்—*அவர்க்குரிய கர்மங்களையும்.* அவற்றில் சேர் ஒததாம் பலன்-*தேவர் முதலானோர்கசுரிய கர்மபலன்களின அநுபவத்தையும்.* தான் செய்யான்— *தான் இயல்வாகச் செய்வதில்லை;* இது தான்— *இக்கர்த்ருத்வம் முதலானவை.* ஒன்றிய முன் வாதனையால் உற்று நேர் நடக்குமாறு— *(ஜீவனோடு) பொருந்தியிருக்கும் பூர்வவாஸனையாலே உண்டாகித் தொடர்ந்து நடந்து செல்லாநிற்கும்.*

॥भा॥ अस्य देवतिर्यङ्मनुष्यस्थावरात्मना प्रकृतिसंसर्गेण वर्तमानस्य लोकस्य देवाद्यसाधारणं कर्तृत्वं तत्तदसाधारणानि कर्माणि तत्तत्कर्मजन्यदेवादिफलसंयोगं च, अयं प्रभुः — अकर्मवश्यः स्वाभाविकस्वरूपेणावस्थित आत्मा न सृजति — नोत्पादयति।

---

14. இவ்வத்தியாயத்தின் எட்டாவது ஶ்லோகத்திலிருந்து தொடங்கி, முன் ஶ்லோகம் வரையில் ஜீவாத்மாவுக்கு தேஹேந்திரிய ஸம்பந்தத்தால் ஏற்படும் கர்த்ருத்வத்தை அந்த தேஹேந்திரியங்களுடையதாகவே அநுஸந்திப்பதாகிற கர்த்ருத்வாநுஸந்தாநம் சொல்லப்பட்டது. இந்த ஶ்லோகத்தில், தன் ஆத்மாவில் அநுஸந்திக்கத்தக்க இயல்வான ஸ்வரூபம் கூறப்படுகிறது. (ப்ரபு₄:) கர்மத்திற்கு வசப்படாததாய், தானான தன்மையில் நிற்கும் ஜீவஸ்வரூபம். இப்ரகரணத்தில் "மயி ஸர்வாணி கர்மாணி ஸந்யஸ்ய" [3-30] [என்னிடத்தில் எல்லாக்கர்மங்களையும் விட்டு] முதலான ஶ்லோகங்களாலே ஜீவனிடமுள்ள கர்த்ருத்வம் பரமாத்மாவினிடம் அநுஸந்திக்கப்படுகிறது. ஆகையால், இந்த ஶ்லோகத்தில் அகர்த்தாவாகக் கூறப்படும் ப்ரபு₄ கர்த்ருத்வமுள்ளவனாக அநுஸந்திக்கப்படும் ஸர்வேஶ்வரனாக முடியாது; கர்த்ருத்வமில்லாதவனாக அநுஸந்திக்கப்படுபவனாய், தானான தன்மையில் அகர்மவஶ்யனாகையாலே ப்ரபு₄வென்னத்தக்கவனான ஜீவனேயாகவேண்டும். (லோகஸ்ய) "லோகஸ்து பு₄வநே ஜநே" என்கிற நிகண்டுவின்படி லோகஶப்தம் இங்கு விசித்திரமான ஜநஸமூஹத்தைக் குறிக்கிறது. தேவர், திர்யக், மனிதர், ஸ்தா₂வரம் எனும் நாலுவகைப்பட்ட விசித்ரமான ப்ராக்ருதயோனிகளில் பிறந்திருக்கும் ஜநஸமூஹத்திற்கு என்றபடி. (கர்த்ருத்வம் ந ஸ்ருஜதி) அந்த தே₃வாதி₃யோனிகளுக்குரிய ப்ரயத்நாதி₃ரூபமான கர்த்ருத்வத்தையும் உண்டுபண்ணுவதில்லை; (கர்மாணி ந ஸ்ருஜதி) அவற்றுக்குரிய ஶரீரேந்திரியசேஷ்டாரூபமான கர்மங்களையும் உண்டுபண்ணுவதில்லை. (கர்மப₂லஸம்யோக₃ம் ந ஸ்ருஜதி) அந்தந்தக் கர்மங்களால் உண்டாகும் தேவர் முதலானோர்க்கு அவ்வக்கர்மங்களின் பலானுபவத்தையும் உண்டுபண்ணுவதில்லை. (ந ஸ்ருஜதி) 'ஸ்ருஜ விஸர்கே₃' என்னும் தாதுவுக்கு விடுவது என்னும் பொருளும் உண்டானாலும், 'கர்த்ருத்வம் முதலானவற்றை விடுவதில்லை' என்று பொருள் கொண்டால், 'அவற்றை ஏற்றுக்கொள்ளுகிறான்' என்னும் ப்ரகரணவிருத்தமான பொருள் ஏற்படுமாகையால், 'கர்த்ருத்வம் முதலானவற்றை ஸ்ருஷ்டிப்பதில்லை, அதாவது உண்டுபண்ணுவதில்லை' என்றே பொருள்கொள்ளவேண்டும்.

कस्तर्हि ? स्वभावस्तु प्रवर्तते । स्वभावः—प्रकृतिवासना; अनादिकालप्रवृत्त-पूर्वकर्मजनितदेवाद्याकारप्रकृतिसंसर्गकृततत्तदात्माभिमानजनितवासनाकृत-मीदृशं कर्तृत्वादिकं सर्वम्; न स्वरूपप्रयुक्तमित्यर्थः ॥ १४ ॥

---

இனி, ஜீவன கர்த்ருத்வம் முதலானவற்றை உண்டாக்கவில்லை யெனில், கர்த்ருத்வம் முதலானவை எதனுல் உண்டாகின்றன என்னும் கேள்வி எழுமளவில், ப்ரக்ருதிவாஸனையாலேயே கர்த்ருத்வம் முதலானவை ஏற்படுகின்றனவென்கிறது ஶ்லோகத்தின் கடைசிப் பாதம் (ஸ்வப₄ாவஸ்து ப்ரவர்த்ததே) ப்ரக்ருதிவாஸனையே கர்த்ருத்வம் முதலானவற்றை உண்டாக்குகிறது. இவ்விடத்தில் ஓராக்ஷேபம் எழுகினறது:—அறிவுள்ளவனுன ஆத்மாவுக்குக் கர்த்ருத்வம் முதலானவை இல்லையென்றும், அறிவற்றதாய், சேதனுன ஜீவனின் குணமாத்ரமாயிருக்கும் வாஸனைக்கே கர்த்ருத்வம முதலானவை உண்டென்றும கூறுவது எப்படிப் பொருந்தும்? ஆத்மா இயல்வாகவே பரிசுத்தனுயிருக்கையால் அவனுக்குக் கர்த்ருத்வம் இல்லையெனில் இயல்வாகவே பரிசுத்தனுன அவனுக்கு ப்ரக்ருதிவாஸனை தான் எங்கிருந்து உண்டாகும்? எங்கிருந்துமே உண்டாகாமல் தானேயுள்ளதெனில், அவ்வாஸனை இயல்வானதென்று ஏற்படுகை யால், அதனுலுண்டாகும் கர்த்ருத்வம் முதலானவையும் இயல்வானவையெனறு கொளளவேண்டிவரும். இப்படிக் கொள்வதில்லை யாகையால் ஏதோவொனறிலிருந்து வாஸனை உண்டாகிறதெனறு சொல்லப்பார்த்தால், அந்த ஏதோவொனறு இயல்வானதா அல்லவா என்னும் கேளவி எழுகிறது; இயல்வானதெனில், வாஸனை இயல் வானதெனறு கொண்டால் வரும் தோஷம் இங்கும் வரும். இயல வானதல்லவெனில் அது எதிலிருந்து உண்டாகிறது என்னும் கேள்வி எழுகிறது. வாஸனையாலேயே உண்டாகிறதெனில் அந்யோந்யாஶ்ரயதோ₃ஷம் ஏற்படும். வேருென்றிலிருநது உண்டாகிற தெனில் அதுஇயல்வானதா அல்லவா என்னும் கேள்வி முதலானவை முன்போலவே முடிவில்லாமல் எழுமாகையால் அநவஸ்த₂ா தோ₃ஷம் வரும். ஆகையால் ப்ரக்ருதிவாஸனையாலே கர்த்ருத்வம் முதலானவை உண்டாகின்றன என்பது எப்படி என்னும இந்த ஆக்ஷேபம் 'ஸ்வப₄ாவஸ்து' எனறவிடத்தில் துஶப்₃த₃த்தாலே தவிர்க்கப்படுகிறது. எப்படித் தவிர்க்கப்படுகிறது எனில்: பீ₃ஜாங்குரந்யாயத்தாலே அந்யோந்யாஶ்ரய பரிஹாரம் ஏற்படுகிறதாகையாலே தவிர்க்கப்

नादत्ते कस्यचित्पापं न चैव सुकृतं विभुः।
अज्ञानेनावृतं ज्ञानं तेन मुह्यन्ति जन्तवः॥१५॥

15. நாத₃த்தே கஸ்யசித் பாபம் ந சைவ ஸுக்ருதம் விபு₄:।
அஜ்ஞாநேநாவ்ருதம் ஜ்ஞாநம் தேந முஹ்யந்தி ஜந்தவ:॥

விபு₄:— *பல இடங்களில் பரவக்கூடிய இந்த ஜீவன்,* கஸ்யசித் பாபம்—*(தனக்கு வேண்டியவனுக நினைக்கப்படும் புத்திரன் முதலான)* எவனுடைய *துக்கத்தையும்.* ந ஏவ ஆத₃த்தே—*நீக்கிவிடுவதேயில்லை;* (கஸ்யசித்) ஸுக்ருதம் ச—*(தனக்கு வேண்டாதவனுக நினைக்கப்படும் சத்ரு முதலான எவனுடைய) ஸுகத்தையும்,* ந ஏவ ஆத₃த்தே—*போக்கடிப்பதேயில்லை.* ஜ்ஞாநம்-*(இவனுடைய) அறிவு.* அஜ்ஞாநேந—*இவ்வறிவுக்கு விரோதி₄யான முன் செய்த வினைகளால்,* ஆவ்ருதம்-*மறைக்கப்பட்டுள்ளது;* ஜந்தவ:-*தே₃வாதி₃ஶரீரங் களிலிருக்கும் ஜீவர்கள்.* தேந-*அந்த முன்செய்த வினைகளால்.* முஹ்யந்தி—*(தேஹாத்மமயக்கம் முதலானவற்ருல்) மயங்கு கின்றனர்.*

---

14. ஆங்கொருவன் றீவினையு நல்வினை யும்பெரியோன்
பாங்கினிற் ருன்வாங்கும் பண்பிலனு—லீங்கறிவு
மாய வினையான் மறைந்தன்று மோகததி
லாய வுயிர்க ளவை.

---

படுகிறது. அதாவது, அநாதிகாலமாக வெவ்வேறு விதைகளி லிருநது வெவ்வேறு முளைகளும், அவற்றிலிருந்து வெவ்வேறு விதைகளும் ஏற்பட்டுவருவதுபோலே, இங்கும் அநாதிகாலமாக உண்டான அந்தந்தக் கர்மங்களாலே தேவர் முதலான ப்ராக்ருத ஶரீரங்களோடு தொடர்பு ஏற்பட்டு, அதனுல், பழுக்கக்காய்ச்சிய இரும்பில் நெருப்பென்னும் எண்ணம் ஏற்படுவ்துபோலே அந்தந்த ஶரீரங்களில 'நானே ஆத்மா' என்னும தேஹாத்மாபி₄மானம ஏற் பட்டு அதனுல் மாறிமாறி உண்டாகும் அந்தந்த வாஸனைகளாலே அந்தந்தக் காதருதவம முதலானவை உண்டாகின்றனவென்று கொள்கிருேமாகையாலே அந்யோந்யாஶ்ரயணம், அநவஸ்தை₂ முதலான தோஷங்கள் வரமாட்டா என்று கருத்து. 14.

॥भा॥ कस्यचित् स्वसंबन्धितयाऽभिमतस्य पुत्रादेः पापं दुःखं नादत्ते—नापनुदति। कस्यचित् प्रतिकूलतयाऽभिमतस्य सुकृतं सुखं

---

**பெரியோன்**—பல இடங்களில் பரவக்கூடிய இந்த ஜீவன், **ஆங்கு**—(தனக்கு வேண்டியவர்களாகவும் வேண்டாதவர்களாகவும் நினைக்கப்படுமவர்கள் நிறைந்த) உலகில், **ஒருவன் தீவினையும்**—(வேண்டியவனுக நினைக்கப்படும்) ஒருவனுடைய துக்கத்தையும், (ஒருவன்) **நல்வினையும**—(வேண்டாதவனுக நினைக்கப்படும்) ஒருவனுடைய ஸௌகத்தையும், **தான் பாங்கினில் வாங்கும் பண்பு இலனுல்**— தான் பக்குவமாகப் போக்கும் தன்மையை உடையவனல்லன்; **ஈங்கு**—இவ்வுலகில், **அறிவு**-(ஜீவனுடைய) அறிவு, **மாயவினையால்**-ஆஶ்சர்யமான புண்யபாபங்களால், **மறைந்தன்று**—மறைக்கப்பட்டுள்ளது; **அவை**— அப்புண்யபாப கர்மங்களால், **உயிர்கள்**—(தேவர் முதலான சரீரங்களிலுள்ள) ஜீவர்கள், **மோகத்தில் ஆய**—(தேஹாத்ம மயக்கம் முதலான) மயக்கங்களில் ஆழ்ந்துள்ளன.

---

15. முன் ஶ்லோகத்தில் முதல் மூன்று பாதங்களில் கூறப்பட்ட ஆத்மாவின் கர்த்ருத்வமின்மை முதலானவை இந்த ஶ்லோகத்தின முற்பாதியிலும், கடைசிப்பாதத்தில் கூறப்பட்ட ப்ரக்ருதிவாஸனையின் கர்தருத்வம் முதலானவை இந்த ஶ்லோகத்தின் பிற்பாதியிலும் விளக்கப்படுகின்றன: (கஸ்யசித் பாபம் நைவ ஆதத்தே) தனக்கு வேண்டியவனுக நினைக்கப்படும் புத்திரன மித்திரன் முதலான எவனுடைய துக்கத்தையும் இந்த ஜீவன் போக்கடிப்பதேயில்லே. (கஸ்யசித் ஸுக்ருதம் ச நைவ ஆதத்தே) தனக்கு வேண்டாதவனுக நினைக்கப்படும் சத்துரு முதலான எவனுடைய ஸௌகத்தையும் இந்த ஜீவன் போக்கடிப்பதேயில்லே. (கஸ்யசித் பாபம் ஸுக்ருதம ச நைவ ஆதத்தே) (எவனுடைய பாபத்தையும், புண்ணியத்தையும் வாங்குவதேயில்லே) என்றே பொருள் ஏற்பட்டாலும, ஒரு ஜீவனுடைய பாபத்தையோ, புண்ணியத்தையோ மற்றொரு ஜீவன் வாங்குவதற்கு ப்ரஸக்தியே இல்லாமையால், பாபபலமான துக்கத்தைப் பாபமென்றும், ஸுக்ருதபலமான ஸௌகத்தை ஸுக்ருதமென்றும இங்கு கூறுவதாகக்

च नादत्ते—नापनुदति। यतोऽयं विभुः न क्वाचित्कः, न देवादि-
देहाद्यसाधारणदेशः, अत एव न कस्यचित्संबन्धी, न कस्यचित्
प्रतिकूलश्च। सर्वमिदं वासनाकृतम्। एवंस्वभावस्य कथमियं विपरीत-

---

கொள்ளவேண்டும். பிறருடைய ஸுகதுக்கங்களைத் தான் போக்கி விடுவதாக இவன் அபி₄மானிக்கிறானன்றோ; அது மயக்கத்தால் ஏற்பட்டது என்று கருத்து. 'ந ஆத₃த்தே' [வாங்குவதில்லை] என்றதற்கு, பிறருடைய ஸுகதுக்கங்களைத் தான ஏற்றுக் கொள்வதில்லை என்று கொள்வது பொருந்தாதாகையால், அவற்றைப் போக்கடிப்பதில்லை என்றே பொருள் கொள்ளவேண்டும். ஆத₃ாநஶப்₃த₃த்திற்குச் செய்வது என்னும் பொருளில் பிரயோகமிருப்பதுபோலே வாங்குவது அல்லது போக்கடிப்பது என்னும் பொருளிலும் பிரயோகமுள்ளதாகையாலும், 'ஸுகதுக்கங்களை எவனுக்கும போக்கடிப்பதில்லை' என்று கூறினால் 'அவற்றை எவனுக்கும் செய்வதில்லை' என்பது தன்னடையே ஸித்திக்குமாகையாலும, 'ஸுகதுக்கங்களை எவனுக்கும் செய்வதில்லை' என்று கூறினால் 'அவற்றை எவனுக்கும போக்கடிப்பதில்லை' எனறு தன்னடையே ஸித்திக்காதாகையாலும் இங்கு 'ந ஆத₃த்தே' எனனும் பதத்திற்குப் 'போக்கடிப்பதில்லை' என்று பொருள்கொள்வதே பொருத்தமாகும். ஒருவனுடைய ஸுகதுக்கங்களையே மற்றொருவன் போக்கடிப்பதற்கு இடமிலலையாகையால், 'கஸ்யசித்' முதலான பதங்களை ஆவ்ருத்திசெய்துகொண்டு, 'வேண்டியவனுடைய துக்கங்களைப் போக்கடிப்பதேயில்லை' என்றும், 'வேண்டாதவனுடைய ஸுகங்களை போக்கடிப்பதேயில்லை' என்றும் பிரித்துப் பொருள்கொள்ளப்பட்டது. 'ந சைவ' என்றவிடத்தில் உள்ள ஏவகாரத்தையும், வாசியில்லாமையாலே இரண்டிடததிலும் கூட்டிப்பொருள்கொள்ளவேணும. இவ்வண்ணமாக ஜீவன் மற்றவர்களுக்கு ஸுகதுக்கங்களைச் செய்யவோ, போக்கடிக்கவோ முடியாமலிருப்பதற்குக் காரணமென்னவெனில், இவன் விபு₄வாயிருக்கையே எனகிறது.— (விபு₄:) இவன இந்த தேவாதி தேஹங்களிலேயே கட்டுப்பட்டிராமல், பல தேஹங்களிலும் பிரவேசிக்கக் கூடியவனாகையாலே, ஒருவன இவனுக்கு வேண்டாதவனாவதும், மற்றொருவன் வேண்டியவனாவதும, அதனால் ஒருவனுக்கு ஸுகத்தைப்போக்கி துக்கத்தைச் செய்வதும், மற்றொருவனுக்கு துக்கத்தைப்போக்கி ஸுகத்தைச் செய்வ

वासनोत्पद्यते ? अज्ञानेनावृतं ज्ञानं—ज्ञानविरोधिना पूर्वपूर्वकर्मणा स्वफलानुभवयोग्यत्वाय अस्य ज्ञानमावृतं—संकुचितम् । तेन ज्ञाना-

தும தேஹத்தாலும், அந்த தேஹஸம்பந்தத்தாலுண்டான வாஸனை யாலும் ஏற்படுவதேயொழிய, இயல்வாக ஜீவஸ்வரூபத்தால் ஏற் படுவதன்று என்று கருத்து. ஜீவன அணுஸ்வரூபன் என்பது "ஏஷோऽணுராத்மா" [இவ்வாத்மா அணு]

"வாலாக்₃ரஶதப₄ாக₃ஸ்ய ஶதத₄ா கல்பிதஸ்ய ச ।
ப₄ாகே₃ா ஜீவ: ஸ விஜ்ஞேய: ஸ சாநந்த்யாய கல்பதே ॥"
[ஶ்வேதாஶ்வதரம்]

[நெல்நுனியில் நூற்றிலொருபங்கை நூறுகூறிட்ட பகுதியிலும் ஒரு பகுதியாயிருப்பவன் ஜீவன் எனறு அறியவேண்டும. அவன் (தன் அறிவால் முக்திநிலையில்) எங்கும் பரவுகினறவனுகிருன்.] முதலான ஶ்ருதி முதலிய ப்ரமாணஙகளால் ஏற்படும் விஷயமாத லால், அதற்கு முரணுக இங்குள்ள விபு₄ஶப்₃த₃த்தை ஜீவனுடைய ஸ்வரூபவிபு₄த்வத்தைச் சொல்லுவதாகக் கொளளலாகாது. முன் ஶ்லோகத்திலுள்ள ப்ரபு₄ஶப்₃த₃பர்யாயமாகக் கொள்வதிலும் இங்கு பயன இல்லை. ஆகையால், விபு₄ஶப்₃த₃த்திற்கு ஒரு குறிப்பிட்ட தே₃ஶத்திற்கே உரியவனுயிராதவன் என்று பொருள்கொண்டு 'இத்தேஹத்திற்கே உரியவனுயிராமல், பல தேஹங்களிலும் பிர வேசிக்கக் கூடியவன்' என்று பொருள் கொள்ளப்பட்டது. இவ் வண்ணமாக, தேஹத்துக்குக் கட்டுப்பட்டிராதவனுகையாலே பிறர்க்கு ஸுகதுக்கங்களைச் செய்வதும் போக்கடிப்பதும வாஸனை யால் ஏற்படுவதேயொழிய, இவனுல் ஏற்படுவதில்லை எனறு கூறினுல், இத்தகையவனுக்கு இத்தன்மைக்கு மாருன அவ்வாஸனை தான் எப்படி ஏற்படும் என்னும் கேள்விக்கு பதில் உரைக்கிறது ஶ்லோகத்தின் பிற்பகுதி. (ஜ்ஞாநம் அஜ்ஞாநேந ஆவ்ருதம்) இந்த ஜீவனுடைய அறிவு, அவ்வறிவுக்கு விரோதியான முன் செய்த புண்யபாபகர்மங்களால் சுருக்கத்தை அடைவிக்கப்பட் டுள்ளது. 'நஞ்'ஞுக்கு, வேறுபட்டிருக்கை, அப₄ாவம் (இல்லாமை) அல்பத்வம் (சிறிதாயிருக்கை) முதலான மற்றும் பல பொருள் களும் உண்டாஞலும், அறிவைமறைக்கும் பொருளைச் சொல்லும இங் குள்ள அஜ்ஞாநஶப்தத்தில் உள்ள நஞ்ஞிற்கு அவை பொருந்த மாட்டாவாகையால், நஞ்ஞிற்கு விரோதா₄ர்த்த₂த்தைக்கொண்டு ஜ்ஞானத்திற்கு விரோதி₄யான முன்செய்த வினைகள் அஜ்ஞாநஶப்தத் தால் சொல்லப்படுவதாகக்கொள்ளப்பட்டது,'ஒளி மறைக்கப்பட்டது'

वरणरूपेण कर्मणा देवादिदेहसंयोगस्तत्तदात्माभिमानरूपमोहश्च जायते। ततश्च तथाविधात्माभिमानवासना, तदुचितकर्मवासना च, वासनातो विपरीतात्माभिमानः, कर्मारम्भश्चोपपद्यते ॥ १५ ॥

எனனுமபோது 'அடியோடு அழிக்கப்பட்டது' எனருவதுபோல், இங்கு 'ஆவ்ருதம்' [மறைககப்பட்டது] என்றதற்கு அடியோடு அழிக்கப் பட்டது என்று பொருள்கொண்டால், "ந விஜ்ஞாதுர் விஜ்ஞாதேர் விபரிலோபோ வித்₃யதே" [ப்₃ருஹ6-3-30] [அறிவாளியான ஜீவனின் அறிவுக்கு அடியோடு அழிவு ஏற்படாது.] முதலான ப்ரமாணங் கள் விரோதிக்குமாகையால, 'ஆவ்ருதம' என்றதற்கு, 'சுருக்கத்தை அடைவிக்கப்பட்டுளளது' எனறு பொருள் கொள்ளப்பட்டது. இப்படிக் கர்மங்கள் ஜ்ஞானத்தைச் சுருக்குவதற்குப் பயன் யாதெனில: தம் ப₂லனுன ஸம்ஸாரதாபங்களை அநுப₄விப்பிக்கையே பயனுகும். இவனுடைய அறிவு சுருங்காவிடில் கர்மப₂லமான ஸம் ஸாரதாபங்களை இவன் அநுப₄விக்கமுடியாதன்றே. இவ்விடத்தில்,

"விஷ்ணுஶக்தி: பரா ப்ரோக்தா க்ஷேத்ரஜ்ஞாக்₂யா தத₂ாऽபரா।
அவித்₃யா கர்மஸமஜ்ஞாऽந்யா த்ருதீயா ஶக்திரிஷ்யதே ॥
யயா க்ஷேத்ரஜ்ஞஶக்திஸ ஸா வேஷ்டிதா ந்ருப ஸர்வக₃ா।
ஸம்ஸாரதாபாநகி₂லா நவாப்நோத்யதிஸந்ததாந் ॥
தயா திரோஹிதத்வாச்ச ஶக்தி: க்ஷேத்ரஜ்ஞஸம்ஜ்ஞிதா।
ஸர்வபூ₄தேஷு பூ₄பால தாரதம்யேந லக்ஷ்யதே ॥"
[வி. பு-6-7-61, 62, 63]

[அரசனே! விஷ்ணுவின ஸ்வரூபமாகிற ஶக்தி மிகப்பெரிய ஶக்தி யாகும. 'க்ஷேத்ரஜ்ஞன' [ஜீவன] எனப்படும மற்றொரு விஷ்ணு சக்தி அதனிலும் தாழ்ந்ததாகும். வித்₃யையாகிற ஜ்ஞானத்திற்கு விரோதியாகையாலே அவித்₃யை எனப்படும் புண்யபாபகர்மம் மூன்ருவது விஷ்ணுசகதியாகும். எங்கும் பரவக்கூடிய அந்த ஜீவனுகிற சக்தி அக்கர்மமாகிற சக்தியாலே் சூழப்பட்டுள்ளது. (இப்படிச் சூழப்பட்டுளளமையாலேயே) கடுமையான எல்லா ஸாம் ஸாரிகதாபங்களையும அந்த ஜீவனுகிற சக்தி அடைகிறது. அது அக்கர்மத்தால் மறைககப்டிருககையாலேயே எல்லா சரீரங்களிலும் (அறிவில்) ஏற்றத்தாழ்வுடன் காண்கின்றது.] என்று தொடங்கி ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் ஸம்ஸாரதாபங்களை விளைப்பதற்காக ஜீவ னுக்குக் கர்மத்தால் ஏறபடுவதாகக்கூறப்பட்ட பலவிதமான ஜ்ஞானச் சுருக்கம இங்கு அநுஸந்திககத்தககது. (தேந) முற்கூறியபடி ஞானத்தைச் சுருங்கச்செய்யும் புண்யபாபகர்மத்தால். (ஜந்தவ: முஹ் யந்தி) தேவர் முதலான தேஹத்தோடு சேர்க்கையை அடையப்பெற்ற

॥भा॥ * सर्वं ज्ञानप्लवेनैव वृजिनं संतरिष्यसि। (४. ३६), * ज्ञानाग्निस्सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा (४. ३७), * न हि ज्ञानेन सदृशं पवित्रम् (४. ३८) इति पूर्वोक्तं स्वकाले संगमयति—

ज्ञानेन तु तदज्ञानं येषां नाशितमात्मनः।
तेषामादित्यवज्ज्ञानं प्रकाशयति तत्परम्॥ १६॥

16. ஜ்ஞாநேந து தத₃ஜ்ஞாநம் யேஷாம் நாஶிதமாத்மந:।
தேஷாமாதி₃த்யவத் ஜ்ஞாநம் ப்ரகாஶயதி தத் பரம்॥

**யேஷாம்**—*எந்த ஜீவர்களுக்கு,* **ஆத்மந: ஜ்ஞாநேந து**—*ஆத்மவிஷயமான ஜ்ஞானத்தால்,* **தத் அஜ்ஞாநம**—*அந்தக் கர்மம்,* **நாஶிதம்**—*அழிக்கப்பட்டதோ,* **தேஷாம்**—*அவர்களுக்கு,* **பரம் தத் ஜ்ஞாநம்**—*மேலான அவ்வாத்மஜ்ஞானம்,* **ஆதி₃தயவத்**—*ஸூர்யனைப்போலே,* **ப்ரகாஶயதி**—*(எல்லாவற்றையும்) பிரகாசப்படுத்துகிறது.*

---

15. அந்த மயர்வை யறிவா னசிப்பித்துச்
சிந்தை தெளிந்து சிறப்புடையோர்—தந்தமது
பேரறிவு தானே பகலவனிற் பீடுடைத்தாய்
ஓரறிவு காட்டு நிறத்து.

**அந்த மயர்வை**-*அந்த அஜ்ஞானஹேதுவான கர்மத்தை,* **அறிவால்**—*ஆத்மஜ்ஞானத்தால்,* **நசிப்பித்து**-*அழியச்செய்து,* **சிந்தை தெளிந்து சிறப்புடையோர் தந்தமது**—*மனத்தெளிவை அடைந்து சிறப்புற்றவர்களுடைய,* **பேரறிவுதானே**—*மிகப்*

---

*ஜீவர்கள் அந்தந்த தேஹங்களையே ஆத்மாவாக மயங்குகின்றனர்; அந்த தேஹாத்மாபி₄மானத்திலிருந்து தே₃ஹாத்மாபி₄மான வாஸனையும், அந்தந்த ஶரீரத்திற்குரிய கர்மவாஸனையும் ஏற்படுகிறது. அந்த வாஸனையாலே இந்த ஆத்மாவின் இயல்வுக்கு முரண்பட்ட தேஹாத்மாபி₄மானம் பேலும் மேலும் வளர்கிறது. அதனால் இவன் தன சரீரஸம்பந்தியான ஒருவனைத் தனக்கு வேணடியவனுக மயங்கி அவனுக்கு துக்கத்தைப்போக்கி ஸுகத்தைச் செய்ய முயல்கிருன்; தன் சரீரத்திற்கு வேண்டாதவனை ஒருவனைத் தனக்கு வேணடாதவனுக மயஙகி அவனுக்கு ஸுகத்தைப்போக்கி துக்கத்தைச் செய்ய முயல்கிருன. இவ்வண்ணமாகக் கர்த்ருத்வம முதலானவை வாஸனையினுல் ஜீவனுக்கு உண்டாகின்றனவேயொழிய இயல்வானவையல்ல என்று கருத்து.* 15.

||भा|| एवं वर्तमानेषु सर्वेष्वात्मसु येषामात्मनामुक्तलक्षणेनात्मयाथात्म्योपदेशजनितेन आत्मविषयेण अहरहरभ्यासाधेयातिशयेन

---

பெரிதான அவ்வாத்மஜ்ஞானமே, பகலவனில் பீடு உடைத்தாய்—சூரியனைப்போலே பெருமைபெற்றதாய், நேர் அறிவு காட்டும நிறத்து—(எலலா விஷயங்களைப்பற்றியும்) உண்மையான அறிவைக்காட்டும் தன்மையை உடையதாகும்.

---

16. மூன்ருமத்தியாயததில் [27-30] சொல்லப்பட்ட அகர்த்ருத்வாநுஸந்த₄ானத்தின் ப்ரகாரஙகள் இதுவரையில் விளக்கப்பட்டன. இனி, ''ஸர்வம் ஜ்ஞாநப்லவேநைவ வ்ருஜிநம் ஸந்தரிஷ்யஸி'' [4-36] [ஆத்மஜ்ஞானமாகிற ஓடததிலுலேயே (கடலபோனற) எலலாப் பாபஙகளையும கடக்கப்போகிருய்] ''ஜ்ஞாநாக்₃நி: ஸர்வகர்மாணி ப₄ஸ்மஸாத் குருதே தத₂ா'' [4-37] [ஆதமஜ்ஞானமாகிற நெருப்பு அவ்வணணமே எலலாக்கர்மங்களையும் சாமபலாக்குகிறது] ''ந ஹி ஜ்ஞாநேந ஸத்₃ருஶம பவித்ரம்'' [4-38] [ஆதமஜ்ஞானத்தைப் போலே பரிசுத்தப்படுத்துவது ஒன்றுமில்லையன்றோ] என்று நாலாவது அத்தியாயத்தில கூறப்பட்ட ஆதமவிஷயமான ஜ்ஞானததின் பெருமை உரியகாலததில கூறப்படுகிறது; அகர்த்ருத்வாநுஸந்த₄ானத்தைச் சொன்னபிறகுஅதை உள்ளடக்கியஆதமவிஷய ஜ்ஞானத்தின் பெருமையைச் சொல்லவேண்டியது அவசியமாகையாலும், முன ஶ்லோகத்தில் கர்மத்தால் ஜ்ஞாநம மறைக்கப்பட்டுள்ளது. எனறு சொன்னபின் எப்போது அமமறைவு நீங்கும் என்பதைச் சொல்லவேண்டியது அவசியமாகையாலும், இந்த ஶ்லோகம இங்கு அவதரித்துள்ளது எனபது குறிக்கொள்ளத்தக்கது. (யேஷாம து) எவர்களுக்கோவெனில்; 'து' [எனில்] எனனும் ஶப்தம் மற்ற ஆத்மாககளைக்காட்டிலும் இவர்களுக்குள்ள சிறப்பைக்காட்டுகிறது. முன ஶ்லோகத்தில சொன்னபடி மற்ற சேதனர்கள் முன் செய்த வினைகளாலே ஞானச்சுருக்கத்தைப் பெற்று மயங்கித் தாழ்ந்து கிடக்கும்போது, ஜ்ஞானத்தாலே அந்த முன் செய்த வினைகள் நசிக்கப்பெற்ற இவர்கள் மயக்கம நீங்கி வாழ்ச்சி பெறுகிருர்கள் என்று கருத்து; இவர்களுக்கு ஏற்படும் வாழ்ச்சி ஶ்லோகத்தின் பிற்பாதியிலே கூறபபடுகிறது. அன்றிக்கே, 'யேஷாம ஜ்ஞாநேந து' எனறு கூட்டி முற்கூறியபடி ஆத்மாவைப்பற்றிய உண்மையுபதேசத்தால் உண்டானதாயிருக்கை, தினந்தோறும் அப்₄யாஸத்தால் முதிர்ச்சிபெற்றதாயிருக்கை, பரிசுத்தப்படுத்துமவற்றில மிகச்சிறந்ததாயிருக்கை முதலானவையான இவர்களுடைய ஞானத்துக்குள்ள சிறப்பு துஶப்தத்தாலே கூறப்படுவதாகவும் கொள்ளலாம்.

निरतिशयपवित्रेण ज्ञानेन तत्–ज्ञानावरणमनादिकालप्रवृत्तानन्तकर्मसंचय-रूपमज्ञानं नाशितम्, तेषां तत् स्वाभाविकं परं ज्ञानमपरिमितमसंकुचितं

'யேஷாம்' என்று இப்ரகரணத்தில் கூறப்படும் கர்மயோக₃ நிஷ்ட்டர்களுக்கிடையே எவர்களுக்கு ஆத்மஜ்ஞானத்தாலே முன் செய்த வினைகள் நசிக்கப்பெறுகின்றனவோ எனறும் பொருள் கொள்ளலாம். (ஆத்மந: ஜ்ஞாநேந) ஆத்மவிஷயமான அறிவால். "ஆத்மந:" என்றவிடத்தில் ஷஷ்டி [ஆறும் வேற்றுமை] ஸம்ப₃ந்த₄ ஸாமாந்யமாத்ரத்தைச் சொல்லுவதிலும, ஆதமாவால் செய்யப்படும் அறிவு என்று பொருள்கொள்வதிலும் இங்கு பயனில்லையாகையாலும், 'யேஷாம் ஜ்ஞாநேந' என்பதிலுலேயே ஆத₄ாராதே₄யப₄ாவாதி₃களாகிற ஸம்ப₃ந்த₄ஸாமாந்யார்த்த₂ம் கிடைக்குமாகையாலும, ஷஷ்டி ஸம்ப₃ந்த₄விஶேஷமான விஷயவிஷயிதா ஸம்ப₃ந்த₄த்தைச் சொலலுகிறது என்று கொள்வதே பொருத்தமுடையது. ஆக, இப்ரகரணத்திற் சொல்லப்பட்ட ஆத்மவிஷயமான அறிவால் எவர்களுடைய அஜ்ஞாநம் அழிக்கப்பட்டதோ எனறு பொருளாகிறது. (தத் அஜ்ஞாநம் நாஶிதம்) முன் ஶ்லோகத்தில் ஆத்மாவுக்குச் சுருக்கத்தை விளைப்பதாகக் கூறப்பட்டதான முன் செய்த வினை அழிக்கப்பட்டதோ. (தத் அஜ்ஞாநம் ஜ்ஞாநேந நாஶிதம) அநாதிகாலமாக வளர்ந்துவரும் அநந்த புண்யபாபகர்மங்களாகிற காரிருள ஞானஸூர்யனுலே கணததில் அழிக்கப்பட்டது என்று கருத்து. (தேஷாம்) அததகைய கர்மயோக₃ நிஷ்ட்டர்களுக்கு. (தத் ஜ்ஞாநம) இயல்வான அவ்வாத்மஜ்ஞானம. (பரம் ஜ்ஞாநம) முறகூறியபடி சுருக்கமற்றதாகையாலே அனைத்தையும் அறிவதாய், அளவற்றதான அவ்வறிவு. 'பரம் ப்ரகாஶயதி' [மேலானதை ப்ரகாஶப்படுத்துகிறது] என்றுமுதல் வேற்றுமையிலுள்ள ஜ்ஞாநஶப்தத்தைக்காட்டிலும் வேறு வேற்றுமையாகப் பரஶப்₃த₃த்தை (இரண்டாவது வேற்றுமையாகக்) கொள்வதைக்காட்டிலும இரண்டு ஶப்₃த₃ங்களையும் ஒரே வேற்றுமையாகக் கொள்வதில் ஸ்வாரஸ்யம் அதி₄கமாகையாலும், சுருக்கத்திலிருந்து விடுபட்ட அறிவு பரத்தை மாத்திரமல்லாமல் பரம், அபரம் ஆகிய எல்லாவற்றையும் பிரகாசப்படுத்துமாகையாலே 'ஸர்வம ப்ரகாஶயதி' [எல்லாவற்றையும் பிரகாஶப்படுத்தும்] என்பது தன்னடையே ஸ்வரஸமாக ஸித்திக்குமாகையாலும், 'பரம் ஜ்ஞாநம' எனறு கூட்டிப்பொருள கொள்வதே சிறந்தது. கர்மம் நீஙகினுல் அறிவு அனைததையும் அறிவிக்கும் என்பது ஶ்ருதியில் பலவிடங்

आदित्यवत्सर्वं यथावस्थितं प्रकाशयति। तेषामिति विनष्टाज्ञानानां बहुत्वाभिधानादात्मस्वरूपबहुत्वम् * न त्वेवाहं जातु नासम् (२-१२) इत्युपक्रमावगतमत्र स्पष्टतरमुक्तम्। नचेदं बहुत्वमुपाधिकृतं, विनष्टाज्ञानाना-

---

களில் கூறப்பட்டுள்ளது. (ஆதித்$_3$த்யவத் ப்ரகாஶயதி) சூரியனை மூடியிருக்கும் மேகமூட்டம் விலகினால் சூரியனின் ஒளி அனைத்தையும் உள்ளபடி தெளிவுபடுத்துவதுபோல கர்மம விலகினால் ஆத்மாவின அறிவு மறைவு நீங்கப்பெற்று அனைத்தையும் உள்ளபடி அறிவிக்கும். இங்கு 'ஆதித்$_3$தயன' எனனும ஶப்$_3$த$_3$ம ஆதித்$_3$த்யனின ஒளியைக் குறிக்கிறது. ஒளியினாலேயேயன்றோ சூரியன அனைத்தையும் பிரகாசப்படுத்துகிறது. சூரியனின் ஸ்தானத்தில் ஆத்மாவும, அவனுடைய ஒளியின ஸ்தானததில ஆத்மாவின் அறிவும் இருக்கையாலேயே ஆத்மஸ்வரூபம் த$_4$ர்மிபூ$_4$தஜ்ஞாநமென்றும, அதன அறிவு த$_4$ர்மபூ$_4$தஜ்ஞானம் எனறும கூறப்படுகிறது. அனறிக்கே,"ஆதித்$_3$த்யவத் (அவஸ்தி$_2$தாநாம) தேஷாம் (ப்ரப$_4$ாதுல்யம) ஜ்ஞாநம" என்று கொண்டு "சூரியனைப்போலிருக்கும் அவர்களுடையதான ஒளியைப்போலிருக்கும் அறிவு" என்றும் பொருளகொள்ளலாம்.

இப்படிப் பதங்களுக்கும், திருஷ்டாந்தததிற்கும பொருந்தும்படி பொருளகொள்ளாமல, 'பரம' எனனும் பதத்திற்கு விஶேஷ்யமாகப் 'பத$_3$ம்' என்னும் பதத்தை வருவித்துக்கொண்டு. 'பரமார்த்த$_2$ தத்துவத்தைப் பிரகாசப்படுத்துகிறது' எனறு சங்கரர் பொருள் கொண்டது பொருத்தமற்றது.

இந்த ஶ்லோகம் ஶங்கரருடைய அத்வைத மதத்திற்கும் ப$_4$ாஸ்கரரின பே$_4$த$_3$ாபே$_4$த$_3$ மதத்திற்கும் பகவத்கீதை மிகவும் பொருந்தாது எனக்காட்டுகிறது; எப்படியெனில்: ஒரு நூலின் தொடக்கத்தில் சொல்லப்பட்ட விஷயமே, நடுவிலும பல விடங்களில் வலியுறுத்தப்பட்டு, முடிவிலும் கூறப்பட்டால் அதுவே அந்நூலின் கருத்து என்பதை எளிதில் அறியலாம். "உபக்ரமோபஸம்ஹாரௌ அப்$_4$யாஸோSபூர்வதா ப$_2$லம அர்த்த$_2$வாதோ$_3$பபதீ ச லிங்க$_3$ம் தாத்பர்ய நிர்ணயே ||" [(1) உபக்ரமோபஸம்ஹாரங்கள் (முதலும, முடிவும) (2) அப்$_4$யாஸம் (நடுவில் அடிக்கடி படித்தல்) (3) (ப்ரதயக்ஷம் முதலான மற்ற ப்ரமாணங்களால் அறியமுடியாதபடி) அபூர்வமாயிருத்தல் (4) ப$_2$லம் (5) அர்த்த$_2$வாத$_3$ம (புகழ்ந்து கூறுதல)

(6) உபபத்தி (யுக்தியுடன் கூடியிருத்தல்) ஆகிய ஆறு அடையாளங்கள் ஒரு நூலின் தாத்பர்யததை நிர்ணயித்துத தருபவை ] என்கிற ஷட்$_3$வித$_4$தாத்பர்யலிங்கஙகளில் உபகரோமோபஸம்ஹாரங்களை யும், அப்$_4$யாஸத்தையும் முதலிரண்டு லிங்க$_3$ங்களாக (அடையாளங்களாக) எடுததிருப்பதைக் காணலாம். இவ்விரண்டு லிங்கங்களும கீதையில் எப்படி அமைந்திருக்கினறன என்று பார்த்தால், உபக்ரமத்தில் (தொடககத்தில்) "ந தவேவாஹம்" [கீதை 2-12] எனனும ஸ்லோகத்தில் ஜீவேஸ்வரபே$_4$த$_3$மும, ஜீவாதமாக்களிடையே பரஸ்பரபே$_4$த$_3$மும கூறபபட்டன. முடிவிலும், ''மாமேவைஷ்யஸி'' [கீதை 18-65] [எனனையே அடைவாய்] "அஹம் த்வா ஸர்வ பாபேப்$_4$யோ மோக்ஷயிஷ்யாமி''[கீதை18-66] [நான உன்னை எல்லாப் பாபங்களினினறும் விடுவிக்கிறேன்.] என்று முக்தி நிலையிலும் ஜீவேஸ்வரபே$_4$த$_3$ம் கூறப்படபபோகிறது. நடுவிலுள்ள இந்த ஸ்லோகததில் முக்தி நிலையில ஜீவர்களுக்கிடையே பரஸபரபே$_4$த$_3$ம வலியுறுததப்படுகிறது. எப்படியெனில: ஸாங்கரப$_4$ாஸ்கரமதநிஷ்டர்கள் 'ந த்வேவாஹம' என்னும ஸ்லோகத்தில் சொனன ஜீவ ப$_3$ஹுத்வம மயககததினாலோ ஒருபாதி$_4$யினாலோ ஏற்படுவதாகக் கூறுகினறனர். இஙகு அஜ்ஞானம் நசித்தபின்பு 'தேஷாம்' என்று பனமையாகப பிரயோகிததிருக்கிறபடியால முக்திநிலையில் மயக்கம உபாதி$_4$ முதலியவையெல்லாம நீஙகியபினபும ஜீவாத்மாக்கள் பலர் உளர் எனறு தெளிவாகிறது. ஆகையால் உபக்ரமத்தில் சொனன ஜீவப$_3$ஹுத்வம் ஸாங்கரப$_4$ாஸ்கரர்கள கூறுகிறபடி மயக்கத்தினாலோ உபாதி$_4$யினாலோ ஏற்படுவதல்ல, உண்மையாகவே உள்ளதென்று நடுவிலுள்ள இந்த ஸ்லோகத்தில் மிகவும தெளிவுபடுத்தப்படுகிறது. ஸங்கரமதத்தின்படி பொய்யானதொரு அஜ்ஞானம் ப்ரஹ்மத்தை மறைப்பதாலே, பொய்யான பல அந்த:கரணஙகளாகிற உபாதி$_4$கள் தோன்றி அவற்றில் ப்$_3$ரஹ்மம பிரதிபலிப்பதாலே ஜீவர்கள் பலர் என்னும் மயக்கம ஏற்படுகிறது. பொய்யான அவ்வஜ்ஞானம் நீங்கியபின் அதனாலுண்டாகும் அந்த:கரணங்களும் அழிந்துவிட வேண்டுமாகையால் ஜீவர்கள் பலர் எனும் மயக்கத்திற்கு இடமில்லை. பாஸ்கரமதத்தின்படி உண்மையான கர்மங்கள் அஜ்ஞான மெனப்படுகின்றன; அதனால் ஸரீரங்கள், அந்த:கரணங்கள் முதலான பல மெய்யான உபாதி$_4$கள் தோன்றுகின்றன. அந்த சரீராந்த:கரணங்களால் அளவுபடுத்தப்பட்ட ப்$_3$ரஹ்மம் பல ஜீவர்களாகத் தோன்றுகிறது. இந்த மதத்திலும் அஜ்ஞானமாகிற கர்மம் அழிந்தவுடன அதனாலுண்டாகும் ஸரீராந்த:கரணங்களாகிற

मुपाधिगन्धाभावात्। तेषामादित्यवज्ज्ञानम् इति व्यतिरेकनिर्देशात् ज्ञानस्य स्वरूपानुबन्धिधर्मत्वमुक्तम्। आदित्यदृष्टान्तेन च ज्ञातृज्ञानयोः

உபாதி₄களும அழிந்துவிடவேண்டுமாகையால் ஜீவர்கள் பலராகத் தோனற இடமில்லை. ஆகையால், அஜ்ஞானம் அழிந்தபினபு இங்கு 'தேஷாம்' என்று ஜீவர்களைக் குறித்துப் பனமையாகப் பிரயோகித்திருப்பது அவ்விரு மதங்களிலும சிறிதும் பொருந்தாது.

அத்வைத மதத்தில் ஒப்புக்கொள்ளப்படும மற்றொரு கொள் கைக்கும் இந்த ஸ்லோகம் மிகவும் பொருத்தமற்றதாயிருக்கிறது. அதாவது,— "ஸாத்₃த₄த்₃ஶையில ஆத்மா ஜ்ஞானஸ்வரூபமாயிருப் பதேயொழிய ஜ்ஞானததை குணமாக உடையதல்ல; 'நான் அறிகிறேன்' 'என்னுடைய அறிவு' என்று ஸமஸாரத₃ஶையில் அறிவு தனக்கு குணமாயிருப்பதுபோல் உண்டாகும் வழக்கு மயக் கத்தால் ஏற்படுவது எனறு அதவைதிகள் கூறுகிறார்கள். அது இந்த ஸ்லோகத்திற்குப் பொருந்தாது. எப்படியெனில: "ஆதி₃த்யவத் தேஷாம் ஜ்ஞாநம்" [சூரியனுடையதுபோலே அவர்களுடைய அறிவு] என்று முக்தி நிலையிலும் ஞானத்தை ஜீவர்களைக்காட்டிலும் வேறுபடுத்திக் கூறுகையாலே, தேஜோத்₃ரவ்யமான சூரியனே, தேஜோத்₃ரவ்யமாய், எங்கும் பரவும் ஒளியையும் த₄ர்மமாக உடையவனாயிருப்பதுபோலே, அஜ் ஞானம் நீங்கிய முக்திநிலையிலும் அறிவு மயமான ஜீவர்கள், ஒளி போனறு எங்கும் பரவும ஓர் அறிவைத் தமக்கு த₄ர்மமாக உடைய வர்களாயிருப்பார்கள் என்று விளங்குகிறது. சூரியனை திருஷ்டாந்த மாக எடுக்கையாலே ஜீவர்களுடைய ஸ்வரூபமும், அறிவும சூரிய னும் ஒளியும் போல் ஒன்றோடொனறு பிரிக்கமுடியாதபடி சேர்ந்தே யிருக்கின்றன என்றும் காட்டப்படுகிறது. சூரியனுடைய ஒளி மேக மூட்டத்தால் மறைக்கப்பட்டு, மூட்டம விலகியவுடன் அனைத்தையும் தெளிவுபடுத்துவதுபோலே, ஆத்மாவின் த₄ர்மபூ₄தஜ்ஞானமும ஸம்ஸாரத₃ஶையில் கர்மத்தினால் சுருக்கத்தை அடைவிக்கப்பட்டு, முக்தி நிலையில் கர்மம் விலகியவுடன் சுருக்கம நீங்கி மலர்ச்சி பெற்று எல்லாப்பொருள்களையும் அறிவிக்கிறது எனபதும சூரியனை திருஷ்டாந்தமாக எடுத்திருப்பதாலேயே விளங்குகிறது. இப்படி சூரியனுக்கு ஒளிபோல் ஆத்மாவுக்கு ஸங்கோசவிகாஸங்களை அடையக்கூடிய த₄ர்மபூ₄தஜ்ஞானம் ஒனறு உள்ளது என்று ஒப்புக் கொள்ளும் நம் பக்ஷத்திலேயே அவித்யையாலே அறிவுக்கு

प्रभाप्रभावतोरिवावस्थानं च। तत एव संसारदशायां ज्ञानस्य कर्मणा संकोचो मोक्षदशायां विकासश्चोपपन्नः॥१६॥

---

மறைவு பொருந்துகிறது. இதை ஒப்புக்கொள்ளாமல் நிர்விஶேஷ சிந்மாத்ரஸ்வரூபமாக ப்ரஹ்மத்தை ஒப்புக்கொள்ளும் அத்வைத பக்ஷத்தில் அதற்கு அவித்யையால மறைவு ஏற்பட்டால், ப்ரஹ்ம ஸ்வரூபநாஶமே ஏற்படுமாகையால் அவர்களுடைய பக்ஷம் பொருந் தாது எனபதும், இந்த ஶ்லோகத்திலுள்ள ஆதி₃த்₃யத்₃ருஷ்டாந்தம அவர்களுக்கு ஒட்டாது என்பதும் குறிக்கொள்ளத்தக்கது. பின் வரும் விஷ்ணுத₄ர்ம ஶ்லோகங்களில் (104–54...56) "அழுக்கை எடுததவுடன மணியில் ஏற்கனவேயுள்ள ஒளி பிரகாசிக்கிறதே யொழியப் புதிதாக ஒளி உண்டாவதில்லை; அதுபோல் கர்மஸம் பந்தம் முதலான தாழ்ந்த குணங்கள விலகியபின் ஆத்மாவில் இயல்வாகவுள்ள ஞானம முதலிய நற்குணங்கள் தாமே பிரகாசிக் கின்றன" எனறு ஆத்மாவுக்கு ஜ்ஞானம் வந்தேறியாயிராமல் இயல்வாகவேயுள்ளதெனறு கூறப்பட்டிருப்பது இங்கு அநுஸந்திக் கத்தக்கது. இத்தால் ஞானம வநதேறி எனனும் நையாயிகபக்ஷமும் நிரஸிக்கப்பட்டதாயிற்று.

"யதா₂ ந க்ரியதே ஜ்யோத்ஸ்நா மலப்ரக்ஷாளநாந்மணே:।
தோ₃ஷப்ரஹாணே ந ஜ்ஞாநமாத்மந: க்ரியதே ததா₂॥
யதோ₂த₃பாநகரணாத் க்ரியதே ந ஜலாம்ப₃ரம்।
ஸதே₃வ நீயதே வ்யக்திம் அஸத: ஸம்ப₄வ: குத:॥
ததா₂ ஹேயகு₃ணத்₄வம்ஸாத் அவபோ₃தா₄த₃யோ கு₃ணா:।
ப்ரகாஶ்யந்தே ந ஜந்யந்தே நித்யா ஏவாத்மநோ ஹி தே॥"

[மணியிலுள்ள மலத்தைக் கழுவுவதினல் ஒளியானது புதிதாக உண்டுபணணப்படுவதில்லை. அபபடியே தோஷம நீஙகுமபோது ஆத்மாவுக்கு ஞானம் புதிதாக உண்டாவதில்லை. (எப்பொழுது முளள ஒளியும் ஞானமும் பிரகாசிக்கத் தொடங்குகினறன.) கிணறு வெட்டுவதினல் ஜலமானது உண்டுபண்ணப்படுவதில்லை. உளள ஜலமே வெளிப்படுத்தப்படுகிறது. இல்லாததை எப்படி உண்டு பண்ணமுடியும்? அப்படியே கெட்டகுணங்கள் நீங்குவதால் ஞானம முதலிய ஆத்மகுணங்கள் பிரகாசிப்பிக்கப்படுகினறனவேயொழிய உண்டுபண்ணப்படுவதில்லை. அவை ஆத்மாவுக்கு நித்யமாயிருப் பவையன்றோ.] எனனும் விஷ்ணுத₄ர்ம ஶ்லோகங்கள் காண்க. 16.

तद्बुद्धयस्तदात्मानस्तन्निष्ठास्तत्परायणाः ।
गच्छन्त्यपुनरावृत्तिं ज्ञाननिर्धूतकल्मषाः ॥ १७ ॥

17. தத்₃பு₃த்₃த₄யஸ் ததா₃த்மாநஸ் தந்நிஷ்ட₂ாஸ் தத்பராயணா: ।
க₃ச்ச₂ந்த்யபுநராவ்ருத்திம் ஜ்ஞாநநிர்த்₄தகல்மஷா: ॥

தத்₃பு₃த்₃த₄ய:— முற்கூறிய ஆத்மத₃ர்ஶனத்திலேயே உறுதிபூண்டவர்களாய், ததா₃த்மாந:—அதிலேயே ஈடுபட்ட நெஞ்சை உடையவர்களாய். தந்நிஷ்ட₂ா:—அதின் பயிற்சியிலேயே ஊன்றி நிற்பவர்களாய், தத்பராயணா:—அதுவே பரமப்ரயோஜனம் என்று நினைத்திருப்பவர்களாய். ஜ்ஞாந நிர்த்₄தகல்மஷா:-இந்த ஆத்மஜ்ஞானத்தாலே முன்செய்த வினைகள் அழியப்பெற்றவர்கள் அபுநராவ்ருத்திம்—திரும்பி வருதலில்லாத ஆத்மாவை. க₃ச்ச₂ந்தி—அடைகிறார்கள்.

---

16. அப்புந்தி யந்தமன மந்நிலைமை யப்பயனா
யிப்புந்தி யால்வினையை யீடழித்தோர்—மெய்ப்புந்தி
மீளா வகையுடைய மெய்ப்பயனை நண்ணுவரே
மாளா வுயிரின் வழி.

அப்புந்தி—முற்கூறிய ஆத்மத₃ர்ஶனத்திலேயே உறுதி. அந்த மனம்—அதிலேயே ஈடுபட்ட நெஞ்சம். அந்நிலைமை—அதின் பயிற்சியிலேயே நிலைநிற்கை. அப்பயனாய்— அது வாகிற பயன்ஆகியவற்றை உடையவர்களாய், இப்புந்தியால்- இந்த ஆத்மஜ்ஞானத்தாலே, வினையை— முன் செய்த வினைகளை, ஈடு அழித்தோர்— அடியோடு அழித்தவர்கள், மாளா மெய்ப்புந்தி உயிரின் வழி— அழிவில்லாத உண்மை யறிவையுடைய ஆத்மாவை அடைதலாகிற. மீளா வகை உடைய—என்றும் திரும்பிவருதலில்லாத. மெய்ப் பயனை— உண்மைப்பயனை, நண்ணுவரே—அடைவர்.

---

17. ஆத்மானுப₄வமாகிற மாடத்திற்கு ஏறும் படிக்கட்டா யிருக்கும் அறிவின் படிகளின் வரிசையைக் காட்டுகிறது இந்த ஶ்லோகம். (தத்₃பு₃த்₃த₄ய:) முன ஶ்லோகத்திற் கூறப்பட்ட ஆத்ம த₃ர்ஶனத்திலேயே உறுதிபூண்டவர்கள். த ச் ச₂ ப்₃ த₃ ம் முன்

॥भा॥ तद्बुद्धयः—तथाविधात्मदर्शनाध्यवसायाः, तदात्मानः—तद्विषयमनसः, तन्निष्ठाः—तदभ्यासनिरताः, तत्परायणाः—तदेव परमप्रयोजनमिति मन्वानाः, एवमभ्यस्यमानेन ज्ञानेन निर्धूतप्राचीनकल्मषाः

---

ஶ்லோகததிற் கூறப்பட்ட ஶாத்₃த₄ாத்மஸ்வருபத்தையோ, அதுபற்றிய த₃ர்ஶநபர்யந்தமான அறிவையோ குறிக்கிறது. தச்ச₂ப்₃த₃ம் ஸ்வருபமாதரத்தைக்குறிக்கும்போது பு₃த்₃தி₄ஶப்₃த₃ம த₃ர்ஶநாத்₄யவஸாயததையும், ஆத்மத₃ர்ஶனத்தைக்குறிக்குமபோது பு₃த்₃தி₄ஶப்₃த₃ம் அதில் உறுதியையும் குறிககிறது என்று கணடுகொள்வது. இது முதற் படி. இனி, ஆத்மாவைக்காணவேணும் என்னும் இவ்வுறுதிககு அடுத்தபடி ஏற்படுவதாய், ஆத்மத₃ர்ஶனத்திற்குறுபபானதான முயற்சியாகிற அடுத்த படி கூறப்படுகிறது.— (தத₃ாத்மாந:) அவ் வாத்மத₃ர்ஶனத்திலேயே ஈடுபட்ட நெஞ்சையுடையவர்கள்; அதற் காக முயல்கின்றவர்கள் எனறு கருத்து. இஙகு ஆத்மஶப்₃த₃ம மநோவாசி. இனி, முயற்சிககு அடுதத படியான பயிற்சி கூறப் படுகிறது,— (தந்நிஷ்ட₂ா:) அவ்வாத்மத₃ர்ஶனப்பயிற்சியிலேயே ஊனறிநிற்பவர்கள். இனி, பயிற்சியினுல உண்டாகும் விஷயாந்தர வைராக்₃யத்தினுலுண்டாகும அடுத்த படி கூறப்படுகிறது,— (தத்பராயணு:) அவ்வாத்மத₃ர்ஶனத்தையே பரமப்ரயோஜனமாக நினைத்திருப்பவர்கள். "ஈயத இத்யயநம்" என்று 'இண்·க₃தௌ' என்னும தா₄துவின்மேல் கர்மணி ல்யுட₃ந்தப்ரயோக₃மாயிருப்பதாகையாலே இங்குள்ள அயநஶப்₃த₃ம் பராபயத்தைக் குறிக்கிறது. இனி, இத்தகைய ஜ்ஞானத்தால் ஏற்படும அநிஷ்ட நிவ்ருத்தியாகிற அடுத்த படி கூறப்படுகிறது.— (ஜ்ஞாநநிர்த்₄த கல்மஷா:) இப்படிப் பயிலப்படும ஆத்மத₃ர்ஶனத்தாலே முன் செய்தவினைகள் அழியப்பெற்றவர்கள். இத்தால, கேவலவாக்யார்த்த₂ஜ்ஞானத்தால் கல்மஷங்கள் கழன்றுவிடும எனறு கூறும் அத்வைதமதம் நிரஸிக்கப்பட்டதாயிற்று. இனி, இவ்வநிஷ்ட நிவ்ருத்திக்குப்பின் ஏறபடும் கடைசிப்படியாகவும பராப்யமாகவுமிருக்கும் ஆத்மப்ராப்தி கூறப்படுகிறது,— (அபுநராவ்ருததிம் க₃ச்ச₂ந்தி) திருமபிவருதலில்லாத முற்கூறிய ஆத்மாவை அடைகின்றனர். புணயபாப நாஶமாகிற அநிஷடநிவ்ருத்திக்குப்பின ஏற்படுவது இஷ்டப்ராப்தியாகிற ஆத்மப்ராப்தியேயாகையாலே அதையே இங்கு அபுநராவ்ருத்தி ஶப்₃த₃த்தாலே கூறுவது உசிதம். அபுநராவ்ருத்திஶப்₃த₃ம ஆத்மாவை எப்படிச் சொல்லும? எனில்:

तथाविधमात्मानमपुनरावृत्तिं गच्छन्ति। यदवस्थादात्मनः पुनरावृत्तिर्न विद्यते, स आत्मा अपुनरावृत्तिः; स्वेन रूपेणावस्थितमात्मानं गच्छन्तीत्यर्थः॥ १७॥

---

"யஸ்மாத் (யத₃வஸ்த₂ாத் ஆத்மந:) புநராவ்ருத்திர் ந வித்₃யதே ஸ ஆத்மா அபுநராவ்ருத்தி:" [எந்த நிலையிலிருந்து ஆத்மாவுக்குத் திரும்பிவருதல் இல்லையோ அந்நிலையிலுள்ள ஆத்மா அபுநராவ்ருத்தி எனப்படுகிறது.] என்னும் வ்யுத்பத்தியாலே ஶுத்₃த₄ ஜீவஸ்வரூபத்தைஅபுநராவ்ருத்திஶப்₃த₃ம் கூறும். இங்கு ஓராக்ஷேபம் எழுகிறது.— "க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஶந்தி" [கீதை9-21] [புண்ணியம குறைந்தவுடன் (தேவலோகத்திலிருந்து) மனிதவுலகை அடைகின்றனர்] என்று ஜீவர்களுககும் புநராவ்ருத்தி (திருமபிவருதல்) சொலலப்படுகிறது. "எந்த நிலையிருந்து ஆத்மாவுக்குத் திரும்பிவருதல் இல்லையோ" என்று ஆத்மாவுக்கு மோக்ஷத்தையும ஒரு நிலையாகச் சொன்னால், உலகில் நிலைகளெல்லாம் நிலையற்றதாயிருப்பதுபோலே, மோக்ஷநிலையும நிலையற்றதாக (அநித்யமாக) வேண்டிவரும் என்பது ஆக்ஷேபம். இதற்கு ஸமாதா₄னம் பின்வருமாறு.— "க்ஷீணே புணயே" எனனும் ஶ்லோகம காம்யகர்மஙகளை அனுஷ்டித்து அதன் பலனாக சுவர்க்கத்தை அடைந்தவர்கள் அவ்வநுபவம் கழிந்தபின் ப்ராசீநகர்மாநுகு₃ணமாக இவ்வுலகிற்குத் திரும்பிவருகினறார்கள் என்று சொல்லிற்று. இங்கு, ஸர்வகர்மங்களும் நீஙகி ஆத்மா இயல்வான தன்னிலையை அடைகிறபடியாலே, திரும்பிவர இடமில்லை. இதிலிருந்தே நிலைகள் எல்லாம அநித்யமானவை என்னும ஐயமும் தவிர்க்கப்படுகிறது. ஓர் காரணத்தால் ஏற்படும் நிலைகளே அநித்யமானவை; அக்காரணம் நீஙகி, இயல்வானதான நிலை ஒரு நித்யவஸ்துவுக்கு ஏற்பட்டால் அந்நிலை அநித்யமாகாது. அத்வைதிகள் முதலானோருடைய மதத்திலும் இந்த ந்யாயம் துல்யமே. அவர்கள் உபாதி₄களால் ஏற்படும ஸாமஸாரிக நிலைகள் முழுவதும் கழிந்தபின ஏற்படும நிலையை மோக்ஷமென்கிறார்கள். ஸாமஸாரிக நிலையை அழிப்பதொனறு இருந்ததுபோல் இயல்வான இந்நிலையை அழிப்பது எதுவும் இல்லாமையால், இதிலிருந்து ஆத்மாவுக்கு நழுவுதல் கிடையாது என்றும கொள்ளுகிறார்கள். ஆகையால், எவரும் நிலையாயிருப்பதெலலாம் அநித்யமே என்று வாதம் செய்ய இடமில்லை. 17.

विद्याविनयसंपन्ने ब्राह्मणे गवि हस्तिनि।
शुनि चैव श्वपाके च पण्डिताः समदर्शिनः॥ १८॥

18. வித்₃யாவிநய ஸம்பந்நே ப்₃ராஹ்மணே க₃வி ஹஸ்திநி
ஶுநி சைவ ஶ்வபாகே ச பண்டி₃தா: ஸமத₃ர்ஶிந:॥

பண்டி₃தா:— *அறிவாளிகள்,* வித்₃யாவிநயஸம்பந்நே (ப்₃ராஹ்மணே)--*கல்வியும், அடக்கமுமுடைய அந்தணனிடமும்,* ப்₃ராஹ்மணே—*(அவையற்ற) அந்தணனிடமும்,* க₃வி—*(உருவத்தால் சிறிய) பசுவினிடமும்.* ஹஸ்திநி—*(உருவத்தால் பெரிய) யானையிடமும்,* ஶுநி—*(கொன்று தின்னப்படும்) நாயிடமும்.* ஶ்வபாகே ச ஏவ—*(அதைக் கொன்று தின்னும்) சண்டாளனிடமுங்கூட,* ஸமத₃ர்ஶிந:— *(ஆத்மா ஒருபடிப் பட்டிருக்கையாலே) ஸமமாகப் பார்பபவர்களாயிருக்கின்றனர்.*

---

17. ஆன்றுணர்ந்த வந்தணனு வததிநாய் நீசனெனத்
தோன்றுடலந் தோறுந் துவக்கமைந்தங்—கேன்றவுயி
ரொக்க நிகழு முணர்வோ ரெனமறையிற்
றக்க வறிவுடையோர் தாம்.

மறையில் தக்க அறிவுடையோர் தாம— *வேதத்திற் சொலலப்பட்ட (ஆத்மாவைப்பற்றிய) உண்மையறிவுடையவர்கள்.* ஆன்று உணர்ந்த அந்தணன்— *அடககத்தோடு கூடிய கல்வியை உடைய அந்தணன் (அவையற்ற அந்தணன்),* ஆ—*பசு,* அத்தி—*துதிக்கையையுடைய யானை,* நாய்—*நாய்.* நீசன்—*( அதைத் தின்னும் ) சண்டாளன்,* என—*என்று இப்படி வெவ்வேறு பட்டு,* தோனறு உடலம் தோறும— *காட்சியளிக்கும் உடலகள் தோறும்,* துவக்கு அமைந்து- *வேறுபாட்டை உடையவையாய்,* அங்கு—*அவ்வுடல்களில,* ஏன்ற உயிர்—*பொருந்திநிற்கும் ஆத்மஸ்வரூபங்கள்,* ஒக்க நிகழும் என உணர்வோர்—*ஒருபடிப் பட்டவை என அறிபவர்கள் ஆவர்.*

॥भा॥ विद्याविनयसंपन्ने, केवलब्राह्मणे, गोहस्तिश्वश्वपचादिष्वत्यन्तविषमाकारतया प्रतीयमानेष्वात्मसु, पण्डिताः—आत्मयाथात्म्यविदः,

18. முன் ஶ்லோகங்களிற் சொன்ன ஆத்மஸாக்ஷாத்காரம் எததகையது? என்னும் கேள்வி எழுந்தவளவில், "யேந பூ₁தாந்ய ஶேஷேண த்₃ரக்ஷ்யஸ்யாத்மந்யதோ₂ மயி" [கீதை 4-35] [எந்த ஆத்மஸாக்ஷாத்காரத்தாலே, எல்லா பூதங்களிலுமிருக்கும் ஆத்ம ஸ்வரூபங்களையும (ஸ்வரூபம ஸமமாயிருக்கையாலே) தன்னிடமும், என்னிடமும் காணப்போகிருயோ] என்று சென்ற அத்தியாயத்தில் சொல்லப்பட்ட அர்த்தத்தையே விளக்குகிறது இந்த ஶ்லோகம். (வித்₃யாவிநய ஸமபநநே) கல்வியும அடக்கமும் கூடிய அந்தண னிடமும். கல்வியிருந்தபோதிலும அடக்கமில்லாவிடில், "வித்₃யா ஹ்ருத்₃யாऽபி ஸாவத்₃யா விநா விநய ஸம்பத₃ம்" [அடக்கமற்ற கல்வி அழகியதாயினும் குற்றமுளளதாகிறது] என்கிறபடியே அக்கல்வி சோபிக்காதாகையாலே, கலவியோடு அடக்கமும் வேணும் என்கிறது. (ப்₃ராஹ்மணே) அக்கல்வியும், அடக்கமுமற்ற ஸாமாந்ய ப்₃ராஹ் மணனிடமும். 'வித்₃யாவிநய ஸம்பந்நே" எனபதை விஶேஷண மாகவும், "ப்₃ராஹ்மணே" என்பதை அதற்கு விஶேஷ்யமாகவும கொண்டு, "கல்வியும, அடக்கமுமுடைய அந்தணனிடமும" எனறு கொள்ளலாம்படி பதங்கள் அமைந்திருக்க, இவற்றைத் தனித்தனி விஶேஷ்யங்களாகக் கொள்வானேன? எனில: முதன முதலில், இந்த ஶ்லோகத்தில் மேலே எடுக்கப்பட்ட பசு, யானை முதலான மற்ற பதம் எதற்குமே விஶேஷணமிடப்படவில்லை; ஆகையால் அந்தணன் ஒருவனுக்கு மாத்திரம் விஶேஷணமிடப்பட்டதாகக் கொள்வது விருபமாகும். ஒன்றுக்கொன்று முரண்பட்ட இரட்டை களை எடுக்கும இப்ரகரணத்தில் ஒனறுககு ஒரு விஶேஷணமிடப் பட்டதாகில், அதற்கு எதிர்த்தட்டான விஶேஷணத்தை மற்றென் றுக்கு இட்டிருக்கவேண்டும். அப்படி எப்பதத்திற்கும இடப்பட் டிருக்கவில்லை. மேலும், 'பசு, ஆனை, என்று உருவததால சிறிதும் பெரிதுமான வேற்றுமையுடைய இரு பொருளகளையும், 'நாய், நாயைக கொன்று தின்பவன்" எனறு "தின்னப்படும் பொருள் தின்பவன்" எனனும் வேற்றுமையுடைய இருபொருளகளையும் எடுத்திருக்கையாலே, "வித்₃யாவிநய ஸம்பந்நே ப்₃ராஹமணே" எனனும பதங்களாலும். ஒனறுக்கொனறு வேற்றுமையுடைய இரு பொருளகளை எடுப்பதே உசிதம். சரீரத்தால் ஒனறுக்கொனறு வேற்றுமையுடைய பொருள்களிடையேயும் ஆத்மாவை ஒனறென்று

அறிவாளிகள் காண்பர் என்று வலியுறுத்துவதன்றோ இந்த ஶ்லோகத்தின் பிண்டி₃தார்த்த₂ம். ஆகையால், முதலிரண்டு பதங்களையும் தனித்தனி விஶேஷ்ய பதங்களாகக் கொண்டு முதற் பதம் கல்வியும் அடக்கமும் உடைய அந்தணனையும், இரண்டாம் பதம் அவையற்ற அந்தணனையும் குறிப்பதாகக் கொள்வதே தகும. கல்வியும, அடக்கமும் உடைய அந்தணன பகவத்பாகவதர்களுக்குத் தொண்டனுகவேயிருப்பானுகையாலே, முதற்பதத்தை "தொண்டாமினமும்" [பெரியதிருமொழி 1-5-9] என்றும, அக்கல்வியும், அடக்கமும் அற்ற அந்தணன மார்பில் பூணடிருக்கும பூணூல் ஒன்றினுலேயே அந்தணனென அறியப்படுவானுகையாலே, இரண்டாம் பதத்தை "துணைநூல் மார்பின் அந்தணரும்" [பெரியதிருமொழி 1-5-9] என்றும் விவரித்தருளினுர் திருமங்கையாழ்வார். இத்தால், கல்வி, அடக்கம் முதலானவையும் ஆத்மஸ்வருபத்தில் எந்த மாறுபாட்டையும விளக்கமாட்டா என்றதாயிற்று. (க₃வி ஹஸ்திநி) உருவத்தாற் சிறிய பசுவினிடமும், உருவத்தாற் பெரிய ஆனையிடமும். இத்தால் ப்ரத்யக்ஷமான உருவத்தின் சிறுமை பெருமைகளும ஆத்மஸ்வருபத்தில் எந்த மாறுபாட்டையும் விளக்கமாட்டா என்றதாயிற்று. (ஶுநி ஶ்வபாகே சைவ) கொன்று தினைப்படும் நாயிடமும், அதைக் கொன்று தின்பவனுகையாலே, 'ஶ்வபாகன்' [ஶ்வாவைப் பசநம செய்பவன்] என்று பெயர்பெற்ற சண்டாளனிடமுங்கூட. இத்தால், தொழில் முதலானவற்றில உள்ள வேறுபாடுகளும் ஆத்மஸ்வருபத்தில் எந்த வேறுபாட்டையும விளக்கமாட்டா என்றதாயிற்று. (சைவ) சகாரம உக்தஸமுச்சாயகமாய், முன இரண்டு இரட்டைகளையும் கூட்டுகிறது. ஏவகாரம் அவற்றைக் காட்டிலும மூன்ருவது இரட்டையில் வேற்றுமையின் மிகுதியைக் காட்டுகிறது. தினைப்படுவதிலும், தினபவனிடமுங்கூட, ஸமத₃ர்ஶிகளாயுள்ளனர் என்றபடி. மூனறு இரட்டைகளும் முறையே ஸாத்விக ராஜஸதாமஸங்களிடையே வேறுபாட்டைக் காட்டுகையாலே, 'ஶ்வபாகே ச' என்றவிடத்திலுளள இரண்டாவது சகாரம் அநுக்த ஸமுச்சாயகமாய், ஸாதவிக ராஜஸ தாமஸ ஶரீரங்களால் மிகவும் வேறுபாட்டையுடையவையாகக காணப்படும் மற்ற எல்லாச் சேதனர்களையும் எடுக்கிறது. (பண்டி₃தா:) 'பண்டா₃' எனனும் ஶப்₃த₃ம் ஜ்ஞானத்தைக குறிக்கிறது. அதை உடையவர்கள் பண்டிதர்கள் எனப்படுகினறனர். இங்கு, ப்ரகரணப₃லத்தாலே, மேலே சொல்லப்படும ஸமத₃ர்ஶித்வத்துக்கு அநுகு₃ணமான அறிவுடையவர்களைக் காட்டு

ज्ञानैकाकारतया सर्वत्र समदर्शिनः। विषमाकारस्तु प्रकृतेः, नात्मनः, आत्मा तु सर्वत्र ज्ञानैकाकारतया सम इति पश्यन्तीत्यर्थः॥१८॥

---

கிறது. அதாவது,—ஊஹாபோஹஜ்ஞாநமுடையவர்கள். இங்கு, "சொல்லப்படும் ஸாம்யம் ஆத்மஸ்வரூபவிஷயத்திலேயே" என்று ஊஹம் செய்வதிலும், "சரீரவிஷயத்திலும், சரீரஸம்பந்தத்திஞு லுண்டாகும் ஸுகது:க்காதி விஷயத்திலும் அல்ல" என்று அபோஹம் செய்வதிலும வலல ஆத்மயாதாத்ம்யஜ்ஞாநிகள் பண்டிதர்கள் என்றபடி. (ஸமதர்ஶிந:) மிகவும் வேறுபாட்டை யுடைய முற்கூறிய எல்லாப் பொருள்களையும் ஸமமாகக் காணும் இயல்வுடையவர்களாயிருக்கின்றனர். "ஸமம் த்ரஷ்டும் ஶீலம் யேஷாம் தே ஸமதர்ஶிந:" என்று வ்யுத்பத்தி. இவ்விடத்தில் ஓராக்ஷேபம் எழுகிறது. அதாவது,— ஶரீரங்களிடையே வேறு பாடு எப்படி ப்ரதயக்ஷமாகக் காணப்படுகிறதோ, அப்படியே ஶரீரஸம்பந்தத்திஞல ஞானத்தில ஏற்படும் ஏற்றத் தாழ்வுகளை உடையவர்களாயிருக்கையாகிற வேறுபாடு ஆத்மாக்களிலும் காணப் படுகிறது. மேலும, சாஸ்திரஙகளில், ப்ராஹ்மணுதிகளை ஸம மாக பாவிப்பவர்களுடைய அந்நத்தைப் புசிக்கலாகாது என்று ஸாமயபுத்தியானது பெரிய தோஷமாகவும கூறப்பட்டிருக்கிறது. அப்படியிருக்க, இங்கு ப்ராஹ்மணர் முதலான அனைவரையும் அறிவாளிகள் ஸமமாகக் காண்கிருர்கள் என்பது எப்படிப் பொருந்தும்? ப்ராஹ்மணர்கள் முதலான அனைவருமே பதார்த் தங்களாய் (உள்ள பொருள்களாய்) இருக்கை முதலான (ஸ்தூல மான) ஸாம்யங்களை உடையவர்கள என்று இங்கு கூறுவதில் பயனில்லையே? என்பது ஆக்ஷேபம். இதற்குப் பரிஹாரமாவது,— இங்கு, சரீரங்களில் காணப்படும் வேற்றுமைகளையோ, சரீர ஸம்பந்தத்திஞல் ஆத்மாக்களின் தர்மபூதஜ்ஞாநத்தில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளாகிற வேற்றுமைகளையோ இல்லை செய்யவில்லை. ஆத்மஸ்வரூபங்கள் அனைத்தும அறிவாகிற ஒரே ஆகாரத்தை உடைத்தாயிருக்கையே இங்கு ஸாம்யம் எனப்படுகிறது. இது ஸ்தூலமான ஸாம்யம் அல்ல. ஆத்மஸ்வரூபங்களிடையே வேற்றுமை எந்த ப்ரமாணத்தாலும் அறியப்படவில்லை. ஆத்மஸ்வரூபங்களுக்கு வேற்றுமையைக் காட்டித்தரும வெவ் வேறு ஆகாரங்களும் காணப்படவில்லை. சாஸ்திரங்களில் ப்ராஹ்மணுதிகளிடையே ஸாம்யபுத்தியை நிஷேதித்ததும,அந்தந்த ஶரீரங்களோடு கூடிய ஆத்மாககளில் வர்ணுஶ்ரமாசார விபரீத

इहैव तैर्जितस्सर्गो येषां साम्ये स्थितं मनः।
निर्दोषं हि समं ब्रह्म तस्माद्ब्रह्मणि ते स्थिताः॥१९॥

**19.** **இஹைவ தைர்ஜித: ஸர்க்கே₃ா யேஷாம் ஸாம்யே ஸ்தி₂தம் மந:॥**
**நிர்த்தே₃ாஷம் ஹி ஸமம் ப்₃ரஹ்ம தஸ்மாத் ப்₃ரஹ்மணி தே ஸ்தி₂தா:॥**

**யேஷாம் மந:**— *எவர்களுடைய மனம்.* **ஸாம்யே**— *(முன் ஶ்லோகத்திற்சொன்ன) ஆத்மஸாம்யத்தில்.* **ஸ்தி₂தம்**— *நிலைநிற்கிறதோ.* **தை:**— *அவர்களால்.* **இஹ ஏவ:**— *ஸாத₄நாநுஷ்டாநா நிலையிலேயே.* **ஸர்க்க₃:**—*ஸம்ஸாரம்.* **ஜித:**—*ஜயிக்கப்பட்டது.* **நிர்த்தே₃ாஷம்**—*(ப்ரக்ருதிஸம்பந்த ரூப) தோஷமற்றதாய்.* **ஸமம் ஹி**—*(அதனுலேயே) ஸமமா யிருப்பதான ஆத்மவஸ்துவேயனறோ.* **ப்₃ரஹ்ம**— *ப்ரஹ்ம மெனப்படுகிறது.* **தஸ்மாத்**—*ஆகையால்,* **தே**—*அவர்கள்.* **ப்₃ரஹ்மணி**—*ப்ரஹ்மத்தில்.* **ஸ்தி₂தா:**— *நிலை நிற்பவர்களே யாவர்.*

---

**18.** இப்பிறவிச் சங்க மிவரால் வெலப்பட்ட
தொப்பி லெவர்க்குமன மொத்தமைந்த—தப்படியாத்
தீதிலா வொத்தவுயிர் சீரார் பிரமதனுள்
மீதுதான் நிற்பரவர் மிக்கு.

**எவர்க்கு**—*எவர்க்கு.* **மனம்**—*மனமானது.* **ஒப்பில்**—*(முன் பாட்டிற் சொன்ன) ஆத்மஸாம்யத்தில்.* **ஒத்து அமைந்தது**— *பொருந்தி நிற்கிறதோ.* **இவரால்**— *இத்தகையவர்களால்.*

---

*மாக ஸாம்யபுத்தியைக் கொளபவர்கள் விஷயமானது எனபது குறிக்கொள்ளத்தக்கது. ஆக, காணப்படும் வேற்றுமைகளெல லாம ஶரீரங்களுடையவையாகவும், ஶரீரஸம்பந்தத்தால ஆத்ம த₄ர்மங்களுக்கு ஏற்படுபவையாகவுமிருக்கையால், ஆத்மஸ்வ ரூபங்களனைத்தும் ஜ்ஞானமாகிற ஒரே ஆகாரத்தை இயலவாக வுடையவையாயிருக்கையே இங்கு கூறப்படும் ஸாம்யம் எனறு அறியத்தக்கது. ஆகையாலே ஆக்ஷேபத்திற்கு இடமில்லை. 18.*

।।भा।। इहैव—साधनानुष्ठानदशायामेव तैस्सर्गो जितः—संसारो जितः; येषां उक्तरीत्या सर्वेष्वात्मसु साम्ये स्थितं मनः। निर्दोषं हि समं ब्रह्म—प्रकृतिसंसर्गदोषवियुक्ततया सममात्मवस्तु हि ब्रह्म। आत्म-

---

இப்பிறவி சங்கம்— இப்பிறவியோடு தொடர்பாகிற ஸம்ஸாரம். வெலப்பட்டது—ஜயிக்கப்பட்டது. அப்படியா— முன் பாட்டில் சொன்ன ரீதியில், தீதிலா— (ப்ரக்ருதி ஸம்பந்தரூப) தோஷமற்றதாய். ஒத்த உயிர்—(அதனாலேயே) ஸமமாயிருப்பதான ஆத்மஸ்வரூபமாகிற. சீர்ஆர் பிரமத்துள்— சீர்மைமிக்க ப்ரஹ்மத்தினுள் அவர்—அவர்கள். மீது தான்— நிலையாகத்தானே. மிககு நிற்பர்—ஈடுபட்டு நிற்பர்.

---

19. முன் ஶ்லோகததிற்சொன்ன ஸமத₃ர்ஶிதவம் ஒருகாலாந்தரத்தில் ஆதம ஸாக்ஷாத்காரத்தை விளைப்பது மாத்திரமன்று; ஸாத₄நாநுஷ்ட்டான வேளையிலேயே அந்த மோக்ஷதுல்யமான து₃:க்க₂நிவ்ருத்தியை அளிக்கிறது என்று ஸமத₃ர்ஶிகளைப் புகழ்கிறது இந்த ஶ்லோகம். (யேஷாம் மந: ஸாம்யே ஸ்தி₂தம்) எவர்களுடைய மனம், முன ஶ்லோகத்திற் சொன்ன ரீதியில் ஆத்ம ஸ்வரூபங்கள் இயற்கையில் அறிவாகிற ஒரே ஆகாரத்தை உடையவையாகையாலே ஸமமானவை என்னும் ஸமபுத்தியில் நிலைநிற்கிறதோ. (தை:) அவர்களாலே. (இஹைவ) ஸாத₄நாநுஷ்ட்டா₂நவேளையிலேயே. 'இவ்வுலகிலேயே' என்று பொருள்கொள்வதைக்காட்டிலும. ஸாத்₄யம் கைவரப் பெறுதவராய், இவர்கள் ஸாத₄நாநுஷ்ட்டாநநிலையிலிருக்குமபோதே எனறு பொருள் கொளவதே பொருத்தமுடையது. (ஸர்க்கோ₃ ஜித:)ஸம்ஸாரம் வெல்லப்பட்டதாகிறது. ஸர்க்க₃ஶப்₃த₃ம் ஸ்ருஷ்டியைக் குறிப்பதில் பொருததமில்லாமையால், "ஸ்ருஜ்யதே இதி ஸர்க்க₃:" எனனும் வ்யுத்பத்தியாலே, ஸ்ருஷ்டிக்கப்படுவதாகிற ஸமஸாரத்தையே இங்கு குறிக்கிறது. இனி, ஆத்மாவில் நிலைநிற்பதே ஸம்ஸாரஜயஹேதுவாயிருக்க, ஆத்மஸாமயத்தில் நிலைநிற்பதை ஸம்ஸார ஜயஹேதுவாகச் சொல்லுவது எப்படி? எனனும கேளவிக்கு ஶ்லோகத்தின பிற்பகுதி பதிலுரைக்கிறது. (நிர்தோ₃ஷம ஸமம் ஹி ப்₃ரஹ்ம) ப்ரக்ருதி ஸம்பநதமாகிற தோஷமற்றதாய், அதனாலேயே ஸமமாயிருக்கும் ஶுத்₃த₄ாத்மஸ்வரூபமன்றோ ப்ரஹ்மமெனப்படுகிறது. பரப்₃ரஹ்மத்திடம முக்₂யமான ப்₃ரஹ்ம ஶப்தம, ஜ்ஞாநைகாகாரமாயிருகையாலே ப்ரஹ்மத்தை ஒத்திருக்

[वस्तु]साम्ये स्थिताश्चेद्ब्रह्मणि स्थिता एव ते; ब्रह्मणि स्थितिरेव हि संसारजयः; आत्मसु ज्ञानैकाकारतया साम्यमेवानुसन्दधाना मुक्ता एवेत्यर्थः॥ १९॥

॥ भा॥ येन प्रकारेणावस्थितस्य कर्मयोगिनस्समदर्शनरूपो ज्ञानविपाको भवति, तं प्रकारमुपदिशति—

न प्रहृष्येत्प्रियं प्राप्य नोद्विजेत्प्राप्य चाप्रियम्।
स्थिरबुद्धिरसंमूढो ब்रह्मविद्ब्रह्मणि स्थितः॥ २०॥

20. ந ப்ரஹ்ருஷ்யேத் ப்ரியம் ப்ராப்ய நோத்₃விஜேத்
ப்ராப்ய சாப்ரியம்।
ஸ்தி₂ரபு₃த்₃தி₄ரஸம்மூடோ₄ ப்₃ரஹ்மவித ப்₃ரஹ்மணி
ஸ்தி₂த:॥

---

கும் ஶுத்தாத்மஸ்வரூபத்தைக் குறித்து இங்கு பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. (தஸ்மாத் தே ப்₃ரஹ்மணி ஸ்தி₂தா:) இப்படி ஸாமயத்தையுடைய ஆத்மவஸ்துவே ப்ரஹ்மமாகையாலே, ஆத்மஸாமயத்தில் நிலைநிற்கும் நெஞ்சையுடைய அவர்கள், அந்த ஸாமயத்தையுடைய ஆத்மவஸ்துவாகிற ப்ரஹமத்தில் நிலைநிற்பவர்களேயாவர். "நிர்த்தோஷமாய், ஸமமானது ப்ரஹ்மமாகையாலே, அவர்கள் ப்₃ரஹ்மத்தில் நிலைநிற்பவர்களே" என்று ஶ்லோகம் அமைந்திருப்பதால், 'நிர்த்தோஷமான ப்ரஹ்மம் ஸமமன்றோ' என்று மூன்றுவது பாதத்திற்குப் பொருள் கொள்ளலாகாது. அப்படிக்கொண்டால் மேலே 'ஆகையால் ப்ரஹ்மத்தில் நிலைநிற்பவர்களே அவர்கள்' என்பது அந்வயிக்காது. ஆக, தோஷமற்றதாய் ஸமமான ஆத்மஸ்வரூபம் ப்ரஹ்மமாகையால், ஸமத₃ர்ஶிகள் ப்₃ரஹமத்தில் நிலைநிற்கிறார்கள்; ப்₃ரஹமத்தில்நிலைநிற்கையே ஸம்ஸாரஜயஹேதுவாகும்; ஆகையால ஸாமயத்தில் நிலைநிற்பதை ஸம்ஸாரஜயஹேதுவாகக் கூறியதில முரண்பாடு ஒன்றுமில்லை என்று கருத்து. ஆத்மாக்கள் ஜ்ஞாநம ஒன்றையே ஆகாரமாகக்கொண்டிருக்கையைபபற்ற அவற்றை ஸமமாக அநுஸந்திப்பவர்கள் ஸாத்₄யம் கைவரப்பெறாத இப்போதே முக்ததுல்யர்களாயிருக்கிறார்கள் என்பது ஶ்லோகததின் திரண்டபொருள். 19.

ஸ்தி₂ர பு₃த்₃தி₄:— *நிலையான ஆத்மாவிடம் ஈடுபட்டவனாய்.* அஸம்மூட₄:—*நிலையற்ற தேஹத்தை ஆத்மாவாக எண்ணி மயங்காதவனாய்,* ப்₃ரஹ்மவித்— *(உபதேசத்தால்) ப்₃ரஹ்மமாகிற ஶுத்₃த₄ாத்மாவையறிந்து.* ப்₃ரஹ்மணி ஸ்தி₂த:—*அவ்வாத்மாவில ஈடுபடுபவன்.* ப்ரியம் ப்ராப்ய— *(ப்ராக்ருதமான) இனிய பொருளை அடைந்தும்,* ந ப்ரஹ்ருஷ்யேத்— *ஆநந்தமடைவதில்லை;* அப்ரியம் ப்ராப்ய ச— *(ப்ராக்ருதமான) இன்னாத பொருளை அடைந்தும்.* ந உத்₃விஜேத்—*பயத்தை அடைவதிலலை.*

---

19. இன்பமது பெற்றுகவா னின்னாத துண்ணடுங்கான்
றன்படியிற் புந்தி தனை நிறுத்தி—முன்பயிலு
மோக மொழிந்திறையை முற்றுமறிந் திவ்வுயிரின்
போகமதி னிறமைந்தான் பூண்டு.

தன் படியில்—*தன் ஸ்வரூபத்தில்.* புந்தி தனை நிறுத்தி—*தன் அறிவை நிலைநிறுத்தி.* முன் பயிலும்—*அநாதிகாலமாகத் தொடர்ந்துவரும்.* மோகம் ஒழிந்து—*தேஹாத்ம மயக்கம் நீங்கப்பெற்று.* இறையை முற்றும் அறிந்து—*ப்₃ரஹ்மமெனப்படும் ஆத்மாவை முழுவதும் உணர்ந்து,* இவ்வுயிரின் போகமதில் நின்று பூண்டு அமைந்தான்—*இவ்வாத்ம ஸ்வரூபத்தின் அனுபவத்தில் நிலைநின்று அதையே பெரும் பேருகக்கொண்டு பொருந்தியிருப்பவன்.* இன்பம் அது பெற்று—*ப்ராக்ருதமான இனியபொருளைப்பெற்று இன்புறமாட்டான்;* இன்னாதது (அது பெற்று)—*இனியதல்லாத ப்ராக்ருதப்பொருளைப் பெற்று.* உள் நடுங்கான்—*நெஞ்சில் நடுக்கம் கொள்ளமாட்டான்.*

---

*20. எந்த நிலையுடனிருந்தால், கர்மயோகிக்கு முற்கூறிய ஸமத₃ர்ஶித்வரூபமான ஜ்ஞாநபரிபாகம் ஏற்படுமோ, அந்த நிலையை உபதே₃ஶிக்கிருன் இந்த ஶ்லோகத்தில்.*

॥ भा ॥ यादृशदेहस्थस्य यदवस्थस्य प्राचीनकर्मवासनया यत्प्रियं भवति, यच्चाप्रियम्, तदुभयं प्राप्य हर्षोद्वेगौ न कुर्यात्। कथम्? स्थिरबुद्धिः—स्थिरे आत्मनि बुद्धिर्यस्य सः स्थिरबुद्धिः, असंमूढः—

(ப்ரியம் ப்ராப்ய ந ப்ரஹ்ருஷ்யேத்) ஒவ்வொரு தேஹத்திலிருப்பவனுக்கும் ஒவ்வொரு ப்ராக்ருதப்பொருள் இனியதாகின்றது. ஒவ்வொரு தேஹத்திலேயே ப₃ால்யம், யௌவநம், முதுமை முதலான ஒவ்வொரு நிலைகளில் ஒவ்வொரு பொருள் இனியதாகின்றது. தேஹஸம்பந்தத்தினால் ஏற்படும் அறிவில் ஏற்றதாழ்வுகளினாலும் ஒவ்வொரு நிலையில் ஒவ்வொரு பொருள் இனியதாகின்றது. இவையனைத்தும் பூர்வகர்மவாஸனையால் ஏற்படுபவை. ஸமத₃ர்ஶந நிலையை அடையவிரும்பும் கர்மயோகியானவன இத்தகைய இனிய பொருள்களை அடைந்தாலும், மற்ற ப்ராக்ருதர்களைப்போலே இன்புறுவதில்லை. (அப்ரியம ப்ராப்ய ச ந உத₃விஜேத) அதுபோலவே அக்கர்மயோகியானவன தேஹபேதத்தாலும், அதன நிலைகளில வேறுபாட்டாலும், அதனாலுண்டாகும ஜ்ஞாநத்தில் ஏற்றத்தாழ்வுகளாலும இன்னாத பொருளகளை அடைநதாலும், பூர்வகாமவாஸனையால் ப்ராக்ருதர்களைப்போலே துனபுறுவதுமில்லை. இனிய பொருள்களையும இன்னாத பொருள்களையும அடைந்தும, அவற்றால் ஏற்பட்டே தீரககூடிய இனபதுனபங்களை எப்படி அடையாமலிருக்கமுடியும? என்னும் கேளவிக்கு மூன்றாவது பாதம் பதில் உரைக்கிறது—(ஸ்தி₂ரபு₃த்₃தி₄:) "ஸ்தி₂ரே ஆத்மநி பு₃த்₃தி₄: யஸ்ய ஸ:— ஸ்தி₂ரபு₃த்₃தி₄:" [ஸ்திரமான (நிலையானதான) ஆத்மாவில் ஈடுபட்ட புத்தியை (அறிவை) உடையவன் ஸ்திரபுத்தியாகிறான்.] எனனும் வ்யதி₄கரண ப₃ஹுவ்ரீஹிஸமாஸததாலே ஆத்மாவில உறுதி கொண்டவனிவன் எனறு காட்டுகிறது. இப்படிச் சிறந்த பொருளான ஆத்மாவில் உறுதிகொண்டவனாகையாலேயே, ப்ராக்ருதமான இனிய இனனாப்பொருள்களை அடைந்தும் இன்பதுனபங்களை அடைவதில்லை என்று கருத்து. ப்ரகரணத்திற்குப் பொருந்திய இக்கருத்தைக் காட்டாதாகையாலே, "ஸ்தி₂ரமான—(நிலையான) புத்தியை உடையவன்—ஸ்தி₂ரபு₃த்₃தி₄" எனனும ஸமாநாதி₄கரண ப₃ஹுவ்ரீஹிஸமாஸத்தைக் கொள்ளாமல், வ்யதி₄கரண ப₃ஹுவ்ரீஹிஸமாஸம் கொள்ளப்பட்டது. (அஸம்மூட₄:) ஸம்மோஹமாவது—தேஹாத்மமயக்கம. 'ஸம்' எனனும் உபஸர்க்க₃ம் இரு

अस्थिरेण शरीरेण स्थिरमात्मानमेकीकृत्य मोहः—संमोहः, तद्रहितः, तच्च कथम्? ब्रह्मविद्ब्रह्मणि स्थितः—उपदेशेन ब्रह्मवित्सन् तस्मिन् ब्रह्मण्यभ्यासयुक्तः। एतदुक्तं भवति—तत्त्वविदामुपदेशेन आत्मयाथात्म्यविद्भूत्वा तत्रैव यतमानो देहात्माभिमानं परित्यज्य स्थिररूपात्मावलोकनप्रियानुभवे व्यवसितः, अस्थिरे प्राकृते प्रियाप्रिये प्राप्य हर्षोद्वेगौ न कुर्यात्—इति ॥ २० ॥

---

பொருள்களை ஒன்றுபடுத்தும் அர்த்தத்தைக் குறிப்பதாகையால்; 'ஸம்மூட₄:' என்னும் பதம், தேஹத்தையும் ஆத்மாவையும் ஒன்றுபடுத்தி மயங்கும் அறிவிலியைக் குறிக்கிறது. 'அஸம்மூட₄:' என்று அத்தகைய தேஹாத்ம மயக்கமற்றவனைக் காட்டுகிறது. இப்படி தேஹாத்மமயக்கம் அற்றவனாகையாலேயும், இவன் தேஹ ஸம்பந்தத்தினால் இனியவாகவும் இன்னாதவாகவும் தோற்றுகிற பொருள்களால இன்பதுன்பங்களை அடைவதில்லை என்று கருத்து. இவ்வண்ணமாக இவன் நிலையான ஆத்மாவில் உறுதிபூண்டிருப்பதற்கும், தேஹாத்மமயக்கம அற்றிருப்பதற்கும் காரணத்தைக் காட்டுகிறது கடைசிப்பாதம்,— (ப்₃ரஹ்மவித்) தத்துவமுணர்ந்த நல்லோர்களால் உபதே₃ஶிக்கப்பெற்று, ஆத்மாவைப்பற்றிய ஜ்ஞாநத்தை உடையவனாகி. (ப்₃ரஹ்மணி ஸ்தி₂த:) அத்துடன் நில்லாமல், அவ்வாத்மாவிலேயே ஈடுபட்டிருக்கையாகிற மிகச் சிறந்த விஜ்ஞாநத்தையும் அடைந்தவன். இங்குள்ள இரண்டு ப்₃ரஹ்மஶப்₃த₃ங்களும ப்ரகரணத்தையொட்டி ப்₃ரஹ்மதுல்யமான சுத்₃த₄ாத்மாவைக் குறிக்கின்றன. இப்படி ஆத்மஜ்ஞாநமுடையவனாகி, அதிலேயே ஈடுபட்டிருக்கையாலேயே இவன தேஹாத்ம மயக்கமற்று ஆத்மாவிலேயே உறுதிகொண்ட நெஞ்சினனாயிருக்கிறான் என்று கருத்து. இந்த ஶ்லோகத்தின திரண்ட பொருளாவது,— ஸமத₃ர்ஶநநிலையை அடையவிரும்பும் கர்மயோகி, தத்துவமறிந்த ஆப்தர்களின் உபதே₃ஶததால் ஆத்மாவைப்பற்றிய உண்மையறிவை உடையவனாகி, அவ்வாத்மாவிலேயே ஈடுபட்டவனாய் (அதனால்) தேஹாத்மாபி₄மாநத்தைக் கைவிட்டு, நிலையான ஆத்மஸாக்ஷாத்காரமாகிற இனிய அநுபவததில் உறுதிபூண்டவனாய், (அதனால்) நிலையற்றதாய், ப்ராகருதமான இனிய பொருள்களையும, இன்னாப்பொருள்களையுமடைவது காரணமாக (முறையே) இன்பத்தையும், துன்பத்தையும் அடையமாட்டான என்கை. 20.

बाह्यस्पर्शेष्वसक्तात्मा विन्दत्यात्मनि यत्सुखम्।
स ब्रह्मयोगयुक्तात्मा सुखमक्षय्यमश्नुते॥ २१॥

21. பா₃ஹ்யஸ்பர்ஶேஷ்வஸக்தாத்மா விந்த₃த்யாத்மநி யஸ்ஸுக₂ம் ।
ஸ ப்₃ரஹ்மயோக₃யுக்தாத்மா ஸுக₂மக்ஷய்யமஶ்நுதே ॥

ய:—எந்தக் கர்மயோகியானவன், பா₃ஹ்யஸ்பர்ஶேஷு—*வெளி விஷயாநுப₄வங்களில்,* அஸக்தாதமா—*ஈடுபடாத நெஞ்சை உடையவனாய்.* ஆத்மநி—*(உள்ளேயிருக்கும்) ஆத்மாவிலேயே,* ஸுக₂ம்—*இன்பத்தை,* விந்த₃தி—*அடைகிறானோ.* ஸ:—*அவன்,* ப்₃ரஹ்ம யோக₃யுக்தாத்மா—*ஆத்மாவைப்பயில்வதிலேயே ஈடுபட்ட மனத்தை உடையவனாய்,* அக்ஷய்யம் ஸுக₂ம்—*(ஆத்மாநுப₄வமாகிற) அழியாத ஸுகத்தை,* அஶ்நுதே—*பெறுகிறான்.*

---

20. புறம்பயிலுந் தொத்தற்ற புந்தியனா யுள்ளே
சிறந்தவுயி ரின்பமெவன் சேருந்—துறந்தவவன்
சேரும் பிரமத்திற் சிநதையனா யந்தமிலா
தாருஞ சுகமடையு மாங்கு.

புறம் பயிலும தொத்து அற்ற புந்தியனாய்—*வெளி விஷயங்களிலேயே ஈடுபடும் தாழ்வு இல்லாத நெஞ்சை உடையவனாய்,* உள்ளே—*உள்ளேயிருக்கும்,* சிறந்த உயிர் இன்பம—*சிறந்ததான ஆத்மாவில் இன்பத்தை,* எவன் சேரும்—*எந்தக் கர்மயோகி அடைகிறானோ,* துறந்த அவன்—*பிராகிருதப் பொருள்களைப் பயில்வதை விட்ட அவன்,* பிரமத்தில் சேரும் சிந்தையனாய்—*ஆத்மாவைப் பயில்வதிலேயே ஈடுபட்ட மனத்தை உடையவனாய்,* ஆங்கு—*பல த₃ஶையில்,* அந்தம இலாது ஆரும சுகம் அடையும்—*அழிவில்லாமல் வரும் ஆத்மாநுபவ ஸுகத்தை அடைவான்.*

---

21. *முன் ஶ்லோகத்தில் சொன்னபடி ப்ராக்ருதப் பொருள்களினால் இன்ப துன்பங்களை அடையாதவனாயிருப்பவனுக்குப் பதினெட்டாம் ஶ்லோகத்திற் சொன்ன ஸமத₃ர்ஶந நிலை ஏற்படு*

॥भा॥ एवमुक्तेन प्रकारेण बाह्यस्पर्शेषु—आत्मव्यतिरिक्त-विषयानुभवेषु, असक्तात्मा—असक्तमनाः अन्तरात्मन्येव यस्सुखं विन्दति—लभते; स प्रकृत्यभ्यासं विहाय ब्रह्मयोगयुक्तात्मा—ब्रह्माभ्यासयुक्तमनाः ब्रह्मानुभवरूपमक्षयं सुखं प्राप्नोति॥२१॥

॥भा॥ प्राकृतस्य भोगस्य सुत्यजतामाह—

ये हि संस्पर्शजा भोगा दुःखयोनय एव ते।
आद्यन्तवन्तः कौन्तेय न तेषु रमते बुधः॥२२॥

22. யே ஹி ஸமஸ்பர்ஶஜா போ₄கா₃ து₃:க்க₂யோநய ஏவ தே।
ஆத்₃யந்தவந்த: கௌந்தேய ந தேஷு ரமதே பு₃த₄:॥

---

விடுமாகையாலே, அளவற்றதான ஆத்மாநுபவஸுகம் தன்னடையே வந்து சேரும் என்கிறது. (ய:) முற்கூறியபடி ப்ராக்ருதப் பொருள்களினுல் இன்பதுன்பமடையாமல ஸமத₃ர்ஶந நிலையை அடைந்த எந்தக் கர்மயோகியானவன். (பா₃ஹ்யஸ்பர்ஶேஷு அஸக்தாத்மா) ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்ட வெளி விஷயங்களின் அநுபவத்தில் ஈடுபடாத நெஞ்சை உடையவனுயிருக்கிருனே. இந்த ஶ்லோகத்தில் முதலாவது மூன்ருவது பாதங்களில் வரும ஆத்மஶப்₃த₃ம நெஞ்சைக்குறிக்கிறது. (ஆத்மநி) வெளி விஷயங்களுக்கு எதிர்த்தட்டாய் உள்ளேயிருக்கும் ஆத்மாவிலேயே. (ஸுக₂ம விந்த₃தி) இன்பத்தை அடைகிருனே. ஆத்மாவைப்பற்றிய உபதே₃ஶம் முதலானவற்ருல் ஏற்படும ஜ்ஞாநத்திஞல் வரும் இன்பத்தை அடைகிருனே. ப₂லத₃ஶையில் வரும் ஆத்மாநுப₄வமாகிற அந்தமில் இன்பத்தைப் பிற்பாதியில் சொல்லப் போகிறதாகையாலே, அதன தொடக்க நிலையான இதையே இங்கு சொல்லுவதாகக் கொள்ளவேண்டும. (ஸ:) ஆத்மாவைப் பயில்கின்றபடியாலே மறுபடியும் மறுபடியும் ப்ராக்ருதமான ஶப்₃தா₃தி₃ விஷயங்களை இனியவையாக நினைக்காதவனுன அவன. (ப்₃ரஹ்மயோக₃யுக்தாத்மா) ப்₃ரஹ்மம் எனப்படும் சுத்₃த₄ாத்மாவைப் பயில்வதிலேயே ஈடுபட்ட நெஞ்சை உடையவனுய். (அக்ஷய்யம் ஸுக₂ம் அஶ்நுதே) ஆத்மஸாக்ஷாத்காரத்திற்குபபின ஏற்படும் ஆத்மாநுப₄வமாகிற அளவற்ற இன்பத்தைப் பெறுகிருன். 'விந்த₃தி'—என்று தொடக்க நிலையையும, 'அஶ்நுதே'—என்று ப₂லத₃ஶையையும காட்டுகிறது.

21.

கௌந்தேய— குந்திபுத்திரனே!. யே ஸம்ஸ்பர்ஶஜா: போ₄கா₃:—விஷயங்களோடு இந்திரியங்கள் தொடர்புகொள்வதால் ஏற்படும் இனபங்கள் யாவை சில உண்டோ, தே—அவை. து₃:க்க₂யோநய: ஏவ ஹி— துன்பததிற்கே காரணமாயிருப்பவையன்றே. ஆத்₃யந்தவந்த: (ஹி)— முதலும் முடிவும் உள்ளவையனறே; பு₃த₄:—அவற்றின் இயலவை அறிபவன். தேஷு—அவற்றில, ந ரமதே— ஈடுபடமாட்டான்.

21. புலன்சேர் பொறியில்வருும போகங்க டுன்பக்
குலஞ்சேருங் காரணமாங் கேளாய்—நலஞ்சேர்ந்து
நிற்பதுவுமில்லை நிறைஞான வானவற்றி
லற்பமுகப் பெய்தா னமர்ந்து.

புலன சேர் பொறியில் வரும் போகங்கள்— விஷயங்களோடு இந்திரியங்கள் தொடர்பு கொள்வதால ஏற்படும் இன்பங்கள். துனபக் குலம் சேரும காரணமாம்— துக்க ஸமூஹங்கள் வந்தடைவதற்குக் காரணமாயிருக்கின்றன. கேளாய்— (மேலும் அவற்றின் இயல்வைக்) கேட்பாயாக. நலம் சேர்நது நிற்பதுவும இல்லை—எவ்விதமான சிறப்பையும் உடையவையாய் நிலையாயிருப்பதும் இல்லை. நிறை ஞான வான்—அறிவு நிறைந்தவன், அவற்றில்— அந்த ப்ராக்ருத இன்பங்களில, அற்பமும்—ஓரு சிறிதும். அமர்ந்து–ஈடுபட்டு. உகப்பு எய்தான்—ஆனந்தததை அடைய மாட்டான்.

22. அநாதிகாலமாக வெளிவிஷய இன்பங்களிலேயே மண்டியிருந்தவன அதைக் கைவிடுவது எப்படி? என்னும கேள்வி எழ, அவ்வினபங்களை ஸம்பாதிபபது, காப்பாற்றுவது முதலானவற்றில் ஏற்படும் வருத்தங்களை அநுஸந்தித்தால் அவற்றை மிக எளிதில் கைவிட்டுவிடலாம எனகிறது. (ஸமஸ்பர்ஶஜா: யே போ₄கா₃:) ஶப₃தா₃தி₃ விஷயங்களோடு இந்திரியங்கள் தொடர்பு கொளவதால் ஏற்படும இனபங்கள் யாவை சில உண்டோ. அற்பமான இந்திரியங்கள் அத்யல்பமான விஷயங்களோடு தொடர்பு கொளவதால ஏற்படும இவ்வினபங்கள் செயறகையானவையெனறும், மிகவும அற்பமானவை எனறும இதனல் உணர்த்தப்படுகிறது.

॥भा॥ विषयेन्द्रियस्पर्शजाः ये भोगाः दुःखयोनयस्ते—दुखोदर्काः, आद्यन्तवन्तः—अल्पकालवर्तिनो ह्युपलभ्यन्ते। न तेषु तद्याथात्म्यविद्रमते॥ २२॥

---

'ஸம்ஸ்பர்ஶஜா:' என்றதால கேவலம் ஸ்பர்ஶஸுகமேயொழிய அநந்தஸுகமில்லை என்று கருத்து. இப்படி அற்பமாயிருக்கும் ஸுகம அநந்தமான பல துனபங்களை விளைப்பதாயுமிருக்கிறது எனகிருன் மேலே,—(தே து₃:க்க₂யோநய: ஏவ) அந்த ஸுகங்கள் எல்லாம பல துன்பங்களுக்குக் காரணமாகவேயிருக்கின்றன. க்ஷுத்₃ரவிஷயாநுப₄வத்தால ஏற்படுகையால், இவ்வுலகத்தில் துன்பங்களை விளைப்பதோடனறியில், பரலோகததிலும பல துன்பங்களை விளைப்பவையாயுள்ளன என்றுணரலாம் எனறு ஏவகாரத்தின் கருத்து. இப்படி அற்பமாய், துன்பங்கலந்ததாயிருந்தாலும், நீண்டகாலததிற்காவது இவ்வற்ப ஸுகத்தை அநுபவிக்கலாமோ எனில, அதுவுமில்லை என்கிறது மேலே,— (ஆத்₃யந்தவந்த:) இவ்வற்பஸுகங்களும் முதலும் முடிவுமுளளவையாகையாலே அற்பகாலத்திற்கேயிருப்பவை. இந்த போ₄க₃ங்களில் தலை சிறந்ததான பிரமனின போ₄க₃மும, அப்பிரமனின வருடங்களாலே நூறு வருடங்களேயிருபபது; கணமே ஒளிவீசும மினனலுக்கும், சில கணங்கள வாழும நீர்ககுமிழிககும உளள வாசியே மனிதனின ஆயுளுககும, பிரமனின ஆயுளுக்கும உள்ளது; ஆகையால் பராக்ருதபோகங்கள் எலலாமே அற்பகாலமே நீடிப்பவை எனறு கருதது. இவ்வணணமாக அற்பஸுக₂மாகவும, துனபங்கள் பல கலநததாகவும், அநித்யமாகவும ஒருவர் உபதே₃ஶிக்கவேண்டாத படி கணகூடாகக் காட்சியளிக்கும் இவற்றில், அறிவாளியாயிருப்பவன ஈடுபடமாட்டான எனகிறுன கடைசிப்பாதத்தில. (பு₃த₄: ந தேஷு ரமதே) இவற்றின் இயலவை அறியும அறிவாளியானவன அந்தப் பிராகிருதபோகஙகளில் ரமிக்க(ஈடுபட)மாட்டான; ரமிக்க மாட்டான் என்பதோடன்றியில், இவற்றின் தோஷங்களைக் காணக காணக் கிரமமாக இவற்றினின்றும உபரமத்தையும் (வைராக்₃யத்தையும்) அடைவான் எனறு கருதது. (பு₃த₄:) ஶப்₃த₃ாதி, விஷயங்கள் ஐநதினின்றும் ஒதுங்கி வாழ்கையாகிற ஐந்து விதமான உபரமத்திற்கும காரணமான, ப்ராக்ருதபோ₄கங்களிலுளள ஐந்துவிதமான தோஷஙகளை விவேகித்து அறிபவன எனறு கருதது. (கௌந்தேய) சிறந்த ஞானியான குந்தியின் புததிரனே நீ இத்தகைய அறிவாளியாகவேண்டாவோ என்று

கருத்து. இவ்விடத்தில், ஸாங்க்₂யகாரிகையில் (50-வது ஶ்லோகத்தில) ஒன்பது விதமான துஷ்டிகளை (இன்பங்களை) விவரிக்குமபோது, "ஆத்₄யாத்மிகாஶ் சதஸ்ர: ப்ரக்ருத்யுபாத₃ாந காலபா₄க்₃யாக₂யா:" என்று ஆத்₄யாத்மிகமான நாலு துஷ்டிகளையும, "ப₃ாஹ்யா விஷயோபரமாத் பஞ்ச" என்று ஐந்து விதமான விஷயவைராக்யங்களாலே ஏற்படும் ஐந்து விதமான ப₃ாஹ்யதுஷ்டிகளையும எடுத்திருபபதும, ப₃ாஹ்யதுஷ்டிகளை விவரிக்கும்போது, இந்த விஷயவைராக்₃யங்களுக்குக் காரணமாக விஷயங்களில் ஐந்து விதமான தே₃ாஷங்களை ஸாங்க்₂யதத்வகௌமுதியிலும், தாத்பர்யசந்தரிகையிலும் எடுத்துக்காட்டியிருப்பதும் அநுஸந்திக்கத்தக்கது. அந்த தோஷங்களாவன,— (1) ஆர்ஜந தே₃ாஷம்—போக்யங்களையும், அவற்றுக்கு ஸாத₄நமான பணத்தையும் ஸம்பாதிப்பதற்காக உயிருக்கும் ஆபத்து ஏற்படும்படி கடல் கடப்பது, ஆயுதமெடுத்துப் போரிடுவது முதலானவை ஆர்ஜநதே₃ாஷங்கள். (2) ரக்ஷணதே₃ாஷம — ஆயிரம மதிளிட்டுக் காவலிடப்பெற்ற க₃ர்ப்ப₄க்₃ருஹத்தில் வைத்து ரக்ஷித்தாலும், அரசர்கள், நெருப்பு, திருடர், எலிகள் முதலானவற்றால் அபாயங்கள வருவது, அவற்றைத் தடுக்கக் கஷ்டப்படுவது முதலானவை ரக்ஷணதோஷங்கள். (3) க்ஷயதே₃ாஷம்— "ஸ்வர்க்கே₃ऽபி பாதபீ₄தஸ்ய க்ஷயிஷ்ணோர் நாஸ்தி நிர்வ்ருதி:" [வி.பு6-5-50] [சுவர்ககத்திலிருந்தாலும 'என்று அவ் வின்பம நசித்துக் கீழே விழுந்து விடுவோமோ' என்று பயப்படுகிறவனுககு, அங்கிருககும்போதும் இன்பம இல்லை.] என்கிறபடியே அநுப₄வத்தின் க்ஷயப₄யத்தினால வருபவை க்ஷயதே₃ாஷங்கள். (4) போ₄க₃தே₃ாஷம்— "ந ஜாது காம: காமாநாம் உபபோ₄கே₃ந ஶாம்யதி, ஹவிஷா க்ருஷ்ணவர்த்மேவ பூ₄ய ஏவாபி₄வர்த்த₄தே ||" [வி.பு4-10-22] [காமிகளின காமம் ஒருபோதும் அநுபவத்தால் அடங்குவதில்லை; எரிபொருளை இட இட அக்நி கொழுந்துவிட்டு எரிவதுபோலே, காமமும் விஷயங்களை அநுபவிக்க அநுபவிக்க மேன்மேலும அதிகமாகிறது.] என்கிறபடியே மேன்மேலும ஆசையை வளர்க்கை, பெரிய அநாத்தங்களை விளைக்கை, தகாத செயல்களில ஈடுபடுத்துகை முதலானவை போ₄க₃தே₃ாஷங்கள். (5) ஹிம்ஸாதே₃ாஷம்—பராக்ருதாநுப₄வம் பெருமபாலும் பிறர்க்குத் தீங்கை விளைததே பெறவேண்டியதாயிருக்கையாலே, அப்பரஹிம்ஸையினால் ஏற்படும் இம்மை மறுமைத துன்பங்கள் ஹிம்ஸா தே₃ாஷங்கள். ஐந்து விதமான இந்த தோஷங்களும் ப்ரத்யக்ஷம முதலான எல்லாப் பிரமாணங்களாலும அறியப்படுகின்றனவாகையால, இந்த தோஷங்

शक्नोतीहैव यः सोढुं प्राक् शरीरविमोक्षणात् ।
कामक्रोधोद्भवं वेगं स युक्तः स सुखी नरः ॥ २३ ॥

23. ஶக்நோதீஹைவ ய: ஸோடு₄ம் ப்ராக் ஶரீரவிமோக்ஷணாத் ।
காமக்ரோதோ₄த்₃ப₄வம் வேக₃ம் ஸ யுக்த: ஸ ஸுகீ₂ நர: ॥

ஶரீரவிமோக்ஷணாத் ப்ராக்—*சரீரம் விடுபடுவதற்கு முன்.* இஹ ஏவ—*( ஸாத₄நாநுஷ்ட்டா₂ந நிலையான )* இக்காலத்திலேயே, காமக்ரோதோ₄த்₃ப₄வம் வேக₃ம—*காமக்ரோதங்களால் ( மனோவாக்காயங்களில ) ஏற்படும் வேகத்தை,* ய:—*எந்தக் கர்மயோகியானவன்,* ஸோடு₄ம ஶக்நோதி—*பொறுக்கவல்லவனாகிறானோ* ஸ: நர:—*அந்த மனிதனே,* யுக்த:—*ஆத்மாநுபவத்தை அடையத்தக்கவன;* ஸ: ஸுகீ₂—*அவனே ( சரீரம் விட்டபின் ) ஆத்மாநுப₄வஸுக₂த்தை அடைகிறான்.*

---

22. காயங் கழிபபதற்கு முன்னிலிலிக் காலத்தே
மாயந் தருகாமம் வல்வெகுளி—யாயவிவை
வேகத்தைத் தானடக்க வல்லா னவனயோகி
போகத்தைத் தானடையும் போய்.

காயம் கழிப்பதற்கு முன்னிலில்—*சரீரம் உயிரைவிட்டுப் பிரிவதற்கு முன்னால.* இக்காலத்தே—*(ஸாத₄நாநுஷ்ட்டா₂ந நிலையான) இக்காலததிலேயே.* மாயம தரு காமம் வலவெகுளி ஆய இவை—*ஆஶ்சர்யமான மயககத்தை விளைக்கும் காமம், வலிமைமிக்க கோபம் ஆகிய இரண்டினால்.* வேகத்தை—*( மனம் மெய் மொழிகளிலே ஏற்படும் ) வேகத்தை.* தான் அடக்க வல்லான்—*தானே கட்டுப்படுத்த வல்லவனே.* யோகி—*ஆத்மாநுபவத்தை அடையத்தக்கவனாவான்;* போய்—*இந்த சரீரம் விட்டுப்போய்.* போகத்தை தான் அடையும்—*ஆத்மாநுப₄வஸுக₂த்தைத் தன்னடையே அடைவான்.*

---

களை நன்கு அநுஸந்தி₄ப்பவர்களுக்கு, அநாதி₃காலமாகப் பழகிப் போந்ததானாலும் ப்ராக்ருதபோ₄கங்₃ம எளிதில் கைவிடத் தக்கதே என்பது இந்த ஶ்லோகத்தின் ஸாரார்த்த₂ம். 22.

॥भा॥ शरीरमोक्षणात् प्राक्, इहैव—साधनानुष्ठानदशायामेव आत्मानुभवप्रीत्या कामक्रोधोद्भवं वेगं सोढुं—निरोद्धुं यः शक्नोति,

23. 'வித்₃யாவிநய' [18] என்னும ஶ்லோகத்தில் ஸமத₃ர்ஶந நிலே விளக்கப்பட்டு, 'இஹைவ தை:' [19] என்னும ஶ்லோகத்தில் அதன் பெருமை காட்டப்பட்டது. அதற்குமேல ஆறு ஶ்லோகங் களாலே, அந்நிலே ஏற்படுவதற்குரிய அநுஷ்ட₂ான முறைகளைக் கூறத்தொடங்கி, இதுவரையில் மூன்று ஶ்லோகங்களில் முறையே ப்ரியாப்ரியங்களில் விருப்புவெறுப்புகளற்றிருக்கை, வெளி விஷயங் களில் பற்றற்றிருக்கை, அவ்விஷயங்களில தோஷத்தை அநுஸந் திக்கை எனனும் மூன்று முறைகள் கூறப்பட்டன. இந்த ஶ்லோ கத்தில், இவ்வண்ணமாக வெளிவிஷயங்களில் பற்றற்று ஆத்மாநு ப₄வஸுக₂த்தையே பயினறுகொண்டு, பிராகிருதபோகங்களின தாழ்வை அநுஸந்திப்பவனுக்குத் தானே ஏற்படுகிற நாலாவது நிலேயைக் கூறிக்கொண்டு, அத்தகையவனுக்கு ஆத்மஸாக்ஷாத் காரத்திலும் அதனுல் ஏற்படும் ஸுகத்திலும் தகுதியைக் கூறுகிருன். (ஶரீரவிமோக்ஷணுத் ப்ராக்) சரீரம் விடுபடுவதற்கு முன். சரீரம் விட்டு ஆத்மாநுப₄வம் ஏற்படுவதற்கு முன், முற்கூறிய பயிற்சி களைச் செய்யாதவனுக்குக் காமக்ரோத₄ங்களை வெல்வது அரிது எனறு கருத்து. (இஹைவ) இந்த ஸாத₄நாநுஷ்ட்டாந நிலேயிலேயே. ஸாத்₄யமான ஆத்மாநுப₄வம் கைபுகுந்தபின் காமக்ரோதங்கள் ஏற்பட இடமேயில்லாமையால், அது ஏற்பட ப்ரஸகதியுள்ள ஸாத₄நாநுஷ்ட்டானநிலே இங்கு 'இஹைவ' என்று கூறப்படுகிறது. (ய:) ஆதமஸுகத்தைப் பயில்கினற யாவனெருு ஸாத₄கன். (காம க்ரோதோ₄த்₃ப₄வம் வேக₃ம் ஸோடு₄ம் ஶக்நோதி) அவ்வாத்மாநுப₄வ ப்ரீதியிஞலே, காமக்ரோத₄ங்களால் உண்டாகும் வேகத்தைத் தடுக்க வல்லவஞகிருனே. காமக்ரோத₄ங்களால் மநோவாக்காயங்கள் நிதானமிழந்து மிக்க பதற்றத்தையடைந்து வரம்புமீறி நடப்பதே இங்கு வேகம் எனப்படுகிறது. உதாரணமாக, காமத்திஞல், தாழ்ந்த விஷயங்களைப்பற்றிய இடைவிடாத சிந்தனம் உண்டாவது மனத் தில் ஏற்படும வேகம்; தாழ்ந்த விஷயங்களையே சுவைபடப் பேசிக கொண்டிருப்பது வாக்கில் ஏற்படும் வேகம்; அவை பொருட்டே ராஜாந்தப்புரத்திலும் நுழைவது போன்ற தலைபோகக்கூடிய காரியங்களில் ஈடுபடுவது காயத்தில் (உடம்பில்) ஏற்படும் வேகம்.

स युक्तः—आत्मानुभवायार्हः। स एव शरीरविमोक्षोत्तरकालमात्मानुभवैकसुखस्संपत्स्यते ॥ २३ ॥

योऽन्तस्सुखोऽन्तरारामस्तथाऽन्तर्ज्योतिरेव यः।
स योगी ब्रह्मनिर्वाणं ब्रह्मभूतोऽधिगच्छति ॥ २४ ॥

24.யோऽந்தஸ்ஸுகோऽந்தராராமஸ் ததாऽந்தர்ஜ்யோதிரேவ ய:।
ஸ யோகீ ப்ரஹ்மநிர்வாணம ப்ரஹ்ம-
பூதோऽதிகச்சதி ॥

---

கோபத்திஞல் பிறரை நலிவதற்கு வழிகளையாராய்வது மனத்தில் ஏற்படும் வேகம்; கடுஞ்சொற்களைப் பேசுவது வாக்கில் எற்படும் வேகம்; அடிதடியில் இறங்குவது காயத்தில ஏற்படும் வேகம். (ஸோடும்) தடுக்க. பொதுவாக இப்பதம 'பொறுத்துக்கொண்டிருக்க' என்னும் பொருளையே காட்டுவதாயினும, காமக்ரோதங்களிஞல் வேகத்தையடைந்துவிட்டு, அவற்றைப் பொறுததுக் கொண்டிருப்பதால் மாத்திரம பயனில்லையாகையால், இங்கு 'தடுக்க' என்றே பொருள் கொள்ளவேண்டும். (ஸோடும் ஶக்நோதி) தடுக்க வல்லமைபெற்று, அதில முயல்கிருனே என்று பொருள். ஆக, காமக்ரோதங்களால் உணடாகும் வேகத்தை அடக்கமுயல்வது ஸமதர்ஶந நிலையை அடைவதற்கு நாலாவது உபாயம் என்று காட்டப்பட்டது. (ஸ: நர: யுக்த:) ஜராமரணங்களை வெல்லப் போகும் அவனே ஆத்மாநுபவத்திற்குத் தகுதிபெற்றவன். 'ரீங்க்ஷயே' என்று தாதுவாகையாலே 'ர' எனனும் எழுத்து க்ஷயத்தை விளக்கும ஜராமரணங்களைக் குறிக்கிறது. 'நர:' என்று ஜராமரணஙகளை வெல்லப்போகும் அதிகாரியான இவன குறிக்கப படுகிருன். (யுக்த:) யோகத்தையுடையவன யுக்தன; மேலே 'ஸ ஸுகீ' என்று ஆத்மாநுபவமாகிற பலத்தைச் சொல்லப்போகிற தாகையாலே, இப்பதம் யமம் நியமம் முதலான அஷ்டாங்கயோக நிலைகளில் கடைசி நிலையான ஸமாதி நிலையிலிருப்பவனைக் கூறுகிறது. (ஸ: ஸுகீ) ஶரீரம் விடுவதற்குமுன முற்கூறியபடி காமக்ரோதங்களாலுண்டாகும் வேகத்தை அடக்கியவனே, சரீரம் விட்ட மறுகணம் ஆத்மாநுபவ ஸுகத்தையே அடைகிருன். (ஸுகீ) 'ஸுகமக்ஷய்யமஶ்நுதே' [21] என்று சொல்லப்பட்ட அழியாத ஸுக முடைமையை இங்கு கூறுவதாகக் கொள்வதே இப்ரகரணத்திற்குப் பொருந்தும். 23.

ய:—எவனொருவன், அந்தஸ்ஸுக₂: (ஏவ)—ஆத்மாநு ப₄வத்தையே போ₄க்₃யமாகக் கொண்டவனாய், (ய:) அந்தரா ராம: (ஏவ)—(எவனொருவன்) அதையே போ₃க₃ஸ்த₂ான மாகக் கொண்டவனாய். ததா₂—அவ்வண்ணமே. ய:— எவனொருவன், அந்தர்ஜ்யோதி· ஏவ—அதையே போ₄க உபகரணமாகக் கொண்டவனாயிருக்கிறானோ, ப்₃ரஹ்ம பூ₄த:— சுத்தாத்மநிலையை அடைந்தவனான். ஸ: யோகீ₃—அந்தக் கர்மயோகி ப்₃ரஹ்மநிர்வாணம்—ஆத்மாநுப₄வஸுக₂த்தை. அதி₄க₃ச்ச₂தி—அடைகிறான்.

---

**23.** தன்னுளம ரின்பத்தோன் றன்னிழலிற்றான் மகிழ்வோன்
றன்னு ளுயர்சோதி தானுடையோன்—றன்னுருவே
யான பிரமமா யந்தப் பிரமத்தைத்
தானடையு மினபந் தழைத்து.

தன்னுள் அமர் இன்பத்தோன—ஆக்மாநுபவத்தையே போக்யமாகக் கொண்டவனாய். தன் நிழலில் தான் மகிழ் வோன்—அதையே போகஸ்தானமாகக் கொண்டவனாய். தன்னுள் உயர்சோதி தான் உடையோன்—அதையே போகோபகரணமாகக் கொண்டவனாயிருப்பவன், தன் உருவேயான பிரமமாய்—ப்₃ரஹ்மம் எனப்படும் சுத்தாத்ம ஸ்வரூபநிலையை அடைந்து. இன்பம் தழைத்து—ஸுகம் விஞ்சப்பெற்று. அந்த பிரமத்தை தான் அடையும்—அந்த சுததாத்மாவைத்தான் அநுபவிப்பான்.

---

24. "பா₃ஹ்ய ஸ்பர்ஶேஷ்வஸக்தாத்மா" [21] என்கிறபடியே கைவிடப்பட்ட பிராகிருதமான பே₄ாக்₃யபே₄ாகே₃ாபகரண பே₄ாக₃ ஸ்த₂ானங்கள் அனைத்தும ஆத்மாவே என்று கொளவது ஸம தர்₃ஶநநிலையை அடைய உதவும் ஐந்தாவது அநுஷ்டானமுறை யென்று கூறுவதன்மூலம், "விநத₃த்யாத்மநி யஸ்ஸுக₂ம்" [21] எனறு முன் கூறியதை விவரிக்கிறான. (ய: அந்தஸ்ஸுக₂' ஏவ) எவனொருவன் முற்கூறியபடி வெளிவிஷயங்களில் பே₄ாக்₃யமாக உள்ள பொருள்களைக் கைவிட்டு, உள்ளிருக்கும் ஆத்மாவையே அவை அனைத்துமாகக் கொள்கிறானோ. "பா₃ஹ்யஸ்பர்ஶேஷு"

||भा|| यो बाह्यविषयानुभवं सर्वं विहाय अन्तस्सुखः— आत्मानुभवैकसुखः, अन्तरारामः–आत्मैकोद्यानः स्वगुणैरात्मैव सुखवर्धको

என்று முன் எடுக்கப்பட்ட வெளிவிஷயங்களுக்கு எதிர்த்தட்டைச் சொல்லுகையாலே. இங்குள்ள 'அந்த:' ஶப்₃த₃ங்கள் ஆத்மாவையே குறிக்கின்றன. ஆதமாவையே ஸர்வவித₄ஸுக₂மாகக் கொண்டவன் என்றும், ஆத்மாவிலேயே எல்லா ஸுகத்தையும் காண்பவன் என்றும் இரண்டுபடியாக அந்தஸ்ஸுக₂ஶப்தத்திற்குப் பொருள் கொள்ளலாம். எப்படிக் கொண்டாலும், ஆத்மாநுப₄வத்தையே ஸர்வவித₄போ₄க்₃யங்களாகவும கொண்டவன் என்றதாகிறது. இந்த ஶ்லோகத்தில் முற்பாதியின் கடைசியிலிருக்கும் 'ஏவ'காரம, அந்தஶ்ஶப்₃த₃த்தோடு கூடிய மூன்று பதஙகளோடும் அந்வயிக்கிறது. முதலிலும் கடைசியிலும் படிக்கப்பட்டிருக்கும் யச்ச₂ப்₃த₃த்தை நடுவிலும் வருவித்துக்கொளளவேண்டியது. உலகில் போக்யங்களை அநுபவிக்கும் போ₄க₃ஸ்த₂ானங்களிருபபதுபோலே இவனுக்கு உண்டோ? என்னும் கேள்வியெழ, ஸர்வபோ₄க₃ஸ்த₂ானமாகவுமிருப்பது ஆத்மாவே எனகிறது மேல்,— (ய: அந்தராராம: ஏவ) எவன் ஆத்மாவையே விளையாடும் தோட்டமாகக் கொள்கிருனே. விளையாடுவதற்குத் தன்னை அண்டியவர்களுக்குத் தோட்டம் எவ்வாறு தன்னகத்தேயுள்ள மரம், செடி, கொடி, தளிர், பூ, பழம், குளம், நிழல் முதலானவற்ருல ஸுகத்தை வளரச்செய்கிறதோ, அவ்வாறே ஆத்மாவும் தனனை அநுபவிப்பவர்களுக்கு அபஹத பாப்மத்வம், ஜ்ஞாநாநந்தஙகள் முதலான குணங்களால் ஸுகத்தை வளரச்செய்து, தன விஷயமான வாதங்களைச்செய்வது, கிரந்தங்களை எழுதுவது முதலான விளையாட்டுகளையும் விளைக்கிறது எனறு கருத்து. இங்கு தோட்டத்தைச் சொன்னது ஸர்வவித₄மான போ₄க₃ஸ்த₂ானஙகளுக்கும் உபலக்ஷணம். ஆத்மாவையே தன்னுல் கைவிடப்பட்ட பிராகிருத போ₄க₃ஸ்த₂ானஙகள் அனைத்துமாகக் கொள்பவன் இவன் எனறு கருத்து. உலகில் தோட்டம் முதலான போகஸ்தானஙகளில் போக்யங்களை அநுபவிக்கும்போது வெளிச்சம முதலான போகோ₃பகரணங்களிருப்பதுபோலே இவனுக்கு போ₄கோ₃பகரணங்களுண்டோ? எனனும் கேள்வியெழ, ஸர்வபோ₄கோ₃பகரணமாகவுமிருப்பது ஆத்மாவே எனகிறது மேலே— (ய: அந்தர்ஜ்யோதி: ஏவ) வெளிச்சம முதலான ஸர்வபோ₄கோ₃பகரணங்களும் எவனுக்கு ஆத்மாவேயாகினறதோ, ஜ்யோதிஶ்ஶப்₃த₃ம்,ஆராமத்₃ருஷ்டாந்தத்தையொட்டி,போ₄க்₃யமமுத

यस्य स तथोक्तः, तथाऽन्तर्ज्योतिः—आत्मैकज्ञानो यो वर्तते, स ब्रह्मभूतो योगी ब्रह்மनिर्वाणम्—आत्मानुभवसुखं प्राप्नोति॥ २४॥

லானவற்றின ஜ்ஞாநஸாத₄நமாயிருக்கையாலே பே₄ாகே₃ாபகரண மான வெளிச்சத்தைக் காட்டுவதன்மூலம் ஸர்வபே₄ாகே₃ாபகரணங் களுக்கும உபலக்ஷணமாகிறது. தோட்டத்தில் விளையாடுமவனுக்குத் தனியானதொரு வெளிச்சம் முதலியவை பே₄ாகே₃ாபகரணமாகத் தேவைப்படுவதுபோலே இவனுக்குத தனியாக ஒனறும் தேவைப் படுவதில்லை; பே₄ாக்₃யபே₄ாக₃ஸ்த₂ானங்களாயிருக்கும ஆத்மாவே இவனுக்கு ஜ்ஞாநாதி₃ஸாத₄நமான ஸர்வவித₄போகே₃ாபகரண மாகவுமாகிறது எனறு கருத்து. அன்றிக்கே, ஜ்யோதிஶ்ஶப₃த₃ம் ஜ்ஞாநத்தைக் குறிப்பதாய், 'அநதர்ஜ்யோதி:' எனறு 'ஆதமா வையே அறிபவன' என்கிறதாய், பிராகிருத விஷயங்களிறபோலே போக்₃யங்களைக் காட்டிலும் வேறுபட்டதொரு பே₄ாக₃ உப கரணத்தை இஙகு அறியவேண்டியதில்லை, ஆத்மாவே பே₄ாக உபகரணமாகவுமிருப்பதால் 'ஆதமாவையே அறிபவனிவன' என்று கூறுகிறதாகவுமாம. ஏவகாரம ஆதமாவைப் பிரகாசிக்கச் செய்யும சோதி வேறிலலை எனறு காட்டுகிறது. அன்றிககே, வெளிச்சோதிகளால் ஆதமா அறியப்படமாட்டாது என்று காட்டுகிற தாகவுமாம். இனி, இபபடி ஆதமாவையே ஸர்வவித₄பே₄ாக்₃ய பே₄ாகே₃ாபகரண பே₄ாக₃ஸ்த₂ானமாகக் கொண்டவன அடையும் ப₂லனைக் கூறுகிறது உத்தரார்த₄ம,— (ப்₃ரஹ்மபூ₄த: ஸ: யோகீ₃) ப்ரக்ருதியிலிருந்து விடுபட்ட சுத்தாத்ம ஸ்வரூபமாயிருக்கும் நிலையை அடைந்த அநதக் கர்மயோகி. அநாதிகாலமாக தே₃ஹாத்மாபி₄மானத்தாலே தன்னை தேவனென்றும், மனிதனென றும் குறுக நினைத்துவநத இவன் இப்போது அக்குறுகிய உணர்வு நீங்கி, இயல்வாகவுள்ள த₄ர்மபூ₄தஜ்ஞாநவிரிவுபெற்றுப் பெரியவனாகிறுகையாலே இவனை ப்₃ரஹ்மபூ₄தன என்கிறது. (ப்₃ரஹ்மநிர்வாணம அதி₄க₃ச்ச₂தி) ஆத்மாநுப₄வஸுகததை அடைகிறுன. ப்ரஹ்மமெனப்படும் சுததாத்மாவாகிற ஸுகத்தை அடைகிறுன் என்றே, அவ்வாதமாவில் ஸுகததை அடைகிறுன் என்றே பொருள் கொள்ளலாம. 'விந்த₃த்யாதமநி யஸ்ஸுக₂ம்' எனகிற ப்ரகரணத்தையொட்டி, நிர்வாணஶப்₃த₃ம (ஆத்ம) ஸுகத் தைக் குறிக்கிறது. சங்கரர் நிர்வாணஶப்₃த₃த்திற்கு ஶாந்தி எனறு பொருள் கொண்டது இபரகரணததிற்குப் பொருநதாதாகையால அஸ்வரஸம். ஆக, இந்த ஶ்லோகததால ஆத்மாவையே *உண்

लभन्ते ब्रह्मनिर्वाणमृषयः क्षीणकल्मषाः ।
छिन्नद्वैधा यतात्मानस्सर्वभूतहिते रताः ॥ २५ ॥

25. லப₄ந்தே ப்₃ரஹ்மநிர்வாணம் ருஷய: க்ஷீணகல்மஷா: ।
சி₂ந்நத்₃வைத₄ா யதாத்மாந: ஸர்வபூ₄தஹிதே ரதா: ॥

சி₂ந்நத்₃வைத₄ா:—(*சீதோஷ்ணம் முதலிய*) *இரட்டைகளிலிருந்து விடுபட்டவர்களாய்.* யதாத்மாந:—*ஆத்மாவிலேயே ஈடுபட்ட மனத்தை உடையவர்களாய்.* ஸர்வபூ₄தஹிதே ரதா:—*எல்லா ஜீவராசிகளுடையவும் நன்மையில் ஊற்றமுடையவர்களாய்,* ருஷய:-*ஆத்மஸாக்ஷாத்காரத்தைப் பயில்கின்றவர்களான கர்மயோகிகள்.* க்ஷீணகல்மஷா:—(*ஆத்மாவை அடையத் தடையாயிருக்கும்*) *எல்லாப் பாபங்களும் நீங்கப்பெற்றவர்களாய்.* ப்₃ரஹ்மநிர்வாணம—*ஆத்மாநுபவ ஸுகத்தை,* லப₄ந்தே—*அடைகிறார்கள்.*

---

24. கண்ட முனிவர் கடுவினையின் கட்டழித்துக்
கொண்ட வுயிரிருமை கூர்ந்ததுயர்—விண்டறவே
நெஞ்ச நிறீஇயுயிர்க்கு நீடின்பம பூண்டவரே
யெஞ்சாப் பரம்பெறுவ ரேய்ந்து.

உயிர் கொண்ட இருமை கூர்ந்த துயர் விண்டு—*ஆத்மாக்கள் அநுபவிக்கும் (சீதோஷ்ணம் முதலிய) இரட்டைத்துன்பங்களிலிருந்து விடுபட்டு.* நெஞ்சம் அறவே நிறீஇ-*மனத்தை நன்றாக (ஆத்மாவில) நிலைநிறுத்தி.* உயிர்க்கு-*எல்லா ஜீவராசிகளுக்கும்.* நீடு இன்பம் பூண்டவரே—*நிலையான இன்பத்தைத் தரும் ஹிதத்தில் ஈடுபட்டவர்களே.* கண்ட முனிவர்—*ஆத்மாவைக் காண்கின்றவர்களாய்.* கடுவினையின் கட்டு அழித்து—(*ஆத்மாவை அடையத் தடையாயிருக்கும்*) *கொடிய வினைகளினின்றும் விடுபட்டு.* எஞ்சா பத₃ம்—*அழியாத ஆத்மாநுப₄வத்தை.* ஏய்ந்து பெறுவர்—*பொருந்தி அடைவர்.*

---

னும் சோறு பருகுமநீர் தின்னும வெற்றிலையாகக் கொள்வதாகிற ஐந்தாவது அநுஷ்ட்டாநமுறை கூறப்படது. 24.

॥ भा ॥ छिन्नद्वैधाः—शीतोष्णादिद्वन्द्वैर्विमुक्ताः, यतात्मानः—आत्मन्येव नियमितमनसः, सर्वभूतहिते रताः—आत्मवत्सर्वेषां भूतानां

25. பதினெட்டாவது ஶ்லோகத்தில் கூறப்பட்ட ஸமத₃ர்ஶந நிலையை அடைய இருபதாவது ஶ்லோகம் தொடக்கமாகச் சென்ற ஶ்லோகமீருக ஐந்து அநுஷ்ட்டான முறைகள் காட்டப்பட்டன. அவைகளில் சிலவற்றை நினைவுபடுத்திக்கொண்டு, 'எல்லா வுயிர்கட்கும நன்மை செய்வதிலேயே உறுதிபூண்டிருக்கை' என்னும் அந்தரங்க₃மான (மிக நெருங்கிய) ஆறுவது அநுஷ்ட்டான முறை இந்த ஶ்லோகத்தில் காட்டப்படுகிறது. (சி₂ந்நத₃வை₄த₄ா:) ஶீதம உஷ்ணம், ஸுக₂ம் து₃க்க₂ம் முதலான இரட்டைகளால் விகாரமடையாமலிருப்பவர்கள். இருபதாவது ஶ்லோகத்தில் கூறப்பட்ட இன்பதுன்பங்கள் அற்றிருக்கை என்னும் முதல அநுஷ்ட்டான முறை இங்கு உணர்த்தப்படுகிறது. இப்பொருளைப்போல் ப்ரகரணத திற்குப் பொருந்தியிராமையாலே, 'சி₂ந்நத்₃வைத₄' ஶப்தத்திற்கு 'பே₄த₃மற்றவர்கள்' 'இதுவோ அதுவோ எனனும ஸம்ஶயமற்றவர்கள்' முதலான பொருள்கள் பொருத்தமாட்டா. (யதாத்மாந:) நியமிக்கப்பட்ட மனத்தை உடையவர்கள்; ஆத்மாவிலேயே ஈடுபடுத்தப்பட்ட மனத்தை உடையவர்கள எனறபடி. சென்ற ஶ்லோகத்தில் காட்டப்பட்ட ஐந்தாவது அநுஷ்ட்டானமுறை இப்பதத்தால் உணர்த்தப்படுகிறது. இப்படி ப்ரகரணததிற்குப் பொருந்தியதாயிருப்பதாலேயே, இங்கு ஆத்மஶப்₃த₃ம் மனததைக கூறுவதாகவும், 'யத' [நியமிககப்பட்ட] என்னும் ஶப்₃த₃ம் அதை ஆத்மவிஷயத்தில ஈடுபடுத்துவதைக் கூறுவதாகவும் கொள்ளப்பட்டது. இவ்வண்ணமாக இரண்டு அநுஷ்ட்டான முறைகளைக காட்டியது முற்கூறிய மற்ற மூன்று அநுஷ்ட்டான முறைகளுக்கும் உபலக்ஷணம. இனி, இவ்வைந்தைக் காட்டிலும் ஸமத₃ர்ஶன நிலையை விளைப்பதில் அந்தரங்க₃மான ஆறுவது நிலை காட்டப்படுகிறது,— (ஸர்வபூ₄த ஹிதே ரதா:) தனனையுளளிட்ட எல்லா ஜீவராசிகளுக்கும நன்மை செய்வதிலேயே உறுதிபூண்டவர்கள்; ஸர்வஶப₃த₃ம் தனனையுளளிட்ட எல்லா உயிர்களையும் காட்டுகிறது. தனனையும சேர்த்தெடுப்பதற்குக் கருத்தென்னவெனில்,— எப்படி ஒவ்வொருவனும தனனுடைய நன்மையிலேயே உறுதிபூண்டிருப்பானே, அப்படியே மற்ற எல்லா உயிர்களின் நன்மையிலும் உறுதிபூண்டிருக்கவேண்டும என்று உணர்த்துவதற்காகவே த்₃ருஷ்டாந்தமாகத் தன்னையும் சேர்த்தெடுக்கிறது. "ஆத்மவத் ஸாவபூ₄தாநி ய: பஶ்யதி ஸ பஶ்யதி" [தன்னைப்

हितेष्वेव निरताः, ऋषयः—द्रष्टारः आत्मावलोकनपराः, य एवंभूतास्ते क्षीणाशेषात्मप्राप्तिविरोधिकल्मषाः ब्रह्मनिर्वाणं लभन्ते ॥ २५ ॥

॥ भा ॥ उक्तलक्षणानां ब्रह्मात्यन्तसुलभमित्याह—

कामक्रोधवियुक्तानां यतीनां यतचेतसाम् ।
अभितो ब्रह्मनिर्वाणं वर्तते विजितात्मनाम् ॥ २६ ॥

---

போலே எல்லா பூதங்களையும் காண்பவனே அறிவாளியாவான்.] என்றும்,

"ஶ்ரூயதாம் த₄ர்மஸர்வஸ்வம் ஶ்ருத்வா சைவ அவத₄ார்யதாம்।
ஆத்மந: ப்ரதிகூலாநி பரேஷாம் ந ஸமாசரேத ॥ [பாரதம]

[அறத்தின் ஸாரார்த்தத்தைக் கேளுங்கள்; கேட்டுக் குறிக்கொள்ளுங்கள். (அதாவது,—) தனக்குத் தீமை பயப்பவற்றைப் பிறர்க்கும் செய்யக்கூடாது.] என்றும இவ்வர்த்தம கூறப்பட்டதன்றே. இந்நிலை விளைந்தால் எல்லாவுயிர்களையும ஸமமாகப் பார்க்கையாகிற ஸமத₃ர்ஶந நிலை தன்னடையே கைகூடுமாகையாலே இதுவே ஸமத₃ர்ஶந நிலைக்கு அந்தரங்க₃மான உபாயம் என விளங்குகிறது. (ருஷய:) ஆத்மாவைக் காணபவர்கள். முற்கூறியபடி எல்லா உயிர்களின நன்மையிலேயே ஈடுபட்டிருந்தனராகில, பரிஶுத்₃த₄ங்களாய், ஒன்றோடொன்று ஒத்தவையான ஆத்மஸ்வரூபங்களை நேரே காணபார்கள் என்று கருத்து. (க்ஷீண கல்மஷா:) ஆத்மாவை அடையத் தடையாயிருக்கும் எல்லாப் பாபங்களும் நீங்கப்பெற்றவர்கள். முற்கூறியபடி ஆத்மஸாக்ஷாத்காரம் ஏற்பட்டால் ஆத்மப்ராப்திக்குத் தடையாயிருக்கும் எல்லாப் பாபங்களும் தன்னடையே நீங்கும் என்று கருத்து. "நஹி ஜ்ஞாநேந ஸத்₃ருஶம் பவித்ரமிஹ வித்₃யதே" [கீதை 4-38] [ஆத்ம ஜ்ஞானத்தைப்போலே பரிசுத்தப்படுத்தும் பொருள் வேறு இங்கு இல்லையன்றே] என்று ஆத்ம ஸாக்ஷாத்காரம பாபங்களைப் போக்குமென்பது முன்னமே கூறப்பட்டதன்றே. இப்படித் தடை நீங்கினால் தன்னடையே ஏற்படும் ஆத்மப்ராப்தியைக் கூறுகிறது.— (ப்₃ரஹ்மநிர்வாணம் லப₄ந்தே) ஆத்மாநுப₄வ ஸுகத்தை அடைகிறார்கள். ஆக, இந்த ஶ்லோகமீறாகவுள்ள ஆறு ஶ்லோகங்களால், ஆத்மப்ராப்திக்கு ஸாத₄நமான ஸமத₃ர்ஶநநிலையை விளைக்கும் ஆறு அநுஷ்டான முறைகள் காட்டப்பட்டன. 25.

**26. காமக்ரோத₄வியுக்தாநாம் யதீநாம் யதசேதஸாம்।**
**அபி₄தோ ப்₃ரஹ்மநிர்வாணம் வர்த்ததே விஜிதாத்மநாம் ॥**

**காமக்ரோத₄வியுக்தாநாம்** — *காமக்ரோதங்களற்றவர்களாய்.* **யதீநாம்**—*ப்ராகிருத விஷயங்களில் பற்றற்றவர்களாய்.* **யதசேதஸாம்**—*மனத்தை ஆத்மாவிலேயே ஈடுபடுத்தியவர்களாய்.* **விஜிதாத்மநாம்**—*மனத்தை வென்றவர்களான கர்மயோகிகளுக்கு,* **ப்₃ரஹ்மநிர்வாணம்**-*ஆத்மாநுப₄வஸுக₂ம்.* **அபி₄தோ வர்த்ததே**—*அருகிலேயே உள்ளது.*

---

**25. இவ்வாறு காம வெகுளி யடக்கிமதி**
**வெல்வாறு தாமனத்தை வென்ருருக்—கெவ்வாறு**
**மீளாது துய்க்கு மிகுபிரம வானந்த**
**நீளாகு மென்று நிகழ்ந்து.**

**இவ்வாறு**—*இவ்வண்ணமாக.* **காமவெகுளி அடக்கி**—*காமக்ரோத₄ங்களை அடக்கி,* **மதி வெல்வாறு தாம்**—*புத்தியைப் (பிராகிருத விஷயங்களில் மேயாமல்) வெல்லும் வழியாலே.* **மனதனை வென்ருருக்கு**—*மனத்தை (ஆத்மாவிலேயே ஈடுபடுத்தி) வென்ருருக்கு.* **எவ்வாறும் மீளாது துய்க்கும்**—*எந்த வழியிலும் முடிவில்லாது அநுபவிக்கும்.* **மிகு பிரம ஆனந்தம**—*சிறந்த ஆத்மாநுப₄வஸுக₂ம்.* **என்றும் நிகழ்ந்து**—*என்றும் ஏற்படுவதாய்.* **நீளாகும்**—*நீண்டு செல்லும்.*

---

*26. இவ்வண்ணமாக ஆறு ஶ்லோகங்களாலே ஸமத₃ர்ஶன நிலையை அடைவதற்கு உறுப்பான ஆறு அநுஷ்டா₂ந முறைகளை உபதே₃ஶித்து, அந்நிலையை விரைவில் அடைய முயற்சி உண்டாவதற்காக, 'ஸமத₃ர்ஶந நிலையை அடைந்தவர்களுக்கு ஆத்மாநுப₄வஸுக₂ம் காலதாமதமில்லாமல் மிக எளிதில் கிடைக்கும்' எனறு இந்த ஶ்லோகத்தில் கூறப்படுகிறது. (காமகரோத₄வியுக்தாநாம) "ஶக்நோதீஹைவ" எனற இருபத்துமூன்ருவது, ஶ்லோகத்திற்சொல்லப்பட்டபடியே, காமக்ரோத₄ங்களின வேகத்தை அடக்கி, அவற்றினின்றும நீங்கப்பெற்றவர்களுக்கு. இப்படிக் காமமும், கோபமுமற்ற*

॥ भा ॥ कामक्रोधवियुक्तानां, यतीनां–यतनशीलानां, यतचेतसां-नियमितमनसां, विजितात्मनां—विजितमनसां, ब्रह्मनिर्वाणमभितो वर्तते-एवंभूतानां हस्तस्थं ब्रह्मनिर्वाणमित्यर्थः ॥ ५६ ॥

---

நிலையை அடைந்துவிட்டதால், இவர்களுக்குச் சென்ற ஶ்லோகத்திற் சொன்ன ஸர்வபூ₄தஹிதே ரதத்வமும் கைவந்திருக்கும் என்றும் உணர்த்தப்படுகிறது. இப்படிக் காமக்ரோத₄ங்களை அடக்கியவுடன தன்னடையே ஏற்படும் பு₃த்₃தி₄நிக்₃ரஹம் அடுத்தபடி கூறப்படு கிறது.—(யதீநாம்) அறிவை அடக்குவதையே இயல்வாக உடைய வர்களுக்கு. இதனால், இருபது இருபத்தோராவது ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட விருப்பு வெறுப்பற்றிருக்கை. வெளிவிஷயங்களில் பற்றற்றிருக்கை என்னும தன்மைகள கைவந்திருக்கின்றன எனறு உணர்த்தப்படுகிறது. இப்படி அறிவை அடக்குகையாலே ஏற்படும் மநோநிக்₃ரஹம் அடுத்த இரு பதங்களாலும் கூறப்படுகிறது.—(யதசேதஸாம) ஆத்மாவிலேயே ஈடுபடுத்தப்பட்ட மனத்தை உடையவர்களுக்கு. இதனால், இருபத்துநாலாவது ஶ்லோகததில் சொல்லியபடி ஆத்மாவையே த₄ாரகபோஷக பே₄ாக்₃யங்களாகக் கொண்டிருப்பவன இவன என்று உணர்த்தப்படுறது (விஜிதாத்ம நாம்) மனத்தைப்பிராகிருத விஷயங்களிற் செல்லாதபடி வென்ற வர்களுக்கு. இத்தால், இருபத்திரண்டாவது ஶ்லோகத்திற் கூறிய படி விஷயங்களின தோஷததைக் காட்டி, அவற்றிற் செலலாதபடி நெஞ்சத்தை அடக்கியவர்கள் இவர்கள என்று விளங்குகிறது. ஆக, முன் ஆறு ஶ்லோகங்களில் கூறப்பட்ட ஆறு அநுஷ்ட₂ாந முறைகளும கைவந்தவர்கள் இவர்கள் எனறு உணர்த்தபபட்ட தாயிற்று. இவ்வண்ணமாக 'யதசேதஸாம' 'விஜிதாத்மநாம்' எனனும் பதங்களுக்கு ப்ரகரணத்தையொட்டி விஷயவிப₄ாக₃ம செய்து புநருக்திபரிஹாரம்செய்ய அறியாமல், 'விதி₃தாத்மநாம்' என்று சிலர் பாடத்தைமாற்றிப் பொருள்கொண்டார்கள். (ப்₃ரஹ்ம நிர்வாணம் அபி₄தோ வர்த்ததே) ஆத்மாநுப₄வஸுக₂ம் சூழ்ந்து நிற்கிறது. கையிலுள்ள தடியாலடித்து மரத்திலிருந்து பெற வேண்டிய பழத்தைப்போலே எட்டியிராமல், கையிற்கனிபோலே அருகில் உள்ளது என்று கருத்து. ஆக, ஸமத₃ர்ஶந நிலையை அடைந்தவர்களுக்கு ஆத்மாநுப₄வம் மிகவும் எளிது எனற தாயிற்று. 26.

॥भा॥ उक्तं कर्मयोगं स्वलक्ष्यभूतयोगशिरस्कमुपसंहरति—

स्पर्शान् कृत्वा बहिर्बाह्यांश्चक्षुश्चैवान्तरे भ्रुवोः।
प्राणापानौ समौ कृत्वा नासाभ्यन्तरचारिणौ॥२७॥

यतेन्द्रियमनोबुद्धिर्मुनिर्मोक्षपरायणः।
विगतेच्छाभयक्रोधो यस्सदा मुक्त एव सः॥२८॥

27. ஸ்பர்ஶாந் க்ருத்வா ப₃ஹிர் பா₃ஹ்யாங் சக்ஷுஶ் சைவாந்தரே ப்₄ருவோ:।
ப்ராணாபாநௌ ஸமௌ க்ருத்வா நாஸாப்₄யந்தர சாரிணௌ ॥

28. யதேந்த்₃ரியமநோபு₃த்₃தி₄ர் முநிர் மோக்ஷபராயண:।
விக₃தேச்ச₂ாப₄யக்ரோதே₄ா யஸ்ஸதா₃ முக்த ஏவ ஸ:॥

பா₃ஹ்யாந் ஸ்பர்ஶாந்— *வெளி விஷயஸ்பர்ஶங்களை,* ப₃ஹி: க்ருத்வா—*வெளியிலே தள்ளி,* சக்ஷு: ச—*கண்கள் இரண்டையும்,* ப்₄ருவோ: அந்தரே ஏவ (க்ருத்வா)—*புருவங்களின் நடுவிலேயே செலுத்தி,* நாஸாப்₄யந்தர சாரிணௌ—*மூக்கினுள் ஸஞ்சரிக்கும்,* ப்ராணாபாநௌ—*ப்ராணாபாந வாயுக்களை,* ஸமௌ க்ருத்வா—*ஸமமாக ஆக்கி,* யதேந்த்₃ரிய மநோபு₃த்₃தி₄:—*(ஆத்மா தவிர்ந்த விஷயங்களிற் செல்ல முடியாதபடி) அடக்கப்பட்ட இந்திரியங்களையும் மனத்தையும், அறிவையும் உடையவனாய்,* விக₃தேச்ச₂ாப₄யக்ரோத₄:—*(அதனாலேயே விஷயங்களில்) விருப்பம், (அவ்விருப்பம் நிறைவேறுமோ என்னும்) ப₄யம், (அதை நிறைவேறாதபடி செய்பவர்களிடம்) கோபம் ஆகியவையற்றவனாய்,* மோக்ஷ பராயண:—*ஆத்மப்ராப்தியாகிற மோக்ஷத்தையே மேலான ப்ராப்யமாகக்கொண்டவனாய்,* முநி:—*ஆத்மாவைக் காண்பதையே இயல்வாக உடையவனாய்,* ய:—*எவன் இருக்கிறானோ,* ஸ:—*அவன்,* ஸதா₃ முக்த: ஏவ—*எப்போதும் முக்தனாகவே இருப்பவன்.*

|| भा || बाह्यान् विषयस्पर्शान्, बहिः कृत्वा—बाह्येन्द्रियव्यापारं सर्वमुपसंहृत्य, योगयोग्यासने ऋजुकाय उपविश्य, चक्षुषी भ्रुवोरन्तरे—

26. புறப்பற்றை நீக்கிப் புருவத்துட் கண்ணுற்
சிறந்தொக்க மூச்சிருகாற் செல்ல—நிறுத்துமனப்
புந்தியான் வென்ற பயவெகுளி யானவனே
சிந்தையான் முத்தன் சிறந்து.

புறப்பற்றை நீக்கி—*வெளிவிஷயத் தொடர்புகளை நீக்கி.* புருவத்துள் கண்ணுல் சிறந்து—*கண்களாலே புருவங்களின் இடையே சிறப்புடன் தியானம்செய்து.* இருகால் மூச்சு ஒக்க செல்ல சிறந்து—*உள்ளேயும் வெளியேயும் செல்லும் இரு மூச்சுகள் ஸமமாகச் செல்லும்படி சிறந்த யோக₃ாப்₄யாஸத்தைச் செய்து.* நிறுத்தும் மனப்புந்தியான்—*(வெளி விஷயங்களிற்செலலாமல்) அடக்கப்பட்ட மனம் முதலிய இந்திரியங்களையும். அறிவையும் உடையவனுய்.* வென்ற பயவெகுளி ஆனவனே-*(அதனுலேயே) ப₄யக்ரோத₄ங்களையும் ஜயித்தவனே.* சிந்தையால் சிறந்து முத்தன்—*மனத்தால் சிறப்படைந்து முக்தனுகவே (எப்போதும்)* இருப்பவன்.

27-28. "ஜ்ஞாநகர்மாத்மிகே நிஷ்டே₂ யோக₃லக்ஷ்யே ஸுஸம் ஸ்க்ருதே! ஆத்மாநுபூ₄தி ஸித்₃த்₄யர்த்தே₂ பூர்வஷட்கேந சோதி₃தே||" *[கீ₃தார்த்த₂ஸங்க்₃ரஹம2] [புததிவிசேஷங்களோடு கூடியவையாய், ஆதமஸாக்ஷாத்காரத்தைப் பயனுகக் கொண்டவையாய், ஆத்ம ப்ராப்தியை அடைவதற்காக ஏற்பட்டவையான ஜ்ஞாநயோகம், கர்மயோகம என்னும் இருநிஷ்டைகளும முன் ஆறு அத்தியாயங் களாலும் விதிக்கப்பட்டன.]* என்று ஆளவந்தார் கீதார்த்த ஸங்க்ரஹத்தில் அருளிச்செய்தபடியே, தனக்கு இலக்கான ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை விளைக்கக்கூடியதாகக் கூறப்பட்ட கர்மயோகத்தை உபதேசித்து, இப்ரகரணத்தை முடிக்கிருன் இவ்விரண்டு ஶ்லோகங்களாலே. (பா₃ஹ்யாந் ஸ்பர்ஶாந்) வெளியேயுள்ள ஶப்₃த₃ாதி₃விஷயஸ்ப்ர்ஶங்களை. (ப₃ஹி: க்ருத்வா) வெளியே தளளி. 'வெளியே பட்டிமேயும் இந்திரியங்களின் தொழில்கள் அனைத்தையும் அடக்கி' எனறு கருத்து. "உபவிஶ்யாஸநே யுஞ்ஜ்யாத் யோக₃மாத்ம விஶுத்₃த₄யே||" *[கீதை 6-12]* [யோகத்துக்குரிய ஆஸனத்

नासाग्रे विन्यस्य, नासाभ्यन्तरचारिणौ प्राणापानौ समौ कृत्वा— उच्छ्वासनिश्श्वासौ समगती कृत्वा, आत्मावलोकनादन्यत्र प्रवृत्त्यनर्हेन्द्रिय-

---

தில் நேரே அமர்ந்து. ஆத்மவிஶுத்₃தி₄யினைபொருட்டு யோக₃ாப்₄யாஸம் செய்யவேண்டும்] என்று அடுத்த அத்தியாயத்தில் சொல்லப்போவதையும், யோக₃ாப்₄யாஸ ப்ரகரணமான இங்கு சேர்த்துக்கொள்ளவேண்டும். (சக்ஷு: ச ப்₄ருவோ: அந்தரே ஏவ க்ருத்வா) இரு கண்களையும் புருவத்திற்கு நடுவில் மூக்கின் நுனித்தலத்திலேயே வைத்து. இருகண்களும் ஒருமைப்பட்டே பார்க்கின்றனவாகையாலே, 'சக்ஷு:' என்று ஒருமையை (ஏக வசநத்தைப்) பிரயோகித்தான். "ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்₃ரம்" [கீதை 6-13] [மூக்கின் நுனியைப் பார்த்துக்கொண்டு] என்று இங்கேயே மேல் ப்ரகரணத்திலும், "நாஸாக்₃ரந்யஸ்தலோசந:" [ஹஸ்திகிரிமாஹாத்ம்யம்] [மூக்கின் நுனியில் வைக்கப்பட்ட கண்களை உடையவன்] என்று ப்ரகரணாந்தரத்திலும் சொல்லப்படுகை யாலே இங்கு 'புருவத்தின் நடுவில்' என்றது மூக்கின் நுனித்தலத்தைக் குறிக்கிறது. (நாஸாப்₄யந்தரசாரிணௌ ப்ராணாபாநௌ ஸமௌ க்ருத்வா) மூக்கின் உள்ளே ஸஞ்சரிக்கும் ப்ராணாபாந வாயுக்களை ஸமமாக ஆக்கி. வெளியிலுள்ள வாயு உள்ளே நுழையும்போது ப்ராணவாயு என்றும், மறுபடி வெளிவரும்போது அபாநவாயு என்றும் பெயர்பெறுகிறது. வாயுவை உள்ளிழுப்பதும் வெளி விடுவதும் தானே ஏற்படக்கூடியதாகையால், அவற்றை ஸமமாக ஆக்குவதே இங்கு விதிக்கப்படுகிறது என்று கொள்ளவேண்டும். இவ்விருவாயுக்களுக்கும் ஸ்தானங்களும், தொழில்களும் வெவ்வேறுபட்டிருக்கையால், அவற்றை ஸமமாக ஆக்கமுடியாது. ஆகையால் மூச்சை உள்ளேயும், வெளியேயும் இழுக்கும் நேரத்தை ஸமமாக்குவதே இங்கு ப்ராணாபாநவாயுக்களை ஸமமாக ஆக்குவதாகக் கூறப்படுகிறது. மூச்சிழுக்கும் நேரத்தையோ, மூச்சை வெளிவிடும் நேரத்தையோ ஒன்றைக் குறைத்து மற்றொன்றை அதிகமாக்கக்கூடாது என்று கருத்து. (யதேந்த்₃ரிய மநோபு₃த்₃தி₄:) ஆத்மா தவிர்ந்த மற்ற விஷயங்களில் செல்லமுடியாதபடி அடக்கப்பட்ட இந்திரியங்களையும், மனத்தையும், அறிவையும் உடையவனாய். ஆத்மஸாக்ஷாத்காரத்திற்கு நேரே முந்தியிருக்கும் நிலையைச் சொல்லுவதாகையாலே, 'யத' என்று ஸாமாந்யமான நிக்₃ரஹத்தைச் சொல்லாமல், மற்ற விஷயங்களில் செல்லவே முடியாதபடி அடக்குவதைக் கூறுகிறது. இப்படி இந்திரியம்

मनोबुद्धिः, तत एव विगतेच्छाभयक्रोधः, मोक्षपरायणः—मोक्षैकप्रयोजनः, मुनिः—आत्मावलोकनशीलः यः, सः सदा मुक्त एव—साध्यदशायामिव साधनदशायामपि मुक्त एवेत्यर्थः ॥ २७ ॥ २८ ॥

॥ भा ॥ उक्तस्य नित्यनैमित्तिककर्मेतिकर्तव्यताकस्य कर्मयोगस्य योगशिरस्कस्य सुशकतामाह—

भोक्तारं यज्ञतपसां सर्वलोकमहेश्वरम् ।
सुहृदं सर्वभूतानां ज्ञात्वा मां शान्तिमृच्छति ॥ २९ ॥

॥इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु कर्मसंन्यासयोगो नाम पञ्चमोऽध्यायः ॥ ५ ॥

---

முதலானவற்றை அடக்குவதால் தன்னடையே ஏற்படுவதைக் கூறுகிறது அடுத்தபடியாக,-(விக₃தேச்சா₂ப₄யக்ரோத₄:) ஶப்₃த₃ாதி₃ விஷயங்களில் விருப்பம், அவ்விருப்பம் நிறைவேறுமோ என்றும், நிறைவேறியபின் அவ்விஷயாநுப₄வம் அழிந்துவிடுமோ என்றும் ஏற்படும் ப₄யம், விருப்பத்தை நிறைவேறாதபடியும், நிறைவேறிய விஷயாநுப₄வத்தை அழியும்படியும் செய்பவர்களிடம் கோபம் ஆகியவை இந்திரிய மநோபுத்திகளை அடக்கியவுடன் தன்னடையே நீங்குகின்றன என்று கருத்து. இந்நிலையை அடைந்தவன் ஆத்மாநுப₄வத்தையே மேலான ப்ராப்யமாகக்கொண்டிருப்பான் என்கிறது அடுத்தபடி,— (மோக்ஷபராயண:) ஆத்மாநுப₄வமாகிற மோக்ஷத்தையே மேலான ப்ராப்யமாகக் கொண்டவன். அந்த மோக்ஷத்தை அடைவதற்காக ஆத்மாவைக் காண்பதையே இயல்வாகக் கொண்டிருப்பான் என்கிறது அடுத்தபடியாக,— (முநி:) ஆத்மாவைக் காண்பதையே இயல்வாகக் கொண்டவன். 'மந—ஜ்ஞாநே' என்னும் த₄ாதுவிலிருந்து தோன்றியது முநிஶப்₃த₃ம்; இங்கு யோகா₃ப்₄யாஸ ப்ரகரணமாகையாலே ஜ்ஞாந விஶேஷமான ஆத்மஸாக்ஷாத்காரத்தையே இயல்வாகக் கொண்டவனைக் குறிக்கிறது. (ய: ஸ: ஸத₃ா முக்த ஏவ) இத்தகையவனாக எவனொருவனிருக்கிறானோ, அவன் எப்போதுமே முக்தனுவான்; ஆத்ம ப்ராப்தி த₃ஶையாகிற ஸாத்₄யத₃ஶையிற்போலே, இப்போதிருக்கும் ஸாத₄ந த₃ஶையிலும் ஆத்மாநுபவத்தில் குறையில்லாமையாலே, முக்தனாகவேயிருக்கிறான் என்றபடி; ஸாத₄ந த₃ஶையிலேயே முக்ததுல்யனாயிருக்கிறான் என்று கருத்து.

29. போ₄க்தாரம் யஜ்ஞதபஸாம் ஸர்வலோகமஹேஶ்வரம் ।
ஸுஹ்ருத₃ம் ஸர்வபூ₄தாநாம் ஜ்ஞாத்வா மாம்
ஶாந்திம் ருச்ச₂தி ॥

யஜ்ஞதபஸாம் போ₄க்தாரம்—*யாகங்களையும், தவங்களையும் ஏற்றுக்கொள்பவனும்,* ஸர்வலோகமஹேஶ்வரம்—*எல்லா உலகங்களுக்கும் பெரிய ஈஶ்வரனும்,* ஸர்வபூ₄தாநாம் ஸுஹ்ருத₃ம்— *எல்லாவுயிர்களுககும் நண்பனுமாக,* மாம்—*என்னை,* ஜ்ஞாத்வா-*அறிந்து,* ஶாந்திம் ருச்ச₂தி—*ஶாந்தியை அடைகிறான்.*

---

27. வேள்விதவங் கொள்வோனாய் மிக்கனைத்துந்தன்வசமா
வாள்வினைய னாகி யனைத்துலகு –நீளுற்ற
வெல்லா வுயிர்க்கு முறவா மெனையறிநத
நல்லான் பெறுஞ்சாநதி நன்கு.

வேள்வி தவம் கொள்வோனாய்—*யாகங்களையும், தவங்களையும் ஏற்றுக்கொள்பவனாய்.* அனைத்து உலகும தன் வசமா மிக்கு ஆள்வினையன் ஆகி—*எல்லா உலகத்தையும் தன் வசப்படுத்திக்கொண்டு, மிகவும் நியமிக்கும் தொழிலை உடையவனாக (ஸர்வலோகமஹேஶ்வரனாக) ஆகி,* அனைத்து உலகு எல்லா உயிர்க்கும்--*எல்லா உலகிலுமுள்ள எல்லா உயிர்களுக்கும்,* நீள் உற்ற உறவாம்—*அநாதி உறவினனான,* எனை அறிந்த நல்லான்—*என்னை அறிந்த நலலவனே,* நன்கு சாந்தி பெறும்—*சாந்தியை நன்கு அடைவான்.*

---

29. "ஸந்ந்யாஸம் கர்மணாம் க்ருஷ்ண" [5-1] என்று இவ்வத்தியாயத்தின் தொடக்கத்தில் கர்மயோக ஜ்ஞாநயோகங்களில எது சிறந்தது என்று கேட்கப்பட்டவளவில், செயற்கரியதாயிருக்கை முதலான குறைகளை ஜ்ஞாநயோகததிற்கும், செயற்கெளிதாயிருக்கை, விரைவில் பலனளிப்பதாயிருக்கை முதலான நிறைவுகளைக் கர்மயோகத்திற்கும் கூறுவதனமூலம் கர்மயோகமே சிறந்ததென்று காட்டினான். அதற்குப்பின் நித்யநைமித்திக கர்மஙகளை இதிகர்த்தவ்யதையாக (அவஶ்யம் அநுஷ்டிக்க வேண்டிய அங்கங்களாகக்)கொண்டவையாய், ஆதமஸாக்ஷாத்காரத்தைப் பயனாகக்கொண்டவையான கர்மயோக வகைகள் விவரிக்கப் பட்டன. இப்போது அத்தியாயத்தின் முடிவிலும், தொடக்கத்தில்

॥भा॥ यज्ञतपसां भोक्तारं सर्वलोकमहेश्वरं सर्वभूतानां सुहृदं मां ज्ञात्वा शान्तिमृच्छति, कर्मयोगकरण एव सुखमृच्छति। सर्वलोकमहेश्वरं—सर्वेषां लोकेश्वराणामपीश्वरम्; * तमीश्वराणां परमं महेश्वरम् (श्वे. ६. ७) इति हि श्रूयते। मां सर्वलोकमहेश्वरं सर्वसुहृदं ज्ञात्वा मदाराधनरूपः कर्मयोग इति सुखेन तत्र प्रवर्तत इत्यर्थः सुहृद आराधनाय हि सर्वे प्रयतन्ते॥२९॥

॥इति श्रीभगवद्रामानुजविरचिते श्रीमद्गीताभाष्ये पञ्चमोऽध्यायः॥५॥

கர்மயோகத்திற்குச் சொல்லப்பட்ட செயற்கெளிமையே மற்றொரு முறையாலே நிலைநிறுத்தப்படுகிறது இந்த ஸ்லோகத்தில. (யஜ்ஞ தபஸாம போ₄க்தாரம மாம ஜ்ஞாத்வா) எல்லா யாகங்களுக்கும், தவங்களுக்கும் போ₄க்தாவாக என்னை அறிந்து; யஜ்ஞங்கள, தவங்கள முதலான கர்மயோக வகைகள அனைத்தையும தனக்கு ஆராத₄ந மாக ஏற்றுக்கொள்கிறவனாக என்னை அறிந்து என்று கருத்து. இப்படி எல்லாக் கர்மங்களும தனக்கு ஆராத₄நமாயிருப்பதற்குக் காரணத்தை அடுத்தபடியாக மூன்று பதங்களாலே கூறுகிறான்,— (ஸர்வலோக மஹேஶ்வரம) எல்லா உலகிற்கும் பெரிய ஈஶ்வரனாயிருப்பவனை; உலகிற்கு ஈஶ்வரர்களாயிருக்கும பிரமன, உருத்திரன முதலானோர்க்கும ஈஶ்வரனாயிருப்பவனை என்று கருத்து. 'மாம் ஜ்ஞாத்வா' என்பதோடு இத்தொடர்கள மூன்றும் அந்வயிக்கின்றன. 'மஹேஶ்வரம' என்று மாத்திரம் சொன்னால ரூடி₄யாலே உருத்திரனைக் குறிப்பதாகச் சிலர் மயங்கக்கூடும என்று பார்த்து, ஸர்வலோகங்களுக்கும மஹேஶ்வரன் என விஶேஷிக்கிறார். "தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம" [ஶ்வே 6-7] [ஈஶ்வரர்களுக்கெல்லாம மேலான மஹேஶ்வரனான அவனை] என்றன்றோ உபநிஷத்தும் ஓதிற்று. ஶ்ருதியில் பரமமஹச்ச₂ப்₃த₃ங்களாலே விஶேஷித்திருப்பதும், இங்கு ஸர்வலோக மஹச்ச₂ப்₃த₃ங்களாலே விஶேஷித்திருப்பதும உருத்திரனுக்கு ஒட்டாதனவன்றோ. "ஸர்வேஶ்வரேஶ்வர: க்ருஷ்ண:" [விஷ்ணுத₄ர்மம 74-44] முதலான ஆயிரக்கணக்கானவிடங்களில் மஹர்ஷிகள் உருத்திரன் முதலான ஈஶ்வரர்களுக்கும் ஈஶ்வரனாகக் கண்ணனையன்றோ அறுதியிட்டனர். இப்படி ஈஶ்வரர்களையும் உள்நுழைந்து நியமிக்கும் ஈஶ்வரனாயிருக்கையாலே, அவர்களை ஆராதி₄ப்பவையாகத் தோன்றும் எல்லாக் கர்மங்களும் உண்மையில தன்னையே ஆராதிக்கின்றன என்று உணர்த்தினானாயிற்று.

(ஸர்வபூ₄தாநாம் ஸுஹ்ருத₃ம்) எல்லா உயிர்களுக்கும் நண்பனாக என்னை அறிந்து. உலகில் தமக்கு நன்மையை விரும்பும் ஸுஹ்ருத்தை ஆராதி₄ப்பதற்கே பண்டிதர்களோடு, பாமரர்களோடு திர்யக்குகளோடு வாசியற அனைவரும் முயல்கின்றார்கள். ஆகையால், "மாதா பிதா ப்₄ராதா...ஸுஹ்ருத்...நாராயண:" [ஸுப₃ாலோபநிஷத்] என்கிறபடியே எல்லா உயிர்களுக்கும் இயற்கையுறவினனான தன்னைக் கர்மங்களால் ஆராதி₄ப்பதே தக்கது என்று கருத்து. 'ஸர்வபூ₄தாநாம்' என்று விஶேஷிக்கையாலே, உலகிலுள்ள மனிதர்களைப்போலே இவன் ஒரு சிலர்க்கே ஸுஹ்ருத்தாயிருப்பவனல்லன் என்று உணர்த்தப்படுகிறது. ஐஶ்வர்யமத₃ம், அதனால ஏற்படும் க₃ர்வம். அதனாலுண்டாகும் முகக்கடுகடுப்பு முதலானவையற்றவனிவன் என்பது 'ஸுஹ்ருத்' என்னும் ஶப்₃த₃த்தால் அறிவிக்கப்படுகிறது. (மாம்...) பரமோத₃ாரனாக என்னை அறிந்து. ஒன்று மளிக்காத க்ருபணர்களாகவும். அற்பங்களையும், அஸ்தி₂ரங்களையும் அளிக்கும் க்ஷுத்₃ரப்ரபு₄க்களாகவுமன்றோ உலகில் அனைவருமிருப்பது. அவர்களைவிட்டுப பரமோத₃ாரனான என்னை ஆராதி₄ப்பதனாலேயே அநந்தஸ்தி₂ரபலன் கிடைக்குமாகையால் நானே எல்லாக்கர்மங்களாலும் ஆராதி₄க்கத்தக்கவன் என்று கருத்து. (ஜ்ஞாத்வா ஶாந்திம ருச்ச₂தி) இப்படிப் பரமோத₃ாரனாகவும், ஸர்வதே₃வாந்தர்யாமியாகவும. ஸர்வஸுஹ்ருத்தாகவும் என்னை அறிந்து, அதனாலேயே யாக₃ம், தவம் முதலிய எல்லாக்கர்மயோகங்களும எனக்கே ஆராத₄னமாயிருக்கின்றன என அறிந்து கர்மயோகத்தை அனுஷ்டிப்பவன், உடலை வருத்தும செயல்களான அக்கர்மங்களைச் செய்யும்போதும் அதனால் வருத்தத்தை அடையாமல் ஸுக₂த்தையே அடைகிறான் என்று கருத்து. இவ்வண்ணமாக, ஆயாஸஸாத்₄யமாயிருந்தும், அனுஷ்டிக்கும்போதும் வருத்தமேற்படாமல் ஸுக₂ரூபமாயிருக்கையே கர்மயோகத்திற்குச் செயற்கெளிமையாகிறது என்பது இங்கு குறிக்கொள்ளத்தக்கது.

ஆக, கர்மஸந்யாஸ யோக₃மாகிற இவ்வத்தியாயத்தில் கர்மயோக₃த்திலடங்கிய ஞானத்தின் பெருமை விளக்கப்பட்டதாயிற்று. 29.

ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி த₃ாஸன் இயற்றிய
கீ₃தார்த்த₂விவரணத்தில் ஐந்தாமத்தியாயம் நிறைவுபெற்றது.

## பகவத் கீதை வெண்பா

(ஐந்தாமத்தியாயத்தின் ஸாரத்தைக் கூறுவது)

*மெய்யுணர் வின்னே வியன்கருமத் தார்ந்து*
... ... .... ... ...
... ... ... ... ...
... ... *யிதுமுடிந்த தோர்ந்து*

*இவ்வெண்பா பெரும்பாலும் செல்லரித்திருப்பதால், பதவுரை எழுதப்படவில்லை.*

வாதிகேஸரி ஜீயர் அருளிய பகவத்கீதை வெண்பாவில்
ஐந்தாமத்தியாயம் நிறைவு பெற்றது.

## கீதார்த்த சங்கிரகம்

(ஸ்ரீ வேதாந்த தேசிகர் அருளியது)

ஐந்தாமத்தியாயத்தின் ஸாரப்பொருள்

6. கண்டெளி தாங்கரு மம்முயிர் காட்டக் கடுகுதலு
மண்டி யதன்படி யின்மனங் கொள்ளும் வரிசைகளுங்
கண்டறி யாவுயி ரைக்காண லுற்ற நினைவுகளும்
வண்டுவ ரேச னியம்பினன வாசவன் மைந்தனுக்கே.

**வண் துவரேசன்**—*துவாரகைக்கு நாதனான வண்மை மிக்க கண்ணன்.* **வாசவன் மைந்தனுக்கு**—*இந்திரன் பிள்ளையான அர்ஜுனனுக்கு.*— **கண்டு எளிதாம் கருமம்**—*கண்ணெதிரே தோற்றுகையால் எளிதில செய்யக்கூடிய கருமயோகம்.* **உயிர் காட்ட கடுகுதலும்**—*ஆத்மாவைக் காட்டுவதில் (ஜ்ஞானயோகத்திலும்) விரைவுமிக்கதாயிருப்பதையும்.* **அதன் படியில் மண்டி**—*அக்கர்மயோகத்தின் அங்கங்களில் ஈடுபட்டு.* **மனம் கொள்ளும் வரிசைகளும்**—*மனத்தில் அனுஸந்திக்கவேண்டிய அகர்த்ருத்வம் முதலானவற்றையும்,* **கண்டு அறியா உயிரை**—*(நேரில் இதுவரை) கண்டு அறியப்படாத ஆத்மதததுவத்தை.* **காணல் உற்ற நினைவுகளும்**—*(எங்கும் ஜ்ஞானஸ்வரூபமாகப்) பார்ப்பதற்கு உறுப்பான எண்ணங்களும் (ஆகிய இவற்றை)*- **இயம்பினன்**—*உபதேசித்தருளினான்.*

# கீதாஸ்லோகார்த்தச் சுருக்கம்

## ஐந்தாமத்தியாயம்

| ஸ்லோ. | அர்த்தம் |
|---|---|
| 1. | கர்மஜ்ஞாநயோகங்களில் எது சிறந்தது? என்று அர்ஜுனன கேள்வி. |
| 2-7. | செயற்கெளிமையாலும், விரைவில் பலனளிக்கும் தன்மையாலும் கர்மயோகமே ஜ்ஞாநயோகத்தைக் காட்டிலும் சிறந்தது என்று கண்ணனின பதில், |
| 8-11. | அகர்த்ருத்வாநுஸந்தானத்தில் ஒரு வகையான 'இந்திரிய ப்ராணன்களில் கர்த்ருத்வத்தை அனுஸந்திக்கை. |
| 12. | பலஸங்கத்யாகம் மோக்ஷஹேது. |
| 13. | சரீரத்தில் கர்த்ருத்வத்தை அநுஸந்திக்கை (அகர்த்ருத்வாநுஸந்தானத்தில் மற்றொரு வகை). |
| 14-15. | ஆத்மாவுக்குக் கர்த்ருத்வமின்மை; ப்ரக்ருதிவாஸனையின் கர்த்ருத்வம. (அகர்த்ருத்வாநுஸந்தானத்தில் மற்றொரு வகை) |
| 16. | அகர்த்ருத்வாநுஸந்தானத்தை உள்ளடக்கிய ஆத்ம விஷய ஜ்ஞாநத்தின பெருமை. |
| 17. | ஆத்மாநுபவமாகிற மாடத்திற்கு ஏறும் படிக்கட்டாயிருக்கும் அறிவின் படிகளின் வரிசை. |
| 18-19. | ஆத்மாக்கள் அனைவரும் ஜ்ஞாநைகாகாரத்தால் ஸமர் எனனும அறிவு—ஆத்மஸாக்ஷாத்காரத்தை மறுமையில் விளைப்பது; இம்மையிலும் மேலான துக்கநிவ்ருத்தியை அளிப்பது. |
| 20-25. | ஸமதர்ஶநநிலை ஏற்பட உதவும் ஆறு அநுஷ்டாந முறைகள். |
| 20. | முற்கூறிய ஸமதர்ஶந நிலையை விளக்கும் மனநிலை. |
| 21. | ஸமதர்ஶந நிலை வந்தால் ஆத்மாநுபவம் தன்னடையே வரும். |
| 22. | ப்ராக்ருதபோகங்களை விடும் வழி. |
| 26. | ஸமதர்ஶநநிலை கைவந்தால் ஆத்மாநுபவம் விரைவில் ஏற்படும். |
| 27-28. | கர்மயோகத்தின் உபதேஶம். |
| 29. | கர்மயோகம் மற்றொரு காரணத்தாலும் செயற்கெளியதாயிருப்பது. |

### ஆளவந்தார் அருளிய

## கீ$_3$தார்த்த$_2$ ஸங்க்$_3$ரஹம்

### [ ஆருவது அத்தியாயத்தின் சுருக்கம் ]

योगाभ्यासविधिर्योगी चतुर्धा योगसाधनम् ।
योगसिद्धिः स्वयोगस्य पारम्यं षष्ठ उच्यते ॥ १० ॥

*10. யோக$_4$ாப்$_4$யாஸவிதி$_4$ர் யோகீ$_3$ சதுர்த்த$_4$ா,*
*யோக$_3$ஸாத$_4$நம்*
*யோக$_3$ ஸித்$_3$தி$_4$: ஸ்வயோக$_3$ஸ்ய பாரம்யம்*
*ஷஷ்ட்ட$_2$ உச்யதே ||*

**யோக$_3$ாப்$_4$யாஸ விதி$_4$:**—( ஆத்ம ஸாக்ஷாத்காரமாகிற ) யோக$_3$த்தைப் பழகும் முறையும். **சதுர்த்த$_4$ா யோகீ$_3$**—நாலுவகைப்பட்ட யோகிகளும். **யோக$_3$ஸாத$_4$நம்**—(முற்கூறிய) யோகத்திற்கு ஸாத$_4$நமாகிய அப்$_4$யாஸம், வைராக்$_3$யம் முதலானவையும். **யோக$_3$ஸித்$_3$தி$_4$:**—(தொடங்கிய) யோக$_3$ம் ( இடையில் தடைபட்டாலும் காலக்ரமத்தில் ) ஸித்$_3$தி$_4$ யடையும் என்பதும். **ஸ்வயோக$_3$ஸ்ய பாரம்யம்**—தன விஷயமான பக்தியோகத்தின் உயர்வும். **ஷஷ்ட்டே$_2$**—ஆருமத்தியாயத்தில். **உச்யதே**—கூறப்படுகிறது.

---

### ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி த$_3$ாஸன் இயற்றிய

## கீதார்த்த விவரணம் ஆரும் அத்தியாயம்

**ஆருவது அத்தியாயார்த்தச் சுருக்கம்:**— (1) ஆத்ம ஸாக்ஷாத்காரமாகிற யோகத்தைப் பழகும முறையும், (2) ஆத்மஸாக்ஷாத்காரம செய்யும் யோகிகளில் நாலு வகையும, (3) அவ்வாத்மஸாக்ஷாத்காரத்திற்கு ஸாத$_4$நமாயிருக்கும் அப்$_4$யாஸம் ( சிந்தனம் ), வைராக்$_3$யம் முதலானவையும், (4) தொடங்கிய யோக$_3$ம இடையில் தடைபட்டாலும, அடியோடு அழிந்துவிடாமல் காலக்ரமத்தில் ஸித்தி யடையும் என்பதும், (5) ஸர்வேஸ்வரனை விஷயமாகக்கொணட பக்தியோகம் முற்கூறிய ஆத்ம ஸாக்ஷாத்காரமாகிற யோகத்தைக் காட்டிலும்சிறப்புற்றது என்னும் அர்த்தமுமாக ஐந்து அர்த்தங்கள் இவ்வத்தியாயத்தில் கூறப்படுகின்றன. இவ்வத்தியாயத்தில் இவ்

வாதிகேஸரி ஜீயர் அருளிய

## பகவத்கீதை வெண்பா—அத்தியாயம் 6

### அத்₄யாத்மயோக₃ம்

### அத்தியாயப் பொருளின சுருக்கம்

*அத்த னருள்கீதை யாறுமோத் தாற்கருமத்*
*தொத்த தெளிவைத் தெரிந்துரைக்கு*
... ... ... ... ...
... ... ... ... ...

ஆறுவது அத்தியாயத்தின் சுருக்கத்தை விளக்கும் இவ் வெண்பாவில் பின்னடிகள் செல்லரித்துவிட்டதால் பதவுரை எழுதப்படவில்லை.

---

வைந்து அர்த்தங்கள் சொல்லப்பட்டாலும், ஓவ்வோரத்தியாயத்தில் ஓவ்வோரர்த்த₂ம் ப்ரதா₄நம் என்கிற கணக்கிலே, இவ்வத்தியாயத்தில் யோக₃ாப்₄யாஸ விதி₄யாகிற முதல் அர்த்த₂மே ப்ரதா₄நமாகையால, இவ்வத்தியாயம் யோக₃ாப்₄யாஸயோக₂ம் என்று அழைக்கப்படுகிறது என அறியத்தக்கது. இதனாலேயே பா₄ஷ்யகாரரும, முதல் ஶ்லோகபா₄ஷ்யத்திலே யோக₃ாப்₄யாஸ விதி₄யையே இவ்வத்தியாயத்தின் அர்த்த₂மாகக் குறிப்பிட்டருளினர். ஆளவந்தாரால் குறிப்பிடப்பட்ட 2, 3, 4-வது அர்த்தங்கள் இந்த யோக₃ாப்₄யாஸத்திற்கு உறுப்பானவை எனபதும், பக்தியோகச் சிறப்பாகிற கடைசி அர்த்தம் மேலே உள்ள மத்₄யமஷட்கத்தில சொல்லப்போகும் பக்தியோகத்திற்குத் தோற்றுவாயாக அமைந்தது என்பதும் குறிக்கொள்ளத்தக்கது.

### முன் அத்தியாயங்களோடு ஸங்க₃தி (தொடர்பு)

முன் ஐந்து அத்தியாயங்களிலும், கர்மயோக₃ ஸாத்₄யமான ஜ்ஞாநயோக₃மும. ஆத்மயாதா₂த்ம்யஜ்ஞாநமாகிற அங்கத்தோடு கூடிய கர்மயோக₃மும விவரிக்கப்பட்டன; இவ்வத்தியாயத்தில் அவ்விரு யோகங்களாலும் தனித்தனியே ஸாதி₄க்கத்தக்க ஆதம ஸாக்ஷாத்காரமாகிற யோகத்தைப் பழகும்முறை ப்ரதா₄நமாக விவரிக்கப்பட்டு, பரவித்₃யைக்கு அங்க₃மானதாய், பரஜாபதி வாக்யத்தில் கூறப்படுவதாக மூன்றுவது அத்தியாயத் தொடக்கத்தில் காட்டப்பட்ட ஆத்மத₃ர்ஶநம் பரிபூர்ணமாக விளக்கப் படுகிறது.

श्रीः
श्रीमते रामानुजाय नमः

## ॥ अथ षष्ठोऽध्यायः ॥ ६ ॥

श्रीभगवानुवाच—

अनाश्रितः कर्मफलं कार्यं कर्म करोति यः।
स संन्यासी च योगी च न निरग्निर्नचाक्रियः॥ १ ॥

ஸ்ரீப$_4$க$_3$வாநுவாச—

1. அநாஶ்ரித: கர்மப$_2$லம் கார்யம் கர்ம கரோதி ய:।
ஸ ஸந்யாஸீ ச யோகீ$_3$ ச ந நிரக்$_3$நிர் ந சாக்ரிய: ॥

கர்மப$_2$லம்—கர்மங்களுக்குரிய ஸ்வர்க்க$_3$ாதி$_3$ ப$_2$லனை, அநாஶ்ரித:—பற்றிநிற்காதவனாய். கார்யம் (இதி) கர்ம ய: கரோதி-கர்மயோக$_3$ாநுஷ்ட்டாநமே ஸ்வயம் ப்ரயோஜநமாயிருப்பது என்னும் எண்ணத்துடன் எவன கர்மயோகத்தை அநுஷ்ட்டிககிருனே, ஸ: ஸந்யாஸீ ச—அவன் ஜ்ஞாநயோக$_3$நிஷ்ட்ட$_2$னுகவுமாகிருன்; (ஸ:) யோகீ$_3$ ச—(அவன்) கர்மயோக$_3$நிஷ்ட்ட$_2$னுகவுமாகிருன்; (ஸ:) ந நிரக்$_3$நி:—(அவன்) அக்$_3$நிகார்யமான யஜ்ஞாதி$_3$கர்மங்களில் ஈடுபடாதவனல்லன் (அவற்றைச் செய்பவனேயாவான்). (ஸ:) ந ச அக்ரிய:—(அவன்) கேவலஜ்ஞாநநிஷ்ட்ட$_2$னுமல்லன்.

---

1. கன்மபலனண்ணுது காரியமென் றுன்னியவத்
தன்மையுமத்தூய்மனத்திற்சார்ந்தியல்வா—னன்மை
ஞானியவன் யோகியவ னல்லங்கி யிற்கிரிசை [யமர்
தானிகழா னென்றுஞ் சமைந்து.

கனம பலன் நண்ணுது—கர்மங்களுக்குரிய ஸ்வர்க்க$_3$ம் முதலிய தாழ்ந்த பலன்களை விரும்பாமல், காரியம் என்று உன்னி—(கர்மயோக$_3$மே) ஸ்வயம்ப்ரயோஜநம் என நினைத்து அவ் அத்தன்மையும்—(ஆத்மாக்களும் அதன் ஸாக்ஷாத்காரமும் நித்யம், தே$_3$ஹாதி$_3$களும், அவற்றுேடு

॥भा॥ उक्तः कर्मयोगस्सपरिकरः, इदानीं (ज्ञानयोग)कर्मयोग-साध्यात्मावलोकनरूपयोगाभ्यासविधिरुच्यते। तत्र कर्मयोगस्य निरपेक्ष-योगसाधनत्वं द्रढयितुं ज्ञानाकारः कर्मयोगो योगशिरस्कोऽनूद्यते; कर्म-फलं—स्वर्गादिकं आनाश्रितः, कार्यं—कर्मानुष्ठानमेव कार्यम्, सर्वात्मना-

---

தொடர்புடைய ஸ்வர்க்காதிகளும் அநிஷ்டம், ஆத்மா ஸ்வதந்த்ரகர்த்தாவல்லன் என்னும்) அந்தந்த அநுஸந்தானங்களையும். அத்தூய் மனத்தில் சார்ந்து—அப்படிபபட்ட (கர்மாநுஷ்டானத்தால்) பரிசுத்தமான மனத்தில் கொண்டு. இயல்வான்-கர்மயோகத்தையே அநுஷ்டிப்பவன (எவனே). அவன் நன்மை அமர் ஞானி—அவனே நன்மை மிக்க ஜ்ஞாநயோகததையும் செய்பவன்; அவன் யோகி—அவனே கர்மயோகத்தையும் செய்பவன்; என்றும் சமைந்து—எப்போதும் (முற்கூறிய) மனப்பக்குவமுடையவனுய். நல் அங்கியில் கிரிசை தான் இகழான்—நல்ல அக்னியோடு தொடர்புடைய யாகம் முதலான ஶ்ரௌதஸ்மார்த்த கர்மங்களை இகழ்ந்து கைவிடமாட்டான்.

---

1. யோகாப்யாஸ விதியை விவரிப்பதற்கு முன், அந்த யோகத்திறகுக காமயோகமே நிரபேக்ஷகாரணம் என பதை உறுதிப்படுத்துவதற்காக, ஜ்ஞாநத்தை உள்ளடக்கியதாய், யோகமாகிற அவ்வாத்மஸாக்ஷாத்காரத்தில் முடிவடைவதான கர்மயோகத்தை முதல் ஒன்பது ஶ்லோகங்களாலே மறுபடியும் கூறுகிருன். அதில் முதல் ஶ்லோகத்தின் முற்பாதியாலே ஜ்ஞாநாகார கர்மயோகத்தை அநுவதித்து, பிற்பாதியாலே. அது யோகத்திற்கு நிரபேக்ஷமான (வேறெருனறை எதிர்பாராத) காரணம் என று காட்டுகிருன். (கர்மபலம் அநாஶ்ரித:)கர்மங்களுக்கு சாஸ்திரங்களிற் கூறப்படும ஸ்வர்க்காதிபலங்களைப் பற்றி நில்லாதவனுய்: அப்படிப் பலனிலலாமற்போனுல், "ப்ரயோஜநமநுத்திஶ்ய ந மந்தோऽபி ப்ரவாத்ததே" [பயனைக்கருதாமல் எக்காரியத்திலும் மூடனும் ஈடுபடமாட்டான] எனகிற ரீதியிலே எவரும் இக்கர்மஙகளில் ஈடுபடமாட்டார்களே எனில், ஸ்வயம்ப்ரயோஜந புத்தியுடன் ஈடுபடலாம் என்கிறதுமேலே; (கர்ம கார்யம் இதி) கர்மமே ஸ்வயம் ப்ரயோஜநம் என னும நினைவுடன்; முன ஶ்லோகத்திற் சொன்னபடி எலலாப் படியாலும் நமக்கு ஸுஹ்ருத்தாயிருக்கும பரமபுருஷனுக்கு ஆராதநமாயிருப்பதாகையாலே இக்கர்மயோகமே மிகவினிதாய்,

असत्सुहृद्भूतपरमपुरुषाराधनरूपतया कर्मैव मम प्रयोजनं न तत्साध्यं किंचिदिति यः कर्म करोति; स संन्यासी च—ज्ञानयोगनिष्ठश्च; योगी च—कर्मयोगनिष्ठश्च; आत्मावलोकनयोगसाधनभूतोभयनिष्ठ इत्यर्थः।

---

ஸ்வயம ப்ரயோஜநமாயிருக்கிறதாகையாலே, இதற்குப்பயனாக வேறு எதுவும தேவையில்லை எனனும் நினைவுடன. (யः கர்ம கரோதி) எவன் கர்மயோகத்தை அநுஷ்டிக்கிருனே. "கார்யம இதி யः கர்மகரோதி" என்று இதிஶப்₃த₃த்தைச் சேர்த்துக்கொண்டு இப்படிப் பொருளகொள்ளாமல், "காயம் கர்ம யः கரோதி" [செய்யத்தக்கதாக சாஸ்த்ரத்தில் விதி₄க்கப்பட்ட கர்மயோகத்தை எவன செய்கிருனோ] எனறு பொருள்கொள்வதில் அர்த்த₂ஸ்வாரஸ்யம் குறைவாயிருக்கிறபடியால் முற்கூறியபடியே பொருள கொளளவேணடும். இனி, ஶ்லோகத்தின் மூன்ரும பாதத்தாலே கர்மஜ்ஞாந யோகங்களிரண்டாலும் ஸாதிக்கத்தக்க ஆத்மஸாக்ஷாதகாரமாகிற பலன அவனுககுக கைகூடுகையால், அவன இரண்டு யோகத்திலும நிஷ்டை₂யுடையவனுகிருன எனறு கூறப்படுகிறது (ஸ ஸந்யாஸீ ச யோகீ₃ ச) அவன் ஜ்ஞாநயோக₃நிஷ்ட₂னுகவுமாகிருன; கர்மயோக₃ நிஷ்ட₂னுகவுமாகிருன. முன அத்யாயங்களில் ஸந்யாஸ யோக₃ஶப்₃த₃ங்களைச் சேர்த்துப்படிக்குமபோது, (முறையே) ஜ்ஞாநயோகமும், கர்மயோகமுமே அவற்ருல் குறிக்கப்படுகினறனவாகையால இங்கும் அப்படியே கொளளவேணும. தனித்தனியே ஆத்மஸாக்ஷாதகாரமாகிற யோகஸாத₄நமாயிருக்கும இவ்விரண்டு யோகங்களாலும ஸாதி₄க்கப்படும் பயன் இவனுக்குக் கிட்டுவதால், இவனை இரணடு யோகங்களையும அனுஷ்டிப்பவனெனறே (உபசாரமாகக்) கூறலாம எனறு கருத்து. ஆக, ஜ்ஞாநயோகத்தை எதிர்பாராமலே (ஜ்ஞாநஸஹித) கர்மயோகம் ஆத்மஸாக்ஷாத்காரத்தை விளைககும் எனறதாயிற்று. இப்படிக கொணடாலொழியக் கர்மயோகநிஷ்ட₂னை முற்பாதியில் அநுவதி₃தது அவனுககே ஜ்ஞாநகர்மயோகஙகள் இரண்டிலும் நிஷ்டையைக் கூறுவது ஒட்டாது; கர்மயோக₃ நிஷ்ட₂னுக்கு ஜ்ஞாநயோக₃ நிஷ்டை கிடையாது எனபதும், கர்மயோகநிஷ்டனையே எடுத்து அவனுக்குக் கர்மயோக₃ நிஷ்டை₂யை விதி₄ப்பது—கூறியது கூறல, பயனினமை முதலிய தோஷங்களையுடையது எனபதும தெளிவன்ருே. அனறிக்கே, கர்மயோக₃த்தின அமஶமான ஜ்ஞாநாம்ஶம 'ஸந்யாஸீ' எனனும் பதத்தாலும், கர்மாம்ஶம 'யோகீ₃' எனனும் பத₃ததாலும் கருதப்படுகையால விரோத₄மில்லை எனறும நிர்வஹிக்கலாம.

न निरग्निर्न चाक्रियः-न चोदितयज्ञादिकर्मस्वप्रवृत्तः, न च केवलज्ञाननिष्ठः; तस्य हि ज्ञाननिष्ठैव, कर्मयोगनिष्ठस्य तूभयमस्तीत्यभिप्रायः ॥ १ ॥

---

கர்மஜ்ஞாநயோகங்களிரண்டையுமுடையவனென்று முன்பாத₃த்தில் சொன்னதுகண்டு, கர்மயோக₃த்தை ஸாத₄நமாகக் கொண்டு ஜ்ஞாநயோக₃த்தை அடைந்தவன் என்று கருதிவிடக்கூடாது என்ப தற்காக, இவன கர்மயோக₃நிஷ்ட₂னே என்று வலியுறுத்துகிறது கடைசிப்பாத₃ம். (ந நிரக்₃நி:) சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட யஜ்ஞாதி₃கர்மங்களில் ஈடுபடாதவனல்லனிவன; அக்₃நிஶப்₃த₃ம் இங்கு அக்₃நியோடு தொடர்புடைய யஜ்ஞாதி₃ கர்மங்களுக்கு உபலக்ஷணமாய், சாஸ்திரங்களில் விதி₄க்கப்பட்ட எல்லாக் கர்மங் களையும் குறிக்கிறது. (ந சாக்ரிய:) கேவலஜ்ஞாநயோக₃நிஷ்ட₂னு மல்லனிவன; 'நிரக்₃நி:' என்பதிலேயே கர்மநிவ்ருத்தி கூறப்பட்டு விட்டபடியால், 'அக்ரிய:' என்றது—க்ரியையிலும வேறுபட்டதாக இந்த ப்ரகரணத்தில் அடிக்கடி படிக்கப்படும் ஜ்ஞாநத்தில் நிஷ்டை₂ யுடையவன் என்றதாகிறது; 'ந சாக்ரிய:' என்றதால் இவன் கேவல ஜ்ஞாநயோக₃நிஷ்ட₂னுமல்லன் என்றபடி. அன்றிக்கே, 'ந நிரக்₃நி:' என்று ஶ்ருதியில் விதிக்கப்பட்ட ஶ்ரௌதகர்மங்களைச் செய்பவன் என்பதையும். 'ந சாக்ரிய:' என்று, ஸ்ம்ருதிகளில் விதி₄க்கப்பட்ட ஸ்மார்த்த கர்மங்களையும் செய்பவன் என்பதையும் காட்டுகிற தாகவுமாம். இவ்வர்த்தத்திலும், இவன் ஜ்ஞாந கர்மங்களிரண்டையு முடைய கர்மயோக₃நிஷ்ட₂னேயொழிய ஜ்ஞாந நிஷ்டை₂ ஒன்றையேயுடைய கேவல ஜ்ஞாநயோக₃ நிஷ்ட₂னல்லன் என்பது ஸித்₃தி₄க்கும். ''அநக்₃நிரநிகேத: ஸ்யாத்'' [மநு 6-25, 43] [அக்₃நி கார்யமற்றவனாகவும், ஓர் இருப்பிடமற்றவனாகவுமிருக்கவேண்டிய வன் ஸந்யாஸி] ''த்யக்த்வா த்₃ரவ்யாக்₃நி ஸாத்₄யாநி கர்மாணி'' [ ] [திரவியத்தாலும், அக்₃னியினாலும் ஸாதி₄க்கத்தக்க கர்மங்களைவிட்டு (வாழவேண்டியவன் ஸந்யாஸி)] என்கிறபடியே அக்₃நித்₃ரவ்யஸாத்₄யகர்மங்களில்லாத ஸந்யாஸியல்லனிவன் என்று பொருள்கொள்ளக்கூடாதோ? எனில், ''ப்ரஸக்தஸ்ய ஹி ப்ரதிஷேத₄:'' [எதற்கு ப்ரஸங்க₃ம் ஏற்பட்டதோ, அதையே தள்ள வேணடும்] என்னும் நியாயப்படி, இங்கு ப்ரஸங்க₃ம் ஏற்பட்டி ருக்கும் ஜ்ஞாநயோக₃நிஷ்ட₂னைத் தள்ளவேண்டுமேயொழிய, இங்கு ப்ரஸங்க₃மே ஏற்படாத ஸந்யாஸியை எடுத்துக்கழிப்பது பொருத்தமற்றது என்பது குறிக்கொள்ளத்தக்கது. ஆக, ஜ்ஞாநாகார கர்மயோக₃மே ஆத்மஸாக்ஷாத்காரத்திற்கு நிரபேக்ஷ(நேரான) காரணம் என்றதாயிற்று. 1.

॥ भा ॥ उक्तलक्षणकर्मयोगे ज्ञानमप्यस्तीत्याह—

यं संन्यास इति प्राहुर्योगं तं विद्धि पाण्डव।
न ह्यसंन्यस्तसङ्कल्पो योगी भवति कश्चन ॥ २ ॥

2. யம் ஸந்ந்யாஸ இதி ப்ராஹுர் யோக₃ம் தம் வித்₃தி₄ பாண்ட₃வ ।
ந ஹ்யஸந்ந்யஸ்தஸங்கல்போ யோகீ₃ ப₄வதி கஶ்சந ॥

பாண்ட₃வ— *பாண்டு₃புத்திரனே!* யம்-*யாதொன்றை,* ஸந்ந்யாஸ: இதி—*ஜ்ஞாநம் என்று,* ப்ராஹு:—*(அறிவாளிகள்) கூறுகின்றார்களோ,* தம்-*அதை,* யோக₃ம் வித்₃தி₄—*கர்மயோக₃மென்றேஅறிவாயாக; (கர்மயோகத்தில் அடங்கியதாக அறிவாயாக என்றபடி)* அஸந்ந்யஸ்த ஸங்கல்ப: கஶ்சந-*(ஆத்மாவல்லாத ப்ரக்ருதியில் ஆத்மாவென்னும்) அபி₄மானத்தைக் கைவிடாதவன் எவனும்,* யோகீ₃—*கர்மயோக₃ம் செய்பவனாக,* ந ப₄வதி ஹி—*ஆகமாட்டானன்றோ.*

---

2. கூரறிவு சேர்துறவென் றெத்தைக் குறித்துரைப்பா
பேரறிவில் யோகமதாம் பாண்டவனே—தூரநசை
விட்டியலா தானொருவன் மெய்கரும யோகியெனப்
பட்டியல மாட்டான் பயின்று.

பாண்டவனே!—*பாண்டுவின் பிள்ளையே!* கூர் அறிவு சேர் துறவு என்று எத்தைக் குறித்து உரைப்பர்—*கூர்மையான அறிவை ஸ்வரூப நிருபகமாகக்கொண்ட ஜ்ஞாநயோக₃ம் என்று எதைக்குறித்து அறிவாளிகள் வழங்குவரோ,* பேர் அறிவில் யோகம் அதாம்—*பெரிய அறிவைத் தன்னுள் அடக்கிய கர்மயோகமே அதுவாகும்,* பயின்று-*மிக முயன்று,* நசை தூர விட்டு இயலாதான் ஒருவன்-*(தேஹத்தில் ஆத்மாவென்னும்) அபி₄மானத்தை அடியோடு கைவிட்டிராதவன் எவனும்,* யோகி எனப்பட்டு இயலமாட்டான்—*கர்மயோகம் செய்பவன் எனப்படத்தகாதவனுவான்.*

॥भा॥ यं, संन्यास इति—ज्ञानयोग इति आत्मयाथात्म्यज्ञानमिति प्राहुः, तं कर्मयोगमेव विद्धि। तदुपपादयति—न ह्यसंन्यस्तसंकल्पो योगी भवति कश्चनेति। आत्मयाथात्म्यानुसन्धानेन अनात्मनि प्रकृतावात्मसङ्कल्पः संन्यस्तः—परित्यक्तो येन स संन्यस्तसङ्कल्पः, अनेवंभूतः असंन्यस्तसङ्कल्पः। न ह्युक्तेषु कर्मयोगिष्वनेवंभूतः कश्चन कर्मयोगी भवति; ※ यस्य सर्वे समारम्भाः कामसङ्कल्पवर्जिताः (४. १९) इति ह्युक्तम्॥ २॥

---

2. முற்கூறிய கர்மயோகத்தில் ஜ்ஞாநமும் உள்ளது என்கிறது. (யம ஸந்ந்யாஸ இதி ப்ராஹு: தம யோகம் வித்தி) ஸந்யாஸ யோக ஶப்தங்கள் முனபோல் முறையே ஜ்ஞாநகர்ம யோகங்களைக் குறிக்கின றனவாகையால், "எதை 'ஜ்ஞாநயோகம்' என்கிருர்களோ அதைக் கர்மயோகம் என அறிவாயாக" எனறு ஜ்ஞாநயோகத்தை எடுத்து, அதற்குக் கர்மயோகமாயிருக்கும் தனமையை விதிப்பதுபோலே தோனறினும் இப்படிப்பொருள் கொள்வதில் பயனில்லையாகையாலும், உத்தரார்த்தத்திலுள்ள விவரணத்திற்குப் பொருந்தாதாகையாலும், இத்தொடருக்குத் தாத்பர்யார்த்தம வேறுவிதமாகக் கொள்ளவேண்டும. ஸந்யாஸஶப்தம் ஜ்ஞாநயோகத்தைச் சொல்லுவதன்மூலம் அதின் பகுதியான ஆத்மயாதாத்ம்ய ஜ்ஞாநத்தை இங்கு குறிக்கிறது; 'ஆத்மயாதாத்ம்ய ஜ்ஞாநத்தைக் கர்மயோகம் என்று அறி' என்றதும் பொருந்தாதாகையால், "ஆத்மயாதாத்ம்ய ஜ்ஞாநத்தைக் கர்மயோகத்தில் அடங்கியதாக அறி" எனறு பொருள்கொள்ளவேண்டும; ஆக, கர்மயோகத்தில் ஜ்ஞாநமும் உள்ளது என்றதாயிற்று. இதை உத்தரார்த்தம் விளக்குகிறது,— (அஸந்ந்யஸ்தஸங்கல்ப: கஶ்சந யோகீ ந பவதி) தேஹத்தில் ஆத்மஸங்கல்பத்தைக் கைவிடாதவன் எவனும் கர்மயோகியாகமாட்டானன்றோ. ஆகையால் கர்மயோகத்தில் ஆத்மஜ்ஞானம இருந்தே தீரவேண்டும் என்று கருத்து. "கஶ்சந" ஶப்தம் முற்கூறிய கர்மயோகிகள் பலவகைப்படுவர் என்பதையும், அவர்கள் அனைவர்க்குமே அவ்வாத்மஜ்ஞாநம் ஆவஶ்யகம் என்பதையும் காட்டுகிறது. இவ்வர்த்தம் "யஸ்ய ஸர்வே ஸமாரம்பா: காமஸங்கல்பவர்ஜிதா:" [4-19] [எந்த முமுக்ஷுவுக்கு எல்லாக் கர்மாரம்பங்களும்—பல

॥भा॥ कर्मयोग एवाप्रमादेन योगं साधयतीत्याह—

आरुरुक्षोर्मुनेर्योगं कर्म कारणमुच्यते।
योगारूढस्य तस्यैव शमः कारणमुच्यते॥ ३॥

3. ஆருருக்ஷோர் முநேர் யோகம் கர்ம காரணமுச்யதே।
யோகாரூடஸ்ய தஸ்யைவ ஶம: காரணமுச்யதே॥

---

ஸங்கமும், தேஹமே ஆத்மா என்னும் அபிமானமும் அற்றவையா யிருக்கின்றனவோ...] முதலானவிடங்களில் ஏற்கனவே தனால் சொல்லப்பட்டது என்று காட்டுகிறது 'ஹி' ஶப்தம். ஸங்கலப ஶப்தம 'நான் இக்கார்யத்தைச் செய்யக்கடவேன' எனனும் கர்ம ஸங்கல்பத்தைக் குறிப்பதாகக் கொள்ளக்கூடாதோ? எனில்: அந்த ஸங்கல்பமில்லாவிட்டால் கர்மம் செய்வதே ஓட்டாதாகை யால், 'கர்மயோகத்தைச் செய்' என விதிக்கும் இப்ரகரணத்திற்கு அது பொருந்தாது. 'பலத்தில் விருப்பத்தை ஸங்கல்பஶப்தம் குறிக்கக்கூடாதோ?'எனில்: அப்படிக்கொண்டால், 'கர்மயோகத்தில் ஞானம் அடங்கியுள்ளது' என்று கூறும் பூர்வார்தத்திற்கு இது விவரணமாகமாட்டாது. இக்காரணத்தாலேயே, " ஸங்கல்பமூல: காமோ ஹி யஜ்ஞாஸ் ஸங்கல்ப ஸம்பவா :" [மநு2-3] [பலஸங்கல் பத்தைக் காரணமாகக்கொண்டது அவ்வப்பலன்களில் விருப்பம்; யஜ்ஞங்களும் அந்த ஸங்கல்பத்தினுல் ஏற்படுமவை] என்று தொடங்கிப் பலகாமத்திற்கும், யஜ்ஞாதி கர்மங்களுக்கும் காரண மாக மநுஸ்ம்ருதியில் கூறப்பட்ட பலஸங்கல்பத்தை இங்கு ஸங்கல்ப ஶப்தத்தால் கூறுவதாகக் கொள்வதும் ஓட்டாது. ஆகையால், தேஹத்தையும் ஆத்மாவையும் ஒன்ருகக் கற்பி(அபிமானி)ப்பதே இங்கு ஸங்கல்பமெனப்படுகிறது "ஸம்—ஏகீக்ருத்ய (ஒன்றுபடுத்தி) கல்ப:(கற்பிப்பது)—ஸங்கல்ப:". முன் அர்தத்திற்சொன்ன ஆத்ம ஜ்ஞானத்தாலே, தேஹாத்மாபிமானத்தைக் கைவிடாதவன் எவ னும் கர்மயோகியாக முடியாது என்றபடி. இப்படிக் கொண்டால் தான் ஶ்லோகத்தின் பிற்பாதி முற்பாதிக்கு விவரணமாக முடியும். (பாண்டவ) பாண்டு புத்திரனே! தேஹாத்மாபிமானத்தைவிட்டு, க்ஷத்ரிய தர்மமாகிற கர்மயோகத்தை அநுஷ்டித்த உன் தந்தை யைப்போலே நீயும் இருக்கவேணடும் என்று கருத்து. 2.

யோகம்—ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை, ஆருருக்ஷோ:—அடைய விரும்புகிற, முநே:—ஆத்மாநுஸந்தானத்தில் ஈடுபடும் முமுக்ஷுவுக்கு, கர்ம—கர்மயோகமே, காரணம் உச்யதே—(அவ்வாத்ம ஸாக்ஷாத்காரத்தைப் பெறுவதற்குக்) காரணமாகக் கூறப்படுகிறது. யோகாரூடஸ்ய தஸ்ய ஏவ—ஆத்ம ஸாக்ஷாத்காரம் நிலைபெற்ற அவனுக்கே, ஶம:—கர்மயோகம் செய்யாமலிருப்பது, காரணம்—காரணமாக, உச்யதே—கூறப்படுகிறது.

3. ஞானயோ கத்தி னயந்தற வேண்டுமுனிக்
கானயோ கக்கரும மாமுதலா—மேனலஞ்சேர்
மிக்கமர்ந்தே யோகத்தின் மேலா மவனுக்கே
தக்கமுத லாகுஞ் சமம்.

ஞானயோகத்தில்-ஞானவுருவான ஆத்மாவைக் காண்பதில், நயந்து—விருப்பங்கொண்டு, அற வேண்டும் முனிக்கு—அதை அடைய மிகவும் ஆசைப்படும் முமுக்ஷுவுக்கு, ஆன யோகக் கருமம்—முற்கூறிய கர்மயோகம், மா முதல் ஆம்—சிறந்த காரணமாகும்; மேல் நலம் சேர் யோகத்தில் மிக்கு அமர்ந்தே—மேலான சிறப்பையுடைய அவ்வாத்மதர்ஶனத்தில் மிகவும் பழகி, மேலாம் அவனுக்கே—சிறப்புற்ற அவனுக்கே, சமம்—கர்மயோகத்திலிருந்து நீங்குதல், தக்க முதலாம்—தக்க காரணமாகும்.

3. கர்மயோகமே நழுவுதலுக்கு இடமில்லாதபடி ஆத்ம ஸாக்ஷாத்காரமாகிற யோகத்தை ஸாதிக்கிறது என்கிறது. (யோகம் ஆருருக்ஷோ:) ஆத்மஸாக்ஷாத்காரமாகிற யோகத்தை அடைய விரும்புகிறவனுக்கு; பரமாத்ம ஸாக்ஷாத்காரம் கர்மயோகத்தை அங்கமாகக்கொண்ட பக்தியாலேயே ஸாதிக்கத்தக்கதாகையால், இங்கு கர்மயோகத்தாலேயே ஸாதிக்கத்தக்கதாகச் சொல்லப்படும் யோகம் ஸ்வாத்மஸாக்ஷாத்காரமேயாகமுடியும். (முநே:) ஆத்ம ஸ்வரூபத்தையே மனனம் செய்துகொண்டிருக்கும் முமுக்ஷுவான இவனுக்கு. (கர்ம காரணம் உச்யதே) கர்மயோகமே அவ்வாத்ம ஸாக்ஷாத்காரத்திற்குக் காரணமாகச் சொல்லப்படுகிறது. "விஶேஷ விதி: ஶேஷ நிஷேத பர:" [குறிப்பிட்டு ஒன்றை விதிப்பது,

॥भा॥ योगम्—आत्मावलोकनं प्राप्तुमिच्छोर्मुमुक्षोः कर्मयोग एव कारणमुच्यते। तस्यैव योगारूढस्य—प्रतिष्ठितयोगस्यैव, शमः—कर्मनिवृत्तिः कारणमुच्यते। यावदात्मावलोकनरूपमोक्षावाप्ति कर्म कार्यमित्यर्थः ॥ ३ ॥

---

மற்றென்றை நிஷேதிப்பதில நோககுடையது.] என்னும் நியாயத்தாலே, "கர்மயோகத்திலும் வேறுபட்ட ஜ்ஞாநயோகமும் நழுவுதலுக்கு இடமளிப்பதாகையாலே, ஆத்மஸாக்ஷாத்காரத்தை விளைக்காமலும் போகலாம; கர்மயோகமோவெனில், நழுவுதலுக்கு இடமில்லாததாகையாலே, ஆத்மஸாக்ஷாத்காரத்தை நிச்சயமாக விளைக்கும" என்று கருதது. இனி, "ஸாத்யாபாவே மஹாபாஹோ ஸாதநை: கிம் ப்ரயோஜநம்" [வி-பு 1-19-36] [ஸாதிக்கத்தக்கதொன்று இல்லாவிடில் ஸாதனத்தால என்ன பயன்?] என்னும் நியாயத்தாலே, ஆத்மஸாக்ஷாத்காரம் கைவந்தபின, கர்மயோகம் தேவையில்லை என்கிறது உததரார்தம் — (யோகாரூடஸ்ய தஸ்யைவ) முற்கூறிய 'ஆருருக்ஷு' நிலை நீங்கி, ஆத்மஸாக்ஷாத்காரம் கைவந்த அவனுககே. ஏவகாரம், அதிகாரி அவனேயாயினும், நிலையில் வேறுபாட்டாலே காரணத்தில் வேறுபாடு ஏற்படுகிறது என்று காட்டுகிறது. (ஶம: காரணம் உச்யதே) கர்மயோகத்தால் ஸாதிக்கவேண்டிய ஆத்மஸாக்ஷாத்காரம கைவந்துவிட்டபடியால், அக்கர்மயோகத்தால பயனில்லையாகையால், அக்கர்மயோகத்தினின்று நீங்குதலாகிற ஶமமே காரணமாகச் சொல்லப்படுகிறது. ஆருருக்ஷுவுக்குக் கர்மம் காரணமானல், ஆரூடனுக்குக் கர்மததிற்கு எதிர்த்தட்டான கர்மநிவ்ருத்தியே காரணமாவது உசிதமாகையால், இங்கு ஶமஶப்தமும் கர்மநிவ்ருத்தியைக் காட்டக்கடவது. ஆகையால், இங்கு முனிஶப்தமும் ஸந்யாஸியைச் சொல்லுவதாகவும், ஶமஶப்தமும் ஸந்யாஸத்தைச் சொல்லுவதாகவும் சிலர் வியாக்கியானம் செய்வது பிரகரணம் முதலானவற்றுக்குப் பொருந்தாது என்று அறியத்தக்கது. நிற்க; "ஆத்மஸாக்ஷாத்காரம கைவந்தவனுக்கு ஒரு காரணம் வேண்டுமோ? அக்காரணத்தால் ஸாதிக்கப்படும் கார்யம்தான ஒன றுமில்லையே!" எனில்: இங்கு ஆத்மஸாக்ஷாத்காரம் கைவந்தவனுக்குக் கர்மநிவ்ருத்தியைக் காரணமாகச் சொன்னது, ஆத்மஸாக்ஷாத்காரமாகிற மோக்ஷம் ஏற்படும் வரையில் ஆருருக்ஷுவுக்கு கர்மயோகம் அவஶ்யம் அநுஷ்டிக்கப்படவேண்டும் என்னும் கருத்துடையதாகை

॥भा॥ कदा प्रतिष्ठितयोगो भवतीत्यत्राह—

यदा हि नेन्द्रियार्थेषु न कर्मस्वनुषज्जते।
सर्वसङ्कल्पसंन्यासी योगारूढस्तदोच्यते॥४॥

4. யதா₃ ஹி நேந்த்₃ரியார்த்தே₂ஷு ந கர்மஸ்வநுஷஜ்ஜதே ।
ஸர்வஸங்கல்பஸந்ந்யாஸீ யோகா₃ரூட₄ஸ் ததோ₃ச்யதே ॥

(அயம் யோகீ₃)—*இந்தக் கர்மயோக₃நிஷ்ட₂ன்*, இந்த்₃ரியார்த்தே₂ஷு—*இந்திரியங்களால அநுப₄விக்கப்படும் ஶப்₃த₃ாதி₃விஷயங்களில்.* யதா₃—*எப்போது.* ந அநுஷஜ்ஜதே—*பற்றற்றவனுகிருனே.* கர்மஸு—*அந்த ஶப்₃தா₃தி₃ விஷயாநுப₄வஸாத₄நமான கர்மங்களிலும்.* யதா₃—*எப்போது.* ந அநுஷஜ்ஜதே—*பற்றற்றவனுகிருனே.* ஸர்வ ஸங்கல்பஸந்ந்யாஸீ—*எல்லா ப்ராக்ருத மனோரத₂ங்களையும் கைவிட்ட அவனே,* ததா₃—*அந்நிலையில்.* யோகா₃ரூட₄: உச்யதே—*ஆத்மஸாக்ஷாத்காரம் கைவந்தவனுகக் கூறப்படுகிருன்.*

---

4. கோலும் புலன்பொருளில் கூட்டுங் கருமத்தி
லேலு நசையறுத்தா னெப்பொழுது—மேலுயர்ந்தே
யெப்பொருளின் சங்கற்பம் விட்டேறும் யோகியென
வப்பொழுதே பேருடைய னும்.

புலன் கோலும் பொருளில்— *இந்திரியங்கள் விரும்பும் ஶப்₃த₃ாதி₃விஷயங்களிலும்,* கூட்டும் கருமத்தில்—*அவ்விஷயங்களோடு இவனைச் சேர்ப்பிக்கும் கர்மங்களிலும்,* ஏலும் நசை—*ஏற்பட்டுக்கொண்டேயிருக்கும் பற்றை.* எப்பொழுது அறுத்தான்—*எப்பொழுது அறுக்கிருனே.* மேல் உயர்ந்து—*அந்நிலைக்கும் மேலே சென்று,* எப்பொருளின் சங்கற்பம் விட்டு (எப்பொழுது) ஏறும்-*பிராகிருதமான எல்லாப் பொருள்களைப்பற்றியும் மனோரத₂ங்களையும் கைவிட்டு எப்போது உயர்ந்ததான ஆத்மவிஷயத்திலேயே ஈடுபடுகிருனே,* அப்பொழுதே—*அப்போதே.* யோகி என பேர் உடையனும்—*யோகம் கைவந்தவன் என்னும் பெயரை உடையவனுகிருன்.*

---

யாலே குறையில்லை. கைவல்ய மோக்ஷதுல்யமாகையாலே ஆத்மஸாக்ஷாத்காரத்தை மோக்ஷமென்கிறது. 3.

||भा|| यदाऽयं योगी स्वात्मैकानुभवस्वभावतया इन्द्रियार्थेषु- आत्मव्यतिरिक्तप्राकृतविषयेषु तत्संबन्धिषु च कर्मसु नानुषज्जते—

4. ஆத்மஸாக்ஷாத்காரம கைவந்தவனுக ஆவது எப்போது என்பதை விளக்குகிறது. (அயம் யோகீ₃) என்னும் கர்த்ரு பத₃த்தை அத்₄யாஹரிததுக் கொள்ளவேண்டும்; (அயம் யோகீ₃) ஆத்மஸாக்ஷாத்காரம கைவருமவரையில் கர்மயோக₃த்தை அநுஷ்ட்டித்து வருபவன. (இந்த்₃ரியார்த்தே₂ஷு யதா₃ ந அநுஷஜ்ஜதே) நித்யமாய், சிறநததான தன் ஆத்மாவை அனுப₄விப்பதையே இயல்வாக உடையவனுயிருப்பதால், அவ்வாத்மாவிலும் வேறுபட்டவையாய், பிராகிருதமானவையாயிருக்கையாலே, அநித்யமாய், அற்பமாயிருப்பவையான இந்திரியார்த்த₂ங்களில் (இந்திரியங்களால் நுகரப்படும் ஶப்₂த₃₂ாதி₃ விஷயங்களில்) எப்போது பற்றற்றவனுகிருனே. (யதா₃ கர்மஸு ந அநுஷஜ்ஜதே) அவ்விஷயாநுபவத்திற்கு ஸாத₄னமான கர்மங்களிலும எப்போது பற்றற்றவனுகிருனே. இங்கு கர்மஶப்₂த₃ம, ஸ்வர்க்க₃ாதி₃ ஸாத₄நமாக ஶாஸ்திரங்களில் விதி₄க்கப்படும் ஜ்யோதிஷ்டோமாதி₃களை மாத்திரம் குறிப்பதல்ல; அவற்றில் அனைவர்க்கும் இயல்வாக ப்ரவ்ருத்தி ஏற்படமாட்டாதாகையாலே, அவற்றை மாத்திரம் குறிப்பிட்டுத் தள்ளுவது பொருந்தாது. சிலர் வியாக்கியானம் செய்வதுபோல் அக்₃நிஹோத்ரம முதலான நித்யநைமித்திக கர்மங்களைக் கர்மஶப்₃த₃த்தாலே கூறுவதாகக் கொள்வதும் சரியல்ல; வேத₃த்தை ப்ரமாணமாகக் கொள்பவர்கள், ஆயுளுள்ளவரையில் அநுஷ்டி₂க்கவேண்டிய அவற்றில் பற்றற்றிருக்கமுடியாதாகையால். ஆகையால், முற்கூறிய இந்திரியார்த்த₂ங்களில் எவன் எதைவிரும்புகிருனே, அவன் அதிலும, அதன் ஸாத₄னத்திலுமே ஈடுபடுவானுகையால், அந்தந்த ஶப்₃த₃ாதி₃ விஷயங்களுக்கு ஸாத₄நமான அந்தந்த விஹிதகர்மங்களும,நிஷித்₃த₄கர்மங்களும்,விஹிதமாகவும,நிஷித்₃த₄மாகவுமிராதகர்மங்களுமே. கர்மஶப்₃த₃த்தால் குறிக்கப்பட்டு, அவற்றில் அவரவர்க்கு ஏற்படக்கூடிய பற்றே இங்கு தவிர்க்கப்படுகிறது எனக்கொள்ளவேண்டும். (யதா₃ ந அநுஷஜ்ஜதே) 'யதா₃ ஸங்க₃ம் த்யஜதி' 'யதா₃ ஸங்க₃ம் நிவர்த்தயதி' என்று ப₃லாத்காரமாகப் பற்றை விடுவதாகக் கூருமல், 'யதா₃ ந அநுஷஜ்ஜதே' [எப்போது பற்றற்றவனுகிருனே] எனக்கூறுகையால், யோகா₃ருட₄நிலையை நெருங்கும போது,இவனுக்கு விஷயங்களிலும், அதற்கு ஸாத₄நமான கர்மங்களிலும்பற்று தன்னடையே விட்டுப்போம் என உணர்த்தப்படுகிறது.

न सङ्गमर्हति; तदा हि सर्वसङ्कल्पसंन्यासी योगारूढ इत्युच्यते। तस्मादारुरुक्षोर्विषयानुभवार्हतया तदननुषङ्गाभ्यासरूपः कर्मयोग एव योगनिष्पत्तिकारणम्। अतो विषयाननुषङ्गाभ्यासरूपं कर्मयोगमेवारुरुक्षुः कुर्यात् ॥४॥

॥भा॥ तदेवाह—

उद्धरेदात्मनाऽऽत्मानं नात्मानमवसादयेत्।
आत्मैव ह्यात्मनो बन्धुरात्मैव रिपुरात्मनः॥५॥

---

(ததா₃ ஹி) அந்நிலையிலேயேயன்றே; முன்னதான கர்மயோகா₃நுஷ்டா₂ந நிலையில் அவனை யோகா₃ரூட₄னென்று கூறுவதில்லை என்று காட்டுவதாகையாலே. 'யதா₃ ஹி' எனறவிடததிலுள்ள ஹி ஶப்₃த₃த்தை இங்கேயே கூட்டிப் பொருள்கொள்ளவேண்டும. (ஸர்வ ஸங்கல்ப ஸந்ந்யாஸீ) ப்ராக்ருதமான எல்லா மநோரத₂ங்களையும் கைவிட்ட அவன; ப்ராக்ருதமான பொருளகளைக் கைவிடுவதோடலலாமல், அவை பற்றிய மநோரத₂ங்களையும் கைவிடுமளவுக்கு இவன் அவற்றில் பற்றற்றவனுகி விடுகிருன் என்று கருத்து. 'அஸந்யஸ்த ஸங்கல்ப:' என்றவிடத்திற்போல் ஸங்கலபஶப்₃த₃த்திற்கு ப்ரஸித்₃த₄ார்த்த₂ம கொள்வதில் ப்ரகரண விரோத₄மில்லாமையாலும், இங்கு விஷயங்களில் பற்றினமையைக் கூறும ப்ரகரணமாகையாலும், ஸங்கல்பஶப்₃த₃ம் தே₃ஹாத்மாபி₄மானமாகிற அபரஸித்₃த₄ார்த்த₂த தைக்கூருமல் விஷயஙகளைபபற்றிய மநோரத₂மாகிற ப்ரஸித₃த₄ார்த்த₂த்தையே கூறக்கடவது. (யோகா₃ரூட₄: உச்யதே) இவ்வண்ணமாக விஷயங்களிலும், அவற்றுக்கு ஸாத₄நமான கர்மங்களிலும், அவைபற்றிய மநோரத₂ங்களிலும் ஈடுபடாதவனுயிருக்கும் இந்நிலையிலேயே அவன் யோகா₃ரூட₄னென்று கூறப்படுகிருன், ஆக, இவ்விரண்டு ஶ்லோகங்களாலும், " ஆத்மஸாக்ஷாத்காரததை அடைய விரும்புகிறவனுக்கு விஷயாநுப₄வங்கள் ஏற்படக்கூடுமாகையால், அவற்றில் பற்றின்மையைப் பழக்கித்தரும் கர்மயோக₃மே ஆத்மஸாக்ஷாத்காரததை விளைக்கக்காரணமாகிறது; ஆகையால் விஷயங்களில் பற்றினமையைப் பழக்கித்தரும் கர்மயோக₃த்தையே ஆருருக்ஷு (ஆத்மஸாக்ஷாத்காரத்தைப்பெற விரும்புமவன்) செய்ய வேண்டும்" என்று உபதே₃ஶிக்கப்பட்டதாயிற்று. 4.

5. உத்₃த₄ரேதா₃த்மநாऽऽத்மாநம் நாத்மாநமவஸாத₃யேத்।
ஆத்மைவ ஹ்யாத்மநோ ப₃ந்து₄ராத்மைவ ரிபுராத்மந:॥

ஆத்மநா—*(விஷயத்தில் பற்றற்ற) மனத்தினுல்*. ஆத்மாநம்—*தன்னை*. உத்₃த₄ரேத—*உயர்த்தக கடவன்*; [ஆத்மநா—*(விஷயங்களில் பற்றுள்ள) மனககால்*] ஆத்மாநம்—*தன்னை*. ந அவஸாத₃யேத்—*கீழே தள்ளக்கடவனல்லன்*; ஆத்மா ஏவ—*(விஷயப்பற்றற்ற) மனமே*. ஆத்மந:—*தனக்கு*. ப₃ந்து₄:—*உறவினுயிருப்பது*; ஆத்மா ஏவ—*(விஷயப்பற்றுள்ள)மனமே*. ஆத்மந:—*தனக்கு*. ரிபு:—*எதிரியாயிருப்பது*.

---

5. தன்னைத்தன னெஞ்சாலே தானெடுப்பான் றன்னெஞ்
றன்னைத தளர்விக்கத தாணியலா—னனனவனும் [சாற்
தன்னுடைய நெஞ்சு தனக்குறவு தன்னெஞ்சே
தன்னுடைய வானபகையாந் தான்.

தன் நெஞ்சாலே—*( விஷயங்களில் பற்றற்ற ) தன் மனத்தாலே*. தன்னை—*தன்னை*. தான் எடுப்பான்—*தான் கரையேற்றக்கடவன்*; தன் நெஞ்சால்—*( விஷயங்களிற் பற்றுள்ள) தன் மனத்தாலே*, தன்னை—*தன்னை*. தான—*தானே*. தளர்விக்க இயலான்—*கீழே நழுவவிடக் கூடாது*. அன்னவனும் தன்னுடைய நெஞ்சு—*அத்தகைய தன்னுடைய (விஷயங்களில் பற்றற்ற) மனமே*. தனக்கு உறவு—*தனக்கு உறவாகும்*; தன் நெஞ்சேதான்—*(விஷயங்களில பற்றுள்ள) தன் மனம் தானே*. தன்னுடைய வான் பகையாம்—*தனக்குப் பெரிய எதிரியாகும்*.

---

5. முன்னிரண்டு ஶ்லோகத்தால் கருதியதை இனியிரண்டுஶ்லோகத்தால் விவரிக்கிறுன். (ஆத்மநா ஆத்மாநம் உத்₃த₄ரேத்) முன் ஶ்லோகத்தில் சொன்னபடி விஷயங்களில் பற்றற்ற மனத்தாலே தனனை யோகா₃ரூட₄ன் (ஆத்மஸாக்ஷாத்காரம் கைவந்தவன்) ஆக்கி ஸம்ஸாரக்கடலிலிருந்து உயரஎடுக்கக்கடவன். கரையேற்றும் கருவியாக ஓராத்மாவும் கரையேற்றப்படுவதாக ஓராத்மாவுமகூறப்படுகையாலும், முன்பின் ப்ரகரணத்தைப் பார்த்தாலும் கரையேற்றும கருவியானஆதமா நெஞ்சென்றும,கரையேற்றப்படும்ஆத்மா தானென்றும்

॥भा॥ आत्मना—मनसा; विषयाननुषक्तेन [मनसा] आत्मानमुद्धरेत्। तद्विपरीतेन मनसा आत्मानं नावसादयेत्। आत्मैव—मन एव ह्यात्मनो बन्धुः; तदेवात्मनो रिपुः॥५॥

बन्धुरात्माऽऽत्मनस्तस्य येनात्मैवात्मना जितः।
अनात्मनस्तु शत्रुत्वे वर्तेतात्मैव शत्रुवत्॥६॥

6. ப₃ந்து₄ராத்மாऽऽத்மநஸ் தஸ்ய யேநாத்மைவாத்மநா ஜித:।
அநாத்மநஸ்து ஶத்ருத்வே வர்த்தேதாத்மைவ ஶத்ருவத்॥

யேந—எந்த மனிதனுல். ஆத்மா—தன் மனம், ஆத்மநா ஏவ—தன்னுலேயே. ஜித:—(விஷயங்களில செல்லாமல்)

---

விளங்கும். இந்த ஶ்லோகத்திற்கு விவரணமான அடுத்த ஶ்லோகத்திலும் இப்படியே. (ஆத்மநா ஆத்மாநம் ந அவஸாத₃யேத்) முற் கூறியதிற்கு மாறுபட்ட (விஷயங்களில் பற்றுள்ள) நெஞ்சாலே தன்னை அந்த ஸம்ஸாரக் கடலிலேயே நழுவவிடக்கடவனல்லன். 'உத்₃த₄ரேத்' [கரையேற்றவேண்டும்] 'ந அவஸாத₃யேத்' [நழுவவிடலாகாது] என்னும் கிரியைகளின் ஸாமர்த்₂யத்தாலும், முனபின் ப்ரகரணத்தாலும இரண்டு பாதங்களிலும ஸமமான பத₃த்தால் சொல்லப்பட்ட நெஞ்சுக்கு மாறுபட்ட தனமைகள் கொள்ளப்பட்டன. இப்படி ஒரு மனமே இரு ஆகாரங்களே உடையதாலுல் விபரீதமான செயல்களைச் செய்யும என்பதையே ஶ்லோகத்தின பிற்பாதி விளக்குகிறது.— (ஆத்மா ஏவ ஹி ஆத்மந: ப₃ந்து₄:) விஷயங்களில் பற்றற்ற மனமேயனறு ஆத்ம ஸாக்ஷாத்காரமோக்ஷத்தை விளைப்பதன்மூலம் இவனுக்கு நன்மை செய்யும் உறவினனுயிருப்பது; மற்ற உறவினர்கள் இம்மோக்ஷத்திற்குத் தடையாயிருப்பதன் மூலம் இவனுக்கு விரோதி₄களாயிருப்பவர்களே என்று ஏவகாரத்தின் கருத்து. (ஆத்மா ஏவ ஹி ஆத்மந: ரிபு:) விஷயங்களில் பற்றுள்ள மனமேயனறு, இவனை ஸம்ஸாரக் கடலில் தள்ளுவதன்மூலம் இவனுக்கு எதிரியாயிருப்பது; மற்ற எதிரிகள் இவனுக்கு ஸம்ஸாரத்தில் வெறுப்பை உண்டாக்கி ஆத்மாவை அடையும் முயற்சியில் ஈடுபடுத்துகிறவர்களாகையாலே அவர்கள் உண்மையில் இவனுக்கு உறவினராயாகிறவர்களே என்று ஏவகாரத்தின் கருத்து. 5.

வெல்லப்பட்டதோ. தஸ்ய ஆத்மந: — அம்மனிதனுக்கு. ஆத்மா–அம்மனம். ப₃ந்து₄:–உறவினனுகும்; அநாத்மந: து–வெல்லப்படாத மனத்தையுடைய மனிதனுக்கோவெனில், ஆத்மா ஏவ—தன் மனமே. ஶத்ருவத்—தன் எதிரியைப் போலே. ஶத்ருத்வே—நன்மைக்குத் தடையாயிருப்பதில், வர்த்தேத—ஈடுபடும்.

---

6. எவன்றன்னுற் றன்னெஞ்ச மேன்றுவெலப் பட்ட
தவன்றனக்கந் நெஞ்ச முறவாகும—அவன்றன்னு
லான்றநெஞ்சில் வாதவனுக் காங்கதுமா றேயியலு
மேன்ற பகைவன்போ லிங்கு.

எவன் தன்னுல்—எந்த மனிதனுல், தன் நெஞ்சம்—தன் மனம், ஏன்று வெலப்பட்டது—(விஷயங்களில் செல்லாமல) இழுதது வெல்லப்பட்டதோ. அவன் தனக்கு—அவ்வாத்மாவுக்கு, அந்நெஞ்சம்—அந்த மனம், உறவாகும்—உறவினன் ஆகும்; அவன் தன்னுல் ஆன்ற நெஞ்சு இல்லாதவனுக்கு—தன்னுல் அடக்கப்பட்ட மனத்தை உடையவனுயிராதவனுக்கு, ஆங்கு அது—அந்த மனமே. ஏன்ற பகைவன்போல்—நிலைநின்ற எதிரியைப்போல், இங்கு—இவ்வுலகில், மாறே இயலும்—நன்மைக்குத் தடையாகவே செயல்படும்.

---

6. முன் ஶ்லோகத்தில் தன் மனமே தன் ஆத்மாவுக்கு உறவினனுகவும், எதிரியாகவும் ஆகும் என்று கூறியது முரணுயிற்றே எனனும் ஶங்கையெழ, மனத்தின ஆகாரபே₄த₃த்தாலே இது கூடுமாகையாலே முரணில்லை என்று பதில் கூறுகிருன இந்த ஶ்லோகத்தில். (யேந) எந்த மனிதனுல் (ஆத்மா) தன மனம். (ஆத்மநா ஏவ ஜித:) உடைமையான அவ்வாத்மா உடையவனுன தன்னுலேயே விஷயங்களிற் செல்லாமல் வெல்லப்பட்டதோ. ஓராத்மாவை வெற்றிகொள்வதாகவும், மற்ருேராத்மாவை வெல்லப் பட்டதாகவும் கூறுகையாலே, வெல்லப்பட்டதை மனமென்றும். வெற்றிகொள்வதை - ஜீவனென்றும் கொள்வதே பொருததம், மனத்தை வெற்றிகொள்வதாவது, அதை விஷயங்களிற் செல்லா

॥ भा ॥ येन—पुरुषेण स्वेनैव स्वमनो विषयेभ्यो जितम्, तन्मनः तस्य बन्धुः। अनात्मनः—अजितमनसः स्वकीयमेव मनः स्वस्य शत्रुवत् शत्रुत्वे वर्तेत—स्वनिश्श्रेयसविपरीते वर्तेतेत्यर्थः। यथोक्तं भगवता पराशरेणापि—* मन एव मनुष्याणां कारणं बन्धमोक्षयोः। बन्धाय विषयासङ्गि मुक्त्यै निर्विषयं मनः॥ (वि. ६. ७. २८) इति॥ ६ ॥

---

மல் இழுப்பதேயாகும். (தஸ்ய ஆத்மந: ஆத்மா ப₃ந்து₄:) அவ் வாத்மாவுக்கு வெல்லப்பட்ட அந்த மனமே உறவினனாகும். (அநாத்மநஸ்து) வெல்லப்படாத மனத்தை உடையவனுக்கோ வெனில்; முன் பாதியில் சொல்லப்பட்ட அதி₄காரிக்கு நேர்மாறான வன் இவன் என்று காட்டுகிறது துஶப்₃த₃ம். அதனாலும், மேலே மனத்தை ஶத்ருவாகக் கூறுகையாலும் 'அநாத்மந:' என்றது 'வெல்லப்படாத மனத்தை உடையவனுக்கு' என்றே பொருள் படுகிறது. (ஆத்மைவ) தன் உடைமையான மனமே. தன் உடைமையே தனக்கு எதிரியாயிற்று என்று ஏவகாரத்தின் கருத்து. (ஶத்ருவத்) வெளியுலகிற் காணும் எதிரிகளைப்போலே. (ஶத்ருத்வே வர்த்தேத) இவனுடைய நன்மையைத் தடை செய்வதிலேயே ஈடு படும். ஆத்மாவைக் காணமுடியாதபடி செய்யும் என்றபடி. ஶத்ருவின் செயல் இங்கு ஶத்ருத்வம் எனப்படுகிறது. முன் பின் ப்ரகரணங்களில் ஆத்மஶப்₃த₃ம் மனத்தைக் குறித்தும் ஜீவனைக் குறித்தும் பிரயோகிக்கப்பட்டிருப்பதாலும், விஷயங்களினின்று மனத்தையிழுப்பதைச் சொல்லியிருப்பதாலும் இங்கு வெற்றிகொள் ளும் ஆத்மா ஜீவனென்றும், வெல்லப்படும் ஆத்மா மனமென்றும், விஷயங்களினின்றும் மனத்தையிழுப்பதே வெற்றி என்றும் தேறும்; இவ்விஷயத்தைப் பராஶரப₄க₃வானும்,

> மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் ப₃ந்த₄மோக்ஷயோ:।
> ப₃ந்த₄ாய விஷயாஸங்கி₃ முக்த்யை நிர்விஷயம் மந: ||"
> [வி-பு 6-7-28]

[மனமே மனிதர்களின் ஸம்ஸாரப₃ந்த₄த்திற்கும், மோக்ஷத்திற்கும் காரணமாகிறது; விஷயத்தில் ஈடுபடும் மனம் ப₃ந்த₄த்திற்கும், விஷயப்பற்றற்ற மனம் மோக்ஷத்திற்கும் காரணமாகிறது] என்று மிகத்தெளிவாக உரைத்தார். ஆகையால் 'ஆத்மநா' முதலான பதங்களுக்குக் கார்யகரண ஸங்கா₄தம் என்று ஶங்கரர் பொருள்

॥ भा ॥ योगारम्भयोग्याऽवस्थोच्यते—

जितात्मनः प्रशान्तस्य परमात्मा समाहितः।
शीतोष्णसुखदुःखेषु तथा मानावमानयोः ॥ ७ ॥

7. ஜிதாத்மந: ப்ரஶாந்தஸ்ய பரமாத்மா ஸமாஹித:।
ஶீதோஷ்ண ஸுகதுக்கேஷு ததா மாநவமாநயோ: ॥

ஶீதோஷ்ண ஸுகதுக்கேஷு—குளிர் உஷ்ணம், ஸுகம் துக்கம் ஆகியவற்றிலும், ததா—அவ்வண்ணமே, மாநாவமாநயோ:-மதித்தல், அவமதித்தல் ஆகியவற்றிலும், ஜிதாத்மந:—விகாரமற்ற மனத்தையுடையவனுய், ப்ரஶாந்தஸ்ய—வெளியிந்திரியங்களையும் அடக்கியவனுடைய (மனத்தில்), ஆத்மா பரம—ஜீவாத்மா ஒருவனே, ஸமாஹித:—நன்கு வைக்கப்பட்டிருக்கிறுன்.

---

7. சீத மழலின்பந் துன்பஞ் சிறப்பிகழ்வின்
மீதமைவு சேர்ந்துமிக வென்றுமனம்—போதம்
திகழ்ந்தவவ னெஞ்சிற் றெளிவுறவே நிற்கு(ம்)
நிகழ்நத வுயிர்பரமா நேர்ந்து.

சீதம் அழல்—குளிர், உஷ்ணம், இன்பம் துன்பம்—ஸுகம், துக்கம், சிறப்பு இகழ்வின் மீது—மதித்தல், அவமதித்தல் ஆகிய இரட்டைகளின் மேல், அமைவு சேர்ந்து—ஒருபடியாகப் பொருந்தி நின்று, மனம் மிக வென்று—மனத்தை மிகவும் வெற்றிகொண்டு, போதம் திகழ்ந்த அவன்—அறிவு திகழும் அவனுடைய, நெஞ்சில்—மனத்தில், நேர்ந்து பரமா நிகழ்ந்த உயிர்—ஸூக்ஷ்மமாய் மேலாயிருக்கும் ஜீவாத்மா, தெளிவுறவே நிற்கும்—தெளிவாக விளங்குவான்.

---

கொண்டதும், ஆத்மஶப்தங்கள் அனைத்தையும் ஜீவபரமாகவே சிலர் பொருள்கொள்வதும் பொருத்தமற்றவை என விளங்கும். 6.

॥ भा ॥ शीतोष्णसुखदुःखेषु मानावमानयोश्च जितात्मनः— जितमनसः-विकाररहितमनसः, प्रशान्तस्य मनसि परमात्मा समाहितः— सम्यगाहितः। स्वरूपेणावस्थितः प्रत्यगात्माऽत्र परमात्मेत्युच्यते, तस्यैव प्रकृतत्वात्। तस्यापि पूर्वपूर्वावस्थापेक्षया परमात्मत्वात्। आत्मा परं समाहित इति वाऽन्वयः॥ ७॥

---

7. இதுவரையில் ஆத்மஸாக்ஷாத்காரம் கைவந்த நிலையும், அந்நிலையை அடைய உபாயமும் கூறப்பட்டது. இனி, பகுதாவது ஶ்லோகத்திலிருந்து அத்தியாயத்தின் முக்கியார்த்தமான யோகாப்யாஸ விதியைச் சொல்லத் தொடங்குமுன், அதன் ஆரம்பநிலை இதுமுதல மூன்று ஶ்லோகங்களாலே உணர்த்தப்படுகிறது. (ஶீதோஷ்ண ஸுகது:கேஷு, ததா மாநாவமாநயோஶ்ச ஜிதாத்மந:) குளிர் உஷ்ணம், துன்பம் இன்பம், மதிப்பு அவமதிப்பு என்னும் இரட்டைகள் விஷயத்தில் வெல்லப்பட்ட மனத்தை உடையவனுக்கு. அநுபவிக்கப்படும் இவை விஷயத்தில மனத்தை வெலலுவதாவது என்ன? எனில்: இவற்றை அநுபவிக்கும் போதும் மனத்தில் இன்பதுன்ப மிகுதிகளாகிற விகாரமற்றிருக்கையே மனத்தை வெல்லுவதாகும். ஶ்லோகத்தின் பிற்பாதியை முற்பாதியின் தொடக்கத்திலுள்ள 'ஜிதாத்மந:' என்பதோடு இப்படி அந்வயிக்கக் கூடுமபோது பிற்பாதியில் 'ஸம:' என்னும பதத்தை அத்யாஹாரம்செய்து ஶங்கரா பொருள்கொண்டது அவஶ்யமற்றது. (ப்ரஶாந்தஸ்ய) வெளியிந்திரியங்களை வென்றவனுக்கு. 'ஜிதாத்மந:' என்று மனத்தை அடக்கியதைச் சொல்லுகையாலே, 'ப்ரஶாந்தஸ்ய' என்று வெளியிந்திரியங்களை அடக்கியதைச் சொல்லுவதே உசிதம். அன்றிக்கே, முன் அத்தியாயங்களிற்கூறிய ஸ்வர்காதி பலாபிஸந்தி முதலானவையில்லாதவன என்று கூறுவதாகவும் கொள்ளலாம். (பரமாத்மா ஸமாஹித:) முன் முன் நிலைகளைக்காட்டிலும மேலான நிலையிலிருப்பவனுகையாலே பரமாத்மா எனத்தக்க நிஷ்க்ருஷ்ட ஜீவஸ்வரூபம மனத்தில் நன்கு வைக்கப்பட்டிருக்கிறது. இது ப்ரதாநமாக ஜீவாத்மப்ரகரணமாகையாலே, இங்கு இவ்வண்ணம் பரமாத்மஶப்தத்தால் ஜீவாத்மாவே சொல்லப்படுவதாகக் கொள்ள வேண்டும். ஸம்ஸாரி ஜீவனுயிருக்குமபோது ஆத்மாவென்றும, கர்மயோகம் செய்யும்போது பராத்மாவென்றும, ஶுத்த நிலையில பரமாத்மா என்றும சொல்லத்தக்கதாகிறது ஜீவ ஸ்வரூபம் என்று கருத்து. இப்படிக் கொண்டாலும், 'பரோ மா

ज्ञानविज्ञानतृप्तात्मा कूटस्थो विजितेन्द्रियः।
युक्त इत्युच्यते योगी समलोष्टाश्मकाञ्चनः॥८॥

8. ஜ்ஞாநவிஜ்ஞாந த்ருப்தாத்மா கூடஸ்தோ₂ விஜிதேந்த்₃ரிய:।
யுக்த இத்யுச்யதே யோகீ₃ ஸமலோஷ்டாஶ்மகாஞ்சந:॥

ஜ்ஞாநவிஜ்ஞாநத்ருப்தாத்மா-*அறிவாலும், பேரறிவாலும் திருப்தியடைந்த மனத்தையுடையவனாய்* கூடஸ்த₂:—*பரிஶுத்₃த₄ாத்மாவிலேயே நிலைநிற்பவனாய்* விஜிதேந்த்₃ரிய:-*இந்திரியங்களை ஜயித்தவனாய்,* ஸமலோஷ்டாஶ்மகாஞ்சந:—*மண்கட்டி, கல், பொன் ஆகியவற்றை ஒக்க நினைப்பவனாய்,* யோகீ₃—*கர்மயோகமும் செய்பவன்,* யுக்த: இதி உச்யதே—*ஆத்மஸாக்ஷாத்கார ரூபயோகத்தின் அப்₄யாஸத்திற்குத் தகுதியுள்ளவன் எனப்படுகிறான்.*

---

8. ஞான விவேகத்து நன்குகந்தார் தன்மையனா
யான புலன்வென் றமர்யோகி—தானோட்டிற்
கற்கனகத் தொத்தியல்வான் காட்சியினற்றக்கானென்
றொற்கமறுஞ் சொற்சேரு முற்று.

ஞான விவேகத்து நன்கு உகந்து ஆர் தன்மையனாய்—*அறிவையும், பேரறிவையும் மிக விரும்பி, அவற்றில் ஈடுபடும் இயல்வையுடையவனாய்,* ஆன புலன் வென்று—*தன் இந்திரியங்களை வென்று,* அமர் யோகிதான்—*ஆத்மாவில் நிலைநிற்கும் கர்மயோகியானவன்,* உற்று ஓட்டில் கல் கனகத்து ஒத்து இயல்வான—*தனக்குக் கிடைத்த ஓட்டிலும், கல்லிலும், பொன்னிலும் ஒருபடிப்பட்ட மனநிலையை உடையவனாய்* காட்சியினால் தக்கான்—*ஆத்மாவைக் காண்பதாகிற யோகத்தின் பழக்கத்திற்குத் தகுதியுடையவன்,* என்று—*என்கிற,* ஒற்கம அறும் சொல் சேரும—*தாழ்விலலாத சொல்லை அடைவான்.*

---

அஸ்மாத் இதி பரம: [எவனைக்காட்டிலும் மேலானவனில்லையோ அவன் பரமன்] என்னும் பரமஶப்₃த₃முக்₂யார்த்த₂ம் ஜீவனுக்கு ஸித்₃தி₄க்காதாகையாலும், அவனுடைய பரத்வம் அளவுபட்டதேயாகையாலும், பரமாத்மஶப்₃த₃த்திற்கு நாராயணனே முக்₂யார்த்த₂மாகையாலும், "ஆத்மா பரம ஸமாஹித:" என்று கூட்டுவது சிறந்தது. பரம—அதி₄கம அல்லது கேவலம் என்றபடி. ஆத்மா ஒருவனே (அல்லது அதி₄கமாக) அவனுடைய நெஞ்சில் நன்கு வைக்கப்பட்டிருக்கிறான் என்றபடி. 7.

॥भा॥ ज्ञानविज्ञानतृप्तात्मा—आत्मस्वरूपविषयेण ज्ञानेन, तस्य च प्रकृतिविसजातीयाकारविषयेण विज्ञानेन च तृप्तमनाः, कूटस्थः—

8. ஆத்மத₃ர்ஶனமாகிற யோக₃ாப்₄யாஸத்தின் ஆரம்ப₄நிலேயில் யோகி₃யானவன இந்திரியங்களே வென்றவனுகவும், ஶீதோஷ்ணங்கள், ஸுக₂து₃:க்க₂ங்கள் முதலிய இரட்டைகளேப் பொறுப்பவனுகவுமிருப்பான என்று சென்ற ஶ்லோகத்தில் கூறப்பட்டது. இந்த ஶ்லோகத்தில் இப்படியிருக்கைக்குக் காரணம் கூறப்படுகிறது. (ஜ்ஞாநவிஜ்ஞாநத்ருப்தாத்மா) ஆத்மஸ்வரூபத்தைப்பற்றிய ஜ்ஞானத்திலும, ஆத்மா ப்ரக்ருதியைக்காட்டிலும வேறுபட்டது என்னும் அதன் ஸ்வபா₄வத்தைப்பற்றிய விஜ்ஞானத்திலும் திருப்திபெற்ற நெஞ்சையுடையவன். ஆத்மஶப்₃த₃ம் நெஞ்சைச் சொல்லுகிறது. மறுமைப் பயன்கள் அனேத்துக்கும பொதுவானதாய், "(ப்ரக்ருதிகார்யமான) தே₃ஹம், இந்திரியம், மனம் முதலானவற்றைக் காட்டிலும் வேறுபட்டது இவ்வாத்மா" என்னும் ஆத்மஸ்வரூபநிரூபகத₄ர்மத்தைப் பற்றியிருப்பதான அறிவு இங்கு ஜ்ஞானம் எனப்படுகிறது; மோக்ஷத்தைப் பெறவிருபபுகிறவர்களுக்கே வேண்டியிருப்பதாய், "ஆத்மா நித்யமானது; அளவற்ற ஆனந்தத்தையுடையது; அளவற்ற ஜ்ஞானத்தையுடையது" முதலான நிருபிதஸ்வரூப விஶேஷணங்களேப் பற்றியிருப்பதான அறிவு இங்கு விஜ்ஞானம் எனப்படுகிறது. ஆகையால் ஜ்ஞானவிஜ்ஞானஶப்₃த₃ங்களிடையே புநருக்தியில்லே. உபாஸனத்துக்கு அங்க₃மான ஆத்மத₃ர்ஶனத்தைப்பற்றிய ப்ரகரணமாகையால். இங்கு விஜ்ஞாந ஶப்₃த₃த்தால் உபாஸநத்தைக் கொள்வது பொருந்தாது. (கூடஸ்த₂:) கூடம்போலே விகாரமற்றிருக்கும் தன் பரிசுத்₃த₄ாத்மாவில் நிலேநிற்பவன். 'கூடே திஷ்டₕதி இதி கூடஸ்த₂:' [கூடத்தில் நிலேநிற்பது கூடஸ்த₂மாகிறது] என்று வ்யுத்பத்தி. "கொல்லன் மற்ற லோஹங்களேக் காய்ச்சி அடித்து மாற்றுவதற்கு இருப்பிடமாயிருப்பதாய், தான் மாறுதலே அடையாமலிருப்பதான இரும்புத்துண்டு கூடம் (பட்டரை) எனப்படுகிறது. இங்கு, பலபல தே₃வாதி₃ ஶரீரங்களின் சேர்க்கையையும், பிரிவையும் உடையதாயிருந்தபோதிலும் 'ந ஜாயதே ம்ரியதே' [கீதை 2-20] [(ஆத்மா தேஹங்களின் பிறப்பிறப்புக்களேயொட்டிப்) பிறப்பதுமில்லே; இறப்பதுமில்லே] என்கிறபடியே தான பிறப்பிறப்பு முதலான விகாரம எதுவுமற்றிருக்கை

देवाद्यवस्थास्वनुवर्तमानसर्वसाधारणज्ञानैकाकारात्मनि स्थितः, तत एव विजितेन्द्रियः, समलोष्टाश्मकाञ्चनः — प्रकृतिविविक्तस्वरूपनिष्ठतया प्राकृतवस्तुविशेषेषु भोग्यत्वाभावाल्लोष्टाश्मकाञ्चनेषु समप्रयोजनो यः

---

யாலே கூடம் போன்றிருக்கும் ஆத்மா கூடஶப்தத்தாலே ஔப சாரிகமாகக் கூறப்படுகிறது. கூடஶப்தம் மலைச்சிகரத்தைக் குறிப்ப தும உண்டாகையால், மலைச்சிகரமபோலே விகாரமற்றிருக்கும் பரமாத்மாவை ஔபசாரிகமாகக் குறிக்கிறது என்றும் கொள்ளலாம். இப்படிக் 'கூடம்' எனப்படும் பரிசுத்தாத்மாவில் நிலைநிற்பவன என்று கூடஸ்தஶப்தத்திற்குப் பொருள். 'கூடஸ்தர்' என்று ஒரு வமஶத்தில் அனைவர்க்கும பொதுவான மூலபுருஷரைக் குறிப்பதுமுண்டு. வம்ஶத்திலுள்ள பலருக்குக் கூடஸ்தர் பொதுவாக அநுஸந்திக்கப்படுவது போலே மாறிமாறிவரும் தேவர் முதலான எல்லா நிலைகளிலும் தொடர்ந்து வருவதாகையாலே பொதுவானதாய், ஞானத்தையே ஸ்வரூபமாகக்கொண்டதான ஆத்மாவை இப்படி அநுஸந்திப்பதன் மூலம அதில் நிலைநிற்பவனைக் கூடஸ்தன் என்பதாகக்கொள்ளலாம். (விஜிதேந்த்ரிய:) இந்திரியங்களை வென்றவன். முன் இரண்டு பதங்களாலும் கூறியபடி ஆத்மாவின் ஸ்வரூபஸ்வபாவங்களை அநுஸந்திப்பதாலேயே இவனுடைய மனம் திருப்தி பெற்றிருப்ப தாலும், ஆத்மாவிலேயே இவன் நிலைநிற்பதாலும் இவன் முன் ஶ்லோகத்தில் கூறியபடி இந்திரியங்களை வெற்றிபெற்றிருக்கிறுன் எனறு கருத்து. இங்கு இந்த்ரிய ஜயத்தைச் சொன்னது த்வந்த்வ ஸஹத்வத்துக்கும் உபலக்ஷணமாய், முனஶ்லோகத்திற் கூறிய இவ்விரண்டுக்கும் இந்த ஶ்லோகத்தில் முதலிரண்டு பதங்களும் காரணத்தைக் கூறுகின்றன என்று காட்டுகிறதாயிற்று. இனி, இதன் மற்றொரு கார்யம் காட்டப்படுகிறது.— (ஸம லோஷ்டாஶ்மகாஞ்சந:) மண்கட்டி, கல், பொன் ஆகியவற்றை ஒக்க நினைப்பவன். ஸ்வரூபத்தாலும், கார்யம், காரணம் முதலான வற்றாலும் மிகவும் வேறுபட்டிருக்கும் இவற்றை ஒக்க நினைக்கை யாவது என்? எனில்: முதல் இரண்டு பதங்களிலும் கூறியபடி ப்ரக்ருதி ஸம்பந்தமற்ற ஆத்மஸ்வரூபத்திலேயே நிலைநிற்கை யால், பிராகிருதப் பொருள்களான மண்கட்டி, கல், பொன முதலானவற்றில் ஈடுபாடு இன்மையால், அவற்றால் ஏற்படும் பயனை ஒன்றாக நினைக்கையே இங்கு அவற்றை ஒக்க நினைக்கை

कर्मयोगी, स युक्त इत्युच्यते—आत्मावलोकनरूपयोगाभ्यासार्ह इत्युच्यते ॥ ८ ॥

॥भा॥ तथा च—

सुहृन्मित्रार्युदासीनमध्यस्थद्वेष्यबन्धुषु।
साधुष्वपि च पापेषु समबुद्धिर्विशिष्यते ॥

9. ஸுஹ்ருந்மித்ரார்யுதா₃ஸீந-
மத்₄யஸ்த₂ த்₃வேஷ்ய ப₃ந்து₄ஷு ।
ஸாது₄ஷ்வபி ச பாபேஷு
ஸமபு₃த்₃தி₄ர் விஶிஷ்யதே ॥

ஸுஹ்ருந் மித்ர அரி உதா₃ஸீந மத்₄யஸ்த₂ த்₃வேஷ்ய ப₃ந்து₄ஷு—*நன்மை விரும்பிகள், நண்பர்கள், விரோதி₄கள், தொடர்பில்லாதார், நடுநிலையாளர், இயற்கை வெறுப்புடையோர், இயற்கையன்புடையோர் ஆகியோரிடத்திலும்,*

---

9. நன்னெஞ்சன் நேரழன் பகைவ னயப்பறியான்
பன்னு நடுவோன் பழிவெறுப்போன்—றன்னளவி
லுற்ரு ருயர்கருமர் பாவிகளா லொத்தமனம்
பெற்ருன் மிகத்தக்கான் பின்.

---

யாகிறது. மற்றுள்ள ப்ராக்ருதர் மண்கட்டி, கல் ஆகியவற்றைத் தாழ்வாகவும், பொன்னை உயர்வாகவும் கருதுவர்; இவனுக்குப் பொன்னும்—மண்கட்டி, கல் முதலானவற்றைப்போலே பயனற்ற தாகையால் இவனுக்கு எல்லாம் ஒன்று என்று கருத்து. (யோகீ₃) இத்தகையவனாக யாவனொரு கர்மயோகி₃ வாழ்கிருனே; (யுக்த இதி உச்யதே) அவன் யுக்தன் எனப்படுகிருன். யுக்தன்—யோக்₃யன்; (தகுதியுள்ளவன்). இங்கு ஆத்ம த₃ர்ஶனமாகிற யோக₃ாப்₄யாஸத்திற்குத் தகுதியுள்ளவனைக் குறிக்கிறது. (யுக்த:) யோக₃ாப்₄யாஸத்தைச் சொல்லும யுஜதா₄துவினமேல், அர்ஹார்த்தே₂க்தப்ரத்யயம் ஏறிக்கிடககிறதாகையால், யோக₃ாப்₄யாஸத்திற்குத் தகுதியுள்ளவன் என்கிறதாகவுமாம். 8.

ஸாது₄ஷு அபி—நல்லோர்களிடத்திலும், பாபேஷு ச—பாவிகளிடத்திலும், ஸமபு₃த்₃தி₄:—ஒத்த நினைவை உடையவன். விஶிஷ்யதே—(யோக₃ாப்₄யாஸம் செய்யத்தக்கவர்களில்) சிறப்புற்றவன.

---

பின்—மேலும். நல் நெஞ்சன்—நன்மை விரும்பி. தோழன்—நண்பன், பகைவன்—எதிரி, நயப்பு அறியான்—நன்மை (தீமை)களில் தொடர்பு இல்லாதவன். பன்னு நடுவோன்—புகழத்தக்க நடுநிலையாளன், பழி வெறுப்போன்-பழிக்கத்தக்க இயற்கை வெறுப்பை உடையவன், தன்னளவில் உற்றார்—தன்னிடம்இயற்கையன்புடையவர்கள். உயர்கருமர்—நற்கருமமே செய்யும் நல்லோர், பாவிகளால்—தீயகருமமே செய்யும் பாவிகள் ஆகிய இவர்கள் அனைவரிடத்திலும். ஒத்த மனம் பெற்றான்—ஒத்த நெஞ்சை உடையவன். மிக தக்கான்—(யோக₃ாப₄யாஸம் செய்யத்தக்கவர்களில்) மிகச் சிறந்தவன்.

---

9. "ஸமலோஷ்டாஶ்மகாஞ்சந:" [மண்கட்டி, கல், பொன் ஆகியவற்றை ஒக்க நினைப்பவன] என்று சென்ற ஶ்லோகத்தில் அசேதனப் பொருள்கள் எதிலும பயனில்லாமையாலே அவற்றை ஒக்க நினைப்பவன் என்று கூறப்பட்டது. இந்த ஶ்லோகத்தில சேதனர்களிலும் எவரிடமும் எப்பயனும் இவனுக்கு இல்லாமையாலே அவர்களையும் ஒக்க நினைப்பவனிவன என்று கூறப்படுகிறது. "உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்" [திருவாய்6-7-1] என்றும், "பூவை பைங்கிளிகள் பந்து தூதை பூம்புட்டில்கள் யாவையும்திருமால் திருநாமமே"[ஷை 6-7-3] எனறும் சேதநாசேதநங்கள் அனைத்திலும் ஏற்படக்கூடிய பயன் ஆழ்வார்க்கு பகவத்விஷயத்திலேயே ஏற்பட்டாப்போலே, இவனுக்கும் சேதநாசேதனங்கள் அனைத்திலும் ஏற்படக்கூடிய பயன் ஆத்மாவிலேயே ஏற்படுகிறது என்று விளக்கப்படுகிறது. இப்படிச் சேதநாசேநதங்களைச் சொல்லுமபோது முந்திய ஶ்லோகத்தில் அசேதனங்களைச் சொல்லி, இந்த ஶ்லோகத்தில் சேதனர்களைச் சொல்லுவதற்குக் கருத்து என்னவெனில்: விஜாதீயமான அசேதனங்களை ஒக்க நினைப்பதைக் காட்டிலும், ஸஜாதீயரான

॥भा॥ वयोविशेषानङ्गीकारेण स्वहितैषिणस्सुहृदः ; सवयसो हितैषिणो मित्राणि, अरयो निमित्ततोऽनर्थेच्छवः ; उभयहेत्वभावात्

சேதனர்களை ஒக்க நினைப்பது கடிநமாகையாலே, முந்திய ஸ்லோகத்திற் சொல்லப்பட்ட நிலையைக் காட்டிலும் முதிர்ச்சி பெற்ற நிலையிலிருப்பவன் இவன என்று காட்டுவதற்காகச் சொல்லுகிறது. இந்த ஸ்லோகத்தின கடைசியில் 'விஸிஷ்யதே' என்று கூறுவதும் இவன் யோகாப்யாஸத்தில் முதிர்ந்த நிலையில் இருப்பவன எனக் காட்டுகிறதனறோ. (ஸுஹ்ருந் மித்ரார்யுதாஸீந மத்யஸ்த த்வேஷ்ய பந்துஷு) நன்மைவிரும்பிகள், நண்பர்கள், விரோதிகள், தொடர்பில்லாதார், நடுநிலையாளர், இயற்கை வெறுப்புடையோர், இயற்கையன்புடையோர் ஆகியோரிடத்திலும். ஸுஹ்ருத், மித்ரம, பந்து என்னும் ஸப்தங்கள் நன்மை விரும்பிகளையும், அரித்வேஷ்ய பதங்கள் தீமை விருமபிகளையும், உதாஸீநமத்யஸ்த ஸப்தங்கள முற்கூறிய இரண்டு குழுவிலும் சேராதவர்களையும காட்டுகின்றன என்பது ப்ரஸித்தம். இனி, இந்த ஸப்தங்களுககுப் புநருக்தியில்லாமல் பொருள்கூறும் வழியைச் சிந்திப்போம். முதற்குழுவில் பந்துஸப்தம் தாய், தந்தை முதலான இயற்கையனபுடைய உறவினர்களைக் காட்டும் என்பதும, மித்ரஸப்தம் ஒத்த வயதுடைய நண்பர்களைக் காட்டும் எனபதும பிரஸித்தம. ஆகையால், எஞ்சிநிற்கும் 'ஸுஹ்ருத்' என்னும் பதம வயஸ்ஸில் ஏற்றத்தாழ்வைக் கணிசியாமல் நன்மைவிரும்பிகளை மாத்திரம் காட்டக்கடவது. இம்மூவரில் ஒத்த வயதையுடைய நண்பர்களுக்கு நன்மை விரும்புகையாகிற ஹிதபரத்வத்தோடு, விளையாட்டு முதலான இனிமையை விரும்பும் ப்ரியபரத்வமும் உண்டு என்பது குறிக்கொள்ளத்தக்கது. உறவினர்களிலும் தாய் முதலான சிலர்க்கு இது உண்டு. இனி, அரித்வேஷ்யர்களாகிய இரண்டாவது குழுவை ஆராய்வோம். இயற்கையனபுடையாரைக் குறிக்கும் பந்துஸப்தத்தை ஒட்டிப்படிக்கப்படும த்வேஷ்யஸப்தம் இயற்கைப பகையுடைய எதிரியைக் குறிப்பது பொருத்தம் என விளங்குகிறது. ஆகையால், எஞ்சிநிற்கும் அரிஸப்தம் ஒரு காரணத்தால் பகையுடைய எதிரியைக் குறிக்கிறது என விளங்குகிறது.

''ம்ருகமீநஸஜ்ஜநாநாம்
த்ருணஜல ஸந்தோஷவிஹிதவ்ருத்தீநாம் ।

तथाऽतिमात्रस्वप्नजागर्ये; तथा अत्यायासानायासौ च। मिताहारविहारस्य

யுறுத்துவதோடு நில்லாமல், 'யுக்த விஹாரஸ்ய' என்று மிதமாக ஸஞ்சரிப்பதையும். 'கர்மஸு யுக்தசேஷ்டஸ்ய' என்று மிதமாகத் தொழில் புரிவதையும் யோக₃த்திற்கு உபகாரகமாகக் கூறுகையாலே, இந்த ஶ்லோகத்தில் மிக அதி₄கமாக ஸஞ்சரிப்பதும், ஸஞ்சார மற்றிருப்பதும், தொழில்புரிவதும், தொழிலற்றிருப்பதும் யோக₃ விரோதி₄யாகக் காட்டப்படுவதாகக் கொள்ளவேண்டும். இத னாலேயே ப₄ாஷ்யகாரர் முதல் ஶ்லோகத்தின் ப₄ாஷ்யத்திலே 'அதிவிஹாராவிஹாரௌ ச' என்றும், 'தத₂ா அத்யாயா ஸாநாயாஸௌ ச' என்றும் அவற்றையும சேர்த்துக்கொண்டார்.

இனி, முதல் ஶ்லோகத்தால் இவ்வண்ணமாக வ்யதிரேகத்தால் கூறப்பட்ட இதே அர்த்த₂ம், இரண்டாவது ஶ்லோகத்தால் அந் வயத்தாலே கூறப்படுகிறது. (யுக்தாஹாரவிஹாரஸ்ய யோகோ₃ ப₄வதி) மிதமான ஆஹாரத்தையும், ஸஞ்சாரத்தையும் உடைய வனுக்கே யோக₃ம் கைகூடும். முன ஶ்லோகத்தில் அதிஶப்₃த₃த் திற்கு ப்ரதிகோடியாக இங்கு பிரயோகிக்கப்படுகையாலே, யுகத ஶப்₃த₃ம் இங்கு 'மிதம்' (அளவான) என்னும் அர்த்த₂த்தைக் காட்டுகிறது. 'யுக்த சேஷ்டஸ்ய' முதலானவிடங்களிலும் இப்படியே கொள்ளவேணும். உணவு உண்டவுடன், அது ஜரிப்பதற்காக அளவோடு ஸஞ்சரிக்கவேண்டும் என்று காட்டுவதற்காக ஆஹார ஶப்₃த₃த்தோடு விஹாரஶப்₃த₃த்தைச் சேர்த்துப் படிக்கையாலே, இங்கு விஹாரஶப்₃த₃ம் ஸஞ்சாரத்தைக் குறிக்கிறது. உணவு உண்டவுடன் உண்டகளைப்பினாலே சோம்பல் ஏற்படுமாகையால், அதைத் தவிர்ப்பதற்காகச் சிறிதுநேரம் விளையாடவேண்டும் என்று காட்டுவதற்காக விஹாரஶப்₃த₃த்தைப் பிரயோகி₃க்கிருன் என்று கொண்டு விஹாரஶப்₃த₃த்திற்கு 'விளையாட்டு' என்றும் பொருள் கொள்ளலாம். எப்படிக்கொண்டாலும் ஆஹாரஶப்₃ த₃த்தோடு தொடர்புடையதாகையாலே விஹாரஶப்₃த₃ம் முன் ஶ்லோகத்தில் உபலக்ஷணமுறையால் காட்டப்பட்டு. பின் ஶ்லோ கத்தில் ஆஹாரஶப்₃த₃த்தோடு த்₃வந்த்₃வஸமாஸமாகப் படிக்கப் படுகிறது என்று விளங்குகிறது. அளவோடு சாப்பிடுபவனுக்கே க்ஷேமம் ஏற்படும் என்னும் அர்த்த₂ம், "யத்₂த்₄யாத்மஸம்மிதம் அந்நம் தத₃வதி தந்ந ஹிநஸ்தி, யத்₃பூ₄யோ ஹிநஸ்தி தத். யத் கநீயோ ந தத₃வதி" [யாதொரு உணவு ஶரீரத்திற்குத் தக்கவாறு அளவோடு அமைகின்றதோ, அது அந்த ஶரீரத்தை ரக்ஷிக்கும்;

मितायासस्य मितस्वप्नावबोधस्य सकलदुःखहा—बन्धनाशनो योगः संपन्नो भवति॥१६॥१७॥

அதற்குத் தீங்கு இழைக்காது; யாதொரு உணவு ஶரீரத்தின் தேவைக்கு மேற்பட்டிருக்கிறதோ அது அந்த ஶரீரத்திற்குத் தீங்கு இழைக்கும், யாதொரு உணவு ஶரீரத்தின் தேவைக்குக் குறைவாக உள்ளதோ அது அந்த ஶரீரத்தை ரக்ஷிக்காது] என்று ஶ்ருதியில் சொல்லப்பட்டது. ஆகையால் யுக்தஶப்₃த₃ம் ஶரீரத்தின் தேவைக்கு அதிகமாகவோ, குறைவாகவோ இராமல் அதற்கேற்ற அளவோடு இருக்கையைக் குறிக்கிறது. இனி, ஶரீரத்தின தேவை தான் எவ்வளவு? என்னும் கேள்வி எழுகிறது. இதற்கு பதில்

"உத₃ரஸ்யார்த்த₄மந்நஸ்ய த்ருதீயமுத₃கஸ்ய து।
வாயோ: ஸஞ்சரணார்த்த₂ம் து சதுர்த்த₂மவஶேஷயேத்॥"

[வயிற்றின் பாதிபாகம் உணவிற்காக ஏற்பட்டது; மூன்றுவது கால்பகுதி நீருக்காக ஏற்பட்டது: வாயு ஸஞ்சரிப்பதற்கு நாலாவது கால்பகுதியைக் காலியாக விடவேண்டும்.] என்று ஸ்ம்ருதியில் கூறப்பட்டது. த்₃வந்த்₃வஸமாஸத்தின் பின்னுலிருக்கும் பதம்போலே, முன்னுலிருக்கும் பத₃த்தையும் த்₃வந்த்₃வஸமாஸத்தின் ஒவ்வொரு பதத்தோடும் அந்வயிப்பதுண்டு; அந்த ரீதியில் இந்த ஶ்லோகத்தில் யுக்த ஶப்₃த₃த்தை—ஆஹார, விஹார, ஸ்வப்ந, அவபோ₃த₄ ஶப்₃த₃ங்கள் ஒவ்வொன்ருேடும அந்வயித்துக் கொள்ளவேண்டும். (கர்மஸு யுக்தசேஷ்டஸ்ய) தனக்குரிய கருமங்களில் அளவோடு தொழில்புரிபவனுக்கு, "பரத₄ர்மோ ப₄யாவஹ:" [கீ₃தை 3-35] [பிறனுக்குரிய த₄ர்மம் ப₄யததை அளிப்பது] என்கிற ரீதியிலே பிறர்க்குரிய கார்யங்கள் தீங்கை விளைகுமாகையால் 'கர்மஸு' என்பதை 'தனக்குரிய கர்மங்கள்' என்று விஶேஷித்துக்கொள்ளவேணும். ஒரு மனிதன் ஒவ்வொரு நாளும் செய்யும் காரியங்களில ஆஹாரம, விஹாரம், தூக்கம, விழிப்பு ஆகியவற்றை எடுத்த பின்பு, ஶ்ரமததைத்தரும் ஆயாஸமெனப்படும தொழில்புரிகையே எஞ்சிநிற்கிறதாகையாலும், சேஷ்டாஶப்₃த₃ம் அதைக் குறிப்பதே உசிதமாகையாலும், சேஷ்டாஶப்₃த₃ம் தொழில்புரிகையைக் காட்டுகிறது. தனக்குரிய காரியங்களில் தொழில் புரிவதிலும் அதி₄கமோ, குறைவோ இல்லாமல் அளவோடு இருக்கவேணும் என்று கூறப்பட்டதாகிறது. (யுக்தஸ்வப்நாவபோ₃த₄ஸ்ய) மிதமான (அளவான) தூக்கத்தையும், விழிப்பையும் உடையவனுக்கு. இவ்வளவால, "அளவுக்கு

यदा विनियतं चित्तमात्मन्येवावतिष्ठते।
निस्स्पृहस्सर्वकामेभ्यो युक्त इत्युच्यते तदा ॥१८॥

18. யதா₃ விநியதம் சித்தம் ஆத்மந்யேவாவதிஷ்ட₂தே।
நி:ஸ்ப்ருஹ: ஸர்வகாமேப்₄யோ யுக்த இத்யுச்யதே ததா₃॥

யதா₃—*எந்த சமயத்தில்.* சித்தம்—*நெஞ்சானது,* ஆத்மநி ஏவ-*ஆத்மாவிலேயே,* விநியதம்-*மிகவும் ஈடுபடுத்தப்பெற்றதாய்,* அவதிஷ்ட₂தே-*அவ்வாத்மாவிலேயே நிலைநிற்கிறதோ,* ததா₃—*அந்த சமயத்தில்,* ஸர்வகாமேப்₄ய:—*எல்லா ப்ராக்ருத காமங்களினின்றும்.* நி:ஸ்ப்ருஹ:—*நீங்கப்பெற்ற ஆசையை உடையவனுன யோகி₃.* யுக்த: இதி—*யுக்தன் என்று.* உச்யதே—*கூறப்படுகிருன்.*

---

*மிஞ்சினுல் அமுதமும நஞ்சாம்" "அதி: ஸர்வத்ர வர்ஜித:" [எதிலும அதிகம் கூடாது.] என்னும முதுமொழிகளின் அநுஷ்டா₂நம் இவனுக்கு அவஶ்யம் என்றதாயிற்று. (து₃:க்க₂ஹா யோகோ₃ ப₄வதி) இந்த ஸம்ஸாரத்திலுள்ள எல்லா துக்கங்களேயும் போக்கடிக்கும் யோகம் கைகூடும். அஸங்கோசந்யாயத்தாலே, து₃:க்க₂ஶப்₃த₃ம் ஸாம்ஸாரிகமான எல்லாத் துன்பங்களேயும் காட்டுகிறது. "பிறவித்துயரற" [திருவாய் 1-7-1] "மரணம தோற்றம் வான்பிணி மூப்பென்று இவை மாய்த்தோம்" [திருவாய் 8-3-2] என்று ஆழ்வாராலும், "ஜராமரணமோக்ஷாய மாமாஶ்ரித்ய யதந்தி யே" [7-29] [கிழத்தனம், மரணம் முதலிய தோ₃ஷங்கள் நீங்குவதற்காக என்னை ஆஶ்ரயித்து எவர்கள் முயல்கிருர்களோ] என்று கீ₃தையிலும் இவனுக்கு ஸமஸாரத்திலுள்ள எல்லாத் துன்பங்களும் போக்கடிக்கப்படுகிறது என்று கூறப்பட்டதன்ரே. 'து₃:க்க₂ஹா யோக₃:' [துன்பத்தைப் போக்கும் யோக₃ம்] என்றதால், பரமாத்மாநுப₄வமாகிற பேரின்பம இவனுக்குக் கிடையாது என உணர்த்தப்படுகிறது. இவன் யோக₃ம் கைவரப்பெருதவனுகையால், 'யோக₃: து₃:க₂ஹா ப₄வதி' [இத்தகையவனுக்கு யோக₃ம துன்பத்தைப் போக்குவதாகிறது.] என்று கூட்டிப் பொருள்கொள்ளாமல். 'து₃:க்க₂ஹா யோகோ₃ ப₄வதி' [துன்பத்தைப்போக்கும் யோக₃ம் இவனுக்கு உண்டாகிறது] என்று கூட்டிப் பொருளகொள்ளப்பட்டது ஆக, இவ்வளவால யோகோ₃பகரணங்கள் அனைத்தும் விவரிக்கப்பட்டன. 16, 17.*

॥भा॥ यदा प्रयोजनविषयं चित्तमात्मन्येव विनियतम्—विशेषेण नियतं–निरतिशयप्रयोजनतया तत्रैव नियतं निश्चलमवतिष्ठते, तदा सर्वकामेभ्यो निस्स्पृहस्सन् युक्त इत्युच्यते—योगार्ह इत्युच्यते॥१८॥

16. எப்போது நெஞ்ச மினிய வுயிர்தன்னிற்
றப்பாது பூண்டு தனிநிற்கு—மப்போது
காம மனைத்திற் கழிந்தநசை யோகியெனு
நாம முடையனு நன்று.

நெஞ்சம்—*மனமானது.* இனிய உயிர் தன்னில்—*இனிதான ஆத்மஸ்வரூபத்தில்.* தப்பாது பூண்டு—*தப்பமுடியாதபடி ஈடுபடுத்தப்பெற்று,* எப்போது—*எந்த சமயத்தில்.* தனி நிற்கும்—*அதிலேயே நிலைநிற்குமோ.* அப்போது—*அந்த சமயத்தில்.* காமம் அனைத்தில் கழிந்த நசை யோகி எனும்—*எல்லா ப்ராக்ருத காமங்களினின்றும் ஆசை நீங்கிய யோகி (யுக்தன்) என்னும்.* நாமம்—*பெயரை.* நன்கு உடையனும்—*நன்கு உடையவனாகிறான்.*

18. இவ்வண்ணமாக யோகத்திற்குத் தேவையான உபகரணங்களைக் கூறியபின், அடுத்த ஶ்லோகத்தில் யோகத₃ஶையைக் காட்டப்புகுகிறவனாய், அதற்கு முந்தியதாய், ஏற்கனவே (கீ₃தை6-7, 8, 9) காட்டப்பட்டதான யோக₃யோக்₃யதஶையை இந்த ஶ்லோகத்தில் மறுபடியும் கூறுகிறான். (யதா₃ சித்தம் ஆத்மந்யேவ விநியதம்) பயனைக் கருதி நிற்கும் இயல்வுடைய நெஞ்சு எப்போது ஆத்மாவிலேயே விஶேஷமாக ஈடுபடுத்தப்பட்டதாய். சிந்திக்கும் இயல்வுடையது சித்தம். இங்கு, மற்ற பயன்களில் ஆசையற்று ஆத்மாவாகிற மிகச்சிறந்த பயனில் ஈடுபடுத்தப்படுவதாகக் கூறப்படுகிறபடியால், ப்ரகரணாநுகு₃ணமாகப் பயனைச் சிந்திக்கும் இயல்வுடையது என்று பொருள் கொள்ளப்பட்டது. ஏவகாரத்தாலே, மற்ற பயன்களில் இந்நெஞ்சுக்கு ஆசை அறுக்கப்பட்டுள்ளது எனறு உணர்த்தப்படுகிறது. (ஆத்மந்யேவ அவதிஷ்ட₂தே) ஆதமாவிலேயே நிலைநிற்கிறதோ. 'ஆத்மந்யேவ' எனபதை மத்₄யமணிந்யாயத்தாலே முன்னும் பின்னும் கூட்டிப் பொருள் கொள்ளவேண்டும். பயனைக் கருதும் இயல்வுடைய நெஞ்சாகையாலே, க்ஷுத்₃ரமான பயன்களான ஶப்₃த₃ஸ்பர்ஶாதி₃

यथा दीपो निवातस्थो नेङ्गते सोपमा स्मृता।
योगिनो यतचित्तस्य युञ्जतो योगमात्मनः॥ १९॥

19. யதா₂ தீ₃போ நிவாதஸ்தே₂ா நேங்க₃தே ஸோபமா ஸ்ம்ருதா |
யோகி₃நோ யதசித்தஸ்ய யுஞ்ஜதோ யோக₃மாத்மந: ||

யதசித்தஸ்ய—(ஶப்₃த₃ாதி₃ விஷயங்களில் நின்றும்) நிவர்த்திக்கப்பட்ட நெஞ்சை உடையவனும், யோக₃ம் யுஞ்ஜத:—ஆத்மவிஷயமான யோக₃ாப்₄யாஸத்தைச் செய்பவனுமான, யோகி₃ந:—யோகி₃யுடைய, ஆத்மந:—ஆத்மஸ்வரூபத்துக்கு, நிவாதஸ்த₂:—காற்றில்லாத இடத்திலிருக்கும், தீ₃ப:—விளக்கு, யதா₂ ந இங்க₃தே—எப்படி அசையாமலிருக்கிறதோ, ஸா—அந்நிலை, உபமா—உபமானமாக, ஸ்ம்ருதா—சொல்லப்படுகிறது.

17. வாயு விலாவிடத்து மன்னும விளக்கதுதா
னேயு சலனமறு மெவ்வாறு—தூயமன
நன்மையினிற் சேர்ந்தியலு நல்யோகு யோகிதன
தன்மையினுக் கொப்பதுவே தான்.

வாயு இலா இடதது—காற்று இல்லாத இடத்தில், மன்னும் விளக்கு அது தான—நிலைநிற்கும் விளக்கானது, ஏயு சலனம் எவ்வாறு அறும்—அதோடு பொருந்தி நிற்கும் அசைவை எப்படி விட்டிருக்குமோ, அதுவே தான்—

விஷயங்களில் ஈடுபடாமல், ஒப்பற்ற பயனான ஆத்மாவிலேயே நிலைநிற்கிறது என்று கருத்து. (ஸர்வகாமேப்₄ய: நி:ஸ்ப்ருஹ:) எல்லா க்ஷுத்₃ரவிஷயங்களில் நின்றும் நீங்கப்பெற்ற ஆசையை உடைய யோகி₃. ஶப்₃தாதி₃ விஷயங்களில் ஆசையற்றவன் என்றபடி. 'யுக்த:' என்பதே இங்கு விதி₄க்கப்படுகையால், முற்பாதியில் ஏவகாரத்தால் உணர்த்தப்பெற்றதை இங்கு அநுவதி₃க்கிறது என்று கொள்ளவேணும. (தத₃ா யுக்த: இத்யுச்யதே) அப்போது யுக்தன் என்று கூறப்படுகிறுன். "யுக்த இத்யுச்யதே யோகீ₃" [கீ₃தை 6-8] என்றவிடத்தில் கூறப்பட்ட யோக₃ாரம்ப₄த்திற்குத் தகுதிபெற்றிருக்கும் நிலையிலிருப்பவனே இங்கு மறுபடியும் கூறப்படுகிறுன் என்று விளங்குகிறது. 18.

||भा|| निवातस्थो दीपो यथा नेङ्गते — न चलति : अचलस्सप्रभस्तिष्ठति ; यतचित्तस्य — निवृत्तसकलेतरमनोवृत्ते :

அந்நிலையே. தூய மனம—(தாழ்ந்த விஷய ஸ்பர்சமின்மை யால்) பரிசுத்தமான மனத்தை உடையவனாய். நல் யோகு நன்மையினில் சேர்ந்து இயலும்—நலமுடைய ஆத்மயோக மாகிற நன்மையில சேர்ந்து அப்₄யாஸம் செய்பவனுடைய, யோகி தன தன்மையினுக்கு—யோகியினுடைய நிலைக்கு, ஒப்பு—உவமையாகும்.

19 இந்த ஶ்லோகத்தில் யோகத₃ஶை கூறப்படுகிறது. (நிவாதஸ்த₂: தீ₃ப: யதா₂ ந இங்க₃தே) காற்றில்லாத இடததி லிருக்கும விளக்கு எப்படி அசையாமலிருக்கிறதோ; அசையாமல் ஒளியுடன் விளங்குகிறதோ என்றபடி. காற்றுள்ள இடத்தி லிருந்தால அசைந்துகொண்டிருக்கும; காற்றில்லாத இடத்தி லிருக்கிறதாகையால அசையாமலிருக்கிறது. அதுபோலவே யோகி யின நெஞ்சிலும் ஶப்₃த₃ாதி₃விஷயங்களில் ஆசையாகிற காற்று அடித்துக்கொண்டிருந்தால அவன தன் ஆத்மாவில் ஸ்தி₂ரமாக ஈடுபடமுடியாது; அவ்வாசையாகிற காற்று அடிக்காத நிலை வந்தபினபு ஒளியுடன் கூடிய அசையாத விளக்குப்போலே, அறி வாகிற த₄ர்மபூ₄தஜ்ஞானத்துடன் கூடிய ஆத்மா ப்ரகாசிக்கும என்று கருத்து. 'இகி₃' தா₄து க₃தி (நடத்தல்) என்னும் பொருளையுடையதாயினும், விளக்குக்கு அது பொருந்தாதாகையால் 'அசைதல்' என்னும் பொருள் கொள்ளப்பட்டது. 'மலைபோல் அசையாமலிருக்கிறதோ' என்று சொல்லாமல், 'விளக்குப்போல் அசையாமலிருக்கிறதோ' என்று கூறியதன் கருத்து என னென்னில்: ஒளியற்ற மலைபோலன்றிக்கே, விளக்கு அசைந்தால் அதன ஒளியும் அசையும்; விளக்கு அசையாமலிருக்கும்போது அதன் ஒளியும் அசையாமலிருக்கும்; அதுபோல் ஆத்மா த₄ர்ம பூ₄தஜ்ஞான ஒளியுடன் இடைவிடாமல் பிரகாசிக்கிறது என்று கருதது. (யத சித்தஸ்ய) ஶப்₃த₃ாதி₃ விஷயங்கள் அனைத்தினின் றும தடுக்கப்பெற்ற மநோவ்ருத்திகளை உடையவனுடைய. சித்தம் என்று சிந்தை (நினைததல்) என்னும் வ்ருத்தியை உடைய நெஞ்சைச் சொன்னது மற்ற வ்ருத்திகளுக்கும் உபலக்ஷணமாய், எலலா வ்ருத்திகளுடன் கூடிய மனத்தைக் கூறுகிறது. அல்லது வ்ருத்தியில் நோக்கில்லாமல் நெஞ்சைக் குறிக்கிறது என்றுமாம்.

**योगिन : — आत्मनि योगं युञ्जत : आत्मस्वरूपस्य सोपमा ;**

அடுத்தபடி 'யோக₃ம் யுஞ்ஜத:' என்று ஆத்மயோக₃த்தைச் செய்பவன் என்று கூறுகையால், 'யதசித்தஸ்ய' என்றவிடத்தில் நெஞ்சு ஆத்மவிஷயம் தவிர்ந்த மற்ற விஷயங்களிற் செல்லாமல தடுககப்படுகிறது என்றே கொள்ளவேண்டும். உபமானத்தில் காற்றின் ஸ்த₂ானத்தில், உபமேயத்தில் இதர விஷயங்களில் ஆசை இருக்கின்றது என்று கண்டுகொள்வது. (யோக₃ம யுஞ்ஜத:) ஆத்மவிஷயத்தில யோக₃த்தைச் செய்பவனுடைய; ஆத்மாவை ஸாக்ஷாத்காரம் செய்பவனுடைய என்று கருத்து. (யோகி₃ந: ஆத்மந:) யோகி₃யினுடைய ஆத்மாவிற்கு. 'யதசித்தஸ்ய யுஞ்ஜத: யோகி₃ந:' என்றவிடங்களில் ஸமாநாதி₄கரண ஷஷ்டி₂ "யோகி₃ந: ஆத்மந:" என்றவிடத்தில் வ்யதி₄கரண ஷஷ்டி₂. (தீ₃ப: யதா₂ ந இங்க₃தே ஆத்மந: ஸா உபமா) முற்கூறியபடி விளக்கு எப்படி அசையாமலிருக்கிறதோ, அந்நிலை அவ்வாத்மாவிற்கு உவமையாகும். இதைத் திருவுள்ளத்திற் கொண்டே "விளக்கினை விதியிற்காண்பார்" [திருக்குறு 18] என்று கைவல்யநிஷ்ட₂ன் யோக₃ாப்₄யாஸவிதி₄யின்படி தன் ஸ்வரூபத்தைக் காண்பதைக் கூறும்போது, ஆத்மஸ்வரூபத்தை 'விளக்கு' என்றே நிர்தே₃ஶித்தார் — திருமங்கையாழவார். 'விளக்கு அசையாமலிருப்பது ஆத்மாவிற்கு உவமை' என்பதால் யோகி₃யின் ஶரீரம் அசையாமலிருப்பதைக் கூறுவதாகக் கொள்ளமுடியாது; "ஸமம் காயஶிரோக்₃ரீவம் த₄ாரயந் அசலம் ஸ்தி₂ரம்" [கீ₃தை 6-13] என்னும் ஶ்லோகத்திலேயே அதைக் கூறிவிட்டபடியால். மேலும், ஶரீரம் அசையாமலிருப்பது தியான நிலையிலேயே இருக்கவேண்டியதொரு நியமம்; ஸமாதி₄நிலையைக் குறிக்கும் இந்த ஶ்லோகத்தில் அதைக் குறிப்பதாகக் கொள்ளுவது பொருந்தாது; "யோகி₃யின் ஆத்மாவிற்கு அது உவமை" என்று கூறியிருப்பது பொருந்தாதாகையால், இந்திரியங்கள் சலியாமலிருப்பதை 'ந இங்க₃தே' என்பதால் குறிப்பதாகக் கொள்ளுவதும் பொருந்தாது; ஆத்மஸ்வரூபம் எப்போதுமே அசையாமலிருப்பதாகையால், ஸமாதி₄நிலையில் அதைக் குறிப்பிட்டுக் கூறுவதாகக் கொள்ளுவதும் பொருந்தாது. ஆகையால், தானே பிரகாசிக்கும ஒளியோடுகூடிய விளக்கு, காற்றில்லாதவிடத்தில் அசையாமலிருப்பதுபோல், மற்ற மநோவ்ருத்திகளெல்லாம் நீங்கப்பெற்ற

निवातस्थतया निश्चलसप्रभदीपवन्निवृत्तसकलेतरमनोवृत्तितया निश्चलो ज्ञानप्रभ आत्मा तिष्ठतीत्यर्थः ॥१९॥

---

பரிசுத்₃த₄மான ஆத்மாவாகிற விளக்கு தானே பிரகாசிக்கும் அறிவாகிற ஒளியோடு காட்சிதருகிறது என்று காட்டுவதற்காகவே, 'யோகி₃ந:' என்று கூறியபினபும், 'ஆத்மந:' என்று மறுபடி கூறப்பட்டது என்று உணரத்தக்கது.

இதற்குமேல் சில ஆக்ஷேபங்கள் எழுகின்றன:— 'ஸா ஆத்மந: உபமா' [விளக்கின் அந்நிலை ஆத்மாவுக்கு உவமை] என்னுமிடத்தில 'உபமா' ஶப்₃த₃ம உவமிக்கப்படும பொருளான த்₃ருஷ்டாந்தத்தைக் கூறுவதாகவோ, உவமித்தலாகிய செயலைக் கூறுவதாகவோ எப்படிக் கொண்டாலும், இங்கு பொருந்தாது; ஏனெனில்: 'விளக்கு எப்படி அசையாமலிருக்கிறதோ, அந்நிலை' என்று விளக்கின் அசையாமலிருக்கும் நிலையை 'ஸா' என்னும் ஶப்₃த₃த்தால் எடுத்து, அதை ஆத்மஸ்வரூபத்திற்கு த்₃ருஷ்டாந்தமாகக் கூறுவது ஒட்டாது; நிலை, நிலையையுடைய பொருளுக்கு த்₃ருஷ்டாந்தமாகாதாகையால். இந்த தோ₃ஷத்தைத் தவிர்ப்பதற்தற்காக, 'உபமா' என்று உவமித்தலாகிய செயலைக் குறிப்பதாகக் கொள்ளலாமோ என்று பார்த்தால், விளக்கு அசையாமலிருக்கும நிலை உபமிதிகரியையாகவும் மாட்டாது. மேலும், 'ஒளியுடன் கூடிய விளக்கு அசையாமலிருக்கும் நிலை' என்றது. வெறும ஆத்மஸ்வரூபத்திற்கு எப்படி த்₃ருஷ்டாந்தமாக முடியும? என்னும கேளவியும் எழுகிறது. யோகி₃யல்லாதாருடைய ஆத்மஸ்வரூபமும் அசைவதாகக் காணுமலிருக்க, யோகியின் ஆத்மஸ்வரூபம அசைவதில்லை என்று இங்கு உபதே₃ஶிப்பதற்குப் பயன் என்ன என னும் கேள்வியும் எழுகிறது. இனி, இவற்றுக்கு ஸமாதா₄னம் பின்வருமாறு:— 'உபமா' என்று த்₃ருஷடாநதமான விளக்கில் உள்ள ஸாத்₃ருஶ்யம் இங்கு கூறப்படுகிறது. 'விளககு அசையாமலிருக்கும் நிலை ஆத்மஸ்வரூபத்திற்கு ஸாத்₃ருஶ்யமாகும்' என்றபடி. 'விளக்கின் ஒளி' ஸ்தா₂னத்தில் ஆத்மாவிற்கு த₄ர்மபூ₄தஜ்ஞானம் உள்ளது. ஆகையால் ஒளியோடு கூடிய விளக்கு அதற்கு மிகப்பொருந்திய த்₃ருஷ்டாந்தமாகும. இங்கு ஆதமா அசையாமலிருக்கையாவது,— ஆத்மாவின் த₄ர்மபூ₄தஜ்ஞானத்தைப் பற்றியதேயொழிய ஸ்வரூபத்தைப் பற்றியதன்றாகையால் யோகி₃ விஷயத்தில் 'ஆத்மா அசையாமலிருக்கிறது' என்னும் உப

यत्रोपरमते चित्तं निरुद्धं योगसेवया।
यत्र चैवात्मनाऽऽत्मानं पश्यन्नात्मनि तुष्यति॥ २०॥
सुखमात्यन्तिकं यत्तद्बुद्धिग्राह्यमतीन्द्रियम्।
वेत्ति यत्र न चैवायं स्थितश्चलति तत्त्वतः॥ २१॥
यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः।
यस्मिन् स्थितो न दुःखेन गुरुणाऽपि विचाल्यते॥ २२॥
तं विद्याद्दुःखसंयोगवियोगं योगसंज्ञितम्।
स निश्चयेन योक्तव्यो योगोऽनिर्विण्णचेतसा॥ २३॥

20. யத்ரோபரமதே சித்தம் நிருத்₃த₄ம் யோக₃ஸேவயா ।
யத்ர சைவாதமநாऽऽத்மாநம் பஶ்யந்நாத்மநி துஷ்யதி ॥

21. ஸுக₂மாத்யந்திகம் யத்தத் பு₃த்₃தி₄க்₃ராஹ்யமதீந்த்₃ரியம் ।
வேத்தி யத்ர ந சைவாயம் ஸ்தி₂தஶ்சலதி தத்த்வத: ॥

22. யம லப்₃த்₄வா சாபரம் லாப₄ம் மந்யதே நாதி₄கம் தத: ।
யஸ்மிந் ஸ்தி₂தோ ந து₃:க்கே₃ந கு₃ருணாऽபி விசால்யதே ॥

23. தம் வித்₃யாத் து₃:க்க₂ஸம்யோக₃வியோக₃ம் [யோக₃ஸம்ஜ்ஞிதம் ।
ஸ நிஶ்சயேந யோக்தவ்யோ யோகோ₃ऽநிர்விண்ணசேதஸா ॥

யோக₃ஸேவயா-*யோகப் (ஆத்மஸாக்ஷாத்காரப்)பழக்கத்தாலே*, நிருத்₃த₄ம்—*(வெளிவிஷயங்களில செல்லாதபடி) தடுக்கப்பட்ட*, சித்தம்—*நெஞ்சு*, யத்ர—*எந்த யோக₃த்தில் (ஆத்மஸாக்ஷாத்காரத்தில்)*, உபரமதே—*மிகவும் ஈடுபடுகிறதோ*, யத்ர ச—*எந்த யோக₃ாப்₄யாஸ த₃ைாயில்*, ஆத்மநா—*நெஞ்சாலே*, ஆத்மாநம் பஶ்யந்—*ஆத்மாவைப்*

---

தே₃ஶம பொருந்தும். காற்றில்லாதவிடத்தில் ஒளியுடன் கூடிய விளக்கு அசையாமலிருப்பதுபோல், மற்ற எல்லா மநோவ்யாபாரங்களும் நீங்கப்பெற்றிருக்கையால், அறிவுடன்கூடிய யோகி₃யின் ஆத்மஸ்வரூபம் அசையாமலுள்ளது என்று இங்கு தாத்பர்யம. 19.

*பார்ப்பவனாய்.* ஆத்மநி ஏவ:—*ஆத்மாவிலேயே.* துஷ்யதி—*(யோகி₃) இன்புறுகிறான்.* அதீந்த்₃ரியம—*இந்திரியங்களுக்கு அப்பாற்பட்டதாகவும்.* பு₃த்₃தி₄க்₃ராஹ்யம்—*ஆத்மபு₃த்₃தி₄யினாலேயே அறியத்தக்கதாகவும்,* யத் தத்—*பிரஸித்தமானதுமான.* ஆத்யந்திகம் ஸுக₂ம்—*துன்பம் கலவாத ஆத்ம ஸாக்ஷாத்கார ஸுக₂த்தை.* யத்ர வேத்தி—*எந்த யோக₃ாப்₄யாஸத்தில் அநுப₄விக்கிறானோ.* யத்ர ஸ்தி₂த: அயம்—*எந்த யோக₃ாப்₄யாஸத்திலிருக்கும் இந்த யோகீ₃,* ததத்வத:—*அத்தன்மையிலிருந்து.* நைவ சலதி—*ஒருபோதும் நழுவுவதில்லையோ.* யம் லப்₃த்₄வா—*எந்த யோக₃த்தைப் பெற்றபின்.* அபரம் லாப₄ம்—*வேறொரு லாப₄த்தை.* தத: அதி₄கம்—*அதைக் காட்டிலும் சிறந்ததாக.* ந மந்யதே—*(யோக₃த்திலிருந்து ஓய்ந்திருக்கும் நேரத்திலும் யோகி₃) எண்ணுவதில்லையோ.* யஸ்மிந் ஸ்தி₂த:—*எந்த யோக₃த்தில் இருப்பவன் (அதிலிருந்து ஓய்ந்திருக்கும் நேரத்திலும்)* கு₃ருணா அபி து₃:க்கே₂ந—*மிகப் பெரிய துன்பத்தினாலும்,* ந விசால்யதே—*மனோவிகாரமடைவதில்லையோ,* தம்—*அதை,* து₃:க்க₂ஸம்யோக₃வியோக₃ம் — *துன்பங்களின் தொடர்புக்கு எதிர்த்தட்டாயிருப்பதாய்.* யோக₃ஸம்ஜ்ஞிதம்—*யோக₃ம் என்று பெயர்பெற்றதாக.* வித்₃யாத்—*அறியக்கடவன்.* ஸ: யோக₃:—*அத்தகைய யோக₃ம்.* நிஶ்சயேந—*(முற்கூறிய) நிஶ்சயத்தினால்,* அநிர்விண்ணசேதஸா—*உவந்த உள்ளத்தை உடைய யோகியால்.* யோக்தவ்ய:—*செய்யப்படவேண்டும்.*

---

18. நெஞ்சுதா னேதி னிருத்தமாய் யோகத்தா
லெஞ்சலிலா தென்று மினிதமரு—நெஞ்சமர்
வேதின் மனத்தாலே யினிய வுயிர்கண்டு
மீததனிற் றுனுகக்கு மிக்கு.

19. புலங்கடந்து யோகத்துப் புந்தியினாற் றோன்று(ம)
நிலங்கடந்த வின்ப நுகர்வோ—னலங்கலந்த
புன்மையிலா னந்தப் புணர்ப்பெய்தி நின்றவவன்
றன்மையினின் றுஞ்சலியா தான்.

20. யாதொன்றைப் பெற்ரு லதனில்வே ரோர்பேறு
மீதென்று பின்ருன் மிகமதியான்— போதமுடன்
மிக்ககதி நின்ருன் மிகுதுன்ப மேலிடினுந்
தக்கவதிற் பினசலியான் ருன்.

21. யோகமென்று பேராம் வியோக மதுதுனப
மாக வுறும்யோக மஃதறிவான்—யோகமது
தீங்கினறி நினற திசைப்பற்ற நெஞ்சினுற்
பாங்கொன்றி யொனறப் படும்.

**யோகத்தால்**—*யோகாப்யாஸததால்.* **நெஞ்சு தான்**—*நெஞ்சமானது.* **நிருத்தமாய்**—*எல்லா க்ஷுத்ர விஷயங்களி லும் தடுக்கப்பட்டதாய்* **எஞ்சலிலாது**—*குறைவில்லாமல்.* **ஏதின் என்றும் இனிது அமரும்**—*எந்த யோகத்தில எப் போதும் நன்கு ஈடுபடுமோ.* **நெஞ்சு அமர்வு ஏதின்**—*நெஞ்சிலுள்ள எந்த யோகத்தில்,* **மனத்தாலே**—*நெஞ்சாலே,* **இனிய உயிர் கண்டு**—*இனிதான ஆத்மாவை ஸாக்ஷாத் கரித்து.* **மீது அதனில்**—*மிகச் சிறப்புற்ற அதனிடததில்.* **தான் மிக்கு உகக்கும்**—*யோகியானவன் மிகவும் உகப்பனே.* **யோகத்து**—*எந்த யோகத்தில்,* **புலன் கடந்து**—*இந்திரியங் களுக்கு அப்பாற்பட்டதாய்.* **புந்தியினுல் தோன்றும்**—*ஆத்ம புத்தியினுல் அறியப்படுவதாய்.* **நிலம் கடந்த**—*அளவிட்டறிய நிலமல்லாததான.* **இன்பம்**—*ஸுகத்தை.* **நுகர்வோன்**—*அநு பவிக்கிருனே.* **நலம் கலந்த புன்மையிலான்**—*நன்மை சேரப் பெற்று தீமை இல்லாதவனுய்,* **அந்தப் புணர்ப்பு எய்தி நினற அவன்**—*அந்த யோகத்தை அடைந்து நின்ற அந்த யோகி.* **தன்மையினின்றும்**—*அந்நிலையிலிருந்தும்.* **சலியாதான்**—*நழுவாமலிருக்கிருனே.* **யாதொன்றை பெற்ருல்**—*யாதொரு யோகத்தைப் பெற்றுவிட்டால்.* **பின**—*யோகத்திலிருந்து ஓய்ந்த நேரத்திலும்.* **அதினில் வேரோர் பேறு**—*அதைக் காட்டிலும் வேறொரு பலனை.* **மீது என்று தான் மிக மதி யான்**—*சிறந்தது என்று தான் மிகவும் எண்ணமாட்டானே,* **போதமுடன்**—*அறிவுடன்.* **மிக்க கதி நின்ருன்**—*சிறந்த அந்த*

॥ भा ॥ योगसेवया हेतुना सर्वत्र निरुद्धं चित्तं यत्र योगे

யோகத்தில நின்றவன், பின—அதிலிருந்து ஓய்ந்த நேரத்திலும். மிகு துனபம மேலிடினும்—பெரிய துன்பத்தை நலிந்தபோதிலும். தக்க அதில் தான சலியான்—துன்புறத்தக்க அதிலும் தான விகாரமற்றிருப்பானே. அது—அந்தயோகத்தை உறும் துன்பம அது வியோகம் ஆக—நேரும் துன்பங்களுககு எதிர்ததட்டானதாகவும். யோகம் என்று பேராம்—யோகம் என்று பெயரை உடையதாகவும், அறிவான்—அறியக்கடவன. யோகம் அது—அந்த யோகம். தீங்கின்றி நின்ற திசைப்பற்ற நெஞ்சினுல்—தீமையற்று தயகக மில்லாத நெஞ்சினுல். பாங்கு ஒன்றி ஒனறப்படும்—உவந்த உள்ளத்தோடு செய்யப்படவேண்டும்.

20—23. யோக₃த்தில அதி₄கமான பற்று ஏற்படுவதற்காக, மறுபடியும யோக₃த்₃யையே ஒப்பற்ற புருஷார்த்த₂மாகக் காட்டி விளக்கப்படுகிறது இந்நாலு ஶ்லோகங்களாலும். அதில் முதல் ஶ்லோகததாலே, மற்ற விஷயங்களினினறும முழுவதும் இவன நீங்கியிருக்கும் தன்மையும, அவறறை எதிர்பாராமல் ஆத்மாவிலேயே இவன திருப்தி பெற்றிருக்கும் நிலையும் வெளியிடப் படுகினறன. (யோக₃ஸேவயா நிருத்₃த₄ம் சித்தம யத்₃ர உபரமதே) யோக₃த்தில் பழகுவதாகிற காரணத்தால் எல்லா வெளிவிஷயங்களிலும் பட்டி மேயாமல் தடுக்கப்பட்ட நெஞ்சம் எந்த யோக₃த்தில் நெருஙகி ஈடுபடுகிறதோ. 'நிருத்₃த₄ம்' என்பதற்கு, 'கைக்கொள்ளப்பட்டது' 'அழிக்கப்பட்டது' என்னும பொருள்களும் உண்டாயினும், அவை இவ்விடத்திற்குப் பொருந்தாவாகையால் 'தடுக்கப்பட்ட' என்னும் பொருந்திய பொருள் கொள்ளப்பட்டது. 'வெளிவிஷயங்களில் நின்றும் தடுக்கப்பட்ட' என்று கூறினுல், அவைகளில் ஈடுபட்ட நெஞ்சத்தைத் தடுப்பதை மாத்திரம சொல்லுவதாகக் தேறும். மேன்மேலும் அவற்றில் ஈடுபடாமல் தடுக்கப்பட்டதையும் காட்டுவதற்காக 'அவற்றில் ஈடுபடாமலே தடுக்கபபட்ட' என்று பொருள் கூறப்பட்டது. 'யோக₃ஸேவயா நிருத்₃த₄ம் யத்ர உபரமதே' [யோக₃ஸேவையால் தடுக்கப் பட்ட நெஞ்சு எதில் ஈடுபடுகிறதோ] என்று கூறினுல், யோக₃ம் வேறு, நெஞ்சு ஈடுபடும் விஷயம (யதர ஶப்₃த₃த்தினுல் காட்டப்

படுவது) வேறு என்றும் தோன்றலாமாயினும், 'யத்ர' ஶப்₃த₃ங்களுக்கு ப்ரதிஸம்ப₃ந்தி₄யைக் கூறும்போது, மேலே நாலாவது ஶ்லோகத்தில் 'தம் யோக₃ஸம்ஜ்ஞிதம்' [யோக₃ம் எனப்படுவதாக அதை] என்று கூறுகையால், 'யத்ர' முதலான எல்லா யச்ச₂ப்₃த₃ங்களாலும் யோக₃மே கூறப்படுவதாக விளங்குகையால், 'எந்த யோகத்தில் ஈடுபடுகிறதோ' என்று பொருள் கொள்ளப்பட்டது. 'யத்தத₃ோர் நித்யஸம்ப₃ந்த₄:' என்னும் நியாயத்தின்படி இப்படிக் கொள்ளவேண்டியிருக்க, இப்படிக் கொள்ளாமல், சில யச்ச₂ப்₃த₃ங்களை யோகா₃பரமாகவும், யத்ரஶப்₃த₃ங்களை 'யஸ்மிந்காலே' [எந்தக் காலத்தில] என்றும விரூபமாக ஶங்கரர் முதலானோர் பொருள் கொண்டது பொருந்தாது. (யத்ர உபரமதே) எந்த யோக₃த்தில, 'இது மிகவும் ஸுக₂மானது' என்னும் எண்ணத்துடன் ஈடுபடுகிறதோ. 'உபரமதே' என்பதற்குக் கைவாங்குகிறது என்னும் பொருள் பிரஸித்₃த₄மாயினும, ப்ரகரணத்திற்கு அது பொருந்தாது; 'எது ஸித்₃தி₄த்தவளவில் மற்றவைகளிலிருந்து கைவாங்குகிறதோ' என்று பொருள்கொள்வதில், 'மற்றவைகளிலிருந்து' என்னும் பத₃த்தை அத்₄யாஹாரம செய்து கொள்ளவேண்டியுள்ளது. மேலும், 'நிருத்₃த₄ம்' [(இதர விஷயங்களில் பட்டிமேயாமல்) தடுக்கப்பட்ட (நெஞ்சு)] என்று சொன்னதோடு புநருக்தியும் ஏற்படுகிறது. ஆகையால், உபஸர்க்க₃ங்கள் பல அர்த்த₂ங்களைக் காட்டக் கூடியவையாகையால், 'உப' என்னும உபஸர்க்க₃த்தோடு கூடிய 'ரமதே' என்னும் பதத்திற்கு 'மிகவும் ஈடுபடுகிறதோ' என்றே இங்கு பொருள் தேறும. 'மிகவும் ஸுக₂மானது இது' என்னும் எண்ணத்தால், மிகவும் ஈடுபடுகிறது என்று கருத்து. அன்றிகே, 'உப-ஸமீபே' என்று 'உப' என்னும் உபஸர்க்க₃த்திற்கு 'ஸமீபம்' என்னும் பொருள் பிரஸித்₃த₄மாகையால், 'ஸமீபத்தில் ஈடுபடுகிறது' என்று ஶப்₃தா₃ர்த்த₂ம கொண்டு, 'இது மிகவும் ஸுக₂மானது' என்னும எண்ணத்தாலே மிக நெருங்கி ஈடுபடுவதாகக் கருத்துரைக்கவுமாம. ஆக, முதல் ஶ்லோகத்தின் முற்பாதியாலே, மனம் இதர விஷயங்களில் பட்டிமேயாதபடி முழுவதும் தடுக்கப்பட்டமை கூறப்பட்டது. இனி, பிற்பாதியால், அவ்விஷயங்களை எதிர்பாராமல், ஆத்மாவிலேயே ஈடுபட்டிருக்கும்படி விளக்கப்படுகிறது. (யத்ர ச) எந்த யோக₃த்தில. (ஆத்மநா) முற்கூறிய நெஞ்சால்

आत्मना — मनसा आत्मानं पश्यन् अन्यनिरपेक्षमात्मन्येव तुष्यति, यत्तदतीन्द्रियमात्मबुद्ध्येकग्राह्यमात्यन्तिकं सुखम्, यत्र च योगे वेत्ति— अनुभवति, यत्र च योगे स्थितः सुखातिरेकेण तत्त्वतस्तद्भावान्न चलति,

---

(ஆத்மாநம் பஶ்யந்) தன் ஆத்மஸ்வரூபத்தைக் காண்கின்றவனாய். (ஆத்மந்யேவதுஷ்யதி) அவ்வாத்ம ஸ்வரூபத்திலேயே யோகி ஈடுபடுகிறான். 'ஏவ'காரத்தினாலும், தோஷஶப்$_3$த$_3$த்தாலும் முன் அநுப$_4$வித்த இதர விஷயங்களை எதிர்பாராமல், அவற்றைக் காட்டிலும சிறப்புற்ற ஆதமஸ்வரூபத்திலேயே ஈடுபட்டிருக்கிறபடி காட்டப்படுகிறது. இசசிறப்பைக் கருதியே 'யத்ர சைவ' என்ற விடத்தில் உள்ள ஏவகாரம் 'ஆத்மந்யேவ' என்று கூட்டிப் பொருள்கொள்ளப்பட்டது. 'யத்ர சைவ' [எந்த யோகத்திலேயே] என்று உள்ளவிடத்திலேயே ஏவகாரததை வைத்துப் பொருள் கொள்வதில் பயன் ஒன்றும இல்லையன்றோ அன்றிகே. 'ஆத்மாநம் பஶ்யந் துஷ்யதி' [ஆத்மாவைக் கண்டு இன்புறுகிறான] என்றாலே போதுமாயிருக்க, அதிகப்படியாக 'ஆதமநி' என்று பதம இட்டது மற்ற விஷயங்களை எதிர்பாராமலே ஆத்மாவில ஈடுபடுகின்றமையைக காட்டுவதற்காகவுமாம. 'ஆத்மநி பரமாத மாநம பஶ்யந் என்று ஜீவாத்மாவில பரமாத்மாவைக் காண்பதைக் கூறுவதாகச் சிலர் பொருள் உரைத்தது ஜீவாத்மப்ரகரணத்திற்கு ஒட்டாதாகையால், அநாதரிக்கத்தக்கது. ஆக, முதல் ஶ்லோகத் தால் நெஞ்சு இதர விஷயங்களில பட்டிமேயாமல் முழுவதும தடுக்கப்பட்டமைக்கும், அவ்விஷயங்களை எதிர்பாராமல் ஆதமா விலேயே ஈடுபட்டிருக்கும்படியும சொல்லிற்றாயிற்று.

இனி, இரண்டாவது ஶ்லோகததாலே, ஆத்மஸ்வரூபஸுக$_2$ாநுப$_4$வமும, அது இயல்வாகவே ஏற்படுவதால் தடைசெய்யமுடியா தது என்பதும கூறப்படுகிறது. (அதீந்த்$_3$ரியம்) இந்திரியங் களுக்கு அப்பாற்பட்டதாய். (பு$_3$த்$_3$தி$_4$க்$_3$ராஹ்யம) ஆத்யபு$_3$த்$_3$தி$_4$ யினாலேயே அறியத்தக்கதாய். இந்திரியங்களுக்கு அப்பாற்பட்டது என்று கூறிவிட்டபடியால், இந்திரியங்களைத் தவிர அறிவதில் வல்லதான ஆத்மபு$_3$த்$_3$தி$_4$யினாலே அறியத்தக்கது என்று பொருள் கொள்ளப்பட்டது. ஆதமஸுக$_2$விஷயத்தில இது உசிதமாகவும் உள்ளது. (ஆத்யந்திகம்) மறுபடியும் துனபம் கலவாதது.

(யத்ஸுகம் தத் யத்ர வேத்தி) முற்கூறிய பெருமைகளை உடையதாக உள்ள யாதொரு ஸுகத்தை எந்த யோகாப்யாஸத்தில் அநுபவிக்கிறானோ என்று கூட்டிப் பொருள் கொள்ளலாம். அன்றிக்கே, 'யத்தத்' என்னும் பதங்கள் ஒன்று சேர்ந்து 'அப்படி ப்ரஸித்தி பெற்ற' என்று பொருள்பட்டு. இவ்வாத்மஸுகம ஶாஸ்த்ரங்களிலும், யோகிகளின் அநுபவத்திலும் ப்ரஸித்தி பெற்றிருக்கின்றமையைக் காட்டுகிறதாகவுமாம். இப்படி 'யத்தத்' என்பதை இரு வகையாகக்கூட்டிப் பொருளகொள்ளலாம என்பதை அறியாத சிலர் 'யத்தத்' என்பதை 'யத்ர' என்று திருத்திப்படிக்கிறார்கள். அது அவஶ்யமற்றது. "வேத்தி யத்ர" என்பதில் யத்ர ஶப்தம் மத்யமணி ந்யாயத்தாலே முன்னும் பின்னும் அந்வயிக்கும். (யத்ர வேத்தி) எந்த யோகாப்யாஸத்தில் அநுபவிக்கிறானோ. 'மோக்ஷதசையில் அநுபவிக்கப்படும் அவ்வாத்மஸுகத்தை எந்த யோகாப்யாஸதசையில் அறிகிறானோ' என்று பொருள்கொளவது யோகாப்யாஸதசையின் சிறப்பைக்காட்டாதாகையால, 'வேத்தி' என்றதற்கு 'அநுபவிக்கிறானோ' என்று பொருள் கொள்ளப்பட்டது. 'ஆத்மநி துஷ்யதி' என்று முதல் ஶ்லோகத்திலும "யத்தத் ஸுகம் வேத்தி" என்று இவ்விரண்டாம் ஶ்லோகத்திலும ஆத்மாநுபவம் கூறப்பட்டதாகிலும், முதல ஶ்லோகத்தில் மற்ற விஷயஸுகங்களை எதிர்பாராமலிருக்கையில் நோக்காகையாலும், இங்கு ஸ்வரூபஸுகாநுபவத்தில நோக்காகையாலும புநருக்தியில்லை. இனி, இவ்விரண்டாம் ஶ்லோகத்தின பிற்பகுதியாலே இந்த யோகாப்யாஸதசையை அடைந்தபின் இவன் அதினின்றும் நழுவமாட்டான என்று கூறப்படுகிறது.—(யத்ர ஸ்திதஶ்ச அயம் தத்த்வத: நைவ சலதி) எந்த யோகாப்யாஸ நிலையில் இருக்கும்போது இவன் அந்நிலையிலிருந்து ஒருபோதும் நழுவமாட்டானோ. 'உபரமதே' என்றவிடத்தில் கூறியபடி இது 'தலைசிறந்த ஸுகம்' என்று அறிகிறானாகையால், இதிலிருந்து நழுவமாட்டான் என்று கருத்து. யோகதசையிலிருக்கும போது மிகுந்த ஸுகம் ஏற்படுகிறதாகையால், இயலபாகவே இவன் நீண்டகாலம் அந்நிலையைக் கைவிடமாட்டான என்று சொல்ல வேண்டியது உசிதமாகையாலும் இப்ரகரணத்திற்கு அவஶ்யாபேக்ஷிதமாகையாலும் 'தத்த்வத:' என்னும் பதத்திற்கு 'அந்நிலையிலிருந்து' என்று பொருள் கொள்ளப்பட்டது. இக்காரணத்தாலேயே 'தத்வத: ந சலதி என்பதற்கு ப்ராமாணிகார்த்தத்திலிருந்து நழுவுவதில்லை' என்றும், 'நன்றாக நழுவுவதில்லை என்றும் பொருள்கொள்

यं योगं लब्ध्वा योगाद्विरतस्तमेव काङ्क्षमाणो नापरं लाभं (ततः अधिकं?) मन्यते, यस्मिंश्च योगे स्थितो विरतोऽपि गुणवत्पुत्रवियोगादिना गुरुणाऽपि

---

வது பொருந்தாது. ஆக, இதர விஷயங்களிற் செல்லாதபடி தடுக்கப்பட்டமையும். அவற்றை எதிர்பாராமையும் முதல் ஶ்லோகத்தாலும ஆத்மஸ்வரூபஸாக்ஷாநுபவமும், இயல்பாகவே ஏற்படும அது தடைபட்டுவிடாது என்பதும இரண்டாம் ஶ்லோகத்தாலும கூறபபட்டது.

இனி, மூன்ருவது ஶ்லோகத்தாலே, இந்த யோகாப்யாஸத்தி லிருந்து ஓய்ந்துநிற்கும் காலத்திலும், மிகப்பெரிய லாபநஷ்டங்க ளாலும், இவன ஆத்மஸாக்ஷாத்திலிருந்து அசைவிக்கப்படுவதில்லே என்று கூறப்படுகிறது. (யம் லப்த்வா) எந்த யோகநிலேயைப் பெற்றபின். (அபரம லாபம் தத: அதிகம ந மந்யதே) அதிலிருந்து ஓய்ந்திருக்கும் நேரத்தில் அடையும் மற்ற லாபங்களேயும அவ் வாத்மாநுபவத்தைக்காட்டிலும மேலானவையாக நிலேப்ப தில்லேயோ. யோகநிலேயிலிருக்குமபோது வேறு லாபங்களே அறிய வும் பரஸக்தியிலலாமையால், இது யோகாப்யாஸத்திலிருநது ஓய்ந திருக்குமபோது ஏற்படும் லாபங்களேக் குறிக்கிறது எனறு விளஙகு கிறது. இநத ஶ்லோகததின பிற்பாதியில கூறப்படும் பெருந்துகக்த திற்கும இந்த ந்யாயம பொருந்தும், (யஸ்மிந் ஸ்திதக:) எந்த யோகத்தில் இருப்பவன (குருணு அபி து:க்கேந ந விசாலயதே) (அதிலிருந்து ஓய்ந்திருக்கும் நேரததிலும்) குணமுடைய புத்திரனின் மரணம் போன்ற மிகப்பெரிய துனபத்தாலும மநோவிகாரமஅடைவ தில்லேயோ. "புத்ரஜந்மவிபத்திப்யாம் ந பரம் ஸுகது:க்கயோ:" [புத்திரன் பிறப்பதற்கு மேலான ஸுகமும கிடையாது; அவனே இழப்பதற்கு மேலான துனபமும கிடையாது] எனறு கூறப்படுகிற தனரே, (ந விசால்யதே) யோகத்திற்குத் தடையான வருத்தத்தை அடைவதிலலேயோ எனறு கருத்து. இததால் யோகநிலேயிலிருந்து ஓய்ந்திருக்கும் காலத்திலும இவன ஆத்மாநுபவததையே பரம ப்ராப்யமாகக்கொண்டிருக்கிருனைகயால், மிகப்பெரிய லாபநஷ் டங்களும் இவனே ஆத்மஸாக்ஷாத்திலிந்து அசையச்செய்யமாட்டா எனறு மூனருவது ஶ்லோகத்தில் கூறப்பட்டதாயிற்று.

இனி நாலாவது ஶ்லோகத்தால் அந்த யோகத்தின அஸாதா ரணுகாரம் கூறப்பட்டு, அதைச் செய்யவேண்டிய ப்ரகாரம காட்டப்

दुःखेन न विचाल्यते, तं दुःखसंयोगवियोगं—दुःखसंयोगप्रत्यनीकाकारं योगशब्दाभिधेयं विद्यात्; स एवंरूपो योग इत्यारम्भदशायां निश्चयेनानिर्विण्णचेतसा—हृष्टचेतसा योगो योक्तव्यः॥ २०—२३॥

---

படுகிறது. (தம்) அந்த யோக₃ாப₄்யாஸ நிலையை. முன் ஶ்லோகங்களிலுள்ள யச்ச₂ப்₃த₃ங்களும, யத்ரஶப்₃த₃ங்களும் இதோடு அந்வயிக்கின்றன. (து:கஸ₂ம்யோக₃வியோக₃ம்) துன்பங்களின் தொடர்புக்கு எதிர்த்தட்டாயிருப்பதாய். 'து:க்₂ஸம்யோக₃ஸ்ய வியோக₃:—அப₄ாவ: யத்ர'' [துன்பங்களின தொடர்பின பிரிவாகிற அதன் இன்மை எந்த நிலையில் ஏற்படுகிறதோ அது] என வ்யுத்பத்தி. து₃:க்க₂ஸம்யோக₃த்தின அப₄ாவம (இன்மை) மற்ருெரு உள்ள பொருளேயாகவேண்டுமாகையால். துன்பங்களின தொடர்புக்கு எதிர்தட்டாயிருப்பது என்று இங்கு கருத்து உரைக்கப்பட்டது. அன்றிக்கே, ''வியுஜ்யுதே அநேந இதி வியோக₃'' என்னும் வ்யுத்பத்தியால் வியோக₃ஶப்₃த₃ம் வியோக₃ஹேதுவைக் குறிக்கிறதாகையால். 'து₃:க்க₂ஸம்யோக₃ வியோக₃ம்' என்றது துன்பங்களின தொடர்பின அழிவுக்குக்காரணமாயிருப்பது என்று பொருள்படுகிறதாகவுமாம். இது இந்த யோக₃த்திற்குரிய அஸாத₄ாரணாகாரம (தனிப்பெருமை). (யோக₃ஸம்ஜ்ஞிதம் வித்₃யாத்) இதையே யோக₃ம் எனப்படுவதாக அறியக்கடவன். (ஸ யோக₃:) இப்படி மிகச்சிறந்த பயனுயிருக்கும் அந்த யோக₃ாப்₄யாஸம, (நிஶ்சயேந) 'இது மிகச் சிறந்த பயனுயிருப்பது' என்னும் நிஶ்சயத்தினுல். மேலே 'யோகதவ்ய:' [செய்யத்தக்கது] என்று படிக்கிறபடியால், யோக₃ாரம்ப₄ த₃ஶையிலிருந்தே இந்த நிஶ்சயம இவனுக்கு அவஶ்யமானது என்று உணர்த்தப்படுகிறது. (அநிர்விண்ணசேதஸா) உகந்த உள்ளத்தை உடையவனுல்; 'இது மிகச்சிறந்த ப₂லன்' என்னும் நிஶ்சயமிருப்பதினுல் இவன் யோக₃ாப்₄யாஸம் செய்யும்போது மிகவும உகந்த உள்ளத்தை உடையவனுயிருக்கிருன் என்று கருத்து. இச்சிறந்த கருத்தைத்தருகையால் 'நிஶ்சயேந யோக்தவ்ய:' என்ற பொருளற்ற அந்வயம் அநாதரிக்கப்பட்டு 'நிஶ்சயேந அநிர்விண்ண சேதஸா' என்று கூட்டிப் பொருள் கொள்ளப்பட்டது. 'நிர்விண்ண சேதஸா' என்று பத₃ம் பிரிததால், ஸம்ஸாரததில் அல்லது தாபத்ரயத்தில (வருந்திய மனத்தை உடையவனுல்) என்று ஒரு பத₃த்தை வருவித்துப் பொருள்கொள்ளவேண்டியிருக்கிறது. அந்த க்லேஶமில்லாமலிருப்பதற்காகவும், 'நிஶ்சயேந' என்னும்

सङ्कल्पप्रभवान्कामांस्त्यक्त्वा सर्वानशेषतः।
मनसैवेन्द्रियग्रामं विनियम्य समन्ततः॥ २४॥

शनैश्शनैरुपरमेद्बुद्ध्या धृतिगृहीतया।
आत्मसंस्थं मनः कृत्वा न किंचिदपि चिन्तयेत्॥ २५॥

24. ஸங்கல்பப்ரப₄வாந் காமாம்ஸ்த்யக்த்வா ஸர்வாநஶேஷத:।
மநஸைவேந்த்₃ரியக்₃ராமம் விநியம்ய ஸமந்தத:॥

25. ஶநை: ஶநைருபரமேத் பு₃த்₃த்₄யா த்₄ருதிக்₃ருஹீதயா।
ஆத்மஸம்ஸ்த₂ம் மந: க்ருத்வா ந கிஞ்சித₃பி சிந்தயேத்॥

---

ஹேதுவுக்குப் பொருந்தியிருப்பதற்காகவும் 'அநிர்விண்ணசேதஸா' என்று பத₃ம் பிரித்துப் பொருள் கொள்ளப்பட்டது. இங்கு அநிர் விண்ணஶப்₃த₃த்தில 'நஞ்' விரோதி₄யைச் சொல்லுவதாகையாலே நிர்வேத₃த்திற்கு எதிர்த்தட்டான ஹர்ஷத்தை (ஆனந்த₃த்தை) உடையவனாலே என்று பொருள் கொள்ளவேணும். 'மநஸா க்லிஶ்யமாநஸ்து ஸமாத₄ாநம ச காமயேத் । அநிர்வேத₃ம் முநிர் கு₃ச்ச₂ந் குர்யாதே₃வ ஆத்மநோ ஹிதம் ॥' [ஸம்ஸாரதாபங்களால் மனத்தில் கிலேஶமடைந்தவன மனஸ்ஸமாத₄ானத்தை விரும்பவேண்டும். அதற்காக நிர்வேத₃த்தின் எதிர்த்தட்டான ஹர்ஷத்தை யோகி₃ யானவன் அடைந்து, ஆத்மாவுககு நன்மையைச் செய்ய வேண்டும்] என்று அநிர்வேத₃ஶப்₃த₃ம் ஹர்ஷப்பொருளிலே பிரயோகி₃க்கப்படுகிறதன்றோ. ஸம்ஸாரத்தில் வைராக்₃யம ஏற் படுவதற்கு உறுப்பான நிர்வேத₃ம் யோகி₃கககு அவஶ்யம் வேண்டியதாகையாலே, இங்கு அதன இன்மையை அநிர்விண்ண ஶப்₃த₃த்தால் குறிப்பதாகக் கொளவது பொருந்தாது. ஆகையால் இங்கு வருத்தத்திற்கு எதிர்த்தட்டான ஹர்ஷமே அநிர்வேத₃ ஶப்₃தா₃ர்த்த₂மாகும். (யோக₃: யோக்தவ்ய:) யோக₃ம செய்யப்பட வேண்டும என்றபடி.

ஆக, இந்த நாலு ஶ்லோகங்களாலும யோகா₃ப்₄யாஸம் மிகச் சிறந்த புருஷார்த்த₂மாக நிரூபிக்கப்பட்டதாயிற்று. 20—23.

**ஸங்கல்ப ப்ரப₄வாந்**—*தன் மமகாரத்தால் ஏற்படும்,* **ஸர்வாந் காமாந்**—*எல்லா விரும்பத்தக்க பொருள்களையும்.* **அஶேஷத: (ச) மநஸா ஏவ தயக்த்வா**—*அடியோடு மனத்தாலேயே ஸ்வரூபத்யாக₃ம் செய்தும்.* **ஸமந்தத:**—*எல்லா விஷயங்களினின்றும்.* **இந்த்₃ரியக்₃ராமம்**—*இந்திரிய ஸமூஹத்தை* **விநியம்ய**—*மிகவும் திருப்பி,* **ஶநை: ஶநை:**—*மெள்ள மெள்ள,* **த்₄ருதிக்₃ருஹீதயா**—*தை₄ர்யத்திஞல் நிலைநிறுத்தப்பட்ட.* **பு₃த்₃த்₄யா**—*அறிவிஞலே.* **உபரமேத்**—*(ஆத்மாவைத் தவிர்ந்த மற்ற விஷயங்களினின்றும்) கைவாங்கக்கடவன்;* **ஆத்ம ஸம்ஸ்த₂ம்**—*ஆத்மாவிலேயே இருப்பதாக.* **மந:**—*மனத்தை.* **க்ருத்வா**—*செய்து.* **கிஞ்சித₃பி**—*ஆத்மாவைத் தவிர்ந்த எவ்விஷயத்தையும்.* **ந சிந்தயேத்**—*சிந்திக்கக்கடவனல்லன்.*

---

**22. தன்னிலாங் காமங்க டானெல்லா நெஞ்சால்விட்**
**டன்ன புலனனைந்து மான்றடக்கி—மன்னுநிலைப்**
**புந்தியினின மெள்ளமனம் பூணடாங் குயிர்மன்னச்**
**சிந்தியான் வேறென்றுஞ் சேர்ந்து.**

**தன்னில் ஆம் காமங்கள் தான் எல்லாம்**—*தன் மமகாரத்தால் ஏற்படும் எல்லா விரும்பத்தக்க விஷயங்களையும்.* **நெஞ்சால் விட்டு**—*(அடியோடு) மனத்தால் கைவிட்டு.* **அன்ன புலன் ஐந்தும**—*விஷயங்களில் பட்டிமேய்வதை இயல்வாகக்கொண்ட ஐந்து இந்திரியங்களையும்.* **ஆன்று அடக்கி**—*(எல்லா விஷயங்களினினறும்) நன்கு அடக்கி,* **மெள்ள**—*சிறிதுசிறிதாக.* **மன்னு நிலைப் புந்தியினின்**—*சலனமிலலாத அறிவிஞலே.* **உயிர் மன்ன மனம் பூண்டு**—*ஆத்மாவிலேயே இருப்பதாக மனத்தைச்செய்து.* **வேறு ஒனறும்**—*ஆத்மாவைத் தவிர்ந்த வேறு எவ்விஷயத்திலும்.* **சேர்ந்து சிந்தியான்** — *மனத்தை ஈடுபடுத்தி எண்ணக்கடவனல்லன்.*

॥ भा ॥ स्पर्शजास्सङ्कल्पजाश्चेति द्विविधाः कामाः, स्पर्शजाः— शीतोष्णादयः, सङ्कल्पजाः—पुत्रक्षेत्रादयः, तत्र सङ्कल्पप्रभवाः स्वरूपेणैव त्यक्तुं शक्याः, तान्सर्वान्मनसैव तदनन्वयानुसन्धानेन त्यक्त्वा

---

24—25. யோகா₃ப்₄யாஸத்திற்கு உறுப்பானவையாக முன்னமே ஆங்காங்கு வெளியிடப்பட்டவையான மமகாரபரித்யாக₃ம முதலானவை அனைத்தையும் எளிதில் உணர்வதற்காகவும் செயற்கெளியவை என்று காட்டுவதற்காகவும இதுமுதல் நாலு ஶ்லோகங்களால் சேர்த்துக்கூறி அவை யோக₃த₃ஶையில் முடிவுறுகின்றன என்று காட்டப்படுகிறது. (ஸங்கல்பப்ரப₄வாந் காமாந் ஸர்வாந் அஶேஷத· ச மநஸைவ த்யக்த்வா) தன் அபி₄மானத்தால் (மமகாரத்தால்) ஏறபடும எல்லா விரும்பத்தக்க பொருளகளையும் அடியோடு மனத்தாலேயே கைவிட்டு. இவ்வுலகில் காமங்கள் எனப்படும் விருமபத்தக்க பொருளகள ஸ்பர்ஶஜங்கள (ஸ்பர்ஶத்தால் உண்டாமவை) என்றும, ஸங்கலபஜங்கள் (மமகாரத்தால் உண்டாமவை) எனறும இருவகைபபடும. குளிர் உஷ்ணம் அணைத்தல் அடித்தல முதலானவை ஸ்பர்ஶஜங்களாகும். "மாத்ராஸ்பர்ஶாஸ்து கௌந்தேய ஶீதோஷ்ணஸுக₂ து₃:க₂த₃ா." (2—14) "யே ஹி ஸம்ஸ்பர்ஶஜா போ₄கா₃:" (5—22) முதலானவிடங்களில் அவை காட்டப்பட்டன. ஸங்கல்பமாகிற மமகாரத்தால் ஏற்படும் காமஙகள் (விரும்பத்தக்க பொருள்கள்) ஆவன—பெண்டுபிள்ளைகள், மாடு, மனை, வீடு, நிலம் முதலியவைகள். இவ்விரண்டுவகைக் காமங்களில் ஸங்கல்பஜங்கள ஸ்வரூபத்யாக₃மே செய்ய உரியவை. அவை அனைத்தையும, எந்த மனம அவற்றில் மமகாரம் வைத்ததோ, அந்த மனத்தாலேயே 'இவை கர்மத்தால ஏற்படுமவையேயொழிய நம்முடையவையல்ல' என்னும் அனுஸந்த₄ானத்தைச் செய்வதன்மூலம் கைவிடவேணும் எனறு கருதது. 'ஸங்கல்பப்ரப₄வ காமம்' என்றதால் மற்றொரு வகைக் காமமானஸ்பர்ஶஜங்களும்உணர்த்தப்படுகையாலும், அவற்றைக்கைவிடுவதையும் இங்கு சொல்லவேண்டியது அவஶ்யமாகையாலும்'அஶேஷதஶ்ச த்யக்த்வா'என்று சஶப்₃த₃த்தைச் சேர்த்துக்கொண்டு,அடியோடு கைவிடமுடியாத ஸ்பர்ஶஜகாமங்களையும் உணர்த்துவதாகக்கொள்ளவேணும். "ந ப்ரஹ்ருஷ்யேத்"(5—20) எனனும ஶ்லோகத்தில் கூறிய ரீதியில் தவிர்க்கமுடியாதபடி வந்தடையும் ஶீதோஷ்ணம முதலானவற்றை அடியோடு தள்ளமுடியாதாயினும, அவற்றால் ஏற்படும் இன்பதுன்பஙகளை விலக்கியிருக்கவேணும்

स्पर्शजेष्ववर्जनीयेषु तन्निमित्तहर्षोद्वेगौ त्यक्त्वा, समन्ततः सर्वस्माद्विषयात्सर्वमिन्द्रियग्रामं विनियम्य शनैश्शनैर्धृतिगृहीतया—विवेकविषयया बुद्ध्या सर्वस्मादात्मव्यतिरिक्तादुपरम्य आत्मसंस्थं मनः कृत्वा न किञ्चिदपि चिन्तयेत् ॥ २४ ॥ २५ ॥

---

என்று கருதது. இப்படி ஸ்பர்ஶஜ காமங்களேயும இங்கு சேர்த்துக கொள்ளாவிடில் 'அஶேஷத:' என்னும் பதமும் வீணானதாகும. 'இந்த்₃ரியக்₃ராமம்' என்று எல்லா இந்த்₃ரியங்களேயும் கூறிவிட்டபடியால், 'அஶேஷத:' என்ற பதை இந்த்₃ரிய ஶப்₃த₃நதோடும அந்வயிக்க முடியாது. ஆகையால் சகாரத்தைச் சேர்ததுககொண்டு இங்கு அவஶ்யம் சொல்லவேண்டிய ஸ்பர்ஶஜ காமத்யாக₃ததையும அநுஸந்திக்கவேண்டும். (ஸமந்தத: இந்த்₃ரியக்₃ராமம விநியம்ய) எல்லா க்ஷுத்₃ரவிஷயங்களினின்றும் இந்த்₃ரியஸமூஹத்தை அடக்கி. "ஸமம் தத:' என்று பத₃ம் பிரித்துப் பொருள் கொளவதில் ஒரு ஸ்வாரஸ்யமும் இல்லாமையால், 'ஸமந்தத:' என்று ஒரே பதமாகக்கொண்டு, "எல்லா க்ஷுத்₃ர விஷயங்களினின்றும்" என்று பொருள் கொள்ளப்பட்டது. (ஶநை: ஶநை: த்₄ருதிக்₃ருஹீதயா பு₃த்₃த்₄யா உபரமேத்) 'இவ்விஷயங்கள் ஆத்மாவோடு தொடர்பற்றவை' என்னும் விவேகத்திலுலே மெள்ள மெள்ளச் சலனமற்றதான அறிவினுலே, ஆத்மாவைத் தவிர்ந்த மற்ற விஷயங்களினின்றும் கைவாங்கக்கடவன. (த்₄ருதிக்₃ருஹீதயா பு₃த்₃த்₄யா) தைர்₄யத்திலுல் நிலைநிறுத்தப்பட்ட அறிவாலே. "விகாரஹேதௌ ஸதி விக்ரியந்தே யேஷாம் ந சேதாம்ஸி த ஏவ தீ₄ரா:" [விகாரமடையக் காரணமிருக்கும்போது எவர்களுடைய மனங்கள் விகாரமடைவதில்லேயோ, அவர்களே தீ₄ரர்கள்] என்கிற ரீதியிலே விகாரமாகிற சலனமற்றிருக்கும அறிவாலே என்றபடி. இப்படிச் சலனமற்றிருக்கைக்குக் காரணம் முற்கூறிய விவேகமேயாகும். (உபரமேத்) வெளிவிஷயங்களைப பெறுவதற்காக மனத்திலுல் செய்யும முயற்சிகளேயும் கைவிடக் கடவன என்று கருதது. (ஆத்மஸம்ஸ்த₂ம் மந: க்ருத்வா) ஆத்மாவில் ஈடுபட்டதாக மனத்தைச் செய்து. இதர விஷயங்களிலிருந்து கைவாங்கக் கைவாங்க மனம் ஆத்மாவில் ஈடுபடும் என்று கருத்து. (ந கிஞ்சித₃பி சிந்தயேத்) அதற்குப்பின் ஆத்மாவைத் தவிர்நத அநுகூல ப்ரதிகூல உதா₃ஸீந விஷயங்களில் எதையும் மனததாலும் எண்ணுமல் இருக்கக்கடவன. 24, 25.

यतो यतो निश्चरति मनश्चञ्चलमस्थिरम्।
ततस्ततो नियम्यैतदात्मन्येव वशं नयेत्॥२६॥

26. யதோ யதோ நிஶ்சரதி மநஶ்சஞ்சலமஸ்திரம் ।
ததஸ் ததோ நியம்யைதத₃ாத்மந்யேவ வஶம் நயேத் ॥

சஞ்சலம்—நிலைநில்லாமையையே இயல்வாகக் கொண்டிருப்பதாய். அஸ்திரம—(ஆத்மவிஷயத்தில்) உறுதியாக ஈடுபடாததான. மந:—மனமானது. யத: யத:—எந்த எந்த விஷயத்தில ஈடுபாடுகாரணமாக. நிஶசரதி—வெளியே செல்லுகிறதோ. தத: தத:—அந்த அந்த விஷயத்தினின்றும்; ஏதத் நியம்ய—இந்த மனத்தை முயன்று திருப்பி ஆத்மநி ஏவ—ஆத்மாவினிடத்திலேயே, வஶம் நயேத்—('இவ்வாத்மா அவையனைத்தையுமவிடச் சிறந்த ஸுகமாயிருப்பது' என்னும் அநுஸந்தா₄னத்தினால்) வசப்படுத்தவேண்டும்.

---

*23. நில்லா துழனெஞ்சு நீங்குமெவை மேலவற்றிற்
செல்லாமைத தன்வசத்தைச் சேர்விப்பான்—நல்யோகி
யாறினான் றீங்குசெருக் கற்றுப் பிரமவுயிர்
தேறினா னின்பமிகச் சேர்ந்து.

நில்லாது உழல நெஞ்சு—(எதிலும்) நிலைநில்லாமல் திரியும் மனம். நீங்கும் எவை மேல்—எந்த விஷயங்களைப் பற்றி (ஆத்மாவினின்றும) நீங்குகிறதோ. அவற்றில் செல்லாமை—அவ்விஷயங்களிற் செல்லாமல். தன் வசத்தை சேர்விப்பான்—தன் ஆத்மாவினிடமே வசப்படுத்துகின்றவனை. நல் யோகி₃—நல்ல யோகா₃ப்₄யாஸநிஷ்டன்— ஆறினான்—(ஆத்மாவினிடம்) அசையாத மனத்தையுடையவனாய், தீங்கு செருக்கு அற்று—(அதனாலேயே) கல்மஷங்களாகிற பாபங்களும். ரஜோகுணத்தால் ஏற்படும் க₃ர்வமும் அற்றவனாய் இனபம் மிகச் சேர்ந்து-உத்தமமான ஸுக₂த்தை அடைந்து, பிரம உயிர் தேறினன—ஸ்வஸ்வரூப ஆவிர் ப₄ாவத்தைப் பெற்றுவிடுகிறான்.

---

* 23-ம் பாட்டு 26, 27 ஶ்லோகங்களுக்கு மொழி பெயர்ப்பு.

||भा|| चलस्वभावतयाऽऽत्मन्यस्थिरं मनः यतो यतो विषय-

26. மனத்தை நியமிப்பது மிகவும் கடினமாகையால், அதில் மிகவும் குறிக்கொண்டு முயலவேண்டும் என்று காட்டுவதற்காக, ஏற்கனவே சொல்லப்பட்ட மநோநியமநப்ரகாரம் தெளிவாக விளக்கப்படுகிறது இந்த ஶ்லோகத்தில். (சஞ்சலம அஸ்திரம் மந:) நிலைநில்லாமையையே இயல்வாகக் கொண்டிருக்கையால், ஆத்மாவினிடம் நிலையாக ஈடுபடாமலிருக்கும் மனம். 'சஞ்சலம' 'அஸ்திரம்' என்னும இரண்டு பதங்களும் நிலைநில்லாமையையே குறிக்குமாகையால், அதனுல் ஏற்படும் புநருக்தி (கூறியது கூறல்) எனனும் தோஷத்தை இரண்டு வகையாகப் பரிஹரிக்கலாம:— (1) 'சஞ்சலம' என்னும் பதம் ஸாமாந்யமாக (பொதுவாக எல்லா விஷயங்களிலும்) மனம் நிலைநில்லாமலிருக்கையைக் காட்டுகிறது. 'அஸ்திரம' என்னும் பதம், முற்கூறிய தன்மை காரணமாக, ப்ரக்ருதத்தில் விஶேஷிதது (குறிப்பாக) இம்மனம் ஆதமாவிடம் நிலையாக ஈடுபடாமலிருக்கிறது என்று காட்டுகிறது. இபபடி முதற்பதம் ஸாமாந்யவிஷயமாகவும், இரண்டாவது பதம் விஶேஷ விஷயமாகவுமிருக்கையால் புநருக்தியில்லை. இந்தப் பரிஹாரத்தில் 'சஞ்சல ஸ்வபாவதயா' என்று பாஷ்யத்தில் அருளியதற்கு, 'எல்லா விஷயங்களிலும் சஞ்சலமாயிருக்கையால' எனறு தாத்பர்யார்த்தம் கொள்ளவேணும். (2) இப்படியல்லாமல், 'நிலைநில்லாமையையே இயல்வாகக் கொண்டது' எனறு சஞ்சல ஸ்வபாவஶப்தத்திற்கு ஶப்தார்த்தத்தையே கொண்டு இரண்டாவது பரிஹாரம உரைக்கப்படுகிறது. அதாவது:— 'சஞ்சலம் அஸ்திரம' என்னும் பதங்கள்—நிலைநில்லாமையையே இயல்வாகக் கொண்டிருக்கும் மனம அதுவே காரணமாக ஆத்மாவிடம் ஈடுபாடில்லாமலிருக்கிறது எனறு காட்டுகிறது—என்றபடி. இப்படி இரண்டு வழிகளில் புநருகதி பரிஹாரம கண்டுகொள்வது. (யதோ யதோ நிஶ்சரதி) எந்த எந்த விஷயத்தில் ஈடுபாடு காரணமாக அவற்றை அநுபவிப்பதற்காக வெளியே செல்லுகிறதோ, 'யத:' என்றவிடத்தில் ஐந்தாம் வேற்றுமையின பொருளிலே 'தஸில்' ப்ரத்யயம் வந்திருக்கிறது. விஷயங்கள் பயனுயிருந்துகொண்டு (மனம் வெளிச்செல்வதற்கு) ஹேதுவாயிருப்பதால், 'ஹேதௌ பஞ்சமீ' எனனும் இலககண வழக்குப் படி ஐந்தாம் வேற்றுமை பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. அன்

प्रावण्यहेतोः बहिः निश्चरति, ततस्ततो यत्नेन मनो नियम्यात्मन्येव अतिशयितसुखभावनया वशं नयेत्॥ २६॥

றிக்கே, 'தஸில்' ப்ரத்யயம இரண்டாம் வேற்றுமைப் பொருளுடையதாய், எந்த எந்த விஷயங்களைக்குறித்து வெளிச்செல்லுகிறதோ எனறும பொருள்கொளளலாம. இப்படியுமல்லாமல், 'எநத எந்த இந்திரிய த்₃வாரங்களின வழியாக வெளிச் செலலுகிறதோ' என்றும பொருள் கொள்ளலாம. பிற்பாதியில 'அவ்வவற்றிலிருந்து திருப்பி ஆத்மாவிடமே ஈடுபடுத்தவேண்டும்' எனறு விஷயப்ரதிகோடியான ஆத்மாவில் ஈடுபடுத்தவேண்டும் என விதி₄க்கப்படுகையால், 'திருப்புவது அவ்விஷயங்களிலிருந்து' எனறு கொள்ளும முந்திய பொருளில ஸ்வாரஸ்யம் அதி₄கம். இக்கருததினல இப்பொருளைத் திருவுளளத்திற்கொண்டே மூலத்தியில்லாத 'விஷயப்ராவண்யஹேதோ:' எனனும் பத₃ம ப₄ாஷ்யகாரரால் இடப்பட்டது. விஷயங்களில் ஈடுபாடாகிற ஹேதுவினுலே என்று ஶப்₃த₃ார்த்த₂ம்; விஷயங்களோடு தொடர்புகொண்டு அவற்றை அநுப₄விப்பதற்காக எனறு தாத்பர்யார்த்த₂ம். விஷயங்களில் ஈடுபாட்டிற்குக் காரணமாக எதிர்பாராமல் ஏற்படும் விஷயஸந்நிதி₄ அவைபற்றிய பேச்சு முதலானவை காரணமாக என்றும பொருள் கொள்ளலாம். (ததஸ் ததோ நியம்ய ஏதத்) அந்த அந்த ஶப்₃த₃ாதி₃ விஷயங்களினின்றும் மனததை மீட்டு. (ஆத்மந்யேவ வஶம் நயேத்) ஆத்மவிஷயத்திலேயே வஶப்படுத்த வேண்டும். இப்படி வஶப்படுத்த இயலுமோவெனில், இந்த ஶப்₃த₃ாதி₃ விஷயங்களைக் காட்டிலும், ஆத்மவிஷயம மிகவும் ஸுக₂மாயிருப்பது என்னும் அநுஸந்த₄ாநத்தால் மனத்தை ஆத்மவஶப்படுத்தலாம எனறு கருத்து. 'எந்த எந்த இந்திரியங்களின் வழியாக மனம வெளிச்செல்லுகிறதோ, அவற்றினினறும் மீட்டு ஆத்மாவிடமே ஈடுபடுத்தவேண்டும' எனறு பொருள் கொள்ளும்போது, மனத்தை வெளிச்செலலாதபடி மீட்டு உள்ளே செலுததவேண்டும் என்னும கருத்து சொலலப்படுகிறது. 26.

27. ஆத்மாவிடம் மனத்தை வஶப்படுத்தும் உபாயமாக முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்டதை இந்த ஶ்லோகத்தில் மறுபடியும் விவரிககிருன். அதில் "ஆத்மங்யேவ வஶம் நயேத்" (மனத்தை ஆத்மாவிடம வசப்படுத்தவேண்டும்) என்று சென்ற ஶ்லோகத்தில் கூறப்பட்டதை "ப்ரஶாந்தமநஸம்" என்று இந்த ஶ்லோகத்தில் முத

प्रशान्तमनसं ह्येनं योगिनं सुखमुत्तमम्।
उपैति शान्तरजसं ब्रह्मभूतमकल्मषम् ॥ २७॥

27. ப்ரஶாந்தமநஸம் ஹ்யேநம் யோகி₃நம் ஸுக₂முத்தமம் ।
உபைதி ஶாந்தரஜஸம் ப்₃ரஹ்மபூ₄தமகல்மஷம் ॥

ப்ரஶாந்தமநஸம்—(முன் ஶ்லோகத்தில் சொன்னபடி ஆத்மாவிடத்தில்) நிலையான மனத்தையுடையவனுய். அகல்மஷம்—(அது காரணமாக) பாபமற்றவனுய். ஶாந்தரஜஸம்—(அது காரணமாக) ரஜோகு₃ணம் நீங்கப்பெற்றவனுய் ப்₃ரஹ்மபூ₄தம்—(அது காரணமாக) தன் நிலை அடைந்தவனுய் யோகி₃நம்—ஆத்மயோக₃த்தில் ஈடுபடுமவனுன, ஏநம்—இவனை. உத்தமம ஸுக₂ம்—தலைசிறந்த ஆத்மாநுப₄வஸுக₂ம் உபைதி ஹி—வந்தடைகிறதன்றே.

---

வில் ப்ரஸ்தாவித்துக்கொண்டு. அதற்கு முன்னும் பின்னும் உள்ள நிலைகளை. 'யோகி₃நம' 'ஶாந்தரஜஸம்' 'ப்₃ரஹ்மபூ₄தம' 'அகல்மஷம்' எனனும் பத₃ஙகளாலே தெரிவித்து, இவன அடையும் ப₂லனைத் தெரிவிக்கிறது இந்த ஶ்லோகம். கார்யமும, காரணத்திற்கு ஜ்ஞாபக ஹேதுவாயிருப்பதையிட்டு, ''பரஶாந்தமநஸம்...தத ஏவ ஹேதோர் த₃க்₃த₄ாஶேஷகல்மஷம்'' எனறு ப₄ாஷ்யமிடபபட்டது. இனி, தாதபர்ய சந்த₃ரிகையில காட்டியபடி ஹேதுகார்யக்ரமப்படி பத₃ங்களை விளககுவோம். (யோகி₃நம்) ஆத்மஸாக்ஷாதகாரயோக₃த்தை அப்₄யாஸம் செய்பவனை, இது முதறபடி. (அகல்மஷம்) பாபமற்றவனை. முற்கூறிய படி யோக₃ாப்₄யாஸம செய்யச்செய்ய இவனுடையபாபங்கள் எல்லாம் படிப்படியாக நீங்குகினறன எனறு கருத்து. தன ஆத்மாவை ஸாக்ஷாத்காரம செய்யப்பழகுவதினுல், தன் பாபம் எப்படி நீங்குமெனில: பரிஶுத்₄த₄மான பஞ்சக₃வ்யத்தைப் பருகினுல் ப₄க₃வத் ஸங்கல்பத்தாலே தே₃ாஷம் நீங்குவதுபோல், பரிஶுத்₃த₄மான ஆத்மாவைப் பார்க்கப் பழகுவதனுலும் ப₄க₃வத்ஸங்கல்பத்தாலே தன தே₃ாஷம் நீங்கத்தட்டில்லை. (ஶாந்தரஜஸம்) ரஜோகு₃ணம் நீங்கப்பெற்றவனை. இங்கு ரஜோகு₃ணத்தைச் சொனனது தமோகு₃ணத்திற்கும் உபலக்ஷணமாய், ரஜஸ்தமங்கள் நீங்கப்பெறுகிறுனிவன் எனறதாகிறது. முற்கூறியபடி பாபம் நீங்க நீங்க, பாபத்தின காரணமாக இவன மனத்தைப்பற்றிநிற்கும் ரஜஸ்தமோ

॥ भा ॥ प्रशान्तमनसम्—आत्मनि निश्चलमनसम्, तत एव हेतोर्दग्धाशेषकल्मषम्, तत एव शान्तरजसं—विनष्टरजोगुणम्, तत एव ब्रह्मभूतं—स्वस्वरूपेणावस्थितमेनं योगिनम्, आत्मस्वरूपानुभवरूपमुत्तमं सुखमुपैति; हीति हेतौ; उत्तमसुखरूपत्वादात्मस्वरूपस्येत्यर्थः ॥ २७ ॥

---

கு₃ணங்கள் அழிகின்றன என்று கருத்து. (ப்ரஶாந்தமநஸம்) ஆத்மாவிடம நிலையாக நிற்கும மனத்தை உடையவனை; முற்கூறிய படி ரஜஸ்தமங்கள் அழிய அழிய மனம் ஆத்மாவிடம நிலைநிற்கிறது என்று கருத்து. (ப்₃ரஹ்மபூ₄தம) ஜ்ஞாநச்சுருக்கமாகிற ஸாமஸாரிக நிலை நீங்கபபெற்று ஜ்ஞாநப்பெருக்கமாகிற ப்₃ரஹ்மநிலையை அடைந்தவனை. முற்கூறியபடி மனம ஆத்மாவிடம வஶப்பட வஶப் பட, இவனுடைய தே₃ஹாதம மயககம், அதனுல ஏற்படும க்லேஶம முதலிய ஜ்ஞாநஸங்கோசங்கள் நீங்கி, இவன் ஜ்ஞாநவிகாஸ மாகிற ஸ்வஸ்வரூபததை அடைகிருன எனறு கருத்து.

"வாலாக்₃ரஶதபா₄க₃ஸ்ய ஶதத₄ா கல்பிதஸ்ய ச ।
ப₄ாகோ₃ ஜீவ: ஸ விஜ்ஞேய: ஸ சாநந்த்யாய கல்பதே ॥
[ஶ்வே 5-9]

[நெல் நுனியின் நூற்றில் ஒருபகுதியை நூறுகூறிட்ட அளவைக் காட்டிலும் சிறியவனுயிருப்பவன ஜீவன எனறு அறியவேண்டும். அவனே (முக்திநிலையில் ஜ்ஞாநப்பெருக்கம் பெற்று) எஙகுமிருப்பவ னுகிருன்] எனறு. அணுவான ஜீவன் முக்திநிலையில் த₄ர்மபூ₄த ஜ்ஞானத்தாலே எங்கும வியாபிததிருக்கையாகிற ப்₃ருஹத்வத்தை (பெருமையை) அடைகிருன என்று ஶ்ருதியிலேயே கூறப்பட்டதனறே. ஆகையாலே, அந்நிலையிலே அவனை 'ப்₃ரஹ்மபூ₄தன்' என்னத் தட்டில்லை. (ஏநம்) இப்படி ஸ்வஸ்வரூபப்ராபதி பெற்ற இவனை. (உத்தமம் ஸுக₂ம உபைதி ஹி) ஆத்மஸ்வரூபமே உததமஸுக₂ரூப மாயிருபபதால் தலைசிறந்த ஆத்மஸ்வரூபாநுப₄வரூபமான ஸுக₂ம் அடைகிறதன்றே. இவன ஆதமஸ்வரூபாநுப₄வ ஸுக₂த்தையே அடைகிருன் என்பதை, அடுத்த ஶ்லோகத்திலேயே 'ப்₃ரஹ்ம ஸமஸ்பர்ஶம் ஸுக₂ம் அஶ்நுதே' என்று கூறப்போகிறதனறே. ஶப்₃த₃ாதி₃ விஷய ஸுக₂ங்களைக் காட்டிலும் சிறப்புற்றதாகை யாலும், துன்பம் கலசாததாகையாலும் இது உத்தமஸுக₂ம் எனப்படுகிறது.

एवं युञ्जन् सदाऽऽत्मानं योगी विगतकल्मषः।
सुखेन ब्रह्मसंस्पर्शमत्यन्तं सुखमश्नुते ॥ २८ ॥

28. ஏவம் யுஞ்ஜந் ஸதா₃ऽऽத்மாநம் யோகீ₃ விக₃தகல்மஷ:।
ஸுகே₂ந ப்₃ரஹ்மஸமஸ்பர்ஶம் அதயந்தம
ஸுக₂மஶ்நுதே ॥

ஏவம்—*முற்கூறியபடி*. ஆத்மாநம் யுஞ்ஜந்—*ஆத்மாவில் ஈடுபடுகிறவனுய்*. விக₃தகல்மஷ:—*(அதனுல) பாபம நீங்கப் பெற்றவனுன*. யோகீ₃—*ஆத்ம ஸாக்ஷாத்காரநிஷ்ட₂ன்*. ப்₃ரஹ்மஸம்ஸ்பர்ஶம—*ஆத்மாநுப₄வரூபமான*. அத்யந்தம் ஸுக₂ம்—*அளவற்ற இன்பத்தை*. ஸுகே₂ந—*எளிதில*. ஸதா₃—*எபபோதும்*. அஶ்நுதே—*அடைகிருன்*.

---

24. இவ்வணண மேதன்னை யோகத்தி லேவிடுத்துத்
தெவ்வண்ண வல்வினைகள் செற்றென்று—மெய்வண்ண
யோகி பிரமத் தணைநதீறி லின்பத்தா
ருகியுயி ரேலெளிதே யாங்கு.

இவ்வண்ணமே—*முற்கூறியபடி*. தன்னை யோகத்திலே விடுத்து—*தன்னை ஆத்மாநுப₄வத்திலே ஈடுபடுத்தி*. தெவ் வண்ண வெவ்வினைகள் செற்று—*ஆத்மாவை ஜ்ஞாநச் சுருக்க மடையச் செய்யும் இயல்வுடைய பாபங்கள் நீங்கப்பெற்று*.

---

"குறுகா நீளா இறுதிகூடா எனையூழி
சிறுகா பெருகா அளவில் இனபம்" [திருவாய் 6-9-10]

என்று ஆழ்வாரும இவ்வின்பத்தை அளவற்றதாக அருளிச் செய்தாரனறே. (ஹி) எனனும பத₃ம் ஹேதுப்பொருளை உடையது. முன ஶ்லோகததில் சொல்லபபட்ட மநோவஶீகரணத்திற்கோ, இந்த ஶ்லோகத்தில் சொல்லபபட்ட உததமஸுக₂ப்ராப்திக்கோ, ஆத்மஸ்வரூபம் ஸுக₂ரூபமாயிருக்கிறதெனபது காரணம் எனறு கருத்து. ஆத்மஸ்வரூபம் ஸுக₂ரூபமாயிருப்பதால், மனத்தை வஶீகரிப்பது எளிது எனறே, ஆத்மாநுப₄வத்தின்மூலம் சிறந்த ஸுக₂த்தை அடைகிருன, எனறே தேறுகிறது. 27.

॥भा॥ एवमुक्तप्रकारेणात्मानं युञ्जन् तेनैव विगतप्राचीनसमस्तकल्मषो ब्रह्मसंस्पर्शं—ब्रह्मानुभवरूपं सुखमत्यन्तमपरिमितं सुखेन—अनायासेन सदाऽश्नुते॥२८॥

---

மெய்வண்ண யோகி—ஸ்வஸ்வரூபத்தை அடைந்த யோகீ₃, உயிர் பிரமத்து அணைந்து—ஜ்ஞானப்பெருக்கம் பெற்ற ஆத்மாவை அநுப₄வித்து. எளிதே—எளிதில் என்றும்—எப்போதும். ஈறில் இனபத்தான் ஆகி ஏல்—அளவற்ற இன்பத்தை உடையவனுகிருன்.

---

28. முற்கூறியபடி யோகப்ரப₄ாவத்தினுல் உண்டாகும் ஸுகம் ஆத்மாநுப₄வரூபமானது என்றும், ஆத்மஸாக்ஷாத்காரத்திற்குப் பிறகு அளவற்றதாகிறது என்றும், அவ்வின்பம் அழிவில்லாதது என்றும், அது எளிதில் அடையப்படுகிறது என்றும் இந்த ஶ்லோகத்தில் உணர்த்தப்படுகிறது. (ஏவம்) "யோகீ₃ யுஞ்ஜீத"[6-10] என்று தொடங்கிக் கூறப்பட்ட முறையில். (ஆத்மாநம் யுஞ்ஜந்) ஆத்மாவில் ஈடுபடுகிறவனுய், (விக₃த கல்மஷ: யோகீ₃) அவ்வாத்ம யோக₃த்தினுல் அநாதி₃ பாபம் நீங்கப்பெற்றவனுன ஆத்மஸாக்ஷாத்காரநிஷ்ட₂ன். (ப்₃ரஹ்ம ஸம்ஸ்பர்ஶம்) ஆத்மாநுப₄வரூபமான, ஸம்ப₃ந்த₄த்தைக் குறிக்கும் ஸம்ஸ்பர்ஶஶப்₃த₃ம லக்ஷணையாலே அநுப₄வத்தைக் காட்டுகிறது. அல்லது அறிவோடு ஸம்ப₃ந்த₄த்தைக் காட்டுகையாலே அநுப₄வத்தை நேரே காட்டுகிறதாகவுமாம். (அத்யந்தம் ஸுக₂ம) எல்லையற்றதான இன்பத்தை. அந்தமாகிற எல்லையை அதிக்ரமித்திருப்பது அத்யந்தம். அளவற்றதாயினும் ஒரு காலத்தில் முடிவடைவதாயிருக்குமோ? எனில்: (ஸதா₃ அஶ்நுதே) எப்போதும் அடைகிருன். இவ்வின்பம் அளவில்லாததாகவும் அழிவில்லாததாகவும் இருக்கிறது என்று கருத்து. "குறுகா நீளா இறுதி கூடா எனையூழி சிறுகா பெருகா அளவில் இன்பம்" (திருவாய் 6-9-10) என்ருர் ஆழ்வாரும். "ஏவம் யுஞ்ஜந்" என்று முன் ஶ்லோகங்களில் கூறியபடி குறிப்பிட்ட காலங்களிலேயே இவன் யோகா₃ப்₄யாஸம் செய்கிருன என்று காட்டப்பட்டுவிட்டபடியால், "ஸதா₃ யுஞ்ஜந்" [எப்போதும் யோகா₃ப்₄யாஸம செய்கிற] என்று அந்வயிப்பது முரண்படும். மேலும், இவ்வின்பம் அழிவற்றது என்று காட்டவேண்டியது அவஶ்யமும் ஆகும். ஆகையால். ஶ்லோகத்தின் முற்பாதியில்

॥भा॥ अथ योगविपाकदशा चतुष्प्रकारोच्यते—
सर्वभूतस्थमात्मानं सर्वभूतानि चात्मनि।
ईक्षते योगयुक्तात्मा सर्वत्र समदर्शनः॥

29. ஸர்வபூ₄தஸ்த₂மாத்மாநம் ஸர்வபூ₄தாநி சாத்மநி।
ஈக்ஷதே யோக₃யுக்தாத்மா ஸர்வத்ர ஸமத₃ர்ஶந:॥

---

உள்ள 'ஸுத₃ா' எனனும் ஶப்₃த₃ந்தைப் பிற்பாதிக்கு இழுதது 'ஸுத₃ா அஶ்நுதே' [எப்போதும் அடைகிறுன] என்று கூட்டிப் பொருள் கொள்ளப்பட்டது (ஸுகே₂ந அஶ்நுதே) எளிதில் அடைகிறுன. ஆத்ம ஸுக₂த்திற்கு ஸாத₄நமாக வேறு ஸுக₂ம இலலையாகையால், 'ஸுகே₂த ஸுக₂ம் அஶ்நுதே' என்பதற்கு 'ஒரு ஸுக₂த்தினுல் மற்றொரு ஸுக₂த்தை அடைகிறுன' என்று பொருள் கொள்ளாமல், எளிதில் ஆத்மஸுக₂த்தை அடைகிறுன எனறு பொருள் கொள்ளப்பட்டது. ஆக, இதுவரையில் "யோகா₃ப்₄யாஸ விதி₄:" [கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹம் 10] என்று ஆளவந்தாரால் காட்டப்பட்ட யோகா₃ப்₄யாஸவிதி₄ விளக்கப்பட்டது. 28.

29. இவ்வண்ணமாக யோகா₃ப்₄யாஸவிதி₄யையும், "ஆத்மலாப₄ ஸுக₂ம் யாவத் தாவத் த்₄யாநமுதா₃ஹ்ருதம்" [ஆத்மாவைப் பெற்று இன்புறும் வரையில் ஆதமப்ராப்திகாமன (ஆத்மாவை) தியானிக்க வேண்டும்] என்கிறபடியே அந்த யோகா₃ப்₄யாஸம் ஆத்மாவைப் பெற்று இனபுறும் வரையில் செய்யத்தக்கது என்பதையும் கூறிய பின்பு, "யோகீ₃ சதுர்த₄ா" [கீ₃தார்த்த₂ஸங்க்₃ரஹம 10] எனறு ஆளவந்தாரால் காட்டப்பட்ட நாலுவகைப்பட்ட யோகிகளை மேல் வரும் நாலு ஶ்லோகங்களாலே கூறுகிறது. அவர்களாவார்:—(1) ஜ்ஞாநாநந்த₃ ஸ்வரூபர்களாயிருக்கையையிட்டு ஆத்மாக்கள் அனைவரையும் ஸமமாகக் காண்பவர்கள். (2) முக்திநிலையில் அபஹதபாப்மத்வம் (பாபமற்றவர்களாயிருககை) முதலான எட்டு கு₃ணஙகளை உடைத்தாயிருககையையிட்டு ஈஶ்வரனையும் தம்மையும் ஸமமாகக் காண்பவர்கள். (3) ப்ராகருதபே₄த₃ங்கள நீங்கிய பிறகு விரிவுபெற்ற ஞானமுடையவர்களாயிருக்கையையிட்டு ஈஶ்வரனேடும், அவனைவிட்டுப் பிரியாத விஶேஷணமாயிருக்கையையிட்டு மற்ற ஆத்மாக்களோடும தமக்குளள ஸாம்யத்தைக் காண்பவர்கள். (4) கர்மம் காரணமாக ஏற்பட்ட பெண்டு பிள்ளைகளோடு

யோகயுக்தாத்மா — யோகா₃ப்₄யாஸத்தில் ஈடுபட்ட நெஞ்சையுடையவன். ஸர்வத்ர—(ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄ மற்ற) எல்லா ஆத்மாக்களிலும், ஸம த₃ர்ஶந:—(ஜ்ஞாநாநந்த₃ாதி₃களையே ஸ்வரூபமாக உடைத்தாயிருக்கையாகிற) ஸாம்ய நிலையைக் காண்கின்றவனாய். ஸர்வபூ₄தஸ்த₂ம் ஆத்மாநம்—எல்லா ஜீவர்களோடு ஸமானமான ஸ்வரூபத்தை உடையவனாகத் தன்னையும், ஆதமநி ச ஸர்வபூ₄தாநி—தன்னோடு ஸமானமான ஸ்வரூபத்தை உடையவர்களாக மற்ற எலலா ஜீவர்களையும, ஈக்ஷதே—காண்கிறான்.

॥ भा॥ स्वात्मनः परेषां च भूतानां प्रकृतिवियुक्त[त्म]स्वरूपाणां ज्ञानैकाकारतया साम्याद्वैषम्यस्य च प्रकृतिगतत्वाद्योगयुक्तात्मा

---

25. எல்லா வுயிரு மெனதுயிர்போ லென்னுயிர்தா
னெலலா வுயிர்போ லெனக்காணுஞ்—சொல்லார்ந்த
யோகஞ்சேர் நன்னெஞ்ச னெவ்விடதது மொத்துயிர்க
ளேகஞ்சேர் வண்ணமறிந் தேய்ந்து.

சொல் ஆர்ந்த யோகம சேர் நல் நெஞ்சன்—முற்கூறப் பட்ட யோகா₃ப்₄யாஸத்தில் ஈடுபட்ட நல்ல நெஞ்சை உடையவன். எவ்விடத்தும்—எலலாவிடத்திலும். உயிர்கள் ஒத்து ஏகம சேர் வண்ணம் அறிந்து—ஜீவர்கள் (ஜ்ஞாநாநந்த₃ஸ்வரூபர்களாயிருககையாலே) ஒருபடிப்பட்டு ஸாம்ய நிலையை அடைந்திருப்பதை அறிந்து. எல்லா உயிரும் எனது உயிர்போல்—எல்லா ஆத்மாக்களும் எனது ஆத்மா போலவும். என உயிர்தான் எல்லா உயிர்போல்—என் ஆத்மா எல்லா ஆத்மாக்களைப் போலவும் (ஜ்ஞாநாநந்த₃ ஸ்வரூபமாயுள்ளது) என—என்று. ஏய்ந்து காணும்—பொருந்திக் காண்பான்.

---

தொடர்பற்றிருக்கையாகிற (ஸகலாத்ம) ஸாம்யத்தைக்காண்பவர்கள். இப்படி மேன்மேலே முற்றிய ஸாம்யத₃ர்ஶனத்தை உடைய இந்நால்வரில் முதற்படியிலே நிற்பவர்களைப் பேசுகிறது இந்த ஶ்லோகம்.

प्रकृतिवियुक्तेष्वात्मसु सर्वत्र ज्ञानैकाकारतया समदर्शनः, सर्वभूतस्थं स्वात्मानं सर्वभूतानि च स्वात्मनीक्षते—सर्वभूतसमानाकारं स्वात्मानं

---

(யோக₃யுக்தாத்மா) யோக₃த்தில் ஈடுபட்ட நெஞ்சை உடையவன். ஆத்மஶப்₃த₃ம் மனத்தைச் சொல்லுகிறது; அன்றிக்கே, ஆத்மஸ்வரூபத்தையே சொல்லுகிறதாய், யோக₃ஸமாதி₄நிலையிலிருக்கும் ஆத்மஸ்வரூபத்தை உடையவன் என்கிறதாகவுமாம். இப்படி ஸமாதி₄நிலையிலே ஆத்மாவை ஸாக்ஷாத்காரம் செய்து கொண்டு இவன் இருப்பதால் ஏற்படும் பயனைச் சொல்லுகிறது.— (ஸர்வத்ர ஸமத₃ர்ஶந:) ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄மற்ற நிலையில எல்லா ஆத்மாக்களும் ஸமம் என்னும காட்சியை உடையவன். தன் ஆத்மாவும், மற்ற ஜீவாத்மாக்களும் ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄மற்ற நிலையில் ஒருபடிப்பட ஞானம் ஒன்றையே ஸ்வரூபமாகக் கொண்டிருக்கையையிட்டு ஸமமானவரென்றும், வேறுபாடுகளெல்லாம் கர்மம் காரணமாக அவரவர்க்கு ஏற்பட்டிருக்கும் ப்ரக்ருதிகார்யமான ஶரீரத்தைப்பற்றிருப்பவையென்றும் காண்கையாலே, இவன் எல்லா ஆத்மாக்களையும ஸமமாகக்காண்கிறுன் என்று கருதது. இனி, இதையே ஶ்லோகத்தின் எஞ்சிய பகுதி விளக்குகிறது.— (ஸர்வபூ₄தஸ்த₂ம ஆத்மாநம்) எல்லா ஆத்மாக்களிடமும் தான் இருப்பதாகவும; (ஸர்வபூ₄தாநி ச ஆத்மநி ஈக்ஷதே) எல்லா பூ₄தங்களும தனனிடம் இருப்பதாகவும் காண்கிறுன. எல்லா ஆத்மாக்களும ஞானம் ஒனறையே ஸ்வரூபமாக உடையவராதலால், தனனைக்காணும்போதே தன்னைப்போலவே அவர்கள் அனைவரும் இருக்கிறுர்கள் என்றும், அவர்களைப்போலவே தான் இருப்பதாகவும் காண்கிறுன் என்று கருத்து. பொதுவாக அசேதநஶரீரத்தோடு கூடிய சேதனரைச்சொல்லும் பூ₄தஶப்₃த₃ம், "ஸத்யம் பூ₄தஹிதம் ப்ரோக்தம்" [ஆத்மாவிற்கு எது நன்மையோ அதுவே ஸத்யமாகும்] முதலானவிடங்களிற்போலே, இங்கு சேதநாம் ஶத்தை மாத்திரம சொல்லுகிறது. முற்கூறியபடி கருத்துரைக்காமல், "ஸர்வபூ₄தஸ்த₂ம்" என்று தொடங்கும் பகுதிக்கு ஶப்₃தா₃ர்த்த₂த்தையே கொண்டால் அதில் பல பொருந்தாமைகள் ஏற்படும். அவையாவன:—(1) தன் ஆத்மாவில் எல்லா பூ₄தங்களுமிருக்கையும், அவற்றில் தான் இருக்கையும் பரஸ்பரம் முரண்பட்டதாகையால் பொருந்தாது. (2) அணுவான தன் ஆத்மா எல்லா ஜீவாத்மாக்களிலும்

स्वात्मसमानाकाराणि च सर्वभूतानि पश्यतीत्यर्थः। एकस्मिन्नात्मनि दृष्टे सर्वस्यात्मवस्तुनस्तत्साम्यात्सर्वमात्मवस्तु दृष्टं भवतीत्यर्थः। सर्वत्र

---

இருப்பது முதலிலேயே ஒட்டாது. (3) பற்பல தே₃ஶங்களிலிருக்கும் பற்பலலாயிரம் உயிர்கள் ஒரு தே₃ஶத்திலிருக்கும் தன் ஆத்மாவிலிருப்பது அடியோடு ஒட்டாது. இதற்காக இங்குள்ள ஆத்மஶப்₃த₃த்தைப் பரமாத்மபரமாகக்கொண்டுவிடலாமே என்று பார்த்தால, பரமாத்மா ஸர்வாதா₄ரனாகவும், ஸர்வவ்யாபியாகவும் உள்ளவன் என்பதைத் தெரிவிப்பதற்காக இப்ரகரணம் ஏற்பட்டதல்லவாகையால் அப்பொருள் பொருந்தாது. ஆகையால் 'எல்லா ஜீவர்களோடு ஸமாநமான ஆகாரத்தை உடையவனாகத் தன் ஆத்மாவையும், தன் ஆத்மாவோடு ஸமாநமான ஆகாரத்தை உடையவராக எல்லா ஜீவர்களையும் காண்கிறான' என்றே பொருள் கொள்ளவேணும். இதற்கு மேல் ஓர் கேள்வி எழுகிறது; அதாவது:- இவன தன ஆத்மாவை மாத்திரம் அநுஸந்தி₄ப்பதாகிற யோக₃த்தில் ஈடுபட்டவன; அத்தகையவன தனனோடு ஸாமயமுடையவராகவும, தன்னிடமுள்ள ஸாம்யத்திற்கு ப்ரதியோகி₃யாயிருப்பவராகவும் எப்படி மற்ற ஆத்மாக்களைக் காணமுடியும? என்பது அக்கேள்வி. இதற்கு பதில்:- ஸ்த₂ாலீபுலாகந்யாயத்தாலே, ஒரு சோற்றைப் பதம பார்த்தால் ஒரு பானை சோறும் பதம் பார்க்கப்பட்டதாகிறது; ஒருகுவியலில் ஒரு நெல்லின ஜாதியைக்கண்டால் எல்லா நெலலின் ஜாதியும் கணடதாகிறது; அதுபோல், தன ஆத்மாவாகிற ஓர் ஆத்மாவைக்கண்டபோதே மற்ற ஆத்மாக்களும் கண்டதாக ஆகிறபடியால், எலலா ஆத்மாக்களையும் காணக் குறையில்லை என்பது. 'ஸர்வபூ₄தஸ்த₂ம் என்னும் பகுதியாலே ஸகலாதமஸாம்யமே கூறப்படுகிறது என்று நிர்ப்பந்திக்கக்காரணமென் ?' எனனில்: இந்த ஶ்லோகத்தின் முடிவில் 'ஸர்வத்ர ஸமத₃ர்ஶந:' என்று ஸாம்யமே கூறப்பட்டிருக்கையாலும், மேலே முப்பத்து மூன்றுவது ஶ்லோகத்தில் அர்ஜுனன் இதைப்பற்றி அநுவாத₃ம் செய்யும்போது "யோSயம் யோக₃ஸ்த்வயா ப்ரோக்த: ஸாம்யேந' என்று ஸாம்யயோக₃ம் என்றே கூறுகையாலும், 'நிர்த்₃தோ₃ஷம் ஹி ஸமம் ப்₃ரஹ்ம" (கீதை 5–19) முதலான முன் கீ₃தாப்ரகரணங்களிலும் ஆத்மஸாம்யமே வலியுறுத்தப்பட்டிருப்பதாலும், இங்கும ஆத்மஸாமயமே ஸர்வத்ரஸமத₃ர்ஶந: என்று கூறப்பட்டு, எஞ்சிய பகுதியால் வலியுறுத்தப்படுகிறது என்று கொள்வதே பொருத்தம்.

समदर्शनः इति वचनात्, योऽयं योगस्त्वया प्रोक्तस्साम्येन (३३) इत्यनुभाषणाच्च, निर्दोषं हि समं ब्रह्म (५. १९) इति वचनाच्च ॥ २९ ॥

योमां पश्यति सर्वत्र सर्वं च मयि पश्यति।
तस्याहं न प्रणश्यामि स च मे न प्रणश्यति ॥ ३० ॥

30 யோ மாம பஶயதி ஸாவதர ஸாவம ச மயி பஶயதி ।
தஸயாஹம ந பரணஶயாமி ஸ ச மே ந பரணஶயதி ॥

---

வேறு எபபடிககொணடாலும பொருநதாமைகளஏறபடும எஙஙனே யெனனில வெளியிலிருககும பஞசபூ₄தஙகளிலும தன ஆதமாவையும அபபஞசபூ₄தஙகளைத தன ஆதமாவிலும காணபதாககொளவது— மேலே (ஸாவதர ஸமத₃ாஶந ) எனறு எலலாவறறிலும ஸாமயததைக காணபதாகச சொலலியிருபபதோடு ஒடடாது இது பரமாதம யோக₃பரகரணமலலாமையாலே எலலா ஜீவராஶிகளையும பரமாத மாவிடமும எலலா ஜீவராசிகளிலும பரமாதமாவையும காணப தாகக கூறுவது பொருநதாது ஜீவாதம யோக₃ததுககு உபயோகி₃ யான பரமாதமத₄யானததை இஙகு சொலலுவதாகக கொளளலாமே? எனில ஜீவாதமயோக₃ஸமாதி₄யைச சொலலுவதெனறு தெளிவாக விளஙகுகையால அதுவும ஒடடாது ஜீவாகளுககும பரமாதமா வுககும ஸாமயததை இஙகு சொலலுவதாகக கொளளலாமே? எனில யோ மாம எனறு மாம ஶப₃த₃ததாலேயே தனனை நேரே எடுககும அடுதத இரணடு ஶலோகஙகளிலும அநத ஸாமயததைக கூறுவதாகக கொளவது உசிதமேயொழிய அஸமச ச₂ப₃த₃மறற இநத ஶலோகததில அதைக கொளளுவது உசிதமலல அபபடிச சொலலுவதாகக கொணடால அடுதத இரண்டு ஶலோகஙகளோடு ஓரளவுககுப புநருகதி ஏறபடும மேலும மேலே அாஜுனன இதை அநுவாத₃ம செயயுமபோது ஒனறுக கொனறு ஆத₄ாராதே₄யமாயிருபபதாகச சொலலாமல யோऽயம யோக₃ ஸாமயேந எனறு ஸாமயததையே கூறுகையாலும முனபிரகரணஙகளிலும புணடி₃தா ஸமத₃ாஶிந [5 18] நிாத தோ₃ஷம ஹி ஸமம [5 19] முதலான ஶலோகஙகளில ஆதம ஸாமயததையே பலகால வலியுறுததுகையாலும, ஜீவாகளிடையே பரஸபர ஸாமயமே இஙகு கூறபபடுவதாகக கொளள வேணடும

ய:—எவனொருவன், மாம்—என்னை, ஸர்வத்ர பஶ்யதி—எல்லா ஆத்மவஸ்துக்களிலும் (என் தனமையிருப்பதை யிட்டுக்) காண்கிறானோ, ஸர்வம் ச—எல்லா ஆத்மாக்களை யும், மயி—என்னிடம், பஶ்யதி—(அவர்கள் தன்மையிருப் பதையிட்டுக்) காண்கிறானோ, தஸ்ய—அவனுக்கு, அஹம்—நான், ந ப்ரணஶ்யாமி—காட்சியளிக்காமற்போவதில்லை; ஸ: ச—அவனும், மே—எனக்கு, ந ப்ரணஶ்யதி—காட்சி யளிக்காமற்போவதில்லை.

---

26\. என்றன்மை யாலுயிர்களெங்குமெனைக் கண்டவற்றைத்
தன்றன்மை யாலென்பாற் றான்காண்பான்—சிந்தையி
நான்றோன்று வாறில்லை நன்குணர்ந்தான் என் [னில்
றான்றோன்று வாறில்லை தான். [னிடையிற் 26.

உயிர்கள் எங்கும்—எல்லா ஆத்மாக்களிலும், என் தன்மையால்—என் தன்மையிருப்பதால், எனை கண்டு—என்னைக் கண்டு, அவற்றை—அந்த ஜீவாத்மாக்களை, தன் தன்மையால—அவற்றின் தன்மையிருப்பதால், என்பால் தான காண்பான்—என்னிடம் தான் காண்பவனுடைய, சிந்தையினில்—நெஞ்சிலே, நான் தோன்றுவாறில்லை—நான் தோனறுமற்போவதில்லை; நன்கு உணர்ந்தான தான்—(என்னோடு தனக்குள்ள ஸாம்யத்தை) நன்கு அறிந்தவன் தானும், என்னிடையில்—என் நெஞ்சில் தோன்றுவாறில்லை தான்—தோன்றுமற்போவதில்லை.

---

30\. ப்ரக்ருதி பரிணாமமான தேவர், மனிதர் முதலான ரூப பேதங்களற்ற ஸ்வரூபததில் எல்லா ஆத்மாக்களுமு ஜ்ஞாநஸ்வ ரூபராயிருக்கையாகிற ஸாம்யம் முன் ஶ்லோகத்தில் பேசப்பட்டது. இனி, இந்த ரூபபேதங்களுக்குக காரணமான புண்யபாபங்கள் அழிந்தபின் முக்திநிலையில் "அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யு: விஶோக: விஜிகத்ஸ: அபிபாஸ: ஸத்யகாம: ஸத்யஸங்கல்ப:" [(1) பாபமற்றவன், (2) கிழத்தனமற்றவன், (3) மரணமற்றவன, (4) ஶோகமற்றவன், (5) பசியற்றவன், (6) தாஹமற்றவன, (7) பழுதுபடாத குணங்களை உடையவன, (8) பழுதுபடாத ஸங்கல்

॥ भा ॥ ततोऽपि विपाकदशापन्नो मम साधर्म्यमुपागतः, निरञ्जनः परमं साम्यमुपैति (मु. ३. १. ३.) इत्युच्यमानं सर्वस्यात्मवस्तुनो विधूतपुण्यपापस्य स्वरूपेणावस्थितस्य मत्साम्यं पश्यन् यस्सर्वत्रात्म-

---

பத்தை உடையவன்] என்று ஶ்ருதியில் பரமஸாமயம் அடையும் ஜீவனுக்கு உண்டாவதாகக் கூறப்பட்ட எட்டுகு₃ணங்களை உடைத்தாயிருக்கையையிட்டு ஈஶ்வரனையும் தமமையும ஸம மாகக் காண்கையாகிற இரண்டாவது நிலையைச் சொல்லுகிறது இந்த ஶ்லோகம். ஜீவர்கள் தங்களுக்குள் உள்ள ஸாமயத்தை மனத்தாலே அநுஸந்தி₄ப்பதைவிட முகதிநிலையில் பரமாத்மாவோடு உண்டாகும் பரமஸாம்யத்தை மனத்தாலே அநுஸந்திப்பது சிறப்புற்றதாகையால் இந்த ஶ்லோகத்திற்கூறும் நிலை முனஶ்லோகத்தில் சொல்லப்பட்டவனைவிடப் பக்குவமடைநதவனுக்கே ஏற்படும. புண்யபாபங்கள் கழிந்தபினபு, கு₃ணாஷ்டகாவிர்பா₄வமாகிற பரம ஸாம்யம் ஏற்படுகிறதென்பது "தத₃ா வித்₃வாந் புண்யபாபே விதூ₄ய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" [முண்ட 3-1-3] [அப்போது உபாஸகன் புண்யபாபங்களை விட்டு, தோ₃ஷமற்றவனாய் மேலான ஸாம்யத்தை அடைகிறான] எனறு ஶ்ருதியில் சொல்லப்பட்டது. இது இப்ரகரணத்தில் சொலலப்படும கைவல்யமடைபவனுக்கும், மேலே சொல்லப்போகும் பரமாத்மாவையடைபவனுக்கும் ஸமம் என்று இந்த ஶ்லோகத்திலிருந்து விளஙகுகிறது. (யோ மாம் ஸர்வத்ர பஶ்யதி) எவனொருவன இப்படி எல்லாப் புண்யபாபமும் கழிந்தபினபு, என்னோடு முக்திநிலையில் பரம ஸாம்யமடைவதையிட்டு என்னை எலலா ஆத்மாக்களிலும காண்கிறானோ; (ஸர்வம் ச மயி பஶ்யதி) எல்லா ஆதமாக்களையும் என்னிடம் (அவர்கள் தனமையிருப்பதையிட்டுக்) காண்கிறானோ: இங்கும பரமாத்மா ஸர்வாத₄ாரனாகவும, ஸர்வவ்யாபியாகவும் உள்ளவன் என்பதைத் தெரிவிப்பதற்காக இப்ரகரணம ஏற்பட்டதல்லவாகையாலும், முனபின் ப்ரகரணங்களில "ஸமத₃ாஶந:" "ஸாம்யேந யோக₃:" எனறு ஸாம்யமே வலியுறுத்தப்படுகையாலும், பரமாத்மாவின ஸர்வாத₄ாரத்வாதி₃களை அநுஸந்தி₄ப்பதாகக் கொள்ளாமல், ஸாம்யத்தை அநுஸந்தி₄ப்பதாகப்பொருள கொள்ளவேண்டும. தன் ஆத்மாவை மாததிரம அநுஸந்திக்கும் யோக₃த்தில் ஈடுபட்ட இவனுக்கு ஸாம்யத்தையிட்டு மறற ஜீவாதமஸ்வரூபங்களும கணடதாகிறது என்று சென்ற ஶ்லோ

वस्तुनि मां पश्यति, सर्वमात्मवस्तु च मयि पश्यति; अन्योन्य-साम्यादन्यतरदर्शनेन अन्यतरदपीदृशमिति पश्यति; तस्य स्वात्मस्वरूपं

---

கததில் சொன்னரீதியில வரப்போகிற ஸாம்யத்தை அநுஸந்தி₄ப் பதையிட்டுப் பரமாத்மஸ்வரூபமும் காணப்பட்டதாவதாக இங்கு கூறுவதில் குறையில்லே. "பரமம் ஸாம்யமுபைதி" என்று ஶ்ருதியில் இந்த ஸாம்யாநுஸந்த₄ாநம விதி₄க்கப்பட்டது. அதுவே இஙகு "யோ மாம் பஶ்யதி" எனறு அநுவதி₄க்கப்படுகிறது எனறு கண்டு கொள்வது. ஆக, "பரமாதமாவோடு மற்ற ஜீவர்கள் முக்தி நிலேயில் பரமஸாமயத்தை அடைந்திருப்பதால, தன ஆத்மாவைக் கண்டவனுககு, பரமாத்மாவும, மற்ற ஜீவர்களும் காணப்பட்ட வர்களாகவே ஆகிருர்கள" எனறு ஶ்லோகத்தின முற்பாதியி லிருந்து பொருள் தேறுகிறது. இனி, அந்வயத்தால் சொல்லப் பட்ட இதையே வ்யதிரேகததாலே வலியுறுத்துகிறது ஶ்லோகத்தின் பிற்பாதி. (தஸ்ய அஹம் ந ப்ரணஶ்யாமி) அவனுக்கு நான் காட்சி தராமற்போவதில்லே; அதாவது.— தன் ஆத்மஸ்வரூபத் தைக் காணுமபோது, 'முக்திநிலேயில் என்னேடு ஸாமயமுடைய வன் பரமாத்மா' எனறே அநுஸந்தி₄க்கிருகையால், அவனுக்கு நான் காட்சிதராமற்போகும் காலமே கிடையாது என்று கருத்து. (ஸ ச மே ந ப்ரணஶ்யதி) அவனும எனக்குக் காட்சிதராமற் போவதிலலே; அதாவது,— முக்திநிலேயில் எனனேடு ஸாம்யத்தை யிட்டு, தன் ஆதமாவை எனக்கு ஸமமாகக் காணும் அவனும், என் ஸ்வரூபததை நான காணும்போது அடங்கியிருக்கையாலே அவன் எனக்குக் காட்சிதராமற்போவதில்லே என்று கருத்து இப்படிப் பொருள் கொள்ளாமல், "அவனுக்கு நான அழிவதில்லே; எனக்கு அவன் அழிவதில்லே" என்று பொருளகொண்டால் அதில் பின் வருமாறு பல பொருந்தாமைகள் ஏற்படும்:—(1) நித்யர்களெனறு பல ப்ரமாணங்களிலிருந்து ஸித்₃தி₄ககும் ஜீவேஶ்வரர்களுக்கு இப்போது அநித்யத்வஶங்கை ஏற்பட இடமில்லாமையால், 'நான் அழிவதில்லே; அவன அழிவதில்லே' என்று அதைத் தவிர்க்க வேண்டிய அவஶ்யமில்லே. (2) மேலும், ஒரு பொருள் ஒருவருக்கு அழிவதாகவும், மற்ருெருவருக்கு அழிவதிலலேயென்றும், எங்கும் காண்பதில்லேயாகையால், 'எனக்கு அவன் அழிவதில்லே; அவ னுக்கு நான் அழிவதிலலே' என்னும் பிரயோக₃மும் சிறிதும் பொருந்தாது. ஆகையால், "ணஶ — அத₃ர்ஶநே" என்னும்

पश्यतोऽहं तत्साम्यान्न प्रणश्यामि—नादर्शनमुपयामि; ममापि मां पश्यतो मत्साम्यात् स्वात्मानं मत्सममवलोकयन् स नादर्शनमुपयाति ॥ ३० ॥

॥ भा ॥ ततोऽपि विपाकदशामाह—

सर्वभूतस्थितं यो मां भजत्येकत्वमास्थितः।
सर्वथा वर्तमानोऽपि स योगी मयि वर्तते ॥ ३१ ॥

31. ஸர்வபூ₄தஸ்தி₂தம் யோ மாம் ப₄ஜத்யேகத்வமாஸ்தி₂த:।
ஸர்வதா₂ வர்த்தமானோऽபி ஸ யோகீ₃ மயி வர்த்ததே ॥

---

தா₄துபாட₂த்தை ஒட்டி, "காட்சிதராமற்போவதில்லை" என்று பொருள் கொள்வதே பொருத்தமாகும். பரமாத்மாவோடு ஸாம்யானுஸந்தா₄நம் இவனுக்குக் கணநேரமும் இடைவிடாமல் நடந்து செல்கிறது என்று வலியுறுத்துவதற்காக, முற்பாதியில் அந்வயத்தாலே சொல்லப்பட்ட அர்த்த₂மே வ்யதிரேகத்தாலே பிற்பாதியில் சொல்லப்படுகிறது. "அவனுக்கு நான் காட்சிதராமற்போவதில்லை" என்று சொன்னாலே இது ஸித்₃தி₄க்குமே; "எனக்கு அவனும் காட்சி தராமற்போவதில்லை" என்று கடைசிப் பாதத்தில் சொல்லுவது எதற்காக? எனில: (1) ஸர்வஜ்ஞனை எனக்கு அவன் எப்படிக் காட்சிதராமற்போவதில்லையோ, அது போலவே நானும் அவனுக்குக் காட்சிதராமற்போவதில்லை என்று த்₃ருஷ்டாந்தத்தின் பொருட்டுச் சொல்லுகிறதாகவுமாம். (2) அவன் அநுஸந்தி₄க்கும் ஸாம்யத்தை, ஸர்வஜ்ஞனை தானும் கண்டு கொண்டிருப்பதைக் காட்டுவதன்மூலம் அது ப்ராமாணிகமானது என்று நிலைநாட்டுவதற்காகச் சொல்லுகிறதாகவுமாம். (3) சென்ற ஶ்லோகத்திற்போலே ஸாம்யவிஷயத்தில் ஆஶங்கையெழ, ஜீவேஶ்வர ஸாமயமே இங்கு கூறப்படுகிறது என்று தெளிவாகக் காட்டுவதற்காகச் சொல்லுகிறதாகவுமாம். ஆக, "எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரிக்கும் எனக்கும், என் ஸ்வரூபத்தை அநுஸந்தி₄க்கும்போது, என்னோடு ஸமமாயிருக்கையையிட்டு, அவனுடைய ஸ்வரூபமும் அநுஸந்தி₄க்கப்பட்டதாகிறதன்றோ" என்று கடைசிப் பாதத்தின் திரண்ட கருத்து. ஆக, இந்த ஶ்லோகத்திலிருந்து இவ்வதி₄காரி முக்தப்ராயன (முக்திநிலையை அணுகியிருப்பவன) என விளங்குகிறது 30.

ஸர்வபூ₄தஸ்தி₂தம் மாம்—(யோக₃த₃ஶையில் முற்கூறிய ஸாம்யத்தையிட்டு) எல்லா ஜீவர்களிலுமிருக்கும் என்னை. ஏகத்வம் ஆஸ்தி₂த:—(ஜ்ஞானச் சுருக்கமற்றிருக்கையாகிற) ஒற்றுமையை அநுஸந்தி₄ப்பவனாய், ய:—எவனொருவன். ப₄ஜதி — காண்கிறானோ. ஸ: யோகீ₃ — அந்த யோகி₃, ஸர்வதா₂ வர்த்தமாந: அபி—(யோக₃த்திலிருந்து எழுந்த நிலையில) எப்படியிருந்தாலும. மயி வர்த்ததே—என்னோடு ஸாம்யத்தை அநுஸந்தி₄ப்பவனாகவே வாழ்கிறான்.

---

**27.** எங்கு நிகழ்திருக்கு மெனறனனை யேகமாத்
தங்குஞ் சமநினைவாற் றுனுணர்ந்தா—னங்கங்கே
யெவ்வா றியன்றிடினும யோகியவ னெனனிடையி
லவ்வா றியன்றவனே யாம்.

எங்கும நிகழ்நதிருக்கும என தன்னை—(யோக₃த₃ஶை யில் முற்கூறிய ஸாமயத்தையிட்டு) எலலா ஜீவர்களிலு மிருக்கும் என்னை. ஏகமா தங்கும் சம நினைவால் தான் உணர்நதான்—(எல்லா ஜீவர்களுமே) பரகாரமாகப் (பரம னோடு) தங்கியிருக்கும் ஸாம்யபுத்தியால் தான் அறிவு பெற்றிருப்பவனான. யோகி அவன்—அந்த யோகி. அங்கு அங்கே—(யோகத்தை விட்டு எழுந்த) அவ்வக்காலங்களில். எவ்வாறு இயன்றிடினும்—எந்தவிதமாக இருந்தாலும், என்னி டையில் அவ்வாறு இயன்றவனே ஆம்—என்னோடு ஸாம் யத்தை அநுஸந்திப்பவனாகவே வாழ்கிறான்.

---

31. கர்மம் கழிந்த முக்திநிலையில் ஈஶ்வரனோடு ஏற்படும் ஸாம்யத்தைக் காண்பது சென்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்டது. இந்த ஶ்லோகத்தில்—அந்த நிலையில் விரிவுபெற்ற ஞானமுடைய வர்களாயிருக்கையையிட்டு ஈஶ்வரனோடும், அவனைவிட்டுப்பிரியாத ப்ரகாரமாயிருக்கையையிட்டு மற்ற ஆத்மாக்களோடும் தமக்குள்ள ஸாமயத்தைக் காண்பதாகிற மூன்றுவது நிலை விவரிக்கப்படுகிறது. ஈஶ்வர ப்ரகாரமாயிருக்கையை அநுஸந்தி₄ப்பதாகையாலே இது சென்ற ஶ்லோகத்தில் அநுஸந்தா₄னத்தைவிடச் சிறப்புற்ற தென்பது தெளிவு. இப்படி மேலும் பரிபக்குவநிலையை அடைகை யால், யோக₃ததைவிட்டு எழுந்தபோதும்,யோக₃ஸம்ஸ்காரப்பெருமை யால் ஸாம்யாநுஸந்த₄ானம் தொடர்கிறபடியும கூறப்படுகிறது.

॥भा॥ योगदशायां सर्वभूतस्थितं मामसंकुचितज्ञानैकाकारतया एकत्वमास्थित: प्राकृतभेदपरित्यागेन सुदृढं यो भजते, स योगी

(ஸர்வபூ₄தஸ்தி₂தம் மாம் ய: ப₄ஜதி) எல்லா பூ₄தங்களிடமும் இருக்கும என்னைப்போனறவனுடைத தனனை எவனொருவன காண்கிருனே. இது எப்படி முடியும? எனில்: (ஏகத்வம ஆஸ்தி₂த:) முக்தி நிலையில் எனனைப்போலே தானும் ஜ்ஞாநச்சுருக்கமற்றவனுய், எல்லா பூ₄தஙகளிலும இருககப்போவதாகிற ஒற்றுமையை அநுஸந்தி₄ப்பதின மூலம காண்கிருன் என்றபடி. எல்லா பூ₄தங்களிலும இருக்கும பரமாத்மாவைத தன ஆத்மாவில காண்கையாவது— தன ஆத்மாவும ப்ராகருத பே₄த₃ங்கள கழிந்தபினபு முக்திநிலையில் பரமாதமாவைபபோலே எல்லா பூ₄தங்களிடமும் இருககபபோவதாகக் காண்கையேயாகும. ஆனுல், அணுவான ஆதமாவுக்கு, விபு₄வான பரமாதமாவுக்குப்போலே ஸ்வரூபத்தாலே எலலா பூ₄தஙகளிலுமிருக்கை ஒட்டாது. ஆயினும், "வாலாக்₃ரஶதபா₄க₃ஸய ஶதத₄ா கல்பிதஸ்ய ச। பா₄கோ₃ ஜீவ: ஸ விஜ்ஞேய: ஸ சாநந்த்யாய கல்பதே ॥" [ஶ்வே 5.9] [நெலநுனியின நூறில ஒரு பகுதியை நூறு கூறிட்ட பகுதியிலும ஒரு பகுதியாயிருப்பவனே ஜீவன் என அறியவேண்டும். அவன் (முக்திநிலையில் ஞானத்தாலே) எங்கும் பரவுகிருன.] எனகிறபடியே முக்திநிலையில் த₄ர்மபூ₄தஜ்ஞானத்தாலே எங்கும் வியாபிப்பதையிட்டு அவனையும் எல்லா பூ₄தங்களிலும் இருப்பவனுகக் கூறமுடியும். "ப்ரதீ₃பவத₃ாவேஶ: தத₂ா ஹி த₃ர்ஶயதி" [4-4-15] [விளக்கு (ஒளியாலே அறை முழுவதும் பரவுவது) போலே (ஜீவனும் ஞானத்தாலே) பரவுகிருன; ஶ்ருதியும் அப்படியே காட்டுகிறதன்ருே.] என்று இதையே ப்₃ரஹ்மஸூத்ரமும் வலியுறுத்திற்று. ஆகையால். கர்மம் காரணமாக உண்டான ஶரீர ஸமப₃ந்த₄த்திஞல் ஏற்படும் ஜ்ஞாந தாரதம்யமாகிற பே₄த₃ம் முக்திநிலையில் கழிந்தபின்பு, பரமாத்மாவோடு ஏற்படப்போகும் இந்த ஒற்றுமையை அநுஸந்தி₄ப்பதன் மூலம் தன ஆத்மாவில் பரமாத்மாவைக் காண்கிருன் எனறு கருத்து. பரமாத்மாவுக்கும், ஜீவனுக்கும் ஸ்வரூபைக்யத்தைக் கூறுவது எல்லா ப்ரமாணஙகளோடும் முரண்படுமாகையாலே, இங்கு 'ஏகத்வம்' என்றதற்கு 'ஸாம்யம்' எனறே பொருள கொள்ளவேண்டும. அடுத்து இந்த யோக₃த்தை அநுவதி₃க்கும

व्युत्थानकालेऽपि यथातथा वर्तमानः स्वात्मानं सर्वभूतानि च पश्यन्

அர்ஜுனன் "ஸாமயேந யோக₃:" [கீ₃தை 6-33] என்று கூறுவதும இதையே வலியுறுத்துகிறது. இக்கைவல்யநிஷ்டர்₂ரையே ஆழ்வாரும்,

"அமரர் தொழப்படுவானை அனைத்துலகுக்கும் பிரானை
அமரமனத்தினுள் யோகுபுணர்ந்து அவன்தன்னொடொன்றாக
அமரத்துணிய வல்லாரகள்" [திருவாய் 3-5-9]

என்று குறிப்பிட்டார். இவ்விடத்தின ஈட்டில், "ஒன்றாக என்னுங்காட்டில் ஸமானமாக எனனும இவ்வர்த்த₂ததைக் காட்டுமோ? என்னில், 'ஸர்வபூ₄தஸ்தி₂தம் யோ மாம ப₄ஜத்யேகத்வமாஸ்தி₂த:' [6-31] என்று ஏகத்வத்தைச் சொல்லி, அதுதன்னை அநுபா₄ஷிக்கிறவிடத்திலே 'யோऽயம் யோக₃ஸ் த்வயா ப்ரோக்த: ஸாம்யேந மது₄ஸூத₃ந' [கீ₃தை 6-33] என்று ஸாமயத்தைச் சொல்லிற்றிறே." என்று வியாக்கியானம செய்ததும இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கது. "ஏகதவம்' என்று எல்லா-ஜீவர்களும் பரமாத்மாவுக்கு அப்ருத₂க்ஸித்₃த₄ (விட்டுப் பிரியாத) விசேஷணமாயிருப்பதைக் குறிப்பதாககொண்டு, எல்லா ஜீவர்களுக்குமுள்ள பரமாத்மாவை விட்டுப்பிரியாதிருக்கையாகிற ஸாம்யத்தையும் கூறுவதாகக் கொள்ளலாம. ஆகையால், இவ்வதி₄காரி—முகதிநிலையில் தான ஞானவிரிவுபெற்று எங்கும் வியாபிப்பதாகிற பரமாத்ம ஸாம்யத்தையும் பரமாத்மாவோடு விட்டுப்பிரியாதிருப்பதாகிற ஸர்வஜீவஸாமயத்தையும் அநுஸந்தி₄ப்பவன் எனறதாகிறது. (ஏகத்வம ஆஸ்தி₂த: ப₄ஜதி) இவ்வொற்றுமையிலே ஊன்றி நிற்பவனாய் தன ஆத்மாவை அநுஸந்தி₄க்கிறான் என்றபடி. (மாம ப₄ஜதி) எனக்கு ஸமமான ஆத்மாவை அநுஸந்தி₄ப்பது என்னை அநுஸந்தி₄ப்பதேயாகும என்று-கருத்து. இனி, இத்தகைய பரிபக்குவ நிலையை அடைந்தவன யோக₃த்தைவிட்டு எழுந்தபோதும், யோக₃ஸம்ஸ்காரப்பெருமையாலே இவனுக்கு இந்த ஸாம்யாநுஸந்தா₄னம் தனனடையே தொடர்கிறது என்கிறது உத்தரார்த்த₄ம்: (ஸ: யோகீ₃ ஸர்வதா₂ வர்த்தமாநோऽபி) அந்த யோகி₃யானவன் எப்படியிருந்தபோதிலும; "ய: ஏகத்வம்' ப₄ஜதி ஸ: ஸர்வதா₂ வர்த்தமாநோऽபி" [எவன் ஸாம்யத்தை அநுஸந்தி₄க்கிறானோ, அவன் எபபடியிருந்தபோதிலும்] என்கையாலே, முற்பாதியில் சொன்ன நிலைக்கும பிற்பாதியில் சொன்ன நிலைக்கும் காலபே₄த₃ம் ஸித்₃தி₄க்கிறது. "யோ ப₄ஜதி";

मयि वर्तते—मामेव पश्यति—स्वात्मनि सर्वभूतेषु च सर्वदा मत्साम्यमेव पश्यतीत्यर्थः ॥ ३१ ॥

॥ भा ॥ ततोऽपि काष्ठामाह—

आत्मौपम्येन सर्वत्र समं पश्यति योऽर्जुन।
सुखं वा यदि वा दुःखं स योगी परमो मतः॥३२॥

32. ஆத்மௌபம்யேந ஸர்வத்ர ஸமம் பஶ்யதி யோऽர்ஜுந।
ஸுக₂ம் வா யதி₃ வா து₃:க்க₂ம ஸ யோகீ₃ பரமோ மத:॥

---

எனறவிடத்தில் சொல்லப்பட்ட யோக₃நிலையில் எப்படி வேண்டு மானுலும இருக்கை ஒட்டாதாகையால், பிற்பாதியில யோக₃த்தை விட்டு எழுந்தபோது எப்படியிருந்தாலும் இந்த ஸாமயாநுஸந்தா₄நம் தொடர்கிறது என்று கூறுவதாகக கொளவதே பொருந்தும். 'ஏகத்வமாஸ்தி₂த:' என்று இந்த ஸாம்யாநுஸந்தா₄ன்த்தில் இவன் ஊன்றி நிற்கிருன எனகையாலே, யோக₃ததை விட்டு எழுந்தபோதும் இவ்வநுஸந்தா₄னம் தொடரத்தட்டில்லே: 'ஸர்வதா₂ வர்த்தமாந:' எனறதற்கு 'ஶாஸ்த்ரங்களில் நிஷித்₃த₄மான முறையில் வாழ்ந்தாலும்' என்று பொருள் கொண்டால், அப்படிவாழும் இவனுக்குக் கைகூடியிருக்கும் யோக₃நிலேயும் அழிந்துவிடும். ஆகையால், தே₃ஹதா₄ரணுதி₃களுக்கு உறுப்பான லௌகிகக்ரியைகளில் ஈடுபட்டிருந்தபோதிலும எனறே பொருள் கொள்ள வேண்டும். (ஸ யோகீ₃ மயி வர்த்ததே) அந்த யோகி, என்னிடமே வாழ்கிருன், பரமாத்மாவிடம தங்கிநிற்பதென்பது யோகி₃க்கும், மற்ற ஜீவர்களுக்கும் துல்யமாகையால், இங்கு அதைககூருமல், தன் பு₃த்₃தி₄யால் இவன் பரமாத்மாவிடம் வாழ்கிருன என்று கூறுவதாகவே கொளளவேண்டும. 'என்னேயே காண்கிருன்' என்றபடி. 'தன்னிடமும, எல்லா ஜீவராசிகளிலும் என்னேடு முற்கூறிய ஸாம்யத்தையே காண்கிருன்' எனறு கருதது. யோக₃த்தைவிட்டு எழுந்தபோது தன ஆத்மாவையே இவன் ஸாக்ஷாத்கரிப்பதில்லேயே; அப்படியிருக்க பரமாத்ம ஸாம்யத்தையோ, ஜீவஸாம்யத்தையோ எப்படி இவன் காணமுடியும எனில்: சற்றுமுன் யோக₃நிலேயில் இருந்தபோது கண்டது இப்போதும் தொடர்வதைக் கூறுவதாகத் தாத்பர்யம கொள்ளவேணும்.' 31.

அர்ஜுந—அர்ஜுநா! ஸர்வத்ர—எல்லாவிடத்திலும், ஆத்மௌபம்யேந—ஆத்மாக்கள் (முற்கூறிய) ஸாம்யத்தை உடையவராயிருக்கையாலே, ஸாவத்ர—தன்னிடமும் மற்ற வர்களிடமும் உள்ள, ஸுக₂ம வா—(பிள்ளை பிறத்தல் முதலிய) ஸுக₂த்தையும், யதி₃ வா து₃:க்க₂ம்—(பிள்ளை இறத்தல் முதலிய) து₃:க₂த்தையும், ய:—எவனொருவன், ஸமம்—ஸமமாக, பஶ்யதி—காண்கிறானோ, ஸ: யோகீ₃—அந்த யோகி₃யானவன், பரம: மத:—அனைவரிலும் சிறந்தவ னாகக் கருதப்படுகிறான்.

---

28. தன்னொத்த வெவ்விடத்து மனனு சமமாக
மன்னொத்த வின்பம வளர்துன்ப—முன்னலுறி
லாங்கவனே சால வதிகனும் யோகியென
வோங்கறிவார் தாமதிப்ப ருற்று.

மன்னு—அரசனே! தன் ஒத்த—(முற்கூறியபடி) தன் ஆத்மாவை ஒத்திருக்கும், எவ்விடத்தும்—எல்லா ஜீவாத் மாக்களிடமும் உள்ள, மன் ஒத்த இன்பம்—மனிதர்களுக்குரிய இன்பங்களையும், வளர் துன்பம்—வளர்கின்ற துனபங்களை யும், சமமாக உன்னலுறில் — சமமாகக் கண்டானாகில், ஆங்கு அவனே—அப்படிப்பட்ட அவனே, சால அதிக னும் யோகி என—யோகிகளுக்குள் மிகச்சிறந்தவன் என்று, ஓங்கு அறிவார் தாம்—அறிவிற்சிறந்தவர்கள்தாம், உற்று மதிப்பர்—நன்கு கௌ₃ரவிப்பர்.

---

32. நாலுவித₄மான ஜீவாத்ம யோக₃நிலைகளில் தலைசிறந்த நிலையைச் சொல்லுகிறது இந்த ஶ்லோகத்தில். மிகப்பெரிய துன்பத்திற்குக காரணமான அநர்த்த₂ம வந்தாலும அதில் விகார மடையாமலிருப்பதற்கு உறுப்பாக, "பூர்வகர்மத்தில் ஏற்றத்தாழ்வா லும், அதனால உண்டாகும ஜ்ஞாநத்தில ஏற்றத்தாழ்வாலும் ஸுக₂து₃:க்க₂ங்களில் ஏற்றத்தாழ்வு ஏற்படுகிறது; அவற்றில் விகாரமடையக்கூடாது" என்று அநுஸந்தி₄த்து பிறர் இன்ப துன்பங்களிற்போலே தன் இனப துனபங்களிலும் ஓட்டற்றிருக்கும் நிலையாகையாலே இது தலைசிறந்த நிலையாகிறது:— (ஸர்வத்ர

॥भा॥ स्वात्मनश्चान्येषां चात्मनामसंकुचितज्ञानैकाकारतयौपम्येन स्वात्मनि चान्येषु च सर्वत्र वर्तमानं पुत्रजन्मादिरूपं सुखं तन्मरणादि-रूपं च दुःखमसंबन्धसाम्यात्समं यः पश्यति, परपुत्रजन्ममरणादिसमं स्वपुत्रजन्ममरणादिकं यः पश्यतीत्यर्थः ; स योगी परमो मतः— योगकाष्ठां गतो मतः ॥३२॥

---

ஆத்மௌபம்யேந) தன் ஆத்மாவிலும், மற்றவர்களுடைய ஆத்மாக்களிலும் ஆத்மஸ்வரூபங்கள் தேஹவிலக்ஷணமாய், ஜ்ஞாநாநந்த மயமாய், முக்திநிலையில் தர்மபூதஜ்ஞாந விகாஸமடைவதாய் இவ்வண்ணம் ஒருபடிப்பட்டதாயிருக்கையாலே. மேலே, 'ஸமம் பஶ்யதி' என்று ஸமமாகக்காண்கையைச் சொல்லுகையாலே, 'ஆத்மௌபம்யேந பஶ்யதி' என்று கூட்டிப் பொருள்கொண்டால் புநருக்தி ஏற்படுமாகையால், 'ஸர்வத்ர ஆத்மௌபம்யேந' என்று கூட்டிப்பொருள் கொள்ளப்பட்டது. உபமாநபதமும் 'ஸமம்'என்னும் பொருளை உடையது; அதன் தன்மை ஔபம்யமாகிறது. எல்லா ஆத்மாக்களும் முற்கூறிய ஸாம்யத்தை உடைத்தாயிருக்கையாலே என்றதாகிறது. 'ஸர்வத்ர' என்னும் பதம் காகாக்ஷிந்யாயத்தாலே கீழும் மேலும் அந்வயிக்கிறது. (ஸர்வத்ர ஸுகம் வா யதி வா து:க்கம் ஸமம் பஶ்யதி) தன்னிடமும், பிறரிடமும் ஏற்படும் பிள்ளை பிறத்தல் முதலானவற்றால் உண்டாகும் இன்பத்தையும், பிள்ளை இறத்தல் முதலானவற்றால் உண்டாகும் துன்பத்தையும், ஆத்மாவோடு தொடர்பற்றிருக்கையையிட்டு ஸமமாகக்காண்கிறானே. மிகவும் வேறுபட்டிருக்கும் இவற்றை ஸமமாகக் காண்பது எப்படி? எனில்; பிறர்க்குப்பிள்ளை பிறப்பதாலும், இறப்பதாலும் தன்னிடமும், தனக்குப்பிள்ளை பிறப்பதாலும் இறப்பதாலும் பிறரிடமும் இன்ப துன்பங்கள் எப்படி ஏற்படுவதில்லையோ, அப்படியே தனக்குப் பிள்ளை பிறப்பது இறப்பது முதலானவற்றிலும் முற்கூறிய அநுஸந்தானத்தின் மூலம் இன்ப துன்பங்கள் ஏற்படாமலிருக்கும் நிலையை அடைந்தவன் இவன் என்று கருத்து. (ஸ யோகீ பரமோ மத:) அந்த யோகியே நால்வரிலும் தலைசிறந்தவன் என்று ஆத்மயோகத்தை அறிந்தவர்களாலே கருதப்படுகிறான். பரமாத்மயோகத்தை மேலே சொல்லப்போகிறானாகையால், இங்கு சொல்லப்படும் ஆத்மயோகிகளில் இவன் தலைசிறந்தவன் என்றே கொள்ள வேண்டும். பரமயோகிகளான வ்யாஸவஸிஷ்டாதிகளும், புதர

अर्जुन उवाच—

योऽयं योगस्त्वया प्रोक्तः साम्येन मधुसूदन।
एतस्याहं न पश्यामि चञ्चलत्वात्स्थितिं स्थिराम्॥ ३३॥

चञ्चलं हि मनः कृष्ण प्रमाथि बलवद्दृढम्।
तस्याहं निग्रहं मन्ये वायोरिव सुदुष्करम्॥ ३४॥

அர்ஜுந உவாச—

33. யோऽயம் யோக₃ஸ்த்வயா ப்ரோக்த:
ஸாம்யேந மது₄ஸூத₃ந।
ஏதஸ்யாऽஹம ந பஶ்யாமி
சஞ்சலதவாத் ஸ்தி₂திம் ஸ்தி₂ராம் ॥

34. சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண ப்ரமாதி₂ ப₃லவத் த்₃ருட₄ம் ।
தஸ்யாஹம நிக்₃ரஹம் மநயே வாயோரிவ ஸுது₃ஷ்கரம் ॥

மது₄ஸூத₃ந க்ருஷ்ண—*மதுவென்னும் அசுரனை அழித்த கண்ணனே!* ய: அயம ஸாமயேந யோக₃—*யாதொரு ஸம தர்ஶநரூபமான இந்த யோகமும்.* த்வயா—*உன்னால்.* ப்ரோக்த:—*உபதேஶிககப்பட்டதோ.* ஏதஸ்ய ஸ்தி₂ராம் ஸ்தி₂திம்—*இந்த யோகமும் நிலையாக நிற்பதை.* சஞ்சலத்வாத்—*மனம் நிலைநில்லாமலிருக்கும் காரணத்தாலே.* ந பஶ்யாமி—*நான் காணவிலலை.* ஹி—*ஏனெனில்:* மந:—*மனமானது.* சஞ்சலம்—*(இயல்வாகவே) நிலைநில்லாததாகவும்.* ப₃லவத்—*வலிமை யுடையதாகவும். (அதனாலேயே)* ப்ரமாதி₂—*கலங்கவைப்பதாகவும்.* த்₃ருட₄ம்—*(விபரீத விஷயங்களில் இழுப்பதில்) உறுதியானதாகவும உள்ளது;* தஸ்ய நிக்₃ரஹம்—*அதை அடக்குவதை.* வாயோ: இவ—*புயற்காற்றை அடக்குவது போலே,* ஸுது₃ஷ்கரம்—*மிகவும் செய்ய இயலாதது என்று.* அஹம் மந்யே—*நான் நினைக்கிறேன்.*

---

வியோக₃ாதி₃களால் விகாரமடைகிறார்களாகையால், அவ்விகாரமடையாத இவனை யோகி₃களில் தலைசிறந்தவன என்று கூறத்தட்டில்லையன்றோ. (அர்ஜுநந்) அர்ஜுனன் (வெளுததவன்) என்று பெயர் பெற்ற நீ ப₃ந்து₄லாப₄மரணஙகளில் ஸுக₂து₃:கக₂ங்களாகிற அழுக்கற்று வெளுத்த நெஞ்சினனாகவேண்டாவோ? என்று கருத்து. 32.

29. அண்ணலைப்பின் கேட்டா னமர்விசய னீயுரைத்த
வெண்ணமரு மொப்பா ரெழில்யோகந்—திண்ணமிது
மன்னு நிலைமை மதுசூத னுகாணே
னுன்னுமனஞ் சஞ்சலததா லோர்த்து.

30. வன்னெஞ்சு சஞ்சலமாய் மாறும் வலிநதடரு
மந்நெஞ்சு காற்றைப்போ லானறடக்கல்—தனனி
லரிதென் றிருப்பனென வாங்கவனுங் கேட்கச்
சுரிசங்கன் றானுரைத்தான் சொல்.

பின்—இப்படிக் கண்ணன் கூறியவுடன், அமர் விசயன்—போரில் வெற்றியே அடையும் அர்ஜுனன், அண்ணலை—ஸ்வாமியான கண்ணனை. கேட்டான்—பின்வருமாறு கேட்டான்.— "மதுசூதனு—மதுவை அழித்தவனே! நீ உரைத்த—உனால் உரைக்கப்பெற்றதாய், எண் அமரும்—அனைவராலும் மதிக்கத்தக்கதாய், ஒப்பு ஆர்—ஸமதர்சனம் நிறைந்ததான. எழில்யோகம் — அழகிய யோகத்தை. ஓர்த்து—ஆராய்ந்து பார்க்குமளவில், உன்னும் மனம் சஞ்சலத்தால்—( ஆத்மாவை. ) தியானிக்கவேண்டிய மனம் நிலைநில்லாமையால். இது—இந்த யோகம். திண்ணம—உறுதியாக, மன்னும் நிலைமை-நிலைநிற்கும் தன்மையுடையதாயிருப்பதை, காணேன்—நான் காணவில்லை; (ஏனெனில்) வல் நெஞ்சு—வலியநெஞ்சம். சஞ்சலமாய் —( இயல்வாகவே ) நிலைநில்லாததாய் மாறும்—கலங்சவைப்பதாய், வலித்து—பலமுடையதாய், அடரும் — உறுதியாக நலியும். அந்நெஞ்சு — அந்த நெஞ்சதனை, ஆன்று அடக்கல்—நன்கு அடக்குவது காற்றை (அடக்கல்) போல்—புயற்காற்றை அடக்குவதுபோல, தன்னில் அரிது என்று—இயல்வாகவே இயலாதது என்று, இருப்பன்—நினைப்பேன் , என—என்று, ஆங்கு—அப்போது, அவனும்—அர்ஜுனனும், கேட்க—கேட்க, சுரிசங்கன் தான்—சுரியுடைய சங்கத்தை ஏந்திய கண்ணன், சொல் உரைத்தான்—( பின்வரும் ) பதிலைக் கூறினன்.

॥भा॥ योऽयं देवमनुष्यादिभेदेन जीवेश्वरभेदेन चात्यन्तभिन्नतयैतावन्तं कालमनुभूतेषु सर्वेष्वात्मसु ज्ञानैकाकारतया परस्परसाम्येन अकर्मवश्यतया चेश्वरसाम्येन च सर्वत्र समदर्शनरूपो योगस्त्वया प्रोक्तः, एतस्य योगस्य स्थिरां स्थितिं न पश्यामि, मनसश्चञ्चलत्वात्।

---

34. இவ்வண்ணமாக ஆத்மயோகிக்குரிய நாலு நிலைகளைச் சொல்லும் முந்திய நாலு ஶ்லோகங்களிலும் ஜ்ஞாநமே ஸ்வரூபமாயிருக்கையையிட்டும், குற்றமற்றிருக்கையையிட்டும், ப்₃ரஹ்மத்தோடு அப்ருத₂க்ஸித்₃தி₄ஸம்ப₃ந்த₄த்தையும் அதன் கு₃ணமான ஜ்ஞாநவிகாஸத்தை முக்திநிலையில் தான் அடைவதையுமிட்டும், மற்ற ப்ராக்ருதர்களோடு ஸம்ப₃ந்த₄மற்றிருக்கையையிட்டும் ப்₃ரஹ்மத்தோடும், மற்ற ஜீவர்களோடும் ஸாம்யாநுஸந்த₄ானம் கூறப்பட்டது. இந்நாலு ஶ்லோகங்களில் முதலிரண்டு ஶ்லோகங்களாலேயே ஸாம்யாநுஸந்த₄ானம் சொல்லப்படுகிறது என்றும் மேலிரண்டு ஶ்லோகங்களாலே அவ்வநுஸந்த₄ானம் த்₃ருட₄தரமாகவும், த்₃ருட₄தமமாகவும் முற்றுவதற்கேற்ப ஏற்படும் இரண்டு ப₂ல நிலைகள் கூறப்படுகின்றனவென்றும் சில ஆசார்யர்கள் நிர்வஹித்தார்கள். ஆக, இவ்வத்தியாயத்தில் இதுவரையில் யோகா₃ப்₄யாஸவிதி₄யும் பகுவத்திற்கேற்ப நாலுவகைப்பட்ட யோகி₃களும் கூறப்பட்டனர். இனி, முன் அத்தியாயங்களில் சொல்லப்பட்ட யோக₃ஸாத₄நங்களான அப்₄யாஸம், வைராக்₃யம் முதலானவற்றைத் தெளிவாக அறிவதற்காக மறுபடியும் அர்ஜுனன் கேள்வி கேட்கிறான் இவ்விரண்டு ஶ்லோகங்களாலே. அதில் முதல் ஶ்லோகத்தில் கேள்வியைச் சுருக்கமாகக் கேட்டு, இரண்டாவதாலே அதை விவரிக்கிறான். (யோऽயம் ஸாம்யேந யோக₃:) பரமாத்மாவோடும், இதரஜீவர்களோடும் ஸாம்யாநுஸந்த₄ாநரூபமான யாதொரு இந்த யோக₃ம். (த்வயா ப்ரோக்த:) உன்னால் உபதே₃ஶிக்கப்பட்டதோ; இயல்வாகவே ஸர்வஜ்ஞனுயிருக்கும் உன்னாலேயே இதை அநுஸந்தி₄ப்பதற்கும், சொல்லுவதற்கும் இயலுமேயொழிய அஜ்ஞர்களான எங்களால் அநுஸந்தி₄ப்பதற்கும் இயலாது என்று கருத்து. (ஏதஸ்ய) இந்த ஸாம்யாநுஸந்த₄ாந யோக₃த்தினுடைய, (ஸ்தி₂ராம் ஸ்தி₂திம் ந பஶ்யாமி) நிலையான ஸ்தி₂தியை நான் காண்கிறேனல்லேன். இந்த யோக₃ம் நிலைநிற்பதை நான் காணவில்லை என்கை.

வைஷமயம் நிறைநதிருக்கும் இவ்வுலகில் ஸாம்யாநுஸந்த₄ாநம் எப்படிக்கூடும? தே₃வர், மனிதர், திர்யக், ஸ்த₂ாவரம் என்னும் நாலுவகைப்பட்ட ஶரீரபே₄த₃ங்களையும், அதனுல் ஜ்ஞாநம் ஶக்தி முதலானவற்றில எண்ணிறநத பே₄த₃ங்களையும உடையவர்களா யிருக்கிறார்கள் ஜீவர்கள். ஜீவர்களையும ஈஶ்வரனையும் எடுததுக் கொண்டால், ஜீவர்கள் கர்மவஶ்யர்களாகவும், அதனுல் அஜ்ஞர் களாகவும, அஶகதர்களாகவுமிருக்கிறார்கள்; ஈஶ்வரனே அகர்மவஶ்ய னுகவும், ஸர்வஜ்ஞனுகவும், ஸர்வஶகதனுகவுமிருக்கிறுன். இப்படி இருளும் ஒளியும் போலே அடியோடு வேறுபடிப்பட்டவையாக அநாதி₃காலமாக அநுப₄விக்கப்பட்ட இநதத் தத்துவங்களிடையே ஸாம்யத்தை அநுஸந்தி₄க்கச் சொல்லுகிறுய். ஜ்ஞாநஸ்வரூபர்களா யிருக்கையையிட்டு ஸர்வஜீவர்களோடும், ஈஶ்வரனேடும், முகதி நிலையில கர்மவஶ்யரல்லாதவராயிருப்பதையிட்டும, அதனுல் ஜ்ஞாநத்திலும, பெறும பேருன இன்பத்திலும ஏற்றத்தாழ்வு இல்லா திருக்கையையிட்டும் ஈஶ்வரனேடும தனக்கு ஸாம்யத்தை அநுஸந் தி₄க்கச்சொல்லுகிறுய். வைஷமயம அநாதி₃காலமாக முகம் பழகியதா யிருககிறது; ஸாம்யமோ ஶாஸ்திரத்தினுலேயே அறியத்தக்கதா யிருக்கிறது. அப்படியிருக்கும்போது இந்த யோக₃ம் எனக்கு எப்படி நிலைநிற்கமுடியும் என்று கருத்து. மனத்தை அடக்குவதன் மூலம் இந்த யோக₃த்தை நிலைநிறுத்திக்கொள்ளலாமே? என்று கண்ணன் திருவுள்ளமாகக் கூறுகிறுன,— (சஞ்சலத்வாத்) விவரண மான மேல்வாக்யத்தில் மனத்தையே சஞ்சலமாகக்கூறுகையால், 'மனம் நிலைநில்லாததாயிருக்கையால்' எனறு இங்கும் பொருள் கொள்ளவேண்டும். (மது₄ஸூத₃ந) மது₄கைடப₄ர்களை அழித்தாற் போலே, என்நெஞ்சிலுள்ள ரஜஸ்தமங்களை அழிக்க வல்ல நீயே என் நெஞ்சை அடகக உபாயத்தையும் உபதே₃ஶிக்கவேணும் என்று கருத்து. ஆக அநாதி₃காலமாக பே₄த₃ாநுஸந்த₄ானம் செய்துவநதவனுய் நிலைநில்லாத நெஞ்சை உடையவனுயிருககை யால் என நெஞ்சில் ஸாம்யாநுஸநத₄ாநயோக₃ம் நிலைநில்லாது; நிலைநிற்க நீயே வழி சொல்லவேணும் எனறு முதல ஶ்லோகத்தில சொல்லிற்றுயிற்று. 33.

இனி, முதல் ஶ்லோகத்தாலே கேட்கப்பட்ட கேள்வி இரண்டா வது ஶ்லோகத்தால் விவரிக்கப்படுகிறது. (ஹி) எப்படியெனில்: 'ஹி' என்பதற்கு ப்ரஸித்₃தி₄ப்பொருளைக்கொண்டு சஞ்சலமாகப் பிரஸித்₃தி₄பெற்ற மனம் என்று மனத்துக்கு விஶேஷணமாக்கினுர்

तथा ह्यनवरताभ्यस्तविषयेष्वपि स्वत एव चञ्चलं पुरुषेणैकत्रावस्थापयितु-मशक्यं मनः पुरुषं बलात्प्रमथ्य दृढमन्यत्र चरति, तस्य स्वाभ्यस्त-

---

யாத₃வப்ரகாஶர்; அதைவிட, அதற்கு ஹேதுப்பொருளைகொண்டு முன ஶ்லோகத்திற்சொன்ன அர்த்த₂த்திற்கு இந்த ஶ்லோகத்தில ஹேது விளக்கப்படுகிறது என்று கூறுவது உசிதம் என்பது ஶ்லோகங்கள் அமைந்திருக்கும முறையிலிருந்து தெளிவாக விளங்குகிறது. (சஞ்சலம மந:) தான எப்போதும பழகும ஶப்₃த₃ாதி₃ விஷயங்களிலும் இயல்வாகவே நிலைநில்லாததாயிருக்கும மனம். அவ்விஷயங்களிலேயே ஒன்றிலும் நிலைநில்லாமல ஒன்றை விட்டு ஒன்றுக்குத் தாவிவரும் மனத்தைந் தான் பழகியறியாத ஆத்மாவில் நிலைநிறுத்த எவனாலும ஆகுமோ? என்று கருத்து. இதையே "நின்றவா நில்லா நெஞ்சினையுடையேன்" [பெரியதிரு 1-1-4] "உள்ளமோ ஒன்றின் நில்லாது" [திருக்குறு 0] என்று திருமங்கையாழ்வாரும் அருளிச்செய்தார். (ப₃லவத்) வலிமை யுடையது. இவன ஆத்மாவை நோக்கி இழுக்க, இது தனக்கு முகம் பழகிய ஶப்₃த₃ாதி₃விஷயங்களை நோக்கி இழுத்தால் இவனை விட வலிமையுடைய இது வெல்லுமேயொழிய இவன வெலல மாட்டான என்று கருதது. (ப்ரமாதி₂) கலங்க வைப்பது; முற் கூறியபடி வலிமைமிக்கதாகையாலே இவனை விஷயங்களை நோக்கி இழுத்துச் சென்று கலங்கவைப்பது இம்மனம் என்று கருத்து. 'ப₃லவத்' என்று ஹேதுவையும், 'ப்ரமாதி₂' என்று கார்யத்தை யும் சொல்லுகிறது. அன்றிக்கே, ப₃லவச்ச₂ப்₃த₃ம் ப்ரமத₂நக்ரியா விஶேஷணமாகவுமாம். ப₃லாத்காரிததுக் கலங்கவைப்பது என்றபடி. (த்₃ருட₄ம்) வெளிவிஷயங்களில் செலவதில் உறுதியாயிருப்பது. ஒரு பூவைவிட்டு மற்றொரு பூவுக்குப் பறந்து சென்றுகொண்டே யிருக்கும வண்டுபோலே, ஶப்₃த₃ாதி₃ விஷயங்களில சஞ்சல ஸ்வ பா₄வமாயிருந்தபோதிலும, "யாதானும் பற்றிநீங்கும் விரதம" [திரு விருத்தம் 95] என்றுப்போலே. ஆத்மாவைக் கைவிட்டு ஏதேனு மொரு வெளிவிஷயத்தை நோக்கிச் செல்வதில உறுதியாயிருப்பது என்று கருத்து. ஆத்மவிஷயத்தைக் காட்டிலும் சிறந்த ப₄க₃வத்₃ விஷயத்தின ருசியறிநத பினபும், அநாதி₃வாஸனையாலே அதி லும் நிலைநில்லாமல், "உன்னையும் வஞ்சிக்கும் கள்ள மனம்" [திருவாய் 5-1-3] என்கிறபடியே ப₄க₃வானிடம ஈடுபட்டதுபோலே நடித்து அவனையும வஞ்சிதது வெளியில் பட்டி மேயும உறுதி

विषयेष्वपि चञ्चलस्वभावस्य मनसस्तद्विपरीताकारात्मनि स्थापयितुं निग्रहं प्रतिकूलगतेर्महावातस्य व्यजनादिनेव सुदुष्करमहं मन्ये। मनोनिग्रहोपायो वक्तव्य इत्यभिप्रायः ॥ ३३ ॥ ३४ ॥

---

யுள்ளதன்றே இம்மனம். "விண்ணுளார் பெருமாற்கடிமை செய்வாரையும் செறும் ஐம்புலன்" [திருவாய் 7-1-6] "பலவாநிந்த்3ரியக்3ராமோ வித்3வாம்ஸமபி கர்ஷதி" [மநு 2-215] [வலிமைமிக்க இந்த்3ரியங்களின் கூட்டம் அறிவுடையவர்களையும் சப்3தா3தி3 விஷயங்களை நோக்கி இழுத்துவிடும்] என்கிறபடியே பேரறிவாளர்களையும் சப்3தா3தி3 விஷயங்களில் இழுத்துவிடும் ஐந்து இந்திரியங்களை அடியாட்கொண்டிருக்கின்றது. மனமென்னும் வன்குறும்பனோடு போரிட்டு வெல்லுது இயலாத காரியமேயன்றே. (தஸ்ய) இவ்வண்ணமாகப் பழகிய விஷயங்களிலும் இயல்வாகவே நிலைநில்லாததாய், வெளிவிஷயங்களில் ஏதேனும் ஒன்றைப்பற்றி ப்ரத்யக்3 (உள்) விஷயத்தை விட்டு நீங்கும் விரதத்தையுடைய அந்த மனத்தினுடைய. (நிக்3ரஹம்) நியமனத்தை; முகம் பழகியறியாத ஆத்மவிஷயத்தில் நிலைநிறுத்தும் பொருட்டு அம்மனத்தை நியமிப்பதை என்னை. (வாயோரிவ ஸுது3ஷ்கரம் அஹம் மந்யே) (மனத்தைப் போலே) சஞ்சலமாய், வலிமையுடையதாய் கலங்க வைப்பதாய், எல்லாப் பொருள்களையும் தான் செல்லும் வழியே அடித்துச்செல்வதில் உறுதியானதான புயற்காற்றை விசிறி முதலானவற்றால் தடுப்பதுபோலே, (இம்மனத்தை நியமிப்பதும்) செயற்கரிய செயல் என்றே எண்ணுகிறேன். தா3ர்ஷ்டாந்திகமான மனத்திற்குச் சொல்லப்பட்ட சஞ்சலத்வம் முதலான தன்மைகளை த்3ருஷ்டாந்தமான காற்றுக்கும் வைத்துக்கொள்ளவேண்டுமாகையால், வாயுமப்3த3த்திற்குப் புயற்காற்று என்று பொருள் கொள்ளவேண்டும். இவ்வளவு வலிமையுடைய மனத்தை எளியெளும்பனான இவன் அடக்கமுயலுவது புயற்காற்றை விசிறியால் தடுக்கமுயல்வதையொக்கும் என்று கருத்து. (க்ருஷ்ண) "க்ருஷாமி மேதி3நீம் பார்த்த2" என்கிறபடியே உயிர்களை உய்விப்பதற்காக அநாதி3காலமாக க்ருஷிசெய்பவன் க்ருஷ்ணனாகிறான். "பத்தியுழவன் பழம்புனத்து" [நான்-திருவ 23] என்கிறபடியே உயிர்களிடத்தில் பக்திப் பயிர் வளருவதற்காக அநாதி3காலமாக க்ருஷிசெய்யும் நீ இம்மனத்தை அடக்கினால் அடக்கலாமேயொழிய எளியெலும்பனான என்னால் இதை அடக்க இயலாது என்று கருத்து.

श्रीभगवानुवाच—
असंशयं महाबाहो मनो दुर्निग्रहं चलम्।
अभ्यासेन तु कौन्तेय वैराग्येण च गृह्यते॥३५॥
असंयतात्मना योगो दुष्प्राप इति मे मतिः।
वश्यात्मना तु यतता शक्योऽवाप्तुमुपायतः॥३६॥

ஸ்ரீப₄க₃வாந் உவாச—
35. அஸம்ஶயம் மஹாபா₃ஹோ மநோ து₃ர்நிக்₃ரஹம் சலம்।
அப்₄யாஸேந து கௌந்தேய வைராக்₃யேண ச க்₃ருஹ்யதே॥
36. அஸம்யதாத்மநா யோகோ₃ து₃ஷ்ப்ராப இதி மே மதி।
வஶ்யாத்மநா து யததா ஶக்யோऽவாப்துமுபாயத:॥

மஹாபா₃ஹோ—*தடக்கையனே!* கௌந்தேய—*குந்தீ புத்திரனே!* சலம் மந—*நிலைநில்லாத மனம்,* து₃ர்நிக்₃ரஹம்—*அடக்கவரிது (என்பதில) அஸம்ஶயம்—ஐயமில்லைதான்;* து—*ஆயினும்.* அப்₄யாஸேந—*(ஆத்மகு₃ணங்களில்) பழக்குவதாலும்.* வைராக்₃யேண—*(மற்ற விஷயங்களில் தோ₃ஷத்தைக காட்டி) வெறுப்பை விளைப்பதாலும்,* க்₃ருஹ்யதே—*(ஒருவாறு) மனம் அடக்கப்படுகிறது.* அஸம்யதாதமநா—*மனத்தை அடக்காதவனுல்,* யோக₃:—*(ஸமத₃ர்ஶந) யோக₃ம்.* து₃ஷ்ப்ராப:—*அடைய அரிது.* இதி—*என்பதே,* மே மதி:—*என் முடிவு,* து-*ஆனுல்,* உபாயத:-*(முற்கூறிய) கர்மயோக₃மாகிற உபாயத்தினுல்,* வஶ்யாத்மநா—*மனத்தை அடக்கியவனுய்,* யததா—*யோகா₃ப்₄யாஸம் செய்பவனுலை.* (யோக₃:—*இந்த ஸமத₃ர்ஶந யோக₃ம்)* அவாப்தும் ஶக்யதே—*அடைய எளிதாகிறது.*

---

"ஒன்று சொல்லி ஒருததினில் நிற்கிலாத ஓரைவர் வன்கயவரை
என்று யான் வெல்கிற்பன் உன திருவருளில்லையேல"
*[திருவாய் 7-1-7]*

*என்ற ஆழ்வாரைபபோலே அவனையே கால் கட்டுகிருன். ஆக, இவ்விரண்டு ஶ்லோகத்தாலும மனத்தை அடக்குவது அரிதாயுள்ளது என்று காட்டி, அதை அடக்கும உபாயத்தை நீயே சொல்ல வேண்டும் எனறு உணர்த்தி நிற்கிருன் அர்ஜுனன. 33, 34.*

31. நேராக நின்றடக்க நில்லா தரிதுமனங்
காரார் கொடைத்தடந்தோட் கௌந்தேயா—சீராரும்
யோகத் திடைப்பயில்வா லேலுந் துறவதனு
லாகத் ததுவடக்க லாம்.

காரார் கொடை தடம் தோள் கௌந்தேயா—மேகம் போலே வரையாது வழங்கும் பெரிய தோளையுடைய குந்திபுத்திரனே. நில்லாத மனம்—நிலைநில்லா நெஞ்சானது. நேராக நின்று அடக்க அரிது—எளிதில் அடக்க இயலாததே யாகும்; சீர் ஆரும் யோகத்திடை பயில்வால்—குணங்கள் நிறைந்த ஆத்மாவின் ஸாக்ஷாத்காரத்தில் பயிற்சியாலும். ஏலும் துறவு அதனுல்—மற்ற விஷயங்களில் பொருந்திய வைராக்யத்தாலும். அது—அம்மனத்தை. ஆகத்து—ஆத்மாவில். அடக்கலாம்—ஈடுபடும்படி செய்யலாம்.

32. தன்னிசையா நெஞ்சுதன்னுற்சார்வரிதாம்யோகமென்
றென்னிசைவ தாகு மிதுபின்னே—முன்னிசையு
நெஞ்சான் முயனறவனு னேரே யுபாயத்தா
லெஞ்சா தடையலா மிங்கு.

தன் இசையா நெஞ்சு தன்னுல்—தனக்கு வசப்படாத மனத்தால். யோகம் சார்வரிதாம்—(ஸமதர்சநரூப) யோகம் அடைய இயலாதது. என்று—என்று. என் இசைவு அது ஆகும்—என் உறுதியான முடிவாகும்; பின்னே இது—ஆயினும் இந்த யோகத்தை. உபாயத்தால்—(முற்கூறிய) கர்மயோகமாகிற உபாயத்தால். முன் இசையும் நெஞ்சால்—தனக்கு முற்பட இசைந்திருக்கும் மனத்தால் முயன்ற வனுல்—முயற்சி செய்கின்ற யோகியால். இங்கு—இப் பிறப்பிலேயே. எஞ்சாது—முழுவதும். நேரே அடையலாம்—தடையற அடையலாம்.

---

35, 36. அர்ஜுனன் கேட்ட கேள்வியை அநுவாதம் செய்து கொண்டு, அவன் அறிய விரும்பிய மனததையடக்குமுபாயததை இவ்விரு ச்லோகங்களாலே கூறுகிறுன் கண்ணன். (சலம மநः

॥भा॥ चलस्वभावतया मनो दुर्निग्रहमेवेत्यत्र न संशयः; तथाऽप्यात्मनो गुणाकरत्वाभ्यासजनिताभिमुख्येनात्मव्यतिरिक्तेषु दोषाकरत्वदर्शनजनितवैतृष्ण्येन च कथंचिद्गृह्यते : असंयतात्मना—अजित-

---

து3ர்நிக்3ரஹம் அஸம்ஶயம்) நிலைநில்லாத நெஞ்சு அடக்க அரியதே என்பதில் ஐயமில்லை; மனம் நிலைநில்லாமையையே இயல்வாகக் கொண்டதாகையால் அடக்க அரிதாயுள்ளது என்று நீ கூறியது பொதுவாக உண்மையே என்று கருத்து, 'அஸம்ஶயம்' (ஐயமில்லை) என்றது, 'ஸதயம்' என்னும் பத3ம்போல் அர்த்4தாங்கீ3காரத்தை (பாதி இசைவை) காட்டுகிறது. (து) ஆயினும்; பொதுவாக நீ சொன்னது சரியாயினும், ஒரு விஶேஷமும் உண்டு என்று காட்டுகிறது துஶப்3த3ம். (அப்4யாஸேந வைராக்3யேண ச) ஆத்மா நற்குணங்கள். பல நிறைந்தது என்று அடிக்கடி அநுஸந்தி4ப்பதன் மூலம் மனத்தை ஆத்மாவில் ஈடுபடுத்துவதாலும், ஆத்மாவைததவிர்ந்த ஶப்3த3ாதி3விஷயங்களில் தோ3ஷத்தைக் காட்டி அவற்றில் வெறுப்பை வளர்ப்பதாலும். அநாதி3காலம் முதல் பழகிய ஶப்3த3ாதி3விஷயங்களில் இவனுக்கு ஏற்பட்டிருக்கும் ஈடுபாட்டைப்போக்குவதற்கு அவற்றிலுள்ள அற்பமாயிருக்கை நிலைநில்லாததாயிருக்கை முதலிய தோ3ஷங்களைக்காட்டிக்காட்டி அவற்றில் வெறுப்பை வளர்க்கவேண்டும். இவனுக்குப் பழக்கமேயில்லாத ஆதமாவில ஈடுபாட்டை ஏற்படுத்துவதற்கு ஆத்மாவிடமுள்ள நித்யமாயிருக்கை, அறிவே வடிவாகவும், அறிவுடையதாகவுமிருக்கை, ஆனந்த3மே வடிவாயிருக்கை, (முக்திநிலையில்) கர்மவஶப்படாததாயிருக்கை, குற்றமற்றதாயிருக்கை முதலான நற்குணங்களைக் காட்டிக்காட்டி அதில் விருப்பை ஏற்படுத்தவேண்டும் என்று கருத்து. (க்3ருஹ்யதே) முற்கூறிய அப்4யாஸவைராக்3யங்களால மனம் ஒருவாறு அடககபபடுகிறது. குறிக்கொண்டு அப்4யாஸவைராக்3யங்களைப்பழகப்பழக, இயல்வாக நிலைநில்லாததாய், யாதானுமொரு வெளிவிஷயத்தைப்பற்றி ஆத்மாவைவிட்டு நீங்கும் மனம் அவ்வெளி விஷயங்களில் ஈடுபாட்டைவிட்டு ஆத்மாவில் நிலையாக நிற்கும் என்று கருத்து. ஆக, முதல் ஶ்லோகத்தாலே நிலைநில்லா மனத்தை ஆதமாவில ஈடுபடுத்தும் உபாயம கூறப்பட்டது. இனி, 'ஏதஸ்யாஹம் ஸ்தி2ராம ஸ்தி2திம் ந பஶ்யாமி' [33] என்று அர்ஜுனன் "யோக3ம் நிலைநிற்பதைக் காணவில்லை" என்று கூறியது நெஞ்சை அடக்காதவன விஷயத்திலேயே பொருந்தும் என்று இரண்டாவது

मनसा महताऽपि यत्नेन योगो दुष्प्राप एव; उपायतस्तु वश्यात्मना— पूर्वोक्तेन मदाराधनरूपेणान्तर्गतज्ञानेन कर्मणा जितमनसा यतमानेनायमेव समदर्शनरूपो योगोऽवाप्तुं शक्यः॥ ३५ ॥ ३६ ॥

---

ஸ்லோகத்தாலே காட்டுகிறான். (அஸம்யதாத்மநா யோக3: துஷ்ப்ராப இதி மே மதி:) அடக்கப்படாத நெஞ்சை உடையவனாலே முற்கூறிய ஸமதர்சநயோகம் அடைய முடியாதது என்பதே என் ஸித்3தா4ந்தம். இந்த ப்ரகரணம் மனத்தை அடக்குவது பற்றியதானமையாலும், 'அஸம்யதாத்மநா' என்றும், 'வஸ்யாத்மநா' என்றும் முறையே ஆத்மாவை அடக்காமலிருப்பதையும் அடக்குவதையும் பற்றி இந்த ஸ்லோகத்தின் இரு பாதிகளிலும் சொல்லுகையாலும், அடக்கத்தக்கது மனமேயொழிய ஜீவாத்மாவல்லாமையாலும் இங்கு ஆத்மாவெனப்படுவது மனமேயாக வேண்டும் என்பது தெளிவு. முந்தின ஸ்லோகத்தில் அர்ஜுனனை 'மஹாபா3ஹோ' [தடக்கையனே!] என்று கூப்பிட்டிருப்பதை இத்துடன் சேர்த்து அநுஸந்தி4க்கும்போது, 'எத்தனைதான் பா3ஹுப3லம் இருந்தாலும் மநோபலம் இல்லாதவனால் யோக3த்தை அடைவது அரிது' என்று சொல்லப்பட்டதாகிறது. 'உபாயேந து யச்சக்யம் ந தச்சக்யம் பராக்ரமை:' [(பு3த்3தி4பலத்தால் நிர்ணயிக்கப்படும்) உபாயத்தால் எதை ஸாதி4க்கலாமோ, அதை பராக்ரமங்களால் (தேஹபலத்தால்) ஸாதி4க்கமுடியாது] என்றது இங்கு அநுஸந்தி4க்கத்தக்கது. 'மே மதி:' என்று '(ஸர்வஜ்ஞனான) என் ஸித்3தா4ந்தம்' என்கையாலே இதில் ஐயமில்லை என்று காட்டப்படுகிறது. (உபாயதஸ்து வஸ்யாத்மநா) எனக்கு ஆராத4நமாயிருப்பதாய், ஜ்ஞானத்தை உள்ளடக்கியதான கர்மயோக3மாகிற முற்கூறிய உபாயத்தால் நெஞ்சை அடக்கியவனுக்கோவெனில். இத்தால், முற்கூறிய கர்மயோக3மே மனத்தை அடக்குவதற்கு நேரே உபாயம் என்றும், முதல் ஸ்லோகத்தில் சொல்லப்பட்ட அப்4யாஸவைராக்3யங்கள் அக்கர்மயோக3த்திற்கு அங்க3மாயிருந்து கொண்டு மனத்தை அடக்குவதில் உதவுகின்றன என்றும் விளங்குகிறது. 'அஸம்யதாத்மநா,' 'வஸ்யாத்மநா' என்ற இரண்டும் ப3ஹுவ்ரீஹிஸமாஸம். 'அடக்காத நெஞ்சை உடையவனால்,' 'வசப்பட்டிருக்கும் நெஞ்சை உடையவனால்' என்று பொருள்படுகின்றன. கர்மதா4ரயஸமாஸமாகக்கொண்டு 'அடக்கப்படாத நெஞ்சால்' 'வசமாயிருக்கும் நெஞ்சால்' என்று பொருள் கொண்டார் வெண்பாவில்

।।भा।। अथ नेहाभिक्रमनाशोऽस्ति (२. ४०) इत्यादावेव श्रुतं योगमाहात्म्यं यथावच्छ्रोतुमर्जुनः पृच्छति; अन्तर्गतात्मज्ञानतया योग-शिरस्कतया च हि कर्मयोगस्य माहात्म्यं तत्रोदितं, तच्च योगमाहात्म्यमेव।

अर्जुन उवाच—

अयतिश्श्रद्धयोपेतो योगाच्चलितमानसः।
अप्राप्य योगसंसिद्धिं कां गतिं कृष्ण गच्छति।।३७।।

कच्चिन्नोभयविभ्रष्टश्छिन्नाभ्रमिव नश्यति।
अप्रतिष्ठो महाबाहो विमूढो ब्रह्मणः पथि।।३८।।

एवं मे संशयं कृष्ण च्छेत्तुमर्हस्यशेषतः।
त्वदन्यः संशयस्यास्य च्छेत्ता न ह्युपपद्यते।।३९।।

அர்ஜுந உவாச—

37. அயதி: ஶ்ரத்3த4யோபேதோ யோக3ாச்சலிதமாநஸ:।
அப்ராப்ய யோக3ஸம்ஸித்3தி4ம் காம க3திம் க்ருஷ்ண
க3ச்ச2தி ॥

38. கச்சிந்நோப4ய விப்4ரஷ்டஶ்சி2ந்நாப்4ரமிவ நஶ்யதி।
அப்ரதிஷ்டோ2 மஹாபா3ஹோ விமூடோ4 ப்3ரஹ்மண: பதி2॥

39. ஏதம மே ஸம்ஶயம் க்ருஷ்ண ச்சே2த்துமர்ஹஸ்யஶேஷத:।
த்வத3ந்ய: ஸம்ஶயஸ்யாஸ்ய ச்சே2த்தா ந ஹ்யுபபத்3யதே ॥

---

வாதி3கேஸரிஜீயர். 'வஶ்யாத்மநா' என்ற பத3த்தோடு முன் ஶ்லோகத்திலுள்ள 'கௌந்தேய' ஶப்3த3த்தைச் சேர்த்துக்கொண்டு, 'விபத3: ஸந்து ந: ஶஶ்வத' [கண்ணா! உன்னை நாங்கள் நினைக்கும்படி) ஆபத்துகள் எங்களுக்கு எப்போதும் ஏற்பட்டுக்கொண்டே இருக்கட்டும.] என்று பிரார்த்தி2க்குமளவுக்கு நெஞ்சை அடக்கிய குந்தியின பிள்ளையான நீ அவளைப்போலே நெஞ்சை அடக்கியவனாக ஆகவேண்டாவோ என்று கருத்து. (யததா) யோக3ாப்4யாஸம் செய்பவனால. (யோக3: அவாப்தும் ஶக்ய:) முற்கூறிய ஸமத3ர்ஶந யோக3ம அடைய எளிது. ஆக, அப்4யாஸ வைராக்3யங்களோடு கூடிய கர்மயோக3த்தைச்செய்து நெஞ்சை அடக்காதவனுக்குத்தான யோக3ம் நிலைநில்லாதேயொழிய அதைச் செய்து நெஞ்சை அடக்கியவனுக்கு யோக3ம் எளிதேயாகும என்றதாயிற்று. 35, 36.

க்ருஷ்ண—கண்ணு! மஹாபாஹோ—தடக்கையனே! ப்ரத்யயா — ப்ரத்தையினுல். உபேத: — யோகத்தைத் தொடங்கியவனுய் அயதி:—(உறுதியான யோகாப்யாஸமாகிற) முயற்சியற்றவனுய், (அதனுலே) யோக ஸம்ஸித்திம் அப்ராப்ய—யோகமும் நிறைவடையாமலிருக்கும் போதே. யோகாத் சலித மாநஸ:—அந்த யோகத்தினின்றும் நழுவிய நெஞ்சையுடையவனுனவன். காம் கதிம்—(போகமோக்ஷரகங்களில்) எந்த கதியை. கச்சதி—அடைவான்? ப்ரஹ்மண: பதி விமூட:—ப்ரஹ்மப்ராப்திக்கு உபாயமான யோகத்தில் வழி தவறியவனுய். அப்ரதிஷ்ட:—(ஸ்வர்க்காதி பலஸாதனங்களில்) நிலைநில்லாதவனுய். (இவ்வண்ணமாக), உபய விப்ரஷ்ட:—போகமோக்ஷகதிகளிரண்டினின்றும் நழுவியவனுய். சிந்நாப்ரம் இவ-சிதறிய மேகம்போலே. கச்சிந் ந நச்யதி—நசிக்காமலிருப்பானு? (அல்லது நசித்தே விடுவானே?) க்ருஷ்ண—கண்ணனே! மே — என்னுடைய. ஏதம் ஸம்சயம் — இந்த ஐயத்தை. அசேஷத:—முழுவதும். சேத்தும் அர்ஹஸி—போககடிப்பாயாக; அஸ்ய ஸம்சயஸ்ய சேத்தா—இந்த ஐயத்தைப் போக்கடிப்பவனுக. த்வதந்ய:-உன்னைத் தவிர வேருெருவன். ந ஹி உபபத்யதே -தகுதி பெற்றிருக்கவில்லையன்ருே.

---

33. ஆங்கு விசய னமலன் றனைக்கேட்டா
னீங்குவிருப் புற்ரு னியல்வற்றுப்—பாங்குமனந்
தக்கயோ கத்துச் சலித்தங் கதுசேரா
தெக்கதியைத் தானடையு மிங்கு.

34. முன்பயன்சேர் கன்ம முழுதொழிந்து மேற்பிரமந்
தன்பயனு நல்வழியிற் சாராதே—பின்பவன்ருன்
றஞ்சமில்லா தவ்விரண்டுந் தானழுவிச் சின்னமா(ம்)
மஞ்செனமே மாயுமோ மற்று.

35. மிக்க மயக்கிதனை மீண்டொன் றொழியாமற்
றக்க பரிசறுக்கத் தக்கவனீ—மிக்கோரி
லுன்னை யொழிய வொழிப்பா ரிதுகண்ணா
பின்னையெவ ருண்டு பெயர்ந்து.

ஆங்கு—அந்தப் போர்க்களத்திலே, விசயன்—அர்ஜுனன், அமலன்தனை கேட்டான்—குற்றமற்றவனான கண்ணனைப் (பின்வருமாறு) கேட்டான்:— "கண்ணா!—கண்ணனே! ஈங்கு—இந்த யோக₃விஷயத்தில், விருப்பு உற்றான்—ஶ்ரத்₃தை₄யோடு கூடி அதைத் தொடங்கியவன், இயல்வு அற்று—அப்₄யாஸம் இல்லாமையாலே, பாங்கு மனம தக்க யோகத்து சலித்து—பாங்காயிருக்கும் நெஞ்சாலேயே கூாட ரதக்க யோக₃த்தினின்றும் நழுவப்பெற்று, அங்கு அது சேராது—அப்பிறப்பில அந்த யோக₃ம் கைவரப்பெறாமல, இங்கு—மறுமையில், எக்கதியைத்தான்—(போ₄க₃மோக்ஷ நரகங்களில்) எந்த க₃தியைத்தான், அடைவான்—பெறுவான்? முன் பயன் சேர் கன்மம் முழுது ஒழிந்து—பூர்வ பா₄க₃த்தில் சொன்ன சுவர்க்கம் முதலான பயன்களில் பற்றோடு கூடிய கர்மங்களிலிருந்து முழுதும் நீங்கியவனாய், மேல் பிரமம் தன் பயனும் நல் வழியில் சாராதே—உடனிஷத்தில சொன்ன ப்₃ரஹ்மத்தைப் பயனாகக் கொண்ட நலல உபாயமாகிற யோக₃மும் கைவரப்பெறாதவனாய், பின்பு—மறுமையில், அவன் தான்—அந்த மனிதன், அவ்விரணடும் தான் நழுவி தஞ்சமிலாது—போ₄க₃மோக்ஷக₃திகள் இரண்டினின்றும் நழுவப்பெற்றுப் புகலற்றவனாய், சின்னம் ஆம் மஞ்சு எனவே—சிதறிப்போகும் மேக₄ம்போலவே, மாயுமோ—அழிந்துவிடுவனோ? (அல்லது அழியாமலிருப்பானோ?) மிக்க மயக்கு இதனை—இந்தப் பெரிய ஐயததை, மீண்டு ஒன்று ஒழியாமல்—மறுபடியும் ஒருசிறிதும் தலையெடுக்காதபடி, தக்க பரிசு—நல்ல முறையில், அறுக்கத்தக்கவன நீ—போக்கடிக்கத் தகுதியுடையவன் நீயே; மிக்கோரில்—அறிவில் சிறந்தவர்களில், இது ஒழிப்பார்—இந்த ஐயத்தைப் போக்

கடிக்கக் கூடியவர்கள். உன்னை ஒழிய பெயர்ந்து பின்னை எவர் உண்டு—உன்னைவிட்டால்வேறு எவர் இருக்கின்றனர்?"

87-89. இவ்வண்ணமாக, ஏற்கனவே சுருங்கச்சொல்லப்பட்ட யோகஸாதநமான அப்யாஸம் வைராக்யம் முதலானவை உள்ளபடி விவரிக்கப்பட்டன. இனி, ஏற்கனவே "நேஹாऽபிக்ரமநாஸோऽஸ்தி" [2.40] முதலானவிடங்களில் சொல்லப்பட்ட யோக மாஹாத்மியத்தை எல்லாப்படியாலும் விரிவாகக் கேட்பதற்காக அர்ஜுனன் இம் மூன்று ஸ்லோகங்களாலே கேள்விகேட்கிறுன். "நேஹாऽபிக்ரம" (2-40) முதலானவிடங்களில் கர்மயோகத்தின் மாஹாத்மியமன்றோ சொல்லப்பட்டது. இங்கு அதன் பலமான யோகம் எனப்படும் ஆத்மஸாக்ஷாத்காரத்தின் பெருமையே கூறப்படுகிறது. ஆகையால் அங்கு சொன்னது இங்கு விவரிக்கப்படுகிறதென்று எப்படிச் சொல்லலாம்? எனில்: ஆத்மஸாக்ஷாத்காரத்தின் தொடக்க நிலையான ஆத்மஜ்ஞானத்தோடு கூடியதாய், பரிபூர்ணமான ஆத்மஸாக்ஷாத்காரமாகிற யோகத்திற்கு ஸாதநமாயிருப்பதான கர்மயோகத்திற்கன்றோ அங்கு பெருமை சொல்லப்பட்டது. அங்கமாயிருக்கும் அக்கர்மயோகத்தின் பெருமையைச் சொன்னது, அங்கியான யோகத்தின் (ஆத்மஸாக்ஷாத்காரத்தின்) பெருமையைச் சொன்னதேயாகுமன்றோ. ஆகையால் அங்கு சுருக்கமாகக் கூறப்பட்ட யோகமாஹாத்மியம இங்கு விவரிக்கப்படுகிறது என்னத்தட்டில்லை. "யோக ஸித்திஃ ஷஷ்ட உச்யதே" என்று இவ்வத்தியாயத்தை ஸங்க்ரஹிக்கும் கீதார்த்தஸங்க்ரஹ ஸ்லோகத்தில் யோகஸித்தி ஸப்தத்தால் சொல்லப்பட்டதே இங்கு யோக மாஹாத்ம்யஸப்தத்தினுல் கீதாபாஷ்யத்தில் விவரிக்கப்படுகிறது. ஸித்திக்குக்காரணமாயிருப்பதன்றோ மாஹாத்மியம். யோக ஸித்தியாவது:— யோகம் தடைபட்டபோதிலும் நீண்டகாலம் பல புண்யலோகங்களை அடைவதும், மறுபடியும் யோகத்தைத் தொடரத்தகுந்த யோகிகுலத்தில் பிறப்பதும், அதன் மூலம் மறுபடியும் தொடங்கப்பட்டு யோகம் நிறைவடைவதும், அதிலிருந்து ஆத்மப்ராப்தியாகிற மோக்ஷம விளைவதுமாகும. இதற்கேயுரிய மாஹாத்மியத்தினுலேயே யன்றோ இத்தகைய ஸித்தி ஏற்படுகிறது. ஆகையாலே மாஹாத்ம்ய ஸப்தத்தாலே பாஷ்யகாரர் ஸித்தி ஸப்தத்தை விவரிக்கிறார் என்று கண்டு கொள்வது. (ஸ்ரத்தயா உபேத:) ஸ்ரத்தையினுல் யோகத்தைத் தொடங்கியவன. யோகத்தைத் தொடங்கியவனே அதில நின்றும நழுவமுடியும்; வெறும

॥भा॥ श्रद्धया योगे प्रवृत्तो दृढतराभ्यासरूपयतनवैकल्येन योगसंसिद्धिमप्राप्य योगाच्चलितमानसः कां गतिं गच्छति? उभयविभ्रष्टोऽयं छिन्नाभ्रमिव कच्चिन्न नश्यति? यथा मेघशकलः पूर्वस्माद्बृहतो मेघाच्छिन्नः परं बृहन्तं मेघमप्राप्य मध्ये विनष्टो भवति, तथैव कच्चिन्न नश्यति? कथमुभयविभ्रष्टता? अप्रतिष्ठो विमूढो ब्रह्मणः

---

ஶ்ரத்3தை4யோடு கூடி நின்று யோக3த்தைத் தொடங்காதவன் அதில் நின்றும் நழுவமுடியாது. ஆகையால் ஶ்ரத்3தா4ஶப்3த3த்தால் அதன் கார்யமான யோக3முயற்சி லக்ஷணையாலே கூறப்படுகிறது என்று கொள்ளவேண்டும். அல்லது, 'உபேத' ஶப்3த3த்திலுல ஶ்ரத்3தை4யினல் உண்டாகும் யோக3தொடக்க நிலையை அடைவதைக்கூறுவதாகவும் கொள்ளலாம். (அயதி:) முற்கூறிய உறுதியான யோகா3ப்4யாஸமாகிற முயற்சி இல்லாதவன. (யோக3ஸம்ஸித்3தி4ம அப்ராப்ய) அதுவே காரணமாக யோக3ம் நிறைவடையாமலிருக்கும் போதே. (யோகா3த் சலித மாநஸ:) யோக3த்திலிருந்து நழுவிய நெஞ்சையுடையவன்; பரிபூர்ண யோக3த்தைச் செய்வதில ஒத்துழைககாத நெஞ்சையுடையவன் என்று கருத்து. (காம க3திம க3ச்ச2தி) போ4க3ம், மோக்ஷம, நரகம எனப்படும் மூவகைப்பட்ட ப2லன்களில் எப்ப2லனை அடைகிறுன்? 37.

'எந்த க3தியை அடைகிறுன்?' என்று முந்திய ஶ்லோகத்தில் பொதுவாகக் கேட்கப்பட்டதையே இரண்டாவது ஶ்லோகத்தில் குறிப்பிட்டுக்கேட்கிறுன் அர்ஜுனன,— (உப4யவிப்4ரஷ்ட) போ4க3 மோக்ஷக3திகள் இரண்டில் நின்றும நழுவியவனுய. (சி2ந்நாப்4ரம இவ கச்சித ந நஶ்யதி) சிதறிய மேக4ம்போலே நசிக்காமலிருபபானு? 'ஏதம் மே ஸம்ஶயம்' என்று அடுதத ஶ்லோகத்தில் இதை ஐயமாகக் கூறுகையாலே, "அல்லது நசிததே விடுவானே" எனனுய (ஸமஶயத்தின்) மறுகோடியையும் சேர்த்துக்கொள்ளவேணும். முதலில் ஒரு பெரிய மேக4த்தினின்றும் பிரிந்துவந்த ஓர் மேக4ப்பகுதி, மற்றொரு பெரிய மேக4த்தை அடையாமல் இடையிலே எப்படி நசித்தே விடுகிறதோ, அதுபோல் இவன் நசிதது விடாமல் இருப்பானு? அலலது நசிததே விடுவானே? எனறு கருதது. போ4க3மோக்ஷ க3திகள் இரண்டில் நினறும் இவன் நழுவியவனுவது எபபடி என்பதை உததரார்தத4ம் (ஶ்லோகத்தின் பிற்பாதி) விவரிக்கிறது,- (அப்ரதிஷ்ட2:) ஜ்யோதிஷ்

पथीति—यथावस्थितं स्वर्गादिसाधनभूतं कर्म फलाभिसन्धिरहितस्यास्य पुरुषस्य स्वफलसाधनत्वेन प्रतिष्ठा न भवतीत्यप्रतिष्ठः, प्रक्रान्ते ब्रह्मणः पथि विमूढः—तस्मात्पथः प्रच்युतः, अतः उभयविभ्रष्टतया किमयं

---

ஹோமம் முதலான அந்தந்தக் கர்மங்களுக்குப் பலனாக வேதத்தில் சொல்லப்படும் ஸ்வர்க்கம் முதலானவற்றில் ஆசை வைக்காமலே இவன் அக்கர்மங்களை அநுஷ்டிக்கிறானையால அந்தககர்மங்கள் ஸ்வர்க்கம் முதலான பலன்களில் இவனை நிலை நிறுத்துவதன் மூலம் இவனுக்கு ஆதாரமாவதில்லை என்றபடி. போக மோக்ஷ கதிகளிரண்டினின்றும் நழுவியவனுவதை விவரிககும் உத்தரார்த்தத்தில், மேலே 'விமூடோ ப்ரஹ்மண: பதி' என்று மோக்ஷபல ஸாதனத்தினின்றும் நழுவியவனவதைக் கூறுகையால், எஞ்சிய ஸாம்ஸாரிக போக ஸாதனததினினறும நழுவியவனுவதையே 'அப்ரதிஷ்ட' பதம் சொல்ல வேண்டும. (ப்ரஹ்மண: பதி விமூட:) தொடங்கப்பட்ட மோக்ஷஸாதனத்தினினறும் அறிவுக் குறைவாலே நழுவியவன. மோக்ஷஸாதனந்தை அறிநது, அதைத் தொடங்கி, அதில் நின்றும் கைவாங்கியவனைப்பற்றியே இங்கு பேசப்படுகிறதாகையால், "விமூடோ ப்ரஹ்மண: பதி" என்ற விடத்தில் விமூடபதம் மோக்ஷஸாதனத்தில் அடியோடு அறி வின்மையைக்கூறவில்லை; அதை மேன்மேலும் தொடர்ந்து நடத்து வதில் அறிவுக்குறைவால் அதில் நினறும் கைவாங்கி நிற்கையை லக்ஷணையாலே கூறுகிறது. (ப்ரஹ்மண: பதி) ப்ரஹ்ம ஶப்தத்தால் சொல்லப்படும் ஆத்மாவை அடைவிக்கும உபாயமான யோகம் எனப்படும் ஆத்மஸாக்ஷாத்காரத்தில் நின்றும (விமூட:) தொடர்ந்து நடத்த அறிவுக்குறைவால் நழுவியவன் என்றபடி. இவ்வண்ணமாக போகமோக்ஷகதிகள் இரணடினினறும் நழுவிய இவன் முற்கூறிய மேகப்பகுதிபோலே சிதறியே விடுவானோ? அல்லது சிதறாமலிருப்பானே? என்று ஶ்லோகத்தின திரண்ட பொருள். (க்ருஷ்ண மஹாபாஹோ) "க்ருஷிர் பூவாசக: ஶப்தோ ணஶ்ச நிர்வ்ருதி வாசக:। விஷ்ணுஸ் தத்பாவயோகாச்ச க்ருஷ்ண இத்யபிதீயதே॥" [க்ருஷிஶப்தம பூமியைச் சொல்லி ஸாம்ஸாரிகமான போகங்கள் அனைத்தையும காட்டுகிறது, 'ண' காரம் மோக்ஷானந்தத்தைக்காட்டுகிறது. இந்த போக மோக்ஷங்கள் இரண்டையும் தன் வஶத்தில கொண்டிருப்பவனையால, விஷ்ணு 'க்ருஷ்ணன்' எனப்படுகிறான்] என்கிறபடியே போகமோக்ஷநாத

नश्यत्येव? उत न नश्यति? तमेनं संशयमशेषतश्छेत्तुमर्हसि, स्वतः प्रत्यक्षेण युगपत् सर्वं सदा पश्यतस्त्वत्तोऽन्यस्संशयस्यास्य छेत्ता न ह्युपपद्यते॥ ३७—३९॥

---

ஞய். சேதனரை இவ்விரண்டிலு எதிலும் இட்டுவைக்கவல்ல மஹா பலமுள்ள தடக்கையனுன நீ இவனைச் சிதறவிட்டுவிடுவாயோ? மாட்டாயோ என்றபடி. 38.

இனி, மூன்ருவது ஶ்லோகத்தில், தனது இந்த ஸம்ஶயத்தைத் தவிர்க்கக் கூடியவன் ஸர்வஜ்ஞனை கண்ணனே என்று கூறி, இவ்வையத்தைப் போக்கடிக்குமாறு அவனைப் பிரார்த்திக்கிருன்— (மே ஏதம ஸம்ஶயம) என்னுடைய இந்த ஐயத்தை. (அஶேஷத: சேத்துமர்ஹஸி) மிகுதியில்லாமல் போக்கடிப்பதற்கு—ஸர்வஜ்ஞனுய, பரமகிருபையை உடையவனுய், எனக்கு இனிய நண்பனு யிருக்கும நீயே தகுந்தவன. (அஸ்ய ஸம்ஶயஸ்ய சேத்தா த்வதந்ய: ந ஹி உபபத்யதே) இந்த ஐயத்தைப் போக்கடிக்கக் கூடியவனுக உன்னைத் தவிர வேறு எவனும் தகுதி பெற்றிருகக வில்லையன்றோ. (க்ருஷ்ண) க்ருஷ்ணன் என்னும உன் தனிப பெயரே நீ ஒருவனே இதற்குத் தகுதிபெற்றவன் என்று காட்டித் தருகிறதே! "க்ருஷாமி மேதிநீம் பார்த்த...க்ருஷ்ணோ வர்ணஶ்ச மே யஸ்மாத் தேந க்ருஷ்ணோऽஹமர்ஜுந॥" [குந்தீபுத்திரனை அர்ஜுன! இவ்வுலகை நான க்ருஷி (உழுதல்) செய்கின்றேன; என் நிறமும் க்ருஷ்ண வர்ணமாய் (கறுப்பு நிறமாய்) இருக்கிறது; அதனுல் நான க்ருஷ்ணனுகிறேன.] "ஏகைவ பஞ்சதா பூதா ப்ரதாநா விக்ரஹாத்மிகா। ஸர்வஶக்தி ஸமேதாபி புருஷோ நிய தீரிமா:॥ ந ஜஹாதி ஸ்வபாவோத்தகாருண்யேந ஸமாஶ்ரித:। பரமேஷ்டீ புமாந விஶ்வோ நிவ்ருத்த: ஸர்வ ஏவ ச। பஞ்சைதா: ஶக்தய: ப்ரோக்தா: பரஸ்ய பரமாத்மந:॥" [ஸ்ரீவிஷ்ணுதத்வம] [நித்யவிபூதித்ரவ்யம் ஒன்றே எல்லா ஶக்திகளோடு கூடிய தாயினும, முக்கியமான ஐந்துவிதமான ஶக்திகளாகிப் பரம புருஷனின விக்ரஹமாகின்றது. தனக்கு இயல்வான கருணையோடு கூடியவனுய், பரமபுருஷன இந்த விக்ரஹத்தின் நியதிகளான இவற்றைக கைவிடுவதில்லை. பரமேஷ்டீ, புமாந், விஶ்வன, நிவ்ருத்தன, ஸர்வன என்னும இவ்வைந்துமே பரமபொருளான அபபரமாத்மாவின இத்தகைய ஐந்து ஶக்திகளாகக் கூறப்படு படுகின்றன] என்று சொல்லப்பட்டபடியே, பத்தியுழவனுகை

श्रीभगवानुवाच—
पार्थ नैवेह नामुत्र विनाशस्तस्य विद्यते।
न हि कल्याणकृत्कश्चिद्दुर्गतिं तात गच्छति ॥ ४० ॥

40. பார்த்த, நைவேஹ நாமுத்ர விநாஶஸ்தஸ்ய வித்₃யதே ।
ந ஹி கல்யாணக்ருத் கஶ்சித் து₃ர்க்க₃திம் தாத க₃ச்ச₂தி ॥

பார்த்த₂ — குந்திபுத்திரனே! தஸ்ய — யோக₃த்தைத் தொடங்கி அதில்நின்றும் நழுவிய மனிதனுக்கு. இஹ— ப்ராக்ருதபோ₄க₃ங்களிலோ, அமுத்ர — மோக்ஷாநுப₄வத் திலோ. விநாஶ:—(விரும்பியது கிடைக்காமலிருத்தல், விரும் பாததை அடைதல் ஆகிய) விநாஶம். நைவ வித்₃யதே— ஒருபோதும் ஏற்படாது; தாத—அப்பா! கல்யாணக்ருத் கஶ்சித்—நல்ல காரியமான ஆத்மஸாக்ஷாத்காரத்தைச் செய் யும் ஒருவன், து₃ர்க்க₃திம்—விரும்பாத க₃தியை, ந ஹி க₃ச்ச₂தி— அடையமாட்டானல்லவோ.

---

யாலும், பஞ்சஶக்திமயமான அப்ராக்ருத தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹ முடையவனாகையாலும் க்ருஷ்ணன் எனப்படும் நீயே "யோ வேத்தி யுக₃பத் ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதா₃ ஸ்வத:" [ந்யாயதத்வம்] [எவனொருவன் எல்லாப் பொருள்களையும் ஒரே சமயத்தில் ப்ரத் யக்ஷமாக எப்போதும் இயல்வாகவே காண்கிறானோ] என்று புகழத்தக்க அறிவை உடையவனாகையாலே இவ்வையத்தைப் போக்கடிக்கக் கூடியவன் என்கை. உன்னைத் தவிர மற்றுள்ளாரின் அறிவு இந்திரியங்களை எதிர்பார்ப்பதாகவும், தெளிவற்று, அநு மாநாதி₃களைக்கொண்டே பெரும்பாலும் ஏற்படுவதாயும், கால க்ரமத்தில் ஏற்படுவதாயும், சில விஷயங்களையே பற்றியதாயும், சில சமயங்களிலேயே உண்டாவதாகவும் உள்ளது. உனனுடைய அறிவோ எதையும் எதிர்பாராமல் இயல்வாகவே உண்டாவதாய், ப்ரத்யக்ஷமாக மிகத் தெளிவாயிருப்பதாய், உடனே உண்டாவ தாய், எல்லாவற்றையும் விஷயீகரிப்பதாய், எப்போதும் ஒளிவிடு வதாய் உள்ளது. ஆகையால் உன்னையொழிய வேறு எவனும் இவ்வையத்தைப் போக்கத் தகுதி பெறவில்லை என்பதையும் நீயே இவ்வையத்தைப் போக்கவல்லவன் என்பதையும் விளக்கவே வேண்டியதில்லை என்று கருத்து. 39.

॥ भा ॥ श्रद्धया योगे प्रक्रान्तस्य तस्मात्प्रच्युतस्य इह चामुत्र च विनाशो न विद्यते—प्राकृतस्वर्गादिभोगानुभवे ब्रह्मानुभवे च

36. ஆய வவனுக் கறிய வுரைசெய்தான்
மேயவுல கத்தினு மேலிடத்து(ம்)— மாய்(வு) அவனுக்(கு)
இல்லாதா னன்றே யிவன்றான் விசயனே
பொல்லா நெறியிற் புகான.

ஆய அவனுக்கு—இப்படிக் கேட்ட அர்ஜுனனுக்கு. அறிய உரை செய்தான்—(அவன்) உணரும்படியாக (கண்ணன் பின்வருமாறு) உபதே₃சித்தான்:—"விசயனே!—அர்ஜுனா! இவன் தான—முற்கூறிய இந்த யோகப்₄ரஷ்டன். மேய உலகத்தினும—அவன வாழும் இந்த ப்ராக்ருத லோகத்திலும, மேல் இடத்தும்—மேமலே இருக்கும் மோக்ஷ லோகத்திலும். மாய்வு அவனுக்கு இல்லாதான்—(விரும்பி யது கிடைக்காமலிருத்தல விரும்பாதது கிடைத்தல ஆகிய) அழிவு தனக்கு இல்லாதவன். பொல்லா நெறியில் புகான் அன்றே—தாழ்ந்த க₃தியையும் அடையமாட்டானன்றே.

40. யோகப்₄ரஷ்டனுக்கு அவன விரும்பும் ப்ராக்ருத அப்ரா க்ருத அநுப₄வங்கள் எல்லாமே கிரமமாகக் கிடைக்கும் என்று கூறு வதன் மூலம, இவனுக்கு இரண்டுமே கிடைக்காமற்போய்விடுமோ எனனும் கேள்விக்கு பதில் உரைக்கிறான் இந்த ஶ்லோகததில். (தாத பார்த்த₂) அப்பா குந்தீபுத்திரனே! 'தாத' (அப்பா) என அழைபபதன் மூலம பரிவையும, 'பார்த்த₂' (குந்தீபுததிரனே) எனறு அழைப்பதன மூலம் அப்பரிவுக்குக் காரணமான உறவை யும காட்டி, தான் சொல்லும் அர்த்த₂ததில் 'இல்லாததைக் கூறல், மிகைபடக்கூறல்' முதலான குற்றங்கள் இல்லை என உணர்த்து கிறான். (தஸ்ய) யோக₃த்தை ஶ்ரத்₃தை₄யுடன் தொடங்கி, அதில் நின்றும நழுவிய மனிதனுக்கு. (இஹ அமுத்ர) அவன் வாழும இந்த ப்ராக்ருதலோகத்திலும, அவனுககு அநந்தஸ்தி₂ர ப₂லங்களை அளிக்கவல்ல அப்ராக்ருதலோகத்திலும். முமுக்ஷுவுக்குப் புண்யத் தோடு, பாபததோடு வாசியற இரண்டுமே கழிக்கத்தக்கதாகிப் பாபஶப்₃த₃த்தால் சொல்லப்படுவதுபோலே, புண்யப₂லமான ஸ்வர்க்கா₃தி₃களும 'இஹ' ஶப்₃த₃த்தால் சொல்லப்படும இம்மைப் ப₂லனாகக் குறிக்கப்படுவதே பொருநதும் என்றபடி.

अभिलषितानवाप्तिरूपः, प्रत्यवायाख्यानिष्टावाप्तिरूपश्च विनाशो न विद्यत इत्यर्थः ; न हि निरतिशयकल्याणरूपयोगकृत्कश्चित्कालत्रयेऽपि दुर्गतिं गच्छति ॥ ४० ॥

---

(விநாஶ: நைவ வித்₃யதே) ப்ராக்ருத லோகத்தில் கிடைக்கும் ஸ்வர்க்க₃ம் முதலானவற்றின் அநுப₄வத்திலோ, அப்ராக்ருத லோகத்தில் கிடைக்கும் ஆத்மபரமாத்மாக்களின் அநுப₄வத்திலோ தான் விரும்பியது கிடைக்காமல்போவதும், வேண்டாத ப்ரத்ய வாயம் முதலானவற்றை அடைவதும் ஆகிய விநாஶங்களில் எதுவும் அவனுக்கு இல்லை. நித்யமென்று ஏற்கனவே நிரூபிக்கப்பட்டு விட்ட ஆத்மவஸ்துவுக்கு ஸ்வரூபநாஶத்தை நிஷேதிக்க ப்ரஸக்தி யில்லையாகையாலும், ஏற்பட்டே தீரும ஶரீரநாஶத்தை இல்லை என்ன முடியாதாகையாலும், "நேஹாபி₄க்ரமநாஶோ஽ஸ்தி ப்ரத்ய வாயோ ந வித்₃யதே" [2-40] முதலானவிடங்களில் கூறப்பட்ட இஷ்டப்ராப்தியும், அநிஷ்டநிவ்ருத்தியும் இல்லாமற்போவதே இங்கு 'விநாஶம்' எனப்படுகிறது என்று கொள்ளவேண்டும். இனி, "கோல்விழுக்காட்டாலே, அவன் நரகம் முதலான வேண் டாத பயன்களையும், ஜந்மாந்தரத்திலாவது அடைந்து நஶித்து விட இடமுண்டோ" என்னும அர்ஜுனனின் ஶங்கைக்கு உத்த ரார்த்த₄த்தில் பரிஹாரம உரைப்பதன்மூலம் பூர்வார்த்த₄ம வலி யுறுத்தப்படுகிறது.— (கல்யாணக்ருத் கஶ்சித் து₃ர்க்க₃திம நஹி க₃ச்ச₂தி) மிகச் சிறந்த நல்ல காரியமான யோக₃த்தைச் செய்த வன் எவனும், வருங்காலம், நிகழ்காலம், கழிகாலம ஆகிய மூன்று காலத்திலும் வேண்டாத க₃தியை அடையமாட்டானன்றோ. இவன் ஸாமாந்யமானதொரு நல்ல காரியத்தைச் செய்யத் தொடங்கி அதில் நின்றும் நழுவியிருந்தால், கோல்விழுக்காட்டாலே வேண் டாத நரகம் முதலானவற்றையும் ஜந்மாந்தரத்தில் அடைய இட முண்டு. இவனோ, மிகச்சிறந்த நல்ல காரியமான யோக₃ம் எனப்படும் ஆத்மஸாக்ஷாத்காரத்தைச் செய்யத் தொடங்கி, அதில் சில பல காலம் பழகியவன். பழகிய அளவுக்கு வைராக்₃யம் முதலானவற்றை ஸம்பாதித்தவன். ஆகையால், அந்த யோக₃த்தி லிருந்து உறுதிக்குறைவாலே நழுவியபோதிலும், இட்டபடை கற்படையாய் (ஏற்பட்ட வைராக்₃யாதி₃கள் கல்லாலான அஸ்தி வாரம்போலே அழிவற்றதாய்), ஜந்மாந்தரத்திலும் தீயக₃திகளான

॥ भा ॥ कथमयं भविष्यतीत्यत्राह—

प्राप्य पुण्यकृतां लोकानुषित्वा शाश्वतीः समाः ।
शुचीनां श्रीमतां गेहे योगभ्रष्टोऽभिजायते ॥ ४१ ॥

41. ப்ராப்ய புண்யக்ருதாம் லோகாந்
உஷித்வா ஶாஶ்வதீ: ஸமா: ।
ஶுசீநாம் ஶ்ரீமதாம் கே₃ஹே
யோக₃ப்₄ரஷ்டோऽபி₄ஜாயதே ॥

யோக₃ப்₄ரஷ்ட:—யோக₃த்தைத் தொடங்கியவுடன் அதி லிருந்து நழுவியவன். (யோக₃மாஹாத்மியத்தாலேயே)

---

நரகத்திற்கோ, மற்ற வேண்டாத க₃திகளுக்கோ போக இடமே யில்லையன்றோ என்று கருத்து. கல்யாணஶப்₃த₃ம் மிகச்சிறந்த நல்ல காரியத்தைக் குறிக்கிறது. து₃ர்கக₃தி ஶப்₃த₃ம் "காம் க₃திம்" என்றவிடத்தில் அர்ஜுனனால் கருதப்பட்ட பே₄ாக₃மோக்ஷ நரகங் களில் நரகக₃தியையோ, அல்லது இவன் விரும்பாத எல்லா க₃தியையுமோ குறிக்கிறது. 'ந க₃ச்ச₂தி' [போகிறதில்லை] என்று நிகழ்காலப்பிரயோக₃ம் செய்தது, முக்காலத்திலும் இவனுக்கு து₃ர்க்க₃தியில்லை என்று காட்டுகிறது. பல காலத்தில் முயன்று ஸம்பாதி₃க்கப்பட்ட கணக்கற்ற புண்யம் செய்தவனுக்கே யோக₃ முயற்சி ஏற்படுமாகையால் கழிந்தகாலத்தில் இவனுக்கு து₃ர்க்க₃தி யில்லை என்பது ஸித்₃த₄ம். இப்போது மிகச்சிறந்த நல்ல காரிய மான யோக₃த்தில் முயற்சி செய்திருக்கிறுகையால் நிகழ்காலத் தில் து₃ர்க்க₃தியை அடைய இடமில்லை. வருங்காலத்திலும், புண்ய லோகங்களை அடைவதும், நற்குடிப்பிறப்பும், யோக₃ம் கைகூடு வதும், மோக்ஷமே ஸித்₃தி₄ப்பதும் பின்வரும் ஶ்லோகங்களில் அவனுக்கு நிரூபிக்கப்படப்போகிறதாகையால் து₃ர்க்க₃திக்கு இடமேயில்லை என்று கருத்து. ஹிஶப்₃த₃ம்—பூர்வார்த்த₄த்தில் சொல்லப்பட்ட விநாஶமின்மைக்கு உத்தரார்த்த₄ம் ஹேதுவைக் காட்டுகிறது என்று உணர்த்துகிறது. அல்லது உத்தரார்த்த₄த்தில் சொல்லப்பட்ட அர்த்த₂ம் ப்ரஸித்₃த₄மானது என்று காட்டுகிற தாகவுமாம். யோக₃த்தைத் தொடங்கியவன் எவனும், ஒருகாலத் தில் து₃ர்க்க₃தியை அடைந்தான் என்று எந்த ப்ரமாணத்தின் மூலமும் நாம் அறிந்ததில்லையே என்று கருத்து. 40.

புண்யக்ருதாம் லோகாந் ப்ராப்ய—மிக்க புண்ணியம் செய்தவர்கள் அடையும் நல்ல உலகங்களை அடைந்து. ஶாஶ்வதீ: ஸமா:—(அங்குள்ள போகங்களில் திருப்தி ஏற்படும் வரையில்) நீண்ட காலம். உஷித்வா—அவ்வுலகங்களில் வாழ்ந்து. ஶுசீநாம்—பரிசுத்தியுடையவர்களாய். ஶ்ரீமதாம்—குண நலச் செல்வம் நிறைந்தவர்கள் வாழும். மஹதி கேஹே—சிறந்த வீட்டில். ஜாயதே—பிறக்கிறான்.

---

37. புண்ணியர்க ளெய்துபெரும் போகத் தினிதமர்ந்தே
நண்ணியதிற் பல்லூழி நாளிருந்து—திண்ணியசீர்
செல்வநலந் தூயார் சிறந்தமனை யிற்பிறக்கு(ம்)
நல்வினையோ கஞ்சிதைந்தா னன்கு.

நல்வினை யோகம் சிதைந்தான்—மிகச் சிறந்த நல்ல காரியமான யோகத்தைத் தொடங்கி. அதிலிருந்து நழுவியவன். புண்ணியர்கள் எய்து பெரும் போகத்து நண்ணி—அதிகமான புண்ணியம் செய்தவர்கள் அடையும் நல்ல உலகங்களில் இன்பங்களை அடைந்து அதில இனிது அமர்ந்தே பல்லூழி நாள் இருந்து—அவற்றில் (திருப்தி ஏற்படும் வரையில) ஸுகமாக வாழ்ந்துகொண்டு நீண்டகாலம் இருந்துவிட்டு. திண்ணிய சீர் செல்வம் நலம் தூயார்—உறுதிபெற்ற நற்குணச் செல்வமும், தூய்மையும் உடையவர்களுடைய, சிறந்த மனையில்—சிறந்த வீட்டில. நன்கு பிறக்கும்—(யோகத்தைக் காணும் தொடரத்தக்க) நல்ல சூழ்நிலையில் பிறப்பான்.

---

41. இரண்டு வகையான யோகப்ரஷ்டனுக்கு ஜந்மாந்தரங்களில் என்ன ஆகிறதென்பதை இரண்டு ஶ்லோகங்களில் விவரிப்பதனமூலம், அவனுக்கு போகமோக்ஷங்களில் இரண்டுமே காலக்ரமத்தில் ஏற்படும் என்று சென்ற ஶ்லோகத்தில் சொன்னதை விவரிக்கிறான். யோகப்ரஷ்டரில இரண்டுவகையாவது:—(1) யோகத்தைத் தொடங்கியவுடன் அதில் நின்றும நழுவியவன. (2) நீண்டகாலம் யோகாப்யாஸம் செய்தபின் அதில் நினறும நழுவியவன. அதில், இந்த ஶ்லோகத்தில் யோகத்தைத் தொடங்கியவுடன அதில் நின்றும் நழுவியவனுக்கு என்ன நேர்கினறது

॥ भा ॥ यज्जातीयभोगाभिकाङ्क्षया योगात्प्रच्युतोऽयमतिपुण्यकृतां प्राप्यान् लोकान् प्राप्य तज्जातीयानतिकल्याणान् भोगान् योगमाहात्म्या-

---

என்பதை வாணிக்கிருன்; யோக₃த்தை நீண்டகாலம் தொடர்ந்த பின் அதில் நின்றும் நழுவியவனுக்கு நேர்வதைக் கூறுகிருன் அடுத்த ஸ்லோகத்தில். இப்படிப் பிரிப்பதற்குக் காரணம் என்ன வெனில்: (1) இந்த ஸ்லோகத்தில் முற்பாதியில் இவன் பல புண்யலோகங்களில் நெடுங்காலம் வாழ்வதாகக் கூறுகையால், யோக₃ம் தொடங்கிச் சிறிது காலத்திலேயே வைராக்₃யம் வளர்ச்சி பெறுமலிருக்கையாலே, அப்புண்ய லோகங்களில் வாழவேண்டும் என்னும் ஆசை ஏற்பட்டு, அதனுல் யோக₃ம் தடைபட்டவன் இவன் என்று விளங்குகிறது. (2) இப்படி நெடுங்கால இடை வெளிக்குப்பின் தூய்மையும், நற்குணச்செல்வமும் உடையவர் களின் குலத்தில் பிறப்பதாக இந்த ஸ்லோகத்தில் கூறுவது போலல்லாமல், நேரே பெரிய யோகி₃களின் குலத்தில் கிடைத் தற்கரிய பிறப்பை அடைகிருன் என்று அடுத்த ஸ்லோகத்தில் கூறுகையால், நெடுங்காலம் யோக₃த்தைத் தொடர்ந்து அறப காரணங்களால் நழுவியவன் அடுத்த ஸ்லோகத்தில் கூறப்படுபவன் என்று விளங்குகிறது. (புண்யக்ருதாம் லோகாந் ப்ராப்ய) எத்தகைய போ₄கங்களை அடையவேண்டும் என்னும் விருப்பத தாலே இவன் யோக₃த்தைத தொடங்கியவுடன் அதில் நின்றும் நழுவி விடுகின்ருனே, அதிபுண்யசாலிகளால் அடையத்தக்க உலகங்களில் அத்தகைய போ₄கங்களை அடைந்து. இதனுல் இவன் யோக₃த்தி லிருந்து நழுவியதற்குக் காரணமும் உணர்த்தப்பட்டதாயிற்று. உலகில் அனைவருமே ஓரளவுக்குப் புண்ணியம் புரிந்திருந்த போதிலும், சிலரைப் புண்ணியசாலிகள் என்பது அதி₄கமான புண்ணியம் புரிந்தமையைப்பற்ற. அப்படிப்பட்ட அதி₄கமான புண்ணியம் புரிந்தவர்களால அடையத்தக்க உலகங்களை — அத் தகைய புண்ணியம் செய்யாமலிருந்தபோதிலும், அவற்றை ஆசைப் பட்டதே ஹேதுவாக யோக₃மாஹாத்மியத்தால் இவன் பெற்று விடுகிருன் என்று கருத்து. இப்படிப் புண்ணியசாலிகளின் உல கங்களைப் பெறுவதோடு மாத்திரமல்லாமல், அவ்வுலகங்களில் அவர்களைக் காட்டிலும் சிறந்த போ₄கங்களை யோக₃மாஹாத் மியத்தாலேயே அடையவும் செய்கிருன் என்கிறது,— (ஸாஸ்வதீ: ஸமா: உஷித்வா) நீண்டகாலம் அவ்வுலகங்களில் வாழ்ந்து. புண்ணியகர்மங்களைச்செய்து அதன் ப₂லனுக அவ்வுலகங்களை

देव भुञ्जानो यावत्तद्भोगतृष्णावसानं शाश्वतीस्समास्तत्रोषित्वा तस्मिन् भोगे वितृष्णः शुचीनां श्रीमतां योगोपक्रमयोग्यानां कुले योगोपक्रमे भ्रष्टो योगमाहात्म्याज्जायते ॥ ४१ ॥

---

அடைந்தவனாயிருந்தால், "க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஶந்தி" [புண்ணியம் கழிந்தவுடன் இம்மனிதருலகிற்கு வருகிறார்கள்.] என்கிறபடியே இவன் புண்யலோகங்களில் வாழும் காலம் அளவு பட்டேயிருக்கும். இருக்கும் காலத்தில் அநுப4விக்கும் அநுப4வங்களும் புண்ணியத்தின் அளவையொட்டி அளவுபட்டேயிருக்கும். இவனோவெனில் ஆசைப்பட்டதே ஹேதுவாக அழியாத யோக3 மாஹாத்மியத்தால் அவ்வுலகங்களை அடைந்தவனானகயால், ஆசை தீரும் வரையில் நீண்டகாலம் அவ்வுலகங்களில் வாழ்கிறான என்றும், அப்படி வாழும்போது அப்புண்யஶாலிகளைக் காட்டிலும் மிகச்சிறந்த போ4க3ங்களை அங்கு அநுப4விக்கிறான என்றும் உணர்த்தப்படுகிறது. இத்தால், ஜ்யோதிஷ்டோமாதி3கர்மங்களை அவற்றின் ப2லமான ஸ்வர்க்க3ம் முதலானவற்றில் விருப்பமில்லாமலே இவன் செய்கையாலே, இவன் அந்த போ4க3ங்களையும் அடையாமல் இழந்து விடுவானோ என்னும் அர்ஜுனனுடைய ஐயத்திற்கு பதில் உரைக்கப்பட்டதாயிற்று. புண்ய லோக ஸாத4னங்களை இவன் அநுஷ்டி2க்காவிடிலும், யோக3 மாஹாத்மியமே இவன் விரும்பிய எல்லா புண்யலோகாநுப4வங் களையும் ஆசை தீரும்வரையில் இவனுக்கு அளித்துவிடுகிறது என்று கருத்து. அத்தோடு நில்லாமல், வெறுக்கத்தக்க அந்த ப்ராக்ருதபோ4க3ங்களில் வெறுப்பையும்—பக்குவமடைந்த புண்ய கர்மத்தினால் ஏற்படும் ஸத்வகு3ணமிகுதியினால் உண்டாகும் விவே கத்தை வளர்ப்பதன் மூலமும், நீண்டகாலம் போ4க3ங்களை அநு ப4விக்கச் செய்வதன் மூலமும் ஸௌப4ரி முதலானார்க்குப்போலே, வேறொரு ஸாத4னத்தை எதிர்பாராமல் தானே விளைத்து, அதற்குப் பின்னும் பூர்வபாப ப2லமான லோகங்கள் எதையும் இவனை அடைய விடாமல்செய்து, மோக்ஷஸாத4னமான யோக3த்தை மறுபடியும் தொடரத்தக்க குலத்தில் இவனைப் பிறக்கும்படியாகவும் செய்கிறது யோக3மாஹாத்மியம் என்கிறது உத்தரார்த்த4ம். (யோக3ப்4ரஷ்ட:) முற்கூறிய ரீதியில் யோக3த்தைத் தொடங்கியவுடன் அதில் நின்றும் நழுவியவன். (ஶுசீநாம்) ஆத்மாவைத் தவிர்ந்த ஶப்3தா3தி விஷயங்களில் ஈடுபாடு அற்றவராயிருக்கும் தூய்மையுடையவர் களாய், (ஶ்ரீமதாம்) தம்மோடு ஸம்ப3ந்த4ம் பெற்றவர்களுக்கும்

अथवा योगिनामेव कुले महति [भवति] धीमताम्।
एतद्धि दुर्लभतरं लोके जन्म यदीदृशम्॥४२॥

42. அத₂வா யோகி₃நாமேவ குலே மஹதி [ப₄வதி] தீ₄மதாம் ।
ஏதத₃தி₄ து₃ர்லப₄தரம லோகே ஜந்ம யதீ₃த₃ருஶம் ॥

அத₂வா—அன்றிக்கே. (யோக₃ம முற்றியபினபு நழுவினவனுயிருந்தானுகில) தீ₄மதாம்- பேரறிவாளர்களான. யோகி₃நாம் ஏவ—யோகி₃களுடையதேயான. மஹதி குலே—பெரிய குலத்தில. (அபி₄ஜாயதே—பிறக்கிறுன;) ஈத்₃ருஶம் யத் ஜநம ஏதத்—(சென்ற ஸ்லோகத்திலும், இந்த ஸ்லோகத்திலும் கூறபபட்ட) இரண்டு வித₄மான இப்பிறப்பும். லோகே—இவ்வுலகில். து₃ர்லப₄தரம் ஹி—(மககளுக்கு) மிகவும கிடைத்தற்கரியதன்றோ.

---

38. மறறதுவே யன்றி வளாமதிசேர் யோகியர்க
ளுற்ற குலத்தி லுதயமா(ம)—முற்றுலகி
லிவ்வாறு சேரு மிதிற்பிறவி தான்மன்ன
வெவ்வாறு தானரிதே யிங்கு.

மற்றதுவேயன்றி—அன்றிக்கே. (யோக₃ம் முற்றியபின்பு நழுவினவனுயிருந்தானுகில), வளர்மதி சேர் யோகியர்கள் உற்ற குலத்தில் உதயமாம்—பேரறிவுடைய யோகி₃களின் சிறபபுடைய குலத்தில பிறக்கிறுன். மன்ன—அரசனே! இங்கு உலகில்—இம்மனிதருலகில. இவ்வாறு உற்று சேரும் இதில் பிறவி தான்—இவ்வாறு வந்தடையும் இந்நற்குடிப் பிறப்பானது, எவ்வாறுதான் அரிதே—எல்லாப்படியாலும் கிடைத்தற்கரியதாகும்.

---

யோக₃ாரமப₄த்தைச் செய்துவைககவல்ல கு₃ணச்செல்வத்தை உடையவாகளான பெரியார்களின, (கே₃ஹே) வீட்டில். (அபி₄ ஜாயதே) யோக₃மாஹாத்மியததாலேயே பிறக்கிறுன என்றபடி. தூயவராய், கு₃ணச்செலவம நிறைந்தவராயிருப்பாரின வீட்டில பிறபபு—யோக₃ப்₄ரஷ்டனுக்கு அத₃ருஷ்டமாகிற புண்ணியததை விளைததும், நேரே ஆத்மாவில ஈடுபடுத்தியும நழுவிய யோக₃ததை இவனைத் தொடரச்செய்துவிடும என்று கருத்து. 41.

॥भा॥ परिपक्कयोगश्चलितश्चेत्, योगिनां धीमतां योगं कुर्वतां स्वयमेव योगोपदेशक्षमाणां महतां कुले भवति; तदेतदुभयविधं योगयोग्यानां योगिनां च कुले जन्म, लोके प्राकृतानां दुर्लभतरम्; एतत्तु योगमाहात्म्यकृतम्॥४२॥

---

42. யோக3ம் முற்றியபின அதில் நின்றும் நழுவியவன் அடையும் சிறப்பைப் பேசுகிறது இநத ஶ்லோகம். (அத2வா) வ்யவஸ்தி2த விகல்பமாய், யோக3ம முற்றியபின அதில்நினறும் நழுவியவனுக்கு நேர்வதைக் கூறுகின்றது. மூன ஶ்லோகத்தில் சொல்லப்பட்டவனைக்காட்டிலும் சிறப்பான பிறப்பு இவனுக்குக் கூறப்படுகிறதாகையால், இவன் யோக3ம் தொடங்கியவுடன் நழுவிய அவனைக்காட்டிலும் அதி4கமான தகுதிபெற்றிருக்கவேண்டும். ஆகையால், யோக3ம் முற்றியபின் நழுவியவனுயிருக்கவேண்டும் என்று கருத்து. (யோகி3நாம ஏவ மஹதி குலே) 'அபி4ஜாயதே' எனற வினைச்சொல்லைச் செனற ஶ்லோகததிலிருந்து கூட்டிக் கொள்ளவேண்டும; யோகி3களுடைய பெருங்குலத்தில பிறக்கிறுன். 'குலே ப4வதி' என்று பாட2மாகில், சென்ற ஶ்லோகத்திலிருந்து வினைச்சொல்லைக் கூட்டிக்கொள்ளவேண்டியதில்லை. (யோகி3நாம் ஏவ மஹதி குலே) சென்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்டவன் யோக3த்தைத் தொடரத்தக்க சூழ்நிலையுள்ள குலத்தில் பிறக்கிறுன். இவன் பரம்பரை பரம்பரையாக யோகா3ப்4யாஸம் செய்துவருகிறவர்களுடைய குலத்திலேயே பிறக்கிறுன். சென்ற ஶ்லோகத்தில் 'கே3ஹே' என்றதும் இங்கு 'குலே' என்றதும ஒரே பொருளையுடையது; நல்லோர்களின் குலத்தில் அவர்கள் வீட்டிலேயே பிறக்கின்றனர் இருவரும். முந்தியவனுடைய குலத்தில் யோக3த்தைத் தொடரத்தக்க சூழ்நிலை உள்ளதேயொழிய, அவனுடைய தந்தை முதலானோர் நேரே யோக3த்தை உபதே3ஶிக்கத் தக்க யோகி3களல்லர், இந்த ஶ்லோகத்தில் 'தீ4மதாம் யோகி3நாம் குலே' [பேரறிவாளர்களான யோகி3களின் குலத்தில்] என்று கூறப்படுகையால், இவனுடைய தந்தை முதலானோர் யோக3த்தை அநுஷ்டி2ப்பவர்களாய், அதை உபதே3ஶிககத்தக்க தகுதிபெற்றவர்களாயிருக்கிறுர்கள் என்று விளங்குகிறது. இப்படிச் சிறப்புற்ற குலமாகையாலே 'மஹதி குலே' என்று மூலத்திலும், 'மஹதாம் குலே' என்று பா4ஷ்யத்திலும் சொல்லப்பட்டது. ''பஶுர் மநுஷ்ய: பக்ஷீ வா யே ச வைஷ்ணவ ஸம்ஶ்ரயா:'' [வைஷ்ணவனைப் பற்றி

तत्र तं बुद्धिसंयोगं लभते पौर्वदेहिकम्।
यतते च ततो भूयः संसिद्धौ कुरुनन्दन॥४३॥

पूर्वाभ्यासेन तेनैव ह्रियते ह्यवशोऽपि सः॥४३~॥

43. தத்ர தம் பு₃த்₃தி₄ஸம்யோக₃ம் லப₄தே பௌர்வதை₃ஹிகம்।
யததே ச ததோ பூ₄ய: ஸம்ஸித்₃தௌ₄ குருநந்த₃ந ||

*44. பூர்வாப்₄யாஸேந தேநைவ ஹ்ரியதே ஹ்யவஶோऽபி ஸ.|

தத்ர — அப்பிறப்பில. பௌர்வதை₃ஹிகம் — முற்பிறப்பில் ஏற்பட்டிருந்த. தம் பு₃த்₃தி₄ஸம்யோக₃ம் — (யோக₃ விஷயமான அந்த பு₃த்₃தி₄ச்சேர்க்கையை. லப₄தே -அடைகிறான். குருநந்த₃ந—குருகுலத்தோன்றலே! தத:—அதற்குப் பின், பூ₄ய:—மறுபடியும், ஸம்ஸித்₃தௌ₄—யோக₃ம் நன்கு நிறைவேறுவதற்கு. யததே—முயல்கிறான். தேந பூர்வாப்₄யாஸேந ஏவ—முற்பிறபபில ஏற்பட்டிருந்த அந்த யோக₃ப் பழககததினாலேயே, ஸ: — அவன், அவஶ: அபி — தனவஶமிழந்தவனாகவே, ஹ்ரியதே—(யோக₃த்திலேயே) இழுக்கப்படுகிறான்.

---

நிற்கும பஶு, மனிதன், பறவை ஆகியவையும் (அந்த ஸம்ப₃நத₄த்தாலேயே நற்கதியடைகிறனர்)] "தவ தா₃ஸ்யஸு₂கைகஸங்கி₃நாம் ப₄வநேஷ்வஸத்வபி கீடஜந்ம மே' [ஸ்தோ—ர 55] [உனனுடைய ஶேஷத்வமாகிற ஸுக₂ம் ஒன்றிலேயே ஈடுபட்டவர்களுடைய திருமாளிகைகளில் அடியேனுக்குப் புழுவாகவாவது பிறப்பு உண்டாகவேண்டும.] முதலானவற்றில் சொல்லப்பட்டதுபோனற பெருமைபெற்ற குலம எனறு கருதது. (ஏத்₃ருஶம யத் ஜநம ஏதத்) சென்ற ஶ்லோகத்தில் கூறப்பட்ட யோக₃யோக₂யகுலத்தில் பிறபபும, இநத ஶ்லோகத்தில் கூறப்பட்ட யோகி₃குலப்பிறப்புமாகிய இவ் விரண்டும். (லோகே து₃ர்லப₄தரம ஹி) 'கணடதே காட்சி' எனறு கருதும இவ்வுலகிலுள்ள ப்ராக்ருதர்களுக்கு மிகவும் கிடைததற்கரி தன்றோ. இத்தகைய கிடைத்தற்கரிய பிறபபு இவ்விருவர்க்கும் யோக₃மாஹாத்மியத்தால் கிடைககிறது எனறு கருத்து. 42.

||भा|| तत्र जन्मनि तमेव पौर्वदैहिकं योगविषयं बुद्धिसंयोगं लभते। ततस्सुप्तप्रबुद्धवद्भूयस्संसिद्धौ यतते। यथा नान्तरायहतो

39. ஆங்கேதன் முன்பிறவி யானயோ கத்துணர்வைப்
பாங்கேலும் புத்தியினிற் பற்றியே—யீங்கமர்ந்த
பின்னு மதின்முயற்றி பெற்றியன்று பேறதனின்
மன்னுமவ ளுகுமே மற்று.

ஆங்கே—அப்பிறப்பில், தன் முன்பிறவி ஆன யோகத்து உணர்வை—தன்னுடைய முன்பிறவியிலிருந்த யோக₃விஷயமான அவ்வறிவை, பாங்கு ஏலும் புத்தியினில் பற்றியே—ப₄வ்யமான நெஞ்சில் அடைந்து, ஈங்கு அமர்ந்த பின்னும்—(அவ்வறிவை) இப்பிறப்பில் அடைந்த பின்பும், அதில் முயற்றி பெற்று இயன்று—யோக₃ம் நன்கு நிறைவேறுவதற்கு முயற்சியை அடைந்து செயல்புரிந்து, மற்று பேறு அதனின் மன்னுமவன் ஆகுமே—கடைசியில் அந்த யோக₃த்தில நிலை நிற்பவனுகவே ஆகிவிடுவான்.

43-*44. நல்லோர்களுடைய அல்லது யோகி₃களுடைய குலத்தில் பிறந்துவிட்டதால் மாத்திரம் அவனுக்கு ஆத்மப்ராப்தியாகிற மோக்ஷம் கிடைத்துவிடுமோ? முன் ஜந்மத்திலேயே ஆத்மப்ராப்தி ஸாத₄னமான யோக₃ம் தடைபட்டு விட்டதே? என்னும் கேள்விக்கு பதில் உரைக்கிறது—(தத்ர) அந்தப் பிறப்பில். தூ₃ரத்திலுள்ள 'குலே' அல்லது 'கே₃ஹே' எனபதைக் குறிப்பதாகக் கொள்வதை விட, அடுத்துள்ள "ஜந்ம யத் ஈத்₃ருஸம்" எனறவிடததில உள்ள 'ஜந்ம' என்பதை 'தத்ர' ஶப்₃த₃ம் குறிப்பதாகக்கொள்வது உசிதம். (பௌர்வதை₃ஹிகம் தம் பு₃த்₃தி₄ஸம்யோக₃ம் லப₄தே) முற்பிறப்பில் தடைபட்ட அந்த யோக₃விஷயமான பு₃த்₃தி₄யின சேர்ததியை அடைகிருன். முற்பிறப்பில யோக₃த்தைத் தடைசெய்த பு₃த₃தி₄யும் இருந்தபோதிலும, யோக₃மாஹாத்மியமானது அந்த பு₃த்₃தி₄யை மறுபடியும் எழும்பவிடாமல் செய்து, தடைபட்ட யோக₃விஷயமான பு₃த்₃தி₄யின் சேர்த்தியையயே மறுபடியும் உண்டாக்கி விடுகிறது என்று கருத்து. (தத:) அந்த பு₃த்₃தி₄ச்சேர்க்கையால. (பூ₄ய: ஸம்ஸித்₃தௌ₄ யததே ச) தூங்கினவன விழித்துக்கொண்டவுடன

भवति ; तथा यतते। तेन पूर्वाभ्यासेन—पूर्वेण योगविषयेणाभ्यासेन सः योगभ्रष्टो ह्यवशोऽपि योग एव ह्रियते। प्रसिद्धं ह्येतद्योग-माहात्म्यमित्यर्थः॥ ४३॥

जिज्ञासुरपि योगस्य शब्दब्रह्मातिवर्तते॥ ४४॥

44*. ஜிஜ்ஞாஸுரபி யோக₃ஸ்ய ஶப்₃த₃ப்₃ரஹ்மாதிவர்த்ததே ||

---

பழைய கார்யத்தைத் தொடர்வதுபோலே, மறுபடியும் யோக₃த்தைத் தலைகட்டுவதில் முயலவும் செய்கிறான். முற்பிறப்பில் உள்ள ஸம்ஸ்காரங்கள் இப்பிறப்பில் பெரும்பாலும் அழிந்துவிடுவதாகக் காண்கின்றபோதிலும், மிகச்சிறந்த புண்யகார்யமான யோக₃த்தைச் செய்தவனுக்கு அந்த ஸம்ஸ்காரம் ஒருபோதும் அழியாது; தூங்கினவனுக்குப் பூர்வஸம்ஸ்காரம் அழியாமலிருப்பதுபோலே— என்று கருத்து. 'ஸித்₃தௌ₄ யததே' என்னாமல், "ஸம்ஸித்₃தௌ₄ யததே' எனகையாலே, முற்பிறப்பிற்போலே தடைபட்டுவிடாமல் தலைக்கட்டிவிடும்படியாக நன்கு முயல்கின்றான் என்று உணர்த்தப்படுகிறது. "பூ₄ய:ஸம்ஸித்₃தௌ₄" என்று அதி₄கமான ஸித்₃தி₄யைக் காட்டுவதாகவும் கொள்ளலாம். (தேந பூர்வாப்₄யாஸேந ஏவ) முற்பிறப்பில் இருந்த அந்த யோகா₃ப்₄யாஸத்தாலேயே; (ஸ:) அந்த யோக₃ப்₄ரஷ்டன். (அவஶோऽபி ஹ்ரியதே) தன் வஶமிழந்தவனாகவே அந்த யோக₃த்திலேயே இழுக்கப்படுகிறான். 'முற்பிறப்பில் இருந்த அந்த யோகா₃ப்₄யாஸத்தினாலேயே இழுக்கப்படுகிறான' எனகையால், 'யோக₃த்திலேயே இழுக்கப்படுகிறான' என்று ஸித்₃தி₄க்கிறது. (ஹி) இந்த யோக மாஹாத்மியம் ப்ரஸித்₃த₄மானதன்றோ. ஜட₃ப₄ரதர், விது₃ரர், பீ₄ஷ்மர் முதலானோருடைய சரித்திரங்களிலே இது ப்ரஸித்₃த₄மன்றோ என்று கருத்து. இந்த ஶ்லோகத்திலுள்ள 'குருநந்த₃ந' [குருகுலத்து உதி₃த்தவனே!] எனனும் ஶப்₃த₃த்தாலும், இந்த ப்ரகரணத்தின் தொடக்கத்திலுள்ள 'பார்த்த₂' [ப்ருதை₂ எனப்படும் குந்தியின் பிள்ளையே!] என்னும் ஶப்₃த₃த்தாலும் தந்தை வழியிலும், தாய்வழியிலும் பரமபரிஶுத்₃த₄ர்களாய், குணநலச் செல்வம் மிகுந்தவர்களுடைய குலத்திலே உதி₃த்த நீ யோக₃த்தைத் தொடர்வதற்கு மிகவும் தகுதிபெற்றவனன்றோ எனனும் கருத்தைக் காட்டுகிறான்.

43-*44.

யோகஸ்ய ஜிஜ்ஞாஸு: அபி—யோகத்தை அறிந்து அநுஷ்டிக்க விரும்புகின்றவனும் (அதில் நின்றும்நழுவிய பின்பும் யோகமாஹாத்மியத்தினாலேயே முற்கூறிய ரீதியில் அந்த யோகமும் தலைக்கட்டப்பெற்று). ஶப்தப்ரஹ்ம அதிவர்த்ததே—'ஶப்தப்ரஹ்மம்' எனப்படும் ப்ரக்ருதியைத் தாண்டிவிடுகிறான்.

---

40. முன்னியலும் யோக முயற்சி வசமறவே
பின்னிவனைத தன்வசமாம் பேறளிக்கு—மன்னுநசை
யோகத்தி லுற்று னுரைசேர் பிரமமா
மாகத்து மீதியல்வா னும்.

முன் இயலும் யோகமுயற்சி—முற்பிறப்பில் ஏற்பட்டிருந்த யோகமுயற்சியானது. பின்—இப்பிறப்பில், இவனை வசம் அறவே—இவனை இவன் வசத்தில் விடாமல், தன் வசமாம் பேறு அளிக்கும்—யோகமுயற்சியாகிய தனது வழியிலேயே செல்லும் பயனை அளிக்கும். யோகத்தில் மன்னும் நசை உற்றான்—யோகத்தில் ஈடுபடவேண்டும் என்று விரும்பியவனும் (அதிலிருந்து நழுவினுைகில், யோகமாஹாத்மியத்தினாலேயே முற்கூறிய ரீதியில் யோகமும் தலைக்கட்டப்பெற்று). உரைசேர் பிரமமாம் ஆகத்து மீது இயல்வான் ஆம்—'ஶப்தப்ரஹ்மம்' எனப்படும் ப்ரக்ருதி தத்துவ ஸ்வரூபத்தைத் தாண்டிவிடுகிறான்.

---

44. யோகத்தைத் தொடங்கியவுடன் நழுவியவனும், யோகம் முற்றியபின் நழுவியவனும், பின் பிறப்பில அந்த யோகம நிறைவடையப் பெறுகின்றனர் எனபது ஒருபுறம் இருக்கட்டும்; யோகத்தை அநுஷ்டிக்க விரும்பி அதைத் தொடங்காமலிருக்கையிலேயே அவ்வெண்ணம் நழுவபபெற்றவனகூட. அதைத் தொடங்கவிரும்பிய மாஹாத்மியத்தாலேயே பின்பிறபபில் முற்கூறிய ரீதியில் யோகமும நிறைவேறப்பெற்று ப்ரக்ருதி ஸமபந்தத்தை அறுகதுக்கொள்கிறான்; யோகததின் மாஹாதமியம் இத்தகையது என்கிறான் இதில். (யோகஸ்ய ஜிஜ்ஞாஸுரபி) யோகத்தை அறிந்து அநுஷ்டிக்க விரும்புகிறவனும். அறிவு மாத்திரம் பயனற்றதாகையால், அநுஷ்டிப்பதற்காக அறியவிரும்புகிறவனும் என்று

अप्रवृत्तयोगो योगे जिज्ञासुरपि ततश्चलितमानसः पुनरपि तामेव जिज्ञासां प्राप्य कर्मयोगादिकं योगमनुष्ठाय शब्दब्रह्मातिवर्तते। शब्द-

கருதது. 'அபி' ஶப்₃த₃த்திறைல் முந்தின ஶ்லோகத்தில் கூறபபட்ட இருவகைப்பட்ட அதி₄காரிகளைககாட்டிலும், இஙகு சொலலப்படுகிறவன தாழ்வானவன என்று உணாரதகப்படுகிறது. 'ஜிஜ்ஞாஸு:' [அறிந்து அநுஷ்டிக்க விரும்புகிறவன்] என்று இவனைக் குறிப்பிட்டமையால், இவனுக்கு யோக₃த்தை அநுஷ்டிககவேண்டும என்னும விருப்பம உள்ளதேயொழிய, இன்னம இவன யோக₃த்தைத் தொடஙகவில்லை என்று தெளிவாகிறது. இப்படி அநுஷடிக்கவிருமபும் நிலையில் இருக்கையிலேயே, முந்திய அதி₄காரிகளைபபோலே இவனும் தன் நிலையிலிருந்து நழுவி விட்டான் என்பதையும கொள்ளவேண்டும். (யோக₃ஸ்ய ஜிஜ்ஞாஸு:) "ந லோகாவ்யய நிஷ்டா₂ கூலர்த்த₂ த்ருநாம்" [அஷடாத்₄யாயீ 2-3-69] [லாதே₃ஶம், 'உ'ப்ரத்யயம், 'உக'ப்ரத்யயம, அவ்யயம், நிஷ்டா₂ப்ரத்யயம், க₂லர்த்த₂ப்ரத்யயம, 'த்ருந' ப்ரத்யயம ஆகியவற்றை முடிவிலகொண்ட பத₃ங்களின் பிரயோக₃ங் களில (அவற்றோடு ஸம்ப₃ந்த₄ப்பட்ட பத₃ங்களுக்கு கர்மார்த்த₂த்தில் ஆருவது வேற்றுமை வாராது.)] என்கிற பாணிநி ஸூத்ரத்தின படி, உபரத்யயாந்தமான ஜிஜ்ஞாஸு பத₃த்தோடு சேருமபோது யோக₃பத₃ததிற்கு ஆருவது வேற்றுமை வாராதாயினும், பொது வாக எந்த ஸம்ப₃ந்த₄த்தையும் குறிக்கும் ஸமப₃ந்த₄ஸாமாந்யப் பொருளுள்ளதான ஆருவது வேற்றுமை வந்திருப்பதாகக் கொளளலாம. மேலே, இவ்வதி₄காரிக்கு "ஶப்₃த₃ப்₃ரஹ்மாதிவாத் ததே" என்று ப்ரக்ருதிமண்ட₃லத்தைத் தாண்டுகையாகிற பரம ப₂லன் சொல்லப்படுகையால், அதற்குமுன கிடைக்கவேணடிய கீழ்க்கண்ட அவாந்தரப₂லனகளும் இவனுக்குப் பின பிறப்பில கிடைப்பதாக இங்கு கொள்ளப்படவேண்டும். அவையாவன,— (1) நழுவிய விருப்பம மறுபடியும் உண்டாவது; (2) அதனா காரணமாகக் கர்மயோக₃த்தையும், ஜ்ஞாநயோக₃த்தையும அநுஷ்டிப்பது (3) அது காரணமாக யோக₃ம எனப்படும் ஆத்மஸாக்ஷாத்காரத்தை அநுஷ்டிப்பது. யோக₃ம் முற்றிய பின்பு நழுவப் பெற்றவனுக்கு விட்ட இடததில் யோக₃மும, யோக₃ம் தொடங்கியவுடன் நழுவப்பெற்றவனுக்கு யோக₃த் தொடக்கமும், யோக₃ாநுஷ்டா₂ந விருப்பம் மாததிரமிருக்கும்போது நழுவப்பெற்றவனுக்கு அதில் விருப்பமும் பின்பிறப்பில் முதலில

ब्रह्म—देवमनुष्यपृथिव्यन्तरिक्षस्वर्गादिशब्दाभिलापयोग्यं ब्रह्म प्रकृतिः।

உண்டாகிறது என்னும் வாசி காணத்தக்கது. (ஶப்₃த₃ப்₃ரஹ்ம அதிவர்த்ததே) ஶப்₃த₃ப்₃ரஹ்மம் எனப்படும் ப்ரக்ருதியைத் தாண்டுகிறான். தே₃வர், மனிதர், பூ₄மி, அந்தரிக்ஷம், ஸ்வர்க்க₃ம் முதலான ஶப்₃த₃ங்களால் சொலலத்தக்கதாய், பெரிதாயிருக்கை யாலே ப்₃ரஹ்மம் எனப்படுவதான ப்ரக்ருதி தத்துவம் இங்கு 'ஶப்₃த₃ ப்₃ரஹ்ம' எனப்படுகிறது. வேறுவகையாகப் பொருள் கொள்வதில் ஸ்வாரஸ்யமில்லை. ஏனெனில்:— பரப்₃ரஹ்மத்தையோ, ஜீவனையோ, வேத₃த்தையோ இவன் கடப்பது (தாண்டுவது அல்லது மீறுவது) ஸ்ரேஷ்டதாகையால் அவற்றை இங்கு ஶப்₃த₃ ப்₃ரஹ்மம் என்று குறிக்க முடியாது. 'ஶப்₃த₃ ப்₃ரஹ்ம' என்று வேத₃த்தில் சொல்லப்படும் கர்மமோ, அதன் ப₂லமோ லக்ஷணை யால் சொல்லப்படுகிறது என்னும் ஶாங்கரபா₄ஷ்யப்பொருளும பொருந்தாது; இப்பொருளில் ப்₃ரஹ்மஶப்₃த₃த்திற்கு வேத₃விஷ யத்தில் அமுக்₂யமான பொருளைக்கொண்டு, அதிலும் பூர்வ பா₄க₃த்தை மாத்திரம் குறிப்பதாகக்கொண்டு அதற்குமேல் லக்ஷணை யையும் கொள்ளவேண்டியிருக்கிறதன்றோ. ஶப்₃த₃த்தினால் உண் டாகும் அறிவும் இங்கு ஶப்₃த₃ப்₃ரஹமம் எனத்தக்கதன்று; யோக₃த்தை அறிந்து அநுஷ்டிக்க விரும்புகிறவனுக்கு அவ் வறிவை மீறுவது முரண்பட்டதன்றோ. "ஸ்வாத்₄யாயாத்₃ யோக₃ மாஸீத யோகா₃த் ஸ்வாத்₄யாயமாமநேத" [வி-பு 6-6-2] [வேத₃த்தை அர்த்த₂த்துடன் அறிந்து யோக₃ம செய்யவேண்டும்; யோக₃ம் செய்யும்போது அடிக்கடி வேத₃த்தை அர்த்த₂த்துடன அநு ஸந்திக்கவேண்டும்.] என்று வேதா₃ர்த்த₂ஜ்ஞானத்தோடே யோக₃த்தைச் செய்யவேண்டும என்று கூறியிருப்பதும விரோதிக்கு மன்றோ. இனி, பின்வருமாறு ஒரு பூர்வபக்ஷம எழுகின்றது:— ஶப்₃த₃ப்₃ரஹ்மமென்று வேத₃ஶப்₃த₃த்தின் பொருளைப்பற்றிய அறிவை மாத்திரமுடைய புருஷனை குறிப்பதாகக்கொண்டு, யோக₃த்தை அநுஷ்டிக்க விரும்புகிறவன, ஶப்₃த₃ப்₃ரஹ்மமெனப் படும இப்புருஷனைக் காட்டிலும சிறப்புற்றவன என்று இங்கு சொல் லப்படுகிறது. "ப்₃ராஹ்மணேஷு ச வித்₃வாம்ஸ:, வித்₃வத்ஸு க்ருத பு₃த்₃த₄ய:। க்ருதபு₃த்₃தி₄ஷு கர்த்தார: கர்த்ருஷு ப்₃ரஹ்மவாதி₃ந: ॥" [1-97] [ப்₃ராஹ்மணர்களுக்குள் வித்₃வான்கள் சிறந்தவர்கள்; வித்₃வான்களுக்குள் நல்ல விஷயத்தைச் செய்யவேண்டும என்னும் உறுதியுள்ளவர்கள் சிறந்தவர்கள்; இவர்களுள அக்காரியத்தைச்

प्रकृतिबन्धाद्विमुक्तो देवमनुष्यादिशब्दाभिलापानर्हं ज्ञानानन्दैकतान-मात्मानं प्राप्नोतीत्यर्थः ॥ ४४ ॥

---

செய்துமுடிப்பவர்கள சிறந்தவர்கள் ; இவர்களுள் ப்₃ரஹ்மத்தில் ஈடுபடுகிறவர்கள் சிறந்தவர்கள்] என்று மநுஸ்ம்ருதியில் சொல்லப்பட்ட ரீதியில் இப்பொருளை ஏன ஏற்கலாகாது என்பது அப் பூர்வபக்ஷம். இப்பூர்வபக்ஷத்தில் பல தோ₃ஷங்கள் உள்ளன. அவையாவன:— (1) வேத₃த்தைச் சொல்லும் ஶப்₃த₃ப்₃ரஹ்மபத₃ம் லக்ஷணையாலே அதனால உண்டாகும் ஜ்ஞாநத்தைக்கூறி, அதை உடைய புருஷனைக் காட்டுவதற்காகப் புருஷஶப்₃த₃த்தை அத்₄யாஹாரம் செய்துகொள்ளவேண்டியிருக்கிறது. (2) இப்ரகரணத்தில இத்தகைய புருஷனைப் பற்றிய பேச்சும இல்லை. (3) இபபடிக் கொண்டால் முனபின் வாக்யங்கள் பொருளபடவும மாட்டா. ஆகையால் இபபூரவபக்ஷம் பொருந்தாது. இவ்வண்ணமாக ஶப்₃த₃ப்₃ரஹ்மபத₃த்திற்கு வேறு எப்பொருளும் பொருந்ாத வளவில ப்₃ரஹ்மஶப்₃த₃த்தாலே மற்ற ஶாஸ்த்ரங்களிற்போலே கீ₃தையிலும பலவிடங்களில் குறிக்கப்படுவதும், ஆத்மாவை யடைபவனால கடக்கப்படவேண்டியதுமான ப்ரக்ருதியே இங்கு ப்₃ரஹ்மஶப்₃த₃த்தால குறிக்கப்படுகிறது என்று கொள்வதே பொருந்தும். போ₄க்₃யமாகவும், போ₄கோ₃பகரணமாகவும, போ₄க₃ ஸ்த₂ாநமாகவும மூலப்ரக்ருதியானது பரந்துகிடக்கையால் அதை 'ப்₃ரஹ்மம்' [பெரியது] என்பதும் பொருத்தமுடையது. "ஸர்வாணி ரூபாணி விசித்ய தீ₄ர: நாமாநி க்ருத்வா அபி₄வத₃ந்" [பு ஸூ] [பேரறிவாளனான பரமபுருஷன ப்ரக்ருதியிலிருந்து எல்லா ரூபங்களையும ஸ்ருஷ்டித்து, அவற்றுக்கு நாமங்களையும இட்டு அப் பெயர்களை உச்சரித்துக்கொண்டிருக்கிறான்.] என்கிறபடியே ப்ரக்ருதியே பல தத்துவங்களாகப் பிரிந்து தே₃வர் முதலான ஶப்₃த₃ங்களால சொல்லப்படுகிறதாகையால் அதை 'ஶப்₃த₃ ப்₃ரஹ்மம்' என்பதும் பொருத்தமுடையது.

"புமாந் ந தே₃வோ ந நரோ ந பஶுர் ந ச பாத₃ப:।
ஶரீராக்ருதிபே₄தா₃ஸ்து பூ₄பைதே கர்மயோநய: ॥"

[வி-பு 2-13-98]

[அரசனே! ஆத்மாவானவன், தே₃வனோ, மனிதனோ, திர்யக்கோ, ஸ்த₂ாவரமோ ஆகமாட்டான. இந்த தே₃வத்வம் முதலானவை

प्रयत्नाद्यतमानस्तु योगी संशुद्धकिल्बिषः।
अनेकजन्मसंसिद्धस्ततो याति परां गतिम्॥४५॥

45. ப்ரயத்நாத்₃யதமாநஸ்து யோகீ₃ ஸம்ஶுத்₃த₄ கில்பி₃ஷ:।
அநேகஜந்மஸம்ஸித்₃த₄ஸ் ததோ யாதி பராம் க₃திம்॥

தத: ஆகையால், ஸம்ஶுத்₃த₄கில்பி₃ஷ:—பாபம் நீங்கப் பெற்றவனுய், அநேக ஜந்ம ஸம்ஸித்₃த₄:—பல ஜன்மங்களில் (ஸம்பாதிக்கப்பட்ட புண்ணியமிகுதியால்) யோக₃த்தை நன்கு கைக்கட்டத் தகுதிபெற்றவனுய், ப்ரயத்நாத்—(இந்திரிய நியமனம் முதலானவற்றில்) மிகமுயன்று, யதமாந: து-(யோக₃த்தில்) முயற்சி செய்கிறவனை, யோகீ₃—யோக₃ப்ரப்₄யாஸநிஷ்டன் (முற்பிறப்பில நழுவியபோதிலும்), பராம் க₃திம் யாதி—(பிறிதொரு பிறப்பில்) மேலான க₃தியை (ஆத்மப்ராப்தியை) அடையவே செய்கிருன்.

---

41. மிக்க முயற்றியுடன் மேலியல்வான் பல்பிறப்பி
லொக்க வருநல் லுயர்வினையிற்—றக்கமர்ந்து
சாருந் துயரகன்று தானியன்ரு ருய்ப்பின்னுஞ்
சேரும் பரகதியைச் சென்று.

---

கர்மம் காரணமாக ஏற்படும் வெவ்வேறு ஶரீர அமைப்புக்களைக் குறிப்பவை.] என்று ஸ்ரீ விஷ்ணுபுராணத்திலும் இவ்வர்த்த₂ம் சொல்லப்பட்டதன்ரே. ஆக, (ஶப்₃த₃ப்₃ரஹ்ம அதிவர்த்ததே) என்றதால், யோக₃த்தை அநுஷ்டிக்க விரும்பும் இவ்வதி₄காரியும் முந்திய இரு அதி₄காரிகளைப்போலே க்ரமேண ப்ரக்ருதிமண்ட₃லத்தைக் கடப்பதாகிற பரமபூலஙைப் பெறுகிருன் என்றதாயிற்று. ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄த்தால் ஏற்பட்ட ஸம்ஸாரப₃ந்த₄த்தில் நின்றும் இவ் வண்ணமாக விடுபட்டவனுய், "நாSஹம் தே₃வோ ந மர்த்யோ வா ந திர்யக் ஸ்த₂ாவரோSபி வா। ஜ்ஞாநாநந்த₃மயஸ்த்வாத்மா ஶேஷோ ஹி பரமாத்மந:॥"[நான் தே₃வனே, மனிதனே, திர்யக்கோ, ஸ்த₂ாவரமோ அல்லன்; ஜ்ஞாநாநந்த₃ஸ்வருபனுய், பரமாத்மாவுக்கு அடிமைப்பட்டவனுயிருப்பவனன்ரே.] என்கிறபடியே, தே₃வர், மனிதர் முதலான ஶப்₃த₃ங்களால் சொல்லத்தகாதவனுய், ஜ்ஞாநாநந்த₃ங்களையே ஸ்வருபமாக உடையவனை தன் ஆத்மாவை அடைகிருன் என்று கருத்து. 44.

॥भा॥ यत एवं योगमाहात्म्यम्, ततोऽनेकजन्मार्जितपुण्यसञ्चयैः संशुद्धकिल्बिषः संसिद्धस्संजातः प्रयत्नाद्यतमानस्तु योगी चलितोऽपि पुनः परां गतिं यात्येव॥४५॥

---

சாரும் துயர் அகன்று—(அநாதி3காலமாகச்) சார்ந்திருக்கும் துயரத்தை விளைக்கும் பாபங்கள் நீங்கி. பல் பிறப்பில்—பல பிறப்புகளில். ஒக்க வரும் நல் உயாவிளையில் தக்கு அமர்ந்து—ஒன்றுகூடி உண்டான புண்ணியங்களால் ஏற்படும் யோக3த்தில் தகுதிபெற்றுப் பொருந்தினன்று. மிக்க முயற்றியுடன் மேல் இயலவான—(இந்திரியங்களை அடக்குவது முதலானவற்றில) மிகுந்த முயற்சியுடன் ஈடுபடுபவன். தான் இயன்றானாய்—யோக3த்தில் முயற்சி செய்பவனாய். பின்னும்—பிறிதொரு பிறப்பில். பரகதியை-மேலான க3தியான ஆத்மாவை, சென்று—(அப்ராக்ருதலோகத்தில்) சென்று, சேரும்—அடைவான்.

---

45. யோக3ப்4ரஷ்டனுக்கு மறுபடியும் யோக3ம் கைகூடுவதில் முயற்சி ஏற்படுகிறது என்பது முன் ஸ்லோகங்களில் கூறப்பட்டது. அந்த முயற்சியானது ஆத்மப்ராப்தியாகிற மேலான புருஷார்த்த2த்தையும் அவனுக்கு விளைக்கிறது என்று இந்த ஸ்லோகத்தில் கூறப்படுகிறது. (தத:) யோக3த்தை அநுஷ்டி2க்கவேண்டுமென்று விரும்பி, அதில் நின்றும் நழுவியவனுக்குங்கூடக் காலக்கிரமத்தில் முற்கூறியபடி பரமப2லனவரை கிடைக்கலாபபடி யோக3மாஹாத்மியம் இருக்கையாலே; கடைசிப் பாத3த்தில் உள்ள 'தத:' என்னும் பத3த்தை அங்கேயே வைத்து, 'பிறகு' என்று பொருள் கொள்வதில் ஸ்வாரஸ்யம் இல்லாமையாலே, முன் ஸ்லோகத்தில் சொன்னதை ஹேதுவாகக் காட்டுவதாகக் கொள்வதே பொருத்தமுடையது அன்றிக்கே, 'தத:' பத3த்தை உள்ளவிடத்திலே வைத்து, யோக3த்தினின்று நழுவியவனும் பிற்பிறப்பில் நற்கதியை அடைகிறான் என்று கூறுவதாகவும் பொருள்கொள்ளலாம் (ஸம்ஶுத்3த4கில்பி3ஷ:) முற்கூறிய யோக3மாஹாத்மியத்தாலே யோக3ம் தொடராவதற்குத் தடையாயிருந்த பாபம் நீங்கப்பெற்றவனாகையால். (அநேக ஜந்ம ஸம்ஸித்3த4:) பல ஜந்மங்களில் ஸம்பாதி3க்கப்பட்ட புண்யமிகுதியினாலே ஆத்மஸாக்ஷாத்காரத்தை நன்கு தலைக்கட்டத்தகுதிபெற்றவனாய்.

॥भा॥ अतिशयितपुरुषार्थनिष्ठतया योगिनस्सर्वस्मादाधिक्यमाह—

तपस्विभ्योऽधिको योगी ज्ञानिभ्योऽपि मतोऽधिकः।
कर्मिभ्यश्चाधिको योगी तस्माद्योगी भवार्जुन॥४६॥

46. தபஸ்விப்₄யோऽதி₄கோ யோகீ₃ ஜ்ஞாநிப்₄யோऽபி மதோऽதி₄க:।
கர்மிப்₄யஶ்சாதி₄கோ யோகீ₃ தஸ்மாத்₃யோகீ₃ ப₄வார்ஜுந॥

யோகீ₃—யோகி₃யானவன். தபஸ்விப்₄ய: அதி₄க: (மத:)—கேவலதபஸ்ஸைச் செய்பவர்களைக் காட்டிலும் சிறப்புற்றவனாக எண்ணப்படுகிறான்; (யோகீ₃—யோகி₃யானவன்) ஜ்ஞாநிப்₄ய: அபி—(ஆத்மஜ்ஞாநம் தவிர்ந்த மற்ற) அறிவுடையவர்களைக்காட்டிலும். அதி₄க: மத: — சிறப்புற்றவனாக எண்ணப்படுகிறான். யோகீ₃—யோகி₃யானவன். கர்மிப்₄ய: ச—கேவல கர்மத்தைச் செய்பவர்களைக் காட்டிலும் அதி₄க: (மத:)—சிறப்புற்றவனாக எண்ணப்படுகிறான். அர்ஜுந—அர்ஜுனா! தஸ்மாத்—ஆகையால், (த்வம்—நீ), யோகீ₃ ப₄வ—யோகி₃யாக ஆகக்கடவாய்.

---

(ப்ரயத்நாத் யதமாந: யோகீ₃ து) இந்திரியங்களை அடக்குவது முதலானவற்றில் முயற்சியுடன், ஆத்மஸாக்ஷாத்காரத்தில் முயல்கின்றவனை யோகி₃யோவெனில்; இவ்வண்ணமாக 'ப்ரயத்நாத், யதமாந:' என்னும் பத₃ங்களில் சொல்லப்படும் முயற்சிகள் வெவ்வேறு விஷயங்களைப்பற்றியவையாகையாலே புநருக்தியில்லை. 'து' ஶப்₃த₃ம் இவ்வதி₄காரிக்கு இப்பிறப்பில் ஏற்படும் சிறப்பைக் காட்டுகிறது. (பராம் க₃திம் யாதி) முற்பிறப்பில் யோக₃முயற்சியிலிருந்து நழுவியபோதிலும, இப்பிறப்பில் முற்கூறியபடி கிரமமாக யோக₃ம் தலைக்கட்டப்பெற்று, மேலான க₃தியான ஆத்மாவை அடைகிறான், இங்கு 'பரா க₃தி' என்று ஆத்மஸாக்ஷாத்காரமாகிற யோக₃மோ, அதனால் கிடைக்கும் ஆத்மப்ராப்தி முதலானவையோ கூறப்படுகின்றது. 45.

॥भा॥ केवलतपोभिर्यः पुरुषार्थस्साध्यते, आत्मज्ञानव्यतिरिक्तैर्ज्ञानैश्च यः, यश्च केवलैरश्वमेधादिभिः कर्मभिः, तेभ्यस्सर्वेभ्योऽधिक-

42. தவம்புரிந்தார் தன்மை யுணர்ந்தார் கருமத்
துவந்தியன்றார் தங்களிலும் யோகி—யவன்சிறந்து
மிக்குணர்ந்தா னென்றுணரப் பட்டான் விசயா நீ
தக்குயர்ந்த யோகமே சார்.

தவம் புரிந்தார் — கேவலதபஸ்ஸைச் செய்பவர்கள். தன்மை உணர்ந்தார்-(அசேதனப் பொருள்களின்) தன்மையை அறிபவர்கள். கருமத்து உவந்து இயன்றார்—கேவல கர்மங்களை உகப்புடன் செய்பவர்கள் (ஆகிய), தங்களிலும்—இவர்கள் அனைவரிலும். யோகி அவன்—யோகி₃யானவன். சிறந்து—சிறப்புற்றவனாய், மிக்கு உணர்ந்தான் என்று உணரப் பட்டான்—சிறந்த பயனுக்கு ஸாத₄னத்தை அறிந்தவன் என்று எண்ணப்படுகிறான். விசயா—அர்ஜுனா!. நீ—நீ. தக்கு—தகுதிபெற்று. உயர்ந்த—சிறப்புற்ற. யோகமே—யோக₃த்தையே. சார்—அநுஷ்டி₂ப்பாயாக.

46. கேவலதபஸ்ஸு. அசித்தத்வஜ்ஞாநம், கேவலகர்மம ஆகிய வற்றுக்கு, இங்கு யோக₃த்திற்குச் சொல்லப்பட்ட மாஹாத்மியம் இல்லாமையால். உலகில் சிறப்புற்றவர்களாகக் காணப்படும் கேவல தபஸ்விகள், அசித்தத்வஜ்ஞாநிகள், கேவலகர்மாநுஷ்டா₂ந பரர்கள் ஆகியவர்களுக்கு யோகி₃க்குக் கிடைப்பதுபோன்ற சிறந்த பயன் கிடைப்பதில்லை; ஆகையால் யோகி₃யானவன முற்கூறியவர்கள் அனைவரைக்காட்டிலும் சிறந்தவன் என்று காட்டி, ஜீவாத்மயோக₃த்தைப் பற்றிய உபதே₃ஶத்தை நிறைவுபடுத்துகிறான் இந்த ஶ்லோகத்தில். (யோகீ₃ தபஸ்விப்₄ய: அதி₄க: மத:) யோகி₃யானவன் கேவலதபஸ்ஸைச் செய்பவர்களைக் காட்டிலும சிறப்புற்றவன் என்று எண்ணப்படுகிறான். "ஊன்வாட வாட உயிர்காவலிட்டு, உடலிற் பிரியாப் புலனைந்தும் நொந்து, தாம் வாட வாடத் தவம் செய்ய வேண்டா" [பெரியதிருமொழி 3-2-6] என்று சொல்லப்பட்ட காயக்லேஶரூபகர்மமே இங்கு 'தபஸ்' எனப்படுகிறது. முமுக்ஷு வான யோகி₃க்கும் ப₂லனில் விருப்பமற்ற தவம் உண்டாகையால்,

पुरुषार्थसाधनत्वाद्योगस्य, तपस्विभ्यो ज्ञानिभ्यः कर्मिभ्यश्चाधिको योगी; तस्माद्योगी भवार्जुन ॥ ४६ ॥

அப்பெருமையற்ற கேவலதபஸ்ஸையுடையவர்களே இங்கு தபஸ்விகள் எனப்படுகிருர்கள் என்று கொள்ளவேண்டும். சிறந்த ஜ்ஞாநகர்மங்களும் யோகிக்கு உண்டாகையால், மேலே ஜ்ஞாநிகள், கர்மிகள் ஆகியவர்கள் விஷயத்திலும் இதே ரீதியில் பொருள் கொள்ளவேண்டும். (யோகீ ஜ்ஞாநிப்⁴யோऽபி அதி⁴க: மத:) யோகியானவன் அசேதநதத்வத்தைப் பற்றிநிற்கும் ஜ்ஞாநமுடையவர்களைக் காட்டிலும் சிறப்புற்றவனுக எண்ணப்படுகிருன. அடுத்த ஸ்லோகத்தில் ஈஸ்வரதத்வஜ்ஞாநமுடையவன இந்த யோகியைக்காட்டிலும மேலானவனுகச் சொல்லப்படுகிருனுகையாலும், ஆத்மஜ்ஞாநத்தை இவனே உடையவனுகையாலும், இங்கு ஜ்ஞாநிகள் எனப்படுகிறவர்கள் எஞ்சிய அசித்தத்வத்தைப்பற்றிநிற்கும ஜ்ஞாநத்தை உடையவர்களேயாகவேண்டும். அந்தந்த யோகசாஸ்திரங்களிலும், உபநிஷத்துக்களில் பூ⁴மவித்³யை முதலானவிடங்களிலும் தே³வதாந்தரங்களைப் பற்றியும், சந்த்³ரஸூர்யர் முதலானவற்றின் க்³ரஹணங்களைப்பற்றியும், இந்திரியம் முதலானவற்றைப் பற்றியும் சொல்லப்படும் அறிவுகள் அசித்தத்வத்தைப்பற்றிநிற்கும ஐஸ்வர்ய பே⁴ாகங்களேயும், அவற்றின் ஸாத⁴நங்களேயுமே அறிவிக்கின்றனவன்றே. (யோகீ³ கர்மிப்⁴யஸ்ச அதி⁴கோ மத:) யோகியானவன் அஸ்வமேத⁴ம் முதலான கேவலகர்மங்களை அநுஷ்டிப்பவர்களைக் காட்டிலும் சிறப்புற்றவனுக எண்ணப்படுகிருன். 'தபஸ்' என்று காயக்லேஸமும், 'கர்ம' ஸப்³த³த்தால் அஸ்வமேத⁴ம் முதலானவையும் குறிக்கப்படுகையால் புநருக்தியில்லே. முமுக்ஷுவான யோகியும் அஸ்வமேத⁴ம் முதான கர்மங்களைப் ப²லனில் விருப்பமில்லாமல் செய்கிருனுகையால், 'கர்மி ஸப்³த³த்தாலே ப²லனில் விருப்பத்தோடு கூடிய கேவலகர்மத்தை அநுஷ்டிப்பவர்களைக் கூறுவதாகவே கொள்ளவேண்டும். (அதி⁴கோ மத:) அசித் தத்வ பரிணமமான ஐஸ்வர்ய புருஷார்த்த²ங்களையே ஸாதி⁴த்துத்தரும் கேவலதபஸ், அசித்தத்வஜ்ஞாநம், கேவலகர்மங்கள் ஆகியவற்றை ஸாத⁴நமாகக் கொண்டவர்களைக்காட்டிலும், சித்தத்வமான ஆத்மாவின் அநுப⁴வத்தை ஸாதி⁴த்துத்தரும் யோக³த்தை ஸாத⁴னமாகக் கொண்ட யோகி³ சிறப்புற்றவன் என்று கருத்து. (தஸ்மாத் யோகீ³ ப⁴வ) இக்காரணத்திஞல் நீ யோகியாக ஆவாய். (அர்ஜுந) 'அர்ஜுந:' (வெளுத்தவன) என்று பெயர்பெற்ற நீ, ஸாத்விகனுய்,

॥भा॥ तदेवं परविद्याङ्गभूतं प्रजापतिवाक्योदितं प्रत्यगात्मदर्शन-मुक्तम्; अथ परविद्यां प्रस्तौति—

योगिनामपि सर्वेषां मद्गतेनान्तरात्मना।
श्रद्धावान् भजते यो मां स मे युक्ततमो मतः॥ ४७॥

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे योगाभ्यासयोगो नाम षष्ठोऽध्यायः॥ ६॥

47. யோகி₃நாமபி ஸர்வேஷாம் மத்₃க₃தேநாந்தராத்மநா।
ஶ்ரத்₃த₄ாவாந் ப₄ஜதே யோ மாம ஸ மே யுக்ததமோ மத:॥

இதி ஶ்ரீமத்₃ ப₄க₃வத்₃கீ₃தாஸு உபநிஷத்ஸு
ப்₃ரஹ்மவித்₃யாயாம் யோகஶாஸ்த்ரே ஶ்ரீக்ருஷ்ணார்ஜுந
ஸம்வாதே₃ யோகா₃ப்₄யாஸயோகோ₃ நாம
ஷஷ்டோ₂ऽத்₄யாய: ॥ 6 ॥

யோகி₃நாம் — *முற்கூறிய யோகிகளைக் காட்டிலும்,* அபி ஸர்வேஷாம் — *தபஸ்விகள் முதலான அனைவரைக் காட்டிலும்.* மத்₃க₃தேந அந்தராத்மநா— *என்னிடம் ஈடு பட்டிருக்கும் நெஞ்சினால்,* ஶ்ரத்₃த₄ாவாந்— *(என்னை அடைவதில) த்வரை உடையவனாய்.* ய: மாம் ப₄ஜதே— *எவன் என்னை உபாஸிக்கிறானோ.* ஸ:— *அவன்,* யுக்ததம:— *மிக உயர்ந்தவனாக.* மே மத: — *என்னால் எண்ணப் படுகிறான்.*

---

43. முன்னுரைத்த யோகிகளுண்முற்றுமென் பான்மனஞ்சேர்
தன்னுறைப்பான் மேல்விரும்பித் தானென்னை-மன்னு
பெற்றே பணிந்தான் பிறங்கியுயர் யோகியென [நலம்
வற்றோனான் கொள்வ னுகந்து.

---

வெள்ளை மனத்தினனான யோகியாக வேண்டாவோ? என்று கருத்து.

॥ भा ॥ *योगिनामिति पञ्चम्यर्थे षष्ठी। *सर्वभूतस्थमात्मानम्(२९)

முன்னுரைத்த யோகிகளுள் — முன் உரைத்த யோகிகளைக் காட்டிலும். முற்றும்—மற்ற எல்லாரைக் காட்டிலும். என்பால் சேர் மனம்—என்னிடம் ஈடுபட்டிருக்கும் மனத்தினால், தன் உறைப்பால்—(என்னை அடைவதில) தான் வேகத்தை உடையவனாயிருப்பதால், மேல் விரும்பி—மிகவும் விருப்புற்று. தான் மன்னும் நலம் பெற்றே என்னை பணிந்தான் — தான (என்னிடம்) நிலையான பக்தியை அடைந்து என்னை உபாஸிப்பவன், பிறங்கி உயர் யோகி என—மிகவிளங்கி உயர்ந்திருக்கும் யோகி என்று, நான் உகந்து கொள்வன் — நான் உகப்புடன் எண்ணுவேன். ('அற்றே' என்பது உகப்பைக் காட்டும் சொல்.)

47. "இவ்வண்ணமாக, தபஸ்விகள் முதலான அனைவரைக் காட்டிலும் ஜீவாத்மயோகியின் சிறப்பு கூறப்பட்டவளவில், 'இவனடையும் இவ்வாத்ம ப்ராப்தியைக் காட்டிலும் மேலான பயனில்லை' என நினைத்து அர்ஜுனன் இதிலேயே திருப்திபெற்று விடப்போகிறானே" என்று நினைத்து, படிப்படியாக மேன்மேலே சிறந்த பலஸாதநங்களை உபதேசித்த பூமவித்யையிற்போலே—முற்கூறிய ஆத்ம ஸாக்ஷாத்காரத்தைக் காட்டிலும சிறந்த பயனான பரமாத்ம ப்ராப்தியை விளைப்பதும், அவ்வாத்ம ஸாக்ஷாத்காரத்தை அங்கமாகக்கொண்டதுமான தன் விஷயமான பக்தியோகத்தை மத்யமஷட்கத்தில் உபதேசிப்பதற்காக, தானே அதை இந்த ஶ்லோகத்தில் புகழ்கிறான். மூன்றாவது அத்தியாயத்தின் தொடக்கத்தில் [பக்கம் 319-326] சொல்லப்பட்ட ரீதியில், மூன்றாவது அத்தியாயத்திலிருந்து தொடங்கி இதுவரையில், பரவித்யையான உபாஸநத்தின் அங்கமாயிருப்பதாய், "ய ஆத்மாऽபஹதபாப்மா" [சாந் 8-7-1] என்று தொடங்கும் ப்ரஜாபதிவாக்யத்தில் சொல்லப்படுவதான ஜீவாத்மதர்ஶநம் விளக்கப்பட்டதன்றோ. அதை அங்கமாகக்கொண்ட பரமாத்மோபாஸநத்தை அடுத்த ஷட்கத்தில் விவரிக்க நினைத்து இந்த ஶ்லோகத்தில் ப்ரஸ்தாபிக்கிறான என்ற படி. (யோகிநாம்) "தபஸ்விப்ய: அதிக:" என்ற முந்திய ஶ்லோகத்திற்போலே, இங்கும், "யோகிப்ய: யுக்ததம:" என்று ஐந்தாவது வேற்றுமைப்பொருளே பொருத்தமாகையாலே, "முற்கூறிய யோகிகளைக் காட்டிலும்" என்று பொருள்படுகிறது. "ஸம்

इत्यादिना चतुर्विधा योगिन: प्रतिपादिता: ; तेष्वनन्तर्गतत्वा-

ப₃ந்த₄ஸாமாந்யே ஷஷ்டீ₂" என்னும் இலக்கண வழக்கையொட்டி எந்த ஸம்ப₃ந்த₄த்தையும் குறிக்கவல்ல ஆறுவது வேற்றுமை, இங்கு ஐந்தாவது வேற்றுமைப்பொருளைக் குறிக்கிறது என்று கொள்ளவேண்டும். இனி, இங்கு பின்வருமாறு பூர்வபக்ஷம் எழுகின்றது.— "நிர்த்த₄ாரணே ஷஷ்டீ₂" என்னும் இலக்கண வழக்கின்படி "யோகி₃களுக்குள் என்னை உபாஸிக்கும் யோகி₃ மிகச்சிறந்தவன்" என்று பொருள்கொள்ள இடமிருக்கும்போது ஐந்தாவது வேற்றுமைப்பொருளிலே ஆறுவது வேற்றுமை படிக்கப்பட்டிருப்பதாக நலிந்து பொருள்கொள்ளவேண்டிய அவஶ்யமில்லையே. இருபத்தொன்பதாவது ஶ்லோகம் தொடங்கி நாலு வகைப்பட்ட யோகி₃களைச் சொல்லிவருகையில் முப்பத்தோராவது ஶ்லோகத்தில், "ஸர்வபூ₄தஸ்தி₂தம் யோ மாம் ப₄ஜத்யேகத்வமாஸ்தி₂த:" என்ற முற்பாதியில் 'மாம் ப₄ஜதி' என்று தன்னை உபாஸிப்பவனாக ஒரு யோகி₃யைக் கூறுகிறான் கண்ணன். இந்த ஶ்லோகத்தில் "ஶ்ரத்₃த₄ாவாந் ப₄ஜதே யோ மாம்" என்று தன்னை உபாஸிப்பவனாகக் கூறப்படுபவன் அவனேயென்றுகொண்டு, "முற்கூறப்பட்ட நாலுயோகி₃களுக்குள் இவன் தலைசிறந்தவன்" என்று அவனைப் புகழுவதாகக் கொண்டு விடலாமே. 'யுக்ததம:' என்ற 'தமப்' ப்ரத்யயமும், யோகி₃களுக்குள் சிலர் யுக்தராகவும், சிலர் யுக்ததரராகவும், இவன் யுக்ததமனாகவுமிருப்பதைக் காட்டுமாகையால், 'நிர்த்த₄ாரணே ஷஷ்டீ₂'யென்றே பொருந்தும்; ஆகையால் ஐந்தாவது வேற்றுமைப்பொருளில் ஆறுவது வேற்றுமை ப்ரயோகி₃க்கப்பட்டிருப்பதாகக் கொள்வது சரியல்ல.—என்பது அவ்வாக்ஷேபம்; இதற்குப் பரிஹாரம் பின்வருமாறு:— முந்திய ஶ்லோகத்தில் யோகீ₃ என்று ஒருமையில் படிக்கப்பட்டவனையே இங்கு 'யோகி₃நாம்' என்று பன்மையில் அநுவதி₃க்கப்படுகிறது இதற்குக் காரணம் யாதெனில்: "ஸர்வபூ₄தஸ்த₂மாத்மாநம்" [29] என்று தொடங்கி நாலு ஶ்லோகங்களாலே சொல்லப்பட்ட நாலு வகைப்பட்ட யோகி₃களும் இங்கு அநுவதி₃க்கப்படுகையாலேயே "யோகி₃நாம்" என்று பன்மையில் படிக்கப்படுகிறது. பரமாத்மாவை உபாஸிக்கும் யோகி₁யானவன் நடு ஷட்கத்திலேயே விவரிக்கப்படப் போகிறான். இந்த ஶ்லோகத்தில் அவன் ப்ரஸ்தாபிக்கப்படுகிறான். இதற்குமுன் எந்த ஶ்லோகத்திலும் அவனைப்பற்றிச் சொல்லவில்லை. "ஸர்வபூ₄தஸ்தி₂தம் யோ மாம்" [31] என்னும் ஶ்லோகத்தில், "ஏகத்வமாஸ்தி₂த:" என்றிருப்பதால், பரமாத்மாவுக்கும் ஆத்மாக்

दृक्ष्यमाणस्य योगिनो न निर्धारणे षष्ठी संभवति। *अपि सर्वेषामिति

களுக்கும் ஸாம்யத்தை அநுஸந்தி₄க்கும யோகி₃யே கூறப்படுகிறுன் என்று அந்த ஶ்லோகத்தில விரிவாக நிரூபிககப்பட்டது. அங்கு பரமாத்மாவை உபாஸிபபவன் கூறப்படுகிறுன என்று கருது வதற்குச் சிறிதும் இடமில்லே. அப்படிகொண்டால், அடுததுதான "ஆத்மௌபம்யேந" (32) என்னும் ஶ்லோகத்தில் "ஸ யோகீ₃ பரமோ மத:" என்று சொல்லியிருக்கையால், பரமாத்மோபாஸகனேவிட முப்பத்திரண்டாம் ஶ்லோகத்தில் சொல்லப்பட்டவன சிறந்தவன் என்று ஏற்படும். 'யோகி₃நாமபி ஸர்வேஷாம்—யுக்ததமோ மத:' என்று இங்கு சொல்லியிருக்கையால, முப்பத்திரணடாம ஶ்லோகத்தில் சொல்லப்பட்டவனேவிடப் பரமாத்மோபாஸகன சிறந்தவன் என்று ஏற்படும. இப்படி முன்னுக்குப்பின் முரண்படுகையால், முபபத் தொன்ரும் ஶ்லோகத்தில் சொல்லப்பட்டவன் பரமாத்மஸாமயாநு ஸந்த₄நம் செய்யும் ஜீவாத்மயோகி₃யே எனத்தேறுகிறது. இவ் வண்ணமாக "யோகி₃நாம்" எனனுமிடத்தில் பரமாத்மயோகி₃யைச் சேர்க்கமுடியாதாகையால், ஜீவாத்மயோகி₃கள் நால்வரைக்காட்டிலும் பரமாத்மயோகி₃ மிகச்சிறந்தவன என்று ஐந்தாவதுவேற்றுமைப பொருளில் ஆருவது வேற்றுமை பிரயோகி₃க்கப்பட்டிருப்பதாகக் கொள்ளவேண்டுமேயொழிய' எல்லா யோகி₃களுக்குள்ளும் பரமாதம யோகி₃ சிறந்தவன்"என்னும் 'நிர்தா₄ரணே ஷஷ்டி₂'யைக் கொள்ள முடியாது. இனி, மற்ருேராக்ஷேபம எழுகிறது.—முன் சொல்லப்பட்ட நாலு ஜீவாத்மயோகி₃களேயும, நடுஷட்கத்தில் சொல்லப்படவிருக் கும் பரமாத்மயோகி₃யையும் சேர்த்து 'யோகி₃நாம்' எனறு எடுத்து, அவர்களுள் பரமாத்மயோகி₃ சிறந்தவன என்று கூறுவதாகக் கொள்ளலாமே என்பது அவ்வாக்ஷேபம். இதற் குப் பரிஹாரமாவது,— ஏற்கனவே தெரிந்தவர்களுள்ளேயே ஒருவனே நிர்த்தா₄ரணம் செய்யவேண்டும். பரமாத்மயோகி₃யோ அர்ஜுனனுக்கு இதுவரையில அறியப்படாதவன். அவனேயும சேர்த்து 'யோகி₃நாம்' எனறு அநுவதி₃த்து நிர்த்தா₄ரணம் செய் வது அடியோடு ஒட்டாது. ஆகையால், ஏற்கனவே அறியப்பட்ட ஜீவாத்மயோகி₃களேக்காட்டிலும் இனிச்சொலலபபோகும பரமாத்ம யோகி₃ மிக்க சிறப்புற்றவன என்று இந்த ஶ்லோகத்தில் பரஸ்தாபம செய்யப்படுவதாகவே கொள்ளவேண்டும். ஆக இவ்வண்ணமாக ஐந்தாவது வேற்றுமைப் பொருளே பொருந்துமாகையால், 'நிர்த் தா₄ரணே ஷஷ்டி₂'யைக்கொண்டு 'யோகி₃களுள' எனறு பொருள் கொள்ளக்கூடாது. (அபி ஸர்வேஷாம்) "தபஸ்விப்₄ய:" என்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட தபஸ்விகள், ஜ்ஞாநிகள, கர்மிகள் ஆகிய அனைவரைக்காட்டிலும். "ஸர்வேஷாம யோகி₃நாம் அபி'

सर्वशब्दनिर्दिष्टास्तपस्विप्रभृतयः। तत्राप्युक्तेन न्यायेन पञ्चम्यर्थो ग्रहीतव्यः। योगिभ्यः, अपि सर्वेभ्यः वक्ष्यमाणो योगी युक्ततमः।

---

(எல்லா யோகி3களைக்காட்டிலும்) என்று 'ஸர்வேஷாம்' ''யோகி3நாம்'' எனனும் இருபத3ங்களும ஒரே அதி4காரியைக் குறிப்பதாகக் கொண்டால 'ஸர்வஶப்3த3ம் அவஶ்யாபேக்ஷிதமல்லாமற்போகிறது 'அபி' ஶப்3த3மும் ஸ்வரஸமாகப் பொருள்படாது. யோகி3களுக்கு ப்ராதா4ந்யத்தை 'அபி'ஶப்3த3த்தாலே காட்டுவதாகக் கொள்ளலாமாயினும், முந்தின ஶ்லோகததிலேயே சொல்லப்பட்டுவிட்ட அந்த ப்ராதா4ந்யத்தை மறுபடியும் இங்கு உணர்த்தவேணடிய அவஶ்யமில்லை. மேலும், பரமாதமயோகி3க்கு ப்ராதா4ந்யத்தைச் சொல்ல வேண்டிய இந்த ஶ்லோகத்தில் ஜீவாத்மயோகி3க்கு ப்ராதா4ந்யததைக் கூறுவது விபரீதமும் ஆகும. 'அபி'ஶப்3த3த்திற்கு ஸமுச்சயப்பொருளே மிகவும் ப்ரஸித்3த4மாகும. இஙகு அபபொருளே கொள்ளத்தக்கதாயிருக்கையில் அதைக்கைவிடுவது சரியல்ல. ஆகையால், 'அபி'ஶப்3த3ம் ஸமுச்சயப் பொருளது என்று கொண்டு, ஸர்வஶப்3த3த்தால் முந்திய ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட தபஸ்வி முதலானவர்களைககூறி, அவர்களையும ஜீவாத்மயோகி3களோடு ஸமுச்சயிககிறது என்று கொள்வதே பொருத்தமாகும. 'ஸர்வேஷாம் யோகி3நாம்' என்று ஜீவாத்மயோகி3களைக்கூறி தபஸ்வி முதலானுரை உபலக்ஷணமுறையாலே காட்டுவதாககொளவதைவிட 'ஸர்வேஷாம்' எனறு அவர்களை ஶாப்3த3மாகவே கூறுவதாகக் கொள்வது சிறப்புற்றது. ஜீவாத்மயோகி3களைக்காட்டிலும் குறைவானவர்களையும சேர்தெடுத்து அனைவரைக்காட்டிலும பரமாத்மயோகி3 சிறப்புற்றவன் என்பதற்குக்கருத்து என்னவெனில்; தபஸ்விகள் முதலானுர்க்கும, ஜீவாத்மயோகி3களுக்கும் வாசி உள்ளதேயாகிலும, பரமாத்மயோகி3க்கு ஒப்பிடுமபோது தபஸ்விகளைப் போலே ஜீவாத்மயோகி3களும் மிகத்தாழ்ந்தவர்களே என்று உணர்த்துவதற்காக அவர்களையும் சேர்த்து எடுக்கிறது. 'யோகி3நாம' என்றவிடத்தில் சொன்ன நியாயத்தின்படி தபஸ்விகள் முதலானுரில பரமாத்மயோகி3 சேர்ந்தவனல்லன், அவனை அவர்களோடு சேர்க்கவும் முடியாது என்பது இப்ரகரணத்திலிருந்து ஸித்3தி4க்கையாலே 'அபி ஸர்வேஷாம' என்றவிடத்திலும் 'ஸர்வேப்4ய: அபி'(தபஸ்விகள் முதலான அனைவரைக்காட்டிலும்) என்று ஐந்தாம் வேற்றுமைப்பொருளைக்கொள்ளவேண்டும. ஆக, ''முற்கூறிய நாலு வகைப்பட்ட ஜீவாதமயோகி3களைக்காட்டிலும், தபஸ்விகள் முதலான அனைவரைக்காட்டிலும் இனிச்சொல்லப்போகும் பரமாதமயோகி3 யுக்ததமன் (மிகச்சிறந்தவன்)'' என்று சொல்லப்பட்டதாயிற்று.

तदपेक्षया अवरत्वे तपस्विप्रभृतीनां योगिनां च न कश्चिद्विशेष इत्यर्थः; मेर्वपेक्षया सर्षपाणामिव। यद्यपि सर्षपेष्वन्योन्यन्यूनाधिकभावो विद्यते; तथाऽपि मेर्वपेक्षया अवरत्वनिर्देशस्समानः। मत्प्रियत्वातिरेकेणानन्यधारणस्वभावतया मद्गतेनान्तरात्मना—मनसा, श्रद्धावान्—

(யுக்ததம:) மிகமிகச்சிறப்புற்றவன். அன்றிக்கே, அவரவர்களுக்குரிய உபாயத்தை உடைய (ஜீவாத்ம) யோகிகள், தபஸ்வி முதலானூர் ஆகியவர்களைக் காட்டிலும் மிகமிகச்சிறப்புற்ற உபாயத்தை உடையவன் என்றும் பொருள் கொள்ளலாம். அன்றிக்கே, மிகமிகத்தகுதி பெற்றவன் என்றும் பொருள் கொள்ளலாம். 'தமப்' ப்ரத்யயமானது—உலகிலுள்ள மற்றுள்ளாரைக்காட்டிலும் சிறந்த உபாயமுடைய தபஸ்வி முதலானூர் யுக்தர்கள் (சிறப்புற்றவர்கள்) என்றும், அவர்களைக்காட்டிலும் சிறந்த உபாயமுடைய ஜீவாத்ம யோகிகள் யுக்ததரர்கள் (மிகச்சிறப்புற்றவர்கள்) என்றும், அவர்களைக்காட்டிலும் சிறந்த உபாயமுடைய இந்தப்பரமாத்மோபாஸகன யுக்ததமன் (மிகமிகசசிறப்புற்றவன்) என்றும் காட்டுகிறது. தபஸ்வி முதலானூரோடு ஜீவாத்ம யோகிகளோடு வாசியற அனைவருமே பரமாத்ம யோகியைக்காட்டிலும தாழ்ந்தவர்களே என்று கருத்து. கடுகுகளுக்கிடையே சிறிய கடுகென்றும், பெரிய கடுகென்றும வாசியிருந்தபோதிலும், மேருமலைக்கு ஒப்பிடுமபோது அவையெல்லாமே சிறியவை எனறு வழங்கும் விஷயத்தில் வாசியில்லாமற்போவது போல், தபஸ்வி முதலானூரைக்காட்டிலும் ஜீவாதம யோகிகள் மிகச்சிறப்புற்றவர்களாயினும், பரமாத்ம யோகியைக்காட்டிலும தாழ்ந்தவர் என்று வழங்கும் விஷயத்தில் அனைவரும ஒத்தவர்களே என்று கருத்து. (மத்கதேந அந்தராத்மநா) என்னிடம் ஈடுபட்டிருக்கும் நெஞ்சால். (மத்கதேந) என்னையே மிகவும் இனியவனுகக் கொண்டிருக்கையால் வேறு எதனுலும் தரிக்க மாட்டாத இயல்வுடையதாகையாலே என்னிடமே தலைசிறந்த பக்தியுடைய நெஞ்சால் என்றபடி. (அந்தராத்மநா) உள்ளேயிருக்கும நெஞ்சால். வெளியிந்திரியங்கள், ஶரீரம் முதலானவற்றைக் காட்டிலும் மனம் அந்தரங்கமாயிருப்பதைக்கருத்தில் கொண்டு இங்கு மனம் அந்தராத்மா எனப்படுகிறது. (ஶ்ரத்தாவாந்) எனனிடமே எல்லையற்ற பிரீதியைக்கொண்டிருக்கையாலே, ஒருகணமும் என்னை விட்டுப்பிரியமாட்டாதவனுகையாலே என்னை அடைவதற்கு முயல்வ

अत्यर्थमतिप्रयत्वेन क्षणमात्रविश्लेषासहतया मत्प्राप्तिप्रवृत्तौ त्वरावान् यो मां भजते, मां—विचित्रानन्तभोग्यभोक्तृवर्गभोगोपकरणभोगस्थानपरि-

---

தில் த்வரையுடையவன். ப₄க்தியின் எல்லைநிலையில் இருக்கும் இவன் விஷயத்தில் ஶ்ரத்₃த₄ா ஶப்₃த₃ம் விருப்பம் முதலானவற்றை மாத்திரம் குறிப்பது உசிதமன்று. ஆகையால் அது இங்கு விருப்பத்தின் கார்யமான த்வரையைக் (வேகத்தைக்) குறிக்கிறது. (ய: மாம் ப₄ஜதே) எவன் என விஷயமாக ப₄க்தி செய்கிருனோ. இவ்விடத்தில்—நூற்றுக்கணக்கான ஶ்ருதி ஸ்ம்ருதி வாக்யங்களிலும், மேலே வரும் இரண்டாவது மூன்ருவது ஷட்கங்களிலும கூறப்படுகின்றவையாய், ப₄க்தி (உபாஸநம்) செய்வதற்கு அவஶ்யம் வேண்டியிருப்பவையாய், ப₄க்தி செய்யத்தக்க பரமபுருஷனிடம் குடிகொண்டிருப்பவையான கீழ்க்கண்ட கல்யாண கு₃ணங்களை 'மாம்' என்னும் ஶப்₃த₃த்திற்குப்பொருளாக அநுஸந்தி₄க்கவேண்டும். அவையும—எம்பெருமானுடைய பரத்வத்தைக் (மேன்மையைக்) காட்டும் கு₃ணங்கள் என்றும, ஸௌலப்₄யத்தைக் (நீர்மையைக்) காட்டும் கு₃ணங்கள் என்றும் இருவகைப்படும. மேரு முதலானவற்றைப்போலே வெறும் பரத்வமும், புல் முதலானவற்றைப்போலே வெறும் ஸௌலப்₄யமும் இருந்தால் சிறப்பில்லையாகையாலே, இரண்டும் சேர்ந்திருப்பது பரமாத்மாவுக்குச் சிறப்பையளிக்கிறது. அவற்றில் பரத்வத்தைக்காட்டும் கு₃ணங்களாவன:-

(1) ஜக₃த்காரணத்வம். "ஸதே₃வ ஸோம்ய இத₃மக்₃ர ஆஸீத்" [சாந்6-2-1] "ப்₃ரஹ்ம வா இத₃மக்₃ர ஆஸீத் ஏகமேவ" [ப்₃ருஹ3-4-11] "ஆத்மா வா இத₃மேக ஏவாக்₃ர ஆஸீத்" [ஐதரேயம் 1-1-1] என்கிற காரணவாக்யங்களில் உள்ள ஸத், ப்₃ரஹ்ம, ஆத்மா என்னும் ஸாமாந்ய ஶப்₃த₃ங்களுக்கு "ஏகோ ஹவை நாராயண ஆஸீத் ந ப்₃ரஹ்மா நேஶாந:" [மஹோபநிஷத் 1-1] என்கிற வாக்யத்தில் உள்ள நாராயண ஶப்₃த₃த்தாலே சொல்லப்பட்ட பரமபுருஷனிடமே பர்யவஸாநம் என்பது ஸாமாந்ய விஶேஷ ந்யாயத்தாலே ஸித்₃தி₄க்கிறது. "யதோ வா இமானி பூ₄தானி ஜாயந்தே" [தைத்-ப்₄ருகு₃ 1] என்று தொடங்கும் வாக்யத்தை விஷயவாக்யமாகக் கொண்ட 'ஜந்மாத்₃யஸ்ய யத:" [ப்₃ரஹ்ம ஸூ 1-1-2] என்கிற ஸூத்ரத்தில் நிருபிக்கப்பட்ட அறியத்தக்க ப்₃ரஹ்மத்தினுடைய லக்ஷணமாயிருப்பது இந்த ஜக₃த்காரணத்வம். இந்தக்காரணத்வத்தாலே லீலா விபூ₄தியோக₃ம் சொல்லப்படுகிறது:- லீலா விபூ₄தியாவது,—விசித்

पूर्णनिखिलजगदुदयविभवलयलीलम्, अस्पृष्टाशेषदोषानवधिकातिशय-ज्ञानबलैश्वर्यवीर्यशक्तितेजःप्रभृत्यसङ्ख्येयकल्याणगुणगणनिधिम्, स्वामि-

திரமாய், அளவற்றதாயுள்ள, போ₄க்₃யங்களாகிற இனிய பொருள்கள், போ₄க்தாக்களான ஸம்ஸாரி ஜீவர்கள், இந்த போ₄க்தாக்கள் அந்த போ₄க்₃யங்களை அநுப₄விக்கைக்கு உறுப்பான தே₃ஹேந்திரியங்களாகிற போ₄கோ₃பகரணங்கள், அவ்வநுப₄வத்திற்குத்தகுந்த இடங்களான போ₄கஸ்₃தா₂னங்கள் ஆகிய அனைத்தும் நிறைந்த இவ்வுலகமாகும். இவ்வுலகின் ஸ்ருஷ்டிஸ்தி₂தி ஸம்ஹாரங்களை விளையாட்டாக உடையவன் ஜக₃த்காரணபூ₄தனை நாராயணன்.

(2) உப₄யலிங்க₃த்வம் அல்லது உப₄யலிங்க₃விஶிஷ்டத்வம். உப₄யலிங்க₃மாவது — அகி₂லஹேய ப்ரத்யநீகத்வமும் (எல்லா தோ₃ஷங்களுக்கும் எதிர்த்தட்டாயிருக்கையும) ஸமஸ்தகல்யாண கு₃ணாத்மகத்வமும (எல்லா நற்குணங்களுக்கும் இருப்பிடமாயிருக்கையும்) ஆகும். இவையிரண்டும பரமபுருஷனை மற்ற எல்லாப் பொருள்களைக்காட்டிலும் பரம விலக்ஷணனாகக்காட்டிக்கொடுக்கும் தன்மைகள் ஆகும. "யதோ வா இமாநி" என்று தொடங்கும் வாக்யத்தால் சொல்லப்பட்ட ஜக₃த்காரணதவம் உபாதா₃நகாரணத்வம் என்றும், நிமித்தகாரணத்வம என்றும் இருவகைப்படும். குடத்துக்கு உபாதா₃ந காரணமான மண்கட்டிக்கு விகாரமுடைமையாகிற தோ₃ஷமிருப்பதுபோலே, உலகிற்கு உபாதா₃நகாரணமான ப்₃ரஹ்மத்திற்கும் தோ₃ஷமுண்டோ என்றும், சட்டிபானைகளுக்கு நிமித்தகாரணமான குயவனுக்கு ஜ்ஞாநம், ஶக்தி முதலான கு₃ணங்களில் குறைவிருப்பது போலே, உலகிற்கு நிமித்தகாரணமான ப்₃ரஹ்மத்திற்கும் கு₃ணக்குறைவு உண்டோ என்றும் ஏற்படும ஶங்கைகளை "ஸத்யம் ஜ்ஞாந மநந்தம் ப்₃ரஹ்ம" [தைத்-ஆ 1] "ஆநந்தோ₃ ப்₃ரஹ்ம" [தைத்-ப்₄ருகு₃ 6] என்னும் ஶோத₄காதி₃வாக்யங்கள் ப்₃ரஹ்மத்தை உப₄யலிங்க₃த்தோடு கூடியது என்று காட்டுவதன் மூலம் போக்குகின்றன. இவ்வர்த்த₂த்தையே ஸ்ரீபராஶர மஹர்ஷி ஸ்ரீவிஷ்ணுபுராணமான புராணரத்நத்தில்,

"ஜ்ஞாநஶக்தி ப₃லைஶ்வர்ய வீர்ய தேஜாம்ஸ்யஶேஷத: ।
ப₄க₃வச்ச₂ப்₃த₃ வாச்யாநி விநா ஹேயைர் கு₃ணாதி₃பி₄: ॥"
[வி-பு 6-5-79]

[ஜ்ஞாநம், ஶக்தி, ப3லம், ஐஶ்வர்யம், வீர்யம், தேஜஸ் என்னும் ஆறு கு3ணங்களும், தாழ்ந்த கு3ணங்களில்லாமையும சேர்ந்து 'ப4க3வாந்' என்னும் ஶப்3த3த்திற்குப் பொருளாகும்.] என்று அநுஸந்தி4த்தார். 'ப4க3வ' என்னும் பகுதியினாலே உயர்வற வுயர்நலமுடைமையையும், 'அந்' என்னும் பகுதியாலே தோ3ஷ மின்மையையும், ஆக இப்படி உப4யலிங்க3முடைமையைக் காட்டினார். ஜ்ஞாநம் முதலான இவ்வாறு கு3ணங்களை ஜ்ஞாநம், ப3லம, ஐஶ்வர்யம, வீர்யம், ஶக்தி, தேஜஸ் என்கிற அடைவிலே கீ3தா பா4ஷ்யகாரர் அருளிச்செய்தமைக்குத் தாத்பர்யம் என்னென்னில்: இவ்வாறு கு3ணங்களில் ஜ்ஞாநப3லங்கள் ஸங்கர்ஷணனுக்கும், ஐஶ்வர்ய வீர்யங்கள் ப்ரத்3யும்நனுக்கும், ஶக்திதேஜஸ்ஸுக்கள அநிருத்3த4னுக்கும் ப்ரதா4னங்களாக அமைந்திருக்கையாலே இந்த க்ரமத்தில் பா4ஷ்யகாரர் அருளினார் என்று கண்டு கொள்வது.

'ப3லம் வீர்யம் ததா2 தேஜ: இத்யேதத்து கு3ணத்ரயம் ।
ஶ்ரமாத்3யவத்3யாபா4வாக்2யம ஜ்ஞாநாதே3ருபஸர்ஜநம் ॥''

[ப3லம், வீர்யம, தேஜஸ் என்கிற மூன்று கு3ணங்களும ஜ்ஞாந ஸங்கிதமான ஶ்ரமமும், ஐஶ்வர்ய ஸங்கிதமான விகாரமும, ஶக்தி ஸங்கிதமான ஸஹகாரிஸாபேக்ஷத்வமுமாகிற குற்றங்கள இவனுக்கு இல்லை என்று முறையே காட்டும் முகத்தாலே ஜ்ஞாந ஐஶ்வர்ய ஶக்திகளுக்கு உபஸர்ஜநங்களாய் (உறுப்பானவையாய்) இருக்கின்றன] என்கிற ப4க3வச்சா2ஸ்த்ர வசநத்தையொட்டி ஜ்ஞாநத்திற்குப்பிறகு ப3லத்தையும், ஐஶ்வர்யத்திற்குப்பிறகு வீர்யத்தையும, ஶக்திக்குப்பிறகு தேஜஸ்ஸையும் கீ3தாபா4ஷ்யகாரர் நிர்த்தே3ஶித்தருளினார் என்பதும் காணத்தக்கது. உலகில் ஸாமாந்ய மனிதன் தூக்கம முதலான நிலைகளில் தன் விபூ4தியைத் தான் அறியமாட்டான; அறியும்போதும அதை த4ரிக்கமாட்டான். அறிந்து த4ரித்தாலும் அவற்றை எப்போதும் நியமிக்கவல்லமையற்றவனாயிருப்பான். வல்லவனும்போதும் தா4ரண நியமனங்களாலே வாட்டமடைவான். வாடாதபோதும அவற்றின ஸத்தாஸ்தி2திகளுக்குக் காரணமாகமாட்டான். அப்படிக் காரணமாம்போதும் துணையை எதிர்பார்ப்பான். இக்குற்றங்கள் ஒன்றும் இல்லாதவன் எம்பெருமான என்பதை—ஜ்ஞாநம் (எல்லாவற்றையும எப்போதும் உள்ளபடி அறிகை) ப3லம (அறிந்தவற்றை ஶ்ரமலேஶமில்லாமல் த4ரிக்கை), ஐஶ்வர்யம் (அனைத்தையும நியமிப்பவனாகை), வீர்யம (நியக்குமிம்போதும் விகாரமற்றிருக்கை), ஶக்தி (ஸத்தா

मतानुरूपैकरूपाचिन्त्यदिव्याद्भुतनित्यनिरवद्यनिरतिशयौज्ज्वल्यसौन्दर्य -

ஸ்திதி முதலான அனைத்தையும் நிர்வஹிக்கும் திறமை), தேஜஸ் (துணையை எதிர்பாராமை) என்னும் இந்த ஷட்குணங்கள் காட்டுகின்றன. இக்குணங்கள் யாதொரு தோஷமும் கலசாதவையாய், எல்லையற்ற பெருமையை உடையவையாய் எம்பெருமானிடம் பிரகாசிக்கின்றன.

(3) நித்யவிபூதியோகம். ஶுபாஶ்ரயம எனப்படும அப்ராக்ருத திவ்யமங்கள விக்ரஹமும, திவ்யாபரணங்களும், திவ்யாயுதங்களும, திவ்யமஹிஷிமார்களும், நித்யஸூரிகளும் முக்தாத்மாக்களுமாகிற பரிஜநங்களும், நித்யவிபூதியான பரமபத ஸாம்ராஜ்யமுமாகிற இவற்றோடே கூடியவன் எம்பெருமான் என்பது ஸகல ஶாஸ்த்ரஸித்தம். திவ்யமங்கள விக்ரஹத்தைக் காட்டுவதன்மூலம் பாஷ்யகாரர் இந்த நித்யவிபூதியுடைமையாகிற பரத்வகுணத்தை வெளிப்படுத்துகிறார். அதில், உபாஸகனுக்கு ஶுபாஶ்ரயமாயிருக்கும் ப்ராதாந்யததையிட்டு திவ்யமங்கள விக்ரஹத்தைக்கொண்டு மற்றவற்றை உபலக்ஷிக்கிறார். இந்த விக்ரஹம் எத்தகையதெனில்: (1) ஸ்வாபிமதமாயிருக்கும். அதாவது— 'இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ:" [வி. பு 6-5-84] [இச்சையினாலே எடுக்கப்பட்ட இஷ்டமான பெரிய தேஹத்தை யுடையவன்] என்கிறபடியே திவ்யாத்மஸ்வரூபத்தைக் காட்டிலும் எம்பெருமானுக்கும் அடியார்களுக்கும் இஷ்டமாயிருக்கும். (2) ஸ்வாநுரூபமாயிருக்கும். அதாவது— பகவத் ஸ்வரூபத்தின் அநுபவத்தை மறைப்பதாயிராமல். அதை வளர்ப்பதாயிருக்கும். (3) ஏகரூபமாயிருக்கும். அதாவது— "ஸதைகரூபரூபாய" [வி. பு 1-2-1] "மலராது குவியாது" [திருவாய் 3-1-8] என்கிறபடியே கர்மாநுகுணஷட்பாவவிகாரரஹிதமாயிருக்கும. (4) அசிந்த்யமாயிருக்கும். அதாவது—மற்ற பொருள்களோடு ஒக்க எண்ணத் தகாததாயிருக்கும. (5) திவ்யமாயிருக்கும். அதாவது—உபமானமின்றிக்கேயிருக்கும். (6) அத்புதமாயிருக்கும். அதாவது—" எப்பொழுதும் நாள்திங்கள் ஆண்டூழியூழிதொறும், அப்பொழுதைக் கப்பொழுது என்னாராவமுதமே" என்கிறபடியே நீடுழிகாலம் அநுபவியாநின்றாலும் க்ஷணந்தோறும் அபூர்வமாயிருககும். (7) நிதய நிரவத்யமாயிருக்கும். அதாவது.—எப்போதும் குற்றமற்றதாயிருக்கும். குற்றமாவது,—தனக்காயிருக்கையாகிற ஸ்வார்த்ததை. இந்த திவ்யவிக்ரஹம "பக்தாநாம் த்வம் ப்ரகாஶஸே" [ஜிதந்தே]

सौगन्ध्यसौकुमार्यलावण्ययौवनाद्यनन्तगुणनिधिदिव्यरूपम्, वाङ्मन-सापरिच्छेद्यस्वरूपस्वभावम्, अपारकारुण्यसौशील्यवात्सल्यौदार्यमहो-दधिम्, अनालोचितविशेषाशेषलोकशरण्यम्, प्रणतार्तिहरम्, आश्रित-

---

எனகிறபடியே என்றும் ப₄க்தாகளுக்காகவேயிருப்பதால என்றும் ஒருபடிப்படத் தனக்காயிராததாயிருக்கும். (8) நிரதிஶயமான (எல்லை யற்ற) ஔஜ்வல்யம் (ஒளி), ஸௌந்த₃ர்யம் (அவயவஶோபை₄) ஸௌக₃ந்த்₄யம (நறுமணம), ஸௌகுமார்யம (மென்மை), லாவண்யம் (லவணமபோலே எஙகுமொக்க வ்யாபித்திருக்கும் ஸமுத₃ாய ஶோபை₄) யௌவநம் முதலான கு₃ணங்கள, செந்தாமரைத்தடங் கண், செங்கனிவாய், செந்தாமரையடிகள், தடப்பெரும்தோள்கள், நிமக்₃நநாபி₄, தநுமத்₄யம, கோலநீள்கொடிமூக்கு, மைவண்ண நறுங்குஞ்சி முதலான அவயவங்கள் ஆகியவற்றோடு கூடியிருக்கும். (9) தி₃வ்யமாயிருக்கும. அதாவது—" ஆதியஞ்சோதியுருவை அங்கு வைததிங்கு பிறந்த வேதமுதல்வனை" [திருவாய் 3-5-5] என்கிற படியே பரமபத₃த்தில் உளள உருவேயாயிருக்கும். ஆக, உப₄ய விபூ₄தியுடையதாய், உப₄யலிங்க₃முடையதாயிருப்பது பரம்பொருள் எனறு அறுதியிடப்பட்டதாயிற்று.

(4) பரத்வாதிஶயம். முற்கூறிய உப₄யவிபூ₄தி உப₄யலிங்க₃ யோக₃ங்களால் எமபெருமானுக்குப் பரத்வம ஸித்₃தி₄க்கிறது. இத்துடன் நில்லாமல், அவனுடைய ஸ்வரூபமும், ஸ்வபா₄வமும் வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாதது என்னும் பரத்வாதிஶயமும் (மேன்மையின் எல்லைநிலமும்) உபாஸநத்துக்கு உறுப்பாக அநுஸந்தி₄க்கப்படவேண்டும். ஸ்வரூபமாவது,—ஸத்யத்வம, ஜ்ஞாநதவம், அநந்தத்வம், ஆநந்த₃த்வம, அமலத்வம், ஶ்ரிய:பதித்வம் முதலான ஸ்வரூபநிரூபகத₄ர்மங்கள. ஸ்வபா₄வமாவது,—ஜ்ஞாநம, ஶக்தி முதலான நிரூபிதஸ்வரூப விஶேஷணங்கள. பரதவம ஸ்வரூபமென்றும், ஸௌலப்₄யம் ஸ்வபா₄வமென்றும் சிலர் கூறுவர். "ஆத்மாநம் நாதிவர்த்தேத₂ா:" என்ற ஶ்ரீ ராமாயண ஶ்லோக வ்யாக்₂யாநாவஸரத்தில் ஆஶ்ரிதபாரதந்தர்யத்தை ஸ்வரூபமாக ப₄ட்டர் நிர்வஹித்தருளினர். ஆக, இதுவரையில் பரத்வத்துக்கு உறுப்பான கல்யாண கு₃ணங்கள் விவரிக்கப்பட்டன. இனி, ஸௌலப்₄யத்துக்கு உறுப்பான கல்யாண கு₃ணங்கள் விவரிக்கப்படுகின்றன. அவையாவன,—

(1) எல்லையற்ற கருணை, நீர்மை, வாத்ஸல்யம், ஔதா₃ர்யம் ஆகியவற்றுக்குக் கடலாயிருப்பவன் எம்பெருமான். கருணையாவது.— பிறர் துன்பங்கண்டு பொறுமை. இது எல்லையற்றிருக்கையாவது, "யதி₃வா ராவண: ஸ்வயம்" [ரா-யு 18-34] என்கிறபடியே எதிரிகளான ராவணாதி₃கள் விஷயத்திலும் செல்லுகை. ஸௌஶீல்யம் எனப்படும் நீர்மையாவது,—உயர்ந்தவனான எம்பெருமான் தாழ்ந்தவர்களோடு கலக்கும்போது 'இவன் நம்மைச்சேர்ந்தவன்' என்று அவர்கள் புரையறக்கலக்கலாமபடியிருக்கை. இது எல்லையற்றிருக்கையாவது,— தே₃வமநுஷ்யாதி₃ உத்க்ருஷ்ட அவதாரங்களில் மாத்திரமல்லாமல், மத்ஸ்யகூர்மாதி₃திர்யக்ஸ்த₂ாவரஜந்மங்களெடுக்கும் போதும் ஸஜாதீயமான திர்யக்ஸ்த₂ாவரங்களோடு ஒருநீராகப் புரையறகலக்கை. வாத்ஸல்யமாவது,— "செய்த குற்றம் நற்றமாகவே கொள் ஞாலநாதனே" [திருச்சந்த 111] "குன்றனைய குற்றம் செயினும் குணங்கொள்ளும்" [முதல்திருவ 41] என்கிறபடியே அடியார்பக்கல் ஸ்நேஹத்தாலே அவர்களிடமுள்ள குற்றங்களையும் கு₃ணமாகக்கொள்ளுகை. இது எல்லையற்றிருக்கையாவது.— ஆஶ்ரிதரளவோடு நில்லாமல் "ரிபூணாமபி வத்ஸல:" என்கிறபடியே எதிரிகள் விஷயத்திலும் வெள்ளமிடுகை. க்ஷமையின் எல்லை நிலமான வாத்ஸல்யத்தைக் கூறியமையால் க்ஷமையும் கூறப்பட்டதாயிற்று. ஔதா₃ர்யமாவது,— அடியார்க்கு விருப்பங்களைத் தன் பேறாகக்கொடுக்கை. இது எல்லையற்றிருக்கையாவது. "உன்னடியார்க்கென் செய்வனென்றே இருத்தி" [பெரியதிருவ 53] "ருணம் ப்ரவ்ருத்₃த₄மிவ மே ஹ்ருத₃யாந்நாபஸர்ப்பதி" [ப₄ார—உத்₃யோக₃ 47-22] [வட்டியால் வ்ருத்₃தி₄யடைந்த கடன்போலே என் நெஞ்சைவிட்டு அகலுகிறதில்லை.] என்கிறபடியே அடியார்க்கு எல்லாம் செய்தாலும் ஒன்றும் செய்திலனாக எப்போதும் நெஞ்சாறல்பட்டுக்கொண்டிருக்கை. இக்குணங்களனைத்துக்கும் கடலாயிருக்கையாவது,—இவற்றுக்கு ஓரே கொள்கலமாயிருக்கை.

(2) ஜாதி, கு₃ணம், ஒழுக்கம், கல்வி முதலிய விஶேஷங்களைக் கணிசியாமல் அனைவர்க்கும் ஶரண்யனாயிருப்பவன் எம்பெருமான். கீழே கூறப்பட்ட காருண்யம் முதலானவற்றால் விளையக்கூடியது இந்த ஶரண்யத்வம்.

(3) ப்ரணதார்த்திஹரனாயிருப்பவன் எம்பெருமான். அதாவது— அடியாருடைய விரோதி₄களை நிரஸிப்பதையே இயல்வாக உடையவன் என்கை. கீழே கூறப்பட்ட ஶரண்யபத₃ம் எம்பெருமான் அடி

वात्सल्यैकजलधिम्, अखिलमनुजनयनविषयतां गतम्, अजहत्स्वस्वभावम्,

யார்க்கு ஆஶ்ரயிக்கத்தகுந்தவன் என்று காட்டும். அப்படி ஆஶ்ரயிப்பவர்களுக்கு விரோதி4களைப் போக்குவனாகிற ப2லனை அளிப்பவன் என்று காட்டுகிறது ப்ரணதார்த்திஹர ஶப்3த3ம்.

(4) ஆஶ்ரிதவாத்ஸல்யைகஜலதி4யாயிருப்பவன் எம்பெருமான்: அதாவது,— மற்ற எல்லா கு3ணங்களையும் ஒரு தட்டாகவும், வாத்ஸல்யகு3ணத்தை ஒரு தட்டாகவும், கொண்டிருப்பவன் எம்பெருமான் என்றபடி, மற்ற கு3ணங்களோடு சேர்த்து வாத்ஸல்ய கு3ணம் கீழே கூறப்பட்டிருந்தாலும், மறுபடியும் வாத்ஸல்யத்தைக் கூறுவதற்குத் தாத்பர்யமாவது,— வாத்ஸல்யகு3ணம் விஶேஷமாக ப்ரகாஶிக்கும் ப4ர்த்ருப4ார்யாஸம்ப3ந்த4ம். மாத்ருபுத்ரஸம்ப3ந்த4ம், முதலான விஶேஷ ஸம்ப3ந்த4ங்கள் ஜீவர்களுக்கு எம்பெருமானோடு உண்டு என்று உணர்த்துவதற்காகவும், அவதாரகாலங்களிலேயே வாத்ஸல்யகு3ணம் விஶேஷமாகச் செயல்படுகிறது என்று தெரிவிப்பதற்காகவும், குற்றம் செய்த ஸம்ஸாரிகளுக்கு ப4யநிவ்ருத்திக்கு உறுப்பான முக2ய கு3ணம் இதுவே என்று விளங்கவைக்கவும், நமக்கு ஜ்ஞாநம் முதலான நன்மைகளில்லாத ப்ரளயாதி3த3ஶை களிலும் இவ்வாத்ஸல்ய கு3ணத்தாலே அவன் தானே ரக்ஷகனுகிறுன் என்று காட்டுவதற்காகவும், அவன் செய்யும் ரக்ஷணத்திற்குத் தடையாய், ஜீவன் எம்பெருமானிடம் காட்டும் வைமுக்2யத்தை இக்குணநுஸந்த4ானமே போக்குவதாகையாலும் மறுபடியும் தனித்து அநுஸந்தி4க்கப்படுகிறது இக்குணம் என்கை.

(5) அகி2லமநுஜநயநவிஷயதாங்க3தனுயிருப்பவன் எம்பெருமான். அதாவது,—''மனிசர் பிறவியில் தோன்றிக்கண்காணவந்து'' [திருவாய் 3-10-6] என்கிறபடியே எல்லா மனிதரும ஊனக்கண்ணு லும் காணலாமபடியிருப்பவன் என்றபடி. முன் சொல்லப்பட்ட காருண்யம முதலான கு3ணக3ணங்களால் ஏற்படுவதாய், ப்ரக்ருத மான க்ருஷ்ணுவதாரத்திற்கு மற்ற அவதாரங்களைக்காட்டிலும் ஏற்றத்தைக் காட்டுவதாயிருப்பது இது.

(6) அஜஹத்ஸ்வஸ்வப4ாவனுயிருப்பவன் எம்பெருமான். "அஜோऽபி ஸந் அவ்யயாத்மா பூ4தாநாம் ஈஶ்வரோऽபி ஸந்" [கீ3தை 4-6] என்கிறபடியே அவதாரகாலத்திலும் தன் பெருமை களில் ஒன்றும குறைவு படாமல் எழுந்தருளியிருப்பவன் என்றபடி.

वसुदेवगृहेऽवतीर्णम्, अनवधिकातिशयतेजसा निखिलं जगद्भासयन्तम्, आत्मकान्त्या विश्वमाप्याययन्तम्, भजते—सेवते, उपास्त

(7) வஸுதே₃வக்₃ருஹத்தில் அவதரித்தவன் எம்பெருமான். "மாம்" என்னும் ஸப்₃த₃ம அப்பத₃த்தை உச்சரிக்குமவனைக்காட்டுவதாகையாலே, இங்கு வஸுதே₃வனின் பிள்ளையாய் அவதரித்த கண்ணனைக் காட்டுகிறது.

(8) எல்லையற்ற சிறப்புடைய தேஜஸ்ஸாலே உலகனைத்தையும் ஒளிவிடச்செய்பவன் எம்பெருமான்.

(9) தனது காந்தியினுல் உலகனைத்தையும் போஷிக்கச்செய்பவன் எம்பெருமான். தேஜஸ்ஸும் காந்தியும், முறையே பரத்வத்தையும், ஸௌலப்₄யத்தையும் காட்டும் விக்₃ரஹகு₃ண விஶேஷங்களாகும். இவை உபாஸகனுடைய நெஞ்சை ஈர்க்குமவையாயுமிருக்கும். "கதிர் போல் முகத்தான்" [திருப்பாவை-1] என்கிறபடியே எதிரிகள் எம்பெருமானை அணுகவொண்ணுதபடியான மிகச்சிறந்த ஒளியே தேஜஸ்ஸாகும். "மதியம்போல் முகத்தான்" [திருப்பாவை 1] எனகிறபடியே அடியார்க்குப் போஷகமான லாவண்யம் காந்தி எனப்படுகிறது.

"அரௌபம்யேந வபுஷா ஹ்யமூர்த்தோ மூர்த்ததாம் க₃த:।
விஶ்வமாப்யாயயந் காந்த்யா பூர்ணேந்த்₃வயுததுல்யயா ॥"
[ஸாத்வதஸம்ஹிதை 2-70]

[உருவற்ற எம்பெருமான் உருவமுடையவனுகி, ஒப்பற்ற தன உருவத்தாலே பதினுயிரம பூர்ணசந்திரர்களை ஒத்த காந்தியாலே உலகத்தைப் போஷித்துக்கொண்டு எழுந்தருளியிருக்கிருன.] என்ற வசநம் இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கது. (ய: மாம பஜதே) இத்தகைய என்னை எவனெருவன் ஸேவிக்கிருனே. அதாவது உபாஸநம் செய்கிருனே என்கிறபடி. "ப₄ஜ-ஸேவாயாம" என்ற தா₄துபாட₂த்தின்படி ஏற்படும் 'ஸேவிக்கிருன்' என்னும் பொருள் "ஸேவா ப₄க்திருபாஸ்தி:" என்ற நிக₄ண்டுவின்படி 'உபாஸிக்கிருன' என்ற பொருளாகத் தேறுகிறது. ஆக, "உபாஸீத" என்று ஶ்ருதிவிஹிதமான உபாஸநமே இங்கு 'ப₄ஜதே' என்று அநுவதி₃க்கப்படுகிறது எனத் தேறுகிறது.

इत्यर्थः। स मे युक्ततमो मतः—स सर्वेभ्यश्श्रेष्ठतमः इति सर्वं सर्वदा यथावस्थितं स्वत एव साक्षात्कुर्वन् अहं मन्ये॥४७॥

॥ इति श्रीभगवद्रामानुजविरचिते श्रीमद्गीताभाष्ये षष्ठोऽध्यायः॥६॥

---

(ஸ: யுக்ததமோ மே மத:) அவன் மற்ற எல்லா யோகி₃களைக் காட்டிலும் மேலானவன என்பது என் ஸித்₃த₄ாந்தம். (மே மத:) "யோ வேத்தி யுக₃பத் ஸாவம் ப்ரத்யக்ஷேண ஸதா₃ ஸ்வத:" [ந்யாயதத்வம்] [எவனொருவன் எல்லாவற்றையும் ஓரே காலத்தில் எப்போதும் தானே ப்ரதயக்ஷமாகக் காண்கிறானோ] என்கிறபடியே எல்லாவற்றையும் ஓரே காலத்தில் எப்போதும் தானாகவே ப்ரத்யக்ஷமாகக் கண்டுகொண்டிருக்கிற எனனுடைய ஸித்₃த₄ாந்தமாகையாலே இதில் நீ விஸ்வஸிக்கத் தட்டில்லை என்று கருத்து. ஆக, இந்த ஸ்லோகத்தால் மத்₄யமஷட்கத்தில் விவரிக்கப்படவிருக்கும் ப₄க்தியோக₃நிஷ்ட₂னுடைய பெருமையைக் காட்டிற்றாயிற்று. 47.

ஆக, யோகா₃ப்₄யாஸ யோக₃ம் என்று பெயர் பெற்ற இவ் வாறும அத்தியாயத்தில், யோகா₃ப்₄யாஸ விதி₄யாகிற (ஆத்ம ஸாக்ஷாத்காரத்தைப் பழகும் முறையாகிற) அர்த்த₂ம் ப்ரத₄ானமாக விளக்கப்பட்டது. ஆதமஸாக்ஷாத்காரம் செய்யும் யோகி₃களில் நாலுவகை உண்டு என்னும் அர்த்த₂மும், அவ்வாத்மஸாக்ஷாத்காரத்திற்கு அப்₄யாஸம (சிந்தனம்), வைராக்₃யம் முதலானவை ஸாத₄னமாயிருக்கின்றன என்னும் அர்த்த₂மும், தொடங்கிய யோக₃ம் இடையில் தடைபட்டாலும் அடியோடு அழிந்து விடாமல் காலக்ரமத்தில் ஸித்₃தி₄யடையும் எனனும் அர்த்த₂மும் முற்கூறிய ப்ரதா₄நார்த்த₂த்திற்கு உறுப்பாக விளக்கப்பட்டன. மேலே உள்ள மத்₄யமஷட்கத்தில் சொல்லப்போகும் ப₄க்தியோக₃த்திற்கு அவதாரிகையாக ப₄க்தியோக₃ச்சிறப்பாகிற அர்த்த₂மும் கடைசி ஸ்லோகத்தில் விளக்கப்பட்டது.

ஸ்ரீ க்ருஷ்ணஸ்வாமி தா₃ஸன் இயற்றிய
கீ₃தார்த்த₂ விவரணத்தில் ஆறுமத்தியாயம் நிறைவு பெற்றது.

**ப்ரத₂ம ஷட்கம்**
**ஸம்பூர்ணம்**

## பகவத் கீதை வெண்பா

(ஆருமத்தியாயத்தின் ஸாரத்தைக் கூறும் பாசுரம்)

யோக விதியோகி யோகத்து நாலுவகை
யோகமது மேலா வுயர்நிலைமை—மேகநிக
ரண்ண லருள்கீதை யாருமோத் தின்பொருளாத்
திண்ண முடிந்ததிது சேர்ந்து.

வாதிகேஸரி ஜீயர் அருளிய பகவத்கீதை வெண்பாவில்
ஆரும் அத்தியாயம் முற்றிற்று.

யோக விதி—*யோக₃மாகிற ஆத்மஸாக்ஷாத்காரத்தைப் பழகும் முறையும்,* யோகி யோகத்து நாலு வகை—*அதைப் பழகும் யோகி₃யரிலும், அந்த யோக₃த்திலும் உள்ள நாலு பிரிவும்,* யோகம் அது—*ஸ⁻ப்ரஸி₃த்₃த₄மான ப₄க்தியோக₃ம்.* மேலா உயர் நிலைமை—*எல்லா யோக₃ங்களைக் காட்டிலும் மேலாக உயர்ந்து நிற்கும் நிலையும்,* இது சேர்ந்து—*ஆகிய இவ் வர்த்த₂ங்கள் சேர்ந்து.* மேகம் நிகர் அண்ணல் அருள் கீதை ஆரும் ஓத்தின் பொருளா திண்ணம் முடிந்தது—*மேக₄த்தை ஒத்த ஸ்வாமியான கண்ணன் அருளிய கீ₃தையின் ஆருமஅத்தியாயத்தின் பொருளாக அறுதியிடப்பட்டு நிறைவடைந்தது.*

## முதல் ஷட்கத்தின் ஸாரம்

சோக முயிருணர்வு தொல்கருமச் செய்தியதி
லாகு மறிவுயர்த்தி யார்வகைகள்—யோகமுயிர்
காட்சி யிவற்றின் கருத்துமுத லாறோத்தின்
மாட்சிமை சொல்லும் வகை.

சோகம்—*(அர்ஜ⁻னனுடைய) சோகம்.* உயிர் உணர்வு—*ஜீவாத்மதத்துவத்தைப்பற்றிய அறிவு,* தொல் கருமச் செய்தி—*பழைமையான கர்மயோக₃ாநுஷ்ட₂ானம்.* அதில் ஆகும் அறிவுயர்த்தி—*அக்கர்மயோக₃த்தில் அடங்கிய அறிவின் சிறப்பு.* (அதில்) ஆர் வகைகள்—*அககர்மயோக₃த்தில் உள்ள சில வகைகள்.* உயிர் காட்சி யோகம—*ஆத்மாவைக் காண்ப தாகிற யோக₃ம்.* இவற்றின் கருத்து—*ஆகிய இவ்வாறு அர்த் த₂ங்களின் விளக்கமும்.* முதல் ஆறு ஓத்தின்—*(முறையே) முதல் ஆறு அத்தியாயங்களின்* மாட்சிமை சொல்லும்வகை—*முக்கியமான அர்த்தங்களைச் சொல்லும் வகையாகும்.*

## கீதார்த்த சங்கிரகம்

### (ஸ்ரீ வேதாந்த தேசிகர்)

### ஆறுமத்தியாயத்தின் ஸாரப்பொருள்

7. யோக முயற்சியும் யோகிற் சமநிலை நால்வகையும்
யோகி னுபாயமும் யோகுத னால்வரும் பேறுகளும்
யோகு தனிற்றன் றிறமுடை யோகுதன் முக்கியமு
நாகணை யோகி நவின்றன னன்முடி வீரனுக்கே.

நாக அணை யோகி—*திருவனந்தாழ்வானாகிய திருப்பள்ளியில் யோகநித்திரைகொண்டருள்கின்ற எம்பெருமானாகிய கண்ணன்.* நன் முடி வீரனுக்கு—*சிறந்த கிரீடத்தையுடைய வீரனானமையால் கிரீடி எனப் பெயர்பெற்ற அர்ஜுநனுக்கு.* யோக முயற்சியும்—*ஜீவாத்ம யோகமாகிற ஆத்மஸாக்ஷாத்காரத்தைப் பழகும் முறையும்.* யோகில்—*முற்கூறிய யோகத்தில்.* சமநிலை நால்வகையும்—*நாலுவகைப்பட்ட ஸாம்யத்தைப் பார்க்கும் நிலைகளும்.* யோகின் உபாயமும்—*முற்கூறிய யோகத்தின் ஸாதநங்களும்,* யோகுதனால் வரும—*அந்த யோகத்தால் உண்டாகின்ற.* பேறுகளும—*பலன்களும்.* யோகுதனில்—*(கீழ்க்கூறிய நான்கு நிலையுள்ள) யோகத்தைக்காட்டிலும்.* தன் திறமுடை—*தன்னைப் பற்றியதான,* யோகுதன் முக்கியமும்—*பக்தியோகத்தின் சிறப்பும் (ஆகிய இவற்றை).* நவின்றனன்—*உபதேசித்தான்.*

## கீதாஸ்லோகார்த்தச் சுருக்கம்

### ஆறுமத்தியாயம்

| ஸ்லோ. | அர்த்தம் |
| --- | --- |
| 1-6. | ஆத்மஸாக்ஷாத்காரமாகிற யோகத்திற்கு, ஜ்ஞானத்தை உள்ளடக்கிய கர்மயோகமே காரணம் என்பதை உறுதிப் படுத்துவதற்காக, அக்கர்மயோகத்தை விவரித்தல். |
| 7-9. | யோகாப்யாஸ விதியின் (யோகமாகிற ஆத்மஸாக்ஷாத்காரத்தைப் பழகும் முறையின்) தொடக்கநிலை. |
| 10-28. | யோகாப்யாஸவிதி விவரணம் |

10-12. பா₃ஹ்ய (வெளி) உபகரண நியமம்.

13-14. அந்தரங்க₃ உபகரணங்களான ஶரீரநிலைகளின் நியமம்.

15. ஸாபாஶ்ரயமான ப₄க₃வத்₃ விக்₃ரஹத்தைச் சிந்திப்பது யோகோ₃பகரணங்களில் முக்₂யமானது.

16-17. மற்றும் சில நியமங்கள்.

18. யோக₃யோக்₃யத₃ஶை

19. யோக₃ த₃ஶையின் விளக்கம்.

20-23. யோகா₃ப்₄யாஸம் மிகச்சிறந்த புருஷார்த்தம்.

24-27 யோகா₃ப்₄யாஸத்திற்கு உறுப்பான மனதை [illegible] முதலானவை.

28. ஆத்மஸாக்ஷாத்காரமாகிற யோக₃த்தின் பலம்.

29-32. நான்குவகைப்பட்ட யோகி₃கள்

33-34. யோக₃ஸாத₄நமான அப்₄யாஸம் (ஆத்மசிந்தனம்), வைராக்₃யம் முதலானவற்றைத் தெளிவாக அறிவதற்காக அர்ஜுனனின் கேள்வி.

35-36. மேற்கூறிய கேள்விக்குக் கண்ணனின் பதில் (யோக₃ஸாத₄நம்).

37-39. யோக₃மாஹாத்ம்யத்தை அறிவதற்காக 'யோக₃ப்₄ரஷ்டனுக்கு போ₄க₃மோக்ஷங்கள் இரண்டுமே கிடைக்காதோ?' என்று அர்ஜுனனின் கேள்வி.

40-45. யோக₃ப்₄ரஷ்டனுக்குக் காலக்ரமத்தில் இரண்டுமே கிடைக்கும் என்று கண்ணனின் பதில் (யோக₃மாஹாத்ம்யம்).

46. தபஸ்விகள் முதலானோரைக்காட்டிலும் ஜீவாத்மயோகி₃யின் சிறப்பு.

47. தபஸ்விகள் முதலானோர், ஜீவாத்மயோகி₃ ஆகிய அனைவரைக் காட்டிலும் பரமாத்மோபாஸகனின் சிறப்பு (ப₄க்தி யோக₃மாஹாத்ம்யம்).

கீ₃தா ஶ்லோகார்த்த₂ச் சுருக்கத்தில் முதல் ஷட்கம் நிறைவு பெற்றது.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஆழ்வாராசார்யர்களின் அருளிச்
செயல்களுக்கு எளிய தமிழ் விரிவுரைகளுடன்
வெளிவரும் சிறந்த

ஸ்ரீவைஷ்ணவ மாதப்பத்திரிகை

# ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்

வேதம். ஸ்மிருதிகள். இதிஹாஸங்கள் முதலியவற்றிலிருந்து ஸ்ரீமந்நாராயணனின் பெருமையை விளக்கும் விஷ்ணுசித்தவிஜயம் என்னும் சிறந்த கிரந்தமும், தமிழில் கீதா வ்யாக்யானமும், திவ்யப்ரபந்தங்களுக்கு எளிய விவரணங்களோடு கூடிய பூர்வாசார்ய வ்யாக்யானங்களும் விசிஷ்டாத்வைத ப்ரகரண க்ரந்தமான விவரண ஸஹித சாரீரககாரிகாவளியும், விவரண ஸஹித ப்ரபந்நாம்ருதமும் மற்றும் பல விஷயங்களும் வெளிவருகின்றன.

ஆசிரியர்:—

**ஸ்ரீ. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்**
அட்வகேட்,
3. புத்தூர் அக்ரஹாரம். திருச்சி.

வருடச் சந்தா ரூ. 5-00.

*ஸர்வஜித் மார்கழி 28உ (12-1-1948)*
முதல் தொடர்ந்து நடைபெறுகிறது.

# — ஸ்ரீஸூக்திமாலா வெளியீடுகள் —

பதவுரை, அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு
முதலானவற்றோடு கூடிய பெரியவாச்சான்பிள்ளை முதலான
பூர்வாசார்யர்களின் க்ரந்தங்கள்.

| க்ரந்தங்கள் | விலை | தபால் |
|---|---|---|
| 1. பரந்த ரஹஸ்யம் முதலிய சில ரஹஸ்யங்கள் | 1.50 | .35 |
| 2. ஸ்தோத்ர ரத்ந சதுச்லோகீ ஜிதந்தே வ்யாக்யானங்கள் (அச்சில்) | | |
| 3. திருப்பல்லாண்டு வ்யாக்யானம் | 1-50 | .35 |
| 4. முதல் திருவந்தாதி வ்யாக்யானம் | 1.88 | .45 |
| 5. பெருமாள் திருமொழி வ்யாக்யானம் | 1 88 | .40 |
| 6. திருமாலை வ்யாக்யானம் (அச்சில்) | | |
| 7. திருவாசிரியம் பெரியதிருவந்தாதி வ்யாக்யானம் | 1 63 | .40 |
| 8. சதுச்லோகீ வ்யாக்யானம் (நாயனாராச்சான்பிள்ளை) | 1-50 | .35 |
| 9. கத்ய வ்யாக்யானங்கள் (அச்சில்) | 0 50 | .20 |
| 10. நாச்சியார் திருமொழி வ்யாக்யானம் | 4.00 | .55 |
| 11. திருச்சந்தவிருத்த வ்யாக்யானம் | 5-00 | .55 |
| 12. நான்முகன் திருவந்தாதி வ்யாக்யானம் (அச்சில்) | | |
| 13. ஸ்ரீராமாயண தனிச்லோகம் (விவரணத்துடன்) I Part | 3-50 | .65 |
| ஷை. இரண்டாம் பாகம் (விவரணத்துடன்) | 7.00 | 1.25 |
| 14. திருப்பள்ளியெழுச்சி வ்யாக்யானம் | 0-50 | .20 |
| 15. பாசுரப்படி ராமாயணம் (விலையில்லை தபால்கூலி 0-10) | | |
| 16. அமலனாதிபிரான் வ்யாக்யானங்கள் | 1.84 | .40 |
| 17. கண்ணிநுண்சிறுத்தாம்பு வ்யாக்யானம் | 0-75 | .30 |
| 18. சிறிய திருமடல் வ்யாக்யானம் (விவரணத்துடன்) (அச்சில்) | | |
| 19. முமுக்ஷுப்படி வ்யாக்யானம் | 3.00 | .55 |
| 20. பெரிய திருமடல் வ்யாக்யானம் (விவரணத்துடன்) | 1 50 | .35 |
| 21. முதல் திருவந்தாதி, அப்பிள்ளையுரை.. | 5.00 | .55 |
| 22. இரண்டாந்திருவந்தாதி வ்யாக்யானம் .. | 4 00 | .75 |
| 23. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் (அச்சில்) | | |
| 24. ஸ்ரீவசநபூஷண வ்யாக்யானம் 4- அரும்பதவுரைகளுடன் முதல் பாகம் | 6.00 | 1-00 |
| 25. மூன்றாந்திருவந்தாதி வ்யாக்யானம் (விவரணத்துடன்) | 4-00 | .60 |
| 26. அருளிச்செயல் ரஹஸ்யம் (பூஷணத்துடன்) | 2-50 | .50 |
| 27. திருவெழுகூற்றிருக்கை வ்யாக்யானம் (விவரணத்துடன்) | 1-00 | .30 |

P. T. O.

# ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடுகள்

(ஸுதர்ஶன பத்ரிகையில் வெளிவந்த எளியநடை நூல்கள்)

| | | | |
|---|---|---|---|
| 1. | திருப்பாவை வ்யாக்யானம் | 4-00 | -55 |
| 2. | (போதாயந) ஸந்த்யாவந்தநம பதவுரையுடன் | 0-35 | -10 |
| 3. | (போதாயந) உபாகர்மவிதி | 0-35 | -10 |
| 4. | புருஷஸூக்த வ்யாக்யானம் | 0-75 | -25 |
| 5. | நாராயண ஸூக்த வ்யாக்யானம் | 0-75 | -25 |
| 6. | ஸ்ரீஸூக்த வ்யாக்யானம் | 2-00 | -45 |
| 7. | பூ நீளா விஷ்ணுஸூக்த வ்யாக்யானங்கள் | 1-75 | -50 |
| 8. | தேஹளீச ஸுப்ரபாதம் | 0-25 | -10 |
| 9. | ராமாநுஜதேசிக ஸ்தோத்ரங்கள் | 1-00 | -30 |
| 10. | விசிஷ்டாத்வைதவிஜயம் (முதல் பாகம்) | 10-00 | 1-50 |
| | ஷை இரண்டாம பாகம | 5-00 | -75 |
| 11. | சாதிமத ஆராய்ச்சி | 2-00 | -25 |
| 12. | ஸ்ரீலக்ஷ்மீ நருஸிம்ஹஸ்தவம் | 0-37 | -15 |
| 13. | ஸந்மதகாரிகாவளீ | 1-75 | -45 |
| 14. | விஷ்ணுசித்தவிஜயம் முதல் பாகம் | 5-00 | 1-00 |
| | ஷை இரண்டாம் பாகம் | 7-00 | 1-50 |
| 15. | கம்பனின் சமயம் முதல் பாகம் | 1-00 | -30 |
| 16. | சாரீரககாரிகாவளீ (முதல் பாகம்) | 3-00 | -60 |
| 17. | பெரியாழ்வார் ப்ரபாவம் | 4-00 | -75 |
| 18. | ஸாத்விகவிஜய ஸர்வஸ்வம் (தபால் உள்பட) 50பை | | |
| 19. | ஸந்த்யாவந்தநபாஷ்யம் | 3-00 | -70 |
| 20. | திருப்பல்லாண்டு வ்யாக்யானம் | 1-50 | -35 |
| 21. | மகரநெடுங்குழைக்காதர் பாமாலையந்தாதி | 1-50 | -40 |
| 22. | ஸ்ரீகேசவமணிமாலை | 0-75 | -25 |
| 23. | மாமுனிகள அறுநூறுவது ஆண்டு மலர் | 1-50 | -40 |
| 24. | சங்கரரும் வைணவமும் (தபால் வகைக்கூலி) 50பை | | |
| 25. | ஸித்தோபாய விஜயம் | 3-00 | -50 |
| 26. | திருப்பாவை, திருப்பள்ளியெழுச்சி (மூலம் மட்டும்) | 0-20 | -10 |
| 27. | கத்யத்ரயம் (மூலம் மட்டும்) | 0-25 | -15 |
| 28. | கீதா வ்யாக்யானம் | 10-00 | 1-50 |

---

கிடைக்குமிடம்:-

ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்,

3. புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

Accn 2636



Vol. 1

Sri Bhagavad Gita

# கீதா வ்யாக்யானம்

Geetha Vyakhana

(ஏழு, எட்டு அத்தியாயங்கள்)

[ப₄க₃வத்₃ கீ₃தையும், அதற்கு ஸ்ரீராமாநுஜ ப₄ாஷ்யமும், ஆளவந்தார் அருளிய கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹமும், வாதி₃கேஸரி ஜீயர் அருளிய பகவத்கீதை வெண்பாவும், ஸ்ரீவேத₃ாந்ததே₃சிகர் அருளிய கீதார்த்தசங்கிரகமும், 'ஸுத₃ர்ஶனம்' ஆசிரியர் இயற்றிய கீ₃தார்த்த₂விவரணம் என்னும் தமிழ் வியாக்கியானமும், கீ₃தாஶ்லோகார்த்த₂ச் சுருக்கமும், கைவல்ய ஸித்₃த₄ாஞ்ஜநமும் அடங்கியது.]

கிடைக்குமிடம்:—

ஸ்ரீ உ. வே.

Krishna Swamy Iyengar. Hab+p

**S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்,**

அட்வகேட், Trichy

3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

விலை ரூ. 8-00. தபாற்கூலி 1-50.

ஸ்ரீநிவாஸம் பிரஸ் 8, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

# உரையாசிரியரின் முன்னுரை

## [7–8 அத்தியாயங்கள்]

கீ₃தையின் ஏழு எட்டாவது அத்தியாயங்களுக்கு ஸ்ரீராமாநுஜர் அருளிய கீ₃தா ப₄ாஷ்யமும், ஆளவந்தார் அருளிய கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹமும், வாதி₃கேஸரி ஜீயர் அருளிய பகவத்கீதை வெண்பாவும், ஸ்ரீவேத₃ாந்ததே₃ஶிகர் அருளிய கீதார்த்த சங்கிரகமும் இவை அனைத்தையும் தழுவி எளிய தமிழ் நடையில் எழுதப்பட்ட நமது கீ₃தா வ்யாக்₂யானமும், கீ₃தா ஶ்லோகார்த்த₂ச் சுருக்கமும் அடங்கிய கீ₃தா வ்யாக்₂யானப் பகுதி இப்போது வெளியிடப்படுகிறது. ஏற்கனவே முதல் ஆறு அத்தியாயங்களாகிற முதல் ஷட்கத்திற்கு இவை அனைத்தும் அடங்கிய பகுதி வெளிவந்திருப்பது ஸ்ரீவைஷ்ணவ உலகம் அறிந்ததே.

முதல் ஷட்கம் முழுவதையும் ஒரு பகுதியாக வெளியிட்டது போலே, இரண்டாவது ஷட்கம் முழுவதையும் ஒரு பகுதியாக வெளியிடுவதே நியாயமாயினும், கீ₃தையின் ஏழு எட்டு அத்தியாயங்கள் அதன் ஹ்ருத₃யம்போலே ஸாரமானதாய் அமைந்திருக்கையாலே இப்பகுதி தனியாக வெளியிடப்படுகிறது. இவ்விரண்டு அத்தியாயங்களின் பொருளை உள்ளபடி உணர்ந்தால், அறியவேண்டியதையெல்லாம் அறிந்ததாகும் என்று இவற்றின் முதலிலும், நடுவிலும், முடிவிலும் கீ₃தாசார்யனாலேயே முழங்கப்பட்டுள்ளது. முதல் ஷட்கம் இவ்விரண்டு அத்தியாயங்களின் பீடிகை என்றும், மேல்வரும் பத்து அத்தியாயங்களும் இவ்விரண்டு அத்தியாயங்களின் விளக்கமே என்றும் கொள்ளலாம். சுருங்கக் கூறினால், இவ்விரு அத்தியாயங்களும் கீ₃தாசரமஶ்லோகத்திற்கு விளக்கமாயமைந்துள்ளன. கீ₃தை முழுவதையும் உரையோடு படிக்க நேரம் இல்லாதவர்களுக்கு இவ்விரண்டு அத்தியாயங்களையும் உரையோடு படித்தாலே போதுமானது.

கீ₃தோபநிஷத்தின் இவ்விரு அத்தியாயங்களும் ஆழ்ந்த பொருளுடையவையாய் அமைந்துள்ளன. '*அவிஸ்த்ருதா: ஸுக₃ம்பீ₄ரா: ராமாநுஜமுநேர் கி₃ர:*' [ஶ்ருதப்ரகாஶிகைத் தொடக்கம் 9] [விரிவற்றவையாகவும், மிக ஆழ்ந்த பொருள் உடையவையாகவும் இருப்பவை ராமாநுஜ முனிவரின்

ஸ்ரீஸூக்திகள்] என்கிறபடியே கீ3தா பா4ஷ்யமும் ஆழ்ந்த பொருளுடையது. மிகச் சுருக்கமாயிருக்கையாலே, இவ்வத்தியாயங்களின் கீ3தா பா4ஷ்யத்தின் பொருளை விளக்குவதில், ஸ்ரீராமாநுஜரின் ஶிஷ்யர்கள் காலம் தொடங்கியே கருத்து வேற்றுமைகள் ஏற்பட்டன; இது காரணமாக விஶிஷ்டாத்3வைத ஸ்ரீவைஷ்ணவ த3ர்ஶனம் இரு ஸம்ப்ரதா3யங்களாகப் பிரிய நேர்ந்தது. இவ்விரு ஸம்ப்ரதா3யங்களில் தி3வ்யப்ரப3ந்த4 வ்யாக்2யாதாக்களால் நிலைநாட்டப்பட்ட தென்னாசார்ய ஸம்ப்ரதா3யத்தைப் பின்பற்றிச் செல்கின்றது நமது கீ3தா வ்யாக்2யானம். கீ3தா பா4ஷ்யத்தின் தாத்பர்ய சந்த்3ரிகையை அடிப்படையாகக் கொண்ட தே3ஶிக ஸம்ப்ரதாயத்துக்கும், தென்னாசார்ய ஸம்ப்ரதா3யத்துக்கும் உள்ள முக்கியமான கருத்துவேற்றுமைகள் இவ்விரு அத்தியாயங்களுக்குப் பொருள் கொள்ளுவதில் வெளிப்படையாக விளங்கி நிற்கின்றன. இந்த ஸம்ப்ரதா3யார்த்த2பே4த3ங்கள் எட்டாம் அத்தியாயத்தின் கடைசியில் (பக்கம் 399-407) கொடுக்கப்பட்டுள்ளன. இதுகொண்டும் நமது கீ3தா வ்யாக்2யானத்தைக்கொண்டும் இரு ஸம்ப்ரதா3யங்களின் அர்த்த2 பே4த3ங்களையும், அவை எந்த அடிப்படையில் தோன்றி வளர்ந்தன என்பதையும் தெளிவாக உணரலாம்.

இவ்வத்தியாயங்களில் சொல்லப்படும் முக்2யமானதொரு அர்த்த2மான கைவல்ய விஷயத்தில் சுமார் 800 ஆண்டுகளுக்குள் தென்னாசார்ய ஸம்ப்ரதா3யஸ்த2ர்களிடையிலேயே குழப்பம் ஏற்பட்டு, தி3வ்ய ப்ரப3ந்த4 வ்யாக்2யாதாக்கள் கருதாததொரு பக்ஷத்தை அவர்களுடைய பக்ஷமாகத் தென்னாசார்ய ஸம்ப்ரதா3ய வித்3வத்3வரிஷ்ட2ர்கள் பலர் கருதத்தொடங்கினர். இதனால் இவ்வத்தியாயங்களின் ஶ்லோக பா4ஷ்யங்களுக்குப் பொருளுரைப்பதில் மூன்றுவகையான கருத்துவேற்றுமைகள் ஏற்பட்டு விட்டன. கீ3தாசார்யனுடைய க்ருபையாலும், எம்பெருமானாருடைய அபாரகருணையாலும், தி3வ்ய ப்ரப3ந்த4 ரஹஸ்ய வ்யாக்2யாதாக்களான பூர்வாசார்யர்களின் ஒப்பற்ற பேரருளாலும் எழுந்த 'கைவல்ய ஸித்3தா4ஞ்ஜனம்' என்னும் நூலில், இக்குழப்பங்களெல்லாம் களையப்பெற்று, கீ3தாசார்யனுடையவும், எம்பெருமானாருடையவும், தி3வ்யப்ரப3ந்த4 ரஹஸ்ய வ்யாக்2யாதாக்களுடையவும் திருவுள்ளம் வெளியிடப்

பெற்றது. இந்நூல் இந்த கீ₃தா வ்யாக்₂யானத்தில் (பக்கம் 281-376) இணைக்கப்பெற்றுள்ளது. இந்நூலைக் கடாக்ஷித்த காஞ்சி மஹாவித்₃வான் ஸ்ரீ உ. வே. ப்ர. ப. அண்ணங்கராசார்ய ஸ்வாமி, திருநாங்கூர் ந்யாயவேதா₃ந்த வித்₃வான் ஸ்ரீ உ. வே. ப்ர. ப. அண்ணங்கராசார்ய ஸ்வாமி, வாக₃ம்ருதவர்ஷீ, ந்யாய வேதா₃ந்த வித்₃வான் ஸ்ரீ உ. வே. K. வரத₃ாசார்ய ஸ்வாமி, ஸாரார்த்த₂ச் சொல்லழகர் ஸ்ரீ உ. வே. ஶதாபி₄ஷேகம் கோ₃விந்த₃நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி, திருநாராயணபுரம் வித்₃வான் ஸ்ரீ உ. வே. அக்காரக்கனி ஸம்பத் குமாராசார்ய ஸ்வாமி, வானமாமலை வித்₃வான் ஸ்ரீ உ. வே. V. S. தோதாத்₃ரி ஐயங்கார் ஸ்வாமி, ஸ்ரீரங்கம் வித்₃வான் க₄னபாடி ஸ்ரீ உ. வே. ஶௌரிராஜய்யங்கார் ஸ்வாமி, திருநாங்கூர் வித்₃வான் (ஸ்ரீராமாநுஜ மிஷன் செயலாளர்) ஸ்ரீ உ. வே. P.B.K. ஸ்ரீநிவாஸா சார்ய ஸ்வாமி முதலான பல மஹனீயர்கள் இந்நூலில் கண்ட முடிவை ஒருமுக₂மாக ஆதரித்திருப்பது குறிப்பிடத்தக்கது. வாக₃ம்ருதவர்ஷி ஸ்வாமி கீழ்க்கண்ட ஶ்லோகங்களின் மூலம் தமது நிஷ்கர்ஷத்தைத் தெரிவித்திருக்கிறார்.

॥ श्रीः ॥

"जयति रघुपतेः वाक्यमेतद्धि सत्यम्"

१. विभीषणप्रपत्तौ हि पक्षत्रयमुदीरितम्।
सुग्रीवहनुमत्पक्षौ रामपक्षस्तथैव च॥

२. सुग्रीवादिवचः श्रुत्वा हनूमान् उत्तरं जगौ।
तद्वचस्त्वधरीकृत्य राम उत्तरमब्रवीत्॥

३. तथा कैवल्यविषये त्वन्तः सौदर्शनो ध्रुवः।
इति दृष्टाः गरीयांसः भवेयुरिति मे मतिः॥
[अन्तः-सिद्धान्तः इत्यर्थः।
सौदर्शनः—सुदर्शनास्थितः इत्यर्थः॥]

४. कैवल्यतत्त्वमधिकृत्य वदन्ति सर्वे
विद्वत्तमा ननु ततोऽप्यधिकश्च पक्षः।
लब्धः सतां द्रविडसंस्कृतशास्त्रदृष्टः
मध्यस्थमत्सरिजना इह मा च भूवन्॥

६. सुदर्शनस्थकैवल्यसिद्धाञ्जनमुपेयुषा ।
वरदार्येण दासेन स्वाभिप्रायो निवेदितः ॥

[*''ரகு₄பதியின் உண்மையான வாக்கே வெற்றிபெறும்''*

(1) ஸுக்₃ரீவனின் பக்ஷம், (2) அனுமனின் பக்ஷம், (3) ராமபக்ஷம் என்று விபீ₄ஷண*ஶ*ரணாகதியை அங்கீ₃கரிக்கும் விஷயத்தில் மூன்று பக்ஷங்கள் காட்டப்பட்டுள்ளன. ''ஸ்ரீவிபீ₄ஷணன் து₃ஷ்டனாகையாலே அங்கீ₃கரிக்கத்தகாதவன்'' என்று ஸுக்₃ரீவன் முதலானோர் சொல்லுவதைக் கேட்டு, ''விபீ₄ஷணன் நல்லவனாகையாலே அங்கீ₃கரிக்கத்தக்கவனே'' என்று அனுமன் பதில் கூறினான். அந்தப் பக்ஷத்தையும் தள்ளி, ''விபீ₄ஷணன் து₃ஷ்டனாயினும் கைக்கொள்ளத்தக்கவனே'' என்னும் மூன்றாவது பக்ஷத்தை ஸ்ரீராமபிரான் அருளினான். அவ்வண்ணமே கைவல்யவிஷயத்திலும் ஸுத₃ர்*ஶ*னத்தில் வெளிவந்த நிர்ணயம் அசைக்கவொண்ணாதது என்று (ஸாராஸார விவேகஜ்ஞர்களாய், ப்ரமாணபரதந்த்ரர்களாய், நடுநிலைவகிப்பவர்களான) பெரியோர்கள் உகந்தருள்வார்கள் என்பது அடியேனது கருத்து. கைவல்யவிஷயத்தைக் குறித்து நீண்டகாலமாகப் பண்டி₃தோத்தமர்கள் அனைவரும் இருவித₄மான பக்ஷங்களைக் கூறிவந்தார்களல்லவா? அவ்விரு பக்ஷங்களைக் காட்டிலும் வேறுபட்டதாய், தென்மொழி வடமொழி *ஶா*ஸ்த்ரங்களில் காணப்படுவதாய், மூன்றாவதான தி₃வ்யப்ரப₃ந்த₄வ்யாக்₂யாதாக்களின் பக்ஷம் ஒன்றும் (தாத்பர்யதீ₃பிகை, கைவல்யஸித்₃த₄ாஞ்ஜநம் முதலானவற்றில்) கிடைத்துள்ளது. இப்பக்ஷ விஷயத்தில் அனைவருமே 'இது சரியோ தவறோ' என்று தயங்குபவர்களாகவோ, இப்பக்ஷத்தில் மாத்ஸர்யம் கொண்டவர்களாகவோ ஆகாமலிருப்பார்களாக. ஸுத₃ர்*ஶ*னத்திலுள்ள கைவல்யஸித்₃த₄ாஞ்ஜனத்தை விமர்*ஶி*த்த வரத₃ாசார்ய த₃ாஸனால் (இவ்வண்ணமாகத்) தன் கருத்து தெரிவிக்கப்பட்டது.]

இவ்வண்ணமாக ஸ்ரீவைஷ்ணவ ஸித்₃த₄ாந்தத்தின் முக்கியமான கொள்கைகளைத் தெளிவுபடுத்துவதாக இவ்வுரை அமைந்தது எம்பெருமானருளேயாகும்.

23—3—79. ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி தாஸன்.

# பிழைதிருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 22 | 27 | கிறது; | தாகிறது; |
| 26 | 13 | ப்ரக்தியை | ப்ரக்ருதியை |
| 33 | 18 | யிருத்த | யிருந்த |
| 45 | 12 | கொணட | கொண்ட |
| 45 | 32 | மிகுதியாவுகைடயார்க்கு | மிகுதியாகவுடையார்க்கு |
| 50 | 25 | கு$_3$ணங்கனால் | கு$_3$ணங்களால் |
| 53 | 10 | யுயைய | யுடைய |
| 59 | 34 | ஈடுபடுவனுக்கும் | ஈடுபடுபவனுக்கும் |
| 61 | 33 | அங்க$_2$பரபததி | அங்க$_2$ப்ரபத்தி |
| 63 | 9 | அலர் | அல்லர் |
| 67 | 16 | எம்பெ ஒ | எம்பெரு |
| 76 | 17 | நிறைளடைய | நிறைவடைய |
| 77 | 13 | எம்பெருமானை அதற்குப் | அதற்குப் |
| 77 | 20 | "ஶப்$_3$த$_3$ ஹி | ஹி |
| 77 | 21 | ப்$_3$ரஹ்ம | "ஶப்$_3$த$_3$ ப்$_3$ரஹ்ம |
| 77 | 24 | இவளை | இவனை |
| 98 | 15 | காணவில்யோ | காணவில்லையோ |
| 131 | 16 | முயற்ச்சி | முயற்சி |
| 139 | 31 | யததே | யததே அத$_2$வா நிவர்த்ததே |
| ,, | 32 | முயல்கிறுன் | முயல்கிறுன் அல்லது மீள்கிறுன் |
| ,, | 36 | ப்ரயத்னத்திற்கும் | ப்ரயத்ன நிவ்ருத்திகளுக்கும் |
| 140 | 3 | ப்ரயத்ன | ப்ரயத்ன நிவ்ருத்தி |
| ,, | 8 | ப்ரவ்ருத்தியை | ப்ரவ்ருத்தியை அல்லது நிவ்ருத்தியை |
| ,, | 19 | உதா$_3$ஸீநநாயிருக் | உதா$_3$ஸீநனுயிருக் |
| ,, | 22 | ப்ரயத்நங்களே | ப்ரயத்ந நிவ்ருத்திகளே |
| ,, | 27 | ப்ரயத்நமும் | நிவ்ருத்தியும் |
| ,, | 35 | ப்ரவ்ருத்திகளே | ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளே |
| 141 | 3 | ப்ரவ்ருத்திகளும் | ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும் |
| ,, | 23 | ப$_4$க்தியோக$_3$த்தைப் | கர்மஜ்ஞானப$_4$க்தி ப்ரபத்திகளில் ஒன்றை |
| 142 | 13 | நிவ்ருத்நி | நிவ்ருத்தி |
| 156 | 30 | தன்னைத தவிர | தன்னைத் தவிர |
| 165 | 11 | ஸ்வப$_4$ாவத்தலும் | ஸ்வப$_4$ாவத்தாலும் |

| | | | |
|---|---|---|---|
| 196 | 11 | சொவ்லுகிருன் | சொல்லுகிருன் |
| 202 | 3 | அடைகிருர்கனோ. | அடைகிருர்களோ. |
| 206 | 33 | ப்ரணைவத்திற்குப் | ப்ரணவத்திற்குப் |
| 208 | 21 | விளங்கிறது. | விளங்குகிறது. |
| 209 | 4 | இவ்வத்₂ூர்வ | இவ்வத₃ூர்வ |
| 211 | 20 | ஸ்த₂ூாந | ஸ்த₂ாந |
| 211 | 22 | விருந்தே அநுபூ₄விப் | லிருந்தே அநுப₄விப் |
| 211 | 24 | கேஷாஞ்சித | கேஷாஞ்சித் |
| 211 | 26 | கூ₃தி: | கு₃தி: |
| 213 | 2 | ஜதார்த்தூ₃நாத் | ஜ ாார்த்து₃நாத் |
| 213 | 14 | பூஜிக்கத்தவன் | பூஜிக்கத்தக்கவன் |
| 215 | 8 | ஆடைகிருன். | அடைகிருன். |
| 219 | 8 | முகதேப்₄யோ | முக்தேப்₄யோ |
| 220 | 6 | மண்டூ₃ல | மண்டு₃ல |
| 221 | 5 | கைவவல்ய ஸ்தூ₃ானம் | கைவல்யஸ்த₂ானம் |
| 232 | 21 | பட்டதகையாலே | பட்டதாகையாலே |
| 234 | 31 | கொள்ளலாம் ஶரீரம். | கொள்ளலாம். ஶரீரம் |
| 237 | 22 | பரமபதூ₃த்திற்குக் | பரமபது₃த்திற்குக் |
| 240 | 33 | றிலே | நிலே |
| 250 | 22 | யர்யாநுப₄வம் | வர்யாநுப₄வம் |
| 250 | 29 | விநாஶிந | விநாஶிந: |
| 252 | 3 | மிக்கதினில் | மிக்கதனில் |
| 252 | 26 | ப்ாகரணத்தில் | ப்ரகரணத்தில் |
| 254 | 13 | எண்ணே | எண்ணெய் |
| 254 | 23 | வ்ருததி | வ்ருத்தி |
| 266 | 34 | முன்ருவது | மூன்ருவது |
| 270 | 28 | ப்₃ாஹ்மாநு | ப்₃ரஹ்மாநு |
| 271 | 2 | பலவிடங்ளளில் | பலவிடங்களில் |
| 272 | 18 | யாத₂ாத்மய | யாத₂ாத்ம்ய |
| 273 | 7 | ப்₃ரஹ்மாநுப₄வவே | ப்₃ரஹ்மாநுப₄வமே |
| 274 | 24 | காணத்தை | கரணத்தை |
| 275 | 5 | ப்₃ாஹ்மாத்மக | ப்₃ரஹ்மாத்மக |
| 282 | 1 | பே₄ாக₂ | பே₄ாக₃ |
| 297 | 25 | த்₃வந்தூ₃வமோஹம் | த்₃வந்த்₃வ மோஹம் |
| 308 | 1 | அர்ச்சிராதி₄ | அர்ச்சிராதி₃ |
| 308 | 31 | நிஷ்டூ₃னுக்கு | நிஷ்டூ₂னுக்கு |

---

ஸ்ரீ:

# ஆளவந்தார் அருளிய
# கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹம்

[ ஏழாவது அத்தியாயத்தின் சுருக்கம் ]

स्वयाथात्म्यं प्रकृत्यास्य तिरोधिः शरणागतिः ।
भक्तभेदः प्रबुद्धस्य श्रैष्ठ्यं सप्तम उच्यते ॥ ११ ॥

11. ஸ்வயாத₂ாத்ம்யம் ப்ரக்ருத்யாஸ்ய திரோதி₄:
ஶரணாக₃தி: ।
ப₄க்தபே₄த₃: ப்ரபு₃த்₃த₄ஸ்ய ஶ்ரைஷ்ட்₂யம் ஸப்தம
உச்யதே ॥

**ஸப்தமே**—ஏழாவது அத்தியாயத்தில், **ஸ்வயாத₂ாத்ம்யம்**—(உபாஸிக்கப்படும்) பரமபுருஷனுடைய தன்னைப்பற்றிய உண்மைநிலையும், **ப்ரக்ருத்யா**—மூலப்ரக்ருதியினாலே, **அஸ்ய திரோதி₄:**—இந்நிலை (ஜீவனுக்கு) மறைக்கப்படுவதும், **ஶரணாக₃தி:**—(அம்மறைவைப் போக்கடிக்கும்) ஶரணாக₃தியும், **ப₄க்தபே₄த₃:**—உபாஸகர்களில் (நாலு) வகையும், **ப்ரபு₃த்₃த₄ஸ்ய ஶ்ரைஷ்ட்₂யம்**—(அந்நால்வரில்) ஞானியின் சிறப்பும், **உச்யதே**—கூறப்படுகிறது.

---

## முதல் ஷட்கத்திற்கும் இரண்டாவது ஷட்கத்திற்கும் ஸங்க₃தி (தொடர்பு)

**"ஜ்ஞாநகர்மாத்மிகே நிஷ்டே₂ யோக₃லக்ஷ்யே ஸுஸம்ஸ்க்ருதே । ஆத்மாநுபூ₄திஸித்₃த்₄யர்த்தே₂ பூர்வஷட்கேந சோதி₃தே" ॥** [(ஶேஷத்வ ஜ்ஞாநம், இதர விஷயங்களில் பற்றின்மை முதலான பு₃த்₃தி₄ விஶேஷங்களாலே) நன்கு சிறப்பிக்கப்பட்ட ஜ்ஞாநகர்மயோக₃ங்கள், (ஆத்ம ஸாக்ஷாத்காரமாகிற) யோக₃த்தை அடையும் பொருட்டும், (அதற்குப் பின்) ஆத்மாநுப₄வத்தை அடையும்பொருட்டும், (கீ₃தையில்) முதல் ஆறு அத்தியாயங்களாலும் விதி₄க்கப்பட்டன.] **"மத்₄யமே ப₄க₃வத்தத்வ யாத₂ாத்ம்யாவாப்தி ஸித்₃த₄யே । ஜ்ஞாந கர்மாபி₄நிர்வர்த்யோ ப₄க்தி யோக₃: ப்ரகீர்த்தித: ॥"** [நடு ஆறுஅத்தியாயங்களில் ப₄க₃வானுகிற பர தத்துவத்தின் உண்மை நிலையின் அநுப₄வம் உண்டாவதன் பொருட்டு, ஜ்ஞாநத்தோடு கூடிய கர்மயோக₃த்தாலே உண்டாகும் ப₄க்தியோக₃ம் சொல்லப்படுகிறது] என்று கீ₃தார்த்த₂ஸங்க்₃ரஹத்தின் 2, 3–வது ஶ்லோகங்களில் அருளியபடியே, "மாமுபேத்ய" [8-16] என்கிறபடியே

வாதிகேஸரி ஜீயர் அருளிய

*பகவத்கீதை வெண்பா—அத்தியாயம் 7*

# விஜ்ஞாநயோகம்

பூர்வமத்$_4$யமஷட்கார்த்த$_2$ஸங்க$_3$தி

*முன்னாறு நல்லுணர்வின் முற்றுங் கருமத்தாற்*
*றன்னா ருயிருணர்வு தானுரைத்துப்—பின்னார்வத்*
*தேறு மனத்தா லிறைவன்பா லன்புசெயல்*
*கூறு நடுவாறுங் கூர்ந்து.*

*முன் ஆறு*—முதல் ஷட்கத்தினால் (ஆறு அத்தியாயங்களால்), *நல் உணர்வின் முற்றும் கருமத்தால்* — ( ஆத்மாவைப்பற்றிய ) உண்மையறிவினால் நிறைவடையும் கர்மயோக$_3$த்தால், *தன் ஆர் உயிர் உணர்வு தான் உரைத்து*—தனது அருமையான ஜீவாத்ம ஸ்வரூபத்தின் ஸாக்ஷாத்காரம் உண்டாவதைக் கூறி, *பின்*— அதன்பலனாக, *ஆர்வம் தேறு மனத்தால்* — அன்பு நிறைந்த நெஞ்சினால், *இறைவன் பால் அன்பு செயல்*—ஸர்வேஶ்வரனிடம் ப$_4$க்திசெலுத்துவதாகிற ப$_4$க்தியோக$_3$த்தை, *நடு ஆறும்*—(கீ$_3$தை யின்) நடுவிலுள்ள ஆறு அத்தியாயங்களும், *கூர்ந்து கூறும்*— விரிவாக விளக்கும்.

---

பரமப்ராப்யமாய், ''பரம் ப்$_3$ரஹ்ம பரம் த$_4$ாம'' [10-12] என்கிறபடியே பரப்$_3$ரஹ்மமாய், புருஷோத்தமவித்$_3$யையிற்படியே குற்றமற்ற வனாய், ''அஹம் ஸர்வஸ்ய ப்ரப$_4$வ:'' [10-8] என்கிறபடியே எல்லா உலகிற்கும் ஒரே காரணமாய் ''மத்த: பரதரம் நாந்யத்'' [7-7] என்று எல்லாமறிந்தவனாய், ''ஸர்வம் ஸமாப்நோஷி ததோऽஸி ஸர்வ:'' [11-40] என்கிறபடியே, (எங்கும் வ்யாபித்திருக்கையாலே) எல்லாமானவனாய், ஸத்யஸங்கல்பனாய், ''பூ$_4$மிராப:'' [7-4] என்று சொல்லப்படும் உப$_4$யவிபூ$_4$திப் பெருஞ் செல்வத்தையுடையவனாய், ஶ்ரிய:பதியான நாராயணனை அடைவதற்கு தத்க்ரதுந்யாயஸித்$_3$த$_4$மான நேர் உபாயமான (அவனைப்பற்றியதான) உபாஸநத்தை மத்$_4$யமஷட் கத்தில் விவரிப்பதற்கு உறுப்பாக, முதல் ஷட்கத்தில்-அவ்வுபாஸநத் திற்கு அங்க$_3$மாய், ஆத்மஜ்ஞாநத்தோடுகூடிய கர்மயோக$_3$ாநுஷ் டா$_2$னத்தால் ஸாதி$_4$க்கப்படுமதான (ப்ராப்தாவான ஜீவாத்மாவை உள்ளபடி ஸாக்ஷாத்கரிப்பதாகிற) ஆத்ம ஸாக்ஷாத்காரமாகிற பரம்பரோபாயம் கூறப்பட்டது. இனி, மத்$_4$யமஷட்கத்தால் பரப்$_3$ரஹ்ம

श्रीः

# अथ सप्तमोऽध्यायः ॥

॥ भा ॥ प्रथमेनाध्यायषट्केन—परमप्राप्यभूतस्य परस्य ब्रह्मणो निरवद्यस्य निखिलजगदेककारणस्य सर्वज्ञस्य सर्वभूतस्य सत्यसङ्कल्पस्य महाविभूतेः श्रीमतो नारायणस्य प्राप्त्युपायभूतं तदुपासनं वक्तुं, तदङ्गभूतमात्मज्ञानपूर्वककर्मानुष्ठानसाध्यं प्राप्तुः प्रत्यगात्मनो याथात्म्यदर्शनमुक्तम्। इदानीं मध्यमेन षट्केन परब्रह्मभूतपरमपुरुषस्वरूपं, तदुपासनं च भक्तिशब्दवाच्यमुच्यते। तदेतदुत्तरत्र * यतः प्रवृत्तिर्भूतानां

---

[ ஏழாம் அத்தியாயத்தின் சுருக்கம் ]

*ஆங்குமுத லேழாமோத் தன்புக் கிலக்காகு*
*மோங்குமிறை மாயத் தொழிக்குமப்—பாங்கிற்*
*சரண நெறியடைந்தார் தம்பேத ஞானி*
*யரணுயர்வு சொல்லு மமைந்து.*

*ஆங்கு முதல்*—அந்த மத்₁யமஷட்கத்தில் முதல் அத்தியாயமான, *ஏழாம் ஓத்து*—ஏழாம் அத்தியாயம், *அன்புக்கு இலக்காகும் ஓங்கும் இறை*—ப₄க்திக்கு விஷயமாகும் தலைசிறந்த ஸர்வேச்வரனையும், *மாயம்*—(அவனை ஜீவனுக்கு மறைக்கும்) ப்ரக்ருதியையும், *ஒழிக்கும் அப் பாங்கில் சரண நெறி*—(அம்மறைவைப்) போக்கடிக்கும் தன்மையையுடைய சரணாக₃தியையும், *அடைந்தார் தம் பேதம்*—உபாஸிப்பவர்களின் (நாலு வகையான) உட்பிரிவையும், *ஞானி அரண் உயர்வு*—(அந்நால்வரில்) *ஞானி* (எம்பெருமானுக்கே) த₄ாரகனுயிருக்கும் சிறப்புற்றவன் என்பதையும், *அமைந்து சொல்லும்*—நன்றாகக் கூறும்.

---

மான பரமபுருஷனுடைய ஸ்வரூபமும், அவனைப்பெற நேருபாயமான ப₄க்தியெனப்படும் பரமபுருஷோபாஸநமும் கூறப்படுகிறது. அங்க₃ம், ப்ராப்தா ஆகிய இரண்டையும் முதல் ஷட்கத்தில் கூறியபின் அங்கி₃, ப்ராப்யம் ஆகிய இரண்டையும் மத்₄யமஷட்கத்தில் கூறுகிறது என்றபடி. மோக்ஷோபாயமான இந்த ப₄க்தியே கடைசி ஷட்கத்திலும்,

येन सर्वमिदं ततम्। स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानवः॥ (१८.४६) इत्यारभ्य * विमुच्य निर्ममश्शान्तो ब्रह्मभूयाय कल्पते। ब्रह्मभूतः प्रसन्नात्मा न शोचति न काङ्क्षति। समस्सर्वेषु भूतेषु मद्भक्तिं लभते पराम्॥ (५४) इति संक्षिप्य वक्ष्यते। उपासनं तु भक्तिरूपापन्नमेव परप्राप्त्युपायभूतमिति वेदान्तवाक्यसिद्धम्। * तमेव विदित्वाऽतिमृत्युमेति (श्वे. ३. ८) * तमेवं विद्वानमृत इह भवति

---

"யத: ப்ரவ்ருத்திர் பூ₄தாநாம் யேந ஸர்வமித₃ம் ததம்।
ஸ்வகர்மணா தமப்₄யர்ச்ய ஸித்₃தி₄ம் விந்த₃தி மாநவ: ॥"
[18-46]

[எந்தப் பரமபுருஷனிடமிருந்து எல்லாப் பொருள்களும் தோன்றி, வாழ்ந்து, மறைகின்றனவோ, எவனால் இவையனைத்தும் வியாபிக்கப் பட்டுள்ளதோ, அவனைத் தன் கர்மாநுஷ்டானத்தால் ஆராதி₄த்து, அவனருளாலே அவனை அடைவதாகிற ஸித்₃தி₄யை மனிதன் அடைகிறான்.] என்று தொடங்கி,

'விமுச்ய நிர்மம: ஶாந்தோ ப்₃ரஹ்மபூ₄யாய கல்பதே।
ப்₃ரஹ்மபூ₄த: ப்ரஸந்நாத்மா ந ஶோசதி ந காங்க்ஷதி ॥
ஸமஸ் ஸர்வேஷு பூ₄தேஷு மத்₃ப₄க்திம் லப₄தே பராம்॥"
[18-53, 54]

[அஹங்காரம் முதலியவற்றை விட்டு, தன்னதல்லாதவற்றில் தன்னது என்னும் அபி₄மானமற்றவனாய், ஆத்மாநுப₄வத்தையே ஸுக₂மாகக் கொண்டவனாய், ஆத்மாவை அநுப₄விக்கிறான். ஸ்வரூபாவிர்பா₄வம் பெற்றவனாய், க்லேஶகர்மாதி₃களால் கலங்காதவனாய், எப்பொருளைக் கண்டும் வருந்துவதுமில்லை, எதையும் விரும்புவதுமில்லை; அனைத்திலும் ஒருபடிப்பட ஆத₃ரமற்றவனாய், என்னிடம் மேலான ப₄க்தியை அடைகிறான்.] என்பதீருகச் சுருக்கமாகக் கூறப்படுகிறது.

### வேதா₃ந்தஸித்₃த₄மான மோக்ஷோபாயம் ப₄க்தியே

இங்கு பின்வருமாறு பூர்வபக்ஷம் எழுகிறது; அதாவது,—"தமேவ விதி₃த்வா அதிம்ருத்யுமேதி" [ஶ்வே 3-8] (அவனை அறிந்தால்தான் ஸம்ஸாரத்தைத் தாண்டலாம்) முதலான வாக்யங்களில் அறிவினாலேயே மோக்ஷத்தை அடையலாம் என்று ஏற்படுகிறது. "உபாஸீத"

(पु) इत्यादिनाभिहितं वेदनम्, * आत्मा वा अरे:... द्रष्टव्यनिदिध्यासितव्यः (बृ. ६. ५. ६.) आत्मानमेव लोकमुपासीत (३. ४. १५)

---

[ப்₃ருஹ 3-4-15] என்றும் வேத₃ வாக்யத்தினில் சொல்லப்படுகிறபடியால் உபாஸநரூபமான அறிவினுல் மோக்ஷம் ஏற்படுகிறது என்று வேண்டுமாகில் கொள்ளலாம். ''ப₄க்தியினுல் மோக்ஷம் ஏற்படுகிறது'' என்று ஒரு வேத₃வாக்யத்திலும் கூறப்படவில்லையே; ஶ்ருதியில் கர்மஜ்ஞாநங்களிரண்டையுங்கொண்டு மோக்ஷமடையலாம் என்று கூறியிருப்பதையும் கைவிடமுடியாது. மேலும், அத₂ர்வஶிகை₂, கௌஷீதகீப்ரதர்த்த₃நவித்₃யை முதலானவிடங்களில் உருத்திரன், இந்திரன் முதலானுரை உபாஸித்தாலும் மோக்ஷம் ஸித்₃தி₄க்கும் என்று கூறப்பட்டிருப்பதால், பரமபுருஷனுகிற நாராயணனை உபாஸித்தால்தான் மோக்ஷமடையலாம் என்றும் கூறமுடியாது.

இவ்வண்ணமாக எழுந்த பூர்வபக்ஷத்திற்குப் பரிஹாரம் உரைக்கும் ஸித்₃தா₄ந்தமாவது:—(1) மோக்ஷோபாயம் உபாஸநமே; வெறும் ஜ்ஞானமல்ல; (2) அதிலும் வெறும் உபாஸநமல்ல; ப₄க்திரூபமான உபாஸநமே மோக்ஷோபாயம்; (3) இத்தகைய உபாஸநமே மோக்ஷோபாயமேயொழிய கர்மமும் உபாஸநமும் சேர்ந்து நேரே மோக்ஷோபாயம் என்பதும் சரியல்ல. (4) அவ்வுபாஸநமும் பரமபுருஷ விஷயமேயொழிய, உருத்திரன், இந்திரன் முதலான தே₃வதைகள் விஷயமானதல்ல. இவ்விஷயங்களனைத்தும் வேத₃வாக்யங்களினுலேயே ஸித்₃தி₄க்கிறது. எப்படியெனில்:—(1) ஒரே விஷயத்தைப் பல வாக்யங்கள் பல ஶப்₃த₃ங்களால் சொல்லும்போது, ஸாமாந்யஶப்₃த₃ங்களை விஶேஷஶப்₃த₃ங்களில் பர்யவஸாநம் செய்வது (தேர்ந்த பொருளாக நிர்ணயிப்பது) நியாயமாகும். அப்படிப் பார்க்கும்போது, மோக்ஷோபாயமாகிற ஒரே விஷயத்தைக் கூறும் வாக்யங்களில் அம்மோக்ஷோபாயத்தைப் பல ஶப்₃த₃ங்களால் படித்திருப்பதைக் காண்கிரேம். அதாவது,— ''தமேவ விதி₃த்வா அதிம்ருத்யுமேதி'' [ஶ்வே 3-8] (பரமபுருஷனை அறிந்தால்தான் ஸம்ஸாரத்தைக் கடக்கிருன்.) ''தமேவம் வித்₃வாந் அம்ருத இஹ ப₄வதி'' [பு. ஸூ] (அப்பரமபுருஷனை இவ்வண்ணம் அறிபவனே முக்தனுக ஆகிருன்.) என்னும் வாக்யங்களில் வேத₃நம் எனப்படும் அறிவு மோக்ஷோபாயமாகப் படிக்கப்படுகிறது, ''ஆத்மாநமேவ லோகமுபாஸீத'' [ப்₃ருஹ 3-4-15] என்னும் வாக்யம் அறிவெனப்பட்ட அம்மோக்ஷோபாயத்தை உபாஸநமெனக் காட்டுகிறது. ஆக, முதல் வாக்யத்தில் காட்டப்பட்ட

* सत्त्वशुद्धौ ध्रुवा स्मृतिः, स्मृतिलम्भे सर्वग्रन्थीनां विप्रमोक्षः (छा. ७. २६. २), * भिद्यते हृदयग्रन्थिश्छिद्यन्ते सर्वसंशयाः। क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन् दृष्टे परावरे॥ (मु. २. २. ८) इत्यादिभिरैकार्थ्यात्स्मृतिसन्तानरूपं दर्शनसमानाकारं ध्यानोपासनशब्द-

---

அறிவு உபாஸநரூபமான அறிவு என்று இவ்விரண்டாம் வாக்யத்திலிருந்து தேறுகிறது. "ஸத்வஶுத்₃தௌ₄ த்₄ருவா ஸ்ம்ருதி:, ஸ்ம்ருதிலம்பே₄ ஸர்வக்₃ரந்தீ₂நாம் விப்ரமோக்ஷ:" [சாந் 7-26-2] [மனம் சுத்₃தி₄யடைந்தால் நிலையான நினைவு ஏற்படுகிறது; அந்நினைவு ஏற்பட்டவுடன் ஸாம்ஸாரிகமான எல்லா முடிச்சுகளும் அவிழ்கின்றன.] என்கிற வாக்யம் நிலையான நினைவை மோக்ஷோபாயமாகக் கூறுகிறது. முன்சொல்லப்பட்ட உபாஸநம் நிலையான நினைவாயிருக்கவேண்டுமென்று இதிலிருந்து தேறுகிறது. 'பி₄த்₃யதே ஹ்ருத₃ய க்₃ரந்தி₂: சி₂த்₃யந்தே ஸர்வஸம்ஶயா:। க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்₃ருஷ்டே பராவரே ॥" [முண்ட 2-2-8] [அப்பரம் பொருள் காணப்பட்டவளவில், ஹ்ருத₃யத்திலுள்ள எல்லா முடிச்சுகளும் அவிழ்கின்றன. எல்லா ஐயங்களும் தொலைகின்றன; எல்லாக் கர்மங்களும் அழிகின்றன.] என்னும் வாக்யம், இந்த நிலையான நினைவாகிற உபாஸநம் நேரே காண்பது போலிருக்கவேண்டும் என்று காட்டுகிறது. இவ்வர்த்த₂த்தையே "ஆத்மா வா அரே த்₃ரஷ்டவ்ய: (ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ) நிதி₃த்₄யாஸிதவ்ய:" [ப்₃ருஹ 6-5-6] [(கேட்கத்தக்கதும், நினைக்கத்தக்கதுமான) ஆத்மா நேரே காண்பதுபோல் த்₄யானம் செய்யத்தக்கது.] என்னுமிடத்தில் ஒரே வேத₃வாக்யம் காட்டுகிறது. "ஶ்ரோதவ்ய:, மந்தவ்ய:" எனப்படும் ஶ்ரவணமும், மனனமும் விதி₄யில்லாமலே ராக₃ப்ராப்தமாய் ஏற்படக்கூடியவையாகையால் அநுவாத₃மாகும். "த்₃ரஷ்டவ்ய: நிதி₃த்₄யாஸிதவ்ய:" என்று ஒரே வாக்யத்தில் விதி₄க்கப்பட்டிருப்பதால், த்₄யானமானது நேரே காண்பதுபோலிருக்கவேண்டும் என்று விதி₄க்கப்படுகிறது என விளங்குகிறது. ஆக, பலவித₄மான வேதா₃ந்த வாக்யங்களில் விதி₄க்கப்படும் மோக்ஷோபாயமாகிற அறிவு, நேரே காண்பது போன்ற உபாஸநம் எனும் த்₄யாநரூபமாயிருக்கவேண்டுமென்று ஸித்₃தி₄த்தது. "நிதி₃த்₄யாஸிதவ்ய: த்₃ரஷ்டவ்ய:" என்னுமிரண்டில் த₃ர்ஶந ரூபமான த்₄யானம் என்று த₃ர்ஶனத்தை த்₄யானத்தில் பர்யவஸாநம் செய்யாமல், த்₄யான ரூபமான த₃ர்ஶனம் என்று த்₄யாநத்தை த₃ர்ஶனத்தில் பர்யவஸாநம் செய்தால் என்ன? எனில்: உயர்ந்தவனை அரசனைத்

वाच्यमित्यवगम्यते। पुनश्च * नायमात्मा प्रवचनेन लभ्यो न मेधया न बहुना श्रुतेन। यमेवैष वृणुते तेन लभ्यस्तस्यैष आत्मा विवृणुते तनूं स्वाम्॥ (क. २. २३) इति विशेषणात् परेणात्मना वरणीयताहेतुभूतं

---

தாழ்ந்தவனை வேலைக்காரனைக் கூறுவதில் அர்த்த₂மில்லை; அநர்த்த₂மும் உண்டு. தாழ்ந்தவனை வேலைக்காரனை உயர்ந்தவனை அரசனைக் கூறுவதில் பயன் உண்டு. அதுபோல் தாழ்ந்ததான த்₄யானத்தை உயர்ந்ததான த₃ர்ஶனமாகக் கூறுவதே உசிதம். மற்றது உசிதமல்ல. த்₄யானமானது ப₄ாவநாப்ரகர்ஷம் எனப்படும் நினைவின் முதிர்ச்சியால் நேரே காண்பது போலிருப்பதை "வ்ருக்ஷே வ்ருக்ஷே ச பஶ்யாமி சீரக்ருஷ்ணாஜிநாம்ப₃ரம்। க்₃ருஹீத த₄நுஷம் ராமம் பாஶஹஸ்தமிவாந்தகம்॥" [ரா-ஆ 39-14] [மரவுரி மான்தோலுடுத்து, வில்லெடுத்த ராமனை மரங்கள் தோறும் காண்கின்றேன்] என்று மாரீசன் சொன்னதுபோன்றவிடங்களில் ப₄யந்தவர்களிடத்திலும், "லீநேவ ப்ரதிபி₃ம்பி₃தேவ" [மாலதீமாத₄வம் 5] முதலான விடங்களில் காமுகர்களிடத்திலும் காண்கிறோம். ஆக, இவ்வாக்யங்களனைத்தும் நேரே காண்பதுபோன்ற உபாஸநமெனப்படும் த்₄யானத்தை மோக்ஷோபாயமாகக் குறிக்கின்றன என்று தேறிற்று.

(2) இனி, இவ்வுபாஸநம் கேவலத்₄யானமன்று, ப₄க்திரூபமாயிருப்பதே என நிரூபிக்கப்படுகிறது. எப்படியெனில்: "நாயமாத்மா ப்ரவசநேந லப்₄ய: ந மேத₄யா ந ப₃ஹுநா ஶ்ருதேந। யமேவைஷ வ்ருணுதே தேந லப்₄ய: தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்॥" [கட 2-23] [இப்பரமாத்மா (அன்பில்லாத) (மநநத்தாலோ அதன் கார்யமான) ப்ரவசநத்தாலோ, த்₄யானத்தாலோ, பலவித₄மான ஶ்ரவணத்தாலோ அடையத்தக்கவனல்லன்; எவனை இப்பரமாத்மா வரிக்கிறானோ அவனாலேயே இவன் அடையத்தக்கவன். அந்த ஜீவனுக்கு இப்பரமாத்மா தன் ஸ்வரூபத்தை வெளிப்படுத்துகிறான்.] என்னும் வேத₃வாக்யமானது—தியானமானது அன்பற்றதாயிருந்தால் பயனற்றது; ஸ்நேஹபூர்வத்₄யானமான ப₄க்தியாயிருந்தால் தான் பரமாத்மாவை அடைவிக்கும் என்று காட்டுகிறது. "ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதி₃த்₄யாஸிதவ்ய:" என்று விதி₄க்கப்பட்ட ஶ்ரவண மநநங்களை முன்னிட்ட தியானத்தை இங்கு அடியோடு நிஷேதி₄ப்பது முரண்படுமாகையால், அன்பற்ற ஶ்ரவணமநநத்₄யானங்களே இங்கு பரமாத்ம ப்ராப்தியில் பயனற்றவை என்று நிஷே

स्मर्यमाण[विषयस्य]ात्यर्थप्रियत्वेन स्वयमप्यत्यर्थप्रियरूपं स्मृतिसन्तान-मेवोपासनशब्दवाच्यमिति हि निश्चीयते। तदेव हि भक्तिरित्युच्यते, * स्नेहपूर्वमनुध्यानं भक्तिरित्यभिधीयते (लै. उ.) इत्यादिवचनात्।

---

தி₄க்கப்படுவதாகக் கொள்ளவேண்டும். இம்மந்திரத்தில் ''யமே வைஷ:......'' என்று தொடங்கி, பரமாத்மாவே ஜீவனை வரிக்கிறுன் என்று சொல்லியிருந்தபோதிலும், அதில் பரமாத்மாவிஞல் வரிக்கத் தகுந்த ஒரு கு₃ணவிஶேஷத்தை உடையவஞயிருப்பதிஞல்தான் இந்த ஜீவன் பரமாத்மாவிஞல் வரிக்கப்படுகிறுன் என்பதும், வரிக்கத் தக்கவஞயிருப்பதற்கு உறுப்பான கு₃ணவிஶேஷமான ப₄க்தியே இங்கு விதி₄க்கப்படுகிறது என்றும் விளங்குகிறது. மிகவும் இனியவஞ யிருப்பவனன்ரே வரிக்கத்தக்கவஞகிருன். ஆகையால், பரமாத்மா வினிடம் பேரன்பு வைப்பவனே அவஞல் வரிக்கப்படுகிருன் என்பது ஸித்₃த₄ம். ''ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்த₂ம் அஹம் ஸ ச மம ப்ரிய:'' [7-17] [ஜ்ஞானிக்கு நான் வர்ணிக்கமுடியாத அளவுக்கு ப்ரியமானவன்; (அதஞலேயே) அவனும் எனக்கு ப்ரியமானவன்.] என்று கீ₃தாசார்யனே இவ்வர்த்த₂த்தை வெளிப்படுத்துகிருன். ஆகை யால், இந்த நாயமாத்மாஶ்ருதியில், பரமாத்மா ஜீவனை வரிப்பதற்குக் காரணமாயிருப்பதாய், தியானிக்கப்படும் பரமாத்மஸ்வரூபம் உபாஸக ஞுக்கு மிகவும் இனியதாயிருக்கையாலே தானும் இனிமையே வடி வெடுத்ததாயிருப்பதாய், தொடர்ந்த நினைவாயிருக்கும் த்₄யானமே உபாஸனம் எனப்படுகிறது என்றும், அதுவே ப₄க்தி எனப்படுகிறது என்றும் விளங்குகிறது. ''ஸ்நேஹ பூர்வமநுத்₄யாநம் ப₄க்திரித்யபி₄தீ₄யதே'' [லைங்க₃ம்] [(உயர்ந்தவர் விஷயத்தில்)ஸ்நேஹத்தை முன்னிட்ட தியானமே ப₄க்தி எனப்படுகிறது] என்றல்லவோ ப₄க்திலக்ஷணம் கூறப் படுகிறது. இந்த ப₄க்தியே ''யா ப்ரீதிரவிவேகாநாம் விஷயேஷ்வநபாயிநீ। தேஷு தேஷ்வச்யுதா ப₄க்திரச்யுதாஸ்து ஸதா₃ த்வயி॥'' [வி.பு1-20-18] [அச்யுதனே! விவேகமற்றவர்களுக்கு விஷயங்களில் (காலதத்வ மெல்லாமநுப₄வித்தாலும்) தொலையாத யாதொரு ப்ரீதி ஒவ்வொரு விஷயத்திலும் உள்ளதோ, அந்த ஒவ்வொரு அழியாத ப்ரீதியும் எப்போதும் உன்னிடமே எனக்கு ஏற்படட்டும்.] என்றும், ''க்வ நாகப்ருஷ்ட₂க₃மநம் புநராவ்ருத்திலக்ஷணம்। க்வ ஜபோ வாஸுதே₃வேதி முக்திபீ₃ஜமநுத்தமம்:॥'' [வி. பு. 2-6-34] (மறுபடியும் திரும்பிவரக்கூடிய சுவர்க்கத்தை அடைவது எவ்வளவு தாழ்ந்தது? ஒப்பற்ற முக்திஸாத₄னமான வாஸுதே₃வ மந்த்ரஜபம் எவ்வளவு உயர்ந்தது?) என்றும் விஷ்ணு புராணத்தில் காட்டப்பட்டது.

अतः-* तमेवं विद्वानमृत इह भवति, नान्यः पन्था अयनाय विद्यते (पु) * नाहं वेदैर्न तपसा न दानेन न चेज्यया। शक्य एवंविधो द्रष्टुं दृष्टवानसि मां यथा॥ भक्त्या त्वनन्यया शक्य अहमेवंविधोऽर्जुन। ज्ञातुं द्रष्टुं च तत्त्वेन प्रवेष्टुं च परन्तप॥ (गी. ११. ५३, ५४)

---

"தமேவம் வித்₃வாநம்ருத இஹ ப₄வதி நாந்ய: பந்தா₂ அயநாய வித்₃யதே" [பு. ஸூ] [அவனை இப்படி அறிபவனே இங்கு மோக்ஷமடைகிறான். மோக்ஷமடைய வேறு வழியில்லை,] என்று ஶ்ருதிகளில் பரமபுருஷஜ்ஞாநமே மோக்ஷோபாயமாக முழங்கப்பட்டது.

"நாஹம் வேதை₃ர் ந தபஸா ந தா₃நேந ந சேஜ்யயா।
ஶக்ய ஏவம்விதோ₄ த்₃ரஷ்டும் த்₃ருஷ்டவாநஸி மாம் யதா₂॥
ப₄க்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம்விதோ₄Sர்ஜுந।
ஜ்ஞாதும் த்₃ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப॥"
[கீ₃தை 11-53, 54]

[நீ என்னைக் கண்டதுபோல், (என்னிடம் ப₄க்தியில்லாமல்) வேத₃ங்களை அத்₄யயநம் செய்வது முதலானவற்றாலும், தவத்தாலும், தா₃னத்தாலும், யாக₃த்தாலும் நான் காணத்தக்கவனல்லன். வீரனை அர்ஜுனனே! வேறொன்றையும் கருதாத ப₄க்தி ஒன்றினாலேயே நான் இவ்வண்ணமாக உள்ளபடி அறிவதற்கும், காண்பதற்கும், அடைவதற்கும் தகுந்தவனாகிறேன்.] என்று கீ₃தை முதலான உபப்₃ரும்ஹணங்களில் ப₄க்தியே மோக்ஷோபாயமாக உத்₃கோ₄ஷிக்கப்பட்டது. இப்படி அறிவென்றும், ப₄க்தியென்றும் கூறப்படும் மோக்ஷோபாயம் ஜ்ஞாந விஶேஷமான ப₄க்தியே என்று கொண்டால்தான் ஶ்ருதிகளுக்கும், ஸ்ம்ருதிகளுக்கும் முரண்பாடு இல்லாமலிருக்கும். ஆக, வேத₃நம், த்₄யாநம், உபாஸநம் எனப்படும் மோக்ஷோபாயம் ப₄க்தியே என்று ஸித்₃தி₄த்தது.

(3) இனி, இத்தகைய உபாஸநம் மோக்ஷோபாயமேயொழிய கர்மமும் உபாஸநமும் சேர்ந்து நேரே மோக்ஷோபாயம் என்பதும் சரியல்ல என்னும் ப்ரதிஜ்ஞையும் தன்னடையே ஸித்₃தி₄க்கும். எப்படியெனில்; "நாந்ய: பந்தா₂ அயநாய வித்₃யதே" என்னும் ஶ்ருதியில் ஜ்ஞாநம் தவிர வேறு மோக்ஷோபாயமில்லை என்று கூறியிருக்கையால் கர்மம் நேரே மோக்ஷோபாயமல்ல என்று தேறுகிறது;

इत्यनयोरेकार्थत्वं सिद्धं भवति। तत्र सप्तमे तावदुपास्यभूतपरमपुरुष-[स्वरूप]याथात्म्यं, प्रकृत्या तत्तिरोधानं, तन्निवृत्तये भगवत्प्रपत्तिः, उपासकविधाभेदो, ज्ञानिनश्श्रैष्ठ्यं चोच्यते ॥

"அவித்₃யயா ம்ருத்யும் தீர்த்வா" [ஈஶ 11] என்று கர்மத்திற்கு மோக்ஷோபாயத்வம் சிலவிடங்களில் கூறியிருப்பதும், "வித்₃யயா அம்ருதமஶ்நுதே" [ஈஶ 11] என்று நேரே மோக்ஷோபாயமாயிருக்கும் ஜ்ஞாநத்திற்குக் கர்மம் அங்க₃மாயிருப்பதிலைலேயே என்று நிர்வஹித்துவிடலாமாகையாலே கர்மமும் ஜ்ஞாநமும் சேர்ந்து மோக்ஷோபாயம் என்பதும் சரியல்ல எனத் தேறுகிறது.

(4) இனி, இவ்வுபாஸநம் பரமபுருஷவிஷயமேயொழிய உருத்திரன் இந்திரன் முதலான தே₃வதைகள் விஷயமானதல்ல என்னும் ப்ரதிஜ்ஞையும் தன்னடையே தேறிநிற்கும். எப்படியெனில்: "தமேவ விதி₃த்வா அதிம்ருத்யுமேதி" [ஶ்வே 3-8] என்னும் ஶ்வேதாஶ்வதர வாக்யமும், "தமேவம் வித்₃வாநம்ருத இஹ ப₄வதி" [பு. ஸூ] என்னும் புருஷஸூக்தவாக்யமும் ஒருவனையே உபாஸிக்கத்தக்கவனாகக் கூறுகையால், புருஷஸூக்தத்தில் லக்ஷ்மீபதியாகக் கூறப்படும் நாராயணனே ஶ்வேதாஶ்வதரம் முதலான மற்ற உபனிஷத்துக்களிலும் உபாஸிக்கத்தக்கவனாகக் கூறப்படுகிறான் என்று ஸர்வஶாக₂ாப்ரத்யயந்யாயத்தாலே ஸித்₃தி₄த்தது. "மஹாந் ப்ரபு₄ர் வை புருஷ: ஸத்வஸ்யைஷ ப்ரவர்த்தக:" [ஶ்வே 3-12] என்று அந்த ஶ்வேதாஶ்வதரத்தில் பரம்பொருளை ஸத்வப்ரவர்த்தகன் என்று கூறியிருப்பதிலிருந்தும் பரமஸத்வஸமாஶ்ரயனை விஷ்ணுவே அவ்வுபனிஷத்திலும் பரம்பொருளாகக் கூறப்படுகிறான் என உறுதியாகிறது. ஆகையால், அவ்வுபனிஷத்தில் படிக்கப்படும் ஶிவருத்₃ராதி₃ஶப்₃த₃ங்களும் பரமமங்க₃ளமானவனும், ஸம்ஸார வியாதியைப் போக்கடிப்பவனுமான பரமபுருஷனையே குறிக்கின்றன என விளங்குகிறது. இந்த நியாயத்தாலே அத₂ர்வஶிகை₂ முதலான மற்ற சில உபனிஷத்துக்களில் படிக்கப்படும் ஶிவாதி₃ஶப்₃த₃ங்களும் நாராயணபரமே என விளங்குகிறது. ப்ரதர்த்த₃நவித்₃யையில் இந்த்₃ரனுக்கு மோக்ஷோபாயத்வம் சொன்னது இந்த்₃ரனுக்கு அந்தர்யாமியான பரமபுருஷனுக்கே சேரும் என்று இந்த்₃ரப்ராணாதி₄கரணத்தில் நிர்ணயிக்கப்பட்டது. இதே ரீதியில் அத₂ர்வஶிரஸ்ஸில் ருத்₃ரனுக்குக் கூறப்படும் ஜக₃த்காரணத்வமும் ருத்₃ராந்தர்யாமியான நாராயணனுக்கே சேரும் என்று காணலாம். நமது விஷ்ணுசித்த

श्रीभगवानुवाच —
मय्यासक्तमनाः पार्थ योगं युञ्जन्मदाश्रयः।
असंशयं समग्रं मां यथा ज्ञास्यसि तच्छृणु ॥ १ ॥

ஸ்ரீப₄க₃வாநுவாச—

1. மய்யாஸக்தமநா: பார்த்த₂ யோக₃ம் யுஞ்ஜந் மத₃ாஶ்ரய: |
அஸம்ஶயம் ஸமக்₃ரம் மாம் யத₂ா ஜ்ஞாஸ்யஸி தச்ச்₂ருணு||

ஸ்ரீப₄க₃வாந் உவாச—ப₄க₃வான் கூறினான்:— பார்த்த₂— குந்தீபுத்ரனே! மயி—என்னிடத்தில் ஆஸக்தமநா:—மிகவும் ஈடுபட்ட மனத்தையுடையவனாய், மத₃ாஶ்ரய:—என்னையே ஆத₄ாரமாகக் கொண்டவனாய், யோக₃ம் யுஞ்ஜந்—(என் விஷயமான) ப₄க்தியோக₃த்தைத் தொடங்குகின்ற நீ, மாம்—(அந்த யோக₃த்திற்கு விஷயமான) என்னை, அஸம்ஶயம்—ஐயமற, ஸமக்₃ரம்—முழுவதும், யத₂ா ஜ்ஞாஸ்யஸி— எந்த அறிவினாலே உணர்வாயோ, தத்—அவ்வறிவை, ஶ்ருணு—கவனமாகக் கேள்.

---

1. என்னமரு நெஞ்சனாய் யோகத் தியல்வுற்றே
நின்னமரு மென்பற்றாய் நின்றநீ—யு(மு)ன்னினைவு(யு)
முண்மயக்கற் றென்றெழியா தென்னை யுணர்வண்ணந்
திண்மையுறக் கேள்பார்த்தா தீர்ந்து.

---

விஜயத்திலே விரிவு கண்டுகொள்வது. ஆக, இந்நாலு ப்ரதிஜ்ஞை களாலும், பரம்பொருளான நாராயணன் விஷயமான ப₄க்திரூப மான ஜ்ஞானத்தாலேயே பரமாத்மப்ராப்திரூபமான மோக்ஷத்தை அடையலாம் என்று நிர்ணயிக்கப்பட்டது. இவ்விஷயமே கீ₃தையின் மத்₄யமஷட்கமான நடு ஆறு அத்தியாயங்களில் விளக்கப்படுகிறது.

அந்த ஷட்கத்தில் முதலாவது அத்தியாயமான இவ்வேழாம் அத்தியாயத்தில் — உபாஸிக்கத்தக்கவனாக ஆறுமத்தியாயத்தின் கடைசியில் "ஶ்ரத்₃த₄ாவாந் ப₄ஜதே யோ மாம்" என்று கூறப்பட்ட பரமபுருஷனை தன்னைப்பற்றிய உண்மைநிலையும், மூலப்ரக்ருதி யினாலே இந்நிலை ஜீவனுக்கு மறைக்கப்படுவதும், அம்மறைவைப் போக்கடிக்கும் பரமபுருஷ ஶரணாக₃தியும், உபாஸகர்களில் நாலு வகை யும், அந்நால்வரில் ஞானியின் சிறப்பும் கூறப்படுகிறது.

॥भा॥ मय्याभिमुख्येन सक्तमनाः—मत्प्रियत्वातिरेकेण मत्स्व-रूपेण गुणैश्च चेष्टितेन मद्विभूत्या विश्लेषे सति तत्क्षणादेव विशीर्य-

**பார்த்தா**—குந்தியின் பிள்ளையே! **என் அமரும் நெஞ்சனாய்**—என்னிடத்திலே மிகப்பொருந்திய நெஞ்சை உடையவனாய், **நின் அமரும் என்பற்றாய்**—உன் ஸ்வரூப மும் என்னையே ஆத$_4$ாரமாகப் பெற்றவனாய், **யோகத்து இயல்வுற்றே நின்ற நீ**—(என் விஷயமான) ப$_4$க்தியோக$_3$த் தைத் தொடங்கி நிற்கும் நீ, **உன் நினைவும்**—(என்னைப் பற்றிய) உன் அறிவும், **உள் மயக்கு அற்று**—ஐயம் இல் லாமல், **ஒன்று ஒழியாது**—முழுவதுமாக, **என்னை உணர் வண்ணம்**—என்னை அறியும்படியாக, **திர்ந்து**—கவனமாக, **திண்மை உற கேள்**—நன்றாகக் கேட்பாயாக.

1. (ஸ்ரீப$_4$க$_3$வாநுவாச) சென்ற ஷட்கத்தின் கடைசி ஶ்லோகத் தில் "மாம்" என்னும் பத$_3$த்தாலே ப$_4$க்தி செய்யத்தக்கவனாகக் கூறப்பட்ட தன்னைப்பற்றிய உண்மையறிவை ப$_4$க்தி செய்வதன் பொருட்டு இனி உபதே$_3$ஶிக்கிறேன் என்று ஜ்ஞாநம் முதலான கு$_3$ணங்களால் நிறைவுபெற்ற கண்ணன் கூறுகிறான். (மயி ஆஸக்த மநா:) என்னிடம் மிகவும் ஈடுபட்ட நெஞ்சையுடையவனாய். ஸக்த பத$_3$ம் ஈடுபாட்டைக் குறிக்கிறது, 'ஆஸக்த' என்று ஆபி$_4$முக்$_2$ யத்தோடு கூடிய ஈடுபாட்டைக் குறிக்கிறது. ஆபி$_4$முக்$_2$யமாவது பரம புருஷனை மிகவும் ப்ரியனாக (இனியனாகக்) கொள்ளுகை. (ஆஸக்த மநா:) இப்படிப் பரமபுருஷனே தனக்கு மிகவும் இனியனாகையாலே அவனுடைய ஸ்வரூபரூபகு$_3$ணசேஷ்டிதவிபூ$_4$திகளைப் பிரியும்போது-அதாவது அவற்றின் அநுப$_4$வம் தனக்குக் கிடைக்காதபோது அக் கணத்திலேயே அழியத் தொடங்குகையாலே அவனிடம் மிகவும் ஈடு பட்ட நெஞ்சை உடையவன் என்றபடி. ஆழ்வார்களைப் போன்ற ப$_4$க்திபரவஶர்கள் "பிறந்தவாறும், வளர்ந்தவாறும், பெரியபாரதம் கைசெய்து ஐவர்க்குத் திறங்கள் காட்டியிட்டுச் செய்துபோன மாயங் களும், நிறந்தனூடுபுக்கு எனதாவியை நின்று நின்று உருக்கி உண் கின்ற" "வதுவை வார்த்தையுள் ஏறுபாய்ந்ததும், மாயமாவினை வாய்பிளந்ததும், மதுவைவார் குழலார் குரவை பிணைந்த குழகும், அது இது உது என்னலாவனவல்ல என்னை உன் செய்கை நைவிக்கும்" "பெய்யும் பூங்குழல் பேய்முலையுண்ட பிள்ளைத்தேற்ற

மும், பேர்ந்து ஓர் சாடிறச் செய்ய பாதமொன்ருல் செய்த நின் சிறுச்சேவகமும், நெய்யுண் வார்த்தையுள் அன்னை கோல்கொள்ள நீயுன் தாமரைக் கண்கள் நீர்மல்கப் பையவே நிலையும் வந்தென் நெஞ்சை உருக்குங்களே'' ''உண்ண வானவர்கோனுக்கு ஆயர் ஒருப்படுத்த அடிசில் உண்டதும் வண்ணமால் வரையை எடுத்து மழை காத்ததும், மண்ணை முன் படைத்து உண்டுமிழ்ந்து கடந்து இடந்து மணந்த மாயங்கள் எண்ணும் தோறும் என் நெஞ்சு எரிவாய் மெழுகு ஒக்கும் நின்றே'' ''நின்றவாறும் இருந்தவாறும் கிடந்த வாறும் நினைப்பரியன ஒன்றலாவுருவாய் அருவாயநின் மாயங்கள் நின்று நின்று நினைக்கிறேன் உன்னை எங்ஙனம் நினைகிற்பன்'' ''ஒண்சுடரோடிருளுமாய் நின்றவாறும் உண்மையோடின்மையாய் வந்து, என் கண்கொளாவகை நீ கரந்தென்னைச் செய்கின்றன எண் கொள் சிந்தையுள் நைகின்றேன் என் கரியமாணிக்கமே!'' ''திருவுருவு கிடந்தவாறும் கொப்பூழ்ச்செந்தாமரைமேல், திசைமுகன் கருவுள் வீற்றிருந்து படைத்திட்ட கருமங்களும், பொருவில் உன் தனிநாயக மவை கேட்குந்தோறும் என் நெஞ்சம் நின்று நெக்கு அருவி சோரும் கண்ணீர்'' ''அடியை மூன்றை இரந்தவாறும் அங்கே நின்று ஆழ் கடலும் மண்ணும் விண்ணும் முடிய ஈரடியால் முடித்துக் கொண்ட முக்கியமும், நொடியுமாறவை கேட்குந்தோறும் என் நெஞ்சம் நின்ற னக்கே கரைந்துகும்'' ''கூடி நீரைக்கடைந்தவாறும் அமுதம் தேவர் உண்ண அசுரரை வீடும் வண்ணங்களே செய்துபோன வித்தகமும் ஊடுபுக்கு எனதாவியை உருக்கி உண்டிடுகின்ற'' [திருவாய்மொழி 5-10] ''பாலாழி நீ கிடக்கும் பண்பை யாம் கேட்டேயும் காலாழும் நெஞ்சழியும் கண் சுழலும்'' [பெரிய திருவ-34] ''இனிதிரைத் திவலை மோத எறியும் தண் பரவைமீதே தனிகிடந்தரசுசெய்யும் தாமரைக் கண்ணனெம்மான் கனியிருந்தனைய செவ்வாய்க் கண்ணனைக் கண்ட கண்கள் பனியரும்புதிருமாலோ என் செய்கேன் பாவியேனே'' [திருமாலை-18] ''கடல் நிறக் கடவுள் எந்தை அரவணைத் துயிலுமா கண்டு உடல் எனக்கு உருகுமாலோ என் செய்கேன் உலகத்தீரே!'' [திருமாலை-19] ''அணியினர் செம்பொனாய அருவரையனைய கோயில் மணியனார் கிடந்தவாற்றை மனத்தினால் நினைக்கலாமே'' [திருமாலை-21] ''காலுமெழா கண்ணநீரும் நில்லா உடல் சோர்ந்து நடுங்கிக் குரல் மேலுமெழா மயிர்க்கூச்சுமறு என தோள்களும் வீழ்வொழியா'' [பெரியாழ்திரு 5-3-5] என்று பரமபுருஷனுடைய

मया विना विशीर्यमाण[स्वरूप]तया मदाश्रयो—मदेकाधारः, मद्योगं युञ्जन्—योक्तुं प्रवृत्तो योगविषयभूतं मामसंशयं—निस्संशयम्,

---

ஸ்வரூப ரூப கு₃ண விபூ₄தி சேஷ்டிதங்களை நினைத்தவுடனேயே நெஞ்சும், ஆவியும், உடலும் உருகப்பெறுவர்கள். அவற்றில் பிரிவு (அநுப₄வமின்மை) ஏற்பட்டாலோவெனில் மயக்கத்தை அடைந்து தாய்ப் பேச்சாலே பேசவேண்டியிருக்கும் நிலையை அடைவர்கள். அந் நிலையில் ''ஆடி யாடி அகங் கரைந்து இசை பாடிப் பாடிக் கண்ணீர் மல்கி, எங்கும் நாடி நாடி நரசிங்கா என்று வாடி வாடும் இவ் வாணுதலே'' ''வாணுதல் இம்மடவரல் உம்மைக்காணும் ஆசையுள் நைகின்ருள்'' ''இரக்க மனத்தோடு எரியணை அரக்கும் மெழுகும் ஒக்குமிவள்'' [திருவாய்-2-4] ''கங்குலும் பகலும் கண்துயில் அறியாள் கண்ண நீர் கைகளாலிரைக்கும்'' ''வெவ்வுயிர்த்துயிர்த் துருகும்'' ''வானமே நோக்கும் மையாக்கும்'' ''உள்ளுருகும்'' ''இட்டகால் இட்டகைகளாயிருக்கும், எழுந்துலாய் மயங்கும் கைகூப்பும், '''கட்டமே காதல்' என்று மூர்ச்சிக்கும்'' ''சிந்திக் கும் திசைக்கும் தேறும் கைகூப்பும்'' ''அழும் தொழும் ஆவி அனல வெவ்வுயிர்க்கும்'' [திருவாய்-7-2] ''ஓதிலும் நின்பேரன்றி மற்ருேதாள் உருகும் நின் திருவுரு நினைந்து காதன்மை பெரிது கையறவுடையள் கயல்நெடுங்கண்துயில் மறந்தாள்'' [பெரிய திரு 2-7-5] என்கிறபடியே இவர்களது த₃ஶை வாசாம் அகோ₃சரமா யிருக்கும். உபாஸகர்களுக்கோவெனில், ஸம்ஶ்லேஷத₃ஶையில் த₄ரித்து நின்று நினைத்தால்தான் உபாஸநமாகிற ஸாத₄நம் கைகூடு மாகையால், ஸம்ஶ்லேஷத₃ஶையில் இவர்களது கரணங்கள் அழிய மாட்டா. விஶ்லேஷத₃ஶையிலேயே கரணங்கள் ஶிதி₂லமாகும். இதைத் திருவுள்ளத்திற்கொண்டே '' விஶ்லேஷே ஸதி '' என்று இங்கு அருளினர் ப₄ாஷ்யகாரர். (மதா₃ஶ்ரய:) தன் நெஞ்சு மாத்திர மல்லாமல், தானும் என்னைப் பிரிந்தால் த₄ரிக்கமாட்டாமையாலே என்னையே ஆத₄ாரமாகக் கொண்டவனுய். ''அப்₃ப₄க்ஷ:'' (காற்றையே ஆஹாரமாகக் கொண்டவன்) என்றவிடத்திற்போலே 'மதா₃ஶ்ரய:' என்றவிடத்திலும் ஸமாஸத்தின் நடுவில் ஏவகாரத்தைக்கொண்டு 'என்னையே ஆத₄ாரமாகக் கொண்டவன்' எனப் பொருள்கொள்ள வேணும்; என் அநுப₄வத்தையே த₄ாரகமாகக் கொண்டவன் என்றபடி. (மய்யாஸக்தமநா: மதா₃ஶ்ரய:) ''முந்துற்ற நெஞ்சே'' [பெரிய திருவ 1] ''**என்னை நெகிழ்க்கிலும் என்னுடை நன்னெஞ்சம்தன்னை அகல்விக்கத் தானும் கில்லான் இனி**'' [திருவாய் 1-7-8] என்கிற

समग्रम्—सकलम्, यथा ज्ञास्यसि—येन ज्ञानेनोक्तेन ज्ञास्यसि; तज्ज्ञानमवहितमनाः त्वं शृणु ॥

படியே ப₄க்தனைக்காட்டிலும், அவனுடைய நெஞ்சு ப₄க₃வத்₃ விஷயத்தில் முன்நிற்கையாலே முதலில் நெஞ்சைச் சொல்லிப் பிறகு அவனைச் சொல்லுகிறான். வெண்பாவில் தனிச்சீர் "முன் நினையும்" என்று பாட₂மானபோது "என் அமரும் நெஞ்சனாய்" என்றவிடத்தில் நெஞ்சுக்கு விஶேஷணமாகி, இப்பொருளைக் காட்டுகிறது. (யோக₃ம் யுஞ்ஜந்) என் விஷயமான ப₄க்தியோக₃த்தைத் தொடங்குகின்றவனாக நீ. 'யுஞ்ஜந்' என்னும் பத₃த்தில் 'ஶத்ரு' ப்ரத்யயத்தினால் காட்டப்படும் நிகழ்காலம் இங்கு யோக₃ம் தொடங்கப்பெற்று முடிவுறாமலிருக்கையைக் காட்டுகிறது. யோக₃த்தைத் தொடங்குவதற்கு உறுப்பான ப₄க₃வத்₃விஷய ஜ்ஞானத்தை இந்த ஶ்லோகம் முதலாக உபதே₃ஶிக்கத் தொடங்குகிறானாகையால் இது யோகா₃நுஷ்ட₂ானத்தைக் குறிக்காது. (மாம் அஸம்ஶயம் ஸமக்₃ரம் யதா₂ ஜ்ஞாஸ்யஸி) எந்த அறிவைக் கூறினால் யோக₃த்திற்கு விஷயமான என்னை ஐயமறவும், பரிபூர்ணமாகவும் நீ அறிவாயோ. (மாம் யதா₂ ஜ்ஞாஸ்யஸி) யோக₃த்திற்கு விஷயமான என்னை முதலில் அறிந்தால் தான் ப₄க்தியோக₃த்தைத் தொடங்கலாம் என்று கருத்து. (அஸம்ஶயம் யதா₂ ஜ்ஞாஸ்யஸி) அதுவும் ஐயமற அறிந்தால்தான் தொடங்க முடியும் என்று கருத்து (ஸமக்₃ரம் யதா₂ ஜ்ஞாஸ்யஸி) அதிலும் பரிபூர்ணமாக அறிந்தால்தான் ஐயமற அறியமுடியும் என்று கருத்து. (யதா₂ ஜ்ஞாஸ்யஸி) மேலே "தத் ஶ்ருணு" [அதைக்கேள்] என்றிருக்கையாலும். மேல் ஶ்லோகத்தில் "ஜ்ஞாநம் தேऽஹம் வக்ஷ்யாமி" [உனக்கு நான் அறிவைச் சொல்லுகிறேன்] என்றிருக்கிறபடியாலும், தான் சொல்லப்போவதும், இவன் கேட்க வேண்டியதுமான ஜ்ஞாநமே "யதா₂" என்னும் ஶப்₃த₃த்தால் கூறப்படுகிறது என விளங்குகிறது. (தத் ஶ்ருணு) அதை கவனமாகக் கேட்பாயாக. அர்ஜுனன் கேளாமலிருக்கச் செய்தே உபதே₃ஶிக்கத் தொடங்குகையாலும், 'தத் ஶ்ருணு' என்று கேட்கச் சொல்லி விதி₄க்கையாலும், தான் சொல்லப்போகும் ஜ்ஞானம் அபூர்வமானதாகையாலே இவன் அவஶ்யம் அறிய வேண்டியதொன்று என்று காட்டுகிறான். அன்றிக்கே, யுத்₃த₄களத்தில் பராக்காயிராமல், நான் சொல்லுவதை கவனமாகக் கேள் என்கிறானாகவுமாம். "கேளீரோ" [திருப்பாவை 2] "கேளாய்" [திருப்பாவை 29] என்றவிடங்களிற்போலே. (பார்த்த₂) நீ என் அத்தை

ज्ञानं तेऽहं सविज्ञानं इदं वक्ष्याम्यशेषतः।
यज्ज्ञात्वा नेह भूयोऽन्यत् ज्ञातव्यमवशिष्यते ॥ २ ॥

2. ஜ்ஞாநம் தேऽஹம் ஸவிஜ்ஞாநம் இத₃ம்
வக்ஷ்யாம்யஶேஷத: ।
யத் ஜ்ஞாத்வா நேஹ பூ₄யோऽந்யத்
ஜ்ஞாதவ்யமவஶிஷ்யதே ॥

**அஹம்**—நான், **தே**—உனக்கு, **இத₃ம் ஜ்ஞாநம்**—(என் விஷயமான) இந்த ஜ்ஞாநத்தை, **ஸவிஜ்ஞாநம்**—விஶேஷ ஜ்ஞாநத்தோடு கூட, **அஶேஷத:**—முழுவதும், **வக்ஷ்யாமி**—கூறுகிறேன்; **யத்**—எந்த இவ்வறிவை, **ஜ்ஞாத்வா**—அறிந்தபின், **இஹ**—என் விஷயத்தில், **பூ₄ய:**—மறுபடியும், **ஜ்ஞாதவ்யம்**—அறியவேண்டியது, **அந்யத்**—வேறொன்றும், **ந அவஶிஷ்யதே**—மிகுதியில்லையோ (அந்த ஜ்ஞாந விஜ்ஞாநங்களைக்கூறுகிறேன் என்றபடி.)

---

2. **மிக்க வறிவிறைவி வேகத் துணர்வுடனே**
**யொக்க வுனக்கொன் றொழியாமற்—சிக்கெனவே**
**யான்பகர்வன் யாதறிந்தால் வேறொன் றினியறியத்**
**தான்படுவ திங்கில்லை சார்ந்து.**

**யாது**—எந்த அறிவையும், விவேகத்தறிவையும், **அறிந்தால்**—உணர்ந்தால், **இங்கு**—என் விஷயத்தில், **இனி**—மறுபடியும், **சார்ந்து அறியத்தான் படுவது வேறொன்று**—பொருந்தி அறியவேண்டிய வேறொரு விஷயம், **இல்லை**—இல்லையோ (அத்தகையதான), **மிக்க இறை அறிவு**—சிறந்த ஸர்வேஶ்வர ஜ்ஞானத்தை, **(இறை) விவேகத்துணர்வுடனே ஒக்க**-(ஸர்வேஶ்வரனை என்னை) விவேகித்தறியும் ஜ்ஞாநத்துடன் சேர்ந்து, **ஒன்று ஒழியாமல்**—முழுவதும், **உனக்கு**—உனக்கு, **யான் பகர்வன்**—நான் கூறப்போகிறேன்.

---

**பிள்ளையாகையாலே நீ கேளாமலிருக்கச்செய்தேயும் உனக்கு நான் இதை உபதே₃ஶிக்கிறேன் என்று கருத்து.** 1.

॥ भा ॥ अहं ते, मद्विषयमिदं ज्ञानं विज्ञानेन सहाशेषतो वक्ष्यामि; विज्ञानम्—विविक्ताकारविषयं ज्ञानम्। यथाऽहं मद्व्यतिरिक्तात्समस्तचिदचिद्वस्तुजातान्निखिलहेयप्रत्यनीकतया नानाविधानवधिकातिशया-संख्येयकल्याणगुणगणानन्तमहाविभूतितया च विविक्तः, तेन विविक्त-

---

2 "தத் ஶ்ருணு" [என்னைப்பற்றிய அறிவைக் கேட்பாயாக] என்று சென்ற ஶ்லோகத்தில் கேட்கச்சொல்லி விதி₄த்த விஷயத்தில் இவன் அதி₄கமாக கவனம் செலுத்தவேண்டும் என்பதற்காக, 'ஸர்வஜ்ஞனாய், ஸர்வஶக்தியான நானே இதைக் கூறுகிறேன்' என்று பீடி₂கையிட்டுக் கொண்டு "அஸம்ஶயம் ஸமக்₃ரம்" என்று கூறப்பட்ட அர்த்த₂ங்களை முறையே முன்பின்பாதிகளாலே சிறிது விளக்குகின்றன் இரண்டாம் ஶ்லோகத்தாலே. (அஹம் தே வக்ஷ்யாமி) ஸர்வஜ்ஞனாய், ஸர்வஶக்தியான நான் இதைக் கேட்பதில் குதூஹலமுடைய உனக்குக் கூறுகிறேன். (இத₃ம் ஜ்ஞாநம் ஸவிஜ்ஞாநம் வக்ஷ்யாமி) ப்ரக்ருதமான இந்த ஜ்ஞாநத்தை, விஜ்ஞானத்தோடுகூடக் கூறுகிறேன். சென்ற ஶ்லோகத்தில் தன் விஷயமான அறிவையே கேட்கச்சொல்லுகையாலே, இங்கும் அதுவே ஜ்ஞாநவிஜ்ஞாந ஶப்₃த₃ங்களால் கூறப்படுவதாகக்கொள்ளவேண்டும். அதில் பரமாத்மாவை ஸ்வரூப நிரூபக கு₃ணங்களையிட்டு அறிவது ஜ்ஞாநஶப்₃த₃த்தாலும், நிரூபிதஸ்வரூப விஶேஷணங்களையிட்டு அறிவது விஜ்ஞான ஶப்₃த₃த்தாலும் கூறப்படுவதாகக் கொண்டால் புநருக்தியில்லை. பரமாத்மாவின் ஸ்வரூபத்தை நிரூபித்துத்தரும் ஸத்யத்வம், ஜ்ஞாநத்வம், அநந்தத்வம், ஆநந்த₃த்வம், அமலத்வம், ஶ்ரிய:பதித்வம் ஆகியவை ஸ்வரூபநிரூபககு₃ணங்கள் எனப்படுகின்றன. பரமாத்மாவின் மற்ற பெருமைகள் நிரூபித ஸ்வரூப விஶேஷணங்கள் எனப்படுகின்றன. விஜ்ஞாநமாவது: - பரமாத்மாவை விவிக்தமாக - மற்ற பொருள்களைக் காட்டிலும் வேறுபட்டதாக அறிவது. அதாவது:—பரமாத்மாவானவன் தன்னைக்காட்டிலும் வேறுபட்ட எல்லாச் சேதநாசேதநப் பொருள்களைக் காட்டிலும்-தாழ்வுகளுக்கும் எதிர்த்தட்டாயிருப்பதன்மூலமும், பலவிதமாய், எல்லையற்ற மேன்மையை உடையவையாய், கணக்கற்றவையான கல்யாணகு₃ணங்களை உடைத்தாயிருப்பதன் மூலமும், எல்லையற்ற உப₄யவிபூ₄திகளுக்கும் தலைவனாயிருப்பதன்மூலமும் — சிறப்புற்றவனாயிருப்பவன் என்று தெரிவிக்கும் அறிவே விஜ்ஞாநம் என்றபடி. ஆக. ஜ்ஞாநவிஜ்ஞாந ஶப்₃த₃ங்களுக்கு முன்பின் ப்ரகரணங்களையொட்டிப்

विषयज्ञानेन सह मत्स्वरूपविषयज्ञानं वक्ष्यामि। किं बहुना? यत् ज्ञानं ज्ञात्वा मयि पुनरन्यत् ज्ञातव्यं नावशिष्यते ॥ २ ॥

॥ भा ॥ वक्ष्यमाणस्य ज्ञानस्य दुष्प्रापतामाह—

मनुष्याणां सहस्रेषु कश्चिद्यतति सिद्धये।
यततामपि सिद्धानां कश्चिन्मां वेत्ति तत्त्वतः ॥ ३ ॥

3. மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஶ்சித் யததி ஸித்$_3$த$_4$யே ।
யததாமபி ஸித்$_3$த$_4$ாநாம் கஶ்சிந்மாம் வேத்தி தத்த்வத: ||

---

பரமாத்ம விஷயஜ்ஞாநமே பொருளாகத் தேறுகையால், விஜ்ஞாந ஶப்$_3$த$_3$த்திற்கு த்$_4$யாநபரமாகச் சிலர் பொருளுரைத்தது பொருந்தாது என்று விளங்குகிறது. ''ஜ்ஞாநம் து விஜ்ஞாநகு$_3$ணஸம்பந்நம் கர்மாஶுப$_4$ம் பஶ்யதி வர்ஜநீயம்'' [ப$_4$ார-மோக்ஷ 199-17] [விஜ்ஞாந கு$_3$ணத்தோடுகூடிய ஜ்ஞாநத்தையும், விலக்கத்தக்கதாய், அமங்க$_3$ளமான கர்மத்தையும் காண்கிருன்.] என்றவிடத்திலும் ஜ்ஞாநவிஜ்ஞாந ஶப்$_3$த$_3$ங்கள் பரமாத்மாவின் இவ்விருவித$_4$மான பெருமைகளையிட்டு அவனை அறிவதையே கூறுகின்றன. ''மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு'' [மூன் திருவ 14] என்கிறபடியே இத்தகைய பெருமை பெற்ற பரமாத்மாவிடம் ஈடுபடுபவன் மற்ற அமங்களங்களைக்கைவிடுகிருன் என்று கருத்து. (வக்ஷ்யாமி) கூறுகிறேன். ஜ்ஞாநத்தையும், விஜ்ஞாநத்தையும் கூறுகிறேன் என்றது (லக்ஷணையாலே) அவற்றை அறிவிக்கும் வாக்யத்தைக் கூறுகிறேன் என்றபடி. இவற்றைத் தெரிவிக்கும் வாக்யம் சொல்லவும் கேட்கவும் தக்கது என்று உணர்த்துகிறதாகவுமாம். (யத் ஜ்ஞாத்வா) எந்த ஜ்ஞாநவிஜ்ஞாநங்களை அறிந்து. சமையல் செய்வதை ''சமையலைச் சமைக்கிருன்'' என்பதுபோலே அறிவைப் பெறுவது இங்கு அறிவை அறிவதாகக் கூறப்படுகிறது (அஶேஷத: வக்ஷ்யாமி) இந்த ஜ்ஞாந விஜ்ஞாநங்களை மீதமில்லாமல், அதாவது முழுவதும் கூறுகிறேன். இனி, உத்தரார்த்த$_4$த்தாலே ''அஶேஷத:'' என்றதை விவரித்துக் கொண்டு, முற்கூறிய ஜ்ஞாநவிஜ்ஞாநங்களைப் புகழ்கிருன்- (யத் ஜ்ஞாத்வா இஹ பூ$_4$ய: அந்யத் ஜ்ஞாதவ்யம் ந அவஶிஷ்யதே) சுருங்கக் கூறிஞல், இந்த ஜ்ஞாநவிஜ்ஞாநங்களை அறிந்தபின் என் ஸ்வரூப ஸ்வபா$_4$வங்கள் விஷயத்தில் மறுபடியும் அறியத்தக்கதாக யாதொன்றும் எஞ்சிநிற்காது என்கை. அவசியம் அறியவேண்டிய எல்லா ஆகாரங்களோடும் கூடிய என் ஸ்வரூபத்தைக் கூறுகிறேன் என்று கருத்து. 2.

**மநுஷ்யாணும்**—ஶாஸ்த்ராதி₄காரிகளுக்குள்ளே, **ஸஹஸ்ரேஷு** — ஆயிரக்கணக்கானவர்களில், **கஶ்சித்** — ஒருவனே, **ஸித்₃த₄யே யததி**—ஸித்₃தி₄யடையும் வரையில் முயல்கின்ருன். **யததாம் ஸித்₃த₄ாநாம் அபி**—ஸித்₃தி₄யடையும் வரையில் முயல்கின்றவர்களுக்குள், (**ஸஹஸ்ரேஷு**) **கஶ்சித்**—(ஆயிரக்கணக்கானவர்களில்) ஒருவனே, **மாம்**—என்னை, **தத்வத:**—உள்ளபடி, **வேத்தி**—அறிகிருன்.

---

3. **மானிடவர் பல்லா யிரத்தொருவன் மன்னுலகந்**
**தானியல்வா னுங்கவர்க டங்களினு—மேனிகழ்ந்தே**
**யென்னை முழுதறிவா னெங்கேனு மாங்கொருவன்**
**றன்னையறி வானரிது தான்.**

**மானிடவர்** — ஶாஸ்த்ராதி₄காரிகளுக்குள்ளே, **பல்லாயிரத்து ஒருவன்** — ஆயிரக்கணக்கானவர்களில் ஒருவனே, **மன்னு உலகம் தான் இயல்வான்**—நிலையான மோக்ஷலோகத்திற்குச் செல்ல முயல்வான்; **ஆங்கு அவர்கள் தங்களிலும்**—அப்படி முயல்கின்றவர்களிலும், **மேல் நிகழ்ந்தே**—அதற்கும் மேலே சென்று, **என்னை முழுது அறிவான்**—என்னையே ப்ராப்யமாகவும் அறிபவன், **எங்கேனும் ஆங்கு ஒருவன்**—ஆயிரக்கணக்கானவரில் ஒருவனே; (அவர்களிலும்) **தன்னை**—(உபாயமாகவுமிருக்கும்) என இயல்வை, **அறிவான்**-அறிகிறவன், **அரிது தான்**—இல்லவேயில்லை.

---

3. இந்தப் பரமாத்மவிஷய ஜ்ஞாநம் மிகவும் பெறற்கரியது என்று காட்டுவதன்மூலம் இதைப் புகழ்கிருன் மூன்ரும் ஶ்லோகத்தில். (மநுஷ்யாணும்) தமக்கு நன்மையை விரும்பி ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கும் ஸாத₄நங்களை அநுஷ்டி₂க்கத் தகுதி பெற்றிருப்பவர்களுக்குள்ளே. தே₃வதாதி₄கரணம் முதலானவற்றில் தே₃வதைகள் முதலானுர்க்கும் மோக்ஷஸித்₃தி₄யின்பொருட்டு முயல அதி₄காரமுண்டு என்று நிர்ணயித்திருக்கையால், இங்கு மநுஷ்யஶப்₃த₃ம் ஶாஸ்த்ரவிஹிதமான மோக்ஷஸாத₄நங்களில் அதி₄காரமுடைய அனைவரையும் காட்டுகிறது. (ஸஹஸ்ரேஷு கஶ்சித்) ஆயிரக்கணக்கானவர்களில் ஒருவனே. ஶாஸ்த்ராதி₄காரிகளில் பெரும்பாலோர் தமக்கு நன்மையை விரும்பினுலும், ப்ராக்ருத ஸுக₂ங்களையே தமக்கு நன்மை

॥ भा ॥ मनुष्याः—शास्त्राधिकारयोग्याः, तेषां सहस्रेषु कश्चिदेव सिद्धिपर्यन्तं यतते। सिद्धिपर्यन्तं यतमानानां सहस्रेषु कश्चिदेव मां विदित्वा मत्तस्सिद्धये यतते। मद्विदां सहस्रेषु कश्चिदेव तत्त्वतः—

---

யென்று மயங்கி, அவற்றின் பொருட்டு ஶாஸ்த்ரங்களில் விதி4க்கப் பட்டிருக்கும் ஜ்யோதிஷ்டோமாதி3 ஸாத4நங்களையே அநுஷ்டி2க்கின்றனர். பல்லாயிரத்தில் ஒருவனே மோக்ஷாநந்த3த்தை விரும்பி, மோக்ஷ ஸாத4நத்தை அநுஷ்டி2க்கிறான் என்று கருத்து. (கஶ்சித் ஸித்3த4யே யததி) அப்படி மோக்ஷ ஸாத4னத்தை அநுஷ்டி2ப்பவர்களிலும் எவனோவொருவனே மோக்ஷ ஸித்3தி4யடையும் வரையில் முயல்கின்றான். இடையில் விஷயாந்தரங்களால் இழுக்கப்பட்டுத் தடுமாறுகிறவர்கள் பலர் என்று கருத்து. (யததாம் ஸித்3தா4நாமபி) மோக்ஷ ஸித்3தி4யடையும் வரையில் முயலுமவர்களுக்குள்ளும். (கஶ்சித் மாம் வேத்தி) எவனோவொருவன் தான் என்னையே ப்ராப்யனாகவும் அறிந்து, என்னை அடையும் பொருட்டு என்னை ஸித்3தோ4பாயமாகக் கொண்டு, ஶாஸ்த்ரங்களில் விதி4க்கப்படும் ப4க்தியோக3மாகிற ஸாத்4யோபாயத்தை அநுஷ்டி2க்கிறான். பலர் தம் ஆத்மாவையே ப்ராப்யமாக எண்ணி, அதன்பொருட்டு என்னை ஸித்3தோ4பாயமாகக்கொண்டு ஶாஸ்த்ரங்களில் விதி4க்கப்படும் கர்மஜ்ஞாநயோக3ங்களை ஸாத்4யோபாயமாக அநுஷ்டி2த்துக் கைவல்ய மோக்ஷத்தைப் பெற்றுப் போகின்றனர் என்று கருத்து. (கஶ்சிந்மாம் வேத்தி தத்த்வத:) இப்படி என்னையடைவதை விரும்புகிறவர்களிலும் எவனோவொருவன்தான் என்னை உள்ளபடி அறிகிறான். என்னையே உபாயமாகவும் அறிகிறான் என்கை. அதாவது—நானே தாயாய்த் தந்தையாய், மற்றுமாய், முற்றுமாய் நின்று சேதனனை அடையப் பாடுபடுபவனாகையாலே, தன்னுடைய ஆநந்த3த்திற்காகத் தான் பாடுபடுவதினின்றும் கைவாங்கி,—மோக்ஷத்திலும் என்னுடைய ஆநந்த3த்தையே விரும்புகின்றவனாய், சாதகம் போலே எனது அருளையே பார்த்திருக்குமவன் மிகவும் கிடைத்தற்கரியவன். அப்படிப்பட்டவன் இன்று வரையிலும் ஒருவன்கூட எனக்குக் கிடைக்கவில்லை என்று கருத்து. "ஸ மஹாத்மா ஸுது3ர்லப4:" [7-19] [வாஸுதே3வனையே ப்ராப்யம், ப்ராபகம் முதலிய எல்லாமாக நினைத்திருக்கும் மஹாத்மா மிகவும் கிடைத்தற்கரியவன்] "மாம் து வேத3 ந கஶ்சந" [7-26] [என்னை உள்ளபடி அறிபவன் ஒருவனுமில்லை] என்று அவனே இவ்வத்தியாயத்தில் மேலே வாய் வெருவப்போகின்றானன்றோ. "யாருமோர் நிலைமையன் என அறி

यथावस्थितं मां वेत्ति। न कश्चिदित्यभिप्रायः। "स महात्मा सुदुर्लभः"(१९) "मां तु वेद न कश्चन" (२६) इति हि वक्ष्यते॥३॥

---

வறிய எம்பெருமான். யாருமோர் நிலைமையன் என அறிவெளிய எம்பெருமான் '' [திருவாய் 1-3-4] என்று ஆழ்வாரும்—தம் முயற்சி யாலே அவனைக் காண நினைப்பார்க்கு அவனை உள்ளபடி அறிய முடியாது என்றும் நிர்ஹேதுக க்ருபையாலே அவன் தன்னைக் காட்ட, அவனைக் காண நினைப்பவர்களுக்கே அவனை உள்ளபடி அறியமுடி யும் என்றும் அருளிச்செய்தாரன்றோ; ஆளவந்தாரும் இதை அடி யொற்றி ''நமோ நமோ வாங்மநஸாதி பூ₄மயே—நமோ நமோऽநந்த மஹாவிபூ₄தயே'' என்று எல்லையற்ற மஹாவிபூ₄தியை உடையவ னுகையாலே, தம் முயற்சியால் காண நினைப்பார்க்குக் காண்பரியன் என்றும், ''நமோ நமோ வாங்மநஸைகபூ₄மயே—நமோ நமோऽநந்த த₃யைகஸிந்த₄வே'' என்று அவனுடைய க்ருபையாலே அவனைக் காண நினைப்பார்க்குக் காண எளியவனென்றும் அருளிச்செய்தா ரன்றோ. ஆழ்வாருடைய இவ்வருளிச்செயலையும், ஆளவந்தாருடைய இந்த ஸ்ரீஸூக்தியையும் அடியொற்றியே ப₄ாஷ்யகாரர் இந்த ஶ்லோகத்தின் ப₄ாஷ்யத்தில் '' ந கஶ்சித்₃த்யபி₄ப்ராய: '' [ஒரு வனுமேயில்லை என்று கருத்து.] என்று அருளிச்செய்து, அதற்கு கீ₃தாசார்யனின் வாக்குகளை ப்ரமாணமாகவும் காட்டினர்.

இனி, ஸாத₄நாநுஷ்ட₂ாநம் செய்து மோக்ஷமடைவார்க்கும், அவனைக்கொண்டு அவனை அடைவார்க்கும் - அவனை அறிவதிலும், பெறும் ப₂லனிலும் வாசியில்லை என்னும் தே₃ஶிக ஸம்ப்ரதா₃ய ரீதி யில் பொருள் கொள்ளும்போது—ஸித்₃தி₄ஶப்₃த₃ம் ப்ரயோஜநாந்தரங் களான ஐஶ்வர்ய கைவல்யங்களைக் குறிக்கிறது. ''ஸித்₃த₄யே யததி'' என்று அவற்றின் பொருட்டு ஸாத₄நாந்தரங்களைப் பற்றுமவர்களைக் குறிக்கிறது. ''மாம் வேத்தி'' என்று அவற்றின் பொருட்டு எம் பெருமானை உபாயமாகப் பற்றுமவர்களைக் குறிக்கிறது '' தத்வத: வேத்தி '' என்று அவனையே ப்ராப்யமாக அறிந்து அடைய, அவனை ஸித்₃தே₄ாபாயமாகவும், ப₄க்திப்ரபத்திகளில் ஒன்றை ஸாத்₄யோபாய மாகவும் பற்றுமவர்களைக் குறிக்கிறது. '' யாருமோர் நிலைமையன் என அறிவரிய எம்பெருமான் '' என்று ஆழ்வாரும், '' வாங் மந ஸாதி பூ₄மயே '' என்று ஆளவந்தாரும், ''ந கஶ்சித்₃த்யபி₄ப்ராய:'' என்று எம்பெருமானரும் அருளியது மிகவும் கிடைத்தற்கரியவன் என்னும் கருத்தாலே என்கை. '' ஒருவனே அறிகிருன்-என்னுமிடத் தில்—ஒருவனே அறிகிருன், இருவர் அறிவதில்லை என்று பொருள்

भूमिरापोऽनलो वायुः खं मनो बुद्धिरेव च।
अहङ्कार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा॥४॥

4. பூ₄மி ராபோऽநலோ வாயு: க₂ம் மநோ பு₃த்₃தி₄ரேவ ச।
அஹங்கார இதியம் மே பி₄ந்நா ப்ரக்ருதிரஷ்டதா₄॥

பூ₄மி:—நிலம், ஆப:—நீர், அநல:—தீ, வாயு:—காற்று, க₂ம்—ஆகாயம் (எனும் ஐம்பூ₄தங்களும்), மந:—மனம் (முதலிய இந்திரியங்களும்), பு₃த்₃தி₄:—மஹான், அஹங்கார: ச-அஹங்காரமும், இதி—ஆகிய, அஷ்டதா₄ பி₄ந்நா—எட்டு விதமாகப் பிரிந்திருக்கும், இயம் ப்ரக்ருதி:-இந்த ப்ரக்ருதி, மே ஏவ-என்னுடையதேயாகும் (என்று) (வித்₃தி₄-அறிவாய்).

---

4. மண்ணும் புனலும் வளரெரியும் வாயுவுடன்
விண்ணு மனஞ்சேர் வியன்புலனுந்—திண்ணமரு
மானுமாங் காரமுமாய் வந்தவகை யெட்டுடைய
தானவசித் தென்னதுரு வாம்.

மண்ணும்—நிலனும், புனலும்—நீரும், வளர் எரியும்—விரகிட வளராநிற்கையால் அனலம் எனப்படும் தீயும், வாயுவுடன்—வாயுவோடு கூடிய, விண்ணும்—ஆகாயமும், மனம் சேர் வியன் புலனும்—மனத்தோடு கூடிய (பதினொரு) வியக்கத்தக்க இந்திரியங்களும், ஆங்காரமுமாய்—அஹங்காரமுமாக, வந்த வகை எட்டு உடையதான—இப்படி எட்டு வகையை உடையதாயிருக்கும், அசித்து-அசேதநப்பொருள், என்னது உருவாம்—என்னுடைய உடலாகும்.

---

கொள்ளமுடியாது; வ்யாஸர், பீ₄ஷ்மர் முதலான பலர் எம்பெருமானை உள்ளபடி அறிபவர்களாகக் காண்கையாலே. ஒருவன் அறியவே செய்கிறான் என்று(அயோக₃வ்யவச்சே₂த₃பரமாகப்)பொருள்கொள்வது-அறிபவர்களின் அருமையைக் காட்டும் இப்ரகரணத்தில் பொருளற்றதாகிறது; "ஸ மஹாத்மா ஸுது₃ர்லப₄:" முதலான—அதி₄காரிகளின் அருமையைக்காட்டும்—வசனங்களோடும் முரண்படுகிறது. ஆகையால், அர்த்த₂ஸ்தி₂தியிலிருந்தும், மேல் வரும் வாக்கியங்களிலிருந்தும் தேறும் அதி₄காரியின் அருமையே இங்கு கருதப்படுகிறது என்று காட்டுகிறார்" என்னும் தாத்பர்ய சந்த்₃ரிகைக் கருத்து இங்கு காணத்தக்கது. 3.

||भा|| अस्य विचित्रानन्तभोग्यभोगोपकरणभोगस्थानरूपेणा - वस्थितस्य जगतः प्रकृतिरियं गन्धादिगुणकपृथिव्यप्तेजोवाय्वाकाशादि -

4. இனி, நாலாம் ஶ்லோகம் தொடங்கி, பனிரண்டாம் ஶ்லோகமீறுக "ஸ்வயாத₂ாத்ம்யம்" [தன்னைப்பற்றிய உண்மையறிவு] என்று ஆளவந்தாரால் கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹத்தில் சொல்லப்பட்ட பரமாத்ம தத்வஜ்ஞாநம் உபதே₃ஶிக்கப்படுகிறது; "தத்த்வத:" என்று சென்ற ஶ்லோகத்தில் கூறப்பட்டது விவரிக்கப்படுகிறது. அதில், தானே ஜீவனுக்கு நிரபேக்ஷோபாயபூ₄தனுயிருக்கிறவன் என்று காட்டு வதற்குறுப்பாக ஜீவன் அசித்தைப்போலே தனக்குப் பரதந்த்ரனு யிருப்பவன் என்று இரண்டு ஶ்லோகங்களில் காட்ட முற்பட்டு, இந்த ஶ்லோகத்தில் அசேதனப் பொருள் தனக்குப் பரதந்த்ரமானது என்று காட்டுகிருன். காணப்படும் வ்யஷ்டிரூபமான இவ்வுலகிற்குக் காரண மாய், எட்டுவிதமாகப் பிரிந்துநிற்கும் ப்ரக்ருதி - எனக்கு ஶேஷமாய், நியாம்யமாய், த₄ார்யமாயிருப்பது என்று காட்டுகிருன். (பூ₄மி: ஆப: அநல: வாயு: க₂ம்) என்று ப்ரத்யக்ஷஸித்₃த₄மான பஞ்ச பூ₄தங்களை எடுக்கிருன். இது, பூ₄தகாரணமான ஐந்து தந்மாத்ரை களுக்கும் உபலக்ஷணம். மேலே, ப்ரத்யக்ஷாநுமானங்களால் ஸித்₃தி₄க்கும் காரணப்பொருள்களைக் காட்டுகிருன். (மந:) மனம். இது, மனத்தின் தலைமையில் இயங்கும் மற்ற ஜ்ஞாந கர்மேந்திரியங்களுக்கு உபலக்ஷணம். (பு₃த்₃தி₄:) பு₃த்₃தி₄யைப் போஷிப்பதாக அநுமானத்தாலும், ஆக₃மத்தினுலும் ஸித்₃தி₄ப்பதாய், மூலப்ரக்ருதிகார்யமாய், அஹங்காரகாரணமான மஹான் என்னும் தத்வம். (அஹங்கார: ச) அஹங்கார வாஸனைக்கு ஹேதுவாக அநுமாநாக₃மங்களால் ஸித்₃தி₄க்கும் பூ₄தேந்திரியகாரணமான தத்வமும். தத்வங்களைக் குறிக்கும் ப்ரகரணமாகையாலே, பு₃த்₃தி₄ ஶப்₃த₃த்தாலே அறிவையும், அஹங்கார ஶப்₃த₃த்தாலே க₃ர்வத்தை யும் குறிப்பதாகக்கொள்வது பொருந்தாது. (இதி அஷ்டத₄ா பி₄ந்நா இயம் ப்ரக்ருதி:) இவ்வண்ணமாக எட்டு வகையாகப் பிரிந்துநிற்கும் இந்த வ்யஷ்டிகாரணம். உபலக்ஷணமுறையால் காட்டப்படும் பஞ்சதந் மாத்ரங்களையும், பத்து ஜ்ஞாநகர்மேந்திரியங்களையும் சேர்த்து மூல ப்ரக்ருதிகார்யமான இருபத்துமூன்று தத்துவங்களும் இங்கு உணர்த்தப்படுகிறது. (இயம் ப்ரக்ருதி:) இந்தக் காரணம். ஶப்₃த₃ ஸ்பர்ஶரூபரஸக₃ந்த₄ங்களாகிற கு₃ணங்களோடு கூடிய பூ₄தங்களைச் சொல்லுகையாலே போ₄க்₃யப் பொருள்களும், பஞ்சபூ₄தபரிணும மான போ₄கஸ்த₂ாநங்களும், இந்திரியங்களைச் சொல்லுகையாலே போ₄கோ₃பகரணங்களும் சொல்லப்பட்டு, இப்படி மூவகையி லடங்கிய இவ்வுலகிற்குக் காரணம் என்று மூலப்ரக்ருதி கார்யமாய், உலகிற்குக் காரணமான எல்லாத் தத்துவங்

रूपेण मनःप्रभृतीन्द्रियरूपेण महदहंकाररूपेण चाष्टधा भिन्ना मदीयेति विद्धि ॥ ४ ॥

களையும் எடுக்கிறுன். இவ்வெட்டும் மூலப்ரக்ருதிகார்யமாயிருந்த போதிலும், வ்யஷ்டிரூபமான உலகிற்குக் காரணமாகையாலே இவற்றை ப்ரக்ருதி ஶப்₃த₃த்தாலே எடுக்கிறுன். சிலர் - பூ₄மி முத லான ஶப்₃த₃ங்களாலே பூ₄மி முதலானவற்றின் காரணமான ஐந்து தந்மாத்ரங்களும், 'மந:' என்று மனத்தின் காரணமான அஹங் காரமும், பு₃த்₃தி₄ஶப்₃த₃த்தாலே அஹங்காரகாரணமான மஹானும், 'அஹங்கார:' என்று அஹங்காரவாஸனைக்கு இருப்பிடமான மூல ப்ரக்ருதியும்—ஆக, இப்படி எல்லாப் பத₃ங்களாலும் ''அஷ்டௌ ப்ரக்ருதய:'' [க₃ர்ப்பபே₄ாபநிஷத்] என்கிற ஶ்ருதியில் கூறப்பட்ட காரணப்பொருள்களே குறிக்கப்படுகையால் ப்ரக்ருதி ஶப்₃த₃த்தாலே இவ்வெட்டு காரணப்பொருள்களும் காட்டப்படுவதாகக் கூறினுர்கள். இப்பொருளில் பு₃த்₃தி₄பத₃ம் தவிர மற்ற எல்லாப் பத₃ங்களும் முக்₂ யார்த்த₂த்தை இழந்து அமுக்₂யமாகின்றன. இதைக் காட்டிலும் எல்லாப் பத₃ங்களையும் முக்₂யமாகவே கொண்டு, வ்யஷ்டிஸ்ருஷ் டிக்குக் காரணமாகையாலே இவை ப்ரக்ருதியெனப்படுகின்றன என்று கொள்வது சிறந்தது. அன்றிக்கே, இப்படி ப்ரக்ருதி ஶப்₃த₃த்திற்கு யௌகி₃கமாகப் பொருள்கொள்ளாமல் மூலப்ரக்ருதி என்று ரூடி₄ப் பொருளையே கொண்டு, அதுவே இப்படி எட்டுவித₄மாக நிற்கிறது என்று த்₃ரவ்யைக்யத்தாலே சொல்லுகிறதாகவுமாம். இப்படிப் பொருள் கொள்ளும்போது அடுத்த ஶ்லோகத்தில் ஜீவதத்வத்தை 'ப்ரக்ருதி' என்று குறித்திருப்பது விரூபமாகும். ஆகையால் முதற்பொருளே சிறந்தது. (இயம் ப்ரக்ருதி: மே ஏவ) அடுத்த ஶ்லோ கத்திலிருந்து 'வித்₃தி₄' என்பதையும் சேர்த்துக்கொண்டு ''இப்படி ஸமஷ்டி ரூபமாகவும் வ்யஷ்டி ரூபமாகவுமிருக்கும் இந்த ப்ரக்ருதி என்னுடையதே என்று அறி'' என்று பொருள்கொள்ளவேணும். இப்ரக்ருதிக்கு நான் ஶேஷியாய், நியாமகனுய், த₄ாரகனுயிருக்கை யாலே இதைக் காட்டிலும் மிகவும் வேறுபட்டவனுய், இதை ஆட்டி வைப்பவனுக என்னை அறி என்று கருத்து. ஏற்கனவே இங்கு இந்த ப்ரக்ருதியைப்பற்றி உபதே₃ஶிக்கப்படாவிடிலும், ப்ரத்யக்ஷாநுமாநங் களாலே ஸித்₃த₄மாகையாலே, இதைத் தன்னுடையதென்று விதி₄ப்பதற்காக 'இயம்' என்று அநுவதி₃க்கிறுன். 'மே' என்னும் ஷஷ்டி₂ பொதுவாக ஸம்ப₃ந்த₄ஸாமாந்யத்தைக் காட்டுமாயினும், இங்கு ஸ்வஸ்வாமிப₄ாவமாகிற (உடைமையாகவும், உடையவனுகவு மிருக்கையாகிற) ஸம்ப₃ந்த₄ விஶேஷத்தைக் காட்டுகிறது. ஆக, அசேதநப்பொருள் எனக்கு அத்யந்தபரதந்த்ரமானது என்று காட்டப்பட்டது. 4.

अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम्।
जीवभूतां महाबाहो ययेदं धार्यते जगत्॥५॥

5. அபரேயமிதஸ் த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்$_3$தி$_4$ மே பராம்।
ஜீவபூ$_4$தாம் மஹாப$_3$ாஹோ யயேத$_3$ம் த$_4$ார்யதே ஜக$_3$த்॥

மஹாப$_3$ாஹோ—தடக்கையனே! இயம்—இந்த அசேதந ப்ரக்ருதி, அபரா—தாழ்ந்தது; இத:—இதைக்காட்டிலும், அந்யாம் து—மிகவும் வேறுபட்டதாய், ஜீவபூ$_4$தாம்—ஜீவன் என்று பெயர்பெற்றதாய், பராம்—முற்கூறிய அசேதந ப்ரக்ருதியைக் காட்டிலும் மேலானதான, ப்ரக்ருதிம்—ப்ர க்ருதியை, மே வித்$_3$தி$_4$—என்னுடையது என்று அறிவாயாக; யயா—எந்த ஜீவபூ$_4$த ப்ரக்ருதியினுலே, இத$_3$ம் ஜக$_3$த்—இவ் வுலகம் முழுவதும், த$_4$ார்யதே—தரிக்கப்படுகிறதோ.

---

5. மற்றதனில் வேருகி மன்னுயிராய் மேலாகி
யுற்றதுதா னென்ற னுருவாக—முற்றுமறத்
தாங்குஞ் சகத்திதனைத் தானமைந்து நிற்குமே
யோங்கித் தழைபுயத்தா யுன்னு.

ஓங்கித் தழை புயத்தாய்!—நீண்டு பெருத்திருக்கும் கைகளை உடையவனே! மற்று அதனில் வேருகி—முன் சொல்லப்பட்ட அசேதன ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறு பட்டதாய், மன் உயிராய்—நிலைபெற்ற உயிராயிருப்பதாய், மேல் ஆகி உற்றதுதான்—(அசேதநத்தைக் காட்டிலும்) மேற் பட்டதாயிருக்கும் ப்ரக்ருதி, சகத்து இதனை—இவ்வுலகத்தை, முற்றும் அறத் தாங்கும்—முழுவதும் நன்ருகத் தாங்குமதாய், என்றன் உருவாக—என்னுடைய உடலாக, தான் அமைந்து நிற்குமே—தானும் பொருந்தி நிற்கிறது. உன்னு—(இதை யும்) அறிவாய.

---

5. இனி, இவ்வசேதனப் பொருளைப்போலே, இதனிலும் மேற் பட்டதான சேதனப் பொருளும் எனக்கு அத்யந்த பரதந்த்ரமானதே என்று காட்டுகிருன். (அபரா இயம்) முன் ஶ்லோகத்தில் சொல்லப் பட்ட அசேதநப்ரக்ருதி தாழ்ந்ததாயிருப்பது. அடுத்தபடி சொல்லப்

॥ भा ॥ इयं ममापरा प्रकृतिः ; इतस्त्वन्याम्—इतोऽचेतना-याश्चेतनभोग्यभूतायाः प्रकृतेर्विसजातीयाकारां जीवभूतां परां—तस्या भोक्तृत्वेन प्रधानभूतां चेतनरूपां मदीयां प्रकृतिं विद्धि ; ययेदम् अचेतनं कृत्स्नं जगद्धार्यते ॥ ५ ॥

---

போகும் சேதநப்ரக்ருதியைக் காட்டிலும் அமுக்2யமானது என்றபடி. இனி, இதைக் காட்டிலும் உயர்ந்ததாகையாலே முக்2யமானதாகிற சேதந ப்ரக்ருதியைக் கூறுகிறான்,—(இதஸ்து அந்யாம்) இதைக் காட்டிலும் மிகவும் வேறுபட்டதாய்; துஶப்3த3ம் மிகவும் வேறுபாட்டை உணர்த்துகிறது. இருளும் ஒளியும்போலே வேறுபட்டிருப்பவை ஜட3மாய், அறிவற்ற அசேதன ப்ரக்ருதியும், அறிவுமயமாய், அறிவுள்ள சேதந ப்ரக்ருதியும் என்று கருத்து. அது எது எனில்: (ஜீவபூ4தாம்) ஜீவன் என்று பெயர்பெற்றிருப்பதே அது என்கை. (பராம் ப்ரக்ருதிம்) மேலான ப்ரக்தியை. "போ4க்தா போ4க்3யம்" [ஶ்வே 1-12] [போ4க்தாவாயிருக்கும் ஜீவனையும், அவனுக்கு போ4க்3யமாயிருக்கும் அசேதனத்தையும்] என்று ஶ்ருதியில் சொன்னபடியே, போ4க்3யமாய் (அனுப4விக்கப்படுவதாய்) இருக்கும் அசேதன ப்ரக்ருதியைக் காட்டிலும், போ4க்தாவாய் (அநுப4விப்பவனாய்) இருக்கும் சேதந ப்ரக்ருதி—அக்காரணத்தாலேயே மேலானது என்று கருத்து. சேதநாசேதநங்களடங்கிய வ்யஷ்டிரூபமான உலகிற்கு, முன் சொன்ன அசேதந ப்ரக்ருதியைப்போலே இச்சேதந ஸமஷ்டியும் காரணமாயிருப்பதால் இது ப்ரக்ருதி எனத்தக்கது என்று கருத்து. வ்யஷ்டிரூபமான அசேதநவுலகை த4ரித்து நிற்பதும் இச்சேதந ஸமஷ்டியே என்று காட்டுகிறான் கடைசிப் பாத3த்தாலே. (யயா இத3ம் ஜக3த் த4ார்யதே) ப்ரத்யக்கான (தனக்கே ப்ரகாஶிப்பதான) எந்தச் சேதந ப்ரக்ருதியாலே, 'இது' என்று சொல்லலாம்படி பராக்கான (பிறர்க்கே ப்ரகாஶிப்பதான) இந்த அசேதநவுலகனைத்தும் த4ரித்து நிற்கப்படுகிறதோ, அந்தப் பரமானப்ரக்ருதியை என்று முற்பாதியோடே அந்வயம். விழித்திருக்கும் நிலையாகிற ஜாக்3ரத3வஸ்தை2யிலும், கனவுநிலையாகிற ஸ்வப்நாவஸ்தை2யிலும் ஸங்கல்பத்தால் ஜீவன் ஶரீரத்தை த4ரித்துநிற்கிறான் என்பது கண்கூடு; தூங்கும்நிலையாகிற ஸுஷுப்தியிலும், மூர்ச்சை2நிலையிலும் ஸ்வரூபத்தால் ஜீவன் ஶரீரத்தைத் தாங்குகிறான் என்று கொள்ளத்தக்கது. (மே ஏவ வித்3தி4) முன் ஶ்லோகத்திலிருந்து ஏவகாரத்தைக் கூட்டிக் கொண்டு, "அந்த அசேதந ப்ரக்ருதியைப்போலே, இந்தச் சேதந ப்ரக்ருதியும் ஸ்ருஷ்டிஸ்தி2தித4ாரண நியமநங்களாலே என்னுடையே

एतद्योनीनि भूतानि सर्वाणीत्युपधारय।
अहं कृत्स्नस्य जगतः प्रभवः प्रलयस्तथा ॥ ६ ॥

6. ஏதத்₃யோநீநி பூ₄தாநி ஸர்வாணீத்யுபத₄ாரய ।
அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜக₃த: ப்ரப₄வ: ப்ரளயஸ்தத₂ா ॥

ஏதத்₃யோநீநி—இந்தச் சேதநாசேதந ஸமஷ்டியைக் காரணமாகக் கொண்ட, ஸர்வாணி பூ₄தாநி—(பிரமன் முதலாகப் புல்லீருகவுள்ள) எல்லாப் பொருள்களும், இதி—என்னுடையவையே என்று, உபத₄ாரய—அறிவாயாக. தத₂ா—அப்படியிருக்கும்போது, அஹம்—நான், க்ருத்ஸ்நஸ்ய ஜக₃த:—இந்த எல்லா உலகிற்கும், ப்ரப₄வ:—உத்பத்திஸ்த₂ாநமாகவும், ப்ரளய:—லயஸ்த₂ானமாகவும் (ேஶஷியாகவும்) இருக்கிறேன்.

---

ஆட்டிவைக்கப்படுவதாகையாலே என்னுடையதென்றே அறி''—என்று பொருள்கொள்ள வேண்டும். இப்படி இதைக் காட்டிலும் வேறுபட்டவனாய், இதன் ஸ்ருஷ்டிஸ்தி₂களுக்குக் காரணமாய், த₄ரிப்பவனாய், உள்நுழைந்து நியமிப்பவனாய், ேஶஷியாயிருப்பவனாகையாலே, நானே இச்சேதனப் பொருளுக்கு நிரபேக்ஷாபாயபூ₄தனென்று அறிவதே—மூன்றும் ஶ்லோகத்தில் கூறிய ரீதியில் என்னை உள்ளபடி அறிவதாகும் என்று கருத்து. இக்கருத்தையே,

''உபாத₃த்தே ஸத்தாஸ்தி₂திநியமநாத்₃யைஶ் சித₃சிதௌ
ஸ்வமுத்₃தி₃ஶ்ய ஸ்ரீமாநிதி வத₃தி வாகௌ₃பநிஷதீ₃ ।
உபாயோபேயத்வே ததி₃ஹ தவ தத்வம் ந து கு₃ணௌ
அதஸ்த்வாம் ஸ்ரீரங்கே₃ஶய ஶரணமவ்யாஜமப₄ஜம் ॥ ''

[ஸ்ரீரங்க₃ 2-87]

[ ''ஸ்ரீமந்நாராயணனானவன்--ஸ்ருஷ்டிஸ்தி₂திநியமநத₄ாரணங்களாலே அசேதநத்தைப்போலே சேதநவஸ்துவையும் தனக்கு ப்ரயோஜநமாக ஆக்கிக்கொள்கிறான் '' என்று உபநிஷத்₃ வாக்யங்கள் உத்₃கே₄ாஷிக்கின்றன. ஆகையால், உபாயத்வமும், உபேயத்வமும் உனக்கே இயற்கையானது. (மற்ற பொருள்களுக்குப்போல) செயற்கையானதல்ல. ஸ்ரீரங்க₃நாத₂னே! இக்காரணத்தாலே உன்னை நான் ஓர் வ்யாஜத்தையும் எதிர்பாராத உபாயமாகப் பற்றினேன் ] என்று ஸ்ரீபராஶரபட்டர் அருளிச்செய்தார். (மஹாபா₃ஹோ) தடக்கையனே! உன் கைகளைப்போலே, அறிவும் பெருமைபெற்று இவ்வுண்மையை அறியவேணும் என்று கருத்து. 5.

॥ भा ॥ एतच्चेतनाचेतनसमष्टिरूपमदीयप्रकृतिद्वययोनीनि ब्रह्मादिस्तम्बपर्यन्तान्युच्चावचभावेनावस्थितानि चिदचिन्मिश्राणि मदीयानि

---

6. இந்த விரண்டு முதலாக வெப்பொருளும்
வந்த பரிசுணர்நீ மன்னவனே—யந்தவகை
தானதனு லெல்லாச் சகத்தின் பிறப்பிறப்பு(ம்)
நானெனவே காணீ நயந்து.

**மன்னவனே!**—அரசனே, **எப்பொருளும்**—இந்த எல்லா வுலகும், **இந்த இரண்டும் முதலாக**—என்னுடையவையான இந்தச் சேதநாசேதந ஸமஷ்டியைக் காரணமாகக் கொண்டதாயிருக்கையால், **வந்த பரிசு**—என்னையே காரண மாகக்கொண்டு உண்டானவை என்பதை, **நீ உணர்**—நீ அறிவாயாக. **அந்த வகை தான் அதனுல்**—அப்படி என்னையே காரணமாகக்கொண்டு உண்டானவையாகையாலே, **எல்லா சகத்தின் பிறப்பு இறப்பும்**—இந்த எல்லா உலகங்களின் பிறப்பிடமும், இறப்பிடமும், **நான் எனவே**—நானேயாயிருக் கிறேன் என்றே, **நீ நயந்து காண்**—நீ விரும்பிப்பார்ப்பாயாக.

---

6. ஸமஷ்டிதத்வங்கள் தன்னுடையவையே என்று இதுவரையில் உரைத்தான். இனி, வ்யஷ்டிதத்வங்களும் தன்னுடையவையே என உரைத்து, ஸமஷ்டிவ்யஷ்டி ரூபமான எல்லாவற்றுக்கும் தானே காரண மெனக் காட்டுகிருன். (ஏதத்₃யோநீநி) முன் இரு ஶ்லோகங்களில் ப்ரக்ருதியாக (காரணமாக) சொல்லப்பட்ட சேதநஸமஷ்டியும், அசேதநஸமஷ்டியுமான இரண்டு பொருள்களையும் காரணமாகக் கொண்டவையான. (ஸர்வாணி பூ₄தாதி) பிரமன் முதலாகப் புல்லெறும் பீருக ஏற்றத்தாழ்வுள்ளவையாகக் காணப்படும் சேதநாசேதநமிஶ்ர மான இந்த எல்லாப்பொருள்களும். இதிலிருந்து—ஸ்வரூபத்தால் நிர்விகாரமாயிருந்தபோதிலும், சேதநவஸ்து – தே₃வர், மனுஷ்யர், திர்யக், ஸ்த₂ாவரம் எனும் வ்யஷ்டி ஶரீரங்களைப் பெறும்போது, அந்தந்த ஶரீரங்களுக்கு அநுகு₃ணமான அறிவு, செயல், பே₄ாக₃ம் முதலியவற்ருேடு கூடியவனுகிருனுகையால், ஸமஷ்டிநிலையில் அசித்தோடு வாசியற நின்ற நிலையைக் காட்டிலும் வேறுபாடாகிற விகாரத்தை அடைகிருனுகையால், சேதநஸமஷ்டி சேதநவ்யஷ்டிக்குக் காரணமாகக் குறையில்லை என விளங்குகிறது. (இத்யுபத₄ாரய)

सर्वाणि भूतानीत्युपधारय। मदीयप्रकृतिद्वययोनीनि हि तानि मदीयान्येव। तथा प्रकृतिद्वययोनित्वेन कृत्स्नस्य जगतः, तयोर्द्वयोरपि मद्योनित्वेन मदीयत्वेन च, कृत्स्नस्य जगतः अहमेव प्रभवोऽहमेव च प्रलयोऽहमेव च शेषीत्युपधारय। तयोश्चिदचित्समष्टिभूतयोः प्रकृति-

---

வ்யஷ்டிப் பொருள்களான இவையனைத்தும், முற்கூறிய ஸமஷ்டிப் பொருள்களைப்போலவே என்னுடையவை என அறிவாய். என்னுடையவையான இரண்டு ப்ரக்ருதிகளைக் காரணமாகக்கொண்ட இவையும் என்னுடையவையே ஆகவேண்டுமன்றோ என்று கருத்து. ''ஸர்வாணி பூ₄தாநி ஏதத்₃யோநீநி'' [எல்லா வ்யஷ்டிப் பொருள்களும் இவ்விரு ப்ரக்ருதிகளைக் காரணமாகக்கொண்டவை] என்னும் இவ்வளவே இங்கு கருதப்பட்டதாகில் ''மே வித்₃தி₄'' என்றவிடத்திற் போலே ''ஏதத்₃யோநீநி உபத₄ாரய'' என்னுமிவ்வளவே போதுமானது. ஆகையால், இங்கு அதி₄கமாயுள்ள 'இதி' ஶப்₃த₃ம் முன் ஶ்லோகத்திற் சொல்லப்பட்டது போலே இதுவும் மதீ₃யம் [என்னுடைமை] என்று உணர்த்துகிறது. ஆக, ஸமஷ்டிப் பொருள்களைப் போலே வ்யஷ்டிப் பொருள்களும் என்னுடைமையே என்றதாயிற்று. இனி, காரணமான இந்த ஸமஷ்டிப் பொருள்களோடு, கார்யமான இந்த வ்யஷ்டிப் பொருள்களோடு வாசியற எல்லாவற்றுக்குமே நானே காரணமாயிருப்பவன்; ஶேஷமான அசேதனத்தோடு, ஶேஷியான சேதநத்தோடு வாசியற எல்லாவற்றுக்குமே நானே ஶேஷியாயிருப்பவன் என்று காட்டுகிறான் உத்தரார்த்த₄த்தாலே- (தத₂ா) இவ்வண்ணமாக எல்லாவுலகமும் முற்கூறிய இரண்டு ப்ரக்ருதிகளைக் காரணமாகக்கொண்டதாகவும், அவ்விரண்டும் என்னைக் காரணமாகக் கொண்டதாகவுமிருக்கையாலே. (க்ருத்ஸ்நஸ்ய ஜக₃த: அஹம் ப்ரப₄வ: ப்ரளய:) காரணமான ஸமஷ்டிப் பொருள்களோடு, கார்யமான வ்யஷ்டிப் பொருள்களோடு வாசியற எல்லாவுலகிற்கும் நானே உத்பத்திஸ்த₂ானமாகவும், லயஸ்த₂ானமாகவுமிருப்பவன்; காரணமாயிருப்பவன் என்றபடி. 'தத₂ா' என்றது 'தத₂ாஸதி' என்றபடியாய், முற்பாதியில் சொல்லப்பட்டதை ஹேதுவாக்குகிறது. இப்படிக் காரணத்வத்தைச் சொன்னது ''மே'' என்று முன் ஶ்லோகங்களிற் சொல்லப்பட்ட ஶேஷித்வத்துக்கும் உபலக்ஷணம். அசேதனம் சேதனனுக்கு ஶேஷமாகவும், சேதனன் அதற்கு ஶேஷியாகவுமிருந்தபோதிலும் இரண்டுமே எனக்கு ஶேஷமாயிருக்கிறது, நான் அவற்றுக்கு ஶேஷியாயிருக்கிறேன் என்று கருத்து. ''தத₂ா''

पुरुषयोरपि परमपुरुषयोनित्वं श्रुतिस्मृतिसिद्धम्। * महानव्यक्ते लीयते। अव्यक्तमक्षरे लीयते। अक्षरं तमसि लीयते। तमः परे देव एकीभवति (सु. २), * विष्णोस्स्वरूपात्परतोदिते द्वे रूपे प्रधानं पुरुषश्च विप्र (वि. १.२.२४), * प्रकृतिर्या मयाऽऽख्याता व्यक्ताव्यक्तस्वरूपिणी। पुरुषश्चाप्युभावेतौ लीयेते परमात्मनि। परमात्मा च सर्वेषामाधारः परमेश्वरः। विष्णुनामा स वेदेषु वेदान्तेषु च गीयते॥ (वि. ६.४.३०, ३१) इत्यादिका हि श्रुतिस्मृतयः॥ ६॥

---

என்று நேரேயே முன் ஶ்லோகங்களிற் குறிக்கப்பட்ட பேஶஷித்வத்தைக் காட்டுவதாகவும் கொள்ளலாம். இங்கு, ஓர் ஆக்ஷேபம் பின்வருமாறு எழுகிறது:—'' அஜாம் ஏகாம் '' [ஶ்வே 4-5] என்று மூலப்ரக்ருதியும், ''நித்யோ நித்யாநாம்'' [கட₂ 5-12] என்று ஜீவனும் பிறப்பிறப்பற்ற நித்யவஸ்துக்களாகக் கூறப்படுகையில், பரமாத்மாவை அவற்றுக்குக் காரணமாக இங்கு எப்படிச் சொல்லலாம்? என்பது அவ்வாக்ஷேபம். ப்ரக்ருதி புருஷர்கள் ஸ்வரூபத்தால் நித்யர்களாயினும், நாம ரூபங்களோடு கூடிய ஸ்தூ₂ல நிலையை அடைவதையிட்டுப் பரமாத்மாவிடமிருந்து பிறப்பதாகவும், நாம ரூபமற்ற ஸூக்ஷ்ம நிலையை அடைவதையிட்டுப் பரமாத்மாவிடம் லயமடைவதாகவும் ஶ்ருதி ஸ்ம்ருதிகள் கூறுகையாலே, அவற்றைக் கார்யப் பொருள்களென்றும், பரமாத்மாவை அவற்றுக்குக் காரணமென்றும் கொள்ளலாம் என்பது இவ்வாக்ஷேபத்திற்கு ஸமாதா₄நம். ஶ்ருதி ஸ்ம்ருதிகள் அப்படி எங்கே கூறுகின்றன? எனில்: ''மஹாநவ்யக்தே லீயதே, அவ்யக்தம் அக்ஷரே லீயதே, அக்ஷரம் தமஸி லீயதே, தம: பரே தே₃வ ஏகீப₄வதி'' [ஸுபா₃லோபநிஷத்-2] [மஹான் அவ்யக்தத்தில் லயிக்கிறது; அவ்யக்தம் அக்ஷரத்தில் லயிக்கிறது; அக்ஷரம் தமஸ்ஸில் லயிக்கிறது; தமஸ்ஸு பரமாத்மாவிடம் ஒன்றுகிறது.] என்னும் ஶ்ருதிவாக்யத்தில் ப்ரக்ருதிபுருஷர்கள் பரமாத்மாவிடம் லயமடைவதாகக் கூறப்படுகிறது. லயமாவது, நீர் பாலில் கலப்பது போலே பிரிக்கமுடியாத நிலையை அடைவதேயாகும். ஆக, ப்ரக்ருதி புருஷர்களின் ஸ்வரூபம் அழியவில்லையாகையால் ''அஜாமேகாம்'' ''நித்யோ நித்யாநாம்'' என்னும் ஶ்ருதிகளின் விரோத₄மில்லை; ''விஷ்ணோ: ஸ்வரூபாத் பரதோதி₃தே த்₃வே ரூபே ப்ரதா₄நம் புருஷஶ்ச விப்ர'' [வி·பு 1-2-24] [அந்தணரே! மேலான விஷ்ணு ஸ்வரூபத்திலிருந்து ப்ரக்ருதியும், புருஷனுமாகிற இரு உருவங்கள் உண்டாயின. (அல்லது வேறுபட்டிருந்தன. அல்லது லயமடைந்தன )] என்றும், ''ப்ர

मत्तः परतरं नान्यत् किञ्चिदस्ति धनञ्जय।
मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव॥ ७॥

7. மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய।
மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ ॥

தநஞ்ஜய—அர்ஜுநா! மத்த:—என்னைக்காட்டிலும், அந்யத் கிஞ்சித் அபி—வேறுபட்டிருப்பவற்றில் ஒன்றுகூட, பரதரம் நாஸ்தி—மிகவும் மேலானதாயில்லை. இதம் ஸர்வம்—இந்த எல்லாப்பொருள்களும், ஸூத்ரே—நூலில், மணிகணா: இவ—ரத்தினங்கள் கோர்க்கப்பட்டிருப்பதுபோலே, மயி ப்ரோதம்—என்னிடத்தில் கோர்க்கப்பட்டிருக்கின்றன.

---

7. என்னில்வே றாகிமிக் கிங்கோர் பொருளுளதென்
றுன்னிலாங் கில்லை யுயர்விசயா—மன்னியநூன்
மாமணிபோற் கோப்புண்டு வந்தே யென்பாலிதெல்லாஞ்
சேமமுற நிற்குஞ் செறிந்து.

உயர் விசயா—உயர்ந்தவனான அர்ஜுநா! என்னில் வேறாகி—என்னைக்காட்டிலும் வேறாயிருப்பதாய், மிக்கு—மேலாயிருப்பதான, ஓர் பொருள் இங்கு உளது? என்று உன்னில்—ஒரு பொருள் இவ்வுலகில் உள்ளதோ? என்று

---

க்ருதிர் யா மயா ऽऽக்யாதா வ்யக்தாவ்யக்தஸ்வரூபிணீ।புருஷஶ்சாப்யுபௌ வேதௌ லீயேதே பரமாத்மநி ॥ பரமாத்மா ச ஸர்வேஷாமாதார: பரமேஶ்வர:। விஷ்ணுநாமா ஸ வேதேஷு வேதாந்தேஷு ச கீயதே ॥" [வி-பு 6-4-30,31] [வ்யக்த ரூபமாகவும், அவ்யக்த ரூபமாகவும் என்றால் சொல்லப்பட்ட ப்ரக்ருதியும், புருஷனுமாகிற இவ்விரு தத்துவங்களும் பரமாத்மாவிடம் லயமடைகின்றன. அனைவர்க்கும் ஆதாரனாய், பரமேஶ்வரனான பரமாத்மாவும், வேதங்களிலும், வேதாந்தங்களிலும் விஷ்ணுவென்னும் பெயருடையவனாகவே முழங்கப்படுகிறான்.] என்று வேதார்த்தை விவரிக்கவந்த ஸ்ரீ விஷ்ணுபுராணம் முதலான ஸ்ம்ருதிகளும் இவ்வர்த்தத்தையே தெளிவாக உத்கோஷித்தன. ஆகையாலே விரோதமில்லை. ஆக, ஸமஷ்டிவ்யஷ்டிரூபமான எல்லா உலகிற்கும், தானே காரணமாகவும் ஶேஷியாகவுமிருப்பவன் என்று சொல்லிற்றாயிற்று. 6.

॥ भा ॥ यथा सर्वकारणस्यापि प्रकृतिद्वयस्य कारणत्वेन, सर्वाचेतनवस्तुशेषिणश्चेतनस्यापि शेषित्वेन, कारणतया शेषितया चाहं परतरः ; तथा ज्ञानशक्तिबलादिगुणयोगेन चाहमेव परतरः। मत्तोऽन्यत्—मद्व्यतिरिक्तं ज्ञानबलादिगुणान्तरयोगि किंचिदपि परतरं नास्ति ॥

---

ஆராய்ந்தால், ஆங்கு இல்லை—அப்படி இல்லை. மன்னிய நூல் மா மணி போல்—உறுதியான நூலில் உயர்ந்த ரத்தினங்கள்போலே, என்பால் கோப்புண்டு வந்தே—என்னிடம் கோர்க்கப்பட்டதாகவே, இது எல்லாம்—இந்த எல்லா உலகமும். செறிந்து—சிதறிவிடாமல் நெருங்கியிருப்பதாய், சேமம் உற—ரக்ஷை பெற்று, நிற்கும்—நிற்கும்.

---

7. அசேதநப் பொருளைப்போலே. சேதநப்பொருளும் என்னுடைமையாகையாலே நானே அதற்கு உபாயமாயிருக்கத்தக்கவன் என்று முன் ஶ்லோகங்களில் உணர்த்தினன். அச்சேதநப்பொருளைக் காட்டிலும் ஜ்ஞாநம், ஶக்தி முதலானவற்றில் மிகச்சிறந்தவனாகையாலும் நானே உபாயமாயிருக்கத்தக்கவன் என்று வலியுறுத்துகிறான் இந்த ஶ்லோகத்தின் முற்பாதியாலே. முன் ஶ்லோகத்திலிருந்து ததா₂ ஶப்₃த₃த்தை இங்கு சேர்த்துக் கொள்ளவேண்டும். (ததா₂) முன் ஶ்லோகத்தில் காட்டப்பட்ட காரணத்வ ஶேஷித்வங்களுக்கு மேலே ஓரர்த்த₂ம் இங்கு காட்டப்படுகிறது. வ்யஷ்டிப் பொருள் அனைத்துக்கும் காரணமான இரண்டு ப்ரக்ருதிகளுக்கும் காரணமாயிருப்பதன் மூலமும், எல்லா அசேதநப் பொருள்களுக்கும் ஶேஷியாயிருக்கும் சேதநப்பொருளுக்கும் ஶேஷியாயிருப்பதன் மூலமும், காரணத்வத்தையிட்டும், ஶேஷித்வத்தையிட்டும் எப்படி நானே மிகவும் மேலானவனாயிருக்கிறேனோ, அப்படியே ஒப்பற்ற ஜ்ஞானம், ஶக்தி, ப₃லம் முதலான கு₃ணங்களோடு கூடியிருக்கையாலும் நானே மிகவும் மேலானவன் என்றபடி. முன் ஶ்லோகத்தில் அந்வயத்தால் சொன்ன அர்த்த₂த்தையே இங்கு வ்யதிரேகத்தால் சொல்லுவதாகக் கொள்ளலாகாதோ? எனில்: அப்படிக் கொள்வதில் பயன் சிறிதேயாகையாலும், முன் ஶ்லோகத்தில் "சேதனன் அசேதனத்தைக் காட்டிலும் பரன்; நான் பரதரன்" என்னும் அர்த்த₂ம் ஶாப்₃த₃மாகச் சொல்லப்படவில்லையாகையாலும், அதில் ஶாப்₃த₃மாகச் சொல்லப்படாத கு₃ணங்களாலுண்டான சிறப்பே, இங்கு வ்யதிரேகத்தால் உறுதிப்படுத்தப்படுகிறது என்று கொள்ளவேண்டும்.

'தத₂ா''ஶப்₃த₃த்தாலே முன் ஶ்லோகங்களில் கூறப்பட்ட அநந்த மஹா விபூ₄தியுடைமையை த்₃ருஷ்டாந்தமாக்கி, அதுபோலே அநந்த கு₃ணங்களை உடையவன் என்று காட்டப்படுகிறது இங்கு. (மத்த: அந்யத் கிஞ்சித் பரதரம் நாஸ்தி) என்னைக் காட்டிலும் வேறுபட்ட தாய், ஜ்ஞாநம், ப₃லம் முதலான நற்குணங்களை உடைய சேதந வஸ்துக்களில் எதுவும் அக்குணங்களில் பரதரமாக—மிகவும் மேலான தாக—இல்லை. ''மத்த: பரதரம் கிஞ்சித் நாஸ்தி'' [என்னைக் காட்டிலும் மேலானது ஒன்றும் இல்லை] என்று அந்வயித்துப் பொருள் கொண்டால், 'அந்யத்' என்னும் பத₃ம் அந்வயிக்காமல் நிற்கிறது. மேலும், ''என்னைக் காட்டிலும் மேலானது இல்லை'' என்று கூறிய தால், ஸமமானது உண்டோ என்னும் ஐயமும் தவிர்க்கப்படாம லுள்ளது. இவ்விரு குறைகளும் ஏற்படாமலிருக்க, ''மத்த: அந்யத் கிஞ்சித் பரதரம் நாஸ்தி'' [என்னைக்காட்டிலும் வேறானது எதுவும் (ஜ்ஞாநம், ப₃லம் முதலான நற்கு₃ணங்களில்) மிகவும் மேலானதா யில்லை] என்றே பொருள் கொள்ளவேண்டும். ''பரதரம் நாஸ்தி'' [மிகவும் மேலானது இல்லை] என்றதால் ஸாமாந்ய ஜீவர்களைக் காட்டிலும், பிரமன், உருத்திரன் முதலான அதி₄காரி புருஷர்களும், நித்யமுக்தர்களும் முற்கூறிய நற்குணங்களில் மேலானவர்களாயிருந்த போதிலும், அவற்றில் அவர்களிலும் மேம்பட்ட என்னைப் போலே மிகவும் மேலானவர்களாயிருப்பவர் எவருமில்லை என்றதாயிற்று. (த₄நஞ்ஜய) நீ எல்லாச் செல்வங்களையும் ஜயித்திருக்கும் த₄நஞ் ஜயனாய், ஜ்ஞாநம், ப₃லம் முதலான கு₃ணங்களில் மற்றுள்ளாரைக் காட்டிலும் மிக்கிருப்பதுபோலே, நான் அக்கு₃ணங்களில் உன்னையும், உன்னிலும் மிக்கிருப்பவர்களான அனைவரையுங் காட்டி லும் மிகவும் மிக்கிருப்பவன் என்று கருத்து. ஆக, ஜ்ஞாநம், ப₃லம் முதலான கல்யாணகு₃ணங்களில் தனக்கு ஒத்தாரும், மிக்காரும் இல்லை என்று கூறப்பட்டதாயிற்று. ''ந தத் ஸமஶ் சாப்₄யதி₄கஶ்ச த்₃ருஶ்யதே'' [ஶ்வே] [அவனை ஒத்தாரும், மிக்காரும் காணப்பட வில்லை] ''ஒத்தார் மிக்காரையிலையாய மாமாயா'' (திருவாய் 2-3-2) என்று உப₄யவேதா₃ந்தங்களும் இவ்வர்த்த₂த்தையே உத்₃கே₄ா ஷித்தன. ஆக, ''பூமிராப:'' [4] என்று தொடங்கி மூன்று ஶ்லோகங் களால்—''ஈஶ்வரனை எதிர்பாராமல் மூலப்ரக்ருதி தானே உலகமாகப் பரிணமிக்கிறது'' என்னும் வாத₃மும் ''புருஷனுடைய ஸந்நிதி₄ மாத்ரத்தாலே மூலப்ரக்ருதி பரிணமிக்கிறது'' என்னும் வாத₃மும் ''ப்ரக்ருதி புருஷர்கள் ஈஶ்வரஶேஷமானவையல்ல'' என்னும்

॥ भा ॥ सर्वमिदं चिदचिद्वस्तुजातं कार्यावस्थं कारणावस्थं च मच्छरीरभूतं सूत्रे मणिगणवदात्मतयाऽवस्थिते मयि प्रोतम्—

---

வாத₃மும் தள்ளப்பட்டன. ''மத்த: பரதரம்'' என்னும் ஶ்லோகார்த்த₂த்தாலே "மும்மூர்த்திகளும் ஒன்று" "மும்மூர்த்திகளும் ஸமர்" "மும்மூர்த்திகளுக்கு மேற்பட்ட வேறொன்றே பரம்பொருள்" "மும்மூர்த்திகளில் பிரமனோ அல்லது சிவனோதான் பரம்பொருள்" "மும்மூர்த்திகள் ஒவ்வொருவர் ஒவ்வொரு கல்பத்தில் பரம்பொருள்" என்னும் வாத₃ங்கள் தள்ளப்பட்டன- ஆக, இவ்வளவால் தானே உலகிற்குக் காரணமாகையாலும், ஶேஷிகையாலும், கல்யாண கு₃ணங்களில் ப்ரதா₄னனாகையாலும் தானே சேதநர்க்கு மோக்ஷத்தில் ப்ராப்யனாய், மோக்ஷோபாயமாயிருக்கத்தக்கவன் என்று அறுதியிடப் பட்டது. *7.

7*. இனி, முன் ஶ்லோகங்களில் தனக்குச் சொன்ன உபாதா₃ந காரணத்வத்தால் ஏற்படும் ஸ்வரூப விகாரஶங்கையைத் தவிர்ப்பதற்காகவும், ப்ரக்ருதி புருஷர்களிருவரும் தன்னைக் காட்டிலும் தனியா யுள்ளனவோ என்னும் ஶங்கையைத் தவிர்ப்பதற்காகவும், சேதன வஸ்துவோடு, அசேதந வஸ்துவோடு வாசியறத் தனக்கு ஶரீரமாய், அத்யந்த பரதந்த்ரமாயிருக்கையலே தானே சேதநர்க்கு உபாயம் என்று உணர்த்துவதற்காகவும் ஸர்வாதா₄ரத்வத்தைச் சொல்லுவதன் மூலம் தானே ஸர்வஶரீரியெனக் காட்டுகிறான் ஶ்லோகத்தின் பிற்பாதியாலே. (ஸர்வம் இத₃ம்) கார்ய நிலையிலும், காரண நிலையிலும் உள்ள இந்த எல்லாச் சேதநாசேதநப்பொருள்களும். (ஸூத்ரே மணிக₃ணா: இவ மயி ப்ரோதம்) உறுதியான நூலில் ரத்தினங்கள் போலே என்னிடம் கோர்க்கப்பட்டிருக்கின்றன, நூலில் கோர்க்கப் பட்ட ரத்தினங்களை மற்ற வஸ்துக்களுக்கும், அவற்றினுள் நுழைந்து அவற்றைத் தாங்கிநிற்கும் நூலைத் தனக்கும் த்₃ருஷ்டாந்தமாகக் கூறுகையாலே, மற்ற சேதநாசேதநப் பொருள்கள் தனக்கு ஶரீர மென்றும், தான் அவற்றுக்கு ஆத்மாவென்றும் காட்டுகிறான். ஒரே நூல் எல்லா மணிகளுக்கும் ஆதா₄ரமாயிருப்பதுபோலே, தான் மற்ற எல்லாப்பொருள்களுக்கும் ஆதா₄ரமாயிருப்பவன் என்றும், நூல் ரத்நங் களினுள் மறைந்திருப்பதுபோலே, தான் மற்ற பொருள்கள் அனைத் திலும் மறைந்திருப்பவன் என்றும், மணிகளுக்கு அதீ₄னமாக நூலின் ஸ்தி₂தியில்லாததுபோலே, ப்ரக்ருதிபுருஷர்களுக்கு அதீ₄நமாகத் தனது ஸ்தி₂தியில்லை யென்றும் ஸூத்ர (நூல்) த்₃ருஷ்டாந்தத்தாலே

आश्रितम्। * यस्य पृथिवी शरीरम् (बृ. ५. ७. ३) * यस्यात्मा शरीरम् (बृ. ५. ७. २२) * एष सर्वभूतान्तरात्माऽपहतपाप्मा दिव्यो देव एको नारायणः (सु. ७) इत्यात्मशरीरभावेनावस्थानं च जगद्ब्रह्मणोरन्तर्यामिब्राह्मणादिषु सिद्धम्॥ ७॥

---

உணர்த்துகிருன். இப்படிப் பல வித₄ங்களில் ஸூத்ர த்₃ருஷ்டாந்தம் ஒத்திருந்தபோதிலும். "அந்தர் ப₃ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி₂த:" [உலகிலுள்ள எல்லாப்பொருள்களிலும் உள்ளும் புறமும் வியாபித்து விளங்குகிருன் நாராயணன்.] என்று உபநிஷத் உத்₃கே₄ாஷிக்கையாலே, நூலைப் போலல்லாமல் இவன் எல்லாப் பொருள்களேயும் வெளியிலும் வியாபித்திருப்பவன் என்பது உணரத் தக்கது. இப்படி எல்லாம் இவனுக்கு ஶரீரமாகவும், இவன் அனைத்துக்கும் ஆத்மாவாகவுமிருப்பவன் என்பதை "யஸ்ய ப்ருதி₂வீ ஶரீரம்" [ப்₃ருஹ 5-7-3] என்று தொடங்கி "யஸ்யாத்மா ஶரீரம்" [5.7-22] என்பதீருக அந்தர்யாமி ப்₃ராஹ்மணத்திலும், ஸுபா₃லோபநிஷத்வாக்யங்களிலும் உபநிஷத் உத்₃கே₄ாஷித்தது. ஸுபா₃லோபநிஷத்து "ஏஷ ஸர்வ பூ₄தாந்தராத்மா அபஹதபாப்மா தி₃வ்யோ தே₃வ ஏகோ நாராயண:" [இவனே எல்லா பூ₄தங்களுக்கும் அந்தராத்மாவாய், தாழ்வுகளற்றவனுய், அப்ராக்ருதனுய் ஒப்பற்றவனுயிருக்கும் தே₃வனுன நாராயணன்.] என்று இவனே நாராயணன் என்றும் காட்டி, "ஶரணம் க₃திர் நாராயண:" என்று இவனே நிருபாதி₄க ப்ராப்யனுகவும், ப்ராபகனுகவுமிருப்பவன் என்றும் காட்டிற்று என்பதும் இங்கு உணரத்தக்கது. ஆக இதுவரையில் எல்லாச் சேதநாசேதநப் பொருள்களுக்கும் காரணமாகவும், ஶேஷியாகவும், ஆத்மாவாகவும், சேதநரைக்காட்டிலும் கு₃ணங்களில் மேலானவனுகவுமிருக்கையாலே சேதநர்க்கு இயற்கையாகவே உபாயோபேயங்களாயிருப்பவன் தானே என்று சொல்லிற்றுயிற்று. 7*.

8-11. உலகில் மற்ற பொருள்களும் ப்ராப்யங்களாகவும், ப்ராபகங்களாகவும் காணப்படுகையில், நானே ப்ராப்யப்ராபகங்களாயிருப்பவன் என்பது எப்படி? என்னும் ஶங்கையெழ, ஒவ்வொரு பதா₃ர்த்த₂த்திலும் உள்ள ப்ராப்யத்வ ப்ராபகத்வங்களுக்கு உறுப்பான சிறப்புகள் உண்மையில் தன்னதீ₄னமே என்பதை அவற்ருேடு ஸாமாநாதி₄கரண்ய ப்ரயோக₃ம் செய்து காட்டுகிருன் இனி நாலு ஶ்லோகங்களாலே. அப்பு [நீர்] முதலான எல்லாப் பொருள்களும் முற்

॥भा॥ अतस्सर्वस्य परमपुरुषशरीरत्वेनात्मभूतपरमपुरुषप्रकारत्वात्सर्वप्रकारः परमपुरुष एवावस्थित इति सर्वैश्शब्दैस्तस्यैवाभिधानमिति तत्तत्सामानाधिकरण्येनाह—

रसोऽहमप्सु कौन्तेय प्रभाऽस्मि शशिसूर्ययोः।
प्रणवस्सर्ववेदेषु शब्दः खे पौरुषं नृषु॥ ७॥

8. ரஸோऽஹமப்ஸு கௌந்தேய ப்ரப₄ாऽஸ்மி ஶஶிஸூர்யயோ: ।
ப்ரணவஸ் ஸர்வவேதே₃ஷு ஶப்₃த₃: கே₂ பௌருஷம் ந்ருஷு ॥

8. எல்லாநா ஞுதலிஞு லப்பி லினிமையுநான்
சொல்லார் மதியிரவிச் சோதியுநான்—நல்லார்க
ளோங்காரம் வேதத் துயர்விண் மிசைச்சத்தம்
பாங்குநர ரிற்பௌ ருடம்.

கூறியபடி பரமபுருஷஶரீரமாயிருந்துகொண்டு, ஆத்மாவான அவனுக்கு ப்ரகாரமாயிருக்கையால், அந்த அப்பு முதலான பொருள்களை ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும் ஆக்குவதற்கு உறுப்பாக அவற்றிலுள்ள ரஸம் முதலான சிறப்புகளும், அவனுக்கு ப்ரகாரமான அப்பு முதலானவற்றுக்கு ப்ரகாரமாயிருக்கையால் அவனுக்கு ப்ரகாரமாயிருக்கின்றன. இப்படி ரஸம் முதலான த₄ர்மங்களோடு, அப்பு முதலான த₄ர்மிகளோடு வாசியற எல்லாவற்றையும் ப்ரகாரமாகக் கொண்டவனைப் பரமபுருஷன் ஒருவனேயிருப்பதால், அப்பு முதலான த₄ர்மிவாசக ஶப்₃த₃ங்களைப்போலே ரஸம் முதலான த₄ர்மவாசகமான ஶப்₃த₃ங்களும் அவனையே முக்₂யவ்ருத்தியினாலே அறிவிக்கின்றன என்பதை ரஸம் முதலான ஶப்₃த₃ங்களைப் பரமபுருஷனை தன்னைச் சொல்லும் அஹம் ஶப்₃த₃த்தோடு ஒரே வேற்றுமையில் படிப்பதன்மூலம் அறிவிக்கிறான் இந்த ஶ்லோகங்களில். ''பூமிராப:'' என்னும் நாலாம் ஶ்லோகத்திலிருந்து தொடங்கி மூன்றரை ஶ்லோகங்களாலே பே₄த₃ஶ்ருதியின் பொருள் விளக்கப்பட்டது. ''மயி ஸர்வம்'' என்னும் அரை ஶ்லோகத்தாலே க₄டகஶ்ருதியின் பொருள் விளக்கப் பட்டது. இவ்விரண்டு ஶ்ருதிகளாலும் நிர்வஹிக்கப்படும் அபே₄த₃ ஶ்ருதியின் பொருள் இந்த நாலு ஶ்லோகங்களாலே விளக்கப்படுகிறது.

**கௌந்தேய!**—குந்தீபுத்திரனே! **அஹம்**—நான், **அப்ஸு**—நீரில், **ரஸ: (அஸ்மி)**—நற்சுவையாயிருக்கிறேன். **ஶஶிஸூர்ய யோ:**—சந்திரஸூர்யர்களின், **ப்ரப₄ா அஸ்மி**—ஒளியாயிருக்கிறேன். **ஸர்வவேதே₃ஷு**—எல்லா வேத₃ங்களிலும், **ப்ரணவ: (அஸ்மி)** — ஓங்காரமாயிருக்கிறேன். **கே₂** — ஆகாஶத்தில், **ஶப்₃த₃: (அஸ்மி)**—ஶப்₃த₃கு₃ணமாயிருக்கிறேன். **ந்ருஷு**—ஆண்களின், **பௌருஷம் (அஸ்மி)**—புருஷத்தன்மையாயிருக்கிறேன்.

---

**எல்லாம் நான் ஆதலினால்**—எல்லாப் பொருள்களும் நானேயாயிருப்பதால், **அப்பில் இனிமையும் நான்**—நீரில் நற்சுவையாயிருப்பவன் நானே. **சொல் ஆர் மதி இரவி சோதியும் நான்**—அனைவராலும் புகழப்படும் சந்திரனிடமும், ஸூர்யனிடமும் உள்ள ஒளியும் நானே. **வேதத்து**—வேதத்தினுள், **நல்லார்கள் ஓங்காரம்**—நல்லவர்கள் விரும்பும் ஓங்காரம் நானே. **உயர் விண்மிசை சத்தம்**—உயர்ந்திருக்கும் ஆகாயத்தில் ஶப்₃த₃கு₃ணமும் நானே. **பாங்கு நரரில் பௌருடம்** — ஆண்மையுடைய ஆண்களின் ஆண்மை நானே.

---

8, (அப்ஸு ரஸ: அஹம்) நீரை ஜீவர்களுக்கு ப்ராப்யமாக்கும் கு₃ணங்களில் ப்ரத₄ானமானதான 'ரஸம்' (சுவை) என்னும் கு₃ணம் நானே. நீர் எனக்கு ப்ரகாரமாகையால், அதற்கு ப்ரகாரமான ரஸகு₃ணமும் எனக்கு ப்ரகாரமாய் என்னதீ₄னமாயிருக்கிறது என்றபடி. நீருக்குள்ள சிறப்புக் குணமான சுவை நான் நீருக்கிட்ட பிச்சை என்று கருத்து. ரஸத்தைக்கருதி நீரை ப்ராப்யமாகக்கொள்வது மயக்கம். அந்த ரஸத்தை அதற்கு அளித்த ஸர்வரஸனை என்னை ப்ராப்யமாகக் கொள்வதே தெளிவு என்பது திரண்ட பொருள். மேலே எடுக்கப்படும் ப்ராப்ய ப்ராபகப் பொருள்களிலும் இப்படியே கொள்வது. ''ரஸபூ₄தே மயி ஆப: ப்ரோதா:'' [ரஸமாயிருக்கும் என்னிடம் நீர் கோர்க்கப்பட்டிருக்கிறது] என்று ஶங்கரர் பா₄ஷ்யமிட்டார். ''ரஸம் முதலான த₄ர்மத்தோடு கூடிய என்னிடத்தில் நீர் முதலானவை கோர்க்கப்பட்டுள்ளன'' என்று மற்றும் சிலர் வ்யாக்யானம் செய்தனர். நீர் ரஸத்திற்கு ஆத₄ாரமாயிருக்க, ரஸத்தை நீருக்கு ஆத₄ாரமாக்குகிறபடியால் இந்த உரைகள் பொருந்தமாட்டா. ஆகையால்

எனது ஶரீரமாய், ப்ரகாரமாயிருக்கும் நீரின் ப்ரகாரமான ரஸகு3ணம் எனக்கு ப்ரகாரமாகையாலே அது என்னதீ4னமே என்று பொருள் கொள்வதே பொருத்தம். உலகில் ரஸம் முதலான ஶப்3த3ங்கள் அந்தந்த கு3ணங்களை மாத்திரம் குறிக்கும் நிஷ்கர்ஷக ஶப்3த3ங்களாக வழங்கப்பட்டபோதிலும், இங்கு 'ரஸம் நானே' என்று ஒரே வேற்று மையில் படிக்கையால், அவை நிஷ்கர்ஷக ஶப்3த3ங்களல்ல; ப்ரகார ப்ரகாரிப4ாவத்தையிட்டுப் பரமாத்ம பர்யந்தம் குறிப்பவை என்று கொள்ளவேண்டும். பூ4மி முதலான த்3ரவ்யங்களின் ப்ரகாரமான காடி2ந்யம் முதலானவை பரமாத்மாவுக்கே ப்ரகாரமாகின்றன என் பதை "காடி2ந்யவாந் யோ பி3ப4ர்த்தி தஸ்மை பூ4ம்யாத்மநே நம:" [வி-பு 1-14-18] முதலானவிடங்களில் ஸ்ரீபராஶரரும் காட்டினர். இங்கு நீர் முதலான த்3ரவ்யங்களை யெடுத்து அவற்றிலுள்ள ப்ரத4ான கு3ணங்களான ரஸம் முதலானவை நானே என்று விதி4ப்பதற்குக் கருத்து என்னென்னில்; ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும் உலகில் காணப்படும் த்3ரவ்யங்களை எடுத்து, அவற்றின் ப்ராப்ய ப்ராபகத் வத்துக்கு உறுப்பான ப்ரத4ாந கு3ணங்கள் என்னதீ4னமேயாகை யால், நிருபாதி4க (இயற்கையான) ப்ராப்ய ப்ராபகத்வம் என்னி டமேயுள்ளது என்று விதி4ப்பதே இங்கு எம்பெருமானின் திருவுள்ளம். ரஸகு3ணம் பூ4மியிலுமிருக்க, நீரில் ரூபம் முதலான மற்ற குணங் களுமிருக்க, நீரின் கு3ணமாக ரஸத்தை எடுத்தது — முந்தின தத்வமான தேஜஸ்ஸில் மறைந்திருந்து, நீரிலேயே வெளிப்பட்ட தனிக்குணமாகையாலும், ரஸத்தையிட்டே நீருக்கு ப்ராப்யத்வம் காண்கையாலுமே. "ஆத்தக3ந்த4ா தத3ா பூ4மி: ப்ரளயத்வாய கல்பதே" [வி-பு 6-4-14] [க3ந்த4த்தை இழந்தவுடன் பூ4மி நீரில் லயத்தை அடைகிறது] என்று பூ4மி, நீர் முதலான தத்வங்கள் (முறையே) அவற்றின் தனிக்குணமான க3ந்த4ம், ரஸம் முதலானவற்றை இழந்தால் முந்திய தத்வங்களில் லயமடைந்துவிடும் என்று ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் கூறுகையாலே நீர் முதலானவற்றில் ரஸம் முதலான வற்றின் ப்ராத4ாந்யம் விளங்குகிறது. இவ்வண்ணமே மேலே ஒவ் வொரு த்3ரவ்யத்திற்கு ஒவ்வொரு கு3ணத்தை எடுத்து 'அது நானே' என்று விதி4க்குமிடங்களிலும் கண்டுகொள்வது. அடுத்த ஶ்லோகத் தில் "புண்யோ க3ந்த4: ப்ருதி2வ்யாம்" என்று பூ4மியின் கு3ணமான மணத்தை 'நறுமணம்' என்று விஶேஷித்திருப்பதையொட்டி, இங்கும் ப்ராப்யமான நற்சுவையே ரஸம் எனப்படுவதாகக்கொள்ளவேண்டும். (ஶஶிஸூர்யயோ: ப்ரப4ா அஸ்மி) சந்திரனுடைய தண்மைமிக்க ஒளியும், ஸூர்யனுடைய வெம்மைமிக்க ஒளியும் நானே. இவ் வொளிகளினாலேயே அவை உலகிற்கு உபகரிக்கையாலும்,

पुण्यो गन्धः पृथिव्यां च तेजश्चास्मि विभावसौ।
जीवनं सर्वभूतेषु तपश्चास्मि तपस्विषु ॥ ९ ॥

9. புண்யோ க$_3$ந்த$_4$: ப்ருதி$_2$வ்யாம் ச தேஜஶ்சாஸ்மி விப$_4$ாவஸௌ
ஜீவநம் ஸர்வபூ$_4$தேஷு தபஶ்சாஸ்மி தபஸ்விஷு ||

ப்ருதி$_2$வ்யாம் ச—பூமியிலும், புண்ய: க$_3$ந்த$_4$: (அஸ்மி)—நறுமணமாயிருக்கிறேன். விப$_4$ாவஸௌ ச — அக்$_3$நியிலும், தேஜ: அஸ்மி—ஒளியாயிருக்கிறேன். ஸர்வபூ$_4$தேஷு—எல்லா பூ$_4$தங்களிலும், ஜீவநம்(அஸ்மி)—மூச்சுக்காற்ருயிருக்கிறேன். தபஸ்விஷு—தவம்புரிவோரிடம், தப: ச அஸ்மி—தவமாகவுமிருக்கிறேன்.

---

அதனாலேயே அவற்றை உலகோர் ப்ராப்யங்களாக மதிக்கையாலும் அவ்வொளிகள் சந்த்$_3$ரஸூர்யர்களுக்கு ப்ரத$_4$ாந குணங்களாகின்றன. (ஸர்வவேதே$_3$ஷு ப்ரணவ:) எல்லா வேத$_3$ங்களுக்கும் மூலமாயிருக்கையாலே வேத$_3$ங்களில் ப்ரத$_4$ாநமான ப்ரணவம் நானே. ப்ரணவத்துக்குள்ள ப்ராப்யத்வ ப்ராபகத்வங்கள் என்னதீ$_4$நமே என்றபடி. (ஶப்$_3$த$_3$: கே$_2$) ஆகாயத்தின் தனிக் குணமாய், அதற்கு ப்ராப்யத்வத்தை அளிக்கையாலே ப்ரத$_4$ாநமான ஶப்$_3$த$_3$கு$_3$ணம் என்னதீ$_4$நமே என்றபடி. (ந்ருஷு பௌருஷம்) நரர்களிடத்திலுள்ள ப்ராப்யப்ராபகத்வஹேதுவான பௌருஷம் நானே. ந்ருஶப்$_3$த$_3$ம் ஸர்வ ஜீவர்களைக் குறிப்பதாகவும், ஆண்களை மாத்திரம் குறிப்பதாகவும் இருவிதமாகப் பொருள்கொள்ளலாம் ஸர்வ ஜீவர்களையும் குறிக்கும்போது, பௌருஷம் என்று கர்த்ருத்வஶக்தியாகிற ஸாமர்த்$_2$யத்தைச் சொல்லுகிறது. அதனாலேயன்றோ கர்த்தாவான ஆத்மாவுக்கு கர்த்ருத்வத்துக்கு உறுப்பான மற்ற காரகங்களைக் காட்டிலும் ப்ராத$_4$ாந்யம் ஏற்படுகிறது. ந்ருஶப்$_3$த$_3$ம் ஆண்களை மாத்திரம் குறிக்கும்போது, 'பௌருஷம்' என்று ஒருவனை ஆண்மகன் என்று எடுத்துக்காட்டும் ஆண்தன்மையைக் குறிக்கிறது. ஸந்ததிவ்ருத்$_3$தி$_4$க்குக் காரணமான வீர்யத்தைக் குறிக்கிறது என்றுமாம். ஸ்த்ரீ நபும்ஸகர்களைக் காட்டிலும் ஆண்களை வேறுபடுத்திக்காட்டும் ப$_3$லம், ஸ்வாதந்த்ர்யம், வீர்யம், ஸ்தி$_2$ரத்வம் முதலான கு$_3$ணங்களைக் குறிக்கிறது என்றுமாம். இவையெல்லாம் புருஷர்களுக்கு ப்ராப்யப்ராபகத்வத்தையளிக்கும் ப்ரத$_4$ான கு$_3$ணங்கள் என்பது தெளிவு. 8.

9. இப்புவிநற் கந்த மெரியிலொளி யெப்பொருட்குங்
கைப்படுயிர் சத்தை கருதுங்கா—லொப்பிலா
நற்றவத்தோர் மாட்டு நலஞ்சிறந்த நற்றவநான்
பற்றலர்கள் கோளரியே பார்.

**பற்றலர்கள் கோளரியே** — எதிரிகளை அடக்கும் சிங்கம் போன்றவனே! **இப்புவி நல் கந்தம்**-இந்த பூ₄மியில் நல்லமணம் நானே. **எரியில் ஒளி**—அக்நியின் ஒளி நானே. **கருதுங்கால்**—ஆராய்ந்து பார்த்தால், **எப்பொருட்கும் உயிர் கைப்படு சத்தை**-எல்லா ஜீவராசிகளிடமுள்ள ஸத்தை நானே. **ஒப்பு இலா நல் தவத்தோர் மாட்டு நலம் சிறந்த நல் தவம் நான்**—ஒப்பில்லாத நல்ல தவத்தையுடையவர்களிடமுள்ள சிறப்பு மிக்க நல்ல தவமும் நானே. **பார்**—இதைக் காண்பாயாக.

---

9. (*புண்யோ க₃ந்த₄: ப்ருதி₂வ்யாம் ச*) பூ₄மியிலுள்ள நறுமணம் நானே. நறுமணமே ஸத்வகு₃ணத்தை வளரச்செய்வதன் மூலம் ப்ராபகமாகிறது; ஸுக₂த்திற்குக் காரணமாவதன் மூலம் ப்ராப்யமாகவும் ஆகிறது. துர்நாற்றம் ப்ராப்யமாகவோ, ப்ராபகமாகவோ கருதப்படாமையால், ப்ராப்ய ப்ராபகமாகக் கருதப்படும் நறுமணத்தை எடுக்கிருன். ''ரஸ:' 'ஶப்₃த₃:' என்று பொதுவாக எடுக்குமிடங்களிலும், இவ்விடத்தையொட்டி — அவற்றில் ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் கருதப்படும் நல்ல அம்ஶங்களே எடுக்கப்படுவதாகக் கொள்ளவேண்டும். புண்ய க₃ந்த₄ம் என்று சேதநரை நல்வழிக்கு அழைத்துச் செல்லும் துளஸீமணம் முதலியவற்றைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். (*தேஜஶ் சாஸ்மி விப₄ாவஸௌ*) அக்₃நியை ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும் ஆக்கும் எரிக்கும் ஶக்தியாகிற தேஜஸ் நானிட்ட பிச்சையே. (*ஸர்வபூ₄தேஷு ஜீவநம்*) ஶரீரமுடையவர்களான பிரமன் முதலாகப் புல்லெறும்பீருகவுள்ள ஸர்வஜீவர்களின் ஜீவனம் நானிட்ட பிச்சையே. ஜீவனமாவது – மூச்சு விடுவது. ப்ராணன் நிலைநிற்பதற்குக் காரணம் என்றும் பொருள் கொள்ளலாம். 'ஸத்தை' என்று வெண்பாவில் கொள்ளப்பட்டது. அன்றிக்கே, பிறர் உபஜீவிப்பது ஜீவநமாய், அந்த ஜீவர்களிடம் உள்ள – பிறர்க்கு ப்ராப்ய ப்ராபகமாயிருக்கும் ஆகாரத்தைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். (*தபஸ்விஷு தபஶ்ச அஸ்மி*) சிறந்த தவம் புரிபவர்களிடம் அவரவர்களுடைய இஷ்ட ஸாத₄னமாகக் காணப்படும் அத்தவமும் என்னதீ₄னமே. 9.

बीजं मां सर्वभूतानां विद्धि पार्थ सनातनम्।
बुद्धिर्बुद्धिमतामस्मि तेजस्तेजस्विनामहम्॥ १० ॥

10. பீ$_3$ஜம் மாம் ஸர்வபூ$_4$தாநாம் வித்$_3$தி$_4$ பார்த்த$_2$ ஸநாதநம்।
பு$_3$த்$_3$தி$_4$ர் பு$_3$த்$_3$தி$_4$மதாமஸ்மி தேஜஸ்தேஜஸ்விநாமஹம் ||

**பார்த்த$_2$**—குந்தீ புத்திரனே! **ஸர்வபூ$_4$தாநாம்**—பரிணமிக்கும் எல்லாப் பொருள்களிலும், **ஸநாதநம் பீ$_3$ஜம் மாம் வித்$_3$தி$_4$** — அநாதி$_3$ஸித்$_3$த$_4$மாயிருக்கும் பரிணாமஸாமர்த்$_2$யமாக என்னை அறிவாய். **அஹம்**—நான், **பு$_3$த்$_3$தி$_4$மதாம்**—அறிவுடையவர்களுடைய, **பு$_3$த்$_3$தி$_4$: அஸ்மி**—அறிவாக இருக்கிறேன்; **தேஜஸ்விநாம்**—தேஜஸ்ஸை உடையவர்களுடைய, **தேஜ: (அஸ்மி)**—தேஜஸ்ஸாகவுமிருக்கிறேன்.

---

**10. எப்பொருட்கும் வித்தா நிலைநின்ற வென்னைநினை**
**யப்புருடர் புத்தியுநா னாகின்றே—னொப்பில்**
**பிறரொளியை மாய்க்குமப் பேரொளிநா னாவன்**
**செறிதிணிதோட் பார்த்தா தெளி.**

**செறி திணி தோள் பார்த்தா**—திரண்டு உருண்ட தோள்களையுடைய குந்தீ புத்திரனே! **நிலைநின்ற என்னை**—நித்யனான என்னை, **எப்பொருட்கும் வித்தா நினை**—எல்லாப் பொருள்களிலுள்ள உபாதா$_3$நஶக்தியாக நினைப்பாயாக. **அப்புருடர்** — அறிவாளிகளான ஜீவர்களின், **புத்தியும்**—அறிவாகவும், **நான் ஆகின்றேன்**—நானே ஆகின்றேன். **பிறர் ஒளியை மாய்க்கும்**—மற்றவர்களுடைய தேஜஸ்ஸை இல்லை செய்யும், **அப்புருடர் ஒப்பில் அப்பேரொளி நான் ஆவன்**—ஒப்பில்லாத தேஜஸ்ஸை உடையவர்களுடைய தேஜஸ்ஸா நானேயாகிறேன். **தெளி**—இதை அறிவாய்.

---

10. (ஸர்வபூ$_4$தாநாம் ஸநாதநம் பீ$_3$ஜம் மாம் வித்$_3$தி$_4$) பரிணாமமடையும் எல்லா த்$_3$ரவ்யங்களிலும் அநாதி$_3$காலமாகவுள்ளதான பரிணமிக்கும் திறமை நானென்றே அறி. தயிர், வெண்ணெ, நெய் முதலியவையாகப் பரிணமிக்கும் பால் முதலானவற்றிலுள்ள அத்திறமை, நானிட்ட பிச்சையே என்று அறிவாயாக. பால் முத

बलं बलवतां चाहं कामरागविवर्जितम् ।
धर्माविरुद्धो भूतेषु कामोऽस्मि भरतर्षभ ॥ ११ ॥

11. ப₃லம் ப₃லவதாம் சாஹம் காமராக₃விவர்ஜிதம் ।
த₄ர்மாவிருத்₃தே₄ா பூ₄தேஷு காமோऽஸ்மி ப₄ரதர்ஷப₄ ॥

ப₄ரதர்ஷப₄—ப₄ரதகுலத்துதித்தவர்களில் சிறந்தவனே! அஹம்—நான், ப₃லவதாம்—ப₃லமுடையவர்களுடைய, காமராக₃விவர்ஜிதம் ப₃லம் (அஸ்மி)—காம்யங்களில் ஆசையற்ற ப₃லமாகவும் இருக்கிறேன். பூ₄தேஷு—ஜீவராஶிகளிடம், த₄ர்மாவிருத்₃த₄:—அறத்திற்கு முரணல்லாத, காம: அஸ்மி—காமமாயிருக்கிறேன்.

---

11. திண்மையினோர் திண்மையுநான் ரீதிலாத் தேகபெறும்
ஒண்மையறு காமரா கம்மொழிந்த—வுண்மை
யறஞ்செறியுங் காமநா னுடவர்க ளேறே
சிறந்ததெலா நானுத் தெளி.

---

லானவை தயிர் முதலானவையாகப் பரிணமித்து ப்ராப்யமாகவும், தே₃ஹப₃லம் முதலானவற்றுக்கு ப்ராபகமாகவும் ஆவது என்னாலேயே என்று கருத்து. "ஸர்வபூ₄தாநாம் பீ₃ஜம்" என்று-பரிணாமித்₃ரவ்யங்களின் ப்ராப்யப்ராபகத்வங்களுக்கு உறுப்பான உபாத₃ாநத்வமாகிற தன்மை சொல்லப்படுகிறது. அன்றிக்கே, எல்லா அசேதந தத்வங்களுக்கும் காரணமான மூலப்ரக்ருதியோ, அந்தந்தக் கார்யப் பொருள்களை உண்டாக்கும் காரணப் பொருள்களோ கூறப்படுவதாகவும் கொள்ளலாமாயினும், ப்ராப்யப்ராபகத்வத்துக்கு உறுப்பான ப்ரத₄ாநத₄ர்மங்கள் தன்னதீ₄னமென்று சொல்லும் ப்ரகரணமாகையாலே, முந்திய பொருளே சிறந்தது. (பு₃த்₃தி₄மதாம் பு₃த்₃தி₄: அஸ்மி) அறிவாளிகளிடம்—அவர்களுக்கும், பிறர்க்கும் ப்ராப்யமாகவும், இஷ்டப்ராபகமாகவும் காணப்படும் அறிவும் என்னதீ₄னமே. பு₃த்₃தி₄ யென்று ஒவ்வொரு விஷயத்திலுள்ள உறுதியையோ, அல்லது ஒவ்வொரு விஷயத்தைப்பற்றிய அறிவு மாத்திரத்தையோ குறிக்கிறது. (தேஜஸ்விநாம் தேஜ: அஹமஸ்மி) ப்ரதாபமுடையவர்களிடம்—ப்ராப்யப்ராபகத்வத்துக்கு உறுப்பாகக் காணப்படும் ப்ரதாபமும் நானே; அதாவது, அவர்களுடைய அநபி₄ப₄வநீயத்வம் (எவராலும் வெல்ல முடியாமலிருக்கும் தன்மை) அல்லது பராபி₄ப₄வநஸாமர்த்₂யம் (பிறரை வெற்றிகொள்ளும் தன்மை) என்னதீ₄னமே என்றபடி. 10.

**ஆடவர்கள் ஏறே**—ஆண்களில் சிறந்தவனே! **தீது இலா தேசு பெறும்** — தீமையில்லாத தேஜஸ்ஸை உடையவர்களாய், **ஒண்மை அறு காமராகம் ஒழிந்த** — சிறப்பற்ற காமராக₃ங்கள் நீங்கப்பெற்றவர்களான, **திண்மையினோர்**—ப₃லமுடையவர்களின், **திண்மையும் நான்**—ப₃லமும் நானே. **உண்மை**—உயிர்களிடத்து, **அறம் செறியும் காமம் நான்**—த₄ர்மத்தோடு பொருந்திய காமம் நானே. **சிறந்தது எ(ல்)லாம்**—(இவ்வுலகில் ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும் காணப்படும்) சிறப்புகள் எல்லாம், **நானு தெளி**—நான் என்றே உணர்வாயாக.

---

11. (ப₃லவதாம் காமராக₃விவர்ஜிதம் ப₃லம் ச அஹம் அஸ்மி) ப₃லஶாலிகளிடம் காமராக₃ ஸம்ப₃ந்த₄மில்லாத ப₃லமும் நானே. காமமாவது—தனக்கு இன்பத்தை விரும்புவதின் உச்சநிலை. ராக₃மாவது—அதன் முதற்படி. அன்றிக்கே, காமஶப்₃த₃ம் ''காம்யந்த இதி காமா: '' என்னும் வ்யுத்பத்தியாலே விரும்பப்படும் விஷயங்களைக் குறித்து, 'காமராக₃ம்' என்று அவற்றில் விருப்பத்தைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். காமராக₃த்தோடு கூடிய ப₃லம் பிறரை வருத்துவதற்கும் காரணமாகி, ப்ராப்யமாகாமலும், இஷ்டப்ராபகமாகாமலும் போகக்கூடுமாகையால், அப்படி ஆகாமைக்காக ''காமராக₃மற்ற ப₃லம்'' என்று விஶேஷிக்கிறுன். (பூ₄தேஷு த₄ர்மாவிருத்₃த₄: காம: அஸ்மி) தே₃வர் மனிதர் முதலான ஶரீரங்களில் வாழும் ஜீவர்களுடைய—அறத்துக்குப் புறம்பல்லாத காமமும் நானேயாகிறேன். காமமாகையாலே தானே ப்ராப்யமாய், த₄ர்மத்திற்குப் புறம்பல்லாததாகையாலே நல்ல ஸந்ததி வ்ருத்₃தி₄யைச் செய்விப்பதின்மூலம் இஷ்ட ஸாத₄னமாகவுமிருக்கும் காமமும் என்னதீ₄னமே என்றபடி. ''வம்புலாம் கூந்தல் மனைவியைத் துறந்து பிறர்பொருள் தாரமென்றிவற்றை, நம்பினுர் இறந்தால் நமன்தமர் பற்றி எற்றிவைத்து எரியெழுகின்ற, செம்பினுலியன்ற பாவையைப் பாவீ தழுவென மொழிவதற்கு அஞ்சி'' [பெரியதிருமொழி 1-6-4] என்கிறபடியே, அறத்துக்குப் புறம்பான காமம் நரகத்தை விளைத்துப் பெருந் துன்பமளிப்பதாகையால், ப்ராப்யமும், இஷ்டப்ராபகமும் அல்லாத அதைத் தவிர்ப்பதற்காக ''த₄ர்மாவிருத்₃த₄:'' என்று விஶேஷிக்கிறுன். ''கௌந்தேய'' ''பார்த்த₂'' ''ப₄ரதர்ஷப₄'' என்று அர்ஜுனனைக் கூப்பிடுவதன் மூலம், பரமஞானியான குந்தியின் பிள்ளையாய், ப₄ரதகுலத்துதித்தவனுய், மேல்விழுந்த ஊர்வஶியின் காமத்தையும் உதறியவனுன

॥भा॥ एते सर्वे विलक्षणा भावा मत्त एवोत्पन्नाः, मच्छेष-भूताः, मच्छरीरतया मय्येवावस्थिताः ; अतस्तत्तत्प्रकारोऽहमेवावस्थितः ॥ ८, ९, १०, ११ ॥

ये चैव सात्त्विका भावा राजसास्तामसाश्च ये।
मत्त एवेति तान्विद्धि न त्वहं तेषु ते मयि॥ १२॥

12. யே சைவ ஸாத்விகா ப$_4$ாவா ராஜஸாஸ் தாமஸாஶ்ச யே ।
மத்த ஏவேதி தாந் வித்$_3$தி$_4$ ந த்வஹம் தேஷு தே மயி ॥

---

12. இன்ன குணமூன்றி லேய்ந்த பொருளனைத்து
மன்னேயென் றன்மையினுல் வாய்ந்ததென-வுன்னுகநீ
யாங்கவைவயென் பாலே யமைந்திடினும் யானவற்றி
னீங்கலுற நிற்ப னிகழ்ந்து.

---

உன்னிடம் — ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் உள்ள பௌருஷம், தேஜஸ், தபஸ், பு$_3$த்$_3$தி$_4$, த$_4$ர்மாவிருத்$_3$த$_4$காமம், காமராக$_3$மற்ற ப$_3$லம் முதலானவையும் என்னதீ$_4$னமே என்று உணர்த்துகிருன்.

இங்கு சேதநாசேதநங்கள் அனைத்திலுமுள்ள நன்மைகளைத் தன்னேடு ஒரே வேற்றுமையில் படிப்பது—''அரசனே இந்த தே$_3$ஶம்'' என்பதுபோலே அமுக்$_2$யப்ரயோக$_3$மாய், பரமாத்மாவின் ஸாமர்த்$_2$யத்தால் இந்நன்மைகள் விளைந்தவை என்று காட்டுவதுமாத்திரமல்ல: அனைத்தும் யதே$_2$ாசிதம் தன்னிடமிருந்தே உண்டாகின்றவையாய், தனக்கு ஶேஷபூ$_4$தமாய், தனக்கு ஶரீரமாகத் தன்னிடமே பிரிக்க முடியாதபடியிருப்பவையாய்த் தனக்கு ப்ரகாரமாயிருப்பவை என்று காட்டும் முக்$_2$யப்ரயோக$_3$மேயாகும். ஆக, ''நவிலக்ஷணத்வாத$_3$ஸ்ய'' [ப்$_3$ரஹ்மஸூத்ரம் 2-1-4] என்று தொடங்கும் விலக்ஷணத்வாதி$_4$கரணப்பொருள் இந்த ஶ்லோகங்களாலே உணர்த்தப்பட்டது ; ஆக. உலகில் ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும் காணப்படும் பொருள்களில் அத்தன்மைகளுக்கு உறுப்பாயுள்ள பெருமைகளெல்லாம் ஸர்வப்ரகாரியான பரமாத்மாவினுல் ஏற்படுபவையாகையால், நிருபாதி$_4$கப்ராப்யப்ராபகனுயிருப்பவன் அவனே என்றதாயிற்று. 8, 9, 10, 11.

**யே ச ஏவ ஸாத்விகா: ப₄ாவா:**—ஸத்வகு₃ணமிகுதியை யுடையவையாகவே (உலகில்) யாவை சில பொருள்கள் உள்ளனவோ, **யே ச (ஏவ) ராஜஸா: தாமஸா:**—ரஜோகு₃ண மிகுதியையோ, தமோகு₃ணமிகுதியையோ உடையவை யாகவே யாவை சில பொருள்கள் உள்ளனவோ, **தாந் மத்த ஏவ இதி**—அவற்றை என்னிடமிருந்தே உண்டானவை என்றும், **தே மயி இதி**—அவை என்னிடமே உள்ளன என் றும், **வித்₃தி₄**—அறிவாய். **அஹம் து**—நானோவெனில், **தேஷு ந**—அவற்றையொட்டி இல்லை.

---

**இன்ன** — இவைபோலே, **குணம் மூன்றில் ஏய்ந்த பொருள் அனைத்தும்**—ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக் குணங்களில் ஒவ்வொன்றை மிகுதியாகக்கொண்ட பொருள் கள் அனைத்தும், **அன்னே**—முற்கூறிய பொருள்களைப் போலே, **என் தன்மையினால் வாய்ந்தது என**—என் ஶக்தியி னால் படைக்கப்பட்டவை என்றும், **ஆங்கு அவை**—அத் தகைய அப்பொருள்கள், **என்பாலே அமைந்திடினும்**—என் னிடமே பிரிக்கமுடியாதபடி இருந்தபோதிலும், **யான்**—நான், **அவற்றில் நிகழ்ந்து**—அவற்றில் வியாபித்து, **நீங்கல் உற நிற்பன் என**—அவற்றோடு ஒட்டற்றும் நிற்பேன் என்றும், **நீ உன்னுக**—நீ அறிவாய்.

---

12. சென்ற நாலு ஶ்லோகங்களில் பல சேதநாசேதநப் பொருள் களை எடுத்து, ப்ராப்யத்வத்திற்கும். ப்ராபகத்வத்திற்கும் உறுப்பாக அவற்றிலுள்ள சிறந்த பெருமைகளெல்லாம் தன்னதீ₄னமே என்று காட்டினான். அப்படியானால், மற்ற பல பொருள்களில் ஸாத்விக ராஜஸதாமஸ புருஷர்களுக்கு ப்ராப்யமாகவும், இஷ்ட ஸாத₄னமாகவு முள்ள மற்றும் பல தன்மைகள் இவனதீ₄னமல்லவோ? என்றும், இத்தன்மைகளையுடைய பொருள்கள் இவனதீ₄னமல்லவோ? என்றும், அவை இவனதீ₄னமாயிருப்பதுபோலே இவன் அவையதீ₄னனாயிருக் கிறானோ? என்றும் ஐயம் ஏற்படக்கூடும். இதைத் தவிர்ப்பதற்காக, உலகில், ஸத்வரஜஸ்தமோ கு₃ணங்களில் ஒவ்வொன்றை மிகுதி யாகவுடைய எல்லாப்பொருள்களும், அவற்றை அவ்வக்குணங்களை மிகுதியாவுகைடயார்க்கு ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும் ஆக்கும்

॥भा॥ किं विशिष्याभिधीयते; सात्त्विका राजसास्तामसाश्च जगति देहत्वेनेन्द्रियत्वेन भोग्यत्वेन तत्तद्धेतुत्वेन चावस्थिता ये भावाः, तान् सर्वान् मत्त एवोत्पन्नान् विद्धि; ते मच्छरीरतया मय्येवावस्थिता

---

எல்லாத்தன்மைகளும் தன்னதீனமே என்றும், தான் அவையதீனனுயில்லை என்றும் காட்டுகிருன் இந்த ஶ்லோகத்தில். (யே சைவ) முன் ஶ்லோகங்களிற்போலே விலக்ஷணர்க்கு ப்ராப்ய ப்ராபகமாயுள்ள விலக்ஷணத் தன்மைகள் என்று தனித்துச் சொல்ல வேண்டியதில்லை; விலக்ஷணுவிலக்ஷண விபா₄க₃மற அனைவர்க்கும் ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும் உள்ள எல்லாப் பொருள்களும், அவற்றிலுள்ள எல்லாத் தன்மைகளுமே தன்னதீனம் என்று சகாரத்தாலும், ஏவ காரத்தாலும் காட்டுகிருன். (ஸாத்விகா:) ஸத்வகு₃ணத்தை மிகுதியாக உடையவையாகவும். (ராஜஸா: தாமஸாஶ்ச) ரஜோகு₃ணத்தை அல்லது தமோகு₃ணத்தை மிகுதியாக உடையவையாகவும். (யே பா₄வா:) உலகில் போ₄கோ₃பகரணங்களான தே₃ஹமாகவும், இந்திரியங்களாகவும், போ₄க்₃யமான ஶப்₃த₃ாதி₃ விஷயங்களாகவும், இவற்றுக்குக் காரணமான ஸமஷ்டிப்பொருள்களாகவும், “ப்ரஹர்ஷ: ப்ரீதிராநந்த₃: ஸுக₂ம் ஸம்ஶாந்தசித்ததா” [பா₄ர-மோக்ஷ 29-27] [சிறந்த உகப்பு, பிரீதி, ஆனந்த₃ம், ஸுக₂ம், சித்தமடங்கிய தன்மை] என்று ஸத்வகு₃ணத்தால் விளைவதாகக் கூறப்படும் தன்மைகளாகவும், “அதுஷ்டி: பரிதாபஶ்ச க்ரோதோ₄ மோஹஸ் தத₂ாऽக்ஷமா” [ஷை 28] [திருப்தியின்மை, பரிதாபம், கோபம், மயக்கம், பொறுமையின்மை] என்று ரஜோகு₃ணத்தால் விளைவதாகக் கூறப்படும் தன்மைகளாகவும், “அவிவேகஸ் தத₂ா மோஹ: ப்ரமாத₃: ஸ்வப்நதந்த்₃ரிதா” [ஷை 29] [விவேகமின்மை, மயக்கம், கவனமின்மை, ஸ்வப்நநிலை, சோம்பல்] என்று தமோகு₃ணத்தால் விளைவதாகக் கூறப்படும் தன்மைகளாகவும், ஆக இப்படி அவரவர்க்கு ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும் காணப்படும் எல்லாப் பொருள்களும் — இங்கு யச்ச₂ப்₃த₃த்தால் உணர்த்தப்படுகின்றன. (மத்த ஏவேதி தாந் வித்₃தி₄) அவையனைத்தும் என்னிடமிருந்தே உண்டானவை என்று அறிவாயாக. ஏவகாரத்தால், நிமித்தகாரணமாகவும், உபாத₃ாநகாரணமாகவும் தானே ஆகிருன் என்று காட்டுவதன்மூலம், நிமித்தம் வேறு, உபாத₃ானம் வேறு எனும் பக்ஷமும், ஸாத்விகம் முதலான விசித்ர ஶக்திகள் மூலப்ரக்ருதிக்குப் பரமாத்ம ஸங்கல்பத்தாலல்லாமல் இயல்வாய் ஏற்பட்டவையென்றும், இப்படி ஶக்திகள் விசித்திரமாயிருக்கிறபடியால், அவ்வவற்றுக்குத் தக்கபடி

इति च। नत्वहं तेषु—नाहं कदाचिदपि तदायत्तस्थितिः; अन्यत्रात्मायत्तस्थितित्वेऽपि शरीरस्य, शरीरेणात्मनस्स्थितावप्युपकारो विद्यते; मम तु तैर्न कश्चित्तथाविध उपकारः, केवललीलैव प्रयोजनमित्यर्थः ॥ १२ ॥

त्रिभिर्गुणमयैर्भावैरेभिस्सर्वमिदं जगत्।
मोहितं नाभिजानाति मामेभ्यः परमव्ययम् ॥ १३ ॥

---

பல நிமித்தகாரணங்கள் உளவென்றும் கூறும் பக்ஷங்களும் தள்ளப்பட்டன. (தே மயி இதி வித்$_3$தி$_4$) அவை என் ஶரீரமாய், என்னிடமே ஸத்தாஸ்தி$_2$தி ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளைப்பெற்று நிற்கின்றன என்றும் அறிவாயாக. 'மயி' என்னும் ஏழாம் வேற்றுமையால், அவற்றை ஒரே வேற்றுமையில் படிக்கலாம்படி அவை தனக்கு ஶரீரமாய், தான் அவற்றை உள்நுழைந்து நியமிப்பவனுயிருக்கின்ற தன்மை காட்டப்படுகிறது. (அஹம் து ந தேஷு) நானோவெனில், அவை என்னை யொட்டியிருப்பதுபோலே அவற்றையொட்டி இல்லை. உலகில் ஶரீரம் ஆத்மாவினுல் ஸத்தாஸ்தி$_2$தி ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளைப் பெற்றிருந்தபோதிலும், ஆத்மாவின் வாழ்வுக்கும் ஶரீரத்தால் பயன் விளைவதுண்டு. என் விஷயத்தில் அப்படியில்லை. எனக்கு அவற்ருல் அத்தகைய உதவி எதுவுமில்லை. (அஹம்) நான் அவாப்த ஸமஸ்தகாமனுன பரிபூர்ணனுகையாலே, கேவலலீலையே எனக்கு அவற்ருல் விளையும் பயன் என்று கருத்து. "அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம்" [தைத்-ஆர 3-11] "அந்தர் ப$_3$ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி$_2$த:" [தை-நா] "அஹமாத்மா" [கீ$_3$தை 10-20] என்று பரமாத்மாவை அனைத்தினுள்ளும் நுழைந்து நியமிப்பவனுகக்கூறும் பல ஶ்ருதி ஸ்ம்ருதிகளுக்கு முரணுகுமாகையால், 'ந த்வஹம் தேஷு' என்பதற்கு 'நான் அவற்றில் வியாபித்திருப்பதில்லை' என்று பொருள் கொள்வது பொருந்தாது. "அவை என்னையொட்டி நின்று உதவிபெறுவதுபோலே, நான் அவற்றையொட்டிநின்று எவ்வுதவியும் பெறுவதில்லை" என்று பொருள்கொள்வதே பொருந்தும். ஆக, இவ்வளவால், "ஸ்வயாத$_2$ாத்ம்யம்" என்று இவ்வத்தியாயத்தின் கீ$_3$தார்த்த$_2$ஸங்க்$_3$ரஹத்தில் சொல்லப்பட்ட—பரமாத்மாவாகிற தன்னைப்பற்றிய உண்மையறிவு உணர்த்தப்பட்டதாயிற்று. 12.

13. த்ரிபி$_4$ர் கு$_3$ணமயைர் ப$_4$ாவைரேபி$_4$ஸ் ஸர்வமித$_3$ம் ஜக$_3$த் ।
மோஹிதம் நாபி$_4$ஜாநாதி மாமேப்$_4$ய: பரமவ்யயம் ॥

ஸர்வம் இத$_3$ம் ஜக$_3$த் — இவ்வுலகிலுள்ள ஜீவர் அனைவரும், ஏபி$_4$: த்ரிபி$_4$: கு$_3$ணமயை: ப$_4$ாவை:—இந்த முக்குண மயமான பொருள்களாலே, மோஹிதம்—மயக்கப்பெற்றவராய், ஏப்$_4$ய: பரம்—இவற்றைக் காட்டிலும் மிகவுயர்ந்தவனாய், அவ்யயம்—எப்போதும் ஒருபடிப்பட்டவனான, மாம்—என்னை, ந அபி$_4$ஜாநாதி—அறிவதில்லை.

---

13. முக்குணஞ்சே ரிப்பொருளான் மோகித்த விவ்வுலக
மக்குணங்க டம்மி லதிமேலாய்—மெய்க்குணங்க
ளொன்றதனி லோர்குறையா தோங்கிறையா [மென்னைத்தா
னின்றறிய மாட்டாது நேர்.

முக்குணம் சேர் இப்பொருளால் மோகித்த இவ்வுலகம்—முக்குணங்களோடு கூடிய இந்தப் பொருள்களாலே மயங்கி நிற்கும் இவ்வுலகினர், அக்குணங்கள் தம்மில் அதிமேலாய்—அக்குணங்களையும், அவற்றையுடைய பொருள்களையுங் காட்டிலும் மிகவும் மேற்பட்டவனாய், மெய் குணங்கள் ஒன்று அதனில் ஓர் குறையாது — கல்யாண கு$_3$ணங்கள் ஒன்றிலும் ஒரு குறையும் இல்லாதவனாய், ஓங்கு இறையாம் என்னை — ஓங்கி நிற்கும் ஸர்வேஶ்வரனான என்னை, நேர் நின்று தான் அறியமாட்டாது — தாமாக உள்ளபடி அறிய இயலாதவராயுள்ளனர்.

---

13. இப்படி நீயே உலகம் யாவையும் ஆக்கி அளித்து அழிக்கும் காரணமாய், அவற்றுக்கு அந்தர்யாமியாய், ஶேஷியாய், கு$_3$ணங்களால் உயர்ந்தவனாய், ப்ராப்யனாய், ப்ராபகனாயிருப்பவனானால், இவ்வுலகினர் உன்னை ஏன் அப்படி அறியவில்லை? என்று அர்ஜுனனுக்குக் கருத்தாகக் கொண்டு, முக்குணமயமாய் என்னால் படைக்கப்பட்ட ப்ராப்ய ப்ராபகப் பொருள்களாலே மயங்கிநிற்பதாலேயே உலகினர் என்னை அறியவில்லை என்கிறான் இந்த ஶ்லோகத்தாலே. "ப்ரக்ருத்யாஸ்ய திரோதி$_4$:" [தன்னைப்பற்றிய உண்மையறிவு-ப்ரக்ருதியினாலே மறைக்கப்படுவது] என்று கீ$_3$தார்த்த$_2$ஸங்க்$_3$ரஹத்தில் சொல்லப்பட்ட அர்த்த$_2$மும் இந்த ஶ்லோகத்தில் சொல்லப்படுவதேயாகும்.

॥भा॥ तदेवं चेतनाचेतनात्मकं कृत्स्नं जगन्मदीयं काले काले मत्त एवोत्पद्यते, मयि च प्रलीयते, मय्येवावस्थितम्, मच्छरीरभूतम्, मदात्मकं चेत्यहमेव कारणावस्थायां कार्यावस्थायां च सर्वशरीरतया सर्वप्रकारोऽवस्थितः। अतः कारणत्वेन शेषित्वेन च ज्ञानाद्यसङ्ख्येय-कल्याणगुणगणैश्चाहमेव सर्वैः प्रकारैः परतरः; मत्तोऽन्यत्केनापि

(மாம் நாபி₄ஜாநாதி) "பூ₄மிராப:" (4) என்று தொடங்கி, இது வரையில் சொல்லப்பட்ட ரீதியில் என்னை உள்ளபடி அறிகின்றதில்லை; அதாவது—சேதநாசேதநங்களடங்கிய உலகம் முழுவதும் என்னுடையதாகவும், ஒருகாலத்தில் என்னிடமிருந்தே உண்டாகி, மற்றொருகாலத்தில் என்னிடமே லயத்தை அடைகிறதாகவும், என்னிடமே நிலைநிற்கிறதாகவும், எனக்கு ஶரீரமாயிருப்பதாகவும், 'நானே எல்லாம்' என்று சொல்லலாம்படி என்னைவிட்டுப் பிரியாமலிருக்கும் ப்ரகாரமாயிருப்பதாகவுமிருக்கையாலே, நானே காரணநிலையிலும், கார்யநிலையிலும் அவையனைத்தையும் ஶரீரமாகவும், பிரியாத ப்ரகாரமாகவும் கொண்டவனுயிருப்பவனென்றும், ஆக இப்படி உலகிற்குக் காரணமாயிருப்பதாலும், ஶேஷியாயிருப்பதாலும், ஜ்ஞாநம், ஶக்தி முதலான கணக்கற்ற கல்யாணகு₃ணக₃ணங்களை உடையவனுயிருப்பதாலும் நானே இவ்வுலகைக் காட்டிலும் எல்லாப்படியாலும் மிகவும் மேலானவனுயிருப்பவனென்றும், என்னைக்காட்டிலும் வேறுபட்டது எதுவும் ஒரு கல்யாணகு₃ணத்தாலும் என்னைப்போலே மிக உயர்ந்ததாயில்லையென்றும் இவ்வண்ணமாக என்னை உள்ளபடி அறிவதில்லை என்றபடி. காரணமான பிதாவாயிருப்பதால் நானே தமக்கு நன்மையை விரும்பிச் செய்பவனென்றும், ஶேஷியாயிருப்பதால் ஶேஷபூ₄தரான தமது உஜ்ஜீவனத்தையும் என் பேருகக் கருதுபவனென்றும். எல்லாமறிந்தவனுயிருக்கை, எல்லாம் வல்லவனுயிருக்கை முதலான கல்யாண கு₃ணங்களால் தமக்கு அநிஷ்டத்தைப் போக்குவதிலும், இஷ்டத்தைத் தருவதிலும் தமது முயற்சியைக்கூட எதிர்பாராதவனென்றும் அறிவதில்லை என்று கருத்து. (நாபி₄ஜாநாதி) "கஶ்சிந் மாம் வேத்தி தத்வத:" [3] என்று மூன்ருவது ஶ்லோகத்தில் சொன்னபடி என்னை உள்ளபடி அறிவதில்லை என்கை. இப்படி உள்ளபடி அறியாதார் ஒருவரிருவரோ? என்னில்; (ஸர்வமித₃ம் ஜக₃த் நாபி₄ஜாநாதி) "தே₃வர், மனிதர், திர்யக் (விலங்கு), ஸ்த₂ாவரம்" என்று நாலு வகைப்பட்ட யோனிகளில் இந்த லீலாவிபூ₄தியில்

कल्याणगु(णग)णेन परतरं न विद्यते। एवंभूतं मां त्रिभ्यस्सात्त्विक-राजसतामसगुणमयेभ्यो भावेभ्यः परं, मदसाधारणैः कल்யाणगुणगणैः तत्तद्भोग्यताप्रकारैश्च परम्—उत्कृष्टतमम्, अव्ययं-सदैकरूपमपि तैरेव

---

தே₃ஹத்தோடு பிறந்துள்ள ப்ரவ்ருத்திபரரான எல்லா ஜீவர்களுமே என்னை உள்ளபடி அறிவதில்லை. ப்₃ரஹ்ம ருத்₃ராதி₃களும் இதற்கு விலக்கல்ல என்று கருத்து. நிவ்ருத்திபரனான மஹாத்மா எவனோ வொருவன் உள்ளபடி அறிவதாக ''ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்₃யதே'' [19] என்று மேலே சொல்லப்போகிறானகையாலே, அதனோடு முரண் படாமலிருப்பதற்காக, ப்ரவ்ருத்திபரரைக் காட்டும் ஜகூ₃ச்சூ₂ப்₃த₃த்தை யிட்டு,அவர்கள் எவருமே என்னை உள்ளபடி அறிவதில்லை என்கிறான். தே₃ஹத்தோடு கூடியிருக்கையாலே ப்ரவ்ருத்திபரராயிருக்கையே இவர்களுக்கு இயல்வு என்று ஜகூ₃ச்சூ₂ப்₃த₃த்தாலே உணர்த்துகிறான். உள்ளபடி அறிவதில்லை என்றால் என்னவெனில்: (மாம் ஏப்₄ய: பரம் அவ்யயம் நாபி₄ஜாநாதி) முற்கூறியபடியுள்ள நான், எட்டாவது ஶ்லோகத்திலிருந்து தொடங்கி இந்த ஶ்லோகமீறுகச் சொல்லப்பட்ட ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் எனும் முக்கு₃ணமயமான பொருள் களைக் காட்டிலும் அவ்வவற்றிற்குரிய பெருமைகளில் மேலானவனாய், எனக்கேயுரிய கல்யாணகு₃ணங்களாலும், அந்தந்த இனிமை வகை களில் அல்பமான அவைபோலன்றியே மிகமிக மேலானவனாயிருப்பவ னென்றும், அவைபோலே அஸ்தி₂ரமாயிராமல், நிலையானவனா யிருப்பவனென்றும் அறியாமையே உள்ளபடி அறியாமை என்றபடி. அதாவது:—ஶப்₃த₃ம், ஸ்பர்ஶம், ரூபம், ரஸம், க₃ந்த₄ம் முதலான கு₃ணங்களையிட்டு ப்ராக்ருதப் பொருள்கள் இனியவையாகின்றன; பரமாத்மாவோவெனில், தன் தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹத்தில் விட்டுப் பிரியாமலிருக்கும் அப்ராக்ருதமான ஶப்₃தா₃தி₃ கு₃ணங்களால் அவற் றைக் காட்டிலும் மிகமிக இனியவனாகிறான். ''அடங்கெழில் சம்பத்து அடங்கக்கண்டு ஈசன் அடங்கெழில் அஃதென்று அடங்குக உள்ளே'' [திருவாய்மொழி 1-2-7] என்கிற ரீதியில் அவனுடைய செல்வம் என்று அநுஸந்தி₄க்குமளவில், அந்த ப்ராக்ருதகு₃ணங்களே அப்ராக்ருத கல்பங்களாய் மிகமிக இனியவையாகின்றன. இவ் வளவுக்கும் மேல், கல்யாணகு₃ணங்களாலும், செயல்களாலும் மிகமிக இனியவனாயிருக்கும் தன்மை அவனுக்கே உரியதொன்று. ஆக, இப்படி எல்லாவகையிலும் இவன் அவற்றைக் காட்டிலும் மிகமிக மேலானவனாய், கடலில் குளப்படிபோலே அவற்றிலுள்ள இனிமை இவனிடத்திலே அடங்கியுள்ளது என்று கருத்து. ''யச்சாஸ்யே

त्रिभिर्गुणमयैर्निहीनतरैः क्षणध्वंसिभिः पूर्वकर्मानुगुणदेहेन्द्रियभोग्यत्वेनावस्थितैः पदार्थैर्मोहितं देवतिर्यङ्मनुष्यस्थावरात्मनाऽवस्थितं सर्वमिदं जगन्नाभिजानाति ॥ १३ ॥

---

ஹாஸ்தி யச்ச நாஸ்தி ஸர்வம் தத₃ஸ்மிந் ஸமாஹிதம்'' [சாந் 7-1-3] [இந்த ஜீவனுக்கு இவ்வுலகில் இனியதாக எது உள்ளதோ, எது மநோரத₂த்தினளவிலேயே நிற்கிறதோ, அது அனைத்தும் பரமாத்மா விடம் சேர்ந்துள்ளது.] என்று ஓதப்படுகிறதன்றோ. ''ஏப்₄ய: பரம்'' என்று எல்லாத் தாழ்வுகளுக்கும் கொள்கலமான அவை போலன்றியே எல்லாத் தாழ்வுகளுக்கும் எதிர்த்தட்டாயிருக்கையாகிற நிகி₂லஹேய ப்ரத்யநீகத்வமும், '' மாம் '' என்று துன்பங்கலந்த சிற்றின்பமான அவைபோலன்றியே, ஒப்பற்ற ஆநந்த₃மாகவேயிருக்கையாகிற கல் யாணைகதாநத்வமும், '' அவ்யயம் '' என்று காலத்தால் அளவுபட்ட அவைபோலன்றியே, காலத்தால் அளவுபட்டிராமையாகிற நித்ய த்வமும் சொல்லப்படுகின்றன. இப்படி அவை மிகத்தாழ்ந்தவை யாய், நீ மிகவுயர்ந்தவனுயிருக்கும்போது அறிவுடையவர்களான ஜீவர்கள் ஏன் உன்னை உள்ளபடி அறிவதில்லை? எனில்: (ஏபி₄: கு₃ணமயை: த்ரிபி₄ர்ப₄ாவை: மோஹிதம்) முற்கூறிய ஸாத்விகராஜஸ தாமஸமென்னும் முக்குணமயமான மூவகைப்பட்ட பொருள்களாலே மயக்கப்பட்டவர்களாகையாலே, என்னை உள்ளபடி அறியவில்லை என்கிறுன். தோ₃ஷமுள்ளவையாயிருந்தபோதிலும் அநாதி₃காலமாக முகம் பழகிப்போந்தவையாகையாலே, அவற்ருல் மயக்கப்பட்டு, அநாதி₃காலமாக என்னை அறியவில்லை என்று கருத்து. (த்ரிபி₄: கு₃ணமயை:) ஒவ்வொரு கு₃ணம் ஒவ்வொரு பொருளில் விஞ்சி, ஒவ்வொரு பொருளில் குறைந்திருந்தபோதிலும் எல்லாப் பொருளி லும் இம்மூன்று கு₃ணங்களும் சேர்ந்தேயிருக்கையால் அவையெல் லாமே தாழ்ந்தவையாய், துன்பம் தருபவையே என்று கருத்து. (ஏபி₄ஸ் த்ரிபி₄:) கர்மாநுரூபமான அநுப₄வத்தைத் தருமவையாகை யாலே, அக்கர்மங்களைப் போலே மிகத் தாழ்ந்தவையே என்றும், அக்கர்மம் கழிந்தபின் ஒருகணங்கூட நிலைநிற்கமாட்டாதவை என் றும் கருத்து. (ப₄ாவை:) அவரவர் பூர்வகர்மாநுகு₃ணமாக தே₃ஹ மாகவும், இந்திரியங்களாகவும், போ₄க்₃யப்பொருள்களாகவுமிருக்கும் பதா₃ர்த்த₂ங்களாலே. (கு₃ணமயை: மோஹிதம்) என்று எடுக்கப்பட்ட வற்றில் ரஜஸ்தமஸ்ஸுக்களால் மயக்கம் ஏற்படுவது சரி; ஸத்வத்தால் மயக்கம் ஏற்படுவது எப்படி? எனில்: ரஜஸ்தமஸ்ஸுக்களைக் காட்டிலும் ஸத்வத்தினுலேயே அதி₄கமான மயக்கம் ஏற்படுகிறது

॥ भा ॥ कथं स्वत एव अनवधिकातिशयानन्दे नित्ये सदैकरूपे लौकिकवस्तुभोग्यताप्रकारैश्चोत्कृष्टतमे त्वयि स्थितेऽपि, अत्यन्तनिहीनेषु गुणमयेष्वस्थिरेषु भावेषु सर्वस्य भोक्तृवर्गस्य भोग्यत्वबुद्धिरुपजायत इत्यत्राह—

दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया । *१४ ॥

*14. தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா ।

மம—என்னுடையதான, ஏஷா—இந்த, குணமயீ—முக்குணமயமான, மாயா—ப்ரக்ருதி, தைவீ—தேவனுன என்னால் படைக்கப்பட்டதாகையாலே, துரத்யயா—(எவராலும் தம் முயற்சியால் மாத்திரம்) கடக்க அரிதாயுள்ளது.

---

14. இந்தக் குணமயியா மென்றதென் மாயைதன்
சந்தத்தி னிற்கடக்குஞ் சார்வரிதாற்—சிந்தையுட
னென்னேயடைந் தேயியல்வா ளிம்மா யையைக்கடக்க
முன்னேயமர்ந் துற்ருன் முயன்று.

இந்த குணமயி என்றது—முற்கூறிய முக்குணமயமான பொருள் என்றது, என் மாயை ஆம்—என்னுடையதான

---

என்பதே உண்மை. எப்படியெனில்: விஷங்கலந்த அன்னத்தில் தேனிருப்பதைக்கண்ட அறிவிலி, பேராசையோடு அதைப் புசிக்க விழைகிருனைகயால், அவனது அழிவு நிஶ்சிதமாகிறது. தேனில்லாமலிருந்திருந்தால் அவ்வன்னத்தைப் புசியாமலிருப்பானுகையால் அழிவு ஏற்பட்டிராது. அதுபோலே, ஸுகலேஶத்தை விளைக்கும் ஸத்வம் கலந்திருக்கையாலே, அறிவில் மிக்கவர்கள்கூட, எட்டாம் ஶ்லோகம் தொடங்கிச் சொல்லப்பட்ட குணமயமான ப்ராப்ய ப்ராபக ஆபாஸங்களாலே ஈர்க்கப்பட்டு, ஆத்மநாஶத்தை அடைகிருர்கள் என்பதை நாம் ப்ரத்யக்ஷமாகக் காண்கிரேமன்ரே. ஆக, ''ப்ரஹ்மாத்யா: ஸகலா தேவா: மநுஷ்யா: பஶவஸ்ததா । விஷ்ணுமாயாமஹாவர்த்த மோஹாந்ததமஸாவ்ருதா: ॥'' [வி-பு 5-30-17] [பிரமன் உருத்திரன் முதலான எல்லா தேவர்களும், மனிதரும், விலங்குகளும் விஷ்ணுவின் மாயையாகிற பெருஞ்சுழலிலேயகப்பட்டு, மயக்கமாகிற பேரிருளால் சூழப்பட்டுள்ளனர்.] என்கிறபடியே ஸாத்விகராஜஸதாமஸ விபாகமற ப்ரவ்ருத்திபரர் அனைவரும் மயங்கினவர்களே என்றதாயிற்று.

॥भा॥ ममैषा गुणमयी—सत्त्वरजस्तमोमयी माया यस्माद्दैवी—देवेन-क्रीडाप्रवृत्तेन मयैव निर्मिता, तस्मात्सर्वैर्दुरत्यया—दुरतिक्रमा।

ப்ரக்ருதியாகும். தன் சந்தத்தினில்—தன் விருப்பப்படி, கடக்கும் சார்வு அரிது—(இதைக்) கடக்கும் உபாயம் இல்லை. சிந்தையுடன் — (எனக்கேயான) மனத்துடன், என்னையே அடைந்து—என்னையே உபாயமாகப் பற்றி, முன்னை முயன்று இயல்வான்—முதலில் என்னிடம் ப₄க்தியோக₃த்தை முயற்சி செய்து அநுஷ்டி₂ப்பவன், இம்மாயையை கடக்க—இந்த மாயையைத் தாண்ட, அமர்ந்து உற்றுன்—பொருந்தி நிற்பவனுவான்.

* 14. ''நீயோ இயல்வாகவே எல்லையற்ற பெருமையையுடைய ஆநந்த₃ ஸ்வரூபனுயிருப்பவன். காலத்தால் அளவுபடாத நித்யனுயிருப்பவன். என்றும் ஒருபடிப்பட்டவனுகவுமிருப்பவன். இவ்வுலகிலுள்ள பொருள்களிலுள்ள இனிமைவகைகளைக் காட்டிலும் மிகமிக உயர்ந்த இனிமை வகைகளை உடையவன். அப்படிப்பட்ட நீயிருக்கையில், மிகமிகத் தாழ்ந்தவையாய், நிலையற்றவையான முக்குணமயமான பொருள்களை—உயர்வு தாழ்வுகளின் தரமறியவல்ல ஜீவர்கள் அனைவரும்–குறிப்பாக ஸத்வகுணம் விஞ்சிநிற்கையாலே உண்மையறிவு நழுவப் பெருத ப்₃ரஹ்மருத்₃ராதி₃ தே₃வர்கள் கூட – இனியவையாக மயங்கி அவற்றில் அழுந்துவது எப்படிப்பொருந்தும்?'' என்று அர்ஜுனனுக்குக் கருத்தாகக் கொண்டு, பதிலளிக்கிருன் இந்த ஶ்லோகத்தின் முற்பாதியாலே. சென்ற ஶ்லோகத்திற்கு விவரணமாயிருப்பது இந்த முற்பாதி. (மம ஏஷா கு₃ணமயீ மாயா) என்னுடையதென்று ஏற்கனவே நாலாம் ஶ்லோகத்தில் சொல்லப்பட்டதாய், முக்குணமயமான இந்த ப்ரக்ருதி. (தை₃வீ ஹ்யேஷா து₃ரத்யயா) தே₃வனுகிற என்னுல் விசித்ரஸ்தூ₂லப் பொருள்களாகப் படைக்கப்பட்டதாகையாலே, மிகவும் கடத்தற்கு அரியது. அக₄டிதக₄டநா ஸமர்த்த₂னை ஈஶ்வரனுல் தன் விளையாட்டுக்காகப் படைக்கப்பட்டது, அநீஶ்வரர் அனைவராலும் தம் முயற்சியால் மாத்திரம் கடக்கவே இயலாததன்ருே; பிற்பாதியில் கூறப்பட்டபடி அவனை ஶரணமடைந்தால்தான் இதைக் கடக்கலாம் என்று கருத்து. ''தி₃வு-க்ரீட₃ா'' என்னும் த₄ாதுவிலிருந்து ஏற்பட்ட தே₃வஶப்₃த₃ம் உலகம் யாவையும் தாமுளவாக்கலும், நிலைபெறுத்தலும், நீக்கலும் நீங்கலா அலகிலா விளையாட்டுடைய பரமாத்மாவைக் குறிக்கிறது. ''தே₃வாத்ம ஶக்திம்'' [ஶ்வே 1-3] என்ற ஶ்ருதியும் இத்தால் உணர்த்தப்படுகிறது. ''தை₃வீ, மம'' என்னும் இரண்டு பத₃ங்

अस्याः मायाशब्दवाच्यत्वं आसुरराक्षसास्त्रादीनामिव विचित्रकार्यकरत्वेन; यथाच * ततो भगवता तस्य रक्षार्थं चक्रमुत्तमम्। आजगाम समाज्ञप्तं ज्वालामालि सुदर्शनम्। तेन मायासहस्रं तच्छम्बरस्याशुगामिना। बालस्य रक्षता देह[ मेकैकंच निषूदितम् ]मेकैकश्येन सूदितम्॥ (वि.१-१९-२०)

---

களை இடுவதன்மூலம் மாயையான ப்ரக்ருதியை ஆட்டி வைக்கும் மஹேஶ்வரன் வேறு, மாயவனான கண்ணன் வேறு என்னும் மயக்கம் தவிர்க்கப்படுகிறது.

"மாயா" என்று பொய்யான பொருள்கள் உலகில் குறிக்கப் படுவதைக் காண்கிறோமாகையால், இங்கும் அதுவே பொருளாக லாம் என்று அத்3வைதிகள் கருதுகிறார்கள். இது தவறு. ஆஶ்சர்ய மான கார்யத்தை விளைக்கும் பொருள்களே லோகவேத3ங்களில் மாயை எனப்படுகின்றன. இங்கும் அப்பொருளே பொருந்தும்.

"ததோ ப4க3வதா தஸ்ய ரக்ஷார்த்த2ம் சக்ரமுத்தமம் |
ஆஜகா3ம ஸமாஜ்ஞப்தம் ஜ்வாலாமாலி ஸுத3ர்ஶநம் ||
தேந மாயாஸஹஸ்ரம் தத் ஶம்ப3ரஸ்யாஶுகா3மிநா |
பா3லஸ்ய ரக்ஷதா தே3ஹம் ஐகைகஶ்யேந ஸூதி3தம் ||"
[வி-பு 1-19-20]

[அதற்குப்பின், மிகமிகச் சிறந்த சோதிமயமான ஸுத3ர்ஶன சக்ரா யுத4ம், அந்த ப்ரஹ்லாத3னை ரக்ஷிப்பதற்காக, பரமாத்மாவால் நியமிக்கப்பட்டு வந்தது. பா3லனான ப்ரஹ்லாத3னின் உடம்பை ரக்ஷிப்பதற்காக விரைவில் தொழில் புரியும் அந்தச் சக்கரத்தாலே ஶம்ப3ராஸுரனுடைய ஆயிரக்கணக்கான மாயைகளும் ஒவ்வொன் றாக அழிக்கப்பட்டது ] என்று சக்ராயுத4மானது அஸுரனுடைய மாயைகளை ஒவ்வொன்றாக அழித்ததாகக் கூறுமிடத்தில், மாயை யானது பொய்ப் பொருளாயிருந்தால் அவற்றை ஆயுத4ம் அழிப்பது ஒட்டாதன்றோ. "யாவந்த: பாம்ஸவோ பூ4மே: ஸங்க்2யாதா தே3வ மாயயா" [தே3வனின் அறிவாலே எண்ணப்பட்ட பூ4மியிலுள்ள மண்துகள்கள் எத்தனையிருக்கின்றனவோ] என்ற ஶ்ருதியில் ஆஶ்சர்ய மான கார்யங்களைச் செய்யும் தே3வனுடைய அறிவு "மாயா" எனப் பட்டது "மாயா வயுநம் ஜ்ஞாநம்" என்று வேத3நிக4ண்டுவும் [த4ர்ம வர்க்கம் 22] கூறிற்று. "மாயயா ஸததம் வேத்தி ப்ராணிநாம் ச ஶுபா4 ஶுப4ம்" [ப்ராணிகளுக்கு நன்மை தீமைகளை ஆஶ்சர்யமான அறிவி னாலே எப்போதும் அறிகிறான்] என்று பரமாத்மாவின் அறிவைக் குறித்தும் அபி4யுக்தர்களால் மாயாஶப்33ம் பிரயோகி3க்கப்பட்டது.

इत्यादौ॥ अतो मायाशब्दो न मिथ्यार्थवाची। ऐन्द्रजालिकादिष्वपि—केनचिन्मन्त्रौषधादिना मिथ्यार्थविषयायाः पारमार्थिक्या एव बुद्धेरुत्पादकत्वेन मायावीति प्रयोगः। तथा मन्त्रौषधादिरेव च तत्र

''தே₃வ மாயேவ நிர்மிதா'' [ரா-பா₃ 1-16] [தே₃வமாயையைப்போலே படைக்கப்பட்டவள்] என்று ஸீதா தே₃விக்கு த்₃ருஷ்டாந்தமாக ஸ்ரீராமாயணத்தில் எடுக்கப்படும் தே₃வமாயை ஆஶ்சர்யமான கார்யங்களைச் செய்யும் மெய்ப்பொருளாகமுடியுமே யொழிய, பொய்ப் பொருளாக முடியாது. மேலும், த₃ண்ட₃நீதியில்—ஸாமம், தா₃னம், பே₄த₃ம், த₃ண்ட₃ம் என்று முக்கியமான நான்கு உபாயங்களைச் சொல்லிவிட்டு, மாயா, உபேக்ஷா, இந்த்₃ரஜாலம் என்று அமுக்கியமான மூன்று உபாயங்கள் கூறப்பட்டன. அவற்றில், ஒருபடிப்பட்ட பொருளை வேறுபடிப்பட்டதாக ஆக்குவது மாயை எனப்படுகிறது. ஒருபடிப்பட்ட வஸ்துவை மற்றொரு படிப்பட்டதாக மயங்க வைப்பது இந்த்₃ரஜாலம் எனப்படுகிறது. ஆக, இவ்வண்ணமாக ஆஶ்சர்யமான செயல்களைப் புரியும் மெய்ப் பொருள்களையே மாயாஶப்₃த₃ம் குறிக்கிறபடியால், அது பொய்ப் பொருளைக் குறிக்கமாட்டாது. இல்லாததை இருப்பதாகக் காட்டும் இந்த்₃ரஜாலம் செய்பவர்களை மாயாவீ என்று குறிப்பதால் மாயாஶப்₃த₃ம் பொய்ப் பொருளையும் குறிப்பதாக உலகில் காண்கிறதே? எனில்: இந்த்₃ரஜாலம் செய்பவர்களும், சில மந்திரம் ஔஷத₄ம் முதலியவற்றால், இல்லாததை இருப்பதாகக் காட்டும் உண்மையறிவையே உண்டுபண்ணுவதால்தான் அவர்கள் மாயாவி எனப்படுகிறார்கள். அங்கும் அறிவு உண்மையே; அவ்வறிவுக்கு விஷயம்தான் பொய்யாகிறது. அவ்விடங்களிலும் ஆஶ்சர்யமான செயலைப்புரியும் உண்மைப் பொருள்களான அந்த மந்திரம், அல்லது ஔஷத₄ம்தான் மாயையாகிறது; அதையுடையவர்களே மாயாவி எனப்படுகிறார்கள். இப்படிக் கொள்வதுதான் உலகிலும் ஶாஸ்த்ரங்களிலும் மாயாஶப்₃த₃ம் பிரயோகிக்கப்படும் எல்லா இடங்களுக்கும் பொருந்திய பொருளாகும். அறிவுக்கு விஷயமான பொய்ப் பொருள் மாயா ஶப்₃த₃த்திற்குப் பொருந்திய பொருளாகமாட்டாது. பல பொருள்கள்கொண்ட ஒரு ஶப்₃த₃த்தை ஒரு ஶக்தியைக் கொண்டே நிர்வஹிக்க இயலும்போது, பல ஶக்திகளை அந்த ஶப்₃த₃த்திற்குக் கற்பிப்பது பொருந்தாது. இனி, ''மாயாவிகளால் படைக்கப்படும் பொய்ப் பொருள்களையே குறித்து 'இது மாயை' என்று உலகில் வழங்குவதைக் காண்கிறோமே; அங்கு விசித்ரமான கார்யங்களை அப்பொய்ப் பொருள்கள் உண்டாக்காமையால், மாயாஶப்₃த₃ம் பொய்ப்பொருளை

माया, सर्वप्रयोगेष्वनुगतस्यैकस्यैव शब्दार्थत्वात्। तत्र मिथ्यार्थेषु मायाशब्दप्रयोगो मायाकार्यबुद्धिविषयत्वेनौपचारिकः, मञ्चाः क्रोशन्तीतिवत्।

---

யும் குறிக்கும் என்று கொள்ளத்தானே வேண்டும்'' எனில்: அவ்விடங்களில் மாயையான மந்த்ரம் முதலானவற்றினுல் உண்டாகும் அறிவுக்கு விஷயமாயிருக்கும் பொய்ப் பொருள் மாயையென்று உபசாரமாகக் கூறப்படுகிறது என்றே கொண்டு நிர்வஹித்துவிடலாம். ''கங்கையில் வீடு'' முதலானவிடங்களில், கங்கை நீரில் வீடிருப்பது பொருந்தாதாகையால், க3ங்கை3க்கரை க3ங்கா3 ஸம்ப3ந்த4த்தை யிட்டு க3ங்கை3யெனப்படுகிறது என்று கொள்கிறோம். ''மஞ்சா: க்ரோஶந்தி'' [படுக்கைகள் அழுகின்றன] என்றவிடத்திலும், படுக்கையின் ஸம்ப3ந்த4த்தையிட்டு, அதிலிருப்பவர்கள் படுக்கை யெனப்படுகிறார்கள் எனக்கொள்கிறோம். ''தத்ர பூஜ்யபதா3ர்த்தோ2க்தி பரிபா4ஷா ஸமந்வித:। ஶப்3தோ3(அ)யம் நோபசாரேண த்வந்யத்ர ஹ்யுபசாரத:॥'' [வி.பு. 6-5-77] [பூஜிக்கத்தக்கவர்களைக் குறிக்கும் வழக்குச் சொல்லாயிருக்கும் இந்த 'ப4க3வான்' என்னும் ஶப்3த3ம் பரமாத்மா ஒருவனிடத்திலேயே உபசார வழக்கல்லாமல் முக்2யமாக வழங்கப்படுகிறது. மற்றவர்களிடத்தில் உபசாரமாகவே வழங்கப்படுகிறது.] என்றபடியே ப4க3வான் முதலான சில ஶப்3த3ங்கள், சில கு3ணங்களிருப்பதையிட்டு பரமாத்மாவல்லாத மற்றவர்களிடமும் ஔபசாரிகமாக வழங்கப்படுகின்றன. இப்படி ஸம்ப3ந்த4த்தை யிட்டோ, கு3ணத்தையிட்டோ நிர்வஹிக்கமுடியாதவிடங்களில்தான் ஒரு பத3த்துக்குப் பல ஶக்திகளைக் கற்பிக்கலாம். மற்றவிடங்களில் கற்பிப்பது கௌ3ரவம் என்னும் தோ3ஷத்தின்பாற்படும். இங்கு, மந்த்ரம் முதலான மாயையினுல் உண்டான ஜ்ஞானத்திற்கு விஷயமாயிருக்கையாகிற ஸம்ப3ந்த4ம் பொய்ப் பொருளுக்கு உள்ளதாகையால், அதையிட்டு ஏற்பட்ட ஔபசாரிக வழக்காகக் கொள்ள இடமுள்ளது. மாயாஶப்3த3ம் பொய்ப் பொருளையே முக்2யமாகக் குறிப்பதாகக் கொண்டால், மாயாஶப்3த3த்தால் குறிக்கப்படும் ஆயுத4ம், அறிவு முதலானவற்றில் அதன் ஸம்ப3ந்த4த்தின் வாஸனையுமில்லையே. பொய்ப் பொருளுக்கு கு3ணமும் இல்லையாகையால், கு3ணத்தையிட்டு ஆயுத4ம் முதலானவற்றை மாயாஶப்3த3ம் ஔபசாரிகமாகக் கூறுவதாக நிர்வஹிக்கவும் முடியாதே. மேலும், சிப்பியில் வெள்ளி முதலான பொய்ப் பொருள்களை மாயை என்று எவரும் குறிப்பதில்லையே. ''சில பொய்ப் பொருள்களைத்தான் மாயாஶப்3த3ம் குறிக்கும்'' எனில்; ''மாயாஶப்3த3வாச்யமான ஆஶ்சர்ய கார்யங்களைச் செய்யும் மந்த்ரம் முதலானவற்றுல் உண்டான அறிவுக்கு விஷயமாயிருக்கும் சில பொருள்களையே மாயாஶப்3த3ம் ஔபசாரிகமாகக் குறிக்கும்'' என்று கூறும் எங்கள் வழிக்கே வந்துவிடுவது நல்லது.

एषा गुणमयी पारमार्थिकी भगवन्मायैव * मायां तु प्रकृतिं विद्यान्मायिनं तु महेश्वरम् (श्वे. ४-१०) इत्यादिष्वभिधीयते। अस्याः

---

"த்வம் ஹி லோககத்₃திர்தே₃வ ந த்வாம் கேசந ஜாநதே।
ருதே மாயாம் விஶாலாக்ஷீம் தவ பூர்வபரிக்₃ரஹாம்" ||
[ரா உ 110-10]

[தே₃வனே! நீயே உலகிற்குப் புகல். தடங்கண்ணியாய், உனது பட்டமஹிஷியான மாயையைத் தவிர உன்னை எவரும் அறியமாட்டார்கள்.] "யோக₃நித்₃ரா மஹாமாயா" [வி-பு 5-1-71] முதலானவிடங்களில் ஸ்ரீதே₃வியையும் யோக₃நித்₃ரையையும் மாயையென்பதும், ப₄க₃வானுக்கு விசித்ர கார்யங்களைச் செய்வதற்கு உதவுவதாலாவது, மாயை எனப்படும் ப்ரக்ருதிதத்வத்திற்கு அபி₄மானி தே₃வதையாயிருப்பதாலாவது பொருந்துகிறது. ஆகையால் விசித்ரகார்யங்களைச் செய்யும் பொருள்களே மாயை எனப்படுகின்றன என்று கொள்வதே தக்கதாகும். முக்குணமயமானதாய், உண்மையானதான ப்ரக்ருதியே "மாயாம் து ப்ரக்ருதிம் வித்₃யாந்மாயிநம் து மஹேஶ்வரம்" [ஶ்வே 4-10] [மாயை எனப்பட்டது ப்ரக்ருதியென்றே அறி; மாயையை உடையவனைப் பெரிய ஈஶ்வரனென்றே அறி.] என்று விசித்ரகார்யங்களைப் படைக்கையையிட்டு ப்ரக்ருதி—மாயை எனப்படுகிறது. இந்த வாக்யம் காணப்படும் ஶ்வேதாஶ்வதர உபநிஷத்தில் புருஷஸூக்த மந்திரங்கள் படிக்கப்படுகையாலும், "மஹாந் ப்ரபு₄ர் வை புருஷ: ஸத்வஸ்யைஷ ப்ரவர்த்தக:" [ஶ்வே 3] என்று இவனை மஹாபுருஷன் என்றும், ஸத்வப்ரவர்த்தகனென்றும் குறிக்கையாலும், இங்கு மஹேஶ்வரன் என்றது உருத்திரனாகமுடியாது; அவனுக்கும் ஈஶ்வரனாய், பரமஸத்வ ஸமாஶ்ரயனான நாராயணனேயாகமுடியும். உருத்திரன் படைக்கப் படுபவன் என்றும், கர்மவஶப்பட்டவன் என்றும் பல ஶ்ருதிஸ்ம்ருதிகளில் கூறப்படுவதால், இவ்வுபநிஷத்திலுள்ள ஶிவன் முதலான ஶப்₃த₃ங்கள் பரமமங்க₃ளத்வம் முதலான கு₃ணங்களையிட்டு ஶாஶ்வத ஶிவனான நாராயணனைக் குறிப்பதாகவோ, ப்ரஸித்₃த₄ஶிவாந்தர்யாமியாக நாராயணனைக் குறிப்பதாகவோ கொள்ளவேண்டும். "அஸ்மாந் மாயீ ஸ்ருஜதே விஶ்வமேதத் தஸ்மிம்ஶ்சாந்யோ மாயயா ஸந்நிருத்₃த₄:" [ஶ்வே 4-9] என்று முன் மந்திரத்தில் மாயையைப் பற்றியும், மாயியைப் பற்றியுமே பேச்சு வந்திருக்கிறபடியால், 'மாயை என்றது ப்ரக்ருதி' என்னும் பொருளே பொருந்துமேயொழிய, ப்ரக்ருதமல்லாத ப்ரக்ருதியையெடுத்து அது மாயை (பொய்) என்று கூறுவதாக

कार्यं भगवत्स्वरूपतिरोधानम्, स्वस्वरूपभोग्यत्वबुद्धिश्च। अतो भगवन्मायया मोहितं सर्वं जगत्, भगवन्तमनवधिकातिशयानन्दस्वरूपं नाभिजानाति ॥ * १४ ॥

॥ भा ॥ मायाविमोचनोपायमाह—

मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते ॥ १४ ॥

14*. மாமேவ யே ப்ரபத்₃யந்தே மாயாமேதாம் தரந்தி தே ||

யே—எவர்கள், மாம் ஏவ—என்னையே, ப்ரபத்₃யந்தே—ஶரணமடைகிறார்களோ, தே—அவர்கள், ஏதாம் மாயாம்—இந்த மாயையை, தரந்தி—தாண்டுகிறார்கள்.

---

அத்₃வைதிகள் பொருளுரைப்பது பொருந்தாது. இந்த ப்ரக்ருதி செய்யும் விசித்ரகார்யமாவது :—ப₄க₃வானுடைய ஸ்வரூபத்தை மறைக்கையும், தன்னை இனியதாகக் காட்டுகையுமேயாகும். ஆகையால், ப₄க₃வானுடைய ப்ரக்ருதியென்னும் மாயையினால் மயக்கப் பட்ட எல்லா உலகும், எல்லையற்ற பெருமையையுடைய ஆநந்த₃ ஸ்வரூபனான ப₄க₃வானை உள்ளபடி அறிவதில்லை என்றதாயிற்று. ஆக, இதுவரையில், ''ஸ்வயாதா₂த்ம்யம் ப்ரக்ருத்யாஸ்ய திரோதி₄:'' [தன்னைப்பற்றிய உண்மையறிவும், ப்ரக்ருதியினால் அது மறைக்கப் படுவதும்] என்று கீ₃தார்த்த₂ஸங்க்₃ரஹத்தில் சொல்லப்பட்ட அர்த் த₂ங்கள் விளக்கப்பட்டன. * 14

14 *. இனி, ''ஶரணாக₃தி:'' என்று கீ₃தார்த்த₂ஸங்க்₃ரஹத்தில் சொல்லப்பட்டதாய், முற்பாதியில் சொல்லப்பட்ட மாயையாகிற ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄த்தைப் போக்கடிக்கும் உபாயமாயிருப்பதான ஶரணாக₃தியை ஶ்லோகத்தின் பிற்பாதியாலே உபதே₃ஶிக்கிறான். (மாமேவ...) என்னையே எவர்கள் ஶரணமாக அடைகிறார்களோ, அவர்கள் இம்மாயையைத் தாண்டுகிறார்கள், (மாம்) ஸத்யஸங் கல்பனாய், பரமகாருணிகனாய், உயர்வு தாழ்வுகள் பாராமல் அனைத் துலகிற்கும் புகலாயிருப்பவனான என்னை. இவனுடைய அநாதி₃ ஸங்கல்பத்தாலே ஜீவர்களுக்கு அநாதி₃காலமாக ப்ரக்ருதிப₃ந்த₄ம் ஏற்பட்டிருக்கையால், இவனது மற்றொரு ஸங்கல்பத்தாலேயே தான் அந்த ப₃ந்த₄த்தை நீக்கமுடியுமாகையால், இங்கு ஸத்யஸங் கல்பத்வகு₃ணம் 'மாம்' எனும் ஶப்₃த₃த்துக்குப் பொருளாக அநு

|| भा || मामेव—सत्यसङ्कल्पं परमकारुणिकमनालोचितविशेषा-

---

ஸந்தி₄க்கப்படவேண்டும். அவ்வண்ணமே, ப₃ந்த₄ விமோசனத்திற்கு உறுப்பான ஜ்ஞாநம், ஶக்தி, பூர்த்தி முதலான கு₃ணங்களும் இங்கு அநுஸந்தி₄க்கப்படவேண்டும். (பா₄ஷ்யத்தில் ஸத்யஸங்கல்பன் என்றது இக்குணங்களுக்கும் உபலக்ஷணம்.) இப்படி ஜ்ஞாநம், ஶக்தி முதலியவற்றை உடையவனானாலும், கருணையற்றவனானால், ஶரணாக₃தி ப₂லியாமற்போவதோடன்றியில், இவனை மேலும்மேலும் குற்றம் பார்த்து த₃ண்டி₃ப்பதற்கே அவை உறுப்பாகுமாகையாலே, எல்லையற்ற கருணையை உடைத்தாயிருக்கையாகிற பரமகாருணிகத்வமாகிற கு₃ணமும் "மாம்" எனும் ஶப்₃த₃த்திற்குப் பொருளாக அநுஸந்தி₄க்கப்பட வேணும். பரமகாருணிகனாயிருந்தாலும், உலகிலுள்ள மற்றவர்களைப் போலே, இவனும் ஜீவனிடமுள்ள நன்மைதீமைகளைப்பார்த்து. நன்மையுடையவனையே ரக்ஷிப்பது என்னும் நியமமுடையவனாயிருந்தால், கணக்கற்ற ப₄க₃வத்₃ப₄ாக₃வத அஸஹ்யாபசாரங்களைப் புரிந்த ஜீவனுக்கு உய்ய வழியில்லையாகையால், உயர்ந்தாரோடு தாழ்ந்தாரோடு வாசியற அனைவரையும் ரக்ஷிக்கையாகிற ஸர்வலோக ஶரண்யத்வமென்னும் கு₃ணமும் "மாம்" என்னும் ஶப்₃த₃த்திற்குப் பொருளாக இங்கு அநுஸந்தி₄க்கப்படவேண்டும். காகாஸுரன், குரங்காகிற ஸுக்₃ரீவன், விபீ₄ஷணனாகிறஅரக்கன், த்₃ரௌபதி₃யாகிற பெண்பிள்ளை, கு₃ஹனாகிற வேடன், ஶப₃ரியாகிற வேடுவிச்சி, குசேலனாகிற ஏழையந்தணன், மதுரைக்கூனி, ஆய்ச்சிகள், மாலாகாரர் முதலானோரை இவன் தாழ்வு பாராமல் ஆட்கொண்டது ஸுப்ரஸித்₃த₄மன்றோ. "யதி₃வா ராவண: ஸ்வயம்" [ரா-யு 18-35] என்று ராவணனையும் ஆட்கொள்ள ஆசைப்பட்டானன்றோ. "சரணாகதி மற்றோர் சாதனத்தைப்பற்றில், அரணாகாது அஞ்சனைதன் சேயை—முரணழியக் கட்டியது வேறோர் கயிறுகொண்டு ஆர்ப்பதன்முன், விட்ட படைபோல விடும்" [ஞானசாரம்] என்கிறபடியே மற்றொரு சேதனரையோ, தன் முயற்சியையோ தன் அபீ₄ஷ்டஸித்₃தி₄க்கு இவன் உபாயமாகக் கருதினானாகில், சணற்கயிறுகண்ட ப்₃ரஹ்மாஸ்த்ரம் போலே ஶரணாக₃தி ப₂லிக்காதாகையாலே, 'ஏவ'காரத்தாலே அவற்றைத் தவிர்க்கிறான். தன் முயற்சியாகிற உபாஸநத்தைச் சொல்லும் இப்ரகரணத்தில் தன் முயற்சியைத் தவிர்த்துக்கொள்வது ஒட்டுமோ எனில்; மோக்ஷ ஸாத₄னமாக உபாஸநமாகிற ஸ்வப்ரவ்ருத்தியில் ஈடுபடுவனுக்கும், உபாஸந விரோதி₄களான பாபங்களைக் கழித்துக் கொள்வதற்குத் தன் முயற்சியால் முடியாமையாலே, அதன் பொருட்டுத் தன் முயற்சியினின்றும் கைவாங்கி, அவனையே ஶரண

शेषलोकशरण्यं ये शरणं प्रपद्यन्ते, त एतां—मदीयां गुणमयीं मायां तरन्ति—मायामुत्सृज्य मामेवोपासत इत्यर्थः ॥ १४ ॥

---

மடைவது ஒட்டும். ஆகையாலே, ஏவகாரத்தாலே இவ்வதி₄காரி கைம்முதலில்லாத அகிஞ்சநனாகவும், வேறு புகலற்ற அநந்யக₃தியாகவும் இருப்பவன் என்று உணர்த்தக்குறையில்லை. (ப்ரபத்₃யந்தே) என்று தன் அபீ₄ஷ்டஸித்₃தி₄க்கு ஸர்வேஶ்வரனையே இவன் உபாயமாக உறுதிகொள்ளவேண்டும் என்று காட்டப்படுகிறது. ''யே'' ''தே'' என்னும் ஶப்₃த₃ங்களாலே ''ப்ரபந்நாத₃ந்யேஷாம் ந தி₃ஶதி முகுந்தோ₃ நிஜபத₃ம்'' [ரஹஸ்யத்ரயஸாரம்] [ப்ரபந்நர்களைத் தவிர வேறு எவர்க்கும் முகுந்த₃ன் தன் பரமபத₃த்தை அருளமாட்டான்] என்கிறபடியே, தம் முயற்சியில் ஈடுபடும் உபாஸகர்களோடு, ஸ்வப்ரவ்ருத்தியினின்றும் நிவ்ருத்தியடையும் ப்ரபந்நரோடு வாசியற அனைவருமே ஶரணாக₃தி செய்தே தீரவேண்டும் என்னும் நியமம் உணர்த்தப்படுகிறது. (ஏதாம் மாயாம்) ''மம மாயா து₃ரத்யயா'' என்று சற்றுமுன் கடக்கவரிதாகக் கூறப்பட்ட இந்த மாயையைக்கூட. (தரந்தி) தாண்டுகிறார்கள். ''மாயாம் தரந்தி'' என்று ஸம்ஸார தரணத்திற்கு ஶரணாக₃தியை நேரே உபாயமாகச் சொல்லியிருக்க, ''மாயாம் உத்ஸ்ருஜ்ய மாமேவ உபாஸதே'' [மாயையாகிற ப்ரக்ருதியைக் கைவிட்டு (பற்றற்று), என்னையே உபாஸிக்கிறார்கள்.] என்று பா₄ஷ்யகாரர் ஶரணாக₃தியை உபாஸநத்திற்கு விரோதி₄களைப் போக்கும் அங்க₃ப்ரபத்திபரமாக இங்கு வ்யாக்₂யானம் செய்வானென்னென்னில்; மேலே உபாஸந ப்ரகரணமாகையாலும், ஸம்ஸார விமோசனமற்ற ஐஶ்வர்யார்த்தி₂யான ப₄க்தனையும் மேலே சொல்லப் போகிறபடியால், அவனுக்கு அங்க₃ப்ரபத்தியே அபேக்ஷிதமாகையாலும் அங்க₃ப்ரபத்திபரமாக வ்யாக்₂யானம் செய்தார். ஆனால், இந்த ஶ்லோகத்தை முக்₂ய ப்ரபத்தியைச் சொல்லும் வசநமாகவே பூர்வாசார்யர்கள் எடுக்கக் காரணமென்ன? எனில்: இங்கு சில உண்மைகளை உணரவேண்டும். இந்த கீ₃தாஶாஸ்த்ரமானது அர்ஜுனனை வியாஜமாகக்கொண்டு ஸகலலோகத்திற்கும் உபதே₃ஶிக்கப்பட்டது. லோகத்தில் பெரும்பாலானவர்கள் ஸ்வார்த்த₂மான ஸ்வப்ரவ்ருத்தியினின்றும் நீங்காதவர்களாகையாலே, அவர்களுக்காக-கர்மயோக₃ம், ஜ்ஞாநயோக₃ம், ப₄க்தியோக₃ம் ஆகிற ப்ரவ்ருத்தித₄ர்மங்களாகிற ஸாத₄நாந்தரங்களை விதி₄த்து, ஆங்காங்கு அந்தந்த ஸாத₄நங்கள் செயற்கரியவையாயிருக்கின்றனவே என்னும் ஶோகம் ஏற்படும்போது, அவை நிறைவடைவதற்காகத் தன் விஷயமான ஶரணாக₃தியையும்

விதி₄த்து, 'இந்த ஸாத₄னங்கள் எல்லாமே செயற்கரியவையாகவும், அத்யந்த பரதந்த்ர ஸ்வரூபத்துக்குத் தகாதவையாகவுமிருக் கின்றனவே' என்னும் மோகம் விளைந்தவுடன், சரமஶ்லோகத்தில் தானே நிருபாதி₁கமான உபாயமெனக் காட்டுகிறான். ஆகையால், எம்பெருமானுடைய திருவுள்ளம் தனது நிரபேக்ஷ உபாயபூ₄ாவத் தைக் காட்டுவதிலேயே ஊன்றிநிற்கிறபடியால், இவற்றை ஸ்வதந்த்ர ப்ரபத்திக்கு ப்ரமாணமாக எடுப்பதிலும் குறையில்லை. இவ்வண்ண மாகவே. கீ₃தையிலுள்ள மூன்று ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட ஜ்ஞாநத்தையுடையனாகவும், மூன்று ஸ்த₂ானங்களில் சொல்லப்பட்ட பரப₄க்தியை உடையவனாகவும் தன்னை ஆக்கும்படி க₃த்₃யத்தில் எம் பெருமானார் பிரார்த்தி₂க்கையாலே. இங்கு கர்மயோக₃ம், ஜ்ஞாந யோக₃ம், ப₄க்தியோக₃ம் முதலான ஸாத₄னங்களை விதி₄க்கும்போதும், எம்பெருமானுடைய திருவுள்ளம் – ஸ்வயம் ப்ரயோஜனமான கர்ம ஜ்ஞாந ப₄க்திகளைச் சேதநர் அனைவரும் பெற்றவராகவேணும் என்பதி லேயே ஊன்றிநிற்பதாகக் கொள்ளலாம். ஆக, அர்ஜுனனைப் போன்ற ப்ரவ்ருத்திபரரைக் கருதி பா₄ஷ்யகாரர் கர்மஜ்ஞாந ப₄க்திகளை ஸாத₄நாந்தரமாகவும், ப்ரபத்தியை அங்க₃ப்ரபத்தியாகவும் வ்யாக்₂யாநம் செய்வதிலும், ப்ரபந்நர்களைக்கருதி க₃த்₃யம் முதலான வற்றில் எம்பெருமானார் முதலான ஸகலபூர்வாசார்யர்களும் கீ₃தா ஶ்லோகங்களை ஸ்வயம் ப்ரயோஜந கர்மஜ்ஞாநப₄க்தி பரமாகவும், ப₄க₃வானுடைய நிரபேக்ஷோபாயத்வபரமாகவும் கொள்வதிலும் எவ் வித முரணுமில்லை, "கஶ்சிந்மாம் வேத்தி தத்வத:" [7-3] என்னும் ஶ்லோகத்தின் பா₄ஷ்யத்தில் ஸ்வார்த்த₂மான ஸ்வப்ரவ்ருத்தி செய்ப வர்கள் எவருமே எம்பெருமானை உள்ளபடி அறியவில்லை என்று எம்பெருமானார் அருளியிருப்பதிலிருந்தும், மேல் ஶ்லோகங்களில் எம்பெருமான் இவ்வர்த்த₂த்தை விரிவாக உபபாதி₃ப்பதிலிருந்தும், "ஸர்வமித₃ம் ஜக₃த் மோஹிதம்" [7-13] என்னுமிடத்தில் ப்ரவ்ருத்தி பரர்களான பிரமன் முதலானோரும் மயங்கியவர்களே என்று முழங்கி யிருப்பதிலிருந்தும், "வாஸுதே₃வஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா" [7-19] என்று வாஸுதே₃வனே நிருபாதி₄க ப்ராப்ய ப்ராபகனென்று அறிப வனே உண்மையான ஜ்ஞாநி என்று முடிவுகட்டியிருப்பதிலிருந்தும், நேரே உபதே₃ஶபாத்ரமாயிருக்கும் அர்ஜுனனைக் கருதி ஸாத₄ நாந்தரபரமாகவும், அங்க₃பரபத்திபரமாகவும் வ்யாக்₂யானம் செய் திருக்குமிடங்களிலும், க₃த்₃யம் முதலானவற்றில் காட்டப்பட்ட ப₄க₃வானுடைய நிரபேக்ஷோபாய பரத்வமும், ஸ்வயம்ப்ரயோஜந கர்ம ஜ்ஞாந ப₄க்திபரத்வமுமே கீ₃தாஶ்லோகங்களுக்குப் பரமதாத் பர்யம் என்பதே கீ₃தாசார்யனும், பா₄ஷ்யகாரரும் உகந்ததாகும்

॥ भा ॥ किमिति भगवदुपासनापादिनीं भगवत्प्रपत्तिं सर्वे न कुर्वीत इत्यत्राह—

न मां दुष्कृतिनो मूढाः प्रपद्यन्ते नराधमाः।
माययाऽपहृतज्ञाना आसुरं भावमाश्रिताः॥ १५॥

15. ந மாம் து₃ஷ்க்ருதிநோ மூடா₄: ப்ரபத்₃யந்தே நராத₄மா: ।
மாயயாऽபஹ்ருத ஜ்ஞாநா: ஆஸுரம் பா₄வமாஶ்ரிதா: ॥

மூடா₄: — அறிவிலிகள், நராத₄மா: — மனிசரில் கடையானவர், மாயயா அபஹ்ருத ஜ்ஞாநா: — மாயையினல் அழிக்கப்பட்ட அறிவை உடையவர்கள், ஆஸுரம் பா₄வம் ஆஶ்ரிதா: — அஸுரத் தன்மையைப் பெற்றிருப்பவர் என்று, து₃ஷ்க்ருதிந: (சதுர்வித₄ா:) — (ஒருவர்க்குமேல் ஒருவர்) பாபம் மிகுந்த நாலுவகைப்பட்டோர், மாம் — என்னை, ந ப்ரபத்₃யந்தே — ஶரணமடைவதில்லை.

---

15. மூடர் நராதமர்கண் முன்மாயை யாலறிவின்
பாடழிந்தா ராசுரமாம் பாவஞ்சேர்—கேடார்ந்தார்
தீவினையார் நால்வரெனைச் சேருங் கதியதனின்
மேவியுறு வாரல்லர் மிக்கு.

மூடர் — அறிவிலிகள், நராதமர்கள் — மனிசரில் கடையானவர்கள், முன் மாயையால் அறிவின் பாடு அழிந்தார் — அநாதி₃மாயையால் அறிவின் பெருமை அழியப்பெற்றவர்,

---

என்று நிரூபகர்களுக்கு நன்கு விளங்கும். மேலே ஸாத₄நாந்தரபரமாகவும், அங்க₃ப்ரபத்தி பரமாகவும் பா₄ஷ்யமிடுமிடங்களிலெல்லாம் இப்படியே கொள்வது. சரமஶ்லோக வ்யாக்₂யாநத்தில் இப்ப்ரம தாத்பர்யத்தை விரிவாக விளக்குவோம். "ஒரு குருவி பிணைத்த பிணையலை ஒருவரால் அவிழ்க்கப்போகிறதில்லை. ஸர்வஶக்தி கர்மாநுகு₃ணமாகப் பிணைத்த பிணையலை ஒருவரால் அவிழ்க்கப்போமோ? அவனையே கால்கட்டி அவிழ்த்துக்கொள்ளுமித்தனை" என்னும் பிள்ளை திருநறையூரரையர் வார்த்தை இந்த ஶ்லோகத்தின் பிற்பாதியின் வாக்யார்த்த₂மாக அநுஸந்தி₄க்கத் தக்கது.

|| भा || दुष्कृतिनः—पापकर्माणो मां न प्रपद्यन्ते। दुष्कृततारतम्येन ते चतुर्विधा भवन्ति—मूढाः, नराधमाः, माययाऽपहृतज्ञानाः, आसुरं भावमाश्रिताः इति। मूढाः—विपरीतज्ञानाः,

---

ஆசுரமாம் பாவம் சேர் கேடு ஆர்ந்தார் — அசுரத்தன்மை பொருந்தி நிற்கையாகிற தீமை நிறைந்தவர், தீவினையார் நால்வர் — (என்று மேன்மேலே) பாவம் மிக்கவர்களான நாலுவகைப்பட்ட மனிதர்கள், எனை சேரும் கதி அதனில் — என்னைப் பற்றுகையாகிற இந்த ஶரணாகதியில், மிக்கு மேவி உறுவார் அலர் — மிகப் பொருந்தியிருப்பதில்லை.

---

15. 'இப்படி உன்னுடைய உபாஸநத்தை நிறைவடைவிக்கும் உன் விஷயமான ஶரணாகதியை ஏன் அனைவரும் செய்வதில்லை? சிலரே செய்கிறார்கள்' என்று அர்ஜுனனுக்குக் கருத்தாகக்கொண்டு, 'பாப மிகுதியாலே பலர் என்னை ஶரணமடைவதில்லை' என்றும், 'புண்ணிய மிகுதியாலே சிலர் என்னைப் பற்றுகிறார்கள்' என்றும் முறையே இரண்டு ஶ்லோகங்களாலே கூறுகிறான். அதில் ஶரணமடையாத நாலு வகைப்பட்ட பாபிகளைக் கூறுவது இந்த ஶ்லோகம். (து₃ஷ்க்ருதிந: சதுர்வித₄ா:) நாலு வகைப்பட்ட பாபிகள். மேல் ஶ்லோகத்திலே 'ஸுக்ருதிந:' (புண்ணியசாலிகள்) என்று பொதுவாக ப்ரபந்நர்கள் அனைவரையும் எடுத்து, அவர்களில் நாலு வகையைக் காட்டியதுபோலே, இங்கும் "து₃ஷ்க்ருதிந:" [பாபிகள்] என்று பொதுவாக ப்ரபந்நரல்லாதார் அனைவரையும் எடுத்து, அவர்களில் நாலு வகையைக் காட்டுவதாகக் கொள்வதே உசிதம். இங்கும் நாலுவகை காட்டப்படுகையாலே, அங்குள்ள சதுர்வித₄ ஶப்₃த₃த்தை இங்கும் வருவித்துப் பொருள் கொள்ளவேண்டும். அவர்கள் யாரென்பதையும், அவர்களில் முன்னால் உள்ளவர்களைக் காட்டிலும் பின்னாலுள்ளவர்கள் பாபமிகுதியை உடையவர்கள் என்பதையும் அவரவர்க்குரிய தனித்தன்மைகளைக் காட்டும் ஶப்₃த₃ங்களாலே கூறுகிறான் மேலே—(மூட₄ா:) அறிவிலிகள். ஶாஸ்த்ராதி₄காரிகளான தே₃வமநுஷ்யர்களைப் பற்றிய ப்ரகரணமாகையாலே, அடியோடு பகுத்தறிவில்லாத விலங்குகளையும், ஸ்த₂ாவரங்களையும் குறிக்காமல், ஒன்றை மற்றொன்றாக அறியும் அந்யத₂ாஜ்ஞாந விபரீதஜ்ஞாநங்களையுடைய தே₃வமநுஷ்யர்களைக் குறிக்கிறது இப்பத₃ம். முற்கூறிய ரீதியில் பரமபுருஷனுக்கு ஶேஷமாயிருக்கையையே இயல்வாக

पूर्वोक्तप्रकारेण भगवच्छेषतैमात्मात्मीयसनं भोग्यजातं च स्वशेषतया मन्यमानाः। नराधमाः—सामान्येन ज्ञातेऽपि मत्स्वरूपे, मदोन्मुख्यानर्हाः। माययाऽपहृतज्ञानाः—मद्विषयं मदैश्वर्यविषयं च ज्ञानं प्रस्तुतं येषां तदसंभावनापादिनीभिः कूटयुक्तिभिरपहृतम्, ते तथोक्ताः।

---

வுடைய ஆத்மாவாகிற தம்மையும், தாம் அநுபவிக்கும் போக்யப் பொருள்களையும், அவ்வநுபவத்துக்கு உறுப்பான தம் ப்ராணேந்திரியங்களையும், அவ்வநுபவங்களைச் செய்யுமிடமான தேஹம் முதலானவற்றையும், 'இவை எம்பெருமான் ஒருவனுக்கே ஶேஷமாயுள்ளன' என்று உணராமல், தமக்கே ஶேஷமென்று மயங்குகிறவர்கள் என்றபடி. குறைந்த பாபத்தையுடைய முதல்வகைப்பட்டவர்கள் இவர்கள். (நராதமா:) மனிசரில் கடையானவர்கள். விபரீத ஜ்ஞானமுடையவர்களை முன் பதத்தாலே சொல்லிவிட்டபடியாலும், ஜ்ஞாநம் உண்டாகி அழியப்பெற்றவர்களை மேலே சொல்லுகையாலும், அவர்களுக்கிடையில் — பொதுப்படையாக எம்பெருமான் ஶேஷியென்றும், தாமும், தமது போக்யபோகோபகரணபோகஸ்தாநங்களும் அவனுக்கு ஶேஷமென்றும் அறிந்தபோதிலும், அவன் விஷயத்தில் ஈடுபடாதவர்களை இங்கு சொல்லுகிறது. அறிந்தும் ஈடுபடாத இவர்கள் அறிவிலிகளான முற்கூறியவர்களைக் காட்டிலும் மிகுந்த பாபத்தையுடைய இரண்டாவதுவகைப் பாபிகள். உபநிஷத்துக்களின் அர்த்தத்தைப்பற்றிய நிஶ்சயமில்லாவிடினும், எல்லா உலகிலும் ப்ரஸித்தமான இதிஹாஸபுராணங்களால் விளைந்த பகவத் விஷயமான பொதுப்படையான அறிவு இவர்களுக்கு உள்ளது. அப்படியிருந்தும், ஸ்வல்பமும் என்னும் அறிவின்மையால்,மேருமலை முதலானவற்றிற்போலே பகவத்விஷயத்தில் இவர்களுக்கு ஈடுபாடு ஏற்படவில்லை என்று கருத்து (மாயயா அபஹ்ருதஜ்ஞாநா:) மாயையாலே அபஹரிக்கப்பெற்ற அறிவை உடையவர்கள். பரமபுருஷன் விஷயமாகவும், அவனது ஐஶ்வர்ய விஷயமாகவும், ஜ்ஞாநம் உண்டாகி, வேதப்ராமாண்யத்தை ஒவ்வாத பாஹ்யர்களாலும்,வேதங்களுக்கு அவப்பொருளுரைக்கும் குத்ருஷ்டிகளாலும் கற்பிக்கப்பட்ட வஞ்சகயுக்திகளாலே அந்த ஜ்ஞாநத்தை இழந்த இவர்கள் மூன்றாவது வகை. விசித்திரமான மயக்கத்தை உண்டாக்குகையால், அந்த யுக்திகள் மாயை எனப்படுகின்றன. உண்டான ஜ்ஞாநம் அழியப்பெறாத முந்தியவர்களைக் காட்டிலும், அது அழியப்பெற்ற இவர்களுடைய பாபம் மிக்கது என்பது வெளிப்படை

आसुरं भावमाश्रिताः — मद्विषयं मदैश्वर्यविषयं च ज्ञानं सुदृढमुपपन्नं येषां द्वेषायैव भवति ; त आसुरं भावमाश्रिताः। उत्तरोत्तराः पापिष्ठतमाः ॥ १५ ॥

चतुर्विधा भजन्ते मां जनास्सुकृतिनोऽर्जुन।
आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ॥१६॥

16. சதுர்வித₄ா ப₄ஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோऽர்ஜுந।
ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்த₂ார்த்தீ₂ ஜ்ஞாநீ ச ப₄ரதர்ஷப₄ ॥

---

(ஆஸுரம் ப₄ாவம் ஆஶ்ரிதா:) அஸுரர்களது தன்மையை அடைந்தவர்கள். உண்டான ஜ்ஞாநம் அழியப் பெற்றவர்களைக் காட்டிலும் வேறானவர்களாக இவர்களை எடுக்கையாலே, ப₄க₃வான் விஷயமாகவும், அவனது ஐஶ்வர்ய விஷயமாகவும் உறுதியாக உண்டான அந்த ஜ்ஞாநம் அழியாமலிருந்தும், ப₄க₃வத்₃விஷயத்தில் த்₃வேஷத்திற்கே உறுப்பாகிறபடியால் அஸுரத் தன்மையை அடைந்தவர்கள் இவர்கள் என்று கருத்து. ஹிரண்யன், ராவணன், ஶிஶுபாலன், கம்ஸன் முதலான ஆஸுரப்ரக்ருதிகள் பரமபுருஷனை எல்லையற்ற ஶக்தியுடையவன் என்று அறிந்தும் அவனிடம் துவேஷத்தையே காட்டினார்களன்றோ. "மாம் ஆத்ம பரதே₃ஹேஷு ப்ரத்₃விஷந்த:" [16-18] என்று கீ₃தையிலும், "விஷ்ணு ப₄க்திபரோ தே₃வ: விபரீதஸ் தத₂ாऽஸுர:" [விஷ்ணு த₄ர்மம் 109-74] [விஷ்ணு ப₄க்தியுடையவன் தெய்வப்பிறவி. நேர்மாறான விஷ்ணு த்₃வேஷி அஸுரப்பிறவி] என்று மற்றவிடங்களிலும் அஸுரலக்ஷணம் சொல்லப்பட்டது. நாலாவது வகையினரான இவர்கள் மிகக் கொடியவர்கள் என்பதும் வெளிப்படை. முதலிலிருந்து நாலாவது வகை வரையில் அறிவில் மேன்மேலே சிறந்தவர்களாயிருந்தும், "விது₃ஷோऽதிக்ரமே த₃ண்ட₃ பூ₄யஸ்த்வம்" [கௌ₃தம த₄ர்மம் 2-12-6] [அறிந்தவன் தவறு செய்தால் அதி₄க த₃ண்ட₃னை பெறுவான்] என்கிற ரீதியில், அவ்வறிவுச் சிறப்பே அவர்களை மேலே மேலே மிகுந்த பாவிகளாக்கி விடுகிறது என்று கருத்து. ஆக, தன்னைப் பலர் ஶரணமடையாமைக்குக் காரணம் அவர்களது பாபத்தின் மிகுதியே என்று காட்டப்பட்டது. 15.

ப₄ரதர்ஷப₄ அர்ஜுந — ப₄ரத குலத்துதித்தவர்களில் தலைவனான அர்ஜுனனே! ஆர்த்த:-(செல்வமிழந்து) வருந்துமவனும், அர்த்தா₂ர்த்தீ₂—(புதிதாக) செல்வத்தைப் பெற விரும்புமவனும், ஜிஜ்ஞாஸு:—ஆத்மஸ்வரூபத்தை அநுப₄விக்க விரும்புமவனும், ஜ்ஞாநீ ச—ஸ்வரூபஜ்ஞானமுடையவனுமாகிய, ஸுக்ருதிந:—புண்ணியசாலிகளான, சதுர்விதா₄: ஜநா:—நாலு வகைப்பட்ட ஜனங்கள், மாம்—என்னை, ப₄ஜந்தே—உபாஸிக்கிறார்கள்.

---

**16. மாடிழந்தான் மன்னுயிரை வேண்டுணர்வோன் வான்பொருளைத்**
**தேடியிருப் பான்ஞானஞ் சேர்வுற்றான்—பீடமரு**
**நல்வினையார் நால்வரிவ ரென்பா னலம்புனையுந்**
**தொல்வினையாற் சேர்வர் துணிந்து.**

**மாடு இழந்தான்** — செல்வத்தை இழந்தவன், **வான் பொருளை தேடி இருப்பான்**—சிறந்த ஐம்வர்யத்தைப் புதிதாக விரும்புமவன், **மன்னு உயிரை வேண்டி உணர்வோன்**—நிலையான ஆத்மாவின் அநுப₄வத்தை விரும்புகிறவன், **ஞானம் சேர்வுற்றான்**—(சிறந்த) அறிவை அடைந்தவன் (என்கிற) **பீடு அமரும் நல் வினையார் இவர் நால்வர்** — (மேல்மேல்) பெருமை பெற்ற புண்ணியம் செய்த இந்த நாலுவகைப் பட்டவர்களும், **துணிந்து**—(அப்புண்ணியத்தின் ஏற்றத்தாழ்வுக்குத் தக்கவாறு ஏற்றத்தாழ்வுள்ள அந்த நான்கு ப₂லன்களிலும்) விருப்பங்கொண்டு, **நலம் புனையும் தொல்வினையால்**—பழையதான உபாஸநா மார்க்கத்தாலே, **என்பால் சேர்வர்**—என்னிடம் ப₄க்திசெய்வார்கள்.

---

16. முன் ம்லோகத்திற் கூறப்பட்ட பாவிகளுக்கு எதிர்த்தட்டான புண்யமாலிகளில் நாலுவகையைக் கூறுகிறான் இந்த ம்லோகத்தாலே. "ப₄க்தபே₄த₃:" [ப₄க்தர்களின் பிரிவு] என்று கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹத்தில் சொல்லப்பட்ட அர்த்த₂மிது. (சதுர்விதா₄: ஸுக்ருதிந: மாம் ப₄ஜந்தே) நாலுவகைப்பட்ட புண்ணிய சாலிகள் என்னை உபாஸிக்கிறார்கள். இங்கு 'ப₄ஜந்தே' என்பதன் மூலம் இவர்களை உபாஸகர்களாகக் காட்டியபோதிலும், "ந மாம் ப்ரபத்₃யந்தே"

॥ भा ॥ सुकृतिनः—पुण्यकर्माणो मां शरणमुपगम्य मामेव भजन्ते। ते च सुकृततारतम्येन चतुर्विधाः, सुकृतगरीयस्त्वेन प्रतिपत्तिवैशेष्यादुत्तरोत्तराधिकतमा भवन्ति। आर्तः—प्रतिष्ठाहीनः, भ्रष्टैश्वर्यः

---

[என்னை ஶரணமடைகிருர்களல்லர்] என்று சென்ற ஶ்லோகத்திற் கூறப்பட்டவர்களுக்கு எதிர்த்தட்டாக இவர்களை எடுக்கையாலே, "புண்யஶாலிகள் நாலுவகையினர் என்னை ஶரணடைந்து உபாஸந விரோதிபாபம் நீங்கப் பெற்று என்னை உபாஸிக்கிருர்கள்" என்று பொருள் கொள்ளவேண்டும். (சதுர்விதா:) முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட பாவிகளுக்கு எதிர்த்தட்டான புண்ணியசாலிகளும் நாலு வகைப்பட்டவர்களே என்றபடி. (ஸுக்ருதிந:) முறைப்படுத்தப்பட்ட இவர்களும், முன் சொல்லப்பட்டவர்களைக் காட்டிலும், பின் சொல்லப் பட்டவர்கள் புண்ணியமிகுதியை உடையவர்கள் என்றும், அதனுலேயே அவரவர் விரும்பும் பலனும் மேன்மேலே சிறப்புற்றதாகிறது என் றும் கருத்து. தனக்கு வைஷம்ய நைர்க்ருண்யம் வாராமைக்காக, எவன் ஶாஸ்த்ரீயமான எப்பலனை விரும்பித்தன்னை உபாஸிக்கிருனே அவனுக்கு அப்பலனை அளிப்பது — என்னும் நியமத்தை எம்பெரு மான் வைத்துக் கொண்டிருக்கிருன் என்றும், ஒவ்வொருவன் ஏற்றத்தாழ்வுள்ள ஒவ்வொரு பலனை விரும்புவதற்குக் காரணம் அவனவனுடைய பூர்வ புண்யத்தின் ஏற்றத்தாழ்வே என்றும் 'ஸுக்ருதிந:' என்ற பதத்திலுள்ள 'இநிச்' ப்ரத்யயத்தாலே உணர்த்துகிருன். இனி, அவர்கள் யாரென்பதை அவரவர்க்குரிய தனித்தன்மைகளைக் காட்டும் ஶப்தங்களையிட்டு ஶ்லோகத்தின் பிற் பாதியாலே காட்டுகிருன். இதில், ஆர்த்தனுக்கும், அர்த்தார்த் திக்கும் இடையில் ஜிஜ்ஞாஸுவைப் படித்திருந்தபோதிலும், பாட க்ரமத்தைக்காட்டிலும் அர்த்தக்ரமம் வலிமையுடையதாகையால், ஐஶ்வர்யார்த்திகளான ஆர்த்தனுக்கும், அர்த்தார்த்திக்கும் பிறகு கைவல்யார்த்தியான ஜிஜ்ஞாஸுவைப் படித்துக் கொள்ளவேண்டும். (ஆர்த்த:) செல்வத்தை இழந்து வருந்துமவன். ஆர்த்திபதம் வருத்தத்தைக் குறித்து, அதற்குக் காரணமான செல்வமிழந்த நிலையைக் குறிக்கிறது. ஆக, ஆர்த்தன் என்று செல்வமிழந்தவனைக் காட்டுகிறது, இப்படிச் செல்வமிழந்தவன் பரமாத்மாவை உபாஸிப் பது இழந்த செல்வத்தைப் பெறுவதற்காகவே என்பது வெளிப்படை. அல்பமும், அஸ்திரமுமான ஐஶ்வர்யத்தை விரும்புகையாலே, இவன் குறைந்த புண்ணியத்தை உடையவன் என விளங்குகிறது. செல் வத்தை இழந்த வருத்தமும் கலந்திருக்கையாலே அர்த்தார்த்தியைக்

पुनस्तत्प्राप्तिकामः। अर्थार्थी—अप्राप्तैश्वर्यतया ऐश्वर्यकामः। तयोर्मुख-
भेदमात्रम्; ऐश्वर्यविषयतयैक्यादेक एवाधिकारः। जिज्ञासुः—प्रकृति-

---

காட்டிலும் குறைந்த புண்ணியம் உடையவனென்றும் விளங்குகிறது. இப்படி மிகக் குறைந்த புண்ணியத்தை உடையவனுகையால், நால்வரில் முதல்வகையாக எடுக்கப்படுகிறான் இவன். (அர்த்தா₂ர்த்தீ₂) புதிதாகச் செல்வத்தைப் பெற விரும்புகிறவன். செல்வத்தை இழந்தவனை முந்திய அதி₄காரியிலும் வேறுபட்டவனுக எடுக்கையால் இவன் புதிதாகச் செல்வத்தைப் பெற விரும்புகிறவன் என்று விளங்குகிறது. 'அர்த்த₂' ஶப்₃த₃ம் ஸம்ஸாரிகளால் அர்த்தி₂க்கப்படுமதாய், கண்டு கேட்டு உற்று மோந்து உண்டு உழலும் ஐங்கருவி கண்ட இன்பம் அனைத்தையும், அவ்வின்பங்களைப் பெற உதவும் இவ்வுலகச் செல்வங்களையும், பிரமன், உருத்திரன், இந்திரன் முதலானுரின் உலகங்களிலுள்ள செல்வங்களையும் குறிக்கிறது. ஆர்த்தனும், அர்த்தா₂ர்த்தி₂யுமான இருவருமே ஐஶ்வர்யார்த்தி₂களானுலும். அவனுக்குள்ள வருத்தம் இவனுக்கு இல்லாமையாலே, இவன் அவனிலும் புண்ணியம் மிக்கவன் என்று விளங்குகிறது. ஆயினும், இருவரும்—அசித்பரிணுமமான ஐஶ்வர்யத்தையே விரும்புமவர்களாகையாலே 'ஐஶ்வர்யார்த்தி₂கள்' என்னும் ஒரேவித₄மான அதி₄காரிகளாய், அவர்களில் இருவகையினராகின்றனர். ஒரே வகையினரானுல் அவர்களைப் பிரித்து எடுப்பானென்னென்னில்: ஒரே வகையினரானுலும் முற்கூறியபடி புண்ணியத்தில் ஏற்றத்தாழ்விருக்கையாலும், அவர்கள் அநுஸந்தி₄க்கவேண்டிய மந்திரங்களில் பே₄த₃மிருக்கையாலும் பிரித்து எடுக்கக்குறையில்லை. "அண்டக்குலத்துக்கு அதிபதியாகி அசுரர் இராக்கதரை இண்டக்குலத்தை எடுத்துக் களைந்த இருடீகேசன் தனக்குத் தொண்டக்குலத்தில் உள்ளீர்" [திருப்பல்லாண்டு 5] என்று பெரியாழ்வார் ஐஶ்வர்யார்த்தி₂களை அழைக்கும் பாசுரத்தில் இவர்களை இக்காரணத்தாலேயே பிரித்துக் காட்டினுர். அப்பாசுரத்தின் வ்யாக்₂யானத்தில் "அண்ட₃ாதி₄பதயே நம:" என்பது அர்த்தா₂ர்த்தி₂ அநுஸந்தி₄க்கும் மந்திரமாகையாலே, "அண்டக்குலத்துக்கதிபதியாகி இருடீகேசன் தனக்குத் தொண்டக்குலத்திலுள்ளீர்" என்று அர்த்தா₂ர்த்தி₂களையும், "அஸுரஶத்ரவே நம:" என்பது ஆர்த்தன் அநுஸந்தி₄க்கும் மந்திரமாகையாலே, "அசுரரிராக்கதரை இண்டக்குலத்தை எடுத்துக் களைந்த இருடீகேசன் தனக்குத் தொண்டக்குலத்திலுள்ளீர்" என்று ஆர்த்தர்களையும் ஆழ்வார் எடுப்பதாகப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் செய்திருப்பது இங்கு காணத்

वियुक्तात्मस्वरूपावाप्तीच्छुः ; ज्ञानमेवास्य स्वरूपमिति जिज्ञासुरित्युक्तम् ।

தக்கது. ஆக, ஆர்த்தன் அர்த்தா₂ர்த்தீ₂ என்று முதலிரண்டு வகையான புண்ணியஶாலிகள் காட்டப்பட்டனர். (ஜிஜ்ஞாஸு:) என்னும் பத₃ம் இவர்களிலும் மிக்க மூன்றாவதுவகைப் புண்ணியசாலியைக் குறிக்கிறது. முன் அதி₄காரிகள் விரும்பும் ஐஶ்வர்யத்தைக்காட்டிலும் சிறந்ததாக வும், நாலாவது அதி₄காரி விரும்பும் ப₄க₃வத₃நுப₄வத்தைக் காட்டிலும் தாழ்ந்ததாகவுமுள்ள ஒன்றை விரும்புகிறவனையே இங்கு எடுக்க வேண்டுமாகையால், ஐஶ்வர்யாநுப₄வத்தைக்காட்டிலும் சிறந்ததாக வும், ப₄க₃வத₃நுப₄வத்தைக் காட்டிலும் தாழ்ந்ததாகவும் இதர ஶாஸ்த் ரங்களில் ப்ரஸித்₃த₄மானதாய், பூர்வஷட்கத்திலும் உணர்த்தப்பெற்ற தாய், இவ்வத்தியாயத்தில் மேலே விவரிக்கப்படுகின்றதான ப்ரக்ருதி வியுக்தமான ஆத்மாநுப₄வத்தைப்பெற விரும்புகிறவனே இங்கு ஜிஜ்ஞாஸு பத₃த்தால் குறிக்கப்படுகிறான் என்பது வெளிப்படை. ப்ர க்ருதி ஸம்ப₃ந்த₄மற்ற நித்யமான சித்தைப்பற்றியதாகையாலே, அஸ் தி₂ரமான அசித்தாகிற ஐஶ்வர்யத்தின் அநுப₄வத்தைக் காட்டிலும் அநந்தமாய், ஸ்தி₂ரமாயிருப்பதாய், ப₄க₃வத₃நுப₄வத்தைக்காட்டிலும் அல்பமாயிருப்பதான ஆத்மாநுப₄வத்தை விரும்புகையாலே இவன் ஐஶ்வர்யார்த்தி₂களுக்கும், ப₄க₃வத₃நுப₄வ காமனுக்கும் இடைப்பட்ட புண்ணியசாலியாக எடுக்கப்படுகிறான். இனி, ஜிஜ்ஞாஸுபத₃த்தால் வேறு சிலரையும் குறிக்கலாமே என்று சில ஆக்ஷேபங்கள் எழக்கூடும். அவையாவன:-(1) ஜ்ஞாநத்தை விரும்புகிறவனைமாத்திரம் ஜிஜ்ஞாஸு பத₃த்தால் எடுக்கலாம் (2) ப₄க₃வானை அறியவிரும்புகிறவனையும் அப்பத₃த்தால் எடுக்கலாம். (3) ''யூயம் ஜிஜ்ஞாஸவோऽப₄க்தா:'' [பா₄ர-மோக்ஷ 344-31] [நீங்கள் ப₄க்தியற்றவர்களாயினும், பரம புருஷனை அறியவிரும்புகிறவர்கள்] என்னும் ஏகதர், த்₃விதர் முதலா னோரின் வாக்யத்திற்போலே, ப₄க்திஶ்ரத்₃தை₄யற்றவராய் குதூஹல மாத்ரத்தாலே ப₄க₃வானை அறியவிரும்புகிறவர்களையும் எடுக்கலாம். (4) 'ஆரோக்₃யம் பா₄ஸ்கராதி₃ச்சே₂த் ஶ்ரியமிச்சே₂த் ஹுதாஶநாத் । ஈஶ்வராத் ஜ்ஞாநமந்விச்சே₂த் மோக்ஷமிச்சே₂த் ஜநார்த்த₃நாத் ॥'' [ஆரோக்₃யத்தை ஸூர்யனை உபாஸித்தும், செல்வத்தை அக்₃நியை ஆஶ்ரயித்தும், ஞானத்தைச் சிவனை அடைந்தும், மோக்ஷத்தை விஷ்ணுவை உபாஸித்தும் பெற விரும்பவேண்டும்.] என்னும் ஸுப்ர ஸித்₃த₄புராண ஶ்லோகத்தை நினைவுறுத்துவதாக இந்த கீ₃தா ஶ்லோக மிருக்கையாலே, ஆரோக்₃யமிழந்து வருந்துமவனை ஆர்த்தனென்றும், செல்வத்தைப் பெற விரும்புகிறவனை அர்த்தா₂ர்த்தீ₂ என்றும், பரமாத்ம ஜ்ஞாநத்தை விரும்புகிறவனை ஜிஜ்ஞாஸு என்றும், மோக்ஷ

ज्ञानी च—* इतस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम् (५) इत्यादिनाऽभि-

த்தை விரும்புகிறவனை ஜ்ஞாநியென்றும் கூறுவதாகவும் கொள்ளலாம் என்பவை அவ்வாக்ஷேபங்கள். இவ்வாக்ஷேபங்கள் பொருந்தமாட்டா என்பது இப்ரகரணத்தை ஆராய்ந்தால் விளங்கும். ஜ்ஞாநத்தை விரும்புகிறவனுக்கும், பகவானைப் பெற விரும்புகிறவனுக்கும் கடைசியில் பகவானே ப்ராப்யமாகையால், ஜிஜ்ஞாஸுவாகிற இவ்வதிகாரி நாலாமவனான ஜ்ஞாநியைக் காட்டிலும் வேறுபடாதவனாக வேண்டிவரும். ஆகையால் இவ்வாக்ஷேபங்கள் பொருந்த மாட்டா. ஆரோக்யம் முதலிய எல்லாச் செல்வங்களையும் இழந்தவனை ஆர்த்த ஶப்தம் குறிக்கலாமாயிருக்க, ஆரோக்யத்தை இழந்தவனை மாத்திரம் குறிப்பதாக ஸங்கோசம் செய்ய இப்ரகரணத்தில் எவ்விதமான நியாமகமுமில்லை. ஆகையால், கீதையில் முன்பின் ப்ரகரணங்களில் ஐஶ்வர்யார்த்திக்கும், பகவதநுபவகாமனுக்கும் இடைப்பட்டவனாக எடுக்கப்படும் ஆத்மாநுபவகாமனையே இங்கு ஜிஜ்ஞாஸு பதத்தால் எடுக்கிறது என்பது தெளிவு. 'ஜ்ஞாநத்தை விரும்புமவன்' என்னும் பொருளுடைய ஜிஜ்ஞாஸுபதம் இவனை எப்படிக் குறிக்கும்? எனில்: இவனுடைய ஸ்வரூபம் ஜ்ஞாநமயமானதாகையால், ப்ரக்ருதி ஸம்பந்தமற்றதான தன் ஆத்மாவை விரும்பும் இவனை ஜிஜ்ஞாஸு என்னக்குறையில்லை. (ஜ்ஞாநீ ச) பகவானே பரமப்ராப்யம் எனும் சிறந்த ஜ்ஞானத்தையுடையவன். என்னையே அடைய விரும்பும் ஜ்ஞாநி-தான் விரும்பும் ப்ராப்யமாகிற என் சிறப்பைக் காணும்போது, முற்கூறிய புண்ணியசாலிகளைக் காட்டிலும் புண்ணியம் மிக்க நாலாவது வகைப்பட்டவனாகிறான் என்கை. முன் அதிகாரிகளுக்கு இல்லாத—''இதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம்'' [7-5] [இவ்வசேதன ப்ரக்ருதியைக் காட்டிலும் மேலான சேதன ப்ரக்ருதியையும் என்னுடையதாக அறி] என்று தொடங்கி உபதேஶிக்கப்பட்ட பரமபுருஷனைப் பற்றிய உண்மையறிவையும், 'அப்பரம புருஷனுக்கு ஶேஷமாயிருப்பதையே இயல்வாகக் கொண்டது ஆத்மஸ்வரூபம்' என்னும் சிறந்த அறிவையும் உடையவனாகையால் இவன் 'ஜ்ஞாநீ' எனப்படுகிறான். புண்ணியத்தின் குறைவாலே இத்தகைய அறிவுபெறாத ஆர்த்தனும், அர்த்தார்த்தியும் அல்பமாய், அஸ்திரமான ஐஶ்வர்யத்தைப் புருஷார்த்தமாக எண்ணி என்னை உபாஸித்து, கல்பகவ்ருக்ஷத்திடம் கௌபீந பிக்ஷை பெறுவதுபோலே என்னிடம் ஐஶ்வர்யத்தைப்பெற்று அகல்கின்றனர். இவர்களிலும் புண்ணியம் மிக்கிருக்கையாலும், ஜ்ஞானியைக் காட்டிலும் குறைந்த புண்ணியத்தையுடையவனாகையாலும்,

हितभगवच्छेषतैकरसात्मस्वरूपवित्; प्रकृतिवियुक्तकेवलात्मन्यपर्यवस्यन् भगवन्तं प्रेप्सुः भगवन्तमेव परमप्राप्यं मन्वानः ॥१६॥

---

அநந்தஸ்தி₂ரப₂லமான என்னை விரும்பாமல், நித்யமான ஆத்மாநுப₄வமாத்ரத்தைப் புருஷார்த்த₂மாக எண்ணி, என்னை உபாஸிக்கும் ஜிஜ்ஞாஸுவும் அல்பப₂லமான அதையே பெற்றுப் போகிருன். இவனிலும் புண்ணியம் மிக்கவனை ஜ்ஞானியோ வெனில், இப்படி கேவலாத்மாவைப் பெற்று அகலாமல், என்னையே பரமப்ராப்யமாக எண்ணி என்னையே பெற விரும்புகின்றவனாய், அவ்விருப்பத்திற்கு அனுகு₃ணமாக என்னை உபாஸித்து என்னையே பெற்று நித்யமான பேரின்ப வாழ்ச்சி பெறுகிருன். ஆகையால் இவனே புண்ணியசாலிகளில் தலைசிறந்தவன் என்று கருத்து. கீதை ஆருமத்தியாயத்தை அடியொற்றி, ''உற்றது வீடுயிர்'' [1-2-5] ''அதுவே வீடு'' [7-8-7] முதலானவிடங்களில் திருவாய்மொழியில் ஆழ்வார் இவ்வாத்மப்ராப்தியை மோக்ஷமாகவே அருளினுர். ''விடை கொள்வார்'' [முதல் திருவ 26] என்று கைவல்யார்த்தி₂களை பரமபுருஷனிடமிருந்து எப்போதுமே விடைகொள்வாராகவும், ''ஈன் துழாயானை வழுவாவகை நினைந்து வைகல் தொழுவார்'' [ஷை-26] என்று ஜ்ஞாநிகளை எம்பெருமானை விட்டுப்பிரியாமலிருக்கைக்குறுப்பாக எப்போதும் உபாஸிப்பவர்கள் என்றும் பொய்கையாழ்வாரும் அருளினுர். இப்படி ஆழ்வாரும் கீ₃தாசார்யனும் அருளியதை ஒட்டி, ''ப்ரக்ருதி வியுக்தாத்ம ஸ்வரூபாவாப்தீச்சு₂:'' என்று ஜிஜ்ஞாஸுவையும். '' கேவலாத்மநி அபர்யவஸ்யந் ப₄க₃வந்தம் ப்ரேப்ஸு, '' [கைவல்ய நிஷ்ட₂னைப் போலே கேவலாத்மாவிலேயே கால் தாழ்ந்து விடாமல், பரமபுருஷனை அடைய விரும்புகிறவன்] என்று ஜ்ஞாநியையும் பா₄ஷ்யகாரர் அருளியிருப்பது குறிக்கொள்ளத் தக்கது. இவ்விஷயத்தில் தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யாதாக்களிடம் கருத்து வேறுபாடு கொண்ட ஸ்ரீவேத₃ாந்த தே₃ஶிகர், ''கேவலாத்மநி அபர்யவஸ்யந்'' என்ற பா₄ஷ்யகார ஸூக்திக்கு '' நகரத்தினுள் நுழைய விரும்பிய வழிப்போக்கன் — நிழல் தரும் மரத்தடியில் தூங்குவதுபோலே (ஜிஜ்ஞாஸுவுக்கு) ஆத்மாநுப₄வ ரூபமான கால தாமதம் இடையில் ஏற்படுகிறது என்று கருத்து'' என்று தாத்பர்ய சந்த்₃ரிகையில் கருத்துரைத்தார். இதுபற்றி அவர் விரிவாக விசாரம் செய்திருக்கும் எட்டாம் அத்தியாயத்திலேயே நாமும் இவ்விரண்டு பக்ஷங்களையும் விரிவாக விளக்குவோம். கைவல்யம் மோக்ஷம் எனும் பக்ஷத்தில், ஸர்வகர்மங்களும் கழிந்தபின்பு கைவல்ய நிஷ்ட₂னுக்குத்

தாழ்ந்த மோக்ஷமும், ஜ்ஞாநிக்கு உயர்ந்த மோக்ஷமும் எப்படி உண்டாகமுடியும்? என்னும் ஒரு கேள்விக்கு மாத்திரம் பாஷ்ய காரர் ''ஸுக்ருத கரீயஸ்த்வேந ப்ரதிபத்தி வைஶேஷ்யாத் உத்த ரோத்தராதிகதமா பவந்தி'' [புண்ணிய மிகுதியினால் உண்டான விருப்பத்தின் சிறப்பாலே மேல்மேல் அதிகாரிகள் சிறந்த பலனைப் பெறுகிறார்கள்.] என்னுமிடத்தில் 'ப்ரதிபத்தி வைஶேஷ்யாத்' என்னும் ஶப்தத்தையிட்டு பதிலை உணர்த்தியிருப்பது குறிக்கொள்ளத் தக்கது. புண்ணிய மிகுதியினால் மேல்மேல் அதிகாரிக்கு மேலே மேலே சிறந்த பலனில் விருப்பம் உண்டாகிறது. அந்த ரீதியில் கைவல்ய நிஷ்டனுக்கு அவனுடைய குறைவான புண்ணியத்தினால் தாழ்ந்த மோக்ஷமான ஆத்மாநுபவத்தில் விருப்பமும், ஜ்ஞாநிக்கு அதிகமான புண்யத்தினால் சிறந்த பலனான பகவதநுபவத்தில் விருப்பமும் ஏற்பட்டுவிடுகிறது. இருவரும் பகவானை ஆஶ்ரயித்து, அவரவர்க்குரிய ஸாதனங்களை அநுஷ்டித்து, தத்க்ரதுந்யாயத்தாலே அவரவர் விரும்பிய பலனைப் பெறுகிறார்கள். அதில், பகவத் ப்ராப்தியைப் போலே, ஆத்ம ப்ராப்தியும் ''ஶப்தப்ரஹ்ம அதி வர்த்ததே'' [6-44] என்கிறபடியே ப்ரக்ருதி மண்டலத்தைத்தாண்டிய பின்பே ஏற்படுவதாகையால், அதற்கும் ஸம்ஸாரஹேது ஸர்வபாப விமோசநம் அவஶ்யமாகிறது. இப்படி ஸர்வபாப விமோசநம் துல்ய மானாலும், புண்யபாபத்தில் சேராத அவரவர் ப்ரதிபத்தியின்படி (விருப் பத்தின்படி) ஒருவன் தாழ்ந்த மோக்ஷத்தையும், ஒருவன் சிறந்த மோக்ஷத்தையும் பெறக் குறையில்லை என்பதை, ''ஸுக்ருத தாரதம் யேந'' ''உத்தரோத்தராதிகதமா பவந்தி'' என்னும் ஸூக்திகளுக் கிடையில் ''ப்ரதிபத்தி வைஶேஷ்யாத்'' என்னும் பதத்தை யிட்டுக் காட்டினார் பாஷ்யகாரர். மோக்ஷத்திலும் இப்படி தத்க்ரது ந்யாயத்தை ஒட்டி அவனவன் விரும்பிய பலனை எம்பெருமான் அளிப்பவனானால்தான் அவனுக்கு வைஷம்யநைர்க்ருண்ய தோஷம் வாராதென்பதும் குறிக்கொள்ளத்தக்கது. இதுபற்றி மேலே விரிவாக விளக்குவோம். (பரதர்ஷப அர்ஜுந) என்னும் விளிகளாலே, நீ பரத குலத்திலுதித்தவர்களில் தலைவனாய், வெள்ளை நிறத்தையுடைய ஶுத்த ஸ்வபாவனாகையாலே, புண்ணியசாலி களில் சிறந்தவனான ஜ்ஞாநியாக வேண்டும் என்னும் கருத்தைக் காட்டுகிறான். ஆக, ''பக்தபேதா:'' என்று கீதார்த்த ஸங் க்ரஹத்திற் கூறியபடியே — புண்ணியத்தின் ஏற்றத் தாழ்வாலே ஏற்றத்தாழ்வுள்ள ஒவ்வொரு பலனில் விருப்பம் ஏற்பட்டு, அவ் விருப்பம் நிறைவேறுவதற்காக எம்பெருமானிடம் பக்தி செய்யும் நாலுவகைப்பட்ட பக்தர்களைக் கூறினாயிற்று. 16.

तेषां ज्ञानी नित्ययुक्तः एकभक्तिर्विशिष्यते ।
प्रियो हि ज्ञानिनोऽत्यर्थमहं स च मम प्रियः ॥ १७ ॥

17. தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த: ஏகப₄க்திர் விஶிஷ்யதே।
ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்த₂மஹம் ஸ ச மம ப்ரிய: ||

**தேஷாம்**—அந்நால்வருக்குள், **நித்யயுக்த:**—என்னோடு எப்போதும் சேர்ந்திருப்பவனாய், **ஏகப₄க்தி:**—என்னொருவனிடமே ஈடுபாட்டை உடையவனாயிருப்பவனான, **ஜ்ஞாநீ**—ஞானி, **விஶிஷ்யதே** — சிறப்புறுகிறான். **அஹம்** — நான், **ஜ்ஞாநிந:** — ஞானிக்கு, **அத்யர்த்த₂ம் ப்ரிய:** — சொல்லவொண்ணாதவளவுக்கு இனியவன்; **ஸ: ச**—அவனும், **மம**—எனக்கு, **ப்ரிய:**—இனியவன்.

---

17. **ஆங்கவரின் ஞானி யதிக னவனென்றும்
பாங்கிலெனைச் சேர்ந்தேக பத்தியனும்—நீங்கலுறு
தென்னையவன் செப்பாத வேய்ந்துகக்கும் யானுமவன்
றன்னையுகந் தேயிருப்பன் சார்ந்து.**

**ஆங்கு அவரில்** — அத்தகைய அவர்களுக்கிடையே, **ஞானி**—ஞானியானவன், **அதிகன்**—சிறப்புற்றவன்; (ஏனெனில்) **அவன்** — அவன், **பாங்கில்** — பாங்காக, **என்றும் என்னை நீங்கலுறுது சேர்ந்து**—என்றுமே என்னோடு பிரியாது கூடியிருப்பவனாய், **ஏகபத்தியனும்** — என் ஒருவனிடமே அன்பு செலுத்துகிறவனாயிருப்பவன்; **என்னை** — என்னை, **அவன்**—அவன், **செப்பாத**—சொல்லமுடியாதபடி, **ஏய்ந்து**—பொருந்தி, **உகக்கும்** — உகப்பான்; **யானும்** — நானும், **அவன் தன்னை சார்ந்து**—அவனோடு பொருந்தி, **உகந்தே இருப்பன்**—(அவனை) உகந்தேயிருப்பேன்.

---

17. இனி, "**ப்ரபு₃த்₃த₄ஸ்ய ஶ்ரைஷ்ட்₂யம்**" [ஜ்ஞாநியின் சிறப்பு] **என்று ஆளவந்தாரால் ஸங்க்₃ரஹிக்கப்பட்ட அர்த்த₂ம் மூன்று ஶ்லோகங்களாலே கூறப்படுகிறது.**

॥भा॥ तेषां ज्ञानी विशिष्यते। कुतः? नित्ययुक्त एक-
भक्तिरिति च। ज्ञानिनो हि मदेकप्राप्यस्य मया योगो नित्यः;

---

"சதுர்வித$_4$ா மம ஜநா ப$_4$க்தா ஏவ ஹி தே ஶ்ருதா:।
தேஷாம் ஏகாந்திந: ஶ்ரேஷ்ட$_2$ாஸ் தே சைவ அநந்யதே$_3$வதா:॥
அஹமேவ க$_3$திஸ் தேஷாம் நிராஶீ:கர்மகாரிணாம்॥
யே து ஶிஷ்டாஸ் த்ரயோ ப$_4$க்தா: ப$_2$லகாமா ஹி தே மதா:।
ஸர்வே ச்யவந த$_4$ர்மாண: ப்ரதிபு$_3$த்$_3$த$_4$ஸ்து மோக்ஷப$_4$ாக்॥"
[ப$_4$ாரதம் – மோக்ஷ 342–33,34,35]

[நாலு வகைப்பட்ட ஜநங்கள் என்னுடைய ப$_4$க்தர்கள் என்று பிர ஸித்$_3$தி$_4$பெற்றவர்கள்; அவர்களுக்குள் ஏகாந்திகள் சிறந்தவர்கள்; அவர்களே வேறு தே$_3$வர்களைப் பற்றாதவர்கள். ப$_2$லன்களில் பற்றற்றுக் கர்மம் செய்யும் அவர்களுக்கு நானே ப்ராப்யனாகிறேன். மற்ற மூன்று ப$_4$க்தர்களும் என்னையொழிந்த ப$_2$லனை விரும்புகிற வர்கள். அவர்கள் மூவரும் (ஶேஷத்வமாகிற) த$_4$ர்மத்திலிருந்து நழுவியவர்கள்; நான்காமவனான ஜ்ஞாநியே மோக்ஷத்தை அடை கிறான்.] என்று இவ்வர்த்த$_2$த்தை மேலே மஹாப$_4$ாரதம் மோக்ஷ த$_4$ர்மத்திலும் கூறப்போகிறான் என்று தாத்பர்ய சந்த்$_3$ரிகை. இந்த ஶ்லோகங்களில் ஜ்ஞாநிகளை 'ஏகாந்திந:' என்று எடுக்கையாலும், அவர்களே மற்றவர்களை தெய்வமாகப் பற்றாதவர்கள் என்று கூறுகை யாலும், மற்ற மூவரும் மற்ற தே$_3$வர் முதலானோரைப் பற்றியவர் களேயாகவேணும் என்றும், இந்த ஶ்லோகங்களை ஒட்டியுள்ள "ப்$_3$ரஹ்மாணம் ஶிதிகண்ட$_2$ஞ்ச ... ப்ரதிபுத்$_3$த$_4$ா ந ஸேவந்தே" [நான்காமவரான ஞானிகள் – பிரமன், உருத்திரன் முதலான தெய் வங்களை ஸேவிக்கமாட்டார்கள்] என்னும் ஶ்லோகமும் இதை வலி யுறுத்துகிறது என்றும் "தேऽபி மாமேவ கௌந்தேய யஜந்தி" [கீ$_3$தை 9-23] [மற்ற தெய்வங்களின் ப$_4$க்தர்களும் (உண்மையில்) அந்தர்யாமியான என்னையே ஆராதி$_4$க்கிறார்கள்] என்று சொன்ன ரீதியில் அவர்களைத் தனது ப$_4$க்தர்களாகக் கண்ணன் கூறுகிறான் என்றும், இக்காரணங்களாலே, "யாந்தி தே$_3$வவ்ரதா தே$_3$வாந் பித்ருந் யாந்தி பித்ருவ்ரதா:। பூ$_4$தாநி யாந்தி பூ$_4$தேஜ்யா யாந்தி மத்$_3$யாஜிநோऽபி மாம்॥" [கீ$_3$தை 9-25] என்னும் ஶ்லோகத்தில் கூறப்பட்ட (1) தே$_3$வப$_4$க்தர்கள், (2) பித்ருப$_4$க்தர்கள், (3) பூ$_4$த ப$_4$க்தர்கள் (4) ப$_4$க$_3$வத்$_3$ப$_4$க்தர்கள் என்னும் நாலுவகைப்பட்ட அதி$_4$ காரிகளையே மோக்ஷத$_4$ர்மத்தில் "சதுர்வித$_4$ா:" என்று எடுக்கிறான்

इतरयोस्तु यावत्स्वाभिलषितप्राप्ति मया योगः। तथा ज्ञानिनो मय्येकस्मिन्नेव भक्तिः; इतरयोस्तु स्वाभिलषिते तत्साधनत्वेन मयि च;

---

என்றும் முமுக்ஷுப்படி வ்யாக்2யானமான தாத்பர்யதீ3பிகையில் காட்டப்பட்டது. ப்ராஸங்கி3கமான இது நிற்க. (தேஷாம்) ஆர்த்தன், அர்த்தா2ர்த்தி2, ஜிஜ்ஞாஸு, ஜ்ஞாநி என்னும் நாலு வகைப் பட்ட ப4க்தர்களுள். "தேஷாம்" என்னுமிடத்தில் ஷஷ்டி2 (ஆறும் வேற்றுமை) "நிர்த4ாரணே ஷஷ்டீ2" என்னும் இலக்கண வழக்கின்படி பலரில் ஒருவரை நிர்த்த4ாரணம் செய்வதாகிற பொருளில் வந்தது. (ஜ்ஞாநீ விஶிஷ்யதே) அந்த நால்வருள் ஜ்ஞானியானவன் சிறந்தவனாகிறான். இனி, பூர்வார்த்த4த்திலுள்ள "நித்யயுக்த:" "ஏகப4க்தி:" என்னும் இரு விஶேஷணங்களும் ஜ்ஞானியின் சிறப்புக்குக் காரணத்தை உணர்த்துகின்றன— (நித்யயுக்த:) எப்போதும் சேர்ந்திருப்பவன்; ஞானியானவன் எப்போதும் என்னோடு சேர்ந்திருக்கிறானாகையால், அவன் அப்படி எப்போதும் என்னோடு சேர்ந்திராத மற்ற இருவரைக் காட்டிலும் சிறந்தவன். ஞானியானவன் என்னையே ப்ராப்யனாகக் கொண்டவனாகையால் ஸாத4நத3ஶையோடு, ஸாத்4யத3ஶையோடு வாசியற என்னோடு சேர்ந்திருக்கிறான். மற்ற இருவருமோ முறையே ஐஶ்வர்யத்தையும், கைவல்யத்தையும் ப்ராப்யமாகவும், என்னை அப்ப2லன்களைக் கொடுக்கும் ஸாத4னமாகவும் கொண்டவர்களாகையாலே, தாங்கள் விரும்பும் ப2லன் கிடைக்கும் வரையிலேயே அதற்கு ஸாத4னமான என்னோடு சேர்ந்திருக்கிறார்கள்; அது கிடைத்தவுடன் என்னைவிட்டு விலகிவிடுகிறார்கள். இக்காரணத்தால் ஞானியே சிறந்தவன் என்று கருத்து. (ஏகப4க்தி:) ஒன்றிலேயே ஈடுபாடு உடையவன்; ஜ்ஞாநிக்கு ப்ராப்யமாகவும், அந்த ப்ராயத்தை அளிக்கும் ப2லப்ரத3ஸாத4நமாகவும் நானே இருக்கையால் என்னொருவனிடமே ஈடுபாடு உள்ளது. மற்ற இருவர்க்கும் முறையே அவரவர்க்கு ப்ராப்யமான ஐஶ்வர்யத்திலும் கைவல்யத்திலும் ஈடுபாடு உள்ளது. அப்ப2லனைத் தரும் ஸாத4நமாக என்னிடமும் ஈடுபாடு உள்ளது. இக்காரணத்தாலும் என்னொருவனிடமே ஈடுபாடுள்ள ஞானி சிறந்தவனாகிறான். ஆக, "ஏகப4க்தி:" என்னும் பத3த்தால் – ஐஶ்வர்யார்த்தி2யோடு, கைவல்யார்த்தி2யோடு வாசியற இருவரும் பரமபுருஷனை ப்ராப்யமாக எண்ணாதவர்கள் என்றும், "நித்யயுக்த:" என்னும் பத3த்தாலே – தமது ப்ராப்யமான ஐஶ்வர்யத்தையோ, கைவல்யத்தையோ பெற்ற பின்பு எம்பெருமானுக்கும் அவர்களுக்கும் உள்ள தொடர்பு விட்டுப்போகிறது

अतस्स एव विशिष्यते। किञ्च, प्रियो हि ज्ञानिनोऽत्यर्थमहम्—

என்றும் விளங்குகிறது. ஐஶ்வர்யார்த்தி விஷயத்தில் இவ்வர்த்தத்தில் விவாதமில்லை. கைவல்யார்த்தி விஷயத்தில் பூர்வாசார்யர்கள் காலத்திலிருந்தே மூன்று விதமான பக்ஷங்கள் உள்ளன. அவற்றில் எந்தப் பக்ஷம் — ஶ்ருதி முதலான ப்ரமாணங்களுக்கும், ஆழ்வார்களின் ஸ்ரீ ஸூக்திகளுக்கும், ஸ்ரீ பாஷ்யம், கீதாபாஷ்யம் முதலான ஆசார்ய ஸ்ரீ ஸூக்திகளுக்கும் பொருந்தியது என்று நிர்ணயிக்கவேண்டிய கடமை நமக்கு உள்ளதாகையால், அந்தப் பக்ஷங்கள் என்னென்ன என்பதையும் அதில் எந்தப் பக்ஷம் மிக்க ஸ்வாரஸ்யத்தையுடையது என்பதையும் விளக்குவோம்.

(1) திவ்யப்ரபந்த வ்யாக்யாதாக்களுடைய பக்ஷம்:— பிள்ளான், நஞ்சீயர், பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை முதலான திவ்யப்ரபந்த வ்யாக்யாதாக்களும், அவர்களை அடியொற்றிய பிள்ளைலோகாசாரியர், மாமுனிகள் முதலான ரஹஸ்ய வ்யாக்யாதாக்களும் பின்வருமாறு திருவுள்ளம்பற்றியிருக்கிறார்கள்:— கர்மயோகத்தை அங்கமாகக் கொண்ட ஜ்ஞாந யோகத்தினாலே ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படுகிறது. ஜ்ஞாந யோகம் நிறைவுடைய ஶுபாஶ்ரய சிந்தநமும் அவஶ்யமாகையாலே, பக்தியோகமும் அதற்கு அங்கமாகிறது. இப்படி கர்மபக்தி யோகங்களை அங்கமாகக் கொண்ட ஜ்ஞாந யோகத்தாலே (அல்லது பக்தியை அங்கமாகக் கொண்ட ஜ்ஞாந ஸஹித கர்மயோகத்தாலே) ஶப்தாதிகளில் பற்று நீங்கி ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படும்போது, ஶப்தாதி விஷயங்களையே அநுபவித்துப் போந்த இந்த யோகிக்கு அவ்வாத்மாவில் மிகுந்த ஈடுபாடு (ப்ராப்யத்வபுத்தி) ஏற்படும். இவ்வாத்மாவைக் காட்டிலும் பரமாத்மாவாகிற தனது வைலக்ஷண்யத்தை அறிந்து, தன்னிடம் ப்ராப்யத்வ புத்தியை இவன் வைக்கவேண்டும் என்னும் திருவுள்ளத்தாலேயே எம்பெருமான் இவனுக்கு ஶுபாஶ்ரய சிந்தந ரூபமான பக்தி யோகத்தை அங்கமாக விதித்திருக்கிறான். அப்படிப் பரம போக்யமான திவ்யமங்கள விக்ரஹத்தைப் பல ஜன்மங்கள் சிந்தித்த பின்பும் அதில் இவன் ஈடுபடாமல், அதைத் தனது பாபத்தைப் போக்கும் பாவனப் பொருளாக மாத்திரம் கருதி "ப்ரக்ருதி வியுக்தமான என் ஆத்மாவை அநுபவிப்பதாகிற கைவல்ய மோக்ஷத்தையே எனக்குக் கொடுத்துவிடவேண்டும்" என்று ப்ராரப்த கர்மம் முடியும் வரையில் இவன் விரும்பினானாகில், அவனுடைய இந்த ப்ரதி

பத்திக்கு அநுகுணமாக, ப்ரக்ருதி மண்டலத்தைத் தாண்டியிருக்கும் பரமபதத்தில் ஓர் மூலையிலுள்ள ஸ்தாநத்தில் எப்போதுமே இவனைத் தன் ஆத்மாவையே அநுபவித்துக் கொண்டிருக்கும்படி செய்கிறான் எம்பெருமான். இவனுக்கு அர்ச்சிராதிகதியும் ப்ரஹ்ம ப்ராப்தியுமில்லை. இந்த ஸ்தாநத்தில் இவன் தான் விரும்பியபடி ஆத்மாநுபவம் செய்வது தவிர, ஓர் ஸாதநாநுஷ்டாநம் செய்ய ப்ரஸக்தியில்லாமையால், இவனுக்கு என்றுமே பகவத் ப்ராப்தி யில்லை. ஆகையால் கைவல்யநிஷ்டன் இப்ரக்ருதிமண்டலத்தி லிருக்கும்போதே — விஷயாந்தரங்களில் பற்றும், அதற்குக் காரண மான ப்ராரப்த கர்மமும், அதடியாக ஸூக்ஷ்மஶரீரமும் கழிவதற்கு முன் எம்பெருமானிடம் போக்யதாபுத்தியை வைத்தாலொழிய இவன் அவனை அடையான்; அவனை விட்டு நிரந்தரமாக விடைகொள்பவனாகவே ஆகிறான். எம்பெருமானை அதற்குப்பின் இவனுக்கு பகவதநுபவமே இல்லாமற் போவதால் இவன் இறந்தவனாகவே ஞானிகளால் கருதப்படுகிறான். ஆகையால், ஶப்தாதிவிஷயங்களில் பற்று அறுவதற்கு முன்னதாகவே எம்பெருமானிடம் ப்ராப்யத்வ புத்தியைவைத் தாலொழிய இவ்வதிகாரிக்குப் பரமபுருஷார்த்த லக்ஷண மோக்ஷம் கிடைக்க வழியே இல்லை என்பது இவ்வாசாரியர்களின் திருவுள்ளம். கீதை (3-17,18,19) பாஷ்யத்தில் ஆத்மப்ராப்தியடைந்தவனை ''ஸ ''ஶப்த ஹி முக்த ஏவ''என்று பாஷ்யகாரர் முக்தனாகவே அருளியிருப் பதும். ப்ரஹ்ம அதிவர்த்ததே'' [கீதை 6-44] என்னும் கீதா ஶ்லோ கத்திலும், அதன் பாஷ்யத்திலும் ப்ரக்ருதி மண்டலத்திலிருந்து விடு பட்ட பின்பே இவன் ஆத்மாநுபவத்தைப் பெறுகிறான் என்று அருளியிருப்பதும், சென்ற ஶ்லோக பாஷ்யத்தில் இவனை ''ப்ரக்ருதி வியுக்தமான ஆத்ம ஸ்வரூபத்தைப் பெற விரும்பியிருப்பவன்'' என்று அருளியிருப்பதும், இந்த ஶ்லோக பாஷ்யத்தில் இவனுக்குத் தன் பலனான கைவல்யத்தைப் பெற்றபின் எம்பெருமானோடு யோகம் (தொடர்பு) விட்டுப்போகிறது என்றும், எம்பெருமானிடம் இவனுக்கு ப்ராப்யத்வ புத்தியில்லை என்றும் அருளியிருப்பதும், கைவல்ய விஷயமான ஆழ்வார்கள் ஸ்ரீ ஸூக்திகள் பலவும் இப்பக்ஷத்திற்கு மிகப் பொருந்தியிருக்கின்றன. ''எல்லாக் கர்மமும் கழிந்தபின் இவனுக்குத் தாழ்ந்த மோக்ஷமும், ஜ்ஞாநிக்கு உயர்ந்த மோக்ஷமும் எப்படி ஏற்படமுடியும்?'' என்னும் கேள்விக்கு ''ப்ரதிபத்திவைஶேஷ் யாத்'' என்னும் பதத்தில் எம்பெருமானார் பதிலுணர்த்தியிருப்பதை யும் சென்ற ஶ்லோக வ்யாக்யானத்திலேயே காட்டினோம், மேலே யுள்ள கீதா பாஷ்ய ஸ்ரீஸூக்திகளும் இந்தப் பக்ஷத்திற்கு மிகப் பொருந்தியுள்ளன என்பதை ஆங்காங்கு காட்டுவோம்.

(2) ஸ்ரீவேதா₃ந்த தே₃ஶிகருடைய பக்ஷம்:—தாத்பர்ய சந்த்₃ரிகையிலும், ந்யாய ஸித்₃த₄ாஞ்ஜநத்திலும் பின்வருமாறு இப்பக்ஷம் விரிவாக விளக்கப் பட்டுள்ளது:—எல்லாக் கர்மங்களும் கழிந்த பின்பு ஒருவனுக்குத் தாழ்ந்த மோக்ஷமும், ஒருவனுக்கு உயர்ந்த மோக்ஷமும் ஏற்படுவதாகக் கூறுவது பொருந்தாது. ஆகையால் முந்திய பக்ஷம் சரியல்ல. ப்₃ரஹ்ம வித்₃யைகளுக்குள் பஞ்சாக்₃நி வித்₃யை என்பது ஒன்று. ப்₃ரஹ்மத்திற்கு ப்ரகாரமாகத் தன் ஆத்மாவை உபாஸிப்பவன் அவன். அவனுக்கு அர்ச்சிராதி₃க₃தியும், ப்₃ரஹ்ம ப்ராப்தியும் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வதி₄காரியே கீ₃தையில் "ஜிஞ்ஞாஸு" எனப்படும் கைவல்ய நிஷ்டூன். மது₄வித்₃யையின்படி உபாஸிப்பவனுக்கு ப்₃ரஹ்ம ப்ராப்திக்கு முன் வஸ்வாதி₃பத₃ ப்ராப்தி அவாந்தர ப₂லனகக் கிடைப்பதுபோல், இவனுக்கும் ப்ரக்ருதி மண்டூலத்திற்குள்ளோ, அர்ச்சிராதி₃க₃தி மத்₄யத்திலோ ஆத்மாநுப₄வம் அவாந்தர ப₂லனகக் கிடைக்கிறது. சில காலம் ஆத்மாவை அநுப₄வித்துவிட்டு, பிறகு ப்₃ரஹ்ம ப்ராப்தியைப் பெறுகிருன் இவன். இவன் ஆத்மாநுப₄வத்தை நித்யமாக அடைகிருன் என்று கொண்டால், ஸ்ரீ ப₄ாஷ்யம், கீ₃தா ப₄ாஷ்யம் முதலானவற்றில் இவனுக்கு ப்₃ரஹ்ம ப்ராப்தியைச் சொல்லியிருக்கும் ஸ்ரீஸூக்திகள் விரோதி₄க்கும். ஆழ்வார்கள் கைவல்யத்தை "வீடு" என்று அருளியிருப்பதும், "நித்யம்" என்று அருளியிருப்பதும் நெடுங்காலம் இருக்கும் சிறந்த புருஷார்த்த₂ம் என்னும் கருத்தினுலேயே. இது ஸ்ரீ வேதா₃ந்ததே₃ஶிகர் திருவுள்ளம்.

(3) ஸ்ரீ வேதா₃ந்ததே₃ஶிகருடைய ந்யாயஸித்₃த₄ாஞ்ஜநத்திலிருந்து — சில ஆசார்யர்கள் ஜிஜ்ஞாஸுவைப்பற்றி வேறு வித₄மாகத் திருவுள்ளம் பற்றியிருப்பதாகவும் தெரிகிறது. அதாவது:— "பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்டூனே 'ஜிஜ்ஞாஸு' எனப்படும் கைவல்யநிஷ்டூன். இவன் ப்₃ரஹ்மாத்மகமாகத் தன் ஆத்மாவை உபாஸிப்பதால் அர்ச்சிராதி₃க₃திமூலம் பரமபத₃ம் சென்று, அதன் ஒரு மூலையில் தத்க்ரதுந்யாயத்தின்படி தன் ஆத்மாவை நித்யமாக அநுப₄வித்துக் கொண்டிருக்கிருன். இவனுக்கு - ஶ்ருதியிலும், ஸ்ரீ ப₄ாஷ்யாதி₃களிலும் ப்₃ரஹ்மப்ராப்தியைச் சொல்லியிருப்பது ப்₃ரஹ்மலோக ப்ராப்தியையிட்டு என்றே, ப்₃ரஹ்மம் விஶேஷணமாக ப்ரகாஶிப்பதையிட்டு என்றே நிர்வஹிக்கத்தக்கது" என்று. முதல் பக்ஷத்தில் ஆழ்வார்களுடைய ஸ்ரீ ஸூக்திகளுக்கும், கீ₃தாப₄ாஷ்ய ஸ்ரீஸூக்திகளுக்கும் உள்ள ஸ்வாரஸ்யம் மற்ற இரண்டு பக்ஷங்களிலும் இல்லை என்பது நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும். குறிப்பாக, இந்த

अत्रार्थशब्दोऽभिधेयवचनः ; ज्ञानिनोऽहं यथा प्रियः, तथा मया सर्वज्ञेन सर्वशक्तिनाऽप्यभिधातुं न शक्यत इत्यर्थः ; प्रियत्वस्येयत्तारहितत்வாத் ।

ஶ்லோகத்தில் உள்ள ''நித்யயுக்த:'' ''ஏகபக்தி:'' என்னும் பதங்களும் அவற்றின் பூரஷ்யமும், ப்3ராஹ்மவித்3யைகளில் ஒன்றான பஞ்சாக்3நிவித்3யாநிஷ்டனாக ஜிஜ்ஞாஸுவைக் கொள்வார்க்கு ஸ்வரஸமாகமாட்டா என்பது வெளிப்படை. ப்ராஸங்கிகமான இது நிற்க; வ்யாக்2யானத்தைத் தொடர்வோம்.

இனி, உத்தரார்த்தத்தாலே, ஜ்ஞாநியானவன் மற்ற இருவரைக் காட்டிலும் மிகச்சிறந்தவன் என்பதற்கு மூன்றாவது ஹேதுவைக் காட்டுகிறான்:— (ஜ்ஞாநிந: அஹம் அத்யர்த்தம் ப்ரியோ ஹி) ஸர்வஜ்ஞனாய், ஸர்வஶக்தியான என்னாலேயே அளவிட்டுச் சொல்லமுடியாத அளவுக்கு நான் ஞானிக்கு இனியவனன்றோ. (அத்யர்த்தம்) அர்த்த2ஶப்3தம் சொல்லத்தக்க பொருளைக் காட்டுவதாகையாலே, 'அத்யர்த்தம்' என்று சொல்லமுடியாத பொருளைக் காட்டுகிறது. எல்லாமறிந்த ஸர்வஜ்ஞனால் சொல்லமுடியாத பொருள் ஒன்று இருந்தால் அது அஸத்தான (இல்லாத) பொருளாகவன்றோ இருக்கவேண்டிவரும். எல்லாம் வல்ல இவனால் ஒன்று முடியாது எனில், இவன் ஈஶ்வரனல்லாதவனாக வேண்டிவருமே? எனில்: ஞானியின் ப்ரீதிக்கு அளவு இல்லையாகையால், இல்லாத பொருளைச் சொல்லமுடியாது என்றது மிகப் பொருந்தும்; உண்மையில் ஆகாயத் தாமரைபோலே இல்லாத பொருளைச் சொல்லுபவனே மயக்கமுடையவன் என்னப் பெறுவானன்றோ. ஆகையால், ''யந்நாஸ்த்யேவ தத3ஜ்ஞதாம் அநுகு3ணம் ஸர்வஜ்ஞதாயா விது3:, வ்யோமாம்பே4ாஜம் இத3ந்தயா கில வித3ந் ப்4ராந்தோऽயமித்யுச்யதே'' [ஸ்ரீஸ்தவம்] [இல்லாத பொருளை அறியாமை ஸர்வஜ்ஞத்வத்திற்குப் பொருந்தியதேயாம். 'இது ஆகாயத்தாமரை' என அறிபவன் மயங்கியவனாகவே கூறப்படுவான்] என்கிற ரீதியில் எம்பெருமானிடம் ஞானிக்குள்ள ப்ரீதிக்கு உண்மையில் அளவே இல்லையாகையால், அதை ஸர்வஜ்ஞனான எம்பெருமானாலும் சொல்ல முடியாது என்றது மிகப் பொருந்தும். ப்ரீதிக்கு அளவு இல்லாமையால், அளவைச் சொல்லும் ஶப்3தமும் இல்லை. ஆகையால் அதைப் பிரயோகிக்க முடியாதிருப்பது ஸர்வ ஶக்தனுக்கு எந்த அஶக்தியையும் விளைக்காது. ஆகையால், இவனுடைய ஈஶ்வரத்வத்திற்கும் எக்குறையுமில்லை. (ஹி) இது ஶாஸ்த்ரங்களில் ஸுப்ரஸித்3த4ம்.

यथा ज्ञानिनामग्रेसरस्य प्रह्लादस्य * स त्वासक्तमतिः कृष्णे दश्यमानो महोरगैः। न विवेदात्मनो गात्रं तत्स्मृत्याह्लादसंस्थितः॥ (वि.१.१७.३९) इति। तथैव सोऽपि मम प्रियः॥ १७॥

"ஸ த்வாஸக்தமதி: க்ருஷ்ணே த₃ஶ்யமானோ மஹோரகை₃:।
ந விவேத₃ாத்மனோ க₃ாத்ரம் தத்ஸ்ம்ருத்யாஹ்லாத₃
ஸம்ஸ்தி₂த: ॥" [வி-பு 1-17-39]

[ஸம்ஸாரது₃:க்க₂ங்களைப் போக்கடிப்பதாலும், அனைவர்க்கும் ஆநந்த₃ ஹேதுவாகையாலும் க்ருஷ்ணனெனப்படும் பரமாத்மாவிடம் நெஞ்சு செலுத்தியவனாகையாலே, அந்த ப்ரஹ்லாத₃ன் மஹாநாக₃ங்களால் கடிக்கப்பட்டபோதிலும், அப்பரமாத்மாவின் நினைவினால் ஏற்பட்ட ஆநந்த₃த்தில் மூழ்கியவனாய் தன் ஶரீரத்தையே உணரவில்லை.] என்கிறபடியே, பிறந்தது முதல் ஒப்பற்ற ஞானமுடையவனாய், எத்தனையோ ப₄யமுறுத்தல்களாலும், கொலைபாதகச் செயல்களாலும் அழிக்கமுடியாத விஷ்ணுப₄க்தியை உடையவனாயிருந்த ப்ரஹ்லாத₃ாழ்வான், மஹாநாக₃ங்களால் கடிக்கப்பட்டதனால் ஏற்பட்ட துன்பத்தையும், அதைத்தாங்கிய ஶரீரத்தோடு கூடிய ஆத்மாவையுங்கூட மறந்திருந்தது இத்தகைய ப₄க₃வத்ப்ரீதியினாலன்றோ. "காதல் கடலின் மிகப்பெரிதால்" [திருவாய் 7-3-6] "மண்டிணி ஞாலமும் ஏழ்கடலும் நீள்விசும்பும் கழியப் பெரிதால்" [திருவாய் 7-3-8] "அதனிற் பெரிய என் அவா" [திருவாய் 10-10-10] என்று நம்மாழ்வாரும் தத்வத்ரயத்தையும் விஞ்சியிருப்பது தம் காதல் என்று அருளினாரன்றோ. (ஸ ச மம ப்ரிய:) அந்த ஞானியும் அளவிட்டுச் சொல்லமுடியாத அளவுக்கு எனக்கு இனியவன். 'ச'காரத்தாலே 'அத்யர்த்த₂ம்' என்னும் பத₃ம் இங்கும் சேர்த்துக்கொள்ளப்படுகிறது. "வாரிக் கொண்டு உன்னை விழுங்குவன் காணில் என்று ஆர்வுற்ற என்னை யொழிய என்னில் முன்னம் பாரித்துத் தான் என்னை முற்றப்பருகினான்" [திருவாய்9-6-10] "என் அவாவறச் சூழ்ந்தாயே" [திருவாய்10-10-10] என்று தம் ப்ரீதியிலும் அவனுடைய ப்ரீதி விஞ்சியது என்று நம்மாழ்வாரும் அருளிச்செய்தாரன்றோ. உண்மை இப்படி இருந்தபோதிலும், மஹோதா₃ரனான ஈஶ்வரன் "ஞானி என்னிடம் மிகுந்த ப்ரீதிவைக்கையாலே, நானும் அவனிடம் ப்ரீதிவைக்கிறேன்" என்று "ஸ ச மம ப்ரிய:" என்னுமிடத்தில் அப்ராத₄ாந்யத்தைக் காட்டும் சகாரத்தாலே, தன் ப்ரீதியில் அத்ருப்திதோற்றச் சொல்லுகிறான் என்று சில ஆசார்யர்கள் நிர்வஹிப்பர்கள் — என்று தாத்பர்ய சந்த்₃ரிகை. 17.

**उदारास्सर्वं एवैते ज्ञानी त्वात्मैव मे मतम्।**
**आस्थितस्स हि युक्तात्मा मामेवानुत्तमां गतिम्॥१८॥**

18. உதா₃ராஸ் ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்।
ஆஸ்தி₂தஸ் ஸஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் க₃திம்॥

ஏதே ஸர்வே ஏவ—இவர்கள் அனைவருமே, உதா₃ரா:—வண்மை மிக்கவர்கள்; **ஜ்ஞாநீ து**—ஞானியோவெனில், (மே) **ஆத்மா ஏவ**—(எனக்கு) தா₄ரகனுகவேயிருப்பவன் (என்று), **மே மதம்**—என் ஸித்₃தா₄ந்தம். **யுக்தாத்மா**—என்னுேடு சேர விரும்புகின்ற, **ஸ:**—அவன், **மாம் ஏவ**—என்னையே, **அநுத்தமாம் க₃திம் ஆஸ்தி₂த: ஹி**—ஒப்பற்ற ப்ராப்யமாகக் கொண்டுள்ளானன்றே.

---

18. **உற்றிவர்க ளெல்லா முதாரரே ஞானியெனு(ம்)**
**மற்றிவனென் றன்னுயிரா வாய்ந்தறிவ—னற்றமற**
**வென்று மவனென்னை யேலும் பரகதியா**
**நின்றுணர்வு செய்யு(ம்) நிகழ்ந்து.**

**உற்ற இவர்கள் எல்லாம் உதாரரே**—என்னுடைய ப₄க்தர்களான இவர்கள் அனைவரும் வள்ளல்களே; **மற்று ஞானி எனும் இவன்**—(இவர்களில்) விலக்ஷணனை ஞானி என்கிற நான்காமவன், **என்தன் உயிரா வாய்ந்து அறிவன்**—எனக்கு தா₄ரகனுகப் பொருந்தியிருப்பவன் என நான் அறுதியிடுவேன்; **என்றும்**—என்றும், **அவன்**—அவன், **என்னை**—என்னை, **நற்றம் அற ஏலும் பரகதியா**—வேறு நற்கதியில்லாதபடி பொருந்திய ஒப்பற்ற ப்ராப்யமாக, **நிகழ்ந்து**—கொண்டு, **நின்று உணர்வு செய்யும்**—என்னை நிலையாக விரும்புவன்.

---

18. முன் ஶ்லோகத்தில் கூறப்பட்ட ஞானியின் சிறப்பு மற்றொரு வகையில் உறுதிப்படுத்தப் படுகிறது இந்த ஶ்லோகத்தில். (ஏதே ஸர்வ ஏவ உதா₃ரா:) ஐஶ்வர்யார்த்தி₂, கைவல்யார்த்தி₂, என்னை விரும்புமவன் என்னும் இவர்கள் அனைவருமே வண்மைமிக்கவர்கள். "உதா₃ரா:" எனும் ஶப்₃த₃த்திற்கு 'உயர்ந்தவர்கள்' என்று

॥भा॥ सर्वे एवैते मामेवोपासत इत्युदाराः—वदान्याः। ये मत्तो यत्किंचिदपि गृह्णन्ति, ते हि मम सर्वस्वदायिनः। ज्ञानी

---

பொருள் கொள்வதில் சிறப்பில்லையாகையால், உலக வழக்கையொட்டி "வண்மை மிக்கவர்கள்" என்றே பொருள் கொள்ளவேண்டும். இவர்கள் எம்பெருமானிடம் யாசித்துத் தம் விருப்பத்தைப் பெரு நிற்க, அவர்கள் விருப்பத்தைக் கொடுக்கவிருக்கும் பரமோதாரனை எம்பெருமான் இவர்களை 'உதாரர்கள்' (வண்மை மிக்கவர்கள்) என்பது எப்படிப் பொருந்தும்? எனில்: "வேறு எவரிடமாவது செல்லாமல், இவர்கள் என்னிடமே ஏதோவொன்றை யாசித்துப் பெறுவதனுல்தானே நான் பரமோதாரன் (மிகவும் வண்மைமிக்கவன்) என்று பெயர் பெற முடிகிறது. எனக்கு எல்லாச் செல்வமுமான இப்பெரும் புகழை அளிக்கும் இவர்களே உண்மையில் உதாரர்கள்" என்று எம்பெருமான் திருவுள்ளமாகையாலே பொருந்தும். ஐஶ்வர்ய கைவல்யங்களைப் பெற்று அகலுமவர்களை 'உதாரர்கள்' என்னலாமோ? எனில், அதை இவனிடம் இவர்கள் பெறுவதும் இவனுடைய ஸகல பலப்ரதத்வமாகிற பரமௌதார்யத்தை வெளிப்படுத்துகிறதாகையாலே சொல்லலாம். ஞானியை 'அத்யர்த்தப்ரியன்' என்று சொல்லியதன் மூலம், மற்ற இருவரும் தனக்கு ஓரளவுக்கு ப்ரியர்களே என்று சென்ற ஶ்லோகத்தில் உணர்த்தியதையே, இந்த ஶ்லோகத்தில் அனைவரையும் உதாரர்கள் என்று கூறுவதன் மூலம் தெளிவுபடுத்துகிறுன். அனைவருமே உதாரர்களானுல், இவர்களிடையே வாசியில்லையோ? எனில், ஞானிக்கும் மற்றவர்க்கும் நெடுவாசி உண்டு என்கிறுன் இரண்டாம் பாதத்தாலே,—(ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்) ஜ்ஞாநியோவெனில் எனக்கே ஆத்மா (தாரகன்) என்பது என் ஸித்தாந்தம். "மத:" என்று பாடம் கொண்டு, "ஜ்ஞாநீ மே ஆத்மைவ மத:" என்று அந்வயித்துச் சிலர் பொருள் கொள்ளுகிறுர்கள். ஆனுல், அப்பாடம் பெரும்பான்மையினரால் ஆதரிக்கப்படாத அப்ரஸித்த பாடமாகையாலே, "மதம்" என்றே பாடம் கொண்டு, "இதி" ஶப்தத்தை அத்யாஹாரம் செய்துகொண்டு (வருவித்துக் கொண்டு) "ஜ்ஞாநீ து (மே) ஆத்மா ஏவ இதி மே மதம்" [ஞானியோவெனில், எனக்கே ஆத்மா என்பது என் முடிவு] என்று அந்வயித்துப் பொருள் கொள்ளவேண்டும். 'ஆத்மா' என்பதன் மூலம் தனக்கும் ஞானிக்கும் ஸ்வரூபைக்யம் சொல்லுவதாகக் கொள்ளுவது ஸ்வரூப பேதத்தைச் சொல்லும் பல ப்ரமாணங்களோடு முரண்படும். "ஸ ச

त्वात्मैव मे मतम्—तदायत्तधारणोऽहमिति मन्ये। कस्मादेवम्? यस्मादयं

மம ப்ரிய:'' [ஞானி எனக்கு மிகவும் இனியவன்] என்று சற்று முன் சொன்னதும் பொருந்தாமற் போய்விடும். மேலும், ஞானிக்கும், மற்றவர்களுக்கும் வாசி சொல்லும் இவ்விடத்தில் ஸ்வரூபைக்யம் சொன்னால், மற்றவர்களுக்கும் பரமாத்மாவுக்கும் ஸ்வரூபைக்யமில்லை என்று தேறும். இது ஸ்வரூபைக்யம் சொல்லுபவர்களுக்கே அநிஷ்டம். ஆகையால், ஆதா₄ரனாயிருக்கையாகிற ஆத்ம லக்ஷணமே இங்கு கருதப்படுகிறது என்று கொள்வதே உசிதமாகையால், ''ஶரீரத்தை த₄ரித்து நிற்கும் ஆத்மாவைப்போல், ஞானியானவன் என்னை த₄ரித்து நிற்கிறானாகையால் அவன் எனக்கே ஆத்மா'' என்றே பொருள் கொள்ளவேண்டும். அனைவர்க்கும் ஆத்மாவாக வேதா₃ந்தங்கள் நாராயணனாகிற உன்னைச் சொல்லியிருக்க, ஞானியை உனக்கு ஆத்மாவாக நீ சொல்லுவது எப்படிப் பொருந்தும்? எனில் (மே மதம்) (இதுவே) என் முடிவு; இது வேதா₃ந்த ஸித்₃தா₄ந்தமா யிருக்கட்டும், அல்லது இல்லாமற் போகட்டும்; இதுவே என் ஸித்₃தா₄ந்தம். ஞானியில்லாவிடில் நான் த₄ரிக்கமாட்டேன் என்பது எனது அசைக்க முடியாத முடிவு என்கிறான். ''என் நெஞ்சினால் நோக்கிக் காணீர்'' [திருவாய் 5-5-3] என்ற ஆழ்வாரைப்போலே சொல்லுகிறான். (ஆத்மைவ) ''ஞானிக்கும் நாராயணனே ஆத்மா; நாராயணனுக்கு ஞானி ஆத்மாவல்ல'' என்று எந்த வேதா₃ந்தம் சொன்னாலும், வேறு யார் சொன்னாலும், ஞானியே சொன்னாலும் நான் அங்கீ₃கரிக்கமாட்டேன்'' என்னும் கருத்தை ஏவகாரத்தாலே காட்டுகிறான். ''அத்யர்த்த₂ப்ரியன்'' என்றதை விவரிப்பதற்காக, ஞானியிடம் ஆத்மத்வத்தை ஏவகாரத்தையிட்டு அழுத்தமாக ஏறிடு கிறான் என்றதாயிற்று. இப்படி ஞானியைத் தன் ஆத்மாவாக அபி₄மானிக்கக் காரணம் என்ன என்பதை ஶ்லோகத்தின் பிற்பாதி யாலே காட்டுகிறான். பிற்பாதியிலுள்ள 'ஹி' ஶப்₃த₃ம்—இரண்டாம் பாத₃த்தில் சொல்லப்பட்ட அர்த்த₂த்திற்குக் காரணத்தை உத்தரார்த்த₄ம் சொல்லுகிறது என்று காட்டுகிறது. (யுக்தாத்மா ஸ:) என்னோடு கூடியிருக்கையை விரும்பும் அவன். யுக்த ஶப்₃த₃த்தில் ''க்த'' என்னும் விகுதி ''ஆஶம்ஸாயாம் க்த:'' என்னும் இலக்கண வழக்கின்படி வந்ததாகையாலே, '(பரமாத்மாவோடு) யோக₃த்தையே (சேர்ந்திருப்பதையே) விரும்பும் ஆத்மாவையுடையவன்' என்று பொருள்படுகிறது யுக்தாத்ம ஶப்₃த₃ம்: ஆத்ம ஶப்₃த₃ம் ஸ்வரூபத்தைக் குறிக்கிறது. எம்பெருமானை அநுஸந்தி₄த்திருக்காவிடில் இவனுக்கு ஸ்வரூபஸத்தை இல்லாமற்போய்விடும் என்றபடி.

मया विनाऽऽत्मधारणासंभावनया मामेवानुत्तमं प्राप्यमास्थितः; अतस्तेन विना ममाप्यात्मधारणं न संभवति। ततो ममात्मा हि सः ॥ १८ ॥

---

"யந்முஹூர்த்தம் க்ஷணம் வாபி வாஸுதே₃வோ ந சிந்த்யதே ।
ஸா ஹாநிஸ் தந்மஹச்சி₂த்₃ரம் ஸா ப்₄ராந்தி: ஸா ச விக்ரியா ॥"

[யாதொரு முஹூர்த்தமோ, க்ஷணமோ வாஸுதே₃வசிந்தனம் இல்லாமல் கழிகிறதோ, அதுவே ஸ்வரூபஹாநியாகும்; அதுவே பெருங்குறையுமாகும்; அதுவே மயக்கமாகும்; அதுவே விகாரமாகும்.] என்கிறபடியே, க்ஷணநேரமானாலும் என்னை அநுஸந்தி₄க்காவிடில், உண்டியே உடையே உகந்தோடும் மற்றுள்ளாரைப் போலே வேறொன்றை அநுஸந்தி₄த்துப் போதுபோக்கவல்ல இயல்வுடையவனல்லாமையால், அழிந்து விடுவான் என்று கருத்து. (மாம் ஏவ அநுத்தமாம் க₃திம் ஆஸ்தி₂த:) இப்படி என்னையொழிய த₄ரிக்கமாட்டாதவனுகையாலே, என்னையே ஒப்பற்ற ப்ராப்யமாகக் கொண்டிருப்பவன் இவன். அவன் இப்படியிருக்கையாலே, நானும் அவனையொழிய த₄ரிக்கமாட்டேன். இம்முறையில் அவன் எனக்கு ஆத்மாவேயாகிறான்; என் நெஞ்சினால் நோக்கிக் காண்பார்க்கு இது புரியும் என்று கருத்து. (மாம் ஏவ) ப₂லனை அளிக்கும் உபாயமாகிற என்னையே பரமப்ராப்யமாகவும் கொண்டவன் என்கையால், ஐஶ்வர்ய கைவல்யார்த்தி₂களைப்போலே என்னையொழிய மற்றொன்றைக் க்ஷணநேரமும் ப்ராப்யமாகக் கொள்ள இயலாதவன் இவன் என்று ஏவகாரத்தாலே காட்டுகிறான். (க₃திம்) "க₃ம்யத இதி க₃தி:" என்னும் வ்யுத்பத்தியாலே க₃திஶப்₃த₃ம் அடையப்படும் ப்ராப்யத்தைக் காட்டுகிறது. "ஶரணம் க₃திர் நாராயண:" [உபாயமாகவும், ப்ராப்யமாகவுமாகிறான் நாராயணன்] என்று இவ்வர்த்த₂த்தை உபநிஷத்தும் ஓதிற்று. "ஸ ஸ்வேநைவ ப₂லப்ரத₃: ப₂லமபி ஸ்வேநைவ நாராயண:" [அநர்க்க₄ராக₄வம்] [ப₂லனையளிக்கும் உபாயமான நாராயணனே ப₂லனுகவும் ஆகிறான்] என்று கவிகளும் இசையும்படி ஸுப்ரஸித்₃த₄மான அர்த்த₂மன்றோ இது. (அநுத்தமாம் க₃திம்) தன்னையிட்டு ப்ராப்யமாகும் பரமபத₃ம், நித்யஸூரிகள், பூ₄ாக₃வதர்கள் முதலான மற்ற ப்ராப்யங்களுமிருக்கையாலே 'ஒப்பற்ற ப்ராப்யம்' என்று விஶேஷிக்கிறான். ஆக, "ஐஶ்வர்ய கைவல்யங்களை விரும்புமவர்கள் என்னை ப₂லப்ரதே₃ாபாயமாகக் கொண்டு எனக்குச் சிறப்பையளிக்கையாலே எனக்கு இனியவர்கள்; ஞானியோவெனில், ப₂லப்ரத₃னை என்னையே பரம ப்ராப்யமாகவும்

बहूनां जन्मनामन्ते ज्ञानवान् मां प्रपद्यते।
वासुदेवस्सर्वमिति स महात्मा सुदुर्लभः॥१९॥

19. ப₃ஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்₃யதே।
வாஸுதே₃வஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுது₃ர்லப₄: ||

ப₃ஹூநாம் ஜந்மநாம் அந்தே—பல புண்ணியப் பிறப்புகள் கழிந்தபின், ஜ்ஞாநவாந்—அறிவு முதிரப்பெற்ற ஞானியானவன், வாஸுதே₃வ: ஸர்வம் இதி—'வாஸுதே₃வனே எனக்குப் பரமப்ராப்யமாகவும், ப்ராபகனுகவும், த₄ாரகம், போஷகம், பே₄ாக்₃யம் முதலான எல்லாமாகவும் இருக்கிருன்' என்று எண்ணி, மாம் ப்ரபத்₃யதே—என்னை ஶரணமடைகிருன். ஸ:—அவன், மஹாத்மா—விஶாலமான நெஞ்சையுடையவனுவான்; ஸுது₃ர்லப₄: — (இவ்வுலகில் எனக்கும்) மிகவும் கிடைத்தற்கரியவனுவான்.

---

19. புண்ணியமார் பல்பிறவி பூண்டியன்றே னந்தத்து
நண்ணியுணர் வென்னை நயந்தடையு—மெண்ணியு
எல்லாமும் வாசுதேவ னேதா னெனவுணர்ந்த [யிர்க்(கு)
நல்லான் மிகவரிய ஞட்டு.

---

கொள்கிருனுகையால் என் ஸ்வரூப ஸத்தைக்கே காரணம் என்னலாம்படி எனக்கு மிகவும் இனியவனுகிருன்'' என்று சொல்லிற்றுயிற்று.

"ந தஸ்யாந்ய: ப்ரியதர: ப்ரதிபு₃த்₃தைர் மஹாத்மபி₄: ।
வித்₃யதே த்ரிஷு லோகேஷு ததோऽஸ்ம்யேகாந்திதாம் க₃த: ।
நாரதை₃தத்₃தி₄ தே ஸத்யம் வசநம் ஸமுத₃ாஹ்ருதம் ।
நாஸ்ய ப₄க்தை: ப்ரியதரோ லோகே கஶ்சந வித்₃யதே ||"
[ப₄ாரதம்-மோக்ஷ 353-65, 354-2]

[''மஹாத்மாக்களான ஞானிகளைக் காட்டிலும் பரமபுருஷனுக்கு இனியவன் ஒருவன் மூவுலகிலும் இல்லை. ஆகையால் நான் ஏகாந்தியானேன்.'' ''நாரத₃ரே! உம்முடைய இவ்வசநம் உண்மையானதேயாகும். இவ்வுலகில் பரமாத்மாவுக்கு ப₄க்தர்களைக் காட்டிலும் இனியவன் எவனுமே கிடையாது.''] என்று இவ்வர்த்தமும் மோக்ஷ த₄ர்மத்திலும் விளக்கப்பட்டது. 18.

**புண்ணியம் ஆர் பல் பிறவி பூண்டு இயன்றேன்**—புண்ணியம் நிறைந்த பல பிறவிகளை எடுத்து உயர்ந்தவனே, **அந்தத்து**—கடைசியில், **உணர்வு நண்ணி**—(மிகச் சிறந்த) அறிவை அடைந்து, '**உயிர்க்கு**—ஜீவாத்மாக்களுக்கு, **எல்லாமும் வாசுதேவனேதான் என எண்ணி** — வாஸுதேவனே பரமப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும், த₄ாரகம், போஷகம், போ₄க்₃யம் முதலான எல்லாமாகவும் இருக்கிறான்' என்று எண்ணி, **என்னை நயந்து அடையும்**—என்னையே விரும்பி அடைவான்; **நாட்டு**—இவ்வுலகில், **உணர்ந்த நல்லான்**—இப்படி அறிவுபெற்ற மஹாத்மா, **மிக அரியன்**—(எனக்கும்) மிகவும் கிடைத்தற்கரியவனாவான்.

---

19. "மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு" என்று தொடங்கும் மூன்றாம் ஶ்லோகத்தில், "மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு" என்று குறிக்கப்பட்ட ஶாஸ்த்ராதி₄கார யோக்₃யர்கள் ஐஶ்வர்யார்த்தி₂களென்றும், "**கஶ்சித் யததி ஸித்₃த₄யே**" என்று குறிக்கப்பட்டவர்களான மோக்ஷார்த்த₂மாக முயல்பவர்கள் கைவல்யார்த்தி₂கள் என்றும், "**யததாமபி ஸித்₃தா₄நாம் கஶ்சிந் மாம் வேத்தி**" என்று மோக்ஷார்த்த₂மாக முயல்பவர்களிலும் தன்னையே ப்ராப்யமாக அறிபவர்களாகக் குறிக்கப்பட்டவர்கள் ஜ்ஞாநிகள் என்றும் சென்ற மூன்று ஶ்லோகங்களிலும் காட்டினான். இனி, "**மாம் வேத்தி தத்வத:**" என்று குறிக்கப்பட்டவனாய், ஜ்ஞாநிகளில் தலைசிறந்தவனான அதி₄காரியை இந்த ஶ்லோகத்தில் காட்டி, அவனது பெருமையைப் பேசுகிறான். (ப₃ஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந்) "மநுஷ்யாணாம்" என்று மூன்றாம் ஶ்லோகத்தில் குறிக்கப்பட்ட ஶாஸ்த்ராதி₄காரி பல புண்யஜந்மங்கள் கழிந்தபின்பு, புண்யங்களின் ப₂லனாகப் பாபங்கள் கழியப்பெற்று, "மாம் வேத்தி தத்வத:" என்று சொல்லப்பட்ட ஞானத்தின் உச்சநிலையை அடைகிறான். சென்ற மூன்று ஶ்லோகங்களிலும் "ஜ்ஞாநீ" என்று குறிக்கப்பட்ட ஞானிகளிலும் ஆயிரத்தில் ஒருவனே ப₄க்தியோக₃த்தைப் பலநாள் அநுஷ்டி₂த்தபின்பு இத்தகைய ஞானமுதிர்ச்சியை அடைவான் என்பதைக் காட்டுவதற்காக "ஜ்ஞாநவாந்" என்னும் வேறு பத₃த்தை இடுகிறான். இவ்விடத்தில் ஓர் கேள்வி எழுகிறது. அதாவது:—"மாதா பிதா" என்கிறபடியே சேதனர் அனைவர்க்கும் இயற்கையிலேயே எல்லா உறவுமாயிருக்கும் எம்பெருமான் அவர்களுக்கு நிர்ஹேதுகமாக மோக்ஷத்தை

அருளவேண்டியது நியாயமாயிருக்க, பல ஜன்மங்கள் இப்படிப் பாடுபட வைப்பது நியாயமா? என்பதே அது. இதற்கு ஸமாத₄ாநம் பின்வருமாறு:— எம்பெருமானைப்போலே ஜீவர்கள் அநாதி₃யாயிருப்பவர்கள். அநாதி₃காலமாக அவர்கள் செய்யும் புண்யபாபகர்மங்களும் அநந்தமாயுள்ளன. இக்கர்மங்களின் ப₂லனாக அநாதி₃காலமாக அவர்கள் முக்குண ப்ரக்ருதியின் விகாரமான ஶரீரத்தில் கட்டுண்டு எம்பெருமானை அறியாமல் மயங்கியுள்ளனர். எம்பெருமானும், "க்ருதப்ரயத்நாபேக்ஷஸ்து" [ப்₃ரஹ்ம ஸூத்ரம் 2-3-41] என்கிற ப்₃ரஹ்மஸூத்ரத்தின்படியே தனக்கு வைஷம்யநைர்க்₄ருண்யங்கள் (பக்ஷபாதமும், கருணையின்மையும்) ஏற்படாமைக்காக ஒவ்வொரு காரியத்தைத் தொடங்கும்போதும் ப்ரத₂மப்ரவ்ருத்தியில் அவர்களுக்குத் தம் இஷ்டப்படி செயல்புரியும் திறமையை அளித்து, அதற்கு அனுகு₃ணமாக அவர்கள் செய்யும் புண்யபாபங்களுக்குப் ப₂லனை அளித்து வருகிறான். இவர்களுக்கு ஶாஸ்த்ராதி₄காரயோக்₃யமான ஜந்மம் ஏற்படும்போது, ஶாஸ்த்ரத்தைக் காட்டி, அதில் இவர்கள் விரும்பும் பற்பல ப்ராக்ருதப₂லன்களுக்குப் பற்பல ஸாத₄னங்களை விதி₄க்கிறான். இப்படி ஒவ்வொரு ஸாத₄னத்தை விதி₄க்கும் பரமகாருணிகனான ஸர்வேஶ்வரனுக்கு அவரவர்கள் அந்தந்த ஸாத₄னங்களால் அவ்வப்ப₂லன்களைப் பெற்றுப்போகவேண்டும் என்பது மாத்திரம் திருவுள்ளமாயிருக்க முடியாது. அவனவன் விரும்பும் ப₂லனுக்கு ஸாத₄னமாக ஒன்றை விதி₄த்து, அவனுடைய ப்ரதிபத்தியை (எண்ணத்தை) உயர்த்தவேண்டும் என்பதே பரமதாத்பர்யமாயிருக்க முடியும். இந்த ரீதியில் எதிரியின் அழிவாகிற க்ரூரப₂லனை விரும்புகிறவனை—வேத₃த்தில் நம்பிக்கையற்ற நாஸ்திகனுக்கு, அந்த நாஸ்திகப்ரதிபத்தி நீங்கி வேத₃த்தில் விஶ்வாஸம் (நம்பிக்கை) ஏற்படுவதற்காக ஶ்யேநயாக₃த்தை விதி₄க்கிறான். வேத₃த்தில் நம்பிக்கையுண்டான பின்பும், தே₃ஹாத்மாபி₄மானியாயிருப்பவனுக்கு, இந்த தே₃ஹம் அழிந்த பின்பும் நிலைநிற்கும் ஆத்மா ஒன்று உண்டு என்னும் ப்ரதிபத்தி (எண்ணம்) ஏற்படுவதற்காக தே₃ஹம் கழிந்த பின் ஸ்வர்க்க₃த்தை அடைவதற்கு ஸாத₄னமான ஜ்யோதிஷ்டோமம் முதலானவற்றை விதி₄க்கிறான். இவ்வண்ணமாக ஸ்வார்த்த₂தையின் (சுயநலமனப்பான்மையின்) மிகுதியாலே அவனவன் விரும்பும் ப்ராக்ருத ப₂லன்களாகிற ஒவ்வோர் ஐஶ்வர்யங்களுக்கு ஸாத₄னமாக, கடுமையான வ்ரதாநுஷ்ட₂ானங்களைக் கொண்ட ஒவ்வொரு புண்ய கர்மத்தை விதி₄த்து, இவனுடைய ப்ரதிபத்தியைப் படிப்படியாக முன்னேற்றுகிறான். இதனால்—அல்பமாய், அஸ்தி₂ரமான ஐஶ்வர்யங்களை அநுப₄விக்கவேணும் என்னும் ப்ரதிபத்தி

நீங்கப்பெற்று, அநந்தஸ்திர பலமான மோக்ஷத்தைப் பெற்றுத் தான் இன்புறவேண்டும் என்னும் ப்ரதிபத்தி (எண்ணம்) இவனுக்கு ஏற்படுகிறது. அப்போதும் புண்ணியக் குறைவாலே பகவானை அடையவேண்டும் என்னும் எண்ணம் ஏற்படாமல், ப்ரக்ருதி ஸம்பந்தத்தினின்றும் நீங்கிய தன் ஆத்மாவைத் தான் கண்டு அநுபவிப்பதாகிற கைவல்ய மோக்ஷத்தில் விருப்பம் உண்டாகிறது. அதற்கு ஸாதநமாகக் கர்ம ஜ்ஞாந யோகங்களை எம்பெருமான் விதிக்கிறான். அப்படி விதிக்கும்போது—பகவச் சேஷத்வாநுஸந்தானத்தை விதிப்பதன் மூலமும், கர்ம ஜ்ஞாந யோகங்கள் தொடங்குவதற்கும் வளர்வதற்கும் தடையாயிருக்கும் பாபங்கள் போவதற்காகப் பரமபுருஷனான தன்னை ஶரணமடையவேண்டும் என்று விதிப்பதன் மூலமும், ஜ்ஞாநயோகம் நிறைவடைவதற்கு உறுப்பாகத் தனது திருமேனியைச் சிந்தனம்செய்யவேண்டும் என்று விதிப்பதன் மூலமும் ''ஜீவாத்மாவே போக்யம்'' என்னும் இவனுடைய ப்ரதிபத்தியை மாற்றி ''பரமாத்மாவே போக்யம்'' என்னும் ப்ரதிபத்தியை ஏற்படுத்தவேண்டும் என்றே திருவுள்ளம் பற்றுகிறான் எம்பெருமான். இப்படி ப்ராரப்தகர்மம் முடியும் வரையில் எம்பெருமானை ஶேஷியாக அநுஸந்தித்து, ஶரணடைந்து, சிந்தித்த பின்பும் இவனது ப்ரதிபத்தி மாறுவிடில், தனக்கு வைஷம்ய நைர்க்ருண்யம் ஏற்படாமைக்காக இவனுக்குக் கைவல்ய மோக்ஷத்தையே கொடுத்துவிடுகிறான். இவர்களில் ஆயிரத்தில் ஒருவனுக்கு இப்ரதிபத்தி மாறி, எம்பெருமானைப் பெற்றுத் தான் ஆனந்திக்கவேண்டும் என்னும் ப்ரதிபத்தி உண்டானால், அதற்கு ஸாதனமாக பக்தியோகத்தை விதிக்கிறான். அப்படி விதிக்கும்போதும்—ஶேஷத்வாநுஸந்தானம், த்ரிவிதபரித்யாகம் முதலானவற்றை விதிப்பதன் மூலமும், பக்தியோகம் தொடங்குவதற்கும் வளர்வதற்கும் தடையாயிருக்கும் பாபங்கள் போவதற்காகத் தன்னை ஶரணமடையவேண்டும் என்று விதிப்பதன் மூலமும் இவனுடைய ஸ்வார்த்ததா ப்ரதிபத்தியை நீக்கவும், மோக்ஷத்திலும் எம்பெருமானுடைய ஆனந்தமே தனக்கு உத்தேஶ்யமென்றும், தன் ஆனந்தத்திற்காகத் தான் முயன்று வந்ததே அநாதிகாலமாக எம்பெருமானை அடைவதற்குத் தடையாயிருந்ததென்றும் உணர்த்தவும் விரும்புகிறான் எம்பெருமான். இவ்வண்ணமாக பக்தியோகநிஷ்டரான ஞானிகளில் ஆயிரத்தில் ஒருவனுக்கு ஸ்வார்த்ததா ப்ரதிபத்தி அடியோடு கழியப்பெற்று மோக்ஷார்த்தமான ஸ்வப்ரவ்ருத்தி ஸாமாந்யமும் நீங்கப்பெற்றால், அவனுக்கு நிர்ஹேதுகமாகத் தன்னை அருளுகிறானகையாலே எக்குறையுமில்லை—என்று கண்டு கொள்வது. இவ்வளவையும் திருவுள்ளம் பற்றியே (பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந்) என்கிறான்.

॥ भा ॥ नाल्पसंख्यासङ्ख्यातानां पुण्यजन्मनां फलमिदम्, यन्मच्छेषतैकरसात्मयाथात्म्यज्ञानपूर्वकं मत्प्रपदनम्; अपि तु बहूनां

(ப₃ஹூநாம் ஜந்மநாம் அந்தே) பல புண்யஜந்மங்கள் கழிந்தபின் கடைசியான ஜந்மத்தில். ''ப₃ஹூநாம் ஜந்மநாம் அந்தே'' என்பதற்கு ''பல ஜந்மங்கள் கழிந்தபின்'' என்று மாத்திரம் பொருள் கொள்வதில் பயனில்லை. அப்படியாகில் ப₃த்₃த₄ஜீவர்கள் அனைவர்க்கும் பல ஜந்மங்கள் கழிந்திருக்கையால், எல்லாருமே தன்னடையே இந்த ஜ்ஞாநமுடையவராகவேண்டிவரும். ஆகையால், '' அறிவு பக்குவமடைவதற்குறுப்பான பல புண்ய ஜந்மங்கள் கழிந்தபின்'' என்றே பொருள்கொள்ளவேண்டும். ''அந்தே'' என்பதற்கு ''இப்படிப்பட்ட புண்ய ஜந்மங்கள் கழிந்தபின், ஒரு ஜந்மம் முடிவுறும் தருவாயில்'' என்று பொருள் கொண்டால், அப்படிப்பட்ட மரண ஸமயத்தில் தான் இப்படிப்பட்ட ஜ்ஞாநமுண்டாகும் என்பதற்கு நியாமகம் இல்லையாகையால், அப்பொருள் பொருந்தமாட்டாது. ஆகையால் ''கடைசியான ஜந்மத்தில்'' என்றே பொருள் கொள்ளவேண்டும். (அந்தே ஜ்ஞாநவாந்) முன் ஶ்லோகத்தின் கடைசியில் ப்ரக்ருதமான ''ஜ்ஞாநீ'' என்னும் பத₃த்தைச் சேர்த்துக்கொண்டு, ''ஜ்ஞாநியானவன் பல புண்ய ஜந்மங்களிடையே கடைசியான ஜந்மத்தில் ஜ்ஞாநவானாகி'' என்று பொருள் கொள்வது பொருத்தம். இங்குள்ள ''ஜ்ஞாநவாந்'' என்னும் பத₃த்தையே '' ஜ்ஞாநீ '' என்னும் பத₃த்தின் பர்யாயமாகக் கொள்ளலாகாதோ? எனில்: முதல் ஜந்மத்திலிருந்தே ஜ்ஞாநீ எனத்தக்க உபாஸகன் கடைசி ஜந்மத்திலேயே 'ஜ்ஞானவான்' எனத்தக்கவனாகிறானாகையால் பர்யாயமாக முடியாது; '' அந்தே '' என்னும் பத₃ஸ்வாரஸ்யத்தையொட்டி கடைசியான ஜந்மத்தில் ஜ்ஞாநிக்கு உண்டாகும் ஒரு பரிபக்வமான (முற்றின) ஜ்ஞாநத்தை உடையவனே இங்கு ஜ்ஞானவான் என்று குறிக்கப்படுவதாகக் கொள்வதே பொருந்தும். '' அந்தே '' என்று ப்ராரப்₃த₄கர்மம் முடியும் கடைசியான ஜந்மத்தில் என்று பொருள் கொண்டால், அந்த ஜந்மத்தில்தான் இவனுக்கு இத்தகைய ஜ்ஞானம் உண்டாகும் என்பதற்கு நியாமகமில்லாமையால், அது பொருந்தாது. ஆகையால், இந்த ஜ்ஞாநம் உண்டாகிவிட்டால், ப்ராரப்₃த₄ கர்மம் தொடங்கிய ஜந்மமாகவோ, நடுவில் ஒரு ஜந்மமாகவோ இருந்தாலும், அதற்குப் பிறகு இவனுக்கு ஜந்மம் கிடையாது; அந்த ஜந்மத்தில், மரணமானால் வைகுந்தம் அடைந்தே தீருவான் என்று உணர்த்தப்படுகிறது.

இதிலிருந்து, இத்தகைய ஜ்ஞாநம் உண்டாவதையே எம்பெருமான் எதிர்பார்த்திருந்தான் என்றும், இத்தகைய ஜ்ஞாநம் ஏற்படாமையாலேயே ஐஶ்வர்யார்த்தி$_2$ தொடங்கி, உபாஸகனீருக அனைவர்க்கும் பல புண்ய ஜந்மங்களை அளித்துவந்தான் என்றும் விளங்குகிறது. "ஜ்ஞாநீ ஜ்ஞாநவாந்" என்று கர்த்ரு பத$_3$த்தையும் சேர்த்துப் படிக்காததிலிருந்து, ஜ்ஞாநியாகிற உபாஸகனுக்குத்தான் இந்த ஜ்ஞாநம் உண்டாகவேண்டும் என்னும் நியமமில்லை, பல புண்ய ஜந்மங்கள் கழிந்தபின் எந்த ஸம்ஸாரி ஜீவனும் உபாஸகனுகாமலே ஜ்ஞாநியின் பரிபக்வ நிலையான இந்த ஜ்ஞாநத்தை அடையலாம் என்று உணர்த்தப்படுகிறது. (ஜ்ஞாநீ ஜ்ஞாநவாந்) "ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு தபோ ஜ்ஞாந ஸமாதி$_4$பி$_4$: I நராணும் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே ப$_4$க்தி: ப்ரஜாயதே II" [இதிஹாஸ ஸமுச்சயம்] [கர்ம ஜ்ஞாந ப$_4$க்தியோக$_3$ங்களைப் பல்லாயிரம் ஜந்மங்களில் அநுஷ்டி$_2$த்த பின்புதான் கண்ணனிடம் (மோக்ஷஸாத$_4$னமான) ப$_4$க்தி உண்டாகிறது] என்று சொல்லப்பட்டவன் ஜ்ஞாநி என்றும், "யே ஜந்மகோடி ஸம்ஸித்$_3$த$_4$ா: தேஷாம் அந்தேऽத்ர ஸம்ஸ்தி$_2$தி:" [பௌஷ்கரஸம்ஹிதை] [எவர்கள் கோடிக்கணக்கான புண்ய ஜந்மங்களில் ஜ்ஞாந ஸித்$_3$தி$_4$பெற்றவர்களோ அவர்களுக்கே கடைசியான ஜந்மத்தில் 'எம்பெருமானே எல்லாம்' என்னும், பரிபக்வநிலை உண்டாகும்.] என்று சொல்லப்பட்டவன் ஜ்ஞாநவான் என்றும் உணரத்தக்கது. (ஜ்ஞாநவாந்) "வாஸுதே$_3$வ: ஸர்வமிதி ப்ரபத்$_3$யதே" [வாஸுதே$_3$வனே எல்லாம் என்று அடைகிருன்] என்று இவன் செய்யும் கார்யம் குறிக்கப்படுகையால், அதற்குக் காரணமான ஜ்ஞாநமும் "வாஸுதே$_3$வனே எல்லாம்" என்னும் ஜ்ஞாநமாகவே இருக்கவேண்டும் என விளங்குகிறது. இந்த ஜ்ஞாநத்திற்குக் காரணம், இவ்வத்தியாயத்தின் தொடக்கத்தில் கூறப்பட்ட பரமபுருஷ யாதா$_2$த்ம்ய ஜ்ஞாநமே என்றும் விளங்குகிறது. (வாஸுதே$_3$வ: ஸர்வமிதி ஜ்ஞாநவாந்) "ஸர்வம் வாக்யம் ஸாவதா$_4$ரணம்" [எல்லா வாக்யங்களும் ஏகாரத்தோடு கூடியவை] என்னும் நியாயத்தையொட்டி வாஸுதே$_3$வனே எனக்கு எல்லாமாயிருப்பவன் என்னும் அறிவையுடையவன் என்று பொருள்படுகிறது. அதாவது:— வாஸுதே$_3$வனே பரமப்ராப்யமாகவும், ப்ராபகனுகவும், மற்றும் சேதநர் விரும்பும் தா$_4$ரகம், போஷகம், போ$_4$க்$_3$யம் முதலான எல்லாப் பொருள்களாகவும் இருப்பவன் என்னும் அறிவையுடையவன். இவ்வறிவு இவனுக்குக் கடைசி ஜந்மத்திலேயே ஏற்படுகிறது என்று கூறுவதிலிருந்து, முந்திய ஜந்மங்களில் பூர்ணமாகக் கிடையாது என்று விளங்குகிறது. "த்வரித ஶிதி$_2$ல சித்தா:"

जन्मनां-पुण्यजन्मनां अन्ते—अवसाने, वासुदेवशेषतैकरसोऽहं तदायत्त-

[ர-ஸ்த 2-86] என்கிறபடியே அதிவிலக்ஷணமான ப்₃ரஹ்மாநந்த₃த்தை அடையவேண்டும் என்னும் த்வரையாலே அறிவுகலங்கி, மோக்ஷத்தில் தான் ஆநந்த₃மடையவேணும் என்று எண்ணி, அதற்கு உறுப்பாக ப₄க்தியோக₃த்தை ஸாத₄னமாக அநுஷ்டி₂க்கும்போது, இவனுக்கு எம்பெருமானும் ப்ராப்யனுய், அவனை அநுப₄விப்பதால் தனக்கு ஏற்படும் ஆநந்த₃மும் ப்ராப்யமாகிறது. எம்பெருமானும் த₄ாரகபோஷகபே₄ாக்₃யங்களாகிருன்; அவனை அநுப₄வித்துத் தான் பெறும் ஆனந்த₃மும் த₄ாரக போஷக பே₄ாக்₃யங்களாகின்றது. யோக₃த்திலிருந்து எழுந்தவுடன் காய், கனி முதலானவையும் த₄ாரகபோஷகபே₄ாக்₃யங்களாகின்றன. ஸாத₄நப₄க்திக்கு உறுப்பாக இவ்வத்தியாயத்தின் தொடக்கத்தில் உபதே₃ஶிக்கப்பட்ட பரமபுருஷ யாத₂ாத்ம்யத்தை அநுஸந்தி₄க்க அநுஸந்தி₄க்க, 'பரமபுருஷனுக்கு ஶேஷமாயிருக்கையையே இயல்வாகவுடைய நான் என் ஆனந்த₃த்தை உத்₃தே₃ஶ்யமாக நினைக்க இடமில்லை' என்று உணர்கிருன். மேலும், "ரஸோऽஹமப்ஸு" [7-8] என்று தொடங்கி நிருபாதி₄க ப்ராப்யப்ராபகன் தானே என்கையாலே "உண்ணும் சோறு பருகும் நீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்" [திருவாய் 6-7-1] என்கிறபடியே, 'அவனே பரமப்ராப்யமும், த₄ாரகம், போஷகம், பே₄ாக்₃யம் முதலான எல்லாமும்' என்னும் அறிவு ஏற்படுகிறது. "காயோடு நீடு கனியுண்டு வீசு கடுங்கால் நுகர்ந்து" [பெரியதிரு 3-2-2] "வீழ்கனியும் ஊழிலையும் என்னுமிவையே நுகர்ந்து" [பெரிய திருமடல் 12,13]என்று சொல்லுகிறபடியே காய், கனி, வேர்,கிழங்கு, நீர், காற்று முதலியவையும் இவ்வுலகிலிருக்கும்போது த₄ாரகபோஷக பே₄ாக்₃யங்கள் என்னும் நினைவு கழிகிறது. முக்தியில் தான் அடையும் ஆனந்த₃த்தில் ப்ராப்யத்வ பு₃த்₃தி₄யும், த₄ாரகபோஷக பே₄ாக்₃யத்வ பு₃த்₃தி₄யும் கழிகின்றது. "தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே" [திருவாய் 2-9-4] "உனக்கே நாம் ஆட்செய்வோம்" [திருப்பாவை 29] "உகக்கும் நல்லவரொடும் உழிதந்து உன்தன் திருவுள்ளம் இடர் கெடுந்தோறும் நாங்கள் வியக்க இன்புறுதும் எம் பெண்மை ஆற்றேம்" [திருவாய் 10-3-9] என்று ஆழ்வார்கள் அநுஸந்தி₄த்த பரார்த்த₂மான அநுப₄வ கைங்கர்யங்களே உத்₃தே₃ஶ்யம் என்னும் ப்ராப்ய நிஷ்கர்ஷம் ஏற்படுகிறது. இனி, ப்ராப்ய நிஷ்கர்ஷம் இல்லாமையாலே, ப்ராபக நிஷ்கர்ஷமும் முந்திய ஜந்மங்களில் இவனுக்கு இல்லாமலிருந்தது. முக்தியில் எம்பெருமானை அநுப₄வித்துத் தான் அடையும் ஆநந்

स्वरूपस्थितिप्रवृत्तिश्च, स चासङ्ख्येयैः कल्याणगुणगणैः परतर इति

த₃த்தையும் ப்ராப்யமாகக் கலங்குகையாலே, அவ்வாநந்த₃த்தை அடைவதற்கு ஸாத₄னமாக ஶாஸ்த்ரங்களில் விதி₄க்கப்பட்டிருக்கும் ப₄க்தியோக₃த்தை அநுஷ்டி₂க்கிருன் இவன். அதனுலே, பரம புருஷனை ப₂லப்ரத₃ ரூபமான உபாயமாகவும், ப₄க்தியை ப₂லகரண ரூபமான உபாயமாகவும் எண்ணுகிருன் இவன். அந்த ஸாத₄ந ப₄க்திக்கு உறுப்பாக இவ்வத்தியாயத்தின் தொடக்கத்தில் உபதே₃ஶிக்கப்பட்ட சில அநுஸந்த₄ானங்கள், இவனுக்குக் காலக்ரமத்தில் ப்ராபகவிஷயத்தில் தெளிவைப் பிறப்பிக்கின்றன. எப்படியெனில்: ''வாஸுதே₃வனே ஸர்வகாரணமாகவும், ஸர்வஶரீரியாகவும், ஸர்வ ப்ரகாரியாகவுமிருக்கிருன்'' என்றும், ''நான் கார்யமாகவும், ஶரீர மாகவும், ப்ரகாரமாகவுமிருக்கையால் என்னுடைய ஸ்வரூப ஸ்தி₂தி ப்ரவ்ருத்திகள் எல்லாம் அவனதீ₄னமாயிருக்கின்றன. அசேதநத்தைப் போல் நான் அவனுக்குப் பரதந்த்ரனுகவுமிருக்கிறேன்'' என்றும் அநுஸந்தி₄க்கையால், தன்னிடமுள்ள கர்மம், ஜ்ஞாநம், ப₄க்தி முதலானவை எல்லாமே அவனுல் விளைந்தவை என்று உணரப் பெற்று, அவற்றில் ஸாத₄நத்வபு₃த்₃தி₄ கழியப்பெறுகிருன். ஜ்ஞாநம், ஶக்தி முதலான கல்யாணகு₃ணங்களாலும் அவனே மிகச் சிறந்தவன் என்று அநுஸந்தி₄ப்பதன் மூலம், அஜ்ஞனுய் அஶக்தனுன தான், தன் முயற்சியாலே தன்னை ரக்ஷித்துக்கொள்ள முடியாதென்றும், ஸர்வஜ்ஞனுய், ஸர்வஶக்தனுன அவனே தனக்குப் ப₂லப்ரத₃னு யிருப்பதோடன்றியில், ப₂லகரண ரூபமான உபாயமாகவுமிருக்கிருன் என்றும் தெளிவு ஏற்படுகிறது. இதனுல், ப₄க்தி முதலான தன் முயற்சிகளை உபாயமாக நினைத்த கலக்கம் தீரப்பெறுகிருன் இவன். மேலும், மோக்ஷத்திலும் தன் ஆனந்த₃ம் தனக்கு உத்₃தே₃ஶ்யமில்லை என்னும் ப்ராப்யநிஷ்கர்ஷம் ஏற்பட்டுவிடுகையாலும், அந்த ஸ்வார்த்த₂மான ஆனந்த₃த்துக்கு ஸாத₄னமான ப₄க்தி முதலான வற்றை, பரார்த்த₂மான அநுப₄வ கைங்கர்யங்களை விரும்பும் தான் அநுஷ்டி₂க்கலாகாது என்று உணர்கிருனுகையால், இவனுடைய ப்ராப்யநிஷ்கர்ஷமே இவனுடைய ப்ராபகநிஷ்கர்ஷத்தை உறுதிப் படுத்துகிறது. (அந்தே ஜ்ஞாநவாந்) இப்படி என்னைப்பற்றிய உண்மையறிவால் ப்ராப்ய ப்ராபகநிஷ்கர்ஷங்கள் ஏற்பட்டபின், ''யத் ஜ்ஞாத்வா நேஹ பூ₄யோऽந்யத் ஜ்ஞாதவ்யம் அவஶிஷ்யதே'' [கீ₃தை 7-2] என்கிறபடியே இவனுக்கு இனி அறியவேண்டியது ஒன்றுமில்லாமையால், இவனுக்கு இதுவே கடைசி ஜந்மமாகிறது; பிறகு இவன் ஸம்ஸார மண்ட₂லத்தில் பிறப்பதில்லை என்று கருத்து.

(அந்தே) கடைசி ஜந்மத்தில். இந்த ஜ்ஞாநம் ஏற்பட்ட க்ஷணத்திலேயே இவனுக்கு மோக்ஷம் ஏற்படவேண்டாவோ? இந்த ஶரீரம் முடியும் வரையில் எம்பெருமான் இவனை வைத்திருக்கவேணுமோ? எனில்: மிகவும் கிடைத்தற்கரிய ஞானியான இவனைக் கொண்டு சிலரைத் திருத்தலாம் என்னும் எண்ணத்தாலும், 'எம்பெருமானைப் பற்றிய உண்மையறிவு ஏற்பட்டால், நச்சுப் பொய்கையிற்போலே உடனே மரணம் ஏற்பட்டுவிடும்' என்னும் ப₄யத்தாலே ஸம்ஸாரிகள் ப₄க₃வத்₃விஷயத்தின் அருகிலும் வர அஞ்சுவர்களாகையாலும், வேர் சூடுமவர்கள், பரிமளத்தில் ஆசையாலே மண்பற்றுக் கழற்றாதாப்போலே, ஞானியினுடைய ஜ்ஞாந ப்ரேம பரிமளமெல்லாம் தோற்றும்படியிருக்கிற விமல சரம தே₃ஹத்தில் எம்பெருமானுக்குள்ள விருப்பத்தாலும், இந்த ஞானிக்கு ஆர்த்தி பரம்பரைகளை விளைத்து, பரப₄க்தி பரஜ்ஞாந பரமப₄க்தி பர்யந்தமான அதி₄கார பூர்த்தியை உண்டாக்குவதற்காகவும் இவனை இந்த ஶரீரத்திற்கு உறுப்பான கர்மங்களை அநுப₄வித்து முடியும் வரையில் வைத்திருக்கக் குறையில்லை. (ஸர்வமிதி ஜ்ஞாநவாந்) "மாதா பிதா ப்₄ராதா நிவாஸ: ஶரணம் ஸுஹ்ருத் க₃திர் நாராயண:" [ஸுபா₃லோபநிஷத்] [தாய், தந்தை, ஸஹோத₃ரன், இருப்பிடம், நண்பன், ப்ராபகம், ப்ராப்யம் ஆகிய எல்லாமே நாராயணன்] "த்வமேவ மாதா ச பிதா த்வமேவ த்வமேவ ப₃ந்து₄ஶ்ச கு₃ருஸ்த்வமேவ। த்வமேவ வித்₃யா த்₃ரவிணம் த்வமேவ த்வமேவ ஸர்வம் மம தே₃வதே₃வ ॥" [தே₃வதே₃வனே! நீயே எனக்குத் தாய், தந்தை, உறவினன், உயர்கு₃ரு, கல்வி, செல்வம் முதலான எல்லாமுமாவாய்.] "பெற்ற தாய் நீயே பிறப்பித்த தந்தை நீ மற்றையாராவாரும் நீ" [பெரியதிருவ 5] "தஞ்சமாகிய தந்தை தாயொடு தானுமாய், அவையல்லனாய்" [திருவாய் 3-6-9] "சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும் மேலாத் தாய் தந்தையும் அவரே இனி ஆவாரே" [திருவாய் 5-1-8] "உண்ணும் சோறு பருகும் நீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்" [திருவாய் 6-7-1] முதலானவிடங்களில் சொல்லப்பட்ட எல்லாமும் இங்கு ஸர்வஶப்₃த₃த்துக்குப் பொருளாகுமாகையாலே, "அந்யத₃பி யத் மநோரத₂வர்த்தி, ஸ ஏவ மம தத் ஸர்வம்" என்று பா₄ஷ்யகாரர் பா₄ஷ்யமிட்டருளினார். இந்த ஜ்ஞாநத்தால் இவன் செய்யும் கார்யம் யாதெனில், (வாஸுதே₃வ: ஸர்வமிதி மாம் ப்ரபத்₃யதே) "வாஸுதே₃வனே எனக்குப் பரமப்ராப்யமும், ப்ராபகமும், உண்ணும் சோறும், பருகும் நீரும், தின்னும் வெற்றிலையும், சேலேய் கண்ணியரும், பெருஞ்செல்வமும், நன்மக்களும், மேலாத் தாய் தந்தையும் முதலான எல்லாம்" என்று

ज्ञानवान् भूत्वा, वासुदेव एव मम परमप्राप्यं प्रापकं च, अन्यदपि

என்னை எல்லாமாகப் பற்றுகிறான் என்கிறான். எல்லாமே கண்ணனான
இவனுக்கு வேறு சிலவும் ப்ராப்யமென்று தோன்றும்படி, இங்கு
பா$_4$ஷ்யத்தில் "பரம ப்ராப்யம்" என்று ப்ராப்ய ஶப்$_3$த$_3$த்துக்குப்
'பரம' என்னும் விஶேஷணமிட்டிருப்பதற்கும், ப்ராபக ஶப்$_3$த$_3$த்
திற்கு அப்படி விஶேஷணமிடாமலிருப்பதற்கும் கருத்து என்ன?
எனில்: பிராட்டிமார், நித்யஸூரிகள், முக்தர் ஆகியவர்களும்
பரமபத$_3$மும் அவ்வுலகிலும், ஆசார்யர்களும், பா$_4$க$_3$வதர்களும்
இவ்வுலகிலும் இவனுக்கு அவனையிட்டு ப்ராப்யர்களாகிறார்களாகை
யால், அவனைப் பரம ப்ராப்யன் என்று விஶேஷித்தார் என்றும்,
சணற்கயிறுகண்ட ப்$_3$ரஹ்மாஸ்த்ரம் போலே துணையுடையவனாய்,
நித்யாநபாயிநியான பிராட்டியையும் உபாயமாயிருக்க ஸஹியாதபடி
நிரபேக்ஷோபாய பூ$_4$தனாயிருக்கையாலே ப்ராபக ஶப்$_3$த$_3$த்துக்கு அப்படி
விஶேஷணமிடவில்லை என்றும் குறிக்கொள்ளத்தக்கது. "ப்ரபத்$_3$
யதே" என்னும் ஶப்$_3$த$_3$ம் பற்றுவதைக் காட்டுவதாயிருக்க,
"உபாஸ்தே" என்று பா$_4$ஷ்யகாரர் பா$_4$ஷ்யமிடுவதற்குக் கருத்
தென்னவெனில், உபாஸகனாயிருந்தபோது இவனுக்கிருந்த ப$_4$க்தி
ரூபமான ஜ்ஞாநமும் அழிவதில்லை; அதில் உபாயத்வ பு$_3$த்$_3$தி$_4$யே
தவிர்க்கப்படுகிறது என்று உணர்த்துவதற்காக "உபாஸ்தே"
என்று பா$_4$ஷ்யமிட்டார். "நிஜகர்மாதி$_3$ ப$_4$க்த்யந்தம் குர்யாத் ப்ரீத்
யைவ காரித:। உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸேத் தே$_3$வே து தாம்
அபீ$_4$:॥" [31] [தனக்குரிய கர்மம் தொடக்கமாக, ப$_4$க்தியீறாக
உள்ளவற்றில் உபாயத்வ பு$_3$த்$_3$தி$_4$யைக் கைவிட்டு, எம்பெருமானிட
த்திலேயே அவ்வுபாயத்வத்தை அநுஸந்தி$_4$த்து ப$_4$யமற்றவனாய்,
அன்பினாலேயே தூண்டப்பட்டவனாய், அவற்றைச் செய்யவேண்
டும்.] என்று கீ$_3$தார்த்த$_2$ஸங்க்$_3$ரஹத்தில் ஆளவந்தாரும் இவ்
வதி$_4$காரிக்கு, ப$_4$க்திபர்யந்தமான எல்லாமே உபாயத்வ பு$_3$த்$_3$தி$_4$
ரஹிதமாகவும், ஸ்வயம் ப்ரயோஜநமாகவும் உண்டு என்று
காட்டினாரன்றோ. "உபாஸ்தே" என்றதினால் இங்கு அங்க$_3$
ப்ரபத்தியே கருதப்படுகிறது என்று கொண்டால், "வாஸு
தே$_3$வ: ஸர்வம் இதி ப்ரபத்$_3$யதே" [வாஸுதே$_3$வனே பரம
ப்ராப்யமும், ப்ராபகமும், தா$_4$ரகபோஷக போ$_4$க்$_3$யங்கள் முதலிய
எல்லாமும் என்று அடைகிறான்] என்று ஶ்லோகத்திற் சொல்லி
யிருப்பதும், அதன் பா$_4$ஷ்ய ஸ்ரீஸூக்திகளும் பொருந்தாமற்போய்
விடும். "வாஸுதே$_3$வ: ஸர்வம்" என்றதை "எல்லாம் கண்ணன்"
[திருவாய்மொழி 6-7-1] என்று ப்ரபந்ந ஜந கூடஸ்த$_2$ரான நம்

यन्मनोरथवर्ति, स एव मम तत्सर्वमिति मां प्रपद्यते—मामुपास्ते ;

மாழ்வாரே வ்யாக்₂யானம் செய்கையால், இங்கு ஸித்₃தோ₄பாய நிஷ்டூத்வமாகிற முக்₂ய ப்ரபத்தியே கருதப்படுகிறது என்பது தெளிவு. இனி, "கஸ்சிந்மாம் வேத்தி தத்வத:" [7-3] என்ற உபக்ரமத்தையொட்டி, இத்தகைய அதி₄காரி தனக்கும் மிகவும் கிடைத்தற்கரியவன் என்று காட்டுகிருன் கடைசிப் பாத₃த்தாலே — (ஸ மஹாத்மா) ஆத்ம ஶப்₃த₃ம் நெஞ்சையும், ஆத்ம ஸ்வரூபத்தையும் குறிக்குமாகையால், 'அவன் பெரு நெஞ்சினன்' என்றும், 'அவன் பெருமைபெற்ற ஸ்வரூபத்தையுடையவன்' என்றும் இருவகையாகப் பொருள்படும். ஆத்மா அணுஸ்வரூபனுகையால், இரண்டாம் பொருளில் ஸ்வரூபத்தால் பெருமையைச் சொல்லுகிறதன்று; சிறப்புக்களால் பெருமையையே சொல்லுகிறது. (மஹாமநா:) தனக்காக என்று எதையும் கொள்ளாமல், எனக்காகவே வாழ்பவனுகையாலே அவன் மிகப்பெரிய நெஞ்சையுடையவன் என்கை. (மஹாத்மா ஆத்மா) என்னையே ஒப்பற்ற ப்ராப்யமாகக் கொண்ட ஜ்ஞாநியை 'ஆத்மா' என்னலாம் என்ருல், அந்த ஞானம் கனியப்பெற்று என்னையே எல்லாமாகக் கொண்ட இவனை 'மஹாத்மா' என்றல்லது சொல்ல லாவதில்லையே என்று கருத்து. "சிவனொடு பிரமன் வண் திரு மடந்தை சேர் திருவாகம் என் ஆவி ஈரும்" [திருவாய் 9-10-6] என்கிறபடியே, என்னைப் பிரிந்தால் /அச்சேத்₃யமான தன் ஆத்மா சேதி₃க்கப்பெறுவதுபோலே துடிப்பான் இவன். "வேம் எமதுயிர் அழல் மெழுகில் உக்கே" [திருவாய் 10-3-6] என்ருப் போலே /அதா₃ஹ்யமான தன் ஆத்மா நெருப்பிலிட்ட மெழுகு போலே கசிந்து உருகுவதாக உணர்வான் இவன். "கண்ணனுக் கென்று ஈரியாயிருப்பாள்" [திருவாய் 6-7-9] என்கிறபடியே /அக்லேத்₃யமான தன் ஆத்மா நனைக்கப்படுவதாக நினைப்பான் இவன். "வேட்கை நோய் மெல்லாவி உள்ளுலர்த்த" [திருவாய்2-1-10] என்கிறபடியே /அஶோஷ்யமான தன் ஆத்மா விஶ்லேஷவ்யஸநத்தாலே உலர்த்தப் பெறுவதாக அநுஸந்தி₄ப்பான்இவன். இத்தகையவனை மஹாத்மாவென்றல்லது வேறு எச்சொல்லாலே சொல்லுவேன் என்றபடி. (மஹாமநா:–பெரு நெஞ்சினன்) இங்கு நெஞ்சைச் சொன்னது மற்ற இந்திரியங்களுக்கும், தே₃ஹத்துக்கும் உபலக்ஷணம். "முந்துற்ற நெஞ்சே" [பெரிய திருவ-1] என்று ஸம்ஶ்லேஷத்தில் இவனுடைய நெஞ்சு இவனிலும் முற்பட்டிருக்கும். "என் நெஞ்சு என்னை நின்னிடையேனல்லேன் என்று நீங்கி......நாண் மலர்ப்பாதம்

/ கீ₃தை 2-24.

स महात्मा — महामना :, सुदुर्लभः — दुर्लभतरो लोके ।

அடைந்ததுவே'' [திருவாய் 8-2-10] என்று விஸ்லேஷத்தில்— அசேதநமான இவனுடைய நெஞ்சு, சேதந ஸமாதி₄யை அடைந்து, 'அவன் விட்டுப்போன உனக்குக் கரணமாகமாட்டேன்' என்று இவனை விட்டுச் சென்று அவனை அடையும். மற்ற இந்திரியங்களும் ''முடியானே'' [திருவாய் 3-8] என்னும் திருவாய்மொழியிற்போலே, சேதந ஸமாதி₄யாலே, ஓரிந்திரியம் மற்ற இந்திரியங்களின் அநுப₄வத்தைப் பெற விரும்பும். ''உடலம் நின்பால் அன்பாயே நீராய் அலைந்து கரைய'' [திருவாய் 5-8-1] என்கிறபடியே பரமபுருஷனிடம் ஆராதகாதலாலே ஆத்மா கசிந்து உருகிவிடாதபடி கட்டின கரையான ஶரீரமானதுதான் அன்புதானே ஒரு வடிவு கொண்டாற் போலேயாய், மேல்மேலே கரைந்து ஆத்ம த₄ர்மத்தை ஏறிட்டுக் கொள்ளும். (பெருநெஞ்சினன்) இவனுடைய நெஞ்சு ஜ்ஞாந த₃ஶையில் ஒப்புயர்வற்ற ப்ராப்ய நிஷ்கர்ஷமும், ப்ராபக நிஷ்கர்ஷமும் பெற்றிருப்பதுபோலே, ப்ரேமத₃ஶையில் எல்லையில்லாத கலக்கத்தையும் பெற்றிருக்கும். உபாஸகனுக்குள்ள கலக்கம் ஸ்வரூப யாதா₂த்ம்ய ஜ்ஞாநமில்லாமையினாலேயுண்டானதாகையாலே தாழ்ந்தது. இவனுடைய கலக்கம் ஞானம் கனிந்த நலமான ப₄க்தியினால் ஏற்படுவதாகையாலே அடிக்கழஞ்சுபெறும் (மிகச் சிறந்தது). உபாஸகனுடைய ப₄க்தி, ''நிதி₃த்₄யாஸிதவ்ய:'' [ப்₃ருஹ 4-4-5] என்கிற விதி₄யினால் தூண்டப்பட்டு, சேதநஸாத்₄யையாய், க்ரம பரிணாமினியாய், கட்டளைப்பட்டதாய், அளவுபட்டிருக்கும். இவனுடைய ப₄க்தி, அதுக்கு எதிர்த்தட்டாய்க் கரைகட்டாக் காவேரிபோலே, '' அத்யந்த ப₄க்தி யுக்தஸ்ய ந ஶாஸ்த்ரம் நைவ ச க்ரம: '' [ப₄க்தி விஞ்சியிருப்பவனுக்கு ஶாஸ்திர வரம்பும், மற்ற வரம்புகளும் கிடையாது] என்கிறபடியே அளவிறந்து, வரம்பு மீறியிருக்கும். ஆனாலும், எத்தனைதான் கலக்கம் ஏற்பட்டாலும், '' தேறியும் தேறாதும் மாயோன் திறத்தனளே இத்திருவே '' [திருவாய் 4-4-7] என்கிறபடியே ஶேஷத்வரூபமான ஸ்வரூபம் நிலைகுலையாது. ப்ரேமத₃ஶையில் இவன் பெண்ணுடையுடுத்துப் பெண்பேச்சுப்பேசும். அப்போது விஷயவைலக்ஷண்யத்தாலும், ப்ராப்யத்வரையாலும் கலங்கிப் பக்ஷிகள் முதலானவற்றையும் தூதுவிடும்; அவனைப்பெற நோன்பு நோற்கும்; மடலெடுக்கவும் துணியும். ''வாயும் திரை'' [2-1] என்னும் திருவாய்மொழியிற்போலே நாரையும், அன்றிலும், கடலும், காற்றும், மேக₄மும், சந்திரனும், கழியும், விளக்கும் தன்னைப்போலே எம்பெருமானைப் பிரிந்து நோவுபடுவதாக எண்ணி அவற்றைக் கட்டிக்கொண்டு அழும்.

அவனைப் பெறவேண்டும் என்னும் ஆசை அளவிறந்து செல்லும் போது "முயன்றுன்னை நோற்கின்றேன் காமதேவா" [நாச்-திரு 2] "தெய்வங்காள் என் செய்கேன்" [திருவாய் 5-4-8] என்று தே₃வ தாந்தர ஸமாஶ்ரயணமும் பண்ணும். இவையெல்லாவற்றுக்கும் மேலே — தனக்காகக் கலங்கிய நிலைபோய், தானான தன்மையிலேயே திருப்பல்லாண்டிற்போலே அஸ்தா₂நே ப₄யஶங்கையாலே கலங்கி, ரக்ஷ்யரக்ஷகப₄ாவம் தட்டுமாறி, ப₄யநிவர்த்தகங்களுக்கு ப₄யப்பட்டு, ப்ரதிகூலரான ஐஶ்வர்ய கைவல்யார்த்தி₂களையும் அநுகூலராக்கிக் கொண்டு, நடந்த காலங்களில் எம்பெருமானுக்கு வந்த ஆபத்துக் களுக்குப் பிற்காலத்திலே வயிறெரிந்து, "சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டே" [12] என்று அங்கு பெறும் ப₂லமும் இதுவே என்று கொண்டு, உறக்கமில்லாத நித்யஸூரிகளைப் பார்த்து "உறகல் உறகல்" [பெரியாழ்திரு 5-2-9] என்பதாய்க்கொண்டு இதுவே யாத்ரையாயிருக்கும். ஞானியான உபாஸகன் "யுக்தாத்மா" என்கிறபடியே என்னைப் பெருவிடில் த₄ரிக்கமாட்டாதவனாயிருக்கும். "மஹாத்மபி₄ர் மாம் அவலோக்யதாம் நய க்ஷணேऽபி தே யத்₃விர ஹோऽதிது₃ஸ்ஸஹ:" [ஸ்தோ-ர 56] [எவர்களைக் கணநேரம் பிரிவதும் உனக்கு மிகவும் பொறுக்கமுடியாததோ, அத்தகைய மஹாத்மாக் களாலே என்னைக் கடாக்ஷிக்கச் செய்வாய்] என்று ஞானிகளில் சிறந்தவனான இவனே — இவனைப் பெருவிடில் நான் கணமும் த₄ரிக்க மாட்டாதபடி மஹாத்மாவாயிருக்கும் என்று கருத்து. "ஸ ச மம ப்ரிய:" என்றவிடத்தில் சகாரம் அப்ராத₄ாந்யத்திலேயாய். அவ னுடைய ப்ரீதியைக் காட்டிலும் என்னுடைய ப்ரீதி குறைவுபட்டது என்று ஒரு பொருள் தோற்றுகிறதன்றோ. அப்பொருள் ஞானிகளில் சிறந்தவனான இவனையே கருதியது. கு₃த்₃ய வ்யாக்₂யாநத்தில் இப்ரகரணத்தில், "'அவனுக்கு நான் அத்யர்த்த₂ப்ரியன்' என் றும், 'அவனும் எனக்கு ப்ரியன்' என்றும் அவன் பக்கல் தனக் குண்டான ப்ரியத்தைக் குறையச் சொல்ல வேண்டுகிறதென்? அவ னுடைய ப்ரியத்தில் தன்னுடைய ப்ரியம் குறைந்தோ இருப்பது? என்னில்: அங்ஙனன்று; அவன் தன்னளவிலே ப்ரியன்; நான் என்னளவிலே ப்ரியன்; அணுவுக்குள்ளதன்றே விபு₄வுக்குள்ளது; குளப்படி கலங்கினாற்போலன்றே கடல் கலங்குவது; இப்படியிருக்க, தன் வாத்ஸல்யத்தாலே 'அவனுடைய ப்ரியத்துக்கு என்னுடைய ப்ரியம் எங்கே கிடக்கும்' என்னும் நினைவாலே சொல்லுகிறான்" என்று உபாஸகனான ஞானிக்கும் பொருந்தும்படியான பொருளை

அருளிச்செய்துவிட்டு, ''அங்ஙனன்றியிலே, ஸர்வஶக்தியாலும் பரிஹரிக்கவொண்ணாத ப₄யத்தை விளைப்பதான ப்ரியமாகையாலே அதுதானே அத்யர்த்த₂மென்னவுமாம். * ப₄யாநாம் அபஹாரியாலும் பரிஹரிக்கவொண்ணாத ப₄யத்தை விளைப்பிப்பதொரு ப்ரியமிறே. ப₄யநிவ்ருத்தி ஹேதுக்கள்தானே ப₄யவ்ருத்₃தி₄ ஹேதுக்களாய்த்து.'' என்று, வாஸுதே₃வனே எல்லாம் என்னும் மஹாத்மாவான இந்த ஞானிக்கே பொருந்தும் பொருளையும் பெரியவாச்சான்பிள்ளை அருளியது காணத்தக்கது. (ஸுது₃ர்லப₄:) இப்படிப்பட்ட மஹாத்மா ஸர்வஶக்தனை எனக்கும் மிகவும் கிடைத்தற்கரியவன். ஞானியான உபாஸகன் ''ஆஸ்தி₂த: ஸ ஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் க₃திம்'' என்கிறபடியே என்னை அடைவதற்காகப் பாடுபடுகிறான். நானோ பரமஞானியான இவனை அடைவதற்காக அநாதி₃காலமாகப் பாடுபடுகிறேன். ''ப்ரஜாபதிம் த்வோ வேத₃'' [யஜு காண் 1-ப்ர-6] [பரமபுருஷனை ஒருவன் அடைகிறான்.] ''யஸ்ச ராமம் ந பஶ்யேத்து'' [ரா-அ 17-14] [எவன் ராமனைக் காணவில்லையோ] என்று பரமபுருஷனைத் தன் முயற்சியாலே அடையும் வகுப்பில் சேர்ந்தவன் அவன். ''ப்ரஜாபதிஸ்த்வம் வேத₃ — யம் ப்ரஜாபதிர் வேத₃ ஸ புண்யோ ப₄வதி'' [யஜு-காண் 1-ப்ர-6] [பரமபுருஷன் ஒருவனை அடைகிறான். அவனே சிறந்தவன்.] ''யமேவைஷ வ்ருணுதே தேந லப்₄ய: தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்'' [கட₂ 1-2-23] [எவனை இப்பரமபுருஷன் வரிக்கிறானோ அவனாலேயே இப்பரமன் அடையத்தக்கவன். அவனுக்கு இப்பரமன் தன் திருமேனியைக் காட்டுகிறான்.] ''யஞ்ச ராமோ ந பஶ்யதி'' [ரா-அ 17-14] [எவனை ராமனும் காணவில்லையோ] என்று பரமபுருஷன் நிர்ஹேதுக க்ருபையாலே வரித்து அடையும் புண்யவான் இவன். இன்றுவரை எனக்கும் ஒருவன்கூட இத்தகைய அதி₄காரி கிடைக்கவில்லை என்று கருத்து. (ஸுது₃ர்லப₄:) மிகவும் கிடைத்தற்கரியவன். ''மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு'' என்ற ஐஶ்வர்யார்த்தி₂ ஸுஸுலப₄ன் (மிகவும் கிடைத்தற்கு எளியவன்); ''கஶ்சித் யததி'' என்ற கைவல்யார்த்தி₂ ஸுலப₄ன் (கிடைத்தற்கு எளியவன்); ''கஶ்சிந் மாம் வேத்தி'' என்ற ஜ்ஞாநியானவன் து₃ர்லப₄ன் (கிடைத்தற்கு அரியவன்); ''கஶ்சிந் மாம் தத்வதோ வேத்தி'' என்ற ஞானிகளில் சிறந்தவனான இவ்வதி₄காரி ஸுது₃ர்லப₄ன் (மிகவும் கிடைத்தற்கரியவன்) என்று கருத்து. ''மிகவும் கிடைத்தற்கரியவன்'' என்கையாலே உடைமையை அடையும் உடையவனைப்போலே சேதநரை இத்தகைய அதி₄காரிகளாக்கி அடைவதற்காகவே எம்

பெருமான் அநாதி₃காலமாக முயன்று வருகிருன் என விளங்குகிறது. ''வாஸுதே₃வ: ஸர்வம்'' என்கையாலே, ''ப்ராபகனும், ப்ராப்திக்கு உகப்பானும் அவனே'' [ஸ்ரீவசந 70] என்னும் அர்த்த₂மும், ''ஸுது₃ர்லப₄:'' என்கையாலே ''ப்ராப்தாவும் அவனே'' [ஸ்ரீவசந70] என்னும் அர்த்த₂மும் சொல்லப்பட்டதாயிற்று. '' அத்₄யர்த்த₂ப்ரியம் ஜ்ஞாநிநம் லப்₃த்₄வா '' என்று ஸ்ரீபா₄ஷ்யத்தின் கடைசியில் பா₄ஷ்ய காரரும் 'ப்ராப்தாவும் அவனே' என்னும் இப்பரமரஹஸ்யார்த்த₂த்தை வெளியிட்டு, ஞானியைப் பற்றின இந்த மூன்று ஶ்லோகங்களையும் உதா₃ஹரித்து ஸ்ரீபா₄ஷ்யத்தை நிறைவுபடுத்தினர். (ஜ்ஞாநவாந்... ஸுது₃ர்லப₄:) இத்தகைய அத்₄யவஸாய ரூபமான ஜ்ஞாநமுடைய வன் அசேதந க்ரியாகலாபங்களைப் பற்றிநின்று என்னைப்பெறப் பாடு படவேண்டா. என்னைச் சிந்தித்திருக்கும் இவனை நான் பெருப் பேறு பெற்ருப்போலே மேல்விழுந்து அடைவேன். ''மற்ருென்றில்லை சுருங்கச் சொன்னேம் மாநிலத்து எவ்வுயிர்க்கும், சிற்றவேண்டா சிந் திப்பே அமையும் கண்டீர்கள் அந்தோ!'' [திருவாய் 5-1-7] என்ருர் ஆழ்வாரும். (மஹாத்மா ஸுது₃ர்லப₄:) இவனுக்கு ஒப்பானவர் உப₄ய விபூ₄தியிலும் கிடையாதாகையாலே இவன் எனக்கு மிகவும் கிடைத்தற் கரியவனே. இவ்வுலகிலுள்ள உபாஸகபர்யந்தமானவர்கள் இவனுக்கு ஒப்பானவரல்லர் என்பது மிகத் தெளிவு. தெளிவிசும்பிலிருந்து தெளிந்திருக்கும் நித்யமுக்தர்களும், இருள்தருமாஞாலத்திலிருந்தும் தெளிந்திருக்கும் இவனுக்கு ஒப்பல்லர். ''சீதனையே தொழுவார் விண்ணுளாரிலும் சீரியரே'' [திருவிருத்தம் 79] என்கிறபடியே. ஸ்வ தஸ் ஸர்வஜ்ஞனாகையாலே தெளிந்திருக்கும் நானும், கலக்கத்தை விளைக்கும் ஸம்ஸாரத்திலேயிருந்து இவ்வளவு தெளிந்திருக்கும் இவனுக்கு ஒப்பல்ல. ஆகையால், இவன் மிகவும் கிடைத்தற்கரிய வனே. க₃த்₃யவ்யாக்₂யானத்தில் இவ்விடத்தை வ்யாக்₂யானம் செய்யும்போது பெரியவாச்சான்பிள்ளை '' அறப்பெரியனன்ருே. அவனை ஒப்பாரில்லை. அவனுக்கு நாமும் ஒப்பல்லோம். ஆவதென்? இது ப்ரஶம்ஸையோ? என்னில்: அன்று; உண்மை. இதுக்கு ஹேது வென்னென்னில்: நமக்கு ஸம்ஸார து₃ரிதமாகிற கலக்கம் தட்டா திருக்கையாலே ஸம்ப₃ந்த₄த்தை உணர்ந்திருக்கலாம். அங்ஙனன் றிக்கே, ஸம்ஸாரத்திலே ப₃த்₃த₄னாய்க் கலங்கியிருக்கிறவன் ஸம் ப₃ந்த₄த்தை உணர்ந்திருக்கையாலே அவனுக்கு நாமும் ஒப்பல்லோம். (து₃ர்லப₄:) அவனை ஸம்ஸாரத்தில் கிடையாது. (ஸுது₃ர்லப₄:) பரமபத₃த்திலும் கிடையாது. இப்படிக் கலக்கத்திலும் தெளிந்திருக் குமவனை உப₄யவிபூ₄தியிலும் கிடையாதுகாண் என்றபடி. நாமும்

ஆசைப்பட்டே போமித்தனையல்லது, அவனை நமக்குங்கூடக் கிடை யாதுகாண் என்கிறான். அதாவது என்னென்னில்: 'தெளிவிசும்பு' [திருவாய் 9-7-5] என்கிறபடியே தெளிவிக்கையே ஸ்வபாவமாயிறே இருப்பது அத்தேசம். இது 'இருள் தருமா ஞாலம்' [திருவாய் 10-6-1] என்கிறபடியே அத்தேசிகர் இங்கே வரிலும் கலக்குகையே ஸ்வபாவமாயிறே இருப்பது'' என்று அருளிச்செய்திருப்பது இங்கு அநுஸந்திக்கத்தக்கது. ''இதி ஶ்லோக த்ரயோதித ஜ்ஞாநிநம் மாம் குருஷ்வ'' [ஶரணாகதிகத்யம்-13] [''தேஷாம் ஜ்ஞாநீ''என்று தொடங் கும் இந்த மூன்று ஶ்லோகங்களிலும் சொல்லப்பட்ட ஜ்ஞாநியாக என்னை ஆக்கவேணும்] என்று பாஷ்யகாரர் கத்யத்திலே பிரார்த்திக்கை யாலே—இந்த ஶ்லோகத்தில் சொல்லப்பட்டவனாய்,''வாஸுதேவனே எல்லாம்'' என்று அறிந்து பற்றுமவனான மஹாத்மாவான ஜ்ஞாநியே மூன்று ஶ்லோகங்களுக்கும் முக்யார்த்தமாயிருப்பவனென்று விளங்கு கிறது. ஆயினும், முதலிரண்டு ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட பெருமை கள் உபாஸகனான ஞானிக்கும் பொருந்தும் என்பதும், இந்த ஶ்லோகத் தில் சொல்லப்பட்ட பெருமை உபாஸகனுக்கன்றிக்கே, மஹாத்மா வான ஞானிக்கே பொருந்தும் என்றும் உணரத்தக்கது. இவ் வண்ணமாக, கீதையில் மேல் ப்ரகரணங்களில் உபாஸகனின் பெருமையைச் சொல்லுமிடங்களில் மஹாத்மாவான ஞானிக்கு அவை மிகப் பொருந்தும் என்பதும் அறியத்தக்கது. பல அவதாரங்கள் செய்தும், இத்தகைய மஹாத்மாவான ஞானி ஒருவன்கூடக் கிடைக்க வில்லையே என்னும் குறைதீரச் சிலர்க்கு மயர்வற மதிநலமருளி, நம்மாழ்வார் முதலான ஆழ்வார்களாக ஆக்கினான் எம்பெருமான் என்னும் ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்தமும் இங்கு உணரத்தக்கது.

''வாஸுதேவ: ஸர்வம்'' என்பதாலே வாஸுதேவனோடு சேதநாசேதநங்களை ஒரே வேற்றுமையில் படிப்பதாகவும், அதில் சேதந ஸாமாநாதிகரண்யத்தால் வாஸுதேவனோடு ஸர்வ ஜீவர் களுக்கும் ஸ்வரூபைக்யம் சொல்லப்படுவதாகவும், அசேதந விஷயத் தில் ஸாமாநாதிகரண்யம் (வாஸுதேவனையும் அசித்துக்களையும் ஒரே வேற்றுமையில் படிப்பது) ''திருடன் தூணே'' என்று திருடனைத் தள்ளி, தூணே உள்ளது என்று சொல்லுமிடத்திற்போலே பாதார்த் தம் (பொய்யானதைத் தள்ளுவதற்கு) என்றும், ''வெள்ளி சிப் பியே'' என்னுமிடத்தில் சிப்பியில் வெள்ளியெனும் அறிவுபோலே ப்ரஹ்மத்திடம் ஸர்வவஸ்துக்கள் எனும் அறிவு ஏறிடப்பட்டிருக் கிறது என்று காட்டுவதற்காக என்றும் ஶங்கரர் கூறுகிறார். ''இந்தக் குடம் மண்'' ''இந்தக் குண்டலம் பொன்'' முதலான

वासुदेवस्सर्वमित्यस्य अयमेवार्थः, * प्रियो हि ज्ञानिनोऽत्यर्थमहम्, * आस्थितस्स हि युक्तात्मा मामेवानुत्तमां गतिमिति प्रक्रमात्। ज्ञानवांश्चायं उक्तलक्षण एव, अस्यैव पूर्वोक्तज्ञानित्वात्, * भूमिरापः

---

விடங்களிற்போலே ப்₃ரஹ்மமே சேதநாசேதந ரூபமான ஸர்வ வஸ்துக்களாகவும் பரிணமிப்பதைக் காட்டுவதாக யாத₃வ ப்ரகாஶர் கூறுகிறார். விஶிஷ்டாத்₃வைதிகளிலும் சிலர், இங்கு ஶரீர ஶரீரி ப₄ாவத்தையிட்டு ஐக்யம் சொல்லப்படுவதாகக் கருத இடம் உண்டு. ''வாஸுதே₃வ: மம ஸர்வம்'' [வாஸுதே₃வனே எனக்கு எல்லாம்] என்று 'மம' [எனக்கு] என்னும் பத₃த்தைச் சேர்த்துக்கொண்டு முற் கூறியபடி பொருள் கொள்வதிலும் அப்படி அத்₄யாஹாரம் செய்யா மல் பொருள் கொள்வதே பொருந்தும் என்றும் இவர்கள் கூறக்கூடும். இவர்கள் ''ஜ்ஞாநவாந்'' என்னும் வேறு பத₃த்தை இட்டிருக்கை யாலே, முன் சொல்லப்பட்ட ப₄க்தனை ஞானியைக் காட்டிலும் வேறுபட்ட அதி₄காரியே இவன் என்று வாத₃ம் செய்யவும் இட முண்டு. இக்கருத்துக்கள் இப்ரகரணத்திற்குப் பொருந்தமாட்டா வாகையால், முன் ஶ்லோகங்களில் குறிக்கப்பட்ட ஞானியே இங்கும் கருதப்படுவதாகக் கொள்ளவேண்டும். எப்படியெனில்: இப்ரகரணத் தின் தொடக்கத்தில், தன்னைப் பற்றிய பரிபூர்ணமான ஜ்ஞாநத்தைப் பற்றி ப்ரஸ்தாபித்து, அதை விவரித்து, அந்த ஜ்ஞாநம் இல்லாமற் போவதற்கு ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄மே காரணம் என்று சொல்லி, அதைக்கடக்க உபாயம் தன்னை ஶரணமடைந்து ப₄க்தி செய்வதே என்று கூறி, புண்ணியத்தின் ஏற்றத்தாழ்வாலே அவரவர் விரும்பும் ப₂லனில் ஏற்படும் ஏற்றத்தாழ்வையிட்டு நாலுவகைப்பட்ட ப₄க்தர் களைச் சொல்லி, ''ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த₂மஹம்'' [17] [ஞானிக்கு நானே மிகவும் இனியவன்] ''ஆஸ்தி₂த: ஸ ஹி யுக் தாத்மா மாமேவாநுத்தமாம் க₃திம்'' [18] [என்னையடைந்தாலல்லது த₄ரிக்கமாட்டாத அவன் என்னையே ஒப்பற்ற ப்ராப்யமாகக் கொண் டிருக்கிறான்.] என்று புண்ணிய மிகுதியாலே பரமபுருஷனையே ப்ராப்யமாகக் கொண்டவனாகிற நாலாவது அதி₄காரியை ஜ்ஞாநி என்றது. அடுத்த ஶ்லோகமான இதில் பரமபுருஷனையே ப்ராப்ய மாகக் கொண்ட அந்த ஜ்ஞாநியே ஜ்ஞாநவாந் எனப்படுவதாகக் கொள்ளவேண்டுமே தவிர, ப்ரகரணத்தில் இல்லாத ஸ்வரூபைக்ய ஜ்ஞாநம் முதலானவற்றை உடையவனைச் சொல்லுவதாகக் கொள்ளு வது ப்ரகரணத்திற்குப் பயனற்றதாயிருப்பதோடன்றியில் முரண் பட்டதுமாகும். ''ஜ்ஞாநவாந்'' என்று வேறு பத₃ம் இடப்பட்டிருக்

इत्यारभ्य * अहङ्कार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा। अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम्। जीवभूताम् (५) इति हि चेतनाचेतनप्रकृतिद्वयस्य परमपुरुषशेषतैकरसतोक्ता ; * अहं कृत्स्नस्य जगत : प्रभवः प्रलयस्तथा ॥ मत्तः परतरं नान्यत्किञ्चिदस्ति धनञ्जय। (७)

---

கிறதே எனில், 'வாஸுதேவனே எனக்கு ஒப்பற்ற ப்ராப்யம்' என்னும் அறிவுடைய ஞானிக்கு, காலக்ரமத்தில் 'வாஸுதேவனே எனக்கு ப்ராபகம், தாரகம், போஷகம், போக்யம் முதலிய எல்லாமும்' என்னும் ஞானமும் ஏற்படுவதைக் குறிப்பதற்காகவே "ஜ்ஞாநவாந்" என்னும் வேறு பதத்தை இட்டிருக்கிறது என்று முன்னமே விளக்கப் பெற்றது. இந்த ஜ்ஞாநம் இவனுக்கு ஏற்படவேண்டும் என்பதற்காகவே — "பூமிராப:" என்னும் நாலாவது ஶ்லோகத்தில் அசேதநப்பொருள்கள் பரமபுருஷனுக்குப் பரதந்திரமானவை என்று உபதேஶிக்கப்பெற்று, "அபரேயம் ...... ஜீவபூதாம்" என்னும் ஐந்தாம் ஶ்லோகத்தில், சேதநப்பொருளும், அசேதநப்பொருளைப் போலே பரமபுருஷனுக்கு அடிமைப் பட்டிருக்கையையே இயல்வாகக் கொண்ட பரதந்திரப் பொருள் என்று காட்டப்பட்டது; "அஹம் க்ருத்ஸ்நஸ்ய" என்ற ஆறும் ஶ்லோகத்திலிருந்து தொடங்கி, "ந த்வஹம் தேஷு தே மயி" என்று முடியும் பனிரண்டாம் ஶ்லோகமீறாக, (1) கார்யநிலை, காரணநிலை என்னும் இரண்டு நிலைகளிலிருக்கும் சேதநாசேதநப்பொருள்கள் இரண்டுமே பரமபுருஷாதீனமான ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகளை உடையவை என்றும், (2) பரமபுருஷன் தன் ஜ்ஞாநம் ஶக்தி முதலான கல்யாண குணங்களாலும் மற்ற எல்லா ஜீவர்களைக் காட்டிலும் மேலானவன் என்றும், மற்ற சேதநாசேதநப் பொருள்களிலுள்ள ப்ராப்யத்வ ப்ராபகத்வாதிகளுக்குறுப்பான பெருமைகள் இவனிட்ட பிச்சையாகையாலே, நிருபாதிகப்ராப்ய ப்ராபகத்வாதிகளையுடைய இவனே, இவனுடைய ஸங்கல்பத்தாலே ப்ராப்ய ப்ராபகாதிகளாகும் அவற்றைக்காட்டிலும் மிக மேலானவன் என்றும் காட்டப்பட்டது. ஆக, இப்ரகரணத்தின் தொடக்கத்திலிருந்து சொல்லப்படும் ஜ்ஞானத்தையுடைய ஜ்ஞாநவானே முன் ஶ்லோகங்களில் படிக்கப் பட்ட ஜ்ஞாநி ஶப்தத்திற்கு முக்யார்த்தமாகையால், "ஜ்ஞாநீ" "ஜ்ஞாநவாந்" என்னும் பதபேதத்தையிட்டு இப்ரகரணத்தில் அதிகாரிகளை வேறுபடுத்துவது பொருந்தாது. ஆக, இந்த ஶ்லோகத்தால், "அஸம்ஶயம் ஸமக்ரம் மாம் யதா ஜ்ஞாஸ்யஸி" [ஐயமறவும், பரிபூர்ணமாகவும் என்னை அறியலாம்படி] என்று

इत्यारभ्य * ये चैव सात्त्विका भावा राजसास्तामसाश्च ये। मत्त एवेति तान्विद्धि न त्वहं तेषु ते मयि॥ (१२) इति प्रकृतिद्वयस्य कार्यकारणोभयावस्थस्य परमपुरुषायत्तस्वरूपस्थितिप्रवृत्तित्वं परमपुरुषस्य च सर्वैः प्रकारैस्सर्वस्मात्परतरत्वमुक्तम्; अतस्स एवात्र ज्ञानीत्युच्यये॥ १९॥

॥भा॥ तस्य ज्ञानिनो दुर्लभत्वमेवोपपादयति—

कामैस्तैस्तैर्हृतज्ञानाः प्रपद्यन्तेऽन्यदेवताः।
तं तं नियममास्थाय प्रकृत्या नियतास्स्वया॥ २०॥

20. காமைஸ் தைஸ்தைர் ஹ்ருதஜ்ஞாநா:
ப்ரபத்₃யந்தேऽந்யதே₃வதா:।
தம் தம் நியமமாஸ்த₂ாய ப்ரக்ருத்யா நியதா: ஸ்வயா ॥

(உலகில் பலகோடி மனிதர்கள்)**ஸ்வயா ப்ரக்ருத்யா**-தமது (முக்குணமயப் பொருள்கள் விஷயமான) அநாதி₃வாஸனை யாலே, **நியதா:** — எப்போதும் சேர்ந்திருக்கப் பெற்றவர் களாய், **தை: தை:** — (தம் வாஸநாநுகு₃ணமான) அந்த அந்த, **காமை:** — (முக்குணமயமான) விரும்பப்படும் பொருள்களாலே, **ஹ்ருத ஜ்ஞாநா:** — அபஹரிக்கப்பெற்ற (என் ஸ்வரூப விஷயமான) அறிவையுடையவர்களாய், (அந்தந்தப் பொருள்கள் கிடைப்பதற்காக), **அந்ய தே₃வதா:**- என்னைக்காட்டிலும் வேறுபட்ட தெய்வங்களை, **தம் தம் நியமம் ஆஸ்த₂ாய** — அந்தந்த தே₃வதைகளையே உகப்பிப் பதற்கு உறுப்பான நியமங்களைக் கைக்கொண்டு, **ப்ரபத்₃யந்தே**—அவர்களையே ஆஶ்ரயித்து ஆராதி₄க்கிருர்கள்.

---

முதல் ஶ்லோகத்திலும் "யத் ஜ்ஞாத்வா நேஹ பூ₄யோऽந்யத் ஜ்ஞாதவ்யமவஶிஷ்யதே" [எவ்வறிவைப் பெற்ருல், இவ்வுலகில் அறிய வேண்டியது வேறென்று எஞ்சியிருப்பதில்லையோ.] என்று இரண்டாம் ஶ்லோகத்திலும், "கஶ்சிந் மாம் வேத்தி தத்வத:" [பல்லாயிரவரில் ஒருவனே என்னை உள்ளபடி அறிகிருன்.] என்று மூன்ரும் ஶ்லோகத்தி லும் கூறப்பட்ட பூர்ண ஜ்ஞாநத்தையுடைய அதி₄காரி யாவன் என்று விளக்கப்பட்டதாயிற்று. 19.

20. காமங்க ளான வவற்ருற் கருத்தழிந்தார்
சேமமுற வேமற்றைத் தேவதைக—ணுமங்கள்
பற்றிநிய மங்களுடன் பண்டைத்தம் வாசனையா
லுற்றியல்வ ரன்பா லுகந்து.

பண்டை தம் வாசனையால் உற்று—தமது (முக்குணமயப் பொருள்கள் விஷயமான) அநாதி₃வாஸனையாலே எப் போதும் சேர்ந்திருக்கப் பெற்றவர்களாய், காமங்களான அவற்ருல்—(தம் வாஸனையை ஒட்டி) விரும்பப்படும் அவ்வப் பொருள்களாலே, கருத்து அழிந்தார் — (என் விஷயமான) அறிவு அழியப்பெற்றவர்களாய், சேமம் உறவே—அந்தந்தப் பொருள்கள் கிடைப்பதற்காக, மற்றை தேவதைகள் — என்னைக்காட்டிலும் வேறுபட்ட தெய்வங்களின், நாமங்கள் பற்றி—(சிவன் இந்திரன் முதலிய) நாமங்களையே பற்றி நின்று, நியமங்களுடன் — (அவரவரையே உகப்பிப்பதற்கு உறுப்பான) நியமங்களைக் கைக்கொண்டு, அன்பால் — (அவர்களிடம்) அன்பாலே, உகந்து இயல்வர்—(அவர்களை) உகப்புடன் ஆராதி₄ப்பர்.

---

20. என்னையே ப்ராப்யமாகக் கொண்டும், மோக்ஷத்தில் தான் ஆநந்த₃மடைய விரும்பும் உபாஸகனும், என்னையே ப₂லப்ரதே₃ாபாய மாகக் கொண்டும் ஐஶ்வர்ய கைவல்யங்களை ப்ராப்யமாகக் கொள்ளு மவர்களும் ஶாஸ்த்ராதி₄காரிகளாகையாலே, அவ்வவர்க்குரிய ஸாத₄ னங்களை விதி₄த்து, என்னுல் படிப்படியாக முன்னேற்றி மஹாத்மா வான ஞானியாக்கத் தக்கவர்கள். பலகோடி ஜநங்கள் இப்படி ஶாஸ்த்ராதி₄காரிகளாயுமல்லாமல், ராஜஸதாமஸ நூல்களைப் பற்றி நின்று ராஜஸதாமஸ தெய்வங்களை உபாஸித்து, என்னுலும் முன்னேற்ற முடியாதபடி ஸம்ஸாரத்திலேயே உழல்வதைப் பார்க்கும் போது ஜ்ஞாநியானவன் மிகவும் கிடைத்தற்கரியவன் என்பது விளங்கும் என்று உணர்த்துவதற்காக, மேலே எட்டு ஶ்லோகங் களாலே ஸம்ஸாரிகளில் பலர் தே₃வதாந்தரபரர்களாய், தன் னிடம் பரத்வபு₃த்₃தி₄யற்றவர்களாய் வாழ்வதைக் காட்டுகிருன்.

॥भा॥ सर्वे एव हि लौकिकाः पुरुषाः, स्वया प्रकृत्या—[पाप]वासनया गुणमयभावविषयया नियताः—नित्यान्विताः तैस्तैः

(ஸ்வயா ப்ரக்ருத்யா நியதா:) தமக்கே உரியதாய், முக்குணமயமான அந்தந்த விஷயங்களைப் பற்றியதான வாஸனையோடு எப்போதும் கூடியிருப்பவர்களாய். (ஸ்வயா) அநாதிகாலமாகத் தமது அநுபவத்தால் உண்டானதாய், தமக்கே உரியதாய், தமக்கே பலனளிப்பதான என்று கருத்து. (ப்ரக்ருத்யா) முக்குணவிஷயங்களைப் பற்றிய வாஸனையால். ப்ரக்ருதி ஶப்தம் ஸ்வபாவத்தைக் காட்டுவதாய், "தைஸ் தை: காமை:" என்னும் பதங்களோடு சேர்த்துப் படிக்கப்படுகையால், அவ்வப் பொருள்களைப் பற்றிய விருப்பத்தை விளைக்கும் அவரவர் ஸஹஜவாஸனையை இங்கு குறிக்கிறது. (நியதா:) எப்போதும் கூடியிருப்பவர்களாய். அவனவனுடைய விஷயவாஸனை அவனவனை விட்டு எப்போதும் பிரிவதில்லை என்று கருத்து. இதனால் ஏற்படும் அநர்த்தத்தை முதல் பாதம் கூறுகிறது, — (காமைஸ் தைஸ் தைர் ஹ்ருத ஜ்ஞாநா:) "வாயவ்யம் ஶ்வேதமாலபேத பூதிகாம:" (செல்வத்தை விரும்புமவன் வாயு விஷயமான ஶ்வேதயாகத்தைச் செய்யவேண்டும்) என்று வாயு முதலான அந்தந்த தேவதைகளால் கொடுக்கத் தக்கவையாக ஶாஸ்த்ரங்களிலிருந்து அறியப்படுமவையாய், தமது வாஸனைக்கு அநுகுணமான ஐஶ்வர்யம் முதலான அந்தந்த முக்குணமயமான விஷயங்களாலே அறிவு அபஹரிக்கப் பெற்றவர்களான எல்லா லௌகிக மநுஷ்யரும். (காமை:) "லபதே ச தத: காமாந்" [22] என்று மேல் ஶ்லோகமொன்றில், அந்தந்த தேவதைகளிடமிருந்து விரும்பிப் பெறப்படும் விஷயங்களையே காமஶப்தத்தால் குறிக்கையாலே, இங்கும் காமஶப்தம் — "காம்யந்த இதி காமா:" [விரும்பப்படுமவை காமங்களாகின்றன.] என்கிற கர்மணி வ்யுத்பத்தியால் விரும்பப்படும் புத்ரன், பசு, அந்நம் முதலிய முக்குணமயமான விஷயங்களைக் குறிக்கிறது. (தைஸ் தை:) அவரவர் வாஸனைக்கு அநுகுணமாக, "யே சைவ" [12] என்னும் ஶ்லோகத்திற் கூறப்பட்டபடி இவ் விஷயங்கள் முக்குணங்களின் ஏற்றத்தாழ்வையிட்டுப் பல பலவாயிருப்பவை என்று காட்டப்படுகிறது. (ஹ்ருத ஜ்ஞாநா:) அறிவு அபஹரிக்கப் பெற்றவர்கள். பன்மைக்கு ஸங்கோசம் (சுருக்கம்) இன்மையாலும், மேலே "ஸர்வபூதாநி ஸம்மோஹம் யாந்தி" [27] என்று எல்லா ஸம்ஸாரி ஜீவர்களும் அறிவிழப்பதாகக் கூறுகை

स्ववासनानुरूपैर्गुणमयैरेव कामैः-इच्छाविषयभूतैः हृतमत्स्वरूपविषयज्ञानाः

யாலும், இங்கு உலகிலுள்ள எல்லா ஸம்ஸாரி புருஷர்களும் கருதப் படுகிறார்கள். ஆர்த்தன் முதலான நாலு வித$_4$மான ப$_4$க்தர்களும் ஶாஸ்த்ராதி$_4$காரிகளான வைதி$_3$க புருஷர்களாய், மேன்மேலே புண்ணியமிகுதியாலே என் விஷயமான அறிவைச் சிறிது சிறிதாகப் பெற்றவராய், தே$_3$வதாந்தர ஸமாஶ்ரயணமில்லாதவர்களாயிருக்கை யாலே, அவர்களுக்கு எதிர்த்தட்டாயிருப்பவர்களாய், ஶாஸ்த்ராதி$_4$ கார யோக்$_3$யர்களாயிருந்தும் ஶாஸ்த்ராதி$_4$காரிகளல்லாமலிருக்கும் எல்லா லௌகிக புருஷர்களும் இங்கு கருதப்படுகிறார்கள். "மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு" என்னும் ஶ்லோகத்தில் மநுஷ்ய ஶப்$_3$த$_3$த்தால் ஶாஸ்த்ராதி$_4$கார யோக்$_3$யராக லீலா விபூ$_4$தியிலுள்ள எல்லா ஜீவர்களும் குறிக்கப்பட்டனர். அவர்கள் கோடிக்கணக்கானவர்கள். "ஸஹஸ்ரேஷு" என்று அவர்களில் ஆயிரக்கணக்கானவர்களாய், ஶாஸ்த்ராதி$_4$காரிகளில் முதற்படியில் நிற்கும் ஐஶ்வர்யார்த்தி$_2$கள் குறிக்கப்பட்டனர். அவர்களிலும் கீழ்ப்பட்டு, "அல்பமேத$_4$ஸாம்" [23] என்கிறபடியே புல்லறிவாளராய், ஶாஸ்த்ர ஸம்ப$_3$ந்த$_4$மிருந்தும் ஶாஸ்த்ர தாத்பர்யமறியாமையாலே ஶாஸ்த்ராதி$_4$காரிகளாகாத லக்ஷக்கணக்கானவர்கள் இதுமுதல் நான்கு ஶ்லோகங்களிலும், மேல் நான்கு ஶ்லோகங்களில் "அபு$_3$த்$_3$த$_4$ய:" [24] "மூட$_4$:" [25] என்கிறபடியே ஶாஸ்த்ர ஸம்ப$_3$ந்த$_4$மேயில்லாமையாலே முற் கூறியவர்களிலும் கீழ்ப்பட்ட அறிவிலிகளாய், முன்னேற்றவே முடியாத கோடிக்கணக்கானவர்களும் குறிக்கப்படுகின்றனர் என்று உணரத்தக்கது. (ஹ்ருத ஜ்ஞாநா:) அறிவு இழந்தவர்கள். "ஜ்ஞாநம் தேऽஹம் ஸவிஜ்ஞாநம்" [2] என்று தொடங்கி இப்ரகரணத்தில் விரிவாகக் கூறப்பட்டதாய், சென்ற ஶ்லோகத்தில் ஜ்ஞாநிக்கு ஏற்படுவதாகக் கூறப்பட்டதான, பரமபுருஷனைப் பற்றிய உண்மை யறிவே இங்கு ஜ்ஞாந ஶப்$_3$த$_3$த்திற்குப் பொருளாக முடியும் என்பது ப்ரகரணத்திலிருந்து விளங்குகிறது. 'ஹ்ருத' ஶப்$_3$த$_3$ம் இவ்வறிவு அநாதி$_3$காலமாக அபஹரிக்கப் பெற்றிருப்பதைக் காட்டுகிறது. ரத்தினத்திற்கு ஒளிபோலே, இந்த ஜ்ஞாநம் ஆத்மாவுக்கு இயல் பானது என்றும், அழுக்குப் படிவதினால் ஒளி மழுங்குவதுபோலே, அநாதி$_3$வாஸனையாலே இவ்வறிவு மழுங்கிக் கிடக்கிறது என்றும் விளங்குகிறது. இப்படி அறிவிழந்தமையால் ஏற்படும் அநர்த் த$_2$த்தை இரண்டாவது, மூன்றாவது பாத$_3$ங்கள் காட்டுகின்றன — (அந்யதே$_3$வதா: தம் தம் நியமம் ஆஸ்தா$_2$ய ப்ரபத்$_3$யந்தே) என்னை யொழிந்த மற்ற தே$_3$வதைகளை அவரவர்க்குரிய நியமங்களைப்பற்றி

तत्तत्कामसिद्ध्यर्थं अन्यदेवताः—मद्व्यतिरिक्ताः केवलेन्द्रादिदेवताः तं तं

நின்று ஆஶ்ரயிக்கின்றனர். "முக்குணமயமான பொருள்களில் விருப்பத்தாலே அறிவிழந்து மற்ற தே₃வதைகளை ஆஶ்ரயிக்கின்றனர்" என்று கூறுகையால், "தாம் விரும்பும் அவ்வப்பொருள்கள் ஸித்₃தி₄ப் பதற்காக, அவ்வப்பொருள்களைக் கொடுக்கவல்லவராக ஶாஸ்த்ரங் களிலிருந்து அறியப்படும் அந்தந்த தே₃வதைகளை ஆஶ்ரயிக் கின்றனர்" என்று தேறுகிறது. (அந்ய தே₃வதா:) என்னையொழிந்த இந்திரன், சிவன் முதலான தே₃வதைகளை மாத்திரம். இந்த்₃ர ப்ராணாதி₄கரணம் முதலானவற்றில் கூறப்பட்டபடி இந்த்₃ராதி₃ ஶப்₃த₃மும் அவர்களுக்கு அந்தர்யாமியான ஸர்வேஶ்வரனையே குறிக் கிறது என்று அறிந்து, இந்த்₃ராதி₃களைப் பற்றிய யாக₃ங்களைச் செய்பவர்கள் தே₃வதாந்தர பரர்களல்லாமையாலே, "இந்த்₃ராதி₃ தே₃வதைகள் மாத்திரமே இந்த யாக₃ங்களால் ஆராதி₄கப்படு கின்றனர்" என்னும் எண்ணத்துடன் அவற்றைச் செய்பவர்களே இங்கு கருதப்படுகின்றனர் என்று கொள்ளவேண்டும். இவர்களுக்கு ஶாஸ்த்ர ஸம்ப₃ந்த₄மிருந்தும், சதுர்வித₄ ப₄க்தர்களைப்போலே ஶாஸ்த்ரத்தின் தாத்பர்யமறியாமையாலே இவர்கள் ஶாஸ்த்ராதி₄ காரிகளல்லாதவராய்ப் போகிறார்கள். அதனாலேயே புல்லறிவாளர் களென்று இப்ரகரணத்தில் நிந்தி₃க்கப்படுகிறார்கள். ஆகையால், இந்த ஶ்லோகங்கள் ஞானி தவிர்ந்த மற்ற மூன்று ப₄க்தர்களையும் பற்றியது என்று சிலர் வ்யாக்₂யானம் செய்வது "அந்யதே₃வதா: ப்ரபத்₃யந்தே" என்னும் பத₃ங்களுக்குப் பொருந்தாது என விளங்கு கிறது. இதையே "ஐகாந்த்யம் ப₄க₃வத்யேஷாம் ஸமாநமதி₄காரிணாம்" [28] [இவ்வதி₄காரிகள் அனைவரும் ப₄க₃வான் ஒருவனையே (தத்தம் ப்ராப்யத்துக்கு) ப₂லப்ரத₃ ஸாத₄னமாகப் பற்றியவர்கள்.] என்று ஆளவந்தாரும் கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹத்தில் அருளிச்செய்தார். இத்தால் — தே₃வதாந்தர ஸமாஶ்ரயணம் செய்பவர்களை ப₄க₃வான் 'புல்லறிவாளர்கள்' என்று நிந்தி₃த்திருக்கையாலே, அறிவாளிகள் மற்ற ப₂லன்களை விரும்பினாலும் ப₄க₃வானிடமிருந்தே பெறவிரும்ப வேண்டும் என்று தெளிவாகிறது. இல்லாவிடில், "த்ருஷிதோ ஜாஹ்நவீதீரே கூபம் க₂நதி து₃ர்மதி:" [க₃ங்கைக் கரையிலிருந்து கொண்டு த₃ாஹ ஶாந்திக்காகக் கிணறு வெட்டும் புல்லறிவாளனைப் போன்றவன், இதர ப₂லன்களுக்காக இதர தே₃வதைகளை ஆஶ்ர யிக்கும் அறிவுகெட்டவன்.] என்னும் நிலையை அடைவான் என்று கருத்து. "தே₃வதாந்தரபரர்கள் அந்தந்த தே₃வதைகளை ஆஶ்ர யிக்கும் ப்ரகாரம் எப்படி?" எனில்: (தம் தம் நியமம் ஆஸ்தா₂ய)

नियममास्थाय — तत्तद्दे[illegible]साधारणं [illegible],
प्रपद्यन्ते—ता एवाश्रित्यार्चयन्ते ॥ २० ॥

ரஜஸ்தமோகு₃ணங்கள் மிக்க சிவன் ஶக்தி முதலான அந்தந்த தே₃வதைகளை மாத்திரம் உகப்பிப்பவையாக ராஜஸதாமஸ நூல்களில் சொல்லப்பட்ட விபூ₄திருத்₃ராக்ஷத₄ாரணம், சுடுகாட்டில் பிணத்தை எரித்த சாம்பலைப் பூசிக்கொண்டு கபால மாலை த₄ரித்து கட்குடத்தில் உருத்திரனைப் பூஜிப்பது, நிர்வாண ஸ்த்ரீயை ஶக்தியாகப் பூஜிப்பது முதலான க்ஷுத்₃ர நியமங்களைப் பின்பற்றி நின்று ஆஶ்ரயிக்கிறார்கள். தே₃வதைகள் பலராகையாலும், அவர்களை உகப்பிக்கும் நியமங்கள் வாய்விட்டுச் சொல்லமுடியாதபடி மிகத் தாழ்ந்தவையாயிருப்பதாலும் "தம் தம் நியமம்" என்கிறான். (தம் தம் நியமம்) "சக்ராதி₃த₄ாரணம் பும்ஸாம் பரஸம்ப₃ந்த₄வேத₃நம் | பதிவ்ரதாநிமித்தம் ஹி வளயாதி₃விபூ₄ஷணம் ||" [சக்ரம், ஶங்கம், ஊர்த்₄வ புண்ட்₃ரம் முதலானவற்றை மனிதர்கள் த₄ரிப்பது—அவர்களுக்கும், பரமாத்மாவுக்குமுள்ள ஸம்ப₃ந்த₄த்தை உணர்த்துவது; பதிவ்ரதைக்கு வளை முதலிய ஆப₄ரணங்கள் போன்றவை இவை.] என்கிற பரம ஸாத்விகமான நியமங்கள் போன்றவையன்றே இவை. இப்படிப்பட்ட தாழ்ந்த காரியங்களையும் சிலர் செய்வார்களோ? என்னும் ஸந்தே₃ஹத்தைப் போக்குகிறது கடைசிப் பாத₃ம், — (ப்ரக்ருத்யா நியதா: ஸ்வயா... ப்ரபத்₃யந்தே) ராஜஸ தாமஸ விஷயங்களில் அநாதி₃வாஸனையாலே, அவற்றைப் பெறுவதற்காக, அவ்விஷயங்களைக் கொடுக்கவல்லவரான இதர தே₃வதைகளை அந்தந்த நியமங்களையுடையராய், மஹா விஶ்வாஸத்தோடு பற்றி, அந்தந்தக் கர்மங்களாலே. அந்தந்த தே₃வதைகளையே ஆராதி₄க்கிறார்கள் என்று கருத்து. "அந்யதே₃வதா: ப்ரபத்₃யந்தே" என்கையாலே, என்னைப்பற்றுகிறவர்களுக்கும், இவர்களுக்கும் விஶ்வாஸத்தில் வாசியில்லை; பற்றுகிற விஷயத்திலேயே வாசி என்று காட்டுகிறான்.

"அநந்ய ஸாத்₄யே ஸ்வாபீ₄ஷ்டே மஹாவிஶ்வாஸ பூர்வகம் |
ததே₃கோபாயதாயாச்ஞா ப்ரபத்தி: ஶரணாக₃தி: ||"

[தன் விருப்பம் வேறு எதனாலும் ஸாதி₄க்கமுடியாமற் போனவளவில், அதைக்கொடுக்க வல்லவன் ஒருவனை மஹா விஶ்வாஸத்தோடு உபாயமாக வரிப்பதே 'ப்ரபத்தி' என்றும், 'ஶரணாக₃தி' என்றும் சொல்லப்படுகிறது.] என்பது ப்ரபத்தி லக்ஷணமன்றோ. ஆக, ப்ராக்ருத ப₂லன்களில் விருப்பத்தாலே உலகினரில் பலர் மற்ற தெய்வங்களை ஆஶ்ரயிக்கிறார்கள் என்றதாயிற்று. 20.

**यो यो यां यां तनुं भक्तः श्रद्धयार्चितुमिच्छति ।**
**तस्य तस्याचलां श्रद्धां तामेव विदधाम्यहम् ॥ २१ ॥**

21. யோ யோ யாம் யாம் தநும் ப₄க்த: ஶ்ரத்₃த₄யார்ச்சிதுமிச்ச₂தி।
தஸ்ய தஸ்யாசலாம் ஶ்ரத்₃தா₄ம் தாமேவ வித₃தா₄ம்யஹம் ||

**ய: ய: ப₄க்த:** — எந்த எந்த தே₃வதாந்தர ப₄க்தன், **யாம் யாம் தநும்**—(எனது) ஶரீரமான எந்த எந்த தே₃வதையை, **ஶ்ரத்₃த₄யா** — விஶ்வாஸத்தோடு, **அர்ச்சிதும்** — ஆராதி₄ப்பதற்கு, **இச்ச₂தி**—விரும்புகிருனே, **தஸ்ய தஸ்ய**— அந்த அந்த ப₄க்தனுக்கு, **தாம் ஏவ ஶ்ரத்₃தா₄ம்** — அந்த (தே₃வதா விஷயமான) விஶ்வாஸத்தையே, **அசலாம்** — (இடையூறுகளால்) அசையாததாய், **அஹம்** — நான், **வித₃தா₄மி**—நிலைநிறுத்துகிறேன்.

---

21. **இங்கெ னுருவா மிமையோரை யாரையா**
**ரங்கருத்தி லர்ச்சிப்பா னிச்சிப்பார்—சங்கையற**
**நானவருக் காங்கவர்பா னன்றிருப்புத் தான்சலியா**
**தானவகை செய்வ னமர்ந்து.**

**இங்கு**—இவ்வுலகில், **யார் (யார்)** — எந்த (எந்த) தே₃வதாந்தரப₄க்தர், **என் உருவாம் இமையோரை யாரை (யாரை)**— என் ஶரீரமான எந்த (எந்த) தே₃வதையை, **சங்கை அற அம் கருத்தில் அர்ச்சிப்பான் இச்சிப்பார்**—உறுதியான மஹா விஶ்வாஸத்தோடு ஆராதி₄க்க விரும்புகிருரோ, **(அவர்) அவருக்கு**—அந்த (அந்த) தே₃வதாந்தர ப₄க்தருக்கு, **ஆங்கு அவர் (அவர்) பால்** — அந்த (அந்த) தே₃வதையிடத்திலே, **நன்று இருப்பு தான் சலியாதான வகை**—உறுதியான விஶ்வாஸமானது (இடையூறுகளால்) அசையாதபடி, **நான் அமர்ந்து செய்வன்**—நான் பொருந்திச் செய்வேன்.

---

21. *ஶாஸ்த்ராதி₄காரிகளல்லாதவர்களில்* [24-வது ஶ்லோகத்திலிருந்து சொல்லப்படும்] *ஶாஸ்த்ரஸம்ப₃ந்த₄மேயில்லாதவர்களைக் காட்டிலும், ஶாஸ்த்ரஸித்₃த₄ரான* தே₃வதைகளின் ப₄க்தர்களாயிருப்பதன்மூலம் ஒவ்வொரு ப₂லனைப் பெறவிரும்பி *ஶாஸ்த்ரஸம்*

॥ भा ॥ ता अपि देवता मदीयास्तनवः * य आदित्ये तिष्ठन्...यमादित्यो न वेद, यस्यादित्यश्शरीरम् (बृ. ५. ९) इत्यादि-श्रुतिभिः प्रतिपादिताः। मदीयास्तनव इत्यजानन्नपि यो यो यां यां

---

பு₃ந்த₄ம் கொண்டிருப்பவர்கள் சிறந்தவர்களன்றோ. அவர்களுக்கு, அந்த தே₃வதைகளை ஆராதி₄ப்பதற்கு உறுப்பான ப₄க்தி ஶ்ரத்₃தை₄கள் தளர்ந்ததாகில், ஶாஸ்த்ர விஶ்வாஸமின்மையாகிற கீழ்ப்படிக்கு இழிந்து, "அலாபே₄ மத்தகாஶிந்யா த்₃ருஷ்டா திர்யக்ஷு காமிதா" [ரமிப்பதற்கு ஸ்த்ரீ கிடைக்காதபோது, மனிதன் மிருக₃ங்களிடமும் ரமிப்பதைக் காண்கிறோம்] என்கிற ந்யாயத்தாலே, அநர்த்த₂த்தை விளைக்கும் மிகத்தாழ்ந்த உபாயங்களில் ஈடுபட்டு அழிவார்கள் என்னும் ப₄யத்தாலே, பரமகாருணிகனான நான் இவர்களையும் கிரமமாக முன்னேற்றுவதற்காக அந்த தே₃வதைகளை ஆராதி₄ப்பதற்கு உறுப்பான ப₄க்திஶ்ரத்₃தை₄களையே அவர்களுக்கு நிலைநிறுத்துகிறேன் என்கிறான் இந்த ஶ்லோகத்தில். (யோ யோ யாம் யாம் தநும்) எந்த எந்த மனிதன், (எனது) ஶரீரமான எந்த எந்த அந்ய தே₃வதையை. "அந்யதே₃வதா:" என்று சென்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட தே₃வதாந்தரங்கள், தனக்கு ஶரீரமாயிருப்பதையிட்டு இங்கு தநுஶப்₃த₃த்தாலே குறிக்கப்படுகிறார்கள் என்று விளங்குகிறது. இப்படியல்லாமல், ராமன், க்ருஷ்ணன் முதலான அவதாரரூபங்கள் போலே, சிவன், இந்திரன், ஸூர்யன் முதலான தே₃வதைகளும் ஸர்வேஶ்வரனுடைய அவதாரரூபங்களே என்று 'தநு' ஶப்₃த₃த்திற்குப் பொருள்கொள்ளப் பார்த்தால், முந்தின ஶ்லோகத்தில் அவர்களை 'அந்யதே₃வதைகள்' என்று தன்னைக் காட்டிலும் வேறு படுத்திப் பேசியிருப்பதும், 23-வது ஶ்லோகத்தில் அவர்களின் ப₄க்தர்களைப் புல்லறிவாளர்கள் என்று நிந்தி₃த்து, தன் ப₄க்தர்களுக்கு அநந்த ஸ்தி₂ர ப₂லனென்றும், இதர தே₃வப₄க்தர்களுக்கு அல்பாஸ்தி₂ர ப₂லன் என்றும் உரைத்திருப்பதும் பொருந்தாமற் போய்விடும். ஆகையால் பரமாத்மாவான தன்னிலும் மிகவும் வேறுபட்ட ஜீவர்களான மற்ற தே₃வதைகளும் தனது ஶரீரமே என்று உணர்த்துவதற்காகவே இங்கு 'தநு' ஶப்₃த₃த்தை இட்டிருப்பதாகக் கொள்ளவேண்டும். "ய ஆதி₃த்யே திஷ்ட₂ந்...யமாதி₃த்யோ ந வேத₃ யஸ்ய ஆதி₃த்ய: ஶரீரம்" [ப்₃ருஹ 5-9] என்று ஶ்ருதியும், ஆதி₃த்யன் முதலான தே₃வர்களைப் பரமாத்மாவை உள்ளபடி அறியாதவராய், அவனுக்கு ஶரீரமாயிருக்கும் ஜீவர்களாகவே காட்டிற்று. (யாம் யாம் தநும் ய: ய: ப₄க்த: ஶ்ரத்₃த₄யா அர்ச்சிது

मदीया[मादित्या]मिन्द्रादिकां तनुं भक्तः श्रद्धयाऽर्चितुमिच्छति ; तस्य तस्य अजानतोऽपि मत्तनुविषयैषा श्रद्धेत्यहमनुसन्धाय तामेव अचलां— निर्विघ्नां विदधाम्यहम्॥ २१ ॥

---

மிச்சதி) எனக்கு ஶரீரமான எந்த எந்த தேவதையை எந்த எந்த பக்தன் விஶ்வாஸத்தோடு ஆராதிக்க விரும்புகிறானோ. ஆராதிக்கும் பக்தன் புல்லறிவாளனாகையாலே, அந்த தேவதையை பரமாத்மாவின் ஶரீரமென்று அறிந்து ஆராதிப்பதில்லை; அப்படி ஆராதித்தானாகில், ப்ரதர்தநவித்யை முதலானவற்றிற்போலே அது பரமபுருஷனின் ஆராதனமாகி அநந்தஸ்திரபலனைக் கொடுத்துவிடும். இவனுக்கோ அல்பாஸ்திர பலனென்று மேலே சொல்லப்படுகிறது. ''ந து மாம் அபிஜாநாதி தத்வேந'' [9-24] [என்னை (ஸர்வதேவாந்தர்யாமியாக) உள்ளபடி அறிவதில்லை] என்னுமிடத்தில் அந்யதேவதா பக்தர்கள் அந்த தேவதைகள் ஸர்வேஶ்வர ஶரீரம் என்று அறிவதில்லை என்றும் கூறப்படுகிறது. அப்படியிருக்க, இங்கு பொருந்தாததும், பயனற்றதுமான 'தநு' ஶப்தத்தை இடாமல் தேவதா ஶப்தத்தையன்றோ இட்டிருக்கவேண்டும் எனில், ''அவன் தான் ஆராதிக்கும் தேவதையை என் ஶரீரமென்று அறியாமல் ஆராதித்தாலும், ஆராதிக்கப்படும் நான் 'நம் ஶரீர விஷயமான ஆராதனந்தானே இது' என்று எண்ணி. அவனுக்கு அந்த ஶ்ரத்தையையே இடையூறில்லாதபடி நிலைநிறுத்துகிறேன்'' என்று உத்தரார்த்தத்திற் சொல்லுவதற்கு அநுகுணமாகத் தநு ஶப்தத்தை இடுகிறான் என்று கண்டுகொள்வது. (தஸ்ய தஸ்ய தாமேவ ஶ்ரத்தாம் அசலாம் விததாமி) அந்தந்த தேவதா பக்தனுக்கு, அந்தந்த தேவதா பக்தி விஶ்வாஸங்களையே இடையூறுகளால் தளராதபடி நிலைநிறுத்துகிறேன். இங்கு ஶ்ரத்தையாகிற விஶ்வாஸத்தைச் சொன்னது பக்திக்கும் உபலக்ஷணம். தேஹத்தைக் காட்டிலும் வேறுபட்ட ஆத்மா உண்டென்று அறியாத ஒருவன், அரசனின் உடலுக்கு உபசாரங்களைச் செய்து, அதற்கான பரிசை அவ்வுடல் கொடுப்பதாக நினைத்தாலும், உண்மையில் அந்த ராஜ ஶரீரத்திலிருக்கும் ஆத்மாவே 'தன் ஶரீரத்தை உபசரித்தான்' என்று உகந்து பரிசளிப்பதுபோலே இங்கும் என்று கண்டுகொள்வது. (ஶ்ரத்தாம் அசலாம் விததாமி) விஶ்வாஸத்தை அசையாததாகச் செய்கிறேன். உண்டான விஶ்வாஸத்தை அசையாததாகச் செய்கையாவது,— அதற்கு இடையூறில்லாதபடி செய்வதன்மூலம் பலன் கிடைக்கும் வரையில் அதை இடைவிடாமல் வளர்க்கையேயாகும்.

स तया श्रद्धया युक्तस्तस्याराधनमीहते ।
लभते च ततः कामान् मयैव विहितान् हि तान् ॥ २२ ॥

22. ஸ தயா ஶ்ரத்₃த₄யா யுக்தஸ் தஸ்யாராத₄நமீஹதே।
லப₄தே ச தத: காமாந் மயைவ விஹிதாந் ஹி தாந்॥

ஸ: (ஸ:)—அந்த (அந்த) தே₃வதாந்தரப₄க்தன், தயா ஶ்ரத்₃த₄யா யுக்த:—அந்த விஶ்வாஸத்தோடு கூடியவனாய், தஸ்ய (தஸ்ய) — அந்த (அந்த) தே₃வதைக்கு, ஆராத₄நம் ஈஹதே—ஆராத₄னம் செய்ய முயல்கிறான்; தத:—அந்தந்த தே₃வதையிடமிருந்து, மயா ஏவ ஹி விஹிதாந்—என்னாலேயே கொடுக்கப்பட்ட, தாந் (தாந்) காமாந் — தான் விரும்பிய அந்த (அந்தப்) பொருள்களை, லப₄தே ச — அடையவும் செய்கிறான்.

---

(தாமேவ வித₃த₄ாமி) அந்த விஶ்வாஸத்தையே நிலைநிறுத்துகிறேன். "நாட்டினான் தெய்வமெங்கும்" [திருமாலை 10] என்கிறபடியே, கொடியைப் பந்தலிலே படரவிடுவதற்குச் சுள்ளிக்கால் நாட்டுவாரைப் போலே,

"ஸூர்யஸ்யைவ து யோ ப₄க்த: ஸப்தஜந்மாந்தரம் நர: ।
தஸ்யைவ து ப்ரஸாதே₃ந ருத்₃ரப₄க்த: ப்ரஜாயதே ॥
ஶங்கரஸ்ய து யோ ப₄க்த: ஸப்தஜந்மாந்தரம் நர: ।
தஸ்யைவ து ப்ரஸாதே₃ந விஷ்ணுப₄க்த: ப்ரஜாயதே ॥"

[ஏழு ஜன்மம் சூரியனுக்கு ப₄க்தனாயிருப்பவன், அவனருளால் சிவ ப₄க்தனாகப்பிறக்கிறான். ஏழுஜன்மம் சிவப₄க்தனாயிருப்பவன் அவனருளால் விஷ்ணுப₄க்தனாகிறான்] என்கிற ப்ரமாணத்தில் சொன்னபடி, தன்னிடம் காலக்ரமத்தில் ப₄க்திவிஶ்வாஸங்கள் உண்டாவதற்கு உறுப்பாக, அந்த ஜன்மத்தில் அந்த தே₃வதாந்தர ப₄க்திவிஶ்வாஸங்களையே பரமகாருணிகனான நான் நிலைநிறுத்துகிறேன் என்றபடி. அப்படி நிலைநிறுத்தாவிடில், ஒரு வகையில் ஶாஸ்த்ரஸம்ப₃ந்த₄ம் கொண்டிருக்குமிவர்கள் ஶாஸ்த்ரவிஶ்வாஸமில்லாத நாஸ்திகர்களாகப் போய்விடுவார்களாகையாலே, அந்த ஶாஸ்த்ர விஶ்வாஸத்தைப் பற்றுசாகக்கொண்டு, படிப்படியாக அவர்களை முன்னேற்றி என் ப₄க்தர்களாக்குவதற்காக, அந்த ஜன்மத்தில் அந்த தே₃வதாந்தர விஶ்வாஸத்தையே நிலைநிறுத்துகிறேன் என்று கருத்து. 22.

|| भा || स तया—निर्विघ्नया श्रद्धया युक्तः तस्य—इन्द्रादेः आराधनं प्रति ईहते। ततः—मत्तनुभूतेन्द्रादिदेवताराधनात् तानेव हि स्वाभिलषि-

22. அந்த விருப்பத் துடனே யவரையவர்
தந்த மனமிறைஞ்சிச் சார்வுறுவர்—சிந்தையுட
னென்பாற் செயப்பட்டே யிங்கவராற் காமமவை
தம்பா லவரடைவர் தாம்.

**அவர்** (அவர்)—அந்த (அந்த) தே₃வதாந்தர ப₄க்தர்கள், **அவரை** (அவரை)—அந்த (அந்த) தே₃வதையை, **அந்த விருப்பத்துடனே** — அந்த விஶ்வாஸத்தோடு கூடவே, **சிந்தையுடன்** — அந்த (அந்த) தே₃வதைகளைப் பற்றிய நினைவுடன், **தம் தம் மனம் இறைஞ்சி சார்வுறுவர்** — தத்தம் மனத்தினுலே ஆராதி₄த்து ஆஶ்ரயிப்பார்கள்; **என்பால் செயப்பட்டே**—(உண்மையில்) என்னுல் கொடுக்கப் பட்டவையேயான, **காமம் அவை** (அவை)—தாம் விரும்பிய (அந்தந்தப்) பொருள்களை, **அவரால்**—அந்த தே₃வதையிட மிருந்து, **அவர் தாம்**—அந்த தே₃வதாப₄க்தர்கள், **தம்பால் அடைவர்**—தமக்கென்றே அடைவர்.

22. அந்தந்த தே₃வதைகளிடம் ப₄க்தி விஶ்வாஸங்களை நிலைநிறுத்தினுலும், கர்மவஶ்யரான அந்தந்த தே₃வர்கள் அவ்வப் ப₂லன்களை அளிக்க வல்லமையுடையவர்கள் என்று எப்படி நம்புவது? எனில்: அந்தந்த தே₃வதாராத₄னங்களைச் செய்வார்க்கு அவ்வப்ப₂லன்கள் கிடைக்கும் என்று ஶாஸ்த்ரங்களில் விதி₄த்தவன் நானேயாகையால், அந்தந்த தே₃வதைகளுக்கு நானே அந்தர்யாமியாயிருந்துகொண்டு, அவர்கள் மூலம் அவ்வப்ப₂லன்களை ஆராத₄கர்களுக்கு அளிக்கிறேனுகையால், அவ்வப்ப₂லன்களையும் அவர்கள் குறைவறப்பெற்றுப் போகிருர்கள் என்கிருன். (ஸ தயா ஶ்ரத்₃த₄யா யுக்த:) முன் ஶ்லோகத்தில் ''ய: ய:'' என்றிருப்பதையொட்டி, இங்கு 'ஸ:' முதலான பத₃ங்களையும் ஆவ்ருத்தி செய்து கொள்ளவேண்டும். அந்தந்த தே₃வதாந்தரப₄க்தன் அந்தந்த தே₃வதாவிஷயமான ப₄க்தி விஶ்வாஸங்களோடு கூடியவனுய்; (தயா ஶ்ரத்₃த₄யா யுக்த;) முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்டபடி என்னுல் இடையூறில்லாதபடி நிலை

तान् कामान् मयैव विहितान् लभते। यद्यप्याराधनकाले आराध्येन्द्रादयो मदीयास्तनवः, तत एव तदर्चनं च मदाराधनमिति न जानाति;

---

நிறுத்தப்பட்ட ஶ்ரத்3தை4யோடு கூடியவனாய் என்றபடி. (தஸ்ய ஆராத4நம் ஈஹதே) இந்திரன் முதலான அந்தந்த தே3வர்களுடைய ஆராத4னத்தைச் செய்ய முயல்கிறான். முன் இரண்டு ஶ்லோகங்களிலும் 'தே3வதா:' 'தநும்' என்று தே3வர்களைக்குறிக்கும் ஸ்த்ரீலிங்க3 ஶப்3த3ம் பிரயோகி3க்கப்பட்டிருந்தபோதிலும், அடுத்த ஶ்லோகத்திற் போலே இங்கும், புல்லிங்க3மான தே3வஶப்3த3மே கருதப்படுகிறதாகையாலே, 'தஸ்ய' என்னும் புல்லிங்க3ஶப்3த3த்தாலே அநுவதி3ப்பது பொருந்தும். 'தஸ்யா:' என்று ஸ்த்ரீலிங்க3ஶப்3த3மாகவே கொண்டு, "தஸ்யா: ராத4நம்" என்று பத3ம் பிரித்து இதே பொருளைக் கொள்ளலாமாயினும், அப்படிக் கொள்ளும்போது, ஆராத4னம் என்னும் பொருளில் அப்ரஸித்3த4மான ராத4நஶப்3த3த்தைப் பிரயோகி3த்திருப்பதாகக் கொள்ளவேண்டிய அஸ்வாரஸ்யம் வருகையால், "தஸ்ய—இந்த்3ராதே3: ஆராத4நம்" என்று பா4ஷ்யமிடுவதன்மூலம் அப்படிப் பத3ம் பிரிப்பது அநாத3ரிக்கப்பட்டது. முன்னிரண்டு ஶ்லோகத்திலுமிருப்பதையொட்டி 'தஸ்யா:' என்று ஸ்த்ரீலிங்க3ஶப்3த3ம் இருப்பதே பொருந்தும் என்று கருதினால், 'தஸ்யா: ராத4னம்' என்றே ஶ்லோகத்தில் பத3ச்சே2த3ம் கொண்டு, பா4ஷ்யத்தில் ப2லிதார்த்த2த்தைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். இனி, உத்தரார்த்த4த்தில், "இவர்களைப் படிப்படியாக ஶாஸ்த்ராதி4காரிகளாக்குவதற்காக, அந்தந்த தே3வதைகளுக்கு அந்தர்யாமியான நானே, அவர்கள் மூலம் அந்தந்த ப4க்தர்கள் விரும்பிய ப2லன்களையும் அளிக்கிறேன்" என்று காட்டுகிறான்:— (தத:) எனது ஶரீரமாயிருக்கும் இந்த்3ராதி3களின் ஆராத4னத்தினால். "தத:" என்று இந்த்3ராதி3 தே3வதைகளிடமிருந்து என்று பொருள்கொள்வதில் பயன் அதி4கமில்லை; "மயைவ விஹிதாந் ஹி தாந்" என்று தானே ப2லனை அளிப்பதாகக் கூறுகையால். ஆகையால், "தஸ்யாராத4நம்" என்று முற்பாதியில் சொல்லப்பட்ட இந்த்3ராதி3களின் ஆராத4னமே இங்கு "தத:" என்று அநுவதி3க்கப்படுவதாகக் கொள்ளவேண்டும். (தாந் காமாந் லப4தே ச) அவனவன் விரும்பிய அந்தந்தக் காமங்களை அடையவும் செய்கிறான். கர்மவஶ்யராய், அல்ப ஶக்தியுடையவர்களான அந்த தே3வதைகள் அதைக் கொடுக்கவல்லவரோ? எனில்; (மயைவ ஹி விஹிதாந்) அவர்களுக்கு அந்தர்யாமியான என்னாலேயே அப்ப2லன்கள் அளிக்கப்படுகிறதாகையால், ஆராத4கர்கள்

तथाऽपि तस्य वस्तुतो मदाराधनत्वादाराधकाभिलषितमहमेव विदधामि ॥ २२॥

பலனைப்பெறுவதில் ஒரு குறையுமில்லை என்கை. (ஹி) இவ்விஷயம், "சதுர்ஹோதாரோ யத்ர ஸம்பதம் கச்சந்தி தேவை:" [யஜு-ஆர 3-11-21] [பரமாத்மா தேவர்களுக்கு அந்தர்யாமியாயிருப்பதாலேயே யஜ்ஞங்கள் தேவர்களோடு தொடர்பு பெறுகின்றன] முதலான ஶாஸ்த்ரங்களில் ப்ரஸித்தம் என்று கருத்து. "ஹிதாந் காமாந்" என்று கூட்டி, "தனக்கு ஹிதமான அந்தந்தப்பொருள்களை அடைகிறான்" என்று கொள்ளக்கூடாதோ? எனில்: அடுத்த ஶ்லோகத்தில் புல்லறிவாளர்களான அவர்கள் அல்பாஸ்திரபலன்களையே பெறுகிறார்கள் என்று நிந்தித்திருக்கையாலே, அறிவின்மையால் அவர்கள் விரும்பும் அப்பலன்களை இங்கு ஹிதமென்பது பொருந்தாது. "ஸ:" "தயா ஶ்ரத்தயா" "தஸ்ய" என்றதைப்போலே, "தாந் காமாந்" என்றிருக்கவேண்டியது நியாயமாகையாலும், மற்ற தெய்வங்கள் அவ்வப்பலன்களைக் கொடுப்பதாக வெளிப்படையாகத் தோன்றுகையால், உண்மையில் தேவதைகளுக்கு உள்ளிருந்து எல்லாப்பலன்களையும் கொடுப்பவன் தானே என்பதில் ஶாஸ்த்ரப்ரஸித்தியைக் காட்டவேண்டியது அவஶ்யமாகையாலும் "ஹி" "தாந்" என்று பிரித்து முற்கூறியபடி பொருள் கொள்வதே பொருந்தும். (மயைவ) "ஆராதிப்பது தேவதாந்தர்யாமியான உன்னையே என்றும், பலனளிப்பதும் நீயே என்றும் அறியாதவர்களுக்கு நீ பலனளிப்பது எப்படிப்பொருந்தும்?" என்னும் ஐயத்தை ஏவகாரத்தாலே நீக்குகிறான். இவ்வாராதகன் இந்திரன் முதலிய அந்த தேவதைகளை ஆராதிக்கும்போது, ஆராதிக்கப்படும் அவர்கள் எனது ஶரீரங்களென்றும், ஆகையால் அவர்களை ஆராதிப்பது எனது அர்ச்சனமே என்றும் அறியாவிடினும், அது உண்மையில் எனது ஆராதனமாகையாலே, அவன் விரும்பும் அவ்வப் பலன்களை நான் அளிக்கக் குறையில்லை என்று கருத்து. எப்படியாயினும், பந்தகமான (ஸம்ஸாரத்தில் கட்டிவைக்கும்) பலன்களைக் கொடுத்து, பரம காருணிகனான எம்பெருமான் இவர்களை ஸம்ஸாரத்தில் அழுந்தச் செய்யலாமோ? எனில்: அவர்கள் விரும்பும் இப்பலன்களை அளிக்காவிடில் அவர்களுக்கு ஏற்கனவே ஏற்பட்டிருக்கும் ஶாஸ்த்ரவிஶ்வாஸமும் அழிந்து நாஸ்திகர்களாகிவிடுவார்களாகையாலே. அப்படியாகாமல், மேல் ஜன்மங்களில் படிப்படியாக முன்னேறித் தன்னை அடைவதற்காக இந்த ஜன்மங்களில் அந்த தேவதைகள் மூலம் அப்பலன்களை அளிப்பது தவறல்ல. இவ்வர்த்தத்தையே நம்மாழ்வார்

अन्तवत्तु फलं तेषां तद्भवत्यल्पमेधसाम्।
देवान् देवयजो यान्ति मद्भक्ता यान्ति मामपि॥२३॥

23. அந்தவத்து ப$_2$லம் தேஷாம் தத்$_3$ப$_4$வத்யல்பமேத$_4$ஸாம்।
தே$_3$வாந் தே$_3$வயஜோ யாந்தி மத்$_3$ப$_4$க்தா யாந்தி மாமபி ||

அல்பமேத$_4$ஸாம் தேஷாம்—புல்லறிவாளர்களான அவர்களுக்கு, தத் ப$_2$லம் — அவ்வாராத$_4$னப$_2$லன், அந்தவத்து — (அல்பமாகவும்) முடிவுடையதாகவும் ஆகிறது; (ஏனெனில்:) தே$_3$வயஜ: — தே$_3$வர்களை ஆராதி$_4$ப்பவர்கள், தே$_3$வாந் — தே$_3$வர்களை, யாந்தி — அடைகின்றனர்; மத்$_3$ ப$_4$க்தா: அபி—என்னுடைய ப$_4$க்தர்களும், மாம் — என்னை, யாந்தி—அடைகின்றனர்.

---

23. அற்ப மதியான வவர்க்கங் கமைபலந்தா
னிற்பதில தாக நிகழுமே—கற்பமரர்
பின்சேர்ந்தா ரங்கவரைப் பெற்று ரவரென்னையே
யின்சேர்ந்தா ரும்பெறுவ ரிங்கு.

---

"ஓடியோடிப் பல பிறப்பும் பிறந்து மற்றோர் தெய்வம்
பாடியாடிப் பணிந்து பல்படிகால் வழியேறிக் கண்டீர்
கூடிவானவர் ஏத்தநின்ற திருக்குருகூரதனுள்
ஆடுபுட்கொடி ஆதிமூர்த்திக்கு அடிமைபுகுவதுவே"
[திருவாய் 4-10-7]

என்று அருளிச்செய்தார். "காமைஸ் தைஸ்தை:" என்று தொடங்கி, இந்த ஶ்லோகமீருகவுள்ள மூன்று ஶ்லோகங்களின் அர்த்த$_2$த்தை

"அவரவர் தமதமது அறிவறி வகைவகை
அவரவர் இறையவர் எனஅடி அடைவர்கள்
அவரவர் இறையவர் குறைவிலர்; இறையவர்
அவரவர் விதிவழி அடையநின் றனரே" [திருவாய் 1-1-5]

என்று ஒரு பாசுரத்தில் ஆழ்வார் அருளிச்செய்ததும் இங்கு அனுஸந்தி$_4$க்கத்தக்கது.

22.

॥भा॥ तेषामल्पमेधसाम् — अल्पबुद्धीनामिन्द्रादिमात्रयाजिनां तदाराधनफलमल्पम्, अन्तवच्च भवति। कुतः? देवान् देवयजो

அற்பமதியான அவர்க்கு — புல்லறிவாளரான அவர்களுக்கு, அங்கு அமை — தேவர்களிடம் கிடைக்கும், பலம் தான்—பயனுனது, நிற்பதிலது ஆக நிகழுமே—நிலை நில்லாத தாகவே ஆகிறது. (ஏனெனில்) கற்ப அமரர் — கற்ப காலத்திற்குட்பட்ட வாழ்வையுடைய தேவர்களை, பின் சேர்ந்தார் — ஆராதிப்பவர்கள், அங்கு — (நிலைநில்லாத) அமரருலகில், அவரை பெற்றுர்—அவ்வமரரையே அடைவர்; இங்கு—இவ்வுலகில். எனையே இன் சேர்ந்தாரும்—என்னிடமே இனிதாக ஈடுபட்டவர்களும், (எனையே) பெறுவர்—என்னையே அடைவர்.

23. உனது அருளாலேயே தேவதாந்தரபக்தர்களும் பலனடைகிருர்கள் எனில்: அவர்களுக்கும், உனது பக்தர்களுக்கும் வாசியில்லையோ? என்ன, நெடுவாசி உண்டு என்கிருன் இந்த ஶ்லோகத்தில். (அல்பமேதஸாம் தேஷாம்) அல்பர்களான தேவதைகளிடமும், அவர்களளிக்கும் அற்பபலன்களிலும் புத்தியைச் செலுத்திய அவர்களுக்கு. அன்றிக்கே, ஶாஸ்த்ரங்களில் அல்பமே அறிகையால் புல்லறிவாளர்களான அவர்களுக்கு என்றுமாம். எல்லா தேவர்களுக்கும் (ஏன் எல்லா உலகுக்குமே) அந்தர்யாமியாக நாராயணன் நிற்கிருன் என்னும் வேதாந்த ஜ்ஞாநம் இல்லாதவர்களாய், இந்திரன் முதலிய அவர்களைமாத்திரம் குறித்து யாகமும் செய்பவர்களாகையாலே, இவர்களைப் புல்லறிவாளர்கள் என்கிருன். ஶாஸ்த்ர ஜ்ஞாநமேயில்லாத நாஸ்திகர்களை, மேலிரண்டு ஶ்லோகங்களிலும் 'அபுத்தய:' 'மூட:' என்று அறிவேயில்லாதவர்களாகக் கூறப்போகிருன். இங்கு ஶாஸ்த்ரத்தையும், அதிற்சொல்லப்பட்ட தேவதைகளையும் மேலெழ அறிந்து, ஶாஸ்த்ர தாத்பர்யமறியாதவர்களை 'அல்பமேதஸ்ஸுகள்' (புல்லறிவாளர்கள்) என்கிருன். இனி அறிவாளிகள் யாரெனில்: பரமபுருஷனிலும் மிகத் தாழ்ந்த ஐஶ்வர்ய கைவல்யங்களை ப்ராப்யமாக மயங்கியபோதிலும், அவற்றுக்குப் பலப்ரத ஸாதனமாயிருப்பவன் ஸர்வதேவாந்தர்யாமியான நாராயணனே என்று அறிபவர்கள் (முற்கூறியவர்களைக் காட்டிலும்) மேதாவான்கள் என்றும், நாராயணனே பரமப்ராப்யமாய், தன்னை அடைவிக்கப் பலப்ரத ஸாதனமாயிருப்பவன் என்று

यान्ति—यत इन्द्रादीन् देवान् तद्याजिनो यान्ति। इन्द्रादयोऽपि हि परिच्छिन्नभोगाः परिमितकालवर्तिनश्च; ततस्तत्सायुज्यं प्राप्ताः तैस्सह

அறிந்தும், தமது முயற்சிகளைப் ப₂லகரண ஸாத₄னமாக (ப்ராபக மாக) மயங்குகிற உபாஸகர்களான ஜ்ஞாநிகள் மேத₄ாவத்தரர்கள் என்றும், அவனையே பரமப்ராப்யம், ப்ராபகம் முதலிய அனைத்துமாக அறிபவர்களான மஹாத்மாக்களான ஜ்ஞாநிகள் மேத₄ாவத்தமர்கள் என்றும் கண்டுகொள்வது. (தத் ப₂லம் அந்தவத் து) அப்படி இந்த்₃ராதி₃களைமாத்திரம் ஆராதி₄ப்பதால் கிடைக்கும் ப₂லம் அற்ப மாகவும், நிலைநில்லாததாகவும் உள்ளது. 'அந்தவத்' என்றே சொல்லப்பட்டபோதிலும், 'து' காரம் சகாரப் பொருளதாய். அநுக்த ஸமுச்சாயகமாகையாலே, அல்பர்களான தே₃வதைகளிடமிருந்து கிடைக்கும் ப₂லம் அல்பமும் ஆகிறது என்று உணர்த்துகிறது. (தேஷாம் து) என்று கூட்டி, கடைசிப் பாத₃த்தில் சொல்லப்பட்ட ப₄க₃வத்₃ப₄க்தர்களைக் காட்டிலும் வேறுபாட்டை 'து'காரம் காட்டுவ தாகவும் கொள்ளலாம்; அப்போது 'அந்தவத்' என்னும் பத₃ம் அர்த்த₂ ஸித்₃த₄மான அல்பத்வத்துக்கு உபலக்ஷணம். இவ்வண்ண மாகப் பூர்வார்த்த₄த்தை ஒரே வாக்யமாகக் கொண்டு பொரு ளுரைக்க இடமிருக்கையால், ''தேஷாம் ப₂லம் அந்தவத்து'' 'அல்பமேத₄ஸாம் தத் ப₄வதி' என்று இரு வாக்யமாக்கிப் பொரு ளுரைப்பது பொருந்தாது. இப்படி இவர்கள் மற்ற தெய்வங்களிட மிருந்து அடையும் ப₂லம் அற்பமாகவும், நிலை நில்லாததாகவும் இருப்பதற்குக் காரணம் என்ன? என்பதைக்காட்டுகிறது மூன்ருவது பாத₃ம்-(தே₃வாந் தே₃வயஜோ யாந்தி) து₃ராராத₄ர்களாய், அல்பராய், அநித்யரான இந்திரன் முதலான தெய்வங்களைக் குறித்து அரும்பாடு பட்டு யஜ்ஞம் முதலான ப்ரவ்ருத்திகளைச் செய்பவர்கள். அந்த தெய்வங்களையேயன்ருே அடைகிருர்கள்; அதனுல் அவர்கள் பெறும் ப₂லன் அற்பமாய், முடிவுடையதாய் உள்ளது என்றபடி. இந்திரன் முதலிய தே₃வர்கள் அளவுபட்ட பே₄ாக₃த்தையுடையவர் களாய், அளவுபட்ட காலமே வாழ்பவர்களாகையாலும், அவர்களை ஆராதி₄ப்பவர்கள் அவர்களிடமிருந்து அதி₄கபக்ஷமாகப் பெறக்கூடி யது அவர்களோடு ஸமாநபே₄ாக₃ராயிருக்கையாகிற அந்த தே₃வதா ஸாயுஜ்யமேயாகையாலும், அந்தப் ப₂லம் அந்த தே₃வதைகளின் ஐஶ்வர்யத்தைப்போலே அல்பமாய், அவர்களது காலத்துக்கு மேற் படாததாகையாலே அஸ்தி₂ரமாயல்லது இருக்கமுடியாது என்று கருத்து. ஆக, தே₃வதாந்தரங்களிடமிருந்து ஐஶ்வர்யத்தை விரும்பு

प्रच्यवन्ते। मद्भक्ता अपि तेषामेव कर्मणां मदाराधनरूपतां ज्ञात्वा परिच्छिन्नफलसङ्गं त्यक्त्वा मत्प्रीणनैकप्रयोजनाः मां प्राप्नुवन्ति; न च

---

மவன் அற்பபு₃த்₃தி₄யுடையவன் என்றதாயிற்று. இப்படி இகழப்பட்ட இவர்களை "மநுஷ்யாணும் ஸஹஸ்ரேஷு கஶ்சித் யததி ஸித்₃த₄யே" (7-3) என்று எம்பெருமான் கொண்டாடுவது பொருந்தாதாகையால், அங்கு கொண்டாடப்பட்டவர்கள் எம்பெருமானிடமிருந்து மோக்ஷ ஸித்₃தி₄யின் பொருட்டு ஸித்₄தி₄பர்யந்தம் யத்னம் பண்ணுபவர்களே என்றும், 'யததாமபி.........கஶ்சிந்மாம் வேத்தி' என்று அவர்களில் சிறந்தவனாகச் சொல்லப்பட்டவன் எம்பெருமானையே பரமப்ராப்யமாகக்கொண்டு, அவனை அடையும் பொருட்டுத் தன் முயற்சியைச் செய்பவன் என்றும், "தத்வதோ வேத்தி" என்று அவர்களில் சிறந்தவனாகச் சொல்லப்பட்டவன் தனக்காகத் தான் முயற்சி செய்வதினின்றும் கைவாங்கி, சாதகம்போல் நாதன்தனதருளே பார்த்திருக்கும் ஸித்₃தே₄ாபாயநிஷ்ட₂ப்ரபந்நன் என்றும் விளங்குகிறது. இனி, புல்லறிவாளர்கள் என்று முற்பாதியில் இகழப்பட்டவர்களுக்கு நேர் எதிர்த்தட்டாயிருப்பவர்களாய், பத்தொன்பதாவது ஶ்லோகத்தில் விவரிக்கப்பெற்றவர்களாய், பேரறிவாளர்களான இந்த மஹாத்மாக்கள் அடையும் ப₂லனைக் கடைசிப் பாத₃த்தில் காட்டுகிறான். (மத்₃ப₄க்தா அபி மாம் யாந்தி) என்னிடம் ஈடுபாடுடைய மஹாத்மாக்கள் — முற்கூறிய புல்லறிவாளர்களைப்போலே அற்பப₂லனைக்குறித்துச் செயற்கரிய கர்மாநுஷ்ட₂ானம்செய்து அரும்பாடு படாமல், அக்கருமங்கள் எனக்கு ஆராத₄னமாயிருப்பவை என்று அறிந்து, அக்கருமங்களுக்குச் சொல்லப்பட்ட அற்பப₂லன்களில் ஆசைவைக்காமல், அவற்றில் விலக்கவொண்ணுத நித்யநைமித்திக கர்மங்களை மாத்திரம் என் உகப்பையே கருதி பே₄ாக₃ரூபமாகச் செய்பவர்களாய், அவற்றை மோக்ஷஸாத₄னமென்றும் நினையாதவர்களாய், என்னை எனது நிர்ஹேதுககிருபையாலேயே அடைகிறார்கள். ப₄ர்த்ருபே₄ாக₃த்தை விலைக்குறுப்பாக்குமாபோலே, ப₄க்தியை மோக்ஷஸாத₄னமாக்குவதும் ஸ்வரூபவிருத்₃த₄மாகையாலே, ஸ்வயம் ப்ரயோஜந ப₄க்திநிஷ்ட₂னை இவனே ப₄க்தஶப்₃த₃த்திற்கு முக்₂யார்த்த₂ம் என்று கருதி, "அஹம் ஸ்மராமி மத்₃ப₄க்தம்" என்று வராஹசரமஶ்லோகத்திற்சொன்னதுபோலே "மத்₃ப₄க்தா:" என்கிறான். "தே₃வயஜ:" என்று, தே₃வர்களைக் குறித்து யஜ்ஞாதி₃களைச் செய்து அரும்பாடுபடுபவர்கள் என்று

पुनर्निवर्तन्ते। * मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते (८. १६) इति हि वक्ष्यते ॥ २३ ॥

அவர்களை வர்ணித்து, ''மத்₃ப₄க்தா:'' என்று இவர்களை, என்னிடம் ஈடுபாட்டில் தலைமைபெற்றவர்கள் என்று வர்ணிப்பது குறிக்கொள்ளத் தக்கது. '' சதுர்வித₄ா ப₄ஜந்தே '' என்று இதர புருஷார்த்த₂ங்களை விரும்புமவர்களையும் உபாஸக ஜ்ஞாநியையும் ப₄க்தர்களாகச் சொன்னுனுயினும், ஐஶ்வர்யார்த்தி₂கள் இவனை உடனே அடைவதில்லையாகையாலும், கைவல்யார்த்தி₂கள் இவனை அடைவதேயில்லையாகையாலும், அல்பபுருஷார்த்த₂ங்களை விரும்புகையாகிற குறை அவ்விருவரிடமும் உள்ளதாகையாலும், மோக்ஷத்திலும் தன் ஆநந்த₃த்தை விரும்புகையாகிற குறை உபாஸக ஜ்ஞானியிடமும் உள்ளதாகையாலும், இங்கு ''மத்₃ப₄க்தா:'' என்றது, மோக்ஷத்திலும் அவனது ஆனந்த₃த்தையே விரும்பும் பேரறிவாளர்களாய், குற்றமற்றவர்களாய், தலைசிறந்தவர்களான ப₄க்தர்களைக் குறிப்பதாகக் கொள்வதே உசிதம் என்பதை ''மத்ப்ரீணநைக ப்ரயோஜநா:'' என்னும் பதத்தாலே ப₄ாஷ்யகாரர் காட்டியருளினர். ''நிஜ கர்மாதி₃ ப₄க்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:, உபாயதாம் பரித்யஜ்ய'' [கீ₃-ஸம் 31] [தான் அவஶ்யம் செய்யவேண்டிய கர்மம் தொடக்கமாக, ப₄க்தியீருக, ப்ரீதியினுலேயே செய்விக்கப்பட்டு, அவற்றில் உபாயத்வபு₃த்₃தி₄யை வாஸனையோடுவிட்டுச் செய்யக்கடவன்.] '' கதா₃ ஹம் ப்ரஹர்ஷயிஷ்யாமி '' [எப்போது நான் உன்னை உகப்பிக்கக்கடவேன் ?] [ஸ்தோ॰ர 46] என்ருரன்ரே ஆளவந்தாரும். இவர்கள் இப்படி அருளிச்செய்கைக்கு அடி — '' தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே எனக்கே கண்ணனை யான் கொள் சிறப்பே '' [ திருவாய் 2-9-4 ] என்று நம்மாழ்வாரும், ''உனக்கே நாம் ஆட்செய்வோம்'' [திருப்பாவை 29] என்று ஆண்டாளும் அருளிச்செய்கை. (மாம் யாந்தி) இனிமை உபேயமாகையாலே, ப்ரீதிவிஶிஷ்டமான எனது ஸ்வரூபமே இவர்களுக்கு ப்ராப்யமாகையாலும், அதையும் ஸ்வப்ரவ்ருத்தியாகிற ஆயாஸமில்லாமல் பெறுகையாலும், இவர்களே மற்ற எல்லா அதி₄காரிகளைக் காட்டிலும் தலைசிறந்த ப₂லனைப் பெறுகிருர்கள் என்று கருத்து. '' போ₄க₃மாத்ர ஸாம்யலிங்கா₃ச்ச '' [4-4-17] என்று ஸூத்ரத்திலும், ''பரமம் ஸாம்யமுபைதி'' [முண்ட₃ 3-1-3] என்று ஶ்ருதியிலும், '' மம ஸாத₄ர்ம்ய மாக₃தா: '' [கீ₃தை 14-2] என்று கீ₃தையிலும் சொல்லப்பட்டபடி, உபாஸகன் பல ஜன்மங்கள் அரும்பாடுபட்டுப் பெறும் ப₂லனை இவன் ஆயாஸமில்லாமல் ஸ்வரூபப்ராப்தமான பரார்த்த₂ப்ரதிபத்திமாத்ரத்தாலே பெறுகிருனன்ரே.

॥भा॥ इतरे तु सर्वसमाश्रयणीयत्वाय मम मनुष्यादिष्ववतार-मप्यकिञ्चित्करं कुर्वन्तीत्याह—

अव्यक्तं व्यक्तिमापन्नं मन्यन्ते मामबुद्धयः।
परं भावमजानन्तो ममाव्ययमनुत्तमम्॥ २४॥

24. அவ்யக்தம் வ்யக்திமாபந்நம் மந்யந்தே மாமபு$_3$த்$_3$த$_4$ய:।
பரம் ப$_4$ாவமஜாநந்தோ மமாவ்யயமநுத்தமம்॥

**அபு$_3$த்$_3$த$_4$ய:**—அறிவு கெட்டவர்களான பெரும்பாலான ஜீவர்கள், **அவ்யயம்**—குறைவற்றதாய், **அநுத்தமம்**—ஒப்பில்லாதபடி உயர்ந்திருப்பதான, **மம பரம் ப$_4$ாவம்**—எனது மேலான நிலையை, **அஜாநந்த:**—அறியாதவர்களாய், **மாம்**—என்னை, **அவ்யக்தம்**—இதுவரையில் இப்படி இல்லாதவனாய், **வ்யக்திம் ஆபந்நம்**—(இப்போது சில புண்யகர்மங்களாலே) இப்படிப் பிறந்திருப்பவனாக, **மந்யந்தே**—எண்ணுகிறார்கள்.

---

24. **ஒன்றோர் குறையற் றுயர்ந்த வென்றன்மை
நின்றோ ரறியார் நிகழ்ந்தென்னை—யின்றோர்பால்
வந்தியல்வான் முன்றெரியா னென்றே மதித்துயிர்போற்
புந்தியிலா ரோர்ந்தார் புணர்ந்து.**

---

**இப்படி ஆயாஸமில்லாமல் பெறுவதாகில் அப்ப$_2$லம் வைதி$_3$கபுத்ர விஷயத்திற்போலே அழிவுள்ளதாயிருக்குமோ? எனில்: கிடைத்தற்கரிய மஹாத்மாவான இவனை அரும்பாடுபட்டுப் பெற்றபின் பரமபுருஷன் இவனை ஒருகாலும் மறுபடி ஸம்ஸாரத்திற்கு அனுப்பமாட்டானாகையால், "அநாவ்ருத்தி: ஶப்$_3$த$_3$ாத் அநாவ்ருத்தி: ஶப்$_3$த$_3$ாத்" [ப்$_3$ரஹ்ம ஸூத்ரம் 4-4-22] "ந ச புநராவர்த்ததே" [சா$_2$ந் 8-15-1] "ஸர்க்கே$_3$ऽபி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யத$_2$ந்தி ச" [கீ$_3$தை 14-2] என்கிற புநராவ்ருத்தியின்மையாகிற ப$_2$லன் இவனுக்கும் உண்டு. இவனுக்குள்ள பரார்த்த$_2$ ப்ரதிபத்தி சிறுகுழந்தைகளான வைதி$_3$கபுத்ரர்களுக்கு இல்லாமையாலே, இவனுக்கு அவர்கள் த்$_3$ருஷ்டாந்தமாகமாட்டார்கள். "தே$_3$வயஜ:" "மத்$_3$ப$_4$க்தா:" "யாந்தி மாமபி" என்னும் பத$_3$ங்களின் ஸ்வாரஸ்யத்தை உணரார்மையாலே நாராயணார்யர் என்னும் இதர மதஸ்த$_2$ர், இவனிடம் இதர ப$_2$லன்களை விரும்புபவர்களும் இங்கு ப$_4$க்த ஶப்$_3$த$_3$த்தாலே குறிக்கப்படுபவர்கள் என்று கொண்டு, அவர்களும் காலக்ரமத்தில் இவனை அடைவதாகப் பொருள்கொண்டார். 23.**

॥भा॥ सर्वैः कर्मभिराराध्योऽहं सर्वेश्वरो वाङ्मनसापरिच्छेद्य-स्वरूपस्वभावः परमकारुण्यादाश्रितवात्सल्याच्च सर्वसमाश्रयणीयत्वाय

---

புந்தியிலார்—அறிவு கெட்டவர்களான பெரும்பாலான ஜீவர்கள், ஒன்று ஓர் குறை அற்று—ஒரு வித₄த்தாலும் ஒரு குறையும் இல்லாமல், உயர்ந்து உயர்ந்த—ஒப்பில்லாத படி உயர்ந்திருப்பதான, என் தன்மை—எனது மேலான நிலையை, நின்று ஓர் அறியார்—நிலைநின்று ஒருபடியும் அறியமாட்டாதவர்களாய், நிகழ்ந்த என்னை—நிகழ்காலத்தில் விளங்காநிற்கும் என்னை, முன் தெரியான்—இதுவரையில் இப்படி இல்லாதவனாய், இன்று—இப்போது, ஓர்பால்—(புண்யகர்மமாகிற) ஒரு காரணத்தாலே, வந்து—சிறப்போடு வந்து, இயல்வான் — பிறந்திருப்பவன், என்றே மதித்து — என்றே நினைத்து, உயிர்போல் புந்தியில் புணர்ந்து ஓர்ந்தார்—மற்ற ஜீவர்களைப்போலே தங்கள் நெஞ்சில் அறுதியிட்டிருக்கிறார்கள்.

---

24. ஶாஸ்த்ராதி₄காரிகளல்லாத புல்லறிவாளராயினும். ஶாஸ்த்ர விஶ்வாஸமிருக்கையாலே ஜந்மாந்தரத்தில் படிப்படியாக ஶாஸ்த்ராதி₄காரிகளாக்கவல்ல முற்கூறிய தே₃வதாந்தரப₄க்தர்களும் சிறுபான்மையினர் என்னும்படி — இவர்களிலும் கீழ்ப்பட்டவர்களாய், ஶாஸ்த்ர விஶ்வாஸமின்மையாலே, 'அனைவரும் ஆஶ்ரயிப்பதற்காக ஸர்வேஶ்வரன் மனிதனாய் அவதரித்திருக்கிறான்' என்று ஶாஸ்த்ரங்கொண்டு உணரமாட்டாமல், ப்ரத்யக்ஷமான எனது ரூபசேஷ்டிதங்களாலும் தே₃வர் தலைவன் என்று அறுதியிடமாட்டாமல் இருக்கையால் என்னாலும் முன்னேற்றவே முடியாதபடி உலகில் பெரும்பாலோர் அறிவுகெட்டுக்கிடக்கிறார்களே என்று வருந்துகிறான் இரண்டு ஶ்லோகங்களில். (அபு₃த்₃த₄ய:) அறிவுகெட்டவர்கள். அறிவில்லாமலிருப்பதோடன்றியில் அறிவில்லையே எனக்குறைபடவுமறியாதவர்கள். அடுத்த ஶ்லோகத்தில் "லோக:" "ஸர்வஸ்ய" என்று இவர்களை எடுக்கையாலே, உலகில் பெரும்பான்மையினர் இப்படி அறிவுகெட்டுக்கிடக்கிறார்கள் என்று விளங்குகிறது. சென்ற ஶ்லோகத்தில் புல்லறிவாளர்களான தே₃வதாந்தர ப₄க்தர்களாகக் கூறப்பட்டவர்கள் லக்ஷக்கணக்கானவர்கள் என்றால் பகுத்தறிவேயில்லாத இவர்கள் கோடிக்கணக்கானவர்கள் என்று கருத்து. இவர்களை இப்படி நிந்தி₃ப்

अजहत्स्वभाव एव वसुदेवसूनुरवतीर्ण इति ममैवं परं भावमव्ययमनुत्तम-

பதற்குக் கருத்து என்ன? எனில், பரமகாருணிகனுன கண்ணன் இவர் களுங்கூட ஶாஸ்த்ரவிஶ்வாஸம் பெற்றுத் தன்னை அறியவேண்டும் என்னும் கருத்தாலேயே, உலகமெல்லாம் கொண்டாடும் கீ₃தையை அருளி, அதில் நெறியெல்லாம் எடுத்துரைத்து, இந்த நெறிகளில் ஒன்றையும் அறியவில்லையே, அறியவில்லை என்னும் இழவும் இல் லையே என்று இவர்களை நிந்தி₃க்கிருன். ''ஓ! ஓ! உலகினதியல்வே'' (திருவாசிரியம் 6) என்னும் பாசுரத்திலே சென்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட தே₃வதாந்தர ப₄க்தர்களை 'உலகு' என்று பெரும் பாலோராக எடுத்து, ''அல்பமேத₄ஸ்ஸு‌க்கள்'' என்று சென்ற ஶ்லோ கத்தில் அருளியதை அடியொற்றி ''படைத்து இடந்து உண்டு உமிழ்ந்து அளந்து தேர்ந்து உலகளிக்கும் முதற்பெரும் கடவுள் நிற்ப, புடைப்பல தானறி தெய்வம் பேணுதல், தனது புல்லறிவு ஆண்மை பொருந்தக் காட்டி'' என்று அவர்களைப்புல்லறிவாளர்கள் என்று நிந்தித்ததும், ''அறிவினுல் குறைவில்லா அகல்ஞாலத்தவரறிய நெறி எல்லாம் எடுத்துரைத்த நிறைஞானத்து ஒரு மூர்த்தி'' [திருவாய் 4-8-6] என்னும் பாசுரத்திலே—இந்த ஶ்லோகத்தில் ''அபு₃த்₃த₄ய:'' என்று கூறப்பட்டவர்களை அறியவில்லையே என்று குறைவுபடவும் அறியாதபடி அறிவு கெட்டவர்களாக எடுத்து, ''அகல் ஞாலத்தவர்'' என்பதன் மூலம் முற்கூறியவர்களைக்காட்டிலும் மிகப்பெரும்பான்மை யினர் இவர்களே என உணர்த்தி, இவர்களும் தன்னை அறிய வேண்டும் என்னும் பரமகருணையாலேயே கீ₃தையில் கண்ணன் தன்னை அடைவதற்கான எல்லா நெறிகளையும் எடுத்துரைத்தான் என்று அருளியதும் இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கது. இப்படி அறி வில்லாமலிருப்பதனுல், இவர்களுக்கு விளையும் அநர்த்த₂த்தைப் பிற்பாதியாலும், முற்பகுதியாலும் கூறுகிருன்,— (பரம் ப₄ாவம்... அநுத்தமம்) எல்லையற்ற பரத்வஸௌலப்₄யங்களை உடையவனுயிருக் கும் எனது மேலான நிலையை அறிவதில்லை இவர்கள் என்று கருத்து. (மம) வஸு‌தே₃வனுக்குப் பிள்ளையாய், பரத்வ ஸௌலப்₄யங்களின் எல்லையைக் காட்டிக்கொண்டு நிற்கிற என்னுடைய. (மம அவ்யயம் அநுத்தமம் பரம் ப₄ாவம்) எல்லையற்ற இப்பரத்வ ஸௌலப்₄ யங்கள் என்றும் அழிவற்றவையாயினும் எனது பரத்வநிலையிலே ஸௌலப்₄யம் ப்ரகாஶிப்பதில்லை. அவதார நிலையான இப்போதே இரண்டும் ப்ரகாஶிக்கின்றன என்று கருத்து. (அநுத்தமம் அவ்யயம் பரம் ப₄ாவம் அஜாநந்த:) தனக்கு மேலில்லாததும் அழிவற்றதுமான பரத்வ ஸௌலப்₄யங்களின் எல்லை

मजानन्तः प्राकृतराजसूनुसमानं इतःपूर्वमनभिव्यक्तमिदानीं कर्म-

நிலையை அறியாதவர்களாய்; எல்லாக் கர்மங்களாலும், ஆராதிக்கப்படும் ஸர்வேஶ்வரனை நான் வாக்குக்கும் மனத்துக்கும் எல்லைகாணமுடியாத தன்மைகளை உடையவன் என்று எனது எல்லையற்ற பரத்வத்தையும் (மேன்மையையும்) அறிவதில்லை; பரம கருணையாலும், என் குழந்தைகளான சேதனரிடம் வாத்ஸல்யத்தாலும், எல்லோருமே என்னை ஆஶ்ரயிக்கவேண்டும் என்னும் எண்ணத்தாலே முற்கூறிய மேன்மையையும் விடாமலே வஸுதேவனின் பிள்ளையாக அவதரித்திருக்கிற எனது எல்லையற்ற ஸௌலப்யத்தையும் (நீர்மையையும்) அறிவதில்லை என்று கருத்து. இப்படி அறியாததற்குக் காரணம் — இவ்விருள்தருமாஞாலத்திலே, அஞ்ஞானமாகிற இருளைப்போக்கி ஸத்தையும், அஸத்தையும் (1. உள்ளதையும், இல்லாததையும்; 2. நல்லதையும், தீயதையும்) பகுத்தறிய உதவும் ஶாஸ்த்ரமாகிற கைவிளக்கைத் துணைகொள்ளாமையே என்பது வெளிப்படை. "ஹார்த்தும் தம: ஸத,ஸதீ ச விவேக்துமீஶ: மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி" [ர-ஸ்த 2-1] [(அஞ்ஞான) இருளைப் போக்குவதற்கும், ஸத்தையும், அஸத்தையும் பகுத்தறிவதற்கும் உறுப்பாக ஶாஸ்த்ரத்தை ஸர்வேஶ்வரன் கைவிளக்கைப்போலே காட்டித் தருகிறான்.] என்றானன்றோ பட்டர். இப்படி அறியாமையாகிற அஜ்ஞானம் மாத்திரமன்று, அந்யதா ஜ்ஞான விபரீத ஜ்ஞாநங்களும் இவர்களுக்கு உள்ளன என்று ஶ்லோகத்தின் முற்பகுதியாலே காட்டுகிறான், — (மாம் அவ்யக்தம் வ்யக்திமாபந்நம் மந்யந்தே) மற்ற ப்ராக்ருதரான ராஜகுமாரர்களைப் போலே, முற்பிறவிகளில் இப்படிப் பிறவாதவனாய், இப்போது புண்யவிஶேஷத்தாலே இப்படிப் பிறந்திருப்பவனாக என்னையும் எண்ணுகிறார்கள். ஶாஸ்த்ர விஶ்வாஸமில்லாவிடிலும், 'இப்போது சிறந்த குலத்தில் சிறப்புடன் பிறந்திருப்பவர்கள் முற்பிறவிகளிலும் இப்படியே பிறந்திருப்பார்கள் என்னும் நியமமில்லை; முற்பிறவிகளில் மிகவும் புண்ணியம் பண்ணியதாலேயே இப்பிறவியில் இப்படிப் பிறந்திருக்கிறார்கள்' என்னும் பொதுஜன நம்பிக்கையைப் பின்பற்றி, நானும் அப்படிப் பூர்வஜன்ம புண்யத்தாலே வஸுதேவனின் பிள்ளையாய், சிறப்புற்றுப் பிறந்திருப்பவன் என்று எண்ணுகிறார்கள் என்று கருத்து. மூல ப்ரக்ருதியாகிற அவ்யக்தம், அதன் கார்யமாகிற வ்யக்தம் முதலானவை இப்ரகரணத்திற்குப் பொருந்தமாட்டாவாகையால், 'அவ்யக்தம்' 'வ்யக்திமாபந்நம்' என்று அவற்றைக் குறிப்பதாகக் கொள்வது ஒட்டாது; முற்கூறியபடியே பொருள்

वशाज्जन्मविशेषं प्राप्य व्यक्तिमापन्नम्—प्राप्तं मामबुद्धयो मन्यन्ते; अतो मां नाश्रयन्ते; न कर्मभिराराधयन्ति च॥२४॥

॥भा॥ कुत एवं न प्रकाश्यत इत्यत्राह—

नाहं प्रकाशस्सर्वस्य योगमायासमावृतः।
मूढोऽयं नाभिजानाति लोको मामजमव्ययम्॥२५॥

25. நாஹம் ப்ரகாஶ: ஸர்வஸ்ய யோக₃மாயாஸமாவ்ருத:।
மூடோ₄ऽயம் நாऽபி₄ஜாநாதி லோகோ மாமஜமவ்யயம்॥

---

25. என்பிறவி யோகமெனு மிம்மாயை யான்மறைந்தே
யன்பிலர்கள் யார்க்கு மறிவரியேன்—என்பதனு
லென்னை யியல்பிறப்பற் றேதுங் குறைவிலனு
வுன்னலுற வோரா துலகு.

---

கொள்ளவேண்டும். 'அஜாநந்த:' என்று பிற்பாதியில் ஜ்ஞாநா பா₄வமாகிற அஜ்ஞாநம் சொல்லிற்று; 'மந்யந்தே' என்று முற் பாதியில் ஸ்வரூப ஸ்வபா₄வங்களை உள்ளபடி உணராமையாகிற அந்யதா₂ ஜ்ஞாந விபரீத ஜ்ஞாநங்களைச் சொல்லுகிறது. முன் நாலு ஶ்லோகங்களில் சொல்லப்பட்டவர்கள் சிறிது ஶாஸ்த்ர ஜ்ஞாந முடையவர்களாகையாலே, மற்ற தே₃வர்களைப்போலே என்னை ஒரு தே₃வனுகவாவது நினைப்பார்கள்; இவர்கள் அடியோடு ஶாஸ்த்ர ஜ்ஞாநமில்லாதவர்களாகையாலே என்னை அடியோடு அறிவதில்லை என்று 'அல்பமேத₄ஸாம்' [23] 'அபு₃த்₃த₄ய:' [24] எனும் பத₃ங்களுக்குக் கருத்து. இப்படி அடியோடு அறிவில்லாமை யாலே, முற்கூறப்பட்டவர்களைப்போலே தே₃வதாந்தரங்களை இடை யிட்டும் என்னை ஆஶ்ரயிப்பதில்லை; 'தம் தம் நியமம்' என்று சொல்லப்பட்ட, அந்த தே₃வதைகளை உகப்பிக்கும் கர்மங்களாலும் என்னை ஆராதி₄ப்பதில்லை; இவர்களை என்னை நேரே ஆஶ்ரயித்து, ஆராதி₄க்கும் ஶாஸ்த்ராதி₄காரிகளாக்குவது எனக்கே மிகக்கடி₂நமா யுள்ளது, அதனுலேயே து₃ஷ்டப்பிள்ளையைத் திட்டித்திருத்தப்பார்க் கும் பிதாவைப்போலே 'அபு₃த்₃த₄ய:' என்று திட்டித்திருத்தப்பார்க் கிறேன். முடியாவிடில் த₃ண்டி₃த்துத் திருத்தப்பார்க்கும் பிதாவைப் போலே பல ஜன்மங்களில் இவர்களைப் பாபப₂லனை அனுப₄விக்கச் செய்து திருத்தப் பார்க்கிறேன் என்பது ஶ்லோகத்திலிருந்து தேறிய பொருள். 24.

॥भा॥ क्षेत्रज्ञासाधारणमनुष्यत्वादिसंस्थानयोगाख्यमायया समा-वृतोऽहं न सर्वस्य प्रकाशः। मयि मनुष्यत्वादिसंस्थानदर्शनमात्रेण

---

யோக₃மாயா ஸமாவ்ருத: அஹம்—மனிதவுருக்கொண்டிருக்கையாகிற மாயையாலே மறைக்கப்பட்ட நான், ஸர்வஸ்ய—உலகில் பெரும்பான்மையினர்க்கு, ந ப்ரகாஶ:—(பரமாத்மாவாகப்) பிரகாஶிப்பதில்லை; மூட₄: அயம் லோக:—அறிவற்றவரான இவ்வுலகினர், மாம்—என்னை, அஜம்—(கர்மம் காரணமான) பிறப்பற்ற காரணப்பொருளாகவும், அவ்யயம்—குறையெதுவுமற்ற ஸர்வேஶ்வரனாகவும், ந அபி₄ஜாநாதி—ஆராய்ந்து அறிவதில்லை.

---

என் பிறவி யோகம் எனும் இம்மாயையால் மறைந்தே—மனிதப் பிறவியில் பிறந்திருக்கையாகிற எனது இந்த மாயையினால் மறைக்கப்பட்டு, அன்பிலர்கள் யார்க்கும்—அன்பில்லாதவர்கள் எவர்க்கும், அறிவரியேன்—(நான்) அறிய அரியவன்; என்பதனால்—இக்காரணத்தால், உலகு—இவ்வுலகமானது, என்னை—என்னை, இயல் பிறப்பு அற்று—கர்மவஶத்தாலுண்டான எப்பிறப்புமற்றவனாய், ஏதும் குறைவு இலனா—எக்குறைவுமில்லாதவனாக, உன்னலுற ஓராது—ஆராய்ந்து அறியாது.

---

25. தடையற்ற ஸங்கல்பத்தை உடைய நீ, உனது குழந்தைகளான சேதனரை உன்னை ஆஶ்ரயிக்கச் செய்வதற்காகவே இவர்கள் கண்காண அவதரித்திருக்கும்போது, இவர்கள் உன்னை அறியத் தடையென்ன? ஏன் உன் விருப்பம் நிறைவேறுவதில்லை? என்னும் கேள்விக்கு பதிலுரைக்கிறது இந்த ஶ்லோகம். (யோக₃மாயா ஸமாவ்ருத: அஹம்) ஜீவர்களுக்கே உரிய மனிதப்பிறவியில் பிறந்து, அவர்களுடையதைப் போன்ற உருக்கொண்டிருக்கையாகிற மாயா யோக₃த்தாலே சூழப்பட்டிருக்கும் நான். "யோக₃மாயா" என்று யோக₃நித்₃ரையாகிற கள்ளநித்திரையில் ப்ரஸித்₃தி₄ உண்டாயினும், அது இப்ரகரணத்திற்குப் பொருந்தாதாகையாலே யோக₃மாகிற மாயை என்றே பொருள் கொள்ளவேண்டும். "ஸம்ப₄வாம்யாத்ம மாயயா" [4-6] "மம மாயா" [7-14] "மாயயாऽபஹ்ருதஜ்ஞாநா:" [7-15] முதலானவிடங்களில் விசித்ரஸ்ருஷ்டியைச் செய்வது எப்பொருளாயினும், அது மாயாஶப்₃த₃த்தினால் குறிக்கப்படலாம் என்று காட்டப்பட்டது. "மம மாயா" என்னுமிடத்திற்போலே முக்

குணமயமான ப்ரக்ருதியை இங்கு மாயாஶப்3த3ார்த்த2மாகக் கொள்ளப்பார்த்தால், அதனுல் மறைக்கப்பட்டிருக்கை பரவாஸு தே3வநிலைக்கும், அவதார வாஸுதே3வ நிலைக்கும் ஸமாநமாகை யால், அவதாரநிலை மறைக்கப்படுவதற்குரிய காரணத்தையே சொல்ல வேண்டிய இப்ரகரணத்திற்குப் பொருந்தாது. "ஆத்மமாயயா" [4-6] என்றவிடத்தில் மாயை எனப்பட்ட ஸங்கல்பமும் எல்லா நிலைக்கும் பொதுவானதாகையால், முற்கூறிய காரணத்தாலேயே அதையும் மாயாஶப்3த3ார்த்த2மாக இங்கு கொள்ளமுடியாது. யோக3ஶப்3த3மும் ப்ரகரணவிருத்3த4மாகையாலே கர்மயோக3ம் முதலானவற்றைக் குறிக்கமுடியாது; ஆகையால், 'சேர்த்தி' என்னும் ப்ரஸித்3த4மான பொருளையே குறிக்கிறது என்று கொள்ளவேண்டும். ஆக, ஸமா வ்ருதனுகச் சொல்லப்படும் கண்ணனுக்கு ஆஶ்சர்ய ஸ்ருஷ்டிகரமான ஏதோவொன்றின் சேர்த்தியே இங்கு சொல்லப்படவேண்டும் என்று தேறியவளவில், இதிஹாஸ புராணங்களிலும், இந்த கீ3தையிலும் தெளிவாக விளங்கும் ஆஶ்சர்யமான வேஷம், சொல், செயல் முத லானவற்றோடு கூடிய மனிதவுருவின் சேர்த்தியே இங்கு 'யோக3 மாகிற மாயை' என்று கூறப்படுவதாகக் கொள்வதே பொருந்தும். இந்த மனிதவுருவானது இந்த்3ரஜாலம் போன்று பொய்யான தாகையால் மாயை எனப்படுகிறது என்று அத்3வைதிகள் கூறுவதும் பொருந்தாது என்பது நாலாம் அத்4யாயத்தின் தொடக்கத்திலேயே விரிவாக நிருபிக்கப்பட்டதும் இங்கு அநுஸந்தி4க்கத்தக்கது. (ஸர்வஸ்ய ந ப்ரகாஶ:) உலகில் பெரும்பாலானவர்களுக்கு நான் பரத்வமுடையவனுக பிரகாஶிப்பதில்லை. இருபதாவது ஶ்லோகம் தொடங்கி நாலு ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட புல்லறி வாளர்களுக்கு ஒரு சிறிது பிரகாஶிக்கையாலும், ஐஶ்வர்யார்த்தி2கள் முதலானூர்க்கு மேன்மேலே ப்ரகாஶிக்கையாலும், அவர்களையொழிந்த பெரும்பாலான ஶாஸ்த்ர ஜ்ஞாநமற்ற ஜனங்களே இங்கு ஸர்வ ஶப்3த3த்தால் சொல்லப்படுகிறுர்கள். இது உன் குற்றமாய், உன்னிடம் ப்ரகாஶமில்லாமையாலே ப்ரகாஶிப்பதில்லையோ? எனில், என்னிடம் ப்ரகாஶமில்லாமையாகிற குற்றமில்லை; அவர்களிடமுள்ள அறிவின்மை யாகிற குற்றத்தாலேயே நான் ப்ரகாஶிப்பதில்லை என்று காட்டுகிறுன் ஶ்லோகத்தின் பிற்பாதியாலே,—(மூட4: அயம் லோக:) அறிவிலியாய், அறிவில்லையே என்னும் இழவுமில்லாமலிருக்கும் இவ்வுலகினர். இவர் களையே "அறிவிஞல் குறைவில்லா அகல் ஞாலத்தவர்" [திருவாய் 4-8-6] என்றுர் நம்மாழ்வார். (மூட4:) எனது மனிதவுருவையே கண்டு மயங்கி நிற்கிறுர்கள் என்று கருத்து. (மாம் நாபி4ஜாநாதி) என்னை ஆராய்ந்து அறிவதில்லை; ஶாஸ்த்ர ஜ்ஞாநமில்லாமையாலே

अजमव्ययं निखिलजगदेककारणं सर्वेश्वरं मां सर्वसमाश्रयणीयत्वाय मनुष्यत्वसंस्थानमास्थितं नाभिजानाति ॥ २५ ॥

ஶாஸ்த்ரங்கொண்டுதான் அறியவில்லையெனில், ப்ரத்யக்ஷமாக என்னைப்பார்த்தாவது ஆராய்ந்து அறியலாமே, அதுவுமில்லை என்கிறுன். (ந அபி₄ஜாநாதி) அடியோடு அறிவதில்லை என்றும் பொருள் கொள்ளலாம். இருபதாவது ஶ்லோகம் தொடங்கி நாலு ஶ்லோகங்களால் கூறப்பட்ட புல்லறிவாளர்கள் ஒரு சிறிதாவது அறிகிறுர்கள்; இவர்கள் அடியோடு அறிவதில்லை என்று கருத்து. உனது ஸௌலப்₄யத்தை இவர்கள் அறிகிறுர்களே எனில், பரத்வத்தை அடியோடு அறியவில்லையே; ஸௌலப்₄யமாத்ரத்தை அறிந்தது என்னைக் கைவிடவன்றே காரணமாயிற்று என்கிறுன். (அஜம் அவ்யயம் நாபி₄ஜாநாதி) இவர்களுக்கு எளியனுவதற்காக என் விருப்பத்தாலே பிறந்திருக்கிறேனுயினும், கர்ம வஶப்பட்ட பிறப்பு எனக்குக் கிடையாது என்று அறிவதில்லை; பரத்வத்தை முழுவதும் மறைத்துக் கொள்ளாமையாலே, "அதிவாய்விந்த்₃ர கர்மாணம் அதிஸூர்யாக்₃நிதேஜஸம்" [வாயு இந்திரன் முதலான தே₃வர்களைக் காட்டிலும் சிறந்த செயல்களைச் செய்பவனும், ஸூர்யன் அக்₃னி முதலானுரைக் காட்டிலும் சிறந்த தேஜஸ்ஸை உடையவனுமான இவனை] என்று அறிவுடையார் பேசும்படி ப்ரத்யக்ஷமாகக் காணப்படும் என்னுடைய பெருமையைக்கண்டு, நானே உலகனைத்துக்கும் ஒரே காரணனுன ஸர்வேஶ்வரனென்றும், அனைவரும் என்னை ஆஶ்ரயிப்பதற்காக மனிதவுருக்கொண்டிருப்பவன் என்றும் அறிவதில்லை. (நாபி₄ஜாநாதி) எனது பரவாஸுதே₃வ நிலையை இவ்வுலகிலுள்ள அனைவருமே ப்ரத்யக்ஷமாக அறிவதில்லை; அது நியாயம்; இவர்களோவெனில், மனிதனுய் அவதரித்தவிடத்திலும் ப்ரத்யக்ஷமாகக் காணப்படும் எனது (மநுஷ்யத்வே) பரத்வத்தையும் அறிவதில்லை. (அஜம் நாபி₄ஜாநாதி) இச்சை₂யால் ஏற்படும் பிறப்பு உண்டாகையால், கர்மம் காரணமாக உண்டாகும் பிறப்பற்றவன் என்று அறிவதில்லை என்று கொள்ள வேண்டும். (அவ்யயம் நாபி₄ஜாநாதி) ஸ்வரூபத்தாலும் ஸ்வபா₄வத்தாலும் விகாரமற்ற ஸர்வேஶ்வரனுக அறிவதில்லை. (அஜமவ்யயம்) "அஜோऽபி ஸந் அவ்யயாத்மா" [கீ₃தை 4-6] ஏன்னுமிடத்தில் சொல்லப்பட்டபடி அவதார நிலையிலும் (கர்மம் காரணமாகப்) பிறப்பற்றவனுகவும், குறைவற்றவனுகவுமிருக்கிறேன் என்பதையும் அறிவதில்லை என்றுமாம். இப்படி எனது மநுஷ்யத்வே பரத்வத்தை அறியாமையாலே, இவர்கள் என்னைக் கர்மவஶத்தால் பிறந்த ஜீவர்களில் ஒருவனுகவும், அதனுல் ஏற்பட்ட ஜ்ஞாந ஸங்கோசம் முதலான குறைவுகளை உடையவனுகவுமே எண்ணி ஸ்வரூப நாஶத்தை அடைகிறுர்கள் என்று கருத்து.

25.

वेदाहं समतीतानि वर्तमानानि चार्जुन।
भविष्याणि च भूतानि मां तु वेद न कश्चन॥२६॥

26. வேத₃ாஹம் ஸமதீதாநி வர்த்தமாநாநி சார்ஜுந।
பூ₄விஷ்யாணி ச பூ₄தாநி மாம் து வேத₃ ந கஶ்சந॥

அர்ஜுந—அர்ஜுனு! ஸமதீதாநி—இறந்தகாலத்தவரும், வர்த்தமாநாநி—நிகழ்காலத்தவரும், ப₄விஷ்யாணி ச—வருங் காலத்தவருமான, பூ₄தாநி—எல்லா ப₃த்₃த₄ ஜீவர்களேயும், அஹம்—நான், வேத₃—அறிவேன்; மாம் து—என்னேயோ வெனில், கஶ்சந—(இவர்களில்) ஒருவனும், ந வேத₃—உள்ளபடி அறிவதில்லை.

---

26. நன்றறிவ னுனே நாடோறும் பூதங்கள்
சென்று நிகழ்ந்துவருஞ் செம்பொருள்க—ணின்றிவற்று
ளொன்று மென்னேயுணர மாட்டா துளதன்றே
குன்றுயர்ந்த தோளாய் குறி.

குன்று உயர்ந்த தோளாய்—மலைபோல் உயர்ந்த தோளே உடையவனே! சென்று நிகழ்ந்து வரும் செம்பொருள்கள் பூதங்கள்—இறந்த காலத்திலும், நிகழ்காலத்திலும், வருங் காலத்திலுமுள்ள நற்பொருள்களாகிற ஸம்ஸாரி ஜீவர்கள் அனைவரையும், நாள்தோறும்—எப்போதும், நானே நன்று அறிவன்—நான் ஒருவனே நன்ருக அறிவேன்; இவற்றுள் ஒன்றும்—இந்த ஜீவர்களில் ஒருவர்கூட, எனே—என்னே, நின்று உணரமாட்டாது உளதன்றே—நிலைநின்று நன்ருக அறியமாட்டாமல் உள்ளனரன்றே; குறி—இதைக் குறிக் கொள்வாயாக.

---

26. இவ்வுலகில் இக்காலத்தில் பெரும்பான்மையினர் என்னே அடியோடு அறிவதில்லை என்ருன் சென்ற ஶ்லோகத்தில்; வருங் காலம், நிகழ்காலம், கழிகாலம் என்னும் முக்காலத்திலும், சிறு பான்மையினரான மற்றவர்களிலாவது எவரேனும் எப்போதும் உன்னே உள்ளபடி அறிகிருர்களோ? எனில், தேவதாந்தரப₄க்தர்கள்

॥ भा ॥ अतीतानि वर्तमानान्यनागतानि च सर्वाणि भूतान्यहं वेद—जानामि। मां तु वेद न कश्चन—मयाऽनुसंधीयमानेषु कालत्रयवर्तिषु भूतेषु मां—एवंविधं वासुदेवं सर्वसमाश्रयणीयत्वायावर्तिण

ஐஶ்வர்யார்த்தி₂கள், கைவல்யார்த்தி₂கள், ஜ்ஞாநி ஆகிய மற்ற வர்கள் மேன்மேலே என்னைப்பற்றிய அறிவு அதி₄கமாக உடைய வர்களாயிருந்தபோதிலும் எப்போதும் என்னை உள்ளபடி அறிவார், அவர்களிலும் ஒருவர்கூட எக்காலத்திலும் இல்லை என்கிருன் இந்த ஶ்லோகத்தில். "கஶ்சிந் மாம் வேத்தி தத்வத:" என்று மூன்றும் ஶ்லோகத்தில் அருளியதற்கு விவரணமாயிருப்பது இந்த ஶ்லோகம். (ஸமதீதாநி வர்த்தமாநாநி ப₄விஷ்யாணி ச பூ₄தாநி அஹம் வேத₃) இறந்தகாலம், நிகழ்காலம், வருங்காலம் என்னும் முக்காலத்திலும் உள்ள ஜீவர்களை நான் அறிவேன். 'ஸமதீதாநி' என்று இறந்த காலத்தில் இருந்தவர்களைச் சொல்லிவிட்டபடியால், "பூ₄தாநி" என்று பூ₄த(இறந்த)காலத்தில் இருந்தவர்களைச் சொல்லாது; பஞ்ச பூ₄தங்களும் ப்ரகரணத்திற்குப் பொருந்தாமையாலே பூ₄தஶப்₃த₃த் திற்குப் பொருளாகமாட்டா. "மாம் து வேத₃ ந கஶ்சந" என்று மேலே 'இவர்களில் எவரும் என்னை அறியமாட்டார்கள்' என்கை யாலே சேதநாசேதநங்களாகிற ஸத்தாயோகி₃யான (உள்ளவை யான) எல்லாப் பொருள்களையும் பூ₄தஶப்₃த₃ங்களால் குறிப்பதும் ஒட்டாது. ஆகையால், ப்ராக்ருத ஶரீரத்தோடு கூடின சேதனரான ப₃த்₃த₄ஜீவரை மாத்திரம் இவ்விடத்தில் பூ₄தஶப்₃த₃ம் குறிப்பதாகக் கொள்ளவேண்டும். இப்படி 'எல்லா ஜீவர்களையும் நான் அறிவேன்' என்று கூறுவது எதற்காக எனில்; 'இவர்களில் என்னை அறிந்த வர்கள் ஒருவருமில்லை' என்று (நாலாம் பாத₃த்தில்) அறுதியிட்டுச் சொல்லுவது தனக்கே பொருந்தும் என்று காட்டுவதற்காக என்று கொள்வது. (மாம் து வேத₃ ந கஶ்சந) என்னை உள்ளபடி ஸர்வ காலமும் அறிபவன் எவனுமே இல்லை. ஶாஸ்த்ர ஜ்ஞாநமில்லாத பெரும்பாலானவர் என்னை மனிதனுகவே நினைக்கையாலே அடி யோடு அறிவதில்லை; புல்லறிவாளர்களான தே₃வதாந்தரப₄க்தர்கள் என்னை ஒரு தே₃வனென்றே அறிகிருர்களாகையாலே சிறிதே அறிகிருர்கள். தே₃வர்தலைவனென்று அறிந்தும் என்னை ப்ராப்ய மென்று அறியாமல், மற்ருென்றை ப்ராப்யமாக நினைத்து அதற்குப் ப₂லப்ரத₃ ஸாத₄னமாக மாத்திரம் என்னை நினைக்கும் ஐஶ்வர்ய கைவல்யார்த்தி₂களும் அறைகுறை அறிவாளிகளாகவே உள்ளனர். என்னையே ப்ராப்யமாகவும், ப₂லப்ரத₃ ஸாத₄னமாகவும் அறிந்தும்

विदित्वा मामेव समाश्रयन् न कश्चिदुपलभ्यत इत्यर्थः। अतो ज्ञानी सुदुर्लभ एव ॥ २६ ॥

॥ भा ॥ तथा हि—

इच्छाद्वेषसमुत्थेन द्वन्द्वमोहेन भारत।
सर्वभूतानि संमोहं सर्गे यान्ति परन्तप ॥ २७ ॥

27. இச்சா₂த்₃வேஷஸமுத்தே₂ந த்₃வந்த்₃வமோஹேந ப₄ாரத।
ஸர்வபூ₄தாநி ஸம்மோஹம் ஸர்க்கே₃ யாந்தி பரந்தப ॥

ப₄ாரத—ப₄ரதகுலத்துதித்தவனே! பரந்தப—எதிரிகளை வாட்டுமவனே! இச்சா₂த்₃வேஷ ஸமுத்தே₂ந — (ப்ராக்ருத விஷயங்களில்) சிலவற்றைப்பற்றிய விருப்பத்தாலும், சில வற்றைப்பற்றிய வெறுப்பாலும் உண்டாகும், த்₃வந்த்₃வ மோஹேந—ஸுக₂ம் து₃:க்க₂ம் முதலான மயங்கவைக்கும் சுயநல உணர்ச்சிகளாலே, ஸர்வபூ₄தாநி—எல்லா ப₃த்₃த₄ ஜீவர்களும், ஸர்க்கே₃—பிறக்கும்போதே, ஸம்மோஹம் யாந்தி—பெருமயக்கத்தை அடைகின்றனர்.

---

என்னைப் ப₂லகரண ஸாத₄னமாக அறியாமல், தன் முயற்ச்சி யான கர்ம ஜ்ஞாந ப₄க்திகளைப் ப₂லகரண ஸாத₄னமாக மயங்கும் உபாஸக ஜ்ஞாநியும் அறிவில் குறையுடையவனாகவேயிருக்கிறான். என்னையே ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும், மற்ற எல்லாமாகவும் அறிந்து பற்றும் மஹாத்மாவான ஜ்ஞாநியும், அப்படி அறிவதற்கு முன்னால் தத்வ ஜ்ஞாநமில்லாதவனாகவேயிருக்கிறானாகையால், அவனும் எப்போதும் என்னை உள்ளபடி அறிபவனல்லன் – என்று கருத்து. இப்படி மஹாத்மாவான ஜ்ஞாநி எனக்கே மிகவும் கிடைத் தற்கரியவனாகையாலே, அப்படி ஒருவன் கிடைக்கப்பெற்றால், அந்த க்ஷணத்திலேயே "ஸர்வபாபேப்₄யோ மோக்ஷயிஷ்யாமி" [கீ₃தை 18-66] என்னும் ஸங்கல்பத்தை அவன் விஷயத்தில் செய்து அவனை மேலும் ஜன்மங்களைக் கொடுத்து என் பேற்றை இழக்காமல், மரண மானால் வைகுந்தம் கொடுத்து அவனை நிரந்தரமாகப்பெற்று நான் இன்புறுகிறேன் என்பது இந்த ஶ்லோகத்திலிருந்து தேறும் பொருள். இது சரமஶ்லோகத்திலே [கீ₃தை 18-66] தெளிவாகும். (அர்ஜுந) வெள்ளை நிறத்தவனான நீ எனக்கே கிடைத்தற்கரிய வெள்ளை மனத்தன னான மஹாத்மாவான ஜ்ஞாநியாக ஆகவேணும் என்று கருத்து. 26.

॥ भा ॥ इच्छाद्वेषाभ्यां समुत्थितेन शीतोष्णादिद्वन्द्वाख्येन मोहेन सर्वभूतानि सर्गे—जन्मकाल एव संमोहं यान्ति। एतदुक्तं

27. முன்னியலு மிச்சை முனிவான் முயன்றெழுந்து
பின்னிருமை கொண்ட பெருந்துயரா—லிந்நிலத்துப்
பூதங்க ளெல்லாம் புணர்பொழுதே யெய்துமே
யேதங்க ளாமோக மிங்கு.

முன் இயலும் இச்சை முனிவால் முயன்று எழுந்து—முதல் முயற்சியில் ஏற்பட்ட (சில ப்ராக்ருத விஷயங்களைப் பற்றிய) விருப்பத்தாலும், (மற்றும் சில ப்ராக்ருத விஷயங்களைப் பற்றிய) வெறுப்பாலும் மிகுதியாக உண்டாகி, பின் இருமை கொண்ட பெரும் துயரால்—மேலும் மேலும் ஸுக₂ம் து₃:க்க₂ம் முதலான இரட்டைகளாகப் பெருகிப் பெரும்துன்பத்தை விளைக்கும் சுயநல உணர்ச்சிகளாலே, இந்நிலத்து பூதங்கள் எல்லாம்—இவ்வுலகிலுள்ள ஸம்ஸாரி ஜீவர்களெல்லாம், இங்கு புணர் பொழுதே—இவ்வுலகில் பிறக்கும் காலத்திலேயே, ஏதங்களாம் மோகம் எய்தும் — பெரும் துன்பத்தை விளைக்கும் மயக்கத்தை அடைகின்றனர்.

27. இப்படி முக்காலத்திலுள்ள அனைவருமே தன்னை எப்போதும் உள்ளபடி அறியாமலிருப்பதற்குக் காரணத்தை இந்த ஶ்லோகத்தில் கூறுவதின் மூலம் ஞானியின் அருமையை வலியுறுத்துகிறான். (இச்சா₂த்₃வேஷ ஸமுத்தே₂ந) அநாதி₃காலமாக இந்த ஜீவர்களுக்கு ப்ராக்ருத விஷயங்களில் ஏற்பட்டிருக்கும் விருப்பு வெறுப்புகளினால் உண்டாகின்றதான. (த்₃வந்த்₃வமோஹேந) இவர்களை மயக்குகின்ற முக்குண விஷயங்களைப்பற்றி நிற்கும் ஶீதம் உஷ்ணம், ஸுக₂ம் து₃:க்க₂ம், லாப₄ம் அலாப₄ம், ஜயம் அபஜயம் முதலான இரட்டைகளாலே. இச்சா₂த்₃வேஷங்களும் த்₃வந்த்₃வங்களில் (இரட்டைகளில்) ஒன்றாயிருக்க, த்₃வந்த்₃வங்களைக் காட்டிலும் அதைத் தனியாக எடுப்பது, அது மற்ற த்₃வந்த்₃வங்களுக்குக் காரணமாயிருக்கையாலேயே என்பதை 'ஸமுத்தே₂ந' என்னும் பத₃ம் காட்டுகிறது. (ஸர்வபூ₄தாநி ஸர்க்கே₃ ஸம்மோஹம் யாந்தி)

भवति — गुणमयेषु सुखदुःखादिद्वन्द्वेषु पूर्वपूर्वजन्मनि यद्विषया-विच्छाद्वेषावभ्यस्तौ ; तद्वासनया पुनरपि जन्मकाल एव तदेव द्वन्द्वाख्यमिच्छाद्वेषविषयत्वेन समुत्थितं भूतानां मोहनं भवति ; तेन

இந்த எல்லா ஜீவர்களும் தாங்கள் பிறக்கும்போதே அந்த ப்ராக்ருத விஷயங்களில் உறுதியான விருப்பு வெறுப்புகள் உள்ளவராகவே அமைகின்றனர்; என்னோடு சேர்ந்தால் இன்பமடைகின்றவர்களாகவும், என்னைப் பிரிந்தால் துன்பமடைபவராகவும் அமைவதில்லை. ஜ்ஞாநியோவெனில் என்னைச் சேர்வதால் இன்பத்தையும், என்னைப் பிரிவதால் துன்பத்தையும் அடைவதையே இயல்வாகக் கொண்டவன். ஆகையால் பிறக்கும்போது அவ்வியல்வையுடையவனாக எவனுமே பிறப்பதில்லை. ஆகையால், பிறந்தபின்பு ஸத₃ாசார்ய கடாக்ஷம் முதலானவற்றாலே ஜ்ஞாநியாகின்றவன் மிகவும் கிடைத்தற்கரியவனே என்று கருத்து. இவ்விஷயத்தை மேலும் விளக்குவதற்காக இந்த ஶ்லோகம் மறுபடியும் விவரிக்கப்படுகிறது. (இச்சா₂த்₃வேஷ) "ஜாநாதி இச்ச₂தி யததே" (அறிகிறான், விரும்புகிறான், முயல்கிறான்) எனப்படும் மூன்றுக்கும் இது உபலக்ஷணம். "ஆத₃ாவீஶ்வரத₃த்தயைவ புருஷ: ஸ்வாதந்த்ர்யஶக்த்யா ஸ்வயம் தத்தத் ஜ்ஞாநசிகீர்ஷண ப்ரயதநாந்யுத்பாத₃யந் வர்த்ததே" [தத்வஸாரம்] [ஸர்வேஶ்வரன் கொடுத்த ஸ்வாதந்த்ர்ய ஶக்தியாலே ஜீவன் ஒவ்வொரு செயல்களைச் செய்யும்போதும் ப்ரத₂மக்ஷணத்திலே தானே ஒவ்வொரு ஜ்ஞாநேச்சா₂ப்ரயத்நங்களைச் செய்கிறான்.] என்கிறபடியே அநாதி₃ காலமாக ஸர்வேஶ்வரன் கொடுத்த ஸ்வாதந்த்ர்ய ஶக்தியைக் கொண்டு ப்ராக்ருத விஷயங்களில் ஜ்ஞாநம், இச்சா₂த்₃வேஷங்கள், அதற்கனுகு₃ணமான ப்ரயத்னம் ஆகியவற்றையே இந்த ஜீவர்கள் வளர்த்துக்கொண்டு வருகிறார்கள். இவர்கள் செய்யும் கர்மமான இதன் ப₂லன் யாதெனில், — (ஸமுத்தே₂ந த்₃வந்த்₃வமோஹேந) அந்தக் கர்மம் புண்யமாயிருந்து ப்ராக்ருதர்களான பஶு, புத்ரன், அந்நம் முதலானவற்றோடு தொடர்பு ஏற்பட்டால் ஸுக₂மும், அது பாபமாயிருந்து எதிரிகள், நெருப்பு, அம்பு முதலானவற்றோடு தொடர்பு ஏற்பட்டால் துன்பமும் ஏற்படுகிறது. அந்தப் புண்யபாப ரூப கர்மங்களாலேயே ஶீதம் உஷ்ணம், லாப₄ம் அலாப₄ம், ஜயம் அபஜயம் முதலான இரட்டைகளும் ஏற்படுகின்றன. இந்த இரட்டைகள் மேன்மேலும் முக்குணமயமான ப்ராக்ருத விஷயங்களிலேயே விருப்பு வெறுப்புகள் உண்டாகும்படி இவர்களை மயக்குகின்றன. இப்படிப் புண்யபாப கர்மங்கள் வளர்ந்து ப்ராக்ருத விஷயங்களிலேயே ஓர் அநாதி₃வாஸனை

मोहेन सर्वभूतानि संमोहं यान्ति; तद्विषयेच्छाद्वेषस्वभावानि भवन्ति, न मत्संश्लेषवियोगसुखदुःखस्वभावानि। ज्ञानी तु मत्संश्लेषवियोगैक-सुखदुःखस्वभावः; न तत्स्वभावं किमपि भूतं जायते—इति ॥ २७॥

ஏற்பட்டுவிடுகிறது. (ஸர்வபூ₄தாநி ஸர்க்கே₃ ஸம்மோஹம் யாந்தி) அந்த அநாதி₃வாஸனையாலே ஜ்ஞாநேச்சா₂ப்ரயத்நங்களைச் செய்ய இயலாத ஜநநகாலத்திலேயே இவர்களுக்கு ப்ராக்ருத விஷயங்களிலேயே விருப்பு வெறுப்புகள் உறுதியான இயல்வாக ஏற்பட்டுவிடுகின்றன. இதனுல் என்னேடு சேர்ந்தால் இன்புறுவதும், என்னைப் பிரிந்தால் துன்புறுவதுமான ஜ்ஞாநியின் இயல்வு ஜநநகாலத்தில் எவர்க்குமே இல்லாமல் போகிறது. பிறந்தபின்பு புண்ணியமிகுதியால் ஏற்படும் ஸதா₃சார்ய கடாக்ஷம் முதலானவற்ருலே இவர்களில் சிலரே மஹாத்மாவான ஜ்ஞாநிகளாகிருர்கள் என்று கருத்து. (த்₃வந்த்₃வமோஹேந ஸம்மோஹம் யாந்தி) மோஹத்தாலே மோஹத்தை அடைகிருர்கள் என்று ஆத்மாஶ்ரய தோ₃ஷம் ஏற்படாமைக்காக, மோஹநமான (மயக்குவதான) த்₃வந்த்₃வத்தாலே உறுதியான மோஹத்தை அடைகிருர்கள் என்று கொள்ளப்பட்டது. (ஸர்க்கே₃) இப்படி அநாதி₃காலமாக வளர்ந்து வரும் புண்யபாபகர்மங்களில், ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄முள்ளவர்களுக்குப் பாபமே பள்ளமடையாகையாலே, ப₃த்₃த₄ ஜீவர்களில் பெரும்பாலானவர்கள் பாபமிகுதியாலே — முன் கூறப்பட்ட "அபு₃த்₃த₄ய:" எனப்பட்ட பெரும்பாவிகளான அறிவுகெட்டவர்களாகவும், அவர்களில் சற்று மேலான பாவிகளான அல்பமேத₄ஸ்ஸுக்களான புல்லறிவாளர்களாகவுமே ஜநநகாலத்தில் பிறக்கின்றனர் என்று கருத்து. பிறந்தபிறகு மஹாத்மாவான ஜ்ஞாநிகளாகின்றவர்களும் பிறக்கும்போது என்னை உள்ளபடி அறியாதவர்களாகவே இருக்கிருர்களாகையாலே 'என்னை முக்காலத்திலுள்ள எவனுமே எப்போதும் உள்ளபடி அறிவதில்லை' என்று சென்ற ஶ்லோகத்தில் சொன்னது சரியானதே என்றும் கருத்து. இப்படி பிறக்கும்போது மஹாத்மாவாக ஒரதி₄காரியுமில்லை என்னும் துர்ப்பி₄க்ஷம் ஏற்படக் கூடாது என்று திருவுள்ளம்பற்றியே தன் நிரங்குஶ ஸ்வாதந்த்ர்யத்தாலே ஸர்வேஶ்வரன் "பொலிக பொலிக பொலிக" என்னும்படி நாட்டை விஶேஷமாகத் திருத்துவதற்காக நம்மாழ்வாருக்கு க₃ர்ப்ப₄த்திலிருக்கும்போதே நிர்ஹேதுகமாக மயர்வற மதிநலமருளி, ஜநநகாலத்திலேயே அவரை, ஞானத்தை மறைக்கும் ஶட₂வாயுவைக் கோபிக்கும் ஶட₂கோபராக்கி, எப்போதுமே உண்ணும் சோறு பருகு நீர் தின்னும்

येषां त्वन्तगतं पापं जनानां पुण्यकर्मणाम्।
ते द्वन्द्वमोहनिर्मुक्ता भजन्ते मां दृढव्रताः॥ २८॥

28. யேஷாம் த்வந்தக₃தம் பாபம் ஜநாநாம் புண்யகர்மணும்।
தே த்₃வந்த்₃வமோஹ நிர்முக்தா: ப₄ஜந்தே மாம்
த்₃ருட₄வ்ரதா: ||

**புண்யகர்மணும் யேஷாம் து ஜநாநாம்** — புண்ணியச் செயல்களை மிகுதியாகச் செய்த எந்த ஜீவர்களுக்கு, **பாபம் அந்த க₃தம்** — (முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட) பாபம் முடிவை நெருங்குகின்றதோ, **தே**—அவர்கள், **த்₃வந்த்₃வ மோஹ நிர்முக்தா:** — ( அவர்களது புண்ணியத்திற்கேற்ப ) மயக்கும் இரட்டைப் பயன்களிலிருந்து சிறிது சிறிதாக விடுபட்டவர்களாய், **த்₃ருட₄வ்ரதா:**-(புண்ணியத்தின் மிகுதிக் கேற்ப ஐஶ்வர்யம், கைவல்யம், ப₄க₃வத் ப்ராப்தி ஆகிய வற்றைப் பெறவேண்டுமென்று) உறுதியான ஸங்கல்ப முடையவர்களாய், **மாம் ப₄ஜந்தே** — ( அப்பலன்களைப் பெறுவதற்காக ) என்னைக் குறித்து ப₄க்தி செய்கிறுர்கள்.

---

வெற்றியையும் எல்லாம் கண்ணன் என்னும் ஞானியாக்கி வைத்திருந் தான் என்பது உணரத்தக்கது. "மாம் து வேத₃ ந கஶ்சந" என்னும் பொதுவிதி₄க்கு நம்மாழ்வார் ஒரு விதி₄விலக்கு என்று அறியத் தக்கது. (ப₄ாரத) ப₄ரத குலத்துதித்தவனை நீ, நான் இதுவரை யில் விளக்கிய கிடைத்தற்கரிய ஞானியாக வேண்டாவோ? என்று கருத்து. ( பரந்தப ) வெளி எதிரிகளை அடக்கி. அவர்களால் கலங்காமலிருக்கும் நீ. உனது உள் எதிரிகளான இச்சா₂த்₃வேஷங் களையும், த்₃வந்த்₃வமோஹங்களையும் அடக்கி, அவைகளால் கலங் காமலிருக்க வேண்டாவோ என்று கருத்து. ஆக, இந்த ஶ்லோகத் தால், ஈஶ்வரன் ப்ரத₂ம ப்ரவ்ருத்தியில் கொடுக்கும் ஸ்வாதந்த்ர்ய ஶக்தியைக் கொண்டு, ஜீவர்கள் அனைவரும் புண்யபாப கர்மங்களைச் செய்து, அதன் ப₂லமான இரட்டைகளில் உழல்வதாலேயே பிறக்கும்போதே ஜ்ஞாநியாகப் பிறக்கமுடிவதில்லை என்று காட்டின யிற்று. ஆக, இதுவரையில் ஞானியின் அருமை விளக்கப் பட்டதாயிற்று. 27.

॥ भा ॥ येषां तु अनेकजन्मार्जितेनोत्कृष्टपुण्यसंचयेन गुणमयद्वन्द्वेच्छा-द्वेषहेतुभूतं मदोन्मुख्यविरोधि चानादिकालप्रवृत्तं पापमन्तगतम्-क्षीणम् ;

28\. புண்ணியஞ் செய்புருடர் யார்க்கும் புணர்பாவ
நண்ணியிருந் தான்முடிவை நன்றாகத்—திண்ணியராய்
நின்றவர்க ளவ்விருமை நீங்கும்பே றென்னையே
யொன்ற வுகந்தடைவ ருற்று.

**புண்ணியம் செய் புருடர் யார்க்கும்**—புண்ணியச் செயல்களை மிகுதியாகச் செய்த எந்த ஜீவர்களுக்கும், **புணர்பாவம் முடிவை நன்றாக நண்ணியிருந்தால்** — அவர்கள் செய்த பாவங்கள் அழிவை மேன்மேலே நெருங்கியிருந்தால், **அவ்விருமை நீங்கும் பேறு நின்றவர்கள்** — (அவர்களது புண்ணியத்திற்கேற்ப) அந்த இரட்டைப் பயன்கள் சிறிது சிறிதாக நீங்கப்பெற்றவர்கள், **திண்ணியராய்**—(புண்ணியத்தின் மிகுதிக்கேற்ப ஐஶ்வர்யம், கைவல்யம், ப₄க₃வத்ப்ராப்தி ஆகியவற்றைப் பெறவேண்டுமென்று) உறுதியான ஸங்கல்பமுடையவர்களாய், **என்னையே உற்று** — என்னையே அப்ப₂லன்களுக்குப் ப₂லப்ரத₃ஸாத₄னமாகக் கொண்டு, **ஒன்ற உகந்து அடைவர்**—ஒருமனப்பட்ட ப₄க்தியை (அவற்றுக்குப் ப₂லகரண ஸாத₄னமாக) அநுஷ்டி₂ப்பர்.

28\. அநாதி₃காலமாகச் செய்துவரும் பாபகர்மங்களாலும், அதனால் ஏற்படும் பாபவாஸனையாலும், பிறக்குங்காலத்தில் பெரும்பாலான ஜீவர்கள் என்னை அறியாமலிருக்கிறார்கள் என்று சென்ற ஶ்லோகத்தில் உணர்த்தினேன். அப்படியானால் "சதுர்வித₄ா ப₄ஜந்தே மாம்" என்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட ப₄க₃வது₃பாஸநம் எப்படி உண்டாகமுடியும் என்னும் கேள்வியெழ, அதற்கு பதிலுரைக்கிறது இந்த ஶ்லோகம். (யேஷாம் புண்யகர்மணாம் ஜநாநாம் பாபம் அந்தக₃தம்) மநுஷ்யர்களில் பெரும்பாலானவர்கள் பாபிகளாயிருந்தபோதிலும், "ஸஹஸ்ரேஷு கஶ்சித்" என்று கூறப்பட்ட ஆயிரக்கணக்கான எவர்க்கு, அநேக ஜன்மங்களில் ஸம்பாதி₃க்கப்பட்ட உயர்ந்த புண்ணியங்களாலே,—மேலும் மேலும் முக்குணமயமான பொருள்கள் விஷயமான இன்பதுன்பங்கள் முதலான இரட்டைகளில் இச்ச₂ாத்₃வேஷங்களை வளர்ப்பதாய், என்னிடம் ஈடுபாட்டுக்குத் தடையாயிருப்பதாய், அநாதி₃காலமாகத் தொடர்ந்து வருவதாக முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட பாபமானது அழிவைச் சிறிது சிறிதாக நெருங்கிக்கொண்டிருக்கிறதோ.

ते पूर्वोक्तेन सुकृततारतम्येन मां शरणमनुप्रपद्य गुणमयान्मोहाद्विनिर्मुक्ताः

(யேஷாம் து)சென்ற ஶ்லோகத்தில் சேதனர்கள் அனைவரையும் பற்றிய பொதுவிதி₄ சொல்லப்பட்டது என்றும், இந்த ஶ்லோகத்தில் அதற்கு ஓர் விதி₄விலக்கு சொல்லப்படுகிறது என்றும் துஶப்₃த₃ம் காட்டுகிறது. (புண்யகர்மணாம் ஜநாநாம் பாபம் அந்தக₃தம்) "த₄ர்மேண பாபம் அபநுத₃தி" [தை-நா 50] [புண்ணியத்தினாலே பாபத்தைப் போக்கு கிறான்] என்று சொல்லப்பட்டபடி பலகோடி ஜன்மங்களில் செய்யப் பட்ட புண்ணியத்தாலே பாபமானது முடிவை எவர்க்கு நெருங்கிக் கொண்டிருக்கிறதோ. (ஜநாநாம்) ஜந்மமுடையவர்களுக்கு. இப் படிப் பாபம் முடிவடைவதற்கு அநேக புண்ய ஜந்மங்கள் ஏற் பட்டிருக்கவேண்டும் என்று உணர்த்தப்படுகிறது. (அந்தக₃தம்) "அந்தம் க₃தம்" [பாபம் அழிந்துவிட்டது] என்னும் நிலை முக்தர் களுக்கே ஏற்படுமாகையால், "அந்தம் ப்ரதி க₃தம்" [முடிவைக் குறித்து நெருங்கிவிட்டதோ] என்று கொண்டு, "க்ஷீணம்" என்று பா₄ஷ்யமிடப்பட்டது. எவர்களுடைய பாபம் முடிவை நெருங்கிக் கொண்டிருக்கிறதோ என்றபடி. (தே த்₃வந்த்₃வமோஹ நிர்முக்தா:) அவர்கள் தங்கள் தங்கள் புண்ணியத்தின் ஏற்றத்தாழ்வுக்கு அநு கு₃ணமாக முற்கூறிய மயக்கும் த்₃வந்த்₃வங்களிலிருந்து ஒவ்வோரள வுக்கு விடுபட்டவர்களாய். இதில் முதற்படியில் நிற்பவர்கள்—முக் குணமயமான அல்பமான ப்ராக்ருத விஷயங்களைப் பற்றி நிற்கும் இன்பம் துன்பம் முதலியவற்றிலிருந்து விடுபட்டு, ப்₃ரஹ்மாவின் பத₃வி, உருத்திரனின் பத₃வி, இந்திரனின் பத₃வி முதலான பெரிய ப்ராக்ருத ஐஶ்வர்யங்களைப்பெற விரும்பி நிற்பவர்கள். அதற்கு மேல் படியில் நிற்பவர்கள்—ப்ராக்ருதமான எல்லா விஷயங்களைப் பற்றி நிற்கும் இன்பம் துன்பம் முதலியவற்றிலிருந்தும் விடுபட்டு, ப்ரக்ருதியினின்றும் நீங்கிய தம் ஆத்மாவைத் தாம் பெற்று அநுப₄விப்பதாகிற கைவல்ய மோக்ஷாநந்த₃த்தைப் பெற விரும்பி நிற்பவர்கள். அதற்கும் மேற்படியில் நிற்பவர்கள் — மோக்ஷத்தில் என்னைப்பெற்று அநுப₄விக்கும் ஒப்பற்ற ப்₃ரஹ்மாநந்த₃த்தைப் பெற விரும்பி நிற்பவர்கள். (ப₄ஜந்தே மாம் த்₃ருட₄வ்ரதா:) தம் தம் விருப்பத்தைப் பெறுவதற்காக உறுதியான ஸங்கல்பமுடையவர் களாய், என்னைப் * ப₂லப்ரத₃ஸாத₄னமாகக் கொண்டு, என் விஷயமான ஶரணாக₃தியை அங்க₃மாகக் கொண்ட ப₄க்தியைப் * ப₂லகரணஸாத₄ந மாக அநுஷ்டி₂க்கிறார்கள். புண்யத்தால் பெரும்பான்மையான பாபங்

* ப₂லப்ரத₃ன்—ப₂லனை அளிப்பவன். ப₂லகரணம்—ப₂லப்ரத₃ன் ப₂லனை அளிக்கத் தனிக்காரணம்.

जरामरणमोक्षाय, महते चैश्वर्याय, मत्प्राप्तये च दृढव्रताः—दृढसङ्कल्पाः मामेव भजन्ते ॥ २८ ॥

---

களிலிருந்து விடுபட்டு, என்னை ஶரணமடைந்ததினால் ப்ராக்ருதங்களான த்₃வந்த்₃வங்களிலிருந்து பெரும்பாலும் விடுபட்டவர்கள் — மிகுந்த புண்யமும், சிறிது பாபமும் எஞ்சியிருக்கையாலே, மிகப்பெரிய ப்₃ரஹ்மாதி₃களின் ஐஶ்வர்யத்தில் ஆசைகொண்டு அதைப்பெற என்னிடம் வருகிறார்கள் : அவ்வாசையையே பற்றாசாகக்கொண்டு அவர்களுக்கு ப்ராக்ருதப்பற்று நீங்கச் செய்வதற்காக, என் விஷயமான ஶரணாக₃தியை அங்க₃மாகக்கொண்ட ப₄க்தியை அங்க₃மாகக்கொண்ட ஜ்ஞாநஸஹிதகர்மயோக₃த்தை நான் அவர்களுக்குப் ப₂லகரண ஸாத₄னமாக விதி₄க்கிறேன். அவர்களும்அதையே உறுதியான ஸங்கல்பத்துடன் அனுஷ்டி₂க்கிறார்கள். முன்கூறியவர்களுடையதைக் காட்டிலும் மிகுந்த புண்யத்தாலே ப்ராக்ருதத்₃வந்த்₃வங்களுக்குக்காரணமான எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுபட்டபோதிலும், என்னையே பரம ப்ராப்யமென்று அறியாமைக்கு உடலான ஓர் ப்ரப₃லபாபம் எஞ்சியிருக்கப்பெற்றவர்கள், தம் ஆத்மாநுப₄வமாகிற கைவல்யாநுப₄வத்திலே ஆசைகொண்டு அதைப்பெற என்னிடம் வருகிறார்கள். அவ்வாசையையே பற்றாசாகக்கொண்டு அவர்களுக்குத் தம் ஆத்மாவில் பரம ப்ராப்யத்வபு₃த்₃தி₄ நீங்கச்செய்வதற்காக என் விஷயமான ஶரணாக₃தியை அங்க₃மாகக் கொண்ட ப₄க்தியை அங்க₃மாகக்கொண்ட கர்மஸஹித ஜ்ஞாநயோக₃த்தை நான் அவர்களுக்குப் ப₂லகரண ஸாத₄னமாக விதி₄க்கிறேன். அவர்களும் அதையே உறுதியான ஸங்கல்பத்துடன் அநுஷ்டி₂க்கிறார்கள். முற்கூறியவர்களுடையதைக் காட்டிலும் மிகுந்த புண்யத்தால், என்னையே ப்ரமப்ராப்யமென்று அறியாமைக்கு உடலான எல்லாப்பாபங்களும் நீங்கப்பெற்றவர்கள்— மோக்ஷத்திலும் என் ஆநந்த₃த்தையே உத்₃தே₃ஶ்யமாகவும், மோக்ஷத்திற்கு என்னையே ப₂லகரணஸாத₄னமாகவும் அறியாமைக்கு உடலான ஓர் பாபம் எஞ்சிநிற்கையாலே மோக்ஷத்தில் தாம் ஆநந்த₃மடைய ஆசைகொண்டு, அதைப்பெற என்னிடம் வருகிறார்கள். அவ்வாசையையே பற்றாசாகக்கொண்டு, அவர்களுக்குத் தம் ஆநந்த₃த்தில் ப்ராப்யத்வபு₃த்₃தி₄யும், அதற்கான தமது முயற்சியில் ப₂லகரணத்வ பு₃த்₃தி₄யும் நீங்கச்செய்வதற்காக, கர்மஜ்ஞாநயோக₃ங்களையும், என் விஷயமான ஶரணாக₃தியையும் அங்க₃மாகக்கொண்ட ப₄க்தியோக₃த்தைப் ப₂லகரண ஸாத₄னமாக விதி₄க்கிறேன். இவ்வண்ணமாக அங்க₃மாகவோ, அங்கி₃யாகவோ ப₄க்திசெய்யும்படி

விதிக்கப்பெற்ற அவர்களும், தத்தம் ப்ராப்யத்தைப் பெறுவதாகிற ஒரே குறிக்கோளை உடையவர்களாய், முற்கூறியபடி என் விஷய மான பக்தியைப் பலகரண ஸாதனமாக அநுஷ்டிக்கிருர்கள் என்று கருத்து. (த்ருடவ்ரதா:) அவ்வவர்களுடைய ப்ரதிபத்தியை (எண்ணத் தைச்) சீர்திருத்தவேண்டும் என்னும் நினைவாலே நான் விதித் திருக்கும் ஸாதனத்தை, என் கருத்தை அறியாமலே, தம் விருப்பம் நிறைவேறவேண்டும் என்னும் ஒரே குறிக்கோளோடு அநுஷ்டிக் கிருர்கள் என்று கருத்து. (பஜந்தே) என்னும் ஆத்மநே பதத்தாலே இவர்களுடைய ஸ்வார்த்ததை தோற்றுகிறது.

சென்ற ஶ்லோகத்திலும், இந்த ஶ்லோகத்திலும் புண்ய பாப லக்ஷணம் கீதாசார்யனுலே உணர்த்தப்படுகிறது என்பது இங்கு குறிக் கொள்ளத்தக்கது. எப்படியெனில்:— ''யேஷாம் து'' என்னுமிடத்தில் துகாரத்தாலே, சென்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட உத்ஸர்க்கத் திற்கு (பொதுவிதிக்கு), இந்த ஶ்லோகத்தில் அபவாதத்தை (விதி விலக்கை) உணர்த்துகிருன் என்று விளங்குகிறது. இப்படியிருக்கும் போது, அந்த ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட எல்லா அம்ஶங்களும் இந்த ஶ்லோகத்திலும் வரவேண்டுமென்பது வெளிப்படை. இவ்விரு ஶ்லோகங் களை ஆராய்ந்தால், இரு ஶ்லோகங்களிலும் த்வந்த்வ மோஹம் வந்தபோதிலும், சென்ற ஶ்லோகத்தில் த்வந்த்வமோஹத்திற்குக் காரணமாகச் சொல்லப்பட்ட இச்சாத்வேஷங்கள் இங்கு இல்லாம லிருப்பதையும். அதற்கு பதிலாக த்வந்த்வமோஹங்கள் நீங்குவதோடு தொடர்புகொண்ட புண்ய பாபங்களைப்பற்றிய ப்ரஸ்தாவம் புதிதாக வந்திருப்பதையும் காண்கிறோம். இதிலிருந்து—அங்கு த்வந்த்வ மோஹத்திற்குக் காரணமாகச் சொல்லப்பட்ட இச்சாத்வேஷங்களின் இரு பகுதிகளே, இங்கு புண்யமென்றும், பாபமென்றும் சொல்லப் படுகிறதென்றும், அதில், படிப்படியாகப் புண்ணியப் பகுதி மிகுந்து, பாபப்பகுதி குறையப்பெற்றவர்களுக்கு, புண்யபாப ரூபமான இச்சா த்வேஷகார்யமான த்வந்த்வமோஹம் படிப்படியாகக் குறைகிறது என்றும் எம்பெருமான் கருதுகிருன் என்று தெளிவாக விளங்கு கிறது. ஒவ்வொரு செயலைத் தொடங்கும்போதும் ''ஜாநாதி, இச்சதி அதவா த்வேஷ்டி, யததே'' [அறிகிருன், விரும்புகிருன் அல்லது வெறுக்கிருன், (அதற்கு அனுகுணமாக) முயல்கிருன்.] என்னும் க்ரமத்திலேயே ஜீவன் முதன்முதலில் செயல்படுகிருன் என்பது அனுபவஸித்தம். ஆகையால், முன் ஶ்லோகத்தில் சொல் லப்பட்ட இச்சாத்வேஷங்கள், இவற்றுக்கு முன்வரும் ஜ்ஞாநத் திற்கும், பின்வரும் ப்ரயத்னத்திற்கும் உபலக்ஷணமென்றும் விளங்கு

கிறது. தனக்கு வைஷம்யநைர்க்ருண்யங்கள் வாராமைக்காகவும், ஶாஸ்த்ரங்களிலுள்ள விதிநிஷேதங்கள் வீணாகாமைக்காகவும் எம்பெருமான் "ஜ்ஞாந இச்சாத்வேஷ ப்ரயத்ந" ரூபமான இந்த ப்ரதமப்ரவ்ருத்தியில் ஜீவனுக்கு ஓர் ஸ்வாதந்த்ர்யம் அளித்து விடுகிறான் என்பது—"க்ருதப்ரயத்நாபேக்ஷஸ்து விஹிதப்ரதிஷித்தாவையர்த்யாதிப்ய:" [ப்ரஹ்ம ஸூத்ரம் 2-3-41] [எம்பெருமான்—விதிநிஷேதங்கள் வீணாகாமை முதலான தோஷங்கள் வாராமைக்காக— ஜீவன் செய்யும் முதல் ப்ரவ்ருத்தியை எதிர்பார்த்தே ஜீவனை மேலே செயல்புரியும்படி தூண்டுகிறான்] "வைஷம்ய நைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்" [ப்ரஹ்மஸூத்ரம் 2-1-34] [(விஷம ஸ்ருஷ்டியினாலே பரம்பொருளுக்கு) பக்ஷபாதமும், கருணையின்மையும் ஏற்படமாட்டா; (ஜீவன் செய்யும் கர்மங்களை) எதிர்பார்த்தே (பரம்பொருள் விஷமஸ்ருஷ்டியைச்) செய்வதால்.] என்று ப்ரஹ்ம ஸூத்ரங்களிலும், "ந ச மாம் தாநி கர்மாணி நிபத்நந்தி தநஞ்ஜய। உதாஸீநவதாஸீநம் அஸக்தம் தேஷு கர்மஸு॥" [கீதை 9-9] [விஷமஸ்ருஷ்டி முதலான செயல்கள் எனக்கு வைஷம்யம் (பக்ஷபாதம்), நைர்க்ருண்யம் (கருணையின்மை) முதலான தோஷங்களை உண்டாக்கமாட்டா; (ஏனெனில்:) (விஷமஸ்ருஷ்டிக்குக் காரணமாக) ஜீவர்கள் செய்யும் கர்மங்களில் ஒட்டற்றவனாய், உதாஸீநநாயிருக்கிறேனாகையால்.] என்று கீதையில் மேலேயும் சொல்லப்பட்டுள்ளது. ஆக, ஈஶ்வரனால் கொடுக்கப்பட்ட ஸ்வாதந்த்ர்ய ஶக்தியால் உண்டாகும் ப்ராக்ருத விஷயமான ஜ்ஞாந, இச்சாத்வேஷ, ப்ரயத்நங்களே ஜீவன் செய்யும் புண்யபாபங்கள் என்றதாயிற்று. இதில் ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட ப்ராக்ருத விஷயங்களில் ஜ்ஞாநத்தை முன்னிட்ட இச்சையும் அதற்கு அநுகுணமான ப்ரயத்னமும், ஶாஸ்த்ரங்களில் நிஷேதிக்கப்பட்ட ப்ராக்ருத விஷயங்களில் ஜ்ஞாநத்தை முன்னிட்ட த்வேஷமும், அதற்கு அநுகுணமான ப்ரயத்நமும் புண்யமென்று சொல்லப்படுகிறது; ஶாஸ்த்ரங்களில் நிஷேதிக்கப்பட்ட ப்ராக்ருத விஷயங்களில் ஜ்ஞாநத்தை முன்னிட்ட இச்சையும், அதற்கு அநுகுணமான ப்ரயத்னமும், ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட ப்ராக்ருத விஷயங்களில் ஜ்ஞாநத்தை முன்னிட்ட த்வேஷமும் அதற்கு அநுகுணமான ப்ரயத்நமும் பாபம் என்று சொல்லப்படுகிறது. பாஷ்யத்தில் "த்வந்த்வேச்சா த்வேஷ" என்பதற்கு "குணமய" என்று விஶேஷணமிட்டிருப்பதினால், ப்ராக்ருத விஷயமான ப்ரதமப்ரவ்ருத்திகளே முற்கூறியபடி அநாதிகாலமாக ஜீவனால் குவித்து வைக்கப்பட்டிருக்கின்றன, அவையே புண்யபாபங்கள் எனப்படுகின்றன என்று உணர்த்தப்படுகிறது; ப்ராக்ருதமல்லாத கேவலாத்ம

விஷயமாகவோ, பரமாத்ம விஷயமாகவோ ஏற்படும் ஜ்ஞாநத்தை முன்னிட்ட இச்சா₂த்₃வேஷங்களும், அவற்றுக்கு அநுகு₃ணமான ப்ரவ்ருத்திகளும் புண்யபாப ஶப்₃த₃வாச்யமாகமாட்டா என்பதும், அவை மோக்ஷஸாத₄னம் என்றே வழங்கப்படுபவை என்றும் விளங்கு கிறது. இனி, ''புண்யாபுண்யாவீஶ்வரப்ரீதிகோபௌ'' ''யத் த்வத்-ப்ரியம் ததி₃ஹ புண்யமபுண்யமந்யத்'' என்று ஈஶ்வரனுடைய ப்ரீதியே புண்யமாகவும், ஈஶ்வரனுடைய கோபமே பாபமாகவும் வழங்கப் படுவதுமுண்டு. ஜீவனுடைய புண்யபாப கர்மங்கள் க்ஷணத்₄வம்ஸி களாய், அவற்றால் விளைந்த எம்பெருமானுடைய ப்ரீதிகோபங்களே இவனுடைய புண்யபாபகர்மங்களுக்குப் ப₂லனளிக்கின்றன என்பதை யிட்டு அவ்வழக்கு ஏற்பட்டுள்ளது. ஆக, ஜீவனுடைய ப்ராக்ருத விஷயமான புண்யகர்மத்தினால் எம்பெருமானுக்கு விளைந்த ப்ரீதி புண்யமென்றும், அவனுடைய ப்ராக்ருத விஷயமான பாபகர்மத்தி னால் எம்பெருமானுக்கு விளைந்த கோபம் பாபமென்றும் வழங்கப்படு கிறது என்றதாயிற்று. எம்பெருமானுடைய இந்த ப்ரீதிகோபங்கள்— ஜீவனுடைய மோக்ஷஸாத₄நாநுஷ்டா₂னத்தாலுண்டான அநுக்₃ரஹத் தாலோ, ஸ்வார்த்த₂மான ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியாகிய ஶரணாக₃தி ரூபமான அதி₄காரி விஶேஷணத்தால் வெளிப்பட்ட நிர்ஹேதுக க்ருபையாலோ அழிந்து விடுகின்றன. அந்தந்த அதி₄காரிகள் விரும்பும் அந்தந்த மோக்ஷத்தைக் கொடுக்கைக்கு உறுப்பான அநுக்₃ரஹம் அழியாமல் யாவதா₃த்மபா₄வி நிலைத்து நிற்கிறது. ஆகையால், இது புண்ய ஶப்₃த₃வாச்யமாகாது. ஆக, கர்மஸஹித ஜ்ஞாநயோகத்தாலே ஆத்மாவைக் கண்டு, ப₄க்தியோக₃த்தைப் ப₂லகரண ஸாத₄நமாகக் கொண்டு எம்பெருமானிடம் அந்திமஸ்ம்ருதிபர்யந்தம் தன் ஆத்மா வையே அநுப₄விக்கவேணும் என்று வேண்டுகிறவனுக்கு, முற்கூறிய ப்ராக்ருத விஷயமான புண்யபாபகர்மங்களும், அதனால் விளைந்த ப்ரீதிகோபங்களும் அழிந்த பின்பும், அவனுடைய நிலைநின்ற ப்ரதி பத்திக்கு அநுகு₃ணமாக ஸ்வாத்மப்ராப்தி ரூபமான தாழ்ந்ததான கைவல்ய மோக்ஷம் ஏற்படுகிறது; இது அவனுடைய மோக்ஷஸாத₄ நாநுகு₃ணமாக எம்பெருமானுக்கு விளைந்த அநுக்₃ரஹகார்யமே யொழிய, புண்யபாபங்களால் விளைந்த ப்ரீதிகோபகார்யமல்ல. கர்ம ஜ்ஞாநாங்கி₃கையான ப₄க்தியாலே எம்பெருமானைக் கண்டு, அந்த ப₄க்தியையே ப₂லகரணஸாத₄னமாகக் கொண்டு, அந்திமஸ்ம்ருதி பர்யந்தம் மோக்ஷத்தில் தான் ஆநந்த₃மடைய வேண்டுகிறவனுக்கு, முற்கூறிய ப்ராக்ருதவிஷயமான புண்யபாபகர்மங்களும், அதனால் விளைந்த ப்ரீதிகோபங்களும் அழியப்பெற்று, அவனுடைய நிலை நின்ற ப்ரதிபத்திக்கு அநுகு₃ணமாக ஸ்வார்த்த₂மான ப்₃ரஹ்மாநு

॥भा॥ अत्र त्रयाणां भगवन्तं भजमानानां ज्ञातव्यविशेषान् उपादेयांश्च प्रस्तौति—

जरामरणमोक्षाय मामाश्रित्य यतन्ति ये।
ते ब्रह्म तद्विदुः कृत्स्नमध्यात्मं कर्म चाखिलम् ॥ २९ ॥

---

ப₄வரூபமான மோக்ஷம் ஏற்படுகிறது; இதுவும், அவனுடைய மோக்ஷஸாத₄நாநுகு₃ணமாக எம்பெருமானுக்கு விளைந்த அநுக்₃ரஹ கார்யமேயொழிய, புண்யபாபங்களால் விளைந்த ப்ரீதிகோப கார்ய மல்ல. அநாதி₃காலமாக எம்பெருமான் செய்துவரும் க்ருஷிகள் பரிபூர்ணமாகப் ப₂லிக்கப்பெற்று, எவனுக்கு ஒரு ஜந்மத்தில் பரார்த்த₂ப்ரதிபத்தி ஏற்பட்டு, வாஸுதே₃வனே பரமப்ராப்யமாகவும், ப₂லப்ரத₃ஸாத₄னமாகவுமிருப்பதோடன்றியில், ப₂லகரண ஸாத₄நமாகவுமிருக்கிறான் என்னும் ஜ்ஞாநம் விளைந்து, ப₄க₃வத்ப்ரவ்ருத்தி விரோதி₄யான ஸ்வப்ரவ்ருத்திநிவ்ருத்திரூபமான ஶரணாக₃தி விளைகிறதோ, ப்ரபந்நர்களில் தலைசிறந்தவனான அவனுக்கு, அந்த ஜந்மத்திலேயே அந்திம ஸ்ம்ருதியையும் எதிர்பாராமல், எம்பெருமான் அவனது ப்ரதிபத்திக்கேற்ப பரார்த்த₂மோக்ஷத்தை அருள்கின்றான். இது ஜீவனுடைய ஸ்வப்ரவ்ருத்தி ரூபமான ப்ரதிப₃ந்த₄கம் (தடை) நீங்கியதால் வெளிப்பட்ட ஸ்வாபா₄விக ப₄க₃வந் நிர்ஹேதுக க்ருபாகார்யமாகையாலே, இதுவும் புண்யபாபங்களால் விளைந்த ப்ரீதிகோப கார்யமல்ல என்பது வெளிப்படை. ஆக, எல்லாக் கர்மங்களும் கழிந்தபின்பும், ஸுக்ருத தாரதம்யத்தினால் விளைந்த ப்ரதிபத்திகளின் தாரதம்யத்தினால் மோக்ஷத்திலும் தாரதம்யத்தை ஒப்புக்கொண்டே தீரவேண்டும் என விளங்குகிறது. பரமகாருணிகனான எம்பெருமான், கைவல்ய நிஷ்டன் முதலானோர்க்குத் தாழ்ந்த ப்ரதிபத்திகளை மாற்றி உயர்ந்த ப்ரதிபத்திகளை விளைக்க வேண்டாவோ? எனில்: அப்படி ப்ரதிபத்தியை உயர்த்துவதற்குத் தான், அவரவர்களது ப்ரதிபத்தியை உயர்த்தக்கூடிய ஸாத₄நாநுஷ்டானங்களைப் பல ஜந்மங்கள் அநுஷ்டி₂க்கும்படியும், ஆத்ம பரமாத்ம ஸ்வரூபங்களை அநுஸந்தி₄க்கும்படியும் விதி₄த்திருக்கிறான் எம்பெருமான். இப்படி அநுஷ்டி₂த்து, அநுஸந்தி₄த்தபின்பும் அந்திம ஸ்ம்ருதி பர்யந்தம் அவர்களது ப்ரதிபத்தி மாறாவிடில், அவரவர் விரும்பிய மோக்ஷத்தை அளிக்கிறான். ப₃லாத்காரமாக அவர்களது ப்ரதிபத்தியை மாற்றவல்லவனாயினும், அப்படி மாற்றுவது அச்சேதனனுக்கு அநிஷ்டமாகையாலும், அப்படி மாற்றினால் முற்கூறியபடி எம்பெருமானுக்கு வைஷம்யம் நைர்க்₄ருண்யம் முதலான தோ₃ஷங்கள் வருமாகையாலும் அப்படி மாற்றுவதில்லை என்று கண்டுகொள்வது. 28.

29. ஜராமரணமோக்ஷாய மாமாஶ்ரித்ய யதந்தி யே ।
தே ப்3ரஹ்ம தத்3விது3: க்ருத்ஸ்நமத்4யாத்மம்
கர்ம சாகி2லம் ॥

ஜராமரணமோக்ஷாய — கிழத்தனம், மரணம் முதலான ஆறு ஊர்மிகளும் அடியோடி கழிந்து ப்ரக்ருதிஸம்ப3ந்த4 மற்ற ஆத்மாநுப4வரூபமோக்ஷம் கிடைப்பதற்காக, **மாம் ஆஶ்ரித்ய** — என்னை அடைந்து, **யே யதந்தி** — எவர்கள் யத்னம் பண்ணுகிறுர்களோ, **தே**—அவர்கள், **தத் ப்3ரஹ்ம**— ப்3ரஹ்மமெனப்படுவதையும், **க்ருத்ஸ்நம் அத்4யாத்மம்**— அத்4யாத்மம் எனப்படுவது முழுவதையும், **அகி2லம் கர்ம ச** — கர்மமெனப்படுவது அனைத்தையும், **விது3:** — அறிய வேண்டும்.

---

29. மூப்பிறப்புத் தீர முயன்றென்னை வந்தடைவ
ராப்புறமந் தப்பிரம மாங்கறிவர்—கோப்புடைய
வெவ்வத்தி யாத்துமத்து மெல்லாக் கருமத்துஞ்
செவ்வை தெரிவுறுவர் சேர்ந்து.

**மூப்பு இறப்பு தீர** — கிழத்தனம், மரணம் முதலான ஆறு ஊர்மிகளும் அடியோடு கழிந்து, ப்ரக்ருதி ஸம்ப3ந்த4 மற்ற ஆத்மாநுப4வரூபமான மோக்ஷம் கிடைப்பதற்காக, **முயன்று**—முயற்சி செய்கின்றவர்களாய், **என்னை வந்து அடைவர்** — என்னைப் ப2ல ப்ரத3ஸாத4னமாகப் பற்றுகிற வர்கள், **ஆப்புறம்**—அதன்பிறகு, **அந்தப் பிரமம் ஆங்கு அறிவர்** — ப்3ரஹ்மம் எனப்படும் அப்பொருளை அதன் பொருட்டு அறியவேண்டும்; **கோப்புடைய** — கட்டுக்கோப் புடைய, **எவ்வத்தியாத்துமத்தும்**—அத்4யாத்மம் எனப்படு வது முழுவதைப்பற்றியும், **எல்லா கருமத்தும்**—கர்மம் எனப்படுவது முழுவதைப் பற்றியும், **செவ்வை**— உண்மையை, **சேர்ந்து தெரிவுறுவர்**—(முற்கூறியதோடு) கூடவே அறியவேண்டும்.

॥ भा ॥ जरामरणमोक्षाय — प्रकृतिवियुक्तात्मस्वरूपदर्शनाय मामाश्रित्य ये यतन्ते; ते तद्ब्रह्म विदुः, अध्यात्मं च कृत्स्नं विदुः, कर्म चाखिलं विदुः॥ २९॥

29. இனி, இவ்வத்தியாயத்தின் கடைசியான இரண்டு ஶ்லோகங்களில், ஐஶ்வர்யத்தின் பொருட்டு எம்பெருமானை உபாஸிக்கும் ஐஶ்வர்யார்த்தி₂, கைவல்யமோக்ஷத்தின் பொருட்டு அவனை உபாஸிக்கும் கைவல்யார்த்தி₂, ப₄க₃வானையே பரமப்ராப்யமாகக் கொண்டு அவனை உபாஸிக்கும் ஜ்ஞாநி ஆகிய மூன்று அதி₄காரிகளுக்கும் அறியவேண்டும் அர்த்த₂விஶேஷங்களையும், கைக்கொள்ள வேண்டியவைகளையும் ப்ரஸ்தாபிக்கிறான். அதில் இந்த ஶ்லோகத்தில், கைவல்யார்த்தி₂க்கு அறியவேண்டும் அர்த்த₂விஶேஷங்களும், கைக்கொள்ளவேண்டியவைகளும் ப்ரஸ்தாபிக்கப்படுகின்றன. (ஜராமரணமோக்ஷாய மாம் ஆஶ்ரித்ய யதந்தி யே) ஜரை எனப்படும் கிழத்தனம், மரணம் எனப்படும் இறப்பு ஆகியவைகள் நீங்குவதற்காக என்னைப் ப₂லப்ரத₃ஸாத₄நமாகக்கொண்டு எவர்கள் முயற்சி செய்கிறார்களோ. ஜரை, மரணம் என்னும் இரண்டைச் சொன்னது, தே₃ஹத்துக்கு உள்ள அஶநாயா(பசி), பிபாஸா(த₃ாஹம்), ஶோகம், மோஹம், ஜரை, மரணம் என்னும் ஆறு ஊர்மிகளுக்கும், அபக்ஷயம் (குறைதல்), வ்ருத்₃தி₄ (வளர்தல்), ஜந்மம் (பிறப்பு), விநாஶம் (அழிதல்), பரிணமம் (மாறுபாடடைதல்) அஸ்தி (இவ்விகாரங்களோடேயே இருத்தல்) என்னும் ஷட்₃பா₄வவிகாரங்களுக்கும் உபலக்ஷணம். ஆக, "ஶாந்திம் நிர்வாணபரமாம் மத்ஸம்ஸ்த₂ாம் அதி₄க₃ச்ச₂தி" [6-15] [ஶரீரமோக்ஷத்தின் எல்லையாயிருப்பதாய், என்னிடமுள்ள (ஷடூ₃ர்மி அல்லது ஷட்₃பா₄வவிகார) ஶாந்தியை அடைகிறான்.] என்று கீ₃தையின் ஆறாம் அத்தியாயத்திலே கர்மத்தை அங்க₃மாகக் கொண்ட ஜ்ஞாநயோக₃த்தாலே ப்ரக்ருதியினின்றும் நீங்கிய தன் ஆத்மாவைப்பெற்று அநுப₄விப்பவனாகச் சொல்லப்பட்டவனே இவன் என்று விளங்குகிறது. (மாமாஶ்ரித்ய யதந்தி) ஜ்ஞாநயோக₃த்தாலே ஆத்மாவைக்கண்டு, அதையே நித்யமாக அநுப₄விக்கையாகிற கைவல்யமோக்ஷத்தைப் பெறவிரும்பும் அதி₄காரிக்கு ப₄க₃வது₃பாஸநமாகிற ப₄க்தி ப₂லகரணஸாத₄னமாக இங்கு விதி₄க்கப்படுகிறது. "மநஸ்ஸம்யம்ய மச்சித்தோ யுக்த ஆஸீத மத்பர:" [கீ₃தை 6-14] என்று அந்த ப்ரகரணத்திலும் தன் ஆத்மாவலோகந விரோதி₄பாபம் நீங்குவதற்குறுப்பாக ஶுபா₄ஶ்ரயமான எம்பெருமான்திருமேனியில் நெஞ்சைச் செலுத்திநிற்கவேணும் என்னும் நியமம் காட்டப்பட்டது.

இப்படி எம்பெருமான் விதி4த்திருப்பதற்குக் கருத்து,— இவன் தன் ஆத்மாவைக் காட்டிலும் ப4க3வத்3விக்3ரஹம் பரமபோ4க்3யமானது என்று உணர்ந்து, தன் ஆத்மாநுப4வத்தில் ஆசையைவிட்டு, ப4க3வ தா3நுப4வத்தில் ஆசையையுடையவனாகவேணும் என்பதே. புண்ய ஶாலிகள் சிலர்க்கு எம்பெருமானுடைய இந்த க்ருஷி (முயற்சி) ப2லித்து, அவர்கள் அவனைப் பாவநமாகவும், விரோதி4நிவர்த்தக னாகவும் மாத்திரம் எண்ணிய நிலை தவிர்ந்து, போ4க்3யனாகவும் எண்ணத்தொடங்குகிறார்கள். இப்படி ஜ்ஞாநயோக3ம் அல்லது ஜ்ஞாநஸஹிதகர்மயோக3ம் ஆத்மஸாக்ஷாத்காரத்திற்குக் காரண மாகி, ப்ராசீந புண்யவஶத்தால் அவ்வாத்மாவிடம் போ4க்3யதா பு3த்3தி4 தவிரப்பெற்று பரமாத்மாவிடம் போ4க்3யதாபு3த்3தி4 ஏற்பட் டால், இவ்வாத்மஸாக்ஷாத்காரம், பரமமோக்ஷஸாத4னமான பர ப4க்தியை விளைத்துவிடுகிறது. அப்படியல்லாமல் புண்ணியக்குறை வுள்ள சிலர்க்கு ஆத்மஸாக்ஷாத்காரம் விளைந்தபின்பும் அவ்வாத்மா விலேயே போ4க்3யதாபு3த்3தி4 நிலைத்து விடுகிறது. அவர்களுக்கு எம் பெருமான், கர்மப4க்திகளை அங்க3மாகக்கொண்ட ஜ்ஞாநயோக3த்தை அல்லது ப4க்தியோக3த்தை அங்க3மாகக்கொண்ட ஜ்ஞாநஸஹித கர்மயோக3த்தை ஸாத4நமாக விதி4த்து, ஸாத4நம் நிறைவேறிய வுடன் ஆத்மப்ராப்தியாகிற மோக்ஷத்தை அருளுகிறான் என்பது முதல் ஷட்கத்திலேயே காட்டப்பட்டது. அப்படியிருக்க, இங்கு "சதுர்வித4ா ப4ஜந்தே" [7-16] முதலானவிடங்களில் ப4க்தியே இவனுக்கு ப்ரத4ாந ஸாத4னமாகக் கூறப்படுவது எப்படி? எனில்: "ஆத்மத்3ருஷ்டேஸ்த்ரயோऽப்யேதே யோக3த்3வாரேண ஸாத4கா:" [கீ3தார்த்த2ஸங்க்3ரஹம்-25] [கர்மயோக3ம், ஜ்ஞாநயோக3ம், ப4க்தி யோக3ம் ஆகிய மூன்றுமே அஷ்டாங்க3யோக3த்தின்மூலம் ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்கு ஸாத4னமாகின்றன] என்று ஆளவந்தார் அருளியிருக்கையால், ப4க்தியோக3மும் பரப4க்தியாக முற்றுவதற்கு முன் ஆத்மஸாக்ஷாத்காரத்திற்குக் காரணமாவதுண்டு என்று விளங்கு கிறது. இவ்வதி4காரிக்கு கர்மஜ்ஞாநங்களை அங்க3மாகக்கொண்ட ப4க்தியோக3ம் ஆத்மஸாக்ஷாத்காரத்திற்குக் காரணமாகி, ப்ராசீந புண்யவசத்தால் அவ்வாத்மாவிடம் போ4க்3யதாபு3த்3தி4 தவிரப் பெற்று பரமாத்மாவிடம் போ4க்3யதாபு3த்3தி4 ஏற்பட்டால், இவ் வாத்ம ஸாக்ஷாத்காரம் பரமமோக்ஷஸாத4னமான பரப4க்தியை விளைத்துவிடுகிறது என்றும், இவர்களிலும் புண்ணியக்குறைவுள்ள சிலர்க்கு அவ்வாத்மாவிலேயே போ4க்3யதாபு3த்3தி4 நீடித்தால்,

அவர்களுக்கு அந்தக் கர்மஜ்ஞாநங்களை அங்க₃மாகக்கொண்ட ப₄க்தி யோக₃த்தையே ஸாத₄நமாக விதி₄த்து, அந்த ஸாத₄நம் நிறைவேறிய வுடன் ஆத்மப்ராப்தியாகிற கைவல்யமோக்ஷத்தை அருளுகிறன் எம் பெருமான் என்றும் கீ₃தை ஏழு, எட்டு அத்தியாயங்களில் காட்டப்படு கிறது என்று விளங்குகிறது. இதனுலேயே இவ்விரண்டு ஷட்கங் களிலும் தேறிய அர்த்த₂த்தை திருவுள்ளத்திற்கொண்டு ஆளவந்தார் "ஆத்மார்த்தீ₂ சேத் த்ரயோऽப்யேதே தத்கைவல்யஸ்ய ஸாத₄கா:" [கீ₃தா-ஸங்-27] [ஆத்மாவை அடைய விரும்பினுகில் கர்மயோக₃ம், ஜ்ஞாநயோக₃ம், ப₄க்தியோக₃ம் ஆகிய மூன்றுமே ஆத்மகைவல் யத்தை ஸாதி₄த்துக்கொடுக்கும்.] என்று அருளினர். ஆக, "மாம் ஆச்ரித்ய" என்று கைவல்ய ப்ராய்திக்குத் தான் ப₂லப்ரத₃ஸாத₄ன மென்றும், "யதந்தி" என்றதால்,— "த்ரயாணுமபி யோக₃ாநாம் த்ரிபி₄ரந்யோந்ய ஸங்க₃ம:" [கீ₃தா-ஸங் 24] என்று ஆளவந்தார் அருளியபடியே மற்ற இரண்டு யோக₃ங்களை அங்க₃மாகக்கொண்ட— கர்மயோக₃மோ, அல்லது ஜ்ஞாநயோக₃மோ, அல்லது ப₄க்தி யோக₃மோ இதற்குப் ப₂லகரணஸாத₄னமென்றும் விளங்குகிறது. இப்படி எம்பெருமான் விதி₄ப்பதற்குக் காரணமும், முற்கூறியபடி இவனுக்கு எப்படியாவது தன்னிடம் பே₄ாக்₃யதாபு₃த்₃தி₄யை விளைத்துவிடவேணும் என்னும் அருளே என்றும் விளங்குகிறது. (ஜராமரண மோக்ஷாய) என்று, ஷடூ₃ர்மிகளும், ஷட்₃ப₄ாவவிகாரமும் நீங்கிவிடுவதாகக் காட்டுகையாலே, அவற்றுக்குக் காரணமான ஸூக்ஷ்மஶரீரமும் இம்மோக்ஷத்தில் அடியோடு நீங்கிவிடுகிறது என விளங்குகிறது. இவ்வர்த்த₂த்தை "ஏடு நிலத்தில் இடுவதன் முன்னம்" [திருப்பல் 4] என்று பெரியாழ்வாரும் காட்டினர். (மோக்ஷாய) என்று கூருமல், (ஜராமரண மோக்ஷாய) என்று விஶேஷிக்கையாலே, ஸம்ஸாரத் துன்பங்களுக்குக் காரணமான ஸ்தூ₂லஸூக்ஷ்ம ப்ரக்ருதியின் மோக்ஷமும், அதனுல் தன்னடையே ஏற்படும் ஸ்வாத்மாநுப₄வமும்தான் இவன் பெறும் ப₂லன் என்றும், ப₄க₃வத₃நுப₄வ கைங்கர்யங்களாகிற முக்₂யமோக்ஷம் இவனுக்குக் கிடையாது என்றும் உணர்த்தப்படுகிறது. இக்கைவல்யஸ்த₂ாநத்தி லிருந்துகொண்டே ஸாத₄நாநுஷ்ட₂ாநங்களைச்செய்து இவன் பரம மோக்ஷத்தை அடையலாகாதோ? எனில்: "விரஜா பரமவ்யோம் நோரந்தரா கேவலம் ஸ்ம்ருதம் | தத்ஸ்த₂ாநமநுபே₄ாக்தவ்யம் அவ் யக்தப்₃ரஹ்மஸேவிபி₄: ||" [விரஜைக்கும் பரமபத₃த்திற்கும் இடையே (நித்யவிபூ₄தியிலுள்ள) ஓர் ஸ்த₂ாநமே கேவலனுக்கு இருப்பிடமாகச் சொல்லப்படுகிறது; கைவல்யார்த்தி₂களால் அந்த ஸ்த₂ானத்திலிருந்துகொண்டே கேவலாத்மாநுப₄வம் செய்யப்படு

கிறது.] என்னும் பாத்₃மபுராண வசநத்திலிருந்தும், இதை அடியொற்றி, ஸஹஸ்ரநாமத்தில் "முக்தாநாம் பரமா க₃தி:" என்னுமிடத்திற்கு வ்யாக்₂யானம் செய்யும்போது, "பரமேதி விஶேஷணேந முக்தாநாமேவ கேஷாஞ்சித் அர்வாசீநா க₃திர் க₃ம்யதே। ஸம்ஸார பரமபத₃யோர் மத்₄யே தேஷாம் ஸ்த₂ாநஞ்ச" ['பரமா' என்னும் விஶேஷணத்தினாலே, முக்தர்களிலேயே சிலர்க்குத் தாழ்ந்தக₃தி உள்ளதாக உணர்த்தப்படுகிறது. ஸம்ஸாரத்திற்கும், பரமபத₃த்திற்கும் இடையே அவர்களுக்கு அநுப₄வஸ்த₂ானமும் கூறப்பட்டுள்ளது.] என்று ப₄ட்டர் அருளியிருப்பதிலிருந்தும் இவன் பே₄ாக₃பூ₄மியான நித்யவிபூ₄திக்குச் சென்றுவிடுகிறுன் என விளங்குகையால், ஸாத₄நாநுஷ்ட₂ாநம் செய்ய இடமில்லை. "ஶப்₃த₃ப்₃ரஹ்ம அதிவர்த்ததே" [6-44] என்று இவன் ப்ரக்ருதி மண்ட₂லத்தைத் தாண்டிவிடுகிறுன் என்று கீ₃தையிலும் கூறப்பட்டது. "நிர்வாண பரமாம்" [கீ₃தை 6-15] "ஜராம்ரண மோக்ஷாய" என்கிறபடியே இவன் ஸூக்ஷ்ம ஶரீரமும் அற்றவனுகையால் ஸாத₄நாநுஷ்ட₂ாநம் செய்யவும் முடியாது. "யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாத் ஆத்மத்ருப்தஶ்ச மாநவ:। ஆத்மந்யேவ ச ஸந்துஷ்ட: தஸ்ய கார்யம் ந வித்₃யதே ॥" [கீ₃தை 3-17] என்று கீ₃தையில் சொன்னபடியே தன் ஆத்மாவையே எல்லாமாகக் கொண்ட இவன் ப₄க₃வத்ப்ராப்தியை விரும்பி ஸாத₄நாநுஷ்ட₂ாநம் செய்ய ப்ரஸக்தியுமில்லை. ஆகையால், ஆத்மமாத்ராநுப₄வமாகிற இக்கைவல்யமோக்ஷத்தை அடைந்துவிட்டால், யாவத₃ாத்மபு₄ாவி கைவிடவொண்ணுமல், அது நித்யமாகவே ஆகிவிடுகிறது என விளங்குகிறது. இவ்வநர்த்த₂த்தைக் கண்டே பெரியாழ்வார், இக்கைவல்யார்த்தி₂களைத் திருத்தும் "ஏடு நிலத்தில்" [திருப்பல் 4] என்னும் பாசுரத்தில், "ஏடு நிலத்தில் இடுவதன்முன்னம் வந்து எங்கள் குழாம் புகுந்து கூடும் மனமுடையீர்கள் வரம்பொழி வந்து ஒல்லை கூடுமினே!" என்று "'நம் ஆத்மாவையே அநுப₄விக்க வேணும்' என்னும் வரம்பை ஸூக்ஷ்ம ஶரீரம் கழிவதற்குமுன் விட்டொழித்துவிட்டு விரைவில் வந்துசேருங்கள். உங்களுடைய மனத்திலுள்ள ப்ரதிபத்தியை உடனே மாற்றிக்கொள்ளவேண்டிய வித்தனையே நீங்கள் செய்யவேண்டியது" என்று பதறினர். நம்மாழ்வாரும் "அற்றது பற்றெனில் உற்றது வீடுயிர்" [திருவாய் 1-2-4] என்னும் பாசுரத்தில், முதல் பாதியாலே "விஷயங்களில் பற்று அறுந்துவிட்டால் கைவல்ய மோக்ஷம் உண்டாகிவிடும்" என்று அருளி, பிற்பாதியில் "அது செற்று மன்னுறில் அற்று இறை பற்றே" என்று "அக்கைவல்ய மோக்ஷத்தில் அகப்படாதே, ப₄க₃வச்சே₂ஷதைகரஸமான உன்னுடைய ஸ்வரூபத்தைப் பெற்று நிலைநிற்கவேண்டி

யிருந்தால், முதலிலே விஷயஸங்க₃த்தை விடும்போதே எம்பெரு மானைப் பற்றிவிடுங்கள்'' என்று அருளுவதன்மூலம் கைவல்ய மோக்ஷத்தை அடைந்துவிட்டால் நிலைநின்ற (ஸ்வரூபப்ராப்தமான) புருஷார்த்த₂மான ப₄க₃வத₃நுப₄வகைங்கர்யங்களை அடையமுடியாது என்று காட்டினர். ''குறுகா நீளா இறுதி கூடா எனையூழி சிறுகா பெருகா அளவில் இன்பம்'' [திருவாய் 6-9-10] என்னுமிடத்தில் இக்கைவல்ய மோக்ஷத்திற்கு எவ்வித₄மான அழிவும் கிடையாது என்று மிகத் தெளிவாகக் காட்டினர். இதே கருத்தில்தான் ''ஜரா மரண மோக்ஷாய மாம் ஆஶ்ரித்ய யதந்தி'' என்று ''கற்பகவ்ருக்ஷத் திடம் கௌபீநபி₄க்ஷை கேட்பதுபோலே, என்னை ஆஶ்ரயித்து ஶரீர மோக்ஷமாத்ரத்தைச் சிலர் பெற விரும்புகிருர்களே!'' என்று உள் வெதுப்போடே அருளிச்செய்து, அவர்களையும் திருத்தவேண்டும் என்னும் பரமகருணையாலே ''யதந்தி'' என்று ப₄க₃வச்சே₂ஷத்வாநு ஸந்த₄ாநம் முதலானவற்றையுடைய கர்மஜ்ஞாநப₄க்தியோக₃ங்களில் ஏதாவதொன்றை நிறைவடையும்வரை அநுஷ்டி₂க்கும்படி விதி₄க் கிருன் கண்ணன் இங்கு. ''பல ஜந்மங்களில், தமது ஆத்மா நமக்கு ஶேஷம் என்று அநுஸந்தி₄த்து, நமது திருமேனியைச் சிந்தித்து, த்ரிவித₄பரித்யாக₃ங்களையும் செய்து, அங்க₃ப்ரபத்தியை அநுஷ்டி₂த் தாலாவது தம் ஆத்மாவில் நசைநீங்கப்பெற்றுத் தன்னிடம் பே₄ாக்₃ யதாபு₃த்₃தி₄ உண்டாகாதா'' என்பதே ப₄க₃வானுடைய ப்ரத்யாஶை என விளங்குகிறது. ''யே யதந்தி'' ''விது₃:'' என்று இந்த ஶ்லோ கத்திலும், அடுத்த ஶ்லோகத்திலும் நிகழ்காலப்ரயோக₃மாகவும், அநுவாத₃மாகவும் இருந்தபோதிலும், விதி₄ப்பதிலேயே நோக்கு என்று ஸ்ரீ ப₄ாஷ்யகாரர் அடுத்த ஶ்லோகப₄ாஷ்யத்திலும், ஸ்ரீ தே₃ஶிகன் இந்த ஶ்லோகத்தின் தாத்பர்யசந்த்₃ரிகையிலும் அருளிச்செய்தனர். ''மேன்மேலே புண்ணிய மிகுதியாலே உண் டான ப்ரதிபத்தியின் சிறப்பால், மேன்மேலே சிறந்தவர்கள் ஆகிருர்கள்'' என்று பதினுருவது ஶ்லோகப₄ாஷ்யத்திற் சொன்ன வரிசைக்கிரமப்படி பார்த்தால், ஐஶ்வர்யார்த்தி₂யை முதலில் அழைக்கவேண்டியிருக்க, அநர்த்த₂த்தின் மிகுதியைக் கண்டு திருப்பல்லாண்டில் கைவல்யார்த்தி₂யை முதலில் அழைத்த பெரியாழ்வாரைப்போலே, இவர்களை முதலில் திருத்தவேண்டும் என்னும் பதற்றத்தாலே, ஐஶ்வர்யார்த்தி₂களுக்கு முன் இவர்களுக்கு ஸாத₄நங்களை விதி₄க்கிருன் கண்ணன் என்று விளங்குகிறது. (மாம்) என்றது, பாவநத்வ விரோதி₄ நிவர்த்தகத்வ கு₃ணங்களை யுடைய என்னை என்றபடி. இக்கு₃ணங்களேயன்ரே இவனுக்கு உதவுகின்றன. இக்கைவல்ய நிஷ்ட₂னைப்பற்றிய பாசுரங்கள் பல

வற்றிலும் ''எம்பெருமானுடைய பாவநத்வ விரோதி₄ நிவர்த்தகத்வ குு₃ணங்களையே இவர்கள் கண்டார்களேயொழிய, பே₄ாக்₃யத்வரூப மஹாகு₃ணத்தைக் கண்டார்களில்லையே'' என்னும் நிர்வேத₃த்தை (வருத்தத்தை) ஆழ்வார்கள் காட்டியிருப்பது இங்கு அநுஸந்தி₄க்கத் தக்கது. குறிப்பாக, ''செடியாராக்கை அடியாரைச் சேர்தல் தீர்க்கும் திருமாலை'' [திருவாய் 1-5-7] ''பிறவித் துயரற ஞானத்துள்நின்று துறவிச்சுடர் விளக்கம் தலைப் பெய்வார் அறவனை ஆழிப்படை அந் தணனை மறவியையின்றி மனத்து வைப்பாரே'' [திருவாய் 1-7-1] ''கனலாழி அரணத் திண்படை ஏந்திய ஈசற்கு ஆளாயே - மரணம் தோற்றம் வான்பிணி மூப்பென்று இவை மாய்த்தோம்'' [திருவாய் 8-3-2] என்று ''ஜராமரணமோக்ஷாய'' என்னும் இந்த ஶ்லோ கத்தை விவரிக்கும் பாசுரங்களில் நம்மாழ்வார்,— பரிஶுத்₃த₄ப் படுத்தும் தன்மையாகிற பாவனத்வத்தையும், விரோதி₄களை நிர ஸிக்கும் தன்மையாகிற விரோதி₄ நிவர்த்தகத்வத்தையும் அநுஸந் தி₄த்திருப்பது காணத்தக்கது. பரமபாவனனாகையால், தங்களுடைய ஸ்தூ₂ல ஸூக்ஷ்ம ஶரீரமான அஶுத்₃தி₄யைக் கழிப்பானென்றும், விரோதி₄ நிவர்த்தகனாகையாலே தம் ஆத்மாவைத் தாம் அநு ப₄விக்கத் தடையாயிருக்கும் ஸர்வகர்மங்களையும், அதுகாரணமாக வரும் ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄த்தையும் கழிப்பானென்றும் கருதி, இவர்கள் எம்பெருமானை ஆஶ்ரயிக்கிறார்கள் என்று விளங்குகிறது. இப்படி விரோதி₄ நீங்கப்பெற்று, அழுக்குக் கழியப்பெற்றால், ஆத்மா தன் னடையே பரிபூர்ணமாக ப்ரகாஶிக்குமாகையால் ''ஜராமரணமோ க்ஷாய'' என்பதற்கு ''ப்ரக்ருதி வியுக்தாத்ம ஸ்வரூப த₃ர்ஶநாய'' என்று பா₄ஷ்யகாரர் அர்த்த₂ம் அருளினார். இதனால் ''ஜிஜ்ஞாஸு:- ப்ரக்ருதி வியுக்தாத்ம ஸ்வரூபாவாப்தீச்சு₂:'' என்று பதினாறும் ஶ்லோக பா₄ஷ்யத்தில் குறிக்கப்பட்ட ஜிஜ்ஞாஸுவே இவன் என்று விளங்குகிறது. ''ஆத்மார்த்தீ₂ சேத் த்ரயோऽப்யேதே தத்கைவல்யஸ்ய ஸாத₄கா:'' [கீ₃தா-ஸம் 27] என்று ஆளவந்தார் இவ்வதி₄காரிக்கு மூன்று யோக₃ங்களில் ஏதாவதொன்றைப் ப₂லகரண ஸாத₄நமாகக் காட்டுகையாலே, பஞ்சாக்₃நிவித்₃யையாகிற வித்₃யை ஒன்றையே ப₂லகரணஸாத₄நமாகக்கொண்டு ப்₃ரஹ்மாத்மகஸ்வாத்மோபாஸநம் செய்யும் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னைக் காட்டிலும் கீ₃தையில் கூறப் படும் கைவல்யார்த்தி₂யாகிற ஜிஜ்ஞாஸு வேறுபட்டவன் என விளங்குகிறது. இவன் யார்? எனில்: ஸ்ரீபா₄ஷ்யகாரராலே கார் யாதி₄கரண [4-3-5] ஸ்ரீ பா₄ஷ்யத்தின் கடைசியில் ''கேவலம் சித்₃வஸ்து ப்₃ரஹ்மத்₃ருஷ்டிவியோகே₃ந உபாஸீந:'' என்று சொல்லப் பட்டவனாய், சா₂ந்தோ₃க்₃ய உபநிஷத்தில் [7-15] ப்ராணஶப்₃த₃த்

साधिभूताधिदैवं मां साधियज्ञं च ये विदुः ।
प्रयाणकालेऽपि च मां ते विदुर्युक्तचेतसः ॥ ३० ॥

॥ इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु विज्ञानयोगो नाम सप्तमोऽध्यायः ॥ ७ ॥

தாலே சொல்லப்பட்ட ஸ்வாத்மமாத்ரத்தையே உபாஸிப்பவனுகக் கூறப்பட்டவனே இவன் என்று விளங்குகிறது. அவ்வதி₄கரணத்தில் ஸ்ரீப₄ாஷ்யகாரரோ, ஸ்ருதப்ரகாஸிகாசார்யரோ அவ்வதி₄கரணத்துக்கு முக்₂யப்ரமேயமான பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னைக் குறித்துக் கேவல ஸப்₃த₃த்தையோ, கைவல்யார்த்தி₂ஸப்₃த₃த்தையோ பிரயோகி₃க்க வில்லையென்பதும், அவனுக்குக் கைவல்யமோக்ஷத்தை முக்₂யப₂ல மாகவோ, அவாந்தரப₂லனுகவோ அருளவில்லையென்பதும். நேர் மாறுக அவனுக்கு ப்₃ரஹ்மாநுப₄வத்தையே காட்டியிருக்கிருர்கள் என்பதும், கேவலாத்மோபாஸகனைப்பற்றியே "கேவலம் (வா) சித்₃ வஸ்து ... உபாஸீந:" என்று கேவலஸப்₃த₃த்தை ப₄ாஷ்யகாரர் ப்ர யோகி₃த்திருக்கிருர் என்பதும் இங்கு குறிக்கொள்ளத்தக்கது. சா₂ந் தோ₃க்₃யத்தில், நாமம் தொடக்கமாக, ஆஸாபர்யந்தமான மற்ற பொருள்களை உபாஸிப்பவர்களுக்கு அஸ்தி₂ரப₂லனைச் சொல்லியிருப் பதும், அவைகளுக்கு மேற்பட்ட இவ்வாத்மாவை உபாஸிப்பவனுக்கு, அஸ்தி₂ரப₂லனைச் சொல்லாததோடன்றியில் அதிவாதி₃த்வத்தையே சொல்லியிருப்பதும் இவனடையயும் ப₂லன் ஸ்தி₂ரமானது எனக் காட்டுகிறது. ப்ராஸங்கி₃கமான இவை நிற்க.

ஸ்லோகத்தின் முற்பாதியால் கைவல்யநிஷ்ட₂னுகிற அதி₄கா ரியை அநுவதி₃த்து, பிற்பாதியால் அவன் அறியவேண்டும் அர்த்த₂ விஸேஷங்களையும், கைவிடவேண்டியதையும் விதி₄க்கிருன்-(தே தத்₃ ப்₃ரஹ்ம விது₃:) அவர்கள் ப்₃ரஹ்மமெனப் படுவதையும் (ஏற்கத் தக்க ப்ராப்யமாக) அறியவேண்டும். (க்ருத்ஸ்நம் அத்₄யாத்மம் விது₃:) அத்₄யாத்மம் எனப்படுவது முழுவதையும் (விலக்கத்தக்க த்யாஜ்யமாக) அறியவேண்டும். (கர்ம ச அகி₂லம் விது₃:) கர்ம மெனப்படுவது அனைத்தையும் (கைவிடத்தக்கதாக) அறியவேண்டும். (கர்மமின்மை கைக்கொள்ளத்தக்கது என்றபடி). 'ப்₃ரஹ்ம' 'அத்₄யாத்மம்' 'கர்ம' என்னும் மூன்றும் எவையென்பதை அடுத்த அத்தியாயம் இரண்டாம் ஸ்லோகத்தில் கண்ணனே விவரிக்கப் போகிருனுகையால், அங்கேயே இவற்றின் பொருளையும், இவற்றை எதற்காகக் கண்ணன் கைவல்யார்த்தி₂க்கு அறியவேண்டும் அல்லது கைவிடவேண்டும் என்று விதி₄க்கிருன் என்பதையும் காண்போம். ஆக, இந்த ஸ்லோகத்தால். கைவல்யார்த்தி₂க்கு மாத்திரம் அறியவேண்டிய அர்த்த₂விஸேஷங்களும்,. கைவிடவேண்டியதும் சொல்லப்பட்டது. 29.

30. ஸாதி$_4$பூ$_4$தாதி$_4$தை$_3$வம் மாம் ஸாதி$_4$யஜ்ஞம் ச யே விது$_3$: |
ப்ரயாணகாலேऽபி ச மாம் தே விது$_3$ர் யுக்தசேதஸ: ||
|| இதி$_3$ ஸ்ரீமத்$_3$ப$_4$க$_3$வத்$_3$கீ$_3$தாஸு
உபநிஷத்ஸு விஜ்ஞாநயோகோ$_3$ நாம ஸப்தமோऽத்$_4$யாய: ||

யே — ஐஶ்வர்யார்த்தி$_2$கள், ஸாதி$_4$பூ$_4$தாதி$_4$தை$_3$வம் — அதி$_4$பூ$_4$தத்தன்மையோடும், அதி$_4$தை$_3$வத்தன்மையோடும் கூடியவனாக, மாம்—என்னை, விது$_3$:—அறியவேண்டும்;(மாம்) ஸாதி$_4$யஜ்ஞம் ச விது$_3$:—(மற்ற இருவரைப்போலே) (என்னை) அதி$_4$யஜ்ஞத் தன்மையோடு கூடியவனாகவும் அறியவேண்டும்; தே ச—(அந்தந்தப் ப$_2$லனுக்காக என்னிடம் ஈடுபட்ட நெஞ்சையுடைய) இம்மூவரும், ப்ரயாணகாலே அபி—(தத் தமக்குரிய ப்ராப்யத்தைப் பெறுவதற்காக) உடலை விடும் ஸமயத்திலும், யுக்தசேதஸ:—(ப$_2$லனுக்குத் தக்கவாறு)என்னை நினைப்பவர்களாய், மாம் விது$_3$:—என்னை அறியவேண்டும்

30. அதிபூத மற்றிங் கதிதெய்வ மெல்லா
மதியெச்ச நாமா வறிந்தோர்—கதிபெற்றுப்
போம்பொழுது மென்னையே பேராத நெஞ்சரா
யாம்பொருளாக் காண்ப ரமர்ந்து.

மற்று இங்கு அதிபூதம் அதிதைவம் நாமா அறிந்தோர் — மேலும் இவ்வுலகில் அதி$_4$பூ$_4$தமும் அதி$_4$தை$_3$வமும் நாமாக் அறிந்த ஐஶ்வர்யார்த்தி$_2$களும், அதியெச்சம் நாமா அறிந் தோர் எல்லாம் — அதி$_4$யஜ்ஞும் நாமே என்று அறிந்த மூவகை அதி$_4$காரிகளும், கதி பெற்றுப் போம் பொழுதும்— (உபாயாநுஷ்ட$_2$ானம் முடிந்து தத்தமக்குரிய) ப்ராப்யத் தைப் பெறுவதற்காக உடலை விடும் ஸமயத்திலும், பேராத நெஞ்சராய் — மறக்காத நெஞ்சையுடையவராய், ஆம் பொருளா அமர்ந்து—தாம் தாம் விரும்பும் ப$_2$லனுக்குத் தக்கவாறு, என்னையே காண்பர்—என்னையே காண்பார்கள்.

30. இனி, இந்த ஶ்லோகத்தில்—ஐஶ்வர்யார்த்தி$_2$களுக்கு அறிய வேண்டும் அர்த்த$_2$விஶேஷங்களையும், கைக்கொள்ளவேண்டியவை களையும், இவ்வைஶ்வர்யார்த்தி$_2$க்கும், முன் ஶ்லோகத்தில் சொல்லப் பட்ட கைவல்யார்த்தி$_2$க்கும், பதினாறுவது ஶ்லோகத்தில் இவர்களோடு சேர்த்துப்படிக்கப்பட்ட அநந்யப்ரயோஜநனான உபாஸகஜ்ஞாநிக்கும் பொதுவாக அறியவேண்டியவற்றையும் கைக்கொள்ளவேண்டியவற்

றையும் காட்டுகிறான். இப்படி அதி₄காரிகளை மூன்றுவித₄மாகப் பிரிப்பதற்குக் காரணம் என்னவெனில்: அசித் (அறிவற்ற ஜட₃ப்பொருள்), சித் (அறிவுள்ள பொருள்), ஈஶ்வரன் (இவ்விரண்டையும் நியமிக்கும் பரமாத்மா) என்று தத்துவங்கள் மூன்றேயாகையால், இம்மூன்றில் முதலாவதான அசித்தினால் வரும் மிகச்சிறந்த போ₄க₃ங்களை அநுப₄விக்க விரும்பும் அதி₄காரி ஐஶ்வர்யார்த்தி₂ என்றும், இரண்டாவதாய், அவரவர்க்குத் தத்தம் ஆத்மாவாயிருக்கும் சித்தை—அதை அநுப₄விக்கத் தடையாயிருக்கும் அசித்ஸம்ஸர்க்க₃ம் அடியோடு கழிந்தபின் பூர்ணமாக அநுப₄விக்கவிரும்பும் அதி₄காரி கைவல்யார்த்தி₂ என்றும், மூன்றாவதான ஈஶ்வரதத்வத்தைப் பரிபூர்ணமாக அநுப₄விக்கவிரும்பும் அதி₄காரி ப₄க₃வச்சரணார்த்தி₂ என்றும் பிரிக்கப்பட்டுள்ளனர் என்று கண்டுகொள்ளவேண்டும். கீ₃தையில் மாத்திரமல்லாமல் இதர ஶாஸ்த்ரங்கள் பலவற்றிலும் இப்படி அதி₄காரிகள் மூவராகவே பிரிக்கப்பட்டிருக்கிறார்கள். கீ₃தையிற்போலே ஐஶ்வர்யார்த்தி₂களை ஆர்த்தன் (இழந்த செல்வத்தைப் பெறவிரும்புமவன்), அர்த்தா₂ர்த்தி₂ (புதிய செல்வத்தைப் பெறவிரும்புமவன்) என இருவகையாக்கி அதி₄காரிகளை நாலுவகையாகக் கூறுவதுமுண்டு. "ந தே₃வலோகாக்ரமணம் நாமரத்வமஹம் வ்ருணே। ஐஶ்வர்யம் வாபி லோகாநாம் காமயே ந த்வயா விநா ॥" [ரா-அ 31-5] [வானவர் நாடான பரமபத₃மடைவதையும், சாவாமையாகிற கைவல்யமோக்ஷமடைவதையும், இவ்விபூ₄தியிலுள்ள அனைத்துலக ஐஶ்வர்யத்தையும் நீயில்லாவிடில் நான் வேண்டேன்] என்று ஸ்ரீராமாயணத்தில் லக்ஷ்மணனாலும், "ஐஹலௌகிகமைஶ்வர்யம் ஸ்வர்க்கா₃த்₃யம் பாரலௌகிகம்। கைவல்யம் ப₄க₃வந்தஞ்ச மந்த்ரோऽயம் ஸாத₄யிஷ்யதி ॥" [வ்ருத்₃த₄ ஹாரீதஸ்ம்ருதி 6-50] [இவ்வுலகச் செல்வத்தையும், சுவர்க்கம் முதலான மறுமைச் செல்வத்தையும், கேவலாத்மாநுப₄வமாகிற கைவல்ய மோக்ஷத்தையும், ப₄க₃வத₃நுப₄வத்தையும் (அதையதை விரும்புவார்க்கு) இந்த அஷ்டாக்ஷரமந்திரம் ஸாதி₄த்துக்கொடுக்கும்.] என்று வ்ருத்₃த₄ஹாரீதஸ்ம்ருதியிலும், "தாவதா₃ர்த்திஸ் ததா₂ வாஞ்சா₂ தாவந்மோஹஸ் ததா₂ऽஸுக₂ம்। யாவந்ந யாதி ஶரணம் த்வாமஶேஷாக₄நாஶநம் ॥" [வி-பு1-9-73] [அவரவர் ப்ராப்யத்திற்குத் தடையாயிருக்கும் அந்தந்தப் பாபங்களைப் போக்கும் உன்னை ஶரணமடையும் வரையில்தான் ஆர்த்தனுக்கு ஆர்த்தியும், அர்த்தா₂ர்த்தி₂க்குச் செல்வத்தில் விருப்பமும், கைவல்யார்த்தி₂க்கு ஆத்மாநுப₄வமின்மையால் வரும் மயக்கமும், ஜ்ஞாநிக்கு ப₄க₃வத₃நுப₄வமின்மையால் வரும் ஸுக₂மின்மையும் இருக்கும்.] என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலும் சொல்லப்பட்டது இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கது. திருப்பல்லாண்டில் பெரியாழ்வாரும், "ஒருநாயகம்" [திருவாய்மொழி 4-4] முதலான திருவாய்மொழிகளில் நம்மாழ்வாரும் இவ்வதி₄காரிகளைச் சேர்த்து எடுத்ததும் காணத்தக்கது.

॥भा॥ अत्र य इति पुनर्निर्देशात्पूर्वनिर्दिष्टेभ्योऽन्ये अधिकारिणो ज्ञायन्ते ; साधिभूतं साधिदैवं मामैश्वर्यार्थिनो ये विदुः—इत्येतदनुवादसरूपमप्यप्राप्तार्थत्वाद्विधायकमेव ; तथा साधियज्ञमित्यपि त्रयाणा-

---

(யே) ஐஶ்வர்யார்த்தி₂கள். முன் ஶ்லோகத்தில் "யதந்தி யே" என்று கூறப்பட்ட கைவல்யார்த்தி₂களே இங்கும் குறிக்கப்படுபவர்களானால், இங்கு 'தே விது₃:' என்றே பாட₂மிருக்கவேண்டும். பாட₂மோ "யே விது₃:" என்றே உள்ளது. 'யே' என்று மறுபடியும் சொல்லுவதற்கு வேறு பயனும் கூறமுடியாது; ஆகையால், இங்கு சொல்லப்படுகிறவர்கள் முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட அதி₄காரிகளைக் காட்டிலும் வேறுபட்டவர்களாகவேயிருக்கவேண்டும். இங்கு அர்ஜுனன் கேட்ட கேள்விகளுக்கு, அடுத்த அத்தியாயத்தில் கண்ணன் கூறும் பதிலைப் பார்த்தாலும், இந்த ப்ரகரணத்தில், "ஆர்த்தோ ஜிஜ்ஞாஸு:..." [7-16] என்று கூறப்பட்ட ஐஶ்வர்ய கைவல்ய ப₄க₃வச்சரணார்த்தி₂களைப் பற்றியே கேள்வி பதில்கள் அமைந்திருக்கின்றன என விளங்கும். அதில், "அதி₄பூ₄தம்" "அதி₄ தை₃வம்" என்னும் பத₃ங்களின் விவரணத்தைக் கருத்திற் கொள்ளும்போது, இங்கு 'யே' எனப்படுபவர்கள் ஐஶ்வர்யார்த்தி₂களே என விளங்குகிறது. (யே ஸாதி₄பூ₄தாதி₄தை₃வம் மாம் விது₃:) ஐஶ்வர்யார்த்தி₂கள் அதி₄பூ₄தத்தன்மையோடும், அதி₄தை₃வத்தன்மையோடும் கூடியவனாக என்னை அறியவேண்டும். 'யே விது₃:' என்பது ஏற்கனவே சொன்னதை அநுவாத₃ம் செய்வது போல் தோன்றினாலும், ஏற்கனவே இவ்வர்த்த₂ம் இங்கு சொல்லப் படாமையால், முன் ஶ்லோகத்தில் 'யே யதந்தி' என்றவிடத்திற் போலே, இங்கும் புதிதாக விதி₄க்கப்படுவதாகவே கொள்ளவேண்டும். ஏற்கனவே சொல்லி முடிக்கப்பட்டிருந்தால் அவற்றைப்பற்றிக் கேள்வி கேட்பதும், பதில் சொல்லுவதும் பொருந்தாது. ஆகையால், "யதா₃க்₃நேயோ அஷ்டாகபால:" [ஶதபத₂ 2-5-1-11] முதலான விடங்களில் யச்ச₂ப்₃த₃மிருப்பதால் அநுவாத₃ம்போல் தோன்றினாலும், அப்ராப்தமான (ஏற்கனவே கிடைக்காத) அர்த்த₂மாகையாலே விதி₄யாகவே கொள்வதுபோலே, இவ்விரு ஶ்லோகங்களிலும் சில அர்த்த₂ங்கள் புதிதாக விதி₄க்கப்படுவதாகவே கொள்ளவேண்டும். 'அதி₄பூ₄தம்' 'அதி₄தை₃வம்' ஆகியவற்றை மேல் அத்தியாயத்தில் நாலாம் ஶ்லோகத்தில் கண்ணனே விவரிக்கப்போகிறானாகையால், அங்கேயே இவற்றின் பொருளையும், இவற்றை அறிவதை எதற்

मधिकारिणामविशेषेण विधीयते, अर्थसामान्यात्। त्रयाणां हि नित्यनैमित्तिकरूपमहायज्ञाद्यनुष्ठानमवर्जनीयम्। ते च प्रयाणकालेऽपि स्वप्राप्यानुगुणं मां विदुः। ते चेति चकारात् पूर्वे जरामरणमोक्षाय यतमानाश्च प्रयाणकाले विदुरिति समुच्चीयन्ते; अनेन ज्ञानिनोऽप्यर्थ-

---

காக விதி₄க்கிறுன் என்பதையும் விளக்குவோம். (மாம் ஸாதி₄யஜ்ஞம் ச விது₃:) (மற்ற இரு அதி₄காரிகளைப்போலே) இவ்வைஶ்வர்யார்த்தி₂களும் என்னை அதி₄யஜ்ஞத்தன்மையோடு கூடியவனுகவும் அறிய வேண்டும். இங்கு ஐஶ்வர்யார்த்தி₂களைக்குறித்து விதி₄த்திருந்த போதிலும், எல்லா அதி₄காரிகளுக்கும் பொதுவாக ஶாஸ்த்ரங்களில் ப்ரஸித்₃த₄மான ' யஜ்ஞம் ' என்னும் பத₃ப்பொருளின் இயல்வைக் காணும்போது, இது மூவகை அதி₄காரிகளுக்கும் பொதுவானது என விளங்கும். " ஸந்த்₄யாஹீநோऽஶுசிர் நித்யமநர்ஹ: ஸர்வ கர்மஸு'' [த₃க்ஷஸ்ம்ருதி] [ஸந்த்₄யாவந்த₃னமாகிற நித்யகர்மத்தை விட்டவன் எப்போதும் பரிஶுத்₃தி₄யற்றவன்; வேறு எந்தக் கர்மத்தையும் அநுஷ்டி₂க்கத் தகாதவன்.] முதலானவிடங்களில் நித்ய நைமித்திகரூபமான பஞ்சமஹாயஜ்ஞங்களின் அநுஷ்டா₂னம் எல்லா அதி₄காரிகளுக்கும் பொதுவாகவே விதி₄க்கப்படுகையாலும், இவற்றை அநுஷ்டி₂யாவிடில் தோ₃ஷங்களைக் கூறுகையாலும், இது மூவகை அதி₄காரிகளுக்கும் அவஶ்யமானது எனத் தெளிவாகிறது. இனி, மூவகை அதி₄காரிகளுக்கும் பொதுவான மற்றொரு விஷயம் கூறப் படுகிறது ஶ்லோகத்தின் பிற்பாதியில்,— (தே ச) அவ்வப்ப₂லனுக்காக என்னை ஆஶ்ரயிக்கும் இம்மூவரும். சகாரம் முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட கைவல்யார்த்தி₂களை ஸமுச்சயிக்கிறது என்பது தெளிவாகிறது. அந்திமகாலத்திலும் தன்னை நினைக்கவேண்டும் என்று இங்கு விதி₄ப்பது இவர்களுடைய ஸ்வார்த்த₂தையைக்கழிப்ப தற்காகவே என்று விளங்குகையால், ஸ்வார்த்த₂தாலேஶமுடைய உபாஸகஜ்ஞானிக்கும் இவ்வந்திம ஸ்ம்ருதிவிதி₄ பொருந்தும் என்பது அந்திமஸ்ம்ருதி பத₃த்தின் அர்த்த₂ஸ்வபா₄வத்தைப் பார்க்கும்போது தெளிவாகிறது. ஆகையால், 'ஸாதி₄யஜ்ஞம் ச'என்றவிடத்திற்போலே இங்கும் சகாரத்தாலே மற்ற இரு அதி₄காரிகளும் ஸமுச்சயிக்கப் (கூட்டிக்கொள்ளப்)படுகிருர்கள். 'அபி ச' என்று கூட்டிப் பொருள் கொள்வதில் பயனில்லையாகையாலும், சகாரத்தைப்பிரித்து 'தே ச' என்று கூட்டிப்பொருள்கொள்வதில் இவ்வண்ணம் சிறந்த பயனிருப்ப தாலும், 'ச' 'அபி' என்னும் இரண்டு பத₃ங்களையும் பிரித்து அந்

स्वाभाव्यात् साधियज्ञं मां विदुः, प्रयाणकालेऽपि स्वप्राप्यानुगुणं मां विदुरित्युक्तं भवति॥ ३०॥

॥ इति श्रीभगवद्रामानुजविरचिते श्रीमद्गीताभाष्ये सप्तमोऽध्यायः॥

---

வயித்துப் பொருள் உரைக்கப்படுகிறது. (யுக்தசேதஸ:) தாம் தாம் விரும்பும் ப₂லனுக்குத் தக்கவாறு என்னை நினைப்பவர்களாய். மேல் அத்தியாயத்தில் இம்மூவரும் அவரவர் அடைய ஆசைப்படும் ப₂ல னுக்குத் தக்கவாறு எப்படி எம்பெருமானை நினைக்கவேண்டும் என்று விவரிக்கப்படவிருக்கிறதாகையால், இங்கு அதுவே கருதப்படுகிறது என விளங்குகிறது. (ப்ரயாணகாலேऽபி மாம் விது₃:) தத்தமக் குரிய ப்ராப்யத்தைப் பெறுவதற்காக—உடலைவிடும் ஸமயத்திலும் என்னை (அந்தந்த ப்ராப்யத்துக்குத் தக்கவாறு) அறியவேண்டும். "ப்ரயாணகாலேऽபி" என்னும் அபிஶப்₃த₃ம் உபாஸநத₃ஶையில் பல ஜன்மங்கள் இவர்கள் இவ்வண்ணம் நினைப்பதை ஸமுச்சயிக் கிறது. எந்த ஜந்மத்தில் இவர்களுக்கு அந்திமஸ்ம்ருதி ஏற்படு கிறதோ, அந்த ஜந்மத்தின் முடிவிலேயே இவர்களுக்கு இவர்கள் விரும்பும் ப₂லம் கிடைக்கும் என்று கருத்து. மஹாத்மாவான ஜ்ஞானி எம்பெருமானுடைய ஆனந்த₃ம் தவிரத் தனக்காக எப்ப₂லனை யும் விரும்பாதவனாகையால், அவனுக்கு எம்பெருமான் தானே உபாயமாகி, அவன் கையில் எதையும் எதிர்பாராமல் அந்த ஜன் மத்தின் முடிவிலேயே அவனுக்கு மோக்ஷமளித்து அவனைத் தனக்கே யாக்கிக்கொள்கிறான். அந்திமகாலத்திலும் "அஹம் ஸ்மராமி" என்ற வராஹசரமஶ்லோகத்தின்படியே, அவன் நினைவை எதிர் பாராமல், எம்பெருமான்தானே அவனை நினைக்கிறான். இதையே பெரியாழ்வாரும், "எய்ப்பென்னைவந்து நலியும்போது அங்கு ஏதும் நான் உன்னை நினைக்கமாட்டேன். அப்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தேன் அரங்கத்தரவணைப் பள்ளியானே" என்று அருளினார். தனக்காக ஒவ்வொரு ப₂லனை விரும்பும் அதி₄காரிகளுக்கு அந்தந்த ப்ராப்யத்துக்குத் தக்கவாறு அந்திமஸ்ம்ருதியை விதி₄ப்பதற்குக் காரணத்தையும் அவரவர்க்கு அந்திமஸ்ம்ருதியை ஒவ்வொரு வித₄ மாக விதி₄க்கும் எட்டாம் அத்தியாயஶ்லோகங்களில் விளக்குவோம். ஆக, இவ்விரு ஶ்லோகங்களாலே, ஐஶ்வர்ய கைவல்ய ப₄க₃வச்சரணார்த் தி₂களான ஸ்வப்ரவ்ருத்திபரர்களுக்கு அறியவேண்டிய அர்த்த₂ங்களை யும், கைக்கொள்ளவேண்டியவற்றையும் ப்ரஸ்தாபித்தாயிற்று. 30.

ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி தா₃ஸன் இயற்றிய

கீ₃தார்த்த₂ விவரணத்தில் ஏழாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.

## பகவத் கீதை வெண்பா

(ஏழாம் அத்தியாயத்தின் ஸாரத்தைக் கூறும் பாசுரம்)

இத்தகவா லேழாமோத் தெந்தை பொருளனைத்து(ம்)
மெய்த்தகையான் ஞானி வியப்புடனே—சுத்தனெனச்
சொன்ன வகையே துளக்கமற வாராய்ந்தே
யின்ன வகைமுடிந்த திங்கு.

**வாதிகேஸரி ஜீயர் அருளிய பகவத்கீதை வெண்பாவில் ஏழாம் அத்தியாயம் முற்றிற்று.**

**இத்தகவால்**—இம்முறையில், **பொருள் அனைத்தும்**—எல்லாப் பொருளையும், **மெய்த் தகையான்**—உள்ளபடி அறிபவனான, **ஞானி**—ஞானியானவன், **சுத்தன்**—சிறந்தவன், **என**—என்று, **எந்தை**—கண்ணபிரான், **துளக்கம் அற ஆராய்ந்தே சொன்ன வகையே**—ஐயமில்லாமல் ஆராய்ச்சி செய்து சொன்ன ரீதியில், **ஏழாம் ஒத்து**—ஏழாம் அத்தியாயம், **இன்ன வகை**—இம்முறையில், **இங்கு முடிந்தது**—இத்துடன் முடிவுற்றது.

## கீதார்த்த சங்கிரகம்

(ஶ்ரீ வேதா₃ந்த தேசிகர்)

ஏழாம் அத்தியாயத்தின் ஸாரப்பொருள்

8. தானின்ற வுண்மையைத் தன்றனி மாயை மறைத்தமையுந்
தானன்றி மாயை தனைத்தவிர்ப் பான்விர கற்றமையு
மேனின்ற பத்தர்க ளுல்வரின் ஞானிதன் மேன்மைகளுந்
தேனின்ற செங்கழ லான்றெளி வித்தனன் பார்த்தனுக்கே.

**தேன் நின்ற**—தேன் நிலையாகப் பெருகுகின்ற, **செம் கழலான்**—சிறந்த திருவடி(த் தாமரை)யையுடைய கண்ணன், **பார்த்தனுக்கு**—அர்ஜுனனுக்கு, **தான் நின்ற உண்மையை**—(ஈசுவரனாகிய) தன்னைப்பற்றிய உண்மையறிவையும், **தன் தனி மாயை**—(இவ்வறிவை) தன்னுடையதான ஒப்பற்ற ப்ரக்ருதி, **மறைத்தமையும்**—மறைத்துநிற்பதையும், **தான் அன்றி**—தன்னைத தவிர, **மாயைதனைத் தவிர்ப்பான்**—ப்ரக்ருதியின் தொடர்பை (ஜீவனுக்கு) ஒழிப்பதற்கு, **விரகு அற்றமையும்**—உபாயம் ஒன்றுமில்லாதிருத்தலையும், **மேல் நின்ற**—(முன்னவருக்குப் பின்னவர்) உயர்ந்தவர் என்னும்படிநின்ற,

பக்தர்கள் நால்வரில்-(ஆர்த்தன், அர்த்த₂ார்த்தி₂, ஜிஜ்ஞாஸு, ஜ்ஞாநி என்ற) ப₄க்தர்கள் நால்வரில், ஞானிதன் மேன்மைகளும்—ஜ்ஞாநியின் ஏற்றங்களேயும், தெளிவித்தனன்—தெளிவாக உபதேசித்தான்.

## கீ₃தாஶ்லோகார்த்த₂ச் சுருக்கம்

### ஏழாம் அத்தியாயம்

ஶ்லோ — அர்த்த₂ம்

I 1–12. ஸ்வயாத₂ாத்ம்யம் — பரமபுருஷனைப்பற்றிய உண்மையறிவு.

1. உண்மையறிவைக் கூறுவதாக ப்ரதிஜ்ஞை.

2. இவ்வறிவைப் பூர்ணமாகப் பெற்றால், அறியவேண்டியது வேறொன்றுமில்லை.

3. மோக்ஷஸித்₃தி₄யின் பொருட்டுக் கடைசிவரை முயல்பவன் ஆயிரத்தில் ஒருவன்; அவர்களிலும் ஆயிரத்தில் ஒருவன் பரமபுருஷனையே ப்ராப்யமாய் அறிபவன். அவர்களிலும் ஆயிரத்தில் ஒருவனே அவனை ப்ராபகமாகவும் அறிபவன்.

4. எட்டுவிதமான அசேதன ஸமஷ்டிப்பொருளும் பரமபுருஷ பரதந்த்ரமானது.

5. அசேதந ப்ரக்ருதிக்கு மேற்பட்ட சேதநஸமஷ்டியும் பரம புருஷபரதந்த்ரமானது.

6. முற்கூறிய சேதநாசேதந ஸமஷ்டிகளைக் காரணமாகக் கொண்ட வ்யஷ்டிப் பொருள்களுக்கும் பரமபுருஷனே காரண மாகவும், ஶேஷியாகவுமிருப்பவன்.

•7. கல்யாண கு₃ணங்களால் ஜீவர்களைக்காட்டிலும் மிகவுயர்ந் தவனும் பரமபுருஷனே.

7•. அவனே அனைத்துக்கும் ஶரீரியாகவுமிருப்பவன். இக் காரணங்களால் அவனே இயற்கையான ப்ராப்யப்ரா பகங்களாயிருப்பவன்.

8-11. சேதநாசேதநப் பொருள்களில் அவற்றின் ப்ராப்யத்வத்திற் கும், ப்ராபகத்வத்திற்கும் உறுப்பாக உள்ள சிறந்த பெருமை கள் பரமபுருஷாதீ₄னமாய் வருபவையே.

12. ஸாத்விகர்களுக்கு ப்ராப்யப்ராபகங்களாயிருக்கும் முற்கூறி யவைபோலே, ராஜஸதாமஸர்களுக்கு ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவுமிருக்கும் பொருள்களின் தன்மைகளும், அவ்வப்பொருள்களும் பரமபுருஷாதீ₄நமே; பரமபுருஷன் அவற்றுக்கு அதீ₄னமானவனல்லன்.

II 13-*14 பரமபுருஷனைப்பற்றிய முற்கூறிய உண்மையறிவை—அவனுக்கு அதீனமான ப்ரக்ருதியின் ஸம்பந்தம் ஜீவனுக்கு மறைக்கிறது.

III 14 ஜீவனுக்குள்ள ப்ரக்ருதி ஸம்பந்தம் பரமபுருஷ ஶரணாகதியாலேயே நீங்குகிறது.

15. மேன்மேலே பாபிஷ்டர்களான நாலுவகைப்பட்ட பாபிகள் பரமபுருஷனை ஶரணமடைவதில்லை.

IV பக்தபேதம்

16. மேன்மேலே புண்ணியமிகுதியால் உண்டாகும் ப்ரதிபத்திச் சிறப்பாலே சிறப்புற்ற நாலுவகை பக்தர்கள் பரமபுருஷனை ஶரணமடைகின்றனர். அவர்களாவார்,— (1) ஆர்த்தன் (2) அர்த்தார்த்தி (இருவரும் சேர்ந்து ஐஶ்வர்யார்த்திகள்) (3) ஜிஜ்ஞாஸு (கைவல்யார்த்தி) (4) ஜ்ஞாநி (பகவச்சரணார்த்தி).

V 17-27. ஞானியின் சிறப்பு.

17. மூவரில், ஸாதனதஶையோடு ஸாத்யதஶையோடு வாசியற எப்போதும் எம்பெருமானுடன் சேர்ந்திருப்பவனாகையாலும், எம்பெருமான் ஒருவனிடமே அன்பு பூண்டவனாகையாலும் ஜ்ஞாநியானவன்,—ஸாதநதஶையில் மாத்திரம் எம்பெருமானோடு சேர்ந்திருப்பவர்களும், ஸ்வஸாத்யமான ஐஶ்வர்ய கைவல்யங்களிலும், அவற்றுக்கு ஸாதனமாக எம்பெருமானிடமும் அன்பு பூண்டவர்களுமான ஐஶ்வர்ய கைவல்யார்த்திகளைக் காட்டிலும் சிறப்புற்றவன். எம்பெருமானிடம் பேரன்புபூண்டவன்; எம்பெருமானுக்கு மிக இனியவன்.

18. மூவருமே பகவான் ஒருவனையே பலப்ரதஸாதனமாகப் பற்றியவர்களாகையாலே உதாரர்கள்; ஜ்ஞாநியோவெனில், எம்பெருமானையே பரமப்ராப்யமாகவும் பற்றியவனாகையாலே அவனுக்கே ஆத்மாவாய் (தாரகனாய்) இருப்பவன்.

19. பல ஜன்மங்கள் கழித்து உபாஸகஜ்ஞானிக்குப் பரமபுருஷனைப் பற்றிய உண்மையறிவை அநுஸந்திப்பதாலே 'அவனே ப்ராப்யனாகவும் ப்ராபகனாகவுமிருப்பவன்' என்னும் அறிவு ஏற்பட்டு, அவனையே எல்லாமாகப் பற்றுகிறான், இவ்வறிவு ஏற்பட்ட ஜன்மமே இவனுக்குக் கடைசி ஜன்மம். இத்தகைய ஜ்ஞானி மஹாத்மாவாவான். எம்பெருமானுக்கே கிடைத்தற்கரியவன் இவன்.

20. ராஜஸதாமஸ நூல்களில் சொன்ன நியமங்களைப்பற்றி நின்று தாழ்ந்த பலன்களுக்காக மற்ற தெய்வங்களை வழிபடுகிறார்கள் பலர்.

21. அவர்களுக்கும் தனது ஶரீரமான அந்த தெய்வங்களிடம் பக்திஶ்ரத்தைகளை எம்பெருமானே ஏற்படுத்துகிறான்.

22. பக்திஶ்ரத்தைகளோடு அந்த தெய்வங்களை ஆராதிப்பவர் களுக்கு, அந்த தெய்வங்களுக்கு அந்தர்யாமியான எம்பெரு மானே பலனளிக்கிறான்.

23. புல்லறிவாளர்களான அவர்களுக்குக் கிடைக்கும் பலன் அல்பமாகவும் அஸ்திரமாகவுமே இருக்கிறது. பகவத் பக்தர்கள் அநந்தஸ்திரபலனையே எளிதில் பெறுகிறார்கள்.

24. முற்கூறியவர்களிலும் கீழ்ப்பட்ட அறிவிலிகள் பலர் பரம புருஷனை ஸாமாந்ய ஜீவனாக நினைக்கிறார்கள்.

25. மனிதவுருக்கொண்டு அவதரித்திருக்கும் ஸர்வேஶ்வரனை இவ்வறிவிலிகள் அறிவதில்லை.

26. பரமபுருஷனை உள்ளபடி அறிபவன் முக்காலத்திலும் ஒரு வனுமேயில்லை.

27. இதற்குக்காரணம்—அநாதிகாலமாக ஜீவர்கள் ப்ரதமப்ர வ்ருத்தியில் ப்ராக்ருத விஷயமான ஜ்ஞானேச்சாப்ரயத்னங் களையே செய்து புண்ய பாப கர்மங்களைக் குவித்து வைத் திருப்பதால், பிறக்கும்போதே ப்ராக்ருதவிஷயத்தில் மயங்கி நிற்கையேயாகும்.

VI முடிவுரை.

28. இவர்களில், புண்யத்தாலே பாபம் சிறிதுசிறிதாக அழியப் பெற்றவர்கள், தத்தம் புண்ணியத்தின் ஏற்றத்தாழ்வுகளுக்கு ஏற்ப, ஐஶ்வர்யத்தையோ, கைவல்யத்தையோ, பரம புருஷனையோ பெறவிரும்பி உறுதியுடன் பக்திசெய்கிறார்கள். புண்யபாப லக்ஷணம்.

29. கைவல்யார்த்திக்கு அறியவேண்டிய அர்த்தவிஶேஷங்களும், கைவிடவேண்டியதும் பற்றிய ப்ரஸ்தாவம்.

30. ஐஶ்வர்யார்த்திக்கு அறியவேண்டும் அர்த்தவிஶேஷங்களும் கைக்கொள்ளவேண்டியவையும், ஐஶ்வர்யகைவல்ய பகவச் சரணார்த்திகளான ப்ரவ்ருத்திபரர் அனைவர்க்கும் பொதுவாக அறியவேண்டியவையும், கைக்கொள்ளவேண்டியவையும் பற்றிய ப்ரஸ்தாவம்.

## ஆளவந்தார் அருளிய
# கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹம்

[எட்டாவது அத்தியாயப் பொருளின் சுருக்கம்]

ऐश्वर्याक्षरयाथात्म्यभगवच्चरणार्थिनाम् ।
वेद्योपादेयभावानां अष्टमे भेद उच्यते ॥ १२ ॥

12. ஐஶ்வர்யாக்ஷரயாத₂ாத்ம்ய ப₄க₃வச்சரணார்த்தி₂நாம்।
வேத்₃யோபாதே₃யப₄ாவாநாம் அஷ்டமே பே₄த₃
உச்யதே॥

**ஐஶ்வர்யாக்ஷரயாத₂ாத்ம்ய ப₄க₃வச்சரணார்த்தி₂நாம்** — (1) ஐஶ்வர்யார்த்தி₂ (2) ப்ரக்ருதியினின்று நீங்கிய ஆத்ம ஸ்வரூபத்தை அநுப₄விக்க விரும்பும் கைவல்யார்த்தி₂ (3) ப₄க₃வானுடைய திருவடித்தாமரையைப் பெறவிரும்பும் ஞானி ஆகிய மூவர்க்கும், **வேத்₃யோபாதே₃யப₄ாவாநாம்**— அறியவேண்டும் அர்த்த₂விஶேஷங்கள், கைக்கொள்ள (அநுஷ்டி₂க்க) வேண்டியவை ஆகியவற்றின், **பே₄த₃:**— வேறுபாடு, **அஷ்டமே** — எட்டாம் அத்தியாயத்தில், **உச்யதே**—சொல்லப்படுகிறது.

---

வாதிகேஸரி ஜீயர் அருளிய
## பகவத்கீதை வெண்பா—அத்தியாயம் 8
## அப்யாஸயோகம்
### அத்தியாயப் பொருளின் சுருக்கம்

*போக முயிருண்மை பூமகள்கோனைப்பெறுதற்*
*காக முயல்வார்க் கறிவமர—மேகநிறத்*
*தெம்மா னருள்கீதை யெட்டாமோத் திற்பொருள்கள்*
*செய்ம்மா வகையுரைக்குஞ் சேர்ந்து.*

***போகம்***—ஐஶ்வர்ய பே₄ாக₃ங்கள், ***உயிருண்மை***—ப்ரக்ருதியினின்றும் நீங்கிய ஆத்மாநுப₄வம், ***பூமகள்கோனை***—ஸ்ரீமந் நாராயணன் ஆகிய இம்மூன்று ப்ராப்யங்களில் ஒன்றை, ***பெறுதற்காக***—பெறுவதற்காக, ***முயல்வார்க்கு***—முயற்சி செய்பவர்களுக்கு, ***அறிவு அமர வகை***—அறியவேண்டியவைகளையும், ***செய் மா வகை***—அநுஷ்டி₂க்கவேண்டியவைகளையும், ***மேகநிறத்து எம்மான் அருள் கீதை எட்டாம் ஓத்தில் பொருள்கள்***-மேக₄ம்போன்ற நிறத்தையுடைய எம்பெருமானை கண்ணன் அருளிய கீ₃தையின் எட்டாம் அத்தியாயத்தின் ஶ்லோகங்கள், ***சேர்ந்து உரைக்கும்***—ஒன்றுகூடிச் சொல்லும்.

श्रीः
श्रीमते रामानुजाय नमः

## ॥ अथ अष्टमोऽध्यायः ॥ ८ ॥

॥ भा ॥ सप्तमे परस्य ब्रह्मणो वासुदेवस्य उपास्यत्वम्, निखिलचेतनाचेतनवस्तुशेषित्वम्, कारणत्वम्, आधारत्वम्, सर्वशरीरतया सर्वप्रकारत्वेन सर्वशब्दवाच्यत्वम्, सर्वनियन्तृत्वम्, सर्वैश्च कल्याणगुणगणैस्तस्यैव परतरत्वम्, सत्त्वरजस्तमोमयैर्देहेन्द्रियत्वेन भोग्यत्वेन

---

ஸ்ரீ க்ருஷ்ணஸ்வாமி த₃ாஸன் இயற்றிய

## கீதார்த்த₂விவரணம் - எட்டாம் அத்தியாயம்

### முன் அத்தியாயத்தோடு ஸங்க₃தியும், இவ்வத்தியாயார்த்த₂ச் சுருக்கமும்.

ஏழாம் அத்தியாயத்தில் சொல்லப்பட்ட விஷயங்களாவன:—

ஏழாமத்தியாயத்தின் முதல் ஶ்லோகம் தொடங்கி இறுதிவரை பலவிடங்களில் பரப்₃ரஹ்மமான வாஸுதே₃வன் உபாஸிக்கத்தக்கவன் என்று சொல்லப்பட்டது. அவ்வுபாஸனத்திற்கு அங்க₃மாக அவனைப் பற்றிய உண்மையறிவும் முதல் பனிரண்டு ஶ்லோகங்களால் சொல்லப்பட்டது. அதில், 4, 5, 6 ஶ்லோகங்களாலே, அவனே எல்லாச் சேதநாசேதநங்களுக்கும் ஶேஷி என்றும் காரணம் என்றும் கூறப்பட்டது. ஏழாவது ஶ்லோகத்தின் பிற்பாதியால், எல்லாவற்றுக்கும் ஆதா₄ரமாயிருப்பவனென்றும் எல்லாப்பொருள்களையும் ஶரீரமாகக் கொண்டவனென்றும் கூறப்பட்டது. 8 முதல் 12 வரை இப்படி ஸர்வஶரீரியாயிருக்கையால், அனைத்தையும் தனக்கு ப்ரகாரமாகக் கொண்டிருக்கையால், அந்தந்தப் பொருள்களையும், அவற்றுக்குப் பெருமையளிக்கும் கு₃ணங்களையும் குறிக்கும் சொற்கள் தன்னையும் குறிக்கும்படியிருக்கும் பெருமை சொல்லப்பட்டது. அவை அனைத்தும் தன்னதீ₄னமே என்கையாலே, அனைத்தையும் நியமிப்பவன் பரம புருஷனே என்றும் கூறப்பட்டது. ஏழாவது ஶ்லோகத்தின் முற்பாதியால், எல்லாக் கல்யாணகு₃ணங்களாலும் அவனே மிகவுயர்ந்தவன் என்று கூறப்பட்டது. 13-வது ஶ்லோகத்தாலும், 14-வதின் முற்பாதியாலும், அநாதி₃காலமாய் வரும் பாபபரம்பரையின் ப₂லமாக தே₃ஹமாகவும் இந்திரியமாகவும், போ₄க்₃யப்பொருள்களாகவும் பரிணமித்திருப்பதாய், ஸத்வரஜஸ்தமோ மயமானதான ப்ரக்ருதியின்

चावस्थितैर्भावैरनादिकालप्रवृत्तदुष्कृतप्रवाहहेतुकैस्तस्य तिरोधानम्, अत्युत्कृष्टसुकृतहेतुकभगवत्प्रपत्त्या च तन्निवर्तनम्, सुकृततारतम्येन च प्रतिपत्तिवैशेष्यादैश्वर्याक्षरयाथात्म्यभगवत्प्राप्त्यपेक्षया उपासकभेदम्, भगवन्तं प्रेप्सोर्नित्ययुक्ततया एकभक्तितया चात्यर्थपरमपुरुषप्रियत्वेन च श्रैष्ठ्यम् दुर्लभत्वं च प्रतिपाद्य, एषां त्रयाणां ज्ञातव्योपादेयभेदांश्च प्रास्तौषीत्। इदानीमष्टमे, प्रस्तुतान् ज्ञातव्योपादेयभेदान् विविनक्ति॥

---

விகாரப்பொருள்களாலே தன்னைப்பற்றிய உண்மையறிவு மறைக்கப் படுகிறது என்று கூறப்பட்டது 14-வது ஶ்லோகத்தின் பிற்பாதி யாலே, மிகவுயர்ந்த புண்ணியத்தினுல் ஏற்படும் ப₄க₃வத்ப்ரபத்தி யினுலே அந்த ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄ம் படிப்படியாகப் போக்கடிக்கப் படுகிறது என உத்₃கே₄ாஷிக்கப்பட்டது பதினுருவது ஶ்லோகத்தாலே, புண்ணியத்தின் ஏற்றத்தாழ்வால் ஏற்பட்ட எண்ணத்தின் ஏற்றத் தாழ்வாலே, ஐஶ்வர்யத்தையோ, ஆத்மாநுப₄வத்தையோ, ப₄க₃வத் ப்ராப்தியையோ விரும்பும் மூவகையான அதி₄காரிகள் தன்னை ஶரணமடைந்து உபாஸிக்கிருர்கள் என்று கூறப்பட்டது. பதினேழா வது ஶ்லோகம் தொடங்கி, இருபத்தேழாவது ஶ்லோகமீருக— இம்மூவரில் ப₄க₃வானை அடையவிரும்பும் ஞானியின் பல்வகைச் சிறப்பும், அருமையும் காட்டப்பட்டது; எல்லா த₃ஶையிலும் எம் பெருமானேடு சேர்ந்திருக்கை, ப₄க₃வான் ஒருவனையே ப்ராப்யமாகக் கொண்டிருக்கையாலே அவனிடமே அன்பு செய்கை, அவனிடம் மிகவும் ஈடுபட்டிருக்கை ஆகியவை மற்ற இருவரைக் காட்டிலும் ஞானிக்குள்ள சிறப்புக்குக் காரணங்கள் என்றும், உலகில் பெரும் பாலான ஜனங்கள் புண்யபாபங்களை மிகுதியாகச் செய்து, ப்ராக்ருத விஷயங்களிலேயே பிறவி தொடங்கி மயங்கி நிற்கையாலே, நாஸ் திகர்களாகவும், தே₃வதாந்தரபரர்களாகவும் ஆகிவிடுகிருர்களாகை யால் ஞானி மிகவும் கிடைத்தற்கரியவன் என்றும் காட்டப்பட்டது. கடைசியில் 28-வது ஶ்லோகம் முதல் முப்பதாவது ஶ்லோகமீருக, முற்கூறிய ஐஶ்வர்ய கைவல்ய ப₄க₃வச்சரணர்த்தி₂களுக்கு அறிய வேண்டியவையும், கைக்கொள்ளவேண்டியவையும் பற்றி ப்ரஸ்தா விக்கப்பட்டது. இனி, இவ்வெட்டாம் அத்தியாயம் முழுவதும், ஏழாம் அத்தியாயக் கடைசியில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட இம்மூவகை அதி₄காரிகளுக்கு அறியவேண்டியவையும் கைக்கொள்ளவேண்டியவை யும் எவையெவை என்று விவரிக்கிருன் கண்ணன்.

अर्जुन उवाच—

किं तद्ब्रह्म किमध्यात्मं किं कर्म पुरुषोत्तम।
अधिभूतं च किं प्रोक्तम् अधिदैवं किमुच्यते॥ १॥

अधियज्ञः कथं कोऽत्र देहेऽस्मिन्मधुसूदन।
प्रयाणकाले च कथं ज्ञेयोऽसि नियतात्मभिः॥ २॥

அர்ஜுந உவாச —

1. கிம் தத் ப்₃ரஹ்ம கிமத்₄யாத்மம் கிம் கர்ம புருஷோத்தம।
அதி₄பூ₄தம் ச கிம் ப்ரோக்தம் அதி₄தை₃வம் கிமுச்யதே ॥

2. அதி₄யஜ்ஞ: கத₂ம் கோऽத்ர தே₃ஹேऽஸ்மிந் மது₄ஸூத₃ந।
ப்ரயாணகாலே ச கத₂ம் ஜ்ஞேயோऽஸி நியதாத்மபி₄:॥

புருஷோத்தம — புருஷோத்தமனே!, மது₄ஸூத₃ந — மது₄வெனும் அஸுரனை அழித்தவனே! (ஜராமரண மோக்ஷத்திற்காக உன்னை ஆஶ்ரயித்து முயல்பவர்களாகக் கூறப்பட்ட கைவல்யார்த்தி₂கள் அறியவேண்டியவையாகச் சொல்லப்பட்டவையான) — தத் ப்₃ரஹ்ம கிம் — ப்₃ரஹ்மம் எனப்படும் அது யாது? அத்₄யாத்மம் கிம் — அத்₄யாத்மம் என்பது யாது? கர்ம கிம் — கர்ம எனப்படுவது யாது? (ஐஶ்வர்யார்த்தி₂கள் அறியவேண்டியவையாகச் சொல்லப்பட்டவையான) — அதி₄பூ₄தம் கிம் ப்ரோக்தம் — அதி₄பூ₄தம் எனப்படுவது யாது? அதி₄தை₃வம் ச கிம் உச்யதே—அதி₄

---

1. ஏது பிரமமதா மேதத்தி யாத்துமமா
மேது கருமமா மிங்கிறைவா—வேதா
மதிபூத மேதா மதிதெய்வ மேதா
மதியெச்ச மெங்ஙனிய லாம்.

2. எவ்வகையா லிவ்வுடல்விட் டேகுங்கா னன்னெஞ்சின்
மெய்வகையார் நின்னினைக்க மேவுதியென்—றிவ்வகை
பார்த்தனவன் கேட்ட படிக்கேற்க வாங்கடைவே [யாற்
வார்த்தையருள் செய்தான்மைம் மால்.

தைவம் எனப்படுவதும் யாது? **அத்ர அஸ்மிந் தேஹே**—ஶாஸ்த்ரங்களில் உனது தேஹமாக ப்ரஸித்திபெற்ற இந்த இந்த்ராதிகளிடத்தில், (மூவகை அதிகாரிகளுக்கும் அறியவேண்டியதான) — **அதியஜ்ஞ: க:** — அதியஜ்ஞம் எனப்படுவது யாது? **கதம்**—அதற்கு அதியஜ்ஞத்தன்மை எப்படி வந்தது? **நியதாத்மபி:** — மனத்தை அடக்கிய இம்மூவராலும், **ப்ரயாணகாலே ச** — (தத்தம் பலனைப்பெறுவதற்காக) உடலை விடும்போதும், **கதம் ஜ்ஞேய: அஸி**—எப்படி நீ அறியத்தக்கவனாயிருக்கிறாய்? ([இதி] **அர்ஜுந: உவாச**—என்று அர்ஜுனன் கேட்டான்.)

---

இறைவா — ஈசனே! இங்கு — கைவல்யார்த்திகள் அறியவேண்டியவையான, **பிரமமது ஏதாம்** — ப்ரஹ்மம் எனப்படுவது யாது? **அத்தியாத்துமம் ஏதாம்**—அத்யாத்மம் எனப்படுவது யாது? **கருமம் ஏதாம்**—கர்மம் எனப்படுவது யாது? (இங்கு—ஐஶ்வர்யார்த்திகள் அறியவேண்டியவையான) **அதிபூதம் ஏதாம்**—அதிபூதம் எனப்படுவது யாது? **அதி தெய்வம் ஏதாம்**—அதிதைவம் எனப்படுவது யாது? (இங்கு — மூவகை அதிகாரிகளும் அறியவேண்டியதான) **அதி யெச்சம் ஏதாம்** — அதியஜ்ஞம் எனப்படுவது யாது? **எங்ஙன் இயலாம்** — அதற்கு அதியஜ்ஞத்தன்மை எப்படி வந்தது? **நல் நெஞ்சின் மெய் வகையார்**—நல்ல நெஞ்சை யுடையராகையாலே உண்மையான இயல்வையுடையவர்கள், **இவ்வுடல் விட்டு ஏகுங்கால்** — (தத்தம் பயனைப் பெறுவதற்குறுப்பாக) இவ்வுடலை விட்டுப் போம்போது, **எவ்வகையால் நின் நினைக்க மேவுதி** — (அவர்களால்) எவ்வகையில் நீ நினைக்கத்தக்கவனாயிருக்கிறாய்? **என்று இவ் வகையால்** — என்று இவ்வண்ணமாக, **பார்த்தனவன் கேட்ட படிக்கேற்க** — அர்ஜுனன் கேட்ட கேள்விகளுக்குப் பொருந்தும்படியாக, **ஆங்கு அடைவே** — அதே முறையில், **மை மால்**—அஞ்சன வண்ணனான கண்ணன், **வார்த்தை அருள் செய்தான்**—பதில் வார்த்தைகளை அருளிச்செய்தான்.

॥ भा ॥ जरामरणमोक्षाय भगवन्तमाश्रित्य यतमानानां ज्ञातव्यतयोक्तं तद्ब्रह्म अध्यात्मं च कर्म च किमिति वक्तव्यम्। ऐश्वर्यार्थिनां

1-2. முன் அத்தியாயத்தில் கண்ணனால் ப்ரஸ்தாபிக்கப்பட்ட மூவகை அதி₄காரிகளும் அறியவேண்டிய ஜீவஸ்வரூபம் முதலானவைகளையும், கைக்கொள்ளவேண்டிய உபாஸநம் முதலானவைகளையும் பற்றி விளக்கமாகக் கூறும்படி இவ்விரண்டு ஶ்லோகங்களில் அர்ஜுனன் கேட்கிறான். ''ஆர்த்தோ ஜிஜ்ஞாஸு:'' [7-16] என்று முன்னமே இம்மூவகை அதி₄காரிகள் சொல்லப்பட்டுள்ளனர். ''ஜராமரணமோக்ஷாய'' [7-29, 30] என்று தொடங்கும் இரு ஶ்லோகங்களிலும் ''யே'' ''யே'' என்று அம்மூன்று அதி₄காரிகளை எடுக்கையாலும், அர்த்த₂ஸ்வபா₄வத்தாலும் அவரவர்க்கு அறியவேண்டியவைகளும், கைக்கொள்ளவேண்டியவைகளும் இவையிவை என்று பொதுவாகப் புரிந்துகொண்டிருக்கிறான் அர்ஜுனன். அவைபற்றி விளக்கத்தை விரும்பி இங்கு கேள்வி கேட்கிறான். மேல் ஶ்லோகங்களில் கண்ணன் அவற்றை விளக்குகிறான். (கிம் தத் ப்₃ரஹ்ம) 7-29-வது ஶ்லோகத்தில் கைவல்யார்த்தி₂க்கு அறியவேண்டியதாகக் கூறப்பட்ட 'ப்₃ரஹ்ம' எனப்படுவது யாது? (கிம் அத்₄யாத்மம்) அங்கு அவனுக்கே அறியவேண்டியதாகக் கூறப்பட்ட 'அத்₄யாத்மம்' என்பது யாது? (கிம் கர்ம) அங்கு அவனுக்கே அறியவேண்டியதாகக் கூறப்பட்ட 'கர்ம' எனப்படுவது யாது? (புருஷோத்தம) புருஷனாகிற ஆத்மாவை அடைய விரும்புகிறவனுக்கு அறியவேண்டியதையும், கைக்கொள்ளவேண்டியதையும் புருஷோத்தமனான நீயே கூறமுடியும் என்கை. (அதி₄பூ₄தம் கிம் ப்ரோக்தம்) 7-30-வது ஶ்லோகத்தின் முதற் பாத₃த்தில் ஐஶ்வர்யார்த்தி₂க்கு அறியவேண்டியதாகக் கூறப்பட்ட 'அதி₄பூ₄தம்' என்பது யாது? (அதி₄தை₃வம் ச கிம் உச்யதே) அங்கு அவனுக்கே அறியவேண்டியதாகக் கூறப்பட்ட 'அதி₄தை₃வம்' என்பதும் யாது? இனி, இரண்டாம் ஶ்லோகத்தில் மூவர்க்கும் பொதுவானவை பற்றிக் கேட்கிறான்,— (அத்ர அஸ்மிந் தே₃ஹே) (அத்ர தே₃ஹே) இதற்கு பதிலான 4-வது ஶ்லோகத்தில் ''அத்ர தே₃ஹே'' என்றவிடத்திற்கு பா₄ஷ்யமிடும்போது ''அத்ர இந்த்₃ராதெ₃ள மம தே₃ஹபூ₄தே'' என்று பா₄ஷ்யகாரர் அருளியிருப்பதால், இங்கும் 'இந்த்₃ரன் முதலான எனது தே₃ஹத்தில்' என்று பொருள்கொள்ள வேண்டும். ''ஸ ஆத்மா அங்க₃ாந்யந்யா தே₃வதா:'' [தைத்-ஶீக்ஷா 5-1] [பரமாத்மா தே₃வதைகளுக்கு ஆத்மாவாயிருப்பவன்; மற்ற தே₃வதைகள் அவனுக்கு அங்க₃ங்களாயுள்ளனர்] ''யஸ்ய ப்ருதி₂வீ ஶரீரம்'' [ப்₃ருஹ 5-7-7] முதலான ஶாஸ்த்ரங்களில் எனக்கு தே₃ஹ

ज्ञातव्यमधिभूतमधिदैवं च किम्? तयाणां ज्ञातव्योऽधियज्ञशब्दनिर्दिष्टश्च कः? तस्य चाधियज्ञभावः कथम्? प्रयाणकाले च एभिस्त्रिभिर्नियतात्मभिः कथं ज्ञेयोऽसि? ॥ १, २ ॥

---

மாக ப்ரஸித்₃தி₄ பெற்ற இந்திரன் முதலானரிடத்தில் என்றபடி. ஏதச்ச₂ப்₃த₃த்திலிருந்து நிஷ்பந்நமான (உண்டான) 'அத்₂ர' என்னும் ஶப்₃த₃ம் ஶாஸ்த்ரப்ரஸித்₃தி₄யைக் காட்டுகிறது. (அஸ்மிந் தே₃ஹே) இந்த தே₃ஹமான இந்திரன் முதலானரிடத்தில். இத₃ம் ஶப்₃த₃த்தின் ஏழாம் வேற்றுமையான 'அஸ்மிந்' என்னும் ஶப்₃த₃ம் இந்த்₃ராதி₃ தே₃வர்கள் க்ருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ப்ரத்யக்ஷமாக விளங்குவதைக் காட்டுகிறது "ஸ ஏஷ த்₃வாப்₄யாம் த₃ர்ஶநீப்₄யாம் விராட்₃ப்₄யாம் அநயோர் த்₃வாவிம்ஶயோ: த்₃விவசநயோ: அயம் புருஷ: ப்ரதிஷ்டித₂:" முதலானவிடங்களில் ஏதச்ச₂ப்₃த₃மும், இத₃ம் ஶப்₃த₃மும் ஒரே வாக்யத்தில் ஒரே வேற்றுமையில் வழங்கப் பட்டிருப்பதைக் காண்கையால், இங்கு 'அத்₂ர அஸ்மிந்' என்று அவற்றை ஒரே வேற்றுமையில் வழங்குவதில் குறையில்லை. அன்றிக்கே, 'அத்₂ர' என்று யஜ்ஞஸ்வரூபத்தைச் சொல்லுகிறதாகவுமாம். (அதி₄யஜ்ஞ: க:) 30-வது ஶ்லோகத்தின் இரண்டாம் பாத₃த்தில் முற்கூறிய அதி₄காரிகள் மூவர்க்கும் அறியவேண்டியதாகக் கூறப்பட்ட அதி₄யஜ்ஞும் என்பது யாது? (கத₂ம்) அதற்கு அதி₄யஜ்ஞுத்தன்மை எப்படி வந்தது? இனி, 30-வது ஶ்லோகத்தின் பிற்பாதியில் மூவர்க்கும் பொதுவாகச் சொல்லப்பட்ட விஷயத்தைப் பற்றிக் கேட்கிருன், (நியதாத்மபி₄:) மனத்தை அடக்கிய இம்மூவராலும். பன்மை, இதுவும் மூவர்க்கும் பொதுவானது எனக் காட்டுகிறது. (ப்ரயாணகாலே ச) தத்தம் ப்ராப்யத்தைப் பெறுவதற்குறுப்பாக உடலைவிடும் சமயத்திலும். சகாரம் உபாஸநத₃ஶையிலும் இவர்கள் இப்படி நினைப்பதை ஸமுச்சயிக்கிறது. (கத₂ம் ஜ்ஞேய: அஸி) நீ இம்மூவகை அதி₄காரிகளுக்கும் எப்படி எப்படி உபாஸிக்கத்தக்கவனுக இருக்கிருய்? இந்த இரண்டாம் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட விஷயங்கள் மூவர்க்கும் பொதுவானவை என்று சென்ற அத்தியாயம் 30-வது ஶ்லோக வ்யாக்₂யானத்திலேயே விளக்கப்பட்டது காணத்தக்கது. (மது₄ஸூத₃ந) மது₄வெனும் அஸுரனை அழித்தாற்போலே, அந்தந்த அதி₄காரிகள் தத்தம் ப்ராப்யத்தைப் பெறுவதற்கு விரோதி₄யான பாபங்களை அழிக்கும் நீயே இவற்றை அருளிச்செய்ய வேணும் என்கை. ஆக, சென்ற அத்தியாயத்தின் கடைசியில் கண்ணன் மூவகை அதி₄காரிகளுக்கும் அறியவேண்டியவையாகவும்,

श्रीभगवानुवाच—
अक्षरं ब्रह्म परमं स्वभावोऽध्यात्ममुच्यते ।
भूतभावोद्भवकरो विसर्गः कर्मसंज्ञितः ॥ ३ ॥

ஸ்ரீ ப$_4$க$_3$வாநுவாச —
3. அக்ஷரம் ப்$_3$ரஹ்ம பரமம் ஸ்வப$_4$ாவோऽத்$_4$யாத்மமுச்யதே ।
பூ$_4$தப$_4$ாவோத்$_3$ப$_4$வகரோ விஸர்க்க$_3$: கர்மஸம்ஜ்ஞித: ॥

ஸ்ரீப$_4$க$_3$வாந் உவாச—ப$_4$க$_3$வான் பின்வருமாறு கூறினன்:—

ப்$_3$ரஹ்ம — 'ப்$_3$ரஹ்ம' எனப்பட்டது, **பரமம் அக்ஷரம்**— ப்ரக்ருதியினின்றும் நீங்கிய ஆத்மஸ்வரூபமாகும்; **அத்$_4$யாத்மம்** — 'அத்$_4$யாத்மம்' எனப்பட்டது, **ஸ்வப$_4$ாவ: உச்யதே** — ப்ரக்ருதி எனப்படுவதே; **பூ$_4$தப$_4$ாவோத்$_3$ப$_4$வகர: விஸர்க்க$_3$:**—மனிதர் முதலான ஜீவராசிகளை உண்டாக்குவதற்கு உறுப்பாக (ஆண் பெண்ணிடம் வீர்யத்தை) விடுவது, **கர்மஸம்ஜ்ஞித:**—'கர்ம' எனப்படுகிறது.

---

3. அக்கர மப்பிரம மாமத்தி யாத்துமமாந்
தொக்க வசித்தின் றெடர்தன்மை—மிக்க
கருமமாங் கண்டதொழில் காரண மாக
வருமங் குயிர்புணர்வார் மாட்டு.

**அப்பிரமம்** — 'ப்ரஹ்மம்' என்று என்னல் சொல்லப்பட்டது, **அக்கரமாம்**—முக்தாத்மஸ்வரூபமாகும். **அத்தியாத்துமம்**—'அத்$_4$யாத்மம்' என்று என்னல் சொல்லப்பட்டது. **தொக்க அசித்தின் தொடர் தன்மை ஆம்**—ஆத்மாவோடு (அநாதி$_3$காலமாகத்) தொடர்புகொள்ளும் இயல்வுகொண்ட ப்ரக்ருதியாகும். **மிக்க கருமம்**—மிகுதியாகவுள்ள கர்மம் எனப்படுவது, **புணர்வார் மாட்டு**—ஒன்றுசேரும் ஆண் பெண்களிடத்திலே, **அங்கு**—அப்புணர்ச்சியின்போது, **உயிர் வரும் காரணமாக கண்ட தொழில் ஆம்**—மனிதர் முதலான ஜீவராசிகள் உண்டாவதற்குக் காரணமாகக் கண்ட (வீர்யத்தை விடுதலாகிற) தொழிலேயாகும்.

---

**கைக்கொள்ளத்தக்கவையாகவும் ப்ரஸ்தாபித்ததைப் பொதுவாகப் புரிந்துகொண்ட அர்ஜுனன், அவற்றைப்பற்றிய விளக்கத்தை இவ் விரு ஶ்லோகங்களிலும் வினவினனயிற்று. 1–2.**

॥भा॥ तद्ब्रह्मेति निर्दिष्टं परममक्षरम्। न क्षरतीत्यक्षरं, क्षेत्रज्ञसमष्टिरूपम्। तथा च श्रुतिः — * अव्यक्तमक्षरे लीयते अक्षरं तमसि लीयते [सु. २] इत्यादिका। परममक्षरं - प्रकृतिविनिर्मुक्तमात्मस्वरूपम्। स्वभावोऽध्यात्ममुच्यते — स्वभावः - प्रकृतिः, अनात्मभूतम्, आत्मनि संबध्यमानं, भूतसूक्ष्मतद्वासनादिकं

---

3. இந்த ச்லோகத்தில் கைவல்யார்த்திகளைப் பற்றிய முதல் மூன்று கேள்விகளுக்கு பதிலிறுக்கிறான் கண்ணன். (ப்ரஹ்ம பரமம் அக்ஷரம்) ப்ரஹ்மம் என்று என்றால் கூறப்பட்டது. ப்ரக்ருதியினின்றும் நீங்கியதாகையாலே மேலானதான முக்தாத்மஸ்வரூபமே. "அந்யத்ர ஹ்யுபசாரத:" [வி-பு 6-5-77] என்னும் நியாயத்தாலே, பல பெருமைகள் பெற்றிருக்கையாலே, முக்தாத்மஸ்வரூபம் இங்கு ப்ரஹ்மசப்தத்தாலே ஔபசாரிகமாகக் குறிக்கப்படுகிறது. "ந க்ஷரதீத்யக்ஷரம்" [அழியாததாகையாலே அக்ஷரமாகும்] என்னும் வ்யுத்பத்தியாலே அக்ஷரசப்தம் ஜீவாத்மஸமஷ்டியைக் குறிப்பிடுகிறது. "அவ்யக்தம் அக்ஷரே லீயதே அக்ஷரம் தமஸி லீயதே" [ஸு-2] [அவ்யக்தம் அக்ஷரம் எனப்படும் ஜீவஸமஷ்டியோடு ஒடுங்குகிறது. அக்ஷரம் தமஸ் எனப்படும் மூலப்ரக்ருதியோடு ஒடுங்குகிறது.] என்று ஸுபாலோபனிஷத்திலும் ஜீவாத்மஸமஷ்டியைக் குறித்து அக்ஷரசப்தம் பிரயோகிக்கப்பட்டது. இங்கு 'பரமம் அக்ஷரம்' என்று விசேஷித்திருக்கிறபடியால், பத்தஜீவர்களைக் காட்டிலும் மேலான, ப்ரக்ருதியினின்றும் நீங்கிய முக்தாத்மாவின் ஸ்வரூபம் சொல்லப்படுகிறது. இந்த ப்ரக்ருதியினின்றும் நீங்கிய தன் முக்தாத்மஸ்வரூபமே இக்கைவல்யநிஷ்டனுக்கு ப்ராப்யமாகையாலே, முதன் முதலில் அதை அறியவேண்டியதாகக் கூறுகிறான் கண்ணன். அடுத்தபடியாக, இந்த ப்ராப்யத்தை அடைவதற்கு அநாதிகாலமாகத் தடையாயிருக்கும் ப்ரக்ருதியானது இவனுக்கு த்யாஜ்யமாகையாலே, அதை அறியவேண்டுமென்கிறான்,— (அத்யாத்மம் ஸ்வபாவ: உச்யதே) 'அத்யாத்மம்' எனப்பட்டது ப்ரக்ருதியாகும். அநாதிகாலமாக ஜீவனோடு இயல்வானதுபோலே ஒட்டிக்கொண்டிருக்கிறபடியாலே, ப்ரக்ருதி இங்கு ஸ்வபாவம் எனப்படுகிறது. "அத்யாத்மமாவது — ஆத்மாவோடு ஸம்பந்தப்பட்டிருக்கும் அநாத்மவஸ்து. அதாகிறது, — கல்பத்தின் தொடக்கத்திலிருந்தே ஜீவனோடு ஒட்டிக்கொண்டிருக்கும் பூதஸூக்ஷ்மம், அதன் வாஸனை முதலானவை.

पञ्चाग्निविद्यायां ज्ञातव्यतयोदितम्। तदुभयं प्राप्यतया त्याज्यतया च

ஒவ்வொரு பிறப்பிலும் ஜீவனடையும் பஞ்சபூ₄த பரிணாமமான ஸ்தூ₂லஶரீரம், மரணத்தின்போது அழிந்தபோதிலும், ஸூக்ஷ்மமான பஞ்சபூ₄தங்களாலான ஸூக்ஷ்மஶரீரம் இவனைப் பிறப்பு தோறும் தொடர்கிறது. கல்பாதி₃யிலிருந்து கல்பமுடிவு வரை, இவனடையும் ஒவ்வொரு பிறப்பிலும் இந்த ஸூக்ஷ்மஶரீரம் இவனை விட்டுப்பிரியாமலிருக்கையால், அதன் தொடர்பு காரணமாக ப்ராக்ருதமான விஷயஜ்ஞாநவாஸனையும், ப்ராக்ருதகர்மவாஸனையும், அதுகாரணமாக ஏற்படும் ப்ராக்ருதவிஷயங்களில் ருசி முதலானவையும் இவனோடு தொடர்ந்து வருகின்றன. இந்த ஸூக்ஷ்மஶரீரமும், வாஸனை முதலானவையும் இவனோடு கூடியிருக்கும்வரையில், இவனால் தன்னுடைய ஆத்மாவைப் பூர்ணமாக அநுப₄விக்க முடியாது. ஆகையால், ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄த்தினின்றும் அறவே நீங்கிய தனது ஆத்மாவை அநுப₄விக்கையையே ப்ராப்யமாகக்கொண்ட இக்கைவல்யநிஷ்ட₂னுக்கு, இவை த்யாஜ்யமாக (கைவிடவேண்டியவையாக) அறியவேண்டியவையாகும். முமுக்ஷுக்களில் மற்றொரு வகைப்பட்ட ப்₃ரஹ்மாத்மக ஸ்வாத்மோபாஸகனான பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னுக்கும், அவனுக்கு ஸாத₄னமான பஞ்சாக்₃னிவித்₃யையில் இக்காரணத்தினாலேயே பூ₄தஸூக்ஷ்மம், அதன் வாஸனை முதலான இவை த்யாஜ்யமாக அறியத்தக்கவையாக விதி₄க்கப்பட்டன. எங்கேயெனில்: "வேத்த₂ யதா₂ பஞ்சம்யாமாஹுதாவாப: புருஷவசஸோ ப₄வந்தி" [சா₂ந் 5-3-3] [ஐந்தாவது ஆஹுதியில், 'அப்புக்கள்' எனப்படும் (பஞ்ச)பூ₄தஸூக்ஷ்மங்கள் 'புருஷன்' என்று சொல்லத்தக்கவையாவதை அறிவாயா?] என்று தொடங்கி, "இதி து பஞ்சம்யாமாஹுதாவாப: புருஷவசஸோ ப₄வந்தி" [சா₂ந் 5-9-1] [இவ்வண்ணமாக—ஸ்வர்க்க₃லோகம், பர்ஜந்யன், பூ₄மி புருஷன், மனைவி எனும் ஐந்து அக்₃னிகளில் முறையே ஹோமம் செய்யப்படும் ஶ்ரத்₃த₄ா, ஸோமன், வ்ருஷ்டி (மழை), அந்நம், ரேதஸ் (ஆண்பிள்ளையின் வீர்யம்) என்னும் ஐந்து ஆஹுதிகளுக்கிடையே ஐந்தாவதான ரேதஸ் என்னும் ஆஹுதியில் பூ₄தஸூக்ஷ்மங்களோடு கூடிய ஜீவன் புருஷன் என்னும் பெயருடையவனாகிறான்.] என்பதீறாக—புண்ணியம்செய்த ஸம்ஸாரி ஜீவன், ஸ்வர்க்க₃லோகத்தில் ஸ்வர்க்கா₃நுப₄வம் செய்துவிட்டு, புண்ணியம் தீர்ந்தவுடன் ஸ்வர்க்க₃லோகத்திலிருந்து பூ₄தஸூக்ஷ்மங்களோடு கூடியவனாய், மழைவழியாக பூ₄மியை அடைந்து அந்நத்தில் கலந்து, புருஷனின் வீர்யத்

मुमुक्षुभिर्ज्ञातव्यम्। भूतभावोद्भवकरो विसर्गः कर्मसंज्ञितः—भूत-

தில் சேர்ந்து, புருஷனும் மனைவியும் புணர்வதாலே மனைவியின் யோனியை அடைவதைக் கூறி, ''தத்₃ய இத்த₂ம் விது₃:'' [ச₂ாந் 5-10-1] என்று ப்₃ரஹ்மாத்மக ஸ்வாத்மாநுப₄வமாகிற முக்தியை அடையவிரும்பும் பஞ்சாக்₃னி வித்₃யாநிஷ்ட₂னுக்கு த்யாஜ்யமாக அறியத்தக்கவையாக ஸூ₄தஸூக்ஷ்மம், அதன் வாஸனை முதலியவை கூறப்பட்டனவன்றோ. அதுபோலவே கேவலாத்மாநுப₄வமாகிற (கைவல்ய) முக்தியை அடையவிரும்பும் இவனுக்கும் தன் ஆத்மாவை அநுப₄விக்கத் தடையான இவை த்யாஜ்யமாக அறியத்தக்கவை என்று கருத்து. இந்தப் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னே கைவல்ய நிஷ்ட₂ன் என்று கொண்டுவிடலாமே எனில்: கார்யாதி₄கரணத்திலும் அதன் ப₄ாஷ்யத்திலும், கீ₃தை [8-23,24] ப₄ாஷ்யத்திலும் பஞ்சாக்₃னிவித்₃யாநிஷ்ட₂னை ப்₃ரஹ்மாத்மக ஸ்வாத்மோபாஸகனாகவும், அவனுக்கு அர்ச்சிராதி₃க₃தியும் ப்₃ரஹ்மாநுப₄வமும் உண்டென்றும் அருளப்பெற்றுள்ளது. கீ₃தையில் 7,8 அத்₄யாயங்களில் பல ஶ்லோகங்களிலும், அவற்றின் ப₄ாஷ்யங்களிலும், ஜிஜ்ஞாஸு என்படும் இக்கைவல்யநிஷ்ட₂னை கேவலாத்மோபாஸகனென்றும், அவனுக்கு ப்ரக்ருதியினின்றும் நீங்கிய தன் ஆத்மா மாத்திரமே ப்ராப்யமென்றும், ப்₃ரஹ்மம் ப்ராப்யமல்லவென்றும், கீ₃தை [8-16] ப₄ாஷ்யத்தில் ஜிஜ்ஞாஸுவான இவனுக்கு அர்ச்சிராதி₃க₃தி இல்லையென்றும் அருளப்பெற்றிருப்பதால் இவன் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னாயிருக்க இடமேயில்லை என்பது விளங்கும். ''ஆத்மார்த்தீ₂ சேத் த்ரயோऽப்யேதே தத்கைவல்யஸ்ய ஸாத₄கா:'' [கீ₃தார்த்த₂ஸங்க்₃ரஹம் 27] என்று இக்கைவல்யநிஷ்ட₂னுக்குக் கர்ம ஜ்ஞாந ப₄க்தியோக₃ங்களில் எதுவும் ஸாத₄னமாகலாம் என்று ஆளவந்தார் அருளுகையாலும், ப₄க்தியோக₃த்தில் ஒரு வகையான பஞ்சாக்₃நிவித்₃யையையே ஸாத₄னமாகக்கொண்ட பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னைக் காட்டிலும் இவன் வேறுபட்டவன் என விளங்கும். ''தது₃ப₄யம் ப்ராப்யதயா த்யாஜ்யதயா ச முமுக்ஷுபி₄ர் ஜ்ஞாதவ்யம்'' [ப்ரக்ருதி வியுக்தமான தன் ஆத்மா ப்ராப்யமாகவும், ஸூ₄தஸூக்ஷ்மம் வாஸனை முதலானவை த்யாஜ்யமாகவும் முமுக்ஷுக்களால் அறியத்தக்கது] என்று இங்கு ப₄ாஷ்யத்தில் அருளியிருப்பதால், பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்ட₂னைப் போலே இவனும் முமுக்ஷு என்றும், இவன் பெறுவதும் மோக்ஷமே என்றும் விளங்குகிறது. இது, மேல் ஶ்லோகங்களை விளக்கும்போதும் தெளிவாகும். பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னுக்கும், இக்கைவல்யநிஷ்ட₂னுக்கும் உள்ள வாசிகளும் மேலே விளக்கப்படும்.

"நன்றாய், ஞானம் கடந்துபோய் நல்லிந்திரியம் எல்லாம் ஈர்த்து
ஒன்றாய்க்கிடந்த அரும்பெரும்பாழ் உலப்பில் அதனை உணர்ந்துணர்ந்து
சென்றாங்கு இன்பத்துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்றால்
அன்றே அப்போதே வீடு அதுவே வீடு வீடாமே" [திருவாய் 8-8-6]

என்று ஆத்மோபாஸகனைப்பற்றிப்பேசும் பாசுரத்திலே நம்மாழ்வார், "அத்₄யாத்மம்" [ஆத்மாவோடு ஒன்றாய்க்கிடக்கும் ப்ரக்ருதி] என்று இங்கு சொல்லப்பட்டதை "ஒன்றாய்க்கிடந்த அரும்பெரும் பாழ் உலப்பில் அதனை" என்று கூறி, "உணர்ந்து உணர்ந்து" "ஞானம் கடந்து போய்" "நல்லிந்திரியம் எல்லாம் ஈர்த்து" "பசை அற்றால்" என்னும் பகுதிகளாலே, ப்ரக்ருதியையும், அதன் கார்யமான விஷயங்களையும், இந்திரியங்களையும், ருசிவாஸனைகளையும் த்யாஜ்ய மாக உணர்ந்து கைவிடவேண்டும் என்று கூறியதும், இங்கு "ப்₃ரஹ்ம" எனப்பட்டதை "ஆங்கு நன்றாய்ச் சென்று" என்று ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄மற்ற ஆத்மாவை ப்ராப்யமாக அநுஸந்தி₄க்க வேண்டுமென்று கூறியதும், இங்கு 'கர்ம' எனப்பட்டதை "ஞானம் கடந்து" "இந்திரியம் எல்லாம் ஈர்த்து" என்று கைவிடத்தக்கதாக உணர்த்தியதும், கடைசி அடியாலே இவன் பெறுவது மோக்ஷமே என்று கூறியதும் காணத்தக்கது. இவ்வெட்டாம் திருவாய்மொழி யில் ஐந்து முதல் எட்டாம்பாட்டு ஈறாக கேவலாத்மோபாஸகனைச் சொல்லுகிறது என்று எம்பாரும், ப்₃ரஹ்மாத்மகஸ்வாத்மோபாஸ கனைச் சொல்லுகிறது என்று ஆண்டானும் நிர்வஹிப்பதாக (8-8-5; 8-8-8) ஈட்டில் காட்டியிருப்பதிலிருந்து, கேவலாத்மாநுப₄வத்தைப் பெறும் கைவல்யநிஷ்ட₂னும், ப்ரஹ்மாத்மகஸ்வாத்மாநுப₄வத்தைப் பெறும் பஞ்சாக்₃னிவித்₃யாநிஷ்ட₂னும் வெவ்வேறானவரென்று விளங் கும். இதையும் மேலே விளக்குவோம். ஆக, இந்த ஶ்லோகத்தின் முற்பாதியாலே, 'ப்₃ரஹ்ம' எனப்படும் ப்ரக்ருதியினின்றும் நீங்கிய ஆத்மஸ்வரூபம் ப்ராப்யமாகவும், 'அத்₄யாத்மம்' எனப்படும் ப்ரக்ருதி யும், அதன் கார்யப்பொருள்களும் த்யாஜ்யமாகவும் கைவல்யார்த் தி₂க்கு அறியத்தக்கவை என்று கூறப்பட்டது. இனி, 'கர்ம' (7-29) என்று கூறப்பட்டது யாது என்று விளக்கப்படுகிறது பிற்பாதியிலே,— (பூ₄தபா₄வோத்₃ப₄வகர: விஸர்க்க₃: கர்மஸம்ஜ்ஞித:) மனிதர் முத லான ஶரீரங்களோடு கூடிய ஜீவராசிகள் உண்டாவதற்குக் காரண மான விஸர்க்க₃ம் (ஆண் பெண்ணிடம் வீர்யத்தை விடுதல்) 'கர்மம்' எனப்படுகிறது. 'விஸர்க்க₃' ஶப்₃த₃த்தோடு சேர்த்துப்படித்திருப்ப

तावापः पुरुषवचसो भवन्ति (छा. ५. ९. १) इति श्रुतिसिद्धो योषित्संबन्धजः, स कर्मसंज्ञितः। तच्चाखिलं सानुबन्धम् उद्वेजनीयतया, परिहरणीयतया च मुमुक्षुभिर्ज्ञातव्यम्। परिहरणीयता चानन्तरमेव वक्ष्यते, * यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति (१०) इति॥३॥

---

தால், இங்கு பூ₄தஸப்₃த₃ம் பஞ்சபூ₄தம் முதலானவற்றைக் காட்டாமல், மனுஷ்யர் முதலான ஸரீரங்களோடு கூடிய ஜீவர்களைக் காட்டுகிறது. 'பூ₄தப₄ாவோத்₃ப₄வகர:' [மநுஷ்யாதி₃ ஸரீரங்கள் உண்டாவதற்குக் காரணமான] என்று விஸேஷித்திருக்கையால், விஸர்க்க₃ஸப்₃த₃ம்—மலம், மூத்ரம், அபாநவாயு முதலானவற்றை விடுதலைக்காட்டாமல், புருஷன் மனைவியிடம் வீர்யத்தை விடுதலையே காட்டுகிறது. ''பஞ்சம்யாமாஹுதாவாப: புருஷவசஸோ ப₄வந்தி'' [சா₂ந் 5-9-1] என்று முன் [பக்கம் 169ல்] எடுக்கப்பட்ட ஸ்ருதி வாக்யத்தில் முமுக்ஷுக்களில் மற்றொரு வகையான பஞ்சாக்₃னி வித்₃யாநிஷ்ட₂னுக்கும் இந்த விஸர்க்க₃ம் அறியத்தக்கதாகக் கூறப் பட்டதன்றோ. இது இவர்களுக்கு எதற்காக அறியவேண்டியதாகக் கூறப்படுகிறது? எனில்: இந்த விஸர்க்க₃மாகிற கர்மமே—

''அந்யத்ர பீ₄ஷ்மாத் கா₃ங்கே₃யாத் அந்யத்ர ச ஹநூமத:।
ஹரிணீகு₂ரமாத்ரேண சர்மணா மோஹிதம் ஜக₃த்॥''

[க₃ங்கா₃புத்திரனான பீ₄ஷ்மரையும், ஹநூமானையும் தவிர, உலகிலுள்ள மற்ற எல்லா ஜீவர்களும், மான்குளம்பளவுள்ள (ஸ்த்ரீயின் யோனியாகிற) தோலாலே மயக்கமுற்றிருக்கின்றனர்.] என்கிறபடியே இவனுக்குக் ''காலிடைப் பாசம்'' [பெரியாழ்வார்திருமொழி 5-2-3] என்று சொல்லப்படுகிற காமபாசத்தை விளைத்து, கொண்ட பெண்டிர் மக்கள் உற்றார் சுற்றத்தவரை வளர்த்து, இவனை ப்ரக்ருதியோடு கழற்றமுடியாதபடி கட்டிவைத்து, ஆத்மஜ்ஞாநத்தை அடியோடு மழுங்கச்செய்கிறதாகையாலே, மனிதர், விலங்குகள் முதலான பலவகைப்பட்ட படைப்புக்களுக்குக் காரணமான இக்கர்மம் முழுவதும், அதற்கு உறுப்பான காமஸாஸ்த்ரம் முதலானவற்றோடும், அதன் பயனான க₃ர்ப்ப₄வாஸம் முதலானவற்றோடும் வெறுக்கத்தக்கதாகவும், கைவிடத்தக்கதாகவும் ஆத்மாநுப₄வத்தை விரும்பும் முமுக்ஷுக்களால் அறியத்தக்கது என்று கருத்து. முமுக்ஷுக்களான ஆத்மோபாஸகர்களில் ஒருவகைப்பட்ட பஞ்சாக்₃னிவித்₃யாநிஷ்ட₂ர்களுக்கு ஸாத₄னமான பஞ்சாக்₃னிவித்₃யையில் — ஐந்தாவது ஆஹுதியான ஸ்த்ரீபுருஷஸம்ஸர்க்க₃ம் (ஆண் பெண் சேர்க்கை) ஈருன

अधिभूतं क्षरो भावः पुरुषश्चाधिदैवतम्।
अधियज्ञोऽहमेवात्र देहे देहभृतां वर॥ ४॥

4. அதி₄பூ₄தம் க்ஷரோ ப₄ாவ: புருஷஶ் சாதி₄தை₃வதம்।
அதி₄யஜ்ஞோऽஹமேவாத்ர தே₃ஹே தே₃ஹப்₄ருதாம் வர॥

தே₃ஹப்₄ருதாம் வர — தே₃ஹமுடையவர்களில் சிறந்த அர்ஜுநனே! அதி₄பூ₄தம் — (ஐஶ்வர்யார்த்தி₂களுக்கு அறிய வேண்டியதாகக் குறிக்கப்பட்ட) அதி₄பூ₄தம் எனப்பட்டது, க்ஷர: ப₄ாவ:—மாறுவதை இயற்கையாகக்கொண்ட (சிறந்த) ஶப்₃த₃ம் முதலான விஷயங்களே; அதி₄தை₃வதம் ச— (அவர்களுக்கு அறியவேண்டியதாகக் குறிக்கப்பட்ட) 'அதி₄தை₃வம்' என்று சொல்லப்பட்டதும், புருஷ:— இந்திரன் முதலான தே₃வர்களைக்காட்டிலும் உயர்ந்த புருஷனின் நிலையேயாம். அதி₄யஜ்ஞ:—(மூவருக்கும் அறிய வேண்டியதாகக் கூறப்பட்ட) அதி₄யஜ்ஞம் எனப்பட்டதும், அத்ர தே₃ஹே அஹம் ஏவ—எனது தே₃ஹமாயிருக்கும் இந்திரன் முதலானோரிடம் அவர்களுக்கு அந்தர்யாமியா யிருந்துகொண்டு யஜ்ஞங்களால் ஆராதி₄க்கப்படும் நானே.

---

4. அதிபூதம் பூத பரிணம மாகு
மதிதெய்வந் துய்க்கு மவனுகு—மதியெச்ச
மாங்குயிருண் ணின்றே யாராத் தியனுகி
யோங்கிறையா நானென் றுணர்.

---

எல்லா நிலையிலும், "ஆப:" என்று குறிக்கப்படும் அசித் ஸம்ப₃ந்த₄ம் ஜீவனைத் தொடர்ந்து வருகிறது, அது கைவிடமுடியாம லிருக்கிறது, க₃ர்ப்ப₄ம், ஜன்மம் முதலான துன்பங்களை விளைப்பதா யிருக்கிறது என்று காட்டப்படுகிறதாகையால், இந்த விஸர்க்க₃ம் மிகவும் வெறுக்கத்தக்கதாயுள்ளது என்பது தெளிவு. "யதி₃ச்ச₂ந்தோ ப்₃ரஹ்மசர்யம் சரந்தி" என்று இவ்வத்தியாயத்திலேயே பதினோ ராவது ஶ்லோகத்தில், அசித்ஸம்ப₃ந்த₄மற்ற ஆத்மாநுப₄வத்தைப் பெறவிரும்பும் இக்கைவல்யார்த்தி₂க்கு, அசித் ஸம்ப₃ந்த₄த்தைப் பூண்கட்டித்தரும் இவ்விஸர்க்க₃ம் கைவிடத்தக்கது, இது இல்லாமை யாகிற ப்₃ரஹ்மசர்யம் ஏற்கத்தக்கது என்று கூறியிருப்பதும் இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கது. ஆக, கைவல்யார்த்தி₂க்கு அறியவேண்டிய தும், கைவிடவேண்டியதும் காட்டப்பட்டதாயிற்று. 3.

।।भा।। ऐश्वर्यार्थिनां ज्ञातव्यतया निर्दिष्टमधिभूतं-क्षरो भावः-वियदादिभूतेषु वर्तमानस्तत्परिणामविशेषः क्षरणस्वभावो विलक्षणश्शब्द-स्पर्शादिस्साश्रयः; विलक्षणास्साश्रयाश्शब्दस्पर्शरूपरसगन्धाः ऐश्वर्यार्थिभिः

---

அதிபூதம் — (ஐஶ்வர்யார்த்திகளுக்கு அறியவேண்டிய தாகக் கூறப்பட்ட) அதி₄பூ₄தம் எனப்பட்டது, பூத பரிணா மம் ஆகும் — பஞ்சபூ₄தங்களின் பரிணாமமான (சிறந்த) ஶப்₃த₃ம் முதலான விஷயங்களே; அதிதெய்வம்—(அவர் களுக்கு அறியத்தக்கதாகக் கூறப்பட்ட) அதி₄தை₃வம், துய்க்கும் அவனும் — (அந்தச் சிறந்த ஶப்₃த₃ாதி₃ விஷ யங்களை) அநுப₄விக்கும் புருஷனின் நிலையேயாம்; அதி யெச்சம் — (மூவர்க்கும் அறியவேண்டியதாகக் கூறப்பட்ட) அதி₄யஜ்ஞம் எனப்பட்டது, ஆங்கு உயிருள் நின்றே— எனது தே₃ஹமான இந்திரன் முதலான ஜீவர்களுக்குள் அந்தர்யாமியாய் நின்று, ஆராத்தியன் ஆகி—ஆராதி₄க் கப்படுபவனாகி, ஓங்கு இறையாம் நான்—ஓங்கிநிற்கும் ஸர்வேஶ்வரனான நானே, என்று உணர் — என்று அறிவாயாக.

---

4. இந்த ஶ்லோகத்தின் முற்பாதியாலே, ஐஶ்வர்யார்த்தி₂ களைப் பற்றிய இரண்டு கேள்விகளுக்கும், பிற்பாதியால் மூவகை அதி₄காரிகளுக்கும் பொதுவான அதி₄யஜ்ஞத்தைப்பற்றிய இரு கேள்விகளுக்கும் பதிலிறுக்கிறான் கண்ணன். (அதி₄பூ₄தம் க்ஷரோ ப₄ாவ:) ஐஶ்வர்யார்த்தி₂களுக்கு அறியத்தக்கதாகச் சொல்லப்பட்ட 'அதி₄பூ₄தம்' எனப்பட்டது,—ஆகாஶம், வாயு, தீ, நீர், நிலம் எனும் பூ₄தங்களிலிருப்பதாய், அந்த பூ₄தங்களின் பரிணாமவிஶேஷங்களாய், மாறுவதையே இயல்வாகக் கொண்டவையான சிறந்த ஶப்₃த₃ ஸ்பர்ஶ ரூப ரஸ க₃ந்த₄ங்களாகிற ஐந்து விஷயங்களும், அவற்றை யுடைய போ₄க்₃யப்பொருள்களுமேயாம். "க்ஷரோ ப₄ாவ:" என்று விகாரமடையும் பொருளாக விளக்கியிருப்பதால், "அதி₄பூ₄த" ஶப்₃த₃த்திலுள்ள பூ₄தஶப்₃த₃ம் ஜீவராஶிகளைக் குறிக்கமாட்டாது. ஆகையால், பஞ்சபூ₄தங்களிலுள்ள ஶப்₃த₃ாதி₃போ₄க்₃யங்களே இங்கு ஐஶ்வர்யமாகச் சொல்லப்படுகின்றன என்பது தெளிவு. இங்கு ஐஶ்வர்யார்த்தி₂களுக்கு ப₄க்தியோக₃மே ஸாத₄னமாக விதி₄க்கப்

प्राप्यास्तैरनुसन्धेयाः। पुरुषश्चाधिदैवतम् — अधिदैवतशब्दनिर्दिष्टः- पुरुषः। अधिदैवतम्—देवतोपरि वर्तमानः; इन्द्रप्रजापतिप्रभृतिकृत्स्न- देवतोपरि वर्तमानः, इन्द्रप्रजापतिप्रभृतीनां भोग्यजाताद्विलक्षणशब्दादेः भोक्ता पुरुषः। सा च भोक्तृत्वावस्था ऐश्वर्यार्थिभिः प्राप्यतयाऽनु-

---

படுகிறதாகையால், நூறு அஶ்வமேத₄யாக₃ம் முதலான கர்மங்களைச் செய்து ஸாதி₄க்கப்படும் இந்திர பதவியிருகவுள்ள ஐஶ்வர்யங்கள் இங்கு கருதப்படவில்லை. ப்₃ரஹ்மாவின் பதவி, அல்லது அதை ஒத்த போ₄க₃மே இங்கு ஐஶ்வர்யார்த்தி₂களுக்கு ப்ராப்யமாக அநு ஸந்தி₄க்கத்தக்கதாக அதி₄பூ₄தஶப்₃த₃த்தால் எடுக்கப்படுகிறது என்று கொள்ளவேண்டும். அதனாலேயே, ஶப்₃த₃தா₃தி₃போ₄க₃ங்களை விலக்ஷண ஶப்₃த₃த்தாலே விஶேஷித்தார் பா₄ஷ்யகாரர். ஆளவந்தாரும், "ப₄க்தியோக₃ஸ் தத₃ர்த்தீ₂ சேத் ஸமக்₃ரைஶ்வர்ய ஸாத₄க:" [ கீ₃தார்த்த₂ஸங்க்₃ரஹம்-23 ] [விரும்பினுகில், ப₄க்தியோக₃ம் நிறைந்த செல்வத்தை ஸாதி₄த்துக்கொடுக்கும்.] என்று ப₄க்தியோக₃த் தால் ஸாதி₄க்கப்படும் ஐஶ்வர்யம் ஸமக்₃ரமானது (நிறைந்தது) என்று காட்டினர். ( புருஷஶ்ச அதி₄தை₃வதம் ) ஐஶ்வர்யார்த்தி₂ களுக்கு அறியத்தக்க அதி₄தை₃வமும், இந்திரன் முதலான தே₃வதை களுக்கு மேலானவனுய், அவர்களிலும் மேற்பட்ட போ₄க₃ங்களை யுடைய புருஷனே. கைவல்யார்த்தி₂க்கே அநுஸந்தி₄க்கத்தக்க ப்ர க்ருதிவியுக்தாத்மஸ்வரூபமாகிற புருஷன், இங்கு புருஷஶப்₃த₃த்தால் குறிக்கத்தக்கவனல்லன்; இங்கு சொல்லப்படும் ஐஶ்வர்யம் மிகச் சிறந்த அசித₃நுப₄வமேயாகையால், இந்தப் புருஷன், தாழ்வுக ளற்றதாய், மிகச்சிறந்த அசித₃நுப₄வத்தையுடைய பிரமனே, அல்லது அவனுக்கு ஸமானமான போ₄க₃த்தையுடைய ஒருவனே ஆகவேண்டும். ஐஶ்வர்யார்த்தி₂யான இவ்வுபாஸகன் தன்னிலும் வேறுபட்ட அப்புருஷனுகவே ஆகமுடியாதாகையாலும், அவனையொத்த போ₄க₃மே இவன் விரும்புவதாகையாலும், இங்கு புருஷஶப்₃த₃ம் ப₄ாவப்ரத₄ானமாய், ஐஶ்வர்யார்த்தி₂க்கு ப்ராப்யமான அத்தகைய புருஷனின் நிலையைக் குறிக்கிறது. ஆக, "அதி₄தை₃வ மென்பது புருஷனே" என்றதால், இந்திரன், ப்ரஜாபதிகள் முதலான தே₃வதைகளுக்கு மேலேயிருப்பவனுய்,அவர்களைக் காட்டிலும் மேலான போ₄க₃ங்களை உடையவனுன பிரமன் அல்லது அவனை ஒத்த போ₄க₃ங்களையுடையானெரு புருஷனின் போ₄க்த்ருத்வாவஸ்தை₂யே (போ₄க₃நிலையே) இங்கு ஐஶ்வர்யார்த்தி₂களால் ப்ராப்யமாக அநு

सन्धेया। अधियज्ञोऽहमेव [—अधियज्ञशब्दनिर्दिष्टोऽहमेव]। अधियज्ञः—यज्ञैराराध्यतया वर्तमानः। अत्र इन्द्रादौ मम देहभूते आत्मतयाऽवस्थितोऽहमेव यज्ञैराराध्य इति महायज्ञादिनित्यनैमित्तिकानुष्ठानवेलायां त्रयाणामधिकारिणामनुसन्धेयमेतत्॥ ४॥

---

ஸந்தி₄க்கத்தக்கது என விளங்குகிறது "அண்டக்குலத்துக்கு அதிபதியாகி" [திருப்பல்லாண்டு-5] என்னும் பாசுரத்தில், ஐஶ்வர்யார்த்தி₂கள் அண்டா₃தி₄பதியான பிரமனின் பே₄ாக₃த்தை விரும்பி "அண்டா₃தி₄பதயே நம:" என்னும் கரணமந்திரத்தாலே அண்டக்குலத்திற்கு அதி₄பதியான எம்பெருமானை உபாஸிப்பதாகப் பெரியாழ்வார் அருளியதும் இங்கு காணத்தக்கது. ஆக, ஶ்லோகத்தின் முற்பாதியாலே, இந்திரன் முதலான தே₃வர்களுக்கு மேலே விளங்கும் அண்டா₃தி₄பதியான பிரமனின் நிலையும், அவன் அனுப₄விக்கும் ஶப்₃தா₃தி₃பே₄ாக₃ங்களும் ஐஶ்வர்யார்த்தி₂களால் ப்ராப்யமாக அநுஸந்தி₄க்கத்தக்கவை என்று காட்டப்பட்டது. இனி, பிற்பாதியாலே, மூவகை அதி₄காரிகளுக்கும் பொதுவான அதி₄யஜ்ஞத்தைப் பற்றிய இரு கேள்விகளுக்கு பதில் கூறுகிறான், — (அதி₄யஜ்ஞ: அஹமேவ) அதி₄யஜ்ஞம் எனப்பட்டவன் நானே. "அதி₄யஜ்ஞ: க:" என்னும் கேள்விக்கு இது பதிலாகிறது. இனி, "கத₂ம்" [அதி₄யஜ்ஞம் எனப்படுகிறவனுக்கு அத்தன்மை எப்படி வந்தது?] என்ற இரண்டாவது கேள்விக்கு பதில் 'அதி₄யஜ்ஞ' ஶப்₃த₃த்தை ஆராய்ந்தால் விளங்கும். எப்படியெனில்: யஜ்ஞத்தோடு தொடர்புகொண்டவன் அதி₄யஜ்ஞம் எனப்படுகிறான். ஸர்வேஶ்வரனை நான் யஜ்ஞங்களோடு ஆராத்₄யனாக (ஆராதி₄க்கப்படுபவனாகத்) தொடர்புகொண்டவனாகையால் 'அதி₄யஜ்ஞம்' எனப்படுகிறேன் என்று கருத்து. "இந்திரன் முதலான தே₃வர்களன்றோ யஜ்ஞங்களால் ஆராதி₄க்கப்படுபவர்களாக அந்தந்த வேத₃வாக்யங்களில் குறிக்கப்படுகிறார்கள்; அப்படியிருக்க, நீயே யஜ்ஞங்களால் ஆராதி₄க்கப்படுபவன் என்பது எப்படி?" எனில், — (அத்ர தே₃ஹே) * என்னுடைய தே₃ஹமாகவே அவ்விந்திரன் முதலானோர் இருக்கையாலே, அவர்களுக்கு உள்ளே அந்தர்யாமியாயிருக்கும் நானே, யஜ்ஞங்களால் ஆராதி₄க்கப்படும் அதி₄யஜ்ஞம் என்னக் குறையில்லை என்றபடி.

---

* பக்கம் 165-ல் 32-வது வரியில் 'எனது' என்பதை 'உனது' என்றும், 36-வது வரியில் 'எனக்கு' என்பதை 'உனக்கு' என்றும் திருத்திக்கொள்க.

''அதி₄யஜ்ஞோऽஹமேவ அத்ர தே₃ஹே'' என்று சொல்லுகிறவன் ஸர்வேஶ்வரனென கண்ணன். ஆகையால், 'அத்ர தே₃ஹே' என்றது அவனுடைய தே₃ஹத்தைப்பற்றியதாகவேயிருக்கவேண்டும். 'அதி₄ யஜ்ஞும்' என்று யஜ்ஞப்ரஸ்தாவம் வந்திருக்கையாலும், ''யஜ - தே₃வ பூஜாயாம்'' என்று த₄ாதுபாட₂ம் இருக்கையாலும், இங்கு தே₃ஹ மாகக் கூறப்படுகிறவர்கள், யஜ்ஞங்களால் பூஜிக்கப்படுகிறவர் களாகப் பிரஸித்₃தி₄ பெற்ற இந்திரன் முதலான தே₃வர்கள் என்று கொள்வதே பொருத்தம்; ''யோ யோ யாம் யாம் தநும்'' [கீ₃தை 7-21] என்னுமிடத்தில் இந்திரன் முதலான தெய்வங்களைத் தன் தே₃ஹ மாகக் கண்ணனே சென்ற அத்தியாயத்தில் கூறியிருப்பதும் இதை வலியுறுத்துகிறது. ஸம்ஸாரி ஜீவர்களுக்குக் கர்மத்தால் ஏற்பட்ட அநித்யமான ஶரீரம்போல் அல்லாமல், எப்போதும் பரமாத்மாவுக்கு இவ்விந்திரன் முதலான தெய்வங்கள் இயற்கையாகவே ஶரீரமா யுள்ளன என்பதை '' மம தே₃ஹபூ₄தே '' என்னும் பத₃த்தினால் காட்டினார் ப₄ாஷ்யகாரர். (அஹமேவ) என்னும் ஏவகாரத்தாலே, வேத₃ாந்தஜ்ஞாநமில்லாதார் இந்திராதி₃களையே யஜ்ஞங்களால் ஆராதி₄க்கப்படுபவராக நினைப்பது தவறு; உண்மையில் அவர்களுக்கு அந்தர்யாமியான தானே யஜ்ஞங்களால் ஆராதி₄க்கப்படுபவன் என்று காட்டுகிறான். ''ஸ ஆத்மா । அங்க₃ாந்யந்யா தே₃வதா:'' [தை- ஶீக்ஷா-5] [அப்பரமபுருஷனே ஆத்மாவாயிருப்பவன். மற்ற தெய் வங்கள் அவனது அங்க₃ங்களாயிருப்பவை.] ''விஷ்ணு: ஸர்வா தே₃வதா:'' [ஐதரேயப்₃ராஹ்மணம்] [விஷ்ணுவே எல்லா தே₃வதை களுக்கும் அந்தர்யாமி] என்று வேத₃மும் ஓதிற்றன்றோ. முன் சொல்லப்பட்ட 'ப்₃ரஹ்ம', 'அத்₄யாத்மம்', 'கர்ம' 'அதி₄பூ₄தம்', 'அதி₄தை₃வம்' ஆகியவைபோலே அதி₄யஜ்ஞும் வேறு தத்வமல்ல; நானேயாகிறேன் என்று 'அஹமேவ' என்னும் ஏவகாரம் காட்டுகிற தாகவும் கொள்ளலாம். ஆக, ஶரீரமான இந்திரன் முதலான அந்தந்த தே₃வதைகளோடு கூடிய ஆத்மாவான நாராயணனே யஜ்ஞங்களால் ஆராதி₄க்கப்படுபவன் என்று தேறுகையால், ''அதி₄யஜ்ஞ: கத₂ம்'' [அதி₄யஜ்ஞும் எனப்படும் தத்துவத்திற்கு அதி₄யஜ்ஞத்தன்மை எப்படி வந்தது ?] என்னும் கேள்விக்கு பதிலிறுக்கப்பட்டதாயிற்று. (தே₃ஹ ப்₄ருதாம் வர) சிறந்த தே₃ஹத்தை உடையவனே! ஸத்வகு₃ணத்தை மிகுதியாகக் கொண்டவனாகையாலே, ரஜஸ்தமங்கள் மிகுந்த ஸாமாந்யஜனங்களைப்போலே இந்திரன் முதலானாரை மாத்திரம் யஜ்ஞங்களால் ஆராதி₄க்கப்படுபவராகக் கொள்ளாமல், அவர்களுக்கு

अन्तकाले च मामेव स्मरन् मुक्त्वा कलेवरम् ।
यः प्रयाति स मद्भावं याति नास्त्यत्र संशयः ॥ ५ ॥

5. அந்தகாலே ச மாமேவ ஸ்மரந் முக்த்வா களேப₃ரம் ।
ய: ப்ரயாதி ஸ மத்₃ப₄ாவம் யாதி நாஸ்த்யத்ர ஸம்ஶய: ॥

அந்தகாலே ச — (தான் விரும்பிய ப₂லனைப்பெறும்) கடைசிக்காலத்திலும், ய:—எவனொருவன், மாம் ஏவ ஸ்மரந்—(தான் விரும்பிய நிலையோடு கூடிய) என்னையே நினைத்துக் கொண்டு, களேப₃ரம் த்யக்த்வா ப்ரயாதி — தே₃ஹத்தை விட்டுச்செல்கிறானோ, ஸ: — அவன், மத்₃ப₄ாவம் யாதி — அந்த எனது நிலையையே அடைகிறான். அத்ர—இவ்விஷயத்தில், ஸம்ஶய: ந அஸ்தி—ஐயமில்லை.

---

5. அந்தகா லத்திலு மாங்கென்னை யேநினைந்திங்
கிந்த வுடலினைவிட் டேகுமவன்—சிந்தைநிகழ்
என்றன்மை தானெய்து மீங்கிதனிற் சங்கைசேர்
தன்றன்மை யொன்றில்லை தான்.

---

அந்தர்யாமியான என்னையே நீ ஆராத்₄யனாகக் கொள்ளவேணும் என்று கருத்து. உனக்குச் சிறந்ததொரு தே₃ஹம் அமைந்திருப்பது போலே, எனக்கு இந்திரன் முதலானோர் சிறந்த தே₃ஹமாவர் என்று காட்டுவதற்காக இப்படி விளிப்பதாகவும் கொள்ளலாம். அதி₄யஜ்ஞத்தைப் பற்றிய இவ்வறிவு, யஜ்ஞங்களை அநுஷ்டி₂ப்பார் அனைவர்க்கும் வேண்டியதாகையாலே, இது மூவகை அதி₄காரிகளுக்கும் பொதுவானது என விளங்குகிறது. ''ஸந்த்₄யாஹீநோऽஶுசிர் நித்யம் அநர்ஹ: ஸர்வகர்மஸு'' [ஸந்த்₄யாவந்த₃னம் செய்யாதவன் எப்போதும் அஶுத்₃த₄ன்; எக்கர்மத்தையும் செய்யத் தகாதவன்] முதலான ஶாஸ்த்ரவசனங்கள் பஞ்சமஹாயஜ்ஞங்கள் முதலான நித்ய நைமித்திக கர்மங்களைச் செய்யாவிடில், எக்கர்மமும் பயனளிக்காது என்று கூறுகையாலே, அதி₄யஜ்ஞத்தைப்பற்றிய இவ்வநுஸந்த₄ாநம், மூவகை அதி₄காரிகளுக்கும் நித்யநைமித்திக கர்மங்களைச் செய்யும் போது அவஶ்யம் வேண்டியது என விளங்குகிறது. ஆக, 'ஐஶ்வர்யார்த்தி₂களைப் பற்றிய இரு கேள்விகளுக்கும், மூவகை அதி₄காரிகளுக்கும் பொதுவான அதி₄யஜ்ஞத்தைப்பற்றிய இரு கேள்விகளுக்கும் பதிலிறுக்கப்பட்டதாயிற்று. 4.

॥भा॥ इदमपि त्रयाणां साधारणम्। अन्तकाले च मामेव स्मरन् कलेबरं त्यक्त्वा यः प्रयाति; स मद्भावं याति—मम यो

---

அந்த காலத்திலும்—(தான் விரும்பிய பலனைபெறும்) கடைசிக்காலத்திலும், ஆங்கு என்னையே நினைந்து—(தான் விரும்பிய நிலையோடு கூடிய) என்னையே நினைத்து, இந்த் உடலினை இங்கு விட்டு ஏகுமவன்—இவ்வுடலை இங்கு விட்டுச் செல்பவன், சிந்தை நிகழ் என் தன்மைதான் எய்தும்—தான் நினைத்த அந்த எனது நிலையையே அடைவான் ஈங்கு இத னில் சங்கை சேர் தன் தன்மைதான் ஒன்று இல்லை—இங்கு இவ் விஷயத்தில் தான் ஐயமுறுவதற்குச் சிறிதும் இடமில்லை.

---

5. இவ்வத்தியாயத்தின் முதல் ஒன்றரை ஶ்லோகத்தாலே அர்ஜுனன் கேட்ட கேள்விகளுக்கு இதுவரையில் கண்ணனால் பதி லளிக்கப்பட்டது. இரண்டாவது ஶ்லோகத்தின் பிற்பாதியில் "ப்ர யாணகாலே" என்று தொடங்கி, அந்திமஸ்ம்ருதி விஷயமாகக் கேட்ட கேள்விக்குச் சுருக்கமாக பதிலளிக்கிறான் இந்த ஶ்லோ கத்தில். இதுவும் மூவகை அதிகாரிகளுக்கும் பொது என்பது "நியதாத்மபி:" [8-2] என்று கேள்வி கேட்கும்போது பன்மை யாலே விளக்கப்பட்டது. அதியஜ்ஞபதார்த்தஸ்வரூபத்தை ஆராய்ந் தால் அது மூவர்க்கும் பொதுவானது என விளங்குவதுபோலே, இந்த ஶ்லோகத்தில் சொல்லப்படும் அந்திமஸ்ம்ருதிபதார்த்தஸ்வ ரூபத்தை ஆராய்ந்தாலும் அது மூவர்க்கும் பொது என விளங்கும். (அந்த காலே ச) கடைசிக்காலத்திலும்; இங்கு, அவரவர்க்கு ப்ராப்ய விரோதிபாபங்களெல்லாம் கழிந்து, பலம் பெறும் தருவாயிலுள்ள மரணகாலத்தைக் காட்டுகிறது. (மாமேவ ஸ்மரந்) தாம் தாம் விரும்பும் பலனுக்கு அநுரூபமான நிலையோடு கூடியவனாக என்னையே நினைப்பவனாய். (ய: களேபரம் முக்த்வா ப்ரயாதி) எவனொருவன் அந்த ஶரீரத்தை விட்டுச் செல்கின்றானோ. (ஸ மத் பாவம் யாதி) அவன் அந்த எனது நிலையை அடைகிறான். இங்கு 'நானாகவே ஆகிறான்' என்று ஸ்வரூபைக்யபரமாகப்பொருள் கொள்வது ஶ்ருதி முதலான ப்ரமாணங்களோடு முரண்படும்; 'ப்ரமரகீடந்யாயத்தாலே ஈஶ்வரனை ஒத்த தன்மையை உடையவனா கிறான்' என்று கொண்டாலும், பல ஈஶ்வரர்கள் உண்டாகையாகிற தோஷம் ஏற்படும். மூவகை அதிகாரிபேதமும் ஸித்திக்காது.

भावः-स्वभावः तं याति ; तदानीं यथा मामनुसन्धत्ते, तथाविधाकारो भवतीत्यर्थः ; यथा आदिभरतादयस्तदानीं स्मर्यमाणमृगसजातीयाकारास्संभूताः ॥ ५ ॥

॥ भा ॥ स्मर्तुस्स्वविषयसजातीयाकारतापादनमन्तिमप्रत्ययस्य स्वभाव इति सुस्पष्टमाह—

यं यं वाऽपि स्मरन् भावं त्यजत्यन्ते कलेबरम् ।
तं तमेवैति कौन्तेय सदा तद्भावभावितः ॥ ६ ॥

6. யம் யம் வாऽபி ஸ்மரந் ப₄ாவம் த்யஜத்யந்தே களேப₃ரம் ।
தம் தமேவைதி கௌந்தேய! ஸத₃ா தத்₃ப₄ாவப₄ாவித: ॥

---

ஆகையால், " மம யோ ப₄ாவ: மத்₃ப₄ாவ: " என்னும் வ்யுத்பத்தியாலே "எனது நிலையை அடைகிருன்" என்று பொருள் கொள்ள வேண்டும். சரீரம் விடும்போது, தான் விரும்பிய எந்த நிலையோடு கூடியவனுய் என்னை உபாஸித்தானே, அந்த நிலையையே அடைகிருன் என்றபடி. மூவகை அதி₄காரிகளுக்கும் ஈஶ்வரனேடு ஸ்வரூபம் வேருயிருக்கச்செய்தே, பல த₃ுஶையில் தாங்கள் விரும்பிய ஒவ்வொரு வகையிலே ஈஶ்வரனேடு ஸாம்யத்தை அடைகிருர்கள் ; ஐஶ்வர்யார்த்தி₂ ஈஶ்வரனேடு ஐஶ்வர்ய விஷயத்தில் ஒரு வகையில் ஸமனுகிருன்; கைவல்யார்த்தி₂ ' அபஹதபாப்மத்வம் ' முதலான எட்டு கு₃ணங்கள் தன் ஆத்மாவில் விளக்கமடைவதாகிற வகையில் ஈஶ்வரனேடு ஸமனுகிருன். ஜ்ஞாநியோவெனில், இத்தோடன்றியில் ஈஶ்வர ஸ்வரூபரூபகு₃ணவிபூ₄திகளை அநுப₄விப்பதிலும் ஈஶ்வரனேடு ஸமனுகிருன். அவனுக்கும் ஈஶ்வரனுக்கேயுள்ள ஜக₃த்ஸ்ருஷ்டி முதலானவை கிடையாது — என்று கண்டு கொள்வது. (அத்ர ஸம்ஶய: நாஸ்தி) இவ்விஷயத்தில் ஐயமே கிடையாது; ஆதி₃ ப₄ரதன் முதலானுர் அந்த காலத்தில் மானையே நினைத்திருந்ததினுல் மானுகவே ஆனுர்கள் என்பது ஶாஸ்த்ரங்களில் ப்ரஸித்₃த₄மன்ருே. இந்த விருத்தாந்தத்திலிருந்து, அந்திமஸ்ம்ருதியால் ஸ்வரூபைக்யம் ஏற்படும் என்னும் மயக்கமும் தவிர்க்கப்படுகிறது. ஜட₃ப₄ரதன் அந்தகாலத்தில் மானை நினைத்ததினுல் அந்த மானுகவே ஆகிவிடவில்லையே; அதுபோன்றதான வேருெரு மானுகத்தானே ஆனுன். ஆக, அந்திமஸ்ம்ருதி விஷயமான கேள்விக்குச் சுருக்கமாக பதிலுரைக்கப்பட்டதாயிற்று.

கௌந்தேய—அர்ஜுன! அந்தே—கடைசிக் காலத்தில், யம் யம் வாபி பாவம் ஸ்மரந் களேபரம் த்யஜதி — எந்த எந்த நிலையை நினைத்துக்கொண்டு ஶரீரத்தை விடுகிறானோ, தம் தம் ஏவ ஏதி — அந்தந்த நிலையையே அடைகிறான். (ஏனெனில்:) ஸதா தத்பாவபாவித: — எப்போதும் அந்த நிலையிலேயே நினைவைச் செலுத்தினவனன்றோ (அவன்).

---

6. தானெந்த வெந்தப் பொருளுன்னித் தன்முடிவி
லூன்வந்த வாக்கை யொழித்தேகுந்—தானந்த
வந்தவது தன்னையே யாங்கணையு மெக்காலுஞ்
சிந்தையது செய்தலினாற் சேர்ந்து.

தன் முடிவில்—தனக்கு மரணம் வந்தபோது, தான் எந்த எந்தப் பொருள் உன்னி—தான் எந்த எந்த நிலையை நினைத்துக்கொண்டு, ஊன் வந்த ஆக்கை ஒழித்து ஏகும்—மாம்ஸமயமான சரீரத்தை விட்டுப் போகிறானோ, தான் அந்த அந்த அதுதன்னையே ஆங்கு அணையும் — அந்த அந்த நிலையையே அடுத்தபடி அடைவான். எக்காலும் அது சேர்ந்து சிந்தை செய்தலினால்—எப்போதும் அந்நிலையிலேயே நினைவைச் செலுத்தியவனாகையாலே.

---

6. ஈஶ்வரன் விஷயமான அந்திமஸ்ம்ருதி, அவரவர் விரும்பும் வகையில் ஈஶ்வரனோடு ஸாம்யத்தை விளைக்கும் என்று சென்ற ஶ்லோகத்தில் சொன்னான்; இது ஈஶ்வர விஷயத்தில் மட்டுமல்ல; கடைசிக்காலத்தில் எந்த விஷயத்தை மனிதன் நினைத்தாலும், அவ்வந்திமஸ்ம்ருதியானதுதானே அடுத்த பிறப்பில் அவ்விஷயம் போன்றதொரு நிலையை அவனுக்கு விளைத்துவிடும் என்று கூறுவதன் மூலம் சென்ற ஶ்லோகத்தை விவரிக்கிறான் இங்கு. (அந்தே) அந்த காலத்தில். சென்ற ஶ்லோகத்தில் "அந்தகாலே" என்று சொல்லப் பட்டதையே, இங்கு 'அந்தே' என்கிறான். (யம் யம் வாऽபி ஸ்மரந்) எதை எதை நினைத்துக்கொண்டு. 'யம் யம்' என்ற வீப்ஸையால் இன்னதைத்தான் நினைக்கவேண்டும் என்னும் நியமமில்லை என்று காட்டப்படுகிறது. (வா அபி) என்னும் பதங்களாலே நினைக்கப் படுவதின் உயர்வுதாழ்வுகளைப் பற்றியும் ஒரு நிர்ப்பந்தமில்லை என்று காட்டப்படுகிறது. (தம் தமேவ) அதை அதையே. 'தம் தம்' என்னும் வீப்ஸையால் ஒன்றை நினைத்தவன் வேறொன்றை

॥ भा ॥ अन्ते — अन्तकाले यं यं वापि भावं स्मरन् कलेवरं त्यजति, तं तं भावमेव मरणानन्तरमेति। अन्तिमप्रत्ययश्च पूर्वभावितविषय एव जायते॥ ६॥

அடைவதென்பதில்லை, அதையே அடைகிருன் என்று காட்டப்படுகிறது. 'ஏவ'காரத்தாலே ப்ரபுலமான வேறு புண்யமிருந்தாலும், அது இதைத் தடைசெய்ய முடியாது; அடுத்த பிறவியில் முன் நினைத்த பொருளைப்போல் ஆனபின்பே, அப்புண்யத்தின் பலன் ஏற்படும் என்று காட்டுகிறது. மஹாபுண்யசாலியான ஜடபரதன் அடுத்த பிறவியில் மாளுகி, அதற்கடுத்த பிறவியிலேயே புண்ணியத்தின் பயனுக உயர்பிறவியை அடைந்தான் என்பது காணத்தக்கது. (யம் யம் பாவம் அந்தே ஸ்மரந் களேபரம் த்யஜதி தம் தமேவ ஏதி) கடைசிக்காலத்தில் எந்த எந்த நிலையை நினைத்துக்கொண்டு உடலை விடுகிருனே, அந்த அந்த நிலையையே அடைகிருன். இங்கு 'பாவ' ஶப்தம் பதார்த்தங்களைக் குறிப்பதாகக்கொண்டால், அந்தப் பதார்த்தத்தை அடுத்த பிறவியில் அடைவதாகவோ, அல்லது அதோடு ஸ்வரூபைக்யம் அடைவதாகவோ கொள்ளவேண்டிவரும்; ஜடபரதன் தான் நினைத்த மானையோ, அதோடு ஸ்வரூபைக்யத்தையோ அடையவில்லையாகையால், இது பொருந்தாது. மேலும், ஸ்வரூபைக்யம், "அந்யத் த்ரவ்யம் ஹி நைதி தத்த்ரவ்யதாம் யத:" [வி-பு 2-14-27] [ஒரு பொருள் மற்றொரு பொருளாக ஆகமுடியாதன்றோ] என்கிற ரீதியில் ப்ரமாணங்களுக்கும் யுக்திகளுக்கும் பொருந்தாது. இதைத் தவிர்ப்பதற்காக, 'தம் தமேவ' என்றதற்கு லக்ஷணையாக 'அவ்வப்பொருள்போன்றதாக ஆகிருன்' என்று பொருள் கொள்ளவேண்டிவரும். ஆகையால், முன் ஶ்லோகத்திற்போலே 'பாவ' ஶப்தம் அந்தந்தப் பொருள்களின் நிலையையே குறிப்பதாகக்கொள்வது பொருத்தம். முன் பிறவியில் ஒரு நிலையையுடைய பொருளை நினைத்தவன், மறு பிறவியில் அதே நிலையையுடையவனுக ஆகிருன் என்று பொருள். (தம் தமேவ ஏதி) என்னும் ஏவகாரத்தாலே ஏதோவொரு ஜன்மத்திலல்லாமல் அடுத்த பிறவியிலேயே அந்நிலையை அடைவதைக் காட்டுகிறது. ஆதிபரதன் அடுத்த பிறவியிலேயே மானுனதை நினைப்பது. இப்படி நினைத்த நிலையையே உடையவனுவதற்குக் காரணமென்னவெனில்: (ஸதா தத்பாவ பாவித:) எப்போதும் இவன் அந்த நிலையிலேயே நினைவைச் செலுத்தினனன்றே; அந்திமஸ்ம்ருதி வரையில் நீடித்த அந்நினைவே இவனை அந்நிலையை அடைவிக்கிறது என்று கருத்து. (தத்பாவ பாவித:) 'அந்த நிலையின் பாவனையின்

तस्मात्सर्वेषु कालेषु मामनुस्मर युध्य च।
मय्यर्पितमनोबुद्धिः मामेवैष्यस्यसंशयः॥७॥

7. தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு மாமநுஸ்மர யுத்₄ய ச ।
மய்யர்ப்பிதமநோபு₃த்₃தி₄: மாமேவைஷ்யஸ்யஸம்ஶய: ||

**தஸ்மாத்**—ஆகையால், **ஸர்வேஷு காலேஷு**—(மரணமடையும் வரையில்) எல்லாக்காலத்திலும், **மாம் அநுஸ்மர**—என்னையே நினைப்பாயாக; **யுத்₄ய ச**—யுத்₃த₄மும் செய்வாயாக; **மய்யர்ப்பிதமநோபு₃த்₃தி₄:** — (இவ்வண்ணம்) என்னிடமே செலுத்தப்பட்ட நெஞ்சையும் அறிவையும் உடையவனாய், **மாம் ஏவ ஏஷ்யஸி**—என்னையே (நீ விரும்பிய வகையில்) அடைவாய்; **அஸம்ஶய:**—இவ்விஷயத்தில் ஐயமில்லை.

---

7. **ஆதலா லெக்காலு மங்ஙனென்னை நின்றுநினை
தீதறுசீர் வெஞ்சமத்தைச் செய்குதிநீ—காதலா
லென்பான் மனம்புத்தி யேய்ந்தா னென்னையடையுந்
தன்பாலோர் சங்கையறச் சார்ந்து.**

**ஆதலால்** — முற்கூறிய காரணத்தால், **எக்காலும்** — (மரணமடையும் வரை) எல்லாக்காலத்திலும், **அங்ஙன்**—முற்கூறிய மூன்று வகைகளில் ஒரு விதமாக, **என்னை** — என்னை, **நின்று நினை** — நிலையாக நினைப்பாயாக; **நீ**—நீ **தீது அறு சீர் வெம் சமத்தை**—(க்ஷத்ரியனுக்கு) குற்றமற்றதாய், பெருமையையுடைய கடும்போரை, **செய்குதி** — செய்வாயாக, **காதலால்** — அன்போடுகூட, **என்பால்**—என்னிடம், **மனம் புத்தி ஏய்ந்தான்** — மனத்தையும் அறிவையும் செலுத்தியவன், **தன்பால் ஓர் சங்கை அற சார்ந்து**—தான் ப₂லன் பெறுவதுபற்றி ஓர் ஐயமும் இல்லாமல ஸாத₄னத்தை அநுஷ்டி₂த்து, **என்னை அடையும்** — (தான் விரும்பிய வகையில்) என்னை அடைவான்.

---

(தியானத்தின்) வாஸனையை உடையவன்' என்றோ, 'அந்நிலையில் நினைவைச் செலுத்தினவன்' என்றோ பொருள்கொள்ளலாம். (கௌந்தேய) என்னையே நினைக்க விரும்பும் குந்தியின் புத்திரனான நீ. என் விஷயமான அநவரதப₄ாவனையை உடையவனாகவேணும் என்று கருத்து. ஆக, அந்திமஸ்ம்ருதி பற்றிய பொதுவான விளக்கம் இந்த ஶ்லோகத்தில் தரப்பட்டதாயிற்று. 6.

॥भा॥ यस्मात् पूर्वकालाभ्यस्तविषय एवान्तिमप्रत्ययो जायते, तस्मात् सर्वेषु कालेष्वाप्रयाणादहरहर्मामनुस्मर। अहरहरनुस्मृतिकरं

---

7. இவ்வண்ணமாக, தான் விரும்பும் ப₄லம்பெறுவது அந்திம ஸ்ம்ருதியை அபேக்ஷித்திருக்கிறதென்றும், அந்த அந்திமஸ்ம்ருதி அப்பலனையே எப்போதும் தியானிப்பதால் ஏற்படுவது என்றும் சொல்லப்பட்டது. ஆகையால், நீயும் சிறந்த விஷயமான என்னைப் பற்றிய அந்திமஸ்ம்ருதியைப் பெறுவதற்காக, என்னைப் பற்றிய பா₄வனையையும், அதை விளக்கும் க்ஷத்ரியத₄ர்மமான யுத்₃த₄த்தையும் செய்யவேண்டும் என்று கூறுகிறான் இந்த ஶ்லோகத்தில். (தஸ்மாத்) ஆகையாலே; முற்காலத்தில் பழகிய விஷயத்திலேயே அந்திமஸ்ம்ருதி ஏற்படுகிறது என்னும் காரணத்தால் என்றபடி. (ஸர்வேஷு காலேஷு மாம் அநுஸ்மர) எல்லாக் காலங்களிலும் சிறந்த விஷயமான என்னையே நினைப்பதாகிற பா₄வனை (உபாஸனை)யைச் செய். இப்படி என் விஷயமான அநவரதபா₄வனை செய்தால், கடைசிக்காலத்தில் என் விஷயமாகவே அந்திமஸ்ம்ருதி ஏற்படும் என்று கருத்து. ''ஸ க₂ல்வேவம் வர்த்தயந் யாவதா₃யுஷம் ப்₃ரஹ்மலோகமபி₄ஸம்பத்₃யதே'' [சா₂ந் 8-15-1] [அந்த உபாஸகன் இவ்வண்ணமாகவே சரீரம் முடியும் வரையில் வாழ்ந்தானாகில், ப்₃ரஹ்ம லோகத்தை அடைகிறான்] ''ப்ராயணாந்தமோங்காரமபி₄த்₄யாயீத'' [ப்ரஶ்ந 5-1] [சரீரத்தை விடும் வரையில் ஓங்காரத்தை தியானிக்கக் கடவன்.] என்னும் ஶ்ருதிகளை ஒட்டி ''ஸர்வேஷு காலேஷு'' என்னும் பத₃ங்கள் ஶரீரம் முடியும் வரையில் உள்ள காலத்தைக் காட்டுகின்றன. ''ஆப்ரயாணாத் தத்ராபி ஹி த்₃ருஷ்டம்'' [4-1-12] [சரீரம் முடியும் வரை உபாஸநம் செய்யவேண்டும்; ஏனெனில்: ஶாஸ்த்ரவசனமும் அப்படியே காணப்படுகிறது.] என்று ஸூத்ரகாரரும் இவ்வர்த்த₂த்தையே அருளினார். ''ஸர்வேஷு காலேஷு'' என்னும் பன்மையாலே, மரணம் வரையில்—மாஸத்துக்கோ, பக்ஷத்துக்கோ ஒரு முறையல்லாமல், தினந்தோறும் உபாஸிக்கவேண்டும் என்று உணர்த்தப்படுகிறது. அதிலும், ''தம் பூர்வாபரராத்ரேஷு யுஞ்ஜாந:'' [அவனை விடியற்காலையில் விழித்தெழும்போதும், இரவில் படுக்கச்செல்லும்போதும் சிந்திக்கவேண்டும்] முதலான வசனங்களில் சொல்லப்பட்ட ரீதியில் ஸத்வகு₃ணம் மிகுந்த எல்லாக் காலங்களிலும் உபாஸிக்கவேண்டும் என்று சொல்லப்பட்டதாயிற்று. ''யத்ரைகாக்₃ரதா தத்ராவிஶேஷாத்'' [4-1-11] [வேறு தே₃ஶகாலங்களைக் குறிப்பிட்டுச் சொல்லாமையால், எந்த தே₃ஶகாலங்களில் உபாஸநம் ஒருமுகப்படுமோ, அந்த தே₃ஶகாலங்களில் (உபாஸநம் செய்யவேண்டும்.)] என்று ப்₃ரஹ்மஸூத்ரகாரரும் அருளினர்.

युद्धादिकं वर्णाश्रमानुबन्धि श्रुतिस्मृतिचोदितं नित्यनैमित्तिकं च कर्म कुरु। एवमुपायेन मय्यर्पितमनोबुद्धिः अन्तकाले च मामेव स्मरन् यथाभिलषितप्रकारं मां प्राप्स्यसि; नात्र संशयः॥ ७॥

---

இப்படி எல்லாக் காலத்திலும் பரமபுருஷனை நினைப்பதாகிற உபாஸநம் மிகவும் செயற்கரிதாயிருக்கிறதே என்னும் கேள்வியெழ, அந்தந்த வர்ணாஶ்ரமங்களுக்குரிய யுத்₃த₄ம் முதலான கர்மங்களை முற்கூறியபடி த்ரிவித₄பரித்யாக₃ங்களோடு செய்துவந்தால், உபாஸநம் தன்னடையே ஸித்₃தி₄க்கும் என்று காட்டுகிறான் மேலே,— (யுத்₄ய ச) 'யுத்₄யஸ்வ ச' என்றதாய், 'யுத்₃த₄ம் செய்வாயாக' என்று பொருள்படுகிறது இங்கு யுத்₃த₄ம் என்றது உபலக்ஷணமாய், அந்தந்த வர்ணாஶ்ரமங்களுக்குரியதாய், ஶ்ருதிஸ்ம்ருதிகளில் விதி₄க்கப்பட்ட நித்ய நைமித்திக கர்மங்கள் அனைத்தையும் காட்டுகிறது. ''மாமநுஸ்மர'' என்று முதலில் உபாஸனத்தைச் சொல்லி, ''மாமேவைஷ்யஸி'' என்று கடைசியில் அதற்குப் ப₂லம் சொல்லியிருக்கையாலே, ''யுத்₄ய ச'' என்று நடுவே தனிப்ப₂லன் இல்லாமல் படிக்கப்பட்டிருக்கும் யுத்₃த₄ம் முதலான வர்ணாஶ்ரமத₄ர்மங்கள்— ''ப₂லவத்ஸந்நிதௌ₄ அப₂லம் தத₃ங்க₃ம்'' [ப₂லனையுடைய ஒரு காரியத்தின் அருகில் ப₂லனில்லாமல் மற்றொரு காரியம் விதி₄க்கப்பட்டிருந்தால் பிந்தியது முந்தியதற்கு அங்க₃ம்] என்னும் மீமாம்ஸா நியாயத்தின்படி, இங்கு ப₂லனோடு படி₂க்கப்பட்டிருக்கும் உபாஸநத்திற்கு அங்க₃மாய் நின்று அதை விளைப்பவை என்று தேறுகிறது. இனி, இவ்வுபாஸனத்தினால் அடையும் ப₂லனை விளக்குகிறது ஶ்லோகத்தின் பிற்பகுதி,— (மய்யர்ப்பித மநோபு₃த்₃தி₄:) முற்கூறியபடி மூன்று வித₄மான பரித்யாக₃ங்களுடன் யுத்₃த₄ம் முதலானவற்றை அநுஷ்டி₂க்கையாகிற கர்மயோக₃மாகிற உபாயத்தாலே, என்னிடம் மனத்தை அர்ப்பணம் செய்வதாகிற உபாஸனத்தையும், என்னிடம் பு₃த்₃தி₄யை அர்ப்பணம் செய்வதாகிற 'இவனே ப₂லனையளிக்கும் உபாயம்' என்னும் உறுதியையும் பெற்றவன் என்றபடி. இப்படிக் கொள்ளும்போது, 'அந்திம காலத்திலும் என்னையே நினைப்பவன்' என்னும் அர்த்த₂ம் ப்ரகரண ஸித்₃த₄மாக ஏற்படும். அன்றிக்கே, ''மாமநுஸ்மர யுத்₄ய ச'' என்று பூர்வார்த்த₄த்திலேயே கர்மத்தை அங்க₃மாகக்கொண்ட உபாஸனமாகிற உபாயம் சொல்லப்பட்டு விட்டபடியால், ''மய்யர்ப்பித மநோ

॥भा॥ एवं सामान्येन स्वप्राप्त्यावाप्तिरन्तिमप्रत्ययाधीनेत्युक्त्वा तदर्थं त्रयाणामुपासनप्रकारभेदं वक्तुमुपक्रमते ; तत्र ऐश्वर्यार्थिनामुपासन-प्रकारं यथोपासनमन्तिमप्रत्ययप्रकारं चाह—

---

பு₃த்₃தி₄:'' என்று அந்திமஸ்ம்ருதியே சொல்லப்படுவதாகவும் கொள்ளலாம். பா₄ஷ்யத்தில் ''உபாயேந'' என்று—முதல் நிர்வாஹத்தில் கர்மயோக₃த்தையும், இரண்டாவது நிர்வாஹத்தில் கர்மத்தை அங்க₃மாகக் கொண்ட உபாஸனத்தையும் குறிக்கிறது. (மாமே வைஷ்யஸி) அந்த உபாஸநம், அந்திமஸ்ம்ருதி இவற்றின் ப₂லனாக, நீ விரும்பிய ஆகாரத்தையுடைய என்னை அடைவாய்; ஐஶ்வர்யத்தை விரும்பினுயாகில், என்னையொத்த ஐஶ்வர்யத்தை உடையவனாகவும், கேவலாத்மாநுப₄வமாகிற கைவல்யத்தை விரும்பினுயாகில், ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄மற்று ஸ்வரூப விளக்கம் பெற்றிருக்கும் விஷயத்தில் என்னையொத்த ஆத்மாவின் அநுப₄வத்தை உடையவனாகவும், உப₄யவிபூ₄திவிஶிஷ்டனான என்னையே பெறவிரும்பினுயாகில், அத்தகைய என்னுடைய அனுப₄வத்தையே உடையவனாகவும் ஆவாய் என்று கருத்து. முன்னும் பின்னும் இங்கு இந்த மூவகை அதி₄காரிகளைப் பற்றியும் ப்ரஸ்தாவம் வந்திருக்கையால், ''மாமே வைஷ்யஸி'' என்றதற்கு மூவகை அதி₄காரிகளுக்கும் பொருந்தும்படி இப்படியே பொருள்கொள்ளவேண்டும். (அஸம்ஶய: ஏஷ்யஸி) ஐயமற்றவனாய் விரும்பிய ப₂லனை அடைவாய். நீ விரும்பிய ப₂லனை அடைவதில் ஐயமில்லை என்றபடி; 'அஸம்ஶய:' என்றது ப₃ஹுவ்ரீஹியாய் அர்ஜுனனுக்கு விஶேஷணமாகிறது; ''நிஸ்ஸம்ஶயேஷு ஸர்வேஷு நித்யம் வஸதி வை ஹரி:। ஸஸம்ஶயாந் ஹேதுப₃லாத் நாத்₄யாவஸதி மாத₄வ:॥'' [பா₄ர-மோக்ஷ 369-71] [ஐயமற்றவர்கள் அனைவரிடமும் ஹரி எப்போதும் வஸிக்கிறார்; குயுக்திகளாலே ஸந்தே₃ஹப்பட்டுக்கொண்டேயிருப்பவர்களிடம் மாத₄வன் வாழ்வதில்லை.] என்கிறபடியே ஐயமற்றவனாய் ஸாத₄னத்தை அநுஷ்டி₂க்கவேண்டும் என்று காட்டுகிறது. அன்றிக்கே, ''அமாநோநா: ப்ரதிஷேதே₄'' என்னும் காவ்யாநுஶாஸனத்தின்படியே, 'அஸம்ஶய:' என்பதில் 'அ' என்னும் எழுத்தை ப்ரதிஷேத₄த்தைக் காட்டும் தனி எழுத்தாகக்கொண்டு 'இவ்விஷயத்தில் ஐயம் இல்லை' என்பதாகவும் கொள்ளலாம். ஆக, 'என்னைப் பற்றிய அந்திமஸ்ம்ருதியைப் பெறுவதற்காக, என்னைப் பற்றிய உபாஸனத்தையும், அதை விளைக்கும் யுத்₃த₄ம் முதலான நித்ய நைமித்திக கர்மங்களையும் செய்யவேண்டும்' என்று கூறப்பட்டதாயிற்று. 7.

अभ्यासयोगयुक्तेन चेतसा नान्यगामिना ।
परमं पुरुषं दिव्यं याति पार्थानुचिन्तयन् ॥ ८ ॥

8. அப்$_4$யாஸயோக$_3$யுக்தேந சேதஸா நாந்யக$_3$ாமிநா ।
பரமம் புருஷம் தி$_3$வ்யம் யாதி பார்த்த$_2$ாநுசிந்தயந் ॥

பார்த்த$_2$ — அர்ஜுநு! அப்$_4$யாஸ யோக$_3$ யுக்தேந— அப்$_4$யாஸத்தோடும், யோக$_3$த்தோடும் கூடியதாய், நாந்ய க$_3$ாமிநா—வேறெதிலும் செல்லாததான, சேதஸா—நெஞ்சாலே, பரமம் தி$_3$வ்யம் புருஷம் — தலைசிறந்த தி$_3$வ்ய புருஷனை என்னை, அநுசிந்தயந்—(பின்வருமாறு கடைசிக் காலத்தில்) நினைப்பவன், (பரமம் தி$_3$வ்யம் புருஷம்) யாதி— அத்தகைய புருஷனை என்னையே அடைகிறுன்; (ஐஶ்வர்ய விஶிஷ்டனுகிறுன் என்றபடி.)

---

8. எஞ்சாத சீலத் தியோகஞ் செறிந்தியலு
நெஞ்சால்வே றென்றை நினையாதே—துஞ்சாத
தன்னினைவாற் செல்வந் தருபரம பூருடனு
மென்னியல்வே வந்தடையு மிங்கு.

எஞ்சாத சீலத்து — விடாமல் என்னை நினைப்பதாகிற அப்$_4$யாஸத்தையும், யோக$_3$ம் — என்விஷயமான ப$_4$க்தி யோக$_3$மாகிற உபாஸனத்தையும், செறிந்து இயலும் நெஞ்சால் — நெருங்கிச் சேர்ந்திருக்கும் நெஞ்சாலே, வேறென்றை நினையாதே—வேறென்றையும் நினையாமல், துஞ்சாத தன் நினைவால்—(பின்வருமாறு கடைசிக்காலத்தில்) மறவாமல் என்னை நினைப்பதால், இங்கு — இந்த லீலா விபூ$_4$தியில், செல்வம் தரு பரம பூருடனும் என் இயல்வே வந்து அடையும் — அனைவர்க்கும் செல்வத்தை அளிக்கும் பரமபுருஷனை எனது ஐஶ்வர்யத்தோடு கூடிய நிலையே (நினைப்பவனுக்கு) வந்துசேரும்.

---

8. கடந்த மூன்று ஶ்லோகங்களிலே—ஐஶ்வர்ய கைவல்ய ப$_4$க$_3$வச் சரணுர்த்தி$_2$களான மூவகை உபாஸகர்களுக்கும், அவரவர் உபாஸனத் தால் அவரவர் ப்ராப்யத்தைப்பற்றிய அந்திமஸ்ம்ருதி ஏற்பட்டால்

॥ भा ॥ अहरहरभ्यासयोगाभ्यां युक्ततया नान्यगामिना चेतसा अन्तकाले परमं पुरुषं दिव्यं मां वक्ष्यमाणप्रकारं चिन्तयन् मामेव

---

தான் அவரவர்க்குரிய ப₄லன் கிடைக்கும் என்னும் பொது விஷயம் சொல்லப்பட்டது. இப்படி இவர்களுக்கு அந்திமஸ்ம்ருதியை விதி₄ப் பதற்குக் காரணம் என்ன? என்பதை நாம் ஆராய்ந்தால், ஒவ்வொரு அதி₄காரிக்கும் உள்ள ஸ்வார்த்த₂தையின் மிகுதியைக் குறைத்து, அவரவர் ப்ராப்யத்திற்கும், பரமபுருஷனுக்கே ஆட்செய்கைக்கும் உள்ள நெடுவாசியைக்காட்டி, அவரவர் ப்ராப்யத்தில் ருசியைக் கழித்துச் சிறிது சிறிதாக அவர்களை உயர்த்தி, அவரவரைப் படிப் படியாகத் தனக்கேயுரியராக்கவேண்டும் என்னும் பரமகருணையாலேயே எம்பெருமான் அந்திமஸ்ம்ருதி ஏற்படும் வரையில் பல ஜன்மங்கள் இவர்களைத் தத்தம் ப்ராப்யாநுகு₃ணமாக உபாஸிக்கவேண்டும் என்று விதி₄த்திருக்கிறான் என்பது விளங்கும். இனி, இந்தப் பரமலக்ஷ்யத் தைக்கொண்ட அந்திமஸ்ம்ருதி ஏற்படுவதற்கு உறுப்பாக அவரவர்க் குரிய உபாஸநபே₄த₃த்தைப் பதினைலாவது ஶ்லோகமீறாகக் காட்ட முற்பட்டு, இது தொடங்கி மூன்று ஶ்லோகங்களாலே ஐஶ்வர்யார்த் தி₂க்குரிய உபாஸநமுறையையும், அதையொட்டியே அந்திமஸ்ம்ருதி ஏற்படுவதையும் விளக்குகிறான். (அப்₄யாஸயோக₃ யுக்தேந சேதஸா) அப்₄யாஸம், யோக₃ம் ஆகிய இரண்டும் கூடிய நெஞ்சாலே. ''அப்₄யாஸத்தின் யோக₃ம் (சேர்த்தி)'' என்று தத்புருஷ ஸமாஸ மாகக்கொண்டால், யுக்தபத₃மிருக்கும்போது, யோக₃பத₃ம் அநா வஶ்யகமாகிறது; மேலும், உத்தர (மேல்) பதா₃ர்த்த₂த்திற்குமாத்திரம் ப்ராதா₄ந்யம் ஏற்படும் தத்புருஷத்தைக் காட்டிலும், இரு பதா₃ர்த்த₂ங் களுக்கும் ப்ராதா₄ந்யம் ஏற்படும் த்₃வந்த்₃வஸமாஸம் சிறந்தது. ஆகையால், 'அப்₄யாஸயோக₃ங்களோடு கூடிய நெஞ்சால்' என்றே பொருள்கொள்ளவேண்டும். அப்₄யாஸமாவது,—''ஆரம்ப₃ணஸம்ஶீல நம் புந: புநரப்₄யாஸ:'' [விக்₃ரஹவிஶிஷ்டனை ப₄க₃வானை மறுபடியும், மறுபடியும் சிந்திப்பது அப்₄யாஸமாகும்.] என்று வாக்யகாரர் அருளிய படியே, நித்யநைமித்திக கர்மங்களை அனுஷ்டி₂ப்பதற்குத் தடையா யிராத எல்லாக்காலங்களிலும் நெஞ்சாலே இடையறுது பரமபுருஷனைச் சிந்திப்பதேயாகும். யோக₃மாவது, — தத்தம் ப்ராப்யத்தைப் பெறு வதற்குப் ப₂லப்ரத₂ஸாத₄னமாக எம்பெருமானைச் சிந்திக்கும் ப₄க்தி யோக₂மேயாகும். அந்தச் சிந்தனையும், தத்தம் ப்ராப்யத்தை அளிப் பதாகையாலே மிகமிக இனியதாகவும், மிகமிகத் தெளிவாகவும், ப்ரத்யக்ஷம்போலேயுள்ளதாகவுமிருக்கும் என்பது ப₄க்தியோக₃ப்ர

याति—आदिभरतमृगत्वप्राप्तिवदैश्वर्यविशिष्टतया मत्समानाकारो भवति।

---

கரணங்களில் தெளிவாக்கப்பட்டது. தியானம் செய்யும் யோக₃காலம், நித்யநைமித்திககர்மங்களைச்செய்யும் காலம் தவிர்ந்த காலங்களில் விக்₃ரஹவிஶிஷ்டனை எம்பெருமானைச் சிந்தித்தல் அப்₄யாஸஶப்₃த₃த்தின் தேர்ந்தபொருள். இவ்வண்ணமாக, தனது ப்ராப்யத்தையும், அதையளிக்கும் ஸாத₄னமாக எம்பெருமானையும் இடையறாது சிந்தித்து வந்தால், இனிமையில் தனது ப்ராப்யம் தாழ்ந்தது என்றும், ப₄க₃வத₃நுப₄வம் இனிமையில் மிகவுயர்ந்தது என்றும், அதிலும் அவனுக்கே ஆட்செய்கை மிகமிக உயர்ந்தது என்றும் விவேகியான உபாஸகன் காலக்ரமத்தில் உணர்ந்துவிடுவான் என்னும் திருவுள்ளத்தாலேயே அந்திமஸ்ம்ருதிவரையில் அப்₄யாஸயோக₃ங்களைச் செய்யும்படி எம்பெருமான் விதி₄க்கிறான் என்பதை இங்கு உய்த்துணரவேண்டும். (நாந்யகா₃மிநா) 'நக₃ம்' 'நைகம்' போன்ற ஶப்₃த₃மாகையாலே, 'அநந்யகா₃மிநா' என்று பொருள்படுகிறது. தனது ப்ராப்யத்தைக்காட்டிலும் தாழ்ந்தவையான விஷயங்களில் செல்லாத நெஞ்சாலே என்றபடி. ஐஶ்வர்ய கைவல்யார்த்தி₂கள் அவரவர் ப்ராப்யத்தைக் காட்டிலும் உயர்ந்த ப₄க₃வத்₃விஷயத்திலும், ப₄க₃வச்சரணார்த்தி₂யான உபாஸகன் தனக்கு ப்ராப்யமான ஸ்வார்த்த₂ப₄க₃வத₃நுப₄வத்தைக் காட்டிலும் உயர்ந்ததான பரார்த்த₂ப₄க₃வத₃நுப₄வகைங்கர்யங்களிலும் செல்லத் தடையில்லை என்பதும், அப்படி உயர்ந்த விஷயத்தில் சென்றால் அதி₄காரிகள் உயர்ந்துவிடுகிறார்கள் என்பதும், இப்படி உயரவேண்டும் என்பதே எம்பெருமானின் பரமலக்ஷ்யம் என்பதும் குறிக்கொள்ளத்தக்கது. (பரமம் தி₃வ்யம் புருஷம் அநுசிந்தயந்) "ந தத்ஸமஶ்சாப்₄யதி₄கஶ்ச த்₃ருஶ்யதே" [ஶ்வே 6-8] [அவனை ஒத்தாரும் மிக்காரும் காணப்படவில்லை.] "ஒத்தார் மிக்காரை இலையாய மாமாயா!" [திருவாய் 2-3-2] என்கிறபடியே, தனக்கு ஸமானமானவர்களோ, உயர்ந்தவர்களோ இல்லாதவனாய். புருஷஸூக்தத்திலும், இங்கு அடுத்த ஶ்லோகத்திலும் "ஆதி₃த்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்" என்று இருள்தருமாஞாலமான இவ்வுலகிற்கு அப்பால் அப்ராக்ருத தே₃ஶத்தில் இருப்பவனாக முழங்கப்பட்ட புருஷோத்தமனான என்னை, அந்திமகாலத்தில் அடுத்த இரண்டு ஶ்லோகங்களிலும் சொல்லப்போகிற ரீதியில், தனது ப்ராப்யத்துக்கு அநுகு₃ணமாக ஐஶ்வர்ய விஶிஷ்டனாகச் சிந்திப்பவன். அப்₄யாஸயோக₃ஶப்₃த₃த்தினால் அந்திம காலத்திற்கு முந்தின காலத்தில் சிந்தனம் கூறப்பட்டுவிட்டபடியால், இங்கு அந்திமகாலத்தில் ஸ்ம்ருதியே கூறப்படுகிறது என்று கொள்ள

अभ्यासः—नित्यनैमित्तिकाविरुद्धेषु सर्वेषु कालेषु मनसोपास्यसंशीलनम्।
योगस्त्वहरहर्योगकालेऽनुष्ठीयमानं यथोक्तलक्षणमुपासनम्॥८॥

---

வேண்டும். (பரமம் புருஷம்) சிந்தனத்திற்கும், தியானத்திற்கும் விஷயமான புருஷனைப் பரமஶப்₃த₃த்தாலே விஶேஷித்திருக்கிறபடியால், புருஷோத்தம வித்₃யாப்ரகரணத்தில் (கீ₃தை 15.17,18) புருஷோத்தமனாகக் கூறப்பட்ட கண்ணனே இப்பரமபுருஷன் என விளங்குகிறபடியால் "மாம் ... சிந்தயந் மாமேவ யாதி" என்று ப₄ாஷ்யகாரர் அருளினார். (தி₃வ்யம் புருஷம்) இதன் விவரணமான அடுத்த ஶ்லோகத்தில் "ஆதி₃த்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்" என்று கூறப்படுகையால், இங்கு தமஸ்ஸுக்கு அப்பாற்பட்டதாய், அப்ராக்ருதமான பரமபத₃த்தில் இருக்கும் பரவாஸுதே₃வனே தி₃வ்ய புருஷனெனப்படுகிறான் என்று விளங்குகிறது. இதனால், 'தி₃வ்யம்' என்றதற்கு 'ஸூர்யமண்ட₃லத்தில் இருப்பவன்' என்று ஶங்கரர் உரையிட்டது ப்ரகரணத்திற்குப் பொருந்தாது என விளங்குகிறது. (பரமம் தி₃வ்யம் புருஷம் யாதி) ஒத்தாரும் மிக்காருமில்லாத அந்த அப்ராக்ருதபுருஷனையே அடைகிறான். ஐஶ்வர்யார்த்தி₂யான இவனுக்கு, பரமபுருஷனை அடைகையைப் ப₂லனாகச் சொல்லுவது எப்படிப்பொருந்தும்? எனில்; 'அந்திமகாலத்தில் மானையே சிந்தித்த ப₄ரதன் மானாக ஆனான்' என்னுமிடத்திற்போலே, பரமபுருஷனை ஐஶ்வர்ய விஶிஷ்டனாகச் சிந்தித்த இவன், அத்தகைய ஐஶ்வர்ய விஶிஷ்டனாக ஆவதே பரமபுருஷனை அடைவதாகும் என்று கருத்து. "யம் யம் வாபி" என்று தொடங்கும் ஆறும் ஶ்லோகத்தில் இவ் விஷயம் தெளிவாக விளக்கப்பட்டது. (அநுசிந்தயந்-யாதி) அந்திம ஸ்ம்ருதிவரையிலும் இவன் ஐஶ்வர்யத்தையே விரும்பி என்னை ஐஶ்வர்ய விஶிஷ்டனாகச் சிந்தித்தானாகில், அடுத்த பிறவியில் அத்தகைய ஐஶ்வர்யத்தை உடையவனாயிருக்கும் விஷயத்தில் என்னை ஒத்தவனாகிறான் என்று கருத்து. அந்திமஸ்ம்ருதி ஸமயத்திலும், எம்பெருமானுடைய முயற்சி ப₂லித்து இவன் ஐஶ்வர்யத்தின் தாழ்வை உணர்ந்து, எம்பெருமானையே இனியவனாக நினைத்துவிட்டானாகில், அப்போதே இவன் ப₄க₃வச்சரணார்த்தி₂யாகி ப₄க₃வத₃நுப₄வத்தையே பெற்றுவிடுவான் என்பது சொல்லாமலே விளங்கும். (பார்த்த₂) குந்தியின் பிள்ளையே! எனது அத்தை பிள்ளையான நீ சிறந்த ஐஶ்வர்யத்தை விரும்புகிறவனானாலும், என்விஷயமான அந்திம ஸ்ம்ருதியைப் பெறுவதற்கு உறுப்பாக யுத்₃த₄ம் முதலான ஸ்வத₄ர்மத்தை அநுஷ்டி₂த்தே தீரவேண்டும் என்று கருத்து. ஆக, ஐஶ்வர்

कविं पुराणमनुशासितारम् अणोरणीयांसमनुस्मरेद्यः।
सर्वस्य धातारमचिन्त्यरूपम् आदित्यवर्णं तमसः परस्तात्॥९॥

9. கவிம் புராணமநுஶாஸிதாரம்
அணோரணீயாம்ஸமநுஸ்மரேத்₃ய: ।
ஸர்வஸ்ய த₄ாதாரமசிந்த்யரூபம்
ஆதி₃த்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் ॥

प्रयाणकाले मनसाऽचलेन भक्त्या युक्तो योगबलेन चैव।
भ्रुवोर्मध्ये प्राणमावेश्य सम्यक् स तं परं पुरुषमुपैति दिव्यम्॥१०॥

10. ப்ரயாணகாலே மநஸாऽசலேந
ப₄க்த்யா யுக்தோ யோக₃ப₃லேந சைவ ।
ப்₄ருவோர் மத்₄யே ப்ராணமாவேஶ்ய ஸம்யக்
ஸ தம் பரம் புருஷமுபைதி தி₃வ்யம் ॥

**கவிம்**—எல்லாமறிந்தவனும், **புராணம்**—பழையவனும், **அநுஶாஸிதாரம்** — (எல்லா உலகையும்) நியமிப்பவனும், **அணோ: அணீயாம்ஸம்**—அணுவான ஜீவனைக்காட்டிலும் அணுவாயிருப்பவனும், **ஸர்வஸ்ய த₄ாதாரம்**—எல்லாவற்றையும் படைப்பவனும், **அசிந்த்யரூபம்**—நினைக்க அரியஸ்வரூபத்தை உடையவனும், **ஆதி₃த்யவர்ணம்** — சூரியன்போன்ற ஒளியுடையவனும், **தமஸ: பரஸ்தாத்** — 'தமஸ்' என்னும் மூல ப்ரக்ருதிக்கு அப்பாற்பட்டவனுமான பரமபுருஷனை, **ப₄க்த்யா யுக்த:**—ப₄க்தியோடு கூடியவனாய், **யோக₃ப₃லேந**—யோக₃ ப₃லத்தினால், **அசலேந மநஸா** — தாழ்ந்த விஷயங்களில் செல்லாதிருக்கும் நெஞ்சினால், **ப்ரயாணகாலே** — அந்திம காலத்தில், **ப்₄ருவோ: மத்₄யே ப்ராணம் ஆவேஶ்ய**—புருவங்களுக்கு நடுவில் ப்ராணனை நிலைநிறுத்தி, **ய:**—எவனொருவன், (ப்₄ருவோ: மத்₄யே - புருவத்தின் நடுவிலேயே), **தி₃வ்யம் பரம் புருஷம்** — அப்ராக்ருதனான பரமபுருஷனை, **ஸம்யக் அநுஸ்மரேத்** — நன்கு நினைக்கிறானோ, **ஸ:** — அவன், **தம்**

---

யார்த்தி₂க்குரிய உபாஸநமுறையும், அதையொட்டிய அந்திமஸ்ம்ருதியும் சுருக்கமாகக் காட்டப்பட்டது.

ஏவ — அந்தப்பரமபுருஷனையே, உபைதி — அடைகிறான்; (அவனை ஒத்த ஐஶ்வர்யத்தை உடையவனாகிறான் என்றபடி.)

---

9. **எண்மதியன் றொல்லையா னெல்லா நியமிப்பா**
**னுண்மைப் பொருளுக்கு நுண்ணியான்—திண்மை**
**யுலகளிப்பா னுன்னரியா னோங்கிரவி வண்ணன்**
**இலகுமந்தத் துப்பரனை மிக்கு.**

10. **இந்த உடலினைவிட் டேகுங்காற் றான்சலியாச்**
**சிந்தையுறு பத்தி திகழ்யோகம்—முந்துற்றே**
**வாயுவினைத் தன்புருவ மத்தியத்தில் வைத்துணர்வான்**
**சேயுயரு மப்பரனைச் சேர்ந்து.**

**எண்மதியன்** — எல்லாவற்றையும் அறிபவனும், **தொல்லையான்** — பழையவனும், **எல்லாம் நியமிப்போன்** — எல்லாவுலகையும் நியமிப்பவனும், **உண்மைப் பொருளுக்கு நுண்ணியான்**—மாறுபாடற்ற அணுப்பொருளான ஜீவனைக் காட்டிலும் அணுவாயிருப்பவனும், **உலகு திண்மை அளிப்பான்**—எல்லாவுலகையும் திடமாகப் படைப்பவனும், **உன்னரியான்** — நினைக்க அரிய ஸ்வரூபத்தை உடையவனும், **ஓங்கு இரவி வண்ணன்** — ஒளிமிக்க சூரியன்போன்ற ஒளியுடையவனும், **அந்தத்து பரனை** — அந்த₄தமஸ்ஸான ப்ரக்ருதிக்கு அப்பாற்பட்டவனுமான பரமபுருஷனை, **இந்த உடலினை விட்டு ஏகுங்கால்**—இந்த உடலை விட்டுச்செல்லும் அந்திமகாலத்தில், **உறு பத்தி திகழ் யோகம் முந்துற்றே**—ப₄க்தியோடும், யோக₃ப₃லத்தோடும் சேர்ந்து, **தான் சலியா சிந்தை**—தாழ்ந்த விஷயங்களில் செல்லாமலிருக்கும் நெஞ்சினால், **வாயுவினை** — ப்ராணனை, **தன் புருவ மத்தியில் வைத்து** — தன்னுடைய புருவங்களுக்கு மத்தியில் நிலை நிறுத்தி, **உணர்வான்**—(முற்கூறிய பரமபுருஷனை அங்கு) தியானிப்பவன், **சேய் உயரும் அப்பரனை** — மிக உயர்ந்த அப்பரமபுருஷனை, **சேர்ந்து**—அடைந்து, **மிக்கு இலகும்**—மிகவும் விளங்குவான். (அவனை ஒதத செல்வத்தை உடையவனாவான் என்றபடி.)

॥ भा ॥ कविं—सर्वज्ञम्, पुराणम्—पुरातनम्, अनुशासितारम्—विश्वस्य प्रशासितारम्, अणोरणीयांसम्—जीवादपि सूक्ष्मतरम्,

9.10. "அநுசிந்தயந்" என்று சென்ற ஶ்லோகத்தில் ஐஶ்வர்யார்த்திக்குச் சொன்ன அந்திமஸ்ம்ருதியை விவரித்துக்கொண்டு, அவன் அடையும் பலனைக்காட்டுகிறான் இவ்விரு ஶ்லோகங்களில். (கவிம்) "கவி: க்ராந்ததர்ஶீ" என்னும் லக்ஷணத்தின்படி எதையும் ஊடுருவிப்பார்க்குமவனைக் கவிஶப்தம் குறிக்குமாயினும், இங்கு ஸர்வேஶ்வரனைப்பற்றியதாகையால், 'ஸர்வஜ்ஞனை' என்று பொருள் படுகிறது. முண்டகோபனிஷத்தில் [1-1-10] "யஸ்ஸர்வஜ்ஞ: ஸர்வவித்" எனப்பட்டானன்றோ. இங்கு ஒவ்வொரு விஶேஷணமும் இவன் அநுஸந்திக்கவேண்டிய பகவத்குணங்களைக் காட்டுகின்றன. "ஸர்வஜ்ஞன்" என்று உணர்ந்தால், அல்பஜ்ஞனான தான் தனக்கு நன்மையென்று கருதி, ஸம்ஸாரத்தில் தன்னைக் கட்டிவைக்கும் ஐஶ்வர்யத்தைப் பலனாக விரும்பியது தவறென்று உணர்ந்து, 'ஸர்வஜ்ஞனான நீயே எனக்கு எது நன்மையோ அதைச்செய்' என்று கேட்டுவிடுவான் என்னும் கருத்தாலே தன் ஸர்வஜ்ஞத்வத்தை அநுஸந்திக்கச் சொல்லுகிறான் கண்ணன். (புராணம்) "புராபி நவ: புராண:" என்கிற வ்யுத்பத்தியின்படி, புராதனனாயிருந்த போதிலும், "எப்பொழுதும் நாள் திங்கள் ஆண்டூழியூழிதொறும் அப்பொழுதைக்கப்பொழுது என் ஆராவமுதமே" [திருவாய் 2-5-4] என்கிறபடியே புதியவனாகவேயிருப்பவன். இத்தகைய ஆராவமுதமானவன் இருக்கும்போது, அல்பமும், அஸ்திரமுமான ஐஶ்வர்யத்தை விரும்பியது தவறு என்று உணர்ந்துகொள்வதற்காகத் தன் புராணத்வத்தை அநுஸந்திக்கச் சொல்லுகிறான். (அநுஶாஸிதாரம்) உலகனைத்தையும் ஆள்பவனை. உபயவிபூதியையும் நியமிக்கும் அவனை அடைந்து, "பொன்னுலகாளீரோ புவனிமுழுதாளீரோ" [திருவாய் 6-8-1] என்கிறபடியே உபயவிபூதிச் செல்வத்தையும் அடைய ப்ராப்தமாயிருக்க, அதில் ஏகதேஶமான செல்வத்தை அடைய நினைப்பது தவறு என்று உணர்த்தவே உபயவிபூதிநாயகத்வத்தை அநுஸந்திக்கச் செய்கிறான். "ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸநே கார்க்கி த்யாவாப்ருதிவ்யௌ வித்ருதே திஷ்டத:" [ப்ருஹ 5-8-8] [கார்க்கீ! இந்த அக்ஷரபுருஷனுடைய ஆணையினாலேயே எல்லாவுலகங்களும் தரித்து நிற்கின்றன.] முதலான ஶ்ருதிகள் இங்கு அநுஸந்திக்கத்தக்கவை. எல்லாவுலகங்களையும் நியமிப்ப

सर्वस्य धातारम्—सर्वस्य स्रष्टारम्, अचिन्त्यरूपम्—सकलेतरविस-

வனுல் அனைத்தினுள்ளும் வியாபித்திருப்பவனாகவேணுமே; மிகப் பெரியவனுன இவன் அனைத்துள்ளும் வியாபித்திருக்கமுடியுமோ? எனில்: (அணோரணீயாம்ஸம்) அசேதனப் பொருள்களைக்காட்டிலும் ஸூக்ஷ்மனுயிருக்கையாலே அவற்றில் வியாபிக்கவல்ல அணுவான ஜீவனைக்காட்டிலும் ஸூக்ஷ்மனுய், அவனிடமும் வியாபிக்கவல்லவனே. "அணோரணீயாந் மஹதோ மஹீயாந்" [கட₂ 1-2-20; தை-நா 10-1] [அணுவைக்காட்டிலும் அணுவாகவும், பெரியதைக்காட்டிலும் பெரியவனாகவுமிருப்பவன்] "ய ஆத்மநி திஷ்டந் ஆத்மனோऽந்தர:" [ப்₃ருஹ 5-7-22] [எவன் ஆத்மாவின் வெளியிலும் உள்ளும் வியாபித்து நிற்கிருனே] "அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம்" [யஜுர்-ஆரண்யகம் 3-11] [எல்லா ஜீவர்களினுள்ளும் நுழைந்து நியமிப்பவன் பரமாத்மா] முதலான ப்ரமாணங்கள் இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கவை. ஜீவனைக்காட்டிலும் ஸூக்ஷ்மமானவன், அவனை உள் நுழைந்து நியமிப்பவன் என்றதால் ஜீவன் ஶரீரம் என்றும், இவன் ஆத்மா என்றும் தேறுகிறது. ஶரீரியான பரமனிருக்க, ஶரீரமான தான் தனக்கு நன்மையென்று நினைத்து ஒன்றை அபேக்ஷிப்பது தவறென்று உணர்ந்துகொள்வதற்காக இதை அநுஸந்தி₄க்கச் சொல்லுகிருன் ஈஶ்வரன். (ஸர்வஸ்ய த₄ாதாரம்) அனைத்துலகையும் ஸ்ருஷ்டிப்பவனே. "த₄ாதா புரஸ்தாத்₃ யமுத₃ாஜஹார" [பு-ஸூ] [ஸ்ருஷ்டிப்பவனுன பிரமன் ஸ்ருஷ்டிகாலத்தில் எந்தப் பரமபுருஷனை தியானித்தானே] "ஸூர்யாசந்த்₃ரமஸௌ த₄ாதா யத₂ாபூர்வம கல்பயத்" [தை-நா 1-38] [ஸ்ருஷ்டிக்கும் பிரமன் ஸூர்யசந்திரர்களை முன் கல்பத்திற்போலவே படைத்தான்.] என்று த₄ாத்ரு ஶப்₃த₃த்தை ஸ்ரஷ்டாவைக்குறித்துப் பிரயோகிப்பதுண்டாகையால், இங்கு "ஸர்வஸ்ய த₄ாதா" என்று ஸர்வஸ்ரஷ்டாவான நாராயணனைக் குறிக்கிறது. அன்றிக்கே, "விஷ்ணுநா வித்₄ருதே பூ₄மீ" [யஜுர் ஆரண்யகம் 8-1] [த்₃யாவாப்ருதி₂விகள் விஷ்ணுவினுலே த₄ரிக்கப் படுகின்றன] "ஸர்வாத₄ாரம் த₄ாம விஷ்ணு ஸம்ஜ்ஞும்" [மைத்ராயணீய உபநிஷத்] [விஷ்ணுவெனப்படும் பரஞ்சோதியே அனைத்துக்கும் ஆத₄ாரமாயிருப்பது] என்று சொல்லப்படும் ஸர்வாத₄ாரத்வத்தையே குறிக்கிறதாய், இந்த ஸர்வாத₄ாரத்வம் ஸர்வஸ்ரஷ்டாவுக்கே பொருந்துமாகையால், "ஸர்வஸ்ய ஸ்ரஷ்டாரம்" என்று ப₄ாஷ்யகாரர் ப₂லிதார்த்த₂த்தை அருளினுர் என்றும் கொள்ளலாம். அனைத்தையும் படைத்து த₄ரிக்கும் பிதாவான அவனை விரும்பாமல், அவனுல் படைக்கப்பட்டு அவனது புத்ரனுன தான் தனக்கு நன்மையாக

जातीयस्वरूपम्, आदित्यवर्णं तमसः परस्तात् — अप्राकृतस्वासाधारण-

ஒன்றை விரும்புவது தவறு என்று உணர்த்துவதற்காகவே ஸர்வ ஸ்ரஷ்ட்ருத்வத்தை அநுஸந்தி₄க்க விதி₄க்கிருன் கண்ணன். (அசிந்த்யரூபம்) த்₃ருஷ்டாந்தம் காட்டமுடியாதபடி மற்ற எல்லாப் பொருள்களைக் காட்டிலும் மிகச்சிறந்தவனுயிருக்கையால், எவராலும் 'இப்படிப்பட்டது' என்று எண்ணமுடியாத இனிமையையும் பெருமையையும் உடைய ஸ்வரூபத்தை உடையவனே. "நேதி நேதி" [ப்₃ருஹ 4-3-6] [இப்படிப் பெருமையுடையது எதுவுமில்லை] "ந தத்ஸமஶ்சாப்₄யதி₄கஶ்ச த்₃ருஶ்யதே" [ஶ்வே 6-8] [அவனுக்கு ஒத்தவரும் மிக்கவரும் காணப்படவில்லை] முதலான ப்ரமாணங்கள் இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கவை. இப்படி இனிமையிலும், பெருமையிலும் மிக விஞ்சியிருப்பவனைவிட்டு அவற்றில் மிகத் தாழ்ந்த ஐஶ்வர்யத்தை விரும்புவது தவறு என்று உணர்த்தவே எம்பெருமான் இந்த அசிந்த்யரூபத்வத்தை அநுஸந்தி₄க்கச் செய்கிருன். (ஆதி₃த்ய வர்ணம் தமஸ: பரஸ்தாத்) 'தமஸ்' எனப்படும் ப்ரக்ருதிக்கு அப்பாற்பட்டவனுய், சூரியன்போல் ஒளியுள்ளவனுயிருப்பவனே. புருஷஸூக்தம் உத்தராநுவாகத்தில் இரண்டாம் மந்திரத்தில் உள்ளதை இங்கு அப்படியே படிக்கிருன். "தத₃ாநீம் தம ஆஸீத்" [ருக்₃வேத₃ம் அஷ்டகம் 8-7-17; யஜுர் அஷ்டகம் 2-7-9] "தமஸஸ் தந்மஹிநா ஜாயதைகம்" [யஜுர்வேத₃ம் அஷ்டகம் 2-4-9] "யதா₃ தம:" [ஶ்வே 4-18] முதலான வேத₃வாக்யங்களில் தம:ஶப்₃த₃ம் மூலப்ரக்ருதியைக் குறிக்கையால், "தமஸ: பரஸ்தாத்" என்றது மூலப்ரக்ருதிக்கு அப்பாற்பட்ட அப்ராக்ருத தே₃ஶத்தில் இருப்பவன் என்பதைக் காட்டுகிறது. இதனுல் கர்மவசப்படாதவன், நித்யமானவன், குற்றமற்றவன் என்று உணர்த்தப்படுகிறது. "ஆதி₃த்ய வர்ணம்" என்கையாலே — "யேந ஸூர்யஸ்தபதி தேஜஸேத்₃த₄:" [காட₂க 3-9-7] [எந்தப் பரஞ்சோதியாலே ஒளியூட்டப்பட்டு ஸூர்யன் ஒளிவிடுகிருனே] "தஸ்ய பா₄ஸா ஸர்வமித₃ம் விபா₄தி" [முண்ட₃க 2-2-11] [அப்பரமபுருஷனுடைய ஒளியாலே இவையனைத்தும் ஒளிவிடுகின்றன.] "ஜ்யோதிஷாம் ஜ்யோதி:" [ப்₃ருஹ 6-4-16] "நாராயண பரோ ஜ்யோதி:" [தை-நா] "யஸ்யாதி₃த்யோ பா₄முபயுஜ்ய பா₄தி" [பா₄ர-ஆநு 158-22] [எந்தப் பரமபுருஷனுடைய ஒளியைக்கொண்டு சூரியன் ஒளிவிடுகிருனே] என்று ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் சூரியனுக்கும் ஒளிகொடுப்பதான பரமபுருஷனின் தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹத்தின் ஒப்பற்ற ஒளி காட்டப்படுகிறது. "தி₃வி ஸூர்ய ஸஹஸ்ரஸ்ய" [11-12] என்னும் ஶ்லோகத்தில்

दिव्यरूपम्, तस्यैवंभूतमहरहरस्यस्मानभक्तियुक्तयोगबलेनारूढसंस्कारतया

இது மேலேயும் விவரிக்கப்படவிருக்கிறது. ஆகையால், ஆதி₃த்ய ஶப்₃த₃ம் நித்யசைதந்ய ப்ரகாஶத்தையும், தமஶ்ஶப்₃த₃ம் அஜ்ஞானத்தையும் குறிக்கிறது என்று ஶங்கரர் உரையிட்டது இந்த ஶ்ருதி ஸ்ம்ருதி கீ₃தா வாக்யங்களுக்குப் பொருந்தாதாகையால் அநாத₃ரிக்கத்தக்கது. இப்படி ஒப்பற்ற ஒளியுடையவனாய், அப்ராக்ருதனாய், கர்மவஶப்படாதவனாய், நித்யமானவனாய், குற்றமற்றவனான அவனிருக்கும்போது, ஒளியில் குறைந்ததாய், ப்ராக்ருதமாய், கர்மம் காரணமாக ஏற்படுவதாய், அநித்யமான ஐஶ்வர்யத்தை விரும்புவது தவறு என்று உணர்த்துவதற்காகவே இப்பெருமையை அநுஸந்தி₄க்கச் சொல்லுகிறான் கண்ணன். இவன் இப்படி ஒன்றை நினைத்து இப்பெருமைகளை அநுஸந்தி₄க்கச் சொல்லியிருக்க, பெரும்பாலான ஐஶ்வர்யார்த்தி₂கள் விஷயத்தில் இந்நினைவு ப₂லிக்காமல், இவ்வநுஸந்தா₄னங்கள் ஐஶ்வர்யத்தில் விருப்பத்தையே உறுதிப்படுத்தி விடுகின்றன. ஸர்வஜ்ஞனாய், பழையவனாய், உலகத்தை ஆள்பவனாய், அணுவுக்கும் அணுவாய், எல்லாவற்றையும் படைப்பவனாய், எவராலும் த்₃ருஷ்டாந்தங்கொண்டு அறியமுடியாதவனாய். அப்ராக்ருத தே₃ஶத்தில் ஒப்பற்ற ஒளியையுடையவனாயிருக்கையாகிற பெருஞ்செல்வத்தை உடையவன், நாம் விரும்பும் ஐஶ்வர்யத்தை அறிந்து ஸாதி₄த்துத்தரவல்ல ஜ்ஞானம். ஶக்தி, வண்மை முதலான கு₃ணங்களை உடையவனாகையாலே இதை அவஶ்யம் நமக்குத் தருவான் என்று அறுதியிட்டு அந்திம ஸமயத்திலும் அவ்வைஶ்வர்யத்தையே பிரார்த்தி₂க்க உறுப்பாகி விடுகின்றன.

"ப்ரஶாஸிதாரம் ஸர்வேஷாம் அணீயாம்ஸமணீயஸாம் ।
ருக்மாப₄ம் ஸ்வப்நதீ₄க₃ம்யம் வித்₃யாத் து புருஷம் பரம் ॥"
[மநு 12-122]

[அனைவரையும் ஆள்பவனும், அணுக்களான ஜீவர்களைக் காட்டிலும் அணுவாயிருப்பவனும், பொன்போன்ற ஒளியுடையவனும், கனவு போன்ற த்₄யானரூபமான மாநஸமான அறிவில் அறியப்படுபவனுமான பரமபுருஷனை அறியக்கடவன்.] என்ற மநுஸ்ம்ருதி ஶ்லோகம் இந்த ஶ்லோகத்தை ஒத்திருப்பது காணத்தக்கது. அநுகூலருக்குப் பொன்போல் ஹிதமாகவும் (ப்ராபகமாகவும்), ரமணீயமாகவும் (ப்ராப்யமாகவும்) கண்ணுக்குக் குளிர்ச்சியாகவும் இருக்கையையிட்டு 'ஹிரண்மய: புருஷ:' [ச₂ாந்] என்று சொன்ன ஶ்ருதியைப்போலே 'ருக்மாப₄ம்' என்கிறார் மநு. ப்ரதிகூலரைத் தபிப்பதாய், காண

अचलेन मनसा प्रयाणकाले भ्रुवोर्मध्ये प्राणमावेश्य—संस्थाप्य; तत्र

---

வொண்ணுததாய், ஒளிவிஞ்சியதாயிருக்கையையிட்டுப் புருஷஸூக்தத்திற்போலே இங்கு 'ஆதி$_3$த்யவர்ணம்' எனப்படுகிறது. "கதிர் மதியம்போல் முகத்தான்" [திருப்பாவை 1] என்று இரண்டு ஆகாரங்களையும் சேர்த்து அநுஸந்தி$_4$த்தாள் ஆண்டாள். இனி, இப்படிப் பிரார்த்திப்பவன் பெறும் ப$_2$லனை "ய: அநுஸ்மரேத்" என்னும் இந்த ஶ்லோகப் பகுதியாலும், அடுத்த ஶ்லோகத்தாலும் காட்டுகிறான்,— (ப$_4$க்த்யா யோக$_3$ப$_3$லேந யுக்த:) "அப்$_4$யாஸ யோக$_3$ யுக்தேந" என்று சென்ற ஶ்லோகத்திற் சொன்னபடி தினந்தோறும் அப்$_4$யாஸம் செய்யப்படும் ப$_4$க்தியோடு கூடிய யோகா$_3$ப்$_4$யாஸ ப$_3$லத்தாலே — உறுதியான ஸம்ஸ்காரம் பெற்றவனாய். யுக்த ஶப்$_3$த$_3$ம் ஸம்ஸ்காரத்தின் உறுதியைக் காட்டுகிறது. இனி, இதனால் ஏற்படும் ப$_2$லனைச் சொல்லுகிறது,— (அசலேந மநஸா) தாழ்ந்த விஷயங்களில் செல்லாத நெஞ்சால். "நாந்யகா$_3$மிநா" என்று சென்ற ஶ்லோகத்தில் சொன்னதையே இங்கும் கூறுகிறான். (ப்ரயாணகாலே ச ய: அநுஸ்மரேத்) அந்திமஸமயத்திலும் எவன் நினைக்கிறானோ, "சைவ" என்றதில் 'ச'காரத்தை இங்கு சேர்த்துக் கொள்ளவேணும். இதனால் அந்திமஸமயத்திற்கு முந்திய உபாஸந காலத்திலும் "ப்ரஶாஸிதாரம்" முதலானவற்றில் சொன்ன கு$_3$ணங்கள் இவனால் அநுஸந்தி$_4$க்கத்தக்கவை என்று உணர்த்தப் படுகிறது. மேலே கைவல்யார்த்தி$_2$ விஷயத்திலும், அந்திமஸ்ம்ருதி ஸமயத்தில் அநுஸந்தி$_4$க்கத்தக்கவையாக விதி$_4$க்கப்பட்ட கு$_3$ணங்கள் உபாஸநகாலத்திலும் அநுஸந்தி$_4$க்கத்தக்கவை என்று கண்டு கொள்ளவேணும். இப்படி நீண்டநாள் இவனுடைய பெருமைகளை அநுஸந்தி$_4$த்தபின்பும் அந்திமஸ்ம்ருதி வரையில் இவர்களுடைய க்ஷு$_3$த்$_3$ரபுருஷார்த்த$_2$ருசி நீங்கவில்லையாகில், இவர்கள் விரும்பிய ப$_2$லனைக் கொடுக்கிறானாகையாலே, தாழ்ந்த ப$_2$லனைக்கொடுக்கையாகிற குற்றம் ஹிதபரனான பரமன் மேல் வராது என்பது காணத்தக்கது. இனி உபாஸநகாலத்திலில்லாததாய், அந்திமகாலத்திற்கே உரிய தான காரியம் சொல்லப்படுகிறது,— (ப்$_4$ருவோ: மத்$_4$யே ப்ராணம் ஸம்யக் ஆவேஶ்ய தி$_3$வ்யம் பரம் புருஷம் ய: அநுஸ்மரேத்) எவனொருவன் புருவங்களுக்கு இடையில் ப்ராணனை நிலைநிறுத்தி அந்தப் புருவங்களுக்கு இடையிலேயே முற்கூறிய தி$_3$வ்யபரமபுருஷனை அந்திமகாலத்தில் நினைக்கிறானோ, "ஆவேஶ்ய" என்றதால், யோக$_3$ப்ரகரணங்களில் சொல்லப்பட்டதான 'அசையாமல் நிலைநிறுத்துதல்' கூறப்படுகிறது. வேறு ஸ்த$_2$ானம் சொல்லப்

अन्तर्मध्ये दिव्यं पुरुषं योऽनुस्मरेत्; स तमेवोपैति—तद्भावं याति, तत्समानैश्वर्यो भवतीत्यर्थः ॥ ९ ॥ १० ॥

॥ भा ॥ अथ कैवल्यार्थिनां स्मरणप्रकारमाह—

यदक्षरं वेदविदो वदन्ति विशन्ति यद्यतयो वीतरागाः ।
यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति तत्ते पदं सङ्ग्रहेण प्रवक्ष्ये ॥ ११ ॥

11. யத₃க்ஷரம் வேத₃விதோ₃ வத₃ந்தி
விஶந்தி யத்₃யதயோ வீதராக₃ா: ।
யதி₃ச்ச₂ந்தோ ப்₃ரஹ்மசர்யம் சரந்தி
தத் தே பத₃ம் ஸங்க்₃ரஹேண ப்ரவக்ஷ்யே ॥

---

11. அக்கரமா யாதொன்றை யாய்ந்தமறை யோருரைப்பர்
செக்கநசை யார்யாதைச் சென்றடைவர்—மிக்கதுற
வேய்ந்தியவ ரிச்சித்தார் யாதையுனக் குச்சுருங்க
வாய்ந்துரைப்ப னப்பதத்தை மற்று.

---

படாமையாலும், மோக்ஷம் தவிர்ந்த ப₂லன்களை அபேக்ஷிப்பவர்கள் ப்ராணனைப் புருவமத்தியில் நிறுத்திப் பரமபுருஷனை அங்கேயே தியானிக்கவேண்டும் என்று யோகப்ரகரணங்களில் கூறப்பட்டிருக்கையாலும், பரமபுருஷத்₄யானமும் புருவமத்தியிலேயே எனக்கொள்ள வேண்டும். (ஸ: தி₃வ்யம் பரம் புருஷமேவ உபைதி) இப்படி அந்திமகாலத்தில் நினைப்பவன் அந்த தி₃வ்யபரமபுருஷனையே அடைகிருன். "சைவ" என்றதிலுள்ள ஏவகாரத்தை இங்கு சேர்த்துக் கொள்ளவேண்டும். "தம் தமேவைதி" [8-6] என்றவிடத்திற்போலே, உத்தமைஶ்வர்யவிஶிஷ்டனுகச் சிந்தித்த இவன் அத்தகைய ஐஶ்வர்யத்தோடு கூடியிருக்கும் நிலையையே அடைகிருன் என்றபடி. "ய: ப்ரயாதி ஸ மத்₃பா₄வம் யாதி" [8-5] என்று எந்த நிலையோடு கூடிய பரமபுருஷனை உபாஸிக்கிருனே, அந்த நிலையையே அடைவதாகவே முதலில் கூறப்பட்டதன்றே. "புருஷம் உபைதி" என்றது பா₄வப்ரதா₄ந நிர்த்தே₃ஶமாய், "புருஷத்வமுபைதி" என்றபடி. ஆக, இவ்வளவால் அந்திமஸ்ம்ருதிவரையில் சிறந்த ஐஶ்வர்யத்தோடு கூடியவனுக உபாஸிக்கும் ஐஶ்வர்யார்த்தி₂, ஆதி₃ப₄ரதந்யாயத்தாலே அத்தகைய சிறந்த ஐஶ்வர்யத்தை உடையவனுக ஆகிருன் என்று காட்டப் பட்டதாயிற்று. 9,10.

**யத்** — யாதொன்றை, **அக்ஷரம்** — அக்ஷரமாக, **வேத₃ வித₃:** — வேத₃த்தை அறிந்தவர்கள், **வத₃ந்தி** — சொல்லு கிறார்களோ, **யத்** — யாதொன்றை, **இச்ச₂ந்த:** — விரும்பு கின்றவர்களாய், **வீதராக₃ா: யதய:**—ஆசையற்றுப் புலன் களை அடக்கியவர்கள், **ப்₃ரஹ்மசர்யம் சரந்தி**—ப்₃ரஹ்மசர் யத்தை அநுஷ்டி₂க்கிறார்களோ, **யத் விஶந்தி** — (அப்படி அநுஷ்டி₂த்ததின் ப₂லனாக) எதை அடைகிறார்களோ, **தத் பத₃ம்**—(உபாஸிக்கத்தக்கதான) அந்த என்னுடைய ஸ்வ ரூபத்தை, **தே** — உனக்கு, **ஸங்க்₃ரஹேண ப்ரவக்ஷ்யே** — சுருக்கமாகச் சொல்லுகிறேன்.

---

**யாதொன்றை** — எதை, **அக்கரமாய்** — அக்ஷரமாக, **ஆய்ந்த மறையோர் உரைப்பர்**—வேத₃த்தை ஆராய்ந்தவர்கள் சொல்லுகிறார்களோ, **செக்க நசையார் இயவர்**—ஆசையை அறுத்த எவர்கள், **யாதை இச்சித்தார்**—எதைப் பெற விரும்பி, **மிக்க துறவு ஏய்ந்து**—மிகுந்த ப்₃ரஹ்மசர்யத்தை அநுஷ்டி₂த்து, **யாதைச் சென்று அடைவர்**—எதைச் சென்று அடைவார்களோ, **மற்று அப்பதத்தை**—(உபாஸிக்கத்தக்க தான) அந்த என்னுடைய அக்ஷரஸ்வரூபத்தை, **உனக்கு சுருங்க ஆய்ந்து உரைப்பன்**-ஆராய்ந்து, உனக்குச் சுருக்க மாகச் சொல்லுவேன்.

---

**11. இனி, மூன்று ஶ்லோகங்களிலே, கைவல்யார்த்தி₂யின் உபாஸன ப்ரகாரத்தையும், அந்திமஸ்ம்ருதி ப்ரகாரத்தையும் கூறு கிறான். முன் சொல்லப்பட்ட அதி₄காரிக்குப் புருவமத்தியில் ப்ராணனை நிறுத்துவதை விதி₄த்திருக்கையாலே, அவன் மோக்ஷத்தைக் காட்டிலும் தாழ்ந்த ஐஶ்வர்யத்தை விரும்புமவன் என்றும், இவ்வதி₄காரிக்குத் தலையில் ப்ராணனை நிறுத்துவதை விதி₄த் திருக்கையால் இவன் மோக்ஷத்தை விரும்புகிறவன் என்றும் விளங்குகிறது. மேலே "அநந்யசேதா:" என்று தொடங்கும் பதினாலாவது ஶ்லோகத்தில் பரமமோக்ஷத்தை விரும்பும் ஜ்ஞானி சொல்லப்படுகிறான் என விளங்குகையால், இம்மூன்று ஶ்லோகங் களிலும் கேவலாத்மப்ராப்தி ரூபமான தாழ்ந்த மோக்ஷத்தை விரும்பும் ஜிஜ்ஞாஸுவே சொல்லப்படுகிறான் என்று விளங்குகிறது. "வியன்**

॥ भा ॥ यत् अक्षरम्—अस्थूलत्वादिगुणकं वेदविदो वदन्ति, वीतरागाश्च यतयो यदक्षरं विशन्ति, यदक्षरं प्राप्तुमिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति, तत्पदं सङ्ग्रहेण ते प्रवक्ष्ये। पद्यते गम्यते चेतसेति पदम्; तत् निखिलवेदान्तवेद्यं मत्स्वरूपमक्षरं यथोपास्यम्, तथा संक्षेपेण प्रवक्ष्यामीत्यर्थः ॥ ११ ॥

---

மூவுலகு பெறினும்'' [திருவாய் 8-10-2[ என்று ஐஶ்வர்யார்த்தி₂யின் ப₂லனைச் சொன்னவுடன், ''போய்த் தானே தானேயானாலும்'' என்று இக்கைவல்யார்த்தி₂யின் ப₂லனைச் சொல்லும்போது, இவனுக்கு ப்ராக்ருதமான ஐஶ்வர்யானுப₄வமும், ப₄க₃வத₃னுப₄வமும் இல்லை, தன் ஆத்மானுப₄வம் மாத்திரமேயுள்ளது என்பது தோற்ற ''தானே தானே'' என்று இருமுறை படிக்கையாலே, இவனை நமது ஆசார்யர்கள் கைவல்யார்த்தி₂ என்றே உரைப்பர். இவ்வதி₄காரியின் ப₂லஸாத₄னங்களை ''ஆத்மார்த்தீ₂ சேத் த்ரயோऽப்யேதே தத்கைவல்யஸ்ய ஸாத₄கா:'' [27] [ஆத்மானுப₄வத்தைப் பெறவிரும்பினானாகில், கர்மஜ்ஞானப₄க்தி யோக₃ங்கள் மூன்றுமே (தனித்தனியே) ஆத்மகைவல்யத்தை ஸாதி₄த்துக்கொடுக்கவல்லவை.] என்று ஆளவந்தார் கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹத்தில் அருளியதை அடியொற்றி, ப₄ாஷ்யகாரரும் இங்கு இவனைக் கைவல்யார்த்தி₂யென்று அவதாரிகையில் அருளிச்செய்கிறார். இக்காரணத்தாலேயே, ஸ்ரீப₄ாஷ்யத்தில் கார்யாதி₄கரணத்தில்—ப்₃ரஹ்மாத்மக ஸ்வாத்மோபாஸனம் செய்து அர்ச்சிராதி₃க₃தியாலே ப்₃ரஹ்மத்தை அடைபவனாகக் கூறப்பட்ட பஞ்சாக்₃னிவித்₃யா நிஷ்ட₂னல்லன் இவன் என்று விளங்கும். பதின்மூன்றாவது அத்தியாயத்தின் தொடக்கத்தில் இரண்டாம் ஷட்கத்திற்கும், மூன்றாம் ஷட்கத்திற்கும் ஸங்க₃தியை அருளிச்செய்யும்போது, ''ஆத்மகைவல்யமாத்ராபேக்ஷாணாம்'' என்று அருளினார் ப₄ாஷ்யகாரர். ''ஆத்மகைவல்யாபேக்ஷாணாம்'' என்று அருளினால், இவ்வதி₄காரிக்குக் கைவல்யத்தை அநுப₄வித்தபின் ப₄க₃வத₃னுப₄வமும் ஏற்படலாம் என்று சிலர் நினைக்கக்கூடும் என்றே ப₄ாஷ்யகாரர் '' மாத்ர '' ஶப்₃த₃த்தையும் சேர்த்துப் பிரயோகி₃த்தார் என்பது குறிக்கொள்ளத்தக்கது. '' தானே தானேயானாலும்'' என்றவிடத்திலும், மற்றும் பலவிடங்களிலும் ஐஶ்வர்யானுப₄வம்போலே ப₄க₃வத₃னுப₄வமும் இவனுக்குக் கிடையாது என்று ஆழ்வார் அருளிச்செய்ததே, ப₄ாஷ்யகாரர் இப்படி அருளிச்செய்வதற்குக் காரணமாகும். இதுபற்றின விரிவான விளக்கம் இவ்வத்தியாயம் 23, 24-வது ஶ்லோகங்களுக்கு உரையிடுகையில் எழுதப்படும்.

(வேத₃வித₃: யத் அக்ஷரம் வத₃ந்தி) வேத₃த்தை அறிந்தவர்கள் எதை அக்ஷரமாகச் சொல்லுகிறார்களோ; "நாவேத₃வித் மநுதே தம் ப்₃ருஹந்தம்" [காட₂கம் 3-9-7] [வேத₃த்தை அறியாதவன் அந்தப் பரம்பொருளை அறியமாட்டான்] என்று வேத₃ம் வ்யதிரேகத்தாலே சொன்னதே இங்கு அந்வயத்தாலே சொல்லப்படுகிறது. (அக்ஷரம்) "அஶ்நோதி - வ்யாப்நோதி - இதி அக்ஷரம்" [எல்லாப் பொருள்களையும் வியாபித்திருப்பதாகையால் அக்ஷரம் எனப்படுகிறது பரம்பொருள்] என்றும், "ந க்ஷரதி இத்யக்ஷரம்" [அழியாததாகையாலே அக்ஷரம் எனப்படுகிறது பரம்பொருள்] என்றும் இருவகையில் பொருள்கொள்ளலாமாயினும், இங்கு கைவல்யார்த்தி₂யின் உபாஸந ப்ரகரணமாகையாலே இரண்டாவது பொருள் பொருத்தம் மிக்கது. "ஏதத்₃வை தத₃க்ஷரம் கா₃ர்க்கி₃ ப்₃ராஹ்மணா அபி₄வத₃ந்தி அஸ்தூ₂லம் அநணு அஹ்ரஸ்வம் அதீ₃ர்க்க₄ம் அலோஹிதம் அஸ்நேஹம் அச்சா₂யம் அதம: அவாயு அநாகாஶம் அஸங்க₃ம் அரஸம் அக₃ந்த₄ம் அசக்ஷுஷ்கம் அஶ்ரோத்ரம் அவாக் அமந: அதேஜஸ்கம் அப்ராணம் அமுக₂ம் அமாத்ரம் அநந்தரம் அபா₃ஹ்யம்" [ப்₃ருஹ 5-8-7] [வேத₃மறிந்தவர்கள் இப்பரம்பொருளை அக்ஷரமாகவே கூறுகின்றனர்:— ஸ்தூ₂லப் பொருள், அணுப் பொருள், குட்டைப் பொருள், நீண்ட பொருள், சிவந்த பொருள், பசையுடைய பொருள், நிழலுடைய பொருள், இருண்ட பொருள், வாயு, ஆகாஶம், சேரும் பொருள், சுவையுடைய பொருள், மணமுடைய பொருள், காணத்தக்க பொருள், கேட்கத்தக்க பொருள், சொல்லத்தக்க பொருள், நினைக்கத் தக்க பொருள், ஒளியுடைய பொருள், ப்ராணனுடைய பொருள், முகமுடைய பொருள், அளவுடைய பொருள், உட்பகுதியுடைய பொருள், வெளிப்பகுதியுடைய பொருள் ஆகிய ப்ராக்ருதப்பொருள்கள் அனைத்தைக்காட்டிலும் வேறுபட்டிருப்பதாக அப்பரம்பொருளைக் கூறுகின்றனர்.] என்று உபனிஷத்தில் சொல்லப்பட்ட அஸ்தூ₂லத்வம் முதலான தன்மைகளோடு கூடிய பரம்பொருளே இங்கு அக்ஷரஶப்₃த₃த்திற்குப் பொருளாகிறது. கைவல்யார்த்தி₂க்கு—அஸ்தூ₂லத்வம் முதலானவற்றோடு கூடியதாய், ப்ரக்ருதியினின்றும் நீங்கியதான தன் ஆத்மாவே ப்ராப்யமாகையால், தத்க்ரதுந்யாயத்தையும், ஆதி₃பூ₄ரத ந்யாயத்தையும் ஒட்டி, அஸ்தூ₂லத்வாதி₃ விஶிஷ்டமான பரமாத்மஸ்வரூபம் அவனுக்கு உபாஸிக்கத்தக்கதாக விதி₄க்கப்படுகிறது என்பது குறிக்கொள்ளத்தக்கது. (வீதராக₃ா: யதய: யத் விஶந்தி) "அற்றது பற்றெனில் உற்றது வீடு உயிர்"

[திருவாய் 1-2-5] என்கிறபடியே ப்ராக்ருத விஷயங்களில் பற்றற்ற புலனடக்கமுடைய கைவல்யார்த்திகள் எந்த அக்ஷர நிலையை அடைகிறார்களோ. இப்படி அக்ஷரமான பரம்பொருளை உபாஸித்து, ப்ரக்ருதிவியுக்த ஆத்மஸ்வரூபமாகிற அக்ஷர நிலையை அடைவதாலேயே இவர்கள் அக்ஷரயாதாத்ம்யவித்துக்கள் என்றும், இவர்களுடைய பலம் 'அக்ஷரகதி' என்றும் குறிக்கப்படுகிறது என்பது குறிக்கொள்ளத்தக்கது. இதனால் கைவல்யார்த்திக்குரிய பலம் சொல்லப்பட்டது; இனி, அவனுக்குரிய உபாயம் சொல்லப் படுகிறது,— (யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி) எந்த அக்ஷர நிலையை விரும்புகிறவர்கள் ஸ்த்ரீ ஸங்கமமின்மையாகிற ப்ரஹ்ம சர்யத்தை அநுஷ்டிக்கிறார்களோ. இத்தால், "பூதபாவோத்பவகர: விஸர்க்க: கர்மஸம்ஜ்ஞித:" [8-3] என்னும் ஶ்லோகப்பகுதியில் இக் கைவல்யநிஷ்டனுக்கு அறியத்தக்கதாகச் சொல்லப்பட்ட ஸ்த்ரீ ஸம்போகமும் — இவன் இதை அடியோடு வெறுத்து விலக்கவேண்டும் என்பதற்காகவே அங்கு அறியத்தக்கதாகப் படிக்கப்பட்டது என்று தெளிவாக விளங்குகிறது. பகவத் ப்ராப்திகாமனான உபாஸகனுக்கு, விஹித விஷயமான தன் மனைவியோடு, யோகத்திற்கு முரணல்லாத விஹித காலத்தில் தொடர்பு கொள்வது அனுமதிக்கப்பட்டிருக்கிறது. இவனுக்கு அத்தகைய ஸ்த்ரீஸங்கமமும் கூடாது என்று இதிலிருந்து விளங்குகிறது. இதற்குக் காரணம் என்னவெனில்: ஸ்த்ரீஸங்கம லேசமிருந்தாலும், ஆத்மா ப்ரகாசிப்பதற்கு அவஶ்யாபேக்ஷிதமான ப்ரக்ருதியில் பற்றறுகை ஸித்திக்காது என்பதேயாகும். சாந் தோக்யத்தில் "அத யத்யஜ்ஞ இத்யாசக்ஷதே ப்ரஹ்மசர்யமேவ தத்" [8-5-1] என்று தொடங்கி ப்ரஹ்மத்தை அடைவிக்கும் சர்யைக ளாகையாலே ப்ரஹ்மசர்யமாகப் படிக்கப்பட்ட யஜ்ஞம் முதலான வற்றையும் இங்கு ப்ரஹ்மசர்ய ஶப்தார்த்தமாகக் கொள்ளலாம் என்று தாத்பர்யசந்த்ரிகையில் அருளிச்செய்யப்பட்டது. கீதா (8-3) பாஷ்யத்தையொட்டி, இவ்வர்த்தத்திலும், ஸ்த்ரீஸங்கமமின்மை யாகிற ப்ரஹ்மசர்யம் அடங்கியிருப்பதாகக் கொள்ளவேண்டும். இப்படி ப்ரஹ்மசர்யமாகிற உபாயாநுஷ்டானத்தைக் குறிக்கொண்டு நோக்கவேண்டியவர்களாகையாலேயே, இவர்கள் "வீதராகா: யதய:" [பற்றற்றவர்கள்; புலனடக்கம் உள்ளவர்கள்] என்று இந்த ஶ்லோ கத்தின் இரண்டாம் பாதத்திலும் குறிக்கப்பட்டுள்ளனர். (தத் பதம் தே ஸங்க்ரஹேண ப்ரவக்ஷ்யே) எல்லா வேதாந்தங்களிலும் ப்ர ஸித்தமான எனது ஸ்வரூபமான அந்த அக்ஷரத்தை, (அக்ஷர நிலையை அடைவதற்காக) எப்படி உபாஸிக்கவேண்டும் என்பதை, (மேலே இரண்டு ஶ்லோகங்களாலே) சுருக்கமாகக் கூறுகிறேன். 'யத்'

सर्वद्वाराणि संयम्य मनो हृदि निरुध्य च।
मूर्ध्न्याधायात्मनः प्राणम् आस्थितो योगधारणाम्॥१२॥
ओमित्येकाक्षरं ब्रह्म व्याहरन्मामनुस्मरन्।
यः प्रयाति त्यजन् देहं स याति परमां गतिम्॥१३॥

12. ஸர்வத்3வாராணி ஸம்யம்ய மநோ ஹ்ருதி3 நிருத்4ய ச।
மூர்த்4ந்யாதா4யாத்மந: ப்ராணம் ஆஸ்தி2தோ
யோக3தா4ரணாம் ||

13. ஓமித்யேகாக்ஷரம் ப்3ரஹ்ம வ்யாஹரந் மாமநுஸ்மரந்।
ய: ப்ரயாதி த்யஜந் தே3ஹம் ஸ யாதி பரமாம் க3திம் ||

ஸர்வத்3வாராணி—(அறிவு வெளிப்படும்) த்3வாரங்களாயிருக்கும் எல்லா ஞானேந்திரியங்களையும், ஸம்யம்ய—(தமது தொழிலைச் செய்யாதபடி) அடக்கி, மந:—மனத்தை, ஹ்ருதி3—ஹ்ருத3யகமலத்திலிருக்கும் அக்ஷர புருஷனை என்னிடத்தில், நிருத்4ய—ஈடுபடுத்தி, யோக3 தா4ரணாம்—என்னிடத்தில் அசையாத நிலையை, ஆஸ்தி2த:-

---

12. பொறிவாச லெல்லா மடைத்தகவாய்ப் புந்தி
நெறியாக்கி மீது நிறுத்திச்—செறியோக
ஞேங்காரஞ் செப்பியெனை யுன்னி யுடலொழித்துப்
போங்காற் பரமகதி போம்.

---

'தத்' என்னும் பத3ங்கள் வேத3ாந்த ப்ரஸித்3தி4யைக்காட்டுகின்றன. பத3ஶப்3த ப்ரஸித்3தா4ர்த்த2ங்களான திருவடி, பரமபத3ம் என்னும் அர்த்த2ங்கள் இங்கு ப்ரகரணத்திற்குப் பொருந்தமாட்டாவாகையால், ''பத்3யதே-க3ம்யதே சேதஸா'' [மனத்தால் நினைக்கப்படுவது பத3ம்] என்னும் வ்யுத்பத்தியாலே, உபாஸிக்கப்படும் பரமாத்ம ஸ்வரூபத்தைப் பத3ஶப்3த3ம் குறிக்கிறது. அது அக்ஷரஶப்3த3த்தால் விஶேஷிக்கப் பட்டிருக்கையால், ப்ராக்ருதவிகாரம் முதலான தோ3ஷங்களற்ற பரமாத்மஸ்வரூபத்தைக் குறிக்கிறது. ப்ராக்ருதவிகாராதி3 தோ3ஷமற்ற தன் ஆத்மஸ்வரூபத்தை அடைவதற்காகவே இங்கு இத்தகைய பரமாத்மோபாஸனம் விதி4க்கப்படுகிறது என்பது தெளிவு. 11.

அடைந்தவனய், **ப்₃ரஹ்ம**—ப்₃ரஹ்மமாகிற எனக்கு வாசகமான, **ஓம் இதி ஏகாக்ஷரம்**—ப்ரணவமாகிற முக்₂யாக்ஷரத்தை, **வ்யாஹரந்** — சொல்லாநிற்பவனய், **மாம்**—(அதற்குப் பொருளான) என்னை, **அநுஸ்மரந்**-அநுஸந்தி₄யாநிற்பவனய், **ஆத்மந:**—தன்னுடைய, **ப்ராணம்**—ப்ராணவாயுவை, **மூர்த்₄நி**—(தனது) தலையில், **ஆத₄ாய**—(தலையிலிருக்கும் ஸுஷும்நா நாடி வழியாகப்) பிரவேசிக்கச் செய்து, **தே₃ஹம்**—ஶரீரத்தை, **த்யஜந் ய:**—விடுகின்றவன் எவனே, **ஸ:**—அவன், **பரமாம்**—(ஸம்ஸாரத்திற்குத்) திரும்பி வருதல் இல்லாத, **க₃திம்**—ப்ராப்யமான ப்ரக்ருதி வியுக்தமான தன் ஆத்மஸ்வரூபத்தை, **யாதி**—அடைகிருன்.

---

**பொறி வாசல் எல்லாம்**—(அறிவு வெளிப்படும்) வாசல்களாயிருக்கும் ஞானேந்திரியங்கள் அனைத்தையும், **அடைத்து**—(தமது தொழிலைச் செய்யாதபடி) அடக்கி, **புந்தி**—மனத்தை, **அகவாய்**—ஹ்ருத₃ய கமலத்திலிருக்கும் அக்ஷரபுருஷனை என்னிடத்திலே, **நெறியாக்கி**—ஈடுபடுத்தி, **செறி யோகன்** — (என்னிடத்தில்) அசையாத நிலையை அடைந்தவனய், **ஓங்காரம் செப்பி**—(என்னைச் சொல்லும்) ப்ரணவமாகிற ஓரெழுத்தைச் சொல்லி, **எனை உன்னி**—(அதன் பொருளான) என்னை அநுஸந்தி₄த்து, **மீது நிறுத்தி** — (தனது ப்ராணவாயுவைத்) தலையிலே (மூர்த்த₄ன்ய நாடி வழியாகப்) புகச்செய்து, **உடல் ஒழித்து போங்கால்**—உடலை விட்டுப்போகும் ஸமயத்தில், **பரமக₃தி போம்**—(முற்கூறிய கைவல்யார்த்தி₂) ஸம்ஸாரமண்ட₃லத்திற்குத் திரும்பி வருதலில்லாததாகையாலே மிகச்சிறந்த ப்ராப்யமான ப்ரக்ருதிவியுக்தமான தன் ஆத்மஸ்வரூபத்தை அடைவான்.

---

**12, 13.** சுருக்கமாகச் சொல்லுவதாகச் சென்ற ஶ்லோகத்தில் ப்ரதிஜ்ஞை செய்தபடி உபாஸநப்ரகாரத்தையும், அந்திமஸ்ம்ருதி ப்ரகாரத்தையும் இவ்விரு ஶ்லோகங்களில் கூறுகிருன். (ஸர்வ

॥भा॥ सर्वाणि श्रोत्रादीनीन्द्रियाणि ज्ञानद्वारभूतानि संयम्य— स्वव्यापारेभ्यो विनिवर्त्य, हृदयकमलनिविष्टे मय्यक्षरे मनो निरुध्य, योगाख्यां धारणामाश्रितः — मय्येव निश्चलां स्थितिमाश्रितः,

---

த்₃வாராணி ஸம்யம்ய) ஜ்ஞானம் வெளிப்படும் வழிகளான மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து இந்திரியங்களையும் நன்கு அடக்கி, யோக₃ப்ரகரணமாகையாலே, தே₃ஹத்திலுள்ள நவத்₃வாரங்களை த்₃வாரஶப்₃த₃த்திற்குப் பொருளாகச் சொல்லுவது பொருந்தாது. ஸூக்ஷ்மமான ஜ்ஞானத்திற்கே இவை வழிகளாகை யாலே. வெளியே தெரியும் த்₃வாரமற்ற மெய், வாய் (நா) என்னும் இந்திரியங்களையும் த்₃வாரம் என்னக் குறையில்லை. இவற்றை நன்கு அடக்குவதாவது, — அஷ்டாங்க₃யோக₃த்தில் ஓரங்க₃மான ப்ரத்யாஹாரத்தில் சொன்ன முறையில் ஶப்₃த₃ம், ஸ்பர்ஶம், ரூபம், ரஸம், க₃ந்த₄ம் என்னும் தத்தமக்குரிய ப்ராக்ருத விஷயங்களில் பட்டிமேயாதபடி இவ்விந்திரியங்களைத் திருப்புகையே யாகும். (மநோ ஹ்ருதி₃ நிருத்₄ய ச) மனத்தை ஹ்ருத₃யகமல வாஸியான என்னிடத்தில் ஈடுபடுத்தி. 'ஹ்ருத்' என்னும் ஹ்ருத₃ யத்தைக் குறிக்கும் ஶப்₃த₃ம் அதில் அந்தர்யாமியாக எழுந்தருளி யிருக்கும் பரமபுருஷனை லக்ஷணையாலே காட்டுகிறது. இப்படிக்கொண்டால்தான் 'மாம் அநுஸ்மரந்' என்று அடுத்த ஶ்லோகத்தில் கூறியிருப்பது பொருந்தும். "ஆத்மந: ப்ராணம் மூர்த்₄நி ஆத₄ாய" என்றவிடத்தில் சொல்லப்படும் காரியம் உடலை விடும்போது செய்யவேண்டியதாகையால், 'பாட₂க்ரமத்தைக்காட்டிலும் அர்த்த₂க்ரமம் வலிமைமிக்கது' என்னும் நியாயத்தையொட்டி அவ்விடத்திலேயே பா₄ஷ்யத்தில் விவரிக்கப்பட்டது. அதன் கருத்தை அங்கேயே காண்போம். (யோக₃ த₄ாரணாம் ஆஸ்தி₂த:) யோக₃ம் எனப்படும் த₄ாரணையை — ஸ்தி₂தியை — அடைந்தவனாய்; என்னிடத்தில் அசையாத நிலையை அடைந்தவனாய் என்றபடி. "யோக₃ஸ்ய த₄ாரணா" என்று ஷஷ்டீ₂ தத்புருஷஸமாஸம் கொள்வதைக்காட்டிலும், 'யோக₃ம் எனப்படும் த₄ாரணை' என்னும் கர்மத₄ாரயஸமாஸம் கொள்வது சிறந்தது என்பது நிஷாத₃ஸ்த₂பதி ந்யாயஸித்₃த₄மாகை யால், இங்கு அஷ்டாங்க₃யோக₃த்தில் ஓரங்க₃மான த₄ாரணையைச் சொல்லாமல், யோக₃மாகிற த₄ாரணையைச் சொல்லுகிறது. (ஓமித் யேகாக்ஷரம் ப்₃ரஹ்ம வ்யாஹ்ரந்) ப்₃ரஹ்மமாகிற என்னைச் சொல்லுவதாகையாலே 'ப்₃ரஹ்ம' எனப்படும் ஒற்றை எழுத்தான ஓங்காரத்தை மூன்று மாத்திரைகளோடும், நாலாவதான அர்த்த₄மாத்திரையோடும்

ओमित्येकाक्षरं ब्रह्म व्याहरन्, मामनुस्मरन्,

---

உச்சரித்து. "ப்ரத₂மா ரக்தபீதா மஹத்₃ ப்₃ரஹ்மதை₃வத்யா, த்₃விதீயா வித்₃யுமதீ க்ருஷ்ணா விஷ்ணுதை₃வத்யா, த்ருதீயா ஶுப₄ா ஶுக்லா ருத்₃ரதை₃வத்யா, யாऽவஸாநேऽஸ்ய சதுர்த்₂யர்த்த₄மாத்ரா வித்₃யுமதீ ஸர்வவர்ணா புருஷதை₃வத்யா" [அத₂ர்வஶிகை] [சிவப்பும் மஞ்சளும் கலந்த பெரியோனான பிரமனை தெய்வமாகக் கொண்டது முதல் மாத்திரை. மின்னலோடு கூடிய கார்நிறமுடைய விஷ்ணுவை தெய்வமாகக் கொண்டது இரண்டாவது மாத்திரை. ஶுத்₃த₄ வெள்ளை நிறங்கொண்ட ருத்₃ரனை தெய்வமாகக்கொண்டது மூன்றாவது மாத்திரை. மின்னலோடுகூடிய எல்லா வர்ணங்களும் கொண்ட புருஷனை தெய்வமாகக்கொண்டது கடைசியில் நாலாவதாக உள்ள அர்த்த₄மாத்திரை] என்கிறபடியே மூன்றரை மாத்திரையோடும் கூடிய ப்ரணவத்திற்குப் புருஷனெனப்படும் ப்₃ரஹ்மமாகிற நாராயணனே பொருள் என்று உபநிஷத் ஓதிற்றன்றோ. இரண்டாவது மாத்திரைக்குப் பொருளான விஷ்ணு நாராயணனின் அவதாரமாயிருப்பவன் என்பதும், முதல் மூன்றாவது மாத்திரைகளுக்குப் பொருளான ப்₃ரஹ்மருத்₃ரர்கள் பரமபுருஷனுடைய அம்ஶம்பெற்ற ஶரீரமாயிருப்பவர்கள் என்பதும் ஸர்வஶாஸ்த்ர ப்ரஸித்₃த₄ம். (ஏகாக்ஷரம்) 'அ' 'உ' 'ம்' என்று மூன்று எழுத்துக்கள் கொண்டதாயினும், ஸம்ஹிதாகாரத்தில் 'ஓம்' என்று ஒரே எழுத்தாயிருக்கையாலே 'ஏகாக்ஷரம்' (ஒற்றையெழுத்து) எனப்பட்டது. அன்றிக்கே, வேத₃மனைத்துக்கும் வித்தாய், மூலமாயிருக்கையாகிற முக்கியத்துவத்தையிட்டு 'ஏகாக்ஷரம்' என்கிறதாகவுமாம்.

"மூலமாகிய ஒற்றையெழுத்தை
மூன்று மாத்திரை உள்ளெழ வாங்கி
வேலைவண்ணனை மேவுதிராகில்
விண்ணகத்தினில் மேவலுமாமே"

[பெரியாழ்வார் திரு 4-5-4]

என்றார் பெரியாழ்வாரும். இனி, "ப்₃ரும்ஹயதி இதி ப்₃ரஹ்ம" என்னும் வ்யுத்பத்தியின்படி தன்னை அநுஸந்தி₄ப்பவனுக்கு இந்த ப்ரணவமானது தனக்குப் பொருளான ஸர்வேஶ்வரனை நினைவுறுத்துவதன் மூலம் உபகாரகமாகவுமிருக்கிறது என்று காட்டுகிறான் மேலே (மாம் அநுஸ்மரந்) இந்த ப்ரணவத்திற்குப் பொருளான என்னை

அநுஸந்தித்துக்கொண்டிருப்பவனும்; ப்ரணவத்திற்குப் பொருளா யிருப்பவன் ஸ்ரீமந் நாராயணனே என்பதைப் பல ஶ்ருதிஸ்ம்ருதிகள் அறிவித்தன:— கடவல்லியில், "ஸர்வே வேதா யத் பதமாமநந்தி தபாம்ஸி ஸர்வாணி ச யத்வதந்தி | யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி தத் தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவீமி — ஓமித்யேதத் ||" [கட 2-15] [எல்லா வேதங்களும் எந்த ப்ரஹ்மஸ்வரூபத்தை ஓதுகின்றனவோ, ப்ரஹ்ம ப்ராப்தி ஸாதனமான தவங்களை ப்ரதானமாகக் கூறும் உபனிஷத்துக்களும் எதைக் கூறுகின்றனவோ, எதை அடையவிரும்பி ப்ரஹ்மசர்யத்தை அநுஷ்டிக்கின்றனரோ, அந்த ப்ரஹ்மஸ்வரூபத்தை உனக்குச் சுருக்கமாகக் கூறுகிறேன்; ஓம் என்பதே அது.] என்று ஓங்காரம் ப்ரஹ்மஸ்வரூபத்தைச் சுருக்க மாகக் காட்டுவது என்று விளக்கப்பட்டது. "ப்ரணவோ தநு: ஶரோ ஹ்யாத்மா ப்ரஹ்ம தல்லக்ஷ்யமுச்யதே | அப்ரமத்தேந வேத்தவ்யம் ஶரவத் தந்மயோ பவேத்" [முண்டக 2-2-8] [ப்ரணவம் வில்லாகும்; ஆத்மா அம்பாகும்; ப்ரஹ்மம் இவ் வம்புக்கு இலக்காகும். ப்ரணவமாகிற வில்லில் ஆத்மாவாகிற அம்பைப்பூட்டி கவனத்துடன் ப்ரஹ்மத்தைக் குறித்து எய்யவேண்டும். (அப்படி எய்தால் அம்பு இலக்கோடு ஒன்றுவதுபோலே) ஆத்மா ப்ரஹ்மத்தோடு ஒன்றுகிறான்.] என்று முண்டகோபனிஷத்திலும் இவ்வர்த்தம் அழகாக உருவகப்படுத்தப்பட்டது. "ஆத்மாந மரணிம் க்ருத்வா ப்ரணவம் ச உத்தராரணிம் | த்யாந நிர்மதநாப்யாஸாத் பஶ்யேத் ப்ரஹ்மாக்நிகூடவத் ||" [ஆத்மாவைக் கீழே யுள்ள அரணிக்கட்டையாகவும், ப்ரணவத்தை மேலேயுள்ள அரணிக் கட்டையாகவும் கொண்டு, த்யானமாகிற கடைதலை விடாமற்செய் தால், அரணியில் மறைந்திருக்கும் நெருப்பைக் காண்பதுபோல், ப்ரணவத்தில் பொருளாகவும், ஆத்மாவில் அந்தர்யாமியாகவும் மறைந்திருக்கும் ப்ரஹ்மத்தைக் காணலாம்.] என்று த்யாந பிந்தூபனிஷத்தில் இவ்வர்த்தம் மற்றொரு வகையாக உருவகப் படுத்தப்பட்டது. "ஓமித்யேவம் த்யாயதாத்மாநம்" [முண்டக 2-2-6] [இவ்வண்ணமாக ஓங்காரத்தாலேயே பரமாத்மாவை தியானிக்கவேண்டும்] "ய: புநரேதம் த்ரிமாத்ரேண ஓமித்யநே நைவ அக்ஷரேண பரம் புருஷமபித்யாயீத...ஸ பராத்பரம் புரிஶயம் புருஷமீக்ஷதே ||" [ப்ரஶ்ந 5-5] [எவனொருவன் மூன்று மாத்தி ரைகள் கொண்ட 'ஓம்' என்னும் இந்த எழுத்தாலேயே பரம புருஷனை தியானிக்கிறானோ......அவன் மேலானவற்றைக் காட்டிலும் மேலானவனாய், அந்தர்யாமியான புருஷனைக் காண்கிறான்.]

" வஹ்நேர் யதா₂ யோநிக₃தஸ்ய மூர்த்திர் ந த்₃ருஶ்யதே நைவ ச லிங்க₃நாஶ: I ஸ பூ₄ய ஏவேந்த₄நயோநிக்₃ருஹ்யஸ் தத்₃வோப₄யம் வை ப்ரணவேந தே₃ஹே II ஸ்வதே₃ஹமரணிம் க்ருத்வா ப்ரணவம் சோத்தராரணிம் I த்₄யாநநிர்மத₂நாப்₄யாஸாத் தே₃வம் பஶ்யேந் நிகூ₃ட₄வத் II " [ஶ்வே 1-13, 14] [நெருப்புக்குக் காரணமான அரணியிலுள்ள நெருப்பின் ஸ்வரூபம் (கடையாமலிருக்கும்போது) காணப்படுவதில்லை; அதனால் அதில் நெருப்பு இல்லை என்ன முடியாது. மறுபடி கடைந்தால் அதிலுள்ள நெருப்பு உண்டாகவே செய்கிறது. அதுபோலே பரமாத்மதே₃ஹமான ஜீவஸ்வரூபத்தை ப்ரணவத்தைக்கொண்டு ஆராய்ந்தால், அந்த ஜீவனுக்குள் அந்தர்யாமியாயிருக்கும் பரமாத்மா காணப்படுகிறான். பரமாத்ம தே₃ஹமான தன் ஆத்மாவைக் கீழ் அரணிக்கட்டையாகவும், ப்ரணவத்தை மேல் அரணிக்கட்டையாகவும் கொண்டு த்₄யானமாகிற கடைதலை விடாமற்செய்தால், அரணியில் மறைந்திருக்கும் நெருப்பைக் காண்பதுபோல், ப்ரணவத்தில் பொருளாகவும், ஆத்மாவில் அந்தர்யாமியாகவும் மறைந்திருக்கும் ப்₃ரஹ்மத்தைக் காணலாம்.] என்று மற்றும் பல உபனிஷத்துக்களில் இவ்வர்த்த₂ம் உரைக்கப்பட்டது. யோக₃யாஜ்ஞவல்க்யத்தில், இங்கு கடைசியில் எடுத்த ஶ்வேதாஶ்வதர மந்திரம் அப்படியே படிக்கப்பட்டு, கடைசிப் பாதம் மாத்திரம் " விஷ்ணும் பஶ்யேத் ஹ்ருதி₃ ஸ்தி₂தம் " என்று படித்திருப்பதால் இப்பரமாத்மா விஷ்ணுவே என விளங்கிறது. " காம்ஸ்யக₄ண்டா நிநாத₃ஸ்து யதா₂ லீயதி ஶாந்தயே I ஓங்காரஸ்து ததா₂ யோஜ்ய: ஶாந்தயே ஶாந்திமிச்ச₂தா II யஸ்மிந் ஸ லீயதே ஶப்₃த₃ஸ் தத் பரம் ப்₃ரஹ்ம கீ₃யதே II " [வெண்கலமணியில் ஓசை படிப்படியாக ஶாந்தி (ஓய்வு) அடைவதுபோல், ஶாந்தியை விரும்புகிறவன் ஓங்காரத்தையும் படிப்படியாக ஶாந்தியடைவதாக உச்சரிக்கவேண்டும். அந்த ஓங்காரம் எவனிடம் லயமடைகிறதோ அவனே பரப்₃ரஹ்மம் எனப்படுகிறான்] என்று மற்றொருபனிஷத்திலும் படிக்கப்பட்டது. "ஓம் க₂ம் ப்₃ரஹ்ம ஓம் க₂ம் புராணம்" [ப்₃ருஹ 7-1-2] "ஓமிதி ப்₃ரஹ்ம ஓமிதீ₃ம் ஸர்வம்" [தை-ஶீக்ஷா 8-1] "ஓங்காரமேவேத₃ம் ஸர்வம்" [சா₂ந் 2-23-2] என்று ஓங்காரமானது ப்₃ரஹ்மத்தைச் சொல்லுவதாகையாலே, ப்₃ரஹ்மத்துள்ளடங்கிய எல்லாப் பொருள்களையுமே சொல்லும் என்று பல உபனிஷத்துக்கள் காட்டின. "ய ஓங்கார: ஸ ப்ரணவோ ய: ப்ரணவ: ஸ ஸர்வவ்யாபீ யஸ் ஸர்வவ்யாபீ ஸோऽநந்த:" என்று அத₂ர்வஶிரஸ்ஸிலும் ஓங்காரம் ஸர்வவ்யாபியான அநந்தனைச் சொல்லுவதென்று காட்டப்பட்டது.

''அஹமேக: ப்ரத₂மமாஸம் வர்த்தாமி ச ப₄விஷ்யாமி ச நான்ய: கஶ்சின் மத்தோ வ்யதிரிக்த:'' [நான் ஒருவனே முக்காலத்திலுமிருப்பவன் ; என்னைத் தவிர வேறு எவனும் அப்படியிருக்கவில்லை.] என்று ருத்₃ரன் கூறுவதாக வரும் இவ்வத₂ர்வ ஶிரஸ்ஸு ருத்₃ரபரமன்றே? என்னில்: ப்ரதர்த்த₃ந வித்₃யையில் இந்திரன் தன்னைப் பரமாத்மாவாகப் பேசிக்கொண்டது அந்தர்யாமியான பரமாத்மாவைக்கருதி என்று நிர்வஹித்ததுபோல் இங்கும் நிர்வஹிக்கவேண்டும் என்பது பூர்வாசார்ய க்₃ரந்த₂ங்களிலும், அவற்றையொட்டி நமது விஷ்ணு சித்தவிஜயத்திலும் நிரூபிக்கப்பட்டது. ஸ்ம்ருதி வசனங்களும் ஓங்கார வாச்யன் கேசவனே என்பதைத் தெளிவுபடுத்துகின்றன. ''ஓமித்யேவம் ஸதா₃ விப்ரா: பட₂த₄வம் த்₄யாத கேஶவம்'' [ஹரி வம்ஶம் விஷ்ணுபர்வம் 133-10] [அந்தணர்களே! 'ஓம்' என்றே எப்போதும் அநுஸந்தி₄த்துக்கொண்டு, கேஶவனை தியானியுங்கள்.] என்று ஹரிவம்ஶத்தில் கூறப்பட்டது.

''தே₃வதாயா: பராயாஶ்ச ஹ்யாலம்ப₃: ப்ரணவ: ஸ்ம்ருத:|
கஶ்சிதா₃ராத₄நாகாமோ விஷ்ணோர் ப₄க்த்யா கரோதி வை ||
தத₃ராத₄ந ஸாந்நித்₄யே ப்ரதிமாம் வ்யஞ்ஜிகாம் யதா₂ |
த₄ாதுத்₃ரவ்யாதி₃பாஷாணை: க்ருத்வா ப₄ாவம் நிவேஶயேத் ||
ஶ்ரத்₃த₄ாப₄க்த்யாத₃ராத்₃யைஶ்ச தஸ்ய தே₃வ: ப்ரஸீத₃தி |
ஓங்காரேண தத₂ா சாத்மா ஹ்யுபாஸ்தே ஸ ப்ரஸீத₃தி ||
ஓமித்யேகாக்ஷரம் ப்₃ரஹ்ம வ்யாஹரந்...ஸ யாதி பரமாம் க₃திம்||
ய ஏதம் ப்ரணவேநாத்₃யம் அக்ஷரம் ப்ரதிபத்₃யதே |
ததோऽக்ஷரேண வேதே₃ந வேத்₃யம் ப்₃ரஹ்மாதி₄க₃ச்ச₂தி ||
ஏதத₃ாலம்ப₃நம் ஶ்ரேஷ்ட₂ம் ஏதத₃ாலம்ப₃நம் பரம்|
ஏதத₃ாலம்ப₃நம் ஜ்ஞாத்வா ப்₃ரஹ்மபூ₄யாய கல்பதே ||
அத்₃ருஷ்டவிக்₃ரஹோ தே₃வோ ப₄ாவக்₃ராஹ்யோ நிராமய: |
தஸ்யோங்கார: ஸ்மருதம் நாம தேநாஹூத: ப்ரஸீத₃தி ||
தஸ்மாதே₃ாமிதி பூர்வம் து க்ருத்வா யுஞ்ஜீத தத்பர:|
ப்₃ரஹ்மோங்காரவித₄ாநேந தத்த்வேந ப்ரதிபத்₃யதே ||''

[பரதே₃வதையைப் பற்றிநிற்பதற்கு ப்ரணவமானது பற்றுசாயிருக்கிறது. விஷ்ணுவை ப₄க்தியுடன் ஆராதி₄க்க விரும்புமவன், அவ்வாராத₄னைக்கு எளிமையை உடைய அர்ச்சைத் திருமேனியை, லோஹம் முதலானவற்றாலும், கற்களாலும் ஏறியருளப்பண்ணி அதில் ப₄க்தியைச் செலுத்தக்கடவன். அத்திருமேனியில் செலுத்தும் ஶ்ரத்₃தை₄, ப₄க்தி, அன்பு முதலியவற்றால் அவனிடம் எம்பெருமான்

பேரன்பைச் செய்கிருன். அவ்வெம்பெருமானுக்கும் ஆத்மாவான (த₄ாரகனுன) இந்த ஜ்ஞானியன்ரே அவனே ஓங்காரத்தால் உபா ஸிக்கிருன். ஆகையால் இவன் விஷயத்தில் அவன் பேரன்பைச் செய்கிருன். "எல்லா இந்திரியங்களேயும் அடக்கி, மனத்தை ஹ்ருத₃யத்தில் உள்ள என்னிடம் ஈடுபடுத்தி, என்னிடம் அசையாத நிலேயை அடைந்தவனுய், ப்₃ரஹ்மமாகிற எனக்கு வாசகமான 'ஓம்' எனும் ஒற்றையெழுத்தைச் சொல்லாநிற்பவனுய், அதற்குப் பொருளான என்னே அனுஸந்தி₄யாநிற்பவனுய், தனது ப்ராணவாயு வைத் தனது தலேயில் பிரவேசிக்கச்செய்து, ஶரீரத்தை விடுகிறவன் எவனே, அவன் ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவருதல் இல்லாத ப்ராப்யமான ப்ரக்ருதிவியுக்தமான தன் ஆத்மஸ்வரூபத்தை அடை கிருன்." எவனெருவன் இப்ரணவத்தினுல் ஆதி₃புருஷனுய், அழி வற்றவனுன பரம்பொருளேயே அடைய விரும்புகிருனே, அவன் (ப்ரணவ விவரணமாய்) அழிவற்றதாய், வேத₃மனேத்தையும் தன் னுள்ளே அடக்கியிருப்பதான அஷ்டாக்ஷரத்தினுல் அறியத்தக்க பர ப்ரஹ்மத்தையே அடைகிருன், (விவரணத்தோடு கூடிய) இந்த ப்ரணவத்தைப் பற்றிநிற்பதே சிறந்ததும், மேலானதுமாகும். பற்றுசான இதை அறிவதனுல் ப்₃ரஹ்மம்போலே ஆகிருன். குறை யற்ற பரமாத்மா, கண்ணுல் காண்பரிய திருமேனியை உடைய வனுய், தியானத்தினுலேயே அறியத்தக்கவனுயிருக்கிருன். அவ னுக்கு ஓங்காரமே நாமமாகிறது. அதையிட்டு அழைத்தால் அவன் பேரன்பு செய்கிருன். ஆகையால் ப₄க₃வானேக் குறித்து யோகம் செய்பவன், ஓங்காரத்தை முன்னிட்டுக்கொண்டே யோக₃ம் செய்யக் கடவன். இப்படி ஓங்காரத்தைக்கொண்டு உபாஸிப்பதனுல் ப்₃ரஹ்ம மானது உள்ளபடி அறியப்படுகிறது] என்று தாத்பர்யசந்த்₃ரிகை யில் எடுக்கப்பட்ட யோக₃யாஜ்ஞவல்க்ய வசனம் இவ்வர்த்த₂த்தை விரிவாகக் கூறியது. இவ்வசனத்தில் இந்த கீ₃தா ஶ்லோகங்கள் இரண்டும் அப்படியே எடுத்தாளப்பட்டிருப்பதால் "மாமநுஸ்மரந்" என்னுமிடத்தில் 'மாம்' என்றதை ப₄க₃வத்₃விஷயமாகக்கொள்ள வேண்டும் என்பது தெளிவு. இந்த இரு ஶ்லோகங்களால் கைவல்ய ப்ராப்தியைச் சொல்லிவிட்டு, மேலே அழியாத வேதத்தால் ப்₃ரஹ் மத்தை அடைகிருன் என்றது,— "ததே₃ததே₃ாமிதி। யமுக்த்வா முச்யதே யோகீ₃ ஜந்மஸம்ஸாரப₃ந்த₄நாத்। ஓம் நமோ நாராயணுயேதி மந்த்ரோபாஸக: வைகுண்ட₂பு₄வந லோகம் க₃மிஷ்யதி" [நாரா யணேபநிஷத்-அத₂ர்வஶிரஸ்] ['அ, உ, ம்' என்னும் மூன்று அக்ஷ ரங்களும் சேர்ந்தது 'ஓம்' என்னும் ப்ரணவம். அதை அநுஸந்தி₂ப்ப வன் பிறவித்துயரால் ஜீவனேக் கட்டும் ஸம்ஸாரக்கட்டிலிருந்து விடு படுவான். 'ஓம் நமோ நாராயணுய' என்னும் (ஓங்கார விவரண மான) திருவஷ்டாக்ஷரத்தை உபாஸிப்பவன் வைகுண்ட₂ லோகத்

திற்கே சென்று எம்பெருமானை அடைவான்.] என்னும் நாராயணோபநிஷத்₃ வாக்யத்தை விவரிப்பதாகையாலே 'ஓம்' என்னும் மந்திரத்தை மாத்திரம் உபாஸிப்பவன் ப்ரக்ருதி மண்ட₂லத்திற்கு அப்பாற்பட்டதாய், வைகுண்ட₂லோகத்திற்கு வெளிப்பட்டதான ஓர் ஸ்த₂ானத்தில் பிறவித்துயரறுகையாகிற கைவல்ய மோக்ஷத்தை மாத்திரம் அடைகிறுன் என்றும், திருவெட்டெழுத்தையும் ஓதுமவன் 'நமோ நாராயணுய' என்னும் விவரணத்தாலே தன்னிடத்தில் ப்ராப்யத்வபு₃த்₃தி₄ கழியப்பெற்றவனுய், கைவல்ய ப்ராபகனுக நினைத்த எம்பெருமானையே ப்ராப்யமாகவும் விரும்பி ஸ்ரீவைகுண்ட₂ம் சென்று அவனையே அடைகிறுன் என்றும் விளங்குகிறது. "அக்ஷரேண வேதே₃ந வேத்₃யம்" என்னும் யாஜ்ஞவல்க்ய வசனம், நாராயணோபநிஷத்தில் "ஓம் நமோ நாராயணுயேதி மந்த்ரோபாஸக:" என்னும் பகுதியையே ரஹஸ்யமாகையாலே மறைத்துச் சொல்லுகிறது. பெரியாழ்வார்—கைவல்யார்த்தி₂யைப் பற்றிய 'ஏடுநிலம்' எனும் பாசுரத்தில், "ஓங்காரத்தை மாத்திரமே அநுஸந்திப்பது என்னும் நியமத்தைவிட்டு, 'நாடும் நகரமும் நன்கறிய நமோ நாராயணுய என்று பாடும்' மனமுடையவர்களாய் வரவேண்டும்" என்று இந்த ஸ்ருத்யர்த்த₂த்தையே வெளிப்படையாகப் பேசினுர்.

"விரஜா பரமவ்யோம்நோரந்தரா கேவலம் ஸ்ம்ருதம் ।
தத் ஸ்த₂ாநமநுபே₄ாக்தவ்யமவ்யக்த ப்₃ரஹ்மஸேவிபி₄: ॥"

[விரஜைக்கும், பரமபத₃த்திற்கும் இடைப்பட்டது கேவலஸ்த₂ானம்; தம் ஆத்மாவை அநுப₄விப்பவர்கள் அவ்விடத்திலிருந்தே அநுப₄விப்பார்கள்.] என்னும் பூர்வர்கள் எடுத்துள்ள புராணவசனமும், "பரமேதி விஸேஷணேந முக்தாநாமேவ கேஷாஞ்சித அர்வாசீநா க₃திர் க₃ம்யதே।...ஸம்ஸார பரமபத₃யோர் மத்₄யே தேஷாம் ஸ்த₂ாநம் ச ॥" ['முக்தாநாம் பரமா க₃தி:' (முக்தர்களுக்கு மேலான ப்ராப்யம்) என்று 'பரமா' (மேலான) என்று விஸேஷித்திருப்பதால், முக்தர்களிலேயே சிலர்க்கு (கேவலாத்ம ப்ராப்திரூபமான) தாழ்ந்த ப்ராப்யம் உள்ளதென்று உணர்த்தப்படுகிறது ...... ஸம்ஸாரத்திற்கும் பரமபத₃த்திற்குமிடையே அவர்களுக்கு ஸ்த₂ானமும் சொல்லப்படுகிறது] என்று ப₄ட்டர் அருளிய ஸஹஸ்ரநாம பா₄ஷ்ய ஸ்ரீஸூக்தியும் இதை வலியுறுத்துகின்றன. நிற்க; இந்த யோக₃யாஜ்ஞவல்க்யஸ்ம்ருதியில், ஹைரண்யக₃ர்ப்ப₄ காபில அவாந்தரதபஸ் ஸநத்குமார ப்₃ரஹ்மிஷ்ட₂ பாஸுபத நாமங்களையுடைய ஸித்₃த₄ாந்தங்களில் ஓங்காரத்திற்கு ஹிரண்யக₃ர்ப்ப₄ாதி₃பரமாகப் பல வித₄மான பொருள்களை விவரித்திருந்தபோதிலும், கடைசியில்,

"த்ரிராத்மா த்ரிஸ்வப₄ாவஸ்ச தத₂ா த்ரிவ்யூஹ ஏவ ச ।
பஞ்சராத்ரே தத₂ா ஹ்யேஷ ப₄க₃வத்₃வாசக: ஸ்ம்ருத: ॥

ப$_3$லம் வீர்யம் தத$_2$ா தேஜ: த்ரிராத்மேதி ச ஸம்ஜ்ஞித: |
ஜ்ஞாநைஶ்வர்யே தத$_2$ா ஶக்திஸ் த்ரிஸ்வபா$_4$வ இதி ஸ்ம்ருத: ||
ஸங்கர்ஷணோऽத$_2$ ப்ரத்$_3$யும்நோ ஹ்யநிருத்$_3$த$_4$ஸ்ததை$_2$வ ச |
த்ரிவ்யூஹ இதி நிர்தி$_3$ஷ்ட ஓங்காரோ விஷ்ணுரவ்யய: ||
ப$_4$க$_3$வத்$_3$வாசக: ப்ரோக்த: ப்ரக்ருதேர் வாசகஸ் தத$_2$ா |
வ்யக்தாவ்யக்தோ வாஸுதே$_3$வ: ப்ரப$_4$வ: ப்ரளயஸ் தத$_2$ா ||"

[மூன்று ஸ்வரூபங்களையும், மூன்று ஸ்வபா$_4$வங்களையும், மூன்று வ்யூஹங்களையும் சொல்லும் இவ்வோங்காரம் பஞ்சராத்ரத்தில் ப$_4$க$_3$வானைச் சொல்லுவதாகக் கூறப்படுகிறது. ப$_3$லம், வீர்யம், தேஜஸ் எனும் மூன்றும் அந்த ஸ்வரூபங்கள்; ஜ்ஞாநம், ஐஶ்வர்யம், ஶக்தி என்னும் மூன்றும் அந்த ஸ்வபா$_4$வங்கள், (ஜ்ஞாநப$_3$லங்களையுடைய) ஸங்கர்ஷணனும், (ஐஶ்வர்ய வீர்யங்களையுடைய) ப்ரத்$_3$யும்நனும், (ஶக்தி தேஜஸ்ஸுக்களையுடைய) அநிருத்$_3$த$_4$னும் அந்த மூன்று வ்யூஹங்கள். இவ்வண்ணமாக அழிவற்ற விஷ்ணுவாகவேயிருப்பது ஓங்காரம். இது ப$_4$க$_3$வானுக்கும், அவனுடைய ப்ரக்ருதி (ப்ரகாரங்) களான சித$_3$சித்துக்களுக்கும் வாசகமாகும். ஸ்தூ$_2$ல ஸூக்ஷ்மமான உலகை ஶரீரமாகக்கொண்ட வாஸுதே$_3$வனே உலகிற்கு உத்பத்தி விநாஶகாரணமாகிறான்.] என்று இவ்வோங்காரம் ப$_4$க$_3$வத்பரமாகவே வர்ணிக்கப்பட்டிருக்கையாலும், "ஓங்காரம் விபுலமசிந்த்யமப்ரமேயம் ஸூக்ஷ்மாக்$_2$யம் த்$_4$ருவமஜரம் ச யத் புராணம் | தத்$_3$விஷ்ணோ: பத$_3$மபி பத்$_3$மஜப்ரஸூதம் தே$_3$ஹாந்தே மம மாநஸே ஸ்தி$_2$திம் கரோது ||" [பெரியதும், அளத்தற்கரியதும் நுண்ணியதும், நிலையானதும், அழியாததும், பழையதும், விஷ்ணுவைச் சொல்லுவதும், (ஆதி$_3$காலத்தில்) ப்$_3$ரஹ்மாவினால் உச்சரிக்கப்பட்டதுமான ஓங்காரம் ஶரீரத்தை விடும்போது என் மனத்தில் நிலைநிற்கட்டும்] என்று அந்தியகாலத்தில், விஷ்ணுவைச் சொல்லுவதாக ஓங்காரத்தை நினைக்கவேண்டும் என்று கூறுகையாலும், ஹைரண்யக$_3$ர்ப்ப$_4$ாதி$_3$ ஸித்$_3$த$_4$ாந்தங்களில் ஹிரண்யக$_3$ர்ப்ப$_4$ன்' முதலானோரைச் சொல்லுவதாகக் கூறியது, அவர்களுக்கு அந்தர்யாமியான ப$_4$க$_3$வானைச் சொல்லுவது என்னும் கருத்தை உடையது என்றே கொள்ளவேண்டும்.

"தல்லிங்கை$_3$ரர்ச்சயேந் மந்த்ரைஸ் ஸர்வாந் தே$_3$வாந் ஸமாஹித:|
நமஸ்காரேண புஷ்பாணி விந்யஸேத் து யத$_2$ாக்ரமம் ||
ஆவாஹநாதி$_3$கம் கர்ம யந்ந ஸூக்தம் மயா த்விஹ|
தத் ஸர்வம் ப்ரணவேநைவ கர்த்தவ்யம் சக்ரபாணயே ||
த$_3$த்$_3$யாத் புருஷஸூக்தேந ய: புஷ்பாண்யப ஏவ வா |
அர்ச்சிதம் ஸ்யாத் ஜக$_3$தி$_3$த$_3$ம் தேந ஸர்வம் சராசரம் ||

விஷ்ணுர் ப்₃ரஹ்மா ச ருத்₃ரஶ்ச விஷ்ணுரேவ தி₃வாகர: |
தஸ்மாத் பூஜ்யதமம் நாந்யமஹம் மந்யே ஜநார்த்த₃நாத் ||"

[எல்லா தே₃வர்களையும், அவரவரைக்குறிக்கும் மந்திரங்களாலே, (அவை அந்தர்யாமியான நாராயணனையே குறிக்கின்றன என்னும் நினைவுடையவனாய் உபாஸகன்) அர்ச்சிக்கக்கடவன். நமஸ்காரத்தோடு புஷ்பங்களையும் முறைப்படி ஸமர்ப்பிக்கக்கடவன். (இன்ன மந்திரங்களைக்கொண்டு செய்யவேண்டும்) என்று என்னால் சொல்லப் படாத இடங்கள் அனைத்திலும் ப்ரணவத்தினாலேயே, சக்ரபாணிக்கு ஆவாஹநம் முதலானவற்றைச் செய்யவேண்டும். புருஷஸூக்தத்தைக்கொண்டு சக்ரபாணிக்குப் பூக்களையும் நீரையும் ஸமர்ப்பிப்பவன், எல்லாச் சராசரங்களுமடங்கிய உலகனைத்தையும் அர்ச்சித்தவனாவான், விஷ்ணுவே பிரமன், உருத்திரன், ஸூர்யன் ஆகிய அனைவர்க்கும் அந்தர்யாமி. ஆகையால் ஜநார்த்த₃னனைக் காட்டிலும் வேறெவனையும் பூஜிக்கத்தவன் என்று நான் எண்ணவில்லை.] என்று இந்த யோக₃ யாஜ்ஞவல்க்யஸ்ம்ருதியில் ப்ரணவத்தினாலேயே ப₄க₃வத₃ர்ச்சனம் சொல்லப்பட்டிருப்பதும் ஓங்காரவாச்யன் ப₄க₃வானே என்பதை வலியுறுத்துகிறது.

"ஓம்பூ₄ர் பு₄வஸ்ஸுவர்மஹர்ஜநஸ் தபஸ் ஸத்யமிதி வைதி₃கம் |
ஏதது₃ச்சார்ய வை ப்₃ரஹ்ம பரே வ்யோம்நி நியோஜயேத் ||
ஹ்ருத₃யேऽக்₃நிஶ்ச வாயுஶ்ச ஜீவோ யஸ் ஸமுத₃ாஹ்ருத: |
ஓங்காரபத்₃மநாளே து உத்₃த்₄ருத்யோபரி யோஜயேத் ||
அப்ராணச்சூ₂ந்யபூ₄தாத்து சேதோऽங்கு₃ம் ஜீவஸம்ஜ்ஞிதம் |
ஜாயதே து யதஸ் தஸ்மாத் புநஸ் தத்ர நிவேஶயேத் ||
க₄ண்டாஶப்₃த₃வதே₃ாங்காரமுபாஸித ஸமாஹித: |
புருஷம் நிர்மலம் ஶுப்₄ரம் பஶ்யேத்₃வை நாத்ர ஸம்ஶய: ||"

என்று இந்த யோக₃யாஜ்ஞவல்க்யத்தில் யோக₃ஶாஸ்த்ர ப்ரக்ரியையில் ப₄க₃வது₃பாஸனத்தைச் சொல்லிவரும்போது, மணியோசைபோல் (படிப்படியாக ஓய்வதாக) ஓங்காரத்தை உபாஸிப்பதன்மூலம் பரம புருஷனை ஸாக்ஷாத்கரிக்கலாம் என்று கூறியிருப்பதும் இதை உறுதிப்படுத்துகிறது. பதஞ்ஜலியின் யோக₃ஸூத்ரத்தில், "க்லேஶ கர்மவிபாகாஶயைரபராம்ருஷ்ட: புருஷவிஶேஷ ஈஶ்வர: | தஸ்ய வாசக: ப்ரணவ: ||" [1-24, 25] [க்லேஶம், கர்மம், விபாகம், ஆஶயம் ஆகியவற்றால் தொடப்படாத சிறந்த புருஷனே ஈஶ்வரன். அவனைச் சொல்லுவது ப்ரணவம்] என்று இவ்வர்த்த₂ம் சொல்லப்பட்டிருப்பது ஸுப்ரஸித்₃த₄ம். (மாமநுஸ்மரந்) 'மாம்' என்று தன்னைக்காட்டுகையால், ஓங்காரத்தை உச்சரித்துக் கொண்டிருக்கும்போதே தி₃வ்ய மங்க₃ளவிக்₃ரஹத்தோடு கூடிய தன்னைச் சிந்திக்கவேண்டும் என்றும்

आत्मनः प्राणं मूर्ध्न्याधाय देहं त्यजन् यः प्रयाति ; स याति परमां गति—प्रकृतिवियुक्तं मत्समानकारमपुनरावृत्तिमात्मानं प्राप्नोतीत्यर्थः।

---

விதி4க்கிறான். இப்படி விதி4ப்பதற்குக் கருத்து என்னவெனில்: ஓங்காரத்தினாலே, 'அகாரவாச்யனான பரமபுருஷனுக்கு நான் ஶேஷபூ4தன்' என அறிந்து, பரமபோ4க்3யமான அவனது திருமேனியையும் சிந்தித்தானாகில், இக்கைவல்யார்த்தி2க்கு அணுவான ஆத்மாவில் போ4க்3யதாபு3த்3தி4 கழியப்பெற்றுப் பரமபுருஷோபாஸகனாக ஆகக்கூடும் என்னும் திருவுள்ளத்தாலேயே எம்பெருமான் இப்படி விதி4க்கிறான் என்று கண்டுகொள்வது "பிறவித்துயரற ஞானத்துள் நின்று துறவிச்சுடர்விளக்கம் தலைப்பெய்வார் அறவனை ஆழிப்படை அந்தணனை மறவியையின்றி மனத்து வைப்பாரே" [திருவாய் 1-7-1] என்று ஆழ்வார் அருளிச்செய்தபடியே அந்திமஸ்ம்ருதி பர்யந்தம் இப்படி ஆழியானை அநுஸந்தி4த்த பின்பும், பாபப்ராசுர்யத்தாலே கையும் திருவாழியுமான அழகில் ஈடுபடாமலும், தங்களுடைய ஆத்மாவில் நசை தீரப் பெறாமலும் அவனைத் தங்களது ப்ராப்யமான கைவல்யத்தைப் பெறுவதற்கு விரோதி4யான பாபங்களைப் போக்கடிக்கவல்ல திருவாழியையுடையவன், ப்ராக்ருத தோ3ஷங்களில்லாத ஶுத்3த4ன் என்றே அநுஸந்தி4த்தார்களாகில், வேறு வழியில்லாமல் இவர்கள் விரும்பிய கேவலாத்மாநுப4வரூபமான கைவல்யமோக்ஷத்தைக் கொடுக்கிறான் என்று கண்டுகொள்வது. (ஆத்மந: ப்ராணம் மூர்த்4நி ஆத4ாய) தனது ப்ராணவாயுவைத் தனது தலையிலேயிருக்கும் மூர்த்4ன்ய நாடி எனப்படும் ஸுஷும்நாநாடி வழியில் பிரவேஶிக்கச்செய்து. "ஶதம் சைகா ச ஹ்ருத3யஸ்ய நாட்3யஸ் தாஸாம் மூர்த்4ாநமபி4நிஸ்ஸ்ருதைகா । தயோர்த்4வமாயந் அம்ருதத்வமேதி விஷ்வங்ஙந்யா உத்க்ரமணே ப4வந்தி" [சா2ந் 8-6-6] [ஹ்ருத3யத்திலிருந்து நூற்றொரு நாடிகள் செல்கின்றன. அவற்றில் தலையை நோக்கிச்செல்வது ஒரு நாடி. அதன் வழியாகச் செல்பவனே மோக்ஷமடைகிறான். மற்ற நாடிகளின் வழியாகச் செல்பவர்கள் மற்ற ஸாம்ஸாரிக ப2லன்களை அடைகிறார்கள்.] என்று உபனிஷத் ஓதுகையாலே, மோக்ஷத்தை அடைய விரும்பும் இவன் தனது ப்ராணனை அந்திமகாலத்தில் தலையிலுள்ள மூர்த்4ந்யநாடி எனப்படும் ஸுஷும்நாநாடியில் பிரவேசிக்கச் செய்யவேண்டும் என்று கூறுகிறான். இதிலிருந்து இக்கைவல்ய நிஷ்ட2ன் மோக்ஷத்தை அடைய விரும்பும் முமுக்ஷுவேயொழிய, ஸம்ஸாரமண்ட2லத்திலேயே இருந்து ஒரு ப2லனை அநுப4விக்க விரும்பும் பு3பு4க்ஷுவல்லன் என விளங்குகிறது. (தே3ஹம் த்யஜந் ய: ப்ரயாதி) ஸ்தூ2லஸூக்ஷ்ம தே3ஹங்களை அடியோடு விட்டு எவன் ப்ரக்ருதிமண்ட2லத்தைத் தாண்டிச் செல்கிறானோ. "ஏடு நிலத்திலிடுவதன் முன்னம் வந்து" என்னும்

* यस्स सर्वेषु भूतेषु नश्यत्सु न विनश्यति ।। अव्यक्तोऽक्षर इत्युक्तस्त-
माहुः परमां गतिम् ।। (२०, २१) इत्यनन्तरमेव वक्ष्यते ।। १२ ।। १३ ।।

---

திருப்பல்லாண்டு நாலாம் பாசுரத்தில் இவனுக்கு ஸூக்ஷ்மஶரீரமும் கழிந்துவிடுகிறது என்பதைப் பெரியாழ்வார் காட்டினர். (ஸ: பரமாம் க₃திம் யாதி) அவன் ப்ரக்ருதியினின்றும் நீங்கியதாய், (ப்ராக்ருத தோ₃ஷங்களில்லாமலிருக்கும் அம்ஶத்தில்) எனக்கு ஸமானமானதாய், ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவருதல் இல்லாமையாலே மிக மேலானதான தன் ஆத்மாவை ஆடைகிருன்; அதை என்றும் அநுப₄விப்பதாகிற கைவல்யமோக்ஷத்தை அடைகிருன் என்று கருத்து. (பரமாம் க₃திம்) 'தனக்கு மேலில்லாத க₃தி' என்னும் பொருள் இங்கு பொருந்தாதாகையால், அசித₃நுப₄வமாகிற ஐஶ்வர்யாநுப₄வத்தைக்காட்டிலும் மேலான பரக₃தி என்னத்தக்கது அசிந்மிஶ்ர ஸ்வாத்மாநுப₄வம் என்றும், அதைக்காட்டிலும் மேலான பரமக₃தி என்னத்தக்கது அசித்₃வியுக்த ஸ்வாத்மாநுப₄வம் என்றும் கருத்து. "யஸ்ஸ ஸர்வேஷு பூ₄தேஷு நஶ்யத்ஸு ந விநஶ்யதி। அவ்யக்தோऽக்ஷர இத்யுக்தஸ் தமாஹு: பரமாம் க₃திம்॥" [கீ₃தை 8-20,21] என்னும் ஶ்லோகத்தில் இது எப்படிப் பரமக₃தியாகிறது என்பதைக் கண்ணனே விவரிக்கப்போகிருன். "தத்வேந யஶ்சித₃சித்₃ஈஶ்வர" [ஸ்தோ-ர 4] என்னும் ஶ்லோகத்தில் அபவர்க்க₃மாகிற மோக்ஷத்தையும், அதை அடைவதற்குரிய உபாயத்தையும் உள்ளபடி அறிவித்தவர் என்று ஆளவந்தாரால் புகழப்பெற்ற பராஶர மஹர்ஷி, இக்கைவல்யமோக்ஷத்தைப்பற்றியும், அதற்குரிய உபாயத்தைப்பற்றியும் பேசியுள்ள பகுதி, கீ₃தோபனிஷத்திலுள்ள இவ்விரு ஶ்லோகங்களை விளக்குமதாய் அமைந்துள்ளது. அதாவது:—

"யோகி₄னோ முக்திகாமஸ்ய ப்ராணாயாமாதி₃ ஸாத₄நம் ।
ஸாத்₄யம் ச பரமம் ப்₃ரஹ்ம புனர் நாவர்த்ததே யத: ॥
ஸாத₄நாலம்ப₃நம் ஜ்ஞாநம் முக்தயே யோகி₃நாம் ஹி யத் ।
ஸ பே₄த₃: ப்ரத₂மஸ் தஸ்ய ப்₃ரஹ்மபூ₄தஸ்ய வை முநே ॥
யுஞ்ஜத: க்லேஶமுக்த்யர்த்த₂ம் ஸாத்₄யம் யத்₃ப்₃ரஹ்ம யோகி₃ந: ।
தத₃ாலம்ப₃நவிஜ்ஞாநம் த்₃விதீயோऽம்ஶோ மஹாமுநே ॥
உப₄யோஸ்த்வவிப₄ாகே₃ந ஸாத்₄யஸாத₄நயோர் ஹி யத் ।
விஜ்ஞாநமத்₃வைதமயம் தத்₃பா₄கோ₃ऽந்யோ மயோதி₃த: ॥
ஜ்ஞாநத்ரயஸ்ய சைதஸ்ய விஶேஷோ யோ மஹாமுநே ।
தந்நிராகரணத்₃வாரத₃ர்ஶிதாத்மஸ்வரூபவத் ॥
நிர்வ்யாபாரமநாக்₂யேயம் வ்யாப்திமாத்ரமநூபமம் ।
ஆத்மஸம்போ₃த₄விஷயம் ஸத்தாமாத்ரமலக்ஷணம் ॥
ப்ரஶாந்தமப₄யம் ஶுத்₃த₄ம் து₃ர்விபா₄வ்யமஸம்ஶ்ரயம் ।
விஷ்ணோர் ஜ்ஞாநமயஸ்யோக்தம் தத் ஜ்ஞாநம் ப்₃ரஹ்மஸம்ஜ்ஞிதம்॥

தத்ர ஜ்ஞாநநிரோதேந யோகிநோ யாந்தி யே லயம் /
ஸம்ஸாரகர்ஷணோப்தௌ தே யாந்தி நிர்பீஜதாம் த்விஜ //''
[வி-பு 1-22-45 ...52]

[(ஜரை, மரணம் முதலான இவ்வுலகத் துன்பங்களிலிருந்து) விடுபடுவதையே விரும்பும் கைவல்யார்த்திக்கு—ப்ராணாயாமம் முதலானவற்றை அங்கமாகக்கொண்ட அஷ்டாங்கயோகம் ஸாதனமாகிறது; 'ப்ரஹ்ம' எனப்படும் ப்ரக்ருதியைக் காட்டிலும் சிறந்த 'பரப்ரஹ்ம' எனப்படும் ப்ரக்ருதி ஸம்பந்தமுள்ள பத்தஜீவனைக் காட்டிலும் சிறந்ததாகையாலே 'பரமப்ரஹ்ம' எனத்தக்க திரும்பிவருதலில்லாத (தனது) முக்தஸ்வரூபம் ஸாத்யமாகிறது.(இது பின்வரும் நாலு பகுதிகளாக ஸாதிக்கப்படுகிறது:-) யோகமாஸ்த்ரத்திலிருந்து அறியத் தக்கதாய், ப்ராணாயாமம் முதலான ஸாதனத்தைப்பற்றியதான அறிவு முதல் பகுதி. ஷடூர்மி முதலான க்லேமங்கள் போவதற்காக இப்படி யோகம் செய்யும் இவனுக்கு, ஸாத்யமாய், ப்ரக்ருதியினின்றும் நீங்கியதான தனது ஆத்மஸ்வரூபத்தைப் பற்றிய அறிவு இரண்டாவது பகுதி. முற்கூறிய ஸாத்யஸாதனங்களை ஸாத்யஸாதனபாவ ஸம்பந்தத்தோடு அறிந்து, தேவர் மனுஷ்யர் முதலான (மரீரஸம்பந்தத்தினால் ஆத்மாவுக்கு ஏற்படும்) பேதங்களை நீக்கித் தன் ஆத்மாவை த்யானிப்பது மூன்றாவது பகுதி. முற்கூறிய மூன்று வகைப்பட்ட ஜ்ஞானங்களின் வேறுபாடுகளை மறக்கையாலே தன் ஆத்மாவை ஸாக்ஷாத்கரிப்பதாயிருக்கும் அறிவு நாலாவது பகுதியாகும். (ஸாதனம் முதலானவற்றை நினைப்பது ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்கு விரோதியாகையாலே, அவற்றை மறந்தால் தான் இவ்வாத்மாவலோகனம் ஏற்படும் என்று கருத்து.) (நாலாவதான இவ்வாத்ம ஸாக்ஷாத்காரநிலையில் இவன் காணும்) ஆத்மஸ்வரூபமானது, ஸாதநாநுஷ்டானமற்றது; ரூபம், வர்ணம் முதலானவையற்றது; (அறிவால்) எங்கும் வியாபித்திருப்பது ஒப்பற்றது. தனது அறிவாலேயே அறியத்தக்கது. (ஷட்பாவவிகாரங்களில்—குறைதல், அழிதல், மாறுதல், வளர்தல், பிறத்தல் என்னும் ஐந்துமற்றதாய்) ஸத்தையொன்றே உடையதாயிருப்பது. (ஆண், பெண் முதலான) அடையாளங்களற்றது. (பசி முதலான) ஷடூர்மிகளற்றது. இத்தகையது என்று நினைக்க அரியது. ஜ்ஞாநமயனான விஷ்ணுவுக்கு உருவமாய், ப்ரஹ்மமெனப்படும் ஜ்ஞாநஸ்வரூபமான அவ்வாத்மஸ்வரூபம் இத்தகையதாகச் சொல்லப்படுகிறது. மற்ற மப்தாதி விஷய அறிவுகளற்று, அந்தத் தமது ஆத்மஸ்வரூபத்தில் (அந்திமஸ்ம்ருதிபலத்தாலே) எவர்கள் லயத்தை (ஸ்தூல ஸூக்ஷ்ம மரீரநாமத்தை) அடைகிறார்களோ, அவர்கள் உமிநீங்கிய நெல்போலே, ஸம்ஸாரமாகிற வயலில் விதைக்கத்தகாதவர்களாகின்றனர்] என்னும் எட்டு ம்லோகங்கள்கொண்ட பகுதியே அது.

இந்த ஶ்லோகங்களின் வ்யாக்₂யானத்தில், ஸ்ரீ பா₄ஷ்யகார ஶிஷ்ய ரான ஸ்ரீ விஷ்ணுசித்தரெனும் எங்களாழ்வான் இக்கைவல்யத்தின் தன்மையை மிகவும் தெளிவுபடுத்தியிருக்கிருர். எப்படியெனில்: முதல் ஶ்லோகத்தில் இவனுக்கு ஸாத்₄யமாகச் சொல்லப்பட்ட "பரமம் ப்₃ரஹ்ம" என்பதை "முக்த ஸ்வரூபம்" என்று வ்யாக்₂யானம் செய்வதன்மூலமும், மூன்ரும் ஶ்லோகத்தில் உள்ள "தத₃ாலம்ப₃நவிஜ்ஞாநம்" என்பதை "ப்ரக்ருதிவிவிக்தாத்மவிஷயம் விஶிஷ்ட ஜ்ஞாநம்" என்று விவரிப்பதன்மூலமும், ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄ம் அடியோடு நீங்கப்பெற்ற தன் முக்தாத்ம ஸ்வரூபமே இவனுக்கு ப்ராப்யம் எனக் காட்டினர். ஐந்தாம் ஶ்லோகத்தில் "தந்நிராகரண த்₃வாரத₃ர்ஶிதாத்மஸ்வருபவத்" என்றதற்கு, "விநிஷ்பந்ந ஸமாதே₄:, இதரபராமர்ஶஸ்ய ஆத்மாவலோகநவிரோதி₄த்வாத் தந் நிராகரணம் த்₃வாரம் இத்யுக்தம்" [ஸமாதி₄ நிறைவடையப்பெற்ற இவனுக்கு ஸாத₄னம் முதலியவற்றை நினைப்பது ஆத்மாநுப₄வத் திற்கு விரோதி₄யாகையால், அவற்றை மறப்பது ஆத்மாநுப₄வத் திற்கு த்₃வாரம் (காரணம்) என்று சொல்லப்பட்டது.] என்று உரை யிட்டதன்மூலம், ஸாத₄னமாயிருந்த ப₄க₃வானைப்பற்றிய சிந்தனமும் ஆத்மாநுப₄வத்திற்குத் தடையாகையாலே, ஸாத்₄யத₃ஶையில் இவனுல் கைவிடப்படுகிறது என்று உணர்த்தினர். "இதரயோஸ்து யாவத்ஸ்வாபி₄லஷிதப்ராப்தி மயா யோக₃:" [ஐஶ்வர்ய கைவல்ய நிஷ்ட₂ர்களுக்குத் தம் ஸாத்₄யம் ஸித்₃தி₄க்கும் வரையில்தான் (ஸாத₄னமான) என்னேடு சேர்த்தி] என்று கீ₃தை(7-17)யில் நித்ய யுக்தஶப்₃த₃பா₄ஷ்யத்தில் பா₄ஷ்யகாரர் அருளியதை அடியொற்றியபடி. இதனுலேயன்ரே இக்கைவல்யநிஷ்ட₂ரை "விடை கொள்வார்" [முதல்திருவ-26] என்று பொய்கையாழ்வார் அருளினர். இக் கைவல்யநிஷ்ட₂னுக்கு ப்ராப்யமான இவனது (ப்ரக்ருதியினின்று நீங்கிய) ஆத்மஸ்வரூபத்தை விவரிக்கும் ஆரும் ஶ்லோகத்தில் "நிர்வ்யாபாரம்" என்னும் பத₃த்திற்கு "ஸாத₄நாநுஷ்ட₂ாந ரஹிதம்" என்று ஸாத₄நாநுஷ்ட₂ாநமாகிற செயலற்றவன் என்று வ்யாக்₂யானம் செய்வதன்மூலம், இவன் கைவல்ய மோக்ஷத்தை அடைந்த பின்பு ப₄க்தியோக₃ம் முதலான ஸாத₄னத்தை அநுஷ் டி₂த்து ப₄க₃வத₃நுப₄வத்தைப் பெற இடமில்லை என்று காட்டினர். "முக்திகாமஸ்ய" (1) "முக்தயே" (2) "க்லேஶமுக்த்யர்த்த₂ம் யுஞ்ஜத:" (3) என்னும் பகுதிகளாலும், இவனுக்கு ப்ராப்யமான கேவலாத்மஸ்வரூபத்தை விவரிக்கும் 6, 7 ஶ்லோகங்களாலும் — "ஜராமரண மோக்ஷாய" [கீ₃தை 7-29] "பிறவித்துயரற"

[திருவாய் 1-7-1] "மரணம் தோற்றம் வான் பிணி மூப்பென்று இவை மாய்த்தோம்" [திருவாய் 8-3-2] முதலானவிடங்களில் சொல்லப்பட்ட பிறப்பு, இறப்பு முதலான ஷடூ₃ர்மிகளற்றிருக்கையாகிற மோக்ஷமே இவனால் பெறப்படுவது என்று ஸ்ரீ பராஶரர் திருவுள்ளம் பற்றுவதாகக் காட்டினார் எங்களாழ்வான். அவரே "தத்ர" என்று தொடங்கும் எட்டாவது ஶ்லோகத்திற்கு அவதாரிகையாக "ஆத்மயோகி₃ நாம் அந்திமப்ரத்யயோ அவஶ்யம் ப₄ாவ்யம், அந்யதா₂ புநராவ்ருத்திரித்யாஹ" [தம் ஆத்மாவைப் பெறவிரும்பி யோக₃ம் செய்பவர்களுக்கு அந்திமஸ்ம்ருதி அவஶ்யம் வேண்டும்; இல்லாவிடில் மறுபடி ஸம்ஸாரத்திற்குத் திரும்பி விடுவார்கள்.] என்று அருளிச் செய்வதன்மூலம்,

"குறுகமிக உணர்வத்தொடு நோக்கி எல்லாம் விட்ட
இறுகல் இறப்பென்னும் ஞானிக்கும் அப்பயன் இல்லையேல்
சிறுக நினைவதோர் பாசமுண்டாம் பின்னும் வீடில்லை
மறுகலில் ஈசனைப் பற்றி விடாவிடில் வீடஃதே"
[திருவாய் 4-1-10]

என்று ஆழ்வார் அருளிச்செய்த ரீதியில், இந்தக் கேவலாத்மயோகி₃யான கைவல்யநிஷ்ட₂னுக்கும் அந்திமஸ்ம்ருதியிருந்தால்தான் புநராவ்ருத்தி ( மறுபடியும் ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவருதல் ) இல்லாத இக்கைவல்யமோக்ஷம் ஏற்படுகிறது என்று காட்டி, இவ்வெட்டாவது ஶ்லோகத்தில் 'லயம்' என்னும் ஶப்₃த₃த்திற்கு 'உபாதி₄வியோக₃ம்' என்று வ்யாக்₂யானம் செய்வதன்மூலம், இக்கைவல்யநிஷ்ட₂னுக்கு ஸூக்ஷ்ம ஶரீரமும் அடியோடு அற்றுப்போகிறதென்றும், "ஸம்ஸார கர்ஷண்ணேப்தௌ தே யாந்தி நிர்பீ₃ஜதாம் த்₃விஜ" என்னும் பிற்பகுதிக்கு வ்யாக்₂யானமாக "க்ருஷ்யத இதி கர்ஷணம் கேத₃ார: | ஸம்ஸார கேத₃ாரே உப்தௌ – ஸஸ்யாவாபே விதுஷ்வ்ரீஹிவத் அபீ₃ஜதாம் யாந்தி ||" [க்ருஷி செய்யப்படுகையாலே கர்ஷணம் என்று வயல் சொல்லப்படுகிறது; அவர்கள் — உமிநீங்கிய நெல் போலே, ஸம்ஸாரமாகிற வயலில் விதைக்கத்தகாதவர்களாகிறார்கள்.] என்று அருளிச்செய்வதன்மூலம் இவன் ஸம்ஸாரத்தில் பிறப்பற்ற முக்தனே என்றும் தெளிவுபடுத்தினார்.

"ஏவம்ப்ரகாரம் அமலம் நித்யம் வ்யாபகம் அக்ஷயம் |
ஸமஸ்தஹேயரஹிதம் விஷ்ணவாக்₂யம் பரமம் பத₃ம் ||"
[வி-பு 1-22-53]

[நிர்வ்யாபரனாயிருக்கை முதலான முக்தனுக்குக் கூறிய எல்லாப் பெருமைகளையும் உடையதாய், அதற்கு மேலே (அவனுக்கு இல்

லாத) நித்யஶுத்₃தி₄யையும், ஸர்வவஸ்துக்களையும் ஸ்வரூபத்தால் வியாபித்திருக்கையையும், ப்ரதிவஸ்து பூர்ணத்வத்தையும், (பாரதந்த்ர்யம் முதலிய) எல்லாத் தாழ்வுகளும் அற்றிருக்கையையும் உடையது 'விஷ்ணு' எனப்படும் பரமப்ராப்யமான ப₄க₃வத்ஸ்வரூபம்] என்று ப₄க₃வத்ஸ்வரூபத்திற்கு முற்கூறிய முக்தஸ்வரூபத்தைக் காட்டிலும் சிறப்பைத் தெரிவிக்கும் ஶ்லோகத்தில் "அஸ்ய நித்ய ஶுத்₃த₄த்வ ஸர்வாத்மத்வ பூர்ணத்வ ஹேயராஹித்யாநி ப்ரக்ருதி ப₃ந்த₄முகதேப்₄யோ விஶேஷ:" [(முற்கூறிய) ப்ரக்ருதிப₃ந்த₄த்தினின்றும் விடுபட்டவனைக் காட்டிலும், இந்தப் பரமபுருஷனுக்கு (1) எப்போதும் ஶுத்₃த₄னாயிருக்கை, (2) ஸர்வாத்மாவாயிருக்கை, (3) பூர்ணனாயிருக்கை, (4) தாழ்வற்றவனாயிருக்கை என்னும் நாலு பெருமைகள் உண்டு.] என்று வ்யாக்₂யானமிடுமிடத்திலும், இக்கைவல்யநிஷ்ட₂னை 'ப்ரக்ருதிப₃ந்த₄முக்தன்' (ப்ரக்ருதியாகிற ப₃ந்த₄த்தினின்றும் விடுபட்டவன்] என்றே குறிப்பிடுவது குறிக்கொள்ளத்தக்கது.

"தத்₃ ப்₃ரஹ்ம பரமம் யோகீ₃ யதோ நாவர்த்ததே புந:|
ஶ்ரயத்யபுண்யோபரமே க்ஷீணக்லேஶோऽதிநிர்மலே||"

[ப₄க₃வதுபாஸகன், புண்யபாபங்கள் க்லேஶங்கள் முதலியவை நீங்கியவுடன், திரும்பிவருதலில்லாத அந்தப் ப்ரப்₃ரஹ்மத்தையே அடைகிறான்] என்னும் ப₄க₃வதுபாஸகனைப்பற்றிய அடுத்த ஶ்லோகத்தில், "யோகீ₃—ப₄க₃வத்₃யோகீ₃| அஸ்யாப்யந்திமப்ரத்யயப₃லேந ப₄க₃வதி லீநஸ்ய அபுநராவ்ருத்திர் த்₃ரஷ்டவ்யா" [இங்கு 'யோகீ₃' எனப்படுபவன் ப₄க₃வானை ப்ராப்யமாகப்பற்றி உபாஸிப்பவனாவான். அந்திமஸ்ம்ருதி ப₃லத்தாலே ப₄க₃வானை அடைந்த இவனுக்கும் ஸம்ஸாரத்திற்குத் திரும்பி வருதலில்லை என்பது குறிக்கொள்ளத் தக்கது.] என்று ப₄க₃வத்₃யோகி₃யை ஆத்மயோகி₃யைக் காட்டிலும் வேறுபட்டவன் என்று தெளிவாகக்காட்டி, அந்திம ஸ்ம்ருதி ப₃லத்தால் ப்ரக்ருதியினின்றும் நீங்கிய தன் ஆத்மாவையடைந்த ஆத்மயோகி₃யைப்போலே, அந்திமஸ்ம்ருதி ப₃லத்தால் ப₄க₃வானை அடைந்த இவனுக்கும் ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவருதல் இல்லை என்று காட்டினார். இவற்றிலிருந்து—பிள்ளான், ப₄ட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை முதலான பூர்வாசார்யர்கள் திருவுள்ளமும், எங்களாழ்வானது திருவுள்ளமும் இக்கைவல்ய விஷயத்தில் ஒருபடிப்பட்டதே என விளங்குகிறது.

"யோகி₃நாம் அம்ருதம் ஸ்த₂ாநம்" [வி-பு 1-6-38] என்னுமிடத்தில் அம்ருத பத₃த்திற்கு முக்₂யார்த்த₂ம்கொண்டு, அந்த

ஶ்லோகத்தில், கைவல்யநிஷ்டர்கள் தம் ஆத்மாவை அநுபவிக்கும் அழியாத ஸ்தாநத்தைச் சொல்லுவதாக பட்டர், பெரியவாச்சான் பிள்ளை முதலானோர் அருளியிருக்க, அம்ருத பதத்திற்கு 'நீண்டகால மிருப்பது' என்னும் அமுக்யார்த்தம்கொண்டு, அவ்விடத்தில் த்ருவநக்ஷத்திரத்திற்கு மேலேயுள்ள விஷ்ணுபதம் என்னும் (ப்ரக்ருதி மண்டலத்திற்குட்பட்ட) ஸ்தானத்தைச் சொல்லுவதாக எங்களாழ் வான் வியாக்கியானம் செய்திருப்பதிலிருந்து கைவல்யம் அநித்யம் என்று அவர் கருதியிருப்பதுபோல் தோன்றுகிறதே? எனில்: "அம்ருதம் ஸ்தாநம்" என்றவிடத்தில் கைவல்ய ஸ்தானம் சொல்லப்படுவ தாகவே அவர் திருவுள்ளம் பற்றவில்லையாகையால், இதுகொண்டு கைவல்ய விஷயத்தில் கருத்துவேற்றுமையைக் கற்பிக்கவொண்ணாது. எப்படி? எனில்: "யோகிநாமிதி || ஆஶ்ரமிஷ்வேவ யே ப்ரதீ கோபாஸகா யோகிந: தேஷாம் அம்ருதம் — விஷ்ணுபதாக்யம் த்ருவாதுபரி ஸ்தாநம் — யதோ கங்கா ப்ரவஹதி இதி வக்ஷ்ய மாணம் ||" [நாலு ஆஶ்ரமங்களில் இருப்பவர்களிலேயே, ப்ரதீக மான தம் ஆத்மாவை உபாஸிக்கும் யோகிகளுக்கு, (நீண்டகால மிருக்கையாலே) அழியாதது எனப்படுவதாய், 'விஷ்ணு பதம்' என்று பெயர்பெற்றதாய், த்ருவநக்ஷத்திரத்திற்கு மேற்பட்டதான ஸ்தாநம் இங்கு சொல்லப்படுகிறது. இந்த ஸ்தாநத்திலிருந்தே கங்கை, பெருகுகிறது என்று மேலே (2-8) சொல்லப்படப்போகிறது.] என்று இவ்விடத்தில் வியாக்கியானம் செய்தார் எங்களாழ்வான். மேலே (2-8-98, 99, 100) இந்த விஷ்ணுபதஸ்தானத்தைப்பற்றிப் பேசு மிடத்தில், "அதோऽத்ர விஷ்ணுபதே ஸ்வர்க்காதிகஸௌக்யாத், ஸத்யலோகாத் அர்வாசீநத்வாச்ச மோக்ஷாக்தி: க்ரமமுக்த்யர்த்தா | தத்ஸ்தா: க்ரமாத் ப்ரஹ்மலோகமேத்ய ப்ரஹ்மணா ஸஹ முச்யந்தே | விஷ்ணுபதே ஸ்திதா: தத்ர லப்தஜ்ஞாநா முச்யந்தே ; ந து தந்முக்தைர் லப்யம் ஸ்தாநமித்யர்த்த:" [ஆகையால், இந்த விஷ்ணுபதத்தில் ஸ்வர்க்கத்தைக் காட்டிலும் மேற்பட்ட இன்பம் உள்ளதாகையாலும், ப்ரஹ்மாவின் ஸத்யலோகத்தைக் காட்டிலும் இது தாழ்ந்ததாகையாலும், இதை 'அம்ருதம்' என்பது, இவ் விடத்திலிருப்பவர்களுக்கும் காலக்ரமத்தில் மோக்ஷம் கிடைக்கும் என்னும் கருத்துடையது; விஷ்ணுபதத்திலிருப்பவர்கள், அங்கு ஜ்ஞானம்பெற்று, காலக்ரமத்தில் ப்ரஹ்மாவின் ஸத்யலோகத்தை அடைந்து, ப்ரஹ்மாவோடுகூட முக்தி அடைகிறார்கள்; அவ்விஷ்ணு பதம் முக்தர்கள் அடையும் ஸ்தானமன்று என்று கருத்து.] என்று வியாக்கியானமிட்டார். இதிலிருந்து, இது ஸத்யலோகத்தைக் காட்டி லும் தாழ்ந்த ஸுகத்தையுடைய (அசிந்மிஶ்ரமான) தம் ஆத்மாவை

அநுபவிப்பவர்களின் ஸ்தானமேயொழிய, ஸத்யலோகத்தைக் காட்டி லும் சிறந்ததாய், ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவருதலில்லாததாக [வி-பு 1-22-52ல்] படிக்கப்படும் ப்ரக்ருதியினின்றும் நீங்கிய தம் ஆத்மாவை அநுபவிக்கும் கைவல்யஸ்தானமன்று என விளங்குகிறது. ஆக, ''யோகிநாமம்ருதம் ஸ்தாநம்'' என்றவிடத்தில், கைவல்யஸ்தானம் சொல்லப்படுகிறதா, அதைக்காட்டிலும் தாழ்ந்த அசிந்மிஶ்ர ஸ்வாத்மாநுபவஸ்தானம் சொல்லப்படுகிறதா என்பதில் கருத்து வேற்றுமையேயொழிய, கைவல்யநித்யத்வாதிவிஷயத்தில் இவ் வாசார்யர்களிடையே கருத்து வேற்றுமை இல்லை என்று தேறிற்று.

வேதார்த்த ஸங்க்ரஹத்தில்—(1) நித்யவிபூதி, (2) ப்ரக்ருதியி னின்றும் நீங்கிய ஆத்மஸ்வரூபம், (3) பகவத்ஸ்வரூபம் ஆகிய மூன்றுமே 'பரமபதம்' என்று சொல்லப்படுவதைப்பற்றி விசாரித்து வரும்போது, ''பரமம் பதம் தஸ்யாகுணம் மஹத்'' [வி-பு 1-22-41] என்று, இந்த விஷ்ணுபுராண ப்ரகரணத்தில் ப்ரக்ருதியினின்றும் நீங்கிய ஆத்மஸ்வரூபத்தைப் பரமபத ஶப்தத்தால் சொல்லியிருப் பதை எடுத்துக்காட்டி, '' ஸர்வகர்மபந்தவிநிர்முக்தாத்ம ஸ்வரூபா- வாப்திர் பகவத்ப்ராப்திகர்ப்பா '' [எல்லாக் கர்மபந்தங்களினின் றும் நீங்கிய ஆத்மஸ்வரூபத்தை அடைவது பகவத்ப்ராப்தியை உள்ளடக்கியது ] என்று ப்ரக்ருதியினின்றும் விடுபட்ட ஆத்ம ஸ்வரூபாவாப்தியைப் பெறும்போது பகவத்ப்ராப்தியும் ஏற்பட்டே தீரும் என்று பாஷ்யகாரர் அருளியிருப்பதால், கைவல்ய நிஷ்ட னுக்கும் பகவத்ப்ராப்தி உண்டென்று தோன்றுகிறதே ? எனில் : அவனுக்கும் பகவத்ப்ராப்தியிருந்தபோதிலும், பகவததநுபவ மில்லாமையாலே குறையில்லை இவ்விடத்தில் தாத்பர்யதீபிகையில், '' பகவத்ப்ராப்தி கர்ப்பத்வாத் — பகவத்ப்ராப்தி ஸஹிதத்வாதி த்யர்த்த:'' [பகவத்ப்ராப்தியை உள்ளடக்கியது என்றது—பகவத் ப்ராப்தியோடு கூடியது என்றபடி] என்றும், ''பகவத்குணாநாமபி திரோதாயகம் கர்மேதி, தந்நிவ்ருத்திபூர்வகாத்மப்ராப்தெள பகவத்குணதிரோதாயக நிவ்ருத்தேரபி பாவாத் பகவத்ப்ராப்தி: ஸித்த்யதி'' [பகவத் குணங்களையும் கர்மமே மறைக்கிறதாகை யால், ஸர்வகர்மங்களும் கழிந்து ஆத்மப்ராப்தி ஏற்படும்போது, பகவத்குணங்களை மறைக்கும் கர்மமும் நீங்குகிறதாகையால், பகவத்ப்ராப்தியும் ஸித்திக்கிறது.] என்றும் ஶ்ருதப்ரகாஶிகா சார்யர் இவனுக்கு பகவத்ப்ராப்தியை அருளிச்செய்திருக்கிறாரே யொழிய, அநுபவத்தை அருளிச்செய்யவில்லை என்பது காணத் தக்கது. ப்ராப்தி ஏற்பட்டால் அநுபவம் ஏற்படாமல் இருக்குமோ?

எனில்: அந்திமஸ்ம்ருதிவரையில் இவனுக்குப் பரமாத்மாவிடம் பே4ாக்3யதாபு3த்3தி4 ஏற்படாமல், தன் ஆத்மாவிலேயே பே4ாக்3யதா பு3த்3தி4 நிலைநிற்கையாலும், பரமபத3த்திற்குச் சென்றபிறகு பரமாத்மாவிடம் பே4ாக்3யதாபு3த்3தி4 ஏற்படத்தக்க ஸாத4நாநுஷ்ட2ாநம் செய்யமுடியாது என்பதை ''நிர்வ்யாபாரம்'' என்னும் பத3த்தால் ஸ்ரீபராஶர மஹர்ஷி காட்டியிருக்கையாலும், இவனுக்கு ப4க3வத் ப்ராப்தியிருந்தபோதிலும் ப4க3வத3நுப4வமில்லை என்றே தேறும். கர்மம் கழிகையாலே, ப4க3வானும், அவனது கு3ணங்களும், நித்ய விபூ4தியும், நித்யமுக்தர்களும் ஸாத்4யத3ஶையில் இவனுக்குப் பிரகாஶித்தபோதிலும், ஸாத4நத3ஶையில் அந்திமஸ்ம்ருதிவரையில், அவற்றில் பே4ாக்3யதா ப்ரதிபத்தி ஏற்படாமல், தன் ஆத்மாவிலேயே பே4ாக்3யதா ப்ரதிபத்தி நிலைநிற்கையாலே ஸாத்4யத3ஶையிலும் முக்தனை இவனுக்கு என்றுமே அவற்றில் பே4ாக்3யதா ப்ரதிபத்தி ஏற்பட இடமில்லை என்று கருத்து. இந்த து3ர்க்க3தியைக் கண்டே பெரியாழ்வார் ''ஏடுநிலத்திலிடுவதன் முன்னம் ...... ஒல்லை கூடுமினோ'' என்று பதற்றத்துடன், ஐஶ்வர்யார்த்தி2க்கு முன்னமே இக்கைவல்யார்த்தி2களை அழைத்தார்; என்றுமே ப4க3வ த3நுப4வமில்லாமையால், இது ஆத்மவிநாஶதுல்யம் என்னும் திருவுள்ளத்தாலே, திருமங்கையாழ்வார் ''இறப்பதற்கே எண்ணாது'' [திருநெடு-1] என்று இக்கைவல்யத்தை இறப்பாகவே அருளிச் செய்தார். இத்தகைய து3ர்க்க3தியான இதில் பரமகாருணிகனை எம்பெருமான் இவர்களைத் தள்ளலாமோ? எனில்: அந்திமஸ்ம்ருதி வரையில் பல ஜன்மங்கள் இவர்களைப் பரமபே4ாக்3யமான தனது திருமேனியையும், ஸ்வரூபத்தையும் சிந்திக்கும்படி விதி4த்திருப்பதே இவர்களைத் திருத்தவேண்டும் என்னும் பரமகருணையாலேதான். இப்படிப் பல ஜன்மங்கள் அநுஸந்தி4த்த பின்பும், இவர்களுக்கு ப4க3வானிடத்தில் பே4ாக்3யதாபு3த்3தி3 ஏற்படவில்லையாகில், அவன் என்செய்வான்? இவர்கள் விரும்பாத ஒரு ப2லனை இவர்கள் பெறும்படி நிர்ப்ப3ந்தி4த்தால் அது புருஷார்த்த2மாகாதே! அவனுக்கு வைஷம்ய நைர்க்4ருண்ய தோ3ஷங்களும் ஏற்படுமே! அதனாலே, ஆனவரையில் இவர்களுக்குத் தன்னிடம் பே4ாக்3யதா பு3த்3தி4யை விளைக்கமுயன்று, 'இனி விளையவே விளையாது' என்னும் நிலைவந்த பிறகுதான், இவர்கள் விரும்பும் கைவல்யமோக்ஷத்தைத் தருகிறுனைகயாலே அவன் கருணைக்கு எக்குறையுமில்லை. இதுபற்றின விரிவு, மேலே 23,24 ஶ்லோகங்களின் வியாக்கியானத்தில் காணலாம்.

அந்திமஸ்ம்ருதியின்போது, இவனுக்கு எம்பெருமானிடம் பே4ாக்3யதாபு3த்3தி4 ஏற்பட்டால் என்னுகும்? எனில்: அந்திம

ஸ்ம்ருதியின்போது, தன் ஆத்மாவை ஶரீரமாகக்கொண்ட பரமாத்மா விடம் இவனுக்கு பே₄தாக்₃யதாபு₃த்₃தி₄ ஏற்பட்டால், த₃ஹராதி₃ வித்₃யாநிஷ்டர்களைப்போலே, இவனும் அர்ச்சிராதி₃க₃தியாலே பரமபத₃ம்சென்று, ஸ்வாத்மஶரீரகனை பரமாத்மாவையே அநுப₄விக்கிறான். அந்திமஸ்ம்ருதியின்போது, பரமாத்மாவை ஆத்மாவாகக் கொண்ட தன் ஆத்மாவில் இவனுக்கு பே₄தாக்₃யதாபு₃த்₃தி₄ ஏற்பட்ட தாகில், இவன் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்டனைப்போலே, அர்ச்சிராதி₃ க₃தியாலே பரமபத₃ம்சென்று, பரமாத்மாவை ஆத்மாவாகக்கொண்ட தன் ஆத்மாவை அநுப₄விக்கிறான். இப்படி இரண்டுவித₄மான ப₂லத்தை அடைகிற இவ்விருவகை அதி₄காரிகளுக்குமே ப்₃ரஹ்மாநந்த₃ம் துல்ய மானது என்பது விகல்பாதி₄கரண (3-3-25) ஸித்₃த₄ம். ஜ்ஞாநயோக₃த் தாலே கைவல்யத்தைப் பெற நினைப்பவனுக்குப் பரமாத்மாவிடம் இப்படி பே₄தாக்₃யதாபு₃த்₃தி₄ ஏற்பட்டால் அவனுக்குப் பரமாத்மாநு ப₄வமும் கிடைக்கும், ஏற்படாவிட்டால் அவனுக்குக் கேவலாத்மாநு ப₄வமே கிடைக்கும் என்னும் இவ்விஷயத்தைத் திருவுள்ளம்பற்றியே,

"ப்ரத்யஞ்சம் ஸ்வம் பஞ்சவிம்ஶம் பராச:
ஸஞ்சக்ஷாணாஸ் தத்த்வராஶேர் விவிச்ய ।
யுஞ்ஜாநாஶ்ச ருதம்ப₄ராயாம் ஸ்வபு₃த்₃தௌ₄
ஸ்வம் வா த்வாம் வா ரங்க₃நாத₂ாப்நுவந்தி ॥" [ர-ஸ்த 2-75]

[ஸ்ரீரங்க₃நாத₂ரே! இருபத்தைந்தாம் தத்துவமாய், தனக்குத்தானே பிரகாஶிக்கும் தன் ஆத்மாவை, மற்ற இருபத்துநாலு தத்துவங்களி லிருந்து பிரித்து அறிகின்றவர்களாய், (ஸமாதி₄நிலையில்) உண்மை யைக்காணும் தங்கள் அறிவில் தம் ஆத்மாவை தியானிக்கிற ஜ்ஞாநயோக₃நிஷ்டர்கள் தம் ஆத்மாவையோ, அல்லது உம்மையோ அடைகிறார்கள்.] என்று ப₄ட்டர் அருளிச்செய்தார்.

"ஆத்மார்த்தீ₂சேத் த்ரயோऽப்யேதே தத் கைவல்யஸ்ய ஸாத₄கா:"
என்று ஆளவந்தார் கீ₃தார்த்த₂ஸங்க்₃ரஹத்தில் (27) கர்மஜ்ஞாந ப₄க்தி யோக₃ங்கள் மூன்றையுமே கைவல்யமோக்ஷத்திற்குத் தனித்தனியே ஸாத₄னமாக அருளியிருக்கிறார். கைவல்யார்த்த₂மாக இவற்றில் ஒன்றை அநுஷ்டிக்கும் எவனுக்கும் அந்திமஸ்ம்ருதியில் ப₄க₃வானிடம் பே₄தாக்₃யதாபு₃த்₃தி₄ ஏற்பட்டால், உடனே ப₄க₃வத் ப்ராப்தி ஸித்₃தி₄க்கு மாகையால், மற்ற இரண்டையும் அங்க₃மாகக்கொண்ட கர்மஜ்ஞாந ப₄க்தியோக₃ங்களில் ஒவ்வொன்றையும் பரமபுருஷார்த்த₂லக்ஷண மோக்ஷஸாத₄னமாக தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யானங்களில் (திருமாலை (25) "குளித்து மூன்றனலை" முதலானவிடங்களில்) பூர்வாசார்யர்கள் அருளியதும் பொருந்திவிடுகிறது என்பதும் குறிக்கொள்ளத்தக்கது.

॥ भा ॥ एवमैश्वर्यार्थिनः कैवल्यार्थिनश्च स्वप्राप्यानुगुणं भगवदुपासनप्रकार उक्तः; अथ ज्ञानिनो भगवदुपासनप्रकारं प्राप्तिप्रकारं चाह—

अनन्यचेताः सततं यो मां स्मरति नित्यशः।
तस्याहं सुलभः पार्थ नित्ययुक्तस्य योगिनः॥ १४ ॥

14. அநந்யசேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஶ:।
தஸ்யாஹம் ஸுலப₄: பார்த்த₂! நித்யயுக்தஸ்ய யோகி₃ந:॥

பார்த்த₂ — குந்தீபுத்திரனே! நித்யஶ: — உபாஸனம் தொடங்கும் காலம் முதலாக, ஸததம்—எல்லாக்காலமும், அநந்யசேதா:—வேறு எதிலும் நெஞ்சு செலுத்தாதவனாய், மாம்—என்னை, ய: ஸ்மரதி — எவனொருவன் (மிக இனியவனாக) நினைக்கிறானோ, நித்யயுக்தஸ்ய தஸ்ய யோகி₃ந: — (என்னோடு) எப்போதும் சேர்ந்திருக்கையை விரும்பும் அந்த உபாஸகனுக்கு, அஹம் — நான், ஸுலப₄: — மிக எளிதில் அடையத்தக்கவனாகிறேன்.

---

13. செல்வமுயி ரின்பத்துச் செல்லாத நெஞ்சனாய்
நல்விரகா லென்னினைந்து நாடோறும்—தொல்வகையா
லென்றுமெனைக் கூடு மியோகிக்குப் பார்த்தனே
நன்று பெறவெளிய னான்.

பார்த்தனே!—குந்தீபுத்திரனே! செல்வம் உயிரின்பத்துச் செல்லாத நெஞ்சனாய்—ஐஶ்வர்யம், கைவல்யம் ஆகியவற்றில் நெஞ்சு செலுத்தாதவனாய், நாள்தோறும்—உபாஸநகாலம் தொடங்கி எப்போதும், நல்விரகால் என்னினைந்து — மிக இனியவனாக என்னை நினைத்து, தொல்வகையால் — ப₄க்தி யோக₃மாகிற அநாதி₃மார்க்க₃த்தால், என்றும் எனைக் கூடும் இயோகிக்கு — எப்போதும் என்னோடு சேர நினைக்கும் உபாஸகனுக்கு, நான் — நான், பெற நன்று எளியன் — அடைவதற்கு மிக எளியவனாயிருக்கிறேன்.

---

ஆக, கைவல்யார்த்தி₂க்குரிய உபாஸநப்ரகாரமும், அந்திம ஸ்ம்ருதிப்ரகாரமும் இவ்விரு ஶ்லோகங்களில் விவரிக்கப்பட்டதாயிற்று. 12,13.

14. எட்டாவது ஶ்லோகம் முதல், சென்ற ஶ்லோகமீறாக ஐஶ்வர்யார்த்திக்கும், அவனைக் காட்டிலும் புண்ணியம் மிக்க கைவல்யார்த்திக்கும் தமது ப்ராப்யத்திற்குத் தக்கவாறு பகவானை உபாஸிக்கும் முறை கூறப்பட்டது. இந்த ஶ்லோகத்தில் அக்கைவல்யார்த்தியைக் காட்டிலும் புண்ணியம் மிக்கவனான ஜ்ஞானி பகவானை உபாஸிக்கும் முறையும், அடையும் முறையும் காட்டப்படுகிறது. முந்தியவனைக் காட்டிலும் பிந்தியவன் புண்ணியம் மிக்கவனாயிருக்கையாலே ஐஶ்வர்ய கைவல்ய பகவத் ப்ராப்திகாமர்களுக்குத் தேவையானவற்றை இந்த க்ரமத்திலே உபதேஶித்துள்ளான் என்று கண்டுகொள்வது. முந்தின அத்தியாயத்தின் கடைசியில் இவர்களைப் பற்றி ப்ரஸ்தாவிக்கும்போதும், இவ்வத்தியாயத்தின் தொடக்கத்தில் அர்ஜுனனுடைய கேள்விகளுக்கு பதிலுரைக்கும் போதும் இந்த க்ரமத்தைப் பின்பற்றுமல் ஐஶ்வர்யார்த்திக்கு முன் கைவல்யார்த்தியை வைத்ததற்குக் கருத்து என்ன? எனில்: முமுக்ஷுவான கைவல்யார்த்திக்கு, தனது ப்ராப்யமான கைவல்ய மோக்ஷத்தை அடைந்து விட்டால், பிறகு எம்பெருமானை அடைய வழியே இல்லாமற்போகையாலே, அவனுடைய இந்த துர்க்கதியைக் கண்டு, ஐஶ்வர்யார்த்தியை "அண்டக்குலத்துக்கு" [திருப்பல் 5] என்னும் பாசுரத்தில் அழைப்பதற்கு முன் "ஏடுநிலத்தில்" [திருப்பல்4] என்னும் பாசுரத்தில் அவனை (கைவல்யார்த்தியை) அழைத்த பெரியாழ்வாரைப்போலே, அர்ஜுனனைக் கைவல்யார்த்தியாகாதபடி தடுக்கவேண்டும் என்னும் திருவுள்ளத்தாலே, முதலில் அவனுக்குரிய ப்ரஹ்மசர்யம் முதலான கடுமையான ஸாதனங்களைக் காட்டினான் சென்ற அத்தியாயத்தின் கடைசியிலும், இவ்வத்தியாயத்தின் தொடக்கத்திலும். அர்ஜுனனுக்குக் கைவல்ய ப்ராப்தியில் ருசியில்லை என்பதை முகக்குறிப்பாலே தெரிந்துகொண்டபின், மூன்று அதிகாரிகளுக்கும் அறியவேண்டியவற்றை எட்டாவது ஶ்லோகம் முதலாக க்ரமமாகவே உபதேஶிக்கிறான் என்று கண்டுகொள்வது. பனிரண்டாவது அத்தியாயத்தின் தொடக்கத்தில் அர்ஜுனனுடைய கேள்விக்கு பதிலுரைக்கும்போது இக்கைவல்ய நிஷ்டனுக்கு அதிகமான க்லேஶத்தை வெளிப்படையாகவே கண்ணன் உரைப்பதிலிருந்தும், இவ்வத்தியாயத்தில் ஐஶ்வர்யார்த்திக்கு தூமாதிகதியையும், ஜ்ஞானிக்கு அர்ச்சிராதிகதியையும் சொன்னதுபோலே, ஜிஜ்ஞாஸுவாகிற இக்கைவல்யநிஷ்டனுக்குரிய கதியைச் சொல்லாமலிருப்பதிலிருந்தும் அர்ஜுனன் இக்கைவல்யத்தை விரும்பிவிடக்கூடாது என்னும் கண்ணனுடைய திருவுள்ளம் விளங்குவது காணத்தக்கது.

"ஏவமைஶ்வர்யார்த்திந:" என்று தொடங்கும் இந்த ஶ்லோகத்தின் அவதாரிகாபாஷ்யம், சிலருக்கு எழக்கூடிய மற்றொரு

ஶங்கையைப் போக்குவதாகவும் அமைந்துள்ளது என்பது தாத்பர்ய சந்த்₃ரிகையில் விரிவாகக் காட்டப்பட்டுள்ளது. அந்த ஶங்கையாவது:— "தே ப்₃ரஹ்ம தத்₃ விது₃:" [7-29] "கிம் தத் ப்₃ரஹ்ம" [8-1] "அக்ஷரம் ப்₃ரஹ்ம பரமம்" [8-3] என்று இங்கு படிக்கப்படும் ப்₃ரஹ்மஶப்₃த₃ம் பரம்பொருளையே குறிப்பதாகக் கொள்வதில் என்ன தடை? அந்த ப்₃ரஹ்மம் ஸர்வாத்மாவாயிருப்பதால், ப்₃ரஹ்ம் ஶப்₃த₃த்தோடு கூடப்படிக்கப்படும் "அத்₄யாத்ம" ஶப்₃த₃ம் அந்த ப்₃ரஹ்மத்திடமுள்ள அனைத்தையும் குறிக்கக்கூடும். அடுத்து "பூ₄தபா₄வோத்₃ப₄வகர: விஸர்க்க₃: கர்மஸம்ஜ்ஞித:" [8-3] எனப் படும் விஸர்க்க₃மாகிற கர்மமும் பூ₄தங்கள் அனைத்தின் ஸ்ருஷ்டியே என்று கொண்டுவிடலாம். அல்லது, "விஸர்க்க₃: — விஸர்ஜநம்; தே₃வதோத்₃தே₃ஶேந சருபுரோடா₃ஶாதே₃: த்₃ரவ்யஸ்ய பரித்யாக₃:; ஸ ஏஷ விஸர்க்க₃லக்ஷணோ யஜ்ஞ: கர்மஸம்ஜ்ஞித:; ஏதஸ்மாத் ஹி பீ₃ஜபூ₄தாத் வ்ருஷ்ட்யாதி₃க்ரமேண ஸ்தா₂வரஜங்க₃மாநி பூ₄தாநி உத்₃ப₄வந்தி" என்று ஶங்கரருடைய கீ₃தாபா₄ஷ்யத்தில் வியாக்கியானம் செய்த ரீதியில், தே₃வதையைக்குறித்து யஜ்ஞத்தில் ஹவிஸ்ஸை யிடுவதே மழை முதலானவற்றை விளைத்து பூ₄தங்கள் உண்டாகக் காரணமாவதால் அதுவே இங்கு விஸர்க்க₃ரூபமான கர்மம் எனப் படுவதாகக் கொள்ளலாம். அதி₄பூ₄தஶப்₃த₃ பா₄ஷ்யத்தில், "அதி₄ பூ₄தம் ப்ராணிஜாதம்—அதி₄ப₄வதீதி" என்று ஶங்கரர் காட்டிய வ்யுத் பத்தியின்படி அது ப்ராணிஸமூஹத்தைக் குறிக்கலாம். நாலாவது ஶ்லோகத்தில் அதி₄தை₃வதம் எனப்படும் புருஷனும் பரம்பொருளின் ஒரு நிலையென்றோ, ஸமஷ்டி புருஷனென்றோ கொள்ளலாம். அதி₄ யஜ்ஞஶப்₃த₃த்திற்கும் "அதி₄யஜ்ஞ: — ஸர்வயஜ்ஞாபி₄மானீ விஷ்ண் வாக்₂யா தே₃வதா; 'யஜ்ஞோ வை விஷ்ணு:' இதி ஶ்ருதே:" என்று ஶங்கரர் உரையிட்டபடியே ஸர்வயஜ்ஞாபி₄மானியாக வேத₃ங் களில் ஓதப்படும் விஷ்ணுவைப் பொருளாகக் கொள்ளலாம். "அந்த காலே" என்று தொடங்கும் ஐந்தாவது ஶ்லோகம் முதலாக மூன்று ஶ்லோகங்களும் முமுக்ஷுவுக்கு அந்திமஸ்ம்ருதியை விதி₄ப்ப தாகவே கொள்ளவேண்டும். அர்ஜுனனின் கேள்வியும், கண்ணனின் பதிலில் நாலு முடியவுள்ள ஶ்லோகங்களும் ஏழாம் அத்தியாயத்தில் "ஆர்த்தோ ஜிஜ்ஞாஸு:" [கீ₃தை 7-16] என்று படிக்கப்பட்ட மூவகை அதி₄காரிகள் விஷயமானாலும், நாலுக்கு மேல் உள்ள ஶ்லோகங்கள் ஏழாம் அத்தியாயத்தில் அவ்வதி₄காரிகளில் ப்ரதா₄ன னாகவும் மிகவும் து₃ர்லப₄னாகவும் கூறப்பட்ட ஞானியைப் பற்றிய வையே ஆகவேண்டும். இல்லாவிடில் "மாமேவ ஸ்மரந்" [5] "மாமேவைஷ்யஸி" [5] என்று தன்னைப்பற்றிய ஸ்மரணத்தையும், தன்னையே ப்ராப்யனாகவும் சொல்லியிருப்பது ஒட்டாது. ஆகையால், "ப்ரயாண காலே ச கத₂ம்" [2] என்னும் கேள்விக்கு பதிலான "அந்த காலே ச மாம்" [5] என்னும் ஶ்லோகம் மூவகை அதி₄காரி

களுக்கும் அந்திமஸ்ம்ருதியை விதி₄க்கிறதென்றும், இப்பதினைலாவது ஶ்லோகம் அவ்வந்திமஸ்ம்ருதியை ஜ்ஞாநி விஷயத்தில் விவரிக்கிற தென்றும் கூறுவது பொருந்தாது. ஐந்தாவது ஶ்லோகம் மூவகை அதி₄காரிகளுக்கும் அந்திமஸ்ம்ருதியை விதி₄க்கிறது என்பதே அந்த ஶ்லோகத்திலிருந்து தேறவில்லை. மேலும், தாழ்ந்த ப₂லனை ஐஶ் வர்யத்தைப் பெறுகிறவனுக்குப் பரமபுருஷனைப்பற்றிய அந்திம ஸ்ம்ருதி தேவைப்படுகிறது என்பதற்கும் ப்ரமாணமில்லை. ஆகையால், ஐந்தாவது ஶ்லோகத்திலும், அதற்கு மேற்பட்ட ஶ்லோகங் களிலும் ஜ்ஞானியாகிற ஒரே அதி₄காரியைப் பற்றியே பேசப்பட்டி ருக்கிறதென்றும், அவனுக்கு அறியத்தக்க விஷயமொன்றே மறுபடி யும் மறுபடியும் ஸங்க்₂ரஹவிஸ்தரரூபமாக ஒவ்வொரு ஶ்லோகத்தி லும் எடுத்து விளக்கப்படுகிறது என்றும் கொள்ளவேண்டும். ஜ்ஞாநியின் ப்ராத₄ான்யத்தை விளக்குவதற்காகத் திருப்பித் திருப்பி அவனைப் பற்றியே பல ஶ்லோகங்கள் பேசுகின்றன என்று கொண்டுவிடலாமாகையால், புநருக்தி தோ₃ஷமும் வராது. ''ஸம்ஸித்₃தி₄ம் பரமாம் க₃தா:'' [15] ''ஸ யாதி பரமாம் க₃திம்'' [13] ''தமாஹு: பரமாம் க₃திம்'' [21] என்னும் தொடர்கள் ஒரே அதி₄காரிக்கு ப்ராப்யத்தைச் சொல்லுவதாக விளங்குகையில், பரமஸம்ஸித்₃தி₄ என்பது ஜ்ஞாநியின் ப்ராப்யத்தையும், பரமக₃தி யென்பது கைவல்யார்த்தி₂யின் ப்ராப்யத்தையும் சொல்லுவதாகப் பிரிப்பது பொருந்தாது. இரு பத₃ங்களும் ஒப்பற்ற ப்ராப்யத்தைத் தானே காட்டுகின்றன. ''தம் பரமாம் க₃திம்'' என்று ஒன்றைத் தன்னைக்காட்டிலும் வேறுபடுத்திக் கூறுகையாலே, இரண்டும் வெவ் வேறு ப்ராப்யங்கள் என்று கொள்ளலாமே எனில், ''புருஷ: ஸ: பர:'' [22] என்று பரமபுருஷனுகிற தன்னைப்பற்றி ''அந்தப் பரமபுருஷன்'' என்று படர்க்கையில் பேசுவதுபோலே, இங்கும் 'தம் பரமாம் க₃திம் ஆஹு:' என்று படர்க்கையில் பேசுவதாகக் கொள்ளலாமாகையாலே இதுவும் பொருந்தாது. 'பர(ம)ம் புருஷம்' என்னும் ஒரே ஶப்₃த₃த் திற்கு, ''பரமம் புருஷம் தி₃வ்யம்'' [8] ''ஸ தம் பரம் புருஷமுபைதி தி₃வ்யம்'' [10] என்றவிடத்தில் ஐஶ்வர்யவிஶிஷ்டனை ப்ரமாத்மா வையும், ''புருஷ: ஸ பர: பார்த்த₂'' [22] என்றவிடத்தில் உப₄ய விபூ₄தியோடும், ஸமஸ்தகல்யாணகு₃ணங்களோடும் கூடிய பரமாத் மாவையும் பொருளாகக்கொள்வதும் பொருந்தாது, மற்ற கீ₃தா பா₄ஷ்யகாரர்கள் அனைவருமே நாலுக்கு மேற்பட்ட ஶ்லோகங்கள் ஒரே அதி₄காரியைப்பற்றிப் பேசுவதாகவும், ப்₃ரஹ்மஶப்₃த₃ம் பரம் பொருளையே குறிப்பதாகவுமே உரையிட்டிருக்கிறார்கள். ஆகையால், இங்கு ப்₃ரஹ்மஶப்₃த₃ம் ப்ரக்ருதியினின்றும் நீங்கிய ஜீவஸ்வரூபத் தைக் குறிப்பதாகவும், அத்தியாயத்திலுள்ள ஶ்லோகங்கள் எல்லாமே மூவகை அதி₄காரிகளையும் மாற்றி மாற்றிக் குறிப்பதாகவும் பொருள் கொள்வது எப்படிப் பொருந்தும்? என்பது அந்த ஶங்கை.

இனி இதற்குப் பரிஹாரம் பின்வருமாறு:— "அதி₁யஜ்ஞோऽஹமேவ" [4] என்றவிடத்திற்போலே "அஹமேவ ப்₃ரஹ்ம" என்று சொல்லாமையாலே, "ஸ்வபா₄வோऽத்₄யாத்மம்" முதலானவிடங்களிற்போலே ப்₃ரஹ்மஶப்₃த₃மும் பரம்பொருளைக்காட்டிலும் வேறொன்றைக் குறிப்பதாகவே கொள்ளவேண்டும். "ப்ரஹ்ம — பரமம் அக்ஷரம்" [3] என்று ப்₃ரஹ்மஶப்₃த₃த்தை அக்ஷரமென்று விவரிப்பதனாலும் இங்கு பரம்பொருள் குறிக்கப்படவில்லையென விளங்கும். பரம்பொருளைக் குறிப்பதாகப் பிரஸித்₃தி₄பெற்ற ப்₃ரஹ்ம ஶப்₃த₃த்தை அத்தகைய ப்ரஸித்₃தி₄யற்ற அக்ஷரஶப்₃த₃த்தால் விவரிப்பது ஒட்டாதன்றோ. "ஏவம் ஸததயுக்தா யே ப₄க்தாஸ்த்வாம் பர்யுபாஸதே। யே சாப்யக்ஷரமவ்யக்தம்॥" [கீ₃தை 12-1] முதலானவிடங்களில், பரமாத்மாவைக்காட்டிலும் வேறுபட்ட உபாஸ்யப்பொருளையே அக்ஷரஶப்₃த₃த்தால் கண்ணன் குறிப்பதைக் காண்கிறோம் "த்₃வே ரூபே ப்₃ரஹ்மணஸ் தஸ்ய மூர்த்தம் சாமூர்த்தமேவ ச। க்ஷராக்ஷரஸ்வரூபே தே ஸர்வபூ₄தேஷ்வவஸ்தி₂தே॥ அக்ஷரம் தத் பரம் ப்₃ரஹ்ம க்ஷரம் ஸர்வமித₃ம் ஜக₃த்॥" [வி. பு. 1-12-55, 56] ['க்ஷரன்' எனப்படும் ஶரீரத்தோடு கூடிய ப₃த்₃த₄ஜீவஸ்வரூபமும், 'அக்ஷரன்' எனப்படும் ஶரீரமற்ற முக்தஸ்வரூபமுமாகிற இரண்டு பரமாத்ம ஶரீரங்களும் எல்லாப் பொருள்களிலும் உள்ளன. 'அக்ஷரம்' எனும் முக்தஸ்வரூபம் ப₃த்₃த₄ஸ்வரூபத்தைக் காட்டிலும் சிறந்ததாகையால் 'பரம் ப்₃ரஹ்ம' எனப்படுகிறது. 'க்ஷரம்' எனப்படும் ப₃த்₃த₄ஸ்வரூபம் இவ்வுலகிலுள்ள பலவகையான ஜீவராசிகளாய் உள்ளது.] முதலானவிடங்களில் புராணங்களில் அக்ஷரஶப்₃த₃த்தையும் பரப்₃ரஹ்மஶப்₃த₃த்தையும் முக்தஸ்வரூபத்தைக் குறித்துப் பிரயோகி₃த்திருக்கும் விஷயம் ஸ்ரீபா₄ஷ்யம், வேதா₃ர்த்த₂ ஸங்க்₃ரஹம் முதலானவற்றில் நிலைநாட்டப்பட்டுள்ளது. ஆகையால், இங்கு 'பரமம் அக்ஷரம்' என்று விவரிக்கப்படும் ப்₃ரஹ்மஶப்₃த₃ம்— ப்ரக்ருதியைக்காட்டிலும் மேலானதாகையாலே 'பரமம்' என்று விஶேஷிக்கத் தக்கதாய், பரமாத்மாவைக்காட்டிலும் வேறுபட்டதான முக்தஸ்வரூபத்தை ஔபசாரிகமாகக் குறிப்பதாகவே கொள்ள வேண்டும். இந்த முக்தஸ்வரூபமே "அவ்யக்தோऽக்ஷர:" [21] என்னுமிடத்திலும் அக்ஷரம் எனப்படுகிறது. "தமாஹு: பரமாம் க₃திம்" [21] என்கையாலே இந்த ஶ்லோகம் பரமாத்மவிஷயம் என்று நினைக்கக்கூடாது. "யே சாப்யக்ஷரமவ்யக்தம்" [12-1] "யே த்வக்ஷரமநிர்தே₃ஶ்யம்" [12-3] "க்ஷரஶ்சாக்ஷர ஏவ ச" [15-16] முதலானவிடங்களிற்போலே இங்கும் அக்ஷரஶப்₃த₃ம் ப₄க₃வானைக் காட்டிலும் வேறுபட்டதைக் குறிக்கிறதென்று முற்கூறிய காரணங்களால் விளங்குகிறதன்றோ. "பரமாம் க₃திம்" [8-13, 21] என்று சொல்லப்பட்ட ப்ராப்யத்தைக் காட்டிலும் சிறந்ததானதொரு ப்ராப்யமே "ஸம்ஸித்₃தி₄ம் பரமாம் க₃தா:" [15] என்றவிடத்தில் ஸம்

ஸித்₃தி₄ ஶப்₃த₃த்தால் சொல்லப்படுகிறது என்பதை 'ஸம்' என்னும் உபஸர்க்க₃ம் காட்டுகிறது. ஆக, இவ்வண்ணமாக எட்டாமத்தியாயத்தில் மேல் ஶ்லோகங்களும் வெவ்வேறு அதி₄காரிகளைக் காட்டுவதென்று தெளிவாக விளங்குகையாலே, 'ஸ்வப₄ாவம்' முதலான ஶப்₃த₃ங்கள் அந்தந்த அதி₄காரிகளுக்கு அறியவேண்டியவைகளையும், கைக்கொள்ளவேண்டியவைகளையும் குறிப்பதாகக் கொள்வதே உசிதம். இவ்வண்ணமாக இந்த எட்டாம் அத்தியாய ஶ்லோகங்களையும், முன் அத்தியாயத்தில் மூவகை அதி₄காரிகளைக் குறிப்பிடும் ஶ்லோகங்களையுங்கொண்டு ஆராயும்போது, இவ்வத்தியாயத்திலுள்ள கேள்விபதில்கள் அந்த மூவகை அதி₄காரிகளைப் பற்றியதே எனத் தேறும் ஆகையால், மேல் உள்ள ஶ்லோகங்களையும், இக்கேள்வி பதில்களை அநுஸரித்து அந்த மூவகை அதி₄காரிகளுக்குரிய உபாஸன ப்ரகாரம், அந்திமஸ்ம்ருதி ப்ரகாரம் முதலானவற்றைச் சொல்லுவதாகக் கொள்வதே தகும். "அநுஸ்மரேத்₃ய:" [9] என்றும், "ய: ப்ரயாதி" [13] என்றும், "யோ மாம் ஸ்மரதி" [14] என்றும் ப்ரகரணத்தில் தொடங்கப்பெற்ற மூவகை அதி₄காரிகளும் மூன்று யச்ச₂ப்₃த₃ங்களாலே அநுவதி₃க்கப்படுகின்றனர் என விளங்குகிறது. இவர்களில் "ய: ப்ரயாதி" [13] எனப்பட்டவன், "மூர்த்₄ந்யாத₄ாய" என்று முமுக்ஷுக்களுக்குரிய ப்₃ரஹ்மரந்த்₄ரம் வழியாக வெளிச்செல்வதாகவும், பரமக₃தியை அடைவதாகவும் குறிக்கையாலும், "யோ மாம் ஸ்மரதி" [14] எனப்பட்டவன் அதைவிடச் சிறந்த பரமமான ஸம்ஸித்₃தி₄யை அடைவதாகக் குறிக்கையாலும் இவ்விருவரும் (முறையே) கைவல்யத்தையும், ப₄க₃வத்ப்ராப்தியையும் அடைபவர்களே என விளங்குகிறது. ஆகையால், இவர்களுக்கு முன் "அநுஸ்மரேத்₃ய:" [9] என்று சொல்லப்பட்டவன் மூவகை அதி₄காரிகளில் எஞ்சிநிற்கும் ஐஶ்வர்யார்த்தி₂யேயாகவேண்டும். ஐஶ்வர்யார்த்தி₂க்குப் பரமபுருஷன் விஷயத்தில் அந்திமஸ்ம்ருதி அவஶ்யம் என்பதற்கு ப்ரமாணமில்லை என்றதும் பொருந்தாது. ப₄ாக₃வத புராணத்தில் ஐஶ்வர்யார்த்தி₂யான த்₄ருவன் விஷயத்தில் அந்திமஸ்ம்ருதி கூறப்பட்டுள்ளது. மானைப் பற்றிய அந்திம ஸ்ம்ருதியாலே ஜட₃ப₄ரதன் மானாக ஆனான் என்னும் சரித்ரத்தைக்கொண்டு பார்க்கும்போது, ஐஶ்வர்யவிஶிஷ்டனாக எம்பெருமானை அந்திமகாலத்தில் சிந்திப்பவனே ஐஶ்வர்யத்தை அடைவான் என்பது தன்னடையே தேறும். இங்கு 'ப்₃ரஹ்ம' 'புருஷ:' 'பரா க₃தி:' முதலான ஶப்₃த₃ங்களிருப்பதால், எல்லா ஶ்லோகங்களிலும் பரமாத்மாவை உபாஸிப்பதும், அவனை அடைவதுமே பொருளாகத் தோன்றியபோதிலும், முற்கூறிய காரணங்களாலே, அதைக்கொண்டு அதி₄காரி ஒருவனே என்று கூறமுடியாது. "அநுஸ்மரேத்₃ய:" என்னுமிடத்தில் புருவமத்தியில் ப்ராணனை நிலைநிறுத்தி ப₄க₃வானை தியானிக்கவேண்டும் என்றும், "ய: ப்ரயாதி" என்னுமிடத்தில்

|| भा || नित्यशः—मां उद्योगप्रभृति सततं—सर्वकालम् अनन्यचेता यः स्मरति—अत्यर्थमत्प्रियत्वेन मत्स्मृत्या विना आत्मधारणमलभमानो निरतिशयप्रियां स्मृतिं यः करोति; तस्य नित्ययुक्तस्य—

---

ஹ்ருத$_3$யகமலத்தில் பரமாத்மாவை த்$_4$யானம் செய்யவேண்டுமென்றும், தலையில் (ப்$_3$ரஹ்மரந்த்$_4$ரத்தில்) ப்ராணனை நிலைநிறுத்த வேண்டும் என்றும் கூறுகையாலும், இரண்டிடத்திலும் அந்திமகாலம் என்று விளங்குவதால் காலபே$_4$த$_3$மில்லாமையாலே, அதைக்கொண்டு ஒரே அதி$_4$காரியாக்க முடியாதாகையாலே, அதி$_4$காரிகள் இருவர் என்று கொண்டே தீரவேண்டும். ''ஶதம் சைகா ச'' [சா$_2$ந் 8-6-6] என்கிறபடியே தலைவழியாக ப்ராணன் செல்வது மோக்ஷத்தை அடைபவனுக்கேயாகையாலும், மற்ற வழிகளில் ப்ராணன் செல்வது மற்ற ப$_2$லன்களுக்காகையாலும், இவ்விரு அதி$_4$காரிகளும் வெவ்வேறு என விளங்குகிறது. ஆகையால், ஏழாம் அத்தியாயத்தில் ''சதுர்வித$_4$ா ப$_4$ஜந்தே'' [7-16] என்னும் ஶ்லோகத்தில் தொடங்கப்பட்ட மூவகை அதி$_4$காரிகளே—அவ்வத்தியாயத்தின் கடைசி ஶ்லோகங்களில் யச்ச$_2$ப்$_3$த$_3$த்தின் ஆவ்ருத்தியாலே எடுக்கப்படுகிறார்கள் என்றும், இவ்வத்தியாயத்தில் முற்கூறிய மூன்று இடங்களில் மூன்று யச்ச$_2$ப்$_3$த$_3$ங்களாலே அவர்களே அநுவதி$_3$க்கப்படுகிறார்கள் என்றும் கொள்வதே பொருந்தும். ஆகையால், இங்கு ஸ்ரீப$_4$ாஷ்யகாரர் காட்டும் பொருளே பொருத்தமுடையது. இனி, வ்யாக்$_2$யானத்தைத் தொடர்வோம்.

(நித்யஶ: ஸததம் அநந்யசேதா:) உபாஸநம் தொடங்கிய காலத்திலிருந்து, அந்திமகாலம் வரையில் எப்போதும் வேறொன்றில் நெஞ்சு செலுத்தாதவனாய். உபாஸனத்தொடக்கம் முதல் அந்திம ஸ்ம்ருதி வரையில் உள்ள காலத்தை 'நித்யஶ:' என்னும் பத$_3$மும், இக்காலத்தில் இடைவிடாமல் அன்புசெலுத்தவேண்டும் என்பதை 'ஸததம்' என்னும் பத$_3$மும் காட்டுகையாலே புநருக்தியில்லை. இதனால், இடையே ஐஶ்வர்யத்திலோ, கைவல்யத்திலோ நெஞ்சு செலுத்தி விட்டால் 'ஜ்ஞாநி' லக்ஷணம் நீங்கப்பெற்று ஐஶ்வர்யார்த்தி$_2$யாகவோ, கைவல்யார்த்தி$_2$யாகவோ ஆகிவிடுவான் என்று காட்டுகிறான். இதனால் உபாஸகஜ்ஞாநிக்கு அந்திமஸ்ம்ருதி வேண்டும் என்றும் உணர்த்தப்படுகிறது. மஹாத்மாவான ஜ்ஞானிக்கும் உபாயமான எம்பெருமானுடைய நிர்ஹேதுக க்ருபையாலே அந்திமஸ்ம்ருதி ஏற்படுமாகையாலே குறையில்லை. ஐஶ்வர்யார்த்தி$_2$க்கும், கைவல்யார்த்தி$_2$க்கும்போலே அந்திமகாலத்தில் ப்ராணனை நிலைநிறுத்துவது முதலான முயற்சிகளைச் சொன்னால் அது மஹாத்மாவான ஜ்ஞானிக்குப் பொருந்தாதாகையாலே, அதைச்சொல்லாமல், பொதுவாக ''யோ மாம் ஸ்மரதி நித்யஶ:'' என்கிறான். (அநந்யசேதா: ய: மாம் ஸ்மரதி) ''அஹம் அத்யர்த்த$_2$ம் ப்ரிய:'' [7-17] [நான் ஜ்ஞானிக்கு

नित्ययोगं काङ्क्षमाणस्य योगिनोऽहं सुलभः—अहमेव प्राप्यः; न मद्भाव ऐश्वर्यादिकः; सुप्रापश्च। तद्वियोगमसहमानोऽहमेव तं वृणे। मत्प्राप्त्यनुगुणोपासनविपाकं तद्विरोधिनिरसनमत्यर्थमत्प्रियत्वादिकं च

---

மிகவும் இனியவன்] என்கிறபடியே என்னிடத்தில் எல்லையில்லாத ப்ரீதிவைத்தவனாகையாலே, என்னிடம் அன்பு செலுத்தினாலொழிய த₄ரிக்கமாட்டாதவனாய் ஒப்பற்ற ப₄க்தியை என்னிடம் எவன் செய்கிறானோ. உபாஸகஜ்ஞானியும் அன்பு அதி₄கமாகும்போது தனது ப₄க்திக்குப் ப₂லமாக மோக்ஷத்தையும் கருதாமல், அன்பு செலுத்தினாலொழிய த₄ரிக்கமாட்டாத ஸ்வயம்ப்ரயோஜந ப₄க்தியுடைய மஹாத்மாவாக ஆகிவிடுவான் என்பதையும் 'அநந்யசேதா:' என்னும் பத₃த்தாலே உணர்த்துகிறான். ( நித்ய யுக்தஸ்ய யோகி₃ந: தஸ்ய ) இப்படி எப்போதும் என்னிடம் சேர்ந்திருக்கையை விரும்பும் யோகி₃யாகிற அவனுக்கு. நித்யயுக்தஶப்₃த₃த்தில் உள்ள 'க்த'ப்ரத்யயம் 'ஆஶம்ஸை' எனப்படும் விருப்பத்தைக்காட்டுகிறது. (தஸ்ய அஹம் ஸுலப₄:) நானே அவனுக்கு ப்ராப்யனாகிறேன்; ஐஶ்வர்யத்தோடு கூடிய என் நிலையாகிற ஐஶ்வர்யமோ, அஸ்தூ₂லத்வம் முதலான தன்மைகளோடு கூடிய என் நிலையாகிற கைவல்யமோ அவனுக்கு ப்ராப்யமாவதில்லை. (ஸுலப₄:) ஐஶ்வர்யகைவல்யங்களை விரும்புகிறவர்களுக்கு அவற்றைப் பெறுவதில் உள்ள அருமை, என்னைப் பெறுவதில் இவனுக்கு இல்லை. அவை ஸ்வரூபத்திற்குத் தகாத பயன்களாகையாலே, அவற்றை விரும்பும் இவனுடைய ப்ரதிபத்தியை உயர்த்துவதற்காக, கடுமையான ப்₃ரஹ்மசர்யம் முதலானவற்றை அவற்றுக்கு ஸாத₄னமாக விதி₄த்து நீண்டநாள் அலைக்கழித்து, அப்போதும் இவனுடைய ப்ரதிபத்தி மாறாவிடிலே அவற்றை அளிக்கிறேன். என்னைப் பெறும்போது அவ்வருமை இல்லாததோடன்றியில் மிக எளியவனாகவும் ஆகிறேன். "ஈஷத்₃து₃ஸ்ஸுஷு க்ருச்₂ராக்ருச்₂ரார்த்தே₂ஷு க₂ல்" [அஷ்டாத்₄யாயீ 3-3-126] என்கிறபடியே ஸுலப₄பத₃த்தில் 'ஸு' என்பது அருமையின்மையைக் காட்டுகிறதன்றோ. அவர்களுக்குள்ள அருமை இவனுக்கு ஏன் இல்லை? எனில்: அவர்கள் என்னையொழிந்த ப₂லன்களை விரும்புகிறவர்களாகையாலே, அதைப் பெறுவதற்குரிய ஸாத₄னத்தைப் பரிபூர்ணமாகச் செய்தாலொழிய அவற்றை நான் அவர்களுக்கு அளிப்பதில்லை. இவன் என்னையே விரும்புகிறவனாகையாலும், உண்மையில் உடைமையான இவனைப் பெறுவது உடையவனான எனக்கே பேறாகையாலும், அவனைப் பிரிந்திருப்பது பொறுக்கமாட்டாமல் பரமகாருணிகனான நானே அவனை வரிக்கிறேன். அவன் உபாஸகஜ்ஞானியாயிருந்தால், அவனுடைய உபாஸனத்தைத் தைலதா₄ரையைப்போல் இடைவிடாத நினைவாயிருப்பதாய், நேரே காண்பதை ஒத்திருப்ப

अहमेव ददामीत्यर्थः। * यमेवैष वृणुते तेन लभ्यः (क. २. २३; मु. ३. २. ३) इति हि श्रूयते। वक्ष्यते च—* तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम्। ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते॥ तेषामेवानुकम्पार्थमहमज्ञानजं तमः। नाशयाम्यात्मभावस्थो ज्ஞानदीपेन भास्वता॥ (१०. १०, ११) इति॥ ॥१४॥

---

தான பக்தியாக முற்றும்படி நானே செய்கிறேன். அவனுக்கு விரோதியாயிருக்கும் பாபங்கள், ரஜஸ்தமஸ்ஸுக்கள், ப்ராக்ருத விஷயங்களில் விருப்பு வெறுப்புகள், அந்யதாஜ்ஞாந விபரீத ஜ்ஞாநங்கள் முதலானவற்றை நானே போக்குகிறேன். பக்தியின் முதிர்ச்சியாலும், ஏழாமத்தியாயத்தில் சொல்லப்பட்ட என்னைப்பற்றிய உண்மையறிவாலும் அவன் மோக்ஷத்திற்கும் தனது பக்தியை ஸாதனமாக்காதவனாய், என்னையே பரமப்ராப்யமாகவும், மூலகரண ஸாதனமாகவும் கொண்ட மஹாத்மாவான ஜ்ஞானியாக ஆகிவிட்டானாகில், அவனுக்கு அவன் கையில் ஒரு ஸாதனத்தை எதிர் பாராமல் அந்த ஜன்மத்திலேயே நிர்ஹேதுகமாக மோக்ஷமளித்து, ஒப்பற்ற புருஷார்த்தமான என் விஷயமான பரார்த்தாநுபவ கைங்கர்யங்களைப் பெறும்படி செய்கிறேன்—என்னும் இவ்வளவையும் ஸாலபம்ப்தத்தாலே காட்டுகிறான். "யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:" [கட 2-23; முண்டக 3-2-3] [எவனை இப்பரமபுருஷன் வரிக்கிறானோ, அவனாலேயே இவன் அடையத்தக்கவன்.] என்று உபனிஷத்திலும் இவ்வர்த்தம் ஓதப்பட்டதகையாலே இதை அதி வாதமாக (உயர்வுநவிற்சியாக) நினைக்கவேண்டாம் என்று கருத்து. இப்படி ஶ்ருதியிலிருந்து தேறும் இவ்வரும்பொருளை "தேஷாம் ஸதத யுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம்। ததாமி புத்தியோகம் தம் யேந மாம் உபயாந்தி தே॥ தேஷாமேவாநுகம்பார்த்தமஹ மஜ்ஞாநஜம் தம:। நாஶயாம்யாத்மபாவஸ்த: ஜ்ஞாநதீபேந பாஸ்வதா॥" [கீதை 10-10,11] [எப்போதும் என்னோடு சேர்ந்திருக்க வேணுமென விரும்புகிறவர்களாய் என்னிடம் பக்திசெலுத்துகிறவர்களுக்கு, என்னை அடைவிக்கும் அந்த பக்தியை நானே மிக விருப்பத்துடன் முதிர்ச்சியடையச் செய்கிறேன். அவர்களுக்கு அருள் புரிவதற்காகவே, அவர்கள் நினைவில் இருந்துகொண்டு, என்விஷயமான ஜ்ஞானமெனும் ஒளிவிளக்கால், பாபத்தால் ஏற்பட்ட (ப்ராக்ருத) விஷயங்களில் ஈடுபாடாகிற இருளைப்போக்குகிறேன்.] என்று தானே மேலே சொல்லப்போகிறானன்றோ. ஆகையாலே, இவ்வர்த்தத்தில் ஐயத்திற்கு இடமேயில்லை. (பார்த்த) 'என் அத்தைபிள்ளையாகையாலே இவ்வரும்பொருளை உனக்கு உரைத்தேன். நீ இத்தகைய ஜ்ஞாநியாகவேணும்' என்று கருத்து. 14.

॥ भा ॥ अतःपरं अध्यायशेषेण ज्ञानिनः कैवल्यार्थिनश्चापुनरावृत्तिमैश्वर्यार्थिनः पुनरावृत्तिं चाह—

मामुपेत्य पुनर्जन्म दुःखालयमशाश्वतम्।
नाप्नुवन्ति महात्मानः संसिद्धिं परमां गताः ॥ १५ ॥

15. மாமுபேத்ய புநர்ஜந்ம து₃:க்க₂ாலயமஶாஶ்வதம் ।
நாப்நுவந்தி மஹாத்மாந: ஸம்ஸித்₃தி₄ம் பரமாம் க₃தா:॥

**பரமாம் ஸம்ஸித்₃தி₄ம் க₃தா:** — மேலான ஸம்ஸித்₃தி₄ ரூபமான என்னை அடைந்தவர்களான, **மஹாத்மாந:** — மஹாத்மாக்களான ஜ்ஞாநிகள், **மாம்**—என்னை, **உபேத்ய**—அடைந்தபின், **து₃:க்க₂ாலயம்**—எல்லாத் துன்பங்களுக்கும் இருப்பிடமாயிருப்பதாய், **அஶாஶ்வதம்**—நிலைநில்லாததான, **ஜந்ம**—தே₃ஹத்தை, **புந:**—மறுபடியும், **ந ஆப்நுவந்தி**—அடைகிறதில்லை.

---

14. என்னை யடைந்ததற்பி னெஞ்சாத் துயர்விளைக்கு
மின்னை நிகர்பிறப்பு மேவலுறார்—அன்ன
பெருமனத்த ராய்ப்பிறங்கும் பேரின்ப மன்னுந்
திருமனத்த ராஞர் சிறந்து.

**அன்ன பெருமனத்தராய்**—முற்கூறியபடி பெரியநெஞ்சை யுடைய மஹாத்மாக்களாய், **சிறந்து பிறங்கும் பேரின்பம் மன்னும் திருமனத்தராஞர்** — மிகச்சிறந்து விளங்கும் பரமாத்மாநுப₄வத்தில் ஊன்றிய நன்னெஞ்சை உடையவர்கள், **என்னை அடைந்ததன்பின்**—என்னைப் (பரமபத₃த்தில்) அடைந்த பின், **எஞ்சா துயர் விளைக்கும்**—முடிவில்லாத துன்பத்தை உண்டாக்குவதாய், **மின்னை நிகர்**—மின்னலைப்போல் நிலை நில்லாததான, **பிறவி** — தே₃ஹத்தை, **மேவல் உறார்** — (மறுபடியும்) அடையமாட்டார்கள்.

---

**15.** ***இதுவரையில்—மூவகை அதி₄காரிகளுக்கும் அறியவேண்டியவையும், அநுஷ்டி₂க்க வேண்டியவையுமான சில விஷயங்கள்***

॥भा॥ मां प्राप्य पुनर्निखिलदुःखालयमशाश्वतम् — अस्थिरं जन्म न प्राप्नुवन्ति। यत एते महात्मानः— महामनसः, यथा-

சொல்லப்பட்டன இதற்குமேல்—அதி₄காரஸித்₃தி₄க்காகப் ப₂லனைப் பற்றி அறியவேண்டியதொன்றைக் கூறுகிறான். அதாவது :— பரம புருஷனையே ப்ராப்யமாகக்கொண்ட ஜ்ஞாநிக்கும், ப்ரக்ருதியினின்றும் நீங்கிய தன் கேவலாத்மாவை அநுப₄விப்பதை ப்ராப்யமாகக்கொண்ட கைவல்யார்த்தி₂க்கும் மறுபடியும இந்த ஸம்ஸாரமண்ட₃லத்திற்குத் திரும்பிவருதலாகிற தாழ்வு இல்லை என்றும், ஐஸ்வர்யார்த்தி₂க்கே தான் பெற்ற உயர்ந்த ப₂லனிலிருந்து தாழ்ந்த ப₂லன்களுக்குத் திரும்பிவருதல் உண்டு என்றும் இவ்வத்தியாயத்தின் எஞ்சிய பகுதியாலே கூறுகிறான். ஐஸ்வர்யார்த்தி₂யினால் அடையப்படும் உயர்ந்த ஐஸ்வர்யமும் நிலையானதல்ல என்றும், கைவல்யார்த்தி₂யினால் அடையப்படும் கேவலாத்மாநுப₄வமும், ஜ்ஞாநியினால் அடையப்படும் ப₄க₃வத₃நுப₄வமும் நிலையானவை (நித்யமானவை) என்றும் இவ்வத்தியாயத்தின் எஞ்சிய பகுதியினால் உணர்த்தப் புகுகிறவன், இந்த ஸ்லோகத்தில் ஜ்ஞாநி அடையும் ப₂லனான ப₄க₃வத₃நுப₄வம் நித்யமானது என்று உணர்த்துகிறான். (மாம் உபேத்ய) என்னைப் (பரமபத₃த்தில்) ப்ராப்யமாக அடைந்தபின். (து₃:க்கா₂லயம் ஜந்ம) எல்லாத் துன்பங்களுக்கும் இருப்பிடமான பிறப்பை; இன்ன து₃:க்க₂ம் என்று குறிப்பிடாமையாலே, இந்தப் பிறப்பு இறப்பு முதலானவற்றில் உழலுவது எல்லா து₃:க்க₂ங்களுக்கும் இருப்பிடம் என்று காட்டப்படுகிறது "ஸம்ஸார ஸாக₃ரம் கோ₄ரம் அநந்தக்லேஸபா₄ஜநம்" [ஜிதந்தே] [மிகக்கொடியதான ஸம்ஸாரக் கடல் கணக்கற்ற துன்பங்களுக்கு இருப்பிடமாயிருப்பது.] என்று ப்ரமாணங்களும் பேசினவன்றோ. இது அனைவர்க்கும் ப்ரத்யக்ஷ ஸித்₃த₄முமாகும் (அஸாஸ்வதம் ஜந்ம) நிலைநில்லாததான பிறப்பு. இங்கு பிறப்புக்குச் சொல்லப்படும் நிலைநில்லாமை — பிறப்போடு பிரிக்கமுடியாத தே₃ஹம், அதைக்கொண்டு அநுப₄விக்கும் இன்பங்கள் ஆகியவற்றின் நிலைநில்லாமை எனறே கொள்ளவேண்டும். அன்றிக்கே, ஜந்மஸப்₃த₃மே இங்கு ஜனனத்தையுடைய ஸரீரத்தைக் குறிப்பதாகவும் கொள்ளலாம் ஸரீரம், துன்பங்கள் அனைத்துக்கும் இருப்பிடமாகவும், நிலைநில்லாததாகவும் இருப்பதன்றோ. (ஜந்ம நாப்நுவந்தி) இத்தகைய பிறப்பை அடைவதில்லை. யார் இவர்கள்? இவர்களுக்கு இப்பெருமை எப்படி வந்தது? எனில்: (மஹாத்மாந:) "ஸ மஹாத்மா ஸுது₃ர்லப₄:" [7-19] என்று மஹாத்மாவாக

वस्थितमत्स्वरूपज्ञाना अत्यर्थमत्प्रियत्वेन मया विना आत्मधारणमलभमाना मय्यासक्तमनसो मदाश्रया मामुपास्य परमसंसिद्धिरूपं मां प्राप्ताः ॥ १५ ॥

---

(பெருநெஞ்சினனுகச்) சொல்லப்பட்ட ஜ்ஞாநிகளே இத்தகைய பெருமையைப் பெறுகிருர்கள். உபாஸக ஜ்ஞாநிகளும் ப₄க்தி யோக₃த்தை ஸாத₄னமாக அநுஷ்டி₂த்துப் படிப்படியாக மஹாத்மாவான ஜ்ஞானியாக ஆகவேண்டும் என்று திருவுள்ளம்பற்றி, ஞானிகள் அனைவரையுமே "மஹாத்மாந:" என்று குறிக்கிருன். "உதா₃ரா: ஸர்வ ஏவைதே" என்று அதி₄காரிகள் மூவரையும் 'உதா₃ரர்கள்' என்று ஒருபடியாக அருளிய எம்பெருமானின் திருவுள்ளத்திற்கும் இது தகும். (மஹாத்மாந:) பெருநெஞ்சினர். 'ஸ மஹாத்மா' [7-19] என்றவிடத்தின் வ்யாக்₂யானத்தில் சொன்ன பெருமைகள் இங்கும் அநுஸந்தி₄க்கத்தக்கவை. இவர்கள் "பூ₄மிராப:" [7-4] என்று தொடங்கி, "ந த்வஹம் தேஷு தே மயி" [7-12] என்ப தீருகச் சொல்லப்பட்ட என்னைப்பற்றிய உண்மையறிவை உடையவர்களாகையாலும், "ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்த₂மஹம்" [7-17] என்கிறபடியே என்னிடம் அளவற்ற ப்ரீதியை உடையவர்களாகையாலும், இக்காரணத்தாலேயே என்னைப் பிரிந்து த₄ரிக்க மாட்டாதவர்களாகையாலும், 'மய்யாஸக்தமநா: பார்த்த₂ யோக₃ம் யுஞ்ஜந் மதா₃ஶ்ரய:" [7-1] என்கிறபடியே என்னிடம் ஈடுபட்ட நெஞ்சையுடையவர்களாகையாலும், என்னையே ஆதா₄ரமாகக் கொண்டவர்களாகையாலும் இவர்கள் இப்பெருமை பெறுவதில் வியப்பில்லை என்றபடி. (பரமாம் ஸம்ஸித்₃தி₄ம் க₃தா:) மேலான புருஷார்த்த₂மாயிருக்கும் என்னை அடைந்தவர்களாகையாலும் இவர்கள் இப்பெருமை பெறுவதில் வியப்பில்லை என்றபடி. இப்படி என்னிடம் ப்ரீதிவைத்து என்னை அடைந்தவர்கள் என்னைவிட்டு மறுபடியும் ஸம்ஸாரமண்ட₃லத்திற்குச் செல்ல விரும்பமாட்டார்கள்; அரும்பாடுபட்டு என்னல் அடையப்பெற்ற இத்தகையவர்களை நானும் ஸம்ஸாரமண்ட₃லத்திற்குத் திருப்பி அனுப்பமாட்டேன் என்று கருத்து. "கஶ்சித் யததி ஸித்₃த₄யே" [7-3] என்று சொல்லப்பட்ட கைவல்யார்த்தி₂யின் ப்ராப்யம் "ஸ யாதி பரமாம் க₃திம்" [8-13] "தமாஹு: பரமாம் க₃திம்" [8-21] என்று சொல்லப்படுகிறது. "கஶ்சிந்மாம் வேத்தி தத்த்வத:" [7-3] என்று முற்கூறியவனைவிடச் சிறந்தவனுகக் கூறப்பட்ட ஜ்ஞாநியின் ப்ராப்யம் இங்கு "பரமா ஸம்ஸித்₃தி₄:" என்று முற்கூறிய ப்ராப்யத்தை

॥ भा ॥ ऐश्वर्यगतिं प्राप्तानां भगवन्तं प्राप्तानां च पुनरावृत्तावपुनरावृत्तौ च हेतुमाह—

आब्रह्मभुवनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन ।
मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते ॥ १६ ॥

16. ஆப்₃ரஹ்மபு₄வநால்லோகா: புநராவர்த்திநோऽர்ஜுந ।
மாமுபேத்ய து கௌந்தேய புநர்ஜந்ம ந வித்₃யதே ॥

அர்ஜுந — அர்ஜுநா! ஆப்₃ரஹ்மபு₄வநாத் லோகா: — (ப்₃ரஹ்மாண்ட₃த்தினுள்ளிருக்கும்) ப்₃ரஹ்மலோகம் வரையிலுள்ள எல்லா உலகங்களும், புநராவர்த்திந: — அழிவை உடையவை; கௌந்தேய — குந்தீபுத்திரனே! மாம் உபேத்ய து — என்னை அடைந்தபின் போவெனில்; புநர் ஜந்ம—மறுபிறப்பு, ந வித்₃யதே—இல்லை.

---

15. வேதா வுலகளவு மீண்டு வருமுலகென்
றோதாநின் றார்க ளுணர்வுடையோர்—போதார்ந்த
தாராருங் கௌந்தேயா வென்னடைந்தார் தாமீண்டு
வாரார் மறுபிறப்பின் வாய்.

போதார்ந்த தாராரும் கௌந்தேயா-புஷ்பங்கள் நிறைந்த மாலையணிந்த குந்தீபுத்திரனே! வேதாவுலகளவும் உலகு—ப்₃ரஹ்மலோகம் வரையிலுமுள்ள எல்லா உலகங்களும், மீண்டு வரும் — அழிவையுடையவை, என்று உணர்வுடையோர் ஓதாநின்றார்கள் — என்று அறிவாளிகள் சொல்லுகின்றனர். என்னை அடைந்தார் தாம் — என்னை அடைந்தவர்களோவெனில், மறுபிறப்பின் வாய் மீண்டு வாரார்—மறுபடியும் (இவ்வுலகில்) பிறப்பை அடையமாட்டார்கள்.

---

விடச் சிறந்ததாகக் காட்டப்படுகிறது என்று கண்டுகொள்வது. அவனுடையது ஸித்₃தி₄; இவனுடையது ஸம்ஸித்₃தி₄; ஸமீசீநமான (ஸ்வரூபாநுகு₃ணமான) ஸித்₃தி₄. ஆக, ஜ்ஞானியின் ப₂லனுக்கு அழிவில்லை என்று காட்டப்பட்டது. மற்றேரதி₄காரியான ஐஸ்வர்யார்த்தி₂யின் ப₂லனுக்கு அழிவுண்டு என்பதும் இத்தால் உணர்த்தப் பட்டதாயிற்று.

॥ भा ॥ ब्रह्मलोकपर्यन्ता ब्रह्माण्डोदरवर्तिनस्सर्वे लोका भोगैश्वर्यालयाः पुनरावर्तिनः—विनाशिनः। अत ऐश्वर्यगतिं प्राप्तानां प्राप्य-

---

16. சென்ற ஶ்லோகத்தில் பரமபுருஷனை தன்னை அடைந்தவர்களின் ப₂லனுக்கு அழிவின்மையைக் கூறியதன்மூலம், மற்றோரதி₄காரியான ஐஶ்வர்யார்த்தி₂யின் ப₂லனுக்கு அழிவுண்டு என்று உணர்த்தப்பட்டது. இந்த ஶ்லோகத்தில்—இவ்விரு அதி₄காரிகளின் ப₂லனில் இவ்வண்ணம் வாசியிருப்பதற்குக் காரணத்தைக் காட்டுகிறான். ( ஆப்₃ரஹ்மபு₄வநாத் லோகா: ) ப்₃ரஹ்மாண்ட₃த்தினுள்ளிருக்கும் ப்₃ரஹ்மலோகமீறாகவுள்ள எல்லா உலகங்களும். "ஆங்" உபஸர்க்க₃ம் 'எது வரையில் உள்ளது' என்பதைக் காட்டும் மர்யாதை₃ (எல்லைப்) பொருளிலும், 'எதை உள்ளடக்கி உள்ளது' என்னும் அபி₄விதி₄ப்பொருளிலும் பிரயோகி₃க்கப்படும். இங்கு 'மாமுபேத்ய' என்று ப்ரதிகோடியாகத் தன்னை எடுக்கையாலும், ப்₃ரஹ்மலோகத்திற்கும் அழிவை அடுத்தபடி கூறுகையாலும், ப்₃ரஹ்மலோகத்தையும் உள்ளடக்கிய அபி₄விதி₄ப்பொருள் கொள்ளப்பட்டது. "மம மாயா" என்று ப₄க₃வானுடைய மாயையாகச் சொல்லப்படும் மூலப்ரக்ருதியாகிய பெருங்கடலில், "ஜலபு₃த்₃பு₃த₃வத் ஸமம்" என்கிறபடியே ப்₃ரஹ்மாண்ட₃ங்களே நீர்க்குமிழிபோலே அழிபவையாயிருக்கும்போது, அதற்குள்ளிருக்கும் ஸத்யலோகம் முதலான உலகங்கள் அழிபவை என்பதைச் சொல்லவும் வேண்டுமோ என்று கருத்து. ஆக, "மாமுபேத்ய" என்றவிடத்தில் கருதப்பட்ட பரமபத₃த்திற்குக் கீழுள்ள எல்லா உலகங்களும் அழிபவையே என்றபடி. (லோகா: புநராவர்த்திந:) போ₄க₃ஸாத₄னமான ஐஶ்வர்யத்திற்கு இருப்பிடமாயிருக்கும் ப்ராக்ருத லோகங்கள் அழிபவையே. ( புநராவர்த்திந: ) "லோகஸ்து பு₄வநே ஜநே" என்று லோகஶப்₃த₃ம் உலகங்களையும், ஜனங்களையும் குறிக்கும். இங்கு பு₄வநஶப்₃த₃த்தோடு சேர்த்துப் படிக்கப்பட்ட லோகஶப்₃த₃ம் ஜனங்களைக் குறிக்கமாட்டாதாகையாலே, "ஜனங்கள் திரும்பிவருகிறார்கள்" என்னும் பொருளைக்கொள்ளமுடியாது. உலகங்கள் போவதுவருவதில்லாமையாலே, அவை திரும்பிவரமுடியாது. ஆகையால், புநராவ்ருத்தி ஶப்₃த₃ம் இங்கு உலகங்கள் மாறிமாறி அழிவதை லக்ஷணையாலே காட்டுகிறது. அன்றிக்கே, லோகஶப்₃த₃ம் அஜஹல்லக்ஷணையாலே ஜனங்களோடுகூடிய உலகங்களைக் காட்டுகிறதாய், ஜனங்கள் திரும்பிவருவதையிட்டு, 'உலகங்கள் திரும்பிவருகின்றன' என்று கூறுவதாகவும் கொள்ளலாம். ஆக, ஐஶ்வர்யக₃தியை அடைந்தவர்களுக்கு, அவர்கள் பயனை அநுப₄விக்கும் இடம் அழியக்கூடியதாகை

स्थानविनाशाद्विनाशित्वमवर्जनीयम्। मां—सर्वज्ञं सत्यसङ्कल्पं निखिलजगदुत्पत्तिस्थितिलयलीलं परमकारुणिकं सदैकरूपं प्राप्तानां विनाशप्रसङ्गाभावात्तेषां पुनर्जन्म न विद्यते॥ १६॥

॥भा॥ ब्रह्मलोकपर्यन्तानां लोकानां तदन्तर्वर्तिनां च परमपुरुषसङ्कल्पकृतामुत्पत्तिविनाशकालव्यवस्थामाह—

सहस्रयुगपर्यन्तमहर्यद्ब्रह्मणो विदुः।
रात्रिं युगसहस्रान्तां तेऽहोरात्रविदो जनाः॥ १७॥
अव्यक्ताद्व्यक्तयस्सर्वाः प्रभवन्त्यहरागमे।
रात्र्यागमे प्रलीयन्ते तत्रैवाव्यक्तसंज्ञके॥ १८॥
भूतग्रामस्स एवायं भूत्वा भूत्वा प्रलीयते।
रात्र्यागमेऽवशः पार्थ प्रभवत्यहरागमे॥ १९॥

---

யாலே, அவர்களுடைய பயனும் அழிவதைத் தவிர்க்கமுடியாது என்று தேறிற்று. இனி, உத்தரார்த்தத்தாலே ப்ரதிகோடியான தன்னை அநுபவிப்பதற்காகப் பரமபதத்தை அடைந்தவர்களுக்கு அழிவில்லை என்று காட்டுகிறான், — (மாம் உபேத்ய து புநர்ஜந்ம ந வித்யதே) எல்லாமறிந்தவனாய், ஸத்யஸங்கல்பனாய், எல்லாவுலகையும் படைத்தளித்து அழிப்பதை விளையாட்டாகக் கொண்டவனாய், பரமகாருணிகனாய், எப்போதும் ஒருபடிப்பட்டவனாயிருக்கும் என்னை அடைந்தவர்களுக்கோவெனில், மறுபிறப்பு கிடையாது. எல்லாமறியாதவனாய், நினைத்ததை நடத்தமுடியாதவனாய், ஒருவனால் படைக்கப்படுபவனாய், கருணையற்றவனாய், ரஜஸ்தமஸ்ஸுக்களால் ஏற்படும் ராகத்வேஷங்களால் பலவிதமான மாறுபாடுகளை அடைபவனான பேசநின்ற சிவன், பிரமன் முதலான க்ஷுத்ரதெய்வங்களை அடைந்திருந்தாலன்றோ, அந்த தெய்வத்தாலேயோ, அல்லது வேறொருவனாலேயோ மறுபிறப்பு ஏற்படலாம் என்று சங்கிக்கக்கூடும்; எல்லா நற்குணங்களும் நிறைந்த என்னை அடைந்தவர்களுக்கு இப்படி சங்கிக்கவும் இடமில்லை என்று கருத்து. (புநராவர்த்திநோऽர்ஜுந) அர்ஜுனன் (சுத்தஸ்வபாவன்) என்று பெயர் படைத்த நீ, அழியும் பலனை விரும்பலாகாது என்று கருத்து. (கௌந்தேய) என் அத்தைபிள்ளையான நீ என்னையடைவதாகிற அழியாப்பயனைப் பெறவேணும் என்று கருத்து. 16.

17. ஸஹஸ்ரயுக₃பர்யந்தமஹர்யத்₃ப்₃ரஹ்மணோ விது₃: ।
ராத்ரிம் யுக₃ஸஹஸ்ராந்தாம் தே ऽஹோராத்ரவிதோ₃ ஜநா: ॥

18. அவ்யக்தாத்₃வ்யக்தய: ஸர்வா: ப்ரப₄வந்த்யஹராக₃மே ।
ராத்ர்யாக₃மே ப்ரலீயந்தே தத்ரைவாவ்யக்தஸம்ஜ்ஞகே ।

19. பூ₄தக்₃ராமஸ்ஸ ஏவாயம் பூ₄த்வா பூ₄த்வா ப்ரலீயதே ।
ராத்ர்யாக₃மே ऽவஶ: பார்த்த₂ ப்ரப₄வத்யஹராக₃மே ॥

**பார்த்த₂** — குந்தீபுத்திரனே ! (யே), **அஹோராத்ரவித₃: ஜநா:** — (மனிதர் தொடக்கமாக நான்முகனீருக்கவுள்ள அனைவாக்கும்) இரவு பகல்களை அறியும் அறிவாளிகள் எவர்கள் உளரோ, **தே**—அவர்கள், **ப்₃ரஹ்மண: அஹ:**—பிரமனின் பகலை, **ஸஹஸ்ரயுக₃பர்யந்தம் விது₃:** — ஆயிரம் சதுர்யுக₃காலத்தில முடிவதாக அறிகின்றனர்; **ராத்ரிம்**—(பிரமனின்) இரவையும், **யுக₃ஸஹஸ்ராந்தாம் (விது₃:)** — ஆயிரம் சதுர்யுக₃காலத்தில் முடிவதாக அறிகின்றனர்; **அஹராக₃மே** — (பிரமனின்) பகல் தொடங்கும்போது, **ஸர்வா: வ்யக்தய:**—(உலகிலுள்ள) எல்லாப்பொருள்களும், **அவ்யக்தாத்**-(பிரமனின் தே₃ஹமான) அவ்யக்தத்தினின்றும், **ப்ரப₄வந்தி**—உண்டாகின்றன; **ராத்ர்யாக₃மே**—(பிரமனின்) இரவு தொடங்கும்போது, **அவ்யக்த ஸம்ஜ்ஞகே தத்ரைவ**—அவ்யக்தம் எனப்படும் அந்தப் பிரமனின் தே₃ஹத்திலேயே, **ப்ரலீயந்தே** — (அவை) ஒடுங்குகின்றன **அவஶ: ஸ ஏவ அயம் பூ₄தக்₃ராம:** — கர்மத்திற்கு வஶப்பட்ட அத்தகைய இந்த ஜீவஸமூஹம், (**அஹராக₃மே**) **பூ₄த்வா பூ₄த்வா**—(ஒவ்வொரு பகலின் தொடக்கத்திலும்) உண்டாகி உண்டாகி, **ராத்ர்யாக₃மே ப்ரலீயதே** — இரவின் தொடக்கத்தில் லயத்தை அடைகிறது, **அஹராக₃மே ப்ரப₄வதி**—(மறுபடியும்) பகலின் தொடக்கத்தில் உண்டாகிறது.

---

16. **ஆயிர மேலுகங்க ளாங்கயனுக் கோர்பகலா**
**மாயிர மாமிரவு மற்றதுவென்—றேயும்**
**பகலிரவு தானறியும் பண்புடையா ரின்னே**
**நிகரறிவு தாஞ்செய்வர் நின்று.**

17. தோன்று வயனுடம்பிற் றேன்றும் பொருளெல்லா
மேன்றும் பகலி னிடையுதிக்கு—மான்றூர்ந்தங்
காகு மவையெல்லா மவ்வுருவுள் ளேயடங்கிப்
போகு மிரவாகும் போது.

18. தொக்கமரிப் பூதமெலாந் தோன்றித்தோன் றித்தொடர
மிக்கவச மாயிரவில் வீயுமே—தக்கபகல்
என்றுவருங் காலத் திவையுண்டா மென்பதனு
லொன்றுநிலை தன்னையுரு துற்று.

(16) **ஆங்கு அயனுக்கு**—ஸத்யலோகத்தில் உள்ள பிரமனுக்கு, **ஆயிரம் மேல் உகங்கள்**—ஆயிரம் சதுர்யுக₃ங்கள், **ஓர் பகலாம்**—ஒரு பகலாகின்றது ; **இரவு**—(அவனுடைய) ஓர் இரவும், **ஆயிரம் மற்றது ஆம்**—ஆயிரம் சதுர்யுக₃மாகும்; **என்று**—என்று இவ்வண்ணமாக, **ஓயும் பகல் இரவுதான்**—(பிரமனுடைய) அநித்யமான பகலேயும் இரவையும், **அறியும் பண்புடையோர் தாம்** — அறியும் பெருமைபெற்றவர்கள், **இன்னே**—இந்த ரீதியில், **நிகரறிவு நின்று செய்வர்**—சிறந்த அறிவை நிலேயாக உடையவராகின்றனர். (17) **தோன்றும் பொருள் எல்லாம்**—புலனுகக்கூடிய எல்லாப் பொருள்களும், **தோன்று அவன் உடம்பில்** — புலனுகாத பிரமனின் உடம்பில், **ஏன்று ஆம் பகலினிடை உதிக்கும்**—(அவனது) பகல் தொடங்கும்போது உண்டாகும். **ஆன்று ஆர்ந்து அங்கு ஆகும் அவையெல்லாம்** — அப்படிப் பகலில் அவ்வுடலில் தோன்றும் அப்பொருள்கள் எல்லாம், **இரவாகும்போது**—பிரமனுக்கு இரவு ஏற்படும்போது, **அவ்வுருவுள்ளே அடங்கிப்போகும்** — அப்பிரமனுடைய உருவினுள்ளே லயித்துவிடும். (18)**தொக்கு அமர் இப்பூதம் எலாம்**—சேர்ந்திருக்கும் இந்த ஜீவராசிகள் அனைத்தும், **தொடர மிக்கு அவசமாய்**—தொடர்ந்து மிகவும கர்மவயப்பட்டதாய், **தோன்றி தோன்றி**—(பகலில்) உண்டாகி உண்டாகி, **இரவில் வீயுமே**—இரவுப்போதில் அழிந்துவிடும். **தக்க பகல் என்று வரும் காலத்து இவை உண்டாம்**—(மறுபடியும்) பகற்காலத்தில் இவை உண்டாகின்றன. **என்பதனுல்**—இக்காரணத்தால், **ஒன்றும் உற்று றிலே தன்னே உருது**—ஒரு பொருளும் உள்ளபடி நிலேயான தன்மையை அடைவதில்லே.

17—19. ப்₃ரஹ்மலோகமீருகவுள்ள உலகங்களுக்கும், அவற்றி னுள்ளிருப்பவர்களுக்கும், பரமபுருஷனுடைய ஸங்கல்பத்தால் ஏற் படும் உத்பத்தி விநாஶங்களின் காலவரம்பைக் காட்டுவதன்மூலம் சென்ற ஶ்லோகத்தில் சொன்ன அர்த்த₂த்தை விவரிக்கிருன் இம் மூன்று ஶ்லோகங்களில். இராப்பகல்கள் முதலான காலங்கள் தத்தமக்குரிய அளவில் ஏற்றத்தாழ்வில்லாமல் வரம்புக்குட்பட்டி ருப்பதற்கு ஸர்வேஶ்வரனுன நாராயணனுடைய ஸங்கல்பமே காரணம் என்னும் விஷயம்—

" காலசக்ரம் ஜக₃ச்சக்ரம் யுக₃சக்ரம் ச கேஶவ: |
ஆத்மயோகே₃ந ப₄க₃வாந் பரிவர்த்தயதேऽநிஶம் ||
காலஸ்ய ச ஹி ம்ருத்யோஶ்ச ஜங்க₃மஸ்த₂ாவரஸ்ய ச|
ஈஷ்டே ஹி ப₄க₃வாநேக: ஸத்யமேதத் ப்₃ரவீமி தே ||"
[பா₄ர-உத்₃யோக₃ 67-12, 13]

[(சுழன்று சுழன்று வருகையாலே) சக்கரம் எனத்தக்கவையான காலத்தையும், உலகத்தையும், யுக₃ங்களையும் கேஶவனுகிற ப₄க₃வான் தன் ஸங்கல்பத்தாலே தினந்தோறும் சுழலச்செய்கிருன். ஜ்ஞாநம், ஶக்தி முதலான கு₃ணங்களால் நிறைந்த ப₄க₃வானுகிற அவனே காலத்தையும், 'ம்ருத்யு' எனத்தக்க ஸம்ஸார வாழ்க்கையையும், (அதில் உழலும்) அசைவனவும், அசையாதனவுமான பொருள்களை யும் நியமிக்கிருன். இதை ஸத்யம் செய்து உனக்குக் கூறுகிறேன்.] என்றும்,

" ததோ யுக₃ஸஹஸ்ராந்தே ஸம்ஹரிஷ்யே ஜக₃த் புந: |
க்ருத்வா மத்ஸ்த₂ாநி பூ₄தாநி சராணி ஸ்த₂ாவராணி ச ||"
[பா₄ர-மோக்ஷ 347-71]

[அதற்குப்பின் ஆயிரக்கணக்கான யுக₃ங்களுக்குப் பிறகு, அசை வனவும், அசையாதனவுமான எல்லாப் பொருள்களையும் என்னுள் ஆக்கி, இவ்வுலகத்தை மறுபடியும் ஸம்ஹாரம் செய்வேன்.] என் றும் மஹாபா₄ரதத்தில் சொல்லப்பட்டது.

17. இம்மூன்று ஶ்லோகங்களில் முதல் ஶ்லோகத்தாலே பிரம னின் இரவும் பகலும் தனித்தனியேஆயிரம் சதுர்யுக₃ங்களளவுள்ளவை என்று கூறப்படுகிறது. இதே விஷயம் மநுஸ்ம்ருதியின் முதல் அத்தியாயத்திலும் விரிவாக விளக்கப்பட்டது. அதில் 69, 70-வது ஶ்லோகங்களில் (ஸந்தி₄களோடு கூடிய) நாலு யுக₃ங்களின் அளவுகள்

॥ भा ॥ ये मनुष्यादिचतुर्मुखान्तानां मत्सङ्कल्पकृताहोरात्रव्यव-स्थाविदो जनाः, ते ब्रह्मणश्चतुर्मुखस्य यदहः, तच्चतुर्युगसहस्रावसानं

---

கூறப்பட்டன. 71-வது ஶ்லோகத்தில் இந்த நாலு யுக₃ங்களும் சேர்ந்து ஒரு தே₃வயுக₃ம் என்று கூறப்படுகிறது என்று கூறினர். 72-வது ஶ்லோகத்தில் தனித்தனியே இத்தகைய ஆயிரம் தே₃வ யுக₃ங்களின் அளவுகொண்டவை பிரமனின் பகலும் இரவும் என்று காட்டினர். அடுத்ததான "தத்₃யே யுக₃ஸஹஸ்ராந்தம் ப்₃ராஹ்மம் புண்யமஹர்விது₃: । ராத்ரிம் ச தாவதீமேவ தேऽஹோராத்ரவிதோ₃ ஜநா: ॥" [1-73] [அந்த தே₃வயுக₃ங்கள் ஆயிரம்கொண்ட காலத்தைப் பிரமனின் புண்யமான பகலாகவும், அதே அளவுகொண்ட காலத்தை அவனுடைய ராத்ரியாகவும் எவர்கள் அறிகிறார்களோ, அவர்கள் 'பகலிரவுகளை அறிந்த ஜனங்கள்' என்று புகழப்படுகின்றனர்.] என்னும் ஶ்லோகம் இந்த கீ₃தாஶ்லோகத்தைப் பெரும்பாலும் அடியொற்றியிருக்கிறது. ஆயினும், இந்த கீ₃தாஶ்லோகம், அந்த மனுஸ்ம்ருதி ஶ்லோகத்தைப்போலே அஹோராத்ரவித்துக்களான (பகலிரவுகளை அறிந்த) ஜனங்களைப் புகழவந்ததல்ல, பிரமனின் பகலிரவுகளின் அளவை விளக்கும் மநுஸ்ம்ருதி (69 முதல் 73 வரையுள்ள) ஶ்லோகங்களின் ஸங்க்₃ரஹமாகவேயிருக்கிறது என்பது இந்த கீ₃தாப்ரகரணத்தையும், இந்த ஶ்லோகத்தின் அமைப்பில் உள்ள வேறுபாடுகளையும் காண்பார்க்கு நன்கு விளங்குமாகையாலே அவ்வண்ணமே இது விவரிக்கப்படுகிறது. (யே அஹோராத்ரவிதோ₃ ஜநா:) மநுஸ்ம்ருதி முதலான ஶாஸ்த்ரங்களில் பகலிரவுகளை அறிந்தவர்களாக எந்த ஜனங்கள் கூறப்படுகிறார்களோ; இந்த ப்ரகரணம் அஹோராத்ரவித்துக்களைப் புகழவந்ததல்லவாகையால், "யே விது₃ஸ் தே அஹோராத்ரவிதோ₃ ஜநா:" [எவர்கள் அறிகிறார்களோ அவர்கள் அஹோராத்ரவித்துக்கள்] என்று அவர்களைப் புகழவந்த மநுஸ்ம்ருதி ஶ்லோகத்திற்போலே, இங்கு பொருள் கொள்ளமுடியாது ஆக, ஶ்லோகத்தின் முற்பாதியிலுள்ள 'யத்' என்னும் நபும்ஸகலிங்க₃ஶப்₃த₃ம் 'அஹ:' என்பதற்கு விஶேஷணமாக அந்வயித்து விடுகிறதாகையால் பிற்பாதியிலுள்ள 'தே' என்னும் பத₃த்திற்கு ப்ரதிஸம்ப₃ந்தி₄யாக 'யே' என்னும் பத₃த்தை வருவித்துக்கொண்டு மநுஸ்ம்ருதி முதலான ஶாஸ்த்ரங்களில் 'அஹோராத்ரவித்துக்கள்' [பகலிரவுகளை அறிந்தவர்கள்] என்று புகழப்படுகிறவர்கள் இங்கு அநுவதி₃க்கப்படுவதாகவே கொள்ள வேண்டும். இங்கு பொதுவாக 'அஹோராத்ரவித்துக்கள்' [பகலிரவு

विदुः; रात्रिं च तथारूपाम्। तत्र ब्रह्मणोऽहरागमसमये

களை அறிந்தவர்கள்] என்கையால், மனிதர் முதலாக, தே₃வர் நடுவாகப் பிரமன் ஈருகவுள்ள ஸம்ஸாரிகள் அனைவருடையவும் பகலிரவு வரம்பையறிந்தவர்கள் இவர்கள் என்று விளங்குகிறது. அவதாரிகையில் எடுத்த ப்ரமாணங்களின்படி பரமபுருஷனின் ஸங்கல் பத்தாலேயே இப்பகலிரவு வரம்புகள் ஏற்படுகின்றன என்பதையும் இவர்கள் அறிந்தவர்களாகவேண்டும் என்பது தானே விளங்கும். ஆக, பரமாத்மா ஒருவனே அழிவில்லாதவன், பிரமனோடு, மனித ரோடு வாசியற அனைவரும் அழிபவர்களே என அறிந்தவர்கள் என்கை. (தே ப்₃ரஹ்மண: யத் அஹ: (தத்) ஸஹஸ்ரயுக₃பர்யந்தம் விது₃:) அந்த அஹோராத்ரவித்துக்கள் ப்₃ரஹ்மாவின் பகலை ஆயிரம் சதுர்யுக₃ங்களில் முடிவடைவதாக அறிகிருர்கள். (ராத்ரிம் யுக₃ ஸஹஸ்ராந்தாம் விது₃:) அவ்வண்ணமே அப்பிரமனின் இரவும் மற்ருெரு ஆயிரம் சதுர்யுக₃ங்களில் முடிவடைவதாக அறிகிருர்கள். (ப்₃ரஹ்மண: ) பிரமனுக்கு. பரம்பொருளாகிற ப்₃ரஹ்மத்திற்குக் காலவரம்பு கிடையாதாகையாலும், பிரமனுக்கே ஆயிரம் சதுர் யுக₃ங்களைத் தனித்தனியே பகலாகவும், இரவாகவும் கொண்டி ருக்கையாகிற காலவரம்பு மநுஸ்ம்ருதி, ஸ்ரீவிஷ்ணுபுராணம் முத லான ஶாஸ்த்ரங்களில் காண்கையாலும், இங்குள்ள ப்₃ரஹ்ம ஶப்₃த₃ம் ப்₃ரஹ்மாவாகிற நான்முகனைக் குறிக்கிறது என்பது தெளிவு. (ஸஹஸ்ரயுக₃ பர்யந்தம் விது₃: ) ஆயிரம் சதுர்யுக₃ங்களை எல்லை யாகக் கொண்டதாக அறிகின்றனர். "சதுர்யுக₃ம் தே₃வாநாம் யுக₃முச்யதே" [மநு 1-71] என்று 'க்ருதம், த்ரேதா, த்₃வாபரம், கலி' எனப்படும் மனிதர்களுடைய ஒரு சதுர்யுக₃ம் தே₃வர்களுக்கு ஒரு யுக₃மாகிறதாகையால், இங்கு 'யுக₃ம்' என்றது மனிதர்களின் சதுர்யுக₃த்தைக் குறிக்கிறது. ஸ்ரீ விஷ்ணுபுராணம் ஆரும் அம்ஶம் முதல் அத்தியாயத்திலும் பிரமனின் பகல் ஆயிரம் சதுர்யுக₃ங்கள் கொண்டது என்று கூறப்பட்டிருப்பது காணத்தக்கது. "ஆயிரம் சதுர்யுக₃ங்களை எல்லையாக உடைய பிரமனின் பகலை அறிகிருர்கள்" என்று பகலைப்பற்றிய அறிவை விதி₄ப்பதாக ஶ்லோகத்தின் அமைப்பு இருந்தபோதிலும், "யே அஹோராத்ர விதோ₃ ஜநா:" என்று இவர்களைப் பகலிரவுகளை அறிந்தவர்களாக அநுவதி₃த்துவிட்டபடி யாலும், "ஸவிஶேஷணௌ விதி₄நிஷேதௌ₄ விஶேஷணமுப ஸங்க்ராமத:" [ஒரு விஶேஷணத்தோடு கூடிய விஶேஷ்யத்தைப் பற்றிய விதி₄யோ, நிஷேத₄மோ விஶேஷணத்தைச் சென்றடையும்]

त्रैलोक्यान्तर्वर्तिन्यो देहेन्द्रियभोग्यभोगस्थानरूपा व्यक्तयश्चतुर्मुखदेहावस्थादव्यक्तात् प्रभवन्ति । तत्रैवाव्यक्तावस्थाविशेषे चतुर्मुखदेहे

என்னும் நியாயத்தாலும் ''பிரமனின் பகலை ஆயிரம் சதுர்யுகங்களை எல்லையாக உடையதாக அறிகிறுர்கள்'' என்று பகலின் எல்லையைப் பற்றிய அறிவை விதிப்பதாகவே பொருள்கொள்ளவேண்டும்.

18. பிரமனின் பகலிரவுகளின் வரம்புகளை முன் ஶ்லோகத்தில் சொன்னதினுல் தேறிய அர்த்தத்தை இந்த ஶ்லோகத்தில் கூறுகிருன். (ஸர்வா: வ்யக்தய: அஹராகமே அவ்யக்தாத் ப்ரபவந்தி) உலகில் காணப்படும் எல்லாப் பொருள்களும், (பிரமனின்) பகல் தொடங்கும்போது, (பிரமனின் ஶரீரமான) அவ்யக்தத்தினின்றும் உண்டாகின்றன. (ராத்ர்யாகமே அவ்யக்த ஸம்ஜ்ஞகே தத்ரைவ ப்ரலீயந்தே) (பிரமனின்) இரவு தொடங்கும்போது, அவ்யக்தம் எனப்படும் அந்தப் பிரமனின் தேஹத்திலேயே அவை ஒடுங்குகின்றன. பொதுவாக 'அவ்யக்தம்' என்று ஸூக்ஷ்மமான மூல ப்ரக்ருதியையும், 'வ்யக்தம்' என்று அதிலிருந்து தோன்றும் மஹான் முதலான ஸ்தூலப்பொருள்களையும் குறிப்பதுண்டாயினும், பிரமனின் பகலின் தொடக்கத்தில் உண்டாவதாகக் கூறப்படும் 'வ்யக்தி'கள், ப்ரஹ்மஸ்ருஷ்டிக்கு முன்னுல் ஸர்வேஶ்வரனுல் செய்யப்படும் ஸமஷ்டி ஸ்ருஷ்டியின்போது உண்டாகும் மஹான் முதலானவையாக முடியாது; ஆகையால், ''வ்யஜ்யந்தே—இதி வ்யக்தய:'' [வெளிப்படுத்தப்படுகின்றனவாகையால் வ்யக்திகள் எனப்படுகின்றன.] என்னும் வ்யுத்பத்தியால், நான்முகனுல் ஸ்ருஷ்டிக்கப்படும் பொருள்களே இங்கு 'வ்யக்திகள்' எனப்படுவதாகக் கொள்ளவேண்டும். அதிலும் பிரமனின் இரவின் தொடக்கத்தில் ப்ரளயமும், பகலின் தொடக்கத்தில் ஸ்ருஷ்டியும் ஏற்படுவது பூர் புவஸ் ஸுவ: என்னும் மூன்று லோகங்களுக்கே என்று இந்த நைமித்திகஸ்ருஷ்டி ப்ரளயங்களைச் சொல்லும் மற்ற ஶாஸ்த்ரங்களிலிருந்து விளங்குகிறதாகையால், இம்மூவுலகிலுமுள்ள தேஹம் இந்த்ரியம் ஆகிய போகோபகரணங்கள், போக்யப்பொருள்கள், போகஸ்தானங்கள் முதலான அசேதனப்பொருள்களே இங்கு வ்யக்திஶப்தத்தால் குறிக்கப்படுவதாகக் கொள்ளவேண்டும். இவ்வசேதனப்பொருள்கள் ப்ரஹ்மாவின் ஶரீரத்திலிருந்தே ஸ்ருஷ்டிக்கப்படுகின்றன என்பதும் பல ஶாஸ்த்ர வசனங்களில் காணப்படுகிறது. ஆகையால், இங்கு வ்யக்திகாரணமாகக் கூறப்படும் 'அவ்

रात्र्यागमसमये प्रलीयन्ते। स एवायं कर्मवश्यो भूतग्रामोऽहरागमे भूत्वा भूत्वा रात्र्यागमे प्रलीयते। पुनरप्यहरागमे प्रभवति। तथा

---

யக்தம்' மூலப்ரக்ருதியன்றென்றும், அதிலிருந்து உண்டானபடியால் ' அவ்யக்தம் ' எனப்படும் ப்₃ரஹ்மாவின் ஶரீரமே என்றும் விளங்குகிறது. அவ்யக்த ஶப்₃த₃ம் ஶரீரத்தைக் குறிக்கும் என்பது ''மஹத: பரமவ்யக்தம்'' [கட₂ 3-11] என்னும் உபநிஷத்₃ வாக்யத்திலிருந்தும், இந்த வாக்யத்தில் அவ்யக்தஶப்₃த₃ம் வ்யக்தமான ஶரீரத்தைக் குறிப்பதின் பொருத்தத்தை விளக்கும் '' ஸூக்ஷ்மம் து தத₃ர்ஹத்வாத் '' [1-4.2] என்னும் ப்₃ரஹ்ம ஸூத்ரத்திலிருந்தும் விளங்கும். ஆக, மூவுலகிலுமுள்ள தே₃ஹம் இந்த்₃ரியம் முதலான அசேதனப் பொருள்கள் பிரமனின் பகலின் தொடக்கத்தில் அவனது ஶரீரத்திலிருந்து தோன்றி, இரவின் தொடக்கத்தில் அந்த ஶரீரத்திலேயே ஒடுங்குகின்றன என்று நைமித்திக ஸ்ருஷ்டி ப்ரளயங்கள் கூறப்பட்டன.

19. முற்கூறிய ஸ்ருஷ்டி ப்ரளயங்களுக்குக் காரணம் அந்தந்த ஜீவர்கள் செய்யும் புண்யபாபகர்மங்கள் என்றும், அக்கர்மங்கள் அடியோடு அழியாமல் தொடர்ந்து வருகையால், அந்த ஸ்ருஷ்டி ப்ரளயங்களும் தொடர்ந்து வருகின்றனவென்றும், இக்காரணத்தால் அக்ருதாப்₄யாக₃மம் (செய்யாத செயலுக்குப் ப₂லனை அநுப₄விப்பது) க்ருதவிப்ரணாஶம் (செய்த செயலுக்குப் ப₂லனில்லாமற்போவது) எனும் தோ₃ஷங்கள் ஏற்படுவதில்லை என்றும், இந்த நைமித்திக ஸ்ருஷ்டி ப்ரளயங்கள் பிரமனின் கல்பங்கள் எனப்படும் ஒவ்வொரு பகலிராக் காலங்களிலும் ஏற்படுகின்றன என்றும், ஒவ்வொரு கல்பத்திலும் முன் கல்பங்களிற்படியே பிரமனால் ஸ்ருஷ்டிக்கப்படுகிறது என்றும் இந்த ஶ்லோகத்தில் காட்டுகிறான். (ஸ ஏவாயம் அவஶ: பூ₄தக்₃ராம: (அஹராக₃மே) பூ₄த்வா பூ₄த்வா ராத்ர்யாக₃மே ப்ரலீயதே; அஹராக₃மே ப்ரப₄வதி) அத்தகைய இந்தக் கர்மவஶப்பட்ட ஜீவராஶிகள் பிரமனின் (பகற்காலங்களின் தொடக்கங்களில்) மறுபடியும் மறுபடியும் உண்டாகி, இராக்காலங்களின் தொடக்கங்களில் லயமடைகின்றன. மறுபடியும் அடுத்த பகற்காலத்தின் தொடக்கத்தில் உண்டாகின்றன. (அவஶ: பூ₄தக்₃ராம:) 'அவஶ:' என்று கர்மபரவஶமாகக் கூறுகையால், பூ₄தஶப்₃த₃ம் இங்கு பஞ்சபூ₄தங்களைக் குறிக்காமல் முற்கூறிய தே₃ஹேந்திரியங்களோடு கூடிய ஜீவராஶிகளைக் கூறுகிறது. (அவஶ: பூ₄தக்₃ராம: பூ₄த்வா பூ₄த்வா ப்ர

वर्षशतावसानरूपयुगसहस्रान्ते ब्रह्मलोकपर्यन्ता लोकाः ब्रह्मा च *पृथिव्यप्सु प्रलीयते आपस्तेजसि लीयन्ते (सु. २) इत्यादिक्रमेण अव्य-

---

லீயதே) கர்மவஶப்பட்ட இந்த ஜீவராஶிகள் மறுபடியும் மறுபடியும் ஸ்ருஷ்டிக்கப்பட்டு அழிக்கப்படுகின்றன என்று கருத்து. 'அவஶ:' என்னும் விஶேஷணம் இந்த ஜீவராஶிகள் ஸ்ருஷ்டி ப்ரளயங்களுக்கு விஷயமாவதற்குக் காரணத்தைக் கூறுவதாகக் கொள்வதே உசிதமாகையாலே, கர்மவஶப்பட்டிருக்கையே அவஶஶப்$_3$த$_3$த்திற்குப் பொருளாயிருக்கத்தகும். (ஸ ஏவாயம்) கல்பந்தோறும் ஒரே ஜீவராஶிகள் தொடர்ந்து ஸ்ருஷ்டி ப்ரளயங்களுக்கு விஷயமாவதாகக் கூறுவதால், கர்மவஶப்பட்ட ஜீவர்கள் நித்யமானவர்கள் என்றும், கர்மங்களும் தொடர்ந்து வருகின்றன என்றும் காட்டப்படுகிறது. (பூ$_4$த்வா பூ$_4$த்வா ப்ரலீயதே) என்கையால், இக்கர்மங்கள் தொடர்ந்து வருகையால் இந்த ஸ்ருஷ்டி ப்ரளயங்களும் இடைவிடாமல் தொடர்ந்து வருகின்றன என்று உணர்த்தப்படுகிறது. இதனுல் இந்த ஜீவராஶிகள் அநுப$_4$விக்கும் ஸுக$_2$ம் து$_3$:க்க$_2$ம் முதலான ஒவ்வோரநுப$_4$வமும் முன்வினைப்பயனே என்றும் உணர்த்தப்படுகிறது. இதனுல் 'அக்ருதாப்$_4$யாக$_3$மம்' [செய்யாத செயலுக்குப் பயனை அனுப$_4$விப்பது] 'க்ருதவிப்ரணாஶம்' [செய்த செயலுக்குப் பயனில்லாமற்போவது] ஆகிய குற்றங்கள் ஏற்படுவதில்லை என்னும் பொதுவிதி$_4$ உணர்த்தப்பட்டதாயிற்று. (அஹராக$_3$மே பூ$_4$த்வா பூ$_4$த்வா ராத்ர்யாக$_3$மே ப்ரலீயதே; அஹராக$_3$மே ப்ரப$_4$வதி) என்கையால் பிரமனுல் அவனது இராப்பகல்களாகிற கல்பங்களில் செய்யப்படும் நைமித்திக ஸ்ருஷ்டி ப்ரளயங்களே இங்கு சொல்லப்படுகின்றன என்பதும், 'ஸ ஏவாயம்' என்றதால், முன் கற்பங்களிற்போலவே பின்கற்பங்களிலும் பிரமன் ஸ்ருஷ்டிக்கிருன் என்பதும் காட்டப்படுகிறது.

"ஆப்$_3$ரஹ்மபு$_4$வநால் லோகா: புநராவர்த்திந:" என்று சென்ற (16வது) ஶ்லோகத்தில் ப்$_3$ரஹ்மலோகமே அழிவதாகக் கூறுகையாலே, இங்கு பிரமனின் ஒவ்வொரு நாளிலும் நடக்கும் ஸ்ருஷ்டி ப்ரளயங்களைச் சொன்னது, ஶ்ருதி முதலான எல்லா ஶாஸ்த்ரங்களிலும் ப்ரஸித்$_3$த$_4$மான ப்ராக்ருத ஸ்ருஷ்டி ப்ரளயங்களுக்கும் உபலக்ஷணமென்றும், அதனுல் பிரமனின் ஸத்யலோகமும் அழிவுள்ளதே என்று காட்டுவதாகவும் கொள்ளவேண்டும். இப்படி உபலக்ஷணமுறையாலே இவ்விஷயம் உணர்த்தப்படுவதாகக் கொள்ளாமல், 'ராத்ர்யாக$_3$ம'

त्वाक्षरतमःपर्यन्तं मय्येव प्रलीयन्ते। एवं मद्व्यतिरिक्तस्य कृत्स्नस्य कालव्यवस्थया मत्त उत्पत्तेर्मयि प्रलयाच्चोत्पत्तिविनाशयोगित्वमवर्जनीय-

---

ஶப்₃த₃மே பிரமனின் ஆயுளான நூறு வருஷங்களின் இறுதியில் ஆயிரக்கணக்கான யுக₃ங்களுக்குப் பின்பு ஏற்படும் கடைசி ராத்ரியை உணர்த்தி. "ப்ருதி₂வ்யப்ஸு ப்ரலீயதே, ஆபஸ்தேஜஸி லீயந்தே.... மஹாநவ்யக்தே லீயதே. அவ்யக்தமக்ஷரே லீயதே, அக்ஷரம் தமஸி லீயதே, தம: பரே தே₃வ ஏகீப₄வதி" [ஸுபா₃ல 2] [பூ₄மி நீரில் லயமடைகிறது; நீர் நெருப்பில் லயமடைகிறது; ...மஹான் அவ்யக்தத்தில் லயமடைகிறது; அவ்யக்தம் அக்ஷரத்தில் லயமடைகிறது; அக்ஷரம் தமஸ்ஸில் லயமடைகிறது; தமஸ்ஸு பரமாத்மாவிடம் ஒன்றுகிறது.] என்று அந்த ராத்ரியில் நடைபெறுவதாக ஶாஸ்த்ரங்களில் முழங்கப் படும் மஹாப்ரளயத்தை உணர்த்தி, அதன்மூலம் ப்₃ரஹ்மலோக மீருகவுள்ள எல்லாவுலகங்களின் அழிவும், பிரமனின் அழிவும் நேரேயே உணர்த்தப்படுவதாகவும் கொள்ளலாம். "நிஜேந தஸ்ய மாநேந ஆயுர் வர்ஷஶதம் ஸ்ம்ருதம் । தத் பராக்₂யம் தத₃ர்த்த₄ம் ச பரார்த்த₄மபி₄தீ₄யதே ॥" [வி-பு 1-3-5] [பிரமனின் இராப்பகல்களின் அளவு கொண்டு, அவனுக்கு நூறு வருடம் ஆயுளாகச் சொல்லப்படுகிறது. அதுவே 'பரம்' எனப்படும் காலம்; அதன் பாதியே 'பரார்த்த₄ம்' எனப்படுகிறது.] என்று இவ்விஷயம் ஸ்ரீ விஷ்ணுபுராணத்திலும் சொல்லப்பட்டது. முன் எடுத்த ஶ்ருதியில் ப்ருதி₂வீ முதலான அண்ட₃காரணமான பூ₄தங்களே லயமடைவதாகக் கூறப்படுகையில், அண்ட₃த்தினுள்ளிருக்கும் ஸத்யலோகம் முதலானவை அழியக் கூடியவை என்பது சொல்லாமலே விளங்கும். அந்த ஶ்ருதியில் 'தமஸ்' எனப்படும் மூலப்ரக்ருதிக்குப் பரதெய்வத்துடன் ஏகீப₄ாவம் (ஒன்றுதல்) கூறப்பட்டது. அப்பரதெய்வம் தானே என்பதை "அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜக₃த: ப்ரப₄வ: ப்ரளயஸ்தத₂ா" [7-6] [நானே எல்லாவுலகிற்கும் ஸ்ருஷ்டி ஸம்ஹாரகாரணம்] என்று கண்ணன் உணர்த்தினன். இந்தக் கடைசி ஶ்லோகத்தில் சொல் லப்பட்ட அஹராக₃மஶப்₃த₃மும் ராத்ர்யாக₃மஶப்₃த₃மும் பிரமனின் முதற்பகலையும் உணர்த்தி, "யோ ப்₃ரஹ்மாணம் வித₃த₄ாதி பூர்வம்" [ஶ்வே 6-18] [எவன் பிரமனை முதலில் படைக்கிறனோ] "ஏகோ ஹவை நாராயண ஆஸீத் ந ப்₃ரஹ்மா நேஶாந:" [மஹோபனிஷத் 1-1] [நாராயணன் ஒருவனே இருந்தான்; பிரமனுமில்லை, சிவனுமில்லை] "நாராயணாத் ப்₃ரஹ்மா ஜாயதே" [நாராயணோபநிஷத்] [நாராயணனிடமிருந்து பிரமன் உண்டாகிறான்] முதலான

मित्यैश्वर्यगतिं प्राप्तानां पुनरावृत्तिरपरिहार्या। मामुपेतानां तु न पुनरावृत्तिप्रसङ्गः॥ १७—१९॥

॥ भा ॥ अथ कैवल्यं प्राप्तानामपि पुनरावृत्तिर्न विद्यत इत्याह—

परस्तस्मात्तु भावोऽन्योऽव्यक्तोऽव्यक्तात्सनातनः।
यस्स सर्वेषु भूतेषु नश्यत्सु न विनश्यति॥ २०॥

अव्यक्तोऽक्षर इत्युक्तस्तमाहुः परमां गतिम्।
यं प्राप्य न निवर्तन्ते तद्धाम परमं मम॥ २१॥

20. பரஸ்தஸ்மாத்து ப₄ாவோऽந்யோऽவ்யக்தோऽவ்யக்தாத் ஸநாதந: ।
யஸ்ஸ ஸர்வேஷு பூ₄தேஷு நஶ்யத்ஸு ந விநஶ்யதி ॥

21. அவ்யக்தோऽக்ஷர இத்யுக்தஸ்தமாஹு: பரமாம் க₃திம் ।
யம் ப்ராப்ய ந நிவர்த்தந்தே தத்₃த₄ாம பரமம் மம ॥

---

ஶ்ருதிகளில் சொல்லப்படும் பிரமன் முதலானோரின் ஸ்ருஷ்டியும், மறுபடியும் அவர்களின் ப்ரளயமும் தொடர்ந்து நடப்பதையும் காட்டுகின்றன. இவ்வண்ணமாக இந்த லீலாவிபூ₄தியிலுள்ள எல்லாப்பொருள்களுக்கும் காலவரம்பு உள்ளதாகையால், அவை அழிபவையென்றும், தான் ஒருவனே அழியாமலிருப்பவனென்றும், தன்னிடமிருந்து உண்டாகி அழியும் எல்லா உலகங்களுக்கும் உத்பத்தி விநாஶங்கள் தவிர்க்கமுடியாதாகையால் ஐஶ்வர்ய க₃தியை அடைந்தவர்களுக்குப் புநராவ்ருத்தி தவிர்க்கவொண்ணாதென்றும், தன்னையடைந்தவர்களுக்குப் புநராவ்ருத்தியேற்பட இடமேயில்லை என்றும் உணர்த்துவதன்மூலம் சென்ற (16-வது) ஶ்லோகத்தை விவரித்தானாயிற்று. "நித்யம் ஹி நாஸ்தி ஜக₃தி பூ₄தம் ஸ்த₂ாவரஜங்க₃மம் । ருதே தமேகம் புருஷம் வாஸுதே₃வம் ஸநாதநம் ॥" [ப₄ாரதம் - மோக்ஷ த₄ர்மம் 347-32] [பழையோனாய், புருஷனான வாஸுதே₃வன் ஒருவனைத் தவிர, இவ்வுலகிலுள்ள அசைவதும், அசையாததுமான எப்பொருளும் நித்யமானதல்ல.] என்று இவ்விஷயம் மஹாப₄ாரதத்திலும் சொல்லப்பட்டது. (பார்த்த₂) என் அத்தைபிள்ளையான நீ அழியும் ப₂லனான ஐஶ்வர்யத்தை விட்டு, அழியாப்ப₂லனான என்னைப் பற்றவேண்டாமோ? என்று கருத்து. 17,18,19.

**தஸ்மாத் அவ்யக்தாத்**—'அவ்யக்தம்' எனப்படும் அந்த அசேதன தத்துவத்தைக்காட்டிலும், **பர:**—மேலானவனுய், **அந்ய:** — வேறுவகைப்பட்டவனுயிருக்கும், **ப₄ாவ:** — பொருளாய், **அவ்யக்த:**—(ஒரு ப்ரமாணத்தாலும் முழுவதும்) அறியவொண்ணுதவனுய், **ஸநாதந:** — நித்யனுய், **ஸர்வேஷு பூ₄தேஷு நஶ்யத்ஸு ந விநஶ்யதி ய:** — காரணகார்யப் பொருள்களோடுகூடிய எல்லா மஹாபூ₄தங்களும் அழியும் போது (அவற்றினுள்ளிருந்த காலத்திலும்) அழியாதவனுக எவனிருக்கிருனே, **ஸ:**—அந்த முக்தஜீவனே, **அவ்யக்த: அக்ஷர: இத்யுக்த:**—'அவ்யக்தம்' என்றும் 'அக்ஷரம்' என்றும் சொல்லப்படுகிருன். **தம்** — அவனை, **பரமாம் க₃திம்** — மேலான ப்ராப்யமாக, **ஆஹு:** — ( கைவல்யார்த்தி₂கள் ) கூறுகிருர்கள். **யம்**—யாதொரு அந்த முக்தஸ்வரூபத்தை, **ப்ராப்ய**—அடைந்தபின்பு, **ந நிவர்த்தந்தே**—(கைவல்யார்த்தி₂கள்) புநராவ்ருத்தியடைவதில்லையோ, **தத்**—அந்த முக்தஸ்வரூபம், **மம**—என்னுடைய, **பரமம் த₄ாம**—மேலான நியமன ஸ்தா₂னமாகும்.

---

**19. எல்லாப் பொருளு மிறுதியினைக் கூடியே**
**நில்லாத காலத்து நிற்குமதாய்ச்—சொல்லார்ந்த**
**வக்கரமாய் நின்றபொரு ளாங்கசித்தின் மேலாகி**
**மிக்கபெரு நுண்மையதாம் வேறு**

**20. நுண்ணேர்கொ ளக்கரமா நூலுரைக்கு மப்பொருளை**
**யெண்ணேர் பரமகதி யென்றுரைப்பர்—நண்ணியது**
**மீளா ரெனக்கதுதான் மேலா யொளிசிறந்து**
**மாளா விருப்பிடமா மற்று.**

**எல்லா பொருளும்** — காரணகாரியங்களோடு கூடிய எல்லா மஹாபூ₄தங்களும், **இறுதியினை கூடியே**—அழிவை அடைந்து, **நில்லாத காலத்து** — நிலைநில்லாமற்போகும் ப்ரளயகாலத்தில், **நிற்குமதாய்** — (அவற்றினுள்ளிருக்கும் போதும்) அழியாததாய், **சொல்லார்ந்த அக்கரமாய்** —

'அக்ஷரம்' என்று ஶாஸ்த்ரங்களில் சொல்லப்படுவதாய், **ஆங்கு அசித்தின் மேலாகி**—முற்கூறிய அசேதனப்பொருளைக் காட்டிலும் மேலானதாய், **வேறு(ஆகி)**—வேறுவகைப்பட்டதாய், **மிக்க பெரு நுண்மையதாம்**—மிகுந்த பெருமைபெற்று (ஒரு ப்ரமாணத்தாலும் முழுவதும் அறியமுடியாதபடி) ஸூக்ஷ்மமானதாயிருக்கும் (முக்தஸ்வரூபம்.)

**நுண் நேர் கொள் அக்கரமா**—நுண்ணியதாகையாலே 'அவ்யக்தம்' என்றும், 'அக்ஷரம்' என்றும். **நூல் உரைக்கும் அப்பொருளை** — ஶாஸ்த்ரங்கள் கூறும் அந்த முக்தஸ்வரூபத்தை, **எண்ணேர்**—(அதை) உபாஸிப்பவர்கள், **பரமகதி என்று உரைப்பர்** — மேலான ப்ராப்யம் என்று கூறுவர். **அது நண்ணி மீளார்** — அதை அடைந்தபின் (அவர்கள்) வேறு பயனை அடையார். **மற்று**—மேலும், **மேலா ஒளி அதுதான்**—மேலான ஒளியாயிருக்கும் அந்த முக்தஸ்வரூபமானது, **எனக்கு**—எனக்கு, **மாளா இருப்பிடமாம்**—அழியாத நியமன ஸ்த₂ானமாகும்.

---

20,21. சென்ற ஐந்து ஶ்லோகங்களில்—தனக்கு அழிவில்லாமையாலே, தன்னையடைந்தவர்களுக்கு ப₄க₃வத₃நுப₄வமழிந்து ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவருதலாகிற புநராவ்ருத்தியில்லை என்றும், 'ப்₃ரஹ்மாவின் லோகம் ஈருன ஐஶ்வர்யங்கள் அனைத்தும் அழிவுள்ளவையாகையாலே, அவற்றை அடைந்தவர்களுக்கு அவ்வைஶ்யர்யாநுபவம் அழிந்து மற்றோரநுப₄வத்திற்குச் செல்லுதலாகிற புநராவ்ருத்தி உண்டு' என்றும் காட்டினன். இவ்விரண்டு ஶ்லோகங்களிலும்—ப்ரக்ருதியினின்றும் நீங்கித் தன் ஆத்மாவை அநுப₄விக்கும் கைவல்யார்த்தி₂க்கும், அவ்வனுப₄வத்திற்கு அழிவில்லையாகையாலே, மற்றோரனுப₄வத்திற்குச் செல்லுதலாகிற புநராவ்ருத்தி இல்லை என்று காட்டுகிறான். இங்கு புநராவ்ருத்தி ஶப்₃த₃த்திற்கு எல்லா ஸ்த₂லங்களுக்கும் பொருத்தமான லக்ஷணத்தை ஆராயவேண்டும். ''புநராவர்த்தந:— விநாஶந'' என்று பா₄ஷ்யகாரர் 19-வது ஶ்லோகத்தின் பா₄ஷ்யத்தில் அருளிச்செய்கையால், ஓரநுப₄வமழிந்து, அங்கிருந்து, கீழ் அல்லது மேலுலகங்களுக்குச் செல்லும் எல்லாவிடங்களிலும் புநராவ்ருத்தி ஶப்₃த₃ப்ரயோக₃ம் செய்யலாம் என விளங்குகிறது. ''இந்த்₃ரலோகாத் பரிப்₄ரஷ்டோ மம கே₃யபராயண: |

ப்ரமுக்த: ஸர்வஸம்ஸாரை: மம லோகம் ச கச்சதி ||'' [வராஹ புராணம் 139-98; கைசிகமாஹாத்ம்யம் - 5] [இந்த்ரலோகத்திலிருக்குமளவும் என்னைப் பாடுவதையே தொழிலாகக்கொண்டவனாய், அங்கிருந்து நழுவியபின்பு, ஸம்ஸாரஸம்பந்தமனைத்திலிருந்தும் விடுபட்டு என்னுடைய உலகத்தை அடைகிறான்.] என்று புராணத்திலும், ''ப்ரச்யுதோ வா ஏஷோऽஸ்மால்லோகாதாகதோ தேவலோகம்'' [யஜுர்வேதம் 6-1-1-5] [இவ்வுலகிலிருந்து நழுவி தேவலோகத்தை வந்தடைந்தவன்] என்று ஶ்ருதியிலும் கீழுலகிலிருந்து மேலுலகம் செல்வதும் ப்ரம்ஶம், என்றும், ச்யுதி என்றும் நழுவுதலாகக் குறிக்கப்பட்டதுபோலே, அழியும் உலகங்களில் ஓரனுபவத்தை இழந்து, அதைவிடத் தாழ்ந்ததாகவோ, உயர்ந்ததாகவோ இருக்கும் மற்றொருலகிற்குச் செல்லும் எல்லா இடங்களிலும் புநராவ்ருத்தி ஶப்தம் இங்கு பிரயோகிக்கப்படுவதாகக் கொள்ளவேண்டும். இப்படிக்கொள்ளாவிடில், பலவிதமான ஏற்றத்தாழ்வுகளையுடைய ஐஶ்வர்யகதிகள் அனைத்தும் புநராவ்ருத்தியுள்ளவை என்று முன் ஶ்லோகங்களில் கண்ணன் அருளிச்செய்ததை நிரூபிக்கவொண்ணாமற்போய்விடும். ஆக, கைவல்யார்த்திக்குப் புநராவ்ருத்தியில்லை என்று இங்கு கூறப்படுவதிலிருந்து, அவன் தன் அநுபவத்தை இழந்து அதிலிருந்து கீழான ஐஶ்வர்யானுபவத்திற்கோ, அதைக் காட்டிலும் உயர்ந்த பகவதநுபவத்திற்கோ செல்வதில்லை எனத் தேறுகிறது. ''ஏடுநிலத்தில் இடுவதன்முன்னம்......வரம்பொழிவந்து ஒல்லைக் கூடுமினோ'' [திருப்பல் 4] என்னும் பாசுரத்தில் இவர்களுக்குப் பிற்காலத்திலும் என்றும் பகவதநுபவமில்லாமற்போய்விடும் என்பதைக் கருதியே, ''ஸூக்ஷ்மஶரீரம் கழிவதற்குமுன் 'ஆத்மாவைமாத்திரம் அநுபவிப்பது' என்னும் வரம்பை விட்டு வந்துசேருங்கள்'' என்றார் பெரியாழ்வார். ''அற்றது பற்றெனில் உற்றது வீடுயிர்'' [திருவாய் 1-2-5] என்று விஷயங்களில் பசையற்றால் கைவல்ய மோக்ஷம் கிடைத்துவிடும் என்ற நம்மாழ்வார் ''செற்றது மன்னுறில் அற்றிறை பற்றே'' [திருவாய் 1-2-5] என்று 'அந்த மோக்ஷத்தை விட்டு ஸ்வரூபப்ராப்தமான பயனைப்பெற விரும்பியிருந்தால் ஈஶ்வரனை போக்யமாகப்பற்றி விஷயங்களில் பற்றை அறுத்துக்கொள்ளுங்கள்' என்றார். மேலும், ''தானே தானேயானாலும்'' [திருவாய் 8-10-2] என்னும் பாசுரத்தில் இருமுறை ''தானே'' என்று அருளுவதன் மூலம் இவனுக்கு ஐஶ்வர்யானுபவமும், பரமாத்மாநுபவமும் என்றுமில்லை எனக் காட்டினார். ''குறுகாநீளா இறுதிகூடா எனையூழி சிறுகா பெருகா அளவிலின்பம்'' [திருவாய் 6-9-10] என்னும் பாசுரத்தில் இக் கைவல்யாநுபவத்திற்கு எத்தகைய அழிவுமில்லை என்று காட்டினார்.

॥भा॥ तस्मादव्यक्तात्—अचेतनप्रकृतिरूपात् पुरुषार्थतया परः—उत्कृष्टो भावोऽन्यः—ज्ञानैकाकारतया तस्माद्विसजातीयः, अव्यक्तः—

"யாதுமில்லை மிக்கதினில் என்றென்றது கருதிக் காதுசெய்வான் கூதை செய்து கடைமுறைவாழ்க்கையும் போம்" [திருவாய் 9 1.9] என்னும் பாசுரத்தில், "கடைமுறைவாழ்க்கையும்" என்ற உம்மை யோடு கூடிய பதத்தாலே, இவனுக்கு ஸம்ஸாரவாழ்க்கையும், ப₄க₃வத₃நுப₄வவாழ்க்கையுமாகிற இரண்டும் போய்விடுகிறது என்று காட்டினர். இவர்கள் ப₄க₃வானிடமிருந்து என்றுமே (அநுப₄வமில் லாமையால்) பிரிந்துவிடுகிறுர்கள் என்பது தோற்ற "விடைகொள் வார்" [முதல் திருவந்தாதி 26] என்று இவர்களுக்குப் பெயர் வைத்தார் பொய்கையாழ்வார். இத்தகைய பிரிவு இவர்களுக்கு இருக்கையால் இந்த மோக்ஷம் ஆத்மவிநாஶதுல்யம் என்பதை "இறப்பதற்கே எண்ணாது" [திருநெடு 1] என்றவிடத்திலே திருமங்கையாழ்வார் காட்டினர். இங்கு கீ₃தையிலும், பா₄ஷ்யத் திலும் இதை ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄ம் நீங்கப்பெற்ற மோக்ஷமாகக் கூறுகையாலும், மோக்ஷத்தில் ஸாத₄நாநுஷ்ட்டா₂நம் செய்து மேலே செல்ல வழியில்லையாகையாலும் இவ்வநுப₄வம் நித்யம் என்பது கீ₃தையையும், பா₄ஷ்யத்தையும் ஸேவிப்பார்க்கே தெளிவாக விளங்கும், இவ்விரண்டு ஶ்லோகங்களிலும் அழிவின்மையையிட்டே அபுநராவ்ருத்தியை நிரூபித்திருப்பதும் இதை வலியுறுத்தும். இவ் விரண்டு ஶ்லோகங்களும் கைவல்யார்த்தி₂யைப் பற்றியவையே என் பதை எப்படி நிர்ணயிப்பது? எனில்: 15,16-வது ஶ்லோகங்களில் ப₄க₃வானை அடைந்தவர்களுக்குப் புநராவ்ருத்தியில்லை என்னும் விஷயம் சொல்லப்பட்டது. 16-முதல் பத்தொன்பதாவது ஶ்லோக மீருக ஐஶ்வர்யார்த்தி₂க்குப் புநராவ்ருத்தியுண்டு என்று கூறப்பட்டது. இனி, இந்த ப்ரகரணத்தில் ப்ரஸ்தாபிக்கப்படும் மூவகை அதி₄காரி களில் எஞ்சிநிற்கும் கைவல்யார்த்தி₂யைப்பற்றியதாகவே இவ்விரு ஶ்லோகங்களைக்கொள்வது உசிதம். இங்கு 'அவ்யக்தத்தைக்காட்டிலும் மேலானவன்' என்றும், 'எல்லா பூ₄தங்களும் நஶிக்கையில் நஶியா மலிருப்பவன்' என்றும் கூறப்படுபவன் ஜீவனாகவேயிருக்கமுடியும். இரண்டாமத்தியாயத்திலும், "அபரேயமிதஸ்த்வந்யாம்" [கீ₃தை 7-5] முதலானவிடங்களிலும் இப்பெருமைகள் ஜீவனுக்கே சொல்லப் பட்டுள்ளன. ஆகையால், இவ்விரு ஶ்லோகங்களும் ஜீவனுடைய நிஷ்க்ருஷ்டஸ்வரூபாநுப₄வமாகிற கைவல்யாநுப₄வத்தைப் பற்றிய வையேயாகவேண்டும்.

केनचित्प्रमाणेन न व्यज्यत इत्यव्यक्तः, स्वसंवेद्यस्वासाधारणाकार इत्यर्थः; सनातनः—उत्पत्तिविनाशानर्हतया नित्यः, यस्सर्वेषु विय-

---

(தஸ்மாத் அவ்யக்தாத் பர:) முன் ஶ்லோகங்களில் அழித்து அழித்துப் படைக்கப்படுவதாகச் சொல்லப்பட்ட அசேதனமான மூல ப்ரக்ருதியைக் காட்டிலும் மேலானவன். அவ்யக்தம் எனப்படும் மூல ப்ரக்ருதியைப் பற்றியே முன் ஶ்லோகங்களில் ப்ரஸ்தாவம் வந்தி ருக்கையால், இங்கு 'வ்யக்தாத்' என்று பதமும் பிரிக்காமல், 'அவ்யக்தாத்' என்று பதமும் பிரித்து, அந்த மூலப்ரக்ருதியைச் சொல்லுவதாகவே பொருள்கொள்ளவேண்டும். (பர: அந்ய: பாவ: அவ்யக்த:) மேலானவனும், வேறுபடிப்பட்டவனுமான பொருள் அவ் யக்தம் எனப்படும் முக்தஜீவன். 'தமாஹு: பரமாம் கதிம்' என்று புருஷார்த்தத்தைச் சொல்லுமிடமாகையால், அவ்யக்தம் எனப்படும் அசேதனமான மூலப்ரக்ருதியைக் காட்டிலும் மேலான புருஷார்த்தமா யிருப்பவன் முக்தஜீவன் என்பதை 'பர:' என்னும் பதமும். அசேதன மான அதைக் காட்டிலும் மிகவும் வேறுபட்ட சேதநஜாதியைச் சேர்ந்தவன் என்பதை 'அந்ய:' என்னும் பதமும் காட்டுகின்றன வாகையாலே இப்பதங்களிடையே புநருக்தியில்லை. (அவ்யக்த:) ஒரு ப்ரமாணத்தாலும் முழுவதும் அறிய முடியாதவனாய், தனக்குத் தானே அநுபவித்து அறியத்தக்க தனித்தன்மைகளை உடையவனா யிருக்கும் ஜீவன். அடுத்த ஶ்லோகத்தில் இவனையே அநுவதிக்கும் போது "அவ்யக்தோऽக்ஷர இத்யுக்த:" என்கையாலும், அறிதற் கரிய ஜீவஸ்வரூபத்தை 'வ்யக்த:' [அறிதற்கெளியவன்] என்பது பொருந்தாதாகையாலும், இங்கும் 'வ்யக்த:' என்று பதமும் பிரிக் காமல் 'அவ்யக்த:' என்றே பதமும் பிரிக்கவேண்டும். ப்ரத்யக்ஷத் தாலும், அநுமானத்தாலும், ஶப்தப்ரமாணமான ஶாஸ்த்ரத்தாலும் அறியத்தக்க ஜீவனை 'அறியவொண்ணாதவன்' என்னும் பொருளுள்ள அவ்யக்தஶப்தத்தால் குறிப்பது எப்படி ? அறியவே முடியாதவன் எனில் ஆகாஶத்தாமரைபோல் இல்லாத பொருளாகவேண்டிவருமே எனில்: இவனுடைய ஏகத்வம் (ஒருவனாயிருக்கை), நித்யத்வம் (நித்யனாயிருக்கை), ஜ்ஞாநத்வம் (ஞானமாயிருக்கை) முதலான தனித்தன்மைகளைத் தனக்குத் தானே அநுபவித்து அறியலாமே யொழிய, ஒரு ப்ரமாணத்தால் முழுவதும் உணர்ந்துவிடமுடியாது என்று கருத்தாகையாலே 'அவ்யக்த:' என்னக் குறையில்லை. (ஸநாதந:) இரண்டாம் அத்தியாயத்தில் கூறப்பட்டபடி உத்பத்தி (உண்டாவது), விநாஶம் (அழிவு) ஆகியவற்றுக்கு யோக்யதையே இல்லாததால் என்றுமிருப்பவன். (ய: ஸர்வேஷு பூதேஷு நஶ்

दादिभूतेषु सकारणेषु सकार्येषु विनश्यत्सु तत्रतत्र स्थितोऽपि न विनश्यति ; सोऽव्यक्तोऽक्षर इत्युक्तः ※ ये त्वक्षरमनिर्देश्यमव्यक्तं पर्युपासते (१२. ३) ※ कूटस्थोऽक्षर उच्यते (१५. १६) इत्यादिषु ;

---

யத்ஸ ந விநஶ்யதி) ஆகாஶம் முதலான எல்லா பூ₄தங்களும், காரணங்களான மஹான் முதலானவற்றேடும், கார்யப்பொருள்களான உலகங்களோடும் அழியும்போது, அவற்றினுள்ளிருந்தபோதிலும் எவன் அழிவதில்லையோ. 'ய:' என்று ஜீவனைக்குறிக்கையால், பூ₄த ஶப்₃த₃ம் ஜீவராசிகளைக் குறிக்காமல், ஆகாஶம் முதலான பஞ்ச மஹாபூ₄தங்களைக் குறிக்கிறது. 'ஸர்வேஷு' என்று—அந்த பூ₄தங்களின் காரணங்களான மஹான் முதலானவற்றையும், கார்யங்களான உலகங்களையும் குறிக்கிறது. உலகில் பொதுவாக எள் முதலான பொருள்கள் தீ முதலானவற்ருல் அழியும்போது, அவற்றினுள்ளிருக்கும் எண்ணெ முதலானவையும் அழிவதைக் காண்கிறேம். இங்கு அப்படியல்லாமல், இவ்வழியும் பொருள்களின் உள்ளிருந்தபோதிலும் ப்ரளயகாலத்தில் ஜீவர்கள் அழிவதில்லை என்று கருத்து. இப்படி ப்ராக்ருதப் பொருள்களினுள்ளிருக்கும் காலத்திலேயே, அவை அழியும்போதும் அழியாத இவன், ப்ரக்ருதிமண்ட₃லத்தைத் தாண்டிச் சென்று ஸ்வரூபவிளக்கம்பெற்ற காலத்தில் — அதாவது கைவல்யஸ்த₂ானத்தில் — அழிவதற்கு இடமேயில்லை என்பது விளங்கும் என்பது கருத்து. அடுத்த ஶ்லோகத்தில் "யம் ப்ராப்ய ந நிவர்த்தந்தே" என்று கைவல்ய மோக்ஷத்தை அடைந்தவனுக்கும், அவ்வநுப₄வமழிந்து மற்றேரனுப₄வத்திற்குச் செல்லுதலாகிற புநராவ்ருத்தி கிடையாது என்று கூறியிருப்பதற்கு இது காரணமாகும். (ஸ: அவ்யக்தோऽக்ஷர இத்யுக்த:) அந்த ஸ்வஸ்வரூப விளக்கம் பெற்ற முக்தஜீவனே 'அவ்யக்தம்' என்றும், 'அக்ஷரம்' என்றும் என்னல் சொல்லப்படுகிருன். எங்கே? எனில்; "யே த்வக்ஷரம் அநிர்த்தே₃ஶ்யம் அவ்யக்தம் பர்யுபாஸதே" [கீ₃தை12-3] ['தே₃வர்' முதலான தே₃ஹத்தைக்குறிக்கும் ஶப்₃த₃ங்களால் வழங்கத்தகாதவனும், ஆகையால் கண்முதலான இந்திரியங்களால் அறியப்படாதவனும் (அவ்யக்தனும்), ஞானத்திலும் ஏற்றத்தாழ்வின்மையால் 'அக்ஷரம்' எனப்படுபவனுமான (ப்ரக்ருதியினின்றும் நீங்கிய) கேவலாத்ம ஸ்வரூபத்தை எவர்கள் உபாஸிக்கிருர்களோ] "கூடஸ்தோ₂ऽக்ஷர உச்யதே" [கீ₃தை 15-16] [கூடஸ்த₂ன் எனப்படும் முக்தாத்மா 'அக்ஷரன்' எனப்படுகிருன்] முதலானவிடங்களில் சொல்லப்படுகிருன்

तं वेदविदः परमां गतिमाहुः। अयमेव * यः प्रयाति त्यजन् देहं स याति परमां गतिम् (८. १३) इत्यत्र परमगतिशब्दनिर्दिष्टोऽक्षरः

---

என்று கருத்து. இவ்விடங்களில் 'அக்ஷரம்' எனப்படுபவன் முக்த ஜீவனே என்பது அந்தந்த ப்ரகரணங்களிலேயே விளங்கும். ஆகை யாலேயே இவ்வத்தியாயத்திலும் "அக்ஷரம் ப்₃ரஹ்ம பரமம்" என்று மூன்றும் ஶ்லோகத்திலும், "அவ்யக்தோऽக்ஷர:" என்று இந்த ஶ்லோகத்திலும் அக்ஷர ஶப்₃த₃த்தால் கூறப்படுபவன் ப்ரக்ருதியி னின்றும் நீங்கிய முக்தபுருஷனென்று கொள்வதே தகும். பின்வரும் அத்தியாயத்தில் "யே த்வக்ஷரம்...அவ்யக்தம்" [12-3] என்று சொல்லப்போவதை "அவ்யக்தோऽக்ஷர இத்யுக்த:" என்று இங்கு எப்படி அநுவதி₃க்க முடியும்? எனில்: உபப்₃ரும்ஹணமான அந்த ஶ்லோகத்திற்கு மூலமான ஶ்ருதியைத் திருவுள்ளத்திற்கொண்டு அநுவதி₃க்கலாம். அல்லது "நிஹதா: பூர்வமேவ" [கீ₃தை 11-33] என்று தன் ஸங்கல்பத்தால் எதிரிகள் அனைவரும் ஏற்கனவே அழிக் கப்பட்டு விட்டதாகக் கூறியதுபோல், தன் ஸங்கல்பத்தால் கீ₃தை முழுவதையும் ஏற்கனவே ஸித்₃த₄ப்படுத்திக்கொண்டு சொல்லுவதாக வும் கொள்ளலாம். (தமாஹு: பரமாம் க₃திம்) அந்த முக்த ஜீவனையே மேலான ப்ராப்யமாகக் கேவலாத்மாநுப₄வத்தை விரும்பும் வேத₃வித்துக்கள் கூறுகிறார்கள். ஐஶ்வர்யார்த்தி₂க்கோ, ப₄க₃வானை விரும்புமவனுக்கோ இவன் பரமப்ராப்யனல்லாமையாலே, "யத₃க்ஷரம் வேத₃விதே₃ா வத₃ந்தி" [கீ₃தை 8-11] என்னும் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட கைவல்யார்த்தி₂களான வேத₃வித்துக்களே, இங்கு "ஆஹு:" [கூறுகிறார்கள்] என்னும் பயனிலைக்கு எழுவாயா யிருக்கத்தக்கவர்கள். இந்த ஆத்மகைவல்யத்திற்கு மேற்பட்ட ப₄க₃வத₃நுப₄வமிருக்க, இதை 'பரமா க₃தி:' [தனக்கு மேலில்லாத ப்ராப்யம்] என்னலாமோ? எனில்,—(தமாஹு:) அவர்கள் இதையே தங்களுக்கு ஒப்பற்ற ப்ராப்யமாக நினைத்துக் கூறுகிறார்களாகையாலே, அவர்கள் நினைவாலே இது ஒப்பற்ற ப்ராப்யமாகிறது. அடியார்கள் நினைவறிந்து காரியம் செய்பவனாகையாலே, "ஸ யாதி பரமாம் க₃திம்" [கீ₃தை 8-13] என்று அவர்கள் நினைவாலே பரமக₃தி யான இந்த மோக்ஷத்தையே அவர்களுக்கு அளிப்பதாகக் கண்ணனும் கூறுகிறான் என்பது காணத்தக்கது. 'பரமாம் க₃திம்' என்னும் ஶப்₃த₃ம் இரண்டு ஶ்லோகங்களிலும் பிரயோகி₃க்கப்பட்டிருப்பதி லிருந்தும், அங்கு சொல்லப்பட்ட கைவல்ய நிஷ்டர்களைப் பற்றியதே இவ்விரு ஶ்லோகங்களும் என்பது விளங்கும். இப்படி 'பரமா க₃தி:'

प्रकृतिसंसर्गवियुक्तस्वरूपेणावस्थित आत्मेत्यर्थः। यमेवंभूतं स्वरूपेणावस्थितं प्राप्य न निवर्तन्ते; तन्मम परमं धाम— परं नियमनस्थानम्।

---

என்னும் ஶப்3த3த்தைப் பிரயோகி3த்தது அவர்கள் நினைவாலேயே யொழியத் தன் நினைவாலேயன்று; தன் நினைவாலே ஜீவனுக்கு ஒப்பற்ற ப்ராப்யமாயிருப்பது தன்னையடைவதே என்பதை—பதினைந்தாம் ஶ்லோகத்தில் ''பரமாம் ஸம்ஸித்3தி4ம்'' என்னும் பத3த்தைப் பிரயோகி3ப்பதன்மூலம் காட்டினன் என்பதை அந்த ஶ்லோகத்தின் வியாக்கியானத்திலேயே தெளிவுபடுத்தினேம். ''யத3க்ஷரம்'' [8-11] என்று அங்கும், ''அவ்யக்தோऽக்ஷர:'' என இங்கும் ஜீவனுடைய முக்தஸ்வரூபத்தைப்பற்றியே பேசியிருக்கையாலும், இரண்டிடங்களிலும் அதைப் பரமக3தி (பரமப்ராப்யம்) என்கையாலும், ப்ரக்ருதி ஸம்ஸர்க்க3ம் அடியோடு நீங்கப்பெற்று, தன் ஸ்வரூபவிளக்கம்பெற்ற ஜீவஸ்வரூபத்தை அடைவதே இங்கு இக்கைவல்யார்த்தி2க்குப் பரம ப்ராப்யம் என விளங்குகிறது இந்த ப்ரக்ருதிமண்ட3லத்திலிருக்கும் வரையில் இவனுக்கு ஸூக்ஷ்மஶரீரம் கழியாதாகையாலும், இந்த ப்ரக்ருதிமண்ட3லத்திற்கு மேலெல்லையாகவும் பரமபத3த்திற்குக் கீழெல்லையாகவுமிருக்கும் விரஜாநதி3யில் குளிக்கும்போதே ஜீவனுக்கு ஸூக்ஷ்மஶரீரம் கழிகிறதென்பது ஶாஸ்த்ரஸித்3த4மாகையாலும், இக்கைவல்யாநுப4வம் இவனுக்கு விரஜைக்கு அக்கரையில் நித்ய விபூ4தியிலுள்ளதொரு ஸ்த2ானத்திலேயே ஏற்படுகிறதென விளங்கும்.

''விரஜாபரமவ்யோம்நோர் ஹ்யந்தரம் கேவலம் ஸ்ம்ருதம் ।
தத் ஸ்த2ாநமுபபே4ாக்தவ்யமவ்யக்தப்3ரஹ்மலேவிநாம் ॥
ஸ்வாத்மஜாநந்த3ஸுக2த3ம் கேவலம் பரமம் பத3ம் ।
நி:ஶ்ரேயஸம் ச நிர்வாணம் கைவல்யம் மோக்ஷ உச்யதே ॥''

[பாத்3மபுராணம் (பூனா ஆநந்த3ாஶ்ரமப்பதிப்பு) -
உத்தரக2ண்ட3ம் 256-7.8]

[விரஜாநதி3க்கும், (பரமாத்மாவை அனுப4விப்பவர்கள் வாழும்) பரமபத3த்திற்கும் நடுவிலிருப்பது 'கேவலஸ்த2ானம்' எனப்படுகிறது; 'அவ்யக்தப்3ரஹ்மம்' எனப்படும் ஆத்மாவை அநுப4விப்பவர்கள் அந்த ஸ்த2ானத்திலிருந்தே அநுப4விக்கவேண்டும். தன் ஆத்மாவை அனுப4விப்பதினல் உண்டாகும் இன்பத்தை அளிப்பதாய், (அதனலேயே கைவல்யார்த்தி2களுக்குப்) பரமப்ராப்யமாயிருப்பதாயுள்ளது கேவல ஸ்த2ானம். 'நி:ஶ்ரேயஸம்' 'நிர்வாணம்' என்னும் மோக்ஷத்தைக் குறிக்கும் பத3ங்களால் அக்கைவல்யமோக்ஷமும் கூறப்படுகிறது ]என்று இந்த ஸ்த2ானம் பாத்3மபுராணத்தில் தெளிவாகக் காட்டப்பட்டது.

இப்பாத்₃மபுராணவசனத்தையும் திருவுள்ளத்திற்கொண்டே "முக்தாநாம் பரமா க₃தி:" என்னுமிடத்தில் ஸஹஸ்ரநாமபா₄ஷ்யத்தில், "பரமேதி விஶேஷணேந முக்தாநாமேவ கேஷாஞ்சித₃ர்வாசீநா க₃திர் க₃ம்யதே......கைவல்யலக்ஷணா......ஸம்ஸார பரமபத₃யோர் மத்₄யே தேஷாம் ஸ்தா₂நம் ச" ['பரமா' என்று க₃திஶப்₃த₃த்திற்கு விஶேஷணமிட்டிருக்கையாலே, முக்தர்களிலேயே சிலர்க்குத் தாழ்ந்த க₃தியான கைவல்யமோக்ஷம் உண்டென்று உணர்த்தப்படுகிறது. ஸம்ஸாரத்திற்கும் பரமபத₃த்திற்கும் இடையில் அவர்களுக்கு ஸ்தா₂னமும் சொல்லப்பட்டிருக்கிறது.] என்று ப₄ட்டர் அருளிச்செய்தார் என்றும் தெளிவாக விளங்குகிறது. இப்பாத்₃மபுராண வசனத்தில் 'பரமவ்யோம' ஶப்₃த₃த்தால் குறிக்கப்படுவது ஸம்ஸார மண்ட₃லத்திலுள்ள கார்யவைகுண்ட₂ம் என்று கொண்டுவிடலாமே? எனில்: பாத்₃மபுராணத்தில், "த்ரிபாத்₃விபூ₄தேர் லோகாஸ்து அஸங்க்₂யா: பரிகீர்த்திதா:" [பாத்₃மபுராணம் 256-1] [த்ரிபாத்₃விபூ₄தியிலுள்ள உலகங்கள் கணக்கற்றவையாகச் சொல்லப்படுகின்றன] என்று தொடங்கி, த்ரிபாத்₃விபூ₄தி எனப்படுவதாய் ஶுத்₃த₄ஸத்வமயமான தான லோகத்தை வர்ணிக்கத்தொடங்கி அதில் விரஜையை ஒட்டியிருக்கிற கைவல்ய ஸ்தா₂னத்தை முதலில் முன் எடுத்த ஶ்லோகங்களில் வர்ணித்து,

"மஹாத்மானோ மஹாபா₄கா₃ ப₄க₃வத்பாத₃ஸேவகா: |
தத்₃விஷ்ணோ: பரமம் தா₄ம யாந்தி ப்₃ரஹ்மஸுகப்ரத₃ம் ||"
[256.9,10]

[ப₄க₃வானுக்குத் திருவடிக் குற்றேவல் புரியும் மஹாபா₄க்₃யஶாலிகள் ப்₃ரஹ்மாநுப₄வத்தையளிக்கும் விஷ்ணுவின் பரமபத₃த்தை அடைகிறார்கள்] என்று தொடங்கி அடுத்துள்ள பரமபத₃த்தை வர்ணித்து,

"தந்மத்₄யே நக₃ரீ தி₃வ்யா ஸாऽயோத்₄யேதி ப்ரகீர்த்திதா |
மணிகாஞ்சநசித்ராட்₄ய ப்ராகாரைஸ் தோரணைர் வ்ருதா ||
சதுர்த்₃வார ஸமாயுக்தா துங்க₃கோ₃புர ஸம்வ்ருதா |
சண்ட₃ாதி₃த்₃வாரபாலைஸ்து குமுதா₃த்₃யை: ஸுரக்ஷிதா ||......
தந்மத்₄யேऽஷ்டத₃ளம் பத்₃மம் உத₃யார்க்கஸமப்ரப₄ம் |
தந்மத்₄யே கர்ணிகாயாம் து ஸாவித்ர்யாம் ஶுப₄த₃ர்ஶநே ||
ஈஶ்வர்யா ஸஹ தே₃வேஶஸ் தத்ராஸீந: பர: புமாந் ||"
[256-11, 12, 13...25, 26]

[அழகியவனே ! அந்தப் பரமபத₃த்தின் நடுவில் 'அயோத்₄யா' என்று ஶ்ருதிகளில் சொல்லப்படும் தி₃வ்யநக₃ரம், பொன்னும் மணியும் நிறைந்த ப்ராகாரங்களாலும் மதிள்களாலும், தோரணங்களாலும் சூழப்பெற்றதாய், நாலு வாசல்களுடையதாய், உயர்ந்த கோ₃புரங்களால் சூழப்பெற்றதாய், சண்ட₃ன் முதலான வாயில்காப்போர்களாலும், குமுத₃ன் முதலான கோயில் காப்பவர்களாலும் ரக்ஷிக்கப்படுவதாக விளங்குகிறது......அதன் நடுவில் எட்டு இதழ்கொண்ட, உத₃ய ஸூர்யன்போல் ஒளியுள்ள தாமரையுள்ளது; அதன் நடுவில் கா₃யத்ரீ ஸ்வரூபமான கர்ணிகையில், ஈஶ்வரியான லக்ஷ்மியோடுகூட நித்ய ஸூரிநாத₂னை பரமபுருஷன் எழுந்தருளியிருக்கிறன்.] என்று பரவாஸுதே₃வன் எழுந்தருளியிருக்கும் திருமாமணி மண்டபம்வரை அனைத்தையும் அவ்வத்தியாயத்தில் விரிவாக வர்ணித்திருப்பதை அறிந்தவர்களிடம் இவ்விதண்ட₃ாவாத₃ம் விலை செல்லாது. இவ்வாத₃த்தைத் தவிர்ப்பதற்காகவே ப₄ட்டர் "விரஜா பரமபத₃யோர் மத்₄யே" என்று அருளிச்செய்யாமல், "ஸம்ஸார பரமபத₃யோர் மத்₄யே" என்று ஸம்ஸாரமண்ட₃லம் முழுவதையும் கீழெல்லையாக அருளிச்செய்தார். ஆக, கைவல்யஸ்த₂ானம் நித்யவிபூ₄தியிலேயே விரஜைக்கு அக்கரையில் இருக்கிறது என்று அசைக்கமுடியாமல் தேறிற்று. இனி, இப்படி ஸ்வரூபவிளக்கம்பெற்று அழிவற்ற அநுப₄வமுடைய முக்தர்கள் வாழும் மோக்ஷஸ்த₂ானமாகையாலே, இந்த ஸ்த₂ானத்திற்கும், இதில் அடையும் அனுப₄வத்திற்கும் என்றும் அழிவில்லை என்பதைக் காட்டுகிறது மேலே.— (யம் ப்ராப்ய ந நிவர்த்தந்தே) எந்த ஆத்மாநுப₄வத்தை அடைந்தவர்களும் அதற்கு அழிவு ரூபமான புநராவ்ருத்தியை அடைவதில்லையோ ; இதற்குக் கீழான ஸம்ஸாரமண்ட₃லத்திற்குச் சென்று ஐஶ்வர்யானுப₄வத்தையோ, மேலான பரமபத₃த்திற்குச் சென்று ப₄க₃வத₃நுப₄வத்தையோ இவர்கள் என்றும் அடைவதில்லை என்று கருத்து. இப்படிக்கொண்டே தீரவேண்டும்படி ப்ரமாணயுக்திகள் அமைந்திருப்பதைக் கீழே காட்டினேம். (தத் தா₄ம பரமம் மம) அந்த முக்தஸ்வரூபம் என்னுடைய மிக மேலான நியமன ஸ்த₂ானம். 'பி₄ந்நா ப்ரக்ருதிரஷ்டதா₄'' [7-4] என்றவிடத்தில் சொல்லப்பட்டதாய், எனக்கு ப்ரகாரமாயிருப்பதான அசேதனப்பொருள்கள் ஒரு நியமன ஸ்த₂ானம்; ''இதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்₃தி₄ மே பராம் ! ஜீவபூ₄தாம் மஹாபா₃ஹோ ! யயேத₃ம் தா₄ர்யதே ஜக₃த் ||'' [7-5] என்றவிடத்தில் சொல்லப்பட்டதாய், எனக்கு மற்றொரு ப்ரகாரமாயிருப்பதாய், முற்கூறிய அசேதனப்பொருளோடு சேர்ந்திருப்பதான ஸம்ஸாரி ஜீவஸ்வரூபம் முற்கூறிய அசேதனப்பொருள்களைக்காட்டிலும் மேலான

अचेतनप्रकृतिरेकं नियमनस्थानम्; तत्संसृष्टरूपा जीवप्रकृतिर्द्वितीयं नियमनस्थानम्; अचित्संसर्गवियुक्तं स्वरूपेणावस्थितं मुक्तस्वरूपं परमं

---

இரண்டாவது நியமனஸ்த2ானம். "அக்ஷரம் ப்3ரஹ்ம பரமம்" [8-3] முதலானவிடங்களில் சொல்லப்பட்டதாய், அசித்ஸம்ப3ந்த4மற்றதாய், ஸ்வரூபவிளக்கம் பெற்றதாய், அதனாலேயே முற்கூறிய ஸம்ஸாரி சேதன ஸ்வரூபத்தைக்காட்டிலும் எனக்குச் சிறந்த ப்ரகாரமாயிருப்பதான முக்தஜீவஸ்வரூபம் முந்திய இரண்டைக்காட்டிலும் மேலான மூன்றாவது நியமனஸ்த2ானம். 'பரமம் த4ாம' என்று விசேஷித்திருப்பதால் மூன்றாவதான முக்தஸ்வரூபமே இங்கு கூறப்படுவதாகக் கொள்ளவேண்டும். 'த4ாம' ஶப்3த3ம் ஸ்த2ானத்தைச் சொல்லும். ஸ்வரூபவிளக்கம்பெற்ற முக்தாத்மாவான கேவலனுக்கு அபுநரா வ்ருத்தியைச்சொல்லும் ப்ரகரணமாகையாலே, 'அவன் எனக்கு இருப்பிடம்' என்று மாத்திரம் சொல்லுவதில் ஸ்வாரஸ்யமில்லை; ஆகையால், "ய ஆத்மநி திஷ்ட2ந் ஆத்மனோऽந்தர:...ஆத்மாநமந்தரோ யமயதி" [ப்3ருஹ 5-7-22; ஶதபத2ம் (மாத்4யந்தி3நஶாகை2) 14-6-5-30] [அந்தர்யாமியான எவன் ஆத்மாவின் உள்ளும் புறமுமிருந்துகொண்டு, ஆத்மாவை நியமிக்கிறானோ] "அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா" [யஜு॰ஆர 3-11-2] [ஸர்வாந்தர்யாமியானவன் ஜனங்களை உள்நுழைந்து நியமிக்கிறான்] முதலான ஶ்ருதிகளில் சொன்னபடி இங்கு நியமநஸ்த2ானத்தைச் சொல்லுகிறது த4ாமஶப்3த3ம். இங்கு இதைச் சொல்லுவதில் கருத்தென்ன? எனில்: அசேதனப்ரக்ருதியை ஸம்ஸாரிசேதனர்க்கு போ4க்3யம் முதலானவையாகும்படியாக நியமிப்பதுபோலவும், ஸம்ஸாரிசேதனரை அவ்வசேதன ப்ரக்ருதிக்கு போ4க்தாவாயிருக்கும்படி நியமிப்பதுபோலவும், நித்யமான கைவல்யமோக்ஷத்தைப் பெற்ற முக்தனுக்கும் அவ்வாத்மானுப4வத்தை எப்போதும் செய்துகொண்டிருக்கும்படி நியமிப்பவன் நானேயாகையால், கேவலனின் அக்கைவல்யாநுப4வமும், என்னையடைந்த முக்தனின் அநுப4வம்போலே நித்யமாயிருக்கிறது என்று கருத்து. இத்தால், 'இம்முக்தாத்மா ஈஶ்வரனால் நியமிக்கப்படுபவனானால், ஸ்வதந்த்ரனான அவன் இவனை ஸம்ஸாரத்திற்குத் திருப்பி அனுப்பிவிடலாமே' என்னும் ஐயமும் தவிர்க்கப்பட்டதாகிறது. 'ஸம்ஸாரத்திற்குத் திருப்பி அனுப்பாவிட்டாலும், இவனை மேலே ஏற்றித் தன் அனுப4வத்தைக் கொடுக்கலாமே' எனில்: ஸாத4நாநுஷ்ட2ானம் செய்யும்போது இவனைத் தன் இனிமையில் ஈடுபடும்படி இவனுடைய ஸாத4னங்களை அமைத்து ஆன

नियमनस्थानमित्यर्थः। तच्च अपुनरावृत्तिरूपम्। अथवा प्रकाशवाची धामशब्दः; प्रकाशश्चेह ज्ञानमभिप्रेतम्; प्रकृतिसंसृष्टात् परिच्छिन्नज्ञान-रूपादात्मनोऽपरिच्छिन्नज्ञानरूपतया मुक्तस्वरूपं परं धाम ॥२०॥२१॥

---

வரையில் முயன்றும், இவனுக்குப் பரமபுருஷாநுப₄வத்தில் விருப்ப மில்லாமையால் இவன் விரும்பும் கைவல்ய மோக்ஷத்தை அளித்தவ னுகையாலும், பே₄ாக₃ஸ்த₂ானமான மோக்ஷத்திற்கு வந்தபின்பு இவனுடைய விருப்பம் மாற இடமில்லையாகையாலும், ''தஸ்ய கார்யம் ந வித்₃யதே'' [கீ₃தை 3-17] [முக்தனுன அவனுக்குச் செய்ய வேண்டியது ஒன்றுமில்லை] என்று இவனுக்கு ஸாத₄நாநுஷ்ட₂ானம் செய்ய இடமேயில்லை என்று கீ₃தையிலேயே சொல்லியிருக்கையாலும், இவனை மேலே ஏற்றவும் இடமில்லை. ஆகையால் இதுவும் அபுநரா வ்ருத்திரூபமான (கீழேயோ மேலேயோ போக ப்ரஸக்தியில்லாத) நித்யாநுப₄வமேயாகும். 'த₄ாம' ஶப்₃த₃த்திற்கு 'ஸ்த₂ானம்' (இருப்பிடம்) என்னும் பொருளைக் கொள்ளும்போது, அதை 'நியமந ஸ்த₂ானம்' என்று விஶேஷிக்கவேண்டியிருக்கிறது; 'த₄ாம' ஶப்₃த₃த்திற்கு மற்ருெரு பொருளான 'ப்ரகாஶம்' என்னும் பொருளைக் கொள்ளும்போது இந்த அஸ்வாரஸ்யமில்லை; ஜீவனைப் பற்றியதாகையால், இங்கு 'ப்ரகாஶம்' என்றது த₄ர்மபூ₄தஜ்ஞானத்தைக் குறிக்கிறது; (தத் பரமம் த₄ாம மம) அந்த மேலான ஜ்ஞானத்தை உடைய முக்த ஸ்வரூபம் எனக்கு உடைமைப் பொருளாகும். ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄ முடையவனுய், அதனுலேயே அளவுபட்ட ஜ்ஞாநமுடையவனுன ஸம்ஸாரி ஜீவனைக் காட்டிலும், அந்த ஸம்ப₃ந்த₄த்திலிருந்து விடு பட்டவனுய், அதனுலேயே அளவற்ற ஜ்ஞானமுடைய முக்தஜீவன் மேலானவனுகையால் 'பரமம் த₄ாம' என்று விஶேஷிக்கிருன். இங்கு முந்திய பொருளிற்போலே மூன்று படிகளில்லாமையாலே, 'பரமம்' என்றது ப₄ாஷ்யத்தில் 'பரம்' என்றே விவரிக்கப்பட்டது. ''பரமம் த₄ாம மம'' [மேலான ஒளியான முக்தஸ்வரூபம் என் உடைமை] என்று சொல்லுவதற்குக் கருத்து என்ன? எனில்: இவனும் என் உடைமையாகையாலே, இவனைத் தன் ஆத்மாவிலும் மேலான என்னை விரும்பும்படி ஶாஸ்த்ரங்களில் பலவிடங்களில் தெரிவித்து, அப்போதும் ஆத்மாவையே விரும்பினுல், இவன் திருந்தலாம்படி ஸாத₄னங்களை அமைத்து ஆனவரையில் முயன்று பார்த்தும், ப்ராரப்₃த₄கர்மம் முடிந்து அந்திமஸ்ம்ருதி ஏற்படும் வரையில் இவன் தன் ஆத்மாவை விரும்புவதிலேயே நிலைநிற்கை யாலே, இவன் மறுபடியும் ஸம்ஸாரத்தில் அழுந்தி நித்யஸம்ஸாரி

॥भा॥ ज्ञानिनः प्राप्यं तु तस्मादत्यन्तविभक्तमित्याह—

पुरुषस्स परः पार्थ भक्त्या लभ्यस्त्वनन्यया।
यस्यान्तस्स्थानि भूतानि येन सर्वमिदं ततम्॥ २२॥

22. புருஷ: ஸ பர: பார்த்த₂ ப₄க்த்யா லப்₄யஸ் த்வநந்யயா।
யஸ்யாந்தஸ்ஸ்த₂ாநி பூ₄தாநி யேந ஸர்வமித₃ம் ததம்॥

**பார்த்த₂**—குந்தீபுத்திரனே! **பூ₄தாநி**—எல்லாப் பொருள்களும், **யஸ்ய**—எந்தப் பரமபுருஷனுடைய, **அந்தஸ்ஸ்த₂ாநி**—உள்ளேயிருக்கின்றனவோ, **யேந**—எவனால், **ஸர்வம் இத₃ம்**—இது அனைத்தும், **ததம்**—வியாபிக்கப்பட்டுள்ளதோ,

---

யாய்ப் போகாதபடி, இவன் விரும்பும் நித்யமான கைவல்ய மோக்ஷத்தையே இவனுக்கு அருளுகிறேன் என்று கருத்து. இதிலிருந்து நித்யமான ப₄க₃வத₃நுப₄வமில்லாத இக்கைவல்ய மோக்ஷத்தை அருளுவதால் எம்பெருமானுடைய கருணைக்கு எக்குறையுமில்லை என்றும், பரமகாருணிகனாகையாலேயே வேறு வழியில்லாமல் இதை அளிக்கிறான் என்றும் விளங்குகிறது. நிற்க.

"நின்ற ஒன்றை உணர்ந்தேனுக்கு அதனுள் நேர்மை அது இது என்று
ஒன்றும் ஒருவர்க்கு உணரலாகாது உணர்ந்துமேலும் காண்பரிது
சென்று சென்று பரம்பரமாய் யாதுமின்றித் தேய்ந்தற்று
நன்று தீதென்றறிவரிதாய் நன்றாய் ஞானம் கடந்ததே"
[திருவாய் 8-8-5]

என்னும் பாசுரத்தின் முற்பாதியாலே, இங்கு ஆத்மாவைக் குறிக்கும் அவ்யக்த ஶப்₃த₃த்தையும், பிற்பாதியாலே "அவ்யக்தாத் பர:" என்னும் பகுதியையும் தெளிவாக விவரித்தருளினராகையால், அந்தப் பாசுரத்தின் வியாக்கியானங்களும், "தமாஹு: பரமாம் க₃திம்" என்றதின் விவரணமாக அடுத்துள்ள "நன்றாய் ஞானம்" [திருவாய் 8-8-6] "அதுவே வீடு" [ஷை 8-8-7] என்னும் பாசுரங்களை அருளிச்செய்திருக்கிறாராகையால், அப்பாசுரங்களின் வியாக்கியானங்களும் இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கவை. ஆக, இவ்விரு ஶ்லோகங்களாலும் அசித₃நுப₄வமான ஐஶ்வர்யாநுப₄வத்தைக் காட்டிலும், சிந்மாத்ராநுப₄வமாகிற கைவல்யாநுப₄வத்தின் சிறப்பு கூறப்பட்டதாயிற்று. 20, 21.

ஸ: பர: புருஷ: து—அந்தப் பரமபுருஷனேவெனில், அநந்யயா பக்த்யா—வேறு பயன் கருதாத பக்தியினுல், லப்ய:—அடையத்தக்கவன்.

---

21. தன்னகத்துப் பூதங்க ளெல்லாந் தகவிருத்தி
யன்னவற்றிற் றன்பரந்தே யாங்கமைந்து—மன்னியசீர்
அந்தப் பரம்புருட னன்பா லனன்னியமாஞ்
சிந்தைக் குறவெளியன் சேர்ந்து

பூதங்கள் எல்லாம் தன் அகத்து தகவு இருத்தி—எல்லாப் பொருள்களேயும் தன்னிடம் பொருந்தியிருக்கச் செய்து, அன்னவற்றில்—அந்தப் பொருள்களிடம், தான் பரந்தே அமைந்து—தான் வியாபித்து நின்று, ஆங்கு மன்னிய சீர்—அப்படி வியாபித்தபோதிலும் பெருமை பெற்றிருக்கும், அந்தப் பரம்புருடன்—அந்தப் பரமபுருஷன், சிந்தைக்கு அனன்னியமாம் அன்பால் - நெஞ்சில் வேறு பயன் கருதாத பக்தியினுல், சேர்ந்து உற எளியன்—அடைவதற்கு எளியவனுகிருன்.

---

22. சென்ற இரு ஶ்லோகங்களில், ஜிஜ்ஞாஸுவுக்கு ப்ராப்யமான சித்தைமாத்திரம் அநுபவிப்பதாகிற கைவல்யமோக்ஷம், ஆர்த்தனுக்கும், அர்த்தார்த்திக்கும் ப்ராப்யமாய், அசித்தை அநுபவிப்பதாகிற ஐஶ்வர்யாநுபவத்தைக்காட்டிலும் மிகச்சிறந்தது என்று காட்டினுன். இந்த ஶ்லோகத்தில் ஜ்ஞாநிக்கு ப்ராப்யமாய், பரமபுருஷனை அநுபவிப்பதாகிற பரமமோக்ஷம் கைவல்யமோக்ஷத்தைக்காட்டிலும் மிகவும் சிறந்தது என்று காட்டுகிருன். இந்த ஶ்லோகத்திலுள்ள துஶப்தமும், இதில் சொல்லப்படும் பகவதநுபவம் கைவல்யத்தைக்காட்டிலும் மிகவும் வேறுபட்டது என்றும், சிறந்தது என்றும் காட்டுகிறது என்னும் திருவுள்ளத்தினுலேயே, இந்த ஶ்லோகத்தின் அவதாரிகையில் "அத்யந்தவிபக்தம்" [மிகவும் வேறுபட்டது (சிறந்தது)] என்று பாஷ்யகாரர் அருளினுர். கைவல்யம் பெற்றவனுக்கு பகவதநுபவம் அடியோடு கிடையாது, ஏற்படவும் இடமில்லை என்னும் திருவுள்ளத்தாலேயே, 'விபக்தம்' என்றுமாத்திரம் பதமிடாமல், 'அத்யந்த விபக்தம்' என்று விஶேஷித்திருக்கிருர் என்பது குறிக்கொள்ளத்தக்கது. "குறுகா நீளா இறுதிகூடா எனையூழி சிறுகா பெருகா அளவிலின்பம் சேர்ந்தாலும், மறுகாலின்றி மாயோன்! உனக்கே ஆளாகும் சிறுகாலத்தை உறுமோ

||भा|| ※ मत्तः परतरं नान्यत्किञ्चिदस्ति धनंजय। मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव॥ (७. ७), ※ मामेभ्यः परमव्ययम् (७. १३) इत्यादिना निर्दिष्टस्य यस्य अन्तस्थानि सर्वाणि भूतानि,

---

அந்தோ ! தெரியிலே'' [திருவாய் 6-9-10] என்னும் பாசுரத்தில், ''நித்யமாய், (ஐச்வர்யத்தைக்காட்டிலும்) சிறந்ததான கைவல்ய மோக்ஷத்தை அடைந்தாலும், அது ஒரு கணநேரம் ப₄க₃வானுக்கே ஆட்செய்வதற்கு ஒப்பாகுமோ ?'' என்று ஆழ்வார் பாடியிருப்பதைத் திருவுள்ளத்திற்கொண்டே எம்பெருமானார் இப்படி அருளினார் என்பது தெளிவு நிற்க; 'புருஷ: ஸ பர: லப்₄ய:'' என்று இங்கு பரம புருஷனையே ப்ராப்யனாகச் சொல்லுகையாலும், அநந்யப₄க்தியை அதற்கு ஸாத₄னமாகக் கூறுகையாலும். ''அநந்யசேதா: ஸததம்... தஸ்யாஹம் ஸுலப₄:'' [8-14] என்னும் ஶ்லோகத்தில் கூறப்பட்ட ஞானியின் ப்ராப்யத்தைப்பற்றியதே இந்த ஶ்லோகம் என விளங்கு கிறது. (ஸ பர: புருஷ:) அந்தப் பரமபுருஷன் ; இப்படிப்படர்க் கையில் கூறியபோதிலும், ''மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சித₃ஸ்தி த₄நஞ்ஜய ! மயி ஸர்வமித₃ம் ப்ரோதம் ஸூத்ரே மணிக₃ணா இவ ||'' [7-7] [த₄னஞ்ஜயனே ! என்னைக்காட்டிலும் (ஜ்ஞாநம் ஶக்தி முதலான வற்றில்) மிக மேலானது வேறு எதுவுமில்லை; என்னிடம் இந்த எல்லாப் பொருள்களும் நூலில் கோர்க்கப்பட்ட ரத்னங்கள்போலே கோர்க்கப் பட்டிருக்கின்றன.] ''மாமேப்₄ய: பரமவ்யயம்'' [7-13] [இவற்றைக் காட்டிலும் மேலானவனாய், அழிவற்ற என்னை] என்று இங்கு கூறப்படும் பெருமைகளை முன் ப்ரகரணங்களில் தன்னைப்பற்றியவையாகவே கூறி யிருக்கிறானாகையாலே, இங்கும் தன்னையே கூறுவதாகக் கொள்ள வேண்டும். (பர: புருஷ:) பரமபுருஷன். 'புரி ஶேதே இதி புருஷ:''என்று ஹ்ருத₃யபுரியில் வாழ்வதாலும், ''பூர்ணத்வாத் புருஷ:'' என்று பூர்ணனாகையாலும், ''பூர்வமேவ இஹாஸமிதி புருஷ:'' என்று அனைவர்க்கும் முன்னவனாகையாலும், ''புரு ஸநோதீதி புருஷ:'' என்று எல்லாப்புருஷார்த்த₂ங்களையும் தருகையாலும் புருஷன் எனப் படுபவனாய், சேதனர் அனைவரிலும் மேலானவனாகையாலே பரம புருஷன் எனப்படுபவன் என்று கருத்து. ''ஸஹஸ்ரஶீர்ஷா புருஷ:'' [பு-ஸூ 1-1] முதலான ப்ரமாணங்கள் புருஷஶப்₃த₃த்தால் சொல்லப் படும் லக்ஷ்மீபதியே பரம்பொருள் எனக்காட்டினவன்றோ. 'நான் பரம புருஷனாகையாலே, ஜீவன் தாழ்ந்ததான தன் ஸ்வரூபத்தைத் தான் அநுப₄விப்பதைக்காட்டிலும், பரமபுருஷனான என்னை அநுப₄விப்பது

येन च परेण पुरुषेण सर्वमिदं ततम्, स परः पुरुषः * अनन्य-चेतास्सततम् (८. १४) इत्यनन्यया भक्त्या लभ्यः ॥ २२ ॥

---

மிகச்சிறந்தது' என்று உணர்த்துகிருன். இன்னமும் பரமபுருஷன் எத்தகையவன் என்பதைப் பிற்பாதியிலும் காட்டுகிருன்,—(யஸ்யாந்தஸ்ஸ்த₂ாநி பூ₄தாநி யேந ஸர்வமித₃ம் ததம்) ஏழாம் அத்தியாயத்தில் கூறியபடி தானேயான அந்தப்புருஷனிடத்திலேயே அவனுல் த₄ரிக்கப்பட்டு எல்லாப்பொருள்களும் வாழ்கின்றன; அவன் அவை அனைத்தையும் உள்ளும் புறமும் வியாபித்து விளங்குகிருன் என்கை. "யஸ்யாந்தஸ்ஸ்த₂ாநி பூ₄தாநி" என்று நாராயண ஶப்₃த₃த்தின் தத்புருஷ ஸமாஸத்தால் ஏற்படும் ஸர்வத₄ாரகத்வத்தையும், "யேந ஸர்வமித₃ம் ததம்" என்று ப₃ஹுவ்ரீஹி ஸமாஸத்தால் ஏற்படும் ஸர்வவ்யாபித்வத்தையும் காட்டுகிருன். "அந்தர் ப₃ஹிஶ்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி₂த:" [தை-நா-11] [அவை அனைத்தையும் உள்ளும் புறமும் வியாபித்து விளங்குகிருன் நாராயணன்] "யஸ்மாத் பரம் நாபரமஸ்தி கிஞ்சித்...தேநேத₃ம் பூர்ணம் புருஷேண ஸர்வம்" [ஶ்வே 3-9] [எவனைக்காட்டிலும் மேலானது வேறென்றுமில்லையோ... அந்தப்புருஷனுல் இவையனைத்தும் நிறைந்துள்ளது.] முதலான ஶ்ருதிகளில் புருஷனென்றும், நாராயணனென்றும் படிக்கப்படும் தனக்கே இப்பெருமைகள் ஓதப்பட்டிருப்பதை உணர்த்துகிருன். இப்படிச் சேதனுசேதனங்களனைத்தையும் வியாபித்து த₄ரித்துநிற்கும் விபு₄வான தன்னைப்பற்றிய அநுப₄வம், அணுவான சேதனன் தன்னைத் தான் அனுப₄விப்பதைக்காட்டிலும் மிகச்சிறந்தது என்று கருத்து. (அநந்யயா ப₄க்த்யா லப்₄ய:) வேறு பயன்கருதாத ப₄க்தியினுலே அடையத்தக்கவன். அதிலும், "தஸ்யாஹம் ஸுலப₄:" [8-14] என்னும் ஶ்லோகத்தில் சொல்லப்பட்டபடி மிக எளியவனுகவுமிருக்கிருன். பனிரண்டாம் அத்தியாயத்தின் தொடக்கத்தில் சொல்லப்பட்டபடி அணுவின் அநுப₄வமாகிற கைவல்யமோக்ஷம் நீண்டகாலம் கழித்து மிகுந்த ஶ்ரமப்பட்டு அடையத்தக்கதாயிருக்கையாலும், விபு₄வான தன்னையநுப₄விப்பதாகிற பேரின்பம் விரைவில் ஶ்ரமமில்லாமல் அடையத்தக்கதாகையாலும் கைவல்யமோக்ஷத்திற்கும், தன்னையடையும் நல் வீட்டிற்கும் மலைக்கும் அணுவுக்குமுள்ள வாசியுண்டாகையால், இது முற்கூறிய கைவல்யமோக்ஷத்தைக்காட்டிலும் மிகச்சிறந்ததே என்று கருத்து. (பார்த்த₂) என் அத்தை பிள்ளையான நீ இந்த மிகச்சிறந்த மோக்ஷத்தை அடையவேண்டாவோ? என்று கருத்து. 22.

॥भा॥ अथात्मयाथात्म्यविदः परमपुरुषनिष्ठस्य च साधारणीमर्चिरादिकां गतिमाह। द्वयोरप्यर्चिरादिका गतिश्श्रुतौ श्रुता ; सा चापुनरावृत्तिलक्षणा। तथा पञ्चाग्निविद्यायां * तद्य इत्थं विदुर्ये-चेमेऽरण्ये श्रद्धा तप इत्युपासते तेऽर्चिषमभिसंभवन्त्यर्चिषोऽहः (छा. ५. १०. १) इत्यादौ। अर्चिरादिकया गतस्य परब्रह्मप्राप्ति-

---

23, 24. இனி, "தத்₃ய இத்த₂ம் விது₃:, யே சேமேऽரண்யே ஶ்ரத்₃தா₄ தப இத்யுபாஸதே, தேऽர்ச்சிஷமபி₄ஸம்ப₄வந்தி, அர்ச்சிஷோऽஹ:" [சா₂ந் 5-10-1] [அந்த ஜீவஸ்வரூபத்தை ஸ்தூ₂ல ஸூக்ஷ்ம தே₃ஹங்களைக் காட்டிலும் வேறுபட்டதாகவும், ப்₃ரஹ்மாத்மகமாகவும் எவர்கள் அறிகிறார்களோ, எவர்கள் ஶ்ரத்₃தை₄யை முன்னிட்டுக்கொண்டு ப்₃ரஹ்மத்தையே உபாஸிக்கிறார்களோ, அவர்கள் இருவகையினரும் அர்ச்சிர்தே₃வதையை (ஆதிவாஹிகராக— மோக்ஷத்திற்கு வழிநடத்துமவராக) அடைகிறார்கள். அர்ச்சிர் தே₃வதையிடமிருந்து அஹர்தே₃வதையை (ஆதிவாஹிகராக) அடைகிறார்கள்.] என்று தொடங்கிப் பஞ்சாக்₃நி வித்₃யாப்ரகரணத்தில் குறிப்பிடப்பட்டவர்களாய், "ப₄க₃வச்சே₂ஷதைகரஸாத்மஸ்வரூப வித்" [கீ₃தை 7-16 பா₄ஷ்யம்] [எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருப்பதையே இயல்வாகக்கொண்ட ஆத்மஸ்வரூபத்தை அறிந்தவன்.] என்னும் ஜ்ஞாநிலக்ஷணத்தைப் பரிபூர்ணமாகவுடையவர்களான ஆத்மயாதா₂த்ம்யவித்துக்கள் எனப்படும் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்டர்ரான ப்₃ரஹ்மாத்மக ஸ்வாத்மோபாஸகர்களுக்கும், மற்ற வித்₃யைகள் ஒன்றில் நின்று ப்₃ரஹ்மத்தை உபாஸிப்பவர்களும், ப்₃ரஹ்மத்தையே உபாயமாகக் கொண்ட ப்ரபந்நர்களுமடங்கிய பரமபுருஷநிஷ்டர்களுக்கும் பொதுவான அர்ச்சிராதிக₃தியை மேல் இரண்டு ஶ்லோகங்களாலே கூறுகிறான் கண்ணன். "யம் ப்ராப்ய ந நிவர்த்தந்தே" [8-21] என்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட ஜிஜ்ஞாஸுவான கைவல்யநிஷ்டனுக்குப்போலே, அர்ச்சிராதிக₃தியாலே செல்லும் இந்த ஜ்ஞாநிகளுக்கும் புநராவ்ருத்தியில்லை. "ஸ ஏநாந் ப்₃ரஹ்ம க₃மயதி......ஏதேந ப்ரதிபத்₃யமாநா இமம் மாநவமாவர்த்தம் நாவர்த்தந்தே" [சா₂ந் 4-15-6] [அந்த அமானவன் இவ்வர்ச்சிராதிக₃தியால் வந்தவர்களை ப்₃ரஹ்மத்தை அடைவிக்கிறான்...இவ்வழியால் வந்தவர்கள் பிறந்தும் செத்தும் நின்று இடறும் இந்த ஸம்

रपुनरावृत्तिश्चाम्नाता * स एनान् ब्रह्म गमयति...एतेन प्रतिपद्यमाना इमं मानवमावर्तं नावर्तन्ते (छा. ४. १५. ६) इति।

ஸார மண்டலத்தை அடையமாட்டார்கள்] என்னும் வேதவாக்யத்தில் அர்ச்சிராதிகதியால் மோக்ஷமடைந்தவனுக்குப் பரப்ரஹ்மாநுபவமும், புநராவ்ருத்தியின்மையும் ஓதப்பட்டதன்றோ.

இனி, இவ்வவதாரிகா பாஷ்யபங்க்தியில் 'ஆத்ம யாதாத்ம்ய வித்' எனப்பட்டவன் பூர்வப்ரக்ருதனை கைவல்யநிஷ்டன் என்றே கொண்டுவிடலாமே என்னும் ஐயத்திற்குப் பரிஹாரம் உரைக்கப் படுகிறது. (1) ஜிஜ்ஞாஸு எனப்படுபவனாய், கேவலாத்மாநுபவத்தை ப்ராப்யமாகக்கொண்ட கைவல்யநிஷ்டனுக்கு "ப்ரக்ருதி வியுக்தாத்மஸ்வரூபாவாப்திச்சு:" [ப்ரக்ருதியினின்றும் நீங்கிய தன் ஆத்மஸ்வரூபத்தைப் பெற விரும்புகிறவன்] என்றும், ப்ரஹ்மாநுபவத்தை ப்ராப்யமாகக் கொண்ட ஜ்ஞாநிக்கு "பகவச்சேஷதைகரஸாத்ம ஸ்வரூபவித்" [பகவானுக்கு அடிமைப்பட்டிருக்கையையே இயல்வாகக்கொண்ட ஆத்மஸ்வரூபத்தை அறிந்தவன்] என்றும் "ஆர்த்தோ ஜிஜ்ஞாஸு:" [கீதை 7-16] என்று தொடங்கும் ஶ்லோகத்தில் லக்ஷணமுரைத்தார் பாஷ்யகாரர். இங்கு இவ்வதிகாரிக்கு "ஆத்மயாதாத்ம்யவித்" [ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை அறிந்தவன்] என்று பெயரிட்டிருப்பதிலிருந்தும், இவனும் ஆத்ம ஸ்வரூபத்தை ப்ரஹ்மாத்மகமாய், ப்ரஹ்ம ஶேஷதைகரஸமானது என்று அநுஸந்திக்கவேண்டும் என்று தத்க்ரது ந்யாயத்தையும் காட்டி நிரூபிப்பதிலிருந்தும் இவனை பாஷ்யகாரர் ஜ்ஞாநியாகக் கருதினரேயொழிய ஜிஜ்ஞாஸுவாகக் கருதவில்லை என்று தெளிவாக விளங்குகிறது. (2) கீதை (7-17) பாஷ்யத்தில் "இதரயோஸ்து யாவத்ஸ்வாபிலஷிதப்ராப்தி மயா யோக:" [ஐஶ்வர்ய கைவல்யநிஷ்டர்கள் இருவர்க்கும் (முறையே) ஐஶ்வர்யமும், கேவலாத்மாநுபவமுமாகிற தத்தம் விருப்பம் கிடைக்கும் வரையிலேயே என்னோடு சேர்த்தியுண்டு] என்று கேவலாத்ம ப்ராப்திக்குப் பின் கைவல்யநிஷ்டனுக்கு ப்ரஹ்மாநுபவம் கிடையாதென்று காட்டினர். கீதை 8-22 அவதாரிகையில், "ஜ்ஞாநிந: ப்ராப்யம் து தஸ்மாதத்யந்தவிபக்தம்" [கைவல்ய நிஷ்டனுடைய ப்ராப்யத்தைக் காட்டிலும், ஜ்ஞாநியின் ப்ராப்யம் மிகவும் வேறுபட்டது] என்று அருளுவதன் மூலம் இதை வலியுறுத்தினர். பதின்மூன்றுவது அத்தியாயத்தின் அவதாரிகாபாஷ்யத்தில் "ஆத்மகைவல்யமாத்ராபேக்ஷாணம்" என்று கைவல்ய

நிஷ்டஂன் கேவலாத்மாநுபவத்தை மாத்திரமே விரும்புகிறான் என்று அருளுவதன்மூலம் இதை நிலைநாட்டினார். இவ்வவதாரிகாபாஷ்யத்திலோவெனில் ஆத்மயாதாத்ம்யவித்தாகிற பஞ்சாக்நிவித்யா நிஷ்டனுக்கு ப்ரஹ்மாநுபவம் உண்டென்று மிகவும் தெளிவாக அருளிச்செய்கிறார். இதனாலும் இவன் ஜ்ஞாநிகோடியில் சேர்ந்தவனேயொழிய ஜிஜ்ஞாஸுவல்லனென்று விளங்குகிறது. (3) ஜிஜ்ஞாஸுவாகிற கைவல்யநிஷ்டனைப்பற்றிப் பலவிடங்களில் குறிப்பிடும்போது "ப்ரக்ருதியினின்றும் நீங்கிய ஆத்மஸ்வரூபத்தை அடைய விரும்புகிறவன்" [7-16; 7-29] என்றோ, 'அக்ஷரயாதாத்ம்யத்தை விரும்பி உபாஸிப்பவன்' [8-ம் அத்தியாயம் அவதாரிகை] என்றோ, 'கைவல்யார்த்தீ' [8-11, 8-14, 8-15 அவதாரிகைகள்] என்றோ, 'கைவல்யம் ப்ராப்தன்' [8-20, 21 அவதாரிகை] என்றோ, 'ஆத்மகைவல்ய மாத்ராபேக்ஷன்' [13-ம் அத்தியாயம் அவதாரிகை] என்றே குறிப்பிடுகிறாரேயொழிய ஓரிடத்திற்கூட 'ஆத்மயாதாத்ம்யவித்' என்று குறிப்பிடவில்லை. இதிலிருந்தும் இந்த ஆத்மயாதாத்ம்யவித் என்பவன் கைவல்யநிஷ்டனிலும் வேறுபட்டவன் என விளங்குகிறது. (4) கீதை (8-26) ஶ்லோகபாஷ்யத்தில் "ஏதே ஶுக்ல க்ருஷ்ணே கதீ ஜ்ஞாநிநாம், விவிதாநாம் புண்யகர்மணாம் ச ஶ்ருதௌ ஶாஶ்வதே மதே" [இந்த ஶுக்லக்ருஷ்ணகதிகளிரண்டும் (முறையே) ஞானிகளுக்கும், பலவிதமான புண்யகர்மங்களைப் புரிந்தவர்களுக்கும் ஶ்ருதியில் எப்போதும் சொல்லப்படுகின்றன.] என்று அருளிச்செய்வதன்மூலம் ஶுக்லகதியான அர்ச்சிராதிகதி ஜ்ஞாநிகளுக்கு உண்டேயொழிய ஜிஜ்ஞாஸுவுக்குக் கிடையாது என்று காட்டுவதன்மூலம் ஆத்மயாதாத்ம்யவித்தாகிற பஞ்சாக்நிவித்யா நிஷ்டன் ஜ்ஞாநிகோடியில் சேர்ந்தவனேயொழிய ஜிஜ்ஞாஸுவல்லனென்று நிலைநிறுத்தினார். "ஜ்ஞாநிநாம் த்விவிதாநாம்" என்று தாத்பர்ய தீபிகையில் எடுக்கப்பட்ட பாடத்தில் இது மிகத் தெளிவாக விளங்குகிறது. (5) பஞ்சாக்நிவித்யாநிஷ்டனுக்குப் பஞ்சாக்னி வித்யை ஒன்றே ஸாதனமாகும். "ஆத்மார்த்தீ சேத் த்ரயோऽப்யேதே தத்கைவல்யஸ்ய ஸாதகா:" [கீதார்த்த ஸங்க்ரஹம்-27] [ஆத்ம மாத்ரத்தை அநுபவிக்கையாகிற பலனை விரும்பினானாகில், கர்மஜ்ஞாநபக்தியோகங்கள் மூன்றும் தனித்தனியே ஆத்மகைவல்யத்தை ஸாதித்துக்கொடுக்கும்.] "ஐஹலௌகிகமைஶ்வர்யம் ஸ்வர்க்காத்யம் பாரலௌகிகம் | கைவல்யம் பகவந்தம் ச மந்த்ரோऽயம் ஸாதயிஷ்யதி ||" [வ்ருத்தஹாரீதஸ்ம்ருதி 6-50] [இவ்வுலகச் செல்வத்தையும், சுவர்க்கம் முதலான மறுமைச் செல்வத்தையும், கேவலாத்மாநுபவமாகிற கைவல்யத்தையும், பகவ

த₃நுப₄வத்தையும் (அதையதை விரும்புவார்க்கு) இவ்வஷ்டாக்ஷர மந்திரம் ஸாதி₄த்துக்கொடுக்கும்.] "தாவதா₃ர்த்திஸ் ததா₂ வாஞ்சா₂ தாவந்மோஹஸ் ததா₂ஸுக₂ம் I யாவந்ந யாதி ஶரணம் த்வாமஶேஷாக₄நாஶநம் II" [வி-பு 1-9-73] [எல்லாப் பாபங்களையும் போக்கடிக்கும் உன்னை எதுவரையில் ஶரணமடையவில்லையோ, அது வரையிலேயே (செல்வத்தை இழந்ததனால் ஏற்படும்) வருத்தம்; அதுவரையிலேயே (செல்வம் வேண்டும் என்னும்) ஆசை; அது வரையிலேயே (ஆத்மாநுப₄வமின்மையால் ஏற்படும்) மோஹம்; அதுவரையிலேயே (ப₄க₃வத₃நுப₄வமின்மையால் உண்டாகும்) ஸுக₂மின்மை. (ஆர்த்தன், அர்த்தா₂ர்த்தி₂ எனப்படும் ஐஶ்வர்யார்த்தி₂கள், ஜிஜ்ஞாஸுவாகிற கைவல்யார்த்தி₂, ஜ்ஞாநி ஆகிய அனைவர்க்கும் ப்ரபத்தியே ப₂ல ஸாத₄னம் என்றபடி)] என்கிறபடியே கைவல்ய நிஷ்ட₂னுக்குக் கர்ம ஜ்ஞாந ப₄க்தி ப்ரபத்திகளில் எதுவும் ஸாத₄ன மாகலாம். இப்படி ஸாத₄னத்தைப் பார்த்தாலும் ஆத்மயாதா₂த்ம்ய வித் எனப்படும் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂ன் கைவல்யநிஷ்ட₂னைக் காட்டிலும் வேறுபட்டவன் என விளங்கும். (6) பஞ்சாக்₃நிவித்₃யா நிஷ்ட₂னைப் பற்றிய ப்ரஸ்தாவம் வரும் கார்யாதி₄கரணம் [4-3-5] முதலான விடங்களில் ஸ்ரீபா₄ஷ்யம், ஶ்ருதப்ரகாஶிகை முதலானவற்றில் அவனைப்பற்றிக் குறிப்பிடும்போது ஓரிடத்திற்கூட அவனைக் கேவலன் என்றோ கைவல்யநிஷ்ட₂ன் என்றோ, அவனுக்குக் கைவல்யம் ப்ராப்யம் என்றோ கூறவில்லை. நேர்மாறாகப் பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்ட₂னைக் காட்டிலும் வேறுபட்ட அதி₄காரிகளே "கேவலம் வா சித்₃வஸ்து...ய உபாஸதே" என்று கார்யாதி₄கரணபா₄ஷ்யத்தின் இறுதியில் கேவல சித₃பாஸகர்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளனர். இதிலிருந்தும் ஆத்ம யாதா₂த்ம்யவித் எனப்படும் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂ன், கைவல்ய நிஷ்ட₂னைக் காட்டிலும் வேறுபட்டவன் என விளங்குகிறது.

இனி, பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂ன் கைவல்யநிஷ்ட₂னைக்காட்டி லும் வேறுபட்டவனானால், ஆத்மோபாஸகர்களான இருவர்க்கும் உள்ள முக்கியமான வேறுபாடு என்ன என்னும் கேள்வி எழுகிறது. இங்கு கார்யாதி₄கரண ஸ்ரீபா₄ஷ்யம் குறிக்கொண்டு காணத்தக்கது. பரமபுருஷநிஷ்ட₂ன், ப்₃ரஹ்மாத்மகஸ்வாத்மோபாஸகனான பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்ட₂ன் எனும் அப்ரதீகாலம்ப₃னர்களை அர்ச்சிராதி₃க₃தி யாலே ஆதிவாஹிகர்கள் அழைத்துச்செல்லுவதாக அவ்வதி₄கரணத் தில் நிரூபிக்கப்பட்டது. இவர்களுக்கு ப்₃ரஹ்மாநுப₄வம் உண்டு என்றும் ஸ்தா₂பிக்கப்பட்டது. இவ்வதி₄கரணத்தின் கடைசியில் ஸ்ரீபா₄ஷ்யத்தில் நாலுவகைப்பட்ட ஆத்மோபாஸகர்களை ப்ரதீகாலம்

பₓனர்களாக எடுத்து, அவர்களுக்கு அர்ச்சிராதிₓகₓதியும் ப்₃ரஹ்மாநுபₓவமாகிற பₓலனும் இல்லையென்று காட்டப்பட்டது. அவர்களாவார்,—(1) அசித்தோடு கூடிய ஆத்மாவை ப்₃ரஹ்மத்₃ருஷ்டியோடு (ப்₃ரஹ்மத்வத்தை ஏறிட்டு) உபாஸிப்பவர்கள். பிரமன், உருத்திரன் முதலான தேவர்களைப் பரம்பொருளாக நினைத்து உபாஸிப்பவர்கள் இப்பிரிவைச் சேர்ந்தவர்கள். இவர்களுடைய உபாஸனம் பொய்யை அடிப்படையாகக் கொண்டதாகையால், இவர்களுக்கு மிகவும் அற்ப பₓலன்களே கிடைக்கும். (2) அவ்வாத்மாவை ப்₃ரஹ்மத்₃ருஷ்டியில்லாமல் உபாஸிப்பவர்கள். பிரமன், உருத்திரன் முதலானோர் பரம்பொருளல்லர் என உணர்ந்து, அவர்கள் அளிக்கக்கூடிய, ஆரோக்₃யம், செல்வம், ஞானம் முதலான இவ்வுலகப் பₓலனைப் பெற்றுப்போகும் இவர்கள் முந்தியவர்களைக்காட்டிலும் சிறந்தவர்கள். (3) கேவலாத்மாவை ப்₃ரஹ்மத்₃ருஷ்டியோடு (ப்₃ரஹ்மத்வத்தை ஏறிட்டு)உபாஸிப்பவர்கள். இவர்களுடைய உபாஸனமும் பொய்யை அடிப்படையாகக் கொண்டதாகையால், இவர்களுக்கு அற்பபₓலன்களே கிடைக்கும். (4) கேவலாத்மாவை ப்₃ரஹ்மத்₃ருஷ்டியில்லாமல் உபாஸிப்பவர்கள். இவர்களே கைவல்யநிஷ்டₓர்கள், ப்ரக்ருதியினின்றும் நீங்கிய தம் ஆத்மாவைப் பெறுவதற்கு, இவர்கள் ஸூக்ஷ்மஶரீரமும் கழியப் பெற்று நித்யவிபூₓதிக்குச் சென்றுலொழிய இவர்கள் விரும்பும் கேவலாத்மாநுபₓவம் ஸித்₃திₓக்காதாகையாலே, இவர்கள் பெறுவது முக்தியேயாகும். ஆயினும், இவர்களும் ப்ரதீகாலம்பₓனர்களேயாகையாலே, அப்ரதீகாலம்பₓனர்களான ப்₃ரஹ்மாத்மகஸ்வாத்மோபாஸகரான பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்டₓர்களுக்கும், பரமபுருஷநிஷ்டₓர்களுக்கும் கிடைக்கும் அர்ச்சிராதிₓகₓதியும் ப்₃ரஹ்மாநுபₓவமும், இவர்களுக்குக் கிடைக்காது. ப்ரதீகமாவது-அவயவம். இவர்கள் அனைவரும் ப்₃ரஹ்மத்தின் அவயவங்களை உபாஸிப்பவர்களேயொழிய அவயவியான ப்₃ரஹ்மத்தை ப்ராப்யமாக உபாஸிப்பவர்களல்லர். ஆகையால், அர்ச்சிராதிₓகₓதியும், அதன் வழியாகச் சென்றவர்களே அடையத்தக்க ப்₃ரஹ்மாநுபₓவமும் இந்த நாலுவகைப்பட்ட ஆத்மோபாஸகர்களுக்கும் இல்லை; அப்ரதீகாலம்பₓனர்களான (அவயவியான ப்₃ரஹ்மத்தை ப்ராப்யமாக உபாஸிக்கும்) பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்டₓர்களுக்கும், பரமபுருஷநிஷ்டₓர்களுக்குமே அர்ச்சிராதிₓகₓதியும் ப்₃ரஹ்மாநுபₓவமும் உண்டு என்பது கார்யாதிₓகரணஸாரம். ஆக, கைவல்யநிஷ்டₓன் கேவலஸ்வாத்மோபாஸகன், பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்டₓன் ப்₃ரஹ்மாத்மகஸ்வாத்மோபாஸகன் என்பது இருவர்க்கும் உபாஸனத்தில் உள்ள வேறுபாடு. முந்தியவனுக்கு அர்ச்சிராதிₓகₓதியும், ப்₃ரஹ்மாநுபₓவமும் கிடையாது. கேவலாத்மாநுபₓவமாகிற கைவல்யமே உண்டு; பிந்தியவனுக்கு உபாஸனத்திற்கு அநுகு₃ணமாக ப்₃ரஹ்மாத்மகஸ்வாத்மாநுபₓவம் பₓலனாகையாலே

ப்₃ரஹ்மாநுப₄வம் உண்டு ; அர்ச்சிராதி₃க₃தியும் உண்டு என்பது இருவர்க்கும் ப₂லனில் உள்ள வேறுபாடு.

இனி, இவ்விருவகையான ஆத்மோபாஸகர்களைப்பற்றி உபனிஷத்துக்களில் எங்கு சொல்லப்பட்டுள்ளது என்னும் கேள்வி எழுகிறது. "தத்₃ய இத்த₂ம் விது₃:" [ சா₂ந் 5-10-1 ] என்னும் வாக்யத்தில் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னை ப்₃ரஹ்மாத்மகஸ்வாத்மோபாஸகனைப்பற்றிச் சொல்லப்பட்டிருப்பது எடுத்துக்காட்டப்பட்டது. சா₂ந்தோ₃க்₃யம் ஏழாவது ப்ரபாட₂கத்தில்—முன்னதைக்காட்டிலும் பின்னது உயர்ந்ததான நாமம் தொடங்கி ஆசை ஈறான பதினாலு அசேதனப்பொருள்களிடம் ப்₃ரஹ்மம் என்னும் பு₃த்₃தி₄யை ஏறிட்டு உபாஸிக்கும்படி கூறி, அந்தந்த உபாஸனங்களுக்குப் படிப்படியாக மேலான இவ்வுலகப்பயன்கள் ப₂லனாகக் கூறப்பட்டன. அதற்குப் பிறகு 'ப்ராணன்' என்னும் ஶப்₃த₃த்தால் அசேதனப்பொருள்களைக் காட்டிலும் வேறுபட்ட ஜீவாத்மஸ்வரூபம் முற்கூறிய ஆசையைக் காட்டிலும் உயர்ந்ததாகச் சொல்லப்பட்டு, "ஸ வா ஏஷ ஏவம் பஶ்யந் ஏவம் மந்வாந ஏவம் விஜாநந் அதிவாதீ₃ ப₄வதி" [ சா₂ந் 7-14-4 ] [அத்தகைய இந்த ஜீவன் தன் ஆத்மாவை முற்கூறிய அசேதனப்பொருள்களிலும் வேறுபட்டதாக மனனமும், உபாஸனமும் செய்தானாகில், அசேதனத்தைக்காட்டிலும் வேறுபட்ட தன் ஆத்மாவை ஸாக்ஷாத்கரித்து அதிவாதி₃யாகிறான்.] என்று அந்த அசேதன ப்ரக்ருதியிலும் வேறுபட்ட ஜீவஸ்வரூபத்தை உபாஸிப்பதால், அதையே ஸாக்ஷாத்கரிப்பதாகிற மிகவுயர்ந்த ப₂லன் அடையப்படுகிறது என்று கூறப்பட்டது. அடுத்ததான பதினைந்தாவது க₂ண்ட₃த்தில் "ஏஷ து வா அதிவத₃தி யஸ் ஸத்யேந அதிவத₃தி" [சா₂ந் 7-15-1] [எவன் ஸத்யம் எனப்படும் ப்₃ரஹ்மத்தைக்கொண்டு அதிவாத₃ம் செய்கிறானோ, அவனே உண்மையில் அதிவாதி₃யாவான்.] என்று ஜீவனைக்காட்டிலும் உயர்ந்த ப்₃ரஹ்மத்தின் உபாஸனத்தைக் கூறி, அதற்கு ஜீவாநுப₄வத்தைக்காட்டிலும் உயர்ந்த ப்₃ரஹ்மாநுப₄வம் ப₂லனாகக்கூறப்பட்டது. இவ்விஷயம் பூ₄மாதி₄கரண (1-3-2) ஶ்ரீபா₄ஷ்யத்தில் விரிவாக விளக்கப்பட்டது. இங்கு ப்ரக்ருதியிலிருந்து நீங்கிய (கேவல) ஜீவனின் அநுப₄வம் ப₂லனாகச் சொல்லப்படுவதாலும், ப்₃ரஹ்மத்தின் அநுப₄வம் அதைவிடச் சிறந்தது என்று கூறப்படுவதாலும் ப்ராணன் எனப்படும் ஜீவனை உபாஸித்து அடைவதே கைவல்யாநுப₄வம் என்னத்தட்டில்லை. இப்ரகரணத்தில்—ப்₃ரஹ்மோபாஸன ப₂லத்திற்குப்போலவே, இந்த ஜீவோபாஸநப₂லத்திற்கும் அதிவாத₃விஷயத்வம் சொல்லப்படுவதால், அதைப்போலவே இதுவும் முக்தியென்றும், ஆனால் ப்₃ரஹ்மாநுப₄வத்தைக்காட்டிலும் தாழ்ந்ததொரு முக்திநிலை இது என்றும் கருதப்படுகிறதென விளங்குகிறது.

இனி, ப்₃ரஹ்மாநுப₄வலேஶமுமற்ற கைவல்யத்தை அடைபவனைப் பற்றிப் பலவிடங்களில் கூறியிருக்கும் ஆழ்வார்கள், அவனிலும் உயர்ந்தவனாய் ப்₃ரஹ்மாத்மகஸ்வாத்மோபாஸகனான பஞ்சாக்₃னி வித்₃யாநிஷ்ட₂னைப்பற்றியும், அவனுக்கு ப்₃ரஹ்மாநுப₄வம் உண்டென்பதுபற்றியும் எவ்விடத்திலாவது கூறியிருக்கிறார்களா என்னும் கேள்வி எழுகிறது. "கண்கள் சிவந்து" [திருவாய்மொழி 8-8] என்னும் திருவாய்மொழியில் ஐந்துமுதல் எட்டாம் பாசுரமீறாக இவனைப்பற்றி ஆழ்வார் அருளிச்செய்வதாக (முதலி)ஆண்டானும், கைவல்யநிஷ்ட₂னைப்பற்றியே ஆழ்வார் அருளிச்செய்வதாக எம்பாரும் நிர்வஹிப்பர்கள் என்று ஈட்டிலிருந்து விளங்குகிறது. ஐந்தாம் பாசுரத்தின் அவதாரிகையில் "இதுக்குமேல் நாலு பாட்டு—படகூ₃த மான ஸௌக்ல்யத்தைப்பிரித்து நிஷ்கர்ஷகஶப்₃த₃த்தையிட்டு வ்யவஹரிக்குமாபோலே, 'எம்பெம்மானோடு' (8-8-8) என்கிற பாட்டளவும் கேவலாத்மஸ்வரூபத்தைச் சொல்லுகிறது — என்று எம்பார் அருளிச்செய்யும்படி. ஆண்டான் 'ப்ரகாரமான வேஷத்திலே சொல்லுகிறது' என்னும்" என்று அருளினார் நம்பிள்ளை. எட்டாம் பாட்டின் ஈட்டில் — "எம்பெம்மானோடு ஒத்தேசென்று அங்குள்ளங் கூடக் கூடிற்றாகில் நல்லுறைப்பே" என்ற பகுதிக்கு எம்பார் நிர்வாஹத்திலும், ஆண்டான் நிர்வாஹத்திலும் பொருள்வேறுபாட்டைத் தெளிவாகக் காட்டுகிறார் நம்பிள்ளை. 'எம்பெம்மானோடு ஒத்த தேசு என்று' என்றிருக்கவேண்டியது நடுக்குறைத்தலாய் 'ஒத்தேசென்று' என்று இருப்பதாகக்கொண்டு, 'எம்பெருமானைப்போலே ஶுத்₃தி₄யை யுடையதாய், ஜ்ஞாநாநந்த₃லக்ஷணமாயிருப்பது ஜீவாத்மா' என்னும் கைவல்யநிஷ்ட₂னின் அநுஸந்த₄ானத்தை ஆழ்வார் கூறுவதாகவும், 'நல்லுறைப்பு' என்று 'ஆத்மப்ராப்தி ஸித்₃தி₄க்கும்' என்று அவனுக்குப் ப₂லனைக் கூறுவதாகவும் எம்பார் நிர்வாஹம். இப்படி நடுக்குறைத்தலாகக்கொள்ளாமல் "எம்பெம்மானோடு ஒத்தே சென்று" என்று பிரித்து, "எம்பெருமான் தனக்கு ஶேஷமாக இவ்வாத்ம வஸ்துவை நினைத்திருக்குமாபோலே, இவனும் அவனோடு ஒத்து-அவன் நினைவோடு ஒத்து, அத்த₃ஶையில் ஶேஷத்வாநுஸந்த₄ானம் கூடுமாகில் நல்ல வாய்ப்பு" என்று கொள்வது ஆண்டான் நிர்வாஹம். இவ்விடத்தில், "ஆண்டான் பணிக்கும்படி—'நின்ற ஒன்றை உணர்ந்தேனுக்கு' என்னும் பாட்டுத்தொடங்கி நிஷ்க்ருஷ்டாத்மாநுஸந்த₄ான மாத்ரமன்றிக்கே ப₄க₃வச்சேஷத்வபர்யந்தமாக அநுஸந்தி₄க்கிறது... எம்பெருமான் தனக்கு...நல்ல வாய்ப்பு" என்று ஈட்டிலும் "நல்லுறைப்பு-நல்ல வாய்ப்பு; ப₄க₃வத₃நுப₄வம் ஸித்₃தி₄க்கும் என்றபடி என்று ஆண்டான் நிர்வாஹத்திலே தாத்பர்யம்" என்று அரும்பதவுரைகளிலும் உள்ள வாக்யங்கள் — ப்₃ரஹ்மாத்மகமாகத் தன் ஆத்மாவை அநுஸந்தி₄த்து ப்₃ரஹ்மாநுப₄வத்தைப்பெறும் பஞ்சாக்₃னி வித்₃யாநிஷ்ட₂னே இங்கு சொல்லப்படுகிறான் என்று முதலியாண்

டான் திருவுள்ளம்பற்றியதைத் தெளிவாக விளக்குகின்றன. இவற்றிலிருந்து இவ்வவதாரிகாபாஷ்யத்தில் 'ஆத்மயாதாத்ம்யவித்' எனப்படும் பஞ்சாக்நிவித்யாநிஷ்டன் ஜிஜ்ஞாஸு எனப்பட்ட கைவல்யார்த்தியிலும் மிகவும் வேறுபட்டவன் என்று அசைக்கமுடியாதபடி தேறிற்று. இவ்விஷயத்தையே ந்யாயஸித்தாஞ்ஜனத்தில் ஜீவபரிச்சேதத்தின் கடைசியில், "அத்ர கிஞ்சிதுச்யதே — யஸ்த்வயம் 'ஆத்மயாதாத்ம்யவித: பரமபுருஷநிஷ்டஸ்ய ச ஸாதாரணீம் அர்ச்சிராதிகாம் கதிமாஹ' இத்யாதி க்ரந்த: ப்ரஸ்துதத்வமாத்ரேண கைவல்யநிஷ்ட பரமபுருஷநிஷ்டவிஷய இதி ந மந்தவ்யம்। கிந்து பரமாத்மாத்மகஸ்வாத்மாநுஸந்தாத்ரு ஸ்வாத்மஶரீரகபரமாத்மாநுஸந்தாத்ருபேததபிந்நப்ரஹ்மவித்விஷய ஏவ। ததா ஸதி ஆத்மயாதாத்ம்யவிச்சப்தோऽப்யத்யந்தாநுகுண:। ஏகக்ரந்த ஸகலாஸ்வாரஸ்யம் பஹுக்ரந்தஸ்வாரஸ்யாய க்ராஹ்யம்। ந சாத்ர கஶ்சித்பகவத்யாமுநமுநிவசநவிரோதகந்தோऽபி இதி। ஸ்ரீமத்கீதாபாஷ்யேऽபி பஞ்சாக்நிவித்யாநிஷ்டஸ்ய ப்ரஹ்மாத்மகஸ்வாத்மாநுஸந்தாநம், தத்க்ரதுந்யாயாத் ப்ரஹ்மப்ராப்திஶ்ச ஸ்புடதரம் ப்ரத்யபாதி" [இங்கு சில வார்த்தைகள் சொல்லுகிறேன்:- 'ஆத்மயாதாத்மயவித்துக்கும் பரமபுருஷநிஷ்டனுக்கும் பொதுவான அர்ச்சிராதிகதியைக் கூறுகிருன்' என்னும் கீதாபாஷ்யக்ரந்தம் - இப்ரகரணத்தில் ப்ரஸ்தாபிக்கப்பட்டவர்கள் என்பதே காரணமாகக் கைவல்யநிஷ்டனையும், பரமபுருஷநிஷ்டனையும் பற்றியே பேசுகிறது என்று நினைக்கக்கூடாது. (அப்படியானல், அது யாரைப்பற்றிப் பேசுகிறது? எனில்:) பரமாத்மாவை ஆத்மாவாகக் கொண்டவனுகத் தன் ஆத்மாவை உபாஸிப்பவனுகிற பஞ்சாக்நி வித்யாநிஷ்டன், தன் ஆத்மாவை ஶரீரமாகக்கொண்டவனுகப் பரமாத்மாவை உபாஸிப்பவன் என இருவகைப்படும் ப்ரஹ்மோபாஸகர்கள் விஷயமே அது. அப்படிக்கொண்டால்தான் (கைவல்யநிஷ்டன் விஷயமாக எங்குமே பிரயோகிக்கப்படாததாய், ஜ்ஞாநிக்கே பொருந்துமதான) 'ஆத்மயாதாத்ம்யவித்' எனும் ஶப்தமும் மிகவும் பொருந்திநிற்கும். கீதாபாஷ்யமாகிற ஒரு க்ரந்தத்தில் ப்ரகரணபங்கமாகிற ஒரு அஸ்வாரஸ்யம், ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்யங்கள் முதலானவற்றில் பல வாக்யங்களின் ஸ்வாரஸ்யத்தைக் கருதி ஏற்கத்தக்கது. [கீதார்த்தஸங்க்ரஹத்தில் ஆளவந்தார் கைவல்யநிஷ்டனை 'அக்ஷரயாதாத்ம்யார்த்தி' என்று குறிப்பிட்டிருக்கிருரேயொழிய, 'ஆத்மயாதாத்ம்யார்த்தி' என்று குறிப்பிடவில்லையாகையால்] இங்கு பகவத்யாமுநமுனிவரின் வசனத்திற்கு விரோதலேஶமும் இல்லை என்கை. கீதாபாஷ்யத்திலும் பஞ்சாக்நிவித்யாநிஷ்டனுக்கு ப்ரஹ்மாத்மகமான தன் ஆத்மாவின் அநுஸந்தானமும், தத்க்ரதுந்யாயத்தாலே ப்ரஹ்மப்ராப்தியும் மிகத்தெளிவாக அருளிச்செய்யப்பட்டது.] என்று ஸ்ரீவேதாந்ததேஶிகர் அருளிச்செய்தார்.

தாத்பர்யசந்த்₃ரிகையில் ஸ்ரீவேதா₃ந்ததே₃ஶிகர் 'அக்ஷரயாத₂ாத்ம்ய வித்' என்றும், 'ஜிஜ்ஞாஸு' என்றும் சொல்லப்படுபவனே 'ஆத்ம யாத₂ாத்ம்யவித்' என்று இந்த அவதாரிகாபா₄ஷ்யத்தில் எடுக்கப் படுவதாகக்கொண்டு, மது₄வித்₃யாநிஷ்ட₂னுக்கு வஸுபத₃த்தை யடைதலை முன்னிட்டுக்கொண்டு ப்₃ரஹ்மாநுப₄வம் கிடைப்பதுபோலே அவனுக்குக் கைவல்யம் அவாந்தரப₂லம் (இடையில் கிடைக்கும் பயன்) என்றும், ப்₃ரஹ்மாநுப₄வமே முக்₂யப₂லன் என்றும் நிர்வஹித் திருக்கையில், அதற்கு முரணாக ந்யாயஸித்₃த₄ாஞ்ஜந ஸ்ரீஸூக்தி களில் கைவல்யநிஷ்ட₂னும், ஆத்மயாத₂ாத்ம்யவித்தும் வெவ்வேறு பட்டவர்கள் என்று கூறுவது எப்படிப்பொருந்தும்? எனில்: அவர்காலத் தில் அவரது பக்ஷத்தைத்தவிரக் கைவல்யநிஷ்ட₂னைப்பற்றி இரு பக்ஷங்கள் இருந்தன. கைவல்யம் நித்யமான முக்தியே என்றே அவ்விரு பக்ஷத்தினரும் கொண்டிருந்தனர். அது நித்யமான முக்தியா யினும் அதில் ப்₃ரஹ்மாநுப₄வத்தின் லேஶமும் கிடையாது; அர்ச்சி ராதி₃க₃தியும் கிடையாது; ஆகையால், கைவல்யார்த்தி₂ இவ்விரண்டை யுமுடைய ஆத்மயாத₂ாத்ம்யவித்தான பஞ்சாக்₃னிவித்₃யாநிஷ்ட₂னைக் காட்டிலும் வேறுபட்டவன் என்பது தி₃வ்யப்ரப₃ந்த₄வ்யாக்₂யாதாக் களின் பக்ஷம்: கைவல்யநிஷ்ட₂ன் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னே; இவனுக்கு அர்ச்சிராதி₃க₃தி உண்டு; ஶ்ருதியிலும், ஸ்ரீ பா₄ஷ்யாதி₃ களிலும் இவனுக்கு ப்₃ரஹ்மப்ராப்தியைச் சொன்னது ப்₃ரஹ்மம் விஶேஷணமாக ப்ரகாஶிப்பதையிட்டு என்பது மற்றவர்களின் பக்ஷம். ஸ்ரீதே₃ஶிகன் இவ்விரண்டாவது பக்ஷக்காரர்களை மறுத்துரைக்கும் போது அவர்களுக்கு ஸ்ரீ பா₄ஷ்யாதி₃கள் முரணாகவும், கீ₃தா பா₄ஷ்யம் அநுகூலமாகவுமிருப்பதைக் காட்டிவிட்டு, "உப₄யா விருத்₃த₄தயா க்₃ரந்த₂நிர்வஹணம் து ஸ்ரீமத்₃ கீ₃தாபா₄ஷ்யடீகாயாம் தாத்பர்யசந்த்₃ரிகாயாம் உக்தமஸ்மாபி₄:" [ஸ்ரீ பா₄ஷ்யாதி₃களுக்கும், கீ₃தாபா₄ஷ்யத்திற்கும் முரண்படாமல் ஸ்ரீஸூக்திகளை நிர்வஹிக்கும் வழி ஸ்ரீமத்₃கீ₃தாபா₄ஷ்யத்தின் உரையான தாத்பர்யசந்த்₃ரிகையில் நம்மால் சொல்லப்பட்டது.] என்று தம் பக்ஷத்தைக் கூறிவிட்டு, "அத்ர கிஞ்சிது₃ச்யதே" [இங்கு சில வார்த்தைகள் சொல்லு கிறேன்.] என்று தொடங்கிக் கூறியது முற்கூறிய இரண்டாவது பக்ஷக்காரர்கள் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னைக் கைவல்யநிஷ்ட₂னாகக் கொள்வதைக்காட்டிலும், தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யாதாக்களைப் போலே பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னைக்காட்டிலும் வேறுபட்டவனாகக் கைவல்யநிஷ்ட₂னைக் கொண்டுவிடுவது ஸ்ரீ பா₄ஷ்யகாரரின் பல ஸ்ரீ ஸூக்திகளுக்குப் பொருந்தியிருக்கும் என்று காட்டியபடியே

யாகையாலே தாத்பர்யசந்த்₄ரிகைக்கும், ந்யாயஸித்₃த₄ாஞ்ஜனத்திற்கும் முரணில்லை.

இனி, ஆத்மஶப்₃த₃மும், அக்ஷரஶப்₃த₃மும் பர்யாயஶப்₃த₃ங்கள் (ஒரே பொருளைக்கூறும் சொற்கள்) ஆயிற்றே; ஆகையால், ஆத்மயாத₂ாத்ம்யவித் எனப்படும் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னையே அக்ஷரயாத₂ாத்ம்யவித்தான கைவல்யநிஷ்ட₂னாகக் கொண்டுவிடுவது ஸ்வரஸமேயன்றோ? என்னும் கேள்வி எழுகிறது. ஆத்மஶப்₃த₃ம் ஜீவாத்மபரமாத்மாக்களைக்குறிக்கும் பொதுவான சொல். அது இங்கு ஜீவாத்மாவையே குறிக்கிறது என்று ப்ரகரணத்தைக்கொண்டு அறுதியிடப்படுகிறது. அதுபோலே, அக்ஷரஶப்₃த₃ம் "தத₃க்ஷரம் அதி₄க₃ம்யதே" [முண்டக 1.1-5] முதலான வாக்யங்களில் பரமாத்மாவைக் குறித்தும், "அம்ருதாக்ஷரம் ஹர:" [ஶ்வே 1-10] முதலானவிடங்களில் ஜீவாத்மாவைக்குறித்தும், "அக்ஷராத் பரத: பர:" [முண்டக 2-1-2] [அக்ஷரஶப்₃த₃த்தால் சொல்லப்படும் அசேதனத்தைக்காட்டிலும் மேற்பட்ட ஜீவாத்மாவிலும் மேற்பட்ட பரமாத்மா] ."அக்ஷரம் தமஸி லீயதே" [ஸுப₃ால-2] [அக்ஷரம் என்னும் நிலையிலுள்ள ப்ரக்ருதி, 'தமஸ்' என்னும் நிலையிலுள்ள ப்ரக்ருதியில் லயமடைகிறது.] முதலானவிடங்களில் அசேதனப்பொருளைக்குறித்தும், "ஸர்வகாமாம்ஶ்ச ஸாக்ஷராந்" [க₃த்₃யத்தில் எடுக்கப்பட்ட புராணஶ்லோகம்] "ஸம்ஸ்ருத்யக்ஷர வைஷ்ணவாத்₄வஸு" [சது:ஶ்லோகீ-3] "ஐஶ்வர்யமக்ஷரக₃திம்" [ஸ்ரீ கு₃ணரத்நகோஶம் 58] முதலானவிடங்களில் கேவலாத்மாநுப₄வமாகிற கைவல்யமோக்ஷத்தைக்குறித்தும் பிரயோகிக்கப்பட்டிருந்தபோதிலும், ப்ரகாணத்தை அநுஸரித்து கீ₃தார்த்த₂ஸங்க்₃ரஹத்திலும் [12] கீ₃தாப₄ாஷ்யத்திலும் [8-வது அத்₄யாயம் அவதாரிகை] அக்ஷரயாத₂ாத்ம்யஶப்₃த₃ம் கேவலாத்மாநுப₄வமாகிற கைவல்யமோக்ஷத்தையே குறிப்பது என்று கொள்ளவேண்டுமாகையால், அக்ஷரயாத₂ாத்ம்யவித்தான கைவல்யநிஷ்ட₂னும், ஆத்மயாத₂ாத்ம்யவித்தான பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னும் வெவ்வேறுபட்டவர்களேயாவர். ஸ்ரீப₄ாஷ்யகாரர் கீ₃தாப₄ாஷ்யத்தில் வெவ்வேறிடங்களில் உள்ள இரு ப்ரகரணங்களில் இந்த இரு ஶப்₃த₃ங்களையிட்டு, அவ்விரு ஶப்₃த₃ங்களால் குறிக்கப்பட்டவர்களுக்கு ப்ராப்யத்திலும், உபாஸனத்திலும் நெடுவாசியைக் காட்டியிருப்பதே இவ்விருவரும் வேறுபட்டவர்கள் என்பதைக் காட்டித்தரும். "கண்கள் சிவந்து" [8-8] திருவாய்மொழியில் ஐந்து முதல் எட்டு பாசுரங்கள் கேவலாத்மோபாஸநம் செய்பவனைக் குறிக்கின்றன, அவனுக்குப் ப₂லம் ஆத்மப்ராப்தி என்று

எம்பார் நிர்வஹித்திருப்பதும், அவை ப்₃ரஹ்மாத்மகமாக ஆத்மாவை உபாஸிப்பவனைக் குறிக்கின்றன, அவனுக்கு ப்₃ரஹ்மாநுப₄வமே ஸித்₃தி₄க்கும் என்று முதலியாண்டான் நிர்வஹித்திருப்பதும் அக்ஷர யாதா₂ர்த்ம்யவித்தான கேவலாத்மோபாஸகனும், ஆத்மயாதா₂த்ம்ய வித்தான ப்₃ராஹ்மாத்மகஸ்வாத்மோபாஸகனும் மிகவும் வேறுபட்ட வர்கள் என்பதைத் தெளிவாகக்காட்டுகிறது. வேறு பல பாசுரங் களின் வ்யாக்₂யானங்களில் கைவல்யநிஷ்ட₂னுக்கு ப்₃ரஹ்மாநுப₄வ லேஶக₃ந்த₄மும் கிடையாது என்று வ்யாக்₂யாதாக்கள் அருளி யிருப்பது இதை வலியுறுத்துகிறது. ஆகையால், தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யாதாக்கள் உகந்த பக்ஷம் இதுவேயாகும்.

இனி, ப்ரகரணத்தில் ப்ரஸ்தாபமேயில்லாத பஞ்சாக்₃னிவித்₃யா நிஷ்ட₂னைப்பற்றி பா₄ஷ்யகாரர் இங்கு எதற்காக ப்ரஸ்தாபிக்கிறார் என்னும் கேள்வி எழுகிறது. அர்ச்சிராதிக₃தியும், ப்₃ரஹ்மாநு ப₄வமும் பரமபுருஷநிஷ்ட₂னுக்கு மாத்திரமல்லாமல், ஆத்மோ பாஸகர்களில் ஒரு வகையினரான பஞ்சாக்₃னிவித்₃யாநிஷ்ட₂னுக்கும் உண்டு என்று ப்₃ரஹ்மஸூத்ரத்தில் கார்யாதி₄கரணத்திலிருந்து தேறிய அர்த்த₂த்தை அர்ச்சிராதி₃க₃தியைப்பற்றிய ஶ்லோகங்களை விவரிக்கும்போது தெரிவிக்கவேண்டியது அவஶ்யமாகையாலும், ப்ர கரணத்தில் அவ்யவஹிதமான முந்தின (22-வது) ஶ்லோகத்தில் ப்ரஸ்தாபிக்கப்பட்ட ஜ்ஞாநிகள் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂ர் என்றும் பரமபுருஷநிஷ்ட₂ர் என்றும் இருவகைப்படுவர் என்று காட்டவேண்டியது அவஶ்யமாகையாலும், அவனை இங்கு ப்ரஸ்தா பிக்கிறார். அப்படி ப்ரஸ்தாபிக்கும்போது, பஞ்சாக்₃நிவித்₃யா நிஷ்ட₂னை அதற்குமுன் ப்ரஸ்தாபிக்கப்பட்ட கைவல்யநிஷ்ட₂னென்று எவரும் மயங்கிவிடக்கூடாதென்றே — கைவல்யநிஷ்ட₂னைப் பற்றித் தாம் ஏற்கனவே பிரயோகி₃த்த கைவல்யார்த்தி₂, ப்ரக்ருதிவியுக்தாத்ம ஸ்வரூபாவாப்தீச்சு₂ முதலான பத₃ங்களை இடாமல், கைவல் யார்த்தி₂யைப் பற்றித் தாமோ, ஆளவந்தார் முதலான பூர்வா சார்யர்களோ எங்குமே பிரயோகி₃யாததும், ஜ்ஞாநி லக்ஷணத்தோடு பொருந்தியதுமான 'ஆத்மயாதா₂த்ம்யவித்' என்னும் ஶப்₃த₃த் தாலே அவனைக் குறித்து, கைவல்யார்த்தி₂க்கு இல்லை என்று (7, 17) (8, 22) முதலான ஶ்லோகபா₄ஷ்யங்களில் தம்மால் காட்டப் பெற்ற ப₄க₃வத₃நுப₄வத்தையும், (8-26) ஶ்லோகபா₄ஷ்யத்தில் (இல்லையென்று) காட்டப்போகிற அர்ச்சிராதிக₃தியையும் இவனுக்கு உண்டென்று ப்ரமாணங்களைக் காட்டி நிரூபித்தருளுகிறார். ஆகை யாலே, இங்கு கூறப்படும் 'ஆத்மயாதா₂த்ம்யவித்' எனப்படும்

न च प्रजापतिवाक्यादौ श्रुतपरविद्याङ्गभूतात्मप्राप्तिविषयेयं * तद्य इत्थं विदुरिति गतिश्रुतिः, * ये चेमेऽरण्ये श्रद्धा तप इत्युपासते इति परविद्यायाः पृथक्छ्रुतिवैयर्थ्यात्। पञ्चाग्निविद्यायां च—* इति

---

பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்டனைக் கைவல்யநிஷ்டனுகக் கருதச் சிறிதும் இடமில்லை. இனி, இதை வலியுறுத்தும் அவதாரிகா பா₄ஷ்யத்தின் மேல் பகுதிகளைக் காண்போம்.

இனி — சா₂ந்தோ₃க்₃யத்தில் எட்டாவது ப்ரபாட₂கத்தில் உள்ள த₃ஹரவித்₃யாப்ரகரணத்தில், ஏழாவது க₂ண்ட₃த்திலிருந்து தொடங்கியுள்ள ப்ரஜாபதி வாக்யத்திலும், "அத்₄யாத்மயோக₃ாதி₄க₃மேந தே₃வம் மத்வா தீ₄ரோ ஹர்ஷஶோகௌ ஜஹாதி" [கட₂ 2-12] [மனத்தை ஆத்மாவில் நிலைநிறுத்துவதன்மூலம் ஜீவாத்ம த₃ர்ஶனத்தை அடைந்து, அதன் ப₂லனுகப் பரமபுருஷனை உபாஸித்து, உபாஸகன் இவ்வுலக இன்பதுன்பங்களைக் கைவிடுகிருன்] என்று கடோ₂பநிஷத்திலும் பரமாத்மோபாஸனத்திற்கு அங்க₃மாகக் கூறப்பட்ட ஆத்மத₃ர்ஶனத்தையே "தத்₃ய இத்த₂ம் விது₃:" என்னும் வாக்யப்பகுதியும் குறிப்பதாகக் கொண்டுவிடலாமே; இவ்விடத்தில் தனியாக ஒருவகைப்பட்ட ஆத்மோபாஸகனைக் கூறுவதாகக் கொள்ளவேண்டிய அவஶ்யமில்லையே என்னும் கேள்வி எழுகிறது. இதற்குப் பரிஹாரமாவது:— "தத்₃ய இத்த₂ம் விது₃: தேऽர்ச்சிஷமபி₄ஸம்ப₄வந்தி" [இப்படி ஆத்மாவை உபாஸிப்பவர்கள் அர்ச்சிராதி₃க₃தியாலே செல்கிருர்கள்] என்று மாத்திரம் சொல்லியிருந்தால் அப்படிக் கொண்டுவிடலாம். இங்கோவெனில், "தத்₃ய இத்த₂ம் விது₃:, யே சேமேऽரண்யே ஶ்ரத்₃தா₄ தப இத்யுபாஸதே" என்று ஆத்மாவை உபாஸிப்பவர்களோடு, பரமாத்மோபாஸகர்களையும் இரண்டு யச்ச₂ப்₃த₃ங்களோடு கூடிய வாக்யப்பகுதிகளிலே தனியே எடுத்து, சகாரத்தாலே இருவரையும் ஸமுச்சயித்து (கூட்டி), இருவர்க்கும் அர்ச்சிராதி₃க₃தியைச் சொல்லுகையாலே, இவ்வாக்யம்— கீ₃தை மூன்ருவது அத்தியாயம் அவதாரிகா பா₄ஷ்யத்தில் விளக்கப்பட்ட ப்ரஜாபதி வாக்யத்திலும், கடோ₂பநிஷத்திலும் கூறப்பெற்ற பரமாத்மோபாஸனத்திற்கு அங்க₃மான ஆத்மத₃ர்ஶநத்தைக் கூறவில்லை என்றும், பரமாத்மோபாஸகர்களைக் காட்டிலும் வேறுபட்ட ஆத்மோபாஸகர்களில் ஒருவகையினரையும், பரமாத்மோபாஸகர்களையும் சேர்த்து எடுத்து, இருவர்க்கும் அர்ச்சிராதி₃க₃தியைக் கூறுகிறது என்றும் விளங்குகிறது.

तु पञ्चम्यामाहुतावापः पुरुषवचसो भवन्ति (छा. ५. ९. १.) इति, * रमणीयचरणाः...कपूयचरणाः (छा. ५. १०. ७) इति पुण्यपापहेतुको मनुष्यादिभावोऽपामेव भूतान्तरसंसृष्टानाम्, आत्मनस्तु तत्परिष्वङ्गमात्रमिति चिदचितोर्विवेकमभिधाय, * तद्य इत्थं विदुः * तेऽर्चिषमभि-

---

இனி, "தத்₃ய இத்த₂ம் வித₃:" என்பது ஆத்மோபாஸகர்களில் ஒரு வகையினரைக் கூறுகிறது என்பது எப்படி? எனில், இவ்விஷயம் பஞ்சாக்₃நிவித்₃யாப்ரகரணத்தை ஆராய்ந்தால் தெளிவாக விளங்கும். அதாவது:- நீர் முதலான பூ₄தஸூக்ஷ்மங்களோடு கூடிய ஜீவன் தூ₄மாதி₃ மார்க்க₃த்தாலே ஸ்வர்க்க₃ம் சென்று திரும்பும்போது—தே₃வலோகமாகிற அக்₃நியில் ஶ்ரத்₃த₄ா ரூபமான ஹவிஸ்ஸாகவும், பர்ஜந்யனாகிற அக்₃நியில் ஸோமரூபமான ஹவிஸ்ஸாகவும், பூ₄மியாகிற அக்₃னியில் மழையுருவான ஹவிஸ்ஸாகவும், புருஷனாகிற அக்₃னியில் அந்ந ரூபமான ஹவிஸ்ஸாகவும், ஸ்த்ரீயாகிற அக்₃னியில் ரேதஸ்(வீர்யம்) உருவிலான ஹவிஸ்ஸாகவும், ஆக இப்படி ஐந்து அக்₃னிகளில் ஐந்து வித₄மான ஹவிஸ்ஸுக்களாக ஹோமம் செய்யப்படுவதாக "இதி து பஞ்சம்யாமாஹுதாவாப: புருஷவசஸோ ப₄வந்தி" [சா₂ந் 5-9-1] [இவ்வண்ணமாக நீர் முதலான பூ₄தஸூக்ஷ்மங்கள் ஐந்தாவதான ஆஹுதியில் 'புருஷன்' என்னும் பெயருடையவையாகின்றன.] என்பதீருகவுள்ள வாக்யங்களில் ஓதப்பட்டது. இவ்வாக்யங்களிலிருந்து — சேதனமாய், விகாரமற்ற ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்ட அசேதனமாய், விகாரமுடைய பூ₄தங்களான ஶரீரத்திற்கே இம்மாறுபாடுகள் நிகழ்கின்றன, ஆத்மா அந்த ஶரீரத்தோடு சேர்ந்திருக்குமித்தனையொழிய விகாரமடைவதில்லை என விளங்குகிறது, இந்த ஶரீரச்சேர்த்தியும் புண்யபாபகர்மத்தால் ஏற்படுவது என்று, "தத்₃ய இஹ ரமணீயசரணா :...ரமணீயாம் யோநிம் ஆபத்₃யேரந்... அத₂ ய இஹ கபூயசரணா :...கபூயாம் யோநிம் ஆபத்₃யேரந்" [சா₂ந் 5-10-7] [திரும்பி வருபவர்களில் பக்வமான புண்யகர்மம் மிகுதியுள்ளவர்கள் ப்₃ராஹ்மணர், க்ஷத்ரியர் முதலான சிறந்த பிறப்புக்களில் ஒன்றை அடைகிருர்கள். பக்வமான பாபகர்மம் மிகுதியுள்ளவர்கள் நாய், பன்றி முதலான தாழ்ந்த பிறப்புக்களில் ஒன்றை அடைகிருர்கள்.] என்னும் வாக்யம் காட்டுகிறது; இப்படி ஶரீரத்தைக் காட்டிலும் வேறுபட்டதாக ஆத்மாவைக் காட்டி, "தத்₃ய இத்த₂ம் வித₃:" என்று யச்ச₂ப்₃த₃த்தோடு கூடிய

संभवन्ति * इमं मानवमावर्तं नावर्तन्ते इति विविक्ते चिदचिद्वस्तुनी त्याज्यतया प्राप्यतया च ये इत्थं विदुस्तेऽर्चिरादिना गच्छन्ति, न च पुनरावर्तन्त इत्युक्तमिति गम्यते। आत्मयाथात्म्यविदः परम-

---

வாக்யப் பகுதியாலே அந்த ஜீவாத்மாவை உபாஸிப்பவனை எடுத்து, "யே சேமேऽரண்யே ஶ்ரத்3தா4 தப இத்யுபாஸதே" என்று மற்றொரு யச்ச2ப்3த3த்தோடும் சகாரத்தோடும் கூடிய வாக்யப்பகுதியாலே பரமாத்மோபாஸகனைக் கூட்டுகையாலே "தத்3ய இத்த2ம் விது3:" என்னும் வாக்யப்பகுதியாலே ஜீவோபாஸகனே எடுக்கப்படுகிறான் என்பது தெளிவு. "இத்த2ம் விது3:" [இப்படி உபாஸிக்கிறார்கள்] என்கையால், இந்தப் பஞ்சாக்3நிவித்3யாப்ரகரணத்தில் ஓதியபடி அசித்தை த்யாஜ்யமாகவும் (கைவிடத்தக்கதாகவும்), சித்தை ப்ராப்யமாகவும் (கைக்கொள்ளத்தக்கதாகவும்) இவர்கள் உபாஸிக்கிறார்கள் என்கையாலே இவனும் ஒருவகையான ஆத்மோபாஸகனே என்பது மிகத் தெளிவாக விளங்குகிறது. இப்படி இரண்டு யச்ச2ப்3த3ங்களாலே இருவரையும் எடுத்து, "தேऽர்ச்சிஷமபி4ஸம்ப4வந்தி" என்று ஓதுகையால், இருவர்க்கும் அர்ச்சிராதி3க3தியுண்டு என்பதும், "ஏதேந ப்ரதிபத்3யமாநா இமம் மாநவமாவர்த்தம் நாவர்த்தந்தே" [சா2ந் 4-15-6] [இவ்வர்ச்சிராதி3க3தியால் வந்தவர்கள் இந்த ஸம்ஸாரமண்ட3லத்திற்குத் திரும்பமாட்டார்கள்] என்று ஓதுகையால் இருவர்க்கும் புநராவ்ருத்தியில்லை என்பதும் தேறுகிறது.

இனி—"தத்3ய இத்த2ம் விது3:" என்று கூறப்படுமவன் ஆத்மோபாஸகனேயாகில், இவன், சா2ந்தோ3க்யம் ஏழாவது ப்ரபாட2கத்தில் அசேதநப்பொருள்களைக் காட்டிலும் வேறுபட்டதாய் ப்ராணஶப்3த3த்தால் சொல்லப்பட்ட தன் ஆத்மாவை உபாஸிக்கும் கேவலாத்மோபாஸகனோ? அல்லது வேறுபட்டவனோ? என்னும் கேள்வி எழுகிறது. பஞ்சாக்3நிவித்3யாப்ரகரணத்தை ஆராய்ந்தால், இவன் கேவலாத்மோபாஸகனல்லன் என்றும், ப்3ரஹ்மாத்மகமாகத் தன் ஆத்மாவை உபாஸிப்பவனே இவன் என்றும் விளங்கும். எப்படியெனில்: "தத் புருஷோऽமாநவ: ஸ ஏநாந் ப்3ரஹ்ம க3மயதி" [சா2ந் 4-15-6] [அந்த அமாநவபுருஷன் இவர்களை ப்3ரஹ்மத்தை அடைவிக்கிறான்.] என்று அர்ச்சிராதி3க3தியால் சென்ற ஆத்மயாதா2த்ம்யவித்தான பஞ்சாக்3நிவித்3யாநிஷ்ட2னுக்கும், பரமபுருஷநிஷ்ட2னுக்கும் ப்3ரஹ்மப்ராப்தி இப்ரகரணத்தில் ப2லமாகச் சொல்லப்பட்டுள்ளது. அதனால் இவ்விருவர்க்கும் அசித்தினின்றும்

पुरुषनिष्ठस्य च * स एनान् ब्रह्म गमयतीति ब्रह्मप्राप्तिवचनादचिद्वि-युक्तमात्मवस्तु ब्रह्मात्मकतया ब्रह्मशेषतैकरसमित्यनुसन्धेयम्; तत्क्रतु-न्यायाच्च। परशेषतैकरसत्वं च * य आत्मनि तिष्ठन्...यस्यात्मा शरीरम् (शत. माध्य. १४. ६. ५. ३०) इत्यादिश्रुतिसिद्धम् ॥

விடுபட்ட ஆத்மஸ்வரூபம்—ப்₃ரஹ்மாத்மகமாகவும் (ப்₃ரஹ்மத்தை அந்தர்யாமியாகக் கொண்டதாகவும்), ப்₃ரஹ்மத்திற்கு அடிமைப் பட்டிருப்பதையே இயல்வாகக் கொண்டதாகவும் உபாஸிக்கத்தக்கது என விளங்குகிறது. "உபாஸனத்தின்படியே ப₂லன் ஏற்படும்" என்னும் தத்க்ரது ந்யாயத்தைக்கொண்டு பார்க்கும்போதும் ப்₃ரஹ் மத்தை அடையும் இவன் ப்₃ரஹ்மத்தை உபாஸித்திருக்கவேண்டும் என்று ஸித்₃தி₄க்கும். ஆகையால், இப்பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂ன் ஏழாவது ப்ரபாட₂கத்தில் சொல்லப்பட்ட கேவலாத்மோபாஸகனல்லன், ப்₃ரஹ்மாத்மகமாகத் தன் ஆத்மாவை உபாஸிப்பவனே என்று தேறுகிறது. ஆத்மாவானது ப்₃ரஹ்மத்திற்கு அடிமைப்பட்டிருக்கை யையே இயல்வாகக்கொண்டது என்பது — "ய ஆத்மநி திஷ்ட₂ந் ஆத்மநோऽந்தர:...யஸ்யாத்மா ஶரீரம்" [ஶதபத₂ - மாத்₄யந்தி₃ந 14-6-5-30] [எவன் ஆத்மாவில் நிற்கிறானோ, ஆத்மாவினுள்ளிருக் கிறானோ, எவனுக்கு ஆத்மா ஶரீரமோ] "பதிம் விஶ்வஸ்ய" [தை-நா-11]' [உலகனைத்துக்கும் தலைவன் நாரணனே] "கரணாதி₄பாதி₄ப:" [ஶ்வே 6-9] [இந்திரியங்களை நியமிக்கும் ஜீவனுக்குத் தலைவன்] முதலான நூற்றுக்கணக்கான வேத₃வாக்யங்களிலிருந்து ஸித்₃தி₄க் கிறது. இவ்வுண்மையை அநுஸந்தி₄த்து உபாஸிக்கும் ஆத்ம யாத₂ாத்ம்யவித்தான பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂ன், ஏழாவது ப்ரபாட₂ கத்தில் கேவலாத்மாவை உபாஸிப்பவனாகக் காட்டப்பட்ட அதி₄காரி யைக்காட்டிலும் வேறுபட்டவன் என்றும், அவனுக்கில்லாத அர்ச்சிராதி₃ க₃தியும் ப்₃ரஹ்மாநுப₄வமும் இவனுக்கு உண்டு என்றும் பஞ்சாக்₃நி வித்₃யாப்ரகரணத்திலிருந்தே இவ்வண்ணமாக விளங்குகிறது.

இவ்விடத்தில் — ப்₃ருஹதா₃ரண்யகத்தில் அர்ச்சிராதி₃க₃தியைச் சொல்லிவருகையில், "புருஷோ மாநஸ ஏத்ய ப்₃ரஹ்மலோகாந் க₃மயதி" [ப்₃ருஹ 8-2-15] [(பரமாத்மாவால்) மனஸ்ஸினால் (ஸங்கல்பத்தால்) ஸ்ருஷ்டிக்கப்பட்ட (அமானவ) புருஷன் வந்து, அவர்களை ப்₃ரஹ்மலோகங்களை அடைவிக்கிறான்.] என்று ப்₃ரஹ்ம லோகப்ராப்தியே சொல்லப்பட்டிருப்பது, கைவல்யநிஷ்ட₂னை பஞ் சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னுக்கு ப்₃ரஹ்மலோகப்ராப்தியுண்டேயொழிய

ப்3ரஹ்மப்ராப்தியில்லை என்னும் கருத்தினாலேயே என விளங்குகிறதே ; "ப்3ரஹ்ம க3மயதி" என்றதும் இதற்கு அநுகு3ணமாக ப்3ரஹ்மலோக ப்ராப்தியைச் சொல்லுவது என்று கொண்டுவிடலாமே— என்னும் வாத3ம் ஸ்ரீபா4ஷ்யாதி3களுக்குப் பொருந்தாது என்று அறியத்தக்கது. "யத்து 'ப்3ரஹ்மலோகாந்' இதி லோகஶப்3த3 ப3ஹுவசநாப்4யாம் கார்யபூ4தஹிரண்யக3ர்ப்ப4ப்ரதீதிரிதி — தத் அயுக்தம்! நிஷாத3ஸ்த2பதி ந்யாயேந 'ப்3ரஹ்மைவ லோகோ ப்3ரஹ்ம லோக:' இதி கர்மதா4ரயஸ்யைவ யுக்தத்வாத்! அர்த்த3ஸ்ய ச ஏகத்வே நிஶ்சிதே, ப3ஹுவசநஸ்ய 'அதி3தி: பாஶாந்' [பூர்வமீமாம்ஸா 9-3-5] இதிவது3பபத்தே:!!" [4-3-11 ஸ்ரீபா4ஷ்யம்] ['ப்3ரஹ்மலோகாந்' என்று ப்3ரஹ்மஶப்3த3த்தோடு லோகஶப்3த3த்தைச் சேர்த்துப் படித்துப் பன்மையும் இட்டிருப்பதால், இங்கு ஜீவனை ஹிரண்யக3ர்ப்ப4லோகப்ராப்தி சொல்லப்படுகிறதேயொழிய, ஸர்வவ்யாபியான ப்3ரஹ்மத்தையடைவது சொல்லப்படவில்லை என்னும் பூர்வபக்ஷம் தவறு ; பூர்வமீமாம்ஸையிற்கூறிய நிஷாத3ஸ்த2பதி ந்யாயத்தால், 'ப்3ரஹ்மத்தின் லோகம் — ப்3ரஹ்மலோகம்' என்று தத்புருஷமாகக் கொள்வதைக் காட்டிலும் 'ப்3ரஹ்மமாகிற லோகம்— ப்3ரஹ்மலோகம்' என்று கர்மதா4ரயமாகக் கொள்வதே பொருந்துமாகையால். ப்3ரஹ்மம் ஒன்றைப் பற்றியே இங்கு சொல்லப்படுகிறது என நிஶ்சயிக்கப்பட்டவளவில், 'ப்3ரஹ்மலோகாந்' என்ற பன்மையும், பூர்வமீமாம்ஸையில் (9-3-5) உள்ள "அதி3தி: பாஶாந்" என்னும் வழக்கைப்போலே ஒருமையாகக் கொள்ளத்தக்கது.] என்று கார்யாதி4கரண ஸ்ரீபா4ஷ்யத்தில் ஸ்ரீபா4ஷ்யகாரர் "ப்3ரஹ்ம லோகாந் க3மயதி" என்றதை "ப்3ரஹ்ம க3மயதி" என்றதற்கு அநுகு3ணமாக நயநம் செய்தருளியிருக்கிறார். மேலும், இவ்வதி4கரண ஸ்ரீபா4ஷ்யத்திலும் (8-23, 24) அவதாரிகா கீ3தாபா4ஷ்யத்திலும், ஶ்ருதியையும், தத்க்ரது ந்யாயத்தையுங்கொண்டு, பஞ்சாக்3நிவித்3யா நிஷ்ட2னுக்கு ப்3ரஹ்மப்ராப்தி ஓதப்பட்டிருப்பதையிட்டு ப்3ரஹ்மோபாஸநத்தை ஸாதி4த்திருப்பதால், இவன் ப்3ரஹ்மத்தை ப்ராப்யமாகவேகொண்டு உபாஸிக்கிறான் என்றும், ப்3ரஹ்மாநுப4வம் இவனுக்கு ப்ராப்யமாகிறது என்றும் தெளிவாக விளங்குகிறது. ஆகையால், இவன் கைவல்ய நிஷ்ட2னல்லன் என்பது வயிரவுருக்காயிற்று. இனி, சில நூற்றாண்டுகளாக இக்கைவல்ய விஷயமாக ஸ்ரீவைஷ்ணவர்களிடையே— குறிப்பாகத் தென்னாசார்ய ஸம்ப்ரதா3யஸ்த2ர்களிடையே — ஏற்பட்டிருக்கும் பலவித4மான குழப்பங்களை நீக்கித் தெளிவு ஏற்படுத்துவதற்காக "கைவல்ய ஸித்3தா4ஞ்ஜநம்" என்னும் கட்டுரையை அடுத்தபடியாக அச்சிடுகிறோம்.

# கைவல்ய ஸித்3தா4ஞ்ஜநம்

**ந வாதா3த் நாபி ஸங்க4ர்ஷாத் நாதி4க்யாத் ந ச காமத: ।**
**வக்ஷ்யாமி வசநம் ப்ராஜ்ஞா: யதா2ர்த்த2ம் கு3ருகௌ3ரவாத்॥**

[அறிவாளிகளே! வாத3ம் செய்யவேண்டும் என்னும் ஆசையாலோ, (பிறர்மீது) பொறாமையாலோ, (பிறரைக் காட்டிலும்) பெருமை பெறவேண்டுமென்றோ, மனம்போனபடியோ அடியேன் இங்குள்ள வார்த்தைகளை எழுதவில்லை; ஆழ்வார்கள் ஆசார்யர்களிடமுள்ள கௌ3ரவபு3த்3தி4யாலேயே உண்மையான வார்த்தைகளை இங்கு எழுதுகிறேன்.]

1. எம்பெருமானுக்கு நித்யவிபூ4தி, லீலாவிபூ4தி (ஸம்ஸாரம்) என இரண்டு விபூ4திகள் (செல்வங்கள்) உண்டு. இரண்டுமே அநாதி3காலமாய் இருந்து வருபவை. மேல்வரும் அநந்த காலத்திலும் இருக்கப்போகின்றவை. நித்யவிபூ4தி ஶுத்3த4ஸத்வமயமானது. இதில் என்றும் ஸம்ஸார ஸம்ப3ந்த4மேயில்லாத நித்யர்கள் என்றும், ஒரு காலத்தில் ஸம்ஸாரஸம்ப3ந்த4ம் பெற்றிருந்து அதிலிருந்து விடுபட்ட முக்தர்கள் என்றும் இருவகைப்பட்ட ஜீவர்கள் வாழ்கிறார்கள். ஒவ்வொரு வகையினரும் கணக்கற்றவர்கள். நித்யவிபூ4தி—மேலேயும் பக்கங்களிலேயும் எல்லையற்றதாகவும், கீழே லீலாவிபூ4தியை எல்லையாகக் கொண்டதாகவும் உள்ளது. லீலாவிபூ4தி—கீழேயும் பக்கங்களிலேயும் எல்லையற்றதாகவும், மேலே நித்யவிபூ4தியை எல்லையாகக் கொண்டதாகவும் உள்ளது.

2. மூலப்ரக்ருதியும், அதன் விகாரங்களும் அடங்கியதாய், ஸத்வம், ரஜஸ், தமஸ் எனும் முக்குணமயமானதான லீலாவிபூ4தியில் கணக்கற்ற ஜீவர்கள் ப்ரக்ருதியிலிருந்து தோன்றிய ஶரீரங்களில் அநாதி3காலமாகக் கட்டுண்டு கிடக்கையாலே ப3த்3த4ர்கள் எனப்படுகிறார்கள். நித்யமுக்தர்களுக்கும், இந்த ப3த்3த4ர்களுக்கும் ஸ்வரூபத்தில் வாசியில்லை. ஒவ்வொரு ஜீவாத்மாவின் ஸ்வரூபமும் இயற்கையில் அணுவாய், ஜ்ஞாநாநந்த3ஸ்வரூபமாய், எல்லையற்ற ஞானத்தை த4ர்மமாகக் கொண்டதாயிருப்பது. நித்யமுக்தர்களுக்கு ப்ரக்ருதி ஸம்ப3ந்த4மில்லாமையால் ஜ்ஞாநாநந்த3ஸ்வரூபமும் எப்போதும் பிரகாஶிக்கிறது; ஞானமும் ஸர்வவ்யாபியாயுள்ளது. ப3த்3த4ர்களுக்கு அந்த ஸம்ப3ந்த4மிருக்கையால் ஜ்ஞாநாநந்த3 ஸ்வரூபமும் தெளிவாகப் பிரகாஶிப்பதில்லை; ஞானமும் மிகச்சுருங்கி

யிருக்கிறது. நித்யவிபூ₄தியில் நித்யமுக்தர்களை அநுப₄வித்து போ₄க₃ ரஸம் கொண்டாடும் (இன்புறும்) எம்பெருமான், லீலாவிபூ₄தியில் ப₃த்₃த₄ர்களை ஒவ்வொரு ஶரீரத்தோடு படைத்து, அளித்து, அழித்து, முக்தியளித்து லீலாரஸம் கொண்டாடுவதற்காகவே இப்படிக் கணக்கற்ற ஜீவர்களை ப்ரக்ருதியால் அநாதி₃காலமாகக் கட்டுப்படுத்தி வைத்திருக்கிறான் என்று ஶாஸ்த்ரங்கள் முழங்குகின்றன.

3. இப்படி ப₃த்₃த₄ஜீவர்களைக்கொண்டு லீலாரஸம் அநுப₄விக்கும்போது, தனக்குக் குற்றங்கள் வராமலிருப்பதற்காக, இந்த ஜீவர்கள் முற்பிறவிகளில் செய்த கர்மங்களுக்கு அநுகு₃ணமாகவே இவர்களுக்கு இவ்வுலகப் ப₂லன்களை அளிப்பது என்னும் நியமத்தை வைத்துக்கொண்டிருக்கிறான் எம்பெருமான். ஜீவன் ஒவ்வொரு கர்மத்தைப் புரியும்போதும், முதன்முதலில் ஒரு ப்ராக்ருத விஷயத்தைப்பற்றி ஜ்ஞாநம், இச்சை₂ அல்லது த்₃வேஷம், ப்ரயத்நம் அல்லது நிவ்ருத்தி ஏற்படுகிறது. அப்போது இவர்களுக்குப் பரிபூர்ணமான ஸ்வாதந்த்ர்யத்தை அநாதி₃காலமாக அளித்திருக்கிறானாகையால், பிறகு அக்கர்மாநுகு₃ணமாகப் ப₂லனளிக்கும்போது எம்பெருமானுக்கு வைஷம்யம் (பக்ஷபாதம்) நைர்க்₄ருண்யம் (கருணையின்மை) எனும் தோ₃ஷங்கள் ஏற்படுவதில்லை. இவ்விஷயம் ப்₃ரஹ்மஸூத்ரத்தில் (2-3-6) பராயத்தாதி₄கரணத்திலும், அதன் ஸ்ரீபா₄ஷ்யம் முதலானவற்றிலும் விளக்கப்பட்டுள்ளது.

4. இப்படி ப₃த்₃த₄ஜீவனை அநாதி₃காலமாக ஸ்வாதந்த்ர்ய பு₃த்₃தி₄யுள்ளவனாகவே அமைத்து, அவன் பள்ளமடையாக ஈடுபடும் ஶப்₃தா₃தி₃விஷயங்களோடு அவனைப் பழகவிட்டு, அதுகாரணமாக சங்கிலித் தொடர்போலே வரும் அஜ்ஞாநம், கர்மம், வாஸனை, ருசி, ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄ம் முதலியவற்றில் உழலுமவனாக்கி லீலாரஸம் அநுப₄வித்தபோதிலும், இந்த ப₃த்₃த₄ஜீவனும், நித்யனையும் முக்தனையும்போலே தனக்குப் பிள்ளையாகவும், ரக்ஷ்யமாகவும், ஶேஷமாகவும், பா₄ர்யையாகவும், உடைமையாகவும், த₄ரிக்கப்படுபவனாகவும், ஶரீரமாகவும், தன்னை அறியவேண்டியவனாகவுமிருக்கையாலே, இவனுக்கு மோக்ஷமருளி, இவனை நித்யமுக்தர்களைப்போலே தான் பெற்று அநுப₄விக்க விரும்பி, அதற்காக ஸ்ருஷ்டி, ஸ்தி₂தி, ஸம்ஹாரம், ஶாஸ்த்ரப்ரதா₃நம், அவதாரம் முதலான பெருமுயற்சிகளைச் செய்பவனாகவுமிருக்கிறான் எம்பெருமான் என்று ஶாஸ்த்ரங்கள் முழங்குகின்றன.

5. இப்படி ஸர்வேஶ்வரன் முயற்சிசெய்யும்போது, தனக்கு வைஷம்யநைர்க்₄ருண்யங்கள் ஏற்படாமைக்கும், ஶாஸ்த்ரங்களில்

உள்ள விதி₄நிஷேத₄ங்கள் வீணாகாமைக்கும் — சேதநனுக்குத் தான் அளித்திருக்கும் ஸ்வாதந்த்ர்ய பு₃த்₃தி₄யாலே ஒவ்வொரு ப்ராக்ருத விஷயங்களில் அவனுக்கு ஏற்படும் ஜ்ஞாந இச்சா₂ த்₃வேஷங்களாகிற ப்ரதிபத்தியையும், அதற்கு அநுகு₃ணமாக ப்ராக்ருத விஷயங்களைப் பெறுவதற்கோ, விலக்குவதற்கோ செய்யும் முதல் ப்ரவ்ருத்திகளும், நிவ்ருத்திகளுமாகிற புண்யபாபங்களையும், அல்லது 'ப்ராக்ருதமல்லாத தன் ஶுத்₃த₄ாத்மஸ்வரூபத்தையோ, பரமாத்மாவையோ பெற்று அநுப₄விக்கையாகிற இருவகை மோக்ஷங்களில் ஒன்றைப்பெற்று அநுப₄விக்கவேணும்' என்னும் ப்ரதிபத்தியையும், அதற்கு அநுகு₃ணமாக ஶாஸ்த்ரங்களில் விதி₄க்கப்பட்ட ஸாத₄நாநுஷ்டா₂னங்களில் முதல் முயற்சியையும் எதிர்பார்த்தே எம்பெருமான் முயற்சி செய்கிறுன் என்னும் விஷயம் — "வைஷம்யநைர்க்₄ருண்யே ந ஸாபேக்ஷத்வாத் தத₂ா ஹி த₃ர்ஶயதி" [ப்₃ரஹ்மஸூத்ரம் 2-1-34] [(தே₃வாதி₃ ஜீவர்களுடைய கர்மத்தை) எதிர்பார்த்தே விஷம (ஏற்றத் தாழ்வுள்ள) ஸ்ருஷ்டியைச் செய்வதால், அந்த ஸ்ருஷ்டியினுல் ஈஶ்வரனுக்கு வைஷம்யம் என்னும் பக்ஷபாதமும், நைர்க்₄ருண்யம் எனும் கருணையின்மையும் ஏற்படமாட்டாது. ஶ்ருதியும் இவ்விஷயத்தைக் காட்டுகிறதன்றே.] "க்ருதப்ரயத்நாபேக்ஷஸ்து விஹித ப்ரதிஷித்₃த₄ாவையர்த்₂யாதி₃ப்₄ய :" [ப்₃ரஹ்மஸூரம் 2-3-41] [(எல்லாச் செயல்களிலும்) ஜீவனுல் செய்யப்பட்ட (முதல்) முயற்சியை எதிர்பார்த்தே (பரமாத்மா அம்முயற்சியை அநுமதித்து அக்காரியத்தைச் செய்விக்கிறுன்.) (இப்படிக் கொண்டால்தான் ப்ராக்ருத பலன்களைக் குறித்தும், மோக்ஷத்தைக் குறித்தும் ஶாஸ்த்ரங்களில் உள்ள) விதி₄நிஷேத₄ங்கள் வீணாகாமலிருக்குமாகையால்] என்னும் ப்₃ரஹ்மஸூத்ரங்களில் தெளிவாக்கப்பட்டது.

6. ப்ராக்ருத விஷயங்களில் ஏற்படும் ப்ரதிபத்திகளைக் கொண்டு சேதனன் மனம்போனபடி ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளைச் செய்து ஆத்மநாஶத்தை அடைந்துவிடக்கூடாதென்னும் பரமகருணையாலேயே எம்பெருமான் அந்தந்த ப்ரதிபத்திகளையே பற்றுசாகக் கொண்டு இவனை நல்வழிப்படுத்துவதற்காக அந்தந்த ப்ரதிபத்திகளுக்கு அநுகு₃ணமான விதி₄நிஷேத₄ங்களை ஶாஸ்த்ரங்களில் செய்து வைத்திருக்கிறுன் என்பது நம் ஆசார்யர்கள் கண்ட முடிவாகும். இம்முறையில் ஶாஸ்த்ர விஶ்வாஸமின்மையாகிற நாஸ்திக ப்ரதிபத்தியுள்ளவனை ஆஸ்திக ப்ரதிபத்தியுள்ளவனுக்குவதற்காக, அவன் விரும்பும் ஶத்ருவிநாஶத்தை எளிதில் ஸாதி₄ப்பதற்கு வேத₃த்தில் ஶ்யேநயாக₃த்தை விதி₄த்திருக்கிறுன். ஆஸ்திக ப்ரதிபத்தி ஏற்பட்ட

பின்பும் தே₃ஹாத்மாபி₄மாந ப்ரதிபத்தியோடிருக்கும் ஒருவனுக்கு, 'தே₃ஹத்தைக் காட்டிலும் வேறுபட்டது ஆத்மா' என்னும் ப்ரதி பத்தியை ஏற்படுத்துவதற்காக — பணம், பசு, மழை முதலான த்₃ருஷ்ட (கண்காணும்) ப₂லன்கள் பலவற்றை ஸாதி₄த்துத் தரும் யாக₃ங்களை விதி₄த்து, அவற்றின் ப₂லன் பெற்று ஜீவனுக்கு வேத₃த் தில் நம்பிக்கை ஏற்பட்ட பின்பு, "ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்க₃காமோ யஜேத" [ஸ்வர்க்க₃த்தை விரும்புகிறவன் ஜ்யோதிஷ்டோம யாக₃த் தைச் செய்யக்கடவன்] என்று இந்த தே₃ஹத்தை விட்டுச் சென்று அடையும் ஸ்வர்க்க₃ஸாத₄னத்தை விதி₄க்கிறான். இப்படி ஸ்வர்க்க₃த்தையடைந்து, அதனிலும் சிறந்த சிவலோகம், சதுர் முக₂லோகம் முதலானவற்றையும் அடைந்தவனுக்கு முன்பிருந்த தே₃ஹமே ஆத்மா என்னும் ப்ரதிபத்தி நீங்கி, 'தே₃ஹத்தைக்காட்டிலும் வேறுபட்டது ஆத்மா' என்னும் ப்ரதிபத்தி உறுதியாகிறது. அடுத்த படியாக, அல்பாஸ்தி₂ரமான இப்ப₂லன்களில் ப்ரதிபத்தியை மாற்றி, 'அநந்த ஸ்தி₂ரப₂லமான மோக்ஷத்தைப் பெற்று இன்புறவேணும்' என்னும் ப்ரதிபத்தியை விளைப்பதற்காகவே கேவலாத்மப்ராப்தி ஸாத₄னங்களும், ப₄க₃வத் ப்ராப்திஸாத₄னங்களும் எம்பெருமானால் ஶாஸ்த்ரங்களில் விதி₄க்கப்பட்டிருக்கின்றன. இவற்றிலிருந்து தாழ்ந்த விஷயத்தை விரும்புகையாகிற தாழ்ந்த ப்ரதிபத்தியுடனிருக்கும் ஒருவனுடைய ப்ரதிபத்தியை உயர்த்துவதற்கு அநுகு₃ணமாகவே அந்தந்த விஷயங்களுக்கு ஸாத₄னங்களை எம்பெருமான் விதி₄த் திருக்கிறான் என விளங்குகிறது. அந்த ஸாத₄நஸ்வரூபங்களை ஆராய்ந்தாலும் இது தெளிவாகிறது. ஶ்யேநயாக₃த்திலுள்ள கடுமை யான நியமங்களும், அந்த யாக₃த்தைக்கொண்டு ஶத்ருவைக் கொன்றவனுக்கு நரகாநுப₄வம் ஏற்படும் என்று காட்டி, அதைத் தவிர்ப்பதற்குக் கடுமையான ப்ராயஶ்சித்தங்களை விதி₄த்திருப்பதும்— இவனுடைய நாஸ்திகபு₃த்₃தி₄ காரணமாக ஏற்பட்ட க்ரூரப்ரதிபத்தி தொலைந்து ஆஸ்திக ப்ரதிபத்தி ஏற்படவே என்று தெளிவாக விளங்குகிறது. இதே ரீதியில், வேத₃த்தில் ஒவ்வொரு ப்ராக்ருத ப₂லனுக்காக எம்பெருமானால் விதி₄க்கப்பட்டிருக்கும் ஸாத₄னங்களும், மோக்ஷார்த்த₂மாக விதி₄க்கப்பட்டிருக்கும் ஸாத₄னங்களும் — இவ னுடைய ஸ்வார்த்த₂தா ப்ரதிபத்தியை (சுயநல மனப்பான்மையை) படிப்படியாகக் குறைத்து, கடைசியில் இவனை ஸ்வார்த்த₂தாலேஶ க₃ந்த₄மும் இல்லாத பரார்த்த₂ப்ரதிபத்தியே வடிவெடுத்த ஞானி யாக்கி, இவனுக்கு நிர்ஹேதுகமாகப் பரார்த்த₂ாநுப₄வ கைங்கர்ய ரூபமான பரமமோக்ஷமருளி, இவனைப்பெற்றுத் தான் அநுப₄விக்க

எம்பெருமான் இட்டிருக்கும் ஸஹேதுகப்படிக்கட்டுகளே என்று விவேகிகள் உய்த்துணரலாம். இவ்விஷயத்தையே — '' ஸுக்ருத கு₃ரீயஸ்த்வேந ப்ரதிபத்திவைஶேஷ்யாத் உத்தரோத்தரம் அதி₄க தமா: '' [7-16] ''ஸுக்ருததாரதம்யேந ச ப்ரதிபத்திவைஶேஷ்யாத்'' [ 8-ம் அத்தியாய அவதாரிகை ] என்ற இரண்டு இடங்களிலும் புண்யம் மிகுதியாவதால் உபாஸகனுடைய ப்ரதிபத்தி சிறப்படைகிறது என்று கூறுவதன்மூலம் பா₄ஷ்யகாரர் உணர்த்தியருளினர்.

7. நம் த₃ர்ஶனத்தில் உண்மைப் பொருள்கள் கணக்கற்றவையானாலும் அசித், சித், ஈஶ்வரன் என்று அவை மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அதுபோலவே, புருஷார்த்த₂ங்களும் கணக்கற்றவையாகிலும், அசித₃நுப₄வமாகிற ஐஶ்வர்யம் என்றும், அசித்தினின்றும் நீங்கிய ஆத்மமாத்ராநுப₄வமாகிற கைவல்யம் என்றும், ஈஶ்வராநுப₄வமாகிற பரமமோக்ஷம் என்றும் மூன்றுவகையாகக்காட்டப் பட்டுள்ளன. இவற்றில் அசித₃நுப₄வமாகிற ஐஶ்வர்யாநுப₄வத்தில்— தே₃ஹத்தோடு சேர்ந்த தன் ஆத்மா, பெண்டு பிள்ளைகள், உற்றார் உறவினர் முதலான அசித்தோடு கலந்த ஆத்மாக்களைப் பற்றிய ஆத்மாநுப₄வங்களும் கலந்தேயிருந்தாலும், ப்ராத₄ாந்யத்தைப்பற்ற அது அசித₃நுப₄வம் எனப்படுகிறது. அவ்வண்ணமே ஈஶ்வராநுப₄வத்தில் சித₃சித்துக்களின் அநுப₄வம் ஈஶ்வரனுடைய விபூ₄திகள் ( செல்வங்கள் ) என்னும் ஆகாரத்தில் கலந்திருந்தபோதிலும், ப்ராத₄ாந்யத்தைப் பற்ற அது ஈஶ்வராநுப₄வம் எனப்படுகிறது. சித்தின் அநுப₄வமாகிற கைவல்யமோவெனில், அசித்தின் அநுப₄வமோ, ஈஶ்வரனின் அநுப₄வமோ அடியோடு இல்லாததாயிருக்கையாலேயே கைவல்யாநுப₄வம் என்றும், கேவலாத்மாநுப₄வம் என்றும் நமது பூர்வாசார்யர்களால் அழைக்கப்பட்டது. ஸூக்ஷ்மஶரீரமும் கழிந்தபின்பே அசித்தின் அநுப₄வத்தோடு கலசாத இக்கேவலாத்மாநுப₄வம் ஏற்படமுடியுமாகையாலேயே, விரஜாதரணத்தின்மூலம் ஸூக்ஷ்மஶரீரம் கழிந்தபின்பு நித்யவிபூ₄தியில் ஏற்படும் மோக்ஷாநுப₄வமே இது என்று கைவல்யஶப்₃த₃த்திலிருந்தே விளங்குகிறது. ஶாஸ்த்ரங்களிலும், நிக₄ண்டுக்களிலும் கைவல்யஶப்₃த₃ம் மோக்ஷத்தைக்குறித்தே பிரயோகி₃க்கப்பட்டிருப்பதும் இதை வலியுறுத்துகிறது. ப₄க₃வத₃நுப₄வலேஶமுமற்ற ஆத்மமாத்ராநுப₄வமே கைவல்யம் எனப் படுகிறதாகையாலே, ப₄க₃வத₃நுப₄வத்தை உடையவனாக எம்பெருமானரால் ஸ்ரீ பா₄ஷ்ய கீ₃தாபா₄ஷ்யங்களிலும், முதலியாண்டானல் '' கண்கள் சிவந்து '' பாசுரங்களிலும் காட்டப்பெற்ற பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்ட₂ன் கைவல்யநிஷ்ட₂னயிருக்கமுடியாது என்பதும்

கைவல்யஸப்3த3த்தை ஆராய்ந்தாலே விளங்கும். இவ்விரு விஷயங் களையும் ஶ்ருதிஸ்ம்ருதி வசனங்களையும், ஆழ்வார்கள், ஆசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளையும், அவற்றுக்கு அநுகு3ணமான யுக்திகளையும் காட்டி நிரூபிக்கிறோம் இனி.

## 1. ஶ்ருதி ஸ்வாரஸ்யம்

8. சா2ந்தோ3க்3ய உபநிஷத்தில் மூன்று ப்ரகரணங்களில் ஆத்ம த3ர்ஶநம் கூறப்படுகிறது. (1) ஐந்தாவது ப்ரபாட2கத்திலுள்ள பஞ்சாக்3நி வித்3யாப்ரகரணம் முதலாவது. (2) ஏழாவது ப்ரபாட2கத்திலுள்ள ப்ராணனெனப்படும் ஜீவனின் உபாஸநத்தைச் சொல்லும் ப்ரகரணம் இரண்டாவது. (3) எட்டாவது ப்ரபாட2கத்தில் உள்ள த3ஹரவித்3யா ப்ரகரணத்தில், ஏழாவது க2ண்ட2ந்தொடங்கிப் படி2க்கப்படும் ப்ரஜாபதி வாக்யம் மூன்றாவது. இவற்றில் மூன்றாவது ப்ரகரணத்தில் உள்ள ஆத்மத3ர்ஶனம் பரமாத்மோபாஸனத்திற்கு அங்க3மானது என்று கீ3தை மூன்றாம் அத்தியாயத்தின் அவதாரிகாபா4ஷ்யத்திலும், கீ3தை (8-23, 24) அவதாரிகாபா4ஷ்யத்திலும் தெளிவாக விளக்கப்பட்டது. முதல் ப்ரகரணமான ஐந்தாவது ப்ரபாட2கத்தில் பஞ்சாக்3நிவித்3யா நிஷ்ட2னுக்கு "ஸ ஏநாந் ப்3ரஹ்ம க3மயதி" என்று ப்3ரஹ்மாநு ப4வம் ப2லமாகச் சொல்லப்பட்டிருக்கையாலே, இவன் ப்3ரஹ்மாத்மக மாகத் தன் ஆத்மாவை உபாஸிப்பவன் என்று கார்யாதி4கரண [4-3.5] ஸ்ரீபா4ஷ்யத்திலும், கீதை (8-23, 24) அவதாரிகாபா4ஷ்யத் திலும் நிரூபித்து, "உபாஸித்தபடியேதான் ப2லன் கிடைக்கும்" என்னும் தத்க்ரதுந்யாயத்தைக்கொண்டும் பா4ஷ்யகாரர் இதைநிலை நாட்டியருளுகையாலே இவன் கேவலாத்மாநுப4வத்தை ப்ராப்யமாகக் கொண்ட கேவலாத்மோபாஸகனாகமுடியாது. [ இவ்விஷயம் நமது கீ3தா (8-வது அத்தியாயம்) வ்யாக்2யானத்தில் 265-280 பக்கங்களில் அசைக்கமுடியாதபடி ஸ்தா2பிக்கப்பட்டிருக்கிறது.] இனி, இரண்டாவது ப்ரகரணமான ஏழாவது ப்ரபாட2கத்தில் படி2க்கப்படும் ஆத்ம த3ர்ஶநம் எத்தகையது என்று ஊன்றிப் பார்க்கவேண்டும். அதில் முதல் க2ண்ட3த்திலிருந்து தொடங்கிப் பதினாலாவது க2ண்ட3மீறாக முறையே (1) நாம (2) வாக் (3) மனம் (4) ஸங்கல்பம் (5) சித்தம் (6) த்4யாநம் (7) விஜ்ஞாநம் (8) ப3லம் (9) அந்நம் (10) அப்புக் கள்(நீர்) (11) தேஜஸ்(தீ) (12) ஆகாஶம் (13) ஸ்மரம் (நினைத் தல்) (14) ஆசை (ப2லத்தில் விருப்பம்) என்னும் பதினாலு அசேதனப்பொருள்களிடத்திலும் ப்3ரஹ்மம் என்னும் பு3த்3தி4யை ஏறிட்டு உபாஸிக்கும்படி கூறி, அந்தந்த உபாஸனங்களுக்குப் படிப்படியாக மேலான இவ்வுலகப்ப2லன்கள் பயனாகக்

கூறப்பட்டன. அடுத்ததான பதினைந்தாவது க₂ண்ட₃த்தில் அசேதனப்பொருள்களைக் காட்டிலும் உயர்ந்த ப்ராணன் என்று படி₂க்கப்படும் ஜீவனைப்பற்றிய உபாஸனம் ஓதப்படுகிறது. அதில் இரண்டாவது மூன்ருவது மந்திரங்களில் ''ப்ராணன் உள்ளிருக்கும் போது பிதா, மாதா முதலானோரைக் கடுமையாகப் பேசினாலே, அவனைக் குறித்து, 'பித்ருஹத்தி செய்தவன், மாத்ருஹத்தி செய்தவன்' முதலான அபவாத₃ங்களை உலகம் கூறுகிறது. அதே பிதா, மாதா முதலானோருடைய ஶரீரங்களிலிருந்து ப்ராணன் வெளிக்கிளம்பியபின், அந்த தே₃ஹத்தை ஶூலத்தில் ஏற்றுவதாலோ, எரிப்பதாலோ கூடப் பித்ருஹத்தி மாத்ருஹத்தி முதலான தோ₃ஷங்கள் ஏற்படுவதில்லை'' என்கையால் இங்கு ப்ராணன் எனப்படுவது தே₃ஹத்தைக்காட்டிலும் வேறுபட்ட ஜீவன் என உணர்த்தப்பட்டது. அதனாலேயே பூ₄மாதி₄கரணத்தில் '' பூ₄மா ஸம்ப்ரஸாத₃ாத₃்தி₄. உபதே₃ஶாத் '' [1-3-7] என்று ப்ராணன் எனப்படுபவன் ஸம்ப்ரஸாத₃ன் எனப்படும் ஜீவனே என்று ஸூத்ரகாரரும், ''ப்ரத்யக₃ாத்மா ஊர்த்₄வம் உபதே₃ஶாத்'' என்று அவன் ப்ரத்யக₃ாத்மாவே என அங்கு உரையிட்ட வ்ருத்தி காரரான போ₃தா₄யனரும் தெளிவாக உரைத்தனர். அந்தப் பதினைந்தாவது க₂ண்ட₃த்தில் நாலாவது மந்திரத்தில் ''ஸ வா ஏஷ ஏவம் பஶ்யந் ஏவம் மந்வாந ஏவம் விஜாநந் அதிவாதீ₃ ப₄வதி'' [இந்த ப்ரத்யக₃ாத்மாவை இவ்வண்ணமாக மனனம்செய்து, உபாஸநம் செய்து, நேரே காண்பவன் அதிவாதி₃யாகிறான்.] என்று இந்த ப்ரகரணத்தில் படி₂க்கப்பட்ட ஆத்மோபாஸகனுக்கு அதிவாதி₃த்வம் ஓதப்பட்டு, ''தஞ்சேத் ப்₃ரூயு: அதிவாத்₃யஸீதி, அதிவாத்₃யஸ்மீதி ப்₃ரூயாத் ந அபஹ்நுவீத'' [அவனை 'நீ அதிவாதி₃யாயிருக்கிறாய்' என்று அறிவாளிகள் கூறினால், 'ஆம்; அதிவாதி₃யாயிருக்கிறேன்' என்று கூறவேண்டுமேயொழிய அதை மறைக்கலாகாது] என்று வலியுறுத்தவும்பட்டது. அடுத்ததான பதினாறாவது க₂ண்ட₃த்தின் தொடக்கத்தில் ''ஏஷ து வா அதிவத₃தி யஸ் ஸத்யேந அதிவத₃தி'' [எவன் ஸத்யம் எனப்படும் பரமாத்மாவைக்கொண்டு அதிவாத₃ம் செய்கிறானோ, அவனே உண்மையான அதிவாதி₃யாகிறான்] என்று ஓதப்பட்டது. இதிலிருந்து — பரமாத்மாநுப₄வரூபமான மோக்ஷமாகிற மிகவுயர்ந்த ப₂லனைப் பெற உபாஸிப்பவனே 'அதிவாதீ₃' எனத்தக்கவன் என்றும், பதினைந்தாவது க₂ண்ட₃த்தில் அசேதனப் பொருள்களைக் காட்டிலும் வேறுபட்ட ஜீவஸ்வரூபத்தை அநுப₄விப்பதற்காக உபாஸிப்பவன் பெறும் ப₂லனான ஜீவாநுப₄வம் தாழ்ந்ததாயிருப்பதைவிட்டு அவன் ப்₃ரஹ்மோபாஸகனைவிடத் தாழ்ந்தவனாகிறான் என்

றும், ஆனாலும் அவன் பெறும் ப₂லனும் முன் சொல்லப்பட்ட அசிது₃பாஸநப₂லன்களைக் காட்டிலும் வேறுபட்ட மோக்ஷமாயிருப்ப தால் அவற்றை உபாஸிப்பவர்களுக்கு இல்லாததாய், பரமாத்மோ பாஸகனுக்கு உள்ள அதிவாதி₃த்வம் இவனுக்கும் ஒரு வகையில் உண்டு என்றும் விளங்குகிறது ஆக, ச₂ாந்தோ₃க்₃ய உபநிஷத்தில் ஏழாவது ப்ரபாட₂கத்தில் படி₂க்கப்படும் கேவலஜீவோபாஸகன் பெறும் ப₂லனாகிற கேவலாத்மாநுப₄வம் முக்தியே என இதிலிருந்து விளங்குகிறது. பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னே கைவல்யநிஷ்ட₂ன் என்று கொள்வார்க்கு, ஶ்ருதி ஸூத்ர பா₄ஷ்யங்களில் அவனுக்கு ப்₃ரஹ்மாநுப₄வத்தைக் கூறியிருப்பது ஒட்டாது. 'கைவல்யம் முக்தியல்ல' என்பார்க்கு இங்கு கேவலாத்மோபாஸகனை அதிவாதி₃ யாகப் படி₂த்து வலியுறுத்தியிருப்பது ஒட்டாது.

9. நாராயணோபநிஷத்தில் அத₂ர்வஶிரஸ்ஸில், "அகார உகார மகார இதி, தாநேகதா₄ ஸமப₄ரத் ததே₃ததோ₃மிதி। யமுக்த்வா முச்யதே யோகீ₃ ஜந்மஸம்ஸாரப₃ந்த₄நாத்॥" [அகாரம், உகாரம், மகாரம் என்னும் (மூன்று வேத₃ங்களின் ஸாரமான) மூன்று எழுத்துக்களை ப்ரஜாபதி ஒன்று கூட்டினார். அதுவே 'ஓங்காரம்' ஆயிற்று. இதை உச்சரித்து உபாஸிப்பவன் ஜந்மஸம்ஸாரக்கட்டி லிருந்து விடுபடுகிறான்.] என்று ஓங்காரமாத்ரோபாஸகனுக்கு ஜந்ம ஸம்ஸாரக் கட்டிலிருந்து விடுதலையை மாத்திரம் கூறி, அடுத்தபடி யாக, "ஓம் நமோ நாராயணாயேதி மந்த்ரோபாஸக: வைகுண்ட₂ பு₄வந(லோக)ம் க₃மிஷ்யதி" ["ஓம் நமோ நாராயணாய" என்னும் திருவஷ்டாக்ஷர மந்திரத்தைக்கொண்டு உபாஸிப்பவன் வைகுண்ட₂ லோகத்தையே அடைகிறான்.] என்று ஓங்காரத்தை, மாத்திரங் கொண்டு உபாஸிப்பது என்னும் வரம்பில்லாமல் அதற்கு விவரண மான நம:ஶப்₃த₃த்தால் தன் ஆத்மாவில் நசை கழியப்பெற்று, நாராயணாய ஶப்₃த₃த்தால் ப₄க₃வத்₃ கு₃ணங்களிலும் கைங்கர்யத்தி லும் ப்ராப்யத்வபு₃த்₃தி₄ ஏற்பட்டு திருவஷ்டாக்ஷரம் முழுவதையுங் கொண்டு உபாஸிப்பவன் வைகுண்ட₂லோகத்தை அடைகிறான் என்று கூறியிருப்பதிலிருந்து, முதல் வாக்யம் ஜராமரண மோக்ஷமடையும் கைவல்யநிஷ்ட₂னைப் பற்றியதென்றும், அவனடையும் ப₂லனும் மோக்ஷமே என்றும், ஆனால் திருவஷ்டாக்ஷரம் முழுவதையுங்கொண்டு உபாஸிக்கும் பரமாத்மோபாஸகனுக்குக் கிடைக்கும் வைகுண்ட₂ லோகப்ராப்தி அவனுக்கு இல்லை என்றும் விளங்குகிறது. [இதன் விரிவு கீ₃தை (8-12, 13)] வ்யாக்₂யானத்தில் (பக்கம் 203-223) காணத்தக்கது.]

10. "ஏதம் சைகா ச ஹ்ருத₃யஸ்ய நாட்₃யஸ் தாஸாம் மூர்த்த₄ாநமபி₄நிஸ்ஸ்ருதைகா । தயோர்த்₄வமாயந் அம்ருதத்வமேதி விஷ்வங்ஙந்யா உத்க்ரமணே ப₄வந்தி ॥" [சா₂ந் 8-6-6] [ஹ்ருத₃யத்தி லிருந்து நூற்றொரு நாடிகள் செல்கின்றன. அவற்றில் தலையை நோக்கிச் செல்வது (ஸுஷும்நா எனும்) ஒரு நாடி. அதன் வழி யாகச் செல்பவனே மோக்ஷமடைகிறான். மற்ற நாடிகள் வழியாகச் செல்பவர்கள் மற்ற ஸாம்ஸாரிகப₂லன்களை அடைகிறார்கள்] என்று உபநிஷத்₃வாக்யம் ஓதுகிறது. "மூர்த்₄ந்யாத₄ாயாத்மந: ப்ராணம்" [கீ₃தை 2-12] [தனது ப்ராண வாயுவைத் தனது தலையிலிருக்கும் ஸுஷும்நா நாடிவழியில் பிரவேசிக்கச்செய்து.] என்று கீ₃தையில் அந்திமகாலத்தில் இக்கைவல்யநிஷ்ட₂னுக்குத் தலையிலிருக்கும் ஸுஷும்நா நாடிவழியாக உத்க்ரமணத்தைக் கூறுகையாலும் இவன் மோக்ஷபலனையடைபவனேயொழிய ஸாம்ஸாரிக ப₂லனை யடைபவனல்லன் என விளங்குகிறது.

## 2. கீ₃தா தத்₃ப₄ாஷ்ய ஸ்வாரஸ்யம்

11. இனி, கீ₃தோபநிஷத் என்று உபநிஷத்தாகச் சொல்லப் படுவதாலும், "ஸர்வோபநிஷதோ₃ கா₃வ:... து₃க்₃த₄ம் கீ₃தாம்ருதம் மஹத்" [எல்லா உபனிஷத்துக்களுமே பசுக்களாகும் ...மிகச்சிறந்த கீ₃தையாகிற அமுதமே பாலாகும்.] என்று உபநிஷத் ஸாரமாகக் கூறப்படுவதாலும், கீ₃தையிலேயே பலவிடங்களில் கேவலாத்மாநு ப₄வமாகிற கைவல்யத்தைப் பற்றி விரிவாகப் பேசப்பட்டிருப்ப தாலும், ஸ்ருதி ஸ்வாரஸ்யத்திற்கு அடுத்தபடி கீ₃தாஸ்வாரஸ்யம் விளக்கப்படுகிறது. எம்பெருமானிடமிருந்து அவிச்சி₂ந்நமாக (இடை யறுது) வந்த கு₃ருபரம்பரைமூலம் கீ₃தையின்பொருளை அறிந்த எம்பெருமானாரின் ப₄ாஷ்யமே கீ₃தையின் பொருளைக்காட்டும் கோல விளக்காயிருக்கையால், அந்த ப₄ாஷ்யஸ்வாரஸ்யமும் ஆங்காங்கு சுருக்கமாகக் காட்டப்படுகிறது. விரிவு வேண்டுவோர் அந்தந்த ஸ்லோகங்களில் நமது வியாக்கியானத்தைக் காணலாம்.

12. "யஸ்த்வாத்மரதி:" [3-17, 18] என்று தொடங்கும் இரு ஸ்லோகங்களிலும் "ஆத்மாவையே த₄ாரக போஷக போ₄க்₃ய மாகக் கொண்டவனாய், ப்ரக்ருதியினின்றும் நீங்கிய ஆத்மாவைக் கண்டு அனுப₄விப்பவனுக்கு எந்த ஸாத₄நமும் அநுஷ்டி₂க்கவேண்டிய தில்லை; ஒரு கர்மத்தைச் செய்து அவன் பயன்பெறவேண்டியதோ,

ஒரு கர்மம் செய்யாததினால் அவன் பெற்றிருக்கும் ஆத்மப்ராப்தியை இழப்பதோ இல்லை '' என்று கூறுவதிலிருந்து ஆத்மப்ராப்தியாகிற கைவல்யத்தைப் பெற்றவன் முக்தனே என விளங்குகிறது. '' அஸாத₄நாயத்தாத்மத₃ர்ஶநஸ்ய முக்தஸ்யைவ '' [ஆத்மத₃ர்ஶனத்தை ஸாத₄நாநுஷ்டா₂னத்தாலே ஸாதி₄க்கவேண்டிய அவஶ்யமில்லாதபடி ஏற்கனவே அவ்வாத்மத₃ர்ஶனம் கைவரப்பெற்ற முக்தனானவனுக்கே] என்று இந்த ஶ்லோகங்களின் அவதாரிகாப₄ாஷ்யத்திலும், '' ஸ ஹி முக்த ஏவ '' [அவன் முக்தனேயன்றோ] என்று இந்த ஶ்லோகங்களின் ப₄ாஷ்யத்திலும் மிகத் தெளிவாக ப₄ாஷ்யகாரர் அருளியிருப்பதும் இவன் ப்ரக்ருதிப₃ந்த₄த்திலிருந்து முக்தியடைந்தவனே என்பதை வலியுறுத்துகிறது.

13. கைவல்ய நிஷ்டா₂னின் ப₂லனைச் சொல்லும். '' யுஞ்ஜந்நேவம் '' [6-15] என்னும் ஶ்லோகத்தில் '' ஶாந்திம் நிர்வாணபரமாம் மத்ஸம்ஸ்தா₂மதி₄க₃ச்ச₂தி '' [ 6-15 ] [என்னிடமிருப்பதாய், ஶரீரமோக்ஷத்தின் எல்லை நிலமாயிருப்பதான (ஷடூ₃ர்மி அல்லது ஷட்₃ப₄ாவவிகார) ஶாந்தியை அடைகிறான்.] என்று ஶரீரமோக்ஷத்தின் எல்லையான ஷடூ₃ர்மி ஶாந்தியையும், ஷட்₃ப₄ாவவிகாரஶாந்தியையும் அடைகிறான் என்கையாலே, இவனுக்கு ஸூக்ஷ்மஶரீரமும் கழிந்து, இவன் ப்ரக்ருதிப₃ந்த₄த்திலிருந்து விடுதலை பெறுகிறான் என்று விளங்குகிறது. '' நிர்வாணபரமாம் '' என்றதற்கு ப₃ஹு₄வ்ரீஹி ஸமாஸம் கொள்ளாமல் தத்புருஷஸமாஸங்கொண்டு, பரமஶப்₃த₃த்திற்கு 'தனக்கு மேலில்லாத' என்று பொருள்கொள்ளாமல், '' காஷ்டா₂ரூபாம் '' [எல்லையாயிருப்பது] என்று இங்கு ப₄ாஷ்யகாரர் பொருளுரைப்பதன்மூலம் இவனுக்கு என்றும் ப₄க₃வத₃நுப₄வமில்லையென்றும், இவன் அடையும் இன்பம் தனக்குமேல் இல்லாததன்று என்றும் உணர்த்தினார். இதன்மூலம்—ப்ரக்ருதிப₃ந்த₄த்திலிருந்து விடுதலையடைவதையிட்டு மோக்ஷம் என்றே இக்கைவல்யம் குறிக்கப்பட்டாலும், பரமனுக்கே ஆட்செய்கையான பரமமோக்ஷத்தைக் காட்டிலும் மிகத் தாழ்ந்ததாகையால் இது அவர (தாழ்ந்த) மோக்ஷமே என்பதையும் காட்டினார்.

14. ஆத்மப்ராப்தியின் பொருட்டுச் செய்யப்படும் யோக₃த்தின் நியமங்களைச் சொல்லும் (6-16, 17) ஶ்லோகங்களில் '' யோகோ₃ப₄வதி து₃:க்க₂ஹா'' [6-17] [எல்லாத் துன்பங்களையும் போக்கும் யோக₃ம் கைகூடும்.] என்னும் ஶ்லோகப்பகுதியிலிருந்தும், ''ஸகலது₃:க்க₂ஹா - ப₃ந்த₄நாஶநோ யோக₃: ஸம்பந்நோ ப₄வதி'' [எல்லாத்

துன்பங்களேயும் போக்கும், (அதாவது— ) ஸம்ஸாரப₃ந்த₄த்தை அழிக்கும் யோக₃ம் உண்டாகிறது] என்னும் ப₄ாஷ்யத்திலிருந்தும் இவனுக்கு ஸம்ஸாரத்துன்பங்களிலிருந்து விடுதலே கிடைக்கிறதே யொழிய, பரமாத்மாநுப₄வமாகிற பேரின்பம் இல்லே என உணர்த் தப்படுகிறது. இதுவும் இது தாழ்ந்த மோக்ஷம் எனக் காட்டுகிறது.

15. கைவல்யநிஷ்டனின் ப₂லனேக் கூறும் "ப்ரஶாந்தமநஸம்" [6-27] எனும் ஶ்லோகத்தில், "அகல்மஷம்"என்று இவனுக்கு எல்லாப் பாபங்களும் கழிந்துவிடுகின்றன என்றும், "ஶாந்தரஜஸம்" என்று ரஜோகு₃ணம் அழிந்து விடுவதாகக் கூறுகையாலே இவனுக்கு ஸூக்ஷ்மஶரீரமும் இல்லே என்றும், "ப்₃ரஹ்மபூ₄தம்" என்கையாலே இவனுக்கு ஞானத்திலிருந்த சுருக்கம் நீங்கி, ஞானம் எங்கும் வியாபித்திருக்கும் பெருமையைப் பெற்றுவிடுகிருன் என்றும் கூறுகையாலே, இவன் நித்யவிபூ₄தியிலிருக்கும் முக்தர்களில் ஒரு வகைப்பட்டவனே என்றும் விளங்குகிறது. இந்த ஶ்லோகத்திலேயே "உத்தமம் ஸுக₂ம் உபைதி" என்ற பகுதிக்கு, "ஆத்மஸ்வரூபாநுப₄வரூபம் உத்தமம் ஸுக₂ம் உபைதி" [ஆத்மஸ்வரூபத்தை அநுப₄விப்பதாகிற சிறந்த ஸுக₂த்தை அடைகிருன்] என்று ப₄ாஷ்யமிடுவதன் மூலம், இப்படி இவன் நித்யவிபூ₄தியிலுள்ள முக்தனே யானுலும், உத்தம ஸுக₂மான ஆத்மாநுப₄வ ஸுக₂ம் உண்டே யொழிய உத்தமோத்தம ஸுக₂மான ப₄க₃வத₃நுப₄வஸுக₂ம் கிடை யாது என்று காட்டினுர் ப₄ாஷ்யகாரர்.

16. "ஏவம் யுஞ்ஜந்" [6-28] என்று தொடங்கும் அடுத்த ஶ்லோகத்திலும், "விக₃தகல்மஷ:" என்ற பத₃த்திற்கு "விக₃த ப்ராசீந ஸமஸ்த கல்மஷ:" [அநாதி₃கர்மங்கள் அனேத்தும் தொலேயப் பெற்றவன்] என்று ப₄ாஷ்யமிடுவதன்மூலம் இவனுக்கு அநாதி₃ கர்மங்கள் எல்லாமே தொலேந்து விடுகின்றன என்று காட்டி, "அத்யந்தம் ஸுக₂ம் ஸத₃ா அஶ்நுதே" [ப்₃ரஹ்மமெனப்படும் ஆத்மாவின் அநுப₄வரூபமான எல்லேயற்ற இன்பத்தை எப்போதும் அடைகிருன்] என்று அந்வயம் கொள்வதன்மூலம் இவன் மோக்ஷத் தில் ஆத்மாநுப₄வத்தையே எப்போதும் அடைகிருன் என்று ப₄ாஷ்ய காரர் காட்டினுர்.

17. "ஸர்வபூ₄தஸ்தி₂தம்" [6-31] என்று தொடங்கும் ஶ்லோகத்தில், "ஏகத்வமாஸ்தி₂த:" என்ற பகுதிக்கு, "அஸங்குசித ஜ்ஞாநைகாகாரதயா ஏகத்வம் ஆஸ்தி₂த:" [முக்திநிலேயில் என்னேப்போலே தானும் ஞானச்சுருக்கமற்றவனுயிருக்கப் போவ

தாகிற ஒற்றுமையை அநுஸந்திப்பதன்மூலம் காண்கிறான்.] என்றும், ''மயி வர்த்ததே'' என்ற பகுதிக்கு ''மாமேவ பச்யதி— ஸ்வாத்மநி ஸர்வபூதேஷு ச ஸர்வதா மத்ஸாம்யமேவ பச்யதி'' [என்னையே காண்கிறான்; அதாவது — தன்னிடமும், எல்லா ஜீவ ராசிகளிடமும் எப்போதும் என்னோடு முற்கூறிய ஸாம்யத்தையே காண்கிறான்] என்றும் பாஷ்யமிடுவதன்மூலம் ஞானச்சுருக்க மற்றிருக்கையையிட்டுப் பரமாத்மாவோடு ஸாம்யத்தை அநுஸந்திப்பவனாக ஆத்மயோகியைக் காட்டுகையாலே, இவன் பெறும் பலனும் ஞானச்சுருக்கமற்றிருக்கும் முக்திநிலையே என்றும், உபாஸந தசையில் பகவத்குணாநுஸந்தானமின்மையால், பரமாத்மயோகிக்குக் கிடைக்கும் பகவத்குணாநுபவம் இவனுக்கு இல்லை என்றும் உணர்த்தினார்.

18 ''ஜிஜ்ஞாஸுரபி யோகஸ்ய சப்தப்ரஹ்ம அதிவர்த்ததே'' [6-44] [யோகத்தை அறிந்து அநுஷ்டிக்க விரும்புகிறவனும், (அதில் நின்றும் நழுவிய பின்பும் யோகமாஹாத்ம்யத்தாலே அந்த யோகம் தலைக்கட்டப்பெற்று) சப்தப்ரஹ்மம் எனப்படும் ப்ரக்ருதியைத் தாண்டிவிடுகிறான்.] என்னும் ச்லோகத்தில், ஆத்மாவை அடைபவன் ப்ரக்ருதியைத் தாண்டிவிடுகிறான் என்று தெளிவாகச் சொல்லப் பட்டது. இந்த ச்லோகபாஷ்யத்தில் ''சப்தப்ரஹ்ம—தேவமநுஷ்ய ப்ருதிவ்யந்தரிக்ஷ ஸ்வர்க்காதி சப்தாபிலாப யோக்யம் ப்ரஹ்ம- ப்ரக்ருதி: । ப்ரக்ருதி பந்தாத்விமுக்தோ தேவமநுஷ்யாதி சப்தாபிலாபாநர்ஹம் ஜ்ஞாநாநந்தைகதாநம் ஆத்மாநம் ப்ராப்நோதீத்யர்த்த:॥'' [சப்தப்ரஹ்மத்தை - தேவர், மனிதர், பூமி, அந்தரிக்ஷம், ஸ்வர்க்கம் முதலான சப்தங்களினால் சொல்லத்தக்கதாய், 'ப்ரஹ்ம' எனப்படுவது ப்ரக்ருதி; ப்ரக்ருதியாகிற கட்டிலிருந்து விடுபட்டு, தேவர் மனிதர் முதலான சப்தங்களால் சொல்லத்தகாதவனாய், அறிவுக்கும் ஆநந்தத்திற்கும் ஒரே இருப்பிடமானவனான ஆத்மாவை அடைகிறான்] என்று பாஷ்யகாரர் அருளியிருப்பதிலிருந்து — ஆத்மாவை அடையும் கைவல்யநிஷ்டன் ப்ரக்ருதிமண்டலத்தைத் தாண்டிச்சென்றே ஆத்மாநுபவத்தைப் பெறுகிறான் என்று மிகத் தெளிவாக விளங்குகிறது.

19. ''யோகிநாமபி ஸர்வேஷாம்'' [6-47] என்று பரமாத்ம யோகியைப்பற்றி ப்ரஸ்தாவிக்கும் ச்லோகத்தின் பாஷ்யத்தில் ''யோகிநாம்'' என்பது நிர்த்தாரணே ஷஷ்டியன்று; ஐந்தாவது வேற்றுமைப்பொருளில் ஆறுவது வேற்றுமை பிரயோகிக்கப்பட்டிருக்

கிறதாகையால் ''ஸர்வேப்₄ய: அபி யோகி₃ப்₄ய'' [முற்கூறிய எல்லா யோகி₃களைக்காட்டிலும்] என்றே பொருள்கொள்ளவேண்டும் என்று பா₄ஷ்யகாரர் நிர்ணயிக்கையால், 13 முதல் 17 வரையில் உள்ள பாராக்களில், எல்லாக் கர்மங்களும் கழியப்பெற்று, ஸ்தூ₂லஸூக்ஷ்ம ஶரீரம் கழியப்பெற்று, ப்ரக்ருதிமண்ட₃லத்தைத் தாண்டிவந்து, ஞான விகாஸமும் பெற்றவனாகக் கூறப்பட்டவன் இங்கு ப்ரஸ்தாவிக்கப்படும் பரமாத்மயோகி₃யைக் காட்டிலும் தாழ்ந்த ஜீவாத்மயோகி₃யே என்று விளங்குகிறது. இதிலிருந்தும் பரமாத்மயோகி₃யடையும் பரமாத்மாநு ப₄வத்தை முற்கூறிய ஜீவாத்மயோகி₃ அடைவதில்லை என உணர்த்தப் படுகிறது. ஏழாம் அத்தியாயத்தில் இது தெளிவாகவே காட்டப் பட்டிருப்பதைக் காண்போம் இனி.

20. (1) ஆர்த்தன், (2) அர்த்தா₂ர்த்தீ₂, (3) ஜிஜ்ஞாஸு, (4) ஜ்ஞாநி என்னும் நாலுவகைப்பட்ட ப₄க₃வது₃பாஸகர்களைக் காட்டும் (7-16) ஶ்லோகத்தில், இவர்களுக்கு லக்ஷணம் சொல்லும் போது '' ஜிஜ்ஞாஸு: - ப்ரக்ருதிவியுக்தாத்மஸ்வரூபாவாப்தீச்சு₂: '' [ஜிஜ்ஞாஸு எனப்படுபவன் - ப்ரக்ருதியினின்றும் நீங்கிய ஆத்ம ஸ்வரூபத்தைப் பெறவிரும்புகிறவன்] என்று பா₄ஷ்யகாரர் அருளிச் செய்கையால், இவன் ப்ரக்ருதியிலிருந்து நீங்கிய தன் ஆத்மஸ்வரூ பத்தை அநுப₄விக்க விரும்புகிறவனேயொழிய, ஆர்த்தன் என்றும் அர்த்தா₂ர்த்தி₂ என்றும் கூறப்பட்டவர்களைப் போலே ஸம்ஸார மண்ட₃லத்தினுள் அசித்தை அல்லது அதோடு கலந்த ஆத்மாவை அநுப₄விப்பதாகிற ஐஶ்வர்யாநுப₄வத்தைப் பெறுபவனல்லன் என்று விளங்குகிறது. ''ப்ரக்ருதிவியுக்தகேவலாத்மநி அபர்யவஸ்யந் ப₄க₃வந் தம் ப்ரேப்ஸு:'' [(முற்கூறியவனைப்போலே) கேவலாத்மாவிலேயே முடிந்துவிடாமல், பரமபுருஷனை அடையவிரும்புகிறவன்] என்று ஞானியைப்பற்றிக் கூறியிருக்கையாலே, ஜிஜ்ஞாஸுவாகிற கைவல்ய நிஷ்ட₂ன் ப₄க₃வானை அடைய விரும்பாமல் கேவலாத்மாவிலேயே முடிவடைந்துவிடுகிறான் என்று தெளிவாக விளங்குகிறது. பர்யவஸாந ஶப்₃த₃ம் அதையே முடிந்த ப₂லனாகக்கொள்வதைக் காட்டுமேயொழிய, நடுவில் இளைப்பாறுவதைக் காட்டாது என்பது நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும். அடுத்த ஶ்லோகத்திலும் இது மிகத்தெளிவாக வலியுறுத்தப்படுவதைக் காணலாம். [22-வது பாரா காண்க.]

21. அந்தப் பதினாறும் ஶ்லோகத்திலேயே ''ப₄க₃வச்சே₂ஷதை கரஸாத்மஸ்வரூபவித்'' [ப₄க₃வானுக்கு அடிமைப்பட்டிருப்பதையே இயல்வாகக்கொண்ட ஆத்மஸ்வரூபத்தை அறிந்தவன்] என்று

ஞானிக்கு லக்ஷணமுரைத்திருப்பது குறிக்கொண்டு காணத்தக்கது. "பகவந்நிஷ்ட:" என்று லக்ஷணமுரைத்தால் பரமேஷைகரஸ மான ஆத்மாவை (ப்ராப்யமாகக்கொண்டு) உபாஸிக்கும் பஞ்சாக்நி வித்யாநிஷ்டன் ஞானியாகாமல் போய்விடக்கூடும் என்று திருவுள்ளம் பற்றியே, (7-23,24) அவதாரிகாபாஷ்யத்தில் அர்ச்சிராதிகதியும் பகவதநுபவமும் உள்ளவர்களாகக் காட்டப்பெற்ற பஞ்சாக்நி வித்யாநிஷ்டனை ஆத்மயாதாத்ம்யவித்தும், பரமபுருஷநிஷ்டனை பகவதுபாஸகனுமாகிற இருவர்க்கும் பொருந்தும்படி "பரமேஷைகரஸாத்மஸ்வரூபவித்" என்று ஞானிலக்ஷணமுரைத்திருக்கிறார் பாஷ்யகாரர் என்று தெளிவாக விளங்குகிறது. ஆகையால், பஞ்சாக்நி வித்யாநிஷ்டனைக் கைவல்யநிஷ்டனாகக்கொள்வது பாஷ்யகாரர் திருவுள்ளத்திற்குச் சிறிதும் பொருந்தாது என விளங்கும். கீதாவ்யாக்யானம் (2-ம்ஷட்கம்) 265-280 பக்கங்களில் இது விரிவாக நிலைநாட்டப்பட்டது. மேல் வரும் பல பாராக்களிலும் இதை அசைக்க முடியாதபடி நிரூபிப்போம். "உபயேऽபி ஹி பரிபூர்ணம் ப்ரஹ்மோ பாஸதே முகபேதேந" [வேதாந்தஸாரம் 4-3-24] [பஞ்சாக்நி வித்யாநிஷ்டனும் பரமபுருஷோபாஸகனுமாகிற இருவருமே ஒவ்வொரு வகையில் பரிபூர்ணமான ப்ரஹ்மத்தையே (ப்ராப்யமாக) உபாஸிக்கிறார்கள்] என்று வேதாந்தஸாரத்தில் ஸ்ரீபாஷ்யகாரர் அருளியிருக்கையால், இங்கு "பகவந்தம் ப்ரேப்ஸு; பகவந்தமேவ பரமப்ராப்யம் மந்வாந:" [பகவானை அடைய விரும்புகிறவன்; பகவானையே பரமப்ராப்யமாக நினைப்பவன்] என்று ஜ்ஞாநி லக்ஷணத்தை விவரித்திருப்பதும் மிகப்பொருந்திவிடுகிறது.

22. (7-17) ஶ்லோகத்தில் ஐஶ்வர்ய கைவல்யார்த்திகளைக் காட்டிலும் ஞானிக்கு "நித்யயுக்த:, ஏகபக்தி:" என்று இரு சிறப்புகள் கூறப்பட்டுள்ளன. இவற்றில் 'நித்யயுக்த:' [எப்போதும் சேர்ந்திருப்பவன்] என்னும் பதத்தை விவரிக்கும்போது "ஜ்ஞாநிநோ ஹி மதேகப்ராப்யஸ்ய மயா யோகோ நித்ய: ; இதரயோஸ்து யாவத்ஸ்வாபிலஷிதப்ராப்தி மயா யோக:" [என்னையே ப்ராப்யமாகக்கொண்ட ஞானிக்கு என்னோடு சேர்த்தி நித்யமானதாகும். ஐஶ்வர்யகைவல்யார்த்திகளுக்கோவெனில் தங்கள் விருப்பத்தை அடையும் வரையிலுமே என்னோடு சேர்த்தி] என்று அருளுவதன்மூலம் ஐஶ்வர்யார்த்திக்குப்போலே கைவல்யார்த்திக்கும் பரமன் ப்ராப்யனல்லன் என உணர்த்தினார் பாஷ்யகாரர். மதுவித்யா நிஷ்டனுக்குப்போல் கைவல்யநிஷ்டனுக்குக் கைவல்யத்தை அநுபவித்தபின் பரமபுருஷன் ப்ராப்யமாவதாக பாஷ்யகாரர் திருவுள்ளம்

பற்றியிருந்தால் இப்படி அருளியிருக்க இடமில்லை என்பது நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும். "ஏகப₄க்தி:" என்ற பத₃த்தை விவரிக்கும்போது, "தத₃ா ஜ்ஞாநிநோ மய்யேகஸ்மிந்நேவ ப₄க்தி:; இதரயோஸ்து ஸ்வாபி₄லஷிதே தத்ஸாத₄நத்வேந மயி ச" [அவ்வண்ணமே ஜ்ஞாநிக்கு என்னொருவனிடமே அன்பு; ஐஶ்வர்யகைவல்யார்த்தி₂களுக்குத் தாம் விரும்பும் ஐஶ்வர்யகைவல்யங்களிலேயே ப்ராப்யமாக அன்புள்ளது; என்னிடம் அதற்கு ஸாத₄நமாகவே அன்புள்ளது] என்று அருளியிருப்பதிலிருந்து ஐஶ்வர்யார்த்தி₂யைப்போலே கைவல்யார்த்தி₂யும் தான்விரும்பும் கைவல்யத்திற்கு ஸாத₄நமாகவே எம்பெருமானிடம் அன்புகொள்கிறானேயொழிய, எம்பெருமானை ஸ்வயம் போ₄க்₃யமாகக்கொள்வதில்லை எனத் தெளிவாக விளங்குகிறது. மது₄வித்₃யாநிஷ்ட₂னுக்கு வஸுபத₃த்திற்போலே ப்₃ரஹ்மத்திடமும் போ₄க்₃யதாபு₃த்₃தி₄யுள்ளது. முதலில் வஸுபத₃த்தையும் பிறகு ப்₃ரஹ்மத்தையும் அடைய ஆசைப்படுபவன் அவன். அதுபோல் ஜிஜ்ஞாஸு முதலில் கைவல்யத்தையும், பிறகு பரமபுருஷனையும் அடைய ஆசைப்படுபவனாயிருந்தால், 'அவனுக்குத் தான் விரும்பிய கைவல்யத்திலேயே அன்பு; அதற்கு ஸாத₄நமாகவே என்னிடம் அன்புவைக்கிறான்" என்று பா₄ஷ்யகாரர் அருளியிருப்பாரா என்பதை நடுநிலையாளர் சிந்திக்கவேண்டும்.

23. (7-18) பா₄ஷ்யத்தில் ஐஶ்வர்யகைவல்யார்த்தி₂களைக் குறித்து "யே மத்தோ யத்கிஞ்சித₃பி க்₃ருஹ்ணந்தி" [எவர்கள் என்னிடம் ஏதோவொன்றைப் பெறுகிறார்களோ] என அருளியுள்ளார். மது₄வித்₃யாநிஷ்ட₂னுக்குப்போலே ஜிஜ்ஞாஸுவுக்கும் கைவல்யம் அவாந்தரப்ராப்யமாகவும், ப₄க₃வத₃நுப₄வம் பரமப்ராப்யமாகவுமிருந்தால் அவனைக்குறித்து "ஏதோவொன்றைப் பெறுபவன்" என்று பா₄ஷ்யகாரர் அருளியிருக்கமுடியுமா என்பதையும் நடுநிலையாளர்கள் சிந்திக்கவேண்டும்.

24. (7-16) ஶ்லோகத்தில், அசித₃நுப₄வமாகிற ஐஶ்வர்யாநுப₄வத்தை விரும்புகிறவன் 'ஆர்த்தன்' என்றும் 'அர்த்தா₂ர்த்தி₂' என்றும் இருவகையாகப் பிரிக்கப்பட்டான். ஈஶ்வராநுப₄வத்தை விரும்புகிறவன் 'ஜ்ஞாநி' எனப்பட்டான். எஞ்சிநிற்கும் கேவலாத்மாநுப₄வமாகிற கைவல்யத்தை விரும்புகிறவனே 'ஜிஜ்ஞாஸு' எனப்படவேண்டும்; அப்படியல்லாமல் கைவல்யத்தை அவாந்தரப₂லனாகவும் ப்₃ரஹ்மாநுப₄வத்தை முக்₂யப₂லனாகவும் விரும்புமவனாக ஓர் அதி₄காரியைக் கல்பித்து, அவனை ஜிஜ்ஞாஸுபத₃த்திற்குப் பொருளாகக் கொள்வது ஏழு எட்டு அத்தியாயங்களிலுள்ள கீ₃தாப்ரகரணங்களுக்கு

அடியோடு பொருந்தாது. உண்மையில் அப்படி ஓர் அதி₄காரி ஸித்₃தி₄த்தாலும், ப்₃ரஹ்மாநுப₄வத்தைப் பரமப₂லனாகக்கொண்ட அவனை ஜ்ஞாநிகோடியில் சேர்க்கவேண்டுமேயொழிய ஜ்ஞாநியைக் காட்டிலும் தனித்து நிற்கும் அதி₄காரியாகக்கொள்ள இயலாது. 'கைவல்யம் அவாந்தரப₂லமாகையாலே தனி அதி₄காரியாகக்கொள் கிறோம்' எனில்: அப்படியானால் ப்₃ரஹ்மாநுப₄வம் பரமப₂லனாயினும், ஸ்வபத₃ப்ராப்தியை அவாந்தரப₂லனாகக்கொண்ட மது₄வித்₃யா நிஷ்ட₂னையும் இங்கு ஓர் தனி அதி₄காரியாகக் குறித்திருக்க வேண்டும். அப்படிக் குறிக்கவில்லையாகையால், ஜிஜ்ஞாஸுவும் கைவல்யமொன்றையே ப₂லமாகக் கொண்டவனாகவேண்டுமே யொழிய, அதை அவாந்தர ப₂லமாகக் கொண்டவனாக முடியாது. இவ்விஷயம் பற்பல கீ₃தாஶ்லோகங்களிலும், அங்கங்கு பா₄ஷ்யங் களிலும் தெளிவாகக் காட்டப்படுவதை முன்னமே காட்டினோம். மேலேயும் காட்டுவோம்.

25. ''எல்லாக் கர்மங்களும் கழிந்தபின், முக்தியில் ப₂லபே₄த₃ம் கொள்வதற்குக் காரணம் எதுவும் இல்லையாகையாலும், எல்லாக் கர்மங்களும் கழிந்தாலும் ஜிஜ்ஞாஸுவிற்குக் கைவல்யத்திற்குக் காரணமான ஒரு கர்மம் கழியவில்லையெனில், அது ஸாம்ஸாரிக போ₄க₃மாகுமேயொழிய முக்தியாகாதாகையாலும், இங்கு கீ₃தை யிலும், பா₄ஷ்யத்திலும் ஜிஜ்ஞாஸுவின் ப₂லனை முக்தியாகவே குறிக்கையாலும், ஜிஜ்ஞாஸுவை ப₄க₃வத₃நுப₄வரூபமான முக்தி யைப் பரமப₂லனாகவும், கேவலாத்மாநுப₄வமாகிற கைவல்ய போ₄க₃த்தை அவாந்தர ப₂லனாகவும் கொண்ட அதி₄காரியாகக் கல்பிக்கிறோம்'' எனில்: இந்த கீ₃தையிலேயே (7-27, 28) ஶ்லோகங் களிலும், அவற்றின் பா₄ஷ்யத்திலும் 'கர்மம்' என்றால் என்ன என்று காட்டியிருப்பதை ஆராய்ந்தால், எல்லாக் கர்மங்களும் கழிந்தாலும், ப்ரதிபத்தியில் (ப₂லனில் விருப்பத்தில்) வேறுபாட்டையிட்டு முக்தியில் ப₂ல பே₄த₃ம் ஏற்படலாம் என விளங்குகையாலும், கீ₃தை (7-16) பா₄ஷ்யத்தில் '' ஸுக்ருத கₒரீயஸ்த்வேந ப்ரதிபத்திவைஶேஷ்யாத் உத்தரோத்தராதி₄கத்மா ப₄வந்தி'' என்றும், 8-ம் அத்தியாயத்தின் அவதாரிகா பா₄ஷ்யத்தில் '' ஸுக்ருத தாரதம்யேந ச ப்ரதிபத்தி வைஶேஷ்யாத்...உபாஸகபே₄த₃ம் '' என்றும் இரு இடங்களில் பிரயோகிக்கப்பட்டுள்ள ப்ரதிபத்தி வைஶேஷ்ய ஶப்₃த₃ம் இவ்விஷ யத்தை வலியுறுத்துகையாலும், இதற்காக அபூர்வமாக ஓர் அதி₄காரி யைக் கற்பிக்கவேண்டியதில்லை. அடுத்த பாராவில் இதை விளக்குகிறோம்.

26. "(ப்ராக்ருதவிஷயங்களில்) சிலவற்றைப்பற்றிய விருப்பத்தாலும், சிலவற்றைப்பற்றிய வெறுப்பாலும் உண்டாகும் ஸுகம், து:க்கம் முதலான த்வந்த்வமோஹங்களாலே (மயங்கவைக்கும் இரட்டையான சுயநல உணர்ச்சிகளாலே,) எல்லா ஸம்ஸாரிஜீவர்களும், பிறக்கும்போது (அவ்விஷயங்கள்பற்றிய) பெருமயக்கத்தை அடைந்திருக்கின்றனர்" என்பது 'இச்சாத்வேஷ" [கீதை 7-27] என்று தொடங்கும் ஶ்லோகத்தின் பொருள். "புண்ணியச்செயல்களை மிகுதியாகச்செய்த எந்த ஜீவர்களுக்கு, (முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட) பாபம் முடிவை நெருங்குகின்றதோ, அவர்கள் (தங்களது புண்ணியத்திற்கேற்ப) முற்கூறிய த்வந்த்வமோஹங்களாகிற மயக்கும் இரட்டைப்பயன்களிலிருந்து சிறிது சிறிதாக விடுபட்டவர்களாய், (புண்ணியத்தின் மிகுதிக்கேற்ப ஐஶ்வர்யம், கைவல்யம், பகவத்ப்ராப்தி ஆகியவற்றைப் பெறவேண்டுமென்று) உறுதியான ஸங்கல்பமுடையவர்களாய், (அப்புலன்களைப்) பெறுவதற்காக என்னைக்குறித்து பக்தி செய்கிறார்கள்" என்பது "யேஷாம் து". [கீதை 7-28] என்று தொடங்கும் அடுத்த ஶ்லோகத்தின் பொருள், இவ்விரு ஶ்லோகங்களிலும் புண்ய பாப லக்ஷணம் கீதாசார்யனாலே உணர்த்தப்படுகிறது என்பது இங்கு குறிக்கொள்ளத்தக்கது. எப்படியெனில்:—'யேஷாம் து" என்னுமிடத்தில் துகாரத்தாலே, சென்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட உத்ஸர்க்கத்திற்கு (பொதுவிதிக்கு), இந்த ஶ்லோகத்தில் அபவாதத்தை (விதிவிலக்கை) உணர்த்துகிறான் என்று விளங்குகிறது இப்படியிருக்கும்போது, அந்த ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட எல்லா அம்ஶங்களும் இந்த ஶ்லோகத்திலும் வரவேண்டுமென்பது வெளிப்படை. இவ்விரு ஶ்லோகங்களை ஆராய்ந்தால், இரு ஶ்லோகங்களிலும் த்வந்த்வமோஹம் வந்தபோதிலும், முதல் ஶ்லோகத்தில் த்வந்த்வமோஹத்திற்குக் காரணமாகச் சொல்லப்பட்ட இச்சாத்வேஷங்களை (விருப்பு வெறுப்புகளை) மேல் ஶ்லோகத்தில் எடுக்காமலிருப்பதையும், அதற்கு பதிலாக த்வந்த்வமோஹங்கள் நீங்குவதோடு தொடர்புகொண்ட புண்ய பாபங்களைப் பற்றிய ப்ரஸ்தாவம் புதிதாக வந்திருப்பதையும் காண்கிறோம். இதிலிருந்து—அங்கு த்வந்த்வமோஹத்திற்குக் காரணமாகச் சொல்லப்பட்ட இச்சாத்வேஷங்களின் இரு பகுதிகளே, இங்கு புண்யமென்றும், பாபமென்றும் சொல்லப்படுகிறதென்றும், அதில், படிப்படியாகப் புண்ணியப்பகுதி மிகுந்து, பாபப்பகுதி குறையப்பெற்றவர்களுக்கு, புண்யபாப ரூபமான இச்சாத்வேஷகார்யமான த்வந்த்வமோஹம் படிப்படியாகக் குறைகிறது என்றும் எம்பெருமான் கருதுகிறான்

என்று தெளிவாக விளங்குகிறது. ஒவ்வொரு செயலைத் தொடங்கும் போதும் ''ஜாநாதி, இச்ச₂தி அத₂வா த்₃வேஷ்டி, யததே அத₂வா நிவர்த்ததே'' [அறிகிறான், விரும்புகிறான் அல்லது வெறுக்கிறான், (அதற்கு அனுகு₃ணமாக) முயல்கிறான் அல்லது மீள்கிறான்.] என்னும் க்ரமத்திலேயே ஜீவன் முதன்முதலில் செயல்படுகிறான் என்பது அனுப₄வஸித்₃த₄ம், ஆகையால், முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட இச்சா₂த்₃வேஷங்கள், இவற்றுக்கு முன்வரும் ஜ்ஞாநத்திற்கும், பின்வரும் ப்ரயத்னநிவ்ருத்திகளுக்கும் உபலக்ஷணமென்றும் விளங்குகிறது. தனக்கு வைஷம்யநைர்க்₄ருண்யங்கள் வாராமைக்காகவும், ஶாஸ்த்ரங்களிலுள்ள விதி₄நிஷேத₄ங்கள் வீணாகாமைக்காகவும், எம்பெருமான் ''ஜ்ஞாந இச்சா₂த்₃வேஷ ப்ரயத்நநிவ்ருத்தி'' ரூபமான இந்த ப்ரத₂மப்ரவ்ருத்தியில் ஜீவனுக்கு ஓர் ஸ்வாதந்த்ர்யம் அளித்து விடுகிறான் என்பது — 'க்ருதப்ரயத்நாபேக்ஷஸ்து விஹிதப்ரதிஷித்₃த₄ அவையர்த்₂யாதி₃ப்₄ய:'' [ப்₃ரஹ்ம ஸூத்ரம் 2-3-41] [எம்பெருமான்—விதி₄நிஷேத₄ங்கள் வீணாவது முதலான தோ₃ஷங்கள் வாராமைக்காக—ஜீவன் செய்யும் முதல் ப்ரவ்ருத்தியை (அல்லது நிவ்ருத்தியை) எதிர்பார்த்தே ஜீவனை மேலே செயல்புரியும்படி தூண்டுகிறான்] ''வைஷம்ய நைர்க்₄ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்'' [ப்₃ரஹ்மஸூத்ரம் 2-1-34] [(விஷம ஸ்ருஷ்டியினாலே பரம்பொருளுக்கு) பக்ஷபாதமும், கருணையின்மையும் ஏற்படமாட்டா; (ஜீவன் செய்யும் கர்மங்களை) எதிர்பார்த்தே (பரம்பொருள் விஷமஸ்ருஷ்டியைச்) செய்வதால்.] என்று ப்₃ரஹ்ம ஸூத்ரங்களிலும், 'ந ச மாம் தாநி கர்மாணி நிப₃த்₄நந்தி த₄நஞ்ஜய। உதா₃ஸீநவதா₃ஸீநம் அஸக்தம் தேஷு கர்மஸு ||'' [கீ₃தை 9-9] [விஷமஸ்ருஷ்டி முதலான செயல்கள் எனக்கு வைஷம்யம் (பக்ஷபாதம்), நைர்க்₄ருண்யம் (கருணையின்மை) முதலான தோ₃ஷங்களை உண்டாக்கமாட்டா; (ஏனெனில்:) (விஷம ஸ்ருஷ்டிக்குக் காரணமாக) ஜீவர்கள் செய்யும் கர்மங்களில் ஒட்டற்றவனாய், உதா₃ஸீநனாயிருக்கிறேனாகையால்.] என்று கீ₃தையில் மேலேயும் சொல்லப்பட்டுள்ளது. ஆக, ஈஶ்வரனால் கொடுக்கப்பட்ட ஸ்வாதந்த்ர்ய ஶக்தியால் உண்டாகும் ப்ராக்ருதவிஷயமான ஜ்ஞாந, இச்சா₂த்₃வேஷ, ப்ரயத்நநிவ்ருத்திகளே ஜீவன் செய்யும் புண்ய பாபங்கள் என்றதாயிற்று. இதில் ஶாஸ்த்ரங்களில் விதி₄க்கப்பட்ட ப்ராக்ருத விஷயங்களில் ஜ்ஞாநத்தை முன்னிட்ட இச்சை₂யும் அதற்கு அநுகு₃ணமான ப்ரயத்னமும், ஶாஸ்த்ரங்களில் நிஷேதி₄க்கப்பட்ட ப்ராக்ருதவிஷயங்களில் ஜ்ஞாநத்தை முன்னிட்ட த்₃வேஷமும், அதற்கு அநுகு₃ணமான நிவ்ருத்தியும் புண்யமென்று சொல்லப்படுகிறது; ஶாஸ்த்ரங்களில் நிஷேதி₄க்கப்பட்ட ப்ராக்ருதவிஷயங்களில்

ஜ்ஞாநத்தை முன்னிட்ட இச்சை₂யும், அதற்கு அநுகு₃ணமான ப்ரயத்னமும், ஶாஸ்த்ரங்களில் விதி₄க்கப்பட்ட ப்ராக்ருதவிஷயங்களில் ஜ்ஞாநத்தை முன்னிட்ட த்₃வேஷமும் அதற்கு அநுகு₃ணமான நிவ்ருத்தியும் பாபம் என்று சொல்லப்படுகிறது. பா₄ஷ்யத்தில் "த்₃வந்த்₃வேச்சா₂ த்₃வேஷ" என்பதற்கு "கு₃ணமய" என்று விஶேஷணமிட்டிருப்பதினால், ப்ராக்ருதவிஷயமான ப்ரத₂ம ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளே முற்கூறியபடி அநாதி₃காலமாக ஜீவனால் குவித்து வைக்கப்பட்டிருக்கின்றன; அவையே புண்யபாபங்கள் எனப்படுகின்றன என்று உணர்த்தப்படுகிறது; ப்ராக்ருதமல்லாத கேவலாத்ம விஷயமாகவோ, பரமாத்ம விஷயமாகவோ ஏற்படும் ஜ்ஞாநத்தை முன்னிட்ட இச்சா₂த்₃வேஷங்களும், அவற்றுக்கு அநுகு₃ணமான ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும் புண்யபாப ஶப்₃த₃வாச்யமாகமாட்டா என்றும், அவை மோக்ஷஸாத₄னம் என்றே வழங்கப்படுபவை என்றும் விளங்குகிறது இனி, "புண்யாபுண்யாவீஶ்வரப்ரீதிகோபௌ" "யத் த்வத்ப்ரியம் ததி₃ஹ புண்யமபுண்யமந்யத்" என்று ஈஶ்வரனுடைய ப்ரீதியே புண்யமாகவும், ஈஶ்வரனுடைய கோபமே பாபமாகவும் வழங்கப்படுவதுண்டு. ஜீவனுடைய புண்யபாப கர்மங்கள் க்ஷண த்₄வம்ஸிகளாய், அவற்றால் விளைந்த எம்பெருமானுடைய ப்ரீதிகோபங்களே இவனுடைய புண்யபாபகர்மங்களுக்குப் ப₂லனளிக்கின்றன என்பதையிட்டு அவ்வழக்கு ஏற்பட்டுள்ளது ஆக, ஜீவனுடைய ப்ராக்ருத விஷயமான புண்யகர்மத்தினால் எம்பெருமானுக்கு விளைந்த ப்ரீதி புண்யமென்றும், அவனுடைய ப்ராக்ருத விஷயமான பாபகர்மத்தினால் எம்பெருமானுக்கு விளைந்த கோபம் பாபமென்றும் வழங்கப்படுகிறது என்றதாயிற்று. எம்பெருமானுடைய இந்த ப்ரீதிகோபங்கள்—ஜீவனுடைய மோக்ஷஸாத₄நாநுஷ்டா₂னத்தாலுண்டான அநுக்₃ரஹத்தாலோ, ஸ்வார்த்த₂மான ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியாகிய ஶரணாக₃தி ரூபமான அதி₄காரி விஶேஷணத்தால் வெளிப்பட்ட நிர்ஹேதுகக்ருபையாலோ அழிந்து விடுகின்றன. அந்தந்த அதி₄காரிகள் விரும்பும் அந்தந்த மோக்ஷத்தைக் கொடுக்கைக்கு உறுப்பான அநுக்₃ரஹம் அழியாமல் யாவதா₃த்மபா₄வி நிலைத்து நிற்கிறது. ஆகையால், இது புண்ய ஶப்₃த₃வாச்யமாகாது. ஆக, கர்மஸஹித ஜ்ஞாநயோகத்தாலே ஆத்மாவைக் கண்டு, கர்ம ஜ்ஞாந ப₄க்தி ப்ரபத்திகளில் ஒன்றைப் ப₂லகரண ஸாத₄நமாகக் கொண்டு எம்பெருமானிடம் அந்திமஸ்ம்ருதிபர்யந்தம் தன் ஆத்மாவையே அநுப₄விக்க வேணும் என்று வேண்டுகிறவனுக்கு, முற்கூறிய ப்ராக்ருத விஷயமான புண்யபாபகர்மங்களும், அதனால் விளைந்த ப்ரீதிகோபங்களும் அழிந்த பின்பும், அவனுடைய நிலைநின்ற ப்ரதிபத்திக்கு அநுகு₃ண

மாக ஸ்வாத்மப்ராப்தி ரூபமான தாழ்ந்ததான கைவல்ய மோக்ஷம் ஏற்படுகிறது; இது அவனுடைய மோக்ஷஸாத₄நாநுகு₃ணமாக எம்பெருமானுக்கு விளைந்த அநுக்₃ரஹகார்யமேயொழிய, புண்யகர்மங்களால் விளைந்த ப்ரீதிகார்யமல்ல. கர்மஜ்ஞாநாங்கி₃கையான ப₄க்தியாலே எம்பெருமானைக்கண்டு, அந்த ப₄க்தியையே ப₂லகரண ஸாத₄னமாகக்கொண்டு, அந்திமஸ்ம்ருதி பர்யந்தம் மோக்ஷத்தில் தான் ஆநந்த₃மடைய வேண்டுகிறவனுக்கு, முற்கூறிய ப்ராக்ருத விஷயமான புண்யபாபகர்மங்களும், அதனால் விளைந்த ப்ரீதி கோபங்களும் அழியப்பெற்று, அவனுடைய நிலைநின்ற ப்ரதிபத்திக்கு அநுகு₃ணமாக ஸ்வார்த்த₂மான ப்₃ரஹ்மாநுப₄வரூபமான மோக்ஷம் ஏற்படுகிறது ; இதுவும், அவனுடைய மோக்ஷஸாத₄நாநுகு₃ணமாக எம்பெருமானுக்கு விளைந்த அநுக்₃ரஹகார்யமேயொழிய, புண்யகர்மங்களால் விளைந்த ப்ரீதிகார்யமல்ல. அநாதி₃காலமாக எம்பெருமான் செய்துவரும் க்ருஷிகள் பரிபூர்ணமாகப் ப₂லிக்கப்பெற்று, எவனுக்கு ஒரு ஜந்மத்தில் பரார்த்த₂ப்ரதிபத்தி ஏற்பட்டு, வாஸுதே₃வனே பரமப்ராப்யமாகவும், ப₂லப்ரத₃ஸாத₄னமாகவுமிருப்பதோடன்றியில், ப₂லகரண ஸாத₄நமாகவுமிருக்கிறான் என்னும் ஜ்ஞாநம் விளைந்து, ப₄க₃வத்ப்ரவ்ருத்தி விரோதி₄யான ஸ்வப்ரவ்ருத்திநிவ்ருத்திரூபமான ஶரணாக₃தி விளைகிறதோ, ப்ரபந்நர்களில் தலைசிறந்தவனான அவனுக்கு, அந்த ஜந்மத்திலேயே அந்திம ஸ்ம்ருதியையும் எதிர்பாராமல், எம்பெருமான் அவனது ப்ரதிபத்திக்கேற்ப, பரார்த்த₂மோக்ஷத்தை அருள்கின்றான். இது ஜீவனுடைய ஸ்வப்ரவ்ருத்தி ரூபமான ப்ரதிப₃ந்த₄கம் (தடை) நீங்கியதால் வெளிப்பட்ட ஸ்வாப₄விக ப₄க₃வந் நிர்ஹேதுக க்ருபா கார்யமாகையாலே, இதுவும் புண்யகர்மங்களால் விளைந்த ப்ரீதி கார்யமல்ல என்பது வெளிப்படை. ஆக, எல்லாக் கர்மங்களும் கழிந்த பின்பும், ஸுக்ருத தாரதம்யத்தினால் விளைந்த ப்ரதிபத்திகளின் தாரதம்யத்தினால் சேதனன் கைக்கொள்ளும் உபாயங்களின் வேறுபாட்டால் மோக்ஷத்திலும் தாரதம்யத்தை ஒப்புக்கொண்டே தீரவேண்டும் என விளங்குகிறது. பரமகாருணிகனான எம்பெருமான், கைவல்யநிஷ்ட₂ன் முதலானோர்க்குத் தாழ்ந்த ப்ரதிபத்திகளை மாற்றி உயர்ந்த ப்ரதிபத்திகளை விளைக்கவேண்டாவோ? எனில்: அப்படி ப்ரதிபத்தியை உயர்த்துவதற்குத்தான், அவரவர்களது ப்ரதிபத்தியை உயர்த்தக்கூடிய ஸாத₄நாநுஷ்டா₂னங்களைப் பல ஜந்மங்கள் அநுஷ்டி₂க்கும்படியும், ஆத்ம பரமாத்ம ஸ்வரூபங்களை அநுஸந்தி₄க்கும்படியும் விதி₄த்திருக்கிறான் எம்பெருமான். இப்படி அநுஷ்டி₂த்து, அநுஸந்தி₄த்தபின்பும் அந்திம ஸ்ம்ருதி பர்யந்தம் அவர்களது ப்ரதிபத்தி மாறாவிடில், அவரவர்

விரும்பிய மோக்ஷத்தை அளிக்கிறான். ப₂லாத்காரமாக அவர்களது ப்ரதிபத்தியை மாற்றவல்லவனாயினும், அப்படி மாற்றுவது அச்சேதனனுக்கு அநிஷ்டமாகையாலும், அப்படி மாற்றினால் முற்கூறியபடி எம்பெருமானுக்கு வைஷம்யம் நைர்க்₄ருண்யம் முதலான தோ₃ஷங்கள் வருமாகையாலும் அப்படி மாற்றுவதில்லை என்று கண்டுகொள்வது.

27. ஜீவஸ்வருபத்திற்கு ஜ்ஞாநாநந்த₃ங்களைக் காட்டிலும் ஶேஷத்வபாரதந்த்ர்யங்களே அந்தரங்க₃நிருபகங்கள் என்பது ஸம்ப்ரதா₃ய ஸித்₃த₄மாயிருக்க, எல்லாக்கர்மங்களும் கழிந்த முக்திநிலையில் த₄ர்மபூ₄தஜ்ஞாநம் சுருக்கம் நீங்கி விரிவுபெற்ற பின்பும், இக்கைவல்யநிஷ்ட₂னுக்கு, ஶேஷத்வபாரதந்த்ர்யங்கள் மறைந்திருக்கின்றன என்று கொள்வது எப்படிப்பொருந்தும்? எனில்: ஶேஷத்வமாவது, எம்பெருமானுக்குச் சிறப்பை விளைக்கவல்லதாயிருக்கை; பாரதந்த்ர்யமாவது, — அவன் விருப்பப்படி விநியோகி₃க்கவல்லதாயிருக்கை. இவற்றோடு கூட ஜீவனுடைய அறிவுக்கு ஸ்வாதந்த்ர்ய ஶக்தியையும் அநாதி₃யாக அளித்திருக்கிறான் எம்பெருமான். இந்த ஶக்தியிருப்பதாலே, மோக்ஷத்திலும், ஆத்மபரமாத்மாக்களுடைய விஷயவைலக்ஷண்யத்தினால், ஸ்வாதந்த்ர்யஶக்தியையுடைய ஜீவனுடைய அறிவுக்குத் தாம் விரும்பும் பரமாத்மஸ்வரூபத்திலோ, தம் ஸ்வரூபத்திலோ போ₄க்₃யதாபு₃த்தி₄ ஏற்படுகிறது. இந்த போ₄க்₃யதாபு₃த்₃தி₄யை — தமது பரார்த்த₂ப்ரதிபத்திக்கு ஏற்ப, அவனுக்கேயானவர்களான நித்யஸூரிகளும், அத்தகைய முக்தர்களும் எம்பெருமானை உபாயமாகக்கொண்டு தவிர்த்துக்கொள்கின்றனர் என்னும் விஷயத்தை "மருந்தே நங்கள்போக மகிழ்ச்சிக்கு என்று பெருந்தேவர் குழாங்கள் பிதற்றும் பிரான்" [திருவாய் 9.3.4] என்னும் பாசுரத்தில் ஆழ்வார் உணர்த்தினர். ஸ்வார்த்த₂ாநுப₄வ கைங்கர்யநிஷ்ட₂ர்களுக்கும், கைவல்யநிஷ்ட₂ர்களுக்கும் மோக்ஷத்திலும், தம் உபாஸநத்திற்கேற்ப "உபாஸித்தபடியே ப₂லன்" என்னும் தத்க்ரதுந்யாயத்தாலே ஸ்வார்த்த₂ப்ரதிபத்தி கழியாமையாலே, அவர்கள் எம்பெருமானை உபாயமாகக்கொண்டு தத்தம் அநுப₄வங்களில் போ₄க்₃யதாபு₃த்₃தி₄யைக் கழித்துக்கொள்வதில்லையாகையாலே, ஶேஷத்வபாரதந்த்ர்யங்கள் ஒவ்வோரளவுக்கு அவர்களுக்கு மறைந்திருக்கின்றன. ஆயினும், தனக்கு வைஷம்ய நைர்க்₄ருண்யங்கள் ஏற்படாமைக்காக அவரவர் விருப்பத்தையே தன் விருப்பமாகக் கொண்டு, அவரவர் விரும்பிய ப₂லனை அளித்து, எம்பெருமான் அவர்களைக்கொண்டு போ₄க₃ரஸம் அநுப₄விக்கிறானாகையால், அவர்களுக்கும் ஶேஷத்வபாரதந்த்ர்ய ஸித்₃தி₄க்குக் குறையில்லை.

28. தர்மபூதஜ்ஞாநம் விரிவுபெற்றபின்பு தம் ஸ்வரூபமான ஶேஷத்வபாரதந்த்ர்யங்களும், எம்பெருமானுடைய போக்யத்வமும் கைவல்யநிஷ்டர்களுக்கு எப்படி மறைந்திருக்கமுடியும்? எனில்: தம் ஆத்மாவில் இவர்களுக்குள்ள போகயதாபுத்தியானது அவற்றை மறைத்து விடுகிறது என்று கொள்கிறோம். "ஆங்கார வாரம் அது கேட்டு அழலுமிழும் பூங்காரரவணையான்" [நான்-திருவ 10] முதலான பாசுரங்களில், எம்பெருமானிடமுள்ள பரிவானது, நித்யஸூரிகளுக்கும் எம்பெருமானுடைய ஸர்வரக்ஷகத்வம் முதலான பெருமைகளையும், தம்முடைய ரக்ஷ்யத்வம் முதலான தன்மைகளையும் மறைத்து விடுவதாக ஆழ்வார்கள் அருளியிருப்பது இவ்விஷயத்திற்கு ஒருவகையில் த்ருஷ்டாந்தமாகக்கொள்ளத்தக்கது.

29 கீதை (7-29) ஶ்லோகத்தில் "ஜராமரண மோக்ஷாய—யதந்தி யே" [ஜரை (கிழத்தனம்), மரணம் ஆகியவற்றிலிருந்து விடுபடுவதற்காக எவர்கள் முயல்கிறார்களோ] என்று கைவல்ய நிஷ்டர்களைக் குறிக்கையாலும், "ப்ராக்ருதிவியுக்தாத்ம ஸ்வரூப தர்ஶநாய - யே யதந்தே" [ப்ரக்ருதியிலிருந்து விடுபட்ட ஆத்ம ஸ்வரூபத்தை அநுபவிப்பதற்காக எவர்கள் முயல்கின்றார்களோ] என்று எம்பெருமானார் அங்கு பாஷ்யமிடுகையாலும், ஷடூர்மிகள், ஷட்பாவவிகாரங்கள், அவற்றுக்குக் காரணமான ப்ராக்ருதமான ஸூக்ஷ்மஶரீரம் ஆகியவை கழியப்பெற்ற முக்திநிலையே இவர்களுக்கு ப்ராப்யம் என விளங்குகிறது. ஆகையால், கைவல்யாநுபவம் ஸூக்ஷ்மஶரீரத்தைக் கழிக்கமுடியாத ப்ரக்ருதி மண்டலத்தினுள் பெறும் அநுபவமே என்று கொள்ளமுடியாது. "ஜராமரண மோக்ஷாய" என்று மோக்ஷஶப்தத்தை ஜராமரணஶப்தத்தாலே விஶேஷித்திருக்கையால், இவன் பெறுவது ஆத்யந்திக ஶரீரநாஶமே யென்றும், பரமாத்மாநுபவமாகிற பரமமோக்ஷம் இவனுக்கு இல்லை என்றும் உணர்த்தப்படுகிறது. இத்தால், "ஸ ஏநாந் ப்ரஹ்ம கமயதி" [சாந் 4-15-6] [அந்த அமாநவபுருஷன் இவர்களை ப்ரஹ்மத்தை அடைவிக்கிறான்] என்று ஶ்ருதியிலும், கார்யாதிகரண ஸூத்ரங்களிலும், அங்கு ஶ்ரீபாஷ்யத்திலும், கீதாபாஷ்யத்திலும் ப்ரஹ்மாநுபவமுடையவனாகக் குறிக்கப்பட்ட பஞ்சாக்நிவித்யாநிஷ்டன் கைவல்ய நிஷ்டனாக முடியாதென்றும் விளங்குகிறது.

30. கீதா (8-3) ஶ்லோகத்தில் கைவல்யார்த்தி அறிய வேண்டிய விஷயங்களைப்பற்றி விளக்குகையில் "ப்ரஹ்ம - அக்ஷரம் பரமம்" [இவன் அறியவேண்டியதான ப்ரஹ்மமாவது—ப்ரக்ருதியினின்றும் நீங்கியதாகையாலே மேலானதான முக்தாத்மஸ்வரூபமே]

என்று இவனுக்கு முக்தியடைந்த தன் ஆத்மஸ்வரூபமே ப்ராப்யம் என்று காட்டப்பட்டது. "பரமம் அக்ஷரம் — ப்ரக்ருதி விநிர்முக்தம் ஆத்மஸ்வரூபம்" என்னும் பா₄ஷ்யம் இதை வலியுறுத்துகிறது. இந்த ஶ்லோக பா₄ஷ்யத்தில், "முமுக்ஷுபி₄ர் ஜ்ஞாதவ்யம்" என்று இரு இடங்களில் அருளியிருப்பதும் கைவல்யார்த்தி₂ மோக்ஷமடைய விரும்புகிறவனே எனத் தெளிவாகக் காட்டுகிறது. "பூ₄த ஸூக்ஷ்ம தத்₃வாஸநாதி₃கம்... த்யாஜ்யதயா. முமுக்ஷுபி₄ர் ஜ்ஞாதவ்யம்" என்று ஸூக்ஷ்ம ஶரீரம் இவனுக்குக் கைவிடத்தக்கது என அருளியிருப்பதும் இதை வலியுறுத்துகிறது.

31. இந்த ஶ்லோக பா₄ஷ்யத்தில், "ஸ்வபா₄வ: அத்₄யாத்மம்" என்னும் ஶ்லோகப் பகுதியை விளக்கும்போது, "ஸ்வபா₄வ:— ப்ரக்ருதி:...பூ₄தஸூக்ஷ்ம தத்₃வாஸநாதி₃கம் பஞ்சாக்₃நிவித்₃யாயாம் ஜ்ஞாதவ்யதயா உதி₃தம் | தது₃ப₄யம் ப்ராப்யதயா த்யாஜ்யதயா ச முமுக்ஷுபி₄ர் ஜ்ஞாதவ்யம் ||" [ஸ்வபா₄வம் எனப்படுவது ப்ரக்ருதி...ஸூக்ஷ்ம ஶரீரம், அதன் வாஸநை முதலானவை; பஞ்சாக்₃நி வித்₃யையில் அறியத்தக்கதாகச் சொல்லப்பட்டது. தன் முக்த ஸ்வரூபமும், ஸூக்ஷ்மஶரீரமும் (முறையே) ப்ராப்யமாகவும்; கைவிடத்தக்கதாகவும் முமுக்ஷுக்களால் அறியத்தக்கது] என்று அருளியிருக்கையால், கைவல்ய நிஷ்டன் பஞ்சாக்₃நிவித்₃யா நிஷ்டனே என விளங்குகிறதே எனில்: "பஞ்சாக்₃நிவித்₃யாயாம் அஸ்ய ஜ்ஞாதவ்யதயா உதி₃தம்" [பஞ்சாக்₃நிவித்₃யையில் இவனுக்கு அறியத் தக்கதாகச் சொல்லப்பட்டது] என்று பா₄ஷ்யகாரர் அருளவில்லையாகையாலும், மேலேயும் "அஸ்ய ஜ்ஞாதவ்யம்" [இவனுக்கு அறியத்தக்கது] என்று அருளாமல், "முமுக்ஷுக்களால் அறியத் தக்கது" எனப் பொதுவாக அருளுகையாலும், ப்₃ரஹ்மாத்மக ஸ்வாத்மோபாஸகனைத் தம்மால் கார்யாதி₄கரண ஸ்ரீ பா₄ஷ்யத்திலும், கீ₃தை [8-23, 24] அவதாரிகையிலும் காட்டப்பட்ட பஞ்சாக்₃நிவித்₃யா நிஷ்டனுக்குப்போலே. கேவலாத்மோபாஸகனை இக்கைவல்ய நிஷ்டனுக்கும் ஸூக்ஷ்மஶரீரம் த்யாஜ்யமாகையாலே, பஞ்சாக்₃நிவித்₃யையில் முமுக்ஷுவான அவனுக்குச் சொன்னதை முமுக்ஷுவான இவனுக்கும் அதிதே₃ஶமே செய்கிறார் பா₄ஷ்யகாரர் என்று தெளிவாக விளங்குகிறது. ஆகையால், இதுகொண்டு இவனைக் கைவல்ய நிஷ்டனாக்கமுடியாது; ஆக்கமுயன்றால் கார்யாதி₄கரண ஸ்ரீபா₄ஷ்ய ஸ்ரீஸூக்திகளும், கீ₃தை (8-23, 24) அவதாரிகா பா₄ஷ்ய ஸ்ரீஸூக்திகளும் விரோதி₄க்கும்.

32. "யத₃க்ஷரம் வேத₃விதோ₃ வத₃ந்தி" [8-11] என்று தொடங்குவதாய், கைவல்யார்த்தி₂யின் உபாஸந ப்ரகாரத்தைச்

சொல்லும் ஶ்லோகத்தில், அஸ்தூலத்வம் முதலானவற்ருேடு கூடியதாய், ப்ரக்ருதியினின்றும் நீங்கியதான தன் ஆத்மாவே கைவல்யார்த்திக்கு ப்ராப்யமாகையால், தத்க்ரது ந்யாயத்தையும், ஆதிபூரதந்யாயத்தையும் ஒட்டி அஸ்தூலத்வம் முதலானவற்ருேடு கூடிய பரமாத்ம ஸ்வரூபம் அவனுக்கு உபாஸிக்கத்தக்கதாக விதிக்கப்படுகிறது இதிலிருந்து இவன் பெறும் பலன் ப்ரக்ருதியினின்று நீங்கிய முக்திநிலேயே என விளங்குகிறது. இப்படி விதிப்பதில் எம்பெருமானுக்கு மற்ருெரு உட்கருத்தும் உண்டு; அதாவது,— இவன் தன் ஆத்மாவில் எந்தப் பெருமைகளைக் கண்டு அதில் ஈடுபடுகிருனே, அந்தப் பெருமைகளும், மற்றும் பல பெருமைகளும் பரமாத்மாவான தன்னிடம் உண்டு என உணர்ந்து, இவன் தன்னிடம் ஈடுபடவேண்டும் என்பது எம்பெருமானின் உட்கருத்து. இதையே ''ப்ரதிபத்தி வைஶேஷ்யத்திஞலே ஐஶ்வர்ய கைவல்ய பகவச் சரணார்த்திகள் மேன்மேலே சிறந்தவர்கள்'' என்று ஏழாம் அத்தியாயத்தில் பக்தபேதத்தை விவரிக்கும் (7-16) ஶ்லோக பாஷ்யத்திலும், அதை அநுவதிக்கும் எட்டாம் அத்தியாயத்தின் அவதாரிகையிலும் பாஷ்யகாரர் அருளினர். இதிலிருந்து எம்பெருமான் செய்யும் ஸாதநாநுஷ்டான விதிகளுக்குச் சேதனனின் ப்ரதிபத்திகளை மாற்றுவதில் முக்கிய நோக்கேயொழிய, அந்த ஸாதனங்களுக்குரிய பலனைக் கொடுப்பதில் முக்கிய நோக்கல்ல என்றும், ஸாதநத்தை அந்திமஸ்ம்ருதி பர்யந்தம் பூர்ணமாக அநுஷ்டித்த பின்பும் இவனுடைய ப்ரதிபத்தி மாருமலிருந்தால், வேறு வழியில்லாமல் இவன் விரும்பும் சுயநலப்பலனை அளிக்கிருன் எம்பெருமான் என்றும் நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும்.

33. ஐஶ்வர்யார்த்திக்கு [8-10] ஶ்லோகத்தில் அந்திமகாலத்தில் புருவங்களுக்கு நடுவில் ப்ராணனை நிலைநிறுத்தும்படி உபதேஶித்தது போலல்லாமல், கைவல்யார்த்தியைப்பற்றிய ''ஸர்வத்வாராணி'' [8-12] என்னும் ஶ்லோகத்தில், 'மூர்த்ந்யாதாய ஆத்மந: ப்ராணம்'' [தன்னுடைய ப்ராணவாயுவைத் தனது தலையில் ப்ரவேஶிக்கச் செய்து] என்று ஸுஷும்நாநாடி வழியாகத் தலையில் நிலைநிறுத்தும்படி உபதேஶிக்கையாலே, ஐஶ்வர்யார்த்தி பெறும் பலன் அஸ்திரமான போகமென்றும், கைவல்யார்த்தி பெறும் பலன் நித்யமான மோக்ஷம் என்றும் தெளிவாக விளங்குகிறது. ''ஹ்ருதயகமல நிவிஷ்டே மயி அக்ஷரே மனோ நிருத்ய...வாச்யம் மாம் அநுஸ்மரந்'' என்று இங்கு பாஷ்யத்தில் அந்திமக்ஷணத்திலும் தன்னைச் சிந்திக்க வேண்டும் என்று எம்பெருமான் விதித்திருப்பதாகக் காட்டியிருப்பது ''இந்தக் கடைசி க்ஷணத்திலாவது இவன் நம்மிடம் ஈடுபடமாட்டானு'' என்கிற எம்பெருமானின் ப்ரத்யாஶையை விளக்குகிறது.

34. இந்த (8-12) ஶ்லோகத்தில் கைவல்யார்த்தி₂க்கு ப்ராப் யத்தைச் சொல்லும்போது, "தே₃ஹம் த்யஜந் ய: ப்ரயாதி" என்று இவன் ஸ்தூ₂ல ஸூக்ஷ்மதே₃ஹங்களை அடியோடுவிட்டு ப்ரக்ருதிமண்ட₂லத்தைத் தாண்டிச் செல்கிறன் என்றதும், "ஸ யாதி பரமாம் க₃திம்" என்று அசித₃நுப₄வமாகிற ஐஶ்வர்யாநுப₄வத்தைக் காட்டிலும் மேலானதாகையாலே 'பரக₃தி' எனத்தக்க அசிந்மிஶ்ர ஸ்வாத்மாநுப₄வத்தைக் காட்டிலும் மேலானதாகையாலே 'பரமா கதி₃' எனத்தக்க தன் கேவலாத்மாநுப₄வத்தை அடைகிறன் என்ற தும்—இவன் அடையும் ப₂லன் மோக்ஷமே என்று காட்டுகிறது. இவ்விடத்தில் பா₄ஷ்யத்தில் "ப்ரக்ருதி வியுக்தம் மத்ஸமாநாகாரம் அபுநராவ்ருத்திம் ஆத்மாநம் ப்ராப்நோதீத்யர்த்த₂:" [ப்ரக்ருதியி னின்றும் நீங்கியதாய், என்னோடு ஒத்த (ஜ்ஞாநாநந்த₃மயமான) ஸ்வரூபத்தை உடையதாய், திரும்பி வருதலில்லாததான ஆத்மாவை அடைகிறன் என்று பொருள்] என்று அருளியிருப்பதும் இதை வலியுறுத்துகிறது.

35. (8-12) ஶ்லோகத்தில் 'பரமா க₃தி' என்று கைவல்யாநு ப₄வத்தைச் சொன்ன கண்ணன், (8-15) ஶ்லோகத்தில் 'பரமா ஸம்ஸித்₃தி₄' என்று ஞானியடையும் ப₂லனைக் குறிக்கையாலே, இரண்டும் மோக்ஷமேயாயினும், ஞானியடையும் ப்₃ரஹ்மாநுப₄வ மாகிற சிறந்த ப₂லனைக் கைவல்யநிஷ்ட₂ன் அடைவதில்லை என்று உணர்த்துகிறன். இதிலிருந்து—ப்₃ரஹ்மாநுப₄வத்தை அடைபவனுக ஶ்ருதி ஸூத்ர பா₄ஷ்யங்களில் கூறப்பட்ட பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂ன் கைவல்யநிஷ்ட₂னுக முடியாது என விளங்குகிறது.

36. (8-15) பா₄ஷ்யத்தின் அவதாரிகையில், "அத:பரம் அத்₄யாயஶேஷேண ஜ்ஞாநிந: கைவல்யார்த்தி₂நஶ்ச அபுநராவ்ருத்திம், ஐஶ்வர்யார்த்தி₂ந: புநராவ்ருத்திம் சாஹ" [இதற்குமேல் உள்ள அத்₄யாயப்பகுதியாலே, ஞானிக்கும், கைவல்யார்த்தி₂க்கும் புநரா வ்ருத்தி இல்லையென்றும், ஐஶ்வர்யார்த்தி₂க்குப் புநராவ்ருத்தி உள்ள தென்றும் கூறுகிறன்.] என்று அருளியிருப்பதிலிருந்து, ஞானியின் ப்ராப்யத்தைப்போலே கைவல்யார்த்தி₂யின் ப்ராப்யமும் ஸம்ஸாரத் திற்குத் திரும்பிவருதல் இல்லாத மோக்ஷமே என விளங்குகிறது.

37. கைவல்யார்த்தி₂க்கு ஸம்ஸாரத்திற்குத் திரும்பி வருதல் இல்லாவிடினும், அவன் தான் பெற்றிருக்கும் கேவலாத்மாநுப₄வத் திற்கு மேற்பட்ட ப₂லமான ப்₃ரஹ்மாநுப₄வத்தைக் காலாந்தரத்தில்

அடையலாமே? எனில், (8-16) ஶ்லோகத்தில் "புநராவர்த்திந:" [ப்3ரஹ்மலோகமீருகவுள்ள எல்லாவுலகங்களும், புநராவ்ருத்தி யுள்ளவை] என்றவிடத்துக்கு வியாக்கியானம் செய்யும்போது "விநாஶிந:" [அழிவுடையவை] என்றே பா4ஷ்யகாரர் அருளிச் செய்கையாலே, புநராவ்ருத்தியில்லாத ப2லனேயுடைய கைவல்ய நிஷ்ட2னும், தன் ப2லன் அழிந்து கீழான ஐஶ்வர்யாநுப4வத்தையோ, மேலான ப4க3வத3நுப4வத்தையோ பெறுவதில்லை என விளங்கும். இப்படிக் கொள்ளாவிடில், இந்த்3ரலோகத்தில் அநுப4வத்தைப் பெற்று, அங்கிருந்து உயர்ந்த லோகமாகிற ப்3ரஹ்மலோகத்திற்குச் சென்று அவ்வுலகில் அநுப4வத்தைப் பெறுகிறவன் புநராவ்ருத்தி யில்லாதவன் என்று கொள்ளவேண்டிவரும். இப்படிக் கொள்வது, "ப்3ரஹ்மலோகமீருகவுள்ள எல்லாவுலகமுமே புநராவ்ருத்தி யுள்ளவை" என்று இந்த (8-16) ஶ்லோகத்தில் சொன்னதோடு முரண்படும். ஆகையால், கைவல்யத்தை அடைந்தவனுக்கு என்றுமே கீழான ஐஶ்வர்யாநுப4வமும், மேலான பரமாத்மாநுப4வ மும் கிடைப்பதில்லை என்று தேறுகிறது.

38. கைவல்யார்த்தி2யின் ப்ராப்யத்தைக் கூறும் (8-20, 21) ஶ்லோகங்களில் "யம் ப்ராப்ய ந நிவர்த்தந்தே" என்று கைவல் யாநுப4வத்தை அடைந்தபின், அதைவிட்டு வேருேரனுப4வத்தை அடைகையாகிற புநராவ்ருத்தியில்லை என்று முக்தகண்ட2மாகச் சொல்லப்பட்டிருப்பதும். அவ்விடத்து பா4ஷ்ய அவதாரிகையில் "அத2 கைவல்யம் ப்ராப்தாநாமபி புநராவ்ருத்திர் ந வித்3யத இத் யாஹ" [இனி, கைவல்யத்தை அடைந்தவனுக்கும் புநராவ்ருத்தி இல்லை என்று கூறுகிருன்] என்று அருளியிருப்பதும், கைவல்யாநுப4வம் ஸம்ஸாரத்திற்கோ, ப4க3வத3நுப4வத்திற்கோ செல்லமுடியாத நித்யாநுப4வம் என்பதை வலியுறுத்துகிறது. இங்கு "தமாஹு: பரமாம் க3திம்" [அக்கேவலாத்மாவை மேலான ப்ராப்யமாக (கைவல்யார்த்தி2கள்) கூறுகிருர்கள்] என்றவிடத்தின் பா4ஷ்யத்தில், "அயமேவ...ப்ரக்ருதி ஸம்ஸர்க்க3வியுக்தஸ்வரூபேணுவஸ்தி2த ஆத்மா இத்யர்த்த2:" [இவனே ப்ரக்ருதியிலிருந்து நீங்கப்பெற்றவனுய், ஸ்வரூபவிளக்கம் பெற்றவனுன ஆத்மா என்று பொருள்] என்று அருளியிருப்பதிலிருந்து, கைவல்யாநுப4வம் ப்ரக்ருதிஸம்ஸர்க்க3ம் அடியோடு நீங்கியபின் ஏற்படும் மோக்ஷாநுப4வமே என விளங்கு கிறது. இங்கு "தத்3தா4ம பரமம் மம" [அது எனது மேலான நியமன ஸ்தா2னம்] என்றவிடத்திற்கு பா4ஷ்யமிடுகையில், "அசேதந ப்ரக்ருதிரேகம் நியமநஸ்தா2நம்; தத்ஸம்ஸ்ருஷ்டரூபா ஜீவப்ரக்ருதிர்

த்₃விதீயம் நியமநஸ்த₂ாநம் ; அசித்ஸம்ஸர்க்க₃வியுக்தம் ஸ்வரூபேணு வஸ்தி₂தம் முக்த ஸ்வரூபம் பரமம் நியமநஸ்த₂ாநம் இத்யர்த்த₂: | தச்ச அபுநராவ்ருத்திரூபம் |'' [எனக்கு ப்ரகாரமான அசேதனப் பொருள் ஒரு நியமனஸ்த₂ானம் ; எனக்கு ப்ரகாரமாயிருப்பதாய், முற்கூறிய அசித்தோடு சேர்ந்திருப்பதான ஸம்ஸாரி ஜீவஸ்வரூபம் முற்கூறிய அசித்தைக் காட்டிலும் மேலான இரண்டாவது நியமன ஸ்த₂ானம்; அசித்ஸம்ப₃ந்த₄ம் அடியோடு நீங்கப்பெற்றதாய், ஸ்வரூப விளக்கம் பெற்றதாய், அதனுலேயே முற்கூறிய ஸம்ஸாரி சேதனஸ்வ ரூபத்திலும் மேலானதான முக்தஜீவஸ்வரூபம் முந்திய இரண்டைக் காட்டிலும் மேலான மூன்ருவது நியமன ஸ்த₂ானம்—என்று பொருள். அதுவும் புநராவ்ருத்தியில்லாத நித்யாநுப₄வமேயாகும் ] என்று அருளியிருப்பது கைவல்யாநுப₄வம் நித்யமுக்தியே என்று ப₄ாஷ்யகாரர் திருவுள்ளம் பற்றியதைக் கரதலாமலகமாக (கையிலங்கு நெல்லிக் கனியாகக்) காட்டுகிறது. த₄ாமஶப்₃த₃த்திற்கு 'ப்ரகாஶம்' [ஞான வொளி] என்று பொருள்கொள்ளும்போதும், ''ப்ரக்ருதிஸம்ஸ்ருஷ்டாத் பரிச்சி₂ந்நஜ்ஞாநரூபாத் ஆத்மந: அபரிச்சி₂ந்நஜ்ஞாநரூபதயா முக்த ஸ்வரூபம் பரம் த₄ாம'' [ப்ரக்ருதியோடு சேர்ந்திருக்கையாலே அளவு பட்ட அறிவையுடைய ஸம்ஸாரி ஜீவஸ்வரூபத்தைக்காட்டிலும், அள வற்ற அறிவையுடையதாகையால் முக்தஸ்வரூபம் மேலான ஞான வொளியாகிறது] என்று அருளியது இதை மேலும் வலியுறுத்துகிறது.

39. (8-22) ஶ்லோகத்தின் அவதாரிகா ப₄ாஷ்யத்தில், ''ஜ்ஞாநிந: ப்ராப்யம் து தஸ்மாத₃த்யந்தவிப₄க்தம் இத்யாஹ'' [ஞானியின் ப்ராப்யமோவெனில், கைவல்யநிஷ்ட₂னுடைய ப்ராப் யத்தைக் காட்டிலும் மிகவும் வேறுபட்டது என்று கூறுகிருன்.] என்று அருளுவதன் மூலம் ''கைவல்யம் பெற்றவனுக்கு ப₄க₃வத₃நு ப₄வம் அடியோடு கிடையாது'' என்பதைக் கல்வெட்டாகக் காட்டி ஞர் ப₄ாஷ்யகாரர். இதிலிருந்து கைவல்யத்தை அநுப₄வித்த பின் இவன் ப₄க₃வத₃நுப₄வத்தைப் பெறுகிருன் என்று ப₄ாஷ்யகாரர் கருதியிருக்க இடமேயில்லை என விளங்குகிறது. ப்₃ரஹ்மாநுப₄வ முள்ளவனுகத் தம்மால் பலவிடங்களில் முழங்கப்பட்ட பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்ட₂னைக் கைவல்யநிஷ்ட₂னுகக் கருதியிருக்கவும் இடமே யில்லை என்றும் விளங்குகிறது.

40. கீ₃தை (8-23, 24) ஶ்லோகங்களின் அவதாரிகா ப₄ாஷ்யத் தில் ''அத₂ ஆத்மயாத₂ாத்ம்யவித₃: பரமபுருஷநிஷ்ட₂ஸ்ய ச ஸாத₄ாரணீம் அர்ச்சிராதி₃காம் க₃திமாஹ'' [இனி, ஆத்ம யாத₂ாத்ம்யவித்துக்கும் பரமபுருஷநிஷ்ட₂னுக்கும் பொதுவான

அர்ச்சிராதி₄க₃தியைக் கூறுகிருன்] என்று 'ஆத்மயாத₂ாத்ம்யவித்' என்னும் பஞ்சாக்₃நிவித்₃யா நிஷ்ட₂னைப் பரமபுருஷநிஷ்ட₂னுகிற ஜ்ஞாநியோடு சேர்த்து எடுக்கையாலே, இவ்விருவரும் 7, 8 அத்₄யாயங்களில் பூர்வப்ரக்ருதர்களான ஜிஜ்ஞாஸுவும் ஜ்ஞாநியுமே என விளங்குகிறதே; இதிலிருந்தும், இவ்வவதாரிகா பா₄ஷ்யத்தின் மேல்பகுதியில் இவ்விருவர்க்கும் அர்ச்சிராதி₃க₃தியும் ப்₃ரஹ்மாநுப₄வமும் கூறப்படுவதிலிருந்தும் ஜிஜ்ஞாஸுவுக்கு முதலில் கைவல்யாநுப₄வமும், பிறகு ப்₃ரஹ்மாநுப₄வமும் ஏற்படுகின்றன என்று கொண்டுதீர வேண்டியிருக்கிறதே — என்னும் ஆக்ஷேபம் எழுகிறது. இதற்குப் பரிஹாரம் பின்வருமாறு,— (1) கீ₃தை (7-16) பா₄ஷ்யத்தில் ஜிஜ்ஞாஸுவுக்கு லக்ஷணம் உரைக்கும்போது "ப்ரக்ருதிவியுக்தாத்மஸ்வரூபாவாப்தீச்சு₂:" [ப்ரக்ருதியினின்றும் நீங்கிய ஆத்மஸ்வரூபத்தை அடைய விரும்புகிறவன்] என்று லக்ஷணமருளினர் பா₄ஷ்யகாரர். ஜ்ஞாநிக்கு "ப₄க₃வச்சே₂ஷைகரஸாத்மஸ்வரூபவித்" [எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருக்கையையே இயல்வாகக் கொண்ட ஆத்மஸ்வரூபத்தை அறிந்தவன்] என்று லக்ஷணமருளினர். இங்கு பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னை "ஆத்மயாத₂ாத்ம்யவித்" [ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை அறிந்தவன்] என்று வழங்கியிருப்பதிலிருந்தும், இவ்வவதாரிகா பா₄ஷ்யத்திலேயே மேலே இவன் தன் ஆத்மஸ்வரூபத்தை ப்₃ரஹ்மாத்மகமாய், ப்₃ரஹ்மசேஷைகரஸமானது என்று அநுஸந்தி₄க்கவேண்டுமென்று தத்க்ரதுந்யாயத்தையும் காட்டி நிரூபிப்பதிலிருந்தும் இவனை பா₄ஷ்யகாரர் ஜ்ஞாநியாகக் கருதினரேயொழிய ஜிஜ்ஞாஸுவாகக் கருதவில்லை என்று தெளிவாக விளங்குகிறது. (2) கீ₃தை (7-17) பா₄ஷ்யத்தில் "ஐஶ்வர்ய கைவல்ய நிஷ்ட₂ர்கள் இருவர்க்கும் (முறையே) ஐஶ்வர்யமும், கேவலாத்மாநுப₄வமுமாகிற தத்தம் விருப்பம் கிடைக்கும் வரையிலேயே என்னோடு சேர்த்தியுண்டு" என்றும், (8-22) அவதாரிகையில் "கைவல்ய நிஷ்ட₂னுடைய ப்ராப்யத்தைக் காட்டிலும் ஜ்ஞாநியினுடைய ப்ராப்யம் மிகவும் வேறுபட்டது" என்றும் அருளுவதன்மூலமும், பதின்மூன்றும் அத்தியாயத்தின் அவதாரிகா பா₄ஷ்யத்தில் "ஆத்ம கைவல்யமாத்ராபேக்ஷாணும்" என்று ஜிஜ்ஞாஸு கேவலாத்மாநுப₄வத்தை மாத்திரமே விரும்புகிருன் என்று அருளுவதன் மூலமும் கைவல்யநிஷ்ட₃னுக்கு ப்₃ரஹ்மாநுப₄வம் கிடையாது, அதைப்பெற விருப்பமேயில்லை எனக்காட்டினர். இவ்வவதாரிகா பா₄ஷ்யத்திலோவெனில் ஆத்மயாத₂ாத்ம்யவித்தாகிற பஞ்சாக்₃நிவித்₃யா நிஷ்ட₂னுக்கு ப்₃ரஹ்மாநுப₄வம் உண்டென்று மிகத் தெளிவாகக் காட்டினர். இதிலிருந்தும் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂ன் ஜ்ஞாநிகோடி

யில் சேர்ந்தவனேயொழிய ஜிஜ்ஞாஸுவல்லன் என விளங்குகிறது. (3) ஜிஜ்ஞாஸுவாகிற கைவல்யநிஷ்டனைப்பற்றிப் பலவிடங்களில் குறிப்பிடும்போது ''ப்ரக்ருதியினின்றும் நீங்கிய ஆத்மஸ்வரூபத்தை அடையவிரும்புகிறவன்'' [7-16; 7-29] என்றே, 'அக்ஷரயாதா₂த்ம்யத்தை விரும்பி உபாஸிப்பவன்' [8-ம் அத்தியாயம் அவதாரிகை] என்றே, 'கைவல்யார்த்தீ₂' [8-11, 8-14, 8-15 அவதாரிகைகள்] என்றே, 'கைவல்யம் ப்ராப்தன்' [8-20, 21 அவதாரிகை] என்றே, 'ஆத்ம கைவல்ய மாத்ராபேக்ஷன்' [13-ம் அத்தியாயம் அவதாரிகை] என்றே குறிப்பிடுகிறாரேயொழிய ஓரிடத்திற்கூட 'ஆத்மயாதா₂த்ம்யவித்' என்று குறிப்பிடவில்லை, இதிலிருந்தும் இந்த ஆத்மயாதா₂த்ம்யவித் என்பவன் கைவல்யநிஷ்டனிலும் வேறுபட்டவன் என விளங்குகிறது. (4) கீ₃தை (8-26) ஶ்லோகபா₄ஷ்யத்தில் ''ஏதே ஶுக்லக்ருஷ்ணே க₃தீ ஜ்ஞாநிநாம், விவிதா₄நாம் புண்யகர்மணாம் ச ஶ்ருதௌ ஶாஶ்வதே மதே'' [இந்த ஶுக்லக்ருஷ்ணக₃திகளிரண்டும் (முறையே) ஞானிகளுக்கும், பலவிதமான புண்யகர்மங்களைப் புரிந்தவர்களுக்கும் ஶ்ருதியில் எப்போதும் உள்ளவையாகச் சொல்லப்படுகின்றன.] என்று அருளிச்செய்வதன்மூலம் ஶுக்லக₃தியான அர்ச்சிராதி₃க₃தி ஜ்ஞாநிகளுக்கு உண்டேயொழிய ஜிஜ்ஞாஸுவுக்குக் கிடையாது என்று காட்டுவதன்மூலம் ஆத்மயாதா₂த்ம்யவித்தாகிற பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்டன் ஜ்ஞாநிகோடியில் சேர்ந்தவனேயொழிய ஜிஜ்ஞாஸுவல்லனென்று நிலைநிறுத்தினார். 'ஜ்ஞாநிநாம் த்₃விவிதா₄நாம்'' என்று தாத்பர்ய தீ₃பிகையில் எடுக்கப்பட்ட பாடத்தில் இது மிகத் தெளிவாக விளங்குகிறது. (5) பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்டனுக்குப் பஞ்சாக்₃னி வித்₃யை ஒன்றே ஸாத₄னமாகும். ''ஆத்மார்த்தீ₂ சேத் த்ரயோऽப்யேதே தத்கைவல்யஸ்ய ஸாத₄கா:'' [கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹம் 27] [ஆத்ம மாத்ரத்தை அநுப₄விக்கையாகிற பலனை விருப்பினுகில், கர்மஜ்ஞாநப₄க்தியோக₃ங்கள் மூன்றும் தனித்தனியே ஆத்மகைவல்யத்தை ஸாதி₄த்துக்கொடுக்கும்.] ''ஐஹலௌகிகமைஶ்வர்யம் ஸ்வர்க்கா₃த்₃யம் பாரலௌகிகம் । கைவல்யம் ப₄க₃வந்தம் ச மந்த்ரோऽயம் ஸாத₄யிஷ்யதி ॥'' [வ்ருத்₃த₄ஹாரீதஸ்ம்ருதி 6-50] [இவ்வுலகச் செல்வத்தையும், சுவர்க்கம் முதலான மறுமைச் செல்வத்தையும், கேவலாத்மாநுப₄வமாகிற கைவல்யத்தையும், ப₄க₃வதநுப₄வத்தையும் (அதையதை விரும்புவார்க்கு) இவ்வஷ்டாக்ஷர மந்திரம் ஸாதி₄த்துக்கொடுக்கும்] '' தாவதா₃ர்த்திஸ் ததா₂ வாஞ்சா₂ தாவந்மோஹஸ் ததா₂ऽஸுக₂ம் । யாவந்ந யாதி ஶரணம் த்வாமஶேஷாக₄நாஶநம் ॥ '' [வி-பு 1-9-73] [எல்லாப்பாபங்களையும் போக்கடிக்கும் உன்னை எதுவரையில் ஶரணமடையவில்லையோ, அது

வரையிலேயே (செல்வத்தை இழந்ததனுல் ஏற்படும்) வருத்தம்; அதுவரையிலேயே (செல்வம் வேண்டும் என்னும்) ஆசை; அது வரையிலே (ஆத்மாநுபவமின்மையால் ஏற்படும்) மோஹம்; அதுவரையிலேயே (பகவதநுபவமின்மையால் உண்டாகும்) ஸுகமின்மை. (ஆர்த்தன், அர்த்தார்த்தி எனப்படும் ஐஶ்வர்யார்த்திகள், ஜிஜ்ஞாஸுவாகிற கைவல்யார்த்தி, ஜ்ஞாநி ஆகிய அனைவர்க்கும் ப்ரபத்தியே பல ஸாதனம் என்றபடி)] என்கிறபடியே கைவல்ய நிஷ்டனுக்குக் கர்ம ஜ்ஞாந பக்தி ப்ரபத்திகளில் எதுவும் ஸாதன மாகலாம். இப்படி ஸாதனத்தைப் பார்த்தாலும் ஆத்மயாதாத்ம்ய வித் எனப்படும் பஞ்சாக்நிவித்யாநிஷ்டன் கைவல்யநிஷ்டனைக் காட்டிலும் வேறுபட்டவன் என விளங்கும். (6) பஞ்சாக்நிவித்யா நிஷ்டனைப் பற்றிய ப்ரஸ்தாவம் வரும் கார்யாதிகரணம் [4-3-5] முத லானவிடங்களில் ஸ்ரீபாஷ்யம், ஶ்ருதப்ரகாஶிகை முதலானவற்றில் அவனைப்பற்றிக் குறிப்பிடும்போது ஓரிடத்திற்கூட அவனைக் கேவலன் என்ரே, கைவல்யநிஷ்டன் என்ரே, அவனுக்குக் கைவல்யம் ப்ராப்யம் என்ரே கூறவில்லை. நேர்மாருகப் பஞ்சாக்நி வித்யாநிஷ்டனைக் காட்டிலும் வேறுபட்ட அதிகாரிகளே "கேவலம் வா சித்வஸ்து...ய உபாஸதே" என்று கார்யாதிகரணபாஷ்யத்தின் இறுதியில் கேவல சிதுபாஸகர்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளனர். இதிலிருந்தும் ஆத்ம யாதாத்ம்யவித் எனப்படும் பஞ்சாக்நிவித்யாநிஷ்டன், கைவல்ய நிஷ்டனைக் காட்டிலும் வேறுபட்டவன் என விளங்குகிறது. பஞ்சாக்நிவித்யாநிஷ்டனைக்காட்டிலும் வேறுபட்ட கேவலாத்மோ பாஸகன் ஒருவன் உண்டோ? எனில்: சாந்தோக்யம் ஏழாவது ப்ரபாடகத்தில் நாமம் தொடங்கி ஆஶை ஈருகப் பதினுலு அசேதனப் பொருள்களின் உபாஸனத்தைக்கூறி, அதற்குப்பின் 'ப்ராணன்' எனும் ஶப்தத்தால் அசேதனப் பொருள்களைக் காட்டிலும் வேறு பட்டதாய், உயர்ந்ததான ஜீவாத்மஸ்வரூபத்தின் உபாஸனத்தை [7-14-4]ல் கூறி, அதை உபாஸிப்பவன் அதிவாதியாகிருன் என்று காட்டி, (7-15-1)ல் 'ஸத்யம்' எனப்படும் ப்ரஹ்மத்தை உபாஸிப்பவன் இவனைவிடச் சிறந்த அதிவாதி என்று காட்டுகையால் ப்ராணன் எனப்படும் கேவல ஜீவனை உபா ஸிப்பவன் ப்ரஹ்மாத்மகஸ்வாத்மோபாஸகனை பஞ்சாக்நிவித்யா நிஷ்டனைக் காட்டிலும் வேறுபட்டவன் என்றும், அதிவாதியாகக் கூறப்படுகையாலே ஒருவகையான மோக்ஷத்தைப் பெறுபவன் என்றும், ப்ரஹ்மோபாஸகனைக் காட்டிலும் தாழ்ந்தவனுகக் கூறப் படுகையாலே ப்ரஹ்மோபாஸகனைக் காட்டிலும் தாழ்ந்த கேவலாத் மோபாஸகன் இவனேயென்றும் விளங்குகிறது. ஆகையால் இவனே

ஜிஜ்ஞாஸுவெனப்படும் கைவல்யநிஷ்டனென்றும், பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்டனும், பரமபுருஷநிஷ்டனும் இவ்வவதாரிகாபாஷ்யத் தோடு அவ்யவஹிதமாக(இடைவெளியில்லாமல்) ப்ரக்ருதரான ஜ்ஞாநி களில் இருவகையினரே என்றும் அசைக்கமுடியாதபடி தேறுகிறது.

41. கீ₃தை (8-26) ஶ்லோக பா₄ஷ்யத்தில் ஶுக்லக₃தியான அர்ச்சிராதி₃க₃தி ஜ்ஞாநிகளுக்கு உண்டேயொழிய ஜிஜ்ஞாஸுவுக்குக் கிடையாது என்று காட்டுவதன்மூலம் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்டனுகிற 'ஆத்மயாதா₂த்ம்யவித்' ஜிஜ்ஞாஸுவிலும் வேறுபட்டவன் என உணர்த்தினர். முந்தின (40-வது) பாராவில் பரிஹாரத்தின் (4)வது பிரிவில் இது விவரிக்கப்பட்டது.

42. கீ₃தை (12-3, 4, 5)ல் கேவலாத்மோபாஸகனின் ப்ராப் யத்தைக் குறிப்பிடுகையில், ''தே ப்ராப்நுவந்தி மாமேவ'' [அவர்கள் என்னையே அடைகிருர்கள்] என்கிருன் கண்ணன். இவர்கள் முதலில் கேவலாத்மாநுப₄வத்தையும், பிறகு பரமாத்மாநுப₄வத்தையும் அடை பவர்களாயிருந்தால், இங்கு பா₄ஷ்யகாரர் ஏவகாரத்தோடு கூடிய ஶ்லோகஸ்வாரஸ்யத்தையொட்டி அவ்விஷயத்தைக் கூறியிருப்பார். அப்படிக் கூறுமல் '' மாம் ப்ராப்நுவந்த்யேவ '' என்று அயோக₃ வ்யவச்சே₂த₃பரமாக அந்வயத்தை மாற்றி, '' மத்ஸமாநாகாரம் அஸம்ஸாரிணம் ஆத்மாநம் ப்ராப்நுவந்த்யேவ '' [(ஜ்ஞாநாநந்த₃ங் களில்) என்னை ஒத்த ஸ்வரூபத்தை உடையவனாய், ஸம்ஸார ஸம்ப₃ந்த₄மற்ற தம் ஆத்மஸ்வரூபத்தை அடையவே செய்கிருர்கள்] என்று பொருளுரைப்பதிலிருந்து, பா₄ஷ்யகாரர் கைவல்யநிஷ்டன் பிரிதொரு காலத்தில் ப்₃ரஹ்மாநுப₄வத்தைப் பெறுகிருன் என்று திருவுள்ளம் பற்றவேயில்லை எனத் தெளிவாக விளங்குகிறது. ஏழு எட்டாம் அத்தியாயங்களில் கைவல்யநிஷ்டனுக்கு ப்₃ரஹ்மாநுப₄வம் அடியோடு இல்லை என்று கண்ணன் திருவுள்ளம் பற்றியிருப்பதாகிற அர்த்த₂ஸ்வாரஸ்யத்தையொட்டி, இங்கு ஶப்₃த₃த்தைச் சிறிது தலிந்து பொருள்கொள்ளவேண்டும் என்று பா₄ஷ்யகாரர் திருவுள்ளம் பற்றுகிருர் என விளங்கும்.

43. இங்கு ''க்லேஶ: அதி₄கதரஸ்தேஷாம்'' என்று கைவல்ய நிஷ்டன் ப₄க₃வது₃பாஸகனைக் காட்டிலும் நீண்ட காலம் மிகுந்த ஶ்ரமப்பட்டு உபாஸிக்கவேண்டும் என்று விதி₄த்திருப்பது—அவனுடைய தைக் காட்டிலும் மிகுந்திருக்கும் இவனுடைய ஸ்வார்த்த₂தா ப்ரதி பத்தியைக் கழிப்பதற்காகவே என விளங்குகிறது.

44. கடைசி ஷட்கத்தின் தொடக்கமான பதின்மூன்ரும் அத்தி யாயத்தின் அவதாரிகையில், முந்தின ஷட்கத்தின் ப்ரமேயத்தைக்

கூறும்போது, “ ஆத்ம கைவல்ய மாத்ராபேக்ஷாணும் ” [கேவலாத் மாநுப₄வத்தை மாத்திரம் விரும்புகிறவர்களுக்கு] என்று கைவல்ய நிஷ்டூர்களைக் குறிப்பிடுவதிலிருந்து, இவர்களுக்கு ப்₃ரஹ்மத்தை அநுப₄விக்கவேண்டும் என்னும் விருப்பமே கிடையாது என விளங்குகிறது. மது₄வித்₃யா நிஷ்ட₂ர்களைப்போலே, முதலில் கேவலாத்மாநுப₄வத்தையும், பிறகு ப்₃ரஹ்மாநுப₄வத்தையும் பெறவிரும்புகிறவர்களாயிருந்தால், இவர்களை “கைவல்யமாத்ராபேக்ஷர்கள் ” என்று பா₄ஷ்யகாரர் குறிப்பிட்டிருப்பாரா என்பதை நடுநிலையாளர்கள் சிந்திக்கவேண்டும்.

45. ப₄க்தியோக₃த்தின் தொடக்கமான ஏழாம் அத்₄யாயத்தை பா₄ஷ்யத்துடன் மொத்தமாக விமர்ஶிக்கும்போது,— இரண்டாவது ஶ்லோகத்தில் பரமாத்மாவான தன் ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்தால், அறியவேண்டியது வேறு இல்லை என்றும், மூன்றுவது ஶ்லோகத்திலும், 26-வது ஶ்லோகத்திலும் — ஸ்வார்த்த₂மான ஸித்₃தி₄க்காக யத்னம் செய்பவர்களிடையே தன்னை உள்ளபடி அறிந்தவன் எவனுமில்லை என்றும் கூறி, தன் பெருமையைக்கூறும் 4 முதல் 12 ஶ்லோகமீருக அசித்தைப்போலே ஜீவனும் தனக்கு அத்யந்தபரதந்த்ரனென நிரூபித்திருப்பது, தன்னை உபாஸிப்பவனை ‘ப₄க்தன்’ எனக் கூருமல், பெரும்பாலும் ‘ ஜ்ஞாநி ’ என்றே கூறுவது, 19 வது ஶ்லோகத்திலே, ஞானத்தின் பூர்த்தியை அடைந்தவனைத் தனக்கே கிடைத்தற்கரியவன் என்பது, 28-வது ஶ்லோகத்தில், புண்யத்தாலே பாபம் சிறிது சிறிதாக அழியப்பெற்றவர்கள் தன்னை ஒவ்வொரு ப₂லனுக்காக ஸாத₄னங்களை அனுஷ்டி₂த்து உபாஸிக்கிருர்கள் என்பது முதலானவற்றை ஆராய்ந்தால், எம்பெருமான் - கைவல்யம் போன்ற அபாயங்களில் சிக்கவைக்கக்கூடிய ஸ்வப்ரவ்ருத்தி ரூபமான ஸாத₄நங்களைக் காட்டிலும், ஸ்வார்த்த₂மான ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்திக்கு உறுப்பான ஜ்ஞாநத்திற்கும், பரார்த்த₂ப்ரதிபத்திக்குமே முக்கியத்துவம் அளித்திருக்கிருன் என்றும், ஸாத₄நங்களை விதி₄த்திருப்பதும் அந்த ப்ரதிபத்தியை விளைப்பதற்கே என்றும் விளங்கும்.

46. இவ்வண்ணமாக, கீ₃தையிலும், அதன் பா₄ஷ்யத்திலும், பலவிடங்களில்—கைவல்யம் ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄ம் நீங்கப்பெற்ற நித்ய முக்தியே என்றும், இக்கைவல்யநிஷ்ட₂னுக்கு அர்ச்சிராதி₃க₃தியும் ப₄க₃வத₃நுப₄வமும் கிடையாது என்றும் தெளிவாகக் காட்டியிருக்கையால், கீ₃தாசார்யனும், பா₄ஷ்யகாரரும் தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யாதாக்களின் பக்ஷத்திற்கே ஆதரவளித்துள்ளார்கள் என்று தெளிவாக விளங்குகிறது. இனி, த்₃ராவிட₂வேத₃ம் என்று புகழ்பெற்ற தி₃வ்ய ப்ரப₃ந்த₄ங்களிலும், அதன் வ்யாக்₂யானங்களிலும் கைவல்யம் ப்₃ரஹ்மாநுப₄வலேஶமுமற்ற தாழ்ந்த மோக்ஷமே என்றும், கைவல்ய நிஷ்ட₂ன் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னிலும் வேறுபட்டவன் என்றும் காட்டப்பட்டிருப்பதை விளக்குவோம்.

## 3. த்3ராவிட3வேத3 தத்3வ்யாக்2யாந ஸ்வாரஸ்யம்

47. முதலாயிரத்தில் முதலானதாய், வேத3த்திற்கு ஓங்காரம் போலே திவ்யப்ரப3ந்த4த்திற்குத் தொடக்கத்திலுள்ள திருப் பல்லாண்டில் — ஐஶ்வர்யார்த்தி2, கைவல்யார்த்தி2, ப4க3வத3நு ப4வத்தை விரும்புமவன் ஆகிய மூவகை அதி4காரிகளையும் அழைத்து மங்க3ளாஶாஸனம் செய்யத் தம்மோடு கூட்டிக்கொள்கிறார் பெரியாழ்வார். அதில் கைவல்யார்த்தி2யை அழைக்கும் "ஏடு நிலத்தில்" என்னும் நாலாம் பாசுரத்தில், "ஏடுநிலத்தில் இடுவதன் முன்னம்" என்று "ஸூக்ஷ்மஶரீரம் ப்ரக்ருதியில் லயிப்பதற்கு முன்னம் வந்து சேருங்கள்" என்கையாலே, இவனுக்கு விரஜா தரணத்தின்போது நிகழும் ஸூக்ஷ்மஶரீரநாஶம் ஏற்பட்டு விடுகிறது என்றும், இது ஒருவகை முக்தியே என்றும் விளங்குகிறது. "எங்கள் குழாம் புகுந்து கூடும் மனமுடையீர்கள் வரம்பொழி வந்து" என்கை யால், 'தம் ஆத்மாவே இனிது' என்னும் நினைவை மாற்றி, 'எம்பெருமானே இனியவன்' என்னும் நினைவைக் கொள்வதே இவன் செய்யவேண்டியது என்று கூறுகையாலே, 'ப்ரதிபத்திக்கு முக்2யத்வமேயொழிய ஸாத4நாநுஷ்டா2நத்திற்கு முக்2யத்வமில்லை, எல்லாக் கர்மங்களும் கழிந்த பின்பும் இந்நினைவினாலேயே இவனுக்குத் தாழ்ந்த மோக்ஷம் ஏற்படுகிறது' என்னும் ஸித்3தா4ந்தத்தைக் காட்டினார் பெரியாழ்வார். "போதுவீர் போதுமினோ" [திருப்பாவை 1] "யாதானும் பற்றி நீங்கும் விரதத்தை நல்வீடு செய்யும் மாதாவினைப் பிதுவை" [திருவிருத்தம் 95] முதலான பாசுரங்களில் — பேற்றுக்குப் பரார்த்த2ப்ரதிபத்தியே வேண்டுவது என்றும், அதை விளைப்பதற்கே, இயற்கையுறவினனான எம்பெருமான் ஸ்ருஷ்ட்யவதாரங்கள் மூலமாக வும், ஶாஸ்த்ரங்களை அளித்தும், இவன் விரும்பும் ஸ்வார்த்த2ப2லன் களுக்கு அந்த ஶாஸ்த்ரங்களில் ஸாத4நங்களை விதி4த்தும், ஞானிகளை அவதரிப்பித்தும், மற்றும் பலவகைகளாலும் முயல்கின்றான் என்றும் மற்றையாழ்வார்களும் காட்டினார்கள். இவ்வாழ்வார்களை அடி யொற்றியே "ப்ரதிபத்திவைஶேஷ்யாத்" என்று கீ3தாபா4ஷ்யத்தில் இரண்டு இடங்களில் அருளினார் ஸ்ரீபா4ஷ்யகாரர். "ஒல்லை கூடுமினோ" என்று விரைந்து வந்து சேரச்சொல்லுகையாலே, இவனுக்குக் கைவல்யமோக்ஷம் கிடைத்துவிட்டால், பிறகு எக் காலத்திலும் ப4க3வத3நுப4வரூபமான மோக்ஷம் இல்லாமற்போய்விடும் என்னும் இவனுடைய துர்க்க3தி உணர்த்தப்படுகிறது. கைவல் யார்த்தி2க்கு கீ3தாபா4ஷ்யத்தில் அபுநராவ்ருத்தியைக் கூறுவதன்

மூலம் பா₄ஷ்யகாரரும் இதை அடியொற்றினர். ஐஸ்வர்யார்த்தி₂க்கு முன்னால் இவனை அழைத்தது இந்த து₃ர்க்க₃தியைக்கண்டே என்று பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்₂யானமிட்டிருப்பது காணத்தக்கது. ''நமோ நாராயணாய என்று பாடும் மனமுடைப் பத்தருள்ளீர்'' என்று ஓங்காரமாத்ரத்தை அநுஸந்தி₄த்து ஜந்மஸம்ஸாரக்கட்டு நீங்கித் தம் ஆத்மாவின் அநுப₄வத்தை மாத்திரம் பெற்றுப்போகாமல், மந்த்ரஶேஷத்தையும் சேர்த்து அநுஸந்தி₄த்து, ப₄க₃வத் கைங்கர்யத்தில் பே₄ாக்₃யதாபு₃த்₃தி₄ வைத்து மங்க₃ளாஶாஸநம் செய்யச்சொல்லுகையாலே, நாராயணோபனிஷத்தில் அத₂ர்வஶிரஸ்ஸில் ''ஓமிதி, யமுக்த்வா முச்யதே யோகீ₃ ஜந்மஸம்ஸாரப₃ந்த₄நாத் | ஓம் நமோ நாராயணாயேதி மந்த்ரோபாஸகோ வைகுண்ட₂பு₄வந (லோக)ம் க₃மிஷ்யதி'' என்று ஓங்காரத்தை மாத்திரம் அநுஸந்தி₄ப்பவனுக்குக் கைவல்ய மோக்ஷமே என்றும், ''நமோ நாராயணாய'' என்பதையும் சேர்த்து அநுஸந்தி₄ப்பவனுக்கே வைகுண்ட₂ப்ராப்தி என்றும் கூறியதை விளக்குகிறார்.

48. திருப்பல்லாண்டில் கைவல்யார்த்தி₂கள் சேரும் ''தீயிற் பொலிகின்ற'' என்னும் பாசுரத்தில் தாங்கள் சக்ராங்கனம் பெற்று வந்ததாகக் கூறுவது பஞ்சஸம்ஸ்காரத்திற்கும் உபலக்ஷணமாகையாலே, ஆழ்வார் அழைத்தபோது நியமித்தபடி ''நமோ நாராயணாய'' என்னும் மந்த்ரஶேஷத்தையும் சேர்த்துத் திருமந்திரத்தை அர்த்த₂த்தோடு அநுஸந்தி₄த்து, 'ஆத்மாவையே அநுப₄விப்பது' என்னும் வரம்பை ஒழித்து எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாட வந்தார்கள் இவர்கள் என்று தோற்றுகிறது. இவற்றிலிருந்து, கைவல்யம் தாழ்ந்ததொரு முக்தியே என்றும், ப₄க₃வத₃நுப₄வமற்ற கைவல்யநிஷ்ட₂ன் அதையுடையவனாக ஶ்ருதி ஸூத்ரபா₄ஷ்யங்களில் அறிவிக்கப்பட்ட பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னாயிருக்கமுடியாது என்றும் விளங்குகிறது.

49. முதலாயிரத்திலுள்ளதாய், வேதமனைத்துக்கும் வித்தாய், உபநிஷத்ஸாரமான திருப்பாவையில் ''ஒருத்தி மகனாய்'' [25] என்னும் பாசுரத்தில் ''வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்து'' என்னும் ப₂லஶ்ருதியில், ''வருத்தம்'' என்று அசித்ஸம்ப₃ந்த₄த்தினாலேற்பட்ட துன்பங்கலந்த அசித₃நுப₄வமான ஐஸ்வர்யாநுப₄வத்தையும், ''தீர்ந்து'' என்று அவ்வசித்ஸம்ஸர்க்க₃ம் அடியோடு கழிகையால் துன்பங்கழியப்பெற்ற கைவல்யாநுப₄வத்தையும் உணர்த்தி, ''மகிழ்ந்து'' என்று தான் பெறவிருக்கும் ப₄க₃வத₃நுப₄வமே எல்லையற்ற ஆனந்த₃த்தையுடையது என்று உணர்த்தினாள்

ஆண்டாள். இதனால், கைவல்யத்தில் அசித்ஸம்ப3ந்த4ம் கழிகையால் தன்னடையே உண்டாகும் ஆத்மமாத்ராநுப4வமாகிற சிற்றின்பமே உண்டென்றும், ப4க3வத3நுப4வமாகிற பெருமகிழ்ச்சி கிடையாதென்றும் உணர்த்தப்பட்டதாகிறது. இதிலிருந்தும் கைவல்யம் வருத்தத்திற்குக் காரணமான அசித்ஸம்ஸர்க்க3ம் அடியோடு கழியப்பெற்ற மோக்ஷமேயென்றும், ப4க3வத3நுப4வமற்ற கைவல்யநிஷ்ட2ன் ஶ்ருதிஸூத்ரபா4ஷ்யங்களில் ப4க3வத3நுப4வமுடையவனாக முழங்கப்படும் பஞ்சாக்3நிவித்3யாநிஷ்ட2னாகமுடியாது என்றும் விளங்கும். ஸூசநமாத்ரமாய், வ்யாக்2யானத்தைக்கொண்டே தெளிய அறிய வேண்டிய இத்தகைய இடங்கள் மற்றும் சிலவும் உண்டு. அவற்றை விட்டு, கைவல்யத்தைப் பற்றியது என்று பாசுரத்திலேயே தெளிவாக விளங்கும் இடங்களைக் காண்போம் இனி.

50. இரண்டாம் ஆயிரத்தில் சரமப்ரப3ந்த4மான திருநெடுந்தாண்டகத்தில், ''முன்னுருவில் பிணிமூப்பில்லாப் பிறப்பிலியாய்'' என்று அசித்ஸம்ஸர்க்க3த்தாலே வரும் பிணி, மூப்பு, பிறப்பு முதலான ஷட்3பா4வவிகாரங்களும், ஷடூ3ர்மிகளுமற்ற முக்தஸ்வரூபத்தை எடுத்து. ''இறப்பதற்கே எண்ணாது'' என்று 'அத்தகைய தன் முக்தஸ்வரூபத்தையே அநுப4விப்பதாகிற கைவல்ய மோக்ஷம், என்றுமே ப4க3வத3நுப4வமேயற்றிருக்கிறதாகையால் ஆத்மவிநாஶத்தை ஒத்தது' என்று அருளிச்செய்தார் திருமங்கையாழ்வார். இதிலிருந்தும், கைவல்யம் ப4க3வத3நுப4வமற்ற நித்யமுக்தியே என்றும், ப4க3வத3நுப4வமுடையவனாக ஶ்ருதிஸூத்ரபா4ஷ்யங்களில் நிலைநாட்டப்பட்ட பஞ்சாக்3நிவித்3யாநிஷ்ட2ன் கைவல்யநிஷ்ட2னாக முடியாது என்றும் விளங்குகிறது.

51. மூன்றும் ஆயிரமான இயற்பாவில் முதல் ப்ரப3ந்த4மான முதல் திருவந்தாதியில், ''எழுவார் விடைகொள்வார் ஈன்துழாயானை வழுவாவகைநினைந்து வைகல் தொழுவார்'' [முதல் திருவ·26] என்னும் பாசுரத்தில் ''எழுவார்'' என்று மேன்மேலே ஐஶ்வர்யங்களில் ஆசையை வளர்த்துக்கொண்டு போகிறவர்களையும், ''ஈன்துழாயானை வழுவாவகைநினைந்து வைகல்தொழுவார்'' என்று நிரந்தரமாக ப4க3வானை அனுப4விக்கவிரும்பி, காலமெல்லாம் அவனைத் தொழுகின்றவர்களான உபாஸகஜ்ஞானிகளையும் எடுக்கிறார் என்று தெளிவாக விளங்குகையாலே, இடையிலேயுள்ள ''விடைகொள்வார்'' என்னும் சொல்லாலே—ஐஶ்வர்யாநுப4வத்திற்கும், ப4க3வத3நுப4வத்திற்கும் இடையிலேயுள்ள கைவல்யாநுப4வத்தைப் பெறுபவர்களை ஆழ்வார் குறிப்பிடுகிறார் என்று தெளிவாகிறது. இவர்களுக்கு

" விடைகொள்வார் " என்று பெயரிடுகையாலே, " எங்களுக்கு ஆத்மாநுபவமே போதும் ; உன் அநுபவம் வேண்டா " என்று நிரந்தரமாக எம்பெருமானிடமிருந்து இவர்கள் விடைகொண்டு விடுகிறார்கள் என விளங்குகிறது. இதிலிருந்தும், கைவல்யம் பகவதநுபவமற்ற நித்ய முக்தியே என்றும், பகவதநுபவ முடையவனாக ஸ்ருதிஸூத்ரபாஷ்யங்களில் நிலைநாட்டப்பெற்ற பஞ்சாக்நிவித்யாநிஷ்டன் கைவல்யநிஷ்டனாக முடியாது என்றும் தெளிவாக விளங்குகிறது.

52. மூன்றும் ஆயிரமான இயற்பாவில் சேர்ந்ததாய், யஜுர் வேதஸாரமான திருவாசிரியத்தில் " உலகு படைத்து " என்று தொடங்கும் இரண்டாம் பாசுரத்தில் " நல் வீடு " என்று பரம புருஷார்த்தலக்ஷணமோக்ஷத்தை விசேஷிக்கையாலே, பகவதநு பவமாகிற நன்மையற்றதாய், ப்ரக்ருதியிலிருந்து விடுபட்டிருக்கை யாலே 'வீடு' (மோக்ஷம்) எனத்தக்கதான கைவல்யமாகிற தாழ்ந்த மோக்ஷமும் உண்டென்று உணர்த்துகிறார் நம்மாழ்வார். இதி லிருந்தும் முற்கூறிய இரண்டு விஷயங்களும் தேறுகிறது.

53. இனி, நாலாவது ஆயிரமாய், ஸாமவேதஸாரமான திருவாய்மொழியில் கைவல்யத்தைப் பற்றிய இடங்களைக் காண்போம். முதல்பத்தில் இரண்டாம் திருமொழியான வீடுமின்முற்றத்தில், ஐந்தாம் பாசுரத்தில் " அற்றது பற்றெனில் உற்றது வீடுயிர் " என்று, ப்ராக்ருத விஷயங்களில் பற்று அறுந்துவிட்டால், ப்ரக்ருதி யினின்று நீங்கிய தன் ஆத்மாநுபவமாகிற 'வீடு' (மோக்ஷம்) உண்டாகிவிடும் என்று கூறுகையாலே, கைவல்யம் ப்ரக்ருதி ஸம்பந்தமற்ற மோக்ஷமே என உணர்த்துகிறார் ஆழ்வார். "அது செற்று மன்னுறில் அற்றிறை பற்றே" என்னும் பிற்பாதியில் "அந்த மோக்ஷமாகிற அபாயத்தில் அகப்படாமல், பகவச்சேஷத்வமே வடிவான உம் ஸ்வரூபத்தைப்பெற்று நிலைநிற்கவேண்டியிருந்தால், விஷயங்களில் பற்றை விடும்போதே எம்பெருமானைப் பற்றிவிடுங்கள்" என்கிறார். 'அது செற்று' என்னும் பதங்களாலே, பகவதநு பவம் என்றுமேயில்லாமல் செய்துவிடும் அபாயமான அக்கைவல் யத்தை முகம் சிதறப் புடைத்துத் தள்ளவேணும் என்கிறார் ஆழ்வார். இவற்றிலிருந்தும் முற்கூறிய இரு விஷயங்களும் தேறுகிறது. இங்கு — " மன்னுறில் " [ நிலைநிற்கவேண்டியிருக்கில் ] என்று ஆழ்வார் அருளுகையாலே, பகவதநுபவமே நிலைநின்ற (நித்யமான) புருஷார்த்தம் என்றும், கைவல்யம் நிலைநில்லாததே (அநித்யமே) என்றும் விளங்குகிறதே — என்று சிலர் செய்யும் வாதம், "குறுகா

நீளா'' [6.9-10] முதலானவிடங்களில் திருவாய்மொழியிலேயே பலவிடங்களில் ஆழ்வார் கைவல்யத்தை நித்யமாகக் கூறுகையாலே தள்ளப்படுகிறது. ''அதில் அகப்படாதே ப₄க₃வச்சே₂ஷதைகரஸமான உன்னுடைய ஸ்வரூபத்தைப்பெற்று நிலைநிற்கவேண்டியிருக்கில்'' என்று ஆருயிரப்படியில் பிள்ளானும் ''மன்னுறில்'' என்னும் பத₃ம் ஶேஷத்வஸ்வரூபத்தைப்பெற்று நிலைநிற்பதையே குறிக்கிறது என்று காட்டினர். ''(மன்னுறில்) மன்னவுறில்; தன்னைப்பற்றினால் 'இன்னமும் அதற்கு அவ்வருகே ஒரு அநுப₄வமுண்டு' என்று இருக்கவேண்டாதபடியான நிலைநின்ற புருஷார்த்த₂த்தைப் பற்றப் பார்க்கில்'' என்று நம்பிள்ளை அருளியபடியே, 'தனக்கு மேல் ஓரனுப₄வமுண்டு' என்று சொல்லத்தக்கதாகையாலே, நித்யமான போதிலும் கைவல்யம் நிலைநில்லாதது என்றும் கொள்ளலாம். ஆகையால், முன்னும் பின்னும் நாம் காட்டும் நூற்றுக்கணக்கான ப்ரமாணங்களுக்கு முரணுகை. இப்பாசுரங்கொண்டு 'கைவல்யம் அநித்யம்' என்று ஸாதி₄க்க எண்ணுவது பகற்கனவாகவே முடியும்.

54. ஆழ்வார் தம் தாழ்வைப்பார்த்து எம்பெருமானைவிட்டு நீங்கநினைக்கும் ''வளவேழுலகு'' என்னும் திருவாய்மொழியில் ''அடியேன் சிறிய ஞானத்தன்'[திருவாய் 1-5-3] என்னும் பாசுரத்தில், ''செடியார் ஆக்கை அடியாரைச் சேர்தல் தீர்க்கும் திருமாலை''என்னும் அடியில் கைவல்யநிஷ்டூரைச் சொல்லும்போது, அவர்களுக்கு ஶரீரஸம்ப₃ந்த₄ம் அடியோடு கழிந்துவிடுகிறது என்றும், ''தம்மைப் போலே எம்பெருமானைக் கிட்டி அவனுக்கு தே₃ாஷத்தை விளைக்காமல், அவனைவிட்டு என்றும் விலகிப்போகும் கேவலரே உண்மையான அடியார்கள்'' என்றும் உணர்த்துகையாலே, முற்கூறிய இரு விஷயங்களும் இப்பாசுரத்திலிருந்தும் தேறுகிறது. '''இவனைக்காண வேணும்' என்று ஆசைப்படாதே இவன்பக்கலிலே கைவல்யாதி₃ ப்ரயோஜனங்களைக்கொண்டு அகன்றுபோவார்கள் என்ன பூ₄ாக்₃யம் பண்ணினரோ? நானும் அங்ஙனே ஆகப்பெற்றிலேன் என்று நோகிறார்'' என்று பிள்ளான் ஆருயிரப்படியில் அருளியது அநுஸந்தி₄க்கத்தக்கது.

55. ''பிறவித்துயரற'' [1-7-1] என்னும் பாசுரத்தில் கேவலரைப் பேசுகிறார் ஆழ்வார் என்பது எல்லா வ்யாக்₂யானங்களிலிருந்தும் விளங்குகிறது. இங்கு'பிறவி' என்றது ஐந்து விகாரங்களுக்கும், ஷடூ₃ர்மிகளுக்கும் உபலக்ஷணமாகையாலே,''ஜராமரணமோக்ஷாய'' [கீ₃தை 7-29] முதலானவிடங்களிற்போலே இப்பத₃த்திலிருந்தும், இவனுக்கு ப்ராக்ருதஶரீரம் அடியோடு கழிந்துவிடுகிறது என விளங்குகிறது.

''துறவிச்சுடர்விளக்கம் தலைப்பெய்வார்'' என்கையாலே, முற்கூறிய ஶரீரநாஶத்தாலே, இவன் முக்தியடைந்து ஜ்ஞாநவிகாஸம் (அறிவு விளக்கம்) பெற்றுவிடுகிறான் என்று காட்டுகிறார். ''அறவனை'' என்கையாலே, ''எங்களுக்கு நீ வேண்டா, எங்களுடைய ஆத்மாநுப₄வமே போதும்'' என்கிறவர்களுக்கும் அதைக்கொடுக்கும் ஔதா₃ர்யத்தை ஆழ்வார் கொண்டாடுகிறார். ''ஆழிப்படை அந்தணனை'' என்கையாலே, ஆத்மாநுப₄வவிரோதி₄யைப் போக்குவதற்குக் கையும் திருவாழியுமாயிருப்பவன் என்றும், தங்களுக்குள்ள அஶுத்₃தி₄யாகிற அசித்ஸம்ப₃ந்த₄த்தைக் கழிக்கவல்ல ஶுத்₃த₄ன் என்றும் இவர்கள் அநுஸந்தி₄ப்பதைக் காட்டுகிறார் ஆழ்வார். ''அந்தணன் என்று சாணிச்சாற்றோபாதி ஶுத்₃த₄ன் என்று கொண்டாடினார்களித்தனை; போ₄க்₃யதையிலே நெஞ்சு சென்றதில்லை;...கையும் திருவாழியுமான அழகைக்கண்டால் அதில் கால் தாழாதே, தங்கள் ப்ரயோஜனத்துக்கு உறுப்பான ஶுத்₃தி₄மாத்ரத்தையே பற்றுவதே!'' என்னும் ஈட்டு ஸ்ரீஸூக்திகள் இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கவை. ''மறவியையின்றி மனத்து வைப்பரே'' என்கையாலே, ''எங்களை நெஞ்சழிக்கும் பரம போ₄க்₃யமான திருமேனியைக் கண்டுவைத்தும், தாங்கள் விரும்பும் க்ஷுத்₃ரபுருஷார்த்த₂மான கைவல்யாநுப₄வத்தை மறக்காமல் நினைவிற்கொண்டு, அதற்கு ஸாத₄நமாக அவனை நினைப்பதே!'' என்று ஆழ்வார் ஆஶ்சர்யப்படுகிறார். இவற்றிலிருந்தும் முற்கூறிய இரு விஷயங்களும் மிகத் தெளிவாக விளங்குகிறது.

56. ''பிறவித்துயரற'' [1-7-1] ஈட்டு வ்யாக்₂யானத்திலேயே, ''ஐஶ்வர்யார்த்தி₂க்கும், ஆத்மப்ராப்திகாமனுக்கும், ப₄க₃வத்ப்ராப்தி காமனுக்கும் ஒக்குமாயிற்று ஸர்வேஶ்வரனை உபாஸிக்கையும், அந்திமஸ்ம்ருதியும்; இனிப் பேற்றில் தாரதம்யம் வரும்படியென்? என்னில்; உபாஸநஸமயத்தில் சிறுகக்கோலுகையாலே. அதாவது- அவனளவும் செல்லாதே நடுவில் வரம்பிட்டுக்கொள்ளுகை. அத்தையிறே ''வரம்பொழிவந்து'' [திருப்பல் 4] என்கிறது. அதுதனக்கு அடி அவர்கள் ஸுக்ருததாரதம்யம்'' என்று அருளிச்செய்திருப்பதிலிருந்து, கைவல்யநிஷ்ட₂னுக்கும், ப₄க₃வத₃நுப₄வகாமனுக்கும் எல்லாக்கர்மங்களும் கழிந்தபோதிலும் பேற்றில் வாசி ஏற்படுவது, ஸுக்ருததாரதம்யமடியாகச் சிறுகவும் பெருகவும் கோலும் அவர்களுடைய ப்ரதிபத்தி வேறுபாட்டாலேயே என விளங்குகிறது. இதையே கீ₃தாபா₄ஷ்யத்தில் இரண்டு இடங்களில் ப்ரதிபத்தி வைஶேஷ்யஶப்₃த₃த்தாலே காட்டினார் பா₄ஷ்யகாரர் என்பதும் குறிக்கொள்ளத்தக்கது.

57. ''அமரர் தொழப்படுவானை'' [திருவாய் 3-5-9] என்னும் பாசுரத்தில் ''அமரமனத்தினுள் யோகு புணர்ந்து அவன் தன்னொடொன்றாக அமரத்துணியவல்லார்கள்'' என்று, அந்திமஸ்ம்ருதி ஸமயத்தில் ஶுத்₃தி₄விஷயத்தில் எம்பெருமானை ஒத்திருப்பது தம் ஆத்மஸ்வரூபம் என்று கேவலர் உபாஸிப்பதாகக் கூறி அவர்களை நிந்தி₃க்கையால், இக்கைவல்யாநுப₄வம ஶுத்₃த₄ாத்மஸ்வரூபத்தை அநுப₄விக்கும் முக்தியே என்றும், இவனுக்கு ப்₃ரஹ்மாநுப₄வமில்லை என்றும் விளங்குகிறது. ஆகையால், முற்கூறிய இரு விஷயங்களும் இதிலிருந்தும் தேறுகிறது.

58. நாலாம் பத்தில், ஐஶ்வர்ய கைவல்ய வைராக்₃யத்தைப் பிறர்க்கு உபதே₃ஶிக்கும் ''ஒரு நாயகம்'' என்று தொடங்கும் முதல் திருவாய்மொழியில், முதல் ஒன்பது பாசுரங்களாலே ப்ராக்ருதமான இவ்வுலகச் செல்வங்களும், ஸ்வர்க்க₃ம் முதலான மறுமைச் செல்வங்களும் அற்பமாகவும், அஸ்தி₂ரமாகவும் (நிலையற்றதாகவும்) இருக்கையாலே கைவிடத்தக்கவை என்று உபதே₃ஶித்து, ''அப்படியானால், ஐஶ்வர்யத்தைப்போலே அற்பமாயும், அஸ்தி₂ரமாயும் இராமல், அளவில்லாத இன்பமாய், நிலையானதான கைவல்யத்தைப் பயனாகப் பற்றலாமோ ?'' என்னும் கேள்வி எழுந்தவளவில், ''குறுகமிக'' என்று தொடங்கும் பத்தாம் பாசுரத்தாலே அதற்கு பதில் கூறுகிறார் நம்மாழ்வார். இப்பாசுரத்திற்கு ஆறாயிரப்படியில் அருளியபடி பொருள் பின்வருமாறு:— ''குறுக மிக உணர்வத்தொடு நோக்கி, இறுகல் இறப்பென்னும் ஞானிக்கும்'' என்னும் பகுதியாலே, ''கைவல்யநிஷ்டனை ஜ்ஞாநயோக₃த்தை ஸாத₄னமாகக்கொண்டு நெஞ்சை ஆத்மாவில் ஈடுபடுத்தி, அதை நேரே கண்டு, ப₄க₃வத₃நுப₄வத்தைக் காட்டிலும் இறுகியதான (சுருங்கியதான) அந்த மோக்ஷத்தையே புருஷார்த்த₂மாகக் கொள்கிறான்'' என்று காட்டுகையாலே, கைவல்யம் ப₄க₃வத₃நுப₄வத்தைக் காட்டிலும் தாழ்ந்ததாயினும், அதுவும் ஒருவகை மோக்ஷமே என்று ஆழ்வார் திருவுள்ளம் பற்றுகிறார் என்று தெளிவாக விளங்குகிறது. ''எல்லாம் விட்ட ஞானி'' என்னும் பகுதியாலே, 'இக்கைவல்யநிஷ்ட₂ன் தன் பயனைப் பெறுவதற்குத் தடையான அசித்தில் பற்றை அடியோடு விடவேண்டும்' என்று காட்டுவதும், இவன் பெறும் பயனில் அசித₃நுப₄வம் அடியோடு கிடையாது என வலியுறுத்துகிறது. ''அப்பயனில்லையேல் சிறுக நினைவதோர் பாசமுண்டாம்'' என்று, ''எம்பெருமானை ஆஶ்ரயிக்காவிடில் ஆத்மாநுப₄வத்திற்குத் தடையான கர்மம் நீங்காதாகையாலே, மறுபடியும் விஷயங்களில் ஈடுபாடு உண்டாகிவிடுமாகையாலே அந்தக் கைவல்யமோக்ஷமும் ஸித்₃தி₄யாது'' என்று காட்டுகையாலே, தமக்குப் பயனாயிருக்கும் ப₄க₃வதா₃ஶ்ரயணத்தைக் கைவல்யநிஷ்ட₂ன் ஸாத₄னமாகவே கொள்கிறான்

என்றும், விஷயாநுபவத்திற்கு எதிர்த்தட்டாயிருப்பது கைவல்யாநுபவம் என்றும் காட்டுகிறார். "மறுகலில் ஈசனைப் பற்றிவிடாவிடில் பின்னும் வீடில்லை" என்னும் பகுதியாலே, "எம்பெருமானை உபாயமாக ஆச்ரயித்து ஆத்மாவைக் கண்டாலும், அந்திம ஸமயத்திலாவது எம்பெருமானை ப்ராப்யமாக அநுஸந்தித்து, முக்யமோக்ஷமான பகவத் கைங்கர்யத்திற்குத் தடையான தன் ப்ரதிபத்தியைப் போக்கிக்கொள்ளாவிடில், அந்த முக்யமோக்ஷம் ஸித்திக்காது" என்கையாலே, 'தன் ஸ்வார்த்த ப்ரதிபத்தியை மாற்றிக்கொள்வதே முக்யமோக்ஷத்தைப்பெற இவன் செய்யவேண்டியது' என்று காட்டினார். "வீடு அஃதே" என்னும் பகுதியாலே, பரமமோக்ஷமான அந்த பகவத் கைங்கர்யமே முக்யமோக்ஷம் என்று காட்டினார். ஆறாயிரப்படியில் பிள்ளான் "அஸ்திரத்வாதி தோஷாஸம்பின்னமான கைவல்யத்தை" என்று இப்பாசுர வ்யாக்யானத்தைத் தொடங்குவதன் மூலம், கைவல்யம் நித்யமானதே என்று தெளிவாகக் காட்டினார். "எம்பெருமானை ஆச்ரயித்தாலல்லது ஆத்மாவலோகந விரோதி கர்மம் போகாது" என்கையால், 'எம்பெருமானை ஆச்ரயித்து ஸகல கர்மங்களும் போனபின்பே கைவல்யமோக்ஷம் ஸித்திக்கிறது' என்று காட்டினார். "பகவத் ஸமாச்ரயணத்தாலே ஆத்மாவலோகனம் பிறப்பது; பிறந்தாலும், அந்திமதசையிலே பகவதநுஸந்தானம் பண்ணி ப்ரதிபந்தகத்தைப் போக்காதொழியில், பின்னை ஆத்மயாதாத்ம்யாவிர்ப்பாவலக்ஷண மோக்ஷம் ஸித்தியாது; முக்யமான மோக்ஷமாகிறதும் அந்த பகவத்கைங்கர்யமே" என்று, 'பகவதநுஸந்தானம் பண்ணி ப்ரதிபந்தகத்தைப் போக்கவேணும்' என்கையாலே, 'கைவல்யநிஷ்டனுடைய ப்ரதிபத்தியே ஸர்வகர்மங்கள் கழிந்த பின்பும் அவனுக்கு முக்யமோக்ஷத்திற்குத் தடையாயுள்ளது, அந்திம ஸ்ம்ருதியிலாவது அவன் ப்ரதிபத்தியை மாற்றிக்கொள்ளாவிடில் அவனுக்கு என்றும் பரமமோக்ஷம் கிடைக்காது' எனத் தெளிவாகக் காட்டினார். "ஆத்மாவலோகந விரோதிகர்மம்" என்று கர்மசப்தத்தையும் "பகவதநுஸந்தானம் பண்ணி ப்ரதிபந்தகத்தைப் போக்காவிடில்" என்று 'பகவதநுஸந்தானம்' 'ப்ரதிபந்தகம்' என்னும் பதங்களையும் இட்டிருப்பது ஆழ்ந்து நோக்கத்தக்கது. "ஆத்மயாதாத்ம்யாவிர்ப்பாவலக்ஷணமோக்ஷம்" என்று பகவத்கைங்கர்யத்தைக் குறிக்கையாலே, கீதாபாஷ்யத்தில் 'அக்ஷரயாதாத்ம்ய'த்தை அடைபவனாகச் சொல்லப்பட்டவனான கைவல்யார்த்தியைக் காட்டிலும், 'ஆத்மயாதாத்ம்யவித்' என்று சொல்லப்பட்ட பஞ்சாக்நிவித்யாநிஷ்டன் வேறுபட்டவன் என்று தெளிவாக உணர்த்தினார். ஆக, இவ்வண்ணமாக எம்பெருமானாரின் நியமனத்தினால், அவரால் ஜ்ஞானபுத்ரராக அபிமானிக்கப்பெற்ற பிள்ளானால் இயற்றப்பெற்ற ஆறாயிரப்படியிலிருந்தே கைவல்யம் நித்யமுக்தியே என்றும், கைவல்யநிஷ்டன் பஞ்சாக்நிவித்யாநிஷ்டனைக்காட்டிலும் வேறுபட்டவன் என்றும் விளங்குகிறது.

59. இப்பாசுரத்தின் மற்ற வ்யாக்₂யானங்களில் விவரிக்கப்பட்ட பொருள் வேறுபாடுகள் பின்வருமாறு:- ''எல்லாம் விட்ட ஞானி'' என்றதுக்கு ''ப்ராக்ருதவிஷயங்கள் எல்லாவற்றையும் விட்ட ஜ்ஞாநயோக₃நிஷ்ட₂ன்'' என்று பிள்ளானைப்போல் பொருள்கொள்ளாமல், ''ஐஶ்வர்யம்,ப₄க₃வத₃நுப₄வம் என்னும் மற்ற இரண்டு புருஷார்த்த₂ங்களையும் விட்ட ஜ்ஞாநயோக₃நிஷ்ட₂ன்'' என்று மற்ற வ்யாக்₂யாதாக்கள் பொருள்கொண்டார்கள். இதிலிருந்தும் 'கைவல்யநிஷ்ட₂னுக்கு ப்ராக்ருதஸு₂க₂ங்கள் நீங்கப்பெற்ற ஒருவகையான மோக்ஷம் ஏற்பட்டுவிடுகிறது' என்றும், 'அந்த மோக்ஷத்தில் ப₄க₃வத₃நுப₄வம் அடியோடு கிடையாது' என்றும் விளங்குகிறது. ''மறுகலில் ஈசனைப் பற்றி விடாவிடில், பின்னும் வீடில்லை'' என்னும் பகுதிக்கு ''அந்திம காலத்தில், தாழ்வுகள் ஒன்றும் இல்லாதவனாகவும், ஜ்ஞாநத்தையே வடிவாகக்கொண்டவனாகவும் எம்பெருமானை அநுஸந்தி₄த்து, இவ்விஷயங்களில் அவனை ஒத்தவனாகத் தன் ஆத்மாவையும் அநுஸந்தி₄த்து இந்த ஶரீரத்தை விடவில்லையானால், அந்தக் கைவல்ய மோக்ஷமும் ஸித்₃தி₄க்காது'' என்று பொருள்கொண்டார்கள். இதிலிருந்தும்—அந்திமஸ்ம்ருதியில் எம்பெருமானைப்போலே தன் ஆத்மாவும் ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄த்தால் வரும் தாழ்வுகள் அற்றது என்றும், ஜ்ஞாநத்தையே வடிவாகக்கொண்டது என்றும் அநுஸந்தி₄ப்பதன் மூலம், ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄ம் அற்றதாய், ஜ்ஞாநத்தையே வடிவாகக் கொண்டதான, தன் ஆத்மாவை அநுப₄விப்பதாகிற மோக்ஷத்தையே கைவல்யநிஷ்ட₂ன் பெற்றுவிடுகிறான் என்று விளங்குகிறது. ஆகையால், ஸூக்ஷ்மஶரீரம் நீங்கமுடியாத இந்த ப்ரக்ருதிமண்ட₃லத்திலேயே கைவல்யாநுப₄வம் ஏற்படுகிறது என்று ஆழ்வாரும், அவருடைய திருவுள்ளக் கருத்தறிந்த ஆசார்யர்களில் எவரும் திருவுள்ளம் பற்றவில்லை என்றும் விளங்குகிறது.

60. நாலாம்பத்தில் ஒன்பதாம் திருவாய்மொழியில் பத்தாம் பாட்டில் ''கண்டு கேட்டு உற்று மோந்து உண்டு உழலும் ஐங்கருவி கண்ட இன்பம்'' என்று இவ்வுலகத்திலுள்ள ப்ராக்ருதமான விஷயங்களை அநுப₄விப்பதாலுண்டாகும் ஐஶ்வர்ய ஸு₂க₂ங்களை எடுத்து, ''தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம்'' என்று முற்கூறிய விஷயஸு₂க₂ங்களிலேயே உழலும் ஸம்ஸாரிகளுக்கு அறிய இயலாததாய், அந்த ப்ராக்ருதமான இன்பங்களைக் காட்டிலும் பெருத்திருக்கையாலே அளவில்லாததாய், ப₄க₃வத₃நுப₄வ ஸு₂க₂த்தைக் காட்டிலும் மிகச் சிறிதாகையாலே சிற்றின்பம் எனத்தக்கதான

கைவல்யாநுபவத்தை எடுத்து, இவ்விரு அநுபவங்களையும் ஸ்ரிய: பதியை அநுபவிக்கப்பெற்ற தான் கைவிட்டதாகக் கூறுகிறார் ஆழ்வார். எல்லா வ்யாக்யானங்களிலும் இப்படியே விவரணம் உள்ளது. "தெரிவரிய அளவில்லா" என்கையாலே "அல்பமும், அஸ்திரமுமான ஐஶ்வர்யஸுகங்களைப்போலல்லாமல், கைவல்யாநுபவம் அளவற்ற இன்பமாய் இருக்கிறது" என்று கூறப்படுகையாலே, இது ஒருவகையான மோக்ஷமே என்று உணர்த்தப்படுகிறது. 'சிற்றின்பம்' என்கையாலே, பகவதநுபவமாகிற பேரின்பம் இவனுக்கு இல்லை என்று உணர்த்தப்படுகையால், பகவதநுபவம் உடையவனை ஶ்ருதிஸூத்ரபாஷ்யங்களில் நிர்ணயிக்கப்பட்ட பஞ்சாக்நி வித்யாநிஷ்டன் கைவல்யநிஷ்டனாயிருக்கமுடியாது என்றும் விளங்குகிறது.

61. ஆறும்பத்து ஒன்பதாம் திருவாய்மொழி பத்தாம் பாட்டில் "குறுகா நீளா இறுதி கூடா எனையூழி சிறுகா பெருகா அளவில் இன்பம்" என்று கைவல்ய மோக்ஷாநந்தத்தைக் குறிப்பதன் மூலம் இது நித்யமான மோக்ஷமே என்று மிகத் தெளிவாகக் காட்டினார் ஆழ்வார். "வைஷயிக ஸுகம் அல்பாஸ்திரத்வாதி தோஷதுஷ்டமாகையாலே உமக்கு அபேக்ஷிதமன்றாகில், ப்ராசுர்யஸ்திரத்வாத்யநேக குணயுக்தமான கேவலாத்மாநுபவ லக்ஷண ஸுகத்தை ப்ராப்யமாகக் கொள்ளலாகாதோ? என்னில்" என்று ஆறாயிரப்படியில் அவதாரிகை இடுவதன்மூலம் நிலையற்ற இவ்வுலக ஸுகங்கள் போலல்லாமல், நிலையான மோக்ஷாநந்தமாயிருப்பது கைவல்யாநுபவம் என்று பிள்ளான் காட்டினார். மேலே வ்யாக்யானத்திலும் இதை உறுதிப்படுத்தினார். மற்ற ஆசார்யர்களும் இப்படியே விவரித்தார்கள். இதிலிருந்து, கைவல்யம் நித்யமான மோக்ஷம் என்றே திவ்யப்ரபந்த வ்யாக்யாதாக்கள் அனைவரும் திருவுள்ளம் பற்றினார்கள் என்று விளங்குகிறது. "மறுகாலின்றி உனக்கே ஆளாகும் சிறுகாலத்தை உறுமோ? அந்தோ! தெரியிலே" என்னும் பகுதியாலே "ஆராய்ந்தால், அளவற்ற நித்யமோக்ஷமான அக்கைவல்யாநுபவம், எம்பெருமானுக்கு ஆட்செய்வதால் ஏற்படும் கணநேர இன்பத்திற்கும் ஈடாகாது" என்று கூறுவதன்மூலம், கைவல்ய நிஷ்டனுக்கு பகவதநுபவ ஸுகம் அடியோடு கிடையாது என்று உணர்த்தினார் ஆழ்வார். இதிலிருந்தும் கைவல்யநிஷ்டன் பகவதநுபவமுடைய பஞ்சாக்நிவித்யாநிஷ்டனாயிருக்க முடியாது என்று விளங்குகிறது.

62. ஏழாம்பத்து ஐந்தாம் திருவாய்மொழி பத்தாம் பாட்டில் "பெருந்துன்பம்" என்று ஆழ்வார் கைவல்யத்தைக் குறிப்பதாகப்

பிள்ளான் முதலிய எல்லா வ்யாக்₂யாதாக்களும் பொருள் கொண் டார்கள். ''கைவல்யரூப மஹாநர்த்த₂ம்'' என்று விவரித்தார் பிள்ளான். ''அளவிலின்பம்'' என்று ஆழ்வார் தாமே அருளிச்செய் கையாலே, அதற்கு முரணாக, ''பெருந்துன்பத்தைத் தருவது'' என் னும் பொருளில் 'பெருந்துன்பம்' என்று ஆழ்வார் இக்கைவல்யத் தைக் குறிக்கமாட்டாராகையாலே, 'பெரிய அனர்த்த₂த்தைத் தருவ தாகையாலே பெருந்துன்பத்தை ஒத்தது' என்றே எல்லா ஆசார்யர் களும் பொருள் கொண்டார்கள். அப்படி இதனால் வரும் அநர்த்த₂ம் என்ன ? எனில் ; 'ப₄க₃வத₃நுப₄வம் இல்லாவிட்டாலும், ஐம்வர்ய ஸுக₂த்தைப் பெற்றவனுக்கு அது நிலைநில்லாததாகையாலே பிறி தொருகாலத்தில் ப க₃வத₃நுப₄வத்தைப் பெறுவதற்கு இடமுண்டு; ப₄க₃வத₃நுப₄வ மற்ற இக் கைவல்யாநுப₄வம் நித்யமானதாகையாலே, என்றுமே இவனுக்கு ப₄க₃வத₃நுப₄வமில்லாமல் செய்து விடுமாகை யாலே பெருந்துன்பத்தை ஒத்த மஹாநர்த்த₂த்தைத் தருவது இது' என்று கருத்து. இப்படியே இருபத்துநாலாயிரப்படியிலும், ஈட்டிலும் விவரிக்கப்பட்டது. இதிலிருந்து 'இவனுக்கு என்றுமே ப₄க₃வத₃ நுப₄வம் இல்லாமல் போய்விடுகிறது' என்றே எல்லா ஆசார்யர் களும் திருவுள்ளம் பற்றினார்கள் என்று தெளிவாக விளங்குகிறது. ஆகையால், இப்பாசுரத்திலிருந்தும் கைவல்யம் நித்யமான மோக்ஷமே என்றும், கைவல்யநிஷ்ட₂ன் ப₄க₃வத₃நுப₄வமுடைய பஞ்சாக்₃னிவித்₃யா நிஷ்ட₂னாக முடியாது என்றும் விளங்குகிறது.

63. எட்டாம்பத்து மூன்றாந்திருவாய்மொழி இரண்டாம் பாட்டில் கைவல்ய நிஷ்ட₂னை இகழ்கிறார் ஆழ்வார். இப்பாட்டின் ஆறாயிரப் படியில் ''ஐம்வர்யோபாய வித₄ாயக ஶாஸ்த்ரங்களை விட்டு, மோக்ஷோபாய வித₄ாயக ஶாஸ்த்ரத்தை அவலம்பி₂த்த நாமும்...... ஸம்ஸார நிவ்ருத்தி மாத்ரத்தை ப்ராப்யமாகப் பற்றினோமித்தனை யிறே; அவன் திருவடிகளை ப்ராப்யமாகப் பற்றிலோமிறே.'' என்று கைவல்யார்த்தி₂யின் பாசுரமாக அமைந்த இப்பாட்டின் பொருள் விவரிக்கப்பட்டது. ''மரணம் தோற்றம் வான் பிணி மூப்பென்றிவை மாய்த்தோம்'' என்று ''இவனுக்கு ஸம்ஸார ஸம்ப₃ந்த₄ம் அடியோடு கழிந்து விடுகிறது'' என்று பாட்டின் இரண்டாமடியில் காட்டப்பட்ட கருத்தை உட்கொண்டு, இவனுக்கு ஸம்ஸார நிவ்ருத்தி மாத்ரமே ப்ராப்யமென்றும், எம்பெருமான் திருவடிகள் ப்ராப்யமல்ல என்றும், இவன் ஐம்வர்யத்துக்கு உபாயங்களை விதி₄க்கும் ஶாஸ்த்ரங்களைவிட்டு, மோக்ஷோபாயத்தை விதி₄க்கும் ஶாஸ்த்ரங்களைப் பின்பற்றியவன் என்றும் தெளிவாகக் காட்டுகிறார் பிள்ளான். மற்ற வ்யாக்₂யாதாக்

களும் இதையே விவரித்தார்கள். ''விரோதி₄நிவர்த்தகமான கனலாழியைக் கையிலேந்தியவனுகையாலே, அதையே பற்றுசாகக் கொண்டு, 'தங்களுடைய விரோதி₄யான ஸம்ஸாரத்தையும் அவன் கழித்துத் தருவான்' என்னும் கருத்தாலே இவர்கள் எம்பெருமானைக் கைவல்யத்திற்கு உபாயமாக நினைத்தார்களேயொழிய, ப்ராப்யமாக நினைக்கவில்லை'' என்று ''கனலாழி அரணத்திண் படை ஏந்திய ஈசற்காளாயே'' என்னும் பாசுரப் பகுதிக்குக் கருத்து தெளிவாகக் காட்டப்பட்டது. இதிலிருந்தும் கைவல்ய நிஷ்டனுக்குக் கிடைப்பது ஸம்ஸாரம் அடியோடு நீங்கும் மோக்ஷமே என்றும், ப₄க₃வத₃நுப₄வம் அவனுக்கு அடியோடு கிடைப்பதில்லை என்றும் தெளிவாக விளங்குகிறது. ஆகையால், கைவல்யம் நித்யமுக்தியே என்றும், ப₄க₃வத₃நுப₄வமுடைய பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்டனே கைவல்யநிஷ்டனாக முடியாது என்றும் வயிரவுருக்காக நிலைநாட்டப்பட்டது.

64. எட்டாம்பத்து எட்டாம் திருவாய்மொழி ஐந்தாம்பாட்டு முதல் எட்டாம்பாட்டு முடிய, ஆழ்வார் ஒருவகையான ஆத்மாநுப₄வத்தைப் பேசி, அதை ''வீடு (மோக்ஷம்)''என்று நிர்த்தே₃ஶிக்கிறார். ஐந்தாம்பாட்டின் ஆறாயிரப்படியில் ''நாலாம்பாட்டகப்பட ஆத்மநிதாத்பர்யமாய், நிர்த்தே₃ஶத்தை ப₄க₃வத்பர்யந்தமாகப் பண்ணிகொடுபோந்தது. இனி, இந்நிர்த்தே₃ஶமும் ஆத்மபர்யந்தமே ஆகிறது'' என்று அவதாரிகையிடுகையாலே, இந்த நாலுபாட்டுகளும் கேவலாத்மாவைப் பற்றியவை என்பது பிள்ளான் திருவுள்ளம் என்று விளங்குகிறது. ஏழாம்பாட்டின் ஆறாயிரப்படியில் ''இந்த ஆத்மஸ்வரூபாவிர்ப்ப₄ாவமே மோக்ஷமாகிறது, மோக்ஷம்பெற்றால் பெரும் ஸுக₂மாவதும் அதுவே என்று அத்₄யவஸித்துக்கொண்டு வ்யதிரிக்த விஷயஸங்க₃த்தையெல்லாம் விட்டு. ஆத்மஸ்வரூபாவிர்ப்ப₄ாவலக்ஷணமாயிருந்த மோக்ஷம் கைவரும். இப்படிச் செய்யாதாருக்குக் கைவாராது. அவர்கள் ஸம்ஸரித்தேபோமித்தனை என்கிறார்'' என்று அருளிச்செய்யப்பட்டது. எட்டாம்பாட்டின் ஆறாயிரப்படியில், ''இவ்வாத்மஸ்வரூபாவிர்ப்ப₄ாவ லக்ஷணமோக்ஷமானது இந்த்₃ரிய ஜயமாத்ரத்திலே கைவாராது; அந்திமத₃ஶையிலே ப₄க₃வத்ஸமாநாகாராத்மாநுஸந்த₄நமும் வேண்டும் என்கிறார்'' என்று அருளிச்செய்யப்பட்டது. இவற்றிலிருந்து, நாலாம் பாட்டுவரையில் ப₄க₃வத்பர்யந்தமாக நிர்த்தே₃ஶம் பண்ணியபோதிலும், ஆழ்வாருக்கு ஆத்மஸ்வரூபத்தைக் காட்டுவதிலே தாத்பர்யம் என்றும், ஐந்தாம்பாட்டு முதல் எட்டாம்பாட்டுவரை அவ்வாத்மாவைப் பிரித்து அநுஸந்தி₄த்து, அதன்ப₂லனைச் சிலர் அடையும் கேவலாத்மாநுப₄வரூபமான கைவல்ய

மோக்ஷத்தை ஆழ்வார் விவரிக்கிறார் என்றும் பிள்ளான் திருவுள்ளம் பற்றுகிறார் என விளங்குகிறது. இங்கு பிள்ளான், கைவல்யத்தை ஆத்மாவுக்கு த₄ர்மபூ₄தஜ்ஞாநத்தின் சுருக்கம் நீங்கப்பெற்று ஸ்வரூபாவிர்ப்பா₄வம் ஏற்பட்டிருக்கும் நித்யமோக்ஷமாகவும், ஸம்ஸாரத்துக்கு எதிர்த்தட்டாகவும் அருளிச்செய்திருப்பது குறிக்கொள்ளத்தக்கது. இப்பாட்டுக்களின் இருபத்து நாலாயிரத்திலும், ஈட்டிலும் எம்பாரும் இதே நிர்வாஹத்தை அருளியதாகக் காட்டப்பட்டது. அவ்விரண்டு வ்யாக்₂யானங்களிலும், இப்படி த₄ர்மியான எம்பெருமானைவிட்டுப் பிரித்து, த₄ர்மமான ஆத்மாவை மாத்திரம் அநுப₄விக்கும் கைவல்யமோக்ஷத்தைக் குறிப்பதாகக்கொள்ளாமல், ஆத்மாவை ப₄க₃வச்சே₂ஷமாக அநுஸந்தி₄த்து, ப₄க₃வத₃நுப₄வத்தையே பெறுமவனாக (பஞ்சாக்₃நிவித்₃யையில்) சொல்லப்பட்ட ப்₃ரஹ்மாத்மக ஸ்வாத்மோபாஸகனை ஆழ்வார் காட்டுவதாக ஆண்டான் நிர்வஹிப்பர் என்று காட்டப்பட்டது. எட்டாம்பாட்டில் ''எம்பெம்மானோடு ஒத்தேசென்று'' என்றதற்கு ''எம்பெம்மானோடு ஒத்த தேசு என்று'' என்று 'த' என்னும் எழுத்தைச் சேர்த்துக்கொண்டு, ''எம்பெருமானோடொத்த ஶு த்₃ தி₄ யை யும், ஜ்ஞாநாநந்த₃ லக்ஷணமாயிருக்கையையும் உடையது ஜீவாத்மா'' என்று அநுஸந்தி₄க்கும் கைவல்ய நிஷ்ட₂னைச் சொல்லி ''அங்குள்ளம் கூடக் கூடிற்றாகில்'' என்று அப்படியே அந்திமகாலத்தில் அநுஸந்தி₄க்கும் அவனுடைய அந்திமஸ்ம்ருதியைச் சொல்லி, ''நல்லுறைப்பு'' என்று ''அவனுக்கு ஆத்மப்ராப்தி ஸித்₃தி₄க்கும்'' என்று ஆழ்வார் அருளிச்செய்வதாக எம்பார் நிர்வாஹத்தில் வ்யாக்₂யானம் செய்யப்பட்டது. ''எம்பெம்மானோடு ஒத்தே சென்று'' என்பதை அப்படியே வைத்துக்கொண்டு, ''எம்பெருமான் தனக்கு ஶேஷமாக இவ்வாத்மாவை நினைத்திருக்குமாபோலே, இவனும் அவனோடு ஒத்து நினைத்து, அந்த அந்திமஸமயத்திலே ஶேஷத்வாநுஸந்த₄ானம் கூடுமாகில்'' என்று பொருள்கொண்டு, ''நல்லுறைப்பு'' என்றதற்கு ''நல்ல வாய்ப்பு'' என்று இவ்விரு வ்யாக்₂யானங்களிலும் ஆண்டான் நிர்வாஹத்தில் பொருள் உரைக்கப்பட்டது. ''நல்ல வாய்ப்பு'' என்றதற்கு '' 'ப₄க₃வத₃நுப₄வம் ஸித்₃தி₄க்கும் என்றபடி' என்று ஆண்டான் நிர்வாஹத்திலே ஶப்₃த₃ார்த்த₂ம்'' என்று அரும்பதவுரைகளிலே பொருள் உரைக்கப்பட்டது. ஐந்தாம்பாட்டின் அரும்பதவுரையிலும், '' 'மேல் நாலுபாட்டும் வைவக்ஷிக நிஷ்கர்ஷகம்' என்று எம்பார் நிர்வாஹம். அநிஷ்கர்ஷகமாக ஆண்டான் நிர்வாஹம். 'எம்பெம்மானோடொத்தே சென்று' என்கிற பாட்டில், கைவல்யபரயோஜனைக்குச் சேர எம்பார் நிர்வாஹம்; ப₄க₃வது₃பாஸநபரயோஜனைக்குச் சேர ஆண்டான் நிர்வாஹம்'' என்று தெளிவுறுத்தப்பட்டது. இவற்றி லிருந்து, பிள்ளான், எம்பார் ஆகிய இருவரும் கேவலாத்மாவை

அநுஸந்தி₄த்துக் கேவலாத்மாநுப₄வத்தைப்பெறும் கைவல்யநிஷ்ட₂ன் விஷயமாக இந்த நாலுபாட்டுக்களையும் நிர்வஹித்தார்கள் என்றும், ஆண்டான், ப்₃ரஹ்மாத்மகமாகத் தன் ஆத்மாவை அநுஸந்தி₄த்து ப்₃ரஹ்மாநுப₄வத்தையே பெறும் பஞ்சாக்₃நிவித்₃யா நிஷ்ட₂ன் விஷயமாக இந்த நாலு பாட்டுக்களையும் நிர்வஹித்தார் என்றும் விளங்குகிறது. இதிலிருந்து—கேவலாத்மாவை அநுஸந்தி₄த்து, அதையே பெறும் கைவல்யநிஷ்ட₂னைக் காட்டிலும், ப்₃ரஹ்மாத்மகமாக (அதாவது) ப்₃ரஹ்மத்திற்கு ப்ரகாரமாகவும், சேஷமாகவும் ஆத்மாவை அநுஸந்தி₄த்து, ப்₃ரஹ்மாநுப₄வத்தையே பெறும் பஞ்சாக்₃நிவித்₃யா நிஷ்ட₂ன் மிகவும் வேறுபட்டவன் என்று கையிலங்கு கனியாகவும், வெள்ளிடைமலையாகவும் விளங்குகிறது. ஆகையால் நம்பிள்ளை, பெரிய வாச்சான்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை ஆகிய மஹாசார்யர்களையும், அவர்களிட்ட வ்யாக்₂யானங்களையும் போற்றுமவர்கள் பஞ்சாக்₃நிவித்₃யா நிஷ்ட₂னே கைவல்யநிஷ்ட₂ன் என்று வாய்திறக்க வழியில்லை.

65. திருவாய்மொழியில் 'ஒருநாயகம்' (4-1-10) ஆறுயிரப்படியில், ஆத்மயாதா₂த்ம்யாவிர்ப்ப₄ாவலக்ஷணமோக்ஷம் என்று ப₄க₃வத் கைங்கர்ய ப்ராப்திலக்ஷணமான முக்₂ய மோக்ஷம் குறிக்கப்பட்டது. திருவாய்மொழியில் 'அதுவே வீடு' (8-8-7) ஆறுயிரப்படியில், "ஆத்மஸ்வரூபாவிர்ப்ப₄ாவலக்ஷணமோக்ஷம்" என்று கைவல்யம் குறிக்கப்பட்டது. 4-1-10 ஆறுயிரப்படியில், 'கைவல்ய மோக்ஷத்திற்குக் கர்மம் தடை' என்றும், 'முக்₂ய மோக்ஷத்திற்குக் கர்மத்தைக் காட்டிலும் வேறுபட்டதாய், வலிதான ப்ரதிப₃ந்த₄கம் (தடை) ஒன்று இருக்கிறது' என்றும் காட்டப்பட்டது. எம்பெருமானை ப்ராப்யமாக அநுஸந்தி₄ப்பதே அந்த ப்ரதிப₃ந்த₄கத்தைப் போக்கும் வழி என்றும் காட்டியிருக்கிறார். இவற்றிலிருந்து—கைவல்ய நிஷ்ட₂னுக்கும் ஸகல கர்மங்களும் கழிந்து விடுகின்றன என்றும், அதனால் கர்மம் காரணமாக அநாதி₃காலமாக இருந்துவந்த த₄ர்மபூ₄த ஜ்ஞாநத்தின் சுருக்கம் நீங்கப்பெற்று, "ஸ சாநந்த்யாய கல்பதே" [முக்தி நிலையில் ஜீவன் தன் அறிவால் எங்கும் வ்யாபிப்பவன் ஆகிவிடுகிறான்] என்னும் ஸ்வரூபாவிர்ப்ப₄ாவலக்ஷணமோக்ஷம் அவனுக்கு ஏற்பட்டு விடுகிறது என்றும், 'தன் ஆத்மாநுப₄வமே போதும்' என்னும் ப்ரதிபத்தியாகிற (எண்ணமாகிற) ப்ரதிப₃ந்த₄கம் (தடை) இருப்பதால், அவனுக்கு ஆத்மயாதா₂த்ம்யாவிர்ப்ப₄ாவலக்ஷண மோக்ஷமாகிற முக்₂ய மோக்ஷம் ஸித்₃தி₄ப்பதில்லை என்றும், அந்திம ஸ்ம்ருதியிலாவது, எம்பெருமானை ப்ராப்யமாக அநுஸந்தி₄த்து அந்தத் தடையைப் போக்கிக்கொண்டாலதான் அவனுக்கு முக்₂ய

மோக்ஷம் ஸித்₃தி₄க்கும் என்றும், இல்லாவிடில் என்றும் கைவல்ய மோக்ஷத்தையே அநுப₄விக்கும்படி நேரிடும் என்றும் பிள்ளான் மிகத் தெளிவாகக் காட்டியிருப்பது நடுநிலையாளர்களுக்கு நன்கு விளங்கும். ஆகையால், பிள்ளானையும், ஆறுயிரப்படியையும் போற்றுமவர்கள் "கைவல்யம் மோக்ஷமல்ல; இவ்வுலகில் அநுப₄விக்கப்படும் ஒரு ஐஶ்வர்யமே என்றும், பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்டனே கைவல்ய நிஷ்டன்" என்றும் வாய்திறக்க வழியில்லை.

66. திருவாய்மொழியில் 'வியன் மூவுலகு' [8·10-2] என்னும் பாட்டில், "தானே தானேயானாலும்" என்னும் தொடராலே கைவல்யாநுப₄வத்தைக் குறிப்பதாக எல்லா வ்யாக்₂யாதாக்களாலும் அருளிச்செய்யப்பட்டது. இங்கு 'தானே' என்று இரண்டுமுறை ப்ரயோகிப்பதன்மூலம், இவனுக்கு அசித்தை அநுப₄விப்பதாகிற ஐஶ்வர்யாநுப₄வமும், ப₄க₃வத₃நுப₄வமும் இல்லாமல் போய்விடுகிறது என்றும், என்றும் இவன் கேவலாத்மாநுப₄வமே செய்யவேண்டும் என்றும் ஆழ்வார் தாமே தெளிவாகக் காட்டுகிறார். இதிலிருந்தும், கைவல்யம் நித்யமுக்தியே என்றும், ப₄க₃வத₃நுப₄வமுடைய பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்டன் கைவல்யநிஷ்டனாக முடியாது என்றும் தெளிவாக விளங்குகிறது.

67. திருவாய்மொழியில் 'யாதுமில்லை' (9-1-9) ஆறுயிரப்படியில் "எல்லாவற்றிலும் மேற்பட்ட புருஷார்த்த₂மன்றோ ஸாம்ஸாரிக து₃:க்க₂ நிவ்ருத்திரூப கைவல்யம் என்று அத்தைப் புருஷார்த்த₂ம் என்று பற்றில், காதுபெருக்க என்றுபுக்கு, பண்டுள்ளத்தையும் கெடுத்து, கூதையாக்கினாற்போலே (காதை அறுத்துக்கொள்வதுபோலே), பண்டுள்ள ஸாம்ஸாரிக ஸுக₂த்தையும் இழக்குமித்தனை" என்று அருளிச் செய்கையாலே, "கைவல்யம் ஸகலஸம்ஸார து₃:க்க₂ங்களும் நீங்கப் பெற்ற மோக்ஷமே என்றும், அதை அடைந்தவனுக்கு ஐஶ்வர்யாநுப₄வமும், ப₄க₃வத₃நுப₄வமும் அடியோடு இல்லாமல் போய்விடுகிறது" என்றும் தெளிவாக விளக்கப்பட்டது. மற்ற வ்யாக்₂யாதாக்களும் இப்படியே விவரித்தார்கள். இதிலிருந்தும், கைவல்யம் நித்யமுக்தியே என்றும், கைவல்யநிஷ்டன் ப₄க₃வத₃நுப₄வமுடைய பஞ்சாக்₃நிவித்₃யா நிஷ்டனாகமுடியாது என்றும் தெளிவாக விளங்குகிறது.

68. கைவல்யநிஷ்டனைப் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்டன் என்று கொண்டால், அவனுக்கு அர்ச்சிராதிக₃தியைச் சொல்லவேண்டி வருகிறது. அப்படிவரும்போது "சூழ்விசும்பணிமுகில்" [திருவாய்10-9]

என்னும் திருவாய்மொழியில், வாசலில் வானவரும், வாளொண்கண் மடந்தையரும், முடியுடை வானவரும், வைகுந்தத்தமரும், முனி வரும், நல்வேதியரும், மதிமுக மடந்தையரும் ஆகிய நித்யஸூரிகள் இக்கைவல்யநிஷ்டனுக்கு நல்வரவுசொல்லி, மகிழ்ந்து வாழ்த்தி, முறை முறை எதிர்கொண்டு வியந்து, பாதங்கள் கழுவி, நிதியும் நற்சுண்ணமும் நிறைகுடவிளக்கமும் ஏந்திவந்து உபசாரம் செய் கிருர்கள் என்று கொள்ளவேண்டிவருகிறது. ஆத்ம யாதா₂த்ம்யா விர்பா₄வம் ஏற்படாத இக்கைவல்யநிஷ்டனுக்கு நித்யஸூரிகள் இத்தகைய உபசாரங்களைச் செய்வார்களா? என்பதையும், ''தானே தானேயானுலும்'' [திருவாய் 8-10-2] என்கிறபடியே தன் ஆத்மாவைத் தவிர வேறு எதையுமே விரும்பாத இவன் அத்தகைய உபசாரங்களை ரஸித்து ஏற்பானு? என்பதையும், 'அஶரீரியாய்க்கொண்டு திரிவான் ஒருவன்' [அர்த்த₂பஞ்சகம்-15] என்று ஶரீரமற்றவனுக ப்ரஸித்₃த₄னுன இவனுக்கு, அத்தகைய உபசாரங்களைச் செய்யமுடியுமா? என்பதையும் நடுநிலை நின்று சிந்தித்தால், இவனுக்கு அத்தகைய உபசாரங்களை நித்ய ஸூரிகள் செய்யமாட்டார்கள் என்றும், செய்தாலும் இவன் விரும்ப மாட்டான் என்றும், ஶரீரமற்ற இவனுக்கு அவ்வுபசாரங்களை உண்மை யில் செய்யமுடியாது என்றும் தெளிவாக விளங்கும். ஆகையால் ''இவன் அர்ச்சிராதி₃ க₃தியுடைய பஞ்சாக்₃நிவித்₃யா நிஷ்ட₂னல்லன்'' என்பது ''சூழ்விசும்பணிமுகில்'' பதிகத்திலிருந்தே தெளிவாக விளங்குகிறது.

69. எம்பெருமானுருடைய பெருமைகளை அற்புதமாக விவரிப்ப தாய், ஒவ்வொரு பாடலிலும் ராமாநுஜ நாமத்தைக்கொண்ட நூற்றெட்டு பாடல்களை உடையதாகையாலே 'ப்ரபந்ந கா₃யத்ரி' என்று போற்றப்படுவதாய், எம்பெருமானுர் நியமனத்தாலே நாலாயிர தி₃வ்ய ப்ரப₃ந்த₄த்தோடு சேர்க்கப்பெற்றதான ''இராமாநுச நூற்றந் தாதி''யில் நாற்பதாம் பாட்டில், ''அறம், பொருள், இன்பம், வீடு'' என்னும் நாலு புருஷார்த்த₂ங்களில், கண்ணனுக்கே ஆமது காமம் என்றும், மற்ற மூன்று புருஷார்த்த₂ங்களும் அக்காமத்துக்கு உறுப்பானவை என்றும் கூறுகின்ருர் திருவரங்கத்தமுதனுர். அப்படிக் கண்ணனுக்கேயாம் காமத்துக்கு உறுப்பான வீட்டை நிர்த்தே₃ஶிக்கும்போது, இப்பாட்டின் தொடக்கத்தில் 'சேமநல்வீடு' என்று இரண்டு விஶேஷணங்களாலே விஶேஷிக்கிருர் அமுதனுர். '' தன் ஆத்மாநுப₄வமாகிற கைவல்யம், ஆத்மஸ்வரூபாவிர்பா₄வம் உடையதாகையாலே வீடு, மோக்ஷம் எனத்தக்கதாயினும், ப₄க₃வ த₃நுப₄வ மற்ற அது கண்ணனுக்கேயாம் காமத்துக்கு அடியோடு உறுப்பன்று, ஸாத₄நாந்தரநிஷ்ட₂ர்கள் பெறும் ப₄க₃வத₃நுப₄வமும்,

அவர்களுக்கும், கண்ணனுக்கும் உறுப்பானதாகையாலே, அதுவும் கண்ணனுக்கேயாம் காமத்துக்கு உறுப்பானதன்று; அவனையே உபாயமாகக்கொண்ட ஸித்₃தோ₄பாயநிஷ்டர்கள் பெறும் பரார்த்₂தாநுப₄வ கைங்கர்யரூபமான மோக்ஷமே கண்ணனுக்கேயாம் காமத்திற்கு உறுப்பானது; முற்கூறிய இரண்டு மோக்ஷங்களும் அத்தகையவை அல்ல'' என்று உணர்த்துவதற்காகவே, ''சேம, நல்'' என்று வீட்டிற்கு இரண்டு விசேஷணங்களை இட்டிருக்கிறார் அமுதனார் என்று எளிதில் உணரலாம். ப₄க₃வத₂நுப₄வமற்ற கைவல்யத்தைக் காட்டிலும் வேறுபடுத்தி ப₄க₃வத₃நுப₄வமுடைய மோக்ஷத்தைக் காட்டுவதற்காக நம்மாழ்வார் திருவாசிரியத்தில் (2-ம் பாட்டு) 'நல் வீடு' என்று விசேஷித்தது இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

70. இவற்றிலிருந்து, நாலாயிர திவ்யப்ரப₃ந்த₄ங்களை அருளிய ஆழ்வார்களும், அமுதனாரும், கைவல்யத்தை ஆத்மஸ்வரூபாவிர்ப்ப₄ாவமுடைய நித்யமோக்ஷமாகவும், ப₄க₃வத₃நுப₄வம் அற்றதாகவுமே திருவுள்ளம் பற்றினார்கள் என்று விளங்குகிறது. இவ்விஷயம் வ்யாக்₂யானங்களில் மிகத் தெளிவாய் உள்ளது. ஆகையால் கைவல்யத்தை, ப்ராக்ருத லோகத்திலுள்ள பே₄தக₂ங்களில் ஒன்றாகக் கொள்வதும், 'பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்ட₂னே கைவல்யநிஷ்ட₂ன்' என்பதும் த்₃ராவிட₃ வேத₃ங்களுக்கும், அவற்றின் வ்யாக்₂யானங்களுக்கும் சிறிதும் பொருந்தாது என்பது வெளிப்படை.

## 4. ஸ்ம்ருதி ஸ்வாரஸ்யம்

71. ஸ்ம்ருதிகளில் பரம வைஷ்ணவ த₄ர்மங்களைச் சொல்லுமவற்றில் தலைசிறந்ததான வ்ருத்₃த₄ஹாரீத ஸ்ம்ருதியில் உள்ள '' ஐஹலௌகிகமைச்வர்யம் ஸ்வர்க்கா₃த்₃யம் பாரலௌகிகம் | கைவல்யம் ப₄க₃வந்தம் ச மந்த்ரோऽயம் ஸாத₄யிஷ்யதி ||'' [வ்ருத்₃த₄ஹாரீதஸ்ம்ருதி 6-50] [இவ்வுலகச் செல்வத்தையும், சுவர்க்கம் முதலான மறுமைச் செல்வத்தையும், கேவலாத்மாநுப₄வமாகிற கைவல்யத்தையும், ப₄க₃வத₃நுப₄வத்தையும் (அதையதை விரும்புவார்க்கு) இவ்வஷ்டாக்ஷர மந்திரம் ஸாதி₄த்துக்கொடுக்கும்.] என்னும் ச்லோகத்தில், ஐச்வர்யம், கைவல்யம், ப₄க₃வத் ப்ராப்தி என்னும் மூவகைப் புருஷார்த்த₂ங்களைப் பற்றிப் பேசப்பட்டுள்ளது. இது நம் பூர்வாசார்யர்களாலும் ரஹஸ்ய க்₃ரந்த₂ங்களில் கையாளப் பட்ட ப்ரமாணம். ருஷிகள் வாக்கில் கைவல்ய ஶப்₃த₃ம் நேரே வழங்கப்பட்டிருப்பது இந்த ப்ரமாணத்திற்குரிய தனிச் சிறப்பு.

இதில், இவ்வுலக ஐஶ்வர்யம் என்றும், மேலுலக ஐஶ்வர்யம் என்றும் இருவகைப்பட்ட ஐஶ்வர்யங்களையும் எடுத்து, அதைக் காட்டிலும் வேறுபட்டதாகக் கைவல்யத்தை எடுக்கையாலே, மேலுலக ஐஶ்வர்யங்களிலும் மேலான ஒருவகைப்பட்ட மோக்ஷமே கைவல்யம் என விளங்குகிறது. கைவல்ய ஶப்3த3ம் நிக4ண்டு முதலானவற்றிலும், ஶாஸ்த்ர க்3ரந்த2ங்களிலும் மோக்ஷத்தைக் குறித்தே ப்ரயோகி3க்கப்பட்டிருப்பதும் இதை வலியுறுத்துகிறது. இந்த ஶ்லோகத்தில் 'ப4க3வந்தம்' என்று ப4க3வத3நுப4வத்தைத் தனியாக எடுத்திருக்கையால் இது ப4க3வத3நுப4வமற்ற ஒரு மோக்ஷம் என்றும் விளங்குகிறது. ஆகையால், ''ஆத்ம கைவல்யம்'' என்று ஆளவந்தாரால் கீ3தார்த்த2 ஸங்க்3ரஹத்திலும், 'கைவல்யம்' என்று எம்பெருமானர் முதலான ஆசார்யர்களாலும் குறிக்கப்பட்ட ஆத்ம மாத்ராநுப4வமே இந்த ஶ்லோகத்தில் கைவல்யம் என்று எடுக்கப்பட்டது என்று தெளிவாகிறது. இந்த ஶ்லோகத்தில், முதலில் இவ்வுலகச்செல்வத்தையும், அடுத்தபடி அதனிலும் மேற்பட்ட மேலுலகச் செல்வத்தையும் எடுத்துவிட்டு, அடுத்தபடி கைவல்யத்தையும், அதன்பிறகு ப4க3வத3நுப4வத்தையும் எடுக்கையாலே, ஆத்ம மாத்ராநுப4வமாகிற இக்கைவல்யம் ப4க3வத3நுப4வமற்றதாகையாலே பரமமோக்ஷத்தைக் காட்டிலும் தாழ்ந்தது என்றும், மேலுலக ஐஶ்வர்யங்களைக் காட்டிலும் சிறந்ததாகையாலே மோக்ஷத்தில் ஒருவகை என்றும் விளங்குகிறது. இது சிலர் கூறுவதுபோல் ஐஶ்வர்யத்தில் ஒருவகை என்றால், மேலுலகச் செல்வத்திற்காட்டிலும் மேலானதாக இதை எடுத்திருப்பதும், கைவல்ய ஶப்3த3த்தை ப்ரயோகி3த்திருப்பதும் ஒட்டாது. ஆகையால், கைவல்யம் நித்யமோக்ஷமே என்றும், இக்கைவல்யநிஷ்ட2ன் ப4க3வத3நுப4வமுடைய பஞ்சாக்3நிவித்3யாநிஷ்ட2னாக இருக்கமுடியாது என்றும் இந்த ஸ்ம்ருதி வாக்யத்திலிருந்தும் தேறுகிறது.

## 5. இதிஹாஸ ஸ்வாரஸ்யம்

72. இதிஹாஸ ஶ்ரேஷ்ட2மான ஸ்ரீராமாயணத்தில் அயோத்4யா காண்ட3த்தில், இளையபெருமாள் பெருமாளிடம், தானும் வனத்திற்குக் கூடவரவேண்டும் என்று ப்ரார்த்தி2க்கும்போது, ''ந தே3வ லோகாக்ரமணம் நாமரத்வம் அஹம் வ்ருணே! ஐஶ்வர்யம் வாபி லோகாநாம் காமயே ந த்வயா விநா!!'' [ரா-அ 31-5] [வானவர் நாடான பரமபத3த்தை அடைவதையும், மரணமின்மையாகிற கைவல்ய மோக்ஷத்தையும், ப்ராக்ருத லோகங்களில் உள்ள எல்லா ஐஶ்வர்யங்களையும் உன்னைவிட்டுப் பிரிந்து நான் அநுப4விக்க விரும்புகின்றிலேன்.] என்று அருளியதாக உள்ளது. இங்கு

ப்ராக்ருத லோகங்களில் உள்ள ஐஶ்வர்யங்களையெல்லாம் மூன்றாவதாக எடுத்துவிட்டபடியால், அதற்கு முன் 'தே₃வலோகாக்ரமணம்' என்றும், 'அமரத்வம்' என்றும் எடுக்கப்பட்ட இரண்டும், ஸ்வர்க்க₃ லோகத்தை ஆள்வதும், இந்த்₃ராதி₃ தே₃வர்களில் ஒருவனாக இருக்கும் சிறப்பும் ஆகமுடியாது. ஆகையால், முன்னிரண்டும் அசித₃நுப₄வமாகிற ப்ராக்ருதச் செல்வங்களைக் காட்டிலும் மேற்பட்டதாகவே இருக்கவேண்டும். இப்படித் தேறினபின்பு 'தே₃வலோகாக்ரமணம்' என்பது வானவர் நாடாகிற பரமபத₃த்தில் பெறும் ப₄க₃வத₃நுப₄வத்தையும், 'அமரத்வம்' என்று அதிலும் தாழ்ந்ததான ஆத்மமாத்ராநுப₄வமாகிற கைவல்யத்தையும் குறிப்பதாகக் கொள்வதே பொருந்தும். இக்கருத்தாலேயே தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யாதாக்களான நம்பிள்ளையும், பெரியவாச்சான்பிள்ளையும், இம் மூன்று பத₃ங்களும் ஈஶ்வரன், சித், அசித் என்னும் மூன்று தத்வங்களின் அநுப₄வத்தைக் கூறுவதாகவே பொருள் கொண்டார்கள். இங்கும், ப்ராக்ருதமான ஐஶ்வர்யங்களைக் காட்டிலும் மேற்பட்டதாகவும், ப₄க₃வத₃நுப₄வத்தைக் காட்டிலும் தாழ்ந்ததாகவும் கைவல்யத்தை எடுத்திருப்பதிலிருந்தும், அதை 'அமரத்வம்' என்று மரணமற்ற நிலையாகக் குறித்திருப்பதிலிருந்தும் கைவல்யம் நித்யமோக்ஷமே என்றும், ப₄க₃வத₃நுப₄வம் அற்றது என்றும் விளங்குகிறது. ஆக, இந்த ஸ்ரீராமாயண ஶ்லோகத்திலிருந்தும், கைவல்யம் மரணம் முதலானவற்றையற்ற மோக்ஷம் என்றும், ப₄க₃வத₃நுப₄வமுடைய பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்டனே கைவல்யநிஷ்டனாக முடியாது என்றும் தெளிவாக விளங்குகிறது.

73. பா₄ரதத்தின் நடுநாயகமான கீ₃தையில், கைவல்யம் நித்யமோக்ஷமே என்றும், கைவல்யநிஷ்டன் ப₄க₃வத₃நுப₄வமுடைய பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்டனாக முடியாது என்றும் எம்பெருமானாருடைய கீ₃தா பா₄ஷ்யத்தைக் கொண்டு இந்த ஸித்₃தா₄ஞ்ஜனத்தின் இரண்டாவது பிரிவில் அசைக்கமுடியாதபடி நிலைநாட்டப்பட்டதாகையால் இவ்விஷயம் இதிஹாஸங்கள் இரண்டிலிருந்தும் தேறியதாயிற்று.

74. பா₄ரதத்தின் ஸாரமான ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ரநாமத்தில் ''முக்தாநாம் பரமா க₃தி:'' (12) என்று ஒரு திருநாமம் படிக்கப்பட்டது. 'முக்தர்களுக்கு மேலான ப்ராப்யம்' என்பது இதன்பொருள். இதிலிருந்து முக்தர்களுக்குக் கீழான ப்ராப்யம் ஒன்று உண்டு என்று உணர்த்தப்பட்டது. இந்த கீழான ப்ராப்யம் எது? என்பதை ஸ்ரீபராஶரப₄ட்டர், ஸஹஸ்ரநாம பா₄ஷ்யத்தில், ''பரமேதி விஶேஷணேந முக்தாநாமேவ கேஷாஞ்சித் அர்வாசீநா க₃திர்க₃ம்யதே ......

கைவல்யலக்ஷணு......ஸம்ஸார பரமபத₃யோர் மத்₄யே தேஷாம் ஸ்த₂ாநஞ்ச'' ['பரமா'(மேலான) என்று க₃தி ஶப்₃த₃த்தை விஶேஷித்திருப்பதால் முக்தர்களிலேயே சிலருக்குத் தாழ்ந்த க₃தியான கைவல்யம் உண்டென்று உணர்த்தப்படுகிறது. ஸம்ஸாரத்திற்கும், பரமபத₃த்திற்குமிடையில் அவர்களுக்கு ஸ்த₂ானமும் சொல்லப்பட்டிருக்கிறது.] என்று அருளிச்செய்து, இதற்கு ப்ரமாணமாக ''யோகி₃நாம் அம்ருதம் ஸ்த₂ாநம் ஸ்வாத்ம ஸந்தோஷகாரிணம்'' [வி-பு 1-6-38] என்னும் ஸ்ரீவிஷ்ணுபுராண ஶ்லோகத்தைக் காட்டினர். இதிலிருந்தும், 'கைவல்யம் நித்யமுக்தியே' என்றும், 'நித்யவிபூ₄தியிலேயே கைவல்ய ஸ்த₂ாநம்' என்றும் தெளிவாக விளங்குகிறது. பரமபத₃த்திற்கு வெளியில் இவனுக்கு ஸ்த₂ானத்தைச் சொல்லுகையால், பரமபத₃த்தினுட்சென்று ப்₃ரஹ்மாநுப₄வம் செய்யும் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னைக் காட்டிலும் கைவல்யநிஷ்ட₂னுக்கு பே₄த₃மும் ஸித்₃தி₄க்கிறது.

75. பா₄ரதம் மோக்ஷ த₄ர்மத்தில் (கிருஷ்ணாசார்யர் பதிப்பில்) 350-வது அத்₄யாயத்தில் (மற்றொரு பதிப்பில் 342-வது அத்₄யாயத்தில்) உள்ள

''சதுர்வித₄ா மம ஜநா ப₄க்தா ஏவ ஹி தே ஶ்ருதா:।
தேஷாம் ஏகாந்திந: ஶ்ரேஷ்ட₂ாஸ் தே சைவ அநந்ய தே₃வதா:॥
அஹமேவ க₃திஸ் தேஷாம் நிராஶீ:கர்மகாரிணம்॥
யே து ஶிஷ்டாஸ் த்ரயோ ப₄க்தா: ப₂லகாமா ஹி தே மதா:।
ஸர்வே ச்யவநத₄ர்மாண: ப்ரதிபு₃த்₃த₄ஸ்து மோக்ஷபா₄க்॥''
[பா₄ரதம்-மோக்ஷ 350-33, 34, 35]

[நாலுவகைப்பட்ட ஜநங்கள் என்னுடைய ப₄க்தர்கள் என்று பிரஸித்₃தி₄ பெற்றவர்கள்; அவர்களுக்குள் ஏகாந்திகள் சிறந்தவர்கள்; அவர்களே வேறு தே₃வர்களைப் பற்றாதவர்கள். ப₂லன்களில் பற்றற்றுக் கர்மம் செய்யும் அவர்களுக்கு நானே ப்ராப்யனாகிறேன். மற்ற மூன்று ப₄க்தர்களும் என்னையொழிந்த ப₂லனை விரும்புகிறவர்கள். அவர்கள் மூவரும் நழுவுதலை இயல்வாகக் கொண்டவர்கள். நான்காமவனான ஜ்ஞாநியே மோக்ஷத்தை அடைகிறான்.] என்கிற ஶ்லோகங்களில் நாலுவகைப்பட்ட ப₄க்தர்களைக் கூறுகையாலே, ''ஆர்த்தோ ஜிஜ்ஞாஸு: அர்த்தா₂ர்த்தீ₂ ஜ்ஞாநீ'' [கீ₃தை 7-16] என்று கீ₃தையில் சொல்லப்பட்ட நாலு வகைப்பட்ட ப₄க்தர்களைப் பற்றியே இந்த ஶ்லோகங்களும் பேசுகின்றன என விளங்குகிறது. இதில் ஜ்ஞாநிகளைத் தவிர்ந்த மற்ற மூவரும் 'ச்யவந த₄ர்மாக்கள்' (நழுவுதலை இயல்வாகக் கொண்டவர்கள்) என்று கூறப்படுவதால், 'கைவல்யார்த்தி₂யின் ப₂லனும் நழுவக்கூடியதே என விளங்கு

கிறதே' என்னும் ஆக்ஷேபம் ஒன்று எழுகிறது. இவ்வாக்ஷேபத்துக்குப் பதில் உரைப்போம் இனி. இந்த ஶ்லோகங்களில் 'ஆர்த்தன், ஜிஜ்ஞாஸு' முதலிய நாலு வகைப்பட்ட ப₄க்தர்களே சொல்லப்படுவதாகக் கொண்டாலும், 'ச்யவந த₄ர்மாண:' என்ற மாத்திரத்தால் கீ₃தையில் கைவல்யார்த்தி₂க்குச் சொல்லப்பட்ட அபுநராவ்ருத்திக்கு முரணாக இங்கு புநராவ்ருத்தியைச் சொல்லுவதாகக் கொள்வது பொருந்தாது. 'ச்யவந த₄ர்மாண:' என்றதற்கு 'ஶேஷத்வ த₄ர்மத்திலிருந்து நழுவியவர்கள்' என்றோ, 'பேரின்பமாகிற ப₄க₃வத₃நுப₄வத்திலிருந்து நழுவியவர்கள்' என்றோ, 'உபாஸந த₃ஶையில் தொடர்புகொண்டிருந்த பரமாத்மாவாகிற பரமத₄ர்மத்தைவிட்டு நழுவியவர்கள்' என்றோ பொருள் கொள்ளலாம். உண்மையில் இந்த ஶ்லோகங்களில் ஆர்த்தன், ஜிஜ்ஞாஸு முதலானவர்களைச் சொல்வதாகக் கொள்வதற்குச் சில விரோத₄ங்கள் உள்ளன. இங்கு "இந்த நாலுவிதமான ப₄க்தர்களில் ஏகாந்திகளே சிறந்தவர்கள். அவர்களே வேறு தே₃வர்களைப் பற்றாதவர்கள்" என்று நாலாமவனே ஏகாந்தியாய் இருப்பவன் என்றும், வேறு தே₃வர்களைப் பற்றாதவன் என்றும் கூறுகையால், மற்ற மூவரும் ஏகாந்திகள் அல்லர் என்றும், வேறு தே₃வர்களைப் பற்றுகிறவர்கள் என்றும் விளங்குகிறது. கீ₃தை ஏழாம் அத்₄யாயத்தில் சொல்லப்பட்ட ஆர்த்தன் முதலான நாலு ப₄க்தர்களோவெனில், ஏகாந்திகள் என்றும், வேறு தே₃வர்களைப் பற்றாதவர்கள் என்றும், அந்த கீ₃தா ப்ரகரணத்தையும், கீ₃தா பா₄ஷ்யத்தையும் ஆராய்ந்தால் தெளிவாக விளங்குகிறது. "ஐகாந்த்யம் ப₄க₃வத்யேஷாம் ஸமாநம் அதி₄காரிணாம்" (28) என்று கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹத்தில் ஆளவந்தாரும், இந்நால்வரையுமே ஏகாந்திகள் என்று குறிப்பிட்டுள்ளார். ஆகையால் மோக்ஷத₄ர்மத்தில் சொல்லப்பட்ட ப₄க்தர்கள் வேறானவர்கள் என்றே கொள்ளவேண்டும். அப்படி நாலுவகைப்பட்ட ப₄க்தர்கள் வேறு உண்டோ? என்று ஆராய்ந்தால், "யாந்தி தே₃வவ்ரதா தே₃வாந் பித்ருந் யாந்தி பித்ருவ்ரதா: | பூ₄தாநி யாந்தி பூ₄தேஜ்யா யாந்தி மத்₃யாஜிநோऽபி மாம் ||" [கீ₃தை 9-25] என்னும் ஶ்லோகத்தில் கூறப்பட்ட (1) தே₃வப₄க்தர்கள், (2) பித்ருப₄க்தர்கள், (3) பூ₄தப₄க்தர்கள், (4) ப₄க₃வத்₃ப₄க்தர்கள் என்னும் நாலுவகைப்பட்ட அதி₄காரிகளையே மோக்ஷத₄ர்மத்தில் "சதுர்வித₄ா:" என்று எடுக்கிறான் என்று கொள்வது பொருத்தம். இந்த ஶ்லோகத்துக்கு முந்தின ஶ்லோகத்தில், "தத்த்வேநாதஶ்ச்யவந்தி தே" என்று கூறியதையே மோக்ஷத₄ர்மத்தில் "ஸர்வே ச்யவந த₄ர்மாண:" [அனைவரும் நழுவும் ப₂லனையும் தன்மையையும் உடையவர்களே]

என்று அநுவதிக்கிறார் என்றும், அதற்கு முந்திய ஶ்லோகத்தில் "யேऽப்யந்யதே3வதாப4க்தா:......தேऽபி மாமேவ கௌந்தேய யஜந்தி அவிதி4 பூர்வகம் ॥" [கீ3தை 9-23] [மற்ற தெய்வங்களின் ப4க்தர்களும் உண்மையில் அந்தர்யாமியான என்னையே ஆராதி4க்கிறார்கள். ஆனால் விதி4ப்படி (நேரே) என்னை ஆராதி4ப்பதில்லை] என்று கூறப்பட்ட ரீதியில், தே3வதாந்தர ப4க்தர்களையும், தன் ப4க்தர்களாகக்கொண்டே மோக்ஷத4ர்மத்தில் "சதுர்விதா4 மம ஜநா ப4க்தா ஏவ ஹி தே ஶ்ருதா:" என்று அவர்களை அநுவதிக்கிறான் என்றும் விளங்குகிறது. மேலும், மோக்ஷத4ர்மத்தில் "ப்ரதிபு3த்3த4ஸ்து மோக்ஷப4ாக்" என்று முப்பத்தைந்தாவது ஶ்லோகத்தில் சொன்னவுடன் "ப்3ரஹ்மாணம் ஶிதிகண்ட2ஞ்ச யாஶ்சாந்யா தே3வதா: ஸ்ம்ருதா: । ப்ரதிபு3த்3த4ா ந ஸேவந்தே யஸ்மாத் பரிமிதம் ப2லம் ॥" [பிரமன், சிவன், மற்ற தே3வதைகள் முதலானோரை, அவர்களிடமிருந்து கிடைக்கும் ப2லன் அளவுபட்டதாகையால் (நான்காமவர்களான) ப்ரதிபு3த்3த4ர்கள் ஆராதி4க்கமாட்டார்கள்] என்று கூறியிருக்கையாலே, முதல் மூன்றுபேரும் எம்பெருமானுடைய ஶரீரமான தே3வர்கள், பித்ருக்கள், பூ4தங்கள் ஆகிய மூன்றுவகைப்பட்டவர்களை ஆராதி4ப்ப தன்மூலம் எம்பெருமானை அவிதி4பூர்வகமாக (வழியல்லா வழியில்) ஆராதி4க்கும் ப4க்தர்களே என்று தெளிவாக விளங்குகிறது. ஆகையால், கைவல்யம் நித்ய மோக்ஷமே என்னும் கொள்கைக்கு, இந்த மோக்ஷ த4ர்மவசநம் எவ்வகையிலும் முரண்படாது.

## 6. புராண ஸ்வாரஸ்யம்

76. முதலில் "தத்வேந யஶ்சித3சித3ீஶ்வர" [ஸ்தோ-ர 4] என்னும் ஶ்லோகத்தில் அபவர்க்க3மாகிற மோக்ஷத்தையும், அதை அடைவதற்குரிய உபாயத்தையும் உள்ளபடி அறிவித்தவர் என்று ஆளவந்தாரால் புகழப்பெற்ற பராஶர மஹரிஷி அருளிய புராண ரத்னமான ஸ்ரீவிஷ்ணுபுராணத்தின் ஸ்வாரஸ்யத்தைக் காட்டுவோம். "யோகி3நாம் அம்ருதம் ஸ்த2ானம் ஸ்வாத்ம ஸந்தோஷ காரிணம்" [வி-பு 1-6-38] [ஆத்மாநுப4வம் செய்யும் யோகி3களுக்கு அழியாத ஸ்த2ானம் உள்ளது.] என்று ஸ்ரீபராஶர மஹரிஷி, அழியாததான ஆத்மாநுப4வஸ்த2ானம் ஒன்றைச் சொல்லிவிட்டு, "ஏகாந்திந: ஸதா3 ப்3ரஹ்மத்4யாயிநோ யோகி3நஶ்ச யே । தேஷாம் தத் பரமம் ஸ்த2ாநம் யத்3வை பஶ்யந்தி ஸூரய: ॥" [எம்பெருமானையே ப்ராப்யமாகக் கொண்டு பரப்3ரஹ்மமான அவனையே எப்போதும் த்4யானிக்கும் யோகி3களுக்கு நித்யஸூரிகள் காணும் மிக உயர்ந்த ஸ்த2ானம் உள்ளது.] என்று நித்யஸூரிகள் முதலானோர் ப்3ரஹ்மாநுப4வம் செய்யும் ஸ்த2ானத்தை அடுத்தபடி வெளிப்படுத்தினார். ஆத்மாநுப4வ ஸ்த2ானத்தை அழியாததாகக் குறித்திருக்கும் ஸ்வாரஸ்யத்தைக்

கொண்டும், அடுத்த ஶ்லோகத்தில் ப்3ரஹ்மாநுப4வம் செய்யும் பரம பத3த்தைக் குறித்திருப்பதைக்கொண்டும், இங்கு குறிக்கப்பட்ட ஆத்மாநுப4வஸ்த2ானம் தாழ்ந்த முக்தியான கைவல்யஸ்த2ானமே என்று ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமபா4ஷ்யத்தில் ஸ்ரீ பராஶரப4ட்டரும், ஸ்தோத்ரவ்யாக்2யானத்திலும், தி3வ்யப்ரப3ந்த4வ்யாக்2யானம் முதலானவற்றிலும் பெரியவாச்சான்பிள்ளை முதலானோரும் அருளிச்செய்தனர். இதிலிருந்து, அழியாத ஸ்த2ானத்திலிருந்து செய்யும் ஆத்மாநுப4வமாகிற கைவல்யம் நித்யமுக்தியே என்று விளங்குகிறது. இங்கு கைவல்யஸ்த2ானத்தை ப்3ரஹ்மாநுப4வம் செய்யும் ஸ்த2ானத்தைக் காட்டிலும் கீழ்ப்பட்டதாகக் கூறியிருக்கையால், கைவல்யம் அடைந்தவனுக்கு ப்3ரஹ்மாநுப4வம் கிடையாது என்று விளங்குகிறது. இக்காரணத்தாலேயே, இவன் ப்3ரஹ்மாநுப4வம் செய்யும் பஞ்சாக்3நி வித்3யாநிஷ்ட2னாகமுடியாது என்றும் விளங்குகிறது.

77. ''யோகி3நாம் அம்ருதம் ஸ்த2ானம்''என்னும் ஶ்லோகத்தில் அம்ருத பத3த்திற்கு 'நீண்ட காலமிருப்பது'என்னும் அமுக்2யார்த்த2ம் கொண்டு, அந்த ஶ்லோகத்தில்—த்4ருவநக்ஷத்திரத்திற்கு மேலேயுள்ள விஷ்ணு பத3ம் என்னும் (ப்ரக்ருதி மண்ட3லத்திற்குட்பட்ட) ஸ்த2ானத்தைச் சொல்லுவதாக எங்களாழ்வான் வியாக்கியானம் செய்திருப்பதிலிருந்து கைவல்யம் அநித்யம் என்று அவர் கருதியிருப்பதுபோல் தோன்றுகிறதே ? எனில் : ''அம்ருதம் ஸ்த2ாநம்'' என்றவிடத்தில் கைவல்ய ஸ்த2ானம் சொல்லப்படுவதாகவே அவர் திருவுள்ளம் பற்றவில்லையாகையால், இதுகொண்டு கைவல்யவிஷயத்தில் கருத்துவேற்றுமையைக் கற்பிக்கவொண்ணாது. எப்படி ? எனில்: ''யோகி3நாமிதி || ஆஶ்ரமிஷ்வேவ யே ப்ரதீகோபாஸகா யோகி3ந: தேஷாம் அம்ருதம் — விஷ்ணுபத3ாக்2யம் த்4ருவாது3பரி ஸ்த2ாநம்— யதோ க3ங்கா3 ப்ரவஹதி இதி வக்ஷ்யமாணம் ||'' [நாலு ஆஶ்ரமங்களில் இருப்பவர்களிலேயே, ப்ரதீகமான தம் ஆத்மாவை உபாஸிக்கும் யோகி3களுக்கு, (காலக்ரமத்தில் முக்தியளிக்கையாலே) அழியாதது எனப்படுவதாய், 'விஷ்ணுபத3ம்' என்று பெயர்பெற்றதாய், த்4ருவநக்ஷத்திரத்திற்கு மேற்பட்டதான ஸ்த2ாநம் இங்கு சொல்லப்படுகிறது. இந்த ஸ்த2ாநத்திலிருந்தே க3ங்கை3 பெருகுகிறது என்று மேலே (2-8) சொல்லப்படப்போகிறது.] என்று இவ்விடத்தில் வியாக்கியானம் செய்தார் எங்களாழ்வான். மேலே (2-8-98, 99, 100) இந்த விஷ்ணுபத3ஸ்த2ானத்தைப்பற்றிப் பேசுமிடத்தில்,''அதோऽத்ர விஷ்ணுபதே3 ஸ்வர்க்க3ாதி4கஸௌக்2யாத், ஸத்யலோகாத் அர்வாசீநத்வாச்ச மோக்ஷோக்தி: க்ரமமுக்த்யர்த்த2ா | தத்ஸ்த2ா: க்ரமாத் ப்3ரஹ்மலோகமேத்ய ப்3ரஹ்மணா ஸஹ முச்யந்தே | விஷ்ணுபதே3 ஸ்தி2தா : தத்ர லப்3த4ஜ்ஞாநா முச்யந்தே ; ந து தந்முக்தைர் லப்4யம் ஸ்த2ாநமித்யர்த்த2:'' [ஆகையால், இந்த விஷ்ணுபத3த்தில் ஸ்வர்க்க3த்தைக் காட்டிலும் மேற்பட்ட இன்பம்

உள்ளதாகையாலும், ப்₃ரஹ்மாவின் ஸத்யலோகத்தைக் காட்டிலும் இது தாழ்ந்ததாகையாலும், இதை 'அம்ருதம்' என்பது, இவ்விடத்தி லிருப்பவர்களுக்கும் காலக்ரமத்தில் மோக்ஷம் கிடைக்கும் என்னும் கருத்துடையது; விஷ்ணுபத₃த்திலிருப்பவர்கள், காலக்ரமத்தில் ப்₃ரஹ்மாவின் ஸத்யலோகத்தை அடைந்து, அங்கு ஜ்ஞானம்பெற்று, ப்₃ரஹ்மாவோடுகூட முக்தி அடைகிறார்கள்; அவ்விஷ்ணுபத₃ம் முக்தர்கள் அடையும் ஸ்த₂ானமன்று என்று கருத்து] என்று வியாக்கியானமிட்டார். இதிலிருந்து, இது ஸத்யலோகத்தைக்காட்டி லும் தாழ்ந்த ஸுக₂த்தையுடைய (அசிந்மிஶ்ரமான) தம் ஆத்மாவை அநுப₄விப்பவர்களின் ஸ்த₂ானமேயொழிய, ஸத்யலோகத்தைக்காட்டி லும் சிறந்ததாய், ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவருதல் இல்லாததாய், ப்ரக்ருதியினின்றும் நீங்கிய தம் ஆத்மாவை அநுப₄விக்கும் இடமான கைவல்யஸ்த₂ானமன்று என்று விளங்குகிறது. ஆகையால், இவ் விடத்திலுள்ள ஸ்ரீஸூக்திகளிலிருந்து கைவல்யவிஷயமான எங்களாழ் வானுடைய திருவுள்ளத்தை அறுதியிடமுடியாது; ஸ்ரீவிஷ்ணு புராண வ்யாக்₂யானத்திலேயே கைவல்யத்தைப்பற்றி எங்களாழ்வான் தம் திருவுள்ளத்தை மிகத் தெளிவாகக் காட்டியிருக்கும் இடங்களை இனிக் காட்டுவோம்.

78. "த்வத்தோ விராட் ஸ்வராட் ஸம்ராட்" [வி-பு 1-12-57] 'விராட்' எனப்படும் அவ்யக்தத்தை ஶரீரமாகக்கொண்ட அநிருத்₃த₄ மூர்த்தியும், 'ஸ்வராட்' எனப்படும் கேவலாத்மாநுப₄வம் செய்யும் முக்தனும், 'ஸம்ராட்'எனப்படும் பரமபத₃மடைந்த முக்தனும் உனக்கு ஶரீரமே] என்னுமிடத்தில் எங்களாழ்வான் "ஸம்ராட் - பரமபத₃ ப்ராப்த:; 'ஸோऽக்ஷர: பரம: ஸ்வராட்' இதி விஶேஷணாத்; ஸ்வராட்-கேவலாத்மப்ராப்த:" ['அழியாதவனாய், மேலான ஸ்வராட்டாக இருப்பவன்'என்று தைத்திரீய நாராயணவல்லியில், ப்₃ரஹ்மாநுப₄வம் செய்யும் முக்தன் மேலான ஸ்வராட்டாகச் சொல்லப்படுகையால், இங்கு பரமபத₃மடைந்த அவனே 'ஸம்ராட்' என்று சொல்லப்படு கிறான். 'ஸ்வராட்' என்று கேவலாத்மாவை அடைந்தவன் சொல்லப் படுகிறான்.] என்று வ்யாக்₂யானம் செய்திருக்கிறார். இதிலிருந்து, "கைவல்யத்தையடைந்தவனை 'ஸ்வராட்' என்றும், பரமபத₃த்தை யடைந்தவனை ஸம்ராட் (மேலான ஸ்வராட்) என்றும் அவர் திருவுள்ளம் பற்றியிருக்கிறார்" என்று விளங்குகிறது. "ஸ ஸ்வராட் ப₄வதி" [சா₂ந் 7-25-2] என்று உபநிஷத்துக்களில் 'ஸ்வராட்' என்னும் ஶப்₃த₃ம் கர்மபாரதந்த்ரியம் அற்ற முக்தனைக் குறித்து ப்ரயோகி₃க்கப் படுகிறது என்பது ப்ரஸித்₃த₄ம். ஆக, இவ்விடத்தில் எங்களாழ்வான் ஸ்ரீஸூக்தியிலிருந்து கேவலாத்மாவை அடைந்தவனை 'முக்தன்' என் றும், பரமபத₃ம் அடைந்தவனை 'மேலான முக்தன்' என்றும் அவர் திருவுள்ளம் பற்றியிருக்கிறார் என்று விளங்குகிறது.

79. ஸ்ரீவிஷ்ணுபுராணம் முதல் அம்ஶம் ஒன்பதாவது அத்₄யா யத்திலுள்ள, "தாவதா₃ர்த்திஸ் ததா₂ வாஞ்சா₂ தாவந்மோஹஸ் ததா₂ऽஸுக₂ம் | யாவந்ந யாதி ஶரணம் த்வாமஶேஷாக₄நாஶநம் ||" [வி-பு 1-9-73] [எப்போது வரையில் அந்தந்தப் ப₂லன்களுக்குத் தடையாயிருக்கும் எல்லா அநிஷ்டங்களையும் போக்கவல்ல உன்னை ஶரணமாகப் பற்றவில்லையோ, அதுவரையிலேயே (செல்வத்தை இழந்ததனால் ஏற்படும்) வருத்தம்; அதுவரையிலேயே (செல்வம் வேண்டும் என்னும்) ஆசை; அதுவரையிலேயே (ஆத்மாநுப₄வ மின்மையால் ஏற்படும்) மோஹம்; அதுவரையிலேயே (ப₄க₃வத₃நு ப₄வமின்மையால் உண்டாகும்) ஸுக₂மின்மை. (ஆர்த்தன், அர்த்தா₂ர்த்தி₂ எனப்படும் ஐஶ்வர்யார்த்தி₂கள், ஜிஜ்ஞாஸுவாகிற கைவல்யார்த்தி₂, ஜ்ஞாநி ஆகிய அனைவர்க்கும் ப்ரபத்தியே ப₂ல ஸாத₄நம் என்றபடி.)] என்ற ஶ்லோகம் ஐஶ்வர்யகைவல்யப₄க₃வச் சரணார்த்தி₂கள் மூவரையும் குறிப்பதாக நம் பூர்வாசார்யர்கள் பலர் விளக்கியுள்ளனர். இந்த ஶ்லோகத்திலிருந்தும் கைவல்யத்தை மோஹத்திற்கு எதிர்த்தட்டான ப₂லமாக எடுக்கையால், அது ஒரு வகை முக்தியே என விளங்குகிறது. ப₄க₃வத₃நுப₄வத்தை ஸுக₂ ஶப்₃த₃த்தால் குறித்திருக்கையால், ஜ்ஞானிக்குள்ள பேரின்பம் கைவல்யார்த்தி₂க்குக் கிடையாது என விளங்குகிறது. இதிலிருந்து ப₄க₃வத₃நுப₄வமுடைய பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂ன் கைவல்யநிஷ்ட₂ னாகமுடியாது என்பதும் விளங்குகிறது.

80. இனி, கேவலாத்மாநுப₄வமாகிற கைவல்யத்தைப்பற்றியும், அதற்குரிய உபாயங்களைப்பற்றியும் ஸ்ரீபராஶரமஹர்ஷி (முதலாவது அம்ஶம் 22ம் அத்தியாயத்தில்) விரிவாக விளக்கியிருக்கும் பகுதியைக் காண்போம். அதாவது :—

"யோகி₃நோ முக்திகாமஸ்ய ப்ராணாயாமாதி₃ ஸாத₄நம் |
ஸாத்₄யம் ச பரமம் ப்₃ரஹ்ம புநர் நாவர்த்ததே யத: ||
ஸாத₄நாலம்ப₃நம் ஜ்ஞாநம் முக்தயே யோகி₃நாம் ஹி யத் |
ஸ பே₄த₃: ப்ரத₂மஸ் தஸ்ய ப்₃ரஹ்மபூ₄தஸ்ய வை முநே ! ||
யுஞ்ஜத: க்லேஶமுக்த்யர்த்த₂ம் ஸாத்₄யம் யத்₃ப்₃ரஹ்ம யோகி₃ந: |
தத₃ாலம்ப₃நவிஜ்ஞாநம் த்₃விதீயோऽம்ஶோ மஹாமுநே ! ||
உப₄யோஸ்த்வவிபா₄கே₃ந ஸாத்₄யஸாத₄நயோர் ஹி யத் |
விஜ்ஞாநமத்₃வைதமயம் தத்₃பா₄கோ₃ऽந்யோ மயோதி₃த: ||
ஜ்ஞாநத்ரயஸ்ய சைதஸ்ய விஶேஷோ யோ மஹாமுநே ! |
தந்நிராகரணத்₃வாரத₃ர்ஶிதாத்மஸ்வரூபவத் ||

நிர்வ்யாபாரமநாக்₂யேயம் வ்யாப்திமாத்ரமநூபமம் ।
ஆத்மஸம்பே₃ாத₄விஷயம் ஸத்தாமாத்ரமலக்ஷணம் ।।
ப்ரஶாந்தமப₄யம் ஶுத்₃த₄ம் து₃ர்விப₄ாவ்யமஸம்ஶ்ரயம் ।
விஷ்ணோர் ஜ்ஞாநமயஸ்யோக்தம் தத்₃ஜ்ஞாநம் ப்₃ரஹ்மஸம்ஜ்ஞிதம்।।
தத்ர ஜ்ஞாநநிரோதே₄ந யோகி₃நோ யாந்தி யே லயம் ।
ஸம்ஸாரகர்ஷணோப்தௌ தே யாந்தி நிர்பீ₃ஜதாம் த்₃விஜ ! ।।''

[வி-பு 1-22-45...52]

['ஜரை, மரணம் முதலான இவ்வுலகத் துன்பங்களிலிருந்து) விடுபடு வதையே விரும்பும் கைவல்யார்த்தி₂க்கு — ப்ராணாயாமம் முதலான வற்றை அங்க₃மாகக்கொண்ட அஷ்டாங்க₃யோக₃ம் ஸாத₄ன மாகிறது; 'ப்₃ரஹ்ம' எனப்படும் ப்ரக்ருதியைக் காட்டிலும் சிறந்த 'பரப்₃ரஹ்ம' எனப்படும் ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄முள்ள ப₃த்₃த₄ஜீவனைக் காட்டிலும் சிறந்ததாகையாலே 'பரமப்₃ரஹ்ம' எனத்தக்க திரும்பி வருதலில்லாத (தனது) முக்தஸ்வரூபம் ஸாத்₄யமாகிறது. (இது பின்வரும் நாலு பகுதிகளாக ஸாதி₄க்கப்படுகிறது:—) யோக₃ ஶாஸ்த்ரத்திலிருந்து அறியத்தக்கதாய், ப்ராணாயாமம் முதலான ஸாத₄னத்தைப்பற்றியதான அறிவு முதல் பகுதி; ஷடூ₃ர்மி முதலான க்லேஶங்கள் போவதற்காக இப்படி யோக₃ம் செய்யும் இவனுச்கு ஸாத்₄யமாய், ப்ரக்ருதியினின்றும் நீங்கியதான தனது ஆத்மஸ்வ ரூபத்தைப் பற்றிய அறிவு இரண்டாவது பகுதி; முற்கூறிய ஸாத்₄ய ஸாத₄னங்களை ஸாத்₄யஸாத₄னப₄ாவ ஸம்ப₃ந்த₄த்தோடு அறிந்து, தே₃வர் மனுஷ்யர் முதலான (ஶரீரஸம்ப₃ந்த₄த்தினால் ஆத்மாவுக்கு ஏற்படும்) பே₄த₃ங்களை நீக்கித் தன் ஆத்மாவை த்₄யானிப்பது மூன்றாவது பகுதி. முற்கூறிய மூன்று வகைப்பட்ட ஜ்ஞானங்களின் வேறுபாடுகளை மறக்கையாலே தன் ஆத்மாவை ஸாக்ஷாத்கரிப்பதா யிருக்கும் அறிவு நாலாவது பகுதியாகும். (ஸாத₄னம் முதலான வற்றை நினைப்பது ஆத்மஸாக்ஷாத்காரத்திற்கு விரோதி₄யாகை யாலே, அவற்றை மறந்தால் தான் இவ்வாத்மாவலோகனம் ஏற் படும் என்று கருத்து.) (நாலாவதான இவ்வாத்ம ஸாக்ஷாத்கார நிலையில் இவன் காணும்) ஆத்மஸ்வரூபமானது, ஸாத₄நாநுஷ்ட₂ான மற்றது; ரூபம், வர்ணம் முதலானவையற்றது; (அறிவால்) எங்கும் வியாபித்திருப்பது; ஒப்பற்றது. தனது அறிவாலேயே அறியத்தக்கது. (ஷட்₃ப₄ாவவிகாரங்களில் — குறைதல், அழிதல், மாறுதல், வளர்தல், பிறத்தல் என்னும் ஐந்துமற்றதாய்) ஸத்தை யொன்றே உடையதாயிருப்பது. (ஆண், பெண் முதலான) அடை யாளங்களற்றது. (பசி முதலான) ஷடூ₃ர்மிகளற்றது. இத்தகையது

என்று நினைக்க அரியது. ஜ்ஞாநமயனன விஷ்ணுவுக்கு உருவமாய், ப்₃ரஹ்மமெனப்படும் ஜ்ஞாநஸ்வரூபமான அவ்வாத்மஸ்வரூபம் இத்தகையதாகச் சொல்லப்படுகிறது. மற்ற ஶப்₃த₃ாதி₃ விஷய அறிவுகளற்று, அந்தத் தமது ஆத்மஸ்வரூபத்தில் (அந்திம ஸ்ம்ருதிப₃லத்தாலே) எவர்கள் லயத்தை (ஸ்தூ₂ல ஸூக்ஷ்ம ஶரீர நாஶத்தை) அடைகிருர்களோ, அவர்கள் உமிநீங்கிய நெல்போலே, ஸம்ஸாரமாகிற வயலில் விதைக்கத்தகாதவர்களாகின்றனர்] என்னும் எட்டு ஶ்லோகங்கள்கொண்ட பகுதியே அது. இந்த ஶ்லோகங்களின் வ்யாக்₂யானத்தில், ஸ்ரீ பா₄ஷ்யகார ஶிஷ்யரான ஸ்ரீ விஷ்ணுசித்தரெனும் எங்களாழ்வான் இக்கைவல்யத்தின் தன்மையை மிகவும் தெளிவுபடுத்தியிருக்கிருர். எப்படியெனில்: முதல் ஶ்லோகத்தில் இவனுக்கு ஸாத்₄யமாகச் சொல்லப்பட்ட "பரமம் ப்₃ரஹ்ம" என்பதை "முக்த ஸ்வரூபம்" என்று வ்யாக்₂யானம் செய்வதன்மூலமும், மூன்ரும் ஶ்லோகத்தில் உள்ள "தத₃ாலம்ப₃நவிஜ்ஞாநம்" என்பதை "ப்ரக்ருதிவிவிக்தாத்மவிஷயம் விஶிஷ்ட ஜ்ஞாநம்" என்று விவரிப்பதன்மூலமும், ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄ம் அடியோடு நீங்கப்பெற்ற தன் முக்தாத்ம ஸ்வரூபமே இவனுக்கு ப்ராப்யம் எனக் காட்டினர். ஐந்தாம் ஶ்லோகத்தில் "தந்நிராகரண த்₃வாரத₃ர்ஶிதாத்மஸ்வரூபவத்" என்றதற்கு, "விநிஷ்பந்ந ஸமாதே₄:, இதரபராமர்ஶஸ்ய ஆத்மாவலோகநவிரோதி₄த்வாத் தந்நிராகரணம த்₃வாரம் இத்யுக்தம்" [ஸமாதி₄ நிறைவடையப்பெற்ற இவனுக்கு ஸாத₄னம் முதலியவற்றை நினைப்பது ஆத்மாநுப₄வத்திற்கு விரோதி₄யாகையால், அவற்றை மறப்பது ஆத்மாநுப₄வத்திற்கு த்₃வாரம் (காரணம்) என்று சொல்லப்பட்டது.] என்று உரையிட்டதன்மூலம், ஸாத₄னமாயிருந்த ப₄க₃வானைப்பற்றிய சிந்தனமும் ஆத்மாநுப₄வத்திற்குத் தடையாகையாலே, ஸாத்₄யத₃ஶையில் இவனுல் கைவிடப்படுகிறது என்று உணர்த்தினர். "இதரயோஸ்து யாவத்ஸ்வாபி₄லஷிதப்ராப்தி மயா யோக₃:" [ஐஶ்வர்ய கைவல்ய நிஷ்ட₂ர்களுக்குத் தம் ஸாத்₄யம் ஸித்₃தி₄க்கும் வரையில்தான் (ஸாத₄னமான) என்னேடு சேர்த்தி] என்று கீ₃தை(7-17)யில் நித்ய யுக்தஶப்₃த₃பா₄ஷ்யத்தில் பா₄ஷ்யகாரர் அருளியதை அடியொற்றிய படி. இதனுலேயன்ரே இக்கைவல்யநிஷ்ட₂ரை "விடை கொள்வார்" [முதல்திருவ 26] என்று பொய்கையாழ்வார் அருளினர். இக்கைவல்யநிஷ்ட₂னுக்கு ப்ராப்யமான இவனது (ப்ரக்ருதியினின்று நீங்கிய) ஆத்மஸ்வரூபத்தை விவரிக்கும் ஆரும் ஶ்லோகத்தில் "நிர்வ்யாபாரம்" என்னும் பத₃த்திற்கு "ஸாத₄நாநுஷ்ட₂ாந ரஹிதம்" என்று ஸாத₄நாநுஷ்ட₂ாநமாகிற செயலற்றவன் என்று

வ்யாக்₂யானம் செய்வதன்மூலம், இவன் கைவல்ய மோக்ஷத்தை அடைந்த பின்பு ப₄க்தியோக₃ம் முதலான ஸாத₄னத்தை அநுஷ்டி₂த்து ப₄க₃வத₃நுப₄வத்தைப் பெற இடமில்லை என்று காட்டினர். "முக்திகாமஸ்ய" (1) "முக்தயே" (2) "க்லேஶமுக்த்யர்த்த₂ம் யுஞ்ஜத:" (3) என்னும் பகுதிகளாலும், இவனுக்கு ப்ராப்யமான கேவலாத்மஸ்வரூபத்தை விவரிக்கும் 6, 7 ஶ்லோகங்களாலும் — "ஜராமரண மோக்ஷாய" [கீ₃தை 7-29] "பிறவித்துயரற" [திருவாய் 1-7-1] "மரணம் தோற்றம் வான் பிணி மூப்பென்று இவை மாய்த்தோம்" [திருவாய் 8-3-2] முதலானவிடங்களில் சொல்லப்பட்ட பிறப்பு, இறப்பு முதலான ஷடூ₃ர்மிகளற்றிருக்கையாகிற மோக்ஷமே இவனால் பெறப்படுவது என்று ஸ்ரீ பராஶரர் திருவுள்ளம் பற்றுவதாகக் காட்டினர் எங்களாழ்வான். அவரே "தத்ர" என்று தொடங்கும் எட்டாவது ஶ்லோகத்திற்கு அவதாரிகையாக "ஆத்மயோகி₃நாம் அந்திமப்ரத்யயோ அவஶ்யம் பா₄வ்யம்; அந்யதா₂ புநராவ்ருத்திரித்யாஹ" [தம் ஆத்மாவைப் பெறவிருப்பி யோக₃ம் செய்பவர்களுக்கு அந்திமஸ்ம்ருதி அவஶ்யம் வேண்டும்; இல்லாவிடில் மறுபடி ஸம்ஸாரத்திற்குத் திரும்பி விடுவார்கள்.] என்று அருளிச்செய்வதன்மூலம்,

"குறுகமிக உணர்வத்தொடு நோக்கி எல்லாம் விட்ட
இறுகல் இறப்பென்னும் ஞானிக்கும் அப்பயன் இல்லையேல்
சிறுக நினைவதோர் பாசமுண்டாம் பின்னும் வீடில்லை
மறுகலில் ஈசனைப் பற்றி விடாவிடில் வீடஃதே"

[திருவாய் 4-1-10]

என்று ஆழ்வார் அருளிச்செய்த ரீதியில், இந்தக் கேவலாத்மயோகி₃யான கைவல்யநிஷ்ட₂னுக்கும் அந்திமஸ்ம்ருதியிருந்தால்தான் புநராவ்ருத்தி (மறுபடியும் ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவருதல்) இல்லாத இக்கைவல்யமோக்ஷம் ஏற்படுகிறது என்று காட்டி, இவ்வெட்டாவது ஶ்லோகத்தில் 'லயம்' என்னும் ஶப்₃த₃த்திற்கு 'உபாதி₄வியோக₃ம்' என்று வ்யாக்₂யானம் செய்வதன்மூலம், இக்கைவல்யநிஷ்ட₂னுக்கு ஸூக்ஷ்ம ஶரீரமும் அடியோடு அற்றுப்போகிறதென்றும், "ஸம்ஸார கர்ஷணோப்தௌ தே யாந்தி நிர்பீ₃ஜதாம் த்₃விஜ" என்னும் பிற்பகுதிக்கு வ்யாக்₂யானமாக "க்ருஷ்யத இதி கர்ஷணம் கேதா₃ர:| ஸம்ஸார கேதா₃ரே உப்தௌ — ஸஸ்யாவாபே விதுஷவ்ரீஹிவத் அபீ₃ஜதாம் யாந்தி ||" [க்ருஷி செய்யப்படுகையாலே கர்ஷணம் என்று வயல் சொல்லப்படுகிறது; அவர்கள் — உமிநீங்கிய நெல் போலே, ஸம்ஸாரமாகிற வயலில் விதைக்கத்தகாதவர்களாகிறார்கள்.]

என்று அருளிச்செய்வதன்மூலம் இவன் ஸம்ஸாரத்தில் பிறப்பற்ற முக்தனே என்றும் தெளிவுபடுத்தினர்.

“ஏவம்ப்ரகாரம் அமலம் நித்யம் வ்யாபகம் அக்ஷயம் ।
ஸமஸ்தஹேயரஹிதம் விஷ்ணவாக்₂யம் பரமம் பத₃ம் ॥”
[வி-பு 1-22-53]

[நிர்வ்யாபாரனயிருக்கை முதலான முக்தனுக்குக் கூறிய எல்லாப் பெருமைகளையும் உடையதாய், அதற்கு மேலே (அவனுக்கு இல்லாத) நித்யஶுத்₃தி₄யையும், ஸர்வவஸ்துக்களையும் ஸ்வரூபத்தால் வியாபித்திருக்கையையும், ப்ரதிவஸ்து பூர்ணத்வத்தையும், (பாரதந்த்ர்யம் முதலிய) எல்லாத் தாழ்வுகளும் அற்றிருக்கையையும் உடையது 'விஷ்ணு' எனப்படும் பரமப்ராப்யமான ப₄க₃வத்ஸ்வரூபம்] என்று ப₄க₃வத்ஸ்வரூபத்திற்கு முற்கூறிய முக்தஸ்வரூபத்தைக் காட்டிலும் சிறப்பைத் தெரிவிக்கும் ஶ்லோகத்தில் “அஸ்ய நித்ய ஶுத்₃த₄த்வ ஸர்வாத்மத்வ பூர்ணத்வ ஹேயராஹித்யாநி ப்ரக்ருதி ப₃ந்த₄முக்தேப்₄யோ விஶேஷ:” [(முற்கூறிய) ப்ரக்ருதிப₃ந்த₄த்தினின்றும் விடுபட்டவனைக் காட்டிலும், இந்தப் பரமபுருஷனுக்கு (1) எப்போதும் ஶுத்₃த₄னயிருக்கை, (2) ஸர்வாத்மாவாயிருக்கை, (3) பூர்ணனயிருக்கை, (4) தாழ்வற்றவனயிருக்கை என்னும் நாலு பெருமைகள் உண்டு.] என்று வ்யாக்₂யானமிடுமிடத்திலும், இக்கைவல்யநிஷ்ட₂னை 'ப்ரக்ருதிப₃ந்த₄முக்தன்' [ப்ரக்ருதியாகிற ப₃ந்த₄த்தினின்றும் விடுபட்டவன்] என்றே குறிப்பிடுவது குறிக்கொள்ளத்தக்கது.

“தத்₃ ப்₃ரஹ்ம பரமம் யோகீ₃ யதோ நாவர்த்ததே புந: ।
ஶ்ரயத்யபுண்யோபரமே க்ஷீணக்லேஶோ ऽதிநிர்மலே ॥

[ப₄க₃வது₃பாஸகன், புண்யபாபங்கள் க்லேஶங்கள் முதலியவை நீங்கியவுடன், திரும்பிவருதலில்லாத அந்தப் பரப்₃ரஹ்மத்தையே அடைகிறுன்] என்னும் ப₄க₃வது₃பாஸகனைப்பற்றிய அடுத்த ஶ்லோகத்தில், “யோகீ₃—ப₄க₃வத்₃யோகீ₃ । அஸ்யாப்யந்திமப்ரத்யயப₃லோந ப₄க₃வதி லீநஸ்ய அபுநராவ்ருத்திர் த்₃ரஷ்டவ்யா” [இங்கு 'யோகீ₃' எனப்படுபவன் ப₄க₃வானை ப்ராப்யமாகப்பற்றி உபாஸிப்பவனுவான். அந்திமஸ்ம்ருதி ப₃லத்தாலே ப₄க₃வானை அடைந்த இவனுக்கும் ஸம்ஸாரத்திற்குத் திரும்பி வருதலில்லை என்பது குறிக்கொள்ளத்தக்கது.] என்று ப₄க₃வத்₃யோகி₃யை ஆத்மயோகி₃யைக் காட்டிலும் வேறுபட்டவன் என்று தெளிவாகக்காட்டி, அந்திம ஸ்ம்ருதி ப₃லத்தால் ப்ரக்ருதியினின்றும் நீங்கிய தன் ஆத்மாவையடைந்த ஆத்ம

யோகி₃யைப்போலே. அந்திமஸ்ம்ருதி ப₂லத்தால் ப₄க₃வானை அடைந்த இவனுக்கும் ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவருதல் இல்லை என்று காட்டினார். இவற்றிலிருந்து—பிள்ளான், ப₄ட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை முதலான பூர்வாசார்யர்கள் திருவுள்ளமும், எங்களாழ்வானது திருவுள்ளமும் இக்கைவல்ய விஷயத்தில் ஒருபடிப்பட்டதே என விளங்குகிறது.

81. இனி, ஸாத்விகபுராணங்களில் ஒன்றாய், நமது பூர்வாசார்யர்களால் ஆங்காங்கு எடுத்துக் கையாளப்பட்டிருப்பதான பாத்₃ம புராணத்தில் உத்தரக₂ண்ட₃த்தில் கைவல்யாநுப₄வஸ்த₂ாநம் நித்ய விபூ₄தியில் விரஜைக்கும், பரமபத₃த்திற்கும் இடையே உள்ளது என்று தெளிவாகக் காட்டப்பட்டிருப்பதைக் காண்போம். அதாவது :—

"விரஜாபரமவ்யோம்னோர் ஹ்யந்தரம் கேவலம் ஸ்ம்ருதம் |
தத் ஸ்த₂ாநமுபபே₄ாக்தவ்யமவ்யக்தப்₃ரஹ்மஸேவிநாம் ||
ஸ்வாத்மஜாநந்த₃ஸுக₂த₃ம் கேவலம் பரமம் பத₃ம் |
நி:ஶ்ரேயஸம் ச நிர்வாணம் கைவல்யம் மோக்ஷ உச்யதே ||"

[பாத்₃மபுராணம் (பூனா ஆநந்த₂ாஶ்ரமப்பதிப்பு) – உத்தரக₂ண்ட₃ம் 256-7, 8]

[விரஜாநதி₃க்கும், (பரமாத்மாவை அனுப₄விப்பவர்கள் வாழும்) பரமபத₃த்திற்கும் நடுவிலிருப்பது 'கேவலஸ்த₂ானம்' எனப்படுகிறது; 'அவ்யக்தப்₃ரஹ்மம்' எனப்படும் ஆத்மாவை அநுப₄விப்பவர்கள் அந்த ஸ்த₂ானத்திலிருந்தே அநுப₄விக்கவேண்டும். தன் ஆத்மாவை அனுப₄விப்பதினால் உண்டாகும் இன்பத்தை அளிப்பதாய், (அதனாலேயே கைவல்யார்த்தி₂களுக்குப்) பரமப்ராப்யமாயிருப்பதாயுள்ளது கேவல ஸ்த₂ானம். 'நி:ஶ்ரேயஸம்' 'நிர்வாணம்' என்னும் மோக்ஷத்தைக் குறிக்கும் பத₃ங்களால் அக்கைவல்யமோக்ஷமும் கூறப்படுகிறது.] என்று கைவல்ய ஸ்த₂ானம் பாத்₃மபுராணத்தில் தெளிவாகக் காட்டப்பட்டது. இப்பாத்₃மபுராண வசனத்தையும் திருவுள்ளத்திற் கொண்டே "முக்தாநாம் பரமா க₃தி:" என்னுமிடத்தில் ஸஹஸ்ர நாமபா₄ஷ்யத்தில், "பரமேதி விஶேஷணேந முக்தாநாமேவ கேஷாஞ்சித₃ர்வாசீநா க₃திர் க₃ம்யதே........கைவல்யலக்ஷணா........ ஸம்ஸார பரமபத₃யோர் மத்₄யே தேஷாம் ஸ்த₂ாநம் ச" ['பரமா' என்று க₃திஶப்₃த₃த்திற்கு விஶேஷணமிட்டிருக்கையாலே, முக்தர்களிலேயே சிலர்க்குத் தாழ்ந்த க₃தியான கைவல்யமோக்ஷம் உண்டென்று உணர்த்தப்படுகிறது. ஸம்ஸாரத்திற்கும் பரமபத₃த்திற்கும் இடையில் அவர்களுக்கு ஸ்த₂ானமும் சொல்லப்பட்டிருக்கிறது.]

என்று ப₄ட்டர் அருளிச்செய்தார் என்றும் தெளிவாக விளங்குகிறது. இப்பாத்₃மபுராண வசனத்தில் 'பரமவ்யோம' ஶப்₃த₃த்தால் குறிக்கப்படுவது ஸம்ஸார மண்டலத்திலுள்ள கார்யவைகுண்ட₂ம் என்று கொண்டுவிடலாமே? எனில்: பாத்₃மபுராணத்தில், "த்ரிபாத்₃விபூ₄தேர் லோகாஸ்து அஸங்க்₂யா: பரிகீர்த்திதா:" [பாத்₃மோத்தரம் 256-1] [த்ரிபாத்₃விபூ₄தியிலுள்ள உலகங்கள் கணக்கற்றவையாகச் சொல்லப்படுகின்றன] என்று தொடங்கி, த்ரிபாத்₃விபூ₄தி எனப்படுவதாய் ஶுத்₃த₄ஸத்வமயமானதான லோகத்தை வர்ணிக்கத் தொடங்கி, அதில் விரஜையை ஒட்டியிருக்கிற கைவல்ய ஸ்தா₂னத்தை முதலில் முன் எடுத்த ஶ்லோகங்களில் வர்ணித்து,

"மஹாத்மாநோ மஹாபா₄கா₃ ப₄க₃வத்பாத₃ஸேவகா: ।
தத்₃விஷ்ணோ: பரமம் தா₄ம யாந்தி ப்₃ரஹ்மஸுக₂ப்ரத₃ம் ॥"
[256-9, 10]

[ப₄க₃வானுக்குத் திருவடிக் குற்றேவல் புரியும் மஹாபா₄க்₃யஶாலிகள் ப்₃ரஹ்மாநுப₄வத்தையளிக்கும் விஷ்ணுவின் பரமபத₃த்தை அடைகிறார்கள்] என்று தொடங்கி அடுத்துள்ள பரமபத₃த்தை வர்ணித்து,

"தந்மத்₄யே நக₃ரீ தி₃வ்யா ஸாऽயோத்₄யேதி ப்ரகீர்த்திதா ।
மணிகாஞ்சநசித்ராட்₄ய ப்ராகாரைஸ் தோரணைர் வ்ருதா ॥
சதுர்த்₃வார ஸமாயுக்தா துங்க₃கோ₃புர ஸம்வ்ருதா ।
சண்ட₃ாதி₃த்₃வாரபாலைஸ்து குமுதா₃த்₃யை: ஸுரக்ஷிதா ॥......
தந்மத்₄யேऽஷ்டத₃ளம் பத்₃மம் உத₃யார்க்கஸமப்ரப₄ம் ।
தந்மத்₄யே கர்ணிகாயாம் து ஸாவித்ர்யாம் ஶுப₄த₃ர்ஶநே! ॥
ஈஶ்வர்யா ஸஹ தே₃வேஶஸ் தத்ராஸீந: பர: புமாந் ॥"
[256-11, 12, 13...25, 26]

[அழகியவளே! அந்தப் பரமபத₃த்தின் நடுவில் 'அயோத்₄யா' என்று ஶ்ருதிகளில் சொல்லப்படும் தி₃வ்யநக₃ரம், பொன்னும் மணியும் நிறைந்த ப்ராகாரங்களாலும், மதிள்களாலும், தோரணங்களாலும் சூழப்பெற்றதாய், நாலு வாசல்களுடையதாய், உயர்ந்த கோ₃புரங்களால் சூழப்பெற்றதாய், சண்ட₃ன் முதலான வாயில்காப்போர்களாலும், குமுத₃ன் முதலான கோயில்காப்பவர்களாலும் ரக்ஷிக்கப்படுவதாக விளங்கிறது...அதன் நடுவில் எட்டு இதழ்கொண்ட, உத₃ய ஸூர்யன்போல் ஒளியுள்ள தாமரையுள்ளது; அதன் நடுவில் கா₃யத்ரீ ஸ்வரூபமான கர்ணிகையில், ஈஶ்வரியான லக்ஷ்மியோடுகூட நித்ய ஸூரிநாத₂னை பரமபுருஷன் எழுந்தருளியிருக்கிறான்.] என்று பரவாஸுதே₃வன் எழுந்தருளியிருக்கும் திருமாமணி மண்டபம்வரை அனைத்தையும் அவ்வத்தியாயத்தில் விரிவாக வர்ணித்திருப்பதை

அறிந்தவர்களிடம் இவ்விதண்டாவாதம் விலை செல்லாது. இவ்வாதத்தைத் தவிர்ப்பதற்காகவே பட்டர் "விரஜா பரமபதயோர் மத்யே" என்று அருளிச்செய்யாமல், "ஸம்ஸார பரமபதயோர் மத்யே" என்று ஸம்ஸாரமண்டலம் முழுவதையும் கீழெல்லையாக அருளிச்செய்தார். ஆக, கைவல்யஸ்தானம் நித்யவிபூதியிலேயே விரஜைக்கு அக்கரையில் இருக்கிறது என்று அசைக்கமுடியாமல் தேறிற்று.

## 7. ஆகம ஸ்வாரஸ்யம்

82. இனி, பாஞ்சராத்ரவைகாநஸரூபமான இரு வைஷ்ணவாகம ஸ்வாரஸ்யத்தைக் காண்போம். அதில், ஆகமப்ராமாண்யத்தில் ஆளவந்தாராலும், பாஞ்சராத்ராதிகரணம் முதலானவிடங்களில் எம்பெருமானாராலும் நிலைநிறுத்தப்பெற்ற ப்ராமாண்யமிகுதியையுடையதாய், "பஞ்சராத்ரம் ஸர்வத்ரைவ ப்ரமாணம்" [ர-ஸ்த 2-14] [பாஞ்சராத்ராகமம் முழுவதுமே ப்ரமாணம்] என்று ஸ்ரீ பராசர பட்டரால் போற்றப்பெற்றதாய், நூறு ஸம்ஹிதைகளுக்கு மேற்பட்டதான பாஞ்சராத்ரத்தில் கைவல்யவிஷயம் வந்திருக்குமிடங்களை அறிந்தவரையில் ஆராய்வோம். இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் ஸகலசாஸ்த்ரங்களும் வல்லவராய் எழுந்தருளியிருந்த வித்வத்வரிஷ்டரான புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமியின் கார்யாதிகரணவாதம் என்னும் க்ரந்தத்தில் (மூன்றாவது தரங்கம்) 269-வது பாராவில் 'ப்ருஹத்ப்ரஹ்ம ஸம்ஹிதா' என்னும் பாஞ்சராத்ர ஸம்ஹிதையின் முதல்பாதம் இரண்டாம் அத்யாயத்திலிருந்து பின்வரும் சில ச்லோகங்கள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. (இந்த ஸம்ஹிதை நம்மிடமில்லாமையால், ப்ராமாணிகக்ரந்தத்திலிருந்து எடுத்துக்காட்டுகிறோம்.)

"ஸம்ப்ராப்யாசார்யசரணம் உபாயமவகத்ய ச |
மதாஜ்ஞாகாரிணோ பூத்வா ஹ்யாஜீவம் ப்ராக்ருதாம் தநும் ||
ஹித்வா முக்தா யே பவந்தி த்விவிதாஸ்தே ப்ரகீர்த்திதா: |
கேவலா: ஸேவகாச்சேதி கேவலாஸ் தநுவர்ஜிதா: ||
ஸேவகா த்விவிதா ஜ்ஞேயா: கிங்கரா ரூபஸேவகா: |
கைங்கர்யம் கந்தமால்யாதிமார்ஜநாலேபவர்த்தநம் ||
பக்ஷ்மபாதாஸஹப்ரேம வீக்ஷணம் ரூபஸேவநம் |
ஏவம்முக்தா மஹாதேவி! மம லோகே விசந்தி ஹி ||...
மாமேவ சரணம் யாதா: ஸர்வபாவேந ஸிந்துஜே ! |
அதீதா துஸ்தராம் மாயாம் கேவலாஸ் ஸேவகா ஹி வா ||
பஹவோ மத்பதம் யாதா: ஸேவகா: ஸேவகா மம |
கமநாகமநை ர் முக்தா: கேவலாஸ்து பவந்தி ஹி ||"

[ஓர் ஆசார்யன் திருவடியை அடைந்து, மோக்ஷோபாயத்தை உணர்ந்து, ஶாஸ்த்ரத்தில் நான் ஆணையிட்டபடி இவ்வுலகில் இருக்கும் வரையில் நடந்து, கடைசியில் ஸ்தூ₂ல ஸூக்ஷ்மரூபமான ப்ராக்ருத தே₃ஹத்தைவிட்டு முக்தியை அடைபவர்கள் 'கேவலர்கள்' என்றும் 'ஸேவகர்கள்' என்றும் இரண்டுவிதமாகச் சொல்லப்படுகிறார்கள். கேவலர்கள் ஶரீரம் அற்றவர்களாயிருப்பவர்கள். ஸேவகர்கள் கைங்கர்யம் செய்பவர்கள் என்றும், ஸ்வரூப ரூபங்களை ஸேவிப்பவர்கள் என்றும் இரண்டுவிதமாக அறியத்தக்கவர்கள். வாசனை த்₃ரவ்யங்கள், மாலை முதலானவற்றை ஸமர்ப்பிப்பது, கோயிலைப் பெருக்குவது, மெழுகுவது, புகையிடுவது முதலானவை கைங்கர்யமாகும். ஸ்வரூப ரூபங்களை ஸேவிப்பதாவது—கண்கொட்டுவதையும் பொறுக்காமல் பெருங்காதலோடு எம்பெருமானைக் கண்டு அநுப₄விப்பதாகும். பெருந் தே₃வியே! இப்படிக் கேவலர்களாகவும், ஸேவகர்களாகவும் முக்தி அடைந்தவர்கள் என்னுடைய அப்ராக்ருதலோகத்தைஅடைகிறார்கள்... பாற்கடலில் உதி₃த்தவளே! மோக்ஷம் அடைவதற்கு என்னையே எல்லா விதத்திலும் உபாயமாகக் கொண்டவர்களாய், என்னுடைய கடக்கவரி தான ப்ரக்ருதியான மாயையைக் கடந்தவர்களாய்ப் பலர் எனதுஅப்ரா க்ருத லோகத்தைக் கேவலர்களாகவோ ஸேவகர்களாகவோ வந்து அடைந்திருக்கிறார்கள். ஸேவகர்கள் (எனக்குக் கைங்கர்யம் செய்வதன் மூலமோ என்னைக் கண்டுகளிப்பதன்மூலமோ) என்னை ஸேவிப்பவர்கள். கேவலர்களோவெனில்: ஸம்ஸாரத்திற்குப் போவது, வருவது இல்லாத ப்ரக்ருதிப₃ந்த₄முக்தர்களாயிருக்கிறார்களித்தனை. ('எனது ஸேவை அவர்களுக்குக் கிடையாது' என்று கருத்து.)] இந்த ஶ்லோகங்களி லிருந்து—கைவல்யநிஷ்ட₂ர்களும் அப்ராக்ருத லோகத்தை அடைந்த வர்கள் என்றும், ப₄க₃வத்ஸேவை அற்றவர்கள் என்றும் விளங்குகை யால் கைவல்யம் நித்யமுக்தியே என்றும், ப₄க₃வத₃நுப₄வமுடைய பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂ன் கைவல்யநிஷ்ட₂னாயிருக்கமுடியாது என் றும் விளங்குகிறது. ப₄க₃வானை அடையும் பரமமுக்தர்களிலும் ப₄க்தி முதலான உபாயாந்தரங்களைக்கொண்டு அவனை அடைபவர்கள் எம் பெருமானுடைய ஸ்வரூப ரூப ஸேவைகளிலே ஊன்றியிருப்பார்கள் என்றும், ஶரணாக₃தியாலே அவனை அடைந்தவர்கள் அவனுடைய கைங்கர்யத்திலே ஊன்றியிருப்பார்கள் என்றும் இதிலிருந்து விளங்கு கிறது. "ஸாத்₄யா ருஷயஶ்சயே" [பு-ஸூ] "யத்ர ருஷய: ப்ரத₂மஜா யே புராணா:" [ ] "வைகுந்தத் தமரரும் முனிவரும்" [திருவாய் 10-9-9] முதலான தென்மொழி வடமொழி வேத₃ வாக்யங்களும், வைகுந்தத்தில் கு₃ணாநுப₄வத்தை ப்ரதா₄னமாகக்

கொண்டவர்களும், கைங்கர்யத்தை ப்ரதா₄னமாகக்கொண்டவர்களுமாக இருவகை முக்தர்கள் இருப்பதாக ஓதியிருப்பது இங்கு குறிக்கொள்ளத்தக்கது.

83. பாத்₃மஸம்ஹிதையில் ஜ்ஞாநபாத₃த்தில் எட்டாம் அத்₄யாயத்தில் "முச்யந்தே மத் ப்ரஸாதே₃ந ஜந்மநோ ऽஸ்மாத்₃விக₃ர்ஹிதாத் | பே₄தே₃ந சாப்யபே₄தே₃ந மிஶ்ரேண ச சதுர்முக₂! ||" [8-28] [சதுர்முக₂னே! மிகவும் இகழத்தக்க இந்த ப்ராக்ருதமான பிறப்பிலிருந்து என் அருளாலே முக்தி அடைபவர்கள் பே₄த₃முக்தி, அபே₄த₃முக்தி, மிஶ்ர (இரண்டும் கலந்த) முக்தி என்று மூவகைப்பட்ட மோக்ஷங்களை அடைகிறார்கள்.] என்று தொடங்கி மூவகைப்பட்ட மோக்ஷம் சொல்லப்பட்டுள்ளது. அதில் கைங்கர்யம் செய்வது பே₄த₃முக்தி என்றும், "அவனைப்போலே நம் ஆத்மாவும் இருப்பதாகையாலே, அவனைக் காட்டிலும் பே₄த₃ம் அற்ற நம் ஆத்மாவையே அநுப₄விப்போம்" என்று 'அவன் தன்னொடு ஒன்றாக அமரத்துணியவல்ல' [திருவாய் 3-5-9] கைவல்யநிஷ்ட₂ர்களின் அநுப₄வம் அபே₄த₃முக்தி என்றும், கு₃ணாநுப₄வமும் கைங்கர்யமும் கலந்தது மிஶ்ரமுக்தி என்றும் கொள்வது பொருந்தும். இதிலிருந்தும், முக்தியில் பே₄த₃ம் உள்ளது என்னும் பாஞ்சராத்ர ஸம்ஹிதையின் கொள்கை விளங்குகிறது.

"மோக்ஷம் ஸாலோக்ய ஸாரூப்யம் ப்ரார்த்த₂யே ந கதா₃சந |
இச்சா₂ம்யஹம் மஹாபா₃ஹோ ! ஸாயுஜ்யம் தவ ஸுவ்ரத ! ||"

[ஸாலோக்யம், ஸாரூப்யம் என்னும் மோக்ஷவகைகளை நான் ஒருபோதும் வேண்டேன். அலம்புரிந்த நெடுந்தடக்கையனே ! ஶரணாக₃த ரக்ஷணத்தை உறுதியான வ்ரதமாகக் கொண்டவனே ! உன்னோடு பரமஸாம்யத்தை அடைவதாகிற ஸாயுஜ்ய மோக்ஷத்தையே நான் விரும்புகிறேன்.]

"லோகேஷு விஷ்ணோர் நிவஸந்தி கேசித்
ஸமீபம் ருச்ச₂ந்தி ச கேசித₃ந்யே |
அந்யே து ரூபம் ஸத்₃ருஶம் ப₄ஜந்தே
ஸாயுஜ்யமந்யே ஸ து மோக்ஷ உக்த: ||"

[விஷ்ணுவினுடைய லோகங்களில் சிலர் வஸிக்கிறார்கள்; (இது ஸாலோக்யம்). மற்றும் சிலர் அவனுக்கு அருகில் இருக்கிறார்கள்; (இது ஸாமீப்யம்). மற்றும் சிலர் அவனையொத்த உருவை அடைகிறார்கள்; (இது ஸாரூப்யம்). வேறு சிலர் அவனையொத்தவர்களாகிறார்கள்; (இது ஸாயுஜ்யம்). இதுவே முக்₂யமோக்ஷம்.] என்னும் இரண்டு ஶ்லோகங்கள் ஸ்ரீவேதா₃ந்த தே₃ஶிகரால் ந்யாயஸித்₃தா₄ஞ்

ஜனத்தில் ஜீவபரிச்சே₂த₃த்தில் ப்ரமாணமாக எடுக்கப்பட்டுள்ளன. முற்கூறிய ப்ரமாணங்களைக்கொண்டு பார்க்கும்போது இந்த ஶ்லோகங்களில் கூறப்படும் ஸாலோக்யமோக்ஷம் கைவல்யமோக்ஷமே என்றும், ஸாமீப்யமோக்ஷம் ப₄க₃வத₃நுப₄வத்தை முக்₂யமாகக்கொண்டிருக்கையாலே ரூபம் தேவையில்லாத ஸாத₄நாந்தரநிஷ்ட₂ர்கள் பெறும் மோக்ஷமே என்றும். ஸாரூப்யமோக்ஷம் ஸ்வார்த்த₂ கைங்கர்யத்தை விரும்பி ந்யாஸமெனப்படும் ப்ரபத்தியை ஸாத்₄யோபாயமாகக் கொண்டு அநுஷ்டி₂க்கும் ஸ்வக₃தஸ்வீகாரநிஷ்ட₂ர்கள் பெறும் மோக்ஷமே என்றும், ஸாயுஜ்யமோக்ஷம் பரக₃தஸ்வீகாரநிஷ்ட₂ர்கள் பெறும் பரார்த்த₂ாநுப₄வகைங்கர்யரூபமோக்ஷமே என்றும் விளங்குகிறது.

84. இனி, வைக₂ாநஸ ஆக₃மத்தில் கைவல்யத்தைப்பற்றிய கொள்கையைக் காண்போம். "ஸமாராத₄ந விஶேஷாத் சதுர்வித₄ பத₃ாவாப்தி:" [ப₄க₃வத₃ாராத₄னமாயிருக்கும் ஒவ்வொரு மோக்ஷோபாயத்தால் நாலுவிதமான மோக்ஷங்களை அடைகிறான்.] என்று வைக₂ாநஸாக₃மத்தைச் சேர்ந்த மரீசிஸம்ஹிதையில் சொல்லப்பட்டது. வைக₂ாநஸர்களின் உபநிஷத்தான பாரமாத்மிகோபநிஷத்தில் ஐந்தாம் அநுவாகத்தின் பத்தாவது மந்திரத்தில் "பதே₃ பதே₃" என்று இந்த மோக்ஷநிலைகள் உணர்த்தப்படுவதாக வைக₂ாநஸர்களால் 'வேதா₃ந்ததே₃ஶிகர்' என்று கொண்டாடப்படும் ஸ்ரீநிவாஸ தீ₃க்ஷிதரால் பா₄ஷ்யம் இடப்பட்டது. அவர் தமது பா₄ஷ்யத்தில்,

"ஆமோத₃ஶ்ச ப்ரமோத₃ஶ்ச ஸம்மோத₃ஸ்தத₃நந்தரம் |
வைகுண்ட₂மிதி விஜ்ஞேயா: தேऽந்யோந்யம் உபரி ஸ்தி₂தா: ||
அத:பரம் சதுர்த்த₂: ஸ்யாத் லோக: பரமபா₄ஸ்வர: |
வாஸுதே₃வஸ்ய ஸுமஹத் தத் தீ₃ப்தம் அஜராம்ருதம் ||
த்₃வாத₃ஶாவரணோபேதம் பூர்ணசந்த்₃ராயுத ப்ரப₄ம் |
ஸர்வதேஜோமயம் பா₄ஸ்வத் அநிர்த்தே₃ஶ்யம் ஸுரைரபி ||
ஆநந்த₃ம் நாம தல்லோகம் பரமாநந்த₃மத்₃பு₄தம் ||"

[ஆமோத₃ம், ப்ரமோத₃ம், ஸம்மோத₃ம், வைகுண்ட₂ம் என்னும் நான்கு லோகங்களும் ஒன்றன்மேல் ஒன்று இருப்பவை; முதல் மூன்று லோகங்களுக்குமேல் நான்காவதாயிருக்கும் வைகுண்ட₂ம் பேரொளி வீசுவது. வாஸுதே₃வனின் பெருங்கோயிலாய் உள்ளது. சோதி மயமாய், ஜராமரணங்கள் அற்றதாய் உள்ளது. பனிரண்டு ஆவரணங்களோடு சேர்ந்தது. பதினாயிரம் பூர்ணசந்த்₃ரர்கள்போல் ஒளியுள்ளது. எல்லாத் தேஜஸ்ஸுக்களும் நிறைந்து ப்ரகாஶிப்பதாய், தே₃வர்களாலும் அறியவொண்ணாதது. ஆநந்த₃ம் என்னும் அந்த உலகம்

பரமாநந்த₃மயமாய் அற்புதமாயிருப்பது.] என்னும் வைகா₂நஸ ஆக₃ம ப்ரமாணங்களை எடுத்துள்ளார். ஐந்தாம் அநுவாகத்தில்முதல் மந்திரத்தின் பா₄ஷ்யத்தின் கடைசியில். "ஆமோத₃ப்ராப்தி: கைவல்யஸ்ய ஆமோத₃ ஏவ | தத்ராபி ஸ்வாநுப₄வ ஏவ | சா₂ந்தோ₃க்₃யே-யதா₂க்ரதுரஸ்மிந் லோகே புருஷோ ப₄வதி, ததே₂த: ப்ரேத்ய ப₄வதி இதி ஶ்ருதே:| தம் யதா₂ யதா₂ உபாஸதே ததை₂வ ப₄வதி இதி||" [கைவல்யமோக்ஷமாவது ஆமோத₃ ஸ்தா₂னத்தை அடைதல். அவனுக்கு 'ஆமோத₃ம்' எனப்படும் ஆத்மாநுப₄வமாத்திரமே உள்ளது. சா₂ந்தோ₃க்₃ய உபநிஷத்தில் "மனிதன் எப்படி இவ்வுலகில் உபாஸிக்கிறனே அப்படியே மறு உலகில் அடைகிறன்" என்று ஓதப்பட்டுள்ளதன்றே. எப்படி உபாஸிக்கிறனே அப்படியே ஆகிறன் என்று கருத்து ] என்று வைகா₂நஸ ஆக₃மங்களில் கைவல்யத்தைப்பற்றிய கொள்கையை விளக்கியிருக்கிறர். இவற்றிலிருந்து ஆமோத₃ ஸ்தா₂னம் எனப்படும் கைவல்யம் நித்யவிபூ₄தியிலேயே உள்ளது என்றும், வைகுண்ட₂த்தைக் காட்டிலும் கீழ்ப்பட்டது என்றும், அதில் ஆத்மாநுப₄வமாத்திரம் உண்டேயொழிய பரமாத்மாநுப₄வம் இல்லை என்றும் விளங்குகையால் கைவல்யம் நித்யமுக்தியே என்றும், ப்₃ரஹ்மாநுப₄வமுடைய பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂ன் கைவல்யநிஷ்ட₂னுகமுடியாது என்றும் வைகா₂நஸ ஆக₃மத்திலிருந்தும் தேறுகிறது.

## 8. ஸூத்ர ஸ்ரீபா₄ஷ்ய ஸ்வாரஸ்யம்

85. இனி, ப்₃ரஹ்மஸூத்ரத்திலும், அதன் வ்யாக்₂யானமாக ஸ்ரீபா₄ஷ்யகாரரால் அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீபா₄ஷ்ய தீ₃பஸாரங்களிலும் முற்கூறிய விஷயங்களே வலியுறுத்தப்பட்டிருப்பதைக் காண்போம். ஸ்ரீபா₄ஷ்யத்தின் தொடக்கத்திலுள்ள இரண்டாவது ஶ்லோகத்தில் ப்₃ரஹ்மஸூத்ரத்தை அம்ருதமாக உருவகப்படுத்தும்போது "ஸம்ஸாராக்₃நி விதீ₃பந வ்யபக₃த ப்ராணாத்ம ஸஞ்ஜீவநீம்" [ஸம்ஸாரமாகிற நெருப்பு கொழுந்துவிட்டு எரிவதனுல் ப்ராணனை (பரமாத்மாவை) அடியோடு இழந்த ஆத்மாக்களை நன்ருக உயிர்ப்பிப்பது.] என்று அவ்வம்ருதத்திற்கு விஶேஷணமிடுகிறர் ஸ்ரீபா₄ஷ்யகாரர். 'வ்யபக₃த ப்ராணாத்ம ஜீவநீம்' என்று விஶேஷணமிட்டாலே போதுமாயிருக்க 'ஸஞ்ஜீவநீம்' என்று விஶேஷணம் இட்டதன் கருத்தை "ஸஞ்ஜீவநீம் இதி — ஜீவநம் — உஜ்ஜீவநம் — ஸம்ஸாரோந்மூலநம் | ஸம் இதி கைவல்ய வ்யாவ்ருத்தி: ||" ['ஸஞ்ஜீவநீம்' என்றதின் கருத்து பின்வருமாறு:—ஜீவநம் என்பது உஜ்ஜீவநத்தை, அதாவது ஸம்ஸாரம் அடியோடு கழிவதைக் குறிக்கும். கைவல்யத்

திலும் ஸம்ஸாரம் அடியோடு கழிவது உள்ளதாகையாலே அதை வேறுபடுத்தி, பரமாத்மாநுப₄வமும் உடையதான ப₄க₃வத் ப்ராப்தி யைக் காட்டுவதற்காக 'ஸம்' என்னும் உபஸர்க்க₃த்தை இடுகிறார்.] என்று ஶ்ருதப்ரகாஶிகாப₄ட்டர் வ்யாக்₂யானம் இட்டிருப்பதிலிருந்து கைவல்யம், ஸம்ஸாரம் அடியோடு கழியப்பெற்ற இடமே என்றும், அதில் ப₄க₃வத₃நுப₄வம் கிடையாது என்றும் ஸ்ரீபா₄ஷ்யகாரர் திருவுள்ளம் என விளங்குகிறது. இதிலிருந்தும், கைவல்யம் நித்ய முக்தியே என்றும், ப₄க₃வத₃நுப₄வமுடைய பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂ன் கைவல்யநிஷ்ட₂னாக முடியாது என்றும் தேறுகிறது.

86. பூ₄மாதி₄கரணத்தில் (1-3-2) "நாமாதி₃ஷ்வாஶாபர்யந்-தேஷ்வசேதநேஷு புருஷார்த்த₂ பூ₄யஸ்தயா பூர்வ பூர்வ மதிக்ராந் தேஷ்வப்யுத்தரோத்தரேஷு-உபதி₃ஷ்டேஷு தத்தத்₃வேதி₃ந: ஆசார் யேணாதிவாதி₃த்வம் நோக்தம்; ப்ராணஶப்₃த₃ நிர்த்தி₃ஷ்ட ப்ரத்ய-க₃ாத்மயாதா₂த்ம்யவேதி₃நஸ்து புருஷார்த்த₂பூ₄யஸ்த்வாதிஶயம் மந்வா நேந 'ஸ வா ஏஷ ஏவம் பஶ்யந்நேவம் மந்வாந ஏவம் விஜாநந் அதிவாதீ₃ ப₄வதி' [சா₂ந் 7-15-4] இதி அதிக்ராந்தவஸ்துவாதி₃த்வ முக்தம் । அதோऽத்ரைவாத்மோபதே₃ஶஸ் ஸமாப்த இதி மத்வா ஶிஷ்யோ பூ₄யோ ந பப்ரச்ச₂ । ஆசார்யஸ்து இத₃மபி ஸாதிஶயம் மத்வா நிரதிஶய புருஷார்த்த₂பூ₄தம் ஸத்யஶப்₃த₃ாபி₄தே₄யம் பரம் ப்₃ரஹ்ம 'ஏஷ து வா அதிவத₃தி யஸ்ஸத்யேநாதிவத₃தி' [சா₂ந் 7-16] இதி ஸ்வயமேவோபதி₃தே₃ஶ । ஶிஷ்யோऽபி பரமபுருஷார்த்த₂ரூபே பரஸ்மிந் ப்₃ரஹ்மண்யுபக்ஷிப்தே தத்ஸ்வரூப தது₃பாஸநயாதா₂த்ம்ய பு₃பு₄த்ஸயா 'ஸோऽஹம் ப₄க₃வஸ்ஸத்யேநாதிவதா₃நி' [சா₂ந் 7-16] இதி ப்ரார்த்த₂யாமாஸ ॥" ['நாமம் தொடக்கமாக ஆஶாபர்யந்த மான அசேதநங்கள் முன்னதைக் காட்டிலும் பின்னது சிறந்த புருஷார்த்த₂ம்' என்று ஆசார்யன் உபதே₃ஶித்தபோதிலும் அவற்றில் அவர் அதிவாதி₃த்வத்தைக் கூறவில்லை. ப்ராண ஶப்₃த₃த்தால் சொல்லப்படும் ப்ரத்யகா₃த்மாவை உள்ளபடி உபாஸிப்பவனுக்கோ வெனில் முற்கூறியவற்றைக் காட்டிலும் மிகச்சிறந்த புருஷார்த்த₂ம் கிடைக்கிறது என்று கருதி, 'இவ்வண்ணமாக ஆத்மாவைக்கண்டு, நினைத்து அறிந்தவன் அதிவாதி₃யாகிறான்' [சா₂ந் 7-15-4] என்று முற்கூறிய அசேதனப்பொருள்களைக் கடந்திருக்கும் ஆத்மவஸ்துவை உபாஸிக்கின்றமை கூறப்பட்டது. ஆகையால் இவ்விடத்திலேயே ஆத்மோபதே₃ஶம் முடிவடைந்தது என்று நினைத்து ஶிஷ்யன் மறுபடி கேள்வி கேட்கவில்லை. ஆசார்யனோவெனில், இந்த ஆத்மப்ராப்தியும் அளவுபட்டது என்று எண்ணி, தனக்கு மேலில்லாத புருஷார்த்த₂மா

யிருப்பதாய் 'ஸத்ய' ஶப்₃த₃த்தினால் சொல்லப்படுவதான பரம் பொருளை 'ஸத்யத்தைக்கொண்டு அதிவாத₃ம் செய்பவனே உண்மையில் அதிவாத₃ம் செய்பவனாவான்' [சா₂ந் 7-16] என்று தானே உபதே₃ஶித்தார். ஶிஷ்யனும் பரமபுருஷார்த்த₂ரூபமான பரம் பொருளைப்பற்றி உபதே₃ஶிக்கப்பெற்றவுடன் அதன் ஸ்வரூபம், உபாஸநம் ஆகியவற்றை உள்ளபடி அறிய விரும்பி 'ப₄க₃வானே! நான் ஸத்யமாகிற ப்₃ரஹ்மத்தைக்கொண்டே அதிவாத₃ம் செய்யக் கடவேன்' [7-16] என்று ப்ரார்த்தி₂த்தான்.] என்று ஸ்ரீப₄ாஷ்ய காரர் அருளியுள்ளார். இந்த ஸ்ரீஸூக்தியிலிருந்து 'நாமம்' தொடக்கமாக 'ஆஶா' பர்யந்தமாக உள்ள அசேதநோபாஸநங்கள் நிலையற்ற ப₂லன்களை அளிப்பவையாகவும், இவ்வசேதனப் பொருள்களைக் கடந்திருக்கும் கேவல ஜீவனின் உபாஸநம் நிலையான ப₂லனை அளிப்பதாகவும் இருப்பதாலேயே அவற்றிற்குச் சொல்லாத அதிவாதி₃த்வத்தைக் கேவல ஜீவோபாஸகனுக்கு ஆசார்யன் அருளினான் என்றும், 'ஸத்ய' ஶப்₃த₃த்தால் சொல்லப்பட்ட ப்₃ரஹ்மத்தை உபாஸிப்பவனுக்கு முற்கூறிய கேவலஜீவோபாஸகனின் ப₂லனைப் போலே அளவுபட்ட ப₂லனாயிராமல் ப்₃ரஹ்மாநுப₄வமாகிற அளவற்ற ப₂லன் கிடைக்கையாலே, அவனுடைய அதிவாதி₃த்வம் முற்கூறியவனின் அதிவாதி₃த்வத்தைக் காட்டிலும் சிறந்தது என்று ஆசாரியன் கூறினான் என்றும் விளங்குகிறது. இதிலிருந்து அதிவாதி₃யான கேவலஜீவோபாஸகனின் ப₂லமான கைவல்யம் நித்ய முக்தியே என்றும், 'ஸத்யம்' எனப்படும் ப்₃ரஹ்மத்தை உபாஸிப்பவனுக்குள்ள ப்₃ரஹ்மாநுப₄வமாகிற ப₂லன் அவனுக்குக் கிடையாதென்றும் விளங்குகிறது. "விஶேஷஞ்ச த₃ர்ஶயதி" [ப்₃ர-ஸூ 4-3-15] என்னும் ஸூத்ரத்தின் ப₄ாஷ்யத்தில் "அசிந்மிஶ்ரம் கேவலம் வா சித்₃ வஸ்து......ய உபாஸதே ந தாந் நயதி" [அசித்தோடு கலந்த ஜீவனையோ, அசித் ஸம்ப₃ந்த₄மற்ற கேவலஜீவனையோ உபாஸிப்பவனை அர்ச்சிராதி₃க₃ணங்கள் அழைத்துச் செல்வதில்லை.] என்று கேவலஜீவோபாஸகனுக்கு, ப்₃ரஹ்மநிஷ்ட₂னுக்கும், பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்ட₂னுக்கும் உள்ள அர்ச்சிராதி₃க₃தி இல்லை என்று காட்டுவதன் மூலமும் இந்தச் சா₂ந்தோ₃க்₃ய ப்ரகரணத்தில் 'ப்ராணன்' எனப்படும் ஜீவனை உபாஸிப்பவனாகப் படிக்கப்படுபவனே கைவல்ய நிஷ்ட₂ன் என்றும், இவனுக்கு அர்ச்சிராதி₃க₃தியும், ப்₃ரஹ்மாநுப₄வமும் இல்லை என்றும் மிகத் தெளிவாகக் காட்டினார் ஸ்ரீப₄ாஷ்யகாரர். ஆகையால், பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னைக் கைவல்யநிஷ்ட₂னாகக் கொண்டு அவனுக்கு அர்ச்சிராதி₃க₃தியைக் கூறும் பக்ஷம் ஸ்ரீப₄ாஷ்யகாரரால் ஆத₃ரிக்கப்பட்டதல்ல என விளங்குகிறது.

கைவல்யநிஷ்ட₂னையே குறிக்கும் 'கேவல' ஶப்₃த₃த்தை இந்த சா₂ந்தோ₃க்₃ய வாக்யத்தில் 'ப்ராணன்' எனப்படும் ஜீவனை உபாஸிப்பவனைக் குறித்தே ஸ்ரீ பா₄ஷ்யகாரர் ப்ரயோகி₃த்திருப்பதும், பஞ்சாக்₃நிவித்₃யா நிஷ்ட₂னைக் குறித்து 'கேவல' ஶப்₃த₃த்தை எங்குமே ப்ரயோகி₃யாமல் இருப்பதும் இதை வலியுறுத்துகிறது.

87. "வித்₃யாகர்மணோரிதி து ப்ரக்ருதத்வாத்" [ப்₃ர-ஸூ 3-1-17] என்னும் ஸூத்ரத்தின் பா₄ஷ்யத்தில் ப்₃ரஹ்ம வித்₃யைகளில் ஒன்றை அநுஷ்டி₂த்து ப்₃ரஹ்மத்தை அடைபவர்களுக்கு தே₃வயாநமான அர்ச்சிராதி₃க₃தியையும், புண்யகர்மங்களை அநுஷ்டி₂த்து, அஸ்தி₂ரமான ஐஶ்வர்ய ப₂லன்களைப் பெறுபவர்களுக்கு பித்ருயாணமான தூ₄மாதி₃க₃தியையும் அஸாதா₄ரணமாக வேத₃ங்களில் ஓதப்பட்டவையாக ஸ்ரீபா₄ஷ்யகாரர் நிஷ்கர்ஷிக்கையால் கேவல ஜீவோபாஸகனுக்கு இவ்விரண்டு க₃திகளும் இல்லை என்று தெளிவாக விளங்குகிறது. கீ₃தை (8-23) பா₄ஷ்யத்தில் ஜ்ஞாநிகளுக்கு அர்ச்சிராதி₃க₃தியையும், புண்யகர்மங்களை அநுஷ்டி₂க்கும் ஐஶ்வர்யார்த்தி₂களுக்கு தூ₄மாதி₃க₃தியையும் பிரித்து அருளிச்செய்து, ப்ரகரணஸித்₃த₄னை ஜிஜ்ஞாஸுவாகிற கைவல்யநிஷ்ட₂னுக்கு இவ்விரண்டு க₃திகளும் இல்லை என்று பா₄ஷ்யகாரர் உணர்த்தியதும் இந்த ஸூத்ரத்தைத் திருவுள்ளத்தில் கொண்டே என எளிதில் உணரலாம். ஆகையால், பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னே கைவல்யநிஷ்ட₂ன் என்னும் பக்ஷம் ஸ்ரீபா₄ஷ்யகாரர் உகந்ததன்று என்று இதிலிருந்தும் தேறுகிறது.

88. "தே₃ஹயோகா₃த்₃ வா ஸோऽபி" [ப்₃ர-ஸூ 3-2-5] என்னும் ஸூத்ரத்தின் ஸ்ரீபா₄ஷ்யத்தில் "ஸோऽபி-திரோபா₄வ: தே₃ஹயோக₃த்₃வாரேண வா ப₄வதி, ஸூக்ஷ்மாசிச்சு₂க்தியோக₃த்₃வாரேண வா; ஸ்ருஷ்டிகாலே தே₃ஹாவஸ்தே₂ந அசித்₃வஸ்துநா ஸம்யோகா₃த் ப₄வதி; ப்ரளயகாலே நாமரூபவிபா₄கா₃நர்ஹாதி ஸூக்ஷ்மாசித்₃வஸ்துயோகா₃த் । அதோऽநபி₄வ்யக்த ஸ்வரூபத்வாத்..." [பரமபுருஷனுடைய ஸங்கல்பத்தால் ஜீவனுக்கு ஏற்படும் அந்த ஸ்வரூப மறைவு — ஸ்ருஷ்டி காலத்தில் தே₃ஹமாகிற அசேதனப்பொருளோடு (எம்பெருமானால் உண்டாக்கப்பட்ட) சேர்த்தியாலே விளைகிறது; (எம்பெருமான் அனைத்தையும் லயமடையச்செய்யும்) ப்ரளய காலத்தில் இந்த ஸ்தூ₂லமான தே₃ஹம் இல்லாவிடிலும், இதற்குக் காரணமாய், நாமரூபப் பிரிவற்றதாகையாலே அதிஸூக்ஷ்மமான மூலப்ரக்ருதி எனும் அசேதநப்பொருளின் சேர்த்தியாலே உண்டா

கிறது. இப்படி ஸ்ருஷ்டி காலத்திலும், ப்ரளயகாலத்திலும் (இரு வகைப்பட்ட அசேதநப்பொருளின் தொடர்பு ஏற்பட்டு இந்த லீலா விபூ₄தியிலிருக்கும் வரையில்) ஜீவன் மறைக்கப்பட்ட ஸ்வரூபத்தை உடையவனுயிருக்கையால்......)] என்று அருளிச்செய்யப்பட்டது. இந்த ஸூத்ரத்திலிருந்தும், பா₄ஷ்யத்திலிருந்தும் இந்த லீலா விபூ₄தியிலிருக்கும் வரையில் ஸ்தூ₂லமாகவோ, ஸூக்ஷ்மமாகவோ ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄ம் தவிர்க்கவொண்ணுதாகையாலே ப்ரக்ருதியி லிருந்து நீங்கிய ஆத்மஸ்வரூபத்தின் பூர்ணுநுப₄வமாகிற கைவல்ய மோக்ஷத்தை ஜீவன் ப்ரக்ருதிமண்ட₃லத்துக்குள் இருந்துகொண்டு அடையமுடியாது. ஆகையால் நித்யவிபூ₄தியிலேயே இந்த மோக்ஷ ஸ்த₂ானம் உள்ளதென்றும், இது நித்ய முக்தியே என்றும் விளங்குகிறது.

89. இது நித்ய முக்தி என்று கொள்வதில் ஸ்ரீபா₄ஷ்ய ஸ்ரீஸூக்திகள் சில முரண்படுமே என்னும் ஆக்ஷேபத்திற்குப் பரிஹாரம் உரைக்கின்றோம். அத்த்ரதி₄கரணத்தில் "விஶேஷணுச்ச" [ப்₃ர.ஸூ 1-2-12] என்னும் ஸூத்ரத்தின் பா₄ஷ்யத்தில் புறமதத்தவர்கள் மோக்ஷத்தைப் பலவாறு கூறுகிருர்கள் என்று விளக்கிவிட்டு, "த்ரய்யந்தநிஷ்ணுதாஸ்து—நிகி₂லஜக₃தே₃ககாரணஸ்ய அஶேஷஹேய ப்ரத்யநீகாநந்தஜ்ஞாநாநந்தை₃க ஸ்வரூபஸ்ய ஸ்வாபா₄விகாநவதி₄ காதிஶயாஸங்க்₂யேய கல்யாண கு₃ணுகரஸ்ய ஸகலேதர விலக்ஷணஸ்ய ஸர்வாத்மபூ₄தஸ்ய பரஸ்ய ப்₃ரஹ்மணஶ்ஶரீரதயா ப்ரகாரபூ₄தஸ்ய அநுகூலாபரிச்சி₂ந்ந ஜ்ஞாநஸ்வரூபஸ்ய பரமாத்மாநுப₄வைகரஸஸ்ய ஜீவஸ்ய அநாதி₃கர்மரூபாவித்₃யாதிரோஹித ஸ்வரூபஸ்ய அவித்₃யோச் சே₂த₃ பூர்வக ஸ்வாபா₄விக பரமாத்மாநுப₄வமேவ மோக்ஷம் ஆசக்ஷதே ||" [வேத₃ாந்தங்களின் முடிவு கண்டவர்களோவெனில்— எல்லாவுலகிற்கும் ஒரே காரணமாய், எல்லாத் தாழ்வுகளுக்கும் எதிர்த் தட்டானவனுய், அளவற்ற ஜ்ஞாநாநந்த₃ங்களை ஸ்வரூபமாக உடைய வனுய், இயல்வானவையாய் எல்லையற்ற மேன்மையை உடையவை யான கணக்கற்ற கல்யாணகு₃ணங்களுக்கு இருப்பிடமானவனுய், தன்னையொழிந்த பொருள்கள் அனைத்திலும் சிறப்புற்றவனுய், அனை வர்க்கும் ஆத்மாவாயிருப்பவனுன பரப்₃ரஹ்மத்திற்கு ஶரீரமாய், ப்ரகாரமாயிருப்பவனுய், அநுகூலமான அளவற்ற ஜ்ஞாநத்தை ஸ்வரூபமாகக்கொண்டவனுய், பரமாத்மாவை அநுப₄விப்பதையே இயல்வாகக் கொண்டவனுன ஜீவனுக்கு, ஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டிருக்கும் அநாதி₃கர்மரூபமான அவித்₃யையின் அழிவை முன்னிட்டுக்கொண்டு இயல்பான பரமாத்மாநுப₄வம் ஏற்படுவதையே மோக்ஷம் என்று கூறுகிருர்கள்.] என்று பரமாத்மாநுப₄வமே மோக்ஷம் என்று வேத₃ாந்தங்களின் முடிவு கண்டவர்களின் ஸித்₃தா₄ந்தமாக ஸ்ரீ பா₄ஷ்யகாரர் அருளியுள்ளார்.

வாக்யாந்வயாதி₄கரணத்தில் [1-4-6] ''அம்ருதத்வஸ்ய பரமபுருஷ வேத₃நை கோபாயதயா ப்ரதிபாத₃நாத்'' [மோக்ஷமானது பரமபுருஷனை உபாஸிப்பதையே உபாயமாகக்கொண்டதென்று வேத₃ம் ஓதுகையால்] என்று தொடங்கி, ''ஆத்மஸ்வரூப யாதா₂த்ம்ய ஜ்ஞாநம் அவ்வுபாஸனத்திற்கு அங்க₃மாகுமேயொழிய மோக்ஷத்திற்கு நேர் உபாயமாகாது'' என்று அருளியுள்ளார். இதிலிருந்து, ஜீவாத்மாநுப₄வ ரூபமான கைவல்யம் மோக்ஷமன்று என்று ஸ்ரீபா₄ஷ்யகாரர் திருவுள்ளம்பற்றியிருப்பதாக விளங்குகிறதே—என்பது அவ்வாக்ஷேபம். இதற்குப் பரிஹாரம் பின்வருமாறு — பரமாத்மாநுப₄வமே முக்₂ய மோக்ஷமாகும். அணுவாகிற ஜீவன் தன்னைத்தான் அநுப₄விப்பதாகிற கைவல்யமோக்ஷம் 'சிற்றின்பம்' [திருவாய் 4-9-10] என்று ஆழ்வார்களால் இகழப்பட்ட தாழ்ந்த மோக்ஷமேயாகையாலே அமுக்₂ய மோக்ஷமேயாகும். இங்கு எடுத்த ஸ்ரீபா₄ஷ்ய ஸ்ரீஸூக்திகளில் வேதா₃ந்தங்களின் முடிவு கண்ட த்ரய்யந்தநிஷ்ணாதர்கள் திருவுள்ளம் பற்றிய முக்₂ய மோக்ஷத்தைப் பற்றியே ஸ்ரீபா₄ஷ்யகாரர் பேசியிருக்கிறாராகையாலே, இதுகொண்டு கீ₃தா பா₄ஷ்யாதி₃களில் அவரே தெளிவாக முக்தி என்று காட்டியிருக்கும் அமுக்₂ய மோக்ஷமான கைவல்ய மோக்ஷத்தை இல்லைசெய்ய முடியாது. முற்கூறிய காரணங்களால் இந்த லீலாவிபூ₄தியில் அநுப₄விக்கப்படும் ஐஶ்வர்யமாக இதைக்கொள்ள முடியாமலிருக்கையால், இதை மோக்ஷத்தின் ஒரு வகையாகவும், தாழ்ந்த மோக்ஷமாகவும், அமுக்₂யமோக்ஷமாகவும் முற்கூறிய ஶ்ருதி, ஸ்ம்ருதி, இதிஹாஸ, புராண, ஆக₃மாதி₃ வாக்யங்களைக்கொண்டு நிர்ணயிக்கத் தட்டில்லை.

90. ப்₃ரஹ்மஸூத்ரத்தில் கார்யாதி₄கரணமும் அதன் ஸ்ரீபா₄ஷ்யமும், தீ₃பஸாரங்களும் தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யாதாக்களின் பக்ஷத்திற்கே பொருந்தியுள்ளன என்று நிரூபிக்கப்படுகிறது இனி. இக் கார்யாதி₄கரணம் (4-3-5) இரண்டு பூர்வபக்ஷங்களும் ஒரு ஸித்₃தா₄ந்தமும் கொண்டது. அர்ச்சிராதி₃க₃தியிலே ஆதிவாஹிகக₃ணங்கள் அழைத்துச்செல்வது கார்யமான ஹிரண்யக₃ர்ப்ப₄னை உபாஸிப்பவர்களையா ? அல்லது ஜக₃த்காரணமான பரப்₃ரஹ்மத்தை உபாஸிப்பவர்களையா ? அல்லது பரப்₃ரஹ்மோபாஸகர்கள், தம் ஆத்மாவையே ப்₃ரஹ்மாத்மகமாக உபாஸிப்பவர்கள் ஆகிய இருவகைப்பட்டவர்களையுமா ? என்று கேள்வி எழுந்தவளவில், கார்யமான ஹிரண்யக₃ர்ப்ப₄னை உபாஸிப்பவர்களையே ஆதிவாஹிகர்கள் அர்ச்சிராதி₃க₃தியில் அழைத்துச்செல்கிறார்கள் என்று பா₃த₃ரி என்பவர் கருதினார். ஜைமிநி

மஹரிஷியோவெனில், பரமாத்மோபாஸகர்களையே அர்ச்சிராதிகதியில் ஆதிவாஹிகர்கள் அழைத்துச் செல்கிறார்கள் என்று கருதினார். இவ்விரண்டு கருத்துக்களையும் பூர்வபக்ஷமாகக்கொண்டு, "அப்ரதீ-காலம்பநாந்நயதீதி பாதராயண உபயதா ச தோஷாத் தத்க்ரதுஶ்ச" (4-3-14) "விஶேஷஞ்ச தர்ஶயதி" (4-3-15) என்னும் இரு ஸூத்ரங்களில் தம் ஸித்தாந்தத்தை நிலைநாட்டினார் பாதராயணரான வேதவ்யாஸர். இவற்றில் முதல் ஸூத்ரத்தில், "(1) ப்ரஹ்மோபாஸகர்கள். (2) ப்ரஹ்மாத்மகமாகத் தம் ஆத்மாவை உபாஸிப்பவர்கள் ஆகிய இருவகைப்பட்டவர்களுக்கு அர்ச்சிராதிகதி உண்டு" என்று பாதராயணர் ஸித்தாந்தம் செய்கிறார். இவர்களை 'அப்ரதீகாலம்பநர்கள்' என்று குறிக்கிறார். "அங்கம் ப்ரதீகோऽவயவ:" [அமரகோஶம் 2-6-70] என்கிற நிகண்டுவின்படி, 'ப்ரதீக' ஶப்தம் அவயவத்தைக் குறிக்கும். 'ஆலம்பந' ஶப்தம் உபாஸனத்தைக் குறிக்கும். 'ப்ரதீகாலம்பந' ஶப்தம் ப்ரஹ்மத்தின் அவயவமான சேதநாசேதநங்களில் ஒன்றை ப்ராப்யமாக உபாஸிப்பவர்களைக் குறிக்கும். இவர்கள் பின்வருமாறு ஆறுவகைப் படுவர்:—(1) பூமாதிகரண விஷயவாக்யத்தில் எடுக்கப்பட்ட நாமம் தொடக்கமாக ஆஶாபர்யந்தமாக உள்ள அசேதநமொன்றை ப்ராப்யமாக உபாஸிப்பவர்கள். (2) அந்த வாக்யத்திலுள்ள ப்ராணன் எனப்படும் கேவலாத்மாவை ப்ராப்யமாக உபாஸிப்பவர்கள். (3) அசித்தோடு சேர்ந்த ஆத்மாவை ப்ராப்யமாக உபாஸிப்பவர்கள். (4), (5), (6) முற்கூறிய அசேதநத்தையும், கேவலாத்மாவையும், அசித்தோடு சேர்ந்த ஆத்மாவையும் 'ப்ரஹ்மம்' என்னும் எண்ணத்தை ஏறிட்டு உபாஸிப்பவர்கள். (4, 5, 6) உபாஸகர்கள் ப்ரஹ்மமல்லாததை ப்ரஹ்மமாக நினைத்து உபாஸிக்கிறார்களாகையாலே, அவர்களுக்கு அஸ்திரமாய் மிகவும் அற்பமான பலன்களே கிடைக்கும். முதல் உபாஸகனான அசேதநத்தை உபாஸிப்பவனுக்கும். மூன்றாமவனான அசித்ஸம்ஸ்ருஷ்ட ஜீவோபாஸகனுக்கும் அசேதநம் அஸ்திரமாய், அல்பமாய் இருக்கையாலே அஸ்திரமாய், அல்பமான பலன்களே கிடைக்கும், இரண்டாவது வகை உபாஸகர்கள் நித்யமான கேவலாத்மாவை உபாஸிக்கையாலே நித்யமான பலன் கிடைத்தபோதிலும், அணுவான தம் ஆத்மாவை ப்ராப்யமாக உபாஸிக்கையாலே, ப்ரஹ்மாநுபவத்தைக் காட்டிலும் அல்பமான கேவலாத்மாநுபவமே கிடைக்கும். இப்படி ப்ரஹ்மத்தின் அவயவமான சேதநாசேதநங்களை உபாஸிப்பவர்களுக்கு அற்பமான பலன்களே கிடைக்கையால், அவர்களுக்கு ப்ரஹ்மாநுபவத்தைப் பலனாகக் கொண்டதாக உபநிஷத்துக்களில் ஓதப்படும் அர்ச்சிராதிகதி கிடையாதென்று பாதராயணரால் இந்த அதிகரணத்தில் முடிவு

கட்டப்பட்டது. இனி, அர்ச்சிராதி₃க₃தி உடையவர்கள் யாரென்னில்: சா₂ந்தோ₃க்₃யம் 5-10-1ல் குறிப்பிடப்பட்ட பஞ்சாக்₃நிவித்₃யா நிஷ்ட₂னை ஆத்மோபாஸகனும், ப்₃ரஹ்மோபாஸகனும் அர்ச்சிராதி₃க₃தியை உடையவர்கள் என்றும் இவ்வதி₄கரணத்தில் முடிவு கட்டப்பட்டது. இங்கு கூறப்பட்ட பஞ்சாக்₃நிவித்₃யா நிஷ்ட₂னுக்கு "ஸ ஏநாந் ப்₃ரஹ்ம க₃மயதி'' [சா₂ந் 4-15-5] என்று ப்₃ரஹ்மாநுப₄வம் ஓதப்படுவதால், தத்க்ரதுந்யாயத்தாலே உபாஸித்தபடியே ப₂லன் கிடைக்க வேண்டுமாகையால் இவன் கேவலாத்மாவை ப்ராப்யமாக உபாஸிப்பவனன்று, ப்₃ரஹ்மாத்மகமாகத் தன் ஆத்மாவை உபாஸிப்பவனே என்று விளங்குகிறது—என்னும் விஷயத்தை 'தத்க்ரதுஶ்ச' [4-3-14] என்னும் ஸூத்ரப்பகுதியாலே பா₃த₃ராயணர் விளக்குகிருர் என்று ஸ்ரீபா₄ஷ்யத்தில் அருளிச்செய்யப்பட்டது. இதிலிருந்து ஸூத்ரகாரரும், பா₄ஷ்யகாரரும் ப்₃ரஹ்மாநுப₄வமும், அர்ச்சிராதி₃க₃தியுமுடைய பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னை இவை இரண்டும் அற்ற கைவல்யநிஷ்ட₂னைக் காட்டிலும் வேறுபட்டவனுகவே கருதியிருக்கிருர்கள் என்று விளங்குகிறது. "நாமாதி₃ ப்ராணபர்யந்த ப்ரதீகாலம்ப₃நாநாம் தூப₄யவித₄ஶ்ருதிஸித்₃தே₄பாஸநாப₄ாவாத் அசிந்மிஶ்ரோபாஸநே தத்க்ரதுந்யாயாச்ச அர்ச்சிராதி₃நா க₃திர் ப்₃ரஹ்ம ப்ராப்திஶ்ச ந வித்₃யதே'' [நாமம் முதலாக ப்ராணன் ஈருகவுள்ள ப்ரதீகமான (ப்₃ரஹ்மாவயவமான) சேதநாசேதநங்களை உபாஸிப்பவர்களுக்கு, ஶ்ருதியில் சொல்லப்பட்ட ப்₃ரஹ்மோபாஸநமும், ப்₃ரஹ்மாத்மக ஸ்வாத்மோபாஸநமுமாகிற இருவகைப்பட்ட உபாஸனமும் இல்லாமையாலும், அசித்தோடு கலந்த ஆத்மாவை உபாஸிப்பதில் 'உபாஸித்தபடியே ப₂லன் கிடைக்கும்' என்னும் தத்க்ரதுந்யாயத்தால் அசித்தோடு கலந்த ஆத்மாநுப₄வமே கிடைக்கவேண்டுகையாலும், அர்ச்சிராதி₃க₃தியும், ப்₃ரஹ்மாநுப₄வமும் கிடையாது] என்று இந்த ஸூத்ரபா₄ஷ்யத்தின் கடைசியில் ஸ்ரீபா₄ஷ்யகாரர் அருளிச்செய்தார். இதிலிருந்து, 'ப்ராணன்' எனப்படும் ஜீவனை உபாஸிப்பவன்—அசித்தோடு கலந்த ஜீவனை உபாஸிப்பவனைக் காட்டிலும் வேறுபட்டவன் என விளங்குகிறது. ஆக, ப்₃ரஹ்மாத்மகமாகத் தன் ஆத்மாவை உபாஸிக்கும் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னைக் காட்டிலும் வேறுபட்டவனுய், அசித்தோடு கலந்த தன் ஆத்மாவை உபாஸிக்குமவனைக் காட்டிலும் வேறுபட்டவனுக இங்கு எடுக்கப்படும் 'ப்ராணன்' எனப்படும் ஜீவனை உபாஸிப்பவன் கைவல்யநிஷ்ட₂னுகவே இருந்து தீரவேண்டும். இவனுக்கு அர்ச்சிராதி₃க₃தியும், ப்₃ரஹ்மாநுப₄வமும் கிடையாது என்று பா₄ஷ்யகாரர் முக்தகண்ட₂மாக இங்கு அருளிச்செய்திருப்பது குறிக்கொள்ளத்தக்கது. "விரோ

ஷுஞ்ச தூ₃ர்ஶயதி'' [ப்₃ர-ஸூ 4-3-15] என்னும் அடுத்த ஸூத்ரத்தின் ப₄ாஷ்யத்திலும், ''அசிந்மிஶ்ரம் கேவலம் வா சித்₃வஸ்து..... ய உபாஸதே ந தாந் நயதி'' [அசித்தோடு கலந்த ஜீவனையோ, அசித் ஸம்ப₃ந்த₄மற்ற கேவல ஜீவனையோ உபாஸிப்பவனை அர்ச்சிராதி₃ கு₃ணங்கள் அழைத்துச் செல்வதில்லை.] என்று இவ்விஷயத்தை வலியுறுத்தினர் ஸ்ரீப₄ாஷ்யகாரர். இவ்வதி₄கரணத்தின் ஸ்ரீப₄ாஷ்யத்தில் கைவல்யநிஷ்ட₂னையே குறிக்கும் கேவல ஶப்₃த₃த்தை 'ப்ராணன்' எனப்படும் ஜீவனை உபாஸிப்பவனைக் குறித்தே ஸ்ரீப₄ாஷ்யகாரர் இங்கு ப்ரயோகி₃த்திருப்பதும், பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னைக்குறித்து 'கேவல' ஶப்₃த₃த்தை எங்குமே ப்ரயோகி₃யாதிருப்பதும், கைவல்யநிஷ்ட₂ன் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னைக் காட்டிலும் வேறுபட்ட 'ப்ராணன்' எனப்படும் ஜீவோபாஸகனே என்று மிகத் தெளிவாகக் காட்டுகிறது.

91. கார்யாதி₄கரண தீ₃பஸாரங்களிலும் இவ்விஷயம் வலியுறுத்தப்படுகிறது. முதல் ஸித்₃தா₄ந்த ஸூத்ரத்தின் (4 3-14) வேதா₃ந்த ஸாரத்தில் ''உப₄யேऽபி ஹி பரிபூர்ணம் ப்₃ரஹ்மோபாஸதே முக₂பே₄தே₃ந—ஸ்வாத்ம ஶரீரகம் ப்₃ரஹ்ம கேசந, ப்₃ரஹ்மாத்மக ஸ்வாத்மாநமிதரே—இதி'' [பரமபுருஷநிஷ்ட₂னும், ப்₃ரஹ்மாத்மக ஸ்வாத்மோபாஸகனை பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னுமாகிய இருவரும் ப்₃ரஹ்மத்தைப் பரிபூர்ணமாக (ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும்) உபாஸிக்கிறார்கள்; உபாஸிக்கும் முறையிலேயே வாசி. அதாவது:— பரமபுருஷநிஷ்ட₂ன் தன் ஆத்மாவை ஶரீரமாகக்கொண்ட ப்₃ரஹ்மத்தை ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும் உபாஸிக்கிறான். பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂ன் ப்₃ரஹ்மத்தை அந்தர்யாமியாகக்கொண்ட தன் ஆத்மாவை ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும் உபாஸிக்கிறான் என்னுமிவ்வளவே வாசி.] என்று பரமபுருஷநிஷ்ட₂னுக்கும், பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னுக்கும் உபாஸிக்கும் முறையில் சிறிது வாசி இருந்தாலும், பரமபுருஷனே ப்ராப்யமாகவும் ஆகிறான் என்று மிகத் தெளிவாகக் காட்டினர் ஸ்ரீப₄ாஷ்யகாரர். அன்றிக்கே, ''பரிபூர்ணம் ப்₃ரஹ்ம உபாஸதே'' என்றது ஸகல கல்யாணகு₃ண விஶிஷ்டமான ப்₃ரஹ்மத்தை ப்ராப்யமாக விரும்பி உபாஸிக்கிறான் என்றும் கொள்ளலாம். பரமபுருஷாநுப₄வத்தின் வாஸனையும் இல்லாதவனாக ஆழ்வார்களாலும், நாம் முன்னெடுத்த பற்பல ப்ரமாணங்களிலும் காட்டப்படும் கைவல்யநிஷ்ட₂ன் இப்பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னாயிருக்க இடமே இல்லை என்பது இந்த ஸார ஸ்ரீஸூக்தியிலிருந்தே மிகத் தெளிவாக விளங்குகிறது.

92. ப்ரதீகாலம்ப₃நர்களைக் காட்டும்போது ஸ்ரீ பா₄ஷ்யத்திற்கும், வேதா₃ந்த தீ₃பத்திற்கும் சிறிது முரண்பாடு இருப்பதுபோல் மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது தோன்றக்கூடும். உண்மையில் முரண்பாடு இல்லை என்று நிருபிக்கப்படுகிறது இனி. ''அசிந்மிஶ்ரம், கேவலம் வா சித்₃வஸ்து ப்₃ரஹ்மத்₃ருஷ்ட்யா தத்₃வியோகே₃ந ச ய உபாஸதே. ந தாந் நயதி'' [அசித்தோடு கலந்த ஆத்மாவையோ, கேவலாத்மாவையோ, ப்₃ரஹ்ம த்₃ருஷ்டியோடோ அல்லது ப்₃ரஹ்ம த்₃ருஷ்டியில்லாமலோ எவர்கள் உபாஸிக்கிறார்களோ, அவர்களை ஆதிவாஹிகர்கள் அர்ச்சிராதி₃கதியில் அழைத்துச்செல்வதில்லை.] என்பது (4-3-15) ஸ்ரீபா₄ஷ்யம். ''ப்ரதீகாலம்பா₃ஸ்து—அசிந்மிஶ்ரம், கேவலம் அசித்₃வஸ்து ச 'ஸிம்ஹோ தே₃வத₃த்த:' இதிவத் ப்₃ரஹ்மத்₃ருஷ்ட்யா ஸ்வரூபேண வா தத்₃வஸ்து ய உபாஸதே, தே'' [ப்ரதீகாலம்ப₃னர்கள் யாரெனில்—அசித்தோடு கலந்த ஜீவனையும், அசிந்மாத்ரத்தையும், 'தே₃வத₃த்தன் சிங்கமாயிருப்பவன்' என்பதுபோலே 'இவ்வஸ்துவே ப்₃ரஹ்மம்' என்னும் எண்ணத்தோடோ, அவ்வெண்ணமில்லாமல் உள்ளபடியேயோ எவர்கள் உபாஸிக்கிறார்களோ அவர்கள்.] என்பது (4-3-14) வேதா₃ந்ததீ₃பம். இந்த ஸ்ரீபா₄ஷ்ய ஸ்ரீஸூக்திகளில் பாரா 90ல் எடுக்கப்பட்ட ஆறு வகைப்பட்ட ப்ரதீகோபாஸகர்களில் அசிந்மாத்ரத்தை ப்₃ரஹ்ம த்₃ருஷ்டியோடோ, இல்லாமலோ உபாஸிக்கும் இருவகைப்பட்ட ப்ரதீகோபாஸகர்கள் எடுக்கப்படவில்லை. வேதா₃ந்த தீ₃பத்திலோ வெனில் கேவலாத்மாவை ப்₃ரஹ்மத்₃ருஷ்டியோடோ, இல்லாமலோ உபாஸிக்கும் இருவகைப்பட்ட ப்ரதீகோபாஸகர்கள் எடுக்கப்படவில்லை. ஓரிடத்தில் மாத்திரம் எடுக்கப்பட்டவர்களை மற்றவிடத்திலும் உபலக்ஷணமுறையில் கொண்டுவிட்டால் மேலெழுந்தவாரியாகத் தோன்றும் இம்முரண்பாடு தீர்ந்துவிடும். ஆக, ப்ரதீகோபாஸகர்கள் ஆறுவகைப்பட்டவர்களாகத் தேறுகிறார்கள். சிலர் இப்படிக் கொள்ளாமல் முற்கூறிய ஸ்ரீபா₄ஷ்ய ஸ்ரீஸூக்தியில் ''கேவலம் வாऽசித்₃வஸ்து'' என்று பாட₂ம்கொண்டு வேதா₃ந்த தீ₃பத்தில் சொல்லப்பட்ட நாலுவகைப்பட்டவர்களே ஸ்ரீபா₄ஷ்யத்திலும் ப்ரதீகோபாஸகர்களாகக் காட்டப்படுவதாகக்கொண்டார்கள். இது ஸ்ரீபா₄ஷ்யத்தின் முன்பின் ஸ்ரீஸூக்திகளுக்குப் பொருந்தாது. (4-3-14) ஸ்ரீபா₄ஷ்யத்தின் கடைசியிலுள்ள (பாரா 90ல் எடுக்கப்பட்ட) வாக்யத்தில் 'ப்ராணன்' எனப்படும் கேவலாத்மாவை உபாஸிப்பவனை அசித்தோடு கலந்த ஆத்மாவை உபாஸிப்பவனைக் காட்டிலும் வேறானவனாகவும், ப்ரதீகோபாஸகனாகவும் தெளிவாகக் காட்டியிருக்கையாலும், (4-3-15) ஸ்ரீபா₄ஷ்யத்திலும் ''நாமாதி₃

ப்ராணபர்யந்த ப்ரதீகம் உபாஸீநாநாம்'' என்று 'ப்ராணன்' எனப் படும் கேவலாத்மாவை உபாஸிப்பவனையும் ப்ரதீகோபாஸகனாக எடுத்திருக்கையாலும், அப்ரதீகாலம்ப₃னனான (ப்ரதீகோபாஸகனைக் காட்டிலும் வேறுபட்டவனான) பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னை இந்த வாக்யத்தின் கடைசியில் குறிக்கும்போது ''ஆத்மாநஞ்ச ப்ரக்ருதி வியுக்தம் - ப்₃ரஹ்மாத்மகம் உபாஸீநாநாம்'' என்று கேவலாத்மோபாஸகனைக் காட்டிலும் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னுக்கு வாசி ப்₃ரஹ்மாத்மகமாகத் தன் ஆத்மாவை உபாஸிப்பதே என்று விளக்கியிருக்கையாலும், இடையில் ப்ரதீகோபாஸகர்களைக்காட்டும் ப்ரக்ருதமான ஸ்ரீஸூக்தியில் ''கேவலம் வா சித்₃வஸ்து'' என்று கேவலாத்மோபாஸகனைக் காட்டுவதாகவே கொள்ளவேண்டும். ஆகையால், ஸ்ரீபா₄ஷ்யத்திலும், தீ₃பத்திலும் ஒன்றில் சொல்லாத இருவகைப் பட்ட ப்ரதீகோபாஸகர்களை மற்றொன்றில் உபலக்ஷணமுறையில் காட்டுவதாகக் கொள்வதே உசிதம். அன்றிக்கே, ஸ்ரீபா₄ஷ்யத்தில் 'கேவலம் வா சித்₃வஸ்து' என்பதை 'கேவலம் வாऽசித்₃வஸ்து' என்று ஆவ்ருத்திசெய்துகொண்டு முன் ஸூத்ரபா₄ஷ்யத்தில் எடுக்கப்பட்ட ஆறுவகைப்பட்ட ப்ரதீகோபாஸகர்களையும் நேரேயே காட்டுவதாகவும் கொள்ளலாம். எப்படிக்கொண்டாலும், கேவலாத்மோபாஸகனான கைவல்யநிஷ்ட₂ன் ப்ரதீகோபாஸகனே என்பதையும், அசித்தோடு கலந்த ஆத்மாவை உபாஸிப்பவனையும், ப்₃ரஹ்மாத்மகமாகத் தன் ஆத்மாவை உபாஸிக்கும் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னையும் காட்டிலும் அவன் வேறுபட்டவனே என்பதையும், அவனுக்கு அர்ச்சிராதி₃க₃தி இல்லை என்பதையும் ஸ்ரீபா₄ஷ்யகாரர் இங்கு கல்வெட்டாகக் காட்டியிருப்பதை எவராலும் மறுக்கவொண்ணாது.

93. இப்படிக் கைவல்யநிஷ்ட₂னுக்கு அர்ச்சிராதி₃க₃தி இல்லையானால், அவன் எந்த க₃தியாலே செல்கிறான் என்னும் கேள்வி எழுகிறது. அவனுக்குரிய க₃தி ஶாஸ்த்ரங்களில் எங்குமே காட்டப்படவில்லையாகையால், ''யேந கேநாபி க₃ச்ச₂தி'' (ஏதோ ஒருவழியில் செல்லுகிறான்) என்று ஸ்ரீவேதா₃ந்ததே₃ஶிகர் ந்யாயஸித்₃தா₄ஞ்ஜனத்தில் ஜீவபரிச்சே₂த₃த்தில் கைவல்ய விசாரப்ரகரணத்தில் அருளிச்செய்தார். புண்யகர்மங்களைச் செய்தவர்களுக்கு தூ₄மாதி₃மார்க்க₃மும், ப்₃ரஹ்மநிஷ்ட₂ர்களுக்கு அர்ச்சிராதி₃மார்க்க₃மும் உபனிஷத்துக்கள், கீ₃தை, ப்₃ரஹ்மஸூத்ரம் முதலான ஶாஸ்த்ரங்களில் விவரிக்கப்பட்டிருக்கும்போது, இவனுக்குரிய க₃தி ஏன் ஶாஸ்த்ரங்களில் விவரிக்கப்படவில்லை ? என்னும் கேள்வி எழுகிறது. இதற்கு பதிலுரைக்

கிறேம் இனி. ''மாலிருஞ்சோலை நெறிபட அதுவே நினைவது நலமே'' [ திருவாய் 2-10-6 ] என்கிறபடியே மாலிருஞ்சோலை யாத்ரை, ப₃த₃ரி யாத்ரை. திருவேங்கட யாத்ரை முதலான யாத்ரைகளுக்குச் செல்கிறவர்களுக்குப் போரும்வழியும் உத்₃தே₃ஶ்யமாயிருக்கையாலே, அந்த யாத்ரை செல்வதற்கு உத்₃தே₃ஶித்த காலந்தொடங்கிச் செல்லும் வரையிலும் யாத்ரையில் செல்லும் வழியைச் சிந்தித்துக் கொண்டேயிருப்பார்கள். அதுபோலே ஸ்வர்க்க₃ம் செல்பவர்களுக்கு வழியாயிருக்கும் தூ₄மாதி₃ மார்க்க₃ம் அவர்களுக்கு உத்₃தே₃ஶ்ய மாகையாலே அதையும், மோக்ஷம் செல்பவர்களுக்கு வழியாயிருக்கும் அர்ச்சிராதி₃மார்க்க₃ம் அவர்களுக்கு உத்₃தே₃ஶ்யமாகையாலே அதையும், அவரவர்கள் சிந்திப்பதற்காக அம்மார்க்க₃ங்களை ஶாஸ்த்ரம் விதி₄த்தது. கேவலாத்மோபாஸகனுக்குத் தன் ஆத்மாவைத் தவிர மற்ற எதுவுமே அவ்வாத்மாநுப₄வத்திற்குத் தடையாயிருக்கையால், அவன் க₃தி சிந்தனத்தை விரும்புவதில்லை என்னும் காரணத்தாலேயே அவனுக்குரிய க₃தியை ஶாஸ்த்ரம் எங்குமே விவரிக்கவில்லை என்று கண்டுகொள்வது.

94. 'கைவல்யநிஷ்ட₂னுக்கு அர்ச்சிராதி₃க₃தியைக் காட்டிலும் வேறான க₃தியுண்டு' என்று பூர்வாசார்யர்கள் எங்காவது தெரிவித்திருக்கிறார்களா? எனில்: கீ₃தை (8-23. 24) தாத்பர்யசந்த்₃ரிகையில், ''அந்யாமபி க₃திம் ப்ராஞ்ச: ப்ரதீசீம் ப்ரத்யபாத₃யந்'' [(அர்ச்சிராதி₃க₃திக்கு) நேர்மாறான வேறொரு க₃தியை முன்னோர்கள் தெரிவித்தார்கள்] என்று ஸ்ரீவேதா₃ந்ததே₃ஶிகர் தமக்கு முன்னிருந்த பல ஆசார்யர்கள், '' சூழ்விசும்பு '' [10-9] திருவாய்மொழியின்படி தோரணம் நிரைத்தெங்கும் தொழுபவரும், தூபநல்மலர்மழை பொழிபவரும், இருப்பிடம் வகுப்பவரும், கைந்நிரை காட்டுபவரும், கீதங்கள் பாடுபவரும், வேதநல்வாயவரும், காளங்கள் வலம்புரி கலந்தெங்கும் இசைப்பவரும், வாழ்த்துபவரும், தோத்திரம் சொல்லுபவரும், முறைமுறை எதிர்கொள்பவரும், வியப்பவரும், பாதங்கள் கழுவுபவரும், நிதியும் நற்சுண்ணமும், நிறைகுடவிளக்கமும் ஏந்திவருபவர்களும் நிறைந்த அர்ச்சிராதி₃க₃திக்கு நேர்மாறாய், தானே தானேயாகும் கைவல்யநிஷ்ட₂னுக்குத் தக்கபடி நிர்மாநுஷ்யமானதொரு க₃தியை அவனுக்குத் தெரிவித்திருக்கிறார்கள் என்று கூறியிருப்பது குறிக்கொள்ளத்தக்கது. இப்படி நிர்மாநுஷ்யமாய், எவ்வித அடையாளமுமில்லாததனாலேயே, சாஸ்த்ரங்கள் இவ்வழியை வர்ணிக்கவில்லை என்றும் கொள்ளலாம்.

95. கார்யாதி₄கரணத்தில் (4-3-14) முதல் ஸித்₃தா₄ந்த ஸூத்ரத்தில் "தத்க்ரதுஶ்ச" என்று மோக்ஷார்த்த₂மான் உபாஸகர்களிடையே " உபாஸித்தபடியே ப₂லன் " எனக்கூறும் தத்க்ரது ந்யாயத்தை ஸூத்ரகாரர் ஸஞ்சரித்திருக்கையாலும், பா₄ஷ்யகாரரும் அதை இருவித₄மான ப்₃ரஹ்மோபாஸகர்களிடையே நிரூபிக்கையாலும், முக்₂யமோக்ஷமான ப்₃ரஹ்மாநுப₄வத்திலேயே ஆகாரதாரதம்யம் உண்டென்று விளங்குகிறது. இருவரும் ப்₃ரஹ்மத்தை ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும் உபாஸித்தபோதிலும், தன் ஆத்மாவுக்கு அந்தர்யாமியான பரப்₃ரஹ்மத்தை ப்ராப்யமாக உபாஸித்தவன் பரமபத₃ம் சென்றபின்பும், தன் ஆத்மாவுக்கு அந்தர்யாமியாயிருக்கும் ஸகல கல்யாணகு₃ணபூர்ணமான ப்₃ரஹ்மத்தை அநுப₄விக்கிறான் என்றும், ப்₃ரஹ்மத்திற்கு ப்ரகாரமாகத் தன் ஆத்மாவை உபாஸித்தவன், பரமபத₃ம் சென்றபின்பு ஸகல கல்யாணகு₃ணபூர்ண ப்₃ரஹ்மத்திற்கு ப்ரகாரமான தன் ஆத்மாவின் அநுப₄வத்தைப் பெறுகிறான் என்றும் விளங்குகிறது. இருவருக்குமே தன் ஆத்மாநுப₄வமும், பரமாத்மாநுப₄வமும் இருந்தபோதிலும், உபாஸநமுறையில் சிறிது பே₄த₃ம் இருந்ததுபோலே, அநுப₄வமுறையிலும் அந்த பே₄த₃ம் உள்ளது என்றே தத்க்ரதுந்யாயத்தின்படி கொள்ளவேண்டும். இருவர்க்குமே அணுவான ஆத்மாவின் அநுப₄வத்தைக் காட்டிலும், விபு₄வான ப்₃ரஹ்மத்தின் அநுப₄வமே விஞ்சிநிற்குமாகையால், "ப்₃ரஹ்ம க₃மயதி" [சா₂ந் 4-15-5] [அமானவன் இருவரையும் ப்₃ரஹ்மத்திடம் அழைத்துச் செல்லுகிறான்] என்று ப்₃ரஹ்மாநுப₄வத்தைப் ப₂லனாக ஶ்ருதி சொன்னதில் குறையில்லை. இப்படிக்கொள்ளாமல், பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்ட₂னுக்கு ப்ரக்ருதிமண்ட₃லத்திற்குள் சிறிதுகாலம்ஆத்மாநுப₄வத்தையும், அதற்குப்பின் பரமபத₃த்தில் ப்₃ரஹ்மாநுப₄வத்தையும் கல்பிப்பது தத்க்ரதுந்யாயத்திற்கும் பொருந்தாது; ஸ்ரீபா₄ஷ்யம், ஶ்ருதப்ரகாஶிகை முதலான பூர்வாசார்ய க்₃ரந்த₂ங்களிலும் அப்படிக் கல்பிக்கவேண்டும் என்று ஸூசநமாகவும் சொல்லப்படவில்லை.

96. இப்படி மோக்ஷத்தில் தாழ்ந்த முக்தி என்றும், உயர்ந்த முக்தி என்றும் இரு முக்திகளை ஒப்புக்கொண்டால், "விகல்போऽவிஶிஷ்ட ப₂லத்வாத்" [ப்₃ரஹ்மஸூத்ரம் 3-3-57] [ப₂லம் ஒத்திருக்கையால், ஒரு வித்₃யையை அநுஷ்டி₂த்தாலே போதும்] என்னும் ஸூத்ரத்தில் மோக்ஷத்தில் ப₂லபே₄த₃மில்லை என்று கூறியிருப்பது பொருந்தாதே எனில்: அவ்வதி₄கரணம் ப்₃ரஹ்மவித்₃யைகளில் ஒவ்வொரு வித்₃யையை அநுஷ்டி₂த்தாலே எல்லையற்ற ப்₃ரஹ்மாநந்த₃ம் ஏற்பட்டு விடுமாகையால்,ஒன்றை அநுஷ்டி₂த்தாலே போதும் என்று ஸ்தா₂பிக்க வந்ததேயொழிய, கைவல்ய ஸாத₄கமான ஆத்மவித்₃யைக்கும், ப்₃ரஹ்மாநுப₄வஸாத₄கமான ப்₃ரஹ்மவித்₃யைக்கும் ப₂லம் ஒன்று என்று ஸாதி₄க்க வந்ததல்ல; ஆகையால் விகல்பாதி₄கரண விரோத₄ம் வாராது.

97. தத்க்ரதுந்யாயத்தை ஆத்மத்வோபாஸநாதி₄கரணத்தில் [4-1-2] விளக்கும்போது "யதா₂வஸ்தி₂தஞ்ச ப்₃ரஹ்ம உபாஸ்யம் | அயதே₂ாபாஸநே ஹி ப்₃ரஹ்மப்ராப்திரபி அயதா₂பூ₄தா ஸ்யாத் ||" [ப்₃ரஹ்மத்தை உள்ளபடி உபாஸிக்கவேணும்; உள்ளபடியல்லாமல் உபாஸித்தால் ப்₃ரஹ்மப்ராப்தியும் உள்ளபடியல்லாததாகவே அமையும்.] என்று ஸ்ரீபா₄ஷ்யகாரர் அருளியிருப்பதிலிருந்து மோக்ஷத்திலும் தத்க்ரதுந்யாயப்படி அவரவர் விருப்பத்தை அநுஸரித்து பே₄த₃ங்கள் உண்டென்று தேறுகிறது. இவ்வாக்யம் பூர்வபக்ஷத்தில் எடுக்கப்பட்டிருந்தபோதிலும், ஸித்₃தா₄ந்தத்தில் மறுக்கப்படாமையாலே ஸ்ரீபா₄ஷ்யகாரர் திருவுள்ளம்பற்றியதென்றே விளங்கும். "அயதா₂பூ₄தா ஸ்யாத்" என்னும் ஸ்ரீ பா₄ஷ்ய ஸ்ரீ ஸூக்திக்கு "ஸம்ஸாரித்வப்ராப்தி: ஸ்யாத் இத்யர்த்த₂:" [ஸம்ஸாரியாக வேண்டிவரும் என்று கருத்து] என்று ஸ்ருதப்ரகாஸிகையில் பூர்வ பக்ஷியின் கருத்துப்படி உரையிடப்பட்டதாகையாலே, ஸித்₃தா₄ந்தத்தில் "கைவல்யம் முதலான பலவிதமான முக்திகள் தத்க்ரதுந்யாயத்தாலே ஏற்படும்" என்று கொள்வதற்கு இது முரணாகாது. ஆக, கைவல்யநிஷ்ட₂ன் எம்பெருமானிடம் பே₄ாக்₃யதாபு₃த்₃தி₄ இல்லாமல் கேவலாத்மாநுப₄வத்தை அளிக்கும் ஸாத₄னமாக மாத்திரம்கொண்டு உபாஸித்தானாகில், முக்தியிலும் அவனுக்கு எம்பெருமான் கேவலாத்மாநுப₄வத்தை அளிப்பதற்கு ஸாத₄னமாக ப்ரகாஸிப்பானேயொழிய, பே₄ாக்₃யமாக ப்ரகாஸிக்கமாட்டான் என்பது இந்த ஸ்ரீ பா₄ஷ்ய ஸ்ரீ ஸூக்தியிலிருந்து எளிதில் விளங்கும்.

98. அபா₄வாதி₄கரணத்தில் [4-4-5] முக்தனுக்கு ஸரீரம், இந்த்₃ரியம் முதலானவை உண்டா, இல்லையா என்று ஆராயப்படுகிறது. பா₃தா₃ரி என்பவர் 'ஸரீரம் இருந்தால் ப்ராக்ருதமான ஸுக₂ து₃:க்க₂ங்களைத் தவிர்க்க முடியாதாகையாலே, முக்தனுக்கு ஸரீரம் இல்லை' என்று கருதினர். ஜைமினியோவெனில், "முக்தன் பலபடியாக ஆகிறான்" என்று வேத₃ம் ஓதுகையால், கர்மம் காரணமாக ஏற்படாத அப்ராக்ருத ஸரீரம் அவனுக்கு உண்டென்று கொள்ள வேண்டும்" என்று கருதினர். பா₃த₃ராயணராகிற வ்யாஸர் இவ்விரண்டு பக்ஷத்தையும் ஏற்காமல், "முக்தர்களில் சிலர் ஸரீரம் உடையவர்களாகவும் இருக்கலாம், சிலர் ஸரீரம் இல்லாதவர்களாகவும் இருக்கலாம்" என்று திருவுள்ளம் பற்றினர். இதிலிருந்து, நித்யஸூரிகளைப்போல் கைங்கர்யத்தில் ஊன்றியிருக்கும் சில முக்தர்களுக்கு ஸரீரம் உண்டென்றும், கைங்கர்யத்தில் ஊன்றாமல் ப₄க₃வத்₃

குணநுபவத்திலேயே ஊன்றியிருக்கும் சில முக்தர்களுக்கு ஶரீரம் தேவையில்லையாகையாலே அப்ராக்ருத ஶரீரமும் இல்லையென்றும் விளங்குகிறது. இதே ந்யாயத்தின்படி பார்க்கும்போது, கைவல்யத்தையடைந்தவனை முக்தனும் தன் ஆத்மாவை மாத்திரம் அநுபவிப்பவனாகையாலே அவனுக்கு ஶரீரம் தேவையில்லை என்னும் காரணத்தால் அவன் அஶரீரியாகவே இருந்து தன் ஆத்மாவை அநுபவிக்கிறான் என்று கொள்ளலாம்.

99. பராயத்தாதிகரணத்தில் [2-3-6] "க்ருதப்ரயத்நாபேக்ஷஸ்து" [2-3-41] என்று தொடங்கும் ஸூத்ரத்தில், ஶாஸ்த்ர விதிநிஷேதங்கள் வீணாகாமல் இருப்பது முதலான காரணங்களுக்காக எம்பெருமான் ஒவ்வொரு காரியத்திலும் ப்ரதம ப்ரவ்ருத்தியில் சேதனனுக்கு ஸ்வாதந்த்ர்யம் அளித்திருப்பதாக ஸூத்ரகாரர் தெளிவாகத் திருவுள்ளம் பற்றினார். ஸ்ரீ பாஷ்யத்திலும், ஶ்ருதப்ரகாஶிகையிலும் இது விரிவாக நிரூபிக்கப்பட்டது. நடாதூரம்மாளாலே தத்வஸாரத்தில் "ஆதாவீஶ்வரதத்தயைவ" [46] என்னும் ஶ்லோகத்தில் இவ்விஷயம் மிகத் தெளிவாக நிலைநாட்டப்பட்டது. சேதனனுக்கு இப்படி ஒவ்வொரு கார்யத்திலும் ஜ்ஞாநம், இச்சை, ப்ரவ்ருத்தி என்னும் முறையில் ஏற்படும் ப்ரதம ப்ரவ்ருத்தியில் ஸ்வாதந்த்ரியம் அளிக்கப்பட்டிருக்கையாலே, அவனது இச்சையாகிற ப்ரதிபத்திக்கு அநுகுணமாகவே எம்பெருமான் அவனுக்கு ஸாதநங்களை விதித்து, அவனுடைய தாழ்ந்த ப்ரதிபத்திகளை (எண்ணங்களை) படிப்படியாக உயர்த்துவதற்கு முயலுகிறான் என்றும், முக்தியிலும் தான் ஆனந்தம் அடைவதற்காக ப்ரக்ருதியிலிருந்து நீங்கின தன் ஆத்மாவைத் தான் அநுபவிக்கவேண்டும் என்னும் எண்ணமுடையவனுக்கு அவனுடைய அவ்வெண்ணத்தைத் திருத்துவதற்காக ஶேஷத்வாநுஸந்தாநம், திவ்ய மங்கள விக்ரஹ சிந்தனம் முதலானவற்றோடு கூடிய ஜ்ஞான யோகத்தை ப்ராரப்த கர்மம் முடிந்து அந்திம ஸ்ம்ருதி ஏற்படும் வரையில் பல ஜன்மங்களில் ஸாதநமாக அநுஷ்டிக்கச் செய்கிறான் என்றும், அந்திம ஸ்ம்ருதி வரையிலும் இவனுக்குத் தன் கேவலாத்மாநுபவத்தில் ஆசை நீங்கி, எம்பெருமானிடம் பேராக்யதாபுத்தி ஏற்படாவிடில் எம்பெருமான் ஶாஸ்த்ர விதிகள் வீணாகாமை, தனக்கு வைஷம்ய நைர்க்ருண்யங்கள் ஏற்படாமை முதலானவற்றைக் கருதி, இவன் விரும்பிய கைவல்ய மோக்ஷத்தையே இவனுக்கு அருளிவிடுகிறான் என்றும் தெளிவாக விளங்குகிறது. பராயத்தாதிகரணத்தில் நிலைநாட்டப்பட்டிருக்கும் ப்ரதம ப்ரவ்ருத்தியில் ஸ்வாதந்த்ர்யம் இவ்வண்ணமாக முக்தியில்

ப₂லபே₄த₃த்தைத் தவிர்க்கமுடியாததாக்கிவிடுகிறது. இவ்விஷயம் 26-வது பாராவில் ஏற்கனவே விரிவாக நிருபிக்கப்பட்டது.

## 9. யுக்தி ஸ்வாரஸ்யம்

100. ''எல்லாக் கர்மங்களும் கழிந்தபின் ஏற்படுவதுதானே முக்தி. அப்படி எல்லாக் கர்மங்களும் கழிந்தபின் ஸ்வரூபத்துக்குத் தகாத கேவலாத்மாநுப₄வம் முதலானவை முக்தியில் எப்படி ஏற்பட முடியும்? அப்படி முக்தியிலும் ஸ்வரூபத்துக்குத் தகாத புருஷார்த்த₂ம் கிடைக்குமாகில், அதற்கும், லீலாவிபூ₄தியிலடையும் ப்ராக்ருத போ₄க₃ங்களுக்கும் வாசியில்லாமல் போய்விடுமே?'' என்பது கைவல்யத்தை முக்தியாகக் கொள்ளமுடியாது என்னும் பக்ஷத்தைத் தழுவிய ஆசார்யர்கள் கைக்கொண்ட முக்₂யமான யுக்தியாகும். இக் கேள்விக்கு பதிலை 25, 26, 27-வது பாராக்களில் விரிவாக நிருபித் திருக்கிறோம். எம்பெருமானாருக்குப் பிற்பட்ட காலத்தில் பிள்ளான், நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை முதலான தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யாதாக்களும், அருளாளப்பெருமாள் எம்பெருமானார், எங்களாழ்வான், நடாதூரம்மாள், கூரத்தாழ்வான், பட்டர், பிள்ளைலோகாசார்யார் முதலான பூர்வாசார்யர்களும்—நாம் ஏற்கனவே எடுத்துக் காட்டிய உபநிஷத்₃வேதா₃ந்த ஸ்வாரஸ்யங்கள், ஸ்ரீபா₄ஷ்ய கீ₃தா பா₄ஷ்யாதி₃ ஸ்வாரஸ்யங்கள் முதலானவற்றைத் திருவுள்ளம்பற்றி, ப்ரத₂மப்ரவ்ருத்தியில் ஜீவனுக்கு எம்பெருமான் அநாதி₃காலமாக ஸ்வாதந்த்ர்யத்தை அளித்திருக்கிறான் என்றும், இந்த ஸ்வாதந்த்ர்யத்தினாலேயே ஜீவன் ப்ராக்ருதமான விஷயங்களை விரும்பி, ஜ்ஞான இச்சா₂ ப்ரயத்னங்களைச் செய்து, கணக்கற்ற புண்யபாபங்களைக் குவித்துவைத்திருக்கிறான் என்றும், எம்பெருமான் ஜீவனுக்குப் பள்ள மடையாயிருக்கும் இந்த ஸ்வார்த்த₂மான ஸ்வப்ரவ்ருத்திகளைப் பற்றாசாகக்கொண்டு, அவன் விரும்பும் ப்ராக்ருத ப₂லன்களுக்கும், கேவலாத்மப்ராப்தி, பரமாத்ம ப்ராப்திரூபமான மோக்ஷங்களுக்கும் ஸாத₄னங்களை விதி₄த்து, ஜீவனுடைய எண்ணத்தைப் படிப்படியாக உயர்த்தி, அவனுடைய ஸ்வார்த்த₂தையாகிற சுயநலமனப்பான்மையும், அதனால் தன் ஆனந்த₃த்துக்குத் தான் முயலுகையாகிற ஸ்வ ப்ரவ்ருத்தியும் படிப்படியாகக் குறைவதற்கு, ஜீவனுடைய பல ஜன்மங்களில் பாடுபடுகிறான் என்றும், அந்த ஸ்வார்த்த₂தையும், ஸ்வப்ரவ்ருத்தியும் அடியோடு கழிந்து, 'உனக்கே நாமாட்செய்வோம்' [திருப்பாவை 29] என்னும் பரார்த்த₂ப்ரதிபத்தியும், ஸ்வார்த்த₂மான ஸ்வப்ரவ்ருத்தி நீங்குகையாகிற பரக₃தஸ்வீகார நிஷ்டை₂ (ஸித்₃தோ₄பாய நிஷ்டை₂) எனப்படும் உத்தம ப்ரபத்திநிஷ்டை₂யும் விளைந்த

பின்பு, தனது நிர்ஹேதுக க்ருபைக்கு அநாதி₃காலமாகத் தடையா யிருந்த ஸ்வார்த்த₂மான ஸ்வப்ரவ்ருத்தி நீங்குகையாலே, பரம பத₃த்தில் பரார்த்த₂ாநுப₄வ கைங்கர்யரூபமான பரமபுருஷார்த்த₂த்தை அந்த நிர்ஹேதுக க்ருபையாலேயே அளிக்கிருன் என்றும், பல ஜன்மங்கள் மோக்ஷஸாத₄னத்தை அநுஷ்டி₂த்த பின்பும் அந்திம ஸ்ம்ருதிவரையில் மோக்ஷாநந்த₃த்தில் ஸ்வார்த்த₂தை நீங்கிப் பரார்த்த₂ ப்ரதிபத்தி விளையாதவர்களுக்கு, அநாதி₃காலமாக ஜீவன் செய்திருக்கும் ப்ராக்ருத விஷயமான ஜ்ஞான இச்சா₂ ப்ரயத்னப₂லங்க ளாகிற புண்யபாபங்களை முழுவதும் கழித்து, அவர்கள் விரும்பும் கைவல்ய மோக்ஷத்தையோ, ஸ்வார்த்த₂மான முக்₂ய மோக்ஷத்தையோ தத்க்ரதுந்யாயத்தையொட்டியும், ஶாஸ்த்ர விதி₄கள் வீணுகாமை, தனக்கு வைஷம்ய நைர்க்₄ருண்யங்கள் வாராமை முதலானவற்றுக்குக் கட்டுப்பட்டும் அவர்கள் செய்த ஸாத₄நாநுஷ்டா₂நப₂லனுக அளித்து விடுகிருன் என்றும் ஒப்புக்கொண்டார்கள். இவ்வாசார்யர்களின் திரு வுள்ளமாவது— ஜீவனுடைய முயற்சிகள் அவனுக்குப் பரார்த்த₂ாநுப₄வ கைங்கர்யங்களாகிற பரமமுக்₂ய மோக்ஷத்தையளிக்கமாட்டாவாகை யால், ப₄க்தியோ அல்லது ப்ரபத்தியோ மோக்ஷஸாத₄னம் என்னும் எண்ணம் தவருனது. தனக்காகத் தான் முயல்வதினின்றும் நீங்கித் தன்னிடமுள்ள ஜ்ஞானம், ப₄க்தி, ப்ரபத்தி முதலியவைகளை மோக்ஷோபாயமாகக் கருதாமல் ஸ்வயம் ப்ரயோஜனமாக எண்ணி, பரார்த்த₂ ப்ரதிபத்தியோடு எம்பெருமானையே உபாயமாக நினைத் திருக்கும் அதி₄காரிகளுக்கு எம்பெருமான் நிர்ஹேதுக க்ருபையாலே முற்கூறிய பரம முக்₂ய மோக்ஷத்தை அருளுகின்ருன். மோக்ஷத்தில் எம்பெருமானேடு தானும் ஆனந்த₃மடையவேணும் என்று விரும்பி, அந்திம ஸ்ம்ருதி வரையில் அதற்காகத் தன் முயற்சியில் ஈடுபடுப வர்களுக்கு அவரவர் விருப்பப்படி தாழ்ந்த மோக்ஷங்களே கிடைக்கும். ஆகையால், தனக்காகத் தான் முயலுவது ஸ்வரூபத்துக்கு விருத்₃த₄ மாகையாலும், தாழ்ந்த மோக்ஷங்களையளித்துவிடுமாகையாலும் அம்முயற்சியில் சேதனன் ஈடுபடலாகாது — என்பது இவ்வாசார்யர் களின் திருவுள்ளம். எம்பெருமானருக்குப் பிற்பட்ட சில ஆசாரியர் கள் இதில் கருத்து வேற்றுமை கொண்டார்கள். எல்லாக் கர்மங்க ளும் கழிந்த பின்பு முக்தியில் வேறுபாடு ஏற்படுவதற்கு இடமில்லை என்றும், ரிஷிகள் முதலானவர்கள் ப₄க்தி முதலான தன் முயற்சி களில் ஈடுபட்டு மோக்ஷம் அடைந்திருக்கையாலே அதை ஸ்வரூப விருத்₃த₄ம் என்பது சரியல்ல என்றும் கருதினர்கள். "ப்ரத₂ம ப்ர வ்ருத்தியில் ஸ்வாதந்த்ரியத்தை எம்பெருமான் அளித்திருப்பதால் இவனுடைய எண்ணத்திற்கு அநுகு₃ணமாக மோக்ஷத்தில் பே₄த₃த்தை

ஒப்புக்கொள்ளவேண்டிவருகிறதே'' என்னும் கேள்விக்கு, ''ப்ரத₂ம ப்ரவ்ருத்தியில் ஸ்வாதந்த்ர்யம் என்பதே நிரூபிக்க இயலாத விஷயம். ஒவ்வொரு புண்யபாப கர்மமும், முன்செய்த புண்யபாப கர்மங்கள், அக்கர்மங்களால் ஏற்பட்ட வாஸனை முதலானவற்றாலே விளைகையாலும், இப்படி அநாதி₃காலமாகச் சங்கிலித் தொடர்போலே புண்ய பாபங்கள் ஏற்படுகையாலும், ஸர்வேஶ்வரனுக்கு வைஷம்ய நைர்க்₄ருண்யங்கள் உண்டாகமாட்டாவாகையால், இந்த வைஷம்ய நைர்க்₄ருண்யங்களைத் தவிர்ப்பதற்காக ப்ரத₂மப்ரவ்ருத்தியில் ஜீவனுக்கு ஸ்வாதந்த்ரியத்தை ஒப்புக்கொள்ளவேண்டியதில்லை; ஒப்புக் கொண்டால் 'எம்பெருமான் ஸர்வகாரணம்' என்னும் கொள்கையோடு முரண்படும்''என்று பதில் கூறினார்கள் இவர்கள். இந்த வாத₃ம் ஸ்ரீவைஷ்ணவ மதம் இரண்டு ஸம்ப்ரதா₃யங்களாகப் பிரிவுபடுவதற்குக் காரணமாயிற்று. இந்த ஸம்ப்ரதா₃ய பே₄த₃ம் கைவல்யம் முக்தியா அல்லவா? என்னும் விசாரத்தில் வெளிப்படையாக விளங்குகிறது. ப்ரத₂ம ப்ரவ்ருத்தியில் ஸ்வாதந்த்ர்யத்தை ஒப்புக் கொண்டு, 'தன் முயற்சியாலே அவனைக் காண நினைப்பவர்கள் அவனை உள்ளபடி காணமுடியாதாகையாலே, பரார்த்த₂ ப்ரதிபத்தியால் ('உனக்கே நாமாட்செய்வோம்' என்னும் எண்ணத்தால்) தடை நீங்கப்பெற்றதான எம்பெருமானுடைய நிர்ஹேதுக க்ருபையாலேயே பரம முக்₂யமோக்ஷமான பரார்த்த₂ மோக்ஷம் கிடைக்கும்' என்றும், 'கடைசி வரையில், மோக்ஷத்திற்காகத் தான் முயலுவதினின்றும் நீங்காமல், ப₄க்தி முதலிய முயற்சிகளாலேயே மோக்ஷத்தையடைபவர்களுக்குத் தாழ்ந்த மோக்ஷமான ஸ்வார்த்த₂ மோக்ஷமே கிடைக்கும்' என்றும், 'தன் முயற்சியும், தான் இன்புறவேணும் என்னும் சுயநல மனப்பான்மையும் வலியதாயிருந்தால், என்றுமே ப₄க₃வ த₃நுப₄வம் இல்லாததாய், ஆத்ம விநாஶ துல்யமான கைவல்ய மோக்ஷமாகிற மஹாநர்த்த₂மும் ஏற்பட்டு விடும்' என்றும் அருளிய முற்கூறிய ஆசார்யர்களின் கொள்கையை ஒரு ஸம்ப்ரதா₃யம் பின் பற்றிற்று. இதில் கருத்து வேற்றுமைகொண்டு, ''ஜீவனுடைய ப்ரத₂ம ப்ரவ்ருத்தியில் ஸ்வாதந்த்ர்யம் என்று ஒன்று இல்லாமையாலே, இவனுடைய விருப்பத்திற்குத் தக்கபடி மோக்ஷத்தில் ஏற்றத்தாழ்வு என்பது சரியல்ல; ஆகையால் கைவல்யம் மோக்ஷமல்ல; கைவல்யத்தை மோக்ஷம் என்றும், நிர்ஹேதுக க்ருபையாலேயே முக்₂யமோக்ஷம் என்றும், ஜீவனுடைய முயற்சியால் மோக்ஷத்திலும் தாழ்வுகள் ஏற்பட்டுவிடும் என்றும், ப்ரத₂மப்ரவ்ருத்தியில் ஜீவனுக்கு ஸ்வாதந்த்ர்யம் உண்டு என்றும் கூறும் ஶ்ருதிஸ்ம்ருதி இதிஹாஸபுராண வசனங்களையும், ஆழ்வார்கள், ஆசார்யர்கள்,

ஸ்ரீஸூக்திகளையும், ப்3ரஹ்மஸூத்ர ஸ்ரீபா4ஷ்ய, கீ3தாபா4ஷ்யாதி3 ஸ்ரீஸூக்திகளையும் ஒருவகையாக நயனம் செய்துகொள்ளவேண்டியதே'' என்றும் திருவுள்ளம்பற்றிய ஆசார்யர்களின் கொள்கையை மற்றொரு ஸம்ப்ரதா3யம் பின்பற்றியது. சுருங்கக்கூறினால், ஜீவனுடைய ஜ்ஞாந இச்சா2 ப்ரயத்னங்களில் இச்சையாகிற ப்ரதிபத்திக்கு ப்ராதா4ந்யமளிப்பதாக ஒரு ஸம்ப்ரதா3யமும், ப்ரயத்நமாகிற ஸ்வப்ரவ்ருத்திக்கு ப்ராதா4ந்யமளிப்பதாக ஒரு ஸம்ப்ரதா3யமும் ஏற்பட்டது. ''த்வமேவோபாயபூ4தோ மே ப4வேதி ப்ரார்த்த2நாமதி:, ஶரணாக3திரித்யுக்தா'' [நீயே உபாயமாவாயாக என்று பிரார்த்திக்கும் எண்ணமே ஶரணாக3தி எனப்படுகிறது] என்று பாஞ்சராத்ரத்தில் ப்ரபத்திலக்ஷணமுரைத்தபடியே ஸித்3தோ4பாய ப்ரார்த்த2நா மதியை ப்ரபத்தியாகவும், ஆநுகூல்யஸங்கல்பம் முதலானவற்றைத் தன்னடையே ஏற்படக்கூடிய ஸ்வபா4வங்களாகவும் ஒரு ஸம்ப்ரதா3யமும், ப4ரஸமர்ப்பணரூப க்ருதியை ப்ரபத்தியாகவும், ஆநுகூல்ய ஸங்கல்பம் முதலானவற்றை அதற்கு அங்க3ங்களாகவும் மற்றொரு ஸம்ப்ரதா3யமும் கொண்டிருப்பது குறிக்கொள்ளத்தக்கது. இதில் எந்த ஸம்ப்ரதா3யம் ப்ரமாணங்களுக்கும், யுக்திக்கும் பொருந்தியது என்பதை ஸாராஸார விவேகஜ்ஞர்களாய், விமத்ஸரர்களாய், ப்ரமாண பரதந்த்ரர்களாய், நடுநிலை தவறாத நல்லோர்களே நிஷ்கர்ஷிக்கவேண்டும். இதுநிற்க;

101. முற்கூறிய பூர்வாசார்யர்களின் திருவுள்ளத்தைப் பின்பற்றிய தென்னாசார்ய ஸம்ப்ரதா3யஸ்த2ர்களிடையிலேயே கைவல்ய விஷயத்தில் பூர்வாசார்யர்களுக்குப் பிற்காலத்தில் இருவகையான அபி4ப்ராயங்கள் ஏற்பட்டுவிட்டன. பூர்வாசார்யர்கள் காலத்திலேயே சிலர் பஞ்சாக்3நிவித்3யாநிஷ்ட2னைக் கைவல்யநிஷ்ட2னாகக்கொண்டு, இவனுக்கு ப4க3வத3நுப4வமற்ற நித்யமான கைவல்ய மோக்ஷம் ஏற்படுவதாகக் கருதினார்கள். இதில் ஸ்ரீபா4ஷ்யாதி3 விரோத4ம் ஏற்படுவதைக் காட்டி ஸ்ரீவேதா3ந்ததே3ஶிகர் தமது ந்யாயஸித்3தா4ஞ்ஜநாதி3 க்3ரந்த2ங்களில் இப்பக்ஷத்தைக் கடுமையாகக் கண்டித்தார். பூர்வாசார்யர்களுக்குப்பிற்பட்ட தென்னாசார்ய ஸம்ப்ரதா3யஸ்த2ர்களில் பலர், ஸ்ரீ தே3ஶிகனால் க2ண்டி3க்கப்பட்ட இதுவே தென்னாசார்யர்களின் பக்ஷம் என்று கொண்டுவிட்டார்கள். ''கண்கள் சிவந்து'' வ்யாக்2யானங்களிலும், அரும்பதவுரைகளிலும் ப்3ரஹ்மாத்மக ஸ்வாத்மோபாஸகனாகிற பஞ்சாக்3னிவித்3யாநிஷ்ட2னுக்கு ப்3ரஹ்மாநுப4வமே ஸித்3தி4க்கும் என்று நிலைநாட்டப்பட்டிருப்பதைக் காண்பார்க்கு தி3வ்யப்ரப3ந்த4 வ்யாக்2யாதாக்கள் பஞ்சாக்3நிவித்3யா நிஷ்ட2னைக் கைவல்யநிஷ்ட2னாகக் கொள்ளவில்லை என்பது எளிதில்

விளங்கும். மாமுனிகளுக்கு மிக ஸமீபகாலத்திலிருந்த தாத்பர்ய தீ₃பிகாகாரர்—பஞ்சாக்₃நிவித்₃யா நிஷ்ட₂னைக் காட்டிலும் வேறுபட்ட ப்ராணோபாஸகனையே கைவல்யநிஷ்ட₂ன் எனக்காட்டும் பக்ஷத்தையே முக்₂யமாக எடுத்திருப்பதும் தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யாதாக்களின் பக்ஷம் இதுவே எனக் காட்டுகிறது. கீ₃தை 8-22, 24 தாத்பர்ய சந்த்₃ரிகையில் ' அந்யாமபி க₃திம் ப்ராஞ்ச: ப்ரதீசீம் ப்ரத்யபாத₃யந்'' [ப்ராசீனர்களான ஆசார்யர்கள் அர்ச்சிராதி₃க₃திக்கு நேர் எதிர்த்தட்டான வேறொரு க₃தியைக் கைவல்ய நிஷ்ட₂னுக்குக் கூறினார்கள்.] என்று ஸ்ரீதே₃ஶிகன் அருளியிருப்பதிலிருந்தும் ப்ராசீனர்களான பிள்ளான் முதலான தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யாதாக்கள் அர்ச்சிராதி₃க₃தியையுடைய பஞ்சாக்₃நிவித்₃யா நிஷ்ட₂னைக் கைவல்யநிஷ்ட₂னாகக் கருதவில்லை என்று தெளிவாக விளங்குகிறது. பஞ்சாக்₃நிவித்₃யா நிஷ்ட₂னைக் கைவல்யநிஷ்ட₂னாகக்கொள்ளும் பக்ஷம் ஏராளமான ப்ரமாண யுக்திகளுக்கு முரண்படுகிறது என்று முன் பாராக்களில் காட்டியுள்ளோம். ஆகையால், இனி, இவ்விஷயத்தில் தென்னாசார்ய ஸம்ப்ரதா₃யஸ்த₂ர்களிடையே கருத்துவேற்றுமை தொடரச் சிறிதும் நியாயமில்லை.

*102. பரமகாருணிகனை எம்பெருமான் இவ்வண்ணமாகக் கைவல்ய மோக்ஷத்தை அளித்து, சில சேதனரைத் தன் அநுப₄வமில்லாதபடி எப்போதும் பிரித்து வைப்பானோ? எனில்: இவர்களுக்குத் தன்னிடம் போ₄க்₃யதாபு₃த்₃தி₄யை விளைப்பதற்காக, இவர்களுடைய ப்ராரப்₃த₄ கர்மம் முடியும் வரையில் பல ஜன்மங்களில் இவர்களுக்குத் தன் தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹசிந்தனம், மோக்ஷத்வாநுஸந்த₄ானம் முதலானவற்றை இவர்களுடைய ஸாத₄னத்திற்கு அங்க₃மாக விதி₄த்து ஆனவரையில் முயன்றும், இவனுக்கு அடியோடு தன்னிடம் போ₄க்₃யதாபு₃த்₃தி₄ ஏற்படாத நிலையில்தான், 'இவன் விருப்பப்படி ஸம்ஸார வ்யாதி₄யாவது நீங்கித் தன் ஆத்மாநுப₄வமாகிற இன்பத்தைப் பெற்றுப் போகட்டும்' என்னும் பரமகருணையாலே எம்பெருமான் இவனுக்குக் கைவல்யத்தை அளிக்கையாலே, இது காருண்யத்திற்கு அநுகு₃ணமாகுமேயொழிய முரணாகாது. மேலும், லீலாவிபூ₄தி நித்யமாகையாலும், ஈஶ்வரன் ஜீவனுக்கு அளித்திருக்கும் ப்ரத₂ம ப்ரவ்ருத்தியில் ஸ்வாதந்த்ர்யம் விசித்திரமானதாகையாலும், எப்போதுமே அநந்தமான சேதனர்கள் இந்த லீலாவிபூ₄தியிலும் இருந்து கொண்டுதான் இருக்கப் போகிறார்கள். இதற்கும் அச்சேதனர்களுடைய ப்ரதிபத்தியே காரணமாகையாலே, எம்பெருமானுடைய கருணைக்குக் குறையில்லை என்றே கொள்ளவேண்டியிருக்கிறது. அந்த

ப்ரதிபத்தியே காரணமாகச் சிலர் ப₄க₃வத₃நுப₄வமில்லாமல் ஆத்ம மாத்ராநுப₄வத்தையே எப்போதும் பெற்றுப்போவது எம்பெருமா னுடைய கருணைக்கு எப்படிக் குறையாக முடியும் ?

103. இப்படி என்றுமே ப₄க₃வத₃நுப₄வமில்லாமையாலே 'இறப்பது' [திருநெடு-1] [ஆத்மவிநாஶம்] 'பெருந்துன்பம்' [திருவாய் 7-5-10] எனப்படும் இக்கைவல்யத்தை எவன் ஆசைப்படுவான் ? எனில் : "ஹந்த ! அநேவம்விதே₄ஷ்வபி ஸ்வர்க்க₃ பஶு புத்ர பி₄க்ஷாத₃நாதி₃ஷு அபி₄லாஷிணோ த்₃ருஶ்யந்தே ; கிம் புந: அதி ஶயிதாநந்த₃ஶாலிநி ஏவம்விதே₄ । ப்ரஸித்₃த₄ஞ்ச ப்ரியாஸ்பத₃த்வம் ஸ்வாத்மந: । ஆக₃மஶ்ச 'ஆஶ்சர்யவத் பஶ்யதி கஶ்சிதே₃நம்' இத்யாதி₃" [இவ்வாத்மாநுப₄வத்தைக் காட்டிலும் மிகத் தாழ்ந்த ஸ்வர்க்க₃ம், பசுக்கள், புத்ரர்கள், பிச்சையெடுத்த உணவு முதலானவற்றையும் ஆசைப்படுபவர்கள் காணப்படுகிறார்களே ! அப்படியிருக்க 'தெரிவரிய அளவில்லா இன்பம்' [திருவாய் 4-9-10] 'குறுகா நீளா இறுதிகூடா எனையூழி சிறுகா பெறுகா அளவில் இன்பம்' [திருவாய் 6-9-10] எனப்படும் அளவற்ற ஆநந்த₃முள்ள ஆத்மாநுப₄வத்தில் ஆசையுள்ள வர்களிருக்கக் குறையென்ன ? ஆத்மாவானது ஆனந்த₃மயமானது என்பது ப்ரமாண ப்ரஸித்₃த₄மன்றோ ; 'ஆஶ்சர்யம்போலே ஒருவன் இவ்வாத்மாவைக் காண்கிறான்' முதலான வேத₃வாக்யங்களும் இதையே கூறுகின்றனவன்றோ.] என்று தொடங்கி ஸ்ரீவேதா₃ந்த தே₃ஶிகர் ந்யாயஸித்₃தா₄ஞ்ஜநத்தில் ஜீவ பரிச்சே₂த₃த்தின் இறுதியில் அருளியிருக்கும் ஸ்ரீஸூக்திகளே இக்கேள்விக்கு அழகான பதிலாக அமைந்திருக்கின்றன.

104. நம் த₃ர்ஶனத்தில் சித், அசித், ஈஶ்வரன் எனும் மூன்று தத்துவங்கள் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளன. இவற்றுக்கு ஏற்ப, அசித் தினுடைய அநுப₄வமாகிற ஐஶ்வர்யமும், ஈஶ்வரனை அநுப₄விப்பதாகிற முக்₂ய மோக்ஷமும், இவ்விரண்டு அநுப₄வமுமில்லாமல், கேவல சித்தாகிற தன் ஆத்மாவை மாத்திரம் அநுப₄விப்பதான கைவல்ய மும் வ்யவஸ்தி₂தங்களான மூன்று புருஷார்த்த₂ங்களாக ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கின்றன. ப்ரக்ருதியிலிருந்து நீங்கிய கேவலாத்மாநு ப₄வம் விரஜாதரணமாகி ஸூக்ஷ்மஶரீரமும் கழிந்த பின்பே ஏற்படமுடி யும். இதிலிருந்தே அசித் ஸம்ஸர்க்க₃ம் அடியோடு நீங்கின பின்பே ஏற்படக் கூடிய கேவலாத்மாநுப₄வம் நித்யமுக்தியே என்றும், ப்₃ரஹ்மாநுப₄வமுடையவனை ப₃ஹுப்ரமாணப்ரஸித்₃த₄னை பஞ் சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂ன் கைவல்யநிஷ்ட₂னைகமுடியாது என்றும் நடு நிலையாளர்க்கு மிகத் தெளிவாக விளங்கும்.

## 10. பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தி ஸ்வாரஸ்யம்

105. ஸ்ரீப₄ாஷ்யகாரர் முதலான பூர்வாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகள் கைவல்ய விஷயத்தில் தி₃வ்ய ப்ரப₃ந்த₄ வ்யாக்₂யாதாக்களின் பக்ஷத்திற்கே அநுகு₃ணமாயிருப்பதை ஏற்கனவே பல பாராக்களில் காட்டினோம். அதில் ஆளவந்தாருடைய கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹ ஸ்ரீஸூக்தி ஸ்வாரஸ்யம் 40-வது பாராவிலும், ஸ்ரீப₄ாஷ்யகாரருடைய கீ₃தாப₄ாஷ்ய ஸ்ரீஸூக்தி ஸ்வாரஸ்யம் 11 முதல் 46 வரையுள்ள பாராக்களிலும், ஸ்ரீப₄ாஷ்ய ஸ்ரீஸூக்தி ஸ்வாரஸ்யம் 8-வது பாராவிலும், 85 முதல் 99 வரையுள்ள பாராக்களிலும் விரிவாகக் காட்டப்பட்டது. முதலியாண்டான், எம்பார் ஸ்ரீஸூக்தி ஸ்வாரஸ்யம் 64-வது பாராவில் காட்டப்பட்டது. பிள்ளானுடைய ஸ்ரீஸூக்தி ஸ்வாரஸ்யம் 53, 54, 58, 61, 62, 63, 64, 65, 67 பாராக்களில் காட்டப்பட்டது. எங்களாழ்வானுடைய ஸ்ரீஸூக்தி ஸ்வாரஸ்யம் 77, 78, 80 பாராக்களிலும், அவர் ஶிஷ்யரான நடாதூரம்மாளுடைய ஸ்ரீஸூக்தி ஸ்வாரஸ்யம் 99-வது பாராவிலும் காட்டப்பட்டது. அமுதனாருடைய ஸ்ரீஸூக்தி ஸ்வாரஸ்யம் 69-வது பாராவில் நிரூபிக்கப்பட்டது. ப₄ட்டருடைய ஸஹஸ்ரநாம ப₄ாஷ்ய ஸ்ரீஸூக்தி ஸ்வாரஸ்யம் 81-வது பாராவில் எடுத்துக்காட்டப்பட்டது. ஶ்ருத ப்ரகாஶிகாப₄ட்டருடைய ஸ்ரீஸூக்தி ஸ்வாரஸ்யம் 85, 99 பாராக்களில் விளக்கப்பட்டது. நஞ்ஜீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத்திருவீதிப்பிள்ளை ஆகிய தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யாதாக்களின் ஸ்ரீஸூக்தி ஸ்வாரஸ்யம் 47 முதல் 68 வரையுள்ள பாராக்களில் நிலைநாட்டப்பட்டது. இதுவரையில் எடுக்கப்படாத ஆசார்ய ஸ்ரீஸூக்திகளின் ஸ்வாரஸ்யத்தைக் காட்டுவோம் இனி.

106. "ஆத்மார்த்தி₂ சேத் த்ரயோऽப்யேதே தத்கைவல்யஸ்ய ஸாத₄கா:" [கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹம் 27] என்று ஆத்மாவை மாத்திரம் அநுப₄விக்கும் புருஷார்த்த₂மாகையாலே இதைக் கைவல்ய ஶப்₃த₃த்தாலே ஆளவந்தார் குறிப்பிட்டு, இவனுக்கு அசித₃நுப₄வமும், ப்₃ரஹ்மாநுப₄வமும் அடியோடு கிடையாது என்று உணர்த்துவதன்மூலம், இவன் முக்தனே என்றும், ப்₃ரஹ்மாநுப₄வம் உடையவனாக ப்₃ரஹ்மஸூத்ர ஸித்₃த₄னை பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்டனைக் காட்டிலும் வேறுபட்டவனே என்றும் விளங்க வைத்தார். இவனுக்குக் கர்ம ஜ்ஞாந ப₄க்தியோக₃ங்கள் ஒவ்வொன்றுமே ஸாத₄னமென்று கூறுவதன்மூலமும், பஞ்சாக்₃நிவித்₃யை ஒன்றையே ஸாத₄னமாகக்கொண்ட பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்டனைக் காட்டிலும் வேறு

பட்டவனே இவன் என்று காட்டினர். இவர் அருளிய சது:ஶ்லோகியில், "ஸம்ஸ்ருத்யக்ஷர வைஷ்ணவாத்₄வஸு" [3] என்று இக் கைவல்யத்தை "அக்ஷராத்₄வா' என்று குறித்து, ஸம்ஸ்ருத்யத்₄வாவான ஸம்ஸார மண்ட₃லத்தைக் காட்டிலும், வைஷ்ணவாத்₄வாவான பரமபத₃த்தைக் காட்டிலும் வேறுபட்டதாக இதையெடுக்கையால், இது ஸம்ஸாரத்தைக் காட்டிலும் மேற்பட்ட முக்தியே என்றும், பரமபத₃த்திலடையும் ப₄க₃வத₃நுப₄வம் அற்றது என்றும் விளங்குகிறது. இதிலிருந்து ஆளவந்தார்—இது ஸம்ஸார மண்ட₃லத்திற்குட்பட்டதோர் அநுப₄வம் என்றோ, ப்₃ரஹ்மாநுப₄வம் உடையவனாக ப்₃ரஹ்மஸூத்ரஸித்₃த₄னை பஞ்சாக்₃நி வித்₃யா நிஷ்டூனைக் கைவல்யநிஷ்ட₂னாகவோ திருவுள்ளம்பற்றியிருக்க முடியாது என்று தெளிவாக விளங்குகிறது. இங்குபோலே, கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹத்திலும் "ஐஶ்வர்யாக்ஷர யாதா₂த்ம்ய ப₄க₃வச்சரணார்த்தி₂நாம்" என்று கைவல்யார்த்தி₂யை 'அக்ஷரயாதா₂த்ம்யார்த்தி₂' என்று அக்ஷரஶப்₃த₃த்தையிட்டுக் குறிக்கையால் 'ஆத்ம யாதா₂த்ம்யவித்' என்று கீ₃தாபா₄ஷ்யத்தில் (8-23, 24) பா₄ஷ்யகாரரால் குறிக்கப் பட்ட பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்ட₂னைக் காட்டிலும் இக்கைவல்ய நிஷ்ட₂ன் வேறுபட்டவன் என்பதே ஆளவந்தார் திருவுள்ளம் என்று தெளிவாக விளங்குகிறது.

107. வேதா₃ர்த்த₂ ஸங்க்₃ரஹத்தில்—(1) நித்யவிபூ₄தி, (2) ப்ரக்ருதியினின்றும் நீங்கிய ஆத்மஸ்வரூபம், (3) ப₄க₃வத்ஸ்வரூபம் ஆகிய மூன்றுமே 'பரமபத₃ம்' என்று சொல்லப்படுவதைப்பற்றி விசாரித்து வரும்போது, "பரமம் பத₃ம் தஸ்யாகு₃ணம் மஹத்" [வி•பு 1-22-41] என்று விஷ்ணுபுராணத்தில் ப்ரக்ருதியினின்றும் நீங்கிய ஆத்மஸ்வரூபத்தைப் பரமபத₃ ஶப்₃த₃த்தால் சொல்லியிருப்பதை எடுத்துக் காட்டி, "ஸர்வகர்மப₃ந்த₄விநிர்முக்தாத்மஸ்வரூபாவாப்திர் ஹி ப₄க₃வத்ப்ராப்திக₃ர்ப்பா₄" [எல்லாக் கர்மப₃ந்த₄ங்களினின்றும் நீங்கிய ஆத்மஸ்வரூபத்தை அடைவது ப₄க₃வத்ப்ராப்தியை உள்ளடக்கியதன்றோ.] என்று ப்ரக்ருதியினின்றும் விடுபட்ட ஆத்மஸ்வரூபாவாப்தியைப் பெறும்போது ப₄க₃வத்ப்ராப்தியும் ஏற்பட்டே தீரும் என்று பா₄ஷ்யகாரர் அருளியிருப்பதால், கைவல்ய நிஷ்ட₂னுக்கும் ப₄க₃வத்ப்ராப்தி உண்டென்று தோன்றுகிறதே? எனில்: அவனுக்கும் ப₄க₃வத்ப்ராப்தியிருந்தபோதிலும், ப₄க₃வத₃நுப₄வமில்லாமையாலே குறையில்லை. இவ்விடத்தில் தாத்பர்யதீ₃பிகையெனும் வ்யாக்₂யானத்தில் "ப₄க₃வத்ப்ராப்தி க₃ர்ப்ப₄த்வாத் – ப₄க₃வத்ப்ராப்தி ஸஹிதத்வாதி₃த்யர்த்த₂:" [ப₄க₃வத்ப்ராப்தியை உள்ளடக்கியது என்றது—ப₄க₃வத்ப்ராப்தியோடு

கூடியது என்றபடி] என்றும், "ப4க3வத்3கு3ணாமபி திரோத4ாயகம் கர்மேதி, தந்நிவ்ருத்திபூர்வகாத்மப்ராப்தெள ப4க3வத்3கு3ணதிரோத4ாயக நிவ்ருத்தேரபி ப4ாவாத் ப4க3வத்ப்ராப்தி: ஸித்3த்4யதி" [ப4க3வத்3 கு3ணங்களையும் கர்மமே மறைக்கிறதாகையால், ஸர்வகர்மங்களும் கழிந்து ஆத்மப்ராப்தி ஏற்படும்போது. ப4க3வத்3கு3ணங்களை மறைக்கும் கர்மமும் நீங்குகிறதாகையால், ப4க3வத்ப்ராப்தியும் ஸித்3தி4க்கிறது.] என்றும் ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் இவனுக்கு ப4க3வத்ப்ராப்தியை அருளிச்செய்திருக்கிறரேயொழிய,ப4க3வத3நுப4வத்தை அருளிச்செய்யவில்லை என்பது காணத்தக்கது. ப்ராப்தி ஏற்பட்டால் அநுப4வம் ஏற்படாமல் இருக்குமோ? எனில்: அந்திமஸ்ம்ருதி வரையில் இவனுக்குப் பரமாத்மாவிடம் பே4ாக்3யதாபு3த்3தி4 ஏற்படாமல், தன் ஆத்மாவிலேயே பே4ாக்3யதாபு3த்3தி4 நிலைநிற்கையாலும். பரமபத3த்திற்குச் சென்றபிறகு பரமாத்மாவிடம் பே4ாக்3யதாபு3த்3தி4 ஏற்படத்தக்க ஸாத4நாநுஷ்டா2நம் செய்யமுடியாது என்பதை "நிர்வ்யாபாரம்" என்னும் பத3த்தால் ஸ்ரீபராஶர மஹர்ஷி முற்கூறிய ஸ்ரீவிஷ்ணுபுராண ப்ரகரணத்தில் காட்டியிருக்கையாலும், இவனுக்கு ப4க3வத் ப்ராப்தியிருந்தபோதிலும் ப4க3வத3நுப4வமில்லை என்றே தேறும். கர்மம் கழிகையாலே, ப4க3வானும், அவனது கு3ணங்களும். நித்யவிபூ4தியும், நித்யமுக்தர்களும் ஸாத்4யத3ஶை யில் இவனுக்குப் பிரகாஶித்தபோதிலும், ஸாத4நத3ஶையில் அந்திம ஸ்ம்ருதிவரையில், அவற்றில் பே4ாக்3யதா ப்ரதிபத்தி ஏற்படாமல், தன் ஆத்மாவிலேயே பே4ாக்3யதா ப்ரதிபத்தி நிலைநிற்கையாலே, ஸாத்4யத3ஶையிலும் முக்தனை இவனுக்கு என்றுமே அவற்றில் பே4ாக்3யதா ப்ரதிபத்தி ஏற்பட இடமில்லை என்று கருத்து. இவ் விஷயத்தை இந்த விஷ்ணு புராண ப்ரகரணத்தை விளக்குகையில் எங்களாழ்வான் மிகவும் தெளிவுபடுத்தியிருப்பதை 80-வது பாராவில் காட்டினேம்.

108. இனி, எம்பெருமானருக்குப் பிற்பட்ட ஆசார்யர்களின் முக்2யமான சில ஸ்ரீஸூக்திகள் காட்டப்படுகின்றன. (1)"பே4ாக3ா இமே விதி4 ஶிவாதி3 பத3ஞ்ச கிஞ்ச, ஸ்வாத்மாநுபூ4திரிதி யா கில முக்திருக்தா! ஸர்வம் தது3ஷஜலஜோஷமஹம் ஜுஷேய ஹஸ்த்யத்3ரிநாத2! தவ தா3ஸ்யமஹாரஸஜ்ஞ:!!" [ வரத3ராஜஸ்தவம் 81 ] [அத்திகிரி அருளாளனே! இவ்வுலகிலுள்ள அசித்3பே4ாக3ங்களும், ப்3ரஹ்மலோகம், ஶிவலோகம் முதலான மறுமையிலுள்ள அசித்3 பே4ாக3ங்களும், ஆத்மமாத்ராநுப4வம் என்று சொல்லப்படும் முக்தியும் ஆகிய இவையனைத்தையும், உப்புநீரை வெறுத்து ஒதுக்கு

வதுபோலே ஒதுக்குகின்றேன். ஏனெனில், உன்னுடைய கைங்கர்யத்தின் பெருஞ்சுவையை அறிந்தவனன்றோ அடியேன்.] என்று கூரத்தாழ்வான் இக்கைவல்யத்தை முக்தி என்றே குறிப்பிட்டார். இதையும் உப்புநீர் போன்றது என்கையாலே, ப₄க₃வத₃நுப₄வம் இதில் அடியோடு இல்லையென்றும் காட்டினார். இதிலிருந்து, கூரத்தாழ்வான் இதை ஸம்ஸார மண்ட₃லத்திற்கு உட்பட்டது என்றோ, ப்₃ரஹ்மாநுப₄வம் உடைய பஞ்சாக்₃நி வித்₃யா நிஷ்ட₂னைக் கைவல்யநிஷ்ட₂ன் என்றோ திருவுள்ளம்பற்றியிருக்க முடியாது என்று விளங்குகிறது. (2) ஸ்ரீவேதா₃ந்ததே₃ஶிகரால் ந்யாயஸித்₃த₄ாஞ்ஜனத்தில், மோக்ஷத்தைக் காட்டிலும் ஐஶ்வர்ய கைவல்யங்கள் வேறுபட்டவை என்று ஸ்ரீபராஶர ப₄ட்டர் அத்₄யாத்ம க₂ண்ட₃த்₃வய வ்யாக்₂யானத்தில் அருளியிருப்பதாக எடுக்கப்பட்ட ஸ்ரீஸூக்தியும் இவ்விஷயங்களையே வலியுறுத்துகிறது. அங்கு மோக்ஷம் என்றது முக்₂யமோக்ஷமான ப₄க₃வத₃நுப₄வமேயாகையால் எம்பெருமானார், கூரத்தாழ்வான் முதலானார் அமுக்₂ய மோக்ஷமான கைவல்யத்தை மோக்ஷம் என்று குறிப்பிட்டிருப்பதோடும், ப₄ட்டரே ஸஹஸ்ரநாம பா₄ஷ்யத்தில் இதைத் தாழ்ந்த மோக்ஷமாகக் காட்டியிருப்பதோடும் முரணில்லை. (3) முற்கூறிய ந்யாயஸித்₃த₄ாஞ்ஜன ப்ரகரணத்தில் கைவல்ய நிஷ்ட₂னுக்குக் கர்மங்கள் முழுவதும் கழிவதில்லை என்றும், ஆகையால் அவன் முக்தனல்லன் என்றும், அவனுடைய அநுப₄வத்தை அழிவற்ற ஐஶ்வர்யாநுப₄வமாகவே கொள்ளவேண்டும் என்றும் நடாதூராழ்வான் அருளியிருப்பதாக ஸ்ரீவேதா₃ந்ததே₃ஶிகர் எடுத்திருக்கிறார். இதிலிருந்து, எம்பெருமானார் ஶிஷ்யர்களிடையிலேயே கைவல்யத்தைப்பற்றி அபி₄ப்ராய பே₄த₃ங்கள் விளைந்து விட்டன என விளங்குகிறது. தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யாதாக்களைப் போலே இக்கைவல்யம் அழிவற்றது என்று நடாதூராழ்வான் திருவுள்ளம் பற்றியபோதிலும், அவர்களைப் போலே கர்மங்கள் அனைத்தும் கழிந்த முக்தியாக இதை நடாதூராழ்வான் கருதவில்லை என விளங்குகிறது. நடாதூராழ்வானுடைய மாநயாதா₂த்ம்ய நிர்ணயத்தில் 'அணுவான ஆத்மஸ்வரூபம் முக்தித₃ஶையில் விபு₄வாகி விடுகிறது' என்று வாத₃ம் செய்திருப்பது ப்₃ரஹ்மஸூத்ரம், ஸ்ரீபா₄ஷ்யம் முதலானவற்றுக்கு முரண்படுமாகையால் அதிவாத₃மாகும்'' என்று ஸ்ரீவேதா₃ந்ததே₃ஶிகர் ந்யாயஸித்₃த₄ாஞ்ஜனத்தில் ஜீவபரிச்சே₂த₃த்தில் அருளிய கணக்கிலே, இந்த வாத₃மும் கீ₃தா பா₄ஷ்யாதி₃களோடு முரண்படுகையால் அதிவாத₃ம் என்று கொள்ளத் தகும். (4) அந்த ந்யாயஸித்₃த₄ாஞ்ஜன ப்ரகரணத்திலேயே ''ப்₃ரஹ்மத்தை அடையவேண்டும் என்று விரும்பி உபாஸனத்தில் இழியும்

சிலர் ஆத்மாவின் போ₄க்₃யதையிலே ஈடுபட்டு, கைவல்யத்தை விரும்பி அதை அடைந்துவிடுவது, ஸ்வர்க்க₃த்தை அடைய விரும்பி யாக₃த்தைத் தொடங்கி, அதைச் சரிவர அநுஷ்டி₂க்காததால் ப்₃ரஹ்ம ராக்ஷஸ ஜன்மத்தை அடைவதையொக்கும்'' என்று ஸ்ரீ விஷ்ணுசித்தரான எங்களாழ்வான் ஸங்க₃திமாலையில், கைவல்யத்தை ப்₃ரஹ்ம ராக்ஷஸ ஜன்மத்தோடு ஒப்பிட்டிருப்பதாக எடுத்திருப்பதிலிருந்தும் இக்கைவல்யம் ப்₃ரஹ்மாநுப₄வம் அடியோடு இல்லாதது என்று விளங்குகிறது. இதிலிருந்தும் ப்₃ரஹ்மாநுப₄வமுடைய பஞ்சாக்₃நிவித்₃யா நிஷ்ட₂ன் கைவல்யநிஷ்ட₂னாக முடியாது என்றும் விளங்குகிறது. (5) ஸ்ரீபராஶரப₄ட்டர் தமது ஸ்ரீரங்க₃ராஜஸ்தவத்தில் பூர்வஶதகத்தில் ''ஆர்த்தாபாஶ்ரயம் அர்த்தி₂கல்பகம் அஸஹ்யாக₃ஸ்கர க்ஷமாதலம், ஸத்₃யஸ்ஸம்ஶ்ரித காமதே₄நும் அபி₄யத்ஸர்வஸ்வம் அஸ்மத்₃த₄நம்| ஸ்ரீரங்கே₃ஶ்வரம் ஆஶ்ரயேம கமலாசக்ஷுர் மஹீஜீவிதம். ஸ்ரீரங்கே₃ ஸ ஸுக₂ாகரோது ஸுசிரம் த₃ாஸ்யம் ச த₃த்தாம் மயி||''[76] [ஆர்த்தருக்குப் புகலிடமாயும், அர்த்த₂ார்த்தி₂களுக்குக் கற்பகமரமாயும், (எம்பெருமானை ஶாஶ்வதமாக விரும்பாமையாகிற) அஸஹ்யாபசாரம் செய்யும் கைவல்யார்த்தி₂கள் விஷயத்திலும் பொறுமையுள்ளவனாகவும், (ஸம்ஸாரத்தில் அடிக்கொதிப்பாலும், ப்₃ரஹ்மாநந்த₃த்தில் பெருவிருப்பாலும் ப₄க்தி முதலானவற்றை உபாயமாக அநுஷ்டி₂த்துச்) சடக்கென ஆஶ்ரயித்தவர்களுக்கு அவர்கள் விரும்பும் ப₂லனையளிக்கும் காமதே₄நுவாகவும், (எம்பெருமானையே ப்ராப்ய ப்ராபகங்களாகவும், த₄ாரக போஷக போ₄க்₃யங்களாகவுங்கொண்டு) அவனையே எல்லாமாக அடைந்த ஆழ்வார்களுக்கு எல்லாமாயிருப்பவனாகவும், (ஒரு கைம்முதலுமற்ற) என்னைப்போன்றவர்களுக்கு எல்லாச் செல்வமுமாயிருப்பவனாகவும், பெரியபிராட்டியார்க்குக் கண்ணாகவும், பூ₄மிப்பிராட்டிக்கு உயிராகவுமிருப்பவனாகவுமுள்ள அரங்கநகரப்பனை ஆஶ்ரயிப்போம். அவன் நீண்டநாட்கள் அடியேனை ஸ்ரீரங்க₃த்தில் இன்புறச்செய்யவேணும். அடியேனுக்குத் தன் கைங்கர்யத்தையும் அருள்வானாக.] என்று அருளினார். இதில் கைவல்யநிஷ்ட₂ன் என்றுமே எம்பெருமானை விரும்பாமலிருப்பதையிட்டு அவனை அஸஹ்யாபசாரம் செய்பவனாகக் குறிப்பிடுகையால், அவனுடைய புருஷார்த்த₂ம் முக்தியே என்றும், ப்₃ரஹ்மாநுப₄வமுடைய பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னைக் காட்டிலும் இவன் வேறுபட்டவனே என்றும் ப₄ட்டர் திருவுள்ளம் பற்றியிருப்பது விளங்குகிறது. (6) உத்தரஶதகத்தில் ''ஆர்த்திம் திதீர்ஷுரத₂ ரங்க₃பதே த₄நாயந் ஆத்மம்ப₄ரிர் விவிதி₃ஷுர் நிஜத₃ாஸ்யகாம்யந்| ஜ்ஞாநீத்யமூந் ஸமமத₂ா: ஸமமத்யுத₃ாராந் கீ₃தாஸு தே₃வ ப₄வத₃ாஶ்ரயணோபகாராந் ||'' [83] [அரங்கநகரப்பனே! தேவரீரை ஆஶ்ரயிப்பதாகிற

உதவியைச் செய்கிறவர்கள் என்பதையே கொண்டு, இழந்த செல்வத்தைப் பெற விரும்பும் ஆர்த்தன், புதிதாகச் செல்வத்தை அடைய விரும்பும் அர்த்தார்த்தி, ஆத்மாவையே விரும்பும் ஜிஜ்ஞாஸு, கைங்கர்யத்தை விரும்பும் ஜ்ஞாநி ஆகிய இவர்களை வாசியற பகவத்கீதையில் உதாரர்களாகத் திருவுள்ளம் பற்றினீரன்றோ] என்னும் ஸ்லோகத்தில்—வயிற்றை நிரப்பியே வாழ்பவனை உதரம்பரி என்பது போலே ஆத்மாவொன்றையே விரும்புகையால், ஆத்மம்பரி எனத்தக்க கைவல்யநிஷ்டனையே கீதையில் சொல்லப்பட்ட ஜிஜ்ஞாஸுவாக பட்டர் எடுக்கையால், ப்ரஹ்மாநுபவமும் உடைய பஞ்சாக்நிவித்யாநிஷ்டனை அவர் ஜிஜ்ஞாஸுவாகத் திருவுள்ளம் பற்றவில்லை என்று தெளிவாக விளங்குகிறது. (7) அடுத்ததான "நித்யம் காம்யம்" என்று தொடங்கும் ஸ்லோகத்தில் கர்மயோகநிஷ்டர்களைப் பற்றியும், அதற்கடுத்த 'ப்ரத்யஞ்சம் ஸ்வம்' என்று தொடங்கும் ஸ்லோகத்தில் ஜ்ஞானயோகநிஷ்டர்களைப் பற்றியும், அதற்கடுத்த "அத்ர ம்ருதித கஷாயா:" என்று தொடங்கும் ஸ்லோகத்தில் பக்தியோகநிஷ்டர்களைப்பற்றியும் விளக்கிவிட்டு 'உபாதத்தே' என்று தொடங்கும் 87-வது ஸ்லோகத்தில், தாம் எம்பெருமானையே உபாயமாகவும், உபேயமாகவும் பற்றிய ப்ரபந்நர் என்பதைக் காட்டுகிறார் பட்டர். இதில், ஜ்ஞானயோகநிஷ்டனைப் பற்றியதான, "ப்ரத்யஞ்சம் ஸ்வம் பஞ்சவிம்ஸம் பராச:, ஸஞ்சக்ஷாணாஸ் தத்த்வராஸேர் விவிச்ய | யுஞ்ஜாநாஸ்சர்தம்பரா யாம் ஸ்வபுத்தௌ, ஸ்வம் வா த்வாம் வா ரங்கநாதாப்நுவந்தி ||" [ர-ஸ்த 2-75] [ஸ்ரீரங்கநாதரே! இருபத்தைந்தாம் தத்துவமாய், தனக்குத் தானே ப்ரகாஸிக்கும் தன் ஆத்மாவை, மற்ற இருபத்துநாலு தத்துவங்களிலிருந்து பிரித்து அறிகின்றவர்களாய், (ஸமாதி நிலையில்) உண்மையைக் காணும் தங்கள் அறிவில் தம் ஆத்மாவை தியானிக்கிற ஜ்ஞாநயோகநிஷ்டர்கள் தம் ஆத்மாவையோ, அல்லது உம்மையோ அடைகிறார்கள்.] என்னும் ஸ்லோகத்தில் அசித்தைக் காட்டிலும் வேறுபடுத்தி ஆத்மாவை அறியும் ஜ்ஞாநயோகத்தினால் (அசித்தினின்றும் நீங்கிய) தம் ஆத்மாவையோ, எம்பெருமானையோ அவர்கள் அடைகிறார்கள் என்று கூறப்பட்டது. அடுத்த ஸ்லோகத்தில், ஜ்ஞாநயோகம் நிறைவடைந்து, பக்தியோகத்தைப் பெற்று அதன் மூலம் எம்பெருமானை அடைபவர்களைப் பற்றிப் பேசுகையாலே, இங்கு ஜ்ஞான யோகத்தின் மூலமே தம் கேவலாத்மாவையோ அல்லது எம்பெருமானையோ அடைவதைப் பற்றியே கூறுகிறார் என்று விளங்குகிறது. இதிலிருந்து ஜ்ஞாந யோக நிஷ்டன் அந்திம ஸ்ம்ருதி வரையில் தன் கேவலாத்மாவையே விரும்பினானாகில்

கைவல்யமோக்ஷத்தை அடைந்து விடுகிருன் என்றும். அந்திம ஸ்ம்ருதியின்போது எம்பெருமானிடம் பே₄ாக்₃யதாபு₃த்₃தி₄ ஏற்பட்டு. ப்₃ரஹ்மாத்மக ஸ்வாத்மோபாஸகனை பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்ட₂னுக மாறிஞுகில் ப்₃ரஹ்மாநுப₄வத்தையே பெற்று விடுகிருன் என்றும் ப₄ட்டர் திருவுள்ளம் பற்றிஞர் என்று விளங்குகிறது. ஆக, கைவல்யம் ப்ரக்ருதியினின்றும் நீங்கிய தாழ்ந்த முக்தியே என்றும், கைவல்ய நிஷ்ட₂ன் பஞ்சாக்₃நி வித்₃யா நிஷ்ட₂னுக முடியாது என்றும் இந்த ஶ்லோகத்திலிருந்தும் விளங்குகிறது. (8) அர்த்த₂ பஞ்சகத்தில் 15-வது சூர்ணையில் கைவல்யத்தை அடைந்தவனைப்பற்றிப் பேசும்போது பிள்ளை லோகாசார்யர் " அஶரீரியாய்க்கொண்டு திரிவாஞெருவன் " என்று அருளியிருக்கையாலே, அர்ச்சிராதி₃ க₃தி வழியே செல்லும் பரம புருஷ நிஷ்ட₂னுக்கும், பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்ட₂னுக்கும் கௌஷீதகியில் சொல்லப்பட்ட அப்ராக்ருத ஶரீரம் கைவல்ய நிஷ்ட₂னுக்கு இல்லை என்று ஏற்படுகிறது. இதிலிருந்தும் கைவல்ய நிஷ்ட₂ன் பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்ட₂னைக் காட்டிலும் வேறுபட்டவன் என்றும், அவனுக்கு அர்ச்சிராதி₃க₃தி இல்லை என்றும் தெளிவாக விளங்குகிறது. தி₃வ்ய ப்ரப₃ந்த₄ வ்யாக்₂யானங்களிலும், பெரியவாச்சான்பிள்ளை, பிள்ளை லோகாசார்யர், மாமுனிகள் முதலான பூர்வாசார்யர்கள் அருளிய பற்பல ரஹஸ்யக்₃ரந்த₂ங்களிலும் இவ்விஷயங்கள் மேலும் நூற்றுக் கணக்கானவிடங்களில் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன. அவற்றை விரி விற்கஞ்சி விடுக்கிரேும். சுருங்கக் கூறிஞல், முற்கூறிய பூர்வாசார் யர்கள் அனைவருமே இக்கைவல்யத்தை ப்₃ரஹ்மாநுப₄வலேஶக₃ந்த₄மு மற்ற நித்யமுக்தியே என்று நூற்றுக்கணக்கானவிடங்களில் முழங்கி யிருக்கிருர்கள். ஓரிடத்திலாவது இவனைப் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂ னென்ரேு, அர்ச்சிராதி₃க₃தியுடையவனென்ரேு காட்டவில்லை, இவற்றி லிருந்து — கைவல்யம் ப்ரக்ருதி மண்ட₂லத்திற்கு அப்பாற்பட்ட தொரு ஸ்த₂ானத்தில் அநுப₄விக்கப்படும் நித்யமுக்தியே என்றும், இக்கைவல்யநிஷ்ட₂ன் — ப்₃ரஹ்மாநுப₄வமுடையவனென்று ஸூத்ர ஸ்ரீப₄ாஷ்ய கீ₃தா ப₄ாஷ்யங்களில் நிலைநாட்டப்பட்டிருக்கும் பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்ட₂னைக் காட்டிலும் வேறுபட்டவனென்றும், இக்கைவல்ய நிஷ்ட₂னுக்கு அர்ச்சிராதி₃க₃தி கிடையாது என்றுமே இப்பூர்வாசார் யர்கள் திருவுள்ளம் பற்றியிருந்தார்கள் என்பது கையிலங்குகனியாக வும், வெள்ளிடைமலையாகவும் விளங்குகிறது.

## முடிவுரை

சுமார் இருபது வருடங்களுக்கு முன் எழுதப்பட்ட ஸந்மதகாரி காவளீ விவரணத்தில் ''கைவல்யம் தாழ்ந்தது என்பது எல்லா ஆசார்யர்களுக்கும் உடன்பாடாகையாலும், தற்காலத்தில் கைவல்யத்தை விரும்புவார் எவருமில்லாமையாலும் இவ்விஷயத்தில் வீண் விவாதம் வேண்டியதில்லை'' என்று அடியேனால் எழுதப்பட்டது. இப்போதும் கைவல்யத்தைப்பற்றிச் சர்ச்சை செய்துகொண்டிருப்பது விசேஷமான பயனை விளைக்கக்கூடியதல்ல என்பதே நம் கருத்து. ஆயினும், கீ₃தையிலும், அதன் பா₄ஷ்யத்திலும் கைவல்யத்தைப் பற்றி விரிவாக விளக்கப்பட்டிருக்கையால், அவற்றைத் தெளிவாகவும், விரிவாகவும் விளக்கும் நமது கீ₃தா வ்யாக்₂யானத்தில் கீ₃தாசார்யனுடையவும், கீ₃தாபா₄ஷ்யகாரருடையவும் திருவுள்ளம் விளங்குவதற்காக இவ்வளவு விரிவாக நாம் விசாரம் செய்யவேண்டிய அவஶ்யம் நேர்ந்து விட்டது. இப்படி விசாரம் செய்யும்போது, இது கைவல்யம் ஒன்றைப் பற்றிய விசாரமாக மாத்திரம் அமையாமல், ஸ்ரீவைஷ்ணவ ஸித்₃தா₄ந்தத்தில் உள்ள இரு ஸம்ப்ரதா₃யங்களும் எந்த அடிப்படையில் பிரிந்து நிற்கின்றன என்பதைத் தெளிவாகவும், விரிவாகவும் காட்டும் விசாரமாகவும் அமைந்துவிட்டபடியால், இவ் விசாரம் பயனுடையதாகவும் ஆகிறது. இதை அடியேனைக் கருவியாகக்கொண்டு கீ₃தாசார்யனும், கீ₃தாபா₄ஷ்யகாரரும் எழுதியிருப்பதாகவே அடியேனுடைய அபி₄ஸந்தி₄ (நினைவு). ஸாராஸார விவேகஜ்ஞர்களான நடுநிலைநிற்கும் நல்லோர்கள் நடுநிலைநின்று ஆராய்ந்து உண்மையை நிஷ்கர்ஷிப்பார்களாக.

ஸாராஸாரவிவேகஜ்ஞா: க₃ரீயாம்ஸோ விமத்ஸரா: |
ப்ரமாணதந்த்ரா: ஸந்தீதி ஸித்₃தா₄ஞ்ஜநமித₃ம் க்ருதம் ||

[ஸாரம், அஸாரம் ஆகியவற்றைப் பகுத்தறியக் கூடியவர்களும், மாத்ஸர்ய மற்றவர்களும், ப்ரமாணங்களுக்குக் கட்டுப்பட்டவர்களுமான பெரியோர்கள் இக்காலத்திலும் இருக்கிறார்கள் என்னும் எண்ணத்தாலே இந்தக் கைவல்ய ஸித்₃தா₄ஞ்ஜநம் இயற்றப் பெற்றது.]

கைவல்யஸித்₃தா₄ஞ்ஜநம் நிறைவுபெற்றது.

यत्र काले त्वनावृत्तिमावृत्तिं चैव योगिनः।
प्रयाता यान्ति तं कालं वक्ष्यामि भरतर्षभ !॥ २३॥
अग्निर्ज्योतिरहःशुक्लः षण्मासा उत्तरायणम्।
तत्र प्रयाता गच्छन्ति ब्रह्म ब्रह्मविदो जनाः॥ २४॥

23. யத்ர காலே த்வநாவ்ருத்திமாவ்ருத்திம் சைவ யோகி3ந:।
ப்ரயாதா யாந்தி தம் காலம் வக்ஷ்யாமி ப4ரதர்ஷப4! ॥

24. அக்3நிர்ஜ்யோதிரஹஶ்ஶுக்ல: ஷண்மாஸா உத்தராயணம்।
தத்ர ப்ரயாதா க3ச்ச2ந்தி ப்3ரஹ்ம ப்3ரஹ்மவிதே3ா ஜநா: ॥

ப4ரதர்ஷப4 !—ப4ரதகுல திலகமே ! யத்ர காலே ப்ரயாதா: யோகி3ந:து—எந்த வழிகளில் செல்லும் யோகி3களோவெனில், ஆவ்ருத்திம் அநாவ்ருத்திம் ச—ஸம்ஸார மண்ட3லத்துக்குத் திரும்பி வருதலும், அப்படித் திரும்பிவராமல் ப்3ரஹ்மத்தை அடைதலுமாகிற ப2லன்களை, யாந்தி—பெறுகிறார்களோ, தம் காலம் — அந்த வழிகளை, வக்ஷ்யாமி — கூறுகிறேன்: அக்3நிர்ஜ்யோதி : — அர்ச்சிஸ்ஸு, அஹ : — அஹஸ்ஸு, ஶுக்ல:—ஶுக்லபக்ஷம், உத்தராயணம் ஷண்மாஸா:—உத்தராயணமான ஆறு மாஸங்கள், தத்ர ப்ரயாதா :—என்னும் இவ்வழியிலே செல்கின்ற, ப்3ரஹ்மவித3 : ஜநா :—ப்3ரஹ்மத்தை ப்ராப்யமாக உபாஸிக்கும் உபாஸகர்கள், ப்3ரஹ்ம க3ச்ச2ந்தி—ப்3ரஹ்மத்தை அடைகிறார்கள்.

---

22. யாதுவழி செல்லுங்கால் யோகியர்கண் மீளார்கள்
யாதுசெல்லுங் கான்மீள்வ ரிவ்வுலகின்—மீதமைந்த
வவ்வழிக டாமிரண்டு மாங்குனக்குச் சொல்லுகே
னிவ்வழியிற் கேளா யிது.

யோகியர்கள்—யோகி3கள், யாது வழி செல்லுங்கால்—எந்த ( அர்ச்சிராதி3 ) மார்க்க3த்தின் வழியாகச் செல்லும் போது, மீளார்கள்—(ஸம்ஸார மண்ட3லத்திற்கு) மீண்டு வரமாட்டார்களோ, யாது செல்லுங்கால்—எந்த (தூ4மாதி3)

மார்க்கத்தின் வழியாகச் செல்லும்போது, மீள்வர்—(இந்த ஸம்ஸார மண்டலத்திற்கே) மறுபடியும் வருவார்களோ, இவ்வுலகின்மீது அமைந்த—இந்த உலகத்திலே அமைந் திருக்கும், அவ்வழிகள் தாம் இரண்டும் — அந்த இரண்டு மார்க்கங்களையும், ஆங்கு—இவ்விடத்தில், உனக்குச் சொல்லுகேன்—உனக்குச் சொல்லுகின்றேன், இது— இவ்வழிகள் இரண்டையும், இவ்வழியில் கேளாய் — நான் சொல்ல நீ கேட்பாயாக.

23. அங்கிபகன் முற்பக்க மாங்கு வடவயனந்
தங்கிமிசை யேகியே தாமணைவர் – சங்கையற
மன்னும் பிரமத்தை வாய்ந்ததனைத் தம்முணர்வா
லுன்னு மனத்தவர்க ளுற்று.

அங்கி—அக்நியாகிற அர்ச்சிஸ்ஸு, பகல்—அஹஸ்ஸு, முற்பக்கம் — ஶுக்லபக்ஷம், ஆங்கு — அடுத்தபடியுள்ள, வடவயனம் மிசை—உத்தராயணம் ஆகியவற்றிலே, தங்கி ஏகியே — தங்கிச்சென்று, சங்கை அற — ஐயமில்லாமல், மன்னும் பிரமத்தை—நிலைநின்ற ப்ரஹ்மத்தை, வாய்ந்து— ப்ராப்யமாகப் பெற்று, தாம் அணைவர்—தாம் அநுபவிக்கப் பெறுவர்; (யாரெனில்) அதனை—அந்த ப்ரஹ்மத்தை, தம் உணர்வால் உற்று—தம் அறிவாலே ப்ராப்யமாக எண்ணி, உன்னும் மனத்தவர்கள்—உபாஸிக்கும் நெஞ்சை உடையவர்களே (முற்கூறியவாறு அடைவர்.)

---

(யத்ர காலே ப்ரயாதா: யோகிந:) எந்த மார்க்கத்தில் சென்ற யோகிகள்; இங்கு 'கால' ஶப்தம், ப்ரகரணத்தை ஒட்டி அர்ச்சிராதி மார்க்கம், தூமாதி மார்க்கம் என்னும் இரு மார்க்கங்களையும் குறிக்கிறது. "ஶுக்ல க்ருஷ்ணே கதீ ஹ்யேதே" [8-26] என்று தொடங்கும் அடுத்துள்ள ஶ்லோகத்தில், இவற்றை 'கதி' ஶப்தத் தால் எடுத்து, அடுத்த ஶ்லோகத்தில் 'நைதே ஸ்ருதீ' [8-27] என்று மார்க்கத்தைச் சொல்லும் ஸ்ருதி ஶப்தத்தாலே அநுவதிக்கையால் இங்கு காலமாத்ரத்தைச் சொல்லுவதாகக் கொள்ளமுடியாது. மேலும், "அதஶ்சாயநேऽபி தக்ஷிணே" [ப்ர-ஸூ 4-2-19] என்று தொடங்கி ப்ரஹ்ம ஸூத்ரத்தில், தக்ஷிணாயனம், க்ருஷ்ணபக்ஷம், ராத்ரி

॥भा॥ अत्र कालशब्दो मार्गस्थाहःप्रभृतिसंवत्सरान्तकालाभिमानिदेवताभूयस्तया मार्गोपलक्षणार्थः। यस्मिन्मार्गे प्रयाता योगिनोऽनावृत्तिं, पुण्यकर्माणश्चावृत्तिं यान्ति; तं मार्गं वक्ष्यामीत्यर्थः।

---

ஆகிய காலங்களில் மரணமடைந்தவனும் மோக்ஷமடையலாம் என்று கூறப்பட்டது. ஆகையால், இங்கு அவ்வக்காலமாத்ரத்தை 'அஹ:' முதலான பத₃ங்கள் குறிப்பதாகக் கொள்ளாமல், அர்ச்சிராதி₃ தூ₄மாதி₃ மார்க்க₃ங்களிலுள்ள அந்தந்தக் காலாபி₄மாநி தே₃வதைகளைக் குறிப்பதாகக் கொள்வதே பொருந்தும். காலத்தைச் சொல்லாத " அக்₃நிர்ஜ்யோதி: " " தூ₄ம: " என்னும் பத₃ங்களை இங்கு கலந்து ப்ரயோகி₃த்திருப்பதும் இதையே வலியுறுத்துகிறது. காலாபி₄மாநி தே₃வதைகளே பெரும்பான்மையினராயிருப்பதால், காலஶப்₃த₃த்தால் மார்க்க₃ம் குறிக்கப்படுகிறது. (யோகி₃ந:) ஜ்ஞாநிகளும் புண்யகர்மம் செய்கிறவர்களுமாகிற இருவகை யோகி₃கள் என்று பொருள் கொண்டால், " ஸருபாணாம் ஏகஶேஷ ஏகவிப₄க்தௌ" [அஷ்டாத்₄யாயீ 1-2-64] [ஒரே வேற்றுமையுடைய ஒருபடிப்பட்ட ஶப்₃த₃ங்களிடையே ஒரு ஶப்₃த₃மே எஞ்சிநிற்கும்.] என்னும் ஸூத்ரத்தின்படி, "யோகி₃நஶ்ச யோகி₃நஶ்ச — யோகி₃ந:" என்னும் ஏகஶேஷத்₃வந்த்₃வமாகக் கொள்ள வேண்டும். அடுத்த ஶ்லோகத்தில் புண்யகர்மம் செய்தவர்களையும் யோகி₃களாக எடுத்திருப்பதற்கு இது பொருந்தும். அன்றிக்கே, "புண்யகர்மாணஶ்ச" என்னும் பத₃த்தை வருவித்துக்கொண்டு, "யோகி₃கள் அநாவ்ருத்தியையும், புண்யகர்மாக்கள் ஆவ்ருத்தியையும் அடைகிறார்களோ" என்றும் பொருள் கொள்ளலாம். இப்போது இந்த ஶ்லோகத்தில் 'யோகி₃கள்' என்றது ஜ்ஞாநிகளை மாத்திரம் குறிக்கும். கீ₃தாபா₄ஷ்யத்தில் இப்படியே கொள்ளப்பட்டது. இந்த கீ₃தாஶ்லோகஸ்வாரஸ்யத்தையொட்டி இருபத்தாறுவது ஶ்லோக பா₄ஷ்யத்தில், அர்ச்சிராதி₃க₃தி ஜ்ஞாநிகளுக்கே உரியது என்று காட்டப்பட்டிருக்கையால், இங்கும் 'யோகி₃ந:' என்றது ஜ்ஞாநிகளையே குறிக்கும் எனக்கொள்வது ஸ்வரஸம். (து) 'து' ஶப்₃த₃ம் பாபிகளை நரகத்திற்கு அழைத்துச் செல்லும் க₃திகளைக் காட்டிலும் வேறுபாட்டைக் காட்டுகிறது. (ஆவ்ருத்திம் அநாவ்ருத்திம் ச யாந்தி) அர்ச்சிராதி₃ மார்க்க₃த்தால் செல்லும் ஜ்ஞாநிகள் மறுபடியும் ஸம்ஸார மண்ட₃லத்திற்குத் திரும்பி வருவதில்லை என்றும், தூ₄மாதி₃ மார்க்க₃த்தால் செல்லும் புண்யகர்மகர்த்தாக்கள் ஸம்ஸார மண்ட₃லத்திலேயே

अग्निर्ज्योतिरहश्शुक्लष्षण्मासा उत्तरायणमिति संवत्सरादीनां प्रदर्शनम्
॥ २३ ॥ २४ ॥

---

உழல்கிறார்கள் என்றும் கருத்து. (தம் காலம் வக்ஷ்யாமி) அந்த அர்ச்சிராதி₃, தூ₄மாதி₃ மார்க்க₃ங்களை உனக்குக் கூறுகிறேன். (ப₄ரதர்ஷப₄) ப₄ரதகுலத்துக்குத் தலைவனான நீ இவ்விரு மார்க்க₃ங்களில் சிறந்ததான அர்ச்சிராதி₃ மார்க்க₃த்தை அடைந்து அந்த வழியாலே ப்₃ரஹ்மத்தை அடையவேண்டும் என்று கருத்து. இரண்டாம் ஶ்லோகத்தில் இவ்வர்ச்சிராதி₃ மார்க்க₃ம் காட்டப்படுகிறது இனி, (அக்₃நிர்ஜ்யோதி:) அக்₃நிரூபமான ஜ்யோதி: அதாவது — அர்ச்சிராதி₃ மார்க்க₃த்தில் முதல் படியான அர்ச்சிஸ்ஸு. (அஹஶ் ஶுக்ல: ஷண்மாஸா உத்தராயணம்) அடுத்த படிகளான பகல், ஶுக்லபக்ஷம், உத்தராயணமான ஆறு மாஸங்கள். ''அர்ச்சிஷோऽஹ: அஹ்ந ஆபூர்யமாணபக்ஷம், ஆபூர்யமாணபக்ஷாத் யாந் ஷடு₃த₃ங்ஙேதி மாஸாம்ஸ்தாந், மாஸேப்₄ய: ஸம்வத்ஸரம், ஸம்வத்ஸராதா₃தி₃த்யம், ஆதி₃த்யாச்சந்த்₃ரமஸம், சந்த்₃ரமஸோ வித்₃யுதம்'' [சா₂ந் 5-10-1, 2] [அர்ச்சிஸ்ஸிலிருந்து அஹஸ்ஸையும், அஹஸ்ஸிலிருந்து ஶுக்லபக்ஷத்தையும், ஶுக்லபக்ஷத்திலிருந்து ஸூர்யன் வடக்கு முகமாகச் செல்லும் உத்தராயணமான ஆறு மாஸங்களையும், அவ்வுத்தராயணத்திலிருந்து ஸம்வத்ஸரத்தையும், ஸம்வத்ஸரத்திலிருந்து ஆதி₃த்யனையும், ஆதி₃த்யனிலிருந்து சந்த்₃ரனையும், சந்த்₃ரனிலிருந்து வித்₃யுத்புருஷனையும் அடைகிறான்] என்று உபநிஷத்தில் சொல்லப்பட்ட ஸம்வத்ஸரம் முதலான அர்ச்சிராதி₃ மார்க்க₃த்திலுள்ள மற்ற அபி₄மாநி தே₃வதைகளுக்கும், மற்றும் சிலர்க்கும் இவை உபலக்ஷணம். இம்மார்க்க₃த்திலுள்ள மற்றும் சிலர் யாரென்பது ப்₃ரஹ்மஸூத்ரத்தில் அர்ச்சிராதி₃ பாத₃த்தில் விளக்கப்பட்டது.

''அர்ச்சிரஹஸ்ஸிதபக்ஷா நுத₃க₃யநாப்₃த₃ மருத₃ர்க்கேந்தூ₃ந் ।
அபி வைத்₃யுத வருணேந்த்₃ர ப்ரஜாபதீநாதிவாஹிகாநாஹு: ॥''
[தத்வஸாரம்-102]

[(1) அர்ச்சிஸ் (ஒளி) (2) அஹஸ் (பகல்) (3) ஶுக்லபக்ஷம் (4) உத்தராயணம் (5) ஸம்வத்ஸரம் (வருஷம்) (6) மருத் (வாயு) (7) ஸூர்யன் (8) சந்திரன் (9) வைத்₃யுதன் (10) வருணன் (11) இந்த்₃ரன் (12) ப்ரஜாபதி (பிரமன்) ஆகிய இவர்கள் ஆதிவாஹிகர்கள் (அர்ச்சிராதி₃க₃தியில் முக்தனை அழைத்துச் செல்லுமவர்கள்) என்று கூறுகிறார்கள்.]

धूमो रात्रिस्तथा कृष्णः षण्मासा दक्षिणायनम्।
तत्र चान्द्रमसं ज्योतिर्योगी प्राप्य निवर्तते ॥ २५ ॥

'முக்தோऽர்ச்சிர் தி3நபூர்வபக்ஷஷடு3த3ங்மாஸாப்3த3வாதாம்ஶுமத்3-
க்3லௌவித்3யுத்3வருணேந்த்3ரத4ாத்ருமஹித: ஸீமாந்தஸிந்த்4வாப்
ஸ்ரீவைகுண்ட2முபேத்ய நித்யமஜட3ம் தஸ்மிந் பரப்3ரஹ்மண: [லுத:]
ஸாயுஜ்யம் ஸமவாப்ய நந்த3தி ஸமம் தேநைவ த4ந்ய: புமாந் ||''
[ஶ்லோகத்2வயம் 2]

[(1) அர்ச்சிஸ் (2) பகல் (3) ஶுக்லபக்ஷம் (4) உத்தராயணம் (5) வருஷம் (6) வாயு (7) ஸூர்யன் (8) சந்திரன் (9) வைத்3யுதன் (10) வருணன் (11) இந்திரன் (12) ப்ரஜாபதி (பிரமன்) ஆகிய வர்களால் அவரவர் ஸ்தானங்களிலே (முறையே) கொண்டாடப் பட்டு, (வைத்3யுதனை அமாநவனோடு கூடச்சென்று) ப்ரக்ருதி மண்ட2லத்தின் இறுதியிலுள்ள (விரஜா) நீரில் குளித்து, பரக்3ய ஶாலியான முக்தன் நித்யமாய், ஸ்வயம்ப்ரகாஶமான ஸ்ரீவைகுண் ட2த்தை அடைந்து, அங்கு பரமாத்மாவோடு ஒத்த கு3ணத்தை உடையவனாகி அவனோடு கூட இன்புறுகிறான்.] என்று அர்ச்சிராதி3 க3தியிலுள்ள எல்லா (பன்னிரண்டு) ஆதிவாஹிகர்களையும் நடாதூரம் மாள் காட்டியருளினர். அர்ச்சிராதி3 முதலான ரஹஸ்யக்3ரந்த2ங்க ளிலும் இந்த க3தி விவரிக்கப்பட்டது. (தத்ர ப்ரயாதா: ப்3ரஹ்மவிதோ3 ஜநா: ப்3ரஹ்ம க3ச்ச2ந்தி) அந்த அர்ச்சிராதி3க3தி வழியாகச் செல் கின்றவர்களாய், ப்3ரஹ்மத்தை ப்ராப்யமாக உபாஸிக்கும் முமுக்ஷுக்கள் ப்3ரஹ்மத்தை அடைகிறார்கள். ப்3ரஹ்மத்தை ப்ராபகமாக உபாஸிக்கும் கைவல்யார்த்தி2களும் இங்கு ப்3ரஹ்மவித்துக்கள் என்னும் ஶப்3த3த் தாலே எடுக்கப்படுவதாகக் கொள்ளலாமே? எனில்: அப்படிக் கொண்டால் ப்3ரஹ்மத்தை ஐஶ்வர்ய ஸாத4நமாக உபாஸிக்கும் ஐஶ்வர்யார்த்தி2களுக்கும் அர்ச்சிராதி3க3தியை ஒப்புக்கொள்ளவேண்டி வரும். ஐஶ்வர்யார்த்தி2க்கு அர்ச்சிராதி3க3தி இல்லை என்பது அனைவரும் இசைந்தது. ஆகையால் இங்கு ப்3ரஹ்மத்தை ப்ராப்ய மாக உபாஸிக்கும் ஜ்ஞாநிகளே ப்3ரஹ்மவித்துக்கள் என்று கூறப் படுகிறார்கள் என்று கொண்டு தீரவேண்டும். ஆக, கைவல்யார்த்தி2க்கு அர்ச்சிராதி3க3தியில்லை என்பது 'ப்3ரஹ்மவித3:' என்னும் ஶப்3த3த்தி லிருந்தே அசைக்கமுடியாதபடி தேறுகிறது. ஆக, பரமபுருஷநிஷ்ட2 னும், பஞ்சாக்3நிவித்3யாநிஷ்ட2னுமான இருவகையான ஜ்ஞாநிகள் ப்3ரஹ்மத்தை அடைவதற்கு வழியான அர்ச்சிராதி3மார்க்க3ம் விவரிக்கப்பட்டதாயிற்று. 23,24.

25. தூ₄மோ ராத்ரிஸ் ததா₂ க்ருஷ்ண: ஷண்மாஸா

த₃க்ஷிணாயநம் ।

தத்ர சாந்த்₃ரமஸம் ஜ்யோதிர் யோகீ₃ ப்ராப்ய நிவர்த்ததே ॥

தூ₄ம:—தூ₄மம் (புகை), ராத்ரி:-இரவு, ததா₂ க்ருஷ்ண:- அவ்வண்ணமே க்ருஷ்ணபக்ஷம், த₃க்ஷிணாயநம் ஷண் மாஸா:—த₃க்ஷிணாயநமான ஆறு மாதங்கள், தத்ர சாந்த்₃ர மஸம் ஜ்யோதி:—அதற்குப்பின் சந்த்₃ரனுகிற சோதி (ஆகிய வர்களை) யோகீ₃—புண்யகர்மம் செய்தவன், ப்ராப்ய— அடைந்து, நிவர்த்ததே—(கர்மபூ₄மிக்கே) திரும்பி வருகிறுன்.

24. தூமமிராப் பிற்பக்கஞ் சோராமற் றென்னயன

மாமதன்மேற் சந்திரனை யாங்கணைந்து—போமவன்றான்

நல்வினையிற் சேர்பயனு நாடணைந்து மீளுமே

மல்வினையிற் சார்பால் மறிந்து.

தூமம் — புகை, இரா — இரவு, பிற்பக்கம் — அபர (க்ருஷ்ண)பக்ஷம், தென் அயனம்—த₃க்ஷிணாயநம், ஆம் அதன்மேல் சந்திரனை ஆங்கு அணைந்து— முற்கூறியவற்றுக்கு மேல் சந்திரனை அவ்வழியில் அடைந்து, சோராமல் போம வன்தான்—களைப்படையாமல் போகின்றவன், நல்வினையின் சேர் பயனும்—புண்ய கர்ம ஸம்ப₃ந்த₄த்தின் ப₂லமாயிருக்கும், நாடு அணைந்து — ஸ்வர்க்க₃லோகத்தை அடைந்து, மல் வினையின் சார்பால் — எஞ்சிய கர்மத்தின் தொடர்பால், மறிந்து மீளுமே—மறுபடியும் கர்மபூ₄மிக்கே வந்து சேர்வான்.

25. புண்ணியம் செய்தவர்கள் ஸ்வர்க்க₃த்திற்குச் செல்லும் வழி யான தூ₄மாதி₃ மார்க்க₃த்தைக் காட்டுகிறுன் இதில். (தூ₄ம:) அர்ச்சி ராதி₃க₃தியில் முதலாவதான ஒளிக்கு எதிர்த்தட்டான புகைக்கு அபி₄ மாநிதே₃வதை. (ராத்ரி:) அர்ச்சிராதி₃க₃தியில் இரண்டாவதான பக லுக்கு எதிர்த்தட்டான ராத்ரிக்கு அபி₄மாநிதே₃வதை. (ததா₂ க்ருஷ்ண:) அர்ச்சிராதி₃க₃தியில் மூன்றுவதான ஶுக்ல பக்ஷத்திற்கு எதிர்த்தட் டான க்ருஷ்ண பக்ஷத்திற்கு அபி₄மாநிதே₃வதை. (ஷண்மாஸா: த₃க்ஷிணாயநம்) அர்ச்சிராதி₃க₃தியில் நான்காவதான உத்தரா யணத்திற்கு எதிர்த்தட்டான த₃க்ஷிணாயநத்திற்கு அபி₄மாநிதே₃வதை.

॥भा॥ एतच्च धूमादिमार्गस्थपितृलोकादेः प्रदर्शनम्। अत्र योगिशब्दः पुण्यकर्मसंबन्धिविषयः॥ २५॥

---

(தத்ர சாந்த்₃ரமஸம் ஜ்யோதி: ப்ராப்ய) அவ்வழியில் சந்த்₃ரனுகிற சோதியை அடைந்து. "அத₂ ய இமே க்₃ராம இஷ்டாபூர்த்தே த₃த்தமித்யுபாஸதே தே தூ₄மமபி₄ஸம்ப₄வந்தி, தூ₄மாத்₃ராத்ரிம், ராத்ரேரபரபக்ஷம், அபரபக்ஷாத்₃யாந் த₃க்ஷிணைதி மாஸாம்ஸ்தாந், நைதே ஸம்வத்ஸரமபி₄ப்ராப்நுவந்தி. மாஸேப்₄ய: பித்ருலோகம், பித்ருலோகாதா₃காஶம், ஆகாஶாச்சந்த்₃ரமஸம்" [ சா₂ந் 5-10-3,4 ] [யாவர் சிலர் தங்களூரிலிருந்துகொண்டு யாக₃ம் முதலான இஷ்டங்கள், குளம்வெட்டுதல் முதலான பூர்த்தங்கள், த₃ானம முதலான புண்ய கர்மங்களை (ஸ்வர்க்க₃த்தை அடைவதற்காக) முறைப்படி செய்கிறார்களோ, அவர்கள் முதலில் தூ₄மாபி₄மாநிதே₃வதையை (ஆதிவாஹிகராக) அடைகிறார்கள். தூ₄மத்திலிருந்து ராத்ரி, ராத்ரியிலிருந்து க்ருஷ்ணபக்ஷம்; அதிலிருந்து த₃க்ஷிணாயநம் ஆகியவற்றை அடைகின்றனர். வருஷத்தை இவர்கள் அடைவதில்லை. த₃க்ஷிணாயநத்திலிருந்து பித்ருலோகத்தையும், அதிலிருந்து ஆகாஶத்தையும், அதிலிருந்து சந்திரனையும் அடைகின்றனர்.] என்னும் உபநிஷத்₃ வாக்யத்தில் சொல்லப்பட்ட பித்ருலோகம், ஆகாஶம் ஆகிய ஆதிவாஹிகர்களையும் இங்கு சேர்த்துக்கொள்ளவேண்டும். (தத்ர யோகீ₃ சாந்த்₃ரமஸம் ஜ்யோதி: ப்ராப்ய நிவர்த்ததே) புண்யகர்மங்களோடு ஸம்ப₃ந்த₄முடையவன் சந்திரனுகிற சோதியை அடைந்து ஸ்வர்க்க₃ ஸுக₂த்தை அநுப₄வித்துவிட்டு, புண்யகர்மம் முடிந்தவுடன், கர்ம ஶேஷப₃லத்தாலே கர்மபூ₄மிக்கே திரும்புகிறான். இவ்விஷயங்களும் ப்₃ரஹ்மஸூத்ரத்தில் மூன்றாம் அத்தியாயத்தின் முற்பகுதியில் விளக்கப்பட்டன. (யோகீ₃) இங்கு யோக₃ஶப்₃த₃ம் "யோக₃: ஸந்நஹநோபாய" [அமரம் 3-3-22] என்கிற நிக₄ண்டுவின்படி ஸ்வர்க்க₃த்திற்கு உபாயமான புண்யகர்மங்களைக் குறித்து, 'யோகீ₃' என்று அவற்றை உடையவனைக் குறிப்பதாகக் கொள்ளலாம். அன்றிக்கே, யோக₃ஶப்₃த₃ம் ஸம்ப₃ந்த₄த்தைக் குறிப்பதாய், புண்யம் செய்தவர்கள் அடையும் தூ₄மாதி₃மார்க்க₃ ப்ரகரணத்தையொட்டி, 'யோகீ₃' என்று இங்கு புண்யகர்மஸம்ப₃ந்த₄முடையவனைக் குறிப்பதாகக்கொள்ளலாம். ஆக, இந்த ஶ்லோகத்தில் புண்யகர்மம் செய்த ஐஶ்வர்யார்த்தி₂கள் ஸ்வர்க்க₃ம் முதலான ப்ராக்ருதலோகங்களை அடைவதற்குச் செல்லும் தூ₄மாதி₃மார்க்க₃ம் விவரிக்கப்பட்டதாயிற்று. 25.

शुक्लकृष्णे गती ह्येते जगतश्शाश्वते मते।
एकया यात्यनावृत्तिमन्ययाऽऽवर्तते पुनः ॥ २६ ॥

26. *ஶுக்லக்ருஷ்ணே* க₃தீ ஹ்யேதே ஜக₃த: *ஶாஶ்*வதே மதே ।
ஏகயா யாத்யநாவ்ருத்திம் அந்யயாऽऽவர்த்ததே புந: ॥

ஏதே *ஶுக்லக்ருஷ்ணே* க₃தீ — இந்த அர்ச்சிராதி₃, தூ₄மாதி₃ மார்க்க₃ங்கள் இரண்டும், ஜக₃த: — (முறையே) ஞானிகளுக்கும், புண்ணியம் செய்தவர்களுக்கும், *ஶாஶ்*வதே மதே — (*ஶ்*ருதியில்) நிலையானவையாக ஓதப்படுகின்றன. ஏகயா — இவற்றில் ஒன்றான அர்ச்சிராதி₃க₃தியாலே, அநாவ்ருத்திம் யாதி—திரும்பி வருதலில்லாத (ப்₃ரஹ்மப்ராப்தியாகிற) ப₂லனை அடைகிறான். அந்யயா—மற்றொன்றான தூ₄மாதி₃ மார்க்க₃த்தால் (சென்றவன்), புந: ஆவர்த்ததே-மறுபடியும் (கர்மபூ₄மிக்குத்) திரும்பி வருகிறான்.

---

25. வெளிதுகரி தாயிருமை மேவியுல கேய்ந்த
வளியநெறி யாங்கவற்றி லொன்றால்—றெளிவமரு
மீளாப் பதமணையு மிக்கதனான் மீண்டுவருங்
கோளாறு தானணையுங் கூர்ந்து.

வெளிது கரிதாய் இருமை மேவி—வெள்ளை வழி, கரிய வழி என (முறையே) இரு பெயர்களைப் பெற்று, உலகு ஏய்ந்த அளிய நெறி ஆங்கு அவற்றில்—(முறையே) ஞானிகளுக்கும், புண்ணியம் செய்தவர்களுக்கும் பொருந்திய நிலையான வழிகளான அவ்விரண்டு வழிகளில், ஒன்றால்—ஒன்றான அர்ச்சிராதி₃க₃தியாலே, தெளிவு அமரும் மீளாப் பதம் அணையும்—தெளிவு பொருந்தியதாய், ஸம்ஸாரத்திற்குத் திரும்புதலில்லாத பரமபத₃த்தை (ஜீவன்) அடைவான். மிக்கதனால்—மற்றொரு வழியான தூ₄மாதி₃ மார்க்க₃த்தாலே (சென்றவன்), மீண்டு வரும் கோளாறுதான்—கர்மபூ₄மிக்குத் திரும்பி வரும் துன்பத்தையே, கூர்ந்து அணையும்—பொருந்தி அடைவான்.

॥ भा ॥ शुक्ला गतिः—अर्चिरादिका, कृष्णा च धूमादिका। शुक्लयाऽनावृत्तिं याति ; कृष्णया तु पुनरावर्तते। एते शुक्लकृष्णे गती

---

26. முற்கூறிய இரண்டு க₃திகளும் ஶ்ருதிப்ரஸித்₃த₄மானவை என்று காட்டுகிறது இந்த ஶ்லோகம். (ஏதே ஶுக்லக்ருஷ்ணே க₃தீ) இந்த ஶுக்ல (வெள்ளை) க₃தியும், க்ருஷ்ண (கறுப்பு) க₃தியும். ஶுக்லபக்ஷஸம்ப₃ந்த₄த்தால் அர்ச்சிராதி₃மார்க்க₃ம் ஶுக்லக₃தியென்றும், க்ருஷ்ணபக்ஷஸம்ப₃ந்த₄த்தால் தூ₄மாதி₃ மார்க்க₃ம் க்ருஷ்ணக₃தி என்றும் சொல்லப்படுவதாகக் கொள்ளலாம். ஸாத்விகரான முக்தியடைபவர்களை உபசரிக்கும் ஸாத்விகரான தே₃வர்கள் நிறைந்திருக்கையாலே ஶுத்₃தி₄யையிட்டு அர்ச்சிராதி₃க₃தி ஶுக்லக₃தி என்றும், ரஜஸ்தமோகு₃ணம் மிகுந்த புண்யகர்மகர்த்தாக்களை உபசரிக்கும் ரஜஸ்தமோகு₃ணங்கள் மிகுந்த தே₃வர்கள் நிறைந்திருக்குமிடமாகையாலே அஶுத்₃தி₄யையிட்டு தூ₄மாதி₃மார்க்க₃ம் க்ருஷ்ணக₃தி என்றும் கூறப்படுவதாகவும் கொள்ளலாம். அர்ச்சிஸ் (ஒளி), அஹஸ் (பகல்), ஶுக்லபக்ஷம், ஆதி₃த்யன் முதலான ஒளிநிறைந்த பொருள்களின் அபி₄மாநிதே₃வதைகள் வாழுமிடமாகையாலே, அர்ச்சிராதி₃ மார்க்க₃ம் 'வெள்ளை வழி' என்றும், தூ₄மம் (புகை), ராத்ரி (இரவு) க்ருஷ்ணபக்ஷம் முதலான இருள்நிறைந்த பொருள்களின் அபி₄மாநிதே₃வதைகள் வாழுமிடமாகையாலே, தூ₄மாதி₃மார்க்க₃ம் 'கறுப்பு வழி' என்றும் கூறப்படுவதாகவும் கொள்ளலாம். (ஜக₃த: ஶாஶ்வதே மதே ஹி) ஜ்ஞாநிகளுக்கு அர்ச்சிராதி₃க₃தியும், "இஷ்டாபூர்த்தம் த₃த்தம்" [சா₂ந் 5-10-3] என்று யாக₃ம், தா₃னம், குளம் வெட்டுதல் முதலான பலவித₄மான புண்யகர்மங்களைச் செய்தவர்களுக்கு தூ₄மாதி₃மார்க்க₃மும் வேத₃வாக்யங்களில் தனித்தனியாகவும், நிலையானவையாகவும் ஓதப்பட்டுள்ளனவன்றோ. 'ஹி' ஶப்₃த₃ம் ஶ்ருதி ப்ரஸித்₃தி₄யைக் காட்டுகிறது. "தத்₃ய இத்த₂ம் விது₃:, யே சேமேऽரண்யே ஶ்ரத்₃தா₄ தப இத்யுபாஸதே தேऽர்ச்சிஷமபி₄ஸம்ப₄வந்தி" [சா₂ந் 5-10-1] [இதன்பொருள் பக்கம் 265, 380 முதலானவிடங்களில் விவரிக்கப்பட்டுள்ளது.] என்று அர்ச்சிராதி₃மார்க்க₃மும், "அத₂ ய இமே க்₃ராமே இஷ்டாபூர்த்தம் த₃த்தமித்யுபாஸதே, தே தூ₄மமபி₄ஸம்ப₄வந்தி" [சா₂ந் 5-10-3] [இதன் பொருள் 383-ம் பக்கத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.] என்று தூ₄மாதி₃மார்க்க₃மும் ஶ்ருதியில் விவரிக்கப்பட்டிருப்பது காணத்தக்கது. 'ஜக₃த:' (உலகிற்கு) என்று பொதுப்படையாக இருந்தபோதிலும், ஶ்ருதியில்-ப்₃ரஹ்மத்தை

ज्ञानिनां, द्विविधानां (ज्ञानिनां द्विविधानां,) पुण्यकर्मणां च श्रुतौ शाश्वते मते । * तद्य इत्थं विदुर्ये चेमेऽरण्ये श्रद्धा तप इत्युपासते तेऽर्चिषमभि-

---

ப்ராப்யமாகக்கொண்டு ப்3ரஹ்மவித்3யையை அநுஷ்டி2க்கும் ஜ்ஞாநிகளுக்கே அர்ச்சிராதி3க3தியும், ஸ்வர்க்க3ம் முதலான ப்ராக்ருத ப2லங்களை ப்ராப்யமாகக்கொண்டு யாக3த3ான ஹோமாதி3புண்ய கர்மங்களை அனுஷ்டி2க்குமவர்களுக்கே தூ4மாதி3மார்க்க3மும் தனித் தனியாக ஓதப்பட்டிருக்கையாலும், "வித்3யாகர்மணோரிதி து ப்ரக்ருதத்வாத்" [ப்3ரஹ்மஸூத்ரம் 3-1-17] [ப்ரகரணத்தைக்கொண்டு ஆராயும்போது, ப்3ரஹ்மவித்3யையை அநுஷ்டி2த்தவர்களுக்கே தே3வயாநமாகிற அர்ச்சிராதி3மார்க்க3மும், (புண்ய) கர்மங்களை அநுஷ்டி2த்தவர்களுக்கே பித்ருயாணமான தூ4மாதி3மார்க்க3மும் (ஏற்படும்) என்று (விளங்கும்)] என்று ப்3ரஹ்மஸூத்ரத்திலும் இவ் விஷயம் நிஷ்கர்ஷிக்கப்பட்டிருக்கையாலும், ஜக3ச்ச2ப்3த3த்திற்கு "ஜ்ஞாநிநாம், விவித4ாநாம் புண்யகர்மணாம் ச" என்று பா4ஷ்யகாரால் உரையிடப்பட்டது. தாத்பர்ய தீ3பிகையில் "ஜ்ஞாநிநாம் த்3விவித4ாநாம், புண்யகர்மணாம் ச" [பரமபுருஷநிஷ்ட2ன், பஞ்சாக்3நிவித்3யாநிஷ்ட2ன் என்னும் இருவகை ஞானிகளுக்கும், புண்ய கர்மம் செய்தவர்களுக்கும்] என்றும் பா4ஷ்யபாட2மிருப்பதாகக் காட்டப்பட்டது. "விவித4ாநாம் புண்யகர்மணாம்" என்று பாட2மாஞல் "இஷ்டாபூர்த்தம் த3த்தம்" [சாந் 5-10-3] என்னும் ஶ்ருதியை விளக்கியதாகவும், "ஜ்ஞாநிநாம் த்3விவித4ாநாம்" என்று பாட2மிருந்தால் "தத்3ய இத்த2ம் விது3:, யே சேமேऽரண்யே ஶ்ரத்3த4ா தப இத்யுபாஸதே" [சாந் 5-10-1] என்னும் ஶ்ருதியை விளக்கியதாகவும் ஆகிறது. எந்தப் பாட2மிருந்தாலும் ஜிஜ்ஞாஸுவான கைவல்யநிஷ்ட2னுக்கு இவ்விரு க3திகளிலும் அந்வயமில்லை என்பதே பா4ஷ்யகாரர் திருவுள்ளம் என்று தெளிவாக விளங்குகிறது. ப்ராக்ருதலோகத்தில் அமைந்திருக்கும் இந்த க3திகளை 'ஶாஶ்வதே' என்றது எப்படி? எனில்: ஒவ்வொரு கல்பத்திலும் இந்த க3திகள் அமைந்திருக்கையால் ப்ரவாஹரூபேண நித்யம் என்பதையிட்டும், ப்3ரஹ்மத்தை அடைபவனுக்கு அர்ச்சிராதி3மார்க்க3ம் என்றும், ப்ராக்ருதமான ஸ்வர்க்கா3தி3லோகங்களை அடைபவனுக்கு தூ4மாதி3மார்க்க3ம் என்றும் தனித்தனியாயிருக்கையாலும் 'ஶாஶ்வதே' எனப்படுகிறது. (மதே) ஶ்ருதியில் ஓதப்பட்டன. பரமபத3மடைபவனுக்கும், ஸ்வர்க்க3மடைபவனுக்கும் அவ்வழிகளும் அவற்றில் நடக்கும் உபசாரங்களும் உத்3தே3ஶ்யமாகையாலே

संभवन्ति (छा. ५. १०. १) * अथ य इमे ग्राम इष्टापूर्ते दत्त मित्युपासते ते धूममभिसंभवन्ति (छा. ५. १०. ३) इति॥ २६॥

---

வேத₃த்தில் இவ்விருவகையினரும் சிந்திப்பதற்காக விவரிக்கப்பட்டன வாகையாலே நானும் இங்கு விவரித்தேன்; மற்றோரதி₄காரியான கைவல்யநிஷ்ட₂னுக்குத் தன் ஆத்மாவைத் தவிர வேறொன்றும் உத்₃தே₃ஶ்யமல்லவாகையாலே வேத₃த்தில் அவனுக்கு க₃தி விவரிக்கப் படவில்லையாகையால், நானும் அவனுக்கு க₃தியை விவரிக்கவில்லை என்று கருத்து. (ஏகயா...புந:) ஶுக்லக₃தியாலே இவ்வுலகத்திற்குத் திருப்பிவருதலில்லாத ப்₃ரஹ்மாநுப₄வத்தையும், க்ருஷ்ணக₃தியாலே கர்மபூ₄மிக்குத் திரும்பிவரக்கூடிய ஸ்வர்க்க₃ம் முதலான அநுப₄வங் களையும் அடைகிறான் என்று கருத்து. இங்கு அநாவ்ருத்தியை உடைய வனுக்கு அர்ச்சிராதி₃க₃தியைக் கூறியிருக்கையால் (8-20) முதலான ஶ்லோகங்களில் அநாவ்ருத்தியை உடையவனாகக் கூறப்பட்ட கைவல்யநிஷ்ட₂னுக்கும் அர்ச்சிராதி₃க₃தி உண்டென்று விளங்கு கிறதே எனில்: இங்கு ''அநாவ்ருத்தியை உடையவனுக்கெல்லாம் அர்ச்சிராதி₃க₃தியுண்டு'' என்னும் வ்யாப்தி கருதப்படவில்லையாகை யால், கைவல்யநிஷ்ட₂னுக்கு அர்ச்சிராதி₃க₃தி உண்டென்று தேறாது. அப்படியொரு வ்யாப்தி இங்கு கருதப்பட்டதாகக்கொண்டால், ''ப்₃ரஹ்மணா ஸஹ தே ஸர்வே ஸம்ப்ராப்தே ப்ரதிஸஞ்சரே। பரஸ் யாந்தே க்ருதாத்மாந: ப்ரவிஶந்தி பரம் பத₃ம்॥'' [கூர்மபுராணம் - பூர்வக₂ண்ட₃ம் 12-269] [பிரமனின் ஸத்யலோகத்தில் ப₄க்திமுதலான உபாயங்களை அநுஷ்டி₂த்து முடித்த அவர்களனைவரும், ப்₃ரஹ்மா வின் ஆயுளான பரம் எனும் காலம் முடிந்தவுடன் ப்ரளயகாலத்தில் ப்₃ரஹ்மாவோடுகூடப் பரமபத₃த்தை அடைகிறார்கள்] என்கிறபடியே, அர்ச்சிராதி₃க₃தியில்லாவிடிலும் பரமபத₃த்தை ப்₃ரஹ்மாவோடு ப்ரளய காலத்தில் அடைந்து (க்ரம) முக்தியடைபவர்களுக்கும் புநராவ்ருத்தி யில்லையாகையாலே, இந்த வ்யாப்திக்கு வ்யபி₄சாரம் (தட்டுப்பாடு) வரும். மேலும், இந்த ஶ்லோகத்தில், இத்துடன்கூடப் படிக்கப் படும் தூ₄மாதி₃மார்க்க₃த்திற்கும், ''ஆவ்ருத்தியை உடையவனுக் கெல்லாம் தூ₄மாதி₃மார்க்க₃ம் உண்டு'' என்னும் வ்யாப்தியைக்கொள்ள வேண்டிவரும். ஆவ்ருத்தியுடைய நரகம் செல்வார் விஷயத்தில் தூ₄மாதி₃மார்க்க₃ம் இல்லையாகையால் இந்த வ்யாப்தியும் பொருந் தாது. ஆகையால் ப்₃ரஹ்மத்தை அடைபவனுக்கு ஆவ்ருத்தியில்லாத அர்ச்சிராதி₃மார்க்க₃மும், ஸ்வர்க்கா₃தி₃ ப்ராக்ருத புண்யலோகங்களை அடைபவனுக்கு ஆவ்ருத்தியுள்ள தூ₄மாதி₃மார்க்க₃மும் உண்டு என விதி₄ப்பதே இந்த ஶ்லோகத்தின் பரமதாத்பர்யமாகும். 27.

नैते सृती पार्थ ! जानन् योगी मुह्यति कश्चन ।
तस्मात्सर्वेषु कालेषु योगयुक्तो भवार्जुन ॥ २७ ॥

27. நைதே ஸ்ருதீ பார்த்த₂! ஜாநந் யோகீ₃ முஹ்யதி கஶ்சந ।
தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு யோக₃யுக்தோ
ப₄வார்ஜுந ! ॥

பார்த்த₂ அர்ஜுந—குந்திபிள்ளையான அர்ஜுநு ! ஏதே ஸ்ருதீ—இந்த அர்ச்சிராதி₃, தூ₄மாதி₃மார்க்க₃ங்கள் இரண்டையும், ஜாநந்—அறிகிற, கஶ்சந யோகீ₃—எந்த ஞானியும், ந முஹ்யதி — மயங்கமாட்டான். தஸ்மாத் — ஆகையால், ஸர்வேஷு காலேஷு—தினந்தோறும், யோக₃யுக்த: ப₄வ — (அர்ச்சிராதி₃க₃தியைச் சிந்திப்பதாகிற) யோக₃த்தோடு கூடியவனுக ஆவாயாக.

---

26. இவ்வழிக டானறிந்த யோகியவன் பார்த்தனே !
யெவ்வழியு மோகத் திடையணையான்—அவ்வழியாற்
கால மனைத்திலுந் காதலால் யோகத்தை
யேல முயல்கண்டா யிங்கு.

பார்த்தனே — அர்ஜுநு ! இவ்வழிகள்தான் அறிந்த யோகி அவன்—இந்த அர்ச்சிராதி₃. தூ₄மாதி₃மார்க்க₃ங்களை அறிந்த எந்த ஞானியும், எவ்வழியும்—ப்ரயாணகாலத்திலும், மோகத்திடை அணையான்—மயங்கமாட்டான். அவ்வழியால்—ஆகையாலே, காலம் அனைத்திலும்—தினந்தோறும், நீ—நீ, காதலால்—ஆர்வத்தோடு, யோகத்தை ஏல—(இந்த அர்ச்சிராதி₃க₃தியைச் சிந்திப்பதாகிற) தியானத்தை ஏற்றுக்கொள்ள, இங்கு— ஸாத₄நத₃ஶையான இப்போதே, முயல்கண்டாய்—முயற்சிசெய்வாயாக.

---

27. அர்ச்சிராதி₃க₃தி சிந்தனம் தினந்தோறும் ஞானியால் செய்யப்படவேண்டும் என்று விதி₄க்கிருன் இந்த ஶ்லோகத்தில். (ஏதே ஸ்ருதீ ஜாநந் கஶ்சந யோகீ₃) வெள்ளை வழியாகிற அர்ச்சிராதி₃க₃தியையும், கறுப்பு வழியாகிற தூ₄மாதி₃க₃தியையும் அறிகின்ற எந்த ஞானியும். பார்த்த₂னே 'அர்ஜுந' (வெளுத்தவனே!)

॥ भा ॥ एतौ मार्गौ जानन् योगी प्रयाणकाले कश्चन न मुह्यति; अपि तु स्वेनैव देवयानेन पथा याति। तस्मादहरहरर्चिरादिगति - चिन्तनाख्ययोगयुक्तो भव ॥ २७ ॥

---

என்று விளிக்கையாலும், தனக்கு ஆத்மஸமனை அவனை ஞானியாக்குவதிலேயே கண்ணனுக்கு நோக்காகையாலும் இங்கு யோகி₃ ஶப்₃த₃ம் 23-வது ஶ்லோகத்திற்போலே ஞானியையே குறிக்கிறதென்று கொள்ளவேணும். ஞானிக்கு மார்க்க₃ சிந்தநம் எதற்கு? எனில்: திருவேங்கடயாத்ரை, ப₃த₃ரியாத்ரை போலே அடையும் தே₃ஶத்தின் இனிமையாலே செல்லும் வழியும் உத்₃தே₃ஶ்யமாயிருக்கையால் ப்ராப்யத்தில் ருசியை வளர்ப்பதற்காக தி₃னந்தோறும் க₃தி சிந்தனம் செய்யவேண்டும் என விதி₄க்கப்படுகிறது. தாழ்ந்ததான தூ₄மாதி₃ மார்க்க₃த்தையும் அறியவேண்டும் என்றதற்குக் காரணத்தைக் காட்டிக்கொண்டு, உயர்ந்ததான அர்ச்சிராதி₃க₃தி சிந்தனத்திற்கு மேலும் ஒரு காரணம் காட்டப்படுகிறது. — (யோகீ₃ ந முஹ்யதி) யோகி₃ மயங்கமாட்டான்; உபாஸநத₃ஶையிலேயே இரண்டு க₃திகளையும் நன்கு அறிந்தவன், தாழ்ந்ததாய், பித்ருயாணமாகிற கறுத்த க₃தியிலிருந்து, சிறந்ததாய் தே₃வயாநமான வெளுத்த க₃தியைப் பிரித்தறிந்து, ப்ரயாணகாலத்தில் தனக்குரிய தே₃வயாநமாகிற அர்ச்சிராதி₃க₃தியில் மயங்காமல் செல்கிறான் என்று கருத்து. (ந முஹ்யதி) தலைசிறந்தவர்களின் உபசாரங்கள் நிறைந்த ஞானிக்குரிய அர்ச்சிராதி₃க₃திக்கு, தாழ்ந்தவர்களின் உபசாரங்களையுடைய ஐஶ்வர்யார்த்தி₂க்குரிய தூ₄மாதி₃க₃தியையும், ஒருபசாரமுமில்லாத ஜிஜ்ஞாஸுவுக்குரிய, நிர்மாநுஷ்யமாய், விவரிக்க இயலாத க₃தியையுங்காட்டிலும் சிறப்பை அறிகையாலே, மயக்கம், வருத்தம் முதலானவற்றை யடையாமல், ஸாத₄நத₃ஶையே தொடங்கித் தெளிவோடும் ஆநந்த₃த்தோடுமிருக்கிறான் என்று கருத்து. (ந முஹ்யதி) "தத்ப்ரகாஶித த்₃வார:" [ ப்₃ரஹ்மஸூத்ரம் 4-2-16 ] என்கிறபடியே பரமாத்மாவான எனது அருளாலே மார்க்க₃த்தைப்பற்றிய தெளிவு உண்டாகையாலே, ப்ரயாணகாலத்திலும் மயங்கமாட்டான் என்றும் கருத்துரைக்கலாம். (தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு யோகயுக்தோ ப₄வ) ஆகையால் தினந்தோறும் அர்ச்சிராதி₃க₃தி சிந்தனமாகிற யோக₃த்தோடு கூடியவனாக ஆவாய், அர்ச்சிராதி₃க₃திஜ்ஞானத்திற்கு மயக்கமின்மையாகிற ப₂லனை உபதே₃ஶித்து, 'தஸ்மாத்' என்று அதை ஹேதுவாக எடுத்து, அதற்குப்பின் மோக்ஷஸாத₄னமாகிற

॥ भा ॥ अथाध्यायद्वयोदितशास्त्रार्थवेदनफलमाह —

वेदेषु यज्ञेषु तपस्सु चैव दाने च यत्पुण्यफलं प्रदिष्टम् ।
अत्येति तत्सर्वमिदं विदित्वा योगी परं स्थानमुपैति चाद्यम् ॥ २८ ॥

॥ इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु
अक्षरपरब्रह्मयोगो नाम अष्टमोऽध्यायः ॥ ८ ॥

28. வேதே₃ஷு யஜ்ஞேஷு தபஸ்ஸு சைவ
தா₃னே ச யத் புண்யப₂லம் ப்ரதி₃ஷ்டம் ।
அத்யேதி தத்ஸர்வமிதம் விதி₃த்வா
யோகீ₃ பரம் ஸ்தா₂நமுபைதி சாத்₃யம் ॥

॥ இதி ஸ்ரீமத்₃ப₄க₃வத்₃கீ₃தாஸூபநிஷத்ஸு
அக்ஷரபரப்₃ரஹ்மயோகோ₃ நாம அஷ்டமோ Sத்₄யாய: ॥

**வேதே₃ஷு**—வேதங்களை ஓதுவதற்கும், **யஜ்ஞேஷு**—யஜ்ஞங்கள், **தபஸ்ஸு ச**—பலவகைப்பட்ட தவங்கள், **தா₃னே ச ஏவ**—தானங்கள் ஆகியவற்றை அநுஷ்டிப்ப தற்கும், **யத் புண்யப₂லம்**-யாதொரு புண்யப₂லம், **ப்ரதி₃ஷ்டம்**-(ஶாஸ்த்ரங்களில்) சொல்லப்பட்டுள்ளதோ, **தத் ஸர்வம்**-அது அனைத்தையும், **இதம்**—இவ்விரு அத்தியாயங்களிலும் சொல்லப்பட்டதான, பரமபுருஷனுன எனது இப்பெரு மையை, **விதி₃த்வா**—அறிந்து, அதனல், **அத்யேதி**—(அவ் வெல்லாப்புண்யப₂லங்களையும்) கடந்து நிற்கிருன், **யோகீ₃**—ப₄க்தியோகத்தைச் செய்பவன் (ஞானியாகவும் ஆகி), **ஆத்₃யம்**—அநாதியானதாய், **பரம்**-மேலானதான, **ஸ்தா₂நம்**-ஸ்ரீவைகுண்ட₂லோகத்தை, **உபைதி**—அடைகிருன்.

---

யோக₃த்தை விதிப்பது பொருந்தாதாகையால், ''யோக₃ஸ் ஸந்நஹ நோபாய த்₄யாந ஸங்க₃தி யுக்திஷு'' [அமரம் 3-3-22] என்று நிக₄ண்டுவில் எடுக்கப்பட்ட பொருள்களில் இங்கு யோக₃ஶப்₃த₃ம் ''த்₄யாநம்'' என்னும் பொருளையுடையதாகக்கொண்டு, அந்த த்₄யாநம் ப்ரகரணத்தையொட்டி, அர்ச்சிராதி₃க₃தியைச் சிந்திப்பதே என்று கொள்வதே பொருந்தும். (பார்த்த₂ அர்ஜுந) ஞானியான என் அத்தையின் பிள்ளையாய், வெளுத்தவனை நீ ஞானிக்குரிய வெள்ளைவழியைச் சிந்திப்பதே பொருந்தும் என்று கருத்து. 27.

27. வேதத்தில் வேள்வியினின் மெய்த்தவத்திற் றானத்தில்
ஓதும் பயனதனை யுற்றெழுந்து—மீதுபோய்
இந்த வறிவமரும் யோகிதான் மேன்முதலா
மந்த நிலமடையு மங்கு.

இந்த அறிவு அமரும் யோகிதான் — இவ்விரு அத்தியா யங்களிலும் சொல்லப்பட்ட என் பெருமையை அறியும் ஞானி, **வேத₃த்தில்**—வேத₃ங்களை ஓதுவதற்கும், **வேள்வி யினில்**—யஜ்ஞங்களை அநுஷ்டி₂ப்பதற்கும், **மெய்த்தவத்தில்**— உண்மையான தவங்களை அநுஷ்டி₂ப்தற்கும், **தானத்தில்**— தா₃னம் செய்வதற்கும், **ஓதும் பயன் அதனை**—(ஶாஸ்த்ரங் களில்) ஓதப்படுகிற அப்பயன்களையெல்லாம், **உற்றெழுந்து மீது போய்**—அடைந்து, அதற்கும் மேலே போய், **அங்கு** — மறுமையில், **அந்த மேல் முதலாம் நிலம் அடை யும்** — ஶாஸ்த்ர ப்ரஸித்₃த₄மாய், மேலானதாய், அநாதி₃ யானதான பரமபத₃த்தை அடைவான்.

---

28. 7,8 அத்தியாயங்களாகிற இரு அத்தியாயங்களில் சொல் லப்பட்ட, ப்ராப்யமாய், ப்ராபகமாய், ஶேஷியாய், காரணமான பரமபுருஷனின் வைப₄வத்தை அறிபவன்—எல்லா ஸாத₄நாநுஷ் டா₂நங்களையும் செய்தவர்கள் அடையும் ப₂லனைக்காட்டிலும் சிறந்த ப₂லனை இவ்விபூ₄தியிலேயே பெறுபவனாய், மறுமையில் பரமபத₃த் தையும் அடைகிறான் என்று, கீ₃தாஶாஸ்த்ரத்தின் ஹ்ருத₃யபூ₄ாக₃ மான இவ்விரு அத்தியாயங்களின் பொருளை அறிந்தவனுக்குப் ப₂லன் கூறி எட்டாம் அத்தியாயத்தை நிறைவுபடுத்துகிறான் கீ₃தா சார்யன். "யத் ஜ்ஞாத்வா நேஹ பூ₄யோऽந்யத் ஜ்ஞாதவ்யம் அவ ஶிஷ்யதே" [கீ₃தை 7-2] [எந்தப் பரமபுருஷனின் பெருமையை அறிந்தவனுக்கு, இவ்வுலகில் மறுபடியும் அறியவேண்டியது வேறு ஒன்றுமில்லையோ] என்று இந்த ப்ரகரணத்தின் தொடக்கத்தில் கூறி யதை விவரித்ததாயிற்று. (வேதே₃ஷு)என்று தொடங்கி ஏழாவதுவேற் றுமையுடைய நாலு ஶப்₃த₃ங்களில் ஒவ்வொன்றும் "யத் புண்யப₂லம் ப்ரதி₃ஷ்டம்" [யாதொரு புண்யப₂லம் (ஶாஸ்த்ரங்களில்) சொல்லப் பட்டுள்ளதோ] என்னும் மேல் பகுதியோடு அந்வயிக்கிறது. அப் படிக்கொள்ளாமல் "வேதே₃ஷு ப்ரதி₃ஷ்டம்" [வேத₃ங்களில் சொல்லப்பட்டதோ] என்று அந்வயித்தால், தூ₃ராந்வயமும் வைரூப்யமும் வரும். "ப்ரதி₃ஷ்டம்" [சொல்லப்பட்டதோ] என்

॥ भा ॥ ऋग्यजुस्सामाथर्वरूपवेदाभ्यासयज्ञतपोदानप्रभृतिषु सर्वेषु पुण्येषु यत्फलं निर्दिष्टम्, इदम् — अध्यायद्वयोदितं भगवन्माहात्म्यं

ருலே ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டது என்பது எளிதில் கிடைக்குமாகையாலும், ''வேதே3ஷு'' என்றதை மற்ற மூன்று ஶப்3த3ங்களோடு ஏகரூபமாகக்கொண்டு, ''ருக் முதலான நாலுவேத3ங்களை அத்4யயந பாராயணங்கள் செய்வதினாலும் யஜ்ஞ தபோ தா3நங்களை முறைப்படி அநுஷ்டி2ப்பதாலும் (ஶாஸ்த்ரங்களில்) யாதொரு ப2லன் கூறப்படுகிறதோ'' எனக்கொள்வதே பொருந்தும். ஔசித்யத்தைக் கருதி வேத3ஶப்3த3ம் வேத3மோதுதலையும், யஜ்ஞ தபோ தா3நஶப்3த3ங்கள் அவற்றின் அநுஷ்ட2ானத்தையும் குறிக்கின்றன. ''வேத3ங்களிலே எத்தனை புண்யப2லன்கள் சொல்லப்பட்டுள்ளனவோ அவையும், யஜ்ஞ தபோ தா3னங்களின் அநுஷ்ட2ானத்திற்குச் சொல்லப்பட்டுள்ள ப2லன்களையும்'' என்று பொருள் கொள்ளலாகாதோ? எனில்: அப்போது யஜ்ஞ தபோ தா3நங்களின்ப2லமும் வேத3த்தில் சொல்லப்பட்டதேயாகையால், ''வேதே3ஷு'' என்றவிடத்தில் அவையொழிந்த மற்றவை சொல்லப்படுகிறது என்று கொள்ளவேண்டும். '' இத3ம் விதி3த்வா '' என்று இந்த ஶ்லோகத்தின் உத்தரார்த்த4த்தில் இந்த இரு அத்4யாயங்களில் சொன்ன அர்த்த2ங்களின் ஜ்ஞாநப2லமும் வேத3ார்த்த2மேயாகையால், ''வேதே3ஷு'' என்று அது தவிர்ந்த மற்றவை சொல்லப்படுகிறது என்று கொள்ளவேண்டும் இந்த அஸ்வாரஸ்யங்களெல்லாம் இல்லாதபடி ''வேத3மோதுவதற்கு யாதொரு ப2லன் சொல்லப்படுகிறதோ'' என்று ''வேதே3ஷு'' என்ற ஶப்3த3த்திற்குப் பொருள்கொள்வதே உசிதம். வேத3மோதுவதால் பாபங்கள் நீங்குகின்றன என்றும், விருப்பங்கள் நிறைவேறுகின்றன என்றும் ஶாஸ்த்ரங்களில் ப2லன் சொல்லப்பட்டிருப்பதும் ப்ரஸித்3த4ம். இங்கு வேத3ாப்4யாஸம், யஜ்ஞதபோதா3நாநுஷ்ட2ானம் ஆகிய நாலு புண்யங்களின் ப2லன்களைச் சொன்னது—ஶாஸ்த்ரங்களில் ஒரு ப2லனை உத்3தே3ஶித்து விதி4க்கப்படும் எல்லாப் புண்யங்களின் ப2லன்களுக்கும் உபலக்ஷணம். (இத3ம் விதி3த்வா தத் ஸர்வம் அத்யேதி) இந்த இரு அத்4யாயங்களில் சொன்ன ப4க3வானின் பெருமையை உள்ளபடி அறிந்தால் அந்த எல்லாப்புண்யப2லன்களையும் விஞ்சிநிற்கும் ப2லனை இம்மையிலேயே பெறுகிறான். 'இத3ம் விதி3த்வா' என்று பொதுவாகச்சொல்லி, க3திமுதலானவற்றை அறிவதைக் குறிப்பிட்டு எடுக்காமையால், ஒரே ப்ரகரணமான இவ்விரு அத்தியாயங்களில் சொல்லப்பட்டதான, 'எம்பெருமானே ப்ராப்யமாய், ப்ராபகமாய், காரணமாய், ஶேஷியாய், ஜ்ஞாநிக்கு தா4ரகபோஷகபோ4க்3யங்கள் முதலான எல்லாமாயிருப்பவன்' என்னும் ப4க3வத்3வைப4வத்தை அறிவதே இங்கு சொல்லப்படுகிறது என்று கொள்ளவேண்டும்.

विदित्वा तत्सर्वमत्येति — एतद्वेदनसुखातिरेकेण तत्सर्वं तृणवन्मन्यते । योगी ज्ञानी च भूत्वा ज्ञानिनः प्राप्यं परमाद्यं स्थानमुपैति ॥ २८ ॥

॥ इति श्रीभगवद्रामानुजविरचिते श्रीमद्गीताभाष्ये अष्टमोऽध्यायः ॥ ८ ॥

---

கீ₃தையின் ஏழாம் அத்தியாயத்தின் தொடக்கத்திலுள்ள பனிரண்டு ஶ்லோகங்களே ப₄க₃வானுடைய பெருமையைச் சொல்லுவதாலும், மேலே 7, 8 அத்தியாயம் முடிய அதை விவரிக்க வந்ததேயாகையால், இவ்விரு அத்தியாயங்களிலும் பரமபுருஷவைப₄வமே சொல்லப்பட்டது என்னக்குறையில்லை. (இத₃ம் விதி₃த்வைவ தத் ஸர்வம் அத்யேதி, இந்த ப₄க₃வத்₃வைப₄வத்தை அறிவதாலேயே எல்லா ஸாத₄நாநுஷ்டா₂னங்களின் ப₂லனைக்காட்டிலும் அதி₄கமான ப₂லனைப்பெறுகிறான். அதாவது— எம்பெருமானையே ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும், மற்றெல்லாமாகவும் அறிந்தவனுக்கு, அந்த ஜ்ஞாநமே பரமப்ராப்யமாகையாலும், அந்த ஜ்ஞாநமுடையவனுக்கு எம்பெருமான்தானே ஒரு ஸாத₄நாநுஷ்டா₂னத்தை எதிர்பாராமல் பரமபுருஷார்த்த₂ லக்ஷண மோக்ஷத்தைத் தன் பேருக அருளுவானாகையாலும், ஸாத₄நாநுஷ்டா₂ன ப₂லன்களையெல்லாம் இவனடையும் ப₂லன் விஞ்சிநிற்கிறது என்று கருத்து. இந்த ஜ்ஞாநமுடைய மஹாத்மாக்கள் "ப₄ாவோ நாந்யத்ர க₃ச்ச₂தி" [ரா-உத் 40-16] [என் நினைவு பரமபத₃த்திற்கும் செல்கின்றதில்லை.] "சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லாத் தன்மை தேவபிரான் அறியும்" [திருவாய் 7-10-10] "இந்திரலோகம் ஆளும் அச்சுவை பெறினும் வேண்டேன்" [திருமாலை 2] என்று "பரமபத₃த்திற்சென்று அடையும் ஸுக₂த்தைக் காட்டிலும் இங்கு அடையும் ஸுக₂மே விஞ்சிநிற்கிறது" என்று அருளிச்செய்தார்களன்றோ. இப்படி பரமபத₃த்தையே ஒன்றாக நினையாதவர்கள் முற்கூறிய வேத₃ாப்₄யாஸயஜ்ஞதபோதா₃நாநுஷ்டா₂னங்களின் ப₂லன்களைப் புல்லென மதிப்பார்கள் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? இந்த ஶ்லோகத்தின் பூர்வார்த்த₄த்திலுள்ள ஏவகாரத்தை உத்தரார்த்த₄த்திலுள்ள 'விதி₃த்வா' என்றதோடு கூட்டிப் பொருள் கொள்ளும்போது, இந்த ஜ்ஞாநமுடையவனுக்கு ஸாத₄நாநுஷ்டா₂னங்கள் எதையும் செய்யத் தேவையில்லை என்று உணர்த்தப்படுகிறது. பூர்வார்த்த₄த்திலுள்ள இரண்டு சகாரங்களில் ஒன்று உக்த ஸமுச்சயமாய், அங்குள்ள வேத₃ாப்₄யாஸ யஜ்ஞ தபோ தா₃நாநுஷ்டா₂னங்களை ஸமுச்சயிக்கிறது(கூட்டுகிறது). மற்றொரு சகாரம் அநுக்த ஸமுச்சயமாய், ஜ்ஞாநயோக₃ம், ப₄க்தியோக₃ம் முதலான உபாயாந்த

ரங்கள் அனைத்தையும் கூட்டுகிறது ஆக, எம்பெருமானைப் பற்றிய உண்மையறிவை உடையவனுக்கு யஜ்ஞம் முதலான மற்ற எதையும் உபாயமாக அநுஷ்டிக்கத் தேவையில்லை என்றதாகிறது. ''ஸர்வே வேதா₃: ஸர்வ வித்₃யா: ஶாஸ்த்ரா: ஸர்வே யஜ்ஞா: ஸர்வ இஜ்யாஶ்ச க்ருஷ்ண:| விது₃: க்ருஷ்ணம் ப்₃ராஹ்மணாஸ் தத்த்வதோ யே தேஷாம் ராஜந்! ஸர்வயஜ்ஞா: ஸமாப்தா: ||'' [எல்லா வேத₃ங்களும், (வேத₃த்தில் சொல்லப்பட்ட) எல்லா வித்₃யைகளும், (வேத₃த்தை விவரிக்கும்) மற்ற ஶாஸ்த்ரங்களும், (வேத₃த்தில் விதி₄க்கப்பட்ட) எல்லா யஜ்ஞங்களும், (அந்த யஜ்ஞங்களால் ஆராதி₄க்கப்படும்) எல்லா தே₃வதைகளும் கண்ணனுக்கு அதீ₄னமே. எந்த அந்தணர்கள் இப்படிக் கண்ணனே ஸர்வநிர்வாஹகன் என்று உள்ளபடி அறிகிறார்களோ, அவர்களுக்கு எல்லா யஜ்ஞங்களும் செய்து முடிக்கப்பட்டவையாகின்றன.] என்று மஹாபா₄ரதத்தில் மற்றோரிடத்திலும் சொல்லப்பட்டதன்றோ. இவர்களை ''செய்தவேள்வியர் வையத்தேவர்'' [திருவாய் 5-7-5] என்றானன்றோ நம்மாழ்வாரும். அப்படி இவ்வுலகில் இவன் அநுப₄விக்கும் ஸுக₂மே தலைசிறந்ததாகில், இவன் பரமபத₃த்தை அடைவதில்லையோ? எனில்: (யோகீ₃ பரம் ஸ்தா₂நம் உபைதி சாத்₃யம்) யோகீ₃ பரம் ஆத்₃யம் ஸ்தா₂நம் உபைதி ச என்று அந்வயம். முற்கூறிய ப₄க₃வத்₃வைப₄வத்தை உள்ளபடி உணர்ந்த ப₄க்தியோக₃ நிஷ்ட₂ன் கீ₃தை (7-19ல்) சொல்லப்பட்ட மஹாத்மாவான ஜ்ஞானியாகி, அத்தகைய ஜ்ஞாநிகளுக்கு ப்ராப்யமாய், மேலானதாய், அநாதி₃யானதான பரமபத₃த்தையும் அடைகிறான். ''உபைதி'' எனும் பரஸ்மைபத₃ம் இவன் பரமபத₃த்தை அடைவது எம்பெருமானுடைய ஆனந்த₃த்துக்கேயொழியத் தன் ஆனந்த₃த்துக்காகவல்ல என்று காட்டுகிறது. அவன் பரமபத₃த்தை ஒருபொருளாக மதிக்காவிடினும், கிடைத்தற்கரிய மஹாத்மாவான அவன் எனக்குப் பெரும்பேறாயிருப்பவனாகையாலே, அவனை இந்த ஜன்மத்தின் முடிவிலேயே பரமபத₃த்திற்கு அழைத்துச் சென்று நான் பேரானந்த₃த்தை அடைகிறேன் என்று கருத்து. ''ப₃ஹூநாம் ஜந்மநாம் அந்தே ஜ்ஞாநவாந்'' [கீ₃தை 7-19] என்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட ஜ்ஞாநியாகப் பரிபக்குவமடைந்த உபாஸகனாகிற யோகி₃க்கு அப்போதே உபாஸநம் நிறைவடைந்து இம்மையிலும், மறுமையிலும் தலைசிறந்த ப₂லனைப் பெற்றுவிடுகிறான் என்று கருத்து. இக்கருத்திலேயே கீ₃தாபா₄ஷ்யத்தில் ''யோகீ₃ ஜ்ஞாநீ ச பூ₄த்வா ஜ்ஞாநிந: ப்ராப்யம் ஸ்தா₂நமுபைதி'' என்று அருளிச்செய்யப்பட்டது. (பரம் ஸ்தா₂நம்) ''ஆதி₃த்ய வர்ணம் தமஸ: பரஸ்தாத்'' [பு-ஸூ 2-2; ஶ்வே 3-8] [தமோ கு₃ணத்தை உடையதாகையாலே தமஸ் எனப்படும் மூல ப்ரக்ருதிக்கு அப்பாற்

## பகவத்கீதை வெண்பா

(எட்டாம் அத்தியாயத்தின் ஸாரத்தைக் கூறும் பாசுரம்)

இவ்வாறு மாய னெழிற்கீதை யெட்டாமோத்
தவ்வா றருளி யமைபொருள்கள்—செவ்வாரு
ஞானத் தமர்ந்து நலஞ்சிறந்த நன்மைசேர்
மானப் படமுடிந்த வாய்த்து.

வாதிகேஸரி ஜீயர் அருளிய பகவத்கீதை வெண்பாவில்
எட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

பட்டிருப்பவனாய், ஸூர்யன் போல் ஒளி விஞ்சிநிற்பவன் பரமபுருஷன்.] ''க்ஷயந்தம் அஸ்ய ரஜஸ: பராகே'' [ருக்-அஷ்டகம்-5-6-24-12] [ரஜோகுணம் உடையதாகையாலே ரஜஸ் எனப்படும் மூல ப்ரக்ருதிக்கு அப்பாற்பட்ட பரமபதத்தில் வாழ்பவன்]''ததக்ஷரே பரமே வ்யோமந்'' [தை-நா6-1] [அந்தப் பரம்பொருள் அழியாததாய் பரமாகாசம் எனப் படும் பரமபதத்தில் உள்ளது.] ''ஹிரண்மயே பரே லோகே விரஜம் ப்ரஹ்ம'' [முண்டக 2-2-10] [பொன்மயமான (சுத்த ஸத்வ மயமான) மேலான உலகத்தில் குற்றமற்ற ப்ரஹ்மம் எழுந்தருளி யிருக்கிறது.] முதலான வேதவாக்யங்களிலும், ''திவ்யம் ஸ்தாநம் அஜரம் சாப்ரமேயம்'' [பாரத-மௌஸல 5-27] [அழிவற்றதாய், அளவிடவொண்ணுததான அப்ராக்ருதமான ஸ்தானத்தை] ''ஏதே வை நிரயாஸ்தாத! ஸ்தாநஸ்ய பரமாத்மந:'' [பாரத - சாந்தி 196-31] [பரமாத்மாவின் ஸ்தானத்துக்கு ஒப்பிட்டால் மற்ற உல கங்களெல்லாம் நரகத்தை ஒக்கும்] முதலான உபப்ரும்ஹணங் களிலும் சொல்லப்பட்டபடியே, அழிவில்லாததாயிருக்கையாலே காலத் தாலும், அளவற்றதாயிருக்கையாலே தேசத்தாலும், சுத்த ஸத்வமாயிருக்கையாலே வஸ்துவாலும் மேலானதாயிருக்கும் ஸ்தானம் என்றபடி. (ஆத்யம் ஸ்தாநம்) அநாதியான ஸ்தானம். ''ஆத்யம் – ஆதௌ பவம் காரணம் ப்ரஹ்ம இத்யர்த்த:'' [ஆத்யம்-ஆதியிலிருக்கும் காரணமான ப்ரஹ்மம் என்று பொருள்.] என்று சங்கரர் வ்யாக்யானம் செய்தார். 'ஆத்ய' சப்தம் 'ஸ்தாந' சப்தத்துக்கு விசேஷணமாயிருக்கையாலே இது பொருந்தாது. ஆக, 7, 8 அத்தியாயங்களின் அர்த்தத்தை உள்ளபடி அறிந்தவன் அடையும் பலன் சொல்லப்பட்டதாயிற்று. 28.

ஸ்ரீ க்ருஷ்ணஸ்வாமி தாஸன் இயற்றிய
கீதார்த்த விவரணத்தில் எட்டாமத்தியாயம் நிறைவு பெற்றது.

இவ்வாறு — இவ்விதமாக, மாயன் — கண்ணனுடைய, எழில் கீதை—அழகிய கீ₃தையின், எட்டாம் ஓத்து — எட்டாம் அத்தியாயத்தில், அவ்வாறு அருளி — முன் பாசுரங்களில் சொல்லியபடி ஐச்வர்யார்த்தி₂, கைவல்யார்த்தி₂, ஜ்ஞாநி ஆகியவர்களைப் பற்றிய விஷயங்களையெல்லாம் அருளி, அமை பொருள்கள் — பொருந்தி நிற்கும் அர்த்த₂ங்கள், செவ்வாறு—செம்மையான வழியிலே, நலம் சிறந்த—சிறந்த பயன்களைப் பெற்றுத் தரும் ஞானத்து அமர்ந்து—(எம்பெருமானுடைய வைப₄வத்தைப் பற்றிய) அறிவிலே முடிவடைந்து, நன்மை சேர் மானப்பட—சிறப்புடைய ப்ரமாணங்களையொட்டியதாய், வாய்த்து—பொருத்தமாக, மூழ்ந்த—முடிவுற்றன.

## கீதார்த்த சங்கிரகம்

### ( ஸ்ரீவேதா₃ந்த தே₃சிகர் )

### எட்டாம் அத்தியாயத்தின் ஸாரப்பொருள்

8. ஆராத செல்வமு மாருயிர் காணு மரும்பயனும்
பேராது தன்கழற் கீழம ரும்பெரு வாழ்ச்சிகளுஞ்
சோரா துகந்தவர் தூமதி கொள்வதுஞ் செய்வனவுந்
தேரா விசயனுக் குத்திரு நாரணன் செப்பினனே.

திருநாரணன்—ஸ்ரீமந் நாராயணன் ஆகிய கண்ணன், தேரா விசயனுக்கு—தெளிவுபெறாத அர்ஜுநனுக்கு, ஆராத—(மேன்மேலே ஆசையை விளைக்கையாலே) போதுமென்று தோன்றாத, செல்வமும்—ஐச்வர்யத்தையும், ஆர் உயிர் காணும்—அருமையான ஜீவனைக் கண்டு அநுப₄விப்பதாகிய, அரும் பயனும் — அருமையான (கைவல்யப்) ப₂லனையும், தன் கழல் கீழ் — (ஸர்வேச்வரனாகிய) தன் திருவடியின் கீழ், பேராது அமரும் — பிரியாது தங்குதலாகிய, பெரு வாழ்ச்சிகளும்—பெரிய வாழ்வுகளையும், சோராது—குறைவு படாது ( பெறவேண்டுமென்று ), உகந்தவர் — விரும்பிய அதி₄காரிகள், தூ மதி கொள்வதும் — பரிசுத்₃த₄மான (தம்) மனத்தால் அறியவேண்டியவையும், செய்வனவும்—அநுஷ்டி₂க்கவேண்டியவையும் ( ஆகிய இவற்றை ) செப்பினன்— உபதே₃சித்தான்.

## கீ₃தாஶ்லோகார்த்த₂ச் சுருக்கம்

### எட்டாமத்தியாயம்

ஶ்லோ. அர்த்த₂ம்

1-2. (1) கைவல்யார்த்தி₂கள் அறியவேண்டிய ப்₃ரஹ்ம, அத்₄யாத்மம், கர்ம என்பவை யாவை? (2) ஐஶ்வர்யார்த்தி₂கள் அறியவேண்டிய அதி₄பூ₄தம், அதி₄தை₃வம் என்பவை யாவை? (3) மூவகை அதி₄காரிகளும் அறியவேண்டிய அதி₄யஜ்ஞும் என்பது யாது? அதற்கு அதி₄யஜ்ஞுத்தன்மை எப்படி வந்தது? (4) மூவருக்கும் அந்திமஸ்ம்ருதி எத்தகையது?—என்று அர்ஜுனனின் கேள்விகள்.

3. முதல் கேள்விக்குக் கண்ணனின் பதில்.

4. முற்பாதியால் இரண்டாவது கேள்விக்கும், பிற்பாதியால் மூன்ருவது கேள்விக்கும் கண்ணனின் பதில்.

5. அந்திமஸ்ம்ருதி பற்றிய நாலாவது கேள்விக்குக் கண்ணனின் சுருக்கமான பதில்—'ஈஶ்வரன் விஷயமான அந்திமஸ்ம்ருதி அவரவர் விரும்பும் வகையில் ஈஶ்வரனேடு ஸாம்யத்தை விளைக்கும்' என்று.

6. இது ஈஶ்வரவிஷயத்தில் மட்டுமல்ல. கடைசிக்காலத்தில் எந்த விஷயத்தை மனிதன் நினைத்தாலும் அந்நினைவுதானே அடுத்த பிறப்பில் அவ்விஷயம்போன்ற ஒரு நிலையை அவனுக்கு விளைத்துவிடும்.

7. ஆகையால் அர்ஜுனன் எப்போதும் தன்னைப்பற்றிய நினைவையும், அதை விளைக்கும் க்ஷத்ரிய த₄ர்மமான யுத்₃த₄த்தையும் செய்யவேண்டும் என்று கண்ணன் நாலாவது கேள்விக்கு விளக்கமான பதில் கூறுகிருன்.

8-14. அவரவர்க்குரிய அந்திமஸ்ம்ருதி ஏற்படுவதற்குறுப்பான உபாஸனபே₄த₃ம்.

8-10. ஐஶ்வர்யார்த்தி₂க்குரிய உபாஸனமுறையும், அதையொட்டி ஏற்படும் அந்திமஸ்ம்ருதியும்.

11-13. கைவல்யார்த்தி₂க்குரிய உபாஸனமுறையும், அதையொட்டி ஏற்படும் அந்திமஸ்ம்ருதியும்.

14. ஜ்ஞாநி ப₄க₃வானை உபாஸிக்கும் முறையும், அடையும் முறையும்.

15-28. ஜ்ஞாநிக்கும், கைவல்யார்த்தி₂க்கும் இந்த ஸம்ஸாரமண்ட₃லத்திற்குத் திரும்பி வராமையை உடைய அழிவற்ற ப₂லன்.

ஐஶ்வர்யார்த்திக்குக் கர்மபூமிக்கே திரும்பிவரும் அழிவுள்ள பலன்.

15. ஜ்ஞாநியடையும் பலனான பகவதநுபவம் நித்யமானது.

16. தன்னை ப்ராப்யமாயடைந்தவர்களுக்குக் கிடைக்கும் பலன் நித்யமாயிருப்பதற்கும், ஐஶ்வர்யார்த்தியின் பலன் அநித்யமாயிருப்பதற்கும் காரணம்.

17-19. ப்ரஹ்மலோகம் ஈறுக்வுள்ள உலகங்களுக்கும் அவற்றி னுள்ளிருப்பவர்களுக்கும் உத்பத்தி விநாஶங்களின் கால வரம்பு இருக்கையாலே ஐஶ்வர்யம் அநித்யமே.

20-21. கைவல்யாநுபவத்திற்கும் அழிவு இல்லாமையால், அதி லிருந்து மற்றொரு அநுபவத்தை அடைவதாகிற புநரா வ்ருத்தி இல்லை.

22. கைவல்யத்தை அடைந்தவனுக்கு ப்ரஹ்மாநுபவம் என்றுமே கிடையாதாகையால், கேவலாத்மாநுபவமாகிற அவனுடைய அநுபவத்தைக் காட்டிலும், பரிபூர்ணப்ரஹ்மாநுபவமாகிற ஜ்ஞாநியினுடைய அநுபவம் மிகவும் வேறுபட்டது.

23-24. பரமபுருஷநிஷ்டனும், ப்ரஹ்மாத்மகமாகத் தன் ஆத்மாவை உபாஸிக்கும் பஞ்சாக்நிவித்யாநிஷ்டனுமான இருவகை யான ஜ்ஞாநிகள் ப்ரஹ்மத்தை அடைவதற்கு வழியான அர்ச்சிராதிகதியின் விவரணம். (கைவல்யவிஷயத்தில் ஏற்பட்ட பலவிதமான குழப்பங்களை 'கைவல்ய ஸித்தாஞ்ஜனம்' என்னும் க்ரந்தத்தின் மூலம் நீக்கவேண்டி வந்துவிட்டதால், இவ்விரு ஶ்லோகங்களுக்கும் வ்யாக்யானம் 117பக்கங்களாக நீண்டுவிட்டது.)

25. புண்ணியம்செய்த ஐஶ்வர்யார்த்திகள் ஸ்வர்க்கம் முதலான புண்ணிய லோகங்களுக்குச் செல்லும் வழியான தூமாதி மார்க்கத்தின் விவரணம்.

26. முற்கூறிய இரண்டு கதிகளும் ஶ்ருதி ப்ரஸித்தமானவை. அர்ச்சிராதிகதியால் செல்பவன் திரும்பி வருதலில்லாத பகவதநுபவத்தை அடைகிறான். தூமாதிகதியால் செல்பவன் கர்மபூமிக்கே திரும்பிவருகிறான்.

27. அர்ச்சிராதிகதி சிந்தனம் தினந்தோறும் ஜ்ஞாநியால் செய்யப்படவேண்டும்.

28. ஏழு, எட்டு அத்தியாயங்களாகிற இரு அத்தியாயங்களில் சொல்லப்பட்ட—ப்ராப்யமாய், ப்ராபகமாய், ஶேஷியாய்,

காரணமாய், ஜ்ஞாநிக்கு த₄ாரக போஷக போ₄க்₃யமா யிருக்கும் கண்ணனின் பெருமையை அறிபவன் எல்லா ஸாத₄நாநுஷ்ட₂ானங்களைச் செய்தவர்கள் அடையும் ப₂லனைக் காட்டிலும் சிறந்த ப₂லனை இவ்விபூ₄தியிலேயே பெற்று, மறுமையில் பரமபத₃த்தையும் அடைகிறான்—என்னும் அத்₄யாய த்₃வயார்த்த₂ சிந்தன ப₂லஶ்ருதி.

தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யாதாக்களின் திருவுள்ளத்தை அடியொற்றிய நமது கீ₃தா வ்யாக்₂யானத்திற்கும், ஶ்ரீதே₃ஶிகன் அருளிய தாத்பர்ய சந்த்₃ரிகைக்கும், ஏழு, எட்டு அத்தியாயங்களில் உள்ள அர்த்த₂ பே₄த₃ங்கள்.

(1) 7-3 கீ₃தா வ்யாக்₂யானம்:-

கைவல்ய மோக்ஷஸித்₃தி₄யின் பொருட்டுக் கடைசிவரை முயல்பவன் ஆயிரத்தில் ஒருவன்; அவர்களிலும் ஆயிரத்தில் ஒருவன் பரமபுருஷனையே முக்தியில் ப்ராப்யமாய் அறிந்து, ப₄க்தி முதலான தன் முயற்சிகளான மற்ற உபாயங்களை அவனை அடையப் ப₂லகரண ஸாத₄னமாகக்கொண்டு அனுஷ்டி₂ப்பவன். அவர்களிலும் ஆயிரத்தில் ஒருவனே அவனை ப்ராபகமாகவும் அறிபவன். இத்தகையவன் பரமபுருஷனைப் பெறுவதன் பொருட்டு அவனையே உபாயமாக (ப₂லகரண ஸாத₄னமாக)க் கொள்வானேயொழிய, தன் முயற்சியான கர்ம, ஜ்ஞான, ப₄க்தியோக₃ங்கள் முதலானவற்றை உபாயமாகக் கொள்ளமாட்டான்.

தாத்பர்ய சந்த்₃ரிகை:-

மற்ற தெய்வங்களிடமிருந்து ஐஶ்வர்ய ஸித்₃தி₄யின் பொருட்டுக் கடைசிவரை முயல்பவன் ஆயிரத்தில் ஒருவன். அவர்களிலும் ஆயிரத்தில் ஒருவன் பரமபுருஷனை ஐஶ்வர்யம் அல்லது கைவல்யத்திற்கு ஸாத₄னமாகக் கொண்டு அதைப் பெறுபவன். அவர்களிலும் ஆயிரத்தில் ஒருவனே அவனையே ப்ராப்யமாகவும் அறிபவன். இவன் தன் முயற்சியான ப₄க்தியையோ, ப்ரபத்தியையோ ப₂லகரண ஸாத₄னமாகக்கொண்டு மோக்ஷத்தில் எம்பெருமானை அடைகிறான்.

(2) 7-4 to 12 கீ₃தா வ்யாக்₂யானம்:-

சேதனன் அசேதனத்தைப்போலே எம்பெருமானுக்குப் பரதந்த்ரனுகையாலே அவன் தன் முயற்சியில் ஈடுபடுவது தகாது. எம்பெருமான் அனைத்துக்கும் காரணமாகவும் ஶேஷியாகவும் இருப்பவனுகையாலே சேதனனை எம்பெருமானே ரக்ஷிக்கவேண்டும்; சேதனன் தன்னைத்தானே ரக்ஷித்துக்கொள்ள முயல்வது தகாது. ஜ்ஞானம், ஶக்தி முதலான கல்யாணகு₃ணங்களால் ஜீவர்களைக்காட்டிலும் மிக

உயர்ந்தவனாகப் பரமபுருஷன் இருப்பதால், ஜீவனுக்கு அவனே ரக்ஷகன்; ஜீவன் தனக்குத் தான் ரக்ஷகனல்லன். அசேதனத்தைப் போலே ஜீவனுக்கும் எம்பெருமான் ஶரீரியாயிருக்கையாலே அவனே ஜீவனுக்கு ரக்ஷகன்; ஶரீரமான ஜீவன் தன்னைத்தானே ரக்ஷித்துக் கொள்ள முயல்வது தகாது. இக்காரணங்களாலே, எம்பெருமானே ஜீவனுக்கு இயற்கையான ப்ராப்ய ப்ராபகங்களாயிருப்பவன். மற்ற பொருள்களில் ப்ராப்யத்வத்திற்கும், ப்ராபகத்வத்திற்கும் உறுப்பாக வுள்ள சிறந்த பெருமைகள் பரமபுருஷ ஸங்கல்பத்தால் செயற்கை யாக வருபவையாகையாலே, அவற்றை ப்ராப்யப்ராபகங்களாக அறிவது மயக்கமேயாகும். இந்த ஜ்ஞானமுடையவனுக்கு ஐஶ்வர்ய கைவல்யங்களாகிற மற்ற ப்ராப்யங்களும், கர்ம ஜ்ஞாந பக்தி யோகங்கள் முதலான மற்ற உபாயங்களும் கைவிடத்தக்கவையே. இக்கருத்தாலேயே இரண்டாவது ஶ்லோகத்தில் "இவ்வறிவைப் பூர்ணமாகப் பெற்றால் அறியவேண்டியது வேறொன்றும் இல்லை" என்று சொல்லப்பட்டது. ஐஶ்வர்ய கைவல்யங்களாகிற மற்ற பயன் களை ப்ராப்யமாகவோ, பகவதநுபவமாகிற சிறந்த ப்ராப்யத்தைத் தனக்கென்றே நினைப்பவர்களைத் திருத்தும் பொருட்டு, அந்தந்த அதிகாரிகளுக்கு மோக்ஷத்வாநுஸந்தானம், த்ரிவித பரித்யாகங்கள், திவ்யமங்களவிக்ரஹ சிந்தனம் முதலானவற்றோடுகூடிய உபாயாந் தரங்கள் விதிக்கப்படுகின்றன. இத்தகைய பக்தியோகநிஷ்டனுக்கு பகவதநுபவத்தில் சுயநலமனப்பான்மை நீங்குவதற்காகப் பரம புருஷனைப்பற்றிய இந்த உண்மையறிவு பக்திக்கு அங்கமாக விதிக்கப்படுகிறது.

தாத்பர்ய சந்த்ரிகை:-

இந்த ஷட்கத்தில் விதிக்கப்படும் பக்தியோகத்துக்கு அங்க மான பரமபுருஷ யாதாத்ம்ய ஜ்ஞானம் இந்த ஶ்லோகங்களில் விவரிக்கப்படுகிறது.

(3) 7-13,14 கீதா வ்யாக்யானம்:-

முற்கூறிய பரிபூர்ண ஜ்ஞானமுடையவனுக்குப் பரமபுருஷனையே உபாயமாகக் கொள்ளுவதாகிற முக்யப்ரபத்தியால் ப்ரக்ருதி ஸம் பந்தமும் நீங்குகிறது. பரிபூர்ண ஜ்ஞாநமில்லாமல் உபாயாந்தரங்க ளில் கைவைப்பவனைத் திருத்துவதற்காக ஶரணாகதி, கர்மஜ்ஞாந பக்திகளுக்கு அங்கமாக விதிக்கப்படுகிறது. கடைசிவரையில் உபா யாந்தர நிஷ்டர்களாகவேயிருப்பவர்களுக்கு, அவ்வுபாயாந்தரங்க ளுக்கு அங்கமாகவே இருந்துகொண்டு ஶரணாகதி ப்ரக்ருதி ஸம் பந்தமும் நீங்குவதற்குக் காரணமாகிறது.

தாத்பர்ய சந்த்₃ரிகை:-

இங்கு ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄ம் நீங்குவதற்குப் பரம்பரயா காரண மான அங்க₃ப்ரபத்தியே விதி₄க்கப்படுகிறது.

(4) 7-16 கீ₃தா வ்யாக்₂யானம்:-

இங்கு பா₄ஷ்யத்தில் 'ஜிஜ்ஞாஸு' பத₃த்தை விளக்கும்போது "ப்ரக்ருதியினின்றும் நீங்கிய ஆத்மஸ்வரூபத்தை அடைய விரும்பு மவனே ஜிஜ்ஞாஸு" என்றும், 'ஜ்ஞாநி' பத₃த்தை விளக்கும் போது "(ஜிஜ்ஞாஸுவைப் போலே) ப்ரக்ருதியினின்றும் நீங்கிய கேவலாத்மாவைப் பெறுவதோடு முடிந்துவிடாமல் எம்பெருமானை அடைபவன் ஜ்ஞாநி" என்றும் விளக்கியிருக்கையால், "கைவல்யம் ப்ரக்ருதியினின்றும் முழுவதும் நீங்கிய முக்தியே" என்றும், "கைவல்ய நிஷ்ட₂னுக்கு ப₄க₃வத₃நுப₄வம் கிடையாது" என்றும், "ப₄க₃வத₃ நுப₄வம் உடையவன் என்று ஶ்ருதி ஸூத்ர பா₄ஷ்யங்களில் ப்ர ஸித்₃தி₄ பெற்றவனை பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂ன் கைவல்யநிஷ்ட₂ னாக முடியாது" என்றும் விளங்குகிறது. "எல்லாக் கர்மங்களும் நீங்கிய பிறகு முக்தியில் எப்படி பே₄த₃ம் பொருந்தும்? என்னும் கேள்விக்கு, "அவனவன் விருப்பத்தில் வேறுபாட்டாலே பொருந்தும்" என்னும் பதிலை இந்த ஶ்லோகத்தின் பா₄ஷ்யத்தில் "ப்ரதிபத்தி வைஶேஷ்யாத்" என்னும் பத₃த்தாலே பா₄ஷ்யகாரர் உணர்த்தினர்.

தாத்பர்ய சந்த்₃ரிகை

இங்கு ஜிஜ்ஞாஸுவாகிற கைவல்யநிஷ்ட₂னை 'ப்ரக்ருதியினின் றும் நீங்கின ஆத்ம ஸ்வரூபத்தை அடையவிரும்புகிறவன்' என்று லக்ஷணம் உரைத்திருக்கையால், இவன் முக்தன் என்று விளங்கு கையாலும், மேலே கைவல்யார்த்தி₂யைப் பற்றி வரும் ஶ்லோக பா₄ஷ்யங்களில் இது வலியுறுத்தப்படுகையாலும் இவன் முக்தியடை பவனே என விளங்குகிறது. ஆனாலும், எல்லாக்கர்மங்களும் நீங்கிய பின்பு முக்தியில் பே₄த₃ம் இருக்க ந்யாயமில்லையாகையால், இங்கு சொல்லப்படும் ஜிஜ்ஞாஸு ப்₃ரஹ்மாத்மகமாகத் தன் ஆத்மாவை உபாஸிப்பவனாய், ப்₃ரஹ்மாநுப₄வத்தை அடைபவனாக ஶ்ருதிஸூத்ர பா₄ஷ்யங்களில் ப்ரஸித்₃தி₄பெற்ற பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னே என்று கொண்டு, அவன் ப்ரக்ருதி மண்ட₃லத்துக்குள் இருந்துகொண்டு கேவலாத்மாவை அனுப₄விக்கும் கைவல்ய ஸ்த₂ானத்தில் ப்ரக்ருதியி னின்றும் நீங்கிய தன் ஆத்மாவைச் சிலகாலம் அநுப₄வித்து விட்டுச் செல்வதால் இங்கு கைவல்யநிஷ்ட₂ன் என்று குறிப் பிடப்படுகிறான் என்று கல்பிக்கிறோம். "(ஜிஜ்ஞாஸுவைப்போலே)

கேவலாத்மாநுப₄வத்தில் முடிந்துவிடாமல்'' என்ற ப₄ாஷ்யகார ஸ்ரீஸூக்திக்கு ''நகரத்தில் நுழைய விரும்பிய வழிப்போக்கன் — நிழல் தரும் மரத்தடியில் தூங்குவதுபோலே (ஜிஜ்ஞாஸுவுக்கு) ஆத்மாநுப₄வரூபமான காலதாமதம் இடையில் ஏற்படுகிறது'' என்று கருத்துரைக்கவேண்டும்.

(5) 7-17 கீ₃தா வ்யாக்₂யானம்:-

''ஐஶ்வர்ய கைவல்யநிஷ்ட₂ர்களுக்குத் தாங்கள் விரும்பும் ஐஶ்வர்ய கைவல்யங்களை அடையும் வரையிலேயே என்னோடு சேர்த்தி'' என்றும், ''ஜ்ஞாநிக்கு என் ஒருவனிடமே அன்பு உள்ளது. மற்ற இருவர்க்கும் தாங்கள் விரும்பும் ஐஶ்வர்ய கைவல்யங்களிலும், அவற்றின் ஸாத₄னமாக என்னிடமும் அன்பு உள்ளது'' என்றும் இங்கு கீ₃தா ப₄ாஷ்யத்தில் அருளியிருப்பதிலிருந்து, கைவல்யநிஷ்ட₂னுக்கு ஐஶ்வர்யார்த்தி₂க்குப் போலே பரமபுருஷன் எக்காலத்திலும் ப்ராப்யமாயிருக்க இடமில்லை என விளங்குகிறது. ஆகையால் இவன் ப்₃ரஹ்மாநுப₄வத்தை ப்ராப்யமாகக் கொண்ட பஞ்சாக்₃நிவித்₃யா நிஷ்ட₂னாக இருக்கமுடியாது

தாத்பர்ய சந்த்₃ரிகை:-

முற்கூறியபடி எல்லாக் கர்மங்களும் கழிந்த பின்பு முக்தியில் பே₄த₃ம் இருக்கமுடியாதாகையால், பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂னுக்கு இடையில் ஏற்படும் கைவல்ய போ₄க₃த்தையிட்டு இந்த கீ₃தா ப₄ாஷ்ய ஸ்ரீஸூக்திகள் எழுந்தன என்று கொள்ளவேண்டும்.

(6) 7-19. கீ₃தா வ்யாக்₂யானம்:-

இந்த ஶ்லோகம்—''உபாஸக ஜ்ஞாநியானவன் எம்பெருமானே ப்ராப்யம், ப்ராபகம், தா₄ரக போஷக போ₄க்₃யங்கள் முதலான எல்லாமாயிருப்பவன் என்று உணர்ந்து, எந்த ஜன்மத்தில் முக்₂ய ப்ரபந்நனாகிறானோ அந்த ஜன்மத்தின் இறுதியிலேயே மோக்ஷத்தையடைகிறான். அத்தகைய மஹாத்மாவான ஜ்ஞாநி எனக்குங்கூட மிகவும் கிடைத்தற்கரியவன்'' என்று உபாஸக ஜ்ஞாநி பரமபுருஷனைப் பற்றிய உண்மையைப் பரிபூர்ணமாக உணர்ந்தபின்பு பரக₃த ஸ்வீகாரநிஷ்ட₂ன் என்னும் ஸித்₃தோ₄பாய நிஷ்ட₂னாவதைக் குறிப்பிடுகிறது.

தாத்பர்ய சந்த்₃ரிகை:-

முற்கூறிய ஜ்ஞாநி மிகவும் கிடைத்தற்கரியவன் என்று கூறுவதன் மூலம் அவனுடைய சிறப்பைக் காட்டுகிறது இந்த ஶ்லோகம்.

(7) 7-27, 28 கீ₃தா வ்யாக்₂யானம்:-

எல்லா ஸம்ஸாரி சேதனர்களும் பரமபுருஷனை அறியாமலிருப்ப தற்குக் காரணத்தை முதல் ம்லோகமும், சிலர் ப₄க₃வானை உபா ஸிப்பதற்குக் காரணத்தை இரண்டாவது ம்லோகமும் காட்டு கின்றது. மேலும், இவ்விரு ம்லோகங்களிலும் "மப்₃த₃ாதி₃ விஷய மான (ஜீவனுடைய) ஜ்ஞாநம், இச்சா₂த்₃வேஷங்கள், ப்ரயத்ன நிவ்ருத்திகளாகிற ப்ரத₂ம ப்ரவ்ருத்திகளே மாஸ்த்ரத்தை ஒட்டி யிருந்தால் புண்யமாகவும், மாஸ்த்ரத்துக்கு முரண்பட்டிருந்தால் பாபமாகவும் ஆகின்றன" என்று புண்ய பாப லக்ஷணம் சொல்லப் படுகிறது. இதிலிருந்து, ஆத்ம விஷயமான அல்லது பரமாத்ம விஷயமான ஜ்ஞாநம், இச்சா₂த்₃வேஷங்கள், ப்ரயத்ன நிவ்ருத்திகள் ஆகியவை புண்யபாபங்களாகமாட்டா என்றும், மோக்ஷ ஸாத₄னங் களேயாகும் என்றும், அந்த மோக்ஷ ஸாத₄னங்களிலும், அவற் றுக்குக் காரணமான சேதநனுடைய ப்ரதிபத்தி எனப்படும் விருப்பத்தி லும் பே₄த₃த்தாலே முற்கூறிய புண்ய பாபங்களெல்லாம் கழிந்த பின்பும் மோக்ஷத்திலும் பே₄த₃ம் உண்டாகலாம் என்றும் விளங்குகிறது.

தாத்பர்ய சந்த்₃ரிகை:-

எல்லா ஸம்ஸாரி சேதனர்களும் பரமபுருஷனை அறியாமலிருப்ப தற்குக் காரணத்தை முதல் ம்லோகமும், சிலர் ப₄க₃வானை உபா ஸிப்பதற்குக் காரணத்தை இரண்டாவது ம்லோகமும் காட்டுகின்றது.

(8) 8-11 to 13 கீ₃தா வ்யாக்₂யானம்:-

கைவல்யார்த்தி₂யின் உபாஸந முறையையும், அந்திமஸ்ம்ருதி முறையையும் கூறும் இந்த ம்லோகங்களில் முன் சொல்லப்பட்ட ஐம்வர்யார்த்தி₂க்குப் போலே புருவமத்தியில் ப்ராணனை நிறுத்து வதை விதி₄க்காமல், தலையில் ப்ராணனை நிறுத்துவதை விதி₄த்திருக்கையால், இவன் மோக்ஷத்தை விரும்புகிறவன் என்று விளங்குகிறது. 8-12,13 ம்லோகங்களின் பா₄ஷ்யத்தில் "ப்ரக்ருதியி னின்றும் நீங்கியதாய், என்னையொத்த ஆகாரத்தை உடையதாய், திரும்பி வருதலில்லாத ஆத்மாவை அடைகிறான்" என்று கைவல் யார்த்தி₂க்குப் ப₂லம் சொல்லியிருப்பதால், இக்கைவல்ய நிஷ்ட₂ னுக்கு ப்ரக்ருதியினின்றும் நீங்கிய தன் ஆத்மாநுப₄வமே ப்ராப்யம் என்றும், ப்ராக்ருதமான ஐம்வர்யாநுப₄வமோ, ப₄க₃வத₃நுப₄வமோ இவனுக்குக் கிடையாது என்றும், ஆகையாலேயே ப்₃ரஹ்மாநு ப₄வத்தைப் ப₂லமாகவுடைய பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்ட₂னாய் இவன் இருக்கமுடியாது என்றும், என்றும் ப₄க₃வத₃நுப₄வமில்லாத ஒரு

வகைத் தாழ்ந்த மோக்ஷமே இது என்றும், ப்ரக்ருதி மண்டலத்தைத் தாண்டியே இந்த மோக்ஷாநுபவம் ஏற்படமுடியும் என்றும் விளங்குகிறது.

தாத்பர்ய சந்த்ரிகை:-

முக்தியில் பேதம் இருக்கமுடியாதாகையாலே, கைவல்யத்தைப் பரம ப்ராப்யமாகக்கொண்ட கைவல்யார்த்தி அநுபவிக்கும் ஸ்தலன் ப்ரக்ருதி மண்டலத்துக்குள்ளேயே இருக்கவேண்டும். இங்கு தலையில் ப்ராணனை நிறுத்துவதை விதிக்கிருக்கையால், இவன் மோக்ஷத்தை அடைபவன் என்று விளங்குகிறது. இந்த முரண்பாட்டை நீக்குவதற்காகக் கைவல்யத்தை அவாந்தர ப்ராப்யமாகவும், கைவல்யத்தில் சிலகாலம் தங்கிய பிறகு பகவத் ப்ராப்தியாகிற மோக்ஷத்தை ப்ராப்யமாகவும் கொண்ட பஞ்சாக்நி வித்யா நிஷ்டனே இங்கு கைவல்யார்த்தியான ஜிஜ்ஞாஸுவாகக் குறிக்கப்படுகிறுன் என்று கொள்ளுகிறோம்.

## (9) 8-15 கீதா வ்யாக்யானம்:-

இந்த ஶ்லோகத்தின் அவதாரிகா பாஷ்யத்தில், ஜ்ஞாநிக்கும், கைவல்யார்த்திக்கும் அபுநராவ்ருத்தியையும், ஐஶ்வர்யார்த்திக்குப் புநராவ்ருத்தியையும் கீதாசார்யன் கூறுவதாக பாஷ்யமருளினுர் பாஷ்யகாரர். 8-13, 21 ஶ்லோகங்களில், கைவல்யார்த்தியின் ப்ராப்யமான கைவல்ய மோக்ஷத்தை 'பரமா கதி:' என்று குறிப்பிட்ட கீதாசார்யன் இந்த ஶ்லோகத்தில் ஜ்ஞாநியின் ப்ராப்யத்தை 'பரமா ஸம்ஸித்தி:' என்று குறிப்பிடுகையால், கைவல்யம் தாழ்ந்த மோக்ஷம் என்றும், பகவததநுபவம் உயர்ந்த மோக்ஷம் என்றும் விளங்குகிறது.

தாத்பர்ய சந்த்ரிகை:-

கைவல்யத்தை அவாந்தர ப்ராப்யமாகக்கொண்ட பஞ்சாக்நி வித்யா நிஷ்டனைப் பற்றியே இவ்வத்தியாயங்களில் பேசப்படுவதால் அவன் மோக்ஷமடைவதாகக் குறிப்பிடுவதில் விரோதமில்லை.

## (10) 8-16 கீதா வ்யாக்யானம்:-

இந்த ஶ்லோக பாஷ்யத்தில் 'புநராவர்த்திந:' என்னும் பதத்திற்கு 'திரும்பி வருபவை' என்று பொருள் கொள்ளாமல் 'விநாஶிந:' (அழிவுடையவை) என்று பொருள் கொண்டமையால், புநராவ்ருத்தியற்ற கைவல்யாநுபவம் அழிவற்றது என்றும், அவ்வநுபவத்திலிருந்து கீழேயுள்ள ஐஶ்வர்யாநுபவத்திற்கோ,

மேலேயுள்ள ப₄க₃வத₃நுப₄வத்திற்கோ செல்லமுடியாது என்றும் விளங்குகிறது.

தாத்பர்ய சந்த்₃ரிகை:-

பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்ட₂னை இக்கைவல்யார்த்தி₂க்குக் கீழே ஐஶ்வர்யாநுப₄வத்திற்குச் செல்வது இல்லாவிட்டாலும், மேலே ப₄க₃வத₃நுப₄வத்திற்குச் செல்வது உண்டு. ப₄க₃வத₃நுப₄வத்திற்குச் சென்ற பின்பும் ஆத்மாநுப₄வம் தொடருகையாலே, கைவல்யாநு ப₄வத்திற்கு விநாஶம் இல்லை என்பதும் ஒட்டும்.

(11) 8-20, 21 கீ₃தா வ்யாக்₂யானம்:-

இந்த ஶ்லோகங்களின் அவதாரிகையிலும், கைவல்யார்த்தி₂க்குப் புநராவ்ருத்தியில்லை என்று முழங்கியிருக்கிறார் ப₄ாஷ்யகாரர். அவனுக்கு ப்ராப்யமாயிருப்பது ப்ரக்ருதி ஸம்ஸர்க₃த்தினின்றும் நீங்கியதாய், ஸ்வரூபாவிர்ப்ப₄ாவம் பெற்றதான ஆத்மா என்றும், அது முக்த ஸ்வரூபமே என்றும், அபுநராவ்ருத்திரூபமே என்றும், அளவற்ற ஜ்ஞானத்தை உடையது என்றும், இந்த ஶ்லோகங்களின் ப₄ாஷ்யத்திலும் கோ₄ஷித்திருக்கிறார் ப₄ாஷ்யகாரர். இதிலிருந்து, கைவல்ய மோக்ஷத்தில் ஆத்மாவின் ஜ்ஞானத்துக்குச் சுருக்கம் நீங்கி ஸ்வரூபாவிர்ப்ப₄ாவம் ஏற்பட்டு விடுகிறது என்றும், இது முக்தியில் ஒரு வகையே என்றும் விளங்குகிறது.

தாத்பர்ய சந்த்₃ரிகை:-

பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்ட₂னுக்கும் கைவல்யாநுப₄வத்துக்குப் பிறகு மோக்ஷம் ஏற்படுவதையிட்டு இந்த கீ₃தா ப₄ாஷ்ய ஸ்ரீஸூக்திகள் பொருந்துகின்றன.

(12) 8-22 கீ₃தா வ்யாக்₂யானம்:-

இந்த் ஶ்லோகத்தின் அவதாரிகாப₄ாஷ்யத்தில், 'ஜ்ஞாநிக்குக் கிடைக்கும் ப₂லன் கைவல்யார்த்தி₂க்குக் கிடைக்கும் ப₂லனைக் காட்டிலும் மிகவும் வேறுபட்டது' என்று ப₄ாஷ்யகாரர் அருளியிருக்கையால், கைவல்யார்த்தி₂க்கு ப₄க₃வத₃நுப₄வம் ஏற்பட இடமேயில்லை என்றும், ப₄க₃வத₃நுப₄வம் உடையவன் என்று ஶ்ருதி ஸூத்ர ப₄ாஷ்யங்களிலிருந்து விளங்கும் பஞ்சாக்₃நிவித்₃யாநிஷ்ட₂ன் கைவல்யார்த்தி₂யாயிருக்க முடியாதென்றும் மிகத்தெளிவாக விளங்குகிறது.

தாத்பர்ய சந்த்₃ரிகை:-

முற்கூறியபடி முக்தியில் ப₂ல பே₄த₃த்தை ஒப்புக்கொள்ள முடியாதாகையால், பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்ட₂னுக்கு இடையில்

ஏற்படும் கைவல்யாநுபவத்தைக் கருதி பாஷ்யகாரர் 'ஜ்ஞாநிக்குக் கிடைக்கும் பலன் கைவல்யார்த்திக்குக் கிடைக்கும் பலனைக் காட்டிலும் மிகவும் வேறுபட்டது' என்று அருளினார் என்று கொள்ள வேண்டும்.

(13) 8-23, 24 கீதா வ்யாக்யானம்:-

இங்கு அவதாரிகாபாஷ்யத்தில் 'ஆத்ம யாதாத்ம்யவித்' என்று சொல்லப்பட்டவன் முந்தியதான 22-வது ஶ்லோகத்தில் சொல்லப் பட்ட ஜ்ஞாநிகளில் ஒருவகையினனான பஞ்சாக்நி வித்யாநிஷ்டனே யொழிய, அதற்கு முன் ஶ்லோகங்களில் கைவல்யார்த்தி முதலான வேறு பதங்களால் குறிப்பிடப்பட்ட கைவல்யார்த்தி அன்று. கைவல்யார்த்தி பெறுவது ஆத்மஸ்வரூபாவிர்ப்பாவ லக்ஷண மோக்ஷம். அதாவது—ப்ரக்ருதி ஸம்ஸர்க்கத்தால் அநாதிகாலமாக ஆத்மாவுக்கு ஏற்பட்டிருந்த ஜ்ஞானச்சுருக்கம் அவனுக்கு நீங்குகிறதே யொழிய, ஶேஷத்வ பலமான பகவதநுபவ கைங்கர்யங்களில் அவனுக்கு விருப்பம் இல்லாமையாலே அவை ஏற்படுவதில்லை. ஜ்ஞாநியோவெனில் ஆத்ம யாதாத்ம்யாவிர்ப்பாவ லக்ஷணமோக்ஷத் தைப் பெறுகிறான். அதாவது ஶேஷத்வ பலமான பகவததநுபவ கைங்கர்யங்களைப் பெறுகிறான். இவன் பரமபுருஷனை ப்ராப்யமாக உபாஸிப்பவன் என்றும், ப்ரஹ்மாத்மகமாகத் தன் ஆத்மாவை ப்ராப்யமாக உபாஸிக்கும் பஞ்சாக்நி வித்யாநிஷ்டன் என்றும் இருவகைப்படுவான். இவ்விருவகையினருக்கும் அர்ச்சிராதிகதியும், ப்ரஹ்மாநுபவமும் உண்டு. கைவல்யார்த்திக்குக் கேவலாத்மாநு பவம் உண்டேயொழிய பகவதநுபவம் இல்லை. அவன் உபாஸகர்க ளையுடைய அர்ச்சிராதிகதியாலே செல்லாமல், நிர்மாநுஷ்யமான தாய், விவரிக்க இயலாத ஒரு வழியாலே நித்யவிபூதிக்குள்சென்று, விரஜையை ஒட்டியிருக்கும் ஒரு ஸ்தானத்திலிருந்து எப்போதும் தன் ஆத்மாவை மாத்திரமே அநுபவித்துக்கொண்டிருக்கிறான்.

தாத்பர்ய சந்த்ரிகை:-

இவ்வத்தியாயத்தில் முன் ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட ஜிஜ்ஞாஸு எனும் கைவல்யார்த்தியை பாஷ்யகாரர் இங்கு 'ஆத்ம யாதாத்ம்யவித்' என்று எடுக்கையால், கீதையில் ஜிஜ்ஞாஸு என்றும், பாஷ்யத்தில் கைவல்யார்த்தி முதலான பதங்களாலும் குறிக்கப்பட்டவன் கைவல்யத்தை அவாந்தர ப்ராப்யமாகவும், ப்ரஹ்மாநுபவத்தை முக்ய ப்ராப்யமாகவும்கொண்ட பஞ்சாக்நி வித்யாநிஷ்டனே என்று விளங்குகிறது.

(14) 8-26 கீ₃தா வ்யாக்₂யானம்:-

இந்த ஶ்லோக பா₄ஷ்யத்தில், ஜ்ஞாநிகளுக்கு அர்ச்சிராதி₃க₃தி என்றும், பலவித₄மான புண்யங்களைச்செய்த ஐஶ்வர்யார்த்தி₂களுக்கு தூ₄மாதி₃க₃தி என்றும் தெளிவாகப் பிரித்துக்கூறி, ஜிஜ்ஞாஸுவுக்கு இவ்விரு க₃திகளும் கிடையாதென்று காட்டியிருக்கையால், அர்ச்சிராதி₃க₃தியுடைய பஞ்சாக்₃நி வித்₃யாநிஷ்ட₂ன் ஜிஜ்ஞாஸுவாகிற கைவல்யநிஷ்ட₂ன் அல்லன், ஜ்ஞாநியே என்று விளங்குகிறது.

தாத்பர்ய சந்த்₃ரிகை:-

கீ₃தையில் எடுக்கப்படும் ஜிஜ்ஞாஸு முக்₂யமான கைவல்யார்த்தி₂யல்லன். ப்₃ரஹ்மாநுப₄வத்தைப் பரமப்ராப்யமாகக்கொண்ட ஜ்ஞாநியே யாவான் அவன். ஆகையால் இங்கு ஜ்ஞாநிக்கு அர்ச்சிராதி₃க₃தி என்று சொன்னது ஜிஜ்ஞாஸுவுக்கும் சொன்னபடியேயாம்,

(15) 8-28 கீ₃தா வ்யாக்₂யானம்:-

இவ்விரு அத்தியாயங்களிலும் சொல்லப்பட்ட ப்ராப்யமாய், ப்ராபகமாய், ஶேஷியாய், காரணமான பரமபுருஷனின் பெருமையை அறிந்தவன், 7-19ல் சொல்லப்பட்ட மஹாத்மாவான ஜ்ஞானியாகி, எம்பெருமானுடைய நிர்ஹேதுகக்ருபைக்கு விஷயமாகிருன். ஆகையாலே ஸாத₄நாநுஷ்ட₂ானம் செய்யும் மற்ற அனைவருடைய ப₂லனைக் காட்டிலும் தலைசிறந்த ப₂லன் அவனுக்கு இவ்வுலகிலும், பரமபத₃த்திலும் கிடைக்கிறது. அந்த ஜ்ஞானத்தைப் பரிபூர்ணமாகப் பெருத ஜ்ஞானியைத் திருத்துவதற்காக, பரமபுருஷனைப் பற்றிய உண்மையறிவை அங்க₃மாகக்கொண்ட ப₄க்தியோக₃ம் அவனுக்கு மோக்ஷஸாத₄னமாக விதி₄க்கப்படுகிறது.

தாத்பர்ய சந்த்₃ரிகை:-

இவ்விரு அத்தியாயங்களிலும், ப₄க்தியோக₃த்திற்கு அங்க₃மாக விதி₄க்கப்படும் பரமபுருஷவைப₄வம், உபாஸகனுக்கு மற்ற ப₂லன்களிலிருந்து வைராக்₃யத்தை விளைக்கிறதாகையாலே, எல்லா ஸாத₄நாநுஷ்ட₂ானங்களையும் செய்பவர்கள் அடையும் ப₂லனைக் காட்டிலும் சிறந்த ப₂லனை இவ்விரு அத்தியாயங்களின் பொருளை அறிந்தவர்கள் அடைகிருர்கள் என்று கூறப்பட்டது.

கீ₃தா வ்யாக்₂யான தாத்பர்யசந்த்₃ரிகைகளில்
ஏழு, எட்டு அத்தியாயங்களில் உள்ள
'ஸம்ப்ரதா₃யார்த்த₂ பே₄த₃ங்கள்' நிறைவு பெற்றது.

இதுவரை வெளியான

எட்டு அத்தியாயங்களின் ஸாரப்பொருள்

1—2-9. உறவினர்களிடம் தகாத அன்பினாலும், கருணையினாலும், தனக்கு த₃ர்மமான யுத்₃த₄த்தை அத₄ர்மம் என நினைத்துக் கலங்கிச் சரணடைந்த அர்ஜுனனைக்குறித்து அவனது மயக்கம் தெளிவடைவதற்காக கீ₃தாஶாஸ்த்ரம் தொடங்கப்பட்டது

2 ஆத்ம தத்துவத்தைப்பற்றிய அறிவுடையவனாய், கர்ம யோக₃த்தை அநுஷ்டி₂ப்பவனுக்கு ஸ்தி₂தப்ரஜ்ஞநிலை எனப்படும் ஜ்ஞாநயோக₃ம் ஏற்பட்டு, அது நிறைவடைந்தால் ஆத்மா (மனத்தால்) நேரே காணப்படுகிறது. (இதுவே ஆத்மஸாக்ஷாத்காரம்).

3. ஜ்ஞாநயோக₃த்தை அநுஷ்டி₂க்க ஶக்தியில்லாதவனும், ஶக்தியிருந்தபோதிலும் சான்றோரைகப் புகழ்பெற்றவனும், தன்னிடமுள்ள கர்த்ருத்வத்தை (செயல் புரியும் தன்மையை) கு₃ணங்களிலோ, ஸர்வேஶ்வரனிடமோ சேர்ப்பதாகிற கர்த்ருத்வத்யாக₃த்தைச்செய்து, மோக்ஷம் தவிர்ந்த மற்ற ப₂லன்களில் பற்றில்லாமல் கர்மங்களைச் செய்வதாகிற (ஞானத்தோடு கூடிய) கர்மயோக₃த்தை அநுஷ்டி₂ப்பதாலேயே ஆத்மஸாக்ஷாத்காரத்தை அடையலாம்.

4. (1) அவதார ரஹஸ்ய ஜ்ஞாநம். (2) ஞானத்தை உள்ளடக்கிய கர்மயோக₃ம் ஞானயோக₃மாகவேயுள்ளது. (3) கர்மயோக₃ ஸ்வரூபம். (4) அதன் வகைகள்.

5. (1) கர்மயோக₃ம் செய்வதற்கு எளியது; ஜ்ஞாநயோக₃த்தைக் காட்டிலும் விரைவில் ஆத்மஸாக்ஷாத்காரமாகிற ப₂லனை அளிப்பது (2 அந்தக் கர்மயோக₃த்தின் அங்க₃ங்கள். (3) 'ஶு₃த்₃த₄மான (ஶரீரஸம்ப₃ந்த₄மற்ற) ஆத்மாக்கள் அனைவரும் ஸமமாயிருப்பவர்கள்' என்று காண்பதற்கு உறுப்பான கர்மயோகி₃யின் நிலை.

6. (1) ஆத்மஸாக்ஷாத்காரமாகிற யோக₃த்தைப் பழகும் முறை (2) ஆத்மஸாக்ஷாத்காரம் செய்யும் யோகி₃களில் நாலு வகை. (3) அவ்வாத்மஸாக்ஷாத்காரத்திற்கு ஸாத₄னமாயிருக்கும் அப்₄யாஸம் (சிந்தனம்), வைராக்₃யம் முதலானவை. (4) தொடங்கிய யோக₃ம் இடையில் தடைபட்டாலும், அடியோடு அழிந்துவிடாமல் காலக்ரமத்தில் ஸித்₃தி₄யடையும். (5) ஸர்வேஶ்வரனை விஷயமாகக்கொண்ட ப₄க்தியோக₃ம் முற்கூறிய ஆத்மஸாக்ஷாத்காரமாகிற யோக₃த்தைக் காட்டிலும் சிறப்புற்றது.

7. (1) பரமபுருஷனைப்பற்றிய உண்மையறிவு (2) அது ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄த்தால் ஜீவர்களுக்கு மறைக்கப்பட்டுள்ளது. (3) பரம புருஷனை ஶரணமடைவதால் அம்மறைவு நீங்கும். (4) ப₄க்தர்களில் நாலு வகை. (5) இந்நால்வரில் ஞானியின் சிறப்பு.

8. ஐஶ்வர்யத்தை அல்லது கைவல்யத்தை அல்லது பரமபுருஷனை அடைய விரும்புகிறவர்கள் அறியவேண்டியவைகளும், கைக்கொள்ள வேண்டியவைகளும் யாவை என்பதின் விளக்கம். [பரமபுருஷனே ப்ராப்யம், ப்ராபகம், தா₄ரகபோஷகபோ₄க்₃யங்கள் முதலான எல்லாமாயிருப்பவன் என்று உணர்ந்த ஞானிக்கு உபாயாநுஷ்டா₂நம் எதையும் எதிர்பாராமல் எம்பெருமானுடைய நிர்ஹேதுக கிருபையாலேயே மோக்ஷம் கிடைக்கிறது என்பது 7-8 அத்தியாயங்களின் பரம ஸாரம்.]

W

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம

# கீதா வயாக்யானம்

(9 முதல 12 அததியாயஙகள்)

[ப₄க₄வத₃ கீ₃தையும், அதறகு ஸ்ரீராமாநுஜ ப₄ாஷயமும், ஆளவநதார் அருளிய கீ₃தார்தத₂ ஸஙக₃ரஹமும, வாதி₃கேஸரி ஜீயர் அருளிய பகவதகீதை வெணபாவும், ஸ்ரீவேத₃ாநததே₃சிகர் அருளிய கீதார்த்தசஙகிரகமும், 'ஸுத₃ர்ஶனம்' ஆசிரியர் இயற்றிய கீ₃தார்தத₂விவரணம என்னும் தமிழ வியாக்கியானமும், கீ₃தாஶலோகார்தத₂ச் சுருக்கமும் அடங்கியது.]

கிடைககுமிடம —

ஸ்ரீ உ. வே.

S. கிருஷ்ணஸ்வாமி அய்யஙகா (ஸுதர்சனா),

'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம' ஆசிரியா,

3, புததூா அகரஹாரம, திருச்சி-620,017.

---

ஸ்ரீ ரா ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யஙகார் குடுமப

தாம சொததுககளின ஆதரவில வெளியிடப்பெறறது.

டிரஸடிகள -

S. கிருஷணஸ்வாமிஅய்யங்கார், M A B L, அட்வகேட,

S. ராம அயயஙகார், B.Sc B L, அட்வகேட்.

---

விலை ரூ. 20-00] 1985. [தபாற்கூலி 3-00

ஸ்ரீநிவாஸம பிரஸ, புததூா அகரஹாரம, திருசசி.

M

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம

# உரையாசிரியரின் முன்னுரை

—❋—

## [ 9-12 அத்தியாயங்கள் ]

கண்ணன் அருளிய கீ₃தையும், அதன் செம்மைப்பொருள் தெரியப்பாரினில் சொன்ன இராமாநுசர் அருளிய ப₄ாஷ்ய மும், இவற்றை அனுஸரித்து ஸ்ரீவாதிகேஸரி ஜீயர் தமிழில் ஒவ்வொரு கீ₃தா ஶ்லோகத்தையும் வெண்பாவாகப்பாடிய பகவத் கீதை வெணபாவும், கீ₃தாப₄ாஷயததுக்கு வழிவகுத் துக கொடுதத ஆளவநதாரின் கீ₃தார்தத₂ஸங்க்₃ரஹமும், அதைத தமிழ்ப பாட்டாக்கிய ஸ்ரீவேத₃ாந்த தே₃ஶிகரின் கீதார்த்தசஙகிரகமும் பத்₃யங்களுக்குப் பதவுரைகளோடு, இவை அனைத்தின் ஆழ்பொருள்களையும் எளிய தமிழ நடையில் விளக்கும கீ₃தா வியாக்கியானமொன்றும 'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்ஶனம்' மாதபபததிரிகையில் சார்வரி வருஷம் மார்கழி மாதத்திலிருநது தொடர்ந்து வெளியிடப்பட்டு வருகிறது. அந்நூலில் முதல் ஆறு அத்தியாயங்கள் அடங்கிய ப்ரத₂மஷட்கம் சுமார் ஆயிரம் பக்கம் கொண்ட தாக பிரமாதீச வருஷம் சிததிரை ரேவதியில் ( 1—5—73 ) தனிப்புத்தகமாக வெளியிடப் பெற்றது. கீ₃தை ஏழு, எட்டு அத்தியாயங்களுக்கு இவையனைததையும் கொண்ட நூலின் இரண்டாம பாகம் (23—3—79) அன்று தனிப புததகமாக வெளியிடப் பெற்றது. கீ₃தை ஒன்பது முதல் பனனிரண்டு முடிய உள்ள நாலு அத்தியாயங்களுககு இவையனைததையும் கொண்ட கீ₃தாமத்₄யமஷட்கத்தின எஞசிய பகுதி குரோதன வருஷம் ஐப்பசித திருமூலம் (15—11—85) அனறு தனிப்புத்தகமாக வெளியிடபபடுகிறது.

முதல் ஷட்கததிற்போலவே ஒவவோரத்தியாயத்தின் முக்கிய விஷயஙகள கீ₃தாஶலோகார்தத₂ச் சுருக்கம்

என்ற தலைப்பில் அந்தந்த அத்தியாயத்தின் கடைசியில் மத₄யம ஷட்கததின் இரண்டு பாகங்களிலும கொடுககப் பட்டுளளன. இந்த மூன்ருவது பாகததில நமது கீ₃தார்தத₂ விவரணம், பெருமபாலும் தாதபர்ய சந்த்₃ரிகையில் காடடப் படட அர்தத₂ங்களை உள்ளடக்கியதாகவே அமைந்துளளது. முதல ஷட்கததிற் போலே இவவிரணடாவது ஷட்கததிலும ஸ்ரீப₄க₃வத்₃கீ₃தையின் பாத₃ாநுக்ரமணிகை மூனருவது ப₄ாக₃த்தின் இறுதியில் அளிக்கபபடடுள்ளது.

இவ்வண்ணமே மூன்ருவது ஷட்கமும் வெளிவரும் படியாக கீ₃தாசார்யனும் எம்பெருமானும் அருள் புரிவார்களாக.

குரோதன
ஐப்பசி திருமூலம.
(15—11—85)

இங்ஙனம,
ஸ்ரீவைஷணவதாஸாநுதாஸன்,
**ஸ்ரீ. கிருஷணஸ்வாமி அயயஙகாா,**
**(ஸுதர்சனர்)**
ஸ்ரீவைஷ்ணவ ஸுதாசனம ஆசிரியர்.



இராமாநுசநூற்றந்தாதி—68

ஆரெனககினறு நிகர்சொல்லில்
மாயனன றைவர்தெய்வத
தேரினிறசெபபிய கீதையின் செம்மைப
பொருள்தெரியப
பாரினிற சொன்ன விராமாநுசனைப்
பணியும் நல்லோர்
சீரினிற சென்று பணிநதது
என்னுவியும் சிநதையுமே.

# பிழைதிருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 423 | 5 | तष्वच | तेष्वच |
| 428 | 11 | பூத₄ானி | பூ₄தானி |
| 445 | 2 | परिववेते | परिवर्तते |
| 454 | 27 | சைதந்யத்தைச் | சைதநயத்தைக் |
| 486 | 12 | தே₃வர் | தம்போகத்தை— தே₃வா |
| 486 | 13 | தமபோகத்தை— லோகததில் | லோகத்தில |
| 512 | 22 | கு₃ணங்கன் | கு₃ணஙகள் |
| 524 | 19 | ஆஶ்ரயிககுரு | ஆஶ்ரயிககும |
| 568 | 21 | கு₃ணு: | கு₃ணு |
| 580 | 15 | அத்தியிலபில | அததியலபில |
| 587 | 14 | மகலேம் | க்லேஶம |
| 657 | 6 | ஶங்கர | ஶஙகர. |
| 701 | 13 | யதையும் | வதையும் |
| 701 | 14 | வாலே | யாலே |
| 845 | 27 | இத₄ம் | இத₃ம |
| 850 | 2 | दष्ण | दृष्ट्वि |
| 865 | 5 | ादश | द्वादश |
| 877 | 34 | எடுந்து | எடுத்து |
| 919 | 7 | து₃லய | துலய |
| 920 | 1 | शत्रु मित्रदिषु | शत्रुमित्रादिषु |



## ஸுதாசனம காரியாலயததில கிடைககும புததகஙகள -

### ஆழவாா அருளிசசெயலகளுககுப பூாவாசாாயாகளின வயாகயானஙகள

(பதவுரை அருமபதவுரை பரமாணததிரட்டுகளோடு கூடியவை)

| | க்ரந்தங்கள | விலை | தபால |
|---|---|---|---|
| 1. | முதல திருவநதாதி வயாகயானம | 2 50 | -50 |
| 2 | திருபபளளியெழுசசி வயாகயானம | 1-50 | 40 |
| 3 | பகவதவிஷயம I (முதலிரணடு திருவாயமொழிகள) | 37-00 | 5-00 |
| | ஷை II பாகம (முதறபநது 3 10 ,, ) | 42-00 | 6 00 |
| | ஷை III பாகம (இரணடாமபதது முழுவதும) | 52-00 | 7-00 |

### II ஆழவாாகளின அருளிசசெயலகளுககு எளியநடை விவரணததுடன கூடிய பூாவாசாாயாகளின வயாக்யானஙகள

| | | | |
|---|---|---|---|
| 1 | சிறியதிருமடல வயாகயானம | 4-50 | -75 |
| 2 | பெரியதிருமடல வயாகயானம | 7-50 | 1-50 |
| 3. | இரணடாநதிருவநதாதி வயாகயானம் | 6-00 | 1-00 |
| 4 | மூனறாநதிருவநதாதி வயாகயானம | 6-00 | 1-00 |
| 5. | நானமுகன திருவநதாதி வயாகயானம | 7-50 | 1-00 |
| 6 | திருவெழுகூறறிருககை வ்யாகயானம் | 1-50 | -40 |
| 7 | திருமாலை வயாகயானம | 16-00 | 2-00 |

### III அருளிசசெயலகளுககு எளியநடை விவரணம மாததிரம

| | | | |
|---|---|---|---|
| 1 | திருபபலலாணடு வ்யாகயானம | 3-00 | -60 |
| 2 | சஙகத தமிழமாலை முபபது—திருபபாவை விளககவுரை | 1-50 | -40 |

### IV நமது மறற வெளியீடுகள

| | | | |
|---|---|---|---|
| 1. | ஸதோதரரதநசது ஶலோகீஜிதநதேவ்யாகயானஙகள | 12-00 | 1-00 |
| 2 | சதுஶலோகீ வயாகயானம [நாயனாராசசானபிள்ளை] | 3-75 | -75 |
| 3 | கதய வயாகயானஙகள் | 6-75 | 1-25 |
| 4. | ஸ்ரீராமாயண தனிசலோகம [விவரணததுடன] I Part | 5-25 | 1-00 |
| | ஷை இரணடாம பாகம [விவரணததுடன] | 10 50 | 2-00 |
| 5 | பாசுரபபடி ராமாயணம | 0-25 | — |
| 6. | முமுக்ஷுபபடி வயாகயானம | 4 50 | -75 |
| 7. | ஆறாயிரபபடி குருபரமபராபரபாவம முதலியவை | 18 00 | 2 50 |
| 8. | ஸ்ரீவசநபூஷண வயாகயானம 4-அருமபதவுரைகளுடன முதலபாகம் | 9 00 | 1 50 |
| 9 | சாரீரககாரிகாவளீ [இரணடாம பாகம] | 7 50 | 1-50 |
| 10 | ஆறாயிரககதை | 0-50 | |
| 11. | உபயவேதாநத ஐககணட்யம | 3 00 | -60 |
| 12. | வடுகநமபி அருளிய யதிராஜவைபவம[விவரணததுடன] | 1-50 | -40 |
| 13 | திருககுறள ஸமஸகருதஶலோக மொழிபெயாப்புடன | 10 00 | 2 00 |
| 14 | [போதாயந] ஸநத்யாவநதநம பதவுரையுடன் | 1-00 | -30 |
| 15 | [போதாயந] உபாகாமவிதி | 0-75 | -30 |
| 16 | அருளிசசெயல ரஹஸயம [வரதாசார்யஸவாமி தொகுதத பூஷணத்துடன] | 3 75 | -75 |
| 17 | புருஷஸூகத வயாகயானம | 2-25 | -40 |
| 18 | நாராயணஸூகத வயாகயானம | 1-50 | -40 |
| 19 | ஸ்ரீஸூகத வயாகயானம | 3 00 | -75 |
| 20. | பூநீளா விஷ்ணுஸூகத வயாகயானஙகள் | 2-50 | -50 |

॥ भा ॥ बह्वीभिर्दंष्ट्राभिरतिभीषणाकारं लोकाः पूर्वोक्ताः प्रति कूलानुकूलमध्यस्थास्त्रिविधाः सर्वे एवाहं च तवेदमीदृशं रूप दृष्ट्वा अतीव व्यथिता भवामः ॥ २३ ॥

யுடையதாகையால மிக ப₄யங்கரமானதாய, **மஹத**—மிசப் பெரியதான, **தே ரூபம**—உனது உருவத்தை, **த₃ருஷ்டவா** பார்த்து, **லோகா.**—உலகினா அனைவரும், **பரவயதி₂தா:**— மிகவும் ப₄யந்திருக்கின்றனா, **தத₂ா அஹம்**—அப்படியே நானும் ப₄யந்திருக்கிறேன.

**24. உன்பெரிய ரூப மொளிமுகஙகண டோடுடைதாள**
**வன்பல் வயிறெயிறு மாயபபயமா—முனபடிகண்**
**டோஙகுபுயத் தாயுலக முண்ணடுஙகு நானதிற்**
**றுங்குபயஞ சார்வன் றளர்நது.**

**ஓஙகு புயததாய**—நெடுநதடக்கையனே! **உன பெரிய ரூபம் ஒளிமுகம கண தோள துடை தாள வன் பல வயிறு எயிறுமாய்**—உனது பெரிய உருவததில விளங்கும முக₂ஙகள், கணகள், தோளகள, துடைகள், காலகள், ப₂லமமிகக பலவயிறுகள, பற்கள ஆகியவற்றைகொணட தாய, **பயமாம்**—மிக ப₄யஙகரமாயிருககும, **உன்படி கணடு**— உனது விஶவரூபததைக்கணடு, **உலகம**—உலகினா, **உள நடுஙகும**—நெஞ்சு நடுஙகுவர், **அதிறருங்கு**—அதுபோலவே, **நான**—நானும், **தளர்ந்து பயம சார்வன**—தளாவடைநது பயப்படுகிறேன்.

23. முந்தின ஶலோகததில 'அனைவரும வியபபுறுகினறூர்கள' என்று கூறபபட்டது. இநத ஶலோகததில 'அனைவரும ப₄யபபடுகினறூாகள' எனறு கூறப்படுகிறது. (மஹாப₃ாஹோ) "அலம புரிநத நெடுநதடககை" [திருநெடு 6] எனகிறபடியே நீணடு உருணடு திரணடு, பரமபுருஷத தனமையைககாட்டும கையை உடையவனே! (ப₃ஹுவகதரநேதரம) பல வாயகளையும கணகளையும் உடையதாய (ப₃ஹுப₃ாஹூருபாத₃ம) பல கைகள துடைகள் காலகள் ஆகியவறறை உடையதாய. (ப₃ஹூத₃ரம) பல வயிறுகளையுடையதாய ஒரே ரூபததில பல வயிறுகள காலகள முதலானவை எபபடியிருககமுடியும? என்னும் கேளவிககு ஸமாத₄ாநம பததொனபதாவது ஶலோக வயாக₂யானததில் காட்டபபெறறது.

**नभस्स्पृशं दीप्तमनेकवर्णं**
**व्यात्तननं दीप्तविशालनेत्रम्।**
**दृष्ट्वा हि त्वा प्रव्यथितान्तरात्मा**
**धृतिं न विन्दामि शमं च विष्णो॥ २४॥**

**24. நப$_4$ஸ்ஸப்ருஶம தீ$_3$பதமநேகவர்ணம்**
**வயாததாநநம தீ$_3$பதவிஶாலநேதரம்।**
**த$_3$ருஷடவா ஹி தவா பரவயதி$_2$தாநதராதமா**
**த$_4$ருதிம ந விநத$_3$ாமி ஶமம் ச விஷ்ணோ॥**

**விஷ்ணோ** — விஷ்ணுவே! **நப$_4$ஸ்ஸப்ருஶம** — பரம பத$_3$ததைத தொடடு நிற்பவனுய, **தீ$_3$பதம** — ஒளிவீசுகிற வனுய, **அநேக வர்ணம**—பல நிறமுடையவனுய **வயாத தாநநம்**— விரியத்திறந்த வாயுடையவனுய, **தீ$_3$பதவிஶால நேதரம்**— ஒளிவீசும் பரந்த கணகளேயுடையவனுன, **த்வா**— உனனே, **த$_3$ருஷடவா** — கணடு, **பரவயதி$_2$தாந்தராதமா**— மிகவும் பயந்த நெஞசுடையவனுன நான, **த$_4$ருதிம்**— தே$_3$ஹத$_4$ாரணததையும, **ஶமம ச**—மனம் இநத$_3$ரியம ஆகிய வற்றின த$_4$ாரணததையும், **ந விநத$_3$ாமி ஹி** — அடைய விலலேயன்ருே.

---

(ப$_3$ஹுத$_3$மஷடராகராளம) பலபறகளே யுடையதாகையாலே அதி ப$_4$யஙகரமாயிருபபதாய் (மஹத) மிகப பெரிதான (தே ரூபம) உனது ரூபததை. (த$_3$ருஷடவா) பார்தது (லோகா ப்ரவயதி$_2$தா) இருபதாவது ஶலோகததில "லோகதரயம பரவயதி$_2$தம" எனற விடததிறபோலே பரதிகூலா, அநுகூலா, இரணடுமிலலாத நடுநிலே நிறபவா எனறு மூனறுவகைபபடட உலகினா அனேவரும் மிகவும நடுஙகுகின்றனா (ப்ரவயதி$_2$தா) "பரஸத$_2$ாநம, பரஸமரணம' முதலானவிடஙகளில 'பர' எனனும் உபஸர்க்க$_3$ததுக்கு எதிாமறைப பொருளும உணடாயினும, அபபொருள இஙகு பொருநதாதாகையால, அவ்வுபஸாகக$_3$ததுககு மிகுதியாக எனனும பொருளேககொணடு 'மிகவும ப$_4$யபபடுகிருாகள' எனறு பொருள்கொளளப்பட்டது. (தத$_2$ா அஹம) அவவணணமே நானும மிகவும ப$_4$யப்படுகிறேன. 23.

॥भा॥ नभश्शब्दः ※ तदक्षरे परमे व्योमन् (ना) ※ आदित्य-वर्णं तमसः परस्तात् (ना) ※ क्षयन्तमस्य रजसः पर.के (यजु २ २. १२. ६८) ※ यो अस्याध्यक्षः परमे व्योमन् (अष्ट. २. ८. ९. ६)

**25.** வானறடவி மேல்விளஙகி மனனுபல வணணமாய
ஆன்றமுக மஙகாந தவிரொளிசேர்ந—தேனறவிழித
தோறறுமுனேக கணடே துளஙகியுளந திண்மையுட
ளுறறலுறே ளுதா வமாநது.

**நாதா**—ஸவாமியான விஷணுவே! **மேல வான் தடவி**—பரமபத₃ததைத தொடுகினறவனுய, **விளஙகி**—ஒளிவீசுகினறவனுய, **மனனு பல வணணமாய**—நிலைநின்ற பல நிறஙகளையுடையவனுய, **ஆனற முகம அஙகாநது**—ஆ என்று விரியத திறநத வாயையுடையவனுய **அவிர் ஒளி சேர்நது ஏன்ற விழி தோறறும்**—ஒளிவீசும பரநத கணகளுடன காடசியளிபபவனுன, **உனே**—உனனே, **கண்டு**—பாாத்து, **உளம துளஙகி**—பயநத நெஞசையுடையவனுய, **திண்மையுடன**—தே₄ஹத₄ாரணததுடன, **அமர்நது**—இநத₃ரியஙகளை ஒருமுகபபடடு, **ஆறறல் உறேன**—த₄ரிகக இயலாதவனுயிருககிறேன

24. சென்ற ஶலோகததில "அனைவரும ப₄யபபடுகிருாகள. நானும அபபடியே" என்று கூறினுன. 'நானும அபபடியே' எனபதை விவரிககினறவனுய, இநத ஶலோகததில "நான பயநத நெஞசினனுய ஶரீரேநதிரியஙகள் த₄ரிககபபெறுகினறிலேன" என கிருன அர்ஜுனன. (நப₄ஸஸபருமம) பரமபத₃ததைத தொடுகினறவனே. நப₄ஶஶப₃த₃ம் ஆகாஶததைக குறிககுமேயலலது பரமபத₃ததைக குறிககுமோ? எனில, "தத₃க்ஷரே பரமே வயோமந" [தை நா 1-2] [அபபரபபொருள அழியாததான பரமாகாஶததில் எழுநதருளியிருககிறது] 'யோ அஸயாத₄யக்ஷ பரமே வயோமந" [யஜு அஷடக 2-8-9-6] [எநதப் பரமாதமா பரமாகாஶமாகிற பரமபத₃ததில் எழுந்தருளியிருந்து இநத லீலாவிபூ₄தியை ஆட்சிபுரிகினருனே] என்னும ஶருதிகளில் ஆகாஶததைசசொலலும 'வயோம' ஶப்₃த₃ம பரமாகாஶமாகிற பரமபத₃ததைக குறிபபதைக காண

इत्यादिश्रुतिसिद्धत्रिगुणप्रकृत्यतीतपरमव्योमवाची, सविकारस्य प्रकृति-तत्त्वस्य, पुरुषस्य च सर्वावस्थस्य, कृत्स्नस्याश्रयतया नभस्स्पृशमिति वचनात्, *द्यावापृथिव्योरिदमन्तरं हि व्याप्तमिति पूर्वोक्तत्वाच्च।

---

கினறேம அதுபோலவே நப₄ஸஸப₃த₃ம இஙகு பரமபத₃ததைக குறிககினறது எனறு கணடுகொளவது நப₄ஸஸப்₃த₃ம ப்ரஸித₃த₄ மான பராகருதமான ஆகாஸததைச சொலலுகிறது எனறே, க₃ாாககி₃வித₃யையில ஆகாஸமெனபபடும மூலபரகருதியைக குறிக கிறது எனறே கொளவதில குறையெனன? எனில இநத விஸவ ரூபம "இஹைகஸத₂ம ஜக₃த கருதஸனம" [11-7] எனறு தொடஙகும ஸலோகததில கூறியபடி ஆகாஸம முதலான எலலா விகாரபபொருளகளேயும, அவறறுககு மூலமான பரகருதியையும், விழிபபு முதலான எலலா நிலேகளிலுமுள்ள ஜீவனேயும தனனுள் அடககியது "ப₃ஹூனயத₃ருஷடபூாவாணி பஸய" [11-6] எனகிறபடியே இநத லீலாவிபூ₄தியில நாம காணுத பல பொருள் களேயும தனனுள அடககியிருபபது அபபடிபபடட இநத விஸவ ரூபம ஆகாஸததைத தொடுவதாயுளளது எனறு சொலலுமபோது அநத ஆகாஸம அநத உருவததினுள அடஙகியிருககும பராகருதா காஸமாயிருககமுடியாது. முககுணமயமான இநத லீலாவிபூ₄திககு அப்பாறபடட பரமாகாஸமாகவே இருககமுடியும. "**ஆதி₃தயவாணம தமஸ பரஸதாத**" [பு ஸூ 2-2] [தமோகு₃ணமுளள தமஸஸுககு (மூலபரகருதிககு) அபபாறபடட பரமபத₃ததில ஸூாயனபோல ஒளிவீசுகிறவனுய எழுந்தருளியிருககும பரமபுருஷனே] "**க்ஷயா தமஸய ரஜஸ பராகே**" [யஜு 2 2-12-68] [இநத ரஜோகு₃ண முள்ள பரகருதிககு அபபாறபடட பரமபத₃ததில எழுநதருளி யிருபபவனே] எனனும வேத₃வாகயஙகள் ரஜஸதமோகு₃ணஙகள நிறைநத இநத பரகருதிமணட₃லததுககு அபபாறபடட பரமாகாஸம எனனும பரமப த₃ம இருப்பதை உறுதிபபடுததுகினறன. ஆகையால இநத ஸுத₃த₄ஸதவமயமான பரமாகாஸமே இஙகு நப₄ஸஸப்₃த₃த திருல சொலலபபடுகிறது எனறு கொளளவேணடும மேலும "**த₃யாவாபருதி₂வயோரித₃மநதரம ஹி வயாபதம**" [11-20] எனனும ஸலோகததில மேலுலகஙகளுககும கீழுலகஙகளுககும இடை யிலுளள இடைவெளியாகிற ஆகாஸம விஸவரூபததால வியாபிககப் பட்டதாகக கூறபபடடது. அநத விஸவரூபம் ஓர் ஆகாஸததைத தொடுகிறது எனறு சொலலுமபோது அவவாகாஸம வியாபிககப படட பராகருதாகாஸத்தைக காட்டிலும வேறுபட்ட பரமாகாஸ

दीप्तमनेकवर्णं व्यात्ताननं दीप्तविशालनेत्रम् त्वां दृष्ट्वा प्रव्यथितान्त-रात्मा—अत्यन्तभीतमनाः धृतिं न विन्दामि—देहस्य धारणं न लभे; मनसश्चेन्द्रियाणां च शमं न लभे। विष्णो—व्यापिन्। सर्वव्यापिनं

மாகவே இருக்கவேண்டும் (தீ₃ப்தம்) ஒளிவீசுகின்றவனை "தி₃வி ஸூர்ய ஸஹஸ்ரஸ்ய" [11-12] என்னும் ச்லோகத்தில் இந்த விச்வரூபத்தின் ஒளி ஆயிரக்கணக்கான ஸூர்யர்களின் ஒளியை ஒத்தது என்று சொல்லப்பட்டதன்றோ. (அநேகவர்ணம்) செந்தாமரைத் தடங்கண் செங்கனிவாய்ச் செங்கமலம் செந்தாமரையடிகளை யும், நீலமேனியையும், உள்ளே வெண்பல் இலகு சிவந்தவாயையும், திருமார்பில் ஹிரண்யவர்ணையான ஸ்ரீதே₃வியையும், பல பல ஆப₄ர ணங்களையும், வைஜயந்தீ வநமாலையையும்கொண்ட இந்த விச்வரூபம் பல நிறங்களையுடையதாகவே இருக்குமன்றோ வேறிடங்களிலும் விச்வரூபத்தை வர்ணிக்கும்போது அது பல நிறங்களையுடையது என்று சொல்லப்பட்டதன்றோ (வ்யாத்தாநநம்) "பொங்கார் கடலும் பொருப்பும் நெருப்பும் நெருக்கிப் புகப்பொன்மிடற்றத்தனைபோது அங்காந்தவன்" [பெரியதிரு 10 6-1] என்கிறபடியே ப்ரளயகாலத்திற் போலே விரியத்திறந்த வாயையுடையவனை (தீ₃ப்தவிசாலநேத்ரம்) "தஸ்ய யதா₂ கப்யாஸம் புண்ட₃ரீகமேவமக்ஷிணீ" [ சா₂ந் 1-6-7 ] [அப்பரமபுருஷனுக்கு ஸூர்யனால் மலர்ந்த தாமரைபோன்ற இரு கண்கள் உள] "கண்கள் சிவந்து பெரியவாய்" [திருவாய் 8-8-1] "கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப் பெரிய வாய கண்கள்" [அமலனாதி 8] என்று உப₄யவேத₃ங்களாலும் முழங்கப்பெற்ற ஒளிவீசும் பரந்த கண்களையுடையவனை (த்வா த₃ருஷ்ட்வா) அப்படிப்பட்ட உன்னைக்கண்டு. (ப்ரவ்யதி₂தா ந்தராத்மா) மிகவும் பயந்த நெஞ்சையுடையவனாய். இவ்வந்தராத்மஶப்₃த₃ம் ஜீவஸ்வரூபத்தைச் சொல்லுவதாகாதோ? எனில் 'ப்ரவ்யதி₂த' என்பதாலேயே அப்பொருள் ஸித்₃தி₄க்கும்போது 'அந்தராத்ம' ஶப்₃த₃ம் பயனற்றதாகிவிடும் ஆகையால் கீதையில் மற்றும் பல இடங்களிற்போலே 'ஆத்ம'ஶப்₃த₃ம் மனத்தைக் குறிக்கிறது என்றே கொள்ளவேண்டும் அந்நமய ப்ராணமயங்களைக் காட்டிலும் மனோமயம் நுண்ணியதாய், அவற்றிற்கு உள்ளிருப்பதாகையாலே, மனஸ்ஸை 'அந்தராத்மா' என்றும் கூறலாம். ஆக 'ப்ரவ்யதி₂தாந்தராத்மா' என்றது மிகவும் பயந்த நெஞ்சுடையவனாய் என்றதாகிறது. அசேதனமான நெஞ்சை ப₄யந்ததாகக்கூறுவது சேதனஸமாதி₄யாலே இப்படிச் சைதன்யத்தை ஏறிட்டுச்

अतिमात्रमत्यद्भुतमतिघोरं च त्वां दृष्ट्वा प्रशिथिलसर्वावयवो व्याकुलेन्द्रियश्च भवामीत्यर्थः ॥ २४ ॥

दंष्ट्राकरालानि च ते मुखानि
दृष्ट्वैव कालानलसन्निभानि ।
दिशो न जाने न लभे च शर्म
प्रसीद देवेश जगन्निवास ॥ २५ ॥

---

சொல்லுவது ப4யத்தின் மிகுதியைக் காட்டுகிறது. (த4ருதிம் ந விந்த3ாமி) தே3ஹத4ாரணத்தை உடையவனாகின்றேனல்லேன். த4ருதிஶப்3த3ம் ப்ரீதியையும் குறிக்குமாயினும், "ந லபே4 ச ஶர்ம" [11 25] என்று அடுத்த ஶ்லோகத்தில் தான் ஸுக2த்தை அடையவில்லை என்று கூறுகிறானாகையாலே, இங்கு த4ருதிஶப்3த3ம் ஸுக2த்தின் ஒருவகையான ப்ரீதியைக்குறிக்கமாட்டாது. ஆகையால் த4ருதிஶப்3த3த்துக்கு இங்கு 'த4ாரணம்' என்னும் பொருளையே கொள்ளவேண்டும் எதனுடைய த4ாரணம் என்று சொல்லாவிடினும், ப்ரகரணத்தாலும் அர்த்த2ஸ்வப4ாவத்தாலும் தே3ஹத4ாரணமே இங்கு த4ருதிஶப்3த3த்தால் குறிக்கப்படுவதாகக் கொள்ளவேண்டும். (ஶமம் ச ந விந்த3ாமி) ஶமஶப்3த3ம் மனமும் இந்த்3ரியங்களும் அடங்கியிருத்தலைக்குறிக்கும் தே3ஹத4ாரணத்தைச் சொன்ன பிறகு மனம் இந்த்3ரியங்களை த4ரித்துநிற்றலை ஶமஶப்3த3த்துக்குப் பொருளாகக் கொள்வதே உசிதம் ஆக, மனமும் இந்த்3ரியங்களும் த4ரித்துநிற்கப்பெற்றிலேன் என்றதாகிறது இப்படிக் கொள்ளாவிடில் புநருக்தி ஏற்படும். (விஷ்ணோ!) ஸர்வவ்யாபியானவனே! வெறும் பேரைக் குறிப்பதாகக்கொள்வதைக் காட்டிலும் "விஷ்லு வ்யாப்தௌ" என்னும் த4ாதுவிலிருந்து ஸித்3தி4க்கும் ஸர்வவ்யாபித்வம் குறிக்கப்படுகிறது என்பதே பொருத்தமானது. ஸர்வவ்யாபியான விஶ்வரூபத்தை வர்ணிக்கும் இந்த ப்ரகரணத்துக்கு இப்பொருள் மிகப்பொருத்தமன்றோ ஆக, இந்த ஶ்லோகத்தால் "அனைத்தையும் வியாபித்திருப்பவனும், பேரளவுடையவனும், அத்யாஶ்சர்யமானவனும், அதிகோ4ரமானவனுமான உன்னைக் கண்டு எல்லா அவயவங்களும் மிகவும் தளர்ந்தவனாய், இந்த்3ரியங்கள் அனைத்தும் கலங்கியவனாகிறேன்" என்று சொல்லப்பட்டதாகிறது. 24.

**25. த₃ம்ஷ்ட்ராகராளாநி ச தே முக₂ாநி**
**த₃ருஷ்டவைவ காலாநலஸநநிப₄ாநி।**
**தி₃ஶோ ந ஜாநே ந லபே₄ ச ஶாம**
**ப்ரஸீத₃ தே₃வேஶ ஜக₃நநிவாஸ ||**

**தே₃வேஶ**—தேவர் தலைவனே! **ஜக₃நநிவாஸ!**—உலகஙகட்கெலலாம் இருப்பிடமாயிருப்பவனே!, **த₃மஷட் ராகராளாநி**—பற்களால ப₄யஙகரமாயிருப்பவையாய, **காலா நல ஸநநி₄பாநி ச**—ஊழிகாலத தீயைப போனறவையுமான, **தே**—உனனுடைய, **முக₂ாநி** — முக₂ஙகளை, **த₃ருஷ்டவா ஏவ**—பாாப்பதாலேயே, **தி₃ஶ:**—தி₃ககுகளை, **ந ஜாநே**—அறிகினறேனலலேன, **ந ச ஶாம லபே₄**—ஸுக₂ததையுமடைகினறேனலலேன் **பரஸீத₃**—(எனனைக் குறித்து) உகந்தருளுவாயாக

---

**26. மேலா மெயிறருன மிகுபயமா முன்முகஙகள்**
**காலா னலனபோலே கணடேநான்—மாலாகித்**
**திககறியே னினபமுறேன றேவேசா விச்சகததுத**
**தககவிருப பேயருணீ தான்.**

**தேவேசா!** — தே₃வர் தலைவனே! **இச்சகததுத தக்க இருபபே**—இந்த உலகததிற்குப பொருததமான இருப்பிடமே! **மேலாம் எயிறருல்** — உறுதியான பற்களால **காலாநலனபோலே**—ஊழிக்காலததீயைப் போலே, **மிகு பயமாம்**—மிகுநத ப₄யங்கரமாயிருக்கும, **உன முகங்கள**—உனது முக₂ஙகளை, **கணடே** — காண்பதாலேயே **நான்** — நான, **மாலாகி**—மயஙகி, **திக்கு அறியேன்**—தி₃க்குகளை அறிகினறேனலலேன **இன்பமும் உறேன்** — ஸுக₂ததையுமடைகிறேனலலேன. **நீ தான அருள்**—நீயே உகந்தருளவேணும்

---

25. "உனனுடைய மறற அவயவஙகளைக் காடடிலும முக₂ஙகள மிகவும ப₄யஙகரஙகளாய இருககினறன அவறறைககண்டு மிகவும ப₄யந்திருககும எனது ப₄யததை நீயே உகநது போககியருள வேணும" என்கிறுன் அர்ஜுனன. (காலாநலஸநநிப₄ாநி) ஊழி காலத தீயைபபோனறவை. அவற்றைபபோலே இநத யுத₃த₄களத

॥ भा ॥ युगान्तकालानलवत्सर्वसंहारे प्रवृत्तान्यतिघोराणि तव मुखानि दृष्ट्वा दिशो न जाने; सुखं च न लभे। जगतां निवास! देवेश!—ब्रह्मादीनामीश्वराणामपि परममहेश्वर! मां प्रति प्रसन्नो भव। यथाह प्रकृतिं गतो भवामि, तथा कुर्वित्यर्थः ॥ २५ ॥

---

தில உளள பெருமபானமையினரைக கொலலுவதறகு முறபடடு நிறபவை எனறு கருதது எமபெருமானே காலததுககு அபி₄மானி யாகையாலே, ஊழிகாலததின செயலான ஸமஹாரததைச செயய முறபடடுவிடடான எனறு கருதது (த₃மஷடராகராளாநி ச) பறக ளாலே மிகவும ப₄யஙகரமாகவுமிருபபவை கராளஶப₃த₃ம் பறகள நிறைநதிருபபதையோ, விகாரமுடையதாயிருபபதையோ, ப₄யஙகரமா யிருபபதையோ காடடும. இததால மிகவும கே₄ாரமாயிருபபவை எனறதாயிறறு இபபடியிருபபவை எவை? எனில (தே முக₂ாநி) உனது விஶவரூபததிலுளள முக₂ஙகளே இப்படியிருககினறன. (த₃ருஷடவா ஏவ தி₃ஶோ ந ஜாநே) அவறறைப் பாரபபதாலேயே எனககு தி₃சைகள தெரியவிலலை (ஶாம ச ந லபே₄) அவறறைப பாரபபதாலேயே நான ஸுக₂ததையும அடையவிலலை, பெருந துனபததையே அடைகிறேன எனறு கருதது 'த₃ருஷடவைவ" [பாரபபதாலேயே] எனகிறவிடததில ஏவகாரததாலே உனது முக₂ததால தீணடபபடடிருநதால அழிநதேபோயிருப்பேன எனனும் கருதது உணாததபபடுகிறது (ஜக₃நநிவாஸ) உலகிறகெலலாம இருபபிடமாயிருபபவனே! அநயபத₃ாதத₂பரத₄ானமான ப₃ஹு வரீஹிஸமாஸததைக காடடிலும உததரபத₃ாதத₂ பரத₄ானமான ததபுருஷஸமாஸம் ஏறபுடையதாகையாலே, 'ஜக₃தாம நிவாஸ' எனறு ப₄ாஷயததில அதுவே கைககொளளபபடடது. "இஹை கஸத₂ம" எனறு தொடஙகும ஏழாம ஶலோகததின பொருளான ஸாவாத₄ரதவமும ததபுருஷஸமாஸததைக கொளளுமபோது விவரிககபபடடதாகும. (தே₃வேஶ) தே₃வர் தலைவனே! "தமீஶவ ராணும பரமம மஹேஶ்வரம தம தே₃வதாநாம பரமம ச தை₃வதம" [ஶவே 6 7] [ஈஶவராகளுககு மேலான மஹேஶவரனும, தே₃வதை களுககு மேலான தே₃வதையுமானவனை] என்று உபநிஷததுககளில 'பிரமன ஶிவன முதலான ஈஶவராகளுககும மேலான மஹேஶவரனுய, மேலான தே₃வதையாயிருபபவன பரமபுருஷனே' எனறு கூறியிருப பதை நேரே காணகின்றேன எனறு கருதது இதனால பிரமன முதலானவாகளே உன்னைககாண இயலாதவாகளாயிருககுமபோது

॥ भा ॥ एवं सर्वस्य जगतः स्वायत्तस्थितिप्रवृत्तित्वं दर्शयन् पार्थसारथी राजवेषच्छद्मनाऽवस्थितानां धार्तराष्ट्राणां योधिष्ठिरेष्वनुप्रविष्टानां चासुरांशानां संहारेण भूभारावतरणं स्वमनीषितं स्वेनैव करिष्यमाणं पार्थाय दर्शयामास। स च पार्थो भगवतः स्रष्टृत्वादिकं सर्वैश्वर्यं साक्षात्कृत्य तस्मिन्नेव भगवति सर्वात्मनि धार्तराष्ट्रादीनामुपसंहारमनागतमपि तत्प्रसादलब्धेन दिव्येन चक्षुषा पश्यन्निदं [चो]श्रोवाच—

अमी[च त्वा]सर्वे धृतराष्ट्रस्य पुत्राः
सर्वैस्सहैवावनिपालसङ्घैः।
भीष्मो द्रोणस्सूतपुत्रस्तथाऽसौ
सहास्मदीयैरपि योधमुख्यैः॥ २६॥

वक्त्राणि ते त्वरमाणा विशन्ति
दंष्ट्राकरालानि भयानकानि।
केचिद्विलग्ना दशनान्तरेषु
संदृश्यन्ते चूर्णितैरुत्तमाङ्गैः॥ २७॥

---

நான் எம்மாத்திரம்? என்னும் கருத்து உணர்த்தப்படுகிறது. (ப்ரஸீத$_3$) இப்படி மிகத் தாழ்ந்தவனுகையாலே மிகவும் ப$_4$யந்திருக்கும் என்னிடம் உகந்தருளவேணும் என்றபடி. இதற்குமுன் க்ணனுக்கு அர்ஜுனனிடம் கோபமிருந்தாலதானே 'உகந்தருள வேணும்' என்று ப்ரார்த்தி$_2$க்கலாம்; அப்படிக்கோபம் இருந்ததாகத் தெரியவில்லையே? எனில்: இங்கு 'ப்ரஸீத$_3$' (உகந்தருளவேணும்) என்றது "உனது ப$_4$யங்கரமான உருவத்தைக் கண்டு மிகவும் ப$_4$யந்திருக்கும் நான் அந்த ப$_4$யம் தெளிந்து இயற்கைநிலையை அடையும்படி செய்தருளவேணும்" என்றே பொருள்படுகிறது. "கோபத்தை ஆறியருளவேணும்" என்று பொருள்படவில்லை. ஆகையாலே குறையில்லை. 25.

26. அமீ[ச த்வா]ஸாவே த₄்ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா:
ஸர்வைஸ்ஸஹைவாவநிபாலஸங்கை₄: ।
பீ₄ஷ்மோ த்₃ரோணஸ்ஸூதபுத்ரஸ்தத₂ாஸௌ
ஸஹாஸ்மதீ₃யைரபி யோத₄முக்₂யை ॥

27 வக்த்ராணி தே த்வரமாணா விஸந்தி
த₃ம்ஷ்ட்ராகராளாநி ப₄யாநகாநி ।
கேசித்₃விலக்₃நா த₃ஸநாந்தரேஷு
ஸந்த்₃ருஸ்யந்தே சூர்ணிதைருத்தமாங்கை₃: ॥

---

26, 27 இருபத்தாறுமுதல் முப்பதீறாக உள்ள ஸ்லோகங்களில் மஹாப₄ாரத யுத்₃த₄த்தில் கௌரவபக்ஷத்தில் இருக்கும் பெரும் பாலானவர்களையும், பாண்ட₃வபக்ஷத்திலும் அஸுராவேஸமுள்ள சிலரையும் தானே அழிக்கப்போவதைக் காட்டுவதன்மூலம் அர்ஜுனனைப் போர்செய்யத் தூண்டுவதற்காக விஸ்வரூபத்தின் வாயில் நுழைந்து அவர்கள் அழிகிறபடியைக் காட்டுகிறான் கண்ணன் இதுவரையில் நடந்த கீ₃தைப் பகுதியாலே "உலக னைத்தும் தனக்கு அதீ₄னமான ஸத்தா ஸ்தி₂தி ப்ரவ்ருத்திகளை உடையது" என்று கண்ணன் விளக்கியதும் ப₄ாரதப்போரில் இவர் களை ஸம்ஹாரம் செய்யப்போகிறவன் தானே, அர்ஜுனன் வெறும் நிமித்த மாத்திரமே என்று உணர்த்துவதற்காகவே என்பதும் குறிக்கொள்ளத்தக்கது. மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்து பார்த்த₂னுக்கு ஸாரதி₂யாயிருக்கும் கண்ணன் அரசர் உருக் கொண்டு பிறந்து போர்க்களத்திலே நிற்கும் அஸுரர்களான த₄்ருத ராஷ்ட்ர புத்ரர்கள் நூற்றுவரையும், யுதி₄ஷ்டி₂ர ஸேனையிலிருக்கும் அத்தகைய சிலரையும் அழிப்பதன்மூலம் பூ₄மிப₄ாரத்தைக் குறைப்ப தாகிற தன் திருவுள்ளக் கருத்தைத் தானே நடத்திவைக்கப்போவதைப் பார்த்த₂னுக்குக் காட்டுகிறான் இந்த ஸ்லோகங்களில். அந்தப் பார்த் த₂னும் உலகனைத்தையும் படைத்து அளித்து அழித்தல் முதலான எல்லாப் பெருமைகளையும் உடையவன் ப₄க₃வானான கண்ணனே என்று நேரே கண்டு, அத்தகைய ஸர்வாந்தர்யாமியாய், அதனாலேயே எல்லாமாயிருப்பவனாய், ஸத்யஸங்கல்பனான அவனே த்₄ருதராஷ்ட்ர புத்ரர்கள் முதலான அனைவரும் அழிவதற்கு எல்லாவகைக் காரண மாகவுமிருப்பவன் என்பதையும், உலகினரால் காணபரியதான விஸ்வரூபத்தைக்கொண்டு அனைத்தையும் விழுங்கும் அவனே அந்த

**அமீ ஸர்வே த்₄ருதராஷ்டரஸய புதரா** —எதிரே காடசியளிககும த்₄ருதராஷடரனுடைய புதராகள நூறறுவரும, **பீ₄ஷம.**—பீ₄ஷம பிதாமஹரும், **த்₃ரோண** —(ஆசாரயரான) த்₃ரோணரும், **ததா₂ அஸௌ ஸூதபுதர** -அவவண்ணமே எதிரே காட்சியளிககும் கர்ணனும (ஆகியவாகள), **அவநி பாலஸஙகை₄ ஸர்வை. ஸஹ**—(அவாகளைச சேர்நத) அரசா கூட்டஙகளோடும, **அஸமதீ₃யை அபி யோத₄முக₂யை ஸஹ** - நமமைச சோநத சில வீரர்தலைவாகளோடும் கூட, **த₃மஷடராகராளாநி**—வளைந்த பறகளை உடையவையாய, **ப₄யாநகாநி**—மிகவும ப₄யஙகரமாயிருபபவையான, **தே வகதராணி**—உனது வாயசளுககுள்ளே, **தவரமாணு ஏவ விஶநதி**—(அழிவின பொருட்டு) விரைவுடனே நுழைகின றுர்கள **கேசித**—அவாகளில சிலர், **சூாணிதை: உதத மாஙகை₃** —துணடு துண்டாககபபட்ட தலைகளோடு கூடியவாகளாய, **த₃ஶநாநதரேஷு விலக₃நா** —பறகளின இடைவெளிகளில தொஙகுகினறவாகளாக, **ஸநத்₃ருஶயநதே**—காணபபடுகிறுாகள.

---

**27. அநதன் புதலவரிவ ரலலா நிருபருடன**
**பநதமுறு பாடடன றுரோணன்தான—முநதுறறுக்**
**கனனனிவ னம்படையிற காவலரோ டெல்லாருந**
**துனனவுனைச சேர்நதிடுவா தொககு**

**அநதன புதலவா இவர்** —குருடனுன த்₄ருதராஷ்ட்ரனின புததிராகளான இவர்களை, **பநதமுறு பாடடன்**—

---

ஸமஹாரததுககு மிக முக₂யமான ஹேது எனபதையும, அாஜுனனுகிற தன கையில அமபுகளபோலவே தானும காககை உடகாரப பனமபழம விழுமிடததிறபோலே இவாகளது அழிவிறகு ஒரு வியாஜமாததரமாகவே இருபபவன எனபதையும, இனிமேல நடக்கபபோவதாயினும இவறறையெலலாம கண்ணன் அருளாலே பெற்ற தி₃வயசக்ஷுஸஸாலே கணடு பினவருமாறு கூறினுன. நடககபபோவதையும நேரே காணகையால நடபபதுபோலவே கூறுகின்றுன எனறும கொளளலாம. ஆகையால் கணணெதிரே நிறபவாகளை அழிகினறவாகளாககாணபது இநத்₃ரஜாலம போனறதோ

॥ भा ॥ अमी धृतराष्ट्रस्य पुत्राः दुर्योधनादयस्सर्वे भीष्मो

(பேராகளிடம) பாசமுளள பாடடஞன பீ₄ஷமன், **துரோணன தான**—துரோணுசாாயா, **முநதுற்று கன்னன் இவன்**—முனனே நிறகும காணனுகிற இவன, (ஆகிய வாகள்) **அல்லா நிருபருடன—(**அவாகளைச் சேர்ந்த) அரசர் கூடடஙகளோடு, **நம படையில் காவலரோடு**—நம படை யைச சோநத (சில) அரசர்களோடு, **எல்லாரும**—அனை வரும, **தொககு** — ஒனறுசோநது, **துனன** — நெருக்கிக கொணடு, **உனை சோநதிடுவர்**—உனனிடம் வருகிறாாகள.

23 **ஆங்கவர்க ளுன்ற னதிபயமாம் வல்லெயிற்**
**றோஙகு முகஙகளிடை யுறறுவிரை ந—தீங்கடைவர்**
**நினசினததாற பலலிடையி னினறுசிலர் பல்பொடியா**
**மனசிரததாற றேன்றுவர்கண் மறறு.**

**ஆங்கு அவர்கள்**—அததகைய அவாகள, **உனதன்**—உனனுடைய, **அதிபயமாம**—மிகவும ப₄யஙகரமாயிருககும, **வல் எயிறறு**—உறுதியான பற்களையுடைய, **ஓங்கு முகஙக ளிடை உறறு**—உயர நிற்கும வாயகளுககுள்ளே நுழைநது, **ஈஙகு விரைநது அடைவர்** — அவறறின உள்ளே விரை வாகச செலவா, **மறறு** — மேலும, **நின சினததால்**— உனது கோபததாலே, **சிலா**—இவாகளில சிலர், **பல் இடையில் நினறு**—பறகளுக்கு நடுவில தொஙகுகின்றவாக ளாய, **பல்பொடியாம் மனசிரததால் தோனறுவர்கள்**—தஙக ளுடைய சிறநத தலைகள் பல பொடிகளாக ஆக்கபபடடுக் காட்சியளிககிறாாகள

---

எனனும ஐயம தவிாககபபடுகிறது. (அமீ ஸாவே த₄ருதராஷ்ட்ரஸய புதரா ) த₄ருதராஷடரனின புதலவாகளான து₃ாயோத₄னன முதலான இநத நூறறுவரும (பீ₄ஷம ) பாணட₃வருககும் கௌர வருககும பாடடஞரான பீ₄ஷமரும அனைவரிலும பெருவீரராகை யாலும, முதலில விழபபோகும ஸேனைததலைவராகையாலும ஸேனைத தலைவாகளுககுள முதலில படிககிறுன. (த₃ரோண ) பாணட₃வ கௌரவாகளுககு ஆசாாயரான த₃ரோணரும. வீரத்தில பீ₄ஷம

द्रोणस्सूतपुत्रः—कर्णश्च तत्पक्षीयैरवनिपालसमूहैस्सर्वैरस्मदीयैरपि कैश्चिद्यो·

ருககே அடுததபடியானவராய அவருககு அடுததபடி விழபபோகும ஸேனைததலைவராகையாலே இரணடாவதாகப படிககிறுன (ததா அஸௌ ஸூத புதர) அவவணணமே இநதத தேரபபாகன மகனுன காணனும கௌரவஸேனையில த்₃ரோணருககு அடுததபடி பெரிய வீரனுய அவருககு அடுததபடி விழ இருககும ஸேனைததலைவனுகை யாலே காணனை மூனருவதாகப படிககிறுன (ஸாவை அவநிபால ஸங்கை₄ ஸஹைவ) கௌரவஸேனையைச சோநத எலலா அரசா கூட்டஙகளோடும கூடவே நாலாவது பாத₃ததில "அஸமதீ₃யை யோத₄முக₂யைஸ ஸஹ" எனறு பாணட₃வ பக்ஷததில உளள போரததலைவாகளைத தனியே எடுககையால 'அவநிபாலஸங்கை₄" எனறு இஙகே கௌரவபக்ஷததிலுள்ள போரததலைவாகளை எடுபப தாகக கொளளவேணடும கௌரவா நூறறுவரையுமபோலே அவா களைச சாநதிருநத போரததலைவாகள அனைவருமே அழியப போகிறுாகள எனபதை "ஸாவை" எனனும பத₃ம காட்டுகிறது (அஸமதீ₃யை யோத₄முக₂யை ஸஹ) நமமுடைய பக்ஷததைச சோநத சில போரததலைவாகளோடு கூட இரணடாவது பாத₃த தில உளளதுபோலே இஙகு 'ஸாவை" எனனும பத₃ம இலலாத தாலும, 'யோத₄முக₂யை." எனறு குறிககையாலும பாணட₃வ பக்ஷததில அனைவரும அழிககபபடவிலலை எனறும, சில போரத தலைவாகளே அழிககபபடடாாகள எனறும உணாதநபபடுகிறது (வகதராணி தே தவரமாணு விஶநதி) உனது வாயகளுககுளளே விரைவாக அழிவின பொருட்டு நுழைகிறுாகள எவாகள ப₄க₃வத₃ ப₄ாக₃வதாபசாரஙகளை எவவளவு விரைவாகச செயகிறுாகளோ, அவாகள உனனுல அவவளவு விரைவாக அழிககபபட இருககிறுாகள எனறு 'தவரமாண' பத₃ததின கருததுः அனறிககே, போாபுரிவதில அவாகள காட்டும வேக₃மெலலாம அவாகளது அழிவுககே காரணமாகினறது எனறும கருததுரைககலாம. அநத வாயகள எபபடி இருககினறன ? எனில (த₃மஷடராகராளாநி ப₄யாநகாநி) இடைவெளியோடு கூடிய பறகளை யுடையனவாய, ப₄யஙகரமா யிருபபவை ப₄யஙகரமானவை எனறு தனியாகச சொலலுகையால கராள' ஶப₃த₃ம இடைவெளியோடு கூடியிருககையையும வளைநதி ருககையையும கூறுகிறது. மேடுபளளஙகளுடன (த₃நதுரமாய) இருக கையைக கூறுவதாகவும கொள்ளலாம 'கராலம த₃நதுரே வகரே" எனனும நிக₄ணடு காணததககது. ப₄ாஷயததில 'து₃ாயோத₄ நாத₃யஸஸாவே" எனறு பாட₂ம இருககையாலும, இரணடு

**घमुरुवेगैस्सह त्वरमाणा दंष्ट्राकरालानि भयानकानि तव वक्त्राणि विनाशाय विशन्ति ; तत्र केचिच्चूर्णितैरुत्तमाङ्गैर्दशनान्तरेषु विलग्नाः संदृश्यन्ते ॥ २६ ॥ २७ ॥**

---

ஶ்லோகங்களையும் ஒரே அந்வயமாகக் கொள்ளுகையாலும் "அமீ ஸர்வே" என்பதே பா4ஷ்ய பாட2ம் என விளங்குகிறது. "அமீ ச த்வா" என்று பாட2மாகில், அடுத்த ஶ்லோகத்தில் உள்ள "விஶந்தி" என்பதை முதல் ஶ்லோகத்திலும் சேர்த்துக்கொண்டோ, அல்லது அதே பொருளுள்ள வேறொரு வினைச்சொல்லை அத்4யாஹாரம் செய்துகொண்டோ, அல்லது இருபத்துநாலாவது ஶ்லோகத்திலுள்ள பத3ங்களின் வசனத்தை ப3ஹுவசனமாக மாற்றிக்கொண்டு "த்3ருஷ்ட்வா ப்ரவ்யதி2தாந்தராத்மானோ த்4ருதிம் ந விந்த3ந்தி" [உன்னைக்கண்டு கலங்கிய மனமுடையவர்களாய் த்4ரிக்கமாட்டாதவர்கள் ஆகின்றனர்] என்று கூட்டியோ முதல் ஶ்லோகத்தைத் தனி அந்வயமாகக் கொள்ளவேண்டும். "அமீ ச த்வா, வக்த்ராணி தே" என்று இரண்டு ஶ்லோகங்களும் தொடங்குகையாலே, இரண்டையும் ஒரே அந்வயமாகக் கொள்ளமுடியாது ஒன்றரை ஶ்லோகத்தாலே— அழிவின்பொருட்டு எம்பெருமான் வாயில் நுழையுமவர்களைச் சொல்லி, இனி அரை ஶ்லோகத்தாலே அவ்விஶ்வரூப எம்பெருமானின் பல்லிடுக்குகளிலே தலை நசுங்கிச் சிலர் அழிந்து கிடக்கிறார்கள் என்று கூறுகிறது (கேசித்) கௌரவஸேனையிலுள்ள சிலர் விஶ்வரூப எம்பெருமானின் வாயிலுள்ள சிலர் என்றுமாம் (த3ஶநாந்தரேஷு லக்3நா) பல்லிடுக்குகளிலே தொங்குகின்றவர்களாய் (சூர்ணிதை உத்தமாங்கை3 ஸந்த்3ருஶ்யந்தே) நசுங்கிய தலைகளையுடையவர்களாய்க் காணப்படுகின்றார்கள்.

**"செற்றெழுந்து தீவிழித்துச் சென்றவிந்த ஏழுலகும்**
**மற்றிவை ஆவென்று வாய்ங்காந்து – முற்றும்**
**மறையவர்க்குக் காட்டிய மாயவனையல்லால்**
**இறையேனும் ஏத்தாதென் நா"** [முதல்திருவ 94]

என்று பொய்கையாழ்வார் இந்த ஶ்லோகங்களை அடியொற்றிக் கண்ணன் பா4ரதப்போரிலே காட்டின விஶ்வரூபத்தைக் கூறுவதாக அப்பிள்ளை உரையிலே பொருளுரைத்தார். மறையவர்க்கு என்பது பீ4ஷ்மத்3ரோணாதி3களைக் குறிக்கிறது. அவர்களும் இந்த விஶ்வரூபத்தைக் கண்டனர் என விளங்குகிறது

யாதவ ப்ரகாஶமதத்தைச சேர்ந்தவர்கள் கீதையில் சில இடங்களில் அதிகாஶலோகங்களைப் படிக்கிறார்கள் என்று இங்கு தாத்பர்ய சந்த்ரிகையில் ஸ்ரீதேசிகனால் காட்டப்பட்டது. அவையாவன —
(1)"காம ஏஷ க்ரோத ஏஷ "[3-37] என்னும் ஶ்லோகத்துக்குப் பிறகு:

அர்ஜுந உவாச—

"ப4வத்யேஷ கத2ம் க்ருஷ்ண கத2ம் சைஷ விவர்த்த4தே |
கிமாத்மக கிமாசார தந் மமாசக்ஷ்வ ப்ருச்சத: ||

ஸ்ரீப4க3வாந் உவாச—

ஏஷ ஸூக்ஷ்ம பரஶ்ஶத்ரு தே3ஹிநாம் இந்த்3ரியைஸ்ஸஹ |
ஸுக2ம் தத்ர இவாஸீநோ மோஹயந் பார்த்த2 திஷ்ட2தி ||
காமக்ரோத4மயோ கோ4ர: ஸ்தம்ப4ஹர்ஷ ஸமுத்3ப4வ: |
அஹங்காரோऽபி4மாநாத்மா து3ஸ்தர: பாபகர்மபி4: ||
ஹர்ஷமஸ்ய நிவர்த்யைஷ ஶோகமஸ்ய த3தா3தி ச |
ப4யம் சாஸ்ய கரோத்யேஷ மோஹயம்ஶ்ச முஹுர் முஹு: ||
ஸ ஏஷ கலுஷ க்ஷுத்3ர: சி2த்3ரப்ரேக்ஷீ த4நஞ்ஜய |
ரஜ: ப்ரவ்ருத்தோ மோஹாத்மா மாநுஷாணாம் உபத்3ரவ: ||"

[அர்ஜுனன் கூறினான்— கண்ணனே! க்ரோத4மாகப் பரிணமிக்கும் இந்தக் காமம் எப்படி உண்டாகிறது? எப்படி வளர்கிறது? எந்த ஸ்வரூபமாயிருக்கிறது? எந்தச் செயலைச் செய்கிறது? கேட்கும் எனக்கு இதைக் கூறுவாயாக. ஸ்ரீப4க3வான் உரைத்தான்— பார்த்த2னே! இந்த்3ரியங்களோடு கூடிய ஶரீரமுடையவர்களுக்கு இது நுண்ணியதாய மேலான எதிரியாகும். அந்த ஶரீரத்திலேயே இனிதாக இருந்துகொண்டு ஜீவாத்மாவை மயக்கிக் கொண்டிருக்கிறது. காமக்ரோத4மயமான பெரிய இந்த எதிரி க3ர்வத்தினாலும் விஷயஸுக2த்தினாலும் உண்டாகிறது. தே3ஹத்தையே ஆத்மாவாக அபி4மானிக்கும் அஹங்காரரூபமாயிருக்கிறது தீவினைகளால் இது கடக்க அரிதாயிருக்கிறது. இந்த ஜீவனுக்கு இன்பத்தைப் போக்கித் துன்பத்தை இது தருகிறது. இவனுக்கு ப4யத்தையும் விளைக்கிறது அடிக்கடி இவனை மயங்கவும் செய்கிறது த4நஞ்ஜயனே! இவ்வெதிரி கலங்கியதாய், தாழ்ந்ததாய், ஸ்வரூப நாஶத்தை விளைப்பதற்கு ஸமயம் பார்த்திருப்பதாயுள்ளது. ரஜோகு3ணத்தால் உண்டாவதாய மனிதர்களுக்கு மயக்கத்தாலே விளையும் உபத்3ரவமாய (தொல்லையாய்) இருக்கிறது] என்னும் ஶ்லோகங்களும், (2) கீ3தை பதினோராவது அத்தியாயத்தில் இருபத்தேழு, இருபத்தெட்டு ஶ்லோகங்களுக்கு இடையில் அதாவது இவ்விடத்தில்—

''நாநாரூபை புருஷைாவத₄யமாநா
விஶந்தி தே வக்தரமசிந்த்யரூபம |
யௌதி₄ஷ்டி₂ரா தா₄ர்த்தராஷ்ட்ராஶ்ச யோதா₄
ஶஸ்த்ரை க்ருத்தா விவிதை₄ஸ்ஸர்வ ஏவ ||

தி₃வ்யாநி கர்மாணி தவாத₃பு₄தாநி
பூர்வாணி பூர்வேப்யருஷயஸ்ஸ்துவந்தி |
நாந்யோऽஸ்தி கர்த்தா ஜக₃தஸ்த்வமேகோ
தா₄தா விதா₄தா ச விபு₄ர் ப₄வஶ்ச ||

தவாத₃பு₄தம் கிந்நு ப₄வேத₃ஸஹ்யம்
கிம் வா ஶக்யம் பரத கீர்த்தயிஷ்யே |
கர்த்தாஸி லோகஸ்ய யதஸ் ஸ்வயம் விபோ₄
தவத்தஸ் ஸர்வம் த்வயி ஸர்வம் த்வமேவ ||

அத்யத₃பு₄தம் கர்ம ந து₃ஷ்கரம் தே
கர்மோபமானம் ந ச வித₃யதே தே |
ந தே கு₃ணாநாம் பரிமாணமஸ்தி
ந தேஜஸோ நாபி ப₃லஸ்ய நாத₃தே₄ ||''

[பல ரூபங்களுடைய புருஷர்களாலே கொல்லப்படுகிறவர்களான பாண்ட₃வ கௌரவஸேனையில் சேர்ந்த போர்வீரர்கள் அனைவரும் பலவித₄மான ஆயுத₄ங்களால் வெட்டப்பட்டு நினைத்தற்கரிய உருவையுடைய உனது வாயில் நுழைகின்றனர். அத₃பு₄தமாய பழைமையான உனது தி₃வ்யசேஷ்டிதங்களை முன்னோர்களான ரிஷிகளும் துதிக்கின்றனர் இவ்வுலகுக்குக் கர்த்தாவும், அதை த₄ரிப்பவனும், அதற்கு அனைத்தையும் விதி₄ப்பவனும், அதை வியாபிப்பவனும், அதுக்கு ஸத்தையையளிப்பவனும் நீ ஒருவனே; வேறொருவருமில்லை எந்த அற்புதச் செயல்தான் உனக்குப் பொருந்தாததாய் உள்ளது? எச்செயல்தான் உனக்குப் பிறரைக்கொண்டு செய்யவேண்டியிருக்கிறது? உன் பெருமைகளைச் சொல்லுகிறேன் ஸர்வேஶ்வரனே! நீ உலகனைத்தையும் படைக்கிறவனாகையாலே உன்னிடமிருந்தே அனைத்தும் உண்டாகிறது உன்னிடமே அனைத்தும் அடங்கி நிற்கிறது (ஆகையால்) நீயே அனைத்துமாயிருக்கிறாய் மிக ஆஶ்சர்யமான செயலும் உனக்குச் செயற்கரியதல்ல உனது செயல்களுக்கு ஓரளவுமில்லை உனது கு₃ணங்களுக்கும், தேஜஸ்ஸுக்கும், ப₃லத்துக்கும், செல்வத்திற்கும் ஓர் அளவில்லை ] என்னும் ஶ்லோகங்களும் உள்ளனவாக எடுக்கப்பட்டன. இங்குள்ள 'தி₃வ்யாநி' என்று தொடங்கும் மூன்று ஶ்லோகங்களும் நாராயணாயராலும் எழுதப்பட்டுள்ளது

यथा नदीनां बहवोऽम्बुवेगाः
समुद्रमेवाभिमुखा द्रवन्ति ।
तथा तवामी नरलोकवीराः
विशन्ति वक्त्राण्यभिविज्वलन्ति ॥ २८ ॥

यथा प्रदीप्तज्वलनं पतङ्गाः
विशन्ति नाशाय समृद्धवेगाः ।
तथैव नाशाय विशन्ति लोकाः
तवापि वक्त्राणि समृद्धवेगाः ॥ २९ ॥

28. யதா2 நதீ3நாம் ப3ஹவோऽம்பு3வேகா3:
ஸமுத்3ரமேவாபி4முகா2 த்3ரவந்தி।
ததா2 தவாமீ நரலோகவீரா
விஶந்தி வக்த்ராண்யபி4விஜ்வலந்தி ||

29. யதா2 ப்ரதீ3ப்தஜ்வலநம் பதங்கா3:
விஶந்தி நாஶாய ஸம்ருத்3த4வேகா3:।
ததை2வ நாஶாய விஶந்தி லோகா.
தவாபி வக்த்ராணி ஸம்ருத்3த4வேகா3: ||

---

(3) இப்பதினோராவது அத்தியாயத்தில் 39வது ஸ்லோகத்தில் 'ப்ரபிதாமஹஶ்ச' என்று முடியும் பூர்வார்த்த4த்தையொட்டி — 'அநாதி3மாநப்ரதிமப்ரபா4வ: ஸர்வேஶ்வரஸ் ஸர்வமஹாவிபூ4தி: | ந ஹி த்வத3ந்ய: கஶ்சித3ஸ்தீஹ தே3வ லோகத்ரயே த்3ருஶ்யதேऽசிந்த்யகர்மா ||" [நீ ஆதி3யற்றவன்; ஒப்பற்ற பெருமையுடையவன், அனைவரையும் நியமிப்பவனுயிருப்பவன், அனைத்தையும் பெருஞ் செல்வமாகக் கொண்டவன், தே3வனே! இம்மூவுலகிலும் நினைத்தற்கரிய செயல்களையுடையவன் உன்னைக் காட்டிலும் வேறொருவனுமில்லை. காணப்படவுமில்லை] என்னும் ஸ்லோகமும் அவரால் எழுதப்பட்டது. "இந்த ஸ்லோகங்கள் கீ3தையில் உள்ளனவா இல்லையா என்பதை தே3வனே அறிவான். (சங்கரர் முதலான) முன் வ்யாக்2யாதாக்களால் எடுக்கப்படாமையாலும், கீ3தை ஓதுபவர்களிடம் ப்ரஸித்3தி4 இல்லாமையாலும் ஸ்ரீபா4ஷ்யகாரர் இவற்றை ஆதரிக்கவில்லை. கீ3தாஶாஸ்த்ரத்தில் இவ்வளவு ஸ்லோகங்கள் உள்ளன என்று வ்யாஸர் முதலானோரால் எண்ணிக்கை சொல்லப்படவில்லை. பின்புள்ளார் சொல்லியிருப்பது நம்பத்தக்கதல்ல" என்று இங்கு தாத்பர்யசந்த்3ரிகையில் அருளியிருப்பது குறிக்கொள்ளத்தக்கது 26, 27.

**ப₃ஹவ** —பலவாயிருக்கும், **நதீ₃நாம் அம்பு₃வேகா₃:**—ஆறுகளின் நீர்ப்பெருக்குகள், **ஸமுத்₃ரம் ஏவ அபி₄முகா₂:**—கடலையே நோக்கியவைகளாக **யதா₂ த்₃ரவந்தி** —எப்படி ஓடுகின்றனவோ, **ததா₂**—அப்படியே, **அமீ நரலோக வீரா** —இந்த ராஜஸமூஹவீரர்கள், **தவ அபி₄விஜ்வலந்தி வக்த்ராணி**—உனது பிரகாசிக்கும் வாய்களுக்குள்ளே, **விஶந்தி**—நுழைகிறார்கள், **ஸம்ருத்₃த₄வேகா₃:**—வளரும் வேகத்தை உடையவைகளான, **பதங்கா₃:**—விட்டில்கள், **ப்ரதீ₃ப்த ஜ்வலநம்**-எரியும் நெருப்பிலே, **யதா₂ நாஶாய விஶந்தி**—எப்படி தம் அழிவின் பொருட்டு நுழைகின்றனவோ, **ததை₂வ**—அப்படியே, **ஸம்ருத்₃த₄ வேகா₃: லோகா: அபி**—வளரும் வேகத்தையுடைய ராஜலோகவீரர்களும், **தவ**—உன்னுடைய, **அபி₄விஜ்வலந்தி வக்த்ராணி**—எரியும் வாய்களுக்குள்ளே, **நாஶாய விஶந்தி**—தம் அழிவின் பொருட்டு நுழைகிறார்கள்

---

**29. ஆற்றின் புனல்வேக மாழியிடை நோக்கிப்போ**
**யூற்றத் தடையுமா றொக்குமே—சீற்றத்துத்**
**தீயமரு நின்முகங்கள் சென்றுலக வீரரெல்லாம்**
**போயடையு மாறு புகுந்து.**

**சீற்றத்து**—கோபத்தினாலே, **தீ அமரும் நின் முகங்கள்**—கொழுந்துவிட்டு எரியும் உனது முகங்களை, **போயச் சென்று**—போயடைந்து, **புகுந்து**—அவற்றினுள் புகுந்து, **உலக வீரர் எல்லாம்** — ராஜலோகவீரர்கள் அனைவரும், **அடையுமாறு**—அடைகின்ற தன்மை, **ஆற்றின் புனல் வேகம்**—ஆறுகளின் நீர்ப்பெருக்குகள், **ஆழியிடை நோக்கிப் போய**—கடலைக் குறித்துச்சென்று, **ஊற்றத்து**—வேகமாக, **அடையுமாறு**—சேரும் தன்மையை, **ஒக்குமே**—ஒத்திருக்கும்.

॥भा॥ एते राजलोका बहवो नदीनामम्बुप्रवाहाः समुद्रमिव,

30. ஓஙகி யெரிமுகததி லோடியே விடடிலெலலா
மாஙகு விழுமா றதுபோல—வீஙகுலக
முனமுகஙக டனனிடையி லுறறே விழுஙகண்டாய
தன்முகளுசெய நாசததைச சாாநது.

**விடடில எலலாம**—விடடிலகள அனைததும், **ஓஙகி எரி முகததில**—கொழுநதுவிட்டு எரியும நெருபபை நோக்கி, **ஓடியே**—ஓடிசசெனறு, **ஆங்கு**—அதிலேயே, **விழுமாறு அதுபோல**—விழுகினறதுபோலே, **ஈஙகு**—இபபோாககளத தில, **உலகம**—ராஜலோகவீராகள், **தனமுகம செய நாசததை சாாந்து**—தமது அழிவைததேடி, **உன முகஙகள தன இடையில் உறறே**—உன வாயகளுககு நடு விலே நுழைநது, **விழும கணடாய**—விழுகிறாாகள

28, 29 உப₄யஸேனையிலும உள்ளவர்கள எமபெருமானுடைய வாயில விழுகினறமைககு நதீ₃பரவாஹஙகள ஸமுத₃ரததில விழு வதையும, விடடிலகள விளககில விழுவதையும முறையே இரணடு ஶலோகஙகளில த₃ருஷடாநதமாகக காடடுகிறன. நதி₃களும தம வேக₃ததாலேயே கடலில விழுநது தததம நாமரூபஙகளை இழக கினறன. விட்டிலகளும தம வேக₃ததாலேயே விளககில் விழுநது அழிகினறன. அதுபோல ஸேனை வீராகளும் தம்முடைய போா முயறசி வேக₃ததாலேயே எமபெருமானின வாயில விழுநது அழி கினறாாகள எலலா நதி₃களும கடல ஒனறிலேயே விழுகினறன. எலலா விட்டில்களும விளககிலேயே விழுகினறன. அதுபோல ஸேனை வீராகளும எமபெருமானது வாயிலேயே விழுகிறாாகள. கடலும விளககும ஒரு செயலைச செயயாமலிருககுமபோதே முறையே நதிகளும விடடிலகளும அழிவதறகுக காரணமாய நிறகினறன. அதுபோலவே எமபெருமானும வெளிபபடையாக எசசெயலையும செய்யாமல ஸேனை வீராகள் அழிவதறகுக் காரணமாய நிறகின்றான — என்னும ஒற்றுமைகள் குறிக்கொளளத்தககன. (ப₃ஹவ நதீ₃நாம அம்பு₃வேக₃ா ஸமுத₃ரம் ஏவ அபி₄முக₂ா யத₃ா த₂ரவநதி) பல நதிகளுடைய நீாபபெருககுகள கடலைக குறிததே எபபடி ஓடுகினறனவோ. 'அமபு₃வேக₃ா' என்னு மிடததில வேக₃ஶப்₃த₃ம வேக₃ததையுடைய பரவாஹததைக குறிக

प्रदीप्तज्वलनमिव च शलभाः तव वक्त्राण्यभिविज्वलन्ति स्वयमेव त्वरमाणा आत्मनाशाय विशन्ति ॥ २८ ॥ २९ ॥

கிறது "வேக₃ம கடலைககுறிததது ஓடுகிறது" எனபது பொருந தாதனறோ (தத₂ா அமீ நரலோகவீரா தவ வகதராணி விஶநதி) அவவணணமே இரு ஸேனைகளிலுமுளள ராஜஸமூஹவீராகள உனது வாயகளிலே நுழைகினறாகள அநத வாய்கள எபபடிப படடவை? எனில (அபி₄விஜவலநதி) நதி₃களெல்லாம தமமிடம் சேரபபெறற கடலபோலே பிரகாஶிககினறன எனறு கருததது. (ஸம்ருத₃த₄வேக₃ா பதங்க₃ா பரதீ₃ப்தஜவலநம யத₂ா நாஶாய விஶநதி) வளரும வேக₃த்தையுடைய விடடிலகள் கொழுநதுவிட் டெரியும விளககிலே தம் அழிவினபொருட்டு எபபடி விழுகினறனவோ. பதங்க₃ஶப₃த₃ம பொதுவாகப் பறவைகளைக குறிககுமாயினும் இஙகு விளககில விழுகின்றவையாகக கூறுகையாலே விட்டிலகளைக குறிக கின்றது (பரதீ₃ப்தஜ்வலநம நாஶாய விஶநதி) விடடிலகளின இறககை வேக₃ததாலே சிறிய விளககாயிருநதால அணைநதுமபோகலாம். 'பரதீ₃பதஜவலநம நாஶாய' எனபதால தான அணையாமல் விடடில களின அழிவுககே காரணமாகிறது என உணர்ததப்படுகிறது. (ததை₂வ ஸமருத₃த₄வேக₃ா லோகா தவ அபி₄விஜவலநதி வகதராணி நாஶாய விஶநதி) அவவணணமே வளரும போா முயறசி வேக₃ததையுடைய ராஜஸமூஹவீராகள கொழுநதுவிட் டெரியும ப₄க₃வானது வாயில விழுகினறனா. இஙகு "லோகா "என்று படிததிருநதபோதிலும எலலா உலகஙகளையும இபபத₃ம சொலலாது. முதல ஶலோகததில சொலலபபடட நரலோக வீராகளையே குறிககும பாணட₃வஸேனையில சிலரே அழியப போகிறாகளாகை யாலும், அடுதத ஶலோகத்தில "ஜக₃த் பரதபநதி" [உமது கிரணங கள் உலகனைததையும தபிககசசெய்கினறன] எனறு ஸாவலோகஙக ளுககுத தாபம சொலலபபடுகிறதேயொழிய விநாஶம் சொலலபபட விலலையாகையாலும இநத லோகஶப₃த₃ம உப₄யஸேனையிலும அழியபபோகும ராஜஸமூஹததையே குறிககிறது. "அபி₄விஜவலநதி" எனனும பத₃ம முநதின ஶலோகததில "வகதராணி" எனனும பத₃த துககு விஶேஷணமாகப படிக்கபபட்டபோதிலும் இஙகுளள 'வகதராணி' எனனும பத₃ததுககும விஶேஷணமாகக கொளளத தககது. 'பரதீ₃பதஜவலநம' (கொழுநதுவிடடெரியும விளககு) எனனும த₃ருஷ்டாநததத்துக்குப பொருததமாயிருககும். "ஸமருத₃த₄ வேக₃ா " எனனும பத₃ம 27 ம் ஶலோகததிலுள்ள "த்வரமாணா "

लेलिह्यसे ग्रसमानस्समन्ताल्लोकान् समग्रान्वदनैर्ज्वलद्भिः।
तेजोभिरापूर्य जगत्समग्रं भासस्तवोग्राः प्रतपन्ति विष्णो॥ ३०॥

30. **லேலிஹயஸே க்₃ரஸமாநஸஸமநதாத**
**லோகாந ஸமக₃ராந வத₃நைாஜவலத₃பி₄:।**
**தேஜோபி₄ராபூர்ய ஜக₃தஸமக்₃ரம**
**ப₄ாஸஸதவோக₃ரா பரதபநதி விஷ்ணோ'॥**

**விஷ்ணோ'**—விஷ்ணுவே!, **ஸமக₃ராந லோகாந**—ராஜஸமூஹம முழுவதையும், **ஜவலத₃பி₄: வத₃நை**—ஒளிவீசும வாயகளாலே, **க்₃ரஸமாந**·—விழுங்குகின றவனாய, **ஸமநதாத லேலிஹ்யஸே**—(உதடு முதலானவற்றை)

எனனும பத₃ததின விளககமாகும். கடலில விழுநது நதீ₃பரவாஹம அழிவதாவது—அவைகளின நாமரூபஙகளும ஆகாரஙகளும மாறுவதே யாகும. நீருககு அழிவிலலையனறோ. விட்டிலகள அழிவதாவது சாமப லாகிற வேறு த₃ரவ்யமாக மாறுகையேயாகும. ஸேனைவீராகள் எம பெருமான வாயகளில விழுநது அழிவதிலும இபபடி இரணடு வகையுமுணடு எனபதை உணர்ததுவதறகாக இரணடு த₃ருஷ டாநதஙகளை கூறுவதாககொளளலாம. அனறிககே பரவாஹ த₃ருஷடாநதததிலை "தொககிலஙகு யாறெலலாம பரநதோடித தொடு கடலே புககனறிப புறமநிறகமாடடாத மறறவைபோல" [பெருமாள திரு 5-8] "பெயரும் கருஙகடலே நோககுமஆறு" [முதலதிருவ 67] எனகிறபடியே ஆறுகள தாம கடலைசசேருவதைத தடுததுககொளள முடியாததுபோல இநத நரலோக வீராகள எமபெருமான வாயில விழுவதைத தாம தடுததுககொளளமுடியாது எனபதைக காடடு வதறகாக முதல த₃ருஷடாநதமும, விடடிலகள தாமே விருமபித தம முயறசியால விளககில விழுவதுபோலே இநத நரலோகவீரா களும தாமே போரை விருமபித தமது முயறசியாலேயே எமபெருமான வாயில விழுகிறுர்கள எனறு காடடுவதறகாக இரணடாவது த₃ருஷ டாநதமும எடுததுககொளளபபடடது எனறும கொளளலாம. எவவளவு நதிகள விழுநதாலும நிறைநதுவிடாத கடலபோலே எமபெருமான இருககினறுன் எனறு காடடுவதறகாக முதல த₃ருஷ டாநதமும, விளககில் விட்டிலகள்போலே விழுநது வீராகள சடக கென அழிகிறுாகள எனறு காடடுவதறகாக இரணடாவது த₃ருஷ டாநதமும எடுககபபடடதாகவும கொளளலாம. 28,29.

॥भा॥ राजलोकान् समग्रान् ज्वलद्भिर्वदनैर्ग्रसमानः कोपवेगेन रुधिरावसिक्तमोष्ठपुटादिकं लेलिह्यसे—पुनः पुनर्लेहनं करोषि। तव

எல்லாப்புறமும் பலமுறை நக்கிக்கொடுக்கிருய, **தவ**—உன்னுடைய, **உக்₃ரா. ப₄ாஸ**—கடுமையான கிரணங்கள், **தேஜோபி₄**—(தம்முடைய) ஒளியினலே, **ஸமக்₃ரம் ஜக₃த்**—உலகனைத்தையும், **ஆபூர்ய**—நிறைத்து, **ப்ரதபந்தி**—வாட்டுகின்றன

**31. ஓங்கு மெரிமுகங்க ளாலே யுலகனைத்தும்**
**வாங்கி விழுங்கிப்பின வாயநக்கு—மாங்குனது**
**பேரொளிதந் தேசாற பெருகத் தபிப்பிக்கும்**
**பாருலக மெங்கும் பரந்து.**

**உலகு அனைத்தும்** — ராஜஸமூஹம் முழுவதையும், **ஓங்கும் எரிமுகங்களாலே** — கொழுந்துவிட்டெரியும் வாய்களாலே, **வாங்கி விழுங்கி**—உள்ளிழுத்து விழுங்கி, **பின**—அதற்குப்பின, **ஆங்கு வாயநக்கும்**—வாயிலுள்ள உதடுகள் முதலானவற்றை நக்கிக்கொடுக்கும், **உனது**—உன்னுடைய, **பேர் ஒளி**—மிகக்கடுமையான கிரணங்கள, **தம தேசால்**—தமது ஒளியாலே, **பார் உலகம் எங்கும் பரந்து**—உலகனைத்தையும் வியாபித்து, **பெருக தபிப்பிக்கும்**—மிகவும் வாட்டும்

30. ஆறுகள அனைத்தையும தனனுடகொள்ளும கடலபோலவும, விட்டில்கள அனைத்தையும தனனிடம இழுக்கும தீவட்டிபோலவும எமபெருமான இருக்கிருன் எனறும, கடலில விழும ஆறுகள் போலவும, தீவட்டியில விழும விட்டில்கள் போலவும ராஜஸமூஹவீரர்கள தாஙகளே வேக₃மாக எமபெருமான வாயில விழுகிருர்கள எனறும சென்ற இரு சுலோகஙகளில கூறுகையாலே இவர்களை அழிக்கும விஷயத்தில அவன செயலற்றிருக்கிருனே எனனும ஐயமெழக் கூடும. இவன செய்யும் செயலைக்காட்டி அந்த ஐயத்தைத தவிர்க்கிறது இந்த ஸலோகம அரசர்களுடைய அழிவுக்கு அவரவர் செய்யும் போர்முயற்சி முதலான செயல்களே காரண மாகினறன அச்செயல்களால விளைந்த கோபம முதலானவற்றேடு

अतिघोरा भासः—रश्मयः तेजोभिः—स्वकीयैः प्रकाशैर्जगत्समग्रमापूर्य प्रतपन्ति ॥ ३० ॥

---

கூடிய எமபெருமான அவாகளை அழிககிருன எனகிறது (ஸமக₃ராந் லோகாந) ராஜஸமூஹம அனைததையும. இஙகு ஸாவலோகஙகளை யும ஸமஹரிககும பரகரணமலலாமையாலே, சென்ற சுலோகததில போலே இஙகும லோகஶப₃த₃ம ராஜஸமூஹததைக குறிககிறது. ஸமக₃ரஶப₃த₃ம போா புரியககூடியிருககும அரசாகளில அழியப போகும அனைவரையும காட்டுகிறது (ஜவலத்₃பி₄ வத₃நை: க₃ர ஸமாந) கொழுநதுவிட்டெரியும வாயகளாலே விழுஙகுகினறவனாய. (லேலிஹயஸே) கோபவேக₃ததாலே—அவ்வரசர்களின ரததத்தாலே நனைநதிருககும உதடுகள முதலானவறறை மறுபடியும மறுபடியும நககிககொடுககிறாய நககிக கொடுபபதற்கு விஷயம வேணடுமாகை யாலே "அரசாகளின ரததத்தால நனைநதுள்ள உதடுகள முதலான வறறை" என்ற தொடா வருவிததுககொள்ளப்பட்டது. விழுஙகு வதாகவும நககுவதாகவும கூறுகையாலே த்₃ரௌபதீ₃மானப₄ங்க₃ம போன்ற பல தீசசெயல்கள புரிநத அவவரசாகளின மேலுள்ள கோபவேக₃ம அவாகளை அழிததபினபும அடஙகவில்லை என்று விளங்குகிறது. "க்ரியா ஸமபி₄ஹாரே யங" என்னும இலககண விதி₄ப்படி 'லேலிஹயஸே' என்னும பத₃ததிலுள்ள 'யங' பரதயயம மறுபடியும மறுபடியும (உதடுகளை) நக்கிககொடுததலாகிற க்ரியா ஸமபி₄ஹாரததைககாட்டுகிறது. ஆக ஶ்லோகததின முற்பாதியால அழியவிருககும அரசர்கள விஷயததில் இவன செயல காட்டப பட்டது. இனி, பிறபாதியால வெளியுலகத்தைக குறிதத இவ னுடைய செயல விளககபபடுகிறது. (தவ உக₃ரா: ப₄ாஸ:) உனது கடுமையான கிரணஙகள. (தேஜோபி₄ ஸமக₃ரம ஜக₃த ஆபூாய) தமது ஒளிகளாலே உலகனைததையும வியாபிதது 'ப₄ாஸ:' 'தேஜோபி₄:' என்னும பத₃ஙகளிடையே புநருகதி இல்லாமைக்காக முதல பத₃ம எமபெருமானுடைய கிரணஙகளையும இரணடாவது பத₃ம அககிரணஙகளின் ஒளிகளையும சொலலுவதாகப பொருள்கொள்ளப்பட்டது. (ப்ரதபநதி) மிகவும தபிக்கச்செயகினறன. அவைகளையும விழுஙக நினைதது வாட்டுவது போலே தோறறு கினறன. அன்றிகசே "இநத ராஜஸமூஹஙகளை விழுஙகுவதைப பார்ததுககொணடிருக்கும் வெளியுலகில உள்ள பிரமன முதலான வாகளுககும அக்காட்சி பொறுககவொணணுததாயிருககிறது" என்றும் கருததுரைககலாம (ப₄ாஸ: தேஜோபி₄ராபூர்ய பரத பந்தி விஷ்ணோ!) நீ எங்கும வியாபிததிருககும் விஷ்ணுவாகை யாலே உனது கிரணஙகள் தம ஒளியாலே உலகெங்கும வியாபிதது வாட்டுவது வியப்பல்ல என்று கருத்து. 30.

आख्याहि मे को भवानुग्ररूपो नमोऽस्तु ते देववर प्रसीद।
विज्ञातुमिच्छामि भवन्तमाद्यं नहि प्रजानामि तव प्रवृत्तिम्॥३१॥

31. **ஆக்₂யாஹி மே கோ ப₄வாநுக்₃ரரூபோ**
**நமோऽஸ்து தே தே₃வவர ப்ரஸீத₃।**
**விஜ்ஞாதுமிச்ச₂ாமி ப₄வந்தமாத்₃யம**
**நஹி ப்ரஜாநாமி தவ ப்ரவ்ருத்திம்॥**

**தே₃வவர!**—தேவர்களில் தலைசிறந்தவனே!, **உக்₃ர ரூப ப₄வாந்**—மிக்க கடுமையான உருவத்தையுடைய தேவரீர், **க**—என்ன செய்ய விரும்புகிறீர்? (என்று) **அத்₃யம் ப₄வந்தம்**—ஆதி₃ காரணரான தேவரீரைப் பற்றி, **விஜ்ஞாதும்**—அறிந்துகொள்ள, **இச்ச₂ாமி**—விரும்புகிறேன். **தவ ப்ரவ்ருத்திம**—நீர் செய்ய விரும்புவதை, **நஹி ப்ரஜாநாமி**—அறிகின்றேனல்லேன் **மே**—எனக்கு, **ஆக்₂யாஹி**—அதைச் சொல்லுவீராக. **தே நம: அஸ்து**—உமக்கு எனது வணக்கம் உரித்தாகுக **ப்ரஸீத₃**—அருள் புரிவீராக.

---

32. **இக்கொடிய ரூபா வெவனீ யெனக்கியம்பாய**
**தக்குனக்கு நானபணிந்தேன் றண்ணளிசெய-மிக்கமுத**
**லானவுனை யிச்சிப்ப னாய்ந்தறிவான றேவவரா**
**நானறியே னுனசெய்தி நன்கு.**

**தேவவரா!**—தேவர்களில் தலைசிறந்தவனே! **இக்கொடிய ரூபா!**—இத்தகைய கொடுமையான உருவத்தை உடையவனே! **நீ எவன**—நீ என்ன செய்ய விரும்புகிறாய் (என்று) **மிக்க முதலான உனை**—ஆதி₃காரணமான உன்னை, **ஆய்ந்து அறிவான் இச்சிப்பன**—ஆராய்ந்து அறிந்துகொள்ள விரும்புகின்றேன **உன் செய்தி**—நீ செய்யவிரும்புவதைப் பற்றி, **நான்**—நான, **நன்கு அறியேன்**—தெளிவாக அறிகின்றேனல்லேன, **எனக்கு இயம்பாய**—எனக்கு அதைச் சொல்லுவாயாக, **உனக்கு**—உனக்கு, **நான்**—நான, **தக்கு**—தக்கபடி, **பணிந்தேன**—வணங்கினேன, **தண்ணளிசெய**—அருள்புரிவாயாக.

। भा ।। दर्शयात्मानमव्ययम् (४) इति तवैश्वर्यं निरङ्कुशं साक्षात्कर्तुं प्रार्थितेन भवता निरङ्कुशमैश्वर्यं दर्शयताऽतिघोररूपमिदमाविष्कृतम्। अतिघोररूपः को भवान् - किं कर्तुं प्रवृत्त इति भवन्तं ज्ञातुमिच्छामि। तवाभिप्रेतां प्रवृत्तिं न जानामि। एतदाख्याहि मे।

---

31. இவ்வண்ணமாக மிகவும் கடுமையான விஶ்வரூபத₃ர்ஶநத்தைப் பொறுக்கவல்லமையற்ற அர்ஜுநன், தனது எல்லா ஐஶ்வர்யங்களையும் வெளியிடத்தொடங்கிய கண்ணன் அத்தகைய கடுமையான திருமேனியைக் காட்டுவதற்கான கருத்தைக் கூறி, மறுபடியும் அருள்பொழியும் திருமேனியை ஏற்றுக்கொள்வதற்குறுப்பான அருளைக் கைக்கொள்ளவேண்டும் என்று விண்ணப்பித்துக்கொள்கிறான் இந்த ஶ்லோகத்தில். (உக்₃ரரூப: ப₄வாந் க: - விஜ்ஞாதும் இச்ச₂ாமி) "த₃ர்ஶயாத்மாநமவ்யயம்" [11-4] என்று உனது எல்லையற்ற ஐஶ்வர்யத்தை நேரில் காணவேண்டும் என்று நான் ப்ரார்த்தித்தேன். அதன்படி உனது எல்லையற்ற ஐஶ்வர்யத்தைக்காட்டும் நீ மிகக்கோரமான இந்த உருவத்தை வெளிப்படுத்தினாய். இத்தகைய கடுமையான உருவத்தையுடைய நீ என்ன செய்ய முற்பட்டிருக்கிறாய் என்று நான் உன்னிடமிருந்து அறியவிரும்புகிறேன். "கோ ப₄வாந்" [நீயார்] என்னும் கேள்விக்கு அவனுடைய பெயர் முதலானவற்றைக் கேட்பதில் கருத்து இருக்கமுடியாது. இவன் ஸர்வேஶ்வரனான கண்ணனே என்பதை அர்ஜுநன் நேரேயும் அறிவான். பலர் உபதே₃ஶித்தும் இருக்கிறார்கள். ஆகையால் இந்தக் கேள்விக்கு "ப₄க்தனான எனக்கு இந்த ப₄யங்கரமான உருவத்தைக் காட்டுவதற்குக் கருத்தென்ன?" என்று கேட்பதிலேயே தாத்பர்யம் கொள்ள வேண்டும். "விஜ்ஞாதும் இச்ச₂ாமி" என்பதை "ந ஹி ப்ரஜாநாமி தவ ப்ரவ்ருத்திம்" [உனது செயலை நான் அறிகின்றேனல்லேன்] என்று கடைசிப் பாத₃த்தாலே விளக்கியிருக்கையாலே, "நீ என்ன செய்யவிரும்புகிறாய்" என்று அறிவதற்காகவே "நீ யார்" என்னும் கேள்வி கேட்கப்படுகிறது என்று தெரிகிறது (ஆத்₃யம் ப₄வந்தம்) என்னும் பகுதியாலே 'கண்ணன் ஆதி₃காரணன்' என்னும் தெரிந்த அம்ஶத்தையும் "விஜ்ஞாதுமிச்ச₂ாமி" என்னும் பகுதியாலே அவன் என்ன செய்யவிரும்புகிறான் என்னும் தெரியாத அம்ஶத்தையும் குறிப்பிடுகிறான். (ஆக்₂யாஹி மே) எனக்கு இதைச் சொல்லுவாயாக. பதில் சொல்லும்போதும் கண்ணன் தான் செய்ய முற்பட்டிருக்கும் காரியத்தையே கூறுகிறானாகையால் இப்படியே பொருள்கொள்ளவேண்டும்.

नमोऽस्तु ते देववर प्रसीद—नमस्तेस्तु सर्वेश्वर!। एवं कर्तुमनेनाभिप्रायेणेद संहर्तु रूपमाविष्कृतमित्युक्त्वा प्रसन्नरूपश्च भव॥ ३१॥

"கணணனது உருவில ஓா அசுரனே அரககனே இப்படி வந்து கோரவுருவைக காட்டுகிருனே எனறு ஐயமுறறு 'நீ யாா' எனறு அாஜுனன கேடகிருன" எனறு சிலா உரையிட்டது பொருநதாது எனபது இதிலிருநதே விளஙகும. பதிலில 'நான் அசுரனே அரககனே அலல' எனறு சொலலாமல, தான செயய முறபடடிருககும காரியததையேயனறே சொலலுகிருன கண்ணன. பதிலில கணணன விஶவரூபததை மறைததுக கொணடபினனும தான செயயபபோகும காரியததையே விளககமாகக கூறுகிருனுகையால, (ந ஹி பரஜாநாமி தவ பரவருததிம விஜஞாதும இசசாமி) எனறதறகு விஶவரூபததோடு கணணன செயய முறபடடிருககும காரியததைக கேடபதில அாஜுனனுககு நோககிலலை. "நீ காலகரமத்தில செயய விருமபியிருககும காரியம யாதெனறு அறிகினறேனலலேன, அதை அறிய விருமபுகிறேன" எனறே பொருளகொளளவேணடும (தேவவர) பிரமன உருததிரன முதலான எலலாத தேவர்களைக காட்டிலும் சிறநத ஸாவேஶவரனே! (நமோऽஸது தே) உலகனைததையும உடையவனுன உனககு, உனது உடைமையான நான எனது ஶேஷதவ ஸவரூபததுககுத தகக வணக்கததைச செலுததுகிறேன. "நாதவய பரம ஶேஷீ ஶேஷா நாதார ஈரிதா । நாதருநாதவயபாவோऽயம ந பரயோஜந பூாவக ॥" [மேலான ஶேஷியான நாராயணனே வணஙகத்தககவன, மற்ற அனைவரும அவனுககு அடிமைபபடடவாகளாகையாலே அவனை வணஙக உரியவாகளாகவே சொலலப்படுகினறனர் இப்படி இவர்கள் வணஙகுகிறவாகளாகவும, அவன வணங்கததககவனுகவுமிருபபது ஒரு பயன் கருதியன்று.] எனறு அஹிாபுதநயஸம்ஹிதையிலும் [527] சொலலபபட்டதனறே. (பரஸீத) உனது விஶவரூபததைக கணடு நடுஙகும எனனிடம அருளகூாந்து பழையபடி உனது அருள் வடிவததை ஏறறுககொளவாயாக, ஆக, இநத ஶலோகத்தால, "நான் இனனது செயவதறகாக, இனன கருததாலே அனைவரையும அழிககும இநத விஶவரூபத்தை எடுததுககொண்டிருககிறேன் எனக கூறிவிடடு, பழைய அருளுருவததைக கொளவாய" என அர்ஜுனன் கண்ணனைப பிராாததிததாறயிறறு. 31.

॥ भा ॥ आश्रितवात्सल्यातिरेकेण विश्वैश्वर्यं दर्शयतो भवतो घोररूपाविष्कारे कोऽभिप्राय इति पृष्टो भगवान् पार्थसारथिस्स्वाभिप्रायमाह—पार्थोद्योगेन विनाऽपि धार्तराष्ट्रप्रमुखमशेषं राजलोकं निहन्तुमहमेव प्रवृत्त इति ज्ञापनाय मम घोररूपाविष्कारः, तज्ज्ञापनं च पार्थमुद्योजयितुमिति।

श्रीभगवानुवाच—

कालोऽस्मि लोकक्षयकृत्प्रवृद्धो
लोकान् समाहर्तुमिह प्रवृत्तः।
ऋतेऽपि त्वा न भविष्यन्ति सर्वे
येऽवस्थिताः प्रत्यनीकेषु योधाः ॥ ३२ ॥

ஸ்ரீப$_4$க$_3$வாந் உவாச—

32. காலோऽஸமி லோகக்ஷயக்ருத ப்ரவ்ருத$_3$தே$_4$ா
லோகாந ஸமாஹாததுமிஹ பரவருததः।
ருதேऽபி தவா ந ப$_4$விஷயந்தி ஸாவே
யேऽவஸதி$_2$தாः பரதயநீகேஷு யோத$_4$ாः॥

**ஸ்ரீப$_4$க$_3$வாந் உவாச**—ஸ்ரீ ப$_4$க$_3$வான் பின்வருமாறு கூற லுற்ருன் — **லோகக்ஷய கருத**—(இங்குளள ஆஸுரமான) ராஜலோகத்தை அழிககினறவனுய, **பரவருத்$_3$த$_4$** —இநத கே$_4$ாரரூபததுடன் வளாநதிருக்கும் நான, **கால: அஸமி**—(இந்த ராஜலோக வீராகளின ஆயுள் முடிவைக கணக்கிடும்) காலனுயிருக்கிறேன். **லோகாந**—இநத ராஜலோகததை, **ஸமாஹர்ததும்**—நானே முன்னின்று அழிபபதற்கு, **இஹ**—இந்தப் போாக்களத்தில, **பரவருத்த**:—முற்பட்டிருககிறேன; **பரதயநீகேஷு**—(உனக்கு) எதிாபபடையில, **யே யோத$_4$ாः அவஸ்தி$_2$தாः**—யாவர் சில வீரர்கள் (போாபுரிய) நிற்கிருர்களோ, **ஸர்வே**—அவர்கள் அனைவரும், **தவா ருதே அபி**—நீ இலலாவிடினும், **ந ப$_4$விஷ்யநதி**—(எனது ஸங்கலபத்தாலேயே) அழியததான போகிருாகள்

**33. இததகவு பார்தத னியமப விறையுரைத்தான்
மெயததகவில் காலன் மிகுநதுலகை—யொதழொழிக்க
லுறறே னுனையொழிந்திங் கொன்னலராய் நின்ருர்கள்
மறருரு முயயார் மடிநது.**

**இததகவு பார்ததன் இயமப** — இவ்வண்ணமாக அாஜுனன கூற, **இறை**—ஸர்வேஶவரனுன சணணன, **உரைததான்**—(பினவருமாறு) கூறலுற்ருன்—**மெய்த தகவில் காலன்**—உணமையிலேயே (கொடியவர்களின ஆயுள் முடிவைக கணககிடும்) கருணையற்ற காலன நான். **உலகை ஒதது**-இநத ராஜலோகததிலுளள அனைவரையும, **மிகுநது**—விஶவரூபமெடுதது வளாநது, **ஒழிக்கல் உறறேன்**—அழிகக முறபட்டிருக்கிறேன **இஙகு**—இப்போாககளததில, **ஒன்னலராய நின்ருர்கள் மற்று ஆரும்**—(உனக்கு) எதிரிகளாய் நினறவர்கள் அனைவரும், **உனை ஒழிந்து**—நீ இலலாவிடிலும், **மடிநது**—(எனது ஸங்கற்பத்தாலேயே) அழிந்து, **உயயார்**—உயிா வாழாமற போவாாசள.

---

32. இனி மூனறு ஶலோகஙகளாலே கணணன அாஜுனனுககு பதிலுரைககிருன. "அடியவனுன எனனிடம வாதஸலயமிகுதியாலே, உமது ஐஶவாயம முழுவதையும காடடிய தேவரீா கோ₄ரமான இநத விஶவரூபததைக காடடியது எனன கருததாலே எனபது எனககு விளஙகவிலலே. தேவரீா எனன செயய விருமபுகிறீா எனறும, எனன கருததாலே இநத அழிககும் ரூபததைக காடடினீா எனறும விளககவேணடும" எனபது அாஜுனனின கேளவி. இதறகு இநத மூனறு ஶலோகஙகளில ஜஞானம ஶகதி முதலான கு₃ணங்கள் நிறைநதவனுன பாாதத₂ஸாரதி₂ பதில கூறுகிருன். "அாஜுனு! உன முயறசியிலலாமலேயே து₃ர்யோத₄னுதி₃யர் முதலான ராஜலோக வீராகளை நானே கொலல முறபடடுவிட்டேன எனறு அறிவிபபதற காகவே இநத கோ₄ரரூபததைக காடடினேன. அபபடி அறிவித்ததும உனனைப போாபுரியவைககவேணடும எனனும கருததாலேயே" எனபது பதிலின ஸாரம. (காலோऽஸமி) நான காலமாகிறேன. இஙகு கலா முஹூாததம முதலானவையாயிருககும காலததை மாத திரம சொலலுவதாககொணடால, "நான காலமாகிறேன" எனறு எமபெருமான சொலலுவது பொருநதாது, ஆகையால் இநத₃ர

॥ भा ॥ कलयति—गणयतीति कालः ; सर्वेषां धार्तराष्ट्रप्रमुखानां राजलोकानामायुरवसानं गणयन्नहं तत्क्षयकृत् घोररूपेण प्रवृद्धो राज-लोकान् समाहर्तुम्—आभिमुख्येन संहर्तुमिह प्रवृत्तोऽस्मि। अतो मत्संकल्पादेव त्वामृतेऽपि—त्वदुद्योगमृतेऽपि एते धार्तराष्ट्रप्रमुखास्तव

---

பராணுதி₄கரணத்திற்போலே காலத்திற்கு அந்தர்யாமியாகிறேன் என்றே கொள்ளவேண்டும். அல்லது ஆகாசபராணுதி₄கரணங்களிற் போலே "கலயதி—க₃ணயதி இதி கால" என்று 'எதிரிகளின் ஆயுள்முடிவைக் கணக்கிடும் காலனாகிறேன்' என்று யௌகி₃கமான பொருளைக்கொள்ளவேண்டும் அல்லது, ஸ்ருஷ்டிஸ்தி₂தி காலங்களிலும் வேறுபட்ட ஸம்ஹாரகாலத்திற்கு அபி₄மானியான ஊழிமுதல்வனானவனுடைய கறுத்த திருமேனியோடு கூடிய ஸ்வரூபத்தைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். எப்படிக்கொண்டாலும் "கலயதி-க₃ணயதி இதி கால" [எதிரிகளின் ஆயுள்முடிவைக் கணக்கிடுவது காலம்] என்னும் வ்யுத்பத்தியினால் தேறும் பொருள் ப்ரகரணத்திற்குப் பொருந்தியதாகையால் கைக்கொள்ளத்தக்கது. 'கல்'தா₄துவுக்கு ஸம்ப₃ந்த₄ம் முதலான மற்றும் பல பொருள்கள் இருந்தபோதிலும், ஸம்ஹாரப்ரகரணத்திற்குப் பொருந்திய 'க₃ணநம்' [கணக்கிடுதல்] என்னும் பொருள் கொள்ளப்பட்டது திருதராஷ்டர புத்திரர்கள் முதலான ராஜலோகவீரர்கள் அனைவரது ஆயுள்முடிவு காலத்தைக் கணக்கிடும் காலமாகிறேன் என்பது திரண்டபொருள். (லோகக்ஷயக்ருத்) அந்த ராஜலோகவீரர்களின் அழிவைச் செய்பவனாகிறேன் 'லோக'ஶப்₃த₃ம் 29-வது ஶ்லோகத்திற்போலே ராஜலோக வீரர்களைக் குறிக்கிறது. (ப்ரவ்ருத்₃த₄) அனைவரையும் வாயிலிட்டுக் கொள்ளுகையாலே கோ₄ரமான விஶ்வரூபத்தோடு வளர்ந்தவனாய். (லோகாந் ஸமாஹர்த்துமிஹ ப்ரவ்ருத்த) ராஜலோகத்தை நானே முன்னின்று அழிக்கமுற்பட்டிருக்கிறேன். "ஸமாஹர்த்தும்" என்னும் பத₃த்திற்கு 'ஒன்றுக்கச் சேர்ப்பது'முதலான பொருள்கள் ஸம்ஹாரப்ரகரணத்திற்குப் பொருந்தாது வெறும் ஸம்ஹாரத்தை அப்பத₃த்திற்குப் பொருளாகக்கொண்டால், 'லோகக்ஷயக்ருத்" என்னும் பத₃த்தோடு புநருக்தி ஏற்படும். ஆகையால், "ஸம்" "ஆ" என்னும் இரு உபஸர்க்க₃ங்களுக்கும்சேர "ஆபி₄முக்₂யத்தோடு (நானே முன்னின்று) ஸம்ஹாரம்செய்ய முற்பட்டிருக்கிறேன்" என்று பொருள்கொள்வதே பொருந்தும் என்னது ஆட்களைக்கொண்டு இவர்களை அழிக்காமல் நானே நேரே அழிக்கமுற்பட்டிருக்கிறேன் என்று கருத்து. என்னது

प्रत्यनीकेषु येऽवस्थिता योधाः, ते सर्वे न भविष्यन्ति—विनङ्क्ष्यन्ति ॥ ३२ ॥

तस्मात्त्वमुत्तिष्ठ यशो लभस्व
जित्वा शत्रून् भुङ्क्ष्व राज्यं समृद्धम्।
मयैवैते निहताः पूर्वमेव
निमित्तमात्रं भव सव्यसाचिन् ॥ ३३ ॥

**33. தஸ்மாத் த்வமுத்திஷ்ட$_2$ யஶோ லப$_4$ஸ்வ**
**ஜிதவா ஶத்ரூந புஞ்க்ஷ்வ ராஜயம் ஸம்ருத்$_3$த$_4$ம் ।**
**மயைவைதே நிஹதா: பூர்வமேவ**
**நிமிததமாதரம் ப$_4$வ ஸவ்யஸாசிந் ॥**

---

ஸஙகல்பத்தாலே அழிககமுற்பட்டிருககிறேன் என்றும பொருள் கொள்ளலாம. "மநஸைவ ஜக$_3$தஸருஷடிம ஸமஹாரஞச கரோதி ய । தஸய அரிபக்ஷக்ஷபணே கியாந உத$_3$யம விஸதர ॥" [வி-பு 5-22-15] [மனததாலேயே உலகைப் படைபபதையும அழிபபதையும செயபவனுக்கு எதிரிகளை அழிப்பதறகுப பெரிய முயறசி தேவையிலலை ] எனறு சொலலபபட்டதனறே முறபாதியில சொனன அர்தத$_2$ததால தேறபபோகும நிகழசசியைப பிறபாதியால சொலலுகிருன—(யே யோத$_4$ா பரதயநீகேஷு அவஸ்தி$_2$தா:-(தே) ஸாவே தவா ருதே அபி ந ப$_4$விஷயநதி) எநத வீரர்கள உனககு எதிரபபக்ஷததில உள்ளனரோ அவாகள அனைவரும உனது போர் முயறசியிலலாவிட்டாலும எனது ஸஙகலபததாலேயே அழியப போகிறவாகளே. உன கையில வில் நீ ஆட்டியபடி ஆடுவதுபோல எனனுல நீ ஆட்டிவைககப்படடு, இவாகளை அழிககும கருவியாகக கொள்ளபபட்டிருககிறுய. ஆகையால உனது போர்முயற்சியிலலாவிடினும நான என விருபபததை வேறுவழியில நிறைவேறறிக கொள்வேன் எனறு கருதது 'ந ப$_4$விஷயநதி' என்றதறகு 'இவர்கள உணடாகபபோவதிலலை' எனறு பொருள்கொள்வது ஸமஹார பரகரணததிறகுப பொருநதாதாகையால் 'உயிரிழபபார்கள்' எனறே பொருளகொளளவேணடும். 32.

**தஸ்மாத்**—முற்கூறிய காரணத்தால், **தவம்**—நீ, **உத திஷ்ட₂**—(போா புரிய) எழுந்திருப்பாய், **ஶத்ரூந் ஜிதவா யஶ: லப₄ஸவ**—எதிரிகளை வென்று புகழ பெறுவாய், **ஸம்ருத₃த₄ம் ராஜ்யம் பு₄ங்க்ஷ்வ**—செழிப்புள்ள ராஜ்யத்தை அநுப₄வ்பபாய, **மயா ஏவ ஏதே பூர்வமேவ நிஹதா.**—(அநீதிச் செயல புரிந்த) இவர்கள் என்னுலேயே முனனமே அழிக்கப்பட வேண்டியவர்களாக ஸங்கலபிக்கப்பட்டுவிட் டார்கள் **ஸவ்யஸாசிந்**—இடது கையாலும் அம்பெய்யவலல அர்ஜுனு! **நிமிதத மாதரம் ப₄வ**—(அம்பு முதலானவற்றைப் போலே என் கையில) ஒரு கருவியாயிருப்பாயாக

---

**34. ஆதலா லிங்கெழுநீ யாங்குப் பெறுபுகழை யேதலரை வெனறே யெழிலரசின - மீதமர்வாய் எனனுலே முனனே யிவர்கள் கொலையுணடார் மனனுநீ யேதுவா மறறு.**

**ஆதலால் இங்கு நீ எழு**—முற்கூறிய காரணத்தால இப் போர்க்களத்தில நீ போர்புரிய எழுவாயாக; **ஏதலரை வெனறே**—எதிரிகளை வெற்றிகொணடு, **ஆங்கு புகழை பெறு**—அப்போர்ககளத்தில புகழபெறுவாய், **எழில அரசின மீது அமர்வாய**—செழிப்புள்ள அரசை அநுப₄விபபாய, **இவர்கள்**—எதிர்த்தலையிலுள்ள வீரர்கள், **எனனுலே முன்னே கொலையுண்டார்,**—என்னுல் கொலைபுரியததக்கவர்க ளாக நிசசயிக்கபபட்டார்கள்; **மன்னு!**—(இரு கையாலும அம்பெய்யவலல) அரசனே! **நீ**—நீ, **மறறு ஏதுவா**—(என் கையில) ஓர் கருவியாக ஆவாயாக.

---

33 "எனது முயறசியிலலாமலே துர்யோத₄நாதி₃யர் அழிவா எனில: எனனைப போாபுரியுமபடி ஏன தூண்டுகிறுய?" எனறு அர்ஜுனனுக்குக கருததாககொணடு, இநத ஶலோகததில் பதில் உரைககிறுன கண்ணன "எனது ப₄கதனுன உனககு வெறறி, புகழ, அரசு ஆகியவை கிடைப்பதறகாகவே உனனைத தூணடுகிறேன" எனபது பதிலின ஸாரம (தஸமாத தவம உததிஷ்ட₂) இபபடி ஏறகனவே நான எதிரிவீரர்களை அழியததக்கவர்களாக நிச்சயிதது

॥ भा ॥ तस्मात्त्वं तान् प्रति युद्धायोत्तिष्ठ, तान् शत्रून् जित्वा यशो लभस्व; धर्म्यं राज्यं च समृद्धं भुङ्क्ष्व। मयैवैते कृतापराधाः पूर्वमेव निहताः—हनने विनियुक्ताः; त्वं तु तेषां हनने निमित்தமாத்ரं

---

விடடபடியால நீ அவாகளோடு போர்புரிய எழுநதிருப்பாயாக. (ஶத்ரூந ஜித்வா யஶோ லப₄ஸ்வ) எதிரிகளை வென்று புகழை அடைவாய. (ஶத்ரூந ஜித்வா ஸம்ருத்₃த₄ம ராஜ்யம புு₄ங்க்ஷ்வ) எதிரிகளை வென்று செழிப புள்ளதாய, க்ஷத்ரியத₄ர்மப்படி உனக்குச் சேரவேண்டியதான அரசை அனுப₄விப்பாய, "ஶத்ரூந் ஜித்வா" என்பது மத₄யமணி நயாயத்தாலே முன்னும பின்னும அநவயிக்கிறது. (மயைவ ஏதே பூாவமேவ நிஹதா:) திரௌபதியைச் சபை நடுவே மானப₄ங்க₃ப படுத்திய அன்றே என்னாலேயே இவர்கள் அழிக்கத்தக்கவர்கள் என்று நிச்சயிக்கப்பட்டு விட்டாாகள். "முன்னமே கொல்லப்பட்டு விட்டாாகள" என்று இங்கு சொல்லப்பட்டிருந்தபோதிலும, இவர்கள் அனைவரும் காண உயிருடன இருக்கையாலும, இவாகள் முனபே அழிந்துவிட்டாாகளெனில, "போாபுரிய எழுநதிருப்பாய" என்று கணணன அாஜுனனைப போாபுரியத தூண்டுவது பொருநதா தாகையாலும, "நிஹதா" என்பதற்கு "அழிக்கத்தக்கவாகள என்று நிச்சயிக்கப்பட்டுவிட்டாாகள" என்றே பொருளகொள்ள வேண்டும கணணனின ஸங்கல்பம பழுதுபடாதாகையாலே, நிச்சய மாக அழியப்போவதையிட்டு 'அழிநதுவிட்டார்கள்' என்று கூறப படுகிறது. (ஏதே) என்றதால—து₃ாயோத₄னாதி₃யா அபசாரம செய்தவாகளாகையாலே அவர்களை அழிக்கத்தக்கவாகளாக நிச்ச யித்ததால எனக்கு வைஷம்யம் (பக்ஷபாதம) நைாக₄ருணயம (கருணையினமை) எனும தே₃ாஷங்கள் வரமாட்டா என்னும் கருத் தும உணர்த்தப்படுகிறது அவர்கள் செய்த அபசாரங்கள் அனைத் திலும கொடியது—கணணனைச சரணடைந்தவளான திரௌபதியைச சபைநடுவே மானப₄ங்க₃ம் செய்ய முற்பட்டதேயாகையாலே, "பூாவ மேவ" என்பது அக்காலத்தைக் குறிக்கிறது (நிமித்தமாத்ரம ப₄வ) அவர்களை அழிப்பதில, உனக்கு உன கையில அம்புபோலே, எனக்கு நீ ஓா கருவியாக ஆவாயாக நிச்சயமாக என்னால் அழிக்கப்படப்போகிற இவர்களை அழிப்பதில நீ உன்னை ஓா கருவியாகவே கருதினாயாகில, 'இதனால பாபம ஏற்படுமோ? கருணையற்றவன எனும அபவாத₃ம ஏற்படுமோ? தோலவி ஏற்படுமோ' முதலான ஐயங்கள் உனக்கு விளையமாட்டா ப்ரகரணத்திற்குப பொருநதாதாகையாலே நிமித்த

घटादिकमिव इदमहं वेद्मीति वेद्यतया वेदिताऽनुभवतीति वेदितुरात्मनो वेद्यतया शरीरमपि घटादिवदर्थान्तरभूतम्। तथा घटादेरिव वेद्यभूताच्छरीरादपि वेदिता क्षेत्रज्ञोऽर्थान्तरभूतः। सामानाधिकरण्येन

---

எப்படிப் பொருந்தும் என்பது அவ்வாக்ஷேபம். இதற்கு பதில் பின்வருமாறு:— அறிபவனான ஆத்மாவை எப்போதும் தேஹத்தோடு ஒன்றாகவே அறிவதாயிருந்தால் இவ்வாக்ஷேபம் விலைசெல்லும். ஆனால் அப்படி இல்லையே. தேஹத்தையே இவன் குறிப்பிட்டு அறியும்போது "நான் இந்த தேஹத்தை அறிகிறேன்" என்று தேஹத்தைக்காட்டிலும் தன்னை வேறுபட்டவனாகவன்றோ அறிகிறான். ப்ரத்யக்ஷத்தால் பார்க்கும எல்லாவற்றையும் அப்படியே உண்மை என்று கொள்ளமுடியவில்லை. க்ரஹங்களைப் பார்க்கும்போது நீர்க் குமிழியளவே உள்ளவையாகத் தோன்றுகின்றன. நக்ஷத்ரங்களைப் பார்க்கும்போது முத்தைப்போன்ற அளவையுடையனவாகவே தோன்று கின்றன. சந்திரனைப் பார்க்கும்போது மதுக்கிண்ணம் அளவேயுள்ள தாகவே தோன்றுகிறது. ஸூர்யமண்டலத்தைப் பார்க்கும்போது வட்டக்கண்ணாடியின் அளவுள்ளதாகவே காணப்படுகிறது. இவை யெல்லாம் ப்ரத்யக்ஷத்தால் அறியப்பட்டபோதிலும் தவறு என்றும், உண்மையில் க்ரஹம் முதலானவை மிகப்பெரிய அளவையுடையவை என்றும் சாஸ்த்ரங்களைக்கொண்டும், யுக்திகளைக்கொண்டும் நிலை நிறுத்தப்படுகிறதன்றோ. அதுபோலே இங்கும் ப்ரத்யக்ஷத்தைக் கொண்டு தேஹமும் ஆத்மாவும் ஒன்றாக அறியப்பட்டபோதிலும் முற்கூறியபடி சாஸ்த்ரயுக்திகளைக்கொண்டு ஆத்மா தேஹத்தைக் காட்டிலும வேறுபட்டதென்றே நிர்ணயிக்கப்படுகிறது. இனி மற் றொரு ஆக்ஷேபம எழுகிறது—எது எதைக்காட்டிலும் வேறுபடுகிறதோ அது அதோடு (ஒன்றாக) ஒரே வேற்றுமையில் படிக்கப்படுவதில்லை. உதாஹரணமாகக் குடமும் வஸ்த்ரமும் ஒரே வேற்றுமையில் படிக்கப் படுவதில்லை, "இந்தக் குடம் மண்" என்பதுபோல், "நான் அந்தணன் கறுப்பானவன் அறிவுள்ளவன்" என்று ஆத்மா தேஹத் தோடு ஒன்றாக வழங்கப்படுகிறது. ஆகவே "இவை வேறுபட்டவை யல்ல. ஒன்றானவையே" என்று கொள்ளத்தடையில்லை என்பது அவ்வாக்ஷேபம். இதற்குப் பரிஹாரம் பின்வருமாறு:—ஒரே வேற்று மையில் படிப்பதால் மாத்திரம் இரண்டு பொருள்களிடையே வேற்றுமையில்லை என்று கொண்டுவிடமுடியாது. 'இது குடம், கறுப் பானது' முதலான இடங்களில் பொருளையும் அதைக்காட்டிலும் வேறு பட்ட அதினுடைய ஜாதி, குணம் முதலானவற்றையும் ஒரே வேற்று

प्रतीतिस्तु वस्तुतश्शरीरस्य गोत्वादिवदात्मविशेषणतैकस्वभावतया तदपृथक्सिद्धेरुपपन्ना। तत्र वेदितुरसाधारणाकारस्य चक्षुरादिकरणा-

மையில் படிக்கிறோமன்றோ. பௌத்₃த₄ர்களைப்போலே ஜாதி, கு₃ணம் முதலானவை இல்லை என்று சொல்லிவிடவும் முடியாது. குடத்தைக் காண்பதால் அதற்கு உருவம் என்னும் கு₃ணம் இருக்கிறது என்றும், தொடுவதால் ஸ்பர்ஶம் என்னும் கு₃ணம் இருக்கிறது என்றும், ஒரு பொருளை மற்ற பொருள்களைக் காட்டிலும் வேறுபடுத்தி அறிய உதவும் அமைப்பாகிற ஜாதி இருப்பதால், அவ்வப்பொருள்களுக்கு வெவ்வேறு ஜாதி இருக்கிறதென்றும் ஏற்படும் தள்ளப்படாத அறிவினால் பொருள்களுக்கு அவற்றிலும் வேறுபட்ட ஜாதிகு₃ணங்கள் உண்டு என்று நிலைநிறுத்துகிறோமன்றோ. "பொருள்களுக்கும், ஜாதிகு₃ணங்களுக்கும் பே₄த₃முண்டு, அபே₄த₃மும் உண்டு" என்று சிலர் சொல்லுவது முன்னுக்குப்பின் முரணானதாகையாலே பொருந்தாது. ஆகையால் "ஜாதி, குணம், செயல் முதலானவை பொருளை விட்டுப் பிரியாமலிருக்கையாலேயே பொருளோடு ஒரே வேற்றுமையில் படிக்கப்படுகின்றன" என்று கொள்வதுபோலே தே₃ஹமும் ஆத்மாவை விட்டுப் பிரியாமலிருக்கையாலேயே ஆத்மாவோடு ஒன்றாகப் படிக்கப்படுகிறது என்று கொள்வதே பொருத்தமானது. இனி மற்றோர் ஆக்ஷேபம் எழுகிறது— "வெள்ளைப்பசு போகின்றது" முதலான வழக்குகளில் வெண்மை முதலான கு₃ணங்கள் 'கோ₃த்வம்' முதலான ஜாதிகள் முதலான விட்டுப்பிரியாத தன்மைகளோடு கூடிய மாடாகிற பொருளை அறிகிறோம். "நான் தே₃வன், நான் மனுஷ்யன்" என்னுமிடத்திலும் தே₃வத்வம் மனுஷ்யத்வம் முதலான தன்மைகளோடு கூடிய தே₃வர் மனிதர் முதலான ஶரீரங்களை அறிகிறோமேயொழிய "தே₃வ ஶரீரத்தோடு கூடிய நான், மனுஷ்ய ஶரீரத்தோடு கூடிய நான்" என்று அறிவதில்லை. ஆகையால் க₄டம் என்று அறியும்போது க₄டத்வத்தோடு கூடிய க₄டமாகிற பொருளை அறிவதுபோல் 'நான் தே₃வன் நான் மநுஷ்யன்' என்று அறியும்போது, தே₃வத்வம் முதலான ஜாதியோடு கூடிய ஶரீரத்தை அறிவதாகக் காண்கிறோமேயொழிய ஆத்மா என்ற மற்றொன்றுக்கு தே₃ஹம் விஶேஷணமாக இருப்பதாக இவ்வழக்கிலிருந்து தெரியவில்லையே என்பது அவ்வாக்ஷேபம். இதற்கு ஸமாதா₄னம் பின்வருமாறு— ஆத்மாவினுடைய தனித்தன்மைகளான அறிவாயிருக்கும் தன்மை, நித்யமாயிருக்கும் தன்மை, நுண்ணிய அணுவாயிருக்கும் தன்மை முதலானவை புலன்களால் அறியப்படாதவை என்று கொண்டு இந்த ஆக்ஷேபம் எழுந்துள்ளது.

विषयत्वाद्योगसंस्कृतमनोविषयत्वाच्च प्रकृतिसन्निधानादेव मूढाः प्रकृत्याकारमेव वेदितारं पश्यन्ति; तथा च वक्ष्यति—

---

இவர்களைக் குறித்து மூன்று கேள்விகள் கேட்கப்படுகின்றன. வெளி இந்த்₃ரியங்களால் தே₃ஹம் மட்டுமே அறியப்படுகிறது என்று கூறுகிறீர்களா? மனத்தால் மாத்திரம் அவ்வண்ணமே அறியப்படுகிறது என்று கூறுகிறீர்களா? அல்லது பரிஶுத்₃த₄மான மனஸ்ஸால் அவ்வண்ணம் அறியப்படுகின்றது என்று கூறுகிறீர்களா? என்பவை அம்மூன்று கேள்விகள். முதல் கேள்வியில் சொன்னபடி ஒப்புக்கொண்டார்களாகில் கண் முதலானவற்றுக்கு ஆத்மாவை அறிவதற்கு ஶக்தி இல்லாமையால் தம்மால் அறிய இயலாதவற்றையே அவை அறியவில்லையாகையால், இதனால் 'ஆத்மா இல்லை' என்று ஸித்₃தி₄த்துவிடாது. இரண்டாவது கேள்வியில் சொன்னபடி அவர்கள் ஒப்புக்கொண்டார்களாகில், மனம் ஆத்மாவை அறியவல்லதாயினும் ரஜஸ்தமஸ்ஸுக்களாகிற அஶுத்₃தி₄ கலந்த மனத்துக்கு ஆத்மாவை அறிய ஶக்தியில்லாமையால் இதனாலும் ஆத்மா இல்லை என்று ஸித்₃தி₄த்துவிடாது. மூன்றாவது கேள்வியில் சொன்னபடி அவர்கள் ஒப்புக்கொண்டார்களாகில், தே₃ஹத்தைக் காட்டிலும் வேறுபட்ட ஆத்மாவை அறிவதற்காகவே அஷ்டாங்க₃யோக₃ம் உபதே₃ஶிக்கப்படுகிறதாகையாலும் ஆஹாரநியதி முதலானவற்றால் அஶுத்₃தி₄ நீங்கப்பெற்ற மனமுடைய யோகி₃கள் அஷ்டாங்க₃யோக₃த்தாலே ஆத்மாவை நேரே கண்டிருக்கிறார்கள் என்பதற்குப் பல சான்றுகள் உளதாகையாலும் பரிஶுத்₃த₄மான மனத்தால் ஆத்மாவை அறிய முடியாது என்று சொன்னது சரியல்ல. இங்கு ஒரு த்₃ருஷ்டாந்தம் காணத்தக்கது. ஒருபடி பாலில் ஒரு சிறிது நீர் கலந்திருக்கும்போது அதைப் பாலென்றே அறிகிறோம். அதில் நீர் கலந்திருப்பதை அறியவில்லை. அவ்வண்ணமே ஒருபடி நீரில் சிறிதுபால் கலந்திருக்கும்போதும் அதை நீர் என்றே அறிகிறோம். அதில் பால் கலந்திருப்பதை அறியவில்லை. இது காணும் கண்ணில், சுவைக்கும் நாவில் உள்ள குறையால் விளைந்தது. அவ்வண்ணமே கர்மம் காரணமாகப் பலருக்கு ரஜஸ்தமோகு₃ணங்கள் நிறைந்திருப்பதால் ஒன்று சேர்ந்திருக்கும் தே₃ஹாத்மாக்களில் ஆத்மா புலப்படுவதில்லை. அதனால் தே₃ஹத்தையே ஆத்மாவாக அவர்கள் மயங்குகிறார்கள். ரஜஸ்தமோகு₃ணங்கள் குறைந்து, ஸத்வம் நிறையப்பெற்ற மனத்தால் யோகி₃கள் ஆத்மாவையே நேரே கண்டிருக்கும் உண்மையை இதுகொண்டு தள்ளிவிடமுடியாது. "மோஹத்துக்குக் காரணமான

* उत्क्रामन्तं स्थितं वाऽपि भुञ्जानं वा गुणान्वितम्। विमूढा नानुपश्यन्ति पश्यन्ति ज्ञानचक्षुषः॥ (१५. १०) इति॥ १॥

क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत।
क्षेत्रक्षेत्रज्ञयोर्ज्ञानं यत्तज्ज्ञानं मतं मम॥ २॥

**2. க்ஷேத்ரஜ்ஞும் சாபி மாம் வித்₃தி₄**
**ஸர்வக்ஷேத்ரேஷு ப₄ாரத।**
**க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோர்ஜ்ஞாநம்**
**யத்தஜ்ஜ்ஞாநம் மதம் மம॥**

ப₄ாரத—ப₄ரதகுலத்துதித்தவனே! **ஸர்வக்ஷேத்ரேஷு**—(தே₃வர் மனிதர் முதலான) எல்லா ஶரீரங்களிலும், **க்ஷேத்ரஜ்ஞும் ச அபி**—(க்ஷேத்ரம் எனப்படும் ஶரீரத்தைப் போலே) க்ஷேத்ரஜ்ஞன் எனப்படும் ஆத்மாவையும், **மாம் வித்₃தி₄**—என்னை ஆத்மாவாகக் கொண்டவனுக அறிவாய், **க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோ: யத் ஜ்ஞானம்**—"ஶரீரமும் ஆத்மாவும் தனிப்பட்டவை, என்னை ஆத்மாவாகக் கொண்டவை" என்னும் அறிவு யாதொன்றுண்டோ, **தத்**—அந்த அறிவே, **ஜ்ஞானம்**—(கைக்கொள்ளத்தக்க) அறிவாக, **மம மதம்**—என் நிர்ணயமாகும்.

---

ரஜஸ்தமோகு₃ணங்கள் நிறைந்த ஶரீரத்தில் இருக்கும் அறிவிலிகளாயிருக்குமவர்களுக்கு ஆத்மாவை உள்ளபடி காணமுடியாது; யோக₃த்தால் பரிஶுத்₃தி₄யடைந்த மனத்தினுலேயே அதைக் காணமுடியும்" என்னும் இவ்விஷயம், "உத்க்ராமந்தம் ஸ்தி₂தம் வாபி பு₄ஞ்ஜாநம் வா கு₃ணுந்விதம்! விமூட₄ா நாநுபஶ்யந்தி பஶ்யந்தி ஜ்ஞாநசக்ஷுஷ: ॥' [கீ₃தை 15-10] [தே₃ஹத்தையே ஆத்மா என்று மயங்கும் அறிவிலிகள் ஸத்வரஜஸ்தமோகு₃ணங்கள் நிறைந்த ஶரீரத்தோடு கூடியவனுய், மரணகாலத்தில் அந்த ஶரீரத்திலிருந்து வெளிக்கிளம்புகின்றவனுய், உயிர் வாழும் காலத்தில் அதிலேயே இருப்பவனுய், ஸத்வரஜஸ்தமோமயமான விஷயங்களை அனுப₄விப்பவனுன ஆத்மாவை ஶரீரத்தைக்காட்டிலும் வேறுபட்டவனுகவும், ஜ்ஞானமே வடிவெடுத்தவனுகவும் அறிவதில்லை. ஜ்ஞானிகளோவெனில் அவ்வண்ணம் அறிகிறூர்கள்] என்று கீ₃தையிலேயே சொல்லப்பட இருக்கிறது. 1.

॥ मा ॥ देवमनुष्यादिसर्वक्षेत्रेषु वेदितृत्वैकाकारं क्षेत्रज्ञं च मां विद्धि—मदात्मकं विद्धि ; * क्षेत्रज्ञं चापीत्यपिशब्दात् क्षेत्रमपि मां

---

2\. கேத்திரங்க ளெங்குமமர் கேத்ரஞ்ஞ ஞனுகப்
பார்த்தறிவு மேவுநீ பார்த்தனே- சீர்த்த
விவையிரண்டு மற்றறியு மிந்தவறி விங்கு
நவையிலறி வென்றறிவ ஞன்.

**பார்த்தனே** — அர்ஜுனு! **கேத்திரங்கள் எங்கும்**— (தே$_2$வர் மனிதர் முதலான) எல்லா ஶரீரங்களிலும், **அமர்** — வாழும், **கேத்ரஞ்ஞன்** - ஜீவாத்மாவையும், **நான் ஆகப் பார்த்து** — என்னை ஆத்மாவாகக் கொண்டவனுகக் கண்டு, **நீ அறிவு மேவு**—நீ அறிவாளியாவாய் **சீர்த்த இவை இரண்டும்**—முற்கூறிய சிறப்புக்களைப் பெற்ற ஶரீரமும ஜீவாத்மாவுமாகிற இந்த இரண்டையும், **மற்று அறியும் இந்த அறிவு** — வெவ்வேருகப் பிரித்து அறிவதோடு அவ்வயிரண்டும எனக்கு ஶரீரமாயிருப்பவை என்று அறியும் இந்த அறிவானது, **இங்கு** — இவ்வுலகில், **நவை இல் அறிவு என்று** — குற்றமற்ற அறிவு என்று, **நான் அறிவன்** - நான் முடிவுகட்டியிருப்பேன்.

---

2\. இவ்வண்ணமாக ஒன்றுக்கொன்று நேர்மாறுபட்ட தன்மைகளையுடையவையாக முதல் ஶ்லோகத்தில் குறிக்கப்பட்ட க்ஷேத்ரமாகிற ஶரீரம், க்ஷேத்ரஜ்ஞனுகிற ஜீவாத்மா ஆகிய இரண்டுக்கும் பரமாத்மாவாகிற தன்னைக்காட்டிலும் வேறுபாட்டைக் காட்டுவதற்காக இரண்டுக்கும் பொதுவான ப$_4$க$_3$வச்சே$_2$ஷத்வத்தை உபதே$_3$ஶித்து, இவ்வண்ணமாக ஶரீரஜீவர்களை உள்ளபடி அறிவதே மயக்கம் நீங்குவதற்குக் காரணமாகிறது என்று விளக்குகிருன் கண்ணன். (ஸர்வக்ஷேத்ரேஷு க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்$_3$தி$_4$)முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட தே$_2$வர், மனிதர் முதலான அனைத்துஶரீரங்களாகிற க்ஷேத்ரங்களிலும், அறிவதையே இயல்பாகக் கொண்டவனுய் அதனுலேயே 'க்ஷேத்ரஜ்ஞன்' எனப்பட்டவனுன ஜீவாத்மாவையும் நானுக அறிவாய்; அதாவது, என்னை ஆத்மாவாகக்கொண்டவனுக அறிவாய். ஶரீரத்தில் வாழ்பவனுய், அதைக்காட்டிலும் வேறுபட்டவனுய் இருந்தபோதிலும் அதில் கட்டுப்பட்டிருப்பவனுன ப$_3$த்$_3$த$_4$ஜீவன் இங்கு க்ஷேத்ரஜ்ஞ

विद्धीत्युक्तमिति गम्यते। यथा क्षेत्रं क्षेत्रज्ञविशेषणैकस्वभावतया तदपृथक्सिद्धेः तत्सामानाधिकरण्येनैव निर्देश्यम्, तथा क्षेत्रं क्षेत्रज्ञं च मद्विशेषणैकस्वभावतया मदपृथक्सिद्धेः मत्सामानाधिकरण्येनैव निर्देश्यौ विद्धि। पृथिव्यादिसंघातरूपस्य क्षेत्रस्य क्षेत्रज्ञस्य च भगवच्छरीरतैक-

---

ஶப்₃த₃த்தாலே சொல்லப்படுகிறுன். அவன் தன் ஶரீரத்தைக் குறித்து ஆத்மாவாயிருந்தபோதிலும் எனனைக் குறித்து ஶரீரமாயிருக்கையாலே என்னுல் 'நான்' எனறு ஒரே வேற்றுமையில் குறிக்கத்தக்கவன் என்று கருத்து. இங்கு க்ஷேத்ரஜ்ஞன் எனறது ஜாத்யேக வசனமாகையாலே ப₃த்₄த₄ஜீவர்கள் அனைவரையும் குறிக்கிறது. சென்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்டதோடு கூட்டுவதற்குச் சகாரமேபோதுமாயிருக்க, மேலும் ஒரு அபிப்ராப₃த₃த்தையிடுகையாலே, "முன ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட க்ஷேத்ரத்தையும் நானுக அறி" எனனும் அர்த்த₂மும் உணர்த்தப்படுகிறது. க்ஷேத்ரம் எனப்படும் ஶரீரம் க்ஷேதரஜ்ஞன் எனும் ஜீவனுக்கு விஶேஷணமாக இருப்பதையே இயல்வாக உடையதாயிருப்பதால் அவனை விட்டுப் பிரியாமலிருப்பதையிட்டு அவனேடு ஒரேவேற்றுமையில் குறிக்கத்தக்கதாக எப்படி ஆகிறதோ, அப்படியே க்ஷேத்ரமும் க்ஷேத்ரஜ்ஞனும் எனக்கு விஶேஷணமாயிருப்பதையே இயல்வாக உடையவையாயிருக்கையால் எனனை விட்டுப்பிரியாமையையிட்டு எனனேடு ஒரேவேற்றுமையில் குறிக்கத்தக்கவையாக ஆகின்றன என்று அறிவாய் என்று கருத்து. அபிஶப்₃த₃த்தாலே ஶரீரத்தையும் தானுகக்குறிக்கையால் ஜீவனை அவனது ஶரீரத்தோடு ஒரேவேற்றுமையில் குறிப்பதற்கு எந்த ஶரீராத்மபா₄வம் காரணமாகிறதோ அந்த ஶரீராத்மபா₄வம் க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞர்களைக்குறித்து எனக்குமுள்ளது; இப்படி விட்டுப் பிரியாத ஶரீரமாயிருக்கையையிட்டு க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞர்களை என்னேடு ஒரேவேற்றுமையில் குறிப்பது முக்₂யமானதே எனறபடி. இங்கு ஓர் ஆக்ஷேபம் எழுகிறது — ஜீவனுக்கு அவனது ஶரீரம் விஶேஷணமாயிருக்கிறது எனபது ப்ரத்யக்ஷத்தால் அறியப்படுகிறது; க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞர்கள் பரமாத்மாவுக்கு விஶேஷணமாயிருப்பதோ. அவ்வண்ணம் அறியப்படவில்லையே. நேர்மாருக அசேதனப்பொருள்களும் ஜீவஸமூஹமும் ஸ்வதந்த்ரமாகவன்றே காணப்படுகின்றன. ஆகையால் இங்கு ஒரேவேற்றுமையில் படிப்பது முக்₂யம் என்று எப்படிக்கொள்வது? என்பது அவ்வாக்ஷேபம். விஶேஷ்யமான பரம்பொருள் ப்ரத்யக்ஷத்தால் அறியப்படாமையாலே அப்பரம்பொருளுக்கும் க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞர்களுக்கும் இடையேயுள்ள

स्वरूपतया भगवदात्मकत्वं श्रुतयो वदन्ति *यः पृथिव्यां तिष्ठन् पृथिव्या अन्तरो यं पृथिवी न वेद यस्य पृथिवी शरीरं यः पृथिवीमन्तरो यमयति स त आत्माऽन्तर्याम्यमृतः (बृ. ५. ७. ३) इत्यारभ्य, * य आत्मनि तिष्ठन्नात्मनोऽन्तरो यमात्मा न वेद यस्यात्मा शरीरं य आत्मानमन्तरो यमयति स त आत्माऽन्तर்याम्यमृतः (बृ ५. ७. २२) इत्याद्याः।

---

ஶரீராத்மத்தன்மை ப்ரத்யக்ஷமாகத் தெரியாவிட்டாலும், பரம்பொருளைத் தெரிவிக்கும் ஶாஸ்த்ரமாகிற ப்ரமாணம் அப்பரம்பொருளைச் சேதனாசேதனங்களுக்கு ஆத்மாவாகவே தெரிவிக்கையால், ஸாமாநாதி₄கரண்யம் (ஒரே வேற்றுமையில் குறிப்பது) முக்₂யமே என்னத் தட்டில்லை என்பது இவ்வாக்ஷேபத்திற்கு ஸமாதா₄நம். அதாவது:— "யः ப்ருதி₂வ்யாம் திஷ்ட₂ந் ப்ருதி₂வ்யா அந்தரோ யம் ப்ருதி₂வீ ந வேத₃ யஸ்ய ப்ருதி₂வீ ஶரீரம் யः ப்ருதி₂வீமந்தரோ யமயதி ஸ த ஆத்மாந்தர்யாம்யம்ருத:" [ப்₃ருஹ 5-7-3] [எந்தப் பரமாத்மா பூமியில் உள்ளும் புறமும் வியாபித்திருக்கிறானோ, எவனை பூமி அறிவதில்லையோ, எவனுக்கு பூமி ஶரீரமோ, எவன் பூமியை உள்நுழைந்து நியமிக்கிறானோ அவனே உனக்கு அழிவற்ற ஆத்மாவாய அந்தர்யாமியாயிருப்பவன்] என்று தொடங்கி, "ய ஆத்மநி திஷ்ட₂ந் ஆத்மனோऽந்தரோ யமாத்மா ந வேத₃ யஸ்யாத்மா ஶரீரம் ய ஆத்மாநமந்தரோ யமயதி ஸ த ஆத்மா அந்தர்யாம்யம்ருத:" [ப்₃ருஹ 5 7-22] [எவன் ஆத்மாவின் உள்ளும் புறமும் நிறைந்து விளங்குகிறானோ, எவனை ஆத்மா அறிவதில்லையோ, எவனுக்கு ஆத்மா ஶரீரமோ, எவன் ஆத்மாவை உள்நுழைந்து நியமிக்கிறானோ அவனே உனக்கு அழிவற்ற ஆத்மாவான அந்தர்யாமி] என்பதீறாகவுள்ள அந்தர்யாமி ப்₃ராஹ்மணம் பூ₄மி முதலான அசேதனங்களையும், ஜீவாத்மாவையும் பரமாத்மாவுக்கு ஶரீரமாகக் கூறுகின்றது. இதிலிருந்தே பூ₄மி முதலானவற்றின் சேர்த்தியாயிருக்கும் ஶரீரமாகிற க்ஷேத்ரமும் பரமாத்மாவுக்கு ஶரீரமென்று தேறுகிறது. இப்படி க்ஷேத்ரமும் க்ஷேத்ரஜ்ஞனும் பரமாத்மாவுக்கு ஶரீரமாயிருப்பதையே இயல்பாகக்கொண்டவையாகையால் அவற்றை ஶாஸ்த்ரம் பரமாத்மாவோடு ஒரே வேற்றுமையில் படிப்பது முக்₂யமானது என்றும் தேறுகிறது. பூ₄மி முதலானவற்றை நாம் பரமாத்மாவின் சரீரமாகக் காண்பதில்லையாகிலும், அந்தர்யாமி ப்₃ராஹ்மணம் கூறுகையால், நாம் பூ₄மி முதலானவற்றைப் பரமாத்ம சரீரம் என்று ஒப்புக்கொள்ளவேண்டியிருக்கிறது. அதுபோலவே நாம்காணும் சரீரத்தை உடைய ஜீவனையும் அந்தர்யாமி ப்₃ராஹ்மணம் கூறுவதைக் கொண்டு பரமாத்ம சரீரம் என்று ஒப்புக் கொண்டே தீரவேண்டும்.

इदमेवान्तर्यामितया सर्वक्षेत्रज्ञानामात्मत्वेनावस्थानं भगवतस्तत्सामानाधिकरण्येन व्यपदेशहे[तु]तुः ; * अहमात्मा गुडाकेश सर्वभूताशयस्थितः (१०. २०) * न तदस्ति विना यत्स्यान्मया भूतं चराचरम् (१०. ३९) * विष्टभ्याहमिदं कृत्स्नमेकांशेन स्थितो जगत् (१०. ४२) इति पुरस्तादुपरिष्टाच्चाभिधाय, मध्ये सामानाधिकरण्येन व्यपदिशति * आदित्यानामहं विष्णुः (१०. २१) इत्यादिना। यदिदं क्षेत्र-

---

இவ்வண்ணமாகப் பரமாத்மாவுக்கும் சேதநாசேதநங்களுக்கும் ஸ்வரூபபே$_4$த$_3$மும் சரீராத்மத்தன்மையும் தேறியவளவில், வேத$_3$ வாக்கியங்களில் அவற்றை ஒரே வேற்றுமையில் படிப்பது இந்த சரீராத்மத் தன்மையைவிட்டே என்றே கொள்ளவேண்டும். அந்த வேத$_3$ வாக்கியங்களை விளக்கும் கீதையில், இங்கு தன்னையும் க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞர்களையும் ஒரே வேற்றுமையில் படிப்பதும் தான் அவற்றுக்கு அந்தர்யாமியாய் ஆத்மாவாயிருப்பதையிட்டே என்றே கொள்ள வேண்டும். 'அஹமாத்மா கு$_3$டா$_3$கேஶ ஸர்வபூ$_4$தாஶயஸ்தி$_2$த:" [10-20] [அர்ஜுநா! எல்லா ஜீவராஶிகளின் ஹ்ருத$_3$யத்திலுமிருக்கும் ஆத்மா நானே] என்று தான் அனைவருக்கும் அந்தர்யாமியாயிருப்பதைக்கூறி "ந தத$_3$ஸ்தி விநா யத் ஸ்யாத் மயா பூ$_4$தம் சராசரம்" [10-39] [அசைவனவும் அசையாதனவுமான பொருள்களில் என்னை விட்டுப் பிரிந்திருப்பது ஒன்றுமேயில்லை] என்று எல்லாப் பொருள்களும் தன்னைவிட்டுப் பிரியாதிருப்பவை என்று கூறி. "விஷ்டப்$_4$யாஹமித$_3$ம் க்ருத்ஸ்நமேகாம்ஶேந ஸ்தி$_2$தோ ஜக$_3$த்" [10-42] [இந்த எல்லாவுலகையும் நான் எனது ஓர் அம்ஶத்தினால் த$_4$ரித்து நிற்கிறேன்] என்று தான் அனைத்தையும் த$_4$ரித்திருப்பதாகக்கூறி, இவ்வண்ணமாக முன்னும் பின்னும் அனைத்துலகும் தன்னால் த$_4$ரித்து நிற்கப்படுவதாய், தன்னைவிட்டுப் பிரியாததான ஶரீரம் என்று கூறியது காரணமாகவே தன்னை உலகத்தோடு ஒரே வேற்றுமையில் படிக்கலாம் என்பதை முற்கூறிய ப்ரமாணங்களுக்கு நடுவே "ஆதி$_3$த்யாநாமஹம் விஷ்ணு:" [20-21] என்று தொடங்கி கீ$_3$தையில் விபூ$_4$த்யத்$_4$யாயத்தில் கண்ணன் காட்டினனன்றே.

இனி இந்த ஒன்றரை ஶ்லோகங்களில் காட்டப்பட்ட க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களைப் பற்றிய உண்மையறிவே கைக்கொள்ளத்தக்க

क्षेत्रज्ञयोर्विवेकविषयं तयोर्मदात्मकत्वविषये च ज्ञानमुक्तम्, तदेवोपादेयं ज्ञानमिति मम मतम्। केचिदाहुः —* क्षेत्रज्ञं चापि मां विद्धीति

---

அறிவு என்பது தன் ஸித்₃த₄ாந்தம் என்று காட்டுகிறான் உத்தரார்த்த₄த்தாலே. (க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோ: யத் ஜ்ஞாநம்) க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களின் வேறுபாட்டைப் பற்றிய யாதொரு அறிவும், அவ்விரண்டுமே என்னை ஆத்மாவாகக் கொண்டவை என்னும் யாதொரு அறிவும் இந்த ஒன்றரை ஶ்லோகங்களில் என்றால் கூறப் பட்டனவோ. 'யத்' என்னும் ஶப்₃த₃ம் அருகிலுள்ளதையே குறிக்கு மாகையால் முதல் ஒன்றரை ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களைப் பற்றிய உண்மை அறிவையே அந்த ஶப்₃த₃ம் குறிப்பதாகக்கொள்ளவேண்டும். பழுக்கக் காய்ச்சிய இரும்புத் துண்டை நெருப்புத் துண்டாக அறிவதுபோல் தே₃ஹத்தையே ஆத் மாவாகவும் ஸ்வதந்த்ரமானதாகவும் அறிவதாகிற பொய்யறிவு பகுத் தறிவற்ற ப்ராணிகளுக்கும் பொதுவானதாகையாலே பகுத்தறிவுள்ள அர்ஜுனனைக் குறித்து அப்பொய்யறிவைப் புகழ்ந்து கூறுவது ஒட்டாதன்றே. (தத் ஜ்ஞாநம் மம மதம்) அந்த உண்மையறிவே கைக்கொள்ளத்தக்க அறிவாகுமென்பது என் ஸித்₃த₄ாந்தம். இங்கு "யத் ஜ்ஞாநம் தத ஜ்ஞாநம் மதம்" என்பதற்கு இந்த அறிவே அறிவெனப்படுகிறது என்று பொதுவாகப் பொருளைக் கூறினால் புநருக்தி முதலான தோ₃ஷங்கள் உண்டாகின்றன. "மற்ற அறிவுகள் அறிவல்ல" என்று இதற்குக் கருத்துரைத்தால் மற்றும் பல அறிவுகள் இருப்பதோடு முரண்படும். இந்த அறிவை அநுவாத₃ம்செய்து 'மதம்' என்று இது தான் உகந்ததென்று காட்டுவதாகக் கொள்ள லாமேயெனில் அப்பொழுது 'ஜ்ஞாநம்' என்று இரண்டு முறை படிக்கவேண்டிய அவஶ்யமில்லை. "யத் ஜ்ஞாநம் தத் மம மதம்" என்று சொன்னாலே போதும். ஆகையால் இங்கு 'இந்த அறிவே அறிவாகும்' என்றது 'இதுவே கைக்கொள்ளத்தக்க அறிவாகும்' என்று இந்த அறிவைப் புகழ்வதற்காகவே என்று கொள்ளவேண்டும். (மம மதம்) எல்லா ஶாஸ்த்ரார்த்த₂ங்களுக்கும் உதவும் இந்த அறிவு அனைவருக்கும் ஹிதமானதாகையால் கைக்கொள்ளத்தக்கது என்பது எல்லா ஜீவராஶிகளுக்கும் நண்பனான எனது முடிவாகும் என்று கருத்து.

இந்த ஶ்லோகத்துக்கு இவ்வண்ணமாக வேத₃வாக்யங்களுக்கும், மற்ற ஸ்ம்ருதிகளுக்கும், இதே கீ₃தையில் முன்பின் வாக்யங்களுக்கும்

सामानाधिकरण्येनैकत्वमवगम्यते। ततश्चेश्वरस्यैव सतोऽज्ञानात्क्षेत्रज्ञत्वमिव भवतीत्यभ्युपगन्तव्यम्। तन्निवृत्त्यर्थश्चायमेकत्वोपदेशः। अनेन चास्य-

---

பொருந்தும்படியாகப் பொருள்கொள்ள வழியிருக்கையில், ஆராய்ச்சி இல்லாத சிலர் இந்த ஶ்லோகத்துக்குப் பின்வருமாறு பொருள் கூறுகின்றார்கள்:— "க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்₃தி₄" [ஜீவனையும் நானாகவே அறி] என்று ஜீவனையும் ஈஶ்வரனை தன்னையும் ஒரே வேற்றுமையில் படித்திருப்பதிலிருந்து ஜீவனும் ஈஶ்வரனும் ஒருவரே என்று விளங்குகிறது. "பி₄ந்நப்ரவ்ருத்திநிமித்தாநாம் ஶப்₃த₃ாநாம் ஏகஸ்மிந் அர்த்தே₂ வ்ருத்தி: ஸாமாநாதி₄கரண்யம்" [வேறுபட்ட தன்மைகளைக் கூறும் பல சொற்கள் அத்தன்மைகளையுடைய ஒரே பொருளைக் குறிக்கும்போது அத்தன்மைகளையும் அப்பொருளையும் குறிக்கும் சொற்களை ஒரே வேற்றுமையில் படிக்கலாம்] என்றல்லவோ ஶாஸ்த்ரகாரர்களால் ஒரே வேற்றுமையில் படிப்பதாகிற ஸாமாநாதி₄கரண்யத்துக்கு லக்ஷணம் சொல்லப்பட்டது. இங்கு எல்லாமறிந்தவனும் எல்லாம் வல்லவனுமான ஈஶ்வரனுக்கும், அல்பஜ்ஞனும் அல்பஶக்தியான ஜீவனுக்கும் ஐக்யம் எப்படிப்பொருந்தும் என்னும் ஆக்ஷேபம் எழுகிறது. இதற்கு ஸமாதா₄னம் பின்வருமாறு—இங்கு இப்படி இருவரையும் ஒன்றாகப் படித்திருக்கையால் ஸர்வஜ்ஞனும் ஸர்வஶக்தியான ஈஶ்வரனே அஜ்ஞானமெனும் அவித்₃யையால் மறைக்கப்பட்டு ஜீவன்போலே காட்சி அளிக்கிறான் என்று ஒப்புக்கொள்ளவேண்டி வருகிறதாகையாலே முற்கூறிய ஆக்ஷேபத்தில் சொன்னபடி முரண்பாடு ஏதுமில்லை. ஜீவனும் ஈஶ்வரனும் இங்கு ஒன்றாகப் படிக்கப்படுகிறார்கள். அது பொருந்துவதற்காக அர்த்தா₂பத்தி ப்ரமாணத்தின்படி இப்படிக் கற்பிக்கிறோம். ஜீவனுக்கு ஸம்ஸாரமாகிற இவ்வுலக வாழ்க்கை ஒரு காரணத்தால் ஏற்பட்டது என்பது அனைவரும் இசைந்தது. இயல்பாகவே ஈஶ்வரன் ஜீவனாகமுடியாதாயினும் அஜ்ஞானத்தாலே ஜீவனாகத் தோற்றுகிறான் என்று கொள்ளக் குறையில்லை என்பது ஸமாதா₄நம். இதற்குமேல் மற்றும் ஒரு ஆக்ஷேபம் எழுகிறது. "அஜ்ஞானமாகிற தோ₃ஷத்தாலுங்கூட அஜ்ஞத்வம் ஸர்வஜ்ஞத்வம் முதலான முரண்பாடுகள் ஒருவனுக்கே எப்படிப் பொருந்தும்? தோ₃ஷத்தால் ஒளி இருளாகிவிட முடியாதே. நல்ல நிலமும் நீரும் இருந்தபோதிலும் கல் முளைவிடமுடியாதே" என்பது அவ்வாக்ஷேபம். "இங்கு ஈஶ்வரன் ஜீவனாக ஆகிறான் என்று நாம் ஒப்புக்கொள்ளவில்லை. ஈஶ்வரன் ஜீவன்போலே தோற்றுகிறான் என்றே ஒப்புக்கொள்கிறோமாகையால் முற்கூறிய ஆக்ஷேபம் எழ வழியில்லை.

तमभगवदुपदेशेन, रज्जुरेषा न सर्प इत्याप्तोपदेशेन सर्पत्वभ्रम

முரண்பட்ட தன்மைகள் ஒரே இடத்தில் இருப்பதாக ஒப்புக்கொள்ளாமல் கயிற்றைப் பாம்பு என்று எண்ணிக் கலங்குமிடத்திற்போலே முரண்பட்ட தன்மை ஏறிடப்படுகிறது என்றே கொள்ளுகிறோமாகையாலே குறையில்லை. வேறு வழியில்லாமையால் இப்படிக் கொள்ளுகிறோம்'' என்பது ஸமாத₄நம். இனி மற்றோர் ஆக்ஷேபம் வருகிறது. ''உண்மையில் ஈஶ்வரன் ஸம்ஸாரி ஜீவனாகவில்லையானால் ஸம்ஸாரம் போவதற்காக உபதே₃ஶம் முதலானவை செய்வது எதற்காக? உண்மையில் வியாதியில்லாதபோது அதைப் போக்குவதற்கு வைத்₃யம் செய்வதில்லையே'' என்பது அவ்வாக்ஷேபம். இதற்கு ஸமாத₄நம் பின்வருமாறு:— ''ஜீவன் என்னும் மயக்கம் நீங்குவதற்காகவே உபதே₃ஶம் செய்கையாலே குறையில்லை இந்த ஐக்யோபதே₃ஶ வாக்யங்கள் த்₃ருஷ்டி விதி₄ முதலானவைபோலே தாழ்ந்த ப₂லன்களைப் பெறுவதற்காக ஏறிட்டுச் சொல்லும் வாக்யங்கள் அல்லவே. ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை அறிவிப்பதற்காக வந்த வாக்யங்கள் என்றல்லவோ அனைவரும் ஒப்புக்கொண்டிருக்கிறோம். கண்ணின் குற்றத்தால் சந்திரனை இரண்டாக எண்ணுபவனை அந்த மயக்கம் தீர்வதற்காக 'சந்த்₃ரன் ஒன்றே; இரண்டாகக் காண்பது உன் கண்ணில் குற்றத்தால் ஏற்பட்டது' என்று ஆப்தன் உபதே₃ஶிப்பது போன்றதல்லவோ இந்த உபதே₃ஶம்'' என்பது ஸமாத₄நம். இனி மற்றொரு ஆக்ஷேபம் எழுகிறது — ''தள்ளப்படாத ப்ரத்யக்ஷத்தின்மூலம் ஜீவனுக்கும் ஈஶ்வரனுக்கும் பே₄த₃ம் அறியப்படுகிறது. அந்த ப்ரத்யக்ஷத்துக்கு முரண்படாமலே ஆப்தோபதே₃ஶம் வரவேண்டும். அப்படி முரண்படாதபடி இந்த ஆப்தோபதே₃ஶத்துக்கு (ஶரீராத்மப₄ாவத்தையிட்டு ஐக்யோபதே₃ஶம் என்று) பொருள்கொள்ள இடமிருக்கிறது. அப்படியிருக்கும்போது இந்த ஆப்தோபதே₃ஶத்தால் முற்கூறிய பே₄த₃ப்ரத்யக்ஷத்தை எப்படித் தள்ளமுடியும்'' என்பது அவ்வாக்ஷேபம். இதற்கு ஸமாத₄நம் பின்வருமாறு:— ''பொதுவாக ஆப்தோபதே₃ஶம் ப்ரத்யக்ஷத்தோடு முரண்படாமலே இருக்குமானாலும் சில இடங்களில் முரண்படுவதுமுண்டு. இப்படிக்கொள்ளாவிட்டால் விளக்குஜ்வாலை ஒன்றாகப் ப்ரத்யக்ஷத்தால் தோன்றியபோதிலும், ஆப்தர்கள் அனுமானத்தால் அது பல ஜ்வாலைகளின் ஸமூஹமே என்று நிர்ணயிப்பது பொருந்தாமற்போய்விடும். ஆகையால் ப்ரத்யக்ஷமாயிருந்தாலும் அல்லாமலிருந்தாலும் எது தோ₃ஷமற்றதோ அது வலிமைமிக்கது, மற்றது வலிமை குன்றியது என்றே

निवृत्तिः क्षेत्रज्ञत्वभ्रमो निवर्तते इति। ते प्रष्टव्याः — अयमुपदेष्टा

கொள்ளவேண்டும். ஒரு மனிதனுடைய உபதேஶ வாக்யத்துக்கு அவனுடைய மயக்கம் வஞ்சனை அறிவின்மை அஶக்தி முதலானவை குறைகளாகலாம். இங்கு ஐக்யோபதேஶத்தைச்செய்யும் வாஸுதேவனே மிகவும் ஆப்தனுகையாலே வஞ்சனையின் வாஸனையுமில்லாதவன். ஜ்ஞானம் ஶக்தி முதலான ஆறு குணங்களும் நிறைந்த பகவானுகையாலே மயக்கமோ அறிவின்மையோ அஶக்தியோ அவனுக்கு உண்டு என்று ஐயமுறவும் இடமில்லை. ஆகையால், ப்ரத்யக்ஷத்தால் தோன்றியபோதிலும், ஜீவன் என்னும் மயக்கம் அந்த வாஸுதேவனின் உபதேஶத்தால் கயிற்றைப் பாம்பு என்று எண்ணும் மயக்கம் நீங்குவதுபோலே நீங்கத் தடையில்லை. இவ்வளவும் மாயாவாதிகளாகிற அத்வைதிகளின் வாதம்.

"எல்லாமறிந்த ஈஶ்வரனுக்கு அறியாமையாலே ஜீவன் என்னும் மயக்கம் ஏற்படுகிறது. அந்த ஈஶ்வரனே ஜீவனுக்கு உபதேஶிக்கிறுன்" என்று முன்னுக்குப்பின் முரணுகப் பேசும் இந்த மாயாவாதிகளின் கருத்து விளங்குவதற்காக இரண்டு வகையாக விகல்பித்து அவர்களைக் கேள்விகள் கேட்கவேண்டும். அதாவது— "அர்ஜுனனுக்கு உபதேஶிக்கும் பரமேஶ்வரனை இந்த பகவான் வாஸுதேவன் ஆத்மாவைப் பற்றிய உண்மையறிவை நேரே கண்டுவிட்டதால் அஜ்ஞானம் நீங்கப்பெற்றவனு? அல்லது நீங்கப்பெருதவனு?' என்பவை அக்கேள்விகள். இக்கேள்விகளின் கருத்துக்கள் பின்வருமாறு— 1. உபதேஶப்புரியும் இவன் "ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜநாதிபா:" [2-12] [நானோ நீயோ இந்த அரசர்களோ எக்காலத்திலும் இல்லாமலிருந்ததுமில்லை இல்லாமலிருக்கப்போவதுமில்லை] என்று இந்த ஶாஸ்த்ரத்தின் தொடக்கத்தில் எல்லா ஜீவர்களைக் காட்டிலும் தன்னை வேறுபட்டவனுகவே உபதேஶிக்கிறுன். மேல் அத்யாயங்களிலும் க்ஷரபுருஷன் அக்ஷரபுருஷனுகிய இருவகையான ஜீவர்களைக் காட்டிலும் தன்னை உயர்ந்தவனுகவே கூறிக்கொள்கிறுன். இத்தகைய இவனுடைய தெளிவான பேச்சுக்களிலிருந்து இவன் ஜீவர்களைக் காட்டிலும் வேறுபட்டவன் என்றே விளங்குகிறது. இதற்கு முரணில்லாமலே ஜீவர்களைத் தானுகக் கூறியுள்ளதற்குப் பொருள் கூறவேண்டும் என்பது ஒரு கருத்து. 2. உபதேஶிக்கும் இவன் அறிவற்றவனுனல் அர்ஜுனனைப் போலே இவனுக்கும் ஶிஷ்யனுக இருக்கத் தகுதியுண்டேயொழிய உபதேஶிக்கும் ஆசார்யனுயிருக்கத் தகுதியில்லை என்பது மற்றொரு

भगवान् वासुदेवः परमेश्वरः किमात्मयाथात्म्यसाक्षात्कारेण निवृत्ताज्ञानः ? उत न ? इति । निवृत्ताज्ञानश्चेत् ; निर्विशेषचिन्मात्रैकस्वरूपे

---

கருத்து. 3. இவன் ஜ்ஞானம், ஶக்தி முதலானவற்றாலே நிறைந்தவனாகையாலே ப₄க₃வான் என்று பெயர்பெற்றவன். ஆகையால் இவன் அறிவற்றவன் என்னும் இரண்டாவது விகல்பம் கைக்கொள்ளத்தகாதது. ஸர்வஜ்ஞனான இவன் அர்ஜுனனின் அஜ்ஞானம் நீங்குவதற்காக உபதே₃ஶிக்கிறான் என்னும் முதல் விகல்பமே கைக்கொள்ளத்தக்கது என்பது பிறிதொரு கருத்து. 4. இவன் வாஸுதே₃வன் என்று பெயர் பெற்றவன இப்பெயரின் பொருள் "ஸர்வத்ராஸௌ ஸமஸ்தம் ச வஸத்யத்ர........" [வி.பு 1-2-12] [இவன் எல்லாப் பொருள்களிலும் வியாபித்து நிற்கிறானாகையாலும் எல்லாப் பொருள்களும் த₄ரிக்கப்பட்டு இவனிடம் இருக்கின்றனவாகையாலும் வாஸுதே₃வன் எனப்படுகிறான்] என்று விளக்கப்பட்டிருக்கிறது. இதிலிருந்து இவனுக்கும் மற்ற பொருள்களுக்கும் பே₄த₃மே தெளிவாகிறது. வஸுதே₃வனின் பிள்ளை வாஸுதே₃வன் என்று கொண்டாலும் பரவாஸுதேவனே வஸுதே₃வனின் பிள்ளையாய் அவதரித்திருப்பதால் முதற்பொருள் இங்கும் பொருந்தும். ஆக, ஜீவர்களோடு பே₄த₃த்துக்கு முரண்படாமலே இந்த ஶ்லோகத்தில் சொல்லப்படும் அபே₄த₃த்துக்குப் பொருள் கொள்ளவேண்டும் என்பது வேறொரு கருத்து. 5. "ஸர்வலோகமஹேஶ்வரம்" [5-29] "பி₃ப₄ர்த்யவ்யய ஈஶ்வர:" [15-17] முதலான இடங்களில் பரமாத்மாவான தன்னை ஈஶ்வரனாகவும் மஹேஶ்வரனாகவும் குறித்துக்கொண்டிருக்கிறான். "யஸ்மாத் க்ஷரமதீதோஹம்" [15-18] என்னும் ஶ்லோகத்தில் எல்லா ஜீவர்களைக் காட்டிலும் உயர்ந்துநிற்கும் புருஷோத்தமனாகத் தன்னை வெளியிட்டுக்கொண்டிருக்கிறான். இந்த ஜீவபே₄த₃த்துக்கு அனுகு₃ணமாகவே இந்த ஶ்லோகத்தில் சொல்லப்படும் ஜீவாபே₄த₃த்தைக் கொள்ளவேண்டும் என்பது மற்றுமொரு கருத்து. ஈஶ்வரனுக்கு அத்₃வைதிகள் அஜ்ஞானத்தை ஒப்புக்கொள்ளுகையால், விஶிஷ்டாத்₃வைதிகளைப்போலே, அவனுக்கு எக்காலத்திலும் மயக்கத்துக்குக் காரணமான அஜ்ஞானமில்லை என்று அவர்களால் ஒப்புக்கொள்ளமுடியாது. அப்படி ஒப்புக்கொண்டால் ஈஶ்வரனால் நியமிக்கப்படும் உலகத்தின் தோற்றம் ஏற்படமுடியாது. உலகத்தோற்றமில்லாமையால் அவன் ஈஶ்வரனாகவும் முடியாது. ஆகையால் ஈஶ்வரனுக்கும் ஒரு காலத்தில் அஜ்ஞானம் இருந்தது; அது பிற்காலத்தில்

आत्मन्यनुरूपाध्यासासंभावनया कौन्तेयादिभेददर्शनं, तान् प्रत्युपदेशादिव्यापाराश्च न संभवन्ति। अथात्मसाक्षात्काराभावादनिवृत्ताज्ञानः, न तर्ह्यज्ञत्वादेवात्मज्ञानोपदेशसंभवः ; * उपदेक्ष्यन्ति ते ज्ञानं

ஜ்ஞானத்தால் போக்கடிக்கப்படுகிறது என்று அவர்கள் ஒப்புக்கொண்டே தீரவேண்டும். அதனாலேயே அர்ஜுனனுக்கு உபதேசிக்கும் இந்த நேரத்தில் ஈஸ்வரனான கண்ணனுக்கு அந்த அஜ்ஞானம் போய்விட்டதா? அல்லவா? என்று முற்கூறியபடி இருவகையாக விகல்பித்துக் கேள்வி கேட்கப்படுகிறது உபதேஶ ஸமயத்தில் அஜ்ஞானம் நீங்கப்பெற்று ஆத்மாவை உள்ளபடி ஸாக்ஷாத்கரிப்பவனாக இந்த ஈஸ்வரனைக்கொண்டால் எவ்விதமான பேதமுமற்றதாய் அறிவு மாத்திரமாயிருக்கும் ஆத்மாவில் அதற்கு எதிர்த்தட்டான தோற்றம் ஏற்பட இடமில்லையாகையால் அர்ஜுனன், த்ருதராஷ்ட்ர புத்திரர்கள் முதலானவர்களைத் தன்னைக்காட்டிலும் வேறுபட்டவர்களாகக் காண்பது, அவர்களுக்கு உபதேஶம், ஸாரத்யம் முதலான செயல்களைச் செய்வது ஆகியவை பொருந்தமாட்டா. எவ்விதமான பேதமுமற்ற அறிவுமாத்திரமான வஸ்துவில் பொய்த்தோற்றம் ஏற்பட இடமில்லை. அஜ்ஞான ஸம்பந்தத்தால் தோற்றம் ஏற்பட்டது என்று கொண்டாலும் அந்த அஜ்ஞானம் நீங்கியபிறகு அந்தப் பொய்த்தோற்றங்கள் எப்படித் தொடரமுடியும்? குணங்கள் முதலான விஶேஷங்களை (பேதங்களை) உடைய பொருளில் ஒரு தனிக்குணம் மறைக்கப்பட்டபோது அதற்கு முரண்பட்ட வேறொரு குணத்தின் தோற்றம் ஏற்படலாம். அதை அறிபவன் ஒருவன் இருந்தால் அப்பொருளைப் பொய்யான ஆகாரத்தோடு அறியலாம், ஒரு குணமுமற்ற அறிவுமாத்திரமான பொருளில் மறைக்கப்படுவதற்கு எந்த ஆகாரமுமில்லாமையால் பொய்த்தோற்றம் ஏற்பட இடமேயில்லை. அறிபவன் ஒருவனுமில்லாமையால் பொய்த்தோற்றம் ஏற்பட அடியோடு இடமில்லை. இனி இரண்டாவது விகல்பத்தில் சொன்னபடி உபதேஶ ஸமயத்தில் ஈஸ்வரனான கண்ணனுக்கு ஆத்மஸாக்ஷாத்காரம் ஏற்படாமையால் அஜ்ஞானம் நீங்கவில்லையானால், அறிவற்றவன் என்னும் காரணத்தாலேயே அவன் அர்ஜுனனுக்கு ஆத்மஜ்ஞானத்தை உபதேஶிப்பதற்கு இடமில்லை. இந்த்ரியங்கள் அசேதனமாயிருந்தபோதிலும் ஜீவனுக்கு ப்ரத்யக்ஷஜ்ஞானத்தை விளைக்கமுடியும். புகை முதலான அடையாளங்கள் அசேதனமாயிருந்தபோதிலும் சேதனர்களுக்கு அநுமான ஜ்ஞானத்தை விளைக்கமுடியும். ஶப்தம் அசேதனமாயிருந்தபோதிலும் சேதனர்க்கு ஶாப்த

ज्ञानिनस्तत्त्वदर्शिनः (४. ३४) इति ह्युक्तम्। अत एवमादिवादा अनाकलितश्रुतिस्मृतीतिहासपुराणन्यायस्ववाग्विरोधैरज्ञानिभिर्जगन्मोहनाय प्रवर्तिता इत्यनादरणीयाः।

---

ஜ்ஞானத்தை விளைக்கமுடியும். அதுபோலே உபதே3ஶிக்கும் சேதனன் அறிவிலியாயிருந்தபோதிலும் பிறருக்கு அறிவை விளைக்க முடியும் என்று கூறமுடியாதே. அறிவு ஏற்பட்ட பின்பன்றோ உபதே3ஶம் செய்யத்தகுதியே ஏற்படுகிறது. அறியாததை உபதே3ஶித்தானாகில் அநாப்தன் (நம்பத்தகாதவன்) என்னும் அபகீர்த்தியன்றோ ஏற்படும். இந்த கீ3தையில் கண்ணனே உண்மையறிவு உடையவர்களே உபதே3ஶிக்கத் தகுதியுடையவர்கள் என்பதை "உபதே3க்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ் தத்த்வத3ர்ஶிந:" [4-34] [உண்மையைக் கண்ட ஜ்ஞானிகள் உனக்கு ஜ்ஞானத்தை உபதே3ஶிப்பார்கள்] என்று கூறினான்றோ.

இதுவரை கண்டிக்கப்பட்ட ஶங்கரரின் மாயாவாத3 மதத்திலும், பா4ஸ்கரரின் பே4தா3பே4த3 மதத்திலும் யாத3வப்ரகாஶரின் ப்3ரஹ்ம பரிணாமவாத3 மதத்திலும் ஶ்ருதிஸ்ம்ருதி ந்யாய விரோத4ங்கள் முதலிய தோ3ஷங்கள் பல உள்ளன. ஶங்கரமதத்தில் பே4த3ஶ்ருதிகளும், ஸகு3ணஶ்ருதிகளும், அந்தர்யாமி ஶ்ருதிகளும், ப்ரக்ருதியும் புருஷனும் நித்யம் என்று கூறும் ஶ்ருதிகளும், இப்படியெல்லாம் கூறும் ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களும் விருத்3த4ங்களேயாகுமென்பது தெளிவு. ப்3ரஹ்மத்தையும் ஜீவனையும் ஒன்றாகக்கூறும் அபே4த3ஶ்ருதிகளிலும்— ப்3ரஹ்மத்திடமுள்ள ஸர்வஜ்ஞத்வாதி3 கு3ணங்களையும், ஜீவனிடமுள்ள அஜ்ஞத்வாதி3 கு3ணங்களையும் தள்ளிவிட்டு, ப்3ரஹ்மஜீவ வாசக பத3ங்கள் நிர்விஶேஷசிந்மாத்ரத்தை லக்ஷணையாலே காட்டுகின்றன என்று அவர்களே ஒப்புக்கொள்ளுகையால், அந்த ஶ்ருதிகளும் அவர்களுக்கு முக்2யார்த்த2மாகமாட்டா. அபே4த3 ஶ்ருதிகளுக்கும் பே4த3ஶ்ருதிகளுக்கும் மேலெழத்தோன்றும் விரோத4த்தை அந்தர்யாமி ஶ்ருதிகளைக்கொண்டும், நிர்க்கு3ண ஶ்ருதிகளுக்கும் ஸகு3ண ஶ்ருதிகளுக்கும் மேலெழத்தோன்றும் விரோத4த்தை முந்தியவை ப்3ரஹ்மத்திடம் தாழ்ந்த கு3ணங்கள் இல்லை என்றும், பிந்தியவை கல்யாண கு3ணங்கள் உண்டு என்றும் கூறுவதாகக் கொண்டும் போக்க இடம் இருக்கும்போது அபே4த3 ஶ்ருதிகளும் நிர்க்கு3ண ஶ்ருதிகளும் முறையே பே4த3ஶ்ருதிகளையும் ஸகு3ண ஶ்ருதிகளையும் தள்ளுகின்றன என்று அவர்கள் ஒப்புக்கொள்ளுகையால் அவர்கள் மதத்தில் ந்யாயவிரோத4மும் ஏற்படுகிறது.

மேலும், அவர்கள் ப்₃ரஹ்மத்தை நிர்விஶேஷம் என்று ஸாதி₄க்கும் போது ஒரு ஹேதுவைக்கொண்டே ஸாதி₄க்கவேண்டும். அப்போது அந்த ஹேதுவால் சொல்லப்படும் விஶேஷத்தை (தன்மையை) ப்₃ரஹ்மத்திடம் ஒப்புக்கொள்ளவேண்டி வருகிறது. இது 'ப்₃ரஹ்மம் விஶேஷமற்றது' என்று சற்றுமுன் கூறிய தன் வாக்யத்தோடு முரண்படுகிறது. "அநுபூ₄தி (ஜ்ஞானம்) அறியத்தகாதது" என்று கூறும்போது அநுபூ₄தியை அநுபூ₄தி என்னும் ஶப்₃த₃த்தால் அறியத்தக்கதாகவே அவர்கள் கொண்டாக வேண்டுமாகையாலே இங்கும் ஸ்வவாச்ய விரோத₄ம் ஏற்படுகிறது. 'ப்₃ரஹ்மம் ஶப்₃த₃த்தால் அறிவிக்க முடியாதது" என்று அவர்கள் கூறும்போதும் ப்₃ரஹ்மஶப்₃த₃த்தால் அது அறியப்படுவதாகக்கொண்டே தீர வேண்டுமாகையாலே இங்கும் ஸ்வவாக்ய விரோத₄ம் ஏற்படுகிறது. ப₄ாஸ்கரரின் பே₄த₃ாபே₄த₃ மதத்திலும் பே₄த₃ஶ்ருதிகள் அபே₄த₃ஶ்ருதிகள் ஆகிய இரண்டுக்குமே விரோத₄ம் ஏற்படுவது வெளிப்படை. விகாரமுள்ள அசித்துக்கு ப்₃ரஹ்மஸ்வரூபத்தோடு ஐக்யத்தை ஒப்புக்கொள்ளுகையால் 'ப்₃ரஹ்மம் விகாரமற்றது' என்னும் ஶ்ருதிகளோடு விரோத₄முமேற்படுகிறது. உபாதி₄யோடு கூடிய ப்₃ரஹ்மமே குறைபாடுகளுள்ள ஜீவனாகிறது என்று ஒப்புக்கொள்ளுகையால் 'ப்₃ரஹ்மம் குறைபாடுகளற்றது' என்று கூறும் ஶ்ருதிகளோடு முரண்படுகிறது. அக₂ண்ட₃மான மஹாகாஶமும் க₄டத்தினுள் அடங்கியுள்ள க₄டாகாஶமும் ஒன்றாயிருப்பதுபோலே அக₂ண்ட₃மான ப்₃ரஹ்மமும் ஶரீரத்துள் அடங்கும்போது ஜீவன் எனப்படுகிறதாகையாலே இரண்டும் ஒன்றே என்று இவர்கள் கொள்ளுகிறார்கள். அளவற்றிருக்கும் மஹாகாஶமும் அளவுடைய க₄டாகாஶமும் ஒன்றாக முடியாது என்பது வெளிப்படை. அது போலவே அளவற்ற ப்₃ரஹ்மமும் ஶரீரத்துக்குள் அடங்கிய ஜீவனும் ஒன்றாக முடியாது என்பது தெளிவு. ஆகையால் அவர்களுடைய மதத்தில் அபே₄த₃ ஶ்ருதிகளும் பெரும்பாலும் முக்₂யார்த்த₂த்தையுடையவையல்ல. இவ்வண்ணமே " தத் த்வமஸி " முதலான வாக்யங்களில் ஜீவனையும் ஈஶ்வரனையும் ஒரே வேற்றுமையில் படித்திருப்பதும் அவர்களுக்கு ஸ்வரஸமாகாது. ஸர்வஜ்ஞத்வம் (எல்லாமறிந்திருக்கை) முதலான கு₃ணக₃ணங்களோடு கூடியிருக்கும் ப்₃ரஹ்மத்துக்கு எல்லா ஜீவர்களோடும் ஐக்யம் ஒப்புக்கொண்டால் எல்லா ஜீவர்களுடைய து₃:க்க₂த்தையும் ப்₃ரஹ்மம் அறிந்து அனுப₄விக்க வேண்டிவரும் என்னும் தோ₃ஷம் வந்தே தீரும். ஆகையால் ப்₃ரஹ்மம் தோ₃ஷமற்றது என்னும் வேத₃வாக்யங்களோடு ஏற்படும்

விரோத₄த்தைத் தவிர்க்க முடியாதாகையால் இவர்கள் மதத்தில் நியாயவிரோத₄மும் ஏற்படுகிறது. யாத₃வப்ரகாஶமதத்திலோவெனில்; ப்₃ரஹ்மம் இயற்கையாகவே வேறுபட்டும் வேறுபடாமலும் இருக்கும் எல்லா ஜீவர்களாகவும் ஆகிறது என்று ஒப்புக்கொள்ளும் பெருங் குற்றம் காணப்படுகிறது. "க₄டோऽஸதி படோऽஸ்தி" [குடம் இருக்கிறது வஸ்திரம் இருக்கிறது] முதலான வழக்குகளில் அஸ்தி (இருக்கிறது) என்று ஒருபடிப்பட வரும் ஸத்தையே ப்₃ரஹ்மம் என்று அவர்கள் ஒப்புக்கொள்ளுகிறார்கள். அப்படியானால் ப்₃ரஹ்மம் கண்ணால் காணத்தக்கதென்றே கொள்ளவேண்டி வருகிறது. இது 'ப்₃ரஹ்மம் கண்ணால் காணத்தகாதது" என்று கூறும் வேத₃வாக்யங்களோடு முரண்படுகிறது. க₄டத்தின் ஸத்தை க₄டத்தைவிட்டுப் பிரியாதபடி கூடியேயிருக்கும் அதன் ஜாதியேயாகையால் இவர்கள் மதத்தில் ப்₃ரஹ்மம் க₄டம் முதலானவற்றின் ஜாதியே என்றும் கொள்ள வேண்டி வருகிறது. இவ்வண்ணமாக மேலும் பல ஶ்ருதி விரோத₄ங்கள் இந்த மதத்தில் ஏற்படுகின்றன. பா₄ஸ்கர யாத₃வப்ரகாஶ மதங்களில் ப்₃ரஹ்மத்துக்கு உலகத்தோடு பே₄த₃ம் அபே₄த₃ம் என்ற இரண்டையும் ஒப்புக்கொள்ளுகையால்,ப்₃ரஹ்மம் தே₃ாஷமுடையது என்றும் தே₃ாஷமற்றது என்றும் ஒப்புக்கொள்ளவேண்டி வருகிறது. "உலகம் உள்ளதாகவும் இல்லாததாகவுமாகிறது" என்று தொடங்கி ஸப்தப₄ங்கி₃யை ஒப்புக்கொள்ளும் ஜைனமதத்திற்போலே பே₄த₃ாபே₄த₃ங்களை ஒப்புக்கொள்ளும் இவர்கள் மதத்திலும் ஸ்வவசனவிரோத₄ம் வெளிப்படையாகும். இவ்வண்ணமாக இந்த மூன்று மதங்களும் ஶ்ருதி ஸ்ம்ருதீதிஹாஸ புராணவசனங்களையும் ந்யாயங்களையும் ஸ்வவாக்யவிரோத₄ம் வருவதையும் ஆராயாத அறிவிலிகளால் பரப்பப்பட்டு உலகம் மயங்குவதற்குக் காரணமாகின்றனவாகையால் இம்மதங்கள் நல்லோர்களால் ஆத₃ரிக்கத்தக்கவையல்ல.

இதற்குமேல் நம்முடைய விஶிஷ்டாத்₃வைத மதத்தில் பிறர் கூறும் ஶ்ருதிவிரோத₄ம் முதலான குற்றங்கள் களையப்படுகின்றன. அவர்கள் கூறும் தே₃ாஷங்களாவன:— உலகிற்கும் ப்₃ரஹ்மத்திற்கும் அடியோடு பே₄த₃த்தை நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறீர்களாகில் "தந்நாமரூபாப்₄யாம் வ்யாக்ரியத்" [அந்தப் பரம்பொருள் (ஸ்ருஷ்டிகாலத்தில்) நாமரூபங்களை அடைந்தது] என்று காரணமான ப்₃ரஹ்மமே கார்யங்களின் நாமரூபங்களை அடைந்தது என்று கூறும் வேத₃வாக்யம் முரண்படும். ப்₃ரஹ்மம் ஒன்றை அறிந்தால் மற்றதெல்லாவற்றையும் அறிந்ததாகும் என்று வேத₃ம் கூறுவதும் ஒட்டாது. குடம் ஒன்றை அறிந்தால் அதைக் காட்டிலும் மிகவும்

வேறுபட்ட வஸ்த்ரம் முதலானவற்றை அறிந்ததாகாதே. மிகவும் வேறுபட்ட உலகத்தையும் ப்₃ரஹ்மத்தையும் ஒரே வேற்றுமையில் படிப்பதும் குடத்தையும் படத்தையும் ஒரே வேற்றுமையில் படிப்பது போல் பொருந்தாது. லக்ஷணையாலே இரண்டையும் ஒரே வேற்றுமையில் படிப்பதாகக் கூறுவீர்களாகில் அதுபோலே லக்ஷணையாலே நிர்வஹிக்கும் எங்கள் மதத்தின்மேல் நீங்கள் குறைகூறுவதற்கு வழியில்லை. காரணமான மண்ணையும் கார்யமான க₄டத்தையும்போலே ப்₃ரஹ்மமும் உலகமும் ஒரே த்₃ரவ்யமென்று நீங்கள் ஒப்புக்கொள்ளாமையால் ப்₃ரஹ்மம் உலகுக்கு உபாதா₃ந காரணம் என்று வேத₃ங்கள் கூறுவது ஒட்டாது. ப்₃ரஹ்மம் தன்னிடமில்லாத உலகை உண்டாக்குகிறது என்று கொண்டால், ஸத்கார்ய வாத₃த்தோடு விரோதி₄க்கும். இனி, வெவ்வேறுபட்ட ப்ரக்ருதி, புருஷன், ஈஶ்வரன் ஆகியவற்றால் கார்யமான உலகம் ஆரம்பி₄க்கப்படுகிறதாகில், "அவை ஒன்று சேர்ந்து உலகை ஆரம்பி₄க்கின்றனவா? அல்லது தனித்தனியாயிருந்தே உலகை ஆரம்பி₄க்கின்றனவா?" என்னும் கேள்வி எழுகிறது. ஒன்று சேர்ந்து உலகை ஆரம்பி₄க்கின்றனவாகில், ஒன்றின் ஸ்வபா₄வம் மற்றொன்றோடு கலக்குமாகையாலே யாத₃வப்ரகாஶமதம் முதலானவற்றில் சொன்ன தோ₃ஷம் உங்களுக்கும் வரும். தனித்தனியாயிருந்தே உலகை ஆரம்பி₄க்கின்றன என்று கொள்வீர்களாகில் "ஒவ்வொன்றும் தனித்தனிக் கார்யத்தை ஆரம்பி₄க்கின்றனவா, அல்லது ஒரே கார்யத்தை ஆரம்பி₄க்கின்றனவா?" என்னும் கேள்வி எழுகிறது, தனித்தனிக் கார்யத்தை ஆரம்பி₄க்கின்றன என்று கூறுவீர்களாகில், எல்லாவற்றுக்கும் ப்₃ரஹ்மம் காரணம் என்னும் உங்கள் மதம் போய்விடும். ஒரே கார்யத்தை ஆரம்பி₄க்கின்றன என்று கூறுவீர்களாகில், ப்ரக்ருதி, புருஷன், ஈஶ்வரன் ஆகிய மூன்றின் தன்மைகளும் கலந்துவிடும் என்னும் தோ₃ஷம் கார்ய நிலையில் ஏற்பட்டே தீரும். ப்₃ரஹ்மம் ஸ்வரூபத்தாலே விகாரமற்றது என்று கொள்ளும் உங்களுக்கு ப்₃ரஹ்மம் கார்யமாகப் பரிணமிக்கிறது என்று கூறும் ஶ்ருதிகளோடு விரோத₄ம் ஏற்படுகிறது. அதற்காக ப்₃ரஹ்மம் கார்யமாக விகாரமடைகிறது என்று கொள்வீர்களாகில் யாத₃வ ப்ரகாஶமதம் முதலானவற்றில் நீங்கள் சொன்னபடி நிர்விகார ஶ்ருதியோடு விரோத₄மேற்படும். ப்₃ரஹ்மம் எப்போதுமே ஸர்வஜ்ஞத்வம் முதலான கல்யாண கு₃ணங்களோடு கூடியிருக்கும் என்று கூறும் உங்கள் மதத்துக்கு 'ப்₃ரஹ்மம் கு₃ணமற்றது' என்று கூறும் நிர்க்கு₃ண ஶ்ருதிகளோடும் 'ப்₃ரஹ்மம் ஜ்ஞானமாத்திரம்' என்று கூறும் ஶ்ருதிகளோடும் விரோத₄ம் ஏற்படுகிறது. 'ப்₃ரஹ்மத்துக்கும் உலகுக்கும் எப்போதும்

अत्रेदं तत्त्वम्—अचिद्वस्तुनश्चिद्वस्तुनः परस्य [च] ब्रह्मणो भोग्यत्वेन, भोक्तृत्वेन चेशितृत्वेन च स्वरूपविवेकमाहुः काश्चन श्रुतयः —* अस्मान्मायी सृजते विश्वमेतत्तस्मिंश्चान्यो मायया सन्निरुद्धः

---

பே4த3த்தை ஒப்புக்கொள்ளும் உங்கள் மதத்துக்கு பே4த3மே யில்லை' என்று கூறும் ஶ்ருதிகளோடும் விரோத4ம் ஏற்படுகிறது. ந்யாயவிரோத4மும் உங்கள் மதத்தில் ஏற்படுகிறது. அதாவது—ப்3ரஹ்மத்திற்கு பே4த3முண்டு கு3ணமுண்டு, ஶரீரமுண்டு என்று சொல்லும் வேத3வாக்யங்களும், ப்3ரஹ்மத்துக்கு இவை யொன்றும் கிடையாது என்று கூறும் வேத3வாக்யங்களும், அர்த்த2ஸ்வபா4வத்தால் முறையே முன் வாக்யங்களும பின் வாக்யங்களுமாவதையிட்டு, 'இல்லை' என்று கூறும் பின் வாக்யங்களால் 'உண்டு' என்று கூறும் முன் வாக்யங்கள் தள்ளப்படுகின்றன என்று நிர்ணயிக்கும் பூர்வமீமாம்ஸையிலுள்ள அபச்சே2த3 ந்யாயத்தோடு விரோத4ம் உங்களுக்கு ஏற்படுகிறது. எல்லாமாயிருக்கும் ப்3ரஹ்மம் எல்லாவற்றைக் காட்டிலும் வேறுபட்டிருப்பதாகவு மிருக்கிறது என்று நீங்கள் கூறுகையால் ஸ்வவசன விரோத4மும் ஏற்படுகிறது. இவ்வளவும் விஶிஷ்டாத்3வைதத்தின்மேல் பிறர்கூறும் ஆக்ஷேபங்கள்.

ஏட்டிக்குப் போட்டியாக, எந்த மதம் உண்மையானது என்று அறியமுடியாதபடி குழப்புவதற்காக, நாயும் பன்றியும் சண்டையிடும்போது கண்ணை மூடிக்கொண்டு கடித்துக் குதறுவதுபோலே செய்யப்படும் சண்டையாக ஆகுமே தவிர, பகுத்தறிவுள்ள மனிதர்கள் செய்யும் விவாத3மாகாது இது என்பதைக் காட்டி, ஶாரீரக மீமாம்ஸையிலுள்ள நல்ல ந்யாயங்களின் துணைகொண்ட எல்லா வேதா3ந்தங்களின் ஸாரார்த்த2த்தையே இந்த கீ3தாஶாஸ்த்ரம் காட்டுகிறது என்பதை ப்ரமாணங்களைக்கொண்டும் யுக்திகளைக் கொண்டும் நிலைநாட்டுவோம் இனி. பற்பல வேத3வாக்கியங்கள் அசேதனப்பொருள்கள் சேதனர்கள் அனுப4விப்பதற்காக ஏற்பட்டவை என்றும், ஜீவர்கள் இவ்வசேதனப் பொருள்களை அனுப4விப்பவர்கள் என்றும், இவ்விரண்டு பொருள்களையும் நியமிப்பவன் ஈஶ்வரன் என்றும் இந்த தத்வத்ரயங்களையும் பிரித்துக்காட்டி ஒவ்வொன்றுக்கும் மற்றும் பல தன்மைகளையும் காட்டுகின்றன. அவ்வாக்யங்களாவன:—

1. "அஸ்மாந் மாயீ ஸ்ருஜதே விஶ்வமேதத் தஸ்மிமஶ்சாந்யோ மாயயா ஸந்நிருத்3த4:" [ஶ்வேதா 4-9] [மாயா எனப்படும் இந்த ப்ரக்ருதியி

(श्वे ४. ९), * मायां तु प्रकृतिं विद्यान्मायिनं तु महेश्वरम् (श्वे. ४. १०), * क्षरं प्रधानममृताक्षरं हरः क्षरात्मानावीशते देव एकः (श्वे. १. १०), * अमृताक्षरं हरः इति भोक्ता निर्दिश्यते;

---

லிருந்து. மாயையுடையவனுகையாலே 'மாயன்' எனப்படும் ஸர்வேஶ்வரன் இவ்வுலகைப் படைக்கிருன். அதில் இவ்விரண்டிலும் வேறுபட்டவனை ஜீவன் மாயையாகிற ப்ரக்ருதியாலே கட்டப்பட்டு நிற்கிருன்] இதில் ப்ரக்ருதியிலிருந்தே உலகைப் படைப்பதாகக் கூறுகையாலே நேரே விகாரத்தை அடைவது அசித்தான ப்ரக்ருதியே என்றும் மாயப்பிரான் விகாரமடைவதில்லை என்றும் காட்டப்படுகிறது. ஆகையால் நிர்விகாரஶ்ருதி விரோதமில்லை. அசித்திலும் ஈஶ்வரனிலும், வேறுபட்ட ஜீவன் மாயையால் கட்டுப்பட்டிருக்கிருன் என்று இங்கு கூறுகையாலே ப்ரஹ்மமே ஜீவனுகிறது என்கிற ஶங்கராதி மதங்கள் வேரறுக்கப்பட்டன. இங்கு மாயையால் மறைக்கப்பட்டு ப்ரஹ்மம் வேருன ஜீவனுகத் தோன்றுகிறது என்று கூறவில்லையே. இயற்கையிலே ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேருயிருக்கும் ஜீவன் மாயையில் (ப்ரக்ருதியில்) கட்டுப்பட்டிருக்கிருன் என்றல்லவோ இந்த வாக்கியம் முழங்குகிறது மாயையால் ஜீவன் தனக்கு இயல்வான ஸர்வஜ்ஞத்வம், எல்லையற்ற ஆனந்தம் ஆகிய தன் தன்மைகள் வெளிப்படாமலிருக்கிருன் என்றல்லவோ இதற்குப் பொருள். 2. "மாயாம் து ப்ரக்ருதிம் வித்யாந்மாயிநம து மஹேஶ்வரம்" [ஶ்வேதா 4-10] [மாயை எனப்படுவது மூலப்ரக்ருதியேயாகும் அந்த மாயையையுடையவனுகையாலே 'மாயீ' (மாயோன) எனப்படுகிறவனே ஈஶ்வரர்களுக்கெல்லாம் ஈஶ்வரனுன மஹேஶ்வரனுவான] இந்த ஶ்ருதியிலிருந்து அத்வைதிகள் மாயா ஶப்தத்துக்குப் 'பொய்' என்ற பொருள்கொண்டது பொருந்தாது என்று காட்டப்பட்டது. மாயீ என்று உபநிஷத் படித்ததையே சங்கநூல்களிலிருந்து தொடங்கி இன்றளவும் "மாயோன், மாயன், மாயப்பிரான், மாயவன்" என்று தமிழர்கள் திருமாலின் பெயராக வழங்கினர். வேறு எந்த தெய்வத்துக்கும் இப்பெயரை அளிக்கவில்லை. இதிலிருந்து தமிழ்ச்சான்ருேர்கள் கண்ட பரம்பொருள் திருமாலே என்று விளங்குகிறது. 3 "க்ஷரம் ப்ரதாநம் அம்ருதாக்ஷரம ஹர: க்ஷராத்மாநாவீஶதே தேவ ஏக:" [ஶ்வேதா 1-10] [ப்ரதாநம் எனப்படும் மூலப்ரக்ருதி ஸ்வரூபவிகாரமடையக் கூடியதாகையாலே க்ஷரம் எனப்படுகிறது. போக்யப்பொருளாகப் பரிணமித்திருக்கும்அதைத் தன் பொருட்டு எடுத்துக்கொள்ளுகையாலே 'ஹரன்' எனப்படும் ஜீவாத்மா ஸ்வரூபவிகாரமற்றவனுகையாலே

प्रधानमात्मनो भोग्यत्वेन हरतीति हरः। * स कारणं करणाधिपाधिपो न चास्य कश्चिज्जनिता न चाधिपः (श्वे. ६. ९), * प्रधानक्षेत्रज्ञपतिर्गुणेशः (श्वे. ६. १३), पतिं विश्वस्यात्मेश्वरं शाश्वतं शिवमच्यु-

---

அக்ஷரம் எனப்படுகிறுன். இவ்விரண்டையும் மாயோனுகிற ஒரு தே₃வனே நியமிக்கிறுன்] இங்கு 'க்ஷரம் ப்ரத₄ானம்' என்று மூலப்ரக்ருதியையும் 'அம்ருதாக்ஷரம் ஹர:' என்று ஜீவாத்மாவையும் பூர்வார்த்த₄த்தில் எடுத்து, அடுத்தபடி உத்தரார்த்த₄த்தில் 'க்ஷராத்மாநௌ' என்று அவ்விரண்டையும் அனுவதி₃க்கையாலே, ஹரஶப்₃த₃த்தை உத்தரார்த்த₄த்தின் பின்பகுதியிலுள்ள 'தே₃வ ஏக:' என்பதோடுகூட்டி ருத்₃ரபரமாகக் கொள்வது பொருந்தாது. ஆகையால் மூலப்ரக்ருதியைத் தனக்கு போ₄க்₃யமாக ஹரிக்கிறுன் (எடுத்துக்கொள்ளுகிறுன்) என்னும் வ்யுத்பத்தியாலே இந்த ஹரஶப்₃த₃ம் ஜீவாத்மாவைக் குறிப்பதாகவே கொள்ளவேண்டும். ஶ்வேதாஶ்வதரோபநிஷத் மாயோனுகிய திருமாலைப் பரம்பொருளாகக் கூறுகிறது. உருத்திரனைப் பரம்பொருளாகக் கூறவில்லை என்று விஷ்ணுசித்த விஜயத்தில் விரிவாக நிரூபித்திருப்பதைக் காணலாம். இங்கு தாத்பர்யசந்த்₃ரிகையிலும் விரிவான விசாரமுள்ளது. இந்த ஶ்ருதியிலிருந்தும் சித₃சிதீ₃ஶ்வர தத்வங்கள் வெவ்வேறுனவை என்று தெளிவாக விளங்குகிறது. 4. '' ஸ காரணம் கரணுதி₄பாதி₄ப: ந சாஸ்ய கஶ்சிஜ்ஜநிதா ந சாதி₄ப:'' [ஶ்வேதா 6-9] [அப்பரமாத்மா அனைவர்க்கும் காரணமாகிறுன்; இந்த்₃ரியங்களுக்குத் தலைவனுன ஜீவனுக்கும் அவன் தலைவன்; அவனைப் படைத்தவன் எவனுமில்லை; அவனுக்குத் தலைவனும் எவனுமில்லை] இந்த வாக்யத்திலிருந்தும் ஜீவேஶ்வரபே₄த₃மும், ப்₃ரஹ்மத்தின் காரணத்வம் ஸ்வாமித்வம் முதலான கு₃ணங்களும் தெளிவாக விளங்குகின்றன. 5. ''ப்ரத₄ாநக்ஷேத்ரஜ்ஞபதிர்கு₃ணேஶ:'' [ஶ்வேதா 6-13] [மூலப்ரக்ருதிக்கும் ஜீவனுக்கும் தலைவன் பரமாத்மா; கல்யாண கு₃ணங்களனைத்தையும் தன்னிடத்தில் கொண்டு ஆள்பவன்] இந்த ஶ்ருதியும் உலகுக்கும் ப்₃ரஹ்மத்துக்கும் அடியோடு வேறுபாட்டையும், ப்₃ரஹ்மம் கல்யாணகு₃ணங்களையுடையது என்பதையும் உறுதிப்படுத்துகிறது. 6. '' பதிம் விஶ்வஸ்யாத்மேஶ்வரம் ஶாஶ்வதம் ஶிவமச்யுதம்'' [தை-நா 11] [உலகனைத்துக்கும் தலைவனுய், தனக்குத் தானே தலைவனுய், என்றுமே மங்க₃ளமாயிருப்பவனுய், அடியவரை நழுவவிடாத அச்யுதனுயிருப்பவன் நாராயணன்] நாராயணனே பரப்₃ரஹ்மம் என்றும், பரதத்வம் என்றும், பரஞ்சோதி என்றும், பரமாத்மா என்றும் முழங்கும் நாராயணுநுவாகத்திலுள்ள இந்த மந்த்ரத்தாலும்

तम् (ना-??), * ज्ञाज्ञौ द्वावजावीशनीशौ (श्वे. १. ९), * नित्यो नित्यानां चेतनश्चेतनानामेको बहूनां यो विदधाति कामान् (श्वे. ६.१३), * भोक्ता भोग्यं प्रेरितारं च मत्वा (श्वे. १. १२), * पृथगात्मानं प्रेरितारं च मत्वा जुष्टस्ततस्तेनामृतत्वमेति (श्वे. १. ६), * तयोरन्यः

---

உலகத்திற்கும் ப்$_3$ரஹ்மத்திற்கும் மிகவும் வேறுபாடு உண்டு என்று தெளிவாகிறது. 7. "ஜ்ஞாஜ்ஞௌ த்$_3$வாவஜாவீஶாநீஶௌ" [ஶ்வேதா 1-9] [இருவரும் பிறப்பற்றவர்களாயினும், எல்லாமறிந்த பரமனும் சிற்றறிவினனான ஜீவனும் (முறையே) அனைத்தையும் நியமிக்கும் ஈஶனாகவும், எதையும் நியமிக்கமாட்டாத அநீஶனாகவும் இருக்கின்றனர்.] இந்த ஶ்ருதியிலிருந்தும் ஜீவனும் பரமாத்மாவும் அநாதி$_3$யாயிருந்த போதிலும், ஈஶ்வரன் அனைத்துமறிந்தவனாய், ஜீவன் சிறிதே அறிந்தவனாய், ஈஶ்வரன் அனைத்தையும் நியமிப்பவனாய், ஜீவன் அவனால் நியமிக்கப்படுபவனாய் இருப்பதைக் கூறுகையால் ஜீவேஶ்வரர்களுடைய அத்யந்தபே$_4$த$_3$ம் நித்யமானது என விளங்குகிறது. தூங்கும்போதும், மூர்ச்சை நிலையிலும், மரண நிலையிலும், ப்ரளயத்தின்போதும் ஜீவன் ஒன்றையும் அறிவதில்லை. விழித்திருக்கும்போதும் ஸ்வப்நத்தின் போதும் சில விஷயங்களையே அறிகிறான். இவன் அறியாத விஷயங்களோ அளவற்றவை. இப்படிப்பட்ட ஜீவனும் ஈஶ்வரனும் எப்படி ஒன்றாக முடியும்? 8. "நித்யோ நித்யாநாம் சேதநஶ்சேதநாநாம் ஏகோ ப$_3$ஹூநாம் யோ வித$_3$த$_4$ாதி காமாந்" [ஶ்வே6-13 கட$_2$ 2-5-13] [என்றுமிருப்பவனாய், அறிவுள்ளவனாய், ஒருவனாய் இருக்கும் எந்த ஸர்வேஶ்வரன் என்றுமிருப்பவர்களாய், அறிவுள்ளவர்களாய், பலரான ஜீவர்களுக்கு விருப்பங்களை அளிக்கிறானோ] இந்த வாக்யம் ஈஶ்வரனைக்காட்டிலும் ஜீவர்கள் வேறுபட்டவர்கள் என்றும், ஸம்ஸாரநிலையோடு மோக்ஷநிலையோடு வாசியற என்றுமிருப்பவர்கள் என்றும், பலர் என்றும், ஈஶ்வரனைப்போலவே அறிவுக்கு இருப்பிடமாயிருப்பவர்கள் என்றும், ஈஶ்வரன் ஒப்பற்றவன் என்றும், ஜீவர்களுக்கு எல்லாப் ப$_2$லன்களையும் அளிப்பவன் என்றும் முழங்கி ஶங்கராதி$_3$மதங்களைத் தகர்க்கிறது. ஜீவேஶ்வரர்களுக்கு என்றும் அத்யந்தபே$_4$த$_3$த்தை நிலைநாட்டுகிறது. 9. "போ$_4$க்தா போ$_4$க்$_3$யம் ப்ரேரிதாரஞ்ச மத்வா" [ஶ்வேதா 1-12] [அசேதனப்பொருளை அனுப$_4$விக்கும் ஜீவன், அவனால் அனுப$_4$விக்கப்படும் அசேதனப்பொருள், அனைத்தையும் நியமிக்கும் ஈஶ்வரன் எனும் மூவரையும் நினைத்து] 10. "ப்ருத$_2$க$_3$ாத்மாநம் ப்ரேரிதாரஞ்ச மத்வா ஜுஷ்டஸ்ததஸ்தேநாம்ருதத்வமேதி" [ஶ்வேதா1-6] [தன்னையும், தன்னை நியமிக்கும் ஸர்வேஶ்வரனையும் தனிப்பட்டவர்களாக அறிந்து, அந்த ஸர்வேஶ்வரனால் அருளப்பட்டவனாய், ஜீவன் மோக்ஷமடை

पिप्पलं स्वाद्वत्त्यनश्नन्नन्यो अभिचाकशीति (मु. ३. १. १), * अजामेकां लोहितशुक्लकृष्णां बह्वीं प्रजां जनयन्तीं सरूपाम्। अजो ह्येको जुषमाणोऽनुशेते जहात्येनां भुक्तभोगामजोऽन्यः (श्वे.४.५. ना १२-५),

---

கிறான்] இவ்வாக்யங்களில் ஜீவேஶ்வரபே4த3த்தை அறியவேண்டுமென்று வேத3மே விதி4க்கிறது. இப்படி பே4த3த்தை அறிந்து எம்பெருமானுடைய அருளுக்கு இலக்கானால்தான் ஜீவனுக்கு மோக்ஷம் கிடைக்கும் என்றும் முழங்குகிறது. வாக்யார்த2ஜ்ஞானத்தால் ஜீவப்3ரஹ்மைக்யத்தை அறிந்தவனுக்கே மோக்ஷம் என்று கூறும் அத்3வைதமதம் இதனால் தகர்க்கப்பட்டதாகிறது. 11. "த்3வா ஸுபர்ணா ஸயுஜா ஸகா2யா ஸமானம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே| தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்3வத்தி அநஶ்நந்நந்யோ அபி4சாகஶீதி ||" [முண்ட3 3-1-1] [துணையாயிருப்பவைகளாய், அழகிய இறக்கைகளை (ஜ்ஞானத்தை) உடையவைகளாய், ஒத்த கு3ணத்தையுடைவைகளான இரண்டு பறவைகள் (ஜீவனும் ஈஶ்வரனும்) ஒரே மரத்தில் (ஶரீரத்தில்) வாழ்கின்றன. அவைகளிலொன்று (ஜீவன்) இனிய பழத்தை (கர்மப2லத்தை) உண்கிறது. மற்றொரு பறவை (ஈஶ்வரன்) அப்பழத்தை உண்ணாமலிருந்தபோதும் மிக விளங்கி நிற்கிறது] இவ்வாக்யம் ஒரே ஶரீரத்திலிருக்கும் ஜீவேஶ்வரர்களில் ஜீவன் ஜ்ஞானச்சுருக்கத்தையடைந்து கர்மப2லத்தைப் புசிக்கையால் வாடி நிற்கிறான் என்றும், ஸர்வேஶ்வரன் அவனை நியமித்துக்கொண்டிருக்கையால் ஒளிபெற்று நிற்கிறான் என்றும் கூறுகையால் ஜீவேஶ்வரர்களின் அத்யந்தபே4த3ம் இதிலிருந்தும் விளங்குகிறது. 12. "அஜாமேகாம் லோஹித ஶுக்ல க்ருஷ்ணாம் ப3ஹ்வீம் ப்ரஜாம் ஜநயந்தீம் ஸரூபாம்| அஜோ ஹ்யேகோ ஜுஷமாணோऽநுஶேதே ஜஹாத்யேநாம் பு4க்தபோ4க3ாமஜோऽந்ய: ||" [ஶ்வேதா 4-5 தை-நா 12-5] [சிவப்பு (ரஜஸ்) வெளுப்பு (ஸத்வம்) கறுப்பு (தமஸ்) ஆகிய மூன்று நிறங்களையும் (கு3ணங்களையும்) உடையதாய், தன்னையொத்த பல பிரஜைகளை (கார்யங்களைப்) படைப்பதாய், ஒன்றாயிருப்பதாய், பிறப்பற்றதான மூலப்ரக்ருதியைப் பிறப்பற்றவனான ஸம்ஸாரி ஜீவன் உகப்புடன் அனுப4விக்கிறான். இதை முன்னமே அனுப4வித்த பிறப்பற்றவனான முக்தஜீவன் இதைக் கைவிட்டுச் செல்கிறான்] இந்த ஶ்ருதியில் ஸத்வரஜஸ்தமோகு3ணங்களையுடைய ப்ரக்ருதி, புருஷன் இரண்டுமே அநாதி3யானதென்றும் புருஷனுடைய கர்மாநுரூபமாக ப்ரக்ருதி பரிணாமத்தை அடைகிறதென்றும், ப3த்3த4 ஜீவனும் முக்தஜீவனும் வேறு என்றும், ப3த்3த4ஜீவன் முக்தியடையும்போது ப்ரக்ருதியைவிட்டுச் செல்லுமித்தனையேயுள்ளது என்றும் காட்டப்படுகிறது. ப்3ரஹ்மத்தை மாயை மறைக்கிறது என்னும் அத்3வைதிகளின் கொள்கைக்கு இது முரண்பட்டது.

/(* गौरनाद्यन्तवती सा जनित्री भूतभाविनी (मं. उ.), * समाने वृक्षे पुरुषो निमग्नोऽनीशया शोचति मुह्यमानः। जुष्टं यदा पश्यत्यन्यमीशमस्य महिमानमिति वीतशोकः (श्वे. ४. ७) इत्याद्याः।)

13 கௌ₃ரநாத்₃யந்தவதீ ஸா ஜநித்ரீ பூ₄தபா₄விநீ| ஸிதாஸிதா ச ரக்தா ச ஸர்வகாமது₃கா₄ விபோ₄:||" [மந்த்ரிகோபநிஷத் 1.5] [ஆதி₃யந்தமற்றதாய், மஹான் அஹங்காரம் முதலான (அறிவற்ற) ஸமஷ்டி கார்யப் பொருள்களையும், அண்ட₃த்துக்குள்ளிருக்கும் அசேதனப் பொருள்களாகிய வ்யஷ்டிகார்யப் பொருள்களையும் உண்டாக்குவதாய், (ஸத்வம், தமஸ், ரஜஸ் என்னும் முக்குணங்களாகிற) வெளுப்பு, கறுப்பு, சிவப்பு நிறங்களையுடையதாய், ஸர்வேஶ்வரனுக்கு லீலாரஸமான பாலைக் கறப்பதான பசுவாயிருப்பது மூலப்ரக்ருதி] இந்த ஶ்ருதியில் மூலப்ரக்ருதியை ஆதி₃யற்றது என்பதோடு நில்லாமல் அந்தமற்றது என்றும் கூறியிருக்கையாலே மோக்ஷமடைந்த பிறகு உலகத்தோற்றம் மறைந்து நிர்விஶேஷசிந்மாத்ரப்₃ரஹ்மமே எஞ்சிநிற்கிறது என்னும் அத்₃வைதிகளின் மதம் தகர்க்கப்பட்டதாகிறது. எம்பெருமானுக்கு லீலாரஸத்தை விளைக்கும் மூலப்ரக்ருதி என்றுமே உள்ளது உண்மையானது என்ற விஶிஷ்டாத்₃வைத மதம் வலியுறுத்தப்பட்டதாகிறது. 14. "ஸமாநே வ்ருக்ஷே புருஷோ நிமக்₃நோऽநீஶயா ஶோசதி முஹ்யமாந:| ஜுஷ்டம் யதா₃ பஶ்யத்யந்ய மீஶம் அஸ்ய மஹிமாநமிதி வீதஶோக:||" [ஶ்வே 4.7] [மரம்போல் அழியக்கூடிய ஒரே ஶரீரத்தில் அழுந்தி ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄த்தாலே மயங்கி, தன் ஸ்வரூபத்தை உணராமல் வருந்துகிறான் ஜீவன். எப்போது அவன் தன்னை த₄ரிப்பவனாய், நியமிப்பவனாய் தனக்கு ஸ்வாமியாயிருக்கையாலே வேறுபட்டவனாய், தன் கர்மத்தால் ஆராதி₄க்கப்பட்டு உகப்படைபவனான ஸர்வேஶ்வரனையும் அவனுடைய பெருமையையும் காண்கிறானோ அப்போது துன்பம் நீங்கப்பெற்றவனாகிறான்] இந்தஶ்ருதியிலிருந்தும் ஶரீரத்தில் அழுந்தி மயங்கி நிற்கும் ஜீவனைக்காட்டிலும் அவனுக்கு ஸ்வாமியாய் நியாமகனாய் த₄ாரகனான ஈஶ்வரன் மிகவும் வேறுபட்டவன் என்றும், ஸர்வேஶ்வரனுடைய உகப்பாலேயே ஜீவன் ஸம்ஸாரம் நீங்கப்பெறுகிறான் என்றும் விளங்குகிறது. இதிலும் இந்த பே₄த₃ஜ்ஞானமே மோக்ஷகாரணம் என்னும் விஶிஷ்டாத்₃வைத ஸித்₃த₄ாந்தமே வலியுறுத்தப்படுகிறது என்றும், ஜீவப்₃ரஹ்ம அபே₄த₃ஜ்ஞானம் மோக்ஷகாரணம் என்னும் அத்₃வைத ஸித்₃த₄ாந்தம் தள்ளப்படுகிறது என்றும் உணரத்தக்கது.

/ ( ) இவ்வடைப்பினுள்ளிருப்பதற்குத் தாத்பர்ய சந்த்₃ரிகையுரையில்லை.

अत्रापि * अहङ्कार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा। अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम्। जीवभूतां (७.४), * सर्वभूतानि कौन्तेय प्रकृतिं यान्ति मामिकाम्। कल्पक्षये पुनस्तानि कल्पादौ विसृजाम्यहम्। प्रकृतिं स्वामवष्टभ्य विसृजामि पुनःपुनः। भूतग्राममिमं कृत्स्नमवशं प्रकृतेर्वशात्॥...मयाऽध्यक्षेण प्रकृतिस्सूयते सचराचरम्। हेतुनाऽनेन

---

வேத₃வாக்யங்களில் இப்படி உள்ளதுபோலவே இந்த கீ₃தை யிலும் பல ப்ரகரணங்களில் சித் அசித் ஈஶ்வரன் ஆகியவர்களுடைய பே₄த₃மே காட்டப்படுகிறது. 1. "பூ₄மிராபோ ऽநலோ வாயு: க₂ம் மநோ பு₃த்₃தி₄ரேவ ச / அஹங்கார இதீயம் மே பி₄ந்நா ப்ரக்ருதிரஷ்டதா₄ // அபரேயமிதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்₃தி₄ மே பராம் / ஜீவபூ₄தாம் மஹாபா₃ஹோ யயேத₃ம் தா₄ர்யதே ஜக₃த் //"[7-4, 5] [நிலம் நீர் தீ காற்று ஆகாஶம் மனம் (முதலிய இந்திரியங்கள்) மஹான் அஹங்காரம் ஆகிய எட்டுவித₄மாகப் பிரிந்திருக்கும் இந்த ப்ரக்ருதியானது என்னுடையதேயாகும் என்று அறிவாய். தடக் கையனே! இந்த அசேதந ப்ரக்ருதி தாழ்ந்தது; இதைக்காட்டிலும் மிகவும் வேறுபட்டதாய், 'ஜீவன்' என்று பெயர் பெற்றதாய், முற்கூறிய அசேதன ப்ரக்ருதியைக் காட்டிலும் மேலானதான ப்ரக்ருதியையும் என்னுடையது என்று அறிவாயாக; எந்த ஜீவபூ₄தப்ரக்ருதியினாலே இவ்வுலகம் முழுவதும் தா₄ரிக்கப்படுகிறதோ] ப்ரக்ருதிகளைத் தன்னு டையது என்று கூறுவதன்மூலம் ஸர்வேஶ்வரனுக்கும் சேதநாசேதநங் களுக்கும் வேறுபாட்டையே கண்ணன் காட்டுகிறான். அபரா ப்ரக்ருதியான அசேதனமும், பராப்ரக்ருதியான சேதனமும் வேறு பட்டவை என்றும் இங்கு காட்டுகிறான். 2. "ஸர்வபூ₄தாநி கௌந் தேய ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம் / கல்பக்ஷயே புநஸ்தாநி கல்பா தௌ₃ விஸ்ருஜாம்யஹம் // ப்ரக்ருதிம் ஸ்வாமவஷ்டப்₄ய விஸ்ருஜாமி புந:புந: / பூ₄தக்₃ராமமிமம் க்ருத்ஸ்நம் அவஶம் ப்ரக்ருதேர்வஶாத் // மயாத்₄யக்ஷேண ப்ரக்ருதி: ஸூயதே ஸசராசரம் / ஹேதுநாऽநேந கௌந்தேய! ஜக₃த்₃வி₄ பரிவர்த்ததே //" [9-7, 8, 10] [குந்தீ புத்ரனே! நான்முகனின் ஆயுள் முடிவில் எல்லாப்பொருள்களும் எனக்கு ஶரீரமான மூலப்ரக்ருதியை அடைகின்றன. அவற்றையே நான் ஸ்ருஷ்டிகாலத்தின் தொடக்கத்தில் மறுபடியும் படைக்கிறேன். (பலவித₄மாகப் பரிணமிக்கும்) என்னுடைய மூலப்ரக்ருதியை (எட்டுவித₄மாகப்) பரிணமமடையச்செய்து (தே₃வர் முதலான நாலு

कौन्तेय जगद्धि परिवर्तते ॥ (९. ७) * प्रकृतिं पुरुषं चैव विद्ध्यनादी उभावपि (१३. १४), * मम योनिर्महद्ब्रह्म तस्मिन् गर्भं दधाम्यहम्। संभवस्सर्वभूतानां ततो भवति भारत ॥ (१४. ३) इति। जगद्योनि-भूतं महद्ब्रह्म मदीयं प्रकृत्याख्यं भूतसूक्ष्ममचिद्वस्तु यत्, तस्मिन्

---

வகைப்பட்ட) இந்த ஜீவராசிகள் முழுவதையும் மூலப்ரக்ருதிக்கு வசப்பட்டிருப்பதால் தன்வசம் இழந்ததாம்படி மறுபடியும் மறுபடியும் படைக்கிறேன். குந்திபுத்ரனே! (என்னுடையதான) மூலப்ரக்ருதி தலைவனை என்னால் (தூண்டப்பட்டதாய்) அசைவனவும் அசையாதனவும் அடங்கிய உலகத்தை (ஜீவர்களின் கர்மானுகுணமாக) ஸ்ருஷ்டிக்கிறது. (ஜீவர்களின் கர்மானுகுணமான என் ஸங்கல்பமாகிற) இந்தக் காரணத்தால் முற்கூறிய உலகம் ஆவதும், வளர்வதும், அழிவதுமாக ஆகிறதன்றோ] இந்த ஶ்லோகங்களிலிருந்து பரமாத்மாவின் ஶரீரமான மூலப்ரக்ருதி ஸூக்ஷ்ம நிலையிலிருந்து ஸ்தூல நிலையை அடைவதே ஸ்ருஷ்டி என்றும், மறுபடியும் ஸூக்ஷ்ம நிலையடைவதே ப்ரளயம் என்றும் விளங்குகிறபடியால்—மாயை மறைக்கையால் ஸ்ருஷ்டி என்றும் அந்த மறைவு நீங்குகையால் ப்ரளயம் என்றும் கூறும் அத்வைத மதம் தள்ளப்படுகிறது. இங்கும் 'என்னுடைய ப்ரக்ருதி' என்கையால் ப்ரக்ருதிக்கும் ஈஶ்வரனுக்கும் பேதம் தெளிவாகிறது. பரமாத்மா நியமிக்கையாலேயே சராசர ரூபமான உலகம் படைக்கப்படுகிறது என்று கூறுகையால், பரமாத்மாவின் ப்ரமத்தாலே உலகத்தோற்றம் உண்டாகிறது என்று கூறும் அத்வைத மதம் தள்ளப்படுகிறது. 3. "ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்த்யநாதீ உபாவபி" [13-14] [ப்ரக்ருதி புருஷன் ஆகிய இரண்டையும் அநாதி என்று அறிவாயாக] ப்ரக்ருதி புருஷர்களை ஒருபடிப்பட அநாதியானவை என்று இங்கு கூறுகையால், ப்ரக்ருதி பொய்யானது என்றும், மாயை மறைக்கையால் ப்ரஹ்மமே ஜீவனாகிறது என்றும் கூறும் அத்வைத மதம் தகர்க்கப்படுகிறது. 4. "மம யோநிர்மஹத்ப்ரஹ்ம தஸ்மிந் கர்ப்பம் தாதாம்யஹம் / ஸம்பவஸ் ஸர்வ பூதாநாம் ததோ பவதி பாரத //" [14-3] [பரதகுலத்தில் உதித்தவனே! பெரிதாய் 'ப்ரஹ்ம' எனப்படுவதான மூலப்ரக்ருதி இவ்வுலகுக்குக் காரணமாயிருப்பதால் என்னுடையதாகவும் இருக்கிறது. மிக நுண்ணிய அவ்வசித்தில் சேதனனை கர்ப்பத்தை நான் சேர்க்கிறேன். அதனால் எல்லா பூதங்களுடைய உத்பத்தியும் ஏற்படுகிறது] இதிலிருந்து உலகத்தின் ஸ்ருஷ்டியின்போது பகவானுடைய

चेतनाख्यं गर्भं संयोजयामि; ततो मत्सङ्कल्पकृताचिदचित्संसर्गादेव देवादिस्थावरान्तानामचिन्मिश्राणां सर्वभूतानां संभवो भवतीत्यर्थः। श्रुतावपि भूतसूक्ष्मं ब्रह्मेति निर्दिष्टं * तस्मादेतद्ब्रह्म नाम रूपमन्नं च जायते (मु. १. १. ९) इति। एवं भोक्तृभोग्यरूपेणावस्थितयोः सर्वावस्थावस्थितयोश्चिदचितोः परमपुरुषशरीरतया तन्नियाम्यत्वेन तद-

ஶரீரமான ப்ரக்ருதியே நேரே பரிணமத்தை அடைகிறதென்றும் ஸ்ருஷ்டிக்குறுப்பான ப்ரக்ருதிபுருஷச்சேர்த்தி எம்பெருமானுடைய ஸங்கல்பத்தால் ஏற்படுகிறது என்றும், அதனாலேயே தே₃வ மனுஷ்ய திர்யக் ஸ்த₂ாவரரூபமான நால்வகையான ஶரீரங்களோடு கூடிய ஜீவர்களின் படைப்பு ஏற்படுகிறது என்றும் விளங்குகையால் சித் அசித் ஈஶ்வரனாகிய மூன்று தத்துவங்களும் வெவ்வேறானவை என்று காட்டப்படுகிறது. மூலப்ரக்ருதியே உலகிலுள்ள அசேதனப்பொருள் களாகப் பரிணமிக்கையாலும், ஈஶ்வரன் அதை அப்படிப் பரிணமிக்கும் படி செய்து ஜீவனை அதோடு சேர்க்கையாலும், மூன்று தத்துவங்களுக் கும் வேறுபாடு தெளிவாக விளங்குகிறது. ப்₃ரஹ்மஶப்₃த₃த்துக்கு மூலப்ரக்ருதி என்று பொருள் கொள்ளலாமோ? எனில் பரப்₃ரஹ்ம மான தன்னைக் காட்டிலும் வேறுபட்டதாக ப்₃ரஹ்மத்தை எடுக்கை யாலும், "தஸ்மாதே₃தத் ப்₃ரஹ்ம நாம ரூபம் அந்நம் ச ஜாயதே" [முண்ட₃க 1-1-10] [அந்தப் பரப்₃ரஹ்மத்திடமிருந்து ப்₃ரஹ்ம ஶப்₃த₃த்தால் சொல்லப்படும் மூலப்ரக்ருதியின் கார்யநிலையான அவ்யாக்ருதமும் நாமரூபங்களோடு கூடிய சேதநாசேதனங்களும் உண்டாகின்றன] என்ற இடத்தில் ப்₃ரஹ்மஶப்₃த₃த்தால் மூல ப்ரக்ருதியின் நிலையொன்றைக் குறித்திருக்கையாலும் அசித்தான மூலப்ரக்ருதியை ப்₃ரஹ்ம ஶப்₃த₃த்தால் குறிக்கத்தட்டில்லை. ஆக, இதுவரையில் சித், அசித், ஈஶ்வரன் ஆகிய மூன்று தத்துவங்களுடைய பே₄த₃ப வேத₃வாக்யங்களைக் கொண்டு நிலைநாட்டப்பட்டது. இந்த பே₄த₃ம் நையாயிக வைஶேஷிகர்கள் முதலானோராலும் ஒப்புக்கொள்ளப் படுகிறது. ஆனால் நமது மதத்தில் ப்₃ரஹ்மத்தையும் உலகத்தையும் ஒரே வேற்றுமையில் படிக்கும் அபே₄த₃ஶ்ருதிகளும் முக்₂யமாவதற்காக க₄டகஶ்ருதிகளைக் கொண்டு உலகிற்கும் ப்₃ரஹ்மத்துக்கும் ஶரீராத்மத் தன்மையும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. அந்த க₄டகஶ்ருதிகள் காரணநிலையிலும் கார்யநிலையிலும் போ₄க்தாவான சேதனனையும் போ₄க்₃யமான அசேதனத்தையும், பரமபுருஷனுக்கு ஶரீரமாகவும் அவ னால் நியமிக்கப்படுவதாகவும் இருக்கையால் அவனைவிட்டுப்பிரியாதவை

पृथक्स्थितिं परमपुरुषस्य चात्मत्वमाहुः काश्चन श्रुतयः। * यः पृथिव्यां तिष्ठन् पृथिव्या अन्तरो यं पृथिवी न वेद यस्य पृथिवी शरीरं यः पृथिवीमन्तरो यमयति (बृ ५. ७. ३) इत्यारभ्य * य आत्मनि तिष्ठन्नात्मनोऽन्तरो यमात्मा न वेद यस्यात्मा शरीरं य आत्मानमन्तरो यमयति स त आत्माऽन्तर्याम्यमृतः (बृ. ५.७.२२. मा) इति ; तथा * यः पृथिवीमन्तरे सञ्चरन् यस्य पृथिवी शरीरं यं पृथिवी न वेद इत्यारभ्य, * योऽक्षरमन्तरे सञ्चरन् यस्याक्षरं शरीरं

---

என்றும், அவன் அவ்விரண்டுக்கும் ஆத்மாவாயிருக்கிறான் என்றும் கூறுகின்றன. உலகுக்கும் ப்$_3$ரஹ்மத்துக்குமுள்ள இந்த ஶரீராத்மத் தன்மை ப்ரத்யக்ஷம் முதலான மற்ற ப்ரமாணங்களால் அறிய முடியாதது தத்வோபதே$_3$ஶம் செய்யும் அநேக வேத$_3$வாக்யங்கள் ஆத$_3$ரத்துடன் இதை முழங்குகின்றன. ஆகையால் இந்த ஶ்ருதிகள் அபே$_4$த$_3$ ஶ்ருதிகளால் தள்ளப்படுகின்றன என்று ஶங்கிக்கவும் இடமில்லை. ஆகையால் இந்த வேத$_3$வாக்யங்களுக்கு அனுகு$_3$ணமாக ஶரீர லக்ஷணத்தை அமைத்துக்கொள்ளவேண்டும். அந்த க$_4$டகஶ்ருதிகளாவன: 1 "ய: ப்ருதி$_2$வ்யாம் திஷ்ட$_2$ன் ப்ருதி$_2$வ்யா அந்தரோ யம் ப்ருதி$_2$வீ ந வேத$_3$ யஸ்ய ப்ருதி$_2$வீ ஶரீரம் ய: ப்ருதி$_2$வீமந்தரோ யமயதி" [ப்$_3$ருஹ 5. 7. 3] [எவன் பூமியின் வெளியிலும் உள்ளும் வ்யாபித்திருக்கிறானோ, எவனை பூமி அறியமாட்டாதோ, எவனுக்கு பூமி ஶரீரமோ எவன் பூமியை உள்நுழைந்து நியமிக்கிறானோ] என்று தொடங்கி "ய ஆத்மநி திஷ்ட$_2$ன் ஆத்மநோऽந்தர: யமாத்மா ந வேத$_3$ யஸ்யாத்மா ஶரீரம் ய ஆத்மாநமந்தரோ யமயதி ஸ த ஆத்மாந்தர்யாம்யம்ருத:" [ப்$_3$ருஹ 5. 7. 22] [எவன் ஆத்மாவின் வெளியிலும் உள்ளும் வியாபித்திருக்கிறானோ, எவனை ஆத்மா அறியானோ, எவனுக்கு ஆத்மா ஶரீரமோ, எவன் ஆத்மாவை உள் நுழைந்து நியமிக்கிறானோ அழிவற்ற அவனே உனக்கு ஆத்மாவாய் அந்தர்யாமியாயிருப்பவன்.] என்று ப்$_3$ருஹதா$_3$ரண்யகத்தில் அந்தர்யாமி ப்$_3$ராஹ்மணத்தில் காரண நிலையிலும் கார்ய நிலையிலும் உள்ள ப்ரக்ருதி புருஷர்கள் பரமாத்மாவின் ஶரீரமாயிருப்பதில் ஒரு ஸாசியில்லை என்று காட்டப்பட்டது. 2 "ய: ப்ருதி$_2$வீமந்தரே ஸஞ்சரன் யஸ்ய ப்ருதி$_2$வீ ஶரீரம் யம் ப்ருதி$_2$வீ ந வேத$_3$" [எவன் பூமியின் உள்ளே வியாபித்திருக்கிறானோ, எவனுக்கு பூமி ஶரீரமோ, எவனை பூமி அறிய

यमक्षरं न वेद, * यो मृत्युमन्तरे सञ्चरन् यस्य मृत्युश्शरीरं यं मृत्युर्न वेद एष सर्वभूतान्तरात्माऽपहतपाप्मा दिव्यो देव एको नारायणः (सु. ७) अत्र मृत्युशब्देन तमश्शब्दवाच्यं सूक्ष्मावस्थमचिद्वस्त्वभिधीयते, अस्यामेवोपनिषदि * अव्यक्तमक्षरे लीयते अक्षरं तमसि लीयते (सु. २) इति वचनात्; * अन्तः प्रविष्टश्शास्ता जनानां सर्वात्मा (य. आ. ३. ११. २) इति च। एवं सर्वावस्थावस्थितचिदचिद्वस्तु-

---

வில்லையோ] என்று தொடங்கி "யோ ऽக்ஷரமந்தரே ஸஞ்சரந் யஸ்யா க்ஷரம் ஶரீரம் யம்: அக்ஷரம் நவேத₃" [எவன் மூலப்ரக்ருதியின் நிலை யான அக்ஷரத்தினுள்ளே வியாபித்திருக்கிறனோ எவனுக்கு அக்ஷரம் ஶரீரமோ, எவனை அக்ஷரம் அறியவில்லையோ] "யோ ம்ருத்யுமந்தரே ஸஞ்சரந் யஸ்ய ம்ருத்யுஶ்ஶரீரம் யம் ம்ருத்யுர்ந வேத₃ ஏஷ ஸர்வபூ₄தாந் தராத்மா அபஹதபாப்மா தி₃வ்யோ தே₃வ ஏகோ நாராயண:" [ஸுபா₃ல 7] [எவன் ம்ருத்யு எனப்படும் மூலப்ரக்ருதியினுள்ளே வியாபித் திருக்கிறனோ, எவனுக்கு ம்ருத்யு ஶரீரமோ, எவனை ம்ருத்யு அறியாதோ இவனே எல்லா பூ₄தங்களுக்கும் அந்தராத்மாவாய், பாபமற்றவனாய், பரமபத₃த்தில் இருப்பவனாய், நாராயணன் எனப்படும் ஒப்பற்ற தே₃வன்] என்று ஸுபா₃லோபநிஷத்தில் அந்தர்யாமி ப்₃ராஹ்மணத்தில் சொன்ன அர்த்த₂த்தையே ஏறக்குறையச் சொல்லி அங்கு சொல்லப்பட்ட அபஹதபாப்மத்வம் (பாபமற்றிருக்கை), ஒப்பற்றிருக்கை முதலான பெருமைகளையுடைய பரப்₃ரஹ்மம் நாராயணனே என்று தெளிவாகக் காட்டிற்று. இங்கு ம்ருத்யு எனப்பட்டது 'தமஸ்' எனப் படும் மிகவும் ஸூக்ஷ்மநிலையிலுள்ள மூலப்ரக்ருதியே என்னும் விஷயம் "அவ்யக்தம் அக்ஷரே லீயதே அக்ஷரம் தமஸி லீயதே" [ஸுபா₃ல 2] [அவ்யக்தம் எனப்படும் ஸூக்ஷ்மமான அசேதனப் பொருள் அக்ஷரம் எனப்படும் அதிஸூக்ஷ்மமான அசேதனப் பொரு ளில் லயிக்கிறது. அவ்வக்ஷரம் தமஸ் எனப்படும் அத்யந்த ஸூக்ஷ்ம மான மூலப்ரக்ருதியில் லயிக்கிறது] என்று காட்டப்பட்டது. ஆகையால் இங்கு 'தமஸ்' எனப்படுவது ஒளிக்கு எதிர்த்தட்டான இருள் அல்ல என்று விளங்குகிறது, 3. "அந்த: ப்ரவிஷ்டஶ்ஶாஸ்தா ஜநாநாம் ஸர் வாத்மா" [யஜுர் ஆரண்ய 3.11.2] [எல்லா ஜீவர்களையும் உள் நுழைந்து நியமிக்கையாலே இப்பரப்₃ரஹ்மம் ஸர்வாத்மா ஆகிறது] என்று யஜுர்வேத₃த்திலுள்ள வாக்யம் ஆத்மாவின் லக்ஷணத்தையும் சொல்லிக்கொண்டு பரப்₃ரஹ்மம் அனைவருக்கும் ஆத்மா என்று முழங்கு

शरीरतया तत्प्रकारः परमपुरुष एव कार्यावस्थकारणावस्थजगद्रूपेणावस्थित इतीममर्थं ज्ञापयितुं काश्चन श्रुतयः कार्यावस्थं कारणावस्थं च जगत् स एवेत्याहुः * सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयं (छा. ६.२.१) * तदैक्षत बहु स्यां प्रजायेयेति तत्तेजोऽसृजत (६.२.३) इत्यारभ्य * सन्मूलास्सोम्येमास्सर्वाः प्रजास्सदायतनास्सत्प्रतिष्ठाः (६. ८. ६) * ऐतदात्म्यमिदं सर्वं तत्सत्यं स आत्मा तत्त्वमसि श्वेतकेतो (६. ८. ७)

---

கிறது. உலகில் அரசனுக்குக் குடிகளைக் குறித்து நியமனம் செய்யும் பெருமையுள்ளது. ஆனால் அவன் அவர்களை வியாபித்திருப்பதில்லை. ஆகாஶம் பல பொருள்களையும் வியாபித்திருக்கிறது. ஆனால் அது அப்பொருள்களை நியமிப்பதில்லை, பரமாத்மாவோவெனில் அனைத்தையும் வியாபிப்பதாகவும் நியமிப்பதாகவும் இருக்கையாலே ஶரீரமான அனைத்துக்கும் ஆத்மாவாகவுமாகிறது என்று கருத்து.

இவ்வண்ணமாகக் காரணநிலையிலும் கார்யநிலையிலும் உள்ள சேதனசேதனப் பொருள்களை ஶரீரமாகக் கொண்டிருக்கையால் அவற்றை ப்ரகாரமாகக்கொண்ட பரமபுருஷனே இருநிலைகளிலுமுள்ள உலகமாக இருக்கிறான் என்னும் இந்த அர்த்த₂த்தை நினைவுபடுத்துவதற்காகவே சில வேத₃வாக்யங்கள் இருநிலைகளிலும் உள்ள உலகத்தை அப்பரம புருஷனாகவே கூறுகின்றன. அவையாவன:— 1. 'ஸதே₃வ ஸோம்ய இத₃மக்₃ர ஆஸீத் ஏகமேவாத்₃விதீயம்'' [சா₂ந் 6-2-1] [குழந்தாய்! இவ்வுலகம் முதலில் 'ஸத்' எனப்படும் ப்₃ரஹ்மமாகவே இருந்தது. ஒன்றாகவே இருந்தது இரண்டற்றதாயிருந்தது] ''ததை₃க்ஷத ப₃ஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி தத்தேஜோऽஸ்ருஜத'' [சா₂ந் 6-2-1] [அந்தப் பரம்பொருள் ''நானே (அண்ட₃த்தினுள்ளிருக்கும்) பல வ்யஷ்டிப் பொருள்களாக ஆகக்கடவேன் (அதற்காக அண்ட₃காரணமான) ஸமஷ்டிப் பொருள்களாகவும் ஆகக்கடவேன்'' என்று ஸங்கல்பித்தது. அது ஸமஷ்டிப் பொருள்களில் ஒன்றான தேஜஸ்ஸை ஸ்ருஷ்டித்து] என்று தொடங்கி ''ஸந்மூலாஸ் ஸோம்ய இமாஸ்ஸர்வா: ப்ரஜாஸ் ஸதா₃யதநா: ஸத்ப்ரதிஷ்டா₂:''[சா₂ந்6-8-6] [குழந்தாய்! இந்தப் பொருள்களெல்லாம் ஸத்தாகிற பரப்₃ரஹ்மத்திடமிருந்து தோன்றியவை, அதையே இருப்பிடமாகக்கொண்டு வாழ்பவை; முடிவில் அதையே அடைபவை] 'ஐததா₃த்ம்யமித₃ம் ஸர்வம் தத்ஸத்யம் ஸ ஆத்மா தத் த்வமஸி ஶ்வேதகேதோ'' [சா₂ந்

इति। तथा * सोऽकामयत, बहु स्यां प्रजायेयेति, स तपोऽतप्यत, स तपस्तप्त्वा, इदं सर्वमसृजत इत्यारभ्य * सत्यं चानृतं च सत्यमभवत् (आ. ६) इति। अत्रापि श्रुत्यन्तरसिद्धः चिदचितोः परमपुरुषस्य च स्वरूपविवेकः स्मारितः—

---

6.8.7] [இவ்வுலகமெல்லாம் இந்த ப்3ரஹ்மமாகவே இருக்கிறது. அந்த ப்3ரஹ்மம விகாரமற்றதாய் ஆத்மாவாயிருக்கிறது. ஶ்வேத கேதுவே! அந்த ப்3ரஹ்மம் நீயாகிறாய்] என்று ச2ாந்தே3ாக்3யத்தில் இவ்வண்ணமே சொல்லப்பட்டிருப்பதைக் காணலாம். இதிலிருந்து பே4த3ஶ்ருதிகளுக்கும் க4டகஶ்ருதிகளுக்கும் அனுகு3ணமாக இப்படிப் பொருள் கொள்ளும்போது ப்3ரஹ்மத்தையும் உலகத்தையும் ஒன்றாக (ஒரே வேற்றுமையில்) படிப்பது முக்2யமானதே என்று விளங்குகிறது. இப்படி ஒன்றாகப்படிக்கும் வேத3வாக்யங்கள் காரண நிலையிலும் கார்ய நிலையிலும் பரமபுருஷனின் ப்ரகாரமாயிருக்கும் சேதனாசேதன த்3ரவ்யம் ஒன்றாயிருப்பதே எனும் கருத்துடையவை என்றபடி. இந்த வேத3 வாக்யங்களுக்கு முரணாகவும், ப்ரத்யக்ஷம், அனுமானம், தன் வசனம் ஆகியவற்றுக்கு முரணாகவும் அத்3வைதிகள் ஜீவப்3ரஹ்மைக்யத்தைச் சொல்லி 'உலகம் பொய்' என்பது இவற்றால் தள்ளப்பட்டதாயிற்று. ப4ாஸ்கரயாத3வப்ரகாஶ மதங்களும் இவற்றுக்கு முரண்பட்டவை என்பது வெளிப்படை. 2 ச2ாந்தே3ாக்3யத்தில் சொன்னதுபோலவே ஶரீராத்மப4ாவமே ப்3ரஹ்மத்தோடு சேதனாசேதனங்களை ஒன்றாக (ஒரே வேற்றுமையில்) படிப்பதற்குக் காரணம் என்று தைத்திரீயோப நிஷத்தும் கூறுகிறது. "ஸோऽகாமயத ப3ஹு ஸ்யாம் ப்ரஜாயே யேதி ஸ தபோऽதப்யத ஸதபஸ்தப்த்வா இத3ம் ஸர்வமஸ்ருஜத" [தை ஆந 6] [அந்தப் பரப்3ரஹ்மம் "நான் பல வ்யஷ்டிப்பொருள் களாக ஆகக்கடவேன். அதற்காக ஸமஷ்டிப்பொருள்களாகவும் ஆகக் கடவேன்" என்று ஸங்கல்பித்தது. அது ஜ்ஞானமயமான தவத்தைச் செய்தது. அப்படித் தவத்தைச் செய்து இது அனைத்தையும் படைத்தது] என்று தொடங்கி, "ஸத்யஞ்சாந்ருதஞ்ச ஸத்யமப4வத்" [விகாரமடையாத சேதனமாகவும் விகாரமடையும் அசேதனமாகவும் ஆகி விகாரமடையாமலே இருந்தது] என்று முடிவது அவ்வாக்யம். இங்கு தவம் என்பது காயக்லேஶரூபமான தவமல்ல, "தபஸா சீயதே ப்3ரஹ்ம" [முண்ட3க1-1-9] என்று தொடங்கும் ப்ரகரணத்தில் "யஸ்ய ஜ்ஞானமயம் தப:" என்று வ்யாக்2யானம் செய்திருக்கையால் ஜ்ஞானமய மான ஆலோசனமே இங்குதவம் எனப்படுகிறது என்று விளங்குகிறது.

* हन्ताहमिमास्तिस्रो देवता अनेन जीवेनात्मनाऽनुप्रविश्य नामरूपे व्याकरवाणि (छा. ६. ३. २), * तत्सृष्ट्वा, तदेवानुप्राविशत्, तदनुप्रविश्य, सच्च त्यच्चाभवत्......विज्ञानं चाविज्ञानं च, सत्यं चानृतं च सत्यमभवत् (आ. ६) इति च। एवंभूतमेव

---

இந்தச் ச₂ாந்தோக்₃ய தைத்திரீய ப்ரகரணங்களிலேயே பே₄த₃ா பே₄த₃ஶ்ருதிகள் முரண்படாமைக்கு ப்₃ரஹ்மம் உலகத்தை அநுப்ரவேஶித்திருப்பதே காரணம் என்று மேலே தெளிவு படுத்தப்படுகிறது. அந்தர்யாமி ப்₃ராஹ்மணம் முதலான வேறு ப்ரகரணங்களிலுள்ள க₄டகஶ்ருதிகளைத் தேடிப்போகவேண்டிய அவசியமுமில்லை என்றபடி. அவ்வாக்யங்களாவன:—3. "ஹந்தா ஹமிமாஸ்திஸ்ரோ தே₃வதா: அநேந ஜீவேநாத்மநாऽநுப்ரவிஶ்ய நாம ருபே வ்யாகரவாணி" [ச₂ாந் 6-3-2] [நான் தீ, நீர், பூ₄மி என்னும் மூன்று தே₃வதைகளையும் இந்த ஜீவஸமஷ்டியாகிற என்னால் (என் ஶரீரத்தால்) வ்யாபித்து நாமருபங்களைச் செய்யக்கடவேன் (என்று பரதே₃வதை ஸங்கல்பித்தது)] என்பது ச₂ாந்தே₃ாக்₃ய வாக்யம். இங்கு "அநேந ஜீவேநாத்மநா" [இந்த ஜீவனாகிற என்னால்] என்றது "ஸிம்ஹேந பூ₄த்வா ப₃ஹவோ மயாத்தா:"[விஷ்ணு த₄ர்மம் 98-17] [ஸிம்ஹமான என்னால் பலர் புசிக்கப்பட்டனர்] என்றதுபோன்ற ப்ரயோக₃மாகும். 4. "தத் ஸ்ருஷ்ட்வா ததே₃வாநுப்ராவிஶத் தத₃நு ப்ரவிஶ்ய ஸச்ச த்யச்சாப₄வத்...நிலயநம் ச அநிலயநம் ச ஸத்யம் சாந்ருதம் ச ஸத்யமப₄வத்" [தை ஆந 6] [அந்த ப்₃ரஹ்மம் அதைப் படைத்து அதையே உள்நுழைந்தது. அதை உள்நுழைந்து விகாரமற்றதாய் ஜ்ஞானமயமான சேதனமாகவும், விகாரமுள்ளதாய் ஜ்ஞானமற்றதான அசேதனமாகவும் ஆயிற்று. இப்படிச் சேதனாசே தனங்களான பின்பு விகாரமற்றதாகவே இருந்தது.] என்பது தைத் திரீய வாக்யம். ச₂ாந்தே₃ாக்₃ய வாக்யத்தில் அசித்தை வியாபித் திருப்பது தெளிவாகச் சொல்லப்பட்டது. ஜீவன் விஷயத்தில் ஓரே வேற்றுமையில் படிப்பது மட்டுமே காணப்படுகிறது. தைத்திரீய வாக்யத்திலோவெனில், சேதனாசேதனங்களிரண்டிலும் வாசியில் லாமல் ப்₃ரஹ்மத்தின் வ்யாப்தி சொல்லப்படுகிறது. இந்த இரு வாக்யங்களினாலும் ஜீவனை ஶரீரமாகக்கொண்ட பரமாத்மாவின் வ்யாப்தியாலே கார்யப்பொருள்களுக்கு நாமருபங்கள் செய்யப்படு

नामरूपव्याकरणं * तद्धेदं तर्ह्यव्याकृतमासीत्तन्नामरूपाभ्यां व्याक्रियत (बृ. ३. ४. ७) इत्यत्राप्युक्तम्। अतः कार्यावस्थः कारणावस्थश्च

---

கின்றன என்றும், அந்த நாமங்கள் சேதநாசேதனங்களைச் சொல்லுவதோடல்லாமல் பரமபுருஷன் வரையில் சொல்லுகின்றன என்றும், ஆகையால் ஒரே வேற்றுமையில் படிப்பது முக்₂யமானதே என்றும் காட்டப்பட்டதாயிற்று. 5. "தத்₃தே₄த₃ம தார்ஹ்யவ்யாக்ருதமாஸீத் தந்நாமரூபாப்₄யாம் வ்யாக்ரியத" [ப்₃ருஹ 3 4.7] [அத்தகைய இந்தப் பரம்பொருள் ப்ரளயகாலத்தில் 'அவ்யாக்ருத'மெனப்படும் மூலப்ரக்ருதியாகவே இருந்தது. ஸ்ருஷ்டிகாலத்தில் அந்த ப்₃ரஹ்மம் நாமரூபங்களையுடைய வ்யஷ்டிப்பொருளாக ஆயிற்று] என்று ப்₃ருஹதா₃ரண்யகத்தில் சேதநாசேதனங்களை ப்₃ரஹ்மம் வியாபித்திருப்பதைப் பற்றிய பேச்சில்லாமல் நாமரூப வ்யாகரணத்தைச் சொல்லியிருக்குமிடத்திலும் சா₂ந்தோ₃க்₃ய தைத்திரீயங்களில் போலவே ப்₃ரஹ்மத்தின் வ்யாப்தியை முன்னிட்ட நாமரூப வ்யாகரணத்தைச் சொல்லுவதாகவே கொள்ளவேண்டும்.

இனி முன் (கீ₃தாவ்யாக்₂யானம் பக்கம் 26 முதல் 28) நம்முடைய மதத்தின்மேல் பிறர் ஏறிட்ட குற்றங்கள் களையப்படுகின்றன. (1) "காரணமான ப்₃ரஹ்மத்தை அறிந்தால் கார்யமான உலகத்தை அறிந்ததாகும்" என்று வேத₃வாக்யங்கள் கூறுவது பொருந்தாது என்னும் ஆக்ஷேபம். இவ்வாக்ஷேபம் பொருந்தாது; ஏனெனில்: காரணத்தை அறிந்தால் கார்யத்தையும் அறிந்ததாகையாவது—கார்யஶப்₃த₃த்தினால் சொல்லப்படும் பொருள்கள் காரணத்தை அறிந்ததனால் அறியப்பட்டதாகையேயாகும். உத₃ாஹரணமாக வீற்றிருக்கும் ஒரு மனிதனை முதலில் பார்த்துவிட்டு, அம்மனிதனையே நடந்து செல்லுகையில் பிறகு பார்க்கும்போது "இம்மனிதன் முன்னமே காணப்பட்டவன்" என்னும் வழக்கு ஏற்படுகிறது. அதுபோன்றதே இதுவும். ஆகையால் காரணத்தை அறியும்போது கார்ய நிலை பற்றித் தெரிந்துகொள்ளாவிட்டாலும் இரண்டு நிலையிலும் அறியப்படும் பொருள் ஒன்றேயாகையால் காரணத்தை அறிந்தால் கார்யத்தையும் அறிந்ததாகும் என்பது முக்₂யமான வழக்கேயாகும். ப்₃ரஹ்ம விஷயத்திலும் ஸூக்ஷ்ம சேதநாசேதனப் பொருள்களை ஶரீரமாகக்கொண்ட பரமபுருஷனே காரணமாகிறான். ஸ்தூ₂ல சேதநாசேதனப் பொருள்களை ஶரீரமாகக்கொண்ட அவனே கார்யமாகவும் ஆகிறான். இப்படி இரண்டு நிலையையுமடைவது பரமபுருஷனாகிற ப்₃ரஹ்மமேயாகையால், காரணத்தைக் காட்டிலும் கார்யம்

स्थूलसूक्ष्मचिदचिद्वस्तुशरीरः परमपुरुष एवेति, कारणात् कार्यस्यानन्यत्वेन कारणविज्ञानेन कार्यस्य ज्ञाततयैकविज्ञानेन सर्वविज्ஞानं च

---

வேறுபடாமல் இருக்கிறது; அதனால் காரணத்தை அறிந்தால் கார்யமும் அறியப்பட்டதாகிறது. ஆக ப்₃ரஹ்மம் ஒன்றை அறிந்தால் கார்யப் பொருளான உலகம் முழுவதையும் அறிந்ததாகும் என்று வேத₃ வாக்யம் கூறியது மிகப் பொருந்தியதேயாகும். அத்₃வைத மதத்தில் இவ்வேத₃வாக்யம் அடியோடு பொருந்தாது. ஏனெனில்— ஒன்றான நிர்விஶேஷ ப்₃ரஹ்மத்தை அறிந்தால் இவ்வுலகிலுள்ள பொருள்கள் எல்லாம் அறிந்ததாகும் என்று இவ்வேத₃வாக்யத்துக்கு அவர்கள் பொருள்கூற வேண்டும். அவர்கள் மதத்தில் ஒன்றான நிர்விஶேஷமே உண்மையானது. இவ்வுலகிலுள்ள பொருள்கள் பொய்யானவை. உண்மையானதை அறிவதால் பொய்யானதும் அறிந்ததாக வேண்டுமெனில், அவ்விரண்டும் ஒன்றாகவேண்டிவரும். இது எப்படி ஒட்டும்? "ஒன்றானதை அறிந்தால் மற்றவையெல்லாம் பொய்யானது என்று அறிந்ததாகும்" என்று இவ்வாக்யத்துக்குப் பொருள் கூறுகிறோமெனில் வாக்யத்தில் இல்லாத பலபத₃ங்களை வருவித்துக்கொண்டு பொருள் கூறுகையாகிற குற்றம் வரும். "அவித்₃யையோடுகூடிய ஒன்றான ப்₃ரஹ்மத்தை அறிவதால் அதன் கார்யமான உலகத்தை அறிந்ததாகும்" என்று பொருள் கூறுகிறோமெனில்:" ஸூக்ஷ்ம சேதனசேதனங்களோடுகூடிய ப்₃ரஹ்மத்தை அறிவதால் அதன் கார்யமான ஸ்தூ₂ல சேதனசேதனங்களோடு கூடிய ப்₃ரஹ்மத்தை அறிந்ததாகும்" என்னும் எங்கள் பக்ஷத்தை நெருங்கியதாகவே ஆகும். ப்₃ரஹ்மம் அவித்₃யையோடு (அஜ்ஞானத் தோடு) கூடியது என்னும் ப்ரமாணவிருத்₃த₄மான கொள்கையை ஒப்புக்கொள்கையாகிற குற்றம் அவர்களுக்குத் தவிர்க்கவொண்ணாதது. ப₄ாஸ்கரயாத₃வப்ரகாஶ மதங்களிலும் ஸூக்ஷ்மமான அசேதன ஶக்தி யோடு கூடியது காரணமான ப்₃ரஹ்மம் என்று ஒப்புக்கொண்டே தீரவேண்டியிருக்கையால் "இந்த விஶிஷ்டமான பொருளை அறிந்தால் அதன் கார்யத்தை அறிந்ததாகும்" என்று நிர்வஹிக்க வேண்டிவரும். அப்போதும் "ப்₃ரஹ்மம் விகாரமற்றது தோ₃ஷ மற்றது" என்று கூறும் ஶ்ருதிவிரோத₄ம் அவர்களுக்கு ஏற்படு மாகையால் அந்த தோ₃ஷமற்ற எங்கள் மதமே பொருந்தியதாகும். (2) உலகுக்கும் ப்₃ரஹ்மத்துக்கும் ஸாமாநாதி₄கரண்யம் (ஒரே வேற்றுமையில் படிப்பது) விஶிஷ்டாத்₃வைத மதத்தில் ஒட்டாது என்னும் ஆக்ஷேபம். இவ்வாக்ஷேபமும் பொருந்தாது ஏனெனில்—

समीहितमुपपन्नतरम्। * हन्ताहमिमास्तिस्रो देवता अनेन जीवेनाऽत्मनाऽनुप्रविश्य नामरूपे व्याकरवाणि (छा. ६. ३. २) इति * तिस्रो देवताः इति सर्वमचिद्वस्तु निर्दिश्य तत्र स्वात्मकजीवानुप्रवेशेन नामरूपव्याकरणवचनात् सर्वे वाचकाश्शब्दाः अचिज्जीवविशिष्टपरमात्मन एव वाचका इति कारणावस्थपरमात्मवाचिना शब्देन कार्यवाचिनश्शब्दस्य सामानाधिकरण्यं मुख्यवृत्तम्। अतः स्थूलसूक्ष्मचिदचित्प्रकारं ब्रह्मैव कार्यं कारणं चेति ब्रह्मोपादानं जगत्। सूक்ष्मचिदचिद्वस्तुशरीरं

---

"ஹந்தாஹமிமாஸ்திஸ்ரோ தே₃வதா; அநேந ஜீவேந ஆத்மநா அநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணி" [சா₂ந் 6-3-2] என்று முன் எடுத்த வாக்யத்தில் 'மூன்று தே₃வதைகள்' என்று தீ நீர் பூ₄மி எனும் த்ரிவ்ருத்கரணம் செய்யப்பட்ட மூன்று பூ₄தங்களை எடுத்தது பஞ்சீகரணம் செய்யப்பட்ட ஐந்து பூ₄தங்களுக்கும் உபலக்ஷண மாகையாலே இப்பத₃ம் அசேதனப் பொருள்கள் முழுவதையும் காட்டுகிறது. அவ்வசேதனப் பொருள்களில் தன்னை அந்தர்யாமியாகக்கொண்ட ஜீவனை வியாபிக்கச் செய்து நாமருபவ்யாகரணம் செய்யப்படுகிறது என்று இவ்வாக்யத்தில் கூறுகையால், உலகில் அந்தந்தப் பொருள்களைச் சொல்லும் எல்லாச் சொற்களும் அந்தந்த அசேதனப் பொருள்களோடும் அவற்றுக்குள்ளிருக்கும் ஜீவர்களோடும் அந்தர்யாமியாகக் கூடிநிற்கும் பரமாத்மாவையும் சொல்லுகின்றன. இக்காரணத்தாலே காரண நிலையிலிருக்கும் பரமாத்மாவைச் சொல்லும் ஶப்₃த₃த்தோடு கார்யப்பொருள்களைச் சொல்லும் ஶப்₃த₃ங்களை ஒரே வேற்றுமையில் படிப்பது முக்₂யமானதேயாகும். ஶங்கர ப₄ாஸ்கர யாத₃வப்ரகாஶ மதங்களில் இந்த ஸாமாநாதி₄கரண்யத்தை அவர்களே லக்ஷணையாகக் கொள்கிறார்கள். 3. மிகவும் வேறுபட்ட உலகுக்கு விஶிஷ்டாத்₃வைத மதத்தில் ப்₃ரஹ்மம் உபாத₃ானகாரணமாக முடியாது என்னும் ஆக்ஷேபம். இவ்வாக்ஷேபமும் பொருந்தாது. முற்கூறிய நிருபணங்களிலிருந்து ஸூக்ஷ்ம சேதநாசேதனங்களை ப்ரகாரமாகக்கொண்ட ப்₃ரஹ்மமே காரணமாகவும், ஸ்தூ₂ல சேதநாசேதனங்களை ப்ரகாரமாகக்கொண்ட ப்₃ரஹ்மமே கார்யமாகவும் ஆகிறது என்று விளங்குகையால், இவ்வுலகத்துக்கு (ஸ்தூ₂லசேதநாசேதனங்களோடு கூடிய ப்₃ரஹ்மத்துக்கு) (ஸூக்ஷ்மசேதநாசேதனங்களோடு கூடிய) ப்₃ரஹ்மமே உபாத₃ானகாரணமாகிறது என்பதும்

ब्रह्मैव कारणमिति जगतो ब्रह्मोपादानत्वेऽपि संघातस्योपादानत्वेन चिदचितोर्ब्रह्मणश्च स्वभावासङ्करोऽप्युपपन्नतरः। यथा शुक्लकृष्णरक्ततन्तुसंघातोपादानत्वेऽपि चित्रपटस्य तत्तत्तन्तुप्रदेश एव शौक्ल्यादिसंबन्ध इति कार्यावस्थायामपि न सर्वत्र वर्णसङ्करः; तथा चिदचिदीश्वर-

---

தெளிவாகிறது இதனால் (கீ3தை முதலானவற்றில் சொல்லப்பட்ட) "உள்ளபொருள் அழியாது இல்லாதது உண்டாகாது" என்னும் ஸத்கார்யவாத3த்தோடும் நமது மதம் முரண்படாமலிருக்கிறது என்றும் தேறுகிறது. 4 ப்3ரஹ்மமே காரணமும் கார்யமுமாகுமானால் சேதனாசேதனங்களின் ஸ்வபா4வங்களும் ஈஶ்வரனின் ஸ்வபா4வமும் ஒன்றோடொன்று கலக்கநேரிடும் என்னும் ஆக்ஷேபம். இவ்வாக்ஷேபமும் பொருந்தாது. நமது மதத்தில் ஸூக்ஷ்ம சேதனாசேதனப்பொருள்களை ஶரீரமாகக்கொண்ட ப்3ரஹ்மமே உலகிற்கு உபாதா3ன காரணமாகிறது என்று கொள்ளுகிறோம். அதுவே ஸ்தூ2ல சேதனாசேதனங்களோடுகூடிய ப்3ரஹ்மமாகக் கார்யநிலையில் ஆகிறது என்றபடி. இப்படிச் சித3சிதீ3ஶ்வரர்களின் சேர்த்தியே உபாதா3நகாரணமாகிறபடியால் சித3சிதீ3ஶ்வரர்களின் ஸ்வபா4வங்கள் ஒன்றோடொன்று கலப்பதில்லை என்பதும் நமது மதத்தில் மிகப்பொருந்தும். உதா3ஹரணமாக சிறுவனாக இருக்கும் ஜீவன் வாலிபனாகிறான். அவ்விடத்தில் சிறுவனின் ஶரீரம், அந்த ஶரீரத்தை அதி4ஷ்டி2த்து நிற்கும் ஜீவனின் ஆத்மா ஆகிய இரண்டின் தன்மையும் ஒன்றோடொன்று கலப்பதில்லையன்றோ. அதுபோலவே இங்கும் என்று கண்டுகொள்வது. காரணநிலையில் ஸ்வபா4வங்கள் கலப்பதில்லை என்பதை நிரூபித்தோம். கார்யநிலையிலும் ஸ்வபா4வங்கள் கலப்பதில்லை என்பதற்கு ஓர் உதா3ஹரணம் காணலாம். அதாவது—வெளுப்பு கறுப்பு சிவப்பு நிறங்களுடைய நூல்களைக்கொண்டு நெய்யப்பட்ட பல வர்ண வஸ்த்ரத்தில் அந்தந்த நிறமுடைய நூல்கள் இருக்குமிடத்திலேயே அந்தந்த நிறங்கள் காணப்படுகின்றனவேயொழிய ஒரு நூலின் நிறம் மற்ற நிறமுடைய நூல்களின்மேல் கலப்பதில்லை என்பதைக் காண்கிறோம். அதுபோலவே சித3சிதீ3ஶ்வரர்களின் சேர்த்தியே உபாதா3நமாயிருந்தபோதிலும் கார்யநிலையிலும் சித்தினுடைய போ4க்த்ருத்வம், அசித்தினுடைய போ4க்3யத்வம், ஈஶ்வரனுடைய நியந்த்ருத்வம் முதலான தன்மைகள் ஒன்றோடொன்று கலப்பதில்லை. இதற்குமேல் ஓர் ஆக்ஷேபம் எழுகிறது:— முற்கூறிய பல நிற வஸ்த்ரத்தையும் அதற்குக் காரணமான ஒவ்வொரு நிற

संघातोपादानत्वेऽपि जगतः कार्यावस्थायामपि भोक्तृत्वभोग्यत्वनियन्तृत्वाद्यसङ्करः। तन्तूनां पृथक्स्थितियोग्यानामेव पुरुषेच्छया कदाचित्संहतानां कारणत्वं कार्यत्वं च; इह तु चिदचितोस्सर्वावस्थयोः परमपुरुषशरीरत्वेन तत्प्रकारतयैव पदार्थत्वात् तत्प्रकारः परमपुरुष एव कारणं कार्यं च; स एव सर्वदा सर्वशब्दवाच्य इति विशेषः। स्वभावभेदस्तदसङ्करश्च तत्र चात्र च तुल्यः। एवं च

---

நூலையும் ஒரே வேற்றுமையில் படிப்பதில்லையே; "நூல்களே வஸ்த்ரம்" என்பது வேண்டுமானால் ஒருவாறு பொருந்தலாம். ஒவ்வொரு நூலையும் வஸ்த்ரம் என்று எப்படிக் கூறமுடியும்? இங்கு சேதனாசேதனங்கள் ஒவ்வொன்றும் ப்$_3$ரஹ்மம் என்று காணப்படும் ஶாஸ்த்ர வழக்கு எப்படி ஒட்டும்? என்பது அவ்வாக்ஷேபம். இதற்கு ஸமாத$_4$ானம் பின்வருமாறு— நூல்கள் ஒவ்வொன்றும் தனித் தனியாயிருப்பவை. ஒரு ஸமயத்தில் ஒரு மனிதன் அவற்றைச் சேர்க்கும்போதே நூல்களுக்குக் காரணத்வமும் வஸ்த்ரத்துக்குக் கார்யத்வமும் ஏற்படுகிறது. இங்கோவெனில், காரண நிலையிலும் கார்யநிலையிலும் சித$_3$சித்துக்கள் பரமபுருஷனுடைய ஶரீரமாயுள்ளன. அவனுக்கு ப்ரகாரமாயிருந்துகொண்டே அவை ஸத்தைபெறுகின்றன. அவற்றை ப்ரகாரமாகக் கொண்ட பரமபுருஷனே காரணமாகவும் கார்யமாகவும் ஆகிறான். அதனாலேயே அவனே எப்போதும் தனக்கு ப்ரகாரமான எந்தப்பொருளைக் குறிக்கும் சொல்லாலும் குறிக்கப்படுகிறான் என்னும் சிறப்பு அவனுக்கே உரியதாயுள்ளது. நூல் வஸ்த்ர த்$_3$ருஷ்டாந்தத்தை எடுத்தது இங்கு எல்லா வகையிலும் ஒற்றுமையைக் கருதியல்ல; வெவ்வேறுபட்ட பொருள்கள் ஒன்று கூடிக் கார்யத்தை உண்டாக்கும்போது கார்யநிலையில் வெவ்வேறான அவற்றின் தன்மைகள் ஒன்றோடொன்று கலப்பதில்லை என்னும் விஷயத்துக்கே த்$_3$ருஷ்டாந்தம் கூறப்பட்டது. ப்ரகாரப்ரகாரிபா$_4$வமுடைய ஈஶ்வரன் விஷயத்திலேயே ஸாமாநாதி$_4$கரண்ய ப்ரயோக$_3$ம் [ஒரே வேற்றுமையில் படிப்பது] ஏற்படும். தந்து படங்கள் ப்ரகார ப்ரகாரிபா$_4$வமுள்ளவையன்றாகையால் அவற்றுக்கு அத்தகைய ப்ரயோக$_3$முண்டாக வழியில்லை. 5. ப்$_3$ரஹ்மம் உலகமாகப் பரிணமிக்கிறது என்று கொள்ளும் விஶிஷ்டாத்$_3$வைத மதத்தில் ப்$_3$ரஹ்மம் விகாரமற்றது என்று கூறும் நிர்விகார ஶ்ருதிவிரோத$_4$ம் வரும் என்னும் ஆக்ஷேபம். இவ்வாக்ஷேபமும் பொருந்தாது. இப்படி ப்$_3$ரஹ்மம் கார்யமாகும்

सति परस्य ब्रह्मणः कार्यानुप्रवेशेऽपि स्वरूपान्यथाभावाभावादविकृतत्व-मुपपन्नतरम्। स्थूलावस्थस्य नामरूपविभागविभक्तस्य चिदचिद्वस्तुन आत्मतयाऽवस्थानात्कार्यत्वमप्युपपन्नम्। अवस्थान्तरापत्तिरेव हि कार्यता।

---

போதும் சேதநாசேதனங்களின் ஸ்வபா₄வம் அதற்கு வராது என்று தெரினவளவில் ப்₃ரஹ்மத்தின் ஸ்வரூபம் வேறுபாடடையாமல் நிர்விகாரமாகவே இருக்குமாகையால் நிர்விகார ஶ்ருதி விரோத₄முமில்லை. நாம் ப்₃ரஹ்மஸ்வரூபத்தை மாத்திரம் உபாதா₃ன மாகக் கொள்ளவில்லை. ஸூக்ஷ்மசேதநாசேதனங்களோடு கூடிய ப்₃ரஹ்மஸ்வரூபத்தையே உபாத₃ாநமாகக் கொள்கிறோம். காரண நிலையோடு கார்ய நிலையோடு வாசியில்லாமல் சேதநாசேதனங்களின் தன்மைகள் ப்₃ரஹ்மத்துக்கு வருவதில்லை என்றும் கொள்கிறோம். நிர்விகாரஶ்ருதி ப்₃ரஹ்மஸ்வரூபம் விகாரமற்றது என்பதையே காட்டுகிறது. சேதநாசேதனங்களோடு கூடிய ப்₃ரஹ்மமே உபாத₃ாந காரணமாகவும் கார்யமாகவுமாகின்றது என்று காரணவாக்யங்கள் காட்டுகின்றன. ஆகையால் இவற்றினிடையே முரண்பாடில்லை. ப்₃ரஹ்மஸ்வரூபமே விகாரமடைகிறது என்னும் யாத₃வப்ரகாஶ மதத்திலேயே நிர்விகார ஶ்ருதி சிறிதும் இடம் பெறாமல் பொருளற்றுப் போகிறது. நமது மதத்திலோவெனில் ப்₃ரஹ்மஸ்வரூபத்தின் எப்பகுதியிலும் விகாரத்தை ஒப்புக்கொள்ளவில்லையாகையால் நிர்விகார ஶ்ருதி மிகப்பொருந்தியதாகிறது. (6) விகாரமற்றதான ப்₃ரஹ்மம் கார்யமாகிறது என்று கூறுவது பொருந்தாது என்னும் ஆக்ஷேபம். இவ்வாக்ஷேபமும் பொருந்தாது. முன் பதிலில் கூறியதுபோலவே ஸூக்ஷ்ம சேதநாசேதனங்களோடு கூடிய ப்₃ரஹ்மமே ஸ்தூ₂லசேதநாசேதனங்களோடு கூடியதாகக் கார்யநிலையில் ஆகிறது. விஶேஷணங்களான சேதநாசேதனங்களே ஸ்தூ₂லநிலையில் நாமரூபப்பிரிவையுடையவையாகின்றன. அந்நிலையிலும் ப்₃ரஹ்மம் அவற்றுக்கு ஆத்மாவாகவேயிருக்கையால் ப்₃ரஹ்மமே கார்யமாகிறது என்று கூறுவதிலும் குறையில்லை. ஒருநிலையிலுள்ள ஒரு பொருள் மற்றொரு நிலையையடைவது தானே கார்யத்வம் எனப்படுகிறது. "எப்படிச் சொன்னாலும் விஶேஷணமான சேதநாசேதனங்களுக்குக் கார்யத்வம் வருமேயொழிய விஶேஷ்யமான நிர்விகார ப்₃ரஹ்மத்துக்கு எப்படிக் கார்யத்வம் வரும்? எனில்; ஸ்தூ₂லநிலையிலுள்ள சேதநாசேதனங்களை நியமிப்பது த₄ரிப்பது முதலானவற்றோடு கூடியதாக ப்₃ரஹ்மமும் இந்நிலையில் ஆகிறபடியால், இந்நிலையையுடைத்தாகையாகிற கார்யத்வம் ப்₃ரஹ்மத்துக்குமுண்டு. (7) ப்₃ரஹ்மம் கல்யாண கு₃ணங்களோடு கூடியது என்று

निर्गुणवादाश्च परस्य ब्रह्मणो हेयगुणसंबन्धाभावादुपपद्यन्ते। *अपहतपाप्मा विजरो विमृत्युर्विशोको विजिघत्सोऽपिपासः (छा.८-१-५) इति हेयगुणान् प्रतिषिध्य *सत्यकामस्सत्यसङ्कल्पः इति कल्याणगुणगणान्विदधतीयं श्रुतिरेवान्यत्र सामान्येनावगतं गुणनिषेधं हेयगुणविषयं व्यवस्थापयति।

---

ஒப்புக்கொள்ளும் விஶிஷ்டாத்₃வைத மதத்தில் ப்₃ரஹ்மம் நிர்கு₃ணம் என்று கூறும் வேத₃வாக்யங்கள் பொருந்தமாட்டா எனனும் ஆக்ஷேபம். இவ்வாக்ஷேபமும் பொருந்தாது. 'ப்₃ரஹ்மம் கு₃ணமற்றது'' என்று பொதுவாக நிர்கு₃ணவாக்யங்கள் கு₃ணத்தைத் தள்ளுகின்றன. மற்ற பல வாக்யங்கள் ''ப்₃ரஹ்மம் ஸர்வஜ்ஞத்வம் (எல்லாமறிந்ததா யிருக்கை) முதலான கல்யாண கு₃ணங்களையுடையது'' என்று விதி₄க் கின்றன. இவ்விரண்டும் ஒன்றோடொன்று முரண்படாமலிருப்பதற் காக உத்ஸர்க்க₃ாபவாத₃ நியாயத்தைக் கொண்டு விதி₄க்கப்பட்ட கல்யாணகு₃ணங்களைக் காட்டிலும் வேறுபட்ட தாழ்ந்த கு₃ணங் களையே நிர்க்கு₃ணஶ்ருதிகள் தள்ளுகின்றன என்று கொள் வதே தக்கதாகும். ''அபஹதபாப்மா விஜர: விம்ருத்யு: விஶோக: விஜிக₄த்ஸ: அபிபாஸ:'' [ச₂ாந் 8-1-5] [ப்₃ரஹ்மம் பாபமற்றது, கிழத்தனமற்றது, மரணமற்றது, வருத்த மற்றது, பசியற்றது, தாகமற்றது] என்று தாழ்ந்த கு₃ணங்கள் ப்₃ரஹ்மத்திடம் இல்லை என்று முழங்கும் வேத₃வாக்யமே அடுத்த படியாக ''ஸத்யகாம: ஸத்யஸங்கல்ப:'' [பழுதுபடாத கல்யாண கு₃ணங்களையும் தடைபடாத ஸங்கல்பத்தையும் உடையது] என்று கல்யாணகு₃ணங்களை விதி₄ப்பது எந்த நியாயத்தையும் எதிர்பாராமல் இவ்விஷயத்தை உறுதிப்படுத்துகிறது. நியாயங்களும் இதையே வலியுறுத்துகின்றன. உத்ஸர்க்க₃ாபவாத₃ந்யாயத்தாலே, விதி₄க்கப் பட்ட கல்யாணகு₃ணங்களைக் காட்டிலும் வேறுபட்ட தாழ்ந்த கு₃ணங்களையே நிர்கு₃ணவாக்யம் தள்ளுகிறது என்று இந்த வேத₃ வாக்யமே காட்டித்தருகிறது. மேலும் நிர்கு₃ணவாக்யம் பொதுவாக கு₃ணங்களைத் தள்ளுகிறது. இந்த வேத₃வாக்யத்தின் முற்பகுதி தாழ்ந்த கு₃ணங்களைக் குறிப்பிட்டு எடுத்துத்தள்ளுகிறது. நிர்கு₃ண வாக்யத்தில் பொதுவாகத் தள்ளப்பட்ட கு₃ணங்கள் இந்த வாக் யத்தின் முற்பகுதியில் குறிப்பிட்டுத் தள்ளப்பட்ட தாழ்ந்த கு₃ணங் களேயாகுமென்று ஸாமாந்யவிஶேஷந்யாயத்திலிருந்தும் தேறுகிறது. மேலும், கு₃ணஶப்₃த₃ம் ஶாஸ்த்ரங்களில் ப்ரக்ருதியின் கு₃ணங்க ளான ஸத்வரஜஸ்தமோ கு₃ணங்களைக் குறிப்பதையும் காண்கிறோம்.

ज्ञानस्वरूपं ब्रह्मेति वादश्च सर्वज्ञस्य सर्वशक्तेर्निखिलहेयप्रत्यनीककल्याण-गुणाकरस्य ब्रह्मणस्स्वरूपं ज्ञानैकनिरूपणीयं स्वप्रकाशतया ज्ञानस्वरूपं चेत्यभ्युपगमादुपपन्नतरः। * यस्सर्वज्ञस्सर्ववित् (मु. १. १. १०) पराऽस्य शक्तिर्विविधैव श्रूयते स्वाभाविकी ज्ञानबलक्रिया च (श्वे. ६.८) * विज्ञातारमरे केन विजानीयात् (बृ. ४. ४. १४) इत्यादिका

நிர்கு3ணவாக்யங்கள் ப்ரக்ருதிகு3ணங்களான ஸத்வரஜஸ்தமோ கு3ணங்கள் ப்3ரஹ்மத்திடம் இல்லை என்று கூறுவதாகக்கொண்டாலும் ஸகு3ண நிர்கு3ண வாக்ய விரோத4ம் இல்லாமல்போகிறது. நிர்கு3ணவாக்யங்கள் பொதுவாகவே கு3ணங்களைத்தள்ளுவதையும், "அபஹதபாப்மா" என்னும் வாக்யம் தாழ்ந்த கு3ணங்களைக் குறிப்பிட்டுத் தள்ளுவதையும், பல வேத3வாக்யங்கள் கல்யாணகு3ணங்களைக் குறிப்பிட்டு விதி4ப்பதையும், எந்த வேத3வாக்யமும் கல்யாண குணங்களைக் குறிப்பிட்டு எடுத்துத்தள்ளாததையும் நோக்கும் நடுநிலையாளருக்கு நாம் கூறியபடி உத்ஸர்க்க3ாபவாத3ந்யாயத்தைக் கொண்டோ, ஸாமாந்யவிஶேஷந்யாயத்தைக் கொண்டோ, நிர்கு3ண வாக்யத்தில் கு3ணஶப்3த3ம் ஸத்வரஜஸ்தமோ கு3ணங்களைக் குறிப்பதாகக்கொண்டோ ஸகு3ண நிர்கு3ணவாக்யங்களில் மேலெழத் தோன்றும் விரோத4த்தைத் தவிர்ப்பதே நியாயமானது என்று நன்கு விளங்கும். அத்3வைதிகள் அபச்சே2தந்யாயத்தைக்கொண்டு நிர்குண3வாக்யங்கள் ஸகு3ணவாக்யங்களைத் தள்ளுகின்றன என்று கூறுவது சிறிதும் பொருந்தாது என்று விஶிஷ்டாத்3வைத விஜயம் முதல் பாகத்தில் விரிவாக நிரூபிக்கப்பட்டது இங்கு அநுஸந்தி4க்கத் தக்கது.

இனி, ப்3ரஹ்மத்தை ஜ்ஞானஸ்வரூபம் என்று வேத3வாக்யங்கள் கூறுகையால் அதற்கு ஜ்ஞானம் முதலானவை கு3ணமாகமாட்டா என்று அத்3வைதிகள் உரைப்பதும் பொருந்தாது. ஏனெனில்—'யஸ்ஸர்வஜ்ஞ: ஸர்வவித்" [முண்ட3 1-1-10] [எவன் எல்லாப் பொருள்களின் ஸ்வருபஸ்ப4ாவங்களை அறிகிறானோ] "பராஸ்ய ஶக்திர் விவிதை4வ ஶ்ருயதே ஸ்வாப4ாவிகீ ஜ்ஞாநப3லக்ரியா ச" [ஶ்வே 6-8] "[பரமபுருஷனுக்கு மேலானதும், இயல்வானதும், பலவிதமானதுமான ஶக்தியும், ஜ்ஞானமும், ப3லமும், செயலும் உண்டென்று ஓதப்படுகின்றது] "விஜ்ஞாதாரமரே கேந விஜாநீயாத்" [ப்3ருஹ 4-4-14] [அறிபவனை பரமாத்மாவை எதனால்

ज्ञातृत्वमावेदयन्ति। * सत्यं ज्ञानम् (आ. १) इत्यादिकाश्च ज्ञानैक-निरूपणीयतया स्वप्रकाशतया च ज्ञानस्वरूपताम्; * सोऽकामयत,

---

அறியலாம்?] முதலான வேத3வாக்யங்கள் ப்3ரஹ்மத்தை ஜ்ஞானம் முதலானவற்றை கு3ணமாக உடையது என்று முழங்குகையாலே எல்லாமறிந்ததாய், எல்லா ஶக்தியுமுடையதாய், தாழ்வுகளுக்கெல்லாம் எதிர்த்தட்டாயிருப்பதாய், கல்யாணகு3ணங்களுக்கெல்லாம் கொள் கலமாயிருப்பதான ப்3ரஹ்மத்தின் ஸ்வரூபம் ஜ்ஞானத்தையிட்டே நிரூபிக்கவேண்டும்படியாய், தானே ப்ரகாஶிப்பதாகையாலே ஜ்ஞான ஸ்வரூபமாகவும் இருக்கிறது என்றே "விஜ்ஞாநம் ஆநந்த3ம் ப்3ரஹ்ம" "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்3ரஹ்ம" [தைத்-ஆந] முதலான வாக்யங்கள் கூறுவதாகக்கொண்டு விடலாமாகையாலே அவற்றைக்கொண்டு கு3ணங்களைத் தள்ளவேண்டிய அவஶ்யமில்லை. ஜ்ஞானம் ஆநந்த3ம் முதலானவை ப்3ரஹ்மத்துக்கு ஸ்வரூப நிருபகங்கள் என்பதே அந்த வேத3வாக்யங்களுக்குக் கருத்தாகும். ஸ்வரூப நிருபக த4ர்மத்தைச் சொல்லும் ஶப்3த3ங்கள் த4ர்மியையும் காட்ட வல்லவை என்பது 'தத்3கு3ணஸாரதவாத்து தத்3வ்யபதே3ஶ: ப்ராஜ்ஞவத்" [2-3-29] [ஜ்ஞானகு3ணத்தை ஸாரமாகக்கொண்டிருப்பதாகையாலே (ஆத்மா) ஜ்ஞானமென்று கூறப்படுகிறது; ஸர்வஜ்ஞனை பரமாத்மா (ஆநந்த3கு3ணத்தை ஸாரமாக உடையவனாயிருப்பதால் ஆநந்த3ம் என்று கூறப்படுவது)போலே.] "யாவதா3த்மபா4விதவாச்ச ந தோ3ஷ: தத்3த3ர்ஶநாத்" [2-3-30] [ஆத்மா இருக்கும் வரையிலும் (நித்யமாக அறிவும்) இருப்பதாலும் (ஆத்மாவை ஜ்ஞானமென்பதில்) குறையில்லை. (நித்யத4ர்மமான கோ3த்வாதி3களையிட்டுப் பசு முதலானவை கோ3முதலிய ஶப்3த3த்தால்) வழங்கப்படுவதைக் காண்கையால்] என்று ப்3ரஹ்மஸூத்ரங்களிலும் சொல்லப்பட்டது. முன்னெடுத்த 30-வது ஸூத்ரத்தில் உள்ள சகாரம ஆத்மா ஜ்ஞானஸ்வரூபமாயிருப்பதோடல்லாமல் ஜ்ஞானத்தை த4ர்மமாகவும் (கு3ணமாகவும்) உடையதாய் இருக்கிறது என்று காட்டுகிறது. ஜீவாத்மபரமாத்மாக்களின் ஸ்வரூபமும் த4ர்மபூ4தஜ்ஞானமும் தாமே பிரகாஶிப்பவையாகையாலே இரண்டையும் ஜ்ஞானமென்று வழங்குவது பொருத்தமே என்று கண்டு கொள்வது. அத்3வைதிகள் ப்3ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை ஜ்ஞானம் என்று ஒப்புக்கொண்டு அதற்கு ஜ்ஞானமாகிற கு3ணம் கிடையாது என்கிறார்கள். அவர்களுக்கு ப்3ரஹ்மத்தை ஜ்ஞானத்தையுடையதாகக் காட்டும் முற்கூறிய வேத3வாக்யங்கள் முரண்படுகின்றன.

बहु स्याम् (आ.) * तदैक्षत बहु स्याम् (छा. ६. २. ३) * तन्नाम-रूपाभ्यां व्याक्रियत (बृ. ३. ४. ७) इति ब्रह्मैव स्वसङ्कल्पाद्विचित्र-स्थिरत्रसरूपतया नानाप्रकारमवस्थितमिति तत्प्रत्यनीकाब्रह्मात्मकवस्तु-नानात्वमतत्त्वमिति प्रतिषिध्यते * मृत्योस्स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति, नेह नानास्ति किञ्चन (कठ. ४ १०. ११) * यत्र

---

நையாயிக வைசேஷிகர்கள் ப்$_3$ரஹ்மத்துக்கு ஜ்ஞானமாகிற த$_4$ர்மத்தை ஒப்புக்கொண்டு அதன் ஸ்வரூபம் கல்போலே ஜட$_3$மானது என்று கொள்ளுகிறார்கள். இவர்களுக்கு ப்$_3$ரஹ்மத்தை ஜ்ஞான ஸ்வரூபமாகக்கூறும் வாக்யங்கள் முரண்படுகின்றன. ப்$_3$ரஹ்மத்தை ஜ்ஞானமயமாகவும், ஜ்ஞானத்தையுடையதாகவும் ஒப்புக்கொள்ளும் நம்முடைய மதத்திலேயே இவ்விரண்டு வகையான வாக்யங்களும் மிகப்பொருந்தி நற்கின்றன. இனி 'ப்$_3$ரஹ்மத்தைக் காட்டிலும் வேறுபொருள் கிடையாது' என்று பே$_4$த$_3$த்தை நிஷேதி$_4$க்கும் வாக்யங்களுக்கு, ப்ரஹ்மத்துக்கும் சேதனாசேதனங்களுக்கும் பே$_4$த$_3$த்தை விதி$_4$க்கும் வாக்யங்களோடு முரண்படாமல் பொருள்கொள்ளும் போது, ப்$_3$ரஹ்மத்தைத்தவிர ஸ்வதந்த்ரமான வேறு பொருள் கிடையாது என்றே பொருள் கொள்ளவேண்டும். அதாவது— 'ஸோ[illegible]யத ப$_3$ஹு ஸ்யாம்'' [தை-ஆந] [அந்த ப்$_3$ரஹ்மம் தானே பலவாவதாக ஸங்கல்பித்தது] ''ததை$_3$க்ஷத ப$_3$ஹு ஸ்யாம்'' [சா$_2$ந். 6-2-3] [அந்த ப்$_3$ரஹ்மம் பல பொருள்களாக ஆவதாக ஸங்கல்பித்தது] ''தந்நாமரூபாப்$_4$யாம் வ்யாக்ரியத'' [ப்$_3$ருஹ 3.4.7] [ப்$_3$ரஹ்மம் தனக்குத்தானே நாமங்களையும், ரூபங்களையும் படைத்துக்கொண்டது] முதலான வேதவாக்யங்கள் ப்$_3$ரஹ்மமே தன் ஸங்கல்பத்தால் ஆஶ்சர்யமான ஸ்த$_2$ாவரஜங்க$_3$மப் பொருள்களாகப் பலவித$_4$மாகத் தன்னை ஆக்கிக்கொண்டது என்று கூறுகின்றன. இதிலிருந்து ப்$_3$ரஹ்மாத்மகமான பல பொருள்கள் உண்டு என்று தேறுகின்றது. இதற்கு விரோத$_4$மில்லாமல் பொருள் கொள்ளும்போது ''ம்ருத்யோஸ்ஸ ம்ருத்யுமாப்னோதி ய இஹ நாநேவ பஶ்யதி'' [கட$_2$ 4-10] [எவனொருவன் இந்த ப்$_3$ரஹ்மத்திடம் பே$_4$த$_3$த்தைக் காண்கிறானோ அவன் ஸம்ஸாரத்திலும் கொடிய ஸம்ஸாரத்தை அடைகிறான்] ''நேஹ நாநாऽஸ்தி கிஞ்சந'' [கட$_2$ 4-11] [இந்த ப்$_3$ரஹ்ம விஷயத்தில் சிறிது பே$_4$த$_3$முமில்லை] ''யத்ர ஹி த்$_3$வைதமிவ ப$_4$வதி ததி$_3$தர இதரம் பஶ்யதி, யத்ர த்வஸ்ய ஸர்வமாத்மைவாபூ$_4$த் தத் கேந கம் பஶ்யேத்''

हि द्वैतमिव भवति तदितर इतरं पश्यति यत्र त्वस्य सर्वमात्मैवा-भूत्तत्केन कं पश्येत् (बृ. ४. ४. १४) इत्यादिना; न पुनः *बहु स्यां प्रजायेय (आ. ६; छा. ६. २. ३) इत्यादिश्रुतिसिद्धं स्वसङ्कल्पकृतं ब्रह्मणो नानानामरूपभाक्त्वेन नानाप्रकारत्वमपि निषिध्यते। * यत्र त्वस्य सर्वमात्मैवाभूत् (बृ. ६. ४. १५) इति निषेधवाक्यारम्भे च तत्स्थापितं * सर्वं तं परादाद्योऽन्यत्रात्मनस्सर्वं वेद (बृ ४. ४. ६)

---

[4-4-14] [இரண்டு பொருள்கள் இருந்தால் ஒருவன் மற்றொன்றைப் பார்க்க முடியும். எவனுக்கு எல்லாப்பொருளும் பரமாத்மாவே ஆகிறதோ அவன் எதைக்கொண்டு வேறொரு பொருளைக் காண்பான்] முதலான வாக்யங்களில் ப்₃ரஹ்மத்தைத் தவிர வேறு பொருளில்லை என்று கூறுவது, முற்கூறிய வாக்யங்களில் சொன்னபடி ப்₃ரஹ்மாத்மகமாயிராமல் ஸ்வதந்த்ரமாக வேறு பொருள் இல்லை என்னும் கருத்துடையதே என்றே கொள்ளவேண்டும். அப்படிக் கொள்ளாமல் ப்₃ரஹ்மத்துக்கு கு₃ணங்களும், செல்வங்களும், ரூபங்களும் உண்டென்று விதி₄க்கும் பல்லாயிரக்கணக்கான வாக்யங்களை இந்த ஒரு சில வாக்யங்களைக்கொண்டு தள்ளுவது எந்த நியாயத்துக்கும் பொருந்தாது. "ப₃ஹு ஸ்யாம் ப்ரஜாயேய" [தை ஆ 6. சா₂ந் 6-2 3] முதலான முன் எடுத்த ஶ்ருதிகளில் ப்₃ரஹ்மம் தன ஸங்கல்பத்தாலே தன்னை ப₃ஹுப்ரகாரமாக நாமரூபங்களையுடையதாக ஆக்கிக்கொண்டது என்று கூறியிருக்கும்போது, அவற்றை இந்த வாக்யங்கள் தள்ளுகின்றன என்று கூறுவது எப்படிப்பொருந்தும்? "யத்ர த்வஸ்ய ஸர்வமாத்மைவாபூ₄த்" [ப்₃ருஹ 4-4-14] என்று பே₄த₃த்தை நிஷேதி₄க்கும் வாக்யத்தின் தொடக்கத்திலேயே 'ஸர்வம் தம் பராதா₃த்₃யோऽந்யத்ராத்மநஸ் ஸர்வம் வேத₃" [ப்₃ருஹ 4-4-6] [எவனொருவன் பரமாத்மாவை விட்டுப் பிரிந்தவையாக எல்லாப் பொருள்களையும் காண்கிறானோ, அவனை எல்லாப்பொருள்களும் நிந்திக்கும்] என்னும் வாக்யம் ப்₃ரஹ்மத்தைவிட்டுப் பிரிந்து நிற்கும் வேறொரு பொருளில்லை என்பதே பின்னால் வரப்போகும் பே₄த₃த்தைத் தள்ளும் வாக்யங்களின் கருத்து என்று காட்டுகிறது. உபக்ரமாதி₄கரண ந்யாயத்தின்படி ஆரம்ப₄த்திலுள்ள இந்த வாக்யத்துக்கு அனுகு₃ணமாகவே பின்னால் வரும் பே₄த₃நிஷேத₄க வாக்யங்களுக்குப் பொருள் கூறவேண்டும் என்று தேறுகிறது. "தஸ்ய ஹவா ஏதஸ்ய மஹதோ பூ₄தஸ்ய நிஶ்வஸிதமேதத்₃யத்₃

* तस्य ह वा एतस्य महतो भूतस्य निश्वसितमेतद्यदृग्वेदः (बृ. ४. ४. १०) इत्यादिना। एवं चिदचिदीश्वराणां स्वरूपभेदं स्वभावभेदं च वदन्तीनां कार्यकारणभावं कार्यकारणयोरनन्यत्वं वदन्तीनां च सर्वासां श्रुतीनामविरोधः, (चिदचितोः परमात्मनश्च सर्वदा शरीरात्मभावं शरीरभूतयोः कारणदशायां नामरूपविभागानर्हसूक्ष्मदशापत्तिं कार्यदशायां च तदर्हस्थूलदशापत्तिं वदन्तीभिः) श्रुतिभिरेव

---

ருக்3வேத3:" [ப்3ருஹ 4-4-10] [அப்படிப்பட்ட இந்த மஹாபூ4தமான பரமாத்மாவுக்கு ருக்3வேத3ம் முதலானவை மூச்சுக்காற்றுகுப] என்னும் உபக்ரமத்தை அடுத்துள்ள வாக்யத்திலும் பரமாத்மாவுக்கும் மற்ற பொருள்களுக்கும் பே4த3ம் ஸ்த2ாபிக்கப்பட்டது. முன் எடுத்த "ப3ஹுஸ்யாம் ப்ரஜாயேய" [தை ஆ 6. ச2ாந் 6-2-3] என்று பே4த3த்தை ஸ்த2ாபிக்குமிடங்களில் மேலே பே4த3த்தை நிஷேதி4க்கும் வாக்யங்களிலேயாகையால் அவ்விடத்தில் இங்குபோலே "மேலே தள்ளுவதற்காக முன்னம் பே4த3த்தைச் சொல்லுகிறது" என்று குயுக்திவாதம் பண்ணவுமிடமில்லை. இவ்வண்ணமாக சித், அசித், ஈஶ்வரன் என்னும் மூன்று தத்துவங்களும் ஸ்வரூபத்திலும், ஸ்வப4ாவத்திலும் வேறுபட்டவை என்று கூறும் பே4த3 ஶ்ருதிகளுக்கும், ப்3ரஹ்மமே காரணமாகவும் கார்யமாகவும் ஆகிறது என்றும், கார்யகாரணங்கள் வேறல்ல என்றும் கூறும் அபே4த3ஶ்ருதிகளுக்கும் மேலெழுந்தோன்றும் விரோத4ம்—சேதநாசேதனங்களுக்கும் பரமாத்மாவுக்கும் எப்போதும் ஶரீராத்மத்தன்மை உள்ளதென்றும், ஶரீரமாயிருக்கும் சேதநாசேதனங்கள் காரணநிலையில் நாமரூபப் பிரிவற்ற ஸூக்ஷ்மநிலையை அடைகின்றன என்றும், அவை கார்யநிலையில் நாமரூபப் பிரிவையுடைய ஸ்தூ2லநிலையை அடைகின்றன என்றும் கூறும் க4டகஶ்ருதிகளாலே நம்முடைய ஸித்3தா4ந்தத்தில் தவிர்க்கப்படுகிறது என்று ஒரு ந்யாயத்தை எதிர்பாராமல் வேத3வாக்யங்களிலிருந்தே தெளிவாக விளங்குகையால் நமது மதமே எல்லா வேத3வாக்யங்களுக்கும் பொருந்திய மதமாகும் எனத் தெளிவாகிறது. மற்ற மதங்களில் சில வேத3வாக்யங்கள் தள்ளப்படுகின்றன. வேத3வாக்யங்களில் சொல்லப்படாத சில விஷயங்கள் கற்பிக்கப்படுகின்றன. ஆகையால் ப்3ரஹ்மத்துக்கு அஜ்ஞானத்தைச் சொல்லும் அத்3வைத மதமும் ப்3ரஹ்மத்துக்கு ஓர் உபாதி4யினாலே பே4த3த்தைச்சொல்லும் ப4ாஸ்கர மதமும், ப்3ரஹ்மமே உலகமாகப் பரிணமிக்கிறது என்று

ज्ञायत इति ब्रह्माज्ञानवादस्यौपाधिकब्रह्मभेदवादस्यान्यस्याप्यपन्याय-मूलस्य सकलश्रुतिविरुद्धस्य न कथंचिदप्यवकाशो दृश्यत इत्यलमति विस्तरेण ॥ २ ॥

तत्क्षेत्रं यच्च यादृक्च यद्विकारि यतश्च यत्।
स च यो यत्प्रभावश्च तत्समासेन मे शृणु ॥

3. **தத் க்ஷேத்ரம் யச்ச யாத்₃ருக் ச யத்₃விகாரி யதஶ்ச யத்।**
**ஸ ச யோ யத்ப்ரப₄ாவஶ்ச தத் ஸமாஸேந மே ஶ்ருணு ॥**

**தத் க்ஷேத்ரம்**—முன் இரண்டு ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட க்ஷேத்ரம் எனப்படும் ஶரீரம், **யத் ச**—எந்த த்₃ரவயத்தினலானது என்பதையும், **யாத்₃ருக் ச**—எவற்றுக்கு இருப்பிடமாயிருக்கிறது என்பதையும, **யத்₃விகாரி**—எவையாகப் பரிணமிக்கிறது என்பதையும், **யத: ச**—எந்தப் பயனுக்காக இது உண்டாயிருக்கிறது என்பதையும், **யத்**—எந்த ஸ்வரூபத்தையுடையது இது என்பதையும், **ஸ: ச ய:**—முன இருஶ்லோகஙகளில் சொலலப்பட்டக்ஷேத்ரஜ்ஞன ஜீவன் எந்த ஸ்வரூபத்தை உடையவன் என்பதையும், **யத்ப்ரப₄ாவ: ச**—அவனுடைய பெருமை எத்தகையது என்பதையும, **தத்**-(ஆகிய) இவையனைத்தையும், **ஸமாஸேந**-சுருக்கமாக, **மே ஶ்ருணு**—என்னிடமிருந்து கேட்பாயாக.

---

கூறும் யாத₂வப்ரகாஶ மதமும், பரமாணுகாரண வாத₃ம் முதலானவற்றைச் செய்யும் நையாயிக மதமும், இதுபோன்ற மற்ற பல மதங்களும், எல்லா வேத₃வாக்யங்களுக்கும் முரண்பட்டவையாகையாலும், தவறன நியாயங்களால் (யுக்திகளால்) எழுந்தவையாகையாலும், நல்லோர்களால் ஒரு சிறிதும் ஏற்றுக்கொள்ளத்தக்கவை அல்ல என விளங்கும். விரிவிற்கஞ்சி இத்துடன் நிறுத்திக்கொள்கிறேம். இதன் விரிவு வேத₃ார்த்த₂ ஸங்க்₃ரஹம், ஸ்ரீப₄ாஷ்யம் முதலானவற்றில் காணத்தக்கது. இங்கு "அத்ரேத₃ம் தத்த்வம்" என்று தொடங்கி, "ந கத₂ஞ்சித₃ப்யவகாஶோ த்₃ருஶ்யதே" என்னுமளவாக உள்ள மஹாவாக்யம் ஸ்ரீப₄ாஷ்யத்தில் ஜிஜ்ஞாஸாதி₄கரணத்தின் இறுதிப் பகுதியில் அதி₄கரணார்த்த₂த்தை விசாரிப்பதற்கு முன்பாக, சிறிது மாறுதல்களுடன் அப்படியே கொடுக்கப்பட்டுள்ளது காணத்தக்கது. 2.

॥भा॥ तत्क्षेत्रं यच्च—यद्द्रव्यम्, यादृक्च—येषामाश्रयभूतम्, यद्विकारि—ये चास्य विकाराः, यतश्च—यतो हेतोरिदमुत्पन्नम्,

---

3\. அக்கேத் திரம்யாதா மாங்கெவ்வா றெவ்விகற்பு
மிக்கெதிலா மெம்மயமாய் மேவுமருந்—தக்கவிவன்
ருனேவ னெத்தகையோன் சார்ந்தசுருக் கத்ததனே
யானேர்ந்து சொல்லக்கே ளிங்கு.

**அக்கேத்திரம்**—முன் இரண்டு ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட 'க்ஷேத்ரம்' எனப்படும் ஶரீரம், **யாதாம்**—எந்த த்₃ரவ்யத்தினுலானது, **ஆங்கு எவ்வாறு**—எவற்றுக்கு இருப்பிடமாயிருக்கிறது, **எவ்விகற்பு**—எவையாகப் பரிணமிக்கிறது, **மிக்கு எதிலாம்**—எந்தப் பயனுக்காக இது உண்டாயிருக்கிறது, **எம்மயமாய் மேவும்**—எந்த ஸ்வரூபத்தை உடையது இது, **அரும் தக்க இவன்தான் ஏவன்**—சிறப்பும் தகுதியுமுடையவனுய் முன் இரு ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட க்ஷேத்ரஜ்ஞனை ஜீவன் எந்த ஸ்வரூபத்தை உடையவன், **எத்தகையோன்**—அவன் எத்தகைய பெருமையையுடையவன், **சார்ந்த**—(ஆகிய இவை) பற்றிய, **சுருக்கத்து அதனே**—சுருக்கம் முழுவதையும், **யான் நேர்ந்து சொல்ல**—நான் முறையாகச் சொல்ல, **இங்கு கேள்**—(நீ) இப்போது கேட்பாயாக.

---

3\. முதல் இரண்டு ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட க்ஷேத்ரமாகிற ஶரீரத்தையும், க்ஷேத்ரஜ்ஞனுகிற ஜீவனையும் பற்றி இவ்வத்₄யாயம் முழுவதிலும் சொல்லப்போவதை முதலில் சுருக்கமாகச் சொல்லப்போவதாக ப்ரதிஜ்ஞை செய்கிருன் இந்த ஶ்லோகத்தில். (தத் க்ஷேத்ரம்) முன்னிரண்டு ஶ்லோகங்களிலும் க்ஷேத்ரம் என்று சொல்லப்பட்ட ஜீவாத்மஶரீரம். (யச்ச) எந்த த்₃ரவ்யத்தினுலானது என்பதையும். இவ்விஷயம் 5-வது ஶ்லோகத்தின் முன்பாதியாலே சுருக்கமாகச் சொல்லப்படுகிறது. (யாத்₃ருக் ச) அது எதற்கு இருப்பிடமாயிருக்கிறது என்பதையும். இவ்விஷயம் 5-வது ஶ்லோகத்தில் பின்பாதியாலே சொல்லப்படுகிறது. (யத்₂விகாரி) இந்த ஶரீரத்தின் பரிணமங்கள் எவை என்பதையும். இவ்விஷயம் "இச்சா₂ த்₃வே

यस्मै प्रयोजनायोत्पन्नमित्यर्थः, यत्—यत्स्वरूपं चेदम्, स च यः—स च क्षेत्रज्ञो यः—यत्स्वरूपः, यत्प्रभावश्च—ये चास्य प्रभावाः, तत्सर्वम्, समासेन—संक्षेपेण मत्तः शृणु ॥ ३ ॥

---

ஷஸ் ஸுக₂ம் து₃க்க₂ம" என்னும் 6-வது ஶ்லோகத்தின் முதல் பாத₃த்தாலே சொல்லப்படுகிறது. இப்படி அடுத்தடுத்துத்தொடர்ந்து விவரிக்கையாலே 'யச்ச' 'யாத்₃ருக்ச' 'யத்₃விகாரி' என்னும் மூன்று தொடர்ச்சியான பத₃ங்களுக்கும் இப்படிப் பொருள்கொள்வதே பொருத்தமானது. இனி, இந்த ஶ்லோகத்தின் முற்பாதியில் 'யதஶ்ச', 'யத்' என்னும் இரு பத₃ங்கள் உள்ளன. விவரிக்கும் ஆருவது ஶ்லோகத்தின் முற்பாதியில் 'ஸங்கா₄த:' 'சேதநாத்₄ருதி:' என்னும் இரு பத₃ங்கள் உள்ளன. இவற்றில் எதற்கு எது விவரணம் என்று ஆராய்ந்தால், 'யத்'என்னும் பத₃ம் முதலில் சொல்லப்பட்ட 'யத்'என்னும் பத₃த்தோடு புநருக்தம (கூறியது கூறல்) ஆகாமைக்காக, முதலில் சொல்லப்பட்ட 'யத்'என்னும ஶப்₃த₃த்தினுல் குறிப்பிடப்படும் பஞ்சபூ₄தங்கள் முதலானவற்றின கூட்டே கடைசியிலுள்ள 'யத்' என்ற ஶப₃த₃த்தினுல் சொல்லப்படுகிறது என்றும், அதுவே ஆருவது ஶ்லோகத்தில் 'ஸங்கா₄த:' (கூட்டு) என்று விவரிக்கப்படுகிறது என்றும் கொள்வதே பொருத்தம். எஞ்சிநிற்கும் 'யதஶ்ச'என்னும் பத₃ம் பாரிஶேஷ்ய ந்யாயத்தாலே எஞ்சிநிற்கும் 'சேதநாத்₄ருதி:' என்னும் பத₃த்தால் விவரிக்கப்படுவதாகக் கொண்டே தீரவேண்டும்; ஆகையால், 'சேதநாத்₄ருதி:'என்னும் அப்பத₃ம் பயனைக்காட்டுவதாகையால் 'யதஶ்ச' என்பதற்கும 'எந்தப் பயனுக்காக இந்த ஶரீரம் உண்டாக்கப்பட்டது என்பதையும' என்றே பொருள்கொள்ளவேண்டும். 'யதஶ்ச' என்பது 'எந்தக் காரணத்துக்காக இது உண்டாக்கப்பட்டதோ' என்று பொருள்படும். இந்த ஶரீரத்தை உண்டாக்கிய ஈஶ்வரன் எந்தப் பயன் கருதி இதை உண்டாக்கினுரே என்றே இதற்குத் தாத்பர்யம் சொல்லவேண்டுமாகையாலே இங்கு சொல்லப்படும் காரணம் ஈஶ்வரன் கருதிய பயனேயாகும். "அத்₄யயநேந வஸதி" [வேத₃ாத்₄யயனமாகிற பயன் கருதி வாழ்கிருன்] என்று கூறுமிடத்தில் கருதப்படும் பயனும் வாழ்வதற்குக் காரணமாகச் சொல்லப்படுகிறதன்றே. கடைசியிலுள்ள 'யத்' என்றதற்கு 'யத்ஸ்வரூபம்' என்று பா₄ஷ்யம் இடப்பட்டது. இங்கு ஸ்வரூபம் என்பது 'ஸங்கா₄தம்' (கூட்டு) என்னும் பொருளை உடையது. பஞ்சபூ₄தங்கள் முதலானவற்றின் கூட்டானதோரமைப்பன்றே ஶரீரம்.

ऋषिभिर्बहुधा गीतं छन्दोभिर्विविधैः पृथक् ।
ब्रह्मसूत्रपदैश्चैव हेतुमद्भिर्विनिश्चितैः ॥

**4. ரிஷிபி₄ர் பஹுதா₄ கீ₃தம் ச₂ந்தோ₃பி₄ர்விவிதை₄: ப்ருத₂க்|**
**ப்₃ரஹ்மஸூத்ரபதை₃ஶ்சைவ ஹேதுமத்₃பி₄ர் விநிஶ்சிதை:||**

(நான் கூறவிருக்கும க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களைப் பற்றிய உண்மை அறிவு) **ரிஷிபி₄:**—(பராஶரர் முதலான) ரிஷிகளாலே, **ப₃ஹுதா₄** — பலவகையாக, **கீ₃தம்**—பாடப்பட்டது. **விவிதை₄: ச₂ந்தோ₃பி₄:**—பலவித₄

முதல் யச்ச₂ப்₃த₃ப்—இந்தஶரீரமானது ஜட₃த்₃ரவ்யமா அஜட₃த்₃ரவ்யமா என்னும் கேள்வியெழ, ஜட₃த்₃ரவ்யமே என்று நிஶ்சயிப்பதற்காக ஏற்பட்டது. ஜட₃த்₃ரவ்யம் என்று நிஶ்சயிக்கப்பட்ட பிறகு, ஜட₃த்₃ரவ்யங்கள் பலவற்றில் ஏதாவது ஒன்ரு அல்லது அவற்றின் கூட்டா என்னும் ஸந்தே₃ஹமெழ, அவற்றின் கூட்டே என்று நிஶ்சயிப்பதற்காக ஏற்பட்டது இரண்டாவது யச்ச₂ப்₃த₃ம். இனி,மூன்ருவது பாத₃த்தாலே க்ஷேத்ரஜ்ஞனுன ஜீவனின் ஸ்வருபஸ்வப₄ாவங்களையும் சுருக்கமாகச் சொல்லப்போவதாகக் கூறுகிருன்—(ஸ ச யஃ) முன் இரண்டு ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட க்ஷேத்ரஜ்ஞனுகிற ஜீவன் எந்த ஸ்வருபத்தை உடையவன் என்பதையும், முன் ஶ்லோகத்தில் 'மாம்' என்று பரமாத்மாவைப் பற்றியும் கூறியிருந்தாலும் இரண்டு ஶ்லோகங்களிலும் ப்ரத₄ானமாக விவரிக்கப்படுபவன் ஜீவனேயாகையாலும், பன்னிரண்டாவது ஶ்லோகம் தொடங்கி சொல்லப்போவது ஜீவனையேயாகையாலும் 'ஸ:' என்னும் பத₃த்துக்கு ஜீவனைப் பொருளாகக் கொள்வதே பொருந்தும். (யத்ப்ரப₄ாவஶ்ச) இந்த ஜீவன் எந்தச் சிறந்த ஸ்வப₄ாவங்களை (தன்மைகளை) உடையவன் என்பதையும்; ப்ரப₄ாவமாவது ப்ரக்ருஷ்டஸ்வப₄ாவம்; அதாவது—சிறந்த தன்மைகள், (தத்) இவையனைத்தையும். (ஸமாஸேந மே ஶ்ருணு) சுருக்கமாக நான் சொல்லப்போவதைக் கேளாய். (ஶ்ருணு) ஏற்கனவே கேட்டுக்கொண்டிருக்கும் அர்ஜுனனை 'கேட்பாயாக' என்று கூறுவது ஶரீராத்ம ப்₄ரமத்தாலே தகாதவிடத்தில் ஸ்நேஹத்தையும் கருணையையும் காட்டுமிவனுக்கு ஶரீராத்மாக்களைப் பற்றிய இந்த விளக்கம் கவனமாகக் கேட்கத்தக்கது என உணர்த்துவதற்காக. 3.

भा ॥ तदिदं क्षेत्रक्षेत्रज्ञयाथात्म्यम् ऋषिभिः--पराशरादिभिः बहुधा-बहुप्रकारं गीतम्- * अहं त्वं च तथान्ये च भूतैरुह्याम पार्थिव! गुणप्रवाह-

மான வேத₃ங்களாலும், ப்ருத₂க்(கீ₃தம்)—(இந்த தே₃ஹாத்ம ஸ்வரூபம்) தனித்தனியாகப் பாடப்பட்டது ஹேதுமத்₃பி₄:—யுக்திகளோடு கூடியவையாய், விநிஸ்சிதை:—சிறப்பான நிச்சயத்தை உடையவையான, ப்₃ரஹ்மஸூத்ரபதை₃: ச ஏவ (பா₃த₃ராயணர் அருளிய) ப்₃ரஹ்மஸூத்ரத்திலுள்ள ஸூத்ரங்களாலும், (ப்ருத₂க்₃ கீ₃தம்)—(இவ்விஷயம்) தனித்தனியாகப் பாடப்பட்டது.

4. போத முனிவர் புகல்வர் பலவகையே
வேதம் விவிதக்கால் வேறுபட—வோதுமது
வேதாந்த சூத்திரங்கள் வேறுரைக்கு மேதுவுடன்
மீதார்ந்த நிச்சயத்தான் மிக்கு.

போதமுனிவர் – உண்மையறிவையுடைய (பராஶரர் முதலான) ரிஷிகள், பலவகையே புகல்வர் — (இந்த தே₃ஹாத்மஸ்வரூபத்தை) பலவிதமாகக் கூறுவர் விவிதக்கால் வேதம்—பலவகைப்பட்ட வேத₃ம, அது வேறுபட ஓதும்—அந்த தே₃ஹாத்ம ஸ்வரூபத்தைத் தனித்தனியாக ஓதும் வேதாந்த சூத்திரங்கள்—(பா₃த₃ராயணர் அருளிய) ப்₃ரஹ்ம ஸூத்திரத்திலுள்ள ஸூத்ரங்கள், ஏதுவுடன்—யுக்திகளோடு, மீதார்ந்த நிச்சயத்தால்--சிறப்பான நிஶ்சயத்தோடு, மிக்கு வேறு உரைக்கும்—(அந்த தே₃ஹாத்ம ஸ்வரூபத்தை) பலவகையாகவும் தனித்தனியாகவும் கூறும்.

4. தன்னால் உபதே₃ஶிக்கப்படவிருக்கும் தே₃ஹாத்ம ஸ்வரூபம்—ரிஷிகளால் இயற்றப்பட்ட இதிஹாஸ புராணங்கள், பா₃த₃ராயணர் அருளிய ப்₃ரஹ்ம ஸூத்ரம் ஆகியவற்றால் விளக்கப்பட்ட பலவகையான வேத₃வாக்யங்களால் தேறிய அர்த்த₂மே என்று கூறுகிறான் (ரிஷிபி₄: ப₃ஹுதா₄ கீ₃தம்) பராஶரர் முதலான ரிஷிகளாலே, நான் கூறவிருக்கும் தே₃ஹாத்மஸ்வரூபம் பலவகையாகக் கூறப்பட்டுள்ளது. "இதிஹாஸ புராணாப்₄யாம் வேத₃ம் ஸமுபப்₃ரும்ஹ

पतितो भूतवर्गोऽपि यात्ययम् ॥ कर्मवश्या गुणा ह्येते सत्त्वाद्याः पृथिवीपते । अविद्यापश्चितं कर्म तच्चाशेषेषु जन्तुषु ॥ आत्मा शुद्धोऽक्षरश्शान्तो निर्गुणः प्रकृतेः परः ॥ (वि. २. १३. ६९. ७०. ७१.)

---

யேத்'' [இதிஹாஸ புராணங்களைக்கொண்டே வேத₃த்துக்கு விளக்கம் கூற வேண்டும்] எனகிறபடியே தெளிவான பொருளையுடைய இதிஹாஸபுராணங்களைக்கொண்டே தெளிவற்ற பொருளையுடைய மறைகளின் பொருளை அறிய முடியுமாகையால் முதலில் அவற்றைக் கூறுகிருன், ''ரிஷபி₄:'' என்று பொதுவாகக் கூறப் பட்டபோதிலும் ராஜஸதாமஸ ஸ்ம்ருதி புராணங்களின்மூலம் வேத₃ார்த்த₂த்தை உள்ளபடி அறியமுடியாதாகையாலே ஸாத்விக ஶாஸ்த்ரங்களை இயற்றிய பராஶரர், வேத₃வ்யாஸர், வால்மீகி, மநு, முதலானவர்களே இங்கு ரிஷிஶப்₃த₃த்தால் கருதப்படுவதாகக் கொள்ள வேண்டும். (ப₃ஹுதா₄) அர்த்த₂ம் ஒன்ருயிருந்த போதிலும் வாக்ய அமைப்புகள் பலவகைப்பட்டிருப்பதைக் கூறுகிறது. ''ரத₂சக்கரத்தின் நாபி₄யின் (குடத்தின்) ஸ்த₂ானத்தில் பரமாத்மாவும், ஆரத்தின் ஸ்த₂ானத்தில் ஜீவாத்மாவும், நேமி எனப்படும் சக்கரவட்டத்தின் ஸ்த₂ானத்தில் அசேதனப் பொருளும் இருந்து கொண்டு முறையே ஒன்ருலொன்று தாங்கப்படுகிறது'' முதலான கற்பனைகளால் பலவகைப்பட்டிருப்பதைக் கூறுவதாகவும் கொள்ளலாம். அன்றிக்கே ஒருவர் சுருக்கமாகவும் மற்ருெருவர் விரிவாகவும் கூறுவதையிட்டுப் பலவகையாகப் பாடப்பட்டது என்கிறதாகவுமாம். அத்தகைய வேத விளக்கமான ரிஷி வாக்யங்களில் சில பின்வருமாறு;—

1. ''அஹம் த்வம் ச தத₂ாந்யே ச பூ₄தைருஹ்யாம பார்த்தி₂வ// கு₃ணப்ரவாஹபதிதோ பூ₄தவர்க்கோ₃ாऽபி யாத்யயம் // கர்மவஶ்யா கு₃ணா ஹ்யேதே ஸத்த்வாத்₃யா: ப்ருதி₂வீபதே I அவித்₃யாஸஞ்சிதம் கர்ம தச்சாஶேஷேஷு ஜந்துஷு // ஆத்மா ஶுத்₃தோ₄ாऽக்ஷரஶ் ஶாந்தோ நிர்கு₃ண: ப்ரக்ருதே: பர: // [வி. பு 2-13-69, 70, 71] [அரசனே! நானும் நீயும் மற்றவர்களும் (தே₃ஹமாகப் பரிணமித்திருக்கும்) பஞ்சபூ₄தங்களால் சுமக்கப்படுகிருேம்; (ஒருவரையொருவர் சுமப்பதில்லை) இந்தப் பஞ்சபூ₄தங்களும் ஸத்வரஜஸ்தமோகு₃ண வெள்ளத்திருல் இழுத்துச் செல்லப்படுகிறது. இந்த ஸத்வாதி₃ கு₃ணங்களும் கர்மத்துக்கு வஶப்பட்டவை. (தே₃ஹத்தை ஆத்மாவாக நினைக்கும்) அஜ்ஞானத்தாலே சேர்த்துவைக்கப்பட்டிருப்பது (புண்யபாபரூப) கர்மம். அக்கர்மம் எல்லா ஜீவர்களிடமுமுள்ளது. (அந்த ஜீவர்களுடைய) ஆத்மாவோவெனில்

तथा * पिण्डः पृथग्यतः पुंसः शिरःपाण्यादिलक्षणः । ततोऽहमिति कुत्रैतां संज्ञां राजन्करोम्यहम् (वि. २. १३. ८९.); तथा [च] * किं त्वमेतच्छिरः किं नु उरस्तव तथोदरम् । किमु पादादिकं त्वं वै तवैतत्किं महीपते ! ॥ समस्तावयवेभ्यस्त्वं पृथग्भूप ! व्यवस्थितः । कोऽहमित्येव निपुणो भूत्वा चिन्तय पार्थिव ! ॥ (वि. २. १३. १०३.)

---

கர்மம் முதலான தே₃ாஷங்களற்றது. அழிவற்றது. பசி தா₃ாஹம் முதலான ஆறு ஊர்மிகளுமற்றது ஸத்வம் முதலான கு₃ணங் களுமற்றது. அசேதனமான ப்ரக்ருதியைக்காட்டிலும் மேலானது] 2 "பிண்ட₃: ப்ருத₂க்₃யத: பும்ஸ: ஶிர:பாண்யாதி₃லக்ஷண: / ததோऽ ஹமிதி குத்ரைதாம் ஸம்ஜ்ஞாம் ராஜந் கரோம்யஹம்:" [வி.பு.2-13-89] [அரசனே! தலை, கை, கால் முதலானவற்றின் கூட்டான ஶரீரமும் ஜீவனைக்காட்டிலும் வேறுபட்டதாக இருக்கையால், இந்தத் தலை கை, கால், முதலானவற்றில் எதைக்குறித்து 'நான்' என்கிற சொல்லை நான் வழங்குவேன்.] 3 'கிம் த்வமேதச் சி₂ர: கிம்நு உரஸ்தவ ததோ₂ா- த₃ரம்/ கிமு பாத₃ாதி₃கம் த்வம் வை தவைதத் கிம் மஹீபதே// ஸமஸ்தாவயவேப்₄யஸ்தவம் ப்ருத₂க்₃பூ₄ப வ்யவஸ்தி₂த:/ கோऽஹமித் யேவ நிபுணோ பூ₄த்வா சிந்தய பார்த்தி₂வ" [வி. பு. 2-13-102 103] [அரசனே! நீ இந்த ஶரீரத்திலுள்ள தலையா, மார்பா, வயிறு அல்லது கால் முதலானவையா? இவையெல்லாம் உன்னோடு என்ன தொடர்புடையவை? இந்த எல்லா அவயவங்களைக்காட்டிலும் நீ வேறான வனாயிருக்கிறாய். ஆராயும் திறமையுள்ளவனாய் 'நான் யார்' என்று ஆராய்வாயாக]. இந்த மூன்று ப்ரமாணங்களும் தான் வீற்றிருந்த பல்லக்கைத்தூக்கிக்கொண்டிருந்த ஜட₃ப₄ரதரைப் பார்த்து அரசன் கேட்ட கேள்விகளுக்கு ப₄ரதர் சொன்ன பதில்களாகும். தே₃ஹத் தைக் காட்டிலும் வேறுபட்டது ஆத்மா என்று உணராமல் தன்னு டைய பல்லக்கைச்சுமப்பவராக அரசன் தம்மை நினைத்ததை இந்த முதல் ப்ரமாணத்தில் ஜட₃ப₄ரதர் ஆக்ஷேபிக்கிறார். அவரை ஜ்ஞானி என்று உணர்ந்த அரசன் 'நீர் யார்' என்று அவரை வினவ அதற்குப் பதிலாக அமைந்தது இரண்டாவது ப்ரமாணம். இதில் தலை, கை, முதலானவற்றில் ஒன்றோ அல்லது எல்லாம் சேர்ந்தோ ஆத்மா வாயிருக்க முடியாது என்று உணர்த்தப்பட்டது, இந்த இரண் டாவது ப்ரமாணத்தில் சொல்லப்பட்ட தே₃ஹாத்மவிவேகத்தை அரசனும் உணர்ந்து உறுதிப்படுத்திக் கொள்வதற்காக ஜட₃ப₄ரதர் அவனைக்குறித்துக் கேட்கும்கேள்விகளாக அமைந்திருப்பது மூன்றாவது

ப்ரமாணம். இந்த மூன்று ப்ரமாணங்களால் இந்த அத்₄யாயத்தின் முதல் ஶ்லோகத்தின் பொருள் விளக்கப்பட்டது. இனி, பின்வருமாறு ஓர் ஆக்ஷேபம் வருகிறது—"த்₃வா ஸுபர்ணு ஸயுஜா ஸகா₂யா ஸமானம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்₃வத்தி அநஶ்நந் அந்யோ அபி₄சாகஶீதி" [முண்ட₃க 3-1-1] [ஜ்ஞானமாகிற ஒத்த குணத்தை உடையவர்களாய் துணைவர்களான இருபறவைகள் (பரமாத்மாவும், ஜீவாத்மாவும்) ஒரே மரத்தை (ஶரீரத்தை)ப் பற்றி நிற்கின்றன. அப்பறவைகளில் ஒன்று (ஜீவன்) இனிய பழத்தை (கர்மப₂லத்தை) உண்கிறது. மற்றொரு பறவை (பரமாத்மா) உண்ணுதபோதும் பிரகாசிக்கின்றது] என்னும் முண்ட₃கோபநிஷத்திலுள்ள மந்திரத்தில் கர்மப₂லத்தை அனுப₄விப்பவனாக ஜீவன் சொல்லப்படுகிருன்; அதை அனுப₄விக்காதவனாகப் பரமாத்மா சொல்லப்படுகிருன். இவ்விஷயம் "கு₃ஹாம் ப்ரவிஷ்டாவாத்மானௌ ஹி தத்₃த₃ர்ஶநாத்" [ப்₃ர ஸூ 1-2-11] [இருதயகுஹையில் நுழைந்திருப்பவர்களிருவரும் ஜீவாத்மாவும் பரமாத்மாவுமேயாவர் (ப்ராணஜீவர்களல்லர்;) ஜீவபரமாத்மாக்களுக்கே இருதயகு₃ஹையில் நுழைந்திருத்தல் காணப்படுவதால்] 'ஸ்தி₂த்யத₃நாப்₄யாம் ச" [ப்₃ர ஸூ. 1-3 6] [(பரமபுருஷனுக்கு சரீரத்தில் இருப்பது மாத்திரத்தையும் (ஜீவனுக்கு) கர்மப₂லபோ₄க₃த்தையும் கூறுகையாலும் (த்₃யுப்₄வாத்₃யாயதநம் பரமபுருஷனே] முதலான ப்₃ரஹ்மஸூத்ரங்களிலும் நிலைநிறுத்தப்பட்டது. இந்த முண்ட₃கமந்த்ரத்தை விவரிக்கப் புகுந்த பைங்கி₃ரஹஸ்யப்₃ராஹ்மணம் "தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத₃வத்தீதி ஸத்த்வம்" [' தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்₃வத்தி' என்னும் வாக்யம் ஸத்த்வம் (ஜந்து) எனப்படும் ஜீவனைக்குறிக்கிறது.] என்று மந்த்ரத்தில் மூன்ருவது பாத₃த்தை விவரித்து, 'அநஶ்நந்நந்யோऽபி₄சாகஶீதி க்ஷேத்ரஜ்ஞ: த்₃வாவேதௌ ஸத்த்வக்ஷேத்ரஜ்ஞௌ ததே₃தத் ஸத்தவம் யேந ஸ்வப்நம பஶ்யதி அத₂யோऽயம் ஶாரீர உபத்₃ரஷ்டா ஸ க்ஷேத்ரஜ்ஞ:" [எவனொருவன் ஸ்வப்நம காண்கிருனே அந்த ஜீவனே ஸத்வமெனப்படுகிருன். அவனை ஶரீரமாகக்கொண்டு அனைத்தையும் காணும் பரமாத்மா க்ஷேத்ரஜ்ஞன் எனப்படுகிருன்] என்று நான்காம் பாத₃ விவரணத்தில் க்ஷேத்ரஜ்ஞஶப்₃த₃த்தால் பரமாத்மா குறிக்கப்படுகிருன். இந்தப் பைங்கிரஹஸ்ய ப்₃ராஹ்மணத்தில் காணப்படும் க்ஷேத்ரஜ்ஞஶப்₃த₃மே "தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ: இதி" என்று முதல் ஶ்லோகத்தில் வழங்கப்பட்டு, அவனைக் குறித்து இங்குள்ள உபத்₃ரஷ்டா என்னும் ஶப்₃த₃ம் "உபத்₃ரஷ்டாநுமந்தா" என்று கீ₃தையில் 22வது ஶ்லோகத்தில் வழங்கப்பட்டது. இதிலிருந்து பைங்கிரஹஸ்ய ப்ராஹ்மணத்திற்கு விளக்கமாகவே கீ₃தை அமைந்

इति । एवं विविक्तयोर्द्वयोर्वासुदेवात्मकत्वं चाहुः * इन्द्रियाणि मनो बुद्धिस्सत्त्वं तेजो बलं धृतिः । वासुदेवात्मकान्याहुः क्षेत्रं क्षेत्रज्ञमेव

துள்ளது என்று விளங்குகிறது. மநுஸ்ம்ருதியிலும் "யோஸ்யாத்மந: காரயிதா தம க்ஷேத்ரஜ்ஞம ப்ரசக்ஷதே / ய: கரோதி து கர்மாணி ஸ பூ₄தாத்மோச்யதே பு₃தை₄: // [மநு 12 12] [எவன் இந்த ஜீவாத்மாவைச் செயல்களைச் செய்யும்படி தூண்டுகிறானோ அந்தப் பரமாத்மாவை "க்ஷேத்ரஜ்ஞன்" என்று அறிவாளிகள் கூறுகிறார்கள். எவன் செயல்களைச் செய்கிறானோ அந்த ஜீவன் "பூ₄தாத்மா" என்று அவர்களால் சொல்லப்படுகிறான்] என்று க்ஷேத்ரஜ்ஞ ஶப்₃த₃த்தால் பரமாத்மாவே கூறப்பட்டான். அப்படியிருக்கும்போது கீ₃தையில் இங்கு க்ஷேத்ரஜ்ஞ ஶப்₃த₃த்தால் ஜீவன் குறிப்பிடப்படுவதாக பா₄ஷ்யமிட்டது எப்படிப்பொருந்தும்? என்னும் ஆக்ஷேபத்தை நீக்குகிறது நாலாவது ப்ரமாணம். அத்துடன் "க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்₃தி₄" என்னும் இவ்வத்₄யாயத்தின் இரண்டாவது ஶ்லோகப் பகுதிக்கு இந்தப் பிரமாணம் விளக்கமாகவுமிருக்கிறது. அதாவது—' இந்த்₃ரியாணி மநோபு₃த்₃தி₄: ஸத்த்வம் தேஜோ ப₃லம த்₄ருதி:/ வாஸுதே₃வாத்மகாந்யாஹு: க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞமேவ ச// [பா₄ர-ஆநு-விஷ்ணுஸஹஸ்ரநாமம்] [இந்திரியங்கள், மனம், பு₃த்₃தி₄, ஸத்வகு₃ணம், தேஜஸ், ப₃லம், தைரியம், க்ஷேத்ரமாகிற ஶரீரம், க்ஷேத்ரஜ்ஞனாகிற ஜீவன் ஆகிய அனைத்தும் வாஸுதே₃வனுக்கு ஶரீரமாகவும் ப்ரகாரமாகவும் உள்ளன என்று ஶாஸ்த்ரங்கள் கூறுகின்றன] என்பது. ஆக இந்த ப்ரமாணத்திலிருந்து க்ஷேத்ரஜ்ஞ ஶப்₃த₃த்தால் ஜீவனையும் குறிப்பது உண்டு என்றும், அவன் வாஸுதே₃வ ஶரீரம் என்றும் விளங்குகையால் பா₄ஷ்யத்தில் அருளிய பொருள் பொருத்தமேயாகும். தனித்தனியாகவும் கூட்டாகவும் "இது என்னுடையதலை, இவை என்னுடைய கைகள், இது என் ஶரீரம்" என்று க்ஷேத்ரமாகிற ஶரீரத்தை ஜீவன் அறிகிறானுகையாலே அவனை க்ஷேத்ரஜ்ஞன் என்னக் குறையில்லை. பரமாத்மாவோவெனில் 'இந்த ஶரீரம் இந்தக் கர்மத்தைத் தொடங்குவதற்காகவும், இந்தக் கர்மத்தின் ப₂லத்தை அநுப₄விப்பதற்காகவும் ஏற்பட்டது' என்று ஶரீரத்தைப்பற்றிய உண்மையனைத்தையும் அறிகிறானுகையாலே க்ஷேத்ரஜ்ஞன் எனப்படுகிறான். ஜீவனுக்கு 'க்ஷேத்ரஜ்ஞ' ஶப்₃த₃ம் மூற்கூறியபடி க்ஷேத்ரத்தை அறிவதால் வந்தது என்பது இவ்வத்₄யாயத்தின் முதல் ஶ்லோக பா₄ஷ்யத்தில் காட்டப்பட்டது. க்ஷேத்ரத்தைப்பற்றிய அனைத்தையும் அறிந்தவனுகையாலே பரமாத்மா க்ஷேத்ரஜ்ஞன்

च ॥ (वि. स.) इति । छन्दोभिर्विविधैः पृथक्-पृथग्विविधैश्छन्दोभिः ऋग्यजुस्सामाथर्वभिः देहात्मनोः स्वरूपं पृथग्गीतम् -- * तस्माद्वा एतस्मादात्मन आकाशस्सम्भूतः । आकाशाद्वायुः । वायोरग्निः । अग्नेरापः । अद्भ्यः पृथिवी । पृथिव्या ओषधयः । ओषधीभ्योऽन्नम् । अन्नात्पुरुषः । स वा एष पुरुषोऽन्नरसमयः (आ. १) इति

எனப்படுகிறான் என்பது முன் எடுத்த மனு வசனத்தில் தெளிவாகக் காட்டப்பட்டது. இவ்வண்ணமே தன் ஶரீரத்தைக் காண்கிறானாகை யாலே ஜீவனையும் உபத்₃ரஷ்டா என்று கீ₃தையில் குறித்ததில் குறையில்லை. பரமாத்மாவும் எல்லாச் சேதநாசேதனங்களையும் காண்கிறானாகையாலே பைங்கி₃ரஹஸ்யத்தில் அவனை உபத்₃ரஷ்டா என்று குறித்ததிலும் குறையில்லை. ஆகையால் இங்கு பா₄ஷ்யத்திற்கு எந்த ப்ரமாண விரோத₄முமில்லை என்று கண்டுகொள்வது. (ச₂ந்தோ₃பி₄ர் விவிதை₄: ப்ருத₂க) பலவிதமான ருக், யஜுஸ், ஸாம, அத₂ர்வ வேத₃ வாக்யங்களாலும் தே₃ஹாத்மாக்களின் ஸ்வரூபம் தனித் தனியாகப் பாடப்பட்டது. விவித₄ ஶப்₃த₃ம் விளக்கும் வகைகள் பலவகைப்பட்டவை எனக் காட்டுகிறது. ச₂ந்த₃ஸ் ஶப்₃த₃த்தை கா₃யத்ரீ முதலான ச₂ந்த₃ஸ்ஸுக்களைக் குறிப்பதாகக் கொள்வதில் இங்கு பொருத்தமில்லாமையால் ச₂ாத₃யதீதி ச₂ந்த₃:'' [பொருளை மறைத்துக் கூறுகையால் 'ச₂ந்த₃ஸ்' (மறை) எனப்படுகிறது வேதம்] என்னும் வ்யுத்பத்தியாலும் ''ஆம்நாயம் ச₂ந்த₃ஸாம் த₃ண்ட:₂'' முதலான வழக்குகளையொட்டியும் இங்கு வேத₃த்தைக் குறிப்பதாகக் கொள்வதே பொருத்தம். 'ப்ருத₂க்' என்னும் ஶப்₃த₃த்துக்கு 'ரிஷிகளால் சொல்லப்பட்டதைக் காட்டிலும் வேறாக' என்று பொருள்கொள்வது பொருந்தாதாகையால், சில பத₃ங்களை வருவித்துக்கொண்டு "தே₃ஹாத்மாக்களின் ஸ்வரூபம் தனித் தனியாக விளக்கப்பட்டது'' என்று பொருள் கொள்ளப்பட்டது. தே₃ஹாத்மாக்கள் ஒன்றுக்கொன்று வேறானவையாகப் பாடப்பட்டன என்று தாத்பர்யம். அப்படிக்காட்டியிருக்கும் வேத₃வாக்யங்கள் பின்வருமாறு:- முதலில் யஜுர் வேத₃வாக்யம் ஒன்றைக்காண்போம். '' தஸ்மாத்₃வா ஏதஸ்மாதா₃த்மந ஆகாஶஸ்ஸம்பூ₄த:. ஆகாஶாத்₃ வாயு:, வாயோரக்₃நி, அக்₃நேராப: அத்₃ப்₄ய: ப்ருதி₂வீ ப்ருதி₂வ்யா ஓஷத₄ய: ஓஷதீ₄ப்₄யோந்நம். அந்நாத் புருஷ:, ஸ வா ஏஷ புருஷோऽந் நரஸமய: [தை ஆன] [அத்தகைய இந்தப் பரமாத்மாவிடமிருந்து ஆகாஶம் உண்டாயிற்று. ஆகாஶத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்₃நியும், அக்₃நியிலிருந்து ஜலமும், ஜலத்திலிருந்து பூமியும்

शरीरस्वरूपमभिधाय तस्मादन्तरं प्राणमयं तस्माच्चान्तरं मनोमयमभिधाय * तस्माद्वा एतस्मान्मनोमयात् । अन्योऽन्तर आत्मा विज्ञानमयः इति क्षेत्रज्ञस्वरूपमभिधाय * तस्माद्वा एतस्माद्विज्ञानमयात् । अन्योऽन्तर आत्माऽऽनन्दमयः इति क्षेत्रज्ञस्याप्यन्तरात्मतया आनन्दमयःपरमात्माऽभिहितः । एवं ऋक्सामाथर्वसु च तत्र तत्र क्षेत्रक्षेत्रज्ञयोः पृथग्भावः तयोर्ब्रह्मात्मकत्वं च सुस्पष्टं गीतम् ।

---

உண்டாயின. பூ4மியிலிருந்து பயிர்கள் உண்டாயின. பயிர்களிலிருந்து அன்னம் உண்டாயிற்று. அன்னத்திலிருந்து ஜீவசரீரமுண்டாயிற்று. இந்த சரீரத்தோடு கூடிய ஜீவன் அன்னரஸத்திலிருந்து தோன்றியவனன்றோ.] என்று தே3ஹ ஸ்வரூபத்தைச் சொல்லி அதற்குள் இருப்பதாக ப்ராணமயம் எனப்படும் ப்ராணனையும், அதனிலும் ஸூக்ஷ்மமாக மனோமயமெனப்படும் மனத்தையும், சொல்லி தஸ்மாத்3 வா ஏதஸ்மாந்மனோமயாத்-அந்யோந்தர ஆத்மா விஜ்ஞாநமய :" என்று இந்த மனோமயத்திலும் ஸூக்ஷ்மமான விஜ்ஞானமயனெனப்படும் ஜீவனுடைய ஸ்வரூபத்தைச் சொல்லி, இந்த விஜ்ஞானமயனை ஜீவனுக்கும் அந்தர்யாமியாயிருப்பவனாய் இவனிலும் வேறான ஆனந்த3மயனை பரமாத்மா "த3ஸ்மாத் வா ஏதஸ்மாத் விஜ்ஞாநமயாத் அந்யோந்தர ஆத்மா ஆநந்த3மய:" என்று கூறப்பட்டான். இது யஜுர் வேதத்திலுள்ளதொரு மஹாவாக்யம். இவ்வண்ணமே ருக்3வேத3த்திலும் ஸாமவேத3த்திலும் அத2ர்வவேதத்திலும் ஆங்காங்கே ஶரீரமும் ஜீவனும் வேறுபட்டவை என்றும், அவை இரண்டுமே ப்3ரஹ்மஶரீரமென்றும் மிகத் தெளிவாகக் கூறப்பட்டது. அவற்றில் சில பின்வருமாறு:1. "தத்3யதா2 ரத2ஸ்யாரேஷு நேமிரஸ்ப்பிதா: நாப4ாவரா அர்ப்பிதா: ஏவமேவைதா பூ4த மாத்ரா: ப்ரஜ்ஞாமாத்ராஸ்வர்ப்பிதா ப்ரஜ்ஞாமாத்ரா: ப்ராணேஷ்வர்ப்பிதா:" [கௌஷீதகீ 3.9] [எவ்வண்ணமாகச் சக்ரத்தின் ஆரங்களில் அதன் நேமி (வளையம்) கோக்கப்பட்டிருக்கிறதோ, அதன் ஆரங்கள் அதன் குடத்தில் கோக்கப்பட்டிருக்கிறதோ; அவ்வண்ணமே இந்தப் பஞ்சபூ4தங்களாலான ஶரீரம் ஜ்ஞானமயனான ஜீவாத்மாவிடம் கோக்கப்பட்டிருக்கிறது. அந்த ஜீவன் ப்ராணனெனப்படும் பரமாத்மாவிடம் கோக்கப்பட்டிருக்கிறது.] 2. "ஏஷ ம ஆத்மா அந்தர் ஹ்ருத3யே...... ஏதமித: ப்ரேதய அபி4ஸம்ப4விதாஸ்மி" [சா2ந் 3-14-4] [என்னுடைய ஹ்ருதயத்தினுள் எனக்கு அந்தர்யாமியாயிருப்பவன் இவனே. இவ்வுலகிலிருந்து நீங்கி மோக்ஷமடையும்போது இவனை அடைவேன்]

ब्रह्मसूत्रपदैश्चैव-ब्रह्मप्रतिपादनसूत्राख्यैः पदैः शारीरकसूत्रैः, हेतुमद्भिः-हेतुयुक्तैः, विनिश्चितैः—निर्णयान्तैः ; * न वियदश्रुतेः (२. ३. १)

3. "தி₃வ்யோ ஹ்யமூர்த்த: புருஷ: ஸ ப₃ாஹ்யாப்₄யந்தரோ ஹ்யஜ: / அப்ராணோ ஹ்யமநாஶ்ஶுப்₄ர: ஹ்யக்ஷராத்பரத: பர:" [முண்ட₃கம் 2-1-2] [பரமபத₃த்திலிருப்பவனுய், கண்ணுல்காணவொண்ணுதவனுய், அனைத்தின் உள்ளும் புறமும் வியாபித்திருப்பவனுய், பிறப்பற்றவனுய், ப்ராணன் மனம் முதலானவையற்றவனுய், ஒளிமிக்கவனுய், மூல ப்ரக்ருதியைக்காட்டிலும் மேலான ஜீவனைக்காட்டிலும் மேலானவனு யிருப்பவன் பரமபுருஷன்.] 4. "ஸ காரணம் கரணுதி₄பாதி₄ப:" [ஶ்வே. 6-9.] [அந்தப் பரமாத்மா இந்த்₃ரியங்களை நியமிக்கும் ஜீவனுக்கும் தலைவனுய், காரணமாயிருப்பவன்] "போ₄க்தாபோ₄க்₃யம் ப்ரேரிதாரம் ச மத்வா ஜுஷ்டஸ்ததஸ்தேந அம்ருதத்வமேதி" [ஶ்வே. 1-9.] [அனுப₄விக்கப்படுவதான அசேதனத்தையும், அதை அனுப₄விப்பவனுன ஜீவனையும், இரண்டையும் நியமிப்பவனுன பர மாத்மாவையும் அறிந்து அப்பரமாத்மாவினுல் அருளப்பெற்று ஜீவன் மோக்ஷம் அடைகிருன்] என்பவை. ஆக வேத₃ங்களும் அதை விளக்க வந்த ரிஷிகளும் சித₃சித்₃ஶ்வர தத்வத்ரயங்களின் பே₄த₃த்தையே வலியுறுத்தியிருக்கிருர்கள் என்று காட்டப்பட்டதாயிற்று. இனி, ஶ்லோகத்தின் பிற்பாதியாலே ப்₃ரஹ்ம ஸூத்ரத்திலுள்ள ஸூத்ரங் களாலும் இவ்விஷயமே நிர்ணயிக்கப்பட்டது என்று காட்டுகிருன். (ப்₃ரஹ்மஸூத்ர பதை₃ஶ்சைவ) ப்₃ரஹ்மத்தைப்பற்றிக் கூறும் ஸூத்ரங்களாகிற பத₃ங்களாலும் இவ்விஷயமே பலவகையாகக் கூறப்பட்டது, "ஶாரீரகமீமாம்ஸை" என்று ப்ரஸித்₃த₄மான ப்₃ரஹ்மஸூத்ரங்களிலும் இது சொல்லப்பட்டது என்றபடி. இந்த ப்₃ரஹ்ம ஸூத்ரங்கள் எப்படிப்பட்டவை என்பதை இரண்டு பத₃ங் களாலே விளக்குகிருன்—(ஹேதுமத்₃பி₄:) ஹேதுக்களோடு கூடிய வைகளாலே. நிர்ணயிக்கும் அர்த்த₂ங்களுக்கு ஹேதுவைக் காட்டு கிறவைகளாலே என்றபடி. (விநிஶ்சிதை:) "விஶேஷதோ நிஶ்சிதம் யேஷாம் தை:" என்னும் வ்யுத்பத்தியாலே சிறப்பான நிர்ண யத்தை உடையவைகளாலே என்று பொருள்படுகிறது. பூர்வ பக்ஷங்களாகிற ஆக்ஷேபங்களை எழுப்பி, ஸித்₃தா₄ந்தங்களாகிற நிர்ணயங்களைச் செய்பவைகளாலே என்றபடி. அவையாவன— 1. (பூ: ஸூ) ந வியத₃ஶ்ருதே: [2-3-1] [ஆகாயம் உற்பத்தியாவதில்லை; (உற்பத்தியை உணர்த்தும்) ஶ்ருதியில்லாமையால்] என்று தொடங்கி,

इत्यादस्य क्षेत्रप्रकारनिर्णय उक्तः, * नात्मा श्रुतेर्नित्यत्वाच्च ताभ्यः

2, (ஸி. ஸூ) "அஸ்தி து" [2-3-2] [ஆகாயத்திற்கு உற்பத்தியுண்டு ] 3, (பூ. ஸூ) 'கௌ₃ணய ஸம்ப₄வாத் ஶப்₃த₃ாச்ச" [2-3 3] [(அக்₃னியை முதலில் படைத்ததாகக் கூறியிருப்பது) ஒட்டாதாகையாலும், (விகாரமற்றது ஆகாயம் என்னும்) ஶ்ருதியினாலும் (ஆகாயத்திற்கு உற்பத்தியைக் கூறும் ஶ்ருதி) அமுக்கியமானது] 4. (பூ. ஸூ.) "ஸ்யாச்சைகஸய ப்₃ரஹ்மஶப்₃த₃வத்" [2-3-4] (ஆகாயவிஷயத்தில் அமுக்கியமாகப் பிரயோகிக்கப் பெற்ற 'ஸம்பூ₄த:' என்னும் ஶப்₃த₃ம்) ஒன்றுக்கே (அக்₃னிமுதலான விஷயங்களில் அனுஷங்கமும் செய்து கொள்ளும்போது முக்கியப்பிரயோகமும்) ஆகலாம்; (ஒரே ப்ரகரணத்தில் அமுக்கியமாகவும் முக்கியமாகவும் பிரயோகிக்கப் படும்.). ப்₃ரஹ்மஶப்₃த₃ம்போலே ] 5 (ஸி ஸூ.) "ப்ரதிஜ்ஞாऽஹாநி. அவ்யதிரேகாத்" [2-3-5] [(ப்₃ரஹ்மத்தை அறிந்தால் எல்லாம் அறியப்பட்டதாகும் என்னும்) ப்ரதிஜ்ஞைக்குக் குறையின்மை (ஆகாயமும் ப்₃ரஹ்மகார்யமாவதற்கு உறுப்பாக ப்₃ரஹ்மத்தைக்காட்டிலும்) வேறுபடாமலிருத்தலாலேயே ஆகும்.] 6. (ஸி. ஸூ ) "ஶப்₃தே₃ப்₄ய:" [2 3-6] [(ஸ்ருஷ்டிக்கு முன் ப்₃ரஹ்மம் ஒன்றே இருந்தது என்று கூறும்) வேத₃ஶப்₃த₃ங்களாலும் ஆகாயத்துக்கு உற்பத்தி உண்டென விளங்குகிறது.] 7. (ஸி ஸூ.) "யாவத் விகாரம் து விப₄ாகே₃ா லோகவத்" [2-3-7] [(ஆகாயம் முதலான) எல்லாக் கார்யப் பொருள்களுக்கும் உற்பத்தி (ஶ்ருதியில் சொல்லப்பட்டே உள்ளது) (தேஜஸ் முதலிய சிலவற்றைக் குறிப்பிட்டுச் சொன்னது) உலகிற்போலே.] 8. (ஸி. ஸூ ) "ஏதேந மாதரிஶ்வா வ்யாக்₂யாத:" [2-3-8] [இதனால் காற்றும் (உற்பத்தியுடையதென்று) விவரிக்கப்பட்டதாயிற்று.] 9 (பூ. ஸூ.) "தேஜோऽதஸ்ததா₂ ஹ்யாஹ" [2-3-10] [அக்₃னிதத்துவமானது முந்திய வாயுவிலிருந்தே (உண்டாகிறது) (ஶ்ருதி) அப்படியே கூறுகிறதன்றோ.] 10 (பூ. ஸூ.) "ஆப:" [2-3-11] [ஜலதத்துவமும் (முந்திய அக்₃னிதத்துவத்திலிருந்தே உண்டாகிறது); (ஶ்ருதி) அப்படியே கூறுகிறதன்றோ.] 11. (பூ ஸூ.) "ப்ருதி₂வீ" [2-3-12] [ப்ருதி₂வீதத்துவமும் (முந்திய ஜலதத்துவத்திடமிருந்தே உண்டாகிறது) (ஶ்ருதி அப்படியே கூறுகிறதன்றோ] என்னும் பதினொரு ஸூத்ரங்களாலே க்ஷேத்ரம் எனப்படும் அசித்தின் தன்மைகள் நிர்ணயிக்கப்பட்டன. இந்த ஸூத்ரங்களில் ஆகாஶம் முதலானவைற்றின் உற்பத்தியைக் கூறுகையாலே அவற்றின் சேர்த்தியாயிருக்கும் க்ஷேத்ரத்தைப் பற்றிய உண்மை அறிவு கூறப்பட்டதாயிற்று. இனி, 1. (ஸி. ஸூ ) 'நாத்மா ஶ்ருதே: நித்யத்வாச்ச தாப்₄ய:"

[2-3-18] [ஆத்மாவானது உண்டாவதில்லை. ஶ்ருதி அப்படிக் கூறுகையாலும், அந்த ஶ்ருதிகளிலிருந்தே ஆத்மா நித்யமானது என்று ஏற்படுகிறபடியாலும்] 2. (ஸி. ஸூ) 'ஜ்ஞோऽத ஏவ'' [2-3-19] [ஶ்ருதிகளிலிருந்தே (ஆத்மா) ஜ்ஞானத்தை உடையவனுகவே இருக்கிருன்] 3. (ஸி. ஸூ) 'உத்க்ராந்தி க₃த்யாக₃திநாம்'' [2-3-20] [(ஶரீரத்திலிருந்து) வெளியேறுதலும், (லோகாந்தரத்திற்குச் செல்லுதலும் (லோகாந்தரத்திலிருந்து) திரும்பி வருதலும் (ஜீவனுக்கு ஶ்ருதியில்) ஓதப்படுவதால் (ஆத்மா அணுவே)] 4. (ஸி. ஸூ) ''ஸ்வாத்மனா ச உத்தரயோ:'' [2-3-21] [க₃தி ஆக₃தி ஆகிய பின்னிரண்டும் தன் ஆத்மஸ்வரூபத்தினுலேயே (நடக்கவேண்டியவையாகையால் ஆத்மா அணு என்பது உறுதி)] 5. (ஸி. ஸூ) ''நாணுரதச்ச்₂ருதேரிதி சேந்ந இதராதி₄காராத'' [2-3-22] [அணுத்வதத்திலும் வேறுபட்ட விபு₄த்வம் ஶ்ருதியில் (ஜீவனுக்குக்) கூறப்படுகையால் (ஜீவன்) அணுவல்லன் எனில், ஜீவனைக்காட்டிலும் வேறுபட்ட பரமாத்மாவைப்பற்றிய ப்ரஸ்தாவமுள்ளதால் அவ்விபு₄த்வம் ஜீவனுடையதல்ல.] 6. (ஸி. ஸூ) 'ஸ்வஶப்₃தோ₃ந்மாநாப்₄யாம் ச'' [2-3-23] [(ஜீவனைக் குறித்து) அணுஶப்₃த₃மும் (அணுவஸ்துவை) எடுத்து அதன் அளவும் (ஶ்ருதியில்) கூறப்படுகையாலும் (ஜீவன் அணுவே)] 7. (ஸி. ஸூ) ''அவிரோத₄ஶ்சந்த₃நவத்'' [2-3-24] [(தே₃ஹத்தின் ஒரு பகுதியிலுள்ள) சந்தனம் (தேஹம் முழுவதும் உணர்ச்சியை விளைப்பது) போலே விரோத₄மில்லை.] 8. (ஸி. ஸூ) ''அவஸ்தி₂திவைஶேஷ்யாதி₃தி சேந்ந அப்₄யுபக₃மாத் ஹ்ருதி₃ ஹி'' [2-3-25] [(சந்தனத்துளி) தே₃ஹத்தின் ஒரு பகுதியில் இருப்பதால் (தே₃ஹம் முழுவதிலும் இன்பம் விளைக்கக் குறையில்லை; ஜீவன் அப்படியில்லையே) எனில்; இவ்வாக்ஷேபம் பொருந்தாது, (ஜீவனுக்கும் தே₃ஹத்தின் ஒரு பகுதியில் இருப்பை) ஒப்புக்கொள்வதால். ஹ்ருத₃யத்திலன்றே (ஜீவனுக்கு இருப்பு ஓதப்படுகிறது)] 9. ஸி.ஸூ) ''கு₃ணாத்₃வாऽऽலோகவத்'' [2 3-26] [(ஸூர்யன் முதலானவற்றின்) கிரணங்களைப்போலே கு₃ணமான அறிவின் மூலம் (தே₃ஹம் முழுவதும் பரவுகிருன் ஜீவன்)] 10 (ஸி. ஸூ) ''வ்யதிரிகோ க₃ந்த₄வத் தத₂ா ச த₃ர்ஶயதி'' [2-3-27] [மணத்திற்கு (அதையுடைய ப்ருதி₂வியைக் காட்டிலும் பே₄த₃ம் ஸித்₃தி₄ப்பது) போலே (த₄ர்மபூ₄த ஜ்ஞானத்துக்கு அதையுடைய ஆத்மாவைக்காட்டிலும்) வேறுபாடு (ஸித்₃தி₄க்கிறது) (ஶ்ருதியும்) அவ்வண்ணமே காட்டுகிறது.]

11. (ஸி. ஸூ) "ப்ருதகு₃பதே₃ஶாத்' [2-3-28] [(ஆத்மாவைக் காட்டிலும் ஜ்ஞானத்தை) வேருகவே உபதே₃ஶிப்பதால் (ஜ்ஞானத் திற்கு ஆத்மாவைக்காட்டிலும் வேறுபாடு ஸித்₃த₄ம்)] 12. (ஸி. ஸூ) "தத்₃கு₃ணஸாரத்வாத் து தத்₃வ்யபதே₃ஶ: ப்ராஜ்ஞவத்" [2-3-29] [ஜ்ஞானகு₃ணத்தை ஸாரமாகக்கொண்டிருப்பதாலேயே (ஆத்மா) ஜ்ஞானமென்று கூறப்படுகிறது. ஸர்வஜ்ஞுன பரமாத்மா (ஆனந்த₃ கு₃ணத்தை ஸாரமாக உடையவனுயிருப்பதால் ஆனந்தம் என்று கூறப்படுவது) போலே.] 13. (ஸி. ஸூ) "யாவதா₃த்மபா₄வித்வாச்ச ந தோ₃ஷ: தத்₃த₃ர்ஶநாத்" [2-3 30] [ஆத்மா இருக்கும் வரையிலும் (நித்தியமாக அறிவும்) இருப்பதாலும் (ஆத்மாவை ஜ்ஞானமென் பதில்) குற்றமில்லை. (நித்யத₄ர்மமான கோ₃த்வாதி₃களை யிட்டு, பசு முதலானவை கோ₃ முதலிய ஶப்₃த₃த்தால்) வழங்கப்படுவதைக் காண் கையால்] 14. (ஸி. ஸூ)"புமஸ்த்வாதி₃வத் த்வஸய ஸதோऽபி₄வ்யக்தி யோகா₃த்" [2-3-31] [(எப்போதும் ஆத்மாவில்) உள்ள இந்த த₄ர்ம பூ₄த ஜ்ஞானத்திற்கு ஆண்மை முதலானவை (மனிதனுக்கு ஒருகாலத் தில் வெளிப்படுவது) போலே (விழிப்பு முதலான சிலகாலங்களில்) வெளிச்செறிப்பு ஏற்படுவதாகக் கொள்ளலாமாகையால் (ஆத்மாவுக்கு அறிவு நித்யத₄ர்மமாகலாம்.)] 15. (ஸி. ஸூ.) 'நித்யோபலப்₃த₄ யநுபலப்₃தி₄ ப்ரஸங்கோ₃ऽந்யதர நியமோ வாந்யதா₂" [2-3-32] [ஆத் மாவை எங்கும் நிறைந்ததாகவும், ஜ்ஞானமாத்ரமாகவும் ஒப்புக்கொள் ளும் பக்ஷத்தில் ஆத்மாவைப்பற்றிய தோற்றமும், தோற்றமின்மையும் எப்போதும் ஏற்படவேண்டிவரும். அல்லது அத்தோற்றம் தோற்ற மின்மை எனும் இவ்விரண்டிற்குள் ஏதாவதொன்று எப்போதும் ஏற்படவேண்டிவரும்.] 16. (ஸி. ஸூ.) "கர்த்தா ஶாஸ்த்ரார்தத₂ வத்த்வாத்" [2-3-33] [ஶாஸ்த்ரம் பயனுள்ளதாக ஆகவேண்டு மாகையால், ஆத்மா கர்த்தாவாகவும் ஆகிருன்.] 17. (ஸி. ஸூ) 'உபாதா₃நாத் விஹாரோபதே₃ஶாச்ச" (2-3-34] [(சரீரேந்த்ரி யங்களைப்) பற்றிக்கொண்டு (ஜீவன்) ஸஞ்சரிப்பதாக உபதே₃ஶிக் கையாலும் (ஜீவனே கர்த்தா)] 18 (ஸி ஸூ) "வ்யபதே₃ஶாச்ச க்ரியாயாம் நசேந்நிர்தே₃ஶ விபர்யய:" [2-3-35] [(லௌகிக வைதி₃க) க்ரியைகளில் (கர்த்தாவாகக்) கூறுகையாலும் (ஜீவனே கர்த்தா) (விஜ்ஞாநஶப்₃த₃த்தால் ஆத்மாவைக்) கூறவில்லையாகில் (விஜ்ஞாநேந என்று) வேற்றுமை மாறுபாடு ஏற்பட்டிருக்க வேண்டும்.] 19. (ஸி. ஸூ.) "உபலப்₃தி₄வத₃நியம:" [2-3-36] [(முன் அதி₄கரணத்தில் கடைசி (2-3-32) ஸூத்ரத்தில்

(२. ३. ४०) इति भगवत्प्रवर्त्यत्वेन भगवदात्मकत्वमुक्तम् । एवं बहुधा गीतं क्षेत्रक्षेत्रज्ञयाथात्म्यं मया संक्षेपेण सुस्पष्टमुच्यमानं शृणु इत्यर्थः ॥ ४ ॥

महाभूतान्यहङ्कारो बुद्धिरव्यक्तमेव च ।
इन्द्रियाणि दशैकं च पञ्च चेन्द्रियगोचराः ॥
इच्छा द्वेषस्सुखं दुःखं संघातश्चेतनाधृतिः ।
एतत् क्षेत्रं समासेन सविकारमुदाहृतम् ॥

5. மஹாபூ₄தாந்யஹங்கார: பு₃த்₃தி₄ரவ்யக்தமேவ ச ।
இந்த்₃ரியாணி த₃ஶைகம் ச பஞ்ச சேந்த்₃ரியகோ₃சரா: ॥

---

சொல்லப்பட்ட) உபலப்₃தி₄யைப் போலே (கர்மப₂லபோ₄க₃த்தில்) நியமமில்லாமற்போகும்.] 20. (ஸி. ஸூ.) "ஶக்திவிபர்யயாத்" [2.3.37] [(ப்ரக்ருதிக்குக் கர்த்ருத்வத்தை ஒப்புக்கொண்டால் அதற்கே போ₄க்த்ருத்வஶக்தியையும் ஒப்புக்கொள்ளவேண்டிவருகையால், ஆத்மாவிற்கு போ₄க்த்ருத்வஶக்தி இல்லாமற்போகும்.] 21. (ஸி. ஸூ.) "ஸமாத்₄யபா₄வாச்ச" [2.3.38] [(மோக்ஷஸாத₄னபூ₄தமான) ஸமாதி₄ பொருந்தாதாகையாலும் (ஆத்மாவே கர்த்தா)] 22. (ஸி. ஸூ.) "யதா₂ ச தக்ஷோப₄யதா₂" [2.3.39] [(ஆத்மா கர்த்தாவாயிருந்தால்தான்) தச்சனைப்போலே (இஷ்டமிருந்தால் வேலைசெய்கிருன்; இஷ்டமில்லையாகில் வேலைசெய்வதில்லை என்னும்) இருவிதமான வ்யவஸ்தை₂யும் (ஒட்டும்)] 23. (ஸி. ஸூ.) "பராத்து தச்ச்₂ருதே:" [2-3-40] [(ஜீவனுடைய) அந்தக் கர்த்ருத்வமோவெனில் பரமாத்மாவாலேயே ஏற்படுகிறது ஶ்ருதி அப்படிக் கூறுகிறபடியால்.] ஆகிய 23 ஸூத்ரங்களால் க்ஷேத்ரஜ்ஞனுகிற ஜீவனைப்பற்றிய உண்மையறிவு நிர்ணயிக்கப்பட்டது. "பராத்து தச்ச்₂ருதே:" என்னும் ஸூத்ரத்தில் ஜீவன் பரமாத்மாவுக்கு ஶரீரமாய், அந்தர்யாமியான அவனுல் எப்போதும் நியமிக்கப்படுபவனுய் இருப்பவன் என்று காட்டப்பட்டது. இப்படி வேத₃ங்களாலும், ரிஷிகளாலும், ப்₃ரஹ்ம ஸூத்ரங்களாலும் க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களைப் பற்றிய உண்மை அறிவு மிக விரிவாகப் பலவிதமாகப் பாடப்பட்டிருக்கையால் அல்ப ஜ்ஞானமுடைய உன்னுல் அவற்றைத்தெளிவாக அறிந்துகொள்ள முடியாது. ஆகையால் எல்லாமறிந்த நான் இங்கு அவற்றைப் பற்றிச் சுருக்கமாகவும் மிகத்தெளிவாகவும் கூறப்போவதை நீ கேட்பாயாக என்று முன்ஶ்லோகத்துடன் கூட்டிப் பொருள் கொள்ளவேண்டும். 4.

6. இச்ச₂ா த்₃வேஷஸ் ஸுக₂ம் து₃:க்க₂ம் ஸங்க₄ாதச்
சேதநாத்₄ருதி: ।
ஏதத் க்ஷேத்ரம் ஸமாஸேந ஸவிகாரம் உதா₃ஹ்ருதம் ॥

மஹாபூ₄தாநி — பஞ்சபூ₄தங்கள், அஹங்கார: — (அவற்றுக்குக் காரணமான) பூ₄தாதி₃, பு₃த்₃தி₄: — (அதற்குக் காரணமான) மஹாந், அவ்யக்தம் ஏவ ச — (அதற்குக் காரணமான) மூலப்ரக்ருதி, த₃ஶ ஏகம் ச இந்த்₃ரியாணி — ஐந்து ஜ்ஞாநேந்த்₃ரியங்களும், ஐந்து கர்மேந்த்₃ரியங்களும், இவற்றை நியமிக்கும் மனமும் ஆகப் பதினொரு இந்த்₃ரியங்களும், பஞ்ச இந்த்₃ரியகோ₃சரா: ச — ஶப்₃த₃ஸ்பர்ஶரூபரஸக₃ந்த₄ங்களாகிற ஐந்து புலன்களும், இச்ச₂ா — விருப்பம், த்₃வேஷ: — வெறுப்பு, ஸுக₂ம் — இன்பம், து₃:க்க₂ம் — துன்பம், சேதநாத்₄ருதி: ஸங்க₄ாத: — (இன்பதுன்பங்களை அனுப₄விப்பதற்கும், போ₄க₃மோக்ஷங்களை ஸாதி₄ப்பதற்கும்) ஜீவனுக்கு ஆதா₄ரமாயிருக்கும் பூ₄தஸமூஹம், ஏதத் — இவையனைத்தும், ஸவிகாரம் — கார்யங்களோடு கூடிய, க்ஷேத்ரம் — க்ஷேத்ரம் (என்று) ஸமாஸேந — சுருக்கமாக, உதா₃ஹ்ருதம் — சொல்லப்பட்டது.

---

5. பூதங்கள் பூதாதி புத்தி பிரகிருதி
யோதிந்தி யம்பதினொன் றொண்புலனை ந்—தீதில்வரு
மிச்சைசின மின்பதுன்ப மேலுமுடல் சேதனர்தம்
துச்சிருப்பி தாகுஞ் சுருக்கு.

பூதங்கள் — ஐந்து பூ₄தங்கள், பூதாதி — (அவற்றுக்குக் காரணமான) அஹங்காரம், புத்தி — (அதற்குக்காரணமான) மஹான், பிரகிருதி — (அதற்குக் காரணமான) மூலப்ரக்ருதி, ஓது இந்தியம் பதினொன்று - பதினொன்றாக ஓதப்படும் இந்த்₃ரியங்கள், ஒண்புலன் ஐந்து — ஒளிபொருந்திய விஷயங்கள் ஐந்து, ஈதில் வரும் — இவற்றினால் விளையும், இச்சை சினம், இன்ப துன்பம் — விருப்பு வெறுப்பு, ஸுகம் துக்கம், சேதனர்தம் — ஜீவர்களுடைய, துச்சு இருப்பு — போ₄க₃த்திற்கு ஆதா₄ரமான, ஏலும் உடல் — பூ₄தங்கள் முதலானவற்றின் கூட்டான உடல், இது சுருக்கு ஆகும் — இது (க்ஷேத்ரத்தின) சுருக்கமாகும்.

भा ॥ महाभूतान्यहंकारो बुद्धिरव्यक्तमेव चेति क्षेत्रारम्भकद्रव्याणि ; पृथिव्यप्तेजोवाय्वाकाशा महाभूतानि, अहंकारो भूतादिः, बुद्धिर्महान्, अव्यक्तं प्रकृतिः ; इन्द्रियाणि दशैकं च पञ्च

---

5, 6. க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களைப்பற்றிய உண்மையறிவைச் சுருக்கமாகச்சொல்லத் தொடங்கியவனாய், இவ்விரு ஶ்லோகங்களில் க்ஷேத்ரமெனப்படும் அசேதனத்தைப்பற்றிய உண்மையறிவைச் சுருக்கமாகக் கூறுகிறான். (மஹாபூ$_4$தாநி அஹங்கார: பு$_3$த்$_3$தி$_4$: அவ்யக்தம் ஏவ ச) பூ$_4$மி, நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் மஹாபூ$_4$தங்களும், அவற்றுக்குக் காரணமான பூ$_4$தாதி$_3$ எனப்படும் அஹங்காரமும், அதற்குக் காரணமாய், அறிவைப்போஷிக்கையாலே பு$_3$த்$_3$தி$_4$ எனப்படும் மஹானும், அதற்குக்காரணமான அவ்யக்தம் எனப்படும் மூலப்ரக்ருதியும், இத்தால் க்ஷேத்ரம் எனப்படும் ஶரீரத்துக்குக் காரணமான த்$_3$ரவ்யங்கள் எடுக்கப்பட்டன. மூன்றாவது ஶ்லோகத்தில் 'யச்ச' என்று கூறியதின் விவரணமாகும் இது. பூ$_4$தஶப்$_3$த$_3$ம் ஜீவராசிகள் முதலானவற்றையும் குறிக்குமானாலும், ஶரீரத்துக்குக் காரணமான பொருள்களைக் கூறும் ப்ரகரணமாகையால், ஐம்பெரும் பூ$_4$தங்களையே இங்கு மஹாபூ$_4$தஶப்$_3$த$_3$த்தால் குறிப்பதாகக் கொள்வதே தக்கது. அவ்வண்ணமே அஹங்கார ஶப்$_3$த$_3$மும் தே$_3$ஹாத்மாபி$_4$மானம் முதலானவற்றைக் குறிப்பதானாலும், ப்ரகரணத்தையொட்டி பூ$_4$தங்களுக்குக் காரணமான அஹங்காரத்தைச் சொல்லுவதாகக்கொள்வதே பொருந்தும். அவ்வஹங்காரத்திலும் ஸாத்விகாஹங்காரம் இந்த்$_3$ரியங்களுக்குக் காரணமாகையாலும், ராஜஸாஹங்காரம் ஸாத்விக தாமஸாஹங்காரங்களிரண்டுக்கும் தத்தம் கார்யோத்பத்தியில் உதவிபுரிவதேயாகையாலும், பஞ்சபூ$_4$தங்களுக்குக் காரணமாய் அதனாலேயே 'பூ$_4$தாதி$_3$' எனப்படும் தாமஸாஹங்காரமே இங்கு அஹங்கார ஶப்$_3$த$_3$த்தால் குறிப்பிடப்படுவதாகக் கொள்வதே தகும். அவ்வண்ணமே பு$_3$த்$_3$தி$_4$ ஶப்$_3$த$_3$மும் உறுதியான அறிவையும் குறிக்குமாயினும் இங்கு ப்ரகரணத்தையொட்டி அவ்வறிவைப் போஷிக்கையாலே பு$_3$த்$_3$தி$_4$' எனப்படுவதாய், அஹங்காரத்துக்குக் காரணமானதான மஹான்' என்னும் தத்துவத்தையே குறிக்கிறது. 'அவ்யக்த' ஶப்$_3$த$_3$ம் இந்த்$_3$ரியங்களுக்குப் புலனாகாத பல பொருள்களைக் குறிக்குமாயினும், ப்ரகரணத்தையொட்டி இங்கு மஹானுக்குக் காரணமான மூலப்ரக்ருதியைக் குறிக்கிறது. அதிலும், "அவ்யக்தமக்ஷரே லீயதே, அக்ஷரம் தமஸி லீயதே, தம: பரே தே$_3$வ ஏகீப$_4$வதி"

चेन्द्रियगोचरा इति क्षेत्राश्रितानि तत्त्वानि; श्रोत्रत्वक्चक्षुर्जिह्वाघ्राणानि पञ्च ज्ञानेन्द्रियाणि, वाक्पाणिपादपायूपस्थानि पञ्च कर्मेन्द्रियाणीति, तानि दश, एकमिति मनः, इन्द्रियगोचराश्च पञ्च--

[ஸுபா3ல 2) (மஹானுக்குககாரணமான அவ்யக்தம என்னும் ப்ரக்ருதியின் நிலை அக்ஷரம் என்னும் ப்ரக்ருதிநிலையில் லயிக்கிறது. அவ்வக்ஷரம் தமஸ் என்னும் மூலப்ரககுருதியில் லயிக்கிறது] என்கிறபடியே அவ்யக்தம் எனப்படும மூலப்ரக்ருதியின் நிலையைச் சொன்னுல் அதற்குக் காரணமான அக்ஷரத்தையும் தமஸ்ஸையும் சொல்லவேண்டிவருமாகையால் மூலப்ரகருதியின் கடைசி நிலையான தமஸ்ஸையே இங்கு அவ்யக்தஶப்3த3ம் குறிக்கிறது என்று கொள்ள வேண்டும். இனி, மூன்ருவது ஸ்லோகத்தில் ''யாத்3ருக்ச'' என்று கூறப்பட்டதாய், க்ஷேத்ரத்தை இருப்பிடமாகக் கொண்டவையான பொருள்கள் ஸ்லோகத்தின் பிற்பாதியாலே விவரிக்கப்படுகின்றன. (இந்த்3ரியாணி த3ஶ ஏகம் ச பஞ்ச ச இந்த்3ரியகோ3சரா:) ஶப்3த3த்தை உணரும் செவி, ஸ்பர்ஶத்தை உணரும் மெய், ரூபத்தை உணரும் கண், ரஸத்தை உணரும் நா, க3ந்த4த்தை உணரும் மூக்கு என்கிற ஜ்ஞானேந்த்3ரியங்கள் ஐந்தும், பேச உதவும் வாய், தொழில் புரிய உதவும் கை, நடக்க உதவும் கால், மல விஸர்ஜனத்துக்கு உதவும் பாயு, மூத்ரரேதோவிஸர்ஜனத்துக்கு உதவும் உபஸ்த2ம் (ஆண், அல்லது பெண் குறி) ஆகிய கர்மேந்த்3ரியங்கள் ஐந்தும், இந்தப் பத்து இந்த்3ரியங்களையும் இயக்கும் மனமாகிற இந்த்3ரியமும் ''இந்த்3ரியாணி த3ஶ ஏகம் ச'' என்று கூறப்படுகின்றன. ''த்வக சக்ஷுர் நாஸிகா ஜிஹ்வா ஶ்ரோத்ரமத்ர ச பஞ்சமம் | ஶப்3தா3தீ3னாம அவாப்த்யர்த்த2ம் பு3த்3தி4யுக்தானி வை த்3விஜ / பாயூபஸ்தௌ2 கரௌ பாதௌ3 வாக் ச மைத்ரேய பஞ்சமீ / விஸர்க்க3ஶில்பக3த்யுக்தி கர்ம தேஷாம் ச கத்2யதே /|'' [வி. பு, 1-2-48-49] ''ஏகாத3ஶம் மனஶ்சாத்ர'' [வி. பு, 1-2-47] [ஶப்3த3ஸ்பர்ஶரூபரஸக3ந்த4ங்களை உணருவதற்காக முறையே ஏற்பட்ட காது, மெய் கண், நா, மூக்கு என்னும் ஐந்தும் ஜ்ஞானேந்த்3ரியங்களாகும். மலத்தை வெளியிட உதவும் பாயு, மூத்ரத்தையும் ரேதஸ்ஸையும் வெளியிட உதவும் உபஸ்த2ம், தொழில் புரிய உதவும் கைகள், நடக்க உதவும் கால்கள், பேச உதவும் வாய் என்னும் ஐந்தும் செயல்களைச் செய்ய உதவும் கர்மேந்த்3ரியங்களாகும். இவற்றை (இயக்கும்) மனம் பதினேராவது இந்த்3ரியமாகும்] என்று பராஶரமஹர்ஷி கூறியது இங்கு அனுஸந்திக்கத்தக்கது.

शब्दस्पर्शरूपरसगन्धाः ; इच्छा द्वेषस्सुखं दुःखमिति क्षेत्रकार्याणि

---

ஜ்ஞானேந்த்ரியங்களால் அறியப்படும் ஶப்₃த₃ம், ஸ்பர்ஶம், ரூபம் ரஸம், க₃ந்த₄ம என்னும் ஐந்து விஷயங்களும் (புலன்களும்) "பஞ்ச இந்த்₃ரிய கோ₃சரா:" என்று கூறப்படுகின்றன. ஆக இந்த ஶ்லோகத்தால் க்ஷேத்ரம் எனப்படும் ஶரீரத்துக்குக் காரணமான த்₃ரவ்யஙகளும் அந்த ஶரீரத்தைப் பற்றியிருக்கும் தத்துவங்களும் கூறப்பட்டன. இனி மூன்றாவது ஶ்லோகத்திலுள்ள 'யத்₃விகாரி' என்னும் பத₃ம் - அடுத்த ஶ்லோகத்தில் முதல் பாத₃த்தாலே விவரிக்கப்படுகிறது. 'க்ஷேத்ரம்' எனும் ஶரீரத்தின் விகாரங்கள் கூறப்படுகின்றன என்றபடி. (இச்ச₂ா த்₃வேஷ; ஸுக₂ம் து₃:க்க₂ம்) விருப்பு வெறுப்பு, இன்பம் துன்பம். இவ்விடத்தில் ஓர் ஆக்ஷேபம் எழக்கூடும். அதாவது:- "விருப்பு வெறுப்புக்கள், இன்பதுன்பங்கள் ஆகியவை பஞ்சபூ₄தங்களின் கூட்டான ஶரீரத்தின் பரிணாமமாகக் காணப்படவில்லையே; நேர்மாறாக ஆத்மாவின் த₄ர்மபூ₄தஜ்ஞானத்தின் பரிணாமமாகவன்றோ அவை காணப்படுகின்றன. அப்படியிருக்கும்போது அவற்றை ஶரீரத்தின் விகாரமென்பது எப்படிப் பொருந்தும்?" என்பது அவ்வாக்ஷேபம். இதற்கு ஸமாத₄ானம் பின்வருமாறு — ஆத்மாவுக்கு இந்த ஶரீர ஸம்ப₃ந்த₄த்தினாலேயே விருப்பு வெறுப்புக்களும், இன்ப துன்பங்களும் ஏற்படுகையால் அதையிட்டு உபசார வழக்காக இவை ஶரீரத்தின விகாரமாகக் கூறப்படுகின்றன. "மநஸா ஹ்யேவ பஶ்யதி மநஸா ஶ்ருணோதி ; காம: ஸங்கல்ப: விசிகித்ஸா ஶ்ரத்₃த₄ா அஶ்ரத்₃த₄ா த்₄ருதி: அத்₄ருதி: ஹ்ரீ: தீ₄: பீ₄: இதயேதத் ஸர்வம் மந ஏவ" [ ப்₃ருஹ 3-5-3 ] [மனத்தாலேயன்றோ (ஜீவன்) காண்கிறான்; மனத்தாலேயே கேட்கிறான். விஷயங்களில் விருப்பம், உறுதி, ஸந்தேஹம், கர்மங்களைச் செய்வதில் ஊற்றம், அதில் ஊற்றமின்மை, ஸுகம், துன்பம், வெட்கம், ப்ரமாணங்களால் மாத்திரம் உண்டாகும் அறிவு, பயம் இவையனைத்தும் மனமே] என்னும் வேத₃வாக்யத்தில் விருப்பம் முதலானவை மனத்தின் விகாரமே என்று கூறியிருக்கையாலும், "பஞ்சவ்ருத்தி: மநோவத்₃ வ்யபதி₃ஶ்யதே" [ப்₃ரஹ்மஸூ 2-4-12] [ஐந்தொழில்களையுடைய ப்ராணனே (பலவித₄மான தொழில்களையுடைய) மனம்போலே ப்ராணன் அபாநன் முதலிய ஐந்து பெயர்களால் குறிக்கப்படுகிறது.] என்னும் ஸூத்ரத்தின் பா₄ஷ்யத்தில் "ந காமாதி₃கம் மநஸ: தத்த்வாந்தரம்" [விருப்பம் முதலானவை மனத்தைக்காட்டிலும்

क्षेत्रविकारा उच्यन्ते; यद्यपीच्छाद्वेषसुखदुःखान्यात्मधर्मभूतानि,

---

வேறுபட்ட பொருள்கள் அல்ல] என்று ப4ாஷ்யமிட்டிருக்கையாலும் இங்கு விருப்பம் முதலானவற்றை த4ர்மபூ4தஜ்ஞானத்தின் பரிணாமமாகக் கூறுவது எப்படிப்பொருந்தும்? எனில்: "கார்யகாரண கர்த்ருத்வே ஹேது: ப்ரக்ருதிருச்யதே / புருஷ: ஸுக2து3:க்க2ானாம போ4க்த்ருத்வே ஹேதுருச்யதே ||" [கீ3தை 13-20] [ஶரீரேந்த்ரியங்களின் செயல்புரியும் தன்மைக்கு (புருஷனால் அதி4ஷ்டி2க்கப்பட்ட) ஶரீரரூபமான ப்ரக்ருதியே காரணமாகச் சொல்லப்படுகிறது. புருஷன் எனப்படும் ஜீவன் (ஶரீரத்தோடு கூடியிருந்துகொண்டு) இன்பதுன்பங்களை அனுப4விப்பதற்குக் காரணமாகிறான்] என்று இந்த கீ3தையில் "இன்பம் துன்பம் முதலானவற்றுக்கு ஜீவனே இருப்பிடமாயிருக்கிறான்" என்று சொல்லப்படப்போகிறதாகையாலே, இவற்றை ஜீவாத்ம த4ர்மமாகவே கொள்ளவேண்டும். கீ3தையில் ஜீவனை ஸுக2து3:க்க2ானுப4வத்திற்கு ஹேது என்று சொல்லிற்றேயொழிய அவ்வனுப4வத்திற்கு இருப்பிடம் என்று சொல்லவில்லையே; இருப்பிடமாயிராமலே ஹேதுவாயிருக்கலாமே எனில்; ஶ்லோகத்தின் முற்பாதியில் 'ஶரீரம் செயலுக்கு இருப்பிடமாயிருந்துகொண்டே ஹேதுவாகிறது' என்று கூறுகையால் இங்கும் புருஷன் ஸுக2து3:க்க2ங்களுக்கு இருப்பிடமாயிருந்துகொண்டு ஹேதுவாவதாகக் கூறுவதே பொருத்தமாகும். இதற்குமேல் அத்3வைதிகள் கூறுவதாவது: "அந்த:கரணமாகிற மனத்தோடு தொடர்புகொண்ட சைதன்யமே (அறிவே) 'ஜீவன்' என்றும் 'புருஷன்' என்றும் சொல்லப்படுகிறது. ஆகையால் "காம: ஸங்கல்ப:" என்னும் உபநிஷத்3வாக்யத்தை யொட்டி விருப்பம் முதலானவற்றை மனத்திலிருப்பவையாகவேகொண்டு விடலாம். 'புருஷஸ்ஸுக2து3:கா2னாம்' என்னும் கீ3தா வாக்யமும் இவ்வர்த்த2த்தையே சொல்லுகிறது" என்பது அத்3வைதிகளின் வாத3ம். தேஹத்தைப்போலே மனமும் ப்ரக்ருதியின் பரிணாமமேயாகையால் இப்படிக் கொள்ளும்போது ஶ்லோகத்தின் முற்பாதியில் கர்த்ருத்வத்துக்குக் காரணமாக ப்ரக்ருதியைச் சொன்னதுபோலே பிற்பாதியில் போ4க்த்ருத்வத்துக்குக் காரணமாகவும் ப்ரக்ருதியையே சொல்லவேண்டிவரும். மனத்துக்குச் சைதன்ய ஸம்ப3ந்த4மிருக்கையால் பிற்பாதியில் 'ஸுக2து3க்க2ங்களுக்கு இருப்பிடமாயிருப்பது புருஷன்' என்று கூறப்பட்டது. எனில், கர்த்ருத்வத்துக்கு இருப்பிடமாயிருக்கும் ஶரீரத்துக்கும் சைதன்ய ஸம்ப3ந்த4முள்ளதாகையால் முற்பாதியிலும் 'கர்த்ருத்வத்துக்கிருப்பிடமாயிருப்பது புருஷனே'

तथाऽऽत्मनः क्षेत्रसंबन्धप्रयुक्तानीति क्षेत्रकार्यतया क्षेत्रविकारा उच्यन्ते; तेषां पुरुषधर्मत्वं * पुरुषस्सुखदुःखानां भोक्तृत्वे

---

என்று கூறவேண்டிவரும். இனி "காம; ஸங்கல்ப:" என்னும் உபநிஷத்₃வாக்யத்துக்கும், ப்₃ரஹ்மஸூத்ரம் 2-4-12-இல் பா₄ஷ்யகாரர் "விருப்பம் முதலானவை மனத்தைக்காட்டிலும் வேறு பொருளல்ல" என்று கூறியிருப்பதற்கும் என்னவழி சொல்லுவது? எனில், "காமம், ஸங்கல்பம் முதலானவையாக த₄ர்மபூ₄த ஜ்ஞானம் பரிணமிப்பதற்குக் காரணமாயிருக்கும் மனோவ்ருத்திகள் (மனத்தின் செயல்கள்) அவற்றின் கார்யமான காமம், ஸங்கல்பம் முதலானவற்றைச் சொல்லும் சொற்களாலேயே சொல்லப்படுபவையாய் மனத்தைக் காட்டிலும் வேறுபடாதவையாய் இருக்கின்றன" என்பதே அவ்வுபநிஷத்₃வாக்யத்துக்கும், அந்த பா₄ஷ்யத்துக்கும் கருத்தென்று கொண்டுவிடலாம். இனி "வாதி₃ப்ரதிவாதி₃கள் இருவரும் ஒப்புக்கொள்ளும் மனோவ்ருத்திகளுக்கே விருப்பம் முதலான பெயர்கள் இருப்பதால் எல்லாம் பொருந்தும்போது த₄ர்மபூ₄தஜ்ஞானத்துக்குப் பரிணாமமாக விருப்பம் முதலானவற்றைக் கற்பிப்பதில் ப்ரமாணமில்லாமையால் அந்த ஶப்₃த₃ங்கள் மனோவ்ருத்திகளை லக்ஷணையாலே குறிக்கின்றன என்பது பொருந்தாதே" எனில்: "ஸோऽகாமயத" [தை-ஆ.-6] "அத₂ புருஷோ ஹவை நாராயணோऽகாமயத" [நாராயணோபநிஷத்] என்று பரமாத்மாவின் ஜக₃த்ஸ்ருஷ்டி ஸங்கல்பத்தைச் சொல்லும்போது சில உபநிஷத்₃வாக்யங்கள் காம ஶப்₃த₃த்தைப் பிரயோகித்தன. மற்றும் சில உபநிஷத்₃வாக்யங்கள் அப்பதத்தின் ஸ்த₂ானத்தில் "ததை₃க்ஷத" [சா₂ந் 6-2-3] "ஸ ஈக்ஷாஞ்சக்ரே" [ப்ரஶ்ந 6-3] என்று அறிவைக் குறிக்கும் 'ஈக்ஷதி'ஶப்₃த₃த்தைப் படித்தன, ப்ராக்ருதமான மனமற்றதான ஜக₃த்காரண விஷயத்தில் இவ்வண்ணமாக 'காம'ஶப்₃த₃ம் அறிவைக்குறிக்கிறது என்று தேறியவளவில் ஜீவனுக்கும் அப்படியே கொள்வதே நியாயமாகும். மேலும், மற்றொரு வேத₃வாக்யத்தில் "ஸ தபோऽதப்யத" [தை-ஆந-6] என்று காமஶப்₃த₃ ஸ்த₂ானத்தில் படிக்கப்பட்ட தபஸ் ஶப்₃த₃த்துக்கு "யஸ்ய ஜ்ஞாநமயம் தப:" [முண்ட₃க 1-1-9] என்று வேறொரு உபநிஷத்₃ வாக்யம் ஜ்ஞானம் என்று பொருள் உரைத்தது.

**" ஸ யதி₃ பித்ருலோக காமோ ப₄வதி ஸங்கல்பா-**
**தே₃வாஸ்ய பிதரஸ் ஸமுத்திஷ்ட₂ந்தி"** [சா₂ந் 8-2-1]

हेतुरुच्यते (२०) इति वक्ष्यते । संघातश्चेतनाधृतिः - आधृतिराधारः,

---

[அந்த முக்தன் பித்ருக்களைக்காண விரும்பினானாகில் அவனது ஸங்கல்பத்தாலேயே அவனுடைய (முன்னாள்) பித்ருக்கள் கிளம்பிவருகிறார்கள்] என்று ப்ராக்ருதமான மலமற்ற முக்தன் காமஸங்கல்பங்களுக்கு இருப்பிடமாய் இருப்பதாக மற்றொரு வேத₃வாக்யம் முழங்கிற்று. மேலும் ஸுக₂ஶப்₃த₃த்தோடு ஒரே பொருளையுடைய ஆநந்த₃ஶப்₃த₃த்தால் சொல்லப்படும் ஆனந்தத்தை 'ரஸம் ஹ்யேவாயம் லப்₃த்₄வா ஆநந்தீ₃ ப₄வதி" [தை-ஆந 7] [ரஸமயனான பரமாத்மாவை இந்த முக்தாத்மா அடைந்து ஆனந்த₃முடையவனாகிறான்] "ஆநந்த₃ம் ப்₃ரஹ்மணோ வித்₃வாந்" [தை-ஆந-9] [ப்₃ரஹ்மத்தின் ஆனந்த₃த்தை அறிபவன்] என்னும் வேத₃வாக்யங்கள் முறையே முக்தாத்மாவிடமும் ப்₃ரஹ்மத்திடமும் உள்ளதாகப் பேசின. "அநுகூல ஜ்ஞாநமேவ ஹ்யாநந்த₃:" [அனுகூலமான அறிவே ஆனந்தமெனப்படுகிறதன்றோ] என்று பா₄ஷ்யகாரர் அருளிய ரீதியில் ஸுகம் முதலானவை த₄ர்மபூ₄த ஜ்ஞானத்தின் பரிணாமமே என்பது இவ்வாக்யங்களிலிருந்தும் விளங்குகிறது. மேலும்,

"நிரஸ்தாதிஶயாஹ்லாத₃ ஸுக₂ப₄ாவைகலக்ஷணா ।
பே₄ஷஜம் ப₄க₃வத்ப்ராப்தி: ஏகாந்தாத்யந்திகீ மதா" ॥
[வி-பு-6.5-59]

[தனக்கு மேலில்லாத பெருமையுடைய ஆனந்தரூபமான ஸுக₂மாக இருக்கையையே லக்ஷணமாகக்கொண்டதாய், துன்பம் கலவாததாய், நித்யமானதான ப₄க₃வத₃நுப₄வம் (ஸம்ஸார நோயால் வருந்துமவனுக்கு) மருந்தாக எண்ணப்படுகிறது.] என்று ப₄க₃வத₃நுப₄வமாகிற பேரின்பத்தைப் பராஶரமஹர்ஷி "ஸுக₂ரூபமானது" என்று குறிப்பிட்டார். இவற்றிலிருந்து, காமம், ஸங்கல்பம், ஸுக₂ம் முதலானவற்றை த₄ர்மபூ₄த ஜ்ஞானத்தின் பரிணாமமாகவே கொள்ள வேண்டும் என்று விளங்குகிறது. அத்₃வைதிகள் கூறுவதுபோல் மனத்தின் வ்ருத்திகளே (செயல்பாடுகளே) காமம், ஸுக₂ம் முதலானவை என்று கொண்டால், அச்செயல்பாடுகள் அறிவற்ற ஜட₃ப் பொருள்களேயாகையால் மற்றொன்றால் ப்ரகாசிப்பவை என்றே கொள்ளவேண்டிவரும். எது மற்றொன்றால் பிரகாசிப்பதோ, அது பிறிதொன்றைப் பிரகாசிக்கச்செய்ய இயலாது. ஆகையால், காமம் ஸுக₂ம் முதலானவை ஜ்ஞானத்தின் நிலைகளே என்று கொண்டாலொழிய அவை மற்ற பொருள்களைப் பிரகாசிக்கச்செய்வது பொருந்

सुखदुःखे सुज्ञानस्य भोगापवर्गौ साधयतश्च चेतनस्याधारतयोत्पन्नो

தாமற் போய்விடும். ஆகையால், அவற்றை ஞானத்தின் நிலைக ளென்றே கொள்ளவேண்டும். ஆகையால் அவற்றை மனத்தின் நிலை களே என்பது லக்ஷணவழக்கென்றே கொள்ளவேண்டும். இனி, "மநோ வ்ருத்திகளுக்கு அறிவின் தொடர்பு இருக்கையால் அவை பொருள்களைப் பிரகாசிக்கச்செய்வது பொருத்தமே எனக் கொள்ள லாமே" என்று அத்₃வைதிகள் கூறுவார்களாகில், எந்த விஶேஷமுமற்ற அவ்வறிவு எந்த விஷயத்தையும் அறியமாட்டாதாகையால், அதோடு தொடர்புடையதாயிருப்பதால் மாத்திரம் மநோவ்ருத்திகள் பொருள் களைப் பிரகாசிக்கச்செய்ய இயலமாட்டா. நூறு குருடர்கள் ஒன்று சேர்ந்தாலும் விஷயங்களைப் பார்க்க முடியாதே! நிர்விஶேஷமான அறிவே பொருள்களைப் பிரகாசிக்கச் செய்வதெனக்கொண்டால் 'மநோவ்ருத்திகளோடு தொடர்புடைய அவை விஷயங்களை கிரஹிக் கின்றன' என்று கொள்ளவேண்டிய அவசியமில்லை. மேலும், விஷய க்₃ராஹகத்வம் என்னும் கு₃ணமுடையவையாகத் தேறுகிறபடியால், அவ்வறிவு நிர்க்கு₃ணம் என்னும் கொள்கையும் தொலைந்துவிடும். "ஸம்ஸார நிலையில் அவ்வறிவு ஸங்கோசத்தை அடைந்துள்ளபடி யால் விஷயங்களை க்₃ரஹிக்கிறது" என்று கூறினால், "ப்₃ரஹ்மம் விகாரமற்றது. ஸங்கோசமற்றது" என்றெல்லாம் முழங்கும் வேத₃ வாக்யங்கள் முரண்படும். நம்முடைய விசிஷ்டாத்₃வைத மதத்தில் ஒப்புக்கொள்ளப்படும் சேதன த₄ர்மபூ₄தமான அறிவுக்கு ஸங்கோச விகாஸம் ஶ்ருதிகளில் முழங்கப்படுகிறதாகையால் இக்குறை ஏற்ப டாது. ஆகையால், விருப்புவெறுப்புகள், இன்பதுன்பங்கள் ஆகி யவை ஆத்மத₄ர்மபூ₄த ஜ்ஞானத்தின் விகாரங்களாயிருந்தபோதிலும், சரீரஸம்ப₃ந்த₄த்தினாலேயே அவை விளைவதையிட்டு இங்கு அவை ஶரீர விகாரங்களாகச் சொல்லப்பட்டது பொருத்தமேயாகும். (ஸங்க₄ாதஶ்சேதநாத்₄ருதி:) ஆத்₄ருதிஶப்₃த₃ம் ஆத₄ாரத்தைக் குறிக்கிறது. ஸங்க₄ாதஶப்₃த₃த்தால், இன்பதுன்பங்களை அனுப₄விப் பதற்கும், போ₄க₃மோக்ஷங்களை ஸாதிப்பதற்கும் ஆத₄ாரமாகப் படைக் கப்பட்டிருக்கும் பஞ்சபூ₄தக்கூட்டு சொல்லப்படுகிறது. 'சேதநா, த்ருதி:' என்று இரு பத₃ங்களாகப்பிரித்தால், 'சேதநா' எனப்படும் அறிவு ஶரீரத்தின் விகாரமாயிராமையால், ஶரீரத்தின் விகாரங்களைச் சொல்லும் இந்த ஶ்லோகத்தில் அது இடம்பெற முடியாது; ஒரே

भूतसंघातः; प्रकृत्यादिपृथिव्यन्तद्रव्यारब्धमिन्द्रियाश्रयभूतमिच्छाद्वेष-सुखदुःखविकारि भूतसंघातरूपं चेतनसुखदुःखोपभोगाधारत्वप्रयोजनं क्षेत्रमित्युक्तं भवति; एतत् क्षेत्रं समासेन—संक्षेपेण सविकारं—सकार्यमुदाहृतम् ॥ ५ ॥ ६ ॥

---

பத₃மாகக்கொண்டாலும், 'சேதநாயா: த்₄ருதி:" என்று பிரிக்கும் போது ஶரீரம் அறிவுக்கு ஆதாரமாயிராமையால் த்₄ருதிஶப்₃த₃த்திற்கு ஆத₄ாரம் என்னும் பொருளும் ஒட்டாது; போ₄க₃ஸ்த₂ானம் என்னும் பொருளைக்கொண்டாலும் விஶேஷணமற்ற வெறும் சைதந்யம் போ₄க்தாவாக முடியாதாகையால் அப்பொருளும் பொருந்தாது; "ஏஷ ஹி த்₃ரஷ்டா ஶ்ரோதா க்₄ராதா ரஸயிதா மந்தா போ₃த்₃த₄ா கர்த்தா விஜ்ஞாநாத்மா புருஷ:" [ப்ரஶ்ந 4-9] [அறிவுடைய இப்புருஷனை காண்பவனாகவும், கேட்பவனாகவும், முகர்பவனாகவும், சுவைப்பவனாகவும், நினைப்பவனாகவும், அறிபவனாகவும், செயல்புரிபவனாகவுமிருப்பவன்] என்று அறிவுடையவனையன்றோ வேத₃ம் போ₄க்தாவாகக் கூறிற்று. ஆகையால், "சேதநஸ்ய ஆத்₄ருதி:" என்று பிர்த்து, சேதனனுக்கு போ₄க₃ஸ்த₂ானமாயிருக்கும் பஞ்சபூதக்கூட்டு என்று பொருள்கொள்வதே பொருத்தமாகும். சேதந ஶப்₃த₃த்தால் ஸம்ஸாரத்தில் கட்டுப்பட்டிருக்கும் ஜீவாத்மா சொல்லப்படுகிறான். ஆத்₄ருதி ஶப்₃த₃மும் "பூ₄தைருஹ்யாம" [வி-பு 2-3-69] [நாம் அனைவரும் பஞ்சபூ₄தங்களால் சுமக்கப்படுகிறோம்] என்று சொன்னரீதியில் போ₄க₃ஸ்த₂ானமான ஆத₄ாரத்தைக் குறிக்கிறது. இக்காரணத்தாலேயே, 'சேதனனால் த₄ரிக்கப்படும் ஆதே₄யமான ஶரீரம் அவனுக்கு எப்படி ஆத₄ாரமாக முடியும்?" என்னும் கேள்விக்கும் இடமில்லை. ஆக, இவ்வளவால், மூன்றாவது ஶ்லோகத்தில் கூறப்பட்ட ஐந்து விஷயங்களைச் சுருக்கமாக விளக்கும் இந்த ஶ்லோகங்களால், க்ஷேத்ரம் எனப்படுவது (1) ப்ரக்ருதிமுதல் ப்ருதி₂வியீறாகவுள்ள த்ரவ்யங்களால் உண்டானது; (2) இந்திரியங்களுக்கு இருப்பிடமாயுள்ளது (3) விருப்புவெறுப்புகள் இன்பதுன்பங்கள் முதலானவையாகப் பரிணமிப்பது; (4) பூ₄தங்களின் கூட்டாயிருப்பது (5) சேதனன் இன்பதுன்பங்களை அநுப₄விப்பதற்கு இருப்பிடமாயிருக்கையைப் பயனாகக்கொண்டது என்று விவரிக்கப்பட்டதாயிற்று 5,6.

भा ॥ अथ क्षेत्रकार्यत्वात्तज्ज्ञानसाधनत्वोपादेया गुणाः प्रोच्यन्ते—

अमानित्वमदम्भित्वमहिंसा क्षान्तिरार्जवम् ।
आचार्योपासनं शौचं स्थैर्यमात्मविनिग्रहः ॥ ७ ॥

7. **அமாநித்வமத₃ம்பி₄த்வமஹிம்ஸா க்ஷாந்திரார்ஜவம் ।
ஆசார்யோபாஸநம் ஶௌசம் ஸ்தை₂ர்யமாத்ம-
விநிக்₃ரஹ: ॥**

**அமாநித்வம்** — உயர்ந்தோரை அவமதிக்காமை, **அத₃ம்பி₄த்வம்**— புகழுக்காக அறஞ்செய்யாமை, **அஹிம்ஸா** — முக்கரணங்களாலும் பிறரைத் துன்புறுத்தாமை, **க்ஷாந்தி:**— பிறரால் துன்புறுத்தப்பட்ட போதிலும் மனவேறுபாடு அடையாமை, **ஆர்ஜவம்**—பிறர் விஷயத்தில் முக்கரணங்களாலும் ஒருபடிப்பட்டிருக்கை, **ஆசார்யோபாஸநம்** — (ஆத்மஜ்ஞானத்தை உபதேசிக்கும்) ஆசார்யன் விஷயத்தில் பணிவிடைபுரிதல், **ஶௌசம்** - (ஆத்மஜ்ஞானத்திற்கும் அதன ஸாதநத்திற்கும் உறுப்பான) முக்கரண சுத்தி, **ஸ்தை₂ர்யம்**—(சாஸ்த்ரம் கூறும் அர்த்தத்தில்) உறுதியாய் இருக்கை, **ஆத்மவிநிக்₃ரஹ:** — (ஆத்மஸ்வரூபம் தவிர்ந்த விஷயங்களில் ஈடுபடாமல்) மனத்தை அடக்குதல்.

---

7. **மானமுட னேடம்பம் வன்கொலையின் மாறுநிலை
யானபொறை செவ்வை யமர்குருவின்—பானணுகல்
சுத்தியமர் வுற்ற துணிவுடைமை சூழ்மனத்தைச்
சித்தி யளவுஞ் செறுப்பு.**

**மானமுடனே டம்பம் வன்கொலையின் மாறுநிலை** — உயர்ந்தோரை அவமதித்தல், புகழுக்காக அறஞ்செய்தல், முக்கரணங்களாலும் பிறரைத் துன்புறுத்தல் ஆகியவையில் லாமலிருக்கை, **ஆனபொறை**— பிறரால் துன்புறுத்தப்பட்ட போதிலும் மனவேறுபாடு அடையாமை, **செவ்வை**—பிறர் விஷயத்தில் முக்கரணங்களாலும் ஒருபடிப்பட்டிருக்கை, **அமர்குருவின்பால் நணுகல்**-(ஆத்மஜ்ஞானத்தை உபதேசிக்கும்) நல்ல ஆசார்யனுக்குப் பணிவிடைபுரிதல், **சுத்தி**—

भा ॥ अमानित्वम्—उत्कृष्टजनेष्ववधीरणारहितत्वम्; अदम्भित्वम्—धार्मिकत्वयशःप्रयोजनतया धर्मानुष्ठानम् दम्भः, तद्रहितत्वम्;

---

(ஆத்மஜ்ஞானத்திற்கும் அதன் ஸாதனத்திற்கும் உறுப்பான) முக்கரணசுத்தி, அமர்வுற்ற துணிவுடைமை-(சாஸ்த்ரம கூறும் அர்த்தத்தில்) மிக்க உறுதியுடனிருக்கை, சூழ் மனத்தைச் சித்தியளவுஞ் செறுப்பு — (ஆத்ம ஸவரூபம் தவிர்ந்த விஷயங்களில்) பட்டிமேயும மனத்தை ஆத்மஸாக்ஷாத்காரம் பெறும் வரையில் அடக்கிவைத்தல்.

---

7. இனி ஐந்து ஶ்லோகங்களாலே ஆத்மஜ்ஞான ஸாத₄னமாகக் கைக்கொள்ள வேண்டிய கு₃ணங்களைக் கூறுகிறான். பனிரண்டாவது ஶ்லோகம் தொடங்கி ஆத்மாவைப்பற்றிக் கூறிய பின்பு ஆத்மஜ்ஞான ஸாத₄னமான கு₃ணங்களைப்பற்றிச் சொல்லுவதே தக்கதாயினும், அந்த கு₃ணங்கள் சென்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட இச்சா₂த்₃வேஷங்கள், ஸுக₂து₃க்க₂ங்கள் ஆகியவற்றைப்போல க்ஷேத்ரமாகிற ஶரீரத்தினால் விளைபவையாகையாலே, க்ஷேத்ரத்தை விளக்கும் போதே அவற்றையும் விவரிக்கிறான். அதில் இந்த ஶ்லோகத்தில் ஒன்பது கு₃ணங்களைக் கூறுகிறான். (1) (அமாநித்வம்) உயர்ந்தோரை அவமதிக்காமை, மானமாவது:—

**வித்₃யாமதோ₃ த₄நமத₃ஸ் த்ருதீயோऽபி₄ஜநோ மத₃: ।**
**ஏதே மதா₃வலிப்தாநாம் ஏத ஏவ ஸதாம் த₃ம: ॥**

[மத₃ங்கொண்டவர்களுக்கு, வித்₃யையும் மத₃ஹேதுவாகிறது; த₄னமும் மத₃ஹேதுவாகிறது; நல்ல குடிப்பிறப்பும் மத₃ஹேதுவாகிறது; (வித்₃யை, த₄னம், குலம் என்னும்) இவையே நல்லோர்களுக்கு த₃மத்திற்கு (அடக்கத்திற்கு) ஹேதுவாகிறது.] என்கிறபடியே கல்வி செல்வம் நற்குடிப் பிறப்பு ஆகியவற்றில் மிகுதி காரணமாக (அவற்றில் குறைந்த) சான்றோர்களை அவமதிக்கும் க₃ர்வமேயாகும். அதையுடையவன் 'மாநீ' எனப்படுகிறான்; அவனது தன்மை மாநித்வமாகும்; அது இல்லாமையே 'அமாநித்வம்' எனும் கு₃ணமாகிறது. அன்றிக்கே, "மாநியைக்காட்டிலும் வேறுபட்டவன் 'அமாநீ' எனப்படுகிறான்; அவனது தன்மை அமாநித்வம்" என்றும் கொள்ளலாம். உயர்ந்தோரை அவமதிக்காமை அமாநித்வம் எனத் தேறுகிறது.

अहिंसा-वाङ्मनःकायैः परपीडारहितत्वम्; क्षान्तिः– परैः पीड्यमान·

---

(2) (அத3ம்பி4த்வம்) புகழுக்காக அறஞ்செய்யாமை; த3ம்ப4மாவது:— 'சாஸ்திரங்களில் விதி4க்கப்பட்டதாகையாலே அறம் செய்யத் தக்கது' என்று எண்ணாமல், 'இவர் பெரிய தா4ர்மிகர்' என்னும் புகழை அடைவதற்காக அதைச் செய்தல்; அதையுடையவன் த3ம்பீ4' அவனது தன்மை த3ம்பி4த்வம்; அது இல்லாமை அத3ம்பி4த்வமாகும். அன்றிக்கே ''த3ம்பி4யைக் காட்டிலும் வேறுபட்டவன் அத3ம்பீ4; அவனது தன்மை அத3ம்பி4த்வம்'' என்றும் கொள்ளலாம்; புகழுக்காக அறஞ்செய்யாமை அத3ம்பி4த்வம் எனத்தேறுகிறது. (3) (அஹிம்ஸா) மனோவாக்காயங்களாகிற முக்கரணங்களாலும் அஸத்துக்களைக்காட்டிலும் வேறுபட்ட எந்த ஜீவராசிக்கும் துன்பம் விளைவிக்காமலிருக்கை; அநர்த்த2த்தையே விளைப்பதாய், பிறர்க்குத் துன்பம் தருவதான செயல் ஹிம்ஸை எனப்படுகிறது. ''வெறுப்பொடு சமணர் முண்டர் விதியில் சாக்கியர்கள் நின்பால் பொறுப்பரியனகள் பேசில்...தலையையறுப்பதே கருமம் கண்டாய்'' [திருமாலை 8] என்று தொண்டரடிப்பொடியாழ்வாராலும், ''யதா2 ஹி சோரः ஸ ததா2ஹி பு3த்3த4:'' [ரா-அ-109-34] [திருடனைப்போலே பௌத்3த4ன் தண்டிக்கத்தக்கவன்] என்று ஆழ்வார் அருளிச்செயலுக்கு அடியான ஸ்ரீ ராமாயண வசனத்திலும் கூறப்பட்டபடியே ஶாஸ்த்ர விருத்3த4மான கார்யங்களைச் செய்பவர்களைத் துன்புறுத்துவது நன்மையையே விளைக்குமாகையால் அது ஹிம்ஸையாகாது. அக்3நீஷோமீயயாக3த்தில் செய்யப்படும் பசு ஹிம்ஸை எவர்க்கும் அனர்த்த2த்தை விளைப்பதல்லாமையாலும் ஶாஸ்த்ரத்தில் விதி4க்கப்பட்டதாகையாலும் ஹிம்ஸையாகாது. மேலும் ஹிம்ஸையானது வாக்கு, மனம், சரீரம் என்னும் முக்கரணங்களாலும் செய்யப்படுகிறது. ஆகையால் பிறர்க்கு அனர்த்த2த்தை விளைக்கும் துன்பத்தைத் தருவதாய், முக்கரணங்களாலும் செய்யப்படுவதான பரபீடை3யைச் செய்யாமலிருக்கை அஹிம்ஸை என்றதாகிறது. இங்கு பா4ஷ்யத்தில் பரபீடை3 என்றது ஶாஸ்த்ரவிருத்3த4மாகத் தன்னைத்தானே துன்புறுத்திக்கொள்வதற்கும் உபலக்ஷணம். ஶாஸ்த்ர விருத்3த4மாகத் தனக்கோ, பிறர்க்கோ அனர்த்த2த்தை விளைக்கும் துன்பத்தைச் செய்யாமலிருக்கை அஹிம்ஸை என்றதாயிற்று. (4) (க்ஷாந்தி:) பிறரால் துன்புறுத்தப்பட்டாலும் அவர்களைக்குறித்து கோபம் முதலான விகாரமில்லாமலிருக்கையாகிற பொறுமை. (5) (ஆர்ஜவம்) நேர்மை.

स्यापि तान्प्रत्यविकृतचित्तत्वम्; आर्जवम्— परान्प्रति वाङ्मनःकाय-प्रवृत्तीनामेकरूपता; आचार्योपासनम् — आत्मज्ञानप्रदायिन्याचार्ये प्रणिपातपरिप्रश्नसेवादिनिरतत्वम्; शौचम्- आत्मज्ञानतत्साधनयोग्यता मनोवाक्कायगता शास्त्रसिद्धा; स्थैर्यम् -अध्यात्मशास्त्रोदितेऽर्थे निश्च-

"மநஸ்யந்யத வசஸ்யந்யத கர்மண்யந்யத து₃ராத்மநாம்" [து₃ஷ்டர்களுக்கு மனமும், மொழியும், செயலும் வெவ்வேறுபட்டிருக்கின்றன] என்கிற து₃ஷ்டலக்ஷணமாகிற கௌடில்யத்திற்கு எதிர்த்தட்டாய், "மநஸ்யேகம் வசஸ்யேகம் கர்மண்யேகம் மஹாத்மநாம்" என்கிற படியே பிறரைக்குறித்து மனம் மொழி செய்களாலே ஒருபடிப் பட்டிருக்கையாகிற மஹாத்மலக்ஷணத்தை உடைத்தாயிருக்கை ஆர்ஜவம் எனப்படும் நேர்மை. (6) (ஆசார்யோபாஸநம்) ஆத்ம ஜ்ஞானத்தையளிக்கும் ஆசார்யன் விஷயத்தில் "தத்₃வித்₃தி₄ ப்ரணிபாதேந பரிப்ரஶ்நேந ஸேவயா" [கீ₃தை 4-34] [நன்கு வணங்குவதாலும், சூழ்ந்துநின்று கேட்பதாலும், கைங்கர்யத்தினாலும் ஆத்ம ஜ்ஞானத்தை ஜ்ஞானிகளிடமிருந்து அறிவாயாக] என்று சொல்லப் பட்ட வணக்கம் முதலானவற்றை உடைத்தாயிருக்கை ஆசார்யோ பாஸனமாகிறது, (7) (ஶௌசம்), "ஸந்த்₄யாஹீநோऽஶுசிர்நித்யம் அநாஹஸ ஸர்வகர்மஸு / யத₃ந்யத் குருதே கர்ம ந தஸ்ய ப₂லபா₄க₃ப₄வேத //" [ஸந்த்₄யாவந்த₃னம் செய்யாதவன் எப்போதும் அஶுத்₃த₄மானவன்; மற்ற கர்மங்களைச் செய்வதற்குத் தகுதியற்றவன்; வேறு கர்மம் எதையாவது செய்தாலும் அதன் பயனை அடையமாட்டான்] என்கிற படியே வேறு கர்மங்கள் செய்யத் தகுதியற்றிருக்கை அஶுசித்வமாகும். அப்படியில்லாமல் அதற்குத் தகுதியுடையனாயிருக்கை ஶுசித்வமாகிற ஶௌசம். இங்கு ப்ரகரணத்தையொட்டி ஆத்மஜ்ஞானம், அதற்கு ஸாத₄னம் ஆகியவற்றுக்குத் தகுதியுடையவனாயிருக்கை ஶௌசமாகிறது. அஶௌசமும் மனத்திலிருக்கும் பேராசை முதலானவையாகவும், வாக்கிலிருக்கும் பொய்கூறுதல் முதலானவையாகவும், உடம்பைப்பற்றியிருக்கும் ருஷித₃த₄பே₄ாஜனம் முதலானவையாகவும் மூன்றுபடிப்பட்டிருக்கும். அந்த மூன்றும் இல்லாமலிருக்கை இங்கு ஶௌசஶப்₃த₃த்தால் கருதப்படுகிறது. குளித்தல் முதலானவற்றால் ப்ரத்யக்ஷமாக ஏற்படும் ஶுத்₃தி₄மாத்திரம் ஶௌசமாகாது. ப்ரத்யக்ஷம் முதலானவற்றால் அறிந்துகொள்ள முடியாதவையாய், ஶாஸ்த்ரங்கொண்டே அறியவேண்டுமவையான ஶௌசங்களும் இங்கு கருதப்படுகிறது. (8) (ஸ்தை₂ர்யம்) அசையாமை. இங்கு ப்ரகரணத்தையொட்டி ஆத்மாவைப்பற்றிய ஶாஸ்த்ரங்களில் கூறிய

त्वम्; आत्मविनिग्रहः — आत्मस्वरूपव्यतिरिक्तविषयेभ्यो मनसो निवर्तनम् ॥ ७ ॥

इन्द्रियार्थेषु वैराग्यमनहङ्कार एव च ।
जन्ममृत्युजराव्याधिदुःखदोषानुदर्शनम् ॥ ८

8. இந்த்₃ரியார்த்தே₂ஷு வைராக்₃யம் அநஹங்கார ஏவ ச ।
ஜந்மம்ருத்யுஜராவ்யாதி₄து₃:க்க₂தோ₃ஷாநுத₃ர்ஶநம் ॥

இந்த்₃ரியார்த்தே₂ஷு வைராக்₃யம்—இந்த்₃ரியங்களால் அறியப்படும் ஶப்₃த₃ாதி₃ விஷயங்களில் பற்றின்மை. அநஹங்கார: ஏவ ச—தே₃ஹாத்மாபி₄மானமின்மை, ஜந்மம்ருத்யுஜராவ்யாதி₄து₃:க்க₂தோ₃ஷாநுத₃ர்ஶநம் — பிறப்பு, இறப்பு, கிழத்தனம், நோய், துன்பம் ஆகிய தோ₃ஷங்களை அனுஸந்தி₄ப்பது.

---

8. இந்தியங்கள் சார்பொருளி லென்றுந் துறந்திருத்தல்
வந்தியலு மாங்கார மற்றொழிதல் – புந்தியினுற்
சென்ம மரணஞ் செரைநோய்சேர் துக்கமாம்
புன்மை யுணரும் புணர்ப்பு.

---

விஷயங்களில் அசையாத உறுதியுடையவனாயிருக்கையைக் குறிக்கிறது. வேத₃த்திற்குப்புறம்பான பௌ₃த்₃த₄ம் முதலான பா₃ஹ்ய மதங்களிலிருப்பவர்களும், வேத₃த்துக்கு அவப்பொருள்கூறும் மாயாவாத₃ம், ஶைவம் முதலான குத்₃ருஷ்டிமதங்களிலிருப்பவர்களும் எத்தனை விதண்டா₃வாத₃ங்கள் செய்தாலும் அசையாமல் உறுதியுடனிருக்கை இங்கு ஸ்தை₂ர்யமாகிறது. (9) (ஆத்மவிநிக்₃ரஹ:) ஆத்மாவை அடக்குதல். தன்னால் அடக்கத்தக்கதாகக் கூறுகையாலே, சரீரத்தோடுகூடிய தன்னைக்காட்டிலும் வேறுபட்ட மனமே இங்கு ஆத்மஶப்₃த₃த்தால் குறிக்கப்படுவதாகக் கொள்ளவேண்டும். இதனாலேயே சரீரேந்த்₃ரியக்கூட்டை ஆத்ம ஶப்₃த₃த்துக்குப் பொருளாக ஶங்கரர்கொண்டது பொருத்தமற்றது என விளங்கும். அக்கூட்டைக்குறித்து ஆத்ம ஶப்₃த₃த்தை வழங்குவதும் இல்லையன்றோ. விநிக்₃ரஹஶப்₃த₃ம் திருப்புவதைக்குறிக்கும். இங்கு ப்ரகரணத்தையொட்டி இயற்கையிலேயே எல்லா விஷயங்களிலும் திரியும் மனத்தை ஆத்மஸ்வரூபம் தவிர்ந்த மற்ற ஶப்₃த₃ாதி₃ விஷயங்களில் செல்லாதபடி திருப்புவதைக்குறிக்கும்,

भा ॥ इन्द्रियार्थेषु वैराग्यम्—आत्मव्यतिरिक्तेषु विषयेषु सदोषतानुसंधानेनोद्वेजनम्; अनहंकारः—अनात्मनि देहे आत्माभिमानरहितत्वम्; प्रदर्शनार्थमिदम्; अनात्मीयेष्वात्मीयाभिमानरहितत्वं च विव-

---

**இந்தியங்கள் சார்பொருளில் என்றும் துறந்திருத்தல்—** இந்த்₃ரியங்களால் அறியப்படும் ஶப்₃தா₃தி₃விஷயங்களில் எப்போதும் பற்றற்றிருக்கை, **வந்து இயலும் ஆங்காரம் அற்று ஒழிதல்—** இயல்வாக உண்டாகும தே₃ஹாத்மாபி₄மானத்தை அடியோடுவிடுதல். **புந்தியினுல்—** அறிவினுலே, **சென்மம் மரணம் செரை நோய் சேர் துக்கமாம் புன்மை உணரும் புணர்ப்பு—** பிறப்பு, இறப்பு, கிழத்தனம், நோய் இவற்ருல் வரும் துன்பம் ஆகிய தோ₃ஷங்களை அனுஸந்தி₄ப்பது.

---

8, இந்த ஶ்லோகத்தில் மேலும் மூன்று கு₃ணங்களைக்கூறுகிருன். (10) (இந்த்₃ரியார்த்தே₂ஷு வைராக்₃யம்) ஆத்ம ஸ்வரூபத்தைக் காட்டிலும் வேறுபட்டவையாய், இந்த்₃ரியங்களால் அறியப்படுபவையான ஶப்₃தா₃தி₃விஷயங்கள் குற்றம் நிறைந்தவை என்று அனுஸந்தி₄ப்பதன் மூலம் அவற்றை அருவருத்து ஒதுக்குதல். இவன் ஆத்மாவிலேயே ஈடுபட வேண்டியவனுகையாலே ஆத்மாவைத் தவிர்த்த மற்ற விஷயங்களில் பற்றற்றவனுயிருக்கவேண்டுமென்பது தெளிவு. "விராக₃ஸ்ய பா₄வ: வைராக₃யம்" [பற்றில்லாதவனின் தன்மை வைராக்₃யம்] என்னும் வ்யுத்பத்தியாலே வைராக்₃யஶப்₃த₃ம் பற்றின்மையைக் குறிக்கிறது. அப்பற்றின்மையும் 'இவ்விஷயங்கள் குற்றமுள்ளவை' என்று எப்போதும் அனுஸந்தி₄ப்பதனுல் உண்டாகும் அருவருப்பினுல் விளையும். இவ்விஷயங்களுக்குக் குற்றங்களாவன—வருந்திப் பெறவேண்டியவையாயிருக்கை, பெற்ருலும் துன்பத்தோடு கலந்திருக்கை, அல்பமாயிருக்கை, நிலைநில்லாதவையாயிருக்கை முதலானவை. (11) (அநஹங்கார ஏவ ச) ஆத்மாவல்லாத தேஹத்தில் ஆத்மா என்னும் நினைவு அஹங்காரமாகிறது. அது அற்றிருக்கை அநஹங்காரம். அஹங்காரஶப்₃த₃ம் க₃ர்வத்தைக் குறித்தும் வழங்கப்படுவதுண்டாயினும். அது 'அமாநித்வம்' என்னும் முதல் கு₃ணத்திலேயே தவிர்க்கப்பட்டு விட்டதாகையால் இங்கு தே₃ஹாத்ம மயக்கத்தை அதற்குப் பொருளாகக் கூறுவதே பொருத்தமானது.

क्षिणम् । जन्ममृत्युजराव्याधिदुःखदोषानुदर्शनम् —सशरीरत्वे जन्ममृत्यु-जराव्याधिदुःखरूपस्य दोषस्यावर्जनीयत्वानुसंधानम् ॥ ८ ॥

---

அநாத்மந்யாத்மபு₃த்₃தி₄ர்யா அஸ்வே ஸ்வமிதி யா மதி: ।
அவித்₃யாதருஸம்பூ₄தி பீ₃ஜமேதத் த்₃விதா₄ ஸ்தி₂தம் ॥
[வி-பு 6-7-11]

[தான் அல்லாத தே₃ஹத்தில் தான் என்ற நினைவும், தன்னுடைய தல்லாத பொருள்களில் தன்னுடையதென்கிற நினைவும் (ஸம்ஸாரத்தை விளைக்கும்) அவித்₃யையாகிற காம்யகர்மங்களெனும் மரம் வளர்வதற்குறுப்பான இரு பருப்புகளை உடைய விதையாகும்] என்கிற படியே அஹங்காரமாகிற இத்துடன் தன்னுடையதல்லாததைத் தன்னுடையதாக நினைக்கும் மமகாரமும் சேர்ந்தேவருவதாகையாலும், அஹங்காரத்தினல் விளைவதாகையாலும் இங்கு அதனுடைய இன்மையும் உபலக்ஷணமுறையாலே கூறப்படுவதாகக் கொள்ளவேணும். "ஏவ ச" என்னும் பத₃த்தாலே மற்ற கு₃ணங்களைக் காட்டிலும் இக்கு₃ணத்தின் முக்கியத்துவம் உணர்த்தப்படுகிறது. (12) (ஜந்மம்ருத்யு ஜரா வ்யாதி₄ து₃:க்க₂தோ₃ஷாநுத₃ர்ஶநம்) பிறப்பு, இறப்பு, கிழத்தனம், நோய், துன்பம் ஆகிய தோ₃ஷங்களை அநுஸந்திப்பது.

"அஶரீரம் வாவ ஸந்தம் ந ப்ரியாப்ரியே ஸ்ப்ருஶத:, ந ஹவை ஸஶரீரஸ்ய ஸத: ப்ரியாப்ரியயோரபஹதிரஸ்தி"
[சா₂ந் 8·12·1]

[ஶரீரமற்றிருக்கும் முக்தனை ஸுக₂து₃:க்க₂ங்கள் தொடுவதில்லை; ஶரீரமுள்ளவரையில் இந்த ஜீவனுக்கு இன்பதுன்பங்கள் அழிவதில்லை] என்கிறபடியே ஶரீரமுள்ளவரையில் பிறப்பு, இறப்பு, கிழத்தனம், நோய் முதலான தோ₃ஷங்கள் தவிர்க்கவொண்ணாதவையாகையால், ஆத்ம ஜ்ஞானத்தைப் பெறவிரும்பும் இவன் எப்போதும் இவற்றின் தோ₃ஷத்தை அநுஸந்தி₄க்கவேண்டும் என்பது வெளிப்படை. "ஜன்ம ம்ருத்யு ஜரா வ்யாதி₄களால் ஏற்படும் துன்பம் ஜன்மம்ருத்யுஜராவ்யாதி₄ து₃:க்க₂ம் எனப்படுகிறது; அதுவே தோ₃ஷம்; அதை அநுஸந்தி₄ப்பது" என்றோ "ஜன்மம்ருத்யுஜராவ்யாதிகள், அவற்றால் ஏற்படும் துன்பம் ஆகியவை எல்லாமே துன்பத்தில் முடிபவையாகையாலும், மேன்மேலே துன்பத்தை விளைப்பவையாகையாலும், துன்பமயமாயிருப்பவையாகையாலும் தோ₃ஷமே வடிவெடுத்தவையாயிருப்பவை; இதை அநுஸந்தி₄ப்பது" என்றோ பொருள்

असक्तिरनभिष्वङ्गः पुत्रदारगृहादिषु ।
नित्यं च समचित्तत्वमिष्टानिष्टोपपत्तिषु ॥ ९

9. அஸக்திரநபி₄ஷ்வங்க₃: புத்ரதா₃ரக்₃ருஹாதி₃ஷு ।
நித்யம் ச ஸமசித்தத்வம் இஷ்டாநிஷ்டோபபத்திஷு ॥

**அஸக்தி:**—(ஆத்மாவைத்தவிர்ந்த மற்ற விஷயங்களில்) அபி₄மானமற்றிருக்கை, **புத்ரதா₃ரக்₃ருஹாதி₃ஷு** — மக்கள் மனைவி வீடு முதலானவற்றில், **அநபி₄ஷ்வங்க₃:** — விருப்பமற்றிருக்கை, **இஷ்டாநிஷ்டோபபத்திஷு**—விரும்பியதோ விரும்பாததோ வந்தடையும் போது, **நித்யம்**—எப்போதும், **ஸமசித்தத்வம் ச**—ஆனந்தமோ வெறுப்போ அடையாமல் மனம் ஒருநிலைப்பட்டிருக்கை.

---

9. நின்ற நசையறுத னேர்புதல்வர் தாரமனை
யொன்று மனமங் கொழிவித்த—லென்றுஞ்சம
ஞர்ந்தே யிருத்த லுகப்புவெறுப் பாம்பொருள்கள்
சேர்ந்து வரலிற் றெளிந்து.

**நின்றநசை அறுதல்**—ஆத்மாவைத்தவிர்ந்த மற்ற விஷயங்களில் அபி₄மானமற்றிருக்கை, **நேர் புதல்வர் தாரம் மனை ஒன்றும் மனம் அங்கு ஒழிவித்தல்** — தனக்கு அமைந்திருக்கும் மக்கள், மனைவி, வீடு முதலானவற்றில் விருப்பத்தை விடுதல், **உகப்பு வெறுப்பாம் பொருள்கள் சேர்ந்து வரலில்**—விரும்பியதோ விரும்பாததோ வந்தடையும்போது, **என்றும்**—எப்போதும். **தெளிந்து** — தெளிவுடையவனாய், **சமன் ஆர்ந்தே இருத்தல்**—ஆனந்தமோ வெறுப்போ அடையாமல் மனம் ஒருநிலைப்பட்டிருக்கை.

---

கொள்ளலாம். உமியிருக்கும்வரையில் அரிசியை உட்கொள்வது இயலாததுபோலே ஸ்தூ₂ல ஸூக்ஷ்மரூபமான ஶரீரம் இருக்கும் வரையில் தே₃ஹதோஷங்களையும் தவிர்க்கவொண்ணாது. ஆகையால் ஆத்மஜ்ஞானமேற்பட்டு முக்தியடையும்வரை அவற்றை அடிக்கடி அநுஸந்தி₄க்க வேண்டுமென்று கருத்து. 8.

भा ॥ असक्तिः-आत्मव्यतिरिक्तपरिग्रहेषु सङ्गरहितत्वम्; अनभिष्वङ्गः पुत्रदारगृहादिपु — तेषु शास्त्रीयकर्मोपकरणत्वातिरेकेण श्लेषरहितत्वम्; संकल्पप्रभवेष्टानिष्टोपनिपातेषु हर्षोद्वेगरहितत्वम् ॥ ९ ॥

---

9. பேனும் மூன்று குணங்களைக் கூறுகிறது இந்த ஶ்லோகத்தில். சென்ற ஶ்லோகத்தில் 'இந்த்₃ரியார்த்தே₂ஷு வைராக்₃யம்'' என்று மெய் வாய் கண் மூக்கு செவிகளாகிற இந்த்₃ரியங்களைத் தொட்டு இன்ப துன்பங்களை விளைவிக்கும் ஸாம்ஸ்பர்ஶிகமான விஷயங்களில் விகாரமின்மை கூறப்பட்டது. இந்த ஶ்லோகத்தில் மனத்தை இன்பமோ அதிர்ச்சியோ அடையச்செய்து விகாரத்தை உண்டாக்கும் ஸாங்கல்பிகமான விஷயங்களில் விகாரமின்மை கூறப்படுகிறது. ஆகையால் புநருக்தியில்லை. 13. (அஸக்தி:) ஆத்மாவைத் தவிர்ந்த செல்வம் முதலானவற்றில் பற்றின்மை. அப்படியானல் க்₃ருஹஸ்த₂ணுயிருந்து மோக்ஷமடைய விரும்புகிறவன் மனைவி மக்கள் வீடு முதலானவற்றை அடியோடு கைவிடவேண்டிவருமாகையால் க்₃ருஹஸ்த₂த₄ர்மத்தையே அனுஷ்டி₂க்கமுடியாதே என்னும் கேள்விக்கு பதிலை அளிக்கிறது. அடுத்தபடியாக—14. (புத்ரதா₃ரக்₃ருஹாதி₃ஷு அநபி₄ஷ்வங்க₃:) ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட க்₃ருஹஸ்த₂த₄ர்மத்துக்கு உதவி செய்பவர்கள் என்னுமளவுக்குமேலே மக்கள் மனைவி வீடு முதலானவற்றில் மிகுந்தபற்றுகிற பாசம் (ஈஷணை) இல்லாமலிருக்கை. அவர்களை அடியோடு கைவிடவேண்டும் என்று இங்கு கூறவில்லை. மிகுந்த பற்றுவைக்கக்கூடாது என்றே சொல்லப் படுகிறது. முந்திய பத₃ம் க்₃ருஹஸ்த₂த₄ர்மத்துக்கு உதவி புரியாத மிகுந்த செல்வம் முதலானவற்றை அடியோடு கைவிடவேணும் என்று கூறுகிறது, இப்பத₃ம் க்₃ருஹஸ்த₂த₄ர்மத்துக்கு உதவிபுரியுமவற்றில் மிகுந்த பற்றுவைக்கக்கூடாது என்று கூறுகிறது. ஆகையாலே புநருக்தியில்லை. 'ந குண்ட்₃யாம நோத₃கே ஸங்கோ₃ ந சேலே ந ச விஷ்டரே| நாகா₃ரே நாஸநே நாந்யே யஸ்ய வை மோக்ஷவித்து ஸ: ||''
[எவனுக்குத் தன் கமண்டலத்திலோ, நீரிலோ, வஸ்திரத்திலோ, கூர்மாஸனம் முதலானவற்றிலோ, மட₂த்திலோ, மான்தோல் முதலானவற்றிலோ, மற்ற எதிலுமோ பற்றில்லையோ அந்த ஸந்யாஸியே மோக்ஷத்தையடைவான்] என்று ஸந்யாஸிக்கும் கைவிடமுடியாத சில விஷயங்களில் பற்றின்மையே விதிக்கப்பட்டதன்ருே. "அஸக்தி:'' என்று ஸங்க₃மாகிற பற்றின் இல்லாமையைக் குறித்தது, ''ஸங்கா₃த் ஸஞ்ஜாயதே காம:'' [கீ₃தை 2.62] என்கிறபடியே ஸங்க₃மாகிற

मयि चानन्ययोगेन भक्तिरव्यभिचारिणी ।
विविक्तदेशसेवित्वमरतिर्जनसंसदि ॥ ௰

10. மயி சாநந்யயோகே₃ந ப₄க்திரவ்யபி₄சாரிணீ I
விவிக்ததே₃ஶஸேவித்வம் அரதிர்ஜநஸம்ஸதி₃ II

**மயி**—ஸர்வேஶ்வரனான என்னிடத்தில், **அநந்யயோகே₃ந**—வேறு எவரிடமும் ஈடுபடாமையாலே, **அவ்யபி₄சாரிணீ**—அசையாத நிலையுடனிருக்கும், **ப₄க்தி: ச**—ப₄க்தி, **விவிக்ததே₃ஶஸேவித்வம்**—ஜனஸஞ்சாரமில்லாத இடத்தில் வாழ்தல், **ஜநஸம்ஸதி₃ அரதி:**—ஜனக்கூட்டத்தில் ஈடுபாடு இன்மை.

---

10. என்பா லனன்னியமா யேய்ந்துபுறம் போகாது
வன்பாரும் பத்தி யமர்வுறுத— லின்பார்
தனியிடத்திற் சார்தல் சனங்குழுவு கண்டால்
நனியுகப்புச் சேரா நலம்.

---

பற்றிலிருந்து காமமாகிற பாசம் விளையும், ஸங்க₃மாகிற காரணமில்லாமையால் அபி₄ஷ்வங்க₃மாகிற பாசத்துக்கு இடமில்லை என்று கருத்து. 15 (இஷ்டாநிஷ்டோபபத்திஷு நித்யம் ஸமசித்தத்வம் ச) மனத்தை விகாரமடையச்செய்யும் இஷ்டாநிஷ்டங்கள் வந்தடையும்போது முறையே ஆனந்தமோ அருவருப்போ அடையாமல் எப்போதும் மனம் ஒருபடிப்பட்டிருக்கை, மழை வெய்யில் தென்றல் முதலான ஸாம்ஸ்பர்ஶிகமான இஷ்டாநிஷ்டங்கள் இவை வந்து தொடும்போது மனம் ஒருபடிப்பட்டிருப்பது இயலாதாகையாலே இங்கு மனத்தை விகாரமடையச்செய்யும் ஸாங்கல்பிகமான இஷ்டாநிஷ்டங்களையே குறிப்பதாகக் கொள்ளவேண்டும். பூர்வார்த்த₄த்தில் சொல்லப்பட்ட மக்கள் மனைவி வீடு முதலான இஷ்டாநிஷ்டங்கள் வந்தடையும்போது அவற்றில் மனம் எப்போதும் ஒருநிலைப்பட்டிருக்கவேண்டும் என்றதாயிற்று. சகாரம் இக்குணம் முக்கியமானது என்று காட்டுகிறது. ௯.

भा मयि- सर्वेश्वरे चैकान्त्ययोगेन स्थिरा भक्तिः ; जनवर्जितदेश-

**என்பால்**—ஸர்வேஶ்வரனை என்னிடத்தில், **அனன்னியமாய் ஏய்ந்து**—வேறு எவரிடமும் ஈடுபடாமல் இருக்கை யாலே, **புறம்போகாத**—எனக்கே அற்றுத்தீர்ந்த, **வன்பு ஆரும் பத்தி**—நிலையாயிருக்கும் ப₄க்தியை, **அமர்வுறுதல்**—உடையவனுதல, **இன்பு ஆர் தனி இடத்தில் சார்தல்**—இனிமை நிறைந்த தனியான இடத்தில் வாழ்தல், **சனம் குழுவு கண்டால்**—ஜனக்கூட்டத்தைப் பார்த்தால், **நனி உகப்பு சேரா நலம்**-மிகவும் ஈடுபாடுகொள்ளாமல இருக்கும் நன்மையை உடையவனுதல்.

---

10. மேலும் மூன்று கு₃ணங்களைக் கூறுகிருன் இந்த ஶ்லோகத்தில். (16) (மயி அநந்யயோகே₃ந அவ்யபி₄சாரிணீ ப₄க்தி: ச) ஸர்வேஶ்வரனை என்னிடத்தில் வேறெவரிடமும் ஈடுபடாமையாலே அசையாத நிலையுடன் இருக்கும் ப₄க்தியும். இந்த கு₃ணமில்லையேல் மற்ற கு₃ணங்களிருந்து பயனில்லை என்பதை, கடைசியான இந்த சகாரம் காட்டுகிறது. (மயி) ஸர்வேஶ்வரனுகிற என்னிடமும் ப₄க்தி வைத்து, மற்றொருவனிடமும் ப₄க்தி வைப்பது ராஜ மஹிஷியானவள் வேலைக்காரனை ஆசைப்படுவதுபோல் கடுமையான குற்றம் என்று கருத்து (அநந்யயோகே₃ந அவ்யபி₄சாரிணீ ப₄க்தி:) வேறு எவரிடமும் ஈடுபடாமையாலே அசையாத நிலையுடன் இருக்கும் ப₄க்தி. இத்தால் மறந்தும் புறந்தொழாமையாலே இது பாஸி பாயாத நிலையான ப₄க்தி என்று உணர்த்தப்படுகிறது. இப்படி முதல் பத₃ம் ஹேதுவையும் இரண்டாவது பத₃ம் நிலையாயிருக்கையாகிற அதன் விளைவையும் காட்டுகையாலே புநருக்தியில்லை 'அநந்யயோகே₃ந' என்னும் பத₃த்துக்கு 'அப்ருத₂க்ஸமாதி₄நா' என்று ஜீவப்₃ரஹ்ம ஐக்ய ஜ்ஞானத்தை ஶங்கரர் பொருளாகக் கொண்டது 'அவ்யபி₄சாரிணீ' என்னும் பத₃த்தோடு பொருந்தாது, அப்பத₃த்திற்கு "நாந்யோ ப₄க₃வதோ வாஸுதே₃வாத் பர: அஸ்தி; அத: ஸ ஏவ ந: க₃தி; இத்யேவம் நிஶ்சிதா பு₃த்₃தி₄:" ('வாஸுதே₃வனைக்காட்டிலும் மேலானவன் ஒருவனில்லை. ஆகையால் அவனே நமக்குத் தஞ்சமாவான்' என்னும் உறுதியான அறிவு) என்று அவரே பா₄ஷ்யம் இட்டிருப்பது குறிக்கொள்ளத்தக்கது.

वासित्वम्, जनसंसदि चाप्रीतिः ॥ १० ॥

---

கீதையில் மற்றும் பல இடங்களிலும் மற்ற தெய்வங்களிடம் ப₄க்தி செலுத்துவதை இகழ்ந்திருக்கையாலே இங்கும் இப்பொருளே பெறுந்தும். (17) (விவிக்ததே₃ஶஸேவித்வம்) ஜன நடமாட்டமில்லாத இனிய இடத்தில் வாழ்வது. (18) (ஜநஸம்ஸதி₃ அரதி:) ஸம்ஸாரி ஜனக் கூட்டத்தில் ஈடுபாடின்மை. இவ்விரண்டு கு₃ணங்களும் இவன் ஆத்ம த்₄யானம் செய்வதற்கு இடையூறு இல்லாமலிருப்பதற்காக அவசிய மானவை. ஜனக்கூட்டம் என்று பொதுவாகச் சொன்னபோதிலும் ஸாத்விகர்களான நல்லோர்களின் ஸஹவாஸம் த்₄யானத்திற்கு இடையூறு விளைக்காதாகையாலே, ரஜஸ்தமோ கு₃ணங்களையுடையவர்களான ஸம்ஸாரி ஜனக்கூட்டத்தையே இங்கு சொல்லுகிறது.

"அஹேரிவ க₃ணாத்₃பீ₄த: ஸந்மாநாந் மரணாதி₃வ ।
குணபாதி₃வ ச ஸ்த்ரீப்₄ய: தம் தே₃வா ப்₃ராஹ்மணம் விது₃: ॥
[பா₄ர-ஶாந்தி 251-13]

[ஜனக்கூட்டத்தைக் கண்டால் பாம்பைக் கண்டதுபோலவும், பாராட்டைக்கண்டால் சாவைக் கண்டதுபோலவும், ஸ்த்ரீகளைக் கண்டால் பிணத்தைக் கண்டாற்போலவும் எவன் பயந்து ஒதுங்குகிறானே, அவனையே தே₃வர்கள் ப்₃ராஹ்மணன் என்று அறிகிறார்கள்] என்றும்,

"நைதாத்₃ருஶம் ப்₃ராஹ்மணஸ்யாஸ்தி வித்தம்
யதை₂கதா ஸமதா ஸத்யதா ச ।
ஶீலே ஸ்தி₂தி: த₃ண்ட₃நிதா₄நமார்ஜவம்
ததஸ்ததஶ்சோபரம: க்ரியாப்₄ய: ॥
[பா₄ர-ஶாந்தி 283-38]

[தனித்து வாழ்வது, (அனைவரிடமும்) ஸமமாயிருப்பது, உண்மை பேசுவது, ஒழுக்கத்தில் நிலைநிற்பது, பலாஶ (புரசு) த₃ண்ட₃த்தைக் கைக்கொள்வது, நேர்மை, ஸாம்ஸாரிகமான அந்தந்தச் செயல்களிலிருந்து நீங்குவது ஆகிய கு₃ணங்களைக்காட்டிலும் ப்₃ராஹ்மணனுக்கு வேறு செல்வமில்லை] என்று மோக்ஷத₄ர்மத்தில் கூறப்பட்டது இங்கு அனுஸந்தி₄க்கத்தக்கது.

अध्यात्मज्ञाननित्यत्वं तत्त्वज्ञानार्थचिन्तनम् ।
एतत् ज्ञानमिति प्रोक्तमज्ञानं यदतोऽन्यथा ॥ ११

11. **அத்₄யாத்மஜ்ஞாநநித்யத்வம் தத்த்வஜ்ஞாநார்த்த₂ சிந்தநம் ।**
**ஏதத் ஜ்ஞாநமிதி ப்ரோக்தமஜ்ஞாநம் யத₃தோऽந்யத₂ா ॥**

**அத்₄யாதம ஜ்ஞாந நித்யத்வம்**—ஆத்மவிஷயமான ஜ்ஞானததில் என்றும் ஈடுபடுகை, **தத்த்வஜ்ஞாநார்த்த₂ சிநதநம்**—உண்மை அறிவு உண்டாவதற்கு உறுப்பான சிந்தனம், **ஏதத்**—இந்த இருபது கு₃ணங்களும், **ஜ்ஞாநம் இதி ப்ரோக்தம்**—ஆத்மஜ்ஞான ஸாத₄நமென்று சொல்லப் படுகிறது. **யத் அத: அந்யத₂ா**—இதைக்காட்டிலும் வேறு பட்டதனைத்தும், **அஜ்ஞாநம்**—ஆத்மஜ்ஞானத்துக்கு இடையூறு விளைப்பவை.

---

11. **ஆருயிரின் மேலறிவி லாய்ந்தென்று நின்றமர்வு**
**பேருணர்வாந் தத்துவத்தின் பீடறிவு - சீருடைய**
**மெய்ஞ்ஞான மாமதென மிக்குரைத்தேன் வேறுளது**
**பொய்ஞ்ஞான மாகும புறம்.**

**ஆருயிரின் மேல் அறிவில் ஆய்ந்து என்றும் நின்று அமர்வு**—அருமையான ஆத்மாவைப்பற்றியதான அறிவில் ஆராய்ச்சியோடு என்றும் நிலையாயிருத்தல், **தத்துவத்தின் பேருணர்வாம் பீடு அறிவு**—உண்மை அறிவுஉண்டாவதற்கு உறுப்பான சிறந்த சிந்தனை (ஆகிய இவ்விருபது கு₃ணங் களும்) **சீர் உடைய மெய் ஞானம் ஆமது**—சிறப்புடைய ஆத்மஜ்ஞானத்துக்கு ஸாத₄னமாவது. **என**—என்று, **மிக்கு உரைத்தேன்**—உறுதியாகச் சொன்னேன், **புறம் வேறு உளது**-இதற்கு மாருக உள்ளது அனைத்தும். **பொய் ஞானம் ஆகும**—ஆத்மஜ்ஞானத்திற்கு இடையூறு விளைப்பது ஆகும்.

---

11. இந்த ஸ்லோகத்தில் மேலும் இரண்டு கு₃ணங்களைக் கூறி இந்த ப்ரகரணத்தை நிறைவு செய்கிருன். (19) (அத்₄யாத்ம ஜ்ஞாந நித்யத்வம்) ஆத்ம விஷயமான ஜ்ஞானத்தில் என்றும் ஈடு

भा: आत्मनि ज्ञानम्–अध्यात्मज्ञानं तन्निष्ठत्वम्; तत्त्वज्ञानार्थचिन्तनम्-तत्त्वज्ञानप्रयोजनं यच्चिन्तनं तन्निरतत्वमित्यर्थः ; ज्ञायतेऽनेनात्मेति ज्ञानम्, आत्मज्ञानसाधनमित्यर्थः ; क्षेत्रसंबन्धिनः पुरुषस्यामानित्वा-दिकमुक्तं गुणबृन्दमेवात्मज्ञानोपयोगी, एतद्व्यतिरिक्तं सर्वं क्षेत्रकार्य-मात्मज्ञानविरोधीत्यज्ञानम् ॥ ११

---

பட்டிருக்கை. (20) (தத்த்வ ஜ்ஞாநார்த்த₂சிந்தநம்) உண்மையறிவைப் பயனாகக்கொண்ட சிந்தனத்தில் ஈடுபட்டிருக்கை. இப்பத₃த்திற்கு "தத்வ ஜ்ஞானத்தினுடைய அர்த்த₂சிந்தனை" என்று பொருள் கொள்வது பொருந்தாது. "தத்த்வம் கிமிதி சிந்தநம்" என்றோ, "ததஸ் தத்த்வசிந்தநம்" என்றோ, "தத்வார்த்த₂சிந்தநம்" என்றோ இங்கு சொல்லவேண்டியிருக்க, "தத்த்வ ஜ்ஞாநார்த்த₂ சிந்தநம்" என்று கூறியது பொருந்தவில்லை அர்த்த₂ ஶப்₃த₃த்துக்கு "விஷயம்" என்றோ, "பயன்" என்றோ பொருள்கொண்டு, தத்த்வ ஜ்ஞான விஷயமான சிந்தனம் என்றோ தத்த்வஜ்ஞானத்தின் பயனைப் பற்றிய சிந்தனம் என்றோ பொருள்கொள்வதில் சிறந்த அர்த்த₂ ஸ்வாரஸ்யமில்லை, ஆகையால் தத்த்வ ஜ்ஞானத்தைப் பயனாகக் கொண்ட சிந்தனம் என்று பொருள்கொள்ளப்படுகிறது. மற்ற சிந்தனங்களின் இல்லாமையும் இவனுக்கு அவசியமாகையால் இந்தச் சிந்தனத்திலேயே ஈடுபட்டிருக்க வேண்டும் என்றும் உணர்த்தப்படுகிறது. "தத்த்வஜ்ஞாநார்த்த₂த₃ர்ஶநம்" என்று சிலரால் பாட₂ம் கொள்ளப் படுகிறது 'சிந்தனம்' என்றே பெரும்பான்மைப் பாட₂ம். இனி ஶ்லோகத்தின் பிற்பாதியாலே க்ஷேத்ரகார்யமான (ஶரீர ஸம்ப₃ந்த₄த்தால் ஏற்படும்) இவ்விருபது கு₃ணங்களும் ஆத்மஜ்ஞான ஸாத₄னமானவையென்றார். மற்ற கு₃ணங்கள் அதற்குத் தடையாயிருப்பவை என்றும் கூறுகிறான். (ஏதத் ஜ்ஞாநமிதி ப்ரோக்தம்) அமாநித்வம் தொடக்கமாக இதுவரையில் சொல்லப்பட்ட இருபது கு₃ணங்களும் ஆத்மஜ்ஞான ஸாத₄நமாக என்றால் கூறப்பட்டது. இந்த கு₃ணங்களனைத்தையும் 'ஜ்ஞானம்' என்று சொல்லுவது பொருந்தாதாகையாலே "ஜ்ஞாயதே அநேந (ஆத்மா) இதி ஜ்ஞாநம்' என்னும் வ்யுத்பத்தியாலே ஜ்ஞானஶப்₃த₃ம் இங்கு ஜ்ஞான ஸாத₄னத்தைச் சொல்லுவதாகக் கொள்ளவேண்டும். ஶரீரத்தோடு கூடியிருக்கும் சேதனனுக்கு இதுவரை சொல்லப்பட்ட அமாநித்வம் முதலான இருபது கு₃ணங்களும் ஆத்மஜ்ஞானமுண்டாவதற்கு உதவுபவை

भा-अथ * एतद्यो वेत्तीति वेदितृत्वलक्षणेनोक्तस्य क्षेत्रज्ञस्य स्वरूपं विशोध्यते-

ज्ञेयं यत्तत्प्रवक्ष्यामि यज्ज्ञात्वाऽमृतमश्नुते ।
अनादि मत्परं ब्रह्म न सत्तन्नासदुच्यते ॥ १२

**12. ஜ்ஞேயம் யத் தத் ப்ரவக்ஷ்யாமி யஜ்ஜ்ஞாத்வாம்ருத-மஶ்நுதே ।**
**அநாதி3 மத்பரம் ப்3ரஹ்ம ந ஸத்தந்நாஸது3ச்யதே ॥**

**யத் ஜ்ஞாத்வா**-எதை அறிந்தால, **அம்ருதம் அஶ்நுதே**-அழியாத ஆத்மாவை அடைகிருனே. **யத் தத் ஜ்ஞேயம்**—இத்தகைய ப்ராப்யமான அந்த ஆத்ம ஸ்வரூபத்தைப்பற்றி, **ப்ரவக்ஷ்யாமி**—நன்கு கூறுகிறேன்; **அநாதி3**—(இவ்வாத்மா

---

எனறதாயிற்று. பொதுவாக ஜ்ஞானமென்று குறிக்கபோதிலும் ப்ரகரணத்தையொட்டி இது ஆத்ம ஜ்ஞானத்தைப்பற்றியது என்று கொள்ளவேண்டும். அதிலும் இவ்வளவு கு3ணங்களால் ஸாதி4க்கப் படவேண்டியது என்று கூறுகையாலே, ஆத்ம ஸாக்ஷாத்காரத்துககு இவையனைத்தும் ஸாத4னங்கள் என்று தேறிற்று. ஆத்மாவைப் பற்றிய மேலெழுந்தவாரியான அறிவு இக்கு3ணங்கள் விளைவதற்கு முன்புமுண்டன்ரே. (யத் அத: அந்யதா2 (தத்) அஜ்ஞாநம்) சரீர ஸம்ப3ந்த4த்தினுலுண்டாகும் மற்ற கு3ணங்கள் அனைத்தும் ஆத்ம ஜ்ஞானத்துக்குத் தடையாயிருப்பவையே. அஜ்ஞானம் என்பதில் உள்ள "நஞ்" விரோதி4 என்னும் பொருளையுடையது. இருபது கு3ணங்களை ஜ்ஞான ஸாத4னமாகச் சொல்லி சரீர ஸம்ப3ந்த4த் தால் ஏற்படும் மற்ற கு3ணங்கள் அனைத்தும் அதற்கு மாருனவை எனகையாலே, இவ்விருபது கு3ணங்களுக்கு நேர் எதிர்த்தட்டான மாநித்வம் முதலானவை மாத்திரமல்லாமல், சரீரஸம்ப3ந்த4த்தால் ஏற்படும் மற்ற கு3ணங்கள் எல்லாமே ஆத்மஜ்ஞானத்துக்குத் தடையாயிருப்பவை என்று விளங்குகிறது. ஜ்ஞானஶப்3த3த்திற்கு ஆத்மஜ்ஞானமென்றே பொருள்கொண்டு அஜ்ஞானஶப்3த3ம் அதற்கு விரோதி4யைக் குறிப்பதாகக் கொள்ளலாம் அன்றிககே "ஏதத் ஜ்ஞாநம்" என்றவிடத்திற்போலே ஜ்ஞானஶப்3த3ம் ஜ்ஞான ஸாத4னத்தைக் குறிப்பதாகக்கொண்டு அஜ்ஞானஶப்3த3ம் ஜ்ஞானஸாத4னவிரோதி4யைக் குறிப்பதாகக் கொள்ளலாம். அப்போது ஜ்ஞானவிரோதி4 என்பது தாத்பர்யார்த்த2மாகத்தேறும். 11.

வானது) ஆதியற்றது, (அந்தமுமற்றது); **மத்பரம்** - எனக்கு அடிமைப்பட்டிருப்பது; **ப்₄ரஹ்ம** — மிகப்பெரியதாயிருப்பது; **தத்**—அது, **ந ஸத் ந அஸத் உச்யதே**— (கார்யநிலையிலுள்ள ஆத்மாவைக் குறிக்கும்) 'ஸத்' என்னும் ஶப்₃த₃த்தாலும், (காரணநிலையிலுள்ள ஆத்மாவைககுறிக்கும) 'அஸத்' என்னும் ஶப்₃த₃த்தாலும் குறிக்கத்தகாதது.

**12. இவ்வறிவா லெய்து முயிர்தன்னை யீங்குரைக்கே**
**னெவ்வறிவா னல்லமுத மெய்தலாஞ் - செவ்வையதி**
**லாதியில தெற்பரமா யான்ற பிரமமா**
**யீதிலதுண் டென்றுரைப்ப தில்.**

**எவ்வறிவால்**—எதை அறிந்தால், **நல் அமுதம் எய்தலாம்**— நன்மைமிக்க அழியாத ஆதமாவை அடையலாமோ, **இவ்வறிவால் எய்தும் உயிர்தன்னை**—அத்தகைய ஜ்ஞான ஸாத₄னங்களால அடையப்படும் ஆத்ம ஸ்வரூபத்தை, **ஈங்கு உரைக்கேன்**—இவ்விடத்தில் கூறுகிறேன் ; **அதில் செவ்வை**—ஆத்மாவின் சிறப்புகளாவன:— **ஆதி இலது**— ஆதியில்லாதது (அந்தமுமில்லாதது) ; **எற்பரமாய்**— எனக்கு ஆட்பட்டதாய், **ஆன்ற பிரமமாய்**—மிகப்பெரியதாய், **ஈது இலது**—இது காரணநிலையிலுள்ள ஆத்மாவைப்போல் 'இலது' என்று சொல்லத்தக்கதாகவோ, (ஈது) **உண்டு என்று உரைப்பது இல்**—இது காரியநிலையிலுள்ள ஆத்மாவைப் போல் உள்ளது என்று சொல்லத்தக்கதாகவோ இராதது இந்த ஆத்மஸ்வரூபம்.

---

12. ஆக இதுவரையில் 'க்ஷேத்ரம்' எனப்படும் ஶரீரமும் அதன் கார்யங்களும் விளக்கப்பட்டன. இனி முதல் ஶ்லோகத்தில் "ஏதத்₃ யோ வேத்தி" என்று அந்த ஶரீரத்தை அறிபவனைச் சொல்லப்பட்ட க்ஷேத்ரஜ்ஞன் எனப்படும் ஜீவனுடைய ஸ்வரூபம் இந்த ஶ்லோகத்திலிருந்து ஆறு ஶ்லோகங்களில் விளக்கப்படுகிறது. (ஜ்ஞேயம் யத் தத் ப்ரவக்ஷ்யாமி) அமாநித்வம் முதலான ஸாத₄னங்களாலே ஸாக்ஷாத்கரிக்கத்தக்கதாய், அடையத்தக்கதான ஆத்மஸ்வருபத்தைப் பற்றிக்கூறுகிறேன். க்ஷேத்ரஜ்ஞன் என்றும், "ஏதத்₃யோ வேத்தி"

भा·अमानित्वादिभिस्साधनैः ज्ञेयं प्राप्यं यत्प्रत्यगात्मस्वरूपं तत्प्रवक्ष्यामि

---

என்றும் அறிபவனைச் சொல்லப்பட்டவனையன்ரே "ஸ ச யோ யத் ப்ரபா$_4$வச் ச" (3) என்று மேலே விளக்கப்போவதாக ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டது. அவனைப்பற்றிய விளக்கத்தைத் தொடங்கும்போது ஜ்ஞாதா என்று குறிக்காமல் 'ஜ்ஞேயம்" என்று குறிப்பானேன்? எனில்: ஸாக்ஷாத்கரித்து அடையத்தக்கதான ஆத்மஸ்வரூபத்தின் லக்ஷணமே 'ஏதத்$_3$யோ வேத்தி' முதலான இடங்களில் கூறப்பட்டது. அந்த ஜ்ஞாதாவான ஜீவனை முற்கூறிய அமாநித்வம் முதலான ஸாத$_4$னங்களாலே ஸாக்ஷாத்கரிக்கப்படுகிருன்; ஆகையால் அவனை இங்கு 'ஜ்ஞேயம்' என்று கூறியதில் குறையில்லை. பரமாத்மஸ்வரூபமும் ஸாக்ஷாத்கரிக்கத்தக்கதாகுலும் இந்த ப்ரகரணத்தில் பரமாத்மாவைப் பற்றிய பேச்சு இல்லாமையால் இங்கு ஜ்ஞேயம் எனப்படுவது பரமாத்மாவும் ஆக முடியாது. தொடக்கத்தில் 'க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோர் ஜ்ஞாநம்" (2) என்று ஶரீரத்தைப்பற்றியும், ஜீவனைப்பற்றியும் விளக்கப்போவதாகவே ப்ரதிஜ்ஞையுள்ளது; இந்த அத்$_4$யாயத்தின் கடைசி ஶ்லோகத்தில் "க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞயோரேவமந்தரம் ஜ்ஞாநசக்ஷுஷா" (34) என்று க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞர்களே இவ்வத்$_4$யாயத்தில் விளக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. நடுவிலும் 'ப்ரக்ருதிம் புருஷம் சைவ" (19) என்று இவ்விருவரைப்பற்றியே பேசப்படுகிறது, மேலும் இங்கு ஜ்ஞேயமாகச் சொல்லப்பட்டவனுக்கு இந்த்$_3$ரியங்களைக்கொண்டு அனுப$_4$விக்கும் தன்மையும், தே$_3$ஹத்திலிருந்து வெளிச்செல்வதும், கு$_3$ணங்களுக்கு வசப்பட்டிருப்பதும் கூறப்படுகின்றன. ஆகையால் இங்கு ஜ்ஞேய ஶப்$_3$த$_3$த்தால் பரமாத்மா குறிக்கப்படவில்லை என்றும், ஜீவாத்மாவே குறிக்கப்படுகிருன் என்றும் விளங்குகிறது. 'ஜ்ஞேயம்' என்று நபும்ஸக லிங்க$_3$மாகக் குறித்தது ஜீவாத்மஸ்வரூபத்தைக் கருத்தில்கொண்டு; ஶ்லோகத்தின் பிற்பாதியில் உள்ள ப்$_3$ரஹ்ம ஶப்$_3$த$_3$த்தைக் கருத்தில்கொண்டு என்றும் கொள்ளலாம். அறிபவனை ஆத்மாவுக்கு ஏற்கனவே லக்ஷணம் சொல்லப்பட்டுவிட்டது. லக்ஷணமாவது மற்ற பொருள்களைக்காட்டிலும் வேறுபாட்டைக்காட்டுவதேயன்ரே. இதற்குமேலும் ஆத்ம ஸ்வரூபத்தைப்பற்றி விளக்கவேண்டிய அவசியமென்ன? எனில்: லக்ஷணத்திஞல் மற்ற பொருள்களைக் காட்டிலும் வேறுபாடு மாத்திரமே விளங்கும்; அப்பொருளுக்கு உள்ளவையும் இல்லாதவையுமான மற்ற தன்மைகள்

यत् ज्ञात्वा जन्मजरामरणादिप्राकृतधर्मरहितममृतमात्मानं प्राप्नोति ; अनादि — आदिर्यस्य न विद्यते, तदनादि ; अस्य हि प्रत्यगात्मन उत्पत्तिर्न विद्यते ; तत एवान्तो न विद्यते; श्रुतिश्च * न जायते म्रियते वा विपश्चित् (क. २. १८.) इति;

---

விளங்கமாட்டா. பூ₄மிக்கு "க₃ந்த₄த்தை உடையது ப்ருதி₂வீ" என்று லக்ஷணம் கூறினதால் ஜலத்தைக்காட்டிலும் அதற்கு வேறுபாடு ஸித்₃தி₄க்குமேயொழிய அதற்குப் பாகத்தினால் ஏற்படும் ரூபாதி₂களு முண்டு என்பது ஸித்₃தி₄க்காதே. அதுபோலே இங்கு ஜ்ஞாத்ருத் வத்தை லக்ஷணமாகச் சொன்னாலும் ஜ்ஞாதாவான அவன் கார்யப் பொருளா? அல்லவா? முதலான தெளிவுகள் ஏற்படாது. ஆகை யால் அத்தெளிவுகள் ஏற்படுவதற்காக முன் ஶ்லோகங்களில் குறிப் பிடப்பட்ட அமாநித்வம் முதலான ஸாத₄னங்களால் அறியத்தக் கதாயிருக்கை, அநாதி₃யாயிருக்கை முதலான பல தன்மைகள் அறிபவனான ஆத்மாவுக்கு இனி விளக்கப்படுகின்றன. (ப்ரவக்ஷ்யாமி) சிறப்பாக உள்ளபடி சொல்லுகிறேன். (யத் ஜ்ஞாத்வா அம்ருதம் அஶ்நுதே) எந்த ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்தால் பிறப்பு, கிழத் தனம், மரணம் முதலான ப்ரக்ருதியின் தன்மைகளில்லாத தனது ஆத்ம ஸ்வரூபத்தை உபாஸகன் அடைகிறானோ அந்த ஆத்ம ஸ்வரூபத்தைப்பற்றிச் சொல்லுகிறேன் என்று முன் பாத₃த்தோடு சேர்த்துப் பொருள்கொள்வது. இனி ஆத்மஸ்வரூபத்தின் பெருமை கள் விளக்கப்படுகின்றன— (அநாதி₃) எதற்கு ஆதி₃(காரணம்) இல்லையோ அது அநாதி₃. இந்த ஜீவாத்மா ஒருகாலத்தில் உண்டானதில்லை என்று தாத்பர்யம். இதைச் சொன்னது 'இந்த ஜீவாத்மா ஒருகாலத்தில் அழிவதுமில்லை' என்று முற்பாதியில் அம்ருத ஶப்₃த₃த்தால் சொன்னதற்கும் காரணமாகிறது. ஜீவாத்மாவுக்கு உத்பத்திவிநாஶங்கள் இல்லை என்னும் இவ்விஷயம் "ந ஜாயதே ம்ரியதே வா விபஶ்சித்" [கட₂ 2-18] [அறிவுடையவனான ஜீவன் ஒரு காலத்தில் உண்டாவதுமில்லை; அழிவதுமில்லை] என்று உபநிஷத்திலும், "நாத்மா ஶ்ருதேர் நித்யத்வாச்ச தாப்₄ய:" [ப்₃ர-ஸூ 2-3-18] [ஆத்மாவானது உண்டாவதில்லை; ஶ்ருதி அப்படிக் கூறு கையாலும், அந்த ஶ்ருதிகளிலிருந்து ஆத்மா நித்யமானது என்று ஏற்படுகிறபடியாலும்] என்று ப்₃ரஹ்மஸூத்ரத்திலும் கூறப்பட்டது.

मत्परम्-अहं परो यस्य तन्मत्परम्, * इतस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम्, जीवभूताम् (७. ५) इति ह्युक्तम् । भगवच्छरीरतया भगवच्छेषतैकरसं ह्यात्मस्वरूपम्; तथा च श्रुतिः * य आत्मनि तिष्ठन्नात्मनोऽन्तरो यमात्मा न वेद यस्यात्मा शरीरं य आत्मानमन्तरो यमयति (बृ. ५. ७. २२ मा) इति, तथा * स कारणं करणाधिपाधिपो न चास्य कश्चिज्जनिता न चाधिपः (श्वे. ६. ९.) * प्रधान-

---

(மத்பரம்)பரமாத்மாவாகிற என்னைப்பரனுக (தலைவனுக)க் கொண்டது. இக்கீதையிலே "இதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்₃தி₄ மே பராம் । ஜீவ பூ₄தாம்" [7-5] என்று ஜீவாத்ம ஸ்வரூபம் எம்பெருமானுக்கு ப்ரகார மாய் ஶரீரமாயிருக்கையாலே அவனுக்கு அடிமைப்பட்டிருப்பதையே இயல்பாகக் கொண்டது என்று முழங்கப்பட்டதன்றே. ஜீவாத்ம ஸ்வரூபம் பரமாத்மாவுக்கு ஶரீரமாயிருப்பது என்பது

"ய ஆத்மநி திஷ்ட₂ந் ஆத்மநோऽந்தரோ, யமாத்மா ந வேத₃ யஸ்யாத்மா ஶரீரம், ய ஆத்மாநமந்தரோ யமயதி ॥"

[ப்₃ருஹ 5-7-22, மாத்₄யந்தி₃நஶாகை₂]

[எந்தப் பரமாத்மா ஜீவாத்மாவின் வெளியிலும் உள்ளும் இருக்கிருனே, எவனை ஆத்மா அறியவில்லையோ, எவனுக்கு ஆத்மா ஶரீரமோ, எவன் ஆத்மாவை உள்நுழைந்து நியமிக்கிருனே] என்ற வேத₃வாக்யத்திலும், ஜீவாத்மா பரமாத்மாவுக்கு அடிமைப்பட்டிருப்பது என்பது "ஸ காரணம் கரணுதி₄பாதி₄போ ந சாஸ்ய கஶ்சித் ஜநிதா ந சாதி₄ப:" [ஶ்வே 6-9] [இந்த்₃ரியங்களுக்குத் தலைவனை ஜீவனுக்குத் தலைவனுய், ஜக₃த்காரணமாயிருப்பவன் அப்பரமாத்மா. அவனை உண்டாக்கினவனே அவனுக்குத் தலைவனே எவனுமில்லை] "ப்ரதா₄நக்ஷேத்ரஜ்ஞபதிர் கு₃ணேஶ:" [ஶ்வே 6-16] [மூலப்ரக்ருதி, ஜீவன் ஆகிய இரு தத்துவத்துக்கும் தலைவனுய், கல்யாண கு₃ணங்களுக்குக் கொள்கலமாயிருப்பவன்] என்ற வேத₃வாக்யங்களிலும் முழங்கப்பட்டதன்றே. சிலர் "அநாதி₃மத்" "பரம்

क्षेत्रज्ञपतिर्गुणेशः (श्वे. ६. १६) इत्यादिका । ब्रह्म बृहत्त्वगुणयोगि । शरीरादेरर्थान्तरभूतम्, स्वतश्शरीरादिभिः परिच्छेदरहितं क्षेत्रज्ञतत्त्वमित्यर्थः ; ※ स चानन्त्याय कल्पते (श्वे. ५ ९ ) इति हि श्रूयते ;

---

ப்₃ரஹ்ம" என்று பத₃ம்பிரிக்கிறார்கள். இது ஜீவப்ரகரணமாகை யாலே, 'பரம்ப்₃ரஹ்ம' என்று ஜீவனைக்குறிப்பதில் ஸ்வாரஸ்யமில்லை மேலும் 'அநாதி₃' என்றுலே ஆதியற்றது என்று தேறுகிறபடியால் அதற்கு மேல் மதுப்ப்ரத்யயத்தைக் கொள்வது பயனற்றதாகிறது. ஶங்கரர் " 'மத்பரம்' என்று பதம் பிரிப்பதில் பொருள் பொருந் தாதாகையால் 'அநாதி₃மத்' என்றே பத₃ம்பிரிக்கவேண்டும். மதுப் ப்ரத்யயம் பயனற்றதாயினும் ஶ்லோகத்தை நிரப்புவதற்காக இடப்பட்டது" என்று பா₄ஷ்யமிட்டார். இங்கு காட்டியபடி 'மத்பரம்' என்பதற்கு மிகப்பொருத்தமான பொருள் தேறுகிறபடியால் மதுப் ப்ரத்யயத்தை ஶ்லோகபூரணமாகக் கொள்ளவேண்டிய அவசியமில்லை. (ப்₃ரஹ்ம) மிகப்பெரிதாயிருப்பது. " 'பரம ப்₃ரஹ்ம' என்னும் ஶப்₃ த₃த்தைப்போலவே ப்₃ரஹ்மஶப்₃த₃மும் பரமாத்மாவிடமே முக்கிய மானதாயிற்றே. அது இங்கு எப்படி ஜீவனைக் குறிக்க முடியும்?" எனில்: ஜீவனுக்கும் ஜ்ஞானகு₃ணத்தாலே பெருமையுண் டாகையாலே அதையிட்டு "ப்₃ரஹ்ம" என்று குறிக்கப்படுகிறது. "அணுஸ்வரூபத்தையுடையதாக வேத₃வாக்யத்திலிருந்து தேறுவதாய் அளவுபட்ட ஜ்ஞானத்தையுடையதான ஜீவாத்மஸ்வரூபத்துக்கு ஜ்ஞாநத்தால் பெருமை எப்படிப்பொருந்தும்?" எனில்: இயற்கையில் எங்கும் பரவக்கூடிய ஜ்ஞானத்தையுடைய ஜீவாத்மஸ்வரூபத்துக்கு ஶரீரஸம்ப₃ந்த₄த்தாலேயே ஜ்ஞானம் அளவுபட்டதாகிறது. அந்த ஶரீரஸம்ப₃ந்த₄ம் நீங்கினால் "ஸ சாநந்த்யாய கல்பதே" [ஶ்வே 5.9] [அணுவான அந்த ஜீவன் (முக்தி நிலையில் ஜ்ஞானத்தால்) எங்கும் பரவுகிறான்.] என்கிறபடியே ஜீவன் ஜ்ஞானத்தால் எங்கும் பரவு வதையிட்டு அவனை "ப்₃ரஹ்ம" என்று வழங்கத்தட்டில்லை. "இயற் கையில் எங்கும் பரவும் ஜ்ஞானத்தையுடையவன் ஸம்ஸாரத₃ஶை யில் அளவுபட்ட ஜ்ஞானத்தையுடையவனாயிருப்பது ஒட்டாதாகை யால், 'முக்திநிலையில் இவனுடைய ஜ்ஞானம் விரிவடைவது செயற் கையானது; ஆகவே 'இவன் எங்கும் பரவுகிறான் என்றது உப

शरीरपरिच्छिन्नत्वं चास्य कर्मकृतम्; कर्मबन्धान्मुक्तस्यानन्त्यम् : आत्मन्यपि ब्रह्मशब्दः प्रयुज्यते — * स गुणान् समतीत्यैतान् ब्रह्मभूयाय कल्पते । ब्रह्मणो हि प्रतिष्ठाऽहममृतस्याव्ययस्य च । (गी १४. २६. २७ ) * ब्रह्मभूतः प्रसन्नात्मा न शोचति न

---

சார வழக்கே' என்று தோன்றுகிறதே" எனில், கர்மத்தாலே இவனுக்கு உண்டான ஶரீரஸம்ப3ந்த4த்தாலேயே இவனுடைய அறிவு சுருங்குகிறது என்றும், கர்மம் நீங்கியவுடன் அறிவு எங்கும் பரவுகிறது என்றும் வேத3வாக்யங்கள் மூழங்குகையாலே விரிவடைந்த ஜ்ஞானம் இயற்கையானது என்றும் சுருங்கிய ஜ்ஞானம் செயற்கையானது என்றும் விளங்குகிறது. கீ3தையிலேயே மற்றும்பல இடங்களில் ஜீவனைக் குறித்து ப்3ரஹ்மஶப்3த3ம் வழங்கப்படுகிறது.

**"ஸ கு3ணாந் ஸமதீத்யைதாந் ப்3ரஹ்மபூ4யாய கல்பதே ।**
**ப்3ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டா2ஹம் அம்ருதஸ்யாவ்யயஸ்ய ச ॥**
**[கீ3தை 14-26, 27]**

[அந்த ஜீவன் இந்த ஸத்வம் முதலான கு3ணங்களைக் கடந்து மிகப்பெரியவனாகிறான். பெரியவனாகையாலே ப்3ரஹ்மம் எனத் தக்கவனாய், மரணமற்றவனாய், அழிவற்றவனான அவனுக்கு ஆதா4ரமாய் இருப்பவன் பரப்3ரஹ்மமான நானே] என்னுமிடத்தில் ஜீவன் ப்3ரஹ்மஶப்3த3த்தால் குறிக்கப்படுவதற்குக் காரணத்தையும், அவனுக்கும் ஆதா4ரமாயிருப்பவன் பரப்3ரஹ்மமான தானே என்பதையும் உணர்த்தினான், இங்கு 'ப்3ரஹ்மமாகிறான்' என்று சொன்னபோதிலும் உத்தரார்த்த4த்தோடு முரண்படுகையாலே ப்3ரஹ்மத்தோடு ஸ்வரூபைக்யம் கொள்வது ஒட்டாது. "மம ஸாத4ர்ம்யமாக3தா:" [கீ3தை 14-2] [என்னோடு ஒற்றுமையை அடைகிறார்கள்] என்று இந்த கீ3தையிலேயே முக்திநிலையில் ஜீவனுக்கு ப்3ரஹ்மத்தோடு ஸாம்யம் (ஒற்றுமை) சொல்லப்பட்டதேயொழிய ஸ்வரூபைக்யம் சொல்லப்படவில்லையே.

**"ப்3ரஹ்மபூ4த: ப்ரஸந்நாத்மா ந ஶோசதி ந காங்க்ஷதி ।**
**ஸம: ஸர்வேஷு பூ4தேஷு மத்3ப4க்திம் லப4தே பராம் ॥"**
**[கீ3தை 18-54]**

काङ्क्षति । समस्सर्वेषु भूतेषु मद्भक्तिं लभते पराम् ॥ (गी १८. ५४.) इति । न सत्तन्नासदुच्यते--कार्यकारणरूपावस्थाद्वयरहिततया सदसच्छब्दाभ्यामात्मस्वरूपं नोच्यते, कार्यावस्थायां हि देवादिनामरूप-

[ஆத்மஸ்வரூபாவிர்பா₄வம் பெற்றவனாய், க்லேசம் காமம் முதலானவற்றால் கலங்காதவனாய், அவன் எதைக்குறித்தும் வருந்துவதில்லை, எதையும் விரும்புவதில்லை. என்னைத்தவிர்ந்த மற்றபொருள்களைப புல்லென மதிக்கையாலே பொருட்படுத்தாமையில் அனைத்திலும் ஓததிருப்பவனாய், என் விஷயமான பரப₄க்தியை அடைகிறான] என்னும் ஶ்லோகத்தில் பரப்₃ரஹ்மததை அடைவதற்கு ஸாத₄னமான ப₄க்தியையடைவதற்கு முன்பே இவன் ப்₃ரஹ்மமாகிறான் என்கையாலே ஸ்வரூபைக்யம் பொருந்தாது. ஆகவே ஜீவாத்ம விஷயத்திலும் அமுக்₂யமான ப்₃ரஹ்ம ஶப்₃த₃ப்ரயோக₃ம் உண்டு என்று தேறிற்று. (ந ஸத்தந்நாஸது₃ச்யதே) கார்யநிலையில் தே₃வாதி₃ நாமரூபங்களோடு கூடியிருப்பதையிட்டு 'ஸத்' என்றும், காரண நிலையில் அந்த நாமரூபங்கள் இல்லாமலிருப்பதையிட்டு 'அஸத்' என்றும் ஶாஸ்த்ரங்களில் அந்தந்த நிலைகளிலுள்ள ஆத்மஸ்வரூபம் கூறப்படுவதுபோல், முக்திநிலையிலுள்ள அசித் ஸம்ப₃ந்த₄ம் நீங்கிய ஆத்மஸ்வரூபம் 'ஸத்' என்னும் ஶப்₃த₃த்தாலோ, 'அஸத்' என்னும் ஶப்₃த₃த்தாலோ கூறப்படுவதில்லை. இங்கு இத்தொடருக்கு "உள்ளது என்றோ இல்லாததென்றோ எந்தவிதமாகவும் கூற முடியாதது" என்று பொருள் கொள்வது இந்த ப்ரகரணத்தில் ஆத்மஸ்வரூபத்தைப் பலவிதமாக வர்ணித்திருப்பதோடு முரண்படும். "உள்ளதுமல்ல இல்லாததுமல்ல" என்று பொருள் கொண்டால் "பரஸ்பரவிரோதே₄ ஹி ந ப்ரகாராந்தரஸ்தி₂தி:" [ஒன்றோடொன்று முரண்பட்ட இரண்டு நிலைகளிலும் சேராததானால் மூன்றாவது நிலையில் அப்பொருள் இருக்க முடியாது] என்னும் நியாயப்படி அப்பொருள் பொருந்தாததாகும். "ஸத் என்றும் அஸத் என்றும் கூறப்படும் ப்ரஸித்₃த₄மான இரு பொருள்களைக் காட்டிலும் வேறுபட்டது" என்று பொருள்கொள்ளப்பார்த்தால், அப்படி இரு பொருள்கள் இல்லாமையாலே அதுவும் பொருந்தாது. 'ஸத்' என்பதற்கு மங்களமானது என்றும் 'அஸத்' என்பதற்கு அமங்களமானது என்றும் பொருள் கொண்டு "அவ்விருவகைப்பொருள்களிலும் வேறுபட்டது" என்று பொருள் கொள்ளப்பார்த்தால் பரம மங்க₃ளமான ஆத்மாவை மங்க₃ளமானதைக் காட்டிலும் வேறுபட்டது

भाक्त्वेन सदित्युच्यते, तदनर्हतया कारणावस्थायामसदित्युच्यते; तथा च श्रुतिः — * असद्वा इदमग्र आसीत्। ततो वै सदजायत (आ. ७.) * तद्धेदं तर्ह्यव्याकृतमासीत्तन्नामरूपाभ्यां व्याक्रियत (बृ. ३. ४. ७) इत्यादिका। कार्यकारणावस्थाद्वयान्वयस्त्वात्मनः कर्मरूपा-विद्यावेष्टनकृतः, न स्वरूपकृत इति सदसच्छब्दाभ्यामात्मस्वरूपं

---

என்று கூறுவது பொருந்தாது. ஆகையால், இங்கு கூறியபடியே பொருள்கொள்ள வேண்டும். கார்யகாரண நிலைகளில் சேதனு சேதனங்களோடு கூடிய பரமாத்மாவை "அஸத₃வா இத₃மக்₃ர ஆஸீத் ததோ வை ஸத₃ஜாயத" [தை ஆ-7] [இவ்வுலகம் நாமரூபங்க ளற்ற சேதனுசேதனங்களோடு கூடியதாகையாலே 'அஸத்' எனப் படும் ப்₃ரஹ்மமாகவே முதலிலிருந்தது, அதிலிருந்து, நாம ரூபங் களை உடைய சேதனுசேதனங்களோடு கூடியதாகையாலே 'ஸத்' எனப்படும் கார்யநிலையிலுள்ள ப்₃ரஹ்மம் உண்டாயிற்று] என்று வேதவாக்யம் ஸத் அஸத் என்னும் ஶப்₃த₃ங்களாலே குறிப்பிட்டது.

"தத்₃தே₄த₃ம் தர்ஹ்யவ்யாக்ருதமாஸீத்
தந்நாமரூபாப்₄யாம் வ்யாக்ரியத" [ப்₃ருஹ 3-4.7]

[இவ்வுலகம் ப்ரளயகாலத்தில் நாமரூபங்களற்ற சிதசித்துக்களோடு கூடிய ப்₃ரஹ்மமாகவேயிருந்தது. அது ஸ்ருஷ்டிகாலத்தில் நாம ரூபங்கள் இடப்பெற்ற சித₃சித்துக்களோடு கூடியதாக ஆயிற்று.] என்று ஸ்ருஷ்டி ப்ரகரணத்தில் ஒத்த பொருளையுடைய வேருெரு வேத₃வாக்யத்திலிருந்து, கார்யநிலையில் நாமரூபங்கள் இடப்பட்டதை விட்டும், காரணநிலையில் அது இல்லாததையிட்டுமே முந்திய வாக்யத்தில் காரண ப்₃ரஹ்மம் 'அஸத'என்றும் கார்ய ப்₃ரஹ்மம் 'ஸத என்றும கூறப்படுகிறது] என்று விளங்குகிறது. இனி பின்வருமாறு ஓர் ஆக்ஷேபம் எழுகிறது—பரமாத்மாவுக்கு முற்கூறிய வேத₃வாக்யங்களில் வழங்கப்பட்ட 'ஸத், 'அஸத்' என்னும் ஶப்₃த₃ங்கள் ஜீவனுக்கும் உண்டென்றே கொள்ள வேண்டும், இல்லாவிடில் ஜீவன் பரமாத்மா வுக்கு ப்ரகாரம் என்று சொல்லப்பட்டது பொருந்தாது. "தோயேந ஜீவாந் வ்யஸஸர்ஜ பூ₄ம்யாம்" [தை-நா.] [ஸூக்ஷ்ம ஶரீரத்தோடு கூட ஜீவர்களை இந்நிலவுலகில் படைத்தான் எம்பெருமான்] என்னும் வேத₃வாக்யத்திலிருந்தும கார்ய காரண நிலைகளில் ஜீவன் பரமாத் மாவுக்கு ப்ரகாரம் என்று விளங்குகிறது. இப்படியிருக்க இந்த கீ₃தா ஶ்லோகத்தில் ஜீவாத்ம ஸ்வரூபம் "ஸத் என்ருே அஸத்

नोच्यते । यद्यपि * असद्वा इदमग्र आसीदिति कारणावस्थं परं ब्रह्मोच्यते, तथाऽपि नामरूपविभागानर्हसूक्ष्मचिदचिद्वस्तुशरीरं परं ब्रह्म कारणावस्थमिति कारणावस्थायां क्षेत्रक्षेत्रज्ञस्वरूपमप्यसच्छब्द-वाच्यम् । क्षेत्रज्ञस्य साऽवस्था कर्मकृतेति परिशुद्धस्वरूपं न सदसच्छब्दनिर्देश्यम् ॥ १२ ॥

---

என்றோ சொல்லத்தகாதது" என்று கூறுவது எப்படிப்பொருந்தும்? என்பது அவ்வாக்ஷேபம். இதற்கு ஸமாத₄ானமாவது—ஜீவனுக்குக் கார்யநிலையும் காரண நிலையுமாகிற இரு நிலைகளும் அந்த ஜீவன் அவித்யை எனும் கர்மத்தால் மறைக்கப்பட்டிருக்கும்போதே உண்டாகிறது. இயற்கையாக உள்ளதன்று. ஆகையால் ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄ மற்ற ஆத்ம ஸ்வரூபம் ஸத்தென்றோ அஸத் என்றோ சொல்லத்தகாதது என்று கூறியது பொருத்தமேயாகும். இனி மற்றோராக்ஷேபம் பின்வருமாறு எழுகிறது—"காரணத்வேந ச ஆகாசாதி₃ஷு யதா₂வ்யபதி₃ஷ்டோக்தே:" [ப்ரஹ்மஸூத்ரம் 1-4-14] [ஆகாசம் முதலான கார்யங்களுக்குக் காரணமாக ஸர்வஜ்ஞத்வம் முதலான பெருமைகளோடு கூடியதாக முன்கூறப்பட்ட ப்₃ரஹ்மத்தையே சொல்லுகிறதாகையால் (ப்₃ரஹ்மமே ஜக₃த் காரணமென்று வேதா₃ந்த வாக்யங்கள் கூறுகின்றன)] என்னும் அதி₄கரணத்தில் ஸத், அஸத், அவ்யாக்ருதம் முதலான காரண வாக்யங்களிலுள்ள ஶப்₃த₃ங்கள் அனைத்தும் பரமாத்மாவையே சொல்லும் என்று நிர்ணயிக்கப்பட்டது; அப்படியிருக்கும்போது அச்சொற்கள் கார்யகாரண நிலைகளிலுள்ள ஜீவனைக் குறிப்பதாகக் கூறுவது எப்படிப் பொருந்தும்? என்பது ஆக்ஷேபம். அதற்கு ஸமாத₄ானம் பின்வருமாறு;—முன் எடுத்த காரண வாக்யங்களில் காரண நிலையிலுள்ள பரமாத்மாவே அஸத் என்று கூறப்பட்டபோதிலும் நாமரூபப் பிரிவற்ற ஸூக்ஷ்ம சேதனாசேதனங்களை ஶரீரமாகக்கொண்ட பரமாத்மாவே காரண நிலையிலிருப்பதால் அந்நிலையில் அப்பரம்பொருளுக்கு ஶரீரமான சேதனாசேதன ஸ்வரூபங்களும் 'அஸத்' என்னும் ஶப்₃த₃த்தால் சொல்லப்படுபவையேயாகும். அப்படியானால் ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄மற்ற முக்தி நிலையிலும் கார்ய நிலையிலுள்ள நாமரூபப் பிரிவில்லாமையால் அப்போதும் 'அஸத்' எனும் ஶப்₃த₃த்தால் பரிஶுத்₃த₄ ஜீவனைக் குறிக்க வேண்டிவருமேயெனில்: கர்மத்தினால் ஜீவனுக்கு ஏற்பட்ட காரண நிலையோ காரிய நிலையோ பரிஶுத்த நிலையில் இல்லை என்று தடுத்துக் கூறுவதிலேயே நோக்காகையாலே "பரிஶுத்₃த₄ ஸ்வரூபம் ஸத்தென்றோ அஸத்தென்றோ கூறத்தகாதது" என்று இங்கு கூறியதில் குறையில்லை. 12.

सर्वतःपाणिपादं तत्सर्वतोऽक्षिशिरोमुखम् ।
सर्वतश्श्रुतिमल्लोके सर्वमावृत्य तिष्ठति ॥ १३.

13. **ஸர்வதః பாணிபாதம் தத் ஸர்வதோऽக்ஷிஶிரோமுகம்।
ஸர்வதஶ்ஶ்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்டதி॥**

தத் — அந்தப்பரிஶுத்தாத்மஸ்வரூபம், **ஸர்வதःபாணிபாதம்**—எல்லாவிடத்திலும் கைகால்கள் செய்யக்கூடிய கார்யங்களைச் செய்யவல்லது, **ஸர்வதோऽக்ஷிஶிரோமுகம்**-எல்லாவிடத்திலும் கண் தலை முகமும் ஆகியவை செய்யும் கார்யங்களைச் செய்யவல்லது; **ஸர்வதஶ் ஶ்ருதிமத்**—எல்லாவிடத்திலும் காது செய்யும் கார்யத்தைச் செய்யக் கூடியது; **லோகே** - உலகிலுள்ள, **ஸர்வம்**-எல்லாப்பொருள்களையும், **ஆவ்ருத்ய திஷ்டதி**—வியாபித்து நிற்கிறது,

---

13. **எங்குங் கரம்பாத மெங்குங்கண் சென்னிமுக
மெங்குஞ் செவியா மியல்புடைத்தாய்—இங்குலகி
லெப்பொருளுந் தன்றகவா லேய்ந்து பரந்துநிற்கு
மப்பொருளின் றன்மை யது.**

**அப்பொருளின் தன்மையது**—பரம்பொருளின் தன்மையுடைய அந்தப் பரிஶுத்தாத்ம ஸ்வரூபம், **எங்கும் கரம் பாதம்**—எல்லாவிடத்திலும் கைகால்கள் செய்யக்கூடிய கார்யத்தையும், **எங்கும் கண் சென்னிமுகம்**—எல்லாவிடத்திலும் கண் தலை முகம் செய்யும் கார்யங்களையும், **எங்கும் செவி** — எல்லாவிடத்திலும் காது செய்யும் கார்யத்தையும, **ஆம் இயல்பு உடைத்தாய்** — செய்யும் வல்லமையுடையதாய், **இங்கு உலகில்** - இவ்வுலகில், **எப்பொருளும்** — எல்லாப் பொருள்களையும், **தன் தகவால்**—தன்னுடைய அறிவால், **ஏய்ந்து**—பொருந்தி, **பரந்துநிற்கும்**—வியாபித்து நிற்கும்.

भा ॥ सर्वतः पणिपादं तत्—परिशुद्धात्मस्वरूपं सर्वतः पाणिपादकार्यशक्तम्, तथा सर्वतोऽक्षिशिरोमुखं सर्वतश्श्रुतिमत् — सर्वतः चक्षुरादिकार्यकृत्, * अपाणिपादो जवनो ग्रहीता पश्यत्यचक्षुस्स शृणोत्यकर्णः (श्वे. ३, १९.) इति परस्य ब्रह्मणोऽपाणिपादस्यापि सर्वतः पाणिपादादिकार्यकृत्त्वं श्रूयते; प्रत्यगात्मनोऽपि परिशुद्धस्य तत्साम्यापत्त्या सर्वतः पाणिपादादिकार्यकृत्त्वं श्रुतिसिद्धमेव ;

---

13. முக்தி நிலையிலுள்ள ஜீவாத்மாக்கள் கை கால் முதலானவைகளால் ப₃த்₃த₄ ஜீவர்கள் இங்கு செய்யும் காரியங்களை ஸங்கல்பத்தாலேயே அங்கு செய்கிறார்கள் என்றும், எல்லாவிடத்திலும் இப்படிக் காரியம் செய்யலாம்படி உலகிலுள்ள எல்லாப் பொருள்களையும் ஜ்ஞானத்தாலே வியாபித்திருக்கிறார்கள் என்றும் கூறுகிறான். (தத) முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட ப்ரக்ருதியினின்றும் நீங்கிய ஆத்ம ஸ்வரூபம். (ஸர்வத: பாணிபாத₃ம் ஸர்வதோऽக்ஷிஶிரோமுக₂ம் ஸர்வதஶ்ஶ்ருதிமத்) கை, கால், கண், தலை, வாய், காது ஆகிய இந்த்₃ரியங்கள் ப₃த்₃த₄ நிலையில் செய்யும் காரியங்களை அவ்விந்த்₃ரியங்கள் இல்லாவிடினும் எல்லாவிடத்திலும் தானே செய்யவல்லது.

"அபாணிபாதோ₃ ஜவநோ க்₃ரஹீதா பஶ்யத்யசக்ஷுஸ்
ஸ ஶ்ருணோத்யகர்ண:" [ஶ்வே-3-19]

[பரமாத்மா கைகால்கள் இல்லாவிடினும் வேக₃மாக நடக்கக்கூடியது; எதையும் பிடிக்கக்கூடியது. கண் இல்லாவிடினும் காணக்கூடியது-காதில்லாவிடினும் கேட்கக்கூடியது] என்று பரப்₃ரஹ்மத்திற்கு, கை கால் முதலான கர்மேந்த்₃ரியங்களும், கண் காது முதலான ஜ்ஞானேந்த்₃ரியங்களும் இல்லாவிடினும் அந்தந்த இந்த்₃ரியங்களால் செய்யப்படும் காரியங்களைத் தானே செய்யவல்லது என்று கூறப்பட்ட பெருமை இந்தப் பரப்₃ரஹ்மத்தோடு ஸாம்யம்பெற்று முக்திநிலையிலிருக்கும் பரிஶுத்₃த₄ாத்ம ஸ்வருபத்துக்கும் உண்டு என்று இங்கு கூறப்படுகிறது.

* तदा विद्वान् पुण्यपापे विधूय निरञ्जनः परमं साम्यमुपैति (मु, ३. १. ३) इति हि श्रूयते; * इदं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागताः (१४. २) इति च वक्ष्यते । लोके सर्वमावृत्य तिष्ठति-लोके यद्वस्तुजात तत्सर्वं व्याप्य तिष्ठति; परिशुद्धस्वरूपं देशादि परिच्छेदरहिततया सर्वगतमित्यर्थः ॥ १३ ॥

---

**"தத₃ா வித்₃வாந் புண்யபாபே விதூ₄ய
நிரஞ்ஜந: பரமம் ஸாம்யம் உபைதி"** [முண்ட₃ 3-1-3]

[அப்போது அந்த ப்₃ரஹ்மஜ்ஞானியானவன் புண்யபாபங்களை விட்டு அஜ்ஞானம் முதலான எந்த தே₃ாஷமுமில்லாதவனாய், பரமாத்மாவோடு மேலான ஒற்றுமையை அடைகிறான்] என்று முக்தாத்மா பரமாத்மாவோடு மேலான ஒற்றுமையை அடைகிறான் என்று உபநிஷத்திலும் ஓதப்பட்டதன்றோ. இந்த மேலான ஒற்றுமை ஜக₃த்₃ வ்யாபாரம் முதலான சில குறிப்பிட்ட விஷயங்கள் தவிர மற்ற எல்லாப் பரமாத்ம ஸ்வப₄ாவங்கள் விஷயத்திலும் உண்டு என்று ப்₃ரஹ்ம ஸூத்ரத்திலும் நாலாமத்தியாயம் நாலாவது பாத₃த்தில் நிர்ணயிக்கப்பட்டதன்றோ. இந்த கீ₃தையிலும்

**"இத₃ம் ஜ்ஞாநமுபாஶ்ரித்ய மம ஸாத₄ர்ம்யமாக₃தா:"**
[கீ₃தை 14-2]

[இந்த ஜ்ஞானத்தையடைந்து (முக்திநிலையில்) என்னோடு மேலான ஒற்றுமையை (ஜீவர்கள்) அடைகிறார்கள்] என்று இவ்விஷயம் மேலே சொல்லப்பட இருக்கிறதாகையாலே இங்கு பரமாத்மாவின் தன்மைகளை முக்தாத்மாவுக்குச் சொன்னதில் குறையில்லை. (லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்ட₂தி) இவ்வுலகிலுள்ள எல்லாப் பொருள்களையும் வியாபித்து நிற்கிறது. 'நிற்கிறது' என்றதால் முக்திநிலையில் ஏற்பட்ட வ்யாப்தி பிறகு என்றுமே அழிவதில்லை என்று உணர்த்தப் படுகிறது. இவ்வுலகில் கர்மத்தாலும் ப்ராக்ருத தே₃ஹத்தாலும் கட்டுப்பட்டிருக்கும்போது இந்த ஜீவஸ்வரூபம் அனைத்தையும் வியாபிக்கவல்லதல்லதாகிலும், கர்ம ஸம்ப₃ந்த₄மும் தே₃ஹ ஸம்ப₃ந்த₄மும் விடுபட்ட முக்தாத்மா அனைத்தையும் வியாபிக்கவல்லவனாகிறான் என்று

सर्वेन्द्रियगुणाभासं सर्वेन्द्रियविवर्जितम्।
असक्तं सर्वभृच्चैव निर्गुणं गुणभोक्तृ च॥ १४

14. ஸர்வேந்த்₃ரியகு₃ணாபா₄ஸம் ஸர்வேந்த்₃ரிய விவர்ஜிதம் ।
அஸக்தம் ஸர்வப்₄ருச்சைவ நிர்கு₃ணம்
கு₃ணபோ₄க்த்ரு ச ॥

**ஸர்வேந்த்₃ரியகு₃ணாபா₄ஸம்** - எல்லா இந்த்₃ரியங்களின் செயல்களாலே விஷயங்களை அறியவல்லது; **ஸர்வேந்த்₃ரிய விவர்ஜிதம்** – (இயல்வான நிலையில்) எல்லா இந்திரியங் களுமில்லாமலே அனைத்தையும அறியவலலது; **அஸக்தம்**- (இயற்கையில்) தே₃வர்கள முதலான தே₃ஹங்களில தொடர்பறறது; **ஸ்ர்வப்₄ருத் ச ஏவ** - தே₃வர் முதலான எல்லா தே₃ஹங்களையும் த₄ரிக்கவல்லதாகவே இருப்பது; **நிர்கு₃ணம்** - (இயற்கையில்) ஸத்வம் முதலான கு₃ணங்க ளற்றது; **கு₃ணபோ₄க்த்ரு ச** - ஸத்வம முதலான கு₃ணங்களை அனுப₄விக்கவல்லதாயிருப்பது,

---

**கருத்து- அணுவான ஜீவன் முக்தி நிலையில்தான் எப்படி அனைத் தையும் வியாபிக்க முடியுப? எனில்: அணுவான இவனுடைய த₄ர்ம பூ₄தஜ்ஞானம் முக்திநிலையில் எங்கும் பரவுகிறதாகையாலே அவ் வறிவைகொண்டு இவன் எங்கும் வியாபிக்கிருன் என்று கருத்து. இவ்விஷயம்**

**"ப்ரதீ₃பவதா₃வேஶஸ ததா₂ஹி த₃ர்ஶயதி"**
**[ப்₃ரஹ்ம ஸூ 4-4-15]**

*[விளக்கின் ஒளிபோலே (முக்தனின் அறிவு) வியாபிக்கிறது; வேதம் அப்படியே ஓதுகின்றதன்றோ] என்று ப்₃ரஹ்ம ஸூத்ரத்திலும் நிர்ணயிக்கப்பட்டது. ஜீவஸ்வரூபம் அணுவாயிருப்பதையே லக்ஷண மாகக் கொண்டதாகையாலும், அது விகாரமற்றதென்று உபநிஷத்தில் ஓதப்படுகையாலும் ஸ்வரூபம் விபு₄வாகிறது என்று கொள்ளமுடி யாது. ஆகையால் தன் அறிவைக்கொண்டே முக்தாத்ம ஸ்வரூபம் எங்கும் வியாபிக்கிறது என்றே கொள்ளவேண்டும். (13)*

**14. எல்லாப் புலனியல்வு மேய்ந்தே விளங்குமதா**
**யெல்லாப் புலனியல்வு மில்லையா—யெல்லாந்**
**தரிக்குமொரு தத்தற்றுச் சார்குணமூன் றின்றி**
**விரித்ததனைத் துய்க்கும் மிக.**

**எல்லா புலன் இயல்வும் ஏய்ந்தே விளங்குமதாய்** - எல்லா இந்த்₃ரியஙகளின் செயலகளாலே விஷயங்களை அறிய வல்லதாய், **எல்லா புலன் இயல்வும் இல்லையாய்** - (இயல்வான நிலையில்) எல்லா இந்த்₃ரியங்களுமில்லாமலே அனைத்தை யும் அறியவல்லதாய், **ஒரு தத்து அற்று** - (இயற்கையில்) தே₃வர்கள் முதலான தே₃ஹங்களில் தொடர்பற்று, **எல்லாம் தரிக்கும்** - தே₃வர் முதலான தே₃ஹங்களையும் தரிககவல்லது; **சார் குணம் மூன்று இன்றி** - (இயற்கையில்) ப்ரக்ருதியைச சார்ந்திருக்கும் ஸத்வம் முதலான மூன்று கு₃ணமில்லாததாய், **அதனை விரித்து மிக துய்க்கும்** - அம மூனறு கு₃ணங்களையும விரிவாகவும் நன்ருகவும அனுப₄ விககவலலதாயிருப்பது.

---

14. *ஜீவர்கள் ஸம்ஸார நிலையோடு முக்திநிலையோடு வாசியில்* லாமல் எல்லா நிலைகளிலும் இந்த்₃ரியங்களின் செயல்களாலே விஷயங்களை அறியவல்லவர்கள் என்றும், தே₃வர் முதலான தே₃ஹங்களை த₃ரிக்கவல்லவர்கள் என்றும், ஸத்வரஜஸ்தமோ கு₃ணங்களை அனுப₄விக்கவல்லவர்கள் என்றும், இயல்பான முக்தி நிலையில் இந்த்₃ரியங்களாலல்லாமல் தாமே அனைத்தையும் அறி பவர்கள் என்றும், தே₃வர் முதலான தே₃ஹங்களோடு தொடர் பற்றவர்கள் என்றும், ஸத்வரஜஸ்தமோகு₃ணங்களற்றவர்கள் என்றும் கூறுகிருன். *(ஸர்வேந்த்₃ரியகு₃ணுப₄ாஸம்)*

**“ஸர்வேந்த்₃ரியகு₃ணை: ஆப₄ாஸோ யஸ்ய தத்”**

*[எல்லா இந்த்₃ரியகு₃ணங்களாலும் எதற்கு அறிவு ஏற்படுகிறதோ அது ‘ஸர்வேந்த்₃ரிய கு₃ணுப₄ாஸம்’ எனப்படுகிறது]* என்று விக்₃ரஹம். இங்கு அறிவெனப்படுவது விஷயங்களைப்பற்றிய அறிவே யாகும். இந்த்₃ரியங்களால் அறியப்படுபவை விஷயங்களேயன்றோ, விஷயங்கள் இந்த்₃ரியங்களாலே அறியப்படுபவையாயிருக்க.

भा ।। सर्वेन्द्रियगुणाभासम् – सर्वेन्द्रियगुणैराभासो यस्य तत् सर्वेन्द्रियगुणाभासम्, इन्द्रियगुणा इन्द्रियवृत्तयः, इन्द्रियवृत्तिभिरपि विषयान् ज्ञातुं समर्थमित्यर्थः । स्वभावतस्सर्वेन्द्रियविवर्जितम् विनैव इन्द्रियवृत्तिभिः स्वत एव सर्वं जानातीत्यर्थः । असक्तम्—स्वभावतो देवादिदेहसङ्गरहितम्, सर्वभृच्चैव--देवादिसर्वदेहभरणसमर्थं च, * स

---

அவற்றின் கு₃ணங்களாலே அறியப்படுபவையாக இங்கு கூறுவது எப்படி ஒட்டும்? எனில்; இங்கு கு₃ணங்கள் எனப்படுவது இந்த்₃ரியங்களின் வ்ருத்திகளாகிற செயல்களேயாகும். ஆக, இந்த்₃ ரியங்களின் செயல்களாலும் விஷயங்களை அறியவல்லது ஜீவாத்ம ஸ்வரூபம் என்றதாயிற்று. இந்த்₃ரியங்களில்லாமல் தானே விஷயங்களை அறியவல்ல முக்திநிலையிலும் இந்த்₃ரியங்களைக் கொண்டும் ஆத்மா விஷயங்களை அறியவல்லதாகையாலே இது ஸம்ஸாரநிலை முக்திநிலை ஆகிய இரண்டுக்கும் பொதுவாகும். மேலே 'ஸர்வப்₄ருத்' 'கு₃ணபோ₄க்த்ரு' என்று கூறுமிடங்களிலும் இப்படியே கொள்வது. இதனால் 'ஆத்ம ஸ்வரூபமானது இந்த்₃ரிய கு₃ணங்களாலே ப்ரகாசிக்கிறது' என்றும், 'எல்லா இந்த்₃ரிய வ்யாபாரங்களிலும் ஈடுபடுவதுபோல் காணப்படுகிறது' என்றும் முன்னுக்குப்பின் முரணாக ஶங்கரர் பா₄ஷ்யமிட்டது ஸ்வரஸமன்று என்று விளங்குகிறது. (ஸர்வேந்த்₃ரிய விவர்ஜிதம்) இயல்பான முக்திநிலையில் எல்லா இந்த்₃ரியங்களோடும் தொடர்பற்றது. இந்த்₃ரியங்களின் செயல்களை எதிர்பாராமல் தானே அனைத்தையும் அறியவல்லது என்று கருத்து. (அஸக்தம்) இயற்கையில் தே₃வர் முதலான தே₃ஹங்களோடு தொடர்பற்றது. முக்திநிலையில் இது ப₂லபர்யந்தமாகிறது. (ஸர்வ ப்₄ருத் ச ஏவ) முக்திநிலையோடு ஸம்ஸார நிலையோடு வாசியற, தே₃வர் முதலான எல்லா தே₃ஹங்களையும் த₄ரிக்கவல்லது. இங்கு ஸர்வ ஶப்₃த₃ம் எல்லாப் பொருள்களையும் குறிப்பதாகக் கொண்டால் முக்தன் உலகனைத்துக்கும் ஆத₄ாரமாயிருப்பவன் என்று பொருள்படும். ஶாஸ்த்ரங்கள் இப்பெருமையைப் பரமாத்மாவுக்குச் சொல்லுகின்றனவேயொழிய முக்தாத்மாவுக்குச் சொல்லுவதில்லை.

एकधा भवति त्रिधा भवति (छा. ७. २६. २) इत्यादिश्रुतेः । निर्गुणम् — तथा स्वभावतस्सत्त्वादिगुणरहितम् । गुणभोक्तृ च — सत्त्वादीनां गुणानां भोगसमर्थं च ॥ १४ ॥

---

ஆகையால் ஸம்ஸார நிலையில் தேவர் முதலான தேஹங்களை ஒவ்வொரு காலத்தில் தரிப்பதுபோலே, முக்திநிலையிலும் அவற்றை தரிக்கவல்லது என்றே பொருள்கொள்ளவேண்டும். இப்படி முக்தனும் பரமாத்மாவின் நினைவையொட்டிப் பல ஶரீரங்களை எடுத்துக்கொள்வதை

"ஸ ஏகதா பவதி த்ரிதா பவதி" [சாந். 7. 26. 2]

[அவன் ஒரு ஶரீரத்தை எடுத்துக்கொள்கிறான். மூன்று ஶரீரங்களை எடுத்துக்கொள்கிறான்] என்று ஶ்ருதியும் ஓதிற்றன்றோ. முக்தனுடைய ஸ்வரூபம் ஒன்றாகவோ மூன்றாகவோ ஆக முடியாதாகையால் அவன் பல ஶரீரங்களை எடுத்துக்கொள்வதன் மூலமாகவே

"ஜக்ஷத் க்ரீடந் ரமமாண:" (சாந். 8. 12. 3)

[முக்தாத்மா உண்டும் விளையாடியும் ஆனந்திக்கிறான்] என்னும் வேதவாக்யத்தில் சொல்லப்பட்ட பல காரியங்களைச் செய்கிறான் என்றே கொள்ளவேண்டும். இதனால் "கானல்நீர் போன்ற எல்லாப் பொருள்களின் மயக்கத்துக்கு இருப்பிடமாயிருப்பது" என்று ஶங்கரர் இப்பதத்துக்குப் பொருள்கொண்டது பொருந்தாது என்று விளங்குகிறது. (நிர்குணம்) இயற்கையாக ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் பிரகிருதிகுணங்கள் மூன்றும் அற்றது. இம்மூன்று குணங்களும் தேஹத்தைச் சார்ந்தவையாகையாலே ஸம்ஸார நிலையிலும் முக்திநிலையிலும் ஆத்மா இவற்றோடு தொடர்பற்றது என்று கருத்து. (குணபோக்த்ரு ச) அந்த மூன்று குணங்களையும் முற்கூறிய இரு நிலைகளிலும் அனுபவிக்கவல்லதாகவும் இருப்பது. முக்குணங்களையும் அனுபவிப்பது ஶரீரஸம்பந்தத்தால் ஸம்ஸார நிலையில் ஏற்படுவது; இயற்கையில் ஆத்மஸ்வரூபத்துக்கு அது கிடையாது. அவற்றை அனுபவிக்கும் வல்லமை ஸம்ஸார நிலையில் போலே முக்திநிலையிலும் உண்டாகையாலே நித்யமானது என்று கருத்து.

बहिरन्तश्च भूतानामचरं चरमेव च ।
सूक्ष्मत्वात्तदविज्ञेयं दूरस्थं चान्तिके च तत् ॥ १५ ॥

15. ப₃ஹிரந்தஶ்ச பூ₄தாநாமசரம் சரமேவ ச ।
ஸூக்ஷ்மத்வாத் தத₃விஜ்ஞேயம் தூ₃ரஸ்த₂ம் சாந்திகே ச தத் ॥

**பூ₄தாநாம் ப₃ஹி: அந்த: ச** - பூ₄மி முதலான ஐம்பெரும் பூ₄தங்களை விட்டு வெளியே இருப்பதாகவும். அவற்றின் உள்ளே இருப்பதாகவும் உள்ளது; **அசரம் சரம் ஏவ ச** — (இயற்கையில்) அசையாததாய், (தே₃ஹத்தோடு கூடியிருக்கையில்) அசைவதாயிருப்பது; **ஸூக்ஷ்மத்வாத்** - மிகவும நுண்ணியதாயிருக்கையால், **தத்** - அந்த ஆதமவஸ்து, **அவிஜ்ஞேயம்** - (தம் தே₃ஹத்திலிருந்த போதிலும் அந்த தே₃ஹத்தைக் காட்டிலும் வேறுபட்டதாக ஸம்ஸாரிகளால்) அறியத்தகாதது; **தத்** - அவ்வாதமவஸ்து, **தூ₃ரஸ்த₂ம் ச** — (அமாநித்வம் முதலான கு₃ணங்களற்றவர்களுக்கும், அக்கு₃ணங்களுக்கு மாறான கு₃ணங்களை உடையவர்களுக்கும்) தம் தே₃ஹத்திலிருந்தபோதிலும் வெகு தூரத்திலுள்ளது, **தத்** - அதுவே, **அந்திகே ச** — (அமாநித்வம் முதலான கு₃ணங்களையுடையவர்களுக்கு) அருகிலேயேயுள்ளது.

---

15. பூதங்க ளுக்குள் புறம்புமாய்த் தானின்று
மீதங் கியல்வதுமாய் மேவியே—போதத்து
நுண்ணிமையி னுன்மிகவு நோக்கரிதாய்த் தூரத்து
மண்ணிமையி னுலருகு மாம்.

**பூதங்களுக்கு உள் புறம்புமாய்** - பூ₄மி முதலான ஐம்பெரும் பூ₄தங்களின் உள்ளே இருப்பதாகவும் அவற்றை விட்டு வெளியேயிருப்பதாகவும், **தான் நின்று மீது அங்கு இயல்வதுமாய்**—(இயற்கையில்) அசையாததாய், தே₃ஹத்தோடு கூடியிருக்கையில் அசைவதாய், **நுண்ணிமையினல்**, மிகவும் நுண்ணியதாயிருக்கையால், **மேவியே** - தம் ஶரீரத்

भा ॥ पृथिव्यादीनि भूतानि परित्यज्याशरीरो बहिर्वर्तते; तेषामन्तश्च वर्तते, * जक्षत् क्रीडन् रममाणः स्त्रीभिर्वा

தில் இருந்தபோதிலும், **போதத்து மிகவும் நோக்கரிதாய் -** (ஸம்ஸாரிகளால்) தம் ஶரீரத்தைக்காட்டிலும் வேறுபட்டதாக உள்ளபடி மிகவும் அறியததகாததாய், **தூரத்தும் ஆம்-** (அமாநித்வம் முதலான கு₃ணங்களற்றவர்களுக்கும் அக்கு₃ணங்களுக்கு மாருன கு₃ணங்களையுடையவர்களுக்கும் தம் ஶரீரத்திலிருந்தபோதிலும்) வெகுதூரத்திலுள்ளதாகும்; **அண்ணிமையினுல் -** (அமாநித்வம முதலான கு₃ணங்களையுடையவர்களின்) நெஞ்சுக்குக் காட்சியளிக்கையாலே, **அருகும் ஆம் -** (அவர்களுக்கு) அருகேயும் உள்ளது.

15. ஶாத்₃த₄ாத்மஸ்வரூபமானது பூ₄மி முதலான பூ₄தங்களுக்கு வெளியேயும் உள்ளும் உள்ளது என்றும், அசையாததாகவும அசைவதாகவும் உள்ளது என்றும், மிக நுண்ணியதாகையாலே ஸம்ஸாரிகளால் தே₃ஹத்தைக் காட்டிலும் வேருனதாகக் காணவொண்ணுததுஎன்றும், அமாநித்வம் முதலான குணங்கள் அற்றவர்களுக்கு வெகுதூரத்திலும், அக்குணங்களுள்ளவர்களுக்கு மிக அருகிலும் உள்ளது என்றும் கூறுகிருன், (ப₃ஹிரந்தஶ்ச பூ₄தாநாம்) முக்தி நிலையில் ஆத்மஸ்வரூபமானது பூ₄மி முதலான ஐந்து பூ₄தங்களை விட்டு வெளியேறி, அந்த பூ₄தங்களாலான ஶரீரமற்றதாய், ப்ரக்ருதி மண்ட₃லத்துக்கு வெளியே இருக்கிறது. அந்த முக்தாத்மஸ்வரூபமே எம்பெருமானுடைய ஸங்கல்பத்துக்கு அனுகு₃ணமான தன் ஸங்கல்பத்தாலே இவ்வுலகில் ஶரீரங்களை எடுத்துக்கொள்ளும்போது, அந்த பூ₄தங்களுக்கு உள்ளேயும் இருக்கிறது. இப்படி ஶரீரத்தின் உள்ளே இருப்பது கர்மத்தால் ஏற்பட்டதல்ல,

**"ஏஷ ஸம்ப்ரஸாத₃: அஸ்மாச்ச₂ரீராத் ஸமுத்த₂ாய பரஞ்ஜ்யோதிருபஸம்பத்₃ய ஸ்வேந ரூபேண அபி₄நிஷ்பத்₃யதே"**

[ச₂ாந் 8-12-2]

[இந்த ஜீவன் இந்த ஶரீரத்திலிருந்து கிளம்பி. பரஞ்சோதியான பரமாத்மாவை அடைந்து தன் ஸ்வரூபவிளக்கம் பெறுகிருன்] என்றும்,

यान्वैर्षा (छा. ८, १२. ३) इत्यादिश्रुतिसिद्धस्वच्छन्दवृत्तिषु ।

---

"ஸ ஸ்வராட்₃ப₄வதி" [ச₂ாந்.7-25:2]
[அந்த முக்தாத்மா கர்மத்துக்கு வசப்படாத ஸ்வதந்த்ரனுகிறுன்] என்றும் கர்மவசப்படாதவனும் ப்ரக்ருதி மண்டலத்தைவிட்டுக் கிளப்பி, பரமபுருஷனையடைந்து ஸ்வரூபவிளக்கம் பெற்ற முக்தனுக்கன்றே

"ஜக்ஷத் க்ரீட₃ந் ரமமாண: ஸ்த்ரீபி₄ர்வா யாநைர்வா"
[ச₂ாந். 8, 12, 3]
[முக்தாத்மா உண்பவனுய், ஸ்த்ரீகளைக்கொண்டும் வாஹனங்களைக் கொண்டும் விளையாடி இன்புறுபவனுயிருக்கிறுன்] என்றும்,

"ஸ யதி₃ பித்ருலோககாமோ ப₄வதி
ஸங்கல்பாதே₃வாஸ்ய பிதரஸ் ஸமுத்திஷ்ட₂ந்தி"
[ச₂ாந். 8, 2, 1]
[அந்த முக்தாத்மா பித்ரு ஸமூஹத்தை அடைய விருப்பினுகில் ஸங்கல்பத்தாலேயே இவனுடைய பித்ருக்கள் மேலே வருகிறுர்கள்] என்றும்,

"இமாந் லோகாந் காமாந்நீ காமரூப்யநுஸஞ்சரந்"
[தை-ப்₄ருகு₃]
[எம்பெருமானுடைய கு₃ணங்களை உணவாகக்கொண்ட முக்தாத்மா விருப்பிய உருவுடன் இவ்வுலகங்களுக்கு எம்பெருமானைப் பின் தொடர்ந்து வருகிறுன்] என்றும்

"ஸ ஏகதா₄ ப₄வதி த்ரிதா₄ ப₄வதி" [ச₂ாந். 7, 26, 2]
[அந்த முக்தாத்மா ஒருபடியாகிறுன்; மூன்றுபடியாகிறுன்] என்றும் பல ஶரீரங்களை எடுத்துக்கொண்டு உப₄ய விபூ₄தியிலும் ஸஞ்சரிக்கும் பெருமை கூறப்படுகிறது. ஸ்வரூபத்திஞல் விகாரமற்றிருக்கும் முக்தாத்ம ஸ்வரூபத்துக்கு இந்த ப்ரமாணங்களில் சொல்லப்பட்டபடி பலபடியாவதும், உண்பது முதலானவையும், பித்ரு ஸமூஹத்தை அடைவது முதலானவையும், ஶரீரங்களை எடுத்துக் கொண்டாலல்லது இயலாதன்றே. இவனுடைய ஶரீரம் இவன் விருப்பப்படி ப்ராக்ருதஶரீரமாகவோ அப்ராக்ருதஶரீரமாகவோ ஆகலாமாகையால் ப்ராக்ருதமான அல்லது அப்ராக்ருதமான பூ₄தங்களின் உள்ளே இவன் இருக்கிறுன் என்பதும் பொருந்துகிறது என்று கருத்து.

भा-अचरं चरमेव च-स्वभावतोऽचरं चरं च देहित्वे, सूक्ष्मत्वात् तदविज्ञेयम्-एवं सर्वशक्तियुक्तं सर्वज्ञं तदात्मतत्त्वमस्मिन् क्षेत्रे वर्तमान· मप्यतिसूक्ष्मत्वात् देहात् पृथक्त्वेन संसारिभिरविज्ञेयम्, दूरस्थं चान्तिके

---

(அசரம் சரமேவ ச) ஜீவாத்ம ஸ்வரூபமானது இயற்கையான முக்தி நிலையில் நடப்பது முதலான செயல்களைச் செய்யாததாகவும், தேஹத்தோடு கூடியிருக்கும் நிலையில் அவற்றைச் செய்வதாகவும் இருப்பது. ஸம்ஸார நிலையில் அசையாதனவும் அசைவனவுமான ஶரீரங்களை உடைத்தாயிருப்பதை இங்கு பொருளாகக்கொண்டால் அது ஶுத்தாத்ம ஸ்வரூபத்தின் தன்மைகளை விவரிக்கும் இந்த ப்ரகரணத்துக்குப் பொருந்தாது. ஆகையால், 'ஆத்ம ஸ்வரூபமானது பூதங்களுக்கு வெளியிலும் உள்ளேயும் இருக்கிறது' என்று முன் சொன்னதின் விளைவை இங்குக் கூறுவதாகக் கொள்ளுவதே பொருத்தம். முக்திநிலையில் ஶரீரமற்றிருக்கும்போது ஶரீரத்தால் ஏற்படும் நடப்பது முதலான செயல்களைச் செய்யாததாகவும், ஶரீரத்தோடு இருக்கும்போது அவற்றைச் செய்வதாகவும் இருக்கிறது என்று கருத்து. ஶரீரமற்றிருக்கும்போதும் ஸங்கல்பத்தால் இவனால் அசையமுடியுமாகையால் இங்கு 'அசரம்' என்று ஶரீரத்தால் செய்யும் நடப்பது முதலான செயல்களைச் செய்யாதது என்றே பொருள் படும். (ஸூக்ஷ்மத்வாத் தத் அவிஜ்ஞேயம்) அந்த ஆத்மவஸ்துவானது இந்த தேஹத்தில் இருந்தபோதிலும் மிக நுண்ணியதா யிருக்கையால் தேஹத்தைக்காட்டிலும் வேறுபடுத்தி ஸம்ஸாரிகளால் அறியத்தகாதது. (தத்) இயல்பான நிலையில் எல்லா ஶக்திகளையு முடையதாய் எல்லாமறிந்ததான அந்த ஆத்மஸ்வரூபம். (அவிஜ்ஞேயம்) அறியத்தகாதது. 'நான் நான்' என்று எப்போதுமறியப்படுவதாய், வெகுதூரத்தில் இல்லாமல் இந்த தேஹத்திலேயே இருப்பதான ஆத்ம ஸ்வரூபத்தை அறியத்தகாதது என்பது எப்படிப் பொருந்தும்? எனில்: தேஹத்திலும் வேறுபடுத்தி ஸம்ஸாரிகளால் அறியத்தகாததாயிருக்கையே இங்கு கருதப்படுகிறதாகையால் பொருந்தும். 'அஜ்ஞேயம்' என்று கூருமல் 'அவிஜ்ஞேயம்' என்று கூறுகையாலே, 'தேஹத்தைக் காட்டிலும் பிரித்து அறியத்தகாதது'

च तत्—अमानित्वाद्युक्तगुणरहितानां विपरीतगुणानां पुंसां स्वदेहे वर्तमानमप्यतिदूरस्थम्, तथा अमानित्वादिगुणोपेतानां तदेवान्तिके वर्तते ॥ १५ ॥

---

என்னும் பொருள் விளங்குகிறது. இப்படி அறியத்தகாததாயிருக்கைக்குக் காரணத்தைச் சொல்லுகிறது — (ஸூக்ஷ்மத்வாத்) மிக நுண்ணியதாயிருக்கையால். பூ₄மி முதலானவற்றைக்காட்டிலும் நுண்ணியதாயிருந்தபோதிலும் வாயு முதலானவை பூ₄மிமுதலானவற்றிலிருந்து வேறுபடுத்தி அறியப்படுகின்றன. இந்த ஆத்மஸ்வரூபம் வாயு முதலானவற்றைக் காட்டிலும் மிகநுண்ணியதாயிருக்கையாலே தே₃ஹத்தைக்காட்டிலும் வேறுபடுத்தி அறியத்தகாததாயிருக்கிறது என்பதை "அதிஸூக்ஷ்மத்வாத்" என்னும் பா₄ஷ்யம் காட்டுகிறது. முக்தர்கள் ஆத்ம ஸ்வரூபத்தைப் பிரித்தறிய வல்லவர்களாகையால் அனைவராலும் ஆத்மஸ்வரூபம் பிரித்து அறியத்தகாதது என்று பொருள்கொள்ள முடியாது. அப்படிக்கொண்டால் ஆத்ம ஸ்வரூபத்தையறிவதற்கு யோகா₃ப்₄யாஸத்தை ஶாஸ்த்ரம் விதி₄த்திருப்பது பயனற்றதாகிவிடும். அதனாலேயே 'ஸம்ஸாரிகளால் பிரித்தறியத்தகாதது' என்று பா₄ஷ்யத்தில் பொருள்கொள்ளப்பட்டது. யோகி₃களுக்கும் முக்தர்களைப்போலே இடைவிடாமல் எப்போதும் மிகத்தெளிவாகப் பிரித்தறியமுடியாதாகையாலே ஸம்ஸாரிகள் என்னும் பத₃த்தில் அவர்களையும் சேர்க்கலாம்; அல்லது விரைவிலேயே முக்தியை அடையவிருக்கும் யோகி₃கள் முக்தப்ராயர்களேயாகையால் ஸம்ஸாரிபத₃ம் யோகி₃கள் தவிர்ந்த மற்ற ப₃த்₃த₄ர்களைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். (தூ₃ரஸ்த₂ம் ச அந்திகே ச தத்) அமாநித்வம் முதலான முன்சொல்லப்பட்ட ஆத்ம கு₃ணங்கள் இல்லாதவர்களுக்கும், அவற்றுக்கு நேர்மாறான கு₃ணங்களையுடையவர்களுக்கும் தம் தே₃ஹத்தில் இருந்தபோதிலும் இந்த ஆத்மஸ்வரூபம் எட்டாததாகையாலே வெகுதூ₃ரத்தில் இருப்பதேயாகும். அமாநித்வம் முதலான கு₃ணங்களையுடையவர்களுக்கு எளிதில் எட்டுவதாகையாலே அந்த ஆத்மஸ்வரூபமே அருகிலுள்ளதுமாகும். 'தூ₃ரத்திலும் இருப்பது அருகிலுமிருப்பது' என்று இது எல்லாவிடத்திலுமிருப்பதைச் சொல்லுவதாகக் கொள்ளலாமேயெனில்:

अविभक्तं च भूतेषु विभक्तमिव च स्थितम् ।
भूतभर्तृ च तज्ज्ञेयं ग्रसिष्णु प्रभविष्णु च ॥ १६

16. அவிப₄க்தம் ச பூ₄தேஷு விப₄க்தமிவ ச ஸ்தி₂தம் ।
பூ₄தப₄ர்த்ரு ச தத் ஜ்ஞேயம் க்₃ரஸிஷ்ணு
ப்ரப₄விஷ்ணு ச॥

தத் - அந்த ஆத்ம ஸ்வரூபம், **பூ₄தேஷு ச** - (தே₃வர் மனிதர் முதலான) எல்லா ஶரீரங்களிலும் (இருந்த போதிலும்), **அவிப₄க்தம்** - (அறிபவனுகவேயிருக்கையால்) வேறுபடாமலிருப்பது; (ஆயினும்), **விப₄க்தம் இவ ச ஸ்தி₂தம்** - (அறிவற்றவர்களுக்கு தே₃வர் முதலான) வேறு பாட்டை உடையது போலவும் இருப்பது; **பூ₄தப₄ர்த்ரு ச** - (தே₃வர் முதலான ஶரீரங்களாகச் சேர்ந்திருக்கும்) பூ₄தங்களை த₄ரிப்பதாகவும், **க்₃ரஸிஷ்ணு (ச)** - (பூ₄தங்களாலான அன்னம் முதலானவற்றை) விழுங்குவதாகவும், **ப்ரப₄விஷ்ணு ச** - (ரேதஸ், க₃ர்ப்ப₄ம் முதலான) பரிணமங்கள் உண்டாவதற்குக் காரணமாகவும், (இருப்பதால்), **ஜ்ஞேயம்** - (பூ₄தங்கள் முதலானவற்றைக் காட்டிலும் வேறுபட்டிருப்ப தாக) அறியத்தக்கது.

---

"ஸர்வமாவ்ருத்ய திஷ்ட₂தி" (13) என்னுமிடத்திலேயே அவ்விஷயம் சொல்லப்பட்டிருக்கிறதாகையாலே அப்பொருள் இங்கு பொருந்தாது. ஆகையால், "மிக நுண்ணியதாகையாலே ஸம்ஸாரிகளால் ஆத்ம ஸ்வரூபம் அறியத்தகாததாயிருக்க, அதை அறியவேண்டும் என்று ஶாஸ்த்ரங்கள் விதி₄ப்பது எப்படிப்பொருந்தும்?" என்று மூன்ருவது பாத₃த்தின்மேல் ஐயமெழ, "முற்கூறிய கு₃ணங்கள் இல்லாத ஸம்ஸாரி களுக்கே அது அடியோடு எட்டாததேயொழிய அக்கு₃ணங்களை உடையவர்களுக்கு அது எட்டக்கூடியதே. அவர்களைக் குறித்து ஶாஸ்த்ரம் விதி₄க்கத்தட்டில்லை" என்று இங்கு ஸமாத₄ானம் கூறுவ தாகக்கொள்வதே பொருந்தும்.

**16. வேறுபா டற்றவது வேற்றுமைசேர் பூதத்து**
**வேறுபா டுற்றதுபோன் மிக்கிருக்கும்—கூறுபா**
**டுற்றபொரு டான்பரிக்கு முண்ணுமுண் டாக்குமென**
**மற்றறியத் தக்கதது வாய்ந்து,**

**வேற்றுமைசேர் பூதத்து** - (தே₃வர் மனிதர் முதலான) வேறுபட்ட எல்லா தே₃ஹங்களிலும் (இருந்தபோதிலும்), **வேறுபாடு அற்ற அது** - (அறிபவனாகவேயிருக்கையால்), வேறுபாடு இல்லாமலிருக்கும் அந்த ஆத்ம ஸ்வரூபம், **மிக்கு வேறுபாடு உற்றது போல் இருக்கும்** - (அறிவற்றவர்களுக்கு) தே₃வர் முதலான மிகுந்த வேற்றுமைகளை உடையதுபோல இருக்கும்; **மற்று** - மேலும், **கூறுபாடு உற்ற பொருள்தான் பரிக்கும் என** - (தே₃வர் முதலான) வகைகளை உடைய சரீரங்களைத் தாங்கும் என்னும் காரணத்தாலும், **உண்ணும் என** - (பூ₄தங்களாலான உணவு முதலானவற்றை) உண்ணும் என்னும் காரணத்தாலும், **உண்டாக்கும் என** - ரேதஸ், க₃ர்பப₄ம் முதலான பரிணாமங்களை உண்டாக்கும் என்னும் காரணத்தாலும். **அது வாய்ந்து அறியத் தக்கது** - அந்த ஆத்மஸ்வரூபம் (ஶரீரங்கள் முதலானவற்றைக் காட்டிலும்) வேறுபட்டதாக அறியத்தக்கது.

---

16. எல்லா தே₃ஹங்களிலும் ஒருபடிப்பட்டிருக்கும் ஆத்ம ஸ்வரூபம் பல காரணங்களால் ஶரீரம் முதலான அறிவற்ற பொருள்களைக் காட்டிலும் வேறுபட்டதாக அறியத்தக்கது என்கிறான். (அவிப₄க்தம் ச பூ₄தேஷு) பஞ்சபூ₄த கார்யங்களான தே₃வர் மனிதர் முதலான ஶரீரங்கள் அனைத்திலும் இருந்தபோதிலும், ஆத்ம ஸ்வரூபமானது அறிபவனாகவே இருக்கையால் வேறுபாடற்றிருப்பது. தே₃வர் முதலான ஶரீரங்களில் வேறுபாடு இருந்தபோதிலும், அந்த ஶரீரங்களிலுள்ள ஆத்மாக்கள் அனைவரும் க்ஷேத்ரமாகிற ஶரீரத்தை அறியும் க்ஷேத்ரஜ்ஞர்களாகவே இருக்கையால், ஒருவரோடொருவர் ஸ்வரூபத்தில் வேறுபாடற்றவர்கள் என்று கருத்து. (விப₄க்தம் இவ ச ஸ்தி₂தம்) அறிவற்றவர்களுக்குத் தம்

भा-देवमनुष्यादिभूतेषु सर्वत्र स्थितमात्मवस्तु वेदितृत्वैकाकारतया अविभक्तम्; अविदुषां देवाद्याकारेण अयं देवो मनुष्यः इति विभक्तमिव च स्थितम्; देवोऽहम्, मनुष्योऽहमिति देहसामानाधिकरण्येनानुसन्धीयमानमपि वेदितृत्वेन देहादर्थान्तरभूतं ज्ञातुं शक्यमिति आदावुक्तमेव * एतद्यो वेत्ति (१) इति; इदानीं

---

ஆத்மஸ்வரூபம் தோற்றுமல் ஶரீரமே தோற்றுகையாலே 'நான் தே₃வன், நான் மனிதன்' என்று வேறுபாடுள்ளதுபோலே ஆத்மஸ்வரூபம் தோற்றுகிறது. 'இவ'ஶப்₃த₃த்தாலே இப்படித் தோற்றுவது மயக்கம் என்று உணர்த்தப்படுகிறது. ஆக ஶ்லோகத்தின் முற்பாதியால்

"பண்டி₃தா: ஸமத₃ர்ஶிந:" [5-18]

என்று முன்னமே அறிவிக்கப்பட்ட பரிஶுத்₃த₄ாத்மஸ்வரூபங்களின் ஸாம்யம் சொல்லப்பட்டது. இனி பிற்பாதியால் பல காரணங்களால் இந்த ஆத்மஸ்வரூபம் தே₃ஹம் முதலான அறிவற்ற பொருள்களைக் காட்டிலும் வேறுபட்டதாக அறியத்தக்கது என்கிருன். இவ்வத்₄யாயத்தின் தொடக்கத்தில் "ஏதத₃யோ வேத்தி" என்று 'நான் தே₃வன், நான் மனிதன்' என தே₃ஹத்தோடு ஒன்ருக அனுஸந்தி₄க்கப்பட்ட போதிலும் ஆத்மாவானது இந்த தே₃ஹத்தை அறிபவனுகையாலே தே₃ஹத்தைக்காட்டிலும் வேறுபட்டவனுக அறியத்தக்கவன் என்று கூறப்பட்டது. இனி இங்கு வேறு சில காரணங்களாலும் தே₃ஹத்தைக் காட்டிலும் வேறுபட்டவனுக அறியத்தக்கவன் என்று காட்டுகிருன் (பூ₄தப₄ர்த்ரு ச தத் ஜ்ஞேயம்) தே₃ஹரூபமாகக் கூடியிருக்கும் பூ₄மி முதலான பஞ்சபூ₄தங்களையும் த₄ரிக்கிறதாகையாலே இந்த ஆத்மஸ்வரூபமானது தன்னால் த₄ரிக்கப்படும் பூ₄தங்களைக் காட்டிலும் வேறுபட்டதாக அறியத்தக்கது. இது ஜீவாத்ம ஸ்வரூபத்தைப்பற்றிய ப்ரகரணமாகையாலே 'பூ₄தப₄ர்த்ரு' முதலான பத₃ங்கள் பரமாத்மாவைக் குறிக்கமுடியாது. முக்த ஸ்வரூபத்திற்கு எல்லாப் பொருள்களையும் த₄ரிக்கை முதலான பெருமைகள் இல்லாமையாலே, இங்கு பூ₄தஶப்₃த₃ம் அசித்தான பஞ்சபூ₄தங்களை; அதிலும் க்ஷேத்ரப்ரகரணமாகையாலே அவற்றின் விகாரமான

प्रकारान्तरैश्च देहादर्थान्तरत्वेन ज्ञातुं शक्यमित्याह-भूतभर्तृ चेति । भूतानां पृथिव्यादीनां देहरूपेण संहतानां यद्भर्तृ तद्भर्तव्येभ्यो भूतेभ्योऽर्थान्तरं ज्ञेयम्, अर्थान्तरमिति ज्ञातुं शक्यमित्यर्थः । तथा ग्रसिष्णु—अन्नादीनां भौतिकानां ग्रसिष्णु, ग्रस्यमानेभ्यो भूतेभ्यो ग्रसितृत्वेनार्थान्तरभूतमिति ज्ञातुं शक्यम्, प्रभविष्णु च--प्रभवहेतुश्च, ग्रस्तानामन्नादीनामाकारान्तरेण परिणतानां प्रभवहेतुः, तेभ्योऽर्थान्तरमिति

---

தேவர் முதலான தேஹங்களைக் குறிக்கிறதென்றே கொள்ள வேண்டும்.

"ஜ்ஞேயம் ய்த் தத் ப்ரவக்ஷ்யாமி" [12]

என்று ப்ராப்யமான ஆத்ம ஸ்வரூபத்தைச் சொல்லத்தொடங்கி இங்கு அதைச் சொல்லிவருகையில் 'ஜ்ஞேயம்' என்னும் பதத்தை இடுகையாலே, அதைக்காட்டிலும் இதற்கு வேறுபொருளேயாக வேண்டும். ஆகையால் 'பூதங்களை தரிக்கும் ஆத்ம ஸ்வரூபம் தரிக்கப்படும் பூதங்களைக்காட்டிலும் வேறுபட்டதாக அறியத்தக்கது' என்று இங்கு பொருள்கொள்வதே தக்கது. (க்ரஸிஷ்ணு ச தத் ஜ்ஞேயம்) அவ்வண்ணமே, 'அந்தப் பஞ்சபூதங்களிலிருந்து தோன்றிய உணவு நீர் முதலானவற்றை உட்கொள்ளும் அந்த ஆத்ம ஸ்வரூபம், உட்கொள்ளப்படும் அவற்றைக் காட்டிலும் வேறு பட்டதாக அறியத்தக்கது' என்று இங்கு பொருள்கொள்வதே தக்கது. (ப்ரபவிஷ்ணு ச தத் ஜ்ஞேயம்) அவ்வண்ணமே 'உட்கொள்ளப் படும் அந்த நீர் முதலானவற்றின் பரிணாமமான ரேதஸ் (வீர்யம்), தர்ப்பம் முதலானவற்றை உண்டாக்கும் அந்த ஆத்மஸ்வரூபம், உண்டாக்கப்படும் அவற்றைக் காட்டிலும் வேறுபட்டதாக அறியத் தக்கது' என்று இங்கு பொருள்கொள்வதே தக்கது. பரிணாமத்தைக் குறிக்கும் ப்ரபவஶப்தமும் இங்கு முற்கூறிய உணவு நீர் முதலான வற்றின் பரிணாமமான ரேதஸ், தர்ப்பம், மலம், மூத்ரம் முதலான வற்றைக்குறிக்கிறது; ப்ரபவிஷ்ணு ஶப்தம் 'அப்பரிணாமங்களுக்குக் காரணமாயிருப்பது' என்று பொருள்படுகிறது. ஆத்மஸ்வரூபம்

ज्ञातुं शक्यमित्यर्थः। मृतशरीरे ग्रसनप्रभवादीनामदर्शनाच्च भूतसंघातरूपं क्षेत्रं ग्रसनप्रभवभरणहेतुरिति निश्चीयते ॥ १६ ॥

---

தே₃ஹம் முதலான அசேதனப் பொருள்களைக்காட்டிலும் வேறு பட்டது என்று விளக்கும் ப்ரகரணமாகையாலே 'பூ₄தப₄ர்த்ரு' முதலான மூன்று பத₃ங்களுக்கும் இப்படிப் பொருள்கொள்வதே உசிதம் என்று கண்டுகொள்வது. இங்கு பின்வருமாறு ஓர் ஆக்ஷேபம் எழுகிறது:— "உணவை உட்கொள்ளுதலும், ரேதஸ் முதலான பரிணாமங்களுக்குக் காரணமாயிருப்பதும் ஶரீரம் செய்வதாகவன்றோ காணப்படுகிறது; தே₃ஹமும் அதன் அவயவங்களும் இவற்றைச் செய்ய முடியுமேயொழிய அவயவமற்ற ஆத்மா இங்கு பொருள்கொண்டதுபோல் இவற்றைச் செய்யமுடியாதே" என்பது அவ்வாக்ஷேபம். இதற்கு ஸமாத₄ானம் பின்வருமாறு:—"உட்கொள்ளுதலைச் செய்வதும் பரிணாமஹேதுவாயிருப்பதுமாகக் காணப்படும் தே₃ஹம் ஓராத்மாவுக்கு ஶரீரமாயிருந்துகொண்டு அவற்றைச் செய்கிறதா, அல்லது வெறும் பஞ்சபூ₄தங்களின் கூட்டாயிருந்து கொண்டு அவற்றைச் செய்கிறதா என்று ஆராய்ந்தால், செத்துப் போனபின் ஶரீரம் உட்கொள்ளுதல் முதலானவற்றைச் செய்யாமையாலே, வெறும் பஞ்சபூ₄தங்களின் கூட்டாயிருந்து கொண்டு ஶரீரம் அவற்றைச் செய்யவில்லையென்றும், ஓர் ஆத்மா தன்னை த₄ரித்துக் கொண்டிருக்கும்போதே அவற்றைச் செய்கிறது என்றும் விளங்குகிறது. இப்படி ஆத்மாவை எதிர்பார்த்தே உட்கொள்ளுதல் முதலானவற்றை ஶரீரம் செய்வதையிட்டு இங்கு ஆத்மா அவற்றைச் செய்வதாகக் கூறப்படுகிறது" என்பது ஸமாத₄ானம். செத்துப்போன ஶரீரத்திற்கு ஏற்படும் வேறுசில பரிணாமங்களுக்கு ஆத்மா காரணமல்லாவிடினும், ஜீவனுடைய அறிவை எதிர்பார்க்கும் ஶரீரத₄ாரணம், உணவு முதலானவற்றை உட்கொள்ளுதல், அவற்றின் பரிணாமமான ரேதஸ் க₃ர்ப்ப₄ம் முதலானவற்றுக்குக் காரணமாயிருத்தல் முதலானவை செத்துப்போன ஶரீரத்தில் இல்லாமையால், வெறும் பஞ்சபூ₄தக்கூட்டான ஶரீரம் இவற்றுக்குக்காரணமல்லவென்றும், ஶரீரத்தை த₄ரிக்கும் ஆத்மாவே இவற்றுக்குக் காரணம் என்றும் விளங்குகிறது என்று கருத்து. ஆத்மாவால் த₄ரிக்கப்படும் ஶரீரம், செத்துபோன ஶரீரம் ஆகிய இரண்டின் பரிணாமங்களுக்கும் ஈஶ்வரன் பொதுவான காரணம் என்பதும் இங்கு குறிக்கொள்ளத்தக்கது.

ज्योतिषामपि तज्ज्योतिस्तमसः परमुच्यते ।
ज्ञानं ज्ञेयं ज्ञानगम्यं हृदि सर्वस्य विष्ठितम् ॥ १७

17. ஜ்யோதிஷாமபி தத் ஜ்யோதி: தமஸ: பரமுச்யதே ।
ஜ்ஞாநம் ஜ்ஞேயம் ஜ்ஞாநக₃ம்யம் ஹ்ருதி₃ ஸர்வஸ்ய
விஷ்டி₂தம ||

**தத்** - அத்த ஆத்மா, **ஜ்யோதிஷாம் அபி** - (விளக்கு ஸூர்யன் முதலான) சோதிகளுக்கும், **ஜ்யோதி:** - சோதியாய் (அவற்றை விளங்கச்செய்வதாய்) இருப்பது; **தமஸ:** - மூலப்ரக்ருதிக்கு, **பரம்** - மேலானதாக, **உச்யதே** - (அவ்வாத்மா) சொல்லப்படுகிறது; **ஜ்ஞாநம் ஜ்ஞேயம்** - (அவ்வாத்மா) ஞானத்தையே ஸ்வரூபமாக உடையதாக அறியத் தக்கது. **ஜ்ஞாநக₃ம்யம்** - (அமாநித்வம் முதலான) ஜ்ஞான ஸாத₄நங்களால் அடையப்படுவது; **ஸர்வஸ்ய** - மனிதர் முதலான ஜீவர்களுடைய, **ஹ்ருதி₃** - ஹ்ருத₃யத்தில், **விஷ்டி₂தம்** - இருப்பது.

---

இப்படி ஜீவேஶ்வரர்கள் அசேதன பரிணாமங்களுக்குக் காரணம் என்று பொருள்கொள்ள இடமிருக்கும்போது "இவை பழுதையைப் பாம்பு என்று நினைப்பதுபோலே பொய்யானவை" என்று ஶங்கரர் பொருள் கொண்டது வேத₃ஶாஸ்த்ரங்களுக்கு முரணான கற்பனையானதையாலே அநாத₃ரிக்கத்தக்கது. ஆக, எல்லா தே₃ஹங்களிலும் ஒருபடிப்பட்டிருக்கும் ஆத்மா தே₃ஹம் முதலான அசேதனப் பொருள்களை த₄ரிப்பதாய், அநுப₄விப்பதாய், விகாரமடையச் செய்வதாயிருக்கையால், த₄ரிக்கப்படுபவையாய், அநுப₄விக்கப்படுபவையாய், விகாரமடைவனவாயிருக்கும் அசேதனப் பொருள்களைக் காட்டிலும் வேறுபட்டது என்று சொல்லப்பட்டதாயிற்று. 16.

**17. சோதிகளின் மிக்கதுதான் சோதியாய்த் தொக்கதமம்
மீதுபர மென்னுமுரை மேவுமதாய்ப்—போதமெனத்
தானறிய லாவறிவாற் சாருமதா யாவர்க்கு
மூனமற வுள்ளிருக்கு முற்று.**

**அதுதான்** - அந்த ஆத்மா, **சோதிகளின் மிக்க சோதியாய்** - (விளக்கு ஸூர்யன் முதலான) சோதிகளையும் விளங்கச்செய்வதாகையாலே அவற்றிலும் மிக்க சோதியாயிருப்பதாய், **தொக்க தமம் மீது பரம் என்னும் உரை மேவுமதாய்**-எங்கும் வியாபித்துள்ள மூலப்ரக்ருதியைக் காட்டிலும் மேலானதென்று சொல்லப்படுவதாய், **போதம் என தான் அறியலா**-ஞானத்தையே இயல்வாகவுடையது என்று அறியத்தக்கதாய், **அறிவால் சாருமதாய்** - (அமானித்வம் முதலான) ஜ்ஞானஸாத₄னங்களால் அடையப்படுவதாய். **யாவர்க்கும் உள்** - மனிதர் முதலான ஜீவர்களுடைய ஹ்ருத₃யத்திலே, **ஊனமற உற்று இருக்கும்** - குறைவில்லாமல் பொருந்தி இருக்கும்.

---

17. ஜ்ஞானமொன்றையே ஸ்வரூபமாகக்கொண்ட ஆத்ம ஸ்வரூபம் அசித்தான சோதிகளுக்கும் சோதியாய், மூலப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்டதாய், ஜ்ஞான ஸாத₄னங்களால் அடையத்தக்கதாய், அசித்தான ஹ்ருத₃யத்தில் இருப்பதாயிருக்கையாலே அசித்தைக் காட்டிலும் வேறுபட்டது என்கிருன். (தத்) அந்த ஆத்மஸ்வரூபம். (ஜ்யோதிஷாமபி ஜ்யோதி:) மற்ற பொருள்களை வெளிப்படுத்தும் விளக்கு, ஸூர்யன், ரத்னம் முதலான சோதிப் பொருள்களையும் வெளிப்படுத்தும் சோதியாய் இருப்பது. அணுவாய், ஸ்வயம்ப்ரகாமாயிருக்கும் ஆத்மஸ்வரூபம் வெளியிலிருக்கும் மற்ற அசேதனப்பொருள்களை எப்படி வெளிப்படுத்தமுடியும்? எனில்: விளக்கு ஸூர்யன் முதலானவை எப்படி வெளியிலிருக்கும் மற்ற பொருள்களோடு தொடர்புகொள்ளும் தம்முடைய ஒளிமயமான கிரணங்க

भा- ज्योतिषाम् —दीपादित्यमणिप्रभृतीनामपि तदेव ज्योतिः- प्रकाशकम्, दीपादित्यादीनामप्यात्मप्रभारूपं ज्ञानमेव प्रकाशकम्, दीपादयस्तु विषयेन्द्रियसन्निकर्षविरोधिसंतमसनिरसनमात्रं कुर्वते;

---

ளாலே அப்பொருள்களை வெளிப்படுத்துகின்றனவோ, அப்படியே இந்த ஆத்ம ஸ்வரூபமும் தனக்கு த₄ர்மமாயிருக்கும் ஜ்ஞானத்தி னாலே வெளிப்பொருள்களோடு தொடர்புகொண்டு அவற்றை வெளிப்படுத்துகிறது என்று அறியத்தக்கது. உண்மையில் விளக்கு ஸூர்யன் முதலான அசேதனச் சோதிப்பொருள்களையும் ஆத்மா வின் ஜ்ஞான ஒளியாயிருக்கும் த₄ர்மபூ₄த ஜ்ஞானமேயன்றோ வெளிப்படுத்துகிறது. அத்தகைய ப்ரகாஶகத்வம் (வெளிப்படுத்தும் தன்மை) உண்மையில் விளக்கு முதலானவற்றுக்கு இல்லையே. கண் முதலானவை வெளிபபொருள்களைக் காணும் காட்சிக்குத் தடையாயிருக்கும் இருட்டைப் போக்குவதன் மூலமே விளக்கு முத லானவை அப்பொருள்களை வெளிப்படுத்துபவை என்று சொல்லப் படுகின்றன. (தமஸ:பரமுச்யதே) தமஸ் எனப்படும் மூலப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்டதாக இந்த ஆத்ம ஸ்வரூபம் கூறப்படுகிறது. சோதியைப்பற்றிப் பேசிவிட்டு அடுத்தபடி கூறப்படும் தமஶ்ஶப்₃த₃ம் சோதிக்கு விரோதி₄யாக உலகில் பிரஸித்₃த₄மான இருட்டைக் குறிப்பதன்றோ உசிதம்? எனில்: 'இருட்டைக்காட்டிலும் வேறுபட்டது ஆத்மஸ்வரூபம்' என்று இங்கு கூறுவதில் பயனில்லை அசேதனப் பொருள்களுக்கெல்லாம் மூலமான ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறு பட்டது ஆத்மஸ்வருபம் என்னும் விஷயம் இங்கு அவஶ்யம் சொல்ல வேண்டியதொன்று. ஆகையாலே ஶ்ருதிஸ்ம்ருதிகளில் தமஶ் ஶப்₃த₃த்தாலே பல இடஙகளில் சொல்லப்படும மூலப்ரக்ருதியை இந்த ஶப்₃த₃ம் குறிக்கிறது என்று கொள்வதே பொருத்தம். "யஸ்ய தம: ஶரீரம்" (ப்₃ருஹ 5-7-13) (எந்தப் பரமாத்மாவுக்கு தமஸ் என்னும மூலப்ரக்ருதி ஶரீரமோ) தம ஆஸீத் தமஸா கூ₃ட₄ மக்₃ரே ப்ரகேதம" (யஜு॰ அஷ்டக 2-8-9-4) (ப்ரளய காலத்தில் தமஸ்ஸெனப்படும் மூலப்ரக்ருதியே இருந்தது. அந்த மூலப்ரக்ருதியால் பரப்பொருள்மறைக்கப்பட்டிருந்தது) "யதா₃ தம: தந்ந தி₃வா ந ராத்ரி:" (ஶ்வே 4-18) (எந்த ப்ரளயகாலத்தில் இரவு பகல் முதலான எதுவு

तावन्मात्रेण तेषां प्रकाशकत्वम्। तमसः परमुच्यते — तमश्शब्दः सूक्ष्मावस्थप्रकृतिवचनः; प्रकृतेः परमुच्यत इत्यर्थः। अतो ज्ञानं ज्ञेयम्-

---

மில்லேயோ, தமஸ் எனப்படும் மூலப்ரக்ருதிமாத்திரமிருந்ததோ] "தம: பரே தே₃வ ஏகீ ப₄வதி" [ஸுபா₃ால 2] [தமஸ் எனப்படும் மூல ப்ரக்ருதி பரமாத்மாவிடம் ஒன்றுகிறது.] "ஆஸீதி₃த₃ம் தமோபூ₄தம்", [மனு 1-6] [இவ்வுலகனைத்தும் ப்ரளயகாலத்தில் தமஸ் எனப்படும் மூலப்ரக்ருதியாகவே இருந்தது] முதலான ஶ்ருதி ஸ்ம்ருதிகளாலே தமஶ்ஶப்₃த₃த்தாலே மூலப்ரக்ருதி சொல்லப்பட்டதன்றோ. (தமஸ:பரம்) மூலப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்டது ஆத்மஸ்வரூபம் என்று கருத்து. மூலப்ரக்ருதியை அனுப₄விப்பதாகையாலே அதைக்காட்டி லும் முக்₂யமானது என்றும் பொருள் கொள்ளலாம். "அபரேயம் இதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்₃தி₄ மே பராம்" [கீ₃தை-5] என்று மூலப்ரக்ருதியைக் காட்டிலும் ஜீவன் மேலானதாக முன்னமே கூறப் பட்டதன்றோ. (தமஸ:பரம் உச்யதே) "நிர்கு₃ண: ப்ரக்ருதே: பர:" [வி, பு-2-14-29] [ஸத்வ ரஜஸ் தமோகு₃ணங்களற்றதாய், ப்ரக்ருதி யைக்காட்டிலும் வேறுபட்டதாயிருப்பது ஆத்மஸ்வரூபம்] முதலான ஶாஸ்த்ரங்களில் இப்படிக் கூறப்படுகிறது என்று கருத்து. ஆக, ஶ்லோகத்தின் முற்பாதியிலே அசேதனமான எல்லாப்பொருள்களைக் காட்டிலும் வேறுபட்டது ஆத்மஸ்வரூபம் என்று கூறப்பட்ட தாயிற்று. இனிப் பிற்பாதியாலே அவ்வாத்மஸ்வரூபத்தின் தனிப் பெருமைகள் சிலவற்றைக் காட்டுகிறான். (ஜ்ஞாநம் ஜ்ஞேயம்) இப் படி அசித்தைக்காட்டிலும் வேறுபட்டதாகையாலே ஜ்ஞானத்தையே ஸ்வரூப நிரூபக த₄ர்மமாகக் கொண்டதாக அவ்வாத்ம ஸ்வரூபம் அறியத்தக்கது. சென்ற ஶ்லோகத்திலுள்ள ஜ்ஞேயபத₃ம்போலே இங்குள்ள ஜ்ஞேயபத₃மும் ஆத்மஸ்வரூபம் அசித்தைக் காட்டிலும் வேறுபட்டதாய், ஜ்ஞானஸ்வரூபமாயிருப்பது என்பதைக் கூறுகிறது என்று கண்டுகொள்வது. இல்லாவிடில் "ஜ்ஞேயம் யத் தத் ப்ர வக்ஷ்யாமி" என்று பன்னிரண்டாம் ஶ்லோகத்தில் சொன்ன

ज्ञानैकाकारमिति ज्ञेयम् । तच्च ज्ञानगम्यम् - अमानित्वादिभिर्ज्ञान-साधनैरुक्तैः प्राप्यमित्यर्थः । हृदि सर्वस्य विष्ठितम् - सर्वस्य मनुष्यादेः हृदि विशेषेणावस्थितम् - सन्निहितम् ॥ १७ ॥

---

தோடு புநருக்தி வரும். (ஜ்ஞாநக₃ம்யம்) அவ்வாத்மஸ்வரூபம் ஜ்ஞாந ஸாத₄நங்களாக முன் கூறப்பட்ட 'அமாநித்வம்' முதலான கு₃ணங்களாலே அடையத்தக்கது. "ஜ்ஞாநக₃ம்யம்" என்றதற்கு 'ஞானத்தால் அறியத்தக்கது" என்று பொருள் கூறலாமே எனில்: எல்லாப் பதா₃ர்த்த₂ங்களுக்கும் பொதுவான இவ்வர்தத₂த்தை இங்கு கூறுவதில் சிறப்பான பயனில்லாமையாலும், 'ஜ்ஞேயம்' [ஜ்ஞாநத்தால் அறியத்தக்கது] என்று கூறியதோடு புநருக்தி ஏற்படுகையாலும், "க₃ம்யம்" என்னும் பத₃த்துக்கு "அறியத்தக்கது" என்னும் பொருளைக் காட்டிலும் "அடையத்தக்கது" என்னும் பொருளிலேயே மிகுந்த ப்ரஸித்₃தி₄ உள்ளதாகையாலும் பதினேழாவது ஶ்லோகத்திற்குப்போலே ஜ்ஞாந ஶப்₃த₃த்திற்குக் கரண வ்யுத்பத்தியாலே ஜ்ஞாநஸாத₄நம் என்று பொருள் கொண்டு, ஜ்ஞாநஸாத₄னங்களான 'அமாநித்வம்' முதலான கு₃ணங்களால் அடையத்தக்கது என்று பொருள்கொள்வதே தக்கது. (ஹ்ருதி₃ ஸர்வஸ்ய விஷ்டி₂தம்) மனுஷ்யர் முதலான அனைவரது ஶரீரங்களிலும் ஹ்ருத₃யத்திலே சிறப்பாக வஸிக்கிறது. கர்மப₂லன்களை அனுப₄வித்துக்கொண்டு வஸிப்பதே இங்கு 'விஷ்டி₂தம்' என்று சிறப்பான வாஸமாகக் கூறப்படுகிறது. அல்லது 'ஆத்மாவின் அணுஸ்வரூபம் ஹ்ருத₃யத்தில் இருக்கிறது; மற்ற அவயவங்களோடு த₄ர்மபூ₄த ஜ்ஞானத்தாலே ஆத்மா தொடர்புகொள்கிறதேயொழிய நேரே இருப்பதில்லை' என்பதைக்கருதி "ஹ்ருதி₃விஷ்டி₂தம்" [ஹ்ருத₃யத்தில் சிறப்பாக இருக்கிறது] என்று கூறுவதாகக் கொள்ளலாம். ஸ்தி₂திஶப்₃த₃ம் வஸிப்பதைக் கூறுவதாயினும் ஹ்ருத₃யம் ஆத்மாவுக்கு ஆதா₄ரமாயில்லாமையால் இங்கு "ஆத்மா ஹ்ருத₃யத்தில் உள்ளது" என்றே பொருள் கொள்ளவேண்டும். அனைவருடைய ஹ்ருத₃யத்திலும் ஆத்மா உள்ளது என்று இங்கு கூறியது "எல்லா வீடுகளிலும் நெல் உள்ளது" என்னும் ப்ரயோக₃ம் போன்றதாகையாலே, அந்தந்த ஆத்மஸ்வரூபம் அந்தந்த உடல்களின் ஹ்ருத₃யத்தில் உள்ளது என்றே பொருள்கொள்ள வேண்டும். (17)

इति क्षेत्रं तथा ज्ञानं ज्ञेयं चोक्तं समासतः ।
मद्भक्त एतद्विज्ञाय मद्भावायोपपद्यते ॥ १८

**18. இதி க்ஷேத்ரம் தத₂ா ஜ்ஞாநம் ஜ்ஞேயம் சோக்தம் ஸமாஸத꞉ I**
**மத்₃ப₄க்த ஏதத்₃ விஜ்ஞாய மத்₃ப₄ாவாயோபபத்₃யதே ॥**

**இதி** - இவ்வண்ணமாக, **க்ஷேத்ரம்** - 'க்ஷேத்ரம்' எனப்படும ஶரீரமும், **தத₂ா ஜ்ஞாநம்** - ஆத்ம ஜ்ஞாந ஸாத₄னங்களும், **ஜ்ஞேயம்** - அறியத்தக்கதான ஆத்ம ஸ்வரூபமும், **ஸமாஸத꞉ உக்தம்** - சுருக்கமாகச்சொல்லப்பட்டது. **மத்₃ப₄க்த꞉** - எனது ப₄க்தன், **ஏதத்** - இம் மூன்றையும், **விஜ்ஞாய** - உள்ளபடி அறிந்து, **மத்₃ப₄ாவாய உபபத்₃யதே** - என்னைப்போல் ஸம்ஸாரத்தோடு தொடர்பற்றவனுவதற்குத் தகுதிபெறுகிருன்.

---

**18. இப்படியாற் கேத்திரமு ஞானத் தியல்வகையு**
**மெய்ப்படியா ஞேய வியப்பதுவுந்—தப்பறவே**
**யான்றிரளச் சொன்னேனென் பத்தனு யீதறிந்து**
**தான்றிகழ்ந் தென்மயனுஞ் சார்ந்து.**

**இப்படியால்** - இவ்வண்ணமாக, **கேத்திரமும்** - க்ஷேத்ரம் என்படும ஶரீரமும், **ஞானத்து இயல் வகையும்** — ஆத்ம ஜ்ஞாந ஸாத₄னங்களும, **மெய்ப்படியாம் ஞேய வியப்பதுவும்** - அறியத்தக்க ஆதமஸ்வரூபத்தின் உண்மையான தனமையும், **தப்பு அறவே** - தவறில்லாமல், **யான்** - நான், **திரளச் சொன்னேன்** - சுருக்கமாகச் சொன்னேன், **என் பத்தனுய்** - எனக்கு ப₄க்தனுயிருப்பவன், **ஈது அறிந்து** - இம் மூன்றின் உண்மையையுமறிந்து, **தான் சார்ந்து திகழ்ந்து என்மயனும்** - என்னைப்போல் தானும் ஸம்ஸாரத்தோடு தொடர்பற்றவனுவதற்குத் தகுதி பெறுகிருன்.

भा- एवं * महाभूतान्यहङ्कारः (५) इत्यादिना * संघात श्चेतनाधृतिरित्यन्तेन क्षेत्रतत्त्वं समासेनोक्तम्। * अमानित्वम् (७) इत्यादिना * तत्त्वज्ञानार्थचिन्तनमित्यन्तेन ज्ञातव्यस्यात्मतत्त्वस्य ज्ञान साधनमुक्तम्। * अनादि मत्परम् (१२) इत्यादिना * हृदि सर्वस्य विष्ठितमित्यन्तेन ज्ञेयस्य क्षेत्रज्ञस्य याथात्म्यं च संक्षेपेणोक्तम्; मद्भक्तः एतत् क्षेत्रयाथात्म्यम्, क्षेत्राद्विविक्तात्मस्वरूपावाप्त्युपाययाथा-त्म्यम्, क्षेत्रज्ञयाथात्म्यं च विज्ञाय, मद्भावायोपपद्यते मम यो भावः- स्वभावः, असंसारित्वम्; असंसारित्वप्राप्तये उपपन्नो भवतीत्यर्थः ॥१८॥

---

18. "தத் ஸமாஸேந மே ஶ்ருணு" (3) என்று தொடங்கியபடி க்ஷேத்ரத்தையும், ஜ்ஞாநஸாத4னங்களையும், ஆத்மஸ்வரூபத்தையும் பற்றி இதுவரையில் சுருக்கமாகச் சொல்லி முடித்து, இதை அறிந்தவனுக்குப் ப2லம் சொல்லுகிறான் இந்த ஶ்லோகத்தில், (இதி க்ஷேத்ரம் ஸமாஸத: உக்தம்) "மஹாபூ4தாந்யஹங்கார:" என்று தொடங்கி "ஸங்கா4த: சேதநா த்4ருதி:" என்பதீறாக ஐந்தாவது ஶ்லோகத்தில் 'க்ஷேத்ரம்' எனப்படும் ஶரீரத்தைப் பற்றிய உண்மையறிவு சுருக்கமாகச் சொல்லப்பட்டது. (ததா2 ஜ்ஞாநம் ஸமாஸத: உக்தம்) "அமாநித்வம்" (7) என்று தொடங்கி "தத்த்வ ஜ்ஞாநார்த்த2 சிந்தநம்" (11) என்பதீறாக அறியத்தக்க ஆத்மதத்வத்தை அடைவதற்கு ஸாத4னமான அமாநித்வம் முதலான கு3ணங்களும் சுருக்கமாகக் கூறப்பட்டன. (ஜ்ஞேயம் ச ஸமாஸத: உக்தம்) "அநாதி3 மத்பரம்" (12) என்று தொடங்கி "ஹ்ருதி3 ஸர்வஸ்ய விஷ்டி2தம்" (17) என்பதீறாக அறியத்தக்க ஆத்மஸ்வரூபத்தைப் பற்றிய உண்மையறிவு சுருக்கமாக உரைக்கப்பட்டது. (மத்3ப4க்த ஏதத்3 விஜ்ஞாய) என்னிடம் ப4க்தியுடையவனாய், (1) க்ஷேத்ரத்தைப்பற்றியும், (2) க்ஷேத்ரத்தைக்காட்டிலும் வேறுபட்ட ஆத்மஸ்வரூபத்தை அடைவதற்கு உபாயத்தைப்பற்றியும், (3) க்ஷேத்ரஜ்ஞனென்கிற ஜீவாத்மாவைப்பற்றியும் என்றால் இதுவரை கூறப்பட்ட இம்மூன்று உண்மையறிவுகளை அறிந்து. 'ஏதத்' என்னும் ஶப்3த3ம் ஶ்லோகத்தின் முற்பாதியில் சொல்லப்பட்ட இம்மூன்றையே

भा ॥ अथात्यन्तविविक्तस्वभावयोः प्रकृत्यात्मनोस्संसर्गस्याना-दित्व संसृष्टयोर्द्वयोः कार्यभेदस्संसर्गहेतुश्चोच्यते—

प्रकृतिं पुरुषं चैव विद्ध्यनादी उभावपि ।
विकारांश्च गुणांश्चैव विद्धि प्रकृतिसंभवान् ॥ १९.

19. ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்$_3$த்$_4$யநாதீ$_3$ உப$_4$ாவபி ।
விகாராம்ஶ்ச கு$_3$ணாம்ஶ்சைவ வித்$_3$தி$_4$ ப்ரக்ருதி
ஸம்ப$_4$வாந் ॥

**ப்ரக்ருதிம்ச**-மூலப்ரகருதியும், **புருஷம் அபி உபெ$_4$ள ஏவ**-ஜீவாத்மாவுமாகிற இரண்டையுமே. **அநாதீ$_3$ வித்$_3$தி$_4$**-அனுதியாய்ச் சேர்ந்திருப்பவை என்று அறிவாயாக, **விகாராந் ச**-(ஸம்ஸாரப$_3$ந்த$_4$த்துக்குக் காரணமான இச்சை$_3$ த்$_3$வேஷம முதலான) விகாரங்களும், **கு$_3$ணாந் ச ஏவ** -(மோக்ஷத்திற்குக் காரணமான அமாநித்வம் முதலான) கு$_3$ணங்களும் ஆகிய இரண்டையும், **ப்ரக்ருதி ஸம்ப$_4$வாந் வித்$_3$தி$_4$** - ப்ரக்ருதியினுல் உண்டாமவையாக அறிவாயாக.

---

குறிக்கும் என்பது வெளிப்படை. ' சதுர்வித$_4$ா ப$_4$ஜந்தே'' [கீ$_3$தை 7-16] என்று ஆத்மாவை அடையவிரும்பும் கைவல்யநிஷ்ட$_2$னும் ஸாத$_4$னமாக ப$_4$க்தியை அனுஷ்டி$_2$க்கிருனகையாலே, அவனையும ''மத்$_3$ப$_4$க்த:'' என்னக் குறையில்லை. (மத்$_3$ப$_4$ாவாய உபபத்$_3$யதே) ''மம யோ ப$_4$ாவ: மத்$_3$ப$_4$ாவ:'' என்னும் வ்யுத்பத்தியாலே 'மத்$_3$ப$_4$ாவ' ஶப்$_3$த$_3$ம் பரமாத்மாவான கண்ணனின் ஸ்வப$_4$ாவத்தைக்குறிக்கும். பரமாத்ம ஸ்வப$_4$ாவங்களில் நித்யஸித்$_3$த$_4$மான ஜ்ஞானத்தையுடையவனுயிருக்கை முதலானவை ஸம்ஸாரத்தில் கட்டுண்டிருக்கும் ஜீவனுக்குக் கூடாதாகையாலே, ஸம்ஸாரத்தோடு தொடர்பற்றிருக்கையாகிற தன்மையே இஙகு கருதப்படுகிறது என்றுகொள்ள வேண்டும. 'பரமம் ஸாம்யம் உபைதி'' என்று ஶ்ருதியிலும் ''மம ஸாத$_4$ர்ம்யம் ஆக$_3$தா:'' [கீ$_3$தை 14-2] என்று இந்த கீ$_3$தையிலும் சொல்லப்பட்ட ஸாம்யத்தோடு முரண்படுமாகையாலே இங்கு மத்$_3$ப$_4$ாவ ஶப்$_3$த$_3$த்தால் ஐக்யத்தைச் சொல்லுவதாகக் கூறுவது பொருந்தாது. (மத்$_3$ப$_4$ாவாய உபபத்$_3$யதே) இம்மூன்றைப்பற்றிய உண்மையையறிந்தவன் என்னைப்போலே ஸம்ஸாரத்தோடு தொடர்பற்றவனுவதற்குத் தகுதியுடையவனுகிறுன்.

**19. சித்து மசித்து மநாதியெனச் சிந்திநீ
யத்தில் விகார மணிகுணங்க - ளொத்தெழுந்து
பந்தமுறு வித்தாகும் பந்தமொழி வித்தாகும்
வந்தெனவெண் ணூற்று மதி.**

**சித்தும் அசித்தும்** - மூலப்ரக்ருதியும் ஜீவாத்மாவும், **அநாதி** - அநாதி₃காலமாகச் சேர்ந்திருப்பவை, **என நீ சிந்தி**- என்று நீ அறிவாயாக. **அத்தில்** - அந்த ப்ரக்ருதியிலிருந்து. **விகாரம்** - (இச்சை₂ த்₃வேஷம முதலான) விகாரங்களும், **அணி குணங்கள்** - (அமாநித்வம் முதலிய) நற்குணங்களும், **ஒத்து எழுந்து வந்து**- வாசியில்லாமல் உண்டாகி ஆத்மாவையடைந்து, **பந்தம் உறு வித்தாகும் பந்தம் ஒழி வித்தாகும்**- (முறையே) ஸம்ஸாரப₃ந்த₄த்தை அடைவதற்குக் காரணமாகவும், அந்தப₃ந்த₄ம் அழிவதற்குக் காரணமாகவும் ஆகின்றன, **என**-என்று, **எண்ணூற்று** - ஆராய்ந்து, **மதி**- அறிவாயாக.

---

19. இதுவரையில் "தே₃ஹஸ்வரூபம், ஆத்மாப்திஹேது: ஆத்மவிஶோத₄னம்" என்று கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹத்தில் (17) சொல்லப்பட்ட மூன்று விஷயங்கள் விளக்கப்பட்டன. இனி "ப₃ந்த₄ஹேது:" என்று அங்கு சொல்லப்பட்ட அடுத்த விஷயம் இந்த ஶ்லோகம் தொடக்கமாக இருபத்திரண்டாவது ஶ்லோகம் ஈறாகக் கூறப்படுகிறது. அதில் இந்த ஶ்லோகத்திலும் அடுத்த ஶ்லோகத்திலும் "மிகவும் வேறுபட்ட தன்மைகளையுடைய அசேதன ப்ரக்ருதியும் ஜீவாத்மாவும் ஒன்றோடொன்று தொடர்புகொண்டிருப்பது அநாதி₃காலமாக" என்றும், அப்படித் தொடர்பு கொண்டிருக்கும் அவ்விரண்டால் உண்டாகும் விளைவுகளும் கூறப்படுகின்றன. மேல் இரண்டு ஶ்லோகங்களில் அவ்விரண்டும் ஒன்றோடொன்று அநாதி₃ காலமாகத் தொடர்புகொண்டிருப்பதற்குக் காரணம் கூறப்படுகிறது. (ப்ரக்ருதிம் புருஷம் சைவ உப₄ாவபி அநாதீ₃ வித்₃தி₄) அசேதனமான மூலப்ரக்ருதியும் புருஷனுகிற ஜீவாத்மாவும் ஒன்றோடொன்று சேர்ந்திருப்பது அநாதி₃காலமாக என்று அறிவாயாக.

भा ।। प्रकृतिपुरुषावुभावन्योन्यसंसृष्टावनादी इति विद्धि; बन्धहेतुभूतान् विकारान्—इच्छाद्वेषादीन्, अमानित्वादिकांश्च गुणान्

---

'உப₄ாவபி' என்று சொன்னதோடு "ப்ரக்ருதிம் புருஷம் ச" என்று சகாரத்தையும் இட்டிருப்பது "இவையிரண்டும் ஒன்றோடொன்று சேர்ந்தே அநாதிகாலமாக இருக்கின்றன" என்பதைக் காட்டுகிறது சகாரம் இதரேதரயோகத்தை (ஒன்றோடொன்று சேர்ந்திருப்பதைக்) காட்டுகிறது. "பரவல்லிங்க₃ம் த்₃வந்த்₃வதத்புருஷயோ:" [அஷ்டாத்₄யாயீ 2—4—26] [த்₃வந்த்₃வஸமாஸத்திலும் தத்புருஷ ஸமாஸத்திலும் ஸமஸ்தபத₃த்தின் லிங்க₃ம் (பால்) பின்பத₃த்தின் லிங்க₃த்தை ஒட்டியிருக்கும்] என்னும் பாணினி ஸூத்ரத்தைக்கருதி "ப்ரக்ருதி புருஷௌ" என்று பா₄ஷ்யத்தில் த்₃வந்த்₃வஸமாஸம் இடப்பெற்றது. அதற்கு விசேஷணமாயிருப்பதால் "உபௌ₄ அநாதீ₃" என்னும் இருபதங்களும் ஆண்பாலாகவேயுள்ளன. இனி ஶ்லோகத்தின் பிற்பாதியாலே ஸம்ஸார ப₃ந்த₄த்துக்குக் காரணமான இச்சா₂ த்₃வேஷங்கள் முதலான விகாரங்களும், அந்த ப₃ந்த₄த்திலிருந்து விடுபடுவதற்குக் காரணமான 'அமாநித்வம்' முதலான கு₃ணங்களும் ப்ரக்ருதியின் தொடர்பால் உண்டாகின்றன என்று காட்டுகிறான்:— (விகாராம்ஶ்ச ப்ரக்ருதி ஸம்ப₄வாந் வித்₃தி₄) "இச்சா₂ த்₃வேஷ: ஸுக₂ம் து₃:க்க₂ம்" என்று ஆறாவது ஶ்லோகத்தில் க்ஷேத்ரமாகிற ஶரீரத்தின் விகாரங்களாகக் கூறப்பட்டவையாய், ஸம்ஸாரப₃ந்த₄த்துக்குக் காரணமானவையான இச்சா₂த்₃வேஷங்கள் அதனால் விளையும் இன்பதுன்பங்கள், லாபா₄லாப₄ மனப்பான்மைகள், வெற்றி தோல்வி மனப்பான்மைகள் முதலான இரட்டைகளும் ப்ரக்ருதியிலிருந்து உண்டாகின்றன என்று அறிவாயாக. 'ப்ரக்ருதிஸம்ப₄வாந் விகாராந்" என்னும் தொடருக்கு ப்ரக்ருதியிலிருந்து உண்டாகும் 'மஹான்' முதலான விகாரங்களைப் பொருளாகக் கொள்ளக்கூடாதோ? எனில்: இந்த ப்ரகரணத்தில் ப்ரக்ருதி விகாரங்களான மஹான் முதலானவற்றைப்பற்றிய பேச்சேயில்லை. ஆகையால், "தத்க்ஷேத்ரம்...யத்₃விகாரி" என்று மூன்றாவது ஶ்லோகத்தில் ப்ரக்ருதி விகாரங்களாகக் கூறப்பட்டு ஆறாவது ஶ்லோகத்தில் விவரிக்கப்பட்ட இச்சா₂த்₃வேஷங்கள் முதலானவற்றை

मोक्षहेतुभूतान् प्रकृतिसंभवान् विद्धि; पुरुषेण संसृष्टेयमनादिकालप्रवृत्ता क्षेत्राकारपरिणता प्रकृतिः स्वविकारैरिच्छाद्वेषादिभिः पुरुषस्य बन्धहेतुर्भवति; सैवामानित्वादिभिः स्वविकारैः पुरुषस्यापवर्गहेतुः भवतीत्यर्थः ॥ १९ ॥

---

விகார ஸம்ப3த3த்துக்குப் பொருளாகக் கொள்வதே இந்த ப்ரகரணத்துக்குப்பொருந்தும். இங்கு இச்சை2 என்றது அதற்குமுன் உண்டாகும் ஜ்ஞானத்துக்கும், அதற்குப்பின் உண்டாகும் ப்ரயத்னத்துக்கும் உபலக்ஷணம். ஶாஸ்த்ரங்களில் விதி4க்கப்பட்ட ப்ராக்ருத விஷயங்களில் இந்த ஜ்ஞாநேச்சா2 ப்ரயத்னங்கள் உண்டாகும் போது இச்சேதனன் புண்யம் செய்தவனாகிறான். ஶாஸ்த்ரங்களில் நிஷேதி4க்கப்பட்ட விஷயங்களில் இந்த ஜ்ஞாநேச்சா2 ப்ரயத்னங்கள் ஏற்பட்டால் இச்சேதனன் பாபம் செய்தவனாகிறான். இங்கு 'த்3வேஷம்' என்பது அதற்குமுன் உண்டாகும் ஜ்ஞானத்துக்கும், அதற்குப்பின் விளையும் நிவ்ருத்திக்கும் உபலக்ஷணம். ஶாஸ்த்ரங்களில் விதி4க்கப்பட்ட ப்ராக்ருதவிஷயங்களில் ஜ்ஞானத்3வேஷ நிவ்ருத்திகள் ஏற்பட்டால் இச்சேதனன் பாபம் செய்தவனாகிறான். ஶாஸ்த்ரங்களில் நிஷேதி4க்கப்பட்ட ப்ராக்ருத விஷயங்களில் இவனுக்கு ஜ்ஞானத்3வேஷ நிவ்ருத்திகள் ஏற்பட்டால் இச்சேதனன் புண்யம் செய்தவனாகிறான். புண்யமானது ப்ராக்ருதமான ஸுக2த்தையும், வெற்றியையும், லாப4த்தையும் இவனுக்கு ஏற்படுத்துகிறது. பாபமானது ப்ராக்ருதமான து3:க்க2த்தையும், தோல்வியையும், இழப்பையும் ஏற்படுத்துகிறது. புண்யபாபங்கள் மேலும் மேலும் இவனை ஸுக2து3:க்க2ங்கள் முதலானவற்றால் மயங்கச் செய்து மேலும்மேலும் புண்யபாபங்களை விளைத்து மேலும்மேலும் ஸுக2து3க்க2ங்கள் முதலான இரட்டைகளில் ஆழ்த்தி ஸம்ஸாரத்தில் இவனை உறுதியாகக் கட்டிவிடுகின்றன. இவ்விடத்தில் ''இச்சா2 த்3வேஷ ஸமுத்தே2ந'' [கீ3தை 7-27] என்னும் ஶ்லோகத்தின் வ்யாக்2யானம் அனுஸந்தி4க்கத்தக்கது. (கு3ணாம்ஶ்சைவ ப்ரக்ருதிஸம்ப4வாந் வித்3தி4) ''அமாநித்வம் அத3ம்பி4த்வம்'' என்னும் ஏழாவது ஶ்லோகம் தொடங்கிப் பதினோராவது ஶ்லோகம் ஈறாக ஆத்மஜ்ஞான ஸாத4னமாகக் கைக்கொள்ள வேண்டியவையாகக்

कार्यकारणकर्तृत्वे हेतुः प्रकृतिरुच्यते ।
पुरुषस्सुखदुःखानां भोक्तृत्वे हेतुरुच्यते ॥ २०

**20. கார்யகாரணகர்த்ருத்வே ஹேதுः ப்ரக்ருதிருச்யதே ।**
**புருஷஸ்ஸுக₂து₃:க்க₂ாநாம் பே₄ாக்த்ருத்வே ஹேது-ருச்யதே ॥**

**கார்யகாரணகர்த்ருத்வே** — ஶரீரமும் பதினொரு இந்த்₃ரியங்களும் செயல் புரியும் விஷயத்தில், **ப்ரக்ருதி:**— (ஜீவனால் அதி₄ஷ்டி₂க்கப்பட்ட) ப்ரக்ருதியே. **ஹேது:** — காரணமாக, **உச்யதே** — சொல்லப்படுகிறது. **புருஷ:** — ஜீவன், **ஸுக₂து₃:க்க₂ாநாம் பே₄ாக்த்ருத்வே** — இன்ப துன்பங்களை அனுப₄விக்கும் விஷயத்தில், **ஹேது:** — (அவ்வனுப₄வங்களுக்கு இருப்பிடமாயிருந்துகொண்டு) காரணமாகிறான் என்று, **உச்யதே** — சொல்லப்படுகிறான்.

---

கூறப்பட்ட கு₃ணங்களையும் முற்கூறியபடி ப்ரக்ருதியிலிருந்து உண்டாகின்றவையாகவே அறிவாயாக. ''ப்ரக்ருதிஸம்ப₄வாந் கு₃ணாந்'' என்று கூறியிருக்கையாலே ப்ரக்ருதியின் கு₃ணங்களான ஸத்வ ரஜஸ்தமஸ்ஸுக்களையோ அதன் விகார கு₃ணங்களான ஶப்₃தா₃தி₃ கு₃ணங்களையோ கூறலாகாதோ? எனில்: அந்த கு₃ணங்களைப்பற்றி இந்த ப்ரகரணத்தில் பேச்சேயில்லை. ஆத்மஜ்ஞான ஸாத₄னமான அமாநித்வம் முதலான கு₃ணங்களைப்பற்றியே இங்கு ப்ரஸ்தாவம் விளைந்துள்ளது. ஆகையால் இங்கு 'கு₃ணாந்' என்று அவற்றைக் கூறுவதாகக்கொள்வதே உசிதம். இந்த கு₃ணங்கள் ஆத்மஜ்ஞான ஸாத₄னங்களாகையாலே மோக்ஷத்துக்குக் காரணமாகின்றன என்பது தெளிவு (ப்ரக்ருதிஸம்ப₄வாந் வித்₃தி₄) 'ப₃ந்த₄ஹேதுவான முற்கூறிய விகாரங்களும், மோக்ஷஹேதுவான முற்கூறிய கு₃ணங்களும் ப்ரக்ருதியிலிருந்தே உண்டாகின்றவை' என்று அறிவாயாக. ஜீவனோடு அநாதி₃காலமாகச் சேர்ந்து செயல்புரிவதாய், ஶரீரமாகப் பரிணமித்திருப்பதான ப்ரக்ருதி தன் விகாரங்களான இச்ச₂ாத்₃வேஷங்கள் முதலானவற்றாலே ஜீவன் ஸம்ஸாரத்தில் கட்டுப்படுவதற்குக் காரணமாகிறது. அதே ப்ரக்ருதி தன்னால் உண்டாகும் அமாநித்வம் முதலான கு₃ணங்களாலே ஜீவனுக்கு மோக்ஷகாரணமுமாகிறது என்றபடி. இந்த ஶரீரமே ப₃ந்த₄ஹேதுவாகும்போது கைவிடத்தக்கதாகவும், மோக்ஷகாரணமாகும்போது கைக்கொள்ளத் தக்கதாகவும் ஆகிறது என்று கருத்து. (19)

20\. காரிய காரணங்கள் கர்த்தா வியற்றுமிடத்
தேய பிரகிருதி யேதுவா—மேயசுகந்
துக்கம் புசிக்குந் தொடர்பதனி லேதுவா
யொக்க வரும்புருட னுற்று.

**காரியகாரணங்கள்** — ஶரீரமும் பதினொரு இந்த்ரியங்களுமம், **கர்த்தா இயற்றுமிடத்து** — ஒரு செயலைச் செய்பவையாகச் செயல் புரியும்போது, **ஏய பிரகிருதி** — (ஜீவனோடு) சேர்ந்திருக்கும் பிரகிருதி, **ஏதுவாம்**—காரணமாகச்சொல்லப் படுகிறது, **மேய சுகம் துக்கம் புசிக்கும் தொடர்பதனில்** — தன்னிடத்திலிருக்கும் இன்பதுனபங்களை அனுப$_4$விக்கும் விஷயத்தில், **புருடன்** — ஜீவன், **உற்று** — (அந்தப் பிரகிருதியோடு) தொடர்புகொண்டு, **ஏதுவாய் ஒக்கவரும்** — எப்போதும் காரணமாயிருப்பான்.

---

20\. இனி, ப்ரக்ருதி புருஷர்கள் ஒன்றோடொன்று சேர்ந்திருப்பதால் அவற்றுக்கு உண்டாகும் செயல் வேற்றுமைகள் இந்த ஶ்லோகத்தில் கூறப்படுகின்றன. (கார்ய காரண கர்த்ருத்வே ப்ரக்ருதி: ஹேது: உச்யதே) ஶரீரமும் பதினொரு இந்த்$_3$ரியங்களும் செயல் புரியும் விஷயத்தில் ப்ரக்ருதியே காரணமாகச் சொல்லப்படுகிறது. இங்கு 'கார்யம்' என்று ஶரீரம் சொல்லப்படுகிறது. 'காரணம்' என்று ஜ்ஞானேந்த்$_3$ரியங்கள் ஐந்தும் கர்மேந்த்$_3$ரியங்கள் ஐந்தும் இரண்டையும் நியமிக்கும் மனமும் ஆகப் பதினொரு இந்த்$_3$ரியங்களாகிற கரணங்கள் சொல்லப்படுகின்றன. "இந்த்$_3$ரியாணி த$_3$ஶைகம் ச" என்று ஐந்தாவது ஶ்லோகத்தில் கூறப்பட்டிருக்கையாலும், கரணமென்றும், காரணமென்றும் இந்த்$_3$ரியங்களுக்கு ப்ரஸித்$_3$தி$_4$ உண்டாகையாலும் இங்கு காரணஶப்$_3$த$_3$ம் இந்த்$_3$ரியங்களைக் குறிப்பதே உசிதம். "கார்யகரண கர்த்ருத்வே" என்று ஒரு பாட$_2$முண்டாயினும் அது அப்ரஸித்$_3$த$_4$மாகையாலே 'கார்யகாரண கர்த்ருத்வே' என்ற பாட$_2$மே ப$_4$ாஷ்யகாரரால் ஆதரிக்கப்பட்டது. இந்த்$_3$ரியங்களோடு சேர்த்துப்படிக்கையாலே கார்யஶப்$_3$த$_3$ம் ப்ரக்ருதியின் கார்யவிஶேஷமான ஶரீரத்தைக்குறிப்பதே உசிதம். "ஈதஸ்ய கார்யம் கரணம் ச

भा ॥ कार्यं—शरीरम्, कारणानि-ज्ञानकर्मात्मकानि समनस्कानि इन्द्रियाणि, तेषां क्रियाकारित्वे पुरुषाधिष्ठिता प्रकृतिरेव हेतुः; पुरुषाधिष्ठितक्षेत्राकारपरिणतप्रकृत्याश्रया भोगसाधनभूताः क्रिया इत्यर्थः।

---

வித்₃யதே" [ஶ்வே. 6-8] [அந்தப் பரமாத்மாவுக்கு (ப்ராக்ருதமான) ஶரீரேந்த்₃ரியங்கள் இல்லை] என்று உபநிஷத்திலும் இப்படியே இவையிரண்டும் படிக்கப்பட்டனவன்ருே. இத்தால் "ஐந்து பூ₄தங்களும், ஐந்து தந்மாத்ரைகளும ஆகப் பத்துவிதமான ப்ரக்ருதி கார்யங்களும் கார்யஶப்₃த₃த்தால் சொல்லப்படுகின்றன. பு₃த்₃தி₄, அஹங்காரம், பதினொரு இந்த்₃ரியங்கள் ஆகப் பதின்மூன்றும் கரணம் என்று சொல்லப்படுகின்றன. அவை உண்டாவதிலும் ஒவ்வொரு கணமும் பரிணமமடைவதிலும் காரணமாயிருப்பது மூலப்ரக்ருதியே" என்றும் மற்றும் பலவிதமாகவும் செய்யப்படும் வ்யாக்₂யானங்கள் பொருந்தாதவை என்று தேறிற்று. இங்கு கர்த்ரு ஶப்₃த₃ம முயற்சிக்கு இருப்பிடமானது என்னும் பொருளில் வழங்கப்படவில்லை. அசேதனமான மூலப்ரக்ருதி முயற்சிக்கு இருப்பிடமாகமாட்டாதன்ருே. ஆகையால் செயல்களுக்கு இருப்பிடமாயிருக்கையே இங்கு 'கர்த்ருத்வம்' என்று சொல்லப்படுகிறது என விளங்குகிறது. ஶரீரம் மாத்திரம் செயல் புரியமுடியாதாகையாலே ஜீவனுல் அதி₄ஷ்டி₂க்கப்பட்ட ஶரீரமே இங்கு ப்ரக்ருதி ஶப்₃த₃த்தால் சொல்லப்படுகிறது என்று கொள்ளவேண்டும். பு₃த்₃தி₄பூர்வமல்லாத சில இந்த்₃ரிய வ்யாபாரங்கள் ஜீவனுடைய இச்சையினுல் ஏற்படாவிட்டாலும் அந்தச் செயல்களின் விளைவுகளையும் அவன் அனுப₄விப்பதற்கு உறுப்பான அவனுடைய ஸாந்நித்₄யம் அவ்விடங்களிலுமுள்ளது. பு₃த்₃தி₄பூர்வமான பெரும்பாலான செயல்களில் அவனுடைய முயற்சிக்குக் காரணமான அதி₄ஷ்டா₂னமே உள்ளது என்பது தெளிவு. ஆக, ஜீவனுல் அதி₄ஷ்டி₂க்கப்பட்டதாய், ஶரீரமாகப் பரிணமமடைந்ததான ப்ரக்ருதியிலிருப்பவை ஜீவனுடைய போ₄க₃த்துக்கு ஸாத₄னமாயிருக்கும் செயல்கள் என்று முதல் பாதி ஶ்லோகத்தின் திரண்ட பொருளாகும். (ப்ரக்ருதி: ஹேது: உச்யதே) மேலே ஜீவனை மற்ருென்றுக்கு ஹேதுவாகச் சொல்லுகையாலே இங்கு இவ்விஷயத்தில் ப்ரக்ருதியே காரணமாகக் கூறப்படுகிறது என்று ஏவகாரத்தைக்கூட்டி பா₄ஷ்யத்தில்

पुरुषस्याधिष्ठातृत्वमेव: तदपेक्षया * कर्ता शास्त्रार्थवत्त्वात् (ब्र २-३-३३) इत्यादिकमुक्तम् ; शरीराधिष्ठानप्रयत्नहेतुत्वमेव हि पुरुषस्य

---

பொருள்கொள்ளப்பட்டது. ப்ரளயத3ஶையில் ஶரீரேந்த்3ரியங்கள் இல்லாமலிருக்கும் ஸம்ஸாரி ஜீவன் ப்ரக்ருதியை அதி4ஷ்டி2க்க முடியா தாகையாலே ப்ரக்ருதி ஶப்3த3த்தால் இங்கு ப்ரக்ருதியின் பரிணாமமான ஶரீரமே கூறப்படுகிறது என்று கொள்ளவேண்டும். இவ்வண்ண மாக ப்ரக்ருதிக்கே கர்த்ருத்வம் உண்டானால் ''கர்த்தா ஶாஸ்த்ரார்த்த2 வத்த்வாத்'' [ப்3ரஹ்ம ஸூத்ரம் 2-3-33] [ஶாஸ்த்ரம் பயனுள்ளதாக ஆகவேண்டுமாகையால் ஆத்மா கர்த்தாவாகவும் ஆகிறான்] முதலான ஸூத்ரங்களில் ஆத்மாவைக் கர்த்தாவாகச் சொல்லியிருப்பதோடு முரண்படுகிறதே எனில்: ஜீவன் செயல்புரியும் ஶரீரத்தை அதி4ஷ் டி2த்து நிற்பதையே செய்கிறானாகையாலும், அதையிட்டு இந்த ஸூத்ரம் அமைந்ததாகையாலும், செயலுக்கு இருப்பிடமாயிருக்கை யாகிற கர்த்ருத்வம் ப்ரக்ருதிக்கே இருப்பதாலும் முரண்பாடு இல்லை, இப்படிக்கொண்டால் புருஷனுடைய கர்த்ருத்வம் ஔபசாரிகம் என்று தேறிவிடுமே எனில்; இந்த ஸூத்ரத்தில் புருஷனுக்கு முயற்சியா லுண்டாகும் செயலுக்கு இருப்பிடமாயிருக்கையாகிற கர்த்ருத்வம் சொல்லப்படவில்லை என்பது உண்மையே. அப்படிச் சொல்லப்படுவ தாகக்கொண்டால் ஶாஸ்த்ரம் பயனுடையதாகை என்னும் ஹேது ஶரீரத்திலேயே உள்ளதாகையால் ஆத்மாவுக்குப் பொருந்தாது. ஆகையால் ஶரீரத்தை நியமிக்கும் முயற்சிக்கு இருப்பிடமாயிருப்பவன் ஆத்மா என்றும், இவனுடைய முயற்சியே இவனுக்குள்ள கர்த்ருத்வம் என்றும் கொள்ளவேண்டும். முயற்சியும் க்ருதியும் ஒரே பொருளைக் குறிக்குமாகையால் இவனுடைய கர்த்ருத்வமே முக்2யமானதாகும். அந்த முயற்சியால் ஏற்படும் அசைவுகளை மாத்திரமேயுடைய ஶரீரத்தின் கர்த்ருத்வமே அமுக்2யம் என்று தேறுகிறது. ஆக, ஶ்லோகத்தின் முற்பாதியால் போ4க3 ஸாத4னங்களான செயல் களுக்கு இருப்பிடமாயிருப்பது ப்ரக்ருதி என்று சொல்லப்பட்டது. இனி, பிற்பாதியால் இன்பதுன்பங்களை அனுப4விக்கையாகிற போ4க3ங்களுக்கு இருப்பிடமாயிருப்பவன் புருஷனே என்று கூறப்

कर्तृत्वम्; प्रकृतिसंसृष्टः पुरुषः सुखदुःखानां भोक्तृत्वे हेतुः, सुख-दुःखानुभवाश्रय इत्यर्थः॥ २० ॥

---

படுகிறது. (புருஷ: ஸுக₂து₃:க்கா₂நாம் போ₄க்த்ருத்வே ஹேது: உச்யதே) முற்கூறிய ப்ரக்ருதியோடு சேர்ந்திருக்கும் புருஷன் இன்பதுன்பங்களை அனுப₄விக்கும் விஷயத்தில் காரணமாகக் கூறப்படுகிறான். 'புருஷனுக்கு இவ்வுலக இன்பதுன்பங்கள் கிடையாதென்றல்லவோ வேத₃வாக்யங்கள் கூறுகின்றன. மோக்ஷத்தில் புருஷனுக்கு இன்பமிருந்தாலும் துன்பமில்லை. அப்படியிருக்கும்போது புருஷனை இன்பதுன்பங்களுக்கு இருப்பிடமானவன் என்று கூறியது எப்படிப் பொருந்தும்?'' எனில்: ''ந ஹ வை ஸஶரீரஸ்ய ஸத: ப்ரியாப்ரியயோ: அபஹதிரஸ்தி'' [ச₂ாந் 8-12-1] (சரீரத்தோடு கூடியிருக்கும்வரையில் ஜீவனுக்கு இன்பதுன்பங்களைத் தவிர்க்க முடியாது] என்னும் வேதவாக்யத்தையொட்டி ஶரீரத்தோடுகூடிய ஜீவனுக்கு இன்பதுன்பங்களைக் கூறுகையாலே குறையில்லை. ''ஶப்₃த₃ாதி₃ விஷயங்களாகவும் இந்த்₃ரியங்களாகவும் பரிணமமடைந்த ப்ரக்ருதியும் இன்பதுன்பங்களை அனுப₄விப்பதற்குக் காரணமாகக் காணப்படுகிறது. அப்படியிருக்க இங்கு புருஷனை மாத்திரம் காரணமாகக் கூறுவது எப்படிப்பொருந்தும்?'' எனில்: இன்பதுன்பங்களின் அனுபவத்திற்கு நேரே இருப்பிடமாயிருப்பவனுகையால் ஜீவனே அவ்வனுப₄வத்திற்கு முக்₂யகாரணம் என்பதை யிட்டு இப்படிச் சொல்லப்பட்டது. இத்தால், ''விகாரமற்ற புருஷனுடைய ஸந்நிதி₄யாலே ப்ரக்ருதிக்கே இன்பதுன்பங்களை அநுப₄விக்கும் தன்மை ஏற்படுகிறது'' என்று கூறும் ஸாங்க்₂யர்களின் மதம் தள்ளப்பட்டதாயிற்று. இப்படிக் கூறுகிற இவர்களே ''புருஷோऽஸ்தி போ₄க்த்ருபா₄வாத்'' [ஸாங்க்₂யதத்வகாரிகை—17] [இன்பதுன்பங்களை அனுப₄விக்கும் தன்மையாலும் புருஷன் இருக்கிறான் என்று தேறுகிறது] ''புருஷஸ்ய த₃ர்ஶநார்த்த₂ம் கைவல்யார்த்த₂ம் தத₂ா ப்ரத₄ாநஸ்ய। பங்க்₃வந்த₄வது₃ப₄யோரபி ஸம்யோக₃ஸ் தத்க்ருதஸ்ஸர்க்க₃:॥'' [ஸாங்க்₂ய தத்வ காரிகை—21] [நடக்க இயலாத நொண்டி ஒருவன், வழி காண இயலாத

குருடனின் தோளில் ஏறி அமர்ந்து, நொண்டி வழிகாட்ட, குருடன் நடந்து செல்ல இருவரும் சேரவேண்டிய இடத்திற்குச் சென்று பயனடைவதுபோல், பிரகிருதிக்குப (புருஷனுள்) பார்வை ஏற்படுவதற்காகவும், அவ்வண்ணமே, புருஷனுக்குத் துன்பமற்ற நிலையான மோக்ஷம் ஏற்படுவதற்காகவும பரஸ்பரம் சேர்த்தி உண்டாகிறது; அதனுல் ஜக₃த்ஸ்ருஷ்டி உண்டாகிறது.] என்று கூறுகையாலே அவர்களுக்குத் தம் வசனத்துடன் முரண்பாடு உண்டாகிறது என்பது தெளிவு. மேலும், இந்த ஸாங்க்₂ய மதம் ''ரசனாநுபபத்தேஶ்ச நாநுமாநம் ப்ரவ்ருத்தேஶ்ச'' [2-2-1] [(சேதனனுல் அதி₄ஷ்டி₂க்கப்படாவிடில்) உலகை உண்டாக்குவது பொருந்தாதாகையாலும், (சேதனனுல் அதி₄ஷ்டி₂க்கப்பட்டாலேயே) அசேதனப் பொருள்கள் செயல்படுவதைக் காண்கையாலும், அநுமானத்தால் அறியப்படும் மூலப்ரக்ருதி ஜக₃த்காரணமாகாது] என்று தொடங்கி ''விப்ரதிஷேதா₄ச்ச அஸமஞ்ஜஸம'' [2-2-9] [முன்னுக்குப்பின் முரணுகப் பேசுகையாலும் (ஸாங்க்₂ய மதம் பொருந்தாததாகும்)] என்பதீருக ப்₃ரஹ்ம ஸூத்ரத்தில் இரண்டாம் அத்தியாயம் இரண்டாம் பாத₃ம் முதல் அதி₄கரணத்தில் தள்ளப்பட்டது. இந்த ஶ்லோகத்தில் மூலப்ரக்ருதிக்கே போ₄க்த்ருத்வமும் உண்டென்று கண்ணன் கருதியிருந்தால் ''கர்த்ருத்வத்திலும, போ₄க்தருத்வத்திலும் ப்ரக்ருதியே ஹேதுவாகிறது'' என்று சொல்லியிருக்கவேண்டுமே யொழிய 'ப்ரக்ருதி கர்த்ருத்வ விஷயத்திலும், புருஷன் போ₄க்த்ருத்வ விஷயத்திலும் ஹேது' என்று பிரித்துக் கூறியிருப்பது பொருந்தாது. உண்மையில், 'போ₄க்த்ருத்வம்' [இன்பதுன்பங்களை அநுப₄விக்கை] என்பதும் ஒருவகைக் கர்த்ருத்வமேயென்பதையும் ''ஶாஸ்த்ரப₂லம் ப்ரயோக்தரி'' [பூர்வ மீமாம்ஸை 3 7-18] [எவன் சாஸ்திரத்தில் சொல்லியபடி அநுஷ்டி₂க்கிருனே, அவனுக்கே அதன் பயன் விளைகிறது] என்னும் நியாயத்தையும் நோக்கும்போது புருஷனுக்கே முற்கூறியபடி கர்த்ருத்வமும், போ₄க்த்ருத்வமும் முக்கியமானது என்று விளங்கும். ''கர்த்ருத்வம் ப்ரக்ருதிக்கு இயல்வானது; ஆனுல் அதற்குள்ள போ₄க்த்ருத்வத்திற்குப் புருஷன் (தன் ஸந்நிதி₄ மூலம்) காரணமாகிறுன். அதையிட்டு இந்த ஶ்லோகம் பிரித்துக் கூறிற்று'' என்று சொல்லுவதும் பொருந்தாது. புருஷனில்லாத கேவல ப்ரக்ருதிக்குக் கர்த்ருத்வத்தைக் காணவில்லையே; எவரும் அதை ஒப்புக்கொள்ளவுமில்லையே.

இப்படிக்கொள்ளாவிடில், "தேந நிவ்ருத்தப்ரஸவாம் அர்த்த₂வ ஶாத் ஸப்தரூப விநிவ்ருத்தாம் | ப்ரக்ருதிம் பஶ்யதி புருஷ: ப்ரேக்ஷகவத₃வஸ்தி₂த: ஸ்வச்ச₂:||" [ஸாங்க்₂யதத்வகாரிகை 65] [ஶு₃த்₃த₄மான அறிவுடையவனாய், சபையில் நடப்பதைப் பார்த்துக் கொண்டிருப்பவனைபோலே கிரியையற்றவனான புருஷன் அந்தத் தத்வஸாக்ஷாத்காரத்தால் பயன்பெற்றுவிட்டபடியால், கிரியையற்றதாய், த₄ர்மம், அத₄ர்மம், அஜ்ஞாநம், வைராக்₃யம், அவைராக்₃யம், ஐஶ்வர்யம், அனைஶ்வர்யம் என்னும் ஏழுவித மான ரூபங்களற்றதாயுமுள்ள ப்ரக்ருதியைப் பார்க்கிறான்] என்று விஶு₃த்₃த₄ கேவலஜ்ஞானமுண்டாகும்போது, ப்ரக்ருதிக்கு ஏழு விதமான ரூபங்கள் நீங்குகின்றன என்று இவர்கள் கூறுவது பொருந்தாமற் போய்விடும். இதை இசைந்தால் முக்தியிலும் ஸம்ஸார நிலையிற்போல ப்ரக்ருதி செயல்புரிய வேண்டிவரும். "ஸங்க₄ாதபரார்த்த₂த்வாத் த்ரிகு₃ணாதி₃விபர்யயாத₃தி₄ஷ்டா₂ நாத் | புருஷோஸ்தி போ₄க்த்ருபா₄வாத் கைவல்யார்த்த₂ம் ப்ரவ்ருத்தேஶ்ச || ஜநநமரணகரணாநாம் ப்ரதிநியமாத் அயுக₃ பத் ப்ரவ்ருத்தேஶ்ச | புருஷப₃ஹுத்வம் ஸித்₃த₄ம் த்ரை கு₃ண்யவிபர்யயாச் சைவ||" [ஸாங்க்₂யதத்வகாரிகை 17, 18] [பலவற்றின் சேர்க்கையான (ஸங்க₄ாத ரூபமான) அவ்யக்தம் முதலானவை பிறர்க்கேயாயிருக்கையாலும், அந்தப் பயனடையும் பொருள் முக்குணமுடைய ஸங்க₄ாதப் பொருள்களினின்றும் வேறுபட்டிருக்கவேண்டுகையாலும், (முக்குணமுடைய பொருள்கள்) மற்றொருவனால் தூண்டப்படுகையாலும், (இன்பதுன்பங்களை ஒவ்வொருவனும் அனுப₄விப்பதிலிருந்து) அநுப₄விப்பவன் ஒருவ னிருக்கவேண்டுகையாலும், துன்பமற்ற நிலையான மோக்ஷ நிலையின் பொருட்டு (சாஸ்திரங்களும் அறிவாளிகளும்) முயற்சி யெடுப்பதாலும், (அவ்யக்தம் பு₃த்₃தி₄ முதலான முக்குணப்பொருள் களைக் காட்டிலும் வேறுபட்ட) புருஷன் ஒருவனிருக்கிறான் என்று தேறிற்று. ஒவ்வொருவனுக்கும் பிறப்பு, இறப்பு, இந்த்₃ரியங்கள் தனித்தனியாகக் காண்கையாலும், ஒவ்வொருவனும் ஒரே சமயத் தில் முயற்சியுடையவனாயிராததாலும், ஒவ்வொருவனுக்கும் ஸத்வ ரஜஸ் தமோகு₃ணங்களில் ஏற்றத்தாழ்வுகள் இருக்கையாலும் புருஷர்கள் பலர் என்றே தேறுகிறது.] என்று ப்ரக்ருதியை

भा ॥ एवमन्योन्यसंसृष्टयोः प्रकृतिपुरुषयोः कार्यभेद उक्तः; पुरुषस्य स्वतस्स्वानुभवैकसुखस्यापि वैषयिकसुखदुःखोपभोगहेतु[ त्व ]-माह —

पुरुषः प्रकृतिस्थो हि भुङ्क्ते प्रकृतिजान् गुणान् ।

***21. புருஷ: ப்ரக்ருதிஸ்தே₂ா ஹி பு₄ங்க்தே ப்ரக்ருதிஜாந் கு₃ணாந் ।**

**ப்ரக்ருதிஸ்த₂:** — ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄முடையவனாக, **புருஷ:** — ஜீவன், **ப்ரக்ருதிஜாந்** — ப்ரகருதிஸம்ப₃ந்த₄த்தினால் உண்டாகும், **கு₃ணாந்**—(ஸத்வம் முதலான) கு₃ணங்களினால் ஏற்படும் இன்பதுன்பங்கள் முதலியவற்றை, **பு₄ங்க்தே ஹி** — அனுப₄விக்கிறானன்றோ.

---

அதி₄ஷ்டி₂ப்பது கொண்டு புருஷனையும், ஒரே சமயத்தில் முயற்சியுடையவராயிராமையைக்கொண்டு புருஷர்கள் பலர் என்பதையும் ஸாதி₄ப்பதிலிருந்து, 'புருஷனையெதிர்பாராத கேவல ப்ரக்ருதிக்குக் கர்த்ருத்வம் உண்டு' என்னும் வாத₃ம் பொருந்தாது என விளங்குகிறது. அந்த வாத₃ம் கீ₃தையில் இந்த ஶ்லோகத்தில் ஆதரிக்கப்பட்டுள்ளது என்று கூறுவது அடுத்த ஶ்லோகத்தில் "ப்ரக்ருதியிலிருக்கும் புருஷன் அந்த ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄த்தால் உண்டாகும் இன்பதுன்பங்களை அனுப₄விக்கிறான்" என்று கூறியிருப்பதோடு முரண்படும் என்று கண்டுகொள்வது. (20)

*21. முந்திய ஶ்லோகத்தில் ஒன்றோடொன்று சேர்ந்திருக்கும் ப்ரக்ருதிக்கும் புருஷனுக்கும் (முறையே) உரிய செயலான கர்த்ருத்வமும், போ₄க்த்ருத்வமும் சொல்லப்பட்டது. இதன்மேல் பின்வருமாறு ஓர் ஐயம் ஏற்படுகிறது:— "பரிஶுத்₃த₄னாய், தன் ஸ்வரூபாநுப₄வத்தால் இன்பத்தையே அடையவேண்டியவனான ஜீவனுக்கு ஶப்₃த₃ாதி₃ விஷயங்களை அநுப₄வித்து இன்பதுன்பங்களை அடைவது உண்மையாயிருக்க முடியாதே; ஆகையால், செம்பருத்திப்பூ அருகிலிருக்கும்போது வெண்மை நிறமுடைய ஸ்ப₂டிக மணியில் சிவப்புநிறம் ஏறிடப்படுவதுபோலே, ப்ரக்ருதி அருகிலிருப்

भा ।' गुणशब्दः स्वकार्येष्वौपचारिकः; स्वतस्त्वासुखैकसुखः पुरुषः प्रकृतिस्थः — प्रकृतिसंसृष्टः, प्रकृतिजान् गुणान् — प्रकृति-

---

பதால் ஜீவன்மேலே இவ்வனுப4வம் ஏறிடப்பெற்றதாயிருக்குமோ?'' என்பது அவ்வையம். அது இந்த ஶ்லோகத்தின் முற்பாதியாலே தவிர்க்கப்படுகிறது. (ப்ரக்ருதிஸ்த2: புருஷ:) ப்ரக்ருதியோடு சேர்ந்திருக்கும் புருஷன். ப்ரக்ருதிகார்யமான ஶரீரத்தோடு கூடிய புருஷன் என்றபடி. ப்ரக்ருதி புருஷர்களைப்பற்றி விளக்கும் ப்ரகரணமாகையால், 'ப்ரக்ருதிஸ்த2' ஶப்3த3ம் 'தே3ஹாரோக்3யம்' 'மனஶ்ஶாந்தி' முதலானவற்றைக் குறிக்காமல் இப்பொருளையே இங்கு கூறுகிறது. (ப்ரக்ருதிஜாந் கு3ணாந் பு4ங்க்தே) ப்ரக்ருதிஸம்ப3ந்த4ம் காரணமாக ஏற்படும் ஸத்வாதி3கு3ண கார்யமான இன்பதுன்பங்களை அநுப4விக்கிறான். இங்கு கு3ணஶப்3த3ம் ஸத்வாதி3 கு3ணங்களைச்சொல்லி, அக்கு3ணங்களினால் விளையும் இன்பதுன்பங்கள், இச்சா2த்3வேஷங்கள் முதலானவற்றைக் குறிக்கிறது. செயல்களைக்கொண்டு அநுமானித்தறியவேண்டிய ஸத்வாதி3கு3ணங்களை எவனும் அநுப4விக்க முடியாதாகையால், கு3ணஶப்3த3ம் லக்ஷணையாலே அவற்றின் கார்யமாய், முன் ஶ்லோகத்தில் ப்ரஸ்தாபிக்கப்பட்ட இன்பதுன்பங்கள் முதலானவற்றைக் குறிப்பதாகவே கொள்ளவேண்டும். 'ப்ரக்ருதிஜாந் கு3ணாந்' என்னும் பதங்களுக்கு 'ப்ரக்ருதியிலிருக்கும் இன்பதுன்பங்களை' என்று பொருள் கொள்ள முடியாது. உண்மையில் இன்பதுன்பங்கள் ஆத்மாவிடமன்றோ உள்ளன. ஆகையால் ''ப்ரக்ருதி ஸம்ப3ந்த4ம் காரணமாக ஏற்படும் இன்பதுன்பங்கள்'' என்றே பொருள்கொள்ள வேண்டும். (புருஷ: கு3ணாந் பு4ங்க்தேஹி) இயல்பாகவே தன் ஸ்வரூபாநுப4வத்தால் இன்பத்தையே அடையவேண்டிய புருஷன் அதற்கு நேர்மாறாக, கு3ணங்களால் உண்டாகும் இன்பதுன்பங்களை அநுப4விக்கிறானன்றோ என்று வியப்பைக் காட்டுகிறான். கு3ணஶப்3த3த்தாலே நேரே இன்பதுன்பங்களைக் குறிக்கலாமானாலும், ப்ரக்ருதியைப்பற்றிய ப்ரகரணமாகையாலும் மேலே பலவிடங்களிலும் கு3ணஶப்3த3ம் ப்ரக்ருதிகு3ணங்களையே குறிப்பதைக் காண்கிறோமாகையாலும் இங்கும் ப்ரக்ருதியின் கு3ணங்களாகிற ஸத்வாதி3 கு3ணங்களைக் குறிப்பதாகக்கொண்டு, அவற்றாலுண்டாகும் இன்பதுன்பங்களை ஔபசாரிகமாகச்

संसर्गोपाधिकान् सत्त्वादिगुणकार्यभूतान् सुखदुःखादीन्, भुङ्क्ते-- अनुभवति ॥

भा ॥ प्रकृतिसंसर्गहेतुमाह--

कारणं गुणसङ्गोऽस्य सदसद्योनिजन्मसु ॥ २१

**21* காரணம் கு₃ணஸங்கோ₃ऽஸ்ய ஸத₃ஸத்₃யோநி ஜந்மஸு ||**

அஸ்ய— இந்தப்புருஷனுக்கு, **ஸத₃ஸத்₃யோநி ஜந்மஸு**— உயர்ந்த (தே₃வர் முதலான) யோனிகளிலும், தாழ்ந்த (திர்யக்ஸ்தா₂வர) யோனிகளிலும் பிறப்பதற்கு, **காரணம்**— காரணம். **கு₃ணஸங்க₃:**—ஸத்வாதி₃கு₃ணங்களினுலுண்டாகும் இன்பதுன்பங்களில் பற்றேயாகும்.

---

சொல்லுவதாகக் கொள்ளப்பட்டது. "புருஷன் கு₃ணங்களை அநுப₄விக்கிருனன்றே" என்னும் வாக்யநடையில் முரண்பாடு தோற்றுகையாலே 'புருஷ' ஶப்₃த₃த்திற்கு இங்கு 'இயல்வான நிலையில் இன்பத்தையே அடையவேண்டிய புருஷன்' என்று பொருள்கொள்ளப்பட்டது. (பு₄ங்க்தே) "பு₄ஜோऽநவநே" என்கிற ஸூத்ரத்தின்படி ஆத்மநேபத₃மாயிருக்கிறபடியாலும், அர்த்த₂மும் பொருந்தாதாகையாலும் இங்கு ரக்ஷிக்கிருன் என்று பொருள்கொள்ள இயலாது. 'உண்கிருன்' என்னும் பொருளும், உணவுண்ணும் ப்ரகரணமல்லாமையால் பொருந்தாது. ஆகையால் 'அநுப₄விக்கிருன்' என்றே கொள்ளவேண்டும். "தன்னிடம் நிகழ்காலத்தில் சேர்ந்திருக்கும் இன்பதுன்பங்களை நேரே ஸாக்ஷாத்கரிப்பது (துய்ப்பது) போ₄க₃ம்" என்பது அநுப₄வலக்ஷணமாகும். பரமஞானியான நம்மாழ்வாரிடம் மதுர் கவியாழ்வார் "செத்தத்தின் வயிற்றில் சிறியது பிறந்தால், அது எத்தைத்தின்று எங்கே கிடக்கும்?" [அறிவற்ற அசித்தான தே₃ஹத்தோடு அணுவான ஆத்மா சேர்ந்து பிறப் பெடுத்தால், அது எதை அநுப₄வித்துக்கொண்டு எங்கேயிருக்கும்?] என்று கேட்க, "அத்தைத்தின்று அங்கே கிடக்கும்" [அந்த சரீரத்தொடர்பினுல் உண்டாகும் இன்பதுன்பங்களை அநுப₄வித்துக்கொண்டு அந்த சரீரத்திலேயே இருக்கும்] என்று நம்மாழ்வார் உரைத்த பதில் இந்த ஶ்லோகார்த்த₂த்தின் ஸாரார்த்த₂மேயாகும் என்பது அறிந்து சுவைக்கத்தக்கது. (*21)

21. வாய்ந்த பிரகிருதி நின்ற புருடனதி
லேய்ந்த குணத்தி னியல்பெய்துந்—தோய்ந்தகுண
சங்கமடி யான சதசத்தாம் யோனிகளிற்
றங்க வவப்பிறப்பிற் சார்ந்து.

**வாய்ந்த பிரகிருதி நின்ற புருடன்**—(பொருந்தியிருக்கும்) ப்ரக்ருதிகார்யமான சரீரத்தில் இருக்கும் ஜீவன், **அதில் ஏய்ந்த குணத்தின் இயல்பு**—அந்த ப்ரக்ருதியின் கு$_3$ணங்களால் உண்டாகும் இன்பதுன்பங்களை, **தோய்ந்த குணசங்கம் அடியான**—அந்த இன்பதுன்பங்களைக் காரணமாகக் கொண்ட, **சதசத்தாம் யோனிகளில் தங்கு அவ் அவ் அப்பிறப்பில் சார்ந்து**—(தே$_3$வர் முதலான) நல்ல யோனிகளிலும், (திர்யக் முதலான) தாழ்ந்தயோனிகளிலும் தங்கியிருக்கும் அந்தந்த தே$_3$வமநுஷ்யதிர்யக் ஸ்த$_2$ாவரப் பிறப்புகளை அடைந்து, **எய்தும்**—அநுப$_4$விப்பான்.

---

21* இயல்வான தன் ஸ்வரூபாநுப$_4$வத்தால் இன்பமே அடைய வேண்டிய புருஷன் ஶப்$_3$த$_3$ாதி$_3$ விஷயங்களை அநுப$_4$வித்து இன்ப துன்பங்களை அடைவது ப்ரக்ருதிஸம்ப$_3$ந்த$_4$த்தாலேயே என்று ஶ்லோகத்தின் முற்பாதியில் கூறப்பட்டது. இனி ஶ்லோகத்தின் பிற்பாதியிலே 'பரிசுத்$_3$த$_4$மான ஆத்மஸ்வரூபத்திற்கு அந்த ப்ரக்ருதிஸம்ப$_3$ந்த$_4$ம் உண்டாவதற்குக் காரணம் என்ன ?' என்னும் கேள்விக்கு பதில் அளிக்கப்படுகிறது. (அஸ்ய) பரிசுத்$_3$த$_4$மான ஸ்வரூபத்தையுடைய இந்தப் புருஷனுக்கு. (ஸத$_3$ஸத்$_3$யோநிஜந்மஸு காரணம் கு$_3$ணஸங்க$_3$:) தே$_3$வர் முதலான நல்ல யோனிகளிலும், திர்யக், ஸ்த$_2$ாவரம் என்னும் தாழ்ந்த யோனிகளிலும் பிறப்பு ஏற்படுவதற்குக் காரணம், முற்கூறிய ஸத்வாதி$_3$கு$_3$ணங்களால் உண்டாகும் இன்பதுன்பங்களில் பற்றேயாகும். "இன்ப துன்பங்களை அநுப$_4$விப்பதற்கு தே$_3$ஹஸம்ப$_3$ந்த$_4$ம் காரணம் என்றும், தே$_3$ஹஸம்ப$_3$ந்த$_4$ம் ஏற்படுவதற்கு இன்பதுன்பங்களில் பற்று காரணம் என்றும் கூறுவதால் அந்யோந்யாஶ்ரயணம் அநவஸ்தை$_2$ முதலான குற்றங்கள் உண்டாகுமே" எனில்,

भा ॥ पूर्वपूर्वप्रकृतिपरिणामरूपदेवमनुष्यादियोनिविशेषेषु स्थितोऽयं पुरुषः तत्तद्योनिप्रयुक्तसत्त्वादिगुणमयेषु सुखदुःखादिषु सक्तस्तत्साधनभूतेषु पुण्यपापकर्मसु प्रवर्तते; ततस्तत्पुण्यपापफलानुभवाय सदसद्योनिषु साध्वसाधुषु योनिषु जायते; ततश्च कर्मा-

---

"விதைக்குக் காரணம் மரம்; மரத்திற்குக் காரணம் விதை" என்னும் பீ₃ஜாங்குரந்யாயத்தாலே அநாதி₃காலமாக ப்ரவாஹ ரூபமாக வரும் இவ்விஷயத்தில் அந்யோந்யாஶ்ரயணதோ₃ஷ மில்லை; முடிவில்லாமல் செல்லுகையாகிற அநவஸ்த₂ா தோ₃ஷமு மில்லை என்று கண்டுகொள்வது. அதாவது:— அநாதி₃காலமாக ப்ரக்ருதி பரிணாமமான தே₃வர், மனிதர் முதலான சரீரங்களி லிருக்கும் ஜீவன், அந்தந்த ஶரீரங்களுக்குரிய ஸத்வம் முதலான கு₃ணங்களால் விளையும் இன்பதுன்பங்களில் பற்றுக்கொள்கி றான். அதனால் அவற்றை அடைவதற்குரிய ஸாத₄னங்களான புண்யபாப கர்மங்களில் ஈடுபடுகிறான்; அதற்குப் பின் அந்தப்புண்யபாபங்களின் ப₂லனை அநுப₄ விப்பதற்காக முற்கூறிய தே₃வர் முதலான நல்ல ஶரீரங் களையோ, திர்யக் முதலான தாழ்ந்த ஶரீரங்களையோ அடைகிறான். மறுபடியும் அந்த ஶரீரங்களில் இன்ப துன்பங்களில் பற்றுக் கொண்டு அவற்றை விளைக்கும் புண்ய பாபகர்மங்களைச் செய் கிறான். அதன் ப₂லனை அநுப₄விக்க மறுபடியும் முற்கூறியபடி ஶரீரங்களை எடுக்கிறான். இவ்வண்ணமாக அநாதி₃காலமாக நடந்து வருகையால் இதில் அந்யோந்யாஶ்ரயணம், அநவஸ்தை₂ முத லான தோ₃ஷங்கள் இல்லை என்றபடி. இப்படி இன்பதுன்பங்களில் பற்றாலே புண்யபாபகர்மங்களைச்செய்து, புண்யத்தால் உயர்ந்த பிறப்பையும், பாபத்தால் தாழ்ந்த பிறப்பையும் அடைகிறார்க ளாகையாலே, "ரமணீயசரணா ரமணீயாம் யோநிமாபத்₃ யேரந்... ... ... கபூயசரணா: கபூயாம் யோநிமாபத்₃யேரந்" [ச₂ாந் 5—10—7] [புண்ணியம் புரிந்தவர்கள் நல்ல பிறவிகளை அடைகிறார்கள்; பாபம் புரிந்தவர்கள் தாழ்ந்த பிறவிகளை அடை கிறார்கள்] என்னும் ஶ்ருதியில் பிறவிக்குக் காரணமாகப் புண்ய பாப கர்மங்களைச் சொன்னதற்கும், இங்கு இன்பதுன்பங்களில்

रभते; ततो जायते; यावदमानित्वादिकानात्मप्राप्तिसाधनभूतान् गुणान् [न]सेवते, तावदेव संसरति; तदिदमुक्तं * कारणं गुणसङ्गोऽस्य सदसद्योनिजन्मसु इति ॥ २१ ॥

---

பற்றைக் காரணமாகச் சொன்னதற்கும் முரண்பாடில்லை. ஸத்வாதி₃கு₃ணங்கள் நேரே பற்றை விளைக்க முடியாதாகையால், முற்பாதியிற்போலே இங்கும் கு₃ணஶப்₃த₃ம் கு₃ணகார்யமாய் பற்றை விளைக்கக்கூடிய இன்பதுன்பங்களை ஔபசாரிகமாகக் கூறுகிறது என்று கொள்ளவேண்டும். "இன்பத்தில் பற்று ஏற்படமுடியும்; துன்பத்தில் பற்று விளையுமோ?" எனில்: துன்பத்தையும் இன்பமாக ஜீவன் மயங்குகையாலே அதிலும் பற்று விளையலாம். பெரும் துன்பங்களை விளைக்கும் மது₄பானம் முதலானவற்ருல் விளையும் அற்ப இன்பங்கருதி ஸுக₂ஸாத₄னமாக மயங்கி அவற்றில் ஈடுபடுகிருனன்ருே மனிதன். "ப்₄ராந்தி ஜ்ஞாநவதாம் பும்ஸாம் ப்ரஹாரோऽபி ஸுகா₂யதே" [வி.பு. 1-17-61] [மயங்கிய மனிதர்க்குத் (துன்பத்தைத்தரும்) அடியும் இன்பத்தைத்தருகிறது] என்றும் சொல்லப்பட்டதன்ருே. (அஸ்ய ஸத₃ஸத்₃யோநி ஜந்மஸு) சா₂ந்தோ₃க்₃யத்தில் [5-10-7] "ரமணீயாம் யோநிம், கபூயாம் யோநிம்" என்று சொல்லப்பட்டபடி நல்லயோனிகளில் பிறப்பையும், தாழ்ந்த யோனிகளில் பிறப்பையுமே ஸத₃ஸத்₃ யோநி ஜந்ம ஶப்₃த₃த்தால் உணர்த்துகையால், "ஸத₃ஸதோர் யோநிஷு ஜந்மஸு" [நல்லதுக்கும், தீயதுக்கும் காரணமான பிறவிகளில்] என்று ஶங்கரர் உரையிட்டது ஸ்வரஸமன்று என்று கண்டுகொள்வது. "ஜந்மஸு" என்னும் பன்மையால், ஒரு புருஷனே அநாதி₃கர்மப்ரவாஹத்தாலே விசித்திரமாய், கணக்கற்றதான ஸத₃ஸத்₃யோனிகள் பலவற்றிலும் பிறக்கிருன் என்று காட்டப்படுகிறது. இப்படி இன்பதுன்பங்களில் பற்றும், அதனுல் புண்யபாபங்களைச் செய்வதும், அதனுல் ஸத₃ஸத்₃யோநிகளில் பிறப்பும் அநாதி₃காலமாகத் தொடர்ந்து வருவதுபோலே, அநந்தமான வருங்காலத்திலும் இடையருமல் தொடர்ந்து செல்லுமோ ? எனில்: இவ்வத்தியாயத்தில் ஏழாவது ஶ்லோகம் தொடங்கிப் பதினேராவது ஶ்லோகம் ஈருகச் சொல்லப்பட்ட ஆத்மப்ராப்திஸாத₄னங்களான அமாநித்வம் முதலிய இருபது கு₃ணங்களையும் இவன் பயின்று பெற்ருனுகில்

उपद्रष्टाऽनुमन्ता च भर्ता भोक्ता महेश्वरः ।
परमात्मेति चाप्युक्तो देहेऽस्मिन् पुरुषः परः ॥ २२

22. உபத்₃ரஷ்டாऽநுமந்தா ச ப₄ர்த்தா போ₄க்தா மஹேஶ்வர: ।
பரமாத்மேதி சாப்யுக்தோ தே₃ஹேऽஸ்மிந் புருஷ: பர: ॥

அஸ்மிந் தே₃ஹே—இந்த தே₃ஹத்தில (இருக்கும்), பர: புருஷ:—(அளவற்ற ஞானசக்திகளை உடையவனுயி யிருககும) பெருமை பெற்ற இந்த ஜீவன், உபத்₃ரஷ்டா—(தே₃ஹத்தை) கண்டு செயலபுரிபவனுய், அநுமந்தா—(தே₃ஹம் செயல்படுவதை) அநுஸந்தி₄ப்பவனுய், ப₄ர்த்தா-தே₃ஹத்ளதைத் தாங்குபவனுய், போ₄க்தா — (தே₃ஹத்தின் செயல்களால் விளையும் இன்பதுன்பங்களை) அநுப₄விப்பவனுய், மஹேஶ்வர:—(தே₃ஹம், இந்த்₃ரியம், மனம, ஆகிய வற்றுக்குப்) பெரிய ஈஶ்வரனுய் (நியந்தாவாய்), பரமாத்மா—(தே₃ஹம், இந்த்₃ரியம், மனம் ஆகியவற்றைக் காட்டிலும்) பெரிய ஆத்மாவாயிருப்பான், இதி சாபி உக்த: — என்றும் சொல்லப்படுகிருன்.

---

இந்த அநாதி₃காலத் தொடர் நீங்கிவிடும், அதுவரையில் இது தொடர்ந்து வரும் என்பதும் இங்கு தாத்பர்யார்த்த₂மாகத் தேறும்; எப்படியெனில்: கு₃ணங்களில் பற்று ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄த்திற்குக் காரணம் என்று இங்கு சொல்லப்பட்டது. "காரணுப₄ாவே கார்யாப₄ாவ:" [காரணம் நீங்கினுல் கார்யம் விளையாது] என்னும் நியாயத்தாலே, அமாநித்வம் முதலான ஆத்மகு₃ணங்களில் பயிற்சியாலே ஸத்வாதி₃கு₃ணங்களில் பற்று நீங்கியவுடன், ஸத₃ஸத்₃யோநி ஜந்மப்ரவாஹமும் தன்னடையே அறுந்துவிடும் என்பது தெளிவு. ஆகையால், நேரே இங்கு சொல்லப்படவில்லையானுலும் முன்ப்ரகரணத்தையும், மற்ற சாஸ்திரவாக்யங்களையும் பார்க்கும்போது இவ்விஷயம் தாத்பர்யார்த்த₂மாகத் தேறக்குறையில்லை. (21*)

22 இவ்வுடம்பின் மேலாம் புருடன்கண் டேய்ந்திசைவா
னவ்வுடம்பு தாங்கி யதிற்றுய்ப்பான்—செவ்வியதிற்
றங்கியபே ரீசனுய்த் தான்பரம வான்மாவா
யிங்கியம்பப் பட்டா னிவன்.

இவ்வுடம்பில் — இந்த தே₃ஹத்தில் (இருக்கும்), **மேலாம் புருடன் இவன்** — (அளவற்ற ஜ்ஞாநஶக்திகளை உடையவனுயிருக்கும்) பெருமை பெற்ற இந்த ஜீவன், **கண்டு ஏய்ந்து** — தே₃ஹத்தைக் கண்டு செயல் புரிபவனுய், **இசைவான்** — (தே₃ஹம செயல்படுவதை) அநுஸந்திப்பவனுய், **அவ்வுடம்பு தாங்கி**—அந்தவுடம்பைத் தாஙகுபவனுய, **அதில் துய்ப்பான்** — தே₃ஹத்தின் செயல்களால் விளையும் இன்ப துன்பங்களை அநுப₄விப்பவனுய், **செவ்வியதில் தங்கிய பேர் ஈசனுய்** — இந்திரியங்கள், மனம் ஆகியவற்றுல் சிறப்புப் பெற்றிருக்கும் அந்த தே₃ஹத்தில் தங்கிய பெரிய ஈஶ்வரனுய் (நியந்தாவாய்), **தான் பரம ஆன்மாவாய்** — (தே₃ஹம், இந்த்₃ரியம், மனம் ஆகியவற்றைக காட்டிலும) தானே பெரிய ஆத்மாவாக, **இங்கு இயம்பப்பட்டான்** — ஆத்ம ஞானிகளின் திரளில் சொல்லப்பட்டான்.

---

22. ஸத₃ஸத்₃யோநி ஜன்மங்களுக்குப் பிறகு உண்டாகும் ஸ்வபா₄வங்களைச் சொல்லுகிறது இந்த ஶ்லோகத்தில். இயற்கை நிலையில் அளவற்ற ஜ்ஞாந ஶக்திகளை உடையவனுயிருக்கும் இவன் முற்கூறிய ஜந்மங்களால் விளையும் ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄த்தால் தன் தே₃ஹத்துக்கு மட்டும் மஹேஶ்வரனுய் அதற்குமட்டும் பரமாத்மாவாய் இருக்கிருன் என்கிறது. (உபத்₃ரஷ்டா) 'த்₃ரஷ்டா' என்று ப்ரமாணயுக்திகளைக்கொண்டு காணத்தக்கவற்றை நன்கு காண்பவனைச் சொல்லுகிறது. 'உபத்₃ரஷ்டா' என்று அப்படிக் கண்டதற்கு அநுகு₃ணமாகச் செயல்புரிபவனைச் சொல்லுகிறது. இங்கு தே₃ஹத்திலிருக்கும் புருஷனைப் பற்றிப் பேசுகையாலே தே₃ஹத்தைக்கண்டு அதற்கநுகு₃ணமாகச்

भा ॥ अस्मिन् देहेऽवस्थितोऽयं पुरुषो देहप्रवृत्त्यनुगुणसङ्कल्पादि-रूपेण देहस्योपद्रष्टा अनुमन्ता च भवति ; तथा देहस्य भर्ता च भवति; तथा देहप्रवृत्तिजनितसुखदुःखयोर्भोक्ता च भवति । एवं देहनियमनेन, देहभरणेन, देहशेषित्वेन च देहेन्द्रियमनांसि प्रति

---

செயல்புரிபவனைக் கூறுகிறது. (அநுமந்தா) இப்பத₃மும் அக் காரணத்தாலேயே தே₃ஹம் செயல்படுவதை அநுஸந்தி₄ப்பவன் என்று பொருள்படுகிறது. ஆக இரண்டு பத₃ங்களாலும் தே₃ஹம் செயல்புரிவதற்கு அநுகு₃ணமாக ஸங்கல்பம் செய்வது, தூண்டு வது ஆகியவற்றைச் செய்துகொண்டு தே₃ஹம் செயல்புரிவதை அநுஸந்தி₄த்துக் கொண்டிருப்பவன் என்றதாயிற்று. அன்றிக்கே, 'அநுமந்தா' என்று செயல்புரியும் தே₃ஹத்தை மேலும் செயல் புரியச் செய்பவன்—என்று கூறுவதாகவும் கொள்ளலாம். இங்குப் படிக்கப்படும் 'உபத்₃ரஷ்டா' முதலான எல்லா ஶப்₃த₃ங்களும் 'இன்னதைக் குறித்து' என்று காட்டாமல் பொதுவாகப் படிக்கப் பட்டிருந்தபோதிலும் இது தே₃ஹத்தையும் ஜீவனையும் பகுத்தறியும் ப்ரகரணமாகையாலும், இந்த ஶ்லோகத்திலேயே பிற்பாதியில் 'அஸ்மிந் தே₃ஹே புருஷ:' என்று 'ஜீவன் இருக்குமிடம் இந்த தே₃ஹம்' என்று கூறுகையாலும், இந்த ஜீவன் 'உபத்₃ரஷ்ட்ருத்வம்' முதலான தன்மைகளை உடையவனுயிருப்பது இந்த தே₃ஹத்தைக் குறித்தே என்று கொள்ளப்படுகிறது. (ப₄ர்த்தா) அவ்வண்ணமே இந்த தே₃ஹத்தை த₄ரிப்பவனுகவும் ஆகிருன். (போ₄க்தா) அவ்வண்ணமே தே₃ஹம் செயல் புரிவ தால் உண்டாகும் இன்பதுன்பங்களை அனுப₄விப்பவனுகவும் ஆகிருன். இந்த நான்கு பத₃ங்களில் முதலிரண்டாலும தே₃ஹத்தை நியமிப்பவன் என்றும், 'ப₄ர்த்தா' என்னும் மூன்ருவது பத₃த்தால் தே₃ஹத்தை த₄ரிப்பவன் என்றும், 'போ₄க்தா' என் னும் நாலாவது பத₃த்தால் தே₃ஹத்தினுல் விளையும் பயன்களை அனுப₄விப்பவன் என்றும் கூறுகையாலே நியமிப்பவனுயிருக்கை, த₄ரிப்பவனுயிருக்கை, பயன்களை அனுப₄விக்கும் ஶேஷியாயிருக்கை என்னும் மூன்றும் ஆத்ம லக்ஷணங்கள் என்றும், நியமிக்கப்படுவதாயிருக்கை,

महेश्वरो भवति तथाच वक्ष्यते * शरीरं यदवाप्नोति यच्चाप्युत्क्रामतीश्वरः । गृहीत्वैतानि संयाति वायुर्गन्धानिवाशयात् ॥ (१५-८) इति । अस्मिन् देहे देहेन्द्रियमनांसि प्रति परमात्मेति चाप्युक्तः । देहे मनसि चात्म-

---

த₄ரிக்கப்படுவதாயிருக்கை, பயன்களை விளைக்கும் ஶேஷப் பொருளாயிருக்கை என்னும் மூன்றும் தே₃ஹலக்ஷணங்கள் என்றும் உணர்த்தப்படுகிறது. இதனுலேயே ப₄ாஷ்யகாரர் முதலிரண்டு பத₃ங்களை ஒரு வாக்யத்தாலும், மேல் பத₃ங்களைத் தனித்தனி வாக்யங்களாலும் விவரித்தார். (மஹேஶ்வர:) இவ்வண்ணமாக தே₃ஹத்தை நியமிப்பவனுகவும், தே₃ஹத்தை த₄ரிப்பவனுகவும், தே₃ஹத்துக்கு ஶேஷியாகவும் இருக்கையாலே தே₃ஹத்திற்கும் அதிலடங்கிய ஜ்ஞாந கர்மேந்த்₃ரியங்களுக்கும், மனத்துக்கும் பெரிய ஈஶ்வரனுய் இருப்பவன். கர்மத்துக்கு வஶப்பட்டுப் பிறந் திறந்து தடுமாறுகிற ஜீவனை ஈஶ்வரன் என்னலாமோ? எனில்;

"ஶரீரம் யத₃வாப்நோதி யச்சாப்யுத்க்ராமதீஶ்வர: |
க்₃ருஹீத்வைதாநி ஸம்யாதி வாயுர்க₃ந்த₄ாநிவாஶயாத்||"
[15—8]

[இந்த்₃ரியங்களுக்கு ஈஶ்வரனை ஜீவன் யாதொரு ஶரீரத்தைப் பெற்றிருந்து அதிலிருந்து கிளம்புகிருனே, அப்படிக் கிளம்பும் போது, மணம்மிக்க பொருள்களிலிருந்து காற்ருனது மணத்தை எடுத்துச் செல்வதுபோல், அந்த ஶரீரத்திலிருந்து பூ₄தஸூக்ஷ்மங்களோடு கூடிய இந்த இந்த்ரியங்களை எடுத்துக்கொண்டு செல்கிருன்] என்று தன்னுடைய தே₃ஹேந்த்₃ரிய மனங்களைக் குறித்து ஜீவனை ஈஶ்வரன் என்று வழங்குகையாலே, இங்கும் அவற்றைக் குறித்து 'பெரிய ஈஶ்வரன்' என்று ஜீவனை வழங்கத் தட்டில்லை, (பரமாத்மா இதி சாபி உக்த:) ஆத்மா எனப்படும் தே₃ஹம், இந்த்₃ரியம், மனம் ஆகியவற்றைக் காட்டிலும ஜீவன் பெரிய ஆத்மாவாயிருக்கையாலே அந்த தே₃ஹத்திலிருக்கும் ஜீவன் பரமாத்மா என்றும் சொல்லப்படுகிருன். பரம்பொருளைக் குறிக்கும் பரமாத்மா என்னும் சொல்லை ஜீவனைக்குறித்து வழங்கலாமோ? எனில்: 'அஸ்மிந் தே₃ஹே புருஷ:' என்று இவனை இந்த தே₃ஹத்திலிருப்பவனுகக் கூறுகையாலும், இவனும் தன்னுடைய தே₃ஹேந்த்₃ரியமனங்களை ஜ்ஞாநத்தாலே வியாபித் திருக்கையாலும் இங்கு 'பரமாத்ம' ஶப்₃த₃ம் ஜீவனையே குறிக்

शब्दोऽनन्तरमेव प्रयुज्यते *ध्यानेनात्मनि पश्यन्ति केचिदात्मान— मात्मना (२४) इति; अपिशब्दान्महेश्वर इत्यप्युक्त इति गम्यते; पुरुषः परः—* अनादि मत्परम् (१२) इत्यादिनोक्तोऽपरिच्छिन्नज्ञान शक्तिरयं पुरुषोऽनादिप्रकृतिसंबन्धकृतगुणसङ्गादेतद्देहमात्रमहेश्वरो देह- मात्रपरमात्मा च भवति ॥ २२ ॥

---

கிறது என்று கொள்ள வேண்டும். பரமாத்மாவைக் குறிப்பதாகக் கொண்டால் 'அஸ்மிந் தே₃ஹே' [இந்த தே₃ஹத்தில்] என்று விஶேஷித்திருப்பது ஒட்டாது. "ஜீவாத்மாவைக் காட்டிலும் மேலான ஈஶ்வரனை 'மேலான ஆத்மா' என்பது பொருந்தும்; ஜீவாத்மாவை 'மேலான ஆத்மா' என்பது எப்படிப் பொருந்தும்? அவனைக் காட்டிலும் கீழான ஆத்மாக்கள் எவரும் இருப்பதாகத் தெரியவில்லையே" எனில்: தே₃ஹத்தையும் மனத்தையும் ஆத்ம ஶப்₃த₃த்தாலே ஶாஸ்த்ரங்களிலும் நிக₄ண்டுக்களிலும் குறித்திருக்கையாலே, அவற்றைக்காட்டிலும் மேலான ஜீவாத்மாவை மேலான ஆத்மா என்பது பொருந்தும். அடுத்துள்ள இருபத்து நாலாவது ஶ்லோகத்திலேயே "த்₄யாநேநாத்மநி பஶ்யந்தி கேசித₃ாத்மாநமாத்மநா" [சிலர் ஶரீரத்தில் உள்ள ஆத்மாவை மனத்தாலே த்₄யானத்தின் மூலம் காண்கிறார்கள்] என்று ஶரீரத்தையும் மனத்தையுங்குறித்து ஆத்ம ஶப்₃த₃ம் வழங்கப்பட்டதன்றோ. சகாரத்தை இட்டதோடு 'அபி'ஶப்₃த₃த்தையும் வழங்குகையாலே 'மஹேஶ்வர' ஶப்₃த₃மும் இங்கு தே₃ஹேந்த்₃ரிய மனங்களுக்கு ஈஶ்வரனான ஜீவனையே குறிக்கிறது என்று உணர்த்தப்படுகிறது. 'உக்த:' [சொல்லப்பட்டான்] என்று கூறுகையாலும், பரம்பொருளையே முக்₂யமாகக் குறிக்கவல்ல இவ்விரு சொற்களும் ஜீவனைக்குறித்து அமுக்₂யமாக வழங்கப்படுகின்றன என்று உணர்த்தப்படுகிறது. (புருஷ: பர:) மேலான புருஷனாகிற இந்த ஜீவன். "அநாதி₃மத்பரம்" [13-12] என்று தொடங்கி இந்த ப்ரகரணத்திலேயே பல சிறப்புக்களை உடையவனாகச் சொல்லப்பட்டவனாய், இயல்பான நிலையில் அளவற்ற ஜ்ஞான ஶக்திகளை உடையவனாயிருக்கும் இந்த ஜீவன் 'அஸ்மிந் தே₃ஹே' என்று குறிக்கப்பட்ட அநாதி₃ தே₃ஹ ஸம்ப₃ந்த₄த்தில் கட்டுப்பட்டிருக்கையால் உண்டான கு₃ணஸங்க₃த்தால் இந்த தே₃ஹத்துக்கு மட்டும் மஹேஶ்வரனாகவும், இந்த தே₃ஹத்துக்கு மட்டும் பரமாத்மாவாகவும் ஆகிறான் என்று கருத்து. 22.

य एनं वेत्ति पुरुषं प्रकृतिं च गुणैस्सह ।
सर्वथा वर्तमानोऽपि न स भूयोऽभिजायते ॥ २३

23 ய ஏநம் வேத்தி புருஷம் ப்ரக்ருதிம் ச கு₃ணைஸ்ஸஹ ।
ஸர்வதா₂ வர்த்தமாநோऽபி ந ஸ பூ₄யோऽபி₄ஜாயதே ॥

**ஏநம் புருஷம்** — முற்கூறிய இந்த ஜீவனையும் (**ஏநாம்**) **ப்ரக்ருதிம் ச** — இந்த ப்ரக்ருதியையும், **கு₃ணை: ஸஹ** — ஸத்வம் முதலான கு₃ணங்களோடு கூட, **ய: வேத்தி** — எவன உள்ளபடி பகுத்தறிகிருனே, **ஸ:**— அவன், **ஸர்வதா₂ வர்த்தமாந: அபி** — தே₃வர் மனிதர் முதலான எந்த தே₃ஹத்தில் கட்டுண்டிருந்தாலும், **பூ₄ய: ந அபி₄ஜாயதே** — மறுபடியும் பிறவி எடுக்கமாட்டான்.

**23. இந்தப் புருடனையு மிந்த வசித்தினையு
மந்தக் குணங்களுட னய்ந்தறிவா—னெந்தவவன்
எவ்வாறு மேவு மியல்பாற் றிரிந்திடினு
மிவ்வா றவன்பிறவா னிங்கு.**

**இந்தப்புருடனையும்** — முற்கூறிய இந்த ஜீவனையும், **இந்த அசித்தினையும்** — இந்த அறிவற்ற ப்ரக்ருதியையும, **அந்த குணங்களுடன்** — அந்த ஸத்வம் முதலான குணங்களோடு கூட, **எந்த அவன் ஆய்ந்து அறிவான்** — எவன் உள்ளபடி பகுத்தறிகிருனே, **அவன்** — அந்த ஜீவன், **எவ்வாறு மேவும் இயல்பால் திரிந்திடினும்** — தே₃வர் மனிதர் முதலான எந்த தே₃ஹத்தில் கட்டுண்டு திரிந்தாலும, **இங்கு** - இவ்வுலகில, **இவ்வாறு அவன் பிறவான்**— இதுவரை பிறந்ததுபோல அவன் மறுபடியும் பிறவி எடுக்கமாட்டான்.

---

23. இனி முப்பத்துமூன்ருவது ஶ்லோகம் ஈருக 'விவேக:' என்று கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹத்தில் சொல்லப்பட்ட—ஆத்மாவையும் அசித்தையும் பிரித்து அனுஸந்தி₄க்கும் முறை விவரிக்கப்படு

भा ॥ एनम्—उक्तस्वभाव पुरुषम् [एनाम्-] उक्तस्वभावां च प्रकृतिं वक्ष्यमाणस्वभावयुक्तैस्सत्त्वादिभिर्गुणैस्सह, यो वेत्ति — यथावद्विवेकेन जानाति, स सर्वथा- देवमनुष्यादिदेहेष्वतिमात्रक्लिष्टप्रकारेण

---

கிறது. அதில் மிகவும் ஈடுபாடு உண்டாவதற்காக இந்த ஶ்லோகத்தில் அதன் ப₂லம் முதலில் காட்டப்படுகிறது. (ஏநம் புருஷம்) 'அநாதி₃ மத்பரம்' என்ற ஶ்லோகந் தொடங்கி விவரிக்கப்பட்ட தன்மைகளையுடைய ஜீவனையும். (ப்ரக்ருதிஞ்ச) 'மஹாபூ₄தாநி' என்று தொடங்கி இரண்டு ஶ்லோகங்களாலே விவரிக்கப்பட்ட தன்மைகளையுடைய ப்ரக்ருதியையும். 'ஏநம் புருஷம்' என்ற விடத்திலுள்ள ஏதச்ச₂ப்₃த₃த்தைப் பெண்பாலாக்கி 'ஏநாம் ப்ரக்ருதிம்' என்று இங்கும் கூட்டிக்கொள்ள வேணும். புருஷனைப் போலே ப்ரக்ருதியும் முன்பே விளக்கப்பட்டதன்றோ. (கு₃ணைஸ் ஸஹ யோ வேத்தி) ஸத்வம் ரஜஸ் தமஸ் என்னும் முக்கு₃ணங்களோடுகூட எவன் உள்ளபடி பகுத்தறிகிறானோ. இந்த கு₃ணங்கள் முன்பே காட்டப்பட்டனவாயினும், அடுத்ததான பதினான்காம் அத்₄யாயத்திலேயே இவை விரிவாக விளக்கப்படப்போகின்றன. ப்ரக்ருதியும புருஷனுமே முக்₂யமான தத்துவங்களாகையாலும் ஸத்வாதி₃ கு₃ணங்கள் அமுக்₂யமானவையாகையாலும் "ஸஹ-யுக்தே அப்ரத₄ாநே" என்னும் பாணிநி ஸூத்ரத்தை அநுஸரித்து 'கு₃ணைஸ்ஸஹ' என்று கு₃ணங்களின் அப்ராத₄ாந்யம் உணர்த்தப் பட்டது. ப்ரக்ருதிபுருஷர்கள் இருவரையும் எடுத்து அதையொட்டி 'கு₃ணைஸ்ஸஹ' என்று படிக்கப்பட்டிருக்கும்போது, இந்த கு₃ண ஶப்₃த₃ம் ப்ரக்ருதி கு₃ணங்களை மாத்திரமே சொல்லுகிறது என்று ப₄ாஷ்யமிட்டிருப்பதற்குக் காரணமென்ன? எனில்: இன்ன கு₃ணமென்று விஶேஷிக்காமல் பொதுவாகப் படிக்கப்படும் கு₃ண ஶப்₃த₃ம் ஶாஸ்த்ரங்களில் பெரும்பாலான இடங்களில் ஸத்வாதி₃ கு₃ணங்களைக் குறித்தே வழங்கப்படுவதைக் காண்கிறோமாகையாலே அப்படி ப₄ாஷ்யமிடப்பட்டது. (யோ வேத்தி) ப்ரக்ருதியையும் அதன் கு₃ணங்களையுமறிவது அஶாஸ்த்₃ரத₄ ஜ்ஞாநமாகையாலே அது மறுபிறவியின்மைக்கு எப்படிக் காரணமாக முடியும்? எனில்: (ஏநாம் ப்ரக்ருதிம்) என்று ப்ரக்ருதியையும் அதன் கு₃ணங்களையும் கைவிடத் தக்கவை என்று உள்ளபடி பகுத்து

वर्तमानोऽपि न भूयोऽभिजायते—न भूयः प्रकृत्या संसर्गमर्हति, अपरिच्छिन्नज्ञानलक्षणमपहतपाप्मानमात्मानं तद्देहावसानसमये प्राप्नोतीत्यर्थः ॥ २३ ॥

---

அறிகையே இங்கு சொல்லப்படுகிறதாகையாலே, அதுவும் மோக்ஷத்திற்குக் காரணமாகும். (ஸர்வதா₂ வர்த்தமாநோऽபி) தே₃வர் மனிதர் முதலான தே₃ஹங்களில் மிகவும் க்லேஶங்களை அநுப₄வித்துக்கொண்டு இருந்தபோதிலும். மனம் போனபடி வாழ்வது மோக்ஷத்திற்குக் காரணமாகாதாகையால் இங்கு 'ஸர்வதா₂ வர்த்தமாநோऽபி' என்றதற்கு 'எப்படி வாழ்ந்தாலும்' என்று பொருள் கொள்வது பொருந்தாது. ஆகையால் 'பலவகைப் பட்ட தே₃ஹங்களில் ஆத்மஸாக்ஷாத்காரத்துக்குத் தடையான விசித்ரமான க்லேஶங்களோடு வாழ்ந்தாலும்' என்றே பொருள் கொள்ளவேண்டும். ஆத்மஜ்ஞாநியானவன் ப்ராரப்₃த₄ கர்ம வஶத்தாலே அவ்வப்போது க்லேஶங்களை அநுப₄வித்தாலும், மற்ற மனிதர்களுக்குப்போல் அவனுக்கு மறுபிறவி ஏற்படாது என்று 'அபி' ஶப்₃த₃த்தோடு கூடிய உத்தரார்த்த₄த்தால் உணர்த்தப் படுகிறது. 'க்லேஶத்தோடு கூடியிருப்பவர்களுக்கும் மறுபிறவி யில்லை' என்று கூறுவதால் ஆத்மஸாக்ஷாத்காரம் கைவரப் பெற்றவர்களாய் க்லேஶமற்றிருப்பவர்களான அதி₄காரிகளுக்கு மறுபிறவியில்லை என்பது சொல்லாமலே விளங்கும். இதையே நம்மாழ்வாரும் 'அற்றது பற்றெனில் உற்றது வீடுயிர்' [திருவாய் 1-2-5] என்று அருளிச்செய்தார். (ஸ: ந பூ₄ய: அபி₄ஜாயதே) அந்த ஜீவன் மறுபடி ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄ம் ஏற்படுவதற்குத் தகாதவனாகிவிடுவான்; அளவற்ற ஜ்ஞாநத்தையுடையதாய், பாபங்கள் நீங்கப்பெற்றதான தனது ஆத்மஸ்வரூபத்தை அந்த தே₃ஹத்தின் முடிவிலேயே அடைந்துவிடுவான் என்று கருத்து. 'ந ஜாயதே ம்ரியதே' [கீ₃தை. 2-20] என்னும் ஶ்லோகத்தில் 'ஆத்மஸ்வரூபம் பிறவாமல் நித்யமாய் இருப்பது' என்று ஆத்ம நித்யத்வம் சொல்லப்பட்டுவிட்டதாகையால், இங்கு அதைச் சொல்லவேண்டிய அவஶ்யமில்லை. மேலும், அப்படிப் பொருள் கொண்டால் 'பூ₄ய:' [மறுபடியும] என்னும் பத₃ம் ஒட்டாது. ஆகையால் 'ஸத₃ஸத்₃யோநிஜந்மஸு' [21] என்று இந்த ப்ரகரணத்தில் சொல்லப்பட்ட தே₃ஹஸம்ப₃ந்த₄ரூபமான பிறவி

ध्यानेनात्मनि पश्यन्ति केचिदात्मानमात्मना।
अन्ये साङ्ख्येन योगेन कर्मयोगेन चापरे॥ २४

24. த்₄யாநேநாத்மநி பஶ்யந்தி கேசிதா₃த்மாநமாத்மநா ।
அந்யே ஸாங்க்₂யேந யோகே₃ந கர்மயோகே₃ந சாபரே ।

**கேசித்** — (யோக₃ம் கைவந்த) சிலர், **ஆத்மநி** — ஶரீர த்தில் (இருக்கும்), **ஆத்மாநம்** — தமது ஆத்மாவை, **ஆத்மநா**—மனத்தாலே, **த்₄யாநேந** - யோக₃த்தின் மூலம், **பஶ்யந்தி**—காண்கிறார்கள். **அந்யே** — (யோக₃ம கைவரப் பெறாத) சிலா; **ஸாங்க்₂யேந யோகே₃ந**—ஜ்ஞாந யோக₃த்தினால் (மனத்தை யோக₃த்துக்குத தகுதியுள்ளதாக்கி முற்கூறியபடி ஆத்மாவைக் காண்கிறார்கள்); **அபரே ச**— மற்றும் சிலர், **கர்மயோகே₃ந** — (ஜ்ஞானத்தை உள்ள டக்கிய) கர்மயோக₃த்தாலே (மனததை யோக₃த்துக்குத் தகுதி யுள்ளதாக்கி முற்கூறியபடி ஆத்மாவைக் காண்கி றார்கள.)

**24. மிக்கார் சிலர்நெஞ்சால் மெய்ப்பரதி யானத்தாற்**
**றக்கா ருயிர்காண்பர் தாஞ்சிலர்கள்—எக்கால**
**சாங்கியயோ கந்தன்னுற் றங்கரும யோகத்தா**
**லாங்கறிவர் வேறுசில ராய்ந்து.**

---

அவனுக்கு மறுபடியும் ஏற்படுவதில்லை என்று கூறுவதாகவே கொள்ளவேண்டும். ப்ரளய த₃ஶையில் தே₃ஹமே அழிந்தபின்பு இவனுக்குப் பிறவி இல்லாமல் இருந்தாலும், மறுபடியும் ஸ்ருஷ்டி காலத்தில் பிறவி உண்டாவதற்குத் தகுதி இருக்கிறதாகையாலே, 'மறுபடியும் பிறவி ஏற்படுவதற்குத் தகுதியற்றவனாகிறான்' என்று பொருள்கொள்ளப்பட்டது. 'மறுபிறவியில்லை' என்று அநிஷ்ட நிவ்ருத்தியைச் சொன்னதால், அளவற்ற அறிவையுடையதாய், பாபங்கள் நீங்கப்பெற்றதான தன் ஆத்மஸ்வருபத்தை அடைகை யாகிற இஷ்டப்ராப்தியும் சொல்லப்பட்டதாகவே ஆகும். 23

भा ॥ केचित् - निष्पन्नयोगा आत्मनि—शरीरेऽवस्थितमात्मानम् आत्मना - मनसा ध्यानेन - योगेन पश्यन्ति ; अन्ये च अनिष्पन्न-

---

**மிக்கார் சிலர்**—யோகம் கைவந்த சிலர், **மெய்** — ஶரீரத்தில (இருககும்) **ஆருயிர்**—தமது ஆத்மாவை, **நெஞ்சால்** — மனத்தாலே, **தக்கபரதியானத்தால்** — தகுதியும் சிறப்புமுடைய யோகத்தின் மூலம், **தாம் காண்பர்**— தாமே காண்கிறார்கள். **சிலர்கள்** - (யோகம் கைவரப்பெறாத) சிலர், **எக்கால சாங்கிய யோகந்தன்னால்** — எக்காலத்திலும் அநுஷ்டிக்கப்படும் ஜ்ஞாநயோகத்தாலும், **வேறு சிலர்**—மற்றும் சிலர், **தம் கருமயோகத்தால்** — தாம் அநுஷ்டிக்கும் (ஜ்ஞாநத்தோடு கூடிய) கர்மயோகத்தாலும் (மனத்தை யோகத்துக்குத் தகுதியுடையதாக்கி), **ஆங்கு ஆய்ந்து அறிவர்** — முற்கூறியபடி ஆத்மாவை நன்கு காண்பர்.

---

24. முன் ஶ்லோகத்தில் 'ய ஏநம் வேத்தி புருஷம்' என்று சொல்லப்பட்டதை இரண்டு ஶ்லோகங்களாலே விவரித்துக் கொண்டு, ஆத்ம ஜ்ஞாநத்தின் பல படிகளைக் கூறுகிறான். அதில் முதற்பாதியாலே ஜ்ஞாநகர்மயோகங்கள் நிறைவுற்று யோகநிலை கைவரப்பெற்றவர்களையும், பிற்பாதியாலே யோகம் கைவரப் பெறாத ஜ்ஞாநயோகநிஷ்டர்களையும் கர்மயோகநிஷ்டர்களையும் கூறுகிறான். (கேசித்) ஜ்ஞாந கர்மயோகங்கள் நிறைவுற்று யோகநிலை கைவரப்பெற்ற சிலர். (ஆத்மநி ஆத்மாநம்) ஆத்ம ஶப்தத்தால் சொல்லப்படும் ஶரீரத்திலிருக்கும் தம்முடைய ஜீவாத்ம ஸ்வரூபத்தை. (ஆத்மநா பஶ்யந்தி) ஆத்மா எனப்படும் மனத்தாலே காண்கிறார்கள். இங்கு 'ஆத்மநி', 'ஆத்மாநம்' 'ஆத்மநா' என்று மூன்று ஆத்ம ஶப்தங்கள் வெவ்வேறு வேற்றுமைகளில் படிக்கப்படுகையால் 'ஆத்மநி' என்று இருப்பிடத்தைச் சொல்லும் ஶப்தத்திற்கு இருப்பிடமான ஶரீரமும், 'ஆத்மாநம்' என்று காணப்படும் விஷயத்தைச் சொல்லும் ஶப்தத்திற்குக் காணப்படும் ஜீவாத்மாவும் 'ஆத்மநா' என்று காண்கைக்கு உபகரணத்தைச் சொல்லும் ஶப்தத்திற்கு உபகரணமான மனமும் பொருளாகக் கொள்ளப்பட்டன. (த்யாநேந

योगाः, सांख्येन योगेन – ज्ञानयोगेन योगयोग्यं मनः कृत्वा आत्मानं पश्यन्ति । अपरे – ज्ञानयोगानधिकारिणः, तदधिकारिणश्च

---

பஶ்யந்தி) யோக$_3$த்தாலே காண்கிருர்கள். இந்த ஶ்லோகத்தின் பிற்பாதியிலும், அடுத்த ஶ்லோகத்திலும் மேன்மேலே தாழ்ந்த அதி$_4$காரிகள் கூறப்படுவதாக விளங்குகையாலும், பிற்பாதியில் 'ஸாங்க்$_2$யேந யோகே$_3$ந' என்று ஜ்ஞாநயோக$_3$மும், 'கர்ம யோகே$_3$ந' என்று கர்மயோக$_3$மும் சொல்லப்படுகிறதென்று வெளிப்படையாக விளங்குகையாலும் இங்கு த்$_4$யாந ஶப்$_3$த$_3$த்தால் கர்மஜ்ஞாந யோக$_3$ங்களைக் காட்டிலும் உயர்ந்ததாய், நேரே 'யோக$_3$ம' என்று சொல்லத்தக்கதானதொரு நிலை கூறப்படுவ தாகக் கொள்ளப்படுகிறது, இனி, ஶ்லோகத்தின் பிற்பாதியாலே யோக$_3$நிலை கைவரப்பெருத ஜ்ஞாநயோக$_3$ நிஷ்ட$_2$ர்களும் கர்ம யோக$_3$நிஷ்ட$_2$ர்களும் மனத்தை யோக$_3$நிலைக்குத் தகுதியுள்ள தாக்கி ஆத்மாவைக் காண்கிருர்கள் என்று சொல்லப்படுகிறது. (அந்யே ஸாங்க்$_2$யேந யோகே$_3$ந) முற்பாதியில் சொல்லப்பட்ட யோக$_3$நிலை கைவரப்பெருத சிலர் ஜ்ஞாநயோக$_3$த்தாலே மனத்தை யோக$_3$த்துக்குத் தகுதியுள்ளதாக்கி அந்த மனத்தாலே ஶரீரத்தில் இருக்கும் தம் ஆத்ம ஸ்வரூபத்தைக் காண்கிருர்கள். 'ஆத்மநி ஆத்மாநம் ஆத்மநா பஶ்யந்தி' என்னும் பத$_3$ங்களை முற்பாதியி லிருந்து மூன்ருவது நாலாவது பாத$_3$ங்களில் தனித்தனியே கூட்டிப் பொருள்கொள்ள வேண்டும். மேன்மேலே தாழ்ந்த நிலை களைச் சொல்லுவது வெளிப்படையாக விளங்குகையால், முற்பாதி யில் சொல்லப்பட்ட யோக$_3$நிலை கைவரப்பெருதவர்களே மூன்ரு வது நாலாவது பாத$_3$ங்களில் சொல்லப்படுகிருர்கள் என்று விளங்குகிறது. அதில் "ஜ்ஞாநயோகே$_3$ந ஸாங்க்$_2$யாநாம்" [3-3] என்று ஏற்கனவே ஜ்ஞாநயோகி$_3$களை ஸாங்க்$_2$ய ஶப்$_3$த$_3$த்தால் குறித்திருக்கையால் 'ஸாங்க்$_2$யேந யோகே$_3$ந' என்று ஜ்நாந யோக$_3$மே சொல்லப்படுவதாக விளங்குகிறது. இவர்கள் தமது ஜ்ஞாநயோக$_3$த்தாலே தம் மனத்தை யோக$_3$நிலைக்குத் தகுதியுள்ள தாக்கி யோக$_3$த்தாலே ஆத்மாவைக் காண்கிருர்கள் என்று கொள்ளவேண்டும். (கர்மயோகே$_3$ந சாபரே) யோக$_3$நிலை

सुकरोपायसक्ताः, व्यपदेश्याश्च, कर्मयोगेनान्तर्गतज्ञानेन मनसो योग-योग्यतामापाद्यात्मानं पश्यन्ति ॥ २४ ॥

अन्ये त्वेवमजानन्तः श्रुत्वाऽन्येभ्य उपासते ।
तेऽपि चातितरन्त्येव मृत्युं श्रुतिपरायणाः ॥ २५

**25. அந்யே த்வேவமஜாநந்த: ஶ்ருத்வாऽந்யேப்$_4$ய உபாஸதே ।**
**தேऽபி சாதிதரந்த்யேவ ம்ருத்யும் ஶ்ருதிபராயணா: ||**

**ஏவம் அஜாநந்த:**—முற்கூறிய ஆத்மத$_3$ர்ஶந ஸாத$_4$நங்களை அறியாத, **அந்யே து** — மற்றும் சிலரோவெனில், **அந்யேப்$_4$ய:** — ஜ்ஞானிகளிடமிருந்து, **ஶ்ருத்வா** — கர்மயோக$_3$ம் முதலானவற்றை உபதே$_3$ஶமூலமாக அறிந்து, **உபாஸதே** — (அவற்றைக்கொண்டு ஆத்மாவை) உபாஸிக்கிறார்கள்; **ஶ்ருதிபராயணா: தே அபிச**—உபதே$_3$ஶம் பெறுவதிலே ஈடுபட்ட அவர்களும், **ம்ருத்யும்**—ஸம்ஸாரத்தை, **அதிதரந்தி ஏவ**—கடக்கவே செய்கிறார்கள்.

---

கைவரப்பெறாத மற்றும் சிலர் முதல் ஷட்கத்தில் சொன்னபடி ஜ்ஞானத்தை உள்ளடக்கிய கர்மயோக$_3$த்தாலே மனத்தை யோக$_3$ நிலைக்குத் தகுதியுள்ளதாக்கி யோக$_3$த்தாலே ஆத்மாவைக் காண்கிறார்கள். இங்கு "கர்மயோகே$_3$ந" என்று சொன்னபோதிலும், ஜ்ஞானத்தை உள்ளடக்காத வெறும் கர்மயோக$_3$ம் ஜ்ஞானயோக$_3$த்தை இடையிடாமல் யோக$_3$த்தை விளைக்காதாகையாலே, 'ஜ்ஞானத்தை உள்ளடக்கிய கர்மயோக$_3$ம்' என்று கர்மயோக$_3$ ஶப்$_3$த$_3$த்திற்குப் பொருள் கொள்ளப்பட்டது. முதல் ஷட்கத்தில் சொன்னபடி அஶக்தியினாலே ஜ்ஞானயோக$_3$த்தில் அதி$_4$காரமில்லாதவர்களாய்க் கர்மயோக$_3$த்தில் இழிந்தவர்களும், அதில் அதி$_4$காரம் இருந்தபோதிலும் எளிய உபாயமான கர்மயோக$_3$த்தில் ஈடுபட்டவர்களும், ஜ்ஞானயோக$_3$த்தில் அதி$_4$காரம் இருந்தபோதிலும் லோகப்ரஸித்$_3$தி$_4$ பெற்றவர்களாய், அதில் அதி$_4$காரமில்லாதவர்களை ரக்ஷிப்பதற்காகக் கர்மயோக$_3$த்தையே அனுஷ்டி$_2$க்க வேண்டியவர்களும் இங்கு 'அபரே' என்னும் ஶப்$_3$த$_3$த்தால் குறிக்கப்படுகிறார்கள்.

**25.** **மற்றிங்கவ் வாறறியார் மன்னறிவார் பாற்கேள்வி**
**யுற்றன் புடனே யுபாசிப்ப—ரற்றமா**
**வந்த வவரு மரும்பவத்தைத் தாங்கடப்பர்**
**இந்த மிகக்கேள்வி யேய்ந்து.**

**மற்று இங்கு அவ்வாறு அறியார்** — முற்கூறிய ஆத்ம தர்ஶந ஸாதநங்களை அறியாத மற்றும சிலர், **மன்னறிவார்பால்** — நிலைநின்ற அறிவுடையவர்களிடம், **கேள்வி யுற்று**—(கர்மயோகம முதலானவற்றை) உபதேஶ மூலமாகப்பெற்று. **அன்புடனே உபாசிப்பர்** — (அவற்றைக் கொண்டு ஆத்மாவை) அன்புடன் உபாஸிக்கிறார்கள். **அந்த அவரும்** — அத்தகைய அவர்களும், **இந்த கேள்வி மிக ஏய்ந்து**—இந்த உபதேஶத்தை மிகுதியாகப்பெற்று. **அரும் பவத்தை**— கடக்க அரிதான ஸம்ஸாரத்தை, **அற்றமா**—உறுதியாக, **தாம் கடப்பர்** — தாமே தாண்டுவர்.

---

25. ஜ்ஞாநயோகமும் அல்லது கர்மயோகமும் கைவரப்பெறாத வர்களான முமுக்ஷுக்கள் கைவரப்பெற்றவர்களிடமிருந்து உபதேஶம் பெற்றுக் கர்மயோகத்தைத் தொடங்கும் நிலை இந்த ஶ்லோகத்தில் கூறப்படுகிறது. (அந்யே து) முன் ஶ்லோகத்தில் சொன்னபடி ஆத்மதர்ஶன ஸாதனமான ஜ்ஞாநயோகமோ அல்லது கர்மயோகமோ தொடங்காதவர்கள். 'து' ஶப்தத்தாலும் 'ஏவம் அஜாநந்த:' [முற்கூறியபடி அறியாதவர்கள்] என்னும் தொடராலும், தம் ஆத்மாவைப் பகுத்தறிய ஶக்தியில்லாமையால், ஆத்மதர்ஶந ஸாதனமான கர்மயோகம் முதலானவற்றில் தொடக்கமும் செய்யாதவர்கள் இவர்கள் என்று விளங்குகிறது. (அந்யேப்ய: ஶ்ருத்வா) ஆத்மாவை உள்ளபடி அறிந்த ஞானிகளிடமிருந்து உபதேஶம் பெற்று, "உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ் தத்த்வதர்ஶிந:" [4-24] [ஆத்மாவை உள்ளபடி அறிந்தவர்களான ஞானிகள் உனக்கு ஆத்மாவைப்பற்றிய உண்மையறிவை உபதேஶிப்பார்கள்] என்று முன்னமே சொல்லப்பட்டதாகையாலே, உபதேஶிப்பவர்களைக் காட்டும்

भा॥ अन्ये तु -- कर्मयोगादिष्वात्मावलोकनसाधनेष्वनधिकृताः अन्येभ्यः -तत्त्वदर्शिभ्यो ज्ञानिभ्यः श्रुत्वा कर्मयोगादिभिरात्मानमुपासते; तेऽप्यात्मदर्शनेन मृत्युमतितरन्ति; ये श्रुतिपरायणाः - श्रवणमात्रनिष्ठाः, ते च श्रवणनिष्ठाः पूतपापाः क्रमेण कर्मयोगादिकमारभ्यातितरन्त्येव मृत्युम्; अपिशब्दाच्च पर्वभेदोऽवगम्यते ॥ २५॥

---

'அந்யேப்₄ய:' என்னும் பத₃ம் ஆத்மதத்வத₃ர்ஶிகளான ஞானிகளையே குறிக்கும். (உபாஸதே) அவ்வுபதே₃ஶத்தாலே கர்மயோக₃ம் முதலானவற்றை அறிந்து அவற்றைக்கொண்டு ஆத்மாவை உபாஸிக்கிறார்கள். (ஶ்ருதிபராயணா: தேऽபி ம்ருத்யும் அதிதரந்த்யேவ) உபதே₃ஶம் பெறுவதில் ஈடுபட்ட அவர்களும் முற்கூறியபடி கர்மயோக₃ம் முதலானவற்றாலே ஆத்மாவைக்கண்டு ஸம்ஸாரத்தைத் தாண்டவே செய்கிறார்கள். அன்றிக்கே, 'ஶ்ருத்வா உபாஸதே' என்று சொன்னதோடு புநருக்தி ஏற்படாமைக்காக, 'ஶ்ருதி பராயணா:' என்னும் பத₃ம் உபதே₃ஶம்பெற்று உபாஸிக்கும் முற்கூறியவர்களைக் காட்டிலும் தாழ்ந்த ஶ்ரவணமாத்ரநிஷ்ட₂ர்களைக் கூறுவதாகவும் கொள்ளலாம். இப்போது, "(யே) ஶ்ருதிபராயணா:" என்னும் தொடரோடு "தேऽபி ம்ருத்யும் அதிதரந்த்யேவ" என்னும் தொடரை மறுபடியும் கூட்டிப் பொருள்கொள்ளவேண்டும். உபதே₃ஶம்பெற்றுக் கர்மயோக₃த்தாலே ஆத்மாவை உபாஸிக்கத் தொடங்காமல், இவர்கள் பல ஞானிகளிடம் கேட்பதிலேயே ஈடுபட்டிருப்பார்கள். இவர்களும் அந்த ஶ்ரவணநிஷ்டையாலேயே உபதே₃ஶம் பெறுவதற்குத் தடையாயிருந்த பாபம் நீங்கப்பெற்றுக் கிரமமாக உபதே₃ஶம் பெற்றுக் கர்மயோக₃ம் முதலியவற்றை அறிந்து அவற்றைத் தொடங்கி ஆத்மாவை உபாஸிக்கும் முற்கூறிய அதி₄காரிகளாகி ஸம்ஸாரத்தைத் தாண்டுகிறார்கள் என்று கருத்து. "தேऽபி" என்னும் ஶப்₃த₃த்தாலே "மிகத்தாழ்ந்த இந்த அதி₄காரிகளே ஸம்ஸாரக்கடலைத் தாண்டும்போது, முற்பட்டவர்கள் ஸம்ஸாரக் கடலைத் தாண்டுவதற்குச் சொல்லவும் வேண்டுமோ?" என்னும் கருத்து தோன்றுகையாலே, இவ்விரு ஶ்லோகங்களிலும் முன்னவர்களைக் காட்டிலும் படிப்படியாகத் தாழ்ந்த படியிலுள்ள அதி₄காரிகளே குறிக்கப்படுகிறார்கள் என விளங்குகிறது.

भा ।। अथ प्रकृतिसंसृष्टस्यात्मनो विवेकानुसन्धानप्रकारं वक्तुं सर्वं स्थावरं जङ्गमं च सत्त्वं चिदचित्संसर्गजमित्याह—

यावत्संजायते किञ्चित्सत्त्वं स्थावरजङ्गमम् ।
क्षेत्रक्षेत्रज्ञसंयोगात्तद्विद्धि भरतर्षभ ।। २६

26 யாவத் ஸஞ்ஜாயதே கிஞ்சித் ஸத்த்வம் ஸ்தா₂வர ஜங்க₃மம் |
க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞ ஸம்யோகா₃த் தத்₃வித்₃தி₄ ப₄ரதர்ஷப₄ ||

**ப₄ரதர்ஷப₄**—ப₄ரதகுலத்தலைவனே! **கிஞ்சித் ஸ்தா₂வர ஜங்க₃மம்**—அசையாததொரு ஸ்தா₂வரமாகவோ, அசையும் ஒரு ஜங்க₃மமாகவோ, **யாவத் ஸத்த்வம் ஸஞ்ஜாயதே**-எவ்வளவு ஜந்து பிறக்கின்றதோ, **தத்**—(அவ்வளவு ஜந்துவின்) அப்பிறப்பு அனைத்தும், **க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞ ஸம்யோகா₃த்**—க்ஷேத்ரம் (சரீரம்) க்ஷேத்ரஜ்ஞன் (ஜீவன்) ஆகிய இரு தத்துவங்களின் சேர்த்தியாலேயே (உண்டாகிறது என்று) **வித்₃தி₄**—அறிவாய்.

**26. எவ்வளவு நின்றியலு மிந்தப் பொருளுண்டா**
**மவ்வளவு தன்னை யடல்விசயா—இவ்வகையே**
**சித்து மசித்துஞ் சிறந்த புணர்ப்பதனு**
**லொத்தியல்வ தென்றே யுணர்.**

---

26. சென்ற மூன்று ஸ்லோகங்களில் ஆத்மாவையும், அசித்தையும் பிரித்தறியும் முறையாகிற விவேகத்தினால் விளையும் ப₂லனும், பிரித்தறிபவர்கள் தங்கள் பக்குவத்திற்கேற்பப் பல படிகளில் உள்ளனர் என்பதும் விளக்கப்பட்டது; அடுத்த ஸ்லோகத்திலிருந்து பிரித்து அநுஸந்தி₄க்கும் முறையாகிற விவேகம் விளக்கப்படவுள்ளது, இப்படிப்பிரித்தறிவது மிகவும் அரிதாயிருப்பதற்குக் காரணம்-அசைவனவும் அசையாதனவுமான எல்லா ஜீவ ராசிகளும் கர்மப₂லனை அநுப₄விக்கிற சித்தாகிற தம் ஆத்மாவும்,

भा ॥ यावत् स्थावरजङ्गमात्मना सत्त्वं जायते, तावत् क्षेत्रक्षेत्रज्ञयोरितरेतरसंयोगादेव जायते - संयुक्तमेव जायते, न त्वितरेतरवियुक्तमित्यर्थः ॥ २६ ॥

---

அடல் **விசயா**—போரில் வல்ல விஜயனே! **நின்று இயலும் இந்த பொருள்** — அசையாது நிற்கும் ஸ்த₂ாவரமாகவும அசையும் ஜங்க₃மமாகவும் உள்ள இந்த ஜீவ ராசி, **எவ்வளவு உண்டாம்** — எத்தனை உள்ளதோ, **அவ்வளவு தன்னை**— அத்தனை பொருளையும், **இவ்வகையே**—முற்கூறியபடி, **சித்தும் அசித்தும் சிறந்த புணர்ப்பதனால் ஒத்து இயல்வது என்றே**—சரீரமும் ஜீவனும் சிறப்பாகச் சேர்ந்திருப்பதால் ஒன்றுபட்டுச் செயல்படுவது என்றே, **உணர்**—அறிவாய்.

---

அதை அநுப₄விக்குமிடமாய், அசித்தாகிற தே₃ஹமும் பிறக்கும் போதிலிருந்தே (கர்மமாகிற கயிற்றால்) அழுந்தக்கட்டப்பட்டிருப்பதேயாகும் என்கிறது இந்த ஶ்லோகம், (கிஞ்சித் ஸ்த₂ாவர ஜங்க₃மம் யாவத் ஸத்த்வம் ஸஞ்ஜாயதே) அசையாததொரு ஸ்த₂ாவரமாகவோ, அசையும் ஒரு ஜங்க₃மமாகவோ எவ்வளவு ஜீவராசி பிறக்கிறதோ. "யாவத் தாவத் ஸாகல்யே" என்னும் வழக்கையொட்டி இங்கு 'யாவத்' என்னும் ஶப்₃த₃ம் 'எவ்வளவுண்டோ அவ்வளவும்' என்னும் பொருளைக்காட்டுகிறது, யாவச்ச₂ப்₃த₃த்தை யச்ச₂ப்₃த₃பர்யாயமாக ஶங்க₃ரர் ப₄ாஷ்யமிட்டிருப்பது நலிந்து பொருள்கொள்வதாகையாலும், பயனற்றதாகையாலும் சிறப்புடைத்தன்று. 'ஸத்த்வ' ஶப்₃த₃ம் இங்கு ப்ரகரணப₃லத்தாலே ஜீவராஶியைக் குறிக்கிறது. "த்₃ரவ்யாஸுவ்யவஸாயேஷு ஸத்த்வமஸ்த்ரீ து ஜந்துஷு" [நாமலிங்கா₃நுஶாஸநம் 3] என்று அமரகோஶம் ஸத்வஶப்₃த₃த்தை ஜந்துவாசகமாகப்படித்திருப்பதைக் காணலாம், ஸ்த₂ாவரத்தையும் ஜந்துவாகக் குறித்திருப்பதால் மரம் செடி கொடிகள் அறிவை வெளிப்படுத்தாமையால் அசேதனப் பொருள்களே என்னும் ஜைநபக்ஷம் தள்ளப்படுகிறது. (தத்) அவ்வளவு ஜந்துவின் அப்பிறப்பு அனைத்தும்.

समं सर्वेषु भूतेषु तिष्ठन्तं परमेश्वरम् ।
विनश्यत्स्वविनश्यन्तं यः पश्यति स पश्यति ॥ २७

**27. ஸமம் ஸர்வேஷு பூ,தேஷு திஷ்ட,ந்தம் பரமேஶ்வரம் |
விநஶ்யத்ஸ்வவிநஶ்யந்தம் ய: பஶ்யதி ஸ பஶ்யதி ||**

**ஸர்வேஷு பூ,தேஷு**—(தே,வர் முதலான) எல்லா ஜீவ ராசியிலும், **ஸமம்**—ஒருப்படிப்பட்டவனும், **பரமேஶ்வரம் திஷ்ட,ந்தம்** — (அநதந்த தே,ஹம, இந்த்,ரியங்கள், மனம் முதலானவற்றைக் குறித்து) மேலான ஈஶ்வரனாய் நிற்பவனும, **விநஶ்யத்ஸு**—அந்த தே,ஹம முதலானவை அழியும் போதும், **அவிநஶ்யந்தம்**— தான் அழியாமலிருப்பவனுமான ஆத்மாவை, **ய: பஶ்யதி**—எவன் காண்கிருனே, **ஸ: பஶ்யதி**- அவனே ஆத்மாவை உள்ளபடி அறிகிருன்.

**27. ஒத்துப் பொருளனைத்தி லுள்ளே யமரவிருந்
தத்துப் பரமேச ணுகியே—தத்துவங்கள்
மாயு மளவதிலு மாயா தவனைக்கண்
டாயுமவன் கண்டா னமைந்து. 27**

---

(க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ ஸம்யோகா,த் [இதி] வித்₃தி₄) க்ஷேத்ர மாகிற ஶரீரமும் க்ஷேத்ரஜ்ஞனுகிற ஜீவனும் ஒன்ருேடொன்று சேர்ந்ததிறுலேயே உண்டாகிறது என்று அறிவாயாக. இவ்விரண் டோடு மூன்ருவதொன்றும் சேர்ந்து உண்டாவதில்லை என்றும், மாதாபிதாக்களின் சேர்த்தியாலே பிள்ளை உண்டாவதுபோலே, இவ்விரண்டின் சேர்த்தியால் மூன்ருவதான ஒரு தத்துவம் உண்டாவதில்லை என்றும், தனித்தனியேயிருக்கும் இவ்விரண்டின் ஸம்யோக₃மாத்ரத்தாலல்லாமல்,கர்மமாகிற வலிய கயிற்ருல் எளி தில் பிரித்தறிய முடியாதபடி அழுந்தக்கட்டப்பட்டிருக்கும் சேர்த் தியாலே உண்டாகிறது என்றும் தாத்பர்யஸித்₃த₄மாகக் கிடைக் கிறது. (ப₄ரதர்ஷப₄) புல்லறிவாளர்களுக்கு இவற்றைப் பிரித்தறி வது அரிதாயினும், ப₄ரதகுலத்துதித்த பேரறிவாளனுன உனக்கு இவற்றைப் பிரித்து அறிவது எளிதல்லவோ என்று கருத்து. 26.

பொருள் **அனைத்தில்** — (தே₃வர் முதலான) எல்லா ஜீவராசியிலும், **ஒத்து** — ஒருபடிப்பட்டவனும், **உள்ளே அமர இருந்து**-(அந்த சரீரங்களின்) உள்ளே (அவற்றிலும்) வேருக இருப்பவனும், **அத்து பரமேசன் ஆகியே**— அந்தந்த தே₃ஹம் இந்த்ரியங்கள் மனம் முதலானவற்றைக் குறித்து மேலான ஈஶ்வரனுயிருப்பவனும், **தத்துவங்கள் மாயும் அளவதிலும்** — அந்த தே₃ஹம் முதலானவை அழியும்போதும், **மாயாதவனே** — தான் அழியாமலிருப்பவனுமான ஆத்மாவை, **கண்டு**-கண்டு, **ஆயுமவன்**—(தே₃ஹத்தையும் ஆத்மாவையும்) பிரித்து அறிபவனே, **அமைந்து கண்டான்**— உள்ளபடி ஆத்மாவைக் கண்டவனுவான்.

---

27. இந்த ஶ்லோகம் முதலாக அத்₄யாயத்தின் இறுதி வரையில் ஆத்மாவையும் அசித்தையும் பிரித்தறியும் முறையாகிற விவேகம் விளக்கப்படுகிறது. அதில் இந்த ஶ்லோகத்தில் ஆத்மாவும் அசித்தும் முறையே ஸமமாகவும் விஷமமாகவும், நியமிப்பதாகவும் நியமிக்கப்படுவதாகவும், நித்யமாகவும் அநித்யமாகவும் இருப்பவை என்று உணர்த்தி, இவ்விஷயத்தை உறுதியாக அறிபவனுக்கு மோக்ஷமாகிற ப₂லத்தையும் கூறுகிருன். "க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞஸம்யோக₃ாத்" என்று சென்ற ஶ்லோகத்தில் உள்ளதையும் இந்த ஶ்லோகத்தையும் விவரிக்கும்போது, "க்ஷேத்ரஜ்ஞனுகிற ஆத்மாவானது அவயவமற்றதாகையாலே அவயவமுடைய க்ஷேத்ரத்தோடு அதற்கு ஸம்யோக₃ம் பொருந்தாது; க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்கள் முறையே கார்யமாகவும் காரணமாகவும் இல்லாமையாலே, ஸமவாயரூபமான ஸம்ப₃ந்த₄மும் பொருந்தாது, ஆகையால் ஜ்ஞாணமாத்திரமான ஆத்மாவுக்கும் அந்த ஜ்ஞானத்தில் தோன்றும் க்ஷேத்ரத்துக்கும் ஒன்றினுடைய தன்மை மற்ருென்றில் ஏறிடப்படுகையாகிற அத்₄யாஸமே ஸம்யோக₃ம் எனப்படுகிறது என்று கொள்ளவேண்டும். அந்த அத்₄யாஸத்தைப் போக்கடிக்கும் ஸம்யக்₃த₃ர்ஶநம் (நல்லகாட்சி) 'ஸமம் ஸர்வேஷு' என்று தொடங்கும் ஶ்லோகத்தில் விளக்கப்படுகிறது" என்று ஶங்கரர் ப₄ாஷ்யமிட்டது சிறுபிள்ளைப் பேச்சைப் போன்றது. அவயவமற்ற ஆகாஶம் முதலானவற்றுக்கும் அவயவம் உள்ள அல்லது அவயவமில்லாத மற்ற பொருள்க

भा ॥ एवमितरेतरयुक्तेषु सर्वेषु भूतेषु देवादिविषमाकारात् विविक्तं तत्रतत्र तत्तद्देहेन्द्रियमनांसि प्रति परमेश्वरत्वेन स्थितमात्मानं

---

ளோடு ஸம்யோக₃ம் ஏற்படுவது பொருத்தமேயாகும். "தனித்திருக்கும் இரண்டு பொருள்கள் ஒன்றோடொன்று தொடர்பு கொள்வது ஸம்யோக₃ம்" என்றல்லவோ ஸம்யோக₃லக்ஷணம் சொல்லப்படுகிறது. அந்த ஸம்யோக₃ம் அவயவமற்ற பொருள்கள் அவயவமுள்ள பொருள்கள் என்ற வாசியில்லாமல் எந்த இரண்டு பொருள்களிடையேயும் ஏற்படலாமல்லவோ. மேலும் சித₃சித்துக்களில் ஒன்றின் தன்மை மற்றொன்றில் ஏறிடப்படுகையாகிற அத்₄யாஸம் அடியோடு பொருந்தாது என்பது முன்னமே விளக்கப்பட்டது. ஸ்ரீ ப₄ாஷ்யத்திலும் நிலைநாட்டப்பட்டது. ஆகையால் இங்கு ப₄ாஷ்யத்தில் காட்டப்பட்டதே பொருந்திய பொருளாகும். (ஸமம் ஸர்வேஷு பூ₄தேஷு) க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களின் ஸம்யோக₃த்தாலுண்டான தே₃வர், மனிதர் முதலான எல்லா ஜீவ ராசிகளிலும், அந்த ஶரீரங்களிலுள்ள வைஷம்யங்கள் (வேறுபாடுகள்) அற்றவனாய் ஒருபடிப்பட்டவனாயிருக்கும் ஆத்மாவை என்று கருத்து. மண் பாத்திரத்திலோ அல்லது பொன் பாத்திரத்திலோ எடுக்கப்பட்ட கங்காஜலம் அவ்வப்பாத்திரங்களில் இருந்தபோதிலும் மண்ணாகவோ பொன்னாகவோ ஆகாததுபோல், ஆத்மாவும் தே₃வர், மனிதர் முதலான ஶரீரங்களில் இருந்த போதிலும், அவற்றின் வேறுபாடுகளை அடைவதில்லை; உப்புச் சுரங்கத்தில் இடப்பட்ட கட்டை சிறிது காலத்தில் உப்புக் கட்டியாவதுபோல் ஆத்மா தே₃வர் முதலான ஶரீரங்களிலிருக்கும் போதும் அவற்றின் வேறுபாடுகளை அடைவதில்லை என்றபடி. "திஷ்ட₂ந்தம்" என்னும் பத₃த்தை "ஸர்வேஷு பூ₄தேஷு ஸமம் திஷ்ட₂ந்தம்" என்று முன்பதங்களோடு கூட்டி "எல்லா ஜீவராசிகளிலும் அவற்றின் வேறுபாடுகளற்று ஒருபடிப்பட்டவனாய் நிற்பவனை" என்றும் பொருள் சொல்லலாம். "பரமேஶ்வரம் திஷ்ட₂ந்தம்" என்று பின்பதத்தோடு கூட்டியும் பொருள்கொள்ளலாம். (பரமேஶ்வரம் திஷ்ட₂ந்தம்) அந்தந்த தே₃ஹங்களில் அந்தந்த தே₃ஹம், இந்த்₃ரியங்கள், மனம் ஆகியவற்றைக் குறித்து மேலான ஈஶ்வரனாய் நிற்கும் ஆத்மாவை. ஈஶ்வரனல்லாதவனாய் அல்ப ஶக்தியுடையவனான ஜீவனைப் பரமேஶ்வரன் என்பது 22வது

ज्ञातृत्वेन समानाकारं तेषु देहादिषु विनश्यत्सु विनाशानर्ह-स्वभावेनाविनश्यन्तं यः पश्यति, स पश்யति — स आत्मानं यथा-

---

ஶலோகத்தில் "மஹேஶ்வரன்" என்றவிடத்திற்போலே, தன் தே₃ஹேந்த்₃ரிய மனங்களை நியமிப்பவனுயிருப்பதையிட்டே என்று கொள்ளவேண்டும். "22வது ஶ்லோகத்தில் ஜீவனைச் சொன்ன போதிலும், இங்கு 'பரமேஶ்வரன்' என்று பரமாத்வையே சொல்லு வதாகக் கொள்ளலாகாதோ?" எனில்: மேலே "அழியும் தே₃ஹங் களில் அழியாமலிருப்பவன்" என்று சொல்லியிருப்பதனுல் இங்கும் ஜீவனைச் சொல்லுவதாகக்கொள்வதே பொருந்தும். தே₃ஹாத்மாபி₄ மானிகள் தே₃ஹமழிவதால் ஆத்மா அழிவதாக நினைக்கிருர்களே யொழிய, தம்மால் அறியப்படாத பரமாத்மா அழிவதாக நினைப் பதில்லையே. ஆகையால் 'தே₃ஹம் அழியும்போது அழியாதவன்' என்று அடுத்தபடி சொல்லுவது ஜீவாத்மாவேயாகமுடியுமாகை யால் அவனேடு ஒரே வேற்றுமையில் படிக்கப்படும் பரமேஶ் வரனும் 22-வது ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட ஜீவனேயாக வேண்டும். (ஸமம் யः பஶ்யதி) "தே₃ஹங்களிலுள்ள வேறுபாடு களில்லாதவனுயிருப்பதோடன்றியில் ஜ்ஞாத்ருத்வம் [அறிபவனு யிருக்கை] ஜ்ஞான ஸ்வரூபத்வம் [அறிவையே ஸ்வரூபமாக உடையவனுயிருக்கை] முதலான தன்மைகளால் ஒருபடிப்பட்டவ னுகவும் இருப்பவனுக எவன் அறிகிருனே என்று கருத்து. 'ஏதத்₃யோ வேத்தி' [13-1] 'ஜ்ஞாநம் ஜ்ஞேயம்' [13-17] முதலான இடங்களில் ஆத்மாக்களனைவரும் ஜ்ஞாத்ருத்வம் ஜ்ஞானத்வம் முதலான கு₃ணங்களையுடையவராயிருப்பர் என்று சொல்லப்பட்டதன்ருே. இவ்விடத்தில், "க₃வாமநேகவர்ணாநாம் க்ஷீரஸ்ய த்வேகவர்ணதா। க்ஷீரவத் பஶ்யதே ஜ்ஞாநம் லிங்கி₃-நஸ் து க₃வாம் யதா₂ ॥" [அம்ருதபி₃ந்தூ₃பநிஷத்] [பல நிறங்க ளுடைய பசுக்களின் பால் ஒரே நிறமுடையதாயிருக்கிறது; அது போல் பலவகைப்பட்ட ஶரீரங்களிலுள்ள ஜ்ஞானமயமான ஆத்மாவை ஜ்ஞானி ஒருபடிப்பட்டதாகக் காண்கிருன்] என்ற வேத₃வாக்யம் அனுஸந்தி₄க்கத்தக்கது. (விநஶ்யத்ஸு அவிநஶ்யந்தம் யः பஶ்யதி) அழியும் ஶரீரங்களில், அழிவுக்குத் தகுதியில்லாத தன்மைகளையுடையவனுகையாலே அழியாதவனுக எவன் காண்கிருனே. "யேந ஸர்வமிதம் ததம்" [கீ₃தை 2-17] முதலானவிடங்களில் விளக்கப்பட்டபடி அழிவுக்கு இடமேயில்

वद्वस्थितं पश्यति ; यस्तु देवादिविषमाकारेणात्मानमपि विषमाकारं जन्मविनाशादियुक्तं च पश्यति, स नित्यमेव संसरतीत्यभिप्रायः ॥ २७ ॥

---

லாத ஜீவாத்மாவை எவன் காண்கிருனே என்று கருத்து. "ஸமம் ய; பஶ்யதி" என்றதால் க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ தத்துவங்களை முறையே வேறுபாடுள்ளதாகவும் ஒருபடிப்பட்டதாகவும், "பரமேஶ்வரம் ய: பஶ்யதி" என்றதால் முறையே நியமிக்கப்படுவதாகவும் நியமிப்பதாகவும், "அவிநஶ்யந்தம் ய: பஶ்யதி" என்றதால் முறையே அழிவதாகவும் அழிவற்றதாகவும் பகுத்தறியவேண்டும் என்றுவிவேகப்ரகாரம் சொல்லப்பட்டதாயிற்று. (ய: பஶ்யதி ஸ பஶ்யதி)'எவன் காண்கிருனே அவனே காண்கிருன்' என்று பொருள் படுகிறது. "இதில் முற்பகுதிக்கும் பிற்பகுதிக்கும் பொருள் வேற்றுமையில்லாமையாலே பொருளற்ற வாக்யம்போல் தோன்றுகிறது. 'எவன் காண்கிருனே' என்று ஒன்றையெடுத்து அதைக்குறித்து வேருென்றை விதி$_4$க்க வேண்டியவிடத்தில் 'அவன் காண்கிருன்' என்று எடுத்ததையே விதி$_4$த்திருப்பதும் பொருந்தவில்லை" என்னும் ஐயங்கள் இங்கு ஏற்படுகின்றன. இவற்றைத் தவிர்ப்பதற்காகவே ப்ரகரணத்தையொட்டி "எவன் இவ்வண்ணம் ஆத்மாவை ப்ரக்ருதியிலிருந்து விவேகித்தறிகிருனே அவனே ஆத்மாவை உள்ளபடி அறிகிருன்" என்றே பொருள் கொள்ளவேண்டும். இப்படி உள்ளபடி அறியாமல், கண்ணில் காமாலை நோயாலே சங்கை மஞ்சள் நிறமுடையதாக அறிபவர்களைப்போலே, ஆத்மாவை அசித்தாகவே அறிபவர்கள் கண்டபோதிலும் காணுதவர்களே என்று கருத்து. "எல்லா வாக்யங்களும் ஏகாரத்தை உள்ளடக்கியவை" என்னும் நியாயத்தாலே "ஸ பஶ்யதி" என்பதற்கு 'அவனே காண்கிருன்' என்று பொருள் கொள்ளவேண்டும். இப்படி இவ்வதி$_4$காரியைப் புகழ்கையாலே "ஆத்மாவை அசித்தைப்போலே வேறுபாடுள்ளதாகவும் தோன்றி அழிவடைவதாகவும் எவன் காண்கிருனே அவன் எப்போதுமே ஸம்ஸாரச் சுழலில் அகப்பட்டு உழல்கின்ருன்" என்று விபரீதமான அதி$_4$காரியைப்பற்றிய இகழ்வும் தாத்பர்யார்த்த$_2$மாகத் தேறுகிறது. 27.

समं पश्यन् हि सर्वत्र समवस्थितमीश्वरम् ।
न हिनस्त्यात्मनाऽऽत्मानं ततो याति परां गतिम् ॥ २८

28 ஸமம் பஶ்யந் ஹி ஸர்வத்ர ஸமவஸ்தி₂தமீஶ்வரம் |
ந ஹிநஸ்த்யாத்மநாத்மாநம் ததோ யாதி பராம்
க₃திம் ||

**ஸர்வத்ர** — (தே₃வர் முதலான) எல்லா ஶரீரங்களிலும, **ஸமவஸ்தி₂தம் ஈஶ்வரம்**—(அந்தந்த தே₃ஹங்களுக்கு) ஸ்வாமியாகவும, ஆதா₄ரமாகவும, நியமிப்பவனுகவும் இருக்கும் ஆத்மாவை. **ஸமம் பஶ்யந்** — (முற்கூறியபடி) ஒருபடிப்பட்டவனுகக் காண்பவன். **ஆத்மநா** — தன் நெஞ்சால், **ஆத்மாநம்** — தனனே, **ந ஹிநஸ்தி ஹி** — அழிக்காமல் ரக்ஷிக்கிருனன்ருே, **தத:** — இந்த ஸமத₃ர்ஶநத்தால், **பராம் க₃திம** — மேலான ப்ராப்யமான தன ஆத்மாவை, **யாதி ஹி** — அடைகிருனன்ருே.

---

**28. எவ்விடத்துந் தானிறையா யேய்ந்திருக்கு மிவ்வுயிர்தா**
**னவ்விடததி லொததியல்வ தாவறிவா– னிவ்விடத்திற்**
**றன்னைத்தன் னெஞ்சதனுற் ருனலியான் ருனடையும்**
**பின்னைப் பரகதியாம் பேறு.**

**எவ்விடத்தும்** — (தே₃வர் முதலான) எல்லா ஶரீரங்களிலும், **தான் இறையாய் ஏய்ந்திருக்கும் இவ்வுயிர்தான்** — (அந்தந்த தே₃ஹங்களுக்கு) ஸ்வாமியாகவும், ஆதாரமாகவும், நியமிப்பவனுகவும பொருந்தியிருக்கும இந்த ஆத்மா, **அவ்விடத்தில் ஒத்து இயல்வதா அறிவான்** — (முற்கூறியபடி எல்லா ஶரீரங்களிலும் ஒருபடிப்பட்டதாயுள்ளதாக அறிபவன், **இவ்விடத்தில்** — இவ்வுலகில், **தன்னை** — தன் ஆத்மாவை, **தன் நெஞ்சதனுல்**—தன்னுடைய நெஞ்சாலே, **தான் நலியான்** — அழிக்காமல் ரக்ஷிக்கிருனன்ருே, **பின்னை** — அப்படி ஒருபடிப்பட்டவனுகக் கண்டபின்பு, **பரகதியாம் பேறு**— மேலான ப்ராப்யமான தன் ஆத்மாவை அடைவதாகிறபயனே, **தான் அடையும்** — தானே அடைகிருனன்ருே.

भा ॥ सर्वत्र—देवादिशरीरेषु तत्तच्छेषित्वेनाधारतया नियन्तृतया च स्थितमीश्वरम् — आत्मानं देवादिविषमाकारवियुक्तज्ञानैकाकारतया समं पश्यन् आत्मना - मनसा, स्वम् आत्मानं,

---

28. முன் ஶ்லோகத்தில் சொன்ன ஸமத₃ர்ஶனத்துக்கு ஆத்ம ப்ராப்தியே பயனாகக்கிடைக்கிறது என்று புகழ்வதன் மூலம் முன் ஶ்லோகத்தை விளக்குகிறான், "ஹி" என்னும் பத₃ம முன் ஶ்லோகத்தில் சொன்ன அர்த்த₂த்துக்கு ஹேதுவைக் காட்டுகிறது இந்த ஶ்லோகம் என்று உணர்த்துகிறது, (ஸர்வத்ர) "ஸர்வத்ராவஸ்தி₂தோ தே₃ஹே தத₂ாத்மா" என்று 32 வது ஶ்லோகத்தில் சொல்லப்போகிறதாகையால், "தே₃வர், மனிதர் முதலான எல்லா ஶரீரங்களிலும்" என்று இங்கு இப்பத₃த்திற்குப் பொருள்கொள்வதே பொருத்தம். (ஸமவஸ்தி₂தம்) "ப₄ர்த்தா போ₄க்தா மஹேஶ்வர:" என்று முன் சொன்னரீதியில் அந்தந்த தே₃ஹங்களுக்கு ஸ்வாமியாகவும், ஆத₄ாரமாகவும், நியமிப்பவனாகவும் இருப்பவன் என்பது 'ஸம்' என்னும் உபஸர்க்க₃த்திலிருந்து தேறுகிறது. (ஈஶ்வரம்) இந்த ஶப்₃த₃த்தாலும் தே₃ஹத்துக்கு ஸ்வாமியாகவும் நியமிப்பவனாகவும் இருப்பவன் என்று தேறுகிறது, முன் ஶ்லோகங்களிலுள்ள மஹேஶ்வர பரமேஶ்வர ஶப்₃த₃ங்களைப்போலே இந்த ஈஶ்வர ஶப்₃த₃மும் தனது தே₃ஹம் முதலானவற்றை நியமிக்கும் ஜீவன் என்றே பொருள்படுகிறது. (ஸமம் பஶ்யந்) தே₃ஹாத்மாபி₄மானத்தினால் ஆத்மாவுக்குத் தோன்றும் தே₃வர், மனிதர் முதலான வேறுபாடுகள் இல்லாதவனாய், ஜ்ஞானத்தையே இயல்வாகக் கொண்டவனாயிருக்கையாலே எல்லா தே₃ஹங்களிலும் ஒருபடிப் பட்டவனாகக் காண்பவன். "க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞஸம்யோக₃ாத்" [26] "யத₃ா பூ₄தப்ருத₂க்₃ப₄ாவம் [30] என்று இப்பிரகரணத்தில் முன்னும் பின்னும் தே₃ஹ ஸம்ப₃ந்த₄த்தினால் ஸித்₃தி₄ப்பதாகச் சொல்லப்பட்ட வேறுபாடுகளற்றவனாய், ஸ்வரூபத்தில் ஜ்ஞானத்தையே வடிவாகக்கொண்டவனாகத் தன் ஆத்மாவைக் காண்பவன் என்று கருத்து. இவனுக்கு உண்டாகும் ப₂லனைப் பிற்பாதியிலே கூறுகிறான் — (ஆத்மநா ஆத்மாநம் ந ஹிநஸ்தி) மனத்தாலே தன் ஆத்மாவை

न हिनस्ति —रक्षति, संसारान्मोचयति; ततः-तस्मात् ज्ञातृतया सर्वत्र समानाकारदर्शनात्, परां गतिं याति ; गम्यत इति गतिः; परं

---

ஹிம்ஸிக்காதவனுகிருன்; அதாவது — ஆத்மாவை ஸம்ஸாரத்தி லிருந்து விடுவித்து ரக்ஷிக்கிருன் என்று கருத்து. 'ஆத்மநா' என்று மூன்ருவது வேற்றுமையில் படிக்கப்படுகையாலே இது கரணமான மனத்தைக் குறிப்பது உசிதம், 'ஆத்மாநம்' என்று இரண்டாவது வேற்றுமையில் படிக்கப்பட்ட ஆத்மாவை ஹிம் ஸிக்காதவனுகிருன் என்கையாலே இது ஸம்ஸாரியான தன் ஆத்மாவைக் குறிப்பது உசிதம். உலகில் ஶாஸ்த்ரத்தால் விதிக் கப்படாமலும் நிஷேதிக்கப்படாமலும் இருக்கும் கார்யங்களைச்செய் பவனும் ஆத்மாவுக்கு ஹிம்ஸையைச் செய்வதில்லை. அதாவது—தீங்கு செய்வதில்லை. இங்கு இத்தகையவனைக் காட்டிலும் சிறந்த ஸமதர்ஶ கனுக்குப் பலமாகக் கூறுகையாலே "ந ஹிநஸ்தி" என்பது தீங்கு செய்யாமைக்கு மேற்பட்டதொருபொருளைக் கூறவேண்டும், ஆத்மா நித்யமாகையாலே விஷமதர்ஶியும் அதற்கு நேரே ஹிம்ஸையைச் செய்யமுடியாது. ஆகையால் இங்கு ஸமதர்ஶி அந்த ஸமதர்ஶ நத்தாலே தான் விரும்பும் ஆத்ம ரக்ஷணத்தைச் செய்கிருன் என்றே பொருள்கொள்ள வேண்டும். ப்ரகரணத்தைக்கொண்டும் நாலா வதுபாதத்தை ஒட்டியும் பார்க்கும்போது இங்கு சொல்லப்படும் ரக்ஷணம் ஸம்ஸாரத்திலிருந்து விடுதலைபெறுவதேயாகும் என்று விளங்குகிறது. (ததோ யாதி பராம் கதிம்) "ஸமம் பஶ்யந்" என்று சொல்லப்பட்ட ஸமதர்ஶனத்தாலேயே பரமப்ராப்யமான ஶுத்த த்மஸ்வரூபத்தையடைகிருன். முன்பாதத்தில் சொன்னபடி அநிஷ்டமான ஸம்ஸாரத்திலிருந்து விடுதலைபெறுவதோடல்லாமல் இஷ்டமான ஆத்மாவையும் அடைகிருன் என்று கருத்து, 'ததः' என்னும் பதம் முன்சொன்னதைக் காரணமாகக் காட்டுகிறது; முன்பாதத்தில் சொன்ன அநிஷ்ட நிவ்ருத்தியும் தானே பலமா யிருக்கையாலே அதை இஷ்ட ப்ராப்திக்குக் காரணமாகக் காட்டு வது உசிதமன்று. ஆகையால், அநிஷ்ட நிவ்ருத்திக்குக் காரண மாகச் சொல்லப்பட்ட ஸமதர்ஶனமே இப்பதத்தால் இஷ்ட ப்ராப்திக்கும் காரணமாகக் காட்டப்படுகிறது என்று கொள்ள வேண்டும். 'பராம் கதிம்' என்று இவனுக்கு மேலான ப்ராப்ய

गन्तव्यं यथावदवस्थितमात्मानं प्राप्नोति; देवाद्याकारयुक्ततया सर्वत्र विषम[ाकार]मात्मानं पश्यन् आत्मानं हिनस्ति — भवजलधि मध्ये प्रक्षिपति ॥ २८॥

---

மான இஷ்ட ப்ராப்தியைச் சொல்லவேண்டிய ப்ரகரணமாகை யாலே மேலான க₃மனத்தையடைகிறான் என்று பொருள்கொள் வது சுவையுடையதன்று. ஆகையால் "க₃ம்யதே இதிக₃தி:" என் னும் வ்யுத்பத்தியாலே மேலான ப்ராப்யமான தனது ஶுத்₃த₄ாத் மாவையடைகிறான் என்றே பொருள்கொள்ளவேண்டும். ஆகவே ஶ்லோகத்தின் பிற்பாதியால், ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄ம் நீங்கி, அதாவது ஸூக்ஷ்ம ஶரீரமும் கழியப்பெற்று, தனது ஶுத்₃த₄ாத்ம ஸ்வரூ பத்தை அனுப₄விக்கையாகிற கைவல்ய மோக்ஷத்தையடைகிறான் என்றபடி: இந்த ப்ரகரணம் ஜீவவிஷயமாகையாலும் "அவ் யக்தோऽக்ஷர இத்யுக்தஸ் தமாஹு: பரமாம் க₃திம்" [கீ₃தை 8-21] என்று ஜீவனைப் பரமப்ராப்யமென்று முன்னமே சொல்லி யிருக்கையாலும், இங்கு பரக₃தி ஶப்₃த₃த்தாலே தன்னைச் சொல்லு வதாகக் கொள்வதே உசிதம். 'நஹிநஸ்தி' என்று இங்கு ஸமத₃ர்ஶிக்குப் ப₂லனைச் சொன்னது — "விஶேஷநிஷேத₄: ஶேஷாப்₄யநுஜ்ஞார்த்த₂:" [ஒன்றை நிஷேதி₄ப்பது மற் றொன்றின் அனுமதியை உணர்த்தும்] என்னும் நியாயத்தாலே "ஆத்மாவை தே₃வர் முதலான வேறுபாடுகளையுடையதாக எல்லாவிடத்திலும் காண்பவன் ஆத்மாவை அழியச் செய்கிறான், அதாவது ஸம்ஸாரக் கடலில் ஆழ்த்துவதன் மூலம் ஆத்மஸ்வருபநாஶத்தை விளைக்கிறான்" என்பதையும் உணர்த்து கிறது. "கம் கா₄தயதி ஹந்தி கம்" [கீ₃தை 2-21] என்று முன் சொன்ன ரீதியில் நித்யமான ஆத்மஸ்வருபத்துக்கு அழிவில்லா மையாலே ஸம்ஸாரத்தில் ஆழ்த்துவதையே இங்கு நாஶமாகச் சொல்லுவதாகக் கொள்ளவேண்டும். இந்த ஶ்லோகத்திலும் 'ப்ர க்ருதியை அறிவது ஸம்ஸாரஹேதுவாகிறது' என்றும், 'ஆத்மாவை அறிவது மோக்ஷஹேதுவாகிறது' என்றும் ப்ரக்ருதி புருஷ விவே கம் உணர்த்தப்பட்டிருப்பது காணத்தக்கது. 28.

प्रकृत्यैव च कर्माणि क्रियमाणानि सर्वशः ।
यः पश्यति तथाऽऽत्मानमकर्तारं स पश्यति ॥ २९

29. ப்ரக்ருத்யைவ ச கர்மாணி க்ரியமாணுநி ஸர்வஶ: |
ய: பஶ்யதி தத,ாத்மாநம் அகர்த்தாரம் ஸ பஶ்யதி ||

**ஸர்வஶ: கர்மாணி** — எல்லாக் கர்மங்களேயும், **ப்ரக்ருத்யா ஏவ க்ரியமாணுநி**-ப்ரக்ருதி கார்யமான ஶரீரத்தாலேயே செய்யப்படுபவை என்றும், **தத,ா** — அவ்வண்ணமே, **ஆத்மாநம்** — ஆத்மாவை. **அகர்த்தாரம் ச** — அச்செயல்களேச் செய்யாதவன் என்றும், **ய: பஶ்யதி** — எவன் காண்கிருனே, **ஸ: பஶ்யதி** — அவனே (ஆத்மாவை உள்ளபடி) காண்கிருன்.

29. ஏய்ந்த பிரகிருதி யித்தாற் கருமமெல்லாம்

பதின்மூன்ருமத்தியாயம் 169

प्रकृत्यैव च कर्माणि क्रियमाणानि सर्वशः ।
यः पश्यति तथाऽऽत्मानमकर्तारं स पश्यति ॥ २९

29. ப்ரக்ருத்யைவ ச கர்மாணி க்ரியமாணுநி ஸர்வஶ: |
ய: பஶ்யதி தத,ாத்மாநம் அகர்த்தாரம் ஸ பஶ்யதி ||

ஸர்வஶ: கர்மாணி — எல்லாக் கர்மங்களேயும், ப்ரக்ருத்யா ஏவ க்ரியமாணுநி-ப்ரக்ருதி கார்யமான ஶரீரத்தாலேயே செய்யப்படுபவை என்றும், தத,ா — அவ்வண்ணமே, ஆத்மாநம் — ஆத்மாவை. அகர்த்தாரம் ச — அச்செயல்களேச் செய்யாதவன் என்றும், ய: பஶ்யதி — எவன் காண்கிருனே, ஸ: பஶ்யதி — அவனே (ஆத்மாவை உள்ளபடி) காண்கிருன்.

भा ॥ सर्वाणि कर्माणि * कार्यकारणकर्तृत्वे हेतुः प्रकृतिरुच्यते (२०) इति पूर्वोक्तरीत्या प्रकृत्या क्रियमाणानीति यः पश्यति, तथा आत्मानं ज्ञानाकारमकर्तारं च यः पश्यति, तस्य प्रकृतिसंयोगस्तदधिष्ठानं तज्जन्यसुखदुःखानुभवश्च कर्मरूपाज्ञानकृतानीति च यः पश्यति, स आत्मानं यथावदवस्थितं पश्यति ॥ २९ ॥

---

பற்றிய விவேகம் விவரிக்கப்படுகிறது. (ஸர்வஶ: கர்மாணி) கால், கை முதலானவற்றை நீட்டுவது முடக்குவது முதலான எல்லாச் செயல்களும். (ப்ரக்ருத்யைவ க்ரியமாணாநி ய: பஶ்யதி) "கார்யகாரணகர்த்ருத்வே ஹேது: ப்ரக்ருதிருச்யதே" என்று இருபதாவது ஶ்லோகத்தில் சொன்னபடியே ப்ரக்ருதியின் கார்யப் பொருளான ஶரீரத்தால் செய்யப்படுபவை என்று எவன் காண்கிறானே. ஸம்ஸாரிகள், ஜ்ஞானிகளாகிற இருவருமே ஶரீரம் இச் செயல்களைச் செய்வதாயிருப்பதைக் காண்கிறார்கள். ஜ்ஞானியோவெனில் ஶரீரமே இச்செயல்களுக்கு இருப்பிடமாயிருக்கிறதேயொழிய ஆத்மாவல்ல என்றும் உணர்கிறான் என்று கண்டுகொள்வது. இதை மேலே விவரிக்கிறான்-(ததா₂ ஆத்மாநம் அகர்த்தாரம் ச ய: பஶ்யதி) அவ்வண்ணமே ஜ்ஞானமே வடிவான ஆத்மா இச்செயல்களுக்கு இருப்பிடமாயிருப்பதல்ல என்று எவன் காண்கிறானே. "ஜ்ஞாநாகாரம்" என்று பா₄ஷ்யத்தில் விவரித்திருப்பது 'ஶுத்₃த₄ாத்ம ஸ்வரூபத்துக்கே அகர்த்ருத்வமாகிற இப்பெருமை' என்று காட்டுகிறது. 'ஜ்ஞாதாகாரம்' என்றும் பாடம் இருப்பதாகத் தாத்பர்ய சந்த்ரிகை. அப்பாடத்தில் ஏற்கனவே அறிவே வடிவாகவும் அறிபவனாகவும் அறியப்பட்ட ஆத்மஸ்வரூபத்துக்கே இப்பெருமை என்றதாகிறது. இப்படி ஆத்மா அகர்த்தாவாயிருந்தால் மனிதன் ஶாஸ்த்ரவிதி₄ நிஷேத₄ங்களுக்கு வஶப்பட்டு நடப்பதும், அப்படி நடப்பதாலும் நடக்காமலிருப்பதாலும் இன்பதுன்பங்களை அனுபவிப்பதும் எப்படிப் பொருந்தும்? எனில்: ஆத்மாவுக்கு ஶரீரத்தோடு சேர்த்தியும், அதைத் தாங்கி நிற்பதும், அதனால் ஏற்படும் இன்பதுன்பங்களின் அனுபவமும் கர்மம் காரணமாக உண்டாகையாலே பொருந்தும் என்று கண்டுகொள்வது. "அவித்₃யா

यदा भूतपृथग्भावमेकस्थमनुपश्यति।
तत एव च विस्तारं ब्रह्म संपद्यते तदा ॥ ३०

30. யத₃ா பூ₄தப்ருத₂க்₃பா₄வம் ஏகஸ்த₂மநுபஶ்யதி ।
தத ஏவ ச விஸ்தாரம் ப்₃ரஹ்ம ஸம்பத்₃யதே தத₃ா ॥

**பூ₄தப்ருத₂க்₃பா₄வம்** — ப்ரக்ருதி புருஷர்கள் ஒன்ருடொன்று சேர்ந்திருக்கும் தே₃வர் முதலான ஜீவர்களில் (தே₃வத்தன்மை மநுஷ்யத் தன்மை, குட்டையாயிருக்கை நெட்டையாயிருக்கை முதலான) வேறுபாடுகளை, **ஏகஸ்த₂ம்**-(ப்ரக்ருதியாகிற) ஒரே தத்துவத்தில் இருப்பதாக, **யத₃ா அநுபஶ்யதி** — எப்போது காண்கிருனே, **தத: ஏவ** — அந்த ப்ரக்ருதியிலிருந்தே, **விஸ்தாரம் ச** —(பிள்ளை பேரன் முதலான வேறுபாடுகளின்) விரிவையும் (எப்போது காண்கிருனே). **தத₃ா** — அப்பொழுது, **ப்₃ரஹ்ம** — இயல்வான ஸ்வரூபத்தையுடைய தன் ஆத்மாவை. **ஸம்பத்₃யதே** — அடைகிருன்.

---

கர்மஸம்ஜ்ஞாந்யா த்ருதீயா ஶக்திரிஷ்யதே। யயா க்ஷேத்ரஜ்ஞ ஶக்திஸ்ஸா வேஷ்டிதா ந்ருப! ஸர்வக₃ா" [வி.பு. 6-7-61] [வித்₃யை எனப்படும் ஜ்ஞானத்தைக் காட்டிலும் வேறுபட்ட (யாக₃ாதி₃) கர்மமானது (ஈச ஜீவர்களாகிற இரண்டு ஶக்திகளுக்கு மேலே) மூன்ருவது ஶக்தியாகக் கொள்ளப்படுகிறது. அந்தக்கர்மத்தால் ஜீவனுகிற ஶக்தி சூழப்பட்டிருக்கிறது] என்று ஸ்ரீ பராஶரமஹர்ஷி கூறியது இங்கு அனுஸந்தி₄க்கத் தக்கது. (ஸ பஶ்யதி) இப்படி ஶரீரமே கிரியைகளுக்கு இருப்பிடம் என்றும், ஆத்மா அப்படியல்லாதது என்றும், ஶரீராத்மச்சேர்த்தி ஶரீரத்தை ஆத்மா தாங்கி நிற்பது, அதனுல் இன்ப துன்பங்கள் ஏற்படுவது ஆகியவை கர்மத்தால் சுழன்று சுழன்று வருபவை என்றும் எவன் காண்கிருனே அவனே இயல்வான நிலையிலுள்ள ஆத்மாவைக் காண்கிருன். ஆக இந்த ஶ்லோகத்தால் க்ரியைகளுக்கு நேரே இருப்பிடமாயிருப்பது ஶரீரமென்றும் அப்படியல்லாதது ஆத்மா என்றும் ப்ரக்ருத்யாத்ம விவேகம் விளக்கப்பட்டது.

**30. எப்போது பூதத் தியல்வேறு பாட்டினையு
மொப்பொருவா வொன்றி லுறுவகையுந்—துப்போடார்
பந்தப் பரப்புமுணர் பாங்கனப் போதுயிரா
மந்தப் பிரமமடைந் தாம்.**

**பூதத்து இயல் வேறுபாட்டினையும்** — ப்ரக்ருதி புருஷர்கள் ஒன்றோடொன்று சேர்ந்திருக்கும் தேவர் முதலான ஜீவர்களில். (தேவத்தன்மை மநுஷ்யத்தன்மை, குட்டையாயிருக்கை நெட்டையாயிருக்கை முதலான) வேறுபாடுகளை, **ஒப்பு ஒருவா ஒன்றில் உறுவகையும்** — தனக்கு ஒப்பில்லாத (ப்ரக்ருதியாகிற) ஒரே தத்துவத்தில் இருக்கும வகையையும், **துப்போடு ஆர்பந்தப் பரப்பும்** — வலிமைமிகுந்து விளங்கும் (பிள்ளை பேரன் முதலான) ப்ரக்ருதி பந்தங்களின் விரிவையும், **எப்போது உணர்பாங்கன்** — எப்போது உணரும் பக்குவத்தை அடைகிறானோ, **அப்போது**—அந்தககாலததில் **உயிராம் அந்த பிரமம்** — பெரிதாகையாலே பிரம்மம் எனப்படும அத்தகைய தன் உயிரை. **அடைந்து ஆம்** — அடைந்தவனாவான்.

---

30. இந்த ஶ்லோகத்தில் ப்ரக்ருதியானது பரிணமிக்கக் கூடியது என்றும், புருஷன் பரிணாமமற்றவன் என்றும் பாகுபாடு உணர்த்தப்படுகிறது. (ப்₄தப்ருத₂க்₃ப₄ாவம்) ப்ரக்ருதி புருஷ தத்துவங்கள் எள்ளும் எண்ணெயும் போலே ஒன்றோடொன்று பிணைந்திருக்கும் தேவர் மனிதர் முதலான எல்லா ஜீவராசிகளிலும் காணப்படும் தேவத்தன்மை மனிதத்தன்மை, குட்டையாயிருக்கை நெட்டையாயிருக்கை முதலான வேறுபாடுகளை. மேலே 'ஏக'ஶப்₃த₃த்தால் ப்ரகரணத்தில் உள்ள ப்ரக்ருதி புருஷர்களில் ஒன்றையெடுக்கையாலே இங்கு 'பூ₄த' ஶப்₃த₃ம் ப்ரக்ருதி புருஷர்களின் சேர்த்தியான ஜீவராஶிகளைக் குறிப்பதாகக் கொள்வதே உசிதம், 'ப்ருத₂க்₃ப₄ாவம்' என்னும் பத₃த்தால் அந்த ஜீவராஶிகளிலுள்ள தேவர் மனிதர் முதலான ஜாதிபே₄த₃ங்களும், குட்டையாயிருக்கை நெட்டையாயிருக்கை முதலான கு₃ணபே₄த₃ங்களும் வாசியற எடுக்கப்படுவதாகக் கொள்வதே உசிதம். இந்த வேறுபாடுகள் அனைத்துமே ப்ரக்ருதியின் பல பரிணாம நிலைகளே

भा ।। प्रकृतिपुरुषतत्त्वद्वयात्मकेषु देवादिषु सर्वेषु भूतेषु सत्सु तेषां देवत्वमनुष्यत्वह्रस्वत्वदीर्घत्वादिपृथग्भावमेकस्थम् — एकतत्त्वस्थम् प्रकृतिस्थं यदा पश्यति, नात्मस्थम्, तत एव-प्रकृतित एवोत्तरोत्तर-

---

யாகையால் பரிணாமமற்ற புருஷனைக்காட்டிலும் ப்ரக்ருதிக்குள்ள வேறுபாடு இப்பதத்தால் உணர்த்தப்படுகிறது. (ஏகஸ்தம் யதா அநுபஶ்யதி) இவ்விரண்டு தத்துவங்களில் ஒன்றான ப்ரக்ருதி யிலிருப்பதாக எப்போது காண்கிருனே. இந்த ப்ரகணத்தில் உள்ள ப்ரக்ருதி புருஷர்களில் ஒன்றே இங்கு ஏகஶப்தத்தால் எடுக்கப் படவேண்டும், "ஸமம் பஶ்யந்" [28] என்று இந்த ப்ரகரணத்தி லும், "பண்டிதா: ஸமதர்ஶிந:" [5-18] என்று ப்ரகரணாந்தரத் திலும ஆத்மாவானது வேறுபாடற்றது என்று நிரூபிக்கப்பட்டி ருக்கையால், அவற்றோடு முரண்படாமைக்காக இங்கு வேறுபாடு உடையதாகக் கூறப்படும் தத்துவம் ப்ரக்ருதியேயொழிய ஆத்மா வல்ல என்று நிர்ணயிக்கப்படுகிறது, 'ஏகஸ்தம்' என்னும் பதத் துக்கு "ஸந்மாத்ரமான ஒரே ப்ரஹ்மத்திடம் எல்லாவேறுபாடு களும், எல்லாப்பரிணாமங்களும் உள்ளன" என்று உரையிட்ட யாதவப்ரகாஶாதிபக்ஷங்கள் ப்ரமாணவிருத்தமானவை என்று முன்னமே தள்ளப்பட்டதாகையாலே, இங்கு கூறியதே சரியான பொருளாகும். (தத: ஏவ ச விஸ்தாரம்) அந்த ப்ரக்ருதியிலிருந்தே மேன்மேலே பிள்ளை பேரன் முதலான வேறுபாடுகளின் விரிவு உண் டாவதாகவும் எப்போது காண்கிருனே. 'யதா அநு பஶ்யதி' என்பதை இங்கேயும் கூட்டிக்கொள்வது. "ஆத்மா வை புத்ரநாமாஸி" [யஜுர்-மந்த்ரப்ரஶ்நம் 2-12] முதலான வேதவாக்யங்களில் தானே புத்ரன் முதலானவர்களாகப் பரிணமிப்பதாகக் கூறியதும் "அங்காதங்காத் ஸம்பவஸி" [ஷை] [என்னுடைய ஒவ்வொரு அவயவத்திலிருந்தும பிறந்திருக் கிருய்] என்று அந்த மந்திரத்தில் கூறியபடியே ப்ரக்ருத்யம் ஶத்தின் பரிணாமமே என்று விளங்குகிறதன்றோ. இந்த வேதவாக் யத்தையொட்டியே 'தத ஏவ' என்பதற்கு 'ப்ரக்ருதியிலிருந்தே' என்றும், 'விஸ்தாரம்' என்பதற்கு 'பிள்ளை பேரன் முதலான வேறு பாடுகளின் விரிவு' என்றும் பொருள்கொள்ளப்பட்டது. ஏவகாரத் தாலே "ப்ரக்ருதி தத்துவமானது முதலில் தேவர் மனிதர் முத லான பரிணாமத்தையும், பிறகு பிள்ளை பேரன் முதலான பரிணா

पुत्रपौत्रादिभेदविस्तारं च यदा पश्यति, तदैव ब्रह्म संपद्यते — अनवच्छिन्नं ज्ञानैकाकारमात्मानं प्राप्नोतीत्यर्थः ॥

अनादित्वान्निर्गुणत्वात्परमात्माऽयमव्ययः ।
शरीरस्थोऽपि कौन्तेय न करोति न लिप्यते ॥ 31

31. அநாதி₃த்வாந்நிர்கு₃ணத்வாத் பரமாத்மாயமவ்யய꞉ ।
ஶரீரஸ்தே₂ா'பி கௌந்தேய! ந கரோதி ந லிப்யதே ॥

**கௌந்தேய** — குந்தீ புத்ரனே! **அயம் பரமாத்மா** — (தே₃ஹத்தைக் காட்டிலும்) மேலான இந்த ஜீவன். **ஶரீரஸ்த₂: அபி**—ஶரீரத்திலிருந்தபோதிலும்; **அநாதி₃த்வாத்**— (ஒரு காலத்தில்) உண்டாக்கப்படாத அனாதிப்பொருளாகை யாலே, **அவ்யய꞉** — அழிவற்றவன்; **நிர்கு₃ணத்வாத்** —

மங்களேயும் அடையும்போது, பே₄ாக்தாவான புருஷன் ஸுக₂து₃:க்க₂ாநுப₄வத்திற்காக அந்த ப்ரக்ருதியோடு இணைந்திருக்கிருனே யொழிய, இன்பதுன்பங்களை அநுப₄விக்குமிடமான ப்ரக்ருதியிலுள்ள விகாரங்களை அடைவதில்லை'' என்று உணர்த்தப்படுகிறது. (ததா₃ ப்₃ரஹ்ம ஸம்பத்₃யதே) அப்போதே தே₃ஹப₃ந்த₄ம் அற்றதாய் அறிவையே வடிவாகக்கொண்ட ஆத்மாவை அடைகிருன். 'ப்₃ரஹ்ம ஸம்பத்₃யதே' என்று இங்கு கூறியதற்கு 'பரமாத்மாவாக ஆகிருன்' என்று பொருள் கொள்வது ப்ரமாண விருத்₃த₄மாகையாலே, ப்₃ரஹ்ம ஶப்₃த₃ம் பரமாத்மாவைச் சொல்லமுடியாது. அப்பதம் ஜீவாத்மா வைக் குறிப்பதாகக் கொள்ளும்போதும், ஜீவாத்மாவாயிருப்பது என்றுமே புருஷனுக்கு நித்யமாகையால், "அப்போது ஜீவாத்மா வாகிருன்" என்பது ஒட்டாது. ஆகையால், ப்₃ரஹ்ம ஶப்₃த₃ம் பரமாத்மாவைக் குறிக்கும்போது, "பரமம் ஸாம்ய முபைதி" [முண்ட₃க 3-1-3] "மம ஸாத₄ர்ம்யமாக₃தா꞉" [கீ₃தை 14-2] என்று ப்ரமாணங்களில் கூறியபடியே ப்₃ரஹ்மத்தோடு மேலான ஒற்றுமையையடைகிருன் என்றே பொருள்கொள்ளவேண்டும். அன்றிக்கே, ப்₃ரஹ்ம ஶப்₃த₃த்தால் ஜீவாத்மாவைக் குறிப்பதாகக் கொண்டு 'ஸம்பத்₃யதே' என்று முக்தி நிலையில் ப₃ந்த₄மற்ற தன் ஆத்மாவின் அநுப₄வத்தைப் பெறுகிருன் என்று கூறுவதாகவும் கொள்ளலாம். 30

ஸத்வம் முதலான கு₃ணங்கள் அற்றிருக்கையாலே, **ந கரோதி** — (தே₃ஹத்தைப்போலே) கிரியைக்கு இருப்பிடமாவதில்லை; **ந லிப்யதே** — தே₃ஹத்தின் தன்மைகளோடு ஒட்டுவதில்லை.

**31. இங்கணையு மாதி யிலனாற் குணமிலனாற்**
**பங்கமிலோ னிந்தப் பரமான்மா—தங்கியுடல்**
**நின்றிடினுங் கௌந்தேயா நேரொன்றுந் தான்செய்யான்**
**என்றுமதிற் றோய்விலனு மேய்ந்து.**

**கௌந்தேயா**—குந்தீ புத்ரனே! **இங்கு அணையும் இந்த பரமான்மா** — இந்த ஶரீரத்தோடு சேர்ந்திருப்பவனாய் இதைக்காட்டிலும மேலானவனான இந்த ஜீவன், **உடல் தங்கி நின்றிடினும்** — உடலிலே தங்கியிருந்தபோதிலும், **ஆதி இலனால்**—(ஒரு காலத்தில்) உண்டாக்கப்படாத அநாதிப்பொருளாகையாலே, **பங்கம் இலோன்** — அழிவில்லாதவன்; **குணமிலனால்** — ஸத்வம் முதலான கு₃ணங்களில்லாமையால், **நேர் ஒன்றும் தான் செய்யான்**—ஶரீரம செய்யும் காரியங்களை நேரே தான் செய்வதில்லை; **என்றும்**-எப்போதும், **அதில்** — **ஶரீரத்தின்** தன்மைகளில், **ஏய்ந்து** — பொருந்தி, **தோய்விலனும்** — ஒட்டுவதில்லை.

---

31. ஆத்மா நித்யமாகையாலும், செயலுக்கு இருப்பிடமாயிராமையாலும், பரிணாமமற்றிருக்கையாலும் ஶரீரத்தைக் காட்டிலும் வேறுபட்டது என்று முன் ஶ்லோகங்களில் சொன்ன அர்த்த₂த்தை, காரணங்காட்டி வலியுறுத்துகிறான். (அயம் பரமாத்மா) தே₃ஹத்தைக்காட்டிலும் வேறுபடுத்தி நித்யத்வம் முதலான தன்மைகளுடையவனாக முன் ஶ்லோகங்களில் நிரூபிக்கப்பட்ட இயல்பான நிலையிலுள்ள ஜீவாத்மா. (ஶரீரஸ்தோ₂ऽபி அநாதி₃த்வாத் அவ்யய:) உண்டாக்கப்படாத அநாதி₃ப் பொருளாகையாலே ஶரீரத்தில்

भा ॥ अयं परमात्मा देहान्निष्कृष्य स्वस्वभावेन निरूपितः, शरीरस्थोऽपि अनादित्वात् अनारभ्यत्वात् अव्ययः-व्ययरहितः, निर्गुणत्वात्-सत्त्वादिगुणरहितत्वात्, न करोति, न लिप्यते देहस्वभावैर्न लिप्यते ॥

---

கட்டுண்டிருந்தபோதிலும் அழிவற்றவன். உலகில் உண்டான பொருள்களையன்றோ அழிபவையாகக் காண்கிறோம். இவ்வுலகில் கர்மத்தினால் உண்டான ஶரீரப3ந்த4த்தாலேயே இவனுக்கு ஜ்ஞானத்தில் ஏற்றத்தாழ்வுகள் ஏற்படுகின்றன; இயற்கையில் இவன் ஸ்வரூபத்திலும் ஜ்ஞானத்திலும் அழிவற்றவனே என்று கருத்து. (நிர்கு3ணத்வாத் ந கரோதி) ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று கு3ணங்களும் இல்லாதவனாகையாலே அவற்றையுடைய ஶரீரத்தைப்போலே அந்த ஶரீரத்திலிருக்கும் இவன் செயலுக்கு இருப்பிடமாவதில்லை. இங்கு 'குணமற்றவன்' என்று பொதுவாகச் சொல்லியிருந்தபோதிலும் "ஜ்ஞானம் முதலான எல்லாகு3ணங்களுமில்லாதவன்' என்று பொருள் கொள்வது ப்ரமாண விருத்3த4மாகையாலே 'ப்ரக்ருதிக்கேயுள்ள ஸத்வாதி3கு3ணங்களற்றவன்' என்று பொருள் கொள்ளப்பட்டது. (நிர்கு3ணத்வாத் ந லிப்யதே) ஸத்வாதி3கு3ணங்களற்றவனாகையாலே தே3ஹ ஸ்வபா4வங்களாலே தொடப்படுவதில்லை. ஸத்வாதி3கு3ணமயமான ஶரீரத்தில் இருக்கையாலே, சேற்றால் அழுக்கடையும் வஸ்த்ரத்தைப் போலே "தத் ஸப்ததா4து த்ரிமலம் த்3வியோநி சதுர்வித4 ஹாரமயம் ஶரீரம்" [அந்த ஶரீரம் ஏழு தா4துக்களையுடையதாய், வாதபித்தகப2ங்களாகிற மூன்று தோ3ஷங்களையுடையதாய், ஆணும் பெண்ணுமான இருவர் சேர்க்கையினால் உண்டானதாய், பல்லால் கடிப்பது, உதட்டால் உறிஞ்சுவது, நாவால் சுவைப்பது, வாயால்பருகுவது என்று நால்வகைப்பட்ட ஆஹாரங்களின் பரிணமமாயிருப்பது] என்று ஓதப்பட்ட ஶரீரத்தின் தன்மைகளாலே ஆத்மா தொடப்படுமோ என்னும் ஐயம் விளைந்தபோதிலும், ஶரீர கு3ணங்களான ஸத்வம் முதலானவை இல்லாமையாலே ஆத்மா ஶரீரத்தின் தன்மைகளாலே தொடப்படுவதில்லை என்று கருத்து. (கௌந்தேய) "கண்ணா! உன்னை நாங்கள் எப்போதும் நினைத்துக்கொண்டிருக்கலாம்படி, எங்களுக்கு விபத்துக்கள் எப்போதும் ஏற்படட்டும்" என்று வேண்டிய தே3ஹாத்ம விவேகமுடைய குந்தியின் பிள்ளையான நீ அவளைப்போலவே விவேகமுடையவனாக வேண்டாவோ? என்று கருத்து. 31.

भा ।। यद्यपि निर्गुणत्वान्न करोति, नित्यसंयुक्तो देहस्वभावैः कथं न लिप्यत इत्यत्राह—

यथा सर्वगतं सौक्ष्म्यादाकाशं नोपलिप्यते ।
सर्वत्रावस्थितो देहे तथाऽऽत्मा नोपलिप्यते ।। ३२-

32. யதா₂ ஸர்வக₃தம் ஸௌக்ஷ்ம்யாத்
ஆகாஶம் நோபலிப்யதே ।
ஸர்வத்ராவஸ்தி₂தோ தே₃ஹே
ததா₂த்மா நோபலிப்யதே ॥

32. சென்ற ஶ்லோகத்தில் 'ஆத்மாவானது தே₃ஹம் செய்யும் செயல்களுக்கு இருப்பிடமாவதில்லை' என்றும், 'தே₃ஹத்தின் தன்மைகளோடு ஒட்டுவதில்லை' என்றும் கூறப்பட்டது. "ஸத்வாதி₃ கு₃ணமற்றிருக்கையால் செயல்களுக்கு இருப்பிடமாவதில்லை என்று கூறியது முன்பே விளக்கப்பட்டுள்ளது. அடுத்த அத்தியாயத்திலும் விளக்கப்படப்போகிறது. இதை ஒப்புக்கொண்டாலும், 'ஶரீரத்திலிருந்தபோதிலும் அதன் தன்மைகளோடு ஒட்டுவதில்லை' என்று கூறியது பொருத்தமாகத்தோன்றவில்லை. உப்புச் சுரங்கத்தில் இடப்பட்ட மரக்கட்டை உப்பின் தன்மைகளை உடையதாவதுபோலே தே₃ஹத்தோடு என்றும் பிணைந்திருக்கும் ஆத்மாவும் தேஹத்தின் தன்மைகளையுடையதாகும் என்று தோன்றுகிறதே" என்னும் ஆக்ஷேபத்திற்கு த்₃ருஷ்டாந்தம் காட்டி பதில் கூறுகிறது இந்த ஶ்லோகம். "ஸம்ஸர்க₃ஜா தே₃ாஷகு₃ணா ப₄வந்தி" [தே₃ாஷங்களும் கு₃ணங்களும் (அவற்றையுடைய வேறு பொருளோடு) சேர்த்தியாலுண்டாகின்றன] "ஶுஷ்கேணார்த்₃ரம் த₃ஹ்யதே மிஶ்ரபா₄வாத்" [பா₄-ரா-73-23] [காய்ந்தவிறகோடு சேர்ந்த ஈரவிறகும், சேர்ந்திருக்கையாலே எரிகிறது] என்று ப்ரஸித்₃தி₄யுள்ளது. சிறிதுகாலம் சேர்ந்திருக்கும் ஸாமான்யமான பொருள்களுக்கே இந்நிலை என்ருல், "யம் ப்ராப்யாதிபவித்ராணி வஸ்த்ராண்யாப₄ரணாநி ச| அஶுசித்வம் க்ஷணாத் யாந்தி கிமந்யத₃ஶுசிஸ்ததஃ ||" [மிகப் பரிஶுத்₃த₄மான வஸ்த்ரங்களும் ஆப₄ரணங்களும் எந்த ஶரீரத்தோடு ஒருகணநேரம் தொடர்பு ஏற்பட்டாலே அபரிசுத்தமாகின்

**ஆகாஶம்** — ஆகாஶமானது, **ஸர்வக₃தம்** — எல்லாப் பொருள்களோடும் சேர்ந்திருந்தபோதிலும், **ஸௌக்ஷ்ம யாத்** — நுண்ணியதாயிருக்கையாலே, **யதா₂ ந உபலிப்யதே** — அந்த எல்லாப்பொருள்களின் தன்மைகளோடு எப்படி ஒட்டாமலிருக்கின்றதோ, **தத₂** — அப்படியே, **ஆத்மா** — ஜீவாத்மாவும், **ஸர்வத்ர தே₃ஹே அவஸ்தி₂த:** — தே₃வர் மனிதர் முதலான அனைத்து தே₃ஹங்களிலும் இருந்தபோதிலும், (**ஸௌக்ஷ்ம்யாத்**—மிக நுண்ணியதாயிருக்கையாலே) **ந உபலிப்யதே** — அந்தந்த தே₃ஹத்தின் தன்மைகளோடு ஒட்டுவதில்லை,

**32. ஓங்குவிசும் பெங்கு முளதாயு நுட்பத்தா**
**லாங்கதனிற் றோயா ததுபோலத்—தாங்குடல**
**மேதிலுநின் றுலு மிலகுமுயி ரவ்வண்ண**
**மாதியல்வாற் றோயாணு மங்கு.**

**ஓங்கு விசும்பு**—சிறப்புள்ள ஆகாஶம், **எங்கும் உள தாயும்**-எல்லாப்பொருள்களோடும் சேர்ந்திருந்தபோதிலும், **நுட்பத்தால்** — நுண்ணியதாயிருக்கையால், **ஆங்கு அதனில் தோயாதது போல** — அந்த எல்லாப்பொருள்களின் தன்மைகளோடு ஒட்டாமலிருப்பதுபோல, **இலகும் உயிர்**— (மிக நுண்ணியதாய்) விளங்கும் ஜீவாத்மாவும், **தாங்கு உடலம் ஏதிலும் நின்றாலும்**-தான் தாங்கி நிற்கும் **தே₃**வர், மனிதர் முதலான எந்த உடலில் இருந்தபோதிலும், **அங்கு ஆதியல்வால்**—அந்தந்த தே₃ஹத்தில் அதின் தன்மைகளோடு, **அவ்வண்ணம் தோயாணும்** — ஆகாஶத்தைப் போலவே ஒட்டாமலிருக்கிறான்.

---

றனவோ அதைக்காட்டிலும் ஶுத்₃தி₄யில்லாத வேறொரு பொருள் என்ன இருக்கிறது?] என்கிறபடியே மிகத் தாழ்ந்ததான இந்த ஶரீரத்தோடு என்றும் சேர்ந்திருக்கும் ஆத்மாவுக்கு ஶரீரத்தின் தோ₃ஷங்கள் எப்படி வராமலிருக்க முடியும்? என்பது ஆக்ஷேபத்தின் கருத்து. இக்கருத்து "சேர்த்தியாலே ஒன்றின் கு₃ணம்

भा ॥ यथा आकाशं सर्वगतमपि सर्वैर्वस्तुभिस्संयुक्तमपि सौक्ष्म्यात् सर्ववस्तुस्वभावैर्न लिप्यते, तथा आत्मा अतिसौक्ष्म्यात्सर्वत्र— देव-मनुष्यादौ देहेऽवस्थितोऽपि तत्तद्देहस्वभावैर्न लिप्यते ॥ ३२ ॥

---

மற்றொன்றுக்கு ஏறுவது என்பது எல்லாவிடங்களிலும் காணப்படுவதொன்றல்ல என்பதை ஆகாஶத்₃ருஷ்டாந்தத்தின் மூலம் காணலாம்'' என்னும் யுக்தியாலே தள்ளப்படுகிறது. இந்த ஶ்லோகத்தில், (ஆகாஶம் ஸர்வக₃தம்) ஆகாயமானது எல்லாப் பொருள்களோடும் சேர்ந்திருந்தபோதிலும். "சேர்ந்திருப்பவற்றில் ஒன்றின் கு₃ணம மற்றொன்றில் ஏறுகிறது'' என்னும் ஆக்ஷேபத்துக்குப் பதிலுரைப்பதாக இந்த ஶ்லோகம் அமைந்திருப்பதால் 'சேர்ந்திருந்தாலும் ஒன்றின் கு₃ணம் மற்றொன்றில் எல்லா இடங்களிலும் ஏறுவதில்லை' என்னும் பொருள் தொனிக்கும்படி 'ஸர்வக₃தம்' என்னும் பத₃த்தோடும், பிற்பாதியில் 'அவஸ்தி₂த:' என்னும் பத₃த்தோடும் 'அபி' (போதிலும்) என்னும் பத₃த்தைச் சேர்த்துக்கொண்டே பொருள்கொள்ளவேண்டும். ஒன்றோடொன்று சேர்ந்திருப்பதால் மாத்திரம் ஒன்றின் கு₃ணம் மற்றொன்றில் ஏறிவிடும என்றுகொண்டால், ஒன்றுக்கொன்று முரண்பட்ட கு₃ணங்களையுடைய கணக்கற்ற பொருள்களோடு சேர்ந்திருக்கும் ஆகாயத்திற்கு முரண்பட்ட கணக்கற்ற கு₃ணங்கள் ஏற்பட வேண்டிவரும் என்று கருத்து. சேர்ந்திருந்தபோதிலும் கு₃ணங்கள் ஒட்டாமலிருப்பதற்குக் காரணமென்ன? எனில்: (ஸௌக்ஷ்ம்யாத்) தன்னோடு சேர்ந்திருக்கும் பொருள்களைக் காட்டிலும் நுண்ணியதாயிருக்கையால், ஆகாயம் அவற்றோடு சேர்ந்திருந்தபோதிலும் அவற்றின் தன்மைகளோடு ஒட்டுவதில்லை என்று கருத்து. (ஸௌக்ஷ்ம்யாத் யதா₂ ஆகாஶம் ந உபலிப்யதே ததா₂ ஸர்வத்ர தே₃ஹே அவஸ்தி₂தோ(ऽபி) ஆத்மா ந உபலிப்யதே) சேர்ந்திருக்கும் மற்ற பொருள்களைக் காட்டிலும் நுண்ணியதாயிருக்கையால் ஆகாஶம் அப்பொருள்களின் தன்மைகளோடு எப்படி ஒட்டுவதில்லையோ அப்படியே அவ்வாகாயத்தைக் காட்டிலும் மிக நுண்ணியதாயிருக்கையால் ஆத்மா தேவர் மனிதர் முதலான எல்லா தே₃ஹங்களோடு சேர்ந்திருந்தபோதிலும் அவற்றின் தன்மைகளோடு ஒட்டுவதில்லை என்று கருத்து. 'ததா₂' என்னும் ஶப்₃த₃த்தால் முற்பாதியிலுள்ள "ஸௌக்ஷ்ம்யாத்'' என்னும்

यथा प्रकाशयत्येकः कृत्स्नं लोकमिमं रविः ।
क्षेत्रं क्षेत्री तथा कृत्स्नं प्रकाशयति भारत! ॥ ३३.

**33. யதா₂ ப்ரகாஶயத்யேக: க்ருத்ஸ்நம் லோகமிமம் ரவி: |**
**க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா₂ க்ருத்ஸ்நம் ப்ரகாஶயதி ப₄ாரத !||**

**ப₄ாரத**—ப₄ரதகுலத்துதித்தவனே! **ஏக: ரவி:**—ஒருவனான ஸூர்யன், **இமம் க்ருத்ஸ்நம் லோகம்** - இவ்வுலகனைத்தையும், **யதா₂ ப்ரகாஶயதி**—எப்படி (தன் ஒளியினால்) விளங்கச் செய்கிறானோ, **ததா₂**—அப்படியே, **க்ஷேத்ரீ** — ஶரீரத்தை உடையவனான ஜீவன், **க்ஷேத்ரம்**— (தன்) ஶரீரத்தை, **க்ருத்ஸ்நம்**— உள்ளும் புறமும் காலிலிருந்து தலைவரையிலும், **ப்ரகாஶயதி**—(தன் ஜ்ஞானத்தால) விளங்கச் செயகிறான்.

**33. எவ்வா றிரவிதா னிந்த வுலகனைத்து**
**மிவ்வா றெழில்விளக்க மெய்துவிக்கு—மவ்வாறு**
**பாரதனே யிவ்வுடல மெல்லாம் பரந்துயிர்தான்**
**சீரதனாற் றான்விளக்குஞ் சேர்ந்து**

**பாரதனே** — பரதகுலத்துதித்தவனே!, **ரவிதான்** — ஸூர்யன் ஒருவனே, **இந்த உலகு அனைத்தும்** — காணப்படும் உலகங்கள் எல்லாவற்றையும், **இவ்வாறு** — நாம் காண்பதுபோலே, **எழில் விளக்கம் எவ்வாறு எய்துவிக்கும்**—

---

ஹேதுவும் எடுக்கப்படுவதாகக் கொள்ளவேண்டும். த்₃ருஷ்டாந்தத்தில் 'ஸர்வக₃தம்' என்றும், தா₃ர்ஷ்டாந்திகத்தில் 'ஸர்வத்ர தே₃ஹே அவஸ்தி₂த:' என்றும் ஸர்வ ஶப்₃த₃த்தை இட்டிருப்பதின் கருத்து என்ன? எனில், "பருத்தியைப் பயிரிடும் போது எரு நீர் முதலானவற்றில் அஞ்ஜனத்தை (மையை)ச் சேர்ப்பதன்மூலம் அப்பருத்தியில் மையின் கருநிறம் ஏறுவதில்லை; அவற்றில் அரக்கு ரஸத்தைச் சேர்ப்பதன்மூலம் பருத்தியில் சிவப்புநிறம் ஏறுகிறது. இங்கும் அதுபோல் சில பொருள்களோடு சேரும்போது அவற்றின் தன்மை ஒட்டாவிடினும் மற்றும் சில பொருள்களோடு சேரும்போது அவற்றின் கு₃ணங்கள் ஒட்டக் கூடுமோ?" என்னும் ஐயத்தைத் தவிர்ப்பதற்காக இரண்டிடத்திலும் ஸர்வஶப்₃த₃ம் இடப்பட்டுள்ளது. 32.

भा ॥ यथैक आदित्यः स्वया प्रभया कृत्स्नमिमं लोकं प्रकाश-यति, तथा क्षेत्रमपि क्षेत्री, ममेदं क्षेत्रमीदृशम् इति कृत्स्नम् — बहि-

---

எப்படி அழகாக விளங்கச்செய்கிருனே, **அவ்வாறு** — அப்படியே, **உயிர்தான்** — ஒருவஞன ஜீவன். **இவ்வுடலம் எல்லாம்** — தனது இந்த உடம்பை உள்ளும் புறமும் காலி லிருந்து தலைவரையிலும். **சீர் அதனுல்தான் சேர்ந்து பரந்து** — தனது ஜ்ஞானத்தாலே (உடலுடன்) சேர்ந்து அலைத வ்யாபித்து, **விளக்கும்** — (அதை) விளங்கச்செய்யும்.

---

33. இவ்வத்தியாயத்தின் ஆரம்பத்தில் 'ஏதத்₃யோ வேத்தி தம் ப்ராஹு:; க்ஷேத்ரஜ்ஞ இதி தத் வித₃:'' [1] என்று க்ஷேத்ரஜ்ஞனை ஜீவன் அறிபவன் என்றும், க்ஷேத்ரம் (ஶரீரம்) அவனுல் அறியப்படுவது என்றும் சொல்லுவதன் மூலம், ஶரீரம் அவயவங்களின் கூட்டாயிருப்பதால் பலவாயிருப்பது என்றும், ஜீவன் அவயவமற்றிருப்பதால் ஒருவனுயிருப்பவன் என்றும் இரு தத்துவங்களுக்கும் வேறுபாடு உணர்த்தப்பட்டது. அது இந்த ஶ்லோகத்தில் நிலைநிறுத்தப்படுகிறது. (ஏக: ரவி: யதா₂ க்ருத்ஸ்நம் இமம் லோகம் ப்ரகாஶயதி) ஒருவனை ஸூர்யன் இவ்வுலகம் முழுவதையும் தனது ஒளியால் எப்படி விளங்கச் செய்கிருனே. ஒருவஞன ஜீவன் தன் ஶரீரம் முழுவதையும் விளங்கச் செய்வதற்கு இது த்₃ருஷ்டாந்தம். ஒளிமயமான ஸூர்யன் தனக்கு கு₃ணமாயிருக்கும் ஒளிமயமான கிரணங்களால் உலகத்தை விளங்கச்செய்வது போலே ஜ்ஞானமயமான ஜீவனும் தனக்கு கு₃ணமான ஜ்ஞானத் தாலே இந்த ஶரீரம் முழுவதையும் விளங்கச் செய்கிருன் என்னும் அர்த்த₂ம் இந்த த்₃ருஷ்டாந்தத்தால் தேறுகிறது. (தத₂ா க்ருத்ஸ்நம் க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ப்ரகாஶயதி) அவ்வண்ணமே ஒருவனுய் ஜ்ஞானமயமான ஜீவன் தன் ஶரீரத்தை உள்ளும்புறமும் தலையிலிருந்து கால் வரையிலும் தனக்கு கு₃ணமாயிருக்கும் ஜ்ஞானத்தால் 'என்னுடையதான இந்த உடல் இத்தகையது' என்று விளங்கச் செய்கிருன். 'க்ருத்ஸ்நம் க்ஷேத்ரம்' என்பதால் எல்லா

रन्तश्चापादतलमस्तकं स्वकीयेन ज्ञानेन प्रकाशयति; अतः प्रकाश्याल्लोकात् प्रकाशकादित्यवद्वेदितृत्वेन वेद्यभूतादस्मात् क्षेत्रादत्यन्तविलक्षणोऽय-मुक्तलक्षण आत्मेत्यर्थः ॥ ३३ ॥

---

ஶரீரங்களையும் எடுப்பதாகத் தோன்றக்கூடும். ஶங்கரரும் "ரவித்$_3$ருஷ்டாந்தோऽத்ர ரவிவத் ஸர்வ க்ஷேத்ரேஷு ஏக ஆத்மா அலேபகஶ்ச இதி ஜ்ஞாபநார்த்த$_2$:" [ஸூர்யனை இங்கு த்$_3$ருஷ்டாந்தமாக எடுத்தது ஸூர்யன்போலே எல்லா உடல்களிலும் ஒரே ஆத்மாவே ஒட்டாமல் விளங்குகிறான் என்று அறிவிப்பதற்காக] என்று ப$_4$ாஷ்யமிட்டார். ஓர் உடலில் இருக்கும் ஜீவன் அந்த உடலையே விளங்கச் செய்கிறானேயொழிய உலகிலுள்ள எல்லா உடல்களையும் விளங்கச்செய்வதில்லையாகையால் ஒவ்வோருடலிலும் தனித்தனி ஆத்மா இருப்பதாகத் தேறுகையால் இவ்வர்த்த$_2$ம் பொருந்தாது. "க்ஷேத்ரீ" என்று ஆத்ம ஜாதி முழுவதையும் குறிப்பதாகக்கொண்டால் ஒருவனான ஸூர்யனை த்$_3$ருஷ்டாந்தமாக எடுத்திருப்பது ஒட்டாது. ஆகையால் "க்ருத்ஸ்நம் க்ஷேத்ரம்" என்று உடலில் வெளியிலுள்ள தோல் முதலானவற்றையும் உள்ளேயுள்ள மாம்ஸம் முதலானவற்றையும் தலையிலிருந்து கால்வரையுள்ள எல்லா அவயவங்களையும் குறிப்பதாகவே கொள்ளவேண்டும். க்ருத்ஸ்நஶப்$_3$த$_3$ம் ஒவ்வொரு ஶரீரமும் பல அவயவங்களையுடைத்தாயிருக்கையால் பலவாயிருந்துகொண்டு ஒன்றான ஆத்மாவைக்காட்டிலும் வேறுபட்டதாயுள்ளது என்றும், உடலில் அவயவங்களில் எதுவும் அறிபவனை ஜீவனாக முடியாது என்றும் காட்டுகிறது. ஆக, பல அவயவங்களின் கூட்டாயிருக்கும் ஶரீரத்தைக்காட்டிலும் அந்த அவயவங்கள் அனைத்தையும் அறிபவனாக அறியப்படும் ஒருவனான ஆத்மா வேறுபட்டவன் என்று ப்ரத்யக்ஷப்ரமாணத்தால் ஸித்$_3$தி$_4$க்கிறது என்று இந்த ஶ்லோகத்தால் சொல்லப்பட்டதாயிற்று. இந்த ஶ்லோகத்தில் த்$_3$ருஷ்டாந்தத$_3$ார்ஷ்டாந்திகங்களைப் பார்க்கும்போது "'ஸூர்யன் உலகத்தை விளங்கச் செய்வதுபோலே ஜீவன் உடலை விளங்கச் செய்கிறான்' என்று மாத்திரம் சொல்லவந்ததல்ல இந்த ஶ்லோகம்; இதிலிருந்து தேறுவதான 'விளங்கச் செய்யப்படும் உலகத்தைக்காட்டிலும் விளங்கச் செய்யும் ஸூர்யனைப்போலே, அறியப்படும் இவ்வுடலைக் காட்டிலும் அறிபவனான ஜீவன் மிகவும் வேறுபட்டவன்' என்னும் பொருளையும் சொல்லவந்தது" என்று

क्षेत्रक्षेत्रज्ञयोरेवमन्तरं ज्ञानचक्षुषा ।
भूतप्रकृतिमोक्षं च ये विदुर्यान्ति ते परम् ॥ ३४.

34. க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோரேவமந்தரம் ஜ்ஞாநசக்ஷுஷா |
பூ₄தப்ரக்ருதிமோக்ஷம் ச யே விது₃ர்யாந்தி தே பரம் ||

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु क्षेत्रक्षेत्रज्ञविभागयोगो नाम त्रयोदशोऽध्यायः ॥ १३ ॥

ஏவம்—இவ்வத்தியாயத்தில் சொன்ன முறையில், **க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞயோ: அந்தரம்**— க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களாகிற இரு தத்துவங்களின் வேறுபாட்டையும, **பூ₄தப்ரக்ருதிமோக்ஷம் ச** — பூ₄தங்களாகப் பரிணமித்திருக்கும் ப்ரக்ருதியிலிருந்து விடுபடுவதற்கு ஸாத₄னமான அமாநித்வம் முதலான கு₃ணங்களேயும், **ஜ்ஞாநசக்ஷுஷா**—(க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களைப்பகுத்தறியும்) ஜ்ஞானமாகிற கண்ணால், **யே விது₃:**—எவர்கள் அறிகிறார்களோ, **தே** — அவர்கள், **பரம் யாந்தி**—(ஸம்ஸாரப₃ந்த₄மற்றதாகையாலே) மேலான தம் ஆத்மாவை அடைகிறார்கள்.

**34. காய முயிரிவற்றின் கண்ணார் பிரிவிவ்வா
றேய வறிவா மெழிற்கண்ணான்—மேயவுடல்
வீடமர்வு தானு மிகவுணர்வார் தாம்பரமாம்
பீடமர்வர் தன்மையினைப் பெற்று.**

**காயம் உயிர் இவற்றின் கண் ஆர் பிரிவு** — க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களாகிற இரு தத்துவங்களின் பலவகைப்பட்ட வேறுபாடுகளையும், **மேய உடல் வீடு அமர்வு தானும்** — ப்ரக்ருதி பரிணாமமான உடலிலிருந்து விடுபடுவதற்குக்

---

விளங்குகிறது. அத்தியாயத்தின் முதல் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட அர்த்த₂மே இவ்வண்ணமாக இந்த ஶ்லோகத்தில் நிலை நிறுத்தப்பட்டதாயிற்று. (பா₄ரத) பா₄ரதகுலத்துதித்த உன் முன்னோர்களான அரசர்களனைவரும் இந்த தே₃ஹாத்ம விவேகமுடையவர்களாய் யுத்₃த₄மாகிற ஸ்வத₄ர்மத்தைச் செய்திருக்கும்போது, அக்குலத்துதித்த நீ தே₃ஹத்தையே ஆத்மாவாக மயங்கிப் போர் புரிய மறுக்கலாமோ? என்று கருத்து. 33.

भा ॥ एवम्-उक्तेन प्रकारेण क्षेत्रक्षेत्रज्ञयोरन्तरं - विशेषं विवेकविषयज्ञानाख्येन चक्षुषा ये विदुः भूतप्रकृतिमोक्षं च, ते परं यान्ति-

காரணமான அமாநித்வம முதலான கு₃ணங்களையும். இவ் வாறு-இந்த அத்தியாயத்தில சொன்னமுறையில், ஏய அறி வாம் எழில் கண்ணால் — (க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களைப்) பகுத் தறியும் அறிவாகிற அழகிய கண்ணால, மிக உணர்வார் தாம்—நன்ருக அறிபவர்கள், பரமாம் தன்மை யினைப் பெற்று பீடு அமர்வர் — ஸம்ஸார ப₃ந்த₄மற்ற தம் ஆத்மாவை அடைவதாகிற செல்வத்தைப் பெறுவர்.

34. இவ்வத்தியாயத்தின் கடைசி ஶ்லோகமான இதில் இவ் வத்தியாயத்தில் முக்கியமாகச் சொல்லப்பட்டதான "'க்ஷேத்ரம்' எனப்படும் உடல் தாழ்ந்ததாகையாலே கைவிடத்தக்கது, 'க்ஷேத் ரஜ்ஞன்' எனப்படும் ஆத்மஸ்வரூபம் உயர்ந்ததாகையாலே கைக் கொள்ளத்தக்கது" என்னும் ஜ்ஞானத்தினுல் விளையும் ப₂லம் கூறப்படுகிறது. (ஏவம்) இதுவரையில் சொல்லப்பட்ட முறையில்; உடல் அறிவற்றதாய், த₄ரிக்கப்படுவதாய், உடைமைப் பொருளா யிருக்கிறது என்றும். ஆத்மா அறிபவனுய், (உடலை) த₄ரிப்பவனுய், (அதை) உடையவனுய் இருக்கிருன் என்றும் இவ்வத்தியாயத்தில் சொல்லப்பட்ட முறையில். (க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோ: அந்தரம்) உடல் ஆத்மா ஆகிய தத்துவங்களின் வேறுபாட்டை. "அந்தரமவ- காஶாவதி₄ பரித₄ாநாந்தர்தி₄பே₄த₃தாத₃ர்த்₂யே" [நாமலிங்க-ஶ நாநா-187] என்று அந்தரஶப்₃த₃த்துக்கு உள்ள பல பொருள் களில் பே₄த₃ம் (வேறுபாடு) என்னும் பொருளே இங்கு ப்ரகர ணத்திற்குப் பொருத்தமானது. (ஜ்ஞாந சக்ஷுஷா யே விது₃:) இவ்விரு தத்துவங்களின் தனித்தன்மைகளைப் பற்றிய ஜ்ஞானமாகிற கண்ணால் எவர்கள் அறிகிருர்களோ; "தி₃வ்யம் த₃தா₃மி தே சக்ஷு:" [கீ₃தை-11-8] முதலான இடங்களிற்போலே, தி₃வ்ய ஜ்ஞானத்தைப் பொருளாகக் கொள்வது பொருந்தாதாகையாலே, இந்த ப்ரகரணத்துக்குப் பொருத்தமாக முற்கூறிய தனித்தன்மை களைப் பற்றிய உபதேஶத்தால் உண்டாகும் ஜ்ஞானமே பொரு ளாகக் கொள்ளப்படுகிறது, உபதேஶத்தால் பெறப்பட்ட இந்த அறிவு ஆத்மாவை நேரே காண்பதற்கு உறுப்பாகையாலே 'ஜ்ஞானமாகிற கண்' என்று கண்ணுக உருவகப்படுத்தப்படுகிறது. "விவிச்யதே அநேந இதி விவேக:" என்னும் வ்யுத்பத்தியாலே, ப₄ாஷ்யத்தில் விவேகஶப்₃த₃ம் வேறுபாட்டைக் காட்டித் தரும்க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞர்களின் தனித்தன்மைகளைக் குறிக்கும்.

निर्मुक्तबन्धमात्मानं प्राप्नुवन्ति। मोक्ष्यतेऽनेनेति मोक्षः, अमानित्वादिकं [उक्तं] मोक्षसाधनमित्यर्थः; क्षेत्रक्षेत्रज्ञयोर्विवेकविषयेणोक्तेन ज्ञानेन तयोर्विवेकं विदित्वा भूताकारपरिणतप्रकृतिमोक्षोपायं अमानित्वादिकं चावगम्य य आचरन्ति, ते निर्मुक्तबन्धाः स्वेन रूपेणावस्थितमनवच्छिन्नज्ञानलक्षणमात्मानं प्राप्नुवन्तीत्यर्थः ॥ ३४ ॥

॥ इति श्रीभगवद्रामानुजविरचिते श्रीमद्गीताभाष्ये त्रयोदशोऽध्यायः ॥१३

(பூ₄தப்ரக்ருதி மோக்ஷம் ச யே விது₃:) பஞ்சபூ₄த ரூபமாகப் பரிணமித்திருக்கும் ப்ரக்ருதியிலிருந்து விடுபடுவதற்குக் காரணமான அமாநித்வம் முதலான கு₃ணங்களையும் எவர்கள் அறிந்து அனுஷ்டி₂க்கிருர்களோ. பூ₄தஶப்₃த₃ம் ஜீவர்களைக் குறிப்பதாய், ஜீவர்களுக்கு ப்ரக்ருதியிலிருந்து விடுபடுவதற்குக் காரணமான முற்கூறிய கு₃ணங்களைக் கூறுவதாகவும் கொள்ளலாம். இந்த அத்₄யாயத்தின் தொடக்கத்தில் முதலில் க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களை விவரித்து, அதற்குப்பின் பரிஶுத்₃த₄ாத்மாவை அடைவதற்குப் பரம்பரயா உபாயமான அமாநித்வாதி₃கு₃ணங்கள் விவரிக்கப்பட்டன. இங்கு முடிவிலும் முதல் பாத₃த்தில் க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞர்களைக் கூறி, மூன்ருவது பாத₃த்தில் 'பூ₄த ப்ரக்ருதிமோக்ஷம்' என்று கூறியது அந்த கு₃ணங்களைக் கூறுவதாகக்கொள்வதே உசிதம். ஆகையால் "மோக்ஷ்யதே அநேநேதி மோக்ஷ:" என்னும் வ்யுத்பத்தியாலே மோக்ஷ ஶப்₃த₃ம் மோக்ஷ ஸாத₄னமான அந்த கு₃ணங்களைக் குறிக்கிறது என்று கொள்ளப்படுகிறது. "பூ₄தங்களுக்கு ப்ரக்ருதியான (காரணமான) அவ்யக்தமெனப்படும் மூல ப்ரக்ருதியை இல்லாமல் செய்வதே பூ₄தப்ரக்ருதிமோக்ஷம்" என்று ஶங்கரர் பொருள்கொண்டார். "கௌ₃ரநாத்₃யந்தவதீ" என்று மந்த்ரிகோபநிஷத்தில் மூல ப்ரக்ருதியை அந்தமும் ஆதி₃யுமற்றது என்று கூறியிருப்பதோடு முரண்படுகையாலே இப்பொருள் ஆதரிக்கத்தக்கதல்ல. (தே பரம் யாந்தி) அவர்கள் ஸம்ஸாரப₃ந்த₄த்திலிருந்து விடுபட்டு, தன் இயல்வான நிலையிலிருக்கும் அளவற்ற ஜ்ஞானத்தையுடைய ஆத்மாவை அடைகிருர்கள். தனது ஜீவாத்ம ஸ்வரூபத்தை அறிந்ததற்குப் ப₂லத்தைக் கூறும் ப்ரகரணமாகையாலே பரஶப்₃த₃ம் இங்கு பரிஶுத்₃த₄ ஜீவ ஸ்வரூபத்தையே குறிக்கும். ஸம்ஸாரி நிலையிலிருக்கும்போது சுருங்கிய ஜ்ஞானத்தோடு

## பகவத் கீதை வெண்பா

(பதின்மூன்றும் அத்தியாயத்தின் ஸாரத்தைக் கூறும் பாசுரம்)

**இத்தன்மை யாலுடலு மிவ்வுயிருஞ் சேர்ந்தியலு**
**மத்தன்மை யாமாப் பவிழ்விரகு—மெய்ததன்மை**
**யோர்ந்த பதின்மூன்று மோத்திங் குரைத்து முடித்**
**தாய்ந்தபொரு ளாய்ந்தோ மறிந்து.**

வாதிகேஸரி ஜீயர் அருளிய பகவத்கீதை வெண்பாவில்
பதின்மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

**இத்தன்மையால்**—இவ்வண்ணமாக, **உடலும் இவ்வுயிரும் சேர்ந்து இயலும் அத்தன்மையாம்** — இந்த உடலும் ஜீவாத்மாவும் ஒன்றேடொன்று (கர்மத்தால்) சேர்ந்து செயல் புரியும் அந்நிலையாகிற, **ஆப்பு**—ஸம்ஸாரபந்தம்.

---

இருந்தவன் இப்போது எங்கும் பரவிய ஜ்ஞானத்தையுடையவனைகயே பரத்வம் என்று கொள்ளவேண்டும். 'யே விது:' என்று அறிவதை மாத்திரம் சொன்னபோதிலும் வாக்யார்த்த ஜ்ஞான மாத்ரம் நேரே மோக்ஷ ஸாதனமாகாதாகையாலே, 'அறிந்து அனுஷ்டிக்கிறுர்களோ' என்று அனுஷ்டான பர்யந்தமாகப் பொருள் கொள்ளப்பட்டது. பூதப்ரக்ருதிமோக்ஷ மப்தத்தாலே இவனுக்கு அநிஷ்டமான ஸம்ஸாரம் நீங்குகிறது என்றும், "பரம் யாந்தி" என்றதால் இவனுக்கு இஷ்டமான ஆத்மாநுபவம் கிடைக்கிறது என்றும் உணர்த்தப் படுகிறது. ஆக, "க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களைப் பற்றிய தனித்தன்மைகளை அறிவதன்மூலம் அவ்விரு தத்துவங்களையும் பிரித்தறிந்து, ப்ரக்ருதியிலிருந்து விடுபடுவதற்கு உபாயமான அமாநித்வம் முதலான இருபது குணங்களையுமறிந்து எவர்கள் அனுஷ்டானத்திற்குக் கொண்டு வருகிறுர்களோ அவர்கள் ஸம்ஸாரபந்தம் நீங்கப்பெற்று எல்லையற்ற ஜ்ஞானத்தையுடைய தமது பரிசுத்தாத்மாவின் அனுபவத்தைப் பெறுகிறுர்கள்" என்னும் இந்த அத்தியாயத்தின் ஸாரார்த்தத்தைக்கூறி அத்தியாயம் நிறைவுறுத்தப்பட்டதாயிற்று. 34

ஸ்ரீ க்ருஷ்ணஸ்வாமிதாஸன் இயற்றிய கீதார்த்த விவரணத்தில்
பதின்மூன்றும் அத்தியாயம் நிறைவுற்றது.

**அவிழ் விரகு**—போவதற்கு உபாயமான, **மெய்த்தன்மை**—மெய்யான ஜீவஸ்வரூப ஜ்ஞானத்தையும், அமாநித்வாதி குணங்களையும், **ஓர்ந்த**—ஆராய்ந்த, **பதின்மூன்றும் ஒத்து**—பதின்மூன்றும அத்தியாயம், **இங்கு உரைத்து முடித்து ஆய்ந்த பொருள்**—இங்கு சொலலிமுடித்து விசாரித்த அர்த்தங்களை **அறிந்து ஆய்ந்தோம்** — ஆராய்ந்து அறிந்தோம்.

## கீதார்த்த சங்கிரகம்

(ஸ்ரீ வேதாந்த தேசிகர் அருளியது)
பதின்மூன்றும் அத்தியாயத்தின் ஸாரப்பொருள்

**ஊனின் படியு முயிரின் பிரிவு முயிர்பெறுவார்**
**ஞானம் பெறுவகை யுஞ்ஞான மீன்ற வுயிர்ப்பயனு**
**மூனின் றதற்கடி யும்முயிர் வேறிடு முள்விரகுந்**
**தேனின்ற பாதன் றெளிவித் தனன்சிலைப் பார்த்தனுக்கே.**

**தேன் நின்ற பாதன்** — தேன் தங்குகின்ற திருவடி (த்தாமரை)யையுடைய கண்ணன், **சிலைப்பார்த்தனுக்கு**—வில்லைத் தாங்கும் அர்ஜுநனுக்கு, **ஊனின் படியும்**—சரீரத்தினுடைய ஸ்வரூபமும், **உயிரின் பிரிவும்** — ஜீவாத்மா (சரீரத்தைக் காட்டிலும) பிரிந்து நிற்குந்தன்மையும், **உயிர் பெறுவார்**—ஆத்மாவை அடையவிரும்புகிறவர், **ஞானம் பெறுவகையும்**— அந்த ஆத்மஜ்ஞானத்தைப் பெறுவதற்கு வேண்டிய அமாநித்வம் முதலிய குணங்களாகிற உபாயங்களும், **ஞானம் ஈன்ற**-ஆத்மாவை அறியச் சாதனமான அந்த குணங்களால் அடையப்படுகின்ற, **உயிர்ப் பயனும்**—ஆத்மாநுபவமாகிய பலனும், **ஊன் நின்றதற்கு** —சரீரம் ஸம்ஸாரத்தில நின்று செயல்படுவதற்கு, **அடியும்** —காரணமும், **உயிர் வேறிடும்** — ஆத்மாவை (ச் சரீரத்தினின்று) வேறுபடக் காணபதற்கு வேண்டிய, **உள் விரகும்**—மனத் தெளிவும் (ஆகிய இவற்றை), **தெளிவித்தனன்**—விளக்கியருளினன்.

## கீ,தாஶ்லோகார்த்த,ச் சுருக்கம்

### பதின்மூன்றும் அத்தியாயம்

ஶ்லோ. அர்த்த₂ம்

1. ஶரீரமே க்ஷேத்ரம் எனப்படும்; அதை அறியும் ஜீவனே க்ஷேத்ரஜ்ஞன் எனப்படுவான்,
2. இரண்டுமே ஸர்வேஶ்வரனுக்கு ஶேஷமானவை என அறிவதே உண்மையறிவு.
3. இரண்டைப்பற்றியும் சுருக்கமாகச் சொல்லப்போவதாக ப்ரதிஜ்ஞை.
4. இவ்வறிவு ஸகல ப்ரமாண ஸித்₃த₄ம்.
5. 6. க்ஷேத்ரத்தைப்பற்றிய உண்மையறிவைச் சுருங்கக் கூறல்.
7-11. ஆத்ம ஜ்ஞாந ஸாத₄னமான அமாநித்வம் முதலான இருபது கு₃ணங்களைக் கூறுதல். இது க்ஷேத்ரத்தினுல் விளையும் கார்யத்தின் விளக்கமுமாகும்.
12-17. க்ஷேத்ரஜ்ஞன் எனப்படும் ஜீவனின் ஸ்வருபத்தின் விளக்கம்.
18. கார்யத்தோடுகூடிய க்ஷேத்ரத்தையும், க்ஷேத்ரஜ்ஞனையும் அறிவதின் ப₂லம்.
19-22. ஆத்மா ஶரீரத்தில் கட்டுப்பட்டிருப்பதற்குக் காரணம் ஸத்வாதி₃கு₃ணங்களால் உண்டாகும் இன்பதுன்பங்களில் பற்றேயாகும்.
23. ப்ரக்ருதி புருஷர்களைப் பிரித்தறியும் விவேக ஜ்ஞானத்தின் ப₂லம் பிறவி நீங்குதலே.
24-25. பிரித்தறியும் விவேகிகளின் பல படிகள்.
26. தே₃ஹமும் ஆத்மாவும் பிறவியிலிருந்தே அழுந்தக் கட்டப் பட்டிருப்பதால், அவற்றைப் பிரித்தறிவது அரிது.
27-33. தே₃ஹாத்மாக்களைப் பிரித்தறியும் முறையாகிற விவேகத்தை விளக்குதல்.
34. க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களைப் பிரித்தறியும் ஞானத்தின் ப₂லம் ஆத்மப்ராப்தி எனக்கூறி அத்தியாயத்தை நிறைவுறுத்தல்.

பதின்மூன்றும் அத்தியாயத்தின் கீ₃தா ஶ்லோகார்த்த₂ச் சுருக்கம் நிறைவுற்றது.

ஆளவந்தார் அருளிய
கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹம்.
[பதினாலாம் அத்தியாயத்தின் சுருக்கம்.]

गुणबन्धविधा तेषां कर्तृत्वं तन्निवर्तनम् ।
गतित्रयस्वमूलत्वं चतुर्दशे उदीर्यते ॥ १८ ॥

18. கு₃ணப₃ந்த₄வித₄ா தேஷாம் கர்த்ருத்வம் தந்நிவர்த்த[நம்]
க₃தித்ரயஸ்வமூலத்வம் சதுர்த₃ஶ உதீ₃ர்யதே ||

**கு₃ணப₃ந்த₄வித₄ா**—(ஸத்வம முதலான மூன்று கு₃ணங்கள்) ஸம்ஸாரப₃ந்த₄த்துக்குக் காரணமாகும் முறையும், **தேஷாம் கர்த்ருத்வம்** — அந்த கு₃ணங்கள் செயலுக்குக் காரணமாயிருக்கும் தன்மையும், **தந்நிவர்த்தநம்** — அந்த கு₃ணங்களை நீக்கும் முறையும், **க₃தித்ரயஸ்வமூலத்வம்** — (சிறந்த ஐஶ்வர்யம், கைவல்யம், ப₄க₃வத்ப்ராப்தி என்னும்) மூன்று ப்ராப்யங்களும தன்னிடமிருந்தே கிடைக்கின்றன என்பதும், **சதுர்த₃ஶே**—(கீ₃தையின்) பதினாலாமத்தியாயத்தில, **உதீ₃ர்யதே**—சொல்லப்படுகிறது.

வாதிகேஸரி ஜீயர் அருளிய
ப₄க₃வத்₃கீ₃தை வெண்பா—அத்தியாயம்-14.
கு₃ணத்ரய விப₄ாக₃யோக₃ம்
அத்தியாயப்பொருளின் சுருக்கம்

முக்குணங்கள் பந்தத்து மூட்டுகின்ற நேர்பதுவு
மக்குணங்க ணீங்குவிக்கு மவ்விரகு — மிக்குயர்ந்த
கீதை பதினலா மோதத்துக் கிளர்ந்துரைக்கும்
போதத் தியல்பாற் புரிநது.

**மிக்கு உயர்ந்த கீதை பதினலாம் ஒத்து**—மிகச்சிறந்த கீ₃தையின பதினாலாம அத்தியாயம் **முக்குணங்கள் பந்தத்து மூட்டுகின்ற நேர்பு அதுவும்** — (ஸத்வம் முதலிய) மூன்று

श्रीः

## ॥ अथ चतुर्दशोऽध्यायः ॥

भा ॥ त्रयोदशे प्रकृतिपुरुषयोरन्योन्यसंसृष्टयोः स्वरूपयाथात्म्यं विज्ञायामानित्वादिभिर्भगवद्भक्त्यनुगृहीतैर्बन्धान्मुच्यत इत्युक्तम् । तत्र बन्धहेतुः पूर्वपूर्वसत्त्वादिगुणमयसुखादिसङ्ग इति चाभिहितं * कारणं गुणसङ्गोऽस्य सदसद्योनिजन्मसु (२१) इति । अथेदानीं गुणानां बन्धहेतुताप्रकारो गुणनिवर்तनप्रकारश्चोच्यते ।

---

குணங்கள் ஸம்ஸார பந்தத்தில (தாமே செயலுக்குக் காரணமாயிருந்து) நன்றாகக் கட்டிவிடுகின்ற முறையையும், **அக்குணங்கள் நீங்குவிக்கும் அவ்விரகும்**—அந்த குணங்களை நீங்கச்செய்யும் முறையையும், **போதத்து இயல்பால்**—அறிவிக்கவேண்டிய முறையில், **புரிந்து**—விருப்பத்தோடு, **கிளர்ந்து உரைக்கும்**—உறுதியாகக்கூறும.

### ஸ்ரீக்ருஷ்ண ஸ்வாமிதேசிகன் இயற்றிய
### கீதார்த்த விவரணம்
### பதினாலாம் அத்தியாயம
### முன் அத்தியாயத்தோடு ஸங்கதியும், இவ்வத்தியாயார்த்தச் சுருக்கமும்.

சென்ற அத்தியாயத்தின் தொடக்கத்திலிருந்து பதினெட்டாவது ஸ்லோகமீறாக ஒன்றோடொன்று சேர்ந்திருக்கும் ப்ரக்ருதி புருஷர்களைப்பற்றிய உண்மையறிவு விளக்கப்பட்டது. இதனிடையே ஏழுமுதல் பதினோராவது ஸ்லோகமீறாக க்ஷேத்ரகார்யமாய், ஆத்மப்ராப்திக்குப் பரம்பரயா காரணமான அமாநித்வம் முதலான இருபது குணங்கள் விளக்கப்பட்டன. அத்தியாயம் முழுவதிலும், 'முற்கூறிய ப்ரக்ருதி புருஷர்களைப் பகுத்தறிந்து பக்தியோகத்தால் அநுக்ரஹிக்கப்பெற்ற முற்கூறிய குணங்களாலே ஸம்ஸாரபந்தம் நீங்கப்பெற்று ஆத்மாவை அடைகிறான்' என்று கூறப்பட்டது. இடையே பத்தொன்பது முதல் இருபத்துமூன்றுவது ஸ்லோகம் ஈறாக "ஆத்மா ஶரீரத்தில் கட்டுப்பட்டிருப்பதற்குக் காரணம் மேன்மேலே ஸத்வாதி குணங்களால் உண்டாகும் இன்பதுன்பங்களில் பற்றே" என்றும் உணர்த்

श्रीभगवानुवाच —

परं भूयः प्रवक्ष्यामि ज्ञानानां ज्ञानमुत्तमम् ।
यज्ज्ञात्वा मुनयस्सर्वे परां सिद्धिमितो गताः ॥ १-

ஸ்ரீப₄க₃வாநுவாச-

**1. பரம் பூ₄ய: ப்ரவக்ஷ்யாமி ஜ்ஞாநாநாம் ஜ்ஞாநமுத்தமம் ।**
**யத் ஜ்ஞாத்வா முநய: ஸர்வே பராம் ஸித்₃தி₄மிதோ க₃தா: ॥**

**பரம்** — (முன்சொன்னதைக் காட்டிலும்) வேருன தொனறை, **பூ₄ய: ப்ரவக்ஷ்யாமி**—(முன் சொன்னதின் விளக்கமாக) மறுபடியும் சொல்லுகிறேன்; **யத் ஜ்ஞாத்வா**— எந்த அறிவை அடைந்து, **ஸர்வே முநய:** — அதை மனனம் செய்யும் அனைவரும், **இத:**—இந்த ஸம்ஸாரமண்ட₃லத்திலிருந்து, **பராம் ஸித்₃தி₄ம க₃தா:** — (தம்) பரிஶுத்₃த₄ாத்ம ஸ்வரூபத்தை அடைவதாகிற மேலான பேற்றைப் பெற்றனரோ, (அது) **ஜ்ஞாநாநாம் உத்தமம் ஜ்ஞாநம்** — (ப்ரக்ருதி புருஷர்களைப்பற்றிய) அறிவுகளில் மேலான அறிவு;

**1. மற்றுமுனக் கன்ன மனனறிவின் மேலறிவை**
**யுற்றுணரும் வண்ண முரைக்கின்றே—னற்றமறை**
**யாதறிந்து மாமுனிவ ரிப்பவம்விட் டெய்தினர்**
**மீதமருந் தன்மையினை மிக்கு.**

**அற்றம் அறை யாது அறிந்து**—உண்மையை உரைக்கும் எதை அறிந்து, **மாமுனிவர்**—அதை மனனம் செய்யும் சிறந்த யோகிகள, **இப்பவம் விட்டு** — இந்த ஸம்ஸார மண்ட₃லத்தை விட்டு, **மீது அமரும் தன்மையினை** — பரிஶுத்₃த₄ாத்ம ஸ்வரூபத்தை அடைவதாகிற மேலான பேற்றை, **மிக்கு எய்தினர்**—சிறப்புடன் அடைந்தனரோ, **அன்ன** - அததன்மையதாய், **மனன் அறிவின் மேல் அறிவை**—

---

தப்பட்டது. இவ்வத்தியாயத்தில் அதற்கு விளக்கமாக, முற்கூறிய மூன்று கு₃ணங்கள் ஸம்ஸார ப₃ந்த₄த்தில் மூட்டும் முறையும், அவற்றை எப்படி நீக்குவது என்பதும் முக்கியமாகக் கூறப்படுகின்றன. ப்ராஸங்கி₃கமாக, ஸத்வாதி₃கு₃ணங்கள் செயலுக்குக் காரணமாயிருக்கும் தன்மையும், ஐஶ்வர்ய கைவல்ய ப₄க₃வத் ப்ராப்திகளாகிற மூன்று ப்ராப்யங்களும் தன்னைத் தஞ்சமாகப்பற்றியவர்களுக்கே ஸித்₃தி₄க்கும் என்பதும் காட்டப்பட்டது.

भा ॥ परम्-पूर्वोक्तादन्यत् प्रकृतिपुरुषान्तर्गतमेव सत्त्वादिगुण-विषयं ज्ञानं भूयः प्रवक्ष्यामि । तच्च ज्ञानं सर्वेषां प्रकृतिपुरुषविषयज्ञानानां

---

(ப்ரக்ருதி புருஷர்களைப் பற்றிய) மனத்தால அறியும் அறிவுகளுக்குள மேலான அறிவை, **மற்றும்** — மறுபடியும், **உனக்கு** — உனக்கு, **உற்றுணரும் வண்ணம் உரைக்கின்றேன்** — நன்கு அறியலாம்படி கூறுகின்றேன்.

---

1. முன் அத்தியாயத்தில் சுருக்கமாகச் சொல்லப்பட்ட ஆத்ம ப்ராப்தி காரணமான ஒரு விஷயத்தையே இவ்வத்தியாயத்தில் விளக்கமாகக் கூறப்போவதாகச் சொல்லுகிறான் கண்ணன். (பரம் ப்ரவக்ஷ்யாமி) முன்சொன்னதைக் காட்டிலும் வேறொன்றைக் கூறுகிறேன். 'உத்தமம்' என்று அடுத்த பாத₃த்திலுள்ள சொல்லோடு புநருக்தி வராமலிருப்பதற்காக, 'பரம்' என்பதற்கு, 'மேலானதை' என்று பொருள்கொள்ளாமல் 'வேறொன்றை' என்று பொருள் கொள்ளப்பட்டது. (பூ₄ய; ப்ரவக்ஷ்யாமி) மறுபடியும் சொல்லுகிறேன். 'வேறொன்று' என்பதும் 'மறுபடியும்' என்பதும் முரண்படுகிறதே எனில்: சென்ற அத்தியாயத்தில் ''ஸத்வாதி₃ கு₃ணங்கள் ஸம்ஸார ப₃ந்த₄த்துக்குக் காரணமாகின்றன'' என்று சுருங்கக் கூறியதையே இவ்வத்தியாயத்தில் விரிவாக விளக்கப் போகிறானகையால், 'வேறொன்று' என்றதற்கும் 'மறுபடியும்' என்றதற்கும் முரண்பாடு இல்லை. (தத் ஜ்ஞாநாநாம் உத்தமம் ஜ்ஞாநம்) ஶ்லோகத்தின் பிற்பாதியில் 'யத்' என்று உள்ளதாகையாலே இங்கு 'தத்' என்று சேர்த்துக்கொள்ளப்படுகிறது. அது ப்ரக்ருதி புருஷர்களைப்பற்றிய எல்லா அறிவுகளைக்காட்டிலும் மேலான அறிவாகும். ''ஜ்ஞாநாநாம் உத்தமம் ஜ்ஞாநம் பூ₄ய: ப்ரவக்ஷ்யாமி'' என்று முதலிரண்டு பாத₃ங்களையும் ஒரே வாக்யமாக அந்வயித்துப் பொருள்கொள்ளலாமாயினும், 'அந்த அறிவு அவசியம் அறிய வேண்டியது' என்று ஸித்₃தி₄ப்பதற்காக, ''தத் ஜ்ஞாநாநாம் உத்தமம் ஜ்ஞாநம்'' என்று இரண்டாவது பாத₃த்தைத் தனி வாக்யமாகப் பிரித்து, ஜ்ஞானத்தின் சிறப்பை விதி₄ப்பதாகப் பொருள்கொள்ளப்பட்டது. 'ஜ்ஞாநாநாம்' என்று பொதுவாக எல்லா அறிவுகளையும் காட்டுமானாலும், ப₄க₃வத்₃விஷய ஜ்ஞானத்தைக் காட்டிலும் மேலான அறிவு ஒன்று இல்லாமையாலே, அதை நீக்கி ''ப்ரக்ருதி புருஷர்களைப்பற்றிய எல்லா அறிவுகளைக் காட்டிலும் சிறந்த அறிவு'' என்று பொருள்கொள்ளப்பட்டது.

उत्तमम् । यज्ज्ञानं ज्ञात्वा सर्वे मुनयस्तन्मननशीलाः इतः—संसार-[बन्धात्] मण्डलात्परां सिद्धिं गताः— परां —परिशुद्धात्मस्वरूपप्राप्ति-रूपां सिद्धिमवाप्ताः ॥ १ ॥

---

இனி ஶ்லோகத்தின் பிற்பாதியாலே, இந்த ஜ்ஞானத்தினால் கிடைக்கும் இஷ்டப்ராப்தி ரூபமான ப₂லனைக் கூறுகிறான்: (யத் ஜ்ஞாத்வா) எந்த ஜ்ஞானத்தை அறிந்து. (ஸர்வே முநய:) அவ்வறிவை எப்போதும் மனனம் செய்யும் அனைவரும். இந்த ஞானத்தைப்பற்றி அறிவதால்மட்டும் மேலான ஸித்₃தி₄ கிடைத்து விடாதாகையாலும், இவ்வறிவைப்பெற்று அதை மனனம் செய்ப வர்களுக்கே மேலான ஸித்₃தி₄ கிடைக்குமாகையாலும், "எந்த ஞானத்தைப்பற்றி அறிந்த முனிவர் அனைவரும்" என்று பொருள் கொள்ளாமல், "எந்த அறிவை அறிந்து அதை மனனம் செய்யும் அனைவரும்" என்று பொருள்கொள்ளப்பட்டது, (இத: பராம்) இந்த ஸம்ஸாரமண்ட₃லத்திற்கு மேலான. 'இத:' என்பதற்கு 'இந்த ஜ்ஞானத்தினால்' என்று பொருள்கொண்டு, கிடைக்க விருக்கும் மேலான ஸித்₃தி₄க்கு இந்த ஜ்ஞானம் காரணம் என்று இப்பத₃ம் காட்டுவதாகக் கொள்ளக் கூடாதோ? எனில்: இப் பத₃ம் இல்லாவிடிலும் "யத் ஜ்ஞாத்வா பராம் ஸித்₃தி₄ம் க₃தா:" என்று முற்பட்டதான ஞானத்தையும், பிற்பட்டதான பரஸித்₃தி₄ ப்ராப்தியையும் சேர்த்துப்படிப்பதாலேயே (பூ₄தபூ₄வ்ய ஸமுச் சார ந்யாயத்தாலே), முற்பட்டது பிற்பட்டதற்குக் காரணம் என்று ஸித்திக்குமாகையாலும், அடுத்து, 'மேலான ஸித்₃தி₄' என்று உள்ளவிடத்தில், 'எதற்கு மேலான?' என்னும் கேள்வி எழுகை யாலும், இப்பத₃ம் ஹேதுவைக்காட்டுவதென்று கொள்ளாமல், 'இத: பராம்' என்னும் தொடருக்கு 'இந்த ஸம்ஸார மண்ட₃லத் திற்கு மேலான' என்று பொருள் கொள்ளப்பட்டது. (பராம் ஸித்₃ தி₄ம் க₃தா:) பரிஶுத்₃த₄ாத்ம ஸ்வரூபத்தை அடைவதாகிற மேலான ஸித்₃தி₄யை அடைந்தார்களோ. ப₄க்தியோக₃த்தா லேயே கிடைக்கக்கூடிய ப₄க₃வத் ப்ராப்தி—மேல் சொல்லப் போகும் ப்ரக்ருதிபுருஷ விவேக ஜ்ஞானத்தாலும், 'ஸத்வம் முத லான முக்குணங்கள் ஸம்ஸார ப₃ந்த₄த்திற்குக் காரணம்' என்று அறிவதாலும் கிடைக்காதாகையால், 'பராம் ஸித்₃தி₄ம்' என்பதற்கு இவ்வறிவுகளால் கிடைக்கக்கூடிய பரிஶுத்₃த₄ாத்ம ப்ராப்தியே பொருளாகக்கொள்ளப்பட்டது. ஆக, "ஜீவன் ஸம்ஸார மண்ட₃

भा ॥ पुनरपि तज्ज्ञानं फलेन विशिनष्टि-
इदं ज्ञान[म]मुपाश्रित्य मम साधर्म्यमागताः ।
सर्गेऽपि नोपजायन्ते प्रलये न व्यथन्ति च ॥ २

2. இத₃ம் ஜ்ஞாந(ம)முபாஶ்ரித்ய மம ஸாத₄ர்ம்ய மாக₃தா: ।
ஸர்க்கே₃ऽபி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யத₂ந்தி ச ॥

**இத₃ம் ஜ்ஞாநம்**—(சொல்லப்போகும்) இந்த அறிவை, **உபாஶ்ரித்ய**—அடைந்து, **மம ஸாத₄ர்ம்யம்**—என்னோடு ஸாம்யத்தை, **ஆக₃தா:** — அடைந்தவர்களாய், **ஸர்க்கே₃ அபி ந உபஜாயந்தே**—(அவர்கள்) இங்கு படைக்கவும படுவதில்லை; **ப்ரளயே ந வ்யத₂ந்தி ச**— அழிக்கவும் படுவதில்லை,

2 இந்த வறிவை யினிதார்ந்திங் கென்னொப்பா
மந்த வுயர்வை யடைநதவர்கள்- பந்தமுடன்
சற்கத்தி லும்பிறவார் தாந்துயரஞ் சாரார்க
ளொற்கப் பிரளயத்தி னுள்.

**இந்த அறிவை**—(சொலலப்போகும்) இந்த ஞானத்தை, **இனிது ஆர்ந்து** — இனிதாகப்பெற்று, **இங்கு என் ஒப்பாம் அந்த உயர்வை அடைந்தவர்கள்**—இத்தேரில வீற்றிருககும் என்னோடு ஒத்திருக்கும அத்தகைய பெருமையைப் பெற்றவர்களாய், **சற்கத்திலும் பந்தமுடன் பிறவார்**—(அவர்கள்) ஸம்ஸாரத்தில் கட்டுப்பட்டுப் பிறப்பை அடைவதில்லை; **ஒற்கப்பிரளயத்தினுள் தாம் துயரம் சாரார்கள்**—மரணமாகிற துன்பத்தையும் அடைவதில்லை.

---

லத்தில் கட்டுப்படுவதற்கு ஸத்வாதி₃கு₃ணங்கள் காரணமாகின்றன; அந்தக்கட்டிலிருந்து நீங்குவதற்கு வழி யாது என்று மேலே சொல்லவிருக்கிற விஷயங்களைப்பற்றிய அறிவு, அதை மனனம் செய்யும் ஜீவனை இந்த ஸம்ஸார மண்ட₃லத்திலிருந்து விடுவித்து அவனுக்குத் தனது ஆத்ம ஸ்வரூபத்தை என்றும் அநுப₄விப்பதாகிற மேலான பயனை அளித்துவிடும்'' என்று சொல்லிற்றாயிற்று.

1.

भा ॥ इदम्--वक्ष्यमाणं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागताः—मत्साम्यं प्राप्ताः, सर्गेऽपि नोपजायन्ते- न सृजिकर्मतां भजन्ते; प्रलये न व्यथन्ति च न च संहृतिकर्मताम् [भजन्ते] ॥ २ ॥

---

2. இவ்வத்தியாயத்தில் சொல்லப்போகும் அறிவை மனனம் செய்பவர்கள் தம் ஆத்மாநுப₄வமாகிற இஷ்ட ப்ராப்தியைப் பெறுவார்கள் என்றது சென்ற ஶ்லோகத்தில்; பிறப்பு இறப்பு முதலான அநிஷ்டங்களும் நீங்கப்பெறுவார்கள் என்கிறான் இந்த ஶ்லோகத்தில், (இத₃ம் ஜ்ஞாநம் உபாஶ்ரித்ய) இவ்வத்தியாயத்தில் மேலே சொல்லப்போகும் இந்த ஜ்ஞாநத்தை அடைந்து; ‘அபாஶ்ரித்ய’ என்று பாட₂மானபோது ‘பற்றுசாகக்கொண்டு’ என்று பொருள்படுகிறது. “ஜ்ஞாநம் ப்ரவக்ஷ்யாமி” என்று இவ்வத்தியாயத்தில் மேலே சொல்லப்போவதாகச் சென்ற ஶ்லோகத்தில் எடுக்கப்பட்டதையே இங்கு “இத₃ம் ஜ்ஞாநம்” என்று அநுவாத₃ம் செய்கிறானுகையால், ‘சொல்லப்பட்ட ஞானம்’ என்று பொருள் கொள்ளாமல், ‘சொல்லப்போகிற ஞானம்’ என்று பொருள்கொள்ளப்பட்டது. (மம ஸாத₄ர்ம்யம் ஆக₃தா:) என்னோடு ஸாம்யத்தை அடைந்தவர்களாய், “அபஹதபாப்மா” முதலான எட்டு கு₃ணங்களின் ஆவிர்ப்ப₄ாவமே இந்த ஸாம்யம். இந்த ஸாம்யம் எத்தகையது என்பதை, “நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி” [முண்ட₃க 3-1-3] [ஸம்ஸார ஸம்ப₃ந்த₄மற்றவனாய் (முக்தாத்மா) என்னோடு மேலான ஒற்றுமையை அடைகிறான்] என்று ஶ்ருதியிலும் ஓதப்பட்டது. இதிலிருந்து முக்தியில் பரமனுக்கும் ஜீவனுக்கும் ஸ்வரூபைக்யம் ஏற்படுகிறது என்னும் அத்₃வைதபக்ஷம் தள்ளப்படுகிறது. இந்த வேத₃வாக்யத்தையும் “மம ஸாத₄ர்ம்யமாக₃தா:” என்னும் இப்பாத₃த்தையும் [கீ₃தை 12—3, 4, 5] ப₄ாஷ்யத்தில் கைவல்யநிஷ்ட₂ன் விஷயமாக எடுக்கையாலே, இங்கு சொல்லப்படுபவனும் கைவல்யநிஷ்ட₂னே என்றும், மறுபடியும் ஸம்ஸார ப்ராப்தியோ ப₄க₃வத் ப்ராப்தியோ இல்லாத தாழ்ந்த மோக்ஷமே கைவல்யாநுப₄வம் என்றும் கீ₃தாசார்யனுக்கும் ப₄ாஷ்யகாரருக்கும் திருவுள்ளம் எனத் தெளிவாக விளங்குகிறது. எட்டாவது அத்தியாயத்தின் வியாக்கியானத்தின் இறுதியில் இணைக்கப்பட்ட கைவல்ய ஸித்₃த₄ாஞ்ஜநத்தில் இது அசைக்க முடியாதபடி நிலைநாட்டப்பெற்றது.

भा॥ अथ प्राकृतानां गुणानां बन्धहेतुताप्रकारं वक्तुं सर्वस्य भूतजातस्य प्रकृतिपुरुषसंसर्गजत्वं * यावत्संजायते किञ्चित् (१३-२६) इत्यनेनोक्तं भगवता स्वेनैव कृतमित्याह-

मम योनिर्महद्ब्रह्म तस्मिन् गर्भं दधाम्यहम्।
संभवस्सर्वभूतानां ततो भवति भारत॥ ३

3. மம யோநிர் மஹத்₃ ப்₃ரஹ்ம தஸ்மிந் க₃ர்ப்ப₄ம் த₃தா₄ம்யஹம் ।
ஸம்ப₄வஃ ஸர்வபூ₄தாநாம ததோ ப₄வதி ப₄ாரத ॥

ப₄ாரத — ப₄ரதகுலத்துதித்தவனே! யோநி: — (உலகனைத்துக்கும்) காரணமாய், மம எனனுடையதாய் மஹத் — பெரிதாயிருப்பதாய், ப்₃ரஹ்ம யத் — 'ப்₃ரஹ்மம' எனப்படும் மூலப்ரகருதி யாதொனறுண்டோ. தஸமிந் — அதில், க₃ர்ப்ப₄ம் — (சேதனஸமஷ்டிரூபமான) க₃ர்ப்ப₄த்தை, அஹம் த₃த₄ாமி — நான் த₄ரிக்கச்செய்கிறேன்; தத: — இப்படி இரண்டையும் சேர்ப்பதால், ஸர்வபூ₄தாநாம் — (பிரமன் முதல் புலஈருகவுள்ள) எல்லா ஜீவராசிகளின், ஸம்ப₄வ: — பிறப்பும், ப₄வதி — உண்டாகிறது.

---

சென்ற ஶ்லோகத்தில் "பராம் ஸித்₃தி₄ம்" என்றதின் விவரணமான கு₃ணஷ்டகத்தின் ஆவிர்ப₄ாவத்தை ஶ்லோகத்தின் முதற்பாதியிலே சொல்லி, "இத: பராம்" என்றதின் விவரணமான ஸம்ஸார மோசனமாகிற அநிஷ்டநிவ்ருத்தியைப் பிற்பாதியிலே விளக்குகிறுன் — (ஸர்க்கே₃ऽபி நோபஜாயந்தே) ஸம்ஸார மண்ட₃லத்தில் ஸ்ருஷ்டிக்கு விஷயமாகிப் பிறப்பதில்லை. (ப்ரளயே ந வ்யத₂ந்தி ச) ப்ரளயம் எனப்படும் ஸம்ஹாரத்திற்கு விஷயமாகி மரணத்துன்பத்தை அநுப₄விப்பதுமில்லை. 'ப்ரளயத்தில் துன்புறுவதில்லை' என்று ஶப்₃த₃ார்த்த₂மாயிருந்தபோதிலும், 'ஸ்ருஷ்டிக்கு விஷயமாகிப் பிறப்பதில்லை' என்று மூன்ரும் பாத₃த்தில் சொன்னதையொட்டி, 'ஸம்ஹாரத்திற்கு விஷயமாகி மரணத்துன்பத்தை அடைவதில்லை' என்று பொருள் கொள்ளப்பட்டது. ஆக, முதலிரண்டு ஶ்லோகங்களாலும் இவ்வத்தியாயத்தில் சொல்லப்போகும் அறிவினுல் விளையும் பயன் விளக்கப்பட்டதாயிற்று. 2

**3 மிக்க பிரமம் விறல்யோனி யென்றுரைக்கத்
தக்க தெனதசித்திற் சார்வுபெறத்—தொக்கவுயிர்
கெற்பத்தை யான்சேர்ப்பன் கேழ்கிளரும் பூதங்க
ளுற்பத்தி சேருமிதி லுற்று.**

**மிக்க பிரமம்**—பெரிதான ப்ரஹ்மம், **விறல் யோனி**-உலகனைத்துக்கும் காரணம், **என்று உரைக்கத்தக்கது** — என்று சொல்லத்தக்கதாய், **எனது அசித்தில்**—என்னுடையதான அசேதன மூலப்ரக்ருதியில், **சார்வுபெற**—பொருந்தியிருக்கும்படி, **தொக்க உயிர் கெற்பத்தை** — சேதன ஸமஷ்டி ரூபமான கர்ப்பத்தை, **யான்**—நான், **சேர்ப்பன்**— சேரச் செய்கிறேன்; **இதில் உற்று**—இந்தச் சேர்த்தியினால், **கேழ் கிளரும்**—பிரமன் முதல் புல் ஈருகப் பலவகையாகப் படரும், **பூதங்கள் உற்பத்தி**—எல்லா ஜீவர்களின் பிறப்பும், **சேரும்**— உண்டாகிறது.

---

3. ஸத்வம் முதலான முக்குணங்கள் ஜீவனை ஸம்ஸாரத்தில் கட்டிவைக்கும் முறையை ஐந்தாவது ஶ்லோகம் முதலாகக்கூறி, அத்யாயத்தின் இறுதியில் இந்த பந்தத்திலிருந்து விடுபடும் வழியைக் கூறுவதற்குமுன், "யாவத் ஸஞ்ஜாயதே கிஞ்சித்" [13-26] என்று 'எல்லா ஜீவராசிகளும் ப்ரக்ருதி புருஷர்களின் சேர்த்தியால் உண்டானவை' என்று சென்ற அத்தியாயத்தில் கூறப்பட்ட ப்ரக்ருதி புருஷஸம்யோகம் பகவானால் தன்னாலேயே செய்யப்பட்டது என்று இந்த ஶ்லோகத்திலும், அடுத்த ஶ்லோகத்திலும் கூறுகிறான். இதன்மூலம் மேலே சொல்லவிருக்கும் குணங்களைக்கொண்டு ஜீவனை ஸம்ஸாரத்தில் கட்டிவைப்பதும் தன்னால் செய்யப்படுவதே என்று உணர்த்துகிறான். (மம யோநிர் மஹத்ப்ரஹ்ம யத்) என்னுடையதாய், உலகனைத்துக்கும் காரணமாய், பெரியதாயிருப்பதாய், அதனாலேயே 'ப்ரஹ்ம' எனப்படுவதான மூலப்ரக்ருதி யாதொன்று உண்டோ. 'தஸ்மிந்' [அதில்] என்று மேலே வருவதால், அதற்கு ப்ரதிகோடியாக 'யத்' என்னும் பதம் வருவித்துக்கொள்ளப்பட்டது. 'மம யோநி:' [எனக்குக் காரணமானது] என்று கூட்டிப்பொருள்கொண்டால், "அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரளயஸ்ததா| மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய||" [7-6] [அர்ஜுனா!

भा ॥ कृत्स्नस्य जगतो योनिभूतं मम महद्ब्रह्म यत्, तस्मिन् गर्भं दधाम्यहम्; * भूमिरापोऽनलो वायुः खं मनो बुद्धिरेव च ।

---

நான் எல்லாவுலகிற்கும் உத்பத்திலய காரணமாயிருக்கிறேன்; என்னைக்காட்டிலும் மேலானது எதுவுமில்லை] என்று கீதையில் சொல்லியிருப்பதோடு முரண்படும்; தனக்குக் காரணமானதில் தான் கர்ப்பத்தை அளிப்பதும் பொருந்தாது; அடுத்த ஶ்லோகத்தில் "தாஸாம் ப்ரஹ்ம மஹத்யோநி: அஹம் பீஜப்ரத: பிதா" [அந்தந்த உருவங்களுக்கு 'ப்ரஹ்ம' எனப்படும் மூலப்ரக்ருதி மேலான காரணமாயிருக்கிறது. நான் அதில் சேதனஸமூஹமாகிற பீஜத்தை அளிக்கும் தந்தையாயிருக்கிறேன்] என்று கூறியிருப்பதும் விரஸமாகிவிடும். ஆகையால் உலகிற்குப் பிதாவான தான் உலகமாகிற கர்ப்பத்தை அளிக்கத்தகுந்த விகாரமடையும் பொருள் ஒன்றே இங்கு 'யோநி' ஶப்தத்தால் குறிக்கப்படுவதாகக் கொள்ளவேண்டும். அது மஹான் அஹங்காரம் முதலாக உலகங்களீருகவுள்ள விகாரப்பொருள்கள் அனைத்துக்கும் காரணமான மூலப்ரக்ருதியே என்று கொள்வதே பொருத்தம். இவ்விடத்தில் பின்வருமாறு ஓராக்ஷேபம் எழுகிறது:— உலகிற்குக் காரணமான "பெரிய ப்ரஹ்மம்" எனத்தக்கவன் பரமாத்மாவேயொழிய மூலப்ரக்ருதி ஆகாதே; "வாஸுதேவ: பரா ப்ரக்ருதி:" [ஏகாயநஶாகை] [வாஸுதேவனே மேலான ஜகத்காரணம்] "யத்பூதயோநிம்" [முண்ட 1-1-6] [பூதங்களனைத்துக்கும் காரணம் பரமாத்மாவே] "கர்த்தாரமீஶம் புருஷம் ப்ரஹ்மயோநிம்" [முண்ட 3-1-3] [உலகைப்படைத்த நிமித்தகாரணனும், உபாதான காரணமுமாய் 'ப்ரஹ்ம' எனப்படும் நியாமகனான பரமபுருஷனை] முதலானவிடங்களில் அவனேயன்றோ ஜகத்காரணனாக ஓதப்படுகிறான்; அப்படியிருக்க, "மம யோநி:" என்று அவனை ஜகத்காரணத்தைக் காட்டிலும் வேறாக இங்கு எப்படிப் படிக்கமுடியும்? மேலும் 'ப்ரஹ்ம' என்னும் சொல்லே ப்ரக்ருதியைச் சொல்லமாட்டாதது; அப்படியிருக்க, "மஹத் ப்ரஹ்ம" என்று ப்ரக்ருதியைக் கூறுவதாகச் சொல்லுவது சிறிதும் பொருந்ாதே; ஆகையால், "ப்ரஹ்மபுச்சம் ப்ரதிஷ்டா" [தைத் — ஆநந்தவல்லீ-5] முதலானவிடங்களிற்போலே ப்ரஹ்மஸ்வரூபமே இங்கும் "மம யோநி:" [என்னுடைய ஜகத்காரணமான ஸ்வரூபம்] என்று வேறுபட்டதுபோல ஔபசாரிகமாக

अहङ्कार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा ॥ अपरेयम् (७ ४) इति निर्दिष्ट अचेतनप्रकृतिर्महदहङ्कारादिविकाराणां कारणतया महद्ब्रह्मेत्युच्यते । अन्यत्रापि क्वचित्प्रकृतिरपि ब्रह्मेति निर्दिश्यते * यस्सर्वज्ञस्सर्वविद्यस्य ज्ञान

---

வழங்கப்படுகிறது என்றே கொள்ளவேண்டும்—என்பது அவ்வாக்ஷேபம். இதற்கு ஸமாதாநம் பின்வருமாறு:— முன் இரண்டு ஷட்கங்களில் சொல்லப்பட்ட அர்த்தங்களை விளக்குவதற்காகவே எழுந்தது இந்த மூன்றாவது ஷட்கம். அதில் "பூமிராபோऽநலோ வாயு: கம் மநோ புத்திரேவ ச | அஹங்கார இதீயம் மே பிந்நா ப்ரக்ருதிரஷ்டதா || அபரேயம்" [கீதை 7—4] என்னுமிடத்தில் தனக்கு ஶேஷபூதமாகச் சொல்லப்பட்ட அசேதன மூலப்ரக்ருதியே இங்கு ப்ரக்ருதி ஶப்தத்தோடு ஒரே பொருளை உடைய 'யோநி' ஶப்தத்தால் சொல்லப்படுகிறது என்றும், அங்கு "இதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம்| ஜீவபூதாம்" [கீதை 7-5] என்று அந்தத் தாழ்ந்த அசேதந ப்ரக்ருதியை தரிப்பதாகக் கூறப்பட்ட மேலான ப்ரக்ருதியான ஜீவஸமூஹமே இங்கு அசேதன ப்ரக்ருதியாகிற யோநியில் கர்மாநுபவத்திற்காகச் சேர்க்கப்படும் கர்ப்பம் என்று கூறப்படுகிறது என்றும் கொள்வதே பொருத்தமானது. "ஏதத்யோநீநி" [கீதை 7-6] என்று அங்கும் ப்ரக்ருதியைக் குறித்து யோநிஶப்தம் வழங்கப்பட்டதும் குறிக்கொள்ளத் தக்கது. அந்த மூலப்ரக்ருதி பெரிதான பஞ்சபூதங்களுக்கும், அவற்றுக்குக் காரணமான அஹங்காரத்திற்கும், அதற்குக் காரணமான 'மஹான்' என்னும் தத்துவத்திற்கும் காரணமாயிருந்துகொண்டு அந்தந்தக் கார்யப்பொருள்களைக் காட்டிலும் மிகப்பெரிதாயிருக்கையால் அதை "மஹத் ப்ரஹ்ம" என்று குறிப்பதும் பொருத்தமே. ப்ரஹ்ம ஶப்தமும் காரணத்வத்தை யிட்டும், பெரிதாயிருப்பதையிட்டும் பரப்ரஹ்மமல்லாத மூலப்ரக்ருதிவிஷயமாகவும் ஜீவவிஷயமாகவும் ஶாஸ்த்ரங்களில் வழங்கப்படுவதைக் காண்கிறோம. "யஸ்ஸர்வஜ்ஞ: ஸர்வவித் யஸ்ய ஜ்ஞாநமயம் தப: | தஸ்மாதேதத்ப்ரஹ்ம நாம ரூபமந்நம் ச ஜாயதே ||" [முண்டக 1-1-10] [எவனொருவன் எல்லாப் பொருள்களின் ஸ்வரூப ஸ்வபாவங்களை அறிகிறானோ, (உலகைப் படைப்பதற்கு) ஞானமயமான ஸங்கல்பத்தை எவன் செய்கிறானோ,

मयं तपः । तस्मादेतद्ब्रह्म नाम रूपमन्नं च जायते ॥ (मु. १.१.१०) इति ; ※ इतस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम् । जीवभूताम् (७ ५) इति चेतन-पुञ्जरूपा या परा प्रकृतिर्निर्दिष्टा सेह सकलप्राणिबीजतया गर्भशब्देनोच्यते।

---

அவனிடமிருந்து, மஹதா₃தி₃களுக்குக் காரணமாகவும் பெரிதாகவு மிருக்கையாலே 'ப்₃ரஹ்ம' எனப்படும் மூலப்ரக்ருதி நாமரூபங்களை யுடையதாய், பூ₄மி முதலானவையாகப் பிறக்கிறது] என்னும் வேத₃ வாக்யத்தில் மூலப்ரக்ருதி ப்₃ரஹ்ம ஶப்₃த₃த்தால் குறிக்கப்படுவதைக் காணலாம். இப்படி மூலப்ரக்ருதியை ஜக₃த்காரணமாகக் கொள்வது, பரமாத்மாவை உலகிற்கு உபாதா₃னகாரணமாகக் கொள்வதோடு ஒத்திருப்பதேயொழிய முரண்பட்டதல்ல; விகாரமற்றவனான பரமாத்மாவுக்கு மூலப்ரக்ருதியை ஶரீரமாகக் கொண்டிருக்கையையிட்டன்றோ ஜக₃து₃பாதா₃நகாரணத்வம் ஒப்புக்கொள்ளப் படுகிறது. அதனாலன்றோ ஏழாம் அத்தியாயத்திலும் "ஏதத்₃ யோநீநி பூ₄தாநி" என்று சேதநாசேதனங்களை உபாதா₃னமாகக் கூறி, உடனே "அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜக₃த: ப்ரப₄வ:ப்ரலயஸ் ததா₂" [7—6] என்று தன்னையே உலகனைத்துக்கும் உத்பத்தி லயகாரணமான உபாத₃ானமாகக் கூறிக்கொண்டான் கண்ணன். ஆகையால், முற்கூறிய ஆக்ஷேபம் பொருந்ாது. (தஸ்மிந் க₃ர்ப்ப₄ம் த₃தா₄ம்யஹம்) மூலப்ரக்ருதியாகிற அந்தத் தாழ்ந்த ப்ரக்ருதியில், "இதஸ் த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்₃தி₄ மே பராம் | ஜீவபூ₄தாம்" [7-5] [இந்த அசேதன ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்டதாய், மேலான ப்ரக்ருதியான ஜீவ ஸமூஹத்தையும் என்னுடையதென்று அறிவாயாக] என்று கூறப்பட்ட மேலான ப்ரக்ருதியான ஜீவஸமூஹமாகிற க₃ர்ப்ப₄த்தை நான் த₄ரிக்கச் செய்கிறேன். "மம யோநி:" என்று அசேதநப்ரக்ருதி நினைவுறுத்தப்படுகையால், அதில் சேர்க்கப்படும் 'க₃ர்ப்ப₄ம்' அதைக்காட்டிலும் மேலானதாக முன் [7-5-ல்] படிக்கப்பட்ட சேதனப்ரக்ருதியாகவே இருக்கவேண்டும்; இந்த ஶ்லோகத்தின் பிற்பாதியில் "எல்லா ஜீவராசிகளின் பிறப்பு இதனால் உண்டாகிறது" என்று கூறியிருப்பதும் இதை வலியுறுத்துகிறது; ஆகையால் 'க₃ர்ப்ப₄' ஶப்₃த₃ம் ஜாத்யேகவசநமாய், ஸகல ப்ராணிகளுக்கும் பீ₃ஜமாய் (காரணமாய்) இருக்கையையிட்டு ஜீவஸமூஹத்தைக் குறிக்கிறது என்றே கொள்ள வேண்டும்;

तस्मिन्नचेतने योनिभूते महति ब्रह्मणि चेतनपुञ्जरूपं गर्भं दधामि, अचेतनप्रकृत्या भोगक्षेत्रभूतया भोक्तृवर्गपुञ्जभूतां चेतनप्रकृतिं संयो-

---

"அசேதனப் பொருள்களுக்கெல்லாம் காரணமாய், அதனாலேயே 'மஹத் ப்₃ரஹ்ம' என்று அழைக்கப்படும் மூலப்ரக்ருதியாகிற க₃ர்ப்ப₄ப்பையில் சேதன ஸமூஹமாகிற க₃ர்ப்ப₄த்தை நான் த₄ரிக்கச் செய்கிறேன்" என்பது ஶ்லோகத்தின் முற்பாதியின் திரண்ட பொருள். இங்கு ஒரு கேள்வி எழுகிறது. "'யயேத₃ம் த₄ார்யதே ஜக₃த்' [7–5] என்று முன் அத்தியாயத்தில் மேலான ப்ரக்ருதியான சேதன ஸமூஹம் தாழ்ந்த ப்ரக்ருதியான அசேதன மூலப்ரக்ருதியை த₄ரிக்கிறது என்று சொல்லப்பட்டது அப்படியிருக்க, 'தஸ்மிந் க₃ர்ப்ப₄ம் த₃த₄ாம்யஹம்' என்று அசேதன மூலப்ரக்ருதியை த₄ரிக்கும் க₃ர்ப்ப₄ப்பையாகவும், சேதனப்ரக்ருதியை த₄ரிக்கப் படும் க₃ர்ப்ப₄மாகவும் சொன்னது எப்படிப் பொருந்தும்?" என்பது அவ்வாக்ஷேபம். இதற்கு ஸமாத₄ானம் பின்வருமாறு: க₃ர்ப்ப₄ப்பை த₄ரிப்பதாகவும் க₃ர்ப்ப₄ம் அதற்குள் அடங்கி அதனால் த₄ரிக்கப்படுவதாகவும் இருக்கும் ஆகாரத்தையிட்டு இங்கு இந்த த்₃ருஷ்டாந்தம் சொல்லப்படவில்லை. க₃ர்ப்ப₄ப் பையும் க₃ர்ப்ப₄மும் க₃ர்ப்ப₄ ஶப்₃த₃த்தால் வழங்கலாம்படி ஒன்று சேர்ந்திருப்பதுபோலே, அசேதனமான ஶரீரத்தில் சேதன வஸ்து ஒன்று சேர்ந்திருக்கிறது என்னும் ஆகாரத்தையிட்டும், க₃ர்ப்ப₄த்தை க₃ர்ப்ப₄ப்பையில் சேர்ப்பதற்கு, கர்மத்திற்கு வசப் பட்ட ஜீவர்களுடைய கர்மாநுப₄வம் முக்₂ய ப்ரயோஜனமாயிருப் பதுபோலே தே₃ஹத்தில் ஜீவனைச் சேர்ப்பதற்கும் அவனுடைய கர்மாநுப₄வமே முக்₂யப்ரயோஜனம் என்னும் ஆகாரத்தையிட் டுமே இந்த த்₃ருஷ்டாந்தம் சொல்லப்படுகிறது என்று ஸமா த₄ானம் கண்டுகொள்வது. இனி, பிற்பாதியாலே இந்தச் சேதனா சேதனச் சேர்த்தியாலேயே எல்லா ஜீவராசிகளின் பிறப்பும் ஏற் படுகிறது என்று கூறுகிறான். மூலப்ரக்ருதியாகிற க₃ர்ப்ப₄ப் பையில் அண்டத்தில் படைக்கப்படும் எல்லா ஜீவர்களையும் தன் ஶரீரத்தில்கொண்ட ஸமஷ்டிபுருஷனான பிரமனை க₃ர்ப்ப₄ம்போலே சேர்த்ததை முற்பாதியில் கூறுகிறது என்றும், அந்தப் பிரமனால் அந்தந்த ஸ்ருஷ்டி காலங்களில் செய்யப்படும் நாலுவகை யான யோனிகளின் பிறப்பும் பிற்பாதியில் கூறப்படுகிறது என்

जयामीत्यर्थः । ततस्तस्मात्प्रकृतिद्वयसंयोगान्मत्संकल्पकृतात्सर्वभूतानां ब्रह्मादिस्तम्बपर्यन्तानां संभवो भवति ॥ ३ ॥

---

றும் கண்டுகொள்வது. (தத:) முற்கூறிய சேதநாசேதனச் சேர்த்தியாலே, 'தத:' என்னும் பத3த்திற்கு, 'பிறகு' என்றும் பொருள் கொள்ளலாமாயினும் அப்பொருளில் பயன் அதிகமாக இல்லை. 'பிறகு ஏற்படுவது' என்பதால் முந்தியது காரணம், பிந்தியது அதன் விளைவு என்று தாத்பர்யார்த்த2ம் சொல்வதே பயனுடையது. அதைவிட 'தத்' என்பதற்கு 'அதுகாரணமாக' என்று பொருள் கொண்டுவிட்டால் இந்தத் தாத்பர்யார்த்த2ம் நேரே ஶப்3த3ார்த்த2மாகவே ஸித்3தி4த்துவிடும். ஆகையாலே, அப்பொருள் கொள்ளப்பட்டது. "க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞஸம்யோகா3த்" [13-26] என்னுமிடத்தில் இந்த ஹேது காட்டப்பட்டுமிருக்கிறது. அங்கு 'சேதநாசேதன ஸம்யோக3ம் மாத்திரம் சொல்லப்படுகையாலே, அந்த ஸம்யோக3ம் ஸாங்க்2யமதரீதியில் தானே விளைகிறதோ' என்னும் ஐயம் ஏற்படும். இங்கு "தஸ்மிந் க3ர்ப்ப4ம் த3த4ாமி" என்று கூறுவதன்மூலம் அந்த ஸம்யோக3ம் ஸர்வேஶ்வரனால் தன்னால் விளைகிறது என்று காட்டப்பட்டு, முற்கூறிய ஐயம் தவிர்க்கப்படுகிறது. (தத: ஸர்வபூ4தாநாம் ஸம்ப4வ: ப4வதி) முற்பாதியில் கூறப்பட்ட என் ஸங்கல்பத்தால் உண்டான சேதநாசேதனச் சேர்த்தியாலே பிரமன் முதல் புல் ஈருகவுள்ள எல்லா ஜீவராசிகளின் பிறப்பும் ஏற்படுகிறது. முற்கூறியபடி மூல ப்ரக்ருதியோடு சேதன ஸமூஹத்தின் சேர்த்திக்குப் பிறகு மஹான் முதலான தத்துவங்களின் பிறப்பும் உண்டாகிறது. ஆனாலும் அந்தத் தத்துவங்களை பூ4த ஶப்3த3த்தால் சொல்லுவதில்லையாகையால் அப்பொருள் இங்கு பொருந்தாது. பூ4தஶப்3த3ம் பஞ்ச பூ4தங்களைக் குறிப்பதாகக் கொண்டாலும், ஜீவர்களின் ப3ந்த4த்திற்கு ஹேதுவைக்காட்டும் இந்த ப்ரகரணத்திற்கு அப்பொருள் பொருந்தாது. ஆகையால், பூ4தஶப்3த3ம் அசேதன தே3ஹத்தில் கட்டுப்பட்டிருக்கும் ஜீவராசிகளைக் குறிப்பதாகவே கொள்ள வேண்டும். பிரமன் முதல் புல்லீருக எல்லா ஜீவராசிகளுமே கர்மத்தால் உண்டான ஸம்ஸாரப3ந்த4த்தில் கட்டுப்பட்டிருப்பவர்களாகையாலே ஸர்வபூ4தஶப்3த3ம் பிரமன் உருத்திரன் முதலான தே3வர்கள் தொடங்கிப் புல் ஈறான தாவரங்கள் வரையிலுள்ள எல்லா ஜீவராசிகளையும் குறிக்கிறது என்று கொள்வதே பொருந்தும். பிரமன் உருத்திரன் முதலானவர்களும் ஸம்ஸார ப3ந்த4த்தில்

मा ॥ कार्यावस्थोऽपि चिदचित्प्रकृतिसंसर्गो मयैव कृत इत्याह—

सर्वयोनिषु कौन्तेय! मूर्तयस्संभवन्ति याः।
तासां ब्रह्म महद्योनिरहं बीजप्रदः पिता ॥ ४

4. ஸர்வயோநிஷு கௌந்தேய மூர்த்தய: ஸம்ப4வந்தி யா:|
தாஸாம் ப்3ரஹ்ம மஹத்3யோநி: அஹம் பீ3ஜப்ரத3: பிதா ||

**கௌந்தேய !** — குந்தீ புதரனே! **ஸர்வயோநிஷு** — தே3வர் முதலான எல்லாவகையான பிறவிகளிலும், **யா:**

---

கட்டுப்பட்டவர்களே என்னும் விஷயம் "ஆப்3ரஹ்மஸ்தம்ப3 பர்யந்தா ஜக3த3ந்தர்வ்யவஸ்தி2தா: | ப்ராணிந: கர்மஜநித ஸம்ஸாரவஶவர்த்திந: || [விஷ்ணுத4ர்மம் 104-23] [இந்த லீலா விபூ4தியின் உள்ளேயிருக்கும் பிரமன் முதல் புல் ஈருகவுள்ள எல்லா ஜீவர்களும் கர்மத்தாலுண்டான ஸம்ஸாரப3ந்த4த்துக்கு வஶப்பட்டவர்கள்] என்றும், "ப்3ரஹ்மாத்3யா: ஸகலா தே3வா: மநுஷ்யா: பஶவஸ்ததா2| விஷ்ணுமாயா மஹாவர்த்த மோஹாந்த4 தமஸாSSவ்ருதா: ||" [வி.பு. 5-30-17] [பிரமன் முதலான எல்லா தே3வர்களும், மனிதர்களும், விலங்குகளும் விஷ்ணுவின் மாயையாகிற மூலப்ரக்ருதி என்னும் பெரிய சுழலி னுல் உண்டான மயக்கமாகிற காரிருளாலே சூழப்பட்டவர்கள்] என்றும், "ஹிரண்யக3ர்ப்பே4ா ப4க3வாந்" [வி.பு. 6-7-56] என்று தொடங்கிப் பல ஶ்லோகங்களிலும் இவ்விஷயம் கூறப்பட்டது இங்கு அனுஸந்தி4க்கத்தக்கது. "அபு3த்3தி4பூர்வகஸ்ஸர்க்க3: ப்ராது3ர்பூ4தஸ்தமோமய:" [வி. பு. 1-5-4] என்று தொடங்கி, பிரமன் தன் நினைவில்லாமலே தாவரங்கள் முதலானவற்றைப் படைத்ததாகக் கூறுகையால், பிரமனைப்போலவே அவனுல் ஸ்ருஷ்டிக்கப்பட்ட புல் ஈருன தாவரங்களும் எம்பெருமானுல் படைக்கப்பட்டவையே என்று விளங்குகிறது. (பா4ரத) தே3ஹாத்ம விவேகமுடைய பல ஞானிகள் வாழ்ந்த ப4ரதகுலத்தில் பிறந்த நீ இவ்வறிவைப் பெற வேண்டாவோ என்று கருத்து. ஆக, இந்த ஶ்லோகத்தால் ப்ராக்ருத நைமித்திக ப்ரளயங்களுக்குப் பிறகு ஏற்படுகிற ஸ்ருஷ்டிகளில் பிரமனைப்படைத்து அவன் மூலமாக நாலுவகை யோனிகளாயிருக்கும் எல்லா ஜீவராசிகளையும் படைப்பவன் தானே என்று காட்டப்பட்டதாயிற்று. 3

भा ॥ सर्वासु देवगन्धर्वयक्षराक्षसमनुष्यपशुमृगपक्षिसरीसृपादिषु योनिषु तत्तन्मूर्तयो याः संभवन्ति - जायन्ते, तासां ब्रह्म महत्

---

**மூர்த்தய:** — எந்த சில ஶரீரங்கள, **ஸம்ப₄வந்தி** — உண்டாகின்றனவோ. **தாஸாம்** — அந்த ஶரீரங்களுக்கு, **மஹத் ப்₃ரஹ்ம** — (சேதனர்களோடு கூடிய கார்யநிலையிலுள்ள) மூலப்ரக்ருதி, **யோநி:** — காரணம். **அஹம்** — நான் **பீ₃ஜப்ரத₃:** - (அவரவர்கர்மாநுகு₃ணமாக) சேதனவர்க்க₃த்தைச்சேர்க்கும், **பிதா** — தந்தையாகிறேன்.

**4. இங்குலகில் யோனிகளா மெத்திறத்து மூர்த்திகளா**
**யங்குதயஞ் செய்யு மவைதமக்குப்—பங்கமிலா**
**விந்தப் பிரமமே யோனி கருவளிக்கு**
**மந்தப் பிதாநானே யாங்கு.**

**இங்கு உலகில் யோனிகளாம்** — இவ்வுலகிலுள்ள தே₃வர் முதலான பிறவிகளில் சேர்ந்த, **எத்திறத்து மூர்த்திகளாய்** - எந்தவகையான ஶரீரங்களாகவும், **அங்கு உதயம் செய்யும் அவை தமக்கு** — ஆங்காங்கு பிறக்கின்ற அந்த ஶரீரங்களுககு **பங்கமிலா இந்த பிரமமே** — (சேதனர்களோடு கூடிய கார்யநிலையிலுள்ள) அழிவிலலாத இந்த மூலபரக்ருதியே, **யோனி** — காரணம், **ஆங்கு** — அவை விஷயத்தில, **கரு அளிக்கும் அந்த பிதா** — (அவரவர் கர்மாநுகு₃ணமாசச்) சேதனவர்க்க₃மாகிற க₃ர்ப்ப₄த்தைச் சேர்க்கும் தந்தை, **நானே** — நானேயாவேன்.

---

4. இனி, கார்ய நிலையில் ஒவ்வொரு ஜீவனுலும் செய்யப்படும் தேஹாத்மச் சேர்த்தியாகிற நித்யஸ்ருஷ்டியும் தன்னுல் செய்யப்படுவதே என்று கூறுகிருன் இந்த ஶ்லோகத்தில். இக்காரணத்தாலேயே ப்ராக்ருத நைமித்திக ஸ்ருஷ்டிகளைச் சொன்ன சென்ற ஶ்லோகத்துக்கும் நித்யஸ்ருஷ்டியைச் சொல்லும் இந்த ஶ்லோகத்துக்கும் புநருக்தியில்லை. (ஸர்வயோநிஷு) பிரமன் செய்யும் தே₃வ மநுஷ்ய திர்யக் ஸ்த₂ாவர ரூபமான நாலு வகை ஸ்ருஷ்டிக்குப் பிறகு உண்டான தேவர்கள், க₃ந்த₄ர்வர்கள், யக்ஷர்கள், ராக்ஷ

योनिः--कारणम्; मया संयोजितचेतनवर्गा महदादिविशेषान्तावस्था प्रकृतिः कारणमित्यर्थः । अहं बीजप्रदः पिता — तत्रतत्र च तत्तत्कर्मानुगुण्येन चेतनवर्गस्य संयोजकश्चाहमित्यर्थः ॥ ४ ॥

---

ஸர்கள், மனுஷ்யர்கள், பலவகை விலங்குகள், பறவைகள், பாம்புகள் முதலான எல்லாப் பிறப்புக்களிலும், பிரமனுடைய படைப்புக்குப் பிறகு பிரளய காலம் வரையில் மிகப்புல்லிய ஜீவராசிகளிடமும் தினந்தோறும் உண்டாகும் ஸந்ததிகள் விஷயத்திலும் ஸர்வேஶ்வரன் தான் உதா3ஸீனனாயிருந்து அவர்களைக்கொண்டு பிறப்பிக்கிறான் என்பதில்லை. அந்த ஸந்ததிகளையும் அவற்றை உண்டாக்கும் அவர்களுக்கு அந்தர்யாமியாயிருந்து அவனே பிறப்பிக்கிறான் என்று கருத்து. (யா: மூர்த்தய: ஸம்ப4வந்தி) அதிவிசித்ரமான எந்தெந்த ஶரீரங்கள் உண்டாகின்றனவோ. உண்டாகும் ஒவ்வொரு பொருளும் ஒன்றைப்போல் ஒன்று இல்லாமல் அதிவிசித்ரமானவையாக உண்டாவதிலிருந்தே விசித்ரஶக்தியையுடைய ஸர்வேஶ்வரனால் இவை படைக்கப்பட்டவையேயொழிய அல்பஶக்தியுடைய ஒரு க்ஷுத்3ர ஜந்துவால் படைக்கப்பட்டவையல்ல என்று விளங்கும் என்று கருத்து. "ஸம்ப4வந்தி" என்றதற்கு 'உண்டாகக்கூடுமோ' என்று பொருள் கொள்ளலாமாயினும், உபாதா3ன காரணத்தைப்பற்றிக்கூறும் இப்ரகரணத்துக்கு அப்பொருள் பொருந்தாதாகையாலே, "உண்டாகின்றனவோ" என்று பொருள் கொள்ளப்பட்டது. (தாஸாம் மஹத் ப்3ரஹ்ம யோநி:) அந்த ஶரீரங்களுக்கு முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட பெரிதான மூல ப்ரக்ருதி காரணமாகும். மூலப்ரக்ருதி ஶரீரங்களுக்கு நேரே உபாத3ாநகாரணமாயிராமையால், பா4ஷ்யத்தில் உபாத3ான காரணம் என்று பத3மிடாமல் 'காரணம்' என்று பதமிடப்பட்டது. சேதனவர்க்க3த்தோடு சேர்க்கப்படாமலும், ஸர்வேஶ்வரனால் அதி4ஷ்டி2க்கப்படாமலுமிருந்தால் மூலப்ரக்ருதிமாத்ரம் காரணமாக மாட்டாதாகையாலே "என்னால் சேர்க்கப்பட்ட சேதனவர்க்க3த்தையுடையதாய், மஹான் தொடக்கமாகப் பஞ்சபூ4தங்கள் ஈருகவுள்ள கார்யநிலைகளையுடையதான மூலப்ரக்ருதி காரணம்" என்று பொருள் கொள்ள வேண்டும். (அஹம் பீ3ஜப்ரத3: பிதா) மூலப்ரக்ருதியாகிற தாயிடம் சேதனஸமூஹமாகிற பீ3ஜத்தை அளிக்கும் தந்தையாயிருப்பவன் நானே, இங்கு சில கேள்விகள் பின்வருமாறு எழுகின்றன:— (1 இங்கு பீ3ஜம் எனப்படுவது யாது? (2) தன்னைத்தந்தை என்று சொல்லலாம்படி அந்த பீ3ஜத்தை

भा ॥ एवं सर्गादौ प्राचीनकर्मवशादचित्संसर्गेण देवादियोनिषु जातानां पुनःपुनर्देवादिभावेन जन्महेतुमाह—

सत्त्वं रजस्तम इति गुणाः प्रकृतिसंभवाः ।
निबध्नन्ति महाबाहो देहे देहिनमव्ययम् ॥

---

அளிப்பது என்பது என்ன? (3) மூலப்ரக்ருதியைக் காரணமான தாயாகவும், தன்னைத் தந்தையாகவும் குறிப்பிடுவது "மூல ப்ரக்ருதியே உபாதா₃ன காரணம்; ஈஶ்வரன் நிமித்த காரணமாக மாத்திரம் இருப்பவன்" என்னும் ஸேஶ்வரஸாங்க்₂ய மதத்தைக் கூறுவது போலிருக்கிறதே; ஈஶ்வரனே உபாதா₃ன நிமித்த காரணங்கள் இரண்டுமாக இருப்பவன் என்று கூறும் ஶ்ருதிக்கு இது விருத்₃த₄மல்லவா?, (4) காரணமான தாயும் ஒன்றுயிருக்கையில், பக்ஷபாதமற்ற தந்தையும் ஒருவனுயிருக்கையில், பிறக்கும் குழந்தைகள் மிகவும் ஏற்றத்தாழ்வுடையவர்களாயிருப்பதற்குக் காரணமென்ன? இக்கேள்விகளுக்கு முறையே பதில்கள் பின்வருமாறு:— (1) முன் ஶ்லோகத்தில் 'மஹத் ப்₃ரஹ்ம யோநி:' என்று எடுக்கப்பட்ட மூலப்ரக்ருதியே இங்கும் அதே ஶப்₃த₃த்தால் எடுக்கப்படுகிறதாகையாலே, அங்கு அந்த மூலப்ரக்ருதியில் சேர்க்கப்படுவதாகச் சொன்ன க₃ர்ப்ப₄மாகிற சேதனஸமூஹமே இங்கு பீ₃ஜஶப்₃த₃த்தால் சொல்லப்படுகிறது என்று விளங்குகிறது. அந்தச் சேதனஸமூஹமே ஶரீரத்தோடு படைக்கப்படும் ஜீவராஶியாயிருப்பதும் இதை வலியுறுத்துகிறது. (2) சென்ற ஶ்லோகத்தில் கூறியபடி சேதன ஸமூஹத்தை அசேதனமான ஶரீரத்தில் சேர்ப்பதே இங்கு 'பீ₃ஜத்தை அளித்தல்' எனப்படுகிறது. (3) சென்ற ஶ்லோகத்திலேயே 'மமயோநி:' என்று மூலப்ரக்ருதி தனக்கு ஶரீரமாயிருக்கிறது என்று சொல்லப்பட்டுள்ளதாகையாலே "மூலப்ரக்ருதி விஶிஷ்டனுன எம்பெருமானே உபாதா₃ன காரணம்" என்று ஸித்₃தி₄க்கும். ஆகையால், ஶ்ருதிவிருத்₃த₄மான ஸேஶ்வர ஸாங்க்₂ய மதம் இங்கு ஆதரிக்கப்படவில்லை. (4) தாயும், பக்ஷபாத மற்ற தந்தையும் ஒன்றுயிருந்தபோதிலும் அந்தந்தச் சேதனர்களுடைய கர்மாநுகு₃ணமாகவே அவர்களுக்கு ஏற்றத்தாழ்வுள்ள ஶரீரச்சேர்த்தி ஏற்படுகிறது. (கௌந்தேய!) பரமஜ்ஞானியான குந்தீதேவியின் பிள்ளையான நீ 'ஸர்வேஶ்வரனே எல்லா ஜீவராசிகளுக்கும் காரணமாயிருப்பவன்' என்னும் ஜ்ஞானத்தைப்பெற வேண்டாவோ? என்று கருத்து. 4

5. ஸத்வம் ரஜஸ்தம இதி கு₃ணா: ப்ரக்ருதிஸம்ப₄வா: ।
நிப₃த்₄நந்தி மஹாபா₃ஹோ! தே₃ஹே தே₃ஹிநமவ்யயம் ॥

**மஹாபா₃ஹோ**—தடக்கையனை அர்ஜுனா!, **ஸத்வம் ரஜ: தம: இதி கு₃ணா:** — ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று குணங்களும், **ப்ரக்ருதிஸம்ப₄வா:** — ப்ரக்ருதியில் என்றும் சேர்ந்திருப்பவையாய், **அவ்யயம்**—(இயற்கையில்) கு₃ணத்தொடர்பினால் வரும தாழ்வில்லாதவனை, **தே₃ஹிநம்** – தே₃ஹத்திலிருக்கும் ஜீவாத்மாவை, **தே₃ஹே**—அவனது தே₃ஹத்தில், **நிப₃த்₄நந்தி**—கட்டிவைக்கின்றன.

**5. சத்துவ ரசோதமமாய்ச் சாருங் குணமூன்று**
**மொய்த்த பிரகிருதி யுள்ளவையா—மித்தகைய**
**வாருயிரைத் தேகத் தமரப் பிணிக்குமே**
**சீருயருந் தோளாய் செறுத்து.**

**சீர் உயரும் தோளாய்!**—சிறப்புகள் மிக்க தோள்களை யுடைய அர்ஜுனா! **மொய்த்த பிரகிருதி உள்ளவையாம்** — சரீரத்திற்குக் காரணமாயிருக்கும் மூலப்ரக்ருதியில் இயல்வாகச்சேர்ந்திருக்கும், **சத்துவரசோதமமாய் சாரும் குணம் மூன்றும்**— ஸத்வம், ரஜஸ, தமஸ் என்னும் ஒன்றோடொன்று சேர்ந்த மூன்று கு₃ணங்களும், **இத்தகைய ஆருயிரை**— இயல்வாக அந்த கு₃ணங்களோடு தொடர்பற்றவனாய் தே₃ஹத்தில் இருக்கும ஜீவனை, **செறுத்து** — அவனது இயல்வான பெருமையை அடக்கி, **தேஹத்து அமர பிணிக்குமே**—தே₃ஹத்தோடு பொருந்தி இருக்கும்படி கட்டி வைக்கின்றன.

---

5. "மூன்றாவது ஶ்லோகத்தில் சொன்னபடி ப்ராக்ருத நைமித்திக ஸ்ருஷ்டிகளில் ஜீவர்களுடைய முன்வினைகளுக்கு அனுகு₃ணமாகப் பரமபுருஷனுடைய ஸங்கல்பத்தாலே அசேதனமான ஶரீரத்தோடு தொடர்பு ஏற்பட்டு ஜீவன் பிறப்பது பொருந்துகிறது; அந்த முன்வினைகள் ஶரீரமாகிற பலனைக் கொடுப்பதன் மூலம் கழிந்துவிடுகின்றன. அந்தக்கர்மம் முடிந்தவுடன் அந்த ஶரீரம் அழிந்துவிடும்; ஜீவன் இயற்கையில் பரிஶுத்₃த₄னானவன். அப்படி

भा ॥ सत्त्वरजस्तमांसि त्रयो गुणाः प्रकृतेः स्वरूपानुबन्धिनः स्वभावविशेषाः प्रकाशादिकार्यैकनिरूपणीयाः

யிருக்க, நாலாவது ஸ்லோகத்தில் சொன்னபடி மறுபடியும் நித்ய ஸ்ருஷ்டிக்கு விஷயமாக இவன் எப்படிப் பிறக்க முடியும்?'' என்னும் கேள்வி எழ, ''முன் ஸ்லோகங்களில் சொன்னபடி ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் முன்வினைப்பயனால் உண்டாகும் அசித் ஸம்ப₃ந்த₄த்தால் தே₃வர் முதலான பிறவிகளில் பிறந்தவர்களுக்கு மறுபடியும் மறுபடியும் அத்தகைய பிறவிகளே ஏற்படுவதற்குக் காரணம் ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களாகிற ப்ரக்ருதியின் கு₃ணங்களே'' என்று பதிலுரைக்கிறான் இனி. (ஸத்வம் ரஜஸ் தம இதி கு₃ணா: ப்ரக்ருதி ஸம்ப₄வா:) ப்ரக்ருதியின் இயல்வான கு₃ணங்களான ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களாகிற மூன்று கு₃ணங்கள். இந்த மூன்று கு₃ணங்களும் ப்ரக்ருதியைவிட்டு என்றும் பிரியாமல் இயல்வாயிருக்கும் ஸ்வரூபநிரூபக கு₃ணங்களாகையாலே 'ப்ரக்ருதி ஸம்ப₄வா:' என்றதற்கு 'ப்ரக்ருதியிலிருந்து உண்டானவை' என்று பொருள்கொள்ள முடியாது. ஆகையால், கார்யநிலையில் இந்த கு₃ணங்கள் ஏற்றத்தாழ்வுடையவையாக ஆவதையிட்டே 'ப்ரக்ருதி ஸம்ப₄வா:' என்று சொல்லப்படுகின்றன என்று கொள்ளவேண்டும். ''ஸத்வம் ரஜ: தம: இதி கு₃ணா:'' என்று 'இதி' ஶப்₃த₃த்தையிட்டது கார்யநிலையிலிருக்கும் ப்ரக்ருதியின் கு₃ணங்களான ஶப்₃த₃ஸ்பர்ஶ ரூபரஸக₃ந்த₄ங்களைக் காட்டிலும் முக்கு₃ணங்களின் சிறப்பைத் தெரிவிப்பதற்காக. நிரூபிதஸ்வரூப விஶேஷணமாய், அநித்யமாய், வந்தேறியாயிருக்கும் ஶப்₃தா₃தி₃களைக் காட்டிலும், ஸ்வரூப நிரூபகமாயிருக்கை, நித்யமாயிருக்கை, இயல்வாயிருக்கை ஆகிய சிறப்புக்களைப் பெற்று விளங்குபவையன்றோ ஸத்வாதி₃ கு₃ணங்கள். 'ஸத்வம் முதலான முக்குணங்களே ப்ரக்ருதி த்₃ரவ்யம்' என்னும் ஸாங்க்₂யமதத்தைத் தள்ளி, முக்குணங்கள் ப்ரக்ருதியின் தனித்தன்மைகளே என்று காட்டுவதற்காக, பா₄ஷ்யத்தில் 'ஸ்வப₄ாவ விஶேஷா:' என்னும் பத₃ம் இடப்பட்டது. சேதனனுடைய தனித்தன்மைகளாயிருந்தபோதிலும் இன்ப துன்பங்கள் அசித் ஸம்ப₃ந்த₄த்தாலே வந்தேறியாயிருக்கும்; அவைபோலல்லாமல் அசித்தின் தனித்தன்மைகளான இந்த ஸத்வாதி₃ கு₃ணங்கள் இயல்வாயிருப்பவை என்று காட்டுவதற்காக பா₄ஷ்யத்தில் 'ஸ்வரூபாநுப₃ந்தி₄ந:' என்னும் பதம் இடப்பட்டது. அசித்துக்கு இயல்வாயிருந்தபோதிலும் சித₃சித்துக்களுக்குப் பொதுவாயிருக்கும் த்₃ரவ்யத்வம் முதலானவை போலல்லாமல் ஸத்வாதி₃கு₃ணங்கள் அசித்துக்கே உரியவை என்பதைக் காட்டுவதற்காக பா₄ஷ்யத்தில் 'ஸ்வப₄ாவ விஶேஷா:' என்னும் பத₃ம் இடப்பட்டது.

இதனால் "குணா: இதி பாரிபாஷிக: ஶப்த₃:, ந ரூபாதி₃வத்₃ த்₃ரவ்யாஶ்ரிதா: கு₃ணா:; ந கு₃ணகு₃ணிநோ: அந்யத்வம் அத்ர விவக்ஷிதம் |" [இங்கு கு₃ணங்கள் என்றது (ஸாங்க்₂யர்களுடைய) வழக்குச் சொல்லாகும். ரூபம் முதலான கு₃ணங்கள் ஒரு த்₃ரவ்யத்தை ஆஶ்ரயித்திருப்பதுபோலே இந்த ஸத்வாதி₃கு₃ணங்கள் ஒரு த்₃ரவ்யத்தை ஆஶ்ரயித்திருப்பவையல்ல; ஸத்வாதி₃கு₃ணங்களும் மூலப்ரக்ருதியும் வேறு என்று இங்கு கருதப்படவில்லை] என்று ஶங்கரர் பா₄ஷ்யமிட்டது கு₃ண ஶப்₃த₃ருடி₄க்குப் பொருந்தாது என்பது தெளிவு. இங்கு பின்வருமாறு ஓர் ஆக்ஷேபம் எழுகிறது:—"ஶப்₃த₃ம் முதலான கு₃ணங்களைப்போலே ஸத்வ ரஜஸ் தமோகு₃ணங்கள் ப்ரத்யக்ஷமாகக் காணப்படவில்லையே; அனுமானத்தைக்கொண்டு அதை ஸாதி₄க்கிறோம் என்று கூறினால், எப்போதுமே இந்த்₃ரியங்களுக்குப் புலப்படாத விஷயத்தில் அனுமானம் செயல்படாது என்று ப்₃ரஹ்ம ஸூத்ரத்தில் நிலைநாட்டப்பட்டுள்ளது. மேலும், என்றும் காணப்படாத காக்கையின் பற்களைப்பற்றிய உபதே₃ஶம்போலே, என்றும் காணப்படாத இந்த முக்குணங்களைப் பற்றிய உபதே₃ஶமும் பயனற்றதாகும்" என்பது அவ்வாக்ஷேபம். இதைப் பரிஹரிப்பதற்காகவே பா₄ஷ்யத்தில் "ப்ரகாஶாதி₃ கார்யைக நிரூபணீயா:" என்னும் பத₃ம் இடப்பட்டது. இதன் கருத்து வருமாறு:—"ஸத்வரஜஸ்தமோ கு₃ணங்கள் ப்ரத்யக்ஷமாயிராவிடினும், முறையே அவற்றின் கார்யங்களான ப்ரகாஶம், ப்ரவ்ருத்தி, மோஹம் ஆகியவை ப்ரத்யக்ஷமாகத் தெரிகின்றன; இந்தக் கார்யங்களுக்குச் சில காரணங்கள் இருக்கவேண்டும் என்று நாம் பொதுவாக அனுமானம் செய்யலாம். காரணமில்லாமல் கார்யமுண்டாகாதன்றோ. இந்த மூன்று கார்யங்களுக்கு முறையே ஸத்வரஜஸ்தமோ குணங்களே காரணமென்பது ஶாஸ்த்ரங்களிலிருந்து ஸித்₃தி₄க்கிறது. புலன்களுக்குப் புலப்படாததைப்பற்றிய உபதே₃ஶம் பயனற்றது என்று கூறியதும் சரியல்ல. விஷம் மரணத்தை விளைக்கக்கூடியது என்பதும், மருந்து உயிரைக் காப்பாற்றக்கூடியது என்பதும் புலன்களுக்குப் புலப்படாவிடினும், அவற்றின் தன்மையறிந்தவர்களின் உபதே₃ஶத்தைக்கேட்டு மற்றவர்கள் விஷத்தை விலக்குவதையும் மருந்தை ஏற்பதையும் காண்கிறோம். அதுபோல் இங்கும் முக்குணங்களைப் பற்றிய உபதேஶம் பயனுடையதேயாகும்" என்று கருத்து. இங்கு பின்வருமாறு மற்றொரு ஆக்ஷேபம் ஏற்படுகிறது:— "ப்ரகாஶம் முத

प्रकृत्यवस्थायामनुद्भूतास्तद्विकारेषु महदादिषूद्भूता महदादिविशेषान्तैरारब्धदेवमनुष्यादिदेहसंबन्धिनमेनं देहिनमव्ययम् — स्वतो गुणसंबन्धानर्हं देहे वर्तमानं निबध्नन्ति; देहे वर्तमानत्वोपाधिना निबध्नन्तीत्यर्थः ॥५

---

லான கார்யங்களைக்கொண்டே ஸத்வாதி₃ கு₃ணங்களை நிரூபிக்க வேண்டும் என்றால் ப்ரளய நிலையில் இன்பதுன்பங்கள் முதலான கார்யங்கள் இல்லாமையாலே அந்நிலையில் ஸத்வாதி₃கு₃ணங்களும் இல்லையென்று ஏற்படுமே; ஆகையால் இக்குணங்கள் ப்ரக்ருதிக்கு இயல்வானது என்று சொன்னது எப்படிப் பொருந்தும்?" என்பது அவ்வாக்ஷேபம். "ப்ரளயநிலையில் இக்குணங்கள் வெளிப்படாமல் உள்ளடங்கியிருக்கையாலே இன்பதுன்பங்கள் முதலான கார்யங்கள் அந்நிலையில் ஏற்படுவதில்லை. ப்ரக்ருதியின் கார்யமான 'மஹாந்' முதலானவற்றில் இவை வெளிப்படுகையாலே கார்யங்கள் விளைகின்றன" என்பது இதற்கு ஸமாதானம். இதுவே ப₄ாஷ்யத்தில் "ப்ரக்ருத்யவஸ்த₂ாயாம் அநுத்₃பூ₄தா: தத்₃விகாரேஷு மஹத₃ாதி₃ஷு உத்₃பூ₄தா:" என்னும் தொடரால் உணர்த்தப்பட்டது. "புஷ்பம் பழம் முதலானவற்றில் பிஞ்சு நிலையில் வெளிப்படாத மணம் சுவை முதலானவை பக்குவமடைந்த நிலையில் வெளிப்படுவதைக் காண்கிறோமன்றோ, அதுபோலவே இங்கும் கொள்ளவேண்டும்" என்று கருத்து. (அவ்யயம் தே₃ஹிநம் தே₃ஹே நிப₃த்₄நந்தி) இயற்கையில் இந்த முக்குணங்களோடு தொடர்புகொள்ளத் தகாதவனாயினும், மஹாந் தொடக்கமாகப் பஞ்சபூ₄தங்கள் ஈறாக உள்ள தத்துவங்களின் கூட்டாலே அமைந்த தே₃வர் மனிதர் முதலான தே₃ஹங்களில் இருக்கும் இந்த ஜீவனை இம்முக்குணங்கள் அந்த தே₃ஹத்திலேயே கட்டிவைக்கின்றன. (அவ்யயம்) இயல்வாக அறிவில் ஏற்றத்தாழ்வுகள் இல்லாத இவனை கு₃ணஸம்ப₃ந்த₄ம் அறிவில் ஏற்றத்தாழ்வுடையவனாக ஆக்கிவிடுகிறது என்று கருத்து. (தே₃ஹிநம் தே₃ஹே நிப₃த்₄நந்தி) "ஶரீரஸ்தோ₂ऽபி கௌந்தேய! ந கரோதி ந லிப்யதே" [கீ₃தை 13-31] என்று சொன்ன ரீதியில் இயல்வான நிலையில் தே₃ஹத்தில் கட்டுப்படத்தகாத இவனை, மோக்ஷமடையும்வரையில் இடையறாது தே₃ஹஸம்ப₃ந்த₄த்தை உடையவனாயிருப்பது காரணமாக இம்முக்குணங்கள் தே₃ஹத்தில் கட்டிவைக்கின்றன என்று கருத்து. "தே₃ஹே நிப₃த்₄நந்தி" என்று "முக்குணங்கள்

भा ॥ सत्त्वरजस्तमसामाकारं बन्धप्रकारं चाह-

तत्र सत्त्वं निर्मलत्वात्प्रकाशकमनामयम् ।
सुखसङ्गेन बध्नाति ज्ञानसङ्गेन चानघ! ॥ ६

6, **தத்ர ஸத்த்வம் நிர்மலத்வாத் ப்ரகாஶகமநாமயம் ।**
**ஸுக₂ஸங்கே₃ந ப₃த்₄நாதி ஜ்ஞாநஸங்கே₃ந சாநக₄ ॥**

அநக₄—குற்றமற்றவனே! **தத்ர** — ஸத்வரஜஸ்தமோ கு₃ணங்களுக்குள், **ஸத்த்வம்**—ஸத்வ கு₃ணம், **நிர்மலத்வாத்**-(ஆத்மாவின் அறிவையும் இன்பத்தையும்) மறைக்காமல் வெளிப்படுத்துவதையே இயல்வாகக் கொண்டதாகையால், **ப்ரகாஶகம்**—(ஆத்மாவுக்கு) உண்மையறிவை விளைப்பது; **அநாமயம்**—நோயற்ற வாழ்வை அளிப்பது. (அது), **ஸுக₂ஸங்கே₃ந**—இன்பத்தில் பற்றை விளைத்தும்,

---

ஜீவனை தே₃ஹத்தில் நன்கு கட்டிவைக்கின்றன" என்று இந்த ஶ்லோகத்தில் தெளிவாகச் சொல்லியிருக்க, "க்ஷேத்ரஜ்ஞம் ப₃த்₄நந்தீவ; தம் ஆஸ்பதீ₃க்ருத்ய ஆத்மாநம் ப்ரதிலப₄ந்தே" [ஜீவனை முக்குணங்கள் கட்டுவதுபோல் தோன்றுகின்றன; அவனை விஷயமாகக்கொண்டு தாங்கள் ஸத்தை பெறுகின்றன] என்று ஶங்கரர் உரையிட்டிருப்பது மூலத்துக்குச் சிறிதும் பொருந்தாது என்பது வெளிப்படை. (மஹாபா₃ஹோ) தடக்கையனே! இந்த கு₃ணப₃ந்த₄த்தை உனது பா₃ஹு ப₃லத்தைக்கொண்டு அடக்கமுடியாது, பு₃த்₃தி₄ப₃லத்தைக்கொண்டே அடக்கவேண்டும் என்று கருத்து. "தீ₃ர்க்தௌ₄ பு₃த்₃தி₄மதோ பா₃ஹூ யாப்₄யாம் ஹிம்ஸதி ஹிம்ஸித:" [பு₃த்₃தி₄யுடையவனின் அறிவுக்கைகள் தே₃ஹத்தின் கைகளைக் காட்டிலும் மிகுந்த வலிமைமிக்கவை; தே₃ஹப₃லத்தினாலே தன்னை ஹிம்ஸித்தவனையும் பு₃த்₃தி₄ப₃லமுடையவன் தனது அறிவுக்கைகளாலே ஹிம்ஸிக்கிறானன்றோ] என்று சொல்லப்பட்டதன்றோ. (மஹாபா₃ஹோ) உன்னுடைய பா₃ஹுப₃லத்தாலே நீ எதிரிகளைக் கட்டுவதுபோலே இந்த முக்குணங்கள் ஜீவனை தே₃ஹத்தில் கட்டிவைக்கின்றன என்றும் கருத்துரைக்கலாம். 5

भा ॥ तत्र सत्त्वरजस्तमस्सु सत्त्वस्य स्वरूपमीदृशम्- निर्मलत्वात् प्रकाशकम् । प्रकाशसुखावरणस्वभावरहितता निर्मलत्वम्; प्रकाशसुखजन-

---

ஜ்ஞாந ஸங்கே₃ந ச—ஞானத்தில் பற்றை விளைத்தும், ப₃த்₄நாதி—(தே₃ஹத்திலிருக்கும ஜீவனை) மேனமேலே கட்டுப் படுத்துகிறது.

6, ஆங்கவற்றிற் சத்துவந்தா னன்றழுக்கற் றார்தலினு
லீங்கொளி செய்வதுநோ யீடழித்துப்—பாங்கில்
வருஞ்சுகத்தில் மற்றறிவின் மன்னுநசை தன்னுற்
பொருந்துயிரைக் கட்டும் புணர்ந்து

ஆங்கு அவற்றில்—அந்த ஸத்வ ரஜஸ்தமோகு₃ணங் களுக்குள், சத்துவந்தான்—ஸத்வகு₃ணமானது, ஆன்று அழுக்கற்று ஆர்தலினுல—(ஆதமாவின் அறிவையும இன பத்தையும்) மறைக்காமல் நன்கு வெளிப்படுத்துவதையே இயல்வாகக் கொண்டதாகையால், ஈங்கு—இவ்வுலகில், நோய் ஈடு அழித்து—நோய்கள் இல்லாமல் செய்து, ஒளிசெய்வது—(ஆத்மாவுக்கு) உண்மை அறிவை விளைப் பது; பாங்கில் வரும் சுகத்தில—நல்ல முறையில் வரும இன்பத்திலும், மற்று அறிவில— நல்ல அறிவிலும். மன்னும்—பொருந்தி கிற்கும, நசைதன்னுல்—பற்றை விளைத்து, பொருந்து உயிரை—தே₃ஹத்தில் உளள ஜீவனை, புணர்ந்து கட்டும்—மேன்மேலே கட்டுப்படுததுகிறது.

---

6. ஸத்வரஜஸ்தமோ கு₃ணங்களின் தனி இயல்வையும், அவை ஜீவனைக்கட்டும் வழியையும் மூன்று ஶ்லோகங்களில் விவ ரிக்கத்தொடங்கி, முதல் ஶ்லோகத்தில் ஸத்வகு₃ணத்தின் தனித் தன்மையையும், அது ஜீவனைக்கட்டும் முறையையும் கூறுகிருன். (தத்ர) முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட ஸத்வம் ரஜஸ் தமஸ் என்னும் மூன்று கு₃ணங்களுக்குள். (நிர்மலத்வாத்) ஆத்மாவின் அறிவையும் இன்பத்தையும் மறைக்காமல் வெளிப்படுத்துவதையே

नैकान्तस्वभावतया प्रकाशसुखहेतुभूतमित्यर्थः । प्रकाशो-वस्तुयाथात्म्यावबोधः । अनामयम्— आमयाख्यकार्यं न विद्यत इत्यनामयम्, अरोगताहेतुरित्यर्थः । एष सत्त्वाख्यो गुणो देहिनमेनं सुखसङ्गेन ज्ञानसङ्गेन च

---

இயல்வாகக்கொண்டதாகையால். "யதா₂ ந க்ரியதே ஜ்யோத்ஸ்நா மலப்ரக்ஷாளநாந்மணே:...ஸதோ₃வ ந்ரியதே வ்யக்திம்" [ரத்தினத்தில் உள்ள மலம் (அழுக்கு) கழுவப்பட்டால் புதிதாக ஒளி உண்டாகாமல், அதில் உள்ள ஒளியே வெளிப்படுவதுபோல்] முதலான இடங்களிற்போலே, இங்கு மலஶப்₃த₃ம் ஆத்மாவின் தன்மையான ஒளி இன்பம் முதலானவற்றை மறைக்கும் இயல்வைக் குறிக்கிறது, 'நிர்மலத்வாத' என்றது 'தமோகு₃ணத்திற்குள்ள அத்தகைய மறைக்கும் இயல்பு இல்லாதிருக்கையால்' என்று பொருள்படுகிறது, 'ப்ரகாஶகம்' என்று இத்தன்மை உண்மையறிவை விளைப்பதாகக் கூறப்படுகிறது. ஆனால், மறைக்கும் இயல்பு இல்லாத ஆகாயம், வாயு முதலானவை உண்மையறிவை விளைப்பதைக் காண்கிறோமல்லோம்; ஆகையால், 'நிர்மலத்வாத்' என்றதற்கு உண்மையறிவையும் இன்பத்தையும் விளைப்பதையே இயல்வாகக் கொண்டதாகையால்' என்று தாத்பர்யார்த்த₂ம் கொள்ளவேண்டும், (ப்ரகாஶகம்) இத்தகைய இயல்பை உடையதாகையால், உண்மையறிவுக்கும், இன்பத்திற்கும் காரணமாயிருப்பது. இங்கு ப்ரகாஶத்தை மட்டும் கூறியிருந்த போதிலும், ஶ்லோகத்தின் பிற்பாதியில் 'ஸுக₂ ஸங்கே₃ந' 'ஜ்ஞாநஸங்கே₃ந' என்று ஸுக₂ஜ்ஞாநங்களிரண்டையும் ஸத்வகு₃ணத்தின் விளைவாகக் கூறியிருக்கையால், ப்ரகாஶ ஶப்₃த₃த்தை ஸுக₂த்திற்கும் உபலக்ஷணமாகக்கொண்டு 'உண்மையறிவுக்கும் இன்பத்திற்கும் காரணமாயிருப்பது' என்று பொருள்கொள்ள வேண்டும். "ஸத்வத்தோடு ரஜஸ்தமஸ்ஸுக்கள் கலந்திருக்கும் போது அவற்றின் விளைவாக 'ப்₄ரமம்' எனப்படும மயக்கமும் ஏற்படுவதைக் காண்கிறோமே. அப்போது ஸத்வத்தின் இத்தன்மை என்னுகிறது?" எனில்; ரஜஸ்தமஸ்ஸுக்களின் விளைவாக மயக்கம் ஏற்படுமிடங்களிலும் மயக்கத்திற்கு அதி₄ஷ்டா₂நமான (இருப்பிடமான) பொருளின் அறிவு விளைகிறது; இது அவ்விரு கு₃ணங்களோடு கலந்திருக்கும் ஸத்வகு₃ணத்தினால் விளைவது என்று கண்டுகொள்வது. (அநாமயம்) நோயற்ற வாழ்வை அளிப்பது. ரஜஸ்தமஸ்ஸுக்களால் விளையும் நோய்கள் இல்லாத வாழ்வை அளிப்பது ஸத்வகு₃ணம் என்று கருத்து. இந்த ஸத்வ கு₃ணம் ஜீவனைக்கட்டும் வழி ஶ்லோகத்தின் பிற்பாதியாலே கூறப்படுகிறது; ரஜஸ்தமஸ்ஸுக்களைப்பற்றிய மேல் இரண்டு ஶ்லோ

बध्नाति– पुरुषस्य सुखसङ्गं ज्ञानसङ्गं च जनयतीत्यर्थः। ज्ञानसुखयोः सङ्गे हि जाते तत्साधनेषु लौकिकवैदिकेषु प्रवर्तते; ततश्च तत्फलानुभवसाधनभूतासु योनिषु जायत इति सत्त्वं सुखज्ञानसङ्गद्वारेण पुरुषं बध्नाति। ज्ञानसुखजननं पुनरपि तयोस्सङ्गजननं च सत्त्वमित्युक्तं भवति॥ ६॥

---

கங்களிலும் பிற்பாதிகள் "தந்நிப₃த்₄நாதி" என்று தனி வாக்யமாய் அமைந்திருப்பதுபோலே, இங்கும் 'இந்த ஸத்வகு₃ணம்' என்பதை வருவித்துக்கொண்டு பிற்பாதியைத் தனிவாக்யமாகக் கொள்வது பொருத்தம். அடுத்த ஶ்லோகத்திலிருந்து 'தே₃ஹிநம்' என்னும் பதத்தையும் இங்கு வருவித்துக்கொள்ளவேண்டும். (தே₃ஹிநம் ஸுக₂ஸங்கே₃ந ஜ்ஞாநஸங்கே₃ந ச ப₃த்₄நாதி) முற்பாதியில் சொல்லப்பட்ட ஸத்வகு₃ணம் இந்த தே₃ஹத்தில் உள்ள ஜீவனை ஸுக₂த்தில் பற்றினாலும் ஞானத்தில் பற்றினாலும் கட்டுகிறது. ஜீவனுக்கு ஸுக₂ஜ்ஞானங்களில் பற்றை விளைக்கிறது என்று கருத்து. "'ப₃த்₄நாதி' என்னும் பத₃த்தால் சொல்லப்பட்ட கட்டு, கர்மப₂லாநுப₄வத்திற்காக ஏற்பட்ட தே₃ஹ ஸம்ப₃ந்த₄மேயாகும். அதற்குக் காரணம் கர்மமே. அப்படியிருக்க, ஸுக₂ஜ்ஞாநங்களில் பற்றைக் கட்டுக்குக் காரணமாகக் கூறுவது எப்படி?" எனில்: ஜ்ஞாநஸுக₂ங்களில் பற்று விளைந்தவுடன் அவ்விரண்டையும் ஸாதி₄ப்பதற்கு லௌகிக வைதி₃க ஸாத₄நங்களில் ஜீவன் முயற்சி எடுக்கிறான்; அதனால் அந்த ஸாத₄னங்களின் ப₂லனை அநுப₄விப்பதற்கு உறுப்பான பிறவிகளில் பிறக்கிறான்; இவ்வண்ணமாக ஸத்வகு₃ணம் ஸுக₂ஜ்ஞானங்களில் பற்றை விளைப்பதன் மூலம் புருஷனுக்கு தே₃ஹஸம்ப₃ந்த₄ங்களை மேன்மேலே உண்டாக்கி அவனைக்கட்டுகிறது என்று கண்டு கொள்வது. இங்கு ஓர் ஆக்ஷேபம் எழுகிறது:—"வைதி₃க (வேத₃த்தில் சொல்லப்பட்ட) ஸாத₄னங்களின் ப₂லனை அனுபவிப்பதற்குப் பிறவி எடுக்க வேண்டியது நியாயம்; லௌகிக ஸாத₄னங்களின் ப₂லனை இப்பிறவியிலேயே அநுப₄வித்துவிடலாமாகையாலே வேறு பிறவி எடுக்கவேண்டியதில்லையே; அப்படியிருக்கும்போது பா₄ஷ்யத்தில் லௌகிக ஸாத₄னங்களின் ப₂லனும் பிறவிக்குக்காரணம் என்றது எப்படிப்பொருந்தும்?" என்பது ஆக்ஷேபம். இதற்கு ஸமாதா₄னமாவது:— இங்கு பா₄ஷ்யத்தில் "லௌகிக" ஶப்₃த₃ம் "ஸ்ம்ருதியில் சொல்லப்பட்டது" என்றோ, "நிஷித்₃த₄கர்மம்" என்றோ பொருள் படுகிறதாகையால் பிறவிக்குக் காரணம் என்றது பொருந்தும்–என்பது. "லோகே வேதே₃ ச" [கீதை15-18] முதலான இடங்

रजो रागात्मकं विद्धि तृष्णासङ्गसमुद्भवम् ।
तन्निबध्नाति कौन्तेय! कर्मसङ्गेन देहिनम् ॥ ७

**7. ரஜோ ராக₃ாத்மகம் வித்₃தி₄ த்ருஷ்ணாஸங்க₃ ஸமுத்₃-
ப₄வம் |
தந்நிப₃த்₄நாதி கௌந்தேய! கர்மஸங்கே₃ந தே₃ஹிநம் ||**

கௌந்தேய—குந்தீபுத்திரனே! **ரஜ:**—ரஜோகு₃ணம் **ராக₃ாத்மகம்**—(ஆணுக்கும் பெண்ணுக்குமிடையிலான) ஆசையை விளைப்பது என்றும், **த்ருஷ்ணா ஸங்க₃ஸமுத்₃ப₄வம்**-ஶப்₃த₃ாதி₃ விஷயங்களில் ஆசையையும், புத்திரன் மித்திரன் முதலானோரிடத்தில பாசத்தையும் விளைப்பது என்றும், **வித்₃தி₄**—அறிவாயாக; **தத்**—அந்த ரஜோகு₃ணம், **தே₃ஹிநம்**—தே₃ஹத்திலிருக்கும் ஜீவனை, **கர்மஸங்கே₃ந**—செயல்களில் ஆசையை விளைத்து, **ப₃த்₄நாதி**—கட்டுகிறது,

**7. ராகமதின் தன்மை ராசதமாங் கௌந்தேயா
தாகமுடன் சங்கந் தனை விளைக்கு—மாக நினை
மற்றதுதான் கன்மத்தில் வன்னசையாற் றேகிதனை
யுற்றமரக் கட்டு முறைத்து.**

---

களில் லோகஶப்₃த₃ம் 'ஸ்ம்ருதி' என்று பொருள் கொள்ளப்பட்டதைக்காணலாம். நிஷித்₃த₄கர்மமான ஹிம்ஸை இம்மையில் ஸுக₂ ஸாத₄னமாயிருந்தபோதிலும். மறுமையில் தாழ்ந்தபிறவி எடுக்கவும் காரணமாகிறதன்றோ. அடுத்த ஶ்லோக ப₄ாஷ்யத்திலும் "தாஶ்ச புண்யபாப ரூபா:" என்று இவ்விஷயம் விளக்கப்பட்டது. இனி "ஸத்வகு₃ணமானது இவ்வண்ணமாக ஸுகத்தையும், ப்ரகாஶத்தையும் உண்டாக்குமானால், அதனால் பற்று எப்படிவிளையும்?" என்னும் கேள்வி எழுகிறது, "ஜ்ஞானஸுகங்களை உண்டாக்கும் ஸத்வம், மேன்மேலே அவற்றைப்பெறவேண்டும் என்னும் விருப்பத்தையும் விளைத்து, பீ₃ஜாங்குர (விதையும் முளையும் மாறிமாறி உண்டாகும்) நியாயத்தாலே பற்றுக்குக்காரணமாகிறது" என்பது இதற்கு பதில். (அநக₄) "ந காங்க்ஷே விஜயம்" [1—32] [நான் வெற்றியை விரும்பவில்லை] என்று கூறும் உன் விஷயத்தில் ஸத்வகு₃ணமும் பற்றை விளைக்காதாகையால், நீ கலங்க வேண்டியதில்லை என்று கருத்து.

भा॥ रजो रागात्मकम् — रागहेतुभूतम् । रागो योषित्पुरुषयोः अन्योन्यस्पृहा । तृष्णासङ्गसमुद्भवम् — तृष्णासङ्गयोरुद्भवस्थानम्.

---

**கௌந்தேயா** — குந்திபுத்திரனே! **ராகமதினை தன்மை ராசதமாம்** — ரஜோகுணம (ஆணுக்கும் பெண்ணுக்குமிடையிலான) ஆசையை விளைப்பது என்றும, **தாகமுடன** — ஶப்தம் முதலான விஷயங்களில ஆசையோடு, **சங்கம் தனை விளைக்கும் ஆகநினை** — புத்திரன் மித்திரன் முதலானோரிடத்தில் பாசத்தையும் உண்டாக்குமென்றும் அறிவாய், **மற்று அதுதான்** — மேலும் அந்த ரஜோகுணம், **தேகிதனை** — தேஹத்திலிருக்கும் ஜீவனை, **கன்மத்தில் வன்னசையால்** — செயல்களில் வலிய ஆசையை உண்டாக்கி, **உறைத்து உற்று அமரக்கட்டும்** — உறைப்புடன் தேஹத்திலேயே பொருந்தியிருக்கும்படி கட்டிவிடும்.

---

7. இந்த ஶ்லோகத்தில் ரஜோகுணத்தின் தனித்தன்மையையும், அது ஜீவனைக்கட்டும் முறையையும் கூறுகிறன். (ரஜோ ராகாத்மகம் வித்தி) ரஜோகுணம் ஆணுக்கும் பெண்ணுக்குமிடையிலான காமத்தை விளைப்பது என்று அறிவாய். இங்கு 'ராகாத்மகம்' என்று ரஜோ குணம் ராகஸ்வரூபமானது என்று கூறியிருந்தபோதிலும், ராகஶப்தம் ராகத்தின் காரணத்தை உபசார வழக்காலோ, "ரஜ்யதே அநேந இதி ராக:" [எது ராகத்திற்குக் காரணமோ அது ராகம்] என்னும் வ்யுத்பத்தியாலோ குறிப்பதாகக் கொள்ளவேண்டும்; ஏனெனில்: முன் ஶ்லோகத்தில் "ப்ரகாஶகம்" என்று ஸத்வ குணத்தை ப்ரகாஶத்திற்குக் காரணமாகவும், அடுத்த ஶ்லோகத்தில் "மோஹநம்" என்று தமோ குணத்தை மயக்கத்திற்குக் காரணமாகவும் கூறுவதையொட்டி, இங்கும் ரஜோ குணத்தை ராகத்திற்குக்காரணம் என்று கொள்வதே பொருந்தியிருக்கும். மேலே, "ரஜஸோ லோப ஏவ ச" (17) என்று ரஜோகுணத்தினல் காமத்தோடு சேர்ந்தேயிருக்கும் லோபமும் உண்டாவதாகக் கூறியிருப்பதும் இதை வலியுறுத்துகிறது. ராகஶப்தம் ஆசையைக் குறிக்கும்; இரண்டாம் பாதத்திலுள்ள 'த்ருஷ்ணா' ஶப்தமும் ஆசையைக் குறிக்கும்; இவையிரண்டுக்கும் புநருக்தி ஏற்படாமைக்காகவும், உலகில் ஆணுக்கும் பெண்ணுக்குமிடையிலான காமத்தைக் குறித்தே ராகஶப்தம் பெரும்பாலும் வழங்கப்படுகையாலும், இங்கும் ராகபதம் அதைக் குறிப்பதாகக் கொள்வது பொருத்தமானது,

तृष्णासङ्गहेतुभूतमित्यर्थः। तृष्णा-शब्दादिसर्वविषयस्पृहा; सङ्गः-पुत्रमित्रादिषु संबन्धिषु संश्लेषस्पृहा। तथा देहिनं कर्मसु-क्रियासु

(த்ருஷ்ணு ஸங்க₃ஸமுத்₃ப₄வம்) ஶப்₃த₃ ஸ்பர்ஶ ரூப ரஸ க₃ந்த₄ங்களாகிற ஐந்து விஷயங்களிலும் ஆசையாகிற த்ருஷ்ணைக்கும், புத்திரன், மித்திரன் முதலான உற்ருர் உறவினரிடம் கலந்து பரிமாறவேண்டும் என்னும் பாசமாகிற ஸங்க₃த்திற்கும் உத்பத்தி ஸ்த₂ானமாய் (காரணமாய்) இருப்பது. "த்ருஷ்ணுஸங்க₃ஸமுத்₃ப₄வம்" என்றதற்கு த்ருஷ்ணுஸங்க₃ங்களால் ரஜோகு₃ணம் விளைவதாகக் கூறுவது பயனற்றது. ரஜோகு₃ணம் த்ருஷ்ணு ஸங்க₃ங்களுக்குக் காரணமாயிருந்து ஜீவனைக் கட்டுகிறது என்று கூறுவது பயனுடையது. ஆகையால், அப்படியே பொருள் கொள்ளப்பட்டது. த்ருஷ்ணுஸங்க₃ங்கள் உண்டாகுமிடமாயிருப்பது த₄ர்மபூ₄தஜ்ஞானமேயாகையால், ரஜோகு₃ணம் அவை உண்டாகக் காரணமாயிருப்பது என்றே கொள்ளவேண்டும். "க்ஷுத்த்ருஷ்ணேுபஶமம்" [வி.பு. 1-17-60] முதலானவிடங்களில் த்ருஷ்ணுஶப்₃த₃ம் நீர்பருகவேண்டும் என்னும் ஆசையாகிற தாகத்தைக் குறிப்பதுண்டாயினும், ஸம்ஸாரத்தில் ஆத்மாவைக் கட்டுவதற்குக் காரணத்தைக் கூறும் இப்ரகரணத்தில் தாகத்தை மாத்திரம் குறிப்பது போதாது; "விஷயத்ருஷ்ணை" என்றும், "விஷயவைத்ருஷ்ண்யம்" என்றும் ஶப்₃த₃ஸ்பர்ஶரூபரஸக₃ந்த₄ங்களாகிற ஐந்து விஷயங்களிலும் உண்டாகும் ஆசையைக் குறித்தும் த்ருஷ்ணுஶப்₃த₃ம் வழங்கப்படுவதைக் காண்கிறேம். ஆகையால் இங்கு த்ருஷ்ணுஶப்₃த₃ம் இவ்வைந்து விஷயங்களிலுமுள்ள ஆசையைக் குறிப்பதாகக் கொள்வதே பொருந்தும்; புலன்களாகிற இந்திரியங்களின் ஸ்பர்ஶத்திஞல் விளையும் (ஸாம்ஸ்பர்ஶிகமான) எல்லா ஆசையையும் த்ருஷ்ணுஶப்₃த₃ம் குறிக்கிறது என்றபடி; ஆகையால் ஸங்க₃ஶப்₃த₃ம் உலக வழக்கை ஒட்டி முற்கூறிய இந்திரியங்களை நியமிக்கும் மனத்தின் அபி₄மானத்தால் விளையும் உற்ருர் உறவினரிடமுள்ள பாசத்தைக் குறிக்கிறது என்று கொள்வதே பொருத்தமானது. 'த்ருஷ்ணு' என்று புலன்களின் தொடர்பால் ஏற்படும் (ஸாம்ஸ்பர்ஶிகமான) பற்றுக்களையும். 'ஸங்க₃:' என்று மனத்தின் அபி₄மானத்தால் விளையும்

स्पृहाजननद्वारेण निबध्नाति; क्रियासु हि स्पृहया याः क्रिया आरभते देही, ताश्च पुण्यपापरूपा इति तत्फलानुभवसाधनभूतासु योनिषु जन्महेतवो भवन्ति । अतः कर्मसङ्गद्वारेण रजो देहिनं निबध्नाति । तदेवं रजो रागतृष्णासङ्गहेतुः कर्मसङ्गहेतुश्चेत्युक्तं भवति ॥ ७ ॥

---

(ஆபி₄மானிகமான) பற்றுக்களேயும் குறிக்கையாலே, இப்பத₃ங்களிடையே புநருக்தியில்லை. இனி, ஶ்லோகத்தின் பிற்பாதியால் ரஜோ கு₃ணம் ஜீவனை ஸம்ஸாரத்தில் கட்டும் முறையை விளக்குகிறன் — (தத்) அந்த ரஜோகு₃ணம். (கர்மஸங்கே₃ந தே₃ஹிநம் ப₃த்₄நாதி) செயல் புரிவதில் ஆசையை விளேத்து தே₃ஹத்தோடு கூடிய ஜீவனைக் கட்டுகிறது. காமம் முதலானவற்றுல் விளேவதாய், அவற்றை அடைவதற்கு உபாயமாயிருக்கும் செயல்களில் ஆசையே இங்கு கர்மஸங்க₃ம் எனப்படுகிறது. இங்கு பின்வருமாறு ஒரு கேள்வி எழுகிறது:—“ராக₃ம் எனப்படும் காமம், த்ருஷ்ணை எனப்படும் ஶப்₃த₃ாதி₃ விஷயங்களில் ஆசை, ஸங்க₃ம் எனப்படும் புத்ரமித்ராதி₃களிடம் பாசம் ஆகியவையும் ஒவ்வொரு ஸுக₂த்தில் பற்றுகவே காணப்படுகின்றன; நூல்களிலும் கூறப்படுகின்றன; சென்ற ஶ்லோகத்தின் பா₄ஷ்யத்தில் ‘ஜ்ஞான ஸுக₂ங்களில் பற்று விளேந்தவுடன் அவற்றின் ஸாத₄னங்களில் ஸத்வகு₃ணம் ஈடுபடுத்துகிறது’ என்று சொல்லப்பட்டது. இப்படி ஸத்வகு₃ணமும் ஸுக₂ஸாத₄னமான கர்மங்களில் பற்றை விளேக்கும்போது, இங்கு ரஜோகு₃ணத்தை மாத்திரம் கர்மத்தில் பற்றை விளேக்கிறது என்று கூறுவது எப்படிப் பொருந்தும்?” என்பது அக்கேள்வி. இதற்கு பதில் பின்வருமாறு:—“ஸத்வகு₃ணம் ஸுக₂த்தை முக்கியமாகக்கொண்டு அதற்காக ஸாத₄நானுஷ்டானங்களில் ஜீவனை ஈடுபடுத்துகிறது. ‘ப்ரயோஜநேஷு ஸஜ்ஜந்தே ந விஶேஷேஷு பண்டி₃தா:’ [ஸத்வகு₃ணம் மிக்க அறிவாளிகள் பயனுகிற ஸுக₂த்தில் ஈடுபடுகிருர்களேயொழிய அதன் ஸாத₄னங்களில் பற்று வைப்பதில்லை] என்று இவ்விஷயம் சொல்லப்பட்டது. ரஜோகு₃ணமோவெனில், ஸுக₂ம் அல்பமாகக் கிடைக்கிறதா மிகுதியாகக் கிடைக்கிறதா? ஸுக₂த்தோடு து₃:க்க₂மும் சேர்ந்து வருகிறதா? என்பதை ஆராயாமல் தாம் விரும்பும் ஸுக₂த்தின் ஸாத₄னங்களிலேயே மிகுதியாகப் பற்றுவைக்கச் செய்கிறது.

तमस्त्वज्ञानजं विद्धि मोहनं सर्वदेहिनाम् ।
प्रमादालस्यनिद्राभिस्तन्निबध्नाति भारत ॥ ८

8. தமஸ்த்வஜ்ஞாநஜம் வித்₃தி₄ மோஹநம் ஸர்வதே₃ஹி நாம்।
ப்ரமாத₃ாலஸ்யநித்₃ராபி₄: தந்நிப₃த்₄நாதி ப₄ாரத ॥

ப₄ாரத! — ப₄ரதகுலத்துதித்தவனே, தம: து — தமோ கு₃ணமோவெனில், அஜ்ஞாநஜம்—பொருள்களை மாறுபட அறிவதால் விளைவது (என்றும்), ஸர்வதே₃ஹிநாம்—

---

அதனுலேயே ரஜோகு₃ணம் கர்ம ஸங்க₃த்தை விளைப்பதாகக் கூறப்பட்டது. அரசனின் மனைவியை ஆசைப்படுவது, தீய புத்திரர்களிடம் பாசம்வைத்து அவர்களை ரக்ஷிப்பது முதலானவற்றை ரஜோகு₃ணமே விளைக்கிறது. இவ்விடங்களில் ஸுக₂ம் அல்பமாய் து₃:க்க₂த்தோடு கலந்ததாயிருப்பதையும், இவற்றைப்பெற இவன் விரும்பிப்புரியும் முயற்சிகளே மிகுதியாக இருப்பதையும் காணலாம்'' என்பது பதில். கர்மஸங்க₃ம் எப்படி ஸம்ஸாரக் கட்டுக்குக் காரணமாகிறது? எனில்: முற்கூறிய ஸுக₂ ஸாத₄ன கர்மங்களில் ஆசையாலே தே₃ஹமுடையவர்கள் தொடங்கும் கர்மங்கள் புண்யபாபரூபங்களாகவே உள்ளனவாகையால், அப்புண்யபாப ப₂லன்களை அனுப₄விப்பதற்கு உறுப்பான பிறவிகளுக்குக் காரணமாகின்றன. ஆகையால் ரஜோகு₃ணம் கர்மஸங்க₃த்தை விளைத்து தே₃ஹமுடைய ஜீவனை ஸம்ஸாரத்தில் கட்டிவைக்கிறது என்பது பொருத்தமே. (கௌந்தேய) பரமஜ்ஞானியான குந்தியின் புத்திரனை நீ ஸத்வகு₃ணத்தால் ஏற்படும் கர்மஸங்க₃த்துக்கும் ரஜோகு₃ணத்தால் ஏற்படும் கர்மஸங்க₃த்திற்குமுள்ள வாசியறிந்து ஸ்வத₄ர்மமாகையாலே ஸாத்விக கர்மஸங்க₃மான யுத்₃த₄த்தில் ஈடுபடவேண்டும் என்று கருத்து. ஆக, இந்த ஶ்லோகத்தால் ''ரஜோகு₃ணம் ஸ்த்ரீகளிடம் காமத்தையும், ஶப்₃தா₃தி₃ விஷயங்களில் ஆசையையும். புத்திரர் மித்திரர் முதலானோரிடம் பாசத்தையும் விளைத்து, அது காரணமாகக் கர்மஸங்க₃த்தையும் விளைத்து ஜீவனை ஸம்ஸாரத்தில் கட்டுப்படுத்துகிறது. இதுவே ஸத்வ தமோ கு₃ணங்களைக்காட்டிலும் ரஜோகு₃ணத்தின் தனித்தன்மை'' என்று சொல்லப்பட்டதாயிற்று. 7

भा ।। ज्ञानादन्यदिहाज्ञानमभिप्रेतम् । ज्ञानं वस्तुयाथात्म्याव-बोधः ; तस्मादन्यत् तद्विपर्ययज्ञानम् । तमस्तु वस्तुयाथात्म्यविपरीत-

---

தே₃ஹத்தையுடைய ஜீவர்கள் அனைவர்க்கும், மோஹநம் — த₄ர்மத்துக்குப்புறம்பான அறிவை விளைவிப்பது (என்றும்) வித்₃தி₃—அறிவாய், தத்-அது, ப்ரமாத₃ாலஸ்யநித்₃ராபி₄:— கவனமின்மை, சோம்பல், தூக்கம் ஆகியவற்றை விளைத்து, நிப₃த்₄நாதி— ஜீவனைக் கட்டுகிறது.

8. தம்மறிவு கேடுதருந் தானறிநீ மோக
மமருயிர்கட் கெல்லா மளிக்குந்—தமமென்ப
தோராமை சோம்ப லுறக்கத்தாற் பார்த்தனே
சோராமற் கட்டுந் துணிந்து.

பார்த்தனே—அர்ஜுனா! தமம் என்பது—தமோ கு₃ணம் என்னும் கு₃ணம், தம் அறிவுகேடுதரும்-பொருள்களைப்பற்றிய மாறுபட்ட அறிவைத் தமக்கு விளைக்கும் (என்றும்), அமர் உயிர்கட்கு எல்லாம் — தே₃ஹத்திலிருக்கும் எல்லா ஜீவர்களுக்கும், மோகம் அளிக்கும் — அறத்திற்குப்புறம்பான அறிவை விளைக்கும்(என்றும்), நீதான் அறி—நீ அறிவாயாக; (மேலும் அது) ஓராமை சோம்பல் உறக்கத்தால்-கவனமின்மை, சோம்பல், தூக்கம் ஆகியவற்றால், சோராமல் துணிந்து கட்டும் —(ஸம்ஸாரத்தில்) தப்பாதபடி உறுதியாகக் கட்டிவிடும்.

---

8. இந்த ஶ்லோகத்தில் தமோ கு₃ணத்தின் தனித்தன்மையையும், அது ஜீவனைக் கட்டும் முறையையும் கூறுகிறன். (தம. து) தமோகு₃ணமோவெனில். துகாரத்தாலே இந்தத் தமோ கு₃ணம் மிகவும் விலக்கத்தக்கது என்று மற்ற இரு கு₃ணங்களைக்காட்டிலும் இதற்குள்ள வேறுபாடு உணர்த்தப் படுகிறது. (அஜ்ஞாநஜம் வித்₃தி₄) பொருள்களை விபரீதமாக (உள்ள நிலைக்கு மாருக) அறிவதாலுண்டாவது என்று அறிவாய். பொருள்களை உள்ளபடி அறிவது ஜ்ஞானமாகும். அதைக்காட்

विषयज्ञानजम् । मोहनं सर्वदेहिनाम् — मोहो विपर्ययज्ञानम्ः विपर्यय-ज्ञानहेतुरित्यर्थः । तत्-तमः प्रमादालस्यनिद्राहेतुतया तद्द्वारेण देहिनं निबध्नाति प्रमादः-कर्तव्यात्कर्मणोऽन्यत्र प्रवृत्तिहेतुभूतमनवधानम्; आलस्यम्-कर्मस्वनारम्भस्वभावः, स्तब्धतेति यावत्; पुरुषस्येन्द्रिय-

---

டிலும் வேறுபட்ட விபரீத ஜ்ஞானம் இங்கு அஜ்ஞானம் எனப் படுகிறது. புண்யபாப கர்மங்களும், ஜ்ஞானமின்மையும் அஜ்ஞான ஶப்₃த₃த்தால் சொல்லப்படுவது உண்டாயினும், இங்கு இந்த அஜ்ஞானம் மோஹத்தை உண்டாக்குவதாகக் கூறுகையால், அதை விளைக்கும் விபரீத ஜ்ஞானத்தையே பொருளாகக்கொள்ள வேண்டும். இங்கு ஜ்ஞானமாவது—பொருள்களை உள்ளபடி அறிவது; அதைக்காட்டிலும் வேறுபட்டது பொருள்களை உள்ள நிலைக்கு நேர்மாறாக அறியும் விபரீத ஜ்ஞானமேயாகும். (தமஸ்து அஜ்ஞாநஜம் வித்₃தி₄) தமோகு₃ணம் இந்த விபரீத ஜ்ஞானத்தால் விளைவது என்று அறிவாய். அசேதன ப்ரக்ருதி கார்யமான ஶரீரத்திலிருக்கும் தமோகு₃ணம் விபரீத ஜ்ஞானத்தால் எப்படி விளையமுடியும்? எனில்: விபரீத ஜ்ஞானம் ஜீவனைப் பாபங்களைச் செய்யும்படி தூண்டும். அதனால் ஶரீரத்தில் ஸத்வகு₃ணம் குறைந்து தமோகு₃ணம் மிகுதியாகிவிடும். இவ்வண்ணமாகவே விபரீத ஜ்ஞானத்தால் தமோகு₃ணம் வளர்கிறது என்று கண்டு கொள்வது, (மோஹநம் ஸர்வதே₃ஹிநாம் வித்₃தி₄) அந்தத் தமோகு₃ணம் ஶரீரத்தோடு கூடிய எல்லா ஜீவர்களுக்கும் த₄ர்மத்துக்குப் புறம்பான அறிவை விளைத்துவிடும் என்றும் அறிவாய். "மோஹநம்" என்றது மோஹத்திற்குக் காரணம் என்றபடி. தமோ கு₃ணத்தைக் காரணமாகக்கொண்ட மோஹம் த₄ர்மத்திற்குப் புறம்பான அறிவு என்று கொள்வதே பொருத்தமாகும். ஆக, விபரீதஜ்ஞானத்தால் விளையும் தமோகு₃ணம் த₄ர்மத்திற்குப் புறம்பான அறிவை விளைக்கிறது என்று தமோகு₃ணத்தின் தனித் தன்மை கூறப்பட்டது. இனி ஶ்லோகத்தின் பிற்பாதியால் அந்த தமோகு₃ணம் ஜீவனை ஸம்ஸாரத்தில் கட்டும் முறையைக் காட்டுகிறான். (தத்) அந்தத் தமோகு₃ணம். (ப்ரமாத₃ாலஸ்ய நித்₃

प्रवर्तनश्रान्त्या सर्वेन्द्रियप्रवर्तनोपरतिर्निद्रा ; तत्र बाह्येन्द्रियप्रवर्तनोपरमः स्वप्नः ; मनसोऽप्युपरतिः सुषुप्तिः ॥ ८ ॥

---

ராபி₄: தே₃ஹிநம் நிப₃த்₄நாதி) கவனமின்மை, சோம்பல், தூக்கம் ஆகியவற்றை விளைத்து, அதன் மூலம் ஶரீரமுடைய ஜீவனை ஸம்ஸாரத்தில் கட்டிவிடும். 'ப்ரமாத₃' ஶப்₃த₃ம் கவனமின்மையைக் குறிக்கிறது. அது செய்யத்தக்க கர்மங்களைக் காட்டிலும் வேறுபட்ட கர்மங்களில் ஈடுபடச் செய்யும். செய்யவேண்டிய கர்மங்களைச் செய்யாமலிருக்கச் செய்தும் பாபங்களை விளைத்து, அதன் விளைவான தாழ்ந்த பிறவிகளைக் கொடுத்துவிடும்.

"அகுர்வந் விஹிதம் கர்ம நிந்தி₃தம் ச ஸமாசரந்|
ப்ரஸஜ்ஜம்ஶ்சேந்த்₃ரியார்த்தே₂ஷு ப்ராயஶ்சித்தீயதே நர:||"
[மனு 11—44]

[செய்யவேண்டிய கர்மத்தைச் செய்யாமலிருப்பதாலும், செய்யத்தகாத கர்மத்தைச் செய்வதாலும், இந்த்₃ரியங்களை ஶப்₃தா₃தி₃ விஷயங்களில் இஷ்டப்படி மேய விடுவதாலும் மனிதன் பாபியாய் ப்ராயஶ்சித்தம் செய்யவேண்டியவனாகிறான்] என்று மனுஸ்ம்ருதியிலும் கூறப்பட்டதன்றோ, ஆக, கவனமின்மை மேன்மேலே தாழ்ந்த பிறவிகளைக் கொடுத்து ஸம்ஸாரத்தில் ஜீவனைக் கட்டிவிடுகிறது என விளங்கும். 'ஆலஸ்ய' ஶப்₃த₃ம் சோம்பலைக்குறிக்கும். பயனுடைய விஷயங்களிலும் செயல்புரியாமலிருக்கும் செயலற்ற நிலையே சோம்பல் எனப்படுகிறது, இதுவும் பாபத்தை விளைப்பதன் மூலம் தாழ்ந்த பிறவிகளை விளைத்து ஜீவனை ஸம்ஸாரத்தில் கட்டிவிடும் என்பது வெளிப்படை. நித்₃ரா' ஶப்₃த₃ம் தூக்கத்தைக் குறிக்கும், தமோகு₃ணம் ஜீவனுடைய சரீரத்தில் எப்போதும் இருந்தபோதிலும் இந்த்₃ரியங்கள் மிகுதியாகச் செயல் புரிந்து களைப்படையும்போதே அவற்றின் செயலற்ற நிலையாகிற தூக்கம் தமோகு₃ணத்தின் விளைவாக உண்டாகிறது. அதில் மனத்தைத்தவிர மற்ற இந்த்ரியங்கள் மாத்திரம் செயலற்றுப்போகும் போது 'ஸ்வப்நம்' எனப்படும் கனவு ஏற்படுகிறது. மனமும் செயலற்றுப்போகும் போது 'ஸுஷுப்தி' எனப்படும் தூக்கம் ஏற்படுகிறது. இங்கு நித்₃ராஶப்₃த₃ம் இவ்விரண்டை

भा ॥ सत्त्वादीनां बन्धद्वारभूतेषु प्रधानान्याह-

सत्त्वं सुखे संजयति रजः कर्मणि भारत ।
ज्ञानमावृत्य तु तमः प्रमादे संजयत्युत ॥ ९

9, ஸத்த்வம் ஸுகே, ஸஞ்ஜயதி ரஜ: கர்மணி ப,ாரத ।
ஜ்ஞாநமாவ்ருத்ய து தம: ப்ரமாதே, ஸஞ்ஜயத்யுத॥

ப,ாரத-ப,ரதகுலத்திலுதித்தவனே! ஸத்த்வம்-ஸத்வகு,ணம், ஸுகே, ஸஞ்ஜயதி—ஸுக,த்தில் (முக்கியமாகப்) பற்றை விளைக்கிறது; ரஜ:-ரஜோகு3ணம், கர்மணி (ஸஞ்ஜயதி)—கர்மத்தில் (முக்கியமாகப்) பற்றை விளைக்கிறது; தம: து-தமோகு,ணமோவெனில், ஜ்ஞாநம் ஆவ்ருத்ய—பொருள்களை உள்ளபடி அறியும் அறிவை மறைத்து,ப்ரமாதே, ஸஞ்ஜயதி உத-கவனமின்மையால் (விபரீத ஜ்ஞானத்தை விளைத்து) செய்யத்தகாத கர்மங்களில் ஈடுபடுத்துவதில் (முக்கியமாகப்) பற்றை விளைக்கிறதன்ரே.

---

யுமே குறிக்கிறது. தூக்கம் ஶாஸ்திரங்களில் விதி4க்கப்பட்ட கர்மங்களை அநுஷ்டி2க்க முடியாதபடி செய்வதன் மூலமும், அநுஷ்டி2த்தாலும் காலத்தில் அநுஷ்டி2க்காதபடியும் காலமல்லாத காலத்தில் அநுஷ்டி2க்கும்படியும் செய்வதன் மூலமும் பாபங்களை விளைத்து, தாழ்ந்த பிறவிகளைக் கொடுப்பதன்மூலம் ஜீவனை ஸம்ஸாரத்தில் கட்டிவிடுகிறது. தீய கனவுகளும் பாபத்தை விளைத்து, தாழ்ந்த பிறவிகளை அளிப்பதன் மூலம் ஜீவனை ஸம்ஸாரத்தில் கட்டிவிடுகின்றன, இதனுலேயே, "யுக்த ஸ்வப்நாவபோ3த4ஸ்ய யோகோ3 ப4வதி து3:க்க2ஹா" [கீ3தை 6—17] [அளவான தூக்கத்தையும் விழிப்பையும் உடையவனுக்கு எல்லாத் துன்பங்களையும் போக்கும் யோக3ாப்4யாஸம் உண்டாகும்] என்று கீ3தையில் கண்ணன் முன்னமே சொன்னுன். (ப4ாரத) ப4ரத குலத்தில் உதித்த நீ இந்தத் த்மோகுணத்தின் கார்யமான செயலற்ற நிலையை அடைந்து போர்புரியாமலிருக்கக் கூடாதென்று கருத்து.

भा ॥ सत्त्वं सुखसङ्गप्रधानं ; रजः कर्मसङ्गप्रधानम्; तमस्तु वस्तुयाथात्म्यज्ञानमावृत्य विपरीतज्ञानहेतुतया कर्तव्यविपरीतप्रवृत्ति-सङ्गप्रधानम् ॥ ९ ॥

9. சத்துவ மதின்பந் தனிற்றுவக்குந் தானிரசம்
தொத்தியலுங் கன்மந் துவக்குவிக்கு—மைத்தும்
மன்னறிவு தன்னை மறைத்திட்டோர்ப் பின்மையினிற்
றுன்னமிகத் தான்றுவக்குஞ் சூழ்ந்து.

சத்துவமது-(முற்கூறிய மூன்றுகுணங்களில்) அந்த ஸத்வகுணமானது, இன்பம் தனில் துவக்கும்-சுகத்தில் (முக்கியமாகப்) பற்றைவிளைக்கிறது; தொத்து இயலும்-முயற்சியை விளைக்கும், இரசம் தான்-ரஜோகுணமானது, கன்மம் துவக்குவிக்கும்-கர்மத்தில் (முக்கியமாகப்) பற்றைவிளைக்கிறது; மைத்தும் தான் —(உள்ளிருளை விளைக்கும்) தமோகுணமானது, மன் அறிவுதன்னை மறைத்திட்டு—பொருள்களை உள்ளபடி அறியும் அறிவை மறைத்து, சூழ்ந்து—(ஜீவனைச் சூழ்ந்து நின்று), துன்னம் மிக ஓர்ப்பின்மையினில்—மிகுதியான கவனமின்மையில், துவக்கும்—(முக்கியமாகப்) பற்றை விளைக்கும்.

9. சென்ற மூன்று ஸ்லோகங்களில் முறையே ஸத்வரஜஸ் தமோகுணங்கள் ஸம்ஸாரத்தில் ஜீவனைக் கட்டுவதற்குக் காரணமாயிருப்பவற்றைக் கூறினான். இந்த ஸ்லோகத்தில் அவற்றில் முறையே முக்கியமானது எது என்று காட்டுகிறான். (ஸத்வம் ஸுகே ஸஞ்ஜயதி) ஸத்வகுணம் ஸுகத்தில் பற்றைவிளைக்கிறது. ஆறாம் ஸ்லோகத்தில் ஸத்வகுணம் ஜ்ஞாந ஸுகங்கள் இரண்டிலும் பற்றை விளைத்து ஜீவனை ஸம்ஸாரத்தில் கட்டுகிறது என்று சொல்லப்பட்டது. ஜ்ஞானத்தில் பற்றும் ஸுகத்தின் பொருட்டேயாகையால், இங்கு ஸுகத்தில் பற்றே முக்கியமானது எனக் காட்டுகிறான். (ரஜ: கர்மணி ஸஞ்ஜயதி) ரஜோகுணம் கர்மத்தில் பற்றை விளைக்கிறது; ஏழாம் ஸ்லோகத்தில் ரஜோகுணம் ராக த்ருஷ்ணை ஸங்கங்களை விளைத்து, அவை காரணமாக விளையும் கர்மத்தில் பற்றினாலே ஜீவனை ஸம்ஸாரத்தில் கட்டுகிறது என்று கூறினான். ராக த்ருஷ்ணை ஸங்கங்களும கர்மத்தில் பற்றை விளைப்பதற்கே உறுப்பாகின்றனவாகையாலே, இங்கு கர்ம ஸங்கமே முக்கியமானது எனக் காட்டுகிறான்.

भा ॥ देहाकारपरिणतायाः प्रकृतेः स्वरूपानुबन्धिनस्सत्त्वादयो गुणाः ; ते च स्वरूपानुबन्धित्वेन सर्वदा सर्वे वर्तन्त इति परस्पर-विरुद्ध कार्यं कथं जनयन्तीत्यत्राह-

रजस्तमश्चाभिभूय सत्त्वं भवति भारत ।
रजस्सत्त्वं तमश्चैव तमस्सत्त्वं रजस्तथा ॥ १०

---

(தம: து ஜ்ஞாநமாவ்ருத்ய ப்ரமாதே₃ ஸஞ்ஜயதி உத) தமோகு₃ணமோவெனில் பொருள்களை உள்ளபடி அறியும் அறிவை மறைத்து, கவனமின்மையை விளைத்து, அதனால் விபரீத ஜ்ஞானத்தை விளைத்து, செய்யத்தகாத கர்மங்களில் ஈடுபடுத்துவதன் மூலம் கவனமின்மையினால் ஜீவனை ஸம்ஸாரத்தில் முக்கியமாகக் கட்டுகிறது. எட்டாம் ஶ்லோகத்தில் கவனமின்மை, சோம்பல், தூக்கம் ஆகிய மூன்றாலும் தமோகு₃ணம் ஜீவனை ஸம்ஸாரத்தில் கட்டுகிறது என்று காட்டினான். இம்மூன்றில் கவனமின்மையாலேயே விபரீத ஜ்ஞாநம் விளைந்து ஸம்ஸாரப₃ந்த₄ம் மிகுதியாக விளைகிறதாகையாலே அதுவே முக்கியமானது எனக் காட்டுகிறான். ''ஜ்ஞாநமாவ்ருத்ய'' என்றதற்கு அறிவு முழுவதையும் மறைப்பதாகப் பொருள்கொண்டால் தூக்கநிலை ஏற்படுமேயொழிய, ப்ரமாத₃ம் (கவனமின்மை) எனும் நிலை ஏற்படாதாகையால், ''பொருள்களை உள்ளபடி அறியும் அறிவை மறைத்து'' என்று பொருள்கொள்ளப்பட்டது. (பா₄ரத) பா₄ரதன் முதலான ஞானிகளின் வம்சத்தில் வந்த நீ இந்த முக்குணங்களைப்பற்றிய தெளிந்த அறிவைப் பெறவேண்டுமென்று கருத்து. 9

10. ''தே₃ஹமாகப் பரிணாமமடைந்திருக்கும் மூலப்ரக்ருதியின் ஸ்வரூபத்தோடு எப்போதும் சேர்ந்திருப்பவை ஸத்வ ரஜஸ் தமோகு₃ணங்கள்; அவை எல்லா தே₃ஹங்களிலும், எல்லாக்காலத்திலும் சேர்ந்தேயிருக்கின்றன. அப்படியிருக்கும்போது ஸத்வகு₃ணம் உண்மையறிவையும், ஸுகத்தில் பற்றையும், மற்ற கு₃ணங்கள் பொய்கலந்த அறிவையும், துன்பத்தில் பற்றையும், மற்றும் இவைபோலே ஒன்றுக்கொன்று முரண்பட்ட விளைவுகளையும் உண்டாக்குகின்றன என்று முன் ஶ்லோகங்களில் கூறினது எப்படிப் பொருந்தும்?'' என்னும் கேள்வியெழ,

10. ரஜஸ்தமஶ்சாபி₄பூ₄ய ஸத்த்வம் ப₄வதி பா₄ரத |
ரஜஸ்ஸத்த்வம் தமஶ் சைவ தமஸ்ஸத்த்வம் ரஜஸ்ததா₂ ||

**பா₄ரத**—பா₄ரதகுலத்துதித்தவனே!, (தேஹத்திலுள்ள முக்குணங்களுக்குள்) **ரஜ: தம: ச அபி₄பூ₄ய**-ரஜோகு₃ணத்தையும், தமோகு₃ணத்தையும் அடக்கி, **ஸத்த்வம் ப₄வதி**—(சிலசமயம் ஸத்வகு₃ணம் மேலோங்கி நிற்கிறது; **ஸத்த்வம் தம: ச (அபி₄-பூ₄ய)**—ஸத்வகு₃ணத்தையும், தமோகு₃ணத்தையும் அடக்கி, **ரஜ: ஏவ(ப₄வதி)**-(சிலசமயம்) ரஜோகு₃ணமே மேலோங்கி நிற்கிறது. **ரஜ: ஸத்த்வம் ததா₂ (அபி₄பூ₄ய)**— ரஜோகு₃ணத்தையும், ஸத்வ கு₃ணத்தையும் அவ்வண்ணமே அடக்கி, **தம: ப₄வதி**-(சிலசமயம்) தமோகு₃ணம் மேலோங்கி நிற்கிறது.

10. முக்குணங்க டம்மின் முதற்குணந்தான் மற்றிரண்டு
மொக்க வமுக்கி யுறுமேலா—மிக்க
விடைக்குணந்தான் பார்த்தனே மற்றிரண்டு மிங்கே
கடைக்குணமு மவ்வாறு காண்.

**பார்த்தனே**—அர்ஜுநா!, **இங்கே**—இவ்வுலகில், **முக்குணங்கள் தம்மில்**—ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் இந்த முக்குணங்களில், **முதல் குணம்**—முதலாவதான ஸத்வகு₃ணமானது, **மற்று இரண்டும் ஒக்க அமுக்கி**-மற்ற இரு கு₃ணங்களான ரஜஸ்ஸையும், தமஸ்ஸையும் ஒருபடிப்பட அடக்கி, **தான் மேலா உறும்**—(சிலசமயம்) தான் மேலோங்கி நிற்கும்; **மிக்க இடை குணம்**—மிகுந்திருக்கும் நடுக்குணமான ரஜோகு₃ணம், **மற்று இரண்டும் (ஒக்க அமுக்கி)**—மற்ற இரு கு₃ணங்களான ஸத்வகு₃ணத்தையும், தமோகு₃ணத்தையும் ஒருபடிப்பட அமுக்கி, **தான் (மேலா உறும்)**—(சிலசமயம்) தான் மேலோங்கி நிற்கும்; **கடைக்குணமும்**—கடைசிகு₃ணமான தமோகு₃ணமும், **அவ்வாறு காண்**—அவ்வண்ணமே மற்ற இரு குணங்களான ரஜோகு₃ணத்தையும், ஸத்வகு₃ணத்தையும் ஒருபடிப்பட அமுக்கி (சிலசமயம்) தான் மேலோங்கி நிற்கும் என்று அறிவாய்.

---

"ஸத்வம் முதலான முக்குணங்களும் ப்ராக்ருதமான தே₃ஹத்தோடுகூடிய ஜீவனோடு எப்போதும் சேர்ந்தேயிருந்தபோதிலும், ப்ராசீந புண்யகர்மத்தால் விளையும ப₄க₃வதநுக்₃ரஹத்தாலும்,

भा ॥ यद्यपि सत्त्वादयस्त्रयः प्रकृतिसंसृष्टात्मस्वरूपानुबन्धिनः, तथाऽपि प्राचीनकर्मवशाद्देहाप्यायनभूताहारवैषम्याच्च सत्त्वादयः परस्परसमुद्भवाभिभवरूपेण वर्तन्ते। रजस्तमसी कदाचिदभिभूय

---

ஸாத்விகமான ஆஹாரத்தை உட்கொள்வதாலும் சிலசமயம் தே₃ஹத்தில் ஸத்வகு₃ணம் மிகுந்து, மற்ற இரு குணங்களும் அடங்கிநிற்கும், பாபகர்மத்தால் விளையும் ப₄க₃வானுடைய நிக்₃ரஹத்தாலும், ராஜஸ தாமஸாஹாரங்களை உட்கொள்வதாலும் சில சமயம் தே₃ஹத்தில் மற்ற இரு கு₃ணங்களில் ஒவ்வொன்று மிகுந்து மற்ற குணங்கள் அடங்கிநிற்கும்; எந்த சமயத்தில் எந்த கு₃ணம் மிகுந்திருக்கிறதோ அந்த சமயத்தில் அந்த கு₃ணத்தின் விளைவே ஏற்படுகையால் முரண்பட்ட விளைவுகள் உண்டாகமாட்டா'' என்று பதிலுரைக்கிறது இந்த ஶ்லோகம். (ரஜஸ் தமஶ் சாபி₄பூ₄ய ஸத்வம் ப₄வதி) ப்ராசீநபுண்யம் மிக்கிருக்கும் சமயத்தில், அதனுலுண்டான ப₄க₃வானுடைய அநுக்₃ரஹத்தாலும், ஸாத்விகமான ஆஹாரங்களை உட்கொள்ளுவதாலும் ஸத்வகு₃ணம் மிகுதியாக உண்டாகி, ரஜஸ்தமோ கு₃ணங்களை அடக்கி நிற்கும் என்று கருத்து.

"ரஸாஸ்ருங்மாம்ஸமேதோ₃ऽஸ்தி, மஜ்ஜா ஶுக்ராணி
தா₄தவ: |
ஸப்த தூ₃ஷ்யா மலா மூத்ர ஶக்ருத் ஸ்வேதா₃த₃யோபி ச ||
வ்ருத்₃தி₄: ஸமாநை: ஸர்வேஷாம் விபரீதைர் விபர்யய: ||"
[அஷ்டாங்க₃ஹ்ருத₃யம்—ஆயுஷ்காமீயம் 1-13,14]

[ரஸம், ரத்தம், மாம்ஸம், மேத₃ஸ், எலும்பு, மஜ்ஜை, ஶுக்லம் (வெள்ளைரத்தம்) ஆகிய ஏழும் ஶரீரத்தில் இருக்க வேண்டிய தா₄துக்கள்; மூத்திரம், மலம், வியர்வை முதலியவை ஶரீரத்திலிருந்து விலக்கத்தக்க மலங்கள். வாதம், பித்தம் கப₂ம் (ஶ்லேஷ்மம்) ஆகியவற்றை வளர்க்கும் ஆஹாரம் ஒத்திருக்கும்போது, வாத பித்த ஶ்லேஷ்மங்கள் மூன்றும் ஸமமாயிருக்கையாலே எல்லா தா₄துக்களும் விருத்தியடைகின்றன. (மலங்கள் அடங்கியுள்ளன); ஒவ்வொன்று விஞ்சியிருக்கும் போது வாதம் முதலான மூன்றில் ஏற்றத்தாழ்வு ஏற்பட்டு

सत्त्वमुद्रिक्ते वर्तते । तथा तमस्सत्त्वे अभिभूय रजः कदाचित् । कदाचिच्च रजस्सत्त्वे अभिभूय तमः ॥

---

த₄ாதுக்கள் குறைவுபட்டு, மலங்கள் விஞ்சுகின்றன] என்று வாக்₃பட₄டரின் அஷ்டாங்க₃ஹ்ருத₃யம் எனும் ஆயுர்வேதநூலில் வாதம், பித்தம், கப₂ம் ஆகியவற்றை வளர்க்கும் ஆஹாரங்களில் ஒவ்வொன்று விஞ்சியிருக்கும்போது, வாதம் முதலானவை வளர்வதாகக் கூறியதுபோல், இங்கும் ஸத்வம் முதலானவற்றை வளர்ப்பவையாகப் பின்னல் சொல்லப்போகும் ஆஹாரங்களால் ஸத்வம் முதலானவை வளர்வதாகக் கொள்ள வேண்டும். "ஆஹாரஶுத்₃தெ₄ள ஸத்வஶுத்₃தி₄:" [ச₂ாந் 7-26-2] [ஆஹாரத்தில் (ஸத்வகு₃ணம் மிகுந்திருக்கையாகிற) ஶுத்₃தி₄யிருந்தால் மனம் (ஸத்வகு₃ணம் மிகுந்து) ஶுத்₃த₄மாகிறது] என்று உபநிஷத்திலும் ஓதப்பட்டதன்றே. "ததோ தே₃வா அப₄வந் பராஸுரா:" [யஜுர்-காண்ட₃ம் 5-3-3-11] [அச்சமயத்தில் அஸுரர்களை எதிரிகளாகக்கொண்ட தே₃வர்கள் மேலோங்கியிருந்தனர்] என்கிற வேத₃வாக்யத்தில் "அப₄வந்" என்னும் வினைச்சொல் மேலோங்கி நிற்பதைக் கூறியதைப்போலே, இங்கும் "ப₄வதி" என்னும் வினைச்சொல் மேலோங்கி நிற்பதைக் கூறுகிறது. (ரஜ: ஸத்வம் தமஶ் சைவ) "அபி₄பூ₄ய ப₄வதி" என்பதை முற்பாதியிலிருந்து சேர்த்துக்கொள்ள வேண்டும். இவ்வண்ணமே (தம: ஸத்வம் ரஜஸ்தத₂ா) என்றவிடத்திலும் சேர்த்துக்கொள்ள வேண்டும். "ப்ராசீனபாபம் சிறிது ஓங்கியிருக்கும்போது அதனல் உண்டான சிறிய ப₄க₃வந் நிக்₃ரஹத்தாலும், ராஜஸாஹாரங்களை உட்கொள்வதாலும் ரஜோகு₃ணம் மிகுதியாக உண்டாகி ஸத்வதமோகு₃ணங்களை அடக்கிநிற்கும்" என்றும், "ப்ராசீநபாபம் மிகவும் ஓங்கியிருக்கும்போது அதனல் உண்டான மிகுந்த ப₄க₃வந்நிக்₃ரஹத்தாலும், தாமஸாஹாரங்களை உட்கொள்வதாலும் தமோகு₃ணம் மிகுதியாக உண்டாகி ஸத்வரஜோகு₃ணங்களை அடக்கிநிற்கும்" என்றும் கருத்து (ப₄ாரத) ஸத்வகு₃ணம் மிக்கவர்கள் நிறைந்த ப₄ரதகுலத்தில் உதித்த நீயும் ப₄க₃வதநுக்₃ரஹத்திற்குப் பாத்திரமாவதன் மூலமும் ஸாத்விகாஹாரங்களை உட்கொள்வதன் மூலமும், ராஜஸதாமஸாஹாரங்களை விலக்குவதன்மூலமும் அவர்களைப்போலே எப்போதும் ரஜஸ்தமோகு₃ணங்களை அடக்கி ஸத்வகு₃ணம் மிகுந்தவனக விளங்க வேண்டும் என்று கருத்து. 10

भा ॥ तच्च कार्योपलम्भेनैवावगच्छेदित्याह —

सर्वद्वारेषु देहेऽस्मिन् प्रकाश उपजायते ।
ज्ञानं यदा तदा विद्यात् विवृद्धं सत्त्वमित्युत ॥ ११

11. ஸர்வத்₃வாரேஷு தே₃ஹேऽஸ்மிந் ப்ரகாஶ உபஜாயதே।
ஜ்ஞாநம் யதா₃ ததா₃ வித்₃யாத் விவ்ருத்₃த₄ம் ஸத்வ-
மித்யுத ॥

அஸ்மிந் தே₃ஹே—இந்த (ப்ராக்ருத) தே₃ஹத்தில், ஸர்வத்₃வாரேஷு-கண் முதலான ஞானம் வெளிப்படும் இந்திரியங்களாகிற எல்லா வாசல்களிலும், ப்ரகாஶ ஜ்ஞாநம்—பொருள்கள் உள்ளபடி பிரகாசிப்பதற்கு உறுப்பான அறிவு, யதா₃ உபஜாயதே-எப்போது உண்டாகிறதோ, ததா₃—அப்பொழுது, ஸத்த்வம் விவ்ருத்₃த₄ம் இதி-ஸத்வகு₃ணமே (ரஜஸ் தமஸ்ஸுகளைக் காட்டிலும்) மேலோங்கி நிற்கிறது என்று, வித்₃யாத் உத — (ஜீவன்) அறியக்கடவன்.

11. பொறிவாயி லெங்கும் புணரு மொளியா
மறிவான தெப்பொழுதுண் டாகும்—குறியாலே
மன்னுடம்பி லப்பொழுது வாய்ந்துயருஞ் சத்துவமா
மென்னுமது தானறிவா னிங்கு.

---

11. "எந்தசமயத்தில் எந்த கு₃ணம் மேலோங்கி நிற்கிறது என்று அறிந்தாலன்றோ நாம் ரஜஸ் தமோகு₃ணங்கள் அடங்கி ஸத்வகு₃ணம் மேலோங்கி நிற்கும்படி பார்த்துக்கொள்ளமுடியும்; மேலோங்கிநிற்பது எந்த கு₃ணம் என்பதை எப்படி அறிவது?" என்னும் கேள்வியெழ, மூன்று ஶ்லோகங்களாலே முறையே ஸத்வரஜஸ்தமோ கு₃ணங்கள் மேலோங்கிநிற்பதை அவற்றின் கார்யங்களின்மூலம் அறியும் வழியைக்காட்டுகிறான். இந்த ஶ்லோகத்தில் ஸத்வகு₃ணம் மேலோங்கிநிற்பதை அதன் கார்யங்கொண்டு அறியலாம் என்கிறான். (ஸர்வத்₃வாரேஷு) மெய், வாய், கண், மூக்கு, செவி, மனம் என்னும் ஞானம் வெளிப்படும்

भा ॥ सर्वेषु चक्षुरादिषु ज्ञानद्वारेषु यदा वस्तुयाथात्म्यप्रकाशो ज्ञानमुपजायते. तदा तस्मिन् देहे सत्त्वं प्रवृद्धमिति विद्यात् ॥

---

இங்கு-இவ்வுலகில், மன்னு உடம்பில் — (ஜீவனோடு) பொருந்தியிருக்கும் உடலில், பொறி வாயில் எங்கும்— (கண் முதலிய) ஞானம் வெளிப்படும் இந்திரியங்களாகிற வாசல்கள் அனைத்திலும், புணரும் ஒளியாம் அறிவானது-பொருள்கள் உள்ளபடி பிரகாசிப்பதற்கு உறுப்பான அறிவானது, எப்பொழுது உண்டாகும்-எந்த சமயத்தில் உண்டாகிறதோ, அப்பொழுது-அந்த சமயத்தில், குறியாலே-அந்த அடையாளத்தாலே, சத்துவம் வாய்ந்து உயருமாம் என்னுமது தான்—ஸத்வகுணமே (ரஜஸ் தமஸ்ஸுக்களைக் காட்டிலும்) மேலோங்கி நிற்கிறது என்பதை, அறிவான்-(ஜீவன்) அறியக் கடவன்.

---

ஆறு வழிகளிலும். இங்கு ஸர்வ த்₃வாரஶப்₃த₃ம் இரு கண்கள், இரு காதுகள், இரு மூக்குதுவாரங்கள், வாய், பாயு (ஆஸனவாய்) உபஸ்த₂ம் எனும் உடலின் ஒன்பது துவாரங்களையோ, பதினொரு இந்திரியங்களையோ குறிப்பதாகக் கொண்டால், 'ஜ்ஞாநம் உபஜாயதே' என்று அவற்றின்மூலம் ஞானம் வெளிப்படுவதாகக் கூறுவது பொருந்தாது. அவையனைத்தின் மூலமும் ஞானம் வெளிப்படுவதில்லையே. ஆகையால் ஞானம் வெளிப்படும் வழிகளான ஞானேந்திரியங்கள் ஐந்தும், மனமுமே ஸர்வத்₃வாரஶப்₃த₃த்தால் குறிக்கப்படுவதாகக் கொள்ளவேண்டும். (ப்ரகாஶ ஜ்ஞாநம் யதா₃ உபஜாயதே) பொருள்கள் உள்ளபடி ப்ரகாஶிப்பதற்கு உறுப்பான அறிவு எப்போது வெளிப்படுகிறதோ. 'ப்ரகாஶ' ஶப்₃த₃ம் முதல் வேற்றுமை என்றுகொண்டால் ஜ்ஞாநஶப்₃த₃த்தோடு புநருக்தி உண்டாகும். 'ப்ரகாஶ' பத₃த்தின் வியாக்கியானம் ஜ்ஞானபத₃ம் என்று சிலர் உரைப்பதும் நலிந்து பொருள்கொள்வதாகும். ஆகையாலே "ப்ரகாஶே உபஜாயதே" என்பது ஸந்தி₄யில் "ப்ரகாஶ உபஜாயதே" என்று ஆகியிருப்பதாகக்கொண்டு ப்ரகாஶஶப்₃த₃த்தை ஏழாம் வேற்றுமையாகக் கொள்ளப்பட்டது. 'ப்ரகா₃ஶே ஜ்ஞானம்' என்றதற்கு, 'பொருள்கள் உள்ளபடி வெளிப்படுவதற்கு உறுப்பான அறிவு' என்றே

लोभः प्रवृत्तिरारम्भः कर्मणामशमस्स्पृहा ।
रजस्येतानि जायन्ते विवृद्धे भरतर्षभ ॥ १२

12. லோப₄: ப்ரவ்ருத்திராரம்ப₄: கர்மணுமஶம: ஸ்ப்ருஹா ।
ரஜஸ்யேதாநி ஜாயந்தே விவ்ருத்₃தே₄ ப₄ரதர்ஷப₄ ॥

ப₄ரதர்ஷப₄-ப₄ரதகுலத்திலுதித்தவர்களில் சிறந்தவனே!, லோப₄:—கருமித்தனம், ப்ரவ்ருத்தி:-பயனற்ற செயல்பாடு, கர்மணும் ஆரம்ப₄:-ஒரு ப₂லனைக் குறித்துக் கர்மங்களைத் தொடங்குவது, அஶம: — இந்திரியங்களை அடக்காமை, ஸ்ப்ருஹா-விஷயங்களில் ஆசை, ஏதாநி-என்னும் இவை, ரஜஸி விவ்ருத்₃தே₄ - ரஜோகு₃ணம் மேலோங்கிநிற்கும்போது, ஜாயந்தே-உண்டாகின்றன.

---

'வெளிப்படுத்தப்படும் பொருள்களைப்பற்றிய உண்மையறிவு' என்றே, ப்ரகாஶ ஶப்₃த₃ம் அறிவையும், ஜ்ஞாநஶப்₃த₃ம் மநோ வ்ருத்தியையும் குறிக்கிறது என்றே பொருள்கொண்டுவிடலாம். ஆகையால், "ப்ரகாஶம் வெளிச்சத்தின் ஸ்த₂ானத்திலும், ஜ்ஞானம் கண்ணின் ஸ்த₂ானத்திலும் உள்ளது" என்று சிலர் கூறும் பொருளும் சுவையற்றது என விளங்கும். (யதா₃ அஸ்மிந் தே₃ஹே உபஜாயதே ததா₃ ஸத்த்வம் விவ்ருத்₃த₄ம் இதி வித்₃யாத்) எப்போது இந்த தே₃ஹத்தில் முற்கூறியபடி அறிவு உண்டாகிறதோ, அப்போது இந்த தே₃ஹத்தில் ஸத்வகு₃ணம் மேலோங்கி நிற்கிறது என்று அறியக்கடவன். ஸௌப₄ரிபோலே பல ஶரீரம் எடுக்கக்கூடியவர்களுக்கு ஒவ்வொரு ஶரீரத்தில் ஒவ்வொரு கு₃ணம் மேலோங்கி நிற்கலாமாகையாலும், ஒருவருடைய ஶரீரத்தில் ஒரு கார்யம் விளைவதுகொண்டு மற்றொருவருடைய ஶரீரத்தில் எந்த கு₃ணம் மேலோங்கி நிற்கிறது என்று அறிய முடியாதாகையாலும் எந்த ஶரீரத்தில் இந்தக் கார்யம் விளைகிறதோ, அந்த ஶரீரத்திலேயே ஸத்வம் மேலோங்கி நிற்கிறதென்று அறிய வேண்டும் என்று ஶ்லோகத்தின் இரு பாதிகளிலும் தே₃ஹ ஶப்₃த₃த்தைக்கூட்டிக்கொண்டு பொருள்கொள்ளப்பட்டது.

मा ॥ लोभः— स्वकीयद्रव्यस्यात्यागशीलता; प्रवृत्तिः-प्रयोजनमनुद्दिश्यापि चलनस्वभावता; आरम्भः कर्मणां-फलसाधनभूतानां कर्मणामारम्भः; अशमः— इन्द्रियानुपरतिः; स्पृहा-विषयेच्छा । एतानि रजसि प्रवृद्धे जायन्ते ; यदा लोभादयो वर्तन्ते तदा रजः प्रवृद्धमिति विद्यादित्यर्थः ॥ १२ ॥

---

12. *ஈயாமை வீணுழற்றி யேய்ந்தகரு மத்தொடக்கஞ்*
*சாயா புலனெழுச்சி தன்னுசை-யோயாம*
*லுண்டா மிவைகண்டா யுற்றிரசத் தோங்கதனுல்*
*வண்டாருந் தார்விசயா மற்று.*

*வண்டு ஆரும் தார் விசயா*—வண்டு நிறைந்த மாலை சூடிய விஜயனே! *ஈயாமை*-எவருக்கும் எதுவும் கொடுக்காமையாகிற கருமித்தனம், *வீண் உழற்றி*—பயனற்ற செயல்பாடு, *ஏய்ந்த கருமத் தொடக்கம்*-ஒரு ப₄லனைக் குறித்துக் கர்மங்களைத் தொடங்குவது, *சாயா புலன் எழுச்சி* – இந்திரியங்கள் அடங்காமல் எழுவது, (புலன்) *தன் ஆசை*-விஷயங்களில் ஆசை, *மற்று இவை*-என்னும் இவை, *இரசத்து ஓங்கு அதனுல்*-ரஜோகு₃ணம் ஓங்கி நிற்பதால், *ஓயாமல் உற்று உண்டாம் கண்டாய்*—இடைவிடாமல் பொருந்தி உண்டாகும் என்று அறிவாய்.

---

12. இந்த ச்லோகத்தில் ரஜோகு₃ணம் சரீரத்தில் ஓங்கி நிற்பதை அதன் கார்யங்கொண்டு அறியலாம் என்கிருன். (லோப₄:) தனது செல்வத்தைப் பிறர்க்கீயாதிருக்கும் இயல்வாகிற கருமித்தனம். பொதுவாக 'லோப₄' சப்₃த₃ம் ஆசையைக் குறிக்குமாயினும், மேலே 'ஸ்ப்ருஹா' என்று விஷயங்களில் ஆசையைக் குறிப்பிட்டிருக்கிறபடியால், இங்கு கருமித்தனம் 'லோப₄'பத₃த்திற்குப் பொருளாகக் கொள்ளப்பட்டது. கருமியை 'லோபி₄' என்றும், அவனது தன்மையை 'லோப₄ம்' என்றும் உலகில் பிரஸித்₃த₄மாக வழங்குவது உண்டன்றோ.

अप्रकाशोऽप्रवृत्तिश्च प्रमादो मोह एव च ।
तमस्येतानि जायन्ते विवृद्धे कुरुनन्दन ॥ १३

13. அப்ரகாஶோऽப்ரவ்ருத்திஶ்ச ப்ரமாதோ₃ மோஹ ஏவ ச ।
தமஸ்யேதாநி ஜாயந்தே விவ்ருத்₃தே₄ குருநந்த₃ந ॥

குருநந்த₃ந! — குருகுலத்தோன்றலே! அப்ரகாஶ:— ஜ்ஞாநமுண்டாகாமையும், அப்ரவ்ருத்தி: ச — சோம்பேறித்தனமும், ப்ரமாத₃:—கவனமின்மையும், மோஹ: ஏவ ச — விபரீதஜ்ஞானமும், ஏதாநி—(ஆகிய) இவை, தமஸி விவ்ருத்₃தே₄ — தமோகு₃ணம் மேலோங்கிநிற்கும்போது, ஜாயந்தே — உண்டாகின்றன.

---

(ப்ரவ்ருத்தி: கர்மணாம் ஆரம்ப₄:) 'ப்ரவ்ருத்தி:' என்றாலும், "கர்மணாம் ஆரம்ப₄:" என்றாலும் செயல்புரிவதையே குறிக்கும். ஆயினும் 'ஆரம்ப₄' ஶப்₃த₃ம் ஒரு பயனைக்குறித்துக் காரியம் தொடங்குவதிலேயே பெரும்பாலும் வழங்கப்படுகிறது. 'கர்மணாம்' என்று விஶேஷித்திருப்பதும் இதையே வலியுறுத்துகிறது. ஆகையாலே 'கர்மணாம் ஆரம்ப₄:' என்னும் தொடர் கண்காணும் பயனைத்தரும் 'வேளாண்மை' முதலான செயல்களையும், மறுமையில் பயன்தரும் 'யஜ்ஞம்' முதலான செயல்களையும் குறிப்பதாகக் கொள்வதே பொருத்தமானது. அதனால் 'ப்ரவ்ருத்தி:' என்னும் மற்ற பத₃ம் ஒரு பலனைக்குறித்துச் செய்யப்படாமல், புல்லை நறுக்குவது, அவயவங்களை ஆட்டுவது முதலான தன்னையறியாமல் செய்யும் செயல்களைக் குறிப்பதாகக் கொள்வதே பொருத்தம். (அஶம:) ஶாந்தியின்மை என்று பொருள்படும். இப்பத₃மும் செயல்புரிகையையே குறிக்குமாயினும், முன் இரண்டு பத₃ங்களோடு புநருக்தி ஏற்படாமைக்காக இந்த்₃ரியங்கள் அடங்கி நிற்காமல் தத்தம் விஷயங்களில் ஈடுபடுகையைக் குறிப்பதாகக்கொள்ள வேண்டும். ஶமத₃மஶப்₃த₃ங்கள் இந்த்₃ரியங்கள் அடங்கி நிற்கையைப் பெருவாரியாகக் குறிக்கின்றனவன்றோ. (ஸ்ப்ருஹா) இந்த இந்த்₃ரியங்களின் ஈடுபாட்டுக்குக் காரணமான விஷயங்களில் விருப்பம். (ஏதாநி ரஜஸி விவ்ருத்₃தே₄ ஜாயந்தே) இந்தத் தன்மைகள் ரஜோகு₃ணம் மேலோங்கிநிற்கும்போது விளைகின்றன. முன் ஶ்லோகத்திற்போலே இங்கும் இந்தக்கார்யங்கள் விளைவது கொண்டு ரஜோகு₃ணம் ஶரீரத்தில் மேலோங்கியிருக்கிறது என்று அறியலாம் என்று கருத்து. (ப₄ரதர்ஷப₄) ஸாத்விகர்கள் நிறைந்த ப₄ரதகுலத்தில் உதித்த நீ இப்படி ரஜோகு₃ணம் மேலோங்காதபடி பார்த்துக்கொள்ள வேணும் என்று கருத்து. 12

भा ॥ अप्रकाशः— ज्ञानानुदयः, अप्रवृत्तिश्च —स्तब्धता, प्रमादः- अकार्यप्रवृत्तिफलमनवधानम्, मोहो-विपरीतज्ञानम् । एतानि तमसि प्रवृद्धे जायन्ते—एतैस्तमः प्रवृद्धमिति विद्यात् ॥ १३ ॥

---

13. மன்னுமுணர் வில்லாமை யொன்றின் முயல்வறுதன்
மன்னுமுயி ரோர்ப்பின்மை மாமோக—மென்னுமிவை
மீதி லுயர்தமத்தின் மேவுமவை யாகநீ
கோதில் குருமுதல்வா கொள்.

கோது இல் குருமுதல்வா! — குற்றமற்ற குருகுலத் தோன்றலே!, மன்னும் உணர்வு இல்லாமை—நிலைநின்ற அறிவுண்டாகாமை, ஒன்றில் முயல்வு அறுதல்—எதிலும் முயற்சியில்லாமை, மன்னும் உயிர் ஓர்ப்பின்மை-நிலைநின்ற ஆத்மாவின் விஷயத்தில் கவனமின்மை, மாமோகம்—விபரீத ஜ்ஞானம், என்னும் இவை—என்கிற இத்தன்மைகள், மீதில் உயர் தமத்தின்—தமோகு₃ணம் மேலோங்கிநிற்கும்போது, மேவுமவை ஆக-உண்டாகும் கார்யங்கள் என்று, நீ கொள்-நீ அறிவாயாக.

---

13. இந்த ஶ்லோகத்தில் தமோகு₃ணம் ஶரீரத்தில் ஓங்கி நிற்பதை அதன் காரியம்கொண்டு அறியலாம் என்கிருன். (அப்ரகாஶ:) அறிவு உண்டாகாமை. (ப்ரமாத₃:) கவனமின்மை. இந்த ஶ்லோகத்தில் படிக்கப்படும் ப்ரமாத₃ஶப்₃த₃ம் தமோ குணத்தைப்பற்றிய எட்டாவது ஶ்லோகத்திலும் படிக்கப்படுகை யாலே அங்குபோலே இங்கும் 'செய்யவேண்டிய கடமைகளைக் காட்டிலும் வேறுபட்ட செய்யத்தகாதவற்றில் ஈடுபடுவதற்கு உறுப்பான கவனமின்மை' என்றே பொருள்படுகிறது. இது ஒரு வகையான அறிவின்மையாகும். இது தவிர்ந்த மற்ற ஆத்ம விஷயமான ஜ்ஞானம் உண்டாகாமலிருக்கை அப்ரகாஶ ஶப்₃த₃த்தால் சொல்லப்படுவதாக கோ₃பலீவர்த்த₃ந்யாயத் தாலே தேறும். எட்டாவது ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட தூக்கம் முதலானவற்ருல் வருவது இது என்று கண்டுகொள்வது. (அப்ரவ்ருத்தி: ச) எட்டாவது ஶ்லோகத்தில் 'ஆலஸ்யம்' என்று

यदा सत्त्वे प्रवृद्धे तु प्रलयं याति देहभृत् ।
तदोत्तमविदां लोकानमलान् प्रतिपद्यते ॥ १४

14. யத₃ா ஸத்வேப்ரவ்ருத்₃தே₄ து ப்ரளயம் யாதி தே₃ஹ-ப்₄ருத் l
ததே₃ாத்தமவித₃ாம் லோகாந் அமலாந் ப்ரதிபத்₃யதே ll

தே₃ஹப்₄ருத்—ஶரீரத்திலிருக்கும் ஜீவன், யத₃ா ஸத்வே ப்ரவ்ருத்₃தே₄ து—ஸத்வகு₃ணம் மேலோங்கியிருக்கும் ஸமயத்தில், ப்ரளயம் யாதி (சேத்)—மரணத்தை அடைந்தாஞகில், தத₃ா—அந்த ஸந்த₃ர்ப்ப₄த்தில், அமலாந்— அறிவின்மையாகிற குற்றம் அற்றவையான, உத்தமவித₃ாம் லோகாந்— (ஆத்மாவைப்பற்றிய உண்மையறிவாகிற) மேலான அறிவைப் பெற்றவர்களுடைய ஸமூஹங்களை, ப்ரதிபத்₃யதே—அடைகிருன்.

14. சத்துவமிக் கோக்கந் தரும்பொழுதிற் ருன்மரணத்
தொத்துடம்பு விட்ட வுயிருடையோன்—றத்துவத்தின்
மேலறிவு சேர்ந்தார் மிகவமல மாங்குலத்துச்
சாலவவன் ருன்பிறக்குஞ் சார்ந்து.

சத்துவம் மிக்கு ஓக்கம் தரும் பொழுதில் தான் — ஸத்வகு₃ணம் மேலோங்கியிருக்கும் ஸமயத்தில், மரணத்து ஒத்து உடம்பு விட்ட உயிருடையோன் அவன்தான்—மரணத்தை

---

சொல்லப்பட்ட சோம்பேறித்தனமே இங்கு 'அப்ரவ்ருத்தி:' [(எச்செயலிலும் ஈடுபடாமை] என்று சொல்லப்படுகிறது என்பது தெளிவு. (மோஹ ஏவ ச) எட்டாவது ஶ்லோகத்திலும் அதன் பா₄ஷ்யத்திலும்போலே மோஹஶப்₃த₃ம் இங்கும் விபரீத ஜ்ஞானத்தைக் குறிக்கிறது. (ஏதாநி தமஸி விவ்ருத்₃தே₄ ஜாயந்தே) தமோகு₃ணம் ஶரீரத்தில் மேலோங்கி நிற்கும்போது இத்தன்மைகள் ஜீவனுக்கு உண்டாகின்றன; இத்தன்மைகள் உண்டாகும்போது தமோகு₃ணம் மேலோங்கிநிற்கிறது என்று அறியலாமென்று கருத்து. (குருநந்த₃ந) குருகுலத்தோன்றலான நீ உன் குடிப்பெருமைக்கேற்ப இந்தத் தமோ கு₃ணத்தை அடியோடு விலக்கியிருக்கவேண்டும் என்று பா₄வம்.

भा ॥ यदा सत्त्वं प्रवृद्धम्, तदा सत्त्वे प्रवृद्धे देहभृत् प्रलयम्-मरणं याति चेत्, उत्तमविदाम्—उत्तमतत्त्वविदाम्, आत्मयाथात्म्य-

---

அடைந்து உடம்பை விட்ட ஜீவனானவன், தத்துவத்தின் மேல் அறிவு சேர்ந்தார்—ஆத்மதத்துவத்தைப்பற்றிய உண்மையறிவாகிற மேலான அறிவைப் பெற்றவர்களுடைய, மிக அமலமாம் குலத்து சார்ந்து—அறிவின்மையாகிற குற்றம் சிறிதும் அற்ற குலங்களை அடைந்து, சால பிறக்கும்—நல்ல பிறவியை அடைவான்.

---

14. இந்த ஶ்லோகத்திலும் அடுத்த ஶ்லோகத்திலும் முக்குணங்களில் ஒவ்வொன்று மேலோங்கியிருக்கும்போது மரணமடைந்தால் உண்டாகும் பலன் சொல்லப்படுகிறது, இந்த ஶ்லோகத்தில் சொல்லப்படும் ஸத்வகுணமிகுதியைக் கைக்கொள்வதற்காகவும், அடுத்த ஶ்லோகத்தில் சொல்லப்படும் ரஜஸ்தமோகுணங்களின் மிகுதியைத் தவிர்த்துக்கொள்வதற்காகவும் இந்த ஶ்லோகங்கள் அமைகின்றன. (யதா ஸத்வே ப்ரவ்ருத்தே து) ஸத்வகுணம் மேலோங்கியிருக்கும் ஸமயத்தில் ஸத்வகுணமிகுதி கைக்கொள்ளத்தக்கது என்றும், அடுத்த ஶ்லோகத்தில் சொல்லப்படும் ரஜஸ்தமோ குணங்களின் மிகுதி தவிர்க்கத்தக்கது என்றும் காட்டுவதற்காக, அடுத்த ஶ்லோகத்தில் இல்லாத 'து' ஶப்தம் இங்கு படிக்கப்படுகிறது. (தேஹப்ருத் ப்ரளயம் யாதி) ஶரீரத்திலுள்ள ஜீவன் மரணத்தை அடைந்தானாகில்; 'சேத்' (ஆகில்) என்னும் பதத்தை வருவித்துக்கொள்ள வேண்டும். 'தேஹப்ருத்' [தேஹத்தையுடைய ஜீவன்] என்று விஶேஷித்திருக்கையால், இங்கு சொல்லப்படும் 'ப்ரளயம்' லோக ப்ரளயமல்ல என்றும், தேஹப்ரளயமாகிற மரணமே என்றும் விளங்குகிறது. (ததா) அந்த ஸந்தர்ப்பத்தில். அந்த ஸமயத்திலேயே மறு பிறவி எடுக்க முடியாதாகையாலே, 'அந்த ஸந்தர்ப்பத்தில்' என்று பொருள்கொள்ளவேண்டும். (உத்தம விதாம் அமலாந் லோகாந் ப்ரதிபத்யதே) ஆத்மதத்துவத்தைப் பற்றிய மேலான உண்மை அறிவையுடையவர்களுடைய, அறிவின்மையாகிற குற்றம் இல்லாத ஸமூஹங்களை அடைகிறான். ஆத்ம யாதாத்ம்ய ஜ்ஞானத்தைப்பற்றிய ப்ரகரணமாகையாலே, 'உத்

विदां, लोकान् — समूहान्. अमलान् - मलरहितान्, अज्ञानरहितान् प्रतिपद्यते - प्राप्नोति; सत्त्वे प्रवृद्धे तु मृतः आत्मविदां कुलेषु जनित्वा आत्मयाथात्म्यज्ञानसाधनेषु पुण्यकर्मस्वधिकरोतीत्युक्तं भवति ॥ १४ ॥

---

रजसि प्रलयं गत्वा कर्मसङ्गिषु जायते ।

*15. ரஜஸி ப்ரளயம் க₃த்வா கர்மஸங்கி₃ஷு ஜாயதே ।

ரஜஸி (ப்ரவ்ருத்₃தே₄)—ரஜோகு₃ணம் மேலோங்கியிருக்கையில், ப்ரளயம் க₃த்வா—(ஜீவன்) மரணமடைந்தானாகில், கர்மஸங்கி₃ஷு— ப₂லனின்பொருட்டுக்கர்மங்களை அனுஷ்டிப்பவர்களுடைய குலங்களில், ஜாயதே—பிறவியெடுக்கிறான்.

---

தமவிதா₃ம்' என்றது "ஆத்ம தத்துவத்தைப் பற்றிய மேலான உண்மையறிவை யுடையவர்களுடைய" என்று பொருள்படுகிறது. 'லோகாந்' என்றது தே₃வலோகத்தையோ பரப்₃ரஹ்மலோகத்தையோ கூறுவதாகக்கொள்வது இந்த ப்ரகரணத்திற்கும், அடுத்த ஶ்லோகத்தில் 'கர்மஸங்கி₃ஷு ஜாயதே' 'மூட₄யோநிஷு ஜாயதே' என்று ஒவ்வொரு ஸமூஹத்தில் பிறப்பதாகச் சொல்லியிருப்பதற்கும் முரண்படுமாகையாலே, "ஆத்மஜ்ஞானிகளின் ஸமூஹங்களை" என்று பொருள்படுகிறது. ஆத்ம ஜ்ஞானிகளுக்கு அறிவின்மையே குற்றமாகையாலே, 'அமலாந்' என்றது "அறிவின்மையாகிற குற்றம் அற்ற" என்று பொருள்படுகிறது. 'ப்ரதிபத்₃யதே' [அடைகிறான்] என்று இங்கு சொல்லப்பட்டபோதிலும், அடுத்த ஶ்லோகத்தில் மற்ற இருவர்க்கும் 'ஜாயதே' என்று ஒவ்வொரு ஸமூஹத்தில் பிறப்பைச் சொல்லியிருப்பதையொட்டி, இங்கும் 'ஆத்ம ஜ்ஞானிகளின் ஸமூஹங்களில் பிறவி எடுக்கிறான்' என்று பொருள்கொள்ள வேண்டும். ஆக, "ஸத்வகு₃ணம் மேலோங்கியிருக்கும்போது மரணமடைந்த ஜீவன், ஆத்ம ஜ்ஞானிகளின் குலங்களில் பிறந்து ஆத்மாவைப்பற்றிய உண்மையறிவுக்கு ஸாத₄னமான புண்ய கர்மங்களை, அக்குடியிற் பிறந்ததனாலேயே செய்யத்தொடங்குகிறான்" என்பது ஶ்லோகத்தின் திரண்ட பொருளாகும். 14.

*15. ஶ்லோகத்தின் முற்பாதியில் ரஜோகு₃ணம் மேலோங்கியிருக்கும்போது மரணமடைந்தவன் பெறும் ப₂லனைக்கூறுகிறான். (ரஜஸி) ரஜோகு₃ணம் மேலோங்கியிருக்கையில். 'ப்ரவ்ருத்₃தே₄'

भा ।। रजसि प्रवृद्धे मरणं प्राप्य फलार्थं कर्म कुर्वतां कुलेषु जायते; तत्र जनित्वा स्वर्गादिफलसाधनकर्मस्वधिकरोतीत्यर्थः ।।

तथा प्रलीनस्तमसि मूढयोनिषु जायते ।। १५

15* ததா₂ ப்ரலீநஸ் தமஸி மூட₄யோநிஷு ஜாயதே ॥

ததா₂—அவ்வண்ணமே, தமஸி (ப்ரவ்ருத்₃தே₄) - தமோ கு₃ணம் மேலோங்கிநிற்கும்போது, ப்ரலீந: — மரணமடைந் தவன், மூட₄யோநிஷு—அறிவில்லாத (திர்யக் ஸ்தா₂வர) யோனிகளில், ஜாயதே—பிறவியெடுக்கிருன்.

15. கன்மநயந் தோர்குலத்திற் காதலுடன் ருன்பிறக்கும்
வன்மையிர சத்துயர்வின் மாய்ந்தவவ—னன்மையிலா
மூட ரிடைப்பிறக்கு முழுதுந் தமத்துயர்வில்
பீடை யுறமரித்தான் பின்.

வன்மை இரசத்து உயர்வில் மாய்ந்த அவன் — வலிமை மிக்க ரஜோகு₃ணம் மேலோங்கிநிற்கும்போது மரண மடைந்தவன், கன்மம் நயந்தோர் குலத்தில்—ப₂லனைக் குறித்துக் கர்மங்களை அனுஷ்டி₂ப்பதில் பற்றுள்ளவர்க ளுடைய குலத்தில், காதலுடன் தான் — விருப்பத்துடனே, பிறக்கும்—பிறவியெடுப்பான், முழுதும் தமத்து உயர்வில்— தமோகு₃ணம் மிகவும் ஓங்கி நிற்கும்போது, மரித்தான்— இறந்தவன், பின் பீடை உற—மேன்மேலும் பல துன்பங்களை

என்னும் பத₃த்தை முன் ஸ்லோகத்திலிருந்து வருவித்துக்கொள்ள வேண்டும். (ப்ரளயம் க₃த்வா) சென்ற ஸ்லோகத்திற்போலே இங்கும் 'தே₃ஹப்ரளயமாகிற மரணத்தை அடைந்தாருகில்' என்று பொருள்கொள்ளவேண்டும். (கர்மஸங்கி₃ஷு ஜாயதே) ப₂லனைக்குறித்துக் கர்மங்களைச் செய்பவர்களுடைய குலங்களில் பிறவி எடுக்கிருன். பன்னிரண்டாவது ஸ்லோகத்தில் 'கர்மணும் ஆரம்ப₄:' என்று ரஜோகு₃ண வ்ருத்₃தி₄யின் கார்யம் சொல்லப் பட்டிருக்கிறதாகையாலே, இங்கு 'கர்மஸங்கி₃ஷு' என்பதற்கு இப்படியே பொருள் கொள்ள வேண்டும். ஆக, "ஸ்வர்க்க₃ம் முதலான ப₂லன்களைப் பெறுவதற்காக ஜ்யோதிஷ்டோமம் முத லான கர்மங்களை அனுஷ்டி₂ப்பவர்களுடைய குலங்களில் பிறவி யெடுத்து, அக்குடிப்பிறப்பினுலேயே அத்தகைய கர்மங்களை அனுஷ் டிக்கத் தொடங்குகிருன் இந்த ராஜஸன்" என்பது முற்பாதியின் திரண்டபொருள்,

*15.

भा ॥ तथा तमसि प्रवृद्धे मृतो मूढयोनिषु-श्वसूकरादियोनिषु जायते; सकलपुरुषार्थारम्भानर्हो जायत इत्यर्थः ॥ १५ ॥

कर्मणस्सुकृतस्याहुस्सात्त्विकं निर्मलं फलम् ।
रजसस्तु फलं दुःखमज्ञानं तमसः फलम् ॥ १६

16. கர்மண; ஸுக்ருதஸ்யாஹு: ஸாத்த்விகம் நிர்மலம் ப₂லம்।
ரஜஸஸ்து ப₂லம் து₃:க்க₂ம் அஜ்ஞாநம் தமஸ: ப₂லம் ॥

ஸுக்ருதஸ்ய கர்மண: — (ஜ்ஞானிகளின் குலத்தில் பிறந்தவன் செய்த) ப₂லனில் பற்றற்ற கர்மங்களின், ஸாத்விகம் ப₂லம் — ஸத்வ கு₃ணத்திஞல் உண்டாகும் ப₂லன், நிர்மலம் ஆஹு:— துன்பம் சிறிதுமற்றது என்று (ஸத்வ கு₃ணத்தின் பெருமையறிந்தவர்கள்) கூறுகிருர்கள். ரஜஸ: ப₂லம் து—(மரண காலத்தில் மேலோங்கிநிற்கும்) ரஜோகு₃ணத்தின் ப₂லமோவெனில், து₃:க்க₂ம் (ஆஹு:)—

அனுப₄விக்கும்படியாக, நன்மை இலா மூடரிடை பிறக்கும்— நன்முயற்சி செய்யமுடியாத அறிவற்ற (திர்யக் ஸ்த₂ாவரப்) பிறவிகளில் பிறப்பான்.

---

15*. ஶ்லோகத்தின் பிற்பாதியில், தமோகு₃ணம் மேலோங்கியிருக்கும்போது மரணமடைந்தவன் பெறும் ப₂லனைக்கூறுகிருன். (தத₂ா) ஸத்வகு₃ணத்துக்கும் ரஜோகு₃ணத்துக்கும் சொன்ன முறையில். (தமஸி) தமோகு₃ணம் மேலோங்கிநிற்கும்போது. 'ப்ரவ்ருத்₃தே₄' என்னும் பத₃த்தை முன் ஶ்லோகத்திலிருந்து இங்கும் வருவித்துக்கொள்ளவேண்டும். (ப்ரலீந:) முன்போலவே 'மரணமடைந்தவன்' என்று பொருள் கொள்ள வேண்டும். (மூட₄யோநிஷு ஜாயதே) அறிவில் மிகக் குறைந்த நாய், பன்றி முதலான விலங்குப் பிறவிகளிலும், மரம் செடி கொடிகள் முதலான தாவரப்பிறவிகளிலும் பிறவி எடுக்கிறன். ஆக, "ஒன்றரை ஶ்லோகங்களாலே சொல்லப்பட்ட ஸாத்விகராஜஸர்களைப்போலே எந்தப்புருஷார்த்தத்தையும் பெறுவதற்கு முயற்சிகளை மேற்கொள்ள முடியாத அறிவில் மிகக் குறைந்த பிறவிகளில் பிறக்கிருன் தா₃மஸன்" என்பது ஶ்லோகத்தின் பிற்பாதியின் திரண்டபொருள்.

15.

भा॥ एवं सत्त्वप्रवृद्धौ मरणमुपगम्यात्मविदां कुले जायते तेनानुष्ठितस्य सुकृतस्य—फलाभिसन्धिरहितस्य मदाराधनरूपस्य कर्मणः फलं पुनरपि ततोऽधिकसत्त्वजनितं निर्मलं-दुःखगन्धरहितं भवतीत्याहुः

---

ஸாம்ஸாரிகத்துன்பத்தொடரே என்று (ரஜோகு₃ணத்தின் தன்மை அறிந்தவர்கள்) கூறுகிறுர்கள். தமஸ: ப₂லம் (து)—(மரண காலத்தில் மேலோங்கிநிற்கும்) தமோகு₃ணத்தின் ப₂லமோவெனில், அஜ்ஞாநம் (ஆஹு:) — மேன்மேலே அறிவின்மையை அடைவதே என்று (தமோகு₃ணத்தின் தன்மை அறிந்தவர்கள்) கூறுகிறுர்கள்.

16. நீதி கருமத்து நின்மலமா நற்பயனைக்
கோதின் முதற்குணத்தே கூறுவரான்—மீதியலுந்
துக்க மிடைக்குணத்திற் சூழ்பயனுப் பிற்குணத்திற்
றக்க வறிவின்மை தான்.

கோது இல் முதல் குணத்தே — குற்றமற்ற ஸத்வ கு₃ணத்திஞலுண்டாகும், நீதி கருமத்து நல் பயனை-பற்றற்ற புண்ய கர்மங்களுடைய பயனை, நின்மலமா கூறுவரால்-துன்பம்சிறிதும் அற்றிருக்கை என்று (ஸத்வகு₃ணத்தின் பெருமை அறிந்தவர்கள்) கூறுகிறுர்கள்; இடைக்குணத்தில்—நடுக் குணமான ரஜோகு₃ணத்திஞல், சூழ்பயன் — உண்டாகும் பயன், மீது இயலும் துக்கம் ஆ—ஸாம்ஸாரிகத் துன்பத் தொடரே என்றும், பின் குணத்தில்—கடைசியான தமோ கு₃ணத்திஞல், சூழ்பயன்-உண்டாகும் பயன், தக்க அறிவு இன்மை தான்ஆ — நல்ல அறிவு இல்லாமற்போவதேயாம் என்றும் (அந்தந்த கு₃ணங்களின் தன்மையறிந்தவர்கள் கூறுகிறுர்கள்.)

---

16. முன் இரண்டு ச்லோகங்களிலும் "முக்குணங்களிலும் ஒவ்வொன்று மேலோங்கியிருக்கும்போது, அதன் பயனுக ஒவ்வொரு வகையான பிறவியை அடைகிருன் ஜீவன்" என்று சொல்லப்பட்டது. அந்த கு₃ணங்களின் பயனுக மேன்மேலும் அத்தகைய பிறவிகளே உண்டாகி, மேன்மேலே அப்பிறவிகளின் பயன்களை வளரச்செய்கின்றன என்று கூறுகிருன் இந்த ச்லோகத்தில்.

सत्त्वगुणपरिणामविदः । अन्त्यकालप्रवृद्धस्य रजसस्तु फलं फलसाधन कर्मसङ्गिकुलजन्म-फलाभिसन्धिपूर्वककर्मारम्भ — तत्फलानुभवपुनर्जन्म - रजोवृद्धि-फलाभिसन्धिपूर्वककर्मारम्भपरम्परारूपं सांसारिकदुःखप्रायमेवे-

---

(ஸுக்ருதஸ்ய கர்மண; ஸாத்விகம் நிர்மலம் ப₂லம் ஆஹு:) பதினைலாவது ஶ்லோகத்தில் 'ஸத்வகு₃ணம் மேலோங்கியிருக்கும் போது மரணமடைந்தவன் ஆத்ம ஜ்ஞானிகளின் குலத்தில் பிறக்கிருன்' என்றும், 'அக்குலத்துக்குரிய புண்ய கர்மங்களைச் செய்கிருன்' என்றும் உணர்த்தப்பட்டது. அவனுல் அனுஷ்டி₂க்கப் பெற்றதாய், ப₂லனில் பற்று இல்லாததாய், பரமபுருஷனுன எனக்கு ஆராத₄னரூபமாயிருக்கும் புண்ய கர்மங்களின் ப₂லம்— மேன்மேலும் மிகுதியான ஸத்வகு₃ணம் வளரப்பெற்று, சிறிதும் து₃:க்க₂ம் அற்றவனுகையே என்று ஸத்வ கு₃ணத்தின் பெருமை அறிந்தவர்கள் கூறுகிருர்கள். பதினைலாவது ஶ்லோகத்தில் 'ஜ்ஞானிகளின் குலத்தில் பிறக்கிருன் ஸாத்விகன்' என்று சொல் லப்பட்டது. அதிலிருந்து அவன் ப₂லனில் பற்றற்ற கர்மங்களை அனுஷ்டி₂க்கிருன் என்று தாத்பர்யார்த்த₂மாகத் தேறுகிறது. அவ்விஷயம் இங்கு 'ஸுக்ருதஸ்ய கர்மண:' என்று அனுவதி₃க்கப் படுகிறது; 'ஸாத்விகம்' என்னும் பத₃த்தாலே இந்தப் புண்ய கர்மங்களாலே ஸத்வகு₃ணம் வளருகிறது என்று உணர்த்தப்படு கிறது. இதன் ப₂லனுக இறுதியில் துன்பம் சிறிதுமற்றதான ஆத்மஸாக்ஷாத்காரம் விளைகிறது என்று 'நிர்மலம் ப₂லம்' என்ப தாலே உணர்த்தப்படுகிறது. (ரஜஸஸ்து ப₂லம் து₃:க்க₂ம் ஆஹு:) மரணகாலத்தில் ரஜோகு₃ணம் மிகுந்திருக்கப்பெற்ற ராஜ ஸனுக்கு, அந்த ரஜோகு₃ணத்தின் ப₂லனுக ஸாம்ஸாரிகத் துன் பத்தொடர் விளைகிறது என்று கூறுகின்றனர். எப்படி? எனில்; முற்கூறியபடி அவன் ப₂லஸாத₄னகர்மங்களில் பற்றுடைய வர்களது குலத்தில் பிறந்து, ப₂லனில் பற்றுடையகர்மங்களை அனுஷ் டி₂த்து அதன் ப₂லனை அநுப₄வித்தபின் அத்தகைய பிறவிகளி லேயே மறுபடியும் பிறந்து, ரஜோகு₃ணம் மேன்மேலே வளரப் பெற்று, மேன்மேலும் அத்தகைய கர்மங்களையே செய்து, அவற்றின் பயனுக ஸாம்ஸாரிகத் துன்பத்தொடரையே அடைகிருன் என்று ரஜோகு₃ணத்தின் தன்மையை அறிந்தவர்கள் கூறுகிருர்கள்.

त्याहुस्तद्गुणयाथात्म्यविदः । अज्ञानं तमसः फलम्-एवमन्त्यकाल-प्रवृद्धस्य तमसः फलमज्ञानपरम्परारूपम् ॥ १६ ॥

भा ॥ तदधिकसत्त्वादिजनितं निर्मलादिफलं किमित्यत्राह —
सत्त्वात्संजायते ज्ञानं रजसो लोभ एव च ।
प्रमादमोहौ तमसो भवतोऽज्ञानमेव च ॥ १७

17. ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம் ரஜஸோ லோப₄ ஏவ ச |
ப்ரமாத₃மோஹௌ தமஸ: ப₄வதோऽஜ்ஞாநமேவ ச ||

ஸத்வாத்— (மிகுதியான) ஸத்வ கு₃ணத்திஞலே, ஜ்ஞாநம் - (ஆத்மஸாக்ஷாத்காரமுள்ளிட்ட) அறிவு, ஸஞ்ஜாயதே- நன்கு விளைகிறது; ரஜஸ: - (மிகுதியான) ரஜோகு₃ணத்தாலே, லோப₄: ஏவ ச—ஸ்வர்க்க₃ம் முதலான ப₂லன்களில் ஆசையே உண்டாகிறது; தமஸ:—(மிகுதியான) தமோ கு₃ணத்திஞல், ப்ரமாத₃மோஹௌ — கவனமின்மையால் உண்டாகும் தீய கர்மங்களில் முயற்சியும், (அதன் விளைவாக) விபரீதஜ்ஞானமும், ப₄வத:—உண்டாகின்றன; அஜ்ஞாநம் ஏவ ச — (அதுகாரணமாக) ஜ்ஞானமின்மையும் விளைகிறது.

17. முற்குணத்தி லாகு முழுதுணர்வு தானிடையி
லற்குணத்து லோப மதுவுண்டாம்—பிற்குணத்தி
லோராமை மோக முணராமை யுண்டாகுஞ்
சீரார் புகழ்விசயா சேர்ந்து.

சீரார் புகழ் விசயா—சிறப்பு மிக்க புகழை உடைய அர்ஜுஞ! முன் குணத்தில்—முதல் கு₃ணமான ஸத்வ கு₃ணத்

(அஜ்ஞாநம் தமஸ: ப₂லம் ஆஹு:) அவ்வண்ணமே மரணகாலத்தில் தமோகு₃ணம் மிக்கிருக்கையாலே மூட₄யோனிகளில் பிறந்த தாமஸனும் அறிவின்மையை அடைந்து, மேன்மேலே தாழ்ந்த பிறவிகளைப்பெறுகிருன்; அதன் விளைவாக அந்தத் தாமஸனுக்கு மேன்மேலே வளரும் தமோகு₃ணத்தின் ப₂லஞக மேன்மேலே அஜ்ஞான பரம்பரைகள் விளைகின்றன என்று தமோகு₃ணத்தின் தன்மையை அறிந்தவர்கள் கூறுகிருர்கள். 16.

भा । एवं परम्परया जातादधिकसत्त्वादात्मयाथात्म्यापरोक्ष्यरूपं ज्ञान जायते । तथा प्रवृद्धाद्रजसस्स्वर्गादिफललोभो जायते । प्रवृद्धाच्च तमसः प्रमादः — अनवधाननिमित्तासत्कर्मणि प्रवृत्तिः ; ततश्च मोहः- विपरीतज्ञानम्; ततश्चाधिकतरं तमः, ततश्चाज्ञानम्- ज्ञानाभावः ॥ १७ ॥

---

திஞல், முழுது உணர்வு தான் ஆகும்—ஆத்மாவை நேரே காண்பது வரையிலான அறிவு உண்டாகும்; இடையில் அல் குணத்து — நடுவிலுள்ள தீய ரஜோகு₃ணத்தால், லோபம் அது உண்டாம் — ஸ்வர்க்க₃ம் முதலான ப₂லன் களில் ஆசை உண்டாகும்; பின் குணத்தில் — பிற்பட்ட (தாழ்ந்த) தமோகு₃ணத்தால். ஓராமை—கவனமில்லாமை யால் விளையும் தீயகர்மங்களில் முயற்சியும், மோகம்—(அத ஞல் விளையும்) விபரீத ஜ்ஞாநமும், உணராமை—(அதஞல் விளையும்) அறிவின்மையும், சேர்ந்து உண்டாகும் — ஒன்று கூடி உண்டாகும்.

---

17. முன் ஶ்லோகத்தில் சொன்னபடி மிகுதியான ஸத்வகு₃ணம் முதலானவற்ருலே விளையும் நிர்மலப₂லம் முதலானவை யாவை என்று விளக்குகிருன் இந்த ஶ்லோகத்திலும், அடுத்த ஶ்லோகத் திலும். (ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞானம்) இவ்வண்ணமாக மேன் மேலே உண்டான மிகுதியான ஸத்வகு₃ணத்திஞலே ஆத்மாவை உள்ளபடி நேரே காண்கையாகிற ஆத்ம ஸாக்ஷாத்கார ஜ்ஞானம் விளைகிறது. இது ஸத்வகு₃ணமிகுதியாலே இம்மையில் இறுதியாக உண்டாகும் நிர்மலப₂லம் என்று கருத்து; மறுமை யில் உண்டாகும் மோக்ஷமாகிற நிர்மலப₂லம் அடுத்த ஶ்லோ கத்தில் கூறப்படுகிறது. (ரஜஸோ லோப₄ ஏவ ச) இவ்வண்ணமே மேன்மேலே உண்டான மிகுதியான ரஜோகு₃ணத்தால் ஸ்வர்க்க₃ம் முதலான ப₂லன்களில் எளிதில் மாற்ற முடியாத பேராசை உண் டாகிறது. இதன் ப₂லஞக ஸாம்ஸாரிகத் துன்பத்தொடர் உண் டாவதற்குக் காரணம் அடுத்த ஶ்லோகத்தில் கூறப்படுகிறது. (தமஸ: ப்ரமாத₃மோஹௌ ப₄வத:) இவ்வண்ணமே மேன்மேலே உண்டான மிகுதியான தமோகு₃ணத்திஞல், கவனமின்மையால் உண்டாகும் தீய கர்மங்களில் முயற்சியும், அதன் விளைவாக விபரீத

ऊर्ध्वं गच्छन्ति सत्त्वस्था मध्ये तिष्ठन्ति राजसाः ।
जघन्यगुणवृत्तिस्था अधो गच्छन्ति तामसाः ॥ १८

18. ஊர்த்₄வம் க₃ச்ச₂ந்தி ஸத்வஸ்த₂ா: மத்₄யே திஷ்ட₂ந்தி ராஜஸா: ।
ஜக₄ந்யகு₃ணவ்ருத்திஸ்த₂ா: அதே₄ா க₃ச்ச₂ந்தி தாமஸா:॥

ஸத்வஸ்த₂ா: — ஸத்வகு₃ணமிகுதியை உடையவர்கள், ஊர்த்₄வம் க₃ச்ச₂ந்தி — (காலக்ரமத்தில்) மோக்ஷமாகிற உயர் நிலேக்குச் செல்கின்றனர்; ராஜஸா: - ரஜோகு₃ண மிகுதியை உடையவர்கள், மத்₄யே திஷ்ட₂ந்தி – (பெரும் பாலும் துன்பத்தையே தரும்) இடைநிலேப்பிறவிகளிலேயே உழல்கிருர்கள்; தாமஸா:— தமோகு₃ணமிகுதியை உடைய வர்களோவெனில், ஜக₄ந்ய கு₃ணவ்ருத்திஸ்த₂ா: — மேன் மேலே தாழ்ந்த தமோகு₃ணச் செயல்களில் ஈடுபட்டவர் களாய், அதே₄ா க₃ச்ச₂ந்தி — (மேன்மேலே அறிவின்மை மிகுந்து) கடைநிலேப் பிறவிகளே அடைகிருர்கள்,

18, மேலடைவர் முற்குணத்தோர் மேவு நடுக்குணத்தோர்
சாலநடு வாமுலகிற் ருனிற்பர்—ஞாலத்துப்
பின்ருங் குணத்தியல்வோர் பீடழிவர் கீழ்மையினே
யெந்நாளுஞ் சேர விழிந்து.

முற்குணத்தோர் — முதலாவதான ஸத்வகு₃ணத்தின் மிகுதியையுடையவர்கள், மேல் அடைவர் —காலக்ரமத்தில் (மோக்ஷமாகிற) உயர்நிலேக்குச் செல்கின்றனர்; நடு மேவு

ஜ்ஞானமும் உண்டாகின்றன, பதின்மூன்ருவது ஶ்லோகத்தில் ப்ரமாத₃ மோஹமப்₃த₃ங்களின் பொருள் இவ்வண்ணமே நிர்ணயிக் கப்பட்டதன்ருே. (அஜ்ஞாநமேவ ச) 'ப₄வதி' என்று சேர்த்துக் கொள்ள வேண்டும். விபரீத ஜ்ஞானத்தோடு நில்லாமல், அதன் வினேவாக மேன்மேலே தமோகு₃ணம் வளரப்பெற்று அது காரண மாக அறிவின்மையும் மேன்மேலே வளர்கிறது. இவ் வஜ்ஞானம் மேன்மேற் பிறவிகளில் எந்த அளவிற்கு வளர்கிறது என்பது அடுத்த ஶ்லோகத்தில் கூறப்படுகிறது. 17.

भा ॥ एवमुक्तेन प्रकारेण सत्त्वस्था ऊर्ध्वं गच्छन्ति -- क्रमेण संसारबन्धान्मोक्षं गच्छन्ति । रजसस्स्वर्गादिफललोभकरत्वाद्राजसाः फल साधनभूतं कर्मानुष्ठाय तत्फलमनुभूय पुनरपि जनित्वा तदेव कर्मानुष्

---

குணத்தோர் — நடுவிலுள்ள ரஜோகு₁ணத்தின் மிகுதியை உடையவர்கள், நடுவாம் உலகில் தான் சால நிற்பர் — (பெரும்பாலும் துன்பத்தைத் தரும்) இடைநிலைப்பிறவிகளிலேயே மிக உழல்கிறுர்கள்; பின் ஆம் குணத்து இயல்வோர்—கடையான தமோகு₃ணத்தின் மிகுதியை உடையவர்கள், கீழ்மையினை எந் நாளும் சேர இழிந்து—மேன்மேலே தாழ்ந்த தமோகு₃ணச் செயல்களிலேயே எப்போதும் ஈடுபட்டவர்களாய், ஞாலத்து பீடு அழிவர்—இவ்வுலகில் (மேன்மேலே) அறிவின்மை மிகுந் திருக்கும் கடைநிலைப்பிறவிகளை அடைகிருர்கள்,

---

18. பதினுருவது ஸ்லோகத்தில் சொல்லப்பட்ட நிர்மலப₂லம், து₃:க்க₂ப₂லம், அஜ்ஞாநப₂லம் என்னும் மூவகைப் ப₂லன்களையும் இந்த ஸ்லோகத்தில் மேலும் விளக்குகிருன். (ஊர்த்₄வம் க₃ச்ச₂ந்தி ஸத்வஸ்த₂ா:) ஸத்வகு₃ண மிகுதியை உடையவர்கள் சென்ற ஸ்லோகத்தில் சொல்லப்பட்டபடி ஆத்ம ஸாக்ஷாத்காரத்தைப் பெற்று, காலக்ரமத்தில் ப்ராரப்₃த₄கர்மம் அழியும்போது உயர்நிலையாகிற மோக்ஷத்தைப் பெறுகிருர்கள். நிலையான ஆத்ம ஸாக்ஷாத்காரமே மோக்ஷமாகையாலே இது "ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம்" என்று சென்ற ஸ்லோகத்தில் சொன்னதற்கு விவரணமாகவும் ஆகிறது. (மத்₄யே திஷ்ட₂ந்தி ராஜஸா:) முன் ஸ்லோகத்தில் சொல்லப்பட்டபடி ரஜோகு₃ணம் ஸ்வர்க்க₃ம் முதலானவற்றில் பேராசையை விளைக்கையால், ரஜோகு₃ணம் மிகுந்தவர்கள் ஸ்வர்க்க₃ம் முதலான இடைநிலைப் ப₂லன்களுக்கு ஸாத₄னமான ஜ்யோதிஷ்டோமம் முதலான கர்மங்களை அநுஷ்டி₂த்து, அந்தப் ப₂லன்களை அநுப₄வித்து, மறுபடியும் இந்நிலவுலகில் பிறந்து அத்தகைய கர்மங்களையே அநுஷ்டி₂த்து ஸ்வர்க்க₃ம் முதலான ப₂லன்களைப்பெற்று மறுபடியும் மறுபடியும் பிறக்கையாலே பெரும்பாலும் துன்பத்தையே

तिष्ठन्तीति मध्ये तिष्ठन्ति । पुनरावृत्तिरूपतया दुःखप्रायमेव तत् । तामसास्तु जघन्यगुणवृत्तिस्था उत्तरोत्तरनिकृष्टतमोगुणवृत्तिषु स्थिता अधो गच्छन्ति— अन्त्यजत्वम्, ततस्तिर्यक्त्वम्, ततः क्रिमिकीटादिजन्म, [ततः] स्थावरत्वम्. ततोऽपि गुल्मलतात्वम्, ततश्च शिलाकाष्ठलोष्टतृणादित्वं गच्छन्तीत्यर्थः ॥ १८ ॥

---

தரும் இடைநிலைப் பிறவிகளிலேயே உழல்கிறார்கள். "ரஜஸஸ்து பலம் து:க்கம்" என்று பதினாறும் ஶ்லோகத்தில் சொல்லப் பட்டது இத்தால் விவரிக்கப்பட்டதாகிறது. (தாமஸா: ஜகந்ய குணவ்ருத்திஸ்தா:) தமோகுணம் மிகுந்தவர்கள் முன் ஶ்லோகத்தில் கூறியபடி ப்ரமாத மோஹங்களையும் அஜ்ஞானத் தையும் அடைகையாலே, மேன்மேலே தாழ்ந்த தமோ குணச் செயல்களான கொலை, களவு முதலானவற்றில் முக்கரணங்களா லும் ஈடுபடுகிறார்கள். (அதோ கச்சந்தி) அது காரணமாக மேன் மேலே அறிவின்மைமிகுந்த கடைநிலைப்பிறவிகளை அடைகிறார்கள் அதாவது:—

"வாசிகை: பக்ஷிம்ருகதாம் மாநஸை: அந்த்யஜாதிதாம் ।
ஶரீரஜை: கர்மதோஷை: யாதி ஸ்தாவரதாம் நர: ॥"

[(தமோகுணத்தால் விளையும்) ஈனச் செயல்களை மனத்தால் நினைத் தானாகில் மனிதன் பஞ்சம ஜாதியில் பிறக்கிறான். வாயினால் செய்தானாகில் பறவைகளாகவும், விலங்குகளாகவும் பிறக்கிறான்; உடலாலேயே செய்தானாகில் தாவரப் பிறவியை அடைகிறான்.] முதலான ப்ரமாணங்களிற் சொன்னபடியே தமோகுணச் செயல் கள் வளரவளர முதலில் குலந்தாங்கு சாதிகள் நாலிலும் கீழ் இழிந்த பிறவிகளிலும், அதற்குப்பின் விலங்குகளாகவும், பறவை களாகவும், அதற்குப்பின் புழு பூச்சிகளாகவும், அதற்குப்பின் மரங் களாகவும், அதற்குப்பின் செடிகொடிகளாகவும், அதற்குப்பின் புல்பூண்டு, கல், கட்டை, மண்கட்டி முதலான உடல்களோடு கூடியவனாகவும் பிறக்கிறான். "அஜ்ஞாநம் தமஸ: பலம்" என்று பதினாறுவது ஶ்லோகத்தில் சொன்னது இத்தால் விளக்கப்பட்டது. ஆக இந்த ஶ்லோகமீறாக, "குணபந்தவிதா" என்று கீதார்த்த ஸங்க்ரஹத்தில்(18) அநுஸந்திக்கப்பட்ட 'குணங்கள் ஜீவனை ஸம்ஸாரத்தில் பிணைக்கும் வகை' விளக்கப்பட்டதாயிற்று. 18.

भा ॥ आहारविशेषैः फलाभिसन्धिरहितसुकृतविशेषैश्च परम्परया प्रवर्धितसत्त्वानां गुणात्ययद्वारेण ऊर्ध्वगमनप्रकारमाह—

नान्यं गुणेभ्यः कर्तारं यदा द्रष्टाऽनुपश्यति ।
गुणेभ्यश्च परं वेत्ति मद्भावं सोऽधिगच्छति ॥ १९

19. நாந்யம் கு₃ணேப்₄ய: கர்த்தாரம் யதா₃ த்₃ரஷ்டாநுபஶ்யதி।
குு₃ணேப்₄யஶ்ச பரம் வேத்தி மத்₃பா₄வம்
ஸோऽதி₄க₃ச்ச₂தி ॥

த்₃ரஷ்டா—ஆத்மாவை நேரே கண்ட ஸத்வ நிஷ்டன், கு₃ணேப்₄ய: அந்யம் — ஸத்வாதி₃கு₃ணங்களைக்காட்டிலும் வேறுபட்ட தன் ஆத்மாவை, கர்த்தாரம் ந அநுபஶ்யதி— செயல்புரிபவனாகஎப்போது கருதுவதில்லையோ, கு₃ணேப்₄ய: பரம் ச (யதா₃) வேத்தி—(செயல்புரியும்) கு₃ணங்களைக் காட்டிலும் வேறுபட்டவனாக (செயல்புரியாதவனாக)வும் (தன் ஆத்மாவை) எப்போது கருதுகிறானோ (அப்போது), ஸ: —அவன், மத்₃பா₄வம்—எனது தன்மையை, அதி₄க₃ச்ச₂தி—அடைகிறான்.

19. மிக்க குணமவற்றில் வேறுபட்ட கத்தாவைத்
தக்க வுணர்வுடையோன் தானுணரான் - றெக்ககுணந்
தன்னிற் பரமெனவுந் தன்னறிவான் சேருமே
யென்னிற் பரத்தன்மை யேய்ந்து.

தக்க உணர்வுடையோன் — ஆத்மாவை நேரே கண்ட ஸத்வநிஷ்டன், மிக்க கு₃ணமவற்றில் வேறுபட்ட கத்தாவை தான் உணரான்—செயல்புரியும் இயல்வுடைய முக்குணங்களைக்காட்டிலும் வேறுபட்ட தன் ஆத்மாவை செயல் புரிபவனாகக்கருதாதவனாய், தொக்க குணம்தன்னில் பரம் எனவும் – செயல்புரியும் கு₃ணங்களைக்காட்டிலு வேறுபட்ட (செயல்புரியாத) வன் என்றும், தன் அறிவான—தன் ஆத்மாவைக் கருதுகின்றவன், என்னில் பரத்தன்மை-எனது சிறந்த தன்மையை, ஏய்ந்து சேருமே —பொருந்தி அடைவான்.

भा॥ एवं सात्त्विकाहारसेवया फलाभिसन्धिरहितभगवदाराधनरूप-कर्मानुष्ठानैश्च रजस्तमसी सर्वात्मनाऽभिभूय उत्कृष्टसत्त्वनिष्ठो यदाऽयं द्रष्टा

19. இனி, இந்த ஶ்லோகத்தில் "தேஷாம் கர்த்ருத்வம்" [கீ₃தார்த்த₂ 18] என்று அநுஸந்தி₄க்கப்பட்ட கு₃ணங்களின் கர்த்ருத்வத்தைக்கூறி, இது தொடங்கி இருபத்தாறுவது ஶ்லோக மீறுக. "தந்நிவர்த்தநம்" [கீ₃தார்த்த₂ 18] என்று அநுஸந்தி₄க்கப் பட்ட 'கு₃ணங்களைக்கடந்து நிற்கும் வகை' விவரிக்கப்படுகிறது. சென்ற ஶ்லோகமீறுக, ஸத்வாதி₃ கு₃ணங்கள் ஜீவனை ஸம்ஸாரத்தில் பிணைக்கும் வகையைச் சொல்லுகிறதெனில், "ஊர்த்₄வம் க₃ச்ச₂ந்தி ஸத்வஸ்த₂ா:" என்று சென்ற ஶ்லோ கத்தில் "ஸத்வகு₃ணம் மிக்கவர்கள் மோக்ஷத்தை அடைகின் றனர்" என்று கூறியது எப்படிப் பொருந்தும்? என்னும் கேள்வியும், "இந்த ஶ்லோகத்திலிருந்து தொடங்கி குணங்களைக் கடந்து நிற்ப வனே மோக்ஷமடைகிறன் என்று கூறுவதும், 'ஸத்வம் மிக்கவர் கள் மோக்ஷமடைகிறர்கள்'(18) என்று கூறியதும் ஒன்றோடொன்று முரண்படுகின்றனவே" என்னும் கேள்வியும் எழுகின்றன. "ஸாத்விகமான ஆஹாரத்தை உண்பதாலும், ப₂லனில் பற்றற்ற கர்மங்களை அநுஷ்டி₂ப்பதாலும் படிப்படியாக ஸத்வகு₃ணம் வளரப்பெற்றவர்கள் மேலே சொல்லப்போகும் கு₃ணங்கடந்த நிலையை அடைந்து அதனாலே மோக்ஷத்தை அடைகிறர்கள்" என்பதே இந்த ப்ரகரணத்தின் திரண்ட பொருளாகையாலே, முற்கூறிய இரண்டு கேள்விகளுக்கும் பதில் உரைக்கப்பட்ட தாகிறது. "ஸத்வகு₃ணத்தின் மிகுதி குணங்கடந்த நிலையை விளைப் பதன் மூலம் மோக்ஷத்திற்குக் காரணமாகிறதேயொழிய நேரே மோக்ஷத்திற்குக் காரணமாவதில்லை; ஆகையாலே எவ்வித முரணு மில்லை" என்பது பதிலின் ஸாரம். (த்₃ரஷ்டா) ஆத்மஸாக்ஷாத் காரம் கைவந்தவன். ஸாத்விகமான ஆஹாரத்தை உட்கொள்வ தாலும், ப₂லனில் பற்றில்லாமல் எம்பெருமானுக்கு ஆராத₄னமாகக் கர்மங்களை அநுஷ்டி₂ப்பதாலும் ரஜஸ்தமஸ்ஸுக்களை மறுபடி தலை யெடுக்காதபடி அடக்கி, ஸத்வகு₃ணத்தை வளர்த்துக் கொண்டு ஆத்ம ஸாக்ஷாத்காரம் கைவரப்பெற்றவனே இங்கு "த்₃ரஷ்டா" எனப்படுகிறன் என்பது இந்த ப்ரகரணத்திலிருந்து தெளிவாகிறது. "யஜ்ஞஶிஷ்டாஶிந: ஸந்த:" [3-13] "போ₄க் தாரம் யஜ்ஞதபஸாம்" [5-29] "ரஜஸ்தமஶ்ச அபி₄பூ₄ய ஸத்வம் ப₄வதி" [14-10] "ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம்" [14-17] என்று முன் ப்ரகரணங்களில் இவ் விஷயங்கள் அனைத்தும் சொல்லப்பட்டுள்ளனவன்றே.

गुणेभ्योऽन्यं कर्तारं नानुपश्यति; गुणा एव स्वानुगुणप्रवृत्तिषु कर्तार इति पश्यति ; गुणेभ्यश्च परं वेत्ति—कर्तृभ्यो गुणेभ्यश्च परम्—

(கு₃ணேப்₄ய: அந்யம் கர்த்தாரம் யதா₃ ந அநுபஶ்யதி) "தமக்குரிய செயல்களில் கு₃ணங்களே செயல்புரிகின்றன; கு₃ணங்களைக்காட்டிலும் வேறுபட்ட தான் செயல்புரியவில்லை" என்று எப்போது காண்கின்றானோ. இந்த ப்ரகரணத்தில் கு₃ணங்களும் ஆத்மாவும் வெவ்வேறு என்று தெளிவாகக் காட்டியிருக்கையாலே "கர்த்தாவான ஆத்மா கு₃ணங்களைக்காட்டிலும் வேறுபட்டவன் அல்லன்" என்று பொருள்கொள்ளாமல் "கு₃ணங்களே தமக்குரிய செயல்புரிகின்றனவேயொழிய ஆத்மா அவற்றில் செயல்புரிவதல்ல" என்று பொருள்கொள்ளப்பட்டது. இங்கு கர்த்தா என்னும் பத₃ம் முயற்சிக்கு இருப்பிடமானவனைக் குறிப்பதல்ல; செயலுக்கு முக்கியமான காரணமாயிருப்பதையே குறிக்கிறது. (கு₃ணேப்₄ய: ச பரம் வேத்தி) செயல்புரிபவையான கு₃ணங்களைக்காட்டிலும் வேறுபட்டவனாய், அதாவது செயல்புரியாதவனாகவும் ஆத்மாவை எவன் அறிகிறானோ. தே₃ஹத்தையே ஆத்மா என்று நினைப்பவர்களும் சில சமயம் "கு₃ணங்களே செயல்புரிபவை" என்று காணக்கூடும். இங்கு இவன் அத்தகையவனல்லன் என்று காட்டுவதற்காக 'கு₃ணங்களைக் காட்டிலும் பரனாக (வேறுபட்டவனாக) ஆத்மாவை அறிகிறான்' என்று கூறப்படுகிறது. ப்ரகரணத்தை யொட்டி வேறுபாடு இந்தச் செயல்புரியும் விஷயத்திலேயேயாகையாலே "செயல்புரியும் கு₃ணங்களைக்காட்டிலும் வேறுபட்டவனாக ஆத்மாவை அறிகிறானோ" என்று பொருள்கொள்ள வேண்டும். "ஆத்மாவுக்குக் கர்த்ருத்வம் இல்லை" என்று கூறும் ப்ரகரணமாகையாலே, 'பர' ஶப்₃த₃த்துக்கு 'மேலானவன்' என்று பொருள் கொண்டு "செயல்புரியும் கு₃ணங்களைக்காட்டிலும் மேலான கர்த்தாவாயிருப்பவன்" என்று பொருள்கொள்வது பொருந்தாது, பரமாத்மோபாஸந ப்ரகரணமல்லாமையாலேயே, பரஶப்₃த₃த்திற்குப் பரமாத்மாவும் பொருளாக முடியாது. ஆகையால் 'பர' ஶப்₃த₃த்துக்கு 'வேறுபட்டவன்' என்றே பொருள்கொள்ள வேண்டும். அந்த வேறுபாடும் ப்ரகரணத்தையொட்டி, கர்த்ருத்வ விஷயத்திலேயே ஆகையாலே "செயல் புரியாதவனாயிருப்பவன்" என்றே பொருள்கொள்ளவேண்டும், "ஸத்வாதி₃ கு₃ணங்களால் விளையும் புண்யபாப கர்மங்களுக்கும் லௌகிக கர்மங்களுக்கும் ஜீவன் இயற்கையில் இருப்பிடமல்லன், அத்தகைய செயல்களைச் செய்யத் தகாதவன்" என்று கருத்து. "காமோऽகார்ஷீத் நாஹமகார்ஷம்" [காமம் செய்ததேயொழிய நான் செய்யவில்லை] முதலான இடங்

अन्यमात्मानमकर्तारं वेत्ति ; स मद्भावमधिगच्छति — मम यो भावस्त-मधिगच्छति । एतदुक्तं भवति — आत्मनस्स्वतः परिशुद्धस्वभावस्य पूर्वपूर्वकर्ममूलगुणसङ्गनिमित्तं विविधकर्मसु कर्तृत्वम् ; आत्मा स्वत-

---

களில் செய்தவன் தானேயாயிருந்தபோதிலும், காமத்தால் தூண்டப்பட்டே செய்கையாலே 'நான் செய்யவில்லை' என்று கூறுவது போன்றது இது. (ஸ: மத்3பா4வம் அதி4க3ச்ச2தி) அவன் எனது தன்மையை அடைகிறான். அதாவது — "ஆத்மாவானது இயற்கையில் பரிஶுத்3த4மான தன்மையையுடையதாகையாலே அநாதி3 காலமாக அந்த ஆத்மா செய்துவந்த புண்யபாப கர்மங்களால் விளைந்த ஸத்வாதி3கு3ணங்களில் பற்றினாலேயே பலவகையான ஸாத்விக ராஜஸ தாமஸச் செயல்களில் அதற்குக் கர்த்ருத்வம் ஏற்படுகிறது. ஆத்மா இயற்கையில் அத்தகைய செயல்களைச் செய்யாதவனாய் எல்லையற்ற ஜ்ஞானமே வடிவாயிருப்பவன்" என்று ஆத்மாவை எப்போது காண்கிறானோ அப்போது எனது தன்மையை அடைகிறான் என்று கருத்து. இத்தால் "கர்த்தா ஶாஸ்த்ரார்த்த2வத்த்வாத்" [ப்3ரஹ்மஸூ 2-3-33] [ஆத்மா செயல் புரிபவன் என்றே கொள்ளவேண்டும்; விதி4நிஷேத4ஶாஸ்த்ரங்கள் பொருள் உடையதாவதற்காக] என்னும் ஸூத்ரத்தில் முயற்சிகளுக்கு இருப்பிடமாயிருக்கையையிட்டு ஆத்மாவைக் கர்த்தாவாகச் சொன்னதோடு முரண் இல்லை என்று விளங்குகிறது. மோக்ஷ நிலையிலும் கு3ண ஸம்ப3ந்த4த்தால் ஏற்படாத ப4க3வத் கைங்கர்யம் முதலானவற்றில் ஆத்மாவுக்குக் கர்த்ருத்வம் உண்டு என்பது குறிக்கொள்ளத்தக்கது. இங்கு 'மத்3பா4வம்' என்று ஜீவபரர்களுக்கு ஸ்வரூபைக்யம் சொல்லப்படுவதாகக்கொள்வது "மம ஸாத4ர்ம்யமாக3தா:" [14-2] [என்னோடு ஒற்றுமையையடைந்தவர்கள்] என்று முன்கூறியதோடு முரண்படும். "பரமம் ஸாம்யமுபைதி" [முண்ட3 3-1-3] [முக்தன் பரமாத்மாவோடு மேலான ஒற்றுமையை அடைகிறான்] என்றும்,

"யதோ2த3கம் ஶுத்3தே4 ஶுத்3த4மாஸிக்தம் தாத்3ருகே3வ ப4வதி ।
ஏவம் முநேர்விஜாநத ஆத்மா ப4வதி கௌ3தம"

[கட2 4-15]

[கௌ3தமரே! தூயநீரில் தூயநீரைக்கலந்தால் அதுபோலவே ஆவதுபோலே, ப்3ரஹ்மஜ்ஞானமுடைய முக்தனுடைய ஆத்மாவும் பரம்பொருளோடு கலக்கும்போது அதுபோலவே ஆகிறது] என்றும் வேத3வாக்யங்கள் முழங்கியதோடும் முரண்படும்.

स्त्वकर्ता अपरिच्छिन्नज्ञानैकाकार इत्येवमात्मानं यदा पश्यति, तदा मद्भावमधिगच्छतीति ॥ १९ ॥

இரண்டாவது ஶ்ருதிவாக்யத்தில் இரண்டு நீர்கள் கலக்கும்போது ஸ்வரூபைக்யம் உண்டாவதில்லை என்பதும், 'தாத்₃ருக்' [அத்தகையது] என்னும் பத₃ஸ்வாரஸ்யமும் குறிக்கொள்ளத்தக்கது. பா₄ரதம் மோக்ஷத₄ர்மத்தில் ஜனகருக்கு வஸிஷ்ட₂ர் உபதே₃ஶம் செய்யும்போது,

"பரேண பரத₄ர்மீ ச ப₄வத்யேவ ஸமேத்ய வை ।
விஶுத்₃த₄த₄ர்மா ஶுத்₃தே₄ந பு₃த்₃தே₄ந ச ஸ பு₃த்₃தி₄மாந் ॥
விமுக்தத₄ர்மா முக்தேந ஸமேத்ய ஹி தத₂ா ப₄வேத் ।
வியோக₃த₄ர்மிணா சைவ வியோகா₃த்மா ப₄வத்யபி ॥
விமோக்ஷிணா விமோக்ஷீ ச ஸமேத்யேஹ தத₂ா ப₄வேத் ।
ஶுசிநா ச ஶுசிஶ்சைவ ப₄வத்யமிதத்₃யுதிமாந் ॥
விமலாத்மா ப₄வத்யேவ ஸமேத்ய விமலாத்மநா ।
கேவலாத்மா தத₂ா சைவ கேவலேந ஸமேத்ய வை ॥
ஸ்வதந்த்ரஶ்ச ஸ்வதந்த்ரேண ஸ்வதந்த்ரத்வ
மவாப்நுயாத் ॥"

[பா₄ரதம் மோக்ஷத₄ர்மம் 318-26......30]

[பரனோடு கூடும்போது பரனின் தன்மையை அடைகிறான்; ஶுத்₃த₄னோடு கூடும்போது பரிஶுத்₃த₄த்தன்மையை அடைகிறான். அறிவுடையவனோடு கூடும்போது அறிவுடையவனாகிறான். முக்தனோடு கூடும்போது முக்தனின் தன்மையை உடையவனாகிறான். தாழ்வில்லாதவனோடு கூடும்போது தாழ்வில்லாதவனாகிறான். மோக்ஷமுடையவனோடு கூடும்போது மோக்ஷமுடையவனாகிறான். ஒளியுடைய ஶுத்₃த₄னோடு கூடும்போது ஒப்பற்ற ஒளியையுடைய ஶுத்₃த₄னாகிறான். அழுக்கற்றவனோடு கூடும்போது அழுக்கற்றவனாகிறான். ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄மற்ற கேவலனோடு கூடும்போது கேவலனாகிறான். கர்மபாரதந்த்ர்யம் அற்றவனோடு கூடும்போது கர்மபாரதந்த்ர்யம் அற்றவனாகிறான்] என்று ஜீவன் மோக்ஷமடையும்போது பரமாத்மாவோடு பலவகையான ஒற்றுமைகள் அடைகிறான் என்று கூறியது இங்கு காணத்தக்கது. ஆகையால் மத்பா₄வம் என்றதற்கு "மம யோ பா₄வ: மத்₃பா₄வ:" என்னும் வ்யுத்பத்தியாலே பரமாத்மாவோடு ஜீவன் மோக்ஷத்தில் ஸாம்யம் அடைவதாகவே கொள்ளவேண்டும். இது அடுத்த ஶ்லோகத்தில் விவரிக்கப்படவிருக்கிறது. 19.

भा ॥ कर्तृभ्यो गुणेभ्योऽन्यमकर्तारमात्मानं पश्यन् भगवद्भाव-
मधिगच्छतीत्युक्तम्; स भगवद्भावः कीदृश इत्यत आह—

गुणानेतानतीत्य त्रीन् देही देहसमुद्भवान् ।
जन्ममृत्युजरादुःखैर्विमुक्तोऽमृतमश्नुते ॥ २०

20. கு₃ணுநேதாந் அதீத்ய த்ரீந் தே₃ஹீ தே₃ஹஸமுத்₃ப₄வாந் ।
ஜந்மம்ருத்யுஜராது₃:க்கை₂: விமுக்தோऽம்ருதமஶ்நுதே ॥

தே₃ஹீ—தே₃ஹத்தை உடையவனுன இந்த ஜீவன், தே₃ஹஸமுத்₃ப₄வாந்—தே₃ஹமாகப் பரிணுமமடைந்த ப்ரக்ருதியிலுள்ளவையான, ஏதாந்—இந்த, த்ரீந் கு₃ணுந்—மூன்று கு₃ணங்களே, அதீத்ய—கடந்து நின்று (அவற்றைக் காட்டிலும் வேறுபட்ட ஜ்ஞானமே வடிவெடுத்த தன்னைக் கண்டாருகில்), ஜந்ம ம்ருத்யு ஜரா து₃:க்கை₂: விமுக்த:—பிறப்பு இறப்பு கிழத்தனம் முதலானவற்ருல் உண்டாகும் துன்பங்களிலிருந்து நீங்கியவனுய், அம்ருதம் அஶ்நுதே—மரணமற்ற தன் ஆத்மாவை அநுப₄விக்கிருன்.

20. இங்குடல மேவியம ரிக்குணங்கண் மூன்றினையு(ம்)
மங்கும் வகைகடந்து மன்னினவன்—றங்கு
பிறப்பிறப்பு மூப்புப் பிணிவிடுத்துத் தன்னுஞ்
சிறப்பமுதஞ் சேருஞ் சிறந்து.

இங்கு உடலம் மேவி அமர் இக்குணங்கள் மூன்றினையும்—தன் உடலில் பொருந்தி நிற்கும் இந்த மூன்று கு₃ணங்களையும், மங்கும் வகை கடந்து—மங்கிப்போகும்படி கடந்து, மன்னினவன்—ஜ்ஞானமே வடிவான தன் ஆத்மாவைக் காண்பவன், தங்கு பிறப்பு இறப்பு மூப்புப் பிணி விடுத்து—தே₃ஹத்தின் இயல்வான பிறப்பு இறப்பு கிழத்தனம் முதலானவற்ருல் உண்டான துன்பங்களைக் கைவிட்டு, தன் ஆம் சிறப்பு அமுதம்—தன்னைத்தானே அனுப₄விக்கும் மரணமற்ற சிறந்த நிலையை, சிறந்து சேரும்—சிறப்பாக அடைவான்.

भा । अयं देही देहसमुद्भवान् — देहाकारपरिणतप्रकृतिसमुद्भवानेतान् सत्त्वादीन् त्रीन् गुणानतीत्य तेभ्योऽन्यं ज्ञानैकाकारमात्मानं पश्यन् जन्ममृत्युजरादुःखैर्विमुक्तोऽमृतमात्मानमनुभवति; एष मद्भाव इत्यर्थः ॥ २० ॥

---

20. சென்ற ஶ்லோகத்தில்—"செயல்புரியும் கு₃ணங்களைக் காட்டிலும் வேறுபட்டு, செயல்புரியாதவனாய், தன்னைத்தானே காண்பவனான ஜீவன் ப₄க₃வானின் தன்மையை அடைகிறான்" என்று கூறப்பட்டது. இந்த ப₄க₃வானின் தன்மையை அடைவதாவது என்ன? என்று விளக்குகிறான் இந்த ஶ்லோகத்தில். பல ஶ்ருதி ஸ்ம்ருதி வாக்யங்களோடு முரண்படும் ப₄க₃வத்ஸ்வரூபைக்யமல்ல என்றும். துன்பங்களற்ற நிலையில் தன்னைத்தானே அனுப₄விப்பதே அது என்றும் காட்டுகிறான். (தே₃ஹீ) முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட தே₃ஹத்தோடுகூடிய இந்த ஜீவன். (தே₃ஹ ஸமுத்₃ப₄வாந் ஏதாந் த்ரீந் கு₃ணாந்) தே₃ஹமாகப் பரிணமித்து நிற்கும் ப்ரக்ருதியிலுள்ள ஸத்வம் ரஜஸ் தமஸ் என்னும் இந்த மூன்று கு₃ணங்களையும். 'தே₃ஹஸமுத்₃ப₄வாந்' என்னும் பத₃த்துக்கு ப₃ஹுவ்ரீஹி ஸமாஸங்கொண்டு "தே₃ஹோத்பத்திபீ₃ஜபூ₄தாந்" [தே₃ஹமுண்டாவதற்குக் காரணமாயிருக்கும் முக்கு₃ணங்களை] என்று சங்கரர் உரை செய்தது நலிந்து பொருள் கொள்வதாகும். ஆகையால், இவ்வத்தியாயத்தின் தொடக்கத்தில் "ஸத்வம் ரஜஸ்தம இதிகு₃ணா: ப்ரக்ருதிஸம்ப₄வா:" (5) என்ற இடத்தில் 'ப்ரக்ருதிஸம்ப₄வ'பத₃த்திற்கு 'ப்ரக்ருதியின் தன்மைகள்' என்று பொருள்கொண்டதுபோலே, இங்கும் "தே₃ஹமாகப் பரிணமித்த ப்ரக்ருதியின் தன்மைகளான இம்முக்குணங்களையும்" என்றே பொருள்கொள்ளவேண்டும். (அதீத்ய) கடந்து. முன் ஶ்லோகத்தில் சொன்னபடி கு₃ணங்களைக் காட்டிலும் வேறுபட்ட ஜ்ஞானமே வடிவெடுத்தவனாகத் தன் ஆத்மாவைக் காண்பதே கு₃ணங்களைக் கடந்து நிற்கை என்று கொள்ள வேண்டும். இந்த நிலை இவ்வுடம்போடு இருக்கும்போதே ஏற்படுவது என்று 'தே₃ஹீ அதீத்ய' என்னும் பத₃ங்களிலிருந்து விளங்குகிறது. இனி ஶ்லோகத்தின் பிற்பாதியாலே இவன் மோக்ஷ நிலையில் அடையும் ப₄க₃வத்₃ப₄ாவம் விவரிக்கப்படுகிறது. (ஜந்மம்ருத்யுஜராது₃:க்கை₂ர்விமுக்த;) பிறவி, இறப்பு, கிழத்தனம் முதலானவற்றால்

भा ॥ अथ गुणातीतस्य स्वरूपवचनाचारप्रकारं गुणात्ययहेतुं च पृच्छन् अर्जुन उवाच—

अर्जुन उवाच—

कैर्लिङ्गैस्त्रिगुणानेतानतीतो भवति प्रभो ।
किमाचारः कथं चैतांस्त्रीन् गुणानतिवर्तते ॥ २१

அர்ஜுந உவாச—

கைர்லிங்கை₃ஸ் த்ரிகு₃ணாநேதாந் அதீதோ ப₄வதி ப்ரபோ₄ ।
கிமாசார: கத₂ம் சைதாம்ஸ்த்ரிகு₃ணாநதிவர்த்ததே ॥

ப்ரபோ₄!— ஐயனே! ஏதாந் த்ரிகு₃ணாந் அதீத:—இந்த முக்குணங்களைக் கடந்து நிற்பவன், கை: லிங்கை₃: ப₄வதி— எந்த உள்ளிலக்கணங்களை உடையவனாக இருக்கிறான்? கிமாசார: (ப₄வதி) — எந்த வெளி ஒழுக்கங்களை உடையவனாக இருக்கிறான்? ஏதாந் த்ரீந் கு₃ணாந் ச — இந்த மூன்று கு₃ணங்களையும், கத₂ம் அதிவர்த்ததே — எப்படிக் கடக்கிறான்? (என்று அர்ஜுனன் கேட்டான்).

---

உண்டாகும் துன்பங்களிலிருந்து விடுபடுகிறான். அன்றிக்கே, பிறப்பு, இறப்பு, கிழத்தனம் முதலானவற்றிலிருந்தும், அவற்றால் உண்டாகும துன்பத்திலிருந்தும் விடுபடுகிறான் என்றும் பொருள் கொள்ளலாம். ஜன்ம ம்ருத்யுஜரைகளைச் சொன்னது (1) க₃ர்ப்ப₄ம், (2) ஜந்மம், (3) ஜரா, (4) மரணம், (5) க்லேசம், (6) கர்மம் என்னும் ஆறு ஊர்மிகளுக்கும் உபலக்ஷணம். (அம்ருதம் அச்நுதே) மரணமற்றதான ஆத்மஸ்வரூபத்தை அநுப₄விக்கிறான், சென்ற ஸ்லோகத்தில் "மத்₃ப₄ாவம் ஸோऽதி₄க₃ச்ச₂தி" என்று சொல்லப்பட்ட 'மத்₃ப₄ாவம்" இதுவே என்று கருத்து. என்னைப் போலவே துன்பங்களற்றவனாய், தன் ஆத்மாவை அநுப₄விப்பதே இவனுக்குக் கிடைக்கும் மோக்ஷமாகிற ப₂லம் என்றபடி. இக்கைவல்ய மோக்ஷத்தைக் குறித்து "அற்றது பற்றெனில் உற்றது வீடுயிர்" [திருவாய் 1-2 5] "மரணம் தோற்றம் வான்பிணி மூப்பென்று இவை மாய்த்தோம்" [திருவாய் 8-3-2] "அவன் தன்னொடு ஒன்றாக அமரத்துணிய வல்லார்" [திருவாய் 3—5—9] என்று ஆழ்வார் அருளிச்செய்தது இங்கு அநுஸந்தி₄க்கத் தக்கது. 20.

भा ॥ सत्त्वादीन् त्रीन् गुणानेतानतीतः कैर्लिङ्गैः—कैर्लक्षणैः उपलक्षितो भवति? किमाचारः — केनाचारेण युक्तोऽसौ ? अस्य स्वरूपावगतिलिङ्गभूताचारः कीदृश इत्यर्थः। कथं चैतान् — केनोपायेन सत्त्वादींस्त्रीन् गुणानतिवर्तते ॥ २१ ॥

21\. இவ்வளவிற் பார்த்த னியம்பினு னிங்கிறைவா
வவ்வகைசேர் முக்குணத்தை யாங்கன்றேன்—
எவ்வகையிற்
சேருமடை யாளத்தன் செய்தொழிலே தெங்ஙனே
சீருடனித் தைக்கடப்பான் செப்பு.

இவ்வளவில்—இந்த சமயத்தில், பார்த்தன் இயம்பினுன்—அர்ஜுனன் (பின்வருமாறு) கூறினுன். இறைவா—ஸர்வேஶ்வரனே! இங்கு அவ்வகைசேர் முக்குணத்தை—இவ்வுலகில் முற்கூறியபடி உடலோடு சேர்ந்திருக்கும் மூன்று குணங்களையும், ஆங்கு அன்றேன்—முன் ஶ்லோகத்தில் சொன்னபடி கடந்து நிற்பவன், எவ்வகையில் சேரும் அடையாளத்தன்—எந்த உள்ளிலக்கணங்களை உடையவனுக இருக்கிருன்? செய்தொழில் ஏது--எந்த வெளி அடையாளங்களை உடையவனுயிருக்கிருன்? எங்ஙனே சீருடன் இத்தைக் கடப்பான்—அவன் சிறப்பாக இம் முக்குணங்களை எப்படிக்கடப்பான்? செப்பு — இதை எனக்குச் சொல்லுவாயாக.

21\. சென்ற ஶ்லோகத்தில் குணாதீதனைப்பற்றிக் கண்ணன் சொன்னதைக் கேட்ட அர்ஜுனன் அந்த குணாதீதனைப் பற்றிய உள்வெளி அடையாளங்களைப்பற்றியும், குணங்களைக்கடந்து நிற்பது எப்படி? என்பது பற்றியும் கண்ணனைக் கேள்வி கேட்கிருன் இந்த ஶ்லோகத்தில். (ஏதாந் த்ரிகுணாந் அதீத: கை: லிங்கை: ப₄வதி) இந்த முக்குணங்களைக் கடந்து நிற்பவன் எந்த உள் இலக்கணங்களை உடையவனுயிருக்கிருன்? அடுத்த படியாக 'கிமாசார:' என்று வெளிப்படையாகக் காணப்படும் லக்ஷணங்கள் சொல்லப்படுவதால் இங்கு எல்லா அடையாளங்களுக்கும் பொதுவான லிங்கஶப்₃த₃ம் உள் இலக்கணங்களைக்குறிப்பதாகக் கொள்ளப்படுகிறது. (கிமாசார:) எந்த வெளியடையாளங்களை உடையவனுக அவன் இருக்கிருன்? ஆசாரஶப்₃த₃ம் வெளிப்

श्रीभगवानुवाच -

प्रकाशं च प्रवृत्तिं च मोहमेव च पाण्डव ।
न द्वेष्टि संप्रवृत्तानि न निवृत्तानि काङ्क्षति ॥ २२

ஸ்ரீப₄க₃வாந் உவாச—
22. ப்ரகாஶம் ச ப்ரவ்ருத்திம் ச மோஹமேவ ச பாண்ட₃வ ।
ந த்₃வேஷ்டி ஸம்ப்ரவ்ருத்தாநி ந நிவ்ருத்தாநி காங்க்ஷதி ॥

பாண்ட₃வ—பாண்டுபுத்திரனே! (ஆத்மாத விர்ந்த மற்ற விஷயங்களில்) ப்ரகாஶம் ச — (ஸத்வகு₃ணகார்யமான) தெளிந்த அறிவையும், ப்ரவ்ருத்திம் ச — (ரஜோகு₃ண கார்யமான) முயற்சியையும், மோஹம் ஏவ ச — (தமோ கு₃ணகார்யமான) மயக்கத்தையும். ஸம்ப்ரவ்ருத்தாநி — (அனிஷ்டமாகவோ. அதற்கு ஸாத₄னமாகவோ) வந்தடைபவற்றை, ந த்₃வேஷ்டி—(கு₃ணாதீதன்) வெறுப்ப தில்லை. நிவ்ருத்தாநி — (இஷ்டமாகவோ அதற்கு ஸாத₄னமாகவோ வந்திருந்து) நீங்கினவற்றை, ந காங் க்ஷதி—விரும்புவதில்லை.

---

படையான ஒழுக்கங்களைக் குறிக்கிறது என்பது லோகப்ரஸித்₃த₄ம். உள் லக்ஷணங்களான ஶமம் த₃மம் முதலானவற்றைக் கொண்டு தனக்குத் தான் கு₃ணாதீதன் என்று தெரிந்து கொள்ளலாமே யொழிய, பிறர் தெரிந்துகொள்ள முடியாதன்றோ; அதனாலேயே வெளிப்படையான ஆசாரங்களைத் தனியாகக் கேட்கிறான். (ஏதாந் த்ரீந் கு₃ணாந் கத₂ம் ச அதிவர்த்ததே) இந்த மூன்று கு₃ணங் களையும் கடந்து நிற்பது எப்படி என்பதையும் கூறவேண்டும். மேல்ஸ்லோகங்களில் கு₃ணாதீத நிலைக்கு உபாயம் விவரிக்கப் படுகையால் இந்தக் கேள்வி உபாயத்தைப் பற்றியது என்று கொள்ளப்படுகிறது. "கத₂ம்" ஶப்₃த₃ம் சில இடங்களில் செய்ய இயலாமையையும் காட்டும்; சில இடங்களில் ப₂லத₃ஶையைப் பற்றிய கேள்வியாகவும் இருக்கக்கூடும். இங்கு பதிலிலிருந்து அப் பொருள்கள் பொருந்தாது என்றும், 'கத₂ம்' ஶப்₃த₃த்தை உபா யத்தைப் பற்றிய கேள்வியாகவே கொள்ளவேண்டும் என்றும் விளங்குகிறது. (ப்ரபோ₄) என் ஸ்வாமியான நீயே என் ஐயங் களுக்கு பதில் அருளவேண்டும் என்று கருத்து. 21.

भा ॥ आत्मव्यतिरिक्तेषु वस्तुष्वनिष्टेषु संप्रवृत्तानि सत्त्वरजस्तमसां कार्याणि प्रकाशप्रवृत्तिमोहाख्यानि यो न द्वेष्टि, तथा आत्मव्यतिरिक्तेष्विष्टेषु वस्तुषु तान्येव निवृत्तानि न काङ्क्षति ॥ २२॥

22. ஈண்டவனுக் கண்ண லியல்பின் றகவுரைத்தான்
பாண்டவனே முந்திப் பரந்தவொளி—மூண்டியற்றி
மோகமுள வற்றை முனியான்முன் மூண்டத்து
வேக நசையிலான் மிக்கு.

ஈண்டு—இப்படிக்கேட்டவுடன், அண்ணல்—கண்ணன், அவனுக்கு — அந்த அர்ஜுநனுக்கு, இயல்பின் தகவு—(கு₃ணங் கடந்தவனுடைய) லக்ஷணத்தின் தன்மைகளை, உரைத்தான் — (பின் வருமாறு)கூறினன். பாண்டவனே!—பாண்டுபுத்திரனே! முந்தி பரந்த ஒளி—முற்பட்டு வெளிப்பட்ட (ஸத்வகு₃ணகார்யமான) அறிவு, மூண்டியற்றி—(ரஜோகு₃ணகார்யமான) பெருமுயற்சி, மோகம்— (தமோகு₃ணகார்யமான) மயக்கம் (ஆகியவை), உளவற்றை—(அநிஷ்டமாகவோ அதற்கு ஸாத₄னமாகவோ) வந்தடைந்திருக்கும்போது, முனியான் — (கு₃ணங் கடந்தவன் அவற்றை) வெறுக்க மாட்டான்; முன் மூண்டத்து— (இஷ்டமாகவோ அதற்கு ஸாத₄னமாகவோ) முதலில் வந்திருந்து நீங்கினவற்றை, மிக்கு வேக நசை இலான்—மிக அதிகமாக ஆசைப்படுவதுமில்லை.

22. ஸாமான்ய ஜனங்கள் முக்குண கார்யங்களில் அநிஷ்டமாகவோ, அதற்கு ஸாத₄னமாகவோ எவையேனும் வந்தடைந்திருந்தால் அவற்றை வெறுக்கிறார்கள்; இஷ்டமாகவோ அதற்கு ஸாத₄னமாகவோ வந்திருந்து நீங்கினால், அவற்றைத் திரும்பிப்பெற விரும்புகிறார்கள். இந்த வெறுப்பும் விருப்பும் இல்லாதவனே கு₃ணாதீதன் என்கிறான் இந்த ஶ்லோகத்தில். முக்குணங்களைக் கடந்து நிற்பவனைப்பற்றிய ப்ரகரணமாகையாலே, ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்ட ப்ராக்ருத விஷயங்களே இங்கு விருப்பின்மைக்கும் வெறுப்பின்மைக்கும் விஷயமாவதாகக் கொள்ளவேண்டும். (ப்ரகாஶம் ச) ஸத்வகு₃ணத்தின் கார்யமான தெளிந்த அறிவையும். (ப்ரவ்ருத்திம் ச) ரஜோகு₃ணத்தின் கார்யமான முயற்சி

उदासीनवदासीनो गुणैर्यो न विचाल्यते ।
गुणा वर्तन्त इत्येव योऽवतिष्ठति नेङ्गते ॥ २३

23. உத₃ாஸீநவத₃ாஸீநோ கு₃ணைர்யோ ந விசால்யதே |
கு₃ணா வர்த்தந்த இத்யேவ யோऽவதிஷ்ட₂தி நேங்க₃தே ||

ய:—எவனொருவன், உத₃ாஸீநவத் ஆஸீந:—(ஆத்மா வைத்தவிர்ந்த விஷயங்களில் முற்கூறிய விருப்பு வெறுப்புகள் விளையாதபடி அவற்றைப்) பொருட்படுத்தாமலிருப்பவனாய், கு₃ணை:—முக்குணங்களாலே, ந விசால்யதே—

---

யையும். (மோஹம் ஏவ ச) தமோகு₃ணத்தின் கார்யமான மயக்கத்தையும். (ஸம்ப்ரவ்ருத்தாநி ந த்₃வேஷ்டி) அனிஷ்டமாகவோ அதற்கு ஸாத₄னமாகவோ வந்தடைந்திருப்பவற்றை ஸாமான்ய ஜனங்கள் வெறுப்பதுபோலே கு₃ணங்கடந்தவன் வெறுப்பதில்லை. 'வந்தடைந்திருப்பவற்றை வெறுப்பதில்லை' என்றே இருந்தபோதிலும் அனிஷ்டமாகவோ, அல்லது அதற்கு ஸாத₄னமாகவோ வந்தடைந்திருப்பவற்றையே வெறுப்பதற்கு இடமுண்டாகையாலே, "அனிஷ்டமாகவோ, அதற்கு ஸாத₄னமாகவோ வந்தடைந்திருப்பவற்றை" என்று விஶேஷணமிடப்பட்டது. அந்தந்தச் சூழ்நிலைக்கேற்ப அறிவும், முயற்சியும், மயக்கமும் அனிஷ்டமாகவோ அதற்கு ஸாத₄னமாகவோ ஆவதைக் காண்கிறோமன்றோ, விரும்பாத விஷயங்களைப்பற்றிய அறிவும் முயற்சியும் அனிஷ்டமாகவும் அதற்கு ஸாத₄னமாகவும் ஆவதுண்டன்றோ. அதுபோலவே விரும்பும் விஷயத்தில் மயக்கம் அனிஷ்டமாகவும் அதை விளைப்பதாகவும் ஆவதையும் காண்கிறோம், (ப்ரகாஶம் ச ப்ரவ்ருத்திம் ச மோஹமேவ ச நிவ்ருத்தாநி ந காங்க்ஷதி) ஸத்வரஜஸ்தமோ கு₃ணங்களின் கார்யமான அறிவு, முயற்சி, மயக்கம் என்னும் மூன்றும் இஷ்டமாகவோ இஷ்டஸாத₄னமாகவோ வந்திருந்து நீங்கினவற்றை கு₃ணாதீதன் விரும்புவதுமில்லை. இங்கும் இஷ்டமாகவோ அதற்கு ஸாத₄னமாகவோ வந்திருந்து நீங்கினவற்றையே விரும்புவதற்கு இடமுண்டாகையாலே, "இஷ்டமாகவோ அதற்கு ஸாத₄னமாகவோ வந்திருந்து நீங்கினவற்றை" என்று விஶேஷணமிடப்பெற்றது. உடம்பில் பொறுக்கமுடியாத வலி இருக்கும்போது மயக்கமும் இஷ்டமாகவும், இஷ்டமான அறிவை சிகிச்சைக்கு ஸாத₄னமாகவும் இருப்பதைக் காண்கிறோம். (பாண்ட₃வ) என் உறவினனான நீ இந்த கு₃ணாதீத நிலையை அவஶ்யம் பெறவேண்டும் என்று கருத்து. 22

भा ॥ उदासीनवदासीनः — गुणव्यतिरिक्तात्मावलोकनतृप्त्या अन्यत्रोदासीनवदासीनः, गुणैर्द्वेषाकाङ्क्षाद्वारेण यो न विचाल्यते ; गुणास्स्वेषु कार्येषु प्रकाशादिषु वर्तन्त इत्यनुसन्धाय यस्तूष्णीमवतिष्ठते । नेङ्गते--न गुणकार्यानुगुणं चेष्टते ॥ २३ ॥

---

(விருப்பு வெறுப்புகள் உண்டாகி) விகாரமடைவதில்லையோ, 'கு₃ணா: வர்த்தந்தே—முக்குணங்கள் (அவற்றின் கார்யமான ப்ரகாஶம் முதலானவற்றில்) காரணமாயிருக்கின்றன' இதி—என்று அனுஸந்தி₄த்து, ய:—எவனொருவன், அவதிஷ்ட₂தி ஏவ—மௌனமாயிருக்கிறானோ, ந இங்க₃தே — (கு₃ணகார்யங்களுக்கு அனுகு₃ணமாகச்) செயல்புரிவதுமில்லையோ, (அவனே கு₃ணங்கடந்தவன்)

---

23. முன் ஶ்லோகத்தில் சொன்னபடி ஶரீரத்திலிருக்கும்போதே, இஷ்டாநிஷ்டங்களுக்கு ஸாத₄னங்களும் நிறைந்திருக்கும்போதே, ஒருவன் விருப்பு வெறுப்புகளில்லாமல் விகாரமற்றிருப்பது எப்படி முடியும்? என்னும் கேள்வியெழ, பதில் உரைக்கிறான் இந்த ஶ்லோகத்தில், (உதா₃ஸீநவத் ஆஸீந:) முக்குணமுடைய தே₃ஹத்தைக் காட்டிலும் வேறுபட்ட ஆத்மாவைக்கண்ட திருப்தியினாலே அந்த ஆத்மாவைத் தவிர்ந்த மற்ற விஷயங்களைப் பொருட்படுத்தாமலிருப்பான். இப்படி இருப்பதே முன் ஶ்லோகத்தில் சொன்ன விருப்பு வெறுப்பின்மையை விளக்கும் என்று கருத்து. (யோ கு₃ணை: ந விசால்யதே) எவனொருவன் முக்குணங்களால் முற்கூறியபடி வெளி விஷயங்களில் வெறுப்பும் விருப்புமுண்டாகி வேறுபாட்டைவதில்லையோ; இந்த ஶ்லோகத்தில் சொன்ன இரண்டு 'ய:' என்னும் யச்ச₂ப்₃த₃ங்களும் இருபத்தைந்தாவது ஶ்லோகத்தில் 'கு₃ணாதீதஸ் ஸ உச்யதே' என்றவிடத்தில் உள்ள 'ஸ:' என்னும் தச்ச₂ப்₃த₃த்தோடு அந்வயிக்கின்றன. 22, 23, 24, 25 ஶ்லோகங்களில் சொன்னபடி எவன் இருக்கிறானோ அவனே கு₃ணங்கடந்தவன் என்று கருத்து. இப்படி விகாரமடையாமலிருப்பதற்குக் காரணத்தைக் கூறுகிறது இனி. (கு₃ணா: வர்த்தந்தே இதி ஏவ ய: அவதிஷ்ட₂தி) "கு₃ணா: கு₃ணேஷு வர்த்தந்தே" (3-28) என்று முன்னமே சொன்ன ரீதியில் முக்குணங்கள் தம் கார்யங்களான ப்ரகாஶம் முதலானவற்றில் ஈடுபடுகின்றன என்று அனுஸந்தி₄த்து எவனொருவன் மௌனமாயிருக்கிறானோ. 'இதி' என்னும் ஶப்₃த₃ம் அனுஸந்த₄ான ப்ரகாரத்தைக் காட்டு

समदुःखसुखस्स्वस्थस्समलोष्टाश्मकाञ्चनः ।
तुल्यप्रियाप्रियो धीरस्तुल्यनिन्दात्मसंस्तुतिः ॥ २४

23, முன்னுக் குதாசீனன் போலிருக்கு முக்குணங்க
டன்னுற் றலைத்திடினுந் தான்சலியான் – மன்னுகுணச்
செய்தியிது வென்றிருக்குஞ் செய்தொழிலிற் சேட்டி
மெய்திருந்து நெஞ்சுடையான மேல். [யான்

மேல் மெய்திருந்து நெஞ்சுடையான்—(குணங்களைக் காட்டிலும்)மேற்பட்ட ஆத்மாவில் உண்மையாகவே ஈடுபட்ட மனமுடையவனை குணங்கடந்தவன், முன்னுக்கு உதாசீனன் போலிருக்கும்—முன்னே தோற்றும் ப்ராக்ருத விஷயங்களில் (முற்கூறிய விருப்பு வெறுப்புகள் விளையாதபடி அவற்றைப்) பொருட்படுத்தாமலிருப்பான்; முக்குணங்கள் தன் உற்று அலைத்திடினும்—ஸத்வம் முதலான மூன்று குணங்களும் தம் வசமாம்படி இழுத்தாலும், தான் சலியான்—(விருப்பு வெறுப்புகள் உண்டாகி) தான் விகாரமடையமாட்டான்; மன்னுகுணச்செய்தி இது என்று இருக்கும்—தேஹத்தோடு என்றுமிருக்கும் குணங்கள் அவற்றின் கார்யங்களான ப்ரகாஶம் முதலானவற்றை விளைப்பதே இது என்று அனுஸந்தித்து மௌனமாயிருப்பான். செய்தொழிலில் சேட்டியான்—(குணங்களின்) செயல்களுக்கு அனுகுணமாகச் செயல்புரிவதில்லை.

கிறது. 'ஏவ'காரம் மௌனமாயிருப்பதைக் காட்டுகிறது. 'யோSவதிஷ்டதி' என்று பரஸ்மைபதமாயிருப்பது ஆர்ஷப்ரயோகம்; 'அவதிஷ்டதே' என்றிருந்தால் நாலாம் பாதத்தில் ஐந்தாமெழுத்து நீண்டு 'சந்தோபங்கம்' ஏற்பட்டுவிடுமாகையாலே இப்படி ஆர்ஷப்ரயோகம் செய்யப்பட்டது. "குணங்கள் தம் கார்யங்களில் ஈடுபட்டிருக்கும்போது நான் விகாரமடைய வேண்டிய அவச்யமில்லை" என்று மௌனமாயிருக்கிறான் என்று கருத்து. இத்தால் முதல் பாதத்தில் உதாஸீனனாயிருக்கிறான் என்று கூறியது விவரிக்கப்பட்டதாயிற்று. இனி 'ந விசால்யதே' என்றதை விவரிக்கிறது—(ந இங்கதே) முற்கூறியபடி முக்குணங்களின் கார்யமான வெறுப்புக்கும் விருப்புக்கும் அனுகுணமாகச் செயல்புரிவதில்லை என்றபடி. 23.

मानावमानयोस्तुल्यस्तुल्यो मित्रारिपक्षयोः ।
सर्वारम्भपरित्यागी गुणातीतस्स उच्यते ॥ २५

24. ஸமது₃:க்க₂ஸுக₂ஸ் ஸ்வஸ்த₂ஸ் ஸமலோஷ்டாஶ்ம காஞ்சந: ।
துல்யப்ரியாப்ரியோ தீ₄ரஸ் துல்யநிந்தா₃த்மஸம்ஸ்துதி: ॥
25. மாநாவமாநயோஸ் துல்யஸ் துல்யோ மித்ராரிபக்ஷயோ: ।
ஸர்வாரம்ப₄பரித்யாகீ₃ கு₃ணாதீதஸ் ஸ உச்யதே ॥

ஸமது₃:க்க₂ஸுக₂: — (எவனொருவன்) இன்ப துன்பங்களை ஸமமாக எண்ணுகிறானோ, ஸ்வஸ்த₂:— தன் ஆத்மாவிலேயே ஈடுபட்டிருக்கிறானோ, ஸமலோஷ்டாஶ்மகாஞ்சந:— மண்கட்டியையும், கல்லையும், பொன்னையும் ஒன்றாக நினைக்கிறானோ, துல்யப்ரியாப்ரிய:— இனியதையும் இன்னாததையும் ஒன்றாக நினைக்கிறானோ, தீ₄ர: - தே₃ஹத்தையும் ஆத்மாவையும் பிரித்தறிகிறானோ, துல்யநிந்தா₃த்மஸம்ஸ்துதி:- தன்னைப்பற்றிய துதியையும் நிந்தையையும் ஒன்றாக எண்ணுகிறானோ, மாநாவமாநயோ: துல்ய: — பிறர்மதிப்பதையும், அவமதிப்பதையும் ஒன்றாக நினைக்கிறானோ, மித்ராரிபக்ஷயோ: துல்ய:—நண்பர்கள் எதிரிகளாகிற இருதரப்பையும் ஒன்றாக நினைக்கிறானோ, ஸர்வாரம்ப₄பரித்யாகீ₃—தே₃ஹ ஸம்ப₃ந்த₄த்திற்கு அனுகு₃ணமான எல்லாக் கார்யங்களையும் கைவிட்டிருக்கிறானோ, ஸ: — அவன். கு₃ணாதீத:— குணங்கடந்தவன் என்று, உச்யதே—சொல்லப்படுகிறான்.

24. தன்சுகத்துந் துக்கத்துந் தான்சமனாய்த் தன்னமர்ந்து
பொன்கலுட னோடிதனிற் புந்தியொத்தோன் — அன்பர்
வெறுப்பரிடை யொப்போன் மிகுபழிநன் கீர்த்தி
நிறுத்தசம நிற்கு நிகழ்ந்து.

---

24-25. குணங்கடந்தவனுக்கு மேலுமுள்ள தன்மைகளைக் காட்டுகிறான் இவ்விரு ஶ்லோகங்களில், (ஸமது₃:க்க₂ஸுக₂:) தனக்கு வரும் துன்பங்களையும் இன்பங்களையும் ஒக்க நினைப்பவன். கீதை (2-15) இல் இப்பத₃ம் விவரிக்கப்பட்டுள்ளது. இதற்குக் காரணம் என்ன? எனில்:— (ஸ்வஸ்த₂:) தன் ஆத்மாவில்

भा । समदुःखसुखः — सुखदुःखयोस्समचित्तः, स्वस्थः— स्वस्मिन् स्थितस्स्वात्मैकप्रियत्वेन तद्व्यतिरिक्तपुत्रादिजन्ममरणादिसुख-दुःखयोस्समचित्त इत्यर्थः । तत एव समलोष्टाश्मकाञ्चनः । तत एव

25. தன்னமரு மானமவ மானஞ்சா ரானண்ப [வருஞ்
றொன்னலர்தம் பக்கத்து மொத்தியல்வான்—மன்ன
செய்ம்முயற்றி யெல்லாஞ் செய்யா னவன்குணங்கண்
மெய்ம்முயற்றி யாற்கடந்தான் மிக்கு.

தன்சுகத்தும் துக்கத்தும் தான் சமனுய்—தனக்கு வரும் இன்பதுன்பங்களை ஒக்க நினைப்பவனுய், தன் அமர்ந்து—தன் ஆத்மாவிலேயே ஈடுபட்டிருப்பவனுய், பொன் கல்

ஈடுபட்டிருப்பவன். இப்படித்தன் ஆத்மாவையே இனியதாகக் கொள்கையால் தனக்குப் பிள்ளை பிறப்பது முதலானவற்ருல் இன்பத்தையோ, பிள்ளை இறப்பது முதலானவற்ருல் துன்பத்தையோ அடையாமையால் இன்ப துன்பங்களை 'அனுப₄வித்தே தீரவேண்டிய கர்மப₂லன்கள்' என்று ஒக்க நினைக்கிருன் என்று கருத்து. 'தன் ஆத்மாவிலேயே ஈடுபட்டவன்' என்று இங்கு சொன்னது கல்லையும், பொன்னையும். இனியதையும் இன்ஞதையும், பழிச்சொல்லையும் துதிச்சொல்லையும், மதிப்பையும அவமதிப்பையும், மித்ரபக்ஷத்தையும் சத்ருபக்ஷத்தையும் ஒன்ருக எண்ணுபவன் என்று மேலே கூறும் அனைத்துக்கும் காரணமாகிறது. இவ்வளவு அர்த்த₂ஸ்வாரஸ்யமிருக்கையாலே ஸ்வஸ்த₂ ஶப்₃த₃த்துக்கு விகாரமற்றிருக்கை, கு₃ணங்களைப் பின்செல்லாமலிருக்கை முதலான பொருள்களைக்கொள்ளாமல், "தன் ஆத்மாவில் ஈடுபட்டிருக்கை" என்று பொருள் கொள்ளப்பட்டது, (ஸமலோஷ்டாஶ்ம காஞ்சந:) ஆத்மாவில் ஈடுபட்டிருக்கையாலேயே மண்கட்டியையும், கல்லையும் பொன்னையும் ஒன்ருக எண்ணுபவன். 'லோஷ்ட' என்று மண்கட்டியை அல்லது ஓட்டாஞ்சில்லைச்சொல்லுகிறது. கீதை (6-8) இல் இப்பத₃ம் விவரிக்கப்பட்டது. (துல்யப்ரியாப்ரிய:) முற்கூறிய காரணத்தாலேயே இனியதையும் இன்ஞதையும் ஒன்ருக நினைப்பவன். ப்ரியாப்ரியஶப்₃த₃ங்களுக்கு ஸுக₂து₃:க்க₂ ஶப்₃த₃ங்களோடு புநருக்தி வராமைக்காக ப்ரியஶப்₃த₃ம் இன்பத்தை விளைக்கும் இனிய பொருள்களையும் அப்ரிய ஶப்₃த₃ம் துன்பத்தை விளைக்கும் இன்ஞத பொருள்களையும் குறிப்பதாகக்கொள்ளப்படுகிறது. (தீ₄ர:) ப்ரக்ருதி பரிணமமான தே₃ஹத்தைக்காட்டிலும் ஆத்மா வேறுபட்டது என்று பகுத்தறிவதில் வல்லவன்.

तुल्यप्रियाप्रियः — तुल्यप्रियाप्रियविषयः । धीरः — प्रकृत्यात्मविवेककुशलः । तत एव तुल्यनिन्दात्मसंस्तुतिः – आत्मनि मनुष्यत्वाद्यभिमानकृतगुणागुणनिमित्तस्तुतिनिन्दयोस्स्वासंबन्धानुसन्धानेन तुल्यचित्तः ।

---

உடன் ஒடு இதனில புந்தி ஒத்தோன் — பொன்னையும், கல்லையும், ஓட்டாஞ்சில்லையும் ஒன்ருக நினைப்பவனாய், அனபர் வெறுப்பர் இடை ஒப்போன் — அன்புடையவர்களிடத்தும் வெறுப்புடையவரிடத்தும் ஒருபடிப்பட்டவனாய், மிகு பழி நன்கீர்த்தி நிறுத்த சமன் — தன்னைப்பற்றிய மிகுந்த பழிச் சொல்லையும் நல்ல துதிச்சொல்லையும் ஒன்ருக எண்ணுகிற வனாய், நிகழ்ந்து நிற்கும் — (தேஹத்தைக்காட்டிலும் வேறுபட்டவனாகத்) தன்னையறிந்து வாழ்பவனாய், தன் அமரும் மானம் அவமானம் சாரான் — பிறர் தன்னை மதிப்பதையும் அவமதிப்பதையும் பொருட் படுத்தாதவனாய், நண்பர் ஒன்னலர் தம் பக்கத்தும் ஒத்து இயல்வான் - நண்பர்கள் எதிரிகள் ஆகிய இருதரப்பையும் ஒன்ருக நினைப்பவனாய், மன்ன வரும் செய் முயற்றி எல்லாம் செய்யான் — தேஹத்தொடர்பை ஒட்டி வரும் எல்லா முயற்சிகளையும் கைவிட்டிருப்பவனாய், அவன் — உள்ளவன், குணங்கள் மெய் முயற்றியால் மிக்கு கடந் தான் — முக்குணங்களையும் தனது உண்மையான முயற்சி யாலே மிகவும் கடந்தவனாவான்.

---

முன் சொன்னபடி இனியதும் இன்னாததும் வந்த டையும்போது கலங்காமலிருப்பதற்கும், பின்னால் சொல்ல விருக்கிறபடி துதி நிந்தை முதலானவற்றில் ஒருபடிப்படவிருப்ப தற்கும் காரணமாகிறதாகையாலே, இடையில் படிக்கப்பட்ட தீ₄ரஶப்₃த₃ம் இப்பகுத்தறிவைக் குறிப்பதாகக் கொள்ளுவதே பொருத்தமாகும். இதுவரையில் குணங் கடந்தவனுக்கு அர்ஜுனன் வினவிய உள் இலக்கணங்கள் சொல்லப்பட்டன. இனி 'கிமாசார:' என்று அவனால் கேட்கப்பட்ட வெளியிலக்கணங்கள் இருபத்தைந்தாம் ஶ்லோகம் ஈருக விவரிக்கப்படுகின்றன, (துல்ய நிந்தா₃த்மஸம்ஸ்துதி:) இப்படி தேஹாத்ம விவேகமுடையவனா கையாலேயே பிறர் தன்னைப் புகழ்வதும் இகழ்வதும் தன் ஆத் மாவைத் தொடாது என்று உணர்ந்து இரண்டிலும் ஒருபடிப்பட இருப்பவன், பிறர் இவனைத் துதிப்பதும் பழிப்பதும் தேஹத்தி லுள்ள நன்மை தீமைகளைக் குறித்தேயாகையாலே, பிறரைத் துதிப்

तत्प्रयुक्तमानावमानयोः तत्प्रयुक्तमित्रारिपक्षयोरपि स्वसंबन्धाभावादेव तुल्यचित्तः । तथा देहित्वप्रयुक्तसर्वारम्भपरित्यागी । य एवंभूतः, स गुणातीत उच्यते ॥ २४ ॥ २५ ॥

---

பதிலும், பழிப்பதிலும் விகாரமற்றிருப்பதுபோலே, அவைபற்றியும் விகாரமற்றிருப்பான் இவன் என்று கருத்து. (மாநாவமாநயோ: துல்ய:) இப்படிப் பழிச் சொற்களாலும் துதிச்சொற்களாலும் விளையும் மதிப்பையும் அவமதிப்பையும் ஒருபடிப்பட நினைப்பவன். வாக்கால் விளைக்கப்படும் மதிப்பும் அவமதிப்பும் முந்தின பதத்திலேயே சொல்லப்பட்டுவிட்டபடியால், இங்கு மனத்தாலும் செயலாலும் விளைக்கப்படும் மானாவமானங்களே சொல்லப்படுவதாகக் கொள்ளவேண்டும். (மித்ர அரிபக்ஷயோ: துல்ய:) மதிக்கும் நண்பர்கள் விஷயத்திலும் அவமதிக்கும் எதிரிகள் விஷயத்திலும் ஒருபடிப்பட இருப்பவன். "மூர்க்க₂ை: பூஜித பூஜகா:" [ப₄ார. உத்₃ 83-62] [மூடர்கள் பாமர மக்களால் பூஜிக்கப்பட்டவர்களையே பூஜிக்கிறார்கள்.] என்கிறபடியே உலகினர் பலரால் துதிக்கப்படுபவனை மதிக்கிறார்கள்; இகழப்படுபவனை அவமதிக்கிறார்கள். இந்த மதிப்பும் அவமதிப்பும் உலக வழக்கிலும் ஶாஸ்த்ரரீதியிலும் பலவகையாயுள்ளன. மதிப்பவர்கள் நண்பர்களாகிறார்கள். அவமதிப்பவர்கள் விரோதி₄களாகிறார்கள் என்னும் கிரமத்தையொட்டி இந்த மூன்று பத₃ங்களும் தொடர்ந்து அமைக்கப்பட்டுள்ளன. ஸமது:க₂ஸுக₂னான இவனுக்கு எவனும் நண்பனாகவோ விரோதியாகவோ ஆகாவிடிலும், இவனை மதிப்பவன் நண்பனாகவும் அவமதிப்பவன் எதிரியாகவும் உலகில் கருதப்படுவதையிட்டு மித்ர அரிஶப்₃த₃ங்கள் வழங்கப்பட்டுள்ளன. (ஸர்வாரம்ப₄பரித்யாகீ₃) ஶரீரத்தோடு கூடியிருப்பதால் விளையும் எல்லாச் செயல்களையும் விட்டிருப்பவன். "ஆரப்₄யந்தே இதி ஆரம்ப₄ா:" என்னும் வ்யுத்பத்தியாலே, செய்த தீமைக்குப் பழி வாங்குவது முதலான செயல்கள் ஆரம்ப₄ஶப்₃த₃த்தால் குறிக்கப்படுகின்றன. மோக்ஷத்தின் பொருட்டு இவன் அநுஷ்டிக்க வேண்டிய கர்மயோக₃ம் முதலானவை கைவிடத்தகாதவையாகையால், தே₃ஹத்தின் தொடர்பால் விளையும் கர்மங்களே இங்கு ஆரம்ப₄ஶப்₃த₃த்தால் சொல்லப்படுவதாகக்கொள்ள வேண்டும். 'ஸாம்ஸாரிகமான எல்லாக் கர்மங்களையும் விட்டிருப்பவன்' என்று கருத்து. (கு₃ணாதீதஸ்ஸ உச்யதே) முற்கூறியபடி விருப்பு வெறுப்பின்மை முதலான உள் அடையாளங்களாலும், ஸாம்ஸாரிக கர்மங்களை விட்டிருக்கை முதலான வெளி அடையாளங்களாலும் அலங்கரிக்கப்பெற்றவனே கு₃ணாதீதன் (கு₃ணங் கடந்தவன்) எனப்படுகிறான். இந்த லக்ஷணங்களை முயன்று விளைத்துக்கொள்வதே குணங்களைக் கடப்பதற்கு உபாயம் என்று மூன்று கேள்விகளுக்கும் பதில் உரைக்கப்பெற்றதாயிற்று. 24-25

भा ॥ अथैवंरूपगुणात्यये प्रधानहेतुमाह—

मां च योऽव्यभिचारेण भक्तियोगेन सेवते ।
स गुणान् समतीत्यैतान् ब्रह्मभूयाय कल्पते ॥ २६

26. மாஞ்ச யோऽவ்யபி₄சாரேண ப₄க்தியோகே₃ந ஸேவதே ।
ஸ கு₃ணாந் ஸமதீத்யைதாந் ப்₃ரஹ்மபூ₄யாய கல்பதே ॥

ய:—எவனொருவன், மாம்—என்னை, அவ்யபி₄சாரேண ப₄க்தியோகே₃ந ச—மற்ற தெய்வங்களையும் ப₂லன்களையும் கருதாத ப₄க்தி யோக₃த்தினாலும் (அதன் அங்க₃ங்களாலும்), ஸேவதே—ஆராதிக்கிறானோ, ஸ;—அவன், ஏதாந் கு₃ணாந்—(ஸத்வம் முதலான) இந்த மூன்று கு₃ணங்களையும், ஸமதீத்ய—கடந்து, ப்₃ரஹ்மபூ₄யாய கல்பதே—ப்₃ரஹ்மத்தோடு ஸமமாயிருக்கும் தன்மையைப்பெறத்தகுதியுள்ளவனாகிறான்.

---

26. என்னைப் புறம்போகா யோகமாம் பத்தியினான்
மன்னப் பயின்று மருவுமவன்—றன்னமரப்
பேசுகுணஞ் செற்றுப் பிரமமாந் தன்மையினை
மாசில்குணஞ் சேர்ந்திடுமே மற்று.

புறம்போகா யோகமாம் பத்தியினால்—வேறு தெய்வங்களையும் பயன்களையும் கருத்தில் கொள்ளாத ப₄க்தியோக₃த்தினால், என்னை—ஸர்வேஶ்வரனான என்னை, மன்ன பயின்று மருவுமவன்—நன்றாக உபாஸித்து ஆராதி₄ப்பவன், தன் அமரப் பேசு குணம் செற்று—தன் ஆத்மாவை அனுப₄விக்கலாம்படி முற்கூறிய ஸத்வம் முதலான மூன்று கு₃ணங்களையும் கடந்து, மற்று—அதற்குமேலே, மாசில் குணம் பிரமமாம் தன்மையினையே சேர்ந்திடும்—பாபமற்றிருக்கை முதலான எட்டு கு₃ணங்களையுடைய பரம்பொருளின் தன்மையையே அடைந்துவிடுவான்.

---

**26. 'நாந்யம் கு₃ணேப்₄ய:' (19) என்று தொடங்கி ஏழு ஶ்லோகங்களாலே கு₃ணங்கடந்த நிலைக்குக் காரணமான அப்ரத₄ான ஹேதுக்களைச் சொல்லி, அதற்குக் காரணமான**

भा ॥ ※ नान्यं गुणेभ्यः कर्तारम् (१९) इत्यादिनोक्तेन प्रकृत्यात्मविवेकानुसन्धानमात्रेण न गुणात्ययस्संपत्स्यते, तस्यानादिकालप्रवृत्तविपरीतवासनाबाध्यत्वसंभवात्, माम्—सत्यसङ्कल्पं परम-

---

ப்ரத₄ான ஹேதுவைக் கூறுகிறான் இந்த ஶ்லோகத்தில். அந்த ஏழு ஶ்லோகங்களிலும் தே₃ஹத்தையும் ஆத்மாவையும் இவ்வுபாஸகன் பலவகையாகப் பிரித்து அனுஸந்தி₄க்கும் முறைகள் சொல்லப்பட்டன. இப்படி எவ்வளவுதான் முயன்று இவன் அனுஸந்தி₄த்தாலும் அநாதிகாலமாக இவனோடு பொருந்தியிருக்கும் தே₃ஹாத்மாபி₄மான வாஸனை இவனது முயற்சிகளைக்கெடுத்து விடும். ஆகையால் அந்த வாஸனையையும் போக்கடிக்கக்கூடிய ப₄க்தியோக₃த்தினால் எம்பெருமானை உபாஸிப்பதே கு₃ணங் கடந்த நிலைக்கு முக்கிய காரணம் என்கிறான். (மாம்) ஸத்ய ஸங்கல்பனாய், பரமகாருணிகனாய், அடியார்கள் விஷயத்தில் வாத்ஸல்ய கு₃ணக்கடலாயிருக்கும் என்னை, "பராபி₄த்₄யாநாத்து திரோஹிதம் ததோ ஹ்யஸ்ய ப₃ந்த₄விபர்யயௌ" [ப்₃ரஹ்ம ஸூ-3-2-4] [பரமாத்ம ஸங்கல்பத்தாலேயே (ஜீவாத்ம ஸ்வரூபம்) மறைக்கப்பட்டுள்ளது. அந்த ஸங்கல்பத்தாலேயன்றோ இந்த ஜீவாத்மாவுக்கு ஸம்ஸாரப₃ந்த₄மும் மோக்ஷமும் ஏற்படுகின்றன] என்று ப்₃ரஹ்ம ஸூத்ரத்தில் கூறியபடி அநாதி₃ ஸம்ஸார ப₃ந்த₄த்தை விளைத்த ப₄க₃வத் ஸங்கல்பமே அந்தக்கட்டை அடியோடு அவிழ்க்க முடியுமாகையாலே, பரமன் தடையற்ற ஸங்கல்பத்தையுடைய ஸத்ய ஸங்கல்பன் என்று இப்பத₃த்தில் அனுஸந்தி₄க்க வேண்டும். ஸத்ய ஸங்கல்பனாயிருந்தபோதிலும், அனைவர்க்கும் பொதுவானவனாயிருக்கையாலே மோக்ஷ ஸங்கல்பத்தைச் செய்வானோ? என்று ஐயமுற வேண்டாதபடி அடியார்களிடம் பரம கருணையுடையவனாகையாலே, மோக்ஷ ஸங்கல்பத்தை அவர்கள் திறத்தில் செய்வான் என்று தேறியிருக்கைக்காக, பரம காருணிகனென்றும் இப்பத₃த்தில் அனுஸந்தி₄க்க வேண்டும். குற்றம் நிறைந்த ஸம்ஸாரிகள் விஷயத்தில் கருணை வெளிப்படுமோ? என்னும் ஐயத்தைத் தவிர்ப்பதற்காக, அடியார்கள் திறத்தில் வாத்ஸல்ய கு₃ணக்கடலாயிருப்பவன் என்றும் இப்பத₃த்தில் அனுஸந்தி₄க்க வேண்டும். தன் அடியடைந்தவர்களுடைய குற்றங்களைக் காணாதிருப்பதோடன்றியில் குன்றனைய குற்றம் செ(ய்)யினும் கு₃ணமாகக்கொள்ளும் இயல்வுடையவனாகையாலே பரம கருணையாலே அவர்கள் திறத்தில் மோக்ஷ ஸங்கல்பத்தைச் செய்வான் என்று கருத்து. இப்படி பரம கருணையும் ஆஶ்ரித வாத்ஸல்யமும் இருக்கையினாலே ப₃ந்த₄மோக்ஷங்

कारुणिकमाश्रितवात्सल्यजलधिम्, अव्यभिचारेण - ऐकान्त्यविशिष्टेन भक्तियोगेन च यस्सेवते, स एतान् सत्त्वादीन् गुणान् दुरत्ययान् अतीत्य ब्रह्मभूयाय—ब्रह्मत्वाय कल्पते--ब्रह्मभावयोग्यो भवति; यथावस्थितमात्मानममृतमव्ययं प्राप्नोतीत्यर्थः ॥ २६ ॥

---

களுக்குப் பொதுவான ஸத்யஸங்கல்பம் அடியார்கள் விஷயத்தில் மோக்ஷத்திற்குக் காரணமாகிறது என்று தாத்பர்யம். (அவ்யபி$_4$சாரேண ப$_4$க்தியோகே$_3$ந) மற்ற தெய்வங்களின் ஸம்ப$_3$ந்த$_4$மும், ப்ராக்ருத ப$_2$லன்களின் ஸம்ப$_3$ந்த$_4$மில்லாத ஏகாந்த (அவனொருவனையே பற்றிநிற்கும்) ப$_4$க்தியோக$_3$த்தாலே. (ப$_4$க்தியோகே$_3$ந ச) சகாரம் அனுக்தஸமுச்சயமாய், ப$_4$க்தியோக$_3$த்தின் அங்க$_3$ங்களாக முன்கூறப்பட்ட கர்மஜ்ஞான யோக$_3$ங்களைச் சொல்லுகிறது. "ஆத்மார்த்தீ$_2$சேத் த்ரயோSப்யேதே தத்கைவல்யஸ்ய ஸாத$_4$கா:॥" [27] என்று கீ$_3$தார்த்த$_2$ ஸங்க்$_3$ரஹத்தில் கூறியபடியே, மற்ற இரண்டையும் அங்க$_3$மாகக்கொண்ட கர்ம ஜ்ஞாந ப$_4$க்தியோக$_3$ங்கள் மூன்றுமே கைவல்ய மோக்ஷஸாத$_4$நமாகையாலே சகாரம் 'வா' என்னும் விகல்பப் பொருளுடையதாய், "ப$_4$க்தியோக$_3$த்திலாவது அதைப்போலவே ஸ்வதந்த்ரஸாத$_4$னங்களான கர்மஜ்ஞான யோக$_3$ங்களாலாவது என்றும் பொருள் கொள்ளலாம். (ய: ஸேவதே ஸ:) எவனொருவன் என்னை ஆராதி$_4$க்கிறானோ அவன். கர்ம ஜ்ஞான ப$_4$க்தியோக$_3$ங்கள் ப$_4$க$_3$வானுக்கு ஆராத$_4$னமாயிருப்பவை என்பதும் முன்பே நிரூபிக்கப்பட்டது. (ஏதாந் கு$_3$ணாந் ஸமதீத்ய) கடப்பதற்கு அரியவை என்று முன் கூறப்பட்ட இந்த ஸத்வம் முதலான மூன்று குணங்களையும் நன்குகடந்து,

"தை$_3$வீ ஹ்யேஷா கு$_3$ணமயீ மம மாயா து$_3$ரத்யயா"
[கீ$_3$தை 7-14]

[என்னுடையதான இந்த முக்குணமயமான ப்ரக்ருதி தேவனை என்னால் படைக்கப்பட்டதாகையாலே எவராலும் (தமது முயற்சியால் மாத்திரம்) கடக்க அரியது] என்று முன்பே கூறினானன்றோ. (ஸமதீத்ய) அடியோடு கடந்து. முற்கூறிய முயற்சிகளால் த்ரிகு$_3$ண வாஸனையைக் கடக்க முடியாதென்றும், தன்னை ஆராதி$_4$ப்பதாலேயே அதையும் கடக்கலாம் என்றும் உணர்த்துகிறான். (ப்$_3$ரஹ்மபூ$_4$யாய கல்பதே) ப்$_3$ரஹ்மத்தின் தன்மைகளை அடையத் தகுதிபெற்றவனாகிறான். அபஹதபாப்மத்வம் முதலான ப்$_3$ரஹ்மத்திற்கு உரிய எட்டு கு$_3$ணங்களும் ஆவிர்ப$_4$விக்கப்பெற்று

ब्रह्मणो हि प्रतिष्ठाऽहममृतस्याव्ययस्य च।
शाश्वतस्य च धर्मस्य सुखस्यैकान्तिकस्य च ॥ २७

॥ इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु गुणत्रयविभागयोगो
नाम चतुर्दशोऽध्यायः ॥ १४ ॥

27. ப்₃ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டா₂ஹமம்ருதஸ்யாவ்யயஸ்ய ச ।
ஶாஶ்வதஸ்ய ச த₄ர்மஸ்ய ஸுக₂ஸ்யைகாந்திகஸ்ய ச ॥

ஹி — ஏனெனில், அஹம் - நான், அம்ருதஸ்ய - மரண மற்றதாய், அவ்யயஸ்ய ச - அழிவற்றதான, ப்₃ரஹ்மண:- ஜீவாத்ம ஸ்வரூபத்தை அடைவதற்கு, ப்ரதிஷ்டா₂ - உபாயமாவேன். ஶாஶ்வதஸ்ய த₄ர்மஸ்ய ச (ப்ரதிஷ்டா₂) - ஶாஶ்வத த₄ர்மமான ப₄க்தியோக₃த்தினுல் ஸாதி₄க்கப்படும் மிகச்சிறந்த ஐஶ்வர்யத்தை அடைவதற்கும் உபாயமா வேன். ஐகாந்திகஸ்ய ஸுக₂ஸ்ய ச (ப்ரதிஷ்டா₂)- ஜ்ஞானி யால் அடையப்படும் பேரின்பத்துக்கும் உபாயமாவேன்.

---

மரணமற்றதும் அழிவற்றதுமான தன் ஆத்மாவை ஶரீரம் நீங்கிய பின்பு (கைவல்யஸ்த₂ானத்தில்) அனுபவிக்கிருன் என்று கருத்து. "ப்₃ரஹ்மபூ₄த: ப்ரஸந்நாத்மா [18-54] முதலான இடங்க ளிற்போலே அழிவும் மரணமுமற்றிருக்கை முதலான ஸாம்யங் களையடைவதே இங்கு ப்₃ரஹ்மத்தின் தன்மையை அடைவ தாகக் கூறப்படுகிறது. ஜீவப்₃ரஹ்ம ஸ்வரூபைக்யத்தைச் சொல்லு வது பல ஶ்ருதிஸ்ம்ருதிகளோடு முரண்படும் என்று முன்பே காட்டப்பட்டது, இவ்வத்தியாயத்திலும் "தே₃ஹே தே₃ஹிநமவ் யயம்" [14-5] என்று தே₃ஹத்திலிருக்கும் வரையில் முக்குணங் களால் கட்டப்பட்டிருக்கிருன் என்றும், "ஜந்மம்ருத்யுஜரா து₃:க்கை₂ர் விமுக்தோऽம்ருதமஶ்நுதே" [14 20] என்று தே₃ஹத்தை விட்டு நீங்கியதும் மோக்ஷத்தையடைகிருன் என்றும் சொல்லப்பட்டதனரோ. அடுத்த ஶ்லோகத்திலும் "அம்ருதஸ்ய அவ்யயஸ்ய ச" என்று அழிவும் மரணமுமற்றிருக்கையே இக்கை வல்ய நிஷ்ட₂ன் அடையும் பயன் என்று சொல்லப்பட்டது குறிக் கொள்ளத்தக்கது. ஆக, இந்த ஶ்லோகத்தால் அங்க₃ங்களோடு கூடிய ஐகாந்திக ப₄க்தியோக₃த்தால் ஆராதி₄க்கப்பட்ட நானே ஸம்ஸாரமோக்ஷத்தை விரும்பும் கைவல்ய நிஷ்ட₂னுக்கு அந்த மோக்ஷத்தை அளிப்பவன் என்று சொல்லப்பட்டதாயிற்று. 26.

27. குன்று வமுதக் குணப்பிரம மாமுயிர்க்கு(ம்)
நன்று மிருப்பிடந்தா னாவ—னின்றுருந்
தன்மப் பயனுக்குந் தானொருமை சார்சுகமா
நன்மைக்கு மென்று நயந்து.

நான் - நான், குன்று அமுதக் குணப் பிரமமாம் - அழி யாமையையும் மரணமின்மையையும் கு₃ணமாகவுடைய ப்₃ரஹ்மம் எனப்படும், உயிர்க்கும் - ஜீவாத்மஸ்வரூபத்தை அடைவதற்கும், நின்று ஆரும் தன்மப் பயனுக்கும்—நிலை யான த₄ர்மமான ப₄க்தியோக₃த்தின் பயனான மிகச் சிறந்த ஐஶ்வர்யத்துக்கும், தான் ஒருமை சார் சுகமாம் நன்மைக் கும்—ஒரு மனமுடைய ஜ்ஞானிகள் அடையும் பேரின்ப மாகிற நற்பயனுக்கும், என்றும்—எக்காலத்திலும், நயந்து—விருப்பத்துடன், நன்றும் இருப்பிடம் தான் ஆவன் —நல்ல உபாயமாவேன்.

---

27. முன் ஶ்லோகத்தில் சொன்ன கைவல்ய மோக்ஷத்தை அளிப்பவன்தானே என்பதை நிலைநிறுத்துவதற்காக, மத்₄யம ஷட்கத்தில் கூறியபடி ஐஶ்வர்ய கைவல்ய ப₄க₃வத் ப்ராப்திகள் மூன்றையும் அளிப்பவன்தானே என்னும் விஷயத்தைக்காட்டி அத்தியாயத்தை நிறைவுபடுத்துகிறான், ஶாரீரகஶாஸ்த்ரத்தில் மோக்ஷத்தை அளிப்பவன் எம்பெருமானே என்பதை நிலை நிறுத்துவதற்காக. "ப₂லமத உபபத்தே:" [ப்ரஹ்மஸூ 3-2-37] [இந்தப் பரமபுருஷனிடமிருந்தே போ₄க₃ மோக்ஷ ப₂லன்கள் கிடைக்கின்றன. (அவனுக்கே ப₂லத்தைக் கொடுப்ப வனாயிருக்கும் பெருமை) பொருந்தியிருக்கையால்] என்னும் ஸூத்ரத்தில் எம்பெருமானே எல்லாப் பலன்களையும் அளிப்பவன் என்று நிரூபித்தது போன்றது இது. (ஹி) ஏனெனில்; முன் ஶ்லோகத்தில் சொன்னதற்கு இந்த ஶ்லோகம் காரணத்தைக் காட்டுகிறது என்று உணர்த்துகிறது. (அம்ருதஸ்ய அவ்யயஸ்யச ப்₃ரஹ்மண: அஹம் ப்ரதிஷ்டா₂ ஹி) மரணமற்றதாய் அழியாத தான ஜீவாத்மஸ்வரூபத்தை அடைவதற்கு ஏகாந்த ப₄க்தி யோக₃த்தாலே ஆராதி₄க்கப்பட்ட நானேயன்றோ உபாயமாயிருப் பவன். இங்கு பரம்பொருளான கண்ணன் ப்₃ரஹ்மத்துக்குத் தன்னை ப்ரதிஷ்டை₂யாகச் சொல்லிக்கொள்வதால், ப்₃ரஹ்மத்துக் கும் பரமாத்மாவுக்கும் வேறுபாடு விளங்குகிறபடியால், ப்₃ரஹ்மம்

भा ॥ हिशब्दो हेतौ; यस्मादहमव्यभिचारिभक्तियोगेन सेवितो-ऽमृतस्याव्ययस्य च ब्रह्मणः प्रतिष्ठा, तथा शाश्वतस्य च धर्मस्य—

---

பரம்பொருளாக முடியாது. யாத₃வப்ரகாஶமதத்தைச் சேர்ந்தவர்கள் 'பே₄தாக்தாவாகவும், பே₄தாக்₃யமாகவும், ஈஶ்வரனாகவும் மூன்று அம்ஶமாயிருக்கும் ப்₃ரஹ்மத்திற்கு ஈஶ்வராம்ஶம் பெரிதாய் ப்ரத₄ானமாயிருக்கையால் ப்ரதிஷ்டை₂யெனப்படுகிறது' என்று கூறுவதும் பொருந்தாது. ஶாஸ்த்ரங்கள் ஈஶ்வரனையே பரம் பொருளாகக் கூறுகின்றனவாகையாலும், மற்றவையிரண்டையும் பரம்பொருளல்லாதவையாகவே கூறுகிறபடியாலும் இப்பக்ஷம் அடியோடு பொருந்தாது. ஜீவாத்மா பரமாத்மாவுக்கு ப்ரதிஷ்டை₂யென்றோ, விகல்பிதமான (பொய்யான பே₄த₃த்தோற்றமுடைய) ப்₃ரஹ்மத்துக்கு நிர்விகல்பகமான (எவ்வித பே₄த₃முமற்ற) ப்₃ரஹ்மம் ப்ரதிஷ்டை₂ என்றோ பொருள்கொள்ளலாமென்று ஶங்கரர் கூறியதும் ஶாஸ்த்ரவிருத்₃த₄மென்று முன்பே நிரூபிக்கப்பட்டிருக்கிறபடியால் பொருந்தாது. மூலப்ரக்ருதியை ப்₃ரஹ்மஶப்₃த₃த்துக்குப் பொருளாகக்கொள்வதும் முன் ஶ்லோகத்தில் சொன்னதற்கு ஹேதுவாகாதாகையால் பொருந்தாது. ஆகையால், "ப்₃ரஹ்மபூ₄யாய கல்பதே" என்று முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட ஜீவனுடைய மோக்ஷநிலையிலுள்ள ஸ்வரூபமே ப்₃ரஹ்மஶப்₃த₃த்தாலே ஔபசாரிகமாக வழங்கப்படுகிறது என்று கொள்ள வேண்டும். அந்த ப்₃ரஹ்ம ஸ்வரூபத்துக்குத் தன்னை ப்ரதிஷ்டை₂யாகச் சொல்லிக் கொள்வதன் மூலம், முமுக்ஷுவானவன் பரம் பொருளுக்கு ஸமானமான பரிஶுத்₃த₄ாத்ம ஸ்வரூபத்தை அடைவதற்கு ஶாஸ்த்ரங்களில் கூறப்பட்ட ஸாத₄னங்களில் தானே ப்ரத₄ானஸாத₄னம் என்று நிர்ணயிக்கிறான். ப்ரதிஷ்டை₂ என்றது ஸாத₄னமென்றபடி. அன்றிக்கே, ப்ரதிஷ்டா₂ ஶப்₃த₃த்துக்கு ஆத₄ாரமென்றும் பொருள் கொள்ளலாம். "ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸநே கா₃ர்க்கி₃ ஸூர்யாசந்த்₃ரமஸௌ வித்₄ருதௌ திஷ்ட₂த:" [ப்₃ரு 5-8-2] [கார்க்கி₃! அழியாதவனுகையால் அக்ஷரமெனப்படும் இந்தப் பரமாத்மாவினுடைய நியமனத்தாலேயே ஸூர்யசந்த்₃ரர்கள் த₄ரிக்கப்பட்டுள்ளனர்] என்னும் வேத₃வாக்யத்தையொட்டிக்காணும்போது இந்த ஆத₄ாரத்வம் நியமனத்தை உள்ளடக்கியது என்பது "ஶா ச ப்ரஶாஸநாத்" [1-3-10] [மூலப்ரக்ருதியை தரிப்பதாகிற அதுவும் மேலான நியமனத்தாலேயாகையால் அக்ஷரம் ஜீவனுமாகமாட்டான்] என்று ப்₃ரஹ்மஸூத்ரத்தில் சொல்லப்பட்டது. ஆக இப்படி ஶுத்₃த₄ாத்ம ஸ்வரூபம் எனது நியமனத்துக்கு உட்பட்டதாகையாலே, அந்த ஸ்வரூபத்தை

अतिशयितनित्यैश्वर्यस्य, ऐकान्तिकस्य च सुखस्य — * वासुदेवः सर्वम् (७. १९) इत्यादिना निर्दिष्टस्य ज्ञानिनः प्राप्यस्य सुखस्ये-

அடைந்து அனுப₄விப்பது என்னிடம் ப₄க்தி செய்வதாலேயே முடியும் என்று கருத்து. (ஶாஶ்வதஸ்ய த₄ர்மஸ்ய ச) நித்யத₄ர்மமான ப₄க்தியோக₃த்தினாலே கிடைப்பதாய் ப்₃ரஹ்ம கல்பம் வரையில் அனுப₄விக்கக் கூடியதான மிகச் சிறந்ததான ஐஶ்வர்யத்தை அடைவதற்கும் நானே உபாயமாவேன். "அஹம் ப்ரதிஷ்டா₂" என்பதை மூன்றுவது நான்காவது பாத₃ங்களிலும் சேர்த்துக்கொள்ளவேண்டும். த₄ர்மவாசகமான ஶாஶ்வதத₄ர்ம ஶப்₃த₃ம் அதன் ப₂லனை லக்ஷணையாலே குறிக்கிறது என்று கொள்ளவேண்டும். இதற்குக் காரணத்தை இந்த ஶ்லோக வ்யாக்யானத்திலேயே மேலே காட்டுவோம். (ஸுக₂ஸ்ய ஐகாந்திகஸ்ய ச) "வாஸுதே₃வஸ்ஸர்வம்" [7-19] என்னுமிடத்தில் ஜ்ஞானிக்கு ப்ராப்யமாகக் காட்டப்பட்ட பேரின்பத்துக்கும் நானே உபாயமாவேன். ஏகாந்திக்குக்கிடைக்கும் ஸுக₂ம் 'ஐகாந்திகம்' எனப்படுகிறது.

"நிரஸ்தாதிஶயாஹ்லாத₃ ஸுக₂ப₄ாவைக லக்ஷணா ।
பே₄ஷஜம் ப₄க₃வத் ப்ராப்தி: ஏகாந்தாத்யந்திகீ மதா ॥"
[வி. பு, 6-5-59]

[தனக்கு மேலில்லாத ஆனந்த₃ரூபமான ஸுக₂மாயிருக்கையையே லக்ஷணமாகக்கொண்டதாய், துன்பம் சிறிதுமற்றதாய். நித்யமானதான பரமபுருஷ ப்ராப்தியே ஸாம்ஸாரிக தாபங்களுக்கு மருந்தாகும்] என்று சொல்லப்பட்ட பேரின்பமே இது என்று விளங்குகிறது. இத்தால். கல்போலே ஜ்ஞானானந்த₃ங்களற்றுப்போவதே மோக்ஷம் என்னும் நையாயிக மதம் முதலான துர்மதங்கள் தள்ளப்படுகின்றன. "இச்ச₂ா த்₃வேஷ: ஸுக₂ம் து₃:க்க₂ம்" [கீதை 13-6] என்று இந்த கீ₃தையிலேயே ஸுக₂ம் க்ஷேத்ரமாகிற ஶரீரத்தின் காரியமே எனச் சொல்லப்பட்டிருக்கிறதேயெனில்; அங்கு ப்ராக்ருதமான சிற்றின்பம் சொல்லப்பட்டபோதிலும், இங்கு ஐகாந்திகஸுக₂ம் என்று ஏகாந்திகளால் அடையப்படுவதாய், து₃:க்க₂ம் சிறிதுமற்றதான ஸுக₂ம் எனப்படுகையாலே "ரஸம் ஹ்யேவாயம் லப்₃த்₄வா ஆநந்தீ₃ ப₄வதி" [தை ஆன 7] [ரஸஸ்வரூபனை பரமாத்மாவை இந்த ஜீவன் அடைந்து ஆனந்தமுடையவனாகிறான்] முதலான வேத₃வாக்யங்களில் சொல்லப்பட்ட பேரினபமே இது என்று கொள்கிறோம்.

"அஶரீரம் வாவ ஸந்தம் ந ப்ரியாப்ரியே ஸ்ப்ருஶத:"
[சா₂ந் 8-12 -1]

त्यर्थः। यद्यपि शाश्वतधर्मशब्दः प्रापकवचनः, तथाऽपि पूर्वोत्तरयोः प्राप्यरूपत्वेन तत्साहचर्यादयमपि प्राप्यलक्षकः। एतदुक्तं भवति—

---

[ஶரீரமற்ற மோக்ஷ நிலையில் ஸுக₂து₃:க்க₂ங்கள் இவனைத் தொடமாட்டா] என்று சில ஶ்ருதிவாக்யங்களில் மோக்ஷநிலையில் தள்ளப்படும் ஸுக₂மும் து₃:க்க₂த்தோடு தோள்தீண்டியாய், ஶரீரகார்யமான சிற்றின்பம் என்று கொள்ளவேண்டும். இனி ஶாஶ்வத த₄ர்ம ஶப்₃த₃த்தின் பொருளைப் பற்றிப் பின்வரும் ஆக்ஷேபம் எழுகிறது:- இங்கு "ஶாஶ்வதஸ்ய த₄ர்மஸ்ய" என்று தர்மத்தைப்பற்றிச் சொல்லியிருக்கும்போது அதன் ப₂லனை சிறந்த ஐஶ்வர்யத்தை லக்ஷிணையாலே பொருள்கொள்வது, எப்படிப் பொருந்தும்?"நாராயண: ஶாஶ்வதத₄ர்மகோ₃ப்தா" [ப₄ார-மோக்ஷ 343-5] முதலான இடங்களில் க்ருதயுக₃த₄ர்மமாகப் பாஞ்சராத்ரத்தில் சொல்லப்பட்ட த₄ர்மத்தையே இங்கு கூறுகிறது என்று கொண்டு, முக்₂யார்த்த₂த்தையே கொள்ளலாமே. யுக₃ம் மாறுகையில் அந்த த₄ர்மம் பாஷண்டிகளால் நலிவடையும்போது "யதா₃ யதா₃ ஹி த₄ர்மஸ்ய க்₃லாநி:" [கீ₃தை 4-7] "த₄ர்ம ஸம்ஸ்தா₂பநார்த்தா₂ய" [கீ₃தை 4-8] முதலான இடங்களில் அந்த த₄ர்மத்தை நிலைநிறுத்துவதாக கீ₃தையில்தானே சொல்லுகிறுகையாலே, ஶாஶ்வத த₄ர்மத்துக்குத் தானே ப்ரதிஷ்டை என்று கூறுவதும் பொருந்துகிறது — என்பது அங்வாக்ஷேபம். இதற்கு ஸமாத₄நம் பின்வருமாறு:— இந்த ஶ்லோகத்தின் முற்பாதியில் ப்ரகரணத்தையொட்டிக் கைவல்ய மோக்ஷம் சொல்லப்படுவதாகக் கொண்டே தீரவேண்டும். நாலாவது பாத₃த்தில் "ஸுக₂ஸ்ய ஐகாந்திகஸ்ய" என்று ப₄க₃வத் ப்ராப்தியாகிற பேரின்பம சொல்லப்படுகிறது என்பது தெளிவு. ஏழு, எட்டாவது அத்தியாயங்களில் சொல்லப்பட்ட ஐஶ்வர்ய கைவல்ய ப₄க₃வத் ப்ராப்திகளில், நித்யமாயிருந்தபோதிலும் ப₄க₃வத₃நுப₄வத்தைக் காட்டிலும் அல்பமான கைவல்ய ஸுக₂ம் முற்பாதியிலும், பேரின்பமான ப₄க₃வத₃நுப₄வஸுக₂ம் நாலாவது பாத₃த்திலும் சொல்லப்பட்டிருக்கும்போது, இந்த்₃ரன் ப்ரஜாபதி முதலானவர்களுடைய போ₄க₃த்தைக்காட்டிலும் சிறந்ததாயினும் அல்பமும் அஸ்தி₂ரமுமான ஸமக்₃ரைஶ்வர்யஸுக₂த்தை மூன்றாவது பாத₃த்தில் சொல்லுவதாகக் கொள்வதே உசிதம், முன்னும் பின்னும் ப்ராப்யங்களைச் சொல்லுபோது இடையில் ப்ராபகத்தைச் சொல்லுவது பொருத்தமாகாது. ஆகையால் ஶாஶ்வத த₄ர்மமான ப₄க்தி யோக₃த்தால் அடையப்படும் ஐஶ்வர்ய ஸுக₂மே மூன்றாவது பாத₃த்தில் சொல்லப்படுவதாகக் கொள்ளவேண்டும். க்ருதயுக₃த₄ர்மத்தைச் சொல்லுவதற்கு இங்கு ப்ரகரணத்தில் இடமில்லை. நாலாவது பாத₃த்தில் சொல்லப்பட்ட ப₄க₃வத் ப்ராப்திக்கு ஸாத₄னமாக அனுஸந்தி₄க்கத்தக்கது அது.

पूर्वत्र * दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया । मामेव ये प्रपद्यन्ते (७–१४) इत्यारभ्य गुणात्ययस्य तत्पूर्वकाक्षरैश्वर्यभगवत्प्राप्तीनां च भगवत्प्रपत्त्येकोपायतायाः प्रतिपादितत्वादेकान्तभगवत्प्रपत्त्येकोपायो गुणात्ययस्तत्पूर्वकब्रह्मभावश्चेति ॥ २७ ॥

॥ इति श्रीभगवद्रामानुजविरचिते श्रीमद्गीताभाष्ये चतुर्दशोऽध्यायः ॥१४

---

இங்கு மற்றும் சில கேள்விகள் எழுகின்றன — (1) இங்கு கைவல்யநிஷ்டை₂யைப்பற்றியே ப்ரகரணத்தில் பேச்சு வந்திருக்கும் போது, ப்ரகரணத்தில் இல்லாத ஐஶ்வர்யார்த்தி₂யைப்பற்றியும் ஜ்ஞானியைப்பற்றியும் இந்தக் கடைசி ஶ்லோகத்தில் சொல்லக் காரணமென்ன? (2) இந்த மூன்று ப₂லத்துக்கும் எம்பெருமான் ப்ரதிஷ்டை₂யாயிருப்பது முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட அர்த்த₂த்துக்கு எப்படிக் காரணமாகும்? (3) ஏற்கனவே ஸித்₃தி₄த்திருப்பதன்றோ மற்றொன்றுக்குக் காரணமாகும்; மூன்று ப₂லத்துக்கும் ப்ரதிஷ்டை₂யாயிருப்பவன் என்பது எங்கு ஸித்₃தி₄த்தது? (4) கு₃ணங்களைக் கடந்தாலன்றோ ஏகாந்த ப₄க்தி யோக₃ம் ஸித்₃தி₄க்கும். அந்த ப₄க்தியோக₃த்தினால் கு₃ணங் கடந்தநிலை ஸித்₃தி₄க்குமென்று முன் ஶ்லோகத்தில் சொல்லுவது அந்யோந்யாஶ்ரய தோ₃ஷத்துக்கு இலக்காகிறதே என்பவை அக்கேள்விகள். இவற்றுக்கு பதில் பின்வருமாறு — (1) ஏழாமத்தியாயத்தில் "தை₃வீ ஹ்யேஷா கு₃ணமயீ மம மாயா து₃ரத்யயா | மாமேவ யே ப்ரபத்₃யந்தே மாயாமேதாம் தரந்தி தே || [கீ₃தை 7—14] [என்னுடையதான இந்த முக்குணமயமான ப்ரக்ருதி தே₃வனான என்னால் படைக்கப்பட்டதாகையாலே எவராலும் தம் முயற்சியால் மாத்திரம் கடக்கவரிதாயுள்ளது. எவர்கள் என்னையே ஶரணமடைகிறார்களோ, அவர்கள் இந்த ப்ரக்ருதியைக் கடக்கிறார்கள்] என்று தொடங்கி எம்பெருமானிடம் ப்ரபத்தி செய்வதாலேயே கு₃ணங்கடந்தநிலை ஏற்பட்டு, அதன்மூலம் ஐஶ்வர்ய அக்ஷர ப₄க₃வத் ப்ராப்திகள் உண்டாகுமென்று முன்பே கூறப்பட்டது. ஆகையால் ப்ரகரணத்தில் இல்லாததைப் பற்றி இங்கு பேசப்படவில்லை. (2) மூன்று ப₂லன்களுக்கும் தானே காரணமென்று கூறுவதிலிருந்து மூன்றிலொன்றான கைவல்யத்துக்குத் தானே உபாயம் என்று தேறுமாகையால் இரண்டாவது கேள்விக்கும் இடமில்லை. (3) மூன்று ப₂லன்களுக்கும் நான் காரணமாயிருப்பவன் என்பது ஏழு எட்டு அத்தியாயங்

## பகவத் கீதை வெண்பா

(பதினாலாமத்தியாயத்தின் ஸாரத்தைக் கூறும் பாசுரம்)

கட்டுதலுங் கர்த்தாவாந் தன்மையுமக் கட்டவிழ்ப்பும்
விட்டுத் திகழமுதின் மேவுதலுந் - தொட்டுவரு
முக்குணத்தின் சார்வா முயன்றுபதி னாலாமோத்
துக்குமுரை யோரு முணர்ந்து.

வாதிகேஸரி ஜீயர் அருளிய பகவத் கீதை வெண்பாவின்
பதினாலாமத்தியாயம் முற்றிற்று.

தொட்டு வரும் முக்குணத்தின் சார்வா— (அநாதி₃கால மாக உம்மோடு) தொடர்பு கொண்டிருக்கும் முக்குணங் களைப் பற்றிய, கட்டுதலும் — (அவை ஜீவனைக்) கட்டும் முறையும், கர்த்தாவாம் தன்மையும் — (அவற்றுக்குள்ள) செயல் புரியும் தன்மையும், அக்கட்டவிழ்ப்பும் — அந்தக் கட்டு நீங்கும் முறையும், விட்டு திகழ் அமுதின் மேவுத லும்- அக்கட்டு விட்டவுடன் ஒளிவிடும் மரணமற்ற ஆத்மாவை அடைதலும், முயன்று உரை— நன்கு விளக்கப் படும், பதினாலாமோத்துக்கும் — பதினாலாமத்தியாயத்துக்குப் பொருளை, உணர்ந்து ஒரும் — ஆராய்ந்து அறிவீர்களாக.

களிலேயே நன்கு ஸித்₃தி₄த்திருப்பதால் மூன்றுவது கேள்விக்கும் இடமில்லை. (4) முன் எடுத்த [7-14] ஶ்லோகத்தில் "எம்பெருமா னிடம் ப்ரபத்திசெய்வது கு₃ணங்கடந்த நிலைக்கும், அதை முன் னிட்டுக்கொண்டு விளையும் ப₄க்தியோக₃த்தால் ஸாதி₄க்கப்படும் மூன்று ப₂லன்களுக்கும் காரணம்" என்று சொல்லப்பட்டது. ப₄க்திக்கு அங்க₃மான அந்த ப்ரபத்தியே முன் ஶ்லோகத்தில் 'ஏகாந்தப₄க்தியோக₃ம்' என்று கூறப்படுகிறது. அந்த ப்ரபத்தியா லேயே கு₃ணங்கடந்த நிலை விளைகிறது; அந்த நிலையால் ஸாத₄ன ப₄க்தியுண்டாகி மூன்று ப₂லன்களும் விளைகின்றன என்று தேறுகிறபடியால் அந்யோந்யாஶ்ரய தோ₃ஷமில்லை ஆக, இந்த ஶ்லோகத்திற்கு இவ்வண்ணமே பொருள்கொள்ளவேண்டும் என்று தேறிற்று.

ஸ்ரீ க்ருஷ்ணஸ்வாமித₃ாஸன் இயற்றிய கீ₃தார்த்த₂
விவரணத்தில் பதினாலாமத்தியாயம் நிறைவுற்றது.

## கீதார்த்த சங்கிரகம்

(ஸ்ரீவேதாந்த தேசிகர் அருளியது)

பதினைலாமத்தியாயத்தின் ஸாரப் பொருள்

முக்குண மேயுயிர் முற்றவுங் கட்டிட மூண்டமையு
முக்குண மேயனைத் தும்வினை கொள்ள முயன்றமையு
முக்குண மாயை கடத்தலு முக்கதி தந்தளிப்பு
முக்குண மற்ற பிரான்மொழிந் தான்முடி யோன்ற
னக்கே.

முக்குணம் அற்ற பிரான் — (ஸத்வம் முதலான) மூன்று குணங்களுமில்லாத எம்பெருமான், முடியோன் தனக்கு — கிரீடமணிந்த அர்ஜுநனுக்கு, முக்குணமே — (ஸத்துவம் ரஜஸ் தமஸ் என்னும்) மூன்று குணங்களுமே, உயிர் முற்றவும்—ஜீவாத்மாக்கள் அனைத்தையும், கட்டிட— (ஸம்ஸாரத்தில்) அகப்படச்செய்வதற்கு, மூண்டமையும்— காரணமாவதையும், முக்குணமே-அந்த மூன்று குணங்களுமே வினை அனைத்தும் கொள்ள — செய்கை முழுவதையும் (தம்மால் செய்யப்படுவனவாகக்) கொள்ள, முயன்றமையும் — முயற்சி கொண்டிருப்பதையும், முக்குண மாயை — மூன்று குணங்களோடு கூடிய ப்ரக்ருதியின் ஸம்பந்தம், கடத்தலும்-நீங்குவதையும், முக்கதி-(ஐஶ்வர்யம் கைவல்யம் பகவத்ப்ராப்தி ஆகிய) மூன்று கதிகளையும், தந்து அளிப்பும்- கொடுத்துக் காக்கும்விதத்தையும், மொழிந்தான் — உபதேசித்தான்.

## கீதாஶ்லோகார்த்தச் சுருக்கம்

### பதினைலாமத்தியாயம்

| ஶ்லோ. | அர்த்தம் |
|---|---|
| 1-2. | இவ்வத்தியாயத்தில் கூறப்படும் அறிவைப் புகழ்தல். |
| 3-4. | ஜீவனுக்கு ஶரீரஸம்பந்தம் ஸ்ருஷ்டியின் தொடக்கத்திலும் அதற்குப் பின்பும் தன்னுலேயே செய்யப்படுகிறது என்று கண்ணன் உரைத்தல். |

5. முக்குணங்களே பிறவிகள் தொடர்வதற்குக் காரணம்.

6-8. ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று கு₃ணங்களின் தனித்தன்மையையும் அவை ஜீவனைக் கட்டும் முறையையும் விளக்குதல்.

9. இக்குணங்கள் ஜீவனைக் கட்டுவதற்குக் காரணங்களில் முக்கியமானதைக் காட்டுதல்.

10. ஒவ்வொரு ஶரீரத்தில் இக்குணங்களில் ஒவ்வொன்று மேலோங்கியிருப்பதால் அதன் விளைவுகளே அந்த உடலில் உண்டாகின்றன எனக் கூறுதல்.

11-13. முறையே முக்குணங்களும் மேலோங்கி நிற்பதை அவற்றின் கார்யங் கொண்டு அறியலாம் என்று விளக்குதல்,

14-15 முக்குணங்களில் ஒவ்வொன்று மேலோங்கியிருக்கும் போது மரணமடைந்தால் உண்டாகும் ப₂லம்.

16-18. மிகுதியான ஸத்வ கு₃ணம் முதலானவற்றாலே விளையும் ப₂லன்களை விளக்குதல். (இதுவரை கு₃ணங்கள் ஜீவனைக் கட்டும் முறை விளக்கப்பட்டது)

19. கு₃ணங்களின் கர்த்ருத்வம் (செயல் புரியும் தன்மை) அவசியம் அறியத்தக்கது.

20. கு₃ணங்களைக் கடந்து நிற்பவன், மரணம், தோற்றம், வான்பிணி, மூப்பு முதலானவை நீங்கப்பெற்று, மரணமற்ற தன் ஆத்மாவை அனுப₄விக்கிறான்.

21. கு₃ணங்கடந்தவனுடைய உள் வெளி அடையாளங்களைப் பற்றியும், கு₃ணங்களைக் கடந்து நிற்பது எப்படி? என்பது பற்றியும் அர்ஜுனனின் கேள்வி.

22-25 அந்தக் கேள்விக்குப் பதிலாக கு₃ணங்கடந்தவனின் உள் வெளி அடையாளங்களை விளக்குதல்.

26. கு₃ணங்கடந்த நிலைக்குத் தன்னிடம் செய்யப்படும் ஏகாந்த ப₄க்தியே முக்கிய காரணம் என்று விவரித்தல்.

27. ஐஶ்வர்ய கைவல்ய ப₄க₃வத் ப்ராப்திகள் தன்னாலேயே விளைபவை என நிரூபித்தல்.

பதினாலாமத்தியாயத்தின்
கீ₃தாஶ்லோகார்த்த₂ச் சுருக்கம் நிறைவுற்றது.

ஆளவந்தார் அருளிய

## கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹம்

[பதினைந்தாம் அத்தியாயத்தின் சுருக்கம்]

अचिन्मिश्राद्विशुद्धाच्च चेतनात्पुरुषोत्तमः ।
व्यापनाद्भरणात्स्वाम्यात् अन्यः पञ्चदशोदितः ॥ १९ ॥

19. அசிந்மிஶ்ராத்₃விஶுத்₃த₄ாச்ச சேதநாத் புருஷோத்தம :।
வ்யாபநாத்₃ப₄ரணாத் ஸ்வாம் யாத்அந்ய:பஞ்சத₃ஶோதி₃த: ॥

அசிந்மிஶ்ராத் (சேதநாத்) — அசேதனமான ப்ராக்ருத ஶரீரத்தோடு சேர்ந்திருக்கும் ப₃த்₃த₄ ஜீவனைக்காட்டிலும், விஶுத்₃த₄ாத் சேதநாத் ச — ப்ராக்ருதஶரீரத்திலிருந்து விடுபட்டுப் பரிஶுத்₃தி₄யடைந்த முக்த ஜீவனைக் காட்டிலும், வ்யாபநாத் — (அவர்களை) வியாபித்திருக்கையாலும், ப₄ரணாத் — (அவர்களைத்) தாங்குகையாலும், ஸ்வாம்யாத் — (அவர்களை) உடையவனாயிருக்கையாலும், அந்ய:— வேறுபட்டவனான, புருஷோத்தம:—புருஷோத்தமனான நாராயணன், பஞ்சத₃ஶோதி₃த:— (கீ₃தையின்) பதினைந்தாம் அத்தியாயத்தில் சொல்லப்பட்டான்.

வாதி₃கேஸரி ஜீயர் அருளிய

## ப₄க₃வத்₃கீதை வெண்பா— அத்தியாயம்-15.

புருஷோத்தமயோக₃ம்

அத்தியாயப்பொருளின் சுருக்கம்

மன்னு மசித்தின் மருவியமர் சித்தினுமா
றுன்னு முயிர்வகையி லுத்தமனு மன்னியவை
மீதுள் பரந்து பரித்திறையாய் மேவினனை
யோதும் பதினைந்தா மோத்து.

மன்னும் அசித்தின் மருவி அமர் சித்தினும் — அனாதி₃காலமாகச் சேர்ந்திருக்கும் அசேதனமான ப்ராக்ருத ஶரீரத்தோடு கூடிய ப₃த்₃த₄ ஜீவனைக்காட்டிலும், மாறு

## ॥ अथ पञ्चदशोऽध्यायः ॥ १५ ॥

भा ॥ क्षेत्राध्याये क्षेत्रक्षेत्रज्ञभूतयोः प्रकृतिपुरुषयोः स्वरूपं विशोध्य विशुद्धस्यापरिच्छिन्नज्ञानैकाकारस्यैव पुरुषस्य प्राकृतगुणसङ्ग-प्रवाहनिमित्तो देवाद्याकारपरिणतप्रकृतिसंबन्धोऽनादिरित्युक्तम् । अनन्तरे चाध्याये पुरुषस्य कार्यकारणोभयावस्थप्रकृतिसंबन्धो गुणसङ्ग-मूलो भगवतैव कृत इत्युक्त्वा गुणसङ्गप्रकारं सविस्तरं प्रतिपाद्य

---

உன்னும் உயிர் வகையில் — அவ்வசித்தை விட்டு நீங்கியதாக அறியப்படும் முக்தாத்மாவைக்காட்டிலும், உத்தமனு மன்னி — மேற்பட்டவனுக விளங்கி, அவை மீது உள் பரந்து — அவ்விரண்டையும் வியாபித்து, பரித்து — அவற்றைத்தாங்கி, இறையாய் — அவற்றை உடையவனுய், மேவினனை — பொருந்தியிருக்கும் புருஷோத்தமனுன நாராயணனை, பதினைந்தாம் ஓத்து — (கீ₃தையின்) பதினைந்தாம் அத்தியாயம், ஓதும் — கூறும்.

ஸ்ரீக்ருஷ்ண ஸ்வாமித₃ாஸன் இயற்றிய

### கீ₃தார்த்த₂ விவரணம்

#### பதினைந்தாம் அத்தியாயம்

முன் அத்தியாயத்தோடு ஸங்க₃தியும்,
இவ்வத்தியாயார்த்த₂ச் சுருக்கமும்.

அசேதனமான ஶரீரத்தைப் பற்றி முக்கியமாகச் சொல்லுகையாலே க்ஷேத்ராத்₄யாயமெனத்தக்க பதின்மூன்றும் அத்தியாயத்தில் ஶரீரமாகப் பரிணமித்த ப்ரக்ருதி, அந்த ஶரீரத்தோடு கட்டுப்பட்டிருக்கும் ஜீவன் ஆகிய இரண்டு தத்துவங்களினுடைய ஸ்வரூபத்தையும் நன்கு ஆராய்ந்து, இயல்வாக இந்த ஶரீர ஸம்ப₃ந்த₄மற்றவனுய், அளவற்ற ஜ்ஞானத்தையே வடிவாகக் கொண்டவனுன ஜீவனுக்கு ப்ரக்ருதியின் முக்குணங்களின் சேர்த்தி அனுதி₃காலமாக இருந்தபடியாலேயே தே₃வ மனுஷ்ய திர்யக் ஸ்த₂ாவர ரூபமான ஶரீரங்களோடு தொடர்பு அனுதி₃காலமாகத் தொடர்ந்து வருகிறது என்று சொல்லப்பட்டது. ஜீவனைப் பற்றி முக்கியமாகச் சொல்லும் அடுத்த பதினுலாம் அத்தியாயத்தில் ஜீவனுக்கு முற்கூறிய கு₃ண ஸங்க₃த்தினுல்

गुणसङ्गनिवृत्तिपूर्वकात्मयाथात्म्यावाप्तिश्च भगवद्भक्तिमूलेत्युक्तम् । इदानीं भजनीयस्य भगवतः क्षराक्षरात्मकबद्धमुक्तविभूतिमत्ताम्, विभूतिभूतात् क्षराक्षरपुरुषद्वयात् निखिलहेयप्रत्यनीककल्याणैकतानतया अत्यन्तोत्कर्षेण विजातीयस्य भगवतः पुरुषोत्तमत्वं च वक्तुमारभते । तत्र तावत्

---

கார்யநிலையிலும், காரண நிலையிலும் உண்டாகும் ப்ரக்ருதி ஸம்ப$_3$ந்த$_4$ம் எம்பெருமானாலேயே உண்டாக்கப்பட்டது என்று கூறி, கு$_3$ணஸங்க$_3$ம் ஜீவனுக்கு உண்டாகும் முறையை விரிவாக விளக்கி, அந்த கு$_3$ணஸங்க$_3$ம் நீங்கப்பெற்று ஆத்மாநுப$_4$வத்தை உள்ளபடி அடைவது ஏகாந்த ப$_4$க$_3$வத்$_3$ப$_4$க்தியை ஸாத$_4$னமாகக் கொள்வதாலேயே உண்டாகும் என்று சொல்லப்பட்டது. ஈஶ்வரதத்துவத்தைப் பற்றி முக்கியமாகச் சொல்லும் இந்தப் பதினைந்தாம் அத்தியாயத்தில், "ப$_4$க்தி செய்யத்தக்க எம்பெருமானுக்கு க்ஷரபுருஷனுகிற ப$_3$த்$_3$த$_4$ஜீவனும், அக்ஷர புருஷனுகிற முக்த ஜீவனும் செல்வங்களாயிருப்பவர்கள்; அந்த க்ஷராக்ஷரபுருஷர்களைக் காட்டிலும், எல்லாத்தாழ்வுகளுக்கும் எதிர்த்தட்டாய், நல்ல கு$_3$ணங்கள் அனைத்துக்கும் கொள்கலமாயிருக்கையாலே மிகவும் மேலானவனாய், வேறுபட்டிருக்கும் எம்பெருமானே புருஷோத்தமனுகிருன்" என்று சொல்லத் தொடங்குகிருன். மூன்ருவது ஷட்கம் (கடைசி ஆறு அத்தியாயம்) முதலிரண்டு ஷட்கங்களில் சொல்லப்பட்ட அர்த்த$_2$ங்களை விவரிக்க வந்தது. அதில் முதல் இரண்டு அத்$_4$யாயங்களாலே முதல் ஷட்கத்தில் சொல்லப்பட்ட ப்ரக்ருதிபுருஷர்களைப் பற்றியும், அவற்றின் தன்மைகளைப் பற்றியும் விரிவாக விளக்கப்பட்டது. "அந்த ப்ரக்ருதியும் அதன் கு$_3$ணங்களும் எம்பெருமானாலே உண்டான ஸத்தாஸ்தி$_2$தி ப்ரவ்ருத்திகளையுடையவை. அந்தப் புருஷனும் அனாதி$_3$காலமாக எம்பெருமானிடம் அபசாரப்பட்டிருக்கையாலே ப$_3$த்$_3$த$_4$ நிலையிலிருக்கிருன். அவன் அருளாலேயே மோக்ஷத்தை அடைவான்" என்னும் விஷயங்கள் மத்$_4$யம ஷட்கத்தில் சொல்லப்பட்டன. அந்த ஷட்கத்தில் சொல்லப்பட்ட பரமாத்மாவைப் பற்றி இந்தப் பதினைந்தாம அத்தியாயத்தில் விளக்கப்படுகிறது என்றும் கண்டு கொள்வது. பதினாலாமத்தியாயத்தின் இறுதி ஶ்லோகங்கள் இரண்டாலும் "அவ்யபி$_4$சாரிப$_4$க்தி யோக$_3$த்தாலே ஆராதி$_4$க்கப்பட்ட எம்பெருமான் ப$_2$லனை அளிக்கிருன்" என்று கூறப்பட்டது, அந்தப்பரமபருஷனைப் பற்றி இவ்வத்தியாயம் விளக்குகிறது என்றும ஸங்க$_3$தி (தொடர்பு) காணத்தக்கது. முன் இரண்டு அத்தியாயங்களில் சொல்லப்பட்ட

असङ्गरूपशस्त्रच्छिन्नबन्धामक्षराख्यविभूतिं वक्तुं छेद्यरूपबन्धाकारेण विततमचित्परिणामविशेषमश्वत्थवृक्षाकारं कल्पयन् श्रीभगवानुवाच —

श्रीभगवानुवाच —

ऊर्ध्वमूलमधश्शाखमश्वत्थं प्राहुरव्ययम् ।
छन्दांसि यस्य पर्णानि यस्तं वेद स वेदवित् ॥ १ ॥

ஸ்ரீ ப₄க₃வாநுவாச—

1. ஊர்த்₄வமூலம் அத₄ஶ்ஶாக₂ம் அஶ்வத்த₂ம் ப்ராஹுரவ்யயம் ।
ச₂ந்த₃ாம்ஸி யஸ்ய பர்ணாநி யஸ்தம் வேத₃ஸ வேத₃வித்॥

(யம்) அஶ்வத்த₂ம்-யாதொரு ஸம்ஸாரமாகிற அரசமரத்தை, ஊர்த்₄வமூலம்—மேலே வேருடையதாகவும், அத₄ஶ்ஶாக₂ம் கீழே பரவியுள்ள கிளைகளையுடையதாகவும், அவ்யயம்—(ப்ரவாஹரூபமாயிருக்கையால்) அழியாததாகவும், யஸ்ய ச₂ந்த₃ாமஸி பர்ணாநி—வேத₃வாக்யங்களை இலைகளாக உடையதாகவும், ப்ராஹு:-(வேத₃ங்கள்) கூறுகின்றனவோ, தம்—அந்த அரசமரத்தை, ய: வேத₃—எவன் அறிகிருனோ, ஸ: வேத₃வித்—அவனே வேத₃த்தை அறிந்தவனாவான்.

---

ப₃த்₃த₄ முக்தர்கள் எம்பெருமானால் வியாபித்துத் தாங்கப்படும் செல்வங்களாயுள்ளனர் என்று இங்கு கூறப்படுகிறது என்னும் ஸங்க₃தியும் அறியத்தக்கது.

இனி, இவ்வத்தியாயத்தின் தொடக்கத்தில், கேட்போர்கள் எளிதில் புரிந்து கொள்வதற்காக வேத₃வாக்யத்தையொட்டி ஸம்ஸாரமானது ஓர் அரசமரமாகக் கல்பிக்கப்படுகிறது. பற்றின்மையாகிற ஆயுத₄த்தைக் கொண்டு, எங்கும் பரவியிருக்கும் அசித்பரிணாமரூபமான இந்த அரசமரமாகிற ஸம்ஸாரத்தின் ப₃ந்த₄த்தை வெட்டிய பின்பே க்ஷரபுருஷனாகிற ப₃த்₃த₄ ஜீவன் அக்ஷரபுருஷனாகிற முக்த ஜீவனாகிறான் என்று காட்டுவதில் நோக்குடையது இந்த உருவகம்.

மீது முதலாய் மிகுசாகை கீழாக
வோது மூலகா முயரரசைப்—போதுந்
தளிர்கள் மறையாகத் தானுணர்வா னந்த
வொளிகொண் மறையுணர்ந்தா னுற்று.

மீதுமுதலாய்—மேலே வேர் உடையதாய், மிகுசாகை கீழாக - பரவியுள்ள கிளைகளைக் கீழே உடையதாய், போதும் தளிர்கள் மறையாக - (பூர்வபாகத்திலுள்ள) வேதவாக்யங்களைத் தளிர்க்கும் இலைகளாக உடையதாக, ஓதும் - வேதங்களில் ஓதப்படும், உலகாம் உயர் அரசை- (ப்ரவாஹரூபமாயிருக்கையால்) அழியாதிருப்பதான ஸம்ஸாரமாகிற அரசமரத்தை, தான் உணர்வான் - அறிகின்ற மனிதன், அந்த ஒளிகொள் மறை உற்று உணர்ந்தான் - மூலப்ரமாணமாய், நித்யமாயிருக்கை முதலான சிறப்புகளை உடையதான வேதத்தை நன்கு அறிந்தவனாவான்.

---

1. ஸம்ஸாரமாகிற அரசமரத்தை அறிந்தவனே வேதத்தை நன்கு அறிந்தவன் என்கிறான். நன்கு புரிந்து கொள்வதற்காக, வேதவாக்யங்களை ஒட்டி இங்கு ஸம்ஸாரம் அரசமரமாக உருவகப்படுத்தப்படுகிறது. பரதத்துவமாகிற எம்பெருமானை அறிய விரும்புவதற்குக் காரணமான ஸம்ஸாரவிரக்தி உண்டாவதற்கு இந்த உருவகம் பயன்படுகிறது. எம்பெருமானுடைய விபூதியான இதை அறிந்தால், உடையவனான எம்பெருமானை அறியலாம் என்று உணர்த்துவதற்கும் இவ்வுருவகம் பயன்படுகிறது. (யம் அஶ்வத்தம்) ஸம்ஸாரமாகிற யாதொரு அரசமரத்தை. 'தம்' என்று பிற்பாதியில் இருப்பதற்குச்சேர 'யம்' என்னும் பதம் வருவித்துக்கொள்ளப்படுகிறது. மூன்றுவது ஶ்லோகத்தில் "ஏநம் அஶ்வத்தம் அஸங்கஶஸ்த்ரேண த்ருடேந சித்வா" என்று இந்த அரசமரம் பற்றின்மையாகிற ஆயுதத்தால் வெட்டப்படுவதாகக் குறிக்கையாலே, பற்றுக்கு விஷயமான ஸம்ஸாரமே இங்கு அரசமரமாகக் கற்பிக்கப்படுகிறது என்று நிர்ணயிக்கிறோம். உலகத்தில் காணும் அரசமரத்தைக்காட்டிலும் இந்த அரசமரம் வேறுபட்டதாகவும் ஆஶ்சர்யமாகவும்

இருப்பது என்பதைக் காட்டுவதற்காக இதன் வேர் மேல்நோக்கியும் கிளைகள் கீழ்நோக்கியும் இருப்பதாக உருவகப்படுத்துகிருன். "கு₃ணப்ரவ்ருத்₃த₄ா விஷயப்ரவாளா: ஶாக₂ா:' [ஸத்வாதி₃கு₃ணங்களால் வளர்ந்தவையாய், ஶப்₃த₃ாதி₃ விஷயங்களைத் தளிர்களாக உடையவையான கிளைகள்] என்று அடுத்த ஶ்லோகத்தில் இந்த மரத்தின் கிளைகளை எடுக்கையாலே மூலப்ரக்ருதியே இங்கு அரச மரமாகக் கற்பிக்கப்படுவதாகக் கொள்ளலாமே எனில்: அழியாத தாகிற மூலப்ரக்ருதியைப் பற்றின்மையாகிற ஆயுதத்தால் வெட்டப்படுவதாகக் கூறுவது பொருந்தாதாகையாலும், மூலப்ரக்ருதியின் கார்யமான லீலாவிபூ₄தியாகிற ஸம்ஸாரமே பற்றுக்கு நேரே விஷயமாகிறதாகையாலும், மூலப்ரக்ருதியைக் கொள்வதைவிட அதன் கார்யமான ஸம்ஸாரத்தை அரசமரமாகக் கற்பிப்பதாகக் கொள்வதே பொருத்தமானது. இவ்வர்த்த₂மே மஹாப₄ாரதத்திலும் [ஆஶ்வ 35-20] நாரஸிம்ஹபுராணத்திலும் [16-5] விளக்கப்பட்டுள்ளது.

"அவ்யக்தமூலப்ரப₄வ: தஸ்யைவாநுக்₃ரஹோச்ச்₂ரித: |
பு₃த்₃தி₄ஸ்கந்த₄மயஶ்சைவ இந்த்₃ரியாந்தரகோடர: ||
மஹாபூ₄தவிஶாக₂ஶ்ச விஷயை: பத்ரஶாக₂வாந் |
த₄ர்மாத₄ர்மஸுபுஷ்பஶ்ச ஸுக₂து₃:க₂ப₂லோத₃ய: ||
ஆஜீவ்ய: ஸர்வபூ₄தாநாம் ப்₃ரஹ்மவ்ருக்ஷஸ் ஸநாதந: |
ஏதத்₃ப்₃ரஹ்ம வநம் சைவ ப்₃ரஹ்மவ்ருக்ஷஸ்ய தஸ்ய தத் ||
ஏதச்சி₂த்வா ச பி₄த்வா ச ஜ்ஞாநேந பரமாஸிநா |
ததஶ்சாத்மரதிம் ப்ராப்ய யஸ்மாந்நாவர்த்ததே புந: ||

[மூலப்ரக்ருதியை மூலகாரணமாக உடையதாய், அதிலிருந்து பரவி வளர்ந்ததாய், மனமாகிற அடிமரத்தை உடையதாய், மற்ற இந்த்₃ரியங்களாகிற பொந்துகளையுடையதாய், பஞ்சமஹாபூ₄தங்களாகிற பெரிய கிளைகளை உடையதாய், ஶப்₃த₃ாதி₃ விஷயங்களாகிற இலைகளையுடைய சிறு கிளைகளை உடையதாய், த₄ர்மம் அத₄ர்மம் ஆகிய மலர்களை உடையதாய், இன்பதுன்பங்களாகிற பழங்களைக் கொண்டதாய், எல்லா ஜீவராசிகளுக்கும் வாழுமிடமாயிருப்பதாய், பழையதாய் ப்₃ரஹ்மாத்மகமான தே₃ஹமாகிற மரம் உள்ளது. இந்த ப்₃ரஹ்மமே இத்தகைய மரங்களடங்கிய ஸம்ஸாரமாகிற வனமாகவும் உள்ளது. இந்த மரத்தை அறிவாகிற பெரிய ஆயுத₄த்தால் வெட்டிப்பிளந்து, திரும்பி வருதல் இல்லாத ப்₃ரஹ்மாநுப₄வமாகிற மோக்ஷத்தை அடைகிருன் ஜீவன்] என்னும் ஶ்லோகங்கள் காண்க. ஒவ்வொரு மனித ஶரீரத்திலும் தலை மேல் பகுதியில் வேர்போலேயும், கைகால் முதலானவை

भा ॥ यं संसाराख्यमश्वत्थम् ऊर्ध्वमूलमधश्शाखमव्ययं प्राहुः श्रुतयः, * ऊर्ध्वमूलोऽवाक्छाख एषोऽश्वत्थस्सनातनः (क. ६-१)

---

கீழ்ப்பகுதியில் கிளைகள் போலேயும் இருப்பதையிட்டு ஒவ்வொரு மனித ஶரீரத்தையுமே அரசமரமாகக் கற்பிப்பதாகக் கூறினர்கள் சிலர். மற்றும் சிலர் "இந்த ப்₃ரஹ்மாண்ட₃ம் முழுவதும் ஹிரண்ய க₃ர்ப்ப₄ன் எனப்படும் ப்₃ரஹ்மாவுக்கு ஶரீரமாய் 'விராட்' எனப்படுகிறது, அந்த விராட்புருஷனுக்கு த்₃யுலோகம் தலையாகவும், சந்த்₃ர ஸூர்யர்கள் கண்களாகவும், திக்குகள் காதுகளாகவும், ஆகாஶம் இடையாகவும், பூ₄மி பாத₃ங்களாகவும் இருப்பதால், அந்த விராட்டாகிற ப்₃ரஹ்மாண்ட₃மே அரசமரமாக இங்கு கற்பிக்கப்படுகிறது" என்று கொண்டனர். வேறு சிலர் "ஜீவ ராசிகளே அரசமரம்; அவற்றுக்கு வேராக உயரே இருப்பவன் பிரமன்" என்றும் இந்த ஶ்லோகத்துக்குப் பொருள்கொண்டார்கள்; "அத₄ஶ்சோர்த்₄வம் ச" என்னும் அடுத்த ஶ்லோகத்தில் மூல ப்ரக்ருதி தொடக்கமாக பஞ்சபூ₄தங்கள் ஈறாக உள்ள உலகனைத்தும் மரமாகக் கற்பிக்கப்படுவதாகவும் இவர்கள் கொண்டார்கள். இந்த எல்லா நிர்வாஹங்களும் ஸம்ஸாரம் மிகத் தாழ்ந்தது என்னும் கருத்தைத் தெரிவிப்பவையாகும். இப்படி தாத்பர்யார்த்த₂த்தைக் கொள்வதைவிட ஸம்ஸாரத்தையே நேரே மரமாக உருவகப்படுத்துவதாகக்கொள்வது சிறந்தது. இரண்டாவது ஶ்லோகத்தில் "தஸ்ய" என்றும் மூன்றாவது ஶ்லோகத்தில் "நருபமஸ்ய" என்றும் முதல் ஶ்லோகத்தில் எடுக்கப்பட்ட மரமே அனுவதிக்கப்படுவதால், மூன்று ஶ்லோகங்களிலும், ஸம்ஸாரமாகிற ஒரே மரம் கூறப்படுகிறது என்று கொள்வது மிகப்பொருத்தம். (ஊர்த்₄வ மூலம் அத₄:ஶாக₂ம் அவ்யயம் ப்ராஹு:) மேலே வேரையுடையதாகவும், கீழே கிளைகளையுடையதாகவும், அழிவற்றதாகவும் வேத₃வாக்யங்கள் கூறுகின்றனவோ, இங்கு 'ப்ராஹு:' (கூறுகின்றன) என்றதற்கு 'கர்த்தா'வாக (எழுவாயாக) இருள் துயக்கு மயக்கு மறப்புக்களையுடைய மற்றவர்களைக் கூறுவதைக் காட்டிலும் அபௌருஷேயங்களாய், முற்கூறிய எந்த தோ₃ஷங்களுமில்லாத வேத₃ங்களைக் கொள்வதே மிகப்பொருத்தமானது. வேத₃ங்கள் அப்படி எங்கே கூறுகின்றன? எனில்; ஊர்த்₄வ மூலோऽவாக்ச₂ாக₂ ஏஷோऽஶ்வத்த₂ஸ் ஸநாதந:" [கட₂6-1]

* ऊर्ध्वमूलमवाक्शाखं वृक्षं यो वेद संप्रति (यजु आ १. ११. ५.) इत्याद्याः । सप्तलोकोपरिनिविष्टचतुर्मुखादित्वेन तस्योर्ध्वमूलत्वम् । पृथिवीनिवासिसकलनरपशुमृगक्रिमिकीटपतङ्गस्थावरान्ततया अधश्शाखत्वम् । असङ्गहेतुभूतादासम्यग्ज्ञानोदयात् प्रवाहरूपेणाच्छेद्य-

---

[மேலே வேருடையதாய், கீழே கிளைகளையுடையதாய், பழையதாயிருக்கும் அரசமரம போன்றது இது] "ஊர்த்4வமூலமவாக்சா2க2ம் வ்ருக்ஷம் யோ வேத3 ஸம்ப்ரதி" [யஜு ஆர 1-11-5] [மேலே வேருடையதாய், கீழே கிளைகளையுடையதான மரம்போல் உள்ள இதை எவன் இப்போது அறிகிறானோ] என்னும் இரு வாக்யங்கள் காணலாம். முதல் வாக்யத்தில் "ஏஷ." என்று ஜீவனைக் கூறுகை யால் அங்கு ஸம்ஸாரம் குறிக்கப்படவில்லையே எனில்; சரீரத்தோடு கூடிய ஜீவனே தலையாகிற வேரை மேலேயும், கைகால்களாகிற கிளைகளைக் கீழேயும் உடைய அரசமரமாகக் குறிக்கப்படுகிறான் ஆகையாலே ஜீவனுடைய சரீரம்சமும் அதனால் விளையும் ஸம்ஸாரமும் அரசமரமாகக் குறிக்கப்படுவதாகவே கொள்ள வேண்டும். முதல் வாக்யத்தில் "ஶ்வோ ந ஸ்த2ாஸ்யதி இதி அஶ்வத்த2" என்னும் வ்யுத்பத்தியாலே மறுநாளைக்கு இருக்கும் என்று உறுதி சொல்ல முடியாத ஸம்ஸாரமே அஶ்வத்த2மாகக் கூறப்படுகிறது, 'மோக்ஷமடைய விரும்புகிறவனால் இது வெட்டப்படவேண்டும்' என்ற கருத்துத்தோன்ற இரண்டாம் வாக்யத்தில் பொதுவாக வ்ருக்ஷம் (மரம்) என்று இந்த ஸம்ஸாரம் குறிக்கப்படுகிறது என்று கண்டுகொள்வது. (ஊர்த்4வ மூலம்) இந்த ஸம்ஸாரமாகிறமரம்—ஏழுலகங்களில் உயரே இருப்பதான ஸத்யலோகத்தில் வாழ்பவனாய், வ்யஷ்டிஸ்ருஷ்டிக்குக் காரணமாயிருப்பவனான நான்முகனை மூலமாகக் கொண்டதாகையாலே இதனுடைய வேர் உயரேயுள்ளது என்று கூறப்படுகிறது. (அத4:ஶாக2ம்) பூமியிலும் அதற்குக் கீழேயுள்ள உலகங்களிலும் வாழும் மனிதர், பசுக்கள், மிருகங்கள், புழுப்பூச்சிகள். பறவைகள், தாவரங்கள் முதலான அனைத்துமாக இந்த ஸம்ஸாரம் கீழ் நோக்கிப் பரவியிருப்பதால் இது கீழ் நோக்கிப் பரவிய கிளைகளையுடையதாகச் சொல்லப்படுகிறது. (அவ்யயம்) அழிவற்றது. மூன்றாவது ஶ்லோகத்தில் இது பற்றின்மையாகிற ஆயுத4த்தால் வெட்டப்படுவதாகக் கூறியிருக்கையில்,

श्वेनाव्ययत्वम् यस्य चाश्वत्थस्य छन्दांसि पर्णान्याहुः छन्दांसि-श्रुतयः। * वायव्यं श्वेतमालभेत भूतिकामः (यजु. २ १. १.)* ऐन्द्राग्नमेकादश-कपालं निर्वपेत्प्रजाकामः (यजु २ २. १.) इत्यादिश्रुतिप्रतिपादितैः

---

இங்கு அழிவற்றது என்று சொல்லுவது எப்படி ஒட்டும்? எனில்: பற்றின்மையாகிற ஆயுத₄த்தால் ஒரு சிலர் இந்த ஸம்ஸாரத்தை வெட்டி மோக்ஷமடைந்தாலும், அனந்த ஜீவர்கள் ஸம்ஸாரத்தில் வாழ்கிறபடியாலும், வருங்காலத்தில் வாழப்போகிறபடியாலும், ப்ரளய காலத்தில் ஸூக்ஷ்ம நிலையாகிற அழிவை அடைந்தாலும் மறுபடி ஸ்ருஷ்டி காலத்தில் ஸ்தூ₂ல நிலையையடைந்து இது உண்டாகப் போகிறபடியாலும், இப்படி ப்ரவாஹரூபேண நித்யமாயிருக்கையைவிட்டு அழிவற்றது என்று சொல்லப்படுகிறது. பற்றின்மை காரணமாக உண்டாகும் நல்லறிவு விளைந்த பின்பே பல கோடியில் ஒருவரால் இந்த ஸம்ஸாரம் தம்மைப் பொறுத்த வரையில் வெட்டப்படுகிறதேயொழிய எம்பெருமானுக்கு விளையாட்டுக் கருவியான இந்த ஸம்ஸாரத்தை அடியோடு அழிக்க முடியாதன்றோ. (ச₂ந்த₃ாம்ஸி யஸ்ய பர்ணாநி) வேத₃த்தின் பூர்வ ப₄ாக₃த்திலுள்ளவாக்யங்கள் இந்த ஸம்ஸாரமாகிற அரச மரத்துக்கு இலைகளாயுள்ளன என்று கருத்து, எப்படியெனில்: இலைகளே மரத்தின் உண்மை வடிவத்தை மறைத்து மரங்களுக்கு ஸூர்யனின் ஒளியைப் பெற்றுப் பயன்படச் செய்வதன் மூலமும், ஶ்வாஸத்துக்கு (மூச்சுவிடுவதற்கு) உறுப்பாயிருப்பதன் மூலமும், மரங்கள் வளர்வதற்குக் காரணமாகின்றன. இலைகள் உதிர்ந்து விட்டால் மரம் பட்டுப்போவதையும் பார்க்கிறோம். இதுபோலவே- வேத₃த்தின் பூர்வப₄ாக₃த்திலுள்ள "வாயவ்யம் ஶ்வேதமாலபே₄த பூ₄திகாம:" [யஜுர் 2-1-1] [செல்வத்தை விரும்புகிறவன் வாயு தேவதையைக்குறித்து ஶ்வேதயாக₃த்தைச் செய்யக்கடவன்] "ஐந்த்₃ராக்₃நமேகாத₃ஶகபாலம் நிர்வபேத் ப்ரஜாகாம:" [யஜுர் 2-2-1] [குழந்தையை விரும்புகிறவன் இந்த்₃ரன் அக்₃னி ஆகிய இருவரையும் தே₃வதையாகக் கொண்ட ஏகாத₃ஶ கபாலயாக₃த்தைச் செய்யக்கடவன்.] முதலான வேத₃ வாக்யங்களில் சொல்லப்பட்ட காம்ய கர்மங்களாலேயே இந்த ஸம்ஸாரமாகிற மரம் வளர்கிறது. இந்த வாக்யங்கள் 'ஸம்ஸாரமாகிற மரம் பற்றின்மையால் வெட்டத்தக்கது' என்னும் உண்

काम्यकर्मभिर्वर्धतेऽयं संसारवृक्ष इति छन्दांस्येवास्य पर्णानि । पर्णैर्हि

---

மையை மறைக்கையாலும் இலைகளோடு அவற்றுக்கு ஒற்றுமை யுள்ளது. அதனாலேயே "ச₂ாத₃யதி இதி ச₂ந்த₃:" [மறைக் கையாலே 'ச₂ந்த₃ஸ்' (மறை) எனப்படுகிறது வேத₃ம்] என்னும் வ்யுத்பத்தியாலே மறைப்பது என்னும் பொருளையுடைய ச₂ந்த₃ஶ் ஶப்₃த₃ம் இங்கு வழங்கப்பட்டது. இலைகளோடு உள்ள இந்த ஒற் றுமைகளைக் கருதி, "வேத₃வாத₃ரதா:" [கீ₃தை 2:42] முதலான இடங்களிற்போலே, ச₂ந்த₃ஶ்ஶப்₃த₃ம் இங்கு ஸம்ஸாரத்தின் உண்மை நிலையை மறைப்பவையாய், அதை வளர்ப்பவையான பூர்வபா₄க₃வாக்யங்களைக் குறிப்பதாகவே கொள்ளவேண்டும். (தம் ய: வேத₃ ஸ : வேத₃வித்) இத்தகைய ஸம்ஸாரமாகிற அரச மரத்தை எவன் அறிகிறானோ, அவனே வேத₃த்தை அறிந்தவ னாவான். இங்கு ஓர் ஆக்ஷேபம் பின்வருமாறு எழுகிறது :— ஸம்ஸாரமோ அரசமரமோ வேத₃ங்களாகமாட்டா. ஆகையால், 'ஸம்ஸாரமாகிற அரசமரத்தை அறிந்தவன் வேத₃த்தை அறிந் தவன்' என்று கூறுவது பொருந்தாது. ஆகையால், "ஆத்₃யம் யத் த்ர்யக்ஷரம் ப்₃ரஹ்ம த்ரயீ யத்ர ப்ரதிஷ்டி₂தா | ஸ கு₃ஹ்யோ ஽ந்யஸ்த்ரிவ்ருத்₃வேதோ₃ யஸ்தம் வேத₃ ஸ வேத₃வித் ||" [மநு 11-265] [வேத₃ஸாரமாய் அகார உகார மகாரங்களாகிற மூன்று அக்ஷரங்கள் கொண்டதான ப்ரணவம் (பிரமனால்) முதலில் உச்சரிக்கப்பட்டது. மூன்று வேத₃ங்களும் அதில் நிலை நிற்கின்றன. அது பரமரஹஸ்யம்; மூன்று வேத₃ங்களும் அப்படி யல்ல; அந்த ப்ரணவத்தை அறிந்தவன் வேத₃த்தை அறிந்தவ னாவான்] என்னுமிடத்தில் சொல்லப்பட்ட வேத₃ ஸாரமான ப்ரணவமே இங்கு அரசமரமாகக் கற்பிக்கப்படுகிறது என்று கொள்ளலாம். 'ப்ரணவத்தின் அர்த்த₄ மாத்திரை ஜக₃த்காரண மான பரமபுருஷனைச் சொல்லுவது' என்று வேத₃ம் கூறுகையால், அது உயரேயிருக்கும் வேரையுடையது என்று சொன்னது பொருந்துகிறது. முதல் மூன்று மாத்திரைகளைக் கீழேயிருக்கும் கிளைகளாகக் கொள்ளலாம். அன்றிக்கே, க்ருதயுக₃த்தில் நடை யாடிவந்ததாய், பாஞ்சராத்ரத்துக்கு மூலமானதான மூல

वृक्षो वर्धते। यस्तमेवंभूतमश्वत्थं वेद, स वेदवित्। वेदो हि

---

வேதம் எனப்படும் ஏகாயநபாகத்தையே இங்கு அரசமரமாகக் கற்பிக்கப்படுவதாகவும் கொள்ளலாம். ஆதியான மூல வேதமா கையாலே அதை வேரை உயரே கொண்டதாகவும், அதிலிருந்து பரவிய மற்ற வேதங்களைக் கீழே கிளைகளாகக் கொண்டதாகவும் உருவகப்படுத்துவதும் பொருந்துகிறது. 'ஊசியானது பல இலை களைக் கோத்துத் தைப்பது போலே ப்ரணவம் எல்லா வேதங் களையும் கோத்து இணைக்கிறது' என்று ஒரு வேதவாக்யம் கூறுகையாலே, "ப்ரணவமாகிற அரச மரத்துக்கு வேத வாக் யங்கள் இலைகள்" என்றதும் ப்ரணவ விஷயத்தில் பொருந்து கிறது. ஏகாயநவேதம் நாராயணனையே சொல்லும் வேதாந்த ரூபமாயிருப்பதால், பூர்வபாகவாக்யங்கள் அதை இலைகள் போல் வளர்ப்பதாகவும் மறைப்பதாகவும் இருக்கின்றன என்று கூறுவதும் பொருந்தும்.

"மஹதோ வேதவ்ருக்ஷஸ்ய மூலபூதோ மஹாநயம் |
ஸ்கந்தபூதா ருகாத்யாஸ்தே ஶாகா பூதாஸ்தத பரே ||"

[இதிஹாஸஸமுச்சயம் 1-24] [வேதமாகிற பெரிய மரத்துக்கு இந்த மூல வேதம் பெரிய வேராயிருப்பது. ருக் முதலான வேதாந்த பாகங்கள் அடிமரமாயுள் ளன; பூர்வபாகங்கள் கிளைகளாயுள்ளன] என்னும் வசன மும் இந்த கீதா ஶ்லோகத்தை மூலவேத பரமாகக் கொள் வதற்கு ஆதாரமாயுள்ளது. ஆகையால் 'ப்ரணவத்தையோ அல்லது மூல வேதத்தையோ அறிந்தவனே வேதமனைத்தையும் அறிந்தவன்' என்று பொருள்கொள்வதே பொருந்தும், ('வேதத் தோடு எத்தொடர்பும் இல்லாத) ஸம்ஸாரத்தை அறிந்தவன் வேதத்தை அறிந்தவனாவான்' என்று பொருள் கொள்வது சிறிதும் பொருந்ாது — என்பது அவ்வாக்ஷேபம். இதற்கு ஸமா தானம் பின்வருமாறு :— இங்கு வேத ஶப்தம் இந்த ஸம் ஸாரமாகிற மரத்தை வெட்டுவதற்கு உபாயத்தைக் கூறும் வேதாந்த பாகத்தைக் குறிக்கிறது. வெட்ட வேண்டிய மரத் தைப் பற்றி அறிவது, வெட்டுவதற்கு உபாயத்தை அறிவதற்கு

संसारवृक्षच्छेदोपायं वदति; छेद्यवृक्षस्वरूपज्ञानं छेदनोपायज्ञानोपयोगीति वेदविदित्युच्यते ॥ १ ॥

---

உதவுமாகையாலே அவ்வுபாயத்தைக் கூறும் வேதா3ந்தபா4கத்தை அறிந்தவனாக மரத்தை அறிந்தவன் கூறப்படுகிறான். ஆக்ஷேபத்தில் சொன்ன பொருள்கள் பொருந்தமாட்டா என்பதைப் பின் வரும் காரணங்களால் அறியலாம்:— (1) மூன்றாவது ஶ்லோகத்தில் இந்த மரம் பற்றின்மையாகிற ஆயுத4த்தால் வெட்டப்படுவதாகக் கூறுவது ப்ரணவத்தையோ அல்லது மூல வேத3த்தையோ மரமாகக் கொண்டால் பொருந்தாது என்பது வெளிப்படை. (2) அந்த மரத்தை வெட்டிவிட்டுப் பரமபத3ம் தேடத் தக்கது என்று நாலாவது ஶ்லோகத்தில் கூறியிருப்பதும் பொருந்தாது. "ஶப்3த3ப்3ரஹ்மணி நிஷ்ணாத: பரம்ப்3ரஹ்ம அதி4க3ச்ச2தி" [வி. பு. 6-5 64] என்னும் வசனமும் "ஶப்3த3 ப்3ரஹ்மமான ப்ரணவம் முதலானவற்றில் ஈடுபடுபவன் பரப்3ரஹ்மத்தை அடைகிறான்" என்று கூறிற்றேயொழிய 'அதை வெட்டுபவன் பரப்3ரஹ்மத்தை அடைகிறான்' என்று கூறவில்லையே. ஆகையால், ஸம்ஸாரத்தையே இங்கு மரமாகக் கூறுவதாகக் கொள்ளவேண்டும்; ப்ரணவம், மூலவேத3ம் முதலானவற்றை மரமாகச் சொல்லுவது பொருந்தாது. வெட்ட வேண்டிய ஸம்ஸாரத்தைப் பற்றி அறிவது, வேதா3ந்தங்களில் சொல்லப்படும் மோக்ஷோபாயஜ்ஞானத்துக்கு உதவுகையால் அதை அறிந்தவன் வேதா3ந்தத்தை அறிந்தவனாக இங்கு புகழப்படுகிறான். ஸம்ஸாரமாகிற மரத்தை உள்ளபடி அறிவது அதில் வைராக்3யத்தை உண்டாக்கி மோக்ஷத்திற்கு உறுப்பாகிறது. எம்பெருமானுடைய செல்வமான ஸம்ஸாரத்தை அறிவது அதை உடையவனான அவனை அறிவதற்கும் உறுப்பாகிறது. இக்கருத்தைத் திருவுள்ளத்திற்கொண்டே நம்மாழ்வாரும் "யாதானும் ஒன்றறியில் தன்னுக்கில் என்கொலோ" [பெரிய திருவ 38] என்று அருளிச்செய்தார். இப்படி வேதாந்தத்தால் சொல்லப்படும் மோக்ஷோபாயத்தையும், பரம்பொருளையும் அறிவதற்கு உறுப்பாகையால் ஸம்ஸாரமாகிற மரத்தை உள்ளபடி அறிந்தவன் வேதா3ந்தத்தை அறிந்தவன் என்று கூறுவது மிகப்பொருத்தமேயாகும். 1,

अधश्चोर्ध्वं च प्रसृतास्तस्य शाखा गुणप्रवृद्धा विषयप्रवालाः ।

*2 அத₄ஶ்சோர்த்₄வம் ச ப்ரஸ்ருதாஸ்தஸ்ய ஶாகா₂
கு₃ணப்ரவ்ருத்₃தா₄ விஷயப்ரவாளா: ।

தஸ்ய—அந்த அரசமரத்தினுடைய, ஶாகா₂:—(மேலும் சில) கிளைகள், கு₃ணப்ரவ்ருத்₃தா₄;—ஸத்வம் முதலான கு₃ணங்களால் வளர்கின்றவையாய், விஷயப்ரவாளா:—ஶப்₃த₃ம் முதலான விஷயங்களைத் தளிர்களாகவுடையவையாய், அத₄ஶ் ச ஊர்த்₄வம் ச ப்ரஸ்ருதா :— கீழும் மேலும் பரவியுள்ளன.

---

भा ॥ तस्य - मनुष्यादिशाखस्य वृक्षस्य तत्तत्कर्मकृता अपराश्चाधश्शाखाः पुनरपि मनुष्यपश्वादिरूपेण प्रसृता भवन्ति ; ऊर्ध्वं च

---

*2. சென்ற ஶ்லோகத்தில் பிரமன் செய்யும் நைமித்திக ஸ்ருஷ்டியை அனுஸரித்து ஸம்ஸாரம் ஒரு அரசமரமாக உருவகப்படுத்தப்பட்டது. இந்த ஶ்லோகத்தில் நித்ய ஸ்ருஷ்டியை அநுஸரித்து அந்த உருவகம் மேலும் நீட்டிக்கப்படுகிறது (தஸ்ய) முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்டபடி மனுஷ்யர் முதலான கிளைகளையுடைய அந்த ஸம்ஸாரமாகிற அரசமரத்துக்கு. (ஶாகா₂:) அந்த மனுஷ்யர்கள் முதலானவர்களுடைய கர்மங்களால் ஏற்பட்ட மற்றும் சில கிளைகள். முன் ஶ்லோகத்தில் சொன்ன ஶாகா₂ஶப்₃த₃த்தோடு புநருக்தி ஏற்படாமைக்காக இங்கு வேறு சில கிளைகள் சொல்லப்படுவதாகக் கொள்ளவேண்டும். சென்ற ஶ்லோகத்தில் "அத₄ஶ்ஶாக₂ம்" என்று கீழே கிளைகள் உள்ளதாகக் கூறியதற்கு மாறாக "அத₄ஶ் சோர்த்₄வம் ச ப்ரஸ்ருதாஸ் தஸ்ய ஶாகா₂:" என்று இங்கு அம் மரத்தின் கிளைகள் கீழும் மேலும் பரவியுள்ளன என்று கூறுகையால், அங்கு சொல்லப்பட்ட நைமித்திக ஸ்ருஷ்டியைக் காட்டிலும் வேறுபட்ட நித்ய ஸ்ருஷ்டி இங்கு சொல்லப்படுவதாகக்கொள்ள வேண்டும். (அத₄ஶ்ச ஊர்த்₄வம் ச ப்ரஸ்ருதா;) நித்ய ஸ்ருஷ்டியில் பாபம் காரணமாக மனுஷ்யர், பசு, முதலான மேலும் தாழ்ந்த பிறவிகளை அடைய இடமுள்ளது; புண்யம் காரணமாக க₃ந்த₄ர்வர், யக்ஷர், தே₃வர் முதலான உயர் பிறவிகளை எடுக்கவும் இடமுண்டு. இந்தத் தாழ்ந்த பிறவிகள் இங்கு கீழ்நோக்கிப்

गन्धर्वयक्षदेवादिरूपेण प्रसृता भवन्ति। ताश्च गुणप्रवृद्धाः गुणैः सत्त्वादिभिः प्रवृद्धाः, विषयप्रवालाः — शब्दादिविषयपल्लवाः ॥ *२ ॥

கீழ்தனிலு மேலுங் கிளைகளதுக் குப்பரந்து
தாழ்வில் குணத்துயருஞ் சார்புலன்கள்—சூழ்தளிரா
மூலங்கீ ழும்பரக்கு முன்னை வினைத்தொடர்பாய்
ஞாலத்தின் மேலமர்ந்து நன்கு. 2.

பரவும கிளைகளாகவும், உயர் பிறவிகள் மேல்நோக்கிப் பரவும கிளைகளாகவும் உருவகப்படுத்தப்படுகிறது. ஆலமரமானது உயரே பரவும் கிளைகளை உடையதாயிருந்தபோதிலும் விழுதுகள் மூலம் மறுபடி கீழேயும் பரவுதைக் காண்கிறோம். அந்த மரத்தின்மேல் பறவைகள் எச்சமிட்டு விதைகள் விழும்போது மறுபடி அதற்குமேலேயும் கிளைகள் பரவுவதைக் காண்கிறோம். அதுபோலவே கீழ்நோக்கிப்பரவிய கிளைகளையுடைய ஸம்ஸாரமாகிற அரசமரத்துக்கும் மறுபடியும் கீழ்நோக்கியும் மேல்நோக்கியும் கிளைகள் வளர்ந்து பரவுகின்றன என்று கருத்து (கு₃ணப்ரவ்ருத்₃த₄ா:) முன் அத்தியாயங்களில் சொன்ன ரீதியில் ஸத்வ ரஜஸ்தமோ கு₃ணங்கள் மேன்மேலே பிறவிகளை விளைக்கின்றனவாகையாலே, தே₃வர், மனிதர் முதலான கிளைகள் இங்கு கு₃ணங்களால் வளர்வதாகக் கூறப்படுகிறது. கு₃ணங்கள் வளர்ச்சிக்குக் காரணமான நீரின் ஸ்த₂ானத்திலோ, அல்லது அடிமரத்தின் ஸ்த₂ானத்திலோ உள்ளதாக இங்கு கொள்ளலாம். (விஷயப்ரவாளா:) ஶப்₃த₃ ஸ்பர்ஶ ரூப ரஸ க₃ந்த₄ங்களாகிற விஷயங்களைத் தளிர்களாகவுடையவை அக்கிளைகள் என்கிறது. ஸம்ஸாரமாகிற அரசமரத்தின் தளிர்களாகச் சொல்லப்படுகையாலே, இங்கு விஷயங்கள் என்று ஸம்ஸாரத்தில் அனுப₄விக்கப்படும் ஶப்₃தா₃தி₃ விஷயங்களைச் சொல்வதாகக் கொள்வதே பொருத்தம். ஆத்மா பரமாத்மா அறிவு முதலான மற்ற விஷயங்களைக் கொள்வது பொருத்தமல்ல, கிளைகளில் தளிர்கள்போலே, ஶப்₃தா₃தி₃ விஷயங்களே ஸம்ஸார வ்ருக்ஷக்கிளைகளில் அனுப₄விக்கத்தக்க இனிய விஷயங்களாயிருக்கின்றனவன்றோ. ப்ரவாள ஶப்₃த₃ம் பவழத்தையும் குறிக்குமானாலும் பவழம் மரத்தில் முளைப்பதல்லாமையாலே அப்பொருள் பொருந்தாது. ஆகையால் ப்ரவாள ஶப்₃த₃த்துக்கு மரத்தில் முளைக்கும் தளிர் என்றே பொருள்கொள்ள வேண்டும். *2.

भा ॥ कथमित्यत्राह —

अधश्च मूलान्यनुसन्ततानि कर्मानुबन्धीनि मनुष्यलोके ॥ २ ॥

2.* அத₄ஶ்ச மூலாந்யநுஸந்ததாநி
கர்மநுாப₃ந்தீ₄நி மநுஷ்யலோகே ।

(ஸம்ஸாரமாகிற அந்த அரசமரத்துக்கு) அத₄: மநுஷ்யலோகே ச — கீழுள்ள மனிதர்களின் உலகிலும், கர்மாநுப₃ந்தீ₄நி — கர்மக்கட்டுகளாகிற, மூலாநி—வேர்கள், அநுஸந்ததாநி – பரவியுள்ளன.

---

भा ॥ ब्रह्मलोकमूलस्यास्य वृक्षस्य मनुष्याग्रस्य, अधः मनुष्यलोके च, मूलान्यनुसन्ततानि । तानि च कर्मानुबन्धीनि - कर्माण्येवानुबन्धीनि

---

அதுக்கு—ஸம்ஸாரமாகிற அந்த மரத்துக்கு கிளைகள்— (பல்வகைப்பிறவிகளாகிற) கிளைகள், கீழ்தனிலும் மேலும்— கீழேயும் மேலேயும், பரந்து—(மறுபடியும்) பரவி, தாழ்வு இல் குணத்து உயரும் – என்றும் குறையாத ஸத்வரஜஸ் தமோகு₃ணங்களாலே வளர்கின்றன; சார்புலன்கள்சூழ் தளிராம்—அனுப₄விக்கத்தக்க ஶப்₃த₃ம் முதலான விஷயங் கள் அக்கிளைகளைச் சூழ்ந்து முளைத்திருக்கும் தளிர்களா கின்றன; கீழும்—கீழேயுள்ள, ஞாலத்தின்மேல்—பூ₄மியின் மேல்; முன்னை வினைத்தொடர்பாய் – பூர்வகர்மப₃ந்த₄ங்க ளாகிற, மூலம்—அம்மரத்தின் வேர்கள், நன்கு அமர்ந்து பரக்கும்—உறுதியாக ஊன்றிப் பரவுகின்றன.

---

2*. "ஸத்ய லோகத்திலுள்ள நான்முகனையே வேராகவும், கீழுலகங்களைக் கிளைகளாகவுங்கொண்ட அரசமரமாக இந்த ஸம்ஸாரத்தை வர்ணித்தது பொருந்துகிறது. இரண்டாவது ஶ்லோகத்தின் முற்பாதியில் 'மறுபடியும் இம்மரத்துக்கு மேலும் கீழும் கிளைகள் பரவிநிற்கின்றன' என்று கூறுவது எப்படிப் பொருந்தும்?" என்னும் கேள்விக்கு பதிலுரைக்கிறது இனி. (அத₄: மநுஷ்யலோகே ச) ப்₃ரஹ்மலோகத்தில் வேரை உடையதாய், மநுஷ்யலோகத்தில் கிளைகளையுடைய தான இந்த ஸம்ஸாரமாகிற அரசமரத்துக்கு, கீழேயுள்ள மநுஷ்ய

मूलानि, अधो मनुष्यलोके च भवन्तीत्यर्थः; मनुष्यत्वावस्थायां कृतैर्हि कर्मभिः अधो मनुष्यपश्वादयः, ऊर्ध्वं च देवादयो भवन्ति ॥ २॥

---

லோகத்திலும்; 'மூலாநி அநுஸந்ததாநி' [வேர்கள் பரவிநிற்கின்றன] என்று அந்வயம். உயரே வேர்களும் கீழே கிளைகளுமுள்ள மரத்துக்கு மறுபடி கீழே எப்படி வேர்கள் அமையமுடியும்? எனில்: மாடியின்மேல் முளைத்திருக்கும் ஒருகொடி கீழே படர்ந்து பூமியில் ஊன்றியபின்பு மறுபடியும் உயர்நோக்கிப் படர்வது போன்றது இது என்று கொள்ளவேண்டும். அந்த வேர்கள்தான் எவை? எனில்: (கர்மாநுப$_3$ந்தீ$_4$நி) கர்மங்களாகிற அநுப$_3$ந்த$_4$ங்களாய் (கட்டுக்களாய்) இருப்பவையே அந்த வேர்கள். 'புருஷம் அநுப$_3$த்$_4$நந்தீதி அநுப$_3$ந்தீ$_4$நி' [ஜீவனைக் கட்டுகையாலே அனுப$_3$ந்தி$_4$கள் எனப்படுகின்றன] என்னும் வ்யுத்பத்தியாலே, அநுப$_3$ந்தி$_4$ஶப்$_3$த$_3$ம் கட்டைக்குறிக்கிறது, ப$_3$ஹுவ்ரீஹிஸமாஸம் கொள்வதைக் காட்டிலும் கர்மத$_4$ாரய ஸமாஸம் கொள்வது சிறந்ததாகையாலே, "கர்மத்தைக் காரணமாகக்கொண்ட வேர்கள்" என்று பொருள் கொள்ளாமல், "கர்மமாகிற கட்டாயிருக்கும் வேர்கள்" என்று பொருள்கொள்ளப்பட்டது. 'ஊர்த்$_4$வமூலம்' என்று சொல்லப்பட்ட சதுர்முக$_2$ லோகத்திலும் நான்முகனுடைய ஸ்ருஷ்டிக்கும் காரணமாக இக்கர்மங்களே அமைவதால் அங்கும் இவையே ப்ரத$_4$ானமான வேர்களாய் அமைகின்றன. மனுஷ்யலோகத்திலும் அவையே வேர்களாய் அமைகின்றன. கர்மங்களைக் காரணமாகக்கொண்ட கு$_3$ணங்கள் முதலானவற்றைக்காட்டிலும் கர்மங்களே முக்கிய காரணமாகையாலே, இவற்றையே வேராகக்கொள்வது தகும். ஆத்மாவை உறுதியாகப் பற்றிநிற்கும் கர்மங்களை மனுஷ்ய லோகத்திலுள்ள வேர்களாகக் கூறுவதற்குக் காரணமென்ன? எனில்: மனிதனுயிருக்கும் நிலையில் செய்யப்பட்ட கர்மங்களில் பாபம் மிகுதியாயிருக்கும்போது தாழ்ந்த மனுஷ்யர்களாகவும் பசு முதலானவையாகவும் பிறக்கிறான் ஜீவன்; புண்யம் மிகுதியாயிருக்கும்போது மேலுலகில் உயர்பிறவிகளான தே$_3$வர் முதலானோராக ஆகிறான், இப்படி ஜீவன் மனுஷ்ய லோகத்திலேயே புண்யபாபங்களைச் சேர்ப்பது மிகுதியாயிருக்கிறபடியால், ஜீவனைப் பற்றியிருந்தபோதிலும் கர்மங்கள் மனுஷ்ய லோகத்திலுள்ள வேர்களாகச் சொல்லப்படுகின்றன.

न रूपमस्येह तथोपलभ्यते नान्तो न चादिर्न च संप्रतिष्ठा ।

*3. ந ரூபமஸ்யேஹ ததோ₂பலப்₄யதே
நாந்தோ ந சாதி₃ர் ந ச ஸம்ப்ரதிஷ்ட₂ா ।

அஸ்ய —இந்த அரசமரத்துக்கு, ரூபம் — முன்கூறப்பட்ட உருவம், இஹ—இந்த மனுஷ்ய லோகத்தில் ஸம்ஸாரிகளாலே, தத₂ா ந உபலப்₄யதே—முன் ஶ்லோகங்களில் சொல்லப்பட்டபடி அறியப்படுவதில்லை. அந்த: ச—(அந்த மரத்தின்) அழிவும், (முன்கூறப்பட்டபடி கு₃ணங்கடந்த நிலையாலே விளைவது என்று) ந—அறியப்படுவதில்லை. ஆதி₃: ச – (இந்த மரத்தின்) காரணமும், ந (கு₃ணங்களில் பற்றே என்று) அறியப்படுவதில்லை, ஸம்ப்ரதிஷ்ட₂ா ச — (இந்தஅரசமரம்) நிலைநிற்கும் ஆத₄ாரமும், ந — (அஞ்ஞானமே என்று) அறியப்படுவதில்லை.

---

भा ॥ अस्य — वृक्षस्य चतुर्मुखादित्वेनोर्ध्वमूलत्वम्, तत्सन्तान-परम्परया मनुष्याग्रत्वेनाधश्शाखत्वम्, मनुष्यत्वे कृतैः कर्मभिर्मूलभूतैः

---

*3. "இந்த ஸம்ஸாரம் அனைவருக்கும் ப்ரத்யக்ஷமாகக் காட்சியளிக்கிறது. அப்படியிருக்கையில், இதை எவனே ஒருவன் தான் அறிவான் என்றும், அவனே வேதமறிந்தவன் என்றும் முதல் ஶ்லோகத்தில் புகழ்வது எப்படிப் பொருந்தும்?" என்னும் கேள்விக்கு பதிலுரைக்கிறது மூன்ருவது ஶ்லோகத்தின் முற்பாதி. (அஸ்ய ரூபம் இஹ தத₂ா ந உபலப்₄யதே) இந்த ஸம்ஸாரமாகிற அரசமரத்தின் உருவம் இங்கு முற்கூறியபடி நான்முகனை முதலாகக் கொண்டதாகையாலே வேரை மேலே உடையது என்றும், அவனல் படைக்கப்பட்ட தேவர் முதலாக மனிதர் ஈருக உள்ள ஜீவர்களைக் கீழே பரவியிருக்கும் கிளைகளாகக் கொண்டது என்றும், மனித நிலையில் செய்யப்பட்ட புண்ய பாப கர்மங்கள் காரணமாக அம்மரத்துக்குக் கீழேயுள்ள கிளைகளிலிருந்து மறுபடியும் கீழும் மேலும் கிளைகள் பரவுகின்றன என்றும் இவ்வுலகிலுள்ள ஸம்ஸாரிகளால் அறியப்படுவதில்லை. ஸம்ஸாரிகள் அனைவரும் ஸம்ஸாரத்தை நேரே கண்டபோதிலும் முதலிரண்டு ஶ்லோகங்களில் சொன்ன ரீதியில் இந்த ஸம்ஸாரமரத்தை

पुनरप्यधश्चोर्ध्वं च प्रसृतशाखत्वमिति यथेदं रूपं निर्दिष्टम्, न तथा संसारिभिरुपलभ्यते, मनुष्योऽहं देवदत्तस्य पुत्रो यज्ञदत्तस्य पिता तदनुरूपपरिग्रहश्चेत्येतावन्मात्रमुपलभ्यते । तथाऽस्य वृक्षस्य अन्तः— विनाशोऽपि गुणमयभोगेष्वसङ्गकृत इति नोपलभ्यते । तथाऽस्य

---

அவர்கள் காண்பதில்லை என்பது 'தத$_2$ா' என்னும் சொல்லின் கருத்து. 'இஹ' என்னும் சொல் இவ்வுலகிலுள்ள ஸம்ஸாரிகளைக் குறிக்கிறது. அதாவது — மோக்ஷத்துக்கு உறுப்பான அறிவு இல்லாதவர்களைக் குறிக்கிறது. அவ்வறிவுடையவன் பெரும்பாலும் 'முக்தன்' என்றே கூறத்தக்கவனன்றோ. "இவ்வுலகிலும் ஆதி முன்னோராயிருப்பவரை வேராகவும், பாட்டன் தந்தை முதலானவர்களைக் கிளைகளாகவும், பிள்ளை பேரன் முதலானவர்களைத் தளிர்களாகவும் கொண்டதாக இந்த ஸம்ஸார வ்ருக்ஷம் காணப்படுகிறதே" எனில்: "நான் மனிதன், என் தந்தை தே$_3$வத$_3$த்தன், என்பிள்ளை யஜ்ஞத$_3$த்தன், தாழ்ந்ததான மனைவி வீடு முதலான பரிக்$_3$ரஹங்களையுடையவன்' என்று ஸம்ஸாரத்தைக் கைக்கொள்வதற்குறுப்பான இதன் உருவத்தை அறிகிறார்களேயொழிய இதைக் கைவிடுவதற்குறுப்பான முற்கூறிய உருவத்தை இவர்கள் அறிவதில்லை என்பது இத்தொடரின் திரண்ட பொருள். (அஸ்ய அந்த: தத$_2$ா இஹ ந உபலப்$_4$யதே) "அந்த:" "ஆதி$_3$:" "ஸம்ப்ரதிஷ்ட$_2$ா" என்ற மூன்று பத$_3$ங்களோடும் "அஸ்ய இஹ தத$_2$ா ந உபலப்$_4$யதே" என்னும் தொடரைக் கூட்டிக்கொள்ளவேண்டும். இந்த மரத்தின் அழிவும் ஸத்வாதி$_3$ கு$_3$ணமயமான போ$_4$க்$_3$யப் பொருள்களில் பற்றின்மையால் விளைவதென்று முன் அத்தியாயங்களில் கூறியபடி ஸம்ஸாரிகளால் அறியப்படுவதில்லை என்பது இத்தொடரின் திரண்ட பொருள். 'அந்த' ஶப்$_3$த$_3$த்துக்கு 'நிர்ணயம்' முதலான வேறு பொருள்கள் உண்டாயினும், அடுத்துள்ள ஆதி$_3$ஶப்$_3$த$_3$த்துக்கு ப்ரதிகோடியாயிருக்கையாலும், இந்த ஶ்லோகத்தின் பிற்பாதியில் "அஸங்க$_3$ஶஸ்த்ரேண த்$_3$ருடே$_4$ந சி$_2$த்வா" என்று இதை அழிக்கும் வழி கூறப்படுகையாலும், 'அந்த' ஶப்$_3$த$_3$ம் இங்கு அழிவையே குறிக்கிறது. சரீரம் அழிவதாகிற நித்ய ப்ரளயத்தை ஸம்ஸாரிகள் தினந்தோறும் கண்டுகொண்டிருந்தபோதிலும், இது அடியோடு அழிவது மோக்ஷமடையும்போதே என்றும், அவ்வழிவு விளைவது பற்றின்மையாலேயே என்றும் அவர்கள் அறிவதில்லை என்பது

गुणसङ्ग एवादिरिति नोपलभ्यते। तस्य प्रतिष्ठा चानात्मन्यात्माभिमानरूपमज्ञानमिति नोपलभ्यते ; प्रतितिष्ठत्यस्मिन्नेवेति ह्यज्ञानमेवास्य प्रतिष्ठा ॥ *३ ॥

---

இத்தொடரின் கருத்து. (அஸ்ய ஆதி₃: ச இஹ தத₂ா ந உபலப்₄யதே) இந்த அரசமரத்துக்கு ஆதி₃காரணம் கு₃ணமயமான பொருள்களில் பற்றே என்பதையும் ஸம்ஸாரிகள் முன் அத்தியாயங்களில் கூறியபடி காண்பதில்லை என்பது இத்தொடரின் திரண்ட பொருள். க₃ர்ப்ப₄ம் முதலான இடையிலுள்ள காரணங்களை ஸம்ஸாரிகள் அறிந்த போதிலும், கு₃ணங்களில் பற்றே ஆதி₃காரணம் என்பதை அவர்கள் அறிவதில்லை என்று கருத்து. (அஸ்ய இஹ ஸம்ப்ரதிஷ்டா₂ ச தத₂ா ந உபலப்₄யதே) இந்த ஸம்ஸாரமாகிற அரசமரம் ஆத்மா அல்லாததான தே₃ஹத்தில் ஆத்மா என்னும் நினைவைச் செய்வதாகிற அஜ்ஞானத்திலேயே நிலைநிற்கிறது என்பதையும் ஸம்ஸாரிகள் முன் அத்தியாயங்களில் கூறியபடி அறிவதில்லை என்பது இத்தொடரின் திரண்ட பொருள். "ஸம்யக் ப்ரதிதிஷ்டா₂த்யஸ்மிந் இதி ஸம்ப்ரதிஷ்டா₂" என்னும் வ்யுத்பத்தியாலே மரம் உறுதியாக பூ₄மியில் நிற்பது போலே, இந்த ஸம்ஸாரமாகிற அரசமரமும் இதன் ஆதியான கு₃ணங்களில் பற்றுக்கும் காரணமான அஜ்ஞானத்திலேயே நிலையாக நிற்கிறது என்று கருத்து. இதனாலேயே 'ஸம்ப்ரதிஷ்டா₂' என்னும் சொல்லுக்கு 'அடிமரம்' என்று சிலர் பொருள் கூறுவதும் பொருந்தாதென்று விளங்குகிறது. பற்றின்மையாகிற ஆயுத₄த்தால் வெட்டத்தக்கதாக இம்மரத்தைப் பிற்பாதியில் கூறுகையால் 'ஸம்ப்ரதிஷ்டா₂' என்னும் சொல்லுக்குப் பரமாத்மாவைப் பொருளாகச் சிலர் கூறுவதும் பொருந்தாது இவ்விஷயங்களில் பற்றிலார் பற்ற நின்றவனை அவனை, பற்றின்மையாகிற ஆயுத₄த்தாலே வெட்டத் தக்க மரம் நிலைநிற்கும் இடமாகக் கூறுவது பொருந்ாதன்றோ. அஜ்ஞானத்தை, 'ஸம்ப்ரதிஷ்டா₂'ஶப்₃த₃த்துக்குப் பொருளாகக் கூறுவது மிகப்பொருத்தமானது. எப்படியெனில்: மரங்களின் வேர்கள் ஊன்றிநிற்கும் பூ₄மியே மரத்துக்கு ஆத₄ாரமாய் (ஸம்ப்ரதிஷ்டை₂யாய்) உள்ளது, கர்மம் ஸம்ஸாரமாகிற மரத்துக்கு வேராகச் சொல்லப்பட்டது. "அவித்₃யாஸஞ்சிதம்

अश्वत्थमेनं सुविरूढमूलमसङ्गशस्त्रेण दृढेन छित्वा ॥ ३
ततः पदं तत्परिमार्गितव्यं यस्मिन् गता न निवर्तन्ति भूयः ।

3* அஶ்வத்த₂மேநம் ஸுவிரூட₄மூலம்
அஸங்க₃ஶஸ்த்ரேண த்₃ருடே₄ந சி₂த்வா ॥

*4 தத: பத₃ம் தத் பரிமார்க்₃இதவ்யம்
யஸ்மிந் க₃தா ந நிவர்த்தந்தி பூ₄ய: ।

ஏநம்—முன்கூறப்பட்டதாய், ஸுவிரூட₄மூலம் — நன்கு பலவிதமாக ஊன்றி நிற்கும் வேரையுடையதான, அஶ்வத்த₂ம் — (ஸம்ஸாரமாகிற). அரசமரத்தை, த்₃ருடே₄ந — (நல்லறிவைக்காரணமாகக் கொண்டிருக்கையாலே) உறுதியாயிருப்பதான, அஸங்க₃ஶஸ்த்ரேண — (கு₃ணமயபோ₄க₃ங்களில்) பற்றின்மையாகிற ஆயுத₄த்தாலே, சி₂த்வா—வெட்டி, தத:—அந்தப் பற்றின்மை காரணமாக, யஸ்மிந் க₃தா:பூ₄ய:ந நிவர்த்தந்தி தத்பத₃ம் மறுபடியும் ஸம்ஸாரத்துக்குத் திரும்பி வருதலில்லாத அந்த ப்ராப்யம், பரிமார்க்₃இதவ்யம்—தேடத்தக்கது.

---

கர்ம" [வி. பு. 2-13-70] [அஜ்ஞானத்தால் ஏற்பட்டவை புண்ய பாபகர்மங்கள்] என்னும் வசனத்திலிருந்து அஜ்ஞானத்தினுலேயே புண்யபாபகர்மங்கள் விளைகின்றன என்று விளங்குகையால், அக்கர்மங்கள் அஜ்ஞானத்திலே ஊன்றியிருக்கின்றன என்று தெளிவாகிறது. கர்மத்துக்கு மற்றொரு காரணமான மமகாரமும் அஹங்காரமாகிற அஜ்ஞானத்திலேயே பிணைப்புண்டிருக்கிறது. ஆக இவ்வண்ணமாக ஸம்ஸாரமாகிற மரத்துக்கு அஜ்ஞானம் ஆத₄ாரமாயிருக்கிறது என்று கண்டுகொள்வது. "இந்தஸம்ஸார மாகிற அரசமரத்தின் உருவமும் அழிவும் ஆதி₃யும் ஆத₄ாரமும் முற்கூறியபடி ஸம்ஸாரிகளால் உணரப்படுவதில்லை" என்று இங்குகூறுகையால், "ஸம்ஸாரம் பொய், இதற்கு அந்தம் ஆதிமுதலானவை உண்மையில் கிடையாது' என்னும் அத்₂வைதமதம் கண்ணனுல் ஏற்கப்படவில்லை என்று விளங்குகிறது. *3.

भा ॥ एनम्-उक्तप्रकारं सुविरूढमूलम्-सुष्ठु विविधंरूढ मूलं

இத்தி னுருவு மிதின்முடிவு மாதியுமற்
றத்தி னிருப்பு மறிவரிதாம்—மொய்த்தமர்ந்த
மூலவர சாமிதனை முற்று மறுத்தறவாங்
கோலவலிச் சத்திரந்தான் கொண்டு. 3

இத்தின் உருவும்—இந்த அரசமரத்துக்கு (முன் கூறப்பட்ட) உருவமும், இதின் முடிவும் — இந்த மரத்தின் அழிவும், (இதின்) ஆதியும்—(இந்தமரத்தின்) காரணமும், மற்று அத்தின் இருப்பும்—அம்மரம் நிலைநிற்கும் ஆத₄ாரமும், அறிவு அரிதாம் — (முன் கூறப்பட்டபடி ஸம்ஸாரிகளால்) அறியப்படுவதில்லை. மொய்த்து அமர்ந்த மூல அரசாம் இதனை—முன் கூறப்பட்டதாய், நன்கு பலவிதமாக ஊன்றி நிற்கும் வேரையுடையதான (ஸம்ஸாரமாகிற) இந்த அரசமரத்தை, அறவாம் கோலவலி சத்திரம் தான் கொண்டு—பற்றின்மையாகிற மிகஉறுதியான ஆயுத₄த்தைக் கொண்டு, முற்றும் அறுத்து—அடியோடு வெட்டி;

---

3*-*4. முற்கூறிய ஸம்ஸாரமாகிற அரசமரத்தை விஷயங்களில் பற்றின்மையாகிற உறுதியான கோடரியால் வெட்டிய பின்பே ஸம்ஸாரத்துக்குத் திரும்பி வருதலில்லாத ஆத்மாவைத் தேடலாம் என்கிறான். (ஏநம் அஶ்வத்த₂ம்) விஷயங்களில் பற்றை விளைக்கும் விசித்ரமான ப்ராக்ருதப் பொருள்கள் அடங்கியதாக முன் கூறப்பட்ட ஸம்ஸாரமாகிற இந்த அரசமரத்தை. இதை வெட்டுவது மிகவும் செயற்கரிய செயல் எனக்காட்டுகிறான் மேலே—(ஸுவிரூட₄மூலம்) நன்றாகவும் விதவிதமாகவும் ஊன்றிய கர்மங்களாகிற வேர்களையுடையது இம்மரம் என்கை. 'ஸு' என்னும் உபஸர்க்கம் 'ஸுஷ்டு₂' (நன்றாக) என்னும் பொருளிலும், 'வி' என்னும் உபஸர்க்கம் 'விவித₄ம்' [விதவிதமாக] என்னும் பொருளிலும் வந்துள்ளன. இந்தக் கர்மங்களாகிற வேர்கள் அனாதி₃காலமாக உறுதிபெற்றிருக்கும் வாஸனாப₃லத்தாலே மிக நன்றாக ஊன்றியிருக்கின்றன என்று கருத்து. இந்தக் கர்மங்களின் ஸ்வரூபத்தை ஆராய்ந்தால், ஶாஸ்த்ரங்

अश्वत्थं सम्यग्ज्ञानमूलेन दृढेन गुणमयभोगासंगाख्येन शस्त्रेण छित्वा, ततो—विषयासंगाद्धेतोस्तत्पदं परिमार्गितव्यम्—अन्वेषणीयम्; यस्मिन् गता भूयो न निवर्तन्ते ॥ ३*-*४ ॥

---

களில் காணப்படும் விதி₄நிஷேத₄ங்களை ஜீவன் மனோவாக்காயங்களாலே பு₃த்₃தி₄ பூர்வகமாகவும் அப்படியல்லாமலும் அனாதி₃ காலமாக மீறுவதனாலே உண்டாகின்றவையாய், எண்ணமுடியாதபடி பலவகைப்பட்டிருப்பவையாயிருப்பவை இவை என விளங்கும். ப்ராயஶ்சித்தம் முதலானவற்றால் இவற்றில் ஒவ்வொன்றை அறுக்க முயன்றாலும், ஒன்றையறுத்து முடிவதற்குள் பலபல கர்மங்கள் புதிதாக விளையும்படி இருக்கும். ஆகையால் இக்கர்மங்கள் என்றுமே விதவிதமானவையாய் எண்ணமுடியாதவையாகவேயிருக்கும், இப்படி நன்றாக விதவிதமாக உறுதிபெற்று ஊன்றியிருக்கும் கர்மங்களாகிற வேர்களையுடையதாகையாலே, இந்த அரசமரத்தை வெட்டுவதற்கு மிக உறுதியான ஆயுத₄ம் வேண்டுமென்கிறது மேலே. (அஸங்க₃ஶஸ்த்ரேண) ஸத்வாதி₃கு₃ணமயமான இனிய பொருள்களில் பற்றின்மையாகிற ஆயுத₄த்தாலே. விஷயங்களில் பற்றின்மையானது சில சமயம் வியாதி முதலானவற்றாலும் விளைவதுண்டு; ஆயினும் அப்பற்றின்மை உறுதியாய் நிலைநிற்காமல் வியாதிமுதலானவை நீங்கியவுடன் மறுபடி கிளைத்துவிடும்; அதனாலே இவ்வாயுத₄ம் உறுதியானதாயிருக்க வேண்டும் என்கிறது (த்₃ருடே₄ந) என்னும் பத₃த்தால். அதாவது — "இந்த விஷயங்கள் உண்மையில் அற்பமாகவும் நிலைநில்லாதவையாகவும், இம்மையிலும் மறுமையிலும் துன்பத்தை விளைப்பவையாகவும் உள்ளன" என்னும் நல்ல அறிவை முன்னிட்டுக்கொண்டு விளைந்த பற்றின்மையே இம்மரத்தை வெட்டக் கூடிய உறுதியான ஆயுத₄மாகும் என்று கருத்து. (சி₂த்வா) முற்கூறிய அரசமரத்தை உறுதியான பற்றின்மையாகிற ஆயுத₄த்தாலே வெட்டி. இனி, ஶ்லோகத்தின் பிற்பாதியாலே 'விஷயங்களில் பற்றைவிட்ட பின்பு, திரும்பி வருதலில்லாத ஆத்மதத்வம் தேடத்தக்கது' என்று விதி₄க்கிறான் :- (தத:) விஷயங்களில் பற்றின்மையாகிற காரணத்தை முன்னிட்டுக்கொண்டு. விஷயங்களை விடும் த₃ஶையிற்போலே ஆத்மாவைத் தேடும் த₃ஶையிலும் பற்றின்மை தொடரவேண்டும் என்று கருத்து. இப்படிச் சிறந்த பொருளைத்தருகையாலே, "தத:' என்பதற்கு சங்கரரைப் போல் 'அதற்குப்பின்' என்று பொருள் கொள்ளாமல்

भा ॥ कथमनादिकालप्रवृत्तो गुणमयभोगसंगस्तन्मूलं च विपरीतज्ञानं निवर्तेत इत्यत आह—

तमेव चाद्यं पुरुषं प्रपद्ये[य]द्यतः प्रवृत्तिः प्रसृता पुराणी ॥ ४

4* தமேவ சாத்₃யம் புருஷம் ப்ரபத்₃யேத்₃ யத: ப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா புராணீ ॥

ஆத்₃யம்—அனைத்துக்கும் ஆதி₃யாய், யத: புராணீ ப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா—எவனிடமிருந்து அனாதி₃காலமாக கு₃ணமய விஷயங்களில் ஈடுபாடு (ஜீவர்களுக்குத்) தொடர்கின்றதோ, தம் புருஷம் ஏவ-அத்தகையவனை பரமபுருஷனையே, ப்ரபத்₃யேத்— (அஜ்ஞானம் முதலானவை நீங்குவதற்காக) ஶரணமடையக்கடவன்.

---

'அப்பற்றின்மை காரணமாகவே' என்று ப₄ாஷ்யமிடப்பட்டது. (தத்பத₃ம் பரிமார்க்கி₃தவ்யம்) ப்ராப்யமான அந்த ஆத்மா தேடத்தக்கது. "ஆத்மாநமந்விச்சே₂த்" [ஜாபா₃ல 6] [ஆத்மாவைத் தேடவேண்டும்] என்று உபநிஷத்தில் ஆத்மாவானது தேடத்தக்கதாகச் சொல்லப்பட்டதன்றே. 'தேடத்தக்கது என்று சொல்லலாம்படி அதற்குள்ள சிறப்பென்ன?' எனில்—(யஸ்மிந் க₃தா ந நிவர்த்தந்தி பூ₄ய:) எந்த ஆத்மாவை அடைந்தவர்கள் ஸம்ஸாரத்துக்கு மறுபடி திரும்பி வருவதில்லையோ, அத்தகைய பெருமையுடைய ஆத்மா தேடத்தக்கது என்று கருத்து. ஐந்தாவது ஶ்லோகத்தில் "தத்பத₃ம்"—என்று இங்கு தேடத்தக்கதாகச் சொல்லப்பட்ட ப்ராப்யத்தையே அடையத்தக்கதாக அநுவதி₃த்து, ஆறுவது ஶ்லோகத்தில் அது தன்னைக்காட்டிலும் வேறுபட்டது என்று ப₄க₃வான் கூறுகையாலே, இங்கு "தத்பத₃ம்" என்றது ப்ராப்யமான ஆத்மாவே என்று கொள்ள வேண்டும். "வைஷ்ணவம் பத₃ம்" என்று சங்கரர் பொருள் கொண்டது ப்ரகரணத்துக்கு முரண்படும். இதன் விரிவு ஐந்தாவது ஶ்லோகத்தின் வ்யாக்₂யானத்தில் காணலாம். "நிவர்த்தந்தே" என்று ஆத்மநேபத₃மாக இருக்க வேண்டியது ஶ்லோகத்தில் ச₂ந்த₃ஸ் ஒட்டுவதற்காக "நிவர்த்தந்தி" என்று பரஸ்மைபத₃மாக ஆர்ஷப்ரயோக₃ம் செய்யப்பட்டது என்பது "நிவர்த்தந்தே" என்னும் ப₄ாஷ்யபத₃த்தால் உணர்த்தப்படுகிறது. 3*-*4

ஆங்கதனு லிப்பதந்தா னுராய்தற் காகுமே
வீங்கதனிற் சென்று ரினிமீளார்—பாங்கதற்குப்
பற்றுவா னுகப் பரனையெவ னுன்மன்னு
முற்றுமியல் வுண்டா முயன்று. 4

ஆங்கு—விஷயங்களில் பற்றை விட்டபின்பு, அதனுல்—அந்தப்பற்றின்மையை முன்னிட்டுக் கொண்டே, இப்பதம் தான்—ப்ராப்யமான இந்த ஆத்மாவானது, ஆராய்தற்கு ஆகுமே-தேடத்தக்கதாகும்; ஈங்கு அதனில் சென்ருர்—இங்கிருந்து சென்று ஆத்மாவை அடைந்தவர்கள், இனி மீளார்—ஸம்ஸாரத்திற்கு மறுபடியும் திரும்பிவரமாட்டார்கள். பாங்கு அதற்கு—விஷயங்களில் பற்றும், அதற்குக் காரணமான விபரீதஜ்ஞானமும் நீங்குவதற்காக, எவனுல்—எந்தப் பரமாத்மாவால், முயன்று முற்றும் இயல்வு (விஷயங்களில்) ஈடுபடுகைக்கு உறுப்பான அநாதி₃காலமாக உள்ளபற்று, உண்டாம்—உண்டாகிறதோ, மன்னு பரனை—அனைத்துக்கும் ஆதியான அந்தப்புருஷனை, பற்றுவானுக—ஶரணடைவானுக.

---

4* 'விஷயங்களில் பற்றின்மையாகிற உறுதியான ஆயுத₄த்தால் ஸம்ஸாரமாகிற மரம் வெட்டத்தக்கது' என்று இதுவரை சொல்லப்பட்டது. இனி, "கு₃ணமயமான பொருள்களில் பற்று அநாதி₃காலமாக இருந்து வருவது; அதற்குக் காரணமான விபரீத ஜ்ஞானமும் அநாதி₃காலமாய் இருந்து வருகிறது. அப்படியிருக்கும்போது ஸம்ஸாரிகள் பற்றின்மையாகிற உறுதியான ஆயுத₄த்தை எப்படி அடைந்து நன்கு வேரூன்றிய ஸம்ஸார மரத்தை வெட்டமுடியும்?" என்னும் கேள்விக்கு "என்னை ஶரணமடைவதன் மூலம் பற்றின்மையாகிற ஆயுத₄த்தைப் பெற்று ஸம்ஸாரமரத்தை வெட்டி வீழ்த்தலாம்" என்று பதில் உரைக்கிருன். (தமேவ சாத்₃யம் புருஷம் ப்ரபத்₃யேத்) அனைத்துக்கும் ஆதி₃ காரணமான பரமபுருஷனை என்னையே ஶரணம் அடையக் கடவுன். (ஆத்₃யம் புருஷம்) "மயாத்₄யக்ஷேண ப்ரக்ருதி: ஸூயதே ஸசராசரம்" [கீ₃தை 9-10] [(என்னுடையதான) மூலப்ரக்ருதி தலைவனை என்னுல் (தூண்டப்பட்டதாய்), அசைவனவும் அசையாதனவும் அடங்கிய உலகை ஸ்ருஷ்டிக்கிறது]

भा ।। अज्ञानादिनिवृत्तये तमेव चाद्यम् — कृत्स्नस्यादिभूतं. ❋ मयाऽध्यक्षेण प्रकृतिस्सूयते सचराचरम् (गी. ९. १०.) ❋ अहं सर्वस्य प्रभवो मत्तस्सर्वं प्रवर्तते (१०. ८.) ❋ मत्तः परतरं नान्यत्किञ्चिदस्ति धनञ्जय (७. ७) इत्यादिषूक्तमाद्यं पुरुषमेव शरणं प्रपद्येत् — तमेव शरणं प्रपद्येत। यतो—यस्मात् कृत्स्नस्य स्रष्टुरियं गुणमयभोगसङ्गप्रवृत्तिः, पुराणी--पुरातनी प्रसृता। उक्तं हि मयैतत् पूर्वमेव ❋ दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया। मामेव

---

"அஹம் ஸர்வஸ்ய ப்ரப₄வோ மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே" [கீ₃தை 10-8] [நான் எல்லா உலகமும் உண்டாவதற்குக்காரணமாகிறேன். என்னாலேயே பொருள்கள் அனைத்தும் செயல்படுகின்றது.] "மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சித₃ஸ்தி த₄நஞ்ஜய" [கீ₃தை 7-7] [அர்ஜுனா! என்னைக்காட்டிலும் வேறானது எதுவும் கு₃ணங்களில் மிகவும் மேலானதாயில்லை] என்று முன் ப்ரகரணங்களில் தன்னையே அனைத்துக்கும் காரணமான புருஷனாகக் கூறியிருக்கிறானாகையாலே, இங்கு 'ஆதிபுருஷனான அவனையே' என்று படர்க்கையாகக் கூறியிருந்தபோதிலும், இப்பத₃ம் கண்ணனையே குறிக்கிறது. ஏவகாரமானது 'எவன் ஸம்ஸாரமாகிற சிறையில் கர்மாநுகு₃ணமாக நம்மை இட்டு வைத்திருக்கிறானோ அவனையே ஶரணமடையவேண்டுமேயொழிய ஸம்ஸாரச் சிறையில் நம்மோடு அடைபட்டுக்கிடக்கும் பிரமன் உருத்திரன் முதலான மற்ற ஜீவர்களை ஶரணமடையக்கூடாது' என்று காட்டுகிறது. இதையே இரண்டாவது பாத₃ம் விவரிக்கிறது- (யத: ப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா புராணீ) அனைத்தையும் படைத்த எந்தப் பரமபுருஷனால், கு₃ணமயமான பொருள்களில் ஈடுபட்டு ஜீவர்கள் செயல் புரிவது அநாதி₃காலமாகத் தொடர்ந்து வருகிறதோ, அந்தப் பரமபுருஷனையே ஶரணமடையவேண்டும் என்று கூட்டிப் பொருள் கொள்ளவேண்டும். இந்த விஷயம் "தை₃வீ ஹ்யேஷா கு₃ணமயீ மம மாயா து₃ரத்யயா | மாமேவ யே ப்ரபத்₃யந்தே மாயாமேதாம் தரந்தி தே ||" [கீ₃தை 7-14] [என்னுடையதான இந்த முக்குணமயமான ப்ரக்ருதி தே₃வனான என்னால் படைக்கப்பட்டதாகையாலே (எவராலும் தன்முயற்சி

ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते ॥ (७. १४) इति । ※ प्रपद्येयतः प्रवृत्तिरिति वा पाठ ; तमेव चाद्यं पुरुषं प्रपद्य—शरणमुपगम्य, इयतः – अज्ञाननिवृत्त्यादेः कृत्स्नस्यैतस्य साधनभूता प्रवृत्तिः पुराणी-

யால் மாத்திரம்) கடக்க அரிதாயுள்ளது. எவர்கள் என்னையே ஶரணமடைகிறார்களோ, அவர்கள் இந்த மாயையாகிற ப்ரக்ருதியைத் தாண்டுகிறார்கள்] என்று கண்ணனால் முன்பே சொல்லப்பட்டதன்றோ. "தேஷாமேவாநுகம்பார்த்த₂ம் அஹம் அஜ்ஞாநஜம் தம: | நாஶயாம்யாத்மபா₄வஸ்தோ₂: ஜ்ஞாநதீ₃பேந பா₄ஸ்வதா ||" [கீ₃தை 10-11] [அந்த ப₄க்திநிஷ்டா₂ர்களிடம் அருளினாலேயே, அவர்களுடைய நெஞ்சுக்கு விஷயமானவனாய், என்னைப்பற்றிய ஜ்ஞானமெனும் ஒளிவிளக்காலே கர்மங்களாலுண்டான விஷயங்களில் பற்றுகிற இருளை நானே அழிக்கிறேன்] என்று முன்ப்ரகரணங்களிலும், "மச்சித்தஸ் ஸர்வது₃ர்க்கா₃ணி மத் ப்ரஸாதா₃த் தரிஷ்யஸி" [கீ₃தை 18-58] [என்னிடம் நெஞ்சு செலுத்திக் கர்மங்களை அனுஷ்டி₂க்கும் நீ என் அருளாலே எல்லாத்தடைகளையும் தாண்டுவாய்.] "மாமேகம் ஶரணம் வ்ரஜ" [கீ₃தை 18-66] [என்னை ஒருவனையே உபாயமாகப்பற்று] என்று பின் ப்ரகரணங்களிலும் பலவிடங்களில் இவ்வண்ணமே சொல்லப்பட்டது அனுஸந்தி₄க்கத்தக்கது. (யத: ப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா புராணீ) என்று அநாதி₃காலமாக ப₃த்₃த₄ ஜீவர்களுக்கு விஷயங்களில் பற்று எம்பெருமானாலேயே தொடர்கின்றது என்று கூறுகையாலே, ஸம்ஸாரம் அநாதி₃காலமாக உண்மையாகவே உள்ளது என்று விளங்குகிறது. ஆகையால் "இது இந்த்₃ரஜாலம்போலே பொய்யானது" என்று சங்கரர் உரையிடுவது பொருந்தாது. அவ்வுரை ப்ரத்யக்ஷம் முதலான மற்ற ப்ரமாணங்களுக்கும் முரண்பட்டது. "ப்ரபத்₃யேத்" என்னும் பரஸ்மைபத₃ம் ஆர்ஷமென்பதை "ப்ரபத்₃யேத" என்று பா₄ஷ்யத்திலுள்ள ஆத்மநேபத₃ப்ரயோக₃ம் காட்டுகிறது. இங்கு "ப்ரபத்₃யேயத:" என்றும் பாட₂ம் காண்கிறது. "ப்ரபத்₃ய இயத:" என்று பத₃ம் பிரிக்கவேண்டும். கண்ணன் அர்ஜுனனுக்கு உபதே₃ஶிக்கும் ப்ரகரணத்தில் "ப்ரபத்₃யே" (ஶரணம் அடைகிறேன்) என்று உத்தமபுருஷனாக (தன்மையாக) பத₃ம் பிரிப்பது ஒட்டாதன்றோ. "ப்ரபத்₃ய—ஆதி₃புருஷனை ஶரணமடைந்து, இயத:—அஜ்ஞானம் நீங்குவது முதலான இவ்வனைத்

पुरातनी प्रसृता ; पुरातनानां मुमुक्षूणां प्रवृत्तिः पुराणी ; पुरातना हि मुमुक्षवो मामेव शरणमुपगम्य निर्मुक्तबन्धास्संजाता इत्यर्थः ॥ ४

निर्मानमोहा जितसङ्गदोषा अध्यात्मनित्या विनिवृत्तकामाः ।
द्वन्द्वैर्विमुक्तास्सुखदुःखसंज्ञैर्गच्छन्त्यमूढाः पदमव्ययं तत् ॥ ५

5. நிர்மாநமோஹா ஜிதஸங்க₃தோ₃ஷா அத்₄யாத்மநித்யா விநிவ்ருத்தகாமா:।
த்₃வந்த்₃வைர் விமுக்தா: ஸுக₂து₃:க்க₂ ஸம்ஜ்ஞை:
க₃ச்ச₂ந்த்யமூட₄ா: பத₃மவ்யயம் தத் ॥

(இவ்வண்ணமாக என்னை ஶரணமடைந்து) நிர்மாந மோஹா:—தே₃ஹாத்மாபி₄மானமாகிற மயக்கம் நீங்கப் பெற்றவர்களாய், ஜிதஸங்க₃தோ₃ஷா:—கு₃ணமயப்பொருள்களில் பற்றுகிற தோ₃ஷத்தை வென்றவர்களாய், அத்₄யாத்ம நித்யா:—ஆத்மஜ்ஞானத்தில் எப்போதும் ஈடுபட்ட

---

துக்கும், புராணீ ப்ரவ்ருத்தி:—ஸாத₄னமாயிருக்கும் அனாதி₃கால மான ப்ரவ்ருத்தி, ப்ரஸ்ருதா-"தொடர்கிறதோ" என்று பதவுரை. இப்படிக்கொள்ளும்போது அவதாரிகையில் கேட்கப்பட்ட கேள்விக்கு இது நேரே பதிலாகிறது. "இயத:" என்று—அவதாரிகையில் ஐயத்துக்கு விஷயமான அஜ்ஞான நிவ்ருத்தி முதலான அனைத்தையும் குறிக்கிறது. "இயத: ப்ரவ்ருத்தி:" என்ற இடத்தில் 'தஸில்' ப்ரத்யயம் ஆறுவது வேற்றுமைப் பொருளில் வந்துள்ளது. பொதுவாக எந்த ஸம்ப₃ந்த₄த்தையும் குறிக்கக்கூடிய ஆறுவது வேற்றுமை இங்கு ப்ரகரணத்தையொட்டி ஸாத்₄ய ஸாத₄னப₄ாவரூபமான ஸம்ப₃ந்த₄த்தைக் குறிக்கிறது. ஆகையால், இத்தொடருக்கு "ஆதி₃புருஷனை ஶரணமடைந்தபின்பே அஜ்ஞானம் நீங்குவது முதலானவற்றுக்கு ஸாத₄னமாயிருக்கும் செயல்கள் அனாதி₃ காலமாகத் தொடர்கின்றன." என்று பொருள் கொள்ளவேண்டும். "முன்னோர்களான முமுக்ஷுக்கள் என்னை ஶரணமடைந்த பின்பு அதனால் அஜ்ஞானம் முதலானவை நீங்கப் பெற்று ஸாத₄னங்களை அனுஷ்டி₂த்து ஸம்ஸாரக் கட்டிலிருந்து நீங்கப்பெற்றார்களன்றோ" என்று ஶிஷ்டாசாரத்தைக் காட்டுகிறான் கண்ணன். 4.

வர்களாய், விநிவ்ருத்தகாமா:—மற்றவிஷயங்களில் விருப்பம் நீங்கப்பெற்றவர்களாய், ஸுகது:க்கஸம்ஜ்ஞை: த்3வந்த்3வை: — இன்பதுன்பங்களாகிற இரட்டைகளிலிருந்து, விமுக்தா:—விடுபட்டவர்களாய், அமூடா:—(தே3ஹாத்மாக்களைப்பற்றிய) அனைத்து மயக்கங்களும் நீங்கப்பெற்றவர்களாய், அவ்யயம் — ஜ்ஞானத்தில் ஏற்றத்தாழ்வற்ற, தத் பத3ம்—ஸ்வரூபாவிர்பா4வம் பெற்ற ப்ராப்ய வஸ்துவான ஆத்மாவை, க3ச்ச2ந்தி—அடைகிறார்கள்.

---

மானமோ கங்களின்றி மற்றுநசைக் குற்றமற்
றானவுயிர்த் தன்மையமர்ந் தாசையது — தானகன்றே
இன்பமிகு துன்ப விருமைவிட் டிங்குணர்வோர்
மன்பதமே தாமடைவர் வாய்ந்து. 5

மானமோகங்களின்றி — தே3ஹாத்மாபி4மானமாகிற மயக்கம் நீங்கப்பெற்றவர்களாய், மற்று நசை குற்றமற்று-கு3ணமயப்பொருள்களில் பற்றுகிற தோ3ஷம் நீங்கப்பெற்றவர்களாய், ஆன உயிர்தன்மை அமர்ந்து—ஆத்ம ஜ்ஞானத்தில் எப்போதும் ஈடுபட்டவர்களாய், ஆசை அது தான் அகன்றே—மற்ற விஷயங்களில் விருப்பம் அகலப்பெற்றவர்களாய், மிகு இன்பதுன்ப இருமை விட்டு—மிகுந்த இன்பதுன்பங்களாகிற இரட்டைகளிலிருந்து விடுபட்டவர்களாய், இங்கு உணர்வோர்—(தே3ஹாத்மாக்களைப்பற்றிய அனைத்து மயக்கங்களும் நீங்கப்பெற்று) தே3ஹாத்மாக்களின் தன்மைகளை அறிபவர்களாய், மன்பதமே—ஜ்ஞானத்தில் ஏற்றத்தாழ்வற்ற முக்தி நிலையிலுள்ள தம் ஆத்மாவை, வாய்ந்து தாம் அடைவர்—பரிபூர்ணமாகத் தாம் பெறுவார்கள்.

---

5. சென்ற ஶ்லோகத்தில் சொன்ன அர்த்த2த்தை விவரிக்கிறான். சென்ற ஶ்லோகத்தில் "இயத:" என்ற பாட2த்தின் விவரணமாயிருப்பது இந்த ஶ்லோகம். (நிர்மாந மோஹா:) தே3ஹாத்மாபி4மானமாகிற மயக்கம் நீங்கப்பெற்றவர்கள். விஷயங்களில் பற்றுக்கு தே3ஹாத்மாபி4மானமே முக்2யகாரணமாகையால், அந்தப்பற்று நீங்குகைக்கு உறுப்பானவற்றில் தே3ஹாத்மாபி4மானம் நீங்கப்பெறுவதை முதன்முதலில் எடுக்கிறது.

भा ॥ एवं मां शरणमुपगम्य निर्मानमोहाः - निर्गतानात्मात्माभिमानरूपमोहाः, जितसङ्गदोषाः — जितगुणमयभोगसङ्गाख्यदोषाः, अध्यात्मनित्याः,—आत्मनि यत् ज्ञानं तदध्यात्मम्, आत्मज्ञाननिरताः,

---

''அமூடா:'' என்று மற்ற மயக்கங்கள் நீங்குவதைத் தனியாகச் சொல்லுகையாலே, இங்கு ''நிர்மாநமோஹா:'' என்பதற்கு 'தேஹாத்மாபிமானமும் மற்ற மயக்கங்களும் நீங்கப்பெற்றவர்கள்' என்று பொருள் கொள்ளாமல் ''தேஹாத்மாபிமானமாகிற மயக்கம் நீங்கப்பெற்றவர்கள்'' என்று பொருள் கொள்ளப் பட்டது. (ஜிதஸங்கதோஷா:) ஸத்வாதி குணமயமான இனிய பொருள்களில் பற்றுகிற குற்றத்தை வென்றவர்கள். முன் பதத்தில் சொன்னபடி தேஹாத்மாபிமானமில்லாமையாலே இவர்களுக்கு ஶப்தாதிவிஷயங்களில் பற்றும் இல்லாமல் போகிறது என்று கருத்து. இங்கு 'ஸங்கம்' என்று பொதுவாகச் சொல்லியிருந்தபோதிலும் அதை தோஷமாகக் கூறுகையாலும் ஆத்மாவிடம் ஸங்கம் (பற்று) இவர்களுக்குத் தேவையானதாகையாலும், இவர்களால் வெல்லப்படுவதாகச் சொல்லப்படும் ஸங்கம் ஶப்தாதி விஷயங்களில் பற்றே என்று கொள்ள வேண்டும். இனி விஷயங்களில் பற்றை வென்றதனால் விளையும் பயனைக் கூறுகிறது — (அத்யாத்ம நித்யா:) ''அத்யாத்ம ஜ்ஞாந நித்யத்வம்'' [13-11] என்று இது முன்னமே கூறப் பட்டது. ஆத்ம விஷயமான ஜ்ஞானம் 'அத்யாத்மம்' எனப் படுகிறது. அதில் எப்போதும் ஈடுபட்டிருக்கை 'அத்யாத்ம(ஜ்ஞான) நித்யத்வ'மாகிறது. யோகம் செய்யும் காலத்தில் இடைவிடாமலும், யோகத்தை விட்டு எழுந்தபோதும் பெரும்பான்மையான காலங் களிலும இவன் ஆத்மாவிலேயே ஈடுபட்டிருக்கவேண்டும் என்று கருத்து. இதன் விளைவைக் கூறுகிறது மேலே — (விநிவ்ருத்த காமா:) மிக இனியதான ஆத்ம ஜ்ஞானத்தில் ஈடுபட்டிருக் கையால் மற்ற விஷயங்களில் விருப்பம் நீங்கப்பெற்றவர்கள் இவர்கள் என்று கருத்து. 'நிவ்ருத்தகாமர்கள்' என்னமல் 'விநிவ்ருத்தகாமர்கள்' என்கையாலே, இதர விஷயங்களில் சிறப்பான வைராக்யமுடையவர்கள் என்று உணர்த்தப்படுகிறது. அதாவது — விஷயங்கள் எதிரேயிருந்தாலும் அவற்றை உபேக்ஷிக்கலாம்படியான வைராக்யமுடையவர்கள் என்று

विनिवृत्तकामाः - विनिवृत्ततदितरकामाः, सुखदुःखसंज्ञैर्द्वन्द्वैश्च विमुक्ताः, अमूढाः - आत्मानात्मस्वभावज्ञाः, तदव्ययं पदं गच्छन्ति - अनव

---

கருத்து. "ஸங்கா3த் ஸஞ்ஜாயதே காம:" [கீ3தை 2-62] என்னுமிடத்தில் விஷயங்களில் பற்றின் முற்றின நிலையே காமம் எனக்காட்டப்பட்டது. இங்கு "ஜிதஸங்கதோ3ஷா:" என்று விஷயங்களில் பற்றில்லாமையும், "விநிவ்ருத்தகாமா:" என்று விஷயங்களில் காமமில்லாமையும் சொல்லப்படுகிறதாகையாலே புநருக்தியில்லை. (ஸுக2து3:க்க2 ஸம்ஜ்ஞை: த்3வந்த்3வை: விமுக்தா:) விஷயங்களில் பற்றும் விருப்பமும் அற்றுப்போகை யாலே அந்த ஸங்க3காமங்களால் விளையும் இன்பதுன்பங் களாகிற இரட்டைகளிலிருந்தும் இவர்கள் விடுபடுகிறார்கள். ஸாத4நத3சையைச் சொல்லும் போது, இன்ப துன்பங்களைப் பொறுத்துக் கொள்ளுகிறார்கள் என்று கருத்து. ப2லத3சையான முக்தி நிலையை இப்பத3ம் குறிப்பதாகக் கொண்டால் 'இன்ப துன்பங்கள் அடியோடு அற்றவர்களாகிறார்கள்' என்று பொருள். (அமூட4ா:) ஆத்மாவைப் பற்றியும் ஆத்மாவல்லாததைப் பற்றியும் அறிவின்மை முழுதும் நீங்கப்பெறுகையாலே, அவை களின் தன்மைகளை நன்கு அறியப்பெறுகிறார்கள். ஶ்லோகத்தின் முற்பாதி மட்டும் ஸாத4நத3சையைச் சொல்லும்போது 'நிர்மாநமோஹா:' என்னும் பத3த்தால் 'தே3ஹாத்மாபி4மானமாகிற மயக்கம் இல்லாதவர்களாயுள்ளனர்' என்று காட்டப்பட்டது. "அமூட4ா:" என்று ப2லத3சையில் தே3ஹாத்மாக்களைப்பற்றிய மற்ற எல்லா மயக்கங்களும் நீங்கப்பெற்று அதனால் தே3ஹாத் மாக்களின் தன்மைகளை நன்கு அறிகிறார்கள் என்று காட்டப் படுகிறது. "த்ரிபி4ர்கு3ணமயைர்பா4வை: ஏபி4ஸ்ஸர்வமித3ம் ஜக3த் | மோஹிதம் நாபி4ஜாநாதி மாமேப்4ய: பரமவ்யயம் ||" [கீதை 7-13] [இவ்வுலகிலுள்ள ஜீவர் அனைவரும் இந்த முக்குண மயமான பொருள்களாலே மயக்கப் பெற்றவராய், இவற்றைக் காட்டிலும் மிக உயர்ந்தவனாய், எப்போதும் ஒருபடிப் பட்டவனான என்னை அறிவதில்லை] என்று முன் கூறியபடியே முக்குணமயமான பொருள்களால் பலவித4மான மயக்கங்கள் இவர்களுக்கு விளைகின்றன. அவற்றில் 'தே3ஹமே ஆத்மா' என்னும் மயக்கத்தை இவர்கள் ஸாத4நத3சையிலேயே போக்கிக் கொள்ளவேண்டும். இது 'நிர்மாநமோஹா:' என்னும் பத3த்தாலே சொல்லப்பட்டது. 'அமூட4ா:' என்னும் இப்பத3ம் தே3ஹாத்

च्छिन्नज्ञानाकारमात्मानं यथावस्थितं प्राप्नुवन्ति ; मां शरणमुपगतानां मत्प्रसादादेवैतास्सर्वाः प्रवृत्तयस्सुशकास्सिद्धिपर्यन्ता भवन्तीत्यर्थः ॥ ५

---

மாக்களைப் பற்றிய மற்ற எல்லா மயக்கங்களும் முக்தி நிலையில் நீங்கிவிடுவதைக் கூறுகிறது. அன்றிக்கே, 'அமூட4ா:' என்னும் இப்பத3மும் ஸாத4னத3ஶையில் விளைவதைக் கூறுவதாகவே கொள்ளலாம். "அமூட4" ஶப்3த3ம் மோஹத்துக்குக் காரணம் நீங்குவதை லக்ஷணையாலே காட்டுகிறது. தே3ஹாத்மாக்களுக்குள்ள தனித்தன்மைகளை அறிவதனாலேயே தே3ஹாத்மாக்கள் ஒன்றென்னும் மயக்கம் நீங்குகிறது. ஆகையால் 'நிர்மாநமோஹா:' என்று அந்த மயக்கம் நீங்குவதையும், 'அமூட4ா:' என்று அதற்குறுப்பாக தே3ஹாத்மதன்மைகளை நன்கு அறிவதையும் சொல்லுகையாலே புநருக்தியில்லை என்றும் கொள்ளலாம். (அவ்யயம் தத் பத3ம் க3ச்ச2ந்தி) எல்லையற்ற ஜ்ஞானத்தையே வடிவாகக் கொண்ட இயல்பான நிலையிலுள்ள ஆத்மாவை அடைகிறார்கள். (அவ்யயம்) ஆத்மாக்கள் ஸ்வரூபத்தால் விகாரமற்றவர்களாகையாலே ஸ்வரூபத்துக்கு 'வ்யயம்' எனப்படும் அழிவைச் சொல்ல இடமில்லை. ஆகையால், ஆத்மாவின் த4ர்மபூ4தஜ்ஞானத்திற்கு ஸம்ஸாரமண்ட3லத்தில் இருக்கும்போது உண்டாகும் ஏற்றத்தாழ்வுகளே இங்கு 'வ்யயம்' எனப்படுகின்றன என்றும், 'அவ்யயம்' என்று முக்தி நிலையில் இந்த ஏற்றத்தாழ்வு நீங்கப்பெற்று எல்லையற்ற ஜ்ஞானத்தையே வடிவாகக் கொண்டதாக ஆத்மா ஆகின்றது என்று காட்டுகிறது என்றும் கொள்ள வேண்டும். 'தத்' என்று ப்ரகரணத்தில் ப்ரஸித்3த4மாயிருக்கும் ஆத்ம ஸ்வரூபத்தைக் குறிக்கிறது. "பத்3யதே இதி பத3ம்" [அடையத்தக்கதாகையாலே பத3ம் எனப்படுகிறது] என்னும் வ்யுத்பத்தியாலே பத3ஶப்3த3ம் அடையத்தக்கதான ப்ராப்ய வஸ்துவைக் குறிக்கிறது. "ப்ராபணீயஸ் ததை2வாத்மா ப்ரக்ஷீணாஶேஷபா4வநை:" [வி பு 6-7-93] [ப்3ரஹ்மபா4வனை, கர்மபா4வனை, உப4யபா4வனை என்னும் மூன்று விதமான பா4வனைகளும் நீங்கப்பெற்ற உபாஸகனின் ஆத்மாவும் அடையத்தக்கதாகிறது] என்று சொல்லப்பட்ட ரீதியில் ஆத்ம ஸ்வரூபமும் முக்தி நிலையில் ப்ராப்யமாகிறதன்றோ. இங்கு பத3ஶப்3த3த்தால் பரமாத்மாவைக் குறிப்பது பொருந்தாது; அடுத்த ஶ்லோகத்தில் இதையே 'தத்' என்னும் பத3த்தால் எடுத்து "மம தா4ம" என்று தன்னுடையதாகக் கூறுகின்றானன்றோ. இந்த ஶ்லோகத்தில்

न तद्भासयते सूर्यो न शशाङ्को न पावकः ।
यद्गत्वा न निवर्तन्ते तद्धाम परमं मम ॥

6. ந தத்₃ ப₄ாஸயதே ஸூர்யோ ந ஶஶாங்கோ ந பாவக: |
யத்₃க₃த்வா ந நிவர்த்தந்தே தத்₃தா₄ம பரமம் மம ||

யத்₃க₃த்வா— எதை அடைந்த பின்பு, ந நிவர்த்தந்தே- (அதை அடைந்தவர்கள் ஸம்ஸாரத்துக்குத்) திரும்புவது இல்லையோ, தத்— அந்த ஜீவாத்ம ஜ்யோதியை, ஸூர்ய: ந ப₄ாஸயதே— ஸூர்யன் பிரகாஶிக்கச் செய்வதில்லை; ஶஶாங்க: ந (ப₄ாஸயதே)— சந்திரனும் பிரகாசிக்கச் செய்வதில்லை; பாவக: ந (ப₄ாஸயதே) — அக்₃னியும் பிரகாசிக்கச் செய்வதில்லை. தத்—அந்த, பரமம் தா₄ம— மேலான சோதி, மம—என்னுடைமையாகும்.

---

பத₃ஶப்₃த₃மும், அடுத்த ஶ்லோகத்தில் "தா₄ம" ஶப்₃த₃மும் பரமபத₃த்தைக் குறிப்பதாகக் கொள்வதும் பொருந்தாது; நாலாவது ஶ்லோகத்தில் "தத்பத₃ம் பரிமார்க்கி₃தவ்யம்" என்று அந்தப் பத₃த்தைத் தேடத்தக்கதாகக் கூறுகிறபடியால் ப்ராப்யமாக அறியத்தக்க பரமபத₃த்தைத் தேடத்தக்கதாகக் கூறுவது பொருந்ாதன்றோ. ஆத்மாவே ஸமாதி₄ பர்யந்தமான நிலைகளில் தேடத்தக்கதாக ஆகிறபடியால், இங்கு பத₃ஶப்₃த₃ம் ஆத்மாவைக் குறிப்பதாகவே கொள்ளவேண்டும். மேலும் அடுத்த ஶ்லோகத்தில் 'மம தா₄ம' என்று சொல்லப்பட்ட வஸ்துவின் ஸம்ஸாரி நிலையே அதற்கடுத்த ஶ்லோகத்தில் "மமைவாம்ஶ: ஜீவபூ₄த:" என்று எடுக்கப்படுகையால், "மம தா₄ம" என்று சொல்லப்படுவது முக்தி நிலையிலுள்ள ஜீவாத்மா என்று கொள்வதே பொருந்தும். "மம தா₄ம" என்று பரமபத₃த்தைக் குறித்து விட்டு உடனே "மமைவாம்ஶ:" என்று ஸம்ஸாரி ஜீவனைக் குறிப்பதில் அவ்வளவு பொருத்தமில்லையன்றோ. ஆக, இந்த ஒன்றரை ஶ்லோகங்களால் "என்னை ஶரணமடைந்தவர்களுக்கு தே₃ஹாத்ம மயக்கம் நீங்குகை முதலானவை அனைத்தும் எளிதாகி, ஆத்மாநுப₄வமாகிற ப₂லமும் ஸித்₃தி₄க்கிறது" என்று சொல்லப்பட்டதாயிற்று. 5.

भा ॥ तदात्मज्योतिर्न सूर्यो भासयते, न शशाङ्कः, न

அந்தவுயிர்ச் சோதியினை யாதித்தன் சந்திரனுஞ்
செந்தழலுந் தாம்விளக்கஞ் செய்யார்க—ளெந்தவுயிர்
தானடைந்தார் மீளார்க டாம மஃதெனக்கே
யானவகை நீதா னறி. 6.

எந்த உயிர்தான் அடைந்தார்—எந்த ஜீவாத்மாவாகிற சோதியை அடைந்தவர்கள், மீளார்கள்-(ஸம்ஸாரத்துக்குத்) திரும்பமாட்டார்களோ. அந்த உயிர்ச்சோதியினை — ஜீவாத்மாவாகிற அந்தச் சோதியை, ஆதித்தன் — சூரியனும், சந்திரனும்—சந்திரனும், செந்தழலும் தாம் — சிவந்த அக்₃னியும் கூடிநின்றாலும், விளக்கம் செய்யார்கள் — பிரகாசிக்கச் செய்யமாட்டார்கள்; தாமம் அஃது-சிறந்த சோதியான அந்த ஜீவாத்மா, எனக்கே ஆனவகை — எனக்கே உடைமையாயிருப்பதை, நீ தான் அறி — நீ தான் அறிவாயாக.

6. முன் ஶ்லோகத்தில் சொன்ன பரிஶுத்₃த₄ாத்மஸ்வரூபத்தின் பெருமையைப் பேசுகிறான் இந்த ஶ்லோகத்தில். (தத்) முன் ஶ்லோகத்தில் "தத் அவ்யயம் பத₃ம்" என்று சொல்லப்பட்ட அந்த ஶுத்₃த₄ாத்மஸ்வருபத்தை. தச்ச₂ப்₃த₃ம் சற்று முன் சொல்லப்பட்டதையே காட்டும், "அவ்யயம் தத் பத₃ம்" என்று இங்கு பரிஶுத்₃த₄ாத்மஸ்வருபமே சற்று முன் சொல்லப்பட்டுள்ளது. அடுத்த ஶ்லோகத்திலும் "மமைவாம்ஶோ ஜீவலோகே ஜீவபூ₄த:" என்று அந்தப் பரிஶுத்₃த₄ாத்மஸ்வருபமே சொல்லப்படுகிறது. இந்த ஶ்லோகத்திலும் உபநிஷத்துக்களில் சொல்லப்பட்டபடி ஜீவாத்மஸ்வருபம் தானே பிரகாஶிப்பதாயிருப்பது என்னும் விஷயம் 'த₄ாம' ஶப்₃த₃த்தைப் பிரயோகிப்பதன் மூலம் உணர்த்தப்படுகிறது. ஆகையால், இந்த ஶ்லோகம் ஜீவாத்மஸ்வருபத்தைப் பற்றியதே என்றும், 'தத்' என்று ஶுத்₃த₄ாத்மஸ்வருபத்தையே குறிக்கிறது என்றும் கொள்ளவேண்டும். (ஸூர்ய: ந ப₄ாஸயதே, ஶஶாங்க: ந, பாவக: ந) சூரியனோ சந்திரனோ அக்₃னியோ பிரகாஶிக்கச் செய்வதில்லை. மூன்றையும் சேர்த்து எடுக்கையாலே, "மூன்றும் கூடினாலும் ஶுத்₃த₄ாத்மஸ்வருபத்தைப்

पावकश्च । ज्ञानमेव हि सर्वस्य प्रकाशकम्; बाह्यानि तु ज्योतींषि विषयेन्द्रियसंबन्धविरोधितमोनिरसनद्वारेणोपकारकाणि । अस्य च प्रकाशको योगः, तद्विरोधि चानादिकर्म, तन्निवर्तनं चोक्तं भगवत्प्रपत्तिमूलमसङ्गादि । यद्गत्वा पुनर्न निवर्तन्ते, तत्परमं धाम परं

---

பிரகாசிக்கச் செய்வதில்லை" என்றும் உணர்த்தப்படுகிறது. அதாவது—ஜ்ஞானமே அனைத்தையும் பிரகாசிக்கச் செய்வது என்றும், வெளியிலிருக்கும் சோதிகளான சூரியனும் சந்திரனும் அக்னியும், விஷயங்களோடு இந்த்ரியங்கள் தொடர்பு கொள்வதற்குத் தடையாயிருக்கும் இருளைப்போக்குவதற்கு உதவி செய்வதன்மூலமே வெளிப்பொருள்களைப் பிரகாசிக்கச் செய்பவையாக வழங்கப்படுகின்றன என்றும் கருத்து. அந்த ஸூர்யன் முதலானவற்றால் காட்டப்படுபவையாகத் தோன்றும் வெளிப்பொருள்களோடு அந்த சூரியன் முதலானவற்றோடு வாசியற அனைத்தும் ஜ்ஞானத்தாலன்றோ உண்மையில் ஜீவாத்மாவுக்கு அறிவிக்கப்படுகின்றன; ஜ்ஞானமானது இந்த்ரியங்கள் மூலமாக விஷயங்களைச் சென்றடையும்போது, அது அவற்றை க்ரஹிக்க முடியாதபடி தடை செய்யும் அங்குள்ள இருளைப்போக்குவதன் மூலமே சூரியன் முதலானவை ஜீவாத்மா வெளிப்பொருள்களை அறிவதற்கு உதவி புரிகின்றனவே யொழிய அவை நேரே அவ்வெளிப் பொருள்களை ஜீவாத்மாவுக்கு அறிவிப்பதில்லையே. இனி, "அப்படியானால், இந்த அனைத்தையும் பிரகாசிக்கச் செய்யும் சோதியுருவான ஆத்மா ஏன் உலகில் தானே பிரகாசிப்பதில்லை? எதனால் அதைப் பிரகாசிக்கச் செய்ய முடியும்?" என்னும் கேள்விகள் எழுகின்றன. இதற்கு பதில்:— "தானே பிரகாசிக்கும் இந்த ஆத்மா அந்தந்த ஜீவாத்மாவுக்கு ஓரளவு பிரகாசிக்கவே செய்கிறது. இதனுடைய எல்லாத் தன்மைகளையும் உள்ளபடி பிரகாசிக்கச்செய்யக்கூடியது யோகமேயாகும்" என்பது. "இந்த யோகம் ஏன் அனைவருக்கும் ஸித்திப்பதில்லை?" எனில்: அநாதிகாலமாகப் பாபங்களை மிகுதியாகச் செய்திருக்கும் பலர்க்கு அப்பாபங்கள் யோகம் கைகூடாதபடி தடுக்கையால், அவர்களுக்கு யோகம் கைகூடுவதில்லை. 'அப்படியானால், யோகம் கைகூடுவதற்கு வழியே இல்லையோ?" எனில்; எம்பெருமானை சரணமடைவதை முன்னிட்டுக்கொண்டு விஷயங்களில் பற்றின்மையை விளைத்துக்கொண்டால் அந்தப் பாபங்கள் நீங்கி யோகம்

ज्योतिः, मम — मदीयं ; मद्विभूतिभूतो ममांश इत्यर्थः । आदित्यादीनामपि प्रकाशकत्वेन तस्य परमत्वम् । आदित्यादीनि हि

கைகூடும் என்பது முன்னமே சொல்லப்பட்டது. இனி, ஶ்லோகத்தின் பிற்பாதியில் இந்த ஶுத்₃த₄ாத்மஸ்வரூபம் தன் உடைமை என்று காட்டுகிறான். (யத்₃க₃த்வா ந நிவர்த்தந்தே) எந்த ஶுத்₃த₄ாத்மஸ்வரூபத்தை முக்தி நிலையில் அடைந்தவர்கள் இந்த ஸம்ஸார மண்ட₃லத்துக்குத் திரும்பி வருவதில்லையோ. (தத் பரமம் த₄ாம) அந்த மேலான சோதி. த₄ாம ஶப்₃த₃ம் முன் ஶ்லோகத்தில் உள்ள பத₃ஶப்₃த₃ வ்யாக்₂யானத்தில் சொன்னபடி பரமபத₃த்தைக் குறிக்கமாட்டாது. மேலும் ஶ்லோகத்தின் முற்பாதியில் சூரியன் முதலானவற்றாலும் பிரகாசிக்கச் செய்ய முடியாததாய், அவற்றையும் பிரகாசிக்கச் செய்யும் சோதியாயிருப்பது ஜீவாத்மஸ்வரூபம் என்று உணர்த்தப்படுகையால், இங்கு த₄ாம ஶப்₃த₃த்துக்குச் 'சோதி' என்று பொருள் கொள்வதே தக்கது. 'பரமம் த₄ாம' என்கையாலே முற்பாதியில் ஸூர்யசந்த்₃ராதி₃களைக் காட்டிலும் மேலானதாகச் சொல்லப்பட்ட ஆத்மச் சோதியே இது என்று உணர்த்தப்படுகிறது. "தத் மம பரமம் த₄ாம" என்று அன்வயித்து "அது என்னுடைய மேலான சோதி" என்று பொருள் கொள்வதில் ஸ்வாரஸ்யம் அதி₄கமில்லை. "தத் பரமம் த₄ாம மம" என்று அன்வயித்து "அந்த மேலான சோதி என்னுடைமையாகும்" என்று பொருள் கொள்வதில் "முக்தி நிலையிலும் ஜீவாத்மஸ்வரூபம் எம்பெருமானுக்கு உடைமையாகவே இருக்கிறது" என்னும் பொருட்சிறப்பு ஸித்₃தி₄க்கிறது. முக்திநிலையில் எம்பெருமானோடு பரமஸாம்யத்தை அடைந்தாலும் இவன் அவனைப்போலே ஸ்வதந்த்ரனாவதில்லை என்பதும், அவனுக்கு உடைமையாகவே இருக்கிறான் என்பதும் தெளிவுபடுத்தப்படுகிறது. அடுத்த ஶ்லோகத்தில் "மமைவாம்ஶ:" என்று சொல்லுகிறபடியால், இந்த முக்தாத்மஸ்வரூபம் தனக்குச் செல்வமாயிருக்கும் தன் அம்சமே என்பதை "மம" என்னும் சொல்லால் காட்டுகிறான் என்று ப₄ாஷ்யத்தில் உரையிடப்பட்டது. 'உலகிலுள்ள செல்வங்களைப்போலே உடையவனை விட்டுப்பிரிந்திருப்பதன்று இந்தச் செல்வம், உடையவனை விட்டுப்பிரியாமல் அவனுடைய ஶரீரரூபமான அம்ஶமாகவே இருப்பது இச்செல்வம்' என்று கருத்து. இங்கு 'அம்ஶ' ஶப்₃த₃த்தின் பொருளைப் பற்றிய பின்வரும் விசாரம் குறிக்கொள்ளத் தக்கது:— ப₄க₃வானுடைய ஸ்வரூபம் ஒன்றாகவும் அவயவமற்றதாகவும் இருக்கிறது. ஆகையால் ஜீவன் ப₄க₃வானு

ज्योतींषि न ज्ञानज्योतिषः प्रकाशकानि ; ज्ञानमेव सर्वस्य प्रकाशकम् ॥ ६ ॥

---

டைய ஸ்வருபத்தின் அம்ஶமாக (பகுதியாக) முடியாது. ஒருவஸ்துவின் ஒரு பகுதியே அம்ஶமெனப்படுகிறதாகையால் அம்ஶமும் அம்ஶத்தையுடைய் அம்ஶியும் வேறுபட்டது என்று கொண்டே தீரவேண்டும். 'ஒரு பொருளில் அம்ஶமெது, அம்ஶியெது?' என்னும் கேள்வியெழுந்தால் 'அம்ஶியே அம்ஶம்' என்று மயங்கியவன் கூடச் சொல்லமாட்டான். 'அம்ஶத்துக்கும் அம்ஶிக்கும் பே₄த₃முமுண்டு அபே₄த₃முமுண்டு' எனில்: இது முன்னுக்குப்பின் முரணுகவும், எல்லா ஶ்ருதிகளுக்கும் முரண்பட்டதாகவும் ஆகும். "பாதோ₃ஸ்ய விஶ்வா பூ₄தாநி" [பு.ஸூ] [லீலா விபூ₄தி முழுவதும் பரம்பொருளின் கால்பகுதியாகும்.] "தஸ்யாவயவ பூ₄தைஸ்து வ்யாப்தம் ஸர்வமித₃ம் ஜக₃த்" [ஶ்வே-4-10] [அப்பரமாத்மாவின் அவயவமாயிருக்கும் ஜீவாத்மாக்களால் இவ்வுலகனைத்தும் வியாபிக்கப்பட்டுள்ளது]. "யதா₂ அக்₃நே: க்ஷுத்₃ரா விஸ்பு₂லிங்கா₃ வ்யுச்சரந்தி ஏவமேவாஸ்மாதா₃த்மந: ஸர்வ ஏவாத்மாநோ வ்யுச்சரந்தி" [ப்₃ருஹ 4-1-20] [நெருப்பிலிருந்து சிறிய தீப்பொறிகள் பறப்பது போலே, பரமாத்மாவிடமிருந்து ஜீவாத்மாக்கள் வெளிவருகின்றன] முதலான ஶ்ருதிவாக்யங்களில் பரமாத்மாவின் அம்ஶமாக ஜீவாத்மாவைச் சொல்லியிருப்பது 'பல விஶேஷணங்களோடு கூடியிருக்கும பரமாத்மாவுக்கு ஜீவாத்மா ஒரு விஶேஷணமாயிருக்கிறுன்' என்னும் கருத்துடையதே என்னும் விஷயம் "அம்ஶோ நாநாவ்யபதே₃ஶாத் அந்யதா₂ ச" [2-3-42] [(ஜீவன் ப்₃ரஹ்மத்தின்) அம்ஶமாயிருப்பவனே. (சில ஶ்ருதிகளில்) ஜீவன் ப்₃ரஹ்மத்தைக் காட்டிலும் வேறுபட்டவன் என்றும், (மற்றும் சில ஶ்ருதிகளில்) ப்₃ரஹ்மத்தோடுஒன்றுபட்டவன் என்றும் உபதே₃ஶிக்கையால்] என்று தொடங்கும் ப்₃ரஹ்மஸூத்ரத்தின் அம்ஶாதி₄கரணத்தில் "ப்ரகாஶாதி₃வத்து நைவம் பர:" [2-3-45] [(ஜீவன்) ஒளி முதலானவை (மணி முதலானவற்றுக்குப்) போலே (பரமாத்மாவுக்கு அம்ஶமெனப்படுகிறுன்); பரமாத்மா (ஸ்வரூபஸ்வபா₄வங்களில்) ஜீவனைப்போன்றவனல்லன்] என்னும் ஸூத்ரத்தில் நிர்ணயிக்கப்பட்டது, ஆகையால், "ஒரு காரணத்தால் ஒன்றுகச் சொல்லப்படும் பல வஸ்துக்களின் கூட்டத்தின் ஒரு பகுதியே அம்ஶம் எனப்படுகிறது" என்று கொள்ளவேண்டும்.

ममैवांशो जीवलोके जीवभूतस्सनातनः ।
मनष्षष्ठानीन्द्रियाणि प्रकृतिस्थानि कर्षति ॥ ७ ॥

7. மமைவாம்ஶோ ஜீவலோகே ஜீவபூ₄தஸ் ஸநாதந: |
மநஷ்ஷஷ்ட₂ாநீந்த்₃ரியாணி ப்ரக்ருதிஸ்த₂ாநி கர்ஷதி ||

ஸநாதந: — அநாதி₃காலமாயிருப்பவனாய் மம அம்ஶ: ஏவ (ஸந்) — என் அம்ஶமாகவே இருக்கும் ஜீவர்களில் ஒருவன், ஜீவபூ₄த: — (கர்மங்களால் சூழப்பட்ட) ப₃த்₃த₄ ஜீவனாயிருந்துகொண்டு, ஜீவலோகே — ப₃த்₃த₄ ஜீவர்கள் வாழும் லீலாவிபூ₄தியிலிருப்பவனாய், ப்ரக்ருதிஸ்த₂ாநி — ப்ரக்ருதியின் பரிணாமமான ஶரீரத்திலிருக்கும், மநஷ்ஷஷ்ட₂ாநி இந்த்₃ரியாணி — மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து ஜ்ஞானேந்த்₃ரியங்களையும் (இவற்றை நியமிக்கும்) ஆருவது இந்திரியமான மனஸ்ஸையும், கர்ஷதி—(கர்மாநுகு₃ணமாகச்) செயல் புரியச் செய்கிறான்.

---

பல நூல்களின் கூட்டமாயிருக்கும் ஒரு வஸ்திரத்தின் அம்ஶமாக அதிலுள்ள நூல்கள் சொல்லப்படுவது இப்படியேயாகும். சில விஶேஷணங்களோடு கூடியிருக்கும் விஶிஷ்டப் பொருள் ஒன்று யிருக்கும் இடங்களில் விஶேஷணங்கள் இந்த நியாயத்தாலே விஶிஷ்டப் பொருளின் அம்ஶங்களாகக் கருதப்பட்டு 'விஶேஷ ணம்ஶங்கள்' என்று வழங்கவும் படுகின்றன. ஆக, மிகவும் வேறுபட்டிருக்கும் உடைமையான ஜீவாத்மாவும், உடையவனான பரமாத்மாவும் ஒருவரோடொருவர் விஶேஷண விஶேஷ்ய ப₄ாவத்தாலே பிரிக்க முடியாதபடி பிணைந்திருக்கையாலே, விஶிஷ்டனான பரமாத்மாவின் அம்ஶமாக விஶேஷணமாயிருக்கும் ஜீவன் பிரித்து வழங்கப் படுகிறான் என்று கண்டுகொள்வது. (பரமம் த₄ாம மம) ஒப்பற்ற சோதியான பரமாத்மாவின் உடைமை யாக ஜீவாத்மா இங்கு சொல்லப்படுகையாலே, இங்குள்ள பரம ஶப்₃த₃ம் 'ஸூர்யன் முதலான மற்ற சோதிகளையும் பிரகாஶிக்கச் செய்வதாலே ஜீவாத்மா அவைகளைக் காட்டிலும் மேலானதா யிருக்கிறது' என்னும் கருத்துடையது. ஸூர்யன் முதலான சோதிகள் ஸ்வயம் ப்ரகாஶமான ஜீவாத்மாவைப் பிரகாசிக்கச் செய்வதில்லை என்பதையும், ஜீவாத்மாவின் ஜ்ஞானமே ஸூர்யன் முதலான சோதிகளையுள்ளிட்ட எல்லாப் பொருள்களையும் பிரகாசிக்கச் செய்கிறது என்பதையும் முன்னமே சொன்னோம். 6.

भा ॥ इत्थमुक्तस्वरूपस्सनातनो ममांश एव सन् कश्चिदनादि-कर्मरूपाविद्यावेष्टितो जीवभूतो जीवलोके वर्तमानो देवमनुष्यादि-

என்னரு மமசமா யிவ்வுலகிற் சீவனாய்
முன்னார நின்று முயலுமுயிர் — தன்னரு
மைம்புல்னு நெஞ்சு மவையாறை யும்வலிக்கும்
வெம்புலத்துச் சேர விரைந்து. 7.

என் ஆரும் அம்சமாய் — எனது பகுதியான அம்சமாய், முன் ஆர நின்று முயலும் உயிர் — அநாதி₃காலமாக நித்யமாக இருந்து கொண்டு செயல் புரியும் ஜீவர்களில் ஒருவன், இவ்வுலகில் — இந்த லீலாவி₄பூதியில், சீவனாய் — ப₃த்₃த₄ ஜீவனாயிருந்துகொண்டு, தன் ஆரும் — தன்னுடைய உடலில் இணைந்திருக்கும், ஐம்புலனும் — மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்தும், நெஞ்சும — (இவற்றை நியமிக்கும்) நெஞ்சுமாகிற, அவை ஆறையும் — ஆறு இந்திரியங்களையும், வெம் புலத்து சேர — துன்பத்தை விளைக்கும் ஶப்₃த₃ம் முதலான விஷயங்களில் ஈடுபடும்படியாக, விரைந்து வலிக்கும் — விரைவாகச் செயல்படுத்துவான்.

---

7. "முன் ஶ்லோகத்தில் சொன்னபடி ஜீவர்கள் அனைவரும் உனக்குச் செல்வமாயிருக்கும் உன் அம்ஶமேயானால், நித்ய ஸூரிகளான ஜீவர்களைப்போலே இவ்வுலகிலுள்ள ஜீவர்கள் அனைவருமே பரிஶுத்₃த₄மான ஜ்ஞானத்தையுடையவர்களாய் விளங்காமலிருப்பது ஏன்?" என்னும் கேள்வியெழ, ப₃த்₃த₄ ஜீவனும் தன் செல்வமாயிருப்பவனே என்று மறுபடியும் உறுதிப் படுத்திக் கொண்டு, ப₃த்₃த₄ர், முக்தர் முதலான வேறுபாடுகள் ஜீவர்களுக்கிடையே உண்டாவதற்குக் காரணத்தையும் அத்தியாயத்தின் எஞ்சிய பகுதியாலே விளக்குகிறான் அதில் இந்த ஶ்லோகத்தில், ப₃த்₃த₄ ஜீவனும் தனது செல்வமே என்று வலியுறுத்திக்கொண்டு, அநாதி₃காலமாக அந்த ப₃த்₃த₄ஜீவன் தான் ஸம்பாதி₃த்து வைத்திருக்கும் புண்யபாபரூபமான விலங்குகளாலே கட்டப்பட்டு, தன் சரீரமாகிற சிறையில் அடைபட்டிருக்கிறான் என்று கூறுகிறான். (ஜீவலோகே மமைவாம்ஶ: ஸநாதந:

प्रकृतिपरिणामविशेषशरीरस्थानि मनष्षष्ठानीन्द्रियाणि कर्षति । पूर्वोक्तेन मार्गेणास्या अविद्यायाः मुक्तः स्वेन रूपेणावतिष्ठते ; जीवभूतस्त्वतिसंकुचितज्ञानैश्वर्यः कर्मलब्धप्रकृतिपरिणामविशेषरूपशरीरस्थानामिन्द्रियाणां मनष्षष्ठानामीश्वरः तानि कर्मानुगुणमितस्ततः कर्षति ॥ ७ ॥

---

ஜீவபூ₄த:) முன் ஶ்லோகங்களில் சொன்னபடி இயற்கை நிலையில் ஜ்ஞானமயனுயிருக்கும் ஜீவர்களில் ஒருவனான ப₃த்₃த₄ஜீவன்— ப₃த்₃த₄ஜீவர்கள் நிரம்பியிருக்கும் இந்த லீலா விபூ₄தியில் என்னுடைய அம்ஶமாயிருந்துகொண்டே அநாதி₃காலமாகத் தான் சேர்த்துவைத்திருக்கும் புண்ய பாப கர்மங்களாகிற அவித்₃யையாலே கட்டுப்பட்டவனாய் வாழ்கிறான். "மமைவாம்ஶ:" என்றவிடத்தில் ஏவகாரத்தாலே இவன் சென்ற ஶ்லோகத்தில் சொன்னபடி தன்னுடைய செல்வமாயிருக்கும் அம்ஶமே என்பதை வலியுறுத்துகிறான். 'ஜீவலோக:' என்று லீலா விபூ₄தியைக் குறிக்கிறது. 'ஜீவபூ₄த:' என்றது ஜாத்யேக வசனம். லீலா விபூ₄தியிலுள்ள ப₃த்₃த₄ ஜீவர்கள் அனைவரையும் குறிக்கிறது. 'ஸநாதந:' என்றதால் ஈஶ்வரனைப்போலே இவனும் அநாதி₃யானவன் என்று உணர்த்தப்படுகிறது. 'ஜீவபூ₄த:' என்றதாலே அநாதி₃காலமாக இவன் செய்த புண்ய பாப கர்மங்களாலே ஜ்ஞானத்தில் ஏற்றத்தாழ்வுடையவனாய், கட்டுப்பட்டிருக்கிறான் என்று காட்டப்பட்டது. (ப்ரக்ருதி ஸ்தா₂நி இந்த்₃ரியாணி) மூலப்ரக்ருதியின் பரிணாமமாயிருக்கும் தே₃வர் மனிதர் முதலான ஶரீரங்களில் இருக்கும் இந்த்₃ரியங்களை. இந்த்₃ரியங்கள் ஶரீரத்திலேயே இருக்கிறபடியால் இங்கு ப்ரக்ருதி ஶப்₃த₃ம் மூல ப்ரக்ருதியின் கார்யமான ஶரீரத்தைக் குறிப்பதாகக் கொள்ள வேண்டும். அந்த இந்த்₃ரியங்கள் எவை? எனில் (மந: ஷஷ்டா₂நி இந்த்₃ரியாணி) மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஜ்ஞானேந்த்₃ரியங்கள் ஐந்தும், இவற்றை நியமிப்பதாய், ஜ்ஞானம் வெளிப்படும் வழியாயிருப்பதான மனமும் ஆகியவையே அவை என்கிறது. (கர்ஷதி) செயல் புரியச்செய்கிறான். தன் கர்மானுகு₃ணமாக ஶப்₃த₃ம், ஸ்பர்ஶம், ரூபம், ரஸம், க₃ந்த₄ம் எனும் ப்ராக்ருத விஷயங்களில் ஈடுபடச் செய்கிறான் என்று கருத்து. முன் ஶ்லோகங்களோடு சேர்த்துப் பார்க்கும்போது "இந்த ப₃த்₃த₄ ஜீவர்களில் ஒருவன் முன் ஶ்லோகங்களில் சொன்ன ரீதியில் ஶரணாக₃தியாலே ப்ரக்ருதியிலிருந்து முக்தியடைந்து ஸ்வரூப விளக்கம் பெறுகிறான்" என்னும் அர்த்த₂மும் உணர்த்தப்

शरीरं यदवाप्नोति यच्चाप्युत्क्रामतीश्वरः ।
गृहीत्वैतानि संयाति वायुर्गन्धानिवाशयात् ॥ ८ ॥

8. ஶரீரம் யத₃வாப்நோதி யச்சாப்யுத்க்ராமதீஶ்வர: ।
க்₃ருஹீத்வைதாநி ஸம்யாதி வாயுர் க₃ந்தா₄நிவாஶயாத் ॥

ஈஶ்வர;-இந்த்₃ரியங்களை நியமிப்பவனன ப₃த்₃த₄ ஜீவன்: யத் ஶரீரம் அவாப்நோதி — (முன் ஶரீரத்தை விட்டபின்) யாதொரு ஶரீரத்தை அடைகிருனே (அந்த ஶரீரத்திற்கு), யச்ச அபி உத்க்ராமதி — எந்த ஶரீரத்திலிருந்து கிளம்புகிருனே (அந்த ஶரீரத்திலிருந்து) வாயு:- காற்றுனது, ஆஶயாத் — (மலர் முதலான மணமுடைய) பொருள்களிலிருந்து, க₃ந்த₄ாந்—மணம்மிக்க சிறுதுகள்களை, இவ—(எடுத்துச்செல்வது) போல், ஏதாநி — இந்த இந்த்₃ரியங்களை, க்₃ருஹீத்வா—(கிளம்பும் ஶரீரத்திலிருந்து) எடுத்துக் கொண்டு, ஸம்யாதி-(அடையும் ஶரீரத்துக்குச்) செல்கிருன்.

---

எந்தவுடல் விட்டெவ் வுடலடையு மீசனவன்
சந்தமுட னங்கிவற்றைத் தான்வாங்கிப்—பந்தமுடன்
ருனேகும் வாயுத்தன் சார்மணங்கள் வாங்கியே
பூநேர்நின் றேகுமது போல்.

ஈசனவன்—இந்த்₃ரியங்களை நியமிக்கும் அந்த ஜீவன், எந்த உடல் விட்டு — யாதொரு உடலைவிட்டுக் கிளம்பி, எவ்வுடல் அடையும் — மற்ருெரு உடலை அடையும்போது,

---

படுகிறது. "இப்படி முக்த ஜீவன் ஸம்ஸாரத்தளையிலிருந்து விடுபட்டிருக்கும்போது ப₃த்₃த₄ ஜீவன் மிகக்குறைந்த ஜ்ஞானச் செல்வத்தையுடையவனுய், கர்மத்திஞல் கிடைக்கும் ப்ரக்ருதி பரிணமரூபமான தே₃வ மனுஷ்யாதி₃ ஶரீரங்களிலிருக்கும் மனம் முதலான ஆறு இந்த்₃ரியங்களை நியமிக்கும் ஈஶ்வரனுய், அவ் விந்த்₃ரியங்களைக் கர்மானுகு₃ணமாக ஶப்₃த₃ாதி₃ விஷயங்களில் மாறி மாறி ஈடுபடும்படி செய்கிருன்" என்பது ஶ்லோகத்தின் திரண்ட பொருள். 7.

भा ॥ यच्छरीरमवाप्नोति, यस्माच्छरीरादुत्क्रामति, तत्रायमिन्द्रियाणामीश्वरः एतानीन्द्रियाणि भूतसूक्ष्मैस्सह गृहीत्वा संयाति। वायु-

---

அங்கு — அந்த விடும் உடலிலிருந்து, இவற்றை — இந்த இந்த்₃ரியங்களை, சந்தமுடன் தான் வாங்கி—விருப்பத்துடன் எடுத்துக்கொண்டு, பந்தமுடன் தான் ஏகும்—கர்ம ப₃ந்த₄த்தோடு தானே (அடையும் ஶரீரத்துக்குச்) செல்கிருன்; வாயு—காற்ருனது பூநேர்நின்று—பூ முதலானமணம் மிக்க பொருள்களைத் தடவிச் செல்லும்போது, தன் சார்மணங்கள் வாங்கியே — அந்தப் பூ முதலானவற்றிலுள்ள மணத்தோடு கூடிய துகள்களை எடுத்துக்கொண்டே, ஏகும் அது போல்—வேறிடத்துக்குச் செல்வது போன்றது இது,

---

8. இந்த ஶ்லோகத்தில் ஜீவன் ஒரு பிராக்ருத ஶரீரத்திலிருந்து கிளம்புவது, மற்ருெரு பிராக்ருத ஶரீரத்தில் புகுவது முதலான துன்பங்களை அனுப₄விப்பதைக்காட்டுகிருன். (ஶரீரம் யத் அவாப்நோதி) ஒரு ஶரீரத்தை விட்ட பின்பு யாதொரு புதிய ஶரீரத்தை ஜீவன் அடைகிருனே அந்தஶரீரத்திற்கு. (யத் சாபி உத்க்ராமதி) இங்கு 'யத்' என்னும் ஶப்₃த₃ம் 'யஸ்மாத்' என்று பொருள்படும். எந்த ஶரீரத்திலிருந்து வெளிக்கிளம்புகிருனே, அந்த ஶரீரத்திலிருந்து. (ஈஶ்வர:) இந்த்₃ரியங்களை நியமிக்கும் ஈஶ்வரனுன இந்த ப₃த்₃த₄ ஜீவன். ப்ரகரணவசத்தாலே இங்கு ஈஶ்வர ஶப்₃த₃ம் ஜீவனைக் குறிக்கிறது என்பது தெளிவு. இனி, ஶ்லோகத்தின் பிற்பாதியாலே — இந்த்₃ரியங்களையே செல்வமாக உடையவனுகையாலே இவன் ஒரு ஶரீரத்திலிருந்து மற்ருெரு ஶரீரத்துக்குப் போகும்போது முன் ஶரீரத்திலிருந்த தன் செல்வமான இந்த்₃ரியங்களைப் பின் ஶரீரத்துக்கும் கொண்டு செல்கிருன் என்கிறது. (ஏதாநி) முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட இந்த்₃ரியங்களை. (க்₃ருஹீத்வா) கிளம்பும் ஶரீரத்திலிருந்து எடுத்துக்கொண்டு. (ஸம்யாதி) புதிதாக அடையும் ஶரீரத்துக்குச் செல்கிருன். ஔசித்யத்தை நோக்கி இப்படிப் பொருள் கொள்ளப்பட்டது. நாலாவது பாத₃த்தில் இதற்கு ஓர் த்₃ருஷ்டாந்தம் கூறப்படுகிறது — (வாயு; ஆஶயாத் க₃ந்த₄ாநிவ)

गन्धानिवाशयात् — यथा वायुः स्रक्चन्दनकस्तूरिकाद्याशयात्— तत्स्थानात् सूक्ष्मावयवैस्सह गन्धान् गृहीत्वाऽन्यत्र संयाति, तद्वदित्यर्थः ॥ ८ ॥

भा ॥ कानि पुनस्तानीन्द्रियाणीत्यत्राह--

श्रोत्रं चक्षुस्स्पर्शनं च रसनं घ्राणमेव च ।
अधिष्ठाय मनश्चायं विषयानुपसेवते ॥ ९ ॥

9. ஶ்ரோத்ரம் சக்ஷுஸ் ஸ்பர்ஶநம் ச ரஸநம் க்₄ராண மேவ ச ]
அதி₄ஷ்டா₂ய மநஶ்சாயம் விஷயாநுபஸேவதே ॥

அயம்—இந்த ஜீவன், ஶ்ரோத்ரம்—செவி, சக்ஷு: — கண், ஸ்பர்ஶநம் ச — மெய், ரஸநம் — நா, க்₄ராணம் ஏவ ச — மூக்கு என்னும் இந்த ஐந்து இந்த்₃ரியங்களையும், மந: ச — (இவற்றை நியமிக்கும்) மனத்தையும். அதி₄ஷ்டா₂ய — தத்தமக்குரிய ஶப்₃த₃ம் முதலான விஷயங்களில் மேயவல்லவையாக ஆக்கி, விஷயாந் — அந்தந்த விஷயங்களை, உபஸேவதே—அநுப₄விக்கிறான்.

---

காற்றானது மாலை, சந்த₃னம், கஸ்தூரி முதலான மணம் மிக்க பொருள்களிலிருந்து மணத்துடன் கூடிய சிறு துகள்களை எடுத்துக் கொண்டு வேறிடத்துக்குச் செல்வது போன்றது இது என்று கருத்து. க₃ந்த₄ம் (மணம்) என்னும் கு₃ணத்தை மணமுடைய பொருளிலிருந்து தனியே பிரித்து எடுத்து வரமுடியாதாகையாலே, இங்கு க₃ந்த₄ ஶப்₃த₃ம் மணமுடைய சிறு துகள்களைக் காட்டுகிறது. இந்த த்₃ருஷ்டாந்த ப₃லத்தாலே, மணத்தோடு அதற்கு இருப்பிடமான நுண்ணிய துகளும் வருவது போலே, தா₃ர்ஷ்டாந்திகத்திலும் இந்த்₃ரியங்களோடு அவற்றுக்கு இருப்பிடமான பூ₄தஸூக்ஷ்மங்களும் வருகின்றன என்று உணர்த்தப்படுகிறது, இதனாலேயே பா₄ஷ்யத்தில் "இந்த்₃ரியாணி பூ₄தஸூக்ஷ்மைஸ் ஸஹ க்₃ருஹீத்வா ஸம்யாதி" [இந்த்₃ரியங்களை பூ₄தஸூக்ஷ்மங்களோடு கூட எடுத்துக்கொண்டு செல்கிறான்] என்று அருளிச்செய்யப்பட்டது. 8.

भा ॥ एतानि मनःषष्ठानीन्द्रियाण्यधिष्ठाय — स्वस्वविषयवृत्त्यनुगुणानि कृत्वा, तान् शब्दादीन् विषयानुपसेवते — उपभुङ्क्ते ॥ ९ ॥

செவிகண் டுவக்குடன் சிங்ஙவைநா சிச்சேர்ந்
தவிவின்றி நெஞ்சோ டமர்ந்து – நவிவில்லாப்
புன்பொருள்க ளெல்லாம புசித்தியலு மிவ்வுயிர்தா
னின்புறுதல் சேர்நசையா லிங்கு. 9.

இங்கு இவ்வுயிர்தான் — இந்த லீலாவிபூ$_4$தியில் உள்ள ப$_3$த்$_3$த$_4$ஜீவன், இன்புறுதல் சேர் நசையால் — தான் இன்பம் அடையவேண்டும் என்னும் ஆசையால், செவி — செவி, கண் — கண், துவக்குடன் — மெய், சிங்ஙவை — நாக்கு, நாசி சேர்ந்து — மூக்கு என்னும் ஐந்து ஞானேந்த்ரியங்களும் சேர்ந்து, அவிவின்றி — இடைவிடாமல், நெஞ்சோடு அமர்ந்து — (இவ்வைந்தையும் நியமிக்கும்) மனத்தோடுகூடி, நவிவு இல்லா — அழிவில்லாத, புன் பொருள்கள் எல்லாம் — தாழ்ந்த ப்ராக்ருதப் பொருள்கள் அனைத்தையும், புசித்து இயலும்—அனுப$_4$வித்து வாழ்கிறான்.

9. முன் இரண்டு ஶ்லோகங்களிலும் சொல்லப்பட்ட அந்த இந்த்$_3$ரியங்கள் எவை என்பதை விளக்கிக்கொண்டு அவ்விந்த்$_3$ரியங்களைக்கொண்டு ப$_3$த்$_3$த$_4$ஜீவன் விஷம் கலந்த தேன் போன்ற ப்ராக்ருத விஷயங்களை அனுப$_4$வித்து உழல்கின்றான் என்கிறது. (ஶ்ரோத்ரம்) ஶப்$_3$த$_3$த்தை நுகரும் செவி. (சக்ஷு:) ரூபத்தை க்$_3$ரஹிக்கும் கண். (ஸ்பர்ஶநம் ச) தொடுவுணர்ச்சியை நுகரும் த்வக் அல்லது மெய் எனப்படும் இந்த்$_3$ரியம். (ரஸநம்) சுவையை உணரும் ‘நா’ எனும் இந்த்$_3$ரியம். (க்$_4$ராணம் ஏவ ச) மணத்தை உணரும் மூக்கு ஆக ஜ்ஞாநேந்த்$_3$ரியங்கள் ஐந்தையும். (மந:ச) இவை ஐந்தையும் நியமிப்பதாய், நினைத்தல் முதலான செயல்களையுடைத்தான மனத்தையும். (அதி$_4$ஷ்ட$_2$ாய) தத்தம் விஷயங்களில் ஈடுபடும்படி செய்து. (அயம் விஷயாந் உபஸேவதே) இந்த ப$_3$த்$_3$த$_4$ஜீவன் முற்கூறிய ஶப்$_3$த$_3$ம் முதலான விஷயங்களை அனுப$_4$விக்கிறான். விஷம் கலந்த தேன் போன்று துன்பம் மிகுந்த இன்பத்தை அளிக்கும் கணக்கற்ற ப்ராக்ருதப் பொருள்களில் மண்டித் துன்புறுகிறான் என்று கருத்து. 9.

उत्क्रामन्तं स्थितं वाऽपि भुञ्जानं वा गुणान्वितम् ।
विमूढा नानुपश्यन्ति पश्यन्ति ज्ञानचक्षुषः ॥ १० ॥

10. உத்க்ராமந்தம் ஸ்தி₂தம் வாபி பு₄ஞ்ஜாநம் வா
குₓணாந்விதம் ।
விமூட₄ா நாநுபஶ்யந்தி பஶ்யந்தி ஜ்ஞாநசக்ஷுஷ: ॥

குₓணாந்விதம்—(முற்கூறியபடி) குₓணமயமான சரீரத்தோடு சேர்ந்திருப்பவனாய், உத்க்ராமந்தம் — (ஒரு சரீரத்திலிருந்து) கிளம்புகிறவனாய், ஸ்தி₂தம் வாऽபி—(அல்லது) வேறொரு சரீரத்தில் இருப்பவனாய், பு₄ஞ்ஜாநம் வா — (அல்லது) குₓணமய விஷயங்களை அநுப₄விப்பவனாயிருக்கும் ஜீவனை, விமூட₄ா: — (தே₃ஹமே ஆத்மா என) மயங்கியவர்கள், ந அநுபஶ்யந்தி—(தே₃ஹத்தைக் காட்டிலும் வேறுபட்ட ஞானவடிவினனாகக்) காண்பதில்லை, ஜ்ஞாநசக்ஷுஷ: - (தே₃ஹத்தைக் காட்டிலும் வேறுபட்டது ஆத்மா எனும்) அறிவுக்கண்ணை உடையவர்கள், பஶ்யந்தி — (முற்கூறிய எல்லா நிலைகளிலும் இவனை தே₃ஹத்திலும் வேறுபட்டவனாகவே) காண்கிறார்கள்,

---

இந்தவுடல் விட்டேக லேய்ந்து மிதிலிருந்தும்
வந்துபுசித் துங்குணத்தின் மன்னிவனை—வந்தறிவின்
மூட ருணர முகமறியார் முற்றுணர்வர்
நாட வுணர்வழியார் நன்கு. 10.

இந்த உடல் விட்டு ஏகல் ஏய்ந்தும்—(இருக்கின்ற) இந்த உடலைவிட்டுப் புறப்படத்தொடங்கியும், இதில் இருந்தும்—(அல்லது) இதிலேயே இருந்தும், வந்து புசித்தும்—(அல்லது குₓணமயமான விஷயங்களை) அடைந்து அநுப₄வித்தும், குணத்தின் மன்னு இவனை—குₓணமயமான தே₃வாதி₃ சரீரங்களில் சேர்ந்திருக்கும் இந்த ஜீவனை, வந்தறிவின் மூடர்—வந்தேறியான தே₃ஹமே ஆத்மா எனும் நினைவினாலே மயங்கியிருப்பவர்கள், உணர முகம் அறியார்—(தே₃ஹத்தைக் காட்டிலும் வேறுபட்ட அறிவு வடிவினனாய் இருப்பவன் ஜீவன் என) அறிய வழியும் காணார்கள்;

भा ॥ एवं गुणान्वितं सत्त्वादिगुणमयप्रकृतिपरिणामविशेष-मनुष्यत्वादिसंस्थानपिण्डसंसृष्टम्, पिण्डविशेषादुत्क्रामन्तं पिण्डविशेषेऽवस्थितं वा, गुणमयान् विषयान् भुञ्जानं वा कदाचिदपि प्रकृति

---

நாட உணர்வு அழியார் — (முற்கூறிய எந்த நிலையிலும் உள்ளபடி) அறியவல்ல அறிவுகெடாத ஞானிகள், நன்கு முற்றுணர்வர் — (ஆத்மா தேஹத்தைக்காட்டிலும் வேறுபட்டதென்றும், ஞானவடிவானதென்றும்) நன்கு முழுவதும் அறிவார்கள்.

---

10. அனாதிகாலமாகச் செய்யப்பட்ட புண்யபாபகர்மங்களாகிற விலங்கிடப்பெற்ற ஜீவன் ஶரீரமாகிற சிறையில் வாழ்வது ஏழாவது ஶ்லோகத்திலும், அந்த ஶரீரத்திலிருந்து கிளம்புவது, மற்றொரு ஶரீரத்தில் நுழைவது முதலான துன்பங்களை அனுபவிப்பது எட்டாவது ஶ்லோகத்திலும், விஷம் கலந்த தேன் போன்ற ஶப்தாதி விஷயங்களை ஶரீரத்திலிருந்துகொண்டு அனுபவிப்பது ஒன்பதாவது ஶ்லோகத்திலும் கூறப்பட்டது. இத்துன்பங்களையெல்லாம் இவன் அனுபவிப்பதற்குக் காரணம் ஆத்மாபஹாரமாகிற திருட்டே என்று காட்டிக்கொண்டு, ஆத்மஸ்வரூபத்தைச் சிலர் காணாமலிருப்பதற்குக் காரணத்தையும் விளக்குகிறான் இந்த ஶ்லோகத்தில். (குணாந்விதம்) ஸத்வரஜஸ் தமஸ்ஸுக்களாகிற குணங்களோடு கூடிய மூலப்ரக்ருதியின் பரிணாமமான மனிதர் முதலான தேஹங்களோடு கூடியவனை. ஜீவாத்மாவுக்கு ஸத்வாதி குணங்களோடு சேர்த்தி தேஹத்தின் மூலமாகவேயாகையால் இப்படியே பொருள் கொள்ளவேண்டும். இனி, இதன் விளைவுகளை முற்பாதியில் எஞ்சிய பகுதியாலே கூறுகிறான். (உத்க்ராமந்தம்) ஒரு ஶரீரத்திலிருந்து கிளம்புகிறவனை. (ஸ்திதம் வாபி) அல்லது ஒரு ஶரீரத்தில் வாழ்கிறவனை. (புஞ்ஜானம் வா) அல்லது முக்குணமயமான விஷயங்களை, ஒரு ஶரீரத்திலிருந்து அனுபவித்துக் கொண்டிருப்பவனை. இந்த மூன்று நிலைகளைச் சொன்னது ஶரீரத்தோடு கூடிய ஜீவனின் எல்லா நிலைகளுக்கும் உபலக்ஷணம். இனி, பிற்பாதியாலே சிலர் ஜீவஸ்வரூபத்தை உள்ளபடி காணாமலிருப்பதற்குக் காரணத்தையும்

परिणामविशेषमनुष्यत्वादिपिण्डाद्विलक्षणं ज्ञानैकाकारं विमूढाः नानुपश्यन्ति । विमूढाः — मनुष्यत्वादिपिण्डा[कारा]त्माभिमानिनः । ज्ञानचक्षुषस्तु पिण्डात्मविवेकविषयज्ञानवन्तः सर्वावस्थमप्येनं विविक्ताकारमेव पश्यन्ति ॥ १० ॥

यतन्तो योगिनश्चैनं पश्यन्त्यात्मन्यवस्थितम् ।
यतन्तोऽप्यकृतात्मानो नैनं पश्यन्त्यचेतसः ॥ ११ ॥

11, யதந்தோ யோகி₃நஶ்சைநம் பஶ்யந்த்யாத்மந்—
யவஸ்தி₂தம் ।
யதந்தோऽப்யக்ருதாத்மாநோ நைநம் பஶ்யந்த்
யசேதஸ: ||

யதந்த: யோகி₃ந: ச — (என்னை ஶரணமடைவதை முன்னிட்டுக்கொண்டு கர்மயோக₃ம் முதலான) முயற்சிகளைச் செய்யும் யோகி₃கள், ஆத்மநி அவஸ்தி₂தம் — தன் ஶரீரத்திலிருக்கும், ஏநம் — இந்த ஜீவாத்மாவை, பஶ்யந்தி— (யோக₃மாகிற கண்ணாலே) காண்கிறார்கள்; யதந்த:

சிலர் காண்பதற்குக் காரணத்தையும் கூறுகிறான். (விமூடா₄: ந அநுபஶ்யந்தி) மனிதர் முதலான தே₃ஹத்தையே ஆத்மா என்று மயங்கும் அறிவிலிகள்—ப்ரக்ருதியின் பரிணாமமான மனிதர் முதலான தே₃ஹத்தைக் காட்டிலும் வேறுபட்டவனாகவும் ஞானமே வடிவெடுத்தவனாகவும் ஜீவ ஸ்வரூபத்தை அறிவதில்லை. ஆக, தே₃ஹாத்மாபி₄மானத்தால் ஆத்மாபஹாரம் செய்வதே சிலர் ஆத்மாவை அறியாமைக்குக் காரணம் என்றதாயிற்று. (நஅநுபஶ்யந்தி) பல்வேறு நிலைகளிலிருக்கும் தே₃ஹத்தை இவன் கண்டு வந்த போதிலும், அதைக்காட்டிலும் வேறுபட்டது ஆத்மா என்று அறியாமையாலே, இவன் ஆத்மாவை அறியாதவனே என்று கருத்து. ''அறிவிலிகள் காண்கிறார்களில்லையே'' என்று எம்பெருமான் தனது மனவருத்தத்தைக் காட்டுகிறான். (ஜ்ஞாந சக்ஷுஷ: பஶ்யந்தி) ஆத்மாவைப் பற்றிய அறிவாகிற கண்ணை யுடையவர்கள் ஶரீரத்தைக்காட்டிலும் ஆத்மா வேறுபட்டது என்று அறிகையாலே, முற்கூறிய எல்லா நிலைகளிலும் ஆத்மாவை ஜ்ஞானமே வடிவெடுத்ததாகவே காண்கிறார்கள். 10

भा ॥ मत्प्रपत्तिपूर्वकं कर्मयोगादिषु यतमानास्तैर्निर्मलान्तःकरणा योगिनो योगाख्येन चक्षुषा आत्मनि—शरीरेऽवस्थितमपि शरीरा-

---

அபி—(என்னை ஶரணமடையாமல்) முயற்சி செய்த போதிலும். அக்ருதாத்மாந:—மனத்தில் பரிஶுத்₃தி₄ விளையாதவர்களாய் (அது காரணமாகவே), அசேதஸ: — (ஆத்மாவைக் காணவல்ல) நெஞ்சு இல்லாதவர்கள், ஏநம் ந பஶ்யந்தி—ஆத்மாவை உள்ளபடி காண்பதில்லை.

---

மன்னுகரு மத்து மருவியல் யோகியர்க
டன்னுடம்பின் மேவிவனைச் சார்ந்துணர்வார்—
முன்னுணரும்
நெஞ்சமில் லாதார் நிறைவின்றித் தாமுணரா
ரெஞ்ச லறவியன்று மிங்கு. 11.

மன்னு கருமத்து மருவு இயல் யோகியர்கள் — என்னை ஶரணமடைவதை முன்னிட்டுக்கொண்டு கர்மயோக₃ம் முதலான முயற்சிகளைச் செய்யும் யோகி₃கள், தன் உடம்பில் மேவு இவனை — தன் ஶரீரத்தில் இருக்கும் இந்த ஜீவாத்மாவை, சார்ந்து உணர்வார — யோக₃மாகிற கண்ணைக் கொண்டு காண்கிறுர்கள், இங்கு இயன்றும் — (என்னை ஶரணமடையாமல்) இவ்வுலகில் முயற்சி செய்த போதிலும், நிறைவு இன்றி — (என்னை ஶரணமடையாமையாலே) மனஸ்ஸில் பரிஶுத்₃தி₄ இல்லாமல், முன் உணரும் நெஞ்சம் இல்லாதார் — ஆத்மாவைக் காணவல்ல நெஞ்சு இல்லாதவர்கள், எஞ்சல் அற தாம் உணரார் — ஆத்மாவைக் குறைவறத் தாம் காண்பதில்லை.

---

11. முன் ஶ்லோகங்களில் சொன்ன அர்த்த₂த்தையே காரணம் காட்டி விளக்குகிருன் இந்த ஶ்லோகத்தில். (யதந்த: யோகி₃ந:) முன் ஶ்லோகங்களில் சொன்னபடி என்னை ஶரணமடைவதை முன்னிட்டுக் கொண்டு கர்மயோக₃ம் முதலான முயற்சிகளைச் செய்பவர்களாய், அதனுலேயே பரிஶுத்₃தி₄ பெற்ற மனத்தை

द्विविक्तं स्वेन रूपेणावस्थितमेनं पश्यन्ति। यतमाना अप्यकृतात्मानः- मत्प्रपत्तिविरहिणः तत एवासंस्कृतमनसः, तत एवाचेतसः—आत्मा- वलोकनसमर्थचेतोरहिताः, नैनं पश्यन्ति॥ ११ ॥

भा। एवं रविचन्द्राग्नीनामिन्द्रियसन्निकर्षविरोधितमसनिरसन- मुखेनेन्द्रियानुग्राहकतया प्रकाशकानां ज्योतिष्मतामपि प्रकाशकज्ञान- ज्योतिरात्मा मुक्तावस्थो जीवावस्थश्च भगवद्विभूतिरित्युक्तम्—* तद्धाम परमं मम * ममैवांशो जीवलोके जीवभूतस्सनातनः इति। इदानी- मचित्परिणामविशेषभूतमादित्यादीनां ज्योतिष्मतां ஜ्योतिरपि भगवद्विभूतिरित्याह—

---

யுடையவர்களான யோகிகள். (ஆத்மநி அவஸ்திதம் ஏநம்) ஶரீரத்தில் இருந்தபோதிலும் ஶரீரத்தைக் காட்டிலும் வேறுபட்டவனாய், ஜ்ஞான வடிவினனாய் இருக்கும் இவனை. இங்கு ஆத்மஶப்தம் ஜீவாத்மாவுக்கு இருப்பிடத்தைச் சொல்லுகையாலே ப்ரக்ருதமான ஶரீரத்தையே குறிக்கிறது. (பஶ்யந்தி) ஶரீரத்தி லிருந்தபோதிலும் முற்கூறியபடி கர்மயோகம் முதலானவற்றால் முயன்று பரிஶுத்தி பெற்ற மனத்தை உடையவர்களாகையாலே, யோகமாகிற கண்ணைக்கொண்டு ஆத்மாவை உள்ளபடி காண்கிறார்கள் என்று கருத்து. (யதந்த: அபி அக்ருதாத்மாந:) என்னை ஶரணமடையாமல் முயற்சி செய்பவர்களோவெனில், அது காரணமாகவே மனப்பரிஶுத்தியடையாதவர்களாய் இருக்கிறார்கள். (அசேதஸ:) அது காரணமாகவே ஆத்மாவைக் காணவல்ல நெஞ்சில்லாதவர்களாயிருக்கிறார்கள். இவர்களுக்கு நெஞ்சம் இருந்தபோதிலும், அதற்கு ஆத்மாவைக் காண்பதற்கு வல்லமை இல்லாமையாலே, அது இருந்தும் இல்லாததாகவே ஆகும் என்று கருத்து. (ஏநம் ந பஶ்யந்தி) இவ்வாத்மாவை ஶரீரத்தைக் காட்டிலும் வேறுபட்டவனாய் ஜ்ஞான வடிவினனாகக் காண்பதில்லை. 11.

यदादित्यगतं तेजो जगद्भासयतेऽखिलम् ।
यच्चन्द्रमसि यच्चाग्नौ तत्तेजो विद्धि मामकम् ॥ १२ ॥

12. யதா₃தி₃த்யக₃தம் தேஜோ ஜக₃த் ப₄ாஸயதேऽகி₂லம் |
யச்சந்த்₃ரமஸி யச்சாக்₃நௌ தத்தேஜோ வித்₃தி₄ மாமகம் ||

ஆதி₃த்யக₃தம் —ஆதி₃த்யனிடம் இருக்கும், யத் தேஜ:— யாதொரு தேஜஸ்ஸானது, அகி₂லம் ஜக₃த்—உலகனைத்தையும், ப₄ாஸயதே — ஒளிவிடச்செய்கிறதோ, சந்த்₃ரமஸி யத் — சந்த்₃ரனிடமுள்ள எந்தத்தேஜஸ் (உலகனைத்தையும் ஒளிவிடச் செய்கிறதோ), யத் ச அக்₃நௌ — அக்₃னியிலுள்ள எந்தத் தேஜஸ் (உலகனைத்தையும் ஒளிவிடச் செய்கிறதோ), தத் தேஜ: — அந்தத் தேஜஸ்ஸை, மாமகம் — என்னுடையதாக, வித்₃தி₄—அறிவாயாக.

---

ஆதித்தன் பானின் றனைத்துலகுந் தான்விளக்குஞ்
சோதிச் சுடர்சோமன் சூழங்கி—மீதிலகி
மன்னுமொழி தன்னின் வனப்பதுவு மன்னனே
யென்னதென வுற்றறிநீ யேய்ந்து. 12.

---

12. இதுவரையில் ஆத்மாவாகிற சோதி தன் விபூ₄தியே (செல்வமே) என்று சொல்லப்பட்டது. இனி, அதைப் பிரகாசிக்கச் செய்யமுடியாதவை என்று சொல்லப்பட்ட மற்ற ப்ராக்ருதச் சோதிகளும் தன் செல்வமே என்று கூறுகிறான் இந்த ஶ்லோகத்தில். ஆறு ஏழாவது ஶ்லோகங்களில் "சூரியன், சந்திரன், அக்₃னி ஆகிய மூன்றும் இந்த்₃ரியங்கள் பொருள்களோடு தொடர்பு கொள்வதற்குத் தடையான இருளைப்போக்குவதன் மூலம் பொருள்களைப் பிரகாசிக்கச் செய்வதால் இந்திரியங்களுக்கு உதவும் சோதிகளாயுள்ளன. அவற்றையும் பிரகாசிக்கச் செய்யும் ஞானச்சோதியாயிருக்கும் முக்த ஜீவனும் ப₃த்₃த₄ ஜீவனும் என் செல்வமாகவேயிருப்பவர்" என்று சொல்லப்பட்டது. இந்த ஶ்லோகத்தில் அசித்தின் பரிணாமமான ஸூர்யன் முதலான சோதிகளின் ஒளியும் தன் செல்வமே என்று காட்டுகிறான்.

भा ।। अखिलस्य जगतो भासकमेतेषामादित्यादीनां यत्तेजः, तन्मदीयं तेजः— तैस्तैराराधितेन मया तेभ्यो दत्तमिति विद्धि ।। १२।।

---

மன்னனே-அரசனான அர்ஜுநனே! ஆதித்தன் பால் நின்று-ஸூர்யனிடமிருந்துகொண்டு, அனைத்துலகும் தான் - எல்லா உலகையும், விளக்கும் சோதி — ஒளிவிடச்செய்யும் ஒளியும், சுடர் சோமன் — பிரகாசிக்கும் சந்திரன், சூழ் அங்கி — சூழ்ந்து எரிக்கும் அக்₃னி, மீது இலகி—இவற்றில் இருந்து கொண்டு (உலகனைத்தையும் ஒளிவிடச்செய்யும் ஒளியும்) என்னது — என்னுடையது, அதுவும் — அந்த ஒளி, மன்னும் மொழி தன்னின் வனப்பு — (அந்த ஸூர்யன் முதலான தேவர்கள் என்னைக் குறித்துச் செய்த) நிலையான துதிகளாலுண்டான சிறப்பு, என — என்று, நீ ஏய்ந்து உற்று அறி — நீ பொருந்தி நன்கு அறிவாயாக.

---

(ஆதி₃த்யக₃தம் யத்தேஜ: அகி₂லம் ஜக₃த் ப₄ாஸயதே) ஸூர்யனிடமிருக்கும் யாதொரு ஒளியானது உலகனைத்தையும் பிரகாசிக்கச் செய்கிறதோ. (யத் சந்த்₃ரமஸி) சந்திரனிலிருக்கும் யாதொரு ஒளியானது உலகனைத்தையும் பிரகாசிக்கச் செய்கிறதோ. (யச்ச அக்₃நௌ) அக்₃னியிலிருக்கும் யாதொரு ஒளி உலகனைத்தையும் பிரகாசிக்கச் செய்கிறதோ. "தேஜ: அகி₂லம் ஜக₃த் ப₄ாஸயதே" என்பதை, பிற்பாதியில் இரண்டிடங்களிலும் சேர்த்துக்கொள்ள வேண்டும். (தத் தேஜ: மாமகம் வித்₃தி₄) அந்த ஒளி என்னுடையது என்று அறிவாயாக. "ஒரு பொருளினுடைய ஒளி மற்றொருவருடையதாக எப்படி ஆகும்? ஆகையால் ஸூர்யன் முதலானவர்களைத் தானாகவே கண்ணன் கூறுவதாகத் தோன்றுகிறதே" என்னும் ஆக்ஷேபம் இங்கு எழுகிறது இதற்கு ஸமாத₄ானம் பின்வருமாறு :— ஸூர்யன் முதலானவர்களுக்கும் கண்ணனுக்கும் ஸ்வரூபைக்யம் கூறுவது பல ப்ரமாணங்களோடு முரண்படும். ஆகையால், "ஸூர்யன் முதலான சோதிகளின் அபி₄மானிகளான ஸூர்யன், சந்த்₃ரன் அக்₃னி ஆகிய தே₃வர்களால் ஆராதி₄க்கப்பட்ட நான் என்னுடைய ஒளியை அவர்களுக்குக் கொடுத்திருக்கிறேன்" என்று இங்கு கருத்துரைக்க வேண்டும். அதாவது-'என்னுடையதான ஒளியின் ஒரு துளியை ஒவ்வொரு ஜீவனுக்கும்

भा ॥ पृथिव्याश्च भूतधारिण्या धारकत्वशक्तिर्मदीयेत्याह—
गामाविश्य च भूतानि धारयाम्यहमोजसा ।
पुष्णामि चौषधीस्सर्वास्सोमो भूत्वा रसात्मकः ॥ १३ ॥

13. க₃ாமாவிஶ்ய ச பூ₄தாநி த₄ாரயாம்யஹமோஜஸா |
புஷ்ணாமி செளஷதீ₄ஸ்ஸர்வா: ஸோமோ பூ₄த்வா
ரஸாத்மக: ||

அஹம் — நான், க₃ாம் ஆவிஶ்ய—பூ₄மியினுள் வியாபித்து, பூ₄தாநி — (எல்லாப் பொருள்களையும்), ஓஜஸா —

---

அவனுடைய கர்மாநுகு₃ணமாக எனது ஸங்கல்பத்தால் சிறிது காலம் கொடுத்திருக்கிறேன்' என்றதாகிறது. வேத₃வாக்யங்களும் "யேந ஸூர்யஸ் தபதி தேஜஸேத்₃த₄:" [காட₂க 3-9] [எந்தப் பரமாத்மாவாகிற சோதியாலே சூரியன் சோதியாகப் பிரகாஶிக்கிருனே] "யஸ்யாதி₃த்யோ ப₄ாமுபயுஜ்ய ப₄ாதி" [எந்தப் பரமாத்மாவின் ஒளியைப் பெற்று சூரியன் பிரகாஶிக்கிருனே] "ந தத்ர ஸூர்யோ ப₄ாதி ந சந்த்₃ரதாரகம் நேமா வித்₃யுதோ ப₄ாந்தி குதோऽயமக்₃நி: | தமேவ ப₄ாந்தமநுப₄ாதி ஸர்வம் தஸ்ய ப₄ாஸா ஸர்வமித₃ம் விப₄ாதி ||" [முண்ட 3-2-11] [அந்தப் பரமாத்மாவிடத்தில் சூரியனே, சந்திரனே, நக்ஷத்திரங்களோ, மின்னல்களோ பிரகாஶிப்பதில்லை. அக்₃னியைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? பிரகாஶிக்கும் அவனைப் பின்பற்றியே எல்லாச் சோதிகளும் ஒளிவிடுகின்றன. அவனுடைய ஒளியாலே இவையனைத்தும் ஒளிவிடுகின்றன] என்று ஓதுகின்றனவன்றோ. "'ஆதி₃த்யனிடமிருக்கும் சோதி' என்று கூறியது ஆதி₃த்யனிடமுள்ள சைதன்யச் சோதியே" என்று பொருள் கொண்டார் ஶங்கரர். அப்பொருளில் 'அந்தச் சோதி உலகனைத்தையும் பிரகாசிக்கச் செய்கிறது' என்று இங்கு கூறியது பொருந்தாது. ஆதி₃த்யனிடமுள்ள அறிவு நமக்குக் குடம் முதலானவற்றைப் பிரகாஶிக்கச் செய்வதில்லையே. "எல்லாப்பொருள்களிலும் சைதன்யமிருந்த போதிலும், கண்ணுடியில் முக₂ம் தெளிவாகப் பிரகாஶிப்பது போலே, ஸத்வம் மிகுதியாயிருக்கையாலே ஆதி₃த்யன் முதலானவற்றில் சைதன்யம் சிறப்பாகப் பிரகாஶிக்கிறது" என்று அவர் கூறியதும் அஸாரம். அத்₃வைதமதத்தில் முக₂ம் கண்ணுடியிற் போலே சைதன்யம் ஒரு பொருளில் ப்ரதிப₂லிப்பது பொருந்தாதன்றோ

मा ॥ अहं पृथिवीमाविश्य सर्वाणि भूतान्योजसा – समाप्रतिहत-सामर्थ्येन धारयामि । तथाऽहममृतरसमयस्सोमो भूत्वा सर्वौषधीः पुष्णामि ॥ १३ ॥

என்னுடைய தடையற்ற திறமையாலே, த₄ாரயாமி— தாங்குகிறேன், ரஸாத்மக: ஸோம: பூ₄த்வா — அம்ருதரஸ மயமான சந்திரனுகி; ஸர்வா: ஓஷதீ₄: — எல்லாப் பயிர் களேயும், புஷ்ணுமி — போஷிக்கிறேன்.

பூதலத்தின் மேவியே பூதங்க ளன்றரிப்பன்
மீதடர்த்து நின்ற மிகுமிடுக்காற்—சீதளஞ்சேர்
சோமனென நின்றமுதஞ் சோர்ந்தே பயிரெல்லாஞ்
சேம முறநிறைப்பன் சேர்ந்து. 13.

நான்—நான், பூதலத்தில் மேவியே - பூ₄மியில்நுழைந்து, மீது அடர்த்து நின்ற மிகு மிடுக்கால்—அனைத்தையும் வெற்றி கொண்டு விளங்கும் என் பெரிய திறமையாலே, பூதங்கள் தரிப்பன் — எல்லாப் பொருள்களேயும் தாங்கு வேன், சீதளம சேர் சோமன் என நின்று —குளிர்ந்த அம்ருதரஸத்தோடு கூடிய சந்திரனுக நின்று, பயிர் எல் லாம் சேர்ந்து — எல்லாப் பயிர்களேயும் (கிரணங்களாலே) அடைந்து, அமுதம் சோர்ந்தே — அம்ருதத்தைப் பெய்து, சேமம் உற நிறைப்பன் — (அவை) வளரும்படி நிறைவு செய்வேன்.

13. பிராகிருதச் சோதிகளான ஸூர்யன் முதலானவற்றுக் குள்ளதான — பொருள்களேப் பிரகாசிக்கச் செய்யும் சக்தி தன்னுடையதே என்று சென்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்டது இனி, பூ₄மியின் த₄ாரணஶக்தியும், சந்திரனின் போஷணஶக்தியும தனனுடையதே என்று இந்த ஶ்லோகத்திலும், ஜாட₂ராக்₃னியின் ஜீர்ணம் செய்யும் ஶகதி தன்னுடையதே என்று அடுத்த ஶ்லோ கத்திலும கூறுவதன் மூலம், உலகிலுள்ள எல்லாப் பொருள்களுக்கும உள்ளதான ஒவ்வொரு காரியத்தைச் செய்யும் ஶக்திகளும் தன்னுடையவையே எனறு உபலக்ஷணமுறையாலே காட்டுகிருன் கண்ணன். பிரகரணத்தையொட்டிக் காணுமபோது, இந்த ஶ்லோகங்கள் கண்ணனின் ஶக்தியைத் தெரிவிப்பதில் மாத்திரம் நோக்குடையவையல்ல என்று விளங்குகிறதன்றே.

(அஹம் கா₃ம் ஆவிஶ்ய) நான் பூ₄மியினுள் நுழைந்து. "யஸ்ய ப்ருதி₂வீ ஶரீரம் ய: ப்ருதி₂வீமந்தரோ யமயதி" [எவனுக்கு பூ₄மி ஶரீரமோ, எவன் பூ₄மியின் உள் நுழைந்து நியமிக்கிறனோ] "ஏஷ ஸர்வபூ₄தாந்தராத்மா அபஹதபாப்மா தி₃வ்யோ தே₃வ ஏகோ நாராயண:" [இவனே எல்லாப்பொருள்களுக்கும் அந்தராத்மாவாய், குற்றமற்றவனாய், பரமபத₃த்தில் விளங்கும் ஒப்பற்ற தே₃வனான நாராயணன்] என்று ப்₃ருஹதா₃ரண்யகத்திலும், ஸுபா₃லோபனிஷத்திலும் அந்தர்யாமி ப்₃ராஹ்மணத்தில் சொல்லப் பட்டதன்றே. (பூ₄தாநி) அசைவனவும், அசையாதனவுமான எல்லா ஜீவராசிகளையும். (ஓஜஸா த₄ாரயாமி) என்னுடைய தடையற்ற திறமையினாலே த₄ரிக்கிறேன். இவ்வுலகிலுள்ள திடப் பொருள்கள் தம் மீது இருக்கும் பொருள்களைக் கீழே செல்ல முடியாதபடி தடுப்பதன் மூலம் த₄ரிக்கின்றன. நான் அப்படியல்லாமல் எனக்கேயுரிய ஶக்தியாலே பூ₄மியிலுள்ள எல்லாப் பொருள்களையும் த₄ரிக்கிறேன். நான் நுழைந்து எனது ஶக்தியாலே த₄ரிக்காவிடில் பூ₄மியின் த₄ரிக்கும் சக்தியும் செயல் படமாட்டாது என்று கருத்து. வேத₃வாக்யங்களிலும், "யேந த்₃யௌருக்₃ரா ப்ருதி₂வீ ச த்₃ருடே₄" [யஜு 4-1-8-5] [பிரகாசிக்கும் த்₃யுலோகமும் பூ₄மியும் எந்தப் பரமாத்மாவால் த₄ரிக்கப்பட்டு உறுதியாக நிற்கின்றனவோ] "ஸ தா₃த₄ாரப்ருதி₂வீம் த்₃யாமுதேமாம்" [யஜு 4-2-8-2][அந்தப்பரமாத்மா இந்த பூ₄மியையும், த்₃யுலோகத்தையும் த₄ரிக்கிறன்] "கிம் ஸ்விதூ₃த்ராந்தராபூ₄தம் யேநேமே வித்₄ருதே உபே₄ விஷ்ணு நா வித்₄ருதே பூ₄மி இதி வத்ஸஸ்ய வேத₃நா"[யஜு ஆர 1-8-2][பூ₄மியும் தே₃வலோகமுமாகிற இவை இரண்டும் எதனால் த₄ரிக்கப்படுகின்றனவோ, இவற்றினிடையில் (அப்படி த₄ரித்துநிற்கும்) பொருள் எது? இவ்விரு உலகங்களும் விஷ்ணுவினாலே த₄ரிக்கப்படுகின்றன என்பது வத்ஸர் எனும் ருஷியின் ஸாக்ஷாத்காரமாகும்] "ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸநே கா₃ர்க்கி₃ த்₃யாவாப்ருதி₂வ்யௌ வித்₄ருதே திஷ்ட₂த:" [ப்₃ருஹ 5-8-9] [கா₃ர்க்கி₃! இந்தப்பரமாத்மாவின் நியமனத்தாலேயேத்₃யுலோகமும், பூ₄மியும் த₄ரிக்கப்பட்டு நிற்கின்றன] என்று முழங்கப் பட்டதன்றே. இனி, பிற்பாதியாலே சந்த்₃ரன் பயிர்களைத் தன் அமுத கிரணங்களாலே போஷிப்பதும் நான் என் சக்தியாலே செய்வதே என்கிறன். (ரஸாத்மக: ஸோம: பூ₄த்வா) அமுதரஸங்கள் நிரம்பிய சந்திரனாயிருந்துகொண்டு "கா₃மாவிஶ்ய" என்ற விடத்திற்போலே சந்திரனை ஶரீரமாகக்கொண்டு என்றே பொருள் கொள்ளவேண்டும். சந்திரன் அமுத ரஸங்கள் நிரம்பியவன் என்பது சாஸ்திரங்களில் பிரஸித்₃த₄மாகையாலே, இப்படிப்பொருள்

अहं वैश्वानरो भूत्वा प्राणिनां देहमाश्रितः ।
प्राणापानसमायुक्तः पचाम्यन्नं चतुर्विधम् ॥ १४

14. அஹம் வைஶ்வாநரோபூ₄த்வா ப்ராணிநாம் தே₃ஹ மாஶ்ரித: |
ப்ராணுபாநஸமாயுக்த: பசாம்யந்நம் சதுர்வித₄ம் ||

அஹம்—நான், வைஶ்வாநர: பூ₄த்வா — ஜாட₂ராக்₃னியாகி, ப்ராணிநாம் — எல்லா ஜீவர்களின், தே₃ஹம் ஆஶ்ரித: — தே₃ஹத்திலும் இருப்பவனுய், சதுர்வித₄ம் அந்நம்—கடித்தும், உறிஞ்சியும், நக்கியும், குடித்தும் உண்ணப்படும் நாலுவகைப்பட்ட உணவை, ப்ராணுபாந ஸமாயுக்த:—ப்ராணன், அபானன் ஆகியவற்ருேடு கூடியவனுய், பசாமி ஜீர்ணமடையச் செய்கிறேன்.

---

நானமர்ந்து நின்றுலகி ஞடு முயிருடலி
லூன மறவளரு மொள்ளெரியாத்—தான்கலவா
வேல்வகைசேர் வாயு விரண்டா லறப்புசிப்ப
ஞல்வகைசே ரன்னத்தை நன்கு. 14.

நான்-நான், உலகில் நாடும் உயிர் உடலில் — உலகில் உள்ள ஜீவர்களின் உடலில், ஊனம் அற வளரும் ஒள் எரியா அமர்ந்து நின்று—குறைவில்லாமல் வளர்ந்துவரும் ஜாட₂ராக்₃னி எனும் நெருப்பாகப் பொருந்தி நின்று, நால் வகை சேர் அன்னத்தை — கடித்தும், உறிஞ்சியும், நக்கியும், குடித்தும் உண்ணப்படும் நாலுவகைப்பட்ட உணவை, நன்கு தான் கலவா — நன்ருகக் கலந்து, ஏல்வகை சேர் வாயு இரண்டால் — வ்ருத்தி ரூபமாகச் சேர்ந்த ப்ராணன், அபானன் ஆகிய இரு வாயுக்களோடு கூடியவனுய், அற புசிப்பன்—ஜீர்ணமாகும்படி உண்கிறேன்.

---

கொள்ளப்பட்டது, (ஸர்வாஶ்ச ஓஷதீ₄: புஷ்ணுமி) எல்லாப்பயிர்களேயும் சந்திர கிரணங்களாலே அமுதரஸத்தைப் பொழிந்து போஷிக்கிறேன். "ரஸாத்மக: ஸோம:" என்று விஶேஷித்ததாலே இப்படியே பொருள் கொள்ளவேண்டும். பூமியையும் சந்திரனேயும் வியாபித்து என் சக்தியாலேயே நான் ஸர்வபூ₄தத₄ாரணத்தையும் பயிர்களின் போஷணத்தையும் செய்கிறேன் என்றதாயிற்று. 13.

भा ॥ अहं वैश्वानरः-- जाठरानलो भूत्वा सर्वेषां प्राणिनां देहमाश्रितः तैर्भुक्तं खाद्यचो[चू]ष्यलेह्यपेयात्मकं चतुर्विधमन्नं प्राणापानवृत्तिभेदसमायुक्तः पचामि ॥ १४ ॥

---

14. ஜாட₂ராக்₃னியின் ஜீர்ணம் செய்யும் சக்தியும் தன்னுடையதே என்கிறுன். (அஹம் வைஶ்வாநரோ பூ₄த்வா) நான் 'வைஶ்வாநரன்' என்று அழைக்கப்படும் ஜாட₂ராக்₃னியாகி. ''கா₃ மாவிஶ்ய'' (13) என்றவிடத்திற்போலே, 'சரீரமான ஜாட₂ராக்₃னியை வியாபித்து' என்று பொருள்படுகிறது. (ப்ராணிநாம் தே₃ஹமாஶ்ரித:) எல்லா ஜீவராசிகளின் உடல்களிலும் இருப்பவனுய். ''கோஷ்டே₂க்₃நிர் பே₄க்துமிச்ச₂தி'' [பா₄ர-மோக்ஷ த₄ர்மம் 245—8] [வயிற்றிலிருக்கும் ஜாட₂ராக்₃னி உணவை எரித்து உண்ண விரும்புகிறது] என்று உணவைச் சீரணிக்கச் செய்வதாய், வயிற்றிலுள்ளதாகக் கூறப்படுகின்றதன்றே இந் நெருப்பு. (சதுர்வித₄மந்நம் பசாமி) சோறு பணியாரங்கள்போலே பல்லால் கடித்துண்ணப்படுவது, பாயஸம்முதலானவற்றைப்போலே உறிஞ்சி உண்ணப்படுவது, தேன் முதலானவற்றைப்போலே நாவால் நக்கி உண்ணப்படுவது, பால் முதலானவற்றைப்போலே பருகி உண்ணப்படுவது என்று அந்த ஜிவராசிகளால் உண்ணப்படும் நாலு வகைப்பட்ட உணவையும் சீரணிக்கச் செய்கிறேன். ''த்ரேதா₄ விஹிதம் வா இத₃மந்நம் அஶநம் பாநம் க₂ாத இதி'' [இவ்வுணவு நாவால் உண்ணப்படுவது, பருகி உண்ணப்படுவது, கடித்து உண்ணப்படுவது என்று மூன்று வகைப்படும்.] என்னும் வசனத்தில் உணவை மூன்று வகையாகப் பிரித்திருக்க, இங்கு நாலு வகையாகக் கூறுவது எப்படி?எனில், உறிஞ்சி உண்ணப்படும் பாயஸம் முதலானவற்றையும், நக்கி உண்ணப்படும் தேன் முதலானவற்றையும் 'அஶநம்' என்று ஒரே வகையாக்கி அங்கு சொல்லியிருப்பதை இங்கு இரண்டாகப் பிரித்திருக்கையாலே நாலாகிறதாகையால் விரோத₄மில்லை. (ப்ராணுபாநஸமாயுக்த: பசாமி) ப்ராணன் அபானன் என்னும் வ்ருத்திகளையுடைய வாயுவோடு கூடிநின்று முற்கூறிய நாலுவகைப்பட்ட உணவை ஜீர்ணமடையச் செய்கிறேன்.

भा ॥ अत्र परमपुरुषविभूतिभूतौ सोमवैश्वानरौ ※ अहं सोमो भूत्वा ※ वैश्वानरो भूत्वेति तत्सामानाधिकरण्येन निर्दिष्टौ। तयोश्च सर्वस्य भूतजातस्य च परमपुरुषसामानाधिकरण्यनिर्देश-हेतुमाह —

सर्वस्य चाहं हृदि सन्निविष्टो मत्तः स्मृतिर्ज्ञानमपोहनं च ।
वेदैश्च सर्वैरहमेव वेद्यो वेदान्तकृद्वेदविदेव चाहम् ॥ १५

---

"அபாநப்ராணயோர் மத்₄யே ப்ராணாபாநஸமாஹித: |
ஸமந்வித: ஸமாநேந ஸம்யக் பசதி பாவக: ||"

[ப₄ாரத-ஆநு 246-23]

[ஆஸநவாயிலிருக்கும் அபாந வாயுவுக்கும், ஹ்ருத₃யத்திலிருக்கும் ப்ராணவாயுவுக்கும் இடையில் (வயிற்றில்) அந்த ப்ராணாபாந வாயுக்களால் உதவப்பெற்று ஸமாநவாயுவோடும் கூடிநின்று ஜாட₂ராக்₃னி உணவைச் சரிக்கச் செய்கிறது] என்று சொல்லப் பட்டதன்றோ. ப்ராணன், அபானன், ஸமாநன, உதா₃னன், வ்யா னன் என்று ஐந்து வ்ருத்திகளை (நிலைகளை) உடையதான ஒரு வாயு விஶேஷமே இச்செயலைச் செய்கிறது என்னும் விஷயம் "பஞ்சவ்ருத்திர் மநோவத்₃வ்யபதி₃ஶ்யதே" [2-4-11] [மனம் பல செயல்களைச் செய்யும்போது பல பெயர்களால் வழங்கப் படுவதுபோலே, ஒரு வாயுவே பல செயல்களைச் செய்யும்போது ப்ராணன், அபானன் முதலான ஐந்து பெயர்களால் வழங்கப் படுகிறது.] என்னும் ஸூத்ரத்தின் பா₄ஷ்யத்தில் "ப்ராணோऽபாநோ வ்யாந உதா₃நஸ் ஸமாந இத்யேதத் ஸர்வம் ப்ராண ஏவ" [ப்₃ருஹ 1-5-3] [ப்ராணன், அபானன், வ்யானன், உதா₃னன், ஸமானன் என்னும் இவ்வைந்தும் ப்ராணனாகிற ஒன்றேயாகும்.] என்னும் ஶ்ருதியைக்கொண்டு ஸ்ரீபா₄ஷ்யகாரரால் விளக்கப்பட்டது இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கது. ஆக, இவ் விரண்டு ஶ்லோகங்களிலும் பூ₄மியின் தா₄ரணஶக்தியும், சந்திர னின் போஷணஶக்தியும், ஜாட₂ராக்₃னியின் ஜீர்ணம் செய்யும் ஶக்தியும் தன்னுடையதே எனக் காட்டுவதன் மூலம், உலகில் உள்ள எல்லாப் பொருள்களுக்கும் உள்ளதான ஒவ்வொரு காரி யத்தைச் செய்யும் ஶக்திகளும் தன்னுடையவையே எனக் காட்டி னானாயிற்று. 14.

भा ॥ तयोस्सोमवैश्वानरयोः सर्वस्य च भूतजातस्य सकल-प्रवृत्तिनिवृत्तिमूलज्ञानोदयदेशे हृदि सर्वं मत्संकल्पेन नियच्छन्

15, ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி₃ ஸந்நிவிஷ்டோ
மத்த: ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநம் ச।
வேதை₃ஶ்ச ஸர்வைரஹமேவ வேத்₃யோ
வேதா₃ந்தக்ருத்₃வேத₃விதே₃வ சாஹம் ॥

அஹம்—நான், ஸர்வஸ்ய ச — எல்லா ஜீவராசிகளுடையவும், ஹ்ருதி₃ — ஹ்ருத₃யத்தில், ஸந்நிவிஷ்ட: — ஆத்மாவாக நுழைந்து நிற்கிறேன், (அனைவருடைய) ஸ்ம்ருதி:— நினைவும், ஜ்ஞாநம்— வஸ்துநிர்ணயமும், அபோஹநம் ச — மறதியும், மத்த: ஏவ — என்னிடமிருந்தே உண்டாகின்றன; ஸர்வை: வேதை₃: ச-எல்லா வேத₃ங்களாலும், அஹம் ஏவ- நானே, வேத்₃ய: — அறியப்படுகிறேன்; வேதா₃ந்தக்ருத் — வேத₃விதி₄களின் ப₂லனை அளிப்பவனும், வேத₃வித் ச — வேத₃த்தை அறிந்தவனும், அஹம் ஏவ — நானே.

15. முன் இரு ஶ்லோகங்களிலும் பரமபுருஷனை தன்னுடைய செல்வமாயிருக்கும் ஸோமனையும் ஜாட₂ராக்₃னியையும் எடுத்து, "அஹம் ஸோமோ பூ₄த்வா—வைஶ்வாநரோ பூ₄த்வா" என்று தானே அவ்விரண்டுமாவதாக அவர்களோடு தனனை ஒரே வேற்றுமையில் படித்தான் கண்ணன். அவர்களையும், உலகிலுள்ள எல்லாப்பொருள்களையும் பரமபுருஷனை தன்னோடு ஒரே வேற்றுமையில் படிப்பதற்குக் காரணத்தை இந்த ஶ்லோகத்தில் கூறுகிறான். (ஸர்வஸ்ய ச ஹ்ருதி₃ அஹம் ஸந்நிவிஷ்ட:) முற்கூறிய ஸோம வைஶ்வானரர்களுடையவும், மற்றுள்ள எல்லா ஜீவராசிகளுடையவும் ஹ்ருத₃யத்தில் நான் நுழைந்து நிற்கிறேன். சகாரம் உக்தஸமுச்சயமாய், முற்கூறிய ஸோமவைஶ்வாநரர்களைக் கூட்டுகிறது "ஸர்வஸ்ய ஹ்ருதி₃" என்கையாலே, இங்கு ஸர்வ ஶப்₃த₃ம் ஹ்ருத₃யமுடைய எல்லாஜீவராசிகளையும் காட்டுகிறது. "ஹ்ருதி₃" என்கையாலே அந்த ஜீவராசிகளை நியமிப்பதற்காக, அவர்களுடைய ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்கு மூலமான ஞானம் வெளிப்படும் இடமான ஹ்ருத₃யத்தில் நான் நுழைந்து நிற்கிறேன் என்று உணர்த்தப்படுகிறது.

अहमात्मतया सन्निविष्टः। तथाहुश्श्रुतयः * अन्तः प्रविष्टश्शास्ता जनानां सर्वात्मा (य आ. ३. ११. २) * यः पृथिव्यां तिष्ठन् (बृ ५. ७. ३) * य आत्मनि तिष्ठन्नात्मनोऽन्तरो...यमयति,

---

எல்லா ரிதயத் திருப்பேனு னென்னாலே
நல்லார் நினைவறிவு நாட்டமாஞ் — சொல்லார்ந்த
வேதங்கள் யாவைக்கும் வேத்தியனான் மேவுபயன்
மீதந் ததுவறிவேன் மிக்கு. 15.

நான்—நான், எல்லார் இதயத்து இருப்பேன்—எல்லா ஜீவராசிகளின் இதயத்திலும் (ஆத்மாவாக) இருக்கிறேன். நல்லார் நினைவு—அறிவுடையவர்களின் நினைவும், அறிவு—வஸ்து நிர்ணயமும், நாட்டம்—ஊகமும், என்னாலே ஆம்—என்னிடமிருந்தே உண்டாகின்றன. சொல் ஆர்ந்த வேதங்கள் யாவைக்கும் — பல தே₃வதைகளைச் சொல்லும் வாக்கியங்கள் நிறைந்த வேத₃ங்கள் அனைத்துக்கும், வேத்தியன் நான் — பொருளாயிருப்பவன் நான், அது மேவு பயன் மீதந்து—வேத₃விதி₄களின் பயன்களை அளித்து, அது மிக்கு அறிவேன்—அந்த வேத₃ங்களை மிகவும் அறிபவனாகவும் இருப்பவன் நானே.

---

"ஸந்நிவிஷ்ட:" என்கையாலே, ஆகாசம்போலே வெறும் வியாப்தியாயிராமல், அனைவரையும் எனது ஸங்கல்பத்தாலே நியமித்துக்கொண்டு ஆத்மாவாய் நுழைந்து நிற்கிறேன் என்று சொல்லப்படுகிறது. இவ்வண்ணமாக அனைவரையும் நியமித்துக் கொண்டு ஆத்மாவாக எம்பெருமான் வியாபித்து நிற்கிறான் என்று பல வேத₃வாக்கியங்கள் முழங்குகின்றன. அவையாவன;- "அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா" [யஜு-ஆர 3-11-2] [அனைவர்க்கும் ஆத்மாவான பரமபுருஷன் அனைவரையும் உள்நுழைந்து நியமிக்கிறான்.] "ய: ப்ருதி₂வ்யாம் திஷ்ட₂ந்" [எவனொருவன் பூ₄மியில் நிற்கிறானோ] என்று தொடங்கி, "ய ஆத்மநி திஷ்ட₂ந் ஆத்மநோऽந்தர:......யமயதி" [ப்₃ருஹ-

(बृ ५. ७. २२. मा) * पद्मकोशप्रतीकाशं हृदयं चाप्यधोमुखम् (ना) * अथ यदिदमस्मिन् ब्रह्मपुरे दहरं पुण्डरीकं वेश्म (छा ८.१.१)इत्याद्याः। स्मृतयश्च * शास्ता विष्णुरशेषस्य जगतो यो जगन्मयः(वि १.१७ २०), * प्रशासितारं सर्वेषामणीयांसमणीयसाम् (मनु. १२. १२२) *यमो वैवस्वतो राजा यस्तवैष हृदि स्थितः (मनु. ८. ९२)इत्याद्याः।

---

[5-7—8...22] எவன் ஆத்மாவின் உள்ளும் புறமும் வியாபித்து அதை நியமிக்கிருனோ] "பத்3மகோஶப்ரதீகாஶம் ஹ்ருத3யம் சாப்யதோ4முக2ம்..... தஸ்யா: ஶிகா2யா மத்4யே பரமாத்மா வ்ய வஸ்தி2த:" [தை-நா 11] [இதயத்தாமரையின் நடுவிலுள்ள திவ்யமங்கள விக்3ரஹத்தில் பரமாத்மா எழுந்தருளியிருக்கிருன்] "அத2 யதி3த3மஸ்மிந் ப்3ரஹ்மபுரே த3ஹரம் புண்ட3ரீகம் வேஶ்ம" [சா2ந் 8-1-1] [ப்3ரஹ்மத்தின் இருப்பிடமான இந்த சரீரத்தில் ஸூக்ஷ்மமான தாமரை போன்ற இதயத்தில் பரமாத்மா எழுந்தருளியிருந்து நியமிக்கின்ருன்] முதலான பல வேத3வாக்யங்கள். வேத3த்தைவிளக்கவந்த ஸ்ம்ருதிகளும் இதையே கூறுகின்றன அவையாவன :— "ஶாஸ்தா விஷ்ணுரஶேஷஸ்ய ஜக3தோ யோ ஜக3ந்மய:" [வி-பு-1-17-20] [அனைத்துலகிற்கும் அந்தர்யாமியான விஷ்ணு அதை உள்நுழைந்து நியமிக்கிருன.] "ப்ரஶாஸிதாரம் ஸர்வேஷாம் அணியாம்ஸமணீயஸாம்" [மநு 12-122] [அணுவான ஜீவர்களைக்காட்டிலும் அணுவாயிருப்பவனுய் அவர்களை நியமிப்பவனுன பரமபுருஷன்] "யமோ வைவஸ்வதோ ராஜா யஸ்தவைஷ ஹ்ருதி3 ஸ்தி2த:" [மநு 8-92] [எந்தப்பரம புருஷன் உனது ஹ்ருத3யத்தில் எழுந்தருளியிருக்கிருனோ அவன் மிக அழகியவனுய், ஸூர்யமண்ட3லத்தில் இருப்பவனுய், அனைவரையும் நியமிப்பவனுய் இருப்பவன்] முதலானவை. இனி, அடுத்த பாத3த் தாலே எல்லா ஜீவர்களுடைய ஹ்ருத3யத்திலும் இருந்துகொண்டு தான் செய்யும் காரியங்களைக் குறிக்கிருன்—(மத்த: ஸ்ம்ருதி: ஜ்ஞாநம் அபோஹநம் ச) என்னிடமிருந்தே அனைவருடைய நினைவும், வஸ்து நிர்ணயமும், மறதியும் உண்டாகின்றன முதல் பாத3த்தில் எல்லா ஜீவர்களுடைய ஹ்ருத3யத்திலும் தான் இருப் பதாகக் கூறுகையாலே, இங்கும் அந்த ஜீவர்கள் அனைவருடைய நினைவு முதலானவையும் தன்னிடமிருந்து உண்டாவதாகக் கூறுவ தாகக் கொள்ளவேண்டும். (ஸ்ம்ருதி:) ஏற்கனவே அனுப4விக்கப்

अतो मत्त एव सर्वेषां स्मृतिर्जायते; स्मृतिः—पूर्वानुभूतविषयमनुभवसंस्कारमात्रजं ज्ञानम्। ज्ञानम्—इन्द्रियलिङ्गागमयोगजो वस्तुनिश्चयः; सोऽपि मत्तः। अपोहनं च, अपोहनम्—ज्ञाननिवृत्तिः।

---

பட்ட ஒருபொருளைப் பற்றி அந்த அனுப₄வத்தால் உண்டான ஸம்ஸ்காரத்தால் மாத்திரம் உணரும் அறிவு. ப்ரகரணத்துக்குப் பொருந்தாதாகையாலே, இங்கு ஸ்ம்ருதி ஶப்₃த₃ம் ஶ்ருதியை விளக்கும் ஸ்ம்ருதியாக மாட்டாது. "ஸோऽயம் தே₃வத₃த்த:" [அன்று நான் பார்த்த தே₃வத₃த்தன் இவனே] முதலான இடங்களில் முதலில் அனுப₄வித்த விஷயத்தை நினைவுபடுத்துவதில் ஸம்ஸ்காரத்தோடு ப்ரத்யக்ஷமும் உதவிபுரிகிறது. "ப்ரத்யபி₄ஜ்ஞை" எனப்படும் அந்த அறிவை விலக்குவதற்காக, 'அந்த அனுப₄வத்தால் உண்டான ஸம்ஸ்காரத்தால் மாத்திரம் உணரும அறிவு' என்று இங்கு ஸ்ம்ருதி லக்ஷணம் கூறப்பட்டது. (ஜ்ஞாநம) இந்த்₃ரியங்களால் உண்டாகும் ப்ரத்யக்ஷ நிஶ்சயம், ஒரு ஹேதுவால் உண்டாகும் அனுமான நிஶ்சயம், ஶப்₃த₃ப்ரமாணத்தால் உண்டாகும் ஶாப்₃த₃நிஶ்சயம், யோகி₃களின் யோக₃த்தால் உண்டாகும் யோக₃நிஶ்சயம் என்று நாலு வகைப்பட்ட ப்ரமாணங்களாலுண்டான வஸ்து நிர்ணயமாகிற அறிவு. ஸ்ம்ருதி ரூபமான அறிவை முதலில் சொல்லிவிட்டபடியால் கோ₃ப₃லீவர்த்த₃ந்யாயத்தாலே இங்கு 'ஜ்ஞானம்' என்றது ஸ்ம்ருதியைக் குறிக்காமல் முற்கூறிய நாலுவகைப்பட்ட ப்ரமாணங்களாலுண்டாகும் வஸ்து நிர்ணயத்தையே குறிக்கிறது. இந்த வஸ்து நிர்ணயமும் என்னிடமிருந்தே உண்டாகிறது என்று கருத்து. (அபோஹநம் ச) மறதியும் என்னிடமிருந்தே உண்டாகிறது. "அபோட₄தோ₃ஷ:" [தோ₃ஷம் நீங்கப்பெற்றவன்] முதலான ப்ரயோக₃ங்களில் அபோஹந ஶப்₃த₃ம் நீங்குதல் என்னும் பொருளில் வழங்கப்பட்டுள்ளது. எதினின்றும் நீங்குதல் என்னும் கேள்வி எழுந்தவளவில் சற்று முன் சொல்லப்பட்ட ஜ்ஞானத்தினின்றும் நீங்குதல் என்று கொள்வதே உசிதமாகும். ஆகையால், அபோஹநஶப்₃த₃ம் மறதியைக் குறிக்கிறது, "அபபரீ வர்ஜநே" [அஷ்டாத்₄யாயீ 1-4-88] என்னும் ஸூத்ரத்தை அனுஸரித்து 'அப' என்னும் ஶப்₃த₃ம் நீங்குதலை உணர்த்துகையாலே இப்படிப்பொருள் கொள்ளப்பட்டது.

अपोहनम् — ऊहनं वा, ऊहनमूहः, ऊहो नामेदं प्रमाणमित्थं प्रवर्तितुमर्हतीति प्रमाणप्रवृत्त्यर्हताविषयं सामग्र्यादिनिरूपणजन्यं प्रमाणानुग्राहकं ज्ञानम्: स चोहो मत्त। एव वेदैश्च सर्वैरहमेव वेद्यः। अतोऽग्निसूर्यवायुसोमेन्द्रादीनां मदन्तर्यामिकत्वेन मदात्मकत्वात्तत्प्रति-

---

'அப' என்னும் சொல்பொருளற்றது என்று கொண்டு 'அபோஹந' ஶப்3த3ம் 'ஊஹனம்' எனப்படும் ஊஹத்தைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். இவ்வூஹத்தைப் பற்றி, "அத்4யாஹாரஸ்தர்க்க ஊஹ:" [அமரகோசம் 1-தீ4வர்க்க3ம்] என்று நிக4ண்டுவிலும் சொல்லப்பட்டது. ஊஹமாவது — "இந்த ப்ரமாணம் இவ்வண்ணமாகச் செயல்புரியத் தகுதியுடையது" என்று ப்ரமாணம் செயல் புரிவதற்குத் தகுதியைப் பற்றியதாய், அந்த ஜ்ஞானத்துக்கு ஸாமக்3ரீ முதலானவற்றை நிருபிப்பதால் உண்டாவதாய், அந்த ப்ரமாணத்துக்கு உதவி புரிவதான ஜ்ஞானம். உதாரணமாக, கண்ணால் ஒரு பொருளைக் காணும்போது உண்டாகும் உண்மையறிவு சாக்ஷுஷப்ரமை எனப்படுகிறது. அந்த உண்மையறிவுக்குத் தனிக்காரணமான ப்ரமாணம் கண் ஆகிற இந்த்3ரியமேயாகும். அது ஒருபொருளை அறியும்போது அப்பொருளையும் அதிலிருக்கும் அதன் உருவத்தையும் நிறம் முதலான தன்மைகளையும அறிகிறது. வெளிச்சம் முதலான ஸாமக்3ரிகள் இருக்கும் போதே இரண்டையும் அறிகிறது. அவை இல்லா விட்டால் இரண்டையும் அறிவதில்லை. இதிலிருந்து "இந்தக் கண்ணானது அந்தப் பொருளையறியும் கணத்திலேயே அதன் தன்மைகளையும் அறிகிறது" என்று ஊஹித்து உணர்கிறோம். இந்த ஊஹம் 'அந்த ப்ரத்யக்ஷ ப்ரமாணமானது உருவம் முதலான தன்மைகளையும் அவற்றையுடைய பொருளையும் ஒரே காலத்தில் அறிகிறதா? வெவ்வேறு காலத்தில் அறிகிறதா?' என்னும் ஐயத்தைப் போக்கி, "உருவம் முதலிய தன்மைகள் பொருளிலேயே இருக்கிறபடியால் இரண்டு அறிவும் ஒரே காலத்தில் உண்டாகிறது" என்று நிர்ணயிப்பதன்மூலம் இந்த ப்ரமாணத்துக்கு உதவி புரிகிறது. இத்தகைய ஜ்ஞானமே 'ஊஹம்' எனப்படுகிறது. 'அந்த ஊஹமும் என்னால் விளைவதே' என்கிறான் கண்ணன். (வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்3ய:) முதலில் கூறியபடி எல்லா ஜீவர்களுடைய ஹ்ருத3யத்திலும் நான் அந்தர்யாமியாயிருக்கையால், எல்லா வேத3 வாக்யங்களாலும் அறியப்படுமவன் நானே. "இப்படி ஸர்வாந்தர்யாமி

पादनपरैरपि सर्वैर्वेदैरहमेव वेद्यः, देवमनुष्यादिशब्दैर्जीवात्मेव । वेदान्तकृत् — वेदानाम् — * इन्द्रं यजेत, वरुणं यजेतेत्येवमादी-

யாயிருப்பதாலேயே, ஸூர்யன் வாயு ஸோமன் இந்த்3ரன் முதலான தே3வர்கள் என்னை அந்தர்யாமியாகக் கொண்டு எனக்கு ஶரீரமாயிருக்கையால், அவர்களைச் சொல்லுகிறவையாகக் காணப்படும் எல்லா வேத3வாக்யங்களாலும் நானே முக்2யமாகச் சொல்லப்படுகிறேன்; தே3வர், மனிதர் முதலான ஶப்3த3ங்கள் அந்தந்த உடல்களை மாத்திரம் குறிக்காமல், அவ்வுடல்களிலுள்ள ஜீவாத்மாக்களையே முக்2யமாகக் குறிப்பதுபோலே" என்று கருத்து. "நாராயணம் மஹாஜ்ஞேயம்" [தை-நா 11] [அறியத் தக்கவைகளுள் முக்2யமானவனுயிருப்பவன் நாராயணன்] "வசஸாம் வாச்யமுத்தமம்" [ஜிதந்தா] [சொற்களுக்கு முக்2யமான பொருளாயிருப்பவன் எம்பெருமான்] முதலான ப்ரமாணங்களிலும இவ்விஷயம் சொல்லப்பட்டதன்றோ. தே3வர் மனிதர் முதலான சொற்களாலே அந்தந்த உடல்கள் குறிக்கப் படுகின்றன என்பது லோக ப்ரஸித்3த4ம். ஆகையால் "அஹமேவ வேத்3ய:" என்ற 'ஏவ'காரத்தாலே ஶரீரமாயிருக்கும் அக்3னி முதலானவர்களைத் தள்ளமுடியாது. அதனுல் 'அக்3னி முதலானவர்களைக் காட்டிலும் முக்2யமாக அறியப் படுபவன் நான்' என்று ஏவகாரத்துக்குக் கருத்துரைக்கப் பட்டது. "சத்வார: பஞ்சத3ஶராத்ரா தே3வத்வம் க3ச்ச2ந்தி" என்று ஒரு யாக3த்தைச் செய்பவர்கள் தே3வத்தன்மையை அடைகிருர்கள் என்று கூறும் வேத3 வாக்யத்திலும், "ஶரீரஜை: கர்மதோ3ஷை: யாதி ஸ்த2ாவரதாம் நர:| வாசிகை: பக்ஷி ம்ருக3தாம் மாநஸைரந்த்யஜாதிதாம் ||" [மநு 12-9] [மனிதன் உடலால் செய்த தீச்செயல்களால் மரமாகிருன்; சொல்லால் செய்த தீச்செயல்களால் பறவை, விலங்கு முதலான திர்யக்கு களாகிருன். மனத்தால் செய்த தீச்செயல்களால் தாழ்ந்த மனித ஜாதியுடையவனுகிருன்] என்று மனோவாக்காயங்களால் செய்யப் பட்ட பாபச்செயல்களால் முறையே மனுஷ்ய திர்யக் ஸ்த2ாவரங் களாகிருன் என்று கூறும் மனு ஸ்ம்ருதி வாக்யத்திலும் தே3வ மனுஷ்ய திர்யக் ஸ்த2ாவர ஶப்3த3ங்கள் அந்தந்த உடல்களை மாத்திரம் குறிக்காமல் அவ்வுடல்களையுடைய ஜீவாத்மாக்களையே முக்2யமாகக் குறிப்பதைக் காண்கிறோமன்றோ. (வேத3ாந்த க்ருத்) "இந்த்3ரம் யஜேத" [ஶதபத2 5-1-6] "வருணம் யஜேத"[ஶதபத2 2-3-37] "ஐந்த்3ரம் த3த்4யமாவாஸ்யாயாம்" [யஜு 2-5-4-1]

नामन्तः — फलम्; फले हि ते सर्वे वेदाः पर्यवस्यन्ति; अन्तकृत् — फलकृत; वेदोदितफलस्य प्रदाता चाहमेवेत्यर्थः। तदुक्तं पूर्वमेव * यो यो यां यां तनुं भक्तः श्रद्धयाऽर्चितुमिच्छति (७. २१) इत्यारभ्य * लभते च ततः कामान् मयैव विहितान् हि तानिति. * अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च (९. २४) इति च। वेदविदेव चाहं — वेदविच्चाहमेव। एवं मदभिधायिनं वेदमहमेव वेद; इतोऽन्यथा यो वेदार्थं ब्रूते न स वेदविदित्यभिप्रायः ॥ १५ ॥

---

"ஐந்த்₃ரம் பயோ<ऽமாவாஸ்யாயாம்" "தாவதோ வாருணம்ஶ சதுஷ்கபாலாந் நிர்வபேத்" [யஜு॰ 2-3-12-1] என்று இந்திரன் வருணன் முதலான தே₃வதைகளைக் குறித்து யாக₃ம் செய்ய வேண்டும் என விதி₄க்கும் வேத₃வாக்கியங்களுக்குப் ப₂லனை அளிப்பவனும நானே. 'வேத₃ாந்தம்' என்று இங்கு உபனிஷத்தையோ, வேத₃நாமத்தையோ குறிப்பது பொருந்தாதாகையால், 'அந்த' ஶப்₃த₃த்திற்கு 'முடிவு' என்று பொருள் கொண்டு, வேத₃ாந்த ஶப்₃த₃த்தாலே வேத₃ வாக்யங்களின் முடிவாகிற ப₂லத்தைக் குறிப்பதே பொருந்தும். எல்லா வேத₃வாக்யங்களும் ப₂லனில் முடிவுறுவதாயிருக்கையால், 'அந்த' ஶப்₃த₃ம் ப₂லனைக் குறிக்கக் குறையில்லை. "எல்லா வேத₃வாக்யங்களாலும் முக்கியமாக அறியப்படுபவன் நானே" என்று எல்லாக் கர்மங்களாலும் ஆராதி₄க்கப்படுபவன் தானே என்று உணர்த்தியவுடன், அக்கர்மங்களுக்குப் ப₂லமளிப்பவனும் தானே என்று கூறுவதே பொருத்தமன்றோ. இவ்விஷயம் கீ₃தையில் முன்னமே "யோ யோ யாம் யாம் தநும் ப₄க்த: ஶ்ரத்₃த₄யார்ச்சிதுமிச்ச₂தி" [7-21] என்று தொடங்கி, "லப₄தே ச தத: காமாந் மயைவ விஹிதாந் ஹி தாந்" [7-22] என்பதீருகவும், "அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போ₄க்தா ச ப்ரபு₄ரேவ ச" [9-24] என்னுமிடத்திலும் சொல்லப்பட்டதன்றோ. (வேத₃விதே₃வ சாஹம்) வேத₃த்தை அறிந்தவனும் நானே. ஶ்லோகத்தில் உள்ளபடி அந்வயித்து "நான் வேத₃மறிந்தவனாகவேயிருக்கிறேன்" என்று

भा ॥ अतो मत्त एव सर्ववेदानां सारभूतमर्थं शृणु —
द्वाविमौ पुरुषौ लोके क्षरश्चाक्षर एव च ।
क्षरस्सर्वाणि भूतानि कूटस्थोऽक्षर उच्यते ॥ १६

16. த்₃வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரஶ்சாக்ஷர ஏவ ச ।
க்ஷரஸ்ஸர்வாணி பூ₄தாநி கூடஸ்தோ₂ऽக்ஷர உச்யதே ॥

லோகே — சாஸ்திரங்களில், க்ஷர ச அக்ஷர:ச த்₃வௌ இமௌ புருஷௌ ஏவ — (அழியும் இயல்வுள்ள அசேதன மான உடலோடு கூடியிருக்கையால்) க்ஷரபுருஷன் எனப்படும் ப₃த்₃த₄ஜீவனும், அழியும் இயல்வில்லாமையால் (அக்ஷரன்) எனப்படும் முக்தஜீவனுமாகிற இரண்டு (வகையான) இப்புரு ஷர்களே (பிரஸித்திபெற்றவர்கள்), க்ஷர: — க்ஷரபுருஷன், ஸர்வாணி பூ₄தாநி — எல்லா ப₃த்₃த₄ஜீவனுமாவான். அக்ஷர: — அக்ஷரபுருஷன், கூடஸ்த₂: உச்யதே — (அசித் ஸம்ப₃ந்த₄மற்ற) முக்தாத்மா எனப்படுகிறான்.

---

ஏவகாரம் அயோக₃வ்யவச்சே₂த₃த்தைக் கூறுவதாகக் கொள்வது பொருந்தாது; ப₄க₃வான் வேத₃த்தை அறிந்தவன் என்பதில் எந்த ஆக்ஷேபமும் எழாதாகையால், அதை ஏவகாரமிட்டு அழுத்திக்கூற வேண்டிய அவசியமில்லை. அதனாலேயே, "வேத₃விச்ச அஹமேவ" என்று கூட்டி, 'வேத₃த்தின் பொருளை அறிந்தவன் நானே' என்று ஏவகாரத்திற்கு அந்யயோக₃வ்யவச்சே₂த₃ப் பொருள் கொள்ளப்பட்டது. "யே ச வேத₃விதோ₃ விப்ரா:" [வேத₃ மறிந்த அந்தணர்கள் எவர்களோ (அவர்கள் கண்ணனைப் பழைமையான த₄ர்மமாக அறிகின்றனர்)] முதலானவிடங்களில் வேத₃த்தை மற்றவர்களும் அறிந்திருப்பதாகக் கூறியிருக்க' இங்கு "வேத₃மறிந்தவன் நானே" என்று கூறுவது எப்படிப் பொருந்தும்? எனில்: 'இவ்வண்ணமாக ஸர்வாந்தர்யாமியாகை யாலே எல்லா வேத₃ங்களும் என்னையே முக்கியமாகக் கூறுகின்றன என்பதை நானே அறிவேன். இவ்வுண்மையறியாமல் அந்தந்த வேத₃ வாக்யங்கள் இந்திரன் முதலான தே₃வர்களை மாத்திரமே குறிக்கின்றன என்று அறிபவன் வேத₃த்தை அறிய மாட்டான்" என்று இவ்வாக்கியத்திற்குக் கருத்தாகையாலே பொருந்தும். 15.

भा ॥ क्षरश्चाक्षरश्चेति द्वाविमौ पुरुषौ लोके प्रथितौ । तत्र

கண்ணா ருலகிற் கரனக் கரனென்றே
யெண்ணும் புருட ரிவரிருவர் — பண்ணாரும்
பூதவுயி ரெல்லாங் கரனும் பொருவில்சீர்
மீதவுயி ரக்கரனும் வேறு. 16.

கண் ஆர உலகில் — விரிவான சாஸ்திரங்களில், எண்ணும் புருடர் — பிரசித்தமாயுள்ள புருஷர்கள், கரன் அக்கரன என்றே இவா இருவா — (அழியும் இயல்வுடைய அசேதனமான உடலோடு கூடியிருக்கையால்) க்ஷரபுருஷன் எனப்படும் ப$_3$த்$_3$த$_4$ஜீவனும், அழியும் இயல்வில்லாமையால் 'அக்ஷரன்' எனப்படும் முக்த ஜீவனுமாகிற இருவகைப் பட்டவரே, பண் ஆரும பூத உயிா எல்லாம் கரன்ஆம் — வேத$_3$த்தில் காணப்படும் ப$_3$த்$_3$த$_4$ஜீவர்கள் அனைவரும் க்ஷரன் எனப்படுகின்றனர், வேறு—இவனிலும் வேறுபட்டு, பொரு இல் சீர் மீத உயிர் அக்கரன் ஆம் — ஒப்பற்ற ஞானத்தை உடைய அசித்தினின்றும் நீங்கிய முக்த ஜீவர்கள் அனைவரும் அக்ஷரன் எனப்படுகின்றனர்.

---

16. 'இப்படி வேத$_3$ங்களின் பொருளை அறிந்தவன் நானே யாயிருக்கையால் எல்லா வேத$_3$ங்களுக்கும் ஸாரமான அர்த்த$_2$த்தை என்னிடமிருந்தே கேட்பாயாக' என்று புருஷோத்தம வித்$_3$யையைக் கூறத் தொடங்குகிறான். (க்ஷர: ச அக்ஷர: ச த்$_3$வௌ ஏவ இமௌ புருஷௌ) க்ஷரன் அக்ஷரன் என்னும் இந்த இரண்டே புருஷர்கள். (லோகே) ஶாஸ்திரங்களில் பிரசித்தி பெற்றவர்கள். பதினெட்டாவது ஶ்லோகத்தில் "லோகே வேதே$_3$" என்று கூறப்படும் ஶ்ருதிஸ்ம்ருதிகள் இரண்டும "லோக்யதே அநேந இதி - லோக:" [அறிவதற்குக் காரணமாயிருக்கையாலே ஶாஸ்த்ரம் லோகமெனப்படுகிறது] என்னும் வ்யுத்பத்தியாலே இங்கு லோக ஶப்$_3$த$_3$த்தால் குறிக்கப்படுகின்றன. அங்கு 'ப்ரதி$_2$த:' என்றிருப்பதையொட்டி இங்கு 'ப்ரதி$_2$தௌ' என்னும் பத$_3$த்தைச் சேர்த்து, 'பிரசித்தி பெற்றவர்கள்' என்று பொருள் கொள்ளப்பட்டது. "அஜோ ஹ்யேகோ ஜுஷமாணோऽநுஶேதே ஜஹாத்யேநாம் பு$_4$க்தபோ$_4$கா$_3$மஜோऽந்ய:"[தை. நா 10-5, ஶ்வே

क्षरशब्दनिर्दिष्टः पुरुषो जीवशब्दाभिलपनीयब्रह्मादिस्तम्बपर्यन्तक्षरण-स्वभावाचित्संसृष्टसर्वभूतानि । अत्राचित्संसर्गरूपैकोपाधिना पुरुष इत्येकत्वनिर्देशः । अक्षरशब्दनिर्दिष्टः कूटस्थः अचित्संसर्गवियुक्तः स्वेन रूपेणावस्थितो मुक्तात्मा । स त्वचित्संसर्गाभावादचित्परिणाम-

---

4-5] [பிறப்பற்றவனான ஒருவன் (ப₃த்₃த₄ஜீவன்) மூல ப்ரக்ருதியை உகப்புடன் அனுப₄விக்கிறான். பிறப்பற்றவனான மற்றொருவன் (முக்த ஜீவன்) தான் அனுப₄வித்து வந்த இந்த மூலப்ரக்ருதியை விட்டுச் செல்கிறான்] முதலான ப்ரமாணங்கள் இங்கு லோக ஶப்₃த₃த்தாலே கருதப்படுகின்றன. இனி, ஶ்லோகத்தின் பிற்பாதியாலே க்ஷராக்ஷரபுருஷர்கள் எவர்? என்று காட்டுகிறான்—(க்ஷர: ஸர்வாணி பூ₄தாநி) இவ்விருவரில் பிராகிருத உடலோடு கூடியவர்களாகையாலே, ப₃த்₃த₄ ஜீவர்கள் என்று சொல்லப்படும் பிரமன் முதல் புல் ஈறாகவுள்ள ஏறிச்சுருங்கும் அறிவுடைய புருஷர்கள் க்ஷரபுருஷர்கள் எனப்படுகின்றனர். ஜீவாத்ம ஸ்வரூபத்துக்கு அழியும் தன்மை கிடையாதாகையாலே அசித்தான உடலோடு சேர்த்தியாலே இவர்களுடைய த₄ர்ம பூ₄தஜ்ஞானம் ஏற்றச்சுருக்கங்கள் உடையதாவதையிட்டு இவர்கள் க்ஷரபுருஷர்கள் எனப்படுகிறார்கள் என்று கண்டு கொள்வது. 'க்ஷர:' என்று ஒருமையில் சொல்லப்பட்டதை "ஸர்வாணி பூ₄தாநி" என்று பன்மையில் விவரிக்கிறபடியால் அசித்தோடு தொடர்பாகிற ஒருகாரணத்தையிட்டு ப₃த்₃த₄ ஜீவர்கள் அனைவரும் 'க்ஷரபுருஷன்' என்று ஒருமையில் குறிக்கப்படுகிறார்கள் என்று கொள்ளவேண்டும். ""க்ஷர:' என்னும் ஒருமையே உண்மையான நிலையைத் தெரிவிக்கிறது. 'ஸர்வாணி பூ₄தாநி' என்னும் பன்மை மாயையினால் உண்டான பொய்த்தோற்றம்" என அத்₃வைதி கள் கூறுவது "நித்யோ நித்யாநாம் சேதநஶ் சேதநாநாம்" [ஶ்வே6-13] என்று சேதனர்களைப் பலராக முழங்கும் ப்ரமாணங்களுக்கு முரண்பட்டதாகும். மேலும், எல்லா ப₃த்₃த₄ஜீவர்களும் ஒருவரேயானால் அனைவருடைய இன்பதுன்பங்களையும் அனைவரும் அனுப₄விக்கவேண்டிவரும். (கூடஸ்தோ₂ऽக்ஷர உச்யதே) 'அக்ஷர:' என்று சொல்லப்படுகிறவன் 'கூடஸ்த₂ன்' எனச்சொல்ல லாம்படி பொதுவான ஆகாரத்தை உடையவனான முக்தாத்மா; அதாவது—அசித்தான உடலோடு தொடர்பு நீங்கப் பெற்றவனாய்,

विशेषब्रह्मादिदेहासाधारणो न भवतीति कूटस्थ इत्युच्यते । अत्रापि-एकत्वनिर्देशोऽचिद्वियोगरूपैकोपाधिनाऽभिहितः । नहीतः पूर्वमनादौ

ஸ்வருபம் விரிவுபெற்றவனான முக்தாத்மா. 'கூடஸ்த₂' ஶப்₃த₃ம் பல ஸந்ததிகளுக்கு மூலபுருஷனாயிருப்பவன் விஷயத்தில் உலகில் பிரசித்தமாக வழங்கப்படுகிறது. பரம புருஷன் அனைவருக்கும் கூடஸ்த₂னாயிருந்தபோதிலும், அடுத்த ஶ்லோகத்தில் "உத்தம: புருஷஸ்த்வந்ய:" என்று அக்ஷரபுருஷனைக் காட்டிலும் வேறு பட்டவனாகச் சொல்லப்படுகிறபடியால் இங்கு கூடஸ்த₂ஶப்₃த₃த்துக்குப் பொருளாகமாட்டான். பிரமன் ப₃த்₃த₄ஜீவர்கள் அனைவர்க்கும் கூடஸ்த₂னாயிருந்தபோதிலும் அவனும் பிராக்ருதமான உடலோடு கூடியவனாயிருக்கையால் க்ஷரபுருஷர்களில் சேர்ந்தவனாகி இங்கு அக்ஷரமெனப்படும் கூடஸ்த₂கோடியில் அடங்கமாட்டான், ஆகையால் க்ஷரபுருஷர்களுக்கும் பரமாத்மாவுக்கும் இடையில் இருப்பவனாய் ஏற்றத்தாழ்வுகள் இல்லாமையாலே 'அக்ஷரன்' எனத்தக்கவனான முக்தாத்மாவையே இங்கு கூடஸ்த₂னாகச் சொல்லுவதாகக் கொள்ளவேண்டும். கூடஸ்த₂ஶப்₃த₃ம் முக்தாத்ம விஷயத்தில் ரூடி₄ உடையதல்லவாயினும், யோக₃வ்ருத்தியாலே அவனைக் கூடஸ்த₂ஶப்₃த₃த்துக்குப் பொருளாகக்கொள்ள இடமிருக்கிறது; எப்படி? எனில்; கூடஸ்த₂ஶப்₃த₃ம் பலபிரிவுகளுக்குப் பொதுவாயிருப்பவனைக் குறிக்கிறது. அசித் பரிணாமமான உடலோடு தொடர்புடைய பிரமன் முதலானோர் அவரவர் தே₃ஹஸம்ப₃ந்த₄த்தாலே அவரவர்க்கேயுரிய இன்பதுன்பங்களைக்கொண்டவர்களாய்த் தனிப்பட்டு நிற்கிறார்கள். இந்த முக்தாத்மாவோவெனில், அந்த அசித் ஸம்ஸர்க்க₃மில்லாமையால் "ஸ்வேந ரூபேண அபி₄நிஷ்பத்₃யதே" [ச₂ாந் 8-12-2] என்கிற உபநிஷத்₃வாக்யத்தில் சொன்னபடி சுருக்கமற்று விரிவுபெற்ற ஜ்ஞானத்தையே வடிவாகக் கொண்டிருக்கையாகிற பொதுவான ஆகாரத்தை உடையவனாயிருக்கிறான்; ஆகையால், யோக₃வ்ருத்தியாலே இவனைக் 'கூடஸ்த₂ன்' என்பது பொருந்தும். "ஏகரூபதயாது ய: காலவ்யாபீ ஸ கூடஸ்த₂:" [3-1-73] என்று அமரகோஶத்திலும் எக்காலத்திலும் ஒருபடிப்பட்டிருப்பவன் 'கூடஸ்த₂ன்' என்று சொல்லப்பட்டதன்றோ. "கூடவத்திஷ்ட₂தீதி கூடஸ்த₂:" என்னும் வ்யுத்பத்தியாலே, கொல்லன் பட்டறையில் இரும்பு சாமான்களைக் காய்ச்சி அடித்துப் பல பல விகாரங்களடையச் செய்வதற்கு ஆத₄ாரமாயிருக்கும் 'கூடம்' எனப்படும் இரும்புக்குண்டுபோலே, மற்றபொருள்

काले मुक्त एक एव । यथोक्तं * बहवो ज्ञानतपसा पूता मद्भावमागताः (गी. ४. १०) * सर्गेऽपि नोपजायन्ते प्रलये न व्यथन्ति च (१४. २.) इति ॥ १६ ॥

उत्तमः पुरुषस्त्वन्यः परमात्मेत्युदाहृतः ।
यो लोकत्रयमाविश्य बिभर्त्यव्यय ईश्वरः ॥ १७

17. உத்தம: புருஷஸ் த்வந்ய: பரமாத்மேத்யுத₃ாஹ்ருத :।
யோ லோகத்ரயமாவிஶ்ய பி₃ப₄ர்த்யவ்யய ஈஶ்வர: ॥

ய:து — எவனொருவன், லோகத்ரயம்—அசித், ப₃த்₃த₄ ஜீவன், முக்தாத்மா என்னும் மூன்று பொருள்களையும், ஆவிஶ்ய — வியாபித்து, பி₃ப₄ர்த்தி — (அவற்றைத்) தாங்குகிறானோ, (அவன்) அவ்யய: — அழிவற்றவனாய், ஈஶ்வர:— (அனைத்தையும்) நியமிப்பவனாய், பரமாத்மா இதி உத₃ாஹ்ருத: — பரமாத்மா என்று (சாஸ்திரங்களில்) சொல்லப் படுபவனாய், உத்தம: புருஷ: — (இக்காரணங்களால்) மிக மிக மேலான புருஷனாயிருப்பவன், அந்ய: — (முற்கூறிய க்ஷராக்ஷர புருஷர்களைக்காட்டிலும்) வேறுபட்டவன்.

---

கள் விகாரமடையும்போது தான் மாறாமல் இருக்கையையிட்டு முக்தாத்மா 'கூடஸ்த₂ன்' எனப்படுவதாகவும் கொள்ளலாம். இங்கும் 'அக்ஷர' என்று ஒருமையிருந்தபோதிலும் அசித்தினின்றும் நீங்கியிருக்கையாகிற காரணத்தையிட்டு, 'அக்ஷர' ஶப்₃த₃ம் முக்தாத்மாக்கள் அனைவரையும் குறிப்பதாகக் கொள்ளவேண்டும். இதற்குமுன் அநாதி₃காலத்தில் முக்தியடைந்தவன் ஒருவனே என்று கூறமுடியாதே. "ப₃ஹவோ ஜ்ஞாநதபஸா பூதா மத்₃பா₄வ மாக₃தா: [4-10] "ஸர்க்கே₃ऽபி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யத₂ந்தி ச" [14-2] என்று ஜ்ஞானத்தால் முக்தியடைந்து பிறப்பிறப்புக்களுக்கு அப்பாற்பட்டவர்களான முக்தர்கள் பலர் என்று கீ₃தையிலும் கூறப்பட்டதன்றோ. 16.

मा । उत्तमः पुरुषस्तु ताभ्यां क्षराक्षरशब्दनिर्दिष्टाभ्यां बद्ध-

ஆங்கிவரி லுத்தமனே யாம்புருட னன்னியனும்
பாங்கிற் பரமான்மா வென்றுரைத்தா—னோங்கியே
தாம்புகுந்து நின்றே தரித்துலக மூன்றிறையா
யோம்புமவன் குன்றுது மேல். 17

பாங்கில் — தன்பெருமைகளால், பரமான்மா என்று உரைத்தான்— பரமாத்மா என்று (சாஸ்திரங்களில்) உரைக்கப்பட்டவனாய், உலகம் மூன்று — அசித், ப$_3$த்$_3$த$_4$ஜீவன், முக்தாத்மா என்று மூன்று பொருள்களையும், ஓங்கியே தாம் புகுந்து நின்றே — நன்றாக வியாபித்து நின்று, தரித்து—(அவற்றைத்) தாங்குகிறவனாய், மேல்—அதற்கு மேல், குன்றாது — தான் அழிவற்றவனாய், இறையாய் ஓம்புமவன் — (அவற்றை) ஸ்வாமியாயிருந்து நியமிப்பவனாய், ஆங்கு — அக்காரணங்களாலே, இவரில் — இந்த க்ஷராக்ஷரபுருஷர்களைக் காட்டிலும், உத்தமனே ஆம் புருடன் — மிக மிக மேலான புருஷனாயிருப்பவன், அன்னியனும்—(முற்கூறிய க்ஷராக்ஷரபுருஷர்களைக் காட்டிலும்) வேறுபட்டவனாவான்.

17. சென்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட க்ஷராக்ஷர புருஷர்களைக் காட்டிலும் பல காரணங்களால் சிறப்புற்ற பரமபுருஷன் வேறுபட்டவன் என்கிறான். (உத்தம: புருஷ: து அந்ய:) 'க்ஷரபுருஷன்' என்று சொல்லப்பட்ட ப$_3$த்$_3$த$_4$னையும, 'அக்ஷரபுருஷன்' என்று சொல்லப்பட்ட முக்தனையுங்காட்டிலும் மேலானவனாயிருக்கையாலே, "ஸ உத்தம: புருஷ:" [ச$_2$ாந்8-12-2] முதலான இடங்களில் 'உத்தமபுருஷன்' (மேலான புருஷன்) என்று ஶாஸ்த்ரங்களில் சொல்லப்படும் பரமபுருஷன் வேறுபட்டவன். சென்ற ஶ்லோகத்தில் இரண்டு புருஷர்களை எடுத்து இங்கு உத்தமபுருஷன் வேறுபட்டவன் என்கையாலே, அந்த இரு புருஷர்களைக் காட்டிலும் இங்கு சொல்லப்படும் மேலான புருஷன் வேறுபட்டவன் என்று விதி$_4$க்கப்படுகிறது என

मुक्तपुरुषाभ्यामन्यः — अर्थान्तरभूतः परमात्मेत्युदाहृतस्सर्वासुश्रुतिषु । परमात्मेति निर्देशादेव ह्युत्तमः पुरुषो बद्धमुक्तपुरुषाभ्यामर्थान्तरभूत इत्यवगम्यते । कथम् ? यो लोकत्रयमाविश्य बिभर्ति— लोक्यत इति लोकः, तत्त्रयम्—लोकत्रयम् : अचेतनं तत्संसृष्टश्चेतनो

---

விளங்குகிறது இனி, ஶ்லோகத்தின் எஞ்சிய பகுதியாலே இவன் அவ்விருவரைக்காட்டிலும் வேறுபட்டவன் என்பதற்குக் காரணங்களைக் கூறுகிறான். "பரமாத்மேத்யுதா₃ஹ்ருத:" [பரமாத்மா என்று ஶ்ருதிகளில் சொல்லப்படுகிறான்] என்று கூறியது விதி₄க்கப்படுவதாகமாட்டாதாகையாலே வேறுபட்டவன் என்றதையே விதி₄க்கப்படுவதாகக் கொண்டு, இத்தொடர் அதற்குக் காரணத்தைக் காட்டுவதாகவே கொள்ளவேண்டும். (பரமாத்மா இதி உதா₃ஹ்ருத:) "தஸ்யா: ஶிகா₂யா மத்₄யே பரமாத்மா வ்யவஸ்தி₂த:" [தை–நா 11] [அந்த அக்₃னி ஶிகை₂யின் (திருமேனியின்) நடுவில் பரமாத்மா எழுந்தருளியிருக்கிறான்] "ஆத்மா நாராயண: பர:" [தை–நா 11] [நாராயணனே பரமாத்மா] முதலான ஶ்ருதிகளில் 'பரமாத்மா' என்று மேலான ஆத்மாவாகச் சொல்லப்படுகையாலே இவன் முற்கூறிய இரண்டு ஜீவாத்மாக்களைக் காட்டிலும் வேறுபட்டவன் என்று கருத்து. "பரமாத்மா என்று ஶ்ருதிகளில் கூறியிருப்பது இவன் க்ஷராக்ஷரபுருஷர்களைக் காட்டிலும் வேறுபட்டவன் என்பதை எப்படிக்காட்டும்?" என்னும் கேள்விக்கு பதில் அளிக்கிறது ஶ்லோகத்தின் பிற்பாதி. (ய: லோகத்ரயம் ஆவிஶ்ய பி₃ப₄ர்த்தி) எவனொருவன் பிரமாணங்களிலிருந்து அறியப்படும் அசேதனப்பொருள், அதனுடன் சேர்ந்திருக்கும் ஸம்ஸாரி சேதனன், முக்த சேதனன் என்னும் மூன்று தத்துவங்களையும் ஆத்மாவாய் உள் நுழைந்து தாங்குகிறானோ, அவன் தன்னால் வியாபிக்கப்படுகிறவையாய், தாங்கப்படுகிறவையாகையாலே அந்த மூன்று தத்துவங்களைக் காட்டிலும் வேறுபட்டவன் என்று கருத்து. "லோகஸ்து பு₄வநே ஜநே" என்னும் நிக₄ண்டுவையொட்டி லோக ஶப்₃த₃ம் பு₄வனங்களைச் சொல்லுவதாகக் கொண்டு, "பூ₄:, பு₄வ:, ஸுவ:" என்னும் மூன்று உலகங்களையோ, ஸ்வர்க்க₃ லோகம், மனித லோகம், பாதாள லோகம் என்னும் மூன்று உலகங்களையோ குறிப்பதாகக்

मुक्तश्चेति प्रमाणावगम्यमेतत्त्रयं य आत्मतया आविश्य बिभर्ति, स तस्माद्व्याप्याद्भर्तव्याच्चार्थान्तरभूतः । इतश्चोक्ताल्लोकत्रयादर्थान्तरभूतः;

---

கொள்ளலாமே எனில்: இங்கு ப்ரகரணத்தையொட்டி முன் ஶ்லோகத்தில் சொன்ன இரண்டு புருஷர்களைக் காட்டிலும் வேறுபட்டவன் பரமபுருஷன் என்று இந்த ஶ்லோகத்தின் முற்பாதியில் விதி₄க்கப்படுகிறதாகையாலே, பிற்பாதிக்கு அதை விளக்குவதாகப் பொருள் கொள்வதே பொருத்தமானது. இங்கு முற்கூறியபடி மூன்று லோகங்களை 'லோகத்ரய' ஶப்₃த₃ம் குறிப்பதாகக் கொண்டால், அது க்ஷராக்ஷர புருஷர்களைக் காட்டிலும் உத்தமபுருஷன் வேறுபட்டவன் என்பதற்குக் காரணமாகமாட்டாது. "க்ருதகம், அக்ருதகம், க்ருதகாக்ருதகம்" என்று நைமித்திக ப்ரளயத்தில் அழியும் பூ₄ர்பு₄வஸ் ஸ்வர்லோகங்களை 'க்ருதகலோகங்கள்' என்றும், அந்த ப்ரளயத்தில் அழியாதிருக்கும் ஜநஸ் தபஸ் ஸத்ய லோகங்களை 'அக்ருதக லோகங்கள்' என்றும், அந்த ப்ரளயத்தில் அழியாமலிருந்தும் ஆளில்லாமலிருக்கும் மஹர் லோகத்தை 'க்ருதகாக்ருதக லோகம்' என்றும் மூன்று வகையாக லோகங்களைப் புராணங்களில் சொல்லுவதுண்டு; இவற்றை நித்ய விபூ₄திக்கும் உபலக்ஷணமாகக் கொண்டு இவ்வுலகங்களிலிருக்கும் க்ஷராக்ஷர புருஷர்களைக் குறிப்பதாகக் கொள்ளலாமே எனில்; இப்படி லக்ஷணையாலே நலிந்து பொருள் கொள்வதைக் காட்டிலும், "லோக்யதே – இதி லோக:" என்னும் வ்யுத்பத்தியாலே ப்ரமாணங்களால் அறியப்படும் மூன்று தத்துவங்களைப் பொருளாகக் கொள்வது சிறந்தது. கண்ணுக்குப் புலப்படாவிடிலும், ப₃த்₃த₄ முக்தர்கள் ப்ரமாணங்களால் அறியப்படுகையாலே, அவர்களையும் லோக ஶப்₃த₃த்துக்குப் பொருளாகக் கொள்ளலாம். 'ய:' என்று "அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா" [யஜு-ஆர. 3-11] [ஸர்வாந்தர்யாமியான நாராயணன் ஜனங்களை உள்நுழைந்து நியமிக்கிறான்.] "ப₄ர்த்தா ஸந் ப்₄ரியமாணோ பி₃ப₄ர்த்தி" [யஜு-ஆர 3-14] [(அனைத்துக்கும அந்தர்யாமியாயிருக்கையாலே) தாங்கப்படும வஸ்துக்களும் தானேயாயிருந்துகொண்டு, அவற்றையுடையவனாகவுமிருந்துகொண்டு தாங்குகிறான்] என்னும் ப்ரமாண ப்ரஸித்₃தி₄யை உணர்த்துகிறது. இப்படி

यतस्सोऽव्ययः, ईश्वरश्च; अव्ययस्वभावो हि व्ययस्वभावादचेतनात्, तत्संबन्धेन तदनुसारिणश्चेतनात् अचित्संबन्धयोग्यतया पूर्वसंबन्धिनो

---

முற்கூறிய இரண்டு புருஷர்களையும் வியாபித்து, த4ரித்து நிற்கையாலே வியாபிக்கப்படுபவர்களாய் த4ரிக்கப் படுபவர்களாயிருக்கும் அவ்விருவரைக்காட்டிலும் இவன் வேறுபட்டவன் என்று கருத்து. இனி 'ய:' என்னும பத3ம் கடைசியிலுள்ள 'அவ்யய:' 'ஈஶ்வர:' என்னும இரு பத3ங்களோடும் தனித்தனியே அந்வயிக்கையாலே, அவ்விரு பத3ங்களும உத்தமபுருஷன் க்ஷராக்ஷரபுருஷர்களைக் காட்டிலும வேறுபட்டவன் என்பதைக் காட்டுகின்றன என விளங்குகிறது. (அவ்யய:) அழிவற்ற தன்மையுடையவன். அழிவற்ற தன்மையுடையவனாயிருக்கையாலேயே, இவ்வுத்தமபுருஷன ஸ்வரூபஸ்வபா4வங்களிரண்டிலும விகாரத்தையுடைவதை இயல்வாகக் கொண்ட அசேதனத்தைக்காட்டிலும், அந்த அசித்ஸம்ப3ந்த4த்தாலே ஜ்ஞானமாகிற ஸ்வபா4வத்தில் ஏற்றச் சுருக்கங்களையுடையும் ப3த்3த4சேதனனைக் காட்டிலும், அந்த அசித்ஸம்ப3ந்த4த்துக்குத் தகுதியுள்ளவனாய், பனனெடுங்காலம அந்த ஸம்ப3ந்த4த்தைப் பெற்றிருந்து அதிலிருந்து விடுபட்டவனான முக்தசேதனனைக் காட்டிலும வேறுபட்டவன் என்பது தெளிவு. "ப3த்3த4முக்தஜீவர்கள் இருவருக்கும ஸ்வரூபவிகாரமில்லை; ப3த்3த4ஜீவனுக்கு ஜ்ஞானத்தில் ஏற்றச்சுருக்கங்களாகிற ஸ்வபா4வவிகாரமும, பிறப்பு இறப்பு முதலான துன்பங்களும் அசித்ஸம்ப3ந்த4த்தால் விளைகையால் அவன பரமாத்மாவைப்போலே அவ்யயனாய்(அழியாதவனாய்) இராதவன் என்று கூறலாம்; இவையில்லாத முக்தஜீவனை அவ்வண்ணம் எப்படிக்கூறுவது?" எனில்:— முக்தனுக்கு இப்போது இந்த ஸ்வபா4வவிகாரமில்லாவிடிலும், கர்மஸம்ப3ந்த4மிருந்த காலத்தில் இது இருந்தமையாலும, அந்தக் கர்மஸம்ப3ந்த4ம் இல்லாமையாலே இப்போது இது இல்லாமையாலும் அவனுக்கும் ஸ்வபா4வ விகாரத்துக்குத் தகுதியுண்டு. அதையிட்டு ஈஶ்வரனுக்குள்ள அவ்யயத்வம் அவனுக்கில்லை என்னக் குறையில்லை, (ஈஶ்வர:) இந்த மூன்று தத்துவங்களையும நியமிக்கும ஈஶ்வரனாயிருக்கையாலும் நியமிக்கப்படும் க்ஷராக்ஷரபுருஷர்களைக் காட்டிலும பரமபுருஷன் வேறு பட்டவனே என்று கருத்து ஆக, க்ஷராக்ஷரபுருஷர்களை வியாபித்து த4ரித்து நியமிக்கையாலே பரமபுருஷன் தன்னால் வியாபிக்கப்பட்டு த4ரிக்கப்பட்டு நியமிக்கப்படும் அவ்விரு புருஷர்களைக்காட்டிலும் வேறுபட்டவன் என்றும், ஸ்வபா4வத்தில் தாழ்ந்த விகாரமோ அல்லது அதற்குத் தகுதியோ இல்லாத

मुक्ताच्च अर्थान्तरभूत एव । तथैतस्य लोकत्रयस्येश्वरः, ईशितव्यात्तस्मा-
दर्थान्तरभूतः ॥ १७ ॥

---

பரமபுருஷன் அவ்விகாரமுடைய ப₃த்₃த₄னைக்காட்டிலும், அவ்விகாரத்துக்குத் தகுதியுடைய முக்தனைக்காட்டிலும் வேறுபட்டவன் என்றும தேறிற்று. இப்படி வ்யாபன ப₄ரண நியமனங்கள் ஒருவகையிலும, அவ்யயஸ்வப₄ாவம் மற்றொருவகையிலும் ஜீவர்களைக்காட்டிலும் பரமபுருஷனுக்கு வேறுபாட்டை நிருபிக்கையால், பத்தொன்பதாவது ஶ்லோகபா₄ஷ்யத்தில் "க்ஷராக்ஷரபுருஷாப்₄யாம் அவ்யயஸ்வப₄ாவதயா வ்யாபநப₄ரண ஐஶ்வர்யாதி₃யோகே₃ந ச விஸஜாதீயம் ஜாநாதி" என்று பரமபுருஷன் மற்ற இருவரைக்காட்டிலும வேறுபட்டவனாயிருக்கைக்குக் காரணம் இருவகையாகப் பிரித்துக்காட்டப்பட்டது. கீ₃தையில் ஈஶவரன் முதலான ஶப்₃த₃ங்கள் வரும இதுபோன்ற இடங்களில் அந்த ஶப்₃த₃ங்கள் ப்ரத₂மபுருஷனாக (படர்க்கையாக) வழங்கப்பட்டிருந்தபோதிலும, அந்த ஶப்₃த₃த்தினால் ப்ரஸித்₃தி₄பெற்ற ருத்₃ரன் முதலானவாகளைப் பொருளாகக் கொள்வதற்குச் சிறிதும் இடமில்லை "ஸர்வஸ்ய சாஹம்" என்று முன்னுள்ள ஶ்லோகத்திலும், "யஸ்மாத் க்ஷரமதீதோऽஹம்" (18) "யோ மாமேவமஸம்மூடே₄ா"(19) என்று பின்னுள்ள ஶ்லோகங்களிலும் உத்தம புருஷனாக (தன்மையாக)க் கண்ணனே வழங்குகையால், ஈஶ்வர ஶப்₃த₃ம் முதலானவை இங்கும் இதுபோன்ற இடங்களிலும் வேறொருவனைக் குறிப்பதற்கு இடமேயில்லை. ஶங்கரரும் இக்காரணத்தாலேயே இங்கு பா₄ஷ்யத்தில் "ஈஶ்வர: ஸர்வஜ்ஞ: நாராயணாக்₂ய: ஈஶநஶீல: [ஈஶ்வர:—எல்லாமறிந்தவனாய், நியமிப்பதையே இயல்வாகக் கொண்டவனாய், நாராயணன் என்னும் பெயருடையவன்.] என்று பா₄ஷ்யமிட்டார், இதுபோன்ற பல இடங்களிலும் ஈஶ்வராதி₃ ஶப்₃த₃ங்கள் வரும்போது "நாராயணாக்₂ய: வாஸுதே₃வாக்₂ய:" என்று நியமேந அவர் பா₄ஷ்யமிடுவது 'நாராயணனே ஸகு₃ண ப்ரஹ்மம், சிவனை ஸகு₃ணப்₃ரஹ்மமாகக் கொள்ளக கூடாது' என்னும் அவரது உறுதியைக்காட்டுகிறது. "இங்கு ஆத்மாவின் லக்ஷணத்தில் சேர்ந்த வ்யாப்தி, த₄ாரணம், நியமனம ஆகியவை வெளிப்படையாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. தன்பொருட்டு த₄ரிப்பது முதலானவற்றைச் செய்வதினாலேயே ஶேஷித்வமாகிற ஸ்வாமித்வமும் இங்கு உணர்த்தப்படுகிறது" என்னும் திருவுள்ளத்தாலேயே ஆளவந்தார் இந்த அத்₄யாயத்தின் ஸங்க்₃ரஹ

यस्मात्क्षरमतीतोऽहमक्षरादपि चोत्तमः ।
अतोऽस्मि लोके वेदे च प्रथितः पुरुषोत्तमः ॥ १८

18. யஸ்மாத் க்ஷரமதீதோऽஹம் அக்ஷராத₃பி சோத்தம:।
அதோऽஸ்மி லோகே வேதே₃ ச ப்ரதி₂த:
புருஷோத்தம :॥

அஹம் — நான், யஸ்மாத்—யாதொரு காரணத்தினுல், க்ஷரம்—க்ஷரபுருஷனை, அதீத: — கடந்து நிற்கிறேனே, அக்ஷராத் அபி—அக்ஷர புருஷனை முக்தனைக்காட்டிலும், உத்தம: ச — மேலானவனுயுமிருக்கிறேனே, அத: — அக்காரணத்தினுலேயே, வேதே₃ லோகே ச — ஶ்ருதியிலும் ஸ்ம்ருதியிலும், புருஷோத்தம: —புருஷோத்தமன் என்று, ப்ரதி₂த: அஸ்மி — புகழ்பெற்றவனுயிருக்கிறேன்.

ஶ்லோகத்தில் "வ்யாபநாத் ப₄ரணாத் ஸ்வாம்யாத் அந்ய: பஞ்சத₃ஶோதி₃த:" என்று ஸ்வாமித்வத்தையும் சேர்த்து அருளிச் செய்தார். இங்கு ஈஶ்வரஶப்₃த₃த்தால் சொல்லப்படும் நியந்த்ருத்வம் ஸங்க்₃ரஹ ஶ்லோகத்தில் உபலக்ஷணமுறையாலே சொல்லப்படுவதாகக் கொள்ள வேண்டும். அடுத்த அத்₄யாயத்தின் அவதாரிகாப₄ாஷ்யத்தில் "வ்யாபநப₄ரணஸ்வாம்யை:" என்றவிடத்திலும் இப்படியே கொள்ளவேண்டும் அன்றிக்கே, "பாம்புகளை நியமிக்கும் கருடனைப்பாம்புகளுக்கு ஈஶ்வரன் என்று வழங்குவதில்லை. ஆகையால், வெறும் நியமனமாத்ரத்தைக் கொண்டு ஈஶ்வரஶப்₃த₃ப்ரயோக₃ம் வருவதில்லை. ஸ்வாம்யத்தோடு கூடிய நியமனமுள்ளவிடத்திலேயே ஈஶ்வரஶப்₃த₃ம் ரூட₄மாய் (ப்ரஸித்₃த₄மாய்) உள்ளது" என்னும் திருவுள்ளத்தாலே ஆளவந்தாரும் ப₄ாஷ்யகாரரும் ஈஶ்வரஶப்₃த₃த்தின் பொருளாகவே ஐஶ்வர்யத்தைத் திருவுள்ளம் பற்றியதாகவும் கொள்ளலாம் மேலும் இங்கு 'ய:' என்று அநுவாத₃ம் செய்யப்படும் வ்யாப்தி முதலானவை ஏற்கனவே ஏழாம் அத்₄யாயத்தில் கூறிய "மயி ஸர்வமித₃ம் ப்ரோதம்" [7-7] முதலான ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட அர்த்த₂த்தின் அநுவாத₃மேயாகையால். "பூ₄மிராப:"[7-4]என்று அங்கு சொல்லப்பட்ட ஶேஷித்வமும் ஈஶ்வரஶப்₃த₃த்தால் கருதப்படுகிறதாகையாலே, "பதிம் விஶ்வஸ்யாத்மேஶ்வரம்" [தை-நா-11] என்று ஶ்ருதியில் சொல்லப்பட்டபடி பதிஶப்₃த₃த்தின் பொருளையுடையது 'ஈஶ்வர'ஶப்₃த₃ம் என்றும் கொள்ளலாம். 17.

எத்தகவால் யான்கரன்மீ தேஇயே யக்கரனு
முத்தனிலு முத்தமனு வுற்றுயர்ந்தே—னித்தகவால்
வேத முலகிவற்றின் மேவுபுரு டோத்தமனு
வோத வுரைசிறந்தே னுற்று. 18.

யான் — நான், எத்தகவால் — எந்தக்காரணத்தால், கரன்மீது ஏகியே — க்ஷரபுருஷனைக்கடந்து நிற்பவனாய், அக்கரனும் முத்தனிலும் உத்தமனு உற்று உயர்ந்தேன் — அக்ஷரபுருஷனான முக்தாத்மாவைக்காட்டிலும் சிறந்தவனாக விளங்கி நிற்கிறேனோ, இத்தகவால் — இக்காரணத்தால், வேதம் உலகு இவற்றில் — ஶ்ருதி, ஸ்ம்ருதி ஆகியவற்றில், மேவு புருடோத்தமனு உற்று ஓத உரை சிறந்தேன் — புருஷோத்தமன் என்னும் பொருத்தமான பெயரை ஓதலாம் படி பிரசித்திபெற்றிருக்கிறேன்.

---

18 சென்ற ஶ்லோகத்தில் தான் க்ஷராக்ஷரபுருஷர்களைக் காட்டிலும் மேலானவன் என்பதைப் பல காரணங்களால் நிலை நாட்டி, ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் பிரசித்திபெற்ற "உத்தமபுருஷன்" என்னும் தன் திருநாமத்தாலும் அவ்விஷயம் நிலைநிறுத்தப்பட்டது. இந்த ஶ்லோகத்தில் "புருஷோத்தமன்" என்னும் மற்றொரு திருநாமத்தைக்கொண்டு அவ்விஷயமே நிலைநிறுத்தப் படுகிறது. "உத்தமபுருஷன் வேறுபட்டவன்" என்று அங்கு படர்க்கையில் சொல்லப்பட்டவன் தானே என்பதை, "அஹம் புருஷோத்தம: ப்ரதித₂: அஸ்மி" [நான் புருஷோத்தமன் என்று பிரசித்திபெற்றிருக்கிறேன்] என்று தன்மையில் சொல்லுவதன் மூலம் நிலைநிறுத்துகிறான். சென்ற ஶ்லோகத்தில் தன்னை க்ஷரா க்ஷரபுருஷர்களைக் காட்டிலும மேலானவன் என்று நிலைநாட்டி, அதை உணர்த்தும் 'உத்தமபுருஷன்' என்னும் திருநாமத்தாலே தன்னை நிர்த்தேஶித்தான். இந்த ஶ்லோகத்தில், க்ஷராக்ஷரபுரு ஷர்களைக் காட்டிலும் மிகவும் மேலானவனாயிருக்கையாலே தான் ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் 'புருஷோத்தமன்' என்றும் முழங்கப் படுவதாகக் கூறுகிறான்—(யஸ்மாத் க்ஷரமதீதோஹம்) முற்கூறிய

भा ॥ यस्मादेवमुक्तैस्स्वभावैः क्षरं पुरुषमतीतोऽहम्, अक्षरान्मुक्तादप्युक्तैर्हेतुभिरुत्कृष्टतमः, अतोऽहम् लोके वेदे च पुरुषोत्तम इति प्रथितोऽस्मि ।

---

வ்யாபனம், ப₄ரணம், ஸ்வாம்யம் முதலான எனக்கேயுரிய பெருமைகளாலே நான் 'க்ஷரபுருஷன்' எனப்படும் ப₃த்₃த₄ஜீவனைக் கடந்து நிற்கும் காரணத்தாலும். 'அதீத' ஶப்₃த₃த்தாலே அந்த ப₃த்₃த₄ஜீவனின் தாழ்வுகளின் நாற்றமும் தன்னிடமில்லை என்று காட்டுகிறான். பதினாறுவது ஶ்லோகத்தில், "த்₃வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரஶ்ச அக்ஷரஏவச" என்று சொல்லப்பட்ட க்ஷராக்ஷரபுருஷர்கள் இங்கு க்ஷராக்ஷரஶப்₃த₃ங்களால்அநுவதி₃க்கப் படுவதால், இங்கு க்ஷரஶப்₃த₃ம் அசேதனமான மூலப்ரக்ருதியைக் குறிக்கமாட்டாது, (யஸ்மாத் அக்ஷராத₃பி சோத்தம:) பதினாறுவது ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட அக்ஷரபுருஷனைக்காட்டிலும் மிகவும் மேலானவனாயிருக்கையாலும். அக்ஷர ஶப்₃த₃ம் மூலப்ரக்ருதிவிஷயமாகவும், பரமாத்மவிஷயமாகவும், சாஸ்திரங்களில் வழங்கப்பட்டிருந்தபோதிலும், பதினாறுவது ஶ்லோகத்தில் "கூடஸ்தே₂ாऽக்ஷர உச்யதே" என்று எடுக்கப்பட்ட அக்ஷரபுருஷனே இங்கு அநுவதி₃க்கப்படுவதால், இவன் முக்தாத்மாவே என விளங்குகிறது. 'க்ஷராக்ஷரபுருஷர்களைக்காட்டிலும் மேற்பட்டவன், என்பதே 'புருஷோத்தமன்' 'உத்தமபுருஷன்' என்னும் தன் திருநாமங்களுக்குப் பொருள் என்றும் இத்தால் உணர்த்தப்பட்டதாயிற்று. (உத்தம:) முற்கூறிய காரணங்களால் முக்தஜீவன் ப₃த்₃த₄ஜீவனைக்காட்டிலும் உயர்ந்தவன்; முற்கூறிய ஸர்வாந்தர்யாமியாயிருக்கை முதலான காரணங்களால் அந்த முக்தனைக் காட்டிலும் தான் உயர்ந்திருக்கையால் தான் மிக உயர்ந்தவன் என்று கருத்து. (அத:) இப்படி க்ஷராக்ஷரபுருஷர்களைக்காட்டிலும் உயர்ந்திருக்கையாலே, (அஹம் புருஷோத்தம: ப்ரதி₂த: அஸ்மி) நான் 'புருஷோத்தமன்' என்று பிரசித்திபெற்றிருக்கிறேன்; "புருஷோத்தமனென நான் பிரசித்திபெற்றிருக்கிறேன்" என்று பொதுவாகப் பிரசித்திபெற்றிருக்கையை இங்கு விதி₄ப்பதாகக் கொண்டால், 'அத;' என்று க்ஷராக்ஷரபுருஷர்களைக்காட்டிலும் உயர்ந்தவனாயிருப்பதைக் காரணமாகக் காட்டியது பொருந்தாதாகையால், "நான் புருஷோத்தமனாகப் பிரசித்தி பெற்றிருக்கிறேன்" என்றே இங்கு பொருள்கொள்ளவேண்டும்.

वेदार्थावलोकनाल्लोक इति स्मृतिरिहोच्यते। श्रुतौ स्मृतौ चेत्यर्थः।

---

(வேதே₃ லோகே ச) ஶ்ருதியிலும் ஸ்ம்ருதியிலும். "லோகஸ்து பு₄வநே ஜநே" என்ற நிக₄ண்டுவையொட்டி இங்கு பு₄வனத்தையோ, ஜனங்களையோ லோகஶப்₃த₃த்துக்குப் பொருளாகக் கொண்டால், உலகத்திலேயோ அல்லது பாமரஜனங்களிடையேயோ எம்பெருமானுக்குப் "புருஷோத்தமன்" என்னும் ப்ரஸித்₃தி₄ மிகுதியாக இல்லாமையால் அது பொருந்தாது. லோகஶப்₃த₃த்திற்குக் காவியம் முதலானவற்றைப் பொருளாகக் கொள்வதிலும் ஸ்வாரஸ்யம் அதிகமில்லை. கவிகள் அபி₄மானத்தாலும் எழுதியிருக்கலாமன்றோ. இதனாலும், வேத₃த்தோடு கூடப்படித்திருப்பதாலும் வேதத்தை விளக்குவதனாலே ப்ரமாணமாகும் ஸ்ம்ருதிகளே இங்கு லோகஶப்₃த₃த்தால் கருதப்படுகின்றன என்று கொள்ளவேண்டும். "லோக்யதே அநேந வேத₃ார்த்த₂: – இதி லோக:" என்னும் வ்யுத்பத்தியாலே, வேத₃ார்த்த₂த்தை அறிய உதவும் ஸ்ம்ருதிகளை லோகஶப்₃த₃த்தால் குறிப்பது பொருத்தமன்றோ. இங்கு ஶ்ருதிஸ்ம்ருதிகளை "புருஷோத்தமன்" என்னும் தன்பெயருக்கு ப்ரமாணமாக எடுத்திருப்பதற்குக் கருத்து பின்வருமாறு:— "ஶ்ரூயதே நித்யம் இதி ஶ்ருதி:" என்னும் வ்யுத்பத்தி 'எவராலும் இயற்றப்படாதவை வேத₃ங்கள்' என்று காட்டுகிறது. சொல்லுகிறவனுடைய தோ₃ஷத்தினால் அது தவறாகப்போவதற்கு இடமில்லையாகையால் அது இயல்பான ப்ரமாணமாகிறது; மேலும், எம்பெருமான் வேத₃ங்களை எப்போதும் நினைவில் கொண்டு அதைப்பிரமனுக்கு முதலில் ஓதுவிக்கிறான்; அவனிடமிருந்து ஆசார்யஶிஷ்யபரம்பரையின் மூலம் இன்றளவும் அது ஓதுவிக்கப்பட்டு வருகிறது. ஆகையால், அதில்சொல்லப் பெற்றதனைத்தும் உண்மையேயாகும். "இதிஹாஸபுராணாப்₄யாம் வேத₃ம் ஸமுபப்₃ருஹ்மயேத்| பி₃பே₄த்யல்பஶ்ருதாத்₃வேத₃: மாமயம் ப்ரதரிஷ்யதி||" [இதிஹாஸ புராணங்களைக்கொண்டே வேத₃ங்களை விளக்கிக்கொள்ளவேண்டும். இதிஹாஸபுராணங்களைக்கற்காமல் வேத₃ங்களைமட்டும் அத்₄யயனம் செய்தவனைக் கண்டு 'இவன் என்னைக்கலக்கிவிடுவானோ' என்று வேத₃ம் ப₄யப்படுகிறது] என்கிறபடியே அளவற்றதாய், பொருள் அறிய அரியதான வேத₃த்தின் எல்லா ஶாகைக₂ளையும் ஆராய்ந்து அர்த்த₂நிர்ணயம் செய்வது புல்லறிவாளர்களால் முடியாதாகையாலே, பரமாப்தர்களாய், வேத₃த்தின் பல ஶாகைக₂ளையும் கண்டவர்களாய், வேத₃த்தாலும் ஆங்காங்கு புகழப்பட்டிருப்பவர்களான மனு, வியாஸர், பராஶரர், வால்மீகி முதலான மஹர்ஷிகளால் வேத₃ார்த்

श्रुतौ तावत् * परं ज्योतिरुपसंपद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते, स उत्तमः पुरुषः (छा. ८-१२-२) इत्यादौ। स्मृतावपि * अंशावतारं पुरुषोत्तमस्य ह्यनादिमध्यान्तमजस्य विष्णोः (वि. ५-१७-३३) इत्यादौ ॥ १८ ॥

---

த₂த்தை ஸ்மரித்து எழுதப்பட்டதாகையாலே 'ஸ்ம்ருதிகள்' எனப் படும் ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களைக் கொண்டு வேதா₃ர்த்த₂த்தை அறுதியிடுவது தக்கதாகும் என்கை; ஶ்ருதிஸ்ம்ருதிகள் இப்படி இவனைப் புருஷோத்தமனாக எங்கே சொல்லியிருக்கின்றன? எனில்: "பரஞ்ஜ்யோதிருபஸம்பத்₃ய ஸ்வேந ரூபேணாபி₄நிஷ்பத்₃யதே, ஸ உத்தம: புருஷ:" [சா₂ந்-8-12-2] [பரஞ்சோதியையடைந்து முக்தாத்மா தன்ஸ்வரூபவிளக்கம் பெறுகிறான்; அப்பரஞ்சோதியே உத்தம புருஷன் எனப்படுகிறான்] என்னும் ஶ்ருதியில் முக்தாத் மாவால் அடையப்பெற்றவனாய், ஒப்பற்ற சோதியுருவாயிருப் பவனான பரமாத்மாவே உத்தமபுருஷன் எனப்படுகிறான். அந்த வேதவாக்கியத்தை விளக்குவதற்காகவே "உத்தம: புருஷஸ்த் வந்ய: பரமாத்மேத்யுதா₃ஹ்ருத:" என்று இங்கு கீதையிலும் முந்தினஶ்லோகத்தில் "உத்தம: புருஷ:" என்று அந்த ஶப்₃த₃த் தையே எடுத்து, இந்த ஶ்லோகத்தில் ஸமஸ்தபத₃மாக வழங்குகிறான் கண்ணன் என்று விளங்குகிறது. வேத₃த்தாலும் கொண்டாடப்பெற்ற பராஶரரால் இயற்றப்பெற்ற ஸ்ரீவிஷ்ணு புராணமாகிறஸ்ம்ருதியிலும் "அம்ஶாவதாரம் புருஷோத்தமஸ்ய ஹ்யநாதி₃மத்₄யாந்தமஜஸ்ய விஷ்ணோ:" [வி·பு 5-17-33] [பிறப் பற்றவனாய், புருஷோத்தமன் என்னும் பெயர் பெற்றவனான விஷ்ணுவினுடைய முதலும் நடுவும் முடிவுமில்லாத அம்ஶாவதா ரமாயிருக்கும் கண்ணனை] என்று ஸமஸ்தபத₃மாகவே புரு ஷோத்தமஶப்₃த₃ம் இக்கண்ணனைக் குறித்து வழங்கப்பட்டது. இங்கு 'விஷ்ணோ:' என்று ப்ரஸித்₃த₄மான பெயரைச் சொன்ன போதிலும், "புருஷோத்தமஸ்ய" என்று அதற்கு விஶேஷண மிடுகையாலே, புருஷோத்தமஶப்₃த₃ம் யோக₃ரூட₄ம் என்று விளங்குகிறது. இதனால், "ரூட்₄யா து காமம் புருஷோத்த மோ௨ஸ்து" என்று வேத₃பா₃ஹ்யனான சைவன் ஒருவன் புருஷோத்தமஶப்₃த₃ம் கேவல ரூடி₄யேதவிர யோக₃ரூட₄மன்று என்று கூறியது ப்ரமாணவிருத்₃த₄மாகையாலே தள்ளப்படுகிறது. புருஷோத்தமஶப்₃த₃த்தை "புருஷஶ்சாஸௌ உத்தம:" என்று கர்மதா₄ரயஸமாஸமாகக்கொண்டால் அஷ்டாத்₄யாயியில் 2-1-61

यो मामेवमसंमूढो जानाति पुरुषोत्तमम् ।
स सर्वविद्भजति मां सर्वभावेन भारत ॥ १९.

19. யோ மாமேவமஸம்மூடே$_4$ா ஜாநாதி புருஷோத்தமம் |
ஸ ஸர்வவித்$_3$ப$_4$ஜதி மாம் ஸர்வப$_4$ாவேந ப$_4$ாரத ||

ப$_4$ாரத — ப$_4$ரத குலத்தில் பிறந்தவனே! ய: — எவ ளொருவன், ஏவம் — இம்மாதிரியாக, புருஷோத்தமம் — க்ஷராக்ஷரபுருஷர்களைக் காட்டிலும் பலகாரணங்களால் சிறப்புற்றவனாக, மாம் — என்னை, அஸம்மூட$_4$: — கலக்க மில்லாமல், ஜாநாதி — அறிகிறானோ, ஸ: ஸர்வவித் — அவன் என்னை அடைவதற்குரிய வழியனைத்தையும் அறிந் தவனாகிறான்: மாம் — என்னை, ஸர்வ ப$_4$ாவேந ப$_4$ஜதி — (என்னை அடையும் வழியான) ப$_4$க்தி ப்ரகாரங்களனைத்தா லும் ப$_4$க்தி செய்தவனாகிறான்.

---

ஸூத்ரப்படி 'உத்தமபுருஷ:' என்று ஸமஸ்தபத$_3$ம் வருமேதவிர 'புருஷோத்தம:' என்று வராது. ஆகையால், தத்புருஷஸமாஸமே கொள்ளவேண்டும் என்று நிர்ணயித்து, பஞ்சமீதத்புருஷ ஸமாஸத்தைக் கொண்டு 'க்ஷராக்ஷரபுருஷர்களைக் காட்டிலும் உத்தமன்' என்றோ, ஷஷ்டீ$_2$தத்புருஷஸமாஸத்தைக் கொண்டு '(தாழ்ந்தவர்களான)க்ஷராக்ஷரபுருஷர்களுக்கு உத்தமன்' என்றோ, ஸப்தமீதத்புருஷஸமாஸம் கொண்டு 'புருஷஶப்$_3$த$_3$த்தால் சொல்லப் படும் ஜீவபரர்களுக்குள் உத்தமன்' என்றோ பொருள் கொள் ளலாம். இது விஷயமான வ்யாகரண விசாரங்கள் தாத்பர்ய சந்த்$_3$ரிகையில் விரிவாகச் செய்யப்பட்டுள்ளன. அதிலேயே கண்டு கொள்வது இப்படி இது நாராயணனிடத்தில் யோக$_3$ ரூட$_4$மாயிருப்பதினாலேயே ஆதி$_3$கவியான வால்மீகியும் "ந ச தேந விநா நித்$_3$ராம லப$_4$தே புருஷோத்தம:" [ரா-ப$_3$ா 18-29] [அந்த லக்ஷ்மணன் பக்கத்தில் இராவிடில் புருஷோத்தமனான ராமன் தூங்கமாட்டான்] என்று கூறினார். இவையனைத்தையும் திருவுள்ளத்தில் கொண்டே யாமுனாசார்யரான ஆளவந்தாரும் ஸ்தோத்ரரத்னத்தில் "க: புண்ட$_3$ரீகநயந: புருஷோத்தம: க:" [ஸ்தோ-ர 12] [புண்ட$_3$ரீகாக்ஷன்யார்? புருஷோத்தமன்யார்?] என்று பரதத்வத்தை நிர்ணயிக்கும் கேள்விகளைக் கேட்டார். 18.

भा॥ य एवम् — उक्तेन प्रकारेण पुरुषोत्तमं मामसंमूढो जानाति — क्षराक्षरपुरुषाभ्यामन्ययस्वभावतया व्यापनभरणैश्वर्यादि·

---

என்னையிங்கே யிவ்வண்ண மேய்ந்தபுருடோத்தமனை
முன்னை மயர்வொழித்து முற்றுணர்ந்தான்—பின்னை
எல்லா மறிந்தே யென்னையடைந்து பத்தியுடன் [யவன்
செல்வானெவ் வாறும் சிறந்து. 19.

இங்கே—இவ்வுலகில், இவ்வண்ணம் — இவ்வண்ணமாக, ஏய்ந்த புருடோத்தமனும் என்னை — பொருத்தமான பொருளுடைய 'புருஷோத்தமன்' என்று சொல்லப்படும் என்னை, முன்னை மயர்வு ஒழித்து — அனாதி$_3$காலமாக உள்ள அஜ்ஞானம் நீங்கப்பெற்று, முற்று உணர்ந்தான் அவன் — முழுதும் அறிகின்றவன்; பின்னை — பின்வரும் காலமெல்லாம், எல்லாம் அறிந்தே — என்னை அடைவதற்குரிய வழியனைத்தையும் அறிந்தவனாய், எவ்வாறும் பத்தியுடன் சிறந்து எனை அடைந்து செல்வான் — என்னை அடையும் வழியான ப$_4$க்திமுறைகளனைத்தாலும் ப$_4$க்திசெய்தவனாகிருன்.

---

19. 'புருஷோத்தம' ஶப்$_3$த$_3$த்துக்குப் பொருளுரைத்தது அப்பொருளை அனுஸந்தி$_4$ப்பதற்காக என்று காட்டிக்கொண்டு, 'புருஷோத்தமன்' என்று அறிவதை மிகச்சிறந்தபயனை அளிப்பதாகப் புகழ்கிருன். (ய: ஏவம் புருஷோத்தமம் மாம் அஸம்மூடோ$_4$ ஜாநாதி) எவனொருவன் இதுவரையில் சொன்னபடி க்ஷராக்ஷர புருஷர்களைக் காட்டிலும் அழிவற்ற தன்மையையுடையவனாயிருக்கையாலும், அவர்களை வியாபிப்பது, தாங்குவது, நியமிப்பது முதலானவற்றைச்செய்வதாலும், அவர்களைக்காட்டிலும்மிக வேறுபட்ட புருஷோத்தமனைக்கலங்காமல் என்னை உள்ளபடி அறிகிருனே, 'எவனொருவன் என்னைப் புருஷோத்தமனை அறிகிருனே' என்று அந்வயித்துப் பொருள் கொண்டால் 'அஸம்மூட$_4$:' (கலங்காமல்) என்னும் பத$_3$ம் பொருளற்றதாக ஆகிவிடும். அதனால் 'புருஷோத்தமனான என்னை முற்கூறியபடி கலங்காமல் உள்ளபடி அறிகிருனே' என்று பொருள் கொள்ளப்பட்டது. ஸம்மூட$_4$த்வமாவது—ஜீவன் தன்னையும் புருஷோத்தமனையும் ஒருபடிப்பட்ட

योगेन च विसजातीयं जानाति, स सर्ववित् — मत्प्राप्त्युपायतया यद्वेदितव्यं तत्सर्वं वेद। भजति मां सर्वभावेन — ये च मत्प्रा-

---

வராக மயங்குதல். அஸம்மூட₄த்வமாவது - அந்த மயக்கமில்லாமை. முன்சொன்னபடி ஜீவன் தன்னைப்போல் புருஷோத்தமனை அழியும் தன்மையுடையவனுய், வியாபிக்கப்படுபவனுய், தாங்கப்படுபவனுய், நியமிக்கப்படுபவனுய் மயங்காமல், அழியாத் தன்மையுடையவனுய், க்ஷராக்ஷரபுருஷர்களை வியாபிப்பவனுய், தாங்குபவனுய், நியமிப்பவனுய் அனுஸந்தி₄ப்பதனுல் அந்த மயக்கமற்ற உண்மையறிவு ஏற்படுகிறது என்று கருத்து. இங்கு அஸம்மூட₄ ஶப்₃த₃த்தினுல் - அத்₃வைதிகள் கூறும் ஜீவேஶ்வரர்களின் ஐக்யஜ்ஞானம் மயக்கமே என்பதும், ப்ரக்ருதி, புருஷன், ஈஶ்வரன் என்னும் மூன்று தத்துவங்களின் பே₄த₃ஜ்ஞானமே உண்மையறிவு என்பதும் உணர்த்தப்பட்டதாயிற்று. இனி ஶ்லோகத்தின் உத்தரார்த்த₄த்தாலே இந்த உண்மையறிவை உடையவனுக்கு விளையும் பயனைக் கூறுகிருன்— (ஸ ஸர்வவித்) அவன் என்னை அடைவதற்கு உறுப்பான உபாயங்களைக் குறித்து அறியவேண்டுவது அனைத்தையும் அறிந்தவனுகிருன். இங்கு புருஷோத்தம ஶப்₃த₃த்தின் பொருளை அறிவதனுல், "அங்க₃ாநி வேதா₃ஶ்சத்வார: மீமாம்ஸா ந்யாயவிஸ்தர: | புராணம் த₄ர்மஶாஸ்த்ரம் ச வித்₃யா ஹ்யேதாஶ் சதுர்த₃ஶ|| ஆயுர்வேதே₃ா த₄நுர்வேத₃: கா₃ந்த₄ர்வஶ்சேதி தே த்ரய:| அர்த்த₂ஶாஸ்த்ரம் சதுர்த்த₂ம் ச வித்₃யா ஹ்யஷ்டாத₃ஶைவ தா: ||" [ஆறு அங்க₃ங்கள், நாலுவேத₃ங்கள், மீமாம்ஸா ஶாஸ்த்ரம், ந்யாயஶாஸ்த்ரம், புராணம், த₄ர்மஶாஸ்த்ரம் ஆகியவை பதினுலு வித்₃யாஸ்த₂ானங்கள் எனப்படுகின்றன. இவற்ருேடு ஆயுர்வேத₃ம், த₄நுர்வேதம், கா₃ந்த₄ர்வ (ஸங்கீ₃த) வேதம், அர்த்த₂ஶாஸ்த்ரம் என்னும் நாலு உபவேத₃ங்களையும் சேர்த்து, பதினெட்டு வித்₃யாஸ்த₂ானங்களாகவும் கூறுவதுண்டு] என்கிற பதினெட்டு வித்₃யாஸ்த₂ானங்களின் அறிவு விளையாது. ஆகையால் அதைப்பொருளாகக் கொள்ளமுடியாது. இங்கு "ஸர்வவித்" என்று உலகிலுள்ள எல்லாப்பொருளையும் அறிகிருன் என்றும் கொள்ளமுடியாது. 'மயிர், புழு, பூச்சிகள் முதலானவற்றை அறிகிருன்' என்று கூறிப் புகழ்வதும் இங்கு பொருத்தமற்றது. மேலே 'எல்லா ப்ரகாரங்களாலும் ப₄க்தி செய்கிருன்' என்று சொல்லியதோடும் இவ்வறிவுகள் பொருத்தமற்றவை. ஆகையால், மேலே சொல்லுவதற்கேற்ப

त्युपायतया मद्भजनप्रकारा निर्दिष्टास्तैश्च सर्वैर्भजनप्रकारैर्मां भजते, सर्वैर्मद्विषयैर्वेदनैर्मम या प्रीतिर्या च मम सर्वैर्मद्विषयैर्भजनैः, उभयविधा सा प्रीतिरनेन वेदनेन मम जायते ॥ १९ ॥

"என்னை அடைவதற்கு உறுப்பான உபாயங்களைப் பற்றி அறிய வேண்டியதனைத்தையும் அறிகிறான்" என்று இங்கு பொருள் கொள்வதே பொருத்தமானது, (மாம் ஸர்வபா₄வேந ப₄ஜதி) என்னை அடைவதற்கு உபாயமாக என்றால் சொல்லப்பட்ட ப₄ஜன ப்ரகாரங்கள் அனைத்தாலும் என்னை ப₄க்திசெய்பவனாகிறான். பா₄வ ஶப்₃த₃த்தை 'க்ரியை' என்னும் பொருளுடையதாகவோ, 'பதா₃ர்த்த₂ம்' என்னும் பொருளுடையதாகவோ கொண்டு 'ஸர்வ பா₄வேந' என்பதற்கு ப₄ஜன ப்ரகாரங்கள் அனைத்தையும் பொருளாகக் கொள்ளவேண்டும். "ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந் தஶ்ச த்₃ருட₄வ்ரதா:| நமஸ்யந்தஶ்ச மாம் ப₄க்த்யா ||" [கீ₃தை 9—14] "யோ மாம் ஸ்மரதி" [8—14] "மச்சித்தா:-கத₂யந்தஶ்ச மாம் நித்யம்"[10—9] முதலான இடங்களில் முன்சொல்லப்பட்ட கீர்த்தனம், யதனம் (முயற்சி), நமஸ்கரணம், ஸ்மரணம், சிந்தனம், கத₂நம் முதலான ப₄க்திப்ரகாரங்களே இச்சொல்லால் கருதப்படுகின்றன என்பது தெளிவு. 'ஸர்வபா₄வேந ப₄ஜதி' என்பதற்கு "வாஸுதே₃வஸ் ஸர்வம்" [கீ₃தை7—19] என்னும் மஹாத்மாவான ஸ்வயம் ப்ரயோஜன ப₄க்திநிஷ்ட₂னின் நிலையைக்கொள்வது உபாஸக ப₄க்தனைப் புகழும் இந்த ப்ரகரணத்திற்குப் பொருத்தமற்றது. ஆகையால், சிறந்த கீர்த்தநாதி₃களையே ஸர்வபா₄வஶப்₃த₃த்துக்குப் பொருளாகக் கொள்ளவேண்டும். இங்கு 'ஸர்வவித்' என்றதால் தத்த்வஹிதங்கள் அனைத்தையும் அறிதலையும், "ஸர்வபா₄வேந ப₄ஜதி" என்றதால் ஹிதமான உபாயத்தின் அனுஷ்டா₂னத்தையும் புருஷோத்தமஶப்₃த₃ா₃ர்த்த₂த்தை அறிந்தவனுக்குச் சொல்லுவதாக விளங்குகிறது. இது பொருந்தாதே. புருஷோத்தமஶப்₃த₃ா₃ர்த்த₂த்தை அறிந்ததினால் பரவ்யூஹ விப₄வ கு₃ணசேஷ்டிதங்கள் அனைத்தையும் அறிந்ததாகவோ, எல்லாவித₄மான ப₄க்தியைச் செய்ததாகவோ ஆகிவிடாதே. 'இங்கு ஏறிட்டுத் துதிக்கப்படுகிறது' என்று கூறினால், அது உண்மையல்லவாகையால் பயனற்றதாகிறது. "புருஷோத்தமஶப்₃த₃ா₃ர்த்த₂த்தை அறிவதால் அனைத்தையும் அறிந்தவனாகிறான்; எல்லா ப்ரகாரங்களாலும் ப₄க்திசெய்தவனாகிறான்" என்று இங்கு புருஷோத்தமஶப்₃த₃ா₃ர்த்த₂ஜ்ஞானத்துக்குப் பயனைக் கூறுவதாகக்

* भा ॥ इत्येतत्पुरुषोत्तमत्ववेदनं पूजयति—

इति गुह्यतम शास्त्रमिदमुक्तं मयाऽनघ ।
एतद्बुद्ध्वा बुद्धिमांत्स्यात्कृतकृत्यश्च भारत ॥ २०

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु पुराणपुरुषोत्तमयोगो नाम
पञ्चदशोऽध्यायः ॥ १५ ॥

20. இதி கு3ஹ்யதமம் ஶாஸ்த்ரம் இத3 முக்தம் மயாऽநக4 ।
ஏதத்3பு3த்3த்4வா பு3த்3தி4மாந் ஸ்யாத் க்ருதக்ருத்யஶ்சப4ாரத ॥

இதி ஸ்ரீமத்3ப4க3வத்3கீ3தாஸூபநிஷத்ஸு புராண
புருஷோத்தமயோகோ3 நாம பஞ்சத3ஶோऽத்4யாய: ॥ 15

அநக4—குற்றமற்றவனே! ப4ாரத—பரதகுலத்திலுதித்தவனே! இதி — இவ்வண்ணமாக, இத3ம் — இந்தப்புருஷோத்தம வித்3யையாகிற, கு3ஹ்யதமம் ஶாஸ்த்ரம்—பரம ரஹஸ்யமான ஶாஸ்த்ரம், மயா — என்னால், உக்தம் — (உனக்கு)உபதே3ஶிக்கப்பட்டது. ஏதத் பு3த்3த்4வா — இதை அறிந்து, பு3த்3தி4மாந் ஸ்யாத்-என்னை அடைவதற்கு வேண்டிய அறிவனைத்தையும் பெற்றவனாகிறான்; க்ருதக்ருத்ய: ச — அதற்குச் செய்யவேண்டியதனைத்தையும் செய்தவனாகிறான்.

---

கொள்ளும்போது "ஏதத்3பு3த்3த்4வா பு3த்3தி4மாந் ஸ்யாத் க்ருதக்ருத்யஶ்ச" [இதையறிந்தவன் அறியவேண்டிய அறிவனைத்தையும் அறிந்தவனாகிறான்; செய்யவேண்டியதனைத்தையும் செய்தவனாகிறான்] என்று அடுத்த ஶ்லோகத்தில் சொல்லியிருப்பதோடு புநருக்தியும் உண்டாகிறது ஆகையால் இந்த உத்தரார்த்த4த்துக்குத் தாத்பர்யம் என்ன? எனில்: "என்னை அடைவதற்குறுப்பான உபாயங்கள் அனைத்தையும் அறிவதாலும், என்னுடைய ப4க்திப்ரகாரங்கள் அனைத்தையும் அனுஷ்டிப்பதாலும் எனக்கு எந்த ப்ரீதிகள் ஏற்படுமோ, அந்த இருவகையான ப்ரீதிகளும் புருஷோத்தமஶப்3த3ார்த்த2த்தை அறிபவன் விஷயத்தில் எனக்கு ஏற்படும்" என்று புருஷோத்தம வித்3யையைப்புகழ்வதே-இங்கு தாத்பர்யமாகையாலே எக்குறையுமில்லை. (ப4ாரத) ப4ரதகுலத்தில் உதித்த நீ இந்தப்புருஷோத்தமஶப்3த3ார்த்த2த்தை அறியவேண்டியது மிகவும் அவஶ்யம் என்று கருத்து. 19.

---

* இந்த அவதாரிகா ப4ாஷ்யத்தை முந்தின ஶ்லோக ப4ாஷ்யத்தின் இறுதியாகக் கொள்வதுமுண்டு.

இன்னேயிச் சாத்திரமா யேய்ந்த மறைபொருளை
மன்னே யுரைத்தேனுன் மற்றிதனை — நன்னெறியா
வுற்றறிந்தா னேரே யுணர்ந்தானும் பார்த்தனே
மற்றனைத்துஞ் செய்தவனும் வாய்ந்து. 20.

பார்த்தனே — குந்தீபுத்திரனே! மன்னே! — அரசனே! இன்னே — இவ்வண்ணமாக, இச்சாத்திரமாய் ஏய்ந்த மறை பொருளை — புருஷோத்தமவித்3யையாகிற பரம ரஹஸ்யமான ஶாஸ்த்ரத்தை, நான் உரைத்தேன் — நான் உனக்கு உபதே3ஶித்தேன்; மற்று இதனை — இந்த ஶாஸ்த்ரத்தை, நல் நெறியா உற்று அறிந்தான் — (அறிவடைவதற்கு) நல்ல வழியாகக்கொண்டு அறிந்தவன், நேரே உணர்ந்தானும் — என்னை அடைவதற்கு வேண்டிய அறிவனைத்தையும் பெற்றவனுகிருன்; மற்று — மேலும், அனைத்தும் வாய்ந்து செய்தவனும் — அதற்குச்செய்யவேண்டியதனைத்தையும் நன்கு செய்தவனுகிருன்.

---

20. மிகவும் ரஹஸ்யமானதாகையால் அநதி4காரிகளிடமிருந்து மறைக்கத்தக்கதாய், சொன்னதனைத்தும் உண்மையாயிருப்பதாய், மிகச்சிறந்த பயனை விளைப்பதாயிருப்பது இந்தப்புருஷோத்தமவித்3யை என்று கூறி இவ்வத்தியாயத்தை நிறைவுபடுத்துகிருன். "இதி கு3ஹ்யதமம் ஶாஸ்த்ரம்" என்று இங்கு படித்திருப்பதைக் கண்டு சிலர் கீ3தாஶாஸ்த்ரம் இத்துடன் நிறைவடைகிறது என்று கூறினுர்கள். பெரும்பாலான பா4ஷ்யகாரர்கள் பதினெட்டு அத்தியாயங்களுக்கும் பா4ஷ்யமிட்டிருக்கையாலும், கடபயாதி3ஸங்க்2யையின்படி 18 என்னும் எண்ணைக்குறிக்கும் 'ஜயம்' என்னும் பெயரையுடைய பா4ரதத்தில் பதினெட்டு பர்வங்கள், பதினெட்டு நாள்போர், பா4ரத ஸாரமான கீ3தையில் பதினெட்டு அத்தியாயங்கள் என்பது பிரசித்தமானதாகையாலும் கீ3தை பதினெட்டு அத்தியாயங்கள் கொண்டது என்பதே உண்மை. "புருஷோத்தமவித்3யையால் மட்டும் எம்பெருமானுக்கு எல்லாவிதமான ப்ரீதியும் உண்டாகுமாகில், ப4க்தி முதலான ஸாத4னங்களை விதி4ப்பது பயனற்றதாகுமே" என்னும் கேள்விக்கு, "ப4க்தி முதலான எல்லா நினைவுகளுக்கும் எம்பெருமான் புருஷோத்தமன் என அறிவதே மூலகாரணமாகையால் இப்படிக் கூறுவதில் குறையில்லை" என பதில் அளிக்கிறது இந்த ஶ்லோகம். சில அதி4காரிகளுக்கு இந்தப் புருஷோத்தமயாதா2ர்த்2ய ஜ்ஞானமே மோக்ஷமீருக எல்லாப்பலன்களையும் அளித்துவிடும் என்னும் கருத்துடையதாகவும் இந்த நிக3மனஶ்லோகத்தைக் கொள்ளலாம்.

भा ।। इत्थं मम पुरुषोत्तमत्वप्रतिपादनं सर्वेषां गुह्यानां गुह्यतममिदं शास्त्रं त्वमनघतया योग्यतम इति कृत्वा मया तवोक्तम् ।

---

(இத₃ம் ஶாஸ்த்ரம்) புருஷோத்தம ஶப்₃த₃ார்த்த₂த்தை விளக்கும் புருஷோத்தம வித்₃யையாகிற இந்த ஶாஸ்த்ரம். 'இத₃ம்' என்று 'இந்த ஶாஸ்த்ரத்தைச் சொல்லுபவரும் கிடையாது; அதைக் காது கொடுத்துக் கேட்பவரும் கிடையாது' என்று உணர்த்தப்படுகிறது. அன்றிக்கே, மற்ற ஶாஸ்த்ரங்களைக் காட்டிலும் இதன் சிறப்பை 'இத₃ம்' ஶப்₃த₃ம் உணர்த்துவதாகவும் கொள்ளலாம். "யஸ்மிந் ப்ரஸாத₃ஸுமுகே₂ கவயோऽபி தே தே ஶாஸ்த்ராண்யஶாஸுரிஹ தந்மஹிமாஶ்ரயாணி । க்ருஷ்ணேந தேந யதி₃ஹ ஸ்வயமேவ கீ₃தம் ஶாஸ்த்ரஸ்ய தஸ்ய ஸத்₃ருஶம் கிமிஹாஸ்தி ஶாஸ்த்ரம் ||" [எவனொருவனுடைய உகப்பினாலே அந்தந்தக் கவிகள் அவனுடைய பெருமையைக் கூறும் ஶாஸ்த்ரங்களை இயற்றினார்களோ, அந்தக் கிருஷ்ணன் தன்னாலேயே இயற்றப்பெற்ற கீ₃தா ஶாஸ்த்ரத்துக்கு இணையாக வேறு என்ன ஶாஸ்த்ரம் இவ்வுலகில் உள்ளது?] என்று சான்றோர்களால் சொல்லப்பட்டதன்றோ. இந்த ஶாஸ்த்ரம் மேலும் எத்தகையது? எனில்: (கு₃ஹ்யதமம்) அநதி₄காரிகளிடமிருந்து மறைக்கத்தக்க எல்லா ரஹஸ்யங்களைக் காட்டிலும் பரம ரஹஸ்யமானது. (மயா உக்தம்) சொல்லவேண்டிய எல்லா உண்மைகளையும் அறிந்தவனாய், நீ தகுந்த அதி₄காரி என்பதை அறிந்தவனாய், உனது நண்பனான என்னாலே சொல்லப்பட்டது. (இதி உக்தம்) வேறெவராலும் இதற்கு முன் சொல்லப்படாத இவ்வர்த்த₂ம் உன் தகுதி கருதி என்னாலே உனக்கே இப்போது சொல்லப்பட்டது என்று கருத்து. தகுதியை விளக்குகிறான் — (அநக₄) குற்றமற்றவனே! "இத₃ம் தே நாதபஸ்காய நாப₄க்தாய கதா₃சந । ந சாஶுஶ்ருஷவே வாச்யம் ந ச மாம் யோऽப்₄யஸூயதி ||" [கீ₃தை 18-67] [இந்த கீ₃தாஶாஸ்த்ரத்தைத் தவம் புரியாதவனுக்குச் சொல்லக் கூடாது. உன்னிடமும் என்னிடமும் ப₄க்தியில்லாதவனுக்கு

एतद्बुद्ध्वा बुद्धिमान्स्यात्कृतकृत्यश्च — मां प्रेप्सुना उपादेया या बुद्धिस्सा सर्वा उपात्ता स्यात्; यच्च तेन कर्तव्यम्, तत्सर्वं कृतं

---

ஒருபோதும் சொல்லக்கூடாது. கேட்பதில் சிரத்தையில்லாதவனுக்கும் சொல்லக்கூடாது. என்னிடம் பொருமையுள்ளவனுக்குச் சொல்லவே கூடாது] என்று இந்த கீ₃தாஶாஸ்த்ரத்தின் முடிவில் சொல்லப்பட்ட தவம் புரியாமை, ப₄க்தியில்லாமை, சிரத்தையில்லாமை, பொருமை ஆகிய குற்றங்கள் இல்லாதவனுகையாலே உனக்கு முழுத்தகுதியுண்டு என்று கருத்து. (ப₄ாரத) ப₄ரதகுலமாகிற நற்குடியிலே பிறந்தவனுகையாலே உனக்குச் சிறப்பான தகுதியுண்டு என்று கருத்து. இனி, ஶ்லோகத்தின் பிற்பாதியாலே இந்தப் புருஷோத்தம வித்₃யையை அறிந்தவனுக்கு உண்டாகும் ப₂லனைக் கூறுகிருன்- (ஏதத்₃பு₃த்₃த்₄வா பு₃த்₃தி₄மாந் ஸ்யாத்) இந்தப் புருஷோத்தம வித்₃யையை அறிந்தவனே அறிவாளியாகிருன். அதாவது — என்னை அடைய விரும்புகிறவன் கைக்கொள்ள வேண்டிய அறிவு அனைத்தும் அவனல் கைக்கொள்ளப்பட்டதாகிறது என்று கருத்து. "ஸா வித்₃யா யா விமுக்தயே... வித்₃யாந்யா ஶில்பநைபுணம்" [வி. பு. 1—19—41] [எந்த அறிவு மோக்ஷத்துக்குக் காரணமாகிறதோ அதுவே உண்மையான அறிவாகும். மற்ற அறிவெல்லாம் செருப்புத் தைத்தல் போன்ற கைத்தொழில் திறமையேயாகும்] "தத்₃ ஜ்ஞாநம் அஜ்ஞாநம் அதோऽந்யது₃க்தம்" [வி. பு. 6-5-87] [பரம்பொருளை அறிவதற்கும், காண்பதற்கும், அடைவதற்கும் எது உறுப்பாகிறதோ, அதுவே உண்மையான அறிவாகும். மற்ற அறிவனைத்தும் அறிவின்மையை ஒத்ததே என்று சொல்லப்படுகிறது] "ஏதஜ் ஜ்ஞாநமிதி ப்ரோக்தம் அஜ்ஞாநம் யத₃தோऽந்யதா₂" [கீ₃தை 13--11] [இங்கு சொல்லப்பட்ட 'அமாநித்வம்' முதலான கு₃ணங்களை அறிவதே உண்மையில் அறிவெனச் சொல்லப்படுகிறது. இதுக்கு மாறுபட்ட அறிவனைத்தும் அறிவுக்கு விரோதி₄யேயாகும்] என்று சொல்லப்பட்ட ரீதியில் மற்ற அறிவுகளெல்லாம் அறிவின்மையையும் ஜ்ஞாநவிரோதி₄களையும் ஒத்தவை என்று கருத்து.

स्यादित्यर्थः । अनेन श्लोकेनानन्तरोक्तं पुरुषोत्तमविषयं ज्ञानं शास्त्रजन्यमेवैतत्सर्वं करोति, न तत् साक्षात्काररूपमित्युच्यते ॥ २० ॥
इति श्रीभगवद्रामानुजविरचिते श्रीमद्गीताभाष्ये पञ्चदशोऽध्यायः ॥ १५ ॥

---

(க்ருதக்ருத்யஶ்ச) என்னை அடைய விரும்புகிறவனால் அனுஷ்டி₂க்கத்தக்கது எதுவோ அது அனைத்தும் இந்தப் புருஷோத்தம வித்₃யையை அறிந்தவனால் செய்யப்பட்டதாகிறது. மோக்ஷமடைய விரும்புகிறவனைப்பற்றிய பிரகரணமாகையாலே, இங்கு க்ருத்ய ஶப்₃த₃ம் அவன் கைக்கொள்ளவேண்டிய கர்மங்களைக் குறிக்கிறது. அக்கர்மங்களே "தத் கர்ம யந்ந ப₃ந்த₄ாய" [வி. பு. 1-19-41] [எந்தக் கர்மம் ஸம்ஸாரப₃ந்த₄த்துக்குக் காரணமாகாமலிருக்கிறதோ அதுவே உண்மையில் கர்மமாகும்] என்று கைக்கொள்ளத்தக்கவையாகப் புகழப்பட்டன. "ஆயாஸாயாऽபரம் கர்ம"[வி.பு.1-19-41] [மற்ற கர்மம் அனைத்தும் தே₃ஹஶ்ரமத்துக்கே உறுப்பாகிறது] என்று மற்ற கர்மங்கள் கர்மம் எனத்தகாதவை என்று இகழப்பட்டன. ஆகையால், 'க்ருதக்ருத்ய' ஶப்₃த₃த்துக்கு இப்படியே பொருள் கொள்ளவேண்டும். இங்கு பின்வரும் கேள்விகள் எழுகின்றன:- (1) இங்கு புருஷோத்தம வித்₃யையோ அல்லது அது பற்றிய அறிவோ புகழப்படுகிறது; அப்படியிருக்கையில் 'ஶாஸ்த்ரம்' என்று கூறுவானேன்? (2) முன்ஶ்லோகத்திலும் இதே அர்த்த₂த்தைச் சொல்லியிருக்கும்போது இங்கு அதே அர்த்த₂த்தைச் சொல்லுவது புநருக்தியாகாதா? என்பதே அக்கேள்விகள். இங்கு 'ஶாஸ்த்ரம்' என்று கூறியிருந்தபோதிலும், "ஏதத்₃பு₃த்₃த்₄வா" என்கையாலே பொருளோடு கூடிய ஶாஸ்த்ர ஜ்ஞாநமே புகழப்படுகிறது. ஆகையால், அர்த்த₂ ஜ்ஞாநத்துக்கே இங்கு சிறந்த ப₂லம் சொல்லப்படுகிறது 'ஶாஸ்த்ரம்' என்று எடுத்ததற்குக் கருத்து என்ன? எனில்: ஶாஸ்த்ரமாத்ரத்தாலுண்டான புருஷோத்தம ஶப்₃த₃ார்த்த₂ ஜ்ஞானத்துக்கே இங்கு சொல்லப்படும் ப₂லம் உண்டு; ஶாஸ்த்ரத்தால் புருஷோத்தமனை அறிந்து அவனை ஸாக்ஷாத்கரிப்பதால்தான் இப்ப₂லம் கிடைக்குமென்று கொள்ள வேண்டியதில்லை என்று கருத்து. "ஸர்வவித்" (19) "ஏதத்₃பு₃த்₃த்₄வா பு₃த்₃தி₄மாந் ஸ்யாத்" (20) என்று இரண்டிடத்திலும் ஒரே அர்த்த₂ம் சொல்லப்படுகிறதாயினும், "ப₄ாரதகுலத்துதித்தவனே! இதை அறிந்து நீயும் க்ருதக்ருத்யனாவாய்" என்று அர்ஜுனன் விஷயமாக முடிக்கிறதாகையாலே புநருக்தியில்லை. 20.

ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி த₃ாஸன் இயற்றிய
கீ₃தார்த்த₂ விவரணத்தில் பதினைந்தாமத்தியாயம் நிறைவுற்றது.

## பகவத் கீதை வெண்பா

(பதினைந்தாம் அத்தியாயத்தின் ஸாரத்தைக் கூறும் பாசுரம்)

ஏலும் புருடோத் தமனென வேற்றத்தைச்
சால விறைவனே தானுரைத்த — மேலான
கீதை பதினைந்தா மோத்துக் கெழுமிகுசீர்ப்
போதப் பொருளுரைத்தோம் பூண்டு.

வாதி₃கேஸரி ஜீயர் அருளிய பகவத்கீதை வெண்பாவில்
பதினைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

ஏலும் புருடோத்தமனென ஏற்றத்தை — தனக்குத்தகுந் ததாயிருக்கும் 'புருஷோத்தமன்' என்னும் பொருத்தமான பெயரைப் பெற்றிருக்கும் சிறப்பை, இறைவனே தான் — ஸர்வேஶ்வரனான கண்ணன் தானே, சால உரைத்த — நன்றாகச்சொன்ன, மேலான கீதை பதினைந்தாம் ஓத்து — கீ₃தையின் சிறந்த பதினைந்தாம் அத்தியாயத்தினுடைய, கெழு மிகு சீர் போதப் பொருள் — நிறைந்ததாய், சிறப்புற்ற தான ஞானப்பொருளை, பூண்டு உரைத்தோம் — வெண் பாவில் இட்டுச் சொன்னோம்.

---

## கீதார்த்த சங்கிரகம்

(ஸ்ரீவேதாந்த தேசிகர்)

பதினைந்தாமத்தியாயத்தின் ஸாரப்பொருள்

15. மூவெட் டினுமதின் மோக மடைந்த வுயிர்களினு(ம்)
நாவெட் டெழுத்தொடு நல்வீடு நண்ணின நம்பரினு(ம்)
மேவெட்டு வன்குண விண்ணோர் களினும் விசயனுக்குத்
தாவிட் டுலகளந் தான்றனை வேறென்று சாற்றினனே

தாவிட்டு உலகு அளந்தான் — (திரிவிக்கிரமாவதாரத்தில்) தாவி உலகத்தை அளந்த எம்பெருமான், விசயனுக்கு — அர்ஜுநனுக்கு, மூவெட்டினும் — இருபத்துநான்கு தத்துவங்களாகிய அசித்திற்காட்டிலும், அதில் மோகம்

அடைந்த — அந்த அசித்தின் தொடர்பால் அஜ்ஞாநத்தைப் பெற்றுள்ள, உயிர்களினும் — (ப₃த்₃த₄) ஜீவர்களைக் காட்டிலும், நா எட்டு எழுத்தொடு — நாவினால் உச்சரிக்கப்பட வேண்டிய திருவஷ்டாக்ஷரத்(தின் அநுஸந்த₄ாநத்)தால், நல் வீடு நண்ணினர் — சிறந்த மோக்ஷத்தைப் பெற்ற, நம்பரினும் — உயர்ந்தவர்(களான முக்தர்) களைக்காட்டிலும், மேவு எட்டு வன்குண விண்ணோர்களினும் — பொருந்திய (பாபமின்மை முதலிய) எட்டு வலிய கு₃ணங்களையுடைய நித்யஸூரிகளைக் காட்டிலும், த(ன்)னை வேறு என்று — தன்னை வேறுபட்டவன் என்று, சாற்றினன்-உபதேசித்தான்.

---

## கீ₃தாஶ்லோகார்த்த₂ச் சுருக்கம்

### பதினைந்தாம் அத்தியாயம்

ஶ்லோ அர்த்த₂ம்

1. ஸம்ஸாரம் ஓர் அரசமரமாக உருவகப்படுத்தப்பட்டு அதை அறிந்தவனே வேத₃த்தை நன்கறிந்தவன் எனப்படுகிறது.

2. முற்கூறிய உருவகம் மேலும் நீட்டிக்கப்படுகிறது.

*3. இந்த மரத்திற்கு கு₃ணங்களில் பற்றே காரணமென்றும் குணங்கடந்த நிலையாலேயே இது அழிகிறதென்றும், அஜ்ஞானமே இதற்கு ஆத₄ாரமென்றும் ஸம்ஸாரிகளால் அறியப்படுவதில்லை.

3*-*4. நல்லறிவால் விளைந்த 'கு₃ணங்களில் பற்றின்மை'யாகிற ஆயுத₄த்தாலே இம்மரத்தைவெட்டி, ப்ராப்யமான ஆத்மா தேடத்தக்கது.

4*. எம்பெருமானை ஶரணமடைவதன் மூலமே பற்றின்மை யாகிற ஆயுத₄த்தைப் பெற்று ஸம்ஸாரத்தை வெட்டி வீழ்த்தலாம்.

5. எம்பெருமானை ஶரணமடைந்தவர்களுக்கு தே₃ஹாத்ம மயக்கம் நீங்குகை, கு₃ணங்களில் பற்றை வெல்லுகை, ஆத்மஜ்ஞானத்தில் எப்போதும் ஈடுபட்டிருக்கை, மற்ற விஷயங்களில் விருப்பம் நீங்கப்பெற்றவர்களாகை, இன்ப துன்பங்களாகிற இரட்டைகளிலிருந்து விடுபடுகை முதலானவை அனைத்தும் எளிதாகி ஆத்மாநுப₄வமாகிற ப₂லமும் ஸித்₃தி₄க்கிறது.

6. பரிஶுத்₃த₄ாத்ம ஸ்வரூபத்தின் பெருமை.

7. எம்பெருமானுடைய செல்வமாயிருக்கும் ஸம்ஸாரி ஜீவன் தான் சேர்த்து வைத்திருக்கும் புண்யபாபரூபமான விலங்குகளாலே வஶியக்கட்டப்பெற்று, தன் ஶரீரமாகிற சிறையிலே அடைபட்டிருக்கிறான்.

8. அவன் ஒரு ஶரீரத்திலிருந்து மற்றொரு ஶரீரத்தில் புகுவது முதலான துன்பங்களை அனுப₄விக்கிறான்.

9. இந்த்₃ரியங்களைக் கொண்டு அவன் விஷம் கலந்த தேன் போன்ற பிராக்ருத விஷயங்களை அனுப₄வித்து உழலுகின்றான்.

10. இத்துன்பங்களையெல்லாம் அவன் அனுப₄விப்பதற்குக் காரணம் ஆத்மாபஹாரமாகிற திருட்டே. இவன் தன் ஸ்வரூபத்தை அறியாமைக்குக் காரணம் தே₃ஹத்தையே ஆத்மா என்று மயங்குவதே. இந்த மயக்கமில்லாமல் அறிவுக்கண்ணையுடையவர்கள் ஆத்மாவை அறிவே வடிவெடுத்ததாகக் காண்கிறார்கள்.

11. முன் ஶ்லோகங்களின் விளக்கம்.

12,13 14 ஸூர்யன், சந்திரன், அக்₃னி முதலானவற்றுக்குள்ளதான பொருள்களைப் பிரகாஶிக்கச் செய்யும் ஶக்தியும், பூ₄மியின் த₄ாரணஶக்தியும், சந்திரனின் போஷணஶக்தியும் ஜாட₂ராக்₃னியின் ஜீர்ணம் செய்யும் ஶக்தியும் இதுபோல் உலகிலுள்ள எல்லாப்பொருள்களுக்குமுள்ளதான ஒவ்வொரு கார்யத்தைச் செய்யும் ஶக்திகளும் எம்பெருமானுடையவையே, ஆகையால், பிராக்ருதப்பொருள்கள் எல்லாமே எம்பெருமானின் செல்வமே.

15. எல்லாப்பொருள்களையும் எம்பெருமானோடு ஒரே வேற்றுமையில் படிப்பதற்குக் காரணம் அவன் அனைவருடைய ஹ்ருத₃யத்திலும் எழுந்தருளி நியமிப்பதே. வேத₃ங்கள் இவ்வர்த்த₂த்தைச் சொல்லுகின்றன. எல்லா வேத₃வாக்யங்களாலும் முக்கியமாக அறியப்படுபவனும் அவற்றில் சொல்லப்பட்ட கர்மங்களுக்குப் ப₂லம் அளிப்பவனும் எம்பெருமானே.

16. புருஷோத்தம வித்₃யையின் தொடக்கம். க்ஷரபுருஷனாகிற ஸம்ஸாரி ஜீவன் அக்ஷரபுருஷனாகிற முக்தன் என்று ஜீவர்கள் இருவகைப்படுவர்

17. அசித், ஸம்ஸாரிஜீவன், முக்தன் என்னும் மூன்று பொருளையும் வியாபித்து, தாங்கிநின்று, நியமிக்கும் பரமாத்மாவாகிற உத்தமபுருஷன் முற்கூறிய க்ஷராக்ஷர புருஷர்களைக் காட்டிலும் வேறுபட்டவன்.

18. ஸம்ஸாரி ஜீவனைக் கடந்து நிற்பதாலும் முக்தனைக் காட்டிலும் மேலானவனுயிருப்பதாலும் ஶ்ருதிஸ்ம்ருதிகளில் "புருஷோத்தமன்" என்று பெயர் பெற்றவன் எம்பெருமானே.

19. இந்தப் புருஷோத்தம வித்₃யையை அறிந்தவன் எல்லா மோக்ஷோபாயங்களையும் அறிந்தவனுகிருன். ப₄க்தி வகைகள் அனைத்தாலும் ப₄க்தியைச் செய்தவனுகிருன்.

20, "உன் தகுதியைப் பார்த்து இந்தப் பரமரஹஸ்யமான ஶாஸ்த்ரத்தை உனக்கு உபதே₃ஶித்தேன். இதை அறிந்து அறியவேண்டியதனைத்தையும் அறிந்தவனுகவும், செய்ய வேண்டியதனைத்தையும் செய்தவனுகவும் ஆவாயாக" என்று அர்ஜுனனுக்குக் கண்ணன் உபதே₃ஶித்து அத்தியாயத்தை நிறைவுபடுத்துகிருன்.

பதினைந்தாமத்தியாயத்தின் கீ₃தாஶ்லோகார்த்த₂ச் சுருக்கம் நிறைவுற்றது.

---

## ஒன்பது முதல் பதினைந்து ஈருன அத்தியாயங்களின் ஸாரப்பொருள்

[எட்டாவது அத்தியாய வியாக்யானத்தின் இறுதிப் பக்கத்தின் தொடர்ச்சி]

9. எம்பெருமானுடைய பெருமை, மனிதனுயிருக்கும் போதே மேன்மையுடையவனுயிருக்கை, ஜ்ஞானிகளுச்குள்ள சிறப்பு, ப₄க்தியோக₃மெனப்படும் உபாஸனம் ஆகியவை விளக்கப்பட்டது.

10. ஸாத₄னப₄க்தி உண்டாகி வளர்வதற்காக, தனது கல்யாண கு₃ணங்கள் அளவற்றவை என்றும், எல்லாப் பொருள்களும் தனக்கு வசப்பட்டவை என்றும் விரிவாக உபதேசிக்கப்பட்டது.

11. தன்னை உள்ளபடி காண்பதற்குரிய ஞானக்கண் அர்ஜுனனுக்குக் கண்ணனால் கொடுக்கப்பட்டதைச் சொல்லுகிறது. ப₄க்தியினாலேயே பரம்பொருளை அறிவது, காண்பது, அடைவது ஆகியவை உண்டாகும் என்று சொல்லுகிறது.

12. ஆத்மோபாஸனத்தைக் காட்டிலும் ப₄க₃வது₃பாஸனமாகிற ப₄க்தியின் சிறப்பு, அந்த ப₄க்திக்கு உபாயங்கள், ப₄க்தியில் சக்தியில்லாதவனுக்கு ஆத்மோபாஸனமே கைக்கொள்ளத்தக்கது, கர்மயோக₃ம் முதலானவற்றுக்கு வேண்டிய கு₃ணங்களின் வகைகள், ப₄க்தனிடம் எம்பெருமானுக்குள்ள மிகுந்த உகப்பு ஆகியவை விளக்கப்படுகின்றன.

13, தே₃ஹத்தின் ஸ்வரூபம், ஜீவாத்ம ஸ்வரூபத்தை அடைவதற்கு உபாயம், ஆத்மாவை ஆராய்ந்து அறிதல், ஆத்மாவுக்கு அசித்தோடு தொடர்பு ஏற்படுவதற்குக் காரணம், ஆத்மாவை அசித்திலிருந்து பிரித்து அனுஸந்தி₄க்கும் முறை ஆகியவை விளக்கப்படுகின்றன.

14. ஸத்வ ரஜஸ் தமோ கு₃ணங்கள் ஸம்ஸார ப₃ந்த₄த்துக்குக் காரணமாகும் முறை, அந்த கு₃ணங்களே ஜீவனுடைய செயல்களுக்குக் காரணமாயிருக்கின்றன என்னும் விஷயம், அந்த கு₃ணங்களைச் செயலற்றதாக்கும் முறை, ஐஶ்வர்யம் கைவல்யம் ப₄க₃வத்ப்ராப்தி என்னும் மூன்று ப்ராப்யங்களும் எம்பெருமானிடமிருந்தே கிடைக்கின்றன என்னும் விஷயம் ஆகியவை விளக்கப்படுகின்றன.

15. அசேதனமான ப்ராக்ருத சரீரத்தோடு சேர்ந்திருக்கும் ப₃த்₃த₄ ஜீவனைக் காட்டிலும், ப்ராக்ருத சரீரத்திலிருந்து விடுபட்டுப் பரிசுத்தியடைந்த முக்த ஜீவனைக் காட்டிலும், புருஷோத்தமனான நாராயணன், அவர்களை வியாபித்து நிற்கையாலும், தாங்குகையாலும், உடையவனாயிருக்கையாலும் வேறுபட்டவன் என்னும் புருஷோத்தம வித்₃யை உபதேசிக்கப்பெற்று, அதற்குப் ப₂லனும் சொல்லப்படுகிறது. அத்தியாயத்தின் தொடக்கத்தில் ஸம்ஸாரம் ஓர் அரசமரமாக உருவகப்படுத்தப்பட்டு, அதை வெட்டும் முறை விளக்கப்படுகிறது.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:







# கீதா வ்யாக்யானம்

[பதினாறு, பதினேழு, பதினெட்டாம்
அத்தியாயங்கள்]

[ப4க3வத்3 கீ3தையும், அதற்கு ஸ்ரீராமாநுஜ ப4ாஷ்யமும், ஆளவந்தார் அருளிய கீ3தார்த்த2 ஸங்க்3ரஹமும், வாதி3கேஸரி ஜீயர் அருளிய பகவத்கீதை வெண்பாவும், ஸ்ரீவேதா3ந்ததே3சிகர் அருளிய கீதார்த்த சங்கிரகமும், 'ஸுதர்சனம்' ஆசிரியர் இயற்றிய கீ3தார்த்த2விவரணம் என்னும் தமிழ் வியாக்கியானமும், கீ3தாஸ்லோகார்த்த2ச் சுருக்கமும் அடங்கியது.]

கிடைக்குமிடம்

S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M A., B.,L,

அட்வகேட்,

ஆசிரியர் 'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்'

3-B, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620 017

ஸ்ரீ ரா. ஸ்ரீ கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப
தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்படுகிறது.



விலை ரூ. 100 தபால்கூலி தனி

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி—17.

# கீதையைப்பற்றி ரிஷிவாக்கு

ஸர்வோபநிஷதோ₃ கா₃வ:
 தோ₃க்₃தா₄ கோ₃பாலநந்த₃ந: ।
பார்த்தோ₂ வத்ஸ: ஸுதீ₄ர் போ₄க்தா
 து₃க்₃த₄ம் கீ₃தாம்ருதம் மஹத் ॥

[எல்லா உபநிஷத்துக்களுமே பசுக்களாகும். அவற்றைக் கறப்பவன் ஆய்ப்பிள்ளையான கண்ணன். அர்ஜுனன் கன்று யிருப்பவன். ஞானியே அப்பாலைப் பருகுமவன், மிகச் சிறந்த கீ₃தையாகிற அமுதமே பாலாகும்.]

# கீதையைப்பற்றித் திருமழிசைப்பிரான்

நான்முகன் திருவந்தாதி-71

சேயன் அணியன் சிறியன் மிகப்பெரியன்
ஆயன் துவரைக்கோனாய்நின்ற மாயன் அன்(று)
ஓதிய வாக்கதனைக் கல்லார் உலகத்தில்
ஏதிலராம் மெய்ஞ்ஞான மில்.

श्रीमते रामानुजाय नमः

# கீதாவ்யாக்யானம்

## முன்னுரை

[ஸ்ரீ உ வே திருமலை அனந்தாண் பிள்ளை
கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி,
190, கோவிந்தராஜன் ஸந்நிதித் தெரு,
திருப்பதி-517501.]

भगवद्गीता (ப₄க₃வத்₃கீ₃தா) என்ற சொல் भगवता गीता (ப₄க₃வதா கீ₃தா) என்று விரிக்கப்படும். பகவானுகிற க்ருஷ்ணனுலே, மஹாபாரதப் போரின் ஆரம்பத்தில் அர்ஜுனனைக் குறித்துச் சொல்லாலும் பொருளாலும் இனிமை பயக்கும்படி அருளிச்செய்யப்பட்ட நூல் என்பது இதன் பொருள்.

'பகவான்' என்பதும் 'ப்₃ரஹ்ம' என்பதும் பரியாயமாய்க் கொண்டு, புருஷோத்தமனுய் ஸர்வேச்வரனுன நாராயணனையே முக்கியமான வ்ருத்தியாலே (சொல்லாற்றலாலே) குறிப்பிடுவன.

இப்படி நாராயணனுலே அருளிச்செய்யப்பட்ட கீதைக்கு ப்ரதிபாத்யவிஷயமாவானும் நாராயணனே.

स्वधर्मज्ञानवैराग्य-साध्यभक्त्येकगोचरः ।
नारायणः परं ब्रह्म गीताशास्त्रे समीरितः ॥

[தத்தம் வர்ணுச்ரம தர்மங்களாகிற கர்மயோக₃ம், ஞானயோக₃ம், இதர விஷய வைராக்யம் ஆகிய இவற்றைக் கொண்டு ஸாதிக்கத்தக்க பக்தியோகமொன்றுக்கே விஷயமாய், (அடையத்தக்க பலமாய்) பரப்₃ரஹ்மமென்று கூறப்படுகின்ற நாராயணன் கீதாசாஸ்த்ரத்தில் ஐயந்திரிபறக் கூறப்பட்டுள்ளான்.] என்று பரமாசார்யராகிய ஆளவந்தார் அருளிய கீதார்த்தஸங்க்ரஹத்தின் முதல் ச்லோகத்தால் இவ்விஷயம் அறியப்படும்,

## கீதையின் ப்ராமாண்யம்

ப்ராமாண்யமாவது— உண்மைப்பொருளை உணர்த்தும் தன்மை. இது இருவகைப்படும்– ஸ்வத: ப்ராமாண்யமென்றும், பரத: ப்ராமாண்யமென்றும். தானாகவே (இயற்கையாகவே) ஏற்பட்டுள்ள ப்ராமாண்யம் என்றும், மற்றொன்றைப் பின்பற்றுவதனால் செயற்கையாக உண்டான ப்ராமாண்யம் என்றும் அவற்றுக்கு முறையே பொருள் கொள்ளத்தக்கது, அபௌருஷேயமாய் நித்யமானவேதம் ஸ்வத: ப்ராமாண்யம் பெற்றது. இந்த கீதை, மற்றுமுள்ள தர்ம சாஸ்த்ரங்கள் ஆகிய ஸ்ம்ருதிகள், ராமாயணாதி இதிஹாஸங்கள், விஷ்ணுபுராணம் முதலிய புராணங்கள் ஆகியவையனைத்தும் — வேதத்தை அநுஸரித்து அவற்றின் பொருள்களையே விவரிப்பது காரணமாகச் செயற்கையான ப்ராமாண்யத்தைப் பெறுகின்றன. இவற்றுள் முதலாவதான கீதை ஸர்வஜ்ஞனான பகவான் அருளியது. ஏனையவை அவன் அருளைப் பெற்ற வால்மீகி, வ்யாஸர் தொடக்கமான மஹர்ஷிகளால் பணிக்கப்பெற்றவை.

ஸர்வஜ்ஞனான பகவான் அருளியமை கொண்டே கீதையின் ப்ராமாண்யத்தை அறுதியிடலாகாதோ என்றால்— ஆகாது; புத்தமுனியாயும் கபிலமுனியாகவும் அப்பகவான் தானே தோன்றிச் சொல்லிய பௌத்த சாஸ்த்ரமும், ஸாங்க்ய சாஸ்த்ரமும் ப்ராமாண்யம் பெற்றுவிடுமாகையாலென்க. அவ்விரண்டையும் வைதிகர்கள் பரிக்ரஹியார்களிறே வேதவிருத்தங்களாகையால். ஆக, வைதிகர்களான நம் பூர்வர்களான ஆழ்வார்கள் ஆதரித்தருளுகையால்தான் கீதைக்கு ப்ராமாண்யம் உண்டாவது ஆழ்வார்களுடைய வைதிகத்வம் 'பரமவைதிகர்களிறே ஆழ்வார்களாகிறார்' என்று பெரியவாச்சான்பிள்ளை [திருநெடு வ்யா 4] குறித்தருளுகையால் அறியவெளிதாகும். நம்மாழ்வார் அங்கீகரித்தருளுகையால் கீதைக்கு ப்ராமாண்யமாகிற உத்கர்ஷம் உண்டாயிற்றென்று அழகிய மணவாளப்பெருமாள்

நாயனார் ஆசார்யஹ்ருதயம் 194 ம் சூர்ணிகையில் பணித்தருளுகிறார்—'பகவன் ஞானவிதி பணிவகை என்று இவரங்கீகாரத்தாலே அதுக்கு உத்கர்ஷம்' என்று, திருவாய்மொழியில் ''அந்தமிலாதியம் பகவன் வணக்குடைத் தவநெறி வழிநின்று'' [1-3-5] [கண்ணபிரானருளிய-வணக்கத்தையுடைய பக்தி மார்க்கமாகிய வழியிலே நிலைநின்று] என்றும், 'ஞானவிதி பிழையாமே' [5-2-9] [கண்ணன் விதித்த ஞானவிசேஷமாகிய பக்திமார்க்கம் தவறாமல்] என்றும், 'பண்டே பரமன் பணித்த பணிவகையே கண்டேன்' [10-4-9] [முன்பே பரமனான கண்ணபெருமான் 'மாமேகம் ஶரணம் வ்ரஜ' என்று பணித்தருளிய ப்ரபத்தி வழியாக அவனைக் காணப்பெற்றேன்.] என்றும் ஆழ்வார் கீதையை உதாஹரித்துள்ளமை காணத்தக்கது. திருமழிசைப்பிரான் ''மாயனன்றோதிய வாக்கதனைக் கல்லார் உலகத்தில் ஏதிலராம் மெய்ஞ்ஞானமி'' [நான் முகன் 71] [எம்பெருமான் பாரதயுத்தம் தொடங்கின அன்று 'மாமேகம் ஶரணம் வ்ரஜ' என்று ஓதிய சரமச்லோகத்தைத் தஞ்சமாக அறியாதவர், உலகில் தத்துவஞானமில்லாதவர்களாய் எம்பெருமானுக்கு சத்ருக்களாயிருப்பர்.] என்றும், ஆண்டாள் ''திருவரங்கர் தாம் பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டு இருப்பர்'' [நாச்-திரு-11-10] [அழகிய மணவாளன் முன்பு அருளிய — ஸத்யமாய் உயர்ந்த சரமச்லோகமாகிய வார்த்தையை நம்மையராகிய பெரியாழ்வார் குருமுகமாகக்கேட்டு அதன்படி ஒழுகுவர்] என்றும் இது தன்னை ஆதரித்து அருளிச்செய்திருப்பதும் காணல் தகும்.

ஆக, பகவான் பணித்ததேயாகிலும் கீதைக்கு ப்ராமாண்யம் வைதிகர்களான ஆழ்வார்கள் ஸ்வீகரித்ததனால் தான் ஸித்தித்தது என்றதாயிற்று.

## கீதையின் வ்யாக்யானங்கள்

நம்மாழ்வாரை யோகதசையில் ஸாக்ஷாத்கரித்து அவரிடம் நாலாயிரத்தையும், மற்றுமுள்ள வேதாதி க்ரந்த ரஹஸ்யார்த்தங்களையும் அறியப்பெற்ற ஸ்ரீமந்நாதமுனிகளின் திருப்பேரனாராய், அவருடைய ப்ரசிஷ்யரான மணக்கால் நம்பிகள் திருவடிவாரத்தில் ஸகலார்த்தங்களையும், விசிஷ்ய கீதா சாஸ்த்ர ரஹஸ்யார்த்தங்களையும் சிக்ஷிக்கப் பெற்ற ஆளவந்தார் கீதார்த்த ஸங்க்ரஹமென்னும் முப்பத்திரண்டு ச்லோகங்களைத் தன்னகத்தே கொண்டதோர் சுருக்கமான உரையை அருளிச்செய்தார். அவ் யமுனைத்துறைவனிணையடியாம் கதிபெற்றுடைய இராமானுசனும் எம்பெருமானர் தம் பரமாசாரியர் அருளிய கீதார்த்தஸங்க்ரஹத்தையே ஆதாரமாகக்கொண்டு கீதைக்கு பாஷ்யமருளிச்செய்தார். முற்கூறிய ஸங்க்ரஹத்திற்கும் இப்பாஷ்யத்திற்கும், கவிதார்க்கிக கேஸரியாகிய வேதாந்த தேசிகர் கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷை கீதாபாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகை என்கிற விரிவான வ்யாக்யானங்களை முறையே அருளிச்செய்துள்ளார். மேலும் வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயர் தம் பெரியபோதத்துக்கேற்ப கீதையில் ஒவ்வொரு ச்லோகத்துக்கும் மொழிபெயர்ப்பாக ஒவ்வொரு வெண்பாவாக ஒரு இனிய நூலை இயற்றி அருளினர். இங்ஙனம் ஆழ்வார்கள் பரிக்ரஹித்ததனால் ஸித்தித்த கீதையின் ப்ராமாண்யம், ஆளவந்தார் தொடக்கமான ஆசார்யர்களின் வ்யாக்யான ஸௌபாக்யத்தினால் மிகவும் த்₃ருட₄மாயிற்று.

## கீதாவ்யாக்யானம்

வித்யாவிசாரத திவ்யார்த்த ரத்நநிதி இத்யாதிகளான ஸார்த்த₂பி₃ருத₃நாமதே₄யங்கள் பெற்ற ஸ்ரீ உ வே S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி கீதாச்லோகங்களுக்கும், கீதார்த்தஸங்க்ரஹத்திற்கும், மொழிபெயர்ப்பாகிய வெண்

பாக்களுக்கும் தெள்ளிய பதவுரையையும், கீதாபாஷ்யத்துக்குத் தாத்பர்ய சந்த்ரிகையில் ஓரம்சத்தையும் விடாமல் ஸ்வீகரித்து மிக மிக விரிவான வ்யாக்யானமொன்றையும், ஏறக்குறைய மூவாயிரம் பக்கவளவில், மிகவும் பரிச்ரமப்பட்டுப் பெரியோர்களிடம் கேட்டபடியே இயற்றி வெளியிட்டுள்ளார். இப்பணி முப்பத்தாறு வருஷங்களாகத் தொடங்கி நடைபெற்று, இப்போது முடிவுபெற்றுள்ளது, இது ஸம்ஸ்க்ருத பாஷாபரிசயம் குறைந்தவர்களோடு, உபயபாஷாபரிசயமும் சாஸ்த்ரஜ்ஞானமுமுள்ள பண்டிதர்களோடு வாசியற எல்லோர்க்கும் உபஜீவ்யமாக உள்ளது. இப்பேருரையாசிரியராகிய இப்புலவர் பெருந்தகை ஸ்ரீவைஷ்ணவர்திரளால் மிகவும் கொண்டாடத்தக்கவர் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

கீதாசார்யன் க்ருஷ்ணன். கீதையை, வேதத்தை அனுஸரித்திருக்கையாலே ப்ரமாணமென்று அங்கீகரித்த நம்மாழ்வார் க்ருஷ்ணத்ருஷ்ணாதத்வம். கீதார்த்தஸங்க்ரஹமருளியவர், யமுனைத்துறைவராகையாலே க்ருஷ்ணனேயாவர். அந்த யமுனைத்துறைவனிணையடியாம் கதிபெற்றுடைய இராமானுசனாகிய கீதாபாஷ்யகாரர், கைரவிணீ நிவாஸ ரஸிகனான ஸ்ரீவேங்கடக்ருஷ்ணனுடைய க்ருபையினால் அவதரித்தமையாலே க்ருஷ்ணனென்னத்தக்கவரே. வேதாந்ததேசிகரும் க்ருஷ்ணனேயாவார்—பூர்வ ஜன்மத்தில் க்ருஷ்ணசர்மா என்ற ஓர் அந்தணனுக்கு மறுபிறவியில் வேதாந்தாசார்யத்வத்தைத் திருவேங்கடமுடையான் அளித்ததாக — வராஹபுராணத்திலுள்ள ஸ்ரீவேங்கடேசாஷ்டோத்தர சதநாமஸ்தோத்ரத்திலுள்ள 92 ம் திருநாமமாகிய 'कृष्णाख्यविप्रवेदान्तदेशिकत्वप्रदाय' (க்ருஷ்ணாக்₂ய விப்ர வேதா₃ந்த தே₃ஶிகத்வப்ரதா₃ய) என்னும் இவ்வாக்யம் கூறுகின்றமைகொண்டு இவ்விஷயத்தைப் பெரியோர் காதுகின்றமையாலென்க. வாதிகேஸரி ஜீயராகிய கீதாவிவர்த்தகாரர் க்ருஷ்ணனென்று ப்ரஸித்தரான பெரியவாச்சான்

பிள்ளையின் சிஷ்யராகையால் இவரையும் க்ருஷ்ணனென்ருல் குறையொன்றுமில்லை. க்ருஷ்ணர்களெனப்படுகின்ற இவர்களித்தனைவரும் பணித்தருளிய க்ரந்தங்களெல்லாவற்றினுடையவும் அர்த்தவிசேஷங்களைத் தமது கீதா வ்யாக்யானத்தில் புகுத்தி இப்போது உலகிற்கு மஹோபகாரம் செய்தருளிய கீதாவ்யாக்யான கர்த்தாவும் க்ருஷ்ணனாகவே கோல்விழுக்காட்டாலே அமைந்துள்ளமை மிக வியப்பிற்கு உரியது. நிற்க.

இங்ஙனம் அமைந்த இந்த கீதாவ்யாக்யானம் 16, 17, 18 அத்தியாயங்கள் கொண்ட இறுதிப்பகுதியில் உபய கலையாருக்கும் உள்ள அபிப்ராயபேதங்கள் சில விஸ்தாரமாகக்காட்டப்பட்டுள்ளன. அவற்றுள் இரண்டொரு விஷயங்களை இங்கு குறிப்பிட எண்ணுகிறேன்.

## உச்சிஷ்டம்

ஸ்ரீகீதாசார்யன் கீதை 17ம் அத்தியாத்தில் (10 ஆம் ச்லோகத்தில்) ஸாத்விக ராஜஸ தாமஸ புருஷப்ரியமான ஆஹாரபேதத்தை அருளிச்செய்யுமடைவில்

यातयामं गतरसं पूति पर्युषितं च यत् ।
उच्छिष्टमपि चामेध्यं भोजनं तामसप्रियम् ॥ १० ॥

என்று அறுவகைப்படுகின்ற தாமஸாஹாரங்களில் உச்சிஷ்டத்தை ஒன்ருகக் குறிப்பிட்டருளி அது ஸாத்விகர்களுக்கு ஆஹாரமாகாமையை அருளிச்செய்துள்ளான். அங்கு நமது பாஷ்யகாரராகிய எம்பெருமானர் 'उच्छिष्टं – गुर्वादिभ्योऽन्येषां भुक्तशिष्टम्' (ஆசார்யர் முதலியோர் தவிர்ந்த மற்றவர் உண்டு மிச்சமான எச்சில்) என்று தமது கீதாபாஷ்யத்தில் விவரணம் அருளியுள்ளார், இதனில் 'गुर्वादिभ्यः' என்ற தன் கண் உள்ள ஆதி சப்தத்தை விவரியா நின்ற ஸ்ரீ வேதாந்த தேசிகர் தாமருளிய தாத்பர்ய சந்திரிகையில்

'आदिशब्देन-पितुः, ज्येष्ठस्य भ्रातुः, भार्याविषये भर्तुश्च ग्रहणम्' (ஆதி சப்தத்தால் — தமப்பனார் தமையன் கணவன் ஆகிய வர்களைக் கொள்ளுதல் பாஷ்யகாரரால் கருதப்பட்டது) என்று விவரித்தருளுகிறார். இவர்களேயன்றி மஹாத்மாக்களான ஞானிகளும் ஆதிசப்தார்த்தத்தில் அடங்கியவர்கள் என்பது தென்னாசார்யர்களான பெரியவாச்சான் பிள்ளை முதலியோரின் திருவுள்ளம்.

## தேசிகன் திருவுள்ளம்

ஜாதி வேறு, குலம் வேறு. ஜாதி சரீரமுள்ளவரையிலும் அழியாது. அவைஷ்ணவன் வைஷ்ணவனாக மாறும்போது, அவைஷ்ணவகுலம் அழியப்பெற்று வைஷ்ணவகுலம் வந்து விடுகின்றது. பசுவில் உயர்ந்த காமதேனுவானாலும் அதனிடமுள்ள பசுத்வஜாதி அழியாது. அதுபோல் ப்ராஹ்மணரான மதுரகவிகளுக்கு நான்காம் வருணத்தில் அவதரித்த நம்மாழ்வார் ஆசார்யரானதும் நம்மாழ்வாரிடத்தில் உள்ள நான்காம் வர்ணம் போனதனாலன்று. விதுரர் முதலியோரை விட மிக்க பெருமையுடைய ஆழ்வார்களை மதுரகவி லோகஸாரங்கமாமுனி முதலியோர் அநுவர்த்தித்த விஷயத்தை, நம்முடைய அனுஷ்டானத்திற்கு அத்தாட்சியாகக் கொண்டு, நாமும் அப்படி அநுஷ்டித்தல் கூடாது நான்காம் வருணத்தவராகிய ஆழ்வார்களும் ஜாதிவரையறையை மீறி எந்தக்காரியத்தையும் செய்வதில்லையென்று அவர்கள் சரிதத்திலிருந்து விளங்குகின்றது.

'नारायणैकनिष्ठस्य' என்று தொடங்கும் விஹகேந்த்ர ஸம்ஹிதாவசனத்தில் 'तत्पादाम्बु अतुलं तीर्थं तदुच्छिष्टं सुपावनम्' (நாராயணனொருவனிடத்திலேயே பக்திசெலுத்தும் பாகவதனுடைய ஸ்ரீபாததீர்த்தமும், அவன் உண்டு மிகுந்த சேஷமும் பரிசுத்தமானது) என்று சொல்லியுள்ளதெல்லாம் அவர்கள் பெருமையைப் பற்றிய ஸ்தோத்ரமாத்ரமேயன்றி அத்தகைய பாகவதர்களனைவரிடமும் ஸ்ரீபாததீர்த்தம் கொள்ளலாமென்றோ அவர்கள் உண்டு மிகுந்த எச்சிலை உண்ணலாமென்றோ தேறிவிடாது. தொண்டரடிப்

பொடிகள் — [திருமாலை-40 ல்] நாமஸங்கீர்த்தனம் செய்யும் பாகவதர்கள் மிகத்தாழ்ந்த செயல்களைச் செய்தும் செய்வித்தும் போந்தவராயினும், அவர்கள் தாம் போஜனம் செய்த சேஷம் தருவரேல், அது நம்மைப் புனிதமாக்கும்—என்று அருளிச்செய்ததும் அவர்கள் உண்ட இலையில் உள்ள எச்சிலைப் பற்றியதல்ல. சமைத்த பாத்திரத்திலுள்ள மிச்சத்தைப் பற்றியதே. ஆக, இங்கு கீதாபாஷ்யத்தில் 'गुर्वादिभ्य:' என்றவிடத்தில் உள்ள ஆதிசப்தத்தினால் தந்தை தமையன் கணவன் ஆகிய இவர்களை மட்டுமே கொள்ள வேண்டும். ஆசார்யன் தமையன் தமப்பனார் கணவன் ஆகிய நால்வரின் உச்சிஷ்டத்தையே புஜிக்க வேண்டும். இதுவே ஸாத்விகம். மற்ற வர்ணத்தாருடைய உச்சிஷ்டம் புஜிக்கக் கூடாது என்பது வேதாந்ததேசிகன் திருவுள்ளம்.

## தென்னாசார்யர்களின் திருவுள்ளம்

காருடபுராணம் 216-6ல் 'मद्भक्तजनवात्सल्यम्' (மத்₃ப₄க்தஜநவாத்ஸல்யம்) என்று தொடங்கிஎட்டுவிதமான விஷ்ணுபக்தியைச் சொல்லி, எம்பெருமான் 'இவ்வெட்டும் ம்லேச்ச₂னிடம் இருந்தாலும் அவன் ப்ராஹ்மண ச்ரேஷ்டன், அவன் முனிவன், அவன் தனிகன், அவன் யதி, அவன் பண்டிதனுமாவான். அவனுக்கு ஞானத்தை உபதேசிக்கலாம், அவனிடமிருந்து ஞானோபதேசம் பெறலாம், அவன் என்னைப்போல் பூஜிக்கத்தக்கவன்' என்று அருளிச்செய்ததாக உள்ளதை ஆராய்ந்தால், ம்லேச்ச₂னுக்கு ம்லேச்ச₂த்வம் போய் தொண்டக் குலமாகிற உயர்ந்த ஜாதி வந்துவிடுவதாகவே தெரிகிறது.

முற்கூறிய நம்மாழ்வார் மற்றும் திருப்பாணாழ்வார் முதலியவர்கள் 'स महात्मा सुदुर्लभ:' என்று கண்ணபிரானால் கிடைத்தற்கு அரியவர்களாகக் கூறப்பட்ட மஹாத்மாக்கள்; இதனால்தான் நம்மாழ்வாரை மதுரகவிகள் ஆசார்யராகக்கொண்டார். லோகஸாரங்கமஹாமுனிகள் திருப்

பாணாழ்வாரைத் தோளில் ஏற்றிக்கொண்டு வந்தார், இத் தகைய மஹாத்மாக்கள் விஷயத்தில் ஜாதி நசிக்குமே யொழிய மற்ற பாகவதர் திறத்தில் அப்படியல்ல. இம் மஹான்களும் வர்ணாச்ரமதர்மங்களைக் குலைக்கமாட்டார்கள். குலைக்கவும் இல்லை. இங்ஙனே ஜாதியில் தாழ்ந்தவர் களை மஹாத்மாக்களாக அறுதியிடும் தகுதி எம்பெருமா னுக்கும் ஆழ்வார்களுக்கும் ஆசார்யர்களுக்குமே உள்ளது.

இத்தகைய மஹாத்மாக்களான ஞானிகள் விஷயத் தில் உயர்ந்த ஜாதியில் உதித்தவர்கள் வர்ணாச்ரமங்களை அதிக்ரமித்த செயல்களை அனுஷ்டித்திருக்கிறார்களென்பதை ஸ்ரீவசனபூஷணம் ஆசார்ய ஹ்ருதயம் முதலிய க்ரந்தங்களில் பரக்கக் காணலாம்.

ஆக, ''நாராயணைக நிஷ்டஸ்ய'' என்று தொடங்கும் விஹகேந்த்ர ஸம்ஹிதா வசனத்தில் 'தஸ்ய உச்சிஷ்டம் ஸுபாவநம்' என்று — நாராயணனையே ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும்,மற்றுமுள்ள தாரகபோஷக போக்யங்களாக வும் கொண்டுவாழும் அதிகாரியினுடையஉச்சிஷ்டமே மிகப் பரிசுத்தமானதென்று கூறுகையால் அது தன்னை வெறும் ஸ்தோத்ரமாகவோ. அவ்வுச்சிஷ்டத்தை சமைத்த பாத்ரத்தி லுள்ள மிச்சமாகவோகொள்ளவேண்டிய அவசியமில்லை.

'போனகம் செய்த சேடம் தருவரேல் புனிதமன்றே' என்று தொண்டரடிப்பொடிகள் அருளியது வெறும் நாம ஸங்கீர்த்தனம் செய்யும் பாகவதர்களைப் பற்றியதன்று. இப்பாசுரத்திற்கு முன்புள்ள மேம்பொருள் பாசுரத்தில் கூறிய த்வயமந்த்ரார்த்தநிஷ்டர்களான—வாழும் சோம் பரைப் பற்றியதே— என்று பெரியவாச்சான்பிள்ளையின் வ்யா க்யானத்திலிருந்து தேறிவிடுகின்றமையாலும் அத்தகைய த்வயமந்த்ர நிஷ்டர்கள் போனகம் செய்த சேஷம் என்ப தற்குப் பெரியவாச்சான் பிள்ளை 'அமுது செய்து கைவாங் கின கலத்தில் — உண்ட இலையில்—உள்ள ப்ரஸாதம்'

என்று உரையிடுவதனாலும், 'சமைத்த பாத்ரத்திலுள்ள ப்ரஸாதம்' என்று அதைக் கொள்ளவேண்டிய நிர்பந்தம் இல்லை, ஆகையால் அவர்கள் உண்ட இலையில் உள்ள எச்சிலே பாவனமென்னத் தட்டில்லை—என்பதே தென்னாசார்யர்களின் திருவுள்ளமாகும். மேலும் இவ்விருதிறத்தாரின் திருவுள்ளங்கள் இக்கடைசிப்பகுதியில் 498 - 513 பக்கங்களில் விரிவாகக் காணத்தக்கன.

## சரமச்லோகம்

सर्वधर्मान् परित्यज्य मामेकं शरणं व्रज।
अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि मा शुचः ॥

இந்த கீதா ச்லோகத்துக்கு எம்பெருமானார் தமது கீதாபாஷ்யத்தில் இரண்டுவகையாகப் பொருள் அருளிச் செய்துள்ளார்.

(1) இதற்கு முன்பு 'मन्मना भव मद्भक्तः' (18 – 65) என்ற ச்லோகத்தில் பக்தியோகம் விதிக்கப்பட்டது. 'நீ பக்தியோகம் அனுஷ்டித்தால் என்னையே அடையக்கடவாய். இது ஸத்யமென்று உனக்கு நான் ப்ரதிஜ்ஞை செய்து தருகிறேன்; நீ எனக்குப் பிரியன் அல்லவா' என்பது இதன் கருத்து. 'பக்தியோகத்தை அனுஷ்டித்து உன்னையடையச் சொல்லுகிறாய். உன்னை அடைவதற்குத் தடையாக அநாதிகாலமாக நான் சேர்த்து வைத்த பலவகைப் பாபங்கள் உள்ளனவே, அவற்றைப் போக்கிக் கொண்ட பிறகல்லவா பக்தியோகத்தால் உன்னையடைய முடியும்?' என்று நினைத்து வருந்தினான் அர்ஜுனன். அவ்வருத்தத்தைத் தீர்ப்பதற்காக இந்த ச்லோகமருளிச் செய்கிறான் கண்ணபிரான்—என்பது முதல்வகை.

'கருமயோகம் ஞானயோகம் பக்தியோகமாகிய — என்னையடைவதற்கு உபாயமானவை அனைத்தையும் என்னுடைய ஆராதனமாக நினைத்து ப்ரீதியுடன் செய்துகொண்டே, நான் இந்தஅத்தியாயத்தின் முதலிலே கூறியபடி—'இந்தக் கருமத்தின் பயன் நம்முடையதன்று. இந்தக் கருமம்

நம்முடையதன்று, இதற்குக் கருத்தாகவும் நாமல்லோம்' என்று நினைக்கும் • பூல - கர்ம-கர்த்ருத்வ த்யாகத்தைச் செய்து, என்னையே நீ செய்த பலவகைப்பாபங்கள் போவதற்கு உபாயமாகப்பற்றினால், என்னையடையத் தடையாகவுள்ள அப்பாபங்களெல்லாவற்றினின்றும் உன்னை விடுவிக்கிறேன் • நீ வருந்தாதே' என்று பக்திக்கு அங்கமாக * (ஆராதுபகாரகமாக) ப்ரபத்தியை விதிக்கிறான் என்பது முதல் வகைக்குச் சேர்ந்த — இந்த ச்லோகக் கருத்து. ஸர்வ தர்மங்களையும் பகவதாராதனபுத்தியோடே செய்துகொண்டிருக்கிற அர்ஜுநனுக்குக் கூறப்படுகின்ற இந்த ஸர்வதர்மபரித்யாகமாவது—இந்த ஸர்வ தர்மங்கள் விஷயத்தில் முற்கூறிய பூல்•கர்ம-கர்த்ருத்வ புத்தி த்யாகமேயாகும்.

ஸர்வ தர்ம பரித்யாகமென்றால் முற்கூறிய புத்தி த்யாகமே என்பது அவ்வளவு ஸ்வரஸமன்று. தர்மங்களைச் செய்யாமல் விடுதல் என்றே ஸ்வரஸமாக (சொற்சுவை குன்றாமல்) பொருள் தோன்றும். ஆகையால் இந்தச் ச்லோகத்திற்கு இரண்டாம் வகையாகப்பொருள் கொண்டார் எம்பெருமானார். இதற்கு வேறு காரணங்களும் உள்ளன. அவை விரிவுக்கஞ்சி விடப்பட்டன.

(2) 'எல்லாப்பாபங்களிலிருந்தும் விடுபட்டவனாய், உனக்கு மிகவும் அன்பனானவன் அனுஷ்டிக்கவேண்டியதன்றோ பக்தியோகம். நான் செய்து குவித்த பாபங்களோ எல்லையற்றன. அவற்றை ஒரு சிலநாட்களே ஜீவிக்கக் கூடிய நான் எல்லையில்லாத பிராயச்சித்தங்களைச்செய்து போக்கமுடியாதே. ஆகையால் பக்தியோகத்தையநுஷ்டிக்க எனக்குத் தகுதியில்லை' என்று அர்ஜுனன் வருந்த, அதைப் போக்க இந்தச் ச்லோகத்தில் — பக்திதொடங்குவதற்குத் தடையாக உள்ள பாபங்களைப் போக்குவதற்காக அங்கமான ப்ரபத்தியை விதிக்கிறான் கண்ணபிரான் என்பது— இரண்டாம் வகையை அனுஸரித்த—இந்த ச்லோகத்தின் கருத்து. இதில் ப்ரபத்தி பக்திக்கு * ஸந்நிபத்யோபகாரகமான அங்கம்.

---

* ஆராத் உபகாரகம்—தொலைவில் நின்று உதவிபுரிவது-
ஸந்நிபத்ய உபகாரகம்—அருகில் நின்று உதவிபுரிவது:

'பக்திதொடங்குவதற்குத் தடையாகவுள்ள பாபங்களைப் போக்குவதற்காக ப்ராயசித்தமாக நீ செய்யவேண்டிய எல்லா தர்மங்களையும் செய்யாமலேயே விட்டுவிட்டு, என்னை ஒருவனையே தஞ்சமாகப் பற்றக் கடவாய். இத்தகைய உன்னை அப்பாபங்களெல்லாவற்றில் நின்றும் விடுவிக்கி றேன். நீ வருந்தாதே' என்பது இதன் பொருள் இப் போது ப்ராயச்சித்தரூபமான ஸர்வ தர்மங்களின் பரித்யா கமாவது— ஸ்வரூபத்யாகமேயாகையால் த்யாக சப்தார் த்தம் ஸ்வரஸமாக அமைந்தமை காணத்தக்கது.

## கேள்வி

இந்த இரண்டுவகையான அவதாரிகையும் பொருளும் அருளிய பின்பு, ஒரு கேள்வி எழுகின்றது. '''கர்மயோக ஞானயோக பக்தியோகங்களைச் செய்து கொண்டே அவற்றை உபாயமாக எண்ணுமல் விட்டுவிட்டு என்னொரு வனையே உபாயமாக (என்னையடைவதற்குத் தஞ்சமாகப்) பற்று. பற்றிய உன்னை நான் அந்த யோகங்களின் ஸ்தானத்தில் நின்று—என்னையடைவதற்குத் தடையாக, வுள்ள எல்லாப் பாபங்களினின்றும் விடுவிக்கிறேன் வருந்தவேண்டாம்' என்று எப்பெருமானுர் தாம்பணித்த கத்யத்ரயத்தில், பகவானையடைவதற்கு ஸாக்ஷாதுபாயமாக ப்ரபத்தியை அங்கியாக்கி எம்பெருமான் விதிப்பதாக அருளிச்செய்தாரல்லவா? கீதா பாஷ்யத்தில் அப்படியல் லாமல் ப்ரபத்தியை பக்திக்கு அங்கமாக விதிப்பதாக ஏன் அருளிச்செய்தார்'' என்பதே அக்கேள்வி,

## வேதாந்த தேசிகர் அருளும் விடை

ப்ரபத்தி எல்லாப் பாபங்களையும் போக்க வல்லதாயி னும், பக்தியை மோக்ஷோபாயமாக விதிக்கும் சாஸ்த் ரங்கள் வீணுகாமைக்காக, பக்தி யோகத்தை அநுஷ் டிக்கச் சக்தியுடையவன் அதையே அநுஷ்டிக்கவேண்டும். அர்ஜுனன் சக்தியுடையவனுகையாலே அவனுக்கு 'மந் மநா ப₄வ' (கீதை 18-65) என்று பக்தியை மோக்ஷோபாய மாக விதித்து, அதற்கு அங்கமாக—'ஸர்வ த₄ர்மாந்'

(18–66) என்று ப்ரபத்தியை விதித்ததாக எம்பெருமானார் கீதாபாஷ்யத்தில் அருளிச்செய்தார். பக்தியோகத்தை அநுஷ்டிக்கச் சக்தியில்லாதவர்களுக்காக ப்ரபத்தியை நேரே மோக்ஷோபாயமாகக் கண்ணபிரான் விதிக்கிறான் என்று எம்பெருமானார் கத்யத்ரயத்தில் அருளிச் செய்தார் என்பதாக, வேதாந்ததேசிகர் அருளிச்செய்யும்விடையாகும்.

## தென்னாசார்யர்கள் அருளும்விடை

எம்பெருமான் ஒவ்வொரு காரியத்திலும் ஜீவனுக்கு அளித்திருக்கும் ஸ்வாதந்த்ர்யத்தைப் பயன் படுத்தி ஜீவன் அநுஷ்டிக்கும் எந்த உபாயமும் (மோக்ஷோபாயமானாலும் கூட) பகவானைக் குறித்து ஜீவனுக்கு ஏற்பட்டுள்ள அத்யந்த பாரதந்த்ர்யமாகிற (எல்லாவகையாலும் எம்பெருமானிட்ட வழக்காக இருக்கையாகிற) ஸ்வரூபத்தோடு முரண்பட்டதாகையாலே, அந்தப் பாரதந்த்ர்யத்துக்குச் சேரும்படி, எம்பெருமானையே நேரே மோக்ஷோபாயமாகப் பற்றுகையாகிற முக்யமான (அங்கி₃யான) சரணாகதியை கத்யத்தில் எம்பெருமானார் அருளிச்செய்தார். தன் முயற்சியிலே ஊன்றிய அர்ஜுநனுக்கு நிவ்ருத்திரூபமான இந்த சரணாகதி ருசிக்கவில்லையாகையால் ப்ரவ்ருத்திரூபமான பக்தியை விதித்து அதற்கு அங்கமாகப் ப்ரபத்தியை 'ஸர்வதர்மாந்' என்னும்ச்லோகத்துக்கு அர்த்தமாக அருளிச் செய்தார்.

அர்ஜுநனுக்கு முக்கிய சரணாகதி ருசிக்கவில்லையென்று எப்படித் தெரிகிறது என்றால், கேண்மின். இந்த ச்லோகத்தின் கீழே (18-61) 'ஸர்வேச்வரன் எல்லோருடைய ஹ்ருதயத்திலும் இருந்து அவர்களுடைய குணபேதத்துக்குத் தக்கபடி ஆட்டிவைக்கிறான்' என்றும் அதிலிருந்து தப்பும் வழியை அடுத்த (18–62) ச்லோகத்தில் 'ஆட்டிவைக்கும் அந்த ஸர்வேச்வரனையே சரணமடைவாயாக அப்படிச் செய்தால் அவனருளாலே எல்லாப் பாபங்களும் நீங்கப்

பெற்றுப் பரமபதத்தையும் அடையக்கடவாய்' என்றும் அருளி யுள்ளான். இந்த உபதேசம் அர்ஜுநன் நெஞ்சில் ஊறி யிருந்தால் 'करिष्ये वचनं तव' [18-73] என்று கடைசியில் சொல்லப்போகும் வார்த்தை இப்போதே வந்திருக்கும். அது வெளிவரவில்லை. எம்பெருமான் ஒவ்வொரு காரியத்தி லும் ஜீவனுக்கும் ஸ்வாதந்த்ர்யத்தை அளித்திருக்குமவ னுகையாலே அர்ஜுனனை நிர்ப்பந்தப்படுத்தி முக்ய ப்ர பத்தி நிஷ்டனுக அவனை ஆக்க நினைக்கவில்லை. ஆகை யால் அடுத்த [18-63] ச்லோகத்தில் 'ரஹஸ்யங்கள் அனைத்திலும் பரமரஹஸ்யமான எல்லாவித மோக்ஷோபாய மான ஜ்ஞானங்களையும் உனக்கு உபதேசித்து விட்டேன். இவற்றை ஆராய்ந்து கர்மஜ்ஞானபக்திகளையோ முக்ய சர ணுகதியையோ நீ விரும்பியபடி செய்' என்று ஸ்வாதந்த்ர் யத்தை அவனுக்குத் தந்தான் கண்ணபிரான். பின்பு அவ னிடமிருந்து करिष्ये वचनं तव நீ சொல்லியபடி போர் புரி கிறேன்-என்று விடைவாராமையாலே, நாம் ஸுலபோபா பாயமான முக்ய ப்ரபத்தியைச் சொன்னுல் இவன் மனம் இதை ஏற்றுக்கொள்ளவில்லை என்றறிந்து, அடுத்த ச்லோ கத்தில் [18-65] தான் ஏற்கனவே ஒன்பதாமத்தியாத்தில் 31 ல் உபதேசித்த பக்தியோகமே இவனுக்கு நன்மை பயக்கவல்லதென்று நிச்சயித்து 'मन्मना भव मद्भक्तः' [18-65] என்றதனுல் அதையே விதித்து, அதற்கு அங்கமாக 'सर्वधर्मान् परित्यज्य' [18-66] என்ற ச்லோகத்தினுல் அந்த பக்திக்கு அங்கமாக ப்ரபத்தியை விதித்தான் என்பது இந்த ப்ரகரணத்திலிருந்து விளங்குகிறது என்பது தென்னுசார்யர் கள் அருளும் விடையாகும்.

மேலும் இவற்றின் விளக்கம் வேண்டுவார் இப்புத்தகத் தில் 811—918 வரையில் கண்டு தெளிந்து இன்புறுக.

உண்மையில் இக்கீதாவ்யாக்யானம் முழுவதுமே ரஸ மயம். சுருக்கமாக இரண்டிடங்களை மட்டும் காட்டினேன்.

**கீதாசார்யர் திருவடிகளே சரணம்**
**எம்பெருமானுர் திருவடிகளே சரணம்**




ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமந் வர வர முநயே நம:



திருவயிந்திரபுரம் ஸ்ரீ மந் மணவாள மாமுனிகள்

ஸ்ரீ



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமந் வர வர முநயே நம:

ஸ்ரீ பெரும்பூதூர் எம்பெருமானார்

# மதிப்புரை

பேராசிரியர்
ஸ்ரீ உ வே N. S. ராமானுஜ தாதாசார்ய ஸ்வாமி.
திருப்பதி ராஷ்ட்ரீய ஸம்ஸ்க்ருத வித்யா
பீடத்தின் முன்னாள் துணைவேந்தர்,
ஜநாதிபதி விருது முதலான பல
விருதுகள் பெற்றவர். (தற்சமயம்) பாண்டி.
பிரெஞ்சுக்கழகத்தின் கௌரவப் பேராசிரியர்,
121, பெருமாள் கோயில் தெரு, பாண்டிச்சேரி.]

ஶ்ரிய: பதியான ஸர்வேச்வரன் லோகோஜ்ஜீவனத்திற்காகப் பற்பல அவதாரங்களை மேற்கொண்டு இப்புவியிலே தோன்றினான் என்பது எல்லோரும் அறிந்த விஷயமே. ஆயினும் சரண்யன் அவ்வவ்வவதாரங்களை மேற்கொண்டதற்கு ஓர் முக்கிய காரணமும் இதிஹாஸபுராணங்களில் கூறப்பட்டுள்ளது. அந்த ரீதியிலே ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்திற்குக் காரணம் இவ்வாறு கூறப்பட்டுள்ளது ;—

"எல்லாப் பிராணிகளையும் பொறுமையுடன் தாங்கும் 'ஸர்வம் ஸஹா' என்கிற பூதேவிக்குப் பாவிகளையும் துஷ்டர்களையும் சுமப்பது தாங்கமுடியாதபெருஞ்சுமையாகித் துன்பத்தைத் தருகின்றது. ஒரு காலத்தில் காலநேமி கம்ஸன் சிசுபாலன் முதலிய துஷ்டர்கள் பிறந்து உலகுக்கு மிகவும் துன்பத்தை விளைவித்தனர். இந்தப் பாவிகளைச் சுமப்பதால் மிகத் துன்பமுற்ற பூதேவி கண்ணும் கண்ணீருமாக க்ஷீராப்திநாதனை ப்₃ரஹ்மாதி₃ தே₃வர்களுடன் சரணமடைய, த₃யாவானான எம்பெருமான் அவளுடைய பாரத்தை நீக்கித் துன்பத்தைப் போக்கடிக்க க்ருஷ்ணனாக அவதரித்தான்"-என. ஆனால் இதுவன்று அவன் அவதரித்ததற்கு முக்கிய காரணம். பின்பு யாதெனில்—உலகிலுள்ள சேதனர்கள் நல்லறிவு பெறாமலும் நற்கதியை அடைய வழி தெரியாமலும் அஜ்ஞானம் என்கிற அடர்ந்த இருளில் ஆழ்ந்து கிடக்கின்றனர். அவர்கள் கரையேறி நல்வழி

நடக்க ஒரு தீபம் தேவைப்படுகிறது. அதற்காகவே கண்ணன் அவதரித்தான். அவன் அர்ஜுனனை வியாஜ மாகக் கொண்டு திருவாய் மலர்ந்தருளிய கீதையானது அதியற்புதமான விளக்காய் அமைந்தது. பெரிய மாளிகை யில் தீபத்தை ஏற்றி வைத்தால் மாடம் அழகு பெறுவதோடு நாற்புறமும் பரவிய இருள் நீங்கி ஒளி வீசப்பெறும். வேதம் ஒரு பெரிய மாளிகை. அதில் ஏற்றி வைத்த தீபம் பகவத் கீதை, வேதத்தில் மறைந்து கிடக்கும அர்த்தங்களையெல் லாம் கீதை தெளிவாய் விளக்குகின்றது. மேலும் வேதத்தில் எம்பெருமான் நித்ய வாஸம் செய்கின்றான். அவனையும் தெளிவாய்க் காட்டுகின்றது இந்தக் கீதை யெனும் திரு விளக்கு. எல்லா வித்வான்களும் ஒரு முகமாய் இந்நூலையே போற்றுகின்றனர். இவ்வாறு எந்நாளும் அழியாத கீதை யென்னும் ஓர் அகண்ட தீபத்தை ஏற்றி உலகிலுள்ள அஜ்ஞானமாகிற இருளைப் போக்கவே கண்ணன் அவதரித் தான். இக்கருத்தை வேதாந்த தேசிகன் தயாசதகத்திலே எண்பத்தொன்பதாவது சுலோகத்திலே அருளிச்செய்கிறார்.

प्रभूतविबुधद्विषद्भरणखिन्नविश्वंभरा-
भरापनयनच्छलात् त्वमवतार्य लक्ष्मीधरम् ।
निराकृतवती दये निगमसौधदीपश्रिया
विपश्चिदविगीतया जगति गीतयान्ध्यं तमः ॥

[திருவேங்கடமுடையானுடைய தயாதேவியே! மிக்க வலி மைகொண்ட தேவதைகளுக்குப் பகைவர்களான அசுரர் களைச் சுமப்பதால் வருந்திய பூதேவியின் பாரத்தைப் போக் குவதென்கிற வ்யாஜத்தினால் நீ ஸ்ரீநிவாஸனைக் கண்ண னாய் அவதரிக்கச்செய்து வேதமாகிற பெரிய மாளிகைக்கு விளக்கின் ஒளிபோன்றதாயும், எல்லா வித்வான்களாலும் ஒருமுகமாகப் போற்றப்பெற்றதாயும் உள்ள கீதையினால் உலகில் அடர்ந்த அஜ்ஞான இருளைப் போக்கடித்தாய்]

''पाण्डुतनययुद्ध प्रोत्साहन व्याजेन'' என்று பாஷ்யாவதரணிகையில் எம்பெருமானாரும் ''அர்ஜுனனை யுத்தம் செய்வதில் தூண்டுவது என்பது வ்யாஜமாத்ரம். உலகில் உள்ளோர் எல்லோரும் மோக்ஷமடைவதற்கு ஸாதனமானது பக்தி. அந்த பக்தியும் கண்ணனிடத்தில் செய்வதே தக்கது என்பதை அறியவேண்டும் என்பதற்காகவே கீதையை உபதேசித்தான்'' என்கிறார்.

ஆகையாலேயே இவ்வுலகில் கீதையை ஏற்றுக்கொள்ளாதவர்கள் இல்லை என்றே சொல்லலாம். முற்காலத்திலும் இக்காலத்திலும் பல வ்யாக்யானங்களும், பலமொழிகளில் மொழிபெயர்ப்புகளும் இந்நூலுக்கு ஏற்பட்டுள்ளது ஒன்றே போதும் கீதையின் பெருமையைக் காட்டுவதற்கு,

மேலும் ஓர் அபி₄யுக்தர் அருளிச்செய்ததாக ஒரு சுலோகம் கீதார்த்தஸங்க்ரஹ ரக்ஷையிலே மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது. அதாவது—

यस्मिन् प्रसादसुमुखे कवयोऽपि ये ते
शास्त्राण्यशासुरिह तन्महिमाश्रयाणि ।
कृष्णेन येन तदिह स्वयमेव गीतम्
शास्त्रस्य तस्य सदृशं किमिवास्ति शास्त्रम् ॥

[கண்ணுக்கெட்டாதவற்றையும் காண்பவர்கள் எனப்படும் கவிகளும் எந்தக் கண்ணபிரானுடைய க்ருபையினால் அவனுடைய மகிமையைப் பற்றின சாஸ்த்ரங்களை அருளிச்செய்தனரோ, அந்தக் கண்ணபிரான் தானாகவே அருளிச்செய்த கீதைக்கு ஒப்பான சாஸ்த்ரம் வேறு எது உளது?]

இந்த கீதையின் பெருமை பாத்ம புராணத்திலும் பேசப்படுகிறது.

भारते भगवद्गीता धर्मशास्त्रेषु मानवम् ।
वेदेषु पौरुषं सूक्तं पुराणेषु च वैष्णवम् ॥

[மஹாபாரதத்தில் பகவத்கீதை என்கிற பகுதி உயர்ந்தது; தர்மசாஸ்த்ர நூல்களில் மநுஸ்ம்ருதி உயர்ந்தது; வேதங்களில் புருஷஸூக்தம் உயர்ந்தது; புராணங்களில் விஷ்ணு புராணம் உயர்ந்தது.]

गीता सुगीता कर्तव्या किमन्यैः शास्त्रविस्तरैः ।
या स्वयं पद्मनाभस्य मुखपद्माद्विनिःसृता ॥

[பத்மநாபனுடைய முகத்தாமரையிலிருந்து வெளிவந்தகீதை ஆர்வத்துடன் படிக்கப்படவேண்டும். (கீதையிருக்கும்போது) மற்ற சாஸ்த்ரஸமூஹங்கள் எதற்கு?] முதலிய ப்ரமாணங்களும் கீதையின் பெருமையைப் பறைசாற்றுகின்றன.

''அறிவினால் குறைவில்லா அகல் ஞாலத்தவரறிய
நெறியெல்லா மெடுத்துரைத்த நிறை ஞானத்தொரு
மூர்த்தி'' என்றருளிச்செய்தார் ஆழ்வாரும்.

''பகவத்கீதைக்கு முற்காலத்தில் பிசாசர், ரந்திதேவர் குப்தர் (அபிநவகுப்தர்), சங்கரர், யாதவப்ரகாசர், பாஸ்கரர், நாராயணார்யர், யஜ்ஞஸ்வாமி முதலியவர்கள் பாஷ்யங்களை இயற்றியுள்ளனர்'' என்றும், ''அவர்கள் எல்லோரும் ஒருமுகமாக 'எம்பெருமானே உயர்ந்த தத்வம், மற்றொரு சரணமின்றி அவனை ஆச்ரயிப்பதே பரமதர்மம்' என்று ஏற்றுக்கொண்டுள்ளனர்'' என்றும் கீதாபாஷ்ய தாத்பர்ய சந்திரிகையில் சரமச்லோக வ்யாக்யானக் கடைசியில் அருளிச்செய்கிறார் தேசிகன். மத்வாசார்யரை அந்த வரிசையில் குறிப்பிடாததால் அவர் அருளிச்செய்த கீதா பாஷ்யத்தை ஸ்வாமி தேசிகன் கடாக்ஷிக்கவில்லை என்று தெரிகிறது. எத்தனை பாஷ்யங்களோ உரைகளோ தோன்றினாலும் சங்கரர் ராமானுஜர் மத்வர் இவர்களுடைய பாஷ்யங்

களே அதிகமான ப்ரசாரத்திலுள்ளன. அழியாமல் இருக்கப் போகின்றன என்பது திண்ணம்.

இம்மூன்று பாஷ்யங்களிலும் எம்பெருமானாருடைய பாஷ்யத்தின் ஏற்றத்தை நம்மால் சொல்லத்தரமன்று. ''பாஷ்யம் ப்ரஸந்நகம்பீரம்'' என்கிற இலக்கணம் இதற்கே பொருந்தும். தேசிகனும் தாத்பர்யசந்த்ரிகையின் முடிவில் அருளிச்செய்கிறார் —

तत्त्वं यत्प्रणवे धनञ्जयरथेऽप्यग्रे दरीदृश्यते
तच्चित्तो भुवि वेङ्कटेश्वरकविर्भक्तोऽनुकम्प्यः सताम् ।
तत्तादृग्गुरु दृष्टिपातमहिमग्रस्तैनसा येन सा
गीताविष्णुपदी यतीश्वरवचस्तीर्थैरवागाह्यत ॥

[எந்த உயர்ந்த தத்வமாகிற கண்ணன் ப்ரணவத்தில் முதலிலும் (முதல் எழுத்திலும்), அர்ஜுனனுடைய தேரின் முதலிலும் காணப்படுகிறானோ, அந்த கண்ணனைச் சித்தத்தில் வைத்துள்ள பக்தனான வேங்கடேஶ்வர கவியானவன் பெரியோர்களுடைய தயைக்குப் பாத்ரபூதன்; ப்ரஸித்தமஹிமையுடைய ஆசார்யருடைய கடாக்ஷத்தினாலே கழிந்த பாபங்களுடைய எந்த வேங்கடேச்வர கவியினால் கீதையாகிற கங்கையில் யதிராஜருடைய ஸ்ரீஸூக்திகளாகிய துறைகளில் இறங்கி அவகாஹனம் பண்ணப்பட்டதோ] என யதிராஜருடைய பாஷ்யத்தின் பெருமையைப் பலபடிகளில் தேசிகன் அருளிச்செய்துள்ளார். விரிவிற்கஞ்சி இத்துடன் நிறுத்திக்கொள்கிறேன்.

ஆளவந்தார் கீதார்த்தஸங்க்ரஹத்தில் அருளிச்செய்த வழியையேபின்பற்றி யதிராஜர் பாஷ்யமிட்டருளினார். தெளிவாகவும் ஆழமாகவும் உள்ள பாஷ்யத்தின் கருத்தை, தாத்பர்யசந்த்ரிகையின் உதவியைக்கொண்டே தெளிவாக அறியமுடியும். ஆயினும் கீதாபாஷ்யமும் தாத்பர்யசந்த்ரிகையும் ஸம்ஸ்க்ருதபாஷையில் அமைந்துள்ளபடியாலும்

ஸூக்ஷ்மமான பல விஷயங்களை உட்கொண்டிருப்பதாலும் சாஸ்த்ரங்களில் தேர்ச்சியுள்ளவர்களாலேயே அக்கருத்தை அறியமுடியுமாகையால் இரண்டிற்கும் தமிழில் உரை அவசியமாகிறது. இக்குறை இதுவரையில் தீர்க்கப்படாமலேயே இருந்து வந்தது. இதை ஸ்ரீ உ. வே. வழக்கறிஞர் மஹாவித்வான் புத்தூர் S கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி முப்பத்தைந்து வருடங்கட்கு முன்பே துவங்கி இப்பொழுது பூர்த்திசெய்து தீர்த்துவைத்துள்ளார் என்பது எல்லோராலும் பாராட்டத்தகுந்த விஷயமாகும்.

பகவத்கீதை, அதற்கு ஸ்ரீராமானுஜபாஷ்யம், ஆளவந்தார் அருளிய கீதார்த்த ஸங்க்ரஹம், வாதிகேஸரி ஜீயர் அருளிய பகவத் கீதை வெண்பா, வேதாந்ததேசிகர் அருளிய தமிழ்பாசுரங்களாகிய கீதார்த்தசங்கிரகம் இவைகளுக்குத்தமிழில்முறையே விரிவான உரையை இந்தஸ்வாமி அருளிச்செய்துள்ளார். முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன்பு ஆரம்பித்து ஸுதர்சனபத்ரிகையில் பிரதிமாதமும் சிறிது சிறிதாக வெளியிட்ட இவ்வுரை இப்பொழுது முடிவாகி, புத்தகவடிவத்தில் பலபாகங்களாக வெளிவருவதைப் பற்றி எல்லோரும் பெருமகிழ்ச்சி அடைகின்றனர்.

ஒவ்வொரு கீதாச்லோகத்துக்கும் பதவுரையும், பகவத் கீதை வெண்பாவின் பதவுரையும், பிறகு எம்பெருமானுருடைய பாஷ்யத்திற்கு உரையும் ஒவ்வொரு அத்தியாயத்தின் முதலில் ஆளவந்தாருடைய கீதார்த்த ஸங்க்ரஹத்தின் உரையும், கடைசியில் தேசிகனுடைய கீதார்த்த சங்கிரகத்தின் உரையும் அமைந்துள்ளது.

இவற்றுள் எல்லாமே நன்குக இருந்தாலும் பாஷ்யத்திற்கு இவர் இயற்றிய கீதார்த்த விவரணம் என்கிற உரை மிகவும் உயர்ந்த ரீதியில் அமைந்துள்ளது. இவர் இயற்றிய உரை 3000 பக்கங்களுக்குமேல் நீண்டுள்ளது. வாழ்க்கையில் இது ஒரு அற்புதமான ஸாதனை என்பதில் ஐயமில்லை, இந்த அவசரத்தில் பூர்த்தியாகப் பார்க்க

முடியாததால் ஸ்தாலீபுலாகந்யாயத்தால் இரண்டு மூன்று இடங்களில் அடியேன் ஒவ்வொரு எழுத்தையும் விடாமல் வாசித்தேன். பகவத்கீதையில் 'न त्वेवाहं जातु नासम्'' என்கிற இரண்டாம் அத்தியாயத்தின் 12 வது சுலோகம் முதல் சாஸ்த்ரத்தின் ஆரம்பமென்றும், அதற்கு முன்புள்ள சுலோகம் வரையில் பெரும்பாலும் உபோத்காதம் என்றும் பெரியோர்கள் பகர்வர். அந்த முதல் சுலோகத்திலேயே 'ஆத்மாக்கள் நித்யர்கள் என்றும், ஒருவர்க்கொருவர் வேறு' என்றும், இவர்கள் ஈச்வரனைக் காட்டிலும் வேறு' என்றும், ஸ்பஷ்டமாக ஏற்படுகிறது என்றும் 'அத்வைதிகளுடைய கொள்கைக்கு கீதையில் இடம் இல்லை' என்றும், எம்பெருமானார் நிரூபித்துள்ளார். அங்குள்ள பாஷ்யபங்க்திகளுக்கு உள்ளபடி பொருள் கூறுதல் சாஸ்த்ரங்களில் தேர்ச்சியுள்ளவர்களுக்கே ஸாத்யமாம். புத்தூர் ஸ்வாமி அந்த இடத்தில் மிகவும் தெளிவாகவும் மனத்தில் நன்கு படியும்படியும் விளக்கமாகவும் தமிழில் உரை எழுதியிருக்கிறார். மேலும் தேசிகனுடைய தாத்பர்யசந்த்ரிகையிலுள்ள விசேஷங்களையெல்லாம் மனத்திற்கொண்டு அவற்றையும் இடை இடையே புகுரவிட்டு மிகவும் நேர்த்தியான முறையில் விளக்கம் தந்துள்ளார். இவருடைய உரையைப் பார்த்துவிட்டு மேலே பாஷ்யத்தைப் பார்க்கும்போது தெளிவாக எம்பெருமானாருடைய கருத்து அறியப்பட்டு சந்தோஷத்தை உண்டுபண்ணுகிறது.

பதின்மூன்றுவது அத்தியாயத்தில் ''क्षेत्रज्ञं चापि मां विद्धि'' என்கிற சுலோகத்தில் பாஷ்யம் விரிவாகவுள்ளது. அங்கேயும் ஜீவனுக்கும், பரமாத்மாவுக்கும் ஒருமையைக் கூறுவதாக ப்ரமம் (மயக்கம்) ஏற்படுகிறபடியால் அதை மறுத்து விசிஷ்டாத்வைதத்தைத் தழுவி வ்யாக்யானம் செய்யவேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டபடியால், எம்பெருமானார் விரிவாக உரை அருளிச்செய்துள்ளார். அந்த இடத்திலும் புத்தூர் ஸ்வாமி மிக்க கவனத்துடன் தெளிவாக உரை எழுதியிருக்கிறார்.— இம்மாதிரி எந்தப் பக்கத்தைப் பிரித்துப்பார்த்தாலும் தெளிவு ஏற்படுகிறது.

எட்டாவது அத்தியாயத்தில் கைவல்யவிஷயமாகப் பல சுலோகங்கள் உள்ளன. ப்ரக்ருதிவியுக்தமான ஆத்ம ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிக்க விரும்புபவன் கைவல்யார்த்தி என்றும், அம்மாதிரியான ஆத்ம ஸ்வரூபத்தை ஸாக்ஷாத் கரித்தலே கைவல்யம் என்றும், அந்தக் கைவல்யத்தை அடைந்தவனுக்கு மறுபடி ஸம்ஸாரம் கிடையாது என்றும், அந்த ஸாக்ஷாத்காரமும் இங்கு ப்ரக்ருதிவியுக்தமான ஆத்ம ஸ்வரூபத்தை த்யானம் பண்ணினவனுக்கு அர்ச்சிராதி மார்க்கத்தாலே சென்றவனுக்கு வருகிறது என்றும், அப்படி ஸாக்ஷாத்காரத்தைப் பண்ணிக்கொண்டு ஆத்மா இருக்குமிடம் விரஜாநதிக்கு அப்பால் ஸ்ரீவைகுண்டத்துக்கு முதல் எல்லையில் உள்ளது என்றும், அவனுக்குப் பிறகு பரப்₃ரஹ்மாநுபவம் கிடையாது என்றும் ஒருசாரார் கொள்கை.

'ப்ரக்ருதிவியுக்தமான ஆத்மஸ்வரூபத்தை ப்₃ரஹ்மாத்மகத்வ ஆகாரத்தைவிட்டு உபாஸிப்பவனுக்கு அர்ச்சிராதிமார் கத்தில்செல்லமுடியாது' என்றும், 'அவன் ஆத்மஸ்வரூபத்தை ப்ரக்ருதி மண்டலத்திலேயே இருந்துகொண்டுதான் ஸாக்ஷாத் கரிப்பன்' என்றும், 'அவனும் ஸம்ஸாரியே' என்றும், 'ப்₃ரஹ்மானுப₄வமேமோக்ஷம்' 'கைவல்யம் மோக்ஷமாகாது' என்றும் 'அர்ச்சிராதிமார்க₃த்தைப்பற்றி உபநிஷத்துக்களில் வரும் ஸந்தர்ப்பங்களில் ஜீவாத்மசரீரகமாகப் பரமாத்மாவையோ, பரமாத்மசரீரமாக ஜீவாத்மாவையோ உபாஸிப்பவனையோ குறிப்பிட்டு அர்ச்சிராதி மார்க₃த்தைக் கூறுகிறபடியாலும்' அர்ச்சிராதி மார்க₃ம் பரமாத்மாவை அடைவிப்பிக்கிறது என்று ஓதுகிற படியாலும் கைவல்ய நிஷ்டனுக்கு அர்ச்சிராதி மார்க₃ம் கிடையாது, என்றும் ஒரு சாரார் கொள்கை.

முதல்கொள்கைக்கு ஆதாரமாக கீதாபாஷ்யம், ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகள், ஆழ்வான் பட்டர் இவர்களுடைய ஸூக்திகள், இவைகளைக் காட்டுகின்றனர். இதற்கு முரணாகக் காணப்படும் ஸ்ரீபாஷ்யாதி ஸூக்திகளுக்குத் தம் கொள்கைக்குத் தக்கவாறு பொருள் கூறுகின்றனர்.

இரண்டாவது கொள்கைக்கு ஆதாரமாக ஸ்ரீபாஷ்ய ஸூக்தி, உபநிஷத்துகள், பல பூர்வாசார்யர்களுடைய ஸூக்திகள் இவைகளைக் காட்டுகின்றனர். இதற்கு முரணாகக் காணப்படும் கீதாபாஷ்யாதி ஸூக்திகளுக்குத் தம் கொள்கைகளுக்குத் தக்கவாறு பொருள் கூறுகின்றனர்.

இந்தக் கொள்கைகளின் வேறுபாட்டினால் ஒன்றும் குடிமுழுகிப்போகவில்லை; ஏனென்றால் கைவல்யத்தை விரும்பி உபாயாநுஷ்டானம் பண்ணுபவர் யாரும் இராத தால். ஆயினும் இவ்விரு கொள்கைகளைப் புரிந்துகொள்ள இவருடைய தமிழ் உரையும் அத்துடன் இணைக்கப்பட்ட கைவல்ய ஸித்தாஞ்ஜனம் என்கிற இவருடைய விரிவான கட்டுரையும் மிகவும் பயன்படும். இவர் தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்தவராகையால் தம் கொள்கையை வலுப்படுத்துவது சகஜமே. அடியேன் தேசிக ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்தவனாயினும் தற்சமயம் அடியேன் கொள்கையை வலுப்படுத்த விரும்பவில்லை இவருடைய உரை எழுதும் வல்லமையைப் போற்றுவதே இப்பொழுது அடியேன் செயல்.*

---

* ஸுதர்சனம் ஆசிரியரின் குறிப்பு:— அடியேனுடைய கீதாவ்யாக்யானத்திலும், கைவல்யஸித்3த4ாஞ்ஜனத்திலும், ஸ்வாமி எடுத்துள்ள இரண்டு சாராருடைய கருத்துக்களும் திவ்யப்ரபந்த் வ்யாக்யாதாக்களான பிள்ளான், நஞ்ஜீயர், பெரியவாச்சான்பிள்ளை வடக்குத்திரு வீதிப்பிள்ளைமுதலான ஆசார்யர்களால் ஆதரிக்கப்படவில்லை என்றும், முற்கூறிய இருசாரார் கருத்துக்களிலும் உள்ள குறைகள் இவர்கள் பக்ஷத்தில் இல்லை என்றும், கைவல்யாநுப4வம் செய்பவனுக்கு அர்ச்சிராதி3க3தி இல்லை என்றும், அந்த க3தியுடையவனாய், ப்3ரஹ்மாநுப4வம் உள்ளவனான பஞ்சாக்3நிவித்3யாநிஷ்ட2னைக்காட்டிலும் வேறுபட்ட ப்ராணஸப்3தி3தஜீவோபாஸகனே வேறொரு வழியில் பரமபதம் சென்று தாழ்ந்தமோக்ஷமான கைவல்யானுப4வத்தைப் பெறுகிறான் என்றுமே திவ்யப்ரப3ந்த4வ்யாக்2யாதாக்கள் திருவுள்ளம் பற்றினார்கள் என்றும் நிரூபிக்கப்பட்டுள்ளது என்பது கவனிக்கத்தக்கது.

மேலும் புத்தூர் ஸ்வாமி இந்த கீதாபாஷ்ய உரையில் நாராயணனுடைய பரத்வத்தை ஸந்தர்ப்பம் வரும் பொழுதெல்லாம் நிலை நாட்டியுள்ளது மட்டுமன்றி சங்கர பகவத் பாதாளுக்கும் நாராயணன் பரதேவதை என்பதிலேயே நோக்கு என்று அவர்களுடைய க்ரந்தத்தையே மேற்கோளாகக் காட்டி நிரூபணம் செய்துள்ளார்.

இந்த ஸ்வாமி 3000 பக்கத்துக்கு மேல் அச்சுப்பிழையிராமல் கீ₃தா ப்ரஸ்த₂ானத்துக்கு உரையை நேர்த்தியாக அச்சிட்டது ஒரு பெரிய கைங்கர்யம். இதுமட்டுமின்றி தம் தகப்பனார் தொடங்கிய காரியங்களை 40 வருஷங்களுக்கு மேலாகத் தம் வக்கீல் தொழிலையும் விட்டு த்யாக₃ பு₃த்₃தி₄யுடன் நிர்வகித்துவருகிறார். ஸ்ரீஸுதர்சன பத்திரிகையில் தாமே எல்லா விஷயங்களையும் எழுதி வெளியிடுகிறார். ஆழ்வார்கள் திவ்ய ப்ரபந்தங்களுக்கும் பூர்வாசார்ய ஸ்தோத்ரங்களுக்கும் பூர்வாசாரியர்களுடைய உரைகளுடன் தம்முடைய விளக்க உரையையும் சேர்த்து வெளியிட்டிருக்கிறார். இவர் வெளியிட்டுள்ள புஸ்தகங்களின் பக்கங்கள் பல்லாயிரக்கணக்கானவை. எல்லாவற்றையும் ஓர் இடத்தில் சேர்த்துப் பார்க்கும் பொழுது மிகவும் ஆச்சரியம் உண்டாகிறது. எம்பெருமானுடையவும் ஆசாரியருடையவும் கடாக்ஷம் இவரிடம் பரிபூர்ணமாக உள்ளது என்பதற்கு இவர் வெளியிட்டுவரும் ப்ரசுரங்களே சான்றாகும்.

இந்த ஸ்வாமி பல்லாண்டுகள் எழுந்தருளியிருந்து ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தைக் கடந்த ஆண்டுகளில் போல் வரும் ஆண்டுகளிலும் வளர்த்து வர அருள்புரியுமாறு அரங்கநகரப்பனையும் பூர்வாசாரியர்களையும் வேண்டுகின்றேன்.

**பாண்டிச்சேரி** **என் எஸ் ராமாநுஜதாதாசாரியர்**
**11—11—96**

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# கீதாவ்யாக்யாநம்

## உரையாசிரியரின் முன்னுரை

ப்ரஸ்தாநத்ரயத்தில் ஒன்ருகவும், கீதோபநிஷத் என்றும் மதத்தலைவர்கள் அனைவராலும் கொண்டாடப் படும் கீதைக்குத் தமிழில் வ்யாக்யானம் ஒன்று அடியேனை ஆசிரியனாகக் கொண்ட ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் பத்திரிகையில்முப்பத்தாறு ஆண்டுகளாக, சார்வரி ஹூ மார்கழி மீ இதழ் முதல் மாதம் எட்டுப்பக்கங்கள்கொண்ட ஒருபாரமாகத் தொடர்ந்து அச்சிட்டு வெளியிடப்பட்டு வந்தது. அதில் பதவுரையோடுகூடிய பகவத்கீதையும் அதற்கு ஸ்ரீராமாநுஜர் அருளிய பாஷ்யமும் அவருடைய பரமாசார்யரான ஆளவந்தார் அருளிய கீதார்த்த ஸங்க்ரஹமும் (பதவுரையோடு கூடியது) வாதிகேஸரி ஜீயர் அருளிய (பதவுரையோடு கூடிய) பகவத்கீதை வெண்பாவும், (பதவுரையோடு கூடிய) ஸ்ரீவேதாந்த தேசிகர் அருளிய கீதார்த்த சங்கிரகமும் இணைத்து வெளியிடப்பெற்றது. கீதாபாஷ்யத்திற்கு ஸ்ரீதேசிகன் அருளிய தாத்பர்ய சந்த்ரிகையின் அர்த்தத்தைப் பெரும்பாலும் விடாமல் கீதாபாஷ்யத்தின் கருத்தை எளிய தமிழில் விளக்குவதாக இந்த விவரணம் அமைந்தது கருத்து வேற்றுமை உள்ள இடங்களில் திவ்ய ப்ரபந்த வ்யாக்யாதாக்களின் திருவுள்ளமும், ஸ்ரீதேசிகனின் திருவுள்ளமும் தனித்தனியே எடுத்துக்காட்டப் பட்டது. இந்த வியாக்கியானத்தின் முதல் ஷட்கம் (முதல் ஆறு அத்தியாயங்கள்) சுமார் ஆயிரம் பக்கங்கள் கொண்டதாக ப்ரமாதீச சித்திரை ரேவதியில் (1–5–1973) வெளியிடப்பட்டது. இதன் இரண்டாவது பதிப்பு சென்ற வருடம் (1995) வெளிவந்தது. இரண்டாவது ஷட்கத்தில்

ஏழு, எட்டு அத்தியாயங்களின் வியாக்கியானம் காளயுக்தி பங்குனியிலும் [23–3–1979]. ஒன்பது முதல் பன்னிரண்டு வரையுள்ள அத்தியாயங்களின் வியாக்கியானம் குரோதன ஐப்பசித் திருமூலத்திலும் [15–11–1985], மூன்ருவது ஷட்கத்தின் முதல் மூன்று (13, 14, 15) அத்தியாயங்களின் வியாக்கியானம் ப்ரமோதூத சித்திரைப் பௌர்ணமியிலும் [9–5–1990] வெளியிடப்பெற்றன. மூன்ருவது ஷட்க வ்யாக்₂யானத்தின் நிறைவுப்பகுதி [16, 17, 18.] ஸுத₃ர்சனப் ஸ்தாபகரின் நூற்ருண்டு விழாவின் போது தா₄த்ரு வருடம் மார்கழி திருவோணத்தில் [10–1–1997] கீதாசார்யனை பார்த்தசாரதி கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் திருவல்லிக்கேணியில் வெளியிடப் பெறுகிறது. ஸுத₃ர்சனம் பத்திரிகையில் இது நிறைவடைய மேலும் சில மாதங்களாகும்.

சுமார் மூவாயிரம் பக்கங்கள் கொண்ட இப்பேருரையில் கீதாசார்யனுடைய அருளாலும், ஆளவந்தார் எம்பெருமானர் முதலான பூர்வாசார்யர்களின் பேரருளாலும் விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்தின் பல பல அர்த்தங்களைப்பற்றிய நிர்ணயங்கள் வெளிவந்திருக்கின்றன. அவற்றில் இந்த ஸித்தாந்தத்தின் உபய ஸம்ப்ரதாயங்களின் முக்கியமான கருத்து வேற்றுமைகளைப்பற்றிய தெளிவான நிர்ணயம் ஏற்பட்டுள்ளது. அதைச் சுருக்கமாக அடுத்தபடி காட்டுகிறேம்.

ப்₃ரஹ்மஸூத்ரத்தில் 'பராயத்தாதி₄கரணம்' [2-3-6] என்னும் ஓர் அதி₄கரணம் உள்ளது. அதில் "பராத்து தத் ஶ்ருதே:" [2 3 40] என்னும் முதல் ஸூத்ரம் "ஜீவன் பரமாத்மாவினுல் தூண்டப்பெற்றே செயல் புரிகிருன்" என்று நிர்ணயித்தது அதற்குமேல் "இப்படி ஒப்புக்கொண்டால் ஶாஸ்த்ரங்கள் ஜீவனைக் குறித்து விதி₄நிஷேத₄ங்கள் செய்வது பொருந்தவில்லையே. பரமாத்மாவுக்கும் பக்ஷபாதமும் கருணையின்மையும் விளைகின்றனவே" என்னும்

ஆக்ஷேபம் எழுந்தது. அதற்குமேல் "க்ருதப்ரயத்நாபேக்ஷஸ்து விஹித ப்ரதிஷித்₃தா₄வையர்த்₂யாதி₃ப்₄ய:" [2-3-41] என்னும் அடுத்தஸூத்ரம் இந்தஆக்ஷேபத்திற்குப் பதிலளித்தது. "ஜீவனுக்கு ஒவ்வொரு செயலிலும் ஸர்வேஶ்வரன் முதல் முயற்சியில் தான் தூண்டாமல் அந்த ஜீவனே ஸ்வதந்த்ரமாகச் செயல்படும்படி அனுமதித் திருக்கிறுகையாலே விதி₄நிஷேத₄ங்கள் வீணாகப்போவது முதலான தோஷங்கள் விளையமாட்டா" என்பதே இதன் ஸாரம். இவ்விஷயம் இந்த ஸூத்ரத்தின் ஸ்ரீப₄ாஷ்யத்திலும், இவ்வதி₄கரணத்தின் பொருளை விளக்கும் நடாதூர் அம்மாளின் தத்வஸாரத்திலுள்ள "ஆத₃ாவீஶ்வர" என்று தொடங்கும் ஶ்லோகத்திலும், இந்த ஸூத்ரத்தின் ஶ்ருத ப்ரகாசிகையிலும் மிகத்தெளிவாக விவரிக்கப்பட்டுள்ளது. இதனடிப்படையிலேயே தேசிகனுக்கு முற்பட்ட பூர்வாசார்யர்களனைவரும் "ஈஶ்வரன் முதல் முயற்சியில் அளித்திருக்கும் ஸ்வாதந்த்ர்யத்தைப் பயன்படுத்தித் தான் மோக்ஷமடைவதற்காக ப₄க்தி முதலான மோக்ஷ ஸாத₄நங்களை அனுஷ்டி₂ப்பது ஸ்வரூபவிருத்₃த₄ம், ஸ்வரூபவிருத்₃த₄யான உபாயங்களை அனுஷ்டித்து மோக்ஷத்தைப் பெற்றாலும் அது தத்க்ரதுந்யாயத்தின்படி ஸ்வார்த்த₂ மோக்ஷமாக அமைந்துவிடும். சிலரை, என்றுமே எம்பெருமானைப் பிரிந்திருக்கையாலே மிகத் தாழ்ந்த மோக்ஷமாகிற கைவல்யத்தையும் அடையச் செய்துவிடும், ஆகையால், தன் முயற்சியாகிற உபாஸநமார்க்க₃ம் அடியோடு விலக்கத்தக்கது" என்று தம் கிரந்தங்களில் அருளிச் செய்துவந்தார்கள். ஹயக்₃ரீவ உபாஸகரான ஸ்ரீவேதாந்த தேசிகருக்கு இவ்வார்த்த₂ம் ருசிக்கவில்லை. "வ்யாஸர், ஶுகர் முதலான மஹரிஷிகள் அனுஷ்டித்துவந்த உபாஸந மார்க்கத்தை ஸ்வரூபவிருத்₃த₄ம் என்று சொல்லுவது சரியல்ல. எல்லாக் கர்மங்களும் கழிந்தபின்பு மோக்ஷத்தில் தாழ்ந்த மோக்ஷம், உயர்ந்த மோக்ஷம், ஸ்வார்த்த₂மோக்ஷம், பரார்த்த₂மோக்ஷம் என்று பே₄த₃ம் விளைவதற்கும் இடமில்லை.

ஆகையால், இவ்வாசார்யர்கள் இப்படிக் கொள்வதற்கு மூலகாரணமாக 'பராயத்தாதி₄கரணம்' இரண்டாவது ஸூத்ரத்தில் 'பரமாத்மா ஜீவனுக்கு முதல் முயற்சியில் ஸ்வாதந்த்ர்யம் அளித்திருக்கிருன்' என்று கூறுவதே சரியல்ல. அநாதி₃காலமாகப் பூர்வபுண்ய பாபங்களுக்கு அநுகு₃ணமாகவே எம்பெருமான் மேன்மேலே புண்ய பாபங்களைத் தூண்டிவிடுகிருனுகையாலே, அவனுக்கு வைஷம்ய நைர்க்₄ருண்ய தோஷங்கள் முதலானவை விளைய மாட்டா. போ₄க₃மோக்ஷங்களை அடைவதற்கு எந்த ஸாத₄நத்தைக் கைக்கொள்வது என்னும் விஷயத்தில் ஜீவனுக்கு ஸ்வாதந்த்ர்யம் இருக்கையாலே ஶாஸ்த்ரவிதி₄நிஷேத₄ங்களும் வீணுகமாட்டா. ஆக, இப்படி ஜீவனுக்கு முதல் முயற்சியில் ஸ்வாதந்த்ர்யம் எதுவுமில்லாமையாலே, ப₄க்தி முதலான உபாயாந்தரங்கள் ஸ்வரூபவிருத்₃த₄ம் என்பது சரியல்ல. அவ்வுபாயங்களை அநுஷ்டிப்பதால் ஸ்வார்த்த₂ மோக்ஷம் விளைகிறது என்பதும் சரியல்ல. ப₄க்தி ப்ரபத்திகளால் அடையப்படும் மோக்ஷம் ஒருபடிப்பட்டதே. கைவல்யம் நித்யமான மோக்ஷமே அல்ல. அது லீலா விபூ₄தியில் அநுபவிக்கப்படும் ஓர் ஐஶ்வர்யமேயாகும்.'' என்று தேசிகன் திருவுள்ளம் பற்றினுர்.

ஆக ''ஒவ்வொரு காரியத்திலும் முதல் முயற்சியில் ஜீவனுக்கு ஸ்வாதந்த்ர்யம் அளிக்கப்பட்டிருக்கையாலே, அதைப் பயன்படுத்தி அநுஷ்டி₂க்கப்படும் மோக்ஷோபாயங்கள் அவனது அத்யந்த பரதந்த்ர ஸ்வரூபத்துக்கு முரண்பட்டவை. அவற்றுல் விளையும் மோக்ஷமும் தத்க்ரதுந்யாயத்தின்படி ஸ்வார்த்த₂மோக்ஷமாகவே அமைந்துவிடும். சிலருக்குத்தாழ்ந்தமோக்ஷமான கைவல்யமோக்ஷமே கிடைத்துவிடும்'' என்று தென்னுசார்ய ஸம்ப்ரதாயத்தின் முக்கியமான கொள்கைகளும், ''ஜீவனுக்கு முதல் முயற்சியில் எம்பெருமான் ஸ்வாதந்த்ர்யம் அளித்திருக்கிருன் என்பது சரியல்ல. ஆகையால் உபாயாந்தரங்கள் ஸ்வரூபவிருத்₃

த₄ங்கள் அல்ல; எனவே மோக்ஷத்தில் ஸ்வார்த்த₂ பரார்த்த₂பே₄த₃ம் கிடையாது. கைவல்யம் மோக்ஷமே அல்ல'' என்று தேசிக ஸம்ப்ரதாயத்தின் முக்கியமான கொள்கைகளும் பராயத்தாதி₄கரணத்திற்குப் பொருள் கொள்வதில் உள்ள கருத்து வேற்றுமையின் அடிப்படையில் அமைந்திருக்கின்றன என்று தேறுகிறது.

இப்படி மஹான்களான பூர்வாசார்யர்களிடையே உள்ள கருத்து வேற்றுமையின் அடிப்படையில் விளைந்த இவ்விரு ஸம்ப்ரதாயங்களைப் பின்பற்றி நிற்பவர்கள் இந்த ஸித்தாந்தத்தின் ப்ரத₄ான ப்ரதிதந்த்ரங்களான ப₄க₃வத்பரத்வத்திலும், உலகிற்கும் எம்பெருமானுக்கும் இடையே உள்ள சரீர சரீரிப₄ாவத்திலும் ஒத்த கருத்துடையவர்களாய் விளங்குகையாலே, ஹிதைஷிகளாய், பரஸ்பரசகிப்புத் தன்மையுடன் இந்தஸித்தாந்தத்தை வளர்ப்பதற்கு இந்தவ்யாக்யானத்தின் மூலம் வழிபிறந்திருக்கிறது என்பது மகிழ்ச்சியைத் தரும்செய்தியாகும். சென்னைப்பல்கலைக்கழகம் வைணவத்துறையின் ஆதரவில் 1995 நவம்பர் 14, 15 தேதிகளில் ''பகவத்கீதையில் தத்வஹிதபுருஷார்த்தங்கள்'' என்னும் தலைப்பில் அடியேன் நிகழ்த்திய அறக்கட்டளைச் சொற்பொழிவும் இந்நூலின் இறுதியில் இணைக்கப்பெற்றுள்ளது. அதிலும் இவ்விஷயம் தெளிவுபடுத்தப்பெற்றுள்ளது. இவ்வண்ணமாக எம்பெருமானுடைய அருளாலும், பூர்வாசார்யர்களுடைய பேரருளாலும் நிறைவடைந்துள்ள இந்த வ்யாக்₂யானத்தின் கடைசிப்பகுதியில் சரமஶ்லோகத்தின் பொருளும் (பக்கம் 818 முதல் 923 வரை) 106 பக்கங்களில் விவரிக்கப்பட்டிருப்பது பலமுறை வாசித்து ரஸிக்கத் தக்கது.

முதல் பாகத்திற்குக் கீர்த்திமூர்த்தியான வாகம்ருத வர்ஷீ ஸ்ரீ உ வே வேளுக்குடி வரதாசார்ய ஸ்வாமி மிக அழகியதொரு முகவுரையை அனுக்ரஹித்தருளினார். இந்த நிறைவுப் பகுதிக்கு—திருப்பதி வித்வான் ஸ்ரீ உ வே தி. அ. கிருஷ்ணமாசார்ய ஸ்வாமியும், திருப்பதி ஸம்ஸ்க்ருத வித்யாபீடத்தின் முன்னாள் துணைவேந்தரான ஸ்ரீ உ. வே. N. S, ராமானுஜ தாதாசார்ய ஸ்வாமியும் அழகிய மதிப்புரைகளை அருளி அடியேனை அனுக்ரஹித்துள்ளார்கள். அவர்களுக்கு அடியேனுடைய க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

"மாயன் அன்று ஐவர் தெய்வத் தேரினில் செப்பிய கீதையின் செம்மைப் பொருள் தெரியப் பாரினில் சொன்ன இராமானுசன்" [இராமாநுச நூற்றந்தாதி 68] அருளிய கீதாபாஷ்யத்திற்கு விளக்கமாய் அமைந்த இந்த வ்யாக்யானத்தைப்படித்து "எம்பெருமானே ப்ராப்யம் ப்ராபகம் முதலான அனைத்தும் என்னும் உறுதியுடன் அவனிடம் ஸ்வயம் ப்ரயோஜனமாக பக்தி செய்யும் பரமைகாந்திக்கு எம்பெருமான் பரமமோக்ஷத்தை நிர்ஹேதுகமாக அருளுகிறான்" என்னும் கீதா ஸாரார்த்தத்தை உணர்ந்து ஸ்ரீமந்நாராயணனுடையவும், ஆழ்வார்களுடையவும், ஆசார்யர்களுடையவும் பேரருளுக்குப் பாத்திரர்கள் ஆவோமாக.

10—1—1997 ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்,
தாத்ரு ஸ (ஸுதர்சனர்
மார்கழியில் ஆசிரியர், ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்
திருவோணம் 3 B, புத்தூர் அக்ரஹாரம்,
திருச்சிராப்பள்ளி-620017.

ஸ்ரீ



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமந் வர வர முநயே நம:



ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம் ஸ்தாபகரும்
ஜ்ஞாநபக்தி வைராக்ய நிதியுமான (புகழுடம்டபாளர்)
ஸ்ரீ உ. வே. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி

ஸ்ரீ



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமந் வர வர முநயே நம:



ஸுதர்ஸனர் ஸ்ரீ உ. வே. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்

ஸ்ரீ:

# ஸ்ரீமத்3 ப4க3வத்3 கீ3தா

## த்ருதீய ஷட்க பாத3ாநுக்ரமணிகை

[இதில் பதின்மூன்று முதல் பதினெட்டு வரை உள்ள அத்தியாயங்களில் உள்ள ஶ்லோகங்களின் பாத3ங்களின் அட்டவணை அத்4யாய ஶ்லோக எண்களுடன் தரப்பட்டுள்ளது அந்த ஶ்லோகங்களின் முதல் பாத3ப்பகுதிகள் பருத்த எழுத்துக்களில் அவை தொடங்கும் பக்கங்களுடன் அச்சிடப்பட்டுள்ளன.]


| பாத3ாதி3 | அத் ஶ்லோ. |
|---|---|
| அ | |
| அகர்த்தாரம் ஸ | 13-29 |
| அக்ஷராத3பி | 15-18 |
| அசரம் சரமேவ | 13-15 |
| அஜ்ஞாநம் சாபி4 | 16-4 |
| அஜ்ஞாநம் தமஸ: | 14-16 |
| அஜ்ஞாநம் யத3தோ | 13-11 |
| அதத்த்வார்த்த2 | 18-22 |
| அதீதோ ப4வதி | 14-21 |
| அதோऽஸ்மி லோகே | 15-18 |
| அத2சேத்த்வமஹம் | 18-58 |
| அதே3ஶகாலே 539 | 17-22 |
| அத்3பு4தம்ரோம | 18-14 |
| அத்3ரோஹோ நாதி | 16-3 |
| அத4ர்மம் த4ர்மமிதி 698 | 18-32 |
| அத4ஶ்ச மூலாநி | 15-2 |
| அத4ஶ்சோர்த்4வம் 289 | 15-2 |
| அதி4ஷ்டா2நம் தத2ா 619 | 18-14 |
| அதி4ஷ்டா2யமந: | 15-9 |
| அதே4ா க3ச்ச2ந்தி | 14-18 |
| அத்4யாத்ம ஜ்ஞான 91 | 13-11 |
| அத்4யாத்ம நித்யா | 15-5 |
| அத்4யேஷ்யதேச 934 | 18-70 |
| அநவேக்ஷ்ய ச | 18-25 |
| அநஹங்கார ஏவ | 13-8 |
| அநாதி3த்வாத் 174 | 13-31 |
| அநாதி3மத்பரம் | 13-12 |
| அநிஷ்டமிஷ்டம் மிஶ்ரம் 608 | 18-12 |
| அநுத்3வேக3கரம் 523 | 17-15 |
| அநுப3ந்த4ம் க்ஷயம் 679 | 18-25 |
| அநேகசித்த 430 | 16-15 |
| அந்தரம் ஜ்ஞான | 13-34 |
| அந்ய: ப்ரியதரோ | 18-69 |
| அந்யாயேநார்த்த2 | 16-12 |
| அந்யே த்வேவம் 155 | 13-25 |
| அந்யே ஸாங்க்2யேந | 13-24 |

அபரஸ்பர 16-8
அபாத்ரேப்4ய 17-22
அப்ரகாஶோ 233 14-13
அப2லப்ரேப்ஸுநா 18-23
அப2லாகாங்க்ஷிபி4ர் யஜ்ஞோ 513 17-11
அப2லாகாங்க்ஷிபி4ர்யுக்தை 17-17
அப4யம் ஸத்வ 372 16-1
அபி4ஜாதஸ்ய 16 3
அபி4ஜாதோऽஸி 16-5
அபி4ஸந்தா4ய 515 17-12
அப்4யாஸாத்3ரமதே 18-36
அமலாந்ப்ரதி 14-14
அமாநித்வ 79 13-7
அம்ருதஸ்யாவ்ய 14-27
அயதா2வத் 18-31
அயுக்த: ப்ராக்ருத: 686 18-28
அரதிர் ஜந 13-10
அராக3த்3வேஷத: 18-23
அவிப4க்தம் ச 115 13-16
அவிப4க்தம் வி 18-20
அஶாஸ்த்ரவிஹிதம் 479 17-5
அஶ்ரத்3த4யா ஹுதம் 558 17-28
அஶ்வத்த2ப்ராஹு 15-1
அஶ்வத்த2மேநம் 296 15-3*
அஸக்தம் ஸர்வ 13-14
அஸக்தபு3த்3தி4: 758 18-49
அஸக்திரநபி4 86 13-9
அஸங்க3ஶஸ்த்ரேண 15-3
அஸத்க்ருத 17-22
அஸத்யமப்ரதிஷ்ட2ம் 403 16-8
ஆஸதி3த்யுச்யதே 17-28
அஸௌ மயா 423 16-14
அஹங்காரம் ப3லம் 435 16-18
அஹங்காரம் ப3லம் 763 18-53
அஹம் த்வா ஸர்வ 18-66
அஹம் பீ3ஜப்ரத3: 14-4
அஹம் வைஶ்வாநரோ 330 15-14
அஹிம்ஸா க்ஷாந்தி 13-7
அஹிம்ஸா ஸத்ய 372 16-2

ஆ

ஆகாஶம் நோப 13-32
ஆசர்யாத்மந: 16-22
ஆசார்யோபாஸநம் 13-7
ஆட்4யோऽபி4ஜந 427 16-15
ஆத்மபு3த்3தி4ப்ரஸா 18-37
ஆத்மஸம்பா4விதா: 432 16-17
ஆத்மாநம் கேவலம் 18-16
ஆயு: ஸத்த்வ 489 17-8
ஆஶாபாஶஶதை: 418 16-12
ஆஸுரம் பார்த்த2 16-6
ஆஸுரீம் யோநிம் 443 16-20
ஆஸுரீஷ்வேவ 16-19
ஆஹாரஸ்த்வபி 485 17-7

ஆஹாரா: ஸாத்விக 17-8
ஆஹாரா ராஜஸ 17-9

இ

இச்ச₂ா த்₃வேஷ: 70 13-6
இஜ்யதே ப₄ரத 17-12
இதி₃க்ஷேத்ரம் 125 13-18
இதி குஹ்யதமம் 359 15-20
இதி தே ஜ்ஞாநம் 804 18-63
இத்யஜ்ஞாநவிமோ 16-15
இத்யஹம் வாஸு॰ 947 18-74
இத₃ம் ஜ்ஞாநமுபா 194 14-2
இத₃ம் தே நாதப 924 18-67
இத₃ம் ஶரீரம் 6 13-1
இத₃மத்₃ய மயா 421 16 13
இத₃மஸ்தீத₃ 16-13
இத₃முக்தம் மயா 15-20
இந்த்₃ரியாணி த₃ஶைகம் 13-5
இந்த்₃ரியார்த்தே₂ஷு॰ 831 3-8
இமம் ப்ராப்ஸ்யே 16-13
இஷ்ட: ஸ்யாமிதி 18-70
இஷ்டாநிஷ்டோப பத்திஷு॰ 13-9
இஷ்டோऽஸி மே 18-64

ஈ

ஈஶ்வர: ஸர்வ 793 18-61
ஈஶ்வரோऽஹமஹம் 16-14
ஈஹந்தே காம 16-12

உ

உச்சி₂ஷ்டமபி 17-10
உத்க்ராமந்தம் 320 15-10
உத்தம: புருஷ: 344 15-17
உதா₃ஸீநவதா₃ ஸீநோ 258 14-23
உபத்₃ரஷ்டாऽநு மந்தா 144 13-22

ஊ

ஊர்த்₄வம் க₃ச்ச₂ந்தி 244 14-18
ஊர்த்₄வமூலமத₄: 280 15-1

ரு (ऋ)

ருஷிபி₄ர்ப₃ஹு॰தா₄ 57 13-4

ஏ

ஏகஸ்த₂மநுபஶ்யதி 13-30
ஏதத்க்ஷேத்ரம் ஸமாஸேத 13-6
ஏதத்₃கு₃ஹ்யமஹம் 18-75
ஏதஜ்ஜ்ஞாநமிதி 13-11
ஏதத்₃பு₃த்₄வா பு₃த்₃தி₄ 15-20
ஏதத்₃யோ வேத்தி 13-1
ஏதாம் த்₃ருஷ்டி மவஷ்டப்₄ய 410 16-9
ஏதாந்யபி து 587 18-6
ஏதாவதி₃தி 16-11
ஏதைர் விமுக்த: 447 16-22

ஓ

ஓம் தத்ஸதி₃தி 541 17-23

க

| | |
|---|---|
| கச்சித₃ஜ்ஞாந | 18-72 |
| கச்சிதே₃தச்ச்₂ருதம் 940 | 18-72 |
| கட்வம்லலவண 493 | 17-9 |
| கரணம் கர்ம | 18-18 |
| கரணம் ச ப்ருத₂க் | 18-14 |
| கரிஷ்யஸ்யவஶோ | 18-60 |
| கரிஷ்யே வசநம் | 18-73 |
| கர்த்தவ்யாநீதி மே | 18 6 |
| கர்த்தா தாமஸ | 18-28 |
| கர்த்தா ஸாத்விக | 18-26 |
| கர்த்தும் நேச்ச₂ஸி | 18-60 |
| கர்ம கர்த்துமிஹா | 16-24 |
| கர்ம சைவ தத₃ | 17-27 |
| கர் ணः ஸுக்ருத 239 | 14-16 |
| கர்மணமமமः | 14-12 |
| கர்மணோ நோபபத்₃ | 18-7 |
| கர்ம ப்ராரப₄தே | 18-15 |
| கர்ம ப்ராஹுர்மநீ | 18-3 |
| கர்மயோகே₃ந சாபரே | 13-24 |
| கர்மஸங்கி₃ஷு | 14-15 |
| கர்மஸங்கே₃ந | 14-7 |
| கர்மணிப்ரவி | 18 41 |
| கர்மாநுப₃ந்தீ நி | 15-2 |
| கர்ஶயந்தः ஶரீர 479 | 17 6 |
| கஶ்சிந்மே ப்ரிய | 18-69 |
| காமம் க்ரோத₄ம் ச | 16-18 |
| காமம் க்ரோத₄ம் பரி | 18 53 |
| காமः க்ரோத₄ஸ்தத₂ா | 16-21 |
| காமக்ரோத₄ பரா | 16-12 |
| காமமாஶ்ரித்ய 412 | 16-10 |
| காமராக₃ப₃லா | 17-5 |
| காமோபபே₄ாக₃ | 16-11 |
| காம்யாநாம் கர்மணம் 572 | 18-2 |
| காயக்லேஶப₄யாத் | 18-8 |
| காரணம் கு₃ணஸம் | 13-21 |
| காரணநி நிபோ₃த₄ | 18-13 |
| கார்யம் சாகார்ய | 18-31 |
| கார்யகாரண 131 | 13-20 |
| கார்யமித்யேவ 599 | 18-9 |
| கார்யாகார்யவ்ய | 16-24 |
| கார்யாகார்யே ப₄யா | 18-30 |
| கார்யே ஸக்தமஹேது | 18-22 |
| கிமந்யத்காம | 16-8 |
| கிமாசாரः கத₂ம் | 14-21 |
| குர்வந்நாப்நோதி | 18-47 |
| குர்வாணோமத்₃ | 18-56 |
| குஶலே நாநு | 18-10 |
| கூடஸ்தோ₂ாக்ஷர | 15-16 |
| க்ருதக்ருத்யஶ்ச | 15-20 |
| க்ருத்ஸ்நம் லோகமிமம் | 13-33 |
| க்ருஷிகோ₃ரக்ஷ்ய 731 | 18-44 |
| கேசித₃ாத்மாந | 13-24 |
| கேஶவார்ஜுநயோः | 18-86 |
| கைர்லிங்கை₃ஸ்த்ரி 254 | 14-21 |
| கோऽந்யோऽஸ்தி | 16-15 |

க்ரியதே தத3ிஹ 17-18
க்ரியதே ப3ஹுலா 8-24
க்ரியந்தே மோக்ஷ 17-25
க்ரியமாணநி 13-29
க்ரோத4: பாருஷ்ய 16-4
க்ஷயாய ஜக3தோ 16-9
க்ஷரஶ்சாக்ஷர ஏவ 15-16
க்ஷர: ஸர்வாணி 15-16
க்ஷாத்ரம் கர்ம 18-43
க்ஷாந்திரார்ஜவமேவ 18-42
க்ஷிபாம்யஜஸ்ரம் 16-19
க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோ ரேவம 183 13-34
க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞ 13-2
க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞஸம் 13-26
க்ஷேத்ரஜ்ஞ இதி 13-1
க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் 13 13-2
க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா2 13-33
க்ஷேத்ரமித்யபி4 13-1

க3

க3ச்ச2ந்த்யமூடா4: 15-5
கா3மாவிஶ்ய ச 327 15-13
கு3ணதஸ்த்ரிவித4ம் 18-29
கு3ணப்ரவ்ருத்3தா4 15-2
கு3ணா: ப்ரக்ருதி 1-45
கு3ணாதீத: ஸ 14-25
கு3ணாநேதாநதீ 252 14-20
கு3ணாவர்த்தந்தே 14-23
கு3ணேப்4யஶ்சபரம் 14-19
கு3ணைர்யோ நவிசா 14-23
கு3ஹ்யாத்3கு3ஹ்ய 18-63
க்3ருஹீத்வைதாநி 15-8
க்3ரஸிஷ்ணு ப்ரப4 13-16

ச

சிந்தாமபரிமேயாம் 416 16-11
சேதஸா ஸர்வ 783 18-57

ச2

ச2ந்த3ாம்ஸி யஸ்ய 15-1
ச2ந்தோபி4ர் விவிதை4: 13-4

ஜ

ஜக3தா3ஹுர 16-8
ஜக3த்3ப4ாஸயதே 15-12
ஜக4ந்யகு3ண 14-18
ஜநா நவிது3ரா 16-7
ஜந்மம்ருத்யுஜராது3: 14-20
ஜந்மம்ருத்யுஜராவ்யா 13-8
ஜாநாதி புருஷோ 15-19
ஜிதாத்மா விக3த 18-49
ஜீவபூ4த: ஸநா 15-7
ஜ்ஞாத்வா ஶாஸ்த்ர 16-24
ஜ்ஞாநம் கர்ம ச 664 18-19
ஜ்ஞாநம் ஜ்ஞேயம் ஜ்ஞாந 13-17
ஜ்ஞாநம் ஜ்ஞேயம் பரி 661 18-18
ஜ்ஞாநம் யதா3 ததா3 14-11

स्वविद्याभिजनाननुगुणोऽभिमानः । क्रोधः - परपीडाफलचित्तविकारः । पारुष्यम् — साधूनामुद्वेगकरः स्वभावः । अज्ञानम् — परावरतत्त्व-

---

"வயஸ: கர்மணோர்த்த2ஸ்ய ஶ்ருதஸ்ய அபி4ஜநஸ்ய ச |
வேஷவாக்3 வ்ருத்தி ஸாரூப்யமாசரந் விசரேதி3ஹ ||" [மநு 4-17]

[தன் பருவம், தனக்குரிய செயல், தன் செல்வ நிலை, கேள்வி ஞானம், குடிப்பிறப்பு ஆகியவற்றுக்குத் தக்கபடியான தோற்றம், வார்த்தை, செயல் ஆகியவற்றை ஒருபடிப்பட்டதாகவுடையவனாய் இவ்வுலகில் வாழ வேண்டும்] என்னும் வசனத்தை மீறி நடப்பவர்களே இங்கு த3ர்ப்பமும், அது காரணமாக வரும் அதிமானமும் உடையவர்களாகக் கூறப்படுகின்றனர். (க்ரோத4:) பிறரைத் துன்புறுத்தும் மனவிகாரம். "அக்ரோத4:" (2) என்னும் தே3வகு3ணத்தை விளக்கும்போது, அதற்கு எதிர்த்தட்டான ஆஸுரகு3ணமான இந்த கு3ணமும் விளக்கப்பட்டது. (பாருஷ்யமேவ ச) நல்லோர்களுக்கு வெறுப்பை விளைக்கும் கடுமை. வேத3த்திற்குப் புறம்பான பா3ஹ்யர்கள் விஷயத்திலும், வேத3த்திற்கு அவப்பொருள் கூறும் குத்3ருஷ்டிகள் விஷயத்திலும், திருடர்கள் முதலான து3ஷ்டர்கள் விஷயத்திலும், வாக்கிலும், த3ண்ட3னையளிப்பதிலும் கடுமையாயிருப்பது "நல்லோர்களுக்கு வெறுப்பையளிக்கும்" என்னும் விசேஷணத்தினால் வேறுபடுத்தப்படுகிறது. நல்லோர்கள் இவர்களை ஒதுக்குவதால், இவர்கள் சாஸ்திரத்தாலும் ஒதுக்கப்பட்டவர்களே என்று கருத்து. (அஜ்ஞானம்) 'பரதத்வம் எது, தாழ்ந்த தத்துவங்கள் எவை' என்பது பற்றியும், 'செய்யத்தக்கது இன்னது, செய்யத்தகாதது இன்னது' என்பது பற்றியும் அறிவின்மை. இந்த அறிவின்மையினாலேயே சைவாக3மம், சாக்தாக3மம் முதலானவற்றில் பரதத்துவத்தையும் அவரதத்துவத்தையும் மாற்றிக் கூறுவதும், வேத3விருத்3த4மான வாமாசாரங்களைக் கூறுவதும் அமைந்துள்ளன என்று அறியத்தக்கது. முன் சொல்லப்பட்ட தே3வகு3ணங்களுக்கு நேர் எதிர்த்தட்டான சில கு3ணங்களை இங்கு காட்டியது, அவற்றுக்கு எதிர்த்தட்டான மற்ற கு3ணங்களுக்கும் உபலக்ஷணம். அல்லது மூன்று சகாரங்களால் அநுக்தஸமுச்சய முறையில் அவை உணர்த்தப்படுவதாகவும் கொள்ளலாம். (ஆஸுரீம் ஸம்பத3ம் அபி4ஜாதஸ்ய) "ப4வந்தி" என்று சென்ற ஶ்லோகத்திலிருந்து

कृत्याकृत्याविवेकः। एते स्वभावा आसुरीं संपदमभिजातस्य भवन्ति। असुरा भगवदाज्ञातिवृत्तिशीलाः॥ ४॥

---

கூட்டிக்கொள்ளவேண்டும். இந்தகு3ணங்கள் அஸுரப்பிறவிகளுக்குரிய செல்வத்தைக் குறித்துப் பிறந்தவனுக்கு அமைகின்றன என்றபடி. அஸுரர்களாவார் — எம்பெருமானுடைய ஆணையை மீறுவதையே இயல்பாகக் கொண்டவர்கள் என்று உணரத்தக்கது. இவர்களைக் குறித்தன்றோ

"பஶ்யத்யேநம் ஜாயமாநம் ப்3ரஹ்மா ருத்3ரோऽத2வா புந: |
ரஜஸா தமஸா சாஸ்ய மாநஸம் ஸமபி4ப்லுதம் ||"
[பா4ரத—மோக்ஷ 357—77]

[பிறக்கும்போது ஒரு மனிதனைப் பிரமனோ, அல்லது உருத்திரனோ பார்த்தானாகில் அவனுடைய மனம் (முறையே) ரஜோகு3ணத்திற்கும், தமோகு3ணத்திற்கும் வசப்பட்டதாய் விளங்கும்] என்றும், "விபரீதஸ் ததா2ऽஸுர:" [விஷ்ணு த4ர்மம் 109—74] [விஷ்ணு ப4க்தியில்லாதவன் அஸுரனாவான்] என்றும் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டது. சா2ந்தோ3க்3ய உபநிஷத்தில் ப்ரஜாபதி வாக்யத்தில் தே3ஹமே ஆத்மா எனும் மயக்கத்தால் இவ்வுலகச் செல்வங்களிலேயே ஈடுபட்டிருப்பவர்களைக் குறித்து "அஸுராணாம் ஹ்யேஷா உபநிஷத்" [சா2ந் 8—8—5] [(தே3ஹமே பூஜிக்கத்தக்கது; ஸர்வலோகஸுகா2நுப4வமும் தே3ஹத்திலிருப்பதே என்னும்) இக்கொள்கையே அஸுரர்களின் உபநிஷத்] என்று சொல்லப்பட்டதும் இங்கு அறியத்தக்கது. இங்கு அஸுரப் பண்பை 'ஸம்பத்' [செல்வம்] என்று கூறியது, அவ்வஸுரர்கள் அப்பண்பைச் செல்வமாக நினைக்கையாலே; அல்லது, கடும் விஷமுள்ள பாம்பை 'நல்லபாம்பு' என்பது போலே விபரீத லக்ஷணையாய், 'இதுவும் ஒரு செல்வமோ?' என்று பரிஹஸிக்கும் கருத்துடையதாகவுமாம். அன்றிக்கே, "ஸம்பத்3யத இதி ஸம்பத்" என்னும் வ்யுத்பத்தியாலே "வந்தடைந்திருப்பது" என்னுமளவே பொருள்கொள்ளவுமாம். 4.

दैवी संपद्विमोक्षाय निबन्धायासुरी मता।

*5. தை₃வீ ஸம்பத்₃ விமோக்ஷாய நிப₃ந்த₄ாயாஸுரீ மதா ||

தை₃வீ ஸம்பத் — தே₃வர்களுக்குரிய (என் ஆணையைப் பின் செல்வதாகிற) செல்வம், விமோக்ஷாய மதா — ஸம்ஸார விடுதலைக்குறுப்பாகிறது; ஆஸுரீ (ஸம்பத்) — அஸுரர்க்குரிய (என் ஆணையை மீறுதலாகிற) செல்வம், நிப₃ந்த₄ாய மதா — தாழ்ந்த க₃திகளை அடைய உறுப்பாகிறது.

---

भा ।। दैवी — मदाज्ञानुवृत्तिरूपा संपत्, विमोक्षाय — बन्धान्मुक्तये भवति; क्रमेण मत्प्राप्तये भवतीत्यर्थः। आसुरी — मदाज्ञातिवृत्तिरूपा संपत्, निबन्धाय भवति, — अधोगतिप्राप्तये भवतीत्यर्थः ।। ॐ५ ।।

---

*5. தே₃வர்களுக்குரிய செல்வத்தைப் பெற வேண்டும் என்ற ஊற்றமும், அஸுரர்க்குரிய செல்வத்தில் வெறுப்பும் விளைவதற்காக அவ்விரண்டு செல்வங்களுக்கும் உரிய ப₂லன்களைக் கூறுகிறான். (தை₃வீ ஸம்பத்₃ விமோக்ஷாய மதா) தே₃வர்களுக்குரிய, என் ஆணையைப் பின்செல்வதாகிற செல்வம் ஸம்ஸார ப₃ந்த₄த்திலிருந்து விடுபடுவதற்கு உறுப்பாகிறது என்பது ஶாஸ்திரங்களின் ஸாரம். இங்கு ஸம்ஸார விடுதலையாகிற அநிஷ்ட நிவ்ருத்தியைச் சொன்னது ப₄க₃வத் ப்ராப்தியாகிற இஷ்ட ப்ராப்தியையும் குறிக்கிறது. இச்செல்வத்தை உடையவன் கால க்ரமத்தில் மோக்ஷ ஸாத₄நங்களை அநுஷ்டி₂த்து ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்டு என்னை அடைந்து விடுவான் என்று கருத்து. (ஆஸுரீ ஸம்பத் நிப₃ந்த₄ாய மதா) அஸுரர்க்குரிய, என் ஆணையை மீறுவதாகிற செல்வம் தாழ்ந்த க₃திகளை அடைய உறுப்பாகிறது என்பது ஶாஸ்த்ர ஸாரம். (நிப₃ந்த₄ாய) "நியதோ ப₃ந்த₄:" அல்லது "நிதராம் ப₃ந்த₄:" அல்லது "நிக்ருஷ்டோ ப₃ந்த₄:" என்று விரியுமாகையாலே 'நிப₃ந்த₄' பதம் தாழ்ந்த க₃திகளைக் குறிக்கிறது. "ஊர்த்₄வம் க₃ச்ச₂ந்தி ஸத்வஸ்தா₂:— அதோ₄ க₃ச்ச₂ந்தி தாமஸா:" [கீ₃தை 14-18] [ஸத்வகு₃ணமுடையவர்கள் கிரமமாக உயரே சென்று மோக்ஷமடைகிறார்கள்;

भा ॥ एतच्छ्रुत्वा स्वप्रकृत्यनिर्धारणादतिभीतायार्जुनायैवमाह —

मा शुचस्संपदं दैवीमभिजातोऽसि पाण्डव ॥ ५

5* மா ஶுசஸ்ஸம்பத₃ம் தை₃வீமபி₄ஜாதோऽஸி பாண்ட₃வ॥

பாண்ட₃வ — பாண்டு₃ புத்திரனே! மா ஶுச: — (நான் அஸுரப்பிறவியோ? என்று ஐயமுற்று)வருந்தாதே;தை₃வீம் ஸம்பத₃ம் அபி₄ஜாத: அஸி - (நீ)தே₃வர்க்குரிய செல்வத்தை நிறைவேற்றப் பிறந்த தெய்வப்பிறவியே ஆகிருய்.

---

தெய்வமெனுஞ் செல்வந் திகழ்மோக்கத் தாசுரந்தா
ணைவகைசார் பந்தத்து நாடுறுப்பா —மிவ்வகையாற்
சேர்ந்துயர்ந்த சீர்ப்பார்த்தா தெய்வமாஞ் சம்பத்தை
நேர்ந்துதித்தாய் சோகியே னீ. 5.

சீர் பார்த்தா — பெருமைமிக்க குந்தியின் பிள்ளையே! தெய்வம் எனும் செல்வம்-தே₃வர்க்குரிய (எனது ஆணையைப் பின் செல்வதாகிற) செல்வம். திகழ்மோக்கத்து நாடு உறுப்பாம் — சிறந்ததான மோக்ஷத்தை அடைவதற்கு உறுப்பாகும்; ஆசுரந்தான்—அஸுரர்க்குரிய (எனது ஆணையைப் மீறுவதாகிற) செல்வம், நைவகை சார் பந்தத்து நாடு உறுப்பாம் — தாழ்ந்த க₃திகளில் கட்டுப்படுவதற்கு உறுப்பாகும். நீ—நீ, இவ்வகையால் சேர்ந்து — பாண்டுவுக்கும் குந்திக்கும் பிள்ளையாகப் பிறந்திருப்பவனுகையால், உயர்ந்த

---

தமோகு₃ணமுடையவர்கள் தாழ்ந்த க₃திகளுக்குச் செல்லுகிருர்கள்] என்று இவ்விஷயம் முன்னமே சொல்லப்பட்டதன்ரே. (மதா) "விஷ்ணு ப₄க்தி பரோ தே₃வ: விபரீதஸ் தத₂ாऽஸுர:" [விஷ்ணு த₄ர்மம் 109-74] [விஷ்ணு ப₄க்தியுடையவன் தே₃வனுவான்; நேர் மாருக விஷ்ணு த்₃வேஷமுடையவன் அஸுரனுவான்] முதலான ஶாஸ்த்ரங்களில் இது ப்ரஸித்₃த₄ம் என்று கருத்து, *5.

भा ।। शोकं मा कृथाः; त्वं तु दैवीं संपदमभिजातोऽसि, पाण्डव — धार्मिकाग्रेसरस्य हि पाण्डोस्तनयस्त्वमित्यभिप्रायः ।। ५ ।।

---

தெய்வமாம் சம்பத்தை — உயர்ந்ததான தே₃வர்களுக்குரிய செல்வத்தை, நேர்ந்துதித்தாய் — பெற்றுப் பிறந்திருக்கிறாய்; சோகியேல் — (ஆகையால்) வருந்தாதே.

---

5*. இப்படி தே₃வாஸுர ப்ரக்ருதிகள் அடையும் பலன்களைக் கேட்டவுடன், தான் தெய்வப்பிறவியோ, அஸுரப்பிறவியோ என்று நிர்ணயிக்க முடியாமல் பயந்தவனாய், அதனால் உண்டான வருத்தம் முகத்தில் தோன்ற இருந்த அர்ஜுனனை நோக்கிக் கூறுகிறான் கண்ணன் — (மாஶுச:) வருந்தாதே. கீ₃தையின் தொடக்கத்தில் உறவினர்களோடு போர் புரியவேண்டியிருப்பதைக்குறித்து அர்ஜுனுக்கு ஏற்பட்ட வருத்தத்தை இங்கு நீக்குவதாகச் சொல்லமுடியாது; அவ்வருத்தம் பல காரணங்களைக் காட்டி முதல் ஷட்கத்திலேயே போக்கடிக்கப்பட்டதன்றோ. மேலும், இவ்வருத்தத்தைப் போக்கடிப்பதற்காக 'நீ தெய்வப்பிறவி ஆகிறாய்' என்று கண்ணன் அடுத்தபடி கூறியிருப்பதும் ஒட்டாது. ஆகையால், முன் ஶ்லோகங்களில் தெ₃ய்வாஸுரப்பிறவிகளாகிற பிரிவையும், அவற்றில் பிறந்தவர்கள் அடையும் பயனையும் சொன்னவுடன், அர்ஜுனனுக்குத் தான் தெய்வப் பிறவியோ அல்லது அஸுரப்பிறவியோ என்று நிர்ணயிக்க முடியாமையாலே ஒரு சோகம் உண்டாயிற்று என்றும், அந்த சோகத்தையே "நீ தெய்வப்பிறவியாகையாலே வருந்தாதே" என்று கண்ணன் போக்குகிறான் என்றும் கொள்ளவேண்டும். 'ஶாஸ்த்ர வரம்பை மீறாத அர்ஜுனனுக்குத் தான் அஸுரப்பிறவியோ என்று எப்படி ஸந்தே₃ஹம் வரும்?' எனில்,

"மஹாஸத்த்வோऽதிக₃ம்பீ₄ர: க்ஷமாவாநவிகத்த₂ந: |
ஸ்தி₂ரோ நிகூ₃ட₄ாஹங்காரோ தீ₄ரோத₃ாத்தோ
த்₃ருட₄வ்ரத: ||" [த₃ஶரூபகம் 2-4]

[பெரிய ப₃லமுடையவனாய். மிகுந்த க₃ாம்பீ₄ர்யம் (ஆழமான உள்ளமுடைமை) உடையவனாய், பொறுமை உடையவனாய், தற்பெருமை பேசாதவனாய், உறுதியானவனாய், அடக்கத்தாலே மறைக்கப்பட்ட அஹங்காரத்தையுடையவனாய், உறுதியான

द्वौ भूतसर्गौ लोकेऽस्मिन् दैव आसुर एव च ।
दैवो विस्तरशः प्रोक्त आसुरं पार्थ मे शृणु ॥ ६.

6. த்₃வௌ பூ₄தஸர்க்கௌ₃ லோகேSஸ்மிந் தை₃வ ஆஸுர ஏவ ச ।
தை₃வோ விஸ்தரஶ: ப்ரோக்த ஆஸுரம் பார்த்த₂ மே ஶ்ருணு ॥

பார்த்த₂—குந்தீ புத்திரனே! அஸ்மிந் லோகே — இந்தக் கர்மலோகத்தில், பூ₄த ஸர்க்கௌ₃ — ஜீவராசிகளின் உற்பத்தி, தை₃வ: — தேவர்க்குரியது என்றும், ஆஸுர ஏவ ச — அஸுரர்க்குரியது என்றும், த்₃வௌ — இருவகைப் பட்டது, தை₃வ:-தேவர்க்குரிய ஆசாரம், விஸ்தரஶ:ப்ரோக்த:- விரிவாகச் சொல்லப்பட்டது, ஆஸுரம் - அஸுரர்க்குரிய ஆசாரத்தை, மே—என்னிடமிருந்து, ஶ்ருணு - கேட்பாயாக!

---

நிர்வாகத் திறமையுடையவனாய் இருப்பவன் தீ₄ரோதா₃த்தன் எனப்படுகிறான்] என்கிற தீ₄ரோதா₃த்த நாயக வகுப்பில் சேர்ந்தவனாகிற அர்ஜுனனுக்கு, "மறைந்து நிற்கும் அஹங்காரம் நமக்கும் உள்ளதே; இதனால் நானும் ஒருகால் ஆஸுர ப்ரக்ருதியாய் இருப்பேனோ" என்று ஐயம் விளைந்து அதனால் அஸுரப்பிறவிகளுக்குரிய தாழ்ந்த க₃திகள் தனக்கும் ஏற்பட்டு விடுமோ என்னும் வருத்தம் உண்டானதை முகக்குறியாலே கண்டு "நீ தெய்வப்பிறவியாகையாலே வருந்தாதே" என்று கண்ணன் தேற்றுகிறானாகையாலே குறையில்லை. வருந்தவேண்டிய அவஶ்யம் இல்லாமைக்குக் காரணத்தை மேலே காட்டுகிறான் — (தை₃வீம் ஸம்பத₃ம் அபி₄ஜாதோSஸி) தேவர்களுக்குரிய, எனது ஆணையை மீறாமையாகிற செல்வத்தை நிறைவேற்றுவதற்காகப் பிறந்தவனன்றோ நீ! ஆகையால் கீ₃தையின் தொடக்கத்தில் ஏற்பட்டது போலே இதுவும் தகாத வருத்தமே என்று கருத்து. (பாண்ட₃வ) தா₄ர்மிகர்களில் தலைவனான பாண்டு₃வின் பிள்ளையான நீ அசுரப் பிறவியாயிருப்பதற்கு இடமே இல்லை என்று கருத்து. மேலும், "கீ₃தையின் தொடக்கத்திலிருந்து இது வரையில் நான் என்னுடைய பெருமைகளைப் பலவாறாகச் சொல்லிவந்தபோதிலும், நீ முகம் சுளிக்காமல் அவற்றைக்கேட்டு உகந்திருப்பதனாலேயே, 'நீ தெய்வப்பிறவியே' என்று தெளிவாக விளங்குகிறது" என்ற கருத்தும் இங்கு கொள்ளவேண்டும். 5

भा ॥ अस्मिन् कर्मलोके कर्मकराणां भूतानां सर्गौ द्विविधौ — दैवश्चासुरश्चेति; सर्गः — उत्पत्तिः. प्राचीनपुण्यपापरूपकर्मवशा-

---

பூத மிருவகையாய்ப் போருமே யிவ்வுலகி
லாதமருந் தெய்வமாங் காசுரமா—மீததனிற்
றெய்வம் விரித்துரைத்தேன் சேர்ந்துநீ யாசுரத்தை
மெய்வகைகேள் பார்த்தா விரித்து. 6.

பார்த்தா — குந்தி பிள்ளையே! இவ்வுலகில் — இந்தக் கர்மலோகத்தில், பூதம் — ஜீவராசிகளின் படைப்பு, இரு வகையாய்ப் போருமே — இரண்டுவிதமாக இருக்கும், ஆங்கு ஆது — அத்தகைய அது, தெய்வம் ஆசுரமா அமரும் — தெய்வப்பிறவி என்றும் அஸுரப்பிறவி என்றும் (இருவகையாக) அமையும்; மீது அதனில் — உலகெங்கும் பரந்த அவ்விருவகைப் படைப்புகளில், தெய்வம் — தெய்வப்பிறவியின் ஒழுக்கத்தை, விரித்துரைத்தேன் — விரிவாகச் சொன்னேன், நீ — நீ, சேர்ந்து — கவனமாக, ஆசுரத்தை — அசுரப்பிறவியின் ஒழுக்கத்தைப் பற்றி, விரித்து — விரிவாக, மெய்வகை — உள்ளபடி (நான் சொல்வதை) கேள் — கேட்பாயாக.

---

6. எல்லா ஆத்மாக்களும் ஸ்வரூபத்தாலும், ஸ்வபா₄வத்தாலும் ஞானத்தையே வடிவாகக்கொண்டவர்களாய் இருந்த போதிலும், தெய்வப்பிறவி என்றும், அசுரப்பிறவியென்றும் பிரிப்பதற்கு அவரவர் கு₃ணங்களே காரணம் என்று முன் ஶ்லோகங்களில் சொல்லி, கைக்கொள்ளவேண்டிய தெய்வப் பிறவிகளின் ஆசாரத்தை, கர்மஜ்ஞான ப₄க்தி யோகங்களைச் சொல்லும்போது விரிவாகக் கூறிவிட்டபடியால், அடியோடு விலக்கவேண்டிய அசுரர்களின் ஆசாரத்தைக் கூறத் தொடங்குகிறான் இனி, (அஸ்மிந் லோகே) இந்தக் கர்மலோகத்தில்; இங்கு 'அஸ்மிந்' என்று பூ₄லோகத்தை மாத்திரம் குறிப்பதாகக் கொள்ளமுடியாது; மற்ற உலகங்களிலும் தெய்வாஸுரப்பிறவிகள் உள்ளனவன்றோ! ஆகையால், அப்பத₃ம் தெய்வாஸுரப்பிறவிகளுக்குக் காரணமான புண்யபாப கர்மங்களைச் செய்யும் கர்ம

भगवदाज्ञानुवृत्तितद्विपरीतकरणायोत्पत्तिकाल एव विभागेन भूतान्युत्पद्यन्त इत्यर्थः । तत्र दैवस्सर्गो विस्तरशः प्रोक्तः - देवानां मदाज्ञानुवृत्तिशीलानामुत्पत्तिर्यदाचारकरणार्था, स आचारः कर्मयोग-

---

லோகம் முழுவதையும் குறிப்பதாகக் கொள்ளவேண்டும். (பூ₄த ஸர்கௌ₃) ஜீவராசிகளின் உற்பத்தி. "ஸர்க₃: ஸ்வபா₄வ-நிர்மோக்ஷ - நிஶ்சயாத்₄யாய - ஸ்ருஷ்டிஷு" [அமரகோஶம் 3-3-22] ['ஸர்க₃:' என்னும் பத₃ம் ஸ்வபா₄வம், கைவிடுவது, நிச்சயம், அத்தியாயம், ஸ்ருஷ்டி எனும் பொருள்களை உடையது] என்று ஸர்க₃ஶப்₃த₃ம் பல பொருள்களை உடையதாயினும் ஸ்வபா₄வம் முதலான பொருள்கள் அப்ரஸித்₃த₄மாகையாலும் இந்தப் பிரகரணத்திற்குப் பொருந்தமாட்டாவாகையாலும் ஸ்ருஷ்டி (உத்பத்தி) என்னும் பொருளே இங்கு பொருத்தமானது. அவரவர் செய்த பழைய புண்ய பாப ரூப கர்மங்கள் காரணமாக, சிலர் எம்பெருமானுடைய ஆஜ்ஞையைப் பின் செல்பவர்களாகவும், வேறு சிலர் அவ்வாணையை மீறுபவர்களாகவும், படைப்புக் காலத்திலேயே உண்டாகிறார்கள் என்று கருத்து. அவ்விரு பிரிவுகள்தான் எவை எனில்,—(தை₃வ ஆஸுர ஏவ ச) தே₃வ ஸ்ருஷ்டியும் அஸுர ஸ்ருஷ்டியுமே அவை என்றபடி. எம்பெருமானுடைய ஆணையைப் பின்செல்வதாகிற செல்வத்தைப் பெற்றிருப்பவர்கள் 'தெய்வப்பிறவி' என்றும், அவ்வாணையை மீறுபவர்கள் 'அசுரப்பிறவி' என்றும் சொல்லப்படுகிறார்கள். (தை₃வோ விஸ்தரஶ: ப்ரோக்த:) எனது ஆணையைப் பின்செல்லும் தெய்வப்படைப்பானது எந்த ஆசாரத்தின்படி ஒழுகுவதற்காக ஏற்பட்டதோ, அந்த ஆசாரமாகிற கர்மஜ்ஞான ப₄க்தி யோக₃ங்கள் என்றால் முன்னமே விரிவாகச் சொல்லப்பட்டது. இங்கு தே₃வர்களுடைய படைப்பைப் பற்றியும் வம்ஶாவளிகளைப் பற்றியும் கீ₃தையில் எங்குமே விரிவாகக் கூறவில்லையாகையால் அதைப் பொருளாகக் கூறமுடியாது. "ப்ரஜஹாதி யதா₃ காமாந்" [2-55] "தை₃வமேவாபரே யஜ்ஞம்" [4-25], "சதுர்வித₄ா ப₄ஜந்தே மாம்" [7-16], "மஹாத்மாநஸ்து மாம் பார்த₂" [9-13] முதலான இடங்களில் கர்ம ஜ்ஞான ப₄க்தியோக₃ங்களில் ஊன்றியிருப்பவர்களைப் பற்றி விரிவாகச் சொல்லியிருக்கையாலே, அவ்விடங்களில் அந்தந்த யோக₃ங்களை விரிவாகச் சொன்னதாக ஆகிறது.

ज्ञानयोगभक्तियोगरूपो विस्तरशः प्रोक्तः; असुराणां सर्गश्च यदाचारार्थः, तमाचारं मे शृणु - मम सकाशाच्छृणु ॥ ६ ॥

---

ஆகையால் அதையே இந்தத் தொடரால் குறிப்பதாகக் கொள்ளுவது பொருத்தம். அதனாலேயே 'தை₃வ:' என்றதற்கு 'தெய்வப்பிறவிகளுக்குரிய ஆசாரம்' என்று இங்கு பொருள் கொள்ளப்பட்டது. இவ்வத்தியாயத்தின் தொடக்கத்தில், முதல் மூன்று ஶ்லோகங்களாலே, முன் விரிவாகச் சொல்லப்பட்ட தெய்வப்பிறவிகளுக்குரிய கு₃ணங்களும் ஆசாரங்களும் சுருக்கமாகச் சொல்லப்படுகின்றன என்று கண்டுகொள்வது. (ஆஸுரம் மே ஶ்ருணு) அஸுரர்களின் படைப்பு எந்த ஆசாரத்தை நடத்துவதற்காக ஏற்பட்டதோ, அந்த ஆசாரத்தை என்னிடமிருந்து கேட்பாயாக. மேலே பல ஶ்லோகங்களில் அஸுரப்பிறவிகளின் ஆசாரமே கூறப்படுகிறதாகையாலே, இங்கும் 'ஆஸுர' ஶப்₃த₃ம் அஸுரப்பிறவிகளின் ஆசாரத்தையே குறிக்கிறது. (மே ஶ்ருணு) 'நான் சொல்லக்கேளாய்' என்று பொருள் கொள்ளாமல், 'என்னிடமிருந்து கேளாய்' என்று பா₄ஷ்யத்தில் பொருளுரைத்தது, பரம ஆப்தனான என்னிடமிருந்து கேட்கையாலே இதில் ஒன்றும் பொய்யில்லை என்று காட்டுவதற்காக. (ஶ்ருணு) கைக்கொள்ளத்தக்க தெய்வப்பிறவிகளின் ஆசாரத்தை அறிந்தால்தான் அதைக் கைக்கொள்ள முடியும்; அதுபோலவே விலக்கத் தக்க அஸுரப்பிறவிகளின் ஆசாரத்தையும் அறிந்தால்தான் அதை விலக்க முடியும். ஆகையால், நான் சொல்லப்போகும் அஸுரப்பிறவிகளின் ஆசாரத்தைக் கவனமாகக் கேட்பாயாக! என்று கருத்து. (பார்த₂) சிறந்த ஞானியான குந்தியின் பிள்ளையான நீ விலக்க வேண்டியதை விலக்குவதற்காக, அவசியம் இதை அறிந்து கொள்ளவேண்டும் என்று கருத்து. 6.

ஆசாரம்: அதுப்டாமை.



प्रवृत्तिं च निवृत्तिं च जना न विदुरासुराः।
न शौचं नापि चाचारो न सत्यं तेषु विद्यते ॥ ७

7. ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச ஜநா ந விது₃ராஸுரா: ।
நஶௌசம் நாபி சாசாரோ ந ஸத்யம் தேஷு வித்₃யதே ॥

ஆஸுரா: ஜநா: — அஸுரப்பிறவியைச் சேர்ந்த ஜீவர்கள், ப்ரவ்ருத்திம் ச — ஐஶ்வர்ய ஸாத₄நமாகவும், நிவ்ருத்திம் ச — மோக்ஷ ஸாத₄நமாகவும் இருக்கும் வைதி₃க த₄ர்மத்தை, ந விது₃: — அறியமாட்டார்கள்; தேஷு — அவர்களிடம், ஶௌசம் ந வித்₃யதே — (வைதி₃க கர்மங்களை அனுஷ்டி₂ப்பதற்குரிய) ஶுத்₃தி₄ இருக்காது; ஆசார: அபி ந வித்₃யதே —(முற்கூறிய ஶுத்₃தி₄யை விளக்கும் ஸந்த்₄யாவந்த₃னம் முதலான) ஆசாரமும் அவர்களிடம் இருக்காது; ஸத்யம் ச ந வித்₃யதே — உண்மை உரைத்தலும் அவர்களிடம் இருக்காது.

---

செய்கின்ற வில்லறமுஞ் செய்யாத் துறவறமு
நைகின்ற வாசுரர்க ணன்கறியார்—மெய்குன்றுத்
தூய்மையுட ஞசாரஞ் சொல்லின் பயனுய
வாய்மையுமற் றில்லையவர் மாட்டு. 7

நைகின்ற ஆசுரர்கள் — தாழ்ந்தவர்களான அசுரப் பிறவிகள், செய்கின்ற இல்லறமும் — ஐஶ்வர்யங்களை ஸாதி₄த்துத்தரும் வைதி₃கமான ப்ரவ்ருத்தி த₄ர்மங்களையும், செய்யாத் துறவறமும்—அந்த ப்ரவ்ருத்தி த₄ர்மங்களிலிருந்து நீங்கினவர்க்குரிய மோக்ஷத்தை ஸாதி₄த்துத் தருவதான வைதி₃கத₄ர்மத்தையும, நன்கு அறியார் — உள்ளபடி அறிய மாட்டார்கள்; மெய்குன்று தூய்மையுடன் — வைதி₃க த₄ர்மங்களை அனுஷ்டி₂ப்பதற்குரிய ஶுத்₃தி₄யும், ஆசாரம் — (முற்கூறிய ஶுத்₃தி₄யை விளக்கும் ஸந்த்₄யாவந்த₃னம் முதலான) ஆசாரமும் சொல்லின் பயனுய வாய்மையும் — வாய்படைத்த பயனுன உண்யை உரைத்தலும், அவர் மாட்டு இல்லை — அவர்களிடம் இல்லை.

भा ॥ प्रवृत्तिं च निवृत्तिं च — अभ्युदयसाधनं मोक्षसाधनं च वैदिकं धर्मं आसुरा न विदुः — न जानन्ति । शौचम् —

---

7. ஆஸுரப்பிரகிருதிகளின் ஆசாரத்தைக் கூறும் முதல் ஶ்லோகம் இது. (ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச ஆஸுரா: ஜநா: ந விது₃:) ஐஶ்வர்ய ஸாத₄நமாகவும், மோக்ஷ ஸாத₄நமாகவுமிருக்கும் வைதி₃க த₄ர்மத்தை அஸுரப்பிறவியைச் சேர்ந்த ஜீவர்கள் அறியமாட்டார்கள். இங்கு ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி ஶப்₃த₃ங்கள் லௌகிக ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளைக் குறிக்க மாட்டா; ஏனெனில், — ஆஸுரர்கள் லௌகிகமான விருப்பங்களை அடைவதற்கும், அநிஷ்டங்களை நீக்கிக்கொள்ளுவதற்கும் தவறான வழிகளில் ப்ரவர்த்திப்பதையும் (முயல்வதையும்), நல்வழியிலிருந்து நிவ்ருத்தியடைவதையும் காண்கிறோமன்றோ. அந்த ஶப்₃த₃ங்கள் சாஸ்திரங்களில் விதி₄க்கப்பட்ட எல்லா விதி₄ நிஷேத₄ங்களையும் பற்றியவை என்றோ, விருப்பத்தினால் செய்யப்படுபவற்றையும் சாஸ்திர விதிப்படி செய்யப்படுபவற்றையும் குறிப்பவை என்றோ கொண்டால் "ந ஶௌசம் நாபி சாசார:" என்று மேலே கூறியிருப்பதோடு புநருக்தி ஏற்படும். ஆகையால், இங்கு முமுக்ஷுக்கள் கைவிடுவதற்காக அறிய வேண்டிய ஐஶ்வர்ய ஸாத₄நமான வைதி₃க த₄ர்மங்களையும், கைக்கொள்வதற்காக அறியவேண்டிய மோக்ஷ ஸாத₄நமான வைதி₃க த₄ர்மங்களையும் அந்த ஶப்₃த₃ங்கள் முறையே குறிக்கின்றன என்று கொள்ளப் படுகிறது. இவ்விரு த₄ர்மங்களைப் பற்றியும்,

"ப்ரவ்ருத்திலக்ஷணம் த₄ர்மம் ப்ரஜாபதிரத₂ாப்₃ரவீத் |
நிவ்ருத்திலக்ஷணம் த₄ர்மம் ருஷிர்நாராயணோऽப்₃ரவீத் ||"
[பா₄ர-மோக்ஷ 219-2]

[ஐஶ்வர்ய ஸாத₄நமான ப்ரவ்ருத்தி த₄ர்மத்தைப் பிரமன் உரைத்தான். மோக்ஷ ஸாத₄நமான நிவ்ருத்தி த₄ர்மத்தை நாராயண ரிஷி உரைத்தார்] என்று மஹாபா₄ரதத்தில் சொல்லப்பட்டதன்றோ. (ந விது₃:) அறியமாட்டார்கள். ஶ்லோகத்தின் பிற்பாதியில் 'ஶௌசம்' 'ஆசாரம்' 'ஸத்யம்' ஆகியவை அவர்களிடம் இல்லையென்று கூறப்பட்டது, இங்கு ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி த₄ர்மங்களை அவர்கள் அறிய மாட்டார்கள் என்று கூறப்படுகிறது. "ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி த₄ர்மங்கள் அவர்களிடம்

वैदिककर्मयोग्यत्वं शास्त्रसिद्धम्; तद्बाह्यमान्तरं चासुरेषु न विद्यते; नापि चाचारः -- तद्बाह्यान्तरशौचं येन सन्ध्यावन्दनादिना आचारेण जायते, सोऽप्याचारस्तेषु न विद्यते । यथोक्तम् — *सन्ध्याहीनोऽशुचिर्नित्यमनर्हस्सर्वकर्मसु (द स्मृ २-२२) इति । तथा सत्यं च तेषु न विद्यते -- यथाज्ञानं भूतहितरूपभाषणं तेषु न विद्यते ॥ ७ ॥

---

இல்லை என்பது மாத்திரமல்ல; நூறு முறை எடுத்துச் சொன்னாலும் தமோ கு₃ண மிகுதியால் அவர்கள் அவற்றை அறிய மாட்டார்கள்'' என்னும் கருத்து இதிலிருந்து விளங்குகிறது. இனி, ஶ்லோகத்தின் பிற்பாதியில் ஆஸுரர்களிடம் இல்லாத நன்மைகளைக் கூறுகிறான் — (ஶௌசம் தேஷு ந வித்₃யதே) மனத்திற்கும், மற்ற இந்திரியங்களுக்கும், அல்லது மநோவாக்காயங்களாகிற முக்கரணங்களுக்கும் வைதி₃க கர்மங்களில் செயல்படத் தகுதியை உண்டாக்குவதற்குறுப்பாக சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட பரிஶுத்₃தி₄ அவர்களிடம் இல்லை. பரிஶுத்₃தி₄யற்ற மனிதர்களோடும் பொருள்களோடும் பழகுவதாலும், அவசியம் செய்யவேண்டியவைகளைச் செய்யாமலிருப்பதாலும் அவர்களிடம் பா₃ஹ்ய ஶுத்₃தி₄யும் இல்லை. ஆத்மகு₃ணம் இல்லாமையாலே மனத்தின் பரிஶுத்₃தி₄யாகிற ஆந்தரஶுத்₃தி₄யும் அவர்களிடம் இல்லை. (ஆசார: அபி தேஷு ந வித்₃யதே) முற்கூறிய பா₃ஹ்யாந்தர ஶௌசத்துக்குக் காரணமான ஸந்த்₄யாவந்த₃னம் முதலான ஆசாரங்களும் அவர்களிடம் இல்லை. ''ப்ராஜாபத்யம் க்₃ருஹஸ்த₂நாம்'' [வி. பு 1-6-37] என்று க்₃ருஹஸ்த₂ர்கள் அநுஷ்டிக்கும் வர்ணாஶ்ரம த₄ர்மங்களுக்கு ப்ராஜாபத்ய லோகம் ப₂லனாகச் சொல்லப்பட்டிருக்கும்போது அது ஶுத்₃தி₄யை விளைக்கிறது என்று எப்படிக்கூறுவது? எனில்;

''ஸந்த்₄யாஹீநோऽஶுசிர் நித்யமநர்ஹஸ்ஸர்வகர்மஸு ।
யத₃ந்யத் குருதே கர்ம ந தஸ்ய ப₂லபா₄க்₃ப₄வேத் ॥''

[த₃க்ஷஸ்ம்ருதி 2-22]

[ஸந்த்₄யாவந்த₃னம் செய்யாதவன் எப்போதும் ஶுத்₃தி₄யற்றவன்; எந்த வைதி₃க கர்மமும் செய்யத் தகுதியில்லாதவன். அவன் செய்யும் வைதி₃க கர்மங்களுக்கும் ப₂லனை அடையமாட்டான்] என்று ஸந்த்₄யா வந்த₃னத்தைப் ப₂லனை எதிர்பாராமல் செய்பவனுக்கு ஶுத்₃தி₄ விளைகிறது

भा ।। किंच—

असत्यमप्रतिष्ठं ते जगदाहुरनीश्वरम् ।
अपरस्परसंभूतं किमन्यत्कामहेतुकम् ।। ८

8. அஸத்யமப்ரதிஷ்ட₂ம் தே ஜக₃த₃ாஹுரநீஶ்வரம் ।
அபரஸ்பர ஸம்பூ₄தம் கிமந்யத்காமஹேதுகம் ॥

தே — அந்த ஆஸுரப்ரக்ருதிகள், ஜக₃த் — உலகம், அஸத்யம் அப்ரதிஷ்ட₂ம் அநீஶ்வரம் ஆஹு: — ப்₃ரஹ்மாத்மகமானது என்றும், ப்₃ரஹ்மத்தில் நிலைநிற்பது என்றும், ப்₃ரஹ்மத்தால் நியமிக்கப்படுவது என்றும் சொல்லுவதில்லை; அபரஸ்பரஸம்பூ₄தம் — ஆண் பெண் சேர்க்கையால் உண்டாகாதது, கிம் அந்யத் (இதி ஆஹு:) — வேறு எந்தப் பொருள் உள்ளது என்று கூறுகிறார்கள்; (ஜக₃த்) காமஹேதுகம் (ஆஹு:) — (ஆகையால்) உலகனைத்தும் காமத்தையே காரணமாகக்கொண்டது என்று கூறுகிறார்கள்.

---

இச்சகத்து மெய்யன் றிதற்கோர் நிலையில்லை
மிச்சவிறை யில்லென்று மேல்விழுந்து — பிச்சுரைப்பார்
தன்னிற்றான் காமத்தாற் சார்ந்தே பிறக்குமதென்
றென்னிற்றான் மற்றேதெனல். 8

---

என்று கூறப்பட்டிருக்கிறபடியால் குறையில்லை. ஸந்த்₄யாவந்த₃னம் இல்லாதவனுக்கு ஶுத்₃தி₄யின்மையைச் சொல்லும் இந்த எதிர்மறை வாக்யத்தால் ஸந்த்₄யாவந்த₃னம் ஶுத்₃தி₄க்குக் காரணமென்று அழுத்திச் சொல்லப்படுகிறது. இங்கு ஸந்த்₄யாவந்த₃னத்தைச் சொன்னது மற்ற நித்ய கர்மங்களுக்கும் உபலக்ஷணம். (ஸத்யம் ச தேஷு ந வித்₃யதே) ஸத்ய வசனமும் அவர்களிடம் இல்லை. ஸத்ய வசனமாவது:— தான் அறிந்தபடி ஜீவராசிகளுக்கு ஹிதமாய் இருப்பதைக் கூறுதல். ஆஸுரர்கள் வஞ்சனையில் திளைப்பவர்களாகையாலே தாம் அறிந்தபடி பேச மாட்டார்கள். பரஹிம்ஸையே இயல்வாகக் கொண்டவர்களாகையாலே ஆஸுரர்கள் ஜீவராசிகளுக்கு ஹிதத்தைப் பேச மாட்டார்கள். 7.

भा ॥ असत्यम् —जगदेतत्सत्यशब्दनिर्दिष्टब्रह्मकार्यतया ब्रह्मात्म·

இச்சகத்து மெய் அன்று — இவ்வுலகம் மெய்யான பரம்பொருளிலிருந்து உண்டானதன்று; இதற்கு ஓர் நிலை யில்லை— இவ்வுலகிற்குப் பரம்பொருளாகிய ஓர் நிலைநிற்கு மிடம் இல்லை; மிச்ச இறை இல் — இவ்வுலகனைத்தையும் நியமிக்கும் ஈஶ்வரன் இல்லை, என்று மேல் விழுந்து பிச்சு உரைப்பார் — என்று (ஆஸுரர்கள்) விடாப்பிடியாகப் பிதற் றுவார்கள், தன்னில்தான் காமத்தால் சார்ந்தே பிறக்கு மது — ஆண் பெண் காமத்தால் புணர்வதால் பிறப்பதே உலகம், என்று—என்று கூறி, என்னில் தான் மற்று ஏது எனல்- (ஸர்வேஶ்வரனை) என்னிடமிருந்து உண்டாகும் வேறு பொருள் ஏது என்று கூறுவார்கள்.

8 முன் ஶ்லோகத்தில் சொன்னதுபோலே ஸத்ய வசனத்தைப் பேசாதது மாத்திரமல்ல; நேர்மாறாக அஸத்ய வசனங்களையும் பேசுகிறார்கள் என்கிறது இந்த ஶ்லோகத்தில். (தே ஜகத் அஸத் யம் ஆஹு:) இவ்வுலகம் ஸத்ய ஶப்தத்தால் சொல்லப்படும் ப்ரஹ்மத்தின் கார்யப்பொருளாகையாலே ப்ரஹ்மாத்மகமானது என்று சாஸ்திரங்களைப் பின்பற்றிக் கூறுவதில்லை. இங்கு அஸத்ய ஶப்தம் 'பொய்' என்னும் பொருளுடையதல்ல, ஏனெனில் உலகம் உண்மையானதாக அனைவராலும் அனுபவிக்கப்படுவ தாலும், 'உலகம் பொய்' என்று கூறுபவனின் வாக்யமும் பொய் யாக வேண்டிவருகையாலும், 'இவ்வுலகச் செல்வங்களே உண்மை யானவையாய், நிலையானவையாய் உள்ளன' எனக்கருதி அவற் றைப்பெறப் பாடுபடும் ஆஸுரர்கள் உலகைப் பொய் எனக்கருத மாட்டாராகையாலும், உலகைப்பொய்யாக்க முயலும் குயுக்திகளை யும் செவியேற்கமாட்டாராகையாலும் 'பொய்' எனும் பொருள் பொருந்தாது. "எப்படி நாம் பெரும்பாலும் பொய்யர்களாகவே இருக்கிறோமோ, அப்படியே இவ்வுலகத்தினர் அனைவரும் பொய்யர் களே" என்று ஆஸுரர்கள் கூறுவதாக ஶங்கரர் உரையிட்டதிலும் ஸ்வாரஸ்யமில்லை; ஏனெனில்: இங்கு 'ஜகத்' என்னும் சொல் லால் சேதனர்கள் மாத்திரமல்லாமல் அசேதனப்பொருள்களும் குறிக்கப்படுகின்றனவாகையால், அதற்கு இப்படி உவமை காட்டிப் பொருளுரைப்பது பொருந்தாது. இங்கு 'அப்ரதிஷ்டம்

कमिति नाहुः। अप्रतिष्ठम्—तथा ब्रह्मणि प्रतिष्ठितमिति न वदन्ति।

---

ஆஹு:' 'அநீஶ்வரம் ஆஹு:' என்னும் பதங்கள் ஏற்கனவே கீ₃தையிலும், மற்றசாஸ்திரங்களிலும் ''உலகம் ப்₃ரஹ்மத்திடம் நிலை நிற்பது; உலகம் ப்₃ரஹ்மத்தால் நியமிக்கப்படுவது'' என்று சொல்லப்படுவதை அஸுரர்கள் இசைவதில்லை என்னும் கருத்துடையவை என்று கொண்டேதீரவேண்டியிருப்பதால் 'அஸத்யம் ஆஹு:' என்றதும் கீ₃தையிலும், மற்றசாஸ்திரங்களிலும் சொல்லப்பட்டபடி உலகம் ப்₃ரஹ்மத்திலிருந்து பிறந்ததாகையால் ப்₃ரஹ்மாத்மகமானது என்று ஆஸுரர்கள் இசைவதில்லை என்னும் கருத்துடையதேயாகவேண்டும். ஆஸுரர்கள் சாஸ்திரத்தை வெறுப்பதையே இயல்வாகக் கொண்டவர்களாகையாலும் சாஸ்திரத்தால்தேறும் அர்த்த₂த்தை மறுப்பதாகவே இங்குள்ள வாக்யங்களுக்குப் பொருள்காண்பது ஸ்வரஸம். ''ஸத்யம் ஜ்ஞாநம் அநந்தம் ப்₃ரஹ்ம'' [தை—ஆந] என்று சாஸ்திரங்களில் ஸத்யஶப்₃த₃ம் ப்₃ரஹ்மத்தின் பெயராகப் படிக்கப்பட்டுள்ளது. சா₂ந்தோ₃க்₃யத்திலும், ''தஸ்ய ஹவா ஏதஸ்ய ப்₃ரஹ்மணோ நாம ஸத்யமிதி தாநி ஹவா ஏதாநி த்ரீண்யக்ஷராணி—ஸத்யம் இதி। தத்₃யத் ஸத் தத₃ம்ருதம், அத₂யத்தி தந்மர்த்யம், யத்₃ யம் தேந உபே₄ யச்ச₂தி. யத₃நேந உபே₄யச்ச₂தி தஸ்மாத் யம், அஹரஹர்வா ஏவம்வித் ஸ்வர்க்க₃ம் லோகமேதி'' [சா₂ந் 8—3—4, 5] [அத்தகைய (இந்த ப்₃ரஹ்மத்தின் பெயர் ஸத்யம் என்பது; இப்பெயரில் 'ஸத்' 'தி' 'யம்' என்று மூன்று அக்ஷரங்கள் உள்ளன; 'ஸத்' என்பது அழியாத சேதனரைக் குறிக்கிறது. 'தி' என்பது அழியும் அசேதனத்தைக் குறிக்கிறது; 'யம்' என்பது இவ்விரண்டையும் நியமிப்பதைக் காட்டுகிறது; ஆக, சேதநாசேதனங்களை நியமிப்பதாகையால் ப்₃ரஹ்மம் 'ஸத்யம்' எனப்படுகிறது. இதை அறிபவன் எப்போதும் பரம்பொருளை அடைகிருன்]) என்று ஸத்ய ஶப்₃த₃ம் ப்₃ரஹ்மத்தையே குறிப்பது என்று நிர்வசனம் செய்துகாட்டப்பட்டது. ஆகையால், இங்கு ''தே ஜக₃த் அஸத்யம் ஆஹு:'' என்றதற்கு, கபிலர், குமாரிலர், ஜினர், பு₃த்₃த₄ர், சார்வாகர்ஆகிய மதத்தவர்களைப்போலே ஆஸுரர்கள்உலகை ப்₃ரஹ்மாத்மகம் என்றுஇசைவதில்லை என்றே பொருள் கொள்ளவேண்டும். (தே ஜக₃த் அப்ரதிஷ்ட₂ம் ஆஹு:) அவர்கள் உலகம் ப்₃ரஹ்மத்திடம் நிலைநிற்கிறது என்பதையும் (சாஸ்திரங்களைப் பின்பற்றி) ஒப்புக்கொள்வதில்லை. உலகம் நிலை

ब्रह्मणाऽनन्तेन धृता हि पृथिवी सर्वान् लोकान् बिभर्ति । यथोक्तं *तेनेयं नागवर्येण शिरसा विधृता मही । बिभर्ति मालां लोकानां सदेवासुरमानुषां । (वि २-५ २७) इति । अनीश्वरम्—सत्यसंकल्पेन

யாக இயங்கிக்கொண்டிருப்பதை எல்லா உலகமும் நேரே பார்த்துக் கொண்டிருக்கையால், 'உலகம் நிலைநிற்பதில்லை' என்று அப்ரதிஷ்டஂ ஶப்3த3த்திற்குப் பொருள் கொள்ள முடியாது. ஆகையால், சாஸ்திரங்களில் உலகம் நிலைநிற்பதற்குக் காரணமாக ப்3ரஹ்மத்தைச் சொல்லுவதை அவர்கள் இசைவதில்லை என்றே இங்கும் பொருள் கொள்ளவேண்டும். அப்படி சாஸ்திரங்களில் கூறியதுண்டோ? எனில்;

"தேநேயம் நாகவர்யேண ஶிரஸா வித்4ருதா மஹீ |
பி3ப4ர்த்தி மாலாம் லோகாநாம் ஸதே3வாஸுரமாநுஷாம்||
[வி. பு. 2—5—27]

[இவ்வுலகம் அரவரசனான ஆதிஶேஷனால் த4ரிக்கப்பட்டதாய்க்கொண்டு, தேவர், அஸுரர், மனிதர் ஆகியவர்கள் கூடிய உலகக்கூட்டங்களைத் தாங்கி நிற்கிறது] முதலான இடங்களில் உலகம் ஸர்வேஶ்வரனின் படுக்கையான அநந்தனால் த4ரிக்கப்படுகிறதென்று கூறப்பட்டதன்றோ. இதிலிருந்து 'ப்ரதிஷ்டா2'ஶப்3த3ம் த4ர்மாத4ர்மங்களை மாத்திரம் குறிப்பிடுகிறது என்று ஶங்கரர் உரையிட்டது ஸ்வரஸமன்று என விளங்கும். ஆதி3கூர்மம், அதன்மேல் ஆதி3ஶேஷன், அதன்மேல் எட்டு தி3க்க3ஜங்கள் முதலானவை இருந்து உலகைத்தாங்குகின்றன என்று ஶாஸ்திரங்களில் கூறியிருப்பதை "பூ4மியை வேறொருவன் தாங்குகிறான் எனில், அவனை மற்றொருவன் தாங்கவேண்டும். அவனைப் பிறிதொருவன் தாங்கவேண்டும்; இப்படியே நில்லாமல் போய்க்கொண்டிருக்குமாகையால் அநவஸ்தா2தோ3ஷம் வரும்; ஆகையால் பூ4மியை அதன் ஶக்தியே தாங்குகிறது என்றுகொள்ள வேண்டும்" என்று சிலர்மறுக்கிறார்கள். வாயு வேக3த்தால் பூ4மி சுழல்கிறது என்கிறார்கள் சிலர், தன் எடையால் கீழே விழுந்துகொண்டே இருக்கிறது என்று ஜைநர்கள் கூறுகிறார்கள். சாஸ்திரத்தை ஒப்புக்கொள்பவர்கள் இவ்வுலகிலுள்ள பொருள்கள் ஒன்றையொன்று தாங்கினாலும், உலகம்முழுவதையும் ஸர்வேஶ்வரனே தன் ஸங்கல்பத்தால் தாங்குகிறான் என்றே கொள்ளவேண்டும் என்று கொள்ளுகிறார்கள். (தே

परेण ब्रह्मणा सर्वेश्वरेण मयैतन्नियमितमिति च न वदन्ति । * अहं सर्वस्य प्रभवो मत्तस्सर्वं प्रवर्तते (१०-८) इति ह्युक्तम् ।

---

ஜக3த் அநீஶ்வரம் ஆஹு:,) அவர்கள் ஸத்யஸங்கல்பனாய், பரப்3ரஹ்மமாய், ஸர்வேஶ்வரனான என்னால் இவ்வுலகம் நியமிக்கப்படுகிறது என்பதையும் (சாஸ்திரங்களைப் பின்பற்றி) ஒப்புக்கொள்வதில்லை. 'அநீஶ்வரம்' என்று இங்கு ஒவ்வொரு கூட்டத்தை நியமிக்கும் அரசர்கள் முதலானோர் இவ்வுலகிற்கு இல்லை என்று கூறுவதாகக் கொள்வது பொருந்தாது; ப்ரத்யக்ஷத்திற்கு முரணாகையால். "அஸத்யம்" என்றதோடு புநருக்தி வருமாகையால், "அநீஶ்வரம்" என்று "ஈஶ்வரன் இல்லை" என்று கூறுவதாகவும் பொருள்கொள்ள முடியாது. ஆகையால், இங்கும் சாஸ்திரங்களில் கூறியபடி ஸர்வநியந்தாவான ஸர்வேஶ்வரனால் தன் ஸங்கல்பத்தைக்கொண்டு உலகனைத்தும் நியமிக்கப்படுகிறது என்று அவர்கள் ஒப்புக்கொள்வதில்லை என்றே பொருள் கொள்ளவேண்டும். இப்படிக் கூறுகிறவர்களும் பலவகைப்படுவர். சிலர் காந்தம் இரும்பை இழுப்பதுபோல் அசித்ஸ்வபா4வத்தால் உலகம் இயங்குகிறது என்கின்றனர். "த4ர்மாத4ர்மாதி3வஶத்தாலே ஜீவர்களும், அஜீவர்களும் அடங்கிய உலகம் ஈஶ்வரன் இல்லாமலே செயல்படுகிறது" என்று ஜைனர் முதலானோர் கூறுகிறார்கள். "பரமேஶ்வரஸம்ஜ்ஞோऽஜ்ஞ கிமந்யோ மய்யவஸ்தி2தே" [வி. பு. 1-17-23] [அறிவிலியே! நான் அனைவரையும் நியமிப்பவனாயிருக்கும்போது பரமேஶ்வரன் என்று வேறொருவன் இருக்கிறானோ?] என்று தன்னையே ஸர்வேஶ்வரனாகக் கூறிக்கொண்ட ஹிரண்யன் முதலானோரும் அவ்வக்காலங்களில் இருந்துள்ளனர். ஒவ்வொரு தே3ஶத்திலும் ஒவ்வொரு காலத்திலும் இருந்த ஈஶ்வரர்களின் கூட்டத்தாலே உலகம் இயங்குகிறது என்பாரும் உளர், ஸர்வேஶ்வரனாய், ஶ்ரிய:பதியான நாராயணனுக்கு எதிர்த்தட்டாகப் பேச நின்ற சிவனையும், பிரமன் முதலானோரையும் பரமேஶ்வரன் என்று கூறுவாரும் உளர். இவர்கள் அனைவரும் ஆஸுரர்களே என்று இதிலிருந்து விளங்குகிறது. பிரமன், சிவன் முதலான சிலரும் ஆங்காங்கு சாஸ்திரங்களில் ஈஶ்வரன் என்று கூறப்பட்டாலும், "அஹம் ஸர்வஸ்ய ப்ரப4வோ மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே" [கீ3தை 10-8] [நான் எல்லாப் பொருள்களுக்கும் உத்பத்திஸ்தா2னமாயிருக்கிறேன்; என்னிடமிருந்தே எல்லாப்பொருள்களும் செயல்படுகின்றன.] என்கிறபடியே அவர்களுடைய ஈஶ்வரத்வம்

वदन्ति चैवम्-अपरस्परसंभूतम्, किमन्यत्-योषित्पुरुषयोः परस्परसंबन्धेन जातमिदं मनुष्यपश्वादिकमुपलभ्यते, अनेवंभूतं किमन्यदुपलभ्यते? किंचिदपि नोपलभ्यत इत्यर्थः। अतस्सर्वमिदं कामहेतुकमिति ॥ ८ ॥

---

அளவுபட்டது என்பதும், அதுவும் எம்பெருமான் அருளாலே உண்டானது என்பதும் அறியத்தக்கது. இவ்விஷயமே "கர்த்தா ஶாஸ்த்ரார்த்த₂வத்த்வாத்" [2-3-33] என்று தொடங்கி, "பராத்து தத் ஶ்ருதே:" [2-3-40] என்பதீறாக ப்₃ரஹ்ம ஸூத்ரங்களில் நிர்ணயிக்கப்பட்டது. ஆக, ஶ்லோகத்தின் முற்பாதியிலுள்ள "அஸத்யம்" "அப்ரதிஷ்ட₂ம்" "அநீஶ்வரம்" என்னும் மூன்று பத₃ங்களாலும் முறையே உலகின் உற்பத்தி, ஸ்தி₂தி, ப்ரவ்ருத்தி ஆகியவை பரமாத்மாவிற்கு வசப்பட்டவை என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டதை ஆஸுரர்கள் ஏற்பதில்லை எனக் கூறப்பட்டது. இனி, ஶ்லோகத்தின் பிற்பாதியில் உலகின் உத்பத்தி ப்₃ரஹ்மத்தால் உண்டாவதில்லை எனக் காட்டுவதற்காக, ஆண் பெண் சேர்க்கையாலேயே அது உண்டாகிறது என்று அவர்கள் கூறுவதைச் சொல்லுகிறான். முற்பாதியோடு ஒட்டாத "கிமந்யத்" என்று ஒரு கேள்வியிருப்பதால் ஶ்லோகத்தின் பிற்பாதி முற்பாதியோடு ஏகவாக்யமாகாது. "முற்பாதியில் சொன்னவையே இவர்கள் அஸுரர்கள் என்று காட்டப்போதுமானது; வேறு எது வேண்டும்?" என்று பொருள் கொள்வதில், இல்லாத பல பத₃ங்களை வருவித்துக் கொள்ளவேண்டியிருப்பதால் அதுவும் ஸ்வரஸமாகாது. ஆகையால் அடுத்த ஶ்லோகத்தில் "ஏதாம் த்₃ருஷ்டிம்" என்று அநுவாத₃ம் செய்திருப்பதையொட்டி, இந்த ஶ்லோகத்தின் பிற்பாதியிலும் அவர்களுடைய மற்றொரு கூற்றே சொல்லப்படுகிறது என்று கொள்ளவேண்டும். (காமஹேதுகம்) இவ்வுலகம் ஸ்த்ரீபுருஷகாமத்தையே காரணமாகக்கொண்டது என்று அவர்கள் கூறுகிறார்கள். "தே ஜக₃த் ஆஹு:" என்பதை முற்பாதியிலிருந்து சேர்த்துக் கொள்ளவேண்டும். இதை விளக்குகிறது பிற்பாதியின் முன் பகுதி — (அபரஸ்பரஸம்பூ₄தம் கிமந்யத்) ஆணும் பெண்ணும் ஒருவரோடொருவர் சேர்வதால் மனிதர் விலங்கு முதலானவை உண்டாவதை நாம் காண்கிறோம்; இப்படியல்லாமல் ஈஶ்வரனால் உண்டாவதாக வேறு எது காணப்படுகிறது? என்கிறார்கள் அவர்கள். அப்படி எதுவும் காணப்படுவதில்லையாகையால், ஈஶ்வரனால் உலகம் உண்டாவதாக சாஸ்திரங்கள் கூறுவது ஏற்கத்தக்கதல்ல என்று கருத்து.

ஆண் பெண் சேர்க்கையினுல் உண்டாகாத வியர்வைக்கிருமிகள், தாவரங்கள் ஆகியவற்றின் உற்பத்தி உலகில் காணப்பட்டாலும், ஈஶ்வரனை மாத்திரம் காரணமாகக் கொண்ட தேவாதிகளின் படைப்பு உலகில் காணப்படுவதில்லை. அயோநிஜங்களாகக் கூறப்படும் சிலவற்றையும், ப்ரத்யக்ஷத்தை ஒட்டி யோநிஜங்களாகவே கொண்டு விடலாம். குயவன் தண்டசக்ரங்கள் ஆகியவை செயல்படும்போது மண்ணிலிருந்து சட்டிபானைகள் உண்டாவதையும், இல்லாவிடில் உண்டாகாததையும் காண்கிறோம். ஆங்காங்கு இப்படிக் காணப்படும் நிமித்த உபாதான ஸஹகாரிகாரணங்களைக் கொண்டே உலகின் உற்பத்தியை நிர்வஹிக்கலாம்படியிருக்கையில், அநுமானத்தைக் கொண்டு உலகிற்குக் கர்த்தா ஒருவனை எதற்காகக் கற்பிக்கவேண்டும்? வேதத்தைக்கொண்டுதான் அப்படி ஒருவனை எதற்காக இசையவேண்டும்? என்பது அவர்கள் கருத்து. ''அகிஞ்சித் காமஹேதுகம்'' என்று சிலர் கொள்ளும் பாடம் அப்ரஸித்தமானது. ''காமஹேதுகம்'' என்று இங்கு உலகின் உற்பத்திக்குக் காரணமாக ஆண் பெண் சேர்க்கையைக் கூறியது, புலன்களால் அறியப்படும் மற்ற காரணங்களுக்கும் உபலக்ஷணம். பெரும்பாலும் ஜீவர்கள் காமத்தில் ஈடுபட்டே ப்ரஜோத்பத்தி செய்வதையிட்டு அதைச் சொல்லிற்று. ஆக, இந்த ஶ்லோகத்தால் — சைவாகமம் முதலானவை பசுபதி முதலான அந்தந்தப் புருஷர்களால் உண்டாக்கப்பட்டவை என்று அவ்வாகமங்களிலேயே கூறியிருப்பது போலேயும், பழைய நகர விருந்தாந்தங்களில் ஒவ்வொரு நகரம் ஒவ்வொருவரால் நிர்மாணிக்கப்பட்டது என்று கூறியுள்ளது போலவும், ஈஶ்வரனுகிற மஹாசிற்பி ஒவ்வொரு கல்பத்திலும் இவ்வுலகமாகிற நகரத்தை நிர்மாணம் செய்கிருன் என்று சாஸ்திரம் கூறுவதை ஒப்புக்கொள்ள இடமிருந்தபோதிலும், தங்கள் நாஸ்திகக்கொள்கைக்கு ஒத்துவராமையாலே, கசப்பு மருந்துபோலிருக்கும் சாஸ்திரத்தில் வெறுப்பாலே இந்த ஆஸுர ப்ரக்ருதிகள் ''உலகம் ஈஶ்வரனிடமிருந்து உற்பத்தி ஸ்திதி ப்ரவ்ருத்திகளை அடைகிறது'' என்னும் சாஸ்த்ர முழக்கத்தை ஏற்பதில்லை என்றதாயிற்று. 8.

एतां दृष्टिमवष्टभ्य नष्टात्मानोऽल्पबुद्धयः ।
प्रभवन्त्युग्रकर्माणः क्षयाय जगतोऽशुभाः ॥ ९ ॥

9. ஏதாம் த்₃ருஷ்டி₂ம் அவஷ்டப்₄ய
நஷ்டாத்மாநோऽல்பபு₃த்₃த₄ய: ।
ப்ரப₄வந்த்யுக்₃ரகர்மாண: க்ஷயாய ஜக₃தோऽஶுப₄ா: ॥

(ஆஸுரப்ரக்ருதிகள்) ஏதாம் த்₃ருஷ்டிம் — இந்த விபரீதமான பார்வையை, அவஷ்டப்₄ய — பற்றிக்கொண்டு, நஷ்டாத்மாந: — (தே₃ஹத்தைக் காட்டிலும் வேறுபட்டதான) ஆத்மாவைக் காணாதவர்களாய், அல்பபு₃த்₃த₄ய: — (அறியப்படும் அசித்தான தே₃ஹத்தில், அறிவதாகையாலே அதைக்காட்டிலும் வேறுபட்ட ஆத்மா உணரப்படுகிறது என்று) பிரித்தறிய முடியாத அல்பபு₃த்₃தி₄க்காரர்களாய், உக்₃ர கர்மாண: — (அனைவர்க்கும் தீங்கிழைக்கும்) கொடிய செயல்களைச் செய்பவர்களாய், அஶுப₄ா: — அமங்க₃ளமானவர்களாய், ஜக₃த: க்ஷயாய ப்ரப₄வந்தி — உலகம் அழிவதற்குக் காரணமாகிறார்கள்.

---

இங்கிதுவே கண்ணாக வேவேற்றுத் தன்னறியா
தங்கியலும் புத்தி யறமறமாய்ப்—பொங்கு
கொடுந்தொழில ராகிக் குலவுலகைத் தீப்பா
லடுந்தொழில ராவா ரவர். 9.

அவர் — அந்த ஆஸுரப்ரக்ருதிகள், இங்கு இதுவே கண்ணாகவே ஏற்று — இவ்வுலகில் இந்த விபரீதமான பார்வையையே பற்றிக் கொண்டு, தன் அறியாது — (தே₃ஹத்தைக் காட்டிலும் வேறுபட்டதான) தம் ஆத்மாவைக் காணாதவர்களாய், அங்கு இயலும் புத்தி அற — தே₃ஹத்தில் (ஆத்மாவைப்) பிரித்தறியும் அறிவு இல்லாமல், மறமாய் பொங்கு கொடும் தொழிலராகி — அதர்ம வழியில் மிகவும் ஈடுபடும் (பரஹிம்ஸை முதலான) கொடிய செயல்களைச் செய்பவராய், குலவு உலகை — அழகான உலகத்தை, தீப்பால் — (தம்முடைய) தீய செய்கைகளினால், அடும் தொழிலர் ஆவார் — அழிக்கும் தொழிலைச் செய்வர்.

भा॥ एतां दृष्टिमवष्टभ्य — अवलम्ब्य, नष्टात्मानः — अदृष्ट-देहातिरिक्तात्मानः, अल्पबुद्धयः — घटादिवत् ज्ञेयभूते देहे ज्ञातृत्वेन

---

9 "சென்ற ஶ்லோகத்தில் சொன்னது போல் அஸத்ய வசனத்தைப் பேசுவது மாத்திரமல்ல; உலகை அழிக்கும் செயலையும் செய்கிறார்கள்" என்கிறது இந்த ஶ்லோகத்தில். (ஏதாம் த்₃ருஷ்டிம் அவஷ்டப்₄ய) இவ்வுலகம் ஸ்திரீபுருஷ காமத்தையே காரணமாகக் கொண்டது என்னும் விபரீதப் பார்வையையே பற்றிக் கொண்டு. "ஏதாம் த்₃ருஷ்டிம்" என்றது சென்ற ஶ்லோகத்தில் சொன்ன விபரீதப்பார்வையையே குறிக்கிறது. 'அவஷ்டப்₄ய' என்றதற்கு 'ஆக்ரமித்து' முதலான பொருள்கள் இங்கு பொருந்தாதாகையாலே, "பற்றிக்கொண்டு" என்று பொருள் கொள்ளவேண்டும். (நஷ்டாத்மாந:)தே₃ஹத்தைக் காட்டிலும் வேறுபட்டதான ஆத்மாவைக் காணாதவர்களாய். ஆத்மாவுக்கு அழிவில்லாமையாலே 'ஆத்ம நாசத்தை அடைந்தவர்களாய்' என்று பொருள் கொள்ள இயலாது. ஆகையால் "ணஶ - அத₃ர்ஶநே" என்னும் த₄ாதுவை ஒட்டி '(தே₃ஹத்திலுள்ள) ஆத்மாவைக் காணாதவர்கள்' என்று பொருள்படுகிறது. இவர்களும் தே₃ஹத்தையே ஆத்மாவாகக் காண்கிறார்களாகையாலே, 'தே₃ஹத்தைக் காட்டிலும் வேறுபட்டதாக ஆத்மாவைக் காணாதவர்கள்' என்று தாத்பர்யம். இனி, இதற்குக் காரணத்தைச் சொல்லுகிறது — (அல்பபு₃த்₃த₄ய:) "குடம் முதலான அசேதநப் பொருள்கள் போலே அறியப்படுவதாக மாத்திரம் இருக்கும் தே₃ஹத்தில், அறிபவனாய், தே₃ஹத்தைக் காட்டிலும் வேறுபட்டவனான ஆத்மா உணரப்படுகிறான்" என்று பிரித்தறிய மாட்டாத புல்லறிவாளர்கள். இவ்வண்ணமாக "அல்பபு₃த்₃த₄ய:" என்று காரணத்தையும், "நஷ்டாத்மாந:" என்று அதனால் விளையும் பயனையும் கூறுகிறதாகையாலே புநருக்தி இல்லை. அன்றிக்கே, "விலங்குகளைப் போலே கர்மம் காரணமாக தே₃ஹத்தைக் காட்டிலும் வேறுபட்டது ஆத்மா என்று அறியாதவர்கள்" என்று "நஷ்டாத்மாந:" என்னும் பத₃மும், "இந்த தே₃ஹாத்மாபி₄மானத்தை ப்ரமாணங் கொண்டு நீக்கிக் கொள்ளவும் அறியாத புல்லறிவாளர்கள்" என்று "அல்பபுத்₃த₄ய:" என்னும் பத₃மும் காட்டுகையாலே புநருக்தி இல்லை என்றும் கொள்ளலாம்

देहव्यतिरिक्त आत्मोपलम्भरत इति विवेकाकुशलाः, उग्रकर्माणः — सर्वेषां हिंसकाः जगतः क्षयाय प्रभवन्ति ॥ ९ ॥

काममाश्रित्य दुष्पूरं दम्भमानमदान्विताः।
मोहाद्गृहीत्वाऽसद्ग्राहान्प्रवर्तन्तेऽशुचिव्रताः ॥ १० ॥

10: காமமாஶ்ரித்ய து₃ஷ்பூரம் த₃ம்ப₄மாந மத₃ாந்விதா: ।
மோஹாத்₃க்₃ருஹீத்வாऽஸத்₃க்₃ராஹாந் ப்ரவர்த்தந்தே-
ऽஶுசிவ்ரதா: ॥

---

சென்ற ஶ்லோகத்தாலும், இந்த ஶ்லோகத்தின் முற்பாதியாலும் பரமாத்மாவைப் பற்றியும், ஜீவாத்மாவைப்பற்றியும், ஆஸுர ப்ரக்ருதிகளுக்குள்ள விபரீதமான பார்வை விளக்கப்பட்டது. இனி, ஶ்லோகத்தின் பிற்பாதியாலே அதனால் விளையும் பயன் விளக்கப்படுகிறது. (உக்₃ரகர்மாண:) அனைவர்க்கும் தீமை செய்யும் கொடிய செயல்களைச் செய்பவர்கள். சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட உக்₃ரமான விரதங்களும் உக்₃ரகர்மங்களானாலும் ஆஸுரப்ரக்ருதிகளுக்கு அவை கிடையாதாகையாலே "கொடிய செயல்களைச் செய்பவர்கள்" என்று பொருள் கொள்ளப்பட்டது. (அஶுப₄ா:) தம்முடைய தொடர்பாலே பிறரையும் தீயவர்களாக்கும் அமங்க₃ளமானவர்கள். (ஜக₃த: க்ஷயாய ப்ரப₄வந்தி) இப்படிப் பிறரையும் தங்களைப்போலே தீயவர்களாக்குகையாலே உலகினரனைவரையும் புருஷார்த்த₂ங்களைப் பெறமுடியாதவர்களாகவும் தாபத்ரயத்தால் பீடிக்கப்படுபவர்களாகவும் ஆக்குவதன் மூலம் உலகம் அழிவதற்குக் காரணமாகிறார்கள். கீ₃தையில் மூன்றாம் அத்தியாயம் 10, 11 ஶ்லோகங்களில் சொன்னபடி, நாலு புருஷார்த்த₂ங்களையும் விரும்புகிறவர்கள் யஜ்ஞங்களைச் செய்து அவனுடைய சேஷத்தை உண்டு உலகம் வளர்வதற்கு வழி வகுக்கவேண்டியிருக்க, அந்த அறவழியை இவர்கள் தாங்கள் மீறுவதோடல்லாமல், தம்மோடு தொடர்புடைய புல்லறிவாளர்களையும் தம்முடைய உபதேசத்தின் மூலமும், ஆசாரத்தின் மூலமும் அதை மீறும்படியாகச் செய்கிறார்களாகையாலே இவர்கள் முற்கூறிய முறையில் உலகை அழிக்கிறார்கள் என்று கருத்து. 9.

(ஆஸுரப்ரக்ருதிகள்) து₃ஷ்பூரம் — நிறைவேற்ற அரிதான, காமம் — காமத்தை, ஆஶ்ரித்ய—பற்றிக்கொண்டு, (அதை நிறைவேற்றுவதற்காக) மோஹாத் — அறிவின்மையாலே, அஸத்₃க்₃ராஹாந் — அநியாயவழியில் தேடப்பட்ட பொருள்களை, க்₃ருஹீத்வா — பற்றிக்கொண்டு, அஶுசிவ்ரதா: — சாஸ்திரங்களில் விதி₄க்கப்படாத விரதங்களோடு கூடியவர்களாய், த₃ம்ப₄மாந மத₃ாந்விதா: — ட₃ம்ப₄ம் து₃ரபி₄மானம், மத₃ம் ஆகியவற்றோடு கூடியவர்களாய், ப்ரவர்த்தந்தே — செயல்படுகிறார்கள்.

---

கிட்டாத காமத்தை யுன்னியது கிட்டும்வினைப்
பட்டாங் கறிவின்றிப் பாவத்தா — லிட்டபொருள்
வாங்கிமதம் டம்பஞ்சேர் மானமுட னிங்குழல்வார்
தீங்கியற்று மல்விரதஞ் சேர்ந்து. 10.

(ஆஸுரப்ரக்ருதிகள்) கிட்டாத காமத்தை உன்னி — நிறைவேற்ற அரிதான காமத்தை ஆசைப்பட்டு, அது கிட்டும் வினைப்பட்டு — அதை நிறைவேற்றும் செயல்களைத் தொடங்க எண்ணி, அறிவின்றி — அறிவில்லாமல், ஆங்கு —அதற்காக, பாவத்தால் இட்டபொருள் வாங்கி—அநியாய வழியில் தேடப்பட்ட பொருள்களைப் பெற்று, தீங்கு இயற்றும் அல்விரதம் சேர்ந்து — தீங்கை விளைப்பனவாய், சாஸ்திரங்களில் விதிக்கப்படாதவையான விரதங்களை அநுஷ்டித்து, மதம் டம்பம் சேர் மானமுடன் — மத₃த்தோடும் ட₃ம்ப₄த்தோடும் சேர்ந்த தீய அபி₄மானத்தோடு, இங்கு உழல்வார் — இவ்வுலகில் செயல்படுகிறார்கள்.

---

10. காமமே உலகிற்குக் காரணம் என்பது ஆஸுரப்ரக்ருதிகளின் கொள்கை என்று எட்டாவது ஶ்லோகத்தில் சொல்லப்பட்டது. அவர்கள் அப்படிப் பற்றிநிற்கும் காமத்தைச் சாதித்துத் தருபவையாக எவற்றைக் கொண்டிருக்கிறார்கள் என்பது இந்த ஶ்லோகத்தில் விளக்கப்படுகிறது. (து₃ஷ்பூரம் காமமாஶ்ரித்ய) ஆஸுரப்ரக்ருதிகளாகையாலே, கிடைக்க அரிதான விஷயங்களில் காமங்களைப்பற்றிக்கொண்டு. ஸத்ப்ரக்ருதிகளாக இருந்தால் ''சிட்டாதாயின் வெட்டென மற'' என்று கிடைக்க

भा ॥ दुष्पूरम् — दुष्प्रापविषयं काममाश्रित्य तत्साधयिषया मोहात् — अज्ञानात्, असद्ग्राहान् — अन्यायगृहीतपरिग्रहान्, गृहीत்வா,

---

அரிதானவற்றை விரும்பமாட்டார்கள்; ரஜஸ்தமஸ்ஸுக்கள் நிறைந்த ஆஸுரப்ரக்ருதிகளாகையாலே அத்தகைய விஷயங்களையும் இவர்கள் பிடிவாதமாக விரும்பி நிற்கிருர்கள்.

"ந ஜாது காம: காமாநாம் உபபோ4கே3ந ஶாம்யதி |
ஹவிஷா க்ருஷ்ணவர்த்மேவ பூ4ய ஏவ அபி4வர்த்த4தே ||"

[காமுகர்களின் காமம் (விரும்பும் விஷயத்தை) அநுப4விப்பதினுல் ஒருபோதும் அடங்குவதில்லை; விறகை இடுவதினுல் நெருப்பு மேன்மேலே கொழுந்து விட்டெரிவது போலே மேன்மேலும் அதி4கரிக்கின்றது] என்கிறபடியே என்றும் நிறைவேற்ற அரிதாயிருப்பது காமத்தின் தன்மை. நிறைவேற்ற அரிதான விஷயங்களைப்பற்றிய காமத்தைப் பற்றிச்சொல்லவும் வேண்டுமோ? என்று கருத்து. (ஆஶ்ரித்ய) பயனுகக்கொண்டு என்று கருத்து. இப்படித் தமக்குப் பயனுன காமத்தைச் சாதிப்பதற்கு இவர்கள் சாதனமாகக் கொள்பவை எவை என்பதை ஶ்லோகத்தின் எஞ்சிய பகுதி விளக்குகிறது. (மோஹாத்) சாத்திரங்களுக்கு முரணுகச் செயல்பட வைக்கும் அறிவின்மையாலே. 'இன்னது செய்யத்தக்கது, இன்னது செய்யத்தகாதது' என்று பிரித்து அறியமாட்டாமையாலன்ரே இவர்கள் சாஸ்திர விருத்3த4மான செயல்களில் ஈடுபடுகிருர்கள். அந்தச் செயல்கள் எவை? எனில் — (அஸத்3க்3ராஹாந் க்3ருஹீத்வா) அநியாயவழியில் தேடப்பட்ட பொருள்களை முயன்று அடைந்து. "அஸத் க்3ராஹ: — க்3ரஹணம் யேஷாம் தே அஸத்3க்3ராஹா:" என்கிற வ்யுத்பத்தியாலே அஸத்3க்3ராஹ ஶப்3த3ம் தீயவழிகளில் தேடப்பட்ட பொருள்களைக் குறிக்கிறது. அறவழியில் நடப்பவர்களாயிருந்தால் நியாயமான வழிகளில் பொருளை ஈட்டுவார்கள். தகாத காமத்தில் ஈடுபட்ட ஆஸுரப்ரக்ருதிகளாகையாலே, திருட்டு முதலான தகாத வழிகளில் பொருளை ஈட்டிக் காமத்தை நிறைவேற்றிக் கொள்ளப்பார்க்கிருர்கள் என்று கருத்து. (அஸத்3க்3ராஹாந் க்3ருஹீத்வா) "க்3ருஹீத்வா" என்று அந்தப் பொருள்களில் தங்களுடையது என்று அபி4மானம் வைப்பதையோ, அல்லது அவற்றை அவ்வப்போது விநியோகிப்பதையோ குறிக்கிறதாகையாலே "க்3ராஹ" ஶப்3த3த்தோடு புநருக்தி இல்லை. இப்படிச்

अशुचिव्रताः — अशास्त्रविहितव्रतयुक्ताः दम्भमानमदान्विताः प्रवर्तन्ते ॥१०॥

---

சுவையுள்ள பொருளிருக்க, "அஸத்₃க்₃ராஹாந்" என்பதற்கு "அஶுப₄நிஶ்சயாந்" என்று பொருள்கொண்டு "ப்ரவர்த்தந்தே" என்பதோடு கூட்டி சங்கரர் உரையிட்டது ஸ்வரஸமாகாது. (அஶுசிவ்ரதா:) சாஸ்திரங்களில் விதி₄க்கப் படாதவையாய், புலையறமாகி நின்ற பௌ₃த்₃த₄ம் சமணம் முதலான சாஸ்திரங்களில் விதி₄க்கப்பட்டவையான விரதங்களோடு கூடியவர்கள்; பாஷண்ட₃ாக₃மங்களில் கூறப்பட்ட விரதங்கள் அதை அநுஷ்டிப்பவர்களைக் காணவும் தீண்டவும் தகாதவர்களாக ஆக்குகையாலே அஶுசி வ்ரதங்கள் எனப்படுகின்றன. த₄ர்மத்தில் நம்பிக்கையில்லாத இவர்கள் அந்த விரதங்களில்தான் ஈடுபடுவார்களோ? எனில்; அந்தப் பாஷண்ட₃ மதங்களைச் சேர்ந்தவர்கள் விஷத்தைப் போக்குவது, கல்லைப் பிளப்பது, சூரியனை ஸஞ்சரிக்காமல் நிறுத்துவது, பொம்மையைப் பேச வைப்பது முதலான வஞ்சனோபாயங்களாலே தாமஸ ப்ரக்ருதிகளை வசீகரித்து, தம்முடைய விரதங்களை ஏற்றுக் கொள்ளும்படி செய்வார்களாகையாலே குறையில்லை. அன்றிக்கே, தான் பெரிய சூரன் என்னும் அஹங்காரத்தால் விளையும் சாஸ்த்ர விருத்₃த₄மான ஸங்கல்பம் இங்கு 'அஶுசி வ்ரதம்' என்று கூறப்படுவதாகவும் கொள்ளலாம். (சாத்திரங்களில் விதி₄க்கப்பட்ட விரதங்களையும் எம்பெருமானுக்கு ஆராத₄னமானவை என்று அறியாமல் அநுஷ்டி₂ப்பது அஶுசிவ்ரதமேயாகும்.) இப்படிப்பட்ட விரதங்களோடு கூடியவர்கள் இங்கு 'அஶுசி வ்ரதர்கள்' என்று கூறப்படுகிறார்கள். (த₃ம்ப₄மாந மத₃ாந்விதா:) த₃ம்ப₄ம், து₃ர்மானம், மத₃ம் ஆகிய து₃ர்கு₃ணங்களோடு கூடியவர்கள். த₃ம்ப₄மும் அதிமானமும் நாலாவது ஶ்லோகத்தின் உரையில் விளக்கப்பட்டன. "வித்₃யா மத₃: த₄ந மத₃: த்ருதீயோऽபி₄ஜநோ மத₃: | ஏதே மத₃ாவலிப்தாநாம் ஏத ஏவ ஸதாம் த₃ம: ||" [மத₃ங் கொண்டவர்களுக்கு வித்₃யையும் மத₃ஹேதுவாகிறது; த₄னமும் மத₃ஹேதுவாகிறது; நல்ல குடிப்பிறப்பும் மத₃ஹேதுவாகிறது. (வித்₃யை, த₄னம், குலம் என்னும்) இவையே நல்லோர்களுக்கு (மத₃த்திற்கு நேர்மாறான) த₃மத்திற்கு (அடக்கத்திற்கு) ஹேதுவாகிறது] என்கிறபடியே கல்வியாலும், பணத்தாலும், நற்குடிப் பிறப்பாலும் உண்டாவ

11618.

21-7-10.

चिन्तामपरिमेयां च प्रलयान्तामुपाश्रिताः ।
कामोपभोगपरमा एतावदिति निश्चिताः ॥ ११ ॥

11. சிந்தாமபரிமேயாம் ச ப்ரலயாந்தாமுபாஶ்ரிதா: ।
காமோபபோ₄க₃பரமா ஏதாவதி₃தி நிஶ்சிதா: ॥

(ஆஸுரப்ரக்ருதிகள்) அபரிமேயாம் —அளவிடவொண்ணாததாய், ப்ரலயாந்தாம் ச — பிரளயகாலம் வரையில் இருந்து சாதிக்கவேண்டிய விஷயங்களைப் பற்றியதான, சிந்தாம் — கவலையை, உபாஶ்ரிதா: — உடையவர்களாய், காமோபபோ₄க₃பரமா: — காமாநுப₄வத்தையே பரமபுருஷார்த்த₂மாக நினைப்பவர்களாய், ஏதாவத் இதி நிஶ்சிதா:— 'புருஷார்த்த₂ம் என்பது இவ்வளவே; (இதற்குமேல் இல்லை)' என்னும் உறுதிபூண்டவர்களாய் உள்ளனர்.

---

துங்கவள வில்லாதே தோற்றஞ்சேர் சிந்தையினைத்
தங்கண் முடிவளவுந் தாமருவி — யங்கமருங்
காமபோ கம்பரமாக் கண்டறுதி மேவுவரே
யேமமிது வல்லதில்லை யென்று. 11.

துங்க அளவில்லாதே தோற்றம் சேர் சிந்தையினை— மிகப்பெரிதாய் அளவற்றதாய் உண்டாகும் கவலையை, தங்கள் முடிவு அளவும் — தங்கள் (கடைசி) முடிவு காலம் வரையில், தாம் மருவி — தாம் கொண்டவர்களாய், அங்கு அமரும் காம போகம் பரமா கண்டு-இவ்வுலகில் அநுப₄விக்கும் காம போ₄க₃த்தையே பெரும்பயனாக நினைத்து, இது அல்லது ஏமம் இல்லை — இதைக் காட்டிலும் சிறந்த பயன் இல்லை, என்று— என்று, அறுதி மேவுவரே—உறுதி கொள்வார்கள்.

---

தாய், தீய செயல்களுக்குக் காரணமாயிருக்கும் க₃ர்வமே மத₃மாகும். (ப்ரவர்த்தந்தே) தங்களுடைய நிறைவேற்ற முடியாத காமங்களை நிறைவேற்றிக் கொள்வதற்காக இத்தகைய தவறான வழிகளில் செயல்படுகிறார்கள் என்று கருத்து. 10.

भा ॥ अद्य श्वो वा मुमूर्षवः चिन्तामपरिमेयाम् — अपरिच्छेद्यां, प्रलयान्तां - प्राकृतप्रलयावधिकालसाध्यविषयाम्, उपाश्रिताः तथा कामोप-

---

11. காமத்தை நிறைவேற்றிக்கொள்வதற்காகத் தவருன வழிகளில் செல்லும் இவர்களுக்கு மேன்மேலே விளையும் மநோ விகாரம் முதலானவை கூறப்படுகின்றன — இந்த ஶ்லோகத்தி லிருந்து பதினெட்டாம் ஶ்லோகம் ஈருக. (சிந்தாம்) செய்ய வேண்டிய விஷயத்தில் நிறைவேற்ற முடியாத மநோரத₂ங்களை வளர்த்துக்கொண்டு அலைப்புண்பது 'சிந்தா' (கவலை) எனப்படு கிறது. (அபரிமேயாம்) எண்ணிறந்த விஷயங்களைப்பற்றிய தாகையாலே பல கிளைகளாகப் பிரிந்து அளவிடவொண்ணுததா யிருக்கிறது இவர்களுடைய சிந்தை; (ப்ரளயாந்தாம் உபாஶ்ரிதா:) ப்ராக்ருத ப்ரளயகாலம் வரையில் இருந்து ஸாதி₄க்கவேண்டிய விஷயங்களைப்பற்றிய சிந்தையை, இன்ருே நாளையோ மரண மடையப்போகும் இவர்கள் கொண்டுள்ளனர். ஒரு தவளை ஓர் பூச்சியைப் பிடிக்க மநோரதி₂த்துக்கொண்டு அதை நோக்கிப் பாய்கிறது; அடுத்த கணம் தன்னை விழுங்க ஓடிவரும் பாம்பைப் பற்றி அறியாமலே அது இதைச் செய்கிறது. தவளையை விழுங்க மநோரதி₂க்கும் பாம்பும் தன் பின்னுல் தன்னை அடித்துக்கொல்லத் தடியை ஓங்கிநிற்கும் ஒருவனைப்பற்றி அறியாமலே மநோரதி₂க் கிறது. இன்ருே நாளையோ யமனிடம் சிக்கப்போகும் ஆஸுர ப்ரக்ருதிகளும் நிறைவேற்றமுடியாதவையாய், எண்ணிறந்தவை யாய், வீணுனவையான இத்தகைய மநோரத₂ங்களில் சிக்கி உழல்கின்ருர்கள் என்று கருத்து. ''ப்ரளய'' ஶப்₃த₃ம் ப்ராக்ருத ப்ரளயத்தையே முக்கியமாகக் குறிக்குமாகையாலும், அப்படிப் பொருள்கொள்ளும்போது அநந்தகாலத்தில் ஸாதி₄க்கவேண்டி யதை அல்பகாலத்தில் ஸாதி₄க்க விரும்பும் இவர்களுடைய மயக்கத்தின் மிகுதி உணர்த்தப்படுவதாலும், 'ப்ரளய' ஶப்₃த₃த் திற்கு அந்த ஶரீரத்தின் முடிவு பொருளாகக் கொள்ளப்படாமல், 'ப்ரளயகாலம்' பொருளாகக் கொள்ளப்பட்டது. சிந்திக்கும் மனிதன் ப்ரளயம் வரையில் இருக்கமுடியாதாகையாலே, அவ னுடைய சிந்தையும் ப்ரளயம் வரையில் இருப்பது இயலாது; ஆகையால், 'ப்ரளயாந்தாம் சிந்தாம்' என்றதற்கு 'ப்ரளயம் வரையில் இருக்கும் சிந்தை' என்று பொருள் கொள்ளாமல், ''ப்ராக்ருத ப்ரளயகாலம் வரையில் இருந்து ஸாதி₄க்கவேண்டிய

भोगपरमाः — कामोपभोग एव परमपुरुषार्थ इति मन्वानाः, एतावदिति निश्चिताः — इतोऽधिकः पुरुषार्थो न विद्यत इति संजातनिश्चयाः ॥ ११ ॥

आशापाशशतैर्बद्धाः कामक्रोधपरायणाः ।
ईहन्ते कामभोगार्थमन्यायेनार्थसञ्चयान् ॥ १२

22-7-10.

12. ஆஶாபாஶஶதைர் ப3த்3த4ா: காமக்ரோத4பராயணா: ।
ஈஹந்தே காமபோ4கா3ர்த்த2மந்யாயேநார்த்த2
ஸஞ்சயாந் ॥

(ஆஸுரப்ரக்ருதிகள்) ஆஶாபாஶஶதை: ப3த்3த4ா: — ஆசைகள் என்னும் நூற்றுக்கணக்கான கயிறுகளாலே கட்டப்பட்டவர்களாய், காமக்ரோத4 பராயணா: — காமத்திலும் கோபத்திலுமே ஊன்றி நிற்பவர்களாய், காம போ4கா3ர்த்த2ம் — காமத்தை அநுப4விப்பதற்காக, அந்யாயேந — தவறான வழிகளில், அர்த்த2ஸஞ்சயாந் — பொருட் குவியல்களை, ஈஹந்தே — விரும்பித் தேடுகிறார்கள்.

---

விஷயங்களைப்பற்றிய சிந்தை" என்று பொருள்கொள்ளப்பட்டது. மநோரதி2க்கும் எண்ணிறந்த விஷயங்களைப்பற்றிய சிந்தைகளில் ஒவ்வொன்றுகூட ஸாதி4க்க இயலாதது என்று 'சிந்தாம்' என்ற ஏகவசனத்திற்கு (ஒருமைக்குக்) கருத்து. (காமோபபோ4க3 பரமா:) காமாநுப4வத்தையே பரமபுருஷார்த்த2மாக நினைப்பவர்கள். "காமோபபோ4க3 ஏவ பரம: யேஷாம் தே—காமோபபோ4க3 பரமா:" என்று வ்யுத்பத்தி. அறம், பொருள், இன்பம், வீடு என்று புருஷார்த்த2ங்கள் நான்காயிருந்தாலும், மற்ற மூன்று புருஷார்த்த2ங்களையும் ஒதுக்கி, காமாநுப4வத்தையே மேலான பயனாகக் கொண்டவர்கள் என்று கருத்து. (ஏதாவதி3தி நிஶ்சிதா:) "புருஷார்த்த2ம் என்பது இவ்வளவே; இதற்குமேல் இல்லை" என்று உறுதி பூண்டவர்கள். 'ஏதாவத்' என்னும் சொல்லாலே "சுவர்க்கம், மோக்ஷம் என்று மறுமைப் பயன்கள் உள்ளதாகச் சிலர் கூறுவது கற்பனை" என்னும் இவர்களுடைய கருத்து வெளிப்படுகிறது. (நிஶ்சிதா:) "பு4க்தா ப்3ராஹ்மணா:" [ப்3ராஹ்மணர்கள் உணவுண்டார்கள்] என்றவிடத்திற்போலே இங்கும் "கர்த்தரி க்த"ப்ரத்யயம் வந்திருக்கிறது. 'நிச்சயம் கொண்டவர்கள்' என்று பொருள்.

भा ॥ आशापाशशतैः — आशाख्यपाशशतैर्बद्धाः, कामक्रोधपरा-

காமஞ்சே ராக்கை சதங்களாற் கட்டுண்டு
காமக் குரோதத்துக் கைவளர்ந்து — சேமமுட
னாங்கதனைத் துய்ப்பா னனியாய வத்தத்தை
யோங்கிமிகத் தாஞ்சேர்ப்ப ருற்று. 12.

(ஆஸுரப்ரக்ருதிகள்) காமம் சேர் ஆக்கை சதங்களால் கட்டுண்டு— ஆசைகள் என்னும் நூற்றுக்கணக்கான கயிறுகளாலே கட்டப்பட்டவர்களாய், காமக்குரோதத்துக் கைவளர்ந்து—காமத்திலும் கோபத்திலுமே வளர்ச்சி பெற்றவர்களாய், சேமமுடன் ஆங்கு அதனைத் துய்ப்பான் — நிம்மதியுடன் இவ்வுலகிலேயே காமத்தை அநுப₄விப்பதற்காக, அநியாய அத்தத்தை — தவறான வழியில் வந்த பொருளை, உற்று — விரும்பி, ஓங்கி மிகத் தாம் சேர்ப்பர் — மிகவும் அதி₄கமாகத் தாமே தேடுவர்.

12. செய்யவேண்டிய விஷயங்களைப் பற்றிய மநோரத₂மாகிற சிந்தையை வளர்த்துப்போருவர்கள் என்று சென்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்டது. பெறும் பயன் விஷயமான ஆசைகளை வளர்த்துப் போருவர்கள் என்று இங்கு சொல்லப்படுகிறது. (ஆஶாபாஶஶதை: ப₃த்₃த₄ா:) ஆசைகள் என்னும் நூற்றுக்கணக்கான கயிறுகளாலே கட்டுண்டவர்கள். செய்யவேண்டியவைகளைப் பற்றிய மநோரத₂ம் 'சிந்தை' எனப்படும். பயனைப் பற்றிய எண்ணங்கள் 'ஆசை' எனப்படும். ஆசைக்கு விஷயங்கள் எண்ணிறந்தவையாயிருக்கையால், அதைப் பற்றிய ஆசைகளும் நூற்றுக்கணக்காகப் பிரிந்து எண்ணிறந்தவையாய் உள்ளன. அந்த ஆசைகள் இவனை உஜ்ஜீவிக்க முடியாதபடி கட்டுகையாலே, இங்கு கயிறுகளாக உருவகப்படுத்தப்படுகின்றன. (காமக்ரோத₄ பராயணா:) காமத்திலும் கோபத்திலுமே ஊன்றி நிற்பவர்கள். "பராயண" ஶப்₃த₃ம் 'பரம ப்ராப்யம்' என்று பொருள்படுமாகிலும், "கோபத்தைப் பரம ப்ராப்யமாகக் கொண்டவர்கள்" என்று கூறுவது பொருந்தாதாகையாலே, "காமக்ரோத₄ங்களிலேயே ஊன்றி நிற்பவர்கள்" என்று பொருள் கொள்ளப்பட்டது. 'அயந' ஶப்₃த₃ம் இங்கு இருப்பிடத்தைக்

यथा:—कामक्रोधैकनिष्ठाः, कामभोगार्थमन्यायेनार्थसंचयान् प्रतीहन्ते ॥ १२ ॥

---

குறிக்கிறது. "காமத்திற்கும் கோபத்திற்கும் மேலான இருப்பிடமாய் இருப்பவர்கள்" என்று பொருள். இவ்விரண்டிலுமே ஊன்றி நிற்பவர்கள் என்று கருத்து. காமக்ரோத$_4$ங்களைச் சேர்த்து எடுப்பதன் மூலம் "காம ஏஷ க்ரோத$_4$ ஏஷ:" [கீ$_3$தை 3-37] என்று காமமே தடைபடும்போது கோபமாகப் பரிணமிக்கிறது என்று கூறியது உணர்த்தப்படுகிறது. ஆகையால் புனருக்தி இல்லை. (காம போ$_4$கா$_3$ர்த்த$_2$ம்) ஶப்$_3$தா$_3$தி$_3$ விஷயங்களை அநுப$_4$விப்பதற்காக. "பரம புருஷார்த்த$_2$த்திற்கு ஸாத$_4$நமான பரமபுருஷனை ஆராதி$_4$ப்பதற்குத் தேட வேண்டிய பொருளை, மறுமையில் நரகத்தை அளிப்பதாய், இம்மையிலும் அற்பமாய் அஸ்தி$_2$ரமாய் இருக்கும் ஆப$_4$ாஸ (மேலெழத்தோன்றும்) ஸுக$_2$த்தின் பொருட்டுத் தேடுவதே! என்னும் இகழ்ச்சி தோற்றுகிறது. (அந்யாயேந) தவறான வழிகளில். யாக$_3$ம் செய்தல் முதலான சாஸ்த்ரீயமான வழிகளில் காமாநுப$_4$வத்திற்குப் பொருள் ஈட்டப்படுவதில்லையன்றோ. பிறரை ஏமாற்றி அவர்களுடைய பொருளைக் கவர்தல், பொய், கொலை, களவு முதலான தவறான வழிகளிலன்றோ காமபரவஶர்களான ஆஸுரப்ரக்ருதிகள் பொருளைக் குவிக்கிறார்கள். (அர்த்த$_2$ ஸஞ்சயாந் ஈஹந்தே) பொருட்குவியலைச் சேர்ப்பதைக் குறித்து விரும்பி முயல்கின்றார்கள். 10-வது ஶ்லோகத்தில் 'ப்ரவர்த்தந்தே' [முயல்கின்றார்கள்] என்பதற்கு விஷயமாக "அஸத்$_3$க்$_3$ரஹாந்" என்று அங்கு சொல்லப்பட்டதே இங்கு "ஈஹந்தே" [விரும்புகின்றனர்] என்பதற்கு விஷயமாக "அந்யாயேந அர்த்த$_2$ஸஞ்சயாந்" என்று கூறப்படுகிறதாகையால், "ஈஹந்தே" என்றதற்கு 'விரும்பி முயல்கின்றனர்" என்று பொருள் கொள்ளப்பட்டது. "அர்த்த$_2$ ஸஞ்சயாந்" என்ற பத$_3$த்தில் இரண்டாவது வேற்றுமை அந்வயிப்பதற்காக 'ப்ரதி' (குறித்து) என்னும் பத$_3$ம் வருவித்துக்கொள்ளப்பட்டது. 'பொருட்குவியலைக் குறித்து விருப்பத்துடன் முயல்கின்றனர்' என்று பொருள். 12

इदमद्य मया लब्धमिमं प्राप्स्ये मनोरथम् ।
इदमस्तीदमपि मे भविष्यति पुनर्धनम् ॥ १३

13. இத3மத்3ய மயா லப்3த4ம் இமம் ப்ராப்ஸ்யே மநோரத2ம் |
இத3மஸ்தீத3மபி மே ப4விஷ்யதி புநர்த4நம் ||

இத3ம் — (வயல், பிள்ளை முதலிய) இவ்வனைத்தும், அத்3ய — இப்போது, மயா — என் திறமையாலே, லப்3த4ம் — அடையப்பட்டது; இமம் மநோரத2ம் — பெறுவதற்கு விரும்பும் இந்தப்பொருளை, ப்ராப்ஸ்யே — (நானே என் திறமையால்) அடைந்து விடுவேன்; இத3ம் (த4நம்) அஸ்தி — இந்தச் செல்வம் (என் திறமையால்) எனக்கு உள்ளது. (இத3ம்) த4நம் — (நான் பெற நினைக்கும்) இந்தச் செல்வம், மே புந: ப4விஷ்யதி — எனக்கு (என் திறமையாலேயே) மறுபடியும் கிடைக்கும்.

---

இதுபெற்றே னிப்போ திதுயா னினைந்த
திதுகிட்டு வன்மேலு மின்னே — யிதுவென்ன
தாயேயுண் டாகின்ற தாங்கதற்பி னித்தனமு
மேயேயுண் டாமெனக்கு மிக்கு. 13.

இது இப்போது பெற்றேன் — (வயல் பிள்ளை முதலிய) இவ்வனைத்தும் இப்போது (என் திறமையாலே) பெற்றிருக்கிறேன். இன்னே — இதுபோலவே, மேலும் — இனி வரும் காலத்திலும், யான் நினைந்தது இது இது — நான் பெற விரும்பும் இந்த இந்தப்பொருளை, கிட்டுவன் — (என் திறமையாலேயே) அடைவேன். இது (தனம்) என்ன தாயே உண்டாகின்றது — இந்தச் செல்வம் என் திறமையாலேயே (எனக்கு) உண்டாயிருக்கிறது, ஆங்கு அதன்பின் இத்தனமும் — வருங்காலத்தில் (நான் பெற நினைக்கும்) இந்தச் செல்வமும், எனக்கு மேயே மிக்கு உண்டாம் — என் திறமையால் எனக்கு மிகவும் உண்டாகும்.

भा॥ इदम्—क्षेत्रपुत्रादिकं सर्वं मया मत्सामर्थ्येनैव लब्धम्, नादृष्टादिना; इमं च मनोरथमहमेव प्राप्स्ये, नादृष्टादिसहितः। इदं धनं मत्सामर्थ्येन लब्धं मे अस्ति, इदमपि पुनर्मे मत्सामर्थ्येनैव भविष्यति ॥ १३ ॥

---

13. "ஆயிரக்கணக்கான ஸ்த்ரீகளை அநுப4விப்பதாகிற பேரானந்தமே மோக்ஷம்" என்னும் கொள்கையுடைய காமுகர்களான ஆஸுரப்ரக்ருதிகள் காமாநுப4வத்தையே பரமபுருஷார்த்த2மாகக் கொண்டு, அதன்பொருட்டுப் பொருளைச் சேர்க்கிறார்கள் என்று இதுவரையில் சொல்லப்பட்டது. யோக3நிலையில் முன்னேறி வருபவர்கள் தங்களுக்குக் கிடைத்த முன்னேற்றத்தையும், கிடைக்கவேண்டியதையும், செய்ததையும், செய்யவேண்டியதையும் கணக்கிடுவதுபோலே இவர்களும் காமாநுப4வத்தில் பெற்றதையும், பெறப்போவதையும் அநுஸந்தி4க்கும் முறை இந்த ஶ்லோகத்தில் சொல்லப்படுகிறது. "சிந்தாம் அபரிமேயாம்" (11) என்னும் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட கணக்கற்ற சிந்தைகளுக்குச் சில எடுத்துக்காட்டுகளைக் காட்டுகிறது இந்த ஶ்லோகம். (இத3மத்3ய மயா லப்3த4ம்) வயல், வீடு, பிள்ளை முதலான இவ்வனைத்தையும் நான் என் திறமையாலேயே இப்போது பெற்றிருக்கிறேன்; முன் செய்த புண்ணியத்தாலல்ல என்று கருத்து. அடுத்த பாதியில் த4னத்தைத் தனியாக எடுக்கப்போகிறபடியால், அது தவிர்ந்த வீடு, வயல், பிள்ளைகள் முதலான செல்வங்கள் இங்கு 'இத3ம்'ஶப்3த3த்தால் குறிக்கப்படுகின்றன. 'மயா' (என்னாலே) என்னும் பத3த்தாலே, "இவற்றையெல்லாம் நான் என் திறமையாலே பெற்றேனேயொழிய, சில அறிவிலிகள் கூறுவதுபோல் ஈஶ்வர க்ருபையால் பெறவில்லை" என்னும் இவர்களது அஹங்காரத்தோடுகூடிய மயக்கம் உணர்த்தப்படுகிறது. (இமம் ப்ராப்ஸ்யே மநோரத2ம்) இனிவரும் காலத்திலும் நான் பெறவிரும்புகிறவற்றையெல்லாம் நானே என் திறமையாலே அடைவேன்; முன்செய்த புண்ணியத்தாலேயல்ல என்று கருத்து. (இத3மஸ்தி) இந்த த4னம் என் திறமையால் பெறப்பட்டதாய் என்னிடம் உள்ளது; (இத3மபி த4நம் மே புநர் ப4விஷ்யதி) நான் பெற விரும்பும் இந்த இந்த த4னம் அனைத்தும் என் திறமையாலேயே எனக்கு மறுபடியும் உண்டாகும். 'இத3ம்' 'இமம்' என்னும் பத3ங்கள் இவர்கள் சிந்தைக்கு விஷயமான செல்வங்கள் எண்ணிறந்தவை என்று காட்டுகின்றன.

27-7-10

असौ मया हतश्शत्रुर्हनिष्ये चापरानपि ।

*14. அஸௌ மயா ஹத: ஶத்ருர் ஹநிஷ்யே சாபராநபி।

மயா —(ப₃லம்மிக்க) என்னால், அஸௌ ஶத்ரு:—இந்த (என்) எதிரி, ஹத:— கொல்லப்பட்டான்; அபராந் அபி ச (ஶத்ரூந்) — மேலும் பல எதிரிகளையும், ஹநிஷ்யே — (ஶூரனாய் வீரனான நான்) கொல்வேன்.

---

भा ॥ असौ मया बलवता हतश्शत्रुः, अपरानपि शत्रूनहं शूरो

---

*14. சென்ற ஶ்லோகத்தில் தான் விரும்பியதெல்லாம் கிடைத்தலாகிற இஷ்டப்ராப்தி தன் திறமையாலேயேயொழிய முன் வினையாலல்ல என்று ஆஸுர ப்ரக்ருதிகள் மயங்குவது கூறப்பட்டது. பதினாலாம் ஶ்லோகத்தின் முற்பாதியிலே ஶத்ரு நிரஸனம் முதலான அநிஷ்ட நிவ்ருத்தியும் தன் திறமையாலேயே யொழிய, பூர்வபுண்யபாபத்தாலல்ல என்னும் மயக்கம் கூறப் படுகிறது. (மயா) என்னாலே; மார்தட்டிச் சொல்லும் இச்சொல் அஹங்காரத்தை உள்ளடக்கியிருக்கையாலே, "ப₃லம்மிக்க என் னாலே" என்று ப்ரகரணத்தையொட்டிப் பொருள்படுகிறது. (அஸௌ ஶத்ரு: ஹத:) வேறு எவராலும் கொல்ல அரியனான இந்த எதிரி கொல்லப்பட்டான். 'அஸௌ' என்னும் பத₃ம் எதிரியின் வலிமையைக் காட்டி, தன் வலிமை ஒப்பற்றது என வலியுறுத்துகிறது. (அபராநபிச [அஹம்] ஹநிஷ்யே) ஶூரனும் தீ₄(வீ)ரனுமான நான் மற்ற பல எதிரிகளையும் வருங்காலத் தில் கொன்றுவிடுவேன். 'மயா' என்னும் ஶப்₃த₃த்தையொட்டி இங்கு மறைந்திருக்கும் 'அஹம்' ஶப்₃த₃மும் அஹங்காரத்தை உள்ளடக்கியதாய், தன்னை ஶூரனாகவும் தீ₄ரனாகவும் உணர்த்து கிறது. "ஶூரம் பீ₄ரும் கவிம் ஜட₃ம்" [ஶூரனையும் பயங் கொள்ளியையும், கவியையும் அறிவிலியையும்] என்று நேர்மாறு னவர்களை எடுக்கும்போது பீ₄யந்தவனுக்கு எதிர்த்தட்டாக ஶூரனை எடுக்கையாலே, புலியைப்போலே பிறர் ப₃லத்தைப் புல்லென மதித்து எதிரிப்படையில் நுழையவல்லவன் ஶூரனா கிறான். "விகாரஹேதௌ ஸதி விக்ரியந்தே யேஷாம் ந சேதாம்ஸி த ஏவ தீ₄ரா:" [விகாரமடைவதற்குக் காரணமிருந்த போதிலும் எவர்களுடைய மனம் விகாரமடைவதில்லையோ, அவர் களே தீ₄ரர்கள்] என்னும் லக்ஷணத்தின்படி எத்தனை பராக்ர மத்தைக் காட்டினாலும் வாட்டமாகிற விகாரம் அற்றிருப்பவன்

वी(धी)रश्च हनिष्ये, किमत्र मन्दधीभिर्दुर्बलैः परिकल्पितेनादृष्टपरिकरेण ॥ १३= ॥

भा ॥ तथा च--

ईश्वरोऽहमहं भोगी सिद्धोऽहं बलवान् सुखी ॥ १४

14*. ஈஶ்வரோऽஹமஹம் போ₄கீ₃ ஸித்₃தோ₄ऽஹம் ப₃லவாந் ஸுகீ₂ ॥

---

14. இப்பகைவன் பட்டான்மற் றியாவரையுங் கொல்வேனான்
செப்பமிறை நான்போகி சித்தனுன்--மெய்ப்பொருளோன்
மேவுவலி யோன்சுகிநான் மேற்குலநா னுகின்றே
னேவனொன்னே டொப்பான்மற் றிங்கு.

---

தீ₄ரனுகிறுன். பா₄ஷ்ய தாத்பர்யசந்த்₃ரிகைகளில் "வீரஶ்ச" என்றும் பாட₂ம் காண்கிறது. பொருளில் வேறுபாடில்லை. "அறிவாளிகளான கணக்கற்ற மனிதர்கள் நம்பி நடக்கும் முன்விணையை அநாத₃ரித்து, தன் திறமையை மட்டும் நீங்கள் நம்பியிருப்பதற்குக் காரணம் என்ன?" என்று ஆஸுரர்களைக் கேட்டால், அவர்கள் சொல்லும் பதில் பின்வருமாறு:—"உலகில் பலர் மந்த₃பு₃த்₃தி₄யுள்ளவர்களாகவும், வலிமையற்றவர்களாகவும் இருக்கிறுர்கள்; அவர்களை ஏமாற்றிப் பணம் பறிப்பதற்காகவும், புகழ் பெறுவதற்காகவும் 'தா₃னம், யாக₃ம் முதலியவற்றைச் செய்தால் உங்களுக்கு அதன் ப₂லனுக இஷ்ட ப்ராப்தியும், அநிஷ்ட நிவ்ருத்தியும் பிற்காலத்தில் கிடைக்கும்' என்று பொய்யான நூல்களை எழுதி வைத்திருக்கிறுர்கள் சிலர். அவற்றைக் கண்டு ஏமாந்து தங்களுடைய திறமையின் பெருமையை அறியாதார் சிலரும், தங்களிடம் மிகுந்த திறமையில்லாதார் பலரும் 'திறமையாலேயே அனைத்தையும் ஸாதி₄க்கலாம்' என்று லோகாயத ஶாஸ்த்ரத்தில் முழங்கப்படும் ப்ரத்யக்ஷ ப்ரமாணத்திற்கு முரணுக, முற்கூறிய பொய்ந்நூல்களை நம்பி, தங்கள் திறமையைப் பயன்படுத்தாமற் போகின்றனர். 'ந பே₄த₃ ஸாத்₄யா ப₃ல த₃ர்ப்பிதா ஜநா:' [ரா-ஸு. 41-3] [வலிமைமிக்கவர்களை ப₄யமுறுத்தி ஏமாற்ற முடியாது] என்னும் நியாயத்தாலே பு₃த்₃தி₄ப₃லமும், தே₃ஹப₃லமும் உள்ள எங்களை முன்விணகளைக்காட்டி ஏமாற்றவோ, ப₄யமுறுத்தவோ முடியாது" என்பது (சார்வாகமதத்தைப் பின்பற்றும் ஆஸுர ப்ரக்ருதிகளின் பதிலாகும்). *14.

भा ॥ ईश्वरोऽहम् —स्वाधीनोऽहम्, अन्येषां चाहमेव नियन्ता ।

---

அஹம் ஈஶ்வர: — நானே என்திறமையால் அனைவரையும் நியமிப்பவன்; அஹம் போ₄கீ₃ — நானே (என் திறமையால்) போ₄க₃ங்களை அனுப₄விப்பவன்; அஹம் ஸித்₃த₄: — நானே (என் திறமையால்) ஸித்₃தி₄களைப் பெற்றவன்; (அஹம்) ப₃லவாந்—(நானே இயற்கையாகவே) ப₃லமுடையவன்; (அஹம்) ஸுகீ₂ — (நானே இயற்கையாகவே) ஸுக₂முடையவன்.

---

இப்பகைவன் பட்டான் — இந்தப்பகைவன் (என்வலிமையால்) அழிந்தான்; மற்று யாவரையும் நான் கொல்வேன்— மேலும் பல எதிரிகளையும் (ஶத்ருனை) நான் அழித்துவிடுவேன்; நான் செப்பம் இறை — நான் இயல்பாகவே அனைவரையும் ஆட்டிவைக்கும் இறைவன்; நான் போகி— நானே (என்திறமையால்) போ₄க₃ங்களை அனுப₄விப்பவன்; நான் சித்தன் — நானே (என் திறமையால்) ஸித்₃தி₄களைப் பெற்றவன்; (நான்) மெய்ப் பொருளோன் — நானே இயல்பாகவே செல்வங்களைப் பெற்றவன்; (நான்) மேவு வலியோன் — நான் இயற்கையாகவே ப₃லமுள்ளவன்; நான் சுகி — நான் (இயற்கையாகவே) ஸுக₂முடையவன்; நான் மேற்குலம் ஆகின்றேன் — நானே (இயல்பாகவே)மேலான குலத்தில் பிறந்திருக்கிறேன். இங்கு — இவ்வுலகில், என்னோடு ஒப்பான் — எனக்குச் சமமானவன்; மற்று ஏவன்— வேறு எவன் இருக்கிறான்?

---

14*. சென்ற ஒன்றரை ஶ்லோகத்தாலே இஷ்டப்ராப்தியும் அநிஷ்டநிவ்ருத்தியும் தம் திறமையாலேயே விளைகின்றன என்று ஆஸுரப்ரக்ருதிகள் மயங்குவது கூறப்பட்டது. இந்த அரை ஶ்லோகத்தாலும், அடுத்த ஶ்லோகத்தாலும் அத்தகைய தம்

अहं भोगी—स्वत एवाहं भोगी, नादृष्टादिभिः। सिद्धोऽहम्—स्वतस्सिद्धोऽहम्, न कस्माच्चिददृष्टादेः। तथा स्वत एव बलवान्; स्वत एव सुखी ॥ १४ ॥

---

திறமையும் தமக்கு இயல்வாகவே உள்ளதேயொழிய, ஒரு புண்யத்தால் உண்டானதன்று என்று அவர்கள் மயங்குவது கூறப்படுகிறது (அஹம் ஈஶ்வர:) என்னையொழிந்த அனைவரையும் நியமிக்கும் நான் எனக்கு நானே ஈஶ்வரன். "பதிம் விஶ்வஸ்ய ஆத்மேஶ்வரம் நாராயணம்" [தை—நா 11] என்று உபநிஷத்துக்களில் ஓதப்படும் ஸர்வேஶ்வரனாய், தனக்குத்தானே ஈஶ்வரனான நாராயணனாகத் தன்னை அபி₄மானிக்கிறபடி. ஆஸுரர்களான ஹிரண்யன் ராவணன் போன்றோர் தமக்கு வசப்பட்ட ஆஸுர ப்ரக்ருதிகளாலே இப்படிப் போற்றப்பட்டுத் தம்மைத்தாமே ஈஶ்வரர்களாக அபி₄மானித்து உலகை ஆட்டிவைத்தார்களன்றோ. (அஹம் போ₄கீ₃) நானே இயல்வாகவே போ₄க₃ங்களை அனுப₄விக்கும் திறமையுடையவன்; நான் போ₄க₃ங்களை அனுப₄விப்பது பூர்வபுண்யத்தாலேயோ, பரமாத்மாவின் அருளாலேயோ அல்ல; என் திறமையாலேயே என்று கருத்து தன் திறமையும் புண்யத்தால் உண்டானதன்று என்று சொல்லும் ப்ரகரணமாகையாலே, இங்கு போ₄க₃ஶப்₃த₃ம் போ₄க₃த்திறமையைக் குறிக்கிறது. 'அஹம்' ஶப்₃த₃த்தைத் திருப்பித்திருப்பிப்படிப்பதிலிருந்து எல்லாத்திறமையும் தன்னாலேயேயொழியப் பூர்வபுண்யத்தாலன்று என்னும் கருத்து வெளிப்படுகிறது. (அஹம் ஸித்₃த₄:) நானே இயல்வாகவே ஞானம் முதலான சிறப்புக்களைப் பெற்றிருப்பவன்; பூர்வபுண்யத்தாலல்ல. (அஹம் ப₃லவாந்) நானே இயல்வாகவே ப₃லமுடையவன்; பூர்வபுண்யத்தாலல்ல (அஹம் ஸுகீ₂) நானே இயல்வாகவே ஸுக₂முடையவன்; பூர்வபுண்யத்தாலல்ல. 'ஸுக₂ம்' என்றது பிள்ளைபிறப்பது முதலானவற்றால் உண்டாகும் இன்பத்தையும், 'போ₄க₃ம்' என்றது புலன்களால் அனுப₄விக்கும் இன்பத்தையும் குறிக்கிறதாகையால் புநருக்தியில்லை. அல்லது 'போ₄க₃ம்' என்றது ஸுக₂ஹேதுக்களையும், 'ஸுக₂ம்' என்றது அதன் விளைவான ஸுக₂த்தையும் குறிக்கையாலே புநருக்தியில்லை என்றும் கொள்ளலாம். இங்கும், அடுத்த ஶ்லோகத்தின் முற்பாதியிலும் சொல்லப்படும் ஈஶ்வரத்வம், போ₄க₃ம்,

आढ्योऽभिजनवानस्मि कोऽन्योऽस्ति सदृशो मया।
यक्ष्ये दास्यामि मोदिष्य इत्यज्ञानविमोहिताः ॥ १५॥

15. ஆட்$_4$யோऽபி$_4$ஜநவாநஸ்மி கோऽந்யோऽஸ்தி ஸத்$_3$ருஶோ மயா ।
யக்ஷ்யே த$_3$ாஸ்யாமி மோதி$_3$ஷ்ய இத்யஜ்ஞாந விமோஹிதா: ॥

(அஹம்) ஆட்$_4$ய: அஸ்மி—(நானே) இயல்வாகவே பண முடையவனாயிருக்கிறேன்; (அஹம்)அபி$_4$ஜநவாந் அஸ்மி—(நானே) இயல்வாகவே நற்குடிப்பிறப்பை உடையவனா யிருக்கிறேன்; மயா ஸத்$_3$ருஶ: க: அந்ய: அஸ்தி — (இவ் வுலகில்) என்னைப்போலே (தன் திறமையாலே எல்லாப் பெருமையும் பெற்றவன்) வேறு எவன் இருக்கிறான்? (அஹம்) யக்ஷ்யே — (நானே என் திறமையாலே) யாக$_3$ம் செய்கிறேன்; (அஹம்) த$_3$ாஸ்யாமி—(நானே என் திறமை யால்) த$_3$ானம் செய்கிறேன்; (அஹம்) மோதி$_3$ஷ்யே — (நானே என் திறமையால் புகழ் முதலானவற்றைஅடைந்து) இன்புறுகிறேன்; இதி — என்று, அஜ்ஞாந விமோஹிதா:- (ஸர்வேஶ்வரனின் அருளின்றியே தானே யாக$_3$ம் த$_3$ானம் முதலானவற்றைச் செய்கிறோம் என்னும்) அறிவின்மை யால் மயங்குகிறார்கள்.

---

15. நானே யெசிப்பேன் கொடுப்பே னனியுகப்பேன்
நானே யெனமோகஞ் சார்ந்தவர்க—ளூனெஞ்
சோடியே மோகித் துறுங்காமத் தார்நரகிற்
கூடியே வீழ்வர் குலைந்து.

---

ஸித்$_3$தி$_4$, ப$_3$லம், ஸுக$_2$ம், த$_4$னம், நற்குடிப்பிறப்பு ஆகிய அனைத் துமே முன்செய்த நல்வினையால் உண்டாமவை என்று முன்னமே ஶ்ருதி ஸ்ம்ருதிகளைக் கொண்டு நிலைநிறுத்தப்பட்டது. அந்த ஶ்ருதி ஸ்ம்ருதிகளாகிற ஶாஸ்த்ரத்தில் நம்பிக்கையில்லாதவர்கள் ஆஸுரர்கள் என்று இவற்றிலிருந்து விளங்குகிறது. 14.

भा ॥ अहं स्वतश्चाढ्योऽस्मि; [अभिजनवानस्मि--स्वत एवोत्तम कुले प्रसूतोऽस्मि;] अस्मिन् लोके मया सदृशः कोऽन्यस्स्वसामर्थ्य·

---

நானே எசிப்பேன் — நானே (என்திறமையாலே,) யாக₃ம் செய்கிறேன்; கொடுப்பேன் — (நானே என் திறமையாலே) தா₃னம் செய்கிறேன்; நானே நனி உகப்பேன் — (நானேஎன்திறமையாலே புகழ்முதலானவற்றை அடைந்து) மிகவும் இன்புறுகிறேன்; என — என்று, மோகம் சார்ந்தவர்கள் — (ஸர்வேஶ்வரனின் அருளின்றியே தாமே யாக₃ம் தா₃னம் முதலானவற்றைச்செய்கிறோம் என்னும்) அறிவின்மையால் மயங்குகிறவர்களாய், நானு நெஞ்சு ஓடியே — பல நினைவுகளால் அலைக்கழிக்கப்படுகிறவர்களாய், மோகித்து — பல மயக்கங்களை அடைந்து, உறும் காமத்தார் — புலனின்பங்களில் மிகவும் ஈடுபட்டவர்களாய், குலைந்து — (நடுவில்) மரணமடைந்து, நரகில் கூடியே வீழ்வர் — நரகத்தில் (தம்மைச் சேர்ந்தவர்களோடு) கூடியே விழுவர்.

---

15. மற்றும் பல திறமைகளும் தமக்கு இயல்வாகவே உண்டானதாக மயங்குகிறார்கள் ஆஸுரர்கள் என்கிறது இந்தஶ்லோகம். (ஆட்₄ய: அஸ்மி) நானே இயல்வாகவே ப₃லமுடையவனாயிருக்கிறேன்; பூர்வபுண்யத்தாலல்ல. (அபி₄ஜநவாந் அஸ்மி) நானே இயல்வாகவே சிறந்த குலத்தில் பிறந்திருக்கிறேன்; பூர்வபுண்யத்தாலல்ல. (மயா ஸத்₃ருஶ: அந்ய: க: அஸ்தி) இவ்வுலகில் எல்லாக் காலத்திலும் தேடினாலும் என்னைப்போலே தன் திறமையால் எல்லாப் பெருமையும் பெற்றவன் எவன் இருக்கிறான்? "ஐஶ்வரத்வம் முதலாக, நற்குடிப்பிறப்பு ஈறாக ஒவ்வொரு பெருமையிலுங்கூட என்னை ஒத்தவன் இவ்வுலகில் இதுவரை இல்லை; இனியும் உண்டாக இடமில்லை என்று அஹங்காரத்தால் இவர்களுக்கு உண்டாகும் மயக்கத்தைக் காட்டுகிறது. "மயா ஸத்₃ருஶ: க:" (என்னையொத்தவன் எவன்) என்றாலே போதுமாயிருக்க, "மயா ஸத்₃ருஶ: அந்ய: க:" என்று அந்யஶப்₃த₃த்தையிட்டது, தன்னைத் தவிர்ந்த மற்றவர்கள் அனைவரும் திறமையற்றவர்கள்

लब्धसर्वविभवो विद्यते? अहं स्वयमेव यक्ष्ये, दास्यामि, मोदिष्ये इत्यज्ञानविमोहिताः — ईश्वरानुग्रहनिरपेक्षेण स्वेनैव यागदानादिकं कर्तुं शक्यमित्यज्ञानविमोहिता मन्यन्ते ॥ १५ ॥

---

என்னும் அஹங்காரத்தையும், "ராமராவணயோர் யுத்3த4ம் ராமராவணயோரிவ" [ராமராவணயுத்3த4ம் ராமராவணயுத்3த4த்திற்கே ஒப்பாயிருந்தது] என்றாற்போலே தனக்குத்தானே ஒப்பானவன் என்னும் து3ரபி4மானத்தையும் காட்டுகிறது. (யக்ஷ்யே) நானே என் திறமையால் யாக3ம் செய்கிறேன்; (தா3ஸ்யாமி) நானே என் திறமையால் தா3னம் செய்கிறேன்; இங்கு யாக3தா3னங்களைச் செய்பவர்களாக இவர்களைக் கூறியது இவர்களுடைய ஶாஸ்த்ரவிஶ்வாஸத்தைக் காட்டுவதன்று; ஶாஸ்த்ர விஶ்வாஸமுடையவர்கள் யாக3தா3னங்களைச் செய்து புகழடைவதைக்கண்டு, தாங்களும் புகழுக்காக இவர்கள் யாக3தா3னங்களைச் செய்கிறார்கள் எனக் காட்டுகிறது. "த3ம்பே4ந அவிதி4பூர்வகம் நாமயஜ்ஞை: தே யஜந்தே" (17) [ட3ம்ப4த்திற்காக வழியல்லா வழியில் புகழுக்கேயான யஜ்ஞங்களை அவர்கள் செய்கிறார்கள்] என்று அடுத்தபடி கூறுகிறானன்றோ. இப்படிப் புகழுக்காகச் செய்கையாலே, ஸாத்விகர்களைப்போலே ஈஶ்வரனுடைய அருளாலே இவற்றைச் செய்வதாக நினையாமல், தம் திறமையாலேயே செய்வதாகக் கருதுகிறார்கள் என்று 'யக்ஷ்யே' முதலான பத3ங்களால் உணர்த்தப்படுகிறது. (மோதி3ஷ்யே) யாக3தா3னங்களாலே விளையும் புகழாலே நான் பலரால் புகழப்பட்டு உகப்பதும் என் திறமையால் விளைந்ததே என்று கருத்து. "கண்டதே காட்சி" என்னும் லோகாயதவாதி3களான இவர்கள் ஸ்வர்க்க3 ஸுக2ம் முதலான மறுமையின்பத்தை இசையாதவர்களாகையாலே, இவ்வுலகப் புகழால் விளையும் இன்பமே இங்கு குறிக்கப்படுகிறது என்று கொள்ளவேண்டும். (இத்யஜ்ஞாந விமோஹிதா:) 'ஸர்வேஶ்வரனின் அருளை எதிர்பாராமலே யாக3ம் தா3னம் முதலானவற்றைச் செய்ய இயலும்' என்னும் மயக்கத்தாலே மயங்கியவர்களாய் இவர்கள் இப்படியெல்லாம் நினைக்கிறார்கள். 15.

अनेकचित्तविभ्रान्ता मोहजालसमावृताः ।
प्रसक्ताः कामभोगेषु पतन्ति नरकेऽशुचौ ॥ १६ ॥

16. அநேக சித்த விப்4ராந்தா மோஹஜாலஸமாவ்ருதா: ।
ப்ரஸக்தா: காமபே4ாகே3ஷு பதந்தி நரகேऽஶுசௌ ॥

அநேக சித்த விப்4ராந்தா: —பல நினைவுகளாலே அலைக் கழிக்கப் படுகின்றவர்களாய், மோஹ ஜால ஸமாவ்ருதா:— பல மயக்கங்களால் சூழப்பட்டவர்களாய், காமபே4ாகே3ஷு— புலனின்பங்களில், ப்ரஸக்தா: — மிகவும் ஈடுபட்டவர்களாய், (நடுவில் மரணமடைந்து), அஶுசௌ நரகே பதந்தி — அஶுத்3த4மான நரகத்தில் விழுகிறார்கள்.

---

भा । अदृष्टेश्वरादिसहकारमृते स्वेनैव सर्वं कर्तुं शक्यमिति कृत्वा एवं कुर्याम्, तच्च कुर्याम्; अन्यच्च कुर्यामित्यनेकचित्तविभ्रान्ताः;

---

16. இந்த ஶ்லோகத்தில் ஆஸுரப்ரக்ருதிகளின் மற்றும் சில தாழ்வுகளையும் சொல்லிக்கொண்டு அவற்றின் பலனாக அவர்கள் நரகத்தில் விழுகிறார்கள் என்கிறான். (அநேக சித்த விப்4ராந்தா:) பல நினைவுகளால் அலைக்கழிக்கப்படுபவர்கள்; ஸர்வேஶ்வரனிடம் தங்களுடையது அனைத்தையும் ஒப்படைத்தவர்கள் அவன் ஒருவனைப்பற்றியே நினைத்திருப்பார்கள். இவர்கள் ஈஶ்வரனுடைய தூண்டுதலாலோ அல்லது முன்வினைகளின் பயனாகவோ அல்லாமல், தங்கள் திறமையாலேயே அனைத்தையும் செய்யமுடியும் என்று எண்ணும் ஆஸுரப் பிரகிருதிகளாகையாலே, "இதை இப்படிச் செய்வேன்", 'அதையும் செய்வேன்'. "மற்றொன்றையும் செய்வேன்" என்று பல நினைவுகளாலே அலைக்கழிக்கப்படுபவர்களாயிருப்பர்கள். சிந்தை (நினைவு) என்னும் செயற்பாட்டை உடைய மனமே 'சித்தம்' எனப்படுகிறது. 'அநேக சித்தம்' என்றது ஒரு மனத்திற்கே பல சிந்தைகளிருப்பதையிட்டு. 'விப்4ராந்தா:' என்றது மயக்கத்தைக் கூறுமாயினும், அடுத்தபடி 'மோஹ' ஶப்3த3த்தால் மயக்கத்தைக் கூறுகையாலே, இங்கு அலைக்கழிக்கப்படுபவர்கள் என்று பொருள்படுகிறது. அன்றிக்கே, 'விப்4ராந்தா:' என்றது ஒன்றை மற்றொன்றாக அறியும் இவர்களது விபரீத ஜ்ஞானத்தையும், மோஹஶப்3த3ம் அறிவின்மையாகிற அஜ்ஞானத்தையும் குறிப்பதாகக் கொள்ளலாம். அன்றிக்கே, "விப்4ராந்தா:" என்றது மயக்கத்தையே சொல்லுவதாகக்கொண்டு

एवंरूपेण मोहजालेन समावृताः कामभोगेषु प्रकर्षेण सक्ताः, मध्ये मृताः अशुचौ नरके पतन्ति ॥ १६ ॥

---

அடுத்த பதத்தில் மோஹஶப்தத்தாலே அது அனுவதிக்கப் படுவதாகவும் கொள்ளலாம். (மோஹஜால ஸமாவ்ருதா:) இவ் வண்ணமாகப் பலவகையான மயக்கங்களாலே சூழப்பட்டவர்கள். "அந்யதா சிந்திதம் கார்யம் தேவேந க்ருதமந்யதா"[நாம்ஒருவித மாகச்செய்ய நினைத்தசெயலை தெய்வம் வேறுவிதமாக ஆக்கிவிட்டது] என்கிற ரீதியிலே முன் பதத்தில் சொல்லப்பட்ட சிந்தைகளே மயக்கங்களாக மாறி இவர்களைச் சூழ்ந்து கொள்ளுகின்றன என்று கருத்து. (காம போகேஷு ப்ரஸக்தா:) சிற்றின்பங்களை அனுபவிப்பதில் மிகவும் ஈடுபட்டவர்கள். "ந ஜாது காம: காமா நாமுபபோகேந ஶாம்யதி| ஹவிஷா க்ருஷ்ணவர்த்மேவ பூய ஏவாபிவர்த்ததே ||" [மநு2-94; வி-பு 4—10—23] [காமமுடையவர்களுடைய காமம் அனுபவிப்பதன் மூலம் ஒருபோதும் தீர்வதில்லை;விறகை இட இட நெருப்பு மேலும் மேலும் கொழுந்து விட்டு எரிவதுபோலே, மேலும் மேலும் வளர்கின்றது] என்கிறபடியே ஆஸுரப்ரக்ருதிகளுடைய காமம் அனுபவத்தினால் தீராமல் மேலும் மேலும் வளர்கின்றது என்பதை, ப்ரகர்ஷத்தை (மிகுதியை)ச் சொல்லும் 'ப்ர' என்னும் உபஸர்க்கம் காட்டுகிறது. இப்படி இவர்கள் மேலும் மேலும் காமபோகங்களில் ஈடுபடுவதன் விளைவைக் காட்டுகிறது ஶ்லோகத்தின் நாலாவது பாதம். "இதம் க்ருதமிதம் கார்யமிதமந்யத் க்ருதாக்ருதம் | ஏவமீஹா-ஸமாயுக்தம் க்ருதாந்த: குருதே வஶே || [பார-மோக்ஷ 175-21] ["இந்தக் காரியம் என்னால் செய்யப்பட்டது; இந்தக் காரியம் என்னால் செய்யப்படவேண்டியுள்ளது; இந்த மற்றொரு காரியம் பாதி செய்யப்பட்டதாயும் பாதி செய்யவேண்டியதாயும் உள்ளது" என்று ஆசைகளில் உழலும் மனிதனைக் காலன் தன் வசப்படுத்திக்கொள்கிறான்] என்கிறபடியே இப்படி ஆசையென்னும் அனத்தக்கடலுள் அழுந்திநிற்கும் இவர்களை, திடீரென்று மரணம் மேற்கொள்கிறது; அதன் விளைவைக் கூறுகிறது நாலாம்பாதம். (அஶுசௌ நரகே பதந்தி) அஶுத்தியுள்ள நரகத்தில் விழுகிறார்கள். ரத்தம், சீழ் முதலானவற்றுக்கு இருப்பிடமான ஸ்த்ரீகளின் உடலிலே மயங்கி அழுந்தியவர்களாகையாலே, மறுமையிலும் இவர்களுக்கு ரத்தம், சீழ் முதலானவற்றிலே அழுந்தும் நரகமே பயனாய் விளைகிறது என்று கருத்து. 16.

2-8-10

आत्मसंभाविताः स्तब्धाः धनमानमदान्विताः ।
यजन्ते नामयज्ञैस्ते दम्भेनाविधिपूर्वकम् ॥ १७ ॥

17. ஆத்மஸம்பு₄ாவிதா: ஸ்தப்₃த₄ா: த₄நமாநமத₃ாந்விதா: ।
யஜந்தே நாமயஜ்ஞைஸ்தே த₃ம்பே₄நாவிதி₄பூர்வகம் ॥

ஆத்மஸம்பு₄ாவிதா: — தம்மைத்தாமே பெருமை பேசிக் கொள்கிறவர்களாய், ஸ்தப்₃த₄ா: — (தம்மைப் பெருக்க மதிக்கையாலே) பணிவில்லாமல் நிமிர்ந்து நிற்பவர்களாய், த₄நமாநமத₃ாந்விதா: — பணத்தினுலும் (கல்வி குடிப்பிறப்பு ஆகியவற்றினுலுண்டான) அபி₄மானத்தாலும் விளையும் க₃ர்வத்தை உடையவர்களான, தே — அந்த ஆஸுர ப்ரக்ருதிகள், நாமயஜ்ஞை: — புகழையே பயனுகக்கொண்டு செய்யப்படும் யாக₃ங்களாலே, அவிதி₄ பூர்வகம் — ஶாஸ்த்ர விதி₄க்கு முரணுக, த₃ம்பே₄ந — 'யாக₃ம் செய்தவன்' என்னும் புகழை வெளிப்படுத்திக் கொள்வதற்காக, யஜந்தே — யாக₃ம் செய்கிறுர்கள்.

---

16. தம்மைத்தாஞ் சம்மதிப்பார் தாமுயலார் தம்பித்துச்
செம்மைத் தனமானஞ் சேர்செருக்கா — ரிம்மைக்கே
நாமவினை யால்யசிப்பார் நாட்டியலும் டம்பத்தாற்
சேமவிதி சேராது சென்று.

தம்மை தாம் சம்மதிப்பார் — தம்மைத்தாமே பெருமை பேசிக்கொள்கிறவர்களாய், தம்பித்து தாம் முயலார் — பணிவின்றியே ஏதும் செய்யாமல் நிமிர்ந்து நிற்பவர்களாய், செம்மை தனமானம் சேர் செருக்கார் — மிகுதியான பணத்தாலும் (கல்வி, குடிப்பிறப்பு ஆகியவற்ருலுண்டான) அபி₄மானத்தாலும் விளையும் க₃ர்வத்தை உடையவர்களான அந்த ஆஸுரர்கள், நாம வினையால் — புகழையே பயனுகக்கொண்டு செய்யப்படும் யாக₃ங்களாலே. சேம விதி சேராது சென்று — நன்மையைத்தரும் சாஸ்திர விதி₄க்கு முரணுக நடந்து, நாட்டு இயலும் டம்பத்தால்— யாக₃ம் செய்தவன் என்னும் புகழை உலகில் வெளிப்படுத்திக் கொள்ள உதவும் டம்ப₄த்திற்காக, இம்மைக்கேயசிப்பார் — இவ்வுலகப் பயன்களுக்காகவே யாக₃ம் செய்வார்கள்.

भा ॥ आत्मनैव संभाविताः, आत्मनैवात्मानं संभावयन्तीत्यर्थः । स्तब्धाः—परिपूर्णमन्यमाना न किंचित्कुर्वाणाः । कथम्? धनमानमदान्विताः — धनेन विद्याभिजनाभिमानेन च जनितमदान्विताः,

---

17. ஆஸுரப்ரக்ருதிகளுக்குள்ள மற்ற தாழ்வுகளையும் சொல்லிக்கொண்டு, 'யாகம் செய்தவன் என்று பெயர் பெறுவதற்காக சாஸ்திரவிதியை மீறி அவர்கள் யாகம் செய்கிறார்கள் என்கிறான் இந்த ஸ்லோகத்தில். (ஆத்ம ஸம்பாவிதா:) தம்மைத்தாமே கொண்டாடிக்கொள்கிறவர்கள்; நல்லோர்கள் எவரும் இவர்களைக் கொண்டாடமாட்டார்களாகையாலே, தம்மைத்தாமே பெருமை பேசிக்கொள்கிறார்கள் என்று கருத்து. "அப்பக்ஷ:" [நீரையே உணவாகக்கொண்டவன்] முதலானவிடங்களிற்போலே இடையில் ஏகாரம் மறைந்து நிற்கிறது. நல்லோர்கள் பிறர் தம்மைக் கொண்டாடினாலும் வெள்கி அதை ஏற்க மறுப்பார்கள். இவர்களோவெனில் லஜ்ஜையில்லாமல் தம்மிடம் இல்லாத பெருமையெல்லாம் இருப்பதாக ஏறிட்டுக்கொண்டு தம்மைத்தாமே புகழ்ந்து கொள்கிறார்கள்; ஆத்மப்ரஸம்ஸாதோஷத்தை உடையவர்கள் என்று கருத்து. (ஸ்தப்தா:) முற்கூறியபடி தம்மைத்தாமே பெருக்க மதித்திருக்கையாலே, பெரியவர்கள் முன்பும் பணிவில்லாமல் நிமிர்ந்து நிற்பவர்களாய், அவர்களை வணங்குவது முதலான செய்யத்தக்க காரியங்கள் எதையும் செய்யாமலிருக்கிறார்கள் என்று கருத்து. மறுமையில் பெருத்த தீங்கை விளைக்கக் கூடிய இந்தப் பணிவின்மை இவர்களுக்கு எப்படி வந்தது? எனில்:' (தநமாந மதாந்விதா:) பணத்தினாலும், (கல்வி, குடிப்பிறப்பு ஆகியவற்றாலுண்டான) அபிமானத்தாலும் விளையும் கர்வத்தை உடையவர்கள்.

" வித்யாமதோ தநமதஸ்த்ருதீயோ அபிஜநோ மத: |
மதா ஏதேऽவலிப்தாநாம் ஏத ஏவ ஸதாம் தமா: ||"

[பார-உத் 34-46]

[கல்வி மதம், பணமதம், குடிப்பிறப்புமதம் என்னும் மூன்று மதங்கள் மதங்கொண்டவர்களுக்கு உள்ளது. கல்வி, பணம், குடிப்பிறப்பு என்னும் இம்மூன்றுமே நல்லோர்க்கு மதத்திற்கு நேர்மாறான தமத்திற்கு (அடக்கத்திற்குக்) காரணமாகின்றன.] என்று

नामयज्ञैः — नामप्रयोजनैः, यष्टेतिनाममात्रप्रयोजनैर्यज्ञैः यजन्ते । तदपि दम्भेन हेतुना यष्टृत्वख्यापनाय, अविधिपूर्वकम् —अयथाचोदनं यजन्ते ॥ १७ ॥

---

சேர்த்துப்படிக்கப்படும் மூன்றுமத3ங்களில் த4னமத3ம் இங்குவெளிப் படையாகப் படிக்கப்படுகையால், அதனுடன் கூடப்படி4க்கப்படும் மானமத3ம் கல்வி, குடிப்பிறப்பு ஆகிய இரண்டின் அபி4மானத் தாலும் ஏற்படும் மற்ற இரண்டு மத3ங்களையும் சேர்த்துக் குறிக் கிறது. இத்தகைய இந்த ஆஸுரப்ரக்ருதிகள் செய்யும் கார்யத்தை ஶ்லோகத்தின் பிற்பாதியில் கூறுகிறுன்,—(தே நாமயஜ்ஞை: யஜந் தே) அந்த ஆஸுரப்ரக்ருதிகள் 'யாக3ம் செய்தவன்' என்றுபெயர் பெறுவதற்காகவே அனுஷ்டி2க்கப்படும் நாமயஜ்ஞங்களைச் செய்கி ருர்கள். நாமயஜ்ஞை:— நாமத்தை — யாக3ம் செய்தவன் என் னும் பெயரைப் பயனுகக்கொண்ட யஜ்ஞங்களாலே, யஜந்தே — யாக3ம் செய்கிருர்களே யொழிய த4ர்மம் முதலானவற்றைப் பய னுகக்கொண்ட ஶாஸ்த்ரீய யஜ்ஞங்களைச் செய்வதில்லை என்று கருத்து. நாம ஶப்3த3த்திற்குப் புகழும் பொருளானுலும், 'த3ம் பே4ந' என்னும் அடுத்துள்ள பத3த்தால் அது ஸித்3தி4த்துவிடு கையால், இங்கு நாமஶப்3த3ம் பெயரைக் குறிப்பது என்று கொள் வது பொருத்தமானது; புகழைக்காட்டிலும் 'பெயர்' என்னும் பொருள் நாமஶப்3த3த்திற்கு ஸுப்ரஸித்3த4ம். 'யாக3ம் செய்தவன்' என்னும் பெயர் பெறுவதற்காக இவன் யாக3ம் செய்கிருனே யொழிய உண்மையில் அப்பெயருக்கு இவன் தகுதியற்றவன் என் னும் பரிஹாஸமும் இப்பொருளில் தோற்றுகிறது; ''நாமமாத்ரை: யஜ்ஞை:'' என்று ''இவர்கள் செய்யும் யஜ்ஞம் பெயருக்கே யாக3ம் எனப்படுகிறதேயொழிய அது உண்மையில் யாக3மல்ல'' என்று பொருள் கொண்டார் சங்கரர். மேலே 'அவிதி4 பூர்வகம்' என்று இவர்கள் செய்வது உண்மையில் யஜ்ஞமல்ல என்னும் விஷயம் காட்டப்படுகையால் அப்பொருள் இங்கு ஸ்வரஸ மல்ல. ''யாக3ம் செய்தவன் என்று பெயர் பெறுவதற்காகச் செய் யப்படும் யாக3ம்'' என்று பொருள் கொள்வதே மிகப்பொருந்தும். மேலும் அவர்கள் செய்யும் யாக3ம் எத்தகையது? எனில்: (த3ம் பே4ந யஜந்தே) ட3ம்ப4த்திற்காகவே செய்கிருர்கள்; 'யாக3ம் செய் தவன்' என்று புகழ் பெறுவதற்காகச் செய்கிருர்கள் என்று கருத்து. (அவிதி4பூர்வகம் யஜந்தே) சாஸ்திரவிதி4களில் சொல்லப்பட்ட

भा ।। ते चेदृग्भूता यजन्त इत्याह —

अहंकारं बलं दर्पं कामं क्रोधं च संश्रिताः ।

मामात्मपरदेहेषु प्रद्विषन्तोऽभ्यसूयकाः ।। १८ ।।

3-8-10

18. அஹங்காரம் ப₃லம் த₃ர்ப்பம் காமம் க்ரோத₄ம் ச ஸம்ஶ்ரிதா: ।

மாமாத்மபரதே₃ஹேஷு ப்ரத்₃விஷந்தோऽப்₄யஸூயகா: ॥

அஹங்காரம் - (வேறு எவரையும் எதிர்பாராமல் நானே அனைத்தையும் செய்யவல்லேன் என்னும்) அஹங்காரத்தையும், ப₃லம் - (அனைத்தையும் ஸாதி₄ப்பதற்கு என் ப₃லமே போதுமானது என்னும்) தன் ப₃லத்தையும், த₃ர்ப்பம் - (எனக்கு இணையானவன் எவனும் இல்லை என்னும்) கர்வத்தையும், காமம் - (இத்தகைய என் விருப்பத்தாலேயே எல்லாம் நிறைவேறும் என்னும்) காமத்தையும், க்ரோத₄ம் ச - (எனக்கு இடையூறு செய்யும் அனைவரையும் ஒழித்துவிடுவேன் என்னும்) கோபத்தையும், ஸம்ஶ்ரிதா:-பற்றிநிற்பவர்களாய், ஆத்மபரதே₃ஹேஷு மாம் - தம் உடலிலும், பிறரது உடலிலும் (இருந்து அனைத்தையும் செய்விக்கும்) என்னைக்குறித்து, அப்₄யஸூயகா: - (குயுக்திகளால் என் இருப்பில் தோ₃ஷத்தை ஏறிடும்) அஸூயையை உடையவர்களாய், ப்ரத்₃விஷந்த: - (என்னைப்) பொறுக்காதவர்களாய், (முற்கூறியபடி யாக₃ம் முதலான செயல்களைச் செய்கிருர்கள்.)

---

முறையை மீறி யாக₃ம் செய்கிருர்கள். விதி₄யாவது—சாஸ்திரங்களில் யாக₃த்தை விதி₄க்கும் வாக்யம். அந்த விதி₄வாக்யத்தில் சொன்ன முறைகளைக் கைவிட்டு யாக₃ம் செய்கிருர்கள் என்று கருத்து. ''இம்மைக்கே யசிப்பர்'' என்று வாதிகேஸரி ஜீயர் வெண்பாவில் இவர்கள் செய்யும் யாக₃த்தால் இம்மையில் பெயரும் புகழும் விளையலாமேயொழிய, மறுமையில் அதனுல் எப்பயனுமில்லை என்று காட்டினுர். ஆக, இதுவரையில் ஆஸுரப்ரக்ருதிகளின் பல தாழ்வுகளைக் காட்டி, அவர்கள் செய்யும் யாக₃ங்கள் மறுமைப் பயனை விளைக்க இயலாதவை என வெளியிட்டாயிற்று. 17.

17. ஆங்காரம் வன்மை யதன்செருக்குக் காமமுடன்
தீங்கார் குரோதமது சேர்ந்தவவர்—பாங்காகத்
தம்பிறர்க டேகத்துச் சார்ந்தவெனைத் தான்வெறுப்பார்
வெம்பியசூ யைச்சுடரால் வெந்து.

ஆங்காரம் - (வேறு எவரையும் எதிர்பாராமல் நானே அனைத்தையும் செய்யவல்லேன் என்னும்) அஹங்காரத்தையும், வன்மை - (அனைத்தையும் ஸாதிப்பதற்கு என் வலிமையே போதுமானதுஎன்னும்) தன் வலிமையையும், அதன் செருக்கு - இரண்டாலும் உண்டாகும் (எனக்கு இணையானவன் எவனும் இல்லை என்னும்) கர்வத்தையும், காமமுடன் - (இத்தகைய என்விருப்பத்தாலேயே எல்லாம் நிறைவேறும் என்னும்) காமத்தையும், தீங்கு ஆர் குரோதம் அது - (எனக்கு இடையூறு செய்யும் அனைவரையும் ஒழித்துவிடுவேன் என்னும்) (பிறர்க்குத்) தீங்கு நினைக்கும் கோபத்தையும், சேர்ந்த அவர்-கொண்டிருக்கும் அந்த ஆஸுரப்பிறவிகள், தம் பிறர்கள் தேகத்து-தம்உடல்களிலும் பிறர் உடல்களிலும், பாங்காக சார்ந்த எனைத்தான்-(அனைத்தையும்) நியமிப்பதற்கு உறுப்பாக வியாபித்திருக்கும் என்னைக் குறித்து, வெம்பி அசூயைச் சுடரால் வெந்து - (குயுக்திகளால்) என் இருப்பில் தோஷத்தை ஏறிட்டுக்கொழுந்துவிட்டு எரியும் அசூயையால் எரிக்கப்பெற்று, வெறுப்பார் - (என்னை) வெறுப்பவர்களாய் (முற்கூறிய யாகம் முதலான செயல்களைச் செய்வர்.)

---

18. தாமே தம் பெருமையால் அனைத்தையும் ஸாதிக்க வல்லோம் என்னும் மயக்கத்துடன் ஸர்வவ்யாபியும் ஸர்வநியந்தாவுமான என்னையே இல்லை செய்யுமளவுக்கு என்னிடம் அஸூயையும் வெறுப்பும் கொண்டவர்களாய், முற்கூறியபடி யாகம் முதலானவற்றைச் செய்வர் என்கிறான் இந்த ஶ்லோகத்தில். முற்பாதியால் ஸாத்விகர்களின் யாகங்களுக்கு நேர்மாறாக டம்பத்திற்காக இவர்கள் செய்யும் யாகங்களுக்கு உறுப்பாக இவர்கள் பற்றிநிற்கும் குணங்களைக் காட்டுகிறான் — (அஹங்காரம்) பகவானே அனைத்தையும் செய்விக்கிறான் என்பதை மறுத்து, 'நானே

भा ॥ अनन्यापेक्षोऽहमेव सर्वं करोमीत्येवंरूपमहंकारमाश्रिताः, तथा सर्वस्य करणे मद्बलमेव पर्याप्तमिति च बलम्, अतो मत्सदृशो न कश्चिदस्तीति च दर्पम्, एवंभूतस्य मम काममात्रेण सर्वं संपत्स्यत इति कामम्, मम ये अनिष्टकारिणस्तान् सर्वान् हनिष्यामीति च क्रोधम्,

---

அனைத்தையும் செய்கிறேன்' என்னும் நினைவாகிற அஹங்காரத்தையும். அஹங்காரத்துடன் செய்யப்படும் யாக₃ம் முதலானவற்றின் ப₂லம் ஸம்ஸாரமே என்பது

" யத்₃யஹங்காரமாஶ்ரித்ய யஜ்ஞதா₃நதப:க்ரியா: |
குர்வம்ஸ்தத் ப₂லமாப்நோதி புநராவர்த்தநம் து தத் ||"

[ப₄ார—மோக்ஷ 210-73]

[அஹங்காரத்தைப் பற்றிநின்று யாக₃ம், தா₃னம், தவம் முதலிய கிரியைகளைச் செய்தானாகில், மறுபடியும் இந்த ஸம்ஸாரத்திலேயே உழலும் பயனையே அடைகிறான்] என்று சொல்லப்பட்டதன்றோ. (ப₃லம்) தனக்குள்ள ப₃லம் ப₄க₃வானால் அளிக்கப்பட்டதே என உணர்ந்து, "ப₄க₃வதோ ப₃லேந ப₄க₃வதோ வீர்யேண ப₄க₃வதஸ் தேஜஸா ப₄க₃வத: கர்மணா ப₄க₃வத: கர்ம கரிஷ்யாமி" [பாஞ்சராத்ரம்—ப₃லமந்த்ரம்] [ப₄க₃வானுடைய ப₃லத்தால், அவனது வீர்யத்தால், அவனது தேஜஸ்ஸால், அவனது செயல் திறனால். அவனுக்கு ஆராத₄னமான கர்மத்தைச் செய்கிறேன்.] என்று அனுஸந்தி₄த்துக்கொண்டு கார்யம் செய்யாமல் 'எதைச் செய்வதற்கும் என் ப₃லமே போதுமானது' என்னும் நினைவோடு கூடிய ப₃லத்தையும். (த₃ர்ப்பம்) முற்கூறிய அஹங்காரத்தையும் ப₃லத்தையும் பற்றிநிற்பதால் விளைவதாய், 'எனக்கு இணை எவருமில்லை' என்னும் நினைவாயிருப்பதாய், அனைவரையும் அவமதிப்பதற்குக்காரணமாய், பூஜிக்கத்தக்கவர்களைப் பூஜிப்பதற்குத் தடையாயிருப்பதான க₃ர்வத்தையும். (காமம் க்ரோத₄ம் ச) ப₄க₃வானுடைய அருளாலேயே—விருப்பங்கள் நிறைவேறுதலாகிற இஷ்டப்ராப்தியும், இடையூறுகள் நீங்குதலாகிற அநிஷ்டநிவ்ருத்தியும் விளைகின்றன என உணராமல், 'என் விருப்பத்தாலேயே நான் விரும்புவதனைத்தும் நிறைவேறுகின்றது என்னும் எண்ணமாகிற காமத்தையும். 'எனக்குத் தீங்கு செய்பவர்களை நானே ஒழித்து விடுவேன்' என்னும் எண்ணமாகிற கோபத்தையும். (ஸம்ஶ்ரிதா:) நன்கு பற்றி நிற்பவர்கள்; தம்முடைய இத்தன்மைகளே வேறு எதையும் எதிர்

एवमेतान् संश्रिताः स्वदेहेषु परदेहेषु चावस्थितं सर्वस्य कारयितारं पुरुषोत्तमं मामभ्यसूयकाः — प्रद्विषन्तः, कुयुक्तिभिर्मत्स्थितौ दोषमा-

---

பாராமல் எதையும் செய்வதற்கு வல்லமை உள்ளவை என அபி₄மானிப்பவர்கள் என்று கருத்து. (ஆத்மபரதே₃ஹேஷு மாம்) யாக₃ம் செய்யும் தன் தே₃ஹத்திலும், யாக₃த்திற்கு உதவும் ரித்விக் முதலானோருடைய தே₃ஹத்திலும், அதற்கு இடையூறு செய்யும் திருடர்கள் முதலானோருடைய தே₃ஹத்திலும் வியாபித்து நின்று எல்லாச் செயல்களையும் செய்விக்கும் புருஷோத்தமனை என்னைக் குறித்து. "தே₃ஹேஷு" என்னும் ஏழாம் வேற்றுமையால் இவன் அவற்றில் வியாபித்து நிற்கிறான் என்று உணர்த்தப்படுகிறது. "அந்த:ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா" [ஸர்வாந்தர்யாமியான நாராயணன் எல்லா ஜனங்களையும் உள்நுழைந்து நியமிக்கிறான்] முதலான ஶ்ருதிகளிலும், "ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி₃ ஸந்நிவிஷ்ட:" [15—15] [அனைவருடைய ஹ்ருதயத்திலும் நான் ஆத்மாவாய் வியாபித்திருக்கிறேன்] என்று கீ₃தை முதலான ஸ்ம்ருதிகளிலும் முன்னமே விளக்கப்பட்டதன்றோ. (மாம் அப்₄யஸூயந்த:) நான் அனைவர்க்கும் நன்மையைச் செய்வதற்காக அந்தர்யாமியாயிருக்க, இவர்கள் என் கு₃ணங்களையே தோ₃ஷமாகக்கண்டு அஸூயைப்படுகிறார்கள். புருஷோத்தமனாகிற என் பெருமையை உணர்ந்து க்ருதக்ருத்யனாகலாமாயிருக்க, பேருபகாரம் செய்யும் என்னிடமே அஸூயையையும் த்₃வேஷத்தையும் கொள்கிறார்கள். "ப்ரத்₃விஷந்தோऽப்₄யஸூயகா:" என்று படி₂த்திருந்தபோதிலும், அஸூயையினாலேயே த்₃வேஷம் உண்டாகிறதாகையால், "அப்₄யஸூயகா; ப்ரத்₃விஷந்த:" என்று கூட்டிப் பொருள் கொள்ளவேண்டும். (அப்₄யஸூயகா:) "நாம் ஈஶ்வரனுக்குப் பரதந்த்ரர் என்றால், கர்மத்திற்கு வசப்பட்டவர் என்பது எப்படிப் பொருந்தும்? நாம் அடையும் ப₂லன்கள் நம் கர்மத்தினாலானால் ஈஶ்வரன் என்னும் ஒருவன் எதற்கு?" முதலான குயுக்திகளால் என் இருப்பையே இசையாதவளவிற்கு தோ₃ஷத்தை ஏறிடுகையாகிற அஸூயையைச் செய்கிறார்கள் என்று கருத்து.

"ந கு₃ணாந் கு₃ணிநோ ஹந்தி ஸ்தௌதி மந்த₃கு₃ணாநபி |
நாந்யதோ₃ஷேஷு ரமதே ஸாऽநஸூயா ப்ரகீர்த்திதா ||"

[அத்ரிஸ்ம்ருதி 1-34]

विक्कुर्वन्तो मामसहमाना अहंकारादिकान् संश्रिता यागादिकं सर्वं क्रियाजातं कुर्वीत इत्यर्थः ॥ १८ ॥

---

[எந்த கு₃ணமானது கு₃ணமுடையவர்களின் கு₃ணங்களை அழிப்பதில்லையோ, குறைந்த கு₃ணமுடையவர்களையும் புகழ்கிறதோ, பிறர் தோ₃ஷங்களில் திளைப்பதில்லையோ அந்த கு₃ணமே அநஸூயை (அஸூயையின்மை) எனப்படுகிறது.] என்று அஸூயையின்மையின் லக்ஷணத்தைச் சொல்லும்போது இதற்கு நேர்மாறானது அஸூயை என்று உணர்த்தப்பட்டதன்றோ. (ப்ரத்₃விஷந்த:) என்னைப் பொறுக்காதவர்கள். என் ஆணையை மீறுமளவிற்கு என்னிடம் வெறுப்பைக் காட்டுபவர்கள் என்று கருத்து. இந்த விஷ்ணுத்₃வேஷம் த்₃வேஷிப்பவர்களின் பித்ருக்களையும் வம்சத்தில் பிறந்தவர்களையும் கீழான நரகத்தில் தள்ளி விடும் என்பது,

"மஜ்ஜந்தி பிதரஸ்தஸ்ய நரகே ஶாஶ்வதீ: ஸமா: |
த்₃விஷ்யாத்₃யோ விபு₃த₄ ஶ்ரேஷ்ட₂ம் தே₃வம் நாராயணம் ஹரிம் ||" [ப₄ார-மோக்ஷ 356-6]

[எவன் ஸமஸ்த பாபங்களையும் அழிப்பவனும், தேவர் தலைவனுன நாராயணனை த்₃வேஷிக்கிருனே அவனுடைய பித்ருக்கள் நரகத்தில் நெடுங்காலம் வீழ்கிருர்கள்.] என்று சொல்லப்பட்டது.

"யே த்₃விஷந்தி மஹாத்மாநம் ந ஸ்மரந்தி ச கேஶவம் |
ந தேஷாம் புண்யதீர்த்தே₂ஷு க₃தி: ஸம்ஸர்க்கி₃ணமபி ||"
[ப₄ார மோக்ஷ 336-36]

[மஹாத்மாவான கேஶவனை எவர்கள் வெறுப்பால் நினைப்பதில்லையோ, அவர்களுக்குப் புண்யதீர்த்த₂ங்களில் ஆடினுலும் நற்கதி கிடையாது] என்று சொல்லப்பட்டதும் இங்கு அநுஸந்திக்கத்தக்கது. சென்ற ஶ்லோகத்திலிருந்து "ப₄ஜந்தே" என்பதைக் கூட்டிக்கொண்டு, "இப்படி என்னிடம் அஸூயா த்₃வேஷங்களை உடையவர்களாய், அஹங்காரம் முதலானவற்றை நன்கு பற்றி நின்று யஜ்ஞுர், த₃ானம் தவம் முதலான செயல்களைப் பெயருக்காகவும், புகழுக்காகவும் முறைதவறிச் செய்கிருர்கள்" என்று பொருள் கொள்ளவேண்டும். சென்ற ஶ்லோகத்தில் "யஜந்தே" என்று யாக₃மாகிற ஓர் செயலைச் சொன்னது த₃ானம் தவம் முதலான மற்ற செயல்களுக்கும் உபலக்ஷணம். 18.

Cause & Effect - ஒரே விஷயம் நினைக்க வேண்டும்.



4-8-10.

तानहं द्विषतः क्रूरान् संसारेषु नराधमान् ।
क्षिपाम्यजस्रमशुभानासुरीष्वेव योनिषु ॥ १९ ॥

19. தாநஹம் த்₃விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராத₄மாந் I
க்ஷிபாம்யஜஸ்ரமஶுபா₄நாஸுரீஷ்வேவ யோநிஷு ll

த்₃விஷத: - (முற்கூறியபடி) என்னை துவேஷிப்பவர்களாய், க்ரூராந் - கொடியவர்களாய், நராத₄மாந் - மனிதரிற் கடையானவர்களாய், அஶுபா₄ந் - அமங்களமானவர்களான, தாந் - அவர்களை, அஹம் - நான், அஜஸ்ரம் — இடைவிடாமல், ஸம்ஸாரேஷு - (பிறப்பு இறப்பு மூப்பு முதலானவை மாறிமாறி வரும்) பிறவிகளில், (அதிலும்), ஆஸுரீஷு ஏவ யோநிஷு - அதிலும் ஆஸுரப் பிறவிகளிலேயே, க்ஷிபாமி - தள்ளுகிறேன்.

---

18. ஆங்கென்னைத் தான்வெறுத்த வந்த நராதமரை
யீங்குழலு மிப்பவத்தி லென்றுநான் — றீங்குழலு
மாசுரமாம் யோனி யவைதன் னிடையெய்த
மாசுறவே தள்ளுவேன் மற்று.

ஆங்கு - முற்கூறியபடி, என்னைத்தான் - (பேருபகாரம் செய்யும்) என்னையே, வெறுத்த - துவேஷிக்கும், அந்த நராதமரை - அந்த மனிசரிற் கடையானவரை, ஈங்கு உழலும் இப்பவத்தில் - (பிறப்பு இறப்பு மூப்பு முதலானவற்றில்) உழலும் இந்தப் பிறவிகளில், மற்று - அதிலும், தீங்கு உழலும் ஆசுரமாம் யோனி அவை தன்னிடை மாசுறவே எய்த - தீமையிலேயே உழன்றுகொண்டிருக்கும் தாழ்ந்த ஆஸுரப்பிறவிகளையே அடையும்படி, நான் - நான், என்றும் தள்ளுவேன் - இடைவிடாமல் தள்ளுவேன்.

भा ॥ य एवं मां द्विषन्ति, तान् क्रूरान् नराधमानशुभान् अहमजस्रं संसारेषु जन्मजरामरणादिरूपेण परिवर्तमानेषु संतानेषु,

---

19. முன் ஶ்லோகங்களில் கூறியபடி ஆஸுரப்ரக்ருதிகள் செய்யும் த்₃வேஷத்தோடு கூடிய யாக₃ம் முதலானவற்றுக்கும், அவற்றிற்குரிய ப்ரதிகூல ப₂லன்களை நானே அளிக்கிறேன் என்கிறான் இந்த ஶ்லோகத்தில். (த்₃விஷத: தாந்) முன் ஶ்லோகங்களில் கூறியபடி எவர்கள் என்னை த்₃வேஷிக்கிறார்களோ அவர்களை; "அவர்களுடைய த்₃வேஷமே அவர்களைக் கீழே தள்ளுகிறதேயொழிய அவர்களுடைய அதோ₄க₃திக்கு நான் காரணமல்ல" என்று உணர்த்துகிறான். இவனுக்கு வைஷம்யம் (பக்ஷபாதம்), நைர்க்₄ருண்யம் (கருணையின்மை) முதலான தோ₃ஷங்கள் வருவதில்லை என்று கூறும் ப்₃ரஹ்மஸூத்ரம் முதலான ப்ரமாணங்கள் இங்கே அநுஸந்திக்கத்தக்கவை. கீ₃தை 7ம் அத்யாயத்தில் 15ஆம் ஶ்லோகத்தில் (1) மூட₄ர்கள் (2) நராத₄மர்கள் (3) மாயையினால் அறிவிழந்தவர்கள் (4) ஆஸுரத் தன்மையைப் பெற்றிருப்பவர்கள் என்று மேன்மேலே பாவிகளான நாலுவகைப்பட்டவர்களைக் கூறினான். அவர்களையே இங்கும் நாலு பத₃ங்களாலே குறிக்கிறான் என்று விளங்குகிறது. "நராத₄ம" ஶப்₃த₃ம் இரண்டு ஶ்லோகங்களிலும் ஒன்றாய் உள்ளது. "ஆஸுரத்தன்மையை அடைந்தவர்கள்" என்று அங்கு எடுக்கப்பட்டவர்கள் "எம்பெருமானை த்₃வேஷிப்பவர்களே" என்று அந்த ஶ்லோகத்தில் பா₄ஷ்யமிடப்பட்டது. ஆகையால், "த்₃விஷத:" என்று இங்கு குறிப்பிடப்படுபவர்கள் அவர்களே என விளங்குகிறது. எஞ்சியிருக்கும் மூட₄ர்களையும், மாயையால் அறிவிழந்தவர்களையும், 'க்ரூர' ஶப்₃த₃த்தாலும் 'அஶுப₄'ஶப்₃த₃த்தாலும் யதோ₂சிதம் குறிப்பதாகக் கொள்ளவேண்டும் எல்லோருமே ஆஸுரப்ரக்ருதிகளாகையாலே அந்த ஶ்லோகத்திற்போல் இங்கு கிரமமாக எடுக்கப்படவில்லை என்று கொள்ளலாம். (அஜஸ்ரம் ஸம்ஸாரேஷு க்ஷிபாமி) முற்கூறப்பட்ட நாலு வகையான ஆஸுரப்ரக்ருதிகளையும் நான் இடைவிடாமல் பிறத்தல், மூப்படைதல், மரணமடைதல் முதலான துன்பங்கள் மாறி மாறிவரும் பிறவிகளிலேயே தள்ளுகிறேன். (ஸம்ஸாரேஷு) "ஸம்ஸரதி புருஷ: அஸ்மிந் இதி ஸம்ஸார:" என்னும்

तत्राप्यासुरीष्वेव योनिषु क्षिपामि — मदानुकूल्यप्रत्यनीकेष्वेव जन्मसु क्षिपामि; तत्तज्जन्मप्राप्त्यनुगुणप्रवृत्तिहेतुभूतबुद्धिषु क्रूरास्वहमेव संयोजयामीत्यर्थः ॥ १९ ॥

---

வ்யுத்பத்தியாலே பிறப்பு, மரணம் முதலானவைகளில் புருஷன் சக்கரம் போல் மாறி மாறி இடைவிடாமல் சுழன்று வரும் பிறவிகளே ஸம்ஸார ஶப்₃த₃த்தால் இங்கு குறிக்கப்படுகின்றன. அந்தப்பிறவிகள் கணக்கற்றவையாகையால் "ஸம்ஸாரேஷு" என்று பன்மையில் படிக்கப்படுகிறது. பிறவிகள் நல்ல பிறவிகளாகவும் கூடுமாகையாலே, இவர்களுக்குத் தாழ்ந்த பிறவிகளே உண்டாகின்றன என்று காட்டுவதற்காக விசேஷிக்கிறான் — (ஆஸுரீஷு ஏவ யோநிஷு) அவற்றிலும் இவர்களை ஆஸுரப் பிறவிகளிலேயே தள்ளுகிறேன். "ஏதத்₃தி₄ து₃ர்லப₄தரம் லோகே ஜந்ம யதீ₃த்₃ருஶம்" [கீ₃தை 6-42] [இந்த இரண்டுவிதமான நற்குடிப்பிறப்பும் இவ்வுலகில் மிகவும் கிடைத்தற்கரியதன்றோ] என்று சொல்லப்பட்டவையாய், என்னிடம் அன்பு உண்டாவதற்கு உறுப்பானவையான ஸாத்விகர்களான நல்லோர்களின் குடிகளிலே அல்லாமல், அதற்கு நேர்மாறாக த்₃வேஷம் உண்டாவதற்குறுப்பான தாமஸமான ஆஸுரப்பிறவிகளிலேயே தள்ளுகிறேன் என்று கருத்து. இத்தகைய ஆஸுரப்ரக்ருதிகள் தேவர் மனிதர் முதலான நாலுவகை யோனிகளிலும் உண்டாகக் கூடியவர்கள் என்பது குறிக்கொள்ளத்தக்கது. (க்ஷிபாமி) அந்தந்த ஆஸுரப்பிறவிகளை அடைவதற்குறுப்பான பாபச் செயல்களைச் செய்வதற்குக் காரணமான கொடிய பு₃த்₃தி₄களை அவர்களுக்கு உண்டாக்குகிறேன் என்று கருத்து. "ஏஷ ஏவ அஸாது₄ கர்ம காரயதி தம் யமதோ₄ நிநீஷதி" [கௌஷீதகீ 3-9] [எவனைக் கீழே தள்ள விரும்புகிறானோ அவனை இந்தப் பரம புருஷனே தவறான கர்மங்களைச் செய்ய வைக்கிறான்] என்று உபநிஷத்திலும் சொல்லப்பட்டதன்றோ. இவ்வண்ணம் பாபச் செயலைப்புரியும்படி எம்பெருமான் தூண்டுவதற்குக் காரணம் இவனுக்கு ஏற்கனவே இருக்கும் மிகுந்த த்₃வேஷமேயாகையால் எம்பெருமானுக்குப் பக்ஷபாதமோ கருணையின்மையோ வாராது என்று காணத்தக்கது.

आसुरीं योनिमापन्ना मूढा जन्मनि जन्मनि ।
मामप्राप्यैव कौन्तेय ततो यान्त्यधमां गतिम् ॥ २०,

5-8-10.

20. ஆஸுரீம் யோநிமாபந்நா, மூடா ஜந்மநி ஜந்மநி |
மாமப்ராப்யைவ, கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம் ||

கௌந்தேய — குந்தீபுத்திரனே! ஆஸுரீம் யோநிம் ஆபந்நா: — (முன் ஶ்லோகத்தில் சொன்னபடி) ஆஸுரப் பிறவிகளை அடைந்த இவர்கள், ஜந்மநி ஜந்மநி — மேல் வரும் ஜந்மங்கள் தோறும், மூடா: — என்னைப்பற்றின விபரீதஜ்ஞானம் வளரப்பெற்றவர்களாய், மாம் அப்ராப்ய ஏவ — என் விஷயமான அறிவை அடையாமலேயே, தத: — அந்தந்த ஜந்மங்களைக் காட்டிலும், அதமாம் கதிம் யாந்தி—தாழ்ந்த கதிகளையே அடைகிறார்கள்.

---

19. உற்றுநிகழ்ந் தாசுரமாம் யோனிகளிற் பல்பிறப்பில்
முற்றுமறி வின்றியே மூடராய்க்— கொற்றவனே
யென்னை யடையாதே யீங்கதனிற் றாழ்ந்தகதி
தன்னடைவ ரென்றுந் தளர்ந்து.

கொற்றவனே — அரசனே! ஆசுரமாம் யோனிகளில் உற்று நிகழ்ந்து — (முன் ஶ்லோகத்தில் சொன்னபடி) ஆஸுரப்பிறவிகளை அடைந்த இவர்கள், பல்பிறப்பில் — மேன்மேலும் வரும் ஜன்மங்கள் தோறும், முற்றும் அறி வின்றியே மூடராய் — அறிவின்மை முற்றும் வளரப்பெற்ற முட்டாள்களாய், என்னை அடையாதே — என்னைப்பற்றிய அறிவை அடையாமலேயே, ஈங்கு — இவ்வுலகில், அதனில் — அந்தந்த ஜன்மங்களைக்காட்டிலும், தளர்ந்து — தளர்ச்சியுற்று, என்றும் — எப்போதும், தாழ்ந்த கதி தன்னடைவர்—தாழ்ந்த கதிகளைத் தாமே அடைவர்.

भा ॥ ममदानुकूल्यप्रत्यनीकजन्मापन्नः पुनरपि जन्मनि जन्मनि मूढाः मद्विपरीतज्ञाना मामप्राप्यैव — अस्ति भगवान् सर्वेश्वरो वासुदेव इति ज्ञानमप्राप्य ततस्ततो जन्मनोऽधमामेव गतिं यान्ति ॥ २० ॥

20. இந்த ஆஸுரப்ரக்ருதிகளுக்கு மேன்மேலும் வரும் தாழ்வுகளைக் கூறுகிறான். (ஆஸுரீம் யோநிம் ஆபந்நா:) முன்ஶ்லோகங்களில் கூறியபடி ஆஸுரப் பிறவிகளை அடைந்தவர்களான இவர்கள். (ஜந்மநி ஜந்மநி) மேன்மேலே வரும் பிறவிகளிலே. (மூடா₄:) என்னைப்பற்றின விபரீத ஜ்ஞாநம் வளரப்பெற்றவர்களாய். இது 'மூட₄' ஶப்₃த₃த்தின் தாத்பர்யார்த்த₂ம். அல்லது 'மூட₄ர்கள்' என்றது "மோஹத்தை (மயக்கத்தை) உடையவர்கள்" என்று பொருள் படுவதாய், அது ப்ரகரணத்தையொட்டித் தன் விஷயமான விபரீதஜ்ஞானம் வளரப்பெற்றவர்கள் என்னும் பொருளைத் தருகிறது என்றும் கொள்ளலாம். (மாம் அப்ராப்ய ஏவ) என் விஷயமான அறிவை அடையாமலேயே. "என்னை அடையாமலேயே" என்றே இங்கு பதவுரை இருந்தபோதிலும், ஆஸுரப்ரக்ருதிகள் எம்பெருமானை அடைவதற்கு ப்ரஸக்தியே இல்லாமையாலே 'என் விஷயமான அறிவை அடையாமலேயே" என்று பொருள்கொள்ளப்படுகிறது. ஸாத்விகர்களுக்கே பல பிறவிகள் கடந்தபின்பே எம்பெருமானை அடையவேண்டியிருக்கிறபடியால், தாமஸரான இவர்கள் எம்பெருமானை அடைவது என்னும் பேச்சுக்கே இடமில்லையே. ஆகையால், தன்னை அடைவதற்கு முதற்படியான ஶாஸ்த்ரஜந்ய ஜ்ஞாநம் (சாஸ்திரத்தினால் உண்டாகும் அறிவு) சாஸ்திரத்திற்கு வசப்படாத இவர்களுக்கு உண்டாகாமலேயே போய்விடுகிறது என்பதே இங்கு கூறப்படுவதாகக் கொள்ளவேண்டும். அதாவது - "'ஜ்ஞாநம் முதலான கு₃ணங்களால் நிறைந்த ப₄க₃வானும், அனைவரையும் நியமிப்பவனுமாக வாசுதேவன் இருக்கிறான்' என்னும் அறிவை அடையாமலேயே" என்று இத்தொடருக்குக் கருத்து. (தத:) அந்தந்த ஜன்மங்களைக் காட்டிலும்; மேலே 'அத₄மாம் க₃திம்' என்று தாழ்ந்த க₃திகளைப்பற்றி வருவதால் எதைக்காட்டிலும் தாழ்ந்தகதி என்னும் கேள்விக்கு "தத:" என்னும் பத₃ம் பதிலுரைக்கிறது என்று கொள்வதே உசிதமாகையால், அப்பத₃ம் காரணத்தைக் காட்டுவது என்று கொள்ளாமல் "அந்தந்த ஜன்மங்களைக் காட்டிலும்" என்னும்

भा ॥ अस्यासुरस्वभावस्यात्मनाशस्य मूलहेतुमाह —

त्रिविधं नरकस्येदं द्वारं नाशनमात्मनः ।
कामः क्रोधस्तथा लोभस्तस्मादेतत्त्रयं त्य[ज]जेत् ॥ २१

21. த்ரிவித₄ம் நரகஸ்யைதத்₃ த்₃வாரம் நாஶநமாத்மந: |
காம: க்ரோத₄ஸ்தத₂ா லோப₄ஸ்தஸ்மாதே₃தத் த்ரயம் த்ய(ஜ)ஜேத் ||

காம: — காமம், க்ரோத₄: — கோபம், தத₂ா லோப₄: — பேராசை (என்கிற) ஏதத் — இது, நரகஸ்ய — ஆஸுரத் தன்மையாகிற நரகத்திற்கு. ஆத்மந: நாஶநம் — ஆத்மாவையே அழிக்கவல்ல, த்ரிவித₄ம் த்₃வாரம் — மூன்றுவகைப் பட்ட காரணமாகும்; தஸ்மாத் — ஆனகையால், ஏதத் த்ரயம் — இந்த மூன்றையும், த்யஜேத் — கைவிட வேண்டும்.

20. மாநரகின் வாசலாய் மன்னுமிவை மூன்றுயிருக்
கீனமா நாச மியற்றுமவை — தானமருங்
காமங் குரோத முலோபங் கடிதிவற்றி
னாமஞ் செறுநீ நவிற்று.

தானமரும் — மனிதனிடத்தில் இருக்கும், காமம் — காமம், குரோதம் — கோபம், உலோபம் — பேராசை, இவை மூன்று (என்கிற) இந்த மூன்றும், மாநரகின் — ஆஸுரத் தன்மையாகிற கொடிய நரகத்தின், வாசலாய் மன்னும் — நுழைவாசலாய் இருக்கும்; உயிருக்கு* ஆத்மாவுக்கு, ஈனமாம் நாசம் இயற்றும் அவை — மிகத்தாழ்ந்த நிலையாகிற அழிவை உண்டுபண்ணக்கூடியவை. நீ — நீ, கடிது — விரைவில், இவற்றின் நாமம் — இவற்றின் பெயர்கூட (வாசனைகூட) இல்லாதபடி, நவிற்று செறு — (இவற்றை) நன்றாக விடுவாய்.

பொருளைத்தருவதாகக் கொள்ளப்பட்டது. (அத₄மாம் க₃திம்யாந்தி) தாழ்ந்த பிறவிகளையும், நரகக₃தி முதலானவற்றையுமே அடைகிறார்கள். (கௌந்தேய) எனது அத்தையான குந்தியின் பிள்ளையான நீ ஶாஸ்த்ரவிஶ்வாஸம் இல்லாத ஆஸுரப்ப்ரக்ருதியாகாதபடி உன்னைக் காத்துக்கொள்ளவேண்டும் என்று கருத்து. 20.

भा ॥ अस्यासुरस्वभावरूपस्य नरकस्यैतत् त्रिविधं द्वारम्, तच्चात्मनो नाशनम्; कामः क्रोधो लोभ इति । त्रयाणां स्वरूपं पूर्वमेव व्याख्यातम् । द्वारम्—मार्गो हेतुरित्यर्थः । तस्मादेतत्त्रयं

---

21. ஆத்ம நாசமாகவே இருக்கும் இந்த ஆஸுரத்தன்மைக்கு மூலகாரணத்தைக் காட்டுகிறான் இந்த ஶ்லோகத்தில்; ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி அறியவிடாமல் செய்வதன் மூலம் இதுவே ஆத்மநாசம் என்று சொல்லத்தக்க இந்த ஆஸுரத்தன்மைக்கு, காமம், க்ரோதம், லோபம் என்பவை மூன்று வகைப்பட்ட நுழைவாசலாய் இருப்பவையாகையால் இம்மூன்றையும் அவசியம் கைவிடவேண்டும் என்று சுருங்கக் கூறுகிறான் இந்த ஶ்லோகத்தில். மூலமான இம் மூன்றையும் கைவிட்டுவிட்டால் முன் ஶ்லோகங்களில் சொன்ன ஆஸுரத்தன்மைகள் அனைத்தையும் தடுத்துவிடலாம் என்று கருத்து. (காம: க்ரோத₄: தத₂ா லோப₄: ஏதத்) காமம், கோபம், பேராசை என்னும் இந்த மூன்றும். இம்மூன்றின் ஸ்வரூபமும் (லக்ஷணமும்) முன் ஶ்லோகங்களில் விரிவாகக்காட்டப்பட்டது. (நரகஸ்ய) ஆஸுரத்தன்மையாகிற நரகத்திற்கு. ரௌரவாதி₃ நரகங்கள் கூட இந்த ஆஸுரத்தன்மையைக்காட்டிலும் கொடியவையல்லவாகையால் ப்ரகரணத்தில் சொல்லப்பட்ட ஆஸுரத்தன்மையே இங்கு நரகமெனப்படுகிறது என்று கருத்து. இந்த ஆஸுரத்தன்மையை அடியோடு (வாஸனையோடு) விடவேண்டும் என்று உபதேசிப்பதற்காக, ஹிதபரனான எம்பெருமான் இதையே 'நரகம்' என்பது பொருத்தம். மேல் ஶ்லோகத்தில் "தமோத்₃வாரை:" என்று இவற்றைத் தன்விஷயமான விபரீதஜ்ஞானமாகிற இருளுக்குக் காரணமாகக் கூறுகையாலும் இவற்றை நரகம் என்பது பொருந்தும். (த்ரிவித₄ம் த்₃வாரம்) மூன்று வகைப்பட்ட நுழைவாயிலாகும். 'த்₃வாரம்' என்பது நுழைவதற்குறுப்பான வாயிலைக் குறிக்கிறது. இங்கு 'காரணம்' என்று தாத்பர்யார்த்த₂ம். (ஆத்மந: நாஶநம்) "அஸந்நேவ ஸ ப₄வதி அஸத்₃ ப்₃ரஹ்மேதி வேத₃ சேத்" [தை-ஆந] என்கிறபடியே ப்₃ரஹ்மஜ்ஞானம் இல்லாவிடில் இல்லாதவனாகவே ஆகிறானாகையாலே, ஸ்வரூபநாசமில்லாத ஆத்மாவையும் அழிக்கவல்லது என்று இங்குக் கூறப்படுகிறது. (த்₃வாரம்—நாஶநம்) இந்த மூன்று வகைப்பட்ட நுழைவாயிலில் நுழைந்தவுடனேயே ஆத்மா அழிந்துவிடுகிறது என்று கருத்து. (தஸ்மாத்) இப்படி ஆஸுரத்தன்மைகளுக்கு நுழைவாயிலாய்

973-ம் நம்பர் வெளியீடு ...



स्य[ज]जेत्। तस्मात् — अतिघोरनरकहेतुत्वात् कामक्रोधलोभानाम्, एतत्त्रितयं दूरतः परित्य[ज]जेत् ॥ २१ ॥

एतैर्विमुक्तः कौन्तेय तमोद्वारैस्त्रिभिर्नरः ।
आचरत्यात्मनश्श्रेयस्ततो याति परां गतिम् ॥ २२

22. ஏதைர்விமுக்த: கௌந்தேய
தமோத்₃வாரைஸ் த்ரிபி₄ர்நர: ।
ஆசரத்யாத்மந: ஶ்ரேய:
ததோ யாதி பராம் க₃திம் ॥

கௌந்தேய-குந்தீபுத்திரனே!, தமோத்₃வாரை:-(என்னைப் பற்றிய விபரீதஜ்ஞானமாகிற) இருளுக்குக் காரணமான, ஏதை: த்ரிபி₄:—காம க்ரோத₄ லோப₄ங்களாகிற இம்மூன்றி னின்றும், விமுக்த: நர: — விடுபட்ட மனிதன், ஆத்மந: ஶ்ரேய: ஆசரதி — (என்விஷயமான அறிவைப்பெறுகையாலே என்னி டம் அநுகூலனாயி நக்கைக்கு உறுப்பான) தனது நன்மையில் முயற்சிகொள்கிறான்; தத: — அதற்குப்பின், பராம் க₃திம் — மேலான ப்ராப்யமான என்னை, யாதி — அடைகிறான்.

---

இருக்கிறபடியாலும், ஆத்மநாஶத்தை விளைக்கிறபடியாலும், ரௌரவாதி₃ நரகங்கள் அவற்றை அநுபவிப்பவனுக்குப் பாபங் களைப் போக்கும். ஆஸுரத்தன்மையாகிற இந்த நரகமோ வெனில் பாபங்களை மேன்மேலும் வளர்க்கக்கூடியதாகையாலே, அவற்றைக் காட்டிலும் கொடியதாயிருக்கையால் அந்த நரகத் தின் நுழைவாயிலான இம்மூன்றையும் அடியோடு கைவிட வேண்டும் என்று கருத்து. (ஏதத் த்ரயம் த்யஜேத்) ஆஸுரத் தன்மைகள் முழுவதுமே கைவிடத்தக்கவையானாலும், மற்ற ஆஸுரத்தன்மைகளுக்குக் காரணமான நுழைவாயிலாக இருக் கையால் இவற்றை வெகுதூரத்தில் விலக்கவேண்டும்; இவற்றை விலக்கினால் ஆஸுரத்தன்மைகள் எல்லாமே விலகிவிடும் என்று கருத்து. "த்யஜ" என்று பாடமானால், "இம்மூன்றையும் நீ கை விடுவாய்" என்று பொருளாகிறது. 21.

भा ॥ एतैः — कामक्रोधलोभैः तमोद्वारैः मद्विपरीतज्ञानहेतुभिः विमुक्तो नरः आत्मनः श्रेय आचरति — लब्धमद्विषयज्ञानो मदानुकूल्ये प्रयतते; ततो मामेव परां गतिं याति ॥ २२ ॥

21. இங்கறிவுகேட்டுக் கிம்மூன்றுய வாசலென
வங்கறிந்து விட்டோ னரசனே — சங்கையறத்
தன்னன்மை யாசரிக்கத் தன்மைப் பரகதியா
மிந்நன்மை சேரு மெழுந்து.

அரசனே — அரசனே! இம்மூன்றும் — காமக்ரோத4 லோப4ங்களாகிற இம்மூன்றும், இங்கு — இவ்வுலகில், அறிவு கேட்டுக்கு — என்னைப் பற்றிய விபரீதஜ்ஞானத்திற்கு, வாசல் என — நுழைவாயிலாயிருப்பவை என்று, அங்கு அறிந்து விட்டோன் — நன்றாக அறிந்து இம்மூன்றையும் கைவிட்டவன், சங்கை அற — சந்தேஹமில்லாமல், தன் நன்மை ஆசரிக்க — தனது நன்மையில் முயற்சி கொள்வதன் மூலம், தன்மைப் பரகதியாம் இந்நன்மை — மேலான க3தியாகவும் நன்மையாகவும் இருக்கும் என்னை, எழுந்து சேரும் — (வானுலகிற்கு) உயரச்சென்று அடைவான்.

22. காமக்ரோத4லோப4ங்கள் மிகக்கொடியவையாகையாலே அவை கைவிடத்தக்கவை என்று விதி4க்கப்பட்டது சென்ற ஶ்லோகத்தில்; அப்படிக் கைவிடுபவனுக்கு உண்டாகும் ப2ல பரம்பரைகள் கூறப்படுகிறது இந்தஶ்லோகத்தில். (தமோத்3வாரை: ஏதை: விமுக்த: நர:) என் விஷயமான விபரீத ஜ்ஞானத்திற்குக் காரணமான இந்தக் காமக்ரோத4லோப4ங்களினின்றும் விடுபட்ட மனிதன், தமஶ்ஶப்3த3ம் அஜ்ஞானமாகிற இருளையே குறிக்குமானாலும், இங்கு அவ்வறிவின்மையால் உண்டாகும் விபரீதஜ்ஞானத்தைக் குறிக்கிறது என்றோ, அவ்வறிவின்மை விபரீதஜ்ஞானத்தையும் உபலக்ஷணமுறையாலே காட்டுகிறது என்றோ கொள்ளலாம். அஜ்ஞான விபரீதஜ்ஞானங்களுக்குக் காரணமான காமக்ரோத4லோப4ங்கள் நீங்குகையால், அந்த அஜ்ஞானவிபரீதஜ்ஞானங்களும் நீங்குகின்றன என்று தானே தேறும். அதனாலேயே எம்பெருமானைப்பற்றிய ஞானம் உண்டாகிவிடும் என்றும் தேறும்; இந்த ஜ்ஞானத்தினால் உண்டாகும் ப2லபரம்பரைகளை ஶ்லோகத்தின் பிற்பாதி கூறுகிறது.

भा ।। शास्त्रानादरोऽस्य नरकस्य प्रधानहेतुरित्याह —

यश्शास्त्रविधिमुत्सृज्य वर्तते कामकारतः ।
न स सिद्धिमवाप्नोति न सुखं न परां गतिम् ।। २३ ।।

23. ய: ஶாஸ்த்ரவிதி,முத்ஸ்ருஜ்ய வர்த்ததே காமகாரத: ।
ந ஸ ஸித்₃தி₄மவாப்நோதி ந ஸுக₂ம் ந பராம் க₃திம் ॥

ய: — எவனொருவன், ஶாஸ்த்ரவிதி₄ம் — வேத₃மாகிற எனது ஆணையை, உத்ஸ்ருஜ்ய — கைவிட்டு, காமகாரத: வர்த்ததே — தன் விருப்பப்படி செயல்புரிகிறானோ, ஸ: — அவன், ஸித்₃தி₄ம்— மறுமையில் சுவர்க்கம் முதலான பயன் எதையும், ந அவாப்நோதி — அடைவதில்லை, ஸுக₂ம் ந (அவாப்நோதி)-இம்மையில் இன்பத்தையும்,அடைவதில்லை. பராம் க₃திம் ந (அவாப்நோதி) — மேலான க₃தியையும் அடைவதில்லை.

---

22. விட்டமருஞ் சாத்திரத்தின் மேய விதியையெவ
னிட்டமிகத் தன்னா லியல்கின்றான் — றட்டறுசீர்ச்
சித்தியது சேர்ந்தடையான் சேரான் சுகம்பரமா
முத்தியது சாரான் முதிர்ந்து.

---

(ஆத்மந: ஶ்ரேய: ஆசரதி) தனக்கு நன்மையை விளைக்கும் செயல்களைச் செய்கிறான். முன் கூறப்பட்ட என் விஷயமான த்₃வேஷம் முதலானவை என் விஷயமான ஜ்ஞாநத்தாலே நீங்குகையாலே, என்னைப்பெறுவதற்குறுப்பாக சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட அனுகூலச்செயல்களைச் செய்கிறான் என்று கருத்து. (தத:) இப்படி அனுகூலச் செயல்களைச் செய்கையால்; பதவுரையில் கண்டதுபோல் 'அதற்குப்பின்' என்று பொருள் கொள்வதிலும் இது ஸ்வரஸம். (பராம் க₃திம் யாதி) மேலான ப்ராப்யமான என்னை அடைகிறான். இருபதாவது ஶ்லோகத்தில் "மாம் அப்ராப்யைவ" என்று "ஆஸுரப்ரக்ருதிகள் என்னை (என் விஷயமான் அறிவை) அடைவதில்லை" என்கையாலே, ஆஸுரத்தன்மை நீங்கப்பெற்ற இவர்கள் பெறும் மேலான பயன் பரமபுருஷனே என்பது தெளிவு. (கௌந்தேய) என் அத்தைபிள்ளையான நீ இத்தகைய சிறப்பைப்பெறவேணும் என்று கருத்து, 22.

भा ॥ शास्त्रं वेदाः, विधिरनुशासनम्, वेदाख्यं मदनुशासन-

அமரும் சாத்திரத்தின் மேய — (எனது ஆணையாகப்) பொருந்தி நிற்கும் வேதத்தில் உள்ள, விதியை — என்ஆணையை, விட்டு — கைவிட்டு, எவன் — எவனொருவன், இட்டமிக தன்னால் இயல்கின்றான் — தன் விருப்பப்படி செயல் புரிகிறானோ, (அவன்) தட்பறு சீர் சித்தி அது — தடையற்ற சிறப்புடைய சுவர்க்கம் முதலான மறுமைப் பயன்களை, சேர்ந்து அடையான் — அடைந்து இன்புற மாட்டான்; சுகம் சேரான் — இம்மை இன்பங்களையும் அடைய மாட்டான்; முதிர்ந்து — சாதனங்களைப்பற்றிநின்று, பரமாம் முத்தி அது — (என்னை அடைவதாகிற) மேலான மோக்ஷத்தையும், சாரான் — அடையமாட்டான்.

23. 'ஆஸுரத்தன்மைகள் அனைத்துக்கும் மூலகாரணமாயிருப்பவை காமக்ரோத₄லோப₄ங்கள் மூன்றும்' என்று கூறினான் சென்ற ஶ்லோகத்தில், 'முக்கிய காரணங்களான இம் மூன்றைக்காட்டிலும் முக்கியமான காரணம் சாஸ்திரத்தை ஆதரிக்காமலிருக்கையே' என்கிறான் இந்த ஶ்லோகத்தில்—அதைக் குறிக்கொண்டு கைவிடுவதற்காக. (ய:) எவனொருவன். (ஶாஸ்த்ரவிதி₄ம்) வேதத்திலுள்ள எனது ஆணையை; எல்லா நிலையிலுமுள்ள எல்லா மனிதர்க்கும் நன்மையை ஆணையிடுவதால், ''ஶாஸநாத் ஶாஸ்த்ரம்'' [ஆணையிடுவதால் (வேதம்) ஶாஸ்த்ரம் எனப்படுகிறது.] என்னும் வ்யுத்பத்தியாலே, ஶாஸ்த்ரஶப்₃த₃த்தால் வேத₃மே முக்கியமாகச்சொல்லப்படுகிறதாகையாலும், அதை விளக்குவதாலேயே ஸ்ம்ருதி முதலானவையும் சாஸ்திரம் எனப்படுகின்றனவாகையாலும் இங்கு ஶாஸ்த்ர ஶப்₃த₃ம் வேத₃த்தைக் குறிக்கிறது; ப்ரகரணத்தையொட்டி சேதனர்க்கு நன்மைகளை விதிக்கும் வாக்யங்களை வேத₃ஶப்₃த₃ம் குறிக்கிறது. ஆகையால் ''சாஸ்திரத்தின் விதி₄'' என்றது ''அந்த விதி₄வாக்யங்களிலுள்ள எனது ஆணையை'' என்று பொருள்படுகிறது. அன்றிக்கே, ''வேதவிதிவாக்யமாகிற (எனது) ஆணையை'' என்றும் பொருள் கொள்ளலாம்.

''ஶ்ருதி: ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா யஸ்தாமுல்லங்க்₄ய வர்த்ததே |
ஆஜ்ஞாச்சே₂தீ₃ மம த்₃ரோஹீ மத்₃ப₄க்தோऽபி ந வைஷ்ணவ:||''
[விஷ்ணுத₄ர்மம் 76—35]

मुत्सृज्य यः कामकारतो वर्तते — स्वच्छन्दानुगुणमार्गेण वर्तते,

---

[ஶ்ருதியும், அதை விளக்கும் சாஸ்திரங்களும் எனது ஆணையே; எவனொருவன் அதை மீறி நடக்கிருனே அவன் எனது ஆணையை மீறுகையாலே எனக்கு துரோகியாகிருன். என் ப$_4$க்தனுயினும் அவன் வைஷ்ணவனுகமாட்டான்.] என்று சொல்லப்பட்டது இங்கு அனுஸந்தி$_4$க்கத்தக்கது. "யஜேத" முதலான விதி$_4$வாக்யங்களிலுள்ள விதி$_4$ப்ரத்யயங்களுக்கு 'தன்னுடைய ஆணை' என்று எம்பெருமான் இங்கு பொருள் கூறுகையால், அவற்றுக்கு 'அபூர்வம்' முதலான மற்ற பொருள்களைக் கூறும் மதங்கள் தள்ளப்பட்டன. 'லிங்' முதலான விதி$_4$ப்ரத்யயங்கள் நியமிப்பவனின் திருவுள்ளத்தையன்ருே சொற்பொருளாகவோ தாத்பர்யார்த்த$_2$மாகவோ குறிக்கின்றன; 'அபூர்வம்' முதலான எவரும் கேட்டறியாத அர்த்தங்களைக் குறிப்பதில்லையே. (ஶாஸ்த்ரவிதி$_4$ம் உத்ஸ்ருஜ்ய) வேத$_3$விதி$_4$வாக்யமாகிற எனது ஆணையைக் கைவிட்டு; (காமகாரேண வர்த்ததே) தன் விருப்பப்படி செயல் புரிகிருனே; சாஸ்திரவிதி$_4$யைக் கைவிட்டதாக இங்கு கூறுகையாலே சாஸ்திரவிதி$_4$க்கு முரணுகத் தன் விருப்பப்படி செயல் புரிவதை இத்தொடர் கூறுகிறது.

" அத$_2$ கேந ப்ரயுக்தோऽயம் பாபம் சரதி பூருஷ: |
அநிச்ச$_2$ந்நமபி வார்ஷ்ணேய ப$_3$லாதி$_3$வ நியோஜித:||" [3-36]

[விருஷ்ணிகுலத்துதித்தவனே! (ஜ்ஞாநயோக$_3$த்தை அனுஷ்டி$_2$க்க முயலும்) இந்த மனிதன் விஷயங்களை அனுப$_4$விப்பதில் விருப்பமில்லாதவனுயிருந்தும், எந்தக் காரணத்திஞல் தூண்டப்பட்டு, ப$_3$லாத்காரமாகத்தள்ளப்பட்டவன்போலே விஷயாநுப$_4$வமாகிற தீங்கைச் செய்கிருன்?] என்று கேட்ட அர்ஜுநனுக்கு,

" காம ஏஷ க்ரோத$_4$ ஏஷ ரஜோகு$_3$ணஸமுத்$_3$ப$_4$வ: |
மஹாஶநோ மஹாபாப்மா வித்$_3$த்$_4$யேநமிஹ வைரிணம்||"[3-33]

[நீ கேட்ட (விஷயாநுப$_4$வ) காரணம்—ரஜோகு$_3$ணத்தால் உண்டாவதாய், பெரும் தீனிதின்னும் காமமேயாகும்; இக்காமமே (தடை செய்யப்பட்டபோது) (தடைசெய்பவர்களைக் குறித்துப்)பெரும் பாபச் செயல்களைப் புரியும் கோபமாகப் பரிணமிக்கிறது. (ரஜோகு$_3$ணத்தாலுண்டாவதாய், கோபமாகப் பரிணமிப்பதான) இக்காமத்தையே இந்த ஜ்ஞானயோக$_3$த்திற்கு விரோதி$_4$ என்று அறிவாயாக.] என்று கண்ணன் கூறிய பதிலில் விளக்கப்பட்ட காமத்தின் வழிநடப்பவன் இவன் என்று விளங்குகிறது. இனி, ஶ்லோ

न स सिद्धिमवाप्नोति — न कामस्यामुष्मिकीं सिद्धिमवाप्नोति; न सुखं किंचिदवाप्नोति;न परां गति-कुतः परां गतिं प्राप्नोतीत्यर्थः। २३॥

---

கத்தின் பிற்பாதி இவன் இம்மையிலோ மறுமையிலோ எப்பயனை யும் அடைவதில்லை என்கிறது— (ஸ: ந ஸித்₃தி₄ம் அவாப்நோதி) அவன் மறுமையில் சுவர்க்கம் முதலான எந்த ஸித்₃தி₄யையும் அடைவதில்லை. (ந ஸுக₂ம்) இம்மையிலும் எந்த ஸுக₂த்தையும் அடைவதில்லை. அன்றிக்கே, ஸித்₃தி₄ம்' என்பதற்கு 'மறுமையில் வினையும் சுவர்க்கம் முதலானவற்றை அடைவதற்குரிய உபாய ஸித்₃தி₄யை' என்றும், 'ஸுக₂ம்' என்பதற்கு 'அவற்றால் வினையும் இன்பத்தையும்' என்றும் பொருள் கொள்ளலாம். இவ்வுலக ஸுக₂ங்களும், ஸ்வர்க்கா₃நுப₄வம் முதலான மறுமையின்பங்களும் சாஸ்திரத்தில் விதி₄க்கப்பெற்ற புண்யகர்மங்களால் உண்டான பரமபுருஷனின் அருளாலேயன்றோ விளைகின்றன. ''அநாராதி₄தகோ₃விந்தா₃ யே நரா து₃:க்க₂பா₄கி₃ந:'' [விஷ்ணுத₄ர்மம் 19—13] [கோ₃விந்த₃னை ஆராதி₄க்காத மனிதர்கள் துன்பத்தையே அடைவார்கள்] என்று சொல்லப்பட்டதன்றோ. (ந பராம் க₃திம்) முற்கூறிய ப்ராக்ருத ப₂லன்களோடல்லாமல், சென்ற ஶ்லோகத்தில் ''பராம்க₃திம்'' என்று சொல்லப்பட்ட என்னையும் அடைவதில்லை. ''ப்ராக்ருதப₂லன்களை அடைவதில்லை'' என்றும், ''என்னை அடைவதில்லை'' என்றும் சேர்த்துப்படித்ததனால் ''ப்ராக்ருதப₂லன்களையே அடைவதில்லை என்று கூறியபின் என்னை அடையமாட்டான் என்பது கைமுதிகந்யாயத்தாலே சொல்லாமலே விளங்கும்'' என்னும் கருத்து விளங்குகிறது.

'' யா வேத₃பா₃ஹ்யா: ஸ்ம்ருதய: யாஶ்ச காஶ்ச குத்₃ருஷ்டய:|
ஸர்வாஸ்தா நிஷ்ப₂லா: ப்ரேத்ய தமோநிஷ்டா₂ ஹி தா:
ஸ்ம்ருதா: ||' [12—95]

[வேத₃த்திற்கு முரணான ஸ்ம்ருதிகளும், வேத₃த்திற்குத் தவறான பொருள் கூறும் ஸ்ம்ருதிகளும் ஆகிய எல்லாமே மறுமையில் நற்பயனை விளைக்கமாட்டாதவை, அவை தாமஸர்களுக்குரியவையாகவன்றோ (நல்லோர்களால்) கூறப்படுகின்றன.] என்னும் மநுஸ்ம்ருதிவசனம் இந்த ஶ்லோகத்திற்கு ஸம்வாத₃ ப்ரமாணமாகக் கொள்ளத்தக்கது. 23.

तस्माच्छास्त्रं प्रमाणं ते कार्याकार्यव्यवस्थितौ ।
ज्ञात्वा शास्त्रविधानोक्तं कर्म कर्तुमिहार्हसि ॥ २४ ॥

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु दैवासुरसंपद्विभागयोगो नाम षोडशोऽध्यायः ॥ १६ ॥

12-8-10

24. தஸ்மாச்சா₂ஸ்த்ரம் ப்ரமாணம் தே
கார்யாகார்ய வ்யவஸ்தி₂தௌ ।
ஜ்ஞாத்வா ஶாஸ்த்ரவிதா₄நோக்தம்
கர்ம கர்த்துமிஹார்ஹஸி ॥

தஸ்மாத் — ஆகையால், தே — உனக்கு, கார்யா கார்ய வ்யவஸ்தி₂தௌ – கைக்கொள்ளத்தக்கது இது, கைக் கொள்ளத்தகாதது இது என்று நிர்ணயிப்பதில், ஶாஸ்த்ரம்- வேத₃மே, ப்ரமாணம் — (நல்லறிவுக்குத் தனிக்காரணமான) பிரமாணமாகும்; (ஆகையால்), ஶாஸ்த்ர விதா₄நோக்தம் — சாஸ்திரங்களில் சொல்லப்படும் (புருஷோத்தமனுகிற) தத்து வத்தையும், . (அவனை அடைய உபாயமான) த₄ர்மத்தையும், ஜ்ஞாத்வா — (உள்ளபடி) அறிந்து, இஹ — இக்கர்மபூ₄மி யில், கர்ம — அக்கர்மத்தையும் (அந்த தத்வஜ்ஞானத் தையும்), கர்த்தும் அர்ஹஸி — (நீ) கைக்கொள்ளத்தக்கவ னுகிருய்.

---

23. மன்னிச் செயுமதுவு மற்றதுவு முற்றறிவு
தன்னிற் பிரமாணஞ் சாத்திரமே — யென்னுமதா
லந்த விதான மறிந்தே கருமத்தை
முந்த வியனீ முயன்று.

மன்னி செயும் அதுவும் — கைக்கொண்டு செய்யத் தக்கதையும், மற்றதுவும் — அப்படிச் செய்யத்தகாததை யும், உற்று — ஆராய்ந்து, அறிவுதன்னில் — அறியும் விஷயத்தில், பிரமாணம் — நல்லறிவுக்குத் தனிக்காரண மாயிருப்பது, சாத்திரமே — வேதமே, என்னுமதால் —

भा ॥ तस्मात्कार्याकार्यव्यवस्थितौ -- उपादेयानुपादेयव्यवस्थायां शास्त्रमेव तव प्रमाणम् — धर्मशास्त्रेतिहासपुराणाद्युपबृंहिता वेदाः

---

என்னும் காரணத்தால், நீ-நீ, அந்த விதானம் அறிந்தே—சாஸ்திரங்களில் சொல்லப்படும் (புருஷோத்தமனுகிற) அந்தத்தத்துவத்தையும், (அவனை அடைய உபாயமாகிற)கர்மத்தையும் (உள்ளபடி) அறிந்து, கருமத்தை - அந்தக்கர்மத்தை, முந்த - முதலில், முயன்று இயல் - முயன்று அனுஷ்டிப்பாய்.

---

24. இவ்வத்தியாயத்தில் சொல்லப்பட்ட தேவாஸுரப்பிரிவு முதலானவை கடைசியான இந்த ஶ்லோகத்தில் சொல்லப்படும் ஶாஸ்த்ரவஶ்யதையை வலியுறுத்துவதற்காகவே என்று காட்டுகிருன். (தஸ்மாத்) மூன் ஶ்லோகத்தில் சொல்லியபடி. ஶாஸ்த்ர விதியை மீறிநடப்பவன் எந்தப்பயனையும் அடையமாட்டாறுகையாலே, (கார்யாகார்ய வ்யவஸ்திதௌ) இன்னது கைக்கொள்ளத் தக்கது, இன்னது கைக்கொள்ளத்தகாதது என்று நிர்ணயிக்கும் விஷயத்தில். தத்துவ நிர்ணய விஷயத்திலும், அநுஷ்டானவிஷயத்திலும் கைக்கொள்ளத்தக்கதும், தகாததுமே இவ்வத்தியாயத்தில் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறபடியால், "கார்யாகார்ய" ஶப்தங்களுக்கு "உண்டாக்கப்படுவது, உண்டாக்கப்படாதது" முதலான பொருள்கள் பொருந்தாமையால், "கைக்கொள்ளத்தக்கது கைக், கொள்ளத்தகாதது" என்றே பொருள்கொள்ளவேண்டும். உபாதாநம் எனப்படும் கைக்கொள்ளுகையாவது-சாஸ்திரத்தை அநுஸரித்து மனத்தால் ஏற்றுக்கொள்ளுகையேயாகும். முன் ஶ்லோகங்களில் ஆஸுரத்தன்மைகளைக் கூறிவரும்போது தத்துவத்தைத் தவருக நினைக்கை, தவருன அனுஷ்டானத்தைக் கொள்ளுகை ஆகிய இரண்டுமே சொல்லப்படுகையால், இங்கு கார்யாகார்ய ஶப்தங்கள் தத்துவநிர்ணயம், அனுஷ்டானம் ஆகியஇரண்டிலும் கைக்கொள்ளத்தக்கதையும், கைக்கொள்ளத் தகாததையும் காட்டுவதாகக் கொள்ளவேண்டும். (தே ஶாஸ்த்ரம்ப்ரமாணம்) உனக்கு ஶாஸ்த்ரமே உண்மையறிவுக்குத் தனிக்காரணமான—[ப்ரமாகரணமான) — ப்ரமாணமாகும். இங்கு ஶாஸ்த்ரமென்று வேதத்தை மாத்திரமே குறித்தால் "ஶ்ருதி: ஸ்ம்ருதி: ஸதாசார:" [யாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதி 1—1—9] முதலான ப்ரமாணங்களில் ஸ்ம்ருதிஶப்தத்தால் சொல்லப்படும் தர்மஶாஸ்த்ர இதிஹாஸ புராணங்களும், ஶிஷ்டா

यदेव पुरुषोत्तमाख्यं परं तत्त्वं तत्प्रीणनरूपं तत्प्राप्त्युपायभूतं च कर्मावबोधयन्ति, तच्छास्त्रविधानोक्तं तत्त्वं कर्म च ज्ञात्वा — यथावदन्यूनातिरिक्तं विज्ञाय, कर्तुं त्वमर्हसि—तदेवोपादातुमर्हसि ॥२४॥

इति श्रीभगवद्रामानुजविरचिते श्रीमद्गीताभाष्ये षोडशोऽध्यायः ॥ १६ ॥

---

சாரமும், ப்ரமாணமல்லாமற்போகவேண்டிவருமே எனில்: த₄ர்ம ஶாஸ்த்ரம், இதிஹாஸபுராணங்கள், ஶிஷ்டாசாரம் முதலானவற்றால் விளக்கப்படும் வேத₃மே சென்ற ஶ்லோகத்திலும், இங்கும் ஶாஸ்த்ர ஶப்₃த₃த்தால் சொல்லப்படுகையால், இக்குறையில்லை. (ஶாஸ்த்ர வித₄ாநோக்தம் ஜ்ஞாத்வா) ஶாஸ்த்ரங்களில் புருஷோத்தமன் என்று குறிக்கப்படும் நாராயணனே பரதத்துவம் என்றும், அவனுக்கு ஆராத₄னமாயிருப்பதாய், அவனை அடைய உபாயமாயிருப்பது கர்மம் என்றும் தத்துவவிஷயமாகவும், அநுஷ்ட₂ாந விஷயமாகவும் அறிவிக்கப்படுவதை அறிந்து. இந்த கீ₃தையிலும் "வேதை₃ஶ்ச ஸர்வைரஹமேவ வேத்₃ய:" [கீ₃தை 15—15] [எல்லா வேத₃ங்களாலும் அறியப்படுபவன் நானே] முதலான விடங்களில் பரதத்வம் அறிவிக்கப்பட்டு, புருஷோத்தமனே பரமாத்மா என்று நிர்ணயிக்கப்பட்டது. ப₂ல ஸங்க₃ கர்த்ருத்வ த்யாக₃த்துடன் அனுஷ்டி₂க்கப்படும் கர்மம் பரமபுருஷனை அடைய உபாயம் என்றும் காட்டப்பட்டது. (ஜ்ஞாத்வா) உள்ளபடியும், கூடுதல் குறைவு இல்லாமலும் அறிந்து என்று தாத்பர்யம். (கர்ம கர்த்தும் அர்ஹஸி) இங்கு 'கர்ம' என்று சொன்னது முற்கூறியபடி தத்வ ஜ்ஞாநத்திற்கும் ப்ரத₃ர்ஶனம் (எடுத்துக்காட்டு); ஆகையால், ஶாஸ்த்ரத்தில் விதி₄க்கப்படும் தத்வநிர்ணயத்தையும், கர்மாநுஷ்ட₂ானத்தையும் நீ கைக்கொள்ள உரியவனாகிறாய், 'அர்ஹஸி' என்றதால் சாஸ்த்ரத்திற்குப் புறம்பாக அனுஷ்டி₂ப்பது தெய்வப்பிறவியான உனக்குத்தகாது என்றும் உணர்த்தப்படுகிறது. (இஹ) 'இந்தக் கர்மபூ₄மியில்' என்றோ, 'கர்மத்திற்கு வசப்பட்டிருக்கும் இந்நிலையில்' என்றோ பொருள்படுகிறது. 24.

## பகவத்கீதை வெண்பா

(பதினாறும் அத்தியாயத்தின் ஸாரத்தைக் கூறும் பாசுரம்)

இப்படியே தேவா சுரமா மியல்வதனைத்
தப்பறுசீர் ஞானத் தகுநிலைமைக் — கொப்பாப்
பகர்ந்தசீர்க் கீதைப் பதினாறு மோத்தில்
நிகழ்ந்தபொருண் முற்றியது நேர்ந்து.

வாதிகேஸரி ஜீயர் அருளிய
பகவத்கீதை வெண்பாவில்
பதினாறும் அத்தியாயம் முற்றிற்று

இப்படியே — இவ்வண்ணமாக, தேவாசுரமாம் இயல்வதனை — தெய்வப்பிறவியினுடையவும், அசுரப்பிறவியினுடையவும் தன்மைகளை, தப்பு அறு சீர் ஞானத் தகுநிலைமைக்கு ஒப்பா — விட்டுப்பிரியாத சிறப்பையுடைய (அவரவர்) அறிவின் தன்மைக்கு அனுகு₃ணமாக, பகர்ந்த — கூறிய, சீர் — சிறப்பையுடைய, கீதை பதினாறும் ஓத்தில் நிகழ்ந்த பொருள் — கீதையின் பதினாறும் அத்தியாயத்தில் சொல்லிய அர்த்தம், நேர்ந்து முற்றியது — பொருத்தமாக நிறைவுற்றது.

---

ஆக, பதினாறும் அத்தியாயத்தால், "ஸத்வகு₃ணம் மிக்க நீ வஞ்சகபுருஷர்களான சிலரால் கற்பிக்கப்பட்ட பொய்ந்நூல்களை ப்ரமாணமாகக்கொண்டு, என்றுமுள்ள ப₄க₃வதா₃ஜ்ஞையாயிருக்கும் வேதமெனும் சாஸ்திரத்தின் ஸாரமாயிருப்பதாய், உன் அதி₄காரத்திற்குத் தக்கபடி கர்மயோக₃த்தாலும், ப₄க்தியோக₃த்தாலும் பரமபுருஷன் ஒருவனையே உபாஸிப்பதாகிற பரமத₄ர்மத்தைக் கைவிட்டுவிடக்கூடாது; அதையே எப்போதும் கைக்கொள்ள வேண்டும்" என்று சொல்லப்பட்டதாயிற்று.

ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி த₃ாஸன் இயற்றிய
கீ₃தார்த்த₂விவரணத்தில் பதினாறும் அத்தியாயம்
நிறைவுபெற்றது.

## கீதார்த்த சங்கிரகம்

(ஸ்ரீவேதா₃ந்ததே₃சிகர் அருளியது)

### பதினாறுமத்தியாயத்தின் ஸாரப்பொருள்

ஆணை மறுதவர் தேவரல் லாவழக் கோரசுரர்
கோணை மராத குணச்செல்வ நீகுறிக் கொண்மறையைப்
பேணிய தத்துவ மும்பிணி யற்ற கிரிசைகளுங்
காணித னுல்விச யாவென்று கண்ண னியம்பினனே.

கண்ணன்—கண்ணன், விசயா—அர்ஜு₂நனே!, ஆணை-(என்னுடைய) கட்டளையை, மறுதவர் — மறுக்காதவர், தேவர்—தேவர்கள் (ஆவர்); அல்லா வழக்கோர் — அப்படியல்லாத (என்னுடைய கட்டளையை மீறுகின்ற) இயல்வுடையவர், அசுரர் — அஸு₂ரராவர். கோணை மராத — கோணல் இயல்வு கலவாத, குணச்செல்வ — குணமாகிய செல்வத்தையுடையவனே!, நீ மறையைக் குறிக்கொள் — நீ வேதத்தையே ப்ரமாணமாகக்கொள்வாயாக; பேணிய—கொண்டாடப்படுகின்ற, தத்துவமும் — பரதத்துவமும், பிணி அற்ற — (ப₄லனில் பற்று வைப்பதாகிய) தீங்கு இல்லாத, கிரிசைகளும்-கர்மங்களும் (ஆகிய இவற்றை), இதனுல் — இந்த வேத₃த்தால், காண் என்று—அறிந்து கொள் என்று, இயம்பினன் — உபதேசித்தான்.

---

## கீதாஶ்லோகார்த்த₂ச் சுருக்கம்

### பதினாறும் அத்தியாயம்

ஶ்லோ. அர்த்தம்

1—3. தெய்வப்பிறவி வகுப்பில் சேர்ந்தவனுக்குரிய முக்கியமான குணங்கள்:— (1) பயமின்மை, (2) மனத்தின் பரிசுத்தி, (3) (ப்ரக்ருதியினின்றும் நீங்கிய) ஆத்மஸ்வரூபத்தைச் சிந்தித்திருத்தல், (4) நல்லவழியில் தேடிய பொருளை நல்லோர்களுக்களித்தல், (5) மனத்தை ஶப்₃த₃ாதி₃ விஷ

யங்களில் பாயாமல் தடுக்கப்பழகுதல், (6) (பலனில் பற்றற்று ப₄க₃வதா₃ராத₄னமாகப்) பஞ்ச மஹாயஜ்ஞம் முதலானவற்றை அனுஷ்டி₂த்தல், (7) வேதா₃த்₄யயனத்தில் ஈடுபடுதல், (8) ஏகாத₃சி உபவாஸம் முதலான தவங்களில் ஈடுபடுதல், (9) மனம் மொழி மெய்களால் ஒருபடிப்பட்டிருத்தல். (10) எந்த ஜீவராசியையும் துன்புறுத்தாமை, (11) ஜீவராசிகளுக்கு நன்மையான உண்மையையே உரைத்தல், (12) பிறரைத் துன்புறுத்துவதில் மூட்டும் கோபம் இல்லாதவனுயிருக்கை, (13) தனக்கு நன்மையை விளைக்காத உடைமைகளைக் கைவிடுதல், (14) (மனம் தவிர்ந்த) இந்த்₃ரியங்களை ஶப்₃த₃தா₃தி₃விஷயங்களில் பாயாமல் தடுக்கப் பழகுதல், (15) (பிறர்க்குத் தீங்கு விளைக்கும்) கோட் சொல்லுதலைத் தவிர்த்தல், (16) ஜீவராசிகளின் துன்பங்கண்டு பொருமலிருத்தல், (17) விஷயங்களில் பற்றின்மை, (18) (நல்லோர்கள் அனுகலாம்படி) மென்மையுடனிருக்கை, (19) தகாத செயல்களைச் செய்வதில் வெள்கியிருத்தல், (20) அருகிலிருக்கும் அழகிய பொருள்களையும் ஆசைப்படாமை, (21) (தீயவர்களால்) வெல்லவொண்ணுமை, (22) (துன்புறுத்துபவர்களிடமும்) பொறுமை, (23) (பேராபத்து வந்தாலும்) செய்யவேண்டியதில் உறுதியாயிருக்கை, (24) (மநோவாக்காயங்களில் சாஸ்திரங்களில் சொல்லிய) பரிசுத்தியாகிற அனுஷ்டா₂னத் தகுதியை உடையவனுயிருக்கை, (25) பிறர் நற்செயல்களைத் தடுக்காமை, (26) தகாத க₃ர்வம் இன்மை ஆகிய 26 குணங்கள்.

4. அஸுரப்பிறவி வகுப்பில் சேர்ந்தவனுக்குரிய முக்கியமான குணங்கள்:— (1) (த₄ார்மிகன் என்னும்) புகழைப்பெற த₄ர்மத்தை அனுஷ்டிப்பது, (2) (ஶப்₃த₃தா₃தி₃ விஷயங்களை அனுப₄விப்பதனுல் உண்டாகும்) செருக்கு, (3) அதி₄கமான க₃ர்வம். (4) (பிறரைத் துன்புறுத்தும்) கோபம், (5) (நல்லோர்களை வெறுப்படையச்செய்யும்) கடுமை, (6) தத்வ விஷயத்திலும், செய்யத்தக்கது அல்லது தகாதது விஷயத்திலும் அறிவின்மை ஆகிய ஆறு குணங்கள்.

*5. எம்பெருமான் ஆணையைப் பின் செல்வதாகிற தேவர்களுக்குரிய செல்வம் ஸம்ஸார விடுதலைக்கும், எம்பெரு

மானுடைய ஆணையை மீறுவதாகிற அசுரர்க்குரிய செல்வம் தாழ்ந்த கதிகளை அடைவதற்கும் உறுப்பாகின்றன.

5* அர்ஜுனன் தேவர்க்குரிய செல்வத்தைப் பெற்றவனே என்று கூறி அவனது வருத்தத்தைப் போக்குதல்.

6. தேவர்க்குரிய ஆசாரம் கர்ம ஜ்ஞான ப₄க்தி யோக₃ங்களைச் சொல்லும்போது விரிவாகக் கூறப்பட்டது. அசுரர்க்குரிய ஆசாரம் மேலே (18-வது ஶ்லோகம் வரை) சொல்லப்படுகிறது.

7. (1) அசுரப்பிறவிகள், ஐஶ்வர்ய ஸாத₄னமாகவும், மோக்ஷ ஸாத₄னமாகவும் இருக்கும் வைதி₃க த₄ர்மத்தை அறிய மாட்டார்கள், (2) அவர்களிடம் ஶௌத்₃தி₄ இருக்காது. (3) ஸந்த்₄யாவந்த₃னம் முதலான ஆசாரமும் அவர்களிடம் இருக்காது. (4) உண்மை உரைத்தலும் அவர்களிடம் இருக்காது.

8. (5) அசுரர்கள் உலகம் ப்₃ரஹ்மாத்மகம், ப்₃ரஹ்மத்தில் நிலைநிற்பது, ப்₃ரஹ்மத்தால் நியமிக்கப்படுவது என்று சொல்வதில்லை. (6) ஆண், பெண் சேர்க்கையால் உண்டாகாதது எதுவுமில்லையாகையால் உலகனைத்தும் காமத்தையே காரணமாகக் கொண்டது என்று கூறுகிறார்கள்.

9. (7) அசுரர்கள் தேஹத்திலும் வேறுபட்ட ஆத்மாவை அறியாமல் கொடிய செயல்களைச் செய்பவர்களாய், உலகம் அழிவதற்குக் காரணமாகிறார்கள்.

10. (8) அசுரர்கள் காமத்தை நிறைவேற்ற அநியாயவழியில் தேடப்பெற்ற பொருள்களைக் கொண்டு சாஸ்திரத்திற்கு முரண்பட்ட விரதங்களைக் கொண்டவர்களாய், ட₃ம்ப₄ம், து₃ரபி₄மானம், மத₃ம் ஆகியவற்றோடு கூடியவர்களாய்ச் செயல்படுகிறார்கள்.

11. (9) அசுரர்கள் அளவிடவொண்ணாத கவலைகளையுடையவர்களாய், காமாநுப₄வத்தையே பரம புருஷார்த்த₂மாக நினைப்பவர்கள்.

12. (10) அசுரர்கள் நூற்றுக்கணக்கான ஆஶாபாஶங்களால் கட்டப்பட்டவர்கள் (11) காமத்திலும் கோபத்திலுமே ஊன்றி நிற்பவர்கள். (12) காமாநுபவத்திற்குத் தவருன வழிகளில் பொருளை விரும்பித்தேடுகிருர்கள்.

13. (13) அசுரர்கள் தங்களுடைய இஷ்டப்ராப்தி தம் திறமையாலேயேயொழிய முன்வினையால் அல்ல என்று மயங்கி, காமாநுபவத்தில் பெற்றதையும், பெறவேண்டியதையும் கணக்கிட்டுக் கொண்டிருக்கிருர்கள்.

*14. (14) அசுரர்கள் 'ஶத்ரு நிரஸனம்' முதலான அநிஷ்ட நிவ்ருத்திகளும் தம் திறமையாலேயேயொழிய முன் வினையால் அல்ல என்று மயங்கியிருக்கிருர்கள்.

14*-15. (15) அசுரர்கள் முற்கூறிய தம் திறமையும், மற்றும் பல திறமைகளும் தமக்கு இயல்பாக உள்ளதேயொழிய, புண்யத்தால் உண்டானதன்று என்று மயங்கியிருக்கிருர்கள்.

16. (16) அசுரர்கள் பல கவலைகளையும், மயக்கங்களையும், புலனின்பங்களில் ஈடுபாட்டையும் உடையவர்களாயிருக்கையாலே அசுத்தமான நரகத்தில் விழுகிருர்கள்.

17. (17) அசுரர்கள் தம்மைத்தாமே பெருமைபேசிக்கொள்பவர்கள், (18) பணிவில்லாமல் நிமிர்ந்து நிற்பவர்கள். (19) பணத்திஞலும் (கல்வி, குடிப்பிறப்பு ஆகியவற்ருல் உண்டான) அபிமானத்தாலும் விளையும் கர்வத்தை உடையவர்கள். (20) புகழையே பயனுகக் கொண்டு சாஸ்த்ர விதிக்கு முரணுக டம்பத்திற்காக யாகம் செய்கிருர்கள்.

18. (21) அசுரர்கள் அஹங்காரத்தையும், தன் பலத்தையும், கர்வத்தையும் கோபத்தையும் பற்றி நிற்பவர்களாய், அனைத்தையும் செய்விக்கும் பகவானிடத்தில் பொருமையுடையவர்களாய் யாகம் செய்கிருர்கள்.

19. பகவானை த்வேஷிப்பவர்களாய், கொடியவர்களாய், மனிதர்களில் கடையானவர்களாய், அமங்களமானவர்களான அவ்வசுரர்களை எம்பெருமான் பிறவிகளில், அதிலும் ஆஸுரப்பிறவிகளிலேயே தள்ளுகிருன்.

1323-த்ருஸ்ரீ-திருவாலஸ்ரீ - தொழிந்து - வங்கம்



ஸ்ரீ:

# ஆளவந்தார் அருளிய

# கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹம்

[பதினேழாம் அத்தியாயத்தின் சுருக்கம்]

11-6-69.
17-8-10

अशास्त्रमासुरं कृत्स्नं शास्त्रीयं गुणतः पृथक् ।
लक्षणं शास्त्रसिद्धस्य त्रिधा सप्तदशोदितम् ॥ २१ ॥

**21.** அஶாஸ்த்ரமாஸுரம் க்ருத்ஸ்நம்
ஶாஸ்த்ரீயம் கு₃ணத: ப்ருத₂க் ।
லக்ஷணம் ஶாஸ்த்ரஸித்₃த₄ஸ்ய த்ரித₄ா
ஸப்தத₃ஶோதி₃தம் ॥

---

20. முற்கூறியபடி ஆஸுரப்பிறவிகளையடைந்த அசுரர்கள் விபரீதஜ்ஞானம் வளரப்பெற்றவர்களாய், மேன்மேலும் தாழ்ந்த கதிகளையே அடைகிறார்கள்.

21. ஆஸுரத்தன்மைக்கு நுழைவாயிலாயிருக்கும் காமம், க்ரோத₄ம், லோப₄ம் என்னும் மூன்றையும் நல்லவர்கள் அவசியம் கைவிடவேண்டும்.

22. இம்மூன்றையும் கைவிடுபவன் தனது நன்மைக்கு முயற்சி செய்து பகவானையே அடைகிறான்.

23. ஆஸுரத்தன்மைக்கு மூலகாரணமான முற்கூறிய மூன்றைக் காட்டிலும் முக்கியமான காரணம் சாஸ்திர நம்பிக்கையின்மையே; சாஸ்த்ர விதி₄யைக் கைவிடுபவன் இம்மை மறுமைப் பயன்களையும், மேலான க₃தியையும் அடையவே மாட்டான்.

24. ஆகையால், கைக்கொள்ளத் தக்கதையும் தகாததையும் நிர்ணயிப்பதில் சாஸ்த்ரமே (வேத₃மே) ப்ரமாணம். ஆகையால், வேத₃த்தில் சொல்லப்பட்ட புருஷோத்தமனுகிற தத்துவத்தையும், அவனை அடைய உபாயமான த₄ர்மத்தையும் கைக்கொள்ள வேண்டும்.

பதினாறும் அத்தியாயத்தின் கீ₃தாஶ்லோகார்த்த₂ச் சுருக்கம் நிறைவுற்றது.

க்ருத்ஸ்நம் அஶாஸ்த்ரம் — சாஸ்திரத்தில் விதி₄க்கப்படாத கர்மம் அனைத்தும், ஆஸுரம் — அஸுரர்க்குரியது (ஆகையாலே பயனற்றது) (என்றும்), ஶாஸ்த்ரீயம் — சாஸ்திரத்தில் விதி₄க்கப்பட்ட கர்மம், கு₃ணத: — (ஸத்வரஜஸ்தமோ) கு₃ணங்கள் மூன்றையிட்டு ப்ருத₂க் — மூன்றுவிதமாய் இருப்பது (என்றும்), ஶாஸ்த்ரஸித்₃த₄ஸ்ய — சாஸ்திரத்தில் விதி₄க்கப்பட்ட யாகம் முதலான கர்மங்களுக்கு, த்ரித₄ா லக்ஷணம் — "ஓம் தத் ஸத்" என்னும் மூன்று பதங்கள் (தாம் சேர்வதன் மூலம் அவற்றை மற்ற கர்மங்களினின்றும் வேறுபடுத்தும்) லக்ஷணமாகின்றன (என்னும் விஷயமும்), ஸப்தத₃ஶோதி₃தம் - பதினேழாம் அத்தியாயத்தில் சொல்லப்பட்டது.

வாதிகேஸரி ஜீயர் அருளிய

## பகவத்கீதைவெண்பா — அத்தியாயம் - 17.

## சிரத்தாத்ரய விபாகயோகம்

### பதினேழாம் அத்தியாயத்தின் பொருள்

*ஆசுரமா மின்மை சாத்திரந்தான் சாத்திரத்திற்*
*றேசுடைய கன்மஞ் செறிகுணத்தாற் — பேசுநெறி*
*சேர்ந்தேயிம் முக்குணங்கள் செப்புமே மூவகையா*
*வோர்ந்தே பதினேழா மோத்து.*

சாத்திரம்தான் இன்மை — சாத்திரத்தில் விதிக்கப்படாத கர்மம் அனைத்தும், ஆசுரம் ஆம் — அசுரர்க்குரியதாகும்; சாத்திரத்தில் தேசுடைய கன்மம் — சாத்திரத்தில் விதிக்கப்பட்டிருக்கையாகிற சிறப்புடைய கர்மங்கள், செறி குணத்தால் மூவகையா — (தே₃ஹத்தோடு) சேர்ந்திருக்கும் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று கு₃ணங்களையிட்டு மூவகையாகவும், பேசு நெறி இம் முக்குணங்கள் சேர்ந்தே மூவகையா — (சாஸ்திரங்களில் புகழப்படும் ஓம் தத் ஸத் என்னும்) இந்த மூன்று பதங்களின் சேர்த்தியினால் (மற்ற கர்மங்களைக்காட்டிலும்) மூன்று வகையில் வேறுபட்டிருப்பதாகவும், பதினேழாம் ஓத்து - பதினேழாம் அத்தியாயம், ஓர்ந்தே செப்புமே — ஆராய்ந்து கூறும்.

श्रीः

## ॥ अथ सप्तदशोऽध्यायः ॥१७॥

भा ॥ देवासुरविभागोक्तिमुखेन प्राप्यतत्त्वज्ञानं तत्प्राप्त्युपायज्ञानं च वेदैकमूलमित्युक्तम् । इदानीमशास्त्रविहितस्यासुरत्वेनाफलत्वम्, शास्त्रविहितस्य च गुणतस्त्रैविध्यम्, शास्त्रसिद्धस्य लक्षणं चोच्यते ।

---

ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி தா₃ஸன் இயற்றிய
கீ₃தார்த்த₂ விவரணம்—பதினேழாம் அத்தியாயம்
முன் அத்தியாயத்தோடு தொடர்பும்,
இவ்வத்தியாயார்த்தச் சுருக்கமும்.

சென்ற பதினாறும் அத்தியாயத்தில், தே₃வாஸுரப்பிரிவைக் கூறுவதன் மூலம் ப்ராப்யமான பரதத்துவத்தின் அறிவும், அதை அடைவதற்குரிய உபாயத்தின் அறிவும் வேதத்தையே மூலமாகக் கொண்டது என்று கூறப்பட்டது. இவ்வத்தியாயத்தில் அதுவே வேறுவகையில் விளக்கப்படுகிறது. அதாவது:- சாஸ்திரத்தில் விதிக்கப்படாத கர்மம் அனைத்தும் அஸுரர்க்கு உரியதாகையாலே பயனற்றது என்றும், சாஸ்திரத்தில் விதி₄க்கப்பட்ட கர்மம் ஸத்வ ரஜஸ் தமோ கு₃ணங்கள் மூன்றையிட்டு மூன்றுவிதமாக இருப்பது என்றும் சாஸ்திரத்தில் விதி₄க்கப்பட்ட யாக₃ம் முதலான கர்மங்களுக்கு, "ஓம் தத் ஸத்" என்னும் மூன்று பத₃ங்கள் தாம் சேர்வதன் மூலம், அக்கர்மங்களை மற்ற கர்மங்களினின்றும் வேறுபடுத்தும் லக்ஷணமாகின்றன என்னும் விஷயமும் இப்பதினேழாம் அத்தியாயத்தில் சொல்லப்படுகின்றன. முன் அத்தியாயத்தில் 23, 24 ஶ்லோகங்களில் சாஸ்திரத்தில் விதிக்கப்படாத கர்மம் அனைத்துமே பயனில்லாதது என்று கூறப்பட்டதை நன்கு புரிந்துகொள்ளாமல், சாஸ்திரத்தில் விதி₄க்கப்படாததாயிருந்த போதிலும் மனம் போனபடி செய்யப்படாமல், சிரத்தையோடு செய்யப்படும் யாக₃ம் முதலான கர்மங்களில் ஸத்வரஜஸ்தமோகு₃ணங்களையிட்டுப் ப₂லனில் வேறுபாட்டை அறியவிரும்பி, அர்ஜுனன் இவ்வத்தியாயத்தின் முதல் ஶ்லோகத்தில் கண்ணனைக் கேள்வி

तत्राशास्त्रविहितस्य निष्फलत्वमजानन् अशास्त्रविहिते श्रद्धासंयुक्ते यागादौ सत्त्वादिनिमित्तफलभेदबुभुत्सया अर्जुनः पृच्छति —

---

கேட்கிறுன். "சென்ற அத்தியாயத்தில் 23, 24 ஶ்லோகங்களில் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட கர்மத்திஞல் இம்மை மறுமைப் பயன்களோ பரகதியோ விளையாது. ஆகையால் சாஸ்திர விதியைப்பார்த்தே நீ செயல்படவேண்டும்" என்று தெளிவாகச் சொல்லியிருக்கும்போது சாஸ்திரத்தில் விதிக்கப்படாத கர்மங்களால் விளையும் பயனைப்பற்றி அர்ஜுனன் இங்கு கேள்வி கேட்பதே பொருந்தாமலிருக்கிறதே" எனில்: இங்கு அர்ஜுனனின் கேள்வியின் கருத்தைப் பின்வருமாறு கொள்ளலாம். அதாவது:- சாஸ்திரத்தில் விதிக்கப்படாமலிருந்த போதிலும், வேளாண்மை செய்வது, நோய்க்குச் சிகித்ஸை செய்வது முதலான கர்மங்களுக்குக் கண்காணும் பலன்கள் கிடைப்பதைப் பார்க்கிறேம். அதுபோலவே சாஸ்திரங்களில் விதிக்கப்படாமலிருந்த போதிலும், சிரத்தையோடு செய்யும் சில காரியங்களுக்கு அத்ருஷ்டபலம் கிடைக்காமற்போகாது. கிடைக்காதென்று கொண்டால் பகுத்தறியக் கூடிய ஜனங்கள் பெரும் பணம் செலவழித்துப் பெருமுயற்சிசெய்து இத்தகைய கர்மங்களைச் செய்வது பொருந்தாமற் போய்விடும். ஆகையால், சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட கர்மங்களைக் காட்டிலும், சாஸ்திரத்தில் விதிக்கப்படாத கர்மங்களுக்குக் குறைந்த பலன்கிடைக்கிறது என்று ஒப்புக்கொள்ளலாமேயொழிய, அடியோடு பலனில்லை என்று ஒப்புக் கொள்ள முடியாது. மேலும், சென்ற அத்தியாயம் 23-வது ஶ்லோகத்தில் "காமகாரத:" என்னும் பதத்திஞல் சாஸ்திர விதியைக் கைவிட்டு மனம் போனபடி கர்மங்களைச் செய்பவனுக்கே எப்பயனுமில்லையென்று கூறப்பட்டுள்ளது. சாஸ்திர விதியைக் கைவிட்டபோதிலும், சிரத்தையுடன் கர்மங்களைச் செய்பவர்களுக்கு எப்பயனும் கிடைக்காது என்று அதிலிருந்து தேருது. ஆகையால், கண்ணனுடைய கருத்தைச் சரியாகப் புரிந்துகொள்ளாமல், தவருன உபதேசத்தாலோ வேதபாஹ்யமான ஆகமங்களைக் கொண்டோ, தன் கற்பனையைக் கொண்டோ, வயது முதிர்ந்த பாமரஜனங்கள் கற்பித்ததைக் கொண்டோ 'வேதத்தால் விதிக்கப்படாத கர்மங்களுக்கும் சில பலன்கள் ஏற்படலாம்' என்று மயங்கி அர்ஜுனன் கேட்கிறுனகையாலே குறையில்லை.

1052-1053-ம் பக்.



अर्जुन उवाच —

ये शास्त्रविधिमुत्सृज्य यजन्ते श्रद्धयाऽन्विताः ।
तेषां निष्ठा तु का कृष्ण सत्त्वमाहो रजस्तमः ॥ १ ॥

15-6-09. 19-8-10

அர்ஜுந உவாச—

1. யே ஶாஸ்த்ரவிதி₄முத்ஸ்ருஜ்ய
யஜந்தே ஶ்ரத்₃த₄யாந்விதா: ।
தேஷாம் நிஷ்ட₂ா து கா க்ருஷ்ண
ஸத்த்வமாஹோ ரஜஸ்தம: ॥

(அர்ஜுந உவாச — அர்ஜுநன் உரைத்தான்-)

க்ருஷ்ண — கண்ணா! யே — எவர்கள், ஶாஸ்த்ரவிதி₄ம் உத்ஸ்ருஜ்ய — ஶாஸ்திரவிதியைக் கைவிட்டபோதிலும், ஶ்ரத்₃த₄யா அந்விதா: — சிரத்தையோடு கூடியவர்களாய், யஜந்தே — யாக₃ம் செய்கிறார்களோ, தேஷாம் து — அவர்களுடைய, நிஷ்ட₂ா — நிலை, கா — எதில்? ஸத்த்வம் — ஸத்வ கு₃ணத்திலா? ஆஹோ ரஜ: — அல்லது ரஜோகுணத்திலா? (ஆஹோ) தம: — அல்லது தமோ குணத்திலா?

---

1. மேவியசீர்ப் பார்த்தன் வினவுரைத்தான் கண்ணனே
பாவியசீர்ச் சாத்திரத்தின் பாங்கொழிந்திங்—கோவா
விருப்புற் றியல்வார்க்கு மிக்ககுண மூன்றி
லிருப்பே தினியுரையா யிங்கு.

மேவிய சீர் பார்த்தன் வினவுரைத்தான் — நற்குணங்கள் பொருந்திய பார்த்தன் (பின்வருமாறு) கேள்வி கேட்டான், கண்ணனே - கண்ணா! பாவியசீர் சாத்திரத்தின் பாங்குஒழிந்து — பெருமைகள் நிறைந்த சாஸ்திரத்தின் விதியைக் கைவிட்டு, இங்கு — இவ்வுலகில், ஓவா விருப்புற்று - நீங்காத சிரத்தை யுடன், இயல்வார்க்கு — யாகம் முதலானவற்றைச் செய்பவர் களுக்கு, மிக்க குணம் மூன்றில் — மிகுந்திருக்கும் ஸத்வ ரஜஸ் தமோ குணங்கள் மூன்றில், இருப்பு ஏது — நிலைஎதிலே? இனி இங்கு உரையாய் — இனி இவ்விஷயத்தைச் சொல்லுவாயாக.

भा ॥ शास्त्रविधिमुत्सृज्य श्रद्धयान्विता ये यजन्ते, तेषां निष्ठा का ? किं सत्त्वम् ? आहोस्विद्रजः ? अथ तमः ? निष्ठा – स्थितिः ;

---

1. மனம் போனபடி செய்யப்படும் கர்மங்களைக் காட்டிலும் சிறந்தவையாய், ஶாஸ்த்ரவிதி₄ப்படி செய்யப்படும் கர்மங்களைக் காட்டிலும் தாழ்ந்தவையாய், சாஸ்திரவிதி₄யில்லாமற் போனாலும் சிரத்தையோடு செய்யப்படும் கர்மங்களைச் செய்பவர்கள் நிலைநிற்பது ஸத்வரஜஸ்தமோ கு₃ணங்களில் எக்குணத்திலே என்று கேட்கிறான் அர்ஜுனன். (யே து) எவர்களோவெனில்; துஶப்₃த₃த்தாலே, மனம் போனபடி கர்மங்களைச் செய்பவர்களைக் காட்டிலும், சாஸ்திரவிதி₄ப் படி கர்மங்களைச் செய்பவர்களைக் காட்டிலும் இவர்களுக்குள்ள வேறு பாடு உணர்த்தப்படுகிறது. "தேஷாம் து" என்று கூட்டினால் அவ்விரு நிஷ்டை₂களைக் காட்டிலும் இவர்களுடைய நிஷ்டை₂க்கு வேறுபாடு சொல்லப்படுகிறது என்று கொள்ளவேண்டும். (ஶாஸ்த்ரவிதி₄முத்ஸ்ருஜ்ய யஜந்தே) ஶாஸ்த்ரவிதி₄யைக் கைவிட்டு யாக₃ம் முதலானவற்றைச் செய்கிறார்களோ. இங்கு 'யஜந்தே' என்று யாக₃த்தைச் சொன்னது தா₃னம், ஹோமம் ஆகியவற் றுக்கும் உபலக்ஷணம். "யஜ-தே₃வபூஜாயாம்" என்று த₄ாது வாகையாலே யாக₃ஶப்₃த₃ம் தே₃வபூஜையான அவற்றையும் குறிக்கிறது என்றும் கொள்ளலாம். இதனால் ஶாஸ்த்ரவிதி₄ப்படி இவற்றைச் செய்பவர்களைக் காட்டிலும் வேறுபட்டவர்கள் இவர்கள் என விளங்குகிறது (ஶ்ரத்₃த₄யாந்விதா யஜந்தே) ஶ்ரத்₃தை₄யோடு கூடியவர்களாய் யாக₃ம் முதலானவற் றைச் செய்கிறார்களோ. இதிலிருந்து "வர்த்ததே காமகாரத:" [16-23] என்று மனம்போனபடி யாக₃ம் முதலானவற்றைச் செய்ப வர்களைக் காட்டிலும் வேறுபாடு உணர்த்தப்படுகிறது. இனி, ஶ்லோ கத்தின் பிற்பாதியாலே ஸத்வரஜஸ்தமோ கு₃ணங்களையிட்டு இவர்கள் அடையும் ப₂லனில் வேறுபாடு என்ன என்று வினவப்படு கிறது. (தேஷாம் நிஷ்டா₂ து கா? ஸத்வம: ஆஹோ ரஜஸ்தம:) அவர்களின் நிலை ஸத்வகு₃ணமா? அல்லது ரஜோகு₃ணமா? அல்லது தமோகு₃ணமா? (நிஷ்டா₂) ஸ்தி₂தி:; "ஸ்தீ₂யதே அஸ்மிந் இதி ஸ்தி₂தி:" [எதில் நிலைநிற்கிறானோ அது ஸ்தி₂தி எனப் படுகிறது] என்னும் அதி₄கரணவ்யுத்பத்தியாலே ஸ்தி₂திஶப்₃த₃ பர்யாயமான நிஷ்டா₂ஶப்₃த₃ம் இங்கு நிலைநிற்குமிடத்தைக் குறிக் கிறது. அவர்கள் நிலைநிற்குமிடம் முக்குணங்களில் எந்த கு₃ணம்? என்பது வினா. "ஸத்வமா, ரஜஸ்ஸா, தமஸ்ஸா" என்றுகேட்கிறபடி

स्थीयतेऽस्मिन्निति स्थितिः, सत्त्वादिरेव निष्ठेत्युच्यते । तेषां किं सत्त्वे स्थितिः, किं वा रजसि, किं वा तमसीत्यर्थः ॥ १ ॥

भा० एवं पृष्टो भगवानशास्त्रविहितश्रद्धायास्तत्पूर्वकस्य च यागादेर्निष्फलत्वं हृदि निधाय शास्त्रीयस्यैव यागादेर्गुणतस्त्रैविध्यं प्रतिपादयितुं शास्त्रीयश्रद्धायाः त्रैविध्यं तावदाह—

श्रीभगवानुवाच—

त्रिविधा भवति श्रद्धा देहिनां सा स्वभावजा ।
सात्त्विकी राजसी चैव तामसी चेति तां शृणु ॥ २ ॥

ஶ்ரீப4க3வாநுவாச –

2. த்ரிவித4ா ப4வதி ஶ்ரத்3தா4 தே3ஹிநாம் ஸா ஸ்வப4ாவஜா ।
ஸாத்விகீ ராஜஸீ சைவ தாமஸீ சேதி தாம் ஶ்ருணு ॥

---

யால் நிஷ்டா2ஶப்3த3த்திற்கு 'விநாஶம்' (அழிவு), 'தியானம்' முதலான மற்ற பொருள்கள் பொருந்தமாட்டா; 'நிலைநிற்குமிடம்' என்னும் பொருளே பொருந்தும். "நிலைநிற்குமிடம் ஸத்வமா, ரஜஸ்ஸா, தமஸ்ஸா" என்று கேட்டதற்குத் தாத்பர்யம் "அவர்கள் நிலைநிற்பது ஸத்வத்திலா, ரஜஸ்ஸிலா, அல்லது தமஸ்ஸிலா" என்பதேயாகும். இப்படிக் கேட்கும் அர்ஜுனனுக்கு, ஸத்வ ரஜஸ்தமோ கு3ணங்களையிட்டு அவர்களுக்கு விளையும் ப2லவேறுபாடுகளைக் கேட்பதிலேயே நோக்கு என விளங்குகிறது. (க்ருஷ்ண)

"க்ருஷிர் பூ4வாசக: ஶப்3தோ3 ணஶ்ச நிர்வ்ருதிவாசக: ।
விஷ்ணுஸ்தத்3ப4ாவயோகா3ச்ச க்ருஷ்ண இத்யபி4தீ4யதே ॥"

[க்ருஷிஶப்3த3ம் உழப்படும் பூ4மியைக்குறிப்பதன் மூலம் இவ்வுலகப்பயன்களைக் குறிக்கிறது; 'ண' என்னும் சொல் ஆனந்த3த்தைச் சொல்லுவதன் மூலம் மோக்ஷானந்த3த்தைக் குறிக்கிறது; விஷ்ணு இவ்வுலகப் பயன்களையும், மோக்ஷானந்த3த்தையும் அளிப்பவராகையாலே 'க்ருஷ்ணன்' எனப்படுகிறார்.] என்கிறபடியே விரும்பியவர்க்கு விரும்பிய ப2லனைக் கொடுக்கும் நீயே இவர்களுக்கு ஸத்வரஜஸ்தமோகு3ணங்களையிட்டு விளையும் ப2லவேறுபாடுகளைச் சொல்லவேண்டும் என்று கருத்து. 1

(ஸ்ரீப₄க₃வான் பதிலுரைத்தார்—)

தே₃ஹிநாம் — (ப்ராக்ருதமான) தே₃ஹத்தை உடையவர்களுக்கு, ஸ்வபா₄வஜா ஸா ஶ்ரத்₃த₄ா — அந்தந்த விஷயங்களில் ருசியினால் விளையும் அந்த சிரத்தை, ஸாத்விகீ ராஜஸீ சைவ தாமஸீ சேதி — ஸாத்விகமானது, ராஜஸமானது, தாமஸமானது என, த்ரிவித₄ா ப₄வதி — மூன்று வகைப்பட்டதாகிறது; தாம் — அந்த ஶ்ரத்₃தை₄யைப் பற்றிய ஸ்வபா₄வத்தை, ஶ்ருணு — கேட்பாயாக.

---

2, ஐயனவ னுக்காங் கறிய வுரைசெய்தான்
செய்ய கருமச் சிரத்தைதான் — மெய்யமருந்
தன்மையான் முக்குணத்தின் சார்வாகு மூவகையாம்
பன்மைநீ கேளாய் பயின்று.

ஐயன் — ஸ்வாமியான கண்ணன், அவனுக்கு—அந்த அர்ஜுனனுக்கு, ஆங்கு—அவ்விடத்தில், அறிய — (அவன்) புரிந்துகொள்ளும்படி, உரைசெய்தான் — (பின்வருமாறு) கேள்விக்கு பதிலுரைத்தான், செய்ய கருமச் சிரத்தைதான்—(சாஸ்திரங்களில் விதி₄க்கப்பட்டிருக்கையாகிற) செம்மையையுடைய கர்மங்களின் சிரத்தை, மெய் அமரும் தன்மையால் — தம் தே₃ஹத்தின் இயல்வோடு பொருந்திய அந்தந்த விஷயங்களில் ருசியினால், மூவகையாம் முக்குணத்தின் சார்வு ஆகும் — ஸாத்விகமானது, ராஜஸமானது, தாமஸமானது என்று முக்குணத்தையிட்டு மூன்று வகைப்பட்டதாகும்; பன்மை — அந்த மூன்றுவகையின் தன்மையை, நீ பயின்று கேளாய் – நீ கவனமாகக் கேட்பாயாக.

---

2. ஶாஸ்த்ரவிதி₄யைவிட்டு ஶ்ரத்₃தை₄யோடு செய்யப்படும் கர்மங்களின் ப₂லவேறுபாட்டைக்குறித்து அர்ஜுனன் கண்ணனின் திருவுள்ளத்திற்கு முரணாகக் கேட்ட கேள்வியில் தன் அனுதரவு தோற்றும்படி கண்ணன் அதற்கு உடனே பதிலளிக்காமல், க்ரமேண (5, 6 ஶ்லோகங்களில்) அந்த ஶ்ரத்₃தை₄யும் அக்கர்மங்களும்

भा ॥ सर्वेषां देहिनां श्रद्धा त्रिविधा भवति । सा च स्वभावजा -- स्वभावः स्वासाधारणो भावः, प्राचीनवासनानिमित्तस्तत्तद्रुचिविशेषः;

---

பயனற்றவை என்று பதிலளிக்கத் திருவுள்ளம்பற்றி, சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட யாக3ம் முதலானவை முக்குணங்களை யிட்டு, அளிக்கும் ப2லனில் வேறுபடுகையாலே மூவகைப்பட்டவை என விரிவாகக் காட்டுவதற்காக, இந்த ஶ்லோகத்தில் சாஸ்திரங்களை ஒட்டியிருக்கும் ஶ்ரத்3தை4 மூவகைப்பட்டது எனக் காட்டுகிறான். ஶாஸ்த்ரவிதி4க்கு முரணாயிருந்தாலும், யாக3ம்முதலானவை ஶ்ரத்3தை4யோடு செய்யப்படும்போது அதையிட்டு ஸாத்விகமாகவும், ஶாஸ்த்ரவிதி4க்கு முரணாயிருப்பதால் தாமஸமாகவும், சாஸ்த்ரத்தை மீறுவதும் ஶ்ரத்3தை4யும் சேர்ந்திருப்பதால் ராஜஸமாகவும் ஆவதாகக்கருதி அர்ஜுனன் அவற்றுக்கு முக்குணங்களை யிட்டுப் ப2லபே4த3த்தைச் சென்ற ஶ்லோகத்தில் கேட்டான். கண்ணன் தன் பதிலில் "ஶ்ரத்3தை4யோடு செய்தால்தான் ப2லன் விளையும் என்பது உண்மையே; ஆனால், அது சாஸ்த்ரங்களில் விதி4க்கப்பட்ட கர்மங்களுக்கே பொருந்தும்; அதிலும் அந்த ஶ்ரத்3தை4 ஒரேமாதிரியானதல்ல" என்னும் கருத்தாலே 2, 3, 4 ஶ்லோகங்களில் ஶாஸ்த்ரங்களையொட்டி ஶ்ரத்3தை4 மூவகைப்பட்டது என்பதை விளக்குகிறான்; இவற்றில் ஶாஸ்த்ரீயகர்மங்களில் முக்குணங்களையிட்டு உண்டாகும் ஶ்ரத்3தை4களின் வேறுபாட்டாலே ஸாத்விக ராஜஸ தாமஸ நிஷ்டை2கள் விளைகின்றன என்று சொல்லப்பட்டதாகிறது. (தே3ஹிநாம் ஶ்ரத்3தா4 த்ரிவிதா4 ப4வதி) பிரமன் தொடங்கியுள்ள ப்ராக்ருத ஜீவர்களின் ஶ்ரத்3தை4 அந்த ஜீவர்களின் தே3ஹம் ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களில் ஒரு கு3ணம் விஞ்சியிருப்பதையிட்டு, அக்குணத்திற்குரிய ஶ்ரத்தை விளைகிறது என்று கருத்து. (ஸாத்விகீ ராஜஸீ சைவ தாமஸீ சேதி த்ரிவிதா4 ப4வதி) தே3ஹத்தில் ஸத்வகு3ணம் விஞ்சியிருந்தால் ஸாத்விகஶ்ரத்3தை4யும், மற்ற இரு குணங்களில் ஒன்று விஞ்சியிருந்தால் முறையே ராஜஸ ஶ்ரத்3தை4யும் தாமஸஶ்ரத்3தை4யும் விளைகின்றன. இப்படி ஶ்ரத்3தை4 மூவகைப்படுகிறது என்றபடி. (ஸா-ஸ்வபா4வஜா)ஸ்வபா4வமாவது தனக்கேயுரிய பா4வம். அதாவது—தனக்கேயுரிய த4ர்மவிஶேஷம். பழையதான வாஸனையினாலே அந்தந்த விஷயங்களில் உண்டாகும் ருசிவிஶேஷங்களே இங்கு ஸ்வபா4வஶப்3த3த்தினால் குறிக்கப்படுகின்றன. ஆக, அந்தந்த

यत्र रुचिस्तत्र श्रद्धा जायते। श्रद्धा हि, स्वाभिमतं साधयत्येतदिति विश्वासपूर्विका साधने त्वरा। वासना रुचिश्च श्रद्धा चात्मधर्मा गुणसंसर्गजाः; तेषामात्मधर्माणां वासनादीनां जनकाः देहेन्द्रियान्तः-

---

ருசிவிஶேஷங்களினால் மூவகைப்பட்ட ஶ்ரத்3தை4கள் விளைகின்றன என்றதாயிற்று. எந்த விஷயத்தில் ருசிஉண்டாகிறதோ, அந்த விஷயத்திலேயே ஶ்ரத்3தை4 விளைகிறது என்பதையும், ருசியில்லையானால் ஶ்ரத்3தை4 விளைவதில்லை என்பதையும் உலகில் நாம் காண்கிறோம். ஆகையால் ருசி காரணம் என்றும், ஶ்ரத்3தை4 அதனால் உண்டாவது என்றும் அந்வயவ்யதிரேகங்களாலே ஸித்3தி4க்கிறது என்று கருத்து. ருசியைக் காட்டிலும் வேறுபட்ட ஶ்ரத்3தை4 என்பது யாது? எனில் ஶ்ரத்3தை4யாவது. — 'தான் விரும்பியதை இது ஸாதி4த்துக் கொடுக்கும்' என்னும் நம்பிக்கையோடு அதை ஸாதி4ப்பதில் உண்டாகும் த்வரை (வேக3ம்) ஆகும். "ஶ்ரத்3தா4 விஶ்வாஸ காங்க்ஷயோ:" [ஶ்ரத்3தா4ஶப்3த3ம் நம்பிக்கையையும், விருப்பத்தையும் குறிக்கும்] என்று நிக4ண்டுவில் ஶ்ரத்3தா4ஶப்3த3ம் வேக3த்தில் முடியும் நம்பிக்கையைக்குறிக்கும் என்று சொல்லப்பட்டதன்றோ. இனி, "காம: ஸங்கல்போ விசிகித்ஸா ஶ்ரத்3தா4ऽஶ்ரத்3தா4 த்4ருதிரத்4ருதிர் ஹ்ரீர்தீ4ர் பீ4ரித்யேதத் ஸர்வம் மந ஏவ" [ப்3ருஹ 3—5—3] [(விஷயங்களில் விருப்பமாகிற) காமம், (உறுதியாகிற) ஸங்கல்பம், ஐயம், ஶ்ரத்3தை4, ஶ்ரத்3தை4யின்மை, த்4ருதி(பிரீதி), பிரீதியின்மை, லஜ்ஜை, (ப்ரமாணங்களில் உண்டாகும்) அறிவு, (வரப்போகும் துன்பத்தைப் பற்றிய ஐயமாகிற) ப4யம் ஆகிய அனைத்தும் மனமே] என்று உபனிஷத்து ஶ்ரத்3தை4முதலானவற்றைமனத்தின் த4ர்மமாக ஓதுகையால் இவை ஆத்மாவில் இல்லை என விளங்குகிறது. ஸத்வாதி3 குணங்களால் விளைகையால் அந்த கு3ணங்களின் தன்மையாகவும் கூறலாம். அப்படியிருக்க, இங்கு "தே3ஹிநாம் ஸ்வப4ாவஜா ஶ்ரத்3தா4" என்று இவற்றை ஆத்மாவின் த4ர்மமாகக் கூறுவது எப்படி? என்னும் கேள்வி எழுகிறது. இயல்வாக ஸத்வாதி3 கு3ணஸம்ப3ந்தமற்ற ஆத்மாவுக்குக் கர்மம் காரணமாக—ஸத்வாதி3கு3ணங்களையுடைய ப்ரக்ருதியின் பரிணாமமான ஶரீரத்தின் தொடர்பினால் (ஆத்மாவின்) த4ர்மபூ4தஜ்ஞானம் வாஸநா ருசி ஶ்ரத்4தை4 முதலானவையாகப் பரிணமிக்கின்றது. இப்படி ஆத்மாவின் த4ர்மமாயிருக்கும் வாஸநா ருசிஶ்ரத்3தை4களை உண்டாக்கியவை எவை? எனில்: தே3ஹம்,

करणविषयगता धर्माः कार्यैर्निरूपणीयाः सत्त्वादयो गुणाः — सत्त्वादिगुणयुक्तदेहाद्यनुभवजा इत्यर्थः । ततश्चेयं श्रद्धा सात्त्विकी राजसी तामसी चेति त्रिविधा । तामिमां श्रद्धां शृणु; सा श्रद्धा यत्स्वभावा, तं स्वभावं शृण्वित्यर्थः ॥ २ ॥

---

இந்திரியம், மனம், ஶப்$_3$த$_3$ாதி$_3$விஷயங்கள் முதலானவற்றிலுள்ள கு$_3$ணங்களான ஸத்வ ரஜஸ் தமோ கு$_3$ணங்களேயாம். சில மூலிகைகளைச் சேர்த்து அக்$_3$னி ஸம்ப$_3$ந்த$_4$த்தை உண்டாக்கினால் ப்ருதி$_2$விபரிணாமமான சுவையற்ற காய் முதலானவை சுவையுடைய கனி முதலானவையாகப் பரிணமிப்பதுபோலே இது என்று கொள்ளவேண்டும். இந்த ஸத்வாதி$_3$ கு$_3$ணங்களைப் புலன்களால் அறிய முடியவில்லையே; இவற்றை எப்படி ஒப்புக்கொள்வது? எனில்: புலன்களால் அறிய முடியாவிடினும் இக்குணங்கள் இன்ன இன்ன விளைவுகளை உண்டாக்கும் என்று சாஸ்த்ரத்தில் கூறியிருக்கிறபடியால், அந்த விளைவுகளைக்கொண்டு இக்குணங்கள் ஶரீரம் முதலானவற்றில் உள்ளதாக அறுதியிடலாம். புலன்களுக்கு அப்பாற்பட்டவையும், எவராலும் அனுப$_4$விக்கப்படாதவையுமான இந்த கு$_3$ணங்கள் வாஸனை முதலானவற்றை உண்டாக்குகின்றன என்று எப்படி அறுதியிடுவது? எனில் ஸத்வாதி$_3$கு$_3$ணமுடையவையென்று சாஸ்திரங்களின் மூலம் அறியப்படும் முற்கூறிய தே$_3$ஹம், இந்திரியம், மனம் விஷயங்கள் ஆகியவற்றை அனுப$_4$விக்கும்போதே இவை உண்டாகிறபடியால், இவை ஸத்வாதி$_3$கு$_3$ணங்களால் உண்டாகின்றன என்று அறுதியிடலாம். ஆகையால், காரணமான சரீராதி$_3$களில் ஒவ்வொரு கு$_3$ணம் மிகுதியாயிருந்து வாஸநா ருசி ஶ்ரத்$_3$தை$_4$களை உண்டாக்குவதையிட்டு, ஶ்ரத்$_3$தை$_4$யானது இங்கு ஸாத்விகீ, ராஜஸீ, தாமஸீ என்று மூவகைப்பட்டதாகக் குறிப்பிடப்படுகிறது. (தாம் ஶ்ருணு) அந்த மூவகைப்பட்ட ஶ்ரத்$_3$தை$_4$ எத்தகையது என்பதை நீ கேட்பாயாக. ஶ்ரத்$_3$தை$_4$ மூவகைப்பட்டது. என்று கூறிய பின்பு மறுபடியும் 'அதைக் கேட்பாய்' என்று சொல்லுவதற்குக் காரணம் என்னவெனில்; ஶ்ரத்$_3$த$_4$ாஸ்வரூபமும், அது மூவகைப்பட்டது என்றும் பொதுவாக அறியப்பட்ட போதிலும், அறியப்படாத அதன் தன்மைகளை இனிமேல் கூறுகிறேன்; நீ கேட்பாயாக என்று கருத்தாகையாலே குறையில்லை. 2.

Characterization — அதன் நடையின் பரிமாணம்.
உடல்-புலன்கள்-மனம்-விழுங்கள்-



सत्त्वानुरूपा सर्वस्य श्रद्धा भवति भारत ।
24-8-'10 श्रद्धामयोऽयं पुरुषो यो यच्छ्रद्धः स एव सः ॥ ३ ॥

3. ஸத்வாநுரூபா ஸர்வஸ்ய ஶ்ரத்₃தா₄ ப₄வதி பா₄ரத ।
ஶ்ரத்₃தா₄மயோऽயம் புருஷோ யோ யச்ச்₂ரத்₃த₄: ஸ ஏவ ஸ: ॥

பா₄ரத — ப₄ரதகுலத்துதித்தவனே! ஸர்வஸ்ய—எல்லா மனிதனுக்கும், ஸத்வாநுரூபா — (தன்) மனத்திற்கு அனுகு₃ணமாகவே, ஶ்ரத்₃தா₄ ப₄வதி — சிரத்தை விளைகிறது; அயம் புருஷ: — இந்த மனிதன், ஶ்ரத்₃தா₄ மய: — சிரத்தையின் பரிணுமமேயாவான்; ய: — எந்த மனிதன், யச்ச்₂ரத்₃த₄: — எந்த சிரத்தையோடு கூடியிருக்கிருனே, ஸ ஏவ ஸ: — அந்த சிரத்தையின் பரிணுமமாகவே உள்ளான்.

---

3. நீடுலகி லெல்லார்க்கு நெஞ்சுக் கனுகுணமாப்
பாடுபெறு மிந்தப் பருஞ்சிரத்தை — நாடுஞ்
சிரத்தையுரு வாம்புருடன் சேர்ந்தே சிரத்தை
யுரத்ததெவற் காங்கவனு முற்று.

நீடுலகில் எல்லார்க்கும் — இப்பெரியவுலகில் எல்லா மனிதர்களுக்கும், நெஞ்சுக்கு அனுகுணமா — (தம்) மனத்திற்கு அனுகுணமாகவே, இந்த பரும் சிரத்தை பாடுபெறும் — பெரிதான இந்த சிரத்தை உண்டாகும்; புருடன் — இந்த மனிதன், நாடும் சிரத்தை உருவாம்— தான் கொண்ட சிரத்தையின் பரிணுமமாகவே உள்ளான்; எவற்கு சிரத்தை சேர்ந்தே உரத்தது — எவனுக்கு (எந்த விதமான) சிரத்தை நெஞ்சில் உண்டாயிருக்கிறதோ, ஆங்கு அவனும் உற்று — அவன் அந்த சிரத்தையின் பரிணுமமாகவே உள்ளான்.

भा।। सत्त्वम्--अन्तःकरणम्, सर्वस्य पुरुषस्यान्तःकरणानुरूपा श्रद्धा भवति; अन्तःकरणं यादृशगुणयुक्तम्, तद्विषया श्रद्धा जायत

3. எந்த விஷயத்தில் சிரத்தையுள்ளவனுகிருனே, அதற்குத் தக்க பலனையடைகிருன் என்கிருன். (ஸத்வாநுருபா ஸர்வஸ்ய ஶ்ரத்₃த₄ா ப₄வதி) அவனவனுடைய மனத்துக்கு அனுகு₃ணமாகவே சிரத்தை அமைகிறது; மனம் ஸத்வரஜஸ்தமங்களில் எதை ப்ரத₄ானமாகக் கொண்டதாயிருக்கிறதோ அதையொட்டிய ஶ்ரத்₃தை₄யே அவனுக்கு உண்டாகிறது என்று கருத்து. மனத்தில் எந்த கு₃ணம் ப்ரத₄ானமாயுள்ளதோ அதற்கு அனுகு₃ணமாகவே வாஸநாருசிகள் அவனுக்கு அமைந்து ஒவ்வொரு விஷயத்தில் அவனை ஶ்ரத்₃தை₄கொள்ள வைக்கின்றன என்றபடி. இங்கு ஸத்வஶப்₃த₃ம் ப்ரகரணத்தையொட்டி ஸத்வகு₃ணத்தைச் சொல்லுவதாக ஆகலாமே எனில்; ஆகாது, எல்லாப் புருஷர்களுக்கும் ஸத்வகு₃ணத்தையொட்டியே ஶ்ரத்₃தை₄யுண்டாகிறதென்று கொண்டால், அனைவர்க்கும் ஸாத்விக ஶ்ரத்₃தை₄யுண்டாகுமேயொழிய ராஜஸதாமஸஶ்ரத்₃தை₄கள் உண்டாகமாட்டா; ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று மூன்று வகைப்பட்டது ஶ்ரத்₃தை₄ என்று சென்ற ஶ்லோகத்தில் கூறியது பொருந்தாமற் போய்விடும். ராஜஸதாமஸஶ்ரத்₃தை₄கள் உண்டாவதற்கும் ஸத்வகு₃ணம் துணைநிற்கிறதாகையால் மூன்று வித₄மான ஶ்ரத்₃தை₄கள் உண்டாகலாமே எனில்: ரஜஸ்தமோகு₃ணங்களும் ஸாத்விக ஶ்ரத்₃தை₄ உண்டாவதற்குத் துணை நிற்கின்றனவாகையால், "ஸத்வகு₃ணத்தை ஒட்டியே ஶ்ரத்₃தை₄ உண்டாகிறது" என்றது பொருந்தாது. ஒவ்வொரு மனிதனுக்கும் வாதபித்தஶ்லேஷ்மங்களில் ஒன்று மிகுந்திருக்கும்போது அதற்கனுகு₃ணமான நோய் உண்டாவது போலே, ஒவ்வொரு புருஷனுக்கு முக்குணங்களில் ஒன்று மிகுந்தும், மற்றவையிரண்டும் அடங்கியுமிருப்பதனுலேயே, மிகுந்திருப்பதையொட்டிய ஶ்ரத்₃தை₄ அவனுக்கு உண்டாகிறது என்பதன்றோ உண்மை நிலை. ஆகையால், ஸத்வஶப்₃த₃த்திற்கு 'மனம்' என்றே பொருள் கொள்ள வேண்டும். சென்ற ஶ்லோகத்தில் "தே₃ஹிநாம் ஸா ஸ்வபா₄வஜா" என்றவிடத்தில், "ருசியாலே அந்தந்த ஶ்ரத்₃தை₄கள் விளைகின்றன" என்று கூறியிருக்க, இங்கு மனம் ஒன்றே ஶ்ரத்₃தை₄க்குக் காரணம் என்று கூறுவானேன்? என்று ஆராய்ந்தால், "ஸத்

इत्यर्थः । सत्त्वशब्दः पूर्वोक्तानां देहेन्द्रियादीनां प्रदर्शनार्थः । श्रद्धामयोऽयं पुरुषः; श्रद्धामयः — श्रद्धापरिणामः । यो यच्छ्रद्धः — यः

---

வாநுரூபா ஸர்வஸ்ய ஶ்ரத்$_3$தா$_4$ ப$_4$வதி'' என்று ''அனைவருக்கும் மனத்துக்கு அனுகு$_3$ணமாகவே ஶ்ரத்$_3$தை$_4$ விளைகிறது'' என்று கூறுகையாலே, சிலருக்கு மனத்தாலும், சிலருக்கு ஸ்வப$_4$ாவமாகிற ருசியாலும் ஶ்ரத்$_3$தை$_4$ உண்டாகிறது என்று கூற முடியாது. ''மனத்திற்கு அனுகு$_3$ணமாகவே ஶ்ரத்$_3$தை$_4$ உண்டாகிறது'' என்று இங்கு கூறுகிறபடியால், ருசியும் மனமும் சேர்த்து ஶ்ரத்$_3$தை$_4$யை உண்டாக்குகின்றன என்றும் கொள்ளமுடியாது; இனி, இதை எப்படிப்பொருந்தவிடுவது? எனில் ஒவ்வொரு மனிதனுக்கும் அவனுடைய தே$_3$ஹம், இந்திரியம், மனம், விஷயங்கள் ஆகியவை தமமிடமுள்ள ஸத்வாதி$_3$கு$_3$ணங்களின் மிகுதிக்கேற்ப, ஒவ்வொரு விஷயத்தில் ருசியையுண்டாக்கி அவற்றில் ஶ்ரத்$_3$தை$_4$யை விளைக்கிறது என்று கொள்ளுகிறோமாகையாலே குறையில்லை இங்கு 'ஸத்வம்' என்று மனத்தைச் சொன்னது முன் சொல்லப்பட்ட தே$_3$ஹம், இந்திரியம, விஷயங்கள் ஆகியவற்றுக்கும் உபலக்ஷணம். தே$_3$ஹம், மனம், இந்திரியம் முதலானவை தம்மிடம் மிகுதியாயுள்ள ஸத்வாதி$_3$கு$_3$ணங்களுக்கேற்ப ஒவ்வொரு விஷயத்தில் ருசியை உண்டாக்கி, ஸாத்விகம் முதலான மூவகைப்பட்ட ஶ்ரத்$_3$தை$_4$களை விளைக்கின்றன என்று கருத்து. இனி, ஶ்லோகத்தின் பிற்பாதியில் எத்தகைய ஶ்ரத்$_3$தை$_4$யை உடையவனாக மனிதன் இருக்கிறானோ, அத்தகைய ப$_2$லனே அவனுக்கு விளைகிறது என்று சொல்லப்படுகிறது. (ஶ்ரத்$_3$த$_4$ாமயோ$\circ$யம் புருஷ:) ஒவ்வொரு மனிதனும் தனக்கு உள்ள ஶ்ரத்$_3$தை$_4$யின் பரிணாமமாகவேயிருக்கிறான். ''ஶ்ரத்$_3$த$_4$ாமய:'' என்னுமிடத்தில் ''ஸ்வார்த்தே$_2$ மயட்'' என்று கொண்டால், ''இவன் ஶ்ரத்$_3$தை$_4$யாகவேயிருக்கிறான்'' என்பதில் எப்பயனுமில்லாமையால் பொருந்தாது. 'மயட்' ப்ரத்யயம் மிகுதியைக்காட்டுகிறது என்று கொண்டால், ''ஶ்ரத்$_3$தை$_4$யை மிகுதியாகக் கொண்டிருக்கிறான்'' என்று கூறுவது முன்பின் பகுதிகளுக்குப் பொருந்தவில்லை. ஆகையால் 'மயட்' ப்ரத்யயத்திற்கு 'விகாரம்' என்னும் பொருளைக்கொண்டு, ''ஶ்ரத்$_3$தை$_4$யின் ப$_2$லனையிட்டு ஶ்ரத்$_3$தை$_4$யின் பரிணாமமாகவே மனிதன் இருக்கிறான்'' என்று இங்கு பொருள் கொள்கிறோம். ஆக, மூன்

पुरुषो यादृश्या श्रद्धया युक्तः, स एव सः — स तादृशश्रद्धापरिणामः । पुण्यकर्मविषये श्रद्धायुक्तश्चेत्, पुण्यकर्मफलसंयुक्तो भवतीति श्रद्धाप्रधानः फलसंयोग इत्युक्तं भवति ॥ ३ ॥

---

ருவது பாத₃த்தில் "ஶ்ரத்₃தை₄க்கு அனுகு₃ணமாகவே மனிதன் ப₂லனையுடையவனுகிறுன்" என்று பொதுவாகச் சொல்லப் பட்டது. இனி, நாலாவது பாத₃த்தில், "குறிப்பிட்ட ஶ்ரத்₃தை₄யையுடையவன் குறிப்பிட்ட ப₂லனையடைகிறுன்" என்று கூறுவதன் மூலம் மூன்ருவது பாத₃ம் விவரிக்கப்படுகிறது- (யோயச்ச்₂ரத்₃த₄: ஸ ஏவ ஸ:) எவன் எத்தகைய ஶ்ரத்₃தை₄யை உடையவனுகிறுனே, அவன் அத்தகைய ஶ்ரத்₃தை₄யின் பரிணுமமாகவே உள்ளான். "ஆயுர்க்₄ருதம்" [யஜு॰ 2-3-2-2] என்னும் வாக்யத்தில் நெய் நீண்ட ஆயுளுக்குக் காரணமாயிருப்பதையிட்டு, "நெய்யே (நீண்ட) ஆயுள்" என்று சொல்லப் பட்டதுபோலே, இங்கும் "ஸ ஏவ ஸ:" என்றது "அவன் அந்த ஶ்ரத்₃தை₄யின் பரிணுமமாகவே ஆகிறுன்" என்னும் கருத்துடையது. ஆகையால் "ஸ ஏவ ஸ:" [அவனே அவன்] என்று உத்₃தே₃ஶ்யமும் விதே₄யமும் ஒன்ருயிருக்கையால் புநருக்திதோ₃ஷம் விளைகிறது என்னும் ஐயத்திற்கு இடமில்லை. இனி, "ஜீவன் நித்யனுகையால், அவனை ஶ்ரத்₃தை₄யின் பரிணுமம் என்று கூறுவது பொருந்தவில்லை; த₄ர்மபூ₄தஜ்ஞானத்தின் பரிணுமமும் இந்திரியங்களின் மூலமாகவே உண்டாகிறது. தே₃ஹம் முதலானவை அசித்தின் பரிணுமங்களேயாகும்; அப்படியிருக்க, எதையிட்டு 'ஜீவன் ஶ்ரத்₃தை₄யின் பரிணுமம்' என்று இங்கு சொல்லப்படுகிறது?" என்னும் கேள்வி எழுகிறது. ஸாத்விகாதி₃ஶ்ரத்₃தை₄களின் ப₂லபே₄த₃த்தைப் பற்றியே இங்கு கேள்வி எழுந்துள்ளபடியால், விளையும் ப₂லனையிட்டே புருஷன் ஶ்ரத்₃தை₄யின் பரிணுமமாகக் கூறப்படுகிறுன் என்பது இக் கேள்விக்கு பதில்; அதாவது:- புண்யகர்ம விஷயத்தில் ஶ்ரத்₃தை₄யுடையவனுனுல், புண்யகர்மத்தின் ப₂லனையுடையவனுகிறுன்; பாபகர்மவிஷயத்தில் ஶ்ரத்₃தை₄யுடையவனுனுல், பாபகர்மத்தின் ப₂லனையுடையவனுகிறுன்; ஆக, இவ்வண்ணமாக ஶ்ரத்₃தை₄யையிட்டே ப₂லம் விளைகிறது என்று சொல்லப்பட்டதாகிறது. (பா₄ரத) பா₄ரதகுலத்துதித்த நீ புண்யகர்மமான த₄ர்மயுத்₃த₄த்தில் ஶ்ரத்₃தை₄யுடையவனுக வேண்டும் என்று கருத்து. 3.

கிரைட் பாமோற்கவம் ஸேவை.



भा ।। तदेव विवृणोति —

यजन्ते सात्त्विका देवान् यक्षरक्षांसि राजसाः ।

25-8-10 प्रेतान् भूतगणांश्चान्ये यजन्ते तामसा जनाः ।। ४ ।।

4. யஜந்தே ஸாத்விகா தே₃வாந் யக்ஷரக்ஷாம்ஸி ராஜஸா: ।
ப்ரேதாந் பூ₄தக₃ணாம்ஶ்சாந்யே யஜந்தே தாமஸா ஜநா: ॥

ஸாத்விகா: — ஸத்வகு₃ணத்தை மிகுதியாகக்கொண்டு ஸாத்விகஶ்ரத்₃தை₄யை உடையவர்கள், தே₃வாந் — தே₃வர்களை, யஜந்தே — ஆராதி₄க்கிறார்கள்; ராஜஸா: — ரஜோகு₃ணத்தை மிகுதியாகக்கொண்டு ராஜஸ ஶ்ரத்₃தை₄யை உடையவர்கள், யக்ஷரக்ஷாம்ஸி (யஜந்தே) — யக்ஷர்களையும்; ராக்ஷஸர்களையும் ஆராதி₄க்கிறார்கள்; அந்யே— (இவ்விருவரிலும்) மிகவும் வேறுபட்டவர்களாய், தாமஸா: ஜநா: — தமோகு₃ணத்தை மிகுதியாகக்கொண்டு தாமஸ ஶ்ரத்₃தை₄யை உடையவர்கள், ப்ரேதாந் — இறந்தவர்களை யும், பூ₄தக₃ணாந் ச — பூ₄தக₃ணங்களையும், யஜந்தே —ஆரா தி₄க்கிறார்கள்.

---

4. சத்துவத்தர் சார்வமரர் தாமியக்க ரோடரக்கர்
மத்தியத்தர் சேரும் வகையதுதான் — புத்திசெறு
புன்மைத் தமோகுணத்தர் பூதம் பிரேதகணந்
தன்னைச் சமைந்தணைவர் தாம்.

சத்துவத்தர்தாம் — ஸத்வகு₃ணத்தை மிகுதியாகக் கொண்டு ஸாத்விகஶ்ரத்₃தை₄யை உடையவர்கள், அமரர் சார்வு — தே₃வர்களை ஆராதி₄ப்பர்; வகையதுதான் — அவ்வண்ணமாகவே, மத்தியத்தர் தாம் — நடுக்குணமான ரஜோகு₃ணத்தை மிகுதியாகக்கொண்டு ராஜஸஶ்ரத்₃ தை₄யை உடையவர்கள், இயக்கரோடு அரக்கர் சேரும் — யக்ஷர்களையும், அரக்கர்களையும் ஆராதி₄ப்பர்; புத்திசெறு

भा ॥ सत्त्वगुणप्रचुराः सात्त्विकया श्रद्धया युक्ता देवान्

---

புன்மைத் தமோகுணத்தர் தாம் — அறிவை அழிக்கும் தாழ்வுடைய தமோகு₃ணத்தை மிகுதியாகக்கொண்டு தாமஸ ஶ்ரத்₃தை₄யை உடையவர்கள், பூதம் பிரேத கணம் தன்னைச் சமைந்து அணைவர் — பூ₄தகு₃ணங்களையும், பிரேத (இறந்தவர்) கு₃ணங்களையும் பொருந்தி ஆராதி₄ப்பர்.

---

4. இரண்டாவது ஶ்லோகத்தில் ஸாத்விகராஜஸதாமஸ பே₄த₃த்தாலே ஶ்ரத்₃தை₄ மூவகைப்பட்டது என்று காட்டப்பெற்று, மூன்றும் ஶ்லோகத்தில் அந்தந்த ஶ்ரத்₃தை₄யை ஒட்டியே அவனவனுக்குப் ப₂லம் கிடைக்கிறது என்று சொல்லப்பெற்றது. இங்கு அந்த மூன்று வகைப்பட்ட ஶ்ரத்₃தை₄யை உடையவர்களும் யாரை ஆராதி₄ப்பார்கள் எனக்காட்டுவதன் மூலம் இரண்டாம் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட மூவகையான ஶ்ரத்₃தை₄களும், மூன்றும் ஶ்லோகத்தில் உணர்த்தப்பட்டபடி அவரவர்களுக்குக் கிடைக்கும் வேறுபட்ட ப₂லன்களும் இந்த ஶ்லோகத்தில் விளக்கப்படுகின்றன. (ஸாத்விகா: தே₃வாந் யஜந்தே) ஸத்வகுணத்தை ரஜஸ்தமோ கு₃ணங்களைக்காட்டிலும் அதி₄கமாகத்தமதுஶரீரேந்திரியமனங்களில் உடையவர்களாய், அதனாலேயே ஸாத்விக ஶ்ரத்₃தை₄யை உடையவர்களான ஜீவர்கள் தம்மைக் காட்டிலும் ஸத்வகு₃ணம் மிகுதியாகவுடைய தே₃வர்களை ஆராதி₄க்கிறார்கள்; அந்த தேவர்களைக் காட்டிலும் மிகுதியான ஸத்வகு₃ணத்தையும், அதனால் உண்டான ப₄க₃வத் பாரதந்திரிய ஜ்ஞானத்தையும் உடைய பரமஸாத்விகர்களான வைஷ்ணவர்கள் தே₃வாதி₃தே₃வனாய், பரமஸத்வ மூர்த்தியான பரமபுருஷனான என்னை உபாஸிக்கிறார்கள் என்பதும் இங்கு குறிப்பாலே உணர்த்தப்படுகிறது. எல்லா ஜீவர்களும் ஸத்வ ரஜஸ்தமோ கு₃ணங்கள் மூன்றையும் உடையவர்களாகையாலே, இங்கு ஸாத்விகர்கள், ராஜஸர்கள், தாமஸர்கள் என்று கூறுவது மற்ற இரண்டு குணங்களைக் காட்டிலும் முறையே ஸத்வம், ரஜஸ், தமஸ் ஆகியவை விஞ்சியிருப்பதையிட்டு என்று அறியத்தக்கது. ஜீவன் ஸாத்விகனாயிருப்பதால் அவனுடைய ஶ்ரத்₃தை₄ ஸாத்விக

यजन्ते। दुःखासंभिन्नोत्कृष्टसुखहेतुभूतदेवयागविषया श्रद्धा सात्विकीत्युक्तं भवति। राजसा यक्षरक्षांसि यजन्ते। अन्ये तु तामसा जनाः प्रेतान् भूतगणान् यजन्ते। दुःखसंभिन्नाल्पसुखजननी राजसी श्रद्धा; दुःखप्रायात्यल्पसुखजननी तामसीत्यर्थः ॥ ४ ॥

---

ஶ்ரத்3தை4யாகிறது. துன்பம் கலவாத உயர்ந்த ஸுக2த்துக்குக் காரணமான தே3வயாக3 விஷயமான ஶ்ரத்3தை4 ஸாத்விகஶ்ரத்3தை4 என்றதாகிறது. "தாம் ஶ்ருணு" என்று இரண்டாம் ஶ்லோகத்தில் இந்த மூன்று வகையான ஶ்ரத்3தை4களைப்பற்றி விளக்குகிறேன் என்றே கூறினன்ரு; ஆராதி4க்கப்படுபவர்களின் ஸாயுஜ்யம், ஸாருப்யம், ஸாமீப்யம், ஸாலோக்யம் ஆகியவற்றை ஆராதி4ப்பவர்கள் அடைகிருர்களாகையாலே, தேவர்களை ஆராதி4ப்பவர்கள் தே3வலோகத்திற்குச் சென்று துன்பங்கலவாத மிகுந்த இன்பத்தை அடைவார்கள் என்பது சாஸ்த்ரஸித்3த4ம். (ராஜஸா: யக்ஷரக்ஷாம்ஸி யஜந்தே) ரஜோகு3ணத்தை ஸத்வதமோகு3ணங்களைக் காட்டிலும் அதி4கமாகத் தமது ஶரீரேந்திரிய மனங்களில் உடையவர்களாய், அதனுலேயே ராஜஸஶ்ரத்3தை4யை உடையவர்களான ஜீவர்கள், தம்மைக்காட்டிலும் ரஜோகு3ணம் மிகுதியாகவுடைய யக்ஷர்களையும், அரக்கர்களையும் ஆராதி4க்கிருர்கள். அதனுல் அவர்களுடைய ஸாயுஜ்ய ஸாருப்ய ஸாமீப்ய ஸாலோக்யங்களை அடைந்து துன்பம் கலந்த அற்பஸுக2முடைய ப2லனைப் பெறுகிருர்கள் என்கை. (அந்யே தாமஸா:) முற்கூறிய இருவரைக் காட்டிலும் மிகத்தாழ்ந்தவர்களாய், தமோகு3ணத்தை ஸத்வரஜஸ்ஸுக்களைக் காட்டிலும் மிகுதியாகத் தமது சரீரேந்திரிய மனங்களில் உடையவர்களாய், அதனுலேயே தாமஸ ஶ்ரத்3தை4யை உடையவர்களான ஜீவர்கள். (ப்ரேதாந் பூ4தக3ணும்ஶ்ச யஜந்தே) இறந்தவர்களான பிரேதக3ணங்களையும், ருத்3ர பார்ஷத3ர்களான பூ4தக3ணங்களையும் ஆராதிக்கிருர்கள். அதனுல் அவர்களுடைய ஸாயுஜ்ய ஸாருப்ய ஸாமீப்ய ஸாலோக்யங்களை அடைந்து பெரும்பாலும் துன்பமேயான அத்யல்ப ஸுக2த்தைப் பெறுகிருர்கள் என்று கருத்து. 4.

भा ॥ एवं शास्त्रीयेष्वेव यागादिषु श्रद्धायुक्तेषु गुणतः फलविशेषः, अशास्त्रीयेषु तपोयागप्रभृतिषु मदनुशासनविपरीतत्वेन न कश्चिदपि सुखलवः, अपि त्वनर्थ एवेति हृदि निहितं व्यञ्जयन्नाह–

अशास्त्रविहितं घोरं तप्यन्ते ये तपो जनाः ।
दम्भाहङ्कारसंयुक्ताः कामरागबलान्विताः ॥ ५ ॥
कर्शयन्तश्शरीरस्थं भूतग्राममचेतसः ।
मां चैवान्तश्शरीरस्थं तान्विद्ध्यासुरनिश्चयान् ॥ ६ ॥

5. அஶாஸ்த்ரவிஹிதம் கோ$_4$ரம் தப்யந்தே யே தபோ ஜநா: ।
தம்$_3$ப$_4$ாஹங்காரஸம்யுக்தா:, காமராக$_3$ப$_3$லாந்விதா: ॥
6. கர்ஶயந்த: ஶரீரஸ்த$_2$ம் பூ$_4$தக்$_3$ராமமசேதஸ: ।
மாம் சைவாந்த:ஶரீரஸ்த$_2$ம் தாந் வித்$_3$த்$_4$யாஸுர-
நிஶ்சயாந் ॥

யே ஜநா: — எந்த மனிதர்கள், அஶாஸ்த்ரவிஹிதம் — சாஸ்திரங்களில் விதிக்கப்படாதாய், கோ$_4$ரம் — மிகக் கடுமையான, தப: தப்யந்தே — தவத்தையும் யாக$_3$த்தையும் செய்கிறார்களோ, த$_3$ம்ப$_4$ாஹங்கார ஸம்யுக்தா: — ட$_3$ம்ப$_4$ம் அஹங்காரம் ஆகியவற்றோடு கூடியவர்களாய், காமராக$_3$ப$_3$லாந்விதா: — காமத்தோடும், ராக$_3$த்தோடும் கூடிய ப$_3$லத்தை உடையவர்களாய், அசேதஸ: — அறிவற்றவர்களாய், ஶரீரஸ்த$_2$ம் பூ$_4$தக்$_3$ராமம் — தம் சரீரத்திலிருக்கும் பஞ்சபூ$_4$தங்களையும், கர்ஶயந்த: — வருந்தச்செய்கிறவர்களாய், அந்த:ஶரீரஸ்த$_2$ம் மாம் ச ஏவ — சரீரத்தினுள்ளிருக்கும் எனதம்ஶமான தமது ஜீவஸ்வரூபத்தையும், கர்ஶயந்த: — வருந்தச்செய்கிறவர்களாய் (எவர்கள் தவத்தையும் யாக$_3$த்தையும் செய்கிறார்களோ), தாந் — அவர்களை, ஆஸுரநிஶ்சயாந் வித்$_3$தி$_4$ — (எனது ஆணையை மீறுதலாகிற) ஆஸுரமான உறுதியை உடையவர்களென்று அறிவாய்.

5. கோரமாய்ச் சாத்திரத்திற் கூருத் தவந்தன்னைச்
சேரவே யாரியல்வார் டம்பமுடன்—ஈரமில்லா
வாங்காரங் கூடி யதிகாம ராகங்கள்
தீங்காகுந் திண்மை செறிந்து.

6. உற்றவுடற் பூதங்க டன்னை யொருநின்றே
மற்றதனுண் மேவுயிராய் மன்னெனையும்—பற்றற்
றறவருந்து விப்பரவ ராசுரமாம் புத்தி
மறவ றெனநினைநீ மற்று.

கோரமாய் — மிகக்கடுமையாய், சாத்திரத்தில் கூரு — சாஸ்திரங்களில் கூறப்பட்டதான, தவம் தன்னை — தவத்தையும் (யாகத்தையும்), டம்பமுடன் சேரவே — டம்பத்துடன் கூடியவர்களாய், ஈரமில்லா ஆங்காரங் கூடி— கருணையில்லாத அஹங்காரத்தோடு கூடியவர்களாய், அதிகாம ராகங்கள் தீங்காகும் திண்மை செறிந்து — மிகுந்த காம ராகங்களால் தீயதான பலத்தோடு சேர்ந்தவர்களாய், யார் இயல்வார் — எவர்கள் செய்கிறார்களோ,) மற்று அவர் — மிகத்தாழ்ந்த அவர்கள், (உற்ற உடல் பூதங்கள் தன்னை ஒருநின்றே — (தம் சரீரத்தில்) இருக்கும் ஐந்து பூதங்களையும் வருந்தச் செய்கின்றவர்களாய், மற்று — அதற்குமேல், அதனுள் மேவு உயிராய்மன்(னு) எனையும்— அந்த சரீரத்தினுள் இருக்கும் உயிராகப் பொருந்தியிருக்கும் என்னையும், பற்று அற்று — கருணையில்லாமல், அற வருந்துவிப்பர் — மிகவும் வருந்தச்செய்பவர்களாய், ஆசுரமாம் புத்தி மறவர் — (எனது ஆணையை மீறுதலாகிற) ஆஸுரமான உறுதியை உடையவர்கள், என — என்று, நீ — நீ, நினை — நினைப்பாயாக.

अशास्त्रविहितमतिघोरमपि तपो ये जनाः तप्यन्ते। प्रदर्शनार्थमिदम्; अशास्त्रविहितं बह्वायासं यागादिकं ये कुर्वते, दम्भाहङ्कार-

5, 6. இவ்வண்ணமாக, ஶாஸ்த்ரங்களில் விதி₄க்கப்படாதிருந்தபோதிலும் ஶ்ரத்₃தை₄யுடன் செய்யப்பட்ட கர்மங்களின் ப₂லபே₄த₃த்தைப் பற்றிக்கேட்ட அர்ஜுனனுக்கு, ஶாஸ்த்ரங்களில் விதி₄க்கப்பட்ட யாக₃ம் முதலான கர்மங்களே ஶ்ரத்₃தை₄யுடன் அனுஷ்டி₂க்கப்படும்போது, ஸத்வ ரஜஸ் தமோ கு₃ணங்களாயிட்டு ப₂லனில் வேறுபடுகையாலே மூவகைப்படும் என்று 2, 3, 4 ஶ்லோகங்களில் பதிலுரைப்பதின் மூலம் ஶாஸ்த்ரங்களில் விதி₄க்கப்படாத தவம் யாக₃ம் முதலான கர்மங்களுக்கு எப்போதும் எப்பயனும் இல்லை என்று உணர்த்தப்பட்டது. அத்தகைய கர்மங்கள் எனது ஆணையை மீறுகின்றவையாயிருக்கையாலே சிறிது ஸுக₂த்தையும் விளைப்பதில்லை என்பதோடல்லாமல் அநர்த்த₂த்தையே விளைக்கின்றனவென்று தன் கருத்தை வெளிப்படையாகக் கூறுகிறுன் இவ்விருஶ்லோகங்களிலும். சென்ற அத்தியாயத்திலும், "ந ஸ ஸித்₃தி₄மவாப்நோதி ந ஸுக₂ம்" [16-23] என்று ஶாஸ்த்ர விதி₄யை மீறுகிறவனுக்கு எந்த ஸித்₃தி₄யும் ஸுக₂முமில்லை என்றும், "பதந்தி நரகேऽஶுசௌ" [16-16] என்று அவனுக்கு நரகமே ப₂லம் என்றும் கூறப்பட்டதன்றே. (யே ஜநா: அஶாஸ்த்ரவிஹிதம் கோ₄ரம் தப: தப்யந்தே) எந்த ஜனங்கள் ஶாஸ்த்ரங்களில் விதி₄க்கப்படாதபோதிலும் மிகக்கடுமையாக முயன்று அனுஷ்டி₂க்கப்படும் தவத்தைச் செய்கிறுர்களோ. "யே ஶாஸ்த்ர விதி₄முத்ஸ்ருஜ்ய யஜந்தே ஶ்ரத்₃த₄யாந்விதா:" [17-1] என்ற அர்ஜுனனின் கேள்வியில், ஶாஸ்த்ரவிதி₄யை மீறினபோதிலும் ஶ்ரத்₃தை₄யுடன் செய்யப்பட்ட கர்மத்திற்குப் ப₂லனுண்டு என மயங்கியதற்கு விடையாகவே "கோ₄ரம்" என்னும் பத₃த்தையிட்டு, மிகுந்த ஶ்ரத்₃தை₄யுடன் மிகப்பாடுபட்டுக் கடுமையான தவத்தை அநுஷ்டித்தாலும் பயனில்லை எனக்காட்டுகிறுன். அர்ஜுனன் கேள்வியில் "யஜந்தே" என்று யாக₃ம் செய்பவர்களைப் பற்றிக் கேட்டிருக்க, இங்கு "தப: தப்யந்தே" என்று தவம் புரிபவர்களைப்பற்றி பதிலுரைப்பது எப்படிப் பொருந்தும்? எனில்: கேள்வியில் யாக₃த்தைச் சொன்னது தவம், தா₃னம் முதலான கர்மங்களுக்கும், பதிலில் தவத்தைச் சொன்னது யாக₃ம் தா₃னம்

संयुक्ताः कामरागबलान्विताः शरीरस्थं पृथिव्यादिभूतसमूहं कर्शयन्तः

---

முதலான கர்மங்களுக்கும் எடுத்துக் காட்டேயாகையால், கேள்வி பதில் இரண்டிலும் எல்லாமே கருதப்பட்டதாகக் கொள்ள வேண்டும். "யே அஶாஸ்த்ரவிஹிதம் கோ4ரம் தப: தப்யந்தே" என்றது ஶாஸ்த்ரங்களில் விதி4க்கப்படாதபோதிலும் மிகுந்த சிரமப்பட்டு எவர்கள் யாக3ம், தவம், தா3னம் முதலான கர்மங்களைச் செய்கிறார்களோ" என்னும் கருத்துடையது என்றே கொள்ள வேண்டும். "அஶாஸ்த்ரவிஹிதம்" [ஶாஸ்த்ரங்களில் விதி4க்கப்படாதது] என்னும் பத3ம் – வேத3த்திற்குப் புறம்பான பௌ3த்3த4ம் ஜைனம், ஸாங்க்2யம், யோக3ம், ஶைவம், ஶாக்தம் முதலான மதங்களின் ஆக3மங்களில் சொல்லப்பட்டவற்றையும், வேத3த்தில் விதி4க்கப்பட்டபோதிலும், தகுதியற்றவர்களால் செய்யப்படுமவற்றையும், தே3ஶம், காலம், த்3ரவ்யம், கிரியை முதலானவைபற்றிய ஶாஸ்த்ர நியமங்களை மீறி முறைதப்பிச் செய்யப்படுமவற்றையும் குறிக்கும். கடுமையைக் குறிக்கும் "கோ4ர"பத3ம் மிகுந்த முயற்சியுடன் செய்யப்படுவதைக்காட்டுகிறது. சாஸ்திரங்களால் நியமிக்கப்பட்டபடி செய்யாத இவர்கள் எதனால் நியமிக்கப்பட்டு இச்செயல்களைச் செய்கிறார்கள் என்பதைக்காட்டுகின்றன முதல் ஶ்லோகத்தின் இரண்டாவது பாதியிலுள்ள இரு பத3ங்கள் — (த3ம்பா4ஹங்கார ஸம்யுக்தா:) பதினாறும் அத்தியாயத்தில் நாலாம் ஶ்லோகத்தில் அஸுரர்களின் செல்வமாகக் குறிக்கப்பெற்ற த3ம்ப4ம் (புகழுக்காக த4ர்மத்தை அனுஷ்டி2த்தல்), அதிமானம் (கல்வி, குடிப்பிறப்பு முதலானவற்றுக்குத்தகாத அபி4மானம்) ஆகியவற்றோடு கூடியவர்கள். (காமராக3 ப3லாந்விதா:) ப்ராக்ருதர்களால் விரும்பப்படும் ஶப்3தா3தி3விஷயங்களில் பற்றோடுகூடிய ப3லத்தை உடையவர்கள். "ப3லம் ப3லவதாம் சாஹம் காமராக3 விவர்ஜிதம்" [கீ3தை 7 — 11] என்கிறபடியே இந்தப்பற்றோடு கூடாததாயிருக்கும் ப3லமன்றோ சிறந்ததாகக் கூறப்பட்டது. இந்தப்பற்றோடு கூடியதாகையாலே தீயதான ப3லத்தையுடையவர்கள் இவர்கள் என்றபடி. இவ்விருபத3ங்களாலும் த3ம்ப4ம், அஹங்காரம், விஷயங்களில் பற்றோடு கூடிய ப3லம் ஆகியவற்றால் தூண்டப்பெற்றே இவர்கள் ஶாஸ்த்ரங்களில் விதி4க்கப்பெறாத கோ4ரமான கர்மங்களைச் செய்கிறார்கள் என்று உணர்த்தப்படுகிறது. இனி, ஆறும் ஶ்லோகத்தாலே "சென்ற அத்தியாயத்தில் (ஶ்லோகம் 16) சொல்லப்பட்டபடி இவர்கள்

मदंशभूतं जीवं चान्तश्शरीरस्थं कर्शयन्तो ये तप्यन्ते,| यागादिकं च

மறுமையில் நரகத்தை அடைவது மாத்திரமல்லாமல், இம்மையிலும் தங்களது ஶரீரத்தையும், ஆத்மாவையும் வருத்திக்கொள்கிறார்கள்'' என்று சொல்லப்படுகிறது-(அசேதஸ:) இம்மையிலும், மறுமையிலும் தங்களுக்குத் துன்பமே விளையுமென்று உணராத அறிவிலிகளான இவர்கள். (ஶரீரஸ்த₂ம் பூ₄தக்₃ராமம் கர்ஶயந்த:) ''காயோடு நீடு கனியுண்டு வீசு கடுங்கால் நுகர்ந்து நெடுங்காலம் ஐந்து தீயோடு நின்று'' [பெரியதிரு 3-2 2] என்கிறபடியே காய், கனி, காற்று ஆகியவற்றையே உண்டு, நெடுங்காலம் நாலுபுறமும் நெருப்பால் சூழப்பெற்று மேலே சூரிய வெப்பம் கொளுத்தும்படி நின்று தவம் செய்வதன் மூலமும், அத்தகைய யாக₃ம் முதலான வற்றைச் செய்வதன் மூலமும் இவர்கள் தங்கள் உடலிலிருக்கும் பஞ்சபூ₄தங்களையும் வருத்திக்கொள்கிறார்கள். இது மட்டுமா? (அந்தஶ்ஶரீரஸ்த₂ம் மாம் சைவ கர்ஶயந்த:) சரீரத்தின் உள்ளிருக்கும் எனது அம்ஶமான தம் ஆத்மஸ்வரூபத்தையும் வருத்திக் கொள்கிறார்கள். ''மாம் கர்ஶயந்த:'' [என்னை வருத்துகின்றவர்கள்] என்றே இங்கு இருந்தபோதிலும், ''அந்தர்யாம்யம்ருத:'' [ப்₃ருஹ 5-7- 4] [அந்தர்யாமியான பரமபுருஷன் மரணம் முதலான எந்த தோ₃ஷமுமற்றவன்] ''அநஶ்நந்-அந்யோ ऽபி₄சாகஶீதி'' [முண்ட₃ 3-1-1] [கர்மப₂லத்தைப் புசிக்காத பரமாத்மா விளங்கா நிற்கிறான்.] ''ந ஸ்த₂ாநதோ ऽபி பரஸ்ய உப₄யலிங்க₃ம் ஸர்வத்ர ஹி'' [ப்₃ர-ஸூ 3-2-11] [(ப்ருதி₂வீ ஆத்மா முதலான ப்₃ரஹ்மஶரீரங்களான) ஸ்த₂ாநங்களையிட்டும் பரமபுருஷனுக்கு (தாழ்வுகள்) இல்லை; எல்லா ஶ்ருதிஸ்ம்ருதிகளிலும் (ப்₃ரஹ்மம் எல்லாத்தாழ்வுமற்றிருக்கையும், எல்லாக் கல்யாண கு₃ணங்களையும் உடைத்தாயிருக்கையுமாகிற) இரு தனி அடையாளங்களை உடையதாகவன்றோ சொல்லப்படுகிறது.] முதலான ப்ரமாணங்கள் பரமாத்மஸ்வரூபமோ, அவனது ஸ்வபா₄வமோ எவராலும் வருத்தக் கூடியதல்ல என்று முழங்குகையாலும், அப்படி ஒருவரால் வருத்தக் கூடியதாக ஒப்புக்கொண்டாலும், ஶாஸ்த்ரங்களில் கூறப்பட்ட உபவாஸம் முதலானவற்றை மேற்கொள்பவர்களும் அவனை வருத்துகிறார்கள் என்று கொள்ளவேண்டிவருகையாலும் இங்கு 'மாம்' என்று பரமாத்மாவைக் குறிப்பதாகச் சொல்ல முடியாது ஶரீரத்தை வருத்துவதால் அந்த ஶரீரத்தை உடைய ஜீவனுக்கு அறிவு ஸுக₂ம் முதலானவை குறைவதால் வருத்தம் விளைகிறது

कुर्वते; तानासुरनिश्चयान्विद्धि। असुराणां निश्चय आसुरो निश्चयः; असुरा हि मदाज्ञाविपरीतकारिणः; मदाज्ञाविपरीतकारित्वात्तेषां सुखलवसंबन्धो न विद्यते; अपि त्वनर्थव्राते पतन्तीति पूर्वमेवोक्तं * पतन्ति नरकेऽशुचौ (१६. १६) इति ॥ ५ ॥ ६ ॥

---

என்பது ஶ்ருதி, ஸ்மிருதி, லோகானுப₄வம் ஆகியவற்ருல் தேறுகிறது; "அந்த:ஶரீரஸ்த₂ம்" [ஶரீரத்தின் உள்ளிருப்பவன்] என்னும் பத₃த்திற்கு ஶரீரத்தின் உள்ளிருக்கும் ஜீவனைப் பொருளாகக் கொள்வது முக்₂யார்த்த₂மாகவும் ஆகிறது; ஆகையால், "க்ஷேத்ரஜ்ஞும் சாபி மாம் வித்₃தி₄" [கீ₃தை 13-2] என்று எம்பெருமானுல் தன் சரீரமாயிருப்பதையிட்டுத் தானாகவே அபி₄மானிக்கப் பெற்றவனுய், "மமைவாம்ஶ: ஜீவலோகே ஜீவபூ₄த: ஸநாதந:" [கீ₃தை 15-7] [அனாதி₃காலமாக இவ்வுலகிலிருப்பவனுய் என் அம்ஶமாகவேயிருக்கும் ப₃த்₃த₄ ஜீவன்] என்று அவனுல் தனக்கு ஶரீரரூபமான விஶேஷணமாயிருப்பதையிட்டு, தன் அம்ஶமென்றே சொல்லப்பெற்றவனுன ப₃த்₃த₄ஜீவனே இங்கு 'மாம்' என்று குறிக்கப்படுவதாகக்கொள்வது மிகப் பொருத்தமாகும். இப்படிக் கூறுவதால் "என் சரீரமான ஜீவனை வருத்துவது என்னை வருத்துவதற்கு ஸமமேயாகும்" என்னும் ப₄க₃வானின் திருவுள்ளத்தையும் வெளிப்படுத்துகையாலே இது பெரிய குற்றமாகவும் ஆகிறது. சாஸ்திரத்தை மீறித் தன்னை வருத்திக் கொள்வதாகிற பெரிய பாபமும் இவர்களுக்கு விளைகிறது என்று கருத்து. (கர்ஶயந்த: யே தப: தப்யந்தே) "இப்படித் தம் ஶரீரத்தையும் ஆத்மாவையும் வருத்திக்கொண்டு எவர்கள் தவம், யாக₃ம் முதலானவற்றைச் செய்கிருர்களோ" என்று பொருள், தபஶ்ஶப்₃த₃ம் யாக₃ாதி₃களுக்கும் உபலக்ஷணம் என்று முன்னமே காட்டப்பட்டது. "யாக₃ம் அதற்கு விஷயமான தே₃வதையை ஆராதி₄ப்பதாயிருப்பதால், அது சாஸ்த்ரத்தை மீறியிருந்தாலும் அதி₄கமான தோ₃ஷத்தை விளைக்காதாகையாலும், தவம் சரீரம் ஜீவஸ்வரூபம் ஆகிய அனைத்தையும் வருத்துகையாலும், யாக₃த்தைச் சொல்லாமல் 'தப: தப்யந்தே' என்று ஶாஸ்த்ரவிருத்₃த₄மான தவம் மாத்திரம் இங்கு எடுக்கப்படுகிறது" என்று சிலர் பொருளுரைக்கின்றனர். யாக₃த்தைப் பற்றிக்கேள்வியும் தவத்தைப்பற்றி பதிலும் அமைந்திருப்பதிலிருந்து இரண்டும் இரண்டையும்பற்றியதே என விளங்குகை

भा ॥ अथ प्रकृतमेव शास्त्रीयेषु यज्ञादिषु गुणतो विशेषं प्रपञ्चयति । तत्राहारमूलत्वात्सत्त्वादिवृद्धेराहारत्रैविध्यं प्रथममुच्यते । * अन्नमयं हि सोम्य मनः (छा ६. ५. ४.) * अहारशुद्धौ सत्त्व-शुद्धिः (छा ७. २६. २) इति हि श्रूयते ।

आहारस्त्वपि सर्वस्य त्रिविधो भवति प्रियः ।
यज्ञस्तपस्तथा दानं तेषां भेदमिमं शृणु ॥ ७ ॥

24-6-09-
21-8-10

7. ஆஹாரஸ்த்வபி ஸர்வஸ்ய த்ரிவிதோ₄ ப₄வதி ப்ரிய: |
யஜ்ஞஸ் தபஸ் ததா₂ தா₃நம் தேஷாம் பே₄த₃மிமம் ஶ்ருணு ||

ஸர்வஸ்ய — உயிருடைய எல்லாப்பொருள்களுக்கும், ஆஹார: அபி — உணவும், த்ரிவித₄: து—(ஸத்வம் முதலான முக்குணங்களில் ஒன்றின் மிகுதிக்கேற்ப) மூவகைப் பட்டதே, ப்ரிய: ப₄வதி — இனியதாகிறது: ததா₂ — அவ்

யால், அது பொருந்தாது. (தாந் ஆஸுரநிஶ்சயாந் வித்₃தி₄) அவர்களை அஸுரர்களின் உறுதியை உடையவர்கள் என அறிவாய். "அஸுராணும் நிஶ்சய: — ஆஸுர: நிஶ்சய:, ஆஸுர: நிஶ்சய: யேஷாம் தே ஆஸுரநிஶ்சயா:" என்று விரியுமாகையாலே அஸுரர்களின் உறுதியை உடையவர்களை ஆஸுரநிஶ்சயபத₃ம் காட்டுகிறது. அஸுரர்களாவார் — "விஷ்ணுப₄க்திபரோ தே₃வ: விபரீதஸ்ததா₂ஸுர:" [விஷ்ணு ப₄க்தியுடையவன் தே₃வன்; விஷ்ணு த்₃வேஷமுடையவன் அஸுரனுவான்] என்கிறபடியே எம்பெருமானிடம் துவேஷத்தாலே அவன் ஆணையை மீறுகிற வர்கள். ஆஸுரநிஶ்சயமாவது எம்பெருமானுடைய ஆணைக்கு மாருகவே நடப்பது என்னும் உறுதி. இவ்வுறுதிகாரணமாகவே அவர்களுக்குச் சிறிதும் ஸுக₂ம் விளைவதில்லை. நேர்மாருக அவர்கள் தீமைகள் பலபயக்கும் நரகங்களிலேயே விழுகிருர்க ளென்பது "பதந்தி நரகேऽஶுசௌ" [கீ₃தை 16—16] [அஶுத்₃த₄மான நரகத்தில் விழுகிருர்கள்] என்று முன்னமே சொல்லப் பட்டது. ஆக இவ்விருஶ்லோகங்களால் சாஸ்த்ரவிதி₄யை மீறி யாகதா₃திகளைச் செய்பவர்களுக்குத் தீய ப₂லன் விளையுமேயொழிய நற்பயன் எதுவுமில்லை என்று சொல்லப்பட்டது. 5. 6.

வண்ணமாகவே, யஜ்ஞ:-யாகமும் (மூவகைப்பட்டதாகிறது); தப: — தவமும் (மூவகைப்பட்ட தாகிறது); தா₃நம் — தா₃ன மும் (மூவகைப்பட்டதாகிறது); தேஷாம் — ஆஹாரம், யஜ்ஞம், தவம், தா₃னம் ஆகியவற்றின், இமம் பே₄த₃ம் — (ஸத்வாதி₃ கு₃ணங்களையிட்டு) மூவகைப்பட்டிருக்கும் இந்த வேறுபாட்டை. ஶ்ருணு — (நான் சொல்லக்) கேட்பாயாக,

---

7. எவர்க்குந் தானுகப்பா மூணெச்ச மேய்ந்ததவ
மேவத் தகுதானம் வேறுபடப் – பாவுங்
குணந்தன்னுன் மூவகையாக் கூறியவப் பேத
முணர்ந்திங்கே கேளிதனை யுற்று.

எவர்க்கும் — உயிருடைய எல்லாப் பொருள்களுக்கும், ஊண் — உணவு, எச்சம் — யஜ்ஞம், ஏய்ந்த தவம் — நன்கு அனுஷ்டி₂க்கப்படும் தவம், மேவத்தகு தானம் — (சாஸ்தி ரங்களில்) அனுஷ்டி₂க்கத்தக்கதாகச் சொல்லப்படும் தா₃னம் ஆகிய ஒவ்வொன்றும், வேறுபடப் பாவும் குணம்தன்னுல்— (ஸத்வாதி₃களில் மூன்றில் ஒன்று மிகுதியாயிருக்கும்படி) வெவ்வேருகப் பரவியிருக்கும் கு₃ணத்தையிட்டு (மூவகைப் பட்டதே) தான் உகப்பாம் — (ஒவ்வொருவருக்கு ஒன்று) இனியதாகிறது; மூவகையாக் கூறிய அப்பேதம் இங்கே உணர்ந்து — மூன்றுவகைப் பட்டதாக (சாஸ்திரங்களில்) கூறப்பட்ட அந்த வேறுபாட்டை இப்போது (நான்சொல்ல) அறிந்து, இதனை—இந்த வேறுபாட்டை, உற்று கேள் — கவனமாகக் கேட்பாயாக.

---

7. சாஸ்திர விதி₄யைக் கைவிட்டு சிரத்தையுடன் அனுஷ்டி₂க் கப்படும் கர்மங்களுக்கு ஸத்வாதி₃குணங்களையிட்டுப் ப₂லனில் வேறுபாட்டை அர்ஜுனன் முதல் ஶ்லோகத்தில் கேட்டான்; சென்ற ஶ்லோகமீருக அதற்கு பதிலுரைத்த கண்ணன் அந்த பதிலில் சாஸ்திர விதி₄யை மீறிச்செய்யும் கர்மங்களுக்கு எப்பயனுமில்லையென்றும், சாஸ்திரவிதி₄களின்படி செய்யப்படும் கர்மங்களுக்கே முக்குணவேறுபாட்டையிட்டுப் ப₂லனில் மூவகை யான பே₄த₃ம் உள்ளதென்றும், ஶ்ரத்₃தை₄, அதை உடையவர்கள்.

भा ।। आहारोऽपि सर्वस्य प्राणिजातस्य सत्त्वादिगुणत्रयान्वयेन

---

அவர்களால் ஆராதிக்கப்படுபவர்கள் ஆகிய மூன்றும் முக்குணங்களையிட்டு மூவகைப்படும் என்றும் கூறினன். இப்படி ஶாஸ்த்ரவிதிகளின்படி அனுஷ்டிக்கப்படும் கர்மங்கள் குணங்களையிட்டுமூவகைப்படும் என்று தான் ப்ரஸ்தாவிக்கையால், யாகம், தவம், தானம் என்று பலவகைப்பட்டிருக்கும் அக்கர்மங்கள் குணங்களையிட்டு வேறுபட்டிருப்பதை அறிவதில் அர்ஜுனனுக்கு விருப்பம் உண்டாயிருக்கும் என்று அறிந்த கண்ணன் அவற்றை விளக்கத் தொடங்குகிருன். அப்படிவிளக்கும்போது ஸத்வம் முதலான முக்குணங்களும் முறையே வளர்வது அந்தந்த குணம் மேலோங்கியிருக்கும் உணவினுலேயேயாகையால், ஆகாரமும் குணங்களையிட்டு மூவகையாயிருப்பதை யஜ்ஞாதிகளை (11-முதல் 22 ஈருக) விளக்குவதற்குமுன் 8 முதல் 10 ஈருக உள்ள மூன்று ஶ்லோகங்களில் விளக்குகிருன். "அந்நமயம் ஹி ஸோம்ய மந:" [சாந் 6-5-4] என்று அன்னத்திற்கு அனுகுணமாகவே மனம் அமைகின்றது என்றும், "ஆஹாரஶுத்தௌ ஸத்வஶுத்தி:" [சாந்7-16-2] [ஆஹாரம் (ரஜஸ்தமோகுணங்களின்றியிலே ஸத்வகுணம் மிக்கதாக) ஶுத்தியுடனிருப்பதாலேயே மனம் (ரஜஸ்தமோகுணங்கள் நீங்கி ஸத்வம்மிகுந்திருக்கப்பெற்று) ஶுத்தியடைகிறது] என்றும் இவ்விஷயம் ஶ்ருதியிலும் சொல்லப்பட்டதன்றே. "வ்ருத்திஸ் ஸமாநைஸ் ஸர்வேஷாம் விபரீதைர் விபர்யய:" [அஷ்டாங்கஹ்ருதயம்] [(மனம் முதலானவற்றைப் போஷிக்கும்) உணவு முக்குணங்களில் எதை மிகுதியாகக் கொண்டிருக்கிறதோ, அதையுடையதாகவே மனம் முதலானவை வளர்கின்றன; அந்த உணவு (குணத்தில்) மாறினல், மனம் முதலானவையும் (அவ்வண்ணமே) மாறுகின்றன.] என்று இவ்விஷயம் ஆயுர்வேதநூலிலும் விளக்கப்பட்டதன்றே. (ஆஹாரஸ்த்வபி) ஆஹாரமும். துஶப்தம் ப்ரகரணத்தோடு தொடர்புள்ள வேறொரு விஷயம் சொல்லப்படுகிறது எனக் காட்டுகிறது; 'அபி' ஶப்தம் உக்த ஸமுச்சயமாய், ஶ்ரத்தை, அதை உடையவர்கள், அவர்களால் ஆராதிக்கப்படுமவர்கள் ஆகிய மூன்றும் முக்குணங்களையிட்டு மூன்று வகைப்படும் என்று முன்னமே (2 முதல் 4 வரை) கூறியதைக் கூட்டுகிறது.

त्रिविधः प्रियो भवति। तथैव यज्ञोऽपि त्रिविधः, तथा तपो दानं च। तेषां भेदमिमं शृणु—तेषामाहारयज्ञतपोदानानां सत्त्वादिभेदेनेमुच्यमानं भेदं शृणु ॥ ७ ॥

---

(ஸர்வஸ்ய) உணவுட்கொள்ளும் உயிருடைய பொருள்கள் அனைவர்க்கும் இது பொதுவானது என்கை. (த்ரிவித₄: ப்ரிய: ப₄வதி) அவரவர்களுடைய மனம் முதலானவற்றில் ஸத்வம் முதலான கு₃ணங்களில் ஒன்று மிகுதியாயிருப்பதையிட்டு ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று மூவகைப்படும் உணவு இனியதாகிறது. ஸத்வகு₃ணம் மிகுதியாயிருக்கும் மனம் முதலான வற்றை உடையவர்களுக்கு அந்த கு₃ணம் மிகுதியாயிருக்கும் பொருள்களையே அநுப₄வித்து அதனால் உண்டான வாஸனையால் அந்த கு₃ணம் மிகுதியாயிருக்கும் விஷயங்களில் ருசி விளைகையால், ஸாத்விகாஹாரம் இனியதாகிறது. இவ்வண்ணமே ரஜஸ்தமோ கு₃ணங்கள் மிகுதியான மனம் முதலானவற்றை உடையவர்களுக்கும் கண்டுகொள்வது. ''பசாம்யந்நம் சதுர்வித₄ம்'' [15-14] என்னுமிடத்தில் கடித்துண்ணப்படுவது, உறிஞ்சிஉண்ணப்படுவது, நக்கி உண்ணப்படுவது, பருகிஉண்ணப்படுவது என்று நாலுவகையாகச் சொல்லப்பட்ட எல்லா உணவுகளிலும் அந்தந்த கு₃ணஸம்ப₃ந்த₄த்தையிட்டு இப்படி மூன்று வகையுண்டு என்பதும் இங்கு அறியத்தக்கது. (தத₂ா யஜ்ஞ:)அவ்வண்ணமே யாக₃மும் மூவகைப் பட்டதாகிறது. (தத₂ா தப:) அவ்வண்ணமே தவமும் மூவகைப் பட்டதாகிறது.(தத₂ா தா₃நம்) அவ்வண்ணமே தா₃னமும் மூவகைப் பட்டதாகிறது, (தேஷாம் பே₄த₃ம் இமம் ஶ்ருணு) ஆஹாரம், யஜ்ஞம், தவம், தா₃னம் ஆகியவை ஸத்வாதி₃கு₃ணங்களில் ஒன்று மிக்கிருப் பதையிட்டு மூவகைப்பட்டிருப்பதை நான் இப்போது சொல்லக் கேட்பாயாக. ஆக இந்த ஶ்லோகத்தால் ஆஹாரம், யாக₃ம், தவம், தா₃னம் ஆகியவை முக்குணங்களையிட்டு மூவகைப்பட்டிருக்கும் என்று ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டது. இனி, 22-வது ஶ்லோகமீறாக இவ்விஷயம் விளக்கப்படுகிறது. 7.

आयुस्सत्त्वबलारोग्यसुखप्रीतिविवर्धनाः ।
रस्याः स्निग्धाः स्थिरा हृद्या आहारास्सात्त्विकप्रियाः ॥ ८ ॥

15-X-09.

8. ஆயுஸ்ஸத்த்வ ப₃லாரோக்₃ய ஸுக₂ப்ரீதிவிவர்த₄நா:।
ரஸ்யா: ஸ்நிக்₃த₄ா: ஸ்தி₂ரா ஹ்ருத்₃யா ஆஹாராஸ்
ஸாத்விகப்ரியா: ||

ஆயுஸ் ஸத்த்வ ப₃லாரோக்₃ய ஸுக₂ப்ரீதிவிவர்த₄நா: — ஆயுள், அறிவு, ப₃லாரோக்₃யங்கள், ஸுக₂ப்ரீதிகள் ஆகியவற்றை வளர்ப்பவையாய், ரஸ்யா: — இனிப்புச் சுவைநிறைந்தவையாய், ஸ்நிக்₃த₄ா: — வழவழப்புடைய வையாய், ஸ்தி₂ரா: — நிலையான நற்பயனை விளைப்பவை யாய், ஹ்ருத்₃யா: — காண்பதற்கு இனியவையான, ஆஹாரா: — உணவுகள், ஸாத்விகப்ரியா: — ஸாத்விகர்களால் விரும்பப்படுகின்றன.

---

8. வாணாண் மனந்தெளிவு மன்னுவலி நோயாமை
பூணுஞ் சுகமுகப்பைப் பொங்குவித்து—மாணார்ந்த
தித்தித்து நெய்த்துத் திரமாய் மனோகரமா
யொத்திடுமே முற்குணத்தி னூண்.

முன் குணத்தின் ஊண் — ஸத்வகு₃ணத்தை மிகுதியாக உடைய உணவு, மாண் ஆர்ந்த — சிறப்புடைய, வாணாள் — ஆயுள், மனந்தெளிவு — மனத்தில் தெளிந்த அறிவு, மன்னுவலி நோயாமை — நிலைநின்ற ப₃லம், ஆரோக்₃யம், பூணும் சுகம் உகப்பை — விரும்பத்தக்க இன்பம், அன்பு ஆகியவற்றை, பொங்குவித்து — வளரச்செய்து, தித்தித்து — இனிப்புச்சுவையுடையதாய், நெய்த்து — வழவழப்புடைய தாய், திரமாய் — நிலையான நற்பயனை விளைப்பதாய், மனோகரமாய் — (காணும்போதே) நெஞ்சை ஈர்ப்பதாய், ஒத்திடுமே — அமைந்திருக்கும்.

भा ॥ सत्त्वगुणोपेतस्य सत्त्वमया आहाराः प्रिया भवन्ति । सत्त्वमयाश्चाहारा आयुर्विवर्धनाः, पुनरपि सत्त्वस्य विवर्धनाः । सत्त्वमन्तःकरणम्, अन्तःकरणकार्यं ज्ञानमिह सत्त्वशब्देनोच्यते । * सत्त्वात्संजायते ज्ञानम् (गी १४-१७) इति सत्त्वस्य ज्ञानविवृद्धिहेतुत्वात्, आहारोऽपि

---

8. ஸாத்விகர்கள் விரும்பும் ஆகாரத்தை விளக்குகிறுன். "ஸத்வகு₃ணம் மிகுந்திருப்பவர்களுக்கு அந்த கு₃ணம் மிகுந்த ஸாத்விக ஆகாரங்களில் ருசி விளைகிறது; இந்த ஸாத்விக ஆகாரங்கள் ஆயுள் முதலானவற்றை வளர்ப்பவை" என்பது ஆயுர்வேத₃ சாஸ்திரங்களிலும் சொல்லப்பட்டுள்ளது. ப்ரத்யக்ஷத்தாலும் காணப்படுகிறது. அவற்றை இங்கு தொகுத்துக் கூறுகிறுன். (ஆயுர் விவர்த₄நா:) நீண்ட ஆயுளை வளரச்செய்பவை; எல்லாப் புருஷார்த்த₂ங்களையும் தேடுவதற்கு நீண்ட ஆயுளே மிகவும் அவசியமாகையால் அதை முதலில் எடுக்கிருன். (ஸத்த்வ விவர்த₄நா:) அறிவை வளர்ப்பவை; அனைவருக்கும், குறிப்பாக மோக்ஷமடைய விரும்புகிறவனுக்கு அறிவு அவசியமாகையாலே அதை அடுத்தபடி எடுக்கிருன். 'ஸத்த்வ' ஶப்₃த₃ம் இங்கு அந்த: கரணமாகிற மனத்தைக் கூறி, மனத்தில் விளையும் அறிவைக் காட்டுகிறது. "ஆஹார ஶுத்₃தௌ₄ ஸத்த்வ ஶுத்₃தி₄:; ஸத்த்வ ஶுத்₃தௌ₄ த்₄ருவாஸ்ம்ருதி:" [ச₂ாந் 7-26-2] [உணவு ஶுத்தமாயிருந்தால் மனம் ஶுத்தி அடைகிறது, மனம் ஶுத்தி அடைந்தால் நிலையான நினைவாகிற ப₄க்தி உண்டாகிறது.] என்னும் வேதவாக்யத்தை விளக்க வந்ததாகையாலே, இங்கு உணவினுல் ஏற்படும் ஸத்வ வ்ருத்₃தி₄ ஜ்ஞானவ்ருத்₃தி₄பர்யந்தமாகக் கொள்ளத்தக்கது. அதனுலேயே 'ஸத்வ' சப்தம் மனத்தைக்குறிப்பதன்மூலம் அறிவைக்குறிப்பதாகப் பொருள் கொள்ளப்பட்டது. "த்₃ரவ்யாஸுவ்யவஸாயேஷு ஸத்த்வமஸ்த்ரீ து ஜந்துஷு" [அமர-3-3-213] [பணம், ப்ராணன், உறுதியான அறிவு, ஜந்துக்கள் ஆகிய பொருள்களில் பெண்பாலல்லாத ஸத்வஶப்தம் வழங்கப்படும்] என்று நிக₄ண்டுவிலும் ஸத்வஶப்₃த₃த்திற்கு உறுதியான அறிவு என்ற பொருள் கொள்ளப்பட்டதன்றே. "ஸத்த்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம்" [கீ₃தை 14-17] [ஸத்வகு₃ணத்திலிருந்து ஜ்ஞானம் உண்டாகிறது] என்று ஸத்வகு₃ணம் ஜ்ஞானத்தை வளரச் செய்வதாகக் கூறப்பட்டிருப்பதால், அந்த கு₃ணம் மிகுந்த உணவும்

सत्त्वमयो ज्ञानविवृद्धिहेतुः। तथा बलारोग्ययोरपि विवर्धनाः। सुख-प्रीत्योरपि विवर्धनाः-- परिणामकाले स्वयमेव सुखस्य विवर्धनाः। तथा

---

அறிவை வளரச் செய்யும் என்பது சொல்லாமலே விளங்கும். வாதம், பித்தம், ஶ்லேஷ்மம் ஆகிய த$_4$ாதுக்களை வளர்க்கும் உணவுகள் வாதம் முதலான அந்தந்த ஶப்$_3$த$_3$ங்களாலேயே சொல்லப்படுவது போல் அந்தந்த கு$_3$ண மிகுதியையிட்டு உணவுகளும் ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று அழைக்கப்படுகின்றன என்பதும் குறிக் கொள்ளத்தக்கது. (ப$_3$லாரோக்$_3$ய விவர்த$_4$நா:) ப$_3$லம், ஆரோக்$_3$யம் ஆகியவற்றை வளர்ப்பவை; ப$_3$லாரோக்$_3$யங்களும், ஸுக$_2$ப்ரீதிகளும் ஒன்றோடொன்று தொடர்புடையவையாகையாலும், சேர்ந்தே செயல் படுகையாலும் பா$_4$ஷ்யத்தில் இரட்டைகளாகச் சேர்த்து எடுக்கப் பட்டன. இங்கு ப$_3$லமாவது-ப்ராணவாயுவும், உடல் உழைப்புக்கு உறுப்பான உஷ்ணமும் மிகுந்திருக்கை. ஆரோக்$_3$யமாவது-வாதம், பித்தம், ஶ்லேஷ்மம் ஆகிய மூன்று த$_4$ாதுக்களும் ஸமமாயிருக்கை. மனிதன் செய்யும் செயல்களின் குற்றத்தினால் உஷ்ணமும் த$_4$ாதுக் களும் ஸமநிலைமாறுவதாலன்றோ வ்யாதி$_4$கள் உண்டாகின்றன. (ஸுக$_2$ப்ரீதிவிவர்த$_4$நா:) இன்பத்தையும், அன்பையும் வளர்ப்பவை; ஶ்லோகத்தின் பிற்பாதியில் ரஸ்யத்வம், ஹ்ருத்$_3$யத்வம் ஆகியவற்றினால் ஸாத்விக ஆகாரங்கள் அப்போதே இன்பத்தை விளைக்கின்றன என்று சொல்லப்படுகிறது; ஆகையால் உட்கொள்ளும்போதே விளையும் இன்பத்தை இங்கு குறிக்க இயலாது. எனவே இவ்வுணவுகள் உட்கொண்ட பிறகு அதனால் விளையும் இன்பம் இங்கு ஸுக$_2$ஶப்$_3$த$_3$த்தால் குறிக்கப்படுவதாகக் கொள்ளவேண்டும். இவ்வுணவுகள் இன்பத்தைத் தாமே விளைக் கின்றன என்று பா$_4$ஷ்யத்தில் கூறப்பட்டது. அடுத்தபடியாகவுள்ள ப்ரீதியை விளைக்கும்போது சில செயல்களை இடையிட்டு விளைப்பதை வேறுபடுத்துவதற்காக "ஸ்வயமேவ" [தாமே] என்னும் பத$_3$ம் பா$_4$ஷ்யத்தில் இடப்பட்டது என்று அறியத்தக்கது. (ப்ரீதி விவர்த$_4$நா:) அன்பை வளர்ப்பவை. இவை அன்பை நேரே வளர்ப்பதில்லை. ஊமத்தங்காய், மது போன்ற சில பொருள்கள் உட்கொள்ளப்பட்டால் உலகம் வெறுக்கும் காரியங்களை இவனைச் செய்யவைத்து வெறுப்பை வளர்ப்பதுபோலே, ஸாத்விக ஆகாரங் களும் உலகிற்கு உபகாரகமான மங்க$_3$ள காரியங்களையும், மறுமைக்கு உறுப்பான காரியங்களையும் இவனைச் செய்யவைத்து

प्रीतिहेतुभूतकर्मारम्भद्वारेण प्रीतिवर्धनाः। रस्याः—मधुररसोपेताः।

அதன் மூலம் அன்பை விளக்கின்றன என்று கொள்ளவேண்டும். (ரஸ்யா:) இனிப்புச்சுவை உடையவை. பொதுவாக 'ரஸம்' என்றால் இனிப்புச்சுவையே பெரும்பாலும் குறிக்கப்படுகிறது; மேலும், அடுத்த ஶ்லோகத்தில் ராஜஸர்கள் விரும்பும் உணவைச் சொல்லும்போது "கட்வம்லலவண" என்று தொடங்கி மற்ற சுவைகள் ராஜஸர்களால் விரும்பப்படுபவையாகக் கூறப்படுகையாலும், இங்கு ஸாத்விகர்கள் விரும்புவது இனிப்புச்சுவையே என்று தேறுகிறது. 'ரஸமஸ்ய அஸ்தி' என்னும் வ்யுத்பத்தியாலே 'ரஸ்ய' ஶப்3த3ம் சுவையுடையதைக்குறிக்கிறது. அன்றிக்கே 'ரஸ்யந்த இதி ரஸ்யா:' [சுவைக்கப்படுகின்றனவாகையால் ரஸ்யங்களாகின்றன] என்றும் கொள்ளலாம். இப்படிப் பொருள்கொள்ளும்போது சுவைக்கத் தக்கதாயிருப்பதற்குக் காரணமான இனிப்புச்சுவையோடு கூடியிருக்கை ரஸ்ய ஶப்3த3த்தால் குறிக்கப்படுகிறது. இனிப்புச் சுவையானது மற்ற சுவைகளைக் காட்டிலும் சரீரம் நிலைத்து நிற்பதற்குச் சிறப்பான காரணமாக ஆகிறது: இவ்விஷயம்—

"ரஸாஸ்ஸ்வாத்3வம்ல லவண திக்த தீக்ஷண கஷாயகா: |
ஷட் த்3ரவ்யமாஶ்ரிதாஸ்தே ச யதா2பூர்வம் ப3லாவஹா:||"

[அஷ்டாங்க3ஹ்ருத3யம்]

[இனிப்பு, புளிப்பு, உ(வர்)ப்பு, துவர்ப்பு, உறைப்பு, கசப்பு என்னும் ஆறு ரஸங்களும் உணவுகளில் இருந்துகொண்டு பிந்தியவற்றைக்காட்டிலும் முந்தியவை மிகுதியாக ப3லத்தைக் கொடுக்கின்றன.] என்று வாக்3ப4டராலும் சொல்லப்பட்டதன்றோ. "ஷட்3ரஸாந்மது4ரப்ராயாந்நாதித்3ருதவிலம்பி3தம்" [இனிப்புச் சுவையை மிகுதியாகக் கொண்ட அறுசுவை உணவை மிக வேகமும் இல்லாமல், மிகத் தாமதமும் இல்லாமல் உண்ணவேண்டும்] என்று நல்ல ஆரோக்3யமுள்ளவனுக்கு உணவில் இனிப்புச்சுவை மிகுதியாக இருக்கவேண்டும் என்றும் கூறப்பட்டது. மருந்துகளைக்கூறும் ஆயுர்வேத ஶாஸ்த்ரங்களிலும் இனிப்புச்சுவையே முக்கியமாக விதிக்கப்படுகிறது. (ஸ்நிக்3தா4:) வழவழப்புடையவை; "வழவழப்புக்கு எதிர்த் தட்டான ரூக்ஷமான (கடி2னமான) உணவுகள் ரூக்ஷ வாயுவைக் கிளப்பிவிட்டு ஶரீரத்திற்குத் தீங்கிழைக்கின்றன. வழவழப்பான ஆகாரம் இந்த வாயுவினால் ஏற்படும் தீங்குகளைத் தவிர்க்கின்றது" என்று ஆயுர்வேத3 நூல்களில் சொல்லப்பட்டது. (ஸ்தி2ரா:) நிலை

स्निग्धाः — स्नेहयुक्ताः । स्थिराः — स्थिरपरिणामाः । हृद्याः — रमणीयवेषाः । एवंविधास्सत्त्वमया आहारास्सात्त्विकस्य पुरुषस्य प्रियाः ॥ ८ ॥

कट्वम्ललवणात्युष्णतीक्ष्णरूक्षविदाहिनः ।
आहारा राजसस्येष्टा दुःखशोकामयप्रदाः ॥ ९ ॥

15-X-09.
2-9-10.

9. கட்வம்லலவணாத்யுஷ்ண தீக்ஷ்ண ரூக்ஷவிதா₃ஹிந: |
ஆஹாரா ராஜஸஸ்யேஷ்டா து₃:க்க₂ஶோகாமய ப்ரத₃ா: ||

கட்வம்ல லவணாத்யுஷ்ண தீக்ஷ்ணரூக்ஷவிதா₃ஹிந: — (மிகுதியான) துவர்ப்பு, புளிப்பு, உ(வர்)ப்பு, மிகுந்த சூடு, (மிகுந்த) காரம், கடுமை, எரிக்கும் தன்மை ஆகியவற்றை உடைய, ஆஹாரா:- உணவுகள், ராஜஸஸ்ய இஷ்டா: - ரஜோ குணம் மிகுதியாக உடையவர்களால் விரும்பப்படுகின்றவையாய், து₃:க்க₂ஶோகாமய ப்ரத₃ா: — துன்பம், வருத்தம், நோய் ஆகியவற்றை விளைக்கின்றன.

---

யான நற்பயனை விளைப்பவை. உட்கொள்ளும் உணவு நிலையானதாய் இருக்கமுடியாதாகையாலும், இருந்தால் நோய் விளையுமாகையாலும் இங்கு 'நிலையான நற்பயனை விளைப்பவை' என்று பொருள்கொள்ளப்பட்டது. அதாவது - இந்த உணவினால் ஶரீரம் நிலையாயிருப்பதற்குக் காரணமான ரஸம், ரத்தம், மாம்ஸம், மேத₃ஸ், எலும்பு, மஜ்ஜை, ஶுக்லம் (வீர்யம்) ஆகிய ஏழு தாதுக்களுடைய பரிணமமும், ப₃லம் முதலானவையும் நிலையாக விளைகின்றன என்று கருத்து. (ஹ்ருத்₃யா:) காண்பதற்கு இனியவை; உண்பதற்கு முன்பே வெறுப்பை விளைக்கும் அமைப்பை உடையவையாயிராமல், காணும்போதே உண்ண வேண்டும் என்னும் விருப்பை விளைப்பவை என்று கருத்து. (ஆஹாராஸ் ஸாத்விக ப்ரியா:) இத்தகைய ஆகாரங்கள் ஸாத்விகர்களால் விரும்பப்படுகின்றன. இங்கு சொல்லப்பட்ட தன்மைகள் - த₄ர்ம ஶாஸ்த்ரங்களிலும் ஆயுர்வேதத்திலும் ஒருமுகமாகக் கூறப்பட்ட ஸாத்விக ஆகாரத்தின் மற்றதன்மைகளுக்கும் உபலக்ஷணம். ஆக, "யுக்தாஹார விஹாரஸ்ய" [கீ₃தை 6-17] என்றவிடத்தில் சொல்லப்பட்ட முமுக்ஷுக்களுக்கு உசிதமான ஆஹாரம் இந்த ஶ்லோகத்தில் விளக்கப்பட்டது. 8.

भा।। कट्वम्ललवणात्युष्णतीक्ष्णरूक्षविदाहिनः, कटुरसाः, अम्लरसा ,लवणोत्कटाः, अत्युष्णाः,अतितीक्ष्णाः, रूक्षाः,

9. காழ்த்துப் புளித்துப்பாய்க் கைக்கொதித்துத் தான்கடிதா
யாழ்ச்சிக் கொடிதா யழல்விளைத்து—மூழ்ச்சியினிற்
றுக்கஞ்சோ கம்பிணியைச் சூழ்க்கு நடுக்குணத்தி
ஞெக்க வுகந்துண்ணு மூண்.

நடுக்குணத்தின் — முக்குணங்களில் நடுக்குணமான ரஜோகுணத்தினுல், ஒக்க உகந்து உண்ணும் ஊண் — பொருத்தமாக விரும்பி உண்ணும் உணவு, காழ்த்து — கடுமையான துவர்ப்புடையதாய், புளித்து — புளிப்புடையதாய், உப்பாய் — (மிகுந்த) உவர்ப்புடையதாய், கைக்கொதித்து —(மிகுந்த) உஷ்ணமுடையதாய், தான்கடிதாய் - கடுமையானதாய், ஆழ்ச்சி கொடிதாய் — (உடலை) எரியச் செய்யும் காரத்தினுல் கொடியதாய், அழல்விளைத்து — எரிச்சலை உண்டு பண்ணி, மூழ்ச்சியினில் — இறுதியில், துக்கம் சோகம் பிணியை — துன்பத்தையும், வருத்தத்தையும், நோயையும், சூழ்க்கும் — விளைக்கும்.

9 ராஜஸர்கள் விரும்பும் உணவை விளக்குகிருன். (கடு) மிகுந்த துவர்ப்புடையவை; ஆறு சுவைகளுமே ஸாத்விகர்களுக்கும் மிதமாக (அளவாக) வேண்டியிருக்கையால், இங்கு 'அத்யுஷ்ண' என்னும் பத₃த்திலுள்ள 'அதி' என்ற பதத்தை ஒவ்வொன்றுடனும் கூட்டிக் கொள்ளவேண்டும். (அம்ல) மிகுந்த புளிப்பையுடையவை. 'கடு' என்னும் பத₃ம் சுக்கு, திப்பிலி, மிளகு என்னும் த்ரிகடுகத்திலும், 'அம்ல' பத₃ம் புளியிலும் மிகுதியான ப்ரஸித்₃தி₄யை உடையதாக இருந்த போதிலும், இங்கு அவற்றைமாத்திரம் அல்லாமல் அந்தச் சுவையை உடைய எல்லாப் பொருள்களையும் குறிக்கும் ப்ரகரணமாகையாலே, அப்பத₃ங்கள் முறையே மிகுந்த துவர்ப்புடைய பொருள்களையும், புளிப்புடைய பொருள்களையும் குறிக்கின்றன. (லவண) மிகுந்த உவர்ப்புடையவை; லவணபத₃ம் நேரே உப்பைச்சொல்லுமாயினும் அது உணவாகமாட்டாதாகையாலும், உப்பை நேரே உண்பது 'பசுவின்மாம்ஸத்தை உண்பதை ஒக்கும்' என்று

विदाहिनश्चेति कट्वम्ललवणात्युष्णतीक्ष्णरूक्षविदाहिनः । अतिशैत्यातितैक्ष्ण्यादिना दुरुपयोगास्तीक्ष्णाः; शोषकरा रूक्षाः; तापकरा विदाहिनः ।

---

சாஸ்திரங்களில் நிஷேதிக்கப்பட்டிருக்கையாலும், ஸாத்விகர்களுக்கும் விரதமநுஷ்டிக்காத காலங்களில் சுவைக்காக அளவான உப்பு அனுமதிக்கப் பட்டிருக்கையாலும் இங்கு 'லவண' ஶப்தம் மிகுந்த உவர்ப்பையுடைய பொருள்களைக் குறிக்கிறது. (அத்யுஷ்ண) மிகுந்த சூடுடையவை; "ஸ்நிக்தமுஷ்ணம் ச போஜநம்" [அஷ்டாங்கஹ்ருதயம் ஸூத்ரஸ்தானம்—7] [வழவழப்புடையதாய், சூடுடையதாக உணவு அமையவேண்டும்] என்று அளவான சூடுடையதாக உணவு இருக்கவேண்டுமென்று ஆயுர்வேதநூல்களில் குறிக்கப் பட்டிருக்கையால் 'அதி' என்று விஶேஷணமிடப்பட்டது. (தீக்ஷ்ண) மிகுந்த காரமுடையவை; அந்தந்த உணவுகள் சுவையுடையதாவதற்காக அளவோடு மிளகாய் முதலான காரப்பொருள்கள் அனுமதிக்கப்பட்டிருக்கையால், இங்கும் 'அதி' என்னும் விஶேஷணத்தைச் சேர்த்துக் கொள்ளவேண்டும். 'தீக்ஷ்ண' சப்தம் சூட்டையும் குறிக்குமாயினும், உஷ்ணம் தனியாக எடுக்கப்பட்டிருக்கையால் இங்கு அதைக் குறிக்கவில்லை. அருகிலிருக்கும்போதே கார உணர்வை விளைக்கும் மிளகாய் முதலியவற்றை ஆயுர்வேத நூல்கள் 'தீக்ஷ்ண' சப்தத்தால் குறிக்கின்றன. அது போலவே உண்ணத் தொடங்கியவுடன் மிகுந்த குளிர்ச்சி முதலானவற்றை விளைக்கையால் உபயோகிக்கத் தகாத பொருள்களும் 'தீக்ஷ்ண' சப்தத்தால் குறிக்கப்படுகின்றன. (ரூக்ஷ) உடலை உலர்த்தக் கூடிய கடுமையை உடையவை; முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட 'ஸ்நிக்த' பதத்திற்கு எதிர்த்தட்டு இது. "வாத பித்த ஶ்லேஷ்ம தாதுக்களில் வாதத்தைக் கிளர்ந்தெழச்செய்பவை இவை" என்று தாத்பர்ய சந்த்ரிகை. (விதாஹிந;) எரிச்சலை உண்டுபண்ணுபவை; "பித்தத்தைக் கிளர்ந்தெழச் செய்பவை இவை" என்று தாத்பர்யசந்த்ரிகை. 'கடு' முதலாக 'ரூக்ஷ' பர்யந்தமாகச் சில பொருள்களை எடுத்து 'விதாஹிந:' என்று அவற்றை எரிப்பவற்றைக் கூறுவதாகப் பொருள் கொள்வது ப்ரகரணத்திற்குப் பொருந்தாது. ஆகவே, எல்லாப்பதங்களையும் கொண்ட த்வந்த்வ ஸமாஸமாகவே கொள்ள வேண்டும். இங்கு இத்தன்மைகளைக்

एवंविधा आहारा राजसस्येष्टाः। ते च रजोमयत्वाद्दुःखशोकामयवर्धनाः रजोवर्धनाश्च ॥ ९ ॥

15-X-09

यातयामं गतरसं पूति पर्युषितं च यत्।
उच्छिष्टमपि चामेध्यं भोजनं तामसप्रियम् ॥ १० ॥

10. யாதயாமம் க₃தரஸம் பூதி பர்யுஷிதம் ச யத் ।
உச்சி₂ஷ்டமபி சாமேத்₄யம் பே₄ாஜநம் தாமஸப்ரியம் ॥

---

கூறியது, முன் ஶ்லோகத்திற்போலவே, (ராஜஸர்கள் விரும்பும் உணவுகளின்) மற்ற தன்மைகளுக்கும் உபலக்ஷணம். (ஆஹாராः ராஜஸஸ்ய இஷ்டா:) இத்தகைய உணவுகள் ரஜோகு₃ணம் மிகுந்தவர்களால் விரும்பப்படுகின்றன; (து₃:க்க₂ ஶோகாமயப்ரத₃ா:) துன்பத்தையும், வருத்தத்தையும், நோயையும் விளைப்பவை; "ரஜோ ராக₃ாத்மகம் வித்₃தி₄ த்ருஷ்ணாஸங்க₃ ஸமுத்₃ப₄வம்" [கீ₃தை 14-7] [ரஜோகு₃ணம் (ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையிலான) ஆசையை விளைப்பது என்றும், ஶப்₃த₃ம் முதலான விஷயங்களில் ஆசையையும், புத்திரன், மித்திரன் முதலானரிடம் பாசத்தையும் விளைப்பது என்றும் அறிவாயாக] என்று ரஜோகு₃ணம் காமத்தையும் ஆசாபாசங்களையும் விளைப்பதாகக் கூறப்படுகையால், ரஜோகு₃ணம் மிகுந்த உணவுகளால் கொண்ட பெண்டிர் மக்கள் உற்றார், விஷயங்கள் ஆகியவை காரணமாகத் துன்பமும் வருத்தமும் நோயும் விளைகின்றன என்பது வெளிப்படை. மிகுந்த துவர்ப்பு, புளிப்பு முதலானவற்றை உடைய உணவுகளால் துன்பம் முதலானவை விளைகின்றன என்பது அவரவர் அநுப₄வத்தாலும் விளங்கும். ஆயுர்வேத₃ நூல்களிலும் சொல்லப்பட்டது. த₄ாதுக்களை ஸமநிலை தவறச்செய்வதன் மூலம் இவை துன்பத்தை விளைக்கின்றன. துன்பம் விளைந்த பிறகு பஶ்சாத்தாபத்தால் வருத்தமும் விளைகிறது. காலக்ரமத்தில் நோய்களும் இவற்றால் விளைகின்றன. தமோகு₃ணம் மிகுந்த உணவுகளைப் போலே இவை உடனடியாகப் ப₂லனை விளைக்காவிடினும், ரஜோகு₃ணத்தை மேலும் மேலும் வளர்த்து வயது முதிர்ந்தபின்பும், மறுமையிலும், மறுபிறப்பிலும் இப்பயன்களை விளைத்தே தீரும் என்பது அறியத்தக்கது. 9.

யாதயாமம் — நீண்டநேரமானதும், க₃தரஸம் — இயற்கைச் சுவை இழந்ததும், பூதி — கெட்ட நாற்றமுடையதும், பர்யுஷிதம் ச — நெடுங்காலமானதால் சுவை வேறுபட்டதும், உச்சி₂ஷ்டம் — (ஆசார்யர் முதலான பெரியவர்கள் தவிர மற்றவர்கள்) உண்டு மிகுந்த கலத்தில் உள்ள எச்சிலும், அமேத்₄யம் — யாக₃ ஶேஷம் அல்லாததுமாக, யத் போ₄ஜநம்—யாதொரு உணவு உள்ளதோ (அது) தாமஸப்ரியம் — தமோகு₃ணம் மிகுதியாக உள்ளவர் விரும்புகின்றதாகும்.

---

10\. காலம் கழிந்து கழிந்திரதந் துற்கெந்தித்
தேல மிகப்பழகி யெச்சிலாய்ச்—சாலப்
படைத்தமுதுக் காகாத பாவச்சோ றுகுங்
கடைக்குணத்தா னுண்ணுங் கணக்கு.

காலம் கழிந்து — நீண்டநேரமானதாய், இரதம்கழிந்து — இயற்கைச் சுவை இழந்ததாய், துற்கெந்தித்து — கெட்ட நாற்றமுடையதாய், ஏலமிகப்பழகி — நெடுங்காலமானதால் சுவை வேறுபட்டதாய், எச்சிலாய் — (ஆசார்யர் முதலான பெரியவர்கள் தவிர மற்றவர்கள்) உண்டு மிகுந்த கலத்தில் உள்ள எச்சிலாய், சாலப்படைத்து அமுதுக்கு ஆகாத பாவச் சோறு ஆகும் — யாகத்தில் நன்றுகப் படைக்கப்பட்டு, உண்பதற்குத் தகுதி பெருத பாவச்சோருயிருப்பது, கடைக்குணத்தான் உண்ணும் கணக்கு—கடைசி கு₃ணமான தமோகு₃ணம் மிகுந்தவன் கணக்கிட்டு உண்ணும் சோறு.

---

10\. தாமஸர்கள் விரும்பும் உணவை விளக்குகிருன். சென்ற இரண்டு ஶ்லோகங்களில் முறையே ஸாத்விகர்களும், ராஜஸர்களும் விரும்பும் உணவை விளக்கும்போது அவ்வுணவுகளின் விளைவுகளையும் காட்டினன்; இந்த ஶ்லோகத்தில் தாமஸ ஆஹாரத்தின் விளைவுகளை ஏன் காட்டவில்லை என்னும் ஐயம் எழக்கூடும். ராஜஸ ஆஹாரத்தின் விளைவுகளான துன்பம், வருத்தம், நோய் ஆகியவையே தாமஸ ஆஹாரத்தால் சற்று மிகுதியாக

भा ।। यातयामम् — चिरकालावस्थितम्, गतरसम् — त्यक्तस्वाभाविकरसम्, पूति — दुर्गन्धोपेतम्, पर्युषितम् — कालातिपत्त्या

---

விளைகின்றனவாகையால் இதைத் தனியாகக் காட்டவில்லை என்று கொள்ளவேண்டும். (யாதயாமம்) நீண்டநேரமானது; யாமம் என்னும் பத₃ம் ஒருயாம நேரத்தையே குறிக்குமாயினும் ஒரு யாம காலத்தில் எல்லா ஆஹாரங்களும் கெட்டுப்போவதில்லையாகையால் இங்கு யாமபதம் எவ்வளவு நேரமிருந்தால் அந்த ஆஹாரம் கெட்டுப் போகுமோ அந்த நேரத்தைக் குறிக்கிறது. ஆஹாரம் கெட்டுப் போகுமளவுக்கு நீண்ட நேரம் ஆனது என்று கருத்து. "யாமஶப்₃த₃ம் 'க்₄ருதாத் பரம் மண்ட₃மிவாதிஸூக்ஷ்மம்' [ஶ்வே 4-16] [நெய்யின் மிகநுண்ணிய ஸாரம்ஶம் (பாலில் மறைந்திருப்பது போலே பரமன் எல்லாப் பொருள்களிலும் மறைந்திருக்கிறான்)] என்ற விடத்திற்போலே ஸாரம்ஶத்தைக் குறிக்கிறது; 'யாதயாமம்' என்று ஸாரம்ஶம் நீங்கப்பெற்றது என்று பொருள்படுகிறது"— என்று சிலர் உரையிட்டனர். நீண்ட நேரமானது என்னும் பொருளிலேயே இது தாத்பர்யார்த்த₂மாகத் தேறும். (க₃தரஸம்) இயற்கைச் சுவையிழந்தது. "க₃தரஸம்" என்னும் சொல் "சுவையற்றது" என்றே பொருள்படுமாயினும் நிலம் நீர் இவற்றாலான உணவுகள் சமைக்கப் பட்டாலும் ஒருபோதும் எல்லாச் சுவையும் இல்லாமற் போவதில்லையாகையால் அந்தந்த உணவுகளுக்குரிய இயற்கைச் சுவையை இழந்தது என்றே இங்கு பொருள் கொள்ள வேண்டும். "க₃தரஸ ஶப்₃த₃த்தினாலே (நீண்டநேரமானதாலே) வீர்யமிழந்த உணவைக் குறிக்கப்போகிறபடியால் 'யாதயாம' ஶப்₃த₃த்தாலே அரைகுறையாகப் பக்குவமடைந்த உணவைக் குறிக்கிறது" என்று ஶங்கரர் "யாதயாம" ஶப்தத்திற்கு நலிந்து பொருள் கொண்டது பொருந்தாது என்று இதிலிருந்து தேறுகிறது. (பூதி) கெட்டநாற்றமுடையது; பாஞ்சராத்ரம் முதலானவற்றில் ஸாத்விகர்கள் உண்ணத்தகாத உள்ளிப் பூண்டு முதலானவற்றைக் குறித்தும் "பூதி" ஶப்₃த₃ம் வழங்கப்படுகிறதாயினும் இங்கு இன்ன இன்ன பொருள்கள் தாமஸங்கள் என்று குறிப்பிடும் ப்ரகரணமல்லாமையாலும், கு₃ணத்தைக் காட்டி அத்தகைய உணவுகள் அனைத்தையும் உணர்த்தும் ப்ரகரணமாகையாலும் 'பூதி' ஶப்₃த₃ம் இங்கு தீயதாக உலகிலும் சாஸ்த்ரங்களிலும் பிரசித்தி பெற்ற கெட்ட நாற்றமுடைய

रसान्तरापन्नम्, उच्छिष्टम् -- गुर्वादिभ्योऽन्येषां भुक्तशिष्टम्,

எல்லா உணவுகளையும் குறிக்கிறது. (பர்யுஷிதம் ச) நெடுங்காலமானதால் சுவைவேறுபட்டது. 'யாதயாம' ஶப்3த3த்தாலே நெடுங்காலமானதால் உட்கொள்ளத்தகாத உணவுகள் குறிக்கப்பட்டன. 'க3தரஸ' ஶப்3த3த்தால் இயற்கைச் சுவை இழந்த உணவுகள் குறிக்கப்பட்டன. இங்கு நெடுங்காலமானதால் சுவை வேறுபட்ட உணவுகள் குறிக்கப்படுகின்றன. இதிலிருந்து 'யாதயாம' ஶப்3த3த்தால் நெடுங்காலமானாலும் சுவையிழக்காத பொருள்களே குறிக்கப்படுகின்றன என்று விளங்குகிறது; 'க3தரஸ' ஶப்3த3த்தால் நெடுங்காலம் ஆகாமலே, புரை குத்தாத பால் முதலானவற்றைப்போலே விரைவில் சுவையிழந்த பொருள்கள் குறிக்கப்படுகின்றன என்று விளங்குகிறது. ஓர்இரவே கழிந்தபோதிலும் நீர் முதலான சில பொருள்கள் சுவையிழக்காமல் உள்ளன; அவற்றுக்கும் இது உபலக்ஷணம். அதனாலேயே நீரில் சமைத்த சிலபொருள்களும், புண்ணிய தீர்த்தமல்லாத ஜலங்களும் ஒருராத்ரி கழிந்தாலே உண்ணப்படுவதில்லை. (உச்சி2ஷ்டமபி) ஆசார்யன் முதலானவர்கள் தவிர்ந்த மற்றவர்கள் உண்டு மிகுந்த எச்சில். 'கு3ர்வாதி3ப்4ய:' என்று பா4ஷ்யத்தில் ஆதி3ஶப்தத்தால் பிதா, தமையன், (மனைவி விஷயத்தில்) கணவன் ஆகியவர்களும் குறிக்கப்படுகிறார்கள் என்று தாத்பர்ய சந்த்3ரிகை. "மஹாத்மாக்களான ஜ்ஞானிகளும் ஆதி3ஶப்தத்தில் அடங்குவர்" என்பது பெரிய வாச்சான் பிள்ளை முதலான தென்னாசார்யர்கள் திருவுள்ளம். ஸ்ரீவேதா3ந்த தேசிகருடைய திருவுள்ளமும் மற்ற ஆசார்யர்களின் திருவுள்ளமும் ஜ்ஞானிகளின் ஜாதி விஷயத்தில் வேறுபடுகிறது. அடுத்தபடி முறையே அவற்றை விளக்குகிறோம்.

## ஜாதிவிஷயத்தில் தேசிகரின் திருவுள்ளம்

1. ப4க்தியில்லாத அந்தணனுக்கும் ப4க்தியில்லாத நான்காம் வகுப்பினருக்கும் உள்ள தாரதம்யத்தை பக்தியுள்ள இருவகுப்பினருக்கும் கொள்ளவேண்டும். இவர்களிடையே விவாஹம் முதலானவை செய்து கொள்ளக் கூடாது.

2. பிராம்மணர் முதலான நான்கு வர்ணங்களும் அதிலும் தாழ்ந்தவைகளும் சாதி எனப்படும். வைஷ்ணவகுலம் முதலானவை குலம் எனப்படும். ஜாதி ஶரீரமுள்ளவரை அழியாது. அவைஷ்

ணவன் இப்பிறப்பிலேயே வைஷ்ணவனுக மாறலாமாகையால் குலம் மாறக்கூடியது. காமதே₄னுவானுலும் பசு ஜாதி மாருதது போலே ஆழ்வாரானுலும் ஜாதி போகாது.

3. அந்தணரான மது₄ரகவிகளுக்கு நான்காம் வர்ணத்தில் அவதரித்த நம்மாழ்வார் ஆசார்யரானதும், நாலு சாதிகளிலும் தாழ்ந்த திருப்பாணுழ்வாரை லோகஸாரங்கமஹாமுனிவர் தோளி லேற்றிக் கொண்டு வந்ததும் சாதி நீங்கும் விஷயத்திற்கு ஆதாரமாகக் காட்டக் கூடாது. விதுரர் முதலானவர்களைக் காட்டிலும் மிகுந்த பெருமையுடையவர்கள் ஆழ்வார்கள். அவர் களின் இந்த வரலாறுகளை நம் அநுஷ்ட₂ானத்திற்கு ப்ரமாணமாகக் காட்டமுடியாது. அவர்களும் ஜாதி வரையறையை மீறிக் கார்யங்கள் செய்ததில்லை என்பது அவர்களுடைய அநுஷ்ட₂ா னங்களிலிருந்து விளங்குகிறது.

4. நாராயணைகநிஷ்ட₂ஸ்ய யா யா வ்ருத்திஸ் தத₃ர்ச்சநம் ।
யோ யோ ஜல்பஸ் ஸ ஸ ஜபஸ் தத்₃த்₄யாநம் யந்நிரீக்ஷணம் ॥
தத்₃பாத₃ாம்ப்₃வதுலம் தீர்த்த₂ம் தது₃ச்சி₂ஷ்டம் ஸுபாவநம் ।
தது₃க்திமாத்ரம் மந்த்ராக்₃ர்யம்
தத்ஸ்ப்ருஷ்டமகி₂லம் ஶுசி ॥ [விஹகே₃-ஸம்]

[நாராயணன் ஒருவனிடத்திலேயே ப₄க்தியையுடையவனுடைய எந்தெந்தக் காரியங்களுள்ளனவோ, அவையெல்லாம் ப₄க₃வ த₃ாராத₄னமாகும்; எந்தெந்த வார்த்தைகளுண்டோ அவை யெல்லாம் ஜபமாகும்; அவனுடைய பார்வையெல்லாம் விஷ்ணு த்₄யானமாகும்; அவனுடைய திருவடி ஸம்ப₃ந்த₄ப்பட்ட ஜலம் ஒப்பற்ற தீர்த்த₂மாகும்; அவன் உண்டு மிகுந்த சேஷம் மிகப் பரிஶுத்₃த₄மானது; அவனுடைய ஒருசொல்லும் மிகச்சிறந்த மந்திரமாகும்; அவனுல் தொடப்பட்டவையெல்லாம் பரிஶுத்₃த₄மானவை.] என்னும் ப்ரமாணத்தில் ப₄க₃வத்₃ ப₄க்தனுடைய ஸ்ரீபாத₃தீர்த்த₂மும் எச்சிலும் முறையே ஒப்பற்ற தீர்த்த₂ம் என்றும், மிகப்பரிசுத்தமானது என்றும் சொல்லியி ருப்பது ப்ரஶம்ஸா (புகழுதல்) மாத்திரமே. இது கொண்டு ப₄ாக₃ வதர்களனைவரிடமும் ஸ்ரீபாத₃தீர்த்த₂ம் கொள்ளலாம் என்றே அவர்கள் உண்டுமிகுந்த எச்சிலை உண்ணலாம் என்றே தேருது.

5. வானுளா ரறிய லாகா வானவா வென்ப ராகில்
தேனுலாந் துளப மாலைச் சென்னியா னென்ப ராகில்
ஊனமா யினகள் செய்யு மூனகா ரகர்க ளேலும்
போனகம் செய்த சேடம் தருவரேல் புனித மன்றே.

என்ற பாட்டில் தொண்டரடிப் பொடியாழ்வார் "மிகத்தாழ்ந்தவர்களான போதிலும், திருநாமஸங்கீர்த்தனம் செய்யும் ப₄ாக₃வதர்களின் 'போனகம்' செய்த சேடம் உடனே பரிசுத்தப் படுத்துவது" என்று கூறுவதும் உண்ட கலத்திலுள்ள எச்சிலைப் பற்றியதல்ல; சமைத்த பாத்திரத்திலுள்ள சேஷத்தைப்பற்றியதே ஆகும். ஆகையால், ஆசார்யன், தந்தை, தமையன், ப₄ர்த்தா என்னும் நால்வருடைய எச்சிலே பரிசுத்தப்படுத்துவது; மற்றவர்களுடைய எச்சில் உட்கொள்ளத்தகாதது.

## ஜாதி விஷயத்தில் தென்னுசார்யர்களின் திருவுள்ளம்

1. ந ஶூத்₃ரா ப₄க₃வத்₃ப₄க்தா: விப்ரா ப₄ாக₃வதா: ஸ்ம்ருதா: [எம்பெருமானிடம் ப₄க்தி உள்ளவர்களான சூத்ர ஜாதியினர் சூத்ரர்கள் அல்லர்; அவர்கள் அந்தணர்களே ஆவர்.]

மத்₃ப₄க்தஜநவாத்ஸல்யம் பூஜாயாஞ்சாநுமோத₃நம் ।
ஸ்வயமப்₁யர்ச்சநஞ்சைவ மத₃ர்த்தே₂ டம்₃ப₄வர்ஜநம் ॥
மத்கதா₂ஶ்ரவணே ப₄க்தி: ஸ்வரநேத்ராங்க₃விக்ரியா ।
மமாநுஸ்மரணம் நித்யம் யச்ச மாம் நோபஜீவதி ॥
ப₄க்திரஷ்டவித₄ா ஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சே₂ऽபி
வர்த்ததே ।
ஸ விப்ரேந்த்₃ரோ முநி: ஶ்ரீமாந் ஸ யதி: ஸ ச பண்டி₃த:॥
தஸ்மை தே₃யம் ததோ க்₃ராஹ்யம் ஸ ச பூஜ்யோ
யதா₂ ஹ்யஹம் ॥ [கா₃ருட₃ம் 219-6...9]

[(1) என் ப₄க்தர்களிடத்தில் வாத்ஸல்யம், (2) என்னை ஆராத₄னம் செய்வதை ஆமோதி₃த்தல், (3) தானே என்னைப் பூஜித்தல், (4) என் விஷயத்தில் ஆட₃ம்ப₃ரமற்றிருத்தல், (5) என் கதைகளைக் கேட்பதில் அன்பு, (6) (என்னை நினைக்கும்போது) குரல் தழதழத்தும், கண்ணீர் மல்கியும்,

உடம்பு மயிர்க்கூச்செறிந்துகொண்டுமிருக்கை, (7) எப்போதும் என்னை நினைத்திருக்கை, (8) என்னிடம் வேறு ஒரு ப்ரயோஜனத்தையும் கேளாதிருக்கை என்னும் இந்த எட்டுவிதமான பக்தியானது எவனிடம் காணப்படுகிறதோ, மிலேச்சனாயினும் அவனே ப்ராஹ்மணஶ்ரேஷ்டன்; அவனே முனிவன்; அவனே தனவான்; அவனே பண்டிதன்; அவனுக்கு ஞானத்தை உபதேசிக்கலாம்; அவனிடமிருந்து ஞானோபதேசமும் பெறலாம் அவன் என்னைப்போல் பூஜிக்கத்தக்கவன்.] முதலான ப்ரமாணங்களில் எம்பெருமானிடம் தலைசிறந்த பக்தியுடையவர்களும், அவனையே ப்ராப்யம், ப்ராபகம், தாரகம், போஷகம், போக்யம் ஆகிய எல்லாமாகக் கொண்டவர்களுமான மஹாத்மாக்களான ஜ்ஞானிகள் விஷயத்தில் அவர்களுடைய தாழ்ந்த ஜாதி போய் உயர்ந்தஜாதி வந்துவிடும் என்றே சொல்லப்படுவதாக விளங்குகிறது. "ஸ மஹாத்மா ஸுதுர்லப:" [கீதை 7-9] என்று எம்பெருமான் அருளியபடியே இந்த அதிகாரிகள் மிகவும் கிடைத்தற்கரியவர்கள்; நம்மாழ்வார் திருப்பாணாழ்வார் முதலியவர்கள் அத்தகையவர்கள். அதனாலேயே அந்தணர் தலைவரான மதுரகவியாழ்வார் நான்காம் வர்ணத்தவரான நம்மாழ்வாரை ஆசார்யராகக் கொண்டார். வர்ணத்தாலும், ஆஶ்ரமத்தாலும் உயர்ந்த லோகஸாரங்க மஹாமுனிவர் திருப்பாணாழ்வார் அத்தகைய அதிகாரி என்பதை பகவந்நிய மனத்தால் அறிந்து அவரைத் தோளில் சுமந்து வந்தார். இத்தகைய மஹாத்மாக்களான ஜ்ஞானிகள் விஷயத்திலேயே ஜாதிபோகுமேயொழிய எல்லா பாகவதர்கள் விஷயத்திலும் அல்ல. ஆகையால் வர்ணாஶ்ரம தர்மங்களை விதிக்கும் ஶாஸ்த்ரங்கள் பழுதுபடமாட்டா. இத்தகைய மஹாத்மாக்களான ஜ்ஞானிகளும் தங்களை அத்தகையவர்களாக அபிமானித்து வர்ணாஶ்ரம ஆசாரங்களைக் குலைக்க மாட்டார்கள். நம்மாழ்வாரும் வேதார்த்தத்தை திவ்யப்ரபந்தங்களிலே அருளினாரேயொழிய வேதவாக்யங்களைத் தம் வாயால் சொல்லவில்லை. திருப்பாணாழ்வாரும் திருவரங்கத்துக்குள் புகவும், மாமுனிகள் தோளிலே ஏறவும் மறுத்தார். அரங்கன் ஆணை என்று அறிந்த பின்பே பாரதந்த்ரியத்தை அனுஷ்டித்து மாமுனிகள் தோளிலேறி கர்ப்பக்ருஹம் வரையில் எழுந்தருளினார். திருமழிசையாழ்வாரும் வேதவாக்யத்தை வாயால் சொல்லாமல் கறுப்பு நெல்லைக் கீறிக்காட்டினார். ஆகையால் இவர்கள் ஜாதியால் உயர்ந்தவர்

களோடு கொள்வினைகொடுப்பினை செய்துகொள்ள இடமேயில்லை. தாழ்ந்தவர்ணத்தில் உதித்த ஒருவர் மஹாத்மாவான ஜ்ஞாநி என்று நிர்ணயிக்கும் தகுதி எம்பெருமானுக்கும், ஆழ்வார்களையும் ஆசார்யர்களையும் போன்ற மஹாத்மாக்களுக்குமே உண்டு. (இக்காலத்தில் உள்ள ஸ்ரீவைஷ்ணவர்களில் இத்தகுதியுள்ளவர்கள் எவரேனும் இருக்கிறார்களா என்பது விளங்கவில்லை) இத்தகைய மஹாத்மாக்களான ஜ்ஞாநிகள் விஷயத்தில் வர்ணாஶ்ரம த4ர்மத்தை மீறிய செயல்களைப் பெரியவர்கள் அநுஷ்டித்திருக்கிறார்கள் என்பதற்கு இதிஹாஸ புராணங்களிலும் ஆழ்வார்கள் ஆசார்யர்கள் வரலாறுகளிலும் பலசான்றுகள் உண்டு. அவைகளில் சில:— (1) எல்லாவகையிலும் உயர்ந்த சக்ரவர்த்தித் திருமகன் ஏழை யேதலன் கீழ் மகனான குஹப்பெருமானை "உடன் பிறந்தவனாக" என்கிறபடியே தம்பியாகக் கொண்டான். (2) அந்தச் சக்ரவர்த்தித் திருமகன் ஜாதியால் தாழ்ந்த வேடுவிச்சியாயினும் பரமபா4க3வதையாய் ஆசார்ய நிஷ்டை2 உடையவளான சபரி கையாலே விருந்துண்டான். (3) தூதுபோன கண்ணனும் சாதியில் உயர்ந்த பீ4ஷ்மத்3ரோணாதி3களைக் கணிசியாமல் ஜாதியால் தாழ்ந்த விது3ரர் கையால் விருந்துண்டார். (4) "மர்க்கடம் விலங்கு" என்கிறபடியே சாதியால் மிகத்தாழ்ந்த அனுமனோடு ஜாதியால் மிகஉயர்ந்த சக்ரவர்த்தித் திருமகன் ஸஹபோ4ஜனம் செய்தான். (5) த4ர்மபுத்ரர் யது3குலத்திலும் ஆய்க்குலத்திலும் தொடர்புடைய கண்ணனுக்கு, குலத்தால் உயர்ந்தவர்களைக் கணிசியாமல் அக்3ரபூஜை கொடுத்தார். (6) "குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும் பிறந்திலேன்" என்று தம்வாயால் சொன்ன திருமழிசையாழ்வாருக்குப் பெரும்புலியூரடிகள் தம்முடைய யாக3த்திலே அக்3ரபூஜை கொடுத்தார். (7) தர்மபுத்ரர் ஜாதியால் தாழ்ந்த விதுரருக்குப் புத்ரனாயிருந்து ஸம்ஸ்காரம் செய்தார். (8) ஸ்ரீராமபிரான் பக்ஷியாயிருந்த ஜடாயுவுக்குப் புத்ரனாயிருந்து ஸம்ஸ்காரம் செய்தான். (9) பெரியநம்பி சாதியால் தாழ்ந்த மாறனேரி நம்பிக்கு ப்3ரஹ்மமேத4 ஸம்ஸ்காரம் செய்தார். (10) தொண்டைமான் சக்ரவர்த்தி சாதியால் தாழ்ந்த குயவரான குறும்பறுத்த நம்பியை அநுவர்த்தித்தார். (11) எம்பெருமானார் சாதியால் தாழ்ந்த திருக்கச்சி நம்பிகளை ஆசார்யராகக் கொள்ளவும் அவரது உச்சிஷ்டபோ4ஜனம் கொள்ளவும் ஆசைப்பட்டார். (12) சாதியாலும் ஆஶ்ரமத்தாலும் உயர்ந்த லோகஸாரங்கமஹாமுனிவர் திருப்பாணாழ்வாரைத் தோளிலே சுமந்தார். (13) அந்தணர் தலைவரான மது4ரகவிகள் நம்மாழ்வாரை ஆசார்யராகவே கொண்டார். (14) எம்பெருமானார் தாம் திருவாராதனம் செய்வதற்கு முன்பு பிள்ளையுறங்காவில்லி தாஸர் ஸ்பர்ஶத்தாலே காயஶுத்3தி4 செய்து

கொண்டார். (15) ஆசார்ய ஸ்ரேஷ்ட₂ரான நம்பிள்ளை ப்ரஸாத₃ ஸ்வீகாரத்தின்போது பிள்ளை ஏறு திருவுடையார் தாஸர் கரஸ்பர்ஶத்தாலே அன்னஶுத்₃தி₄ செய்துகொண்டார். (16) பட்டர் வம்ஶத்தில் உதித்த நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர் தாம் குடிபுகும் வீட்டிற்கு, பிள்ளை வானமாமலை தாஸரின் ஸஞ்சாரத்தாலே ஸ்த₂லஶுத்₃தி₄ செய்துகொண்டார். இவற்றிலிருந்து உண்ணும் சோறு பருகும்நீர் தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன் என்ற நம்மாழ்வாரைப்போலே ப₄க₃வந்நிஷ்டையோ, "தேவு மற்றறியேன்" என்ற மதுரகவியாழ்வாரைப்போலே ஆசார்யநிஷ்டை₂யோ உடைய ப₄ாக₃வதர்களுக்குத் தாழ்ந்த சாதிபோய் அவர்கள் அந்தணர் தலைவரேயாவர் என்று விளங்குகிறது. ப்₃ராஹ்மணராகவும் க்ஷத்ரியராகவுமிருந்து தமது கொடிய ஒழுக்கத்தால் திரிசங்கு, அஜாமிளன், க்ஷத்ரப₃ந்து₄ முதலானோர் தம் உயர்சாதியை இழந்து தாழ்ந்தசாதியையடைந்தனர் என ப்ரமாணங்கள் கூறுவதை ஒப்புக்கொள்ளுகிறோம், அதைப்போல், தலைசிறந்த ஜ்ஞானிகளான மஹாத்மாக்களுக்குத் தாழ்ந்த சாதி நீங்கப்பெற்று உயர்ந்தவராகிறார்கள் என்று ப்ரமாணங்களைக் கொண்டு ஒப்புக்கொள்வதில் எக்குறையுமில்லை.

2. 'தஸ்யோச்சி₂ஷ்டம் ஸுபாவநம்' என்னும் விஹகே₃ந்த்₃ர ஸம்ஹிதா வசனத்தின் தொடக்கத்தில் அந்த அதி₄காரியைப் பற்றி "நாராயணைக நிஷ்ட₂ஸ்ய" என்று கூறுகையால், நாராயணனையே ப்ராப்யமும் ப்ராபகமும் த₄ாரக போ₄ஷக போக்₃யங்களுமாகக் கொண்டு வாழும் அதி₄காரியினுடைய உச்சி₂ஷ்டத்தையே மிகப்பரிசுத்தமானது என்று கூறுகையால் அதை வெறும் புகழ்ச்சியாகவோ, சமைத்த பாத்திரத்தில் இருக்கும் ஶேஷத்தைக் குறிப்பதாகவோ கொள்ள வேண்டிய அவசியமில்லை.

3. இந்த ப்ரமாணத்தைப் பின்பற்றி "வானுளார் அறியலாகா" [திருமாலை 41] என்று தொடங்கும் பாட்டில் தொண்டரடிப்பொடியாழ்வார் "போனகம் செய்த சேடம் தருவரேல் புனிதமன்றே" என்று அருளியிருப்பதும் வெறும் திருநாமஸங்கீர்த்தனம் செய்யும் ப₄ாக₃வதர்களைப் பற்றியதன்று, "மெய்ம்பொருள் போகவிட்டு" ...வாழும் சோம்பர் [திருமாலை 38] என்னும் பாட்டில் கூறப்பட்ட தலைசிறந்த ப்ரபந்நர்களுடைய ப்ரப₄ாவத்தைக் கூறுகின்றவையே மேலே உள்ள ஐந்து பாட்டுக்களும். (பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்₂யாநத்தில் அப்படியே உள்ளது)

39 ம் பாட்டில்—“எவ்வளவு தாழ்ந்த ஜன்மத்தில் பிறந்தவர்களா னாலும் இந்த ‘மேம் பொருள்’ பாசுரத்தில் சொன்ன ஜ்ஞானத்தில் ஊன்றி நிற்பவர்கள் திருத்துழாயைப்போலே எம்பெருமானலே தலைமேல் வைத்துக் கொண்டாடப்பெறுவர்” என்கிறார். 40 ம் பாட்டில் — “பிறப்பால் வரும் தாழ்வு மாத்திரம் அல்லாமல் ஆசாரக்குறைவு உடையவர்களானாலும் இந்த ஜ்ஞாநத்தில் ஊன்றி நிற்பவர்கள் இந்த ஆசாரக்குறைவினால் உண்டாகும் பலனை அநுபவிக்க வேண்டியதில்லை” என்கிறார். 41 ம் பாட்டில்— “இப்படிப் பிறப்பாலும் ஆசாரத்தாலும் வரும் குறை இல்லாமல் போவது மாத்திரம் அன்று. அவரோடு தொடர்புடைய ஸம்ஸாரிகளும் அவருடைய எச்சிலை உண்டால் பரிசுத்தி பெறுவர்” என்கிறார். இப்பாட்டில் “போனகம் செய்த சேடம்” என்பதற்கு “அமுதுசெய்து கைவாங்கின கலத்தில் ப்ரஸாதம்” என்று பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம் செய்திருப்பது குறிக்கொள்ளத்தக்கது. 42 ம் பாட்டில் —“பிறப்பு ஆசாரம் முதலானவற்றால் தாழ்வுடையவர் களானாலும், இந்த ஜ்ஞாநம் உடையவர்கள்—இந்த ஜ்ஞாநத்தை அநுஷ்டானபர்யந்தம் அடையாதவர்களாய், பிறப்பு ஆசாரம் ஆகியவற்றில் உயர்ந்தவர்களுக்கு ஸர்வேஶ்வரனைப்போலே பூஜிக்கத் தக்கவர்களாய், ஜ்ஞாநம் அளிப்பது ஜ்ஞாநம் கொள்வது ஆகிய கொள்வினை கொடுப்பினைகளைச் செய்வதற்குத் தக்கவர்களாவர்.” என்கிறார். இந்தப் பாட்டே கா₃ருட₃புராணவசனத்திற்கு நேர் மொழி பெயர்ப்பாக விளங்குகிறது. இப்பாட்டில் “மதிள் திருவரங்கத்தானே” என்ற இடத்திற்கு “உபதேசமாத்ரமேயாய்ப் போகாமே கோயிலிலே வந்து லோகஸாரங்க₃மஹாமுனிகள் தலையிலே திருப்பாணாழ்வாரை வைத்து இவ்வர்த்த₂த்தை வ்யாபரித்துக் காட்டிற்றிலீரோ” என்று திருப்பாணாழ்வார் விஷயத்தில் பெரிய பெருமாளே இவ்வர்த்த₂த்தை நடத்திக்காட்டியதாகப் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்₂யானமிட்டருளினார். 43ம் பாட்டில்— “குடிப்பிறப்பு ஆசாரம் ஜ்ஞாநம் ஆகிய அனைத்தையும் உடையவர்களாய், அடியார்களுக்குத் தலைவரான அந்தணர்களானாலும் இந்த ஜ்ஞாநமுடையவர்களை அவர்களுடைய பிறப்பு ஆசாரம் முதலானவற்றின் தாழ்வுகளைப் பார்த்துத் தாழ நினைத்தார்களா

பிழைதிருத்தம்:- பக்கம் 502ல் 6-வது வரியில் ‘த₄னவான்’ என்றதற்குப்பின் ‘அவனே ஸந்யாஸி’ என்று சேர்த்துக்கொள்க.

னால், அக்கணத்திலேயே அவர்கள் சண்டாளர்கள் ஆகிவிடுவார்கள்.'' என்கிறார். 44ம் பாட்டில்—''பிறப்பு ஒழுக்கம் முதலானவற்றால் மிகத் தாழ்ந்த க₃ஜேந்த்₃ராழ்வானுக்கு இந்த ஜ்ஞாநம் ஒன்றையே பார்த்து, பிரமன் முதலானோர் விஷயத்திற்காட்டிலும் மேலான அருளை எம்பெருமான் பொழிந்ததை இந்தப்பரமபா₄க₃வத வைப₄வத்திற்கு த்₃ருஷ்டாந்தமாக எடுக்கிறார். இவற்றிலிருந்து ''வானுளார் அறியலாகா'' என்று தொடங்கும் பாட்டு வெறும் திருநாம ஸங்கீர்த்தனம் செய்யும் பா₄க₃வதர்களைப் பற்றியதன்று; தலைசிறந்த ப்ரபந்நர்களைப்பற்றியதே என்று தெளிவாக விளங்குகிறது. ஆகையால், இத்தகையவர்கள் விஷயத்தில் உண்ட கலத்தில் இருக்கும் எச்சில் பரிசுத்தப் படுத்துவதே ஆகும்.

4, இவ்விடத்தில் ஓர் ஆக்ஷேபம் எழுகிறது. அதாவது:—''விப்ரா: பா₄க₃வதா: ஸ்ம்ருதா:'' என்று ''எம்பெருமானிடம் தலைசிறந்த பக்தியை உடையவர்கள் தாழ்ந்த ஜாதியில் பிறந்தவர்களாயிருந்தாலும் அந்தணர்களே ஆவர்'' என்று பிரமாணம் கூறுகிறது. அப்படி அவர்கள் அந்தணர்கள் ஆகிவிட்டால் அந்தணர்க்குரிய உபநயநாதி₃ ஸம்ஸ்காரங்களும், வேத₃ம் ஓதுதல் ஓதுவித்தல், யாக₃ம் செய்தல் செய்வித்தல் முதலான தொழில்களும் அவர்களுக்கு வரவேண்டிவருமே. இப்படி வந்ததாக எங்கும் அநுஷ்டா₂னம் இல்லையே என்பது அவ்வாக்ஷேபம்.

5. இதற்கு விடை பின்வருமாறு:— தலைசிறந்த ஜ்ஞானிகளுக்குத் தாழ்ந்த ஜாதிபோய் அவர்கள் உயர்ந்தவர்களாகிவிடுகிறார்கள் என்பதே இந்தப் பிரமாணங்களுக்குக் கருத்தே ஒழிய அந்தணர் முதலான உயர்ந்த ஜாதி அவர்களுக்கு வந்துவிடுகிறது என்று கருத்தல்ல. அப்படிக்கொண்டால், 'முநி: யதி:' என்று இவர்களைச் சொல்லியிருக்கையாலே அவன் ஸந்யாஸியாகவும் ஆகி, ஸந்யாஸ த₄ர்மத்தையும் ஏற்றுக்கொள்ள வேண்டிவரும். ஆகையால் ''விப்ர: பா₄க₃வதா:'' என்றதால் இத்தகைய ஜ்ஞாநி பலவிஷயங்களில் அந்தணர்களை ஒத்தவன் என்றும், ''முநி: யதி:'' என்றதால் பலவிஷயங்களில் முனிவர்களையும் ஸந்யாஸிகளையும் ஒத்தவன் என்றும், ''ஸ விப்ரேந்த்₃ர:'' என்றதால் பல தன்மைகளில் அவன் அந்தணர்களைக்காட்டிலும் உயர்ந்தவன் என்றுமே பொருள்கொள்ளவேண்டும். ''சீதனையே தொழுவார் விண்ணுளாரிலும் சீரியரே'' [திருவிருத்தம் 79] என்கிறபடியே, ''இவர்கள் நித்யஸூரிகளைக்காட்டிலும் சிறந்தவர்களே'' என்று நம்மாழ்வார்

அருளினர். இனி, தாழ்ந்த ஜாதி போய்விடுகிறதென்றால் இவர்கள் எந்த ஜாதியை அடைகிருர்கள் என்னும் கேள்வி எழுகிறது. 'எம்பெருமானுக்கு ஶேஷமாய், பரதந்த்ரமாக உள்ளது இவ்வாத்ம வஸ்து' என்று பரிபூர்ணமாக உணர்ந்து அதன்படி நடக்கும் தொண்டக்குலமாகிற மிகவுயர்ந்த சாதி வந்துவிடுகிறது என்பதே இதற்குப் பதில். ''பண்டைக்குலத்தைத் தவிர்ந்து—தொண்டக் குலத்திலுள்ளீர்'' [திருப்பல்லாண்டு-5] என்று பெரியாழ்வார் அருளினரன்றோ. ஆக,

'' கிமப்யத்ராபி₄ஜாயந்தே யோகி₃ந: ஸர்வயோநிஷு |
ப்ரத்யக்ஷிதாத்ம நாத₂நாம் நைஷாம் சிந்த்யம் குலாதி₃கம் ||''

[எம்பெருமானுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்தாலே ஆழ்வார்கள் முதலான ஞானிகள் இவ்வுலகில் எல்லா ஜாதிகளிலும் பிறக்கி ருர்கள். எல்லா ஆத்மாக்களுக்கும் ஆத்மாவான அந்த எம்பெரு மானையே ஸாக்ஷாத்கரித்த இவர்களைக் குலம் முதலானவைகளை இட்டுத் தாழ நினைக்கலாகாது.] என்று ப₄ாரத்₃வாஜ ஸம்ஹிதை யிலும், ''த₃க்₃த₄ துர்ஜாதி கில்பி₃ஷ:'' [தாழ்ந்த ஜாதியாகிற தே₃ாஷம் (ஜ்ஞானத்தாலே) எரிக்கப்பட்டவன்] என்று ப₄ாக₃ வதத்திலும் சொல்லப்பட்டிருப்பதால் தாழ்ந்த ஜாதி இவர்களுக்குப் போய்விடுகிறது என்றே கொள்ளவேண்டியுள்ளது. 'விப்ரா:', 'விப்ரேந்த்₃ர:', 'முநி:', 'யதி:', ''தொண்டக்குலத்திலுள்ளீர்'', ''விண்ணுளாரிலும் சீரியரே'' முதலான ப்ரமாணங்களின்படி இவர்கள் பல தன்மைகளில் ப்₃ராஹ்மணர்கள், முனிவர்கள், ஸந்யாஸிகள் ஆகியவர்களை ஒத்தவர்களாகவும், பலதன்மைகளில் அவர்களைவிடச் சிறந்தவர்களாகவும் உள்ள தொண்டக்குலம் என்னும் உயர்ந்த ஜாதியை அடைகிருர்கள் என்றே கொள்ள வேண்டும்.

ஆழ்வார்கள் போன்ற தலைசிறந்த ஜ்ஞானிகளுக்குத் தாழ்ந்த ஜாதி போகுமா என்ற விஷயத்தில் கருத்து வேற்றுமை இருந்த போதிலும், ''மிகுந்த பெருமையுடைய ஆழ்வார்களுடைய வரலாறுகளை நம் அநுஷ்ட₂ானத்திற்கு ப்ரமாணமாகக் காட்ட முடியாது'' என்று தேசிகன் திருவுள்ளம் பற்றியிருப்பதையும், தென்னசார்யர்களும் இவர்களுக்கு ப்₃ராஹ்மண ஜாதி வந்துவிடுவ தில்லை என்று திருவுள்ளம் பற்றுவதையும் காணும்போது, இவர் களிடையே அதி₄கமாகக் கருத்து வேற்றுமை இருப்பதாகக்கொள்ள

இடமில்லை. இரண்டு ஸம்ப்ரதா3யத்தைச் சேர்ந்த அறிவாளிகளிடையே இன்று ஜாதி விஷயத்தில் நடைமுறையில் எந்தவிதமான வேற்றுமையும் இல்லை. ''பா4க3வதர்கள் எத்தனை பெரிய ஜ்ஞானிகளானாலும் அவர்களுடைய உச்சி2ஷ்டபோ4ஜநம் கூடாது'' என்பது தேசிகன் திருவுள்ளம். ''தலைசிறந்த ஜ்ஞானிகளான பா4க3வதர்களுடைய உச்சி2ஷ்ட போ4ஜநம் பரிசுத்தப்படுத்துவதாகையால் ஏற்கத் தக்கதே'' என்பது தென்னாசாரியர்களின் திருவுள்ளம் என்னும் கருத்து வேற்றுமை இவ்வளவால் விவரிக்கப்பட்டதாயிற்று.

இனி, தாத்பர்ய சந்த்3ரிகையிலுள்ளவையான உச்சி2ஷ்டபோ4ஜநம் பற்றிய மற்றும் சில விசாரங்கள் தரப்படுகின்றன:- ''அதி3தி: புத்ரகாமா ஸாத்4யேப்4யோ தே3வேப்4யோ ப்3ரஹ்மௌத3நம பசத்। தஸ்யா உச்சே2ஷணமத3து:। தத் ப்ராஸ்நாத்। ஸாரேதோ Sத4த்த ||'' [யஜுர்—கா—6-5-6-1] [அதி3தி புத்ரர்களை விரும்பியவளாய், ஸாத்4ய தே3வர்களுக்கு *ப்3ரஹ்மௌத3நத்தைச் சமைத்து அளித்தாள். அவளுக்கு அந்த தே3வர்கள் தாங்கள் உண்டு மிகுந்ததைக் கொடுத்தார்கள், அதை அவள் உண்டாள். (அதனால்) அவள் க3ர்ப்ப4ம் த4ரித்தாள்] என்று யஜுர் வேத3த்தில் ஆசார்யரோ அல்லது தந்தையோ அல்லது ப4ர்த்தாவோ அல்லாத ஸாத்4ய தே3வர்களின் உச்சி2ஷ்ட போ4ஜநத்தை அதி3தி செய்தாள் என்று சொல்லப்பட்டிருக்கிறதே; இது எப்படிப் பொருந்தும்? எனில்; இது ப்3ரஹ்மௌத3நத்தை விதி4ப்பதற்காக ஏற்பட்ட வாக்யமாதலின், எல்லா உச்சி2ஷ்ட போ4ஜநத்திற்கும் பொருந்தாது. அல்லது பாத்ரத்தில் மிகுந்த உச்சி2ஷ்டத்தைப் பற்றியதாகவும் ஆகலாம். இந்த விஷயம் வேறு எங்கும் சொல்லப்படாததாகையால் விதி4 என்றே கொண்டாலும், அதி3தி ஸாத்4ய தே3வர்கள் விஷயம் என்றே கொள்ளவேண்டும். இது கொண்டு நம்முடைய அநுஷ்டா2நத்தை நியமிக்க முடியாது. நம்முடைய அநுஷ்டா2னத்திற்குக் கொண்டாலும், அந்த வேத3 வாக்யத்தில் சொன்ன கர்ம விஷயமாகக் கொள்ளவேண்டும். உண்மையில் இங்கு விதி4யோ அல்லது விதி4யைக் கல்பிப்பதற்கு இடமோ இல்லையாகையால், இவ்விஷயத்தில் (உச்சி2ஷ்ட போ4ஜந விஷயத்தில்) இது ப்ரமாணமாகாது. இனி, தே3வரிஷியான நாரத3ர், முற்பிறப்பில் தான் ஶூத்3ர ஜாதியில் இருந்தபோது நடந்ததை நினைவு கூர்ந்து, ''உச்சி2ஷ்ட லேபாந் அநுமோதி3தோ த்3விஜைஸ் ஸக்ருத் ஸ்ம பு4ஞ்ஜே தத3பாஸ்த கில்பி3ஷ:'' [பா4க3வதம் 1-5-25] [அந்தணர்களுடைய அருளுக்குப் பாத்ரமான

* ப்3ரஹ்மௌத3நம்—பாலில் சமைத்த சோறு.

வனுய், அவர்களுடைய உச்சிஷ்டத்தை நான் ஒருமுறை பு₄ஜித்தேன். அதனுல் பாபம் நீங்கப்பெற்று (மனம் பரிசுத்தமாகி உயர்ந்த பிறவியை அடைந்தேன்.) ] என்று கூறியிருப்பதை எப்படி நிர்வஹிப்பது? என்னும் கேள்வி எழுகிறது. அப்பிறப்பில் நாரத₃ர் ஶூத்₃ர ஜாதியைஉடையவராயினும், அவ்வந்தணர்களுக்கு சிஷ்யராகவும் இருந்தாராகையால், ஆசார்யனுடைய உச்சி₂ஷ்ட பே₄ாஜநமாகையால்குறையில்லை. சிஷ்யர் அல்லாதவராஞல் உச்சி₂ஷ்டபே₄ாஜநத்தைக் கொள்ளமுடியாது. இப்படி ஆசார்ய விஷயமாகக் கொண்டால்தான் த₄ர்மஶாஸ்த்ரங்கள் முரண்படாமல் இருக்கும். வசனங்கள் முரண்படும்போது, தர்க்கத்தைக் கொண்டு ஓர் அநுஷ்டா₂னத்தைக் கற்பிக்க முடியாதன்றோ; இங்கு என்ன வசநவிரோத₄ம்? எனில்; "உச்சி₂ஷ்டாஶநவர்ஜம் ஆசார்யவத் ஆசார்ய புத்ரே வ்ருத்தி:" [ஆபஸ்தம்ப₃ த₄ர்ம 1-2-7-30] [ஆசார்யனிடத்திற்போலே ஆசார்ய புத்ரனையும் கௌரவிக்க வேண்டும்; ஆனுல் ஆசார்ய புத்ரனுடைய உச்சி₂ஷ்டத்தைப் புசிக்கலாகாது,] என்று ஆபஸ்தம்ப₃த₄ர்ம ஸூத்ரத்தில் ஆசார்ய புத்ரனுடைய உச்சி₂ஷ்டத்தையே பு₄ஜிக்கலாகாது என்று கூறியிருப்பதால், மற்றவர்களுடைய உச்சி₂ஷ்டத்தை பு₄ஜிக்கலாகாது என்பது தன்னடையே விளங்கும். ஆசார்யன் தவிர்ந்த மற்றவர்களுடைய உச்சி₂ஷ்டத்தை உண்டு விட்டால் பா₄க₃வதனுக்குக் கடுமையான ப்ராயஶ்சித்தங்கள் விதி₂க்கப்படுகின்றன. யாமுநாசார்யர் ஆக₃ம ப்ராமாண்யத்தில் மேற்கோளாகக் காட்டியிருக்கும் பின்வரும் ஸநத்குமார ஸம்ஹிதா வசநம் இவ்விஷயத்தில் பிரமாணம் ஆகும். "நிர்மால்யம் ப₄க்ஷயித்வைவ-முச்சி₂ஷ்டமகு₃ரோரபி | மாஸம் பயோவ்ரதோ பூ₄த்வா ஜபந் அஷ்டாக்ஷரம் ஸதா₃ | ப்₃ரஹ்மகூர்ச்சம் தத: பீத்வா" [இவ்வண்ணமாக நிர்மால்யத்தையோ அல்லது ஆசார்யர் அல்லாதவர்களுடைய உச்சி₂ஷ்டத்தையோ புசித்தாஞகில், ஒரு மாத காலம் எப்போதும் அஷ்டாக்ஷர மந்த்ர ஜபம் செய்துகொண்டு பாலைமாத்திரம் உண்கையாகிற பயோ வ்ரதத்தை அநுஷ்டி₂த்து, அது முடிந்த பிறகு, *ப்₃ரஹ்மகூர்ச்சத்தைக் குடித்து (அப்பாபத்திலிருந்து விடுபடுவான்.)] என்பது அவ்வசநம். இங்கு கீ₃தா பா₄ஷ்யத்தில் கு₃ரு ஶப்₃த₃ம் ஆசார்யனையோ, பிதாவையோ

* ப்₃ரஹ்மகூர்ச்ச பஞ்சக₃வ்யம் என்பதின் சுருக்கம்:- பசுவின் பால், தயிர், நெய், சாணம், மூத்திரம் ஆகியவற்றை அளவோடு கூட்டி, கூர்ச்சத்தால் ஹோமம் செய்து எஞ்சியிருக்கும் பஞ்சக₃வ்யத்தைப் பருகுவது பெரும் பாபங்களுக்கு ப்ராயச்சித்தமாகும்.

குறிக்கிறது என்று கொண்டாலும், கு₃ரு ஶப்₃த₃த்திற்குப் பொருளான உபாத்₄யாயர் முதலான எல்லா ஆசார்யர்கள் விஷயத்திலும் உச்சி₂ஷ்டத்தை ஏற்கலாம் என்பதற்குப் பிரமாணமில்லாமையால், கு₃ரு ஶப்₃த₃ம் எல்லா ஆசார்யர்களையும் குறிக்கும் என்று கொள்ள முடியாது. ஏதோவொன்றை உபதேசித்தவர்கள் அனைவரும் ஆசார்யர்களாக மாட்டார்களே.

''உபநீய து யஶ்ஶிஷ்யம் வேத₃ம் அத்₄யாபயேத்₃த்₃விஜ: |
ஸகல்பம் ஸரஹஸ்யம் ச தமாசார்யம் ப்ரசக்ஷதே ||''

[மநு. 2. 140]

[எந்த அந்தணர், தன் ஶிஷ்யனுக்கு உபநயநம் செய்வித்துக் கல்ப ஸூத்ரத்தோடும் மோக்ஷ ஸாத₄நமான வித்₃யைகளோடும் கூட, வேத₃த்தை ஓதுவிக்கிறாரோ, அவரையே ஆசார்யர் என்று கூறுகிறார்கள்.] என்று ஆசார்ய லக்ஷணம் கூறப்பட்டதன்றோ. மற்றவர்களை ஆசார்யன் என்பது உபசாரத்தினால் ஏற்பட்ட அமுக்₂யமான வழக்கு என்று கொள்ளவேண்டும். எவனொருவன் ஶிஷ்யனுக்கு உபநயனம் செய்வித்து ப்ரணவம் முதலானவற்றை மாத்திரம் உபதேசித்து விடுகிறானோ, எவனொருவன் (மநு ஸ்ம்ருதியில் ரஹஸ்யம் எனப்பட்ட) மோக்ஷ ஸாத₄நமான வித்₃யைகளை அந்தந்த வேத₃ வாக்யங்களை முன்னிட்டு உபதே₃ஶிக்கிறானோ அவர்களையும் ஆசார்யன் என்று சில ப்ரமாணங்கள் கூறுகையாலே அதையும் ஒப்புக்கொள்கிறோம். ப₄க₃வான் யாஜ்ஞ வல்க்யரால் பலவகைப்பட்ட ஆசார்ய லக்ஷணம் பின்வரும் வசநத்தில் சொல்லப்பட்டது.

''ஸ கு₃ருர்ய: க்ரியா: க்ருத்வா வேத₃மஸ்மை ப்ரயச்ச₂தி |
உபநீய த₃த₃த்₃வேத₃ம் ஆசார்யஸ்ஸ உதா₃ஹ்ருத: ||
ஏகதே₃ஶம் உபாத்₄யாய: ரித்விக் யஜ்ஞக்ருது₂ச்யதே |
ஏதே மாந்யா யதா₂பூர்வம் ஏப்₄யோ மாதா க₃ரீயஸீ || ''

[யாஜ்ஞ 1-2-34, 35]

[எவரொருவர் ஶிஷ்யனுக்கு ஸம்ஸ்காரங்கள் அனைத்தையும் செய்து வேத₃த்தை ஓதுவிக்கிறாரோ அவரே கு₃ரு எனப்படுகிறார். உபநயனம் செய்வித்து, வேதத்தை ஓதுவிப்பவர் ஆசார்யர் எனப்படுகிறார். வேத₃த்தின் ஒரு பகுதியை ஓதுவிப்பவர் உபாத்₄யாயர் எனப்படுகிறார். யாக₃த்தைச் செய்விப்பவர் ரித்விக் எனப்படுகிறார். இவர்கள் அனைவரும் பின்னவரைக்காட்டிலும் முன்னவர் மிகுதியாக கௌ₃ரவிக்கத் தக்கவர். இவர்கள் அனைவரைக்காட்டிலும் தாய் மிகவும் கௌ₃ரவிக்கத் தக்கவள்] என்பது யாஜ்ஞவல்க்ய வசநம். இதில் உபாத்₄யாய லக்ஷணத்தை,

अमेध्यम् — अयज्ञार्हम्, अयज्ञशिष्टमित्यर्थः; एवंविधं तमोमयं

''ஏகதே₃ஶந்து வேத₃ஸ்ய வேதா₃ங்கா₃ந்யபி வா புந: |
யோ(அ)த்₄யாபயதி வ்ருத்த்யர்த்த₂ம் உபாத்₄யாயஸ்ஸ உச்யதே|| ''
[மநு. 2-141]

[வேத₃த்தில் ஒரு பகுதியையோ, வேத₃த்தின் அங்க₃ங்களையோ எவன் தொழிலுக்காகக் கற்பிக்கிருனே அவன் உபாத்₄யாயன் எனப் படுகிருன்] என்று மநு விளக்கியிருக்கிருர். ஆக, யாஜ்ஞவல்க்ய வசநத்தில் சொல்லப்பட்ட நாலு வகைப்பட்ட ஆசார்யர்களுக்கும் வசந ப₃லத்தாலே ஆசார்யத்வம் ஒப்புக்கொள்ளப்படுகிறது.

''ஏகாக்ஷர ப்ரதா₃தாரம் ஆசார்யம் யோ(அ)வமந்யதே |
ஶுநாம் யோநிஶதம் க₃த்வா சண்டா₃லேஷ்வபி ஜாயதே'' ||
[அத்ரி. 1. 10]

[ஒற்றை எழுத்தாகிய பிரணவத்தை உபதே₃ஶிக்கும் ஆசார்யனை எவன் அவமதிக்கிருனே அவன் நூறு ஜன்மங்கள் நாயாகப் பிறந்து, பிறகு சண்டா₃ளனுகவும் பிறக்கிருன்.] முதலான வசநங்களில் ப்ரணவத்தை மாத்திரம் உபதேசித்தவனையும் ஆசார்யனுகக் கூறியிருக்கிறதே எனில், அவனையும் அவமதிக்கக் கூடாது என்பதைக் காட்டுவதற்காக, ஆசார்ய ஶப்₃த₃த்தால் உபசரித்துச் கூறியதாகக் கொள்ளவேண்டும். இந்த வசநத்தை மாத்திரம் கொண்டு ஆசார்யர்களுக்குரிய உச்சி₂ஷ்ட போ₄ஜநம் முதலிய எல்லா கௌரவங்களும் அவர்களுக்குக் காட்டத் தக்கதன்று. நிக₄ண்டுகளை ஒட்டி அஸ்த்ர ஶஸ்த்ர வித்₃யைகள் முதலிய வற்றை உபதே₃ஶித்த த்₃ரோணர் க்ருபர் முதலியவர்கள் விஷயத்திலும் ஆசார்ய ஶப்₃த₃ம் வழங்கப்படுகிறதாகையால், அவர்களிடத்திலும் ஆசார்ய ஶப்₃த₃ம் முக்₂யமே என்று சிலர் கொள்கிருர்கள். ஆயினும் உச்சி₂ஷ்ட போ₄ஜநத்தை அனுமதிக்குமளவுக்கு உள்ள ஆசார்யத்வ பூர்த்தி ''ஓம் தத் ஸத்'' என்னும் மூன்றையும் முன்னிட்டுப் பரவித்₃யையை உபதே₃ஶிப்பவனிடமே உள்ளது. சாஸ்திரங்களும் அப்படியே கூறுகின்றன. ஶிஷ்டாசாரமும் அப்படியே உள்ளது. வேத₃ வாக்யங்களுக்கு நேரே முரண்பட்டதாய், மயக்கம் கொண்டவர்கள் கருத்தாலே ஶாஸ்த்ரத்தை மீறி நடப்பவர்களுடைய ஆசாரம் ஶிஷ்டாசாரம் ஆகாது; ஆக, உச்சி₂ஷ்ட ஶப்₃த₃ விசாரம் நிறைவு பெற்றது. (அமேத்₄யம்) யஜ்ஞத்திற்குத் தகுதியில்லாத உணவு; யஜ்ஞ ஶிஷ்டம் (யஜ்ஞத்தில் மிகுந்தது) அல்லாதது என்று கருத்து. ''மேதை₄க்கு விரோதி₄யாய் இருப்

भोजनं तामसप्रियं भवति । भुज्यत इत्याहार एव भोजनम् । पुनश्च तमसो वर्धनम् । अतो हितैषिभिस्सत्त्वविवृद्धये सात्त्विकाहार एव सेव्यः ॥ १० ॥

---

பது அமேத்₄யம்'' என்று பொருள் கொள்ளலாமாகுலும், அதில் இம்மையில் விளையும் தீங்கு மாத்திரமே உள்ளதாகையால், மறுமையிலும் தீங்கு விளைக்கையாலே, 'யஜ்ஞத்திற்குத் தகுதியில்லாதது' என்று இங்கு பொருள் கொள்ளப்பட்டது. இங்கு 'மேத₄:' என்னும் ஶப்₃த₃ம் யஜ்ஞத்தைக் குறிக்கும். அதற்குத் தகுதியுள்ளது மேத்₄யம்; அதற்குத் தகுதியற்றது அமேத்₄யம் ஆகும். யஜ்ஞத்திற்குத் தகுதியுள்ள பொருள்களிலும் சில பொருள்கள் உண்ணத் தகாதவை என்று ஶாஸ்த்ரங்கள் விதி₄க்கையாலே இங்கு ''யஜ்ஞ சிஷ்டம் அல்லாதது'' என்று கருத்து உரைக்கப்பட்டது.

''வ்ருதா₂ க்ருஸரஸம்யாவம் பாயஸாபூபமேவ ச |
அநுபாக்ருதமாம்ஸாநி தே₃வாந்நாநி ஹவிம்ஷி ச ||''
[மநு. 5. 7.]

[(தே₃வர்கள், பித்ருக்கள் முதலான உயர்ந்தவர்களை உத்₃தே₃ஶித்து அளிக்கப்படாத) வீணான உணவு, (எள்ளும் அரிசியும் சேர்ந்து சமைக்கப்பெற்ற உணவாகிற) க்ருஸரம், (நெய், பால், வெல்லம், கோதுமை மாவு ஆகியவற்ருல் சமைக்கப்பெற்றதாய், தத்கரிகா என்று அழைக்கப்படுவதான) ஸம்யாவம், பாயஸம், அப்பம், (பசு யாக₃த்தில்) மந்திரத்தால் புனிதமடையாத பிராணியின் மாம்ஸம், (நிவேத₃னம் செய்வதற்குமுன்) தே₃வர்க்குரிய அன்னங்கள், (ஹோமம் செய்வதற்குமுன்)ஹோமம் செய்வதற்குரிய ஹவிஸ் ஆகியவை (ப்ராஹ்மணக்ஷத்ரியவைஶ்யர்களாகிற) இருபிறப்பாளர்க்கு உண்ணத்தகாதவை] முதலான ஶ்லோகங்களில் மனுவும் யஜ்ஞத்திற்குத்தகுதியுள்ள பலபொருள்களையும் உண்ணத் தகாதவை என்று தள்ளினுரன்ருே. ஸாத்வதம் முதலான ஆக₃ம சாஸ்திரங்களிலும், ஸ்ம்ருதிகளிலும், ''நாநிவேத்₃ய ஹரேः கிஞ்சித் ஸமஶ்நீயாத்து பாவநம்''[ஶாதாதப ஸ்ம்ருதி][ஹரிக்கு நிவேத₃நம் செய்யாமல், பாவனமான பொருள்களைக் கூட உண்ணலாகாது] என்று கூறியிருக்கையால், எம்பெருமானுக்கு அமுதுசெய்விக்கப்படாத எந்த உணவும் அமேத்₄யமேயாகும். (போ₄ஜநம் தாமஸப்ரியம்) இதுவரை கூறப்பட்ட தமோகு₃ணம் நிறைந்த உணவுகள் தமோகு₃ணம் நிறைந்தவர்களுக்கு இனியதாகிறது.

अफलाकाङ्क्षिभिर्यज्ञो विधिदृष्टो य इज्यते ।
यष्टव्यमेवेति मनस्समाधाय स सात्त्विकः ॥ ११ ॥

5-7-09
28-9-10

11. அப2லாகாங்க்ஷிபி4ர்யஜ்ஞோ விதி4த்3ருஷ்டோ ய இஜ்யதே ।
யஷ்டவ்யமேவேதி, மநஸ் ஸமாதா4ய, ஸ ஸாத்விக: ॥

அப2லாகாங்க்ஷிபி4:— ப2லனில் விருப்பமில்லாத புருஷர்களாலே, விதி4 த்3ருஷ்ட:—ஶாஸ்த்ரத்தில் கூறிய முறைப்படி, யஷ்டவ்யமேவ இதி — (எம்பெருமானுக்கு ஆராத4னமாய் ஸ்வயம்ப்ரயோஜநமாய் (இருப்பதாகையாலே) இந்த யாகத்தைச் செய்தே ஆகவேண்டுமென்று, மந:ஸமாதா4ய — நெஞ்சில் உறுதிகொண்டு. ய: யஜ்ஞ: — யாதொரு யாக3ம், இஜ்யதே — அனுஷ்டி2க்கப்படுகிறதோ, ஸ: — அந்த யாக3ம், ஸாத்விக: — ஸாத்விக யாக3ம் ஆகும்.

---

(போ4ஜநம்) "பு4ஜ்யத இதி போ4ஜநம்" [எது புசிக்கப்படுகிறதோ அது போ4ஜநம்] என்னும் வ்யுத்பத்தியாலே இப்பதம் இங்கு புசிக்கப்படும் ஆஹாரத்தைக் குறிக்கிறது. "க்ருத்யுல்லுடோ ப3ஹுளம்" [அஷ்டாத்4யாயீ 3—3—113] என்னும் ஸூத்ரத்தின்படி 'கர்மணி ல்யுட்' வந்திருக்கிறது. போ4ஜநஶப்3த3ம் புசித்தலாகிற க்ரியையையும் குறிக்கும்; ஆயினும் 'யாதயாமம்' முதலான இங்குள்ள விசேஷணங்கள் அதற்குப் பொருந்தாது. 7, 8, 9 ஶ்லோகங்களில் உள்ள 'ஆஹார'ஶப்3த3 ஸ்தா2னத்தில் இங்கு 'போ4ஜந' ஶப்3த3ம் படிக்கப்பட்டிருப்பதைக் காணும்போதும் இங்கு 'ஆஹாரம்' என்று பொருள் கொள்வதே பொருந்தும் என விளங்கும். (தாமஸப்ரியம்) தமோகு3ணம் மிகுந்தவர்களால் விரும்பப்படுகையாலே, மேலும் மேலும் தமோ குணத்தை வளர்த்து. சென்ற ஶ்லோகத்தில் ராஜஸாஹாரத்தின் பலன்களாகச் சொல்லப்பட்ட து3:க்க2 ஶோகாமயங்களை உடனடியாகவும் மிகுதியாகவும் வளர்க்கின்றன என்று கருத்து. 8, 9, 10 ஶ்லோகங்களில் ஸாத்விக ராஜஸ தாமஸ உணவுகளின் ப2லன்களைச் சொன்னது—தமக்கு நன்மையை விரும்புகிறவர்கள் ராஜஸதாமஸ உணவுகளை விலக்கி, ஸத்வகு3ணமும் அதனடியாக ஜ்ஞானமும் வளருவதற்காக ஸாத்விக ஆஹாரத்தையே கைக்கொள்ள வேண்டும் என்று காட்டுவதற்காக. இவ்வண்ணமே மேல் ஶ்லோகங்களில் யஜ்ஞம் முதலானவற்றில் ஸாத்விக ராஜஸ தாமஸப்பிரிவுகளைக் காட்டுவதும்—யஜ்ஞம் முதலானவற்றில் ஸாத்விகமானவையே கைக்கொள்ளத் தக்கது என்று காட்டுவதற்காக என்று கண்டுகொள்வது. 10.

भा ॥ फलाकाङ्क्षारहितैः पुरुषैः विधिदृष्टः शास्त्रदृष्टः मन्त्रद्रव्यक्रियादि-

11. வேண்டா ததிற்பயனை வேதவிதி மேவிமனம்
பூண்டா ரியல்வாகப் புந்தித்து—மூண்டாங்கு
தாமியல்வ ரெச்சந் தகவான் முதற்குணத்தி
லாமெனவே கொள்க வறிந்து.

அதில் பயனை வேண்டாது — யாக₃த்தின் பலனில் நெஞ்சு செலுத்தாமல், வேதவிதி மேவி - சாஸ்திரத்தில் கூறிய முறைப்படி, இயல்வாகப் புந்தித்து — (இந்தயாகம் எம்பெருமானுக்கு ஆராத₄னமாகையாலே) தானே பயனாய் இருப்பது என்று நினைத்து, மனம்பூண்டார் — (இதைச் செய்தேயாகவேண்டும் என்று) மனத்தில் உறுதி கொண்டவர்களாய், ஆங்குமூண்டு தாம் இயல்வர் — அந்த யாகத்தில் சிறப்பாகச் செயல்படுபவர்களுடைய, எச்சம் — யாக₃ம், தகவால் — தன் தன்மையால், முதல் குணத்தில் ஆம் — முக்குணங்களில் முதலாவதான ஸத்வகு₃ணத்தை உடையது, எனவே — என்றே, அறிந்து கொள்க — அறிவாயாக.

11. இனி, யஜ்ஞம், தவம், தானம் ஆகியவற்றில் ஸாத்விக ராஜஸ தாமஸப் பிரிவுகளை விவரிக்கத் தொடங்கி, இந்த ஶ்லோகத்தில் ஸாத்விகமான யாக₃த்தை விளக்குகிறான். (அப₂லாகாங்க்ஷிபி₄:) அந்தந்த யாக₃த்திற்கு ஶாஸ்த்ரங்களில் விதி₄க்கப் பெற்ற இவ்வுலகப் பலன்களில் விருப்பமற்றவர்களாலே; பரமாத்மாவின் உகப்புதவிர வேறு ப₂லன்களை விரும்பாதவர்கள் என்று கருத்து. ப₂லத்தில் விருப்பமுள்ளவர்கள் ப₂லாகாங்க்ஷிகள். அவர்களிலும் வேறுபட்டவர்கள் அப₂லாகாங்க்ஷிகள்; ப₂லனில் விருப்பமற்றவர்கள் என்று கருத்து. ''அப₂லத்தில் விருப்பமுள்ளவர்கள்'' என்னும் பொருள் பொருந்தாதாகையாலே இப்படியே பொருள்கொள்ள வேண்டும். (விதி₄த்₃ருஷ்ட:) ஶாஸ்த்ரத்தில் கூறிய முறைப்படி மந்த்ரம், த்₃ரவ்யம், க்ரியை முதலானவற்றோடு கூடியதாக என்று கருத்து. 'விதி₄' ஶப்₃த₃த்திற்குப் பிரமன் என்று பொருள் கொண்டால், பிரமனால் காணப்பட்டது என்று

भिर्युक्तः, यष्टव्यमेवेति — भगवदाराधनत्वेन स्वयंप्रयोजनतया यष्टव्यमिति मनस्समाधाय यो यज्ञ इज्यते, स सात्त्विकः ॥ ११ ॥

अभिसन्धाय तु फलं दम्भार्थमपि चैव यः ।
इज्यते भरतश्रेष्ठ तं यज्ञं विद्धि राजसम् ॥ १२ ॥

12. அபி4ஸந்தா1ய து ப2லம் த3ம்பா4ர்த்த2மபி சைவ ய: ]
இஜ்யதே ப4ரதஶ்ரேஷ்ட2 தம் யஜ்ஞம் வித்3தி4 ராஜஸம் ||

---

பொருளாகிறது; எல்லா யாகங்களுமே பிரமனால் காணப்பட்டவையேயாகையால், இங்கு அதைச் சொல்லுவதனால் அநுஷ்ட2ானத்தில் எந்தச் சிறப்பும் இல்லை. ஆகையால், விதி4க்கும் ஶாஸ்த்ரமே இங்கு விதி4 என்று சொல்லப்படுவதாகக் கொள்ளப் படுகிறது. 'ஶாஸ்த்ரத்தில் காணப்படுவது' என்று யாகத்தை விசேஷிப்பதில் பயனில்லையே என்றால், ஶாஸ்த்ரத்தில் கூறியபடி மந்த்ரம், த்3ரவ்யம், க்ரியை முதலானவற்றோடு கூடியது என்றே இங்கு கருத்தாகையாலே குறையில்லை. (யஷ்டவ்யம் ஏவ இதி) எம்பெருமானுக்கு ஆராதனமாய் ஸ்வயம் ப்ரயோஜனமாய் இருப்பதாகையாலே இந்தயாகத்3தைச் செய்தே ஆகவேண்டும் என்று. " யஜ-தே3வபூஜாயாம் " என்று தா4து ஆகையாலே யாக3ம் உண்மையில் எல்லா தே3வதைகளுக்கும் அந்தர்யாமியான எம்பெருமானுக்கு ஆராத4னமாயிருக்கையாலே, அவ்வகையில் தானே பயனாய் இருப்பது என்று நினைத்து என்றபடி. "யஷ்டவ்யம் ஏவ" என்னும் ஏகாரத்தாலே நமக்கு வகுத்த ஸ்வாமியின் ஆராத4னமான இது தானே பயனாய் இருப்பது என்று உணர்த்தப் படுகிறது. "ப்ரயோஜனம் அநுத்3திஶ்ய ந மந்தோ3பி ப்ரவர்த்ததே" [ஒரு பயனைக் கருதாமல் அறிவற்றவன் கூட ஒரு காரியத்தைத் தொடங்க மாட்டான் ] என்னும் நியாயத்தின்படிபயன் கருதாது [அப2லாகாங்க்ஷியாய்] எவனும் யாக3த்தைத் தொடங்க மாட்டானே என்னும் ஐயத்திற்கு 'வகுத்த ஸ்வாமியாய், இனியவனாய், நண்பனாய் இருக்கும் எம்பெருமானுக்கு ஆராத4னமாய் இருக்கையால் இந்த யாக3ம் தானே பயனாய் இருக்கிறது' என்று பதிலுரைக்கப்பட்டதாகிறது. (மநஸ்ஸமாதா4ய) மனத்தில் உறுதி கொண்டு, ஶாஸ்த்ரத்தில் இந்த யாகத்திற்குக் கூறப்பட்ட ப2லன்களான ஸ்வர்க்க3ம் முதலானவற்றில் நெஞ்சு செலுத்தாமல் முற்கூறியபடி இந்த யாக3ந்தன்னையே பயனாக உறுதி பூண்டு என்று கருத்து. (ய: யஜ்ஞ: இஜ்யதே ஸ: ஸாத்விக:) எந்த யஜ்ஞமானது அநுஷ்டி2க்கப்படுகிறதோ அதுவே ஸாத்விகமாகும். 11.

भा ॥ फलाभिसन्धियुक्तैर्दम्भगर्भो यज्ञःफलश्च यो यज्ञ इज्यते, तं यज्ञं राजसं विद्धि ॥ १२ ॥

ப₄ரதஶ்ரேஷ்ட₂ — ப₄ரதகுலத்தவர்களில் சிறந்தவனே! ப₂லம் அபி₄ஸந்த₄ாய து—ப்ராக்ருத ப₂லன்களில் விருப்பத்தோடு, த₃ம்ப₄ார்த்த₂மபி ச ஏவ — டம்ப₄ம் காரணமாகவே, ய: இஜ்யதே — எந்த யாக₃ம் அநுஷ்டி₂க்கப்படுகிறதோ, தம் யஜ்ஞம் — அந்த யாக₃த்தை, ராஜஸம் வித்₃தி₄ — ராஜஸமான யாக₃ம் என்று அறிவாயாக.

---

12. சேர்ந்த பயனினைந்தும் டம்பம் பொருட்டாயுஞ்
சார்ந்த தெதுபரதர் தந்தலைவா—கூர்ந்த
மனத்தாலவ் வெச்சத்தை வாய்ந்தறிநீ யந்த
வினத்தா லிடைக்குணத்த தென்று.

பரதர் தந்தலைவா — ப₄ரதகுலத்தில் உதித்தவர்களில் சிறந்தவனாய் இருப்பவனே! சேர்ந்த பயன் நினைந்தும் — ப்ராக்ருத ப₂லன்களில் விருப்பத்தோடும், டம்பம் பொருட்டாயும் — ட₃ம்ப₄ம் காரணமாகவும், சார்ந்தது எது — எந்த யாக₃ம் அநுஷ்டி₂க்கப்படுகிறதோ, அவ்வெச்சத்தை — அந்த யாக₃த்தை, அந்த இனத்தால்— அதன் தன்மையால், இடை குணத்தது என்று—நடுக்குணமாகிற ரஜோகு₃ணத்தை உடையது என்று, கூர்ந்த மனத்தால் -- கூர்மையான பு₃த்₃தி₄யால், நீ— நீ, ஆய்ந்து அறி — ஆராய்ந்து அறிவாயாக.

---

12. ராஜஸமான யஜ்ஞத்தை விளக்குகிறான். (ப₂லம் அபி₄ஸந்த₄ாய து) அந்தந்த யாக₃ங்களுக்குரிய ப்ராக்ருதமான ப₂லன்களில் விருப்பத்துடன், 'து' ஶப்₃த₃ம் "அப₂லாகாங்க்ஷிபி₄:" என்று சொல்லப்பட்ட ஸாத்விக யாக₃த்தைக் காட்டிலும் மாறுபட்டிருப்பது ராஜஸயாக₃ம் என்று காட்டுகிறது. (த₃ம்ப₄ார்த்த₂மபி சைவ) ட₃ம்ப₄த்தைக் காரணமாகக் கொண்டதாய், புகழை உத்தேசித்துச் செய்யப்படுவது. முதல்பாத₃ம் இங்கிருக்கும் போது வினையும் இம்மைப் ப₂லன்களில் விருப்பத்தோடு செய்யப்படுவது என்று காட்டிற்று. இங்கு—இறந்தபின்பும் புகழ்பெற வேண்டும் என்னும் விருப்பத்துடன் செய்யப்படுகிறது

विधिहीनमसृष्टान्नं मन्त्रहीनमदक्षिणम् ।
श्रद्धाविरहितं यज्ञं तामसं परिचक्षते ॥ १३ ॥

13. விதி₄ ஹீநமஸ்ருஷ்டாந்நம் மந்த்ரஹீந மத₃க்ஷிணம் |
ஶ்ரத்₃த₄ா விரஹிதம் யஜ்ஞம் தாமஸம் பரிசக்ஷதே ||

விதி₄ ஹீநம்—(அந்தணர்களின்) அநுஜ்ஞா வாக்யத்தைப் பெருததும், அஸ்ருஷ்டாந்நம் — நியாயமான வழியில் ஸம்பாதிக்கப்படாத த்₃ரவ்யங்களை உடையதும், மந்த்ரஹீநம் — உரிய மந்த்ரங்கள் இல்லாததும், அத₃க்ஷிணம் — த₃க்ஷிணை இல்லாததும், ஶ்ரத்₃த₄ா விரஹிதம் — ஶ்ரத்₃தை₄யோடு செய்யப்படாததுமான, யஜ்ஞம் — யாக₃த்தை, தாமஸம் பரிசக்ஷதே — தாமஸயாக₃ம் என்று (ஶாஸ்த்ரமறிந்தவர்கள்) சொல்லுகிருர்கள்.

13. விதியற் றவியற்று மந்திரமும் விட்டே
யதின்மேவு தக்கணையு மற்றுக் —கதிசேர்ந்த
வேலுஞ் சிரத்தையிலா வெச்சங் கடைக்குணத்தாற்
கோலு மெனவுரைப்பர் கூர்ந்து.

விதியற்று—(அந்தணர்களின்) அநுஜ்ஞா வாக்யத்தைப் பெருததும், அவியற்று — நியாயமான வழியில் ஸம்பாதி₃க்.

என்று காட்டுகிறது. ட₃ம்ப₄த்தை வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளும் யாக₃ம் தாமஸயாக₃ம் ஆகும். அப்படியல்லாமல் ட₃ம்ப₄த்தைக்காரணமாகக் கொண்டு அதை உள்ளடக்கி யிருப்பதாய், மேல் விளையும் புகழைக் கருத்தில் கொண்ட தாயிருப்பது, ராஜஸயாக₃ம் என்னும் வேற்றுமை அறியத்தக்கது. "யஷ்டவ்யம் ஏவ" என்று ப₄க₃வதா₃ராத₄னமாகையாலே அவஶ்யம் செய்யத்தக்கது என்னும் மனவுறுதியுடன் செய்யப்படும் ஸாத்விகயாக₃த்தைக் காட்டிலும் புகழுக்காகச் செய்யப் படும் ராஜஸயாக₃த்தின் வேற்றுமை உணர்த்தப்படுகிறது. (ய: இஜ்யதே தம் யஜ்ஞம் ராஜஸம் வித்₃தி₄) இவ்வண்ணமாக யாதொரு யாக₃ம் அநுஷ்டி₂க்கப்படுகிறதோ அது ராஜஸயாக₃ம் என்று அறிவாயாக. (ப₄ரதஶ்ரேஷ்ட₂) பரதகுலத்தவரில் மிகச் சிறந்தவனுன நீ ஸாத்விக யாக₃த்திற்கே அதி₄காரியாகையால் ராஜஸதாமஸ யாக₃ங்களை விலக்கவேண்டும் என்று கருத்து. 12.

भा : विधिहीनम् — ब्राह्मणोक्तिहीनम्, सदाचारयुक्तैर्विद्वद्भि-र्ब्राह्मणैर्यजस्वेत्युक्तिहीनमित्यर्थः; असृष्टान्नम् — अचोदितद्रव्यम्, मन्त्र-

கப்படாத த்3ரவ்யங்களை உடையதும், மந்திரமும் விட்டே — உரிய மந்திரங்கள் இல்லாததும், அதில் மேவு தக்கணையும் அற்று — யாக3த்தில் கொடுக்க வேண்டிய த3க்ஷிணை இல்லாததும், கதிசேர்ந்த ஏலும் சிரத்தையிலா — பலனை விளைக்கக்கூடிய பொருத்தமான ஶ்ரத்3தை4யில்லாததுமான, எச்சம் — யாக3மானது, கடைக்குணத்தால் கோலும் என — கடைசியான தமோ கு3ணத்தால் செய்யப் படுவது என்று, கூர்ந்து உரைப்பர் — (ஶாஸ்த்ரமறிந்தவர்கள்) ஆராய்ந்து கூறுவர்.

13. தாமஸமான யாக3த்தை விளக்குகிறான். (விதி4ஹீநம்) அந்தணர்களின் அநுஜ்ஞாவாக்யத்தைப் பெறாதது. எந்த யாக3த்தை அல்லது வைதி3க கர்மத்தைத் தொடங்கும்போதும், நல்ல ஆசாரங்களை உடையவர்களாய், ஶாஸ்த்ரம் அறிந்தவர்களான அந்தணர்கள் "யாக3த்தைத் (கர்மத்தைத்) தொடங்கு" என்று அநுஜ்ஞா [அநுமதி] வாக்கியத்தைக் கூறியபின்பே அக்காரியத்தைச் செய்யவேண்டும் என்பது ஶாஸ்த்ரங்களிலும் சிஷ்டாசாரத்திலும் காணப்படுகிறது. அந்தச்சிறப்பு இல்லாதது என்று கருத்து. "விதி4த்3ருஷ்ட:" என்று 11வது ஶ்லோகத்தில் ஸாத்விகயாக3த்தைச் சொன்னதற்கு எதிர்த்தட்டாக இங்கு தாமஸயாக3த்தை "விதி4ஹீநம்" என்று சொல்லியிருக்கும்போது அங்கு போலே 'விதி4' என்ற ஶப்3த3த்திற்கு 'ஶாஸ்த்ரவிதி4' என்று பொருள் கொள்ளாமல், 'அந்தணர்களின் அநுஜ்ஞாவசநம்' என்று பொருள்கொள்வானேன்? ஏனில்; மேலே "அஸ்ருஷ்டாந்நம்", "அத3க்ஷிணம்", "மந்த்ரஹீநம்" முதலான பத3ங்களாலே தாமஸயாக3ம் ஶாஸ்த்ரமுறைப்படி செய்யப்படாதது என்று விவரிக்கப்படுகிறபடியாலும், ப்3ராஹ்மணர்களின் அநுஜ்ஞையைப் பெறாதது தாமஸ யாக3ம் என்று சொல்லவேண்டியது அவசியமாகையாலும், இங்கு விதி4 ஶப்3த3த்திற்கு 'அந்தணர்களின் அநுஜ்ஞாவசநம்' என்று பொருள் கொள்ளப்பட்டது. (அஸ்ருஷ்டாந்நம்) ஶாஸ்த்ரங்களில் விதி4க்கப்பட்ட நியாயமான முறைகளில் ஸம்பாதி3க்கப்படாத த்3ரவ்யங்களை உடையது;

हीनमदक्षिणं श्रद्धाविरहितं च यज्ञं तामसं परिचक्षते ॥ १३ ॥

भा ॥ अथ तपसो गुणतस्त्रैविध्यं वक्तुं तस्य शरीरवाङ्मनोनिष्पाद्यतया स्वरूपभेदं तावदाह—

देवद्विजगुरुप्राज्ञपूजनं शौचमार्जवम् ।
ब्रह्मचर्यमहिंसा च शारीरं तप उच्यते ॥ १४ ॥

---

யாகத்துக்கு உரிய த்₃ரவ்யம் 'ஸ்ருஷ்டம்' என்று சொல்லப் படுகிறது. அதைக்காட்டிலும் வேறுபட்டது அஸ்ருஷ்டம். 'அஸ்ருஷ்டாந்நம்' என்றதற்கு 'அன்னத₃ானம் செய்யப்படாத யஜ்ஞம்' என்று பொருள் கொள்ளக்கூடாதோ? எனில்: அடுத்தபடி 'அத₃க்ஷிணம்' என்று 'பொருளாசையால் இந்த யாக₃ம் த₃க்ஷிணேயில்லாமல் செய்யப்படுவது' என்று சொல்லப்படுவதால், அன்னதானம் இல்லாதது என்று தன்னடையே விளங்கும். 'அத₃க்ஷிணம்' என்றவிடத்தில் 'த₃க்ஷிணு' ஶப்₃த₃மே உபலக்ஷண முறையிலும் அன்னத₃ானம் முதலானவற்றைக் காட்டும். ஆகையால் 'அஸ்ருஷ்டாந்ந'பத₃த்திற்கு, ஶாஸ்த்ரங்களில் விதி₄க்கப்பட்ட நியாயமான முறையில் ஸம்பாதிக்கப்படாத த்₃ரவ்யங்களைக் கொண்டு செய்யப்படுவது என்று பொருள் கொள்வதே சிறந்தது. அத்தகைய த்₃ரவ்யங்களுக்கு எடுத்துக்காட்டாக—

நயஜ்ஞார்த்த₂ம் த₄நம் ஶூத்₃ராத்₃ விப்ரோ பி₄க்ஷேத த₄ர்மவித் ।
யஜமாநோ ஹி பி₄க்ஷித்வா ப்ரேத்ய சண்டா₃ளதாம் வ்ரஜேத் ॥
[மநுஸ்ம்ருதி 11—24]

[த₄ர்மமறிந்த அந்தணன் யாக₃த்திற்காக (த₃ானம் கொடுக்க அதி₄காரமில்லாத) நான்காம் வருணத்தவரிடமிருந்து பணத்தைப் பெறலாகாது. யாக₃ம் செய்பவன் அப்படிப் பெற்ருனுகில் மறுபிறவியில் சண்டா₃ளனுவான்] என்னும் மநுஸ்ம்ருதி வசனம் தாத்பர்ய சந்த்₃ரிகையில் ஸ்ரீவேத₃ாந்த தேசிகரால் எடுத்துக்காட்டப்பட்டது. (மந்த்ரஹீநம் அத₃க்ஷிணம் ஶ்ரத்₃த₄ாவிரஹிதம்) ஒரு யாக₃த்திற்கு அவசியம் வேண்டியவைகளாக ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்படும் மந்திரம், த₃க்ஷிணே, ஶ்ரத்₃தை₄ என்னும் மூன்றும் இல்லாதது. (யஜ்ஞம் தாமஸம் பரிசக்ஷதே) இத்தகைய யாக₃த்தைத் தாமஸ யாக₃ம் என்று ஶாஸ்த்ரமறிந்தவர்கள் கூறுகிருர்கள்.

5-7-09
14-9-10.

14. தே₃வத்₃விஜகு₃ருப்ராஜ்ஞபூஜநம் ஶௌசமார்ஜவம் ।
ப்₃ரஹ்மசர்யமஹிம்ஸா ச ஶாரீரம் தப உச்யதே ॥

தே₃வத்₃விஜகு₃ருப்ராஜ்ஞபூஜநம் — தே₃வர்கள், இருபிறப்பாளர்கள், ஆசார்யர், அறிவாளிகள் ஆகியவர்களை ஆராதி₄ப்பது, ஶௌசம் — (புண்யதீர்த்த₂மாடுவது முதலான) பரிசுத்தியை விளைக்கும் செயல்கள், ஆர்ஜவம் — மனத்தில் எண்ணியபடியே கார்யம் செய்தல், ப்₃ரஹ்மசர்யம் — பெண்களிடம் காமச்செயல்களைப் புரியாதிருத்தல், அஹிம்ஸா ச — உயிர்களைத் துன்புறுத்தாமல் இருத்தல் ஆகியவை, ஶாரீரம் தப: உச்யதே — ஶரீரத்தினால் செய்யப்படும் தவமாகச் சொல்லப்படுகிறது.

---

14. காயஞ் சொலவுமனங் காட்டுந் தவங்களவை
மேய குணங்கண் மிகுநெறியா — லாயவெனின்
மூன்றதனி னின்று முயலும் படியுரைக்க
வேன்றதனைக் கேணீ யினி.

காயம் சொலவு மனம் காட்டும் தவங்கள் அவை — உடல், சொல், மனம் ஆகிய முக்கரணங்களாலும் செய்யப்படும் மூன்று வகைப்பட்ட தவங்கள் ஒவ்வொன்றும், மேய குணங்கள் மிகு நெறியால் ஆய எனின் — (செய்பவனிடம்) பொருந்திநிற்கும் ஸத்வம், ரஜஸ், தமஸ் எனும் முக்குணங்களில் ஒவ்வொன்றின் மிகுதியாலே மூன்று வகைப்பட்டிருக்கின்ற காரணத்தாலே, மூன்று அதனினின்றும் — உடல், சொல், மனம் என்னும் முக்கரணங்களின் மூலம், முயலும்படி உரைக்க — (மனிதன்) தவம் புரியும்படியை (நான்) சொல்ல, இனி — இனிமேல், நீ — நீ, அதனை — அவ்விஷயத்தை, ஏன்று கேள் — கவனமாகக்கேட்பாயாக.

15. தேவர் மறையோர் குருக்கண் மிகவுணர்ந்தோர்
மேவ வருச்சித்தன் மெய்தூய்மை — யோவாத
செவ்வை மகளிரிடைச் செல்லாமை கொல்லாமை
யிவ்வகைகா யத்தவமா மிங்கு.

भा ॥ देवद्विजगुरुप्राज्ञानां पूजनम्, शौचम् — तीर्थस्नानादिकम्,

தேவர் மறையோர் குருக்கள் மிக உணர்ந்தோர் மேவ அருச்சித்தல் — தேவர்கள், வேதமோதும் இரு பிறப்பாளர்கள், ஆசார்யர்கள், மிக்க அறிவுடையவர்கள் ஆகியவர்களை நன்கு ஆராதிப்பது. மெய் தூய்மை — (புண்ய தீர்த்தமாடுவது முதலான) உடலுக்குப் பரிசுத்தியை விளைக்கும் செயல்கள். ஓவாத செவ்வை — எப்போதும் மனத்தில் எண்ணியபடியே செயல்புரிதல். மகளிரிடை செல்லாமை — பெண்களிடம் காமச்செயல்களைப் புரியாதிருத்தல், கொல்லாமை-உயிர்களைத்துன்புறுத்தாமலிருத்தல், இவ்வகை — முதலானவை, இங்கு — இவ்வுலகில், காயத் தவமாய் -உடலால் செய்யப்படும் தவம் எனச்சொல்லப்படுகிறது.

14. இனி, தவம் முக்குணங்களையிட்டு மூன்று வகைப்பட்டது என்று 17, 18, 19-வது ஶ்லோகங்களில் உரைப்பதற்காக, 14, 15, 16-வது ஶ்லோகங்களில் அத்தவம் உடல், சொல், மனம் ஆகியவற்றால் செய்யப்படுவதையிட்டு மூன்று வகைப்பட்டது என உரைக்கிறான்; அதில் இந்த 14-வது ஶ்லோகம் உடலால் செய்யப்படும் தவத்தை விளக்குகிறது. (தே₃வத்₃விஜகு₃ருப்ராஜ்ஞபூஜநம்) தேவர்கள், இருபிறப்பாளர்கள், ஆசார்யர்கள், அறிவாளிகள் ஆகியோரை கௌரவிப்பது, இது ஶரீரத்தினால் செய்யப்படும் தவத்தைக் குறிக்கிறதாகையாலே, இங்கு இவர்களுடைய திருமுன்பே ஶாஸ்த்ரங்களில் இவர்களைக் குறித்துக் காட்டவேண்டியதாகச் சொல்லப்படும் (உடலால் செய்யப்படும்) நடத்தையைக் குறிக்கிறது. "ப்ரஶஸ்த மங்க₃ள்ய தே₃வாயதந சதுஷ்பதா₂தி₃ப்ரத₃க்ஷிணம் ஆவர்த்தேத மநஸா வா தக்ஸமக்₃ரம்" [கௌ₃தமத₄ர்மம் 9—67] [புகழப்படும் இடங்கள், மங்களமான இடங்கள், தே₃வாலயங்கள், நான்கு சாலைகள் கூடுமிடமான சதுக்கங்கள் ஆகியவற்றை வலம் வரவேண்டும். அவற்றுக்கு முன் நிற்கும்போது (வலம் வரமுடியாவிட்டால்) மனத்திலாவது வலம் வர வேண்டும்] என்றும், "ப்ரத₃க்ஷிணம் வ்ரஜேத்₃விப்ராந் க₃ாமஶ்வத்த₂ம் ஹுதாஶநம்" [ப₄ார-ஆஶ்வ] [அந்தணர்கள், பசு, அரசமரம், அக்₃னி ஆகியவற்றை வலம்

आर्जवम् -- यथामनश्शारीरवृत्तम्, ब्रह्मचर्यम् -- योषित्सु भोग्यताबुद्धि-

---

வரவேண்டும்] என்றும், "ஆஸநேப்₄யஸ்ஸமுத்தஸ்து₂: மாநயந்த: புரோஹிதம்" [ரா அ-5-24] [ஆசார்யரை கௌரவப் படுத்துவதற்காக அனைவரும் ஆஸநங்களிலிருந்து எழுந்தார்கள்] என்றும், "ஊர்த்₄வம் ப்ராணா ஹ்யுத்க்ராமந்தி யூந: ஸ்த₂விர ஆக₃தே | அப்₄யுத்தா₂நாபி₄வாத₃ாப்₄யாம் புநஸ்தாந் ப்ரதிபத்₃யதே ||" [மநு 2-120] [வயது கல்வி முதலானவற்றால் முதிர்ந்தவர் எதிரே வரும்போது, அவற்றால் இளையவனுடைய ப்ராணன்கள் (முதிர்ந்தவனை கௌரவிப்பதற்காக) உயரே கிளம்புகின்றன; ஆகையாலே இளையவன் முதிர்ந்தவனை எதிர்கொண்டு வணங்குவதன் மூலம் அந்த ப்ரணன்களை வெளிக் கிளம்பாதபடி நிலைநிறுத்தவேண்டும்] என்றும் ப்ரமாணங்களில் இவ்விஷயம் விளக்கப்பட்டது. இங்கு வயதால் மாத்திரம்முதிர்ந்தவர்கள் கௌரவிக்கத்தக்கவர்கள் என்று கொள்ளக்கூடாது.

"ந ஹாயநை: ந பலிதை: ந வித்தை: ந ச ப₃ந்து₄பி₄: |
ருஷயஸ் சக்ரிரே த₄ர்மம் யோऽநூசாநஸ் ஸ நோ மஹாந் ||
[மநு 2-154]

[முதிர்ந்த பிராயத்தைக் கொண்டோ, தலை நரைத்ததைக் கொண்டோ, பணத்தைக் கொண்டோ, உறவினர்களைக் கொண்டோ ரிஷிகள் ஒருவனை கௌரவிப்பதில்லை; எவனொருவன் அங்க₃ங்களோடு கூடிய வேத₃ங்களை நன்கு கற்றவனோ அவனே எங்களுக்குப் பெரியவன்.] என்று மநுஸ்ம்ருதியில் சொல்லப்பட்டபடியே வேத₃ஶாஸ்த்ரங்கள் அறிந்தவனே பெரியவன் என்று கொள்ளவேணடும். (ஶௌசம்) புண்ய தீர்த்த₂மாடுவது முதலான பரிசுத்தியை விளைக்கும் செயல்கள். பொதுவாக "ஶௌசம்" என்றால் தீர்த்த₂ஸ்நாநம் முதலானவற்றால் விளையும் ஶு₃த்₃தி₄யையே குறிக்குமானாலும், இங்கு உடலால் செய்யப்படும் தவத்தைக் குறிக்கும் இடமாகையாலே அந்த ஶு₃த்₃தி₄க்குக் காரணமான தீர்த்த₂ஸ்நானம் முதலானவற்றைக் குறிக்கிறது. (ஆர்ஜவம்) மனத்தில் எண்ணியபடியே காரியம் செய்தல். பொதுவாக 'ஆர்ஜவம்' என்பது மனம் மொழி மெய்களாலே ஒருபடிப்

युक्तक्षणादिरहितत्वम्, अहिंसा — अप्राणिपीडा; एतच्छारीरं तप उच्यते ॥ १४ ॥

अनुद्वेगकरं वाक्यं सत्यं प्रियहितं च यत् ।
स्वाध्यायाभ्यसनं चैव वाङ्मयं तप उच्यते ॥ १५ ॥

15. அநுத்$_3$வேக$_3$கரம் வாக்யம் ஸத்யம் ப்ரியஹிதம் ச யத் ।
ஸ்வாத்$_4$யாயாப்$_4$யஸநம் சைவ வாங்மயம் தப உச்யதே ॥

---

பட்டிருப்பதைக் குறிக்குமானாலும், இங்கு உடலால் செய்யப்படும் தவத்தைக் குறிக்குமிடமாகையாலே, இப்படிப் பொருள் கொள்ளப்பட்டது. (ப்$_3$ரஹ்மசர்யம்) பெண்களிடம் காமச்செயல்களைப் புரியாதிருத்தல். "ப்$_3$ரஹ்மசர்யம் ச யோஷித்ஸு போ$_4$க$_3$யதா பு$_3$த்$_3$தி$_4$வர்ஜநம்" [ஸ்த்ரீகளிடத்தில் 'இனியவர்கள்' என்னும் எண்ணத்தை விடுகை ப்$_3$ரஹ்மசர்யமாகும்] என்று சொல்லப்பட்டதன்றோ. கீ$_3$தாவ்யாக்$_2$யாநம் முதல் ஷட்கத்தில் [6—14] "ப்$_3$ரஹ்மசாரிவ்ரதே" என்னும் பத$_3$த்தை விவரிக்கும்போது, (1) ஸ்த்ரீயை நினைப்பது (2) அவளைப்பற்றிப்பேசுவது (3) அவளோடு கேலிப்பேச்சுப் பேசுவது (4) அவளைக் காமத்தோடு பார்ப்பது (5) புணர்வதைப்பற்றிப் பேசுவது (6) புணர்வது என்று ஸங்கல்பிப்பது (7) அதில் உறுதிகொள்வது (8) புணர்ந்து முடிப்பது என்று 'மைது$_2$நம்'(பெண்ணுறவு) எட்டுவகைப்பட்டது என்றும், இவற்றில் ஒவ்வொன்றையும் விலக்குவதையிட்டு ப்$_3$ரஹ்மசர்யமும் எட்டுவகைப்பட்டது என்றும் கூறும் அக்$_3$நிபுராண [372-10, 11] வசநம் எடுத்துக்காட்டப்பட்டது; அது இங்கும் அநுஸந்தி$_4$க்கத்தக்கது. இங்கு உடலால் செய்யப்படும் தவத்தைக் குறிக்கும் இடமாகையாலே பெண்ணைக் காமத்தோடு பார்ப்பது, தொடுவது, புணர்ந்து முடிப்பது முதலானவற்றை விலக்குவதையே ப்$_3$ரஹ்மசர்யஶப்$_3$த$_3$த்திற்குப் பொருளாகக் கொள்ளவேண்டும். (அஹிம்ஸா ச ஶாரீரம் தப உச்யதே) முற்கூறியவையும், உயிர்களைத் துன்புறுத்தாமல் இருப்பதும் ஶரீரத்தினால் செய்யப்படும் தவமாகச் சொல்லப்படுகிறது. இங்கு 'அஹிம்ஸை' என்றது ஶாஸ்த்ரத்தில் விதி$_4$க்கப்பட்ட ஹிம்ஸைகளைத் தவிர்ந்த ஹிம்ஸைகளை விட்டிருப்பதைக் குறிக்கிறது.

भा ॥ परेषामनुद्वेगकरं सत्यं प्रियहितं च यद्वाक्यं स्वाध्यायाभ्यसनं चेत्येतद्वाङ्मयं तप उच्यते ॥ १५ ॥

---

அநுத்₃வேக₃கரம் — பிறருக்கு வெறுப்பை விளைக்காததாகவும், ஸத்யம் — உண்மையானதாகவும், ப்ரியஹிதம் ச — இனியதாகவும், நன்மை விளைப்பதாகவும் இருக்கும், யத்வாக்யம் (தத்) — வார்த்தையும், ஸ்வாத்₄யாயாப்₄யஸநம் ச ஏவ — வேதத்தை விடாது ஓதுதலுமே, வாங்மயம் தப:— வாக்கினால் செய்யப்படும் தவம் என்று, உச்யதே—சொல்லப்படுகிறது.

---

16. அஞ்சா வகைசொல் லதின்மெய் யுகப்பிதமாத்
துஞ்சா மறையின் சொலின்வலியா—லெஞ்சாத
வாக்கதனி னின்றும் மருவுதவ மென்பரே
யூக்க மனமுடையோ ருற்று.

அஞ்சாவகை — பிறர் அருவருக்காத வகையில், அதில் மெய் உகப்பு இதமாச்சொல் —அதிலும் உண்மையானதாய், இனிமையானதாய், நன்மை பயப்பதாய் உள்ள சொல், துஞ்சா மறையின் சொலின் வலியால் எஞ்சாத (சொல்) — அழியாத வேத₃த்தின் ஓதுதலால் ப₃லம் குறையாத சொல் (ஆகியவை), வாக்கதனில் நின்றும் — வாக்கிலிருந்து. மருவு - வெளிப்படும், தவம் — தவமாகும் (என்று ஊக்க மனமுடையோர் — உறுதியான நெஞ்சுடையோர், உற்று — ஆராய்ந்து, என்பரே — கூறுவர்கள்.

---

15. இந்த ஶ்லோகத்தில் வாக்கினால் செய்யப்படும் தவத்தை விளக்குகிறான். (அநுத்₃வேக₃கரம் வாக்யம்) பிறருடைய மர்மத்தைப் பிளப்பதாய், பிறரை நிந்திப்பதாய் இருக்கையாலே பிறர்க்கு ப₄யம், அருவருப்பு முதலானவற்றை உண்டாக்கும் வாக்யம் உத்₃வேக₃ கரமான வாக்யம். முற்கூறியபடி இல்லாததாகையாலே ப₄யம் முதலானவற்றை விளைக்காமல் இருக்கும் வாக்யம் இங்கு வாக்கினால் செய்யப்படும் தவமாகச் சொல்லப்படுகிறது. (ஸத்யம்) 'உள்ளதை உள்ளபடி சொல்லுவதாய், உயிர்

मनःप्रसादस्सौम्यत्वं मौनमात्मविनिग्रहः ।
भावसंशुद्धिरित्येतत्तपो मानसमुच्यते ॥ १६ ॥

16. மந:ப்ரஸாத3ஸ் ஸௌம்யத்வம் மௌநமாத்ம
விநிக்3ரஹ: |
ப4ாவஸம்ஶுத்3தி4ரித்யேதத் தபோ மாநஸமுச்யதே ||

---

களுக்கெல்லாம் நன்மை பயப்பதான வாக்கியமே ஸத்யவாக்யம்' என்று முன்பு பலவிடங்களில் ப்ரமாணங்களைக்காட்டி (ஸத்ய) லக்ஷணம் சொல்லப்பட்டது. (ப்ரியஹிதம் ச) இனியதாகவும் நன்மை பயப்பதாகவும் இருப்பது; இனியதாயிருக்கும் சொல்லாவது— நல்வரவு கூறுதல், அறம் செய்பவர்களைப் பாராட்டுதல் முதலானவை. ஆனால் துதிக்கத்தகாதவர்களைத் துதிப்பது முதலானவை இனியவையாய் இருந்தபோதிலும், ஶாஸ்த்ரங்களில் விலக்கப்பட்டிருக்கையாலே, அவைகளைத் தவிர்ப்பதற்காக இங்கு வாக்யம் நன்மை பயப்பதாகவும் இருக்கவேண்டும் எனப்படுகிறது. (யத்) 'தத் வாக்யம்' என்று கூட்டி அந்வயித்துக்கொள்வது.

ஸத்யம் ப்3ருயாத் ப்ரியம் ப்3ருயாத் ந ப்3ருயாத்
ஸத்யம் அப்ரியம் |
ப்ரியம் ச நாந்ருதம் ப்3ருயாத் ஏஷ த4ர்ம: ஸநாதந: ||

[ (பிறர்க்கு நன்மை பயப்பதான) உண்மையையே பேசவேண்டும்; இனியதையே பேசவேண்டும்; இனியதல்லாத உண்மையைப் பேசக் கூடாது; உண்மையல்லாத இனியதையும் பேசக் கூடாது. இதுவே நல்லோர்கள் பழமையாகக் கடைப்பிடிக்கும் தர்மமாகும்.] என்னும் பிரமாணம் இங்கு அநுஸந்தி4க்கத்தக்கது. (ஸ்வாத்4யாயாப்4யஸநம் ச ஏவ வாங்மயம் தப: உச்யதே) முற்கூறியவைகளோடு: வேதமோதுதலையே பழக்கமாகக் கொண்டிருப்பதும் வாக்கினால் செய்யப்படும் தவமாகச் சொல்லப்படுகிறது. முதல் ஷட்கத்தில் (4- 28) சொல்லப்பட்ட ஸ்வாத்4யாய யஜ்ஞம் எனப்படும் வேத3 பாராயண யஜ்ஞமே இதுவாகும்.

மந:ப்ரஸாத₃: — மனத்தில் கோபம் முதலான தீய கு₃ணங்கள் அற்றுத் தெளிவாயிருக்கை, ஸௌம்யத்வம் — (மனத்தில்) பிறர்க்கு நன்மையை எண்ணுகை, மௌநம் — மனத்தாலே வாக்கின் செயலை அடக்குவது, ஆத்ம விநிக்₃ரஹ:-மனத்தை (ப்ராக்ருத விஷயங்களிலிருந்து) அடக்கித்தியானிக்கத்தக்க விஷயங்களில் நிலைநிறுத்தல், ப₄ாவஸம்ஶுத்₃தி₄: — ஆத்மாவைத்தவிர்ந்த விஷயங்களைப்பற்றிய நினைவு இல்லாமல் இருத்தல், இதி ஏதத் — என்னும் இவை, மாநஸம் தப: — மனத்தால் செய்யப்படும் தவம் என்று, உச்யதே — சொல்லப்படுகிறது.

---

17. மனந்தெளித னன்கறிதல் வாயுரையை மீட்ட
லினைவுமனஞ் சேர நிறுத்த — லினமியல்வு
சேராத தூய்மையிவை சித்தத்துச் சேர்தவமென்
றுராய்வர் ஞானத் தவர்.

மனம்தெளிதல் — மனத்தில் கோபம் முதலான குணங்கள் அற்றுத் தெளிவாயிருக்கை. நன்கு அறிதல் — (மனத்தில்) பிறர்க்கு நன்மையே எண்ணுதல், வாய் உரையை மீட்டல் — மனத்தாலே வாக்கின் செயலை அடக்குவது. நினைவு மனம் சேர நிறுத்தல் — மனத்தை (ப்ராக்ருத விஷயங்களிலிருந்து) அடக்கி, தியானிக்கத்தக்க 'விஷயங்களில் நிலைநிறுத்தல், இனம் இயல்வு சேராத தூய்மை — ஆத்மாவைத் தவிர்ந்த விஷயங்களைப் பற்றிய நினைவு இல்லாமலிருத்தல், இவை — ஆகிய இவை, சித்தத்து சேர்தவம் என்று — மனத்தால், செய்யப்படும் தவம் என்று, ஞானத் தவர் — அறிவாளிகள், ஆராய்வர் — ஆராய்ந்து உரைப்பர்.

भा ॥ मनःप्रसादः—मनसः क्रोधादिरहितत्वम्, सौम्यत्वम्—मनसः परेषामभ्युदयप्रावण्यम्, मौनं — मनसा वाक्प्रवृत्तिनियमनम्,

---

16. இந்த ஶ்லோகத்தில் மனத்தால் செய்யப்படும் தவத்தை விளக்குகிறன். (மந꞉ப்ரஸாத₃꞉) மனத்தில் கோபம் முதலான தீயகு₃ணங்கள் அற்றுத் தெளிவாயிருக்கை. அழுக்கு நீங்கி இருத்தல் நீருக்குத் தெளிவு; அதுபோல், அழுக்காறு (பொருமை), அவா (ப்ராக்ருத விஷயங்களில் பேராசை), வெகுளி (கோபம்) முதலான தீயகு₃ணங்களாகிய அழுக்குகள் அற்றிருக்கை மனத்துக்குத் தெளிவு. இத்தால் பிறர் திறத்துத் தீயநினைவுகள் இல்லாமல் இருக்கவேண்டும் என்று சொல்லப்பட்டது. இனி அடுத்த பத₃த்தாலே மனத்தால் பிறர்க்கு நன்மையையும் விரும்ப வேண்டும் என்று சொல்லப்படுகிறது. (ஸௌம்யத்வம்) (மனத்தில்) பிறர்க்கு நன்மையை எண்ணுகை. பொதுவாக "ஸௌம்ய" ஶப்₃த₃ம் உடலழகைக் குறிக்குமானலும் இது மனத்தால் செய்யப்படும் தவத்தைக்குறிக்குமிடமாகையாலே, பிறர்க்கு நன்மையை விரும்புகையாகிற மனத்தழகை இங்கு குறிக்கிறது. 'மந꞉ப்ரஸாத₃꞉' என்ற ஶப்₃த₃த்திலுள்ள 'மந꞉' என்ற பதத்தை இங்கும் கூட்டிக் கொள்ளவேண்டும்.

வஸதி ஹ்ருதி₃ ஸநாதநே ச தஸ்மிந் ப₄வதி புமாந் ஜக₃தோऽஸ்ய ஸௌம்யரூப꞉ |
க்ஷிதிரஸமதிரம்யமாத்மநோऽந்த꞉ கத₂யதி சாருதயைவ ஸாலபோத꞉ ||
[வி. பு. 3-7-25]

[பழையோனை அப்பெருமான் நெஞ்சில் வாழ்ந்தானெனில் அந்த மனிதன் இவ்வுலகிற்கே அழகிய ரூபமுடையவனாகக் காட்சியளிக்கிறன்; இளம் ஸால (ஆச்சா) மரம் தன் அழகினாலேயே தான் நிற்கும் பூமியின் உள்ளிருக்கும் நீரின் மிக அழகிய ரஸத்தை உணர்த்துகிறதன்றோ] என்று ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் ஒரு ஸ்ரீவைஷ்ணவனுடைய உடலழகு அவனுடைய மனத்தழகையும் காட்டும் என்று கூறப்பட்டதன்றோ. (மௌநம்) மனத்தாலே

आत्मविनिग्रहः — मनोवृत्तेर्ध्येयविषयेऽवस्थापनम्, भावसंशुद्धिः - आत्मव्यतिरिक्तविषयचिन्तारहितत्वम्; एतन्मानसं तपः ॥ १६ ॥

---

வாக்கின் செயலை அடக்குவது, பொதுவாக 'மௌந' ஶப்3த3ம் வாக்கின் செயலை அடக்குவதையே குறிக்குமானாலும், இங்கு மனத்தால் செய்யப்படும் தவத்தைச் சொல்லுமிடமாகையாலே, வாக்கின் செயலை அடக்குவதற்குக் காரணமான மனத்தின் செயலை முக்கியமாகக் குறிக்கிறது. (ஆத்மவிநிக்3ரஹ:) மனத்தை (ப்ராக்ருதவிஷயங்களிலிருந்து அடக்கி, தியானிக்கத்தக்க விஷயங்களில் நிலைநிறுத்தல். இங்கு 'ஆத்ம' ஶப்3த3ம் மனத்தைக்குறிக்கிறது; மனத்தைப்பிராக்ருத விஷயங்களிலிருந்து அடக்குவது, தியானிக்கத்தக்க ஆத்ம பரமாத்ம விஷயங்களில் மனத்தை நிலைநிறுத்துவதற்கேயாகையாலே, பா4ஷ்யத்தில் "த்4யேய விஷயே அவஸ்தா2பநம்" [தியானிக்கத்தக்க விஷயங்களில் நிலைநிறுத்தல்] என்று பொருள் கொள்ளப்பட்டது. (பா4வஸம்ஶுத்3தி4:) ஆத்மாவைத் தவிர்ந்த விஷயங்களைப்பற்றிய நினைவு இல்லாமல் இருத்தல். அழுக்காறு, அவா, வெகுளி முதலானவை அற்றிருத்தலும் 'பா4வஸம்ஶுத்3தி4:' என்னும் பத3த்திற்குப் பொருளாகுமானாலும், 'மந:ப்ரஸாத3:' என்னும் சொல்லால் அது சொல்லப்பட்டுவிட்டபடியால், அத்தோடு புநருக்தி வாராமைக்காக முற்கூறியபடி பொருள்கொள்ளப்பட்டது. இங்கு "பா4வ" ஶப்3த3ம் அபி4ப்ராயமாகிற நினைவைக்குறிக்கிறது. அதற்கு 'ஸம்ஶுத்3தி4'யாவது மற்ற விஷயங்களை அடியோடு விலக்கியிருக்கை. இப்படி ஆத்ம பரமாத்மவிஷயங்களைத்தவிர மற்ற விஷயங்களை அடியோடு விலக்கியிருக்கையாலே, இத்தவத்தை உடையவன் பரதா3ரம் பரத்3ரவ்யம் முதலானவற்றை மனத்தாலும் விரும்பமாட்டான் என்பது சொல்லாமலே விளங்கும். (இதி ஏதத் மாநஸம் தப: உச்யதே) என்னும் இவை மனத்தால் செய்யப்படும் தவம் என்று (அறிவாளிகளால்) சொல்லப்படுகிறது. இந்த மூன்று ஶ்லோகங்களில் தவத்தை ஶரீரம் வாக்கு மனம் ஆகியவற்றால் செய்யப்படுவதாக மூன்றாகப் பிரித்திருப்பது ஶரீரம் முதலானவற்றின் ப்ராதா4ன்யத்தை இட்டு. இப்படிக் கொள்ளாவிடில் "அதி4ஷ்டா2நம் ததா2 கர்த்தா கரணம் ச ப்ருத2க்3விதா4ம் | விவிதா4 ச ப்ருத2க் சேஷ்டா தை3வம் சைவாத்ர பஞ்சமம் || ஶரீரவாங்மநோபி4ர் யத் கர்ம ப்ராரப4தே நர: | ந்யாய்யம் வா விபரீதம் வா பஞ்சைதே தஸ்ய ஹேதவ: ||" [கீதை 18-14, 15] எனும் ஶ்லோகங்களில் ஒவ்வொரு செயலுக்கும் ஶரீரத்தையும் மனம் முதலான இந்த்3ரியங்களையும் காரணமாகக்கூறியிருப்பது ஒட்டாமல் போய்விடும். 16

श्रद्धया परया तप्तं तपस्तत्त्रिविधं नरैः ।
अफलाकाङ्क्षिभिर्युक्तैः सात्त्विकं परिचक्षते ॥ १७ ॥

7-7-09

17. ஶ்ரத்₃த₄யா பரயா தப்தம் தபஸ்தத் த்ரிவித₄ம் நரை: |
அப₂லாகாங்க்ஷிபி₄ர் யுக்தைஸ் ஸாத்விகம் பரிசக்ஷதே ||

அப₂லாகாங்க்ஷிபி₄: — ப₂லனில் விருப்பம் இல்லாதவர்களாய். யுக்தை: — (பரமாத்மாவின் ஆராத₄னம் இது என்னும் நினைவை) உடையவர்களான, நரை: — மனிதர்களாலே, பரயா ஶ்ரத்₃த₄யா — மேலான ஶ்ரத்₃தை₄யோடு, யத் த்ரிவித₄ம் தப: தப்தம் — (முற்கூறியபடி) மூவகைப்பட்ட யாதொரு தவம் செய்யப்படுகிறதோ, தத் — அதை, ஸாத்விகம் பரிசக்ஷதே — ஸாத்விகமான தவம் என்று (அறிவாளிகள்) கூறுகிருர்கள்.

---

18. முக்கரணஞ் செய்தவங்கண் மூன்றுவித மார்வமுயர்ந்
தொக்க வருபயனை யுள்ளொழித்துத்—தக்கவர்கள்
செய்யுந் தவத்தைச் சிறக்கின்ற முற்குணத்தென்
றுய்யு மவருரைப்ப ருற்று.

முக்கரணம் செய்தவங்கள் மூன்று விதம் — மனம், மொழி, மெய் என்னும் மூன்று கரணங்களாலும் செய்யப்படும் மூன்றுவகைப்பட்ட தவங்களையும், ஆர்வம் உயர்ந்து— மேலான ஶ்ரத்₃தை₄யோடு, ஒக்க வருபயனை உள்ளொழித்து — (அத்தவத்திற்குத்) தன்னடையே வரும் பயனில் நெஞ்சு செலுத்தாமல், தக்கவர்கள் — (இத்தவம் எம்பெருமானுக்கு ஆராதனம் என்னும்) நினைவுடையவர்கள், செய்யும் தவத்தை — செய்கின்ற தவத்தை, சிறக்கின்ற முன் குணத்(த)து என்று-சிறந்ததான ஸத்வகு₃ணத்தால் விளைகின்றது என்று, உய்யும் அவர் — உஜ்ஜீவனத்தைத் தேடுகின்றவர்கள், உற்று உரைப்பர் — ஆராய்ந்து கூறுவர்.

भा ॥ अफलाकाङ्क्षिभिः -- फलाकाङ्क्षारहितैः, युक्तैः -- परम-पुरुषाराधनरूपमिदमिति चिन्तायुक्तैः नरैः परया श्रद्धया यत् त्रिविधं तपः कायवाङ्मनोभिस्तप्तम्, तत्सात्त्विकं परिचक्षते ॥ १७ ॥

सत्कारमानपूजार्थं तपो दम्भेन चैव यत् ।
क्रियते तदिह प्रोक्तं राजसं चलमध्रुवम् ॥ १८ ॥

18. ஸத்கார மாந பூஜார்த்த2ம் தபோ த3ம்பே4ந சைவ யத் |
க்ரியதே ததி3ஹ ப்ரோக்தம் ராஜஸம் சலமத்4ருவம் ||

ஸத்கார மாந பூஜார்த்த2ம் — மனத்தில் கொள்ளப்படும் மதிப்பு, புகழ்மொழிகள், நமஸ்காரம் முதலான பூஜைகள்

---

17. மெய், மொழி, மனம் ஆகியவற்றால் அனுஷ்டி2க்கப்படும் மூன்று வகைப்பட்ட தவங்களைச் சென்ற மூன்று ஶ்லோகங்களில் விளக்கியபின், இனிவரும் மூன்று ஶ்லோகங்களாலே முக்குணங்களால் அத்தவம் மூன்றுவகைப்பட்டது என்று காட்டுகிறான். அதில் இந்த ஶ்லோகத்தில் ஸாத்விகமான தவத்தை விளக்குகிறான். (அப2லாகாங்க்ஷிபி4:) இந்தத் தவத்திற்குரிய ப்ராக்ருத ப2லன்களில் விருப்பமில்லாதவர்களாலே, (யுக்தை: நரை:) 'இத்தவம் பரமபுருஷனுக்கு ஆராத4னமாயிருப்பது' என்னும் நினைவோடுகூடியிருக்கும் மனிதர்களாலே. முன் பத3த்தாலே தவத்திற்குரிய ப்ராக்ருத ப2லன்களை இவர்கள் விரும்புவதில்லை என்று சொல்லப்பட்டது. அதிலிருந்தே எம்பெருமானுடைய ப்ரீதியாகிற சிறந்த ப2லனை இவர்கள் விரும்புகிறார்கள் என்பது மறைமுகமாக உணர்த்தப்பட்டது. ஆகையாலே, "யுக்தை:" என்னும் இந்தப் பதத்திற்கு, அந்த ப்ரீதிக்கு உறுப்பாயிருக்கும் "எம்பெருமானுக்கு ஆராத4னம் இத்தவம்" என்னும் நினைவோடு கூடியிருப்பவர்களாலே—என்று பொருள் கொள்வதே பொருத்தமானது. (பரயா ஶ்ரத்3த4யா த்ரிவித4ம் தப: (யத்) தப்தம்) மேலான ஶ்ரத்3தை4யோடு முற்கூறியபடி மனம் மெய் மொழிகளாலே மூன்றுவகைப்பட்ட யாதொரு தவம் அநுஷ்டி2க்கப்படுகிறதோ. மேலே 'தத்' என்னும் ஶப்3த3ம் வருகையாலே இங்கு 'யத்' என்னும் ஶப்3த3த்தை வருவித்துக்கொள்ளவேண்டும். (தத் ஸாத்விகம் பரிசக்ஷதே) அந்தத் தவத்தை ஸத்வகு3ணத்தால் உண்டாவது என்று அறிவாளிகள் கூறுகிறார்கள். 17.

भा ॥ मनसा आदरस्सत्कारः, वाचा प्रशंसा मानः, शारीरो नमस्कारादिः पूजा। फलाभिसन्धिपूर्वकं सत्काराद्यर्थं च दम्भेन हेतुना

ஆகியவைகளின் பொருட்டு, த₃ம்பே₄ந ச ஏவ — ட₃ம்ப₄த்திற்காகவே, யத் தப: க்ரியதே — யாதொரு தவம் செய்யப்படுகிறதோ, தத் — அந்தத்தவம், இஹ — இவ்வுலகில், ராஜஸம் ப்ரோக்தம் — ரஜோகு₃ணத்தால் உண்டாகிறது என்று சொல்லப்படுகிறது; (அது) (ப₂லனையிட்டு) சலம் — நழுவக்கூடியதாகவும், அத்₄ருவம் - நிலைநில்லாததாகவும் இருப்பது.

19. நாடு நலநினைந்து கொண்டாடி நன்கிறைஞ்சத்
தேடு மனநினைந்து டம்பத்தாற் — பீடுறவே
யெய்ந்ததவ நில்லா திடைக்குணத்த தாய்ச்சலித்து
மாய்ந்தறுமென் றேயுரைப்பர் மற்று.

நாடு — உலகத்திலுள்ளவர்கள், நலம் நினைந்து — மனத்தால் நல்லவனாகமதித்து, கொண்டாடி — வாயால் புகழ்ந்து, நன்கு இறைஞ்ச — நமஸ்காரம் முதலியவைகளால் நன்கு பூஜை செய்வதற்கு, தேடு மனம் நினைந்து — விருப்பத்தை

18. இந்த ஶ்லோகத்தில் ராஜஸமான தவத்தை விளக்குகிறான். (ஸத்கார மாந பூஜார்த்த₂ம்) மனம் மொழி மெய்களாலே பிறர் நம்மைக் கொண்டாடுவதைப் பயனாகக் கருதி. ஸத்காரம், மாநம், பூஜை என்னும் மூன்று பத₃ங்களும் பிறர் நம்மைக் கொண்டாடுவதைக் காட்டுமானாலும், இவற்றினிடையே புனருக்தி இல்லாமைக்காக, பிறர் நம்மை மனத்தால் மதிப்பதை 'ஸத்கார' பத₃மும், வாயால் கொண்டாடுவதை 'மாந' பத₃மும், ஶரீரத்தால் நமஸ்காரம் முதலான கௌ₃ரவங்கள் செய்வதை 'பூஜா' ஶப்₃த₃மும் குறிப்பதாகக் கொள்ளப்பட்டது. ஸாத்விகமான தபஸ்ஸைச் சென்ற ஶ்லோகத்தில் விளக்கியபோது, "அப₂லாகாங்க்ஷிபி₄:" என்று ப்ராக்ருதப₂லன்களில் விருப்பமில்லாமையைக் கூறியபடியால், இங்கு அந்த ப்ராக்ருத ப₂லன்களில் விருப்பத்தோடு செய்யப்படுகிறது இந்தத்தவம் என்று அர்த்த₂ப₂லத்தாலே கொள்ளவேண்டும். (த₃ம்பே₄ந சைவ யத் தப: க்ரியதே) ஆட₃ம்ப₃ரத்திற்காகவே யாதொரு தவம் செய்யப்படுகிறதோ.

यत्तपः क्रियते, तदिह राजसं प्रोक्तम्; स्वर्गादिफलसाधनत्वेनास्थिरत्वात् चलमध्रुवम्। चलत्वम्—पातभयेन चलनहेतुत्वम्, अध्रुवत्वम्—क्षयिष्णुत्वम् ॥ १८ ॥

---

மனத்தில் கொண்டு, டம்பத்தால் — டம்பம் காரணமாக, பீடு உறவே ஏய்ந்த தவம் — ஸ்வர்க்கம் முதலான ப்ராக்ருத பலன்களை அடைவதற்குச் செய்யப்படும் தவம், இடைக்குணத்ததாய் — நடுக்குணமாகிற ராஜஸகுணத்தால் உண்டாவதாய், நில்லாது — நிலைநில்லாததாய் இருக்கையாலே, சலித்து — நழுவக்கூடியதாய், மற்றும் — மேலும், மாய்ந்து அறும் — அழிந்து ஒழியும், என்றே உரைப்பர் — என்றே (அறிவாளிகள்) கூறுவர்.

---

(தத் இஹ ராஜஸம் ப்ரோக்தம்) அது இவ்வுலகத்தில் ரஜோ குணத்தால் உண்டாகும் தவமாகச் சொல்லப்படுகிறது. இந்த ராஜஸமான தவத்திற்கு இரண்டுவிதமான தாழ்வுகள் கடைசி இரண்டு பதங்களாலே குறிக்கப்படுகின்றன. (சலம் அத்ருவம்) நிலையற்ற ஸ்வர்க்கம் முதலான பலன்களுக்கு ஸாதனமாக இருப்பதால், இத்தவம் பலனையிட்டு நழுவக்கூடியதாகவும் அழியக்கூடியதாகவும் இருக்கிறது. 'சலம்' 'அத்ருவம்' என்னும் பதங்களில் முந்தியது காரணத்தையும் பிந்தியது கார்யத்தையும் காட்டுவதாகக் கொண்டு, "எப்போதாவது விளையும் பலனை உடையதாகையாலே நிலையற்றது" என்று பொருள் கொண்டார் ஶங்கரர். இதைக் காட்டிலும் பலனையிட்டு இரண்டு தாழ்வுகளை இப்பதங்கள் இத்தவத்திற்குச் சொல்லுவதாகக் கூறுவது ஸ்வரஸமானது. இரண்டு பதங்களில் "அத்ருவம்" என்னும் பிந்திய பதம் பலம் நிலையற்றது என்று தெளிவாகக் காட்டுகிறது. 'சலதி இதி சலம்' என்னும் வ்யுத்பத்தியாலே 'சல' ஶப்தம் அநுபவிக்கும்போதே பலம்நழுவக்கூடியது என்று காட்டுகிறது. "ஸ்வர்க்கேபி பாதபீதஸ்ய க்ஷயிஷ்ணோர் நாஸ்தி நிர்வ்ருதி:" [ஸ்வர்க்கஸுகத்தை அநுபவிக்கும் போதும் 'ஒருநாள் இதை இழந்து பூமியில் விழுந்து விடுவோம்' என்று பயந்தவனுக்கு அநுபவிக்கும் ஆநந்தமும் போய்விடுகிறது.] என்று சொல்லப்படுகையாலே அநுபவிக்கும்

मूढग्राहेणात्मनो यत्पीडया क्रियते तपः ।
परस्योत्सादनार्थं वा तत्तामसमुदाहृतम् ॥ १९ ॥

19. மூடக்3ராஹேண ஆத்மநோ யத் பீட3யா க்ரியதே தப: |
பரஸ்யோத்ஸாத3நார்த்த2ம் வா தத் தாமஸ முதா3-
ஹ்ருதம் ||

மூடக்3ராஹேண — அறிவிலிகளால் (தங்கள்) பிடிவாதத்தாலே, ஆத்மந: பீட3யா — தம்மைத்தாமே துன்புறுத்துவதாகவும், பரஸ்ய உத்ஸாத3நார்த்த2ம் வா — பிறரைத் துன்புறுத்துவதற்காகவும், யத் தப: க்ரியதே — யாதொரு தவம் செய்யப்படுகிறதோ, தத் — அத்தவம், தாமஸம் உதா3ஹ்ருதம் — தமோகு3ணத்தால் விளைவது என்று சொல்லப்படுகிறது.

---

20. மூட மதியான் முயல்வுற்றுத் தம்முயிர்தான்
பீடை மருவப் பிறர்கேடு—கூடவே
யுற்றதவ மான துடனே கடைக்குணத்தைப்
பற்றவரு மென்பர் பயின்று.

மூட மதியால் முயல்வுற்று—(அறிவிலிகளாலே) தங்கள் பிடிவாதத்தாலே செய்யப்படுவதாய், தம் உயிர்தான்பீடை மருவ — தம்மைத்தாமே வருத்திக் கொள்வதாகவும், உடனே பிறர் கேடு கூடவே — அத்துடன் பிறர்க்கு அழிவைச் செய்வதாகவும், உற்ற தவமானது — செய்யப்படும் தவத்தை, பயின்று — ஆராய்ந்து பார்த்து, கடை குணத்தைப் பற்ற வரும் என்பர்—கடைசி குணமான தமோகு3ணத்திலை வருவது என்று (அறிவாளிகள்) கூறுவர்.

---

போதே நழுவிவிடுவதைக் காட்டுகிறது. 'சல' ஶப்3த3ம் என்று கருத்து. சிலர் 'சல' ஶப்3த3த்தாலே இத்தவத்தின் ப2லன் அநித்யமானது என்றும், 'அத்4ருவ' ஶப்3த3த்தாலே தடையேற்படக்கூடியதாகையாலே உறுதியாக விளையக்கூடியதல்ல என்றும் காட்டப்படுவதாகப் பொருள் கொண்டனர். மற்ற தவங்களுக்கும் தடையேற்படக்கூடுமாகையாலே ராஜஸமான தவத்திற்கு மாத்திரம் இதைச் சொல்லுவது பொருந்தாது. 18.

भा ॥ मूढाः — अविवेकिनः, मूढग्राहेण — मूढैः कृतेनाभिनिवेशेन आत्मनश्शक्त्यादिकमपरीक्ष्य आत्मपीडया यत्तपः क्रियते, परस्योत्सादनार्थं च यत्क्रियते, तत्तामसमुदाहृतम् ॥ १९ ॥

---

19. இந்த ஶ்லோகத்தில் தாமஸமான தவத்தை விளக்குகிறன். (மூட₄க்₃ராஹேண) தீமையையே நன்மை என்று மயங்கி, தீமைகளில் ஈடுபடும் அறிவிலிகள் இங்கு மூட₄ர்கள் எனப்படுகிறர்கள். 'மூட₄க்₃ராஹேண' என்று அத்தகைய மூடர்களால் தங்களுடைய பிடிவாதத்தால் செய்யப்படுவது இத்தவம் என்று சொல்லப்படுகிறது. (ஆத்மந: பீட₃யா) தம்முடைய ஶக்தி எவ்வளவு என்பதை ஆராயாமல், ஶாஸ்த்ரத்தில் இது தீமை விளைப்பதாகக் கூறப்பட்டிருப்பதையும் ஆராயாமல். தமக்கு இம்மையிலும் மறுமையிலும் துன்பத்தை விளைத்துக் கொள்வதற்காகவே இத்தவம் செய்யப்படுகிறது என்று கருத்து. (பரஸ்ய உத்ஸாத₃நார்த்த₂ம் வா யத்தப: க்ரியதே) அறிவிலிகளாகையாலே பிறரைத் துன்புறுத்துவதற்காகவும் 'அபி₄சாரம்' முதலான யாதொரு தவம் செய்யப்படுகிறதோ; இங்கு "வா"ஶப்₃தம் சகாரத்தின் பொருளை உடையது.

"அஶக்யாநி து₃ரந்தாநி ஸமவ்யயப₂லாநி ச|
அஸாத்₄யாநி ச வஸ்தூநி நாரபே₄த விசக்ஷண: ||"

[தனக்கு இயலாதவையும், தீமையை விளைப்பவையும், லாப₄த்துக்கு ஸமமான நஷ்டத்தை உடையவையும், எவராலும் ஸாதி₄க்க முடியாதவையுமான காரியங்களை அறிவுடையவன் தொடங்கக் கூடாது ] என்னும் ப்ரமாணம் இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கது. "ஆத்மந: பீட₃யா" என்றவிடத்தில் தன்னால் தாங்க முடியாத பீடைகளே குறிக்கப்படுவதாகக் கொள்ளவேண்டும். ஏகாதசி விரதம் முதலான ஸாத்விக வ்ரதங்களிலும் தன்னால் தாங்கக்கூடிய சிறிய பீடைகள் உண்டன்றே. இவ்விஷயமே "ஸந்நிரீக்ஷ்ய ப₃லாப₃லம்" என்று மற்றொரு ப்ரமாணத்தில் சொல்லப்பட்டது.

"தே₃ஶம் காலம் ததா₂த்மாநம் த்₃ரவ்யம் த்₃ரவ்யப்ரயோஜநம் |
உபபத்திம் அவஸ்தா₂ம் ச ஜ்ஞாத்வா ஶௌசம் ஸமாசரேத் |"

[தேசத்தையும், காலத்தையும், தனது நிலையையும், தன்னிடமுள்ள திரவியத்தையும், அந்த திரவியத்தினால் விளையும் பயனையும், இவை அனைத்தின் பொருத்தத்தையும், நிலைகளையும் அறிந்து, நல்ல

10-7-09.

दातव्यमिति यद्दानं दीयतेऽनुपकारिणे ।
देशे काले च पात्रे च तद्दानं सात्त्विकं स्मृतम् ॥ २० ॥

20. த₃ாதவ்யம் இதி யத் த₃ாநம் தீ₃யதே அநுபகாரிணே [1]
தே₃ஶே காலே ச பாத்ரே ச தத் த₃ாநம் ஸாத்விகம்
ஸ்ம்ருதம் ||

அநுபகாரிணே — தனக்கு உதவிசெய்யாதவனுக்கு, த₃ாதவ்யம் இதி-கொடுப்பதையே பயனுகக்கருதி, தே₃ஶே — நல்ல தேசத்திலும், காலே ச — நல்லகாலத்திலும், பாத்ரே ச — நல்ல பாத்திரத்திலும், யத் த₃ாநம் தீ₃யதே — யாதொரு த₃ாநம் கொடுக்கப்படுகிறதோ, தத் த₃ாநம்—அந்த த₃ாநம், ஸாத்விகம் ஸ்ம்ருதம் — ஸாத்விகம் என்று சொல்லப், படுகிறது.

---

21. வேறுப காரத்தை விரும்பா தியல்வென்று
கூறிடங் காலநலங் கொள்பவனைத்—தேறியே
தான் கொடுக்குந் தானந்தான் சத்துவத்தி னின்றுமேல்
வான்கொடுக்கு மென்பர் மதித்து.

வேறு உபகாரத்தை — (கொடுப்பவனிடமிருந்து) வேறு ஒரு உதவியை, விரும்பாது — பெற விரும்பாமல், இயல்வு என்று — கொடுப்பதையே பயனுகக்கொண்டு, கூறு இடம் காலம் கொள்பவன் நலனைத் தேறியே — ஶாஸ்த்ரத்தில் சொல்லப்படும் தேசம், காலம், தானம்வாங்குபவனுகிய பாத்திரம் ஆகியவற்றின் சிறப்பை ஆராய்ந்து, மதித்துதான் கொடுக்கும் தானம் தான் — தானுக உவந்து கொடுக்கும் த₃ானமே, சத்துவத்தில் நின்று—சத்துவகுணத்திலிருந்து விளைவதாய், மேல் வான் கொடுக்கும் என்பர் — உயர்ந்த க₃தியைக் கொடுக்கும் என்று கூறுவர்.

---

காரியங்களைச் செய்யவேண்டும்.] என்று சொல்லப்பட்டதற்கு எதிர்த்தட்டானவை தாமஸமான தவம் என்று அறியத்தக்கது (தத் தாமஸம் உதா₃ஹ்ருதம்) முற்கூறியபடி செய்யும்தவம் தமோகு₃ணத் தால் விளைவது என்று அறிவாளிகளால் சொல்லப்படுகிறது.

भा ।। फलाभिसन्धिरहितं दातव्यमिति देशे काले पात्रे चानुपकारिणे यद्दानं दीयते, तद्दानं सात्त्विकं स्मृतम् ।। २० ।।

---

20. இனி மூன்று ஶ்லோகங்களாலே ஸத்வ ரஜஸ் தமோ குணங்களையிட்டு மூவகைப்பட்ட தாநங்களை விளக்கத்தொடங்கி, இந்த ஶ்லோகத்தில் ஸாத்விகமான தாநத்தை விவரிக்கிருன். (தாதவ்யமிதி யத் தாநம் தீயதே) 'கொடுக்கவேண்டியது நம் கடமை' என்னும் எண்ணத்துடன் யாதொரு தாநம் கொடுக்கப் படுகிறதோ. ஸாத்விகமான தவம் முதலியவற்றில் போலே இங்கும் இப்படிக் கூறுவதினுல் வேருெரு எண்ணத்துடன் கொடுக்கப் படுவது தவிர்க்கப்படுகிறது; அதாவது — அடுத்துள்ள ராஜஸ தானத்தை விளக்கும் ஶ்லோகத்தில், "பலம் உத்திஶ்ய" என்று சொன்னவிடத்திற்போலே ஸ்வர்க்கம் முதலான மறுமைப்பயனை உத்தேசித்து இந்த ஸாத்விகதானம் செய்யப்படுவதில்லை என்று கருத்து. (அநுபகாரிணே) தனக்கு எவ்வுதவியும் செய்யாதவனைக் குறித்து. இங்கு இம்மைப் பயன்களை ஒருவனிடமிருந்து விரும்பி தானம் கொடுப்பதைத் தவிர்க்கையால், முன் சொன்னதோடு புனருக்தி யில்லை. (தேஶே காலே ச பாத்ரே ச) நல்ல தேசத்திலும், காலத் திலும், பாத்திரத்திலும் கொடுக்கப்படுவது ஸாத்விகதானம் என்று கருத்து "பாத்ரே" [பாத்திரத்தில்] என்று ஏழாவது வேற்றுமை யில் சொல்லப்பட்ட தானத்தை வாங்கிக்கொள்பவனையே "அநு பகாரிணே" என்னுமிடத்தில் குறிக்கும்போது நாலாவது வேற்று மையை வழங்கியிருப்பது எப்படி? எனில்: தானத்தை ஏற்றுக்கொள் பவன் என்னும் ஸம்ப்ரதானப் பொருளில் நான்காம் வேற்றுமை வந்திருக்கிறதாகையாலும், தானம் கொடுக்கப்படும் திரவி யத்தைப் பெறுபவன் என்னும் அதிகரணப் பொருளில் ஏழாம் வேற்றுமை வந்திருக்கிறதாகையாலும் குறையில்லை. "பாத்ரே ஸித்தே அநுபகாரிணே தஸ்மை" [நற்பாத்திரம் ஸித்திக்கு வளவில், உபகாரம் செய்யாத அவனைக்குறித்து] என்று கூட்டியும் பொருள் கொள்ளலாம். "பாத்ரே தீயதே, தச்ச அநுபகாரிணே தீயதே" [பாத்திரத்தில் கொடுக்கப்படுகிறது; அதுவும் உபகாரம் செய்யாதவனுக்குக்கொடுக்கப்படுகிறது.] என்றுவாக்யபேதம் செய் தும் பொருள் கொள்ளலாம். (தேஶே காலே) "தேசத்திலும் காலத் திலும்" என்று பொதுவாகச் சொல்லப்பட்டிருந்தபோதிலும் இவ்விரு பதங்களும் தானத்திற்குச் சிறந்தவையாக ஶாஸ்த்ரங்களில் விதிக் கப்பட்டபுண்ய தேசத்தையும் புண்யகாலத்தையும் குறிக்கின்றன.

यत्तु प्रत्युपकारार्थं फलमुद्दिश्य वा पुनः ।
दीयते च परिक्लिष्टं तद्राजसमुदाहृतम् ॥ २१ ॥

21. யத்து ப்ரத்யுபகாரார்த்த₂ம் ப₂லமுத்₃தி₃ஶ்ய வா புந: ।
தீ₃யதே ச பரிக்லிஷ்டம் தத்₃ராஜஸமுதா₃ஹ்ருதம் ॥

ப்ரத்யுபகாரார்த்த₂ம்—கைம்மாறு கருதியோ, ப₂லம் உத்₃தி₃ஶ்ய வா புந: – அல்லது (மறுமையில்) ஒரு பயனைக் கருதியோ, பரிக்லிஷ்டம் — மனத்தில் க்லேஶத்துடன், யத்து தீ₃யதே — யாதொரு தா₃னம் அளிக்கப்படுகிறதோ, தத்— அந்த தா₃னம், ராஜஸம் உதா₃ஹ்ருதம் — ராஜஸதா₃னம் எனப்படுகிறது.

---

22. மீண்டுபகா ரங்கொளவும் வேறுபல மிச்சித்தும்
பூண்டு மிகவருந்திப் புன்பொருள்கள்—வேண்டுநெறி
யிட்டியலுந் தான மிடைக்குணத்தின் பாங்கதனிற்
பட்டியலு மென்பர் பலர்.

மீண்டு உபகாரங் கொளவும் — மறுபடியும் கைம்மாறு கொள்வதற்காகவும், வேறு பலம் இச்சித்தும் — (மறுமையில்) வேறு ப₂லனை விரும்பியும், புன்பொருள்கள் பூண்டு— தாழ்ந்த பொருள்களைக் கைக்கொண்டு, மிகவருந்தி —

---

(பாத்ரே) என்ற விடத்தில் சொல்லப்பட்ட நல்ல பாத்திரம்

ந வித்₃யயா கேவலயா ஜந்மநா வாபி பாத்ரதா ।
யஸ்ய வ்ருத்தமிமே சோக்தே தத்₃தி₄ பாத்ரம் ப்ரசக்ஷதே ॥
[யாஜ்ஞவல்க்ய-ஆ-200]

[கல்விமாத்திரத்தாலேயோ, நற்குடிப் பிறப்பு மாத்திரத்தினாலேயோ ஒருவன் நல்ல பாத்திரமாகிவிடமாட்டான். எவனிடம் இவ்விரண்டோடு நல்ல ஒழுக்கமும் இருக்கிறதோ அவனே நல்ல பாத்திரமாகிறான் என்று ஶாஸ்த்ரங்கள் கூறுகின்றன] என்று ஸ்ம்ருதியில் விளக்கப்பட்டது. (தத்தா₃நம் ஸாத்விகம் ஸ்ம்ருதம்) இத்தகைய தா₃னமே ஸாத்விகதா₃னம் எனப்படுகிறது. 20.

भा । प्रत्युपकारकटाक्षगर्भं फलमुद्दिश्य च परिक्लिष्टम् — अकल्याण-द्रव्यकं यद्दानं दीयते, तद्राजसमुदाहृतम् ॥ २१ ॥

---

மிகுந்த வருத்தத்துடன். வேண்டும் நெறி இட்டியலும் தானம் — தான் விரும்பியவழியில் கொடுக்கப்படும் தானம், இடைக்குணத்தின் பாங்கு அதனில் பட்டு இயலும் என்பர் பலர் — நடுககுணமான ரஜோகுணத்தின் தன்மையைக் கொண்டதாய் விளங்குவது என்று பல பெரியோர்கள் கூறுவர்.

---

21. இந்த ஶ்லோகத்தில், ராஜஸதானத்தை விளக்குகிறான். (யத்து) யாதொரு தானமோவெனில்; 'து' [எனில்] என்னும் பதம் முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட ஸாத்விகதானத்தைக் காட்டிலும் வேறுபட்டது இது என்று உணர்த்துகிறது. (ப்ரத்யுபகாரார்த்தம்) பிரதி உதவியைக் கருத்தில் கொண்டு. தானம் வாங்குபவன் முன் செய்த உதவிக்குப் பிரதி உதவியாகக் கொடுக்கப்படும் தானமும், 'தானம் வாங்குபவன் பிற்காலத்தில் நமக்கு ஒரு பிரதி உதவியைச் செய்வான்' என்னும் நினைவுடன் கொடுக்கப்படும் தானமும் ராஜஸதானம் என்று கருத்து. "தாதவ்யம் இதி அநுபகாரிணே தீயதே" [20] என்று 'கொடுக்கவேண்டியது நம் கடமை' என்னும் நினைவுடன் கைம்மாறு கருதாமல் கொடுக்கப்படும் ஸாத்விகதானத்தைக் காட்டிலும் இது மிகவும் வேறுபட்டது என்று உணர்த்தப் படுகிறது. (பலம் உத்திஶ்ய வாபுந:) மறுமையிலும் ஒரு பலன் கருதாது செய்யப்படும் ஸாத்விக தானத்தைப்போல் அல்லாமல் மறுமையில் ஸ்வர்க்கம் முதலான ப்ராக்ருதபலன்களைக் கருதிச் செய்யப்படும்தானமும் ராஜஸதானம் என்றுகருத்து.(பரிக்லிஷ்டம் ச தீயதே) 'தன் கைப்பொருளைப் பிறர்க்குக் கொடுக்கவேண்டியி ருக்கிறதே' என்னும் வருத்தத்துடன் கொடுக்கப்படும் தானமும், நல்ல பொருளைத் தனக்கு வைத்துக் கொண்டு தாழ்ந்த பொருளைப் பிறர்க்குக் கொடுக்கும் தானமும், கொடுக்கும் பொருளை ஶ்ரத்தையில்லாமல் கொடுக்கும் தானமும் ராஜஸதானம் என்று கருத்து. (தத்ராஜஸம் உதாஹ்ருதம்) இத்தகைய தானம் ராஜஸதானம் என்று சொல்லப்படுகிறது. 21.

अदेशकाले यद्दानमपात्रेभ्यश्च दीयते ।
असत्कृतमवज्ञातं तत्तामसमुदाहृतम् ॥ २२ ॥

22. அதே₃ஶகாலே யத்₃தா₃நமபாத்ரேப்₄யஶ்ச தீ₃யதே |
அஸத்க்ருதமவஜ்ஞாதம் தத்தாமஸமுதா₃ஹ்ருதம் ||

அதே₃ஶகாலே — தகாத தே₃ஶத்திலும் காலத்திலும், அபாத்ரேப்₄ய: ச — தகாத பாத்திரங்களுக்கும், அஸத்க்ருதம் — வாங்குபவனை மதிக்காமலும், அவஜ்ஞாதம் — அவமதித்தும், யத்₃தா₃நம் தீ₃யதே—யாதொரு தா₃னம் அளிக்கப் படுகிறதோ, தத் — அது, தாமஸம் உதா₃ஹ்ருதம்—தாமஸ தா₃னம் என்று சொல்லப்படுகிறது.

---

23. தேசகா லஞ்சிறப்புச் சிந்தியா தேற்பவன்பா
லாசின்மை பாரா தவமதித்து—நேசஞ்செய்
யாதரிப்ப தில்லாத வத்தானம் பிற்குணத்தை
மீதரிப்ப தென்றுரைப்பர் மிக்கு,

தேசகாலம் சிறப்புச் சிந்தியாது — தேசம் காலம் ஆகியவற்றின் சிறப்பை ஆராயாமலும் [சிறப்பற்ற தேசத்திலும் காலத்திலும்], ஏற்பவன் பால் ஆசின்மை பாராது — தா₃னம் வாங்குகிறவனிடம் குற்றம் இருக்கிறதா இல்லையா என்று ஆராயாமலும் [குற்றமுள்ளவனுக்கும்], அவமதித்து—[வாங்குபவனை] அவமானம் செய்தும், நேசம் செய் ஆதரிப்பதில்லாத — அன்பும் ஆதரவுமில்லாமலும் (அளிக்கப்படும்), அத்தானம் — அந்த தானம், பிற்குணத்தை மிக்கு மீதரிப்பது—கடைசி கு₃ணமான தமோகு₃ணத்தை மிகவும் கொண்டது, என்று உரைப்பர் — என்று (பெரியோர்கள்) கூறுவர்.

---

22. இந்த ஶ்லோகத்தில் தாமஸதா₃னத்தை விளக்குகிறான். (அதே₃ஶகாலே) தகாத தேசத்திலும் காலத்திலும். தகாத தேசமாவது—யவனர்களாலும், பௌ₃த்₃த₄ர் முதலான புறச்சமயிகளாலும், கள்ளர் முதலான தீயொழுக்கம் உள்ளவர்களாலும் நிறைந்திருக்கும் தேசம். "கலிங்கம், கோகடம் முதலானவை'

भा ॥ अदेशकाले अपात्रेभ्यश्च यद्दानं दीयते, असत्कृतम् — पादप्रक्षालनादिगौरवरहितम्, अवज्ञातं — सावज्ञम्, अनुपचारयुक्तं यद्दीयते, तत्तामसमुदाहृतम् ॥ २२ ॥

---

என்று தாத்பர்ய சந்த்₃ரிகை. அகாலமாது — இரவு முதலான காலங்கள். (அபாத்ரேப்₄யஶ்ச) தானங் கொடுக்கத்தக்க பாத்திரமாயிராதவர்களுக்கும். அவர்களாவார் — தங்களுடைய தொடர்பாலே அருகிலிருப்பவர்களையும் தோ₃ஷமுடையவர்களாக்கும் பங்க்திதூ₃ஷகர்கள், முட்டாள்கள், திருடர்கள், வஞ்சகர்கள், வந்தி, வைதாளிகன் முதலான பிறரைத் துதித்துப் பிழைப்பவர்கள் முதலானவர்கள். (அஸத்க்ருதம்) மதிப்பில்லாமல் (கௌ₃ரவமில்லாமல்) கொடுக்கப்படுவது. தா₃னம் கொடுக்கும்போது பெறுபவனுடைய திருவடிகளை விளக்குதல் முதலான உபசாரங்களைச் செய்து கொடுக்க வேண்டும்; அப்படி அல்லாதவை தாமஸ தா₃னம் என்று கருத்து. (அவஜ்ஞாதம்) அவர்களுக்கு கௌ₃ரவம் செய்து கொடுக்காவிடினும் அவர்களை அவமதிக்காமலாவது கொடுக்க வேண்டும். அப்படி அல்லாதவை தாமஸதா₃னம் என்று கருத்து. மதிப்பைப்போலே அவமதிப்பும் மனோவாக்காயங்கள் மூன்றாலும் ஆகலாம். தானம் வாங்குபவனை மதிக்காமலும் அவமதித்தும் தானம் கொடுப்பதற்குக் காரணம் — 'அவனை மதித்தும் அவமதிக்காமலும் கொடுக்க வேண்டும்' என்று கூறும் ஶாஸ்த்ரத்தில் நம்பிக்கை இல்லாமையும், இதனால் மறுமையில் துன்பம் விளையும் என்னும் அறிவில்லாமையும், தா₃னம் வாங்கும் நற்பாத்திரங்களைக் காட்டிலும் தான் சிறந்தவன் என்னும் அபி₄மானத்தை உடைத்தாயிருக்கையுமே ஆகும். நல்ல தேசகாலங்களில், நல்ல பாத்திரங்களுக்குத் தானம் கொடுத்த போதிலும், அவர்களை மதிக்காமலும் அவமதிப்போடும் கொடுத்தால் விபரீதப₂லனே விளையுமாகையாலே இவை குறிக்கொண்டு விலக்கத்தக்கவை. (யத்₃தா₃னம் தீ₃யதே தத் தாமஸம் உதா₃ஹ்ருதம்) யாதொரு தா₃னம் கொடுக்கப்படுகிறதோ, அது தாமஸதா₃னம் எனப்படுகிறது. 22.

भा ॥ एवं वैदिकानां यज्ञतपोदानानां सत्त्वादिगुणभेदेन भेद उक्तः, इदानीं तस्यैव वैदिकस्य यज्ञादेः प्रणवसंयोगेन तत्सच्छब्दव्यपदेश्यतया च लक्षणमुच्यते—

ओं तत्सदिति निर्देशो ब्रह्मणस्त्रिविधः स्मृतः ।
ब्राह्मणास्तेन वेदाश्च यज्ञाश्च विहिताः पुरा ॥ २३ ॥

23 ஓம் தத்ஸதி₃தி நிர்தே₃ஶோ ப்₃ரஹ்மணஸ்த்ரிவித₄: ஸ்ம்ருத: ।
ப்₃ராஹ்மணாஸ்தேந வேதா₃ஶ்ச யஜ்ஞாஶ்ச விஹிதா: புரா ॥

ஓம் தத் ஸத் இதி — 'ஓம் தத் ஸத்' என்னும், த்ரிவித₄: நிர்தே₃ஶ:-மூன்று விதமான ஶப்₃த₃ம், ப்₃ரஹ்மண: ஸ்ம்ருத:- வைதிக கர்மத்திற்கு [சேர்ந்திருக்கவேண்டும் என்று] சொல்லப்படுகிறது. தேந — அந்த மூன்றுவகைப்பட்ட ஶப்₃த₃த்தோடு கூடியவர்களாகவே,ப்₃ராஹ்மணா: — வேத₃த்தில் அதி₄காரமுடைய மூன்று வர்ணத்தவர்களும், வேதா₃: ச — வேத₃ங்களும், யஜ்ஞா: ச — யஜ்ஞங்களும், புரா — ஸ்ருஷ்டி காலத்தில், விஹிதா: — என்னால் படைக்கப்பட்டார்கள்.

---

24. ஓந்தற் சத்தென்னு முரைமூன்று மொண்மறையாய்
வாய்ந்த பிரமத்தின் மன்னியவை — யேய்ந்திவ்
விலக்கணத்தா லந்தணர்கள் வேதங்க ளெச்சங்
கலக்க மறவுண்டாங் காண்.

ஓம் தத் சத் என்னும் உரை மூன்றும் — 'ஓம் தத் ஸத்,' என்னும் மூன்று விதமான சப்தமும், ஒண்மறையாய் வாய்ந்த பிரமத்தின் மன்னியவை — வைதிககர்மத்துடன் சேர்ந்திருக்க வேண்டியவை; அந்தணர்கள் — வேதத்தில் அதி₄காரமுடைய முதல் மூன்று வருணத்தவர்களும், வேதங்கள் — வேதங்களும், எச்சம் — யஜ்ஞங்களும், இவ்விலக்கணத்தால் ஏய்ந்து — இந்த லக்ஷணத்தோடு கூடி, கலக்கம் அற உண்டாம் காண் — [ஸ்ருஷ்டி காலத்தில்] கலக்கமில்லாமல் [என்னால்] உண்டாக்கப்பட்டவை என்று அறிவாய்.

मा ॥ ॐ तत् सत् इति त्रिविधोऽयं निर्देशः—शब्दो ब्रह्मणः स्मृतः—ब्रह्मणोऽन्वयी भवति। ब्रह्म च वेदः; [ब्रह्म]वेदशब्देन वैदिकं

---

23. சென்ற ஸ்லோகம் ஈருக "வேதத்தில் சொல்லப்பட்ட யாகமும், தவம், தானம் ஆகியவை ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களையிட்டு மூவகைப்பட்டிருக்கின்றன" என்று கூறப்பட்டது. இந்த ஸ்லோகத்தில் "அந்த வைதிகமான யஜ்ஞ தபோ தானங்களே 'ஓம் தத் ஸத்' என்னும் மூன்று ஶப்தங்களோடு இணைந்திருக்க வேண்டும்" என்று அவற்றுக்கு லக்ஷணம் உரைக்கப்படுகிறது. ('ஓம் தத் ஸத்' இதி த்ரிவித₄: நிர்தே₃ஶ:) 'ஓம் தத் ஸத்' என்னும் மூன்று வகைப்பட்ட ஶப்₃த₃ம். (ப்₃ரஹ்மண: ஸ்ம்ருத:) ப்₃ரஹ்மத்தோடு சேர்ந்திருக்கவேண்டுமென்று சொல்லப்படுகிறது. இங்கு ப்₃ரஹ்மம் எனப்படுவது வேத₃மே. அதாவது—இந்த ப்ரகரணத்தில் இதுவரை சொல்லப்பட்ட வைதிகமான யஜ்ஞ தபோ தா₃னங்களையே ப்₃ரஹ்மஶப்₃த₃ம் குறிக்கிறது. ஆக, யஜ்ஞம் முதலான வைதி₃க கர்மங்கள் 'ஓம் தத் ஸத்' என்னும் மூன்று வித₄மான ஶப்₃த₃த்தோடு கூடியிருக்கவேண்டும் என்று சொல்லப்பட்டதாயிற்று. யஜ்ஞ தபோ தா₃னங்கள் மூவகைப்பட்டவை என்று சொன்னது போலே இங்கு ப்₃ரஹ்ம ஶப்₃த₃த்தால் சொல்லப்படும் பொருளுக்கு ஸத்வ ரஜஸ் தமோ கு₃ணங்களையிட்டு பே₄த₃ங்கள் இந்த ஸ்லோகத்திலோ மேல் ஸ்லோகத்திலோ சொல்லப்படவில்லை. ஆகையால், இதுவரை சொல்லப்பட்ட வைதிக கர்மத்திற்கு லக்ஷணத்தை விதி₄க்கவேண்டியது அவசியமாகையாலே ஸ்லோகத்தின் முற்பாதியிலே அது சொல்லப்படுகிறது என்று விளங்குகிறது. அதனாலேயே "ப்₃ரஹ்மண: நிர்தே₃ஶ: த்ரிவித₄: ஸ்ம்ருத:" என்று கூட்டிப் பொருள் கொள்ளாமல் "த்ரிவித₄: நிர்தே₃ஶ: ப்₃ரஹ்மண: ஸ்ம்ருத:" என்று கூட்டிப்பொருள் கொள்ளப்பட்டது. அதனாலேயே 'ப்₃ரஹ்மண:' என்றவிடத்தில் ஆறும்வேற்றுமை — ஸம்ப₃ந்த₄ஸாமான்யே ஷஷ்டி₂யாய் இந்த மூன்று ஶப்₃த₃ங்களோடு ப்₃ரஹ்மம் எனப்படும் வைதிக கர்மங்கள் சேர்ந்திருப்பவை என்று பொருள் கொள்ளப்பட்டது.

இங்கு பின்வருமாறு ஓர் ஆக்ஷேபம் எழுகிறது:- 'ஓம் தத் ஸத்' என்னும் ஶப்₃த₃ங்களோடு கூடியிருப்பதே வைதி₃க கர்மங்களின் லக்ஷணம் என்று கூறுவது சரியல்ல. ப்₃ரஹ்ம ஶப்₃த₃த்திற்கு முக்₂யார்த்த₂மான பரப்₃ரஹ்மத்தையே இங்கு பொருளாகக்

कर्मोच्यते। वैदिकम्—यज्ञादिकम्; यज्ञादिकं कर्म ओं तत्सदिति

கூறலாம்படியிருக்க 'வைதிகக கர்மம்' என்று பொருள் கொள்வது பொருந்தாது. 'ப்₃ரஹ்ம' ஶப்₃த₃ம் வைதி₃க கர்மத்தைக் குறிப்பதாக எங்கும் கண்டதில்லை. 'ஓம் தத் ஸத்' என்னும் மூன்று ஶப்₃த₃ங்களும் நேரே பரப்₃ரஹ்மத்தின் பெயராயிருப்பவை என்று பல வேத₃வாக்யங்களிலிருந்து விளங்குகிறது.

ஸர்வே வேதா₃ யத் பத₃மாமநந்தி
தபாம்ஸி ஸர்வாணி ச யத்₃வத₃ந்தி ।
யதி₃ச்ச₂ந்தோ ப்₃ரஹ்மசர்யம் சரந்தி
தத்தே பத₃ம் ஸங்க்₃ரஹேண ப்ரவக்ஷ்யே ஓமித்யேதத்॥
[கட₂ 1-2-15]

[எல்லா வேத₃ங்களும் எந்தப் பரமாத்மஸ்வரூபத்தை ஓதுகின்றனவோ, தவமாகிற உபாஸனத்தை முக்₂யமாகக் கொண்ட உபநிஷத்₃பா₄கங்கள் எதை நேரே கூறுகின்றனவோ, எந்தப் பரமாத்மாவை அடைய விரும்பி ப்₃ரஹ்மசர்யத்தை (1. கு₃ருகுலவாஸம் 2. விஷயப்பற்றின்மை) அநுஷ்டி₂க்கின்றனரோ அந்த ஸ்வரூபத்தைச் சுருக்கமான சொல்லாலே கூறுகிறேன். [ஓம் என்பது அச்சொல்] என்னும் உபநிஷத்₃ வாக்யம் ஓங்காரம் ப்₃ரஹ்மத்தைச் சொல்லுவதென்று காட்டிற்று. "தத் ஏதஸ்ய மஹதோ பூ₄தஸ்ய நாம ப₄வதி । யோ அஸ்யைததே₃வ நாம வேத₃ ப்₃ரஹ்ம ப₄வதி" ['தத்' என்னும் சொல் இந்தப் பெரிய பொருளான ப்₃ரஹ்மத்தின் பெயராகவுள்ளது; எவனொருவன் பரம் பொருளுக்கு உள்ள இந்தப் பெயரை அறிகிறானோ, அவன் ப்₃ரஹ்மத்தைப் போல ஆகிறான்.] என்னும் வேத₃வாக்யம் 'தத்' என்னும் சொல்லை ப்₃ரஹ்மத்தின் பெயராக முழங்கிற்று. "ஸந்மூலாஸ் ஸோம்யேமாஸ் ஸர்வா: ப்ரஜா:ஸ் ஸதா₃யதநாஸ் ஸத்ப்ரதிஷ்டா₂:" [சா₂ந் 6-8-4] [இந்த எல்லாப்பொருள்களும் 'ஸத்' எனப்படும் ப்₃ரஹ்மத்திடமிருந்தே தோன்றி, அதனிடமே வாழ்ந்து, அதனிடமே லயமடைபவை] என்னும் உபநிஷத்₃வாக்யம் 'ஸத்' என்னும் ஶப்₃த₃ம் ப்₃ரஹ்மத்தின் பெயர் என்று காட்டிற்று. ஆகையால், இந்த கீ₃தா ஶாஸ்த்ரத்திற்கு முக்கியமான அர்த்த₂மான பரப்₃ரஹ்மத்தின் மூன்று நாமங்கள் உபாஸகர்கள் வழங்குவதற்காக இங்கு உபதேசிக்கப்படுகின்றன என்று கொள்வதே பொருத்தமானது. இந்த ப்ரகரணத்தில் உபதேசிக்கப்பட்ட யஜ்ஞதபோதா₃னங்களாகிற கர்மங்களில் குறையேற்பட்டாலும் ப்₃ரஹ்மத்தின்

शब्दान्वितं भवति । ओमितिशब्दस्यान्वयो वैदिककर्माङ्गत्वेन प्रयोगादौ प्रयुज्यमानतया ; तत्सदितिशब्दयोरन्वयः पूज्यत्वाय वाचकतया ।

---

இந்த மூன்று நாமங்களைச் சொன்னால் அந்தக் கர்மம் நிறைவடைந்து விடும் என்று காட்டுவதற்காக இங்கு இந்த விஷயம் சொல்லப்படுவதாகக் கொள்ளலாம். ஒரு கர்மத்தைச் செய்யும் போது வேறொரு கர்மம் குறுக்கிட்டாலும, லௌகிகமான வார்த்தைகள் சொல்ல நேர்ந்தாலும், தூக்கம் கவனமின்மை முதலானவை இடையில் நேர்ந்தாலும், அக்குறைகளை நிறைவுபடுத்துவதற்கு நல்லோர்கள் 'ஓம் தத் ஸத்' என்று சொல்லுவதைக் காண்கிறோம். அதனாலேயே அத்தியாயம் முதலான க்3ரந்த2ப்பகுதிகள் முடியும் போது "ஓம் தத் ஸத்" என்ற இந்த மூன்று ஶப்3த3ங்களையும் படிக்கிறார்கள் — என்பது அவ்வாக்ஷேபம்.

இனி இதற்குப் பதிலுரைக்கப்படுகிறது;— 'ஓம் தத் ஸத்' என்னும் சொற்கள் ப்3ரஹ்மத்தைச் சொல்லும் நாமங்களாயிருப்பது பிரசித்தமே. ஆனாலும இந்த அத்யாயத்தில் உள்ள கேள்விபதில்களைப் பார்த்தால் அவை ஸத்வ ரஜஸ்தமோ கு3ணங்களாகிற மூன்றையிட்டு மூன்றுவகைப்படும் யஜ்ஞதபோதா3னங்களாகிற வைதி3கமான கர்மங்களைப்பற்றியே இருப்பதைக்காண்கிறோம். மேலும், இந்த ஶ்லோகத்திலேயே மேல்பாதி "இந்த மூன்று நிர்தே3ஶங்களோடு கூடியவர்களாகவே ப்3ராஹ்மணர்களும், வேத3ங்களும் யஜ்ஞங்களும் முன்னமே படைக்கப்பட்டன" என்று கூறுகிறது. இந்த மூன்றும் ப்3ரஹ்மத்தின் நாமங்கள் என்று கொண்டால் இந்த மேல்பாதி பொருளற்றதாகிறது. ஆகையால் வேத3த்தைக் குறிக்கக்கூடிய ப்3ரஹ்மஶப்3த3த்தால் உபலக்ஷண முறையாலே இந்த ப்ரகரணத்தில் கூறப்பட்ட வைதி3க கர்மங்கள் சொல்லப்படுவதாகக் கொண்டு முற்கூறியபடி பொருள் கொள்வதே பொருந்தும். ஆக, இந்த அத்4யாயத்தில் சொல்லப்பட்ட யஜ்ஞ தபோ தா3னங்களாகிற வைதி3க கர்மங்கள் 'ஓம் தத்ஸத்' என்ற மூன்று ஶப்3த3ங்களோடு கூடியிருக்கின்றன என்று சொல்லப்பட்டதாயிற்று. மேல் ஶ்லோகங்களில் இந்த மூன்று ஶப்3த3ங்களும் வைதி3க கர்மங்களோடு எந்த முறையில் கூடியிருக்கின்றன என்று விளக்கப்படுகிறது. ஓங்காரமானது வேதத்தின் ஆதி3யாய் இருப்பதாலே, வைதி3ககர்மங்களிலும் அவற்றுக்கு அங்க3மாக அவற்றைத் தொடங்கும்போது வழங்கப்படுகிறது. 'தத்ஸத்' என்னும் ப்3ரஹ்மத்தைக் குறிக்கும் ஶப்3த3ங்கள் வைதி3க கர்மங்கள் மோக்ஷப2லன்களையும் இவ்வுலகப்பலன்களையும் விளைப்பதற்கு ஸாத4னமாய் இருப்பதற்காக அக்கர்மங்களின் பெருமையைக் காட்டும் வாசகங்களாக வழங்கப்படுகின்றன.

तेन त्रिविधेन शब्देनान्विता ब्राह्मणा वेदान्वयिनस्त्रैवर्णिकाः वेदाश्च यज्ञाश्च पुरा विहिताः-पुरा मयैव निर्मिता इत्यर्थः ॥ २३ ॥

---

(தேந ப்₃ராஹ்மணு: வேதா₃ஶ்ச யஜ்ஞாஶ்ச புரா விஹிதா:) இந்த 'ஓம் தத் ஸத்' எனும் மூன்றுவித₄மான ஶப்₃த₃ங்களோடுசேர்ந்தவர்களாகவே வேதத்தில் அதி₄காரமுள்ள முதல் மூன்று வர்ணத்தவர்களும், வேதங்களும், யஜ்ஞங்களும் முன்னமே படைக்கப்பட்டார்கள். 'தேந' என்னும் சொல்லில் மூன்ரும் வேற்றுமையைக் கரணப் பொருளதாகக் கொண்டு "இந்த மூன்று ஶப்₃த₃ங்களைக் கொண்டு இவர்கள் படைக்கப்பட்டார்கள்" என்று கூறுவது பொருந்தாதாகையாலே மூன்ரும் வேற்றுமை உபலக்ஷணப் பொருளைக் காட்டுவதாகக் கொண்டு "இந்த மூன்று ஶப்₃த₃ங்களோடு கூடியவர்களாகப் படைக்கப்பட்டார்கள்" என்று பொருள் கொள்ளப்பட்டது. ஶ்லோகத்தின் முற்பாதியில் ப்₃ரஹ்ம ஶப்₃த₃த்தால் வேத₃ம் குறிக்கப்பட்டுள்ளபடியாலே, இங்கு ப்₃ராஹ்மண ஶப்தமும் அந்த வேத₃த்தில் அதி₄காரமுள்ள மூன்று வர்ணத்தவரையும் குறிக்கிறது. அடுத்த ஶ்லோகத்திலும் "ப்₃ரஹ்ம வாதி₃நாம்" என்று இந்த ஶப்₃த₃ம் வேத₃த்தை ஓதுபவர்கள் அனைவரையும் குறிக்கும் என்று காட்டப்படுகிறதன்ருே. "புரா விஹிதா:" [முன்னமே படைக்கப்பட்டனர்] என்று சொல்லும் போது யாரால் படைக்கப்பட்டனர் என்று இங்கு சொல்லாவிடினும், "சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம்" [கீ₃தை 4-13] [நான்கு வர்ணத்தவரும் என்னுலேயே படைக்கப் பட்டனர்] என்று முன்னமே கூறப்பட்டிருப்பதால் "படைப்புக்காலத்தில் என்னுலேயே படைக்கப்பட்டனர்" என்று இங்கு பொருள் கொள்ளவேண்டும். வேத₃ங்கள் படைக்கப்பட்டதாகச் சொன்னது முன் கல்பத்திலிருந்தது போலவே உபதே₃ஶிக்கப் பட்டதைக் குறிக்கும். "யோ ப்₃ரஹ்மாணம் வித₃த₄ாதி பூர்வம் யோ வை வேத₃ாம்ஶ்ச ப்ரஹிணேதி தஸ்மை" [ஶ்வே 6 17] [எவனெருவன் பிரமனை ஸ்ருஷ்டி காலத்தில் படைக்கிருனே எவன் அவனுக்கு வேதங்களை உபதேசிக்கிருனே] என்று உபநிஷத்திலும், "அநாதி₃நித₄நா ஹ்யேஷா வாகுத்ஸ்ருஷ்டா ஸ்வயம்பு₄வா" [ப₄ார—மோக்ஷ 234-93] [தோற்றமும் அழிவுமில்லாத இந்த வேத₃வாக்கானது பரமாத்மாவால் முதலில் (படைப்புக்காலத்தில்) உபதேசிக்கப்பட்டது] என்று மஹாப₄ாரதத்திலும் வேதம் எவராலும் உண்டாக்கப் பட்டதல்லவென்றும், நித்யமானது என்றும் கூறப்படுகிறதன்ருே. 23.

भा ॥ त्रयाणाम् ओं तत्सदिति शब्दानामन्वयप्रकारो वर्ण्यते । प्रथममोमितिशब्दस्यान्वयप्रकारमाह —

तस्मादोमित्युदाहृत्य यज्ञदानतपःक्रियाः ।
प्रवर्तन्ते विधानोक्ताः सततं ब्रह्मवादिनाम् ॥ २४ ॥

24. தஸ்மாதோ₃மித்யுதா₃ஹ்ருத்ய யஜ்ஞதா₃நதப:க்ரியா: ।
ப்ரவர்த்தந்தே விதா₄நோக்தாஸ் ஸததம் ப்₃ரஹ்மவாதி₃நாம் ॥

தஸ்மாத் — (இப்படி என்றலேயே) வைதிக கர்மங்கள் முதலானவை இந்தமூன்று ஶப்₃த₃ங்களோடு கூடவே படைக்கப்படுகையால், ப்₃ரஹ்மவாதி₃நாம்-வேதத்தை ஓதும் மூன்று வர்ணத்தவர்களால் அனுஷ்டிக்கப்படுபவையும், விதா₄நோக்தா: — வேத₃வாக்யங்களில் விதி₄க்கப்படுபவையுமான, யஜ்ஞதா₃ந தப: க்ரியா: — யாக₃ம், தா₃னம், தவம் முதலான வைதி₃ககர்மங்கள், ஓம் இதி உதா₃ஹ்ருத்ய — (முதலில்) ஓம் என்று உச்சரித்தபின்பே, ஸததம் — எப்போதும், ப்ரவர்த்தந்தே — அநுஷ்டி₂க்கப்படுகின்றன.

---

25. ஆதலா லோமென் றமர்ந்துரைத்தே யந்தணர்க்கு
வேதநின் றேதும் விதிவகையே — போதமுட
னெச்சந்தா னந்தவங்க ளெல்லாமெக் காலத்து
மிச்சந்தன் ஞனடக்கு மேல்.

ஆதலால் — (இப்படி என்றலேயே) வைதிககர்மங்கள் முதலானவை இந்த மூன்று ஶப்₃த₃ங்களோடு கூடவே படைக்கப்படுகையால், வேதம் நின்று ஓதும் அந்தணர்க்கு— வேத₃த்தை இடைவிடாமல் ஓதும் மூன்று வர்ணத்தவர்களுக்கு , விதிவகையே போதமுடன் — வேத₃வாக்யங்களில் விதிக்கப்பட்டிருக்கும் அறிவோடு கூடிய, எச்சம் தானம் தவங்கள் எல்லாம் — யாக₃ம் தானம் தவம் முதலான எல்லா வைதி₃ககர்மங்களும், ஓம் என்று அமர்ந்துரைத்தே—

भा॥ तस्मात् ब्रह्मवादिनाम् — वेदवादिनां त्रैवर्णिकानां यज्ञदानतपःक्रियाः विधानोक्ताः — वेदविधानोक्ताः आदावोमित्युदा-

---

முதலில் 'ஓம் என்று' உச்சரித்தபின்பே, மேல் மிச்சம் — (அவற்றில்) எஞ்சியுள்ள மேல்பகுதிகளோடு, எக்காலத்தும் — எல்லாக்காலத்திலும், தன்னுல் நடக்கும் — தானே அநுஷ்டி2க்கப்படும்.

---

24. சென்ற ஶ்லோகத்தில் சொன்ன அர்த்த2த்தை இதிலிருந்து நான்கு ஶ்லோகங்களாலே விவரிக்கிறுன். வேதமோதுபவர்கள், வேதம், வைதி3ககர்மங்கள் ஆகியவை 'ஓம் தத் ஸத்' என்னும் மூன்று ஶப்3த3ங்களோடு எப்படிச் சேர்ந்திருக்கின்றன என்பதை மேல் நான்கு ஶ்லோகங்களாலே விளக்கத தொடங்கி, இந்த ஶ்லோகத்தாலே ஓங்காரமாகிற ப்ரணவம் அவற்றேடு எப்படிச் சேர்ந்திருக்கிறது என்பதை விளக்குகிறுன். மூன்று ஶப்3த3ங்களில் முதலில் சொல்லப்பட்டதாகையாலும், வேத3த்தின் ஆதியில் ஓதப் படுகையாலும் ஓங்காரம் இவற்றேடு சேர்ந்திருக்கும் முறை முதலில் விளக்கப்படுகிறது. (தஸ்மாத்) முன் ஶ்லோகத்தில் சொன்னபடி அனைத்தையும் படைக்கும் என்னுலே படைப்புக்காலத்திலேயே 'ஓம் தத் ஸத்' என்னும் மூன்று ஶப்3த3ங்களோடு சேர்த்தே வேத மோதுகிறவர்களும் வேத3ங்களும் யஜ்ஞம் முதலான வைதி3க கர்மங்களும் படைக்கப்பட்டிருக்கையால். (ப்3ரஹ்மவாதி3நாம் யஜ்ஞ தா3ந தப: க்ரியா:) வேதத்தை ஓதுகின்ற மூவர்ணத்தவருடைய யஜ்ஞம், த3ானம், தவம் முதலான கர்மங்கள்; முன் ஶ்லோகத்தில் ப்3ராஹ்மண ஶப்3த3த்தாலே சொல்லப்பட்ட வேத3த்தை ஓதும் மூவர்ணத்தவரே இங்கு ப்3ரஹ்மவாதி3 ஶப்3த3த்தாலே சொல்லப்படுகின்றனர். மூவருக்கும் யாக3ம், த3ானம், தவம் முதலான வைதி3ககர்மங்களை அநுஷ்டி2க்க அதி4காரம் உண்டன்றே. (விதா4நோக்தா:) வேத3 வாக்யங்களில் விதி4க்கப்படும் வைதிககர்மங்கள் என்று கருத்து. 'விதீ4யதே அநேந இதி விதா4நம்' என்னும் வ்யுத்பத்தியாலே விதிக்கும் வாக்யங்கள் விதா4னம் எனப்படுகின்றன. (ஓம் இதி உதா3ஹ்ருத்ய ப்ரவர்த்தந்தே) முதலில் 'ஓம்' என்று உச்சரித்த பின்பே அநுஷ்டி2க்கப்படுகின்றன. இது அந்தந்த விதி4வாக்யங்களிலிருந்தே விளங்கும் என்று கருத்து.

हृत्य सततम्—सर्वदा प्रवर्तन्ते। वेदाश्चोमित्युदाहृत्यारभ्यन्ते। एवं वेदानां वैदिकानां च यज्ञादीनां कर्मणामोमितिशब्दान्वयो वर्णितः।

---

வேத₃வேதா₃ந்தம் அறிந்தவர்கள் இப்படி முதலில் ஓங்காரத்தை உச்சரிப்பது-அதன் பொருளான பரம்பொருளுக்கு ஆராத₄னமாக அந்தக் கர்மங்கள் விளங்குகையாலே என்று கருத்து. ''ஹரிமேவ ஸ்மரேந்நித்யம் கர்மபூர்வாபரேஷு ச''[விஷ்ணுதர்மம்] [வைதிக கர்மங்களின் முதலிலும் முடிவிலும் எப்போதும் ஹரியையே நினைக்க வேண்டும்] என்று சௌநகர் கூறினாரன்றோ. வேத₃ாந்தமறியாமல் வேத₃ங்களை மட்டும் ஓதினவர்களும் பரம்பொருளைக் கூறும் ஓங்காரத்தை முதலில் உச்சரித்தால் அந்தக் கர்மத்திற்கு மங்களமாக நிறைவேறும் பெருமை ஸித்₃தி₄க்கிறது. ஆகையால் மோக்ஷத்தை விரும்பியவர்களும், மற்ற ப₂லன்களை விரும்பிய வர்களும் கர்மங்களை அநுஷ்டி₂க்கும்போது ஓங்காரத்தை முதலில் உச்சரிக்கவேண்டும் என்று தேறுகிறது. (ஸததம் ப்ரவர்த்தந்தே) எப்போதுமே வைதி₃ககர்மங்கள் ஓங்காரத்தை முன்னிட்டுக் கொண்டே அநுஷ்டி₂க்கப்படுகின்றன. ''வஸந்தே வஸந்தே ஜ்யோதிஷா யஜேத'' [ஆஶ்வலாயன-ஶ்ரௌத] ''ஶரதி₃ வாஜ-பேயேந யஜேத'' [ஷ] என்று 'ஜ்யோதிர்யாக₃த்தை வஸந்த காலத்தில் செய்யவேண்டும்' என்றும், 'வாஜபேயயாக₃த்தை ஶரத் காலத்தில் செய்யவேண்டும்' என்றும் ஒவ்வொரு யாக₃த்திற்கு ஒவ்வொருகாலவிசேஷம் சொல்லப்பட்டிருந்தபோதிலும், எல்லா யாகங்களையும் ப்ரணவத்தை முன்னிட்டுக் கொண்டே அநுஷ்டி₂க்க வேண்டுமென்பதில் காலவிஶேஷ நியமமில்லை என்று கருத்து. ஸ்வர்க்க₃ஸாத₄னமாக அநுஷ்டி₂த்தாலும், மோக்ஷ ஸாத₄னமாக அநுஷ்டி₂த்தாலும் எப்போதுமே ப்ரணவத்தை முன்னிட்டுக் கொண்டே அநுஷ்டி₂க்கவேண்டும் என்று கூறுவதாகவும் கொள்ளலாம். இந்த ஶ்லோகத்தில் வைதி₃ககர்மங்களுக்கு ப்ரணவத்தை முன்னிட வேண்டும் என்று மாத்திரம் சொல்லியிருந்த போதிலும், சென்ற ஶ்லோகத்தில்''ப்₃ராஹ்மணாஸ்தேந வேதா₃ஶ்ச யஜ்ஞாஶ்ச'' என்று வேத₃ங்களுக்கும் வேத₃மோதுகிறவர்களுக்கும் ப்ரணவத்தில் அந்வயம் கூறப்படுகையால் இங்கும் ''வேதங்கள் ப்ரணவத்தை முன்னிட்டுக் கொண்டே தொடங்கப்பட வேண்டும்'' என்னும் அர்த்த₂ம் உணர்த்தப்படுவதாகக் கொள்ளவேண்டும்.

ओमितिशब्दान्वितवेदधारणात्तदन्वितयज्ञादिकर्मकरणाच्च ब्राह्मणशब्द-निर्दिष्टानां त्रैवर्णिकानामप्योमितिशब्दान्वयो वर्णितः ॥ २४ ॥

भा ॥ अथैतेषां तदितिशब्दान्वयप्रकारमाह --

तदित्यनभिसन्धाय फलं यज्ञतपःक्रियाः ।

दानक्रियाश्च विविधाः क्रियन्ते मोक्षकाङ्क्षिभिः ॥ २५ ॥

25. தஇத்யநபி₄ஸந்தா₄ய ப₂லம் யஜ்ஞதபக்ரியா: |
தா₃நக்ரியாஶ்ச விவிதா₄: க்ரியந்தே
மோக்ஷகாங்க்ஷிபி₄: ||

---

''யத்₃வேதா₃தௌ₃ ஸ்வர: ப்ரோக்த: வேதா₃ந்தே ச ப்ரதிஷ்டி₂த: |
தஸ்ய ப்ரக்ருதிலீநஸ்ய ய: பர: ஸ மஹேஶ்வர:'' [தை-நா-10]
[வேதத்தின் முதலிலும் முடிவிலும் படிக்கப்படும் ஸ்வரமான ப்ரணவத்தின் மூலமான அகாரத்திற்குப் பொருளாயிருப்பவனே ஸர்வேஶ்வரன்] என்று உபநிஷத்திலும்,

''ப்₃ரஹ்மண: ப்ரணவம் குர்யாதா₃தா₃வந்தே ச ஸர்வதா₃ |
ஸ்ரவத்யநோங்க்ருதம் பூர்வம் பரஸ்தாச்ச விஶீர்யதே || ''
[மநு 2—74]

[வேதத்திற்கு முதலிலும் முடிவிலும் ப்ரணவத்தை உச்சரிக்க வேண்டும். முன்னால் உச்சரிக்காவிட்டால் வேத₃ம் நழுவிவிடும். பின்னால் உச்சரிக்காவிட்டால் வேத₃ம் சிதறிவிடும்] என்று ஸ்ம்ருதியிலும் சொல்லப்பட்டதன்றோ. மேலும், ''விதா₄நோக்தா:'' என்றும், ''ப்₃ரஹ்மவாதி₃நாம்'' என்றும் சொல்லுகையாலே, வேத₃ங்களுக்கும் வேத₃மோதுகிறவர்களுக்கும் ப்ரணவத்தின் அந்வயம் இந்த ஶ்லோகத்திலும் உணர்த்தப்படுகிறது. வேதத்தை ஓதுகிறவர்களுக்கு ப்ரணவத்தின் அந்வயம் எப்படி அமைந்திருக்கிறது? எனில் ''ஓம்'' என்னும் ஶப்₃த₃த்தோடு கூடிய வேத₃த்தை தா₄ரித்து நின்று ஓதுகையாலும், அந்த ஓங்காரத்தோடு கூடிய யஜ்ஞம் முதலான வைதி₃ககர்மங்களைச் செய்கையாலும் 'ப்₃ராஹ்மணர்கள்' என்று சென்ற ஶ்லோகத்திலும் 'ப்₃ரஹ்மவாதி₃கள்' என்று இந்த ஶ்லோகத்திலும் சொல்லப்பட்ட வேதமோதும் மூவர்ணத்தவர்களுக்கும் இந்த ஶ்லோகத்திலேயே ப்ரணவத்தின் அந்வயம் சொல்லப்பட்டதாகிறது என்று அறியத்தக்கது. 24.

भा ॥ फलमनभिसन्धाय वेदाध्ययनयज्ञतपोदानक्रियाः मोक्ष-

---

மோக்ஷகாங்க்ஷிபி₄: — மோக்ஷத்தை விரும்பும் மூவர்ணத்தவர்களாலே, விவித₄ா: — பலவிதமான, யஜ்ஞ தப: க்ரியா: — யாக கர்மங்களும் தவக்கர்மங்களும், தா₃ந க்ரியா: ச — தா₃னகர்மங்களும், தத் இதி-(ப்₃ரஹ்மத்தின் பெயரான) 'தத்' என்னும் ஶப்₃த₃த்தைச் சொல்லி, ப₂லம் அநபி₄ஸந்த₄ாய — (மோக்ஷம் தவிர்ந்த) ப₂லனைக் கருதாமல், க்ரியந்தே — அநுஷ்டி₂க்கப்படுகின்றன.

---

26. நெஞ்சாற் பலத்தை நினையாதே தச் சந்தானந்
துஞ்சாத் தவமுத்தி தொன்மைநினைந் — தெஞ்சாமை
லொத்தங் கியலு முயர்ந்த தெனச்சொல்லும்
தத்தென் றுரைக்குந் தரம்.

உயர்ந்தது எனச் சொல்லும் — (பரம்பொருளின் பெயராகையாலே, உயர்ந்தது என்று (சாஸ்திரங்கள்) கூறும், 'தத்' என்று உரைக்கும் தரம் — 'தத்' என்று சொல்லப்படும் சிறந்த சொல், நெஞ்சால் பலத்தை நினையாது — மனத்தால் மற்ற ப₂லன்களை நினையாமல், தொன்மை முத்தி நினைந்து — நித்யமான மோக்ஷத்தையே பலனாகக் கொண்டு, துஞ்சா எச்சம் தானம் தவம் — ப₂லத்தால் அழியாத யாக₃ம், தா₃னம், தவம் ஆகியவற்றோடு, எஞ்சாமல் ஒத்து அங்கு இயலும் — எல்லாக் காலத்திலும் ஒருபடியாகச் சேர்ந்திருக்கும்.

---

25. இனி, வைதி₃ககர்மங்கள், வேத₃ம், வேத₃மோதுகிறவர்கள் ஆகிய மூன்றுக்கும் 'தத்' எனும் ஶப்₃த₃த்தின் சேர்த்தி சொல்லப்படுகிறது. முந்தின ஶ்லோகத்தாலே ஸ்வர்க்க₃ ஸாத₄நமாகவும் மோக்ஷஸாத₄நமாகவும் இருக்கும் வைதி₃க கர்மங்கள் முதலானவற்றுக்கு ப்ரணவத்தோடு சேர்ந்திருக்கையாகிய லக்ஷணம் சொல்லப்பட்டது. இனி, இந்த ஶ்லோகத்தில் மோக்ஷ ஸாத₄நமான கர்மங்களுக்கு 'தத்' என்னும் ஶப்₃த₃த்தோடு

काङ्क्षिभिस्त्रैवर्णिकैर्याः क्रियन्ते, ताः ब्रह्मप्रा[प्तिसाधन]भ्युपायतया ब्रह्मवाचिना तदितिशब्देन निर्देश्याः ; * स नः कः किं यत्तत्पदमनु-

---

சேர்ந்திருக்கை லக்ஷணம் என்றும், அடுத்த இரண்டு ஶ்லோகங்களில் மற்றப2லன்களுக்கு ஸாத4நமான கர்மங்களுக்கு 'ஸத்' என்னும் பத3த்தோடு சேர்ந்திருக்கை லக்ஷணம் என்றும் உரைக்கப்படுகிறது. இவ்விஷயத்தை3 "வைதி3கஸ்ய ச கர்மண: ஸாமாந்யலக்ஷணம் ப்ரணவாந்வய: | தத்ர மோக்ஷாப்4யுத3யஸாத4நயோர் பே4த3: தத்ஸச்ச2ப்3த3நிர்தே3ஶ்யத்வேந" [வைதி3கமான எல்லாக் கர்மங்களுக்கும் பொதுவான லக்ஷணம் ப்ரணவத்தோடு கூடியிருக்கை. அக்கர்மங்களுள் மோக்ஷஸாத4நமாக அமைந்தவை "தத்" என்னும் ஶப்3த3த்தோடு கூடியவை. மற்ற ப2லன்களுக்கு ஸாத4நமாக அமைந்தவை "ஸத்" என்னும் ஶப்3த3த்தோடு கூடியவை.] என்று பதினெட்டாம் அத்தியாயத்தின் அவதாரிகையில் பா4ஷ்யகாரரே அருளிச்செய்தார். (விவித4ா: யஜ்ஞதப: க்ரியா: தா3நக்ரியா: ச) பலவித4மான யாக3ம், தவம், தானம் ஆகிய கர்மங்கள். இது வேதா3த்4யயனத்துக்கும் உபலக்ஷணம். இதனால், வேத3ங்களோடும் 'தத்' என்னும் ஶப்3த3ம் சேர்ந்திருக்கிறது என உணர்த்தப்படுகிறது. (மோக்ஷகாங்க்ஷிபி4: தத் இதி ப2லம் அநபி4ஸந்த4ாய க்ரியந்தே) மோக்ஷத்தை விரும்பும் மூவர்ணத்தவர்களால், அக்கர்மங்கள் மோக்ஷஸாத4னமாக ஆவதற்காக, ப்3ரஹ்மத்தைக் குறிக்கும் 'தத்' எனும் ஶப்3த3த்தோடு கூடியவையாய், மற்ற ப2லன்களை விரும்பாமல் அநுஷ்டி2க்கப்படுகின்றன. (மோக்ஷகாங்க்ஷிபி4: ப2லம் அநபி4ஸந்த4ாய) இவர்கள் மோக்ஷத்தை விரும்புகிறவர்களாகையால் மற்ற ப2லன்களை விரும்புவதில்லை; இக்கர்மங்கள் மோக்ஷஸாத4னமாவதற்காக ப்3ரஹ்மத்தைக் கூறும் 'தத்' எனும் ஶப்3த3த்தோடு சேர்த்தே இவற்றை அநுஷ்டி2க்கிறார்கள். 'தத்' என்னும் ஶப்3த3த்தால் சொல்லப்படும் ப்3ரஹ்மத்தை அடைவிக்க ஸாத4னமாயிருக்கையால் இக்கர்மங்களும் 'தத்' என்னும் ஶப்3த3த்தால் உபசாரமாக வழங்கப்படுகின்றன என்று கருத்து. சென்ற ஶ்லோகத்திலிருந்து 'உத3ாஹ்ருத்ய' என்னும் பத3த்தை வருவித்துக் கொண்டு (தத் இதி உத3ாஹ்ருத்ய க்ரியந்தே) என்று கூட்டி 'தத்' என்னும் ப்3ரஹ்மவாசகமான ஶப்3த3த்தை அநுஸந்தி4த்து இக்கர்மங்கள் அநுஷ்டி2க்கப்படுகின்றன என்றும் பொருள் கொள்ளலாம். இனி, 'தத்' (அது) என்னும் பொதுவான ஸர்வத4ர்ம

त्तमम् (वि स.) इति तच्छब्दो हि ब्रह्मवाची प्रसिद्धः। एवं वेदाध्ययनयज्ञादीनां मोक्षसाधनभूतानां तच्छब्दनिर्देश्यतया तदितिशब्दान्वय उक्तः। त्रैवर्णिकानामपि तथाविधवेदाध्ययनाद्यनुष्ठानादेव तच्छब्दान्वय उपपन्नः ॥ २५ ॥

भा ॥ अथैषां सच्छब्दान्वयप्रकारं वक्तुं लोके सच्छब्दस्य व्युत्पत्तिप्रकारमाह —

सद्भावे साधुभावे च सदित्येतत्प्रयुज्यते ।
प्रशस्ते कर्मणि तथा सच्छब्दः पार्थ युज्यते ॥ २६ ॥

26. ஸத்3பா4வே ஸாது4பா4வே ச ஸதி3த்யேதத் ப்ரயுஜ்யதே ।
ப்ரஶஸ்தே கர்மணி ததா2 ஸச்ச2ப்3த3: பார்த்த2! யுஜ்யதே ॥

---

ஶப்3த3ம் எப்படி ப்3ரஹ்மத்தின் நாமமாகும்? என்னும் கேள்வி எழுகிறது. "ஸ வ: க: கிம் யத் தத் பத3மநுத்தமம்" என்று ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் 'தத்' முதலான ஸர்வ நாம ஶப்3த3ங்களும் ப்3ரஹ்மத்தின் பெயர்களாகப் படிக்கப்பட்டிருக்கையாலே குறையில்லை; இந்த ஸஹஸ்ரநாமாத்4யாயம் "யாநி நாமாநி கௌ3ணாநி விக்2யாதாநி மஹாத்மந:" [மஹா புருஷனான விஷ்ணுவுக்கு கு3ணங்களையிட்டு இவ்வாயிர நாமங்களும் பெயர்களாயுள்ளன] என்று தொடங்கி, "நாம்நாம் ஸஹஸ்ரம்" என்று நிறைவுறுவதால், இதிலுள்ள ஒவ்வொரு நாமமும் எம்பெருமானின் திருநாமமே என்பது தெளிவன்றோ. இங்கு மோக்ஷஸாத4னமாயிருப்பதையிட்டு வைதி3க கர்மங்கள் 'தத்' என்னும் ஶப்3த3த்தால் சொல்லப்படுகின்றன என்று கூறியதால் மோக்ஷஸாத4னமான வேதா3த்4யயனம் முதலானவையும் 'தத்' என்னும் ஶப்3த3த்தால் சொல்லப்படுபவையாகக் கொள்ளவேண்டும். ஆயினும் 23-ஆது ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட மூவர்ணத்தவர்களுக்கு மோக்ஷஸாத4னத்வமில்லாமையால், அவர்களை 'தத்' என்னும் ஶப்3த3த்தால் குறிப்பது எப்படி? எனில்; அவர்களுக்கு நேரே மோக்ஷஸாத4னத்வமில்லாவிடினும், மோக்ஷஸாத4னமாயிருக்கும் வேதா3த்4யயனத்தையும் வைதி3ககர்மங்களையும் அனுஷ்டி2க்கையால், அவர்களையும் 'தத்' என்னும் ஶப்3த3த்தால் குறிப்பது பொருத்தமே. 25.

பார்த்த₂ — குந்தீபுத்திரனே! ஸத் இதி ஏதத் —ஸத் என்னும் இச்சொல், ஸத்₃ப₄ாவே — 'இருக்கும்பொருள்' என்னும் அர்த்த₂த்திலும், ஸாது₄ப₄ாவே ச — 'நல்லபொருள்' என்னும் அர்த்த₂த்திலும், ப்ரயுஜ்யதே—(உலகிலும் வேத₃ங்களிலும்) வழங்கப்படுகிறது. தத₂ா—அவ்வண்ணமே, ப்ரஶஸ்தே கர்மணி — நல்ல லௌகிக கர்ம விஷயத்திலும், ஸச்ச₂ப்₃த₃:- 'ஸத்' என்னும் சொல், யுஜ்யதே-வழங்கப்படுகிறது.

---

27. உண்மையிலு(ம்) நன்றான வொண்மையிலுஞ்
சத்தென்னும்
வண்மையுரை தன்னை மதித்துரைப்பர் —திண்மையுயர்ந்
தேலுங் கருமத்தைச் சற்கருமமென்றுரைப்பர்
மாலும் புகழ்விசயா வாய்ந்து.

மாலும் புகழ் விசயா — இந்திரனாலும் புகழப்படும் அர்ஜுனனே! சத் என்னும் வண்மை உரைதன்னை —'ஸத்' என்கிற பல பொருள்களை உடைய சொல்லை, உண்மையிலும் — இருக்கும் பொருள் என்னும் அர்த்த₂த்திலும், நன்றான ஒண்மையிலும்— நல்ல பொருள் என்னும் அர்த்த₂த்திலும், மதித்து உரைப்பர் — (அறிவாளிகள்) ஆராய்ந்து கூறுவர். திண்மை உயர்ந்து ஏலும் கருமத்தை — உலகில் காணப்படும் சிறப்புடைய கருமத்தையும், சற்கருமம் என்று - "ஸத் கர்மம்" என்று, ஆய்ந்து உரைப்பர் — ஆராய்ந்து வழங்குவர்.

---

26. இனி, அடுத்த ஶ்லோகத்தில் வேத₃ங்களுக்கும், வைதி₃க கர்மங்களுக்கும், மூவர்ணத்தவர்க்கும் 'ஸத்' என்னும் ஶப்₃த₃த்தோடு சேர்த்தியை விளக்கும் முன்பாக, இந்த ஶ்லோகத்தில் லோகவேத₃ங்களில் 'ஸத்' என்னும் சொல்லின் வழக்குகளைக் காட்டுகிறான். ஸத் என்னும் சொல்லுக்கு இங்கு லோகப்ரஸித்₃த₄மான மூன்று பொருள்கள் காட்டப்படுகின்றன. இவை போலவே அடுத்த ஶ்லோகத்தில் சொல்லப்படும் பொருளும்

भा ॥ सद्भावे -- विद्यमानतायां, साधुभावे -- कल्याणभावे च सर्ववस्तुषु सदित्येतत्पदं प्रयुज्यते लोकवेदयोः । तथा केनचित्पुरुषेण

---

பொருந்தும் என்று காட்டுவதற்காக இவை மூன்றும் உதாரணமாக எடுக்கப்படுகின்றன. (ஸத்₃பா₄வே) இல்லாப் பொருளிலும் வேறுபட்ட இருக்கும் பொருள் என்னும் அர்த்த₂த்திலும் 'ஸத்' என்னும் சப்தம் வழங்கப்படுகிறது. நிகழ்காலத்திலுள்ள பொருளைப் பற்றியும் 'ஸத்' என்னும் சொல் வழங்கப்படுகிறது. 'ஸத்₃பா₄வ' ஶப்₃த₃த்திற்கு இவ்விரண்டும் பொருளாகலாம். (ஸாது₄பா₄வே ச ஸத் இத்யேதத் ப்ரயுஜ்யதே) "நல்ல பொருள்" என்னும் அர்த்த₂த்திலும், ஸத் என்னும் சொல் வழங்கப்படுகிறது. "ஸாது₄காரீ ஸாது₄ர் ப₄வதி" [ப்₃ருஹ 6-4-5] [நல்லதைச் செய்பவன் நல்லவனாகிறான்] முதலானவிடங்களிற் போலே, ஸாது₄ஶப்₃த₃ம் புண்ணியம், புண்ணியமுடையவர்கள் முதலான நல்ல பொருள்களைக் குறிக்கிறது. (ஸத் இதி ஏதத் ப்ரயுஜ்யதே) மற்ற விஷயங்களில் எவ்வளவு வேறுபாடு இருந்தாலும், இவ்விரு பெருமைகள் இருந்தால் ஸத்கர்மம், ஸத்—ஶாஸ்த்ரம், ஸத்—பாத்ரம் முதலான விடங்களில் 'ஸத்'என்னும் ஶப்₃த₃ம சேர்த்தே படிக்கப்படுகிறது. (ப்ரயுஜ்யதே) 'வழங்கப்படுகிறது' என்று பொதுவாக எடுக்கையால், உலகிலும் ஶாஸ்த்ரங்களிலும இந்த வழக்கு எங்கும் காணப்படுகிறது. என்று உணர்த்தப்படுகிறது. இனி, ஶ்லோகத்தின் பிற்பாதியில் மூன்ருவது உதா₃ஹரணம காட்டப்படுகிறது. (ததா₂ ப்ரஶஸ்தே கர்மணி ஸச்ச₂ப்₃த₃: யுஜ்யதே) அவ்வண்ணமே ஒருமனிதனுல் அநுஷ்டி₂க்கப்படும் லௌகிகமான நல்ல கர்மத்திலும் "இது ஸத்கர்மம்" என்று 'ஸத்' என்னும் சொல் சேர்த்தே வழங்கப்படுகிறது; சென்ற ஶ்லோகத்தில் 'தத்' என்னும் சொல்லின் சேர்த்தியை விளக்கும்போது "மோக்ஷ காங்க்ஷிபி₄:" என்று மோக்ஷத்தை விரும்புகிறவர்களை விஷயமாகக் கூறியிருக்கிறபடியாலும், இங்கு "ப்ரஶஸ்தே கர்மணி" என்று 'நல்ல கர்மம்' என்று மாத்திரம் விசேஷணம் இட்டிருக்கையாலும், மோக்ஷஸாத₄நலக்ஷணமாக 'தத்' என்னும் ஶப்₃த₃மும், மற்ற புருஷார்த்த₂ ஸாத₄நலக்ஷணமாக 'ஸத்' என்னும் ஶப்₃த₃மும் வழங்கப் படுகின்றன என்று உணர்த்தப்படுகிறது. (ப்ரஶஸ்தே கர்மணி) 'நல்லகர்மங்கள்' என்று இங்கு பொதுவாகச் சொல்லப்பட்டிருந்த போதிலும், அடுத்த ஶ்லோகத்தில் சொல்லப்படும் வைதி₃கமான நல்லகர்மங்களுக்கு உதா₃ஹரணமாகவே இங்கு இது எடுக்கப் படுகையால், இங்கு லௌகிகமான நல்ல கர்மங்களே சொல்லப்

अनुष्ठिते लौकिके प्रशस्ते—कल्याणे कर्मणि सत्कर्मेदमिति सच्छब्दो युज्यते—प्रयुज्यते इत्यर्थः ॥ २६ ॥

यज्ञे तपसि दाने च स्थितिस्सदिति चोच्यते ।
कर्म चैव तदर्थीयं सदित्येवाभिधीयते ॥ २७ ॥

27. யஜ்ஞே தபஸி தா₃நே ச ஸ்தி₂திஸ்ஸதி₃தி சோச்யதே ।
கர்ம சைவ தத₃ர்த்தீ₂யம் ஸதி₃த்யேவாபி₄தீ₄யதே ॥

யஜ்ஞே — யாக₃த்திலும், தபஸி — தவத்திலும், தா₃நே ச — தா₃னத்திலும், ஸ்தி₂தி: ச — (மூவர்ணத்தவர்கள்) நிலை நிற்பதும், ஸத் இதி உச்யதே — 'ஸத்' என்று சொல்லப் படுகிறது. தத₃ர்த்தீ₂யம் ஏவ கர்ம ச — அந்த மூவர்ணத்த வர்களுக்காகவே ஏற்பட்ட (யஜ்ஞம் தா₃னம் முதலான) கர்மமும், ஸத் இதி ஏவ — 'ஸத்' என்றே, அபி₄தீ₄யதே — சொல்லப்படுகிறது.

---

படுவதாகக் கொள்ள வேண்டும். இப்படிக்கொள்ளாவிடில் உதா₃ஹரணமாக மாட்டாது; புனருக்தியும் ஏற்படும். "ஸாது₄ பா₄வே" [நல்ல பொருள்கள் விஷயத்திலும்] என்று சொல்லப் படும் இரண்டாவது பொருளில் ஒரு வகையே 'ப்ரஶஸ்தே கர்மணி' (நல்ல கர்மவிஷயத்திலும்) என்று மூன்றாவது உதா₃ஹரணமாக எடுக்கப்படுகிறது. இது எதற்காக? எனில்: அடுத்த ஶ்லோகத்தில் சொல்லப்படும் வைதிகமான நல்லகர்மங்களுக்கு இது நெருங்கிய உதா₃ஹரணமாகையாலே, லௌகிகமான நல்லகர்மங்கள் இங்கு தனி உதா₃ஹரணமாக எடுக்கப்படுகிறது என்று கொள்ள வேண்டும். (யுஜ்யதே) வழங்கப்படுகிறது. முற்பாதியில் சொல்லப்பட்ட 'ப்ரயுஜ்யதே' என்னும் சொல்லும், இங்கு 'ப்ர' என்னும் உபஸர்க்கம் இல்லாமல் சொல்லப்பட்ட இச்சொல்லும் ஒரே பொருளை உடையவை. சில இடங்களில் உபஸர்க்க₃ங்கள் வேறுபொருளைக் காட்டுமானாலும், சில இடங்களில் உபஸர்க் க₃ங்கள் தா₄துப்பொருளை வெளிப்படுத்துவது மாத்திரம் உண் டன்றோ. (பார்த்த₂) குந்தீபுத்திரனே! ஸத்குலத்திலே ஸத்புத்ரனாகப் பிறந்த உனக்கு 'ஸத்' என்னும் இந்தச் சொல்லின் வழக்கு தெரிந்ததேயன்றோ என்று கருத்து. 26.

भा ॥ अतो वैदिकानां त्रैवर्णिकानां यज्ञे तपसि दाने च स्थितिः कल्याणतया सदित्युच्यते। कर्म च तदर्थीयम् — त्रैवर्णि-

---

28. ஆங்கதனு லெச்சந் தவந்தான மாமிவற்றி
லோங்கமருந் தன்னிலையு முற்றவற்றிற் – பாங்கியலுஞ்
சத்தென் றுரைக்கத் தகுமென்று வேதியர்க
ளொத்தேன் றுரைப்ப ருகந்து.

ஆங்கு அதனுல் — முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட வழக்குகளால், எச்சம் தவம் தானம் ஆம் இவற்றில் ஓங்கு அமருப தன் நிலையும் — யாகம், தவம், தானம் ஆகிய வற்றில் உறுதியாக நிற்கும் தம்முடைய நிலையும், உற்ற வற்றில் பாங்கு இயலும் — (மூவர்ணத்தவர்களான தமக்கு) விதிக்கப்பட்டவற்றில் நன்கு அநுஷ்டிக்கப்படும் கருமமும், சத் என்று உரைக்கத் தகும் — 'ஸத்' என்று சொல்லத்தகும், என்று — என்று. வேதியர்கள் — மூவர் ணத்தவர்கள், ஒத்து ஏன்று – ஒருமுகமாக ஏற்றுக்கொண்டு, உகந்து உரைப்பர் — உகப்புடன் கூறுவர்.

---

27. முன் ஶ்லோகத்தில் 'ஸத்' என்னும் சொல்லுக்கு வழக்கைக் காட்டிப் பொருளைக்கூறி, இந்த ப்ரகரணத்தில் லக்ஷணம் கூறப்படும் மூவர்ணத்தவர், வேதங்கள், வைதிக கர்மங்கள் ஆகிய மூன்றின் விஷயத்திலும் 'ஸத்' என்னும் வழக்கு பொருந்தி நிற்கிறது என்று காட்டுகிருன் இந்த ஶ்லோகத்தில். (யஜ்ஞே தபஸி தாநே ச ஸ்திதி: ச ஸத் இதி உச்யதே) யாகத்திலும் தவத்திலும் தானத்திலும் நிலைநிற்பதும் 'ஸத்' என்னும் சொல்லால் சொல்லப்படுகிறது. இங்கு நிலைநிற்பதாகிய ஸ்திதி 'ஸத்' என்னும் ஶப்தத்திற்குப் பொருள் என்று சொன்னதாலே, நிலைநிற்பவர்களான மூவர்ணத்தவர்க்கும், அவர்களை அக்கருமங்களில் நிலைநிறுத்தும் வேதங்களுக்கும் 'ஸத்' என்னும் சொல்லின் சேர்த்தி சொல்லப்பட்டதாக ஆகிறது. அத்தியாயங்களின் கடைசியில் "ஓம் தத் ஸத்" என்று படிக்கப் படுகையால், ஸ்திதி ஶப்தமானது இங்கு "இறுதி" என்னும்

कार्यं यज्ञदानादिकं सदित्येवाभिधीयते । तस्माद्वेदा वैदिकानि कर्माणि

---

பொருளை உடையது என்று சிலர் உரையிட்டார்கள். ப்ரகரணத்திற்கு ஒட்டியிருக்கும் 'நிலை நிற்றல்' என்னும் மிகப்ரஸித்3த4மான பொருள் இருக்கும் போது, ப்ரகரணத்திற்குப் பொருந்தாத இப்பொருள் ஏற்கத்தக்கதன்று. (தத3ர்த்தீ2யம் ஏவ கர்ம ச ஸத் இதி அபி4தீ4யதே) மூவர்ணத்தவர்களுக்கேயான யாக3ம் த3ானம் தவம் முதலான கர்மங்களும் 'ஸத்' என்னும் சொல்லால் சொல்லப்படுகின்றன. ஶ்லோகத்தின் முற்பாதியிலுள்ள 'ஸ்தி2தி' ஶப்3த3த்தினாலே உணர்த்தப்படும் அநுஷ்டா2ாதாக்களான மூவர்ணத்தவர்களையே இங்கு ''தத்'' என்னும் சொல்லுக்கும் பொருளாகக் கொள்வது உசிதம்; மூவர்ணத்தவர்களைக் குறித்தன்றோ இக்கர்மங்கள் வேத3ங்களில் விதி4க்கப்படுகின்றன; '''ஓம் தத ஸத்'' என்னும் மூன்று விதமான சொல்லுக்கும் பொருளாக இந்த ப்ரகரணத்தில் காட்டப்படும் ஸர்வேஶ்வரனுக்கு உரியவையான கர்மங்கள்'' என்னும் பொருளையும் ஶங்கரர் ஆதரித்தார். இந்த ஶ்லோகத்தின் முற்பாதியிலேயே ஸித்3தி4க்கும் வைதி3கர்களை 'தத்' என்னும் சொல்லுக்குப் பொருளாகக் கொள்வது ஸ்வரஸமேயொழிய 23வது ஶ்லோகத்திலுள்ள ப்3ரஹ்மஶப்3த3ார்த்த2த்தை இங்கு 'தத்' என்னும் சொல்லுக்குப் பொருளாகக் கொள்வது ஸ்வரஸமன்று. இங்கு கர்மஶப்3த3த்தால் ஶ்லோகத்தின் முற்பாதியில் சொல்லப்பட்ட யஜ்ஞம் தவம் த3ானம் முதலானவற்றையே குறிப்பதாகக் கொள்ளவேண்டும். முன்ஶ்லோகத்தில் இந்தயாக3ம் முதலானவற்றின் ஸாத4னங்களை ஸம்பாதிக்கும் கர்மங்களிலும் ''ஸத் கர்மம்'' என்னும் பிரயோகம் உள்ளதென்று காட்டப்பட்டதாகையால், இங்கு யாகம் முதலானவற்றையே கர்மஶப்3த3த்தால் குறிப்பது மிகப்பொருந்தும். ''மூவர்ணத்தவர்களுக்குரிய கர்மம்'' என்று பொதுவாகச் சொல்லப்பட்டதால் யாக3ம் த3ானம் தவம் என்னும் மூன்றைச் சொன்னது வேத3ாத்4யயனம் முதலானவற்றிற்கும் உபலக்ஷணம் என்று கொள்ளவேண்டும். இந்த ஶ்லோகத்தின் இரண்டு பாதிகளாலும் வேத3ங்களும், அவற்றில் சொல்லப்பட்ட கர்மங்களும், அந்த வேத3ங்களில் அதி4காரம் உள்ள ப்3ராஹ்மணர்கள் என்று சொல்லப்பட்ட மூவர்ணத்தவர்களும் 'ஸத்' என்னும் ஶப்3த3த்தின் சேர்த்தியை உடையவர்கள் என்று விளக்கப்பட்டது. ஆக, 23வது ஶ்லோகம்தொடங்கி இந்தஶ்லோகம் ஈறுக வேத3ங்களும் வேத3ங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களும், வேத3த்தில் அதி4காரிகளான மூவர்ணத்தவர்களும்''ஓம் தத் ஸத்''

ब्राह्मणशब्दनिर्दिष्टास्त्रैवर्णिकाश्च ओं तत्सदिति शब्दान्वयरूपलक्षणेन अवेदेभ्यश्चावैदिकेभ्यश्च व्यावृत्ता वेदितव्याः ॥ २७ ॥

अश्रद्धया हुतं दत्तं तपस्तप्तं कृतं च यत् ।
असदित्युच्यते पार्थ न च तत्प्रेत्य नो इह ॥ २८ ॥

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु श्रद्धात्रयविभागयोगो नाम सप्तदशोऽध्यायः ॥ १७ ॥

28. அஶ்ரத்3த4யா ஹுதம் த3த்தம் தபஸ்தப்தம் க்ருதம் ச யத்।
அஸதி3த்யுச்யதே பார்த்த2 ந ச தத் ப்ரேத்ய நோ இஹ॥

இதி ஸ்ரீமத்3 ப4க3வத்3கீ3தாஸு உபநிஷத்ஸு ஶ்ரத்3த4ாத்ரய-
விபா4கயோகோ3 நாம ஸப்ததஶோத்4யாய:

பார்த்த2 — குந்தீ புத்திரனே! அஶ்ரத்3த4யா க்ருதம் — ஶ்ரத்3தை4யில்லாமல் செய்யப்படும், யத் — யாதொரு, ஹுதம் — ஹோமமும், த3த்தம் — தானமும் உள்ளதோ, யத் தப: ச தப்தம் — யாதொரு தவமும் அநுஷ்டி2க்கப்படுகிறதோ (அது), அஸத் இதி உச்யதே — 'அஸத்' என்று சொல்லப்படுகிறது; தத் — அது, ப்ரேத்ய ந — மோக்ஷத்தின் பொருட்டும் ஆவதில்லை; இஹ ச நோ — இவ்வுலகப் பலன்களின் பொருட்டும் ஆவதில்லை.

---

என்னும் ஶப்33ங்களின் சேர்த்தியாகிற லக்ஷணத்தாலே முறையே வேத3மல்லாதவற்றைக் காட்டிலும், வைதி3ககர்மமல்லாதவற்றைக் காட்டிலும், வேத3மோதுவதற்குத் தகுதியில்லாதவர்களைக் காட்டிலும் மிகவும் வேறுபட்டவர்கள் என்று உணர்த்தப்படுகிறது. "ஓம் தத் ஸத்" என்னும் தொடருக்கு சிலர் ஒரு வாக்யார்த்த2ம் சொல்லுவதாகத் தாத்பர்யசந்த்3ரிகையில் குறிப்பிடப்பட்டது. பாட2ங்கள் மாறுபட்டிருப்பதால் அந்த வாக்யார்த்த2ம் இன்னதென்று விளங்கவில்லை. "இந்த வாக்யார்த்த2ம் இங்கு கருதப்படுகிறது என்பதற்கு காரணமுமில்லை; இந்த வாக்யார்த்த2த்தினால் உதவிஎதுவும் இல்லை; இந்த மூன்று ஶப்33ங்களின் சேர்த்தி ஶாஸ்த்ரஸி த்34ங்களுக்கு லக்ஷணமாக விதி4க்கப்படுகின்றது என்று கொள்வது இவற்றை அநுஸந்திப்பதாகிற அநுஷ்டா2னத்திற்கு ஏற்றுப்பாகிறது. ஆகையால் அதுவே பொருத்தம்." என்று கூறி, இந்த ஶ்லோகத்தின் தாத்பர்ய சந்த்3ரிகை நிறைவடைகிறது. 27.

भा ।। अश्रद्धया कृतं शास्त्रीयमपि होमादिकमसदित्युच्यते । कुतः?

29 தான்விருப்ப மின்றிச்செய் தானந் தவமோமம்
வான்விருப்பத் தேற வழியாகா — வான் விருப்பாக்
காயத்தி னன்காகாக் காரணத்தாற் றனசத்தாய்
மாயத் துறுவிக்கு மற்று,

தான் விருப்பமின்றிச்செய் — தனக்கு ஒரு விருப்பம் (ஶ்ரத்₃தை₄)இல்லாமல் செய்யப்படும், தானம் தவம் ஓமம் - தா₃னமும் தவமும் ஹோமமும், விருப்பத்து வான் ஏற வழியாகா-விரும்பப்படும் பரமபத₃த்திற்குச் செல்வதற்கு வழியாக மாட்டா, வான் விருப்பா — பெரிய விருப்பத்துடன், காயத்தின்-உடலைப்பற்றி இருப்பதனல் அமையும் பயன்களுக்கும், நன்கு ஆகா — அடியோடு காரணமாகமாட்டா; காரணத்தால் — இக்காரணத்தால், தான் அசத்தாய் — இக்கருமங்கள் தான் 'அஸத்' என்று சொல்லப்படுபவையாய், மற்று மாயத்து உறுவிக்கும் — (முற்கூறிய பே₄ாக₃மோக்ஷங்களைக் காட்டிலும்) மிகவும் வேறுபட்ட ஸம்ஸாரத்திலேயே உழல வைக்கும்.

---

28. இந்த அத்தியாயத்தின் தொடக்கத்தில் அர்ஜுனன் ஶாஸ்த்ரவிதி₄யை மீறி ஶ்ரத்₃தை₄யோடு செய்யப்படும் யாக₃ம் முதலானவற்றிற்குப் ப₂லன் என்ன? என்று கேட்டான். அதற்கு பதில்கூறத்தொடங்கிய கண்ணன் ஶ்ரத்₃தை₄யோடு செய்யப் பட்டாலும் ஶாஸ்த்ரவிதி₄யை மீறிச்செய்யப்படுவது ஆஸுரமாகையால் விபரீத ப₂லனையே விளைக்கும் என்றும், ஶாஸ்த்ரத்தையொட்டி ஶ்ரத்₃தை₄யோடு செய்யப்படும் கருமங்கள் ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று மூவகைப்படும் என்றும் விளக்கினன். இந்த ஶ்லோகத்தில் ஶாஸ்த்ரத்தை ஒட்டிச் செய்யப் படுவதானலும் ஶ்ரத்₃தை₄யில்லாமல் செய்யப்படும் கருமம் 'அஸத்' என்றே சொல்லப்படும் என்றும், அதனல் எப்பலனும் இல்லை என்றும் காட்டுகிருன். (யத் அஶ்ரத்₃த₄யா க்ருதம் ஹுதம் த₃த்தம்) ஶ்ரத்₃தை₄யில்லாமல் செய்யப்படும் யாதொரு ஹோமமும் தா₃னமும் உண்டோ அது; இங்கு ஹுதம் த₃த்தம்

न च तत्प्रेत्य, नो इह—न मोक्षाय, न सांसारिकाय च फलाय [इति] ॥ २८ ॥

इति श्रीभगवद्रामानुजविरचिते श्रीमद्गीताभाष्ये सप्तदशोऽध्यायः ॥१७॥

---

என்னும் பதங்கள் பூர்வார்த்தங்களாய், ஹோமத்தையும் தானத்தையும் குறிக்கின்றன. அடுத்தபடியாக உள்ள "தப்தம் தப:" [செய்யப்பட்ட தவம்] என்னும் தொடரில் "தப்தம்" என்பதனால் தவம் செய்யப்பட்டது என்று ஸித்திக்கிறபடியால், "க்ருதம்" [செய்யப்பட்டது] என்றசொல் "ஹுதம்" "தத்தம்" என்னும் இரு சொற்களுக்கு மாத்திரம் விசேஷணமாய் நிற்கிறது. ஆக, "யாதொரு ஹோமதானங்களும் தவமும் ச்ரத்தையில்லாமல் அநுஷ்டிக்கப் படுகின்றனவோ என்பது முற்பாதியின் திரண்ட பொருள். இப்படி "க்ருத" ஶப்தத்தை "ஹுத" "தத்த" ஶப்தங்களுக்கு விசேஷணமாகக்கொள்ள வேண்டியிருக்கிறபடியால் "க்ருத" ஶப்தத்தைத் தனியாக்கி, அதற்குப் பரோபகாரம் முதலான பொருள்களைக் கூறுவது பொருந்தாது என்று அறியத்தக்கது. (அஸத் இதி உச்யதே) அந்த ஹோமமும், தானமும், தவமும் 'அஸத்' என்று சொல்லப் படுகிறது; இப்படி "அஸத்" என்று இவற்றைச் சொல்லுவதற்குக் காரணம் என்ன என்பதை நாலாவது பாதம் விவரிக்கிறது. (தத் ப்ரேத்ய ந) அது எல்லா பந்தங்களும் ஶரீரமும் விடுபட்டு மோக்ஷமடைவதாகிற பயனுக்கும் உறுப்பாவதில்லை; (இஹ ச நோ) இவ்வுலகில் ஸாம்ஸாரிகமான பலன்களை அடைவதற்கும் உறுப்பாவதில்லை. 'ப்ரேத்ய' என்னும் ஶப்தம் வெறும் இறப்பை மாத்திரம் காட்டாது; "மோக்ஷகாங்க்ஷிபி:" [17-25] என்று சொன்னதை ஒட்டி 'யேயம் ப்ரேதே" [கட 1-20] என்னும் கடோபநிஷத்வாக்கியத்தை அநுஸரித்து, எல்லா பந்தங்களும் ஶரீரமும் விடுபட்ட மோக்ஷநிலையையே காட்டும். "இஹ" என்னும் பதம் அதற்கு எதிர்த்தட்டான ஸம்ஸார நிலையைக் காட்டும். ஆக, ஶாஸ்த்ரவிதியை மீறி ச்ரத்தையோடு செய்யும் காரியத்தைப் போலே விபரீதபலனை அளிக்காவிடினும், ஶாஸ்த்ரத்தை அநுஸரித்து ச்ரத்தையில்லாமல் செய்யப்படும் கர்மம் எப்பலனையும் அளிக்காமல் இருப்பதால் "அஸத்" என்று சொல்லப்படும் என்பது இந்த ச்லோகத்தின் திரண்ட பொருள்.

## பகவத் கீதை வெண்பா

(பதினேழாம் அத்தியாயத்தின் ஸாரத்தைக் கூறும் பாசுரம்)

மேவு குணங்களினல் வேரும் கருமங்கள்
பாவு சுருதிப் பயில்வகையே — சேவையுறும்
பாங்குரைத்த கீதைப் பதினேழா மோத்ததனை
யிங்குரைத்தோ மிப்பொருளா லேய்ந்து.

மேவு குணங்களினல் — (ஸத்வம் ரஜஸ் தமஸ் என்னும்) ஶரீரத்தில் உள்ள குணங்களினல், வேரும் கருமங்கள் — (ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று) வேறுபட்டிருக்கும் ஶாஸ்த்ரத்தை ஒட்டிய கர்மங்களையும், பாவு சுருதிப் பயில் வகையே சேவை உறும் பாங்கு — சிறப்புடைய வேதத்தில் சொல்லப்பட்ட கர்மங்களுக்கு [ஓம் தத் ஸத் என்னும்] தகுந்த லக்ஷணமும், உரைத்த - கூறிய, கீதை பதினேழாம் ஒத்து அதனை — கீதையின் பதினேழாவது அத்தியாயத்தை, இப்பொருளால் ஏய்ந்து — இப்படிப் பொருளோடு பொருந்தவிட்டு, ஈங்கு உரைத்தோம் — இங்கு (வெண்பாவினல்) கூறினேம்.

வாதிகேஸரி ஜீயர் அருளிய பகவத்கிதை வெண்பாவில்
பதினேழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

இந்த அத்தியாயம் முழுவதற்கும் ஸாரார்த்தம் பின்வருமாறு:— ஶ்ரத்தையோடு கூடியதாயினும் வேதத்திற்கு முரண்பட்ட கர்மமும், வேதத்தை அனுஸரித்திருந்தபோதிலும் ஶ்ரத்தையில்லாமல் செய்யப்படும் கர்மமும் இம்மை மறுமைப்பயன்கள் எதையும் விளைக்காதாகையால் அநுஷ்டிக்கத்தக்கதன்று; இம்மை மறுமைப்பயன்கள் விளையுமாகையால், ஶாஸ்த்ரத்தை ஒட்டி உள்ளதாய், ஶ்ரத்தையால் பரிசுத்தப்படுத்தப்பட்டதான கர்மமே அநுஷ்டிக்கத்தக்கது என்கை. (பார்த்த) குந்தீபுத்திரனே! பரமஜ்ஞானியான குந்தியின் பிள்ளையான நீ ஶாஸ்த்ரங்களில் உனக்கு விதிக்கப்பட்ட தர்மமான யுத்தத்தைப் பலனில் பற்றற்ற ஸாத்விக ஶ்ரத்தையோடு அநுஷ்டிக்க வேண்டும் என்று கருத்து. 28.

ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி தாஸன் இயற்றிய கீதார்த்த விவரணத்தில்
பதினேழாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.

## கீதார்த்த சங்கிரகம்

(ஸ்ரீவேதா₃ந்த தே₃சிகர் அருளியது)
பதினேழாம் அத்தியாயத்தின் ஸாரப் பொருள்

மறைபொருந் தாதவை வல்லசு ரர்க்கு வகுத்தமையு(ம்)
மறைபொருந் துந்நிலை யின்வன் குணப்படி மூவகையு(ம்)
மறைநிலை தன்னை வகுக்குங் குறிமூன்றின் மேன்மையுமம்
மறையுமிழ்ந் தானுரைத் தான்வாச வன்றன்
சிறுவனுக்கே. 18

அம் மறை உமிழ்ந்தான் — அந்த வேத₃த்தை வெளியிட்டவனான கண்ணன், வாசவன்றன் சிறுவனுக்கு— இந்திரனுடைய பிள்ளையான அர்ஜுனனுக்கு, மறை பொருந் தாதவை— வேத₃ (மாகிய சாஸ்திர) த்திற்கு விபரீதமான கர்மங்கள், வல் அசுரர்க்கு— வலிய அஸுரத்தன்மையுடையவர்க்கு, வகுத்தமையும்— பிரித்துக் கூறப்பட்டமையும், வன் குணப்படி — வலிய (ஸத்வம் முதலிய) கு₃ணத்தின்படி, மறை பொருந்தும் நிலையின் — சாஸ்திரங்களைத் தழுவிய கர்மானுஷ்டா₂னத்தின், மூவகையும் — மூன்று வகைப்பட்ட தன்மையும், மறைநிலைதன்னை — வேதத்தில் விதிக்கப்பட்ட கர்மானுஷ்டா₂னத்தை, வகுக்கும் — (மற்றவற்றினின்று) வேறுபடுத்திக் காட்டுகின்ற, குறி மூன்றின்— (ஓம், தத், ஸத் என்ற) மூன்று லக்ஷணங்களின், மேன்மையும் — உயர்வும் (ஆகிய இவற்றை), உரைத்தான்— உபதேசித்தான்.

## கீதாஶ்லோகார்த்தச் சுருக்கம்

பதினேழாம் அத்தியாயம்

ஶ்லோ. அர்த்த₂ம்

1. ஶாஸ்த்ரவிதி₄ இல்லாமற் போனாலும் ஶ்ரத்₃தை₄யோடு செய்யப்படும் கர்மங்களைப்பற்றி அர்ஜுனனின் கேள்வி.

2. ஶாஸ்த்ரங்களை ஒட்டியிருக்கும் ஶ்ரத்₃தை₄கு₃ணங்களையிட்டு மூவகைப்படுகிறது.

3. ஶ்ரத்₃தை₄ எப்படிப்பட்டதோ அதற்குத்தக்க ப₂லனே கிடைக்கும்.

4. ஸாத்விக ராஜஸ தாமஸர்களால் ஆராதி₄க்கப்படுபவர்கள்.

5-6. ஶாஸ்த்ரவிதி₄க்கு முரணான கர்மங்கள் ப₄க₃வதா₃ஜ்ஞையை மீறுவதால் எப்பயனையும் விளைப்பதில்லை என்பதோடல்லாமல் அனர்த்த₂த்தையும் விளைக்கின்றன.

7. ஸத்வ ரஜஸ் தமோ கு₃ணங்களையிட்டு ஆஹாரமும், தவமும், தா₃னமும் மூவகைப்பட்டிருக்கும் என்று கூறுதல்.

8. ஸாத்விக ஆஹார விளக்கம்.

9. ராஜஸ ஆஹார விளக்கம்.

10. தாமஸ ஆஹார விளக்கம் [ ப்ராஸங்கி₃கமாக, உப₄ய ஸம்ப்ரதா₃யத்திலும் ஜாதிபற்றிய கருத்து வேறுபாடு வ்யாக்₂யானத்தில் விளக்கப்படுகிறது ]

11. ஸாத்விக யாக₃ விளக்கம்.

12. ராஜஸ யாக₃ விளக்கம்

13. தாமஸ யாக₃ விளக்கம்.

14. உடலால் செய்யப்படும் தவத்தின் விளக்கம்

15. வாக்கால் செய்யப்படும் தவத்தின் விளக்கம்

16. மனத்தால் செய்யப்படும் தவத்தின் விளக்கம்

17. ஸாத்விகமான தவத்தின் விளக்கம்

18. ராஜஸமான தவத்தின் விளக்கம்

19. தாமஸமான தவத்தின் விளக்கம்

20. ஸாத்விக தா₃னத்தின் விளக்கம்

21. ராஜஸ தா₃னத்தின் விளக்கம்

22. தாமஸ தா₃னத்தின் விளக்கம்

# பதினெட்டாம் அத்தியாயம்

ஆளவந்தார் அருளிய

## கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹம்

[பதினெட்டாம் அத்தியாயத்தின் சுருக்கம்]

**ईश्वरे कर्तृताबुद्धिस्सत्वोपादेयतान्तिमे ।**
**स्वकर्मपरिणामश्च शास्त्रसारार्थ उच्यते ॥ २२ ॥**

22. ஈஶ்வரே கர்த்ருதாபு₃த்₃தி₄ஸ்ஸத்வோபாதே₃யதாந்திமே।
ஸ்வகர்மபரிணமஶ்ச ஶாஸ்த்ரஸாரார்த்த₂ உச்யதே ॥

---

23. வைதி₃க கர்மங்கள் "ஓம்தத்ஸத்" என்னும் மூன்று ஶப்₃த₃ங்களோடு இணைந்திருக்கவேண்டும் என்னும் வைதி₃க கர்ம லக்ஷணம்

24. மூன்று ஶப்₃த₃ங்களில் முதலாவதான ப்ரணவம் வைதி₃க கர்மங்களோடும், வேத₃ங்களோடும், மூவர்ணத்தவர்களோடும் சேர்ந்திருக்கும் முறை.

25. வைதி₃க கர்மம் முதலான மூன்றுக்கும், "தத்" என்னும் ஶப்₃த₃த்தோடு சேர்த்தி; மோக்ஷஸாத₄னமான கர்மங்களுக்கு "தத்" என்னும் ஶப்₃த₃த்தோடு சேர்ந்திருக்கை லக்ஷணம்

26. "ஸத்" என்னும் சொல்லின் வழக்குகள் (ப்ரயோக₃ங்கள்).

27. வைதி₃க கர்மங்கள் முதலான மூன்றுக்கும் "ஸத்" என்னும் ஶப்₃த₃த்தோடு சேர்த்தி; ப்ராக்ருத ப₂ல ஸாத₄னங்களுக்கு "ஸத்" என்னும் ஶப்₃த₃த்தோடு சேர்ந்திருக்கை லக்ஷணம்

28. ஶாஸ்த்ரத்தையொட்டிச் செய்யப்படுவதானாலும் ஶ்ரத்₃தை₄யில்லாமல் செய்யப்படும் கர்மம் "அஸத்" என்று சொல்லப்படும். அதனால் எப்பலனும் இல்லை.

பதினேழாம் அத்தியாயத்தின் கீ₃தாஶ்லோகார்த்த₂ச் சுருக்கம் நிறைவுற்றது.

ஈஶ்வரே கர்த்ருதா பு₃த்₃தி₄: — கர்மங்களைச் செய்பவன் ஈஶ்வரனே என்னும் நினைவும், ஸத்வோபாதே₃யதா — ஸத்வ கு₃ணம் கைக்கொள்ளத்தக்கது என்னும் விஷயமும், ஸ்வகர்ம பரிணும: — (முற்கூறிய நினைவுடன் அநுஷ்டி₂க்கப் படும்) ஸாத்விக கர்மத்தின் ப₂லன் முக்தி என்பதும், ஶாஸ்த்ர ஸாரார்த்த₂: ச — இந்த கீ₃தா ஶாஸ்த்ரத்தின் ஸாரார்த்த₂மான ப₄க்தி ப்ரபத்திகளும், அந்திமே — கீ₃தை யின் கடைசியான பதினெட்டாம் அத்தியாயத்தில் உச்யதே — சொல்லப்படுகிறது.

வாதி₃கேஸரி ஜீயர் அருளிய

## ப₄க₃வத்₃கீ₃தை வெண்பா—அத்தியாயம் 18

### மோக்ஷோபதேச யோகம்

### அத்தியாயப் பொருளின் சுருக்கம்

செய்கருமத் தீசனே கர்த்தாவாச் சிந்திப்பு(ம்)
மெய்கருதுஞ் சத்துவத்தின் மெய்ப்பாடு - முய்கருமஞ்
சாருங் கதியுமிச் சாரத்தின் சாரமுமுற்
றோரும் பதினெட்டா மோத்து.

செய்கருமத்து ஈசனே கர்த்தாவா சிந்திப்பும்-அநுஷ்டி₂க் கப்படும் கர்மத்திற்கு ஸர்வேஶ்வரனே கர்த்தா என்னும் நினைவையும், மெய் கருதும் சத்துவத்தின் மெய்ப்பாடும் — உண்மையான ஜ்ஞானத்திற்குக் காரணமான ஸத்வ கு₃ணம் கைக்கொள்ளத்தக்கது என்பதையும், உய்கருமம் சாரும் கதியும் — முற்கூறிய நினைவுடன் அநுஷ்டி₂க்கப்படும் ஸாத்விககர்மத்தின் ப₂லன் முக்தி என்பதையும், இச்சாரத் தின் சாரமும்-ஶாஸ்த்ரங்களின் ஸாரமான இந்த கீ₃தையின் ஸாரம் ப₄க்தி ப்ரபத்திகளே என்பதையும், பதினெட்டாம் ஓத்து — (கீதையின்) பதினெட்டாம் அத்தியாயம், உற்று ஓரும் — நன்கு ஆராய்ந்துரைக்கும்.

## ॥ अथ अष्टादशोऽध्यायः ॥

भा ॥ अतीतेनाध्यायद्वयेन अभ्युदयनिःश्रेयससाधनभूतं वैदिकमेव यज्ञतपोदानादिकं कर्म, नान्यत्, वैदिकस्य च कर्मणस्सामान्यलक्षणं प्रणवान्वयः, तत्र मोक्षाभ्युदयसाधनयोर्भेदः तत्सच्छब्दनिर्देश्यत्वेन, मोक्षसाधनं च कर्म फलाभिसन्धिरहितं यज्ञादिकम्, तदा-

---

ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி தா3ஸன் இயற்றிய

கீதார்த்த2 விவரணம்

### பதினெட்டாம் அத்தியாயம்

### முன் அத்தியாயத்தோடு தொடர்பும் இவ்வத்தியாயார்த்தச் சுருக்கமும்

மூன்றுவது ஷட்கத்தில் 'ஸித்3த4த்ரிகம்' எனப்படும் முதல் மூன்று (15, 16, 17) அத்தியாயங்களில், சித், அசித், ஈஶ்வரன் என்னும் ஸித்3த4மான மூன்று தத்துவங்களைப்பற்றிய நிர்ணயம் செய்யப்பட்டது. ஸாத்4யமான விஷயங்களைப் பற்றிய 'ஸாத்4யத்ரிக'மான மேல் மூன்று அத்தியாயங்களுள், இதுவரை நடந்த 16,17 அத்தியாயங்களில் "வேதத்தையொட்டியிருக்கும் யஜ்ஞும் தவம் தா3னம் முதலான கர்மங்களே இவ்வுலகப் ப2லன்களுக்கும் மோக்ஷத்திற்கும் ஸாதனமாகின்றன. வேத3த்திற்கு முரணான கர்மங்களுக்கு இப்பெருமை இல்லை," என்றும், "வைதி3ககர்மம் அனைத்தோடும் சேர்ந்திருப்பதன் மூலம் ப்ரணவமாகிற ஓங்காரம் அக்கர்மங்களை மற்றகர்மங்களிலிருந்து பிரித்துக் காட்டும் லக்ஷணமாகிறது. அந்த வைதி3க கர்மங்களில் 'தத்' என்னும் ஶப்3த3த்தோடு சேர்ந்து அநுஷ்டி2க்கப்படுபவை மோக்ஷஸாத4நமாகவும், 'ஸத்' என்னும் ஶப்3த3த்தோடு சேர்த்து அநுஷ்டி2க்கப்படுபவை இவ்வுலகப்ப2லன்களுக்கு ஸாத4நமாகவுமாகின்றன" என்றும் காட்டப்பட்டது. இப்படிப் பிரிப்பதற்குக் காரணம் சென்ற அத்தியாயத்தில் 25, 27 ஶ்லோகங்களின் வ்யாக்2யாநத்தில் காட்டப்பட்டது. "ஓம் தத் ஸத் என்னும் மூன்று ஶப்3த3ங்களோடு சேர்த்து வைதி3க கர்மங்களை அநுஷ்டி2க்கும்போது அவை முறையே ஸாத்விகமாகவும் ராஜஸமாகவும் தாமஸமாகவும் ஆகின்றன" என்று சிலர் இந்த ஶப்3த3ங்களைப் பிரிப்பதற்கு எந்த ப்ரமாணமும்

रम्भश्च सत्त्वोद्रेकाद्भवति, सत्त्ववृद्धिश्च सात्त्विकाहारसेवया. इत्युक्तम्-अनन्तरं मोक्षसाधनतया निर्दिष्टयोस्त्यागसंन्यासयोरैक्यम्, त्यागस्य च स्वरूपम्, भगवति सर्वेश्वरे च सर्वकर्मणां कर्तृत्वानुसन्धानम्, सत्त्वरजस्तमसां कार्यवर्णनेन सत्त्वगुणस्यावश्योपादेयत्वम्, स्ववर्णोचितानां कर्मणां परमपुरुषाराधनभूतानां परमपुरुषप्राप्तिनिर्वर्तनप्रकारः, कृत्स्नस्य

---

இல்லை. "யஜ்ஞம் முதலான கர்மங்களே அவற்றுக்குரிய ப்ராக்ருத பலன்களில் பற்றில்லாமல் அநுஷ்டிக்கப்படும்போது மோக்ஷ ஸாதநமாகின்றன. ஸத்வகுணம் ரஜஸ்தமோ குணங்களைக் காட்டிலும் விஞ்சியிருக்கும்போது இத்தகைய கர்மங்களை ஜீவன் தொடங்குகிறான். ஸாத்விகமான ஆஹாரத்தைத் தொடர்ந்து உண்பதால் ஸத்வ குணம் வளர்கிறது" என்றும் இவ்விரு அத்யாயங்களில் நிரூபிக்கப்பட்டது. இனி, ஸாத்யத்ரிகத்தில் மூன்றும் அத்தியாயமான பதினெட்டாம் அத்தியாயத்திலே மோக்ஷஸாதநமாக உபநிஷத்துக்களில் கூறப்பட்ட 'ஸந்யாஸம்' 'த்யாகம்' என்னும் இரண்டும் ஒன்றே என்னும் விஷயமும், அந்த த்யாகத்தின் ஸ்வரூபமும், ஸகல கல்யாண குணங்களும் நிறைந்த பகவானான ஸர்வேச்வரனிடம் எல்லாக் கர்மங்களுக்கும் கர்த்ருத்வத்தை அநுஸந்திக்கவேண்டும் என்னும் விஷயமும், ஸத்வரஜஸ்தமோ குணங்களின் விளைவுகளைக் காணும்போது ஸத்வகுணமே அவச்யம் கைக்கொள்ளத்தக்கது என விளங்கும் என்பதும், தமது வர்ணத்திற்குரிய கர்மங்களைப் பரமபுருஷனுடைய ஆராதனமாக அனுஷ்டிப்பதால், பரமபுருஷனை அடைவதாகிற மோக்ஷம் கிடைக்கும் என்னும் விஷயமும், கீதாஶாஸ்த்ரம் முழுவதற்கும் பக்தியோகமே ஸாரார்த்தம் என்னும் விஷயமும் சொல்லப்படுகின்றன. இந்த அத்தியாயத்திற்குரிய கீதார்த்த ஸங்க்ரஹ ஶ்லோகத்தில், இங்கு பாஷ்யத்தில் கூறப்பட்ட த்யாகஸந்யாஸங்களின் ஐக்யமும், த்யாக ஸ்வரூபமும் சொல்லாமல் விட்டிருப்பதேன்? எனில் — ஸர்வேஶ்வரனிடம் கர்த்ருத்வத்தை அநுஸந்திப்பதற்கு உறுப்பாகவே அவை இங்கு சொல்லப்படுகையால், அதைச் சொன்ன போதே இவையும் சொல்லப்பட்டவையாம் என்னும் கருத்தாலே விடப்பட்டது. "ஸ்வதர்மஜ்ஞாந வைராக்ய ஸாத்ய பக்த்யேக கோசர:" (தன் (வர்ணாச்ரம) தர்ம ரூபமாயிருக்கும் கர்ம யோகத்தாலும் ஜ்ஞாந யோகத்தாலும் இதரவிஷயங்களில் பற்றின்மை

गीताशास्त्रस्य सारार्थौ भक्तियोग इत्येते प्रतिपाद्यन्ते । तत्र तावत्त्याग संन्यासयोः पृथक्त्वैकत्वनिर्णयाय स्वरूपनिर्णयाय चार्जुनः पृच्छति —

---

யாலும் உண்டாகும் பக்தியொன்றுக்கே விஷயமாகுமவனும்] என்று கீ3தார்த்த2 ஸங்க்3ரஹத்தின் முதல் ஶ்லோகத்தில் குறிக்கப்பட்ட ப4க்தியோக3மே ஶாஸ்த்ரத்தின் ஸாரார்த்த2மாய் இருக்கத் தக்கது என்னும் திருவுள்ளத்தாலே "ஶாஸ்த்ர ஸாரார்த்த2:" என்னும் பத3த்திற்கு ப4க்தியோக3ம் கீ3தாபா4ஷ்யத்தில் பொருளாகக் கொள்ளப்பட்டது. சரமஶ்லோகத்தின் பொருளான ஶரணாக3தியே இந்த ஶாஸ்த்ரத்தின் பரமஸாரார்த்த2மானாலும் "பரமம் கு3ஹ்யம்" [கீ3தை 18-68] என்று குறிப்பிட்டு, "அநதி4காரிகளுக்கு இதைச் சொல்லாதே" என்று கூறுவதன் மூலம் கண்ணன் இதை ஆசார்யோபதே3ஶத்தால் அறியத்தக்கதாக விதி4த்திருக்கிறபடியாலும், "அதி4காரிகளைப் பரீக்ஷியாமல் சரமஶ்லோகார்த்த2த்தை உபதேசிக்கக் கூடாது" என்று எம்பெருமானாருக்குச் சரமஶ்லோகார்த்த2த்தை உபதேசித்த திருக்கோட்டியூர் நம்பியின் நியமனத்தைப் பின்பற்றியும், சரம ஶ்லோகம் ப4க்திக்கு அங்க3மான ப்ரபத்தியைச் சொல்லுவதாக கீ3தாபா4ஷ்யத்தில் வ்யாக்2யானம் செய்யப்போகிறாராகையாலே, இங்கும் ப4க்தியோக3த்தை மாத்திரம் ஶாஸ்த்ரஸாரார்த்த2மாகக் குறிப்பிட்டார் என்று கண்டுகொள்வது. ஶரணாக3தி க3த்3யத்தில் சரம ஶ்லோகத்தை எடுத்து ஸ்வதந்த்ரப்ரபத்திபரமாகவே வ்யாக்2யானம் செய்கையால் இங்கு ஶாஸ்த்ரஸாரார்த்த2 ஶப்3த3த்திற்கு ஶரணாக3தியையும் பொருளாகக் கொள்வதில் குறையில்லை. இந்தப் பதினெட்டாம் அத்தியாயத்தின் தொடக்கத்தில், உபநிஷத்3வாக்யங்களில் மோக்ஷஸாத4நமாகக் குறிப்பிடப்படும் 'ஸந்யாஸம்' 'த்யாக3ம்' ஆகியவற்றைப்பற்றி அர்ஜுனன் ஒருகேள்வி கேட்கிறான். "ஸந்யாஸ ஶப்3த3ம் நாலாவது ஆஶ்ரமத்தைக் குறித்தும் வழங்கப்படுகிறது. த்யாக3ம் என்று அதற்குப் பொருள்கொள்ளவும் அந்த ஶப்3த3ம் இடமளிக்கிறது. ஆகையால் இந்த இரு ஶப்3த3ங்களும் வெவ்வேறானவையா? அல்லது இரண்டும் ஒன்றுதானா? வெவ்வேறாகில் அவற்றின் ஸ்வரூபம் என்ன? ஒன்றாகில் பலரால் பலவிதமாக வர்ணிக்கபடும் அந்த த்யாக3த்தின் உண்மையான ஸ்வரூபம் என்ன?" என்பது அர்ஜுனனின் கேள்விக்குக் கருத்தாகும். ஸ்வர்க்க3ம் முதலான இவ்வுலகப் ப2லன்களுக்கு ஸாத4நமாயிருக்கும் யஞ்ஜம் தானம் முதலான கர்மங்களே த்யாக3த்தோடு கூடியவையானால் மோக்ஷஸாத4நமாகின்றன என்று உபநிஷத்துக்கள் முழங்குகையால் இதை அவஶ்யம் தெரிந்துகொள்ளவேண்டும் என்னும் கருத்தாலே அர்ஜுனன் முதல் ஶ்லோகத்திலே இக்கேள்வியைக் கேட்கிறான்.

अर्जुन उवाच—

संन्यासस्य महाबाहो तत्त्वमिच्छामि वेदितुम्।
त्यागस्य च हृषीकेश पृथक्केशिनिषूदन ॥ १ ॥

அர்ஜுந உவாச—

1. ஸந்ந்யாஸஸ்ய மஹாபா3ஹோ தத்த்வமிச்சா2மி வேதி3தும்|
த்யாக3ஸ்ய ச ஹ்ருஷீகேஶ ப்ருத2க்கேஶிநிஷூத3ந ||

மஹாபா3ஹோ — தடக்கையனே! ஹ்ருஷீகேஶ — இந்த்3ரியங்களை நியமிக்கும் ஹ்ருஷீகேஶனே! கேஶிநிஷூத3ந— கேசி என்னும் அஸுரனைக் கொன்றவனே! ஸந்ந்யாஸஸ்ய — (உபநிஷத்துக்களில் மோக்ஷஸாத4நமாகக் குறிக்கப்படும்) ஸந்யாஸத்தைப் பற்றியும், த்யாக3ஸ்ய ச —த்யாக3த்தைப் பற்றியும், தத்த்வம்—உண்மையை, ப்ருத2க் வேதி3தும் — தனித்தனியானவையா (அல்லது ஒன்ரு) என அறிய, இச்சா2மி — விரும்புகிறேன்.

---

1. சன்யாசங் கன்மத்திற் சாருந் தியாகத்தில்
முன்யான் பிரிவொருமை முற்றறியேன் - பின்பின்னும்
தோன்ருது நீயிதனைச் சொல்லென்ருன் பார்த்தனதற்
கேன்றங் குரைத்தா னிறை.

கன்மத்தில் சாரும் — (மோக்ஷஸாத4நமான) கர்மத்தோடு சேர்ந்திருக்கும், சன்யாசம் தியாகத்தில் — ஸன்யாஸம் த்யாக3ம் ஆகிய இவ்விரண்டின், பிரிவு ஒருமை — வேற்றுமையையோ, ஐக்கியத்தையோ, யான் — நான், முன் முற்று அறியேன் — முதலில் முழுவதும் அறியமாட்டேன்; பின் பின்னும் தோன்ருது — பலவாருக ஆராய்ந்த பின்னும் (இவற்றின் ஸ்வரூபம்) எனக்கு விளங்கவில்லை; நீ — நீ, இதனைச்சொல் — இதை விளக்குவாய்; என்ருன் பார்த்தன் — என்று குந்திமகனுன அர்ஜுனன் கூறினன். அதற்கு ஏன்று — அக்கேள்வியை ஏற்றுக்கொண்டு, அங்கு- அவ்விடத்திலேயே, இறை உரைத்தான் — ஸர்வேஶ்வரனுன கண்ணன் பதிலுரைத்தான்.

भा ॥ त्यागसंन्यासौ हि मोक्षसाधनतया विहितौ— * न कर्मणा न प्रजया धनेन त्यागेनैके अमृतत्वमानशुः ... वेदान्तविज्ञानसुनिश्चितार्थास्संन्यासयोगाद्यतयश्शुद्धसत्त्वाः । ते ब्रह्मलोके तु परान्तकाले परामृतात्परिमुच्यन्ति सर्वे ॥ (ना) इत्यादिषु । अस्य संन्यासस्य त्या-

---

1. அர்ஜுனன் ஸந்யாஸத்யாகங்கள் ஒன்று வெவ்வேறு என்று அறிவதற்காகக் கேள்விகேட்கிருன் முதல் ஶ்லோகத்தில். (ஸந்ந்யாஸஸ்ய த்யாகஸ்ய ச தத்த்வம் ப்ருதக் வேதிதும் இச்சாமி) உபநிஷத் வாக்யங்களில் மோக்ஷஸாதநமாகக் கூறப்படும் ஸந்யாஸம் த்யாகம் ஆகிய இரண்டைப்பற்றிய உண்மையை, இவை தனித்தனியானவையா அல்லது ஒன்று,ஸ்வரூபம் என்ன என அறிய விரும்புகிறேன். "ந கர்மணு ந ப்ரஜயா தநேந த்யாகேநைகே அம்ருதத்வமாநஶு:" [தை-நா 10-21] [மோக்ஷத்தைக் கர்மத்தாலேயோ, குழந்தையாலேயோ, தனத்தாலேயோ அடைந்துவிட முடியாது. த்யாகத்தாலேயே சிலர் அதை அடைந்தனர்.] "வேதாந்தவிஜ்ஞாந ஸுநிஶ்சிதார்த்தாஸ் ஸந்ந்யாஸ யோகாத் யதயஶ்ஶுத்தஸத்த்வா:। தே ப்ரஹ்மலோகே து பராந்தகாலே ப்ராம்ருதாத் பரிமுச்யந்தி ஸர்வே॥"[தை-நா10-22] [புலனடக்கமுள்ளவர்களாய், வேதாந்தத்தாலே உண்டான அறிவாலே அறியவேண்டியவைகளை அறிந்தவர்கள் அனைவரும் ஸந்யாஸமாகிற யோகத்தாலே மனத்தில் குற்றம் நீங்கப் பெற்றவர்களாய், கடைசி ஶரீரத்தின் முடிவில் ப்ரஹ்மத்தின் உலகில் ஸம்ஸார ஸம்பந்தமற்ற மேலான பரமாத்மாவை அடைந்து ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலை அடைகிருர்கள்] முதலான உபநிஷத்வாக்யங்களில் த்யாகமும் ஸந்யாஸமும் மோக்ஷத்திற்கு ஸாதநமாக விதிக்கப்படுகின்றன. யஜ்ஞம் முதலான கர்மங்கள் ஸ்வர்க்கத்திற்கும் மோக்ஷத்திற்கும் பொதுவான ஸாதநமாயிருந்த போதிலும், 'த்யாகம்', 'ஸந்யாஸம்' ஆகியவற்ருேடு சேர்ந்திருந்தால் அவை மோக்ஷஸாதநமாகவே ஆகின்றன என்பது இந்த வேதவாக்கியங்களின் கருத்து. ஆகையால், இந்த த்யாகஸந்யாஸங்களின் முக்கியத்துவத்தை நோக்கும்

शब्दस्य च तत्त्वम् — याथात्म्यं पृथग्वेदितुमिच्छामि। अयमभिप्रायः — किमेतौ संन्यासत्यागशब्दौ पृथगर्थौ, उतैकार्थावेव? यदा पृथगर्थौ, तदा अनयोः पृथक्त्वेन स्वरूपं वेदितुमिच्छामि, एकत्वेऽपि तस्य स्वरूपं वक्तव्यमिति ॥ १ ॥

---

பொழுது இவை கர்மத்திற்கு அங்கமாயிருந்த போதிலும் இவற்றையே மோக்ஷஸாதநமென்று வழங்கலாம் என்று விளங்குகிறது. (தத்வம் வேதிதும் இச்சாமி) இவற்றைப்பற்றிய உண்மையை ஐயந்திரிபற அறிய விரும்புகிறேன். (ப்ருதக் வேதிதும் இச்சாமி) இவை தனித்தனியானவையா அல்லது ஒன்ரு என்பதையும் அறிய விரும்புகிறேன். இங்கு ''ப்ருதக்'' என்று ஸம்ஶயத்தின் ஒருபகுதியை எடுத்தது ஐக்யமாகிற மற்ருெரு பகுதிக்கும் உபலக்ஷணம். ''ஸந்யாஸத்தையும் த்யாகத்தையும் பற்றிய உண்மையைத் தனித்தனியாக அறிய விரும்புகிறேன்'' என்று இங்கு பொருள் கொள்ள முடியாது. ஏனெனில், இவை தனித்தனியானவை என்று அர்ஜுனன் அறிந்திருப்பதைக் காட்டும் பதம் எதுவும் இந்த ஶ்லோகத்தில் இல்லை. மேலே கண்ணன் பதிலுரைக்கும் போது இவை ஒன்றே என்று காட்டுகிருன். ஆகையால், ஸந்யாஸத்யாகங்களைப் பற்றிய உண்மையை அறியவிரும்புகிறேன் என்று இவ்வளவே இங்கு பொருள்; அல்லது ''ஸந்யாஸம் த்யாகம் என்னும் இவ்விருசொற்களும் வெவ்வேறு பொருளைக்குறிப்பனவையா? அல்லது ஒரே பொருளைக் குறிப்பவையா, வெவ்வேறு பொருளைக்குறிப்பவையானுல் அவற்றின் ஸ்வரூபத்தை அறிய விரும்புகிறேன்; ஒரே பொருளைக்குறிப்பதானுல் அதனுடைய ஸ்வரூபத்தை அறியவிரும்புகிறேன்'' என்றும் இக்கேள்விக்குக் கருத்துரைக்கலாம். (மஹாபாஹோ) என்று கண்ணனைத் தடக்கையனுகக் குறித்தது தன்னுடைய ஐயங்களுக்கெல்லாம் உதாரமாக (விரிவாக) பதில் சொல்ல வல்லவன் என்றும், (ஹ்ருஷீகேஶ) என்றது இந்த பதிலைத் தன்னுடைய நெஞ்சம் ஏற்கும்படி செய்யவல்லவன் என்றும், (கேஶிநிஷூதந) என்றது கேசியை அழித்தது போல் தன்னுடைய ஐயத்தையும் அழிக்க வல்லவன் என்றும் உணர்த்துகிறது. 1.

भा ॥ अथानयोरेकमेव स्वरूपम्, तच्चेदमिति निर्णेतुं वादि-
विप्रतिपत्तिं दर्शयन् श्रीभगवानुवाच—

श्रीभगवानुवाच —

काम्यानां कर्मणां न्यासं संन्यासं कवयो विदुः ।
सर्वकर्मफलत्यागं प्राहुस्त्यागं विचक्षणाः ॥ २ ॥

ஸ்ரீப4க3வாநுவாச—

2 காம்யாநாம் கர்மணாம் ந்யாஸம் ஸந்ந்யாஸம் கவயோ
விது3: ।
ஸர்வகர்மப2லத்யாக3ம் ப்ராஹுஸ் த்யாக3ம் விசக்ஷணா: ॥

கவய: — (சில) அறிவாளிகள், காம்யாநாம் கர்மணாம்— ஒரு ப2லனை விரும்பிச் செய்யப்படும் காம்ய கர்மங்களுடைய, ந்யாஸம் — ஸ்வரூபத்யாக3மே, ஸன்னியாசம் விது3:— ஸந்யாஸம் எனப்படுவதாகக் கூறுகிறார்கள், விசக்ஷணா: — மற்றும் சில அறிவாளிகள், ஸர்வ கர்ம ப2லத்யாக3ம் — எல்லாக் கர்மங்களின் பலனையும் கைவிடுவதே, த்யாக3ம் ப்ராஹு:— த்யாக3ம் எனப்படுவதாகக் கூறுகிறார்கள்.

---

2. காமக் கருமங்கள் கைவிடுதல் சன்னியாசம்
சேமத்த தென்று சிலருரைப்பர்— ஏமத்தா
லெக்கருமப் பேறு மிகழ்வு தியாகமெனச்
சிக்கெனவே சொல்வர் சிலர்.

சிலர் — சில அறிவாளிகள், காமக் கருமங்கள் கைவிடுதல் — ஒரு ப2லனை விரும்பிச் செய்யப்படும் காம்ய கர்மங்களை அறவே கைவிடுவதே, சேமத்தது சன்னியாசம்— நன்மையை விளைக்கும் ஸந்யாஸம், என்று உரைப்பர் — என்று கூறுவர்; சிலர்—மற்றும் சில அறிவாளிகள், ஏமத்தால் — (ஆத்மாவை) ரக்ஷிக்கும் பொருட்டு, எக்கருமப் பேறும் இகழ்வு தியாகம்-நித்யம் நைமித்திகம் காம்யம் என்னும் எல்லாக்கருமங்களின் ப2லங்களையும் கைவிடுவதே தியாகமாகும், என-என்று, சிக்கெனவே சொல்வர்— உறுதியாகக் கூறுவர்.

भा ।। केचन विद्वांसः काम्यानां कर्मणां न्यासं - स्वरूपत्यागं संन्यासं विदुः । केचिच्च विचक्षणाः नित्यानां नैमित्तिकानां काम्यानां च

2. முந்தின ஶ்லோகத்தில் 'ஸந்யாஸம்' என்றும் 'த்யாகம்' என்றும் உபநிஷத்துக்களில் சொல்லப்படுவது ஒன்றா வெவ்வேறா? அதன் ஸ்வரூபம் என்ன? என்று வினவினான் அர்ஜுனன். ஸந்யாஸமும் த்யாகமும் ஒன்றே என்பதையும் அதன்ஸ்வரூபம் இத்தகையது என்பதையும் நிர்ணயிப்பதற்காக அவற்றைப்பற்றி அறிவாளிகள் பலருடைய கருத்துக்களை இனி இரண்டு ஶ்லோகங்களிலே காட்டுகிறான் கண்ணன். பல அறிவாளிகள் இதைப் பற்றிப் பலவிதமாகக் கூறுகையாலே இது பற்றி ஐயம் ஏற்படுவது இயல்பு என்று காட்டுவதற்காக, பலருடைய கருத்துக்களை இவ்விரண்டு ஶ்லோகங்களிலே காட்டி, மேல் ஶ்லோகங்களில் தன் நிர்ணயத்தை விளக்குகிறான். முன் அத்தியாயங்களிலேயே இந்த த்யாகத்தைப் பற்றிக் கண்ணன் விளக்கியிருந்த போதிலும், பல அறிவாளிகள் பலவகையாகக் கூறுகையாலே அர்ஜுனன் அதுபற்றி இங்கு மறுபடியும் கேட்பது பொருந்தும் என்று அறியத்தக்கது. இங்கு ஒரே விஷயத்தைப் பற்றிப் பல அறிவாளிகளின் கருத்தைச் சொல்லும்போது ஶ்லோகத்தின் முற்பாதியில் ஸந்ந்யாஸஶப்தத்தாலும், பிற்பாதியில் த்யாகஶப்தத்தாலும் அதை எடுக்கையாலே இரண்டும் ஒன்று என்று விளங்குகிறது. ஆகையால், அவை வெவ்வேறு என்னும் ஐயத்திற்கு 'இல்லை' என்னும் பதில் தன்னடையே தெரிவிக்கப் பட்டதாகிறது. (கவய:) சில அறிவாளிகள். அடுத்த ஶ்லோகத்தில் "ஏகே" "அபரே" என்றிருப்பதைப் போலே இங்கும் "கேசந" (சில) என்னும் பதத்தை வருவித்துக் கொள்ளவேண்டும். இங்கு 'கவிகள்' என்றும், பிற்பாதியில் "விசக்ஷணர்கள்" என்றும் இவர்களை அறிவாளிகளாகக் காட்டியிருந்த போதிலும்; மேலே இவர்களுடைய கருத்துக்களைக் கண்ணன் மறுக்கப் போகிறானாகையாலே, இங்கு அறிவாளிகளாக இவர்களைக் கூறுவது இவர்கள் சொல்லும்கருத்து சரியானது என்னும் திருவுள்ளத்தாலல்ல என்றும், தம்முடைய அறிவு கொண்டு ஆராய்ந்து ஒரு கருத்தைத் தெரிவிக்கத்தகுதியுடையவர்கள் என்னும் திருவுள்ளத்தாலேயே என்றும் கொள்ள வேண்டும். (காம்யாநாம் கர்மணாம் ந்யாஸம் ஸந்ந்யாஸம் விது:) ஒரு பலனை விரும்பிச் செய்யப்படும் காம்யகர்மங்களின் ஸ்வ

सर्वेषां कर्मणां फलत्याग एव मोक्षशास्त्रेषु त्यागशब्दार्थ इति प्राहुः

ரூபத்யாக3மே ஸந்யாஸம் எனப்படுவதாகக் கூறுகிறார்கள். "காம்யாநாம் கர்மணாம்" என்று கூறுகையாலே, இவற்றினின்றும் வேறுபட்ட நித்ய நைமித்திக கர்மங்களைக் கைவிடலாகாது என்னும் இவர்களுடைய கருத்து வெளிப்படுகிறது. பிற்பாதியில் வேறு சிலருடைய கருத்தைக் கூறும் போது "ஸர்வகர்மப2லத்யாக3ம்" என்று கர்மங்களின் ப2லனைக் கைவிடுவதை மாத்திரம் கூறுகையாலே, இங்கு 'ந்யாஸம்' என்பது ஸ்வரூபத்யாக3த்தையே குறிக்கிறது என்று விளங்குகிறது. இங்கு காம்யகர்மங்களின் ஸ்வரூபத்யாக3த்தைக் கூறும் இவர்களுடைய கருத்து பின்வருமாறு:—நித்ய நைமித்திக கர்மங்களைச் செய்யாவிடில் தோ3ஷம் ஏற்படும்; மற்ற கர்மங்களை அநுஷ்டிக்கத் தகுதியின்மையும் உண்டாகும். ஆகையால் அவற்றை அநுஷ்டி2த்தே தீரவேண்டும். ஆனால், காம்யகர்மங்களுக்கு இப்படி அநுஷ்டி2த்தே தீரவேண்டும் என்னும் நிர்ப்பந்தம் இல்லை. ஸ்வர்க்க3ம் முதலான இக்காம்யகர்மங்களின் ப2லன்கள் மோக்ஷத்திற்குத் தடையாகுமாகையால், அப்ப2லன்களைப் பெறுவதற்காக இவற்றை முமுக்ஷுக்கள் அநுஷ்டி2க்க வேண்டியதில்லை. மோக்ஷத்தைப் பெறுவதற்கு உபாஸநம் முதலான ஸாத4நங்களே விதி4க்கப் பெற்றிருப்பதால் காம்ய கர்மங்களை மோக்ஷஸாத4நம் என்றும் கூறமுடியாது. "தமேதம் வேதா3நுவசநேந ப்3ராஹ்மணா விவிதி3ஷந்தி யஜ்ஞேந தா3நேந தபஸாऽநாஶகேந" [ப்3ருஹ 6-4-22] [அத்தகைய இந்தப்பரமாத்மாவை ப்3ராஹ்மஜ்ஞாநிகள் வேதா3த்4யயனத்தாலும், யஜ்ஞத்தாலும் தா3னத்தாலும் உபவாஸரூபமான தபஸ்ஸாலும் அறிய விரும்புகிறார்கள்] என்னும் வேத3 வாக்யத்தில் உபாஸநத்திற்கு அங்க3மாகவும் இக்கர்மங்கள் விதிக்கப்பட்டிருக்கையாலே இவற்றை விடக்கூடாது என்றும் சொல்லமுடியாது; அந்த வேத3வாக்யம் நித்ய நைமித்திக கர்மங்களை மட்டுமே உபாஸநத்திற்கு அங்க3மாகக் கூறுகிறது என்று கொள்வதே பொருத்தம். மோக்ஷத்திற்குத் தடையான ப2லன்களையுடைய இக்காம்ய கர்மங்களை உபாஸநத்திற்கு அங்க3மாகக் கூறுவதாகக்கொள்வது பொருத்தமல்ல. இதனாலேயே "ஸர்வாபேக்ஷா ச யஜ்ஞாதி3ஶ்ருதேः அஶ்வவத்" [ப்3ரஹ்மஸூ 3-4-26] [ப்ரயாணத்திற்கு ஸாத4னமான குதிரை தனக்குரிய சேணம் கடிவாளம் முதலிய பரிகரங்களை அபேக்ஷிப்பது

போலே, க்3ருஹஸ்த2ர்களிடம் ப்3ரஹ்மவித்3யை அக்3நிஹோத்ரம் முதலான எல்லாக் கர்மங்களையும் எதிர்பார்க்கிறது.''யஜ்ஞேந தா3ந நேந'' என்று தொடங்கும் வேதவாக்யத்திலே அப்படி ஓதப்படுகையால்] என்னும் ஸூத்ரம் ஆஶ்ரமத4ர்மங்களைக் குறிப்பதாக பா4ஷ்யமிடப்பட்டது. ஆகையால், முமுக்ஷுக்களுக்கு நரகம் போன்றவையான ஸ்வர்க்கம் முதலானவற்றை ஸாதி4த்துத் தரும் காம்யகர்மங்கள் முமுக்ஷுக்களால் அறவே கைவிடத்தக்கவை. (விசக்ஷணா: ஸர்வகர்ம ப2லத்யாக3ம் த்யாக3ம் ப்ராஹு:) வேறு சில அறிவாளிகள் நித்யம், நைமித்திகம், காம்யம் என்னும் மூன்று வகைப்பட்ட கர்மங்களின் ப2லனைக்கைவிடுவதே மோக்ஷ ஶாஸ்த்ரங்களில் த்யாக3ம் எனப்படுகிறது என்று கூறுகிறார்கள். இவர்களுடைய கருத்து பின்வருமாறு:— காம்யகர்மங்களின் பலன் மோக்ஷத்திற்குத் தடை என்னும் காரணத்தினாலன்றோ அவை கைவிடத்தக்கவையோ என்னும் ஐயம் ஏற்படுகிறது. அந்தப் ப2லனில் விருப்பத்தை விட்டுவிட்டால் அவையும் கைக்கொள்ளத்தக்கவையாகலாமன்றோ. ஒரு ப2லனும் இல்லாத கர்மத்தை எப்படி அநுஷ்டி2ப்பது? எனில்; நித்யநைமித்திக கர்மங்களைப் போலே காம்ய கர்மங்களிலும் எம்பெருமானுடைய ப்ரீதியையே ப2லனாகக்கொண்டு அநுஷ்டி2க்கலாமாகையாலே குறையில்லை. இப்படி வேத3த்தில் எங்கும் சொல்லவில்லையே எனில் ''யோ வா ஏதத3க்ஷரம் கா3ர்க்3யவிதி3த்வா ஜுஹோதி யஜதே தபஸ் தப்யதே ப3ஹூநி வர்ஷஸஹஸ்ராணி அந்தவதே3வாஸ்ய தத்3ப4வதி'' [ப்3ருஹ 5—8—10] [கா3ர்க்3யே! ஒருவன் இந்த அழியாத பரமபுருஷனை அறியாமல் இவ்வுலகில் பல்லாயிரக்கணக்கான வருஷங்கள் ஹோமங்களையும் யாகங்களையும் தவங்களையும் அநுஷ்டி2த்தாலும் அவனுக்கு அழிவுள்ள ப2லனே கிடைக்கும்] என்று தொடங்கும் வேதவாக்யத்தில் பரம புருஷனைப் பற்றிய அறிவோடு கூடிய கர்மங்கள் நித்யமான மோக்ஷப2லஸாத4நமாகும் என்றும், அவ்வறிவில்லாமல் செய்யப்படும் கர்மங்கள் அநித்யமான ப2லன்களுக்கே ஸாத4நம் என்றும் கூறப்பட்டிருக்கையாலே குறையில்லை ஆகையாலே நித்ய நைமித்திக கர்மங்களைப் போலே காம்யகர்மங்களையும் அறவே கைவிடக் கூடாது என்கை. இங்கு ஶ்லோகத்தின் இருபாதிகளிலும் ஒரே விஷயத்தைப்பற்றி இரு கருத்துக்கள் கூறப்படுகின்றன என்று தெளிவாகிறது. அப்படிக் கூறும்போது கைவிடுதல் என்னும் பொருளையுடைய ''ஸந்யாஸம்'' என்னும் பத3த்தை முற்பாதியிலும் ''த்யாக3ம்'' என்னும்

तत्र शास्त्रीयत्यागः काम्यकर्मस्वरूपविषयः, सर्वकर्मफलविषय इति विवादं प्रदर्शयन् एकत्र संन्यासशब्दमितरत्र त्यागशब्दं प्रयुक्तवान्, अतस्त्यागसंन्यासशब्दयोरेकार्थत्वमङ्गीकृतमिति ज्ञायते । तथा * निश्चयं शृणु मे तत्र त्यागे भरतसत्तम (४) इति त्यागशब्देनैव निर्णयवचनात् * नियतस्य तु संन्यासः कर्मणो नोपपद्यते । मोहात्तस्य परित्यागः तामसः परिकीर्तितः ॥ (७) * अनिष्टमिष्टं मिश्रं च त्रिविधं कर्मणः फलम् । भवत्यत्यागिनां प्रेत्य न तु संन्यासिनां क्वचित् ॥ (१२) इति परस्परपर्यायत्वादर्शनाच्च तयोरेकार्थत्वमङ्गीकृतमिति निश्चीयते ॥ २ ॥

---

பதத்தைப் பிற்பாதியிலும் சொல்லுகையாலே, இவ்விரு சப்தங்களும் ஒரே பொருளையுடையவை என்று கண்ணன் திருவுள்ளம் பற்றுகிறானென்று விளங்குகிறது. ஆகையால், இவ்விரண்டும் வெவ்வேறே என்னும் அர்ஜுனனுடைய ஐயம் தவிர்க்கப்பட்டதாகிறது. இதனால் இவ்விரண்டையும் வெவ்வேறாகக் கொண்டு சிலர் உரையிடுவது பொருந்தாது என்பது தெளிவு. இவ்விரண்டும் வெவ்வேறானால் "காம்யம் தவிர்ந்த மற்ற கர்மங்களின் பலத்யாகம்" என்றல்லவோ பிற்பாதியில் சொல்லப்பட்டிருக்கவேண்டும். "ஸர்வ கர்ம பலத்யாகம்" என்கையாலே, ஒன்றுக்கே காம்ய கர்மங்களின் ஸ்வரூபத்யாகத்தைப் பொருளாகச் சிலரும், மூவகைக் கர்மங்களுக்கும் பலத்யாகத்தைச் சிலரும் பொருளாகக் கருதுகிறார்கள் என்றே கொள்ளவேண்டும். நித்ய கர்மங்களுக்குப் பலன் உண்டோ? பலன் இருந்தால் தானே அந்தப்பலனைக் கைவிட முடியும் எனில்—"ப்ராஜாபத்யம் க்ருஹஸ்தாநாம்" [விஷ்ணு புராணம் 1-6-37] முதலானவிடங்களில் நித்ய கர்மங்களை அநுஷ்டிக்கும் க்ருஹஸ்தர்களுக்கும் ப்ராஜாபத்ய லோகம் பலனாகச் சொல்லப்பட்டிருக்கையாலே அவற்றுக்கும் பலத்யாகம் பொருந்தும். த்யாக ஸந்யாஸ சப்தங்கள் ஒரு பொருளையே குறிக்கின்றன என்பதை மேலே உள்ள ஸ்லோகங்களும் தெளிவாகக் காட்டுகின்றன.

त्याज्यं दोषवदित्येके कर्म प्राहुर्मनीषिणः ।
यज्ञदानतपः कर्म न त्याज्यमिति चापरे ॥ ३ ॥

3. த்யாஜ்யம் தோ₃ஷவதி₃த்யேகே கர்ம ப்ராஹுர் மநீஷிண:|
யஜ்ஞதா₃நதப: கர்ம ந த்யாஜ்யமிதி சாபரே ||

ஏகே மநீஷிண: — சில அறிவாளிகள், தோ₃ஷவத் கர்ம — தோ₃ஷங்களோடு கூடிய யாகம் முதலான கர்மம், த்யாஜ்யம் — (முமுக்ஷுக்களால்) கைவிடத்தக்கது, இதி ப்ராஹு: — என்று கூறினர்கள்; அபரே ச (மநீஷிண:) — வேறு சில அறிவாளிகள், யஜ்ஞதா₃நதப: கர்ம — யஜ்ஞம், தா₃னம், தவம் ஆகிய கர்மம், ந த்யாஜ்யம் — (முமுக்ஷுக்களாலும்) கைவிடத்தக்கதன்று, இதி (ப்ராஹு:) — என்று கூறினர்கள்.

---

(1)"நிஶ்சயம் ஶ்ருணு மே தத்ர த்யாகே₃ ப₄ரதஸத்தம" என்று நாலாம் ஶ்லோகத்தின் முற்பாதியில் கண்ணன் இது பற்றிய நிர்ணயத்தை அருளும்போது த்யாக₃ ஶப்₃த₃த்தையே பிரயோகித்திருக்கிறுனகை யாலே இரண்டு சப்தங்களாலும் சொல்லப்படுவது ஒன்றே என்று விளங்குகிறது. இங்கு இரண்டு விஷயங்களைப் பற்றிய விமர்ஶம் இருந்ததாகில் அவற்றில் ஒன்றைப்பற்றிய நிஶ்சயத்தைக் கூறுவது பொருந்தாதன்றே. (2) மேலும் ஏழாம்ஶ்லோகத்தில், "நியதஸ்ய து ஸந்ந்யாஸ: கர்மணோ நோபபத்₃யதே" என்று முற்பாதியில் கர்மஸந்யாஸத்தை எடுத்து "மோஹாத்தஸ்ய பரித்யாக₃: தாமஸ: பரிகீர்த்தித:" என்று பிற்பாதியில் அதையே கர்மபரித்யாக₃ம் என்று எடுத்தது; பனிரண்டாவது ஶ்லோகத்தில் "அநிஷ்டமிஷ்டம் மிஶ்ரம் சத்ரிவித₄ம் கர்மண: ப₂லம் | ப₄வத்யத்யாகி₃நாம் ப்ரேத்ய ந து ஸந்ந்யாஸிநாம் க்வசித் ||" என்று பிற்பாதியில் முதல் பாதத்தில் த்யாக₃த்தைச் செய்பவர்களாகக் கூறப்பட்டவர்களையே, இரண்டாம் பாத₃த்தில் ஸந்ந்யாஸத்தைச்செய்பவர்களாக எடுத்தது. இதிலிருந்து த்யாக₃ ஶப்₃த₃த்தையும், ஸந்ந்யாஸஶப்₃த₃த்தையும் கண்ணன்பர்யாயமான (ஒரேபொருளையுடைய) சொற்களாகவே திருவுள்ளம் பற்றுகிறுன் எனத்தெளிவாக விளங்குகிறது. ஆகையால், உபநிஷத்துக்களில் படிக்கப்பட்ட த்யாக₃ ஸந்யாஸஶப்₃த₃ங்கள் ஒரே பொருளுடையவையென்றே கண்ணனின் பதிலாகக் கொள்ளவேண்டும். 2.

भा ।। एके मनीषिणः — कापिला वैदिकाश्च तन्मतानु-

3. ஏதம்போற் கன்ம மிகழப் படுமென்று
போதர் சிலருரைப்பர் புந்தியான்—மீதென்று
மெச்சந் தவந்தான மீங்கிகழ்வ தல்லதென
நிச்சஞ் சிலருரைப்பர் நின்று.

போதர் சிலர் — சில அறிவாளிகள், கன்மம் — யாகமும் முதலிய கர்மம், ஏதம் போல் — காமம் கோபம் முதலான குற்றங்கள் போலே, இகழப்படும் — (முமுக்ஷுக்களால்) கைவிடத்தக்கது, என்று—என்று, புந்தியான் உரைப்பர் — தம் அறிவால் ஆராய்ந்து உரைப்பர்; (போதர்) சிலர் — வேறு சில அறிவாளிகள், எச்சம் தவம் தானம் — யஜ்ஞம் தவம் தானம் முதலான கர்மம், ஈங்கு — இவ்வுலகில், என்றும் மீது இகழ்வது அல்லது என — எக்காலத்திலும் மிகவும் கைவிடத்தக்கதல்ல என்று, நிச்சம் நின்று உரைப்பர் — உறுதியாக நிலைநின்று கூறுவர்.

3. முன் ஶ்லோகத்தில் காம்யகர்மங்கள் மோக்ஷமடைவதற்குத் தடையாயிருக்கையாலே அவை கைவிடத்தக்கவை என்று சிலர் கூறியதையும், 'பலத்யாகமும் செய்து விட்டால் தடையில்லாமையாலே எல்லாக் கர்மங்களும் கைக்கொள்ளத்தக்கவை' என்று சிலர் கூறியதையும் உரைத்தான்; இந்த ஶ்லோகத்தில் 'கர்ம ஸ்வரூபமே குற்றமுடையதாகையாலே கைவிடத்தக்கது' என்று சிலர் கூறியதையும், 'அப்படிக்குற்றமில்லாததாகையாலே கைக்கொள்ளத்தக்கதே' என்று சிலர் கூறியதையும் விளக்குகிருன். (ஏகே மநீஷிண:) சில அறிவாளிகள். 'யாகமும் முதலான கர்மங்கள் குற்றமுடையவையாகையாலே கைவிடத்தக்கவையென்று கபிலருடைய ஸாங்க்யய மதத்தைச் சேர்ந்தவர்களும், அவர்களைப் பின்பற்றும் சில வைதிகர்களும் கூறுகிருர்களாகையாலே அவர்களே 'சில அறிவாளிகள்' என்று இங்குக்குறிப்பிடப்படுகிருர்கள். ''த்ருஷ்டவதாநுஶ்ரவிக: ஸஹ்யவிஶுத்தி: க்ஷயாதிஶயயுக்த:'' [ஸாங்க்யதத்வகாரிகா-2] [உலகிற்காணப்படும் உயிர்வதையைப் போலே வேதத்தில் விதிக்கப்படும் உயிர்வதையும் தீயதே; அது அபரிசுத்தியும் மிகுந்த தாழ்வுகளும் உடையதன்ருே ] என்று

सारिणो रागादिदोषवद्बन्धकत्वात् सर्वं यज्ञादिकं कर्म मुमुक्षुणा त्याज्यमिति प्राहुः। अपरे पण्डिताः यज्ञादिकं कर्म न त्याज्यमिति प्राहुः ॥ ३ ॥

---

இவ்விஷயம் ஸாங்க்₂ய மதத்தைச் சேர்ந்த ஈஶ்வரகிருஷ்ணராலும் சொல்லப்பட்டது. "ஹிம்ஸா ச புருஷஸ்ய தோ₃ஷமாவக்ஷ்யதி க்ரதோஶ்ச உபகரிஷ்யதி" [ஸா-கௌ 2] [யாக₃பசுஹிம்ஸை புருஷனுக்கு தோ₃ஷத்தை விளைக்கும்; யாக₃த்திற்கு மிகவும் உதவியாகவுமிருக்கும்] என்று ஸாங்க்₂யதத்வ கௌமுதி₃யிலும், "ஸ்யாத்ஸ்வல்பஸ் ஸங்கர: ஸபரிஹர: ஸப்ரத்யவமர்ஶ:" [யோக₃ஸூத்ரபா₄ஷ்யம் 2-13] [(யாக₃பசுஹிம்ஸையால்) சிறிது தோ₃ஷமுண்டாகலாம்; பச்சாத்தாபத்தோடு கூடிய பிராயச்சித்தத்தால் அது எளிதில் போக்கடிக்கப்படலாம்] என்று பஞ்சசிகாசார்யராலும் இவ்விஷயம் விளக்கப்பட்டது இதுபற்றி இரண்டாம் அத்தியாயத்தின் வ்யாக்யானத்தில் பக்கம் 191 முதல் 194 முடிய விரிவாக விளக்கப்பட்டது இங்கு அனுஸந்தி₄க்கத்தக்கது. "ஸந்யாஸிகள் எல்லாக் கர்மங்களையும் அடியோடு கைவிடவேண்டும்" என்று கொள்ளும் அத்₃வைதிகளின் மதமும் இந்த ஶ்லோகத்தின் முற்பாதியாலே அவைதி₃கமென்று காட்டப்படுகிறதென்பது அறியத்தக்கது. (தோ₃ஷவத் கர்ம த்யாஜ்யம்) காமம், கோபம் முதலான குற்றங்கள் கைவிடத்தக்கவை என்பதை எப்படி அனைவரும் ஒப்புக்கொள்ளுகிறோமோ, அதுபோலே உயிர்வதை முதலான தோ₃ஷங்களையுடைய கர்மமும் கைவிடத்தக்கது என்று ஒப்புக்கொண்டே தீரவேண்டும். "தோ₃ஷவத்" என்றது 'தோ₃ஷம்போலே' என்றபடி. அன்றிக்கே, "தோ₃ஷவத் கர்ம" என்று கர்ம ஶப்₃த₃த்திற்கு விஶேஷணமாகவும் கொள்ளலாம். அதாவது—காமம் கோபம் ஹிம்ஸை முதலான குற்றங்களை உடையதாகையாலே கர்மம் அனைத்தும் இவனுக்கு ஸம்ஸாரப₃ந்த₄த்தை விளைக்கும்; ஆகையால் அது கைவிடத்தக்கது என்றபடி. (கர்ம த்யாஜ்யம் இதி ப்ராஹு:) யஜ்ஞம், தா₃னம், தவம் ஆகிய எல்லா விஹிதகர்மமும் மோக்ஷத்தை விரும்புகிறவர்களால் கைவிடத்தக்கதே என்று கூறினர்கள். இங்கு "கர்ம" என்று பொதுவாகச் சொல்லியிருந்தபோதிலும், பிற்பாதியில் "யஜ்ஞதா₃நதப: கர்ம" என்று விசேஷிக்

निश्चयं शृणु मे तत्र त्यागे भरतसत्तम ।
त्यागो हि पुरुषव्याघ्र त्रिविधः संप्रकीर्तितः ॥ ४ ॥

4. நிஶ்சயம் ஶ்ருணு மே தத்ர த்யாகே₃ ப₄ரதஸத்தம |
த்யாகோ₃ ஹி புருஷ வ்யாக்₄ர த்ரிவித₄ஸ் ஸம்ப்ரகீர்த்தித: ||

ப₄ரதஸத்தம — ப₄ரதகுலத்தில் உதித்தவர்களில் சிறந்தவனே! தத்ர த்யாகே₃ — இப்படிக் கருத்து வேற்றுமைகளுக்குட்பட்ட த்யாக₃ விஷயத்தில், நிஶ்சயம் — நிர்ணயத்தை, மே ஶ்ருணு — என்னிடமிருந்து கேட்பாயாக; புருஷ வ்யாக்₄ர — மனிதர் தலைவனே! த்யாக₃: — (கர்மங்களைச் செய்யும் போது அநுஸந்தி₄க்கப்படும்) த்யாக₃மானது, த்ரிவித₄: — மூன்று வகைப்பட்டதென்று, ஸம்ப்ரகீர்த்தித: ஹி — (என்றால்) முன்னமே சொல்லப்பட்டதன்றோ.

---

கையாலே ஶாஸ்த்ரங்களில் விதி₄க்கப்பட்ட கர்மங்களையே குறிக்கிறது என்று கொள்ளவேண்டும். நித்யம் அல்லது நைமித்திகம் அல்லது காம்யம் என்று விசேஷிக்காமையாலும், காம்ய கர்மத்தை மாத்திரம் கொண்டால் முன் ஶ்லோகத்தின் முற்பாதியோடு புனருக்தி வருகையாலும் இங்கு மூவகைக் கருமமுமே குறிக்கப்படுவதாகக் கொள்ளவேண்டும். அனைவராலுமே இக்கர்மங்கள் கைவிடத்தக்கவை என்று கொண்டால், அவற்றை விதி₄த்திருக்கும் ஶாஸ்த்ரங்கள் பயனற்றவை ஆகுமாகையால், மோக்ஷத்தை விரும்புகிறவர்களால் கைவிடத்தக்கது என்று கொள்ளப்பட்டது. இனி, ஶ்லோகத்தின் பிற்பாதியிலே தானுகந்த பக்ஷத்தை விளக்குகிறான் — (அபரே யஜ்ஞதா₃நதப: கர்ம ந த்யாஜ்யமிதி ப்ராஹு:) மற்றும் சில பேரறிவாளர்கள் யாக₃ம், தா₃னம், தவம் ஆகிய கர்மம் கைவிடத்தக்கதன்று என்றுசொன்னார்கள். ஐந்தாவது ஶ்லோகத்திலே "யஜ்ஞதா₃நதப: கர்ம ந த்யாஜ்யம் கார்யமேவ தத்" என்னும் முற்பாதியில் கண்ணன் இந்தப்பக்ஷத்தையே தன்னுடைய நிச்சயமாகக் கூறுகிறானாகையாலே, இங்கு "அபரே" என்றதற்குப் "பண்டி₃தர்கள்" என்று பா₄ஷ்யத்தில் விளக்கமளிக்கப்பட்டுள்ளது. பண்டி₃தர்களாவார் — இன்னது கைவிடத்தக்கது, இன்னது கைக்கொள்ளத்தக்கது என்று உள்ளபடி பிரித்தறியக் கூடியவர்களன்றோ.

भा ॥ तत्र — एवं वादिविप्रतिपन्ने त्यागे — त्यागविषये निश्चयं मत्तः शृणु; त्यागः क्रियमाणेष्वेव वैदिकेषु कर्मसु फलविषयतया, कर्म-

4. அந்தத் தியாகத் தறுதியினை யென்பாற்கேள்
சந்ததிகள் பாரதர்க டந்தலைவா — முந்துறவே
யான்பகர்ந்தேன் மூன்றுவகை யென்றே தியாகத்தைத்
தான்பயனச் சங்கந் தவிர்ந்து.

பாரதர்கள் சந்ததிகள் தம் தலைவா — பரத குலத்தில் உதித்தவர்களுக்குத் தலைவனே! அந்தத்தியாகத்து — (இப்படிக் கருத்துவேற்றுமைக்குட்பட்ட) அந்தத் தியாக விஷயத்தில், அறுதியினை — நிர்ணயத்தை, என்பால் கேள் — என்னிடம் கேட்பாயாக; தியாகத்தை — முற்கூறிய தியாகத்தை, தான் பயன் அச்சங்கம் தவிர்ந்து — கர்மம், பயன், செயல்பாடு ஆகிய மூன்றிலும் தன்னுடையது என்னும் பற்றை விடுகையாலே, மூன்றுவகை என்றே — மூன்று வகைப்பட்டது என்றே, யான் முந்துறவே பகர்ந்தேன் — நான் முன்னமே கூறினேன்.

4. முன் இரு ஶ்லோகங்களிலும் ஸந்யாஸம் எனப்படும் த்யாகத்தைப் பற்றி வாதிகள் பலர் பல் கருத்து வேறுபாடுகள் கொள்வதை விளக்கினான். இந்த ஶ்லோகத்திலிருந்து தொடங்கி, சென்ற ஶ்லோகத்தின் இறுதியில் சொல்லப்பட்ட கருத்தே தன்னுடைய முடிவாகும் என்பதை விரிவாக விளக்குகிறான். அப்படி விளக்கும் போது தான் மூன்றும் அத்தியாயத்திலேயே த்யாகம் மூன்றுவகைப்பட்டது என்று காட்டியிருப்பதை நினைவு படுத்துகிறான் இந்த ஶ்லோகத்தில். (தத்ர த்யாகே நிஶ்சயம்) இவ்வண்ணமாக, சென்ற இரண்டு ஶ்லோகங்களில் வாதிகளின் கருத்து வேற்றுமைகளுக்கு உட்பட்டதாக விளக்கப்பட்ட த்யாக விஷயத்தில் நிர்ணயத்தை. 'த்யாகவிஷயத்தில் நிர்ணயத்தை' என்று கூறுகையாலே, முன்ஶ்லோகங்களில் வாதிகளின் பல வகைக் கருத்துக்களைக் கூறியிருப்பதால் இவ்விஷயத்தில் ஸந்தேஹம் ஏற்பட்டிருக்கிறது என்பதும், அந்த ஸந்தேஹத்தை நல்ல யுக்திகளைக்கொண்டு தீர்த்து உண்மையை இனி வரும்

विषयतया कर्तृत्वविषयतया च पूर्वमेव हि मया त्रिविधस्संप्रकीर्तितः — मयि सर्वाणि कर्माणि संन्यस्याध्यात्मचेतसा । निराशीर्निर्ममो भूत्वा युध्यस्व विगतज्वरः ॥ (३-३०) इति । कर्मजन्यं स्वर्गादिकं फलं

---

ஶ்லோகங்களில் தான்முடிவு கட்டப்போவதும் உணர்த்தப்படு கிறது. (மே ஶ்ருணு) என்னிடமிருந்து கேட்பாயாக. "த்யாகே₃ மே நிஶ்சயம் ஶ்ருணு" என்று கூட்டி, 'த்யாக₃விஷயத்தில் என்னுடைய நிச்சயத்தைக் கேட்பாயாக' என்று பொருள் கொண்டால், முன் எடுக்கப்பட்ட கருத்துக்கள் அனைத்தையுங் காட்டிலும் வேறுபட்டது கண்ணனின் நிர்ணயம் என்று தோன்றும்; உண்மையில் சென்ற ஶ்லோகத்தின் இறுதியில் கூறப்பட்டதே கண்ணனின் நிர்ணயம் ஆகையாலே "த்யாகே₃ நிஶ்சயம் மே ஶ்ருணு" என்று கூட்டி "த்யாக₃விஷயத்தில் நிர்ண யத்தை என்னிடமிருந்து கேட்பாயாக" என்று பொருள் கொள்ள வேண்டும். (மே ஶ்ருணு) ப்₄ரமம் (மயக்கம்), ப்ரமாத₃ம் (கவன மின்மை), விப்ரலிப்ஸை (வஞ்சிப்பதில் விருப்பம்) முதலான குற்றங்கள் இல்லாத என்னிடமிருந்து கேட்பாயாக என்று கருத்து. இனி, ஶ்லோகத்தின் பிற்பாதியில் தான் ஏற்கனவே மூன்றும் அத்தி யாயத்தில் த்யாக₃ம் மூன்று வகைப்பட்டது என்று விளக்கியிருப் பதை நினைவுபடுத்துகிறுன்-(த்யாக₃: த்ரிவித₄: ஸம்ப்ரகீர்த்தித: ஹி) த்யாக₃ம் முன்னமே மூன்று வகைப்பட்டது என்று என்னால் விளக்கப்பட்டுள்ளதன்றோ, எங்கே விளக்கப்பட்டது? எப்படி விளக்கப்பட்டது? எனில்:

"மயி ஸர்வாணி கர்மாணி ஸந்ந்யஸ்யாத்₄யாத்ம சேதஸா |
நிராஶீர் நிர்மமோ பூ₄த்வா யுத்₄யஸ்வ விக₃தஜ்வர:||"

[கீ₃தை 3-30]

[ஆத்மாவைப் பற்றிய அறிவோடு (அநுஸந்த₄ானத்தோடு) எல்லாக் கர்மங்களையும் ஸர்வாந்தர்யாமியான என்னிடத்தில் நன்கு வைத்து, கர்ம ப₂லத்தில் விருப்பற்றவனுகவும், கர்மங்களில் மம காரமும் அற்றவனுகவும் ஆகி, அநாதி₃ பாபத்தைப்பற்றிக் கவலைப் படாதவனுய்ப் போர் புரிவாயாக] என்னுமிடத்தில் இது விளக்கப் பட்டது, இந்த ஶ்லோகத்தில் வைதி₃க கர்மங்களைச் செய்யும் போது அவற்றின் ப₂லனைப்பற்றியும், அக்கர்மங்களைப்பற்றியும், அவற்றின் கர்த்ருத்வமாகிற செயல் புரியும் தன்மையைப் பற்றியும்

मम न स्यादिति फलत्यागः; मदीयफलसाधनतया मदीयमिदं कर्मेति कर्मणि ममतायाः परित्यागः कर्मविषयस्त्यागः; सर्वेश्वरे कर्तृत्वानुसंधानेनात्मनः कर्तृतात्यागः कर्तृत्वविषयस्त्यागः ॥ ४ ॥

---

மூன்று வகைப்பட்ட த்யாக3 மனப்பான்மையோடு அக்கர்மங்களை அனுஷ்டிக்கவேண்டும் என்று சொல்லப்பட்டதன்றோ, இந்த மூன்று வகைப்பட்ட த்யாக3ங்களில் "இக்கர்மத்தால் ஏற்படும் ஸ்வர்க்க3ம் முதலான ப2லன்கள் எனக்குத் தேவையில்லை" என்று எண்ணுவது ப2லத்யாக3மாகும்; "என்னுடைய ப2லனுக்கு ஸாத4னமாக என்னுடைய இக்கர்மம் அனுஷ்டி2க்கப்படுகிறது" என்னும் மமகாரமாகிற எனதுஎன்னும் எண்ணத்தை விடுகை மமதாத்யாக3மாகும்; இதுவே கர்மத்தைப் பற்றிய த்யாக3மனப்பான்மையாகும்; "இக்கர்மத்தை ஸர்வேஶ்வரன் செய்விக்கிறானேயொழிய நான் ஸ்வதந்த்ரமாகச் செய்யவில்லை" என்று கர்த்ருத்வத்தைத் தியாகம் செய்வது (ஸர்வேஶ்வரனிடம் அநுஸந்திப்பது) கர்த்ருத்வத்யாக3மாகும். (த்ரிவித4: ஸம்ப்ரகீர்த்தித: ஹி) 'ஸம்ப்ரகீர்த்தித' ஶப்3த3த்திற்கு 'முன்னமே சொல்லப்பட்டது' என்று பொருள் கொள்வதே ஸ்வரஸமாகையாலும், "ஹி" ஶப்3த3த்தாலே கேட்பவனுக்கும் இது ஏற்கனவே தெரிந்தது என்று உணர்த்தப்படுகையாலும் இது மூன்றும் அத்தியாயத்தில் சொல்லப்பட்ட த்யாக3 மனப்பான்மையைக் குறிக்கிறது என்று கொள்ளவேண்டுமேயொழிய, இனிமேல் சொல்லப்போகும் ஸாத்விக ராஜஸ தாமஸ த்யாக3ங்களைச் சொல்லுவதாகக் கொள்வது பொருந்தாது. இந்த மூன்று வகைப்பட்ட த்யாகம் இனிச்சொல்லப்போகும் ஸாத்விக த்யாக3த்தில் அடங்கியது என்பதும் அறியத்தக்கது. இந்த மூன்று வகைப்பட்ட த்யாக3ங்களைப் பற்றிய விளக்கங்களும் ஆக்ஷேபஸமாதா4னங்களும் முன் எடுக்கப்பட்ட கீ3தை [3-30] ஶ்லோக வ்யாக்யானத்திலேயேகொடுக்கப்பட்டன. அவை இங்கு அனுஸந்திக்கத்தக்கவை. (ப4ரத ஸத்தம) ப4ரதகுலத்தில் உதித்தவர்களின் தலைவனே! (புருஷ வ்யாக்4ர) மனிதர்கள் அனைவரிலும் சிறந்தவனே! இவ்வண்ணமே நீ ப4ரத குலத்தில் உதித்தவர்களிலும் மனித ஸமூஹம் அனைத்திலும் தலை சிறந்தவனாய் இருப்பதால் நீ உனக்குரிய கர்மமாகிற யுத்3த4த்தை முற்கூறிய மூன்றுவிதமான த்யாக3மனப்பான்மையோடு அனுஷ்டி2க்க வேண்டும் என்று கருத்து. 4.

यज्ञदानतपः कर्म न त्याज्यं कार्यमेव तत् ।

भा ॥ यज्ञदानतपः प्रभृति वैदिकं कर्म मुमुक्षुणा न कदाचिदपि त्याज्यम्, अपि त्वाप्रयाणादहरहः कार्यमेव ॥

भा ॥ कुतः?

यज्ञो दानं तपश्चैव पावनानि मनीषिणाम् ॥ ५ ॥

5. யஜ்ஞதா₃நதப: கர்ம ந த்யாஜ்யம் கார்யமேவ தத் ।
யஜ்ஞோ தா₃நம் தபஶ்சைவ பாவநாநி மநீஷிணாம் ॥

யஜ்ஞ தா₃ந தப: கர்ம — யாக₃ம், தா₃னம், தவம் முதலான வைதி₃க கர்மம், ந த்யாஜ்யம் — (முமுக்ஷுக்களால்) கைவிடத்தக்கதன்று; தத் — அக்கர்மம், கார்யம் ஏவ — (கடைசி வரை) அநுஷ்டி₂க்கத்தக்கதேயாகும்; (ஏனெனில்) யஜ்ஞ: தா₃நம் தப: ச — யாக₃ம், தா₃னம், தவம் முதலியகர்மம், மநீஷிணாம் — மோக்ஷத்தை விரும்பும் உபாஸகர்களுக்கு, பாவநாநி ஏவ — (உபாஸனம் நிறைவடைவதற்குத் தடையான பழவினைகளைப் போக்கும்) பாவநகர்மங்களேயாகும்.

---

5. பாவியசீ ரெச்சம் பயிலுந் தவந்தான
மேவியிக ழாதென்று முற்றியல — மேவினவை
யாவன்பா லாங்கவைதா ஞன வறிவினர்க்கும்
பாவனமா மென்றும் பயின்று.

பாவிய சீர் எச்சம் — ( முற்கூறிய ) தியாகமனப்பான்மையோடுகூடிய யாக₃மும், பயிலும் தவம் — (அந்த மனப்பான்மையோடு) அனுஷ்டிக்கப்படும் தவம், தானம் — (அத்தகைய) தா₃னம் முதலிய கர்மங்கள், மேவி இகழாது — அடியோடு கைவிடாது, என்றும் முற்று இயல மேவினவை — எப்போதும் முழுவதும் அனுஷ்டி₂க்கத்தக்கவை; ஆங்கு அவை தான் — அப்படிப்பட்ட கர்மங்கள், அன்பால் ஆன அறிவினர்க்கும் — அன்பாகக் கனிந்த அறிவையுடைய உபாஸகர்களுக்கும், பயின்று — அனுஷ்டிப்பதாலே, என்றும் பாவனமாம் — (எப்போதும் உபாஸனம் நிறைவடைவதற்குத் தடையான பாவங்களைப்போக்கும்) பரிசுத்தச் செயல்களாம்.

भा ॥ यज्ञदानतपःप्रभृतीनि वर्णाश्रमसंबन्धीनि कर्माणि मनीषिणां

5. முதல் ஷட்கத்தில் விளக்கப்பெற்ற மூன்று வகைப்பட்ட த்யாகங்கள் சென்ற ஸ்லோகத்தில் அநுவதிக்கப்பட்டன. இந்த ஸ்லோகத்தில் அந்த அநுவாதமும் கர்மஸ்வருபத்யாகமும் தன்னால் ஒப்புக்கொள்ளப்படவில்லை என்று காட்டுவதற்காகவே என்று விளக்கப்படுகிறது. (யஜ்ஞதாநதப: கர்ம ந த்யாஜ்யம்) யஜ்ஞம், தானம், தவம் முதலான வேதத்தில் சொல்லப்பட்ட கர்மங்கள் மோக்ஷத்தை விரும்புகின்றவனால் ஒருநாளும் கைவிடத்தக்கவை அல்ல. இங்கு யஜ்ஞம் தானம் தவம் என்னும் மூன்றைச் சொன்னது வேதத்தில் சொல்லப்பட்ட எல்லாக் கர்மங்களுக்கும் உபலக்ஷணம். பிற்பாதியில் இந்த மூன்றையும் எடுக்கும்போது "ச"காரத்தாலே இவ்விஷயம் உணர்த்தப்பட்டது. சிலர் ப்ரஹ்மத்தை அறிவதில் விருப்பம் ஏற்படுவதற்கு முன் யஜ்ஞம் முதலான கர்மங்கள் அநுஷ்டிக்க வேண்டியவை என்றும், அதற்குப்பின் அவை கைவிடத் தக்கவை என்றும் கூறுகிறார்கள். இங்கு "ந த்யாஜ்யம்" என்று பொதுவாகக் கூறியிருக்கையாலும், "ஸ கல்வேவம் வர்த்தயந் யாவதாயுஷம்" [சாந் 8-15-10] என்று உபநிஷத்வாக்யத்தில் உபாஸனமும் அதன் அங்கமான கர்மமும் ஆயுள் உள்ளவரை அநுஷ்டிக்கத்தக்கது என்று கூறுகையாலும் கர்மம் ஒருபோதும் கைவிடத்தக்கதல்ல என்றும், ஆயுள் உள்ளவரை அநுஷ்டிக்கத் தக்கதே என்றும் விளங்குகிறது. இதையே வலியுறுத்திக் கூறுகிறான் அடுத்தபடியாக— (கார்யமேவ தத்) கர்மம் ஆயுள் உள்ளவரை தினந்தோறும் அநுஷ்டிக்கத்தக்கதே. முன் எடுத்த சாந்தோக்ய உபநிஷத்வாக்யத்திலும் இவ்வண்ணமே கூறப்பட்டது. "ஆப்ரயாணாத் தத்ராபி ஹி த்ருஷ்டம்" [4-1-12] [(உபாஸனமும், அதன் அங்கமான கர்மமும்) ஆயுள் உள்ளவரை அநுஷ்டிக்கத்தக்கதே. அவ்வண்ணமேயன்றோ வேதமும் ஓதுகிறது.] என்று ப்ரஹ்மஸூத்ரத்திலும் சொல்லப்பட்டது. ஆகையால், "கர்மம் ஆயுள் உள்ளவரையில் தினந்தோறும் விதிக்கப்பட்ட காலங்களில் அநுஷ்டிக்கத்தக்கது" என்பதே தன் ஸித்தாந்தம் என்று கண்ணன் காட்டுகிறான். இதன் மேல் கர்மஸ்வருபத்யாகத்தைச் சொல்லுகிறவர்கள் சில ஆக்ஷேபங்களை எழுப்புகிறார்கள். அவையாவன:— "ப்ரஹ்மஜ்ஞானத்தில் ஊன்றியிருப்பவனுக்கு அதோடு தொடர்பேயில்லாத

—मननशीलानां पावनानि । मननमुपासनम्; मुमुक्षूणां यावज्जीवमुपासनं कुर्वतामुपासननिष्पत्तिविरोधिप्राचीनकर्मविनाशनानीत्यर्थः ॥ ५ ॥

---

கர்மம் எதற்காக அநுஷ்டிக்கப்படவேண்டும்? கர்ம ஜ்ஞாநங்கள் இரண்டும் சேர்ந்தே மோக்ஷஸாதநம் என்று ஒப்புக்கொள்ளாமையால் கர்மம் மோக்ஷத்திற்கு உதவி புரிகிறது என்று கூற முடியாது. உண்மையறிவைக் கர்மம் விளைக்கிறது என்று சொல்லலாமோ என்றால், உபப்3ரும்ஹணங்களோடு சேர்ந்த ஶாஸ்த்ரத்திலிருந்தே உண்மையறிவு விளைகின்றதாகையாலே அதற்கும் கர்மம் தேவையில்லை. இந்த உண்மையறிவை இடைவிடாமல் சிந்திக்கலாகிற உபாஸனத்தின் பொருட்டுக் கர்மம் வேண்டுமோவென்று பார்த்தால் இந்த உபாஸனமும் உறுதியான ஸம்ஸ்காரத்தினாலேயே விளையுமாகையால் அதற்கும் கர்மம் தேவையில்லை. கர்மத்தால் விளைவதாய், முமுக்ஷுவுக்குத் தேவையான வேறு எந்தப் பயனையும் காண்கின்றிலோம். ஒரு பயனில்லாமல் மந்த3 பு3த்3தி4யுள்ளவன்கூட ஒரு கார்யத்தைச் செய்யமாட்டான்'' என்பவை அவ்வாக்ஷேபங்கள். இவ்வாக்ஷேபங்களுக்கு ஶ்லோகத்தின் பிற்பாதியாலே கண்ணன் பதிலுரைக்கிறான். (யஜ்ஞோ தா3நம் தபஶ்சைவ பாவநாநி மநீஷிணாம்) யஜ்ஞம், தா3நம், தவம் முதலான அவரவர் வர்ணாஶ்ரமத4ர்மங்களுக்குரிய கர்மங்கள் உபாஸகர்களுக்குப் பரிசுத்தியை விளைப்பவை. யஜ்ஞ தா3ன தபஶ் ஶப்3த3ங்களுக்குப் பின்பு உள்ள சகாரம் இம்மூன்று தவிர்ந்த மற்ற வைதி3க கர்மங்களைக் கூட்டுகிறது. ஆக, நித்யமாகவும், நைமித்திகமாகவும் உள்ள எல்லாக்கர்மங்களுமே கைவிடத்தகாதவை என்று இங்குக் கூறுகையால், 'ஜ்ஞாநியான ஸந்யாஸி அவற்றைவிட வேண்டும்' என்னும் அத்3வைதமதம் தள்ளப்பட்டதாயிற்று. ''மநஸ: ஈஷிண: மநீஷிண:'' என்னும் வ்யுத்பத்தியாலே இங்கு ''மநீஷி'' ஶப்3த3ம் எப்போதும் மனனம் செய்து கொண்டிருப்பவர்களையே காட்டுகிறது. ஆனால் இங்கு படிக்கப்படும் ''மனனம்'' ஶ்ரவணத்தை யொட்டிச் சொல்லப்படும் ''மனனம்'' அன்று. ப்ரகரணத்தையொட்டி இது உபாஸனத்தையே குறிக்கிறது. ஆக, உபாஸகர்களாகிற ப்3ரஹ்ம வித்3யா நிஷ்ட2ர்களுக்கு, கர்மம் பரிசுத்தியை விளைக்கிறது என்று சொல்லப்பட்டதாயிற்று. இனி 'அவர்களுக்கு என்ன அபரிசுத்தி இருந்து அதை இது போக்குகிறது?' என்னும் கேள்வி எழுகிறது. ''ப்ராயணாந்தமோங்காரம் அபி4த்4யா

தாமஸம். தாம-கொண்டாட்டம் — ஸாமம் = hவட்டம்.



एतान्यपि तु कर्माणि सङ्गं त्यक्त्वा फलानि च।
कर्तव्यानीति मे पार्थ निश्चितं मतमुत्तमम् ॥ ६ ॥

6. ஏதாந்யபி து கர்மாணி ஸங்க₃ம் த்யக்த்வா ப₂லாநி ச |
கர்த்தவ்யாநீதி மே பார்த்த₂ நிஶ்சிதம் மதமுத்தமம் ||

பார்த்த₂ — குந்தீபுத்திரனே! ஏதாநி கர்மாணி அபிது — (உபாஸனத்தைப் போலே) இந்தக்கர்மங்களும், ஸங்க₃ம் — என்னுடையது என்னும் எண்ணத்தையும், ப₂லாநி ச-பலத்தில் விருப்பத்தையும், த்யக்த்வா — விட்டு, 'கர்த்தவ்யாநி- (முமுக்ஷுக்களால்) அநுஷ்டி₂க்கப்படவேண்டியவையே, இதி — என்பது, மே — என்னுடைய, நிஶ்சிதம் உத்தமம் மதம் — உறுதியானதும் மிகமேலானதுமான நிர்ணயம்.

---

யீத'' [ப்ரஶ்ந 5-5] [ஆயுள் உள்ளவரையில் ஓங்காரத்தைத் தியானிக்க வேண்டும்] என்று தொடங்கி, ''ய: புநரேதம் த்ரிமாத்ரேணோமித்யேதேநைவாக்ஷரேண பரம் புருஷமபி₄த்₄யாயீத'' [ப்ரஶ்நம் 5-5] [எவனொருவன் மூன்றுமாத்திரையுள்ள ''ஓம்'' என்னும் இந்த அக்ஷரத்தைக் கொண்டு பரமபுருஷனைத் தியானிக்கிறானோ] முதலான வேதவாக்யங்களில் உபாஸனம் ஆயுள் உள்ளவரையில் முமுக்ஷுக்களால் அநுஷ்டி₂க்கப்படவேண்டும் என்று விதி₄க்கப்படுகிறது. எம்பெருமானுக்கு ஆராத₄னமாய் இருந்துகொண்டு அவனுக்கு உகப்பை விளைக்கையால், யஜ்ஞம் முதலான கர்மம் அந்த உபாஸநம் உண்டாவதற்குத் தடையாயிருக்கும் முன்வினைகளைப் போக்குவதன் மூலம் உபாஸகர்களுக்குப் பரிசுத்தியை ஏற்படுத்தி உபாஸனம் உண்டாகும்படி செய்து, ஆயுள் உள்ளவரையில் இதையும் உபாஸநத்தோடு கூட அநுஷ்டி₂க்கும்போது அவ்வுபாஸனம் வளரவும் காரணமாகின்றதாகையாலே கர்மம் உபாஸனத்திற்கு ஸந்நிபத்ய உபகாரகமான [ஸாத₄னத்தை உண்டாகும்படி செய்து அதோடு கூடியிருந்து உதவி புரிவதான] அங்கமாகிறது என்று கருத்து. உபாஸனமானது நிறைவடைந்த பின்பு முன்வினைகள் முழுவதையும், பின்வினைகளாகிற உத்தராக₄ங்களையும் போக்கக் கூடியது. அதற்கு அங்க₃மான இந்தக்கர்மமோவெனில் உபாஸனம் உண்டாவதற்கான தடைகளை மட்டும் நீக்கி அது வளர்வதற்கும் உதவி செய்கிறது என்னும் வேற்றுமை அறியத்தக்கது.

भा ।। यस्मान्मनीषिणां यज्ञदानतपःप्रभृतीनि पावनानि, तस्मात्

6. இக்கரும மான விவையென் கருமமென
மிக்கமருஞ் சங்க மிகுபயன்க — ளொக்கவிடுத்
தேய்ந்தவியல் வென்றே யியலுமதே யென்றனக்கிங்
காய்ந்த வறுதிமிக வாம்.

இக்கருமமான இவை—இப்படி உபாஸனத்திற்கு அங்க மாயிருக்கும் இக்கர்மங்களை, என் கருமம் என மிக்கு அமரும் சங்கம் — 'இது என்னுடைய கர்மம்' என்று மிகவும் பொருந்தியிருக்கும் பற்றையும், மிகு பயன்கள் — மிகுதியாக வரும் பயன்களையும், ஒக்க விடுத்து—ஒருங்கே விட்டு, ஏய்ந்த இயல்வு என்றே இயலுமதே — (ஆயுள் உள்ளவரை) செய்யவேண்டியவை என்னும் எண்ணத்துடன் அநுஷ்டிக்கவேண்டும் என்பதே, என்தனக்கு — எனக்கு, இங்கு — இவ்விஷயத்தில், மிக ஆய்ந்த அறுதி ஆம் — மிகவும் ஆராயப்பட்டதாய் மேலானதான நிர்ணயமாகும்.

6 "தோஷமுடையதாகையால் கர்மம் கைவிடத்தக்கதே" என்று மூன்றாவது ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட கருத்து தவறானது என்று சென்ற ஶ்லோகத்தில் அறுதியிட்டான். நாலாவது ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட மூன்று வகையான த்யாகங்களில் பலத்யாகத்தையும் ஸங்கத்யாகத்தையும் வலியுறுத்துவதன் மூலம் கர்மத்திற்கு தோஷமில்லையென்று காட்டுகிறான் இந்தஶ்லோகத்தில். சென்றஶ்லோகத்தில் "யஜ்ஞம், தானம் தவம் முதலான கர்மங்கள் உபாஸகர்களைப் பரிசுத்தப்படுத்தி உபாஸனத்திற்கு உதவிபுரிபவை என்று காட்டினான். அக்காரணத்தாலேயே பல ஸங்கத்யாகத்தோடு கூடிய கர்மம் அநுஷ்டிக்கத்தக்கதே என்று நிர்ணயிக்கிறான் இந்த ஶ்லோகத்தில்: (ஏதாநி அபிது கர்மாணி) இந்த யஜ்ஞம், தானம், தவம் முதலான கர்மங்களும். "ஏதாநி" என்னும் பதத்தால் முந்தின ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட கர்மங்களே இங்கு எடுக்கப்படுகின்றன என்று விளங்குகிறது. "அபிது" என்னும் பதம் முந்தின ஶ்லோகத்திலுள்ள "மநீஷிணாம்" என்னும் பதத்தாலே உணர்த்தப் பெற்ற உபாஸனத்தை

उपासनवदेतान्यपि यज्ञादिकर्माणि मदाराधनरूपाणि, सङ्गम्—कर्मणि ममतां फलानि च त्यक्त्वा अहरहराप्रयाणादुपासननिर्वृत्तये मुमुक्षुणा कर्तव्यानीति मम निश्चितमुत्तमं मतम् ॥ ६ ॥

नियतस्य तु संन्यासः कर्मणो नोपपद्यते।
मोहात्तस्य परित्यागस्तामसः परिकीर्तितः ॥ ७ ॥

7. நியதஸ்ய து ஸந்ந்யாஸ: கர்மணோ நோபபத்$_3$யதே ।
மோஹாத்தஸ்ய பரித்யாக$_3$ஸ்தாமஸ: பரிகீர்த்தித: ॥

---

ஸமுச்சயிக்கிறது. உபாஸனத்தைப் போலவே இந்த யஜ்ஞாதி$_3$ கர்மங்களும் எனக்கு ஆராதனமாயிருக்கையாலே அநுஷ்டிக்கத் தக்கவை என்று கருத்து. சென்ற ஶ்லோகத்திலேயே இக் கர்மங்கள் தனக்கு ஆராத$_4$னமாய் இருக்கையாலேயே உபாஸ கர்களுடைய பாபங்களைப் போக்கி அவர்களைப் பரிசுத்தப்படுத்து கின்றன என்று சொல்லப்பட்டதன்றோ, (ஸங்க$_3$ம் த்யக்த்வா) கர்மத்தில் என்னுடையது என்னும் பற்றை விட்டு. "ப$_2$லாநி ச" என்று ப$_2$லத்யாக$_3$த்தை அடுத்தபடி சொல்லப்போகிறுனகை யாலே இங்கு சொல்லப்படும் ஸங்க$_3$த்யாக$_3$ம் 'இக்கர்மம் என்னு டையது' என்னும் மமகாரத்யாக$_3$மேயாகும். (ப$_2$லாநி ச) அந்தக் கர்மங்களுக்கு வேதங்களில் சொல்லப்படும் ஸ்வர்க்க$_3$ம் முதலான ப$_2$லன்களில் விருப்பத்தையும் விட்டு. (கர்த்தவ்யாநி இதி மே நிஶ்சிதம் உத்தமம் மதம்) இக்கர்மங்கள் உபாஸனத்திற்கு அங் கமாயிருக்கையால் உபாஸனம் நிறைவடைவதன் பொருட்டு ஆயுள் உள்ளவரையில் தினந்தோறும் முமுக்ஷுவால் (மோக்ஷத்தை விரும்புகிறவரால்). அநுஷ்டிக்கப்படவேண்டியதே என்பதே என்னுடைய உறுதியான தலைசிறந்த நிர்ணயமாகும். 'நிஶ்சிதம்' என்னும் பதத்தாலே இதில் அர்ஜுனன் ஐயமுறக்கூடாது என்று உணர்த்தப்படுகிறது. 'உத்தமம்' என்னும் பதத்தாலே புல்லறிவாளர்களான சிலர் இதற்கு முரணுக, 'கர்மத்தை விட்டு விடவேண்டும்' என்று நிர்ணயிப்பது மிகத்தாழ்ந்ததாகையாலே கைக்கொள்ளத்தக்கதன்று என்று உணர்த்தப்படுகிறது. (பார்த்த$_2$)என்னுடைய அத்தை பிள்ளையான நீ உனக்குரிய கர்மமான யுத்தத்தைப் ப$_2$லஸங்க$_3$த்யாக$_3$த்தோடு அநுஷ்டிக்க வேண்டும் என்று கருத்து. 6.

भाः ॥ नियतस्य — नित्यनैमित्तिकस्य महायज्ञादेः कर्मणः,

நியதஸ்ய கர்மண: — நித்யம் நைமித்திகம் முதலான கர்மத்தினுடைய, ஸந்ந்யாஸ: து. — த்யாக₃ம் (கைவிடுதல்), ந உபபத்₃யதே — பொருந்தாது; மோஹாத் — (கர்மம் குற்றமுடையது என்னும்) மயக்கத்தாலே, தஸ்ய — அக்கர்மத்தை, பரித்யாக₃: கைவிடுவது, தாமஸ: பரிகீர்த்தித:— தமோ கு₃ணத்தால் விளைவது என்று சொல்லப்படுகிறது.

7. என்று நியதமா மிந்தக் கருமங்க
ளொன்றும் விடவிவனுக் கொண்ணுதா—னின்றிவற்றை
மோகத்தாற் றன்விடுதன் மூக்குணத்திற் பிற்குணத்தி
லாகத்தால் வந்த வது.

என்றும் நியதமாம் இந்தக் கருமங்கள் — எப்போதும் அநுஷ்டிக்கவேண்டிய இந்த நித்ய நைமித்திக கர்மங்களில், ஒன்றும் — எதுவும், இவனுக்கு — மோக்ஷத்தை விரும்பும் இவனுக்கு, விட ஒண்ணுதால்— விடத்தகாததாகும்; மோகத்தால் — (கர்மம் குற்றமுள்ளது என்னும்) மயக்கத்தால், இவற்றை நின்று விடுதல் தான்—இவற்றை அடியோடு விடுவது, மூக்குணத்தில் பிற்குணத்தில் ஆகத்தால் வந்த அது — ஸத்வம் ரஜஸ் தமஸ் என்னும் மூன்றுகுணங்களில் பிற்பட்டதான தமோகு₃ண ஸ்வரூபத்தால் விளைந்ததாகும்.

7, சென்ற ஶ்லோகத்தில் தன்னுடைய நிர்ணயமே தலைசிறந்தது என்றும், அதற்கு முரணாக மற்றும்சிலர் சொல்லுகின்ற நிர்ணயம் மிகத் தாழ்ந்தது என்றும் உணர்த்தினான். இந்த ஶ்லோகத்தில் அதை விவரிக்கிறான். (நியதஸ்யது ஸந்ந்யாஸ: கர்மண: ந உபபத்₃யதே) பஞ்சமஹாயஜ்ஞம் முதலான நித்ய நைமித்திக கர்மங்களை விடுவது பொருந்தாது."நியத" ஶப்₃த₃த்தாலே விஶேஷிக்கையாலே, கர்மஶப்₃த₃ம் அந்தந்த வர்ணத்தையும் ஆஶ்ரமத்தையும் பற்றியிருப்பவர்களுக்கு உரியவையாய், அவர்கள் அநுஷ்டி₂த்தே தீரவேண்டியவையாகையாலே

संन्यासः -- त्यागो नोपपद्यते, *शरीरयात्राऽपि च ते न प्रसिद्ध्ये-
दकर्मणः (३. ८) इति शरीरयात्राया एवासिद्धेः; शरीरयात्रा हि यज्ञ-
शिष्टाशनेन निर्वर्त्यमाना सम्यग्ज्ञानाय प्रभवति; अन्यथा *ते त्वघं
भुञ्जते पापाः (३. १३) इत्ययज्ञशिष्टाघरूपाशनाप्यायनं मनसो विपरीत-

---

கைவிடத்தகாதவையான நித்ய நைமித்திக கர்மங்களைக் குறிக்கிறது. "து" ஶப்3த3ம் தான் முன்சொன்ன பக்ஷங்களில் ஒன்றை இங்கு மறுப்பதைக் காட்டுகிறது. "ஸந்ந்யாஸ: ந உபபத்3யதே" என்கையாலே, மூன்ருவது ஶ்லோகத்தின் முற்பாதியில் "த்யாஜ்யம் தோ3ஷவத்" என்று தொடங்கி "குற்றமுள்ளதாகையாலே கர்மம் கைவிடத்தக்கது" என்று கூறும் பக்ஷமே இங்கு மறுக்கப்படுகிறது என்று விளங்குகிறது. இந்த "ஸந்ந்யாஸ" ஶப்3த3மே அடுத்த பாதியில் "பரித்யாக3" ஶப்3த3த்தாலே அநுவதி3க்கப் படுகிறதாகையால் இங்கு "ஸந்ந்யாஸ" ஶப்3த3ம் த்யாக3த்தையே குறிக்கிறது. சென்ற ஶ்லோகத்தில் "பரிசுத்தப்படுத்துவதாகையால் கர்மம் அநுஷ்டி2க்கத்தக்கது" என்று கூறியபின்பு, இங்கு மறுபடி 'கர்மத்தைக் கைவிடுவது பொருந்தாது' என்று கூறுகையாலே, முதல் ஷட்கத்தில் மூன்ரும் அத்தியாயத்தில் "ஶரீரயாத்ராபி ச தே ந ப்ரஸித்3த்4யேத3கர்மண:" [கீ3தை 3-8] [எக்கர்மத்தையும் செய்யாமல் ஜ்ஞானத்திலேயே ஊன்றி நிற்கும் உனக்கு (ஜ்ஞாநநிஷ்டைக்கும் வேண்டியதான) தே3ஹதா4ரணமும் கைகூடாது] என்ற ஶ்லோகத்தில் கர்மத்தைக் கைவிடுவதால் இம்மையிலும் மறுமையிலும் விளையும் அனுபபத்திகளைக்காட்டியது இங்கு நினைவுறுத்தப்படுகின்றது. அதாவது—மோக்ஷத்தை விரும்பும் ஒருவன் யஜ்ஞத்தில் எஞ்சி நிற்கும் உணவை உட்கொள்வதன் மூலம் தே3ஹதா4ரணம் செய்துவந்தால் தான் அது நல்ல ஜ்ஞானத்தை விளைக்கும். இல்லாவிடில்

"யஜ்ஞஶிஷ்டாஶிந: ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பி3ஷை: |
தே த்வக4ம் பு4ஞ்ஜதே பாபா: யே பசந்த்யாத்மகாரணாத்||"
[கீதை 3-13]

[யஜ்ஞத்தில் எஞ்சிநிற்பதைப் புசிக்கும் நல்லவர்கள் எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுகிருர்கள். எவர்கள் தமக்காகவே சமைத்து உண்கிருர்களோ அவர்கள் பாபத்தையே உண்கிருர்கள்.]

ज्ञानाय भवति। *अन्नमयं हि सोम्य मनः (छा ६-५-४) इत्यन्नेन हि मन आप्यायते; *आहारशुद्धौ सत्त्वशुद्धिः सत्त्वशुद्धौ ध्रुवा स्मृतिः। स्मृतिलम्भे सर्वग्रन्थीनां विप्रमोक्षः॥ (छा ७ २६ २) इति ब्रह्मसाक्षात्काररूपं ज्ञानमाहारशुद्ध्यायत्तं श्रूयते। तस्मान्महायज्ञादिनित्यनैमित्तिकं कर्म आप्रयाणात् ब्रह्मज्ञानायैवोपादेयमिति तस्य त्यागो नोपपद्यते।

---

என்கிறபடியே, யஜ்ஞத்தில் எஞ்சி நிற்காததாய், தமக்கென்றே சமைக்கப்படும உணவாகையால் பாபமென்றே சொல்லத்தக்க உணவாலே போஷிக்கப்பட்ட மனம் விபரீதஜ்ஞானத்தையே விளைக்கிறது. "பஞ்சபூ$_4$தாத்மகைர்போ$_4$கைர்: பஞ்சபூ$_4$தாத்மகம் வபு: | ஆப்யாயதே" [வி. பு. 6-7-18] [ஐந்து பூ$_4$தங்களாலான உணவு முதலான போ$_4$க$_3$ங்களாலே ஐந்து பூ$_4$தங்களாலான உடல் போஷிக்கப்படுகிறது] என்று ஆஹாரங்களாலே உடலே போஷிக்கப்படுவதாகக் கூறியிருக்க மனம் போஷிக்கப்படுவதாகக் கூறுவது எப்படிப்பொருந்தும்? எனில் "அந்நமயம் ஹி ஸோம்ய மந:" [சா$_2$ந் 6-5-4] என்று உபநிஷத்தில் அன்னத்தின் ஸூக்ஷ்மாம்சத்தாலே மனமும் போஷிக்கப்படுவதாகக் கூறுகையாலே பொருந்தும், 'மயட்' ப்ரத்யயம் 'விகாரம்' என்னும் பொருளையுடையதாய் இருந்தபோதிலும், ஸாத்விகாஹங்காரத்திலிருந்து தோன்றும் மனம் என்னும் இந்த்$_3$ரியம் அன்ன விகாரமாக முடியாதாகையாலே, இங்கு "மயட்" ப்ரத்யயத்திற்குப் போஷிப்பது என்னும் பொருள் கொள்ளப்பட்டது. 'ஆஹார ஶுத்$_3$தெள$_4$ ஸத்வ ஶுத்$_3$தி$_4$ஸ் ஸத்வ ஶுத்$_3$தெள$_4$ த்$_4$ருவா ஸ்ம்ருதி:| ஸ்ம்ருதிலம்பே$_4$ ஸர்வக்$_3$ரந்தீ$_2$நாம் விப்ரமோக்ஷ:||" [சா$_2$ந் 7-26-2] [ஆஹாரம் சுத்தமாயிருந்தால்தான் மனமானது சுத்தியடையும். மனம் சுத்தியடைந்தால்தான் நிலையான நினைவான உபாஸனம் நிறைவடையும். உபாஸனம் நிறைவடைந்தால் (ஸம்ஸாரத்திற்குக்காரணமான) கர்மம் முதலான எல்லா முடிச்சுகளும் அவிழ்ந்துவிடும்] என்றும், "பி$_4$த்$_3$யதே ஹ்ருத$_3$யக்$_3$ரந்தி$_2$:—தஸ்மிந் த்$_3$ருஷ்டே பராவரே" [முண்ட$_3$ 2-2-8] [பரமாத்மாவின் ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டால், நெஞ்சில் உள்ள எல்லாமுடிச்சுக்களும் அவிழும்] என்றும் வேத$_3$வாக்யங்களில் ப்$_3$ரஹ்மத்தை நேரே காண்பதாகிற ஜ்ஞானம் ஆஹார ஶுத்$_3$தி$_4$யினால் விளைகிறது என்று ஓதப்படுகிறது. ஆகையால், பஞ்சமஹாயஜ்ஞம் முதலான நித்யநைமித்திக கர்மங்கள் மோக்ஷமடையும் வரையில் ப்$_3$ரஹ்ம ஜ்ஞானம் உண்டாவதற்காகவும் வளருவதற்காகவும் கைக்கொள்ளத்தக்கவையாகையால், அவற்றைக் கைவிடுவது பொருந்தாது என்று இந்தஶ்லோகத்தின் முற்பாதியில் சொல்லப்படுகிறது.

एवं ज्ञानोत्पादिनः कर्मणो बन्धकत्वमोहात्परित्यागस्तामसः परिकीर्तितः। तमोमूलस्त्यागस्तामसः, तमःकार्याज्ञानमूलत्वेन त्यागस्य तमोमूलत्वम्। तमो ह्यज्ञानस्य मूलं * प्रमादमोहौ तमसो भवतोऽज्ञानमेव च (१४-१७)

---

(தஸ்ய மோஹாத் பரித்யாக₃:) முற்பாதியில் சொன்னபடி ப்₃ரஹ்ம ஜ்ஞானத்திற்கு உதவிபுரிபவையாகையாலே நித்யநைமித்திக கர்மங்களை "இவை ஸம்ஸாரத்தில் கட்டிவைப்பவை" என்னும் மயக்கத்தாலே கைவிடுவது. இதிலிருந்து, மூன்ருவது ஶ்லோகத்தின் முற்பாதியில் சொல்லப்பட்ட மதமே இங்கு கண்ணுல் கண்டிக் கப்படுகிறது என்று விளங்குகிறது. (தாமஸ: பரிகீர்த்தித:) இவ் வண்ணம் கைவிடுவது தமோகு₃ணம் காரணமாக விளைவது என்று சொல்லப்படுகிறது. 'தாமஸ:' என்னும் ஶப்₃த₃மும் 'தத்ர ப₄வ:' [அஷ்டாத்₄யாயீ 3-5-3] என்னும் ஸூத்ரத்தின்படி தமஶ்ஶப்₃த₃த்திலிருந்து உண்டாகி 'தமோகு₃ணத்தோடு ஸம் ப₃ந்த₄ம் உடையது' என்னும் பொருளைத் தருகிறது. இங்கு தமோகு₃ணத்திஞல் விளைவது என்று பொருள்படுகிறது. தமோ கு₃ணமானது அஜ்ஞானத்தை விளைத்து இப்படிக் கர்மத்தைக் கைவிடும்படி செய்கிறது என்று கருத்து. "ப்ரமாத₃ மோஹௌ தமஸ: ப₄வதோऽஜ்ஞாநமேவ ச" [கீதை 14—17] [(மிகுதி யான ) தமோகு₃ணத்திஞல், கவனமின்மையால் உண்டாகும் தீயகர்மங்களில் முயற்சியும், (அதன் விளைவாக) விபரீதஜ்ஞான மும் உண்டாகின்றன. (அதுகாரணமாக) ஜ்ஞானமின்மையும் விளைகிறது.] என்று இவ்விஷயம் முன்னமே சொல்லப்பட்டது. இந்த கீ₃தாஶ்லோகத்தில் தமோகு₃ணத்திலிருந்து மோஹம் (மயக்கம்) உண்டாகிறது என்று சொல்லப்பட்டது. இங்கு "மோஹாத் தஸ்ய பரித்யாக₃:" என்று இந்த த்யாக₃ம் மோஹத் தால் விளைவது என்று சொல்லப்பட்டுள்ளது. ஆகையால், 'தாமஸ' ஶப்தத்திற்குத் 'தமோ குணத்தாலுண்டாகும் மோஹமாகிற விபரீத ஜ்ஞானத்தாலே உண்டாவது' என்று பொருள்கொள்ள வேண்டியிருக்க, அஜ்ஞானத்தாலே உண்டாவது என்று பொருள் கொள்வது எப்படிப் பொருந்தும்? என்னும் கேள்வியெழுகிறது. 'மோஹாத்' என்று முதலில் சொல்லப்பட்ட மோஹமாகிற காரணத்தைக் காட்டிலும் வேறொரு காரணத்தை 'தாமஸ' ஶப்₃த₃த்தாலே சொல்லுவது ஸ்வரஸமாகையாலே, அப்படிப் பொருள் கொள்வது பொருந்தும். இங்கு மற்றொரு ஆக்ஷேபம் பின்வருமாறு எழுகிறது:— "கீதை [14—17] ஶ்லோ

इत्यत्रोक्तम् । अज्ञानं तु ज्ञानविरोधि विपरीतज्ञानम्; तथा च वक्ष्यते — * अधर्मं धर्ममिति या मन्यते तमसाऽऽवृता । सर्वार्थान्विपरीतांश्च बुद्धिस्सा पार्थ तामसी ॥ (३२) इति । अतो नित्यनैमित्तिकादेः कर्मणस्त्यागो विपरीतज्ञानमूल एवेत्यर्थः ॥ ७ ॥

---

கத்தில் 'மோஹ' ஶப்தத்தால் விபரீத ஜ்ஞானத்தைத் தனியாகச் சொல்லிவிட்டபடியால் 'அஜ்ஞான' ஶப்₃த₃ம் ஜ்ஞானமின்மையைச் சொல்லுகிறது'' என்று பா₄ஷ்யமிடப்பட்டது. இங்கு அதே ''அஜ்ஞான'' ஶப்₃த₃த்திற்கு 'விபரீதஜ்ஞானம்' என்று பா₄ஷ்யமிட்டது எப்படிப்பொருந்தும்? என்பது அவ்வாக்ஷேபம். ஜ்ஞானமின்மையானது விபரீதஜ்ஞானத்தை விளைத்து செயல்படுகிறது என்னும் கருத்தாலே இதைப் பொருந்தவிடலாமாகையாலே குறையில்லை. தமோகு₃ணத்தால் விளையும் அறிவு த₄ர்மத்தையும் அதர்மம் என்று மயங்கவைத்துவிடும் என்னும்விஷயம், ''அத₄ர்மம் த₄ர்மமிதி யா மந்யதே தமஸாऽऽவ்ருதா । ஸர்வார்த்தா₂ந் விபரீதாம்ஶ்ச பு₃த்₃தி₄ஸ்ஸா பார்த்த₂ தாமஸீ॥'' [கீதை 18-32] [குந்தீபுத்திரனே! தாமஸ பு₃த்₃தி₄யானது தமோகு₃ணத்தால் மறைக்கப்பட்டதாய், அத₄ர்மத்தை த₄ர்மமாகவும், த₄ர்மத்தை அத₄ர்மமாகவும் நினைக்கிறது. (அதுபோலவே) உள்ள பொருளை இல்லாததாகவும், இல்லாதபொருளை உள்ளதாகவும், மேலான பொருளைத் தாழ்ந்ததாகவும், தாழ்ந்த பொருளை மேலானதாகவும், இவ்வண்ணமாகவே அனைத்தையும் விபரீதமாகவே நினைக்கிறது] என்னும் ஶ்லோகத்தில் மேலே விவரிக்கப்பட இருக்கிறது. ஆக, ''நித்யகர்மம், நைமித்திககர்மம், ப₂லனில் விருப்பமற்றுச் செய்யப்படும் காம்யகர்மம் ஆகிய கர்மங்களை 'ப₃ந்த₄கம்' என நினைத்துக் கைவிடுவது ஒன்றை மற்றொன்றாக எண்ணும் விபரீதஜ்ஞானத்தால் விளைவதே'' என்பது இந்த ஶ்லோகத்தின் திரண்ட பொருளாகும். 'விபரீத ஜ்ஞானம்' என்று சொன்னபடியால், முப்பத்தொன்றாவது ஶ்லோகத்தில் ''த₄ர்மாத₄ர்மங்களை உள்ளபடியல்லாமல் அறிவது'' என்று சொல்லப்பட்ட ராஜஸமான அறிவைக்காட்டிலும் இந்தத் தாமஸமான அறிவுக்கு உள்ள வேறுபாடு உணர்த்தப்படுகிறது. 7.

दुःखमित्येव यत्कर्म कायक्लेशभयात्त्यजेत् ।
स कृत्वा राजसं त्यागं नैव त्यागफलं लभेत् ॥८॥

8. து3க்க2மித்யேவ யத் கர்ம காயக்லேஶப4யாத் த்யஜேத் l
ஸ க்ருத்வா ராஜஸம் த்யாக3ம் நைவ த்யாக3ப2லம் லபே4த் ll

காயக்லேஶ ப4யாத் — உடலுக்கு வருத்தம் விளையும் என்னும் அச்சத்தாலும், து3க்க2ம் இத்யேவ — துன்பமயமாயிருப்பது என்னும் காரணத்தாலும், கர்ம — நித்யம் நைமித்திகம் முதலான கர்மங்களை, யத் த்யஜேத் — (ஒருவன்) கைவிட்டானாகில், ஸ: — அவன், ராஜஸம் த்யாக3ம் க்ருத்வா — ரஜோகு3ணத்தால் விளையும் த்யாக3த்தைச் செய்தவனாகையாலே, த்யாக3 ப2லம் — (ஸாத்விகமான) த்யாக3த்தின் ப2லமான ஜ்ஞானத்தை, நைவ லபே4த் — அடையவே மாட்டான்.

---

8. துக்கமெனக் கன்மத்தைத் தோன்று முடல்வருத்த
மிக்கபயத் தாற்செய்யா விட்டவன்றான் — சிக்கெனவிவ்
வாய்ந்த விடைக்குணத்தான் மற்றதுவிட் டப்பயனு
மேய்ந்த வறிவுபெறா னிங்கு.

உடல் வருத்தம் தோன்றும் மிக்கபயத்தால் — உடலுக்கு வருத்தம் விளையும் என்னும் மிகுந்த அச்சத்தாலும், துக்கம் என — துன்பமயமாயிருப்பது என்னும் காரணத்தாலும், கன்மத்தை — நித்யம் நைமித்திகம் முதலான கர்மங்களை, செய்யா விட்டவன் தான் — அனுஷ்டிக்காமல் விட்டவன், இவ் ஆய்ந்த இடைக்குணத்தால் மற்று அது விட்டு — இங்கு ஆராய்ந்து கூறப்பட்ட ரஜோகு3ணத்தால் அக்கர்மங்களை விட்டவனாகையாலே, இங்கு — இவ்வுலகில், அப்பயனும் ஏய்ந்த அறிவு — (ஸாத்விகமான) த்யாக3த்தின் பயனான நல்ல ஜ்ஞானத்தை, சிக்கெனப் பெறான் — உறுதியாகப் பெறமாட்டான்.

भा ॥ यद्यपि परंपरया मोक्षसाधनभूतं कर्म, तथाऽपि दुःखात्मक-द्रव्यार्जनसाध्यत्वात् बह्वायाससरूपतया कायक्लेशकरत्वाच्च मनसोऽवसाद·

---

8. சென்ற ஸ்லோகத்தில் ஒன்றை மற்ருென்ருக என்னுவதாகிற விபரீத ஜ்ஞானத்தால் விளையும் தாமஸமான த்யாகம் விளக்கப்பட்டது. இந்த ஸ்லோகத்தில் பொருள்களை உள்ளபடியல்லாமல் அறிவதாகிற அந்யதா ஜ்ஞானத்தால் விளையும் ராஜஸமான த்யாகம் விளக்கப்படுகிறது. தர்மமாகிற கர்மத்தையே அதர்மம் என்று, அதனுடைய ஸ்வரூபநிருபக குணத்தையே வேருக அறிவது விபரீதஜ்ஞானமாகும். தர்மத்தை தர்மம் என்று அறிந்தபோதிலும், அது மனத்திற்குத் தெளிவை விளைப்பது என்று அறியாமல், அது மனத்திற்குத் துன்பத்தை விளைப்பது என்று அதன் நிருபிதஸ்வருப விசேஷணத்தைத் தவருக அறிவது அந்யதா ஜ்ஞானமாகும். இந்த அந்யதாஜ்ஞானத்தால் விளையும் ராஜஸ த்யாகம் இந்த ஸ்லோகத்தில் விளக்கப்படுகிறது. (து:க்கமித்யேவ யத்கர்ம த்யஜேத்) கர்மமானது துன்பமயமானது என்னும் காரணத்தாலே எவனுல் கைவிடப்படுகிறதோ; கர்மம் ஜ்ஞானத்தை விளைப்பதன்மூலம் படிப்படியாக மோக்ஷத்திற்கு ஸாதனமாயிருந்தபோதிலும் மிகக் கஷ்டப்பட்டு, துன்பங்களை ஏற்றுக்கொண்டு பணத்தை ஸம்பாதிப்பதன் மூலம் நிறைவேற்றவேண்டியிருப்பதால் எவனுல் அது கைவிடப்படுகிறதோ என்று கருத்து. "அர்த்தாநாமார்ஜநே து:க்கம் ஆர்ஜிதாநாஞ்ச ரக்ஷணே | நாசே து:க்கம் வ்யயே து:க்கம் க்நந்தி சைவார்த்த காரணாத் ||" [பாரத-ஆரண்ய 2-44] [பொருளை ஸம்பாதிப்பதிலும் துன்பம்; ஸம்பாதித்த பணத்தை ரக்ஷிப்பதிலும் துன்பம்; பணம் அழிந்தாலும் துன்பம், பணம்செலவழிந்தாலும் துன்பம்; பணத்திற்காகக் கொலையும் செய்கிருர்கள்] என்று பணம் ஸம்பாதிப்பது துன்பமயமானது என்னும் விஷயம் சொல்லப்பட்டதன்ருே. இரண்டாம் பாதம் கர்மத்தைவிடுவதற்கு மற்ருெரு காரணத்தையும் காட்டுகிறது. (காயக்லேஶ பயாத் த்யஜேத்) மிகுந்த தேஹ சிரமத்தைப்பட்டே கர்மத்தை அநுஷ்டிக்க வேண்டியிருப்பதால் தேஹத்திற்கு வருத்தம் ஏற்படும் என்னும் காரணத்தாலும் எவனொருவன் கர்மத்தை விடுகிருனே, இப்படித் துன்பமயமாயிருப்பதாலும், உடலுக்கு வருத்தம் விளையுமாகையாலும் மனத்திற்குத்

करमिति तद्भीत्या योगनिष्पत्तये ज्ञानाभ्यास एव यतनीय इति यो महा-
यज्ञाद्याश्रमकर्म परित्यजेत्, स राजसं—रजोमूलं त्यागं कृत्वा तदयथा-

---

துன்பம் உண்டாகும் என்று எண்ணி இந்த மனத்துன்பத்தைக் கண்டு பயந்து, மோக்ஷஸாத$_4$நம் நிறைவடைவதற்கு ஜ்ஞானத்தைக் கைக்கொள்வதே தக்கது என்னும் எண்ணத்தாலே இவன் பஞ்சமஹா யஜ்ஞம் முதலான வர்ணாச்ரமத$_4$ர்மங்களைக் கைவிடுகிறான் என்று கருத்து. ''தல்லப்$_3$தி$_4$: விவேக-விமோக-அப்$_4$யாஸ-க்ரியா-கல்யாண-அநவஸாத$_3$-அநுத்$_3$த$_4$ர்$_4$ஷேப்$_4$ய:'' என்று வாக்யகாரர் ஜ்ஞானம் உண்டாவதற்கு 'விவேகம்' முதலான ஏழு ஸாத$_4$நங்களைச் சொல்லும்போது 'அநவஸாத$_3$' மாகிற மனச்சோர்வின்மையையும் ஒரு ஸாத$_4$நமாகக் கூறியிருக்கையாலே, மனச்சோர்வை விளைக்கும் கர்மம் ஜ்ஞானத்தை அடையவிரும்புகிறவர்களுக்குக் கைவிடத்தக்கதே என்பது இவர்கள் கருத்து. இக்காரணத்தால் இவர்கள் கர்மத்தை விட்டு ஜ்ஞானத்தையே பயிலவேண்டும் என்று கூறுகிறார்கள். ''யதோ$_2$க்தாந்யபி கர்மாணி பரிஹாய த்$_3$விஜோத்தம: | ஆத்மஜ்ஞாநே ஶமே ச ஸ்யாத்$_3$ வேதா$_3$ப்$_4$யாஸே ச யத்நவாந் ||'' [மநு 12-92] [முன் சொல்லப்பட்ட ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி கர்மங்களைக் கைவிட்டாலும், அந்தணர் தலைவனாயிருப்பவன் ஆத்மஜ்ஞானத்திலும் . இந்திரியங்களை ஜயிப்பதிலும் வேதா$_3$த்$_4$யயனத்திலும் முயற்சி கொள்ளவேண்டும்] என்னும் மநுஸ்ம்ருதி வசனத்தை இவர்கள் ப்ரமாணமாகக் கொள்கிறார்கள். ஆனால் இந்த மநுஸ்ம்ருதி வசனத்திற்குக் கர்மங்களை விடவேண்டும் என்பதில் நோக்கில்லை, ப$_3$ஹிரங்க$_3$ ஸாத$_4$நமான கர்மத்தைக் காட்டிலும் அந்தரங்க$_3$ஸாத$_4$நமான ஜ்ஞானத்தின் பெருமையைக் கூறுவதிலேயே இந்த ஶ்லோகத்திற்கு நோக்கு. இப்படிக் கொள்ளாவிடில், மநுஸ்ம்ருதியில் கர்மம் அவசியம் அநுஷ்டி$_2$க்கப்பட வேண்டியதே என்று கூறும் பல வாக்கியங்களும், கர்மத்தை அநுஷ்டித்தே தீரவேண்டும் என்னும் ஈஶாவாஸ்யம் முதலான உபநிஷத்வாக்கியங்களும், கீதாஶ்லோகங்களும் முரண்படும். இனி, ஶ்லோகத்தின் பிற்பாதியாலே உண்மையில் மனத்திற்குத் தெளிவை விளைக்கக் கூடிய கர்மத்தை மனத்திற்கு வருத்தத்தை விளைக்கக் கூடியதாக எண்ணிக் கைவிடும் இவன் ராஜஸமான த்யாக$_3$த்தைச் செய்கிறானென்றும், அதனால் த்யாக$_3$த்தின்

व्यस्थितशास्त्रार्थरूपमिति ज्ञानोत्पत्तिरूपं त्यागफलं न लभेत्; * अयथाव-त्प्रजानाति बुद्धिस्सा पार्थ राजसी (३१) इति हि वक्ष्यते । नहि कर्म दृष्टद्वारेण मनःप्रसादहेतुः; अपितु भगवत्प्रसादद्वारेण ॥ ८॥

பலனான ஜ்ஞானம் இவனுக்கு உண்டாகாதென்றும் காட்டுகிறான். (ஸ: ராஜஸம் த்யாகம் க்ருத்வா) முற்கூறியபடி மனத்திற்கு வருத்தத்தை விளைக்கும் என்று எண்ணிக் கர்மத்தைக் கைவிடுபவன் ஒன்றை மற்றொன்றாக எண்ணவைக்கும் ரஜோ குணத்தால் உண்டாகும் ராஜஸத்யாகத்தையே செய்கிறான் என்று கருத்து. உண்மையில் மனத்திற்குத் தெளிவை விளைக்கக்கூடிய கர்மத்தை, மனத்திற்குத் துன்பத்தை விளைக்கக் கூடியதாகவன்றோ இவன் நினைக்கிறான். "அயதாவத் ப்ரஜாநாதி புத்திஸ்ஸா பார்த்த ராஜஸீ" [கீதை 18-31] [ஒன்றை மற்றொன்றாக எண்ணும் அறிவு ராஜஸமான அறிவாகும்] என்று இவ்வத்தியாயத்திலேயே இவ்விஷயம் விளக்கப்படவிருக்கிறதன்றோ. (நைவ த்யாகபலம் லபேத்) இப்படி ராஜஸ த்யாகத்தைச் செய்பவன் ஸாத்விகமான த்யாகத்தின் பலனான ஜ்ஞாநோத்பத்தியை அடைய மாட்டான். இங்கு 'த்யாகபலம்' என்று பொதுவாகச்சொல்லியிருந்த போதிலும், இது மோக்ஷத்தை விரும்புகிறவர்களைப் பற்றிய ப்ரகரணமாகையாலே, காம்யகர்மத்தின் பலனான ஸ்வர்க்காதிகளை இதற்குப் பொருளாகக் கொள்ளமுடியாது. ஆகையால் அடுத்த ஶ்லோகத்தில் சொல்லப்படும் ஸாத்விகத்யாகத்தின் பலனான ஜ்ஞாநோத்பத்தியே இங்கு த்யாகபலம் என்று சொல்லப்படுகிறதென்று கொள்ளவேண்டும். கர்மம் மனத்துன்பத்தை விளைப்பதாகையாலே ஜ்ஞாநோத்பத்திக்கு விரோதி என்று கூறியதும் பொருந்தாது. கர்மத்தை அநுஷ்டிப்பதில் ஶரீரத்திற்குச் சிறிது சிரமம் இருந்த போதிலும், அந்தக் கர்மத்தினால் ஆராதிக்கப் பட்ட பரமபுருஷன் அந்தக்கர்மத்தை அநுஷ்டிக்கிறவனுக்கு மனத்தெளிவையே உண்டாக்குகிறான் என்பது ஶாஸ்த்ரஸித்தமாகையாலே, இவனுக்கு மனத்துன்பம் விளையாது. "பலஸம்பிபத்ஸயா ஹி" என்று த்ரமிடபாஷ்யத்தில் "கர்மங்களால் உகப்படைந்த எம்பெருமான் மனச்சோர்வின்மையை விளைக்கிறான்" என்று சொல்லப்பட்டதன்றோ. ஆகையால், 'ஶரீரஶ்ரமத்தால் மனத்துன்பம் விளையும் என்றெண்ணிக் கர்மத்தைக் கைவிடுவது ராஜஸ த்யாகமேயாகையால், அப்படிவிட்டவனுக்கு ஜ்ஞானம் உண்டாகாது' என்பது இந்த ஶ்லோகத்தின் திரண்ட பொருள். 8.

कार्यमित्येव यत्कर्म नियतं क्रियतेऽर्जुन ।
सङ्गं त्यक्त्वा फलं चैव स त्यागस्सात्त्विको मतः ॥९॥

9. கார்யமித்யேவ யத் கர்ம நியதம் க்ரியதே*ர்ஜுந ।
ஸங்க₃ம் த்யக்த்வா ப₂லம் சைவ ஸ த்யாக₃ஸ்
ஸாத்விகோ மத: ॥

அர்ஜுந — அர்ஜுநா! நியதம் கர்ம—நித்ய நைமித்திக கர்மமானது, ஸங்க₃ம் ப₂லம் சைவ த்யக்த்வா — 'கர்மம் என்னுடையது' என்னும் பற்றையும், கர்மத்திற்குரிய ப₂லனையும் விட்டு, கார்யம் இதி ஏவ — ஸ்வயம் ப்ரயோஜனமானது என்று எண்ணி, யத் க்ரியதே — செய்யப்பட்டதாகில், ஸ த்யாக₃: — அந்த த்யாக₃ம், ஸாத்விக: மத: — ஸத்வகு₃ணத்தால் உண்டாவது என்று சொல்லப்படுகிறது.

---

9. நின்று நியதக் கருமத்தை நேர்ந்தியல்வென்
றென்று மியன்றே யிகல்விசையா—வொன்றிவருஞ்
சங்கம் பயன்றுறப்பார் சாருந் தியாகந்தா
னங்கந்த முற்குணத்த தாம்.

இகல் விசையா — வீரனான விஜயனே! நியத கருமத்தை— நித்யம் நைமித்திகம் ஆகிய கர்மத்தை, நேர்ந்து— 'எம்பெருமானுடைய ஆராத₄ன ரூபமானது' என்று அறிந்து, இயல்வு என்று — 'அதைச் செய்வது தானே பயன்' என்று கருதி, என்றும் நின்று இயன்றே — எப்போதும் உறுதியாக அநுஷ்டித்து, ஒன்றி வரும்— (அந்தக் கர்மத்தை அநுஷ்டிக்கும் போது) சேர்ந்து வரும், சங்கம் பயன் துறப்பார் — 'இக்கர்மம் என்னுடையது' என்னும் பற்றையும், அந்தக் கர்மத்தினுடைய ப₂லனையும் விடுகின்றவர்கள், சாரும் தியாகம் தான்—கைக்கொள்ளும் தியாகமானது, அங்கு அந்த முற்குணத்ததாம் — ஸத்வம் ரஜஸ் தமஸ் என்னும் மூன்று குணங்களில் முதலாவதான ஸத்வ குணத்தால் விளைவதாகும்.

भा ॥ नित्यनैमित्तिकमहायज्ञादिवर्णाश्रमविहितं कर्म मदाराधनरूपतया कार्यं—स्वयंप्रयोजनमिति मत्वा सङ्गम्—कर्मणि ममतां फलं च त्यक्त्वा यत्क्रियते, स त्यागस्सात्त्विको मतः-- स सत्त्वमूलः;

---

9. முன் இரு ஶ்லோகங்களாலே கைவிடத்தக்க தாமஸ த்யாக3த்தையும் ராஜஸத்யாக3த்தையும் விளக்கிவிட்டு, இந்த ஶ்லோகத்தாலே ஸாத்விகத்யாக3த்தை விளக்குகிருன். நாலாவது ஶ்லோகத்தில் ''த்யாகே3ா ஹி த்ரிவித4ஃஸம்ப்ரகீர்த்தித:'' என்று, ''ஏற்கனவே முதல் ஷட்கத்தில் என்னுல் மூன்றுவிதமான த்யாக3ம் சொல்லப்பட்டுள்ளது'' என்று சொன்னதையே இந்த ஶ்லோகத்தில் எடுத்து அது ஸத்வத்திருல் உண்டாகும் உண்மையறிவால் விளைவதாகையாலே அதுவே ஶாஸ்த்ரங்களுக்குப் பொருந்தியது என்று உறுதிப்படுத்துகிருன். (நியதம் கர்ம) நித்யமும் நைமித்திகமுமான கர்மம். ஏழாவது ஶ்லோகத்தில் 'நியதஸ்ய கர்மண:' என்று 'நியத' ஶப்3த3த்தைக் கர்மஶப்3த3த்திற்கு விஶேஷணமாக வழங்கியிருப்பதைப் போலவே, இங்கும் கர்மஶப்3த3த்திற்கு விஶேஷணமாகவே கொள்ள வேண்டும். 'நியதம் க்ரியதே' என்று கூட்டிப் பொருள் கொள்வதில் ஸ்வாரஸ்யம் இல்லை. (கார்யமித்யேவ யத் க்ரியதே) ''எம்பெருமானுக்கு ஆராத4னமாயிருக்கையால் இது ஸ்வயம்ப்ரயோஜனமாகச் செய்யத்தக்கது'' என்று எண்ணிச் செய்யப்பட்டதாகில். ஒரு காரியம் செய்யத்தக்கதாருல் அது பயனுடையதாயிருக்க வேண்டும். இந்த ஶ்லோகத்தின் பிற்பாதியில் ப2லனில் விருப்பத்தைவிட்டு இதைச் செய்யவேண்டுமென்று கூறுகையால், 'பயனற்ற இதை எப்படிச் செய்வது?' என்னும் கேள்வியெழும். அந்தக் கேள்விக்குப் பதிலாகவே 'ஸர்வேஶ்வரனுக்கு ஆராத4னமாயிருக்கையால் கர்மமானது ஸ்வயம்ப்ரயோஜனம்' என்று இங்கு சொல்லப்படுகிறது. (ஸங்க3ம் ப2லம் சைவ த்யக்த்வா) 'இந்தக் கர்மம் என்னுடையது' என்னும் பற்றையும், இந்தக்கர்மத்துக்கு ஶாஸ்த்ரத்தில் கூறப்பட்ட ஸ்வர்க்க3ம் முதலிய ப2லன்களில் பற்றையும் விட்டு. இங்கு ப2லஸங்க3த்யாக3ங்களைக் கூறியது மூன்ருவதான கர்த்ருத்வத்யாக3த்திற்கும் உபலக்ஷணம். நாலாவது ஶ்லோகத்தில் த்யாக3ம் மூன்று வகைப்பட்டது என்று சொல்லப்பட்டதன்ருே. அதனுலேயே அடுத்த ஶ்லோகத்தில் 'த்யாகீ3' என்னும் பத3த்திற்கு பா4ஷ்யமிடும்போது 'ஸங்க3ப2லகர்த்ருத்வத்யாகீ3' என்று பா4ஷ்யகாரர் அருளினர்.

यथावस्थितशास्त्रार्थज्ञानमूल इत्यर्थः । सत्त्वं हि यथावस्थितवस्तुज्ञान-मुत्पादयतीत्युक्तं * सत्त्वात्संजायते ज्ञानम् (१४-१७) इति, वक्ष्यते च प्रवृत्तिं च निवृत्तिं च कार्याकार्ये भयाभये । बन्धं मोक्षं च या वेत्ति बुद्धिस्सा पार्थ सात्त्विकी ॥ (३०) इति ॥ ९ ॥

न द्वेष्ट्यकुशलं कर्म कुशले नानुषज्जते ।
त्यागी सत्त्वसमाविष्टो मेधावी छिन्नसंशयः ॥ १० ॥

6-8-09
27-10-10

10. ந த்₃வேஷ்ட்யகுஶலம் கர்ம குஶலே நாநுஷஜ்ஜதே ।
த்யாகீ₃ ஸத்த்வ ஸமாவிஷ்டோ மேத₄ாவீ சி₂ந்ந ஸம்ஶய: ॥

---

(ஸ த்யாக₃ஸ் ஸாத்விகோ மத:) இப்படிப் ப₂லஸங்க₃கர்த்ருத்வங்கள்மூன்றையும் விடுவதே, உண்மையறிவை விளக்கும் ஸத்வகு₃ணத்தால் உண்டாவதாகையாலே ஸாத்விகத்யாக₃ம் எனப்படுகிறது. ஸத்வமானது உண்மையறிவை உண்டாக்கக்கூடியது என்னும் விஷயம் "ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம்" [கீதை 14-17] [ஸத்வகு₃ணத்திலிருந்து உண்மை அறிவு உண்டாகிறது] என்று முன்னமே சொல்லப்பட்டது. "ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச கார்யாகார்யே ப₄யாப₄யே| ப₃ந்த₄ம் மோக்ஷம் ச யா வேத்தி பு₃த்₃தி₄ஸ் ஸா பார்த்த₂ ஸாத்விகீ ||" [கீதை 18-30] [குந்தீ புத்திரனே! ப்ரவ்ருத்தி கர்மத்தையும், நிவ்ருத்திகர்மத்தையும், செய்யத்தக்கதையும் செய்யத்தகாததையும், "ஶாஸ்த்ரத்தை மீறுவது ப₄யத்தை விளைக்கும், ஶாஸ்த்ரத்தை அநுஸரிப்பது அப₄யமளிக்கும்" என்பதையும், ஸம்ஸார மோக்ஷங்களைப் பற்றிய உண்மையையும் எது அறிகிறதோ, அதுவே ஸாத்விகமான அறிவாகும்.] என்று இந்த அத்தியாயத்தில் மேலே சொல்லப்படவுமிருக்கிறது. (அர்ஜுந!) வெள்ளை நிறத்தவனான நீ வெள்ளை நிறத்தால் குறிக்கப்படும் ஸத்வகு₃ணத்தால் விளையும் ஸாத்விகத்யாக₃த்தோடு உனக்குரிய கர்மமான யுத்₃த₄த்தைச் செய்யவேண்டுமென்று கருத்து. 9.

भा ॥ एवं सत्त्वसमाविष्टो मेधावी—यथावस्थिततत्त्वज्ञानः, तत

ஸத்த்வஸமாவிஷ்ட: — முற்கூறியபடி ஸத்வ குணத்தோடு கூடியவனாய், மேதா₄வீ — (அதனாலேயே) தத்துவங்களைப்பற்றிய உண்மையறிவை உடையவனாய், சி₂ந்ந ஸம்ஶய: — (அதனாலேயே) ஐயம் நீங்கப்பெற்றவனாய், த்யாகீ₃ — தான் செய்யும் கர்மங்களில் ப₂லஸங்க₃கர்த்ருத்வ த்யாக₃த்தை உடையவனாயிருப்பவன், அகுஶலம் கர்ம — தான் விரும்பாத பயனைத் தரும் பாபகர்மத்தை, ந த்₃வேஷ்டி — வெறுப்பதில்லை; குஶலே (கர்மணி) — தான் விரும்பும் ப்ராக்ருத ப₂லன்களைத்தரும் புண்யகர்மத்தில், ந அநுஷஜ்ஜதே — பிரீதி அடைவதில்லை.

10 சத்துவத்தி னின்று தவிர்ந்துபயன் சார்ந்தறிவு
தத்துவத்திற் சந்தேகம் தானற்றா — னொத்துவரும்
தீவினையி னல்வினையிற் சேர்வெறுப்பு சங்கமவை
யோவியிருப் பெய்து முகந்து.

சத்துவத்தில் நின்று — ஸத்வ கு₃ணத்தில் நிலைநிற்பவனாய், பயன் தவிர்ந்து — தான் செய்யும் கர்மங்களில் ப₂லஸங்க₃கர்த்ருத்வ த்யாக₃த்தை உடையவனாய், தத்துவத்தில் அறிவு சார்ந்து — தத்துவங்களைப்பற்றிய உண்மையறிவை உடையவனாய், (தத்துவத்தில்) சந்தேகந்தான் அற்றான் — அந்தத் தத்துவங்களைப்பற்றிய ஐயம் நீங்கப்பெற்றவன், ஒத்துவரும் தீவினையில் நல்வினையில் — ஒன்றாகவரும் விரும்பாப் பலனைத்தரும் பாபகர்மத்திலும், விரும்பும் பலனைத்தரும் புண்ய கர்மத்திலும், சேர் வெறுப்பு சங்கம் அவை ஓவி — (முறையே) உண்டாகும் துவேஷம், பற்று ஆகியவற்றை விட்டு, உகந்து இருப்பு எய்தும் — (இரண்டிலும்) உகந்து இருப்பான்.

10. ஸத்வகு₃ணத்தால் விளைவதாய், ஶாஸ்த்ரஸித்₃த₄மான முற்கூறிய த்யாக₃த்தோடு கூடியவனுக்கு உள்ள விகாரமற்றிருக்கையாகிற லக்ஷணம் இந்த ஶ்லோகத்தில் சொல்லப்படுகிறது. "ந த்₃வேஷ்டி ஸம்ப்ரவ்ருத்தாநி ந நிவ்ருத்தாநி

एव च्छिन्नसंशयः, कर्मणि सङ्गफलकर्तृत्वत्यागी, न द्वेष्ट्यकुशलं कर्म,

காங்க்ஷதி'' [கீ₃தை 14-22][(அநிஷ்டமாகவோ, அதற்கு ஸாத₄னமாகவோ) வந்தடைபவற்றை (கு₃ணாதீதன்) வெறுப்பதில்லை; (இஷ்டமாகவோ அதற்கு ஸாத₄னமாகவோ வந்திருந்து) நீங்கினவற்றை விரும்புவதில்லை] ''உதா₃ஸீநவதா₃ஸீந:'' [கீதை 14-23][(ஆத்மாவைத்தவிர்ந்த விஷயங்களில் முற்கூறிய விருப்பு வெறுப்புகள் விளையாதபடி அவற்றைப்) பொருட்படுத்தாமல் இருப்பவன்.] என்று கீதையிலும், ''தத்ர யத்ப்ரீதிஸம்யுக்தம் காயே மநஸி வா ப₄வேத் | வர்த்ததே ஸாத்விகோ பா₄வ இத்யுபேக்ஷேத தத்ததா₃ ||'' [பா₄ர-மோக்ஷ 292-29] [உடம்பிலோ, மனத்திலோ உகப்பை உண்டாக்கும் கர்மப₂லம் விளைந்ததாகில் அது ஸத்வ கு₃ணத்தால் உண்டானது என்று எண்ணி அப்போது அதைப் பொருட்படுத்தாமல் இருக்க வேண்டும்]என்று மோக்ஷதர்மத்திலும் இந்த விகாரமின்மையாகிற லக்ஷணம் சொல்லப் பட்டதன்றோ. இந்த மூன்று வகைப்பட்ட த்யாக₃மும் ஸத்வகு₃ணத்தால் உண்டானது என்னும் விஷயமும் இந்த ஶ்லோகத்தில் சொல்லப்படுகிறது. ஶ்லோகத்தின் முற்பாதியில் சொல்லப்பட்ட விகாரமின்மைக்கு, பிற்பாதியில் படிப்படியாகக் காரணங்கள் விளக்கப்படுகிறதாகையாலே, அந்த க்ரமத்தில் பத₃ங்கள் விவரிக்கப்படுகின்றன. (ஸத்வஸமாவிஷ்ட:)முன் ஶ்லோகத்தில் சொன்னபடி ஸத்வகுணத்தோடுகூடியவன். (மேத₄ாவீ) ஸத்வகுணம் உடைமையினாலேயே, தத்துவங்களைப் பற்றிய, உண்மையறிவை உடையவன்; ''தீ₄ர்த₄ாரணாவதீ மேத₄ா'' [நாம-1-தீ₄வர்க்க₃ம்]என்று அமரகோஶத்திலும் ''மேத₄ா'' ஶப்₃த₃ம் உண்மையறிவைச் சொல்லுவதாகப் படிக்கப்பட்டது. ''மேத₄ாமநீஷே மா விஶதாம் ஸமீசீ பூ₄தஸ்ய பவ்யஸ்ய அவருத்₄யை'' [யஜுர்-ஆரண்யகம்-5-42] [சென்ற காலத்திலும், வருங்காலத்திலும் உள்ள பொருள்களை வசப்படுத்துவதற்காக, நன்மைமிக்க அறிவும் மனிதத்தன்மையும் என்னை வந்து அடையட்டும்] என்று ஶ்ருதியிலும் ''மேத₄ா'' ஶப்₃த₃ம் நல்லறிவைக் குறித்து வழங்கப்பட்டது. ஆகையால், இங்கு ''மேத₄ாவீ'' என்னும் ஶப்₃த₃ம் ஆசார்யனிடமிருந்து உபதேசம் பெற்றதாய் விபரீதஜ்ஞாநம் கலவாததான தத்வ ஜ்ஞானத்தை உடையவனைக் குறிக்கிறது. (சி₂ந்நஸம்ஶய:)தத்வஜ்ஞாநம் உள்ளவனாகையாலேயே தத்வங்களைப் பற்றிய ஐயம் நீங்கப்பெற்றவன். (த்யாகீ₃) முன் ஶ்லோகங்களில் சொன்னபடி தான் செய்யும்

कुशले च कर्मणि नानुषज्जते। अकुशलं कर्मानिष्टफलम्, कुशलं च कर्मेष्टरूपस्वर्गपुत्रपश्वन्नाद्यादिफलम्, सर्वस्मिन् कर्मणि ममतारहितत्वात् त्यक्तब्रह्मव्यतिरिक्तसर्वफलत्वात्, त्यक्तकर्तृत्वाच्च तयोः क्रियमाणयोः प्रीतिद्वेषौ न करोति। अनिष्टफलं पापं कर्मात्र प्रामादिकमभिप्रेतम्,

---

கர்மத்தில் 'இது என்னுடையது' என்னும் பற்றையும் அக் கர்மத்திற்குரிய பயனையும், அதில் கர்த்ருத்வத்தையும் கைவிடுபவன். முன் ஶ்லோகத்தில் சொன்ன ஸாத்விகத்யாக₃த்தை உடையவன் என்று கருத்து; இனி, ஶ்லோகத்தின் முற்பாதியில் இந்த ஸாத்விக த்யாக₃த்தின் ப₂லனாக உண்டாகும் விகாரமின்மையாகிற இவனுடைய லக்ஷணம் விளக்கப்படுகிறது. (அகுஶலம் கர்ம ந த்₃வேஷ்டி) தான் விரும்பாத ப₂லனை விளைக்கும் பாபகர்மங்களை வெறுப்ப தில்லை. (குஶலே ந அநுஷஜ்ஜதே) தான் விரும்பும் ஸ்வர்க்க₃ம், புத்ரன், பசு, அந்நம் முதலான செல்வம் ஆகிய ப₂லன்களில் பற்று வைப்பதில்லை. வெறுப்பிற்குக் காரணமாகக் கூடியதாகை யால் இங்கு "அகுஶலம் கர்ம" என்றது தான் விரும்பாத ப₂லனை விளைக்கும் பாபகர்மங்களேயாகும். பற்றுவைக்கக் காரணமாகக் கூடியதாகையால் "குஶலகர்மம்" என்றது தான் விரும்பும் ப₂லனை விளைக்கும் புண்யகர்மங்களேயாகும். இப்படிக் காரணமிருந்தும் முற்கூறிய வெறுப்பும் பற்றும் விளையப்பெருமலிருப்பவன் ஸாத் விகத்யாக₃த்தை உடையவன் என்றதாயிற்று. ஸாத்விகத்யாக₃ம் இத்தகைய மனநிலைக்கு எப்படிக் காரணமாகிறது? எனில்: எப்படி மற்ெருருவன் செய்யும் அவனுடைய கர்மத்தில் தன் தொடர்பு இல்லாமையால் தனக்கு அதனால் ஸுக₂து₃:க்க₂ங்கள் விளையா மையால் தனக்கு விருப்பு வெறுப்புகள் ஏற்படுவதில்லையோ, அப்படியே தான் செய்யும் எல்லாக் கர்மங்களிலும் 'இது என் னுடையது' என்னும் நினைவு இல்லாமையாலும், ப்₃ரஹ்மம் தவிர்ந்த மற்ற எல்லாப் ப₂லன்களையும் விட்டிருக்கையாலும், அக் கர்மங்களில் கர்த்ருத்வத்தையும் விட்டிருக்கையாலும் விருப்பு வெறுப்புகள் ஏற்படுவதில்லை என்று கருத்து. இங்கு ஒரு ஆக்ஷேபம் எழுகிறது. காம்ய கர்மங்களை அநுஷ்டி₂க்கும் போதும் அவற்றுக்குரிய ஸ்வர்க்க₃ம் முதலான ப₂லன்களில் பற்று வைக் காமலிருப்பதால் ஸ்வர்க்க₃ம் முதலான பலன்கள் விளைவதில்லை

* नाविरतो दुश्चरितान्नाशान्तो नासमाहितः । नाशान्तमानसो वापि प्रज्ञानेनैनमाप्नुयात् ॥ (क २. २४) इति दुश्चरिताविरतेर्ज्ञानोत्पत्ति-विरोधित्वश्रवणात् । अतः कर्मणि कर्तृत्वसङ्गफलानां त्यागश्शास्त्रीय-त्यागः, न कर्मस्वरूपत्यागः ॥ १० ॥

---

என்று ஶாஸ்த்ரம் கூறுகிறதாகையால் அக்கர்மங்களில் பற்றுஇல்லை என்பது பொருந்தும். பாபகர்மங்களைச் செய்யும் போது அவற்றின் ப₂லனில் பற்றுவைக்காமல் இருந்தாலும் அவற்றின் பலன் ஏற்பட்டே தீரும் என்பதே ஶாஸ்த்ரம். இப்படிக் கொள்ளாவிடில் பாப கர்மங்களுக்கு ப்ராயச்சித்தத்தை விதி₄ப்பதே பொருந்தாமல் போய் விடும். பாபகர்மத்தின் ப₂லனான நரகம் முதலானவை எவனாலும் விரும்பப்படவும் மாட்டாது; ஆகையால், பாபகர்மத்தை வெறுப்பதில்லை என்பது எப்படிப்பொருந்தும்? என்பது அவ்வாக்ஷேபம். இனி, இதற்கு ஸமாத₄ானமாவது—இங்கு அநிஷ்டப₂லத்தை விளைக்கும் பாபகர்மமாவது-கவனமின்மையால் செய்யப்படுவதேயாகும். ஆகையாலே தோஷமில்லை. சில சிறந்த அதி₄காரிகளுக்கு பு₃த்₃தி₄பூர்வமான பாபங்களும் ஒட்டுவதில்லை என்று இங்குக்கூறுவதாகக் கொள்ளலாகாதோ? எனில் "நாவிரதோ து₃ஶ்சரிதாத் நாஶாந்தோ நாஸமாஹித: । நாஶாந்த மாநஸோ வாபி ப்ரஜ்ஞாநேநைநமாப்நுயாத் ॥" [கட₂ 2-24] [தீய கர்மங்களிலிருந்து நீங்காதவனாய், காமக்ரோத₄ வேக₃ம் நீங்கப்பெறாதவனாய், மனத்தில் ஒருமைப்பாடு இல்லாதவனாய், மனத்தை அடக்காதவனாய் இருப்பவன் இந்தப் பரமாத்மாவை உபாஸநத்தால் அடைய இயலாது] என்று வேதவாக்கியத்திலும் பு₃த்₃தி₄பூர்வமான பாபங்கள் நீங்கப் பெறாதவனுக்குப் பரமாத்ம ஜ்ஞாநம் நிறைவடையாதென்று கூறப் பட்டதன்றோ. ஆக இந்த ஶ்லோகத்தால், கர்மத்தில் ப₂ல ஸங்க₃கர்த்ருத்வங்களை த்யாக₃ம் செய்வதே ஶாஸ்த்ரங்களில் மோக்ஷ காரணமான த்யாக₃ம் எனப்படுகின்றது என்றும், கர்மங்களை அடியோடு கைவிடுவது மோக்ஷகாரணமாகாது என்றும் நிருபிக்கப்பட்டதாயிற்று. 10.

भा ॥ तदाह —

न हि देहभृता शक्यं त्यक्तुं कर्माण्यशेषतः ।
यस्तु कर्मफलत्यागी स त्यागीत्यभिधीयते ॥ ११ ॥

11. ந ஹி தே3ஹப்4ருதா ஶக்யம் த்யக்தும் கர்மாண்-
யஶேஷத: ।
யஸ்து கர்மப2லத்யாகீ3 ஸ த்யாகீ3த்யபி4தீ4யதே ॥

தே3ஹ ப்4ருதா — தே3ஹத்தை த4ரிக்கும் ஜீவனாலே, கர்மாணி — செயல்களை, அஶேஷத: த்யக்தும் — அடியோடு கைவிடுவதற்கு, ந ஹி ஶக்யம் — இயலாதன்றோ; ய: — எவனொருவன், கர்மப2லத்யாகீ3 — கர்மத்தின் ப2லத்தை கைவிடுகிறானோ, ஸ: து — அவனே, த்யாகீ3 இதி — த்யாகீ3 என்று, அபி4தீ4யதே — சொல்லப்படுகிறான்.

---

11. காய முடையோன் கருமமெல்லாங் கைவிடுத
லாய வகையங் கரிதாகும்—மேய
பலன்றுறந்தோ னன்றும் படிதுறந்தோ னென்று
நலஞ்சிறந்தோர் சொல்வர் நயந்து.

காயமுடையோன் — ஶரீரத்தை த4ரிக்கும் ஜீவன், கருமம் எல்லாம் கைவிடுதல் ஆயவகை — எல்லாச் செயல்களையும் கைவிடுவதற்கு உரிய வழி, அங்கு அரிதாகும் — இவ்வுலகில் இயலாது; நலம் சிறந்தோர் — சாஸ்திர அறிவில் சிறந்தவர்கள், ''மேய பலன் துறந்தோன் — கருமத்திற்குரிய பலனைக் கைவிட்டவனே, நன்றும் படி துறந்தோன் — நன்றாகக் கர்மத்தைக் கைவிட்டவன், என்று — என்று, நயந்து சொல்வர் — ஆராய்ந்து கூறுவர்.

---

11. ''நியதஸ்ய'' என்று தொடங்கும் ஆருவது ஶ்லோகத்தை விவரித்துக் கொண்டு முன் சொல்லப்பட்ட மூவகைப்பட்ட த்யாக3முமே ஸாத்விக த்யாக3மாகும் என்று இந்த ஶ்லோகத்தில் நிர்ணயிக்கப்படுகிறது. (தே3ஹப்4ருதா) ஶரீரத்தையுடைய

भा ॥ नहि देहभृता — ध्रियमाणशरीरेण कर्माण्यशेषतः त्यक्तुं शक्यम्, देहधारणार्थानामशनपानादीनां तदनुबन्धिनां च कर्मणामवर्जनीयत्वात् । तदर्थं च महायज्ञाद्यनुष्ठानमवर्जनीयम् । यस्तु तेषु महायज्ञादिकर्मसु फलत्यागी, स एव *त्यागेनैके अमृत-

ஜீவனாலே. இவன் எப்பொழுதும் செயல்பட்டுக் கொண்டேயிருக்கும் ஶரீரத்தை உடையவனாகையாலே இவனால் கர்மங்களை அடியோடு கைவிடமுடியாது என்பதை உணர்த்துவதற்காக, ஜீவனைப் பொதுவாகக் குறிக்காமல் 'ஶரீரமுடைய ஜீவனாலே' என்று குறிக்கப்படுகிறது. (கர்மாணி அஶேஷத: த்யக்தும் நஹி ஶக்யம்) கர்மங்களை அடியோடு கைவிடுவது இயலாதன்றோ. இவ்விஷயம் "நஹி கஶ்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத்। கார்யதே ஹ்யவஶ: கர்மஸர்வ: ப்ரக்ருதிஜைர்குணை:॥" [கீதை 3-5][ஏனெனில், எந்த மனிதனும் எக்காலத்திலும் ஒருகணங்கூட, கர்மத்தைச் செய்யாமல் இருப்பதில்லை. (ஒன்றையும் செய்வதில்லை என்று உறுதி பூண்டவனையுள்ளிட்ட) எல்லாப் புருஷரும் ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் வளரும் ஸத்வரஜஸ்தமோ குணங்களால் அவ்வவற்றுக்குரிய செயலைக்குறித்து தம்மையறியாமலே தூண்டப்படுகிறாரல்லவோ? (ஆகையால் கர்மயோகத்தாலே ரஜஸ்தமோகுணங்களைக் குறைத்து ஸத்வகுணத்தை வளரச்செய்தாலல்லது ஜ்ஞாந யோகம் ஏற்படாது என்று கருத்து)] என்று மூன்றாம் அத்தியாயத்திலேயே விரிவாக விளக்கப்பட்டது. செயல்களை விடவேண்டும் என்னும் உறுதியுடையவனும் உயிர்தரிப்பதன் பொருட்டு உணவு உண்பது நீரருந்துவது முதலானவற்றைச் செய்தே தீரவேண்டும். அதன் பொருட்டுப் பொருளைத் தேடுவதற்கும் செயல் புரிய வேண்டும். ஆகையால், உலகவாழ்க்கை நடத்துவதற்குச் செயல் புரிந்தே தீரவேண்டும் என்று தேறியபின்பு, இந்தச் செயல்களைப் புரியும்போது பாபம் ஏற்படாமலிருப்பதற்காக ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டிருக்கும் பஞ்சமஹாயஜ்ஞங்கள் முதலானவற்றை அநுஷ்டிப்பதும் தவிர்க்கவொண்ணாததாகும். இனி, "த்யாகேநைகே அம்ருதத்வமாநஶு:" [தை-நா] என்று கர்மங்களைக் கைவிடுவதனாலேயே மோக்ஷம் கிடைக்குமென்று வேதம் சொல்லுகிறதே? என்னும் கேள்விக்கு ஶ்லோகத்தின் பிற்பாதியில்

त्वमानशुः (ना) इत्यादिशास्त्रेषु त्यागीत्यभिधीयते, फलत्यागीति प्रदर्शनार्थः, फलकर्तृत्वकर्मसङ्गानां त्यागीति, * त्रिविधस्संप्रकीर्तितः (४) इति प्रक्रमात् ॥ ११ ॥

भा ॥ ननु कर्माण्यग्निहोत्रदर्शपूर्णमासज्योतिष्टोमादीनि महा-यज्ञादीनि च स्वर्गादिफलसंबन्धितया शास्त्रैर्विधीयन्ते; नित्यनैमित्तिकानामपि * प्राजापत्यं गृहस्थानाम् (वि. १. ६. ३८.) इत्यादिफलसंबन्धितयैव हि चोदना । अतस्तत्तत्फलसाधनस्वभावतयाऽवगतानां कर्मणामनुष्ठाने बीजावापादीनामिवानभिसंहितफलस्यापीष्टानिष्टरूपफलसंबन्धोऽवर्जनीयः, अतो मोक्षविरोधिफलत्वेन मुमुक्षुणा न कर्मानुष्ठेयमित्यत उत्तरमाह --

अनिष्टमिष्टं मिश्रं च त्रिविधं कर्मणः फलम् ।
भवत्यत्यागिनां प्रेत्य न तु संन्यासिनां क्वचित् ॥ १२ ॥

12. அநிஷ்டமிஷ்டம் மிஶ்ரம் ச த்ரிவித4ம் கர்மண: ப2லம் ।
ப4வத்யத்யாகி3நாம் ப்ரேத்ய ந து ஸந்ந்யாஸிநாம் க்வசித் ॥

---

பதிலுரைக்கப்படுகிறது:—(யஸ்து கர்ம ப2லத்யாகீ3 ஸ த்யாகீ3 இதி அபி4தீ4யதே) எவனொருவன் அக்கர்மங்களின் ப2லன் முதலானவற்றைக் கைவிடுகிருனே அவனே த்யாக3ம் செய்பவனுக உபநிஷத்தில் சொல்லப்படுகிருன். (கர்மப2லத்யாகீ3) இங்கு "ப2லத்யாக3ம்" மாத்திரம் சொல்லப்பட்ட போதிலும், நாலாவது ஶ்லோகத்தில் 'த்யாக3ம்' மூன்று வகைப்பட்டது என்று கூறி, ஒன்பதாவது ஶ்லோகத்திலும் மேல் ஶ்லோகங்களிலும் அவை ப2லஸங்க3கர்த்ருத்வத்யாக3ங்கள் என்று விவரிக்கப்படுகையாலே, இங்கு ப2லத்யாக3த்தைச் சொன்னது மற்ற இரண்டு த்யாக3ங்களுக்கும் உபலக்ஷணம். (த்யாகீ3 இதி அபி4தீ4யதே) "த்யாகே3நைகே அம்ருதத்வமாநஶு:" [தை நா] முதலான உபநிஷத்3வாக்யங்களில் இந்த மூன்று வகைப்பட்ட த்யாக3த்தைச்செய்பவர்களே த்யாக3ம் செய்துமோக்ஷத்தைப்பெறுபவர்களாக எடுக்கப்படுகிருர்கள். ஆகையால் கர்மத்தின்ஸ்வரூப த்யாக3ம் அந்தவாக்கியங்களில் சொல்லப்படவில்லை என்று கருத்து. 11.

அநிஷ்டம் — (கர்மம் செய்பவனுக்குத்) துன்பத்தைத் தரும் நரகம் முதலானவையும், இஷ்டம் — இன்பத்தைத் தரும் ஸ்வர்க்கம் முதலானவையும், மிஶ்ரம் ச — இன்ப துன்பங்களைக் கலந்து தரும் பிள்ளை பசு அந்நம் முதலான செல்வங்களும்(ஆகிய), த்ரிவிதம் கர்மண: பலம்-மூன்று வகைப்பட்ட கர்மத்தின் பயனும், அத்யாகிநாம் — மூன்று வகைப்பட்ட த்யாகத்தைச் செய்யாதவர்களுக்கே, ப்ரேத்ய — கர்மத்தைச் செய்தபின்பு, பவதி — உண்டாகிறது; ஸந்ந்யாஸிநாம் து — முன்சொன்ன மூன்று வகைப்பட்ட த்யாகத்தைச் செய்பவர்களுக்கோவெனில், க்வசித் — ஒரு போதும், ந பவதி — (அந்தக் கர்மபலம்) உண்டாக மாட்டாது.

---

12. நன்றுந்தீ துங்கலந்து நண்ணும் பலமூன்று
யொன்றுந் துறவா துடன்சென்றார்க்—கென்றுங்
கருமத்தி லொன்றிக் கருதுபயன் சாரா
தொருமைப் படத்துறந்தார்க் குற்று

கருமத்தில் ஒன்றி—கர்மானுஷ்டானத்தில் பொருந்தி, துறவாது உடன் சென்றார்க்கு — மூன்று வகைப்பட்ட த்யாகங்களைச் செய்யாமலிருப்பவர்களுக்கு, நன்றும் — ஸ்வர்க்கம் முதலான இன்பம்தரும் பலன் என்றும், தீதும் — நரகம் முதலான துன்பம் தரும் பலன் என்றும், கலந்து நண்ணும் பலம் — 'புத்திரன் பசு முதலான இன்பதுன்பங்களைக் கலந்து தரும் பலன்' என்றும், மூன்றாய் ஒன்றும் — மூன்று விதமான பயன்களும் உண்டாகும்; என்றும்—எப்போதுமே, ஒருமைப்படத் துறந்தார்க்கு—பலத்தையும், ஸங்கத்தையும், கர்த்ருத்வத்தையும் ஒன்றாகக் கைவிட்டவர்களுக்கு, கருது பயன் உற்று சாராது — (முற்கூறிய) மூன்று பயன்களும் வந்தடையமாட்டா.

भा ॥ अनिष्टम् — नरकादिफलम्, इष्टम् — स्वर्गादि, मिश्रम् — अनिष्टसंभिन्नं पुत्रपश्वन्नाद्यादि; एतत्त्रिविधं कर्मणः फलम्, अत्यागिनाम्-कर्तृत्वममताफलत्यागरहितानां प्रेत्य भवति। प्रेत्य —कर्मानुष्ठानोत्तर-

---

12. 'உலகில் பலனில் விருப்பமில்லாமல் ஒரு காரியத்தைச் செய்தாலும் அந்தக் காரியத்துக்குப் பலன் ஏற்பட்டே தீருகிறது. பலனில் விருப்பமில்லாமல் விதை விதைத்தாலும் அது முளைக்காமல் இருக்காதன்றோ. அது போலவே ஸ்வர்க்கம் முதலான பலன்களை விளைப்பவையாக சாஸ்திரங்களில் விதிக்கப்படும் அக்நிஹோத்ரம், தர்ஶபூர்ணமாஸம் ஜ்யோதிஷ்டோமம் முதலான கர்மங்களும், தினந்தோறும் அனுஷ்டிக்கப்படும் பஞ்சமஹாயஜ்ஞும் முதலானவையும் பலனில் விருப்பமில்லாமல் செய்யப்பட்டபோதிலும் அவற்றுக்குப் பலன் விளைந்தே தீருமன்றோ. " ப்ராஜாபத்யம் க்ருஹஸ்தாநாம்'' [வி. பு 1-6-38] முதலான ப்ரமாணங்களில் க்ருஹஸ்தர்கள் அநுஷ்டிக்கும் நித்யநைமித்திக கர்மங்களுக்கும் ப்ராஜாபத்ய லோகம் பயனாகச் சொல்லப்பட்டதாகையாலே, அவற்றுக்கும் இந்த நியாயம் பொருந்தும். ஆகையால், எல்லாக்கர்மங்களுமே, ஒரு பலனை விரும்பாமல் செய்தாலும், பலனை விளைத்தே தீருமாகையால் அவற்றுக்கு இஷ்டாநிஷ்டரூபமான பலன்கள் விளைவதைத் தவிர்க்கமுடியாது. ஆகையால், மோக்ஷத்திற்குத் தடையான பலன்களை விளைப்பவையாகையாலே மோக்ஷத்தை விரும்பும் முமுக்ஷுவால் கர்மம் அநுஷ்டிக்கத் தக்கதன்று'— என்னும் ஆக்ஷேபத்திற்குப் பதிலுரைக்கிறன் இந்த ஶ்லோகத்தில். (அநிஷ்டம்) பொதுவாக மக்களால் விரும்பப்படாத துன்பத்தையளிக்கும் நரகம் முதலான பலம். (இஷ்டம்) அவர்களால் விரும்பப்படும் இன்பத்தைத் தரும் ஸ்வர்க்கம் முதலான பலம். (மிஶ்ரம்) இன்பத்தையும் துன்பத்தையும் கலந்து தரும் பிள்ளை பசு அந்நம் முதலான செல்வங்கள். (த்ரிவிதம் ச கர்மண: பலம்) இந்தமூன்று வகையான கர்மபலனும். (அத்யாகிநாம் பவதி) 'இந்தக் கர்மத்தைச் செய்பவன் நான்' என்னும் எண்ணத்தையும், 'இந்தக்கர்மம் என்னுடையது' என்னும் எண்ணத்தையும், 'இந்தக்கர்மத்தின் பலன் என்னுடையது' என்னும் எண்ணத்தையும் விடாதவர்களுக்கே உண்டாகிறது. (ப்ரேத்ய பவதி) கர்மத்தை அநுஷ்டித்த பிறகு உண்டாகிறது. 'ப்ரேத்ய' என்பதற்கு 'இறந்தபிறகு' என்று பொருளாயிருக்க

कालमित्यर्थः। न तु संन्यासिनां क्वचित्—न तु कर्तृत्वादिपरित्यागिनां क्वचिदपि मोक्षविरोधिफलं भवति। एतदुक्तं भवति—यद्यप्यग्निहोत्र-महायज्ञादीनि [ नित्यान्येव ] तान्येव; तथाऽपि जीवनाधिकारकामाधि-

---

''கர்மத்தை அநுஷ்டி₂த்தபிறகு'' என்று பொருள் கொள்ளலாமோ? எனில்; நரகம் முதலான அநிஷ்டப₂லமும் ஸ்வர்க்க₃ம் முதலான இஷ்டப₂லமும் இறந்த பிறகு உண்டானாலும், காரீரியாக₃ம் முதலியவற்றால் உண்டாகும் மழை முதலானவை உயிர் வாழும்போதே உண்டாவதையும காண்கிறோமாகையாலே, இங்கு 'ப்ரேத்ய' என்றது உயிர்வாழும்போது உண்டாகும் ப₂லன்களையும் உபலக்ஷணமுறையாலே காட்டுகிறது. அதனாலேயே 'கர்மத்தை அநுஷ்டி₂த்த பிறகு' என்று பொருள் கொள்ளப் பட்டது. இப்படிக்கொள்ளாவிடில், இந்த எண்ணங்களைக் கைவிடுபவர்களுக்கு உயிரோடு இருக்கும் போது இந்தப் ப₂லன்கள் உண்டாகலாம் என்னும் பொருளும் தொனிக்கும்; ''அவற்றைக் கைவிடுபவர்களுக்கு இது ஒருபோதும் உண்டாகாது'' என்று கூறும் நாலாவது பாதத்தோடும் முரண்படும். ஆகையால் 'ப்ரேத்ய' என்றதற்கு 'கர்மத்தை அநுஷ்டி₂த்த பிறகு' என்றே பொருள் கொள்ளவேண்டும். (ஸந்யாஸிநாம் து க்வசித் ந ப₄வதி) இந்த மூன்று வித₄மான எண்ணங்களையும் கைவிடுபவர்களுக்கோ வெனில், மோக்ஷத்திற்குத் தடையான இந்த மூன்று விதமான ப₂லமும் ஒருபோதும் உண்டாகாது. அநிஷ்ட ப₂லனைப் பொறுத்தவரையில் 10-வது ஶ்லோகத்தின் ப₄ாஷ்ய வ்யாக்₂யானங்களில் விவரித்தபடி ப்ராமாதி₃கமாகச் (கவனமில்லாமல்) செய்யப் பட்ட அநிஷ்டப₂லமே உண்டாகாது என்றே கொள்ள வேண்டும். இந்த ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட கருத்து பின்வருமாறு:— அக்₃நிஹோத்ரம் பஞ்சமஹாயஜ்ஞம் முதலான கர்மங்களையே ஆயுள் உள்ளவரையில் க்₃ருஹஸ்த₂ர்களால் அநுஷ்டி₂க்கப்பட வேண்டியவையாக ஶாஸ்த்ரங்கள் விதி₄க்கின்றன. வேறு சில ஶாஸ்த்ர வாக்யங்கள் இக்கர்மங்களையே ஸ்வர்க்க₃ம் முதலான ப₂லன்களுக்கு ஸாத₄நமாக விதி₄க்கின்றன. இப்படி இருவகைவாக்கியங்கள் இருப்பதைக் கொண்டு தினந்தோறும் அநுஷ்டி₂க்கப்படவேண்டிய அக்கர்மங்களைக் காட்டிலும், ஸ்வர்க்க₃ம் முதலான ப₂லன்களுக்கு ஸாத₄நமாக

कारयोरिव मोक्षाधिकारे च विनियोगपृथक्त्वेन परिह्रियते । मोक्ष-विनियोगश्च * तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन दानेन तपसाऽनाशकेन (बृ. ६. ४. २२.) इत्यादिभिरिति । तदेवं क्रियमाणेष्वेव कर्मसु कर्तृत्वादिपरित्यागश्शास्त्रसिद्धस्संन्यासः, स एव च त्याग इत्युक्तः ॥ १२ ॥

---

அநுஷ்டி2க்கப்படும் அக்கர்மங்கள் வேறு என்று கொள்கிறோம். இதையே "விநியோக3 ப்ருத2க்த்வ ந்யாயம்" என்று ஶாஸ்த்ரம் அறிந்தவர்கள் சொல்லுகிறார்கள். இந்த நியாயத்தின்படி, இதே கர்மங்களே மோக்ஷஸாத4நமாகவும் விதி4க்கப்படுகையாலே, 'ப2லனில் விருப்பமற்றுச் செய்யப்படும் இதே கர்மங்கள் முற்கூறிய இரண்டைக் காட்டிலும் வேறுபட்டவையாய், மோக்ஷத்திற்கு ஸாத4நமாகின்றன' என்று கொள்கிறோம். ஆகையால், "கர்மங்கள் மோக்ஷத்திற்குத் தடையான ப2லன்களைக் கொடுக்கக் கூடியவையாகையாலே கைவிடத் தக்கவை" என்ற ஆக்ஷேபத்திற்கு ஸமாதா4நம் உரைக்கப்பட்டதாயிற்று. இனி ஒரு கேள்வி பின் வருமாறு எழுகிறது:- "தமேவம் வித்3வாந் அம்ருத இஹ ப4வதி நாந்ய: பந்தா3:" [பு-ஸூ] [அந்தப் பரமபுருஷனை இவ்வண்ணமாக அறிபவனே இப்பிறப்பில் மோக்ஷமடைகிறான். மோக்ஷமடைய வேறு வழியில்லை] என்னும் வேத3வாக்யத்தில் ஜ்ஞாநமே மோக்ஷஸாத4நமென்றும், கர்மம் மோக்ஷஸாத4நமாகாது என்றும் கூறியிருக்கும் போது, கர்மத்தை மோக்ஷஸாத4நமாக வேத3வாக்யங்கள் விதி4க்கின்றன என்பது எப்படிப் பொருந்தும்? என்பது அக்கேள்வி. இதற்குப்பதில் பின்வருமாறு:- "தமேதம் வேதா3நுவசநேந ப்3ராஹ்மணா விவிதி3ஷந்தி யஜ்ஞேந தா3நேந தபஸாऽநாஶகேந" [ப்3ருஹ 6-4-22] [இந்தப் பரமாத்மாவை ப்3ராஹ்மணர்கள் (வேத3ம் வல்லவர்கள்) வேதா3த்4யயனத்தாலும், யஜ்ஞத்தாலும், தா3னத்தாலும் அழியாததவத்தாலும் அறிவதற்கு விரும்புகிறார்கள்] என்னும் வேத3வாக்யம் யஜ்ஞம், தானம், தவம் முதலான கர்மங்கள் ப்3ரஹ்மஜ்ஞாநத்தை உண்டாக்குவதன் மூலம் பரம்பரயா மோக்ஷஸாத4நமாகின்றன என்று விதி4க்கின்றது. "நாந்ய: பந்தா2:" என்ற

भा ॥ इदानीं भगवति पुरुषोत्तमे अन्तर्यामिणि कर्तृत्वानुसंधानेन आत्मन्यकर्तृत्वानुसंधानप्रकारमाह, तत एव फलकर्मणोरपि ममतापरित्यागो भवतीति । परमपुरुषो हि स्वकीयेन जीवात्मना स्वकीयैश्च करणकलेबरप्राणैः स्वलीला(दि)प्रयोजनाय कर्माण्यारभते; अतो जीवात्मगतं क्षुन्निवृत्त्यादिकमपि फलम्, तत्साधनभूतं च कर्म परमपुरुषस्यैव ।

पञ्चैतानि महाबाहो कारणानि निबोध मे ।
सांख्ये कृतान्ते प्रोक्तानि सिद्धये सर्वकर्मणाम् ॥ १३ ॥

13. பஞ்சைதாநி மஹாபா3ஹோ காரணாநி நிபோ3த4 மே |
ஸாங்க்2யே க்ருதாந்தே ப்ரோக்தாநி ஸித்3த4யே ஸர்வ
கர்மணாம் ||

மஹாபா3ஹோ-தடக்கையனே! ஸாங்க்2யே க்ருதாந்தே - வேதத்தையொட்டியிருக்கும் உண்மையறிவாலே தேறும் நிர்ணயத்தில், ஸர்வகர்மணாம் ஸித்3த4யே — எல்லாக் கர்மங்களும் உண்டாவதன் பொருட்டு, ப்ரோக்தாநி — சொல்லப்படுகின்ற, ஏதாநி பஞ்ச காரணாநி—இந்த ஐந்து காரணங்களை, மே — என்னிடமிருந்து, நிபோ3த4 — அறிவாயாக.

---

வாக்யம் 'கர்மம் நேரே மோக்ஷஸாத4னமாகாது' என்னும் கருத்துடையது. ஆகையாலே, விநியோக3 ப்ருத2க்த்வ நியாயத்தை இங்கும் கொள்ளலாம். ஆக, முதல் ஶ்லோகத்தில் "ஸந்யாஸம் த்யாக3ம் இரண்டும் ஒன்று வேறு? அதன் ஸ்வரூபம் என்ன?" என்று அர்ஜுனன் கேட்ட கேள்விக்கு, "கர்மங்களைச் செய்யும் போது மூன்று வகையான பரித்யாக3ங்களைச் செய்வதே ஶாஸ்த்ரங்களில் ஸந்யாஸம் என்று சொல்லப்படுகின்றது. அதுவே த்யாக3ம் என்றும் சொல்லப்படுகின்றது" என்று இதுவரையில் பதிலுரைக்கப் பட்டதாயிற்று. 12.

13. செய்யுங் கருமமெல்லாஞ் சித்திக்க நீவிசையா
வுய்யு மதியறுதி யுற்றுணர்ந்த – வைவகைசேர்
காரணங்க ளென்பாற் கருத்தமர்ந்து கேட்டறிநீ
யாரணங்கள் சொல்லு மது.

விசையா — அர்ஜுந! ஆரணங்கள் சொல்லுமது — வேதங்களால் சொல்லப்படுவதாய், உய்யும் மதி அறுதி— உய்விக்கச்செய்வதான அறிவினால் தேறும் நிர்ணயத்தில், நீ செய்யும் கருமமெல்லாம் சித்திக்க — (ஜீவனை) நீ செய்யும் கர்மங்கள் அனைத்தும் உண்டாவதற்கு, உற்று உணர்ந்த — நன்கு அறியப்பட்ட, ஐவகை சேர் காரணங்கள் — ஐந்து வகைப்பட்ட காரணங்களை, என்பால் — என்னிடம், நீ — நீ, கருத்து அமர்ந்து — கவனத்துடன், கேட்டு அறி — கேட்டு அறிவாயாக.

---

13. சென்ற ஸ்லோகம் ஈறுக— அத்தியாயத்தின் தொடக்கத்தில், அர்ஜுனனால் கேட்கப்பட்ட கேள்விக்குப் பதிலுரைக்கப்பட்டது. இனி, மூன்றும் அத்தியாயம் தொடங்கி அடிக்கடி சொல்லப் பட்டு வரும் மூன்று விதமான பரித்யாகங்களில் ஒன்றான அகர்த்ருத்வாநுஸந்தாநத்தின் உண்மையான ஸ்வரூபத்தைக் காரணங்காட்டி விளக்குகிறான். அகர்த்ருத்வாநுஸந்தாநமாவது— (எல்லாக்கல்யாண குணங்களோடும் கூடியவனாய், தாழ்ந்த குணங்கள் எதுவும் இல்லாதவனாய், ஜீவர்களைக் காட்டிலும் மிகச்சிறந்த புருஷோத்தமனாய், அனைவருக்கும் அந்தர்யாமியாய் இருக்கும் எம்பெருமானே நாம் செய்யும் ஒவ்வொரு செயலையும் செய்விக்கிறானேயொழிய, நாம் எதுவும் செய்யவில்லை என்னும் அநுஸந்தாநமாகும்.) இந்த அகர்த்ருத்வாநுஸந்தாநத்தை விளக்கியதாலேயே பலத்யாகமும் கர்மஸங்கத்யாகமுமாகிற மற்ற இரண்டு த்யாகங்களும் விளக்கப்பட்டதாகிறது. ஆதலாலேயே இதை விரிவாக இங்கு விளக்குகிறான். இவ்விடத்தில் பின்வருமாறு ஓர் ஆக்ஷேபம் எழுகிறது—யாகங்களில் ரித்விக் முதலானவர்கள் யாகங்களைச் செய்யும் கர்த்தாக்களாயிருந்த

போதிலும், யாகஂங்களைச் செய்யாதவர்களான யஜமானன் முத லானவர்கள் இந்த யாகஂங்களையும் அவற்றின் ப₂லன் களையும் தம்முடையவையாக எண்ணுவதைப் பார்க்கிறோம். அதுபோலவே இங்கும் ஆகலாமே. ஆகையால், கர்த்ருத்வ த்யாகஂத்தால் மாத்திரம் மற்ற இரண்டு த்யாகஂங்களும் எப்படி ஸித்₃தி₄க்கும் என்பது அவ்வாக்ஷேபம். இதற்குப்பதில் பின்வரு மாறு:— (பரமபுருஷன் தன் உடைமையான ஜீவாத்மாவைக் கொண்டு, தன் உடைமையாயிருக்கும் அவனுடைய ஶரீரம் இந்த்₃ரியம் ப்ராணன் ஆகியவற்றாலே, தன்னுடைய விளையாட்டு, தன்னுடைய அடியார்களை ரக்ஷிப்பது முதலான பயனுக்காகச் செயல்களைத் தொடங்குகிறான். ஜீவனுடைய ஶரீரேந்த்₃ரியப்ராணன் கள் அவனுடைய உடைமையாயிருந்தபோதிலும் அவனை உடைய வனான ஈஶ்வரனுக்கும் உடைமையாய் உள்ளன. ராஜாவுக்கு உடைமையான யானை, குதிரை முதலானவற்றின் அலங்காரங் களும் ராஜாவுக்கு உடைமையாயிருப்பது போலே இதுவும்.) ஆகையால், "லோகவத்து லீலாகைவல்யம்" [ப்₃ரஹ்மஸூத்ரம் 2-1-33] என்னும் ஸூத்ரத்தில் சொன்னபடி ஸர்வேஶ்வரனின் விளையாட்டின் பொருட்டே இக்கர்மங்கள் அமைகின்றன. "த்வம் ந்யஞ்சத்₃பி₄: உத₃ஞ்சத்₃பி₄: கர்மஸூத்ரோபபாதி₃தை: | ஹரே விஹரஸி க்ரீட₃ாகந்து₃கைரிவ ஜந்துபி₄:||" [விஷ்ணு த₄ர்மம்] [எம்பெருமானே! தாழ்ந்தும் உயர்ந்தும் இருக்கும் கயிறுகளாலே கட்டப்பட்டிருக்கும் விளையாட்டுப் பந்துகளாலே விளையாடுவது போலே, தாழ்ந்தும் உயர்ந்துமிருக்கும் கர்மங் களாலே கட்டப்பட்டிருக்கும் ஜீவர்களைக் கொண்டு நீ விளை யாடுகிறாய்] "அப்ரமேயோऽநியோஜ்யஶ்ச யத்ர காமக₃மோ வஶீ | மோத₃தே ப₄க₃வாந் பூ₄தைர் பா₃ல: க்ரீட₃நகைரிவ||" [பா₄ர-ஸபா₄ 61-31] [அளவிடவொண் ணாதவனும், கேள்வி கேட்கக் கூடாதவனும், எங்கும் நிறைந்தவனும், அனைத்தையும் தன்வசத்தில் கொண்டவனும் இருக்கும் ப₄க₃வான் பரமபத₃த்திலிருந்துகொண்டு சிறுபிள்ளை விளையாட்டுக் கருவிகளைக் கொண்டு விளையாடுவது போலே ஜீவரா சிகளைக் கொண்டு விளையாடுகிறான்] "க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூ₄தமித₃ம் விஶ்வம் சராசரம்" [பா₄ர-ஸபா₄ 41-23] [அசை வனவும் அசையாதனவும் அடங்கிய இவ்வுலகம் கிருஷ்ணனுக் காகவே அமைந்தது] முதலான ப்ரமாணங்களில் இவ்விஷயம் சொல்லப்பட்டது. ஆகையால், கர்த்ருத்வத்யாகஂத்தைச் சொன்னது

भा ॥ संख्या — बुद्धिः; सांख्ये कृतान्ते — यथावस्थिततत्त्व-विषयया वैदिकया बुद्ध्या अनुसंहिते निर्णये सर्वकर्मणां सिद्धये —

---

மற்ற இரு த்யாக$_3$ங்களையும் சொன்னதாகவே ஆகும். இங்கு மற்றொரு ஆக்ஷேபம் எழுகிறது. ஶாஸ்த்ரங்களில் பரமபுருஷனுக்கு ஆராத$_4$னமாகவே கர்மங்கள் விதிக்கப்படுகையால் இக்கர்மங்களும் அவற்றின் ப$_2$லன்களும் அந்தப்பரமபுருஷனுடையவையே என்று சொல்லுவது பொருந்தும்; உலகில் உணவுண்பது முதலான லௌகிக கர்மங்களும் அவற்றின் பயனான பசிதீருவது முதலானவையும் பரமபுருஷனுக்காக ஏற்பட்டவை என்று ஶாஸ்த்ரங்களில் சொல்லப்படுவதுமில்லை, அப்படிக் காணப்படுவதுமில்லை; நேர்மாறாக, ஜீவன் தன்னுடைய பசிபோவது முதலான ப$_2$லன்களுக்காக, தான் உண்பது முதலானவற்றைச் செய்கிறான் என்றே காணப்படுகிறது; ஆகையால், லௌகிகமான ப$_2$லன்களும் அவற்றுக்குச் சாதனங்களும் ஜீவனுக்காக ஏற்பட்டவையே எனத்தேறுகையால், பரமபுருஷனுக்கேயானவை என்று சொல்ல முடியாதே; ஆகையால், இந்த ஶ்லோகத்தின் கடைசிப்பாதத்தில் "எல்லாக்கர்மங்களும் உண்டாவதற்காக" என்று கூறியது பொருந்தாதே—என்பது அவ்வாக்ஷேபம். இதற்கு ஸமாதா$_4$னம் பின்வருமாறு:— அரசன் அரண்மனையில் தன் ஆனந்தத்திற்காகக் கூட்டிலிருக்கும் கிளியை உணவூட்டிப் போஷித்து வளர்க்கிறான். அதனால் கிளிக்கு ஏற்படும் இன்பம் முதலானவையெல்லாம் எப்படி அரசனின் ஆனந்தத்திற்கே ஆகின்றனவோ, அப்படியே ஜீவாத்மாவுக்கு விளையும் பசி தீருதல் முதலான பயன்களும், அதற்குச் சாதனமான உணவுண்பது முதலான செயல்களும் பரம புருஷனின் ஆனந்தத்திற்கே ஆகின்றன. ஆகையால் ஜீவன் தன்னிடம் கர்த்ருத்வம் (செயல் புரியும் தன்மை) இல்லாமையையும், எம்பெருமானிடமே கர்த்ருத்வத்தையும் அநுஸந்தி$_4$ப்பது பொருத்தமே. இனி ஶ்லோக வ்யாக்$_2$யாநம் தொடங்கப்படுகிறது. (ஸாங்க்$_2$யே க்ருதாந்தே) தத்துவங்களை உள்ளபடி தெரிவிக்கும் வேத$_3$த்தையொட்டிய உண்மையறிவாலே தேறும் நிர்ணயத்தில். சொல் அமைப்பை ஒட்டி இங்கு 'ஸாங்க்$_2$யஸித்$_3$தா$_4$ந்தம்' என்று பொருள் கொள்ளக் கூடாதோவெனில், கூடாது; அந்த ஸித்$_3$தா$_4$ந்தத்தில் ஈஶ்வரனை ஒப்புக்கொள்ளுவதில்லை;

उत्पत्तये, प्रोक्तानि पञ्चैतानि कारणानि निबोध मे -- मम सकाशादनु·

இங்கு பதினாலாவது ஶ்லோகத்தின் முற்பாதியில் செயல்புரிவோனாகிற கர்த்தாவையும், அவனுக்குக் கருவியாயிருக்கும் கரணங்களையும் தனியாகச் சொல்லியிருப்பது போலே ஸாங்க்₂யர்கள் ஒப்புக்கொள்வதில்லை; கரணத்தைக் காட்டிலும் வேறுபட்ட கர்த்தா இல்லை என்றன்றோ அவர்கள் ஒப்புக்கொள்கிறார்கள். ஸாங்க்₂யமதத்தில் ஒருபகுதி வேத₃த்தோடு முரண்பட்டும் ஒரு பகுதி வேத₃த்தையொட்டியும் உள்ளது. வேதத்தோடு முரண்பட்டது தத்வோபதேசம் ஆகாதாகையால், அதை இங்கு சொல்லலாகாது. முரண்படாததைச் சொல்லுவதாகக் கொண்டால், வேத₃ஸித்₃த₄ாந்தத்தைச் சொல்லுவதாகுமேயொழிய ஸாங்க்₂ய ஸித்₃த₄ாந்தத்தைச் சொல்லுவதாகாது. ஆகையால், இங்கு அர்த்த₂த்தின் பொருத்தத்தைக் கருதி ஸாங்க்₂ய ஶப்₃த₃த்தின் ரூடி₄யைக் கைவிட்டு, யோக₃ார்த்த₂த்தைக் கொள்ள வேண்டும். அப்படிக் கொள்ளும்போது 'ஸங்க்₂யா'ஶப்₃த₃ம் பு₃த்₃தி₄யாகிற அறிவைக் குறிப்பதாய், தத்துவங்களை உள்ளபடி தெரிவிக்கும் வேத₃த்தையொட்டிய உண்மை அறிவை இங்கு குறிக்கிறது. 'அந்த' ஶப்₃த₃த்திற்கு நிக₄ண்டுக்களில் நிர்ணயம் என்னும் பொருள் படிக்கப்பட்டுள்ளது. 'க்ருதாந்தே' என்றதால் முற்கூறிய அறிவால் உண்டாக்கப்பட்ட நிர்ணயத்தைச் சொல்லுகிறது. இங்கு ஶங்கரபா₄ஷ்யத்தில் "ஸாங்க்₂யே க்ருதாந்தே" என்னும் பத₃த்திற்கு 'கர்மங்கள் முடிவடையும் வேதா₃ந்த ஶாஸ்த்ரத்தில்' என்று பொருள் கொள்ளப்பட்டது. இது பொருந்தாது. "குர்வந்நேவேஹ கர்மாணி ஜிஜீவிஷேத் ஶதம் ஸமா:" [ஈஶாவாஸ்யம் 2] [கர்மங்களைச் செய்து கொண்டே நூறாண்டுகள் வாழ விரும்பவேண்டும்] முதலான பல வேதா₃ந்த வாக்கியங்களில் கர்மங்களைச் செய்யவேண்டும் என்றே சொல்லப்பட்டதன்றோ. "க்ருதாந்தே" என்றதற்கு "அநுஸந்திக்கப்பட்ட நிர்ணயத்தில்" என்று பா₄ஷ்யம். பூர்வர்களின் நிர்ணயம் பின்னால் வருபவர்களால் அநுஸந்திக்கப்படுகிறது என்று கருத்து. அன்றிக்கே 'நிர்ணய'ஶப்₃த₃ம் நிர்ணயிக்கப்பட்ட பொருளைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். அல்லது நிர்ணயஶப்₃த₃ம் நிர்ணயிக்கும் சொல்லைக்குறிப்பதாகவும் கொள்ளலாம். அப்போது 'ப்ரோக்தாநி' [சொல்லப்படுபவை] என்பதோடு அந்வயிக்கிறது. எதற்காகச் சொல்லப்படுகின்றன? எனில்— (ஸர்வகர்மணாம் ஸித்₃த₄யே) எல்லாக் கர்மங்களும் உண்டாவதின் பொருட்டு 'ஸித்₃தி₄' ஶப்₃த₃ம் ப₂லன் வரையிலான 'ஸித்₃தி₄'யை இங்கு குறிக்கமுடியாது.

संधत्स्व । वैदिकी हि बुद्धिः शरीरेन्द्रियप्राणजीवात्मोपकरणं परमात्मानमेव कर्तारमवधारयति — * य आत्मनि तिष्ठन्नात्मनोऽन्तरो यमात्मा न वेद यस्यात्मा शरीरं य आत्मानमन्तरो यमयति स त आत्माऽन्तर्याम्यमृतः (बृ ५ ७. २२.) * अन्तःप्रविष्टश्शास्ता जनानां सर्वात्मा (य. आ. ३. ११. २.) इत्यादिषु ॥ १३ ॥

---

அடுத்த ச்லோகங்களில் "யத்கர்ம ப்ராரப₄தே பஞ்சைதே தஸ்ய ஹேதவ:" [எந்தக் கர்மத்தைத் தொடங்குகிறுனே, அதற்கு இந்த ஐந்தும் காரணங்கள்] என்று கர்மத்தைத் தொடங்குவதற்கே காரணமாகச் சொல்லுகையால், இங்கு 'ஸித்₃தி₄' ஶப்₃த₃ம் கர்மத்தின் உத்பத்தியையே குறிக்கிறது. (ஏதாநி பஞ்ச காரணுநி) "ப்ரோக்தாநி" என்பதோடு கூட்டிக் கொள்ள வேணும். எல்லாக் கர்மங்களின் உத்பத்திக்கும் இந்த ஐந்தும் காரணங்களாகச் சொல்லப்படுகின்றன என்று கருத்து. (மே நிபோ₃த₄) இவ்வைந்து காரணங்களையும் என்னிடமிருந்து அறிவாயாக. "மே காரணுநி" [எனக்குக் காரணங்கள்] என்று கூட்டிப்பொருள் கொள்வது எவ்வகையிலும் பொருந்தாதாகையாலே, 'மே நிபோ₃த₄' என்றே கூட்டிப்பொருள்கொள்ளவேண்டும். வேதத்தைக்கொண்டு உண்டாகும் அறிவு ஶரீரம், இந்த்₃ரியம், ப்ராணன், ஜீவன் ஆகிய நான்கையும் கருவிகளாகக் கொண்டு ஆட்டிப்படைக்கும் பரமாத்மாவையே செயல்களைச் செய்பவனுக உறுதிப்படுத்துகிறதன்றோ. "ய ஆத்மநி திஷ்ட₂ந்நாத்மநோந்தரோ யமாத்மா ந வேத₃ யஸ்யாத்மா ஶரீரம் ய ஆத்மாநமந்தரோ யமயதி ஸ த ஆத்மாந்தர்யாம்யம்ருத:" [ப்₃ருஹ 5-7-22] [எந்தப் பரமாத்மா ஜீவாத்மாவுக்கு வெளியிலும் உள்ளேயும் வியாபித்துநிற்கிறுனே, எவனை ஜீவாத்மா அறியவில்லையோ, எவன் ஜீவாத்மாவுக்கு ஶரீரமோ, எவன் ஜீவாத்மாவை உள்நுழைந்து நியமிக்கிறுனே, அவனே உனக்கும் ஆத்மாவாகவும் உள் நுழைந்து நியமிக்கும் அந்தர்யாமியாகவும் அழிவற்றவனுகவும் இருப்பவன்] "அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா" [யஜுர்-ஆர 3-11-2] [அனைவர்க்கும் ஆத்மாவாயிருக்கும் பரமாத்மா ஜனங்களை உள் நுழைந்து நியமிக்கிறுன்] முதலான வேத வாக்கியங்களைக் காணலாம். ஆக இத்தால், இருபத்தாறுவது தத்துவமான ஈஶ்வரனை ஒப்புக்கொள்ளாதவர்களும் இருபத்தைந்தாவது தத்துவமான ஜீவனுக்குக் கர்த்ருத்வம் ஏறிடப்பட்டதாகச் சொல்லுகிறவர்களுமான ஸாங்க்₂யர் முதலானவர்களுக்கு இந்த

भा ॥ तदिदमाह—

अधिष्ठानं तथा कर्ता करणं च पृथग्विधम् ।

विविधा च पृथक्चेष्टा दैवं चैवात्र पञ्चमम् ॥ १४ ॥

शरीरवाङ्मनोभिर्यत्कर्म प्रारभते नरः ।

न्याय्यं वा विपरीतं वा पञ्चैते तस्य हेतवः ॥ १५ ॥

14. அதி₄ஷ்டா₂நம், தத₂ா கர்த்தா, கரணம் ச ப்ருத₂க்₃வித₄ம் |
விவித₄ா ச ப்ருத₂க்சேஷ்டா, தை₃வம் சைவாத்ர பஞ்சமம் ||

15. ஶரீரவாங்மநோபி₄ர்யத் கர்ம ப்ராப₄தே நர:|
ந்யாய்யம் வா விபரீதம் வா பஞ்சைதே தஸ்ய ஹேதவ:||

ந்யாய்யம் வா — ஶாஸ்த்ரத்தில் ஸித்₃தி₄ப்பதாகவோ, விபரீதம் வா — ஶாஸ்த்ரத்தில் தடுக்கப்பட்டதாகவோ உள்ள, யத் கர்ம — யாதொரு கர்மத்தை, ஶரீரவாங் மநோபி₄: — உடலாலும் வாக்காலும் மனத்தாலும், நர: — மனிதன், ப்ராரப₄தே — தொடங்குகிருனே, தஸ்ய — அந்தக் கர்மத்திற்கு. ஏதே பஞ்ச — இந்த ஐந்தும், ஹேதவ: — காரணங்களாகின்றன; (அவையாவன) — அதி₄ஷ்டா₂நம் — ஶரீரம், தத₂ா கர்த்தா — அடுத்தபடியாக ஜீவாத்மா, ப்ருத₂க்வித₄ம் கரணம் ச — அதுபோலவே பலவிதமான செயல்களையுடைய மனத்தோடு கூடிய ஐந்து கர்மேந்த்ரியங்கள், விவித₄ா ப்ருத₂க் சேஷ்டா ச — அவ் வண்ணமே ஐந்து வகைப்பட்ட செயல்களையுடைய ப்ராணன், அத்ர — இக்கர்மங்களுக்குக் காரணமானவற்றில், பஞ்சமம் தை₃வம் ச ஏவ — ஐந்தாவதாயும், முக்கிய மான காரணமாயுமிருக்கும் பரமாத்மாவுமேயாம்.

---

ப்ரகரணம் பொருந்தாது என்றும், வைதி₃க ஸித்₃தா₄ந்தமே இங்கு சொல்லப்படுகிறது என்றும் விளங்குகிறது. ''மஹாபா₃ஹோ நிபோ₃த₄'' என்றதால், ''தேஹவலிமை மிக்கவனுன நீ என்னி டமிருந்து இதை அறிந்து, அறிவிலும் வலிமைமிக்கவன் ஆகவேண்டும்'' என்று உணர்த்தப்படுகிறது. 18.

14. நிற்கநிலை யாகுமுட னேர்ந்தவுயி ராங்கர்த்தா
வற்குநிழற் செய்கரண மற்றவைதா—னொற்கமிலாச்
சேட்டைபல பஞ்சமமாந் தெய்வவிறை கன்மத்துக்
கூட்டமாவ தாகவே கொள்.

15. காயத்தால் வாக்காற் கருது மனந்தன்னால்
வாயத்தான் செய்ய மருவிமுயல் – நேயத்தால்
நல்வினைக்குந் தீவினைக்கு நாட்டி லிவையைந்துஞ்
செல்வினையி லேதுவாஞ் சேர்ந்து.

காயத்தால் — உடலாலும், வாக்கால்—வாக்கினாலும், கருதும் மனம் தன்னால் — நினைக்கும் மனத்தாலும், நேயத்தால் வாய தான் செய்ய மருவி முயல் — அன்போடு பொருத்தமாகத் தான் செய்வதற்கு விரும்பி ஈடுபடும், நல்வினைக்கும் — ஶாஸ்த்ரத்தில் ஸித்$_3$தி$_4$க்கும் செயல்களுக்கும், தீவினைக்கும் — ஶாஸ்த்ரத்திற்கு முரணான செயல்களுக்கும், (1) நிற்க நிலையாகும் உடல் — ஜீவாத்மா த$_4$ரிக்கையாலே நிலையாயிருக்கும் உடல், (2) நேர்ந்த உயிராம் கர்த்தா — அவ்வுடலிலே பரவியிருக்கும் ஜீவாத்மாவாகிற செயல்படுபவன், (3) வற்கு— அவனுக்கு, நிழல் செய் — உதவிபுரியும், கரணம் மற்றவைதான் — மனத்தோடு கூடிய கர்மேந்திரியமான ஐந்து, (4)ஒற்கமிலா சேட்டைபல - ஓய்வில்லாத ஐந்து செயல்களைப் புரியும் ப்ராணன் என்னும் வாயு, (5) கன்மத்துக் கூட்டமாவதாகவே கொள் — தான் செயல்புரியும் போது இவையனைத்தையும் கருவிகளாகக் கொண்ட, பஞ்சமமாம் தெய்வ இறை – ஐந்தாவது முக்கிய காரணமான பரமாத்மா, இவை ஐந்தும் — இந்த ஐந்தும், நாட்டில் — இவ்வுலகில் செல்வினையில் — நடைபெறும் கர்மங்களுக்கு, சேர்ந்து ஏதுவாம் — ஒன்று சேர்ந்து காரணமாகின்றன.

भा।। न्याय्ये - शास्त्रसिद्धे, विपरीते -- प्रतिषिद्धे वा सर्वस्मिन् कर्मणि-शारीरे, वाचिके, मानसे च पञ्चैते हेतवः। अधिष्ठानम् --

---

14, 15. முன்ஸ்லோகத்தில் சொல்லப்பட்டதாய், வேத$_3$ங்களிலிருந்து தேறுகின்றதான இந்த அர்த்த$_2$த்தை இனி இரண்டு ஸ்லோகங்களாலே விவரிக்கிறுன். (ந்யாய்யம் வா) ஸாஸ்த்ரத்திலிருந்து தேறுகின்றதாகவோ; "ந்யாயத$_3$நபேதம் ந்யாய்யம்" [எது நியாயத்தை மீறுமலிருக்கிறதோ அது 'ந்யாய்யம்' ஆகும்] என்று வ்யுத்பத்தி. "த$_4$ர்மபத்$_2$யர்த்த$_2$ந்யாயாத$_3$நபேதே" [அஷ்டாத்$_4$யாயீ 4-4-92] [த$_4$ர்ம பதி$_2$ அர்த்த$_2$ ந்யாய ஆகிய சொற்களோடு 'மீறுமல் இருக்கிறது' என்னும் பொருளில் ('ய'கரஒற்று சேரும்)] என்கிற பாணினிஸூத்ரம் காண்க. இங்கு 'ந்யாய' ஸப்$_3$த$_3$ம் மனிதனை உயர்த்தும் தலைசிறந்த ஸாஸ்த்ரமான வேத$_3$த்தைக் குறிக்கிறது. முன் ஸ்லோகத்தில் வேதத்தினுல் உண்டான அறிவைப்பற்றியன்றோ பேசியிருக்கிறது. (விபரீதம் வா) இந்த வேத$_3$த்தில் தடுக்கப்பட்டதாகவோ. "அந்யத்$_3$வா" என்று சொல்லியிருந்தால் ஸாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்டதற்கு வேறுபட்டதான லௌகிக கர்மத்தைக் குறிக்கலாம். இங்கு 'விபரீதம் வா' என்று சொல்லியிருக்கையாலே ஸாஸ்த்ரத்தில் தடுக்கப்பட்ட கர்மத்தைச் சொல்லுகிறது. கைமுதிக ந்யாயத்தாலே லௌகிககர்மமும் இதில் உணர்த்தப்படும். (நர: ஸரீர வாங்மநோபி$_4$: யத்கர்ம ப்ராரப$_4$தே) மனிதன் ஸரீரத்தாலும், மனத்தாலும், வாக்காலும் யாதொரு கர்மத்தைத் தொடங்குகிறுனே. (தஸ்யைதே பஞ்ச ஹேதவ:) அந்தக் கர்மம் அனைத்துக்கும் இங்கு சொல்லப்படும் ஐந்தும் காரணங்கள். ஸரீரத்தால் செய்யப்படும் கர்மத்திற்கு ஸரீரம் முக்கிய காரணமாகிறது; வாக்கினுல் செய்யப்படும் கர்மத்திற்கு வாக்கு முக்கிய காரணமாகிறது. மனத்தால் செய்யப்படும் கர்மத்திற்கு மனம் முக்கிய காரணமாகிறது. அந்த மூன்றுலும் செய்யப்படும் ஒவ்வொரு கர்மத்திற்கும் இந்த ஐந்தும் காரணமாகின்றன என்று கருத்து. ஒவ்வொரு கர்மத்திற்கும் இந்த ஐந்தும் காரணமானுலும் ப்ராத$_4$ன்யத்தையிட்டு ஸாரீரககர்மம் என்றும், வாசிககர்மம் என்றும், மாநஸகர்மம் என்றும் சொல்லப்படுகிறது என்று கண்டுகொள்வது. உலகைப் படைத்தல் முதலான எல்லாச் செயல்களுக்கும் பரமாத்மாவே காரணமானுலும், ஒரு ஜீவனுல் செய்

शरीरम्; अधिष्ठीयते जीवात्मनेति महाभूतसंघातरूपं शरीरमधिष्ठानम् । तथा कर्ता जीवात्मा; अस्य जीवात्मनो ज्ञातृत्वं कर्तृत्वं च — ज्ञोऽत एव

யப்படும் செயல்கள் விஷயத்தில் பரமாத்மா தன் விருப்பத்தாலேயே மற்ற நான்கையும் தனக்குக் கருவிகளாகக் கொள்கிருன் என்று கருத்து. அந்தக் காரணங்கள் ஐந்தும் யாவை என்பதை முதல் ஶ்லோகம் விளக்குகிறது. (அதி₄ஷ்டா₂நம்) ஶரீரம், ஜீவாத்மாவால் அதி₄ஷ்டி₂க்கப் படுகிறதாகையாலே 'அதி₄ஷ்டா₂நம்' என்று பஞ்சபூ₄தங்களாலான ஶரீரம் குறிக்கப்படுகிறது. இந்த்₃ரியம் முதலானவையும் ஜீவனுல் அதி₄ஷ்டி₂க்கப்படுபவையானுலும், அவற்றைத் தனியே எடுக்கையாலே இங்கு அந்த இந்த்₃ரியங்கள் முதலானவற்றிற்கு இருப்பிடமான ஶரீரத்தை இந்த ஶப்₃த₃ம் குறிக்கிறது. "அதி₄ஷ்டா₂நம் க்ஷேத்ரமாஹு:" [ப₄ார மோக்ஷ த₄ர்மம் 319-14] [இந்த ஶரீரத்தை அதி₄ஷ்டா₂நம் என்று சொல்லுகிருர்கள்] என்று மஹாப₄ாரதத்தில் கராள வஸிஷ்ட₂ஸம்வாத₃த்தில் சொல்லப்பட்டது. "மக₄வந் மர்த்யம் வா இத₃ம் ஶரீரமாத்தம் ம்ருத்யுநா தத₃ஸ்யாம்ருதஸ்ய அஶரீரஸ்ய ஆத்மநோ அதி₄ஷ்டா₂நம்] [ச₂ாந் 8-12-1] [இந்திரனே! இயற்கையில் மரணமற்றவனும் ஶரீரமில்லாதவனுமான இந்த ஜீவாத்மாவிற்கு மரணமடையக்கூடியதும் எப்போதும் அழியக்கூடியதுமான இந்த ஶரீரம் போ₄கங்களை அநுப₄விப்பதற்கு இருப்பிடமாய் இருக்கிறது.] என்று உபநிஷத்திலும் இந்த ஶரீரம் அதி₄ஷ்டா₂நம் எனப்பட்டது காண்க. (ததா₂ கர்த்தா) அடுத்தபடி கர்மத்திற்குக் காரணமாயிருப்பவன் செயல் புரிபவனுன ஜீவாத்மா. பரமாத்மா அனைத்துக்கும் கர்த்தாவாயிருந்தபோதிலும், 'தைவம்' என்று அவனைத் தனியே எடுக்கையால், "ஶாஸ்த்ரப₂லம் ப்ரயோக்தரி" [பூர்வமீமாம்ஸை 3-7 17] [எவன் செயலைச் செய்கிருனே அவனுக்கே அச்செயலுக்கு ஶாஸ்த்ரங்களில் சொல்லப்படும் ப₂லன் போய்ச்சேருகிறது.] என்கிற ந்யாயத்தாலே இங்கு இந்தச் சொல் கர்மப₂லனை அநுப₄விக்கும் ஜீவாத்மாவைக் குறிக்கிறது. இங்கு ஓர் ஆக்ஷேபம் எழுகிறது. அதாவது—"ஒரு செயலை அறிந்து, அதைச் செய்வதில் விருப்பம் கொண்டு, அதைச்செய்ய முயல்வதே செயல்புரியும் தன்மை எனப்படுகிறது; ஜ்ஞாநமாத்ரமான ஆத்மாவுக்கு ஒன்றை அறிவதே இயலாது,

(ब्र-२-३-१९) * कर्ता शास्त्रार्थवत्त्वात् (३३) इति च सूत्रोपपादितम्
करणं च पृथग्विधम् — वाक्पाणिपादादिपञ्चकं समनस्कम्

---

ஆகையால் அதற்குப் பின்வரும் கர்த்ருத்வம் (செயல் புரியும் தன்மை) எப்படி வரும்?'' என்பது அவ்வாக்ஷேபம். இதற்கு பதிலாவது:— இந்த ஜீவாத்மாவுக்கு ஜ்ஞாத்ருத்வமும் கர்த்ருத்வமும் உண்டு என்னும் விஷயம், "ஜ்ஞோத ஏவ" [2-3-19] [இக்காரணத்தாலேயே ஜீவன் அறிபவனும் ஆகிருன்] "கர்த்தா ஶாஸ்த்ரார்த்த₂வத்த்வாத்" [2-3-33] [(இவனைக்குறித்துக் கர்மங்களை விதி₄க்கும்) ஶாஸ்த்ரம் பொருளுடையதாவதற்காக, இவனைக் கர்த்தாவென்றும் கொள்ள வேண்டும்] என்னும் ப்₃ரஹ்ம ஸூத்ரங்களிலும், அவற்றுக்கு விஷயமான உபநிஷத்₃வாக்யங்களிலும் ஜீவாத்மா அறிபவனுகவும் செயல் புரிபவனுகவும் முழங்கப் படுகையால், முற்கூறிய ஆக்ஷேபம் பொருந்தாது. ஆகையால் கர்த்தா என்று ஜீவனைக் குறிப்பதில் எக்குறையுமில்லை. (கரணம் ச) மனத்தோடு கூடிய வாக், பாணி (கை), பாத₃ம், பாயு (மலமூத்ரவிஸர்ஜநேந்த்₃ரியம்), உபஸ்த₂ம் (சிற்றின்பத்திற்கு உறுப்பான இந்த்₃ரியம்) என்னும் ஐந்து கர்மேந்திரியங்கள் கர்மங்கள் உண்டாவதற்குக் காரணமாகச் சொல்லுகையால், இங்கு கரணஶப்₃த₃ம் ஞானேந்திரியங்களைக் குறிக்காமல், கர்மேந்திரியங்களையே குறிக்கிறது. ஞானேந்திரியங்களும், அந்தந்த விஷயங்களைப் பற்றிய அறிவை உண்டாக்குவதன் மூலம் கர்மத்திற்குப் பரம்பரையாகக் காரணமாகின்றனவேயொழிய கர்மேந்திரியங்களைப் போலே கர்மத்திற்கு நேரே காரணமாவதில்லையன்றே. மனம் ஞானேந்திரியமானுலும், ஸங்கல்பத்தின் மூலம் அது நேரே செயல்புரியக் காரணமாவதால், அதுவும் இங்கு கரணஶப்₃த₃த்திற்குப் பொருளாகிறது. இதனுலேயே ஞானேந்திரியமான மனம் கர்மேந்திரியமாகவும் சொல்லப்படுகிறது. "ஶரீரவாங்மநோபி₄:" என்று இங்கு மனமும் ஸங்கல்பரூபமான கர்மத்திற்குக் காரணமாகச் சொல்லப்படுவதால் அதைக் கர்மேந்திரியங்களோடு சேர்ப்பதில் பொருத்தம் உள்ளது.

"பு₃த்₃தீ₄ந்த்₃ரியாணி சக்ஷு:-
ஶ்ரோத்ரக்₄ராணரஸநத்வகா₂க்₂யாநி ।
வாக்பாணிபாத₃பாயூபஸ்த₂ாந் கர்மேந்த்₃ரியாண்யாஹு: ॥
உப₄யாத்மகமத்ர மநஸ் ஸங்கல்பகமிந்த்₃ரியம் ச
ஸாத₄ர்ம்யாத் ॥" [ஸாங்க்₂யகாரிகை 26, 27]

कर्मेन्द्रियम्, पृथग्विधम् — कर्मनिर्वृत्तौ पृथग्व्यापारम्। विविधा च पृथक्चेष्टा — चेष्टाशब्देन पञ्चात्मा वायुरभिधीयते तद्वृत्तिवाचिना; शरीरेन्द्रियधारणस्य प्राणापानादिभेदभिन्नस्य वायोः पञ्चात्मनो विविधा च चेष्टा — विविधा वृत्तिः।

---

[கண், காது, மூக்கு, நாக்கு, த்வக் (தொடுவுணர்ச்சிப்புலன்) என்னும் ஐந்தும் ஞானேந்திரியங்கள்; வாக், பாணி, பாத3ம், பாயு, உபஸ்த2ம் என்னும் ஐந்தும் கர்மேந்திரியங்கள் எனக் கூறுகிறார்கள். ஸங்கல்பரூபமான கார்யத்தையும் செய்வதால் ஞானேந்திரியமான மனம் கர்மேந்திரியமும் ஆகிறது ] என்று ஸாங்க்2யர்களும் உரைக்கின்றனர். (ப்ருத2க்3வித4ம்) தனித்தனிச் செயல்களைச் செய்கையால் இவை தனித்தனிக் கர்மேந்திரியங்கள் ஆகின்றன என்று கருத்து. வாக்கு வார்த்தை பேசுவதையும், பாணி (கை) எடுப்பது முதலானவற்றையும், பாதம் நடப்பது முதலானவற்றையும், பாயு மலஜல விஸர்ஜனத்தையும், உபஸ்த2ம் சிற்றின்பத்திற்கு உறுப்பான கலவிச்செயலையும், மனம் ஸங்கல்பமாகிற செயலையும் தனித்தனியே செய்கிறதன்றோ. (விவித4ா ச ப்ருத2க் சேஷ்டா) ஐந்து வகைப்பட்ட செயல்களையுடைய ப்ராணனும். இங்கு "சேஷ்டா" ஶப்3த3த்திற்கு சரீரம், வாக், மனம் ஆகியவற்றினால் முயன்று செய்யப்படும் செயல்களே முக்கியமான அர்த்த2மாயினும், இந்தச் சேஷ்டை முக்கரணங்களாலும் செய்யப்படும் கர்மங்களுக்குக் காரணமாகச் சொல்லப் படுகையால், இந்த முக்2யார்த்த2த்தைக் கொண்டால் தனக்குத் தானே காரணம் என்று கூறும் ஆத்மாஶ்ரயதோ3ஷம் விளையும். ஆகையால், இங்கு 'சேஷ்டா' ஶப்3த3ம் ப்ராணனின் ஐந்து வகைப்பட்ட செயல்களைக்குறிப்பதாய், அச்செயல்களைச் செய்யும் ப்ராணனை உபலக்ஷணமுறையாலே குறிக்கிறது. இந்திரியங்களுக்கும், ப்ராணனுக்கும் தங்களில் யார் முக்கியமானவர் என்னும் விவாதம் விளைந்ததாகவும், இந்திரியங்கள் சரீரத்தை விட்டு வெளிக்கிளம்பும்போது சரீரம் ஸத்தைபெற்றிருந்ததாகவும், ப்ராணன் வெளிக்கிளம்பத்தொடங்கியவுடன் சரீரம் நிலைகுலையத் தொடங்கியதாகவும், ஆகையால் ப்ராணனே அனைத்திலும் முக்கியமானதென்னும் நிர்ணயம் ஏற்பட்டதென்றும் உபனிஷத்துக்களில் சொல்லப்பட்டதன்றோ. ஆகையால், முக்கரணங்களால் செய்யப்படும் செயல்களுக்கு ப்ராணனை ஓர் காரணமாகச் சொல்லுவது மிகப்பொருத்தமானதாகையால், இங்கு சேஷ்டா ஶப்3த3ம் ப்ராணனைக் குறிக்கிறதென்றே கொள்ள வேண்டும்.

दैवं चैवात्र पञ्चमम् -- अत्र कर्महेतुकलापे दैवं पञ्चमम् — परमात्मा

"ப்ராணோऽபாநோ வ்யாந உதா₃ந: ஸமாந:......இத்யேதத் ஸர்வம் ப்ராண ஏவ" [ப்₃ருஹ 3-5-3] என்று உபநிஷத்தில் கூறியபடி ப்ராணன், அபாநன், வ்யானன், உதா₃னன், ஸமானன் என்னும் ஐந்து பெயர்களையுடையதாய் மூச்சுவிடுதல், கண் கொட்டுதல் முதலான செயல்களைச் செய்வதாய், சரீரம் இந்திரியம் முதலானவற்றைக்காட்டிலும் வேறுபட்டதான முக்₂யப்ராணன் "விவித₄ா ச ப்ருத₂க் சேஷ்டா" என்று இங்கு கூறப்படுகிறது. "பஞ்சவ்ருத்திர் மநோவத்₃ வ்யபதி₃ஶ்யதே" [ப்₃ரஹ்மஸூ 2-4-11] [மனம் ஒன்றே யாயினும் காமம், ஸங்கல்பம் முதலான தன் செயல்களைக் கொண்டு காமம், ஸங்கல்பம் முதலான சொற்களால் வழங்கப்படுவது போல், ப்ராணன் ஒன்றே தனது ஐந்து செயல்களையிட்டு ப்ராணன், அபானன் முதலான ஐந்து சொற்களால் வழங்கப்படுகிறது] என்று ப்₃ரஹ்ம ஸூத்ரத்திலும் இவ்விஷயம் கூறப்பட்டது. இங்கு ப்ராணன் முதலானவற்றின் ஐந்து வ்ருத்திகளைச் சொன்னது நாக₃ன், கூர்மன், க்ருகரன், தே₃வத₃த்தன், த₄நஞ்சயன் என்னும் பெயருடைய உமிழ்தல், கண் திறத்தல், பசியைஉண்டாக்குதல், கொட்டாவிவிடுதல், போஷித்தல் ஆகிய ஐந்து செயல்களுக்கும் உபலக்ஷணம். (தை₃வம் சைவாத்ர பஞ்சமம்) செயல்களுக்குக் காரணமாயிருப்பவற்றில் பரமாத்மாவான அந்தர்யாமி செயல்கள் நிறைவேறுவதற்கு முக்கியமான காரணம் என்று கருத்து. ஐந்து காரணங்களைச் சொல்லி வரும்போது 'அத்ர' என்று இதைக்குறிப்பிட்டு எடுக்கையாலும், 'பஞ்சமம்' [ஐந்தாவது] என்று எண்ணிக்கையைக் குறிப்பதற்கு ச்ருதிக்ரமம், அர்த்த₂க்ரமம், பாட₂க்ரமம் முதலான வேறு எக்காரணமும் இல்லாமையாலும் தெய்வமாகிற இது முக்₂யமான காரணம் என்று உணர்த்தப்படுகிறது என்று கொள்ளவேண்டும். "தம் ஆத்மபஞ்சமம் த்₃ருஷ்ட்வா" [ரா-யு 17-3] [(துணைவரான நால்வரோடு கூடி) தான் ஐந்தாமவனாயிருக்கும் அந்த விபீஷணனைப் பார்த்து] என்கிறபடியே, மற்ற நால்வருடைய ஸத்தை தன் அதீ₄நமாம்படியான ப்ராதா₄ந்யத்தை உடையவன் என்று ஸ்ரீ விபீஷணனைக் குறிக்கும்போது. 'ஆத்ம பஞ்சமம்' என்று ஸ்ரீவால்மீகி பகவான் குறித்தாரன்றோ கடோ₂பநிஷத்தில் [3-11] "இந்த்₃ரியேப்₄ய: பரா ஹ்யர்த்தா₂:" என்று தொடங்கி "மஹத: பரமவ்யக்தம் அவ்யக்தாத் புருஷ: பர:| புருஷாந்ந பரம் கிஞ்சித் ஸா காஷ்டா₂ ஸா பரா க₃தி:||"என்று சேதநனால் வசீகரிக்

अन्तर्यामी कर्मनिष्पत्तौ प्रधानहेतुरित्यर्थः । उक्तं हि * सर्वस्य चाहं

---

கத்தக்கவைகளின் வரிசையைச் சொல்லிவரும்போது இந்திரியங்களை முதலில் எடுத்து, பரமபுருஷனைக் கடைசியில் எடுத்ததன் மூலம், இந்திரியம் முதலான அனைத்தின் செயல்பாட்டிற்கும் பரமாத்மாவே முக்₂ய காரணமாகவும் வசீகரிக்கத்தக்கவைகளுள் எல்லை நிலமாகவும் இருப்பவன் என்று சொல்லப்பட்டது போலே இங்கும் கடைசியில் சொல்லப்பட்ட "தை₃வம்" முக்கிய காரணமென்று காட்டுகிறது. இங்கு ஓர் ஆக்ஷேபம் எழுகிறது. "தை₃வம் புராக்ருதம் கர்ம" [முன்செய்தவினை 'தைவம்' எனப்படுகிறது] "தை₃வம் தி₃ஷ்டம் ப₄ாக₃தே₄யம் ப₄ாக்₃யம்" [அமரகோஶம் 1-4-28] [தை₃வம், தி₃ஷ்டம், ப₄ாக₃தே₄யம், ப₄ாக்₃யம் முதலான சொற்கள் முன்செய்த புண்யபாபங்களைக் குறிக்கின்றன] முதலான நிகண்டுக்களில் முன்வினைகளாகிற ப₄ாக்₃யத்தைக் குறிப்பதாக 'தை₃வ' ஶப்₃த₃ம் படிக்கப்பட்டுள்ளது. சேதனன் செய்யும் காரியங்களுக்கு முன் செய்தவினைகள் காரணமாயிருக்கின்றன என்பதும் பொருத்தமேயாகும். ஆகையால் 'தை₃வ' ஶப்₃த₃த்திற்குப் பரமாத்மா என்று இங்கு பொருளுரைப்பது எப்படிப் பொருந்தும்? என்பது அவ்வாக்ஷேபம. இதற்கு ஸமாதா₄னம் பின் வருமாறு:— செய்தவுடன் அழிந்து போகும் புண்யபாப கர்மங்கள் மனிதன் செய்யும் காரியங்களுக்கு நேரே காரணமாகும் என்று சொல்லமுடியாது. ஆகையால் அந்தக் கர்மத்தினுல் விளையும் பரம புருஷனுடைய ப்ரீதிகோபங்களால் உண்டாகும் ஸங்கல்பமே மனிதன் செய்யும்செயல்களுக்குக் காரணம் என்று சொல்லவேண்டும். இப்படிப் பரமபுருஷ ஸங்கல்பத்தை 'தை₃வ' ஶப்₃த₃த்தால் குறிப்பதைவிட அந்த ஸங்கல்பத்தைச்செய்யும் பரமபுருஷனையே 'தை₃வ' ஶப்₃த₃த்தால் குறிப்பது சிறந்தது. உலகிலும் ஶாஸ்த்ரங்களிலும் 'தை₃வ' ஶப்₃த₃மானது தேவதையைக் குறிப்பதாக வழக்கில் உள்ளது. "ஸத்யம் ஸத்யம் புநஸ் ஸத்யம் உத்₃த்₄ருத்ய பு₄ஜமுச்யதே| வேதா₃ச் சா₂ஸ்த்ரம் பரம் நாஸ்தி நதை₃வம் கேஶவாத் பரம்||" [நாரஸிம்ஹபுராணம் 18-33] [மூன்று முறை ஸத்யம் செய்து கை தூக்கி நின்று கூறுகிறேன், வேதத்தைக்காட்டிலும் மேலான ஶாஸ்த்ரம் இல்லை. கேசவனைக்காட்டிலும் மேலான தெய்வம் இல்லை] என்னும் ஶாஸ்த்ர வசனத்தில் 'தை₃வ' ஶப்₃த₃த்திற்குப் பரமாத்மாவே நேராகப் பொருளாகிறானன்றோ, ஸ்ரீமத்₃ராமாயணத்திலும், "ஸ்வாதீ₄நம் ஸமதிக்ரம்ய மாதரம் பிதரம் கு₃ரும் | அஸ்வாதீ₄நம் கத₂ம் தை₃வம் ப்ரகாரைரபி₄ராத்₄யதே ||"

[ரா-அ 30-33] [நம் கண்காண நமக்கு வசப்பட்டிருக்கும் தாய் தந்தை ஆசார்யனைக் காட்டிலும் நமக்கு வசப்படாத தெய்வத்தைப் பலமுறைகளாலே ஆராதிப்பது எப்படிப் பொருந்தும்?] என்றும், மஹாபாரதத்தில் "ஶ்ரூயதாம் பரமம் தைவம் துர்விஜ்ஞேயம் மயாபி ச| நாராயணஸ்து புருஷோ விஶ்வரூபோ மஹாத்யுதி:||" [மஹாபாரதம்-ஸபா பர்வம் 46-40] [என்னாலும் அறிய இயலாததான மேலான தெய்வத்தைப்பற்றிக் கூறுகிறேன் கேட்பாயாக; உலகனைத்தையும் தன் உருவமாகக்கொண்டவனும், பேரொளி உடையவனும், புருஷன் எனப்படும் நாராயணனே அவன்] என்றும், யாஜ்ஞவல்க்யர் இயற்றிய யோக ஶாஸ்த்ரத்தில் "ஆர்ஷம் சந்தஶ்ச மந்த்ராணாம் தைவதம் ப்ராஹ்மணம் ததா||" [மந்திரங்களுடைய ரிஷி ஸம்பந்தத்தையும் சந்தஸ்ஸுக்களையும், தேவதையையும்...] என்றும் சொல்லப்பட்டது. அந்த யோக ஶாஸ்த்ரத்திலேயே அஸுரர்களை மயக்குவதற்காக ப்ரஜாபதி உபதேசித்ததை அநுவதிக்கும்போது "ஆத்மாநம் பூஜயந் நித்யம் பூஷணைச்சாதநாதிபி: | ஸ்வதேஹ ஏவ தைவம் ஸ்யாதந்யத் தைவம் ந வித்யதே||" [தன்னுடைய ஶரீரத்தை தினந்தோறும் நல்ல ஆபரணங்கள் வஸ்த்ரங்கள் முதலானவற்றால் அலங்கரிக்கவேண்டும். தன் ஶரீரமே தெய்வமாகும்; வேறு தெய்வம் (தேவதை) கிடையாது.] என்று சொல்லப்பட்டது. விஹகேந்த்ரஸம்ஹிதையிலும் "தைவாதீநம் ஜகத் ஸர்வம் மந்த்ராதீநம் து தைவதம் | தந் மந்த்ரம் ப்ராஹ்மணாதீநம் தஸ்மாத் விப்ரா ஹி தைவதம் ||" [விஹகேந்த்ர 22-15] [உலகனைத்தும் தெய்வத்துக்கு வசப்பட்டது. அந்த தெய்வம் மந்த்ரத்துக்கு வசப்பட்டது. அந்த மந்த்ரம் ப்ராஹ்மணனுக்கு வசப்பட்டது. ஆகையால் ப்ராஹ்மணர்களே தேவதையாவர்.] என்று சொல்லப்பட்டது. இந்த கீதாஶாஸ்த்ரத்திலும் "ஸாதிபூதாதிதைவம் மாம்" [7-30] என்று அதிதைவத்தைப்பற்றி ப்ரஸ்தாபித்து; "அதிதைவம் கிமுச்யதே" [8-1] [அதிதைவம் என்று எது சொல்லப்படுகிறது?] என்று அர்ஜுனனுடைய கேள்வியெழுந்தபின் "புருஷஶ்சாதிதைவதம்" [ 8-4] [அதிதைவம் என்று சொல்லப்பட்டதும் இந்திரன் முதலான தேவர்களைக்காட்டிலும் மேலான பிரமன் அல்லது பிரமன் போன்ற தெய்வத்தின் நிலையே] என்று பதிலுரைக்கப்பட்டது. சாந்தோக்ய உபநிஷத்திலும் "தஸ்யோபநிஷதஹரித்யதிதைவதம்" என்னும் வாக்யத்தில் ஸூர்யனுக்குள்ளிருக்கும் தேவனுக்கு அதிதைவதம் என்று பெயர் சொல்லப்படுகிறது. சங்கரரும் கண் முதலான இந்த்ரியங்களைப் போஷிக்கும் ஆதித்யன் முதலான தேவதைகளை இந்தச் சொல் குறிப்பதாக உரையிட்டார். அதைவிட ஆதித்யன் முதலான தேவ

हृदि सन्निविष्टो मत्तः स्मृतिर्ज्ञानमपोहनं च (१५.१५.) इति। वक्ष्यति च * ईश्वरस्सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति। भ्रामयन् सर्व-

---

தைகளையும் அநுக்3ரஹிக்கும் பரமாத்மாவே தை3வஶப்3த3த்திற்குப் பொருள் எனக்கொள்வதே சிறப்பு. ஸ்தோத்ரரத்நத்தில் ஆளவந்தாரும், "ப்ரக்2யாத தை3வ பரமார்த்த2 விதா3ம் மதைஶ்ச" என்று தை3வ ஶப்3த3த்தை தேவதை என்னும் பொருளில் வழங்கினர். ப4ட்டர் லக்ஷ்மீகல்யாணம் என்னும் காவியத்தில் "த4ர்மே ப்ரமாணம் ஸமயஸ்த தீ3யோ வேதா3ஶ்ச தத்வம் ச ததி3ஷ்ட தை3வம்" என்று இஷ்ட தேவதையை இஷ்ட தை3வம் என்று குறிப்பிட்டார். ஆகையால் இங்குள்ள தை3வசப்தத்திற்கு தேவதை என்று பொருள்கொள்வது பொருத்தமே. எந்த தேவதை என்று குறிப்பிட்டுச் சொல்லாமையாலும், எல்லாச் செயல்களையும் நடத்திவைக்கும் காரணனுகக் கூறுகையாலும் இங்கு தை3வ சப்தம் பரதேவதையைக் குறிப்பது என்று கொள்வதே பொருந்தும். இந்தப் பரதேவதை மற்றவர்களுக்கு ஆத்மாவாயிருப்பதுபோலே இவனுக்கு ஓர் ஆத்மா இல்லாமையாலே பரமாத்மா எனப்படுகிருன். சரீரம் முதலானவை செயல்படுவதற்கு ஜீவன் எப்படி முக்யமான காரணமாகிருனே அதுபோலவே அந்த ஜீவனையும் செயல் புரியும்படி உள் நுழைந்து நியமிப்பவனுகையாலே இவன் அந்தர்யாமி எனப்படுகிருன். இக்காரணங்களால் முற்கூறிய நான்கு கர்ம ஹேதுக்களைக்காட்டிலும் இவன் முக்2யமான ஹேதுவாகிருன் என்பது வெளிப்படை. இந்த கீ3தையிலும் "ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி3 ஸந்நிவிஷ்டோ மத்த: ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநம் ச" [கீ3தை 15-15] [நான் எல்லா ஜீவராசிகளுடையவும் ஹ்ருத3யத்தில் ஆத்மாவாக நுழைந்திருக்கிறேன்; (அனைவருடைய) நினைவும், வஸ்து நிர்ணயமும், மறதியும் என்னிடமிருந்தே உண்டாகின்றன] என்று முன்னமே இவ்விஷயம் சொல்லப்பட்டது. "ஈஶ்வர: ஸர்வபூ4தாநாம் ஹ்ருத்3தே3ஶேऽர்ஜுந திஷ்ட2தி | ப்4ராமயந் ஸர்வபூ4தாநி யந்த்ராரூடா4நி மாயயா" [18-61] [அர்ஜுநா! அனைவரையும் நியமிக்கும் வாஸுதேவன் எல்லா ஜீவராசிகளுடைய இதயத்திலிருப்பவனாய், தேஹம் இந்த்3ரியம் முதலான நிலையிலுள்ள ப்ரக்ருதியான யந்திரத்தின் மேலே ஏறியிருக்கும் எல்லா ஜீவராசிகளையும் தன்னுடைய ஸத்வம் முதலான குணங்களான மாயையினாலே அந்தந்த குணங்களுக்கு

भूतानि यन्त्रारूढानि मायया । (६१) इति । परमात्मायत्तं च जीवात्मनः कर्तृत्वम् — परात्तु तच्छ्रुतेः (ब्र. २. ३. ४०) इत्युपपादितम् । नन्वेवं

---

அநுகுணமாக நடத்திக் கொண்டு நிற்கிறான்.] என்று இவ் விஷயம் மேலேயும் சொல்லப்படுகிறது. இனி இவ் விஷயத்தில் ஓர் ஆக்ஷேபம் பின்வருமாறு எழுகிறது. "ஸ்வ தந்த்ர: கர்த்தா" [அஷ்டாத்யாயி 1-4-54] என்று செயலைப் புரியும் கர்த்தாவுக்கு ஸ்வாதந்திரியம் லக்ஷணமாகச் சொல்லப் படுகிறது. இந்த ஶ்லோகத்திலும் 'கர்த்தா' என்று ஜீவனே குறிக்கப்படுகிறான். ஒரு செயலை உண்டாக்கும் காரகங்கள் 1. கர்த்ருகாரகம், 2. கர்மகாரகம், 3. கரணகாரகம், 4. ஸம்ப்ரதாநகாரகம், 5. அபாதாந காரகம், 6. அதிகரண காரகம் என்று ஆறுவகைப்படுகின்றன. இவற்றில் முதலாவதாய், செயலைப் புரியும் கர்த்தாவான காரகம் மற்ற ஐந்து காரகங்களையும் நடத்தி வைப்பதாய், தன்னை நடத்திவைக்கும் வேறொரு காரகம் இல்லாததாய் ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஆகையால் செயலுக்குக் காரகமாக இங்கு கூறப்படும் தெய்வமும் அதிஷ்டானமாகிற சரீரம், கரணமாகிற இந்திரியங்கள், ப்ராணன் ஆகிய மற்ற காரகங்களைப் போலே கர்த்தாவாகிற காரகனுக்கு அடங்கியதொரு காரகனாகவே கொள்ளப்படவேண்டும் என்பது அவ்வாக்ஷேபம். இதற்கு ஸமாதாநம் பின்வருமாறு: "ஜாநாதி, இச்சதி, யததே" என்கிற ரீதியில் முதலில் ஒரு செயலைப் பற்றிய அறிவுண்டாகி, அடுத்தபடி அச்செயலில் விருப்பமுண்டாகி, அதை முயன்று செய்கின்ற புருஷனாகிற கர்த்ருகாரகனுக்கே மற்ற காரகங்களை நடத்திவைப்பதாயிருக்கை, தனக்கோர் காரகனின்றியிருக்கை ஆகிய பெருமைகள் ஒப்புக்கொள்ளப்படுகின்றன. அந்த அறிவு, விருப்பம், முயற்சி ஆகியவை விளைவதே பரமாத்மாவுக்கு அதீநமானது என்று வேதவாக்யங்களிலிருந்து தேறுகிறபடியால் ஜீவன் பரமாத்மாவுக்கு அதீநமாயிருந்தே கர்த்தாவாகிறான் என்பதும், மற்ற காரகங்களைக் குறித்து ஸ்வதந்த்ரனாயிருக்கிறான் என்பதும் ஒன்றோடொன்று முரண்படாதது என்று "பராத்து தச்ச்ருதே:" [2-3-40] [(ஜீவனுடைய) அந்தக் கர்த்ருத்வமோவெனில் பரமாத்மாவாலேயே விளைகிறது; ச்ருதி அப்படிக் கூறுகிறபடியால்] என்னும்

परमात्मायत्ते जीवात्मनः कर्तृत्वे जीवात्मा कर्मण्यनियोज्यो भवतीति

---

ப்$_3$ரஹ்மஸூத்ரத்தில் நிர்ணயிக்கப்பட்டது. ஜ்ஞாந இச்ச$_2$ ப்ரயத்நங்களின் உற்பத்தியே பரமாத்மாவின் ஆஜ்ஞையாகையால் அவனுக்கு அதீ$_4$நமானதே "ஜீவனுடைய கர்த்ருத்வம் என்றபடி.

இதற்கு மேல் ஓர் ஆக்ஷேபம் எழ, அதற்கு ப்$_3$ரஹ்ம ஸூத்ரகாரர் அடுத்த ஸூத்ரத்தில் பதிலுரைக்கிறார். அந்த ஆக்ஷேபமாவது:—"ஜீவாத்மாவின் கர்த்ருத்வமும் [செயல் புரியும் தன்மை] பரமாத்மாவுக்கு அதீ$_4$நமாயிருப்பதானால், அந்த ஜீவனைக் குறித்து ஶாஸ்த்ரங்கள் 'இதைச்செய், அதைச்செய்' என்னும் விதிகளையும், 'இதைச்செய்யாதே அதைச்செய்யாதே' என்னும் நிஷேத$_4$ங்களையும் செய்வது பொருளற்றதாகும். எவனொருவன் ஸ்வதந்த்ரமாக ஒரு கார்யத்தைச் செய்யவல்லவனோ, அல்லது ஒரு காரியத்திலிருந்து மீள வல்லவனோ அவனைக்குறித்தே 'செய்' அல்லது 'செய்யாதே' என்று விதி$_4$ நிஷேத$_4$ங்களைச் செய்வது பொருந்தும். இங்கு ஜீவன் பரமாத்மாவால் தூண்டப்பட்டே காரியங்களைச் செய்கிறானாகையாலே, அவனைக்குறித்து ஶாஸ்த்ரம் விதி$_4$ நிஷேத$_4$ங்களைச்செய்வது பொருந்தாது. மேலும், பரமாத்மா தானே ஒருவனைத் தவறான காரியங்களைச் செய்யும்படி தூண்டிவிட்டு, அவனிடம் கோபம் கொண்டு அவனைத் தண்டிப்பதும், அந்தப்பரமாத்மாவே மற்றொருவனைப் புண்ணியகாரியங்களைச் செய்யும்படி தூண்டிவிட்டு அவனிடம் பிரீதி கொண்டு அவனுக்குஸுக$_2$த்தை அளிப்பதும் பரமாத்மாவுக்குப் பக்ஷபாதம், கருணையின்மை முதலான பல தோஷங்களை விளைக்கும். ஆகையால், பரமாத்மாவால் தூண்டிவிடப்பட்டே ஜீவன் காரியங்களைச் செய்கிறான் என்று ஒப்புக்கொள்வது பொருந்தாது" என்பது (அவ்வாக்ஷேபம்). இந்த ஆக்ஷேபத்திற்கு ஸூத்ரகாரரே அடுத்த ஸூத்ரத்தில் பதிலுரைக்கிறார், 'க்ருதப்ரயத்நாபேக்ஷ: து விஹிதப்ரதிஷித்$_3$தா$_4$-அவையர்த்$_2$யாதி$_3$ப்$_4$ய:"[2-3-41]][(எல்லாச் செயல்களிலும்) ஜீவனால் செய்யப்பட்ட (முதல்) முயற்சியை எதிர்பார்த்தே, அம்முயற்சியை அநுமதித்து (பரமாத்மா அக்காரியத்தைச் செய்விக்கிறான்); (ஏனெனில்) விதி$_4$ நிஷேத$_4$ஶாஸ்த்ரங்கள் வீணாகாமலிருக்கவேண்டுகை முதலான காரணங்களால்] என்பது அந்த ஸூத்ரம். கர்த்ருத்வம் பரமாத்மாதீ$_4$நமானது என்று கொண்டால், விதி$_4$நிஷேத$_4$ஶாஸ்த்ரங்கள் வீணாகும் என்று சொல்லப்பட்ட ஆக்ஷேபத்திற்கு இதில் பரிஹாரம் உரைக்கப்படுகிறது. எல்லாச் செயல்களையும் தொடங்கும்போது, ஜீவன் தன் விருப்பப்படி முதல் க்ஷணத்தில் செய்யும் முயற்சியைப் பரமாத்மா அநுமதிக்காமலும், தடுக்காமலும் உபேக்ஷித்து நிற்கிறான். இரண்டாவது க்ஷணத்திலிருந்து செய்யும் முயற்சிகளை,

முதல் முயற்சிக்கு அநுகுணமாகச் செய்ய அநுமதிப்பதன் மூலம் ஜீவனைக் காரியங்களைச் செய்விக்கிறான். ஏன் இப்படி ஒப்புக் கொள்ளவேண்டும்? எனில்; முதல் முயற்சியிலும் ஜீவனைக் காரியம் செய்வதற்குப் பரமாத்மாவே தூண்டிவிடுகிறான் என்று ஒப்புக்கொண்டால் 'இதைச் செய், அதைச் செய்' என்று விதிக்கும் ஶாஸ்த்ரங்களும், 'இதைச் செய்யாதே; அதைச்செய்யாதே' என்று நிஷேதிக்கும் ஶாஸ்த்ரங்களும் பயனற்றவையாகும். தானே தூண்டிவிட்ட புண்யபாபச்செயல்களைக்குறித்துப் பரமாத்மா தானே (முறையே) ப்ரீதிகோபங்களைக் காட்டுவதும், அதடியாகப் புண்யம் செய்தவனுக்கு ஸுகத்தையும், பாபம் செய்தவனுக்கு து:க்கத்தையும் அளிப்பதும் பொருந்தாமற்போய்விடும். ஆகையால், பரமாத்மாவினால் ஜீவன் காரியங்களைச் செய்விக்கப்படுபவனானாலும், ஜீவன் முதல் முயற்சியில் ஸ்வாதந்த்ர்யம் பெற்றிருக்கையால், அவன் ஶாஸ்த்ரவிதிநிஷேதங்களுக்கும் தகுதி பெற்றவனாகிறான். ஜீவன் செயல்களைப் புரியும்போது (1) உதாஸீநனாய் இருக்கை, (2) அனுமதிப்பவனாயிருக்கை, (3) தூண்டிவிடுபவனாயிருக்கை என்று மூன்று ஆகாரங்கள் பரமாத்மாவுக்கு உண்டு, (1) அவற்றில் ஜீவனுடைய முதல் க்ஷண முயற்சியின்போது பரமாத்மா அதைத் தான் அநுமதிக்காமலும், தடுக்காமலும் ஜீவனை அவன் வழியிலே விட்டு அவன் செய்யும் செயல்களில் உதாஸீநனாயிருக்கிறான். (2) ஜீவன் முதல் க்ஷணத்தில் தன் இஷ்டப்படி ஒரு விதமாகக் காரியத்தைத் தொடங்கியபின், இரண்டாவது க்ஷணம் முதல் அவன் செய்யும் முயற்சிகளைப் பரமன் அநுமதிக்கிறான். இது எதற்காக? எனில்: பரமாத்மாவின் அநுமதியில்லாவிடில் ஜீவனால் தொடர்ந்து காரியத்தைச்செய்ய முடியாதல்லவா; அதற்காக அநுமதிக்கிறான் என்று சாஸ்திர வசநங்களைக் கொண்டு ஒப்புக்கொள்கிறோம், பரமாத்மாவின் அநுமதியில்லாமல் முதல் க்ஷணத்தில்தான் இவன் எப்படிக்கார்யத்தைத்தொடங்கமுடியும்? எனில்: விதிநிஷேதஶாஸ்த்ரங்கள் வீணாகிவிடுகை முதலான முற்கூறிய தோஷங்கள் ஏற்படாமலிருப்பதற்காகப் பரமாத்மாவே ஜீவனுக்கு அந்த ஸ்வாதந்த்ர்யபுத்தியை அளித்து விடுகிறானாகையால் முதல் க்ஷணத்தில் ஜீவன் தானே காரியத்தைத் தொடங்கக் குறையில்லை. அரசன் முதலானோர் தம் இஷ்டப்படி அமைச்சர் முதலானோர்க்குச் சில விஷயங்களில் ஸ்வாதந்த்ரியமளிக்க, அதைக்கொண்டு அமைச்

* कृतप्रयत्नापेक्षस्तु विहितप्रतिषिद्धावैयर्थ्यादिभ्यः (२. ३. ४१) इति ।

சர் முதலானோர் தம் இஷ்டப்படி காரியம் செய்யும்போது அரசனுடைய ஸ்வாதந்த்ர்யத்திற்கும், அமைச்சருடைய பாரதந்த்ரியத்துக்கும் குறையேற்படாததுபோலே, பரமாத்மாவினால் தன் இஷ்டப்படி அளிக்கப்பட்ட ஸ்வாதந்த்ரிய புத்தியைக்கொண்டு ஜீவன் பூர்வகர்மத்தையும் எதிர்பாராமல், வாஸனையையும் எதிர்க்கவல்லவனாய் முதல் முயற்சியைச் செய்யும்போதும் ஈஶ்வரனுடைய ஸ்வாதந்த்ர்யத்திற்கோ, ஸர்வகாரணத்வத்திற்கோ, கர்மாநுகுண பலப்ரதத்வத்திற்கோ, ஜீவனுடைய பாரதந்த்ர்யத்திற்கோ எக்குறையும் ஏற்படாது. (3) "ஏஷ ஹ்யேவ ஸாது கர்ம காரயதி யமேப்யோ லோகேப்ய உந்நிநீஷதி | ஏஷ ஏவ அஸாது கர்ம காரயதி தம் யமதோ நிநீஷதி||" [கௌஷீதகீ 3-9] [எந்த ஜீவனை இந்தப்ராக்ருத லோகங்களிலிருந்து மேலெடுக்கப் பரமாத்மா விரும்புகிறானோ, அவனை இவனே நற்கர்மங்களைச் செய்விக்கிறான்; எந்த ஜீவனை இந்தப் பரமாத்மாவே கீழுலகங்களில் தள்ள விரும்புகிறானோ அவனை இவனே பாபகர்மங்களைச் செய்விக்கிறான்.] "ததாமி புத்தியோகம் தம் யேந மாமுபயாந்தி தே" [கீதை 10-11] [என்னை அடைய வழிகாட்டும் புத்தியை நானே அவர்களுக்கு அளிக்கிறேன்.] "தாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் | க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாந் ஆஸுரீஷ்வேவ யோநிஷு" [கீதை 16-19] [என்னை த்வேஷிப்பவர்களாய், கொடியவர்களாய், மனிசரில் கடையராய், அமங்களமானவர்களான அவர்களை நானே ஸம்ஸாரகதிகளில், அதிலும் அஸுரப்பிறப்புகளிலேயே எப்போதும் தள்ளுகிறேன்] என்று பரமாத்மாவே ஜீவனைப் புண்யபாப கர்மங்களில் தூண்டிவிட்டு, அதற்கனுகுணமான பலன்களை அளிப்பதாகச்சிலஶ்ருதிஸ்ம்ருதிவாக்யங்கள் கூறுகின்றதற்குப் பொருளென்ன? எனில்: ஈஶ்வரனால் முதல் முயற்சியில் அளிக்கப்பட்ட ஸ்வாதந்த்ரியத்தைச்சரியாகப் பயன்படுத்திக்கொண்டு எவர்கள் பரமாத்மாவுக்கு மிகவும் அநுகூலர்களாயிருக்கிறார்களோ, அவர்களை ஈஶ்வரன் நற்கருமங்களை மேலும் மேலும் செய்யத்தூண்டி அவர்கட்கு நற்கதியளிக்கிறான் என்றும், அந்த ஸ்வாதந்த்ரியத்தைத் தவறாகப் பயன்படுத்திக்கொண்டு எவர்கள் பரமாத்மாவுக்கு மிகவும் ப்ரதிகூலர்களாயிருக்கிறார்களோ, அவர்களை அவன் தீய கருமங்களை மேலும் மேலும் செய்யத்தூண்டி அவர்கட்குத் தீயகதிகளை அளிக்கிறான் என்றும் அந்த ஶ்ருதி ஸ்ம்ருதிகள் கூறுகின்றனவாகையால் இவையும் ஜீவனுடைய முந்திய முதல் முயற்சிகளின் பலனேயாகும்.

एतदुक्तं भवति -- परमात्मना दत्तैस्तदाधारैश्च करणकलेबरादिभिस्तदा-

---

ஆக, இப்படிப் பின் முயற்சிகளில் பரமாத்மா ஜீவனைக் காரியம் செய்ய அநுமதிப்பது முன் முயற்சியின் ப₂லனுகையாலும், முதல் முயற்சியிலே சிலரைத் தூண்டுவது முந்திய முதல் முயற்சிகளின் ப₂லனுகையாலும் எக்குறையுமில்லை. முதல் முயற்சியில் பரமாத்மாவுக்குக் காரயித்ருத்வமாகிற (செய்விக்கையாகிற) விஶேஷகாரணத்வம் இல்லாவிடிலும், ஜீவனுக்கு அந்த ஸ்வாதந்த்ர்ய பு₃த்₃தி₄யை அளித்தவன் பரமாத்மாவேயாகையால், ஜீவகர்த்ருத்வவிஷயத்தில் ஸாமாந்ய காரணத்வம் இருக்கவே செய்கிறது. ஆகையால், பரமாத்மாவினுடைய ஸர்வகாரணத்வத்துக்கும் குறையேற்படவில்லை. ஆக, ஜீவனுடைய கர்த்ருத்வம் பரமாத்மாதீ₄நமே.

இதுவரையில் பராயத்தாதி₄கரணத்தின் ஸாரமாக இங்கு எழுதியவை அந்த அதி₄கரணத்தின் ஶ்ருதப்ரகாசிகையின் சுருக்கமாகும். பிள்ளைலோகாசார்யருடைய தத்வத்ரயக்₃ரந்த₂த்தில் முப்பத்தைந்தாவது சூர்ணையான "கர்த்ருத்வம்தான் ஈஶ்வராதீ₄நம்" என்னும் சூர்ணையின் வ்யாக்₂யானத்தில் மணவாளமாமுனிகளும் இப்பக்ஷத்தை ஆதரித்தார். அவ்விடத்தில் வாதிகேஸரி ஜீயருடைய தீபப்ரகாசம் என்னும் க்₃ரந்த₂த்திலிருந்து மாமுனிகள் மேற்கோள் காட்டியுள்ளார். அந்த தீ₃பப்ரகாசத்தில் வாதிகேஸரி ஜீயர் நடாதூர் அம்மாளுடைய தத்வஸாரத்திலிருந்து, "ஆத₃ரவீஶ்வர த₃த்தயைவ புருஷஸ் ஸ்வாதந்த்ர்யஶக்த்யா ஸ்வயம் தத்தத்ஜ்ஞாந சிகீர்ஷண ப்ரயதநாந்யுத்பாத₃யந் வர்த்ததே | தத்ரோபேக்ஷ்ய ததோநுமத்ய வித₃த₄த் தந்நிக்₃ரஹாநுக்₃ரஹௌ தத்தத் கர்மப₂லம் ப்ரயச்ச₂தி ததஸ் ஸர்வஸ்ய பும்ஸோ ஹரி: ||" என்னும் ஶ்லோகத்தை எடுத்திருக்கிருர். அதற்கு "அடியிலே ஸர்வ நியந்தாவாய் ஸர்வாந்தராத்மாவான ஸர்வேஶ்வரன், தனக்குண்டாக்கிக் கொடுத்த ஜ்ஞாத்ருத்வரூபமான ஸ்வாதந்த்ர்ய ஶக்தியாலே, இப்புருஷன் தானே அவ்வோ விஷயங்களிலே ஜ்ஞாந சிகீர்ஷா ப்ரயத்நங்களை உண்டாக்கிக்கொண்டு வர்த்தியாநிற்கும்; அவ்விடத்திலே அஶாஸ்த்ரீயங்களிலே உபேக்ஷித்தும், ஶாஸ்த்ரீயங்களிலே அநுமதிபண்ணியும், அவ்வோ விஷயங்களிலே நிக்₃ரஹாநுக்₃ரஹங்களைப் பண்ணு நின்றுகொண்டு

हितशक्तिभिस्स्वयं च जीवात्मा तदाधारस्तदाहितशक्तिस्सन् कर्म-

---

அவ்வோ கர்மபலத்தையும் ஸர்வேஶ்வரன் கொடாநிற்கும் என்ருர்கள். இப்படி ஸர்வ ப்ரவ்ருத்திகளிலும் சேதநனுடைய ப்ரதம ப்ரயத்நத்தை அபேக்ஷித்துக் கொண்டு பரமாத்மா ப்ரவர்த்திப்பியாநிற்குமென்றதாய்த்து'' என்று தீபப்ரகாசத்தில் வாதிகேஸரி ஜீயரே அர்த்தமும் அருளிச்செய்திருக்கிருர். ஶ்ருதப்ரகாஶிகாசார்ய பட்டர் இந்த ஶ்லோகததிற்குத் திருவுள்ளம்பற்றியிருக்கும் பொருளுக்கும் வாதிகேஸரி ஜீயர் திருவுள்ளம் பற்றியிருக்கும் பொருளுக்கும் சிறிது வேறுபாடு உண்டு. ''ஒவ்வொரு காரியத்தைத் தொடங்கும்போதும் ஈஶ்வரன் கொடுத்த ஸ்வாதந்த்ரிய ஶக்தியைக்கொண்டு முதல் க்ஷணத்தில் (எம்பெருமானுல் தூண்டப்படாமல்) தானே ஜீவன் நற்காரியங்களிலோ தீயகாரியங்களிலோ ஜ்ஞாந இச்சா ப்ரயத்நங்களைச் செய்கிருன்'' என்னும் ஶ்லோகத்தின் முற்பாதிக்குப் பொருள் கொள்வதில் இரண்டு ஆசார்யர்களுக்கும் கருத்து வேற்றுமையில்லை. பிற்பாதிக்கு ''அப்படி முதல் ப்ரயத்நத்தை ஜீவன் செய்யும்போது எம்பெருமான் அவனைத் தூண்டிவிடாமல் உதாஸீனனாய் இருக்கிருன். இரண்டாவது கணத்திலிருந்து செய்யப்படும் முயற்சிகளில் புண்ய பாபச்செயல்கள் இரண்டையுமே அந்த முதல் முயற்சியை ஒட்டி அதை அனுமதிப்பவனாக எம்பெருமான் தூண்டி விடுகிருன். இப்படி முதல் கணத்தில் கொடுக்கப்பட்ட ஸ்வாதந்த்ரியத்தினுல், ஒரு காரியத்தைத் தொடங்கியதே காரணமாகத் தீய செயல்களுக்கு நிக்ரஹத்தையும் நற்செயல்களுக்கு அநுக்ரஹத்தையும் செய்து அவற்றுக்கு முறையே துக்கத்தையும் சுகத்தையும் பலனாக எம்பெருமான் எல்லா ஜீவர்களுக்கும் அளிக்கிருன்'' என்பது ச்ருதப்ரகாசிகாசார்யர் திருவுள்ளம்பற்றிய பொருள். அதே பிற்பாதிக்கு ''அப்படி முதல் முயற்சியில் ஜீவன் ஸ்வாதந்த்ர்யத்தோடு புண்ய பாபகர்மங்களைத் தொடங்குமளவில், இரண்டாவது கணம் தொடங்கிப் பாப கர்மங்களைக் கடைசி வரையில் தூண்டி விடாமல் உபேக்ஷித்தே நிற்கிருன் எம்பெருமான்; புண்ய கர்மங்களை இரண்டாவது கணம் தொடங்கி அனுமதித்துத் தூண்டிவிடுகிருன். இப்படி முதல் கணம் தொடங்கிக் கடைசி வரையில் ஸ்வதந்த்ரனாகவே செயல்பட்டானுகையாலே பாபகர்மங்கள் விஷயத்தில் இவனுக்கு நிக்ரஹம் செய்து அதன் பலனாக துக்கத்தை அளிக்கிருன் எம்பெருமான். புண்ய கர்மங்கள் விஷயத்தில் முதல் கணத்தில் ஸ்வதந்த்ரமாகச் செயல்பட்டதனுல் அனுக்ரஹத்தையும், அதன் பல

निष्पत्तये स्वेच्छया करणाद्यधिष्ठानाकारं प्रयत्नं चारभते; तदन्त-

ளுக சுகத்தையும் அளிக்கிருன் எம்பெருமான்'' என்பது வாதி கேஸரி ஜீயர் திருவுள்ளம் பற்றிய பொருள். ''புண்யமாயினும் பாப மாயினும் முதல் கணம் ஒன்றிலேயே எம்பெருமான் தன் விருப் பப்படி ஜீவனுக்கு ஸ்வாதந்த்ரியம் அளிக்கிருனுகையாலே அந்த ஒரு கணத்தில் தான் எம்பெருமானுடைய விசேஷகாரணத்வத்திற்கு ஸங்கோசம் (சுருக்கம்) கொள்ளவேண்டும். இரண்டாவது கணம் தொடங்கி ஜீவனுடைய புண்ய பாபச் செயல்கள் அனைத்தின் விஷயத்திலுமே ஸாமான்ய காரணத்வத்தோடு தூண்டிவிடுகை யாகிற விசேஷகாரணத்வமும் எம்பெருமானுக்கு உள்ளது'' என்பது ச்ருதப்ரகாசிகாசாரியரின் திருவுள்ளம். ''பாபகர்மவிஷயத்தில் இரண்டாவது கணம் தொடங்கி உள்ள முயற்சிகளிலும் எம்பெரு மான் ஜீவனைத் தூண்டிவிடுவது அவனது கருணைக்குக் குறைவு விளைக்குமாகையாலே, அக்கர்ம விஷயத்தில் முதலிலிருந்து முடிவு வரையில் எம்பெருமானுக்குத் தொடங்கியவனைத் தூண்டி விடுகை யாகிறவிசேஷ காரணத்வம் இல்லையென்று கொள்வதால் குறையேது மில்லை'' என்று வாதிகேஸரி ஜீயரின் திருவுள்ளம். ''புண்யகர்மவிஷ யத்தில் முதல் ப்ரவ்ருத்தியில் எம்பெருமான் உபேக்ஷித்து நிற்கிரு னுகையால் அவனுக்கு விசேஷ காரணத்வம் இல்லை. இரண்டாவது கணம் முதல் தொடங்கினதைத் தூண்டிவிடுகிருனுகையால் விசேஷ காரணத்வமும் உண்டு'' என்பதே இரண்டு ஆசார்யர்களுக்கும் திருவுள்ளம்.

இவ்விஷயத்தில் ஸ்ரீவேதாந்த தேசிகருடைய கருத்து முற்றிலும் வேறுபடுகிறது. பராயத்தாதி₄கரணத்தின் அதி₄கரணஸாராவளியி லும், ப்ரக்ருதமான [கீதை 18—14, 15] ஶ்லோகங்களின் கீ₃தா பா₄ஷ்ய தாத்பர்ய சந்த்₃ரிகையிலும் அவர் தம் திருவுள்ளத்தைத் தெளிவுபடுத்தியிருக்கிருர். அதன் சுருக்கம் பின்வருமாறு:— எம் பெருமான் ஜீவனுக்குத் தன் ஸங்கல்பத்தாலே உண்டாக்கப்பட்ட ப்ரவ்ருத்தி சக்தியையுடைய ஶரீரேந்த்ரியங்களைச் செயல்படுவதற்குக் கருவிகளாகக் கொடுக்கிருன். எல்லாக் காரியங்களிலும் முயற்சி கொள்வதற்கும் முயற்சியிலிருந்து நீங்குவதற்கும் அநுகு₃ணமாகத் தன் ஸ்வரூபத்தினுலும் ஸங்கல்பத்தினுலும் (பூ₄மியைப்போலே) அனைவரையும் தாங்கி நிற்கிருன், ஶரீரேந்த்₃ரியங்களை அதி₄ஷ் டி₃த்து நிற்பதற்கும் ஜீவர்களுக்கு சக்தியை அளிக்கிருன். இவர்

स्वस्थितः परमात्मा स्वानुमतिदानेन तं प्रवर्तयतीति जीवस्यापि

கள் செயல்படலாம்படி ஶப்₃த₃ாதி₃விஷயங்களை இவர்களுக்குக் காட்டுகிறான். இவை அனைத்தும் ஜீவனுடைய கர்த்ருத்வத்தை ஒட்டியவையாகவும், எல்லா ப்ரவ்ருத்திநிவ்ருத்திகட்கும் பொதுவாக வுமிருப்பவையாகையாலே இவற்றில் ஆக்ஷேபம் எழுவதற்கு இடமில்லை. இதைக்கொண்டே எல்லா ப்ரவ்ருத்திகளிலும் நிவ்ருத்திகளிலும் எம்பெருமான் பொதுவாக உதா₃ஸீனனாக இருக்கிறான் என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி எம்பெருமானிடமிருந்து ஶக்திபெற்ற ஜீவன் செயலைத் தொடங்கும் போது அச்செயலை நிறைவுபடுத்துவதற்காக எம்பெருமான் தொடங்கியதைத் தூண்டுவதாகிற அனுமதிதா₃னத்தைச் செய்கிறான். இதுவும் ஜீவனுடைய கர்த்ருத்வத்தைத் (செயல் புரியும் தன்மையைத்) தடுக்காது; மேலும் வலிமை ஊட்டவே செய்யும். அதனால் 'ஶாஸ்த்ரங்கள் ஜீவனைக் குறித்துச் செய்யும் விதி₄நிஷேத₄ங்கள் பயனற்றதாகும்' என்னும் ஶங்கைக்கு இடமில்லை. ஒரே செயலில் கர்த்தாவான ஜீவனுக்குப் பரமாத்மாவாகிற மற்றொரு கர்த்தா உதவி புரிகிறான் என்னும் காரணத்தால் சாஸ்திரங்கள் ஜீவனைக்குறித்து விதி₄ நிஷேத₄ங்களைச் செய்யக்கூடாது என்று கூறுவதுபொருந்தாது. ஒருவராகச்செய்யகூடாதவையாய், பலராகச்சேர்ந்தே செய்ய வேண்டிய தேர்இழுப்பது,பாறை அல்லது மரத்தைத்தள்ளுவது முதலான செயல்களில், உலகில் ஒவ்வொருவரைக்குறித்தும் விதி₄ நிஷேத₄ங்கள் விளைவதையும், அவை பயனுடையவை ஆவதையும் காண்கிறோம். முயற்சியில் சக்திஉடையவனுக்குப் பிறர் அதைத் தடுக்காமல் இருந்தால் ஸ்வாதந்த்ரியம் முதலானவை உள்ளதை இத்தகைய செயல்களில் காண்கிறோம். ''கார்யதே ஹ்யவஶ: கர்ம ஸர்வ: ப்ரக்ருதிஜைர்கு₃ணை: [3—5] [(ஒன்றையும் செய்வதில்லை என்று உறுதி பூண்டவனை உள்ளிட்ட)எல்லாப் புருஷரும் ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄த்தினால் வளரும் ஸத்வ ரஜஸ் தமோ கு₃ணங்களால் அவ்வவற்றுக்கு உரிய செயலைக் குறித்துத் தம்மையறியாமலே தூண்டப்படுகிறாரல்லவோ] முதலான இடங்களிலும் ஜ்ஞானம் இச்சை ஆகியவற்றை முன்னிட்டுக் கொண்டே ஜீவன் தூண்டப்படுவதாலும்,அந்தந்த ஜீவனுடைய வாஸனை முதலானவற்றுக்கு அநுகு₃ணமாகவே வெவ்வேறு இச்சைகள் விளைகின்றனவாகையாலும் ஜீவனுடைய கர்த்ருத்வம் அசைக்கவொண்ணாதது. அதனு

स्वबुद्ध्या प्रवृत्तिहेतुत्वमस्ति; यथा गुरुतरशिलामहीरुहादिचलनादिफल-

லேயே இந்த ஸ்லோகங்களில் செயல்களுக்குக் கூறப்படும் ஐந்துகாரணங்களில், 'கர்த்தா' என்று பெயரிட்டு அழைப்பதன் மூலம் கர்த்ருத்வத்தைக் கொண்டே ஜீவன் நிரூபிக்கப்படுகிறுன். இனி எம்பெருமானுக்கு வைஷம்யநைர்க்₄ருண்யங்கள் [பக்ஷபாதம், கருணையின்மை] ஏற்படுகிறது என்னும் ஆக்ஷேபத்தை ஆராய்வோம். ஶரீரேந்த்₃ரியங்களின் ஶக்தி ஜ்ஞாநம் இச்சை முதலானவற்றில் ஒருவருக்கொருவர் மிகுந்த வேறுபாடு இருக்கும்படி எம்பெருமான் கொடுப்பது, ஜீவன் தவறு செய்யும்போது தடுக்காமலிருப்பது, அதை அனுமதிப்பது, அதற்கு தண்டனை அளிப்பது முதலானவையும் அநாதிகாலமாக வரும் பூர்வகர்மங்களினுல் விளைவதாகையாலே, அவை ஈஸ்வரனுக்கு வைஷம்யநைர்க்₄ருண்யங்களை விளைக்கமாட்டா. எம்பெருமான் தூண்டுவதாயிருந்தால் இவனைக்குறித்து ஶாஸ்த்ரங்கள் விதி₄நிஷேத₄ங்கள் செய்வது பொருந்தாதே எனில்—ஒருவன் யஜ்ஞம் முதலானவற்றைச் செய்யத் தொடங்குகிறுன் என்ருல் அதற்குக் காரணம் முற்பிறவியில் செய்த புண்ணியம் ஆகும். அப்படிப் புண்யத்தால் யஜ்ஞங்கள் செய்யும் போது ஶாஸ்த்ரங்களைக் கொண்டு இன்ன யஜ்ஞத்தைத் தொடங்கவேண்டும் என்று அறிந்தே தொடங்கவேண்டியிருப்பதால் ஶாஸ்த்ரங்கள் வீணுவதில்லை. இப்படி ஒவ்வொரு புண்ணியகாரியத்தையும் எம்பெருமான் தூண்டி ஜீவன் செய்யும்போதும் அதற்குக் காரணம் முந்திய புண்ணியம், அதற்குக் காரணம் முந்திய புண்யம்-இப்படி நிர்வஹித்து விடலாம். முன்பிறவியில் யஜ்ஞாதி₃களுக்குக் காரணமான புண்ணியம் செய்ததால் மாத்திரம் யஜ்ஞம் முதலானவை நடந்து விடாதே. ஶாஸ்த்ரங்களைக் கொண்டுதானே அந்த யஜ்ஞாதி₃களைப்பற்றி அறிந்துகொண்டு அவற்றை அநுஷ்டிக்கவேண்டும். பாப விஷயத்திலும் ஒவ்வொரு பாபத்திற்குக் காரணம் முன்செய்த மற்ருெரு பாபமே என்று நிர்வஹித்து விடலாம். உலகில் ஜீவர்களுடைய செயல்களெல்லாம் முன்வினையால் ஏற்படுகின்றன என்பதை, சார்வாகராயில்லாத எல்லா வைதி₃கர்களும் ஶாஸ்த்ரங்களைக் கொண்டு ஒப்புக்கொள்ளுகிருர்கள். அந்த ஶாஸ்த்ரமே "புண்யபாபங்களாகிய முன் வினையால் நடப்பது என்ருல், அந்தப் புண்யபாபங்களால் விளைந்த ஈஸ்வரனுடைய ப்ரீதி கோபங்களால் உண்டான ஸங்கல்பத்தால் நடப்பது என்றே பொருள் கொள்ளவேண்டும்" என்று உபதேசிக்கிறது. ஆகையால் இவ்விஷயத்தில் ஈஸ்வரனுக்கு வைஷம்யநைர்க்₄ருண்யங்கள் விளை

प्रवृत्तिषु बहुपुरुषसाध्यासु बहूनां हेतुत्वं विधिनिषेधभाक्त्वं चेति ॥ १४ ॥ ॥ १५ ॥

---

யுமே? என்று கேள்வி கேட்பதற்கு இடமேயில்லை. இது எம்பெருமானுக்கு தோஷமும் ஆகாது என்பதை "வைஷம்யே ஸதி கர்மணாமவிஷம: கிம் நாம குர்யாத் க்ருதீ | கிம் வோதா₃ரதயா தா₃தீ₃த வரதோ₃ வாஞ்ச₂ந்தி சேத்₃ து₃ர்க₃திம் ||" [பக்ஷபாத மில்லாதவனான ஈச்வரன் அவனவன் செய்த கர்மங்கள் மிகவும் வேறுபட்டிருந்தால் (ஒவ்வொருவனை ஒவ்வொருவிதமாகத் தூண்டாயல்) என்ன செய்யமுடியும்? ஜீவர்கள் தாழ்ந்த க₃திகளை விரும்பினால் வண்மைமிக்க வரதனான எம்பெருமான் மிக உயர்ந்த கதிகளை அவர்களுக்கு அளிக்க முடியுமா?] என்று நம்முடைய ஆசார்யரான வாதி₃ஹம்ஸாம்பு₃வாஹர் [கிடாம்பி அப்புள்ளார்] உரைத்தது இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கது. ஆக இங்கு இதுவரை சொல்லப்பட்டவை பின்வரும் இரண்டு ஶ்லோகங்களில் சுருக்கிக் கூறப்படுகின்றன:—

"தத்தத்₃ருஷ்டாத்₃ருஷ்டமூல ஶாஸ்த்ர வஶ்ய த₄ஶாந்வயாத் |
புநஸ்தத₃தத₃த்₃ருஷ்டாத்₃யுத்பத்திருபபத்₃யதே ||
புமர்த்த₂ ஸாத₄நத்வேந ப்ரததே ஸ்வேச்ச₂யா புமாந் |
ப்ரவர்த்தேதேதி தாத₃ர்த்₂யாத் ஸாவகாஶாத்ர சோத₃நா ||"

[அந்தந்த மதங்களில் ஒப்புக்கொள்ளப்படும் முன்வினைகளினால் ஶாஸ்த்ரங்களை முன்னிட்டுக்கொண்டு மேலும் மேலும் அது போலவே பின் வினைகள் உண்டாவது பொருந்துகிறது. (அப்படி இருந்தபோதிலும்) புருஷார்த்த₂ ஸாத₄நமாக ஶாஸ்த்ரங்களில் காணப்படும் கர்மங்களில் ஜீவன் தன் விருப்பப்படி முயற்சி செய்யலாமாகையாலே ஶாஸ்த்ரவிதி₄யும் பயனுடையதாகிறது.] இதுவரையில் தாத்பர்ய சந்திரிகையில் தேசிகனுடைய கருத்து சுருக்கிக் கூறப்பட்டது.

இனி, அதி₄கரண ஸாராவளியில் பராயத்தாதி₄கரணத்தில் இக்கருத்துக்களை விவரித்து தேசிகன் அருளியிருக்கும் ஒரு ஶ்லோகம் பொருளுடன் கொடுக்கப்படுகின்றது.

" கர்த்ருத்வம் ஸ்யாத் கதா₃சித் கரணவதி பரப்ரேரணா நிர்வ்யபேக்ஷம்
நோசேத் தந்நிக்₃ரஹாத்₃யம் கத₂மிதி யதி₃ ந ஸ்வேஷ்டபக்ஷேऽபி ஸாம்யாத் |

ஸ்வேநாபத்₂யப்ரவ்ருத்தம் ந ஹி புநரபி தத் காரயேயுர் த₃யார்த்₃ரா:
தச்சேத் தஸ்ய ஸ்வபா₄வாதி₃தரத₃பி ந கிம் நிஷ்ப₂லோ ऽதீ₄தபு₄ங்க₃: ||"

["ஜீவனிடத்தில் முதல் முயற்சியின்போது தீவினைகளிலோ நல்வினைகளிலோ ஈடுபடுவதாகிற கர்த்ருத்வம் ஈஶ்வரன் தூண்டாமலே உண்டாவது என்று கொள்ளவேண்டும். 'முதல் முயற்சியிலும் ஈஶ்வரன் தூண்டுகிருன்' என்ருல், அதற்கு ஈஶ்வரன் நிக்₃ரஹத்தையோ அநுக்₃ரஹத்தையோ செய்வதும் துக்கத்தையோ ஸுகத்தையோ அளிப்பதும் எப்படிப் பொருந்தும்?" என்னும் ஆக்ஷேபம் பொருந்ாது. ஏனெனில்: இரண்டாவது தொடங்கியுள்ள முயற்சிகளில் எம்பெருமான் தூண்டுகிருன் என்று ஒப்புக்கொள்ளும் உங்கள் பக்ஷத்திலும் இந்த தோஷம் வரும்.* முதலில் தானே ஒரு தவருன காரியத்தைச் செய்யத்தொடங்கியவனை, கருணையுள்ளவர்கள் எவரும் பிறகு அக்காரியத்தையே செய்யும்படி தூண்டிவிடமாட்டார்கள். "முதல்முயற்சியில் ஒருவன் தவருன காரியத்தைத் தொடங்கின பின்பு அதை அனுஸரித்து அந்தக் கர்மத்திற்குப் பலனுக எம்பெருமான் இரண்டாவது தொடங்கியுள்ள முயற்சிகளைத் தூண்டிவிடுகிருனுகையாலே அவன் கருணையற்றவன் அல்லன் என்று கொள்ளலாமே" எனில்: முற்பிறவியில் உள்ள ஒரு கடைசி முயற்சிக்குப் பலனுகவே இந்த முதல் முயற்சியில் எம்பெருமான் தூண்டிவிடுகிருனென்று நாங்களும் அதே ஸமாதானத்தைச் சொல்லலாம். "தொடங்கியதை அனுமதித்துத் தூண்டுவதாகிய அநுமந்த்ருத்வம் ஈஶ்வரனுக்கு, எல்லாக்காரியங்களுக்கும் காரணமாயிருக்கும் இயல்பினுல் ஏற்பட்டது என்று கூறுவீர்களானுல், அந்த இயல்பினுல் அவன் முதல் முயற்சிக்கும் காரணமாகிருன் என்றுகொண்டுவிடலாமே. இப்படி ஒப்புக்கொள்ளாவிடில், 'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்னும் ஶாஸ்த்ரஸாரார்த்த₂த்தினுல் தேறும் எம்பெருமானுடைய ஈஶ்வரத்வமே இல்லாமல் போய்விடும். மேலும், ஜீவர்களை எம்பெருமான் எல்லாச் செயல்களிலும் உள் நுழைந்து நியமிக்கிருன் என்று கூறும் வேத வாக்யங்களும் வீணுகிவிடும்.] இந்த ஶ்லோகத்திற்கு அடுத்த ஶ்லோகத்தில் "பா₄ஷ்யாதி₃ க்₃ரந்த₂ லேஶோ ऽப்யவஹிதமநஸாமைத₃மர்த்₂யம் பு₄ஜேத" [ஸ்ரீபா₄ஷ்யத்திலும் "தத்ரோபேக்ஷ்ய" "ததோநுமத்ய" என்று தத்வஸாரத்திலும் முதல்

---

* இந்த தோ₃ஷத்தைத் தவிர்ப்பதற்காகவே வாதிகேஸரி ஜீயர் 'பாபகர்ம விஷயத்தில் எம்பெருமான் எப்போதுமே தூண்டிவிடுவதில்லை' என்று கொண்டார்.

க்ஷணத்தில் எம்பெருமான் உபேக்ஷையுடன் இருக்கிறான் என்றும், இரண்டாவது கணம் தொடங்கி அனுமதி பண்ணுகிறான் என்றும் சொல்லப்படுவதை நுணுகி ஆராய்ந்து பார்த்தால் நாம் சொல்லும் அர்த்தத்திலேயே அவற்றுக்கும் கருத்து என்று விளங்கும்] என்று ஸாதித்திருக்கிறார் தேசிகன். அங்கு வ்யாக்யாநம் செய்த தேசிகனுடைய குமாரரான வரதாசார்யர் 'அநாதி₂யாகத் தொடர்ந்து வரும் முயற்சிகளில் முதல் முயற்சி என்பதையே நிரூபிக்கமுடியாது' என்று ஸாதித்திருக்கிறார். ஈச்வரன் ஸ்வதந்த்ரனாக இருப்பதால் அவனைக்'கர்த்தா'என்றும்,ஜீவனைச்செய்விக்கிறபடியால் 'காரயிதா' (ப்ரேரகன்)என்றும், ஒருசெயலில் முன்னமே செயல்படத் தொடங்கியவனை மேலும் செயல்படச்செய்வதால் 'அநுமந்தா' என்றும், பயிர்களின் முளைகளுக்குத் தண்ணீர்போல் எல்லாச் செயல்களுக்கும் பொதுவான ஹேதுவாக இருப்பதால் 'உதா₃ஸீனன்' என்றும், எல்லா நிலையிலும் யாவற்றையும் கண்டு நிற்பதால் 'ஸாக்ஷீ' என்றும், அவனவனுடைய கர்மங்களையொட்டி ஒவ்வொரு செயலிலும் உடனிருந்து செய்விப்பதால் 'ஸஹகாரி' என்றும் ஈச்வரன் ஒருவனே சாஸ்த்ரங்களில் சொல்லப்படுகிறான். ஆகையால் உதாஸீனத்வத்திற்கும் ப்ரேரகத்வத்திற்கும் முரண்பாடு இல்லை. ஆகையால், எல்லா முயற்சிகளிலும் எம்பெருமான் ஜீவனைத் தூண்டி விடுகிறான் என்று கொள்வதால் எக்குறையும் இல்லை என்பது தேசிகனுடைய திருவுள்ளம்.

இனி, ச்ருதப்ரகாசிகாசார்யர் முதலான மற்ற ஆசார்யர்களின் திருவுள்ளம் விவரிக்கப்படுகிறது. பராயத்தாதி₄கரணத்தில் "பராத்து தத் ச்ருதே:" என்னும் முதல் ஸூத்ரத்தில் ஜீவனுடைய கர்த்ருத்வம் பரமாத்மாவினால் விளைவது என்று ஸித்தாந்தம் செய்தார் ஸூத்ரகாரர். அதற்கு மேல் "சாஸ்த்ரவிதி₄ நிஷேத₄ங்கள் வீணாகுமே, எம்பெருமான் ஜீவனுக்கு நிக்₃ரஹ அநுக்₃ரஹங்களைச் செய்வதும் ஸுகதுக்கங்களை அளிப்பதும் பொருந்தாமல் போய்விடுமே" என்னும் ஆக்ஷேபம் எழ, அடுத்த ஸூத்ரத்தில் "க்ருதப்ரயத்நாபேக்ஷஸ்து" என்னும் பகுதியாலே ஸூத்ரகாரர் அந்த ஆக்ஷேபத்திற்குப் பதிலுரைக்கிறார். இதிலிருந்தே 'ஜீவனால் செய்யப்பட்ட ப்ரயத்நத்தை முதலில் எதிர்பார்க்கிறான் எம்பெருமான்' என்று தெளிவாகிறது. முதல் முயற்சியிலும் ஜீவன் எம்பெருமானால் தூண்டப்பெற்றே காரியம் செய்பவனானால் ஸூத்ரத்தில் "காரித ப்ரயத்நாபேக்ஷ:" என்றே இருக்கவேண்டும்; 'க்ருதப்ரயத்நாபேக்ஷ:' என்று இருப்பது பொருந்தாது.

இந்த ஸூத்ரத்தின் ஸ்ரீபாஷ்யத்திலும் "ஸர்வாஸு க்ரியாஸு புருஷேண க்ருதம் ப்ரயத்நம் — உத்3யோகம் அபேக்ஷ்ய, அந்தர்யாமி பரமாத்மா, தத3நுமதி தா3நேந ப்ரவர்த்தயதி |" [எல்லாச் செயல்களிலும் ஜீவனால் செய்யப்பட்ட ப்ரயத்நமாகிற முயற்சியை எதிர்பார்த்தே அந்தர்யாமியான பரமாத்மா (அதற்குப் பின்) அச்செயலுக்கு அனுமதியை வழங்கி ஜீவனைச் செயல்பட வைக்கிறான்.] என்று ஜீவன் முதலில் செய்த முயற்சியை எதிர் பார்த்தே அதன்பிறகு எம்பெருமான் செயல்படச் செய்கிறான் என்று தெளிவாக உள்ளது. 'ஒவ்வொரு செயலிலும் ஜீவன் முதலில் செய்யும் முயற்சியை எதிர்பார்த்து' என்று பாஷ்யமிடு கையால் ஜீவன் செய்யும் ஒவ்வொரு செயலிலுமே முதல் முயற்சி யில் எம்பெருமான் உதாஸீனனாயிருக்கிறான் என்று விளங்கு கிறது, ஆகையால் 'முதல் முயற்சி என்பதை நிரூபிக்கமுடியாது' என்னும் ஆக்ஷேபம் பொருந்தாது என்று தெளிவாகிறது. தத்வ ஸாரத்திலும் "ஆதௌ3 புருஷ: ஸ்வாதந்த்ர்ய ஶக்த்யா ஸ்வயம் உத்பாத3யந் வர்த்ததே" [முதலில் ஜீவன் எம்பெரு மான் அளித்த ஸ்வாதந்திரிய ஶக்தியாலே தானே செயல்களைத் தொடங்குகிறான்.] என்று முதல் முயற்சியில் ஜீவனுடைய ஸ்வா தந்திரியம் மிகத்தெளிவாகப் பேசப்பட்டிருக்கிறது. "தத்ர உபே க்ஷ்ய" "தத: அநுமத்ய" என்னும் பத3ங்களாலும் முதல் முயற்சி யில் எம்பெருமான் தூண்டிவிடாமல் உபேக்ஷித்து நிற்கிறான் என்பதும், இரண்டாவது முயற்சியில் தொடங்கியதைத் தூண்டி விடுவதாகிய அநுமதி தா3னத்தைச் செய்கிறான் என்பதும் மிகத் தெளிவாக விளங்குகிறது. முதல் முயற்சியிலும் எம்பெருமானுக்கு ஸாமான்ய காரணத்வம் உண்டாகையாலே எம்பெருமானுடைய ஸர்வ காரணத்வத்திற்கும் எக்குறையுமில்லை; முதல் முயற்சியில் ஜீவனுக்கு உள்ள ஸ்வாதந்திரியமும் எம்பெருமானாலேயே கொடுக்கப்பட்டதாகையாலே, பரமாத்ம பாரதந்திரியத்தோடு முரண்படாது என்பதை அரசன் மந்திரிகளுக்குக் கொடுக்கும் ஸ்வாதந்திரியத்தை த்3ருஷ்டாந்தம் காட்டி முன்னமே விளக் கினோம். முதல் க்ஷணத்தில் ஜீவன் செய்யும் முயற்சியை அனு ஸரித்தே மேல் முயற்சிகளில் அந்த முதல் முயற்சிக்குப் பலனாகத் தூண்டி விடுகிறானாகையாலே, இதனால் பரமனுக்கு வைஷம்ய நைர்க்4ருண்யங்கள் விளையாது. முதல் முயற்சியிலும் எம்பெருமா னுக்கு ஸாமான்ய காரணத்வம் உண்டாகையாலே, "அவனன்றி

ஓரணுவும் அசையாது'' என்னும் ஶாஸ்த்ர ஸாரார்த்தத்திற்கும் எக்குறையும் இல்லை. எம்பெருமான் ஜீவனுக்கு நன்மை தீமைகளைப் பகுத்தறியும் ஆற்றலைக் கொடுத்திருக்கிறான். பூர்வகர்ம வாஸனை ஒருவிதமாகத் தூண்டினாலும், அதை எதிர்த்து நின்று வேறுவிதமாகச் செயல்படும் ஶக்தியையும் கொடுத்திருக்கிறான். அதைச் சரியாகப் பயன் படுத்திக் கொள்ளாமல் தவறான காரியங்களை ஜீவன் தொடங்குவதினாலேயே ஜீவனுக்கு எம்பெருமான் தண்டனையை வழங்குகிறான் என்று கொள்வதே நடுநிலை நிற்கும் நீதிபதியாய் இருக்கிற எம்பெருமானுடைய தன்மைக்குப் பொருந்தும். இப்படிக் கொள்ளாவிடில், ''எம்பெருமான் தானே ஒருவனை நற்செயலைச் செய்யும்படி தூண்டிவிட்டு, தானே அவனுக்குப் பரிசளிக்கிறான்; தானே ஒருவனைத் தீயசெயல்களைச் செய்யும்படி தூண்டிவிட்டுத் தானே அவனுக்கு தண்டனை அளிக்கிறான்'' என்னும் தோஷங்கள் ஏற்படும். பூர்வ பூர்வ கர்மங்கள் உத்தரோத்தரகர்மங்களுக்குக் காரணமாகையாலே இக்குறையில்லை என்று சொல்லுவது எம்பெருமான் அநாதிகாலமாகத் தானே ஒவ்வொருவரை நற்செயல்களைச் செய்யும்படித் தூண்டிவிட்டு அவர்களுக்குப் பரிசளிக்கிறான் என்றும், தானே ஒருசிலரைத் தீயசெயல்களைச் செய்யும்படித் தூண்டிவிட்டு அவர்களுக்குத் தண்டனை அளிக்கிறான் என்றும் சொல்லுவதாகவே முடியும். இவ்விஷயத்தை ஜீவனுக்கும் எம்பெருமானுக்கும் நடைபெற்ற ஸம்வாதமாக அமைத்துப் பின்வருமாறு விளக்கலாம்.

ஜீவன் :—பிரானே! நான் மிகவும் கஷ்டப்படுகிறேன்; அடுத்த வீட்டுக்காரன் மிகவும் ஸுகமாயிருக்கிறான்; என்னைக் கஷ்டப் படும்படியாகவும், அவனை ஸுகமாயிருக்கும்படியாகவும் வைத்த நீ பக்ஷபாதமுடையவனல்லவா? என்னை இப்படிக் கஷ்டப்பட வைக்கும் உனக்குக் கருணையும் இல்லையே!

எம்பெருமான் :—இது என் குற்றமல்லவப்பா! நீ பாவம் பண்ணினாய், அதனால் கஷ்டப்படுகிறாய். அவன் புண்ணியம் பண்ணினான், அதனால் ஸுகப்படுகிறான். இதற்கு நான் என்ன செய்வது? எனக்கு எப்படி வைஷம்யமும் (பக்ஷபாதமும்), நைர்க்ருண்யமும் (கருணையின்மையும்) ஏற்படும்?

ஜீவன் :—என்னைப் பாவம் செய்யவைத்ததும், அவனைப் புண்ணியம் செய்ய வைத்ததும் நீதானே! நீயே என்னைப் பாவம் செய்யும்படி தூண்டிவிட்டு, நீயே என்னைக் கஷ்டப்படுத்தலாமா?

இது கருணையின்மையாகாதா? நீயே அவனைப் புண்ணியம் செய்யும்படி தூண்டிவிட்டு அவனுக்கு ஸுகத்தை அளிக்கலாமா? இது பக்ஷபாதமல்லவா?

ஈஶ்வரன் :—உன்னைப் பாவம் செய்யும்படியோ, அவனைப் புண்ணியம் செய்யும்படியோ நான் தூண்டவில்லையப்பா! உங்களிருவரையும் தேஹேந்திரியங்களோடு ஸ்ருஷ்டிக்கும்போதே இஷ்டப்படி நடப்பதற்கு உறுப்பான அறிவையும் (ஸ்வாதந்த்ர்ய புத்தியையும்) கொடுத்திருக்கிறேன். நன்மை தீமைகளைக் காட்டும் ஶாஸ்த்ரத்தையும் கொடுத்திருக்கிறேன். ஶாஸ்த்ரத்தைக்கொண்டு நன்மை (புண்யம்) இன்னது, தீமை (பாவம்) இன்னது என்று அறிந்து தீமையை விலக்கி, நன்மையைச் செய்வதில் அவன் ஈடுபட்டபடியால் அவனுக்கு ஸுகத்தை அளித்தேன். ஶாஸ்த்ரத்தைக்கொண்டு நன்மை தீமைகளைப் பகுத்தறியாமலும், அறிந்தும் பல பாபங்களையே செய்து புண்யம் செய்யாமையால் உனக்குக் கஷ்டத்தைக் கொடுத்தேன். எனக்கு வைஷம்யநைர்க்ருண்யங்கள் எப்படி வரும்?

பூர்வபூர்வகர்மங்களையொட்டி மேன்மேலேவரும் கர்மங்களைச் செய்யும்படி எம்பெருமான் தூண்டுகிறான் என்று கொள்ளும் பக்ஷத்தில், எம்பெருமான் ஜீவனுடைய இந்தக் கடைசிக் கேள்விக்கு "நீ முற்பிறவிகளில் செய்த பாபங்களையொட்டி உன்னைப் பாவம் செய்யும்படி தூண்டினேன். அவன் முற்பிறவிகளில் செய்த புண்ணியங்களையொட்டி அவனைப் புண்ணியம் செய்யும்படி தூண்டினேன்," என்று பதில் சொல்லவேண்டிவரும். அதற்குமேல் ஜீவன் முன்பிறவியில் தான் பாபம் செய்ததற்கும், அவன் புண்ணியம் செய்ததற்கும் காரணம் என்னவென்று கேட்டால், அதற்கும் முறையே பாபத்தையும், புண்ணியத்தையும் காரணமாகச் சொல்ல வேண்டிவரும். இந்த பதில் விதண்டாவாதமாகுமேயொழிய சரியான பதில் ஆகாது என்பது நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும். ஒவ்வொரு காரியத்தையும் தொடங்கும்போதாவது ஜீவன் ஈஶ்வரன் தனக்களித்த பகுத்தறிவைப் பயன்படுத்திச் சுதந்திரமாகச் செயல்படுகிறான் என்று கொண்டால்தான் ஈஶ்வரன் ஜீவனின் நற்செயலைக்கண்டு உகந்து பரிசளிப்பதும், ஜீவனின் தீச்செயலைக்கண்டு கோபங்கொண்டு தண்டனையளிப்பதும் பொருந்தும்.

மேலும் "க்ருதப்ரயத்நாபேக்ஷஸ்து" என்று தொடங்கும் ஸூத்ரத்தின் பாஷ்யத்தின் இறுதியில் "கௌஷீதகீ 3-9 உபநிஷத் வாக்கியத்தில் சிலரை எம்பெருமான் முதல் முயற்சியிலே நற்கருமங்களைச் செய்யும்படி தூண்டுகிறான் என்றும், சிலரைத் தீயகருமங்களைச் செய்யும்படி தூண்டுகிறான் என்றும் சொல்லப் பட்டிருப்பது பொருந்தவில்லையே?" என்னும் கேள்வியை எழுப்பிக் கொண்டு, "இந்த வேதவாக்கியம் ஜீவர்களனைவருக்கும் பொதுவானதன்று; எம்பெருமானுக்கு மிகவும் அநுகூலனாய் இருப்பவன் விஷயத்தில் அவனை முதலிலேயே புண்ணியம் செய்யும்படி தூண்டுகிறான். எம்பெருமானுக்கு மிகவும் பிரதிகூலனாய் இருப்பவன் விஷயத்தில் அவனை முதலிலேயே பாபம் செய்யும்படி தூண்டுகிறான்" என்று நிர்வகித்துவிட்டு, இதை வலியுறுத்துவதற்காக கீதையில் பத்தாம் அத்தியாயத்தில் எட்டு முதல் பதினொன்று வரையில் உள்ள ஶ்லோகங்களையும், கீதை பதினாறுவது அத்தியாயத்தில் எட்டு முதல் பத்தொன்பது வரையில் உள்ள ஶ்லோகங்களையும் ப்ரமாணமாகக் காட்டுகிறார். [இதன் சுருக்கம் நம்மால் பக்கம் 632-ல் (8)வது பிரிவில் கொடுக்கப்பட்டுள்ளது] (இதிலிருந்து பொதுவாக ஒவ்வொரு காரியத்திலும் முதல் முயற்சியின்போது. எம்பெருமான் ஜீவர்களைத் தூண்டிவிடுவதில்லை என்பதே ஸ்ரீபாஷ்யகாரரின் திருவுள்ளம் என்று தெளிவாக விளங்குகிறது. ஆகையால், ஶாஸ்த்ரங்களிலுள்ள விதிநிஷேதங்கள் பயனுள்ளவையாவதற்காகவும், எம்பெருமானுக்கு வைஷம்ய நைர்க்ருண்யங்கள் ஏற்படாமல் இருப்பதற்காகவும் ப்ரஹ்ம ஸூத்ரம், ஸ்ரீபாஷ்யம் முதலியவற்றையொட்டி எம்பெருமான் ஒவ்வொரு செயலையும் ஜீவன் தொடங்கும்போது, அவனைத் தூண்டி விடாமல், அவனுக்கு ஸ்வாதந்த்ரியத்தைத் தானே அளித்து விடுகிறான் என்பதே பொருந்தும்.)

ஆக, இதுவரையில் ப்ரஹ்மஸூத்ரத்தில் பராயத்தாதிகரணத்தையும், அதன் ஸ்ரீபாஷ்யத்தையும், அதை விளக்கும் நடாதூர் அம்மாளின் தத்வஸாரஶ்லோகத்தையும். அவருடைய சிஷ்யரான ஶ்ருதப்ரகாசிகாசார்யரின் பராயத்தாதிகரண ச்ருதப்ரகாசிகையையும், வாதிகேஸரி ஜீயரின் தீபப்ரகாசத்தையும், அதை மேற்கோளாகக்காட்டி மாமுனிகள் தத்வத்ரய வ்யாக்யானத்தில் ஸாதித்திருக்கும் ஸ்ரீஸூக்திகளையும் பார்க்கும்போது ஜீவன் செய்யும் ஒவ்வொரு காரியத்திலும் ப்ரதமப்ரவ்ருத்தி எனப்படும் முதல் முயற்சியில் எம்பெருமான் அவனுக்கு ஸ்வாதந்திரியத்தை அளித்

திருக்கிறான் என்பது ஸூத்ரகாரர் பாஷ்யகாரர் முதலிய ஆசார்யர்களின் திருவுள்ளம் என்று விளங்குகிறது. ஆயினும், தாத்பர்ய சந்த்ரிகையில் ஸ்ரீவேதாந்த தேசிகர் தம்முடைய ஆசார்யரான வாதிஹம்ஸாம்புவாஹரை (கிடாம்பி அப்புள்ளாரை) மேற்கோளாகக் காட்டி "ப்ரதமப்ரவ்ருத்தியில் ஜீவனுக்கு ஸ்வாதந்திரியம் உண்டு" என்பது சரியல்லவென்றும், பூர்வபூர்வகர்மங்கள் காரணமாக உத்தரோத்தரகர்மங்களை எம்பெருமான் தூண்டி விடுகிறான் என்று கொண்டே வைஷம்யநைர்க்ருண்ய பரிஹாரம் முதலானவற்றைச் செய்துவிடலாம் என்றும் திருவுள்ளம் பற்றியிருக்கிறார். பராயத்தாதிகரணத்தின் அதிகரணஸாராவளியிலும், ஸ்ரீபாஷ்யம் முதலானவற்றை இதற்கு அநுகுணமாக நயனம் செய்துவிடலாம் என்றும் திருவுள்ளம் பற்றியிருக்கிறார். இவ்விஷயத்தில் ஸ்ரீவைஷ்ணவ பூர்வாசார்யர்களிடையே உள்ள இக்கருத்து வேற்றுமையே — ஸ்ரீதேசிகனுக்கும் மற்ற ஆசார்யர்களுக்கும் ரஹஸ்யப்ரஸ்தாநத்தில் சில முக்கியமான கருத்து வேற்றுமைகள் விளையவும், அது காரணமாக இரண்டு ஸம்ப்ரதாயங்கள் உருவாகவும் அடிப்படையாக அமைந்துள்ளது என்பதை இனி விளக்குவோம்.

## தென்னாசார்யர்களின் திருவுள்ளம்

ஸ்ரீமந்நாராயணன் ஒருவனே அநாதிகாலமாக ஸகல சேதனர்க்கும் ஸர்வவிதபந்துவாயிருப்பவன். தனக்கு வைஷம்ய நைர்க்ருண்யங்கள் (பக்ஷபாதமும் கருணையின்மையும்) ஏற்படாமைக்காக அநாதிகாலமாக அவர்களுக்கு ஓரளவுக்கு ஸ்வாதந்த்ர்யபுத்தியை அளித்து, அநாதிகாலமாக அவர்கள் செய்யும் புண்யபாபங்களுக்கு அநுகுணமாகப் பலனளிப்பவனாயினும், சேதநலாபத்தைத் தன் பேருகநினைத்திருப்பவனாகையாலே, ஒவ்வொரு சேதனனும் தன்னையடையவேண்டுமென்று அநாதிகாலமாக ஒன்றி ஒன்றி உலகம் படைப்பது, இசைகொள் வேதநூல் அருளுவது, எந்நின்ற யோனியுமாய்ப் பிறப்பது முதலான எண்ணிறந்த முயற்சிகளைச் சேதனர்களுடைய கர்மத்தைக் கணிசியாமல் தன் நிர்ஹேதுக கிருபையினாலே ஓயாமல் செய்துகொண்டேயிருக்கிறான். இம்முயற்சிகளின் பயனாகவே சில சேதனர்க்குச் சில நன்மைகள் விளைந்து அவர்கள் தன்னை அடையப் பெறுகிறான். இவற்றையெல்லாம் நடுநிலைநின்று ஆராயும் போது — ஸ்வரூபாநுகுணமான பரமபுருஷார்த்தலக்ஷண மோக்ஷத்

தின் பொருட்டு பகவான் செய்யும் ஸங்கல்பம் நிர்ஹேதுக க்ருபாகார்யம் என்றே அறுதியிடத்தக்கதாயுள்ளது; ஸ்வரூபத்துக்குத் தகாத இதரபுருஷார்த்தங்களின் பொருட்டு பகவான் செய்யும் ஸங்கல்பம் ப்ரபந்நர்க்கு நிர்ஹேதுகமாகவும், மற்றையோர்க்கு ஸஹேதுகமாகவும் அமைகிறது.

(இனி, இப்படி ஸகல சேதனர்களும் தன்னையடைய நிர்ஹேதுகக்ருபையாலே எம்பெருமான் விடாமுயற்சியைச் செய்துகொண்டிருக்கும்போது, பெரும்பாலான சேதனர்கள் அவனை அடையாமலேயிருக்கக் காரணமென்ன என்று ஆராய்ந்தால், தனக்கு வைஷம்ய நைர்க்ருண்யம் வாராமைக்காக அநாதிகாலமாக எம்பெருமான் அளித்திருக்கும் ஸ்வாதந்த்ர்யபுத்தியைக்கொண்டு தமக்கு நன்மையைத் தாம் தேட நினைத்து ஸ்வப்ரவ்ருத்தியில் சேதனர் ஈடுபட்டு வருவதே அவர்கள் அவனை அடையாமலிருப்பதற்குக் காரணம்; இந்த ஸ்வார்த்தபரதையையும், அதனால் ஏற்படும் ஸ்வப்ரவ்ருத்தியையும் எம்பெருமானைக் கால்கட்டித் தவிர்த்துக்கொண்டானாகில் எம்பெருமானுடைய நிர்ஹேதுககிருபை ஸபலமாகி, பரமபுருஷார்த்தம் ஸித்திக்கிறது. இதைச் சிறிது விவரிப்போம்.)

"அநாத்மந்யாத்மபுத்திர் யா அஸ்வே ஸ்வமிதி யா மதி:।
அவித்யாதருஸம்பூதிபீஜமேதத் த்விதா ஸ்திதம் ॥"

[தானல்லாத தேஹத்தைத் தானாக எண்ணும் அஹங்காரமும், தன்னதல்லாத பொருள்களைத் தன்னுடையதாக எண்ணும் மமகாரமும்; அஜ்ஞானமாகிற (விஷ)வ்ருக்ஷத்தின் வளர்ச்சிக்குக் காரணமான இருபகுதியாக உள்ள விதையாகும்] என்கிறபடியே ஈச்வரன் கொடுத்த ஸ்வாதந்த்ர்யபுத்தியின் பயனாகவும், விசித்ரமான கர்மப்ரவாஹத்தின் பயனாகவும் விளைந்த அஹங்காரமமகாரங்களாலே ஒவ்வொரு சேதனனுக்கும் அதிகமாகவோ குறைவாகவோ ஸ்வார்த்தபரதையும் (தனக்குத்தான் நன்மையை விரும்புகையும்), அதை நிறைவேற்றிக்கொள்வதற்காகத் தான் முயலுகையாகிற ஸ்வப்ரவ்ருத்தியும் ஏற்பட்டுள்ளது. அஹங்காரமும் மமகாரமும் ஒன்றிருந்தால் மற்றொன்றும் இருந்தே தீரும் என்பதைக் காட்டுவதற்காகவே கீழ் எடுத்த ச்லோகத்தில் அவற்றை ஒரு விதையின் இருபருப்புகளாக உருவகப்படுத்தினார் ரிஷி. இதுபோலவே, அஹங்கார கார்யமான ஸ்வப்ரவ்ருத்தியும்,

மமதாரூப கார்யமான ஸ்வார்த்த₂பரதையும் ஒன்றிருந்தால் மற்றொன்றும் இருந்தே தீரும். இவையிரண்டும் சிலர்க்கு மிக அதி₄கமாகவும் சிலர்க்குப் படிப்படியாகக் குறைந்தும் இருப்பதாலேயே சேதனர் அடையும் புருஷார்த்த₂ங்களிலும், அதை அடைய அவர்கள் கைக்கொள்ளும் ஸாத₄னங்களிலும் ஏராளமான ஏற்றத்தாழ்வுகள் ஏற்பட்டுள்ளன. இந்த ஸ்வார்த்த₂பரதையிலும் ஸ்வப்ரவ்ருத்தியிலும் அநாதி₃காலமாக ஊறிக்கிடக்கும் சேதனர்கது அவற்றைப் படிப்படியாகக் குறைப்பதற்கே ஸர்வேஶ்வரன் பலபல புருஷார்த்த₂ங்களையும், அவற்றுக்குப் பலபல ஸாத₄னங்களையும் சாஸ்திரங்களிலே காட்டியிருக்கிறான்.

மஹாபாபிகளாய், அத்யந்ததாமஸப்ரக்ருதிகளாயிருக்கும் பலர் 'கண்டதே காட்சி, கொண்டதே கோலம், உண்டதே போகம்' என்னும் ஸ்வார்த்த₂பரதையின் எல்லைநிலத்திலே நின்று, அதற்சாகக் கொலை, கொள்ளை முதலான எத்தகைய ஸ்வப்ரவ்ருத்தியையும் செய்யத் துணிந்த பரமநாஸ்திகர்களாயிருக்கின்றனர். ஒரேயடியாகத் திருத்த முடியாத இவர்களைப் படிப்படியாகத் திருத்தவேஎம்பெருமான் பலபுருஷார்த்த₂ங்களையும், அவற்றையடையப் பலஸாத₄னங்களையும் சாஸ்த்ரங்களில் காட்டுகிறான். முதலில் விரோதி₄நிரஸனத்தை ஸாதி₄த்துக் கொடுக்கும் க்ரூரமான ஸ்வப்ரவ்ருத்தியாயிருக்கும் ஆபி₄சாரிகயாக₃ம் முதலானவற்றைக் காட்டி ஶாஸ்த்ரவிஶ்வாஸத்தைப் பிறப்பிக்கிறான். பிறகு க்ரௌர்யமற்ற ஸ்வப்ரவ்ருத்தியாயிருக்கும் ஐஹிகபுருஷார்த்த₂ ஸாத₄னங்களைக் காட்டி, சாஸ்திர விஶ்வாஸத்தை உறுதிப்படுத்துகிறான். பிறகு, ஐஹிகத்தைக்காட்டிலும் உத்க்ருஷ்டமான ஸ்வர்க்கா₃தி₃ புருஷார்த்த₂ங்களையும், அவற்றின் ஸாத₄னங்களையும் காட்டி ஆத்மா தே₃ஹத்தைக்காட்டிலும் வேறுபட்டது எனும் அறிவை விளக்கிறான். இவ்வண்ணமாக தே₃ஹாத்மாபி₄மானம் படிப்படியாக நீங்கப்பெற்றபோதிலும், கர்மவாஸநாருசிப₃லத்தாலே ஸ்வப்ரவ்ருத்திஸஹித ஸ்வார்த்த₂பரதை அடியோடு நீங்கப்பெறாத சிலர்க்கு ஆத்மப்ராப்தியாகிற கைவல்ய மோக்ஷத்தையும் அதற்கு ஸாத₄னங்களையும் காட்டுகிறான். இவர்களிலும் மேம்பட்டு ஆத்மப்ராப்தியின் தாழ்வையும் அறிந்து ஸ்வார்த்த₂பரதை பெரும்பாலும் நீங்கியபோதிலும் அஹங்கார க₃ர்ப₄மான ஸ்வப்ரவ்ருத்தி நீங்காத சிலர்க்கு, ஸ்வார்த்த₂தை கலந்த பரமாத்மாநுப₄வத்தையும், அதற்கு ஸாத₄னமான ஸாத₄நாந்தரங்களையும் காட்டுகிறான். இவர்களைக் காட்டிலும் மேற்படியில் ஏறி ஸ்வப்ரவ்ருத்தியும் பெரும்பாலும் நீங்கப்பெற்ற சிலர்க்கு, ப₄க₃

வதநுபவபரீவாஹமான ஸ்வார்த்த கைங்கர்யத்தையும், அதற்கு ஸாதனமாக உபாயபுத்தியோடு செய்யப்படும் ப்ரபத்தியாகிற ஸ்வகதஸ்வீகாரத்தையும் காட்டுகிறான். முற்கூறிய அனைவரிலும் மேம்பட்டவர்களாய், ஸ்வார்த்தபரதையும், ஸ்வப்ரவ்ருத்தியும் அடியோடு நீங்கப்பெற்றவர்களாய், 'நான் பற்றும் பற்று உபாய மன்று; அவன் பற்றும் பற்றே உபாயம்' என்னும் நினைவோடு ஶரணவரணம் செய்கையாலே பரகதஸ்வீகார நிஷ்டர்கள் எனப்படும் உத்தமோத்தமர்களான ப்ரபந்நாதிகாரிகளுக்குப் பரார்த்த கைங்கர்யத்தையும், அதற்கு ஸாதநமான ஸித்தோ பாயமான தன்னையும் காட்டிக் கொடுக்கிறான். இத்தகைய மிகவுயர்ந்த அதிகாரியாகத் தன்னை ஆக்கிக்கொள்வதற்காக எம்பெருமானைக் கால்கட்டி ஸ்வார்த்தபரதையையும், ஸ்வப்ரவ்ருத்தியையும் அடியோடு கழித்துக்கொள்ளவேணும் என்பதே தென்னாசார்யர்களின் நிஷ்கர்ஷம்.

முற்கூறிய அதிகாரிகளில் கைவல்யநிஷ்டன், ஸ்வார்த்த பரமாத்மாநுபவநிஷ்டன், ஸ்வார்த்த பரமாத்ம கைங்கர்ய நிஷ்டன் ஆகிய மூவர்க்கும் மோக்ஷத்திலேயே குறைவுடைய புருஷார்த்தங்கள் நித்யமாக ஏற்பட்டுவிடுமளவுக்கு ஸ்வார்த்த பரதையும் ஸ்வப்ரவ்ருத்தியும் க்ரூரமானவை என்பதையும் குறிக் கொள்ளவேண்டும். இதனாலேயே--"மதிராபிந்து மிஶ்ரமான—(கள் துளி கலந்த)— ஶாதகும்பமயகும்பகத தீர்த்த ஸலிலம் போலே—(பொற்குடத்தீர்த்தம்போலே)— அஹங்கார மிஶ்ரமான உபாயாந்தரம்" என்று பிள்ளான் அருளினார்.

ஸர்வகர்மங்களும் கழிந்த பின்பு இப்படிக் குறைவுடைய புருஷார்த்தங்கள் ஏற்படக் காரணம் என்ன? என்னும் கேள்வி எழுகிறது. கைவல்யநிஷ்டன் விஷயத்தில் "பிறவித்துயரற" [திருவாய் 1-7-1] ஈட்டில் காட்டிய பின்வரும் பரிஹாரம் இங்கு அநுஸந்திக்கத்தக்கது :—"ஆத்ம ப்ராப்திகாமனுக்கும், பகவத் ப்ராப்திகாமனுக்கும் ஒக்குமாயிற்று ஸர்வேஶ்வரனை உபாஸிக்கையும், அந்திமஸ்ம்ருதியும்; இனிப் பேற்றில் தாரதம்யம் வருகிற படியென்? என்னில்; உபாஸநஸமயத்தில் சிறுகக்கோலுகையாலே; அதாவது—அவனளவும் செல்லாதே நடுவே வரம்பிட்டுக் கொள்ளுகை; அத்தையிறே 'வரம்பொழிவந்து' என்கிறது.

அது தனக்கு அடி அவர்கள் ஸுக்ருததாரதம்யம்; 'சதுர்விதா₄ ப₄ஜந்தே மாம் ஜநா: ஸுக்ருதிநோऽர்ஜுந' [கீதை 7-16] என்று அருளிச்செய்தானிறே; * ஸுக்ருதத்துக்கு அநுரூபமாகவாயிற்று புருஷார்த்த₂ங்களில் ருசி பிறப்பது; ருச்யநுகு₃ணமாகவாயிற்று உபாஸிப்பது; உபாஸநாநுகு₃ணமாக இருக்கக்கடவது ப₂லம்'' என்கிற ஈட்டு ஸ்ரீஸூக்திகளின்படி ஸர்வகர்மங்களும் கழிந்த பின்பும் ஸுக்ருததாரதம்யத்தால் ஏற்படும் ருச்யநுகு₃ணமாக முக்தியில் பே₄த₃த்தைத் தென்னுசார்யர்கள் ஒப்புக்கொண்டிருக்கிருர்கள் என்பது விளங்குகிறது. ஸ்ரீவசநபூ₄ஷணம் 265-வது ஸூத்ரத்தில் பிள்ளைலோகாசார்யரும் ''உபாயாந்தர நிஷ்ட₂ர்க்கு உபேயம் ப₄க₃வத₃நுப₄வம்; ஸ்வப்ரயோஜந பரர்க்கு உபேயம் ஸ்வார்த்த₂ கைங்கர்யம்'' என்று உபாயாந்தரநிஷ்ட₂ர்க்கும் ஸ்வகீய ஸ்வீகாரநிஷ்ட₂ர்க்கும் முக்தியில் ப₂லபே₄த₃முண்டு என்று மிகத்தெளிவாகக் காட்டியிருக்கிருர். மாமுனிகள் இவ்விடத்தில் மிகத் தெளிவாக வியாக்கியானமும் அருளியிருக்கிருர். அண்ணுவப்பங்கார் ஸ்வாமியும் தமது அரும்பதவுரையில் ஆக்ஷேபஸமாதா₄ந பூர்வகமாக இவ்விஷயத்தை நிலைநாட்டியிருக்கிருர். ஆசார்யஹ்ருத₃யத்திலும், அதன் வியாக்கியானத்திலும், இவ்விஷயம் வலியுறுத்தப்பட்டுள்ளது. பரமஸௌஹார்த்த₃கு₃ணமுடைய எம்பெருமான் முக்தியிற்கூடச் சில விஷயங்களை நிர்ப்பந்தப்படுத்துவதில்லை; தம்மை அநுபவிக்க விருப்புவார்க்கு அவ்வாத்மாநுப₄வத்தையே அளிக்கிருன்; தன்னை ஸ்வார்த்த₂மாக அனுப₄விக்க விரும்புவார்க்கும், தனக்கு ஸ்வார்த்த₂ கைங்கர்யம் செய்ய விருப்புவார்க்கும், அவர்கள் விருப்பத்தை அநுஸரித்து முக்தியிலும் விஷய வைலக்ஷண்யத்தினுல் ஏற்படும் ஸ்வார்த்த₂தையை அவர்களுக்கு அனுமதித்து, அவர்கள் விரும்பும் ப₂லனை அளிக்கிருன்; ஸ்வார்த்த₂தையின் நாற்றத்தையும் ஸஹியாத பரக₃தஸ்வீகாரநிஷ்ட₂ர்க்கே அவர்களுடைய விருப்பத்தையொட்டிப் பரார்த்த₂ கைங்கர்யத்தை நிர்ஹேதுகமாக அளிக்கிருன் — என்பதே தென்னுசார்யர்களின் திருவுள்ளம் என்று இவற்றிலிருந்து தெளிவாக விளங்குகிறது.

---

* கீதை (7-16) ஶ்லோகபா₄ஷ்யத்தில், ''ஸுக்ருதக₃ரீயஸ்த்வேந ப்ரதிபத்தி வைஶேஷ்யாது₃த்தரோத்தராதி₄கதமா ப₄வந்தி'' [புண்ணியம் மேன்மேலே மிகுந்திருக்கையால், ப்ரதிபத்தி (ருசி) யில் சிறப்பிருப்பதையிட்டு, உபாஸனத்தில் மேன்மேலே சிறந்தவராகின்றனர்] என்று பா₄ஷ்யகாரர் அருளியது காண்க

# ஸ்ரீவேதாந்த தேசிகரின் திருவுள்ளம

ஸ்ரீராமாநுஜருடைய சிஷ்யப்ரசிஷ்யர்களிடையே ஸம்ப்ரதா3ய விஷயங்களில் சில கருத்து வேற்றுமைகள் இருப்பதை ஸ்ரீவேதா3ந்த தேசிகர் தம் நூல்களில் குறிப்பிடுகிறார். அவர்களுடைய கருத்துக்களைத் தம் கருத்தோடு ஒத்தவையாகச் சில இடங்களில் நயனம் செய்கிறார். அப்படி நயனம் செய்ய இயலாவிடில், தம்முடைய கருத்தை வலியுறுத்தி மற்றவர்களுடைய கருத்துக்களை மறுக்கிறார். அப்படி மறுக்கும் கருத்துக்களில் "ஜீவனுக்கு ப்ரத2ம ப்ரவ்ருத்தியில் எம்பெருமானால் அளிக்கப்படும் ஸ்வாதந்திரியம் உண்டு" என்பதும் ஒன்று என்பதையும், அதற்குத் தம்முடைய ஆசார்யருடைய ஸ்ரீஸூக்தியை மேற்கோளாக எடுப்பதையும் முன்னமே காட்டினோம். ஆகையால், இந்தக் கருத்து வேற்றுமையும் ஸ்ரீதேசிகனுக்கு முன்னமே இருந்துள்ளது என்று விளங்குகிறது. "ஜீவனுக்கு ஒவ்வொரு காரியத்திலும் முதல் முயற்சியில் ஸ்வாதந்திரியம் உண்டென்று பராயத்தாதி4கரணத்திலிருந்து தேறுகிறபடியால், அந்த முதல் முயற்சியைப் பயன்படுத்தி, தம் ஆனந்தத்திற்காக ஒரு பயனை விரும்பி அனுஷ்டி2க்கப்படும் ஸாத4நாந்தரங்கள் அனைத்துமே ஜீவனுடைய அத்யந்தபரதந்த்ர ஸ்வரூபத்திற்கு முரண்பட்டவை; அந்த ஸாத4நங்களை அனுஷ்டி2த்து மோக்ஷத்தையே பெற்றாலும், தத்க்ரது ந்யாயத்தாலே, அந்த ஸாத4நங்களுக்குப் ப2லனாகக் கிடைக்கும் மோக்ஷமும் தம் ஆனந்தத்திற்கு உறுப்பாகவே அமையும். 'தன் ஆனந்த3த்திற்கு உறுப்பாகத் தன் ஆத்மாவை அனுப4விப்பதே போதும்' என்று நினைத்துக் கைவல்யத்தைப் பெறவிரும்பி, அதற்குரிய ஸாத4நத்தை அந்திமஸ்ம்ருதி பர்யந்தம் அனுஷ்டித்தானானால், தத்க்ரதுந்யாயத்தின்படி கைவல்யமாகிற தாழ்ந்த மோக்ஷமே அவர்களுக்கு நிரந்தரமாகக் கிடைத்துவிடும். தம் ஆனந்த3த்தை விரும்பி ப4க்தியை ஸாத4நமாக அனுஷ்டி2ப்பவர்களுக்கும் ஸ்வார்த்த2மாக ப4க3வானை அநுப4விப்பதை முக்கியமாகக் கொண்ட மோக்ஷம் கிடைத்துவிடும். உபாயமாக நினைத்து ப்ரபத்தியை அனுஷ்டி2ப்பவர்களுக்கும் ஸ்வார்த்த2மான ப4க3வத்கைங்கர்யத்தை முக்கியமாகக் கொண்ட மோக்ஷம் கிடைத்துவிடும். ப4க்தி நிஷ்ட2ர்களுக்கு ஸ்வார்த்த2ப4க3வத3நுப4வம் ப்ரதா4னமாகவும், ப4க3வத்கைங்கர்யம் அதற்கு அடங்கியும், ப்ரபத்தியை உபாயமாக அனுஷ்டி2ப்பவர்களுக்கு ஸ்வார்த்த2ப4க3வத்கைங்

கர்யப ப்ரதா₄னமாகவும், ப₄க்₃வத₃நுப₄வம் அதற்கு உறுப்பாகவும் அமையும். முக்தியிலும எம்பெருமானுடைய ஆனந்த₃த்தையே உத்₃தே₃ஶ்யமாகக் கொண்டு, மோக்ஷத்திற்குத் தாம் ஒரு ஸாத₄நாநுஷ்டா₂னத்தைக் கைக்கொள்வது ஸ்வரூபவிருத்₃த₄ம என்று உணர்ந்து, தாம் பற்றும பற்று உபாயம் என்னும் எண்ணத்தைக் கொள்ளாமல், எம்பெருமான் நம்மைப்பற்றுவதே உபாயமாகும் என்று உறுதி பூண்டு, * சாதகம்போல் நாதன்தனதருளே பார்த்திருக்கும் பரக₃தஸ்வீகார நிஷ்டா₂ர்களான உத்தமஶரணாக₃தர்களுக்கு எம்பெருமான் நிர்ஹேதுகமாகப் பரார்த்த₂ாநுப₄வ கைங்கர்யரூபமான மோக்ஷத்தை அருளுவான்'' என்று ராமாநுஜ சிஷ்யபரம்பரையில் வந்த பல ஆசார்யர்கள் திருவுள்ளம் பற்றியது சில ஆசார்யர்களுக்கு ருசிக்கவில்லை என்று இதிலிருந்து விளங்குகிறது. ஶாஸ்த்ரத்தில் விதி₄க்கப்பட்டதாகவும், ரிஷிகள் அனுஷ்டி₂த்து வந்ததாகவும் உள்ள ப₄க்தி யோக₃த்தை ஸ்வரூப விருத்₃த₄ம் என்று கூறுவதும், அதன் ப₂லனாக மோக்ஷத்திலும் ஸ்வார்த்த₂ ப₂லன் விளைந்துவிடும் என்று கூறுவதும் சரியல்ல என்பது இவர்களுடைய திருவுள்ளம். ப்ரத₂மப்ரவ்ருத்தியில் ஜீவனுக்கு ஸ்வாதந்திரியத்தை ஒப்புக் கொண்டால் அந்த ஸ்வாதந்திரியத்தைப் பயன்படுத்தி அனுஷ்டி₂க்கப்படும் ஸாத₄நாந்தரங்கள் ஸ்வரூபவிருத்₃த₄ம் என்று தேறிவிடுமாகையால், ''ப்ரத₂மப்ரவ்ருத்தியில் ஜீவனுக்கு ஸ்வாதந்திரியம் உண்டு என்பதே சரியல்ல. ஜீவனுடைய பூர்வ பூர்வகர்மங்களே மேன்மேலே அவன் செய்யும் நன்முயற்சிகளுக்கும், தீயமுயற்சிகளுக்கும் காரணமாகின்றன என்று கொண்டுவிடலாம். இதன் மூலமே எம்பெருமானுக்கு வைஷம்ய, நைர்க்₄ருண்ய பரிஹாரம் முதலானவை ஏற்பட்டுவிடும்'' என்று இவர்கள் முற்கூறிய பல ஆசார்யர்களுடைய திருவுள்ளத்தை மறுக்க முற்பட்டிருக்கிறார்கள். ஹயக்₃ரீவ உபாஸகராகையாலே, ''உபாஸநம் ஸ்வரூபவிருத்₃த₄ம்'' என்பதை இசைய இயலாத ஸ்ரீவேதாந்த தேசிகரும் இப்பக்ஷத்தைப் பின்பற்றியுள்ளார் என்று விளங்குகிறது. ''ஜீவனுக்கு ப்ரத₂மப்ரவ்ருத்தியில் ஸ்வாதந்திரியம் உண்டு. அந்த ஸ்வாதந்த்ரியத்தைப் பயன்படுத்தி மோக்ஷத்தின் பொருட்டு அனுஷ்டி₂க்கப்படும் ஸாத₄நாந்தரங்களும் ஸ்வரூபவிருத்₃த₄மே. அந்த ஸாதாநாந்தரங்களின் மூலம் அடையும் மோக்ஷமும் ஸ்வார்த்த₂மாகவே

* ஞானசாரம்—2.

तत्रैवं सति कर्तारमात्मानं केवलं तु यः ।
पश्यत्यकृतबुद्धित्वान्न स पश्यति दुर्मतिः ॥ १६ ॥

16. தத்ரைவம் ஸதி கர்த்தாரமாத்மாநம் கேவலம் து ய: |
பஶ்யத்யக்ருதபு₃த்₃தி₄த்வாத் ந ஸ பஶ்யதி து₃ர்மதி: ||

ஏவம் ஸதி — இவ்வண்ணமாக (உண்மையில் பரமாத்மாவின் அநுமதியை முன்னிட்டுக் கொண்டே ஜீவாத்மாவின் கர்த்ருத்வம்) இருக்கும்போது, தத்ர — தான் செய்யும் செயலில், கேவலம் ஆத்மாநம் து — தன்னை மாத்திரமே, கர்த்தாரம் — செயல்புரிபவனாக, ய: பஶ்யதி — எவன் காண்கிறானோ, ஸ: து₃ர்மதி: — உள்ளதை வேறாகக்

அமையும். மோக்ஷத்திலும் எம்பெருமானுடைய ஆனந்த₃த்தையே உத்₃தே₃ஶ்யமாகக் கொண்டு, அவனுடைய அருளையே ஸாத₄நமாகக் கொண்டு, தம்மிடமுள்ளது எதையும் ஸாத₄நமாக நினைக்காத உத்தமப்ரபந்நர்களுக்கே எம்பெருமான் நிர்ஹேதுகமாகப் பரார்த்த₂ கைங்கர்ய ப்ரத₄ானமான மோக்ஷத்தை அருள்கிறான்.'' என்னும் தத்வ ஹித புருஷார்த்த₂க் கொள்கைகளை அடிப்படையாகக்கொண்டு தென்னாசாரிய ஸப்ப்ரதாயமும், ''ஜீவனுக்குப் ப்ரத₂ம ப்ரவ்ருத்தியில் ஸ்வாதந்திரிய லேசமும் இல்லை. ஆகையால், ஸாத₄நாந்தரங்கள் ஸ்வருபவிருத்₃த₄ம் என்னும் பேச்சுக்கே இடமில்லை. ஆகையால் முக்தியிலும் ஸ்வார்த்த₂ம், பரார்த்த₂ம் என்று இருவகை மோக்ஷமில்லை. கைவல்யம் மோக்ஷமாகாது; தலைசிறந்ததொரு ஐஶ்வர்யமே'' என்னும் தத்வ ஹித புருஷார்த்த₂க் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு தேசிக ஸப்ப்ரதாயமும் வளர்ந்துள்ளன என்று இவற்றிலிருந்து விளங்குகிறது. ''வணங்கும் துறைகள் பலபலவாக்கி'' [திருவிருத்தம்—96] என்ற பாட்டில் நம்மாழ்வார் அருளியபடியே, பலபல மனப்பான்மைகள் உள்ளவர்களுக்காக எம்பெருமான் பலவகையான சமயங்களை உருவாக்கியதைப்போலே, இருவித₄மான மனப்பான்மையுள்ளவர்களுக்காக இவ்விருவகையான ஸப்ப்ரத₃ாயங்களை உருவாக்கியிருக்கிறான் என்று உணர்ந்து. பரஸ்பர சகிப்புத்தன்மையுடன் இரு ஸம்ப்ரத₃ாயஸ்த₂ர்களும் வாழ்வது தக்கது. 14,15.

காணும் அவன், அக்ருதபு₃த்₃தி₄த்வாத் — (ஆத்மாவைப் பற்றிய ஶாஸ்த்ரங்களாலே) உண்டாகாத அறிவை உடையவனுகையாலே, ந பஶ்யதி — (செயல்புரிபவனே) உள்ளபடி அறிவதில்லே.

---

16. இவ்வகையா லீசனுற் கர்த்தாவா மிவ்வுயிரிற்
செவ்வைமதி யாதுவெறுஞ் சிவனே — யெவ்வகையிற்
கர்த்தாவா மென்னவே காண்கின்ற துன்மதிதா
னெத்தாரும் புத்தியு றுன்.

இவ்வகையால் — முன் இரு ஶ்லோகங்களில் சொன்னபடி, ஈசனுல் கர்த்தாவாம் இவ்வுயிரின் செவ்வை மதியாது — ஸர்வேஶ்வரனின் அனுமதியினுல் செயல்புரி பவனுய் இருக்கும் இந்த ஜீவாத்மாவின் தன்மையை அறியாமல், வெறும் சிவனே — ஜீவாத்மாவை மாத்திரம், எவ்வகையில் — எல்லாவகையிலும், கர்த்தாவாம் என்னவே — செயல்புரிபவனுகிறுன் என்றே, காண்கின்ற — அறிகிற, துன்மதி தான் — விபரீதமான அறிவையுடையவன், ஒத்து ஆரும் புத்தி உறுன் — (ஶாஸ்த்ரங்களே) ஒட்டி உண்டான உண்மையறிவு இல்லாதவனுவான்.

---

16. இங்கு சொல்லப்படும் அகர்த்ருத்வாநுஸந்தா₄னத்தைப் பற்றிப் பின்வருமாறு ஓர் ஐயம் எழுகிறது.—"முன் இருஶ்லோகங்களில் கூறியபடி செயல்களுக்கு ஐந்து காரணங்கள் இருந்தபோதிலும், ஜீவாத்மாவே கர்த்தா [செயல்புரிபவன்] என்று வழங்கத்தக்க வனுயிருப்பவனுகில், ஜீவாத்மாவிற்கு வேண்டியதாகச் சொல்லப் படும் அகர்த்ருத்வாநுஸந்தா₄னம் [நான் செயல்புரிபவன் அல்லன் என்னும் நினைவு] மயக்கமாகவன்றே முடியும்; மேலும், ஶாஸ்த் ரங்களில் உள்ள விதி₄ நிஷேத₄ங்கள் பயனுள்ளவையாக வேண்டுமென்றுல் ஆத்மாவிற்குள்ள கர்த்ருத்வத்தைத் தவிர்க்கவே முடியாது. 'துணைகளை எதிர்பாராத கர்த்ருத்வமே இங்கு தவிர்க் கப்படுகிறது' என்று கூறினுல், துணைகளை எதிர்பாராத

सा ।। एवं — वस्तुतः परमात्मानुमतिपूर्वके जीवात्मनः कर्तृत्वे

---

கர்த்ருத்வமே இல்லேயாகையால், அப்படிப்பட்ட கர்த்ருத்வத்தைத் தவிர்க்கவும் இடமில்லே. 'தேஹம், இந்திரியம், தண்டம், சக்ரம் முதலான துணைகளை எதிர்பாராமல் நான் செயல்புரிகிகிறேன்' என்று எவனும் நினைப்பதில்லேயே'' என்று 'அகர்த்ருத்வாநுஸந்தாநம் மயக்கமேயாகும்'' என்னும் ஐயம் எழுந்தவளவில், (''இங்கு 'நான் செயல்புரிபவனல்லன்' என்று அநுஸந்திப்பதை அகர்த்ருத்வாநுஸந்தாநமாகக் கூறவில்லே. 'நியமிப்பவனுண ஸர்வேச்வரனே எதிர்பாராமலே இயற்கையாகவே நான் செயல் புரிபவன்' என்னும் மயக்கத்தையும், பலரைக் காரணமாகக் கொண்ட செயலில் தான் ஒருவனே காரணம் என்று தேஹாத்மாபிமானிகளுக்கு உண்டாகும் மயக்கத்தையும் நீக்குவதே இங்கு அகர்த்ருத்வாநுஸந்தானம் என்று சொல்லப்படுகிறது'' என்று விளக்குகிருன் இந்த ஶ்லோகத்தில்.) (ஏவம்ஸதி) முன் இரண்டு ஶ்லோகங்களிலும் சொன்ன ரீதியில் பரமாத்மாவின் அனுமதியை முன்னிட்டுக்கொண்டே உண்மையில் ஜீவாத்மா செயல்புரிபவனுயிருக்க; பாஷ்யத்திலுள்ள 'அநுமதி' ஶப்தம் ''ப்ரவ்ருத்தஸ்ய ப்ரவர்த்தநம்'' [முதலில் காரியத்தைத் தொடங்கியவனே மேலும் அதைச் செய்யும்படி தூண்டுவது] என்று பராயத்தாதிகரண ஶ்ருதப்ரகாசிகையில் விளக்கப்பட்டது. ஜீவன் பரமாத்மா அளித்த ஸ்வாதந்த்ர்யத்தைக் கொண்டு காரியத்தைத் தொடங்கினுலும், அவனுடைய அனுமதியில்லாவிடில் அதை மேலும் தொடர முடியாது என்னும் விஷயமும் ''பரமாத்மாநுமதி மந்தரேண அஸ்ய ப்ரவ்ருத்திः நோபபத்யதே'' [பரமாத்மாவின் அனுமதியில்லாமல் ஜீவன் செயல்புரிவது ஒட்டாது] என்று பராயத்தாதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் அருளிச்செய்யப்பட்டது. இங்கு பாஷ்யத்தில் ''பரமாத்மாவின் அனுமதியை முன்னிட்டுக் கொண்டே ஜீவாத்மாவின் கர்த்ருத்வம் அமைந்தவளவில்'' என்று அனைத்துக்கும் நிர்வாஹகனுய், ப்ரதான காரணமான பரமாத்மாவை எடுத்தது அதிஷ்டானமாகிற ஶரீரம், கரணமாகிற இந்திரியங்கள், 'சேஷ்டா' எனப்பட்ட ப்ராணன் ஆகிய மற்ற காரணங்களுக்கும் உபலக்ஷணம் என்று கொள்ள வேண்டும். (தத்ர) (ஜீவன்) தான் செய்யும் செயலில். (கேவலம் ஆத்மாநம் து கர்த்தாரம் யः பஶ்யதி) தன்னை மாத்திரமே செயல்புரிபவனுக எவன் காண்கி

सति, तत्र -- कर्मणि केवलमात्मानमेव कर्तारं यः पश्यति, स दुर्मतिः —

---

ருனே. இங்கு 'ஆத்மாநம்' என்றது தன் ஆத்மாவைக் குறிக்கிறது. அதனாலேயே 'கர்த்தாரம்' என்னும் இங்குள்ள சொல் சென்ற ஶ்லோகத்திற் போலே ஜீவாத்ம ஸ்வரூபத்தைச் சொல்லாமல் 'செயல் புரிபவனாக' என்று பொருள்படுகிறது. 'கர்த்தாரம் ஆத்மாநம்' என்னும் சொற்களை விசேஷண விசேஷ்யங்களாகக் கொண்டு இரண்டுமே ஜீவாத்மஸ்வரூபத்தைக் குறிப்பதாகக் கொண்டால், "கர்யத்தைத் தொடங்குவதற்கான காரணமாக" என்னும் தொடரை வருவித்துக்கொண்டு பொருள் கொள்ள வேண்டியிருக்கும். அதனாலேயே 'கர்த்தாரம்' என்னும் சொல்லுக்கே 'செயல்புரிபவனாக' என்று பொருள் கொள்ளப்பட்டது. 'து' ஶப்₃த₃ம் இங்கு ஏவகாரப் பொருளுடையது. ஆக "இப்படி ஐந்தும் சேர்ந்து செயலுக்குக் காரணமாயிருக்கையில், தன்னையே செயல்புரிபவனாக எவன் காண்கிறானோ" என்று சொன்னதாகிறது. " 'ஆத்மாநம் கேவலம் கர்த்தாரம் ய: பஶ்யதி' என்ற தொடரில் 'கேவலகர்த்தா' என்றதற்கு 'இயல்வான கர்த்தா' என்று பொருள் கொள்ளலாமே" எனில்—முன் ஶ்லோகங்களில் மற்ற நாலோடும் சேர்ந்தே இவன் கர்த்தாவாகிறான் என்று சொல்லப்பட்டிருப்பதால், அதை அறியாதவனைப் பற்றி நிந்திக்கும் இந்த ஶ்லோகத்தில், "அந்த நாலின் துணையில்லாமல் தானே செயல் புரிவதாக இவன் எண்ணுவதையே 'கேவல' ஶப்₃த₃ம் காட்டுகிறது" என்று பொருள் கொள்ளுவதே ஸ்வரஸம். இங்கு சிலர் பின்வருமாறு ஆக்ஷேபிக்கிறார்கள்—"ஆத்மா இயல்வாகவே விகாரமடையாதவனாகையாலே, 'அதி₄ஷ்டா₂நம்' முதலானவற்றோடு சேர்ந்து அவன் 'கர்த்தா' வாக முடியாது. விகாரமுடைய பொருளுக்கேயன்றோ மற்ற பொருள்களோடு சேர்வதோ, அவர்களோடு சேர்ந்து செயல் புரிவதோ பொருந்தும்; விகாரமற்றவனான ஆத்மாவுக்கு ஒரு பொருளோடு சேர்வதோ, அதனுடன் சேர்ந்து செயல்புரிவதோ பொருந்தாதே" என்பது அவர்களது ஆக்ஷேபம். இவ்வாக்ஷேபம் பொருந்தாது. ஆத்மாவானது பிறப்பு, இறப்பு முதலான விகாரங்கள் அற்றதாயினும்,

विपरीतमतिः अकृतबुद्धित्वात् – अनिष्पन्नयथावस्थितवस्तुबुद्धित्वात्, न पश्यति — न यथावस्थितं कर्तारं पश्यति ॥ १६ ॥

---

"தா3ருண்யக்3நிர் யதா2 தைலம் திலே தத்3வத் புமாநபி | ப்ரதா4நே(அ)வஸ்தி2தோ வ்யாபீ சேதநாத்மாத்மவேத3ந:||" [வி பு 2-7-28] [ஜ்ஞாநஸ்வரூபனும், ஜ்ஞாதாவாகவும் இருக்கும் ஜீவன் அரணிக்கட்டையில் நெருப்புப் போலவும், எள்ளில் எண்ணெய் போலவும் தன் ஶரீரம் முழுவதையும் வியாபிப்பவனாய் நிற்கிறான்] முதலான ஶாஸ்த்ரங்களில் ஶரீரம் முதலானவற்றோடு சேருகிறான் என்றும், துணைகளோடு கூடி ஜ்ஞாந இச்சா2 ப்ரயத்நங்களை உடையவனாய்க் கர்த்தாவாகிறான் என்றும் நிலைநிறுத்தப்பட்டுள்ளதன்றோ. இந்த கீ3தையிலும் செயல்களுக்குச் சொல்லப்படும் ஐந்து காரணங்களில் கர்த்தாவான ஆத்மாவும் ஒருவனாகச் சொல்லப்படுவதும் இவர்களுக்குப் பொருந்தாது. (ஸ: து3ர்மதி:) ஶ்லோகத்தின் முற்பாதியில் சொன்னபடி ஐந்தும் சேர்ந்து செயல்புரியக் காரணமாயிருக்க, தன்னை ஒருவனையே செயல்புரிபவனாக எண்ணும் அவன்; "து3ர்மதி:" என்பதை விதே4யமாகக் கொண்டால் பூர்வார்த்த4த்தில் சொன்னதோடு புனருக்தி ஏற்படுமாகையால் முற்பாதியில் சொன்ன அர்த்த2த்தின் அநுவாத3மாக அப்பத3ம் கொள்ளப்பட்டது. (அக்ருத பு3த்3தி4த்வாத்) ஆத்மாவைப்பற்றிய ஶாஸ்த்ரங்களால் உண்டாகாத அறிவை உடையவனாகையாலே, (ந பஶ்யதி) கர்த்தாவை உள்ளபடி காண்பதில்லை; 'எவன் காண்கிறானோ அவன் காண்பதில்லை' என்று மேலெழப் பார்க்கும்போது முரண்பட்ட வாக்கியமாகத் தோன்றினாலும், 'இவன் உள்ளபடி காண்பதில்லையாகையாலே அவனுடைய காட்சி இருந்தும் இல்லாததையொக்கும்' என்று நிந்திப்பதிலே தாத்பர்யம். ஆக, 14, 15, 16 ஶ்லோகங்களில் "இயல்பினால் செய்ய வேண்டியவையும், ஶாஸ்த்ரங்களில் விதி4க்கப்பட்டவையுமான செயல்களைத்தவிர மற்ற செயல்களில் முயலக்கூடாது; ஶாஸ்த்ரவிதி4ப்படி அவசியம் செய்தே தீரவேண்டியவையும், இயல்பினால் செய்ய வேண்டியவையுமான செயல்களில் தன்னிடமும் அதி4ஷ்டா2னம் முதலான மற்ற நாலிலும் செயல்புரியும் தன்மையை உரிய முறையில் வைத்து முயல வேண்டும்" என்று கூறப்பட்டதாயிற்று. 16.

यस्य नाहंकृतो भावो बुद्धिर्यस्य न लिप्यते ।
हत्वाऽपि स इमाँल्लोकान्न हन्ति न निबध्यते ॥ १७ ॥

15-8.09

17. யஸ்ய நாஹங்க்ருதோ ப₄ாவோ பு₃த்₃தி₄ர் யஸ்ய ந லிப்யதே ।
ஹத்வாऽபி ஸ இமாந் லோகாந் ந ஹந்தி ந நிப₃த்₄யதே ॥

யஸ்ய ப₄ாவ: — எவனுடைய [கர்த்ருத்வவிஷயமான] நினைவு, ந அஹங்க்ருத: — 'நானே செய்கிறேன்' என்னும் அபி₄மானத்தால் விளையாமலிருக்கிறதோ, யஸ்ய பு₃த்₃தி₄:—எவனுடைய அறிவானது, ந லிப்யதே — 'இக் கருமத்தின் ப₂லன் என்னுடையது' 'இக்கருமம் என்னுடையது' என்னும் நினைவுகள் அற்றிருக்கிறதோ, ஸ: — அவன், இமாந் லோகாந் ஹத்வா அபி — இந்த உலகம் முழுவதிலுமுள்ள ; உயிர்களை (போரில்) கொன்றாலும், ந ஹந்தி — கொன்றவனாக மாட்டான்; ந நிப₃த்₄யதே — கொன்றதின் ப₂லனாக ஸம்ஸாரத்தில் கட்டுப்படமாட்டான்.

---

17. நான்செய்தே னென்று நடக்கு மனமின்றித்
தான்சேர் பயனதனிற் சார்வற்றான்—றான்சேரு
மிவ்வுலகைக் கொன்று மிவன்கொல்லான் கட்டுண்ணு
னவ்வினையிற் சேரா னவன்.

நான் செய்தேன் என்று நடக்கும் மனமின்றி — 'இச் செயலை நானேசெய்தேன்' என்று எண்ணும் மனமில்லாமல், தான் சேர் பயன் அதனில் சார்வு அற்றான் — அந்தச் செயலுக்கு வரும் பலனில் தன்னுடையது என்னும் பற்று இல்லாமல் இருப்பவன் எவனோ, இவன் — இப்படிப்பட்டவன், இவ்வுலகை கொன்றும் கொல்லான் — [போரில்] இவ்வுலகம் முழுவதையும் கொன்றாலும் கொன்றவனாகமாட்டான், அவன் — அவன், அவ்வினையில் சேரான் — அச்செயலின் பயனை அடையமாட்டானாகையாலே, கட்டுண்ணான் — ஸம்ஸாரத்தில் கட்டுப்படமாட்டான்.

भा परमपुरुषकर्तृत्वानुसंधानेन यस्य भावः — कर्तृत्वविषयो मनोवृत्तिविशेषो नाहंकृतः — नाहमभिमानकृतः, अहं करोमीति ज्ञानं

---

17. சென்ற ஶ்லோகத்தில் து3ர்மதியாகிற தீயமனத்தானைப் பற்றி ப்ரஸ்தாவம் வருகையாலே நல்லமனத்தவன் எவன் என்னும் கேள்விக்குப் பதிலுரைப்பவனாய், முன் கூறிய அகர்த்ருத்வாநுஸந்தா4னத்தின் பயனையும் உரைக்கிறான் இந்த ஶ்லோகத்தில். ஶ்லோகத்தின் முற்பாதியில் நல்ல மனத்தவன் யார் என்பதும், பிற்பாதியில் அவனுக்கு வினையும் பயனும் சொல்லப்படுகிறது. (யஸ்ய பா4வ: ந அஹங்க்ருத:) எவனுடைய கர்த்ருத்வ விஷயமான நினைவு பரமபுருஷனே ப்ரதா4னகர்த்தா என்று அனுஸந்தி4க்கையாலே, 'நான் செய்கிறேன்' என்னும் அபி4மானத்தால் விளையாமலிருக்கிறதோ: பா4வ ஶப்3த3ம் அபி4ப்ராயமாகிற நினைவைக் குறிக்கிறது. வேறு பொருள்கள் இங்கு பொருந்தமாட்டா. இந்த ப்ரகரணம அகர்த்ருத்வாநுஸந்தா4னத்தைப்பற்றியதாகையாலே இங்கு, நினைவு என்றது கர்த்ருத்வ விஷயமான நினைவைக் குறிக்கிறது, (ந அஹங்க்ருத:) 'நான் செய்கிறேன்' என்னும் அபி4மானத்தால் விளையாமலிருக்கிறதோ; ப்ரகரணத்தையொட்டி இங்கு 'அஹம்' என்னும் சொல் 'நான் செய்கிறேன்' என்னும் அபி4மானத்தைக் குறிக்கிறது. வேறு பொருள்கள் ப்ரகரணம் முதலானவற்றுக்குப் பொருந்தமாட்டா. இங்கு பின்வருமாறு ஒரு கேள்வி எழுகிறது. 'ஆத்மாவே கர்த்தா' என்பது ஶாஸ்த்ர ஸித்3த4மாயிருக்க, 'அஹம்' என்னும் சொல்லுக்குப் பொருளான அந்த ஆத்மாவானது 'நான் செய்கிறேன்' என்னும் நினைவை எப்படி விட்டிருக்க முடியும் என்பது அந்தக் கேள்வி. இங்கு 'அஹமபி4மானம்' என்றது முன் ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட ஐந்தும் சேர்ந்து செய்யும் செயலைத் தானே செய்வதாக நினைப்பதேயாகும். ஆகையால் "நானே செய்கிறேன்" என்னும் நினைவே இங்கு தவிர்க்கப்படுகிறது. ஆகையால் ஆத்மாவின் கர்த்ருத்வத்துக்கு எக்குறையும் இல்லை. ஶ்லோகத்தின் முதல் பாத3த்தாலே 'நானே செய்கிறேன்' என்னும் நினைவைத் தவிர்க்கையாகிற 'கர்த்ருத்வத்யாக3ம்' சொல்லப்படுகிறது என்று கருத்து. இனி, இரண்டாவது பாத3த்தாலே இவனுக்குப் ப2லத்யாக3மும் ஸங்க3த்யாக3மும சொல்லப்படுகிறது. (யஸ்ய பு3த்3தி4: ந லிப்யதே) எவனுடைய அறிவானது 'இக்கருமத்தின் ப2லன் என்னுடையது' 'இக்கருமம் என்னுடையது' என்னும் நினைவுகள்

यस्य न विद्यत इत्यर्थः। बुद्धिर्यस्य न लिप्यते—अस्मिन् कर्मणि मम कर्तृत्वाभावादेतत्फलं न मया संबध्यते, न च मदीयं कर्मेति यस्य बुद्धिर्जायत इत्यर्थः। स इमान् लोकान् युद्धे हत्वापि तान्न निहन्ति;

---

அற்றிருக்கிறதோ. "இச்செயலில் எனக்குக் கர்த்ருத்வம் இல்லாமையாலே இச்செயலின் ப2லனும் என்னிடம் ஒட்டாது. இச்செயலும் என்னுடையதல்ல" என்னும் அறிவு எவனுக்கு உண்டாகிறதோ என்று கருத்து. ஆக, இந்த ஶ்லோகத்தின் முற்பாதியால் ப2ல ஸங்க3 கர்த்ருத்வ த்யாக3ங்களை உடையவனே முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட து3ர்மதிக்கு எதிர்த்தட்டான நல்ல மனத்தையுடையவன் என்று சொல்லப்பட்டதாயிற்று. இனி, பிற்பாதியால் இவனுக்கு விளையும் ப2லன் கூறப்படுகிறது. (ஸ: இமாந் லோகாந் ஹத்வாபி ந ஹந்தி) அவன் த4ர்மயுத்3த4த்தில் இந்த உலகம் முழுவதையும் கொன்றாலும் கொன்றவனாக மாட்டான். 'இந்த உலகம் முழுவதையும் கொன்றாலும்' என்று பொதுவாக இருந்தாலும் "நாவிரதோ து3ஶ்சரிதாத்—ப்ரஜ்ஞாநேநைநம் ஆப்நுயாத்" [கட2 2-24] [தீய செயல்களை விடாதவன் உபாஸநத்தாலும் இந்தப் பரமாத்மாவை அடைய முடியாது] என்றும், "ந ஹிம்ஸ்யாத் ஸர்வா பூ4தாநி" [எந்த உயிரையும் துன்புறுத்தக்கூடாது] என்றும் ஶாஸ்த்ரம் ஜீவஹிம்ஸையைவிலக்கியிருக்கிறபடியாலே இங்கு க்ஷத்ரியனுக்கு த4ர்மமான யுத்3த4த்தில் கொல்வதைப்பற்றிக் கூறுவதாகவே கொள்ளவேண்டும். இந்த கீ3தா ஶாஸ்த்ரத்தின் தொடக்கத்திற்கும் இது மிகப்பொருந்தியது; "பீ4ஷ்மர் முதலான சிலரை மட்டுமல்ல, த4ர்மயுத்3த4த்தில் இந்த உலகத்தையே கொன்றாலும் நீ கொன்றவனாகமாட்டாய்" என்று கருத்து. "கொன்றாலும் கொன்றவனாகமாட்டாய்" என்று முரண்பட்ட வாக்யமாகத் தோன்றுகிறதே எனில்; இந்த மூன்று வகைப்பட்ட த்யாக3ங்களும் இல்லாமல் உயிர்களைக் கொன்றவன் அடையும் பாவத்தை நீ அடையமாட்டாய் என்று கருத்தாகையாலே விரோத4மில்லை. இங்கு சங்கர பா4ஷ்யத்தில் "ஆத்மாவுக்குக் கர்த்ருத்வம் கிடையாதாகையாலே அவன் கொன்றாலும் கொன்றதின் ப2லனை அடையமாட்டான்" என்று பொருள் விவரிக்கப்பட்டது; இது பொருந்தாது. "யஸ்ய நாஹங்க்ருதோ பா4வ:',

न केवलं भीष्मादीनित्यर्थः । ततस्तेन युद्धाख्येन कर्मणा न निबध्यते— तत्फलं नानुभवतीत्यर्थः ॥ १७ ॥

---

என்று இங்கு அகர்த்ருத்வாநுஸந்தா₄னம் உடையவனுக்கே இப்பெருமை சொல்லப்படுகிறது. சங்கரமதத்திலோவெனில் ஜ்ஞாநியல்லாத ஜீவனுக்கும் கர்த்ருத்வம் கிடையாது; அதன் ப₂லன் ஜீவனுக்கு விளைவதும் பொய்யானது. ஆகையால் இங்கு கூறியதே சரியான பொருள். (ந நிப₃த்₄யதே) இப்படி இவன் யுத்₃த₄மாகிற செயலைச் செய்தாலும் அதைச் செய்தவனாகமாட்டாளுகையாலே அச்செயலினால் விளையும் ப₂லனும் இவனிடம் ஒட்டாது. அதாவது பிறரைக் கொன்றதனால் பாபம் ஏற்பட்டு இவனுக்கு மோக்ஷத்திற்குத் தடை விளையாது என்று கருத்து. "ந ஹந்தி" [கொன்றவனாகமாட்டான்] என்பதற்கு விவரணமாகவே (ந நிப₃த்₄யதே) [இவன் பாபத்தால் கட்டுப்படமாட்டான்] என்னும் தொடர் அமைந்துள்ளது என்று சிலர் உரையிட்டனர். இதைவிட, முற்பாதியில் "யஸ்ய நாஹங்க்ருதோ பா₄வ:" என்று கர்த்ருத்வ த்யாக₃த்தைச் சொல்லி, "பு₃த்₃தி₄ர் யஸ்ய ந லிப்யதே" என்று அதனால் விளையும் ப₂ல ஸங்க₃ த்யாக₃த்தைச் சொன்னது போலவே, இந்தப் பிற்பாதியிலும் "ந ஹந்தி" என்று கொல்வதனால் உண்டாகும் பாபம் இவனுக்கு இல்லை என்று உணர்த்தி, "ந நிப₃த்₄யதே" என்று 'அந்தப் பாபத்தால் விளையும் ஸம்ஸார ப₃ந்த₄ம் இவனுக்கு இல்லை' என்று சொல்லுவதாகக் கொள்வதே பொருத்தமானது. யுத்₃த₄த்தில் எதிரிகளைக் கொல்வது மோக்ஷத்திற்குத் தடையாகாது என்பது திரண்ட பொருள். இதனால் முதற் பாத₃த்தால் கர்மங்களைச் செய்யும்போது அஹங்காரம் கூடாதென்றும், இரண்டாவது பாத₃த்தால் கர்மங்களைச் செய்தபின்பு 'என்னால் செய்யப்பட்டது' என்னும் நினைவு கூடாதென்றும் சொல்லப்படுவதாகவும், இப்படிக் கர்மங்களைச் செய்பவனுக்கு "ந ஹந்தி" என்று இம்மையில் தோஷமில்லை என்றும் "ந நிப₃த்₄யதே" என்று மறுமையில் தோஷமில்லை என்றும் காட்டப்படுகிறது என்றும் சிலர் உரையிட்டது பொருந்தாது என்பது நாம் எடுத்துக் காட்டிய ப்ரகரணம் பத₃ஸ்வாரஸ்யம் முதலானவற்றிலிருந்து விளங்கும்.

17.

भा॥ सर्वमिदमकर्तृत्वाद्यनुसन्धानं सत्त्वगुणवृद्ध्यैव भवतीति सत्त्वस्योपादेयताज्ञापनाय कर्मणि सत्त्वादिगुणकृतं वैषम्यं प्रपञ्चयिष्यन् कर्मचोदनाप्रकारं तावदाह —

ज्ञानं ज्ञेयं परिज्ञाता त्रिविधा कर्मचोदना ।
करणं कर्म कर्तेति त्रिविधः कर्मसंग्रहः ॥ १८ ॥

17-8-09.
9-11-10.

18. ஜ்ஞாநம் ஜ்ஞேயம் பரிஜ்ஞாதா த்ரிவித₄ா கர்ம சோத₃நா ।
கரணம் கர்ம கர்த்தேதி த்ரிவித₄: கர்மஸங்க்₃ரஹ: ॥

கர்ம சோத₃நா — (ஜ்யோதிஷ்டோமம் முதலான) கர்மங்களைப்பற்றிய வேத₃விதி₄, ஜ்ஞாநம் — (செய்யவேண்டிய கர்மத்தைப்பற்றிய) அறிவு, ஜ்ஞேயம் —அறிந்து செய்யத் தக்கதான அந்தக் கர்மம், பரிஜ்ஞாதா — (அந்தக் கர் மத்தை) அறிபவன், (என்று) த்ரிவித₄ா — மூன்றுடன் கூடியது; கர்மஸங்க்₃ரஹ: —(இம்மூன்றில் இடைப்பட்டதான) கர்மத்தின் வகை, கரணம் — (கர்மத்திற்கு ஸாத₄நமாயிருக்கும்) த்₃ரவ்யம் முதலானது, கர்ம — (யாக₃ம் முதலான) அந்தக் கர்மம், கர்த்தா இதி — அந்தக் கர்மத்தைச் செய் பவன் என்று, த்ரிவித₄: — மூன்று ஆகும்.

---

18. அறிவாங் கறியப் படுங்கன்ம மத்தை
யறிவான் விதிமூன்றே டாகுஞ் — செறிவார்
கரணஞ்செய் கன்மமதிற் கர்த்தாவா மூன்றுங்
கரணஞ்செய் கன்மத் தடைவு.

விதி — (ஜ்யோதிஷ்டோமம் முதலான கர்மங்களைப் பற்றிய) வேத₃ விதி₄, அறிவு — (செய்யவேண்டிய கர்மத் தைப் பற்றிய) அறிவு, ஆங்கு அறியப்படும் கன்மம் — அறிந்து செய்யத்தக்கதான அந்தக் கர்மம், அத்தை அறி வான் — (அந்தக் கர்மத்தை) அறிபவன், மூன்றேடாகும் — (என்னும்) மூன்றேடும் கூடியிருப்பதாகும்; கரணம் செய்

मा। ज्ञानम् — कर्तव्यकर्मविषयं ज्ञानम्, ज्ञेयं च — कर्तव्यं कर्म, परिज्ञाता — तस्य बोद्धेति त्रिविधा कर्मचोदना — बोधको[ऽय]-द्रव्यवादप्युक्तो ज्योतिष्टोमादिकर्मविधिरित्यर्थः। तत्र बोद्धव्यरूपं कर्म

---

கன்மத்து அடைவு — இந்திரியங்களால் செய்யப்படும் கர்மத்தின் வகை, செறிவார் கரணம் — கர்மத்திற்கு உபகரணமாயிருக்கும் திரவியம் முதலானது, செய் கன்மம் — செய்யப்படும் அந்தக்கர்மம், அதில் கர்த்தாவாய — அந்தக் கர்மத்தைச் செய்பவன் என்று, மூன்றும — மூன்றாயிருக்கும்.

---

18. இதுவரையில் அகர்த்ருத்வாநுஸந்தா4னமாகிற கர்த்ருத்வத்யாக3மும் ப2லஸங்க3 த்யாக3ங்கள் என்று மூன்றுவகைப்பட்டிருக்கும் ஸாத்விக த்யாக3ம் விளக்கப்பட்டது. "நித்ய ஸத்வஸ்த2:" [கீ3தை 2—45] முதலானவிடங்களில் கீ3தையில் சொல்லியபடி இந்த ஸாத்விக த்யாக3மானது ஸத்வகு3ணம் வளர்வதாலேயே விளையும், ஆகையால் முக்குணங்களில் ஸத்வகு3ணமே கைக்கொள்ளத்தக்கது என்னும் விஷயத்தை விரிவாக அடுத்தபடி விளக்கவேண்டியுள்ளது. அதை விளக்குவதற்கு முன் இந்த ச்லோகத்தில் வேதத்திலுள்ள கர்மவிதி4யின் மூன்று விஷயங்களுடன் கூடியவை என்று காட்டிக்கொண்டு, மேல் ச்லோகங்களில் அந்த மூன்றிலும் ஸாத்விக ராஜஸ தாமஸ வேறுபாடுகளை விளக்குவதன் மூலம் ஸத்வகு3ணம் வளர்வதற்கு ஸாத்விகமான ஜ்ஞாநம் முதலானவையே கைக்கொள்ளத்தக்கவை என்று காட்டுகிறான். (கர்மசோத3நா) ஜ்யோதிஷ்டோமம் முதலான கர்மங்களைப் பற்றிய வேத3விதி4 (த்ரிவிதா4) மூன்றுடன் கூடியது. அவை எவை என்பதை முதல் பாத3ம் விளக்குகிறது. (ஜ்ஞாநம்) செய்யவேண்டிய கர்மத்தைப்பற்றிய அறிவு. அறிவு என்று பொதுவாகச் சொல்லியிருந்த போதிலும் கர்மவிதி4யைப் பற்றிய ப்ரகரணமாகையாலே இங்கு செய்ய வேண்டிய கர்மத்தைப் பற்றிய அறிவு என்று பொருள் கொள்ளப்படுகிறது. ப்ரகரணத்திற்குப் பொருந்தாதாகையாலே ஜ்ஞாந ஶப்3த3த்திற்கு 'ஶாஸ்த்ரம்' என்று சிலர் பொருள் கொள்வது ஒட்டாது. (ஜ்ஞேயம்) அறிந்து செய்யப்படும் அந்தக் கர்மம், (பரிஜ்ஞாதா) செய்வதற்காக அந்தக் கர்மத்தை அறிபவன். வேத3விதி4யைக் காட்டிலும் வேறுபட்டவையான இந்த ஜ்ஞாநம் முதலானவற்றை "த்ரிவிதா4" என்று

त्रिविधं संगृह्यते — करणं कर्म कर्तेति। करणम् —साधनभूतं द्रव्यादिकम्; कर्म — यागादिकं; कर्ता — अनुष्ठातेति ॥ १८ ॥

---

அந்த விதி₄யின் வகைகளாகச் சொல்லியிருப்பது எப்படிப் பொருந்தும்? எனில், அந்த வேத₃விதி₄யோடு இம்மூன்றும் சேர்ந்திருப்பதையே "வித₄ா" ஶப்₃த₃ம் இங்கு சொல்லுகையாலே பொருந்தும். இனி, இம்மூன்றில் இடையில் சொல்லப்பட்டதாய், அறிந்து அநுஷ்டி₂க்கத்தக்கதான கர்மம் மூவகைப்பட்டது என்று ஶ்லோகத்தின் பிற்பாதி கூறுகிறது. (கரணம்) "வ்ரீஹிபி₄ர் யஜேத" [ஆபஸ்தம்ப₃ ஶ்ரௌத 6—31—24] "த₃த்₄நா ஜுஹோதி" [ஷ 6—25—10] முதலானவற்றில் யாக₃ம் செய்வதற்கு உபகரணமாகச் சொல்லப்படும் 'வ்ரீஹி' எனப்படும் நெல், 'த₃தி₄' எனப்படும் தயிர் முதலானவை 'கரணம்' எனப்படுகின்றன. செய்யப்படும் கர்மமே ப₂லத்துக்கு 'கரணம்' ஆனாலும் இங்கு அது தனியாக 'கர்ம' என்று அடுத்தபடியாக எடுக்கப்படுகையால், முதலில் உள்ள 'கரண' ஶப்₃த₃ம் யாக₃ம் செய்வதற்கு உபகரணமாயிருப்பவற்றையே குறிக்கிறது. பா₄ஷ்யத்தில் 'த்₃ரவ்யாதி₃கம்' என்றவிடத்தில் 'ஆதி₃' ஶப்₃த₃த்தாலே த்₃ரவ்யத்தின் ஜாதி முதலானவை சொல்லப்படுகிறது. இங்கு பின்வருமாறு ஓர் ஆக்ஷேபம் எழுகிறது:—"ஶ்லோகத்தின் முற்பாதியில் 'ஜ்ஞேயம்' 'பரிஜ்ஞாதா' என்று சொல்லப்பட்டவைகளே பிற்பாதியில் முறையே 'கர்ம' 'கர்த்தா' என்று சொல்லப்படுகின்றன என்பது தெளிவு. ஆகவே முற்பாதியில் 'ஜ்ஞாநம்' என்று சொல்லப்படுவதே பிற்பாதியில் 'கரணம்' என்று சொல்லப்படுவதாகக் கொள்வதல்லவோ பொருத்தம். 'ஜ்ஞாயதே அநேந இதி ஜ்ஞாநம்' என்னும் வ்யுத்பத்தியாலே அறிவதற்குக் கரணமாயிருக்கும் ஜ்ஞாநத்தைக் கரணம் என்று எடுப்பதில் பொருத்தமும் உள்ளது. ஆகையால் முற்பாதியில் சொல்லப்பட்ட மூன்றுமே பிற்பாதியில் அநுவதி₃க்கப்படுகிறது என்று கொள்வதே பொருத்தமாயிருக்கிறது. முற்பாதியில் இடைப்பட்டதாயிருக்கும் கர்மம் பிற்பாதியில் மூன்று வகையாகப் பிரிக்கப்படுகிறது என்று கொள்வது எப்படி பொருந்தும்?" என்பது அவ்வாக்ஷேபம். இதற்கு ஸமாத₄ாநம் பின்வருமாறு: 'கர்ம சோத₃நா' என்னும் ஶப்₃த₃த்தாலே கர்மத்தைப் பற்றிய விதி₄ முற்பாதியில் விளக்கப்படுகிறது என விளங்குகிறது. பிற்பாதியில் 'கர்மஸங்க்₃ரஹ:' என்னும் பத₃த்தாலே முற்பாதியில் சொல்லப்பட்ட விதி₄யைக்காட்டிலும் வேறுபட்டதாய், முற்பாதியில் சொல்லப்பட்ட மூன்றில் ஒன்றான கர்மத்தின் வகை பிற்பாதியில் விளக்கப்படுகிறது என்று விளங்கு

17-8-09
9-11-10

ज्ञानं कर्म च कर्ता च त्रिधैव गुणभेदतः ।
प्रोच्यते गुणसंख्याने यथावच्छृणु तान्यपि ॥ १९ ॥

19. ஜ்ஞாநம் கர்ம ச கர்த்தா ச த்ரிதை₄வ கு₃ணபே₄த₃த: ।
ப்ரோச்யதே கு₃ண ஸங்க்₂யாநே யதா₂வச்ச்₂ருணு தாந்யபி ॥

கு₃ணஸங்க்₂யாநே—(ஸத்வம் முதலான மூன்று) கு₃ணங்களின் விளைவுகளைக் கணக்கிடும்போது, கு₃ண பே₄த₃த:—(அந்த) கு₃ணங்களின் வேறுபாட்டையிட்டு, ஜ்ஞாநம்—(செய்யவேண்டிய கர்மத்தைப்பற்றிய) அறிவு, கர்ம—(செய்யப்படும்), கர்மம், கர்த்தா ச—செய்பவனான கர்த்தா (ஆகிய மூன்றும்) த்ரிதா₄ ஏவ ப்ரோச்யதே—மூன்று மூன்றுவகையாகவே சொல்லப்படுகிறது. தாநி அபி—அவைகளையும், யதா₂வத் ஶ்ருணு—உள்ளபடி கேட்பாயாக.

---

கிறது. முற்பாதியில் சொன்னதையே வேறுசொற்களில் பிற்பாதி சொல்லுகிறது என்று கூறுவதில் பயனில்லையாகையால், அதில் ஒன்றைப் பிரிக்கிறது என்று கொள்வதே பொருத்தமானது. (கர்ம) செய்யப்படும் யாக₃ம் முதலான கர்மம். "கரணம்", 'கர்ம' கர்த்தா என்று சேர்ந்து படிக்கப்படுகையால் இம்மூன்றும் காரகங்களைக் குறிப்பதாகத் தோன்றினாலும் அப்படிப் பொருள் கொள்ளுவது ப்ரகரணத்திற்குப் பொருந்தாதாகையால், செய்யப்படும் யாகத்தையே இச்சொல் இங்கு குறிக்கும். மேலேயும் 23 வது ஶ்லோகம் முதல் இங்கு சொல்லப்படும் கர்மமே ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று மூன்றாகப் பிரிக்கப்படுகிறதாகையாலே இங்கும் அந்தக் கர்மமே சொல்லப்படுகிறது என்று கொள்வதே பொருத்தமாகும். (கர்த்தா) முற்பாதியில் கர்மத்தைப்பற்றிய வேத₃விதி₄யை அறிபவனாகச் சொல்லப்பட்டவனே அதில் சொல்லப்படும் கர்மத்தை அநுஷ்டிப்பவன் என்னும் நிலையில் 'கர்த்தா' வாகச் சொல்லப் படுகிறான் என விளங்குகிறது. (த்ரிவித₄: கர்ம ஸங்க்₃ரஹ:) முற்பாதியில் சொல்லப்பட்ட மூன்றில் இடைப்பட்டதான கர்மத்தின் அடைவு இவ்வண்ணமாக மூன்று வகைப்பட்டிருக்கும். கர்ம ஸ்வரூபமானது அது உண்டாவதற்குக் காரணமான கரணத்தோடும் கர்த்தாவோடும் சேர்ந்து மூன்று வகையாக அடைவுபடுத்தப்படுகிறது என்று கருத்து. 18.

भा ॥ कर्तव्यकर्मविषयं ज्ञानमनुष्ठीयमानं च कर्म तस्यानुष्ठाता

19. காணுணர்வுங் கன்மமுங் கர்த்தாவு மும்மூன்ருய்ப்
பேணுங் குணத்திற் பிரியுமதென் — றேணுறவே
யக்குணஞ்சேர் தன்மை யறவுரைப்ப ராங்கதனை
மிக்குணர்ந்து மன்னுகேள் வேறு.

காண் உணர்வும்-(செய்யவேண்டிய கர்மத்தை) அறியும் ஜ்ஞாநமும், கன்மமும்-(செய்யப்படும்)கர்மமும், கர்த்தாவும் - அதைச்செய்பவனும், (ஆகிய இம்மூன்றும்) பேணும் குணத்தில்-(அவனவன்)கைக்கொள்ளும்(ஸத்வம் முதலான) குணத்தையொட்டி, மும்மூன்ருய் பிரியுமது — மூன்று மூன்ருய்ப் பிரிகின்றன, என்று — என்று, அக்குணஞ்சேர் தன்மை — (முக்குணங்களில்) அந்தக் குணத்திஞல் விளையும் விளைவுகளை, ஏணுறவே அற உரைப்பர் - (அறிவாளிகள்) சிறப்பாகவும் நன்ருகவும் கூறுவர்; மன்னு — அரசஞன அர்ஜுஞ! ஆங்கு அதனை — முற்கூறிய மூன்றும் மூன்றுமூன்ருகப் பிரிகின்ற வகையை, வேறு — தனித்தனியாக, மிக்கு உணர்ந்து கேள் — மிகவும் கவனமாக (நான் சொல்லக்) கேட்பாயாக.

19. சென்ற ஶ்லோகத்தில் வேத₃விதி₄களில் காணப்படும் கர்மத்தைப் பற்றிய அறிவும், கர்மமும், கர்மங்களைச் செய்யும் கர்த்தாவும் ஆகிய மூன்றும் விளக்கப்பட்டன. இந்த ஶ்லோகத்தில், இம்மூன்றும் ஸத்வ ரஜஸ் த₃மோ கு₃ணங்களையிட்டு மும்மூன்ருகப் பிரிக்கப்படும் என்று கூறி மேல் ஒன்பது ஶ்லோகங்களாலே அவற்றை விளக்குகிருன். (ஜ்ஞாநம் கர்ம ச கர்த்தா ச த்ரிதை₄வ கு₃ணபே₄த₃த:) செய்யவேண்டிய கர்மத்தைப்பற்றிய அறிவும், செய்யப்படும் கர்மமும், அதைச்செய்பவனும் முக்குணங்களையிட்டு மும்மூன்ருகப் பிரிக்கப்படுகின்றன. சென்ற ஶ்லோகத்தில் "ஜ்ஞாநம், ஜ்ஞேயம், பரிஜ்ஞாதா" என்று சொல்லப்பட்ட மூன்றுமே இங்கு "ஜ்ஞாநம் கர்ம ச கர்த்தா ச" என்று எடுக்கப் படுகிறது; 'ஜ்ஞேயம்' என்று சொல்லப்பட்ட கர்மம் சென்ற ஶ்லோகத்தின் பிற்பாதியிலேயே 'கர்ம' என்னும் சொல்

च सत्त्वादिगुणभेदतस्त्रिधैव प्रोच्यते, गुणसंख्याने — गुणकार्यगणने; यथावच्छृणु तान्यपि — तानि गुणतो भिन्नानि ज्ञानादीनि यथावच्छृणु ॥ १९ ॥

सर्वभूतेषु येनैकं भावमव्ययमीक्षते ।
अविभक्तं विभक्तेषु तज्ज्ञानं विद्धि सात्त्विकम् ॥ २० ॥

20 ஸர்வபூ4தேஷு யேநைகம் பா4வமவ்யயமீக்ஷதே ।
அவிப4க்தம் விப4க்தேஷு தத் ஜ்ஞாநம் வித்3தி4 ஸாத்விகம் ॥

---

லால் விளக்கப்பட்டது. அறிபவனுயிருக்கையாகிய ஜ்ஞாத்ருத்வமும், செய்பவனுயிருக்கையாகிய கர்த்ருத்வமும் ஜ்ஞாநமுடையவனின் இருநிலைகளேயாகையாலே, இந்த ஜ்ஞாநத்தையும் கர்த்தாவையும் சொன்னதாலே ஜ்ஞாதாவும் சொல்லப்பட்டதாகிறபடியாலே அதைத் தனியாகக் கூறவில்லை. சென்ற ஶ்லோகத்தில் 'கரணம்' என்று சொல்லப்பட்ட த்3ரவ்யம் முதலானவையும் கர்மத்தில் அடங்கியவையாகையாலே, கர்மத்தை மும்மூன்றுகப் பிரிப்பதனுலேயே கரணமும் அதில் அடங்கிவிடும். ஆகையால் ஜ்ஞாநம் கர்மம் கர்த்தா என்னும் இம்மூன்றுமே ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களையிட்டு மும்மூன்றுகப் பிரிக்கப்படுகின்றன என்று கருத்து. இப்படி எங்கே பிரிக்கப்படுகிறது எனில்: (கு3ணஸங்க்2யாநே ப்ரோச்யதே) (அறிவாளிகளால்) கு3ணங்களின் விளைவுகளைக் கணக்கிடும்போது பிரிக்கப்படுகிறது; இங்கு 'கு3ணஸங்க்2யாந' ஶப்3த3த்தாலே ஸாங்க்2ய ஸித்3தா4ந்தத்தைக் குறிப்பதாகக் கொள்வதற்குப் பிரமாணம் எதுவுமில்லை; இந்த ப்ரகரணத்தில் அப்படிக் கொள்வதால் பயனும் இல்லை; ''கு3ணஸ்வரூபத்தைக் கணக்கிடுவது'' என்று பொருள் கொண்டால் கு3ணஸ்வரூபத்தில் 'ஜ்ஞாநம்' முதலானவை அடங்காது. ஆகையால் கு3ணங்களின் விளைவுகளைக் கணக்கிடும்போது என்றே பொருள் கொள்ளவேண்டும். (தாந்யபி யதா2வத் ஶ்ருணு) ''முக்கு3ணங்களையிட்டு மும்மூன்றுகப் பிரியும் ஜ்ஞாநம், கர்மம், கர்த்தா ஆகிய மூன்றைப்பற்றியும் மேலே மும்மூன்று ஶ்லோகங்களிலே நான் உள்ளபடி சொல்ல, நீ கவனமாகக் கேட்பாயாக'' என்கிறுன். 19.

भा ।। ब्राह्मणक्षत्रियब्रह्मचारिगृहस्थादिरूपेण विभक्तेषु सर्वेषु

யேந — எந்த அறிவாலே, விப₄க்தேஷு — கு₃ணத்தால் பலவகைப்பட்ட, ஸர்வபூ₄தேஷு — (ப்₃ராஹ்மணர் முதலான பலவகைப்பட்ட ஜாதிப்பிரிவுகளையுடையவையான, கர்மம் செய்யும்) எல்லா உயிர்களிடத்தும், அவிப₄க்தம் — (நிறம் பரிமாணம் முதலானகுணத்தாலும்) வேறுபடாததாய், அவ்யயம் — விகாரமற்றதாய், ஏகம் பா₄வம் — (ஜாதி முதலானவற்றினாலும் வேறுபடாமல்) ஒருபடிப்பட்ட ஆத்மவஸ்துவானது, ஈக்ஷதே — காணப்படுகிறதோ, தத் ஜ்ஞாநம் — அந்த அறிவை, ஸாத்விகம் வித்₃தி₄ — 'ஸாத்விக ஜ்ஞாநம்' என்று அறிவாயாக.

---

20\. வண்ணாச் சிரமவகைசேரெஞ் ஞானத்துங்
கண்ணா ருயிரொருமைக் காட்சியாற் — றிண்ணார
வேறறவே நோக்கு மிகுமறிவைச் சத்துவத்திற்
சேறறிவா மென்றே தெளி.

வண்ணாச்சிரம வகைசேர் எஞ்ஞானத்தும் - பிராமணன் முதலான வர்ணவகைகளாலும், ஸந்யாஸிகள் முதலான ஆஶ்ரம வகைகளாலும் (குணத்தாலும்) வேறுபட்டிருக்கும் சரீரங்களோடுகூடிய எல்லாச்சேதனரிடத்தும், கண் ஆர் உயிர் ஒருமைக்காட்சியால் — சரீரத்தை வியாபித்திருக்கும் உயிர்கள் (அறிவுவடிவாயிருக்கையால்) ஒருபடிப்பட்டவை என்று காண்கையாலே, திண் ஆர் — உறுதியாக, வேறு அறவே நோக்கும் மிகும் அறிவை — (சரீரத்தையிட்டு வரும்) வேறுபாடுகள் இல்லாமல் காணும் மேலான அறிவை, சத்துவத்தில் — ஸத்வ குணத்தினால் உண்டாகும், சேறு அறிவாம் என்றே தெளி — சிறந்த அறிவாகும் என்று புரிந்து கொள்வாயாக.

---

20\. இது முதல் மூன்று ஶ்லோகங்களாலே முறையே ஸாத்விக, ராஜஸ, தாமஸ ஜ்ஞாநங்களை விளக்குகிறான். ஜ்ஞாநம் ஸத்வாதி₃ கு₃ணங்களால் உண்டாவதையிட்டு மூன்றுவகையாயிருப்பதைக் கூறுவது — 'கர்த்ருத்வம் கு₃ணங்களுக்கு வசப்பட்டிருப்பது' என்று

भूतेषु—कर्माधिकारिषु येन ज्ञानेनैकम्—आत्माख्यं भावं, तत्राप्य-विभक्तम्—ब्राह्मणत्वाद्यनेकाकारेष्वपि भूतेषु सितदीर्घादिविभागरत्सु

---

உணர்த்துவதற்காகவேயாம். (ஸர்வபூ₄தேஷு) சரீரத்தைவிட்டு ப்₃ராஹ்மணர், க்ஷத்ரியர், வைஸ்யர், ஶூத்ரர், ஸந்யாஸி, வாந ப்ரஸ்த₂ர், க்₃ருஹஸ்த₂ர், ப்₃ரஹ்மசாரி என்று வர்ணம். ஆஶ்ரமம் முதலானவற்றுலே பலவகைப்பட்டிருக்கும் கர்மம் செய்யத் தகுதி யுள்ள எல்லா உயிர்களிடத்திலும், அடுத்தபடியாக இந்த உயிர் களிடத்து ஜ்ஞாநிகளுக்கு பனையும் ஒருபடிப்பட்ட காட்சியைக் கூறுகிறபடியாலே, இங்கு ஸர்வபூ₄த ஶப்₃த₃ம் அந்த ஜ்ஞாந மற்ற வர்கள் சரீரத்தையிட்டுப் பலபடியாகக் காணும் வேறுபாடுடைய ஜீவர்களைக் குறிக்கிறது, அவர்களிலும், பதினெட்டாம் ஶ்லோகத் தில் கர்மத்தைப் பற்றியது இவ்வறிவு என்று கூறியிருக்கையாலே; இங்கு 'ஸர்வபூ₄த' ஶப்₃த₃ம் கர்மம் செய்யத்தகுதியுள்ள ஜீவர்களையே குறிக்கிறது. (யேந ஏகம் பா₄வம் ஈக்ஷதே) எந்த அறிவால் ஒரு படிப்பட்டதாக ஆத்மவஸ்துவானது காணப்படுகிறதோ; 'பா₄வ' ஶப்₃த₃ம் பதா₃ர்த்த₂மாகிற பொருளைக் குறிப்பதாய், இங்கு ப்ரகர ணத்தை யொட்டி ஆத்மவஸ்துவைக் குறிக்கிறது. 'ஏக' ஶப்₃ த₃த்தாலே 'ஆத்ம வஸ்துக்கள் எல்லாம் ஜ்ஞாநமே வடிவாயிருக் கிற ஒரே ஜாதியைச் சேர்ந்தவை' என்று உணர்த்தப்படுகிறது. "ந த்வேவாஹம்" [கீ₃தை 2—12] என்று தொடங்கி இந்த ஶாஸ்த் ரத்தில் பல இடங்களில் ஆத்மாக்கள் பலர் என்று நிரூபிக்கப் பட் டிருக்கையால் "ஆத்மாக்கள் அனைவரும் ஒன்றே" என்று இங்கு சங்கரர் உரையிடுவது பொருந்தாது. அடுத்த ஶ்லோகத்தில் "நாநா பா₄வாந்" என்று 'பலர்' என்று கூறப்படுவதற்கும் பொருந்தாது. ஆகையால், ஜீவாத்மாக்களுடைய ஸாம்யத்தை அநுஸந்தி₄ப்பதே இங்குப் பொருளாகமுடியும். முன் ஶ்லோகங்களில் 'கர்த்தா' என்று சொல்லப்பட்ட ஜீவாத்மாவைப் பற்றிய அநுஸந்த₄ானமே இங்குப் பொருத்தமாகையால் இவ்வநுஸந்த₄ானம் பரமாத்மாவைப் பற்றி யது என்று கொள்ளவும் இடமில்லை. இந்த ஆத்ம வஸ்துவை மேலும் விசேஷிக்கிறது.—(விப₄க்தேஷு அவிப₄க்தம்) முற்கூறிய வர்ணாஶ்ரமங்கள் முதலான வேறுபாடுகள் மாத்திரமல்லாமல் வெளுப்பு, சிவப்பு, உயரம், குட்டை முதலான மற்றும் பல வேறு பாடுகளையுடைய ஶரீரங்களில் அத்தகைய வேறுபாடுகள் எதுவும் இல்லாமல் இருப்பது ஜ்ஞாநமே வடிவான ஆத்மவஸ்து என்று

ज्ञानाकारे आत्मनि विभागरहितम्, अव्ययं — व्ययस्वभावेष्वपि ब्राह्मणादिशरीरेष्वव्ययम्--अविकृतं फलादिसङ्गानर्हं च कर्माधिकारवेलायामीक्षते, तज्ज्ञानं सात्त्विकम् विद्धि ॥ २० ॥

---

கருத்து. 'ஸர்வபூ4த' ஶப்3த3த்தாலே ப்3ராஹ்மணர் முதலான சாதிகளையிட்டு வேறுபாட்டைச் சொல்லுகிறது என்றும், 'விப4க்த' ஶப்3த3ம் கு3ணம் முதலான மற்ற வேறுபாடுகளைச் சொல்லுகிறது என்றும், 'ஏக' 'அவிப4க்த' ஶப்3த3ங்கள் முறையே இவ்விருவகையான வேறுபாடுகளுமற்றது ஆத்மவஸ்து எனக் கூறுகின்றன என்றும் கொள்ளவேண்டும்.

> க3வாமநேகவர்ணாநாம் க்ஷீரஸ்ய த்வேகவர்ணதா ।
> க்ஷீரவத் பஶ்யதி ஜ்ஞாநம் லிங்கி3நஸ்து க3வாம் யதா2॥

[பலநிறங்களையுடைய பசுக்களின் பால் ஒரே (வெளுப்பு) நிறமுடையதாயிருக்கிறது. அதுபோலவே ஞானிகள் பசுவின் பாலைப்போலே (பலவகைப்பட்ட சரீரங்களிலுள்ள) ஜீவர்களை ஒரே அறிவு மயமானவராய்க் காண்கிறார்கள்.] என்று ப்3ராஹ்மபி3ந்து3 உபநிஷத்தில் கூறப்பட்டது காணத்தக்கது. இந்த ஆத்மவஸ்து எப்படிப்பட்டது என்பதை மேலும் விளக்குகிறான்.— (அவ்யயம்) அழியும் இயல்வையுடைய ப்3ராஹ்மணர் முதலான ஶரீரங்களில் அழிவற்றதாய்—விகாரமற்றதாய் இருப்பது ஆத்மவஸ்து என்றபடி. (அவ்யயம் ஈக்ஷதே) முற்கூறியபடி ப2லம் முதலானவற்றில் பற்றற்றதாகவும் கர்மாநுஷ்டா2ன வேளையில் ஆத்மவஸ்து எந்த அறிவால் காணப்படுகிறதோ என்று கருத்து. விகாரத்தைப் பொருளாக உடைய 'வ்யய' ஶப்3த3ம் ப2லம் முதலானவற்றின் அநுப4வமாகிற விகாரத்தை இங்குக் குறிக்கிறது. 'அவ்யயம்' என்றதாலே ப்ராக்ருத ப2லாநுப4வமும் இந்த ஆத்மவஸ்துவுக்கு இயல்வானதன்று என்று உணர்த்தப்படுகிறது. பதினெட்டாம் ஶ்லோகத்தில் 'கர்மசோத3நா' என்று கர்மத்தைப் பற்றியது இவ்வறிவு என்று கூறியிருக்கையாலே கர்மாநுஷ்டா2ன வேளையில் இந்த அநுஸந்த4ானம் அவசியம் என்று உணர்த்தப்படுகிறது. (யேந ஜ்ஞாநேந ஈக்ஷதே தத் ஜ்ஞாநம் ஸாத்விகம் வித்3தி4) எந்த அறிவால் இப்படி அறியப்படுகிறதோ அதுவே ஸாத்விகமான அறிவு என்று தெளிந்து கொள்வாயாக. 20·

पृथक्त्वेन तु यज्ज्ञानं नानाभावान् पृथग्विधान् ।
वेत्ति सर्वेषु भूतेषु तज्ज्ञानं विद्धि राजसम् ॥ २१ ॥

21. ப்ருத₂க்த்வேந து யத் ஜ்ஞாநம் நாநாப₄ாவாந் ப்ருத₂க்₃வித₄ாந் |
வேத்தி ஸர்வேஷு பூ₄தேஷு தத் ஜ்ஞாநம் வித்₃தி₄ ராஜஸம் ||

ஸர்வேஷு பூ₄தேஷு — (முற்கூறிய) ப்₃ராஹ்மணர் முதலான வேறுபட்ட சரீரங்களை உடைய எல்லா உயிர்களிடத்தும், ப்ருத₂க்த்வேந — (ப்₃ராஹ்மணர் முதலான ஜாதிகளின்) தனித்தன்மையையிட்டும், ப்ருத₂க்வித₄ாந் — (வெளுப்பு, சிவப்பு, உயரம், குட்டை) முதலான குணங்களாலும் வேறுபட்டவர்களாக, நாநாப₄ாவாந் - ஜீவஸமூஹங்களை, யத் ஜ்ஞாநம் வேத்தி — எந்த அறிவு அறிகிறதோ, தத் ஜ்ஞாநம் — அந்த அறிவை, ராஜஸம் வித்₃தி, — (ரஜோ கு₃ணத்தால் உண்டாகும்) ராஜஸ ஜ்ஞாநமாக அறிவாய்.

---

21. வேறுபடு பூதங்கண் மேவுயிரும் வெவ்வேறுய்க்
கூறு படும்வகையிற் கூடுமெனத் தேறு
மறிவை யிடைக்குணத்தி லாகியிவ் வண்ணஞ்
செறிவதென வேயறிநீ தேர்ந்து.

வேறு படு பூதங்கள் மேவு உயிரும் — (முற்கூறிய) ப்₃ராஹ்மணர் முதலான வேறுபட்ட சரீரங்களை உடைய எல்லா உயிர்களையும், வெவ்வேறுய்க் கூறுபடும் வகையில் கூடும் என — (ப்₃ராஹ்மணர் முதலான ஜாதிகளின் தனித்தன்மையையிட்டும், வெளுப்பு சிவப்பு உயரம்குட்டை முதலான கு₃ணங்களையிட்டும்) வேறுவேருயிருப்பவை என்று, தேறும் அறிவை - நிர்ணயிக்கும் அறிவை. இடை குணத்தில் ஆகி— ரஜோகு₃ணத்தினல் உண்டாகி, இவ்வண்ணம் — இந்த முறையில், செறிவது எனவே — நிர்ணயிக்கிறது என்று, நீ தேர்ந்து அறி — நீ ஆராய்ந்து அறிவாயாக.

भा ॥ सर्वेषु भूतेषु — ब्राह्मणादिषु ब्राह्मणाद्याकारपृथक्त्वेनात्मा-स्वरूपानपि भावान्नानाभूतान् सितदीर्घादिपृथक्त्वेन च पृथग्विधान् फलादिसंयोगयोग्यान् कर्माधिकारवेलायां यज्ज्ञानं वेत्ति, तज्ज्ञानं राजसं विद्धि ॥ २१ ॥

---

21. ரஜோகு3ணத்தினால் உண்டாகும் ராஜஸஜ்ஞாநத்தை விளக்குகிறான். (ஸர்வேஷு பூ4தேஷு) முன் ஶ்லோகத்தில் சொன்னது போலவே ப்3ராஹ்மணர் முதலான வர்ணங்களாலும், ஸந்யாஸி முதலான ஆஶ்ரமங்களாலும் வெவ்வேறு ஜாதியைச் சேர்ந்த உயிர்களிடத்தும். (ப்ருத2க்த்வேந ப்ருத2க்3வித4ாந்) ப்3ராஹ்மணர் முதலான ஶரீர அமைப்புக்களின் தனித் தன்மையாலும், வெளுப்பு சிவப்பு குட்டை நெட்டை முதலான கு3ணங்களின் வேறுபாட்டாலும் வெவ்வேறானவர்களாக, (நாநாப4ாவாந் யத் ஜ்ஞாநம் வேத்தி) பலராயிருக்கும் ஜீவர்களை, எந்த அறிவானது அறிகிறதோ. சென்ற ஶ்லோகத்திற் போலே 'ப4ாவ' ஶப்3த3ம் ஆத்மவஸ்துக்களைக் குறிக்கிறது. 'நாநா' என்னும் விஶேஷணம் அவர்கள் 'பலர்' என்று காட்டுகிறது. 'ப்ருத2க்த்வேந' என்னும் பத3ம் ஜாதிபே4த3த்தையும் 'ப்ருத2க்3வித4ாந்' என்னும் பத3ம் கு3ணம் முதலானவற்றின் பே4த3த்தையும் காட்டுகிறது: ஆகையாலே புநருக்தியில்லை. சென்ற ஶ்லோகத்தில் ஸாத்விகஜ்ஞாநத்தை விளக்கும்போது 'அவ்யய' ஶப்3த3த்தாலே ப2லஸம்யோக3மாகிற விகாரமற்றதாக ஆத்மாவை அறியும் பெருமை கூறப்பட்டது; அதற்கு எதிர்த்தட்டாக இங்கு ப2லஸம்யோக3த்தை உடையதாக ஆத்மாவை அறியும் தன்மை இந்த ராஜஸஜ்ஞாநத்திற்கு உபலக்ஷணமுறையாலே இங்கு உணர்த்தப்படுவதாகக்கொள்ளவேண்டும். (யத் ஜ்ஞாநம் வேத்தி தத் ராஜஸம் வித்3தி4) யாதொரு அறிவானது கர்மங்களை அநுஷ்டி2க்கும் வேளையில் இவ்வண்ணம் அறிகிறதோ, அதை ரஜோகு3ணத்தால் உண்டாகும் ராஜஸஜ்ஞாநம் என்று தெரிந்து கொள்வாயாக. (ஜ்ஞாநம் வேத்தி) "எந்த ஜ்ஞாநம் அறிகிறதோ" என்று அறிவில் கர்த்ருத்வத்தை ஏறிட்டு உபசார வழக்காகச் சொல்லப்படுகிறது. "எந்த ஜ்ஞாநத்தால் இவ்வண்ணம் அறிகிறானோ" என்று கருத்து. 21.

यत्तु कृत्स्नवदेकस्मिन् कार्ये सक्तमहैतुकम् ।
अतत्त्वार्थवदल्पं च तत्तामसमुदाहृतम् ॥ २२ ॥

22. யத்து க்ருத்ஸ்நவதே3கஸ்மிந் கார்யே ஸக்தமஹைதுகம் |
அதத்வார்த்த2வத3ல்பம் ச தத் தாமஸமுதா3ஹ்ருதம் ||

யத் து — யாதொரு அறிவானது, ஏகஸ்மிந் கார்யே— (இறந்தவர்களையும் பூ1தங்களையும் ஆராதிப்பதாகிற மிகக் குறைந்த பலனையுடைய) ஒரு செயலில், க்ருத்ஸ்நவத் — நிறைந்த ப2லனை அளிக்கும் செயலிற்போலே, ஸக்தம் — ஈடுபடுவதாய், அஹேதுகம் — (இப்படி ஈடுபடக்) காரண மற்றதாய், அதத்வார்த்த2வத் — (ஆத்மாக்களைவேறுபாடுகள் உடையதாகக் காண்கையாகிற) பொய்யைப்பற்றி நிற்ப தாய், அல்பம் ச— மிகத் தாழ்ந்ததாய் இருக்கிறதோ, தத்— அந்த அறிவு, தாமஸம் உதா3ஹ்ருதம்—(தமோ கு3ணத்தா லுண்டான) தாமஸ ஜ்ஞாநம் என்று சொல்லப்படுகிறது.

---

22. ஏதேனு மோர்கருமத் தெல்லாம் பெறலாமென்
றுதே நசைபண்ணி யற்பமாய் - மீதேயோர்
மெய்ம்மை யடையா வெறுமறிவு பிற்குணத்திற்
பொய்ம்மை பயனும புணர்ந்து.

ஏதேனும் ஓர் கருமத்து — (இறந்தவர்களையும் பூ1தங் களையும் ஆராதிப்பதாகிற) மிகக்குறைந்த ப2லனையுடைய ஒருசெயலில், எல்லாம் பெறலாம் என்று — நிறைந்த எல்லாப் ப2லனையும் பெறலாம் என்று எண்ணி, ஆதே நசை பண்ணி — அச்செயலிலேயே ஈடுபட்டு, அற்பமாய் — மிகத்தாழ்ந்ததாய், மீதே ஓர் மெய்ம்மையடையா — (முன்பாட் டில் சொன்னது போலே ஆத்மாக்களை வேறுபாடுகள் உடையதாகக் காண்கையாகிற) பெரியதோர் பொய்யைப் பற்றி நிற்பதாய், வெறும் அறிவு - (முற்கூறியபடி தாழ்ந்த செயலில் ஈடுபடக்) காரணமும் அற்றதான அறிவு; பின் குணத்தில் புணர்ந்து—கடைக்குணமான தமோ கு3ணத்தி னால் உண்டாகி, பொய்ம்மை பயனும் — விபரீதமான ப2லனைக் கொடுக்கும்.

भा ॥ यत्तु—ज्ञानम्, एकस्मिन् कार्ये—एकस्मिन् कर्तव्ये कर्मणि प्रेतभूतगणाद्याराधनरूपे अत्यल्पफले कृत्स्नफलवत् सक्तम्,

---

22. தமோகு₃ணத்தாலுண்டாகும் தாமஸஜ்ஞாநத்தை விளக்குகிறுன். (யத்து) யாதொரு ஜ்ஞாநமோவெனில்; முன் ஶ்லோகத்திலிருந்து 'ஜ்ஞாந' ஶப்₃த₃த்தை வருவித்துக் கொள்ளவேண்டும். 'து' ஶப்₃த₃ம் முற்கூறிய ஸாத்விக ராஜஸ ஜ்ஞாநங்களைக் காட்டிலும் இந்தத் தாமஸஜ்ஞாநம் மிகத்தாழ்ந்தது என்று காட்டுகிறது. (ஏகஸ்மிந் கார்யே ஸக்தம்) ''ப்ரேதாந் பூ₄தக₃ணாம்ஶ்சாந்யே யஜந்தே தாமஸா ஜநா:'' [கீதை 17-4] [ஸாத்விக ராஜஸர்களைக் காட்டிலும் வேறுபட்ட தாமஸஜநங்கள் இறந்தவர்களையும் பூ₄தக₃ணங்களையும் ஆராதிக்கிருர்கள்.] என்று முன் சொன்னபடியே இறந்தவர்களையும் பூ₄தக₃ணங்களையும் ஆராதி₄ப்பதாகிற மிகச்சிறிய பயனையளிக்கும் ஒரு செயலில் ஈடுபட்டிருப்பது. வேதங்களில் விதிக்கப்பெற்ற கர்மங்களைப்பற்றிய இந்த ப்ரகரணத்தில் ''கார்யே ஸக்தம்'' [காரியத்தில் ஈடுபடுவது] என்று கூறுகையால் இங்கு 'கார்ய' ஶப்₃த₃ம் செயலைக்குறிக்கிறது; உத்பத்தி முதலானவற்றைக் குறிக்காது. இந்த ஈடுபாடு தகாது என்று இந்த வாக்யத்தில் உணர்த்தப்படுகையால் 'ஏகஸ்மிந் கார்யே' என்று இங்கு கூறியது கீதை (17-4) ஶ்லோகம் பிற்பாதியில் தாமஸ ஜனங்களுக்குக் கூறப்பட்ட ப்ரேத பூ₄தக₃ணங்களின் ஆராத₄னமாகிற தாழ்ந்த செயலே இத்தொடரால் குறிக்கப்படுகிறது என்று விளங்குகிறது. 'ஏக' ஶப்₃த₃ம் மிகக்குறைந்த பயனை அளிப்பது என்னும் பொருளை உணர்த்துகிறது (க்ருதஸ்நவத் ஸக்தம்) நிறைந்த பலனை அளிக்கும் செயலில் ஈடுபடுவதுபோல் ஈடுபடுகிறது. 'க்ருத்ஸ்நவத்' என்பதற்கு 'நிறைந்த செயலிற்போலே' என்று பொருளாகுமாயினும் இங்கு எதிர்த்தட்டாக எடுக்கப்பட்டது குறைந்த பயனுடைய செயலாகையாலே, இதற்கும் ''பயனையிட்டு நிறைந்த செயலிற்போலே,'' அதாவது 'நிறைந்த பயனுடையசெயலிற்போலே' என்றே பொருள் கொள்ளவேண்டும். (அஹேதுகம்) உண்மையில் குறைந்த பயனுடையதாகையால், இந்த ஈடுபாடு காரணமுமற்றது என்றபடி. தமோகு₃ணத்தினுல் உண்டாகும்

अहेतुकम्- वस्तुतस्त्वकृत्स्नफलवत्तया तथाविधसङ्गहेतुरहितम्, अतत्त्वार्थवत् —पूर्ववदेवात्मनि पृथक्त्वादियुक्ततया मिथ्याभूतार्थविषयम्, अत्यल्पफलं च प्रेतभूताद्याराधनविषयत्वादल्पं च, तज्ज्ञानं तामसमुदाहृतम् ॥ २२ ॥

---

ஜ்ஞாநத்திற்கோ இந்த ஈடுபாட்டிற்கோ காரணமில்லையென்று கூறுவது பொருந்தாதாகையாலே, "ஆராய்ந்தால் குறைந்த பயனுடைய இச்செயலில் ஈடுபடுவதற்கு உண்மையில் எக்காரணமும் இல்லை." என்று பொருள் கொள்ளப்பட்டது. "அஹைதுகம்" என்றும் பாடம். காரணமுள்ளதாகிற ஹைதுகத்தைக் காட்டிலும் வேறுபட்டது என்று பொருள். அப்போதும் முற்கூறியபடியே கருத்துரைக்கவேண்டும். (அதத்த்வார்த்தவத்) ராஜஸ ஜ்ஞாநத்தைப்போலவே ஆத்மாக்களை ஜாதிகுணங்களின் வேறுபாடுகளையிட்டு வேருகக் காண்கையாகிற பொய்யைப் பற்றி நிற்பது. இவ்விஷயத்தில் இந்தத் தாமஸ ஜ்ஞாநம் ராஜஸ ஜ்ஞாநத்தை ஒத்தது என்று கருத்து. (அல்பம் ச) முற்பாதியில் கூறியபடி மிகக்குறைந்த பலனையுடையதாய் இருப்பதோடன்றியில் மிகத்தாழ்ந்ததாகவும் இருக்கிறது என்று கருத்து. முற்பாதியில் பலத்தையிட்டுத் தாழ்வும் இங்கு ஸ்வரூபத்திஞல் தாழ்வும் சொல்லப்படுகிறதாகையாலே புனருக்தியில்லை. இறந்தவர்களையும் பூதகணங்களையும் ஆராதிப்பதைப் பற்றிநிற்பதால் இந்த ஜ்ஞாநம் மிகத்தாழ்ந்ததாகவும் இருக்கிறதன்றே! (தத் தாமஸம் உதாஹ்ருதம்) அந்த அறிவு தாமஸ ஜ்ஞாநம் என்று சொல்லப்படுகிறது. "ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம்" [14-17] என்று இந்த கீதையிலேயே 'ஸத்வகுணத்தால் உண்டாவதே ஜ்ஞாநமாகும்' என்று சொல்லியிருக்க, ராஜஸ ஜ்ஞாநம், தாமஸ ஜ்ஞாநம் என்று இங்கு சொல்லுவது முரண்படாதோ? எனில்; அந்யதா ஜ்ஞாநம் விபரீத ஜ்ஞாநம் ஆகியவையும் ஜ்ஞாநம் என்று வழங்கப்படுகையாலே குறையில்லை. ஸத்வகுணத்தால் உண்டாவதே உண்மையறிவு என்றும், மற்றவை பொய்யறிவு என்றும் கண்டுகொள்வது, "ஏதத் ஜ்ஞாநமிதி ப்ரோக்தம் அஜ்ஞாநம் யததோऽந்யதா" [13-11] [இதுவே ஜ்ஞாநம் என்று சொல்லப்படுகிறது; மற்ற அறிவுகளெல்லாம் அஜ்ஞாநமேயாகும்] என்று கீதையிலேயே சொல்லப்பட்டதன்றே. 22.

ஸங்கம் = பற்றுதல் (மமதா, கர்த்ருத்வம்)



भा ॥ एवं कर्तव्यकर्मविषयज्ञानस्याधिकारवेलायामधिकार्यंशेन गुणतस्त्रैविध्यमुक्त्वा अनुष्ठेयस्य कर्मणो गुणतस्त्रैविध्यमाह —

नियतं सङ्गरहितमरागद्वेषतः कृतम् ।
अफलप्रेप्सुना कर्म यत्तत्सात्त्विकमुच्यते ॥ २३ ॥

21-8-09. 15-11-10

23. நியதம் ஸங்க₃ரஹிதம் அராக₃த்₃வேஷத: க்ருதம் |
அப₂லப்ரேப்ஸுநா கர்ம யத்தத் ஸாத்விகமுச்யதே ||

யத் கர்ம — யாதொரு கர்மமானது, நியதம் — (தத்தம் வர்ணாஶ்ரமங்களுக்கு) உரியதாயிருக்கிறதோ, ஸங்க₃ரஹிதம் — (நான் கர்த்தா, என்னுடையது கர்மம் என்னும்) பற்றற்று இருக்கிறதோ, அராக₃த்₃வேஷ த: க்ருதம் — புகழில் விருப்பத்தாலோ இகழ்வில் வெறுப்பாலோ செய்யப்படாததாயிருக்கிறதோ, அப₂லப்ரேப்ஸுநா (க்ருதம்) — ப₂லனில் விருப்பமில்லாதவனுல் செய்யப்பட்டதோ, தத் — அந்தக் கர்மம், ஸாத்விகம் உச்யதே — ஸாத்விக கர்மம் எனப்படுகிறது.

---

23. உகப்புவெறுப் பின்றி யுயர்நசையு மற்றே
மிகத்தனியல் வாமென்று மேவி — யகப்பயனி
லாசையொழிந் தாங்கியலு மக்கரும முற்குணத்திற்
பேசவரு மேலுயர்த்தி பெற்று.

உகப்பு வெறுப்பு இன்றி — புகழில் விருப்பமோ இகழ்வில் வெறுப்போ இல்லாமல், உயர்நசையும் அற்றே — (நான் கர்த்தா என்னுடையது கர்மம் என்னும்) மிகுதியான பற்றும் இல்லாமல், தன் இயல்வாம் என்று — தன் வர்ணாசிரமத்திற்கு உரியதாம் என்று, மிக மேவி — மிகவும் ஈடுபட்டு, அகப்பயனில் ஆசை ஒழிந்து — அதற்கு உரிய ப₂லனில் ஆசையில்லாமல், ஆங்கு இயலும் அக்கருமம் — கர்மாதி₄கார வேளையில் செய்யப்படும் அக்கர்மம், முற்குணத்தின் — முதற்குணமாகிற ஸத்வகு₃ணத்தின், மேல் உயர்த்தி பெற்று — மிகுந்த சிறப்பைப் பெற்று, பேச வரும் — (ஸாத்விக கர்மம் என்று) சொல்லப்படும்.

भा ।। नियतम् — स्ववर्णाश्रमोचितम्, सङ्गरहितम् — कर्तृत्वादि-सङ्गरहितम्, अरागद्वेषतः कृतम् — कीर्तिरागादकीर्तिद्वेषाच्च न कृतम्, अदम्भेन कृतमित्यर्थः; अफलप्रेप्सुना — अफलाभिसन्धिना कार्यमित्येव कृतं यत्कर्म, तत्सात्त्विकमुच्यते ।। २३ ।।

---

23. சென்ற மூன்று ஶ்லோகங்களாலே கர்மாதி4காரம் உள்ள போது கர்மத்தைச் செய்பவனின் தன்மையையிட்டு, செய்யப்படும் கர்மத்தைப் பற்றிய ஜ்ஞாநமானது ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று மூன்று வகைப்பட்டிருக்கும் என்று சொல்லப்பட்டது. இனி மூன்று ஶ்லோகங்களாலே, செய்யப்படும் கர்மம் முக்குணங்களையிட்டு மூன்று வகைப்படும் என்று சொல்லப்படுகிறது. அதில் இந்த ஶ்லோகம் ஸாத்விக கர்மத்தை விளக்குகிறது. (யத் கர்ம) யாதொரு கர்மமானது. (நியதம்) தம்முடைய வர்ணாஶ்ரமங்களுக்கு உரியதோ. (ஸங்க3ரஹிதம்) 'நான் செய்பவன்' 'என்னுடையது கர்மம்' என்னும் பற்று இல்லாமலிருக்கிறதோ. 'ஸங்க3' ஶப்3த3ம் பொதுவாக எல்லாப்பற்றையும் குறிக்குமாயினும் இங்கு ப்ரகரணத்தையொட்டி 'நான் கர்த்தா,' 'என்னுடைய கர்மம்' 'எனக்குரியது ப2லம்' என்னும் மூன்று பற்றுக்களையும் குறிப்பதே பொருத்தம். அந்த மூன்றிலும் 'அப2லப்ரேப்ஸுநா' என்று ப2லத்தைப்பற்றி மேலே தனியாக எடுக்கப்பட்டு விடுகிறபடியால், இங்கு பற்ற இரண்டு பற்றுக்களையுமே குறிக்கிறது. ஆகையால் 'ஸங்க3ரஹிதம்' என்பது 'நான் செய்பவன்' 'என்னுடைய கர்மம்' என்னும் பற்று இல்லாமல் எந்தக் கர்மம் இருக்கிறதோ என்று பொருள்படுகிறது. மேலே ஸாத்விக கர்த்தாவைச் சொல்லும்போது "முக்தஸங்க3: அநஹம்வாதீ3" [26] என்று கர்த்தாவுக்குச் சொல்லப்படும் பற்றற்ற தன்மை அந்தக் கர்த்தாவின் தொடர்பையிட்டு இங்கு கர்மத்திற்குச் சொல்லப்படுகிறது. (அராக3த்3வேஷத: க்ருதம்) புகழில் விருப்பத்தாலோ, இகழ்வில் வெறுப்பாலோ எந்தக் கர்மம் செய்யப்படாமலிருக்கிறதோ. ஆடம்பரத்திற்காகச் செய்யப்படாமலிருக்கிறதோ என்று கருத்து. "த3போ த3ம்பே4ந சைவ யத்" [17-18] என்று ஆடம்பரத்திற்காகச் செய்யப்பட்டது 'ராஜஸம்' என்று சொல்லப்பட்டதன்றோ. விருப்பு வெறுப்பில்லாமல் செய்யப்படுகிறது என்று பொதுவாக இருந்தபோதிலும், ப்3ரஹ்மத்திடம் விருப்பாலும் ஸம்ஸாரத்தில் வெறுப்பாலும் செய்யப்படுவதும்

यत्तु कामेप्सुना कर्म साहङ्कारेण वा पुनः ।
क्रियते बहुलायासं तद्राजसमुदाहृतम् ॥ २४ ॥

24. யத்து காமேப்ஸுநா கர்ம ஸாஹங்காரேண வா புந: ।
க்ரியதே ப₃ஹுலாயாஸம் தத்₃ராஜஸமுத₃ாஹ்ருதம் ॥

யத் கர்ம து — யாதொரு கர்மம், காமேப்ஸுநா — ப₂லனை விரும்பியும், புந: ஸாஹங்காரேண வா — 'நான் செய்பவன்' என்னும் அபி₄மாநத்தோடும், ப₃ஹுலாயாஸம் — பெருமுயற்சியோடு, க்ரியதே — செய்யப் படுகிறதோ, தத் — அந்தக் கர்மம், ராஜஸம் உத₃ாஹ்ருதம் — ராஜஸ கர்மம் என்று சொல்லப்படுகிறது.

---

24. காமநசை தன்ன லகங்காரக் காழ்ப்பினிற்
றுமருவு மாயாசந் தான்மிக்குச் — சேமமென
நின்றியலு மக்கரும நேர்ந்தே யிடைக்குணத்திற்
சென்றியலு மென்றுரைப்பர் தேர்ந்து.

காமநசைதன்னல் — பலனில் விருப்பத்தாலும், அகங் காரக் காழ்ப்பினில் — 'நான் செய்பவன்' என்னும் அபி₄ மாநத்தோடும், தாம் மருவும் ஆயாசம் தான் மிக்கு — தாம் செய்யும் பெருமுயற்சியோடு, சேமம் என நின்று இயலும் — தனக்கு நன்மையளிப்பது என்னும் எண்ணத்துடன் உறுதி

---

ஸாத்விக கர்மமேயாகையாலே, இங்கு 'புகழில் விருப்பாலும், இகழ்வில் வெறுப்பாலும் செய்யப்படும் கர்மம் என்று பொருள் கொள்ளப்பட்டது. (அராக₃த்₃வேஷத: க்ருதம்) முதலிலுள்ள அகாரத்தைத் தனிப்பதமாகக் கொண்டு 'விருப்பு வெறுப்பினல் செய்யப்படாதது' என்று பா₄ஷ்யத்தில் பொருள்கொள்ளப்பட்டது. அல்லது இப்பொருளைத் தாத்பர்யார்த்தமாகவும் கொள்ளலாம். (அப₂லப்ரேப்ஸுநா க்ருதம் யத் கர்ம) யாதொரு கர்மம் பலனில் விருப்பமில்லாதவனல் செய்யப்படுகிறதோ. பலனில்விருப்பமில்லாமல் 'இதைச் செய்யவேண்டியது நம்கடமை' என்னும் ஸாத்விக த்யாக₃த்தோடு செய்யப்படுகிறது என்று கருத்து. (தத் ஸாத்விகம் உச்யதே) அந்தக் கர்மம் ஸாத்விக கர்மம் எனப்படுகிறது. 23.

मा ।। यत्तु पुनः कामेप्सुना—फलप्रेप्सुना साहंकारेण वा; वाशब्दश्चार्थे, कर्तृत्वाभिमानयुक्तेन च, बहुलायासं यत्कर्म क्रियते, तद्राजसम्-बहुलायासमिदं कर्म मयैव क्रियत इत्येवंरूपाभिमानयुक्तेन यत्कर्म क्रियते, तद्राजसमित्यर्थः ।। २४ ।।

---

யாகச் செய்யப்படும். அக்கருமம்—அந்தக்கர்மம், இடைக் குணத்தில் நேர்ந்தே சென்று இயலும் — நடுக்குணமாகிற ரஜோகு3ணத்தால் உண்டானதாகச்செயல்படும், என்று தேர்ந்து உரைப்பர்-என்று (அறிவாளிகள்) ஆராய்ந்துக் கூறுவர்.

---

24. ராஜஸமான கர்மத்தை விளக்குகிருன். (யத் கர்ம து) யாதொருகர்மமானது; து ஶப்3த3ம் ஸாத்விக கர்மத்தைக் காட்டிலும் வேறுபாட்டைத் தெரிவிக்கிறது. (காமேப்ஸுநா க்ரியதே) பலனை விரும்புகின்றவனால் செய்யப்படுகின்றதோ. ஸாத்விக கர்மத்தை விளக்கும் சென்ற ஶ்லோகத்தில் 'அப2லப்ரேப்ஸுநா' என்ற பத3த்தால் சொல்லப்பட்ட ப2லனில் விருப்பமின்மைக்கு எதிர்த் தட்டான ப2லனில் விருப்பத்தை இப்பத3ம் தெரிவிக்கிறது. (புநஃ ஸாஹங்கரரேண வா யத் கர்ம க்ரியதே) 'நான் செய்பவன்' என்னும் அபி4மானத்தோடும் எந்தக்கர்மம் செய்யப்படுகிறதோ. 'அல்லது' என்னும் பொருள் இங்கு பொருந்தாதாகையாலே 'வா' ஶப்3த3ம் இங்கு'ச'காரத்தின் பொருளையுடையது. சென்ற ஶ்லோகத்தில் 'ஸங்க3ரஹிதம்' என்னும் பத3த்தால் ஸாத்விக கர்மத்திற்கு 'நான் செய்தேன்' 'என்னுடைய கர்மம்' என்னும் பற்றின்மை சொல்லப் பட்டது. அதற்கு எதிர்த்தட்டான இப்பத3ம் அப்பற்றுகள் இங்கு உண்டு என்று காட்டுகிறது. (ப3ஹுலாயாஸம் யத் கர்ம க்ரியதே) மிகுந்த முயற்சியோடு யாதொரு கர்மம் செய்யப்படுகிறதோ, முயற்சியை விளைக்கும் ரஜோகு3ணத்தால் உண்டாவதாகையாலும், பயனற்ற முயற்சியும் சேர்ந்திருக்கையாலும், "ப3ஹுலாயாஸம்"எனப் படுகிறது. இந்த முயற்சி அனைத்துக்கும் தானே காரணம் என்னும் அபி4மானம் 'ஸாஹங்கார' ஶப்3த3த்தாலே உணர்த்தப்படுகிறது. (தத் ராஜஸம் உதா3ஹ்ருதம்) பெருமுயற்சியோடு கூடிய இந்தக் கர்மம் என்னாலேயே செய்யப்படுகிறது என்னும் அபி4மானத்தோடு கூட யாதொரு கர்மம் செய்யப்படுகிறதோ அது ராஜஸ கர்மம் எனப்படுகிறது. 24.

अनुबन्धं क्षयं हिंसामनवेक्ष्य च पौरुषम् ।
मोहादारभ्यते कर्म यत्तत्तामसमुच्यते ॥ २५ ॥

25. அநுபந்தம் க்ஷயம் ஹிம்ஸாமநவேக்ஷ்ய ச பௌருஷம் ।
மோஹாதாரப்யதே கர்ம யத் தத் தாமஸமுச்யதே ॥

யத் கர்ம — யாதொரு கர்மம், அநுபந்தம்—கூடவே வரும் துன்பத்தையும், க்ஷயம் — பொருளழிவையும், ஹிம்ஸாம் — உயிர்களுக்குப் பீடையையும், பௌருஷம் ச — (தன்னுடைய) செயல் முடிக்கும் திறனையும், அநவேக்ஷ்ய — ஆராயாமல், மோஹாத் — (பரம புருஷனே செய்விக்கிருன் என்று) அறியாமல், ஆரப்யதே — தொடங்கப்படுகிறதோ, தத் — அந்தக்கர்மம், தாமஸம் உச்யதே—தாமஸ கர்மம் எனறு சொல்லப்படுகிறது.

---

25. துக்கத் தொடர்ச்சி பொருணசஞ் சூழ் பீடை
யொக்க வியல்வலிதா னென்றினையுங்—தக்கறியான்
மோகத்தாற் செய்கரும முண்டேற் கடைக்குணத்தின்
வேகத்தா லாகுமே மிக்கு.

துக்கத்தொடர்ச்சி —தொடர்ந்துவரும்துன்பம், பொருள் நாசம் — பொருளழிவு, சூழ் பீடை — (தனக்கும் பிற உயிர்களுக்கும்) உண்டாகும் ஹிம்ஸை. ஒக்க இயல் வலிதான்—(தன்னுடைய)செயல் முடிக்கும் திறன், ஒன்றினையும் — ஆகிய எதையும், தக்கறியான் — நன்கு அறியாமல், மோகத்தால் — (பரமபுருஷன் செய்விக்கிருன் என்னும்) அறிவில்லாமல், செய்கருமம் உண்டேல் — செய்யப்படும் கர்மம் இருந்ததானல் (அது), கடைக்குணத்தின் வேகத்தால் மிக்கு ஆகுமே — மூன்ருவது குணமான தமோ குணத்தின் வேகத்தால் மிகவும் உண்டாகும் தாமஸ கர்மம் ஆகும்.

भा ॥ कृते कर्मण्यनुबध्यमानं दुःखमनुबन्धः; क्षयः – कर्मणि क्रियमाणे अर्थविनाशः; हिंसा–तत्र प्राणिपीडा; पौरुषम् – आत्मनः कर्मसमापनसामर्थ्यम्; एतानि अनवेक्ष्य – अविमृश्य, मोहात् – परमपुरुषकर्तृत्वाज्ञानात् यत्कर्मारभ्यते, तत्तामसमुच्यते ॥ २५ ॥

---

25. தாமஸ கர்மத்தை விளக்குகிறான். (யத் கர்ம) யாதொரு கர்மமானது. (அநுப3ந்த4ம் அநவேக்ஷ்ய ஆரப்4யதே) கர்மம் செய்யப்பட்டபின் தொடர்ந்து வரும் துன்பத்தை ஆராயாமல் தொடங்கப்படுகிறதோ; கர்மம் செய்யும்போது ஏற்படும் பொருளழிவு அடுத்துள்ள 'க்ஷய' ஶப்3த3த்தாலே சொல்லப்படுகையாலும், 'அநுப3ந்த4ம்' என்னும் இப்பத3த்திலுள்ள 'அநு' என்னும் உபஸர்க்க3த்தின் ஸ்வாரஸ்யத்தாலும் இப்பத3ம் கர்மம் செய்ததற்குப் பின் தவிர்க்க முடியாமல் தொடர்ந்துவரும் துன்பத்தைக் குறிக்கிறது. (க்ஷயம் அநவேக்ஷ்ய ஆரப்4யதே) கர்மம் செய்யும் போது ஏற்படும் பணச்செலவாகிற தோ3ஷத்தையும் ஆராயாமல் தொடங்கப்படுகிறதோ. (ஹிம்ஸாம் அநவேக்ஷ்ய ச ஆரப்4யதே) தனக்கும் பிற உயிர்களுக்கும் சரீரப்பீடை, மனப்பீடை ஆகியவை உண்டாவதை ஆராயாமல் தொடங்கப்படுகிறதோ. 'ஹிம்ஸா' என்று பொதுவாகச் சொல்லியிருக்கையாலே தனக்கும் பிறர்க்கும் உண்டாகும் பீடைகளைச் சொல்லுகிறது. தாமஸர்கள் ப்ரேத பூ4தக3ணங்களை ஆராதிப்பதற்காகச் செய்யும் கர்மங்களில் துன்பமும் பொருளழிவும் உயிர்ப்பீடையும் மிகுதியாக ஏற்படுகின்றனவன்றோ. (பௌருஷம் அநவேக்ஷ்ய ச ஆரப்4யதே) தன்னிடம் உள்ள செயல் முடிக்கும் திறமையை ஆராயாமலும் தொடங்கப்படுகிறதோ. விதி4யைக்குறிக்கும் 'தை3வ' ஶப்3த3த்திற்கு எதிர்த்தட்டான 'பௌருஷ' ஶப்3த3ம் இங்கு புருஷனுடைய செயல்முடிக்கும் திறமையைக் குறிக்கிறது. (மோஹாத் ஆரப்4யதே) 'பரமபுருஷனே செய்விக்கிறான்' என்று அறியாமல் எந்தக் கர்மம் தொடங்கப்படுகிறதோ. துன்பம் முதலான அஜ்ஞாநங்கள் முற்பாதியில் சொல்லப்பட்டுவிட்டபடியால், இங்கு அகர்த்ருத்வாநுஸந்த4ான ப்ரகரணமாகையாலே சொல்லப்படும் அஜ்ஞாநம் 'பரமபுருஷன் செய்விக்கிறான்' என்று அறியாமையே ஆகும். (தத் தாமஸம் உச்யதே) முற்கூறியபடி தொடங்கப்படும் கர்மம் தாமஸகர்மம் எனப்படுகிறது. 25

मुक्तसङ्गोऽनहंवादी धृत्युत्साहसमन्वितः ।
सिद्ध्यसिद्ध्योर्निर्विकारः कर्ता सात्त्विक उच्यते ॥ २६ ॥

21-8-09. 17-11-10.

26. முக்த ஸங்கோ₃(அ)நஹம்வாதீ₃ த்₄ருத்யுத்ஸாஹ ஸமந்வித: ।
ஸித் த்₄யஸித்₃த்₄யோ: நிர்விகார: கர்த்தா ஸாத்விக உச்யதே ॥

முக்தஸங்க₃:—ப₂லனில் விருப்பமற்றவனாய், அநஹம் வாதீ₃—'நான் செய்கிறேன்' என்னும் அபி₄மானமற்ற வனாய், த்₄ருத்யுத்ஸாஹ ஸமந்வித:—தவிர்க்கவொண்ணாத துன்பத்தைப் பொறுக்கும் தன்மையாகிற த்₄ருதி, முயற்சி யுடைய மனமுடையவனாயிருக்கையாகிற உத்ஸாஹம் ஆகியவற்றோடு கூடியவனாய், ஸித்₃த்₄யஸித்₃த்₄யோ: நிர் விகார:—பயன் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் விகார மற்றவனாய் உள்ள, கர்த்தா—செயல் புரிபவன், ஸாத்விக: உச்யதே—ஸாத்விக கர்த்தா என்று சொல்லப்படுகிறான்.

---

26. ஆர்ந்தபய னாசை யதுவிட் டகங்காரந்
தீர்ந்துதிட னாய்முயற்றி சென்றியன்று—சேர்ந்துவரும்
பேறிழவில் வேறுபடாப் பீடுடைய கர்த்தாவாம்
வீறியலுஞ் சத்துவத்தான் மிக்கு.

ஆர்ந்த பயன் ஆசை அதுவிட்டு—காமத்திற்கு உரிய ப₂ல னில் விருப்பத்தை விட்டு, அகங்காரம் தீர்ந்து — 'நான் செய்கிறேன்' என்ற அபி₄மானமும் இல்லாமல், திடனாய் முயற்றி சென்று இயன்று-தவிர்க்கவொண்ணாத துன்பத்தைப் பொறுத்திருக்கையாகிற தைரியம், முயற்சியுடையமனமுடை யவனாயிருக்கையாகிற உத்ஸாஹம் ஆகியவற்றோடு கூடிய வனாய், சேர்ந்து வரும் பேறு இழவில் வேறுபடாப் பீடுடைய— கர்மத்தையொட்டிவரும் பயன் கிடைப்பதிலும், கிடைக்கா மல் போவதிலும் விகாரமற்றிருக்கும் பெருமையுடைய, கர்த் தா—செயல் புரிபவன், மிக்கு வீறு இயலும் சத்துவத்தான் ஆம்—மிகவும் பெருமை பெற்ற ஸாத்விக கர்த்தா ஆகிறான்.

भा ॥ मुक्तसङ्गः—फलसङ्गरहितः, अनहंवादी—कर्तृत्वाभिमानरहितः, धृत्युत्साहसमन्वितः—आरब्धे कर्मणि यावत्कर्मसमाप्त्यवर्जनीयदुःखधारणं धृतिः, उत्साहः—उद्युक्तचेतस्त्वम्, ताभ्यां समन्वितः,

---

26. இனி, மூன்று ஶ்லோகங்களாலே முறையே ஸாத்விக ராஜஸ தாமஸ கர்த்தாக்களை விளக்குகிறான். (முக்தஸங்க$_3$:) தான் செய்யும் கர்மத்தின் பலனில் பற்று இல்லாதவன். அடுத்த படி "அநஹம்வாதீ$_3$" என்று "நான் கர்த்தா" என்னும் அபி$_4$மானம் இல்லாதவன் என்று கூறப்போகிறபடியால், இங்கு பலனில் விருப்பமில்லாமையைக் கூறுவதாகக் கொள்ளவேண்டும். இதனால் 'இந்தக்கர்மம் என்னுடையது' என்னும் பற்றும் இல்லாதவன் என்று தன்னடையே தேறுகிறது. (அநஹம்வாதீ$_3$) 'நான் கர்த்தா' என்னும் அபி$_4$மானமில்லாதவன். "நான்" என்று கூறும் இயல்வுடையவன் 'அஹம்வாதீ$_3$' ஆகிறான். கர்த்தாவை விளக்கும் ஶ்லோகமாகையாலே 'நான் கர்த்தா' என்று கூறுபவன் அஹம் வாதீ$_3$ என்று கொள்ளவேண்டும். அவனைக்காட்டிலும் வேறுபட்டவன் 'அநஹம்வாதீ$_3$'; 'நான் கர்த்தா என்று சொல்லாதவன்' என்றபடி. "மந: பூர்வ: வாக் உத்தர:" [தை. ஸம். 7-3 3] [முதலில் மனஸ்ஸும் அடுத்தபடியாக வாக்காகிற இந்திரியமும் செயல்படுகின்றன.] என்று வேத$_3$ம் கூறுகையாலே, இங்கு பேச்சைச் சொன்னது முற்பட்ட மனத்தின் செயலான அபி$_4$மானத்தையும் சொன்னதாகவே ஆகும். ஆகையால் "நான் கர்த்தா" என்னும் அபி$_4$மானமற்றவன் என்று பொருள் தேறுகிறது. (த்$_4$ருத்யுத்ஸாஹ ஸமந்வித:) த$_4$ாரணம், உத்ஸாஹம் ஆகியவற்றோடு கூடியவன். இங்கு கர்த்தாவைப் பற்றிப் பேசுகையால், தொடங்கிய செயலில் அச்செயல் முடியும் வரையில் தவிர்க்க வொண்ணாமல் வரும் துன்பத்தைத் தரித்துநிற்பது "த்$_4$ருதி" எனப்படுகிறது. உத்ஸாஹமாவது—உறுதிகொண்ட நெஞ்சினை உடையனாயிருக்கை. 'உத்ஸாஹ' ஶப்$_3$த$_3$ம் பொதுவாக முயற்சியையே குறிக்குமானாலும், 'கர்த்தா' என்னும் சொல்லாலேயே முயற்சி ஸித்$_3$தி$_4$க்குமாகையாலும், ராஜஸதாமஸ கர்த்தாக்களுக்கும் முயற்சி உண்டாகையாலும், இங்கு 'ஸாத்விக கர்த்தா'வுக்குச் சொல்லப்பட்டுள்ள உத்ஸாஹம் வெறும் முயற்சியைக்காட்டிலும் சிறந்ததான நெஞ்சுறுதியோடு செய்யப்படும் முயற்சியைக் குறிக்கிறது. (ஸித்$_3$த்$_4$யஸித்$_3$த்$_4$யோ: நிர்விகார:) யுத்$_3$த$_4$ம் முதலான செயலிலும், அதற்கு உறுப்பாயிருக்கும் பணம் ஸம்பாதித்தல் முதலான

सिद्ध्यसिद्ध्योर्निर्विकारः — युद्धादौ कर्मणि तदुपकरणभूतद्रव्यार्जनादिषु च सिद्ध्यसिद्ध्योरविकृतचित्तः कर्ता सात्त्विक उच्यते ॥ २६ ॥

रागी कर्मफलप्रेप्सुर्लुब्धो हिंसात्मकोऽशुचिः ।
हर्षशोकान्वितः कर्ता राजसः परिकीर्तितः ॥ २७ ॥

27. ராகீ$_3$ கர்மப$_2$லப்ரேப்ஸுர் லுப்$_3$தே$_4$ா ஹிம்ஸாத்மகோऽஶுசி: ।
ஹர்ஷஶோகாந்வித: கர்த்தா ராஜஸ: பரிகீர்த்தித: ॥

ராகீ$_3$—புகழை விரும்புகின்றவனாய், கர்மப$_2$லப்ரேப்ஸு: — கர்மத்தின் ப$_2$லனை விரும்புகின்றவனாய், லுப்$_3$த$_4$: — (கர்மம் செய்வதற்கு வேண்டிய பணத்தைச் செலவிடுவதில்) கருமியாய் இருப்பவனாய், ஹிம்ஸாத்மக: — பிறரைத் துன்புறுத்திக் கர்மங்களைப் புரிபவனாய், அஶுசி: — (கர்மாநுஷ்ட$_2$ானத்திற்குத் தேவையான) பரிசுத்தியற்றவனாய், ஹர்ஷ ஶோகாந்வித: — (போர் முதலான கர்மங்களில் வெற்றி தோல்விகள் காரணமாக) ஆனந்தமும் வருத்தமும் அடைகிறவனாயுள்ள, கர்த்தா—செயல் புரிகிறவன், ராஜஸ: பரிகீர்த்தித: ராஜஸ கர்த்தா என்று சொல்லப்படுகிறான்.

---

செயல்களிலும் ப$_2$லன் ஸித்$_3$தி$_4$த்தாலும் ஸித்$_3$தி$_4$க்காவிட்டாலும் விகாரமற்ற நெஞ்சையுடையவனாயிருப்பவன். "முக்தஸங்க$_3$:" என்னும் பத$_3$த்தால் ஸ்வர்க்க$_2$ம் முதலான மறுமைப்பலன்களில் பற்றில்லாதவன் என்று கூறிவிட்டபடியால் இங்கு போரில் வெற்றி தோல்வி முதலான இம்மைப்ப$_2$லன்களில் விகாரமடையாதவன் என்றே கொள்ளவேண்டும். "முக்தஸங்க$_3$:" என்னும் பத$_3$த்தாலேயே இம்மை மறுமைப்பலன்களில் பற்றில்லாதவன் என்று சொல்லப்படுகிறதாகில், இங்கு அதன் பயனான விகார மற்றிருக்கையைச் சொல்லுவதாகக் கொள்ளவேண்டும். (கர்த்தா ஸாத்விக உச்யதே) இத்தகைய 'கர்த்தா' ஸாத்விககர்த்தா என்று சொல்லப்படுகிறான். 26.

भा ॥ रागी—यशोर्थी, कर्मफलप्रेप्सुः-कर्मफलार्थी; लुब्धः-कर्मा-पेक्षितद्रव्यव्ययस्वभावरहितः, हिंसात्मकः--परान् पीडयित्वा तैः कर्म

---

27. புகழ்விரும்பிப் புன்பயனை வேண்டிப் பொருளை
மிகவவ்விப் பீடையினை மேவித்—தகவென்னுஞ்
சுத்தியுறு துட்களிப்புச் சோகத் துறுங்கர்த்தா
மத்திய மாங்குணத்தான் மற்று.

புகழ்விரும்பி—புகழை விரும்பி, புன்பயனைவேண்டி — கர்மத்திற்குரிய தாழ்ந்த பயனை வேண்டி, பொருளை மிக வவ்வி – (கர்மம் செய்வதற்குச் செலவிடுவதில் கருமியாய்) பொருளில் மிகவும் ஆசைகொண்டு, பீடையினை மேவி — (கர்மங்கள் புரிவதற்குப்) பிறரைத் துன்புறுத்துகிறவனாய், தகவு என்னும் சுத்தி உருது·(கர்மாநுஷ்டா2நத்துக்குத்) தகுதி அளிக்கும் பரிசுத்தியை அடையாமல், உள்களிப்பு சோகத்து உறும் கர்த்தா -- (போர் முதலான கர்மங்களில் வெற்றி தோல்விகள் காரணமாக) ஆனந்தமும் வருத்தமும் அடைகிறவனாயுள்ள செயல்புரிகிறவன், மற்று மத்தியமாம் குணத்தான் — முற்கூறிய ஸத்வகு3ணத்தைக்காட்டிலும் வேறுபட்ட நடுக்குணமாகிய ரஜோகு3ணத்தையுடைய கர்த்தா ஆவான்.

---

27. ராஜஸ கர்த்தாவை விளக்குகிறான். (ராகீ3) புகழை விரும்புகிறவன். அடுத்துள்ள 'கர்மப2லப்ரேப்ஸு:' என்னும் பத3த்தாலே 'ஶாஸ்த்ரங்களில் சொல்லப்படும் ஸ்வர்க்க3ப2லனை விரும்புகிறவன்' என்று மறுமைப்ப2லனில் விருப்பத்தைக் கூறவிருக்கிறபடியால், இப்பதத்திற்கு ''கர்மம் செய்யும்போது தன்னுடையே வரும் புகழாகிய இம்மைப்பலனை விரும்புகிறவன்'' என்றே பொருள் கொள்ளவேண்டும். (கர்மப2லப்ரேப்ஸு:) கர்மத்தின் ப2லனான ஸ்வர்க்க3ம் முதலானவற்றை விரும்புகிறவன். சென்ற ஶ்லோகத்தில் ஸாத்விககர்த்தாவுக்கு ''முக்தஸங்க3:'' என்று ப2லனில் விருப்பமின்மை கூறப்பட்டது. அவனுக்கு நேர்மாறாக ஸ்வர்க்க3ம் முதலான ப2லனில் விருப்பமுடையவன் இவன் என்று தேறுகிறது.

कुर्वाणः, अशुचिः-कर्मापेक्षितशुद्धिरहितः, हर्षशोकान्वितः-युद्धादौ कर्मणि जयादिसिद्ध्यसिद्ध्योर्हर्षशोकान्वितः कर्ता राजसः परिकीर्तितः ॥ २७ ॥

---

(லுப்3த4:) பொருளில் ஆசைகொண்டவனுகையாலே கர்மம் செய்வதற்குத் தேவையான பணத்தைச் செலவிடும் இயல்பு இல்லாதவன் "லுப்3த4" ஶப்3த3ம் பணத்தைச்செலவிடும் இயல்பு இல்லாதவனைப் பொதுவாகக் காட்டுமாயினும், இங்கு கர்மத்தைப்பற்றிப் பேசுகையாலே 'கர்மத்திற்குத் தேவையான பணத்தைச் செலவிடும் இயல்பு இல்லாதவன்' என்று பொருள் கொள்ளப்பட்டது. தகாதவர்கள் விஷயத்தில் பணத்தைச் செலவிடாமல் இருப்பது கு3ணமாகும். இங்கு ராஜஸ கர்த்தாவைப் பற்றிக் கூறுகையாலே அப்பொருள் பொருந்தாது. முற்கூறியபடியே பொருள் கொள்ள வேண்டும். (ஹிம்ஸாத்மக:) பிறரைத் துன்புறுத்தி அவர்களைக் கொண்டு கர்யத்தைச் செய்பவன். கர்மம் செய்பவனைப் பற்றிய தாகையாலே, 'பிறரைத் துன்புறுத்துபவன்' என்று மாத்திரம் பொருள் கொள்ளாமல் 'பிறரைத் துன்புறுத்தி அவர்களைக் கொண்டு கர்மம் செய்பவன்' என்று பொருள் கொள்ளப்பட்டது. 'காமமாத்மாநம் பா4ர்யாம் புத்ரம் வா உபருந்த்4யாத் ந த்வேவ தா3ஸகர்மகரம்' [ஆபஸ்த2ம்ப3 2-4.9-11] [தன்னையும், தன் மனைவியையும், தன் பிள்ளையையும் துன்புறுத்தி வேலை வாங்கலாம். வேலை செய்பவனைத் துன்புறுத்தக்கூடாது] என்னும் ஶாஸ்த்ர வசனத்திற்கு முரணாக நடப்பவன் என்று கருத்து. (அஶுசி:) கர்மம் செய்வதற்குத் தேவையான பரிசுத்தியில்லாதவன்; 'அஶுசி' ஶப்3த3ம் பொதுவாயிருந்தபோதிலும் கர்மப்ரகரணமாகையாலே இப்படிப் பொருள் கொள்ளப்பட்டது. காண்பதற்கும் தொடுவதற்கும் உறுப்பான பரிசுத்தி சிலருக்கு இருந்தபோதிலும் வைதிக கர்மங்களைச் செய்வதற்குத் தேவையான சுத்தியிருப்பதில்லையன்றே (ஹர்ஷஶோகாந்வித:) போர் முதலான கர்மங்களில் வெற்றி முதலானவை கிடைத்தால் ஆனந்தத்தையும், தோல்வி முதலானவை கிடைத்தால் துன்பத்தையும் அடைபவன். சென்ற ஶ்லோகத்தில் ஸாத்விக கர்த்தாவை விளக்கும்போது "ஸித்3த்4ய ஸித்3த்4யோ: நிர்விகார:" என்ற பத3த்தால் சொல்லப்பட்டதற்கு நேர்மாறான தன்மையுடையவன் ராஜஸ கர்த்தா என்று கருத்து. (கர்த்தா ராஜஸ: பரிகீர்த்தித:) இத்தகைய கர்த்தா ராஜஸ கர்த்தா என்று சொல்லப்படுகிறான். 27.

अयुक्तः प्राकृतः स्तब्धः शठो नैकृतिकोऽलसः।
विषादी दीर्घसूत्री च कर्ता तामस उच्यते ॥ २८ ॥



28. அயுக்த: ப்ராக்ருத: ஸ்தப்₃த₄ஶ் ஶடே₂ா நைக்ருதிகோऽலஸ:|
விஷாதீ₃ தீ₃ர்க்க₄ஸூத்ரீ ச கர்த்தா தாமஸ உச்யதே ||

அயுக்த:—(ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட கர்மங்களைச் செய்யத்) தகுதியில்லாதவனாய், ப்ராக்ருத:-(ஶாஸ்த்ரங்களைக் கல்லாத) ஸாமான்யனாய், ஸ்தப்₃த₄: — (ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட) கர்மங்களைத் தொடங்கும் இயல்வேயில்லாதவனாய், ஶட₂:— அபி₄சாரம் முதலான தாழ்ந்த கர்மங்களில் ஈடுபாடுடையவனாய், நைக்ருதிக: —வஞ்சிக்கும் இயல்வுடையவனாய், அலஸ:-தொடங்கிய கர்மங்களிலும் மந்த₃மாகச்செயல் படுபவனாய், விஷாதீ₃— மிகுந்த மனவருத்தத்தை இயல்வாக உடையவனாய், தீ₃ர்க்க₄ஸூத்ரீ ச-நீண்டகாலமாகப் பிறர்க்குத் தீங்கைச் சிந்திக்கும் இயல்வுடையவனை, கர்த்தா—செயல் புரிபவன், தாமஸ: உச்யதே — தாமஸ கர்த்தா என்று சொல்லப்படுகிறான்.

---

28. நன்மைத் தகானறிவு நண்ணான் முயற்றியுறான்
வன்மைச் சடன்மறத்தின் மன்னுவான்—புன்மைசேர்
மந்தன்சோம் பன்னெடுக வாதைநினை யுங்கர்த்தா
சந்தத்தாற் றாமதனாந் தான்.

நன்மைத்தகான்— (ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட) நற்கர்மங்களைச் செய்யத்தகுதியில்லாதவனாய், அறிவுநண்ணான்— (ஶாஸ்த்ரங்களைக்கற்று) அறிவடையாதவனாய், முயற்றி உறான்—(ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட கர்மங்களைத்) தொடங்கும் இயல்வேயில்லாதவனாய், வன்மைச் சடன்—அபி₄சாரம் முதலான கொடூரமான கர்மங்களில் ஈடுபாடுடையவனாய், மறத்தின் மன்னுவான் — வஞ்சிப்பதில் நிலைநிற்பவனாய், புன்மைசேர் மந்தன்—(தொடங்கிய கர்மங்களிலும்) மந்தமாகச் செயல்படும் தாழ்வையுடைய

भा ॥ अयुक्तः – शास्त्रीयकर्मायोग्यः, विकर्मस्थः, प्राकृतः – अनधिगतविद्यः, स्तब्धः - अनारम्भशीलः, शठः - अभिचारादिकर्मरुचिः,

---

வனாய், சோப்பன் – மிகுந்த மனவருத்தத்தை அடைபவனாய், நெடுகவாதை நினையும் — நீண்டகாலமாக (பிறர்க்குத்) தீங்கை நினைக்கும் இயல்புடையவனான, கர்த்தா – செயல் புரிபவன், சந்தத்தால் தாமதனும் தான் — தன்மையால் தாமஸ கர்த்தாவாய் இருப்பான்.

---

28. தாமஸ கர்த்தாவை விளக்குகிறான். (அயுக்த.) ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட கர்மங்களைச் செய்யத்தகுதியில்லாதவன். 'அயுக்த' ஶப்3த3ம் கவனமில்லாதவன் என்றும் பொருள்படுமாயினும் அடுத்துள்ள 'ப்ராக்ருத' ஶப்3த3த்தின் பொருளிலேயே அது அடங்கிவிடுமாகையால் இங்கு இப்படிப் பொருள் கொள்ளப்பட்டது. சென்ற ஶ்லோகத்தில் 'அஶுசி' ஶப்3த3த்தாலே ராஜஸ கர்த்தாவுக்குக் 'கர்மங்களுக்குத் தேவையான பரிசுத்தியற்றவன்' என்னும் தாழ்வு சொல்லப்பட்டது. தாமஸ கர்த்தாவான இவனுடைய தகுதியின்மை அதைக்காட்டிலும் மிகுந்ததாகையால், இந்த 'அயுக்த' ஶப்3த3த்திற்கு 'ஶாஸ்த்ர விருத்3த4மான கர்மங்களில் ஊன்றியிருப்பவன்' என்று கருத்துரைக்கவேண்டும். விருத்3த4 கர்மங்களில் ஊன்றியிருக்கும் தாமஸ கர்த்தாவினுடைய தாழ்வு

"ஶைவாந் பாஶுபதாந் ஸ்ப்ருஷ்ட்வா லோகாயதிக நாஸ்திகாந் ।
விகர்மஸ்தா2ந் த்3விஜாந் ஶூத்3ராந் ஸசேலோ ஜலமாவிஶேத் ॥"

[சைவர்கள், பாசுபதர்கள், லோகாயதர்கள், நாஸ்திகர்கள் ஆகிய விருத்3த4 கர்மங்களில் ஊன்றிநிற்கும் இருபிறப்பாளர்களையும் சூத்ரர்களையும் தொட்டால் உடுத்திருக்கும் வஸ்திரத்தோடு குளிக்க வேண்டும்] என்று சொல்லப்பட்டதன்றோ. (ப்ராக்ருத:) ஶாஸ்த்ரங்களைக் கல்லாத ஸாமாந்யன். வேத3ஶாஸ்த்ரங்களை ஓதாமலும் அவற்றினுடைய பொருளை உபதேசிக்கப்பெருமலும் இருக்கையால் ஸாத்விககர்மத்தை அனுஷ்டி2க்கத்தகுதியில்லாதவன் என்று கருத்து. (ஸ்தப்3த4:) ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கும் கர்மங்களைத் தொடங்கும் இயல்வேயில்லாதவன்; ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட கர்மங்களைத் தொடங்குவதற்குமுன் பெரியவர்களை வணங்குதல் முதலான காரியங்களைச் செய்யவேண்டும், அது

नैकृतिकः-वञ्चनपरः, अलसः-आरब्धेष्वपि कर्मसु मन्दप्रवृत्तिः, विषादी-अतिमात्रावसादशीलः, दीर्घसूत्री —अभिचारादिकर्म कुर्वन् परेषु दीर्घकालवर्त्यनर्थपर्यालोचनशीलः. एवंभूतो यः कर्ता, स तामसः ॥ २८ ॥

---

கூடச் செய்யாமல் மரம்போல் இருப்பவன் என்று கருத்து. (ஶட2:) அபி4சாரம் முதலான தாழ்ந்த கர்மங்களில் ஈடுபாடுடையவன். ரஹஸ்யமாகக் கொடூரமான காரியங்களைச் செய்பவன் 'ஶட2ன்' ஆகிறான். தாமஸ கர்த்தாவைப்பற்றிய ப்ரகரணமாகையாலே தாமஸர்கள் செய்யும் அபி4சாரம் முதலான பிறர்க்குத் தீங்கு விளைக்கும் கர்மங்களைச் செய்வதில் ஈடுபட்டவன் என்று தேறுகிறது. (நைக்ருதிக:) வஞ்சிக்கும் இயல்வுடையவன். "ஶட2" ஶப்3த3த்தால் அபி4சாரம் முதலான ஶாஸ்த்ரீய கர்மங்களால் பிறர்க்குத் தீங்கிழைக்கும் தன்மை குறிக்கப்பட்டது. இந்த ஶப்3த3த்தால் பொய் சொல்லுவது ஏமாற்றுவது முதலான லௌகிகச் செயல்களால் பிறருக்குத் தீங்கிழைக்கும் தன்மை சொல்லப்படுகிறது; ஆகையால் புனருக்தி இல்லை. (அலஸ:) தொடங்கிய கர்மங்களிலும் மந்த3மாகச் செயல்படுபவன். "ஶ்வ: கார்யமத்3ய குர்வீத" [நாளைக்குச் செய்யவேண்டியதை இன்றே செய்யவேண்டும்] என்னும் நியாயத்தின்படி ஶாஸ்த்ரீய கர்மங்களில் வேக3த்தைக் காட்டவேண்டும், அதற்கு நேர்மாறாக மந்த3மாகச் செயல்படுபவன் என்று "அலஸ" ஶப்3த3த்திற்குப் பொருள். அதில் "ஸ்தப்3த4" ஶப்3த3த்தாலே கர்மங்களைத் தொடங்கும் இயல்வு இல்லாதவன் என்று சொல்லப்பட்டுவிட்டபடியால், இங்கு "தொடங்கிய கர்மங்களில் மந்த3மாகச் செயல்படுபவன்" என்று கருத்து உரைக்கப்பட்டது. (விஷாதீ3) மிகுந்த மனவருத்தத்தை இயல்வாக உடையவன். 'ஷத்3லு' தா4து வருத்தத்தைச் சொல்லுவது. 'வி' என்னும் உபஸர்க்க3ம் வருத்தத்தின் மிகுதியைக் காட்டுகிறது. 'விஷாதி3ந்' ஶப்3த3த்தில் உள்ள 'இநிச்'ப்ரத்யயம் மிகுந்த மனவருத்தத்தை இயல்வாக உடையவன் என்று காட்டுகிறது. அதனாலேயே பா4ஷ்யத்தில் "அதிமாத்ர அவஸாத3நஶீல:" என்று பொருள் கொள்ளப்பட்டது "தே3ஶகால வைகு3ண்யாத் ஶோகவஸ்த்வாத்3யநுஸ்ம்ருதேஶ்ச தஜ்ஜம் தை3ந்யம்—அப4ாஸ்வரத்வம் மநஸ:—அவஸாத3:" [ப்3ரஹ்மநந்தி3வாக்யம்] [தேசம் காலம் ஆகியவற்றின் முரண்பாட்டாலும், வருத்தத்தை விளைக்கும் பொருள் முதலானவற்றை நினைப்பதாலும் உண்டாகும் மனச்சோர்வு 'அவஸாத3ம்' எனப்படுகிறது.] என்று வாக்யகாரராலும் அவஸாத3த்தின் லக்ஷணம் விளக்கமாகச் சொல்லப்பட்டது.

भा ॥ एवं कर्तव्यकर्मविषयज्ञाने कर्तव्ये च कर्मणि अनुष्ठातरि च गुणतस्त्रैविध्यमुक्तम्; इदानीं सर्वतत्त्वसर्वपुरुषार्थनिश्चयरूपाया बुद्धेर्धृतेश्च गुणतस्त्रैविध्यमाह —

बुद्धेर्भेदं धृतेश्चैव गुणतस्त्रिविधं शृणु ।
प्रोच्यमानमशेषेण पृथक्त्वेन धनंजय ॥ २९ ॥

29. பு3த்3தே4ர் பே4த3ம் த்4ருதேஶ் சைவ கு3ணதஸ் த்ரிவித4ம் ஶ்ருணு ।
ப்ரோச்யமாநமஶேஷேண ப்ருத2க்த்வேந த4நஞ்ஜய ||

த4நஞ்ஜய — அர்ஜுந! பு3த்3தே4: —(ஆராய்ந்து உறுதி கொள்ளுகையாகிற) பு3த்3தி4யினுடையவும், த்4ருதே: ச ஏவ — (தொடங்கிய கர்மத்திற்கு இடையூறு ஏற்பட்டாலும்)

---

(தீ3ர்க்க4 ஸூத்ரீ ச) நீண்டகாலமாகப் பிறர்க்குத் தீங்கைச் சிந்திக்கும் இயல்வுடையவன். 'கர்மங்களை விரைவில் முடிக்காமல் நீண்டகாலம் எடுத்துக்கொள்பவன்' என்று இதற்குப் பொருள் கொள்ளலாமாயினும், 'அலஸ' ஶப்3த3த்திலேயே இப்பொருள் சொல்லப்பட்டதாகுமாகையாலே, புநருக்தி தோ3ஷத்தைத் தவிர்ப்பதற்காக, "'ஶட2' ஶப்3த3த்தில் கூறியபடி 'அபி4சாரம்' முதலான கர்மங்களைச் செய்யும்போது, பிறர்க்கு நெடுங்காலமாகத் தீங்கைச் சிந்திக்கும் இயல்வுடையவன்" என்று பொருள் கொள்ளப்பட்டது. "ஸூத்ர- ஸூத்ரணே" என்னும் தா4துவில் தோன்றிய 'ஸூத்ரண' ஶப்3த3மும் சிந்தனத்தைக்குறிக்கிறது. 'ஸூத்ரிந்'என்பதிலுள்ள 'இநிச்' ப்ரத்யயம் அதையே இயல்வாக உடையவன் என்றுகாட்டுகிறது. ஆக 'தீ3ர்க்க4 ஸூத்ரீ' என்னும் பத3ம் 'அபி4சாரம் முதலான கர்மங்களில் ஈடுபடுவதற்கு முன் நீண்டகாலம் பிறர்க்குத் தீங்கைச் சிந்திப்பவன்' என்று பொருள்படுகிறது. "'குற்றம் செய்யாத பறவைகளைப் பிடிப்பதற்காக நீண்டகயிறுகளாகிற வலையைக்கட்டுகின்றவனைப்போல் பிறரை அகப்படுத்துபவன்' என்று சிலர் பொருள் கொண்டனர். இது உபசார வழக்காகையாலே ஸ்வரஸமன்று" என்று தாத்பர்ய சந்த்3ரிகை. 28

भा ॥ बुद्धिः—विवेकपूर्वकं निश्चयरूपं ज्ञानम्, धृतिः—

த₄ரித்துநிற்கையாகிற த்₄ருதியினுடையவும், கு₃ணத:—முக்குணங்களையிட்டு, த்ரிவித₄ம பே₄த₃ம் — மூன்றுவகையாக இருக்கும் வேறுபாட்டை, ப்ருத₂க்த்வேந ப்ரோச்யமாநம்— தனித்தனியாக நான் கூறுவதை, அஶேஷேண ஶ்ருணு — (உள்ளபடி) முழுவதும் கேட்பாயாக.

29. புந்தியிலுந் திண்மையிலும் பூணுங் குணப்பிரிவால்
வந்திவைதான் மூன்ரும் வகையதனைச்—சிந்தைதிகழ்ந்
தெல்லாம் பிரிவறிய யானியம்பக் கேளிதனை
நல்லாய் தனஞ்செயனே நன்கு.

நல்லாய் தனஞ்செயனே — நல்லவனான அர்ஜுநனே! புந்தியிலும் — (ஆராய்ந்து உறுதிகொள்ளுகையாகிற) பு₃த்₃தி₄யினுடையவும், திண்மையிலும் — (தொடங்கிய கர்மத்திற்கு இடையூறு ஏற்பட்டாலும்) த₄ரித்து நிற்கையாகிற த்₄ருதியினுடையவும், பூணும குணபபிரிவால்— முக்குணப் பிரிவையிட்டு, இவைதான் வந்து மூன்ரும் வகை அதனை — ஒவ்வொன்றும் மும்மூன்ருய் இருக்கும் வகையை, எல்லாம் பிரிவு அறிய யான் இயம்ப — தனித்தனியாக அனைத்தையும் யான் கூறுவதை, இதனைச் சிந்தை திகழ்ந்து நன்கு கேள் — இதை நெஞ்சில் கவனமாகக்கொண்டு உள்ளபடி கேள்.

29. பத்தொன்பதாவது ஶ்லோகம் தொடங்கி, செய்யவேண்டிய கர்மத்தைப் பற்றிய அறிவு, அந்தக் கர்மம், அதை அனுஷ்டிப்பவன் ஆகிய மூன்றும் ஸத்வ ரஜஸ் தமோ கு₃ணங்களையிட்டு மும்மூன்ருய் இருக்கும் முறை சென்ற ஶ்லோகம் வரை சொல்லப்பட்டது. இனி, இந்த ஶ்லோகத்திலிருந்து தொடங்கி முப்பத்தைந்தாவது ஶ்லோகம் வரை ஶாஸ்த்ரம், ப்ரத்யக்ஷம் முதலானவற்ருல் உண்டாகும் நிர்ணய ரூபமான அறிவாகிற பு₃த்₃தி₄யும், இடையூறு உண்டானுலும், த₄ரித்து நின்று கர்மங்களைத்

आरब्धायाः क्रियाया विघ्नोपनिपातेऽपि धारणम्, तयोस्सत्त्वादिगुण-तस्त्रिविधं भेदं पृथक्त्वेन प्रोच्यमानं यथावच्छृणु ॥ २९ ॥

---

தொடருகையாகிய த்$_4$ருதியும். முக்குணங்களையிட்டு மும்மூன்ருய் இருக்கும் வகை விளக்கப்படுகிறது. (பு$_3$த்$_3$தே$_4$: கு$_3$ணத: த்ரிவித$_4$ம் பே$_4$த$_3$ம்) புத்தியானது முக்குணங்களையிட்டு மூன்று விதமாயிருக்கும் வேறுபாட்டை. பத்தொன்பதாவது ஸ்லோகம் தொடங்கி இருபத்திரண்டாவது ஸ்லோகம் ஈருக, ஜ்ஞாநம் முக்குணங்களையிட்டு மூன்றுவகையாயிருப்பது சொல்லப்பட்டது. இந்த ஸ்லோகம் தொடங்கி நான்கு ஸ்லோகங்களில் பு$_3$த்$_3$தி$_4$யானது முக்குணங்களையிட்டு மூன்றுவகையாய்இருப்பது சொல்லப்படுகிறது. இந்த ஸ்லோகங்களின் அமைப்பை ஆராயும்போது அநுஷ்டிக்கப்பட்ட கர்மத்தைப் பற்றிய அறிவே 'ஜ்ஞாநம்' என்று சொல்லப்படுகிறது என்றும், இந்த அநுஷ்டா$_2$நதசைக்கு முற்பட்டதாய், அந்த ஜ்ஞானத்திற்குக் காரணமாயிருப்பதாய், ஸாஸ்த்ரங்கள் முதலானவற்ருல் உண்டாவதாய், எல்லாத்தத்துவங்களையும் எல்லாப் புருஷார்த்தங்களையும் பற்றிய நிச்சயரூபமாயிருப்பதான அறிவே இங்கு பு$_3$த்$_3$தி$_4$ என்று சொல்லப்படுகிறது என விளங்குகிறது. இங்கு சொல்லப்படும் புத்தியாவது:— தத்துவவிஷயமாகவும், புருஷார்த்த$_2$விஷயமாகவும் உள்ள மற்றகருத்துக்களை ஆராய்ச்சிசெய்து தள்ளி, உண்மையான கருத்தை நிச்சயிப்பதாகிற அறிவு. இப்படிக் கொள்ளாமல் "ஜ்ஞாநம் பு$_3$த்$_3$தே$_4$ர் வ்ருத்தி:, பு$_3$த்$_3$தி$_4$ஸ்து வ்ருத்திமதீ" [ஜ்ஞாநம் என்பது புத்தியின் செயல்பாடு. புத்தியானது (ஜ்ஞாநமாகிற) செயல்பாட்டை உடையது.] என்று சங்கரர் விளக்கியது ஜ்ஞாநத்தையும் புத்தியையும் மும்மூன்ருகப் பிரிக்கும் கீதாஸ்லோகங்களுக்குப் பொருந்தவில்லை. (த்$_4$ருதேஸ்சைவ கு$_3$ணத: த்ரிவித$_4$ம் பே$_4$த$_3$ம்) தொடங்கிய கர்மத்திற்கு இடையூறு வந்தாலும் த$_4$ரித்து நின்று தொடருகையாகிற த்$_4$ருதியானது முக்குணங்களையிட்டு மூன்றுவித$_4$மாயிருக்கும் வேறுபாட்டையும்; இந்த த்$_4$ருதிஸ்வரூபத்தை ஆராயும்போது உறுதியான ஸங்கல்பத்தை உடைத்தாயிருக்கையாகிற புத்தியின் ஒரு தன்மையே இது என விளங்கும். (கு$_3$ணத: த்ரிவித$_4$ம் பே$_4$த$_3$ம் ப்ருத$_2$க்த்வேந ப்ரோச்யமாநம் அஸேஷேண ஸ்ருணு) முற்கூறிய 'பு$_3$த்$_3$தி$_4$' 'த்$_4$ருதி' ஆகிய இரண்டில் ஒவ்வொன்றும் முக்கு$_3$ணங்களையிட்டு மும்மூன்ருக வேறுபட்டிருப்பதைத் தனித்தனியாக

प्रवृत्तिं च निवृत्तिं च कार्याकार्ये भयाभये ।
बन्धं मोक्षं च या वेत्ति बुद्धिस्सा पार्थ सात्त्विकी ॥ ३० ॥

30. ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச கார்யாகார்யே ப$_4$யாப$_4$யே ]
ப$_3$ந்த$_4$ம் மோக்ஷம் ச யா வேத்தி பு$_3$த்$_3$தி$_4$ஸ்ஸாபார்த்த$_2$
ஸாத்விகீ ॥

பார்த்த$_2$ — குந்தீ புத்திரனே! ப்ரவ்ருத்திம் ச — இவ்வுலகச் செல்வங்களுக்கு ஸாத$_4$நமான த$_4$ர்மத்தையும், நிவ்ருத்திம் ச — மோக்ஷத்திற்கு ஸாத$_4$நமான த$_4$ர்மத்தையும், கார்யாகார்யே — (இந்த த$_4$ர்மங்களில் ஊன்றிநிற்பவர்

---

நான் கூறப்போவதை உள்ளபடி கேட்பாயாக. 'த்ரிவித$_4$' ஶப்$_3$த$_3$ம் பு$_3$த்$_3$தி$_4$, த்$_4$ருதி ஆகிய இரண்டுமே முக்குணங்களையிட்டு மும்மூன்ருக இருப்பதைக் காட்டுகிறது. ''ப்ருத$_2$க்த்வேந ப்ரோச்யமாநம்'' என்றதால் ஒரு குணத்தின் காரியம் மற்ருெரு குணத்தின் காரியத்தோடு கலந்துவிடாதபடி தனித்தனியாக மேலே வரும் ஶ்லோகங்களில் தான் சொல்லப்போவதை உணர்த்துகிறது. 'அஶேஷேண' என்னும் பத$_3$த்தை 'ஶ்ருணு' என்னும் பததோடு கூட்டி 'பு$_3$த்$_3$தி$_4$, த்$_4$ருதி ஆகியவற்றின் காரியங்களை ஒன்று விடாமல் கேள்' என்று பொருள் கொள்ளுகையாலே புனருக்தியில்லை. 'கவனமாக ஸம்ஶய விபர்யயங்கள் (ஐயம் திரிபுகள்) இல்லாதபடி கேட்பாயாக' என்று தாத்பர்யம். இதுவே 'யத$_2$ாவத் ஶ்ருணு' [உள்ளபடி கேட்பாயாக] என்று ப$_4$ாஷ்யத்தில் விளக்கப்பட்டது. (த$_4$நஞ்ஜய) ''தி$_3$க்விஜயே மாநுஷம் தை$_3$வம் ச ப்ரபூ$_4$தம் த$_4$நம் ஜிதவாந், தேந அஸௌ த$_4$நஞ்ஜய: அர்ஜுந:'' [தி$_3$க்$_3$விஜயத்தின்போது மநுஷ்யலோகத்திலும் தேவலோகத்திலும் உள்ள தலைசிறந்த த$_4$னங்கள் அனைத்தையும் ஜயித்தவனுகையாலே அர்ஜுனன் த$_4$னஞ்ஜயன் எனப்படுகிருன்] என்று சங்கரர் ''த$_4$னஞ்ஜய'' ஶப்$_3$த$_3$த்திற்குப் பொருளுரைத்தார் இங்கு 'த$_4$நஞ்ஜய'' என்று அவனை விளித்ததால், 'அந்த தனங்களை ஜயித்தது போலே பு$_3$த்$_3$தி$_4$, த்$_4$ருதி முதலானவற்றை நன்கு அறிவதன் மூலம் புலனடக்கம் முதலான ஆத்மகு$_3$ணங்களாகிற த$_4$னங்களையும் நீ வசப்படுத்த வேண்டும்' என்று உணர்த்துகிருன் கண்ணன். 29.

भा ॥ प्रवृत्तिः — अभ्युदयसाधनभूतो धर्मः, निवृत्तिः — मोक्ष

களுக்குச்) செய்யத்தக்கவையும் செய்யத்தகாதவையும், ப₄யாப₄யே — ப₄யத்துக்கும் ப₄யமின்மைக்கும் இடமாயிருப்பவற்றையும், ப₃ந்த₄ம் மோக்ஷம் ச — ஸம்ஸாரத்தில் கட்டுப்படுவது அதிலிருந்து விடுபடுவது ஆகியவை பற்றிய உண்மையையும், யா வேத்தி — எந்த அறிவு அறிகிறதோ, ஸா பு₃த்₃தி₄: ஸாத்விகீ — அந்த அறிவு ஸத்வகு₃ணத்தால் உண்டானதாகும்.

30. அக்க வியலறமு மல்லறமுங் காரியமு
மிக்க வகாரியமு மேலச்சந் — தக்கவரு
மஞ்சாமை பந்தம்வீ டான்றறியும் புந்திதா
னெஞ்சா முதற்குணத்தா மிங்கு.

அக்க இயலறமும் — இவ்வுலகச் செல்வங்களுக்கு ஸாத₄நமான த₄ர்மத்தையும், அல் அறமும் — இவ்வுலகச் செல்வங்களிலிருந்து வேறுபட்ட மோக்ஷத்திற்கு ஸாத₄நமான த₄ர்மத்தையும், மிக்க காரியமும் அகாரியமும் — (இந்த த₄ர்மங்களில் ஊன்றி நிற்பவர்களுக்கு) அவசியம் செய்யத்தக்கவையும் செய்யத்தகாதவையும், மேல் — அதற்கு மேலே, தக்கவரும் அச்சம் அஞ்சாமை — பயத்துக்கும் பயமின்மைக்கும் இடமாயிருக்கத் தகுதியுள்ளவற்றையும், பந்தம் வீடு — ஸம்ஸாரத்தில் கட்டுப்படுவது, அதிலிருந்து விடுபடுவது ஆகியவைபற்றிய உண்மையையும், ஆன்று அறியும் புந்திதான் — நன்கு அறியும் புத்தியானது, நெஞ்சாம் முதல் குணத்து ஆம் — மனத்தில் உண்டான ஸத்வகு₃ணத்தால் விளைவது.

30. ஸாத்விக பு₃த்₃தி₄யை விளக்குகிறான். (ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச) இவ்வுலகச் செல்வங்களுக்கு ஸாத₄நமான ப்ரவ்ருத்தி த₄ர்மத்தையும், மோக்ஷச் செல்வத்திற்கு ஸாத₄நமான நிவ்ருத்தி த₄ர்மத்தையும்; மேலே 'கார்யம்' 'அகார்யம்' என்று

साधनभूतः, तावुभौ यथावस्थितौ या बुद्धिर्वेत्ति; कार्याकार्ये — सर्ववर्णानां

செய்யத்தக்கதையும், செய்யத்தகாததையும் எடுக்கையாலே அதோடு புநருக்தி (கூறியது கூறல்) ஆகாமைக்காக, இந்த ஶப்₃த₃ங்கள் முறையே இவ்வுலகச் செல்வங்களை ஸாதி₄த்துத் தரும் ப்ரவ்ருத்தி த₄ர்மத்தையும், மோக்ஷத்தை ஸாதி₄த்துத்தரும் நிவ்ருத்தி த₄ர்மத்தையும் சொல்லுகின்றன என்று கொள்ள வேண்டும். "ப்ரவ்ருத்தி லக்ஷணம் த₄ர்மம் ப்ரஜாபதிரத₂ாப்₃ர வீத் | நிவ்ருத்திலக்ஷணம் த₄ர்மம் ருஷிர் நாராயணோऽப்₃ரவீத்||" [ப₄ாரத—ஶாந்தி—மோக்ஷ 219—4, 2] [இவ்வுலகச் செல்வங்களை ஸாதி₄த்துத்தரும் ப்ரவ்ருத்தி த₄ர்மத்தைப் பற்றி ப்ரஜாபதியாகிற பிரமன் விளக்கினார். மோக்ஷத்தை ஸாதி₄த்துத்தரும் நிவ்ருத்தி த₄ர்மத்தைப்பற்றி நாராயணரிஷி விளக்கினார்.] என்று தொடங்கி இவ்விரண்டு த₄ர்மங்களும் மோக்ஷத₄ர்மத்தில் விளக்கப்பட்டன வன்றோ. (யா வேத்தி) இவ்விருவகையான த₄ர்மங்களைப் பற்றியும் எந்த பு₃த்₃தி₄யானது உள்ளபடி அறிகிறதோ; அடுத்த ஶ்லோகத்தில் ராஜஸ பு₃த்₃தி₄யை விளக்கும்போது "அயதா₂வத் ப்ரஜாநாதி" என்று 'அது உள்ளபடி உணராத அறிவு' என்று கூறுகையாலே, இங்கு அதற்கு எதிர்த்தட்டாக 'உள்ளபடி அறிகிறதோ' என்று சேர்த்துக்கொள்ளவேணும். (கார்யாகார்யே யா வேத்தி) ப்ரவ்ருத்தி த₄ர்மத்திலோ, நிவ்ருத்தி த₄ர்மத்திலோ ஊன்றி நிற்கும் எல்லாவர்ணத்தவருக்கும், அந்தந்த தேசம் காலம் நிலை ஆகியவற்றுக்குத் தக்கபடி இன்னது செய்யத்தக்கது, இன்னது செய்யத் தகாதது என்று எந்த பு₃த்₃தி₄யானது அறிகிறதோ; ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி ஶப்₃த₃ங்களால் சொல்லப்பட்ட இருவகைப் பட்ட ப்ரதா₄ந த₄ர்மங்களுக்கு உதவிபுரியும் செயல்களை "கார்யா கார்ய" ஶப்₃த₃ம் குறிக்கிறது. அந்தந்த வர்ணங்களுக்குத் தக்க படியும் தேசகால நிலைகளுக்குத் தக்கபடியும் கார்யாகார்யங்கள் மாறுமாகையாலே ப₄ாஷ்யத்தில் "ஸர்வவர்ணாநாம் தே₃ஶகாலா வஸ்த₂ா விஶேஷேஷு" என்று கார்யாகார்யங்கள் விசேஷிக்கப்பட் டன. "ஶரீரம் ப₃லமாயுஶ்ச வய: காலம் ச கர்ம ச| ஸமீக்ஷ்ய த₄ர்ம வித்₃ பு₃த்₃த்₄யா ப்ராயஶ்சித்தாநி நிர்தி₃ஶேத்||" [போ₃த₄ாயநத₄ர்ம ஸூத்ரம் 1—1—16] [தன் உடல், ப₃லம், ஆயுள், வயது, காலம், கர்மம் ஆகியவற்றை அறிவுகொண்டு ஆராய்ந்து, த₄ர்மத்தை அறிந்தவன் ப்ராயச்சித்தங்களைச் சொல்லவேண்டும்] என்றும்,

प्रवृत्तिनिवृत्तिधर्मयोरन्यतरनिष्ठानां देशकालावस्थाविशेषेषु, इदं कार्यम्, इदमकार्यमिति या वेत्ति; भयाभये -- शास्त्रातिवृत्तिभयस्थानं, तदनुवृत्तिः-

"தேஶம் காலம் ததா₂த்மாநம்" [தேசம் காலம் தன்னுடையநிலை (ஆகியவற்றைப்பார்த்து,கார்யாகார்யங்களை நிர்ணயிக்கவேண்டும்)] என்றும் த₄ர்மஶாஸ்த்ரங்களில் இவ்விஷயம் சொல்லப்பட்டதன்றோ. இங்கு கார்யாகார்யங்களைச் சொன்னது 'தன்னால் செய்யக்கூடியது, செய்ய இயலாதது' ஆகியவற்றையும் உபலக்ஷண முறையாலே காட்டும். (ப₄யாப₄யே யா வேத்தி) ப₄யத்திற்கு இடமாயிருப்பதையும், ப₄யமின்மைக்கு இடமாயிருப்பதையும் எந்த அறிவு அறிகிறதோ. ப₄யாப₄யங்களை அறிவது எல்லா அறிவுக்கும் பொதுவாகையாலே, ஸாத்விகமான அறிவுக்கு விஷயமாகக் குறிப்பிட்டு இங்கு சொல்லப்படும ப₄யாப₄யங்கள்—ப₄யாப₄யங்களுக்குக் காரணமாயிருப்பவையேயாகும். ப்ரகரணத்தையொட்டிப் பார்க்கும்போது 'ஶாஸ்த்ரத்தை மீறுவது ப₄யத்துக்குக்காரணமாகையாலே பயம்எனப்படுகிறது.ஶாஸ்த்ரத்தைப்பின்பற்றுவது ப₄யமின்மைக்குக் காரணமாகையாலே அப₄யம் எனப்படுகிறது' என்று விளங்கும். "பி₃பே₄த்யஸ்மாதி₃தி ப₄யம்" [எதைக்கண்டு பயப்படுகிறானோ அது ப₄யமாகும்] எனனும் வ்யுத்பத்தியாலே ப₄ய ஶப்₃த₃ம் ப₄யகாரணத்தைக்குறிக்கிறது. அனைவரையும் நியமிக்கும் ஈஶ்வரனிடமிருந்தன்றோ ஜ்ஞாநிகளுக்கு ப₄யமும் அப₄யமும் உண்டாகிறது. அவனுடைய தூண்டுதலில்லாமல் ஒருவனால் மற்றொருவனைத் துன்புறுத்தவோ துன்புறுத்தாமல் விடுவதோ இயலாதன்றோ. ஆகையால் அவனுடைய ஆஜ்ஞையான ஶாஸ்த்ரங்களைப் பின்பற்றுவதை 'அப₄யம்' என்றும், அவற்றை மீறுவதை 'ப₄யம்' என்றும் கொள்ளத்தடையில்லை. (ப₃ந்த₄ம் மோக்ஷம் ச யா வேத்தி) ஸம்ஸாரத்தில் கட்டுண்டிருக்கையாகிற ப₃ந்த₄த்தைப் பற்றிய உண்மையையும், அதிலிருந்து விடுபடுகையாகிற மோக்ஷத்தைப்பற்றிய உண்மையையும் எந்த அறிவு அறிகிறதோ; வேத₃த்துக்கு முரணான மதங்களும் வேத₃த்துக்கு அவப்பொருள் கூறும் மதங்களும் கூட, தங்கள் கருத்துப்படி ப₃ந்த₄மோக்ஷத்தைக் கூறுகையாலே 'ப₃ந்த₄ மோக்ஷங்கள் இருப்பதை அறிகிறதோ' என்று பொருள் கொள்ளாமல் 'ப₃ந்த₄ மோக்ஷங்களைப் பற்றிய உண்மையை அறிகிறதோ' என்று பொருள்கொள்ளப்பட்டது. ஸம்ஸாரப₃ந்த₄ம் பொய் என்று கூறும் மதம், ஸம்ஸாரப₃ந்த₄ம் ஒரு பரம்பொருளால் உண்டானதன்று என்று கூறும் மதம் முதலான

अभयस्थानम्, बन्धं मोक्षं च — संसारयाथात्म्यं तद्विगमयाथात्म्यं च या वेत्ति; सा सात्त्विकी बुद्धिः ॥ ३० ॥

यया धर्ममधर्मं च कार्यं चाकार्यमेव च ।
अयथावत्प्रजानाति बुद्धिस्सा पार्थ राजसी ॥ ३१ ॥

31. யயா த4ர்மமத4ர்மம் ச கார்யம் சாகார்யமேவ ச I
அயதா2வத் ப்ரஜாநாதி பு3த்3தி4ஸ்ஸா பார்த்த2 ராஜஸீ॥

பார்த்த2—குந்தீபுத்திரனே! யயா—எந்த அறிவாலே, த4ர்மம் அத4ர்மம் ச — த4ர்மத்தையும் அத4ர்மத்தையும், கார்யம் அகார்யம் ஏவ ச — செய்யத்தக்கதையும் செய்யத்தகாததையும், அயதா2வத் ப்ரஜாநாதி — தவருக (ஒருவன்) அறிகிருனே, ஸா பு3த்3தி4: — அந்த அறிவு, ராஜஸீ —ரஜோகு3ணத்தால் உண்டானது.

---

மதங்களைத் தவிர்ப்பதற்காக 'ஸம்ஸார ப3ந்த4த்தைப் பற்றிய உண்மையை அறிகிறதோ' என்று பொருள்கொள்ளப்பட்டது. மோக்ஷத்தில் ஜீவன் கல்லைப்போல உணர்ச்சியற்றவனுகிருன் என்றுகூறும் மதம், மோக்ஷத்தில் ஜீவன் ப்3ரஹ்மமேயாகிருன் என்று கூறும் மதம் முதலான மதங்களைத் தவிர்ப்பதற்காக 'மோக்ஷத்தைப் பற்றிய உண்மையை அறிகிறதோ' என்று பொருள் கொள்ளப்பட்டது. 'எந்த புத்தி அறிகிறதோ' என்று புத்தியையே அறியும் கர்த்தாவாகக் கூறியது ஔபசாரிகம்; எந்த அறிவானது அறிவதற்குக் கருவியாயிருக்கிறதோ என்று கருத்து. (ஸா பு3த்3தி4: ஸாத்விகீ) இவற்றையெல்லாம் உள்ளபடி அறிவதற்கு உறுப்பாயிருக்கும் அறிவே ஸத்வகு3ணத்தால் உண்டாவதாகும். (பார்த்த2) குந்தீ புத்திரனே! 'என் அத்தைபிள்ளையான நீ இந்த ஸாத்விக பு3த்3தி4யைப் பெறவேண்டும்' என்று கருத்து. ராஜஸ தாமஸ பு3த்3தி4களை விளக்கும் மேலிரண்டு ஶ்லோகங்களிலும் இந்த 'பார்த்த2' ஶப்3த3ம் காணப்படுகிறது. அங்கு 'என் அத்தைபிள்ளையான நீ இந்த ராஜஸ தாமஸ பு3த்3தி4களை விலக்க வேண்டும் என்று கருத்துரைக்க வேண்டும். 33, 34, 35 ஶ்லோகங்களில் ஸாத்விக ராஜஸ தாமஸ த்4ருதியை விளக்கும் போதும் இந்த 'பார்த்த2'ஶப்3த3ம் காணப்படுகிறது. அங்கும் ஸாத்விகத்வத்தைக் கொள்ளவேண்டும் என்றும், ராஜஸ தாமஸத்தை விலக்கவேண்டும் என்றும் கருத்துரைப்பது. 30.

भा ॥ यया पूर्वोक्तं द्विविधं धर्मं तद्विपरीतं च तन्निष्ठानां देश· कालावस्थादिषु कार्यं चाकार्यं च यथावन्न जानाति, सा राजसी बुद्धिः ॥ ३१ ॥

---

31. தன்மமு மற்றைய தன்மமுங் காரியமும்
புன்மைய காரியமும் போக்குத்தா – நன்மையுறக்
காணும் வகையன்றிக் காணலுறும் புத்திதான்
பேணு மிடைக்குணத்தைப் பேர்ந்து.

தன்மமும் மற்றை அதன்மமும் — (முற்கூறிய இருவகைப் பட்ட) த4ர்மத்தையும் அதற்கு நேர்மாறான அத4ர்மத்தையும், தாம் போக்கு காரியமும் புன்மை அகாரியமும் — (அவற்றில் ஊன்றி நிற்பவர்கள்) தாம் செய்யத்தக்கதையும், செய்யத் தகாத தாழ்ந்த செயலையும், நன்மையுறக் காணும் வகை யன்றி காணலுறும் புத்திதான் — உள்ளபடி காணமல் தவ ருகக் காணும் புத்தியானது, பேர்ந்து — ஸாத்விக பு3த்3தி4யி லும் வேறுபட்டு, இடைக்குணத்தைப் பேணும் — முக்குணங் களில் இடைப்பட்டதான ரஜோகு3ணத்தால் உண்டான தாயிருக்கும்.

---

31. ராஜஸபு3த்3தி4யை விளக்குகிருன். (த4ர்மம்) முன் ஶ்லோ கத்தில் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி ஶப்3த3ங்களாலே சொல்லப்பட்ட இரண்டுவிதமான ஸாத4நங்களையும்; 'த்4ருதிஸாத4நம் த4ர்ம:' [தரிக் கச் செய்யும் செல்வங்களுக்கு ஸாத4நமாயிருப்பது த4ர்மம்] என்னும் வ்யுத்பத்தியாலே, த4ர்மஶப்3த3மானது இவ்வுலகச் செல்வம்மோக்ஷச் செல்வம் ஆகிய இருவகைச்செல்வங்களுக்கும் ஸாத4நங்களைக் குறிப் பிடுகிறது.(அத4ர்மம்ச)முற்கூறிய த4ர்மத்திற்கு மாருன அத4ர்மத்தை யும்.(கார்யம் ச அகார்யமேவ ச) முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட படி இந்த த4ர்மங்களில் ஊன்றிநிற்பவர்களுக்குச் செய்யத்தக்கவற் றையும் செய்யத்தகாதவற்றையும் (யயா அயத2ாவத் ப்ரஜாநாதி) எந்த புத்தியாலே உள்ளபடி அறியாமல் தவருக ஒருவன் அறி கிருனே. (ஸா பு3த்3தி4: ராஜஸீ) அந்த அறிவு ரஜோகு3ணத்தினுல் உண்டாவதாகும். 31.

अधर्मं धर्ममिति या मन्यते तमसाऽऽवृता ।
सर्वार्थान्विपरीतांश्च बुद्धिस्सा पार्थ तामसी ॥ ३२ ॥

32. அத₄ர்மம் த₄ர்மமிதி யா மந்யதே தமஸாவ்ருதா ।
ஸர்வார்த்த₂ாந் விபரீதாம்ஶ்ச பு₃த்₃தி₄ஸ்ஸா பார்த்த₂ தாமஸீ ॥

பார்த்த₂ — குந்தீபுத்திரனே! யா — எந்த அறிவானது, தமஸா ஆவ்ருதா — தமோ கு₃ணத்தால் சூழப்பட்டதாய், அத₄ர்மம் த₄ர்மம் இதி மந்யதே – அத₄ர்மத்தை த₄ர்மம்என்று அறிகிறதோ, ஸர்வார்த்த₂ாந் — (ஸித்₃த₄மாகவும் ஸாத்₄ய மாகவும் இருக்கும்) எல்லாப் பொருள்களையும், விபரீதாந் ச (மந்யதே) — நேர்மாறாக அறிகிறதோ, ஸா பு₃த்₃தி₄: — அந்த அறிவு, தாமஸீ — தமோ கு₃ணத்தால் உண்டாகும் புத்தியாகும்.

---

32. மேவுபொருளெல்லாம் விபரீத மாகவே
தாவுமிருள் சேர்ந்து தனஞ்செயனே — யாவதென
வொன்று மதன்மத்தை வேறுணரும் புத்திதான்
சென்று கடைக்குணத்தாஞ் சேர்ந்து.

தனஞ்செயனே — அர்ஜுநா!, தாவும் இருள் சேர்ந்து — பரவிநிற்கும் (அறிவின்மையை உண்டாக்கும்) தமோ கு₃ணத்தால் சூழப்பட்டதாய், ஆவது என ஒன்றும் அதன் மத்தை — 'இதுவே தக்கது' என்று நினைக்கவைக்கும் அத₄ர்மத்தை, வேறு உணரும் — த₄ர்மமாகவே நினைப்ப தாய், மேவு பொருள் எல்லாம் — ஸித்₃த₄மாகவும் ஸாத்₄ யமாகவும் உள்ள எல்லாப் பொருள்களையும், விபரீத மாகவே உணரும் — நேர்மாறாகவே அறிவதான, புத்தி தான் — அறிவானது, சென்று சேர்ந்து — ஜீவனை வந் தடைந்து, கடைக்குணத்து ஆம் — முக்குணங்களில் கடைசி குணமான தமோகுணத்தால் உண்டானதாய் இருக்கும்.

भा ॥ तामसी तु बुद्धिः तमसाऽऽवृता सती सर्वार्थान्विपरीतान्मन्यते । अधर्मं धर्मं, धर्मं चाधर्मं, सन्तं चार्थमसन्तम्, असन्तम् चार्थं सन्त, परं च तत्त्वमपरम्, अपरं च तत्त्वं परम् । एवं सर्वं विपरीतं मन्यत इत्यर्थः ॥ ३२ ॥

---

32. தாமஸ பு₃த்₃தி₄யை விளக்குகிறான். (தமஸா ஆவ்ருதா) அவ்வப்போது தமோகு₃ணத்தால் சூழப்பட்டதாய்; 'தாமஸபு₃த்₃தி₄' என்னும் இதன் பெயரிலிருந்தே இது தமோகு₃ணத்தால் உண்டாவது என்று தேறியபோதிலும், 'தமஸா ஆவ்ருதா' என்று தனியாகச் சொல்லுகையாலே, அவ்வப்போது தமோகு₃ணத்தால் சூழப்பட்டதாய் இது ஒவ்வொரு பொருளையும் நேர்மாறாக அறிகிறது என்று உணர்த்தப்படுகிறது. (அத₄ர்மம் த₄ர்மம் இதி ஸர்வார்த்த₂ாந் விபரீதாம்ஸ்ச யா மந்யதே) த₄ர்மம் அல்லாததை த₄ர்மம் என்றும், த₄ர்மத்தை அத₄ர்மம் என்றும், உள்ள பொருளை இல்லாத பொருள் என்றும், இல்லாத பொருளை உள்ள பொருள் என்றும், மேலான தத்துவத்தைக் கீழான தத்துவம் என்றும், கீழான தத்துவத்தை மேலான தத்துவம் என்றும் இவ்வண்ணமாக ஸித்₃த₄மாகவும், ஸாத்₄யமாகவும் இருக்கும் எல்லாப் பொருள்களையும் நேர்மாறாகவே அறிகிறதோ. 'அத₄ர்மத்தை த₄ர்மமாக நினைக்கிறது' என்பதால் 'த₄ர்மத்தை அத₄ர்மமாக நினைக்கிறது' என்பதும் உணர்த்தப்படுகிறது. ''ஸர்வார்த்த₂ாந் விபரீதாந்'' என்பதால் முற்பாதியில் சொல்லப்பட்ட த₄ர்மாத₄ர்மங்களாகிய ஸாத்₄யமான பொருள்களிலிருந்து வேறுபட்ட மற்ற ஸாத்₄யவஸ்துக்களும் ஸித்₃த₄வஸ்துக்களும் சொல்லப்படுகின்றன. உள்ள பொருளான சித் அசித் ஈஶ்வர தத்துவங்களை இல்லாத பொருளாகவும், அத்₃வைதிகள் கூறும் மாயை போன்ற இல்லாத பொருள்களை உள்ள பொருளாகவும், தாமஸ புராணங்களிலும் தாமஸ ஆக₃மங்களிலும் சொல்லுவதுபோலே பரதத்வமான நாராயணனை அபரதத்வமாகவும், அபரதத்வமான சிவன் முதலானோரைப் பரதத்வமாகவும் தாமஸ புத்தியானது அறிவிக்கிறது என்று கருத்து. (ஸா பு₃த்₃தி₄: தாமஸீ) அந்த அறிவு தமோகு₃ணத்தால் உண்டாவதாகும். இந்த ஶ்லோகத்தால் வேதத்துக்குப் புறம்பான பௌத்தம் முதலான பாஹ்ய மதங்களும். வேதத்துக்கு அவப்பொருள் கூறும் மாயாவாதம், சைவம் முதலான குத்₃ருஷ்டி மதங்களும் தமோ கு₃ணத்தால் உண்டானவை

धृत्या यया धारयते मनःप्राणेन्द्रियक्रियाः ।
योगेनाव्यभिचारिण्या धृतिस्सा पार्थ सात्त्विकी ॥ ३३ ॥

33 த்₄ருத்யா யயா த₄ாரயதே மந:ப்ராணேந்த்₃ரியக்ரியா:।
யோகே₃நாவ்யபி₄சாரிண்யா த்₄ருதிஸ் ஸா பார்த்த₂ ஸாத்த்விகீ ॥

பார்த்த₂ — குந்தீபுத்திரனே! அவ்யபி₄சாரிண்யா— வேறு பயன் கருதாத, யோகே₃ந — ப₄க₃வது₃பாஸநத்தாலே, மந:ப்ராணேந்த்₃ரியக்ரியா: — மனம், பிராணன். இந்த்₃ரியம் ஆகியவற்றின் செயல்கள், யயா த்₄ருத்யா த₄ாரயதே — (எந்த) த்₄ருதியினால் (ஒருவன்) த₄ரிக்கிறானோ, ஸா த்₄ருதி:— அந்த த்₄ருதி, ஸாத்விகீ – ஸத்வகு₃ணத்தால் உண்டானது.

---

என்று காட்டப்பட்டதாயிற்று. "யா வேத₃பா₃ஹ்யா: ஸ்ம்ருதயோ யாஶ்ச காஶ்ச குத்₃ருஷ்டய: | ஸர்வாஸ்தா நிஷ்ப₂லா: ப்ரேத்ய தமோநிஷ்டா₂ ஹி தாஸ்ஸ்ம்ருதா:॥" [மநு 12—95] [வேதத்திற்குப் புறம்பான ஸ்ம்ருதிகளும் வேதத்திற்கு அவப்பொருள் கூறும் ஸ்ம்ருதிகளுமாகிற அனைத்தும் மறுமையில் பயனற்றவை. தமோகுணத்தால் உண்டானவையாகவே அவை சொல்லப்பட்டிருக்கின்றன.] என்று மநுவும் கூறினாரன்றோ. சென்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட ராஜஸ பு₃த்₃தி₄க்கும் இந்த ஶ்லோகத்தில் சொல்லப்படும் தாமஸ பு₃த்₃தி₄க்கும் உள்ள வேறுபாட்டை இரண்டு விதமாகக் கூறுகிறார்கள்:— (1) அரைகுறையாக அறிவதும். வேறாக அறிவதும் ராஜஸ பு₃த்₃தி₄யால் விளைகிறது என்பது "யதா₂வத் ந ஜாநாதி" என்னும் பா₄ஷ்யத்திலிருந்து விளங்குகிறது; 'ஸர்வார்த்தா₂ந் விபரீதாந்' என்று இந்த ஶ்லோகத்தில் சொல்லுகையாலே எல்லாவற்றையும் நேர்மாறாக அறிவது தாமஸபு₃த்₃தி₄யாகும்—என்பது சிலர் கருத்து. (2) த₄ர்மியையே வேறாக அறிவது தாமஸ பு₃த்₃தி₄; த₄ர்மத்தை வேறாக அறிவது ராஜஸபு₃த்₃தி₄. இரண்டிலுமே ஒரு த₄ர்மியில் இல்லாத த₄ர்மங்கள் ஏறிடப்படுகின்றனவானாலும், கிளிஞ்சலை வெள்ளியென மயங்கும் இடத்திற்போலே, ஸ்வரூப நிரூபக த₄ர்மத்தை மாறுபடுத்தி அறிவது தாமஸ பு₃த்₃தி₄யால் விளைவது. வெண்சங்கை மஞ்சள் நிறமுள்ளதாக அறியும் இடத்திற்போலே, நிருபித ஸ்வரூப விஶேஷணத்தை மாறாக அறிவது ராஜஸ பு₃த்₃தி₄யால் விளைவது என்பது மற்றவர்கள் கருத்து. 32.

भा ॥ यया धृत्या योगेनाव्यभिचारिण्या मनःप्राणेन्द्रियाणां क्रियाः पुरुषो धारयते; योगः — मोक्षसाधनभूतं भगवदुपासनम्; योगेन

33. உண்மையினா னெஞ்சை யுயிர்புலன்க ளுற்றசெயல்
வண்மையறி யோகத்து மன்னிவருந் — திண்மையினா
லுற்றே தரிக்கு முயர்திருதி பார்த்தனே
யற்றே முதற்குணத்த தாம்.

பார்த்தனே — அர்ஜுனனே! வண்மை அறியோகத்து மன்னிவரும் திண்மையினால் — (தாழ்ந்த பயன்களைக் கருதாமல்) உயர்ந்த பயனான மோக்ஷத்திற்கு ஸாத₄நமான பக₃வது₃பாஸநத்தில் ஊன்றியிருக்கும் உறுதியினாலே, நெஞ்சு உயிர் புலன்கள் உற்ற செயலை — மனம், பிராணன், இந்த்ரியங்கள் ஆகியவற்றின் செயல்களை, உண்மையினால் உற்றே தரிக்கும் உயர் திருதி — உள்ளபடி பொருந்தி தரிக்கும் உயர்ந்த த்₄ருதியானது, அற்றே முதற்குணத்தது ஆம்— நிச்சயமாக முதல் கு₃ணமான ஸத்வ கு₃ணத்தால் உண்டானதாகும்.

33. சென்ற மூன்று ஶ்லோகங்களில் பு₃த்₃தி₄யானது முக்குணங்களையிட்டு மூவகையாயிருப்பதை விளக்கிவிட்டு, இது முதல் மூன்று ஶ்லோகங்களில் 'த்₄ருதி'யானது முக்குணங்களையிட்டு மூவகையாயிருப்பதை விவரிக்கிறான். அதில் இந்த ஶ்லோகத்தில் ஸாத்விகத்₄ருதியை விவரிக்கிறான். (அவ்யபி₄சாரிண்யா யோகே₃ந) வேறு பயன்கருதாத மோக்ஷஸாத₄நமான ப₄க₃வது₃பாஸநத்தாலே. ராஜஸத்₄ருதியை விவரிக்கும் அடுத்த ஶ்லோகத்தில் 'த₄ர்ம காமார்த்த₂ாந் த₄ாரயதே' என்று ராஜஸபு₃த்₃தி₄யானது அறம்பொருள் இன்பம் என்னும் மூன்று புருஷார்த்த₂ங்களின் ஸாத₄னங்களை த₄ரிப்பதாகக்கூறுகையாலே, இங்கு 'யோகு₃ஶப்₃த₃ம்' நாலாவது புருஷார்த்த₂மான மோக்ஷத்துக்கு ஸாத₄நமாயிருக்கும் ப₄க₃வது₃பாஸநத்தைக் குறிக்கும். 'அவ்யபி₄சாரிண்யா' என்னும் பத₃த்தாலே முன்சொன்னபடி அந்த உபாஸநம் வேறுபயன் கருதாததாய் இருக்கவேண்டும் என்று உணர்த்தப்படுகிறது.

प्रयोजनभूतेनाऽव्यभिचारि[ण्यः]ण्या योगोद्देशेन प्रवृत्तास्तत्साधनभूता मनःप्रभृतीनां क्रियाः यया धृत्या धारयते, सा सात्त्विकीत्यर्थः ॥३३॥

---

(மந:ப்ராணேந்த்3ரியக்ரியா: யயா தா4ரயதே) அந்த உபாஸநத்தைக்குறித்துச் செயல்படுபவையாய், அதற்கு ஸாத4நமாய் இருப்பவையான மனம், ப்ராணன், இந்திரியங்கள் ஆகியவற்றின் செயல்களை எந்த த்4ருதியாலே ஒருவன் தா4ரிக்கின்றானோ. உபாஸநத்தால் இந்தச் செயல்களை தா4ரிக்கையாவது—உபாஸநஸ்வரூபமும் அதன் ப2லமான மோக்ஷமும் பேரானந்த3மாய் இருக்கையால், மனம் முதலானவற்றின் செயல்களைத் தாழ்ந்த விஷயங்களில் செல்லாமல் தடுத்து ப4க3வத்3 விஷயத்தில் செலுத்துகையேயாகும். எம்பெருமானை ஸாக்ஷாத்கரிப்பதே மனத்தின் செயலாகும். “யத்ர மநஸ் தத்ர வாயு: யத்ர வாயு: தத்ர மந:” [மனமிருக்கும் இடத்தில் ப்ராணனாகிற வாயு இருக்கும்; வாயுவாகிற ப்ராணன் இருக்கும் இடத்தில் மனம் இருக்கும்] என்கிறபடியே மனமும் வாயுவும் ஒன்றோடொன்று பிணைந்திருக்கையாலே, எம்பெருமானை ஸாக்ஷாத்கரிப்பது ப்ராணனின் க்ரியையுமாகும். ‘புநர்வாயுபத2ம் ப்ராப்ய மநோ ப்4ரமதி வாயுவத்’ [மறுபடியும் வாயு (பிராணன்) இருக்கும் இடத்தை அடைந்து மனம் வாயுவைப் போல் சுழல்கிறது] என்று சொல்லப்பட்டதன்றோ. ப்ராணாயாம ப்ரக்ரியையாலே உபாஸநத்திற்குத் தடையாயிருக்கும் துன்பங்கள் பாபங்கள் முதலானவற்றைப் போக்குவதற்குக் காரணமாயிருக்கையால் அந்த ப்ராணாயாம க்ரியையையும் ப்ராணனின் செயலாகக் கூறலாம். மனத்தைத் தனியாக எடுக்கையால், ‘இந்த்3ரியக்ரியா:’ என்றது மற்ற பத்து இந்திரியங்களின் செயல்களைச் சொல்லுகிறது. இந்த இந்திரியங்களின் செயல்களும் உபாஸநத்திற்கு உதவி புரிகின்றன.

ஸ்வாத்4யாயாத்3 யோக3மாஸீத யோகா3த் ஸ்வாத்4யாயமாமநேத் |
ஸ்வாத்4யாய யோக3ஸம்பத்த்யா பரமாத்மா ப்ரகாஸதே ||
[வி. பு. 6-6-2]

[பொருளுடன் வேதங்களைக் கற்ற பின்பு உபாஸநம் செய்ய வேண்டும்; உபாஸநம் செய்தபிறகு பொருளுடன் வேதங்களைச் சிந்திக்க வேண்டும். வேதங்களைக் கற்பதும் உபாஸநமும் பூர்ணமானால் பரமாத்மா காட்சியளிக்கிறான்.] முதலான பிரமாணங்

यया तु धर्मकामार्थान् धृत्या धारयतेऽर्जुन ।
प्रसङ्गेन फलाकाङ्क्षी धृतिस्सा पार्थ राजसी ॥ ३४ ॥

34. யயா து த$_4$ர்மகாமார்த்த$_2$ாந் த்$_4$ருத்யா தாரயதேऽர்ஜுந ।
ப்ரஸங்கே$_3$ந ப$_2$லாகாங்க்ஷீ த்$_4$ருதிஸ்ஸா பார்த்த$_2$ ராஜஸீ ॥

பார்த்த$_2$ அர்ஜுந — குந்தியின் பிள்ளையான அர்ஜுனா! ப$_2$லாகாங்க்ஷீ — (மோக்ஷம் தவிர்ந்த) பயனை விரும்பும் மனிதன், ப்ரஸங்கே$_3$ந — மிகுந்த பற்றுடன், த$_4$ர்மகாமார்த்த$_2$ாந் — அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று புருஷார்த்தங்களுக்கும் ஸாத$_4$நமான செயல்களை, யயா து த்$_4$ருத்யா — எந்தத்$_4$ருதியினால். த$_4$ாரயதே - தரிக்கிறானோ, ஸாத்$_4$ருதி: - அந்த த்$_4$ருதி, ராஜஸீ — ரஜோ கு$_3$ணத்தால் உண்டானது.

---

34. தன்மகா மார்த்தங்க டன்னையே யாதினாற்
புன்மைசேர் தன்பயனாற் புந்தித்து—வன்மைசேர்
சங்க முடனே தரிக்கின்றா னத்திருதி
யங்க விடைக்குணத்த தாம்.

தன்ம காமார்த்தங்கள் தன்னையே — அறம் இன்பம் பொருள் என்னும் மூன்று புருஷார்த்த$_2$ங்களுக்கு ஸாத$_4$நமான செயல்களை, புன்மை சேர் தன் பயனால் புந்தித்து — தனக்கான தாழ்ந்த பயன்களைக் கருதி, வன்மைசேர் சங்க முடனே — வலிமைமிக்க பற்றுடன், யாதினால் தரிக்கின்றான் — எந்த த்$_4$ருதியினாலே தரிக்கின்றானோ, அத் திருதி — அந்த த்$_4$ருதி, அங்கு அவ் விடைக்குணத்ததாம் — முக்குணங்களில் இடைக்குணமான ரஜோகுணத்தினால் உண்டானதாகும்.

---

களில் சொல்லப்பட்டபடி அவ்வப்போது உபாஸநம் செய்து முடித்தவுடன் செய்யப்படும் உபாஸநாங்க$_3$மான வேதா$_3$ப்$_4$யாஸம் முதலானவற்றுக்கு இந்திரியக்ரியைகள் உதவுகின்றன. உபாஸநத்துக்கு அங்க$_3$மான அஷ்டாங்க$_3$யோக$_3$த்தில் ஓரங்க$_3$மான ப்ரத்யாஹாரத்தில் இந்திரியங்கள் வெளிவிஷயங்களிலிருந்து திருப்பி ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தில் ஈடுபடுத்தப்படுகின்றன. அதை இந்த்$_3$ரிய க்ரியையாகச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். (ஸா த்$_4$ருதி: ஸாத்விகீ) அந்த த்$_4$ருதி ஸத்வகு$_3$ணத்தால் உண்டானது. 33,

भा । फलाकाङ्क्षी पुरुषः प्रकृष्टसङ्गेन धर्मकामार्थान् यया धृत्या धारयते, सा राजसी । धर्मकामार्थशब्देन तत्साधनभूता मन.प्राणेन्द्रिय-क्रिया लक्ष्यन्ते । *फलाकाङ्क्षीत्यत्रापि फलशब्देन राजसत्वाद्धर्मकामार्था एव विवक्षिताः । अतो धर्मकामार्थापेक्षया मनःप्रभृतीनां क्रियाः यया धृत्या धारयते, सा राजसीयुक्त भवति ॥ ३४ ॥

---

34. ராஜஸ த்4ருதியை விளக்குகிறான். (ப2லாகாங்க்ஷீ) அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று பயன்களை விரும்புகின்ற மனிதன். ராஜஸ த்4ருதியைப்பற்றிப் பேசுகையாலே, இங்கு சொல்லப்படும் ப2லம் மோக்ஷமாய் இருக்கமுடியாது. ஶ்லோகத்தின் முற்பாதியில் சொல்லப்பட்ட அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று புருஷார்த்த2ங்களையும் ப2ல ஶப்3த3ார்த்த2மாகக் கொள்வதே பொருத்தம். (ப்ரஸங்கே3ந) மிகுந்த பற்றுடன். ப்ரகரணத்துக்குப் பொருந்தாதாகையாலே 'ப்ரஸங்க3' ஶப்3த3த்திற்கு 'ப்ராஸங்கி3கம்' என்னும் பொருளைக் கொள்ளமுடியாது. ஆகையால் 'ப2லனில் மிகுந்த பற்றோடு' என்று பொருள் கொள்ளப்பட்டது. (த4ர்மகாமார்த்தா2ந் யயா து4த்4ருத்யா தா4ரயதே) அறம் இன்பம் பொருள் என்னும் மூன்று புருஷார்த்த2ங்களுக்கு ஸாத4நமாயிருக்கும் மந:ப்ராணேந்த்3ரியக்ரியைகளை எந்த த்4ருதியாலே த4ரிக்கிறானோ அறம் பொருள் இன்பம் ஆகிய புருஷார்த்த2ங்களை த்4ருதியாலே த4ரிக்க முடியாதாகையாலே அந்தப் புருஷார்த்த2ங்களுக்கு ஸாத4நமாய், த்4ருதியாலே தரிக்கத்தக்கவையான மந: ப்ராண இந்த்ரியக்ரியைகள் த4ர்மகாமார்த்த2 ஶப்3த3த்தாலே லக்ஷணையாலே சொல்லப்படுகின்றன. (ஸா த்4ருதி: ராஜஸீ) சென்ற ஶ்லோகத்தில் மோக்ஷஸாத4நத்திற்கு உதவிபுரியும் மந ப்ராணேந்த்3ரியக்ரியைகள் ஸாத்விக த்4ருதியாலே தரிக்கப்படுவதாகச் சொன்னதுபோலே, இந்த ஶ்லோகத்தில் மற்ற மூன்றுபுருஷார்த்த2ங்களுக்கும் ஸாத4னமான மந: ப்ராணேந்த்3ரியக்ரியைகள் ராஜஸ த்4ருதியால் த4ரிக்கப்படுவதாகச் சொல்லுகிறது. ஆக, அறம் பொருள் இன்பம் என்னும்மூன்று புருஷார்த்த2ங்களை விரும்பி மனம் முதலான மூன்றின்செயல்கள் எந்த த்4ருதியாலே த4ரிக்கப்படுகின்றனவோ, அது 'ராஜஸத்4ருதி' என்று சொல்லப்பட்டதாயிற்று. (அர்ஜுந) வெள்ளை நிறத்தவனான நீ இந்த ராஜஸ த்4ருதியையும் விலக்கி, ஸாத்விக த்4ருதியைக் கைக்கொண்டு வெள்ளை மனத்தவன் ஆகவேண்டும் என்று கருத்து. 34.

यया स्वप्नं भयं शोकं विषादं मदमेव च ।
न विमुञ्चति दुर्मेधा धृतिस्सा पार्थ तामसी ॥ ३५ ॥

35. யயா ஸ்வப்நம் ப4யம் ஶோகம் விஷாத3ம் மத3மேவ ச ।
ந விமுஞ்சதி து3ர்மேத4ா த்4ருதிஸ்ஸா பார்த்த2 தாமஸீ ॥

பார்த்த2— குந்தீபுத்திரனே! து3ர்மேத4ா: —தீய அறிவுள்ள ஒருவன், ஸ்வப்நம் மத3ம்— கனவு, (தூக்கம்), மத3ம் ஆகியவற்றை விளக்கும் மனம் பிராணன் முதலானவற்றின் செயல்களையும், ப4யம் ஶோகம் விஷாத3ம் ஏவச— அச்சம், வருத்தம், கவலை ஆகியவற்றை விளக்கும் விஷயங்களுக்குக் காரணமான மனம் பிராணன் முதலானவற்றின் செயல்களையும், யயா ந விமுஞ்சதி—எந்த த்4ருதியால் த4ரிக்கிருனோ, ஸா த்4ருதி :— அந்த த்4ருதி, தாமஸீ— தமோகு3ணத்தால் விளைவது.

---

35. மன்னு முறக்கம் பயஞ்சோகம் வாட்டமதந்
துன்னுமிவை யித்தனையுந் துன்மதியான்— மன்னி
யிடைவிடா தேமருவு மித்திருதி பார்த்தா
கடையிலா குங்குணத்தின் காழ்ப்பு.

பார்த்தா—குந்தீபுத்திரனே! துன்மதியான்—தீய அறிவுள்ள ஒருவன், மன்னும் உறக்கம் மதம்—வந்து சேரும் கனவு தூக்கம் மதம் ஆகியவற்றை விளக்கும் மனம் பிராணன் முதலானவற்றின் செயல்கள், பயம் சோகம் வாட்டம்—அச்சம் வருத்தம் கவலை ஆகியவற்றை விளக்கும் விஷயங்களுக்குக் காரணமான மனம் பிராணன் முதலானவற்றின் செயல்கள், துன்னும் இவை இத்தனையும்— (என்று) நெருங்கியிருக்கும் இவையனைத்தையும், மன்னி— சேர்ந்து, இடைவிடாதே மருவும் இத்திருதி—எப்போதும் த4ரித்திருக்கும் இந்த த்4ருதி, கடையில் ஆகும் குணத்தின் காழ்ப்பு—கடைசிக்குணமான தமோகு3ணத்தினுல் உண்டாகும் தீய தன்மையாகும்.

भा ॥ यया धृत्या स्वप्नं — निद्रां, मदं — विषयानुभवजनितं मदं स्वप्नमदावुद्दिश्य प्रवृत्ता मनःप्राणादीनां क्रियाः दुर्मेधा न विमुञ्चति — धारयति । भयशोकविषादशब्दाश्च भयशोकादिदायिविषयपराः ; तत्साधनभूताश्च मनःप्राणादिक्रिया यया धारयते, सा धृतिस्तामसी ॥ ३५ ॥

---

35 தாமஸத்₄ருதியை விளக்குகிருன். (து₃ர்மேத₄ா:) தீய அறிவையுடையவன். தீய அறிவுடையவனுகையாலேயே இவன் இந்த ஶ்லோகத்தில் சொல்லப்படும் காரியத்தைச் செய்கிருன் என்று கருத்து. (ஸ்வப்நம்) கனவைச் சொல்லும் இப்பதம் தூக்கத்திற்கும் உபலக்ஷணம். (மத₃ம்) ஶப்₃த₃ாதி₃ விஷயங்களை அநுப₄விப்பதினுல் உண்டாகும் க₃ர்வத்தைக் குறிக்கிறது. த்₄ருதியாலே த₄ரிக்கப்படுவதாகச் சொல்லுகையாலே தெய்வச்செயலால் வரும் பித்துப்பிடித்தலை இங்குப் பொருளாகக் கொள்ள முடியாது. புருஷனுக்கு வசப்பட்டிராத கனவு, தூக்கம் முதலானவற்றை அவன் த₄ரிக்கமுடியாதாகையாலே, இங்கு ஸ்வப்ந மத₃சப்தங்கள் அவற்றுக்குக் காரணமான மனம் பிராணன் முதலானவற்றின் செயல்களைக்குறிக்கிறது. (ப₄யம் ஶோகம் விஷாத₃ம் ஏவச) அச்சம் வருத்தம் கவலை ஆகியவற்றை விளைக்கும் விஷயங்களை முறையே ப₄ய ஶோக விஷாத₃ சப்தங்கள் குறிக்கின்றன. தீய அஹங்காரத்தினுல் உண்டாகும் வலிமை மிக்க விரோத₄ம் முதலானவை அச்சத்தை விளைக்கும் விஷயங்கள். கோபம் முதலானவற்ருல் செய்யப்படும் உறவினரைக் கொல்லுவது முதலானவை வருத்தத்தை விளைக்கும் விஷயங்கள். பணத்தை வீணுகச் செலவுசெய்வது முதலானவை கவலையை விளைக்கும் விஷயங்கள். இங்கும் த₄ரிக்கப்படுவதாகச் சொல்லுகையாலே ப₄யம் முதலான சப்தங்கள் அவ்விஷயங்களுக்குக் காரணமான மனம் பிராணன் முதலானவற்றின் செயல்களைக் குறிக்கின்றன. (யயா ந விமுஞ்சதி) ஸுக₂ம் விளைப்பவையாக இவனுல் கருதப்படும் ஸ்வப்நமத₃ங்களுக்குக் காரணமான செயல்களையும், துன்பத்தை விளைக்கும் ப₄யம் முதலானவற்றுக்குக் காரணமான செயல்களையும் எந்த த்₄ருதியாலே இவன் விடாமல் தரித்து நிற்கிருனே; த்₄ருதியின் கார்யமாகையாலே

सुखं त्विदानीं त्रिविधं शृणु मे भरतर्षभ ।

*36. ஸுக₂ம் த்வித₃ாநீம் த்ரிவித₄ம் ஶ்ருணு மே ப₄ரதர்ஷப₄ I

ப₄ரதர்ஷப₄ – பரதர்குலத்தலைவனே!, இத₃ாநீம் — இப்போது, ஸுக₂ம் து—ஸுகமானது, த்ரிவித₄ம் — (முக்குணங்களையிட்டு) மூன்றுவகைப்பட்டிருப்பதை, மேஶ்ருணு—என்னிடமிருந்து கேட்பாயாக.

भा ॥ पूर्वोक्तास्सर्वे ज्ञानकर्मकर्त्रादयो यच्छेषभूताः, तच्च सुखं गुणतस्त्रिविधमिदानीं शृणु ॥

---

விடாமையைச் சொன்னது த₄ரித்து நிற்பதையும் காட்டும். ப₄யந்தவன் எப்படி த₄ரித்து நிற்கமுடியும்? எனில்: தீய அறிவை உடைய இவன் விளைவதறியாமல் ப₄யத்திற்குக் காரணமானவற்றைத் தொடர்ந்து செய்வதே த₄ாரணமாகையாலேபொருந்தும்.(ஸாத்₄ருதி: தாமஸீ) அந்த த்₄ருதி தமோகு₃ணத்தால் விளைவது. 35.

*36. இதுவரையில் ஜ்ஞாநம் கர்யம் கர்த்தா முதலானவை முக்குணங்களையிட்டு மூன்று வகைப்பட்டிருக்கின்றன என்று விவரிக்கப்பட்டது. இவையெல்லாம் எதன் பொருட்டு ஆகின்றனவோ அந்த ஸுக₂ம் முக்குணங்களையிட்டு மூன்று வகைப்பட்டது என்பதை இனி விவரிக்கத் தொடங்கியவனாய், இந்த அரை ஶ்லோகத்தாலே அதை ப்ரஸ்தாபிக்கிறான். (இத₃ாநீம்) இப்போது, "ஜ்ஞாநம் கர்மம் கர்த்தா முதலான ஸாத₄நவகைகளைப்பற்றி விளக்கியபின்பு, இவற்றால் ஸாத்₄யவகைகள் என்ன? என்னும் கேள்வி எழுந்திருக்கும் இப்போது" என்று கருத்து. (ஸுக₂ம் து) ஸுக₂மானது, 'து' ஶப்₃த₃ம் முன் ஶ்லோகங்களினால் சொல்லப்பட்ட ஜ்ஞாநம் முதலானவற்றால் ஸாத்₄யமானவற்றைப்பற்றிச் சொல்லப் போவதை உணர்த்துகிறது. (த்ரிவித₄ம்) முக்குணங்களையிட்டு மூன்று வித₄மாய் இருப்பதை. (மே ஶ்ருணு) என்னிடமிருந்து கேட்பாயாக. (ப₄ரதர்ஷப₄) ப₄ரதகுலத்தில் உதித்தவனாகையால் நீ சிறந்ததான ஸாத்விக ஸுக₂த்தைப் பெறத் தகுதியுள்ளவன் என்று கருத்து. *36.

अभ्यासाद्रमते यत्र दुःखान्तं च निगच्छति ॥ ३६ ॥

36* அப்4யாஸாத்3 ரமதே யத்ர து3:க்க2ாந்தம் ச நிக3ச்ச2தி ।

भा ॥ यस्मिन् सुखे चिरकालाभ्यासात् क्रमेण निरतिशयां रतिं प्राप्नोति, दुःखान्तं च निगच्छति— निखिलस्य सांसारिकस्य दुःखस्यान्तं निगच्छति ॥ ३६ ॥

भा ॥ तदेव विशिनष्टि—

यत्तदग्रे विषमिव परिणामेऽमृतोपमम् ।
तत्सुखं सात्त्विकं प्रोक्तमात्मबुद्धिप्रसादजम् ॥ ३७ ॥

37. யத்தத3க்3ரே விஷமிவ பரிணாமேऽம்ருதோபமம் ।
தத் ஸுக2ம் ஸாத்விகம் ப்ரோக்தமாத்மபு3த்3தி4
ப்ரஸாத3ஜம் ॥

யத்ர அப்4யாஸாத் — எந்த ஸுக2த்தில் நீண்டநாள் பழகுவதாலே, ரமதே — ஒப்பற்ற ஆனந்தத்தை அடைகிருனோ, து3:க்க2ாந்தம் ச நிக3ச்ச2தி—எல்லா ஸம்ஸாரத் துன்பங்களின் முடிவையும் அடைகிருனோ, யத் தத் — எந்த ஸுக2ம், அக்3ரே— (யோக3த்தைத்) தொடங்கும் காலத்தில், விஷம் இவ—(பழகாத ஆத்ம விஷயத்தில் மிகுந்த சிரமப்பட வேண்டியிருக்கையால்) துன்பம்போல் தோன்றுகிறதோ, பரிணாமே—(யோக3த்தின்) இறுதியில், அம்ருதோபமம் — (ஆத்மஸ்வரூபத்தை அனுப4விக்கையால்) அமுதத்தைப் போல் இனிதாயிருக்கிறதோ, ஆத்ம பு3த்3தி4 ப்ரஸாத3ஜம்— மற்ற விஷயங்களிலிருந்து நீங்கி ஆத்மாவையே அனுப4விக்கையால் உண்டானதான, தத் ஸுக2ம்—அந்த ஸுக2மானது, ஸாத்விகம் ப்ரோக்தம் — ஸத்வ கு3ணத்தால் உண்டானது என்று சொல்லப்படுகிறது.

36. தானமர்ந்து சேர்சுகந்தான் றன்குணத்தான் மூன்று
யானபடி கேணீ யமர்விசையா — வூனமற [வகை
மிக்கெதனிற் சீலத்தான் மெய்யே யுகப்பெய்தித்
துக்கமுடி வுஞ்செறியுஞ் சூழ்ந்து.

37. ஏது முதல்விடம்போ லின்னுது பின்னதுதான்
மீது வளர்ந்தமுத மேயொக்கு — மோதுமுயிர்ப்
புந்தித் தெளிவுதரும் பொற்பார் சுகமதுதான்
முந்தித் திகழ்குணத்தின் மொய்ம்பு.

36 அமர்விசையா — போரிலே வெற்றியே பெறும் அர்ஜுனு! தான் அமர்ந்து சேர் சுகந்தான் — மனிதன் பொருந்திச் சேரும் சுகமானது, தன் குணத்தால் — அவனிடமுள்ள ஸத்வம் ரஜஸ் தமஸ் ஆகிய மூன்று குணங்களில் எது மிகுதியாயிருக்கிறதோ அதையிட்டு, மூன்று வகையானபடி — மூன்று வகையாயிருப்பதை, நீ கேள் — நீ (என்னிட மிருந்து) கேட்பாயாக. ஊனமற — குற்றமில்லாதபடி, எதனில் — எந்த சுகத்தில், மிக்க சீலத்தால் — மிகவும் பழகுவதால், (மனிதன்) மெய்யே உகப்பு எய்தி — உண்

36*-37. இந்த ஒன்றரை ஶ்லோகங்களாலே ஸாத்விக ஸுகத்தை விளக்குகிருன். (யத்ர அப்யாஸாத்) எந்த ஸுகத்தில் நீண்டநாள் பழகுவதால், சில ஸுகங்கள் மேலெழப்பார்க்கும்போது இனியவையாய் இருக்கும், நீண்டநாள் பழகினுல் துன்பம் தருபவை என்று விளங்கும். இந்த ஸாத்விக ஸுகம் அப்படியல்லாமல், பழகப்பழகவே இனிமை மிகும் என்று கருத்து. (ரமதே) இந்த ஸாத்விக ஸுகத்தில் நீண்டநாள் பழகுவதால் இன்பம் மேலும் மேலும் வளரப்பெற்று ஒப்பற்ற மோக்ஷ ஸுகத்தையும் அடைவான் என்று கருத்து (து:க்காந்தம் ச நிகச்சதி) துன்பத்தின் முடிவையும் அடைகிருனே; இன்ன துக்கம் என்று கூறுமையால், ஸம்ஸாரத் தொடர்பால் உண்டாகும் எல்லாததுன்பங்களிலிருந்தும் விடுபடு கிருன் என்று கருத்து. இப்படி முப்பத்தாருவது ஶ்லோகத்தின் பிற்பாதியால் ஸாத்விக ஸுகம் துன்பங்களிலிருந்து விடுபடச்செய்து சிறந்த ஆனந்தத்தை விளக்கும் என்று கூறி முப்பத்தேழாவது

भा॥ यत्तत्सुखम्; अग्रे — योगोपक्रमवेलायां बह्वायाससाध्यत्वा-द्विविक्तस्वरूपस्याननुभूतत्वाच्च विषमिव दुःखमिव भवति; परिणामेऽमृतोपमम् — परिणामे — विपाके अभ्यासबलेन विविक्तात्मस्वरूपाविर्भावे

---

மையான ஆனந்தத்தை அடைந்து, துக்கமுடிவும் சூழ்ந்து செறியும் — எல்லாத் துன்பங்களின் முடிவையும் அடைவானோ, ஏது — எந்த சுகமானது, முதல் — (யோகத்தைத்) தொடங்கும் காலத்தில், விடம்போல் இன்னாது-(பழகாத ஆத்மவிஷயத்தில் மிகுந்த சிரமப்படவேண்டியிருக்கையால்) விஷத்தைப்போல்துன்பமளிக்கிறதோ, பின் — (யோகத்தின்) இறுதியில், அதுதான் — அதுவே, மீது வளர்ந்து அமுதமே ஒக்கும் — (ஆத்ம ஸ்வரூபத்தை) மேன்மேலும் அனுபவிக்கையால் அமுதத்தை ஒத்திருக்குமோ, ஓதும் உயிர் புந்தித் தெளிவுதரும் பொற்பார் சுகம் அதுதான் — மற்ற விஷயங்களிலிருந்து நீங்கி, ஆத்மாவையே அனுபவிக்கையால் உண்டானதான அந்தச் சுகம், முந்தித் திகழ் குணத்தின் மொய்ப்பு — முதல் கு3ணமான ஸத்வ கு3ணத்தால் ஏற்பட்ட சிறந்த தன்மையாகும்.

---

ஶ்லோகத்தில் அதையே விளக்குகிறான். (யத்தத்)யாதொரு ஸுக2ம். ஶ்ருதி முதலான பிரமாணங்களில் பிரசித்தமானது இந்த ஸாத்விக ஸுக2ம் என்று கருத்து. பிற்பாதியில் இதையே 'தத்ஸுக2ம்' என்று அநுவதி3ப்பது இதன்மேல் உள்ள ஆத3ரத்தாலே. (அக்3ரே) யோக3த்தைத் தொடங்கும் காலத்தில். (விஷம் இவ) ஆத்மஸ்வரூபமானது இதுவரையில் பழகாததாகையாலும், அதில் பழகுவதாகிற யோக3த்தை அநுஷ்டிப்பது மிகுந்த முயற்சியை எதிர்பார்க்கையாலும் விஷம்போல் துன்பத்தை அளிப்பதாய் இருக்கிறதோ. தொடக்கத்தில் இது துன்பத்தை அளிப்பதாய் இருப்பதைக்கண்டு புல்லறிவாளர்கள் இதைக் கைவிட்டுவிடுவார்கள் என்று உணர்த்துகிறது. (பரிணாமே அம்ருதோபமம்)யோக3த்தின் இறுதியில் இந்தஸுக2மே அமுதப்போல் இனிதாயிருக்கிறது என்று கருத்து. ஒரு ஸுக2மே முதலில் விஷம் போலும் பிறகு அமுதம் போலும் எப்படியிருக்க

अमृतोपमम् भवति; तच्चात्मबुद्धिप्रसादजम् — आत्मविषया बुद्धिः— आत्मबुद्धिः, तस्याः निवृत्तसकलेतरविषयत्वं प्रसादः, निवृत्तसकलेतरविषय- बुद्धया विविक्तस्वभावात्मानुभवजनितं सुखममृतोपमं भवति; तत्सुखं सात्त्विकं प्रोक्तम् ॥ ३७ ॥

विषयेन्द्रियसंयोगाद्यत्तदग्रेऽमृतोपमम् ।
परिणामे विषमिव तत्सुखं राजसं स्मृतम् ॥ ३८ ॥

38. விஷயேந்த்3ரியஸம்யோக3ாத்3 யத்தத3க்3ரே அம்ருதோபமம் |
பரிணமே விஷமிவ தத் ஸுக2ம் ராஜஸம் ஸ்ம்ருதம் ||

விஷயேந்த்3ரிய ஸம்யோக3ாத் — (அன்னம் பானம் முதலான) விஷயங்களுக்கு இந்திரியங்களோடு சேர்த்தி ஏற்படுகையால், அக்3ரே — (அந்த விஷயங்களை அனுப4விக்கும்) ஆரம்ப காலத்தில், யத்தத் அம்ருதோபமம் — யாதொரு

---

முடியும்? எனில்: முதலில் ஆயாஸமிகுதியாலே விஷம் போல் தோன்றும் இது பழகப்பழக ஆத்மஸ்வரூபம் ஆவிர்ப்ப4விக்கும் போது அமுதம் போல் இனியதாகிறது என்று கருத்து. மேலும் எத்தகையது எனில் —(ஆத்ம பு3த்3தி4 ப்ரஸாத3ஜம்) மற்ற விஷயங்களிலிருந்து நீங்கி ஆத்மாவை அனுப4விக்கையால் உண்டானது. ப3லனைச் சொல்லும் இடமாகையாலே 'ஆத்மாவின் புத்தி' என்று கொள்ளாமல் 'ஆத்ம விஷயமான புத்தி' என்று பா4ஷ்யத்தில் பொருள் கொள்ளப்பட்டது. புத்திக்கு 'ப்ரஸாத3ம்' எனப்படும் தெளிவாவது — தகாதவையான ஶப்3த3ாதி3 விஷயங்களின் தொடர்பாகிய கலக்கம் நீங்கியிருக்கையே ஆகும். ஆக, மற்ற விஷயங்களிலிருந்து நீங்கியிருப்பதாய், ஆத்மாவின் அனுப4வத்தால் உண்டானதாயிருக்கும் ஸுக2மே அமுதத்தை ஒத்திருக்கும் என்றதாயிற்று. இங்கு ஆத்ம பு3த்3தி4 என்றது கைவல்ய நிஷ்ட2ர்கள் விஷயத்தில் ப்ரக்ருதியினின்றும் நீங்கிய தம்முடைய ஆத்மாவை மட்டும் விஷயீகரிப்பது பரமாத்ம நிஷ்ட2ர்கள் விஷயத்தில் ஆத்மாவோடு

भा ॥ अग्रे-अनुभववेलायां विषयेन्द्रियसंयोगात् यत्तदमृतमिव भवति;

ஸுக₂ம் அமுதம்போல் இருக்கிறதோ, பரிணமே—(அந்த விஷயானுபவத்தின் ப₂லனை அனுபவிக்கும்) கடைசிக் காலத்தில், விஷம் இவ — விஷத்தைப்போல் துன்பத்தைத் தருகிறதோ, தத் ஸுக₂ம்—அந்தஸுக₂ம், ராஜஸம் ஸ்ம்ருதம் —ரஜோகு₃ணத்தால் உண்டாவது என்றுசொல்லப்படுகிறது.

38. மூளும் பொறிபுலனுன் முன்னமுதம் போலாகி
மீளும் பொழுதில் விடம்போலே—நாளுங்
கொடுநிரையத் தேவீழ்க்கக் கூட்டுஞ் சுகந்தா
னடுத்திகழு மக்குணத்தி னட்பு.

மூளும் பொறி புலனுல்—(அன்னம் பானம் முதலான) விஷயங்களுக்கு இந்திரியங்களோடு சேர்த்தி ஏற்படுகையால், முன்—(அந்த விஷயங்களை அனுப₄விக்கும்) ஆரம்ப காலத்தில், அமுதம் போல் ஆகி—அமுதம் போல் இருந்து, மீளும் பொழுதில் — (அதனுடைய ப₂லனை அனுப₄விக்கும்) கடைசிக்காலத்தில், விடம் போலே — விஷத்தைப்போலே, நாளும்—இம்மையிலும் மறுமையிலும், கொடு நிரையத்தே வீழ்க்கக் கூட்டும் — கொடுமையான துன்பத்தில் விழும்படியாகச் செய்து விடுகிற, சுகந்தான் — சுகமானது, நடுத் திகழும் அக்குணத்தின் நட்பு — முக்குணங்களின் நடுவிலுள்ள ரஜோகு₃ணத்தின் சேர்த்தியால் உண்டானது.

பரமாத்மாவையும் விஷயீகரிப்பது. ஆத்மானந்தம் சிறியதாகவும், பரமாத்மானந்தம் எல்லையற்றதாகவும் இருந்தபோதிலும் இரண்டுமே அமுதத்தை ஒத்தது என்று சொல்லத்தடையில்லை. (தத் ஸுக₂ம் ஸாத்விகம் ப்ரோக்தம்) அந்த ஸுக₂ம் ஸத்வகு₃ணத்தால் உண்டாவதாகச் சொல்லப்படுகிறது 36*, 37.

38. ராஜஸ ஸுக₂த்தை விளக்குகிறுன். ஸாத்விக ஸுக₂த்துக்கு நேர் மாருக இது தொடக்கத்தில் அமுதம் போலிருந்து, இறுதியில் விஷம்போல் ஆகிறது என்கிறுன்,

परिणामे विपाके विषयाणां सुखतानिमित्तक्षुदादौ निवृत्ते तस्य च सुखस्य निरयादिनिमित्तत्वाद्विषमिव पीतं भवति; तत्सुखं राजसं स्मृतम् ॥ ३८॥

(அக்3ரே) ஶப்3த3ாதி3 விஷயங்களை அனுப4விக்கும் ஆரம்ப4காலத்தில். (விஷயேந்த்3ரிய ஸம்யோகா3த் | யத் தத் அம்ருதோபமம்) அந்த விஷயங்களில் இந்த்ரியங்கள் சேர்வதால் யாதொரு இன்பமானது அம்ருதம்போல் இனிக்கிறதோ. பசியிருக்கும்போது அன்னம் (உணவு) இந்த்ரியங்களால் சுவைக்கப்பட்டு இனிப்பதையும், தாகம் இருக்கும்போது பானம் இந்திரியங்களால் சுவைக்கப்பட்டு இனிப்பதையும் காண்கிறோமன்றோ. இப்படி இனிப்பதாலேயே ஶாஸ்த்ரவரம்புகளை மீறிய அன்னபானாதி3களை ரஜோகு3ணம் மிக்கவர்கள் அனுபவிக்கிறார்கள். தொடக்க காலத்தில் அவை அமுதம்போல் இனிக்கின்றன என்று கருத்து. (பரிணாமே விஷமிவ) காலக்ரமத்தில் இந்த அன்னபானாதி3களே விஷம்போல் ஆகிவிடுகின்றன என்கிறது. இப்படி விஷம்போல் ஆவதை இம்மையிலேயே காண்கிறோம். வயது முதிர்ந்தபின் இனிமைக்குக் காரணமான பசி முதலானவை குறைந்தபின் அதே அன்னபானாதி3கள் உடலுக்கு ஊறுவிளைக்கின்றன என்று கருத்து. "அக்3நேஶ்ஶீதேந தோயஸ்ய த்ருஷா ப4க்தஸ்ய ச க்ஷுதா4| க்ரியந்தே ஸுக2 கர்த்ருத்வம் தத்3விலோமஸ்ய சேதரை:||" [வி-பு-1-17-64] [குளிர் இருக்கும்போது அக்னியினாலே அக்3நி ஸுக2த்தை அளிக்கிறது. தாகம் இருக்கும்போது அதனால் நீர் ஸுக2ம் அளிக்கிறது. பசியிருக்கும்போது அதனால் அன்னம் இன்பம் அளிக்கிறது. அந்தக் குளிர் பசி தாகம் ஆகியவை நீங்கியபோது அவையே துன்பம் அளிக்கின்றன] "க்ஷுத்த்ருஷ்ணோபஶமம் தத்3வச்சீ2தாத்3யுபஶமம் ஸுக2ம் | மந்யதே பா3லபு3த்3தி4த்வாத் து3:க்க2மேவ ஹி தத்புந:||" [வி-பு-1-17-60] [அறிவுக்குறையினாலே மனிதன் பசி தாகம் அடங்குவதையும் குளிர் முதலானவை நீங்குவதையும் ஸுக2மாக நினைக்கிறான். பிறிதொரு காலத்தில் அவையே துக்கமாக மாறுகின்றனவன்றோ.] என்று ஸ்ரீபராசர மஹரிஷி இவ்விஷயத்தை வெளியிட்டார். ஸுக2த்திற்குக் காரணமான பசி தாகம் முதலியவை அடங்கியவுடன் அந்த அன்னபானாதி3கள் ஸுக2த்தை விளைக்காமல் இருப்பது மாத்திரமல்ல, துக்கத்தை விளைப்பவையாகவும் ஆகின்றன என்பது 'விஷமிவ'

यदग्रे चानुबन्धे च सुखं मोहनमात्मनः ।
निद्रालस्यप्रमादोत्थं तत्तामसमुदाहृतम् ॥ ३९ ॥

39. யத₃க்₃ரே சாநுப₃ந்தே₄ ச ஸுக₂ம் மோஹநமாத்மந: ।
நித்₃ராலஸ்ய ப்ரமாதோ₃த்த₂ம் தத்தாமஸமுதா₃ஹ்ருதம் ॥

யத்— யாதொரு ஸுகமானது, அக்₃ரே ச—தொடக்கத்திலும், அநுப₃ந்தே₄ச—நாளடைவிலும், ஆத்மந:—ஆத்மாவிற்கு, மோஹநம்—மயக்கத்தை விளைக்கிறதோ, நித்₃ராலஸ்ய ப்ரமாதோ₃த்த₂ம்—தூக்கம் சோம்பல் கவனமின்மை ஆகியவற்றால் உண்டாவதான, தத் ஸுக₂ம்—அந்த ஸுக₂ம், தாமஸம் உதா₃ஹ்ருதம்—தாமஸஸுக₂ம் என்று சொல்லப் படுகிறது.

---

என்ற பதத்தால் உணர்த்தப்படுகிறது. இம்மையில் இப்படி து₃:க்க₂த்தை அளிப்பதோடல்லாமல் மறுமையிலும இவை கடுமையான துன்பங்களை விளைக்கின்றன.

"வம்புலாங் கூந்தல் மனைவியைத்துறந்து பிறர்பொருள் தாரமென்றிவற்றை
நம்பினர் இறந்தால் நமன்தமர் பற்றி எற்றிவைத்து எரியெழுகின்ற,
செம்பினால் இயன்ற பாவையைப் பாவி! தழுவென மொழிவதற்கஞ்சி,
நம்பனே! வந்துன் திருவடி யடைந்தேன் நைமிசாரணியத்துள் எந்தாய்." [பெரிய-திருமொழி 1-6-4]

என்று திருமங்கையாழ்வார் அருளிச்செய்தபடியே ஶாஸ்த்ர வரம்புகளை மீறி, பரத்₃ரவ்யாபஹாரம், பரதா₃ரக₃மனம் ஆகியவற்றை பயங்கலந்த க்ஷுத்₃ரஸுக₂த்துக்கு ஆசைப்பட்டுச் செய்பவன் மறுமையில் நரகத்தில் கடுமையான துன்பங்களை அனுபவிப்பதாக ஶாஸ்த்ரங்கள் கூறுகின்றனவன்றோ. ஆகையால் தொடக்கத்தில் அமுதம்போல் இனித்த இந்தச்சுகம் நாளடைவில் விஷம் போல் ஆகிறது என்று சொல்லத்தட்டில்லை. (தத் ஸுக₂ம் ராஜஸம் ஸ்ம்ருதம்) அத்தகைய ஸுக₂மே ராஜஸஸுக₂ம் எனப் படுகிறது.

भा ॥ यत्सुखमग्रे चानुबन्धे च -- अनुभववेलायां विपाके च आत्मनो मोहनम् — मोहहेतुर्भवति; मोहोऽत्र यथावस्थितवस्तुत्वप्रकाशः

39. தோன்றுழியிற் றுய்ப்பிற் றுளங்கா வுயிர்மயக்கி
யூன்றுறக்க முண்மடிவோர்ப் பின்மையா - லேன்றுவரு
மோகச் சுகமதுதான் முக்குணத்திற் பிற்குணத்த
தாகப் புகன்று ரறிந்து.

தோன்றுழியில்-தொடக்கத்திலும், துய்ப்பில் — நாளடைவில்அனுபவிக்கும்போதும், துளங்காஉயிர்மயக்கி — அழிவற்ற ஆத்மாவுக்கு மயக்கத்தை விளைத்து, ஊன்று உறக்கம் உள் மடி ஓர்ப்பு இன்மையால் ஏன்று வரும் மோகச் சுகம் அதுதான் — மிகுதியான தூக்கம், மிக்க சோம்பல், கவனமின்மை ஆகியவற்ருல் விளைவதாய், மயக்கத்தை விளைப்பதான அந்த ஸுக2ம், முக்குணத்தில் பிற்குணத்ததாக—மூன்று கு3ணங்களில் கடைசிக்குணமான தமோகு3ணத்தால் விளைவதாக, அறிந்து புகன்ருர் — (அறிவாளிகள்) ஆராய்ந்து கூறிஞர்கள்.

39. தொடக்கத்திலும் நாளடைவிலும் பல தீங்குகளை விளைப்பதாயிருப்பது தாமஸஸுக2ம் என்கிருன். (யத் ஸுக2ம்) யாதொரு ஸுக2மானது. (அக்3ரே ச அநுப3ந்தே4 ச) தொடக்கத்திலும்முற்றிய நிலையிலும், ''அநுப3த்4யத இதி அநுப3ந்த4:'' என்னும் வ்யுத்பத்தியாலே 'அநுப3ந்த4' ஶப்3த3ம் நாளடைவில் வரும் முற்றியநிலையைக் குறிக்கிறது.( ஆத்மந: மோஹநம்) ஆத்மாவிற்கு மயக்கத்தை விளைப்பதாயிருக்கிறது. ''மோஹயதி இதி மோஹநம்'' என்னும் வ்யுத்பத்தியாலே 'மயக்கம்' என்று பொருள் கொண்டால் ஸுகத்தை மயக்கம் என்பது பொருந்தாது; ஆகையால் ''முஹ்யதி அநேந இதி மோஹநம்'' என்று கரண வ்யுத்பத்தியைக் கொண்டு, ''மயக்கத்திற்குக் காரணமாகிறது'' என்று பொருள் கொள்ளப்பட்டது. இந்த ஸுக2ம் மேலும் எத்தகையதுஎனில் (நித்3ராலஸ்யப்ரமாதோ3த்த2ம்) தூக்கம், சோம்பல், கவனமின்மை ஆகியவற்ருல் விளைவது இந்த ஸுக2ம் என்கிறது. தூக்கம், சோம்பல், கவனமின்மை ஆகியவற்ருல் விளையும் ஸுக2ம் ஒரு பொருளை வேருென்ருக அறிவதாகிற விபரீத ஜ்ஞானத்தை விளைக்காதாகையால் 'மோஹநம்' என்னும் பத3ம்

अभिप्रेतः ; निद्रालस्यप्रमादोत्थम् — निद्रालस्यप्रमादजनितम्, निद्रादयो ह्यनुभववेलायामपि मोहहेतवः; निद्राया मोहहेतुत्वं स्पष्टम्; आलस्यम् — इन्द्रियव्यापारमान्द्यम्; इन्द्रियव्यापारमान्द्ये च ज्ञानमान्द्यं भवत्येव; प्रमादः कृत्यानवधानरूप इति तत्रापि ज्ञानमान्द्यं भवति;

---

விபரீத ஜ்ஞாநத்தைச் சொல்லாமல் பொருளை உள்ளபடி காணாமை யையே சொல்லுகிறது. தூக்கம் முதலானவை அவற்றை அநுப4விக்கும் போதே இத்தகைய மோஹத்தை விளைக்கின்றனவன்றோ. ராஜஸஸுகமும் முற்றிய நிலையில் மயக்கத்தை விளைக்கும்; தாமஸஸுகமோவெனில் தொடங்கும் போதே மயக்கத்தை விளைக்கும் என்னும் வேற்றுமை காணத்தக்கது. தூக்கம் அதை அநுப4விக்கும் போதே அறியாமையாகிற மோஹத்தை விளைக்கிறது என்பது தெளிவு. சோம்பலாவது – இந்திரியங்களின் செயல்பாடு மந்த3மாயிருக்கை. இதனால் அறிவும் மந்தமாகும் என்பது சொல்லாமலே விளங்குகிறது. ஜ்ஞாநம் மந்த3மாயிருக்கையாவது—ஒரு சில விஷயங்களைப்பற்றியதாகவே இருக்கை; ஆகையால் பல விஷயங்களை அறியாமையை உள்ளடக்கி நிற்கிறது சோம்பல் என்று விளங்கும். கவனமின்மையாவது செய்ய வேண்டியதை அறியாமையே ஆகும்; ஆகையால் அதனாலும் ஜ்ஞாநக்குறைவு உண்டாகிறது. இப்படி சோம்பலும் கவனக்குறைவும் ஜ்ஞானக்குறைவை உண்டாக்குகை யால் அவற்றாலும் காலக்ரமத்தில் பொருள்களை உள்ளபடி அறியாமையாகிற 'மோஹம்' விளையும். தூக்கம் சோம்பல் கவனமின்மை ஆகியவற்றால் ஸுகம் விளையுமோ? எனில்—களைப்பை ஆற்றுவது முதலான காரணங்களால் தூக்கத்தில் ஸுக2ம் விளைவதைக் காண்கிறோம். அதனாலேயே 'ஸுகமாகத் தூங்கினேன்' என்னும் வழக்கும், தூக்கத்தைக் குலைப்பவர்களிடம் கோபமும் உண்டாகின்றன. சோம்பலில் இந்திரியங்களின் செயல்பாடு குறைகிறது. அதனால் அவயவங்களுக்கு சிரமம் இல்லாமல் இருப்பதன் மூலம் ஓர் ஆனந்தம் ஏற்படுகிறது. கவனமாய் இருக்கும்போது அறிவை ஒருமுகப்படுத்த வேண்டுகையாகிற சிரமம் ஏற்படுகிறது. கவனமில்லாமல் இருக்கும் போது அந்த சிரமம் இல்லாமையாலே ஓர் ஆனந்தம் ஏற்படுகிறது. மேலெழத்தோன்றும் இத்தகைய ஸுகங்களை விளைத்து அறிவின்மையை மிகுதிப்படுத்துகையால் அகாலநித்திரை முதலானவை

ततश्च तयोरपि मोहहेतुत्वात् तत्सुखं तामसमुदाहृतम् । अतो मुमुक्षुणा रजस्तमसी अभिभूय सत्त्वमेवोपादेयमित्युक्तं भवति ॥ ३९ ॥

न तदस्ति पृथिव्यां वा दिवि देवेषु वा पुनः ।
सत्त्वं प्रकृतिजैर्मुक्तं यदेभिस्स्यात्त्रिभिर्गुणैः ॥ ४० ॥

9-9-09
8-12-10

40. ந தத3ஸ்தி ப்ருதி2வ்யாம் வா திவி தே3வேஷு வா புந: |
ஸத்வம ப்ரக்ருதிஜைர்முக்தம் யதே3பி4ஸ் ஸ்யாத்
த்ரிபி4ர்கு3ணை: ||

ப்ருதி2வ்யாம் வா — இந்த பூமியிலுள்ள மனிதர்களிலோ, தி3வி தே3வேஷு வா புந: — தேவலோகத்திலுள்ள தேவர்களிலோ, ஏபி4: த்ரிபி4: ப்ரக்ருதிஜை: கு3ணை: முக்தம் — இந்த ப்ராக்ருதமான மூன்று கு3ணங்களிலிருந்து விடுபட்டதான, யத் ஸத்வம் ஸ்யாத் — யாதொரு பிராணி உண்டோ, தத் ந அஸ்தி — அத்தகைய உயிர் எதுவும் இல்லை.

---

விலக்கத்தக்கவை என்று கருத்து. "யாமத்3வயம் ஶயாநஸ்து ப்3ரஹ்மபூ4யாய கல்பதே" [த3க்ஷஸ்ம்ருதி] [(இரவில்) இரண்டு யாமங்கள் மாத்திரம் தூங்குபவனே மோக்ஷமடையத்தகுதியுள்ளவன்] என்று அளவான தூக்கத்தின் பெருமை சொல்லப்பட்டது. ஆயுர்வேத3ஶாஸ்திரத்திலும் "அகாலேஅதிப்ரஸங்கா3ச்ச ந ச நித்3ரா நிஷேவிதா | ஸுகா2யுஷீ பராகுர்யாத் காலராத்ரிரிவாபரா||" [தகாத காலம் இடம் முதலானவற்றில் தூங்கக்கூடாது. தூங்கினுல் ஸுக2த்தையும் ஆயுளையும் அழித்துவிடும் மற்ெருரு காலராத்திரி ஆகிவிடும்.] என்று தகாத தூக்கத்தினுல் ஏற்படும் கேடு விளக்கப்பட்டது. (தத் தாமஸம் உதா3ஹ்ருதம்) அந்தஸுக2ம் தாமஸஸுக2ம் என்று சொல்லப்படுகிறது. ஆக, இப்படி ஒவ்வொன்றையும் முக்குணங்களால் வெவ்வேறு பட்டவையாக இங்குபிரித்துக் காட்டுவதன் மூலம் மோக்ஷத்தை விரும்புகிறவன் ஒவ்வொன்றிலும் ராஜஸ தாமஸங்களை வென்று ஸாத்விகத்தையே கைக்கொள்ள வேண்டும் என்று சொல்லப்பட்டதாகிறது. 39.

भा ॥ पृथिव्यां मनुष्यादिषु दिवि देवेषु वा प्रकृतिसंसृष्टेषु

---

40. பூமிமிசை மானிடரிற் பொன்னுலகின் மன்னுவா
ராமிமையோர் தம்மி லமர்ந்தொருவர் — தாமியலு
முன்னைப் பிரகிருதி மூளிந்த முக்குணங்க
டன்னைப் பிரிந்ததில்லைத் தான்.

பூமிமிசை மானிடரில்— இந்த பூ4மியில் இருக்கும் மனிதர்களிலும், பொன்னுலகில் மன்னுவாராம் இமையோர் தம்மில் — சொர்க்கலோகத்தில் இருக்கும் தேவர்களிலும், அமர்ந்த ஒருவர் தாம் — சேர்ந்திருக்கும் ஒருவர் கூட, இயலும் — எப்போதும் செயல்பட்டுக் கொண்டிருப்பவையாய், முன்னை பிரகிருதி மூள் — அசேதனங்களுக்கெல்லாம் காரணமான ப்ரக்ருதியிலிருந்து உண்டானவையான, இந்த முக்குணங்கள் தன்னை — இந்த மூன்று குணங்களை, தான் பிரிந்தது இல்லை —விட்டிருப்பதில்லை.

---

40. ப்ராக்ருதமான ஸத்வ ரஜஸ் தமோகு3ணங்கள் மூன்றையும் கடந்ததாய், ஶுத்3த4ஸத்வமயமான தான பரமபதத்தில் பரமபுருஷனை அடைவதாகிற மோக்ஷத்தை அடைவதற்கு முன் இந்த லீலா விபூ4தியில் இருக்கும் பிரமன் முதல் புல்லீருக உள்ள சேதனரில் எவரும் இதுவரையில் கூறப்பட்ட முக்குணங்களை முழுவதும் விட்டிருக்கமுடியாது என்று கூறுவதன் மூலம் முக்குணங்களின் காரியங்களைக் கூறும் ப்ரகரணத்தை நிறைவுபடுத்துகிறான். முக்குணங்களின் காரியங்களைக் கூறும் ப்ரகரணம் இத்துடன் நிறைவு பெற்றாலும் மேல் ஶ்லோகங்களிலும் நாலு வர்ணங்களுக்கும் முக்குணங்களில் எவை எவை மிகுந்திருக்கும் என்று காட்டப்போகிறானாகையாலே குணத்ரய ப்ரகரணம் மேலும் தொடருகிறது. (ப்ருதி2வ்யாம் வா) இந்த பூமியிலுள்ள மனிதர்கள் முதலானாரிலோ; அடுத்தபடி "தி3வி தே3வேஷு" என்று தேவருலகில் தேவர்கள் என்று கூறுகையால், இங்கு பூமியிலுள்ள மனிதர்கள் முதலானார் என்று கூட்டிக்கொள்ளவேண்டும். (தி3வி தே3வேஷு வா புந:)

ब्रह्मादिस्थावरान्तेषु प्रकृतिजैरेभिस्त्रिभिर्गुणैर्मुक्तं यत्सत्त्वं — प्राणिजातं, न तदस्ति ॥ ४० ॥

தேவருலகில் உள்ள தேவர்களிலும், இங்கு தேவர்களைச் சொன்னது அந்த தேவர்களைப் போலவே ஸத்வகு$_3$ணம் மிகுந்திருக்கும் க$_3$ந்த$_4$ர்வர் கின்னரர் முதலானவர்களுக்கும் உபலக்ஷணம், பூமியில் மனிதர்களையும் தேவருலகில் தேவர்களையும் பிரித்துச் சொன்னதற்குக் காரணம் என்னவெனில் தேவர்கள் மற்ற இருகுணங்களைக் காட்டிலும் ஸத்வகு$_3$ணம் விஞ்சியிருக்கப்பெற்றவர்களாகவும் மனிதர்கள் முக்குணங்களில் பலவகையான ஏற்றத் தாழ்வுகளுடையவர்களாகவும் இருக்கையே ஆகும். ''மநுஷ்யாதி$_3$ஷு'' என்று பா$_4$ஷ்யத்தில் கூறியதிலும் ஆதி$_3$ஶப்$_3$தத்தாலே ரஜோகு$_3$ணம் மிக்க அசுரர்களும் தமோகு$_3$ணம் மிக்க ராக்ஷஸர்களும் கருதப்படுகிறார்கள். ''ஹிரண்யக$_3$ர்ப்$_4$ப$_4$ர ப$_4$க$_3$வாந்'' [வி-பு 6-7-56] என்று தொடங்கி ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் பிரமன் முதல் புல்லீறாக உள்ள ஜீவர்களிடம் உள்ள ஏற்றத் தாழ்வுகளும் அவையெல்லாமே முக்குணமயமான ப்ரக்ருதிக்கு வசப்பட்டவை என்றும் விளக்கப்பட்டன. ''ஆப்$_3$ரஹ்ம ஸ்தம்ப$_3$ பர்யந்தா: ஜக$_3$த$_3$ந்தர் வ்யவஸ்தி$_2$தா:| ப்ராணித: கர்மஜநித ஸம்ஸார வஶவர்த்திந:||'' [விஷ்ணுதர்மம் 104—23] [பிரமன் முதல் புல்லீறாக இவ்வுலகினுள் இருக்கும் பிராணிகள் கர்மத்தினால் நடைபெறும் ஸம்ஸாரத்திற்கு வசப்பட்டவர்களே.] என்கிறபடியே இந்த ப$_3$த்$_3$த$_4$ ஜீவர்கள் அனைவருமே முக்குணமயமான ப்ரக்ருதிக்குக் கட்டுப்பட்டவர்கள் என்பதை ஶ்லோகத்தின் எஞ்சிய பகுதியால் காட்டுகிறான். — (யத் ஸத்வம் ஏபி$_4$: ப்ரக்ருதிஜை: த்ரிபி$_4$: கு$_3$ணை: முக்தம் தத் நாஸ்தி) பலவகைப்பட்டிருக்கும் பிரமன் முதல் புல்லீறாகவுள்ள பிராணிகளில் யாதொரு பிராணியானது முற்கூறிய ப்ராக்ருத கு$_3$ணங்களிலிருந்து விடுபட்டிருக்கிறதோ அத்தகைய பிராணி இல்லை. ப்ரக்ருதி மண்ட$_3$லத்தினுள் உள்ள எல்லா உயிர்களும் இந்த முக்கு$_3$ணங்களுக்குக் கட்டுப்பட்டே உள்ளன என்று கருத்து. கு$_3$ணப்ரகரணமாய் இருந்தபோதிலும் இங்கு ஸத்வ ஶப்$_3$த$_3$ம் ஸத்வ குணத்தைக் குறிப்பது பொருந்தாதாகையால் பிராணி என்று பொருள்படுகிறது. ''ப்ராணி ஜாதம்'' என்று பா$_4$ஷ்யத்தில் குறித்ததினால் கூட்டம் கூட்டமாய் இருக்கும் உயிர்களிலும் இக்கு$_3$ணங்கள் இல்லாமல் இருப்பது எதுவும் இல்லை என்று உணர்த்தப்படுகிறது, அல்லது ''ஜாதம்'' என்னும்பதத்தைத் தனிப்பதமாகக் கொண்டால் எல்லா உயிர்களுமே பிறந்தது முதல் ஸம்ஸாரமண்ட$_3$லத்தில் இருக்கும் நாளெல்லாம் இக்கு$_3$ணங்களுக்குக் கட்டுப்பட்டவையே என்று உணர்த்துகிறது. 40.

भा ॥ त्यागेनैके अमृतत्वमानशुः (ना) इत्यादिषु मोक्षसाधनतया निर्दिष्टस्त्यागः संन्यासशब्दार्थादनन्यः; स च क्रियमाणेष्वेव कर्मसु कर्तृत्वत्यागमूलः फलकर्मणोस्त्यागः; कर्तृत्वत्यागश्च परमपुरुषे कर्तृत्वानुसंधानेनेत्युक्तम्; एतत्सर्वं सत्त्वगुणवृद्धिकार्यमिति सत्त्वोपादेयताज्ञापनाय सत्त्वरजस्तमसां कार्यभेदाः प्रपञ्चिताः । इदानीमेवंभूतस्य मोक्षसाधनतया क्रियमाणस्य कर्मणः परमपुरुषाराधनवेषतां, तथानुष्ठितस्य च कर्मणस्तत्प्राप्तिलक्षणं फलं प्रतिपादयितुं ब्राह्मणाद्यधिकारिणां स्वभावानुबन्धिसत्त्वादिगुणभेदभिन्नं वृत्त्या सह कर्तव्यकर्मस्वरूपमाह—

ब्राह्मणक्षत्रियविशां शूद्राणां च परंतप ।
कर्माणि प्रविभक्तानि स्वभावप्रभवैर्गुणैः ॥ ४१ ॥

41. ப்3ராஹ்மணக்ஷத்ரியவிஶாம் ஶூத்3ராணாம் ச பரந்தப |
கர்மாணி ப்ரவிப4க்தாநி ஸ்வப4ாவப்ரப4வைர் கு3ணை: ||

பரந்தப! எதிரிகளை வெல்கின்றவனே! ப்3ராஹ்மண க்ஷத்ரியவிஶாம்— பிராம்மணன், க்ஷத்திரியன், வைஶ்யன் ஆகியவர்களுடையவும், ஶூத்3ராணாம் ச— ஶூத்3ரர்களுடையவும், ஸ்வப4ாவப்ரப4வை: கு3ணை:— (அவரவர்க்குரிய) முன்வினையால் உண்டான கு3ணங்களோடு கூட, கர்மாணி — செயல்களும், ப்ரவிப4க்தாநி — (ஶாஸ்திரங்களில்) பிரித்துக் கூறப்படுகின்றன.

---

41. மாமன்றயோர் மன்னவர்கள் வைசியர்கள் சூத்திரர்க
ளாமனிசர்க் காகி யமர்தருமே-- தாமருவுந்
தன்மை யமர்குணத்தின் சார்வுடனே வேறுபடு
நன்மை யமரு நயந்து.

மாமறையோர் மன்னவர்கள் வைசியர்கள் சூத்திரர்கள் ஆம் மனிசர்க்கு ஆகி பிராம்மணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் ஆகிய நாலு வர்ணத்தில் பிறந்த மனிதர்களுக்கும் உரியதாய், தாம் மருவும்தன்மை அமர் குணத்தின் சார்வுடனே — அவரவர்க்குரிய முன் வினையால் உண்டான குணத்தின் பிரிவுகளோடுகூட, அமரும் வேறுபடு நன்மை — (அக்குணங்களுக்குப்) பொருந்தி வெவ்வேறாயிருக்கும் செயல்களும், நயந்து அமர்தருமே — (சாஸ்திரங்களில்) ஆர்வத்துடன் கூறப்படுகின்றன.

---

41. முன் ஶ்லோகங்களில் ஸம்ஸாரிகள் ஸத்வம் ரஜஸ் தமஸ் என்னும் முக்குணங்களுக்கு வசப்பட்டவர்கள் என்று சொல்லப்பட்டது. இனி, அந்த முக்குணங்களில் ஒவ்வொன்று மிகுதியாகவும் மற்றவை குறைவாகவும் உடைய தேகத்தோடு கூடிய நாலு வர்ணத்தவரான அதிகாரிகளுக்கும் அவரவர் குணத்துக்கேற்றபடி சாஸ்திரங்களில் பிரித்துக் கூறப்படும் தொழில்களும் ஜீவனோபாயங்களும் விளக்கப்படுகின்றன. இந்த இடத்தில் இந்த அத்தியாயத்தின் தொடக்கத்திலிருந்து சொல்லப்பட்ட விஷயங்களை நினைவுபடுத்திக் கொள்ள வேண்டியது அவசியம். அதாவது: முதலில்— (1) "த்யாகேநைகே அம்ருதத்வமாநஶு:" [தை-நா-10—21] [சில ஞானிகள் த்யாகத்தினாலேயே மோக்ஷமடைந்தார்கள்.] "ஸந்யாஸ யோகாத் யதய:......பரிமுச்யந்தி" [தை-நா 10-22] [புலனடக்கமுள்ள சிலர் ஸந்யாஸத்தாலே மோக்ஷமடைகிறார்கள்] என்று வேதாந்த வாக்கியங்களில் மோக்ஷஸாதனமாகச் சொல்லப்படும் த்யாகமும் ஸந்யாஸமும் ஒன்றே; அதுவும் தமக்குரிய செயல்களில் கர்த்ருத்வத்யாகத்தை முன்னிட்டுக் கொண்டு 'இச்செயலின் பலன் என்னுடையதல்ல' என்று பலத்தையும், 'இச்செயல் என்னுடையதல்ல' என்று அச்செயலையும் கைவிட்டிருப்பதே ஆகும். கர்த்ருத்வத்யாகமும் பரமபுருஷனிடம் கர்த்ருத்வத்தை அனுஸந்திப்பதன் மூலமே உண்டாகும் என்னும் விஷயங்கள் சொல்லப்பட்டன. இந்த மூன்று வகைப்பட்ட த்யாகமும் ஸத்வகுணம் வளருவதன் மூலமே உண்டாகுமாகையால் ரஜஸ்தமோ குணங்களைக்கைவிட்டு ஸத்வகுணமே கைக்கொள்ளத் தக்கது என்று உணர்த்துவதற்காக ஸத்வரஜஸ்

भा ॥ ब्राह्मणक्षत्रियविशां स्वकीयो भावः स्वभावः, ब्राह्मणादिजन्महेतुभूतं प्राचीनकर्मेत्यर्थः; तत्प्रभवास्सत्त्वादयो गुणाः । ब्राह्म-

---

தமோ கு₃ணங்களின் வெவ்வேருன காரியங்கள் இதுவரை விளக்கப் பட்டன. இனி "இப்படி மூன்று வகையான த்யாக₃த்தோடு கூடியதாய், மோக்ஷஸாத₄னமாகச் செய்யப்படும் (அவரவருக்குரிய) கர்மமானது பரமபுருஷனுக்கு ஆராத₄னமாய் இருக்கிறது." என்பதையும் "அந்த நினைவுடன் அனுஷ்டி₂க்கப்பட்ட அக்கர்மத்தினுல் அந்தப் பரமபுருஷனை அடைவதாகிற பலனைப் பெறுவான்" என்பதையும் மேலே சொல்லுவதற்காக, இது முதல் 44-வது ஶ்லோகம் முடிய பிராம்மணன் முதலான நாலு வர்ணங்களில் பிறந்த அதி₄காரிகளுக்குத் தத்தம் முன்வினைகளுக்குத் தக்கபடி ஸத்வம் முதலான குணங்களில் வேறுபாடு உள்ளதையும் அதற்குத் தக்கபடி அவர்களுக்கு வெவ்வேருயிருக்கும் (செய்யத்தக்க) தொழில்களையும், ஜீவனேபாயங்களையும் கூறுகிருன். இந்த ஶ்லோகத்தில் நாலு வர்ணத்தவருக்கும் அவரவர்க்குரிய முன்வினைகளால் உண்டான கு₃ணங்களோடுகூட, செயல்களும் சாஸ்திரங்களில் பிரித்துக் கூறப்படுகின்றன என்கிருன். (ப்₃ராஹ்மண க்ஷத்ரியவிஶாம் ஶூத்₃ராணும் ச ஸ்வபா₄வ ப்ரப₄வை: கு₃ணை:) அந்தணர், அரசர், வணிகர் ஆகிய இரு பிறப்பாளர்களுடையவும், நாலாவது வர்ணத்தவரான ஶூத்₃ரர்களுடையவும் அவரவர்க்குரிய முன்வினையால் உண்டான கு₃ணங்களோடுகூட; முதல் மூன்று வர்ணத்தவர்களும் வேத₃த்தில் அதி₄காரமுடைய இரு பிறப்பாளர்களாகையாலே, அவர்களை ஒரே ஸமஸ்தபதமாகச் சேர்த்தும், வேத₃த்தில் அதிகாரமில்லாமையாலே ஶூத்₃ரர்களைத் தனியாகவும் கூறுகிருன். "ஸ்வபா₄வ" ஶப்₃த₃த்தாலே அந்தணர் முதலான பிறவிகளுக்குக் காரணமான முன்வினை குறிக்கப்படுகிறது. "ஸ்வபா₄வ ப்ரப₄வை: கு₃ணை:" என்று அந்த முன்வினையால் உண்டான ஏற்றத்தாழ்வுகளை உடைய ஸத்வம் முதலான முக்குணங்கள் குறிக்கப்படுகின்றன. "கர்மவஶ்யா கு₃ணு ஹ்யேதே ஸத்வாத்₃யா: ப்ருதி₂விபதே" [வி—பு 2-13-70] [அரசனே! இந்த ஸத்வரஜஸ்தமோகு₃ணங்கள் அவரவர்களுடைய முன்வினையால் உண்டாகின்றன] என்று கூறப்பட்டிருக்கையால், இந்த ஸ்வபா₄வ ஶப்₃த₃ம் இயல்வானது என்று பொருள் படாமல் இந்த குணங்களுக்குக் காரணமான முன்வினைகளைக் குறிக்கிறது. முன்வினைகளையொட்டி ஸத்வாதி₃ குணங்கள் வளர்கின்றன என்னும் விஷயம் கீ₃தையிலும் முன்னமே சொல்லப்பட்டது. ஆகையால்

णस्य स्वभावप्रभवो रजस्तमोभिभवेनोद्भूतस्सत्त्वगुणः; क्षत्रियस्य स्वभावप्रभवस्तमस्सत्त्वाभिभवेनोद्भूतो रजोगुणः; वैश्यस्य स्वभावप्रभवस्सत्त्वरजोऽभिभवेनाल्पोद्रिक्तस्तमोगुणः; शूद्रस्य स्वभावप्रभवस्तु रजस्सत्त्वाभिभवेनात्युद्रिक्तस्तमोगुणः। एभिः स्वभावप्रभवैर्गुणैस्सह प्रविभक्तानि कर्माणि शास्त्रैः प्रतिपादितानि। ब्राह्मणादय एवंगुणकाः,

---

இந்த கு3ணங்களுக்குக் காரணமான முன்வினைகள் முக்குணங்களில் ஒவ்வொன்றை மிகுதியாகக் கொண்ட மனிதனுக்குத் தனித்தன்மையாக இருக்கையால் இங்கு ஸ்வப4ாவம் என்று சொல்லப்படுவது பொருத்தமே. நாலு வர்ணத்தவர்க்கும் முக்குணங்களில் எந்தெந்த குணங்கள் விஞ்சியிருக்கும் என்னும் விஷயம் ப்3ராஹ்ம புராணம் முதலானவற்றில் விரிவாகச் சொல்லப்பட்டது. "தமஶ் ஶூத்3ரே ரஜ: க்ஷத்ரே ப்3ராஹ்மணே ஸத்வம் உத்தமம்" [ப4ார—ஆஶ்வ 39-11] [ஶூத்3ரனிடம் தமோகு3ணமும் க்ஷத்ரியனிடம் ரஜோகு3ணமும் பிராம்மணனிடம் ஸத்வகு3ணமும் விஞ்சிநிற்கின்றன.] என்று மஹாப4ாரதத்தில் சுருக்கமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இவற்றின் ஸாரமாவது - (1) பிராம்மணனுக்கு ரஜஸ்தமோ கு3ணங்களை விஞ்சி நிற்பதாய் வெளிப்பட்டிருக்கும் ஸத்வகு3ணம் அவனது முன்வினையால் உண்டானது. (2) க்ஷத்திரியனுக்கு தமஸ் ஸத்வகு3ணங்களை விஞ்சி நிற்பதாய், வெளிப்பட்டிருக்கும் ரஜோகு3ணம் அவனது முன்வினையால் உண்டானது. (3) வைசியனுக்கு ஸத்வ ரஜோ கு3ணங்களை விஞ்சி நிற்பதாய், சிறிது அதி4கமாய் இருக்கும் தமோகு3ணம் அவனது முன்வினையால் உண்டானது. (4) ஶூத்3ரனுக்கு ரஜஸ் ஸத்வ கு3ணங்களை விஞ்சி நிற்பதாய் மிகவும் அதி4கமாயிருக்கும் தமோகு3ணம் அவனது முன் வினையால் உண்டானது. (கு3ணை: கர்மாணி ப்ரவிப4க்தாநி) கு3ணங்களோடு கூட செயல்கள் பிரித்துக் கூறப்படுகின்றன. இந்திரியங்களுக்குப் புலப்படாதவையான ஸத்வாதி3 கு3ணங்களின் பிரிவுகள் சாஸ்திரங்களைக் கொண்டே அறியப்படுகையால் 'ப்ரவிப4க்தாநி' என்னும் பதத்துக்கு "சாஸ்திரங்களில் பிரித்துக் கூறப்படுகின்றன" என்றே பொருள் கொள்ளவேண்டும். "கு3ணை: கர்மாணி 'ப்ரவிப4க்தாநி' என்னும் தொடருக்குக் குணங்களால் கர்மங்கள் பிரிக்கப்படுகின்றன." என்று பொருள் கொள்ளுவது பொருந்தாதாகையாலே "கு3ணங்களோடு கூட கர்மங்களும்

तेषां चैतानि कर्माणि, वृत्तयश्चैता इति हि विभज्य प्रतिपादयन्ति शास्त्राणि ॥ ४१ ॥

शमो दमस्तपश्शौचं क्षान्तिरार्जवमेव च।
ज्ञानं विज्ञानमास्तिक्यं ब्राह्मं कर्म स्वभावजम् ॥ ४२ ॥

42. ஶமோ த₃மஸ்தபஶ்ஶௌசம் க்ஷாந்திரார்ஜவமேவ ச ]
ஜ்ஞாநம் விஜ்ஞாநம் ஆஸ்திக்யம் ப்₃ராஹ்மம் கர்ம ஸ்வப₄ாவஜம்[

ஶம:—வெளி இந்த்ரியங்களை அடக்குதல், த₃ம:-மனத்தை அடக்குதல், தப:—சாஸ்திரங்களை யொட்டி சரீரத்தை வருத்துதல். ஶௌசம்—சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களைச்செய்யத்தகுதியை உண்டாக்கிக்கொள்ளுதல், க்ஷாந்தி:—பிறரால் துன்புறுத்தப்பட்டாலும் மனம் வேறுபாடடையாமல் இருத்தல். ஆர்ஜவம் - பிறரிடம் மனம் மெய் மொழிகளில் ஒருபடிப்பட நடத்தல், ஜ்ஞாநம்—பரதத்துவத்தையும் மற்ற

---

சாஸ்திரங்களில் பிரித்துக் கூறப்படுகின்றன'' என்றே பொருள் கொள்ளவேண்டும். கு₃ணங்களையிட்டுச் செயல்கள் சாஸ்திரங்களில் பிரிந்துக் கூறப்படுகையால் 'கு₃ணங்களால் செயல்கள் பிரிக்கப்படுகின்றன.' என்று உபசார வழக்காகக் கொள்வதைக் காட்டிலும் 'ஸஹ' ஶப்₃த₃த்தைச் சேர்த்துக் கொண்டு 'கு₃ணங்களோடு கூட செயல்களும் சாஸ்திரங்களில் பிரித்துக் கூறப்படுகின்றன' என்று பொருள் கொள்வதே சிறந்ததாகும். (ப்ரவிப₄க்தாநி) சாஸ்திரங்கள் கு₃ணங்களையோ செயல்களையோ நேரே பிரிக்கவில்லை யாகையால் இப்பதத்திற்கு 'சாஸ்திரங்கள் தனித்தனியாகப் பிரித்துக் கூறுகின்றன' என்று பொருள் கொள்ள வேண்டும். ''பிராம்மணர் முதலானோர் இன்ன இன்ன கு₃ணங்களை உடையவர்கள். அவர்களுக்கு இவை இவை தொழில்கள்; இவை இவை (வ்ருத்திகள்) (ஜீவனோபாயங்கள்)'' என்று சாஸ்திரங்கள் பிரித்துக் கூறுகின்றனவன்றோ. 'கர்ம' ஶப்₃த₃ம் அதையொட்டியிருக்கும் ஜீவனோபாயமாகிற வ்ருத்தியையும் காட்டுகிறது (பரந்தப) எதிரிகளை வெற்றி கொள்ள வேண்டிய க்ஷத்ரியனை உனக்குரிய கு₃ணகர்மங்களை நீ அறிந்து கொள்ள வேண்டுமென்று கருத்து. 41.

தத்துவங்களையும் உள்ளபடி அறிதல், விஜ்ஞாநம்—பர தத்துவத்திடம் இருக்கும் தனித்தன்மைகளை அறிதல், ஆஸ் திக்யம்—வேதத்தில் சொல்லியது அனைத்துமே உண்மை யானது என்று அசைக்க முடியாதபடி உறுதிகொள்ளல் ஆகிய இவை, ஸ்வபாவஜம்—முன் வினையால் ஏற்பட்ட, ப்ராஹ்மம் கர்ம — பிராம்மணனுக்குரிய செயல்களாகும்.

---

42. சமந்தமஞ் சார்ந்த தவந்தன் னமர்ந்தசுத்தி
நமர்ந்த பொறைசெவ்வை ஞான—மமர்ந்த
விறையறி வுண்மையுணர் விக்கரும மாகு
மறையவர்தந் தன்மை மதம்.

சமம் - வெளி இந்திரியங்களை அடக்குதல். தமம்—உள் இந்திரியமான மனத்தை அடக்குதல், சார்ந்த தவம் — சாஸ்திரங்களையொட்டி சரீரத்தை வருத்துதல், தன் அமர்ந்த சுத்தி — சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட கர்மங் களைச் செய்யத் தகுதியைத் தனக்கு உண்டாக்கிக் கொள் ளுதல், நமர்ந்த பொறை — பிறரால் துன்புறுத்தப் பட்டா லும் மனம் வேறுபாடடையாமல் இருத்தல், செவ்வை— பிறரிடம் மனம் மெய் மொழிகளில் ஒருபடிப்பட நடத்தல், ஞானம் — பரதத்துவத்தையும் மற்ற தத்துவங்களையும் உள்ளபடி அறிதல், அமர்ந்த இறையறிவு — பரதத்துவத் திடம் இருக்கும் தனித்தன்மைகளை அறிதல், உண்மை உணர்வு — வேதத்தில் சொல்லியது அனைத்துமே உண்மை யானது என்று உறுதி கொள்ளல், இக்கருமம் — ஆகிய இச்செயல்கள், மறையவர்தம் தன்மை மதம் ஆகும் — அந்தணர்களுக்கு முன் வினையால் ஏற்பட்டவையாக சாஸ் திரங்களில் சொல்லப்பட்டவையாகும்.

भा ॥ शमः -- बाह्येन्द्रियनियमनम्, दमः — अन्तःकरणनियमनम्, तपः — भोगनियमनरूपश्शास्त्रसिद्धः कायक्लेशः, शौचं — शास्त्रीय-कर्मयोग्यता, क्षान्तिः — परैः पीड्यमानस्याप्यविकृतचित्तता, आर्जवं — परेषु मनोनुरूपं बाह्यचेष्टाप्रकाशनम्, ज्ञानम् — परावरतत्त्व-

---

42. பிராம்மணருக்குரிய செயல்களைக் கூறுகிறான். (ஶம:) வெளி இந்திரியங்களை அடக்குதல், (தம:) உள் இந்திரியமான மனத்தை அடக்குதல்; இங்கு சொல்லப்படும் குணங்களில் பெரும்பாலானவை கீதை 10-4-5; 16-1, 2, 3 ஆகிய ஶ்லோகங்களில் எடுக்கப்பட்டு விவரிக்கப்பட்டன. ஆகையால் இங்கு சுருக்கமாகவே விவரிக்கப் படுகின்றன. அவ்விடங்களில் முதலில் தமமும் அடுத்தபடியாக 'ஶம' அல்லது 'ஶாந்தி'யும்சொல்லப்பட்டதாகையாலேமுதலில் அடக்க வேண்டியவெளிஇந்திரியங்களின் நியமனம்'தம'ஶப்தத்திற்குப் பொருளாகச் சொல்லப்பட்டது. இங்கு 'ஶம' ஶப்தமும் முதலில் எடுக்கப்படுகையாலே முதலில் அடக்கவேண்டிய வெளிஇந்திரியங்களின் நியமனம் அதற்குப்பொருளாகச்சொல்லப்பட்டது. ஆகையாலே விரோதமில்லை. (தப:) சாஸ்திரங்களையொட்டி போகங்களை ஒடுக்கி சரீரத்தை வருத்துதல். (ஶௌசம்) சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்யத் தகுதியை உண்டாக்கிக்கொள்ளுதல். 'ஶௌச' ஶப்தமும் முற்கூறிய தகுதியாகிற ஶுத்தியை மாத்திரமே குறிக்குமாயினும் இங்கு (பிராம்மணனுடைய) செயலாகச் சொல்லப்படுகையாலே அந்த ஶுத்தியை உண்டாக்கிக் கொள்ளுதல் என்றே பொருள் கொள்ள வேண்டும். மேல் பதங்களிலும் இப்படியே. (க்ஷாந்தி:) பிறரால் துன்புறுத்தப்பட்டாலும் மனம் வேறுபாடடையாமல் இருத்தல். (ஆர்ஜவம்) பிறரிடம் மனம் மெய் மொழிகளில் ஒருபடிப்பட நடத்தல். ''மநஸ்யந்யத் வசஸ்யந்யத் கர்மண்யந்யத் துராத்மநாம் | மநஸ்யேகம் வசஸ்யேகம் கர்மண்யேகம் மஹாத்மநாம்||'' [தீயவர்கள் மனத்திலொன்றும், வாக்கிலொன்றும், செயலிலொன்றுமாய் இருப்பார்கள், நல்லோர்கள் மனோவாக்காயங்களில் ஒருபடிப்பட்டிருப்பார்கள்.] என்று நல்லோர்களுக்கு இது லக்ஷணமாகச் சொல்லப்பட்டதன்றோ. 'ஏவச'என்று ஆர்ஜவத்தின் இப்பெருமையை உணர்த்துகிறது. (ஜ்ஞாநம்)பரதத்வத்தையும் மற்ற தத்வங்களையும் உள்ளபடி அறிதல். (விஜ்ஞாநம்) பரதத்வத்திடம் உள்ள தனித்தன்மைகளை அறிதல். (ஆஸ்திக்யம்) வேதத்

याथात्म्यज्ञानम्, विज्ञानम् -- परतत्त्वगतासाधारणविशेषविषयं ज्ञानम्, आस्तिक्यम् -- वैदिक[ार्थ]स्य कृत्स्नस्य सत्यतानिश्चयः प्रकृष्टः, केनापि हेतुना चालयितुमशक्य इत्यर्थः; भगवान् पुरुषोत्तमो वासुदेवः परब्रह्म- शब्दाभिधेयो निरस्तनिखिलदोषगन्धः स्वाभाविकानवधिकातिशयज्ञान- शक्त्याद्यसङ्ख्येयकल्याणगुणगणो निखिलवेदवेदान्तवेद्यः, स एव

---

தில் சொல்லியது அனைத்துமே உண்மையானது என்று நம்பும் விஷயத்தில் எவராலும் எக்காரணத்தாலும் அசைக்கமுடியாதபடி மிக உறுதி பூண்டிருத்தல். 'அஸ்தி மதி: அஸ்ய — இதி ஆஸ்திக:' என்கிற வ்யுத்பத்தியின்படி 'ஆஸ்திக' ஶப்₃த₃ம் அறிவுடையவனைக் குறிக்கிறது, அவனுடைய தன்மை ஆஸ்திக்யமாகிறது. பிரமாணங்களுக்கு முரண்பட்ட விஷயங்களில் அறிவுடையவனாக இருந்தால் அது குற்றமாகும். ப்ரத்யக்ஷம் முதலான மற்ற பிரமாணங்களால் அறியக்கூடியதை அறிவது ஆஸ்திகனுக்குச் சிறப்பன்று. ஆகையால் சாஸ்திரத்தால் அறிய வேண்டிய விஷயங்களை அறிபவனே ஆஸ்திகனாகிறான். அதிலும் ஒரு சில விஷயங்களை அறிந்து மற்ற விஷயங்களை அறியாமலிருந்தால் சாஸ்திரங்களுக்கு அவப்பொருள் கூறும் குத்₃ருஷ்டியாகிவிடுவான். ஆகையால் சாஸ்திரம் முழுவதிலும் சொல்லப்படும் விஷயங்கள் உண்மையே என்று உறுதி பூண்டிருப்பவனே ஆஸ்திகன் என்று பொருள் கொள்ளப்பட்டது. 'விஜ்ஞாந' ஶப்₃த₃த்தோடு புநருக்தி ஏற்படாமைக்காக 'மிக்க உறுதி பூண்டிருத்தல்' என்று விசேஷிக்கப்பட்டது. அதாவது-எவராலும் எக்காரணத்தாலும் அசைக்கமுடியாதபடி உறுதி பூண்டிருத்தல் என்று தேறுகிறது. வேதா₃ர்த்த₂ங்களில் சிலர் ப்ரஹ்மத்தை ஒப்புக்கொண்ட போதிலும் அவன் "ஸ்ரீமந்நாராயணனே" என்பதை ஒப்புக்கொள்ளுவதில்லை. மற்றும் சிலர் 'அவன் எல்லாக்கல்யாண கு₃ணங்களுக்கும் இருப்பிடமானவன்' என்பதை ஒப்புக் கொள்வதில்லை. இப்படியெல்லாம் இல்லாமல் ப₄க₃வானாய், புருஷோத்தமன் என்றும், வாஸுதேவன் என்றும், பரப்பிரம்மம் என்றும் சொல்லப்படுபவனான ஸ்ரீமந்நாராயணன் எந்த விதமான குற்றத்தின் நாற்றமும் அற்றவனென்றும், இயற்கையானவையாய் எல்லையற்றமேன்மையையுடையவையான ஜ்ஞாநம் ஶக்திமுதலான கணக்கற்ற கல்யாண கு₃ணங்களை உடையவனென்றும், எல்லா வேத₃ வேதா₃ந்தங்களாலும் அறியப்

निखिलजगदेककारणं निखिलजगदाधारभूतः, निखिलस्य स एव प्रवर्तयिता; तदाराधनभूतं च वैदिकं कृत्स्नं कर्म, तैस्तैराराधितो धर्मार्थकाममोक्षाख्यं फलं प्रयच्छतीत्यस्यार्थस्य सत्यतानिश्चय आस्तिक्यम् । *वेदैश्च सर्वैरहमेव वेद्यः (१५, १५) * अहं सर्वस्य प्रभवो मत्तस्सर्वं प्रवर्तते (१०, ८) * मयि सर्वमिदं प्रोतम् (७, ७) भोक्तारं यज्ञतपसां...ज्ञात्वा मां शान्तिमृच्छति (५, २९) * मत्तः परतरं नान्यत्किञ्चिदस्ति धनञ्जय (७, ७) * यतः प्रवृत्तिर्भूतानां येन सर्वमिदं ततम् । स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानवः ॥ (१८, ४६) * यो मामजमनादिं च वेत्ति लोकमहेश्वरम् (१०, ३) इति ह्युच्यते । तदेतद्ब्राह्मणस्य स्वभावजं कर्म ॥४२॥

---

படுபவனென்றும், அவனே அனைத்துலகுக்கும் ஒரே காரணனென்றும் அனைத்துலகுக்கும் ஆதாரமாய் இருப்பவனென்றும், எல்லா உலகையும் நடத்திவைப்பவனென்றும், வேதத்தில் விதிக்கப்பட்ட கர்மங்கள் அனைத்தும் அவனுக்கு ஆராதனமாய் இருப்பவையென்றும் அக்கருமங்களால் ஆராதிக்கப்பட்ட அவனே 'அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாலுவகைப்பட்ட பேறுகளையும் அளிக்கிறான் என்றும் சாஸ்திரங்களில் கூறப்படுவது உண்மையானதே என்று மிக்க உறுதியுடன் இருப்பது ஆஸ்திக்யம் என்றதாயிற்று. கீதையில் கண்ணனே "வேதைஶ்ச ஸர்வை: அஹமேவ வேத்ய:" [15-15] [எல்லா வேதங்களாலும் அறியப்படுபவன் நானே] "அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ்ஸர்வம் ப்ரவர்த்ததே" [10-10] [நான் எல்லா உலகங்களும் உண்டாவதற்குக் காரணமாகிறேன்; என்னாலேயே பொருள்கள் அனைத்தும் செயல்படுகிறது] "மயிஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ" [7-7] [இந்த எல்லாப் பொருள்களும் நூலில் ரத்தினங்கள் கோர்க்கப்பட்டிருப்பது போலே என்னிடத்தில் கோர்க்கப்பட்டிருக்கின்றன.] "போக்தாரம் யஜ்ஞதபஸாம் ...ஜ்ஞாத்வா மாம் ஶாந்திம் ருச்சதி" [5-29] [யாகங்களையும் தவங்களையும் ஏற்றுக்கொள்ளும் என்னை அறிந்து சாந்தியை அடைகிறான்.] 'மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய" [7-7] [அர்ஜுனா! என்னைக் காட்டிலும் வேறுபட்டிருப்பவைகளில் ஒன்றுகூட மிகவும் மேலானதாய் இல்லை']

शौर्यं तेजो धृतिर्दाक्ष्यं युद्धे चाप्यपलायनम् ।
दानमीश्वरभावश्च क्षात्रं कर्म स्वभावजम् ॥ ४३ ॥

43. ஶௌர்யம் தேஜோ த்₄ருதிர்தா₃க்ஷ்யம் யுத்₃தே₄
சாப்யபலாயநம் ।
தா₃நமீஶ்வரபா₄வஶ்ச க்ஷாத்ரம் கர்மஸ்வபா₄வஜம் ॥

ஶௌர்யம் — போர்க்களத்தில் அச்சமின்றி நுழையும் தன்மையாகிற சூரத்தன்மை, தேஜ: — பிறரால் வெல்லமுடியாமை, த்₄ருதி: — தொடங்கிய செயலில் இடையூறு நேர்ந்தாலும் தரித்து நின்று அதை நிறைவேற்றும் திறமை, தா₃க்ஷ்யம் - எல்லாச் செயல்களையும் நிறைவேற்றும் திறமை, யுத்₃தே₄ சாபி அபலாயநம் — போர்க்களத்தில் தனக்கு மரணம் உறுதியானாலும் பின்வாங்காமல் இருத்தல், தா₃நம் — தன்பொருளைப் பிறர்க்கு அளித்தல், ஈஶ்வரபா₄வ: ச — தன் குடிமக்கள் அனைவரையும் நியமிக்கும் திறமை ஆகிய இவையனைத்தும், ஸ்வபா₄வஜம் — முன்வினையால் உண்டான, க்ஷாத்ரம் கர்ம — க்ஷத்ரியனுக்கு உரியசெயலாகும்.

---

"யத: ப்ரவ்ருத்திர் பூ₄தாநாம் யேந ஸர்வமித₃ம் ததம்।
ஸ்வகர்மணா தமப்₄யர்ச்ய ஸித்₃தி₄ம் விந்த₃தி மாநவ:॥" [18-46] [எந்தப் பரமபுருஷனிடமிருந்து எல்லாப்பொருள்களும் உண்டாகின்றனவோ, எவனால் இவ்வுலகனைத்தும் வியாபிக்கப்பட்டிருக்கிறதோ, அத்தகைய என்னை, தனக்குரிய கர்மத்தாலே ஆராதனம் செய்து என் அருளாலே என்னை அடைவதாகிற ஸித்தியை மனிதன் பெறுகிறான்.] "யோ மாமஜமநாதி₃ம் ச வேத்தி லோகமஹேஶ்வரம்...ஸர்வபாபை: ப்ரமுச்யதே" [10-3] [எவனொருவன் என்னைப்பிறப்பற்றவனாகவும், அதிலும் அநாதிகாலமாகப் பிறப்பற்றவனாகவும் லோகேஶ்வரர்களுக்கும் ஈஶ்வரனாகவும் அறிகிறானோ, அவன் பக்தி உண்டாவதற்குத் தடையான எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுபடுகிறான்.] என்று இவ்விஷயங்களைக் கூறினானன்றோ.(ப்₃ராஹ்மம் கர்ம ஸ்வபா₄வஜம்) இந்தக் கர்மங்கள் அனைத்தும் பிராம்மணனுக்கு முன்வினையால் ஏற்பட்டவையாகும், 'ஸ்வபா₄வஜம்' என்றதற்கு முன்வினையால் உண்டானது என்று பொருள். 'ப்₃ரஹ்ம' ஶப்₃த₃ம் பிராம்மணனைக் குறிப்பது; 'ப்₃ராஹ்மம் கர்ம' என்றதற்கு 'அவனுக்குரிய கர்மம்' என்று பொருள். 42.

भा ॥ शौर्यं - निर्भयप्रवेशसामर्थ्यं, तेजः -- परैरनभिभवनीयता, धृतिः —आरब्धे कर्मणि विघ्नोपनिपातेऽपि तत्समापनसामर्थ्यं, दाक्ष्यं —

---

43. சௌரியமு மிக்கொளியுந் தற்றுணிவும் தன்சமத்தும்
வைரியமர் நாணுமை வாய்ந்தகொடை—சீரியனு
யொக்கநிய மிக்குமது மோங்கரசர் தந்தன்மை
தக்க கருமமாஞ் சார்ந்து,

சௌரியமும்—போர்க்களத்தில் அச்சமின்றி நுழையும் தன்மையாகிற சூரத்தன்மையும், மிக்கொளியும்--பிறரால் வெல்ல முடியாமையும், தற்றுணிவும்—தொடங்கிய செய லில் இடையூறு நேர்ந்தாலும் த$_{4}$ரித்து நின்று அதை நிறைவேற்றும் திறமையும், தன்சமத்தும் — எல்லாச் செயலையும் நிறைவேற்றும் திறமையும், வைரிஅமர் நாணுமை — போர்க்களத்தில் தனக்கு மரணம் உறுதியா னாலும் பின்வாங்காமல் இருத்தலும், வாய்ந்த கொடை — தன்பொருளைப் பிறர்க்கு அளித்தலும், சீரியனுய் ஒக்க நிய மிக்கும் அதும் — சிறப்பாக மக்கள் அனைவரையும் நிய மிக்கும் திறமையும், ஓங்கு அரசர் தம் தன்மை சார்ந்து தக்க கருமமாம்—ஆட்சி புரியும் அரசர்க்கு அவரவர் முன் வினை யால் உண்டான செயலாகும்.

---

43 க்ஷத்திரியனுக்குரிய செயல்களை விளக்குகிருன். (சௌர் யம்) சூரத்தன்மை. ''ஶூரம் பீ$_{4}$ரும் கவிர் ஜட$_{3}$ம்'' [ப$_{4}$ார மோக்ஷ— 174—32] என்று மஹாப$_{4}$ாரதத்தில் கவியாகிற அறிவாளிக்கு எதிர்த் தட்டாக ஜடனைக் கூறியதுபோலே, சூரனுக்கு எதிர்த்தட்டாக ப$_{4}$யந்தவனுகிய பீ$_{4}$ருவைக் கூறியிருக்கையாலே, போர்க்களத்தில் அச்சமற்று நுழையும் தன்மையே சூரத்தன்மை ஆகிறது. இத்தன்மை மனத்திலும் செயலிலும் வெளிப்படுகிறது. (தேஜ:) பிறரால் வெல்ல வொண்ணுமை போர்க்களத்தில் அச்சமின்றி நுழையும் திறமையாகிற சூரத்தன்மை இருந்தாலும் அங்கு எதிரிகளால் அவமதிக்கப்பட்டா னுகில் அத்தன்மை தோஷமேயாகும். ஆகையால், சூரத்தன்மையை

सर्वक्रियानिर्वृत्तिसामर्थ्यं, युद्धे चाप्यपलायनम्—युद्धे चात्ममरणनिश्चयेऽप्यनिवर्तनम्, दानम्—आत्मीयस्य धनस्य परस्वत्वापादनपर्यन्तस्त्यागः, ईश्वरभावः—स्वव्यतिरिक्तसकलजननियमनसामर्थ्यम्, एतत् क्षत्रियस्य स्वभावजं कर्म ॥ ४३ ॥

12-X-09
15-12-10

कृषिगोरक्ष्यवाणिज्यं वैश्यं कर्म स्वभावजम् ।

*44 க்ருஷிகோ3ரக்ஷ்ய வாணிஜ்யம் வைஶ்யம் கர்ம ஸ்வபா4வஜம்

க்ருஷிகோ3ரக்ஷ்ய வாணிஜ்யம் — உழவு செய்து பயிர் விளைத்தலும், பசுக்களைக் காத்தலும், வியாபாரம் செய்வதும், ஸ்வபா4வஜம் — முன் வினையால் உண்டான, வைஶ்யம் கர்ம — வைச்யனுடைய செயலாகும்.

---

குணமாக்குவது இது என்று கண்டு கொள்வது. (த்4ருதி:) தொடங்கிய செயலில் இடையூறு நேர்ந்தாலும் த4ரித்து நின்று அதை நிறைவேற்றும் திறமை. (தா3க்ஷ்யம்) "த3க்ஷ" ஶப்3த3ம் திறமை உடையவனைக்குறிக்கும். அவனுடைய தன்மையாகையாலே 'தா3க்ஷ்ய' ஶப்3த3ம் எல்லாச் செயல்களையும் நிறைவேற்றும் திறமையைக் குறிக்கிறது "த்4ருதி" ஶப்3த3ம் இடையூறு நேர்ந்தபோது செயல்களைக் கைவிட்டுவிடாமல் நிறைவேற்றுவதைக் குறிக்கிறது. "தா3க்ஷ்ய" ஶப்3த3ம் பொதுவாக எல்லாச் செயல்களையும் நிறைவேற்றும் திறமையைக் குறிக்கிறது. ஆகையால் புநருக்தி இல்லை (யுத்3தே4 சாபி அபலாயநம்) போர்க்களத்தில் தனக்கு மரணம் உறுதியானாலும் பின் வாங்காமல் இருத்தல். 'அபி' ஶப்3த3த்தாலே பின்வாங்குவதற்கு முக்கிய காரணமான மரணம் நேரும் என்னும் உறுதி உணர்த்தப்படுகிறது. (தா3நம்) தன் பொருளைக் கைம்மாறு கருதாமல் பிறருக்குஉரியதாக்குவதாகிற கொடை. (ஈஶ்வரபா4வ: ச) தன் குடிமக்களில் தீயவர்களை அடக்கியும், நல்லவர்களைக் காத்தும் அனைவரையும் நியமிக்கும் திறமை ஆகிய இவை அனைத்தும். (க்ஷாத்ரம் கர்ம ஸ்வபா4வஜம்) முன்வினையால் க்ஷத்திரியனுக்கு உண்டான செயலாகும். 'க்ஷத்ர' ஶப்3த3ம் க்ஷத்ரியனைக்குறிக்கும்; 'க்ஷாத்ரம் கர்ம' என்றது அவனுக்குரிய செயல் என்றபடி. 43.

भा ॥ कृषिः—सस्योत्पादनं कर्षणम्, गोरक्ष्यम्-पशुपालन-मित्यर्थः, वाणिज्यम्--धनसञ्चयहेतुभूतं क्रयविक्रयात्मकं कर्म, एतद्वैश्यस्य स्वभावजं कर्म ॥ ४३= ॥

परिचर्यात्मकं कर्म शूद्रस्यापि स्वभावजम् ॥ ४४ ॥

44*. பரிசர்யாத்மகம் கர்ம ஶூத்$_3$ரஸ்யாபி ஸ்வபா$_4$வஜம் ]

ஶூத்$_3$ரஸ்ய அபி — நாலாவது வர்ணத்தைச்சேர்நத சூத்ரனுக்கும், ஸ்வபா$_4$வஜம் — முன் வினையால் உண்டானது, பரிசர்யாத்மகம் கர்ம— முதல் மூன்று வர்ணத்தவருக்கும் மெய்வருந்திக் கைங்கர்யம் செய்யும் தொழிலாகும்.

---

*44. வைஶ்யருக்குரிய செயல்களைவிளக்குகிறான். (க்ருஷி—கோ$_3$ரக்ஷ்ய—வாணிஜ்யம்) உழவு செய்து தானியங்களைப் பயிர் செய்தல் 'க்ருஷி' எனப்படுகிறது. பசுக்களைக் காத்தல் கோ$_3$ரக்ஷ்யமாகிறது. ''கோ$_3$ரக்ஷ்யம்'' என்றது பா$_4$வார்த்த$_2$மாய் கோ$_3$ரக்ஷணம் என்றபடி. ''கௌ$_3$: ரக்ஷ்யா யத்ர தத்கர்ம கோ$_3$ரக்ஷ்யம்'' [பசு எதில் ரக்ஷிக்கப்படுகிறதோ, அச்செயல் கோ$_3$ரக்ஷ்யமாகும்] என்னும் வ்யுத்பத்தியாலும் இப்பொருள் ஏற்படுகிறது. 'கௌ$_3$ரக்ஷ்யம்' என்றும் பாடமுண்டு. ''கா$_3$ம் ரக்ஷதி இதி கோ$_3$ரக்ஷ:'' [பசுவை ரக்ஷிப்பவன் கோ$_3$ரக்ஷனாகிறான்] என்கிற வ்யுத்பத்தியாலே ''கோ$_3$ரக்ஷ'' ஶப்$_3$த$_3$ம் கோபாலகனைக் குறிக்கிறது. அவனுடைய செயலாகிற பசு பாலனம் கௌ$_3$ரக்ஷ்யமாகிறது. ''வணிஜ: கர்ம வாணிஜ்யம்'' என்னும் வ்யுத்பத்தியாலே வணிகரின் செயல் 'வாணிஜ்யம்' ஆகிறது ஆக, உழவுசெய்து பயிர்த்தொழில் செய்தல், பசுக்களை ரக்ஷித்தல், வியாபாரம் செய்தல் ஆகிய மூன்றும் இந்த ஸமஸ்த பத$_3$த்தால் குறிக்கப்படுகிறது. (வைஶ்யம் கர்ம ஸ்வபா$_4$வஜம்) இவை மூன்றும் வைசியனுக்கு முன்வினையால் ஏற்பட்ட செயல்களாகும். 'விட்' என்னும் ஶப்$_3$த$_3$ம் வைசியனைக் குறிக்கிறது. ''விஶ: கர்ம வைஶ்யம்'' என்னும் வ்யுத்பத்தியாலே 'வைஶ்ய' ஶப்$_3$த$_3$ம் வைசியனின் செயல்களைக் குறிக்கிறது. ''கு$_3$ணவசந ப்$_3$ராஹ்மணாதி$_3$ப்$_4$ய: கர்மணிச'' [அஷ்டாத்$_4$யாயீ 5—1—124] என்னும் பாணினி ஸூத்ரத்தின்படி வைஶ்ய ஶப்$_3$த$_3$த்தில் ''ஷ்யஞ்'' ப்ரத்யயம் வந்திருக்கிறது என்பது தாத்பர்ய சந்திரிகை. *44.

भा ॥ पूर्ववर्णत्रयपरिचर्यारूपं शूद्रस्य स्वभावजं कर्म । तदेतच्चतुर्णां

44. காணி விளைப்பதுவும் காலியவை காப்பதுவும்
வாணியமும் வைசியர்க்கு வாய்த்ததொழில்—பேணியவர்
மூவர்க்கு மாளாய் முயலுமதே சூத்திரர்க்கு
மேவப் படுந்தொழிலா மிக்கு.

காணி விளைப்பதுவும் — வயலில் உழவுத்தொழில் செய்து பயிர் விளைப்பதும், காலி அவை காப்பதுவும் — பசு, காளை, எருமை முதலானவற்றை ரக்ஷிப்பதுவும், வாணியமும் — வியாபாரமும், வைசியர்க்கு — வைசியர்களுக்கு, வாய்த்த தொழில் — முன் வினையால் விளைந்த செயல்களாகும், பேணி — மெய்வருந்தி, அவர் மூவர்க்கும் ஆளாய் முயலுவதே — முற்கூறிய மூன்று வர்ணத்தவர்களுக்கும் பணி புரிபவனாய் இருக்கையே, சூத்திரர்க்கு — நாலாவது வர்ணத்தைச் சேர்ந்த சூத்திரர்களுக்கு, மிக்கு மேவப்படும் தொழிலாம் — மிகவும் கைக்கொள்ளத் தக்க செயலாகும்.

44*. சூத்திரர்களுக்குரிய செயலை விளக்குகிறான். (ஶூத்₃ரஸ்யாபி பரிசர்யாத்மகம் ஸ்வபா₄வஜம் கர்ம) நான்காவது வர்ணத்தைச் சேர்ந்த ஶூத்₃ரனுக்கு மற்ற மூன்று வர்ணத்தவர்க்குப் பணி செய்வதே முன் வினையால் உண்டான செயலாகும். இவ்விஷயம் மநுஸ்ம்ருதி முதலான ஸ்ம்ருதிகளிலும், இதிஹாஸ புராணங்களிலும் பல விடங்களில் விளக்கப்பட்டுள்ளதாகையால் இங்கு 'பரிசர்யாத்மகம்' என்று பொதுவாகச் சொல்லப்பட்டபோதிலும் முன் சொல்லப்பட்ட மூன்று வர்ணத்தவர்க்கும் பணி செய்வது என்று பொருள் கொள்ளப்பட்டது. (ஶூத்₃ரஸ்ய) "ஶோசதி இதி ஶூத்₃ர:" [வருந்துகிறவனுகையாலே சூத்ரன்] என்னும் வ்யுத்பத்தியாலே முதல் மூன்று வர்ணத்தவர்க்கும் பணி செய்வதன் மூலம் மெய்வருத்தம் அடைகிறவனுகையாலே சூத்ரன் எனப்படுகிறுன். அல்லது "ஶுசம் த்₃ராவயதி இதி ஶூத்₃ர:" [வருத்தத்தைப் போக்குகிறவனுகையாலே சூத்ரன்] என்னும் வ்யுத்பத்தியாலே தன் பணியின் மூலம் முதல் மூன்று வர்ணத்தவர்களுடைய வருத்தத்தைப் போக்குகிறவனுகையாலே 'சூத்ரன்' எனப்படுவதாகவும் கொள்ளலாம்.

'ஶூத்ர' ஶப்தமும் இழிந்தவனைக் கூறுவதாகச் சில நாஸ்திகர்கள் பிரசாரம் செய்வதற்கு ஆதாரம் எதுவும் இல்லை. "குலம் தாங்கு சாதிகள் நாலினும்" [திருவாய்3-7-9] என்று ஆழ்வாரும் நாலு சாதிகளும் சமூகத்தைத் தாங்குகின்றவையாகவே குறிப்பிட்டது இங்கு குறிக்கொள்ளத்தக்கது. புருஷஸூக்தத்தில் இந்நாலு சாதிகளும் பிரமனுடைய நாலு அவயவங்களிலிருந்து உண்டானதாகக் கூறியது இதைவலியுறுத்துகிறது.

"ஜனஸமூஹத்தினுடைய முகஸ்தானமாயிருக்கும் ப்ராஹ்மணஜாதி பிரமனுடைய முகத்தினின்றும் உண்டாயிற்று. முகத்தில் ஞானேந்த்ரியங்களான கண், மூக்கு, நாக்கு, செவி, மெய்(தோல்) என்னும் ஐந்தும் இருக்கின்றன......அப்படியே ப்ராஹ்மணர்களும் தீர்க்கதர்ஶிகளாகவும், ஜீவாத்ம பரமாத்ம தத்வஜ்ஞானிகளாகவும் உலகத்திற்குக் கண்போன்றும் விளங்குகிறார்கள். ...... கர்மேந்த்ரியங்களுள் வலிமை வாய்ந்ததான கையிலிருந்து தோளாண்மையுடைய க்ஷத்ரியன் பிறந்தான். தேஹம் கையினுடைய பலத்தினாலேயே ரக்ஷிக்கப்படுவதுபோல் ஜனஸமூஹமும் க்ஷத்ரியனுடைய தோள்வலிமையினால் ரக்ஷிக்கப்படுகிறது. ராஜாக்களில்லாவிடில் உலகம் அராஜகமாகி அழிந்துவிடும். அதனாலேயே அரசனுக்குத் திருமாலின் அம்ஶம் உள்ளதாகக் கூறப்படுகிறது.

"எல்லாரும் உண்டு ஜீவிப்பதற்கு அவஶ்யமான உணவுப்பொருள்களை உண்டாக்குவதையும் பலருக்கு விநியோகிப்பதையும் தொழிலாகவுடைய வைஶ்யன் துடையிலிருந்து உண்டாக்கப்பட்டான். வைஶ்யனுடைய தாளாண்மையினாலேயே வேளாண்மை நடக்கிறதன்றோ. எல்லாருடைய தேஹத்தையும் போஷிப்பது வைஶ்யனுடைய தொழில்.

"இம்மூவர்ணத்தார்க்கும் வேண்டிய உபகரணங்களை ஸம்பாதித்துக்கொடுப்பதற்காக ஆடி ஓடித் திரிந்து நடந்து கார்யம் செய்பவனாகையால் ஶூத்ரன் காலிலிருந்து படைக்கப்பட்டான். கால்கள் ஶரீரத்தைத் தாங்குவதுபோல், அவன் இம்மூவர்ணத்தாரையும் தாங்குகிறான். காலிலிருந்து உண்டானதால் ஒருவிதமான தாழ்வும் கிடையாது. எம்பெருமானுடைய திருவடிகளே எல்லோருக்கும்

अदर्शनार्थमुक्तम्। यज्ञादयो हि त्रयाणां वर्णानां साधारणाः।

---

வணங்கும் துறையாகும். மற்றவர்ணத்தார்க்குள்ள நியமநிஷ்டைகள், ஆசாரவ்யவஹாரங்கள் முதலிய கஷ்டங்கள் இவர்களுக்குக் கிடையாது. சொன்னதைச் செய்வதில் பாபமும் கிடையாது; பொறுப்பும் கிடையாது. அவர்களுக்கு நற்கதியடையவது மிகவும் ஸுலபமாகும். பிறப்பினாலேயே அவர்களுக்கு நைச்யமும், அஹங்கார மமகாரமில்லாமையும் ஏற்பட்டிருக்கின்றன. ஆசார்யர்களும் உயர்ந்த வர்ணத்தார்க்குப் பிறப்பினாலேற்படும் அஹங்கார மமகாரங்கள் அழியவேண்டுமென்று உபதேசித்திருக்கிறார்கள். "தொழுமினீர் கொடுமின் கொண்மின்" [திருமாலை 42] என்று அவர்களிடமிருந்து ஞானத்தைப் பெற்றுக்கொள்வதிலும், அவர்களுக்கு ஞானத்தைக் கொடுப்பதிலும் தடையில்லை என்று தொண்டரடிப்பொடியாழ்வாரும் அருளியிருக்கிறார். போதனம், ரக்ஷணம், போஷணம், ஸேவகம் என்பவை முறையே நான்கு வர்ணத்தார்க்கும் தொழிலாகும். ஒவ்வொருவரும் மற்ற வர்ணத்தார்க்காக உழைக்கிறார்கள். நால்வரும் பகவானுடைய அவயவங்களே. அவர்களுக்குள் ஏற்றத்தாழ்வு கிடையாது. அவர்கள் ஒருவர்க்கொருவர் சண்டையிடுவது சரீரத்தின் அவயவங்கள் ஒன்றுக்கொன்று சண்டை செய்வதை ஒக்கும்; வயிறுடன் மற்ற அவயவங்கள் சண்டையிட்ட கதை எல்லோரும் அறிந்தது ......" என்று புருஷஸூக்த வ்யாக்யானத்தில் ஸுதர்சனம் ஸ்தாபகரும், எந்தையாருமான ஸ்ரீஉ. வே. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார்ஸ்வாமி அருளிச்செய்தது இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

இங்கு ஓர் கேள்வி யெழுகிறது:— 1) யாகம் செய்தல், 2) யாகம் செய்வித்தல், 3) வேதம் ஓதுதல், 4) வேதம் ஓதுவித்தல், 5) தானம் கொடுத்தல், 6) தானம் வாங்குதல் என்னும் ஆறு செயல்கள் பிராம்மணனுக்கு உரியவையாகவும். 1) யாகம் செய்தல், 2) வேதம் ஓதுதல், 3) தானம்கொடுத்தல் என்கிற மூன்றும் க்ஷத்ரியர்களுக்கும் வைசியர்களுக்கும் உரிய செயல்களாகவும் சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டுள்ளன.

பார்யாரதிः சுசிः ப்ருத்ய பர்த்தா ச்ராத்தக்ரியாந்விதः।
நமஸ்காரேண மந்த்ரேண பஞ்ச யஜ்ஞாந்ந ஹாபயேத்॥

शमादयोऽपि त्रयाणां वर्णानां मुमुक्षूणां साधारणाः । ब्राह्मणस्य तु सत्त्वोद्रेकस्य स्वाभाविकत्वेन शमदमादयस्सुखोपादाना इति कृत्वा तस्य शमादयः स्वभावजं कर्मेत्युक्तम् । क्षत्रियवैश्ययोस्तु स्वतो रजस्तमःप्रधानत्वेन शमदमादयो दुःखोपादाना इति कृत्वा न तत्कर्मेत्युक्तम् ।

---

[யாஜ்ஞவல்க்யஸ்ம்ருதி 1—5—121] [மனைவியிடம் இன்புறுபவனாய், பரிசுத்தனாய், தன்வேலையாள்களைத் தாங்குபவனாய், முன்னோர் களுக்கு ஈமக்கடன்களைச் செய்வதில் ஈடுபட்டவனாய், நமஸ்காரத் தாலும் மந்திரத்தாலும் ஐவகை வேள்விகளை விடாமல் இருக்க வேண்டும் (சூத்ரவர்ணத்தில் பிறந்தவன்)] என்று யாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதியில் சூத்ரனுக்கும் பல செயல்கள் விதிக்கப்படுகின்றன. இங்கு நாலுவர்ணத்தவர்க்கும் ஒரு சில செயல்களையே சொல்லியிருப் பது எப்படிப் பொருந்தும்? என்பது அக்கேள்வி. "இங்கு சில செயல் களை எடுத்துக்காட்டாகவே கூறியிருக்கையாலே, இங்கு சொல்லப் பட்ட செயல்களை சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட மற்ற செயல் களுக்கு உபலக்ஷணமாகக் கொள்ளவேண்டும்" என்பது இதற்கு பதிலாகும். யாகம் செய்தல், வேதம் ஓதுதல், தானம் கொடுத்தல் என்னும் மூன்று தொழில்களும் முதல் மூன்று வர்ணத்தவர்களுக்கும் பொதுவானவை என்று சாஸ்திரங்கள் பலவிடங்களில் கூறுகை யாலே இப்படியே கொள்ளவேண்டும். பிராம்மணனுக்குச் சொல்லப் பட்ட ஶமதமாதிகள் மோக்ஷமடைய விரும்பும் மூன்று வர்ணத்த வர்க்கும் பொதுவானவை. அப்படியிருக்கும் போது அவை பிராம் மணனுக்குரிய குணமாக ஏன் சொல்லப்பட்டன? எனில், பிராம் மணனுக்கு முன் வினையால் ஸத்வகுணம் மிகுதியாய் இருக்கையால் ஶமதமாதிகள் எளிதில் உண்டாகும் என்னும் கருத்தாலே அவை அவனுக்குரிய செயல்களாகச் சொல்லப்பட்டன. க்ஷத்திரியனுக்கும் வைசியனுக்கும் ரஜஸ்தமோகுணங்கள் மிகுந்திருப்பது இயல்வாகை யாலே ஶமதமாதிகள் விளைவது அரிது என்னும் கருத்தாலே அவை அவர்களுக்குரிய செயலாகச் சொல்லப்படவில்லை.

ब्राह्मणस्य वृत्तिर्याजनाध्यापनप्रतिग्रहाः ; क्षत्रियस्य जनपदपरिपालनम्; वैश्यस्य च कृष्यादयो यथोक्ताः; शूद्रस्य तु कर्तव्यं वृत्तिश्च पूर्ववर्णत्रयपरिचर्यैव ॥ ४४ ॥

---

இப்படி இங்கு சொல்லப்பட்ட செயல்கள் எடுத்துக்காட்டாய் இருந்து கொண்டு மற்ற செயல்களை உணர்த்துவதுபோலே, அவர்களுக்குரிய வ்ருத்திகளாகிற ஜீவனோபாயங்களும் மற்ற வ்ருத்திகளை உபலக்ஷண முறையாலே காட்டுகிறது. பிராம்மணனுக்கு ஜீவனோபாயம் யாகமும் செய்வித்தலும், வேதமோதுவித்தலும், தானம் வாங்குதலும் ஆகும். க்ஷத்திரியனுக்கு ஜீவனோபாயம் குடிமக்களை ரக்ஷிப்பது ஆகும். வைசியனுக்கு ஜீவனோபாயம் முன் சொல்லப்பட்ட பயிர்த்தொழில் முதலானவை ஆகும். சூத்ரனுக்குச் செயலும் ஜீவனோபாயமும் முதல் மூன்று வர்ணத்தவர்களுக்குப் பணிவிடை செய்வதேயாகும்.

''சூத்ரனுக்குச் செயலும் ஜீவனோபாயமும் முதல் மூன்று வர்ணத்தவர்களுக்குப் பணிவிடைசெய்வதே என்று இங்கு கூறுவது பல சாஸ்திரவசனங்களுக்குப் பொருந்தவில்லையே'' என்னும் ஆக்ஷேபம் இங்கு எழுகிறது. சற்றுமுன் எடுக்கப்பட்ட ''பார்யா ரதி:'' என்று தொடங்கும் யாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதி வசனம் அவனுக்கு வேறுகர்மங்களையும் வ்ருத்திகளையும் காட்டுகிறது. கீதை [9—32] ஶ்லோகத்திலும் தன்னை ஆச்ரயிப்பதனால் ஸ்த்ரீ சூத்ரர்களும் மோக்ஷமடையலாம் என்று கண்ணனே கூறியிருக்கிறான். ''வஸந்தே தீக்ஷயேத் விப்ரம்'' என்று தொடங்கி ''ஹேமந்தே ஶூத்ரமேவ ச| ஸ்த்ரியம் ச வர்ஷாகாலே து பஞ்சராத்ரவிதாநத:'' என்பது ஈருக பாஞ்சராத்ர ஶாஸ்த்ரத்தில் பிராம்மணனுக்கு வஸந்தகாலத்திலும், சூத்ரனுக்கு ஹேமந்த (முன்பனிக்) காலத்திலும், ஸ்த்ரீக்கு மழை காலத்திலும் எம்பெருமானை ஆராதிப்பதற்கு உறுப்பான தீக்ஷை அளிக்கலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. பாரதத்திலும்

''ப்ராஹ்மணை: க்ஷத்ரியைர் வைஶ்யைஶ்ஶூத்ரைஶ்ச
க்ருதலக்ஷணை:|
அர்ச்சநீயஶ்ச ஸேவ்யஶ்ச நித்யயுக்தைஸ் ஸ்வகர்மஸு|
ஸாத்வதம் விதிமாஸ்தாய கீதஸ் ஸங்கர்ஷணேந ய:''||

[பார பீஷ்ம 66—39—40] [பஞ்சஸம்ஸ்காரம் செய்யப்பெற்றவர்களாய், தத்தமக்குரிய கர்மங்களில் எப்போதும் ஈடுபட்டவர்களான பிராம்மண க்ஷத்ரிய வைசிய சூத்ரர்களாலே, ஸங்கர்ஷணனை எம்பெருமானால் சொல்லப்பட்ட பாஞ்சராத்ரவிதியை அநுஸரித்து எம்பெருமான் அர்ச்சனை செய்யவும் ஸேவிக்கவும் தக்கவன்] என்று பஞ்சஸம்ஸ்காரம் செய்யப்பெற்ற சூத்ரர்களுக்கும் எம்பெருமானை ஆராதிக்கும் உரிமை கொடுக்கப்பட்டுள்ளது. விஷ்ணுதர்மத்திலும், "க்ருதம் நாம யுகம் பூர்வம் யத்ர தர்மஸ்ஸநாதந:| க்ருதமேவ ந கர்த்தவ்யம் யஸ்மிந் காலே நரோத்தம| ப்ராஹ்மணா: க்ஷத்ரியா வைஶ்யாஶ்ஶூத்ராஶ்ச க்ருதலக்ஷணா:| க்ருதே யுகே ஸம்பவந் ஸ்வகர்மநிரதாஸ் ஸதா| ஏகவேதா ஸமாயுக்தா ஏகமந்த்ரவிதிக்ரியா:| ப்ருதக்தர்மாஸ் த்வேகவேதா: (த்யா:) தர்மமேகமநுவ்ரதா:| சாதுராஶ்ரம்ய யுக்தேந கர்மணா காலயோகிநா| அகாம பலஸம்யோகாத் ப்ராப்நுவந்தி பராம் கதிம்| [விஷ்ணுதர்மம் 108—19] [முதல் யுகமான க்ருதயுகத்தில் பலமுடையான தர்மம் அநுஷ்டிக்கப்பட்டது. அரசனே! அக்காலத்தில் கர்மங்கள் க்ருதம் (செய்யப்பட்டது) என்னும் நிலையில் இருந்தனவேயொழிய "கர்த்தவ்யம்" (செய்யப்பட வேண்டியது) என்னும் நிலையில் இல்லை. பஞ்சஸம்ஸ்காரம் செய்யப்பெற்ற பிராம்மண க்ஷத்ரிய வைசிய சூத்ரர்கள் எப்போதும் தமக்குரிய கர்மங்களில் ஈடுபட்டிருந்தார்கள். ஒரே வேதத்தோடு கூடியிருந்தார்கள். ஒரே மந்திரத்தைக்கொண்டு கர்மங்களைப் புரிந்து வந்தார்கள். பலவகையான தர்மங்களை உடையவர்களும், (ஏகாயந சாகையாகிற) ஒரே வேதத்தைப் பின்பற்றியவர்களாய், (ஸாத்வத தர்மமாகிற) ஒரே தர்மத்தை அநுஷ்டிப்பவர்களாய், நாலு ஆச்ரமங்களுக்கும் அவ்வக்காலத்திற்குரிய கர்மங்களை ஸாதனமாகக்கொண்டு பலனில் விருப்பமில்லாமல் மோக்ஷத்தை அடைந்தார்கள்] என்று சூத்ரர்களுக்கும் பாஞ்சராத்ர விதிப்படி மோக்ஷோபாயத்தை அநுஷ்டிப்பது சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ரீஸாத்வத ஸம்ஹிதையிலும்" அஷ்டாங்கயோகயுக்தாநாம் ஹ்ருத்யாகநிரதாத்மநாம்| யோகிநாம் அதிகாரஸ்ஸ்யாத் ஏகஸ்மிந் ஹ்ருதயேஶயே| வ்யாமிஶ்ரயாகயுக்தாநாம் விப்ராணாம் வேதவாதிநாம்| ஸமந்த்ரே து சதுர்வ்யூஹே ஹ்யதிகாரோ ந சாந்யதா| த்ரயாணாம் க்ஷத்ரியாதீநாம் ப்ரபந்நாநாம் ச தத்த்வத:| அமந்த்ரமதி

காரஸ்து சதுர்வ்யூஹக்ரியாக்ரமே | ஸக்ரியே மந்த்ரசக்ரே து வைப₄வீயே விவேகிநாம் | மமதாஸந்நிரஸ்தாநாம் ஸ்வகர்ம நிரதாத்மநாம் | கர்மவாங்மநஸைஸ்ஸம்யக் ப₄க்தாநாம் பரமேஶ்வரே | சதுர்ணாமதி₄காரோ வை வ்ருத்தே தீ₃க்ஷாக்ரமே ஸதி ||" [ஸ்ரீ ஸாத்வத 2—7, 8, 9 10, 11] [அஷ்டாங்க₃யோகம் கைவந்தவர்களும் ஹ்ருத₃யத்தில் எம்பெருமானை உபாஸிப்பவர்களுமான யோகிகளுக்கு அந்தர்யாமியான எம்பெருமானை ஆராதி₄ப்பதிலேயே அதி₄காரம், வேத₃ங்களை ஓதி அதில் சொல்லப்பட்ட யாகங்களில் ஈடுபடும் அந்தணர்களுக்கு மந்திரங்களோடு கூடிய நான்கு வியூகங்களை ஆராதி₄ப்பதிலேயே அதி₄காரம் உண்டு; வேறொன்றில் இல்லை. ப்ரபந்நர்களான க்ஷத்ரிய வைசிய சூத்ரர்கள் மூவருக்கும் நாலு வ்யூஹங்களையும் மந்திரமில்லாமல் ஆராதிப்பதில் அதி₄காரமுண்டு. விவேகம் உடையவர்களாய், அஹங்கார மமகாரமற்றவர்களாய், தம் கர்மங்களில் ஈடுபட்டவர்களாய், மனம் மொழி மெய்களாலே பரமாத்மாவிடம் நன்கு ப₄க்தி செலுத்துபவர்களான நாலு வர்ணத்தவர்க்கும் கிரியைகளோடும் மந்திரங்களோடும் கூடிய விப₄வாவதாரத்தை ஆராதி₄ப்பதில் அதி₄காரம் உண்டு] என்று நாலு வர்ணத்தவருக்கும் எம்பெருமானை ஆராதிப்பதில் ஒவ்வொரு வகையான அதி₄காரம் சொல்லப்பட்டது. ஸாத்வத ஸம்ஹிதை ஏழாவது அத்தியாயத்தில் (53-56) விரதங்களை விதிக்கும்போது "தா₃நார்ச்சநே து ஶூத்₃ராணாம் வ்ரதகர்மணி ஸர்வதா₃ |... தஸ்மாத் ஸ்வேநாதி₄காரேண குர்யாத₃ராத₄நம் ஸதா₃ | ஸர்வத்ராதி₄க்ருதோ விப்ரோ வாஸுதே₃வாதி₃ பூஜநே || யதா₂ ததா₂ ந க்ஷத்ராத்₃யா: தஸ்மாச் சா₂ஸ்த்ரார்த்த₂மாசரேத் | நயேந் நக்தாஶநைர் ப₄க்த்யா தி₃நாந் யோதாநி மௌத்₃க₃ல: | வ்ரதாத்₃யந்தே து விஹிதம் பாரிட₃ம் ஓபி தஸ்ய வை" [ஶூத்₃ரர்கள் தானம் கொடுக்கும் போதும் அர்ச்சனை செய்யும்போதும் விரதம் அனுஷ்டிக்கும் போதும் எப்போதும் (அஸித்₃த₄ாந்நம் விதிக்கப்படுகிறது)........ எப்போதும் அவன் தன் அதி₄காரத்துக்குத் தக்கபடி ஆராதனம் செய்யவேண்டும். வாஸுதேவன் முதலான எல்லா மூர்த்திகளையும் ஆராதி₄ப்பதற்கு அந்தணனுக்கு எப்படி அதி₄காரம் உண்டோ அப்படி க்ஷத்திரியன் முதலானோர்க்கு அதி₄காரம் இல்லை. ஆகையால் அவரவர்கள் சாஸ்திரத்தில் சொல்லியபடி ஆராதிக்க வேண்டும்.

ஶூத்₃ரன் ப₄க்தியுடன் விரதத்தை அனுஷ்டிக்கும் தினங்களில் இரவு மட்டும் உண்ணவேண்டும். விரதம்முதலானவை முடியும்போது அவனுக்கு உபவாஸம் விதி₄க்கப்பட்டிருக்கிறது] என்று ஶூத்₃ரனுக்கு விரதங்கள் அனுஷ்டி₂க்கவேண்டியமுறையும் காட்டப்பட்டுள்ளது."நஸ்வர(:) ப்ரணவோ ऽங்க₃ந்யாஸோ நாப்யந்யவித₄யஸ்ததா₂ । ஸ்த்ரீணாம் து ஶூத்₃ர ஜாதீநாம் மந்த்ரமாத்ரோக்திரிஷ்யதே।" [1—102] [ஸ்த்ரீகளுக்கும் ஶூத்ரர்களுக்கும் ஸ்வரத்தோடு கூடிய ப்ரணவம், அங்க₃ந்யாஸம்,வேறுவிதிகள் ஆகியஒன்றும் கிடையாது. மந்திரத்தை மாத்திரம் சொல்லுவதுதான் அவர்களுக்கு விதிக்கப்பட்டுள்ளது.] என்று நாரதீயம் அஷ்டாக்ஷரகல்பத்திலும் ஶூத்₃ரர்களுக்கும் மந்திரத்தில் அதி₄காரம் சொல்லப்பட்டது இவ்வண்ணமே ஏகாதசி விரதம் முதலானவையும் புராணங்களில் எல்லா வர்ணங்களுக்கும் பொதுவாக விதிக்கப்பட்டுள்ளது. இதுபோலவே தர்ம சாஸ்திரங்களிலும் ஶூத்₃ரர்கள் விலக்கத்தக்கவையும் ஏற்கத்தக்கவையுமாகப் பல விஷயங்கள் படிக்கப்படுகின்றன. ஆகையால் முதல் மூன்று வர்ணத்தவர்க்குப் பணிவிடை செய்வதே ஶூத்₃ரர்களுக்குச் செயலும் தொழிலுமாகும் என்று கூறுவது எப்படிப் பொருந்தும்?

மேலும்"நஶூத்ராப₄க₃வத்₃ப₄க்தாவிப்ரா பா₄க₃வதா:ஸ்ம்ருதா:" [விஹகேந்த்₃ர 24—10] [எம்பெருமானுடைய ப₄க்தர்கள் ஶூத்₃ர ஜாதியில்பிறந்திருந்தாலும்அவர்கள் ஶூத்₃ரர்கள் அல்லர்; அவர்கள் அந்தணர்களாகவே எண்ணப்படுவர்.] என்று பகவத் பக்தர்களாகி விட்டால் ஶூத்ரர்களுக்கு அந்த ஶூத்₃ரத்தன்மை கழிந்து விடுவதாகச் சொல்லப்படுகிறது. ஜயாக்₂ய ஸம்ஹிதை முதலானவற்றில் நாலு வர்ணத்தைச் சேர்ந்த பா₄க₃வதர்களும் ஸமானமானவர்கள் என்று சொல்லப்படுகிறது. இவற்றைப் பார்க்கும்போது எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்யும் சூத்ரர்களுக்கு, மற்ற மூன்று வர்ணத்தவர்களுக்கும் பணிபுரிய வேண்டிய அவசியம் இல்லை என்றும் தேறுகிறது. ஆகையால் இங்கு 'சூத்ரனுக்குச்செயலும் தொழிலும் முதல் மூன்று வர்ணங்களுக்குப் பணிவிடை செய்வதே" என்று பா₄ஷ்யத்தில் கூறியது எப்படிப் பொருந்தும்? என்பது அந்த ஆக்ஷேபம்.

கிருதயுகம், திரேதாயுகம்,



## இக்ஷ்வாகோபத்திற்குத் தாத்பர்ய சந்திரிகையில் ஸ்ரீதேசிகன் அருளிச்செய்யும் சமாதானம்

சிறப்புடைய ஸம்ஸ்காரம், குண விசேஷங்கள் ஆகியவற்றோடு கூடிய சூத்ரர்களுக்கு மற்றும் பல த4ர்மங்களும் விதி4க்கப்பட்டிருக்கின்றன என்பது உண்மையே; அவைதவிர்ந்த மற்ற கர்மங்களே சூத்ரனுக்குக் கிடையாது என்று கொள்ளவேண்டியது நியாயமே. ஆனாலும் இங்கு கீதையில் "பரிசர்யாத்மகம் கர்ம" என்று சூத்ரனுடைய கர்மம் முழுவதும் பரிசர்யாரூபமானது என்று கூறப்பட்டிருப்பதை உற்று நோக்கினால், முன்மூன்று வர்ணத்தாருக்குப் பணிவிடை செய்வதே அவனுக்கு ப்ரத4ான கர்மம் என்றும், ஆகையால் மற்ற கர்மங்களும் அம்மூன்று வர்ணத்தாரால் நியமிக்கப்பெற்று அவர்களுக்குப் பணிவிடை செய்யும் எண்ணத்தோடேயே அனுஷ்டிக்கத் தக்கவை என்றும் விளங்குகிறது. கீதையில் 'பரிசர்யா கர்ம" என்று சொல்லாமல் "பரிசர்யாத்மகம் கர்ம" என்று கூறியது இப்படிக் கொள்ளாவிடில் பயனற்றதாகிவிடும். ரஹஸ்யாம்நாயத்தில் "ஜ்ஞாந ஜ்ஞாபந ஸம்ப்ரேஷணகர்மா ப்3ராஹ்மண:, ஜ்ஞாந பரித்ராண கர்மா க்ஷத்ரிய:, ஜ்ஞாந பீ3ஜவர்த்த4நகர்மா வைஶ்ய:, ஜ்ஞாந பர்யுத்த2ாநகர்மா ஶூத்3ர: | க்ருதயுக3ஸ்யாந்தே த்ரேதாயுக3ஸ்யாதௌ3 ப்3ராஹ்மணா: க்ஷத்ரிய வைஶ்ய ஶூத்3ரா பி4த்3யந்தே, தேஷாம் பி4ந்நாநாம் த்3ருஷ்டி: ந தத2ா ப4வதி, பத்2யா ரஸநா ந தத2ா ப4வந்தி; புஷ்ப ப2லம் ஓஷதி4 வநஸ்பதயோ ந தத2ா து3த4்தே, தாம் த்3ருஷ்ட்வா ப்3ராஹ்மண க்ஷத்ரிய வைஶ்ய ஶூத்3ராணாம் அஸூயா ப்ராது3ர்ப3பூ4வ | ஶூத்3ர: ப்ரத2மஜாதிர் ந வ: பர்யுத்த2ாஸ்யாமீதி | வைஶ்யோ த்3விதீய ஜாதி: ந வோ பீ3ஜாநி வர்த்த4யிஷ்யாமீதி, க்ஷத்ரியஸ் த்ருதீயஜாதிர் ந வ: பரித்ராஸ்ய இதி | தாந் ப்3ராஹ்மண இத்யாஹ ஆஸ்தி2தா யூயம் ந வோ வக்ஷ்யாமி இதி" [சாஸ்த்ரார்த்தங்களை அறிதல் அறிவித்தல், பரப்புதல் ஆகியவைகளைத் தொழிலாக உடையவன் பிராம்மணன். அவற்றை அறிதல் மற்றவர்களை ரக்ஷித்தல் ஆகியவைகளைத் தொழிலாக உடையவன் க்ஷத்திரியன். அவற்றை அறிதல் பயிர்த்தொழில் செய்தல் ஆகியவைகளைத் தொழிலாக உடையவன் வைசியன். அவற்றை அறிதல் மற்றமூவர்ணத்தவர்க்கும் பணிவிடை செய்தல் ஆகியவைகளைத் தொழிலாக உடையவன் சூத்ரன். (கிருதயுகத்தின் இறுதிவரை இந்நிலைநீடித்துவந்தது). கிருதயுகத்தின் முடிவில் திரேதாயுகத்தின் தொடக்கத்தில் பிராம்மணக்ஷத்திரிய வைசியசூத்ரர்களிடையே வேற்றுமை விளைந்தது; வேற்றுமைவிளைந்த அவர்களுடைய பார்வை வேறாக இருந்தது. ஹிதமான ஆகாரத்தை

ஏற்றுக்கொள்ளும் நாவும் வேறுயிற்று: புஷ்பம் பலம் ஓஷதிகள்
மரங்கள் ஆகியவற்றைப் பயன்படுத்தும் முறையும் வேறுயிற்று.
இவ்வாறு ஆனதைக்கண்டு இவர்களிடையே பொருமை விளைந்தது.
முதலில் கிளர்ந்தெழுந்த சூத்ரன் மற்ற மூவர்ணத்தவர்க்கும் பணி
விடை செய்ய மறுத்தான். இரண்டாவதாகக் கிளர்ந்தெழுந்த வைசி
யன் மற்றவர்க்குப் பயிர்த்தொழில் செய்யமறுத்தான். மூன்ருவதாகக்
கிளர்ந்தெழுந்த க்ஷத்திரியன் அவர்களை ரக்ஷிக்க மறுத்தான். இவர்
களைக் குறித்து பிராம்மணன் "நீங்கள் இப்படி ஆகிவிட்டீர்கள்;
உங்களுக்கு நான் உபதேசிக்கமாட்டேன்" என்று கூறினுன்.]
என்று சொல்லப்பட்டிருப்பதும் கிருதயுகம் வரை இந்த தர்மங்கள்
கீதையில் சொல்லப்பட்டபடியே நடைபெற்றன என்பதைக் காட்டு
கிறது. விஷ்ணுபுராணத்தில் 6-ம் அம்சம் 2-ம் அத்தியாயத்தில்—
நாமஸங்கீர்த்தனம் போன்ற சிறுமுயற்சியினுலேயே பரமாத்மாவை
அடைவிக்கும் கலியுகமானது பெருமுயற்சிகளான உபாஸனம்
முதலானவற்ருல் அவனை அடைவிக்கும் க்ருதம் முதலான யுகங்
களைக் காட்டிலும் சிறந்தது என்றும். பிராம்மண க்ஷத்ரிய வைஸ்
யர்கள் அவரவர் தர்மத்திலிருந்து வழுவிநிற்கப்போகும்
கலியுகத்தில், தன் தர்மமான பணிவிடையிலேயே நிலைநிற்கப்
போகும் சூத்ரனே சிறந்தவன் என்றும், பல கர்மாநுஷ்டானங்களைச்
செய்ய வேண்டிய புருஷர்களைக் காட்டிலும் பர்த்தாவுக்குப்
பணிவிடை செய்கையாகிற ஒரு கர்மத்தாலேயே நற்கதியடையக்
கூடிய ஸ்த்ரீயே சிறந்தவள் என்றும் வியாஸர் கூறினுர் என்னும்
வரலாறும் சூத்ரனுக்குப் பணிவிடை செய்வதே தொழில் என்பதை
வலியுறுத்துகிறது. இதிலிருந்து "ந ஶூத்ரா பகவத்பக்தா:"
முதலான வசனங்கள் பகவத்பக்தர்களைத் துதிப்பதற்காக
எழுந்தவையேயொழிய பக்தனானதால் மாத்திரம் சூத்ரனுக்கு
முன்மூன்று வருணத்தாருக்குப் பணிவிடை செய்வதாகிற ஸ்வதர்மம்
நீங்கிவிடுமென்று விதிப்பவையல்ல என விளங்குகிறது. உண்மையில்
பகவத்பக்தனுயிருக்கும் சூத்ரன் கீதா வசனத்தின்படி முதல்
மூன்று வருணத்தவர்க்குப் பணிவிடை செய்வதாகிற ஸ்வதர்மத்தை
அவசியம் செய்யவேண்டும். பகவத்பக்தர்கள் சூத்ரர்கள் அல்லர்
என்று சொல்லும் அந்தவாக்கியமே, 'பகவத்பக்தியில்லாதவர்கள்
அந்தணர் முதலானவர்களானுலும் சூத்ரர்களே' என்று நிந்தித்திருக்
கிறது. இதனுல் அவர்களுடைய ஜாதி மாறிவிடாதே. அப்படியானுல்
பகவத்பக்தர்களைப் புகழ்ந்திருப்பதற்கும் மற்றவர்களை இகழ்ந்

திருப்பதற்கும் கருத்து என்னவெனில்—சரீரத்தில் ரஜஸ் தமோ குணங்கள் மிகுந்தவர்களாயிருந்தபோதிலும், ஸாத்விகாஹாரம் உண்பதாலும் பகவத் பாகவத கடாக்ஷத்தாலும் க்ஷத்ரிய வைசிய சூத்ரர்களுக்கும் மனத்தில் ஸத்வகுணம் மேலோங்கிநிற்கலாம்; அதையிட்டு பகவத் பக்தர்களான சூத்ரன் முதலானுரை முற்கூறிய வசனங்கள் புகழ்கின்றன; அதுபோலவே சரீரத்தில் ஸத்வ குணம் மிகுந்தவனாயிருந்த போதிலும், தாமஸ ஆஹாரம் உண்பது பகவத் பக்தியில்லாமை முதலிய காரணங்களாலே பிராம் மணனுக்கும் மனத்தளவில் ரஜஸ் தமோ குணங்கள் மேலோங்கி நிற்கலாம். அதையிட்டு முற்கூறிய வசனங்கள் அவர்களை இகழ் கின்றன என்றே கருத்துரைக்கவேண்டும். மனத்திலுள்ள ஸத்வ குணத்தால் உண்டாகும் ஜ்ஞாநத்தையிட்டன்றோ பிராம்மணனுக் கும பிராம்மண்யம் உண்டாவதாகச் சொல்லப்படுகிறது. "மௌநம் ச அமௌநம் ச நிர்வித்யாத ப்ராஹ்மண:" [ப்ருஹ 5—5—1] [பண்டிதனாயிருந்தும் குழந்தைபோல் இருத்தல், பகவானை தியானித்தல் ஆகிய இரண்டை அடைந்தபின்பே பிராம்மணன் ஆகிறான்.] "விஷ்ணும் க்ராந்தம் வாஸுதேவம் விஜாநந் விப்ரோ விப்ரத்வம் கச்சதே தத்வதர்ஸீ" [பார- ஆநு 16—2] [அண்டத்தையும் கடந்திருக்கும் வாஸுதேவனை விஷ்ணுவை அறியும் தத்வஜ்ஞாநியான அந்தணனே அந்தணத் தன்மையை அடைகிறான்.] "சண்டாலமபி வ்ருத்தஸ்தம் தம் தேவா ப்ராஹ்மணம் விது:" [சண்டாளனாயினும் நல்லொழுக்க முடையவனாயின் அவனைத் தேவர்கள் பிராம்மணனாகவே கருதுகிறார் கள்.] முதலான ப்ரமாணங்கள் இங்கு அநுஸந்திக்கத்தக்கவை. க்ஷத்ரிய வைஶ்ய ஶூத்ரர்களுக்கு மனத்தில் ஸத்வகுணம் மேலோங் கினாலும், சரீரத்தில் உள்ள ஸத்வகுணத்தின் குறைவையிட்டு உண்டான அந்தந்த ஜாதிகள் மரணம் வரையில் நீங்காமலே இருக் கும். அதுபோலவே பிராம்மணனுக்கு மனத்தில் ரஜஸ் தமோகுணங் கள் மிகுந்தாலும் சரீரத்தில் ஸத்வகுணத்தையிட்டு பிராம்மண ஜாதி மரணம் வரை நீங்காமலே இருக்கும். ஆகையால், இந்த நான்கு வர்ணத்திற்கும் உரிய தர்மங்கள் சாஸ்திரங்களில் கூறியபடியே இருக்கும். அதனாலேயே பிரம்மவித்யையை அறிந்த விதுரரும் "ஶூத்ர யோநாவஹம் ஜாத: நாதோऽந்யத்வக்துமுத்ஸஹே" [பார-உத்யோக 41-5] [சூத்ரயோநியில் பிறந்த நான் இதற்கு மேல் ஒன்றும் சொல்லத் துணியவில்லை.] என்று தம் ஜாதிக்குத்

தக்கபடி வார்த்தை சொன்னார். ஶமம் த3மம் முதலான கு3ணங்கள் நிறைந்த சூத்ரன் முதலானோர் விஷயத்தில் வீட்டுக்கு விலக்காயிருக்கும் தன் தாய் விஷயத்திற் போலே அவமதிப்பில்லாமல் நடந்துகொள்ளவேண்டும் என்னும் கருத்திலேயே. "ஏதைஸ்ஸமேதஶ் ஶூத்3ரோ(அ)பி வார்த்த4கே மாநமர்ஹதி" [யாஜ்ஞ-ஆ 115] [இந்த நற்குணங்களோடு கூடிய ஶூத்3ரனும் முதிர்ந்த வயதில் மதிக்கத்தக்கவன்] முதலான பிரமாணங்கள் அமைந்திருக்கின்றன. 501-வது பக்கத்தில் எடுக்கப்பட்டுள்ள எட்டுவிதமான பக்தியுள்ள மிலேச்சனுக்கும் பெருமை சொல்லும் கா3ருட3 புராணவசனமும் ஜாதி வரம்புக்கு மாறுதலில்லாத முறையிலேயே பொருள் கொள்ளப்பட வேண்டும். ப4க3வத்3ப4க்தர்கள் எந்த வர்ணத்தவர்களானாலும் ஸமமானவர்கள் என்று கூறும் வசனங்கள், உயர்ந்த ப2லன்கள் எல்லோருக்கும் ஸமமாகவே கிடைக்கும் என்னும் கருத்தை உடையவை. இப்படிக் கொண்டால்தான் ப்3ரஹ்ம ஸூத்ரத்தில் அபஶூத்3ராதி4கரணம் முதலியவை பொருந்தும். *"கேவல ப்3ராஹ்மணனுக்கும் கேவல ஶூத்3ரனுக்கும் உள்ளவல்ல பா4க3வதப்3ராஹ்மணனுக்கும் பா4க3வத ஶூத்3ரனுக்கும் கொள்ளவேணும்" என்றும், "இவர்களை ஸமரென்கிற சாஸ்த்ரங்களும் பரமபுருஷார்த்த2 ஸாம்யாதி3களாலே" என்றும் ஆசார்யரான கிடாம்பி அப்புள்ளார் அருளிச்செய்தார். "குலம்தரும்" [பெரிய திருமொழி 1—1—9] என்கிற பாட்டுக்கு வ்யாக்2யானம் பண்ணின அபி4யுக்தரும் (பெரியவாச்சான் பிள்ளையும்) — ஜந்மத்தால் வ்ருத்தத்தால் குறைந்தான் ஒருத்தனுக்கு ப4க3வத் ஸம்ப3ந்த4முண்டானால் அவை இவையுடையான் ஒருத்தன் தாழநினைக்கக் கூசவேண்டும்படியாயிற்று ப4க3வத் ப்ரபா4வமிருக்கும்படி; ஆனால் அவர்களோடு பெண் கொடுத்துக் கொள்ளுகிறதில்லையே என்னில், அது ஜாதி நிப3ந்த4நம்; ஶ்லாகை4 கு3ண நிப3ந்த4நை—என்று நிஷ்கர்ஷித்தார்கள்" / ஆகையால் "ஶூத்3ரனுக்குச் செயலும் தொழிலும் முதல் மூன்று வர்ணத்தவர்களுக்குப் பணிவிடை செய்வதே" என்று கீ3தையிலும் பா4ஷ்யத்திலும் கூறியது சரியே. இவ்வளவும் ஸ்ரீவேதா3ந்த தே3ஶிகர் திருவுள்ளம்.

* / இந்த வாக்யங்கள் ரஹஸ்யத்ரயஸாரம் ப்ரபா4வ வ்யவஸ்தா2தி காரத்தில் உள்ளவை.

### ஜாதி விஷயத்தில்
### தென்னாசாரியர்களின் திருவுள்ளம்

கீதையிலும் கீதா பாஷ்யத்திலும் ஸத்வ ரஜஸ் தமோ குணங்களின் ஏற்றத்தாழ்வையிட்டு பிராம்மண க்ஷத்ரிய வைச்ய சூத்ர ஜாதிகள் வேறுபடுகின்றன என்றும், அவர்களுடைய செயலும் தொழிலும் வேறுபடுகின்றன என்றும், சூத்ரனுக்கு முதல் மூன்று வர்ணத்தவர்களுக்குப் பணிபுரிவதே தொழில் என்றும் கூறியிருப்பது உண்மையே. இது பொது விதியாயினும், இதற்கு ஓர் விதி விலக்கு உண்டு என்பது தென்னாசாரியர்களின் திருவுள்ளம், அதாவது:—

ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேந் மதுஸூதந: |
ஸாத்விகஸ் ஸது விஜ்ஞேய: ஸ வை மோக்ஷார்த்த சிந்தக: ||

[பாரத சாந்தி 358—73]

[பிறந்து கொண்டிருக்கும்போது எந்தப் புருஷனை மதுஸூதனன் பார்க்கிறானோ, அவனே ஸத்வ குணமுடையவனென்று அறியத்தக்கவன். அவனே மோக்ஷபலத்தை நினைப்பவன்.] என்கிறபடியே ஆழ்வார்களைப் போன்ற ஜாயமாந கால கடாக்ஷம் பெற்ற மஹாத்மாக்களான ஞானிகளுக்கும், திருக்கச்சிநம்பி, மாறனேர் நம்பி, பிள்ளையுறங்கா வில்லிதாஸர் போன்ற ஆசார்யாபிமானம் பெற்ற பெரியவர்களுக்கும் அவர்களுடைய சரீரத்திலும் தமோகுணமிகுதி நீங்கப்பெற்று ஸத்வகுணமிகுதி உண்டாகி, அவர்களுடைய தாழ்ந்த ஜாதி கழிந்து தொண்டக்குலமாகிற உயர்ந்த ஜாதி வந்து விடுகிறபடியாலே தாழ்ந்த ஜாதிகளுக்குரிய செயலையும் தொழிலையும் அவர்கள் கடைப்பிடிக்கவேண்டிய நிர்ப்பந்தமில்லை என்று இவ்வாசாரியர்கள் திருவுள்ளம் பற்றியிருக்கிறார்கள். மூலப்ரக்ருதியின் காரியமான மனம் தாழ்ந்த ஜாதியினருக்கும் தமோ குணம் குறையப்பெற்று ஸத்வகுணம் மிகுதியடையக்கூடும் என்று ஸ்ரீதேசிகன் திருவுள்ளம் பற்றியிருக்கிறார்; அதே நியாயத்தின்படி முற்கூறிய சிறந்த அதிகாரிகளுக்கு மூலப்ரக்ருதியின் காரியமான சரீரத்திலுள்ள தமோ குணமும் குறையப்பெற்று ஸத்வகுணம் மிகுதியடையக் கூடுமாகையாலே அவர்களுடைய தாழ்ந்த ஜாதி கழிவதில் எந்த விரோதமுமில்லை என்பது இவர்களுடைய திருவுள்ளம். இத்தகைய மஹாத்மாக்கள்

12-7-09
16-12-10

स्वे स्वे कर्मण्यभिरतस्संसिद्धिं लभते नरः ।
स्वकर्मनिरतस्सिद्धिं यथा विन्दति तच्छृणु ॥ ४५ ॥

45 ஸ்வே ஸ்வே கர்மண்யபி$_{4}$ரதஸ் ஸம் ஸித்$_{3}$தி$_{4}$ம் லப$_{4}$தே நர:।
ஸ்வகர்மநிரதஸ்ஸித்$_{3}$தி$_{4}$ம் யத$_{2}$ா விந்த$_{3}$தி தச்ச்$_{2}$ருணு ||

ஸ்வே ஸ்வே கர்மணி — தம்தம் வர்ணத்திற்குரிய செயலிலே, அபி$_{4}$ரத: — ஈடுபாடுடைய, நர: — மனிதன், ஸம் ஸித்$_{3}$தி$_{4}$ம் — மோக்ஷஸித்$_{3}$தி$_{4}$யை, லப$_{4}$தே — அடைகிறான், ஸ்வகர்மநிரத: — தன் வர்ணத்திற்குரிய செயலில் ஈடுபட்டு அனுஷ்டிப்பவன், யத$_{2}$ா ஸித்$_{3}$தி$_{4}$ம் விந்த$_{3}$தி தத் — எப்படி மோக்ஷஸித்$_{3}$தி$_{4}$யை அடைகிறான் என்னும் விஷயத்தை, ஶ்ருணு — கேட்பாயாக.

---

45. தந்தங் கருமத்துச் சார்ந்தே தருமபயன்
வந்தடைய லாகு மனிசர்க்குச் — சந்தமுடன்
றன்கரும நின்றொருவன் றன்சித்திச் சார்வகையை
நன்கமரக் கேணீ நயந்து.

---

விஷயத்தில் ஜாதி போகுமே யொழிய எல்லா ப$_{4}$ாக$_{3}$வதர்கள் விஷயத்திலும் ஜாதி நீங்காதாகையாலே கீ$_{3}$தா ஶ்லோகங்களுக்கும் அவற்றின் ப$_{4}$ாஷ்யத்திற்கும் எந்த விரோத$_{4}$முமில்லை; அந்த மஹாத்மாக்களும் தங்கள் ஜாதி நீங்கிவிட்டதாக அபி$_{4}$மானித்து வர்ணாஶ்ரம ஆசாரங்களைக் குலைக்கமாட்டார்களாகையாலே அவற்றை விதி$_{4}$க்கும் சாஸ்திரங்களும் பழுதுபடமாட்டா; இது விஷயமாக இவர்களுடைய திருவுள்ளக் கருத்தை கீதை 17ம் அத்தியாயம் ஶ்லோகம் 10—ன் வியாக்கியானத்தில் [பக்கம் 501 முதல் 508 வரை] விரிவாக நிரூபித்திருக்கிறோம். அது இங்கும் அநுஸந்தி$_{4}$க்கத்தக்கது. மஹாத்மாக்களைத் தேடினாலும் காணமுடியாத இன்று ஜாதி விஷயத்தில் நடைமுறையில் இவ்விரு ஸம்பிரதாயங்களிலுமுள்ள அறிவாளிகளிடையே எந்த வேற்றுமையும் இல்லையாகையாலே கீ$_{3}$தைக்கும் கீ$_{3}$தாப$_{4}$ாஷ்யத்திற்கும் எந்த முரண்பாடும் இல்லை. 44.

भा । स्वे स्वे — यथोदिते कर्मण्यभिरतो नरः संसिद्धिं — परम-

தம் தம்கருமத்துச் சார்ந்தே — அவரவர் வர்ணத்திற்குரிய கர்மத்தை அனுஷ்டிப்பதாலேயே. மனிசர்க்கு — மனிதப் பிறவியை அடைந்தவர்களுக்கு, தருமபயன் வந்தடையலாகும் — மோக்ஷ ஸாத4நத்தின் பயனை மோக்ஷம் கிட்டும்; ஒருவன் — ஒரு மனிதன், சந்தமுடன் — மனப்பூர்வமாக, தன் கருமம் நின்று — தன் வர்ணத்திற்குரிய கர்மத்தில் நிலைநிற்பதால், தன் சித்தி சார் வகையை — தனக்குரிய மோக்ஷ ஸித்3தி4யை அடையும்முறையை, நீ-நீ, நன்கு அமர நயந்து கேள் — நன்கு கவனமாக விருப்புடன் கேட்பாயாக.

45. மோக்ஷ ஶாஸ்த்ரமான இந்த கீதையில் அந்தந்த வர்ணத்திற்குரிய கர்மங்களைச் சொல்லுவது எதற்காக? என்னும் கேள்விக்கு பதில் அளிக்கிறான் இந்த ஶ்லோகம் தொடங்கி. (ஸ்வே ஸ்வே கர்மணி அபி4ரத: நர:) முன் ஶ்லோகங்களில் கூறப்பட்டதாய், தத்தம் வர்ணங்களுக்குரியதான கர்மத்தில் ஈடுபட்டு அதை அநுஷ்டி2க்கும் மனிதன். 'அபி4ரத' ஶப்3த3ம் அநுஷ்ட2ானம் வரையிலான ஈடுபாட்டைக் குறிக்கும். (ஸம்ஸித்3தி4ம் லப4தே) பரமபத3த்தை அடைகிறான். "ஸர்வகர்மாண்யபி ஸதா3 குர்வாண: ............ அவாப்நோதி ஶாஶ்வதம் பத3மவ்யயம்" [18—56] [எல்லாக் கர்மங்களையும் எப்போதும் அநுஷ்டி2ப்பவன் நிலையானதாய் அழிவற்ற பத3த்தை அடைகிறான்.] என்று மேலே சொல்லப் போகிறதாகையாலே இங்கு "ஸம்ஸித்3தி4" ஶப்3த3ம் மேலான ப்ராப்யமான பரமாத்மாவையோ அல்லது அவனுடைய இருப்பிடமான பரமபத3த்தையோ குறிக்கிறது. அல்லது — "நைஷ்கர்ம்ய ஸித்3தி4ம்...... அதி4க3ச்ச2தி" [18—49] [தியான யோக3த்தை அடைகிறான்.] என்று சொல்லப்பட்ட நைஷ்கர்ம்ய ஸித்3தி4யாகிற தியான யோகமே இங்கு 'ஸம்ஸித்3தி4' ஶப்3த3த்தால் சொல்லப்படுவதாகவும் கொள்ளலாம். அந்த த்4யான யோக3ம் பரமபத3த்தை அடைவித்து விடுமாகையாலே ப4ாஷ்யத்தில் பரமபத3த்தை அடைகிறான் என்று சொல்லப்பட்டது. இங்கு பின்வருமாறு ஓர் ஆக்ஷேபம் எழுகிறது:— "தன் கர்மத்தில் ஈடுபட்டாலும் ஶூத்ரன் எப்படிப் பரமபத3த்தை அடையமுடியும்? அவனுக்குப்பரமபத3த்தை அடைவதற்கு ஸாத4நமான ப்3ரஹ்மவித்3யையில் அதி4காரமில்லை

पदप्राप्तिं लभते; स्वकर्मनिरतो यथा सिद्धिं विन्दति--परमपदं प्राप्नोति तथा शृणु ॥ ४५ ॥

---

என்னும் விஷயம் அபசூத்3ராதி4கரணத்தில் நிர்ணயிக்கப் பட்டதன்றோ" என்ற இவ்வாக்ஷேபத்திற்குப் பதில் பின்வருமாறு:—அந்த ஜன்மத்தில் அவன் ப்3ரஹ்ம வித்3யையை அநுஷ்டி2க்க முடியாதாயினும் அந்தக் கர்மாநுஷ்டானத்தின் பயனாக அடுத்த ஜன்மத்தில் அவன் ப்3ரஹ்ம வித்3யையை அனுஷ்டிக்கத்தகுதியுள்ள குலத்தில் பிறந்து, அதை அநுஷ்டித்து மோக்ஷமடையலாமாகையாலே குறையில்லை. அல்லது விது3ரர் முதலானவர்களைப் போலே முன் ஜன்மத்திலேயே ப்3ரஹ்மவித்3யையைத் தொடங்கியவர்களாய் இந்த ஜன்மத்திலும் அந்தநினைவு நீங்கப் பெறுதவர்களாய், தமக்குரிய கர்மங்களை அநுஷ்டிப்பவர்களுக்கு அந்த ஜன்மத்திலேயே ப்ராரப்3த4 கர்மம் கழிந்தால் பரமபத3ம் அடையக் குறையில்லை. விஷ்ணு த4ர்மத்தில் பகவான் சௌனகரும்

"த4ர்மவ்யாத4ாத3யோऽப்யந்யே பூர்வாப்4யாஸாத்
ஜுகு3ப்ஸிதே |
வர்ணாவரத்வே ஸம்ப்ராப்தா: ஸம்ஸித்3தி4ம் ஶ்ரமணீ தத2ா ||"
[விஷ்ணு த4ர்மம் 102—30]

[த4ர்ம வ்யாத4ன், ஶ்ரமணீ முதலான மற்றவர்களும் அருவருக்கத்தக்க தாழ்ந்த வர்ணத்தில் பிறந்திருந்தபோதிலும், முன் ஜன்மத்தில் ப்3ரஹ்ம வித்3யையை அப்4யஸித்ததனால் பரமபத3த்தை அடைந்தார்கள்.] என்று உரைத்தாரன்றோ. இனி, "மோக்ஷம் தவிர்ந்த அளவுபட்ட ப2லன்களையே அளிக்கவல்லவர்களான இந்திரன் முதலானவர்களுக்கு ஆராத4னமாயிருக்கும் அந்தந்த வர்ணாஶ்ரம த4ர்மங்கள் எப்படிப் பரமபத3ப்ராப்திக்குக் காரணமாக முடியும்?" என்னும் கேள்வியெழ, அதற்குப் பதிலுரைக்கிறது ஶ்லோகத்தின் பிற்பாதி—(ஸ்வகர்ம நிரத: ஸித்3தி4ம் யத2ா விந்த3தி தத் ஶ்ருணு) தனக்குரிய கர்மத்தில் ஈடுபட்டு அநுஷ்டி2ப்பவன் பரமபத3த்தை எப்படி அடைகிறான் என்பதை நான் சொல்லக் கேட்பாயாக. மேல் ஶ்லோகங்களில் நான் இதை விவரிக்கப் போகிறேன்; அதை நீ கேட்பாயாக என்று கருத்து. "யத2ா" என்னும் ஶப்3த3த்தோடு தொடர்புடையதாகையாலே 'தத்' என்னும் ஶப்3த3ம் 'தத2ா' என்னும் சொல்லின் பொருளையுடையதாகிறது அவன் பரமபத3த்தை எப்படி அடைகிறான் என்பதைக் கேட்பாயாக என்று தாத்பர்யம். 45.

यतः प्रवृत्तिर्भूतानां येन सर्वमिदं ततम्।
स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानवः ॥ ४६ ॥

46. யத: ப்ரவ்ருத்திர் பூ₄தாநாம் யேந ஸர்வமித₃ம் ததம்।
ஸ்வகர்மணா தமப்₄யர்ச்ய ஸித்₃தி₄ம் விந்த₃தி மாநவ: ॥

யத: — எந்தப் பரமபுருஷனிடமிருந்து, பூ₄தாநாம் ப்ரவ்ருத்தி: — எல்லாப் பொருள்களுக்கும் உற்பத்தி முதலான செயல்கள் அனைத்தும் விளைகின்றதோ, யேந — எந்தப் பரம புருஷனாலே, இத₃ம் ஸர்வம் — இந்தப் பொருள்களனைத்தும், ததம் — வியாபிக்கப்பட்டுள்ளதோ, தம் — அந்தப் பரம புருஷனை, ஸ்வகர்மணா — தனக்குரிய வர்ணாஶ்ரமகர்மத்தாலே, அப்₄யர்ச்ய — ஆராதனம் செய்து, மாநவ: — மனிதன், ஸித்₃தி₄ம் விந்த₃தி — மேலான ப்ராப்யமான என்னை அடைகிறான்.

---

46. ஏவன்பாற் பூதங்க ளெல்லாம் பிறந்தியலு
மேவன்றா னிங்க ணிடைப்பரம்பு(ம்) — மேவியே
யாங்கவனைத் தன்கருமத் தாலே யருச்சித்தே
யோங்கவவன் சித்தி யுறும்.

ஏவன்பால் — எந்தப்பரமபுருஷனிடமிருந்து, பூதங்கள் எல்லாம் — எல்லாப் பொருள்களும், பிறந்து இயலும் — உண்டாகிச் செயல்படுகின்றனவோ, ஏவன்தான் — எந்தப் பரமபுருஷன், இங்கண் இடைப் பரம்பும் — இந்த எல்லாப் பொருள்களிலும் வியாபித்து நிற்கிறானோ, ஆங்கு அவனை — (இந்திரன் முதலான எல்லாத் தேவர்களுக்கும்) அந்தர்யாமியாயிருக்கும் அந்தப் பரமபுருஷனை, மேவியே — ஆராதிக்கத் தக்கவனாக எண்ணி, அவனைத் தன் கருமத்தாலே — அந்தப் பரமபுருஷனைத் தனக்குரிய வர்ணாஶ்ரம த₄ர்மத்தாலே, அருச்சித்தே — ஆராத₄னம் செய்தே, அவன் — மனிதன், ஓங்க சித்தி உறும் — உயர்ந்த மோக்ஷ ஸித்₃தி₄யை அடைகிறான்.

मा ॥ यतोभूतानामुत्पत्त्यादिका प्रवृत्तिः, येन च सर्वमिदं ततम्, स्वकर्मणा तं — मामिन्द्राद्यन्तरात्मतयाऽवस्थितमभ्यर्च्य मत्प्रसादात् मत्प्राप्तिरूपां सिद्धिं विन्दति मानवः; मत्त एव सर्वमुत्पद्यते, मया च सर्वमिदं ततमिति पूर्वमेवोक्तम् ॥ अहं कृत्स्नस्य जगतः प्रभवः प्रल-

---

46. எல்லாப்பொருள்களுக்கும் காரணமாயிருப்பவனும், அனைவர்க்கும் அந்தர்யாமியான பரமாத்மாவே தன்னால் படைக்கப்பட்டவர்களாய், தனக்கு மரீரமாய் இருப்பவர்களான இந்திரன் முதலானரைச் சொல்லும் சொற்களால் சொல்லப்படுகிறனுகையாலே, இந்திரன் முதலானவர்களைக்குறித்து அனுஷ்டிக்கப்படும் வர்ணுஶ்ரம த4ர்மங்கள் உண்மையில் அந்தப் பரமாத்மாவுக்கே ஆராத4னமாயிருக்கையாலே. அவை மோக்ஷ ஸாத4நமாவது மிகப் பொருந்தும் என்று கூறுகிறன் இந்தஶ்லோகத்தில்; (யத: ப்ரவ்ருத்தி: பூ4தாநாம்) எந்தப் பரமபுருஷனிடமிருந்து எல்லாப் பொருள்களுக்கும் உத்பத்தி முதலான எல்லாச் செயல்களும் உண்டாகின்றனவோ. 'பூ4-ஸத்தாயாம்' என்னும் த4ாதுவிலிருந்து தோன்றிய பூ4தஶப்3தம் இங்கு ஸத்தையுடைய சேதநாசேதநங்கள் அனைத்தையும் குறிக்கின்றது. அவற்றின் ப்ரவ்ருத்தி என்று பொதுவாகக் கூறுகையாலே, ப்ரவ்ருத்தி ஶப்3தம் குறிப்பிட்ட சில சேஷ்டைகளைக் குறிக்காமல் உத்பத்தி முதலான எல்லாச் செயல்களையும் குறிக்கிறது. ஆக, இத்தொடரால் பரமபுருஷனே ஸர்வவித4காரணன் என்று சொல்லப்பட்டதாயிற்று. இந்தக் காரணத்வத்திற்கு உறுப்பான வ்யாபகத்வத்தை அடுத்தபடி சொல்லுகிறது—(யேந ஸர்வம் இத3ம் ததம்) எந்தப் பரமபுருஷனாலே இந்த எல்லாப் பொருள்களும் வியாபித்து நியமிக்கப்படுகின்றனவோ. (தம்) அந்தப் பரமபுருஷனை என்னை. (ஸ்வகர்மணு அப்4யர்ச்ய) மேலெழப் பார்க்கும்போது இந்திரன் முதலான தேவர்களுக்கு ஆராத4னமாகத் தோன்றியபோதிலும், உண்மையில் அவர்களுக்கு அந்தர்யாமியான எனக்கே ஆராத4னமாயிருக்கும் தந்தமக்குரிய வர்ண த4ர்மங்களாலே ஆராதித்து. (மாநவ: ஸித்3தி4ம் விந்த3தி) மனிதன் என் அருளாலே என்னை அடைவதாகிற மோக்ஷ ஸித்3தி4யைப் பெறுகிறன். 'தம்' என்று இங்கு பதர்க்கையில் சொல்லியிருக்க 'என்னை' என்று உரையிடுவது

यस्तथा । मत्तः परतरं नान्यत्किञ्चिदस्ति धनञ्जय ॥ (७. ६) * मया ततमिदं सर्वं जगदव्यक्तमूर्तिना (९. ४) * मयाऽध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् (९. १०) * अहं सर्वस्य प्रभवो मत्तस्सर्वं प्रवर्तते (१०. ८) इत्यादिषु ॥ ४६ ॥

---

எப்படிப் பொருந்தும்? எனில்— கீதையின் முன் ப்ரகரணங்களில் இங்கு சொல்லப்பட்ட ஸர்வ காரணனுயிருக்கை, அனைவரிலும் பெரியவனுயிருக்கை, அனைத்தையும் வியாபித்திருக்கை, அனைத்தையும் நியமிப்பவனுய் இருக்கை முதலான பெருமைகள் எல்லாம் தனக்கே உண்டென்று கண்ணன் முழங்கியிருக்கிருனுகையாலே, இங்கு பரமபுருஷனைப் படர்க்கையில் கூறியிருந்த போதிலும் என்னை என்று உரையிடுவதில் குறையில்லை.

''அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரளயஸ் ததா ।
மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய ॥'' [7—6]

[நானே இவ்வுலகனைத்துக்கும் உண்டாகுமிடமாகவும் ஒடுங்குமிடமாகவும் இருக்கிறேன். அர்ஜுனு! என்னைக் காட்டிலும் எதுவும் மிகவும் மேலானதாயில்லை.] என்று தன்னிடமிருந்தே எல்லாம் உண்டாகின்றன என்றும், தன்னிடமே ஒடுங்குகின்றன என்றும், தானே அனைவரிலும் மேலானவன் என்றும்,

''மயா ததம் இதம் ஸர்வம் ஜகதவ்யக்தமூர்த்திநா ।
மயாத்யக்ஷேண ப்ரக்ருதிஸ் ஸூயதே ஸசராசரம் ॥''[9—4, 10]

[வெளிப்படாத ஸ்வரூபத்தையுடைய அந்தர்யாமியான என்னுலே இவையனைத்தும் வியாபிக்கப்பட்டுள்ளது. மூலப்ரக்ருதி தலைவனுன என்னுல் தூண்டப்பட்டதாய், அசைவனவும் அசையாதனவும் அடங்கிய உலகத்தைப் படைக்கிறது] என்று தானே அனைத்தையும் வியாபித்திருப்பவன் என்றும், தன்னுலேயே மூலப்ரக்ருதி தூண்டப்பட்டுப் பொருள்களைப் படைக்கிறது என்றும், ''அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ் ஸர்வம் ப்ரவர்த்ததே'' [10-8] [நானே எல்லா உயிர்களுக்கும் உத்பத்தி காரணமாகிறேன். என்னுலேயே பொருள்களனைத்தும் செயல்படுகின்றது.] என்று தன்னுலேயே அனைத்தும் செயல்படுவதாகவும் கீதையில் கண்ணன் கூறியிருப்பது இங்கு அநுஸந்திக்கத்தக்கது. 46.

16-X-09

श्रेयान् स्वधर्मो विगुणः परधर्मात्स्वनुष्ठितात् ।

*47. ஶ்ரேயாந் ஸ்வத4ர்மோ விகு3ண: பரத4ர்மாத்
ஸ்வநுஷ்டி2தாத் ॥

ஸ்வத4ர்ம: — (ஶரீரத்தோடு கூடிய மனிதனுக்கு) இயற்கையில் கைவரக்கூடிய உபாயமாயிருக்கும் கர்மயோகம், விகு3ண: (அபி) — குறையுடையதாயிருந்தாலும், ஸ்வநுஷ்டி2தாத் — (சிலகாலம்) நன்கு அநுஷ்டி2க்கப்பட்ட, பரத4ர்மாத் — பிறர்க்குரிய உபாயமான ஜ்ஞாநயோக3த்தைக் காட்டிலும், ஶ்ரேயாந் — சிறந்தது.

---

भा ॥ एवं त्यक्तकर्तृत्वादिको मदाराधनरूपस्स्वधर्मः — स्वेनैवोपादातुं योग्यो धर्मः; प्रकृतिसंसृष्टेन हि पुरुषेण इन्द्रियव्यापाररूपः कर्मयोगात्मको धर्मः सुकरो भवति;

---

*47. இதுவரையில் வர்ணாஶ்ரம த4ர்மங்கள் கைவிடத்தக்கவையல்ல என்றும், பரமபுருஷனை அடைவதற்கு ஸாத4நமாய் இருப்பவை என்றும் காட்டப்பட்டது. இனி, இந்த வர்ணாஶ்ரம த4ர்மங்களே "தை3வமேவாபரேயஜ்ஞம்" [4—25] என்று தொடங்கி நாலாம் அத்தியாயத்தில் சொல்லப்பட்ட ரீதியில் பல நியமங்களோடுகூடிய ப்ரதாந த4ர்மமாய் (அங்கி3யாய்) இருந்து கொண்டு கர்மயோக3ம் என்று பெயர் பெறுகின்றனவென்றும், அக்கர்மயோக3ம் ஜ்ஞாந யோக3த்தைச் செய்யத் தகுதியுள்ளவர்களாலும் கைவிடத்தகாதது என்றும் முதல்ஷட்கத்தில் சொன்னதை இந்த ஶ்லோகத்தில் மறுபடியும் நினைவு படுத்துகிறான். கீதை 3-35ன் முற்பாதியே இந்த அரை ஶ்லோகமாய் அமைந்திருப்பது குறிக்கொள்ளத்தக்கது. (ஸ்வத4ர்ம:) முற்கூறியபடி கர்த்ருத்வத்யாக3ம் முதலானவற்றோடு கூடியதாய், எனக்கு ஆராத4னமாய் இருப்பதாய், உனக்குக் கைக்கொள்ளத்தக்கதாயிருக்கும் த4ர்மமான கர்மயோக3ம். (விகு3ண: பரத4ர்மாத் ஶ்ரேயாந்) ஶரீரஸம்ப3ந்த4த்தோடு கூடிய புருஷர்களுக்கு, இந்த்3ரியவியாபாரரூபமாயிருக்கும் கர்மயோக3மானது, ஜ்ஞாநத்தைக்காட்டிலும் தாழ்ந்ததாய் இருந்தபோதிலும், செய்வதற்கு எளியதாகையாலே, இந்திரியங்களை வென்ற புருஷர்களுக்குரிய த4ர்மமான ஜ்ஞாநயோக3த்தைக் காட்டிலும் சிறந்தது.

எல்லா இந்திரியங்களையும் அடக்குவதை எதிர் பார்க்கையால் நழுவுவதற்கு இடமுள்ள ஜ்ஞாநயோகத்தைக் காட்டிலும் இந்த்₃ரிய வ்யாபார ரூபமாகையாலே நழுவுவதற்கு இடமில்லாத தாய், செய்வதற்கு எளிதான கர்மயோகம் சிறந்தது என்று கருத்து. இந்திரியங்களை வென்றவர்களுக்கு உரியதாக ஜ்ஞாந யோக₃மும், அதை வெல்லாதவர்களுக்கு உரியதாகக் கர்மயோகமும் கூறப் படுகையாலே கர்மயோகம் 'விகு₃ணம்' (தாழ்ந்தது) என்னும் அர்ஜுனனின் ஐயத்தை ''விகு₃ணோபி'' என்னும் பத₃ம் அநுவதிக் கிறது சக்தியில்லாதவர்களுக்கு, அமுக்₂யகல்பமாக அனுமதிக்கப் பட்டதாயிருந்தாலும் என்று கருத்து. (ஸ்வநுஷ்டி₂தாத் பரத₄ர்மாத்) 'ஸ்வநுஷ்டி₂தாத்' என்னும் பத₃த்தில் க்தப்ரத்யயம் இறந்த காலத்தைக் காட்டுவதாகையாலே, இந்த ஜ்ஞாநயோக₃மானது நன்கு அநுஷ்டிக்கப்பட்டாலும், இவன் பழகிப் போராததாகையாலே சிறிது காலத்தில் கைவிடப்பட்டுவிடும், என்று உணர்த்துகிறது. இந்த ஶ்லோகத்தில் ஸ்வத₄ர்மமென்றும், பரத₄ர்மமென்றும் கூறப்படுவது முறையே தனக்கும் பிறர்க்குமுரிய வர்ணாஶ்ரம த₄ர்மங்களென்று கொள்ளக்கூடாதோ? எனில்: பிறர்க்குரிய வர்ணாஶ்ரமத₄ர்மங்களை அநுஷ்டிப்பது அஶாஸ்த்ரீயமாகையாலே, அதை இங்கு எடுத்துக் கழிப்பதும் தகாது மேலும் 'பிறர்க்குரிய த₄ர்மத்தைக் காட்டிலும், தனக்குரிய த₄ர்மத்தை அநுஷ்டிப்பது மிகச் சிறந்தது' என்று இங்கு கூறுகையாலே, பிறர்க்குரிய த₄ர்மத்தை அநுஷ்டிப்பதும் சிறப்புடையதென்று தோற்றுகிறது. பிறர்க்குரிய த₄ர்மத்தை எப்படி அநுஷ்டித்தாலும் அது அத₄ர்மமென்றும், இகழத்தக்கது என்றும் சாஸ்திரங்கள் கூறுகையாலே, அதைச் சிறப்புடையது என்று கூறுவதே ஒட்டாது பாபத்தைக் காட்டிலும் புண்ணியம் சிறப்புடையது என்று கூறுவது தகாதன்றோ. இக் காரணத்தாலேயே, வேதத்திற்குப் புறம்பான த₄ர்மத்தைக் காட்டி லும் வைதி₃க த₄ர்மம் சிறந்தது என்று இங்கு கூறுவதாகக் கொள்ளு வதும் பொருந்தாது ''ஶ்ரேயோ பே₄க்தும் பை₄க்ஷம்'' [2—5] [பிச்சை யெடுத்து உண்பதும் சிறந்தது.] என்று தொடக்கத்தில் அர்ஜுனன் கூறியது போல் க்ஷத்திரியனை அர்ஜுனனுக்கு பிராம்மணனின் த₄ர்மமான பி₄க்ஷா பே₄ஜனத்தை இங்கு பரத₄ர்ம மாகக் கூறுவதாகக் கொள்ளலாமே எனில்: ஆபத்துக் காலத்

निपुणपुरुषधर्मात् ज्ञानयोगात् सकलेन्द्रियनियमनरूपतया सप्रमादात् कदाचित्स्वनुष्ठितात् श्रेयान् ॥ *४७ ॥

भा । तदेवोपपादयति—

स्वभावनियतं कर्म कुर्वन् नाप्नोति किल्बिषम् ॥ ४७ ॥

16-7-09

47*. ஸ்வபா₄வநியதம் கர்ம குர்வந் நாப்நோதி கில்பி₃ஷம் ॥

ஸ்வபா₄வநியதம் கர்ம — இயல்வாகவே பொருந்தியிருக்கும் கர்மத்தை, குர்வந் — செய்பவன், கில்பி₃ஷம் — பாபத்தின் பலனான ஸம்ஸாரத்தை, ந ஆப்நோதி—அடையமாட்டான்.

---

திலேயே அத்தகைய பரத₄ர்மம் ஏற்கத்தக்கது. அப்போது அதைக் கைவிடமுடியாது. ஆபத்துக்காலம் இல்லாதபோது அதைக் கைக்கொள்ளுவதே பாபமாகையால் இங்கு அதையும் பரத₄ர்மமாகக் கூறமுடியாது. ஆகையால், மூன்றும் அத்தியாயம் 35-வது ஶ்லோகத்திற் போலே இங்கு ஸ்வத₄ர்மம் என்று கர்மயோக₃மும் பரத₄ர்மம் என்று ஜ்ஞாநயோக₃மும் குறிப்பிடப்படுவதாகக் கொள்வதேதக்கது. இந்த ஶ்லோகத்தின் பிற்பாதியில் ''ஸ்வபா₄வ நியதம் கர்ம'' என்று கூறுகையால் இங்கு 'ஸ்வத₄ர்ம' ஶப்₃த₃ம் கர்மத்தைக் குறிக்கிறது; ப்ரகரணத்தையொட்டி பலனில் பற்றற்று அநுஷ்டி₂க்கப்படும் கர்மயோக₃த்தைக் குறிக்கிறது. புலன்களை வெல்லாதவர்க்குரிய த₄ர்மமான கர்மயோக₃த்தை 'ஸ்வத₄ர்மம்' என்கையால், அதை வென்றவர்களாலேயே அநுஷ்டி₂க்கத்தக்க ஜ்ஞாநயோக₃மே பரத₄ர்மம் என்று குறிப்பிடப்படுகிறது. ''சரீரத்தோடு கூடிய மனிதனுக்கு இந்திரிய வ்யாபார ரூபமாயிருக்கையாலே எளியதாய் இருக்கும் கர்மயோக₃ம் புலன்களனைத்தையும் அடக்குவதை உட்கொண்டதாகையால் தவறு ஏற்பட இடமளிக்கும் ஜ்ஞாநயோக₃த்தைக் காட்டிலும் சிறந்தது'' என்பது இந்த முற்பாதியின் திரண்ட பொருள்.

*47.

भा ॥ प्रकृतिसंसृष्टस्य इन्द्रियव्यापाररूपतया स्वभावत एव नियतत्वात्कर्मणः, कर्म कुर्वन् किल्बिषं —संसारं न प्राप्नोति, अप्रमादत्वात् कर्मणः ज्ञानयोगस्य सकलेन्द्रियनियमनसाध्यतया सप्रमादत्वात्तन्निष्ठस्तु प्रमादात्किल्बिषं प्रतिपद्येतापि। ४७।

---

47. தன்கரும மல்குணத்தைச் சார்ந்திடினு மிக்கியன்ற
வன்கரும மானவது மற்றொன்றி—னன்கதுவாந்
தன்மைசேர் கன்மதத்துத் தக்கியல்வான் சார்துயரப்
புன்மைசா ரான்போய்ப் புறத்து.

தன்கருமம் அது தனக்குரியதான கர்மயோகம், அல்குணத்தைச் சார்ந்திடினும் — குணமற்றதானாலும், மிக்கியன்றவன் கருமமான மற்றொன்றின் நன்கதுவாம — புலன்களை நன்கு வென்றவனுக்குரிய த₄ர்மமான ஜ்ஞாந யோக₃த்தைக் காட்டிலும் சிறந்ததாகும். தன்மைசேர் கன்மத்து — தனக்கு இயல்வாகவே பொருந்தியிருக்கும் கர்மத்தை, தக்கியல்வான் — தக்கபடி அநுஷ்டி₂ப்பவன், புறத்துப்போய் — (ஜ்ஞாநயோக₃நிஷ்ட₂னைப்போல்) நழுவிப் போய், சார்துயரப் புன்மை சாரான் — ஸம்ஸாரத் துன்பத்தை விளைக்கும் பாபத்தை அடையமாட்டான்.

---

47. முற்பாதியில் கூறிய விஷயத்தையே பிற்பாதியில் விளக்குகிறான். (ஸ்வபா₄வநியதம் கர்ம குர்வந்) ப்ரக்ருதி விகாரமான ஶரீரத்தோடு கூடிய மனிதனுக்கு இந்திரிய வியாபார ரூபமாய் இருக்கையாலே இயற்கையாகப் பொருந்தியிருக்கும் கர்மத்தைச் செய்யும் மனிதன். "வேம்பின் புழு வேம்பன்றி உண்ணாது" [பெரிய திரு 11—8—7] என்கிறபடியே, வேப்பமரம், விஷமரம், புளியமரம் முதலானவற்றில் உண்டாகும் புழுக்கள் அந்தந்த மரங்களில் விளைந்தவைகளையே ஆகாரமாகக் கொள்வதுபோலே சரீரத்தோடு கூடியவனுக்கு அந்த சரீரத்தின் செயல்பாடான கர்மத்தைச் செய்வது இயல்வானது என்று கருத்து. (கில்பி₃ஷம் ந ஆப்நோதி) மிகுந்த பாபத்தை அடையமாட்டான். கர்மம் நழுவுவதற்கு இடமளிக்காததாகையால் கர்மயோக₃த்தைச் செய்பவன் மிகுந்த பாபத்தின் ப₂லனான ஸம்ஸாரத்தை அடையமாட்டான் என்று

भा ॥ अतः कर्मनिष्ठैव ज्यायसीति तृतीयाध्यायो' स्मारयति—

सहजं कर्म कौन्तेय सदोषमपि न त्यजेत् ।
सर्वारम्भा हि दोषेण धूमेनाग्निरिवावृताः ॥ ४८ ॥

48, ஸஹஜம் கர்ம கௌந்தேய ஸதோ3ஷமபி ந த்யஜேத் |
ஸர்வாரம்ப4ா ஹி தோ3ஷேண தூ4மேநாக்3நி
ரிவாவ்ருதா: ||

கௌந்தேய — குந்திபுத்திரனே! ஸஹஜம் கர்ம — இயல்வானதான கர்மயோக3ம், ஸதோ3ஷம் அபி — குற்றமுள்ளதாயினும், ந த்யஜேத் — (அதைக்) கைவிடக்கூடாது, ஹி — ஏனெனில், தூ4மேந — புகையினால், அக்3நி: இவ — நெருப்பு (சூழப்பட்டிருப்பது) போல், ஸர்வாரம்ப4ா: — கர்மயோக3ம், ஜ்ஞாநயோக3ம் ஆகிய எதைச் செய்வதும், தோ3ஷேண ஆவ்ருதா: — குற்றத்தால் சூழப்பட்டது.

---

48- கூடப் பிறந்த கருமங் குறையுறிலும்
வீடப் படாது விசல்விசையா—பீடுற்ற
வெல்லா முயற்றியையு மேய்ந்தெரியைத் தூமம்போற்
பொல்லாங்கு சூழும் புகுந்து.

விசல் விசையா — போரில் வல்ல அர்ஜுநா! கூடப் பிறந்த கருமம் இயல்வான கர்மயோக3ம், குறையுறிலும்— குற்றமுள்ளதாயிருந்தாலும், வீடப்படாது — கைவிடத் தகாதது; எரியைத தூமம் போல் — நெருப்பைப் புகை (சூழ்வது) போல், பீடுற்ற எல்லா முயற்றியையும் — (மோக்ஷ ஸாத4நமாயிருக்கும்)பெருமை பெற்ற கர்மயோக3ம் ஜ்ஞாந யோக3ம் ஆகிய எல்லா முயற்சிகளையும், பொல்லாங்கு-குற்றம், ஏய்ந்து புகுந்து சூழும் — நெருங்கிப் பொருந்திச் சூழும்.

---

கருத்து இப்படிக் கூறியதால், "ஜ்ஞாநயோக3மானது எல்லா இந்திரியங்களையும் அடக்குவதால் உண்டாவதாகையாலே, தவறு ஏற்பட இடமுள்ளதாகையால், அதை அநுஷ்டி2ப்பவன் கவனக் குறைவினாலே தவறிப்போய், பாபத்தையும் அதன் ப2லனை ஸம்ஸாரத்தையும் அடைய இடமுண்டு" என்னும் விஷயமும் உணர்த்தப்படுகிறது.

भा ॥ अतस्सहजत्वेन सुकरमप्रमादं च कर्म सदोषं — सदुःखमपि न त्यजेत्; ज्ञानयोगयोग्योऽपि कर्मयोगमेव कुर्वीतेत्यर्थः । सर्वारम्भाः- कर्मारम्भाः ज्ञानारम्भाश्च हि दोषेण - दुःखेन धूमेनाग्निरिवावृताः । इयांस्तु विशेषः — कर्मयोगस्सुकरोऽप्रमादश्च, ज्ञानयोगस्तद्विपरीत इति ॥ ४८ ॥

---

48. முற்கூறிய காரணத்தாலே ஜ்ஞாநயோகத்தைச் செய்யத் தகுதியுள்ளவனுக்கும் கர்மயோகத்தை அநுஷ்டிப்பதே சிறந்தது என்று மூன்றாம் அத்தியாயத்தில் சொன்னதை நினைவுறுத்துகிறான். ஆகாரத்தாலே மறுபடியும் கூறுகிறானாகையாலே புநருக்தி இல்லை. (ஸஹஜம் கர்ம) அநாதி வாஸனையினாலே உனக்கு இயல்வான தான கர்மயோகத்தை; அநாதி காலமாகக் கர்மம் செய்தே பழகிப் போந்த உனக்கு அதுவே செய்ய எளிதாகவும், நழுவ இடமில்லாத தாகவும் இருக்கிறது என்று கருத்து. (ந த்யஜேத்) இக்காரணத் தாலேயே அதைக் கைவிடக்கூடாது. (ஸதோஷமபி) உடல் வருத்தத்தை விளைப்பதாகையாலே குற்றமுள்ளதாய் இருந்தாலும் அதைக் கைவிடக்கூடாது. இங்கு 'தோஷ' ஶப்தத்தாலே பாபத்தைக்குறிப்பது பொருந்தாது; சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கும் கர்மயோகத்தில் பாபம் இருக்க இடமில்லை. ஒரு பகுதி அதில் பாபம் இருப்பதாக எண்ணினாலும், பாபம் அனைவராலும் கைவிடத்தக்கதேயாகையால் 'கைவிடக்கூடாது' என்று சொன்னது பொருந்தாது. ஆகையால், உடல் வருத்தமே இங்கு தோஷமாகச் சொல்லப்பட்டது என்று கொள்ளவேண்டும். உடல்வருத்தமிருப்ப தாலேயே, அதைப்பொறுக்கமாட்டாத சிலர் அதைக் கைவிடக் கூடுமாகையால், அவர்களைக்குறித்து' கைவிடக்கூடாது' என்று விதிக்கிறான். இதனால் ''ஸாங்க்ய மதத்தை எடுத்துக்கொண்டு 'குற்றமிருந் தாலும்' என்று அநுவதிக்கிறான்'' என்று சிலர் உரையிட்டது பொருந்தாது. "மோக்ஷமடைய விரும்பும் இவனுக்கு சாஸ்திரங் களில் மோக்ஷஸாதநமாகச் சொல்லப்பட்ட இக்கர்மத்தில் உடல் வருத்தத்தைப் பார்த்துக் கைவிடவேண்டும் என்னும் நினைவு வராதே; அப்படியிருக்க, 'உடல் வருத்தமிருந்தாலும் விடக்கூடாது' என்று சொன்னது எப்படிப் பொருந்தும்?'' எனில்; ஜ்ஞாந யோகத்திற்குத் தகுதியுள்ள அர்ஜுனன் உடல் வருத்தமில்லாமலேயே அதை அநுஷ்டிக்கலாமாயிருக்க, உடல் வருத்தத்தோடு கூடிய கர்ம யோகத்தை அநுஷ்டிக்கவேண்டாமே என்று நினைக்கக்கூடுமாகை யால் இவ்வாறு சொல்லப்பட்டது. இனி, உண்மையில் கர்ம

असक्तबुद्धिस्सर्वत्र जितात्मा विगतस्पृहः ।
नैष्कर्म्यसिद्धिं परमां संन्यासेनाधिगच्छति ॥ ४९ ॥

49. அஸக்த பு₃த்₃தி₄ஸ் ஸர்வத்ர ஜிதாத்மா விக₃தஸ்ப்ருஹ: ।
நைஷ்கர்ம்யஸித்₃தி₄ம் பரமாம் ஸந்ந்யாஸேநாதி₄க₃ச்ச₂தி ॥

ஸர்வத்ர — கர்மத்திலும் அதன் பலத்திலும், அஸக்த பு₃த்₃தி₄:— பற்றற்றவனாய், ஜிதாத்மா — மனத்தை வென்றவனாய், விக₃தஸ்ப்ருஹ: — (தன்னுடைய கர்த்ருத்வத்தில்) ஆசையற்றவனாய், ஸந்ந்யாஸேந — (முற்கூறிய மூவகைப்பட்ட) தியாகத்தோடு (கூடியவனாய், கர்மம் செய்பவன்), பரமாம் — மேலான, நைஷ்கர்ம்யஸித்₃தி₄ம் — தியான நிஷ்டையை, அதி₄க₃ச்ச₂தி — அடைகிறான்.

---

49. எங்குந் துவக்கின்றி யேனு மனஞ்செயித்துப்
பொங்கு நசையில்லாப் போதத்தா— னங்குத்
தனையமர் சன்னியாசச் சார்வதனுன்மேவும்
வினையகன்ற மேலாம் வியப்பு.

---

யோகத்திற்போலே ஜ்ஞாநயோக₃த்திலும் துன்பம் உண்டாகையால், துன்பம் விளைக்கும் விஷயத்தில் இரண்டும் ஒன்றுதான் என்று பிற்பாதியாலே கூறுகிறான். (ஹி) ஏனெனில்:(ஸர்வாரம்பா₄:) கர்ம யோக₃ம், ஜ்ஞாந யோக₃ம் ஆகிய இரண்டில் எதைச் செய்தாலும். (தூ₄மேந அக்₃நி: இவ தோ₃ஷேண ஆவ்ருதா: ஹி) புகையால் நெருப்பு சூழப்பட்டிருப்பதுபோலே, இவையிரண்டும் துன்பத்தால் சூழப்பட்டவையன்றோ. ஒருகையால் அருகிலிருக்கும் அந்த முழங்கை மூட்டைத் தொடுவதுபோல், தன் ஆத்மாவைத் தேடுவது இயலாததாகையால், ஆத்மாவைக்காண்பதற்காக அநுஷ்டிக்கப்படும் ஞானயோக₃மும் மிகுந்த புலனடக்கத்தை எதிர்பார்க்கையால் துன்பத்தோடு சேர்ந்தது என்று கருத்து. இப்படியிரண்டும் துன்பமுடையதாய் இருந்தாலும். கர்மயோக₃ம் முற்கூறியபடி செய்வதற்கு எளிதாகையாலும், நழுவ இடமில்லாததாகையாலும் செய்யத்தக்கது என்றும், ஜ்ஞாநயோக₃ம் அதற்கு நேர்மாறானதாகையாலே அநுஷ்டிக்கத்தகாதது என்றும் கருத்து. (கௌந்தேய) என் அத்தை பிள்ளையாகையாலே உனக்கு நன்மையைச் சொல்லுகிறேன் என்று கருத்து. 48,

भा। सर्वत्र — फलादिष्वसक्तबुद्धिः, जितात्मा — जितामनाः, परमपुरुषकर्तृत्वानुसंधानेनात्मकर्तृत्वे - विगतस्पृहः, एवं त्यागादनन्यत्वे र

---

எங்கும் — கர்மத்திலும் அதன் பலத்திலும், தூவக்கின்றி — பற்றற்றவனாய், ஏலும் மனம் செயித்து — (அதனால்) வசப்பட்ட மனத்தை வென்றவனாய், பொங்கு நசையில்லா போதத்தான் — (தன்னுடைய கர்த்ருத்வத்தில்) மிக்க ஆசையில்லாத அறிவுடையவன், அங்குத் துனையமர் சன்னியாசச் சார்வதனால் — கீழே கூறப்பட்ட (மூவகைப்பட்ட) தியாகத்தோடு கூடியிருப்பதனால், வினையகன்ற மேலாம் வியப்பு மேவும் — கர்மங்களை அநுஷ்டித்தபின் பெறும் மேலான தியான நிஷ்டையைப் பெறுவான்.

---

49. முற்கூறியபடி கர்மயோக$_3$த்தை அநுஷ்டிப்பதனாலேயே ஜ்ஞாநயோகத்தின் ப$_2$லனான தியாநநிஷ்டையையே அடையலாம் என்கிறான். (ஸர்வத்ர அஸக்தபு$_3$த்$_3$தி$_4$:) கர்மத்திலும் அதன் ப$_2$லத்திலும் பற்றற்றவன். 'இந்தக் கர்மம் என்னுடையது' என்னும் நினைவும், 'இந்தப் பலன் என்னுடையது' என்னும் நினைவும் அற்றவன் என்று கருத்து. இப்படிப் பற்றற்று இருக்கையின் விளைவைச் சொல்லுகிறது அடுத்தபடியாக—(ஜிதாத்மா) மனத்தை வென்றவன். ஆத்மபத$_3$ம் இங்கு மனத்தைக் குறிக்கிறது. (விக$_3$தஸ்ப்ருஹ:) பரமபுருஷனிடமே கர்த்ருத்வத்தை அநுஸந்திக்கையாலே தன்னுடைய கர்த்ருத்வத்தில் ஆசையற்றவன். இவ்வத்தியாயத்தில் சொல்லப்பட்ட மூன்று வகைப்பட்ட த்யாகங்களில் கர்மஸங்க$_3$ த்யாக$_3$த்தையும் ப$_2$லஸங்க$_3$த்யாக$_3$த்தையும் 'ஸர்வத்ர அஸக்தபு$_3$த்$_3$தி$_4$;' என்றவிடத்தில் சொல்லிவிட்டபடியால், இங்கு எஞ்சியுள்ள கர்த்ருத்வத்யாக$_3$த்தைச் சொல்லுவதே பொருத்தமாகும். இப்பத$_3$த்தால் தன் சக்தியை மீறிய சனவு முதலானவற்றில் கூட, தன்னிடத்தில் கர்த்ருத்வத்தை அநுஸந்தி$_4$க்காதவன் என்று உணர்த்தப்படுகிறது. (ஸந்ந்யாஸேந) முற்கூறிய மூவகைப்பட்ட தியாகத்தோடு கூடியவனாய், கர்மம் செய்பவன் என்று கருத்து. முந்தின ஸ்லோகத்தில் ஜ்ஞாநயோக$_3$த்திற்குத் தகுதி உள்ளவனாய் இருந்தாலும் கர்மயோக$_3$த்தை அநுஷ்டி$_2$க்கவேண்டும் என்று

निर्णीतेन संन्यासेन युक्तः कर्म कुर्वन् परमां नैष्कर्म्यसिद्धिमधिगच्छति — परमां ध्याननिष्ठां ज्ञानयोगस्यापि फलभूतामधिगच्छतीत्यर्थः। वक्ष्यमाणध्यानयोगावाप्तिं सर्वेन्द्रियकर्मोपरतिरूपामधिगच्छति ॥ ४९ ॥

---

கூறுகையால், இங்கு ஸந்ந்யாஸஶப்3த3ம் ஜ்ஞாநயோக3த்தைக் குறிக்கமாட்டாது. ஆகையால், இவ்வத்தியாயத்தின் தொடக்கத்தில் த்யாக3ஶப்3த3த்தோடு ஒரு பொருளுடையதாக நிர்ணயிக்கப்பட்ட ஸந்ந்யாஸ ஶப்3த3மே இது என்று கொள்ளவேண்டும். ஆக, முற்பாதியில் கூறிய மூன்று வகைப்பட்ட த்யாக3த்தையே இங்கு இப்பதத்தால் அநுவதிக்கிறது. "ஸந்ந்யாஸேந அதி4க3ச்ச2தி" என்று மூவகைப்பட்ட த்யாகத்தோடு கூடிக் கர்மம் செய்பவன் ஒரு பலனை அடைகிறான் என்னும் பொருளைத் தருகிறது. அந்தப் ப2லன் எது என்பதைக்காட்டுகிறது மூன்றுவது பாத3ம்—(பரமாம் நைஷ்கர்ம்யஸித்3தி4ம்) ஜ்ஞாந யோக3த்துக்கும் ப2லமான மேலான தியாநநிஷ்டையை அடைகிறான் என்றபடி. இங்கு "நைஷ்கர்ம்ய ஸித்3தி4" என்னும்பதம் மோக்ஷத்தைக் குறிக்கமாட்டாது. அடுத்த ஶ்லோகத்தில் "இந்த ஸித்3தி4யை அடைந்தவன் மோக்ஷமடையும் வழியைக் கூறுகிறேன்" என்று கண்ணன் கூறுகிறானன்றோ. இது ஜ்ஞாநயோக3மாத்திரத்தைக் குறிப்பதாகவும் கொள்ளமுடியாது. 'நைஷ்கர்ம்யம்' என்னும் பதமே ஜ்ஞாந யோக3த்தைக் குறிக்கப் போதுமானது. ஆகையால், 'நைஷ்கர்ம்யஸித்3தி4' என்றதாலும், 'பரமாம்' என்று விஶேஷிக்கையாலும் ஜ்ஞாநயோக3த்தின் பலனான பக்தியோக3த்தின் தொடக்கமே இங்கு சொல்லப்படுகிறது என்று கொள்ளவேண்டும். ஆகையால், மேல் ஶ்லோகங்களிலே சொல்லப்படும் தியாந யோகத்தை அடைவதே இங்கு 'நைஷ்கர்ம்யஸித்3தி4' என்று சொல்லப்படுவதாகவும், 'பரமா' என்று அதன் சிறப்பு சொல்லப்படுவதாகவும் கொள்ளவேண்டும். 'நிர்க3தகர்மா' [கர்மத்தைச் செய்து முடித்து அதினின்றும் நீங்கியவன்] எனத்தக்க ஜ்ஞாந யோக3நிஷ்ட2ன் 'நிஷ்கர்மா' எனப்படுகிறான். அவனுடைய தன்மை 'நைஷ்கர்ம்ய'மாகையால் இச்சொல் ஜ்ஞாநநிஷ்டை2யைக் குறிக்கிறது. ஆக, "எல்லா இந்திரியகர்மங்களிலிருந்தும் நீங்கிய ஜ்ஞாந நிஷ்டை2யின் ப2லமானதாய், சிறப்புற்றதான தியாநநிஷ்டை2யை, இந்த மூவகைப்பட்ட த்யாக3த்தோடு கருமத்தைச் செய்பவன் அடைகிறான்" என்பது இந்த ஶ்லோகத்தின் திரண்ட பொருள். 49.

सिद्धिं प्राप्तो यथा ब्रह्म तथाप्नोति निबोध मे ।
समासेनैव कौन्तेय निष्ठा ज्ञानस्य या परा ॥ ५० ॥

50. ஸித்₃தி₄ம் ப்ராப்தோ யதா₂ ப்₃ரஹ்ம ததா₂ப்நோதி நிபோ₃த₄ மே |
ஸமாஸேநைவ கௌந்தேய நிஷ்டா₂ ஜ்ஞாநஸ்ய யா பரா ||

கௌந்தேய—குந்தீபுத்திரனே! ஸித்₃தி₄ம் ப்ராப்த:—த்₄யாந ஸித்₃தி₄யை அடைந்தவன், யதா₂ ப்₃ரஹ்ம ஆப்நோதி—எந்த உபாயத்தால் ப்₃ரஹ்மம் எனப்படும் ஆத்மஸ்வரூபத்தை அடைவானே, ததா₂—அந்த உபாயத்தை, ஸமாஸேந—சுருக்கமாக, மே நிபோ₃த₄—என்னிடமிருந்து கேட்பாயாக; (அந்த ப்₃ரஹ்மம் எத்தகையதென்றால்) யா ஜ்ஞாநஸ்ய பரா நிஷ்டா₂—தியான ரூபமான ஜ்ஞாநத்திற்குப்பரம ப்ராப்யமாயிருப்பது அந்த ப்₃ரஹ்மமே.

---

50. செவ்வியுறுந் த்யானத்தின் சித்தியினைச் சேர்ந்தவவன்
எவ்வாறு தான்பிரம மெய்தினு—னவ்வாறு
சேர்ந்த வதினிலையாஞ் சித்தி யதுசுருக்க
மார்ந்தெனது பானீ யறி.

செவ்வி உறும் த்யானத்தின் சித்தியினைச் சேர்ந்த அவன்—சிறப்புற்ற த்₄யாந ஸித்₃தி₄யை அடைந்தவன், எவ்வாறு தான் பிரமம் எய்தினுன்—எந்த உபாயத்தால் பிரம்மம் எனப்படும் ஆத்ம ஸ்வரூபத்தை அடைவானே, அவ்வாறு—அந்த உபாயத்தையும், சேர்ந்த அதின் நிலையாம் சித்தி அது—அவ்வுபாயத்திலிருந்து நிலையாகக் கிடைக்கும் ஸித்₃தி₄யாகிற அந்தப் பிரம்மத்தையும், எனது பால்—என்னிடமிருந்து, சுருக்க மார்ந்து — சுருக்கமாக, நீ அறி — நீ அறிவாயாக.

भा ।। सिद्धिं प्राप्तः — आप्रयाणादहरहरनुष्ठीयमानकर्मयोग-निष्पाद्यध्यानसिद्धिं प्राप्तः, यथा — येन प्रकारेण वर्तमानो ब्रह्म प्राप्नोति, तथा समासेन मे निबोध । तदेव ब्रह्म विशेष्यते — निष्ठा ज्ञानस्य या परेति । ज्ञानस्य ध्यानात्मकस्य या परा निष्ठा — परमप्राप्य-मित्यर्थः ।। ५० ।।

---

50. கர்மயோகத்தாலேயே தியான நிஷ்டையை அடையலாம் என்றான் சென்ற ஶ்லோகத்தில், அந்த தியான நிஷ்டையால் ஆத்மதரிசனத்தைப் பெறும் வழியைக் கூறத் தொடங்குகிறான் இந்த ஶ்லோகம் முதலாக. (ஸித்₃தி₄ம் ப்ராப்த:) சென்ற ஶ்லோகத்தில் 'நைஷ்கர்ம்ய ஸித்₃தி₄' என்று சொல்லப்பட்ட தியான ஸித்₃தி₄யை உடலிருக்கும் வரையில் தினந்தோறும் அநுஷ்டிக்கப்படும் கர்ம யோகத்தினாலே அடைந்தவன். இந்த ஸித்₃தி₄யை அடைந்தவன் ப்₃ரஹ்மத்தை அடைகிறான் என்று கூறுகையாலே இங்கு 'ஸித்₃தி₄' என்றது அந்த ப்₃ரஹ்ம ப்ராப்திக்கு ஸாத₄னமாய் சென்ற ஶ்லோகத்தில் விவரிக்கப்பட்டதான தியான ஸித்₃தி₄யேயாகும். (யதா₂ ப்₃ரஹ்ம ஆப்நோதி) எந்த முறையில் வாழ்ந்தால் ப்₃ரஹ்மம் எனப்படும் ஆத்மாவைக் காண்கிறானோ. (அடுத்த மூன்று ஶ்லோகங்களில் இன்ன இன்ன முறையில் வாழ்பவன் ப்₃ரஹ்மாநுப₄வத்தைப் பெறுகிறான் என்று கூறி அதற்கு அடுத்த ஶ்லோகத்தில் அதன் பலனாக என்னுடைய ப₄க்தியை அடைகிறான் என்றும், அதற்கடுத்த ஶ்லோகத்தில் அந்த பக்தியால் பரமாத்மாவான தன்னையடையலாம் என்றும் கூறுகிறானாகையாலே, இங்கு 'ப்₃ரஹ்மப்ராப்தி' எனப்படுவது ப₄க்தியோகத்திற்குக் காரணமான ஆத்மதரிசனம் என்றும், அதனால் ப்₃ரஹ்ம ஶப்₃த₃ம் ஆத்மாவையே குறிக்கிறது என்றும் விளங்குகிறது.) 'யதா₂' என்று அடுத்த மூன்று ஶ்லோகங்களில் ஆத்மதரிசனத்திற்குக் காரணமாகச் சொல்லப்பட்ட வாழ்க்கை முறை சொல்லப்படுகிறது. (ததா₂ ஸமாஸேந மே நிபோ₃த₄) அந்தமுறையைச் சுருக்கமாக நான் சொல்லக்கேட்பாயாக. ''மே நிபோ₃த₄'' என்பதற்கு 'என்னிடமிருந்து நிச்சயித்துக் கேட்டுக் கொள்' என்று பொருள். 'நி' என்னும் உபஸர்க்க₃ம் நிச்சயத்தைக் காட்டுகிறது. கடைசிப் பாத₃த்தாலே, 'யதா₂' என்று சொல்லப்பட்ட உபாயத்தின் பரம ப₂லமான ப்₃ரஹ்மம் எனப்படும் ஆத்மாவின் பெருமையைச் சொல்லுகிறான் — (நிஷ்டா₂ ஜ்ஞாநஸ்ய யா பரா) முன்

बुद्ध्या विशुद्धया युक्तो धृत्याऽऽत्मानं नियम्य च ।
शब्दादीन्विषयांस्त्यक्त्वा रागद्वेषौ व्युदस्य च ॥ ५१ ॥

विविक्तसेवी लघ्वाशी यतवाक्कायमानसः ।
ध्यानयोगपरो नित्यं वैराग्यं समुपाश्रितः ॥ ५२ ॥

अहङ्कारं बलं दर्पं कामं क्रोधं परिग्रहम् ।
विमुच्य निर्ममश्शान्तो ब्रह्मभूयाय कल्पते ॥ ५३ ॥

51. புத்₃த்₄யா விஶுத்₃த₄யா யுக்தோ த்₄ருத்யாத்மாநம் நியம்ய ச ।
ஶப்₃தா₃தீ₃ந் விஷயாம்ஸ்த்யக்த்வா ராக₃த்₃வேஷௌ வ்யுத₃ஸ்ய ச ॥

52. விவிக்தஸேவீ லக்₄வாஶீ யதவாக் காய மாநஸ: ।
த்₄யாநயோக₃பரோ நித்யம் வைராக்₃யம் ஸமுபாஶ்ரித: ॥

53. அஹங்காரம் ப₃லம் த₃ர்ப்பம் காமம் க்ரோத₄ம் பரிக்₃ரஹம் ।
விமுச்ய நிர்மமஶ் ஶாந்தோ ப்₃ரஹ்மபூ₄யாய கல்பதே ॥

பு₃த்₃த்₄யா விஶுத்₃த₄யா யுக்த: — ஆத்மதத்வவிஷயமான உண்மையறிவோடு கூடியவனாய், த்₄ருத்யா —(முற்கூறிய) ஸாத்விகத்₄ருதியாலே, ஆத்மாநம் — நெஞ்சை, நியம்ய ச — விஷயங்களிலிருந்து மீட்டு, ஶப்₃தா₃தீ₃ந் விஷயாந் — ஶப்₃த₃ஸ்பர்ஶரூப ரஸ க₃ந்த₄ங்களாகிற புலன்களை, த்யக்த்வா — விட்டு, ராக₃த்₃வேஷௌ — விருப்பு வெறுப்புகளை,

---

ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட தியான ரூபமான ஜ்ஞானத்திற்கு அந்த ப்₃ரஹ்மம் எனப்படும் ஆத்மா மேலான ப்ராப்யமாகும். 52-வது ஶ்லோகத்தில் 'த்₄யாந யோக₃ பர:' என்று உபாஸகனை வர்ணிக்கையாலே இங்கு ஜ்ஞாநம் என்று ஜ்ஞாந ரூபமான த்₄யானத்தைக் குறிக்கிறது. (கௌந்தேய) என்னுடைய அத்தை பிள்ளையாகையாலே இந்த அரிய பொருளை உனக்குக் கூறுகிறேன்.

வ்யுத3ஸ்ய ச — கைவிட்டு), விவிக்தஸேவீ — (த்4யாந விரோதி4களோடு தொடர்பில்லாத) ஏகாந்தமான இடத்திலிருப்பவனாய், லக்4வாஶீ — அளவோடு உண்பவனாய், யதவாக்காயமாநஸ: — மநோவாக்காயங்களை தியானத்தில் ஈடுபடுத்தியவனாய், நித்யம் த்4யாநயோக3பர: — இறுதி வரையில் தினந்தோறும் தியானயோக3த்தை அநுஷ்டி2ப்பவனாய், வைராக்3யம் ஸமுபாஶ்ரித: — (ஆத்மா தவிர்ந்த விஷயங்களில்) வைராக்3யத்தை வளர்ப்பவனாய்), அஹங்காரம் — தே3ஹத்தில் ஆத்மா என்னும் அபி4மானத்தையும், ப3லம் — அவ்வபி4மானத்தை வளர்க்கும் வாஸநாப3லத்தையும், (அது காரணமாக வரும்) த3ர்ப்பம் — க3ர்வத்தையும், காமம் — பேராசையையும், க்ரோத4ம் — கோபத்தையும், பரிக்3ரஹம் — உறவினரையும், விமுச்ய — கைவிட்டு, நிர்மம: — தன்னதல்லாதது அனைத்திலும் தன்னது என்னும் நினைவற்றவனாய், ஶாந்த: — ஆத்மாநுப4வத்தையே இனிதாகக் கொண்டவனாய் (தியானயோக3த்தைச் செய்பவன்) ப்3ரஹ்மபூ4யாய கல்பதே — ஆத்மாவை உள்ளபடி அநுப4விக்கிறான்.

---

51. கோதறுசீர்ப் புத்தியுடன் கூடித்தன் றிண்மையான்
மீதியலு நெஞ்சை மிகவடக்கித் — தீதமரு
மோசை முதற்பொருள்க ளுள்ளுறவிட் டொன்றிவரும்
மாசை வெறுப்பவையு மற்று.

52. தக்கதனி யாமிடத்துச் சார்ந்தறிவு தான்சிறிதுண்
டொக்கவுரை காயநெஞ் சுள்ளொடுக்கி — மிக்கமர்ந்தே
யென்றுந் தியானமாம் யோகஞ்சேர்ந் தெவ்விடத்து
மொன்று நசைவிடுத லுற்று

53. ஆங்காரம் வன்மை யதிற்செருக்குக் காமமுடன்
றீங்கார் வெகுளிதான் சேர்சுற்றந் — தேங்காது
நீந்து மமதை நெகிழ்ந்தே நிகழ்சாந்தன்
வாய்ந்தபிர மத்தனும் வந்து.

கோதறுசீர்புத்தியுடன்கூடி — ஆத்மதத்வவிஷயமான உண்மையறிவோடு கூடியவனாய், தூ திண்மையால் — முற்கூறிய ஸாத்விக த்4ருதியால், மீதியில் நெஞ்சை மிக அடக்கி — பட்டிமேயும் நெஞ்சை விஷயங்களிலிருந்து மீட்டு, தீதமரும் ஓசை முதற்பொருள்கள் உள்ளுறவிட்டு — தாழ்ந்தவையான ஶப்3த3ஸ்பர்ஶரூபரஸ க3ந்த4ங்களாகிற புலன்களை அடியோடு விட்டு, ஒன்றிவரும் ஆசை வெறுப்பு அவையும் அற்று — அவ்விஷயங்களில் ஈடுபாட்டால் வரும்விருப்பையும்
வெறுப்பையும்கைவிட்டு) (அறிவுதான் தக்க தனியாம் இடத்துச் 52
சார்ந்து — தியானத்திற்குத் தகுந்தபடி தியானவிரோதிகளோடு தொடர்பில்லாததான ஏகாந்தமான இடத்தில் இருப்பவனாய், சிறிது உண்டு — அளவோடு உண்பவனாய், ஒக்க உரை காயம் நெஞ்சு உள்ளொடுக்கி — முக்கரணங்கள் என்று சொல்லப்படும் மனோ வாக் காயங்களை ஒருபடிப்பட தியானத்தில் ஈடுபடுத்தியவனாய், மிக்கமர்ந்தே என்றும் தியானமாம் யோகம் சேர்ந்து — இறுதிவரையில் தினந்தோறும் தியானயோக3த்தை அநுஷ்டி2ப்பவனாய், எவ்விடத்தும் ஒன்றும் நசை விடுதலுற்று — ஆத்மாதவிர்ந்த விஷயங்களில்
ஈடுபடுவதைக் கைவிட்டவனாய்) (ஆங்காரம் — தேகமே ஆத்மா 53
என்கிற அபி4மாநத்தையும், வன்மை — அதுவளரக் காரணமான வாஸனையின் ப3லத்தையும், அதில் — அது காரணமாக வரும், செருக்கு — கர்வம், காமமுடன் — பேராசை, தீங்கார் வெகுளி — தீதுவிளைவிக்கும் கோபம், தான் சேர் சுற்றம் — தன்னால் கொள்ளப்பட்ட உறவினர் ஆகியவற்றோடு, தேங்காது — சேராமல், நீந்து மமதை நெகிழ்ந்தே — தன்னதல்லாததைத் தன்னது என்று நினைக்கும் மமகாரத்தைக் கைவிட்டு, நிகழ்சாந்தன் — ஆத்மாநுப4வத்தையே எப்போதும் இனிதாகக் கொண்டிருப்பவன், வந்து வாய்ந்த பிரமத்தனும் — ஆத்மாவை உள்ளபடி நேரேகண்டு அநுப4விப்பான்.

भा ॥ बुद्ध्या विशुद्धया — यथावस्थितात्मतत्त्वविषयया युक्तः, धृत्या आत्मानं नियम्य च — विषयविमुखीकरणेन योगयोग्यं मनः कृत्वा, शब्दादीन् विषयांस्त्यक्त्वा — असन्निहितान् कृत्वा, तन्निमित्तौ च रागद्वेषौ व्युदस्य, विविक्तसेवी — सर्वैर्ध्यानविरोधिभिर्विविक्ते देशे

---

51, 52, 53, — சென்ற ஶ்லோகத்தில் கூறியபடி ஆத்மதரிசனத்தைப் பெறும் வழியை இந்த மூன்று ஶ்லோகங்களில் சுருக்கமாகக் கூறுகிறான். (பு3த்3த்4யா விஶுத்3த4யா யுக்த:) ஆத்ம தத்வ விஷயமான உண்மையறிவோடு கூடியவனாய். இங்கு 'புத்தி' எனப்படுவது சென்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட ஆத்மவிஷயமான புத்தியேயாகும். அதற்கு விசுத்தியாவது ஐயம் திரிபு நீங்கப்பெற்றதாகவும் பரிபூர்ணமாகவும் இருக்கை. (த்4ருத்யா ஆத்மாநம் நியம்ய ச) 33-வது ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட ஸாத்விகத்4ருதியாலே ஶப்3தா3தி3 விஷயங்களிலிருந்து மீட்டு, நெஞ்சை யோக3ம் செய்யத் தக்கதாக்கி. "எந்த த்4ருதியாலே மனம் பிராணன் இந்திரியங்கள் ஆகியவற்றின் கிரியைகள் தரிக்கப்படுகின்றனவோ அதுவே ஸாத்விக த்4ருதி" என்று 33-வது ஶ்லோகத்தில் சொல்லப்பட்டதன்றோ. (ஶப்3தா3தீ3ந் விஷயாந் த்யக்த்வா) ஶப்3த3 ஸ்பர்ஶ ரூப ரஸ க3ந்த4ங்களாகிற ப்ராக்ருத விஷயங்களைக் கைவிட்டு. கர்மயோகத்தை அநுஷ்டி2க்கும் போதே இவன் இந்திரியங்கள் விஷயங்களில் ஈடுபடுவதைத் தடுத்திருக்க, இங்கு அவற்றைக் கைவிடுவதாவது என்னவெனில், அவற்றை அருகிலில்லாதபடி செய்கையே இங்கு கைவிடுவதாகச் சொல்லப்படுகிறது. விஷயங்கள் அருகிலிருந்தால் இந்திரியங்களை வென்றவனையும் கலக்கிவிடுமன்றோ. (ராக3த்3வேஷௌ வ்யுத3ஸ்ய ச) இப்படி விஷயங்களை அருகில் இல்லாமல் செய்வதன் மூலம் அவற்றில் விருப்புவெறுப்புகளை நீக்கி. அன்றிக்கே, தூரத்திலிருக்கும் விஷயங்களிலும் மனத்தில் ஏற்படும் நுண்ணிய விருப்பு வெறுப்புகளை நீக்கி என்றும் கொள்ளலாம். (விவிக்தஸேவீ) 52. தியானத்திற்குத் தடையான எல்லா விஷயங்களிலிருந்தும் நீங்கப்பெற்ற தேசத்தில் வாழ்பவனாய். 'விவிக்த' ஶப்3த3ம் நீங்கியது என்று பொருள்படும். இங்கு ப்ரகரணத்தையொட்டி தியான விரோதி4கள் நீங்கப்பெற்ற தேசத்தைக் குறிக்கிறது. (லகு4வாஶீ) "நாத்யஶ்நதஸ்து யோகோ3ஸ்தி ந சைகாந்தமநஶ்நத:" [கீதை 6-16] [அதிகமாக உண்பவனுக்கும் யோகா3ப்4யாஸம் கைகூடாது; ஒரேயடியாக உண்ணாமலிருப்பவனுக்கும்

वर्तमानः, लघ्वाशी—अत्यशनानशनरहितः, यतवाक्कायमानसः—ध्यानाभिमुखीकृतकायवाङ्मनोवृत्तिः, ध्यानयोगपरो नित्यम्—एवं भूतस्सन् आप्रयाणादहरहर्ध्यानयोगपरः, वैराग्यं समुपाश्रितः—ध्येयतत्त्वव्यतिरिक्तविषयदोषावमर्शेन तत्रतत्र विरागतां वर्धयन्, अहङ्कारं—अनात्मन्यात्माभिमानं, बलं—तद्वृद्धिहेतुभूतवासनाबलं. तन्निमित्तं

---

யோகமும் கைகூடாது] என்று முன்பு சொல்லப்பட்ட ரீதியில் அதிகமாகவும் இல்லாமல் மிகக்குறைவாகவும் இல்லாமல் அளவோடு உண்பவனாய். (யதவாக்காயமாநஸ:) மநோ வாக் காயங்களாகிற முக்கரணங்களையும் தியானத்தில் ஈடுபடுத்தியவனாய்; "த்ருத்யா ஆத்மாநம் நியம்ய" என்றவிடத்தில் நெஞ்சை விஷயங்களிலிருந்து மீட்பதைச் சொல்லிற்று. இங்கு நெஞ்சு முதலானவற்றை தியானத்தில் ஈடுபடுத்துவதைச் சொல்லுகையாலே புனருக்தி இல்லை. ஸ்திரமான ஆஸனத்தில் வீற்றிருத்தல் முதலானவைகள் உடலைத் தியானத்தில் ஈடுபடுத்துகையாகும். ப்ரணவம் முதலான தேவையான மந்திரங்களைத் தவிர்ந்த மற்றவற்றை உச்சரிப்பதைத் தவிர்ப்பது வாக்கைத்தியானத்தில் ஈடுபடுத்துவதாகும். ஶுபாஶ்ரயமாகிற எம்பெருமானுடைய திருமேனியைப்பற்றி நிற்பது மனத்தைத் தியானத்தில் ஈடுபடுத்துகையாகும். இனி இவையெல்லாம் தியானயோகத்திற்கு உறுப்பானவை என்பதை அடுத்தபடி கூறுகிறான் (நித்யம் த்யாந யோகபர:) ஶரீரம் நீங்கும் வரையில் தினந்தோறும் தியானயோகத்தில் ஈடுபடுவனாய். (வைராக்யம் ஸமுபாஶ்ரித:) ஆத்மாதவிர்ந்த விஷயங்களில் உள்ள தாழ்வுகளை அநுஸந்தித்து, அவற்றில் வைராக்யத்தை வளர்ப்பவனாய்; 'ராகத்வேஷௌ வ்யுதஸ்ய' என்றவிடத்தில் இந்தவைராக்யத்திற்குக்காரணமான விஷயங்களில் விருப்புவெறுப்பின்மை சொல்லப்பட்டது. இங்கு (ஸமுபாஶ்ரித:) என்னுமிடத்தில் 'ஸம' என்னும் உபஸர்க்கத்தாலே அந்த வைராக்யம் வளர்க்கப்பட்டு உறுதிப்படுத்தப்படுவதைக்கூறுகிறது.) (அடுத்தபடி கூறப்படும் அஹங்காரம் முத 53
லானவற்றைக் கைவிடும் விஷயத்திலும் இப்படியே கண்டுகொள்வது. (அஹங்காரம்) ஆத்மாவல்லாத தேஹத்தை ஆத்மா என்று அபிமானிப்பது. (பலம்) இந்த அஹங்காரத்தை வளர்க்கும் வாஸனா பலம். ஶரீரம் மனம் பிராணன் முதலானவற்றின் பலம் யோகத்திற்குத் தடையாய் அமையாதபடியால் இங்கு யோகத்திற்குத் தடையாய் அமையும் வாஸனாபலமே கூறப்படுகிறது (தர்ப்பம்) இந்த அஹங்காரத்தாலும் வாஸனாபலத்தாலும் உண்டாகும் செருக்கு,

दर्पं कामं क्रोधं परिग्रहं विमुच्य, निर्ममः — सर्वेष्वनात्मीयेष्वात्मीय-बुद्धिरहितः, शान्तः -- आत्मानुभवैकसुखः, एवंभूतो ध्यानयोगं कुर्वन् ब्रह्मभूयाय कल्पते — [ब्रह्मभावाय कल्पते;] सर्वबन्धविनिर्मुक्तो यथावस्थितमात्मानमनुभवतीत्यर्थः ॥ ५१-५३ ॥

---

அதாவது-ஏற்றுக்கொள்ளவேண்டியவைகளை ஏற்றுக்கொள்ளாமல் இருக்கை. 'நான் யோகி3யாயிருக்கிறேன்' 'நான் சாந்தியுடையவனுயிருக்கிறேன்' என்று கொள்ளும் செருக்கும் இங்கு 'த3ர்ப்ப' ஶப்3த3த்திற்குப் பொருளாகும். ''ஹ்ருஷ்டோ த்3ருப்யதி த்3ருப்தோ த4ர்ம மதிக்ராமதி'' [ஆப-தர்ம ஸூத் 1-13-4] [தன் பெருமையைக் கண்டு மிகவும் ஆனந்தமடைபவன் மிகவும் செருக்குக் கொள்கிருன். செருக்கடைபவன் தர்மத்தை மீறுகிருன்] என்று சொல்லப்பட்டதன்றே. (காமம்) செல்வத்தில் பேராசை. (க்ரோத4ம்) அதை அடையத் தடைசெய்பவர்கள் மீது ஏற்படும் கோபம். (பரிக்3ரஹம்) இவனுல் கைக்கொள்ளப்படும் கொண்ட பெண்டிர் மக்கள் உற்ருர் சுற்றத்தவர் முதலானோர். (விமுச்ய) அஹங்காரம் தொடக்கமாய், பரிக்3ரஹம் ஈருக உள்ள அனைத்தையும் கைவிட்டு, (நிர்மம:) தன்னதல்லாதது அனைத்திலும் தன்னது என்னும் எண்ணத்தை விட்டவனுய். (ஶாந்த:) ஆத்மாநுப4வத்தையே இனியதாகக் கொண்டவனுய். மனோ வாக்காயங்களை அடக்குவதாகிற ஶாந்தி ஏற்கனவே சொல்லப்பட்டு விட்டதாகையாலே, இங்கு இந்த ஶாந்திக்குக் காரணமான 'ஆத்மாநுப4வத்தையே இனிதாகக் கொண்டிருக்கை' இப்பதத்தால் சொல்லப்படுகிறது. இந்திரியங்கள் விஷயங்களில் ஈடுபடுவதினின்றும் நீங்குவதும், கோபம் முதலானவற்றிலிருந்து நீங்குவதும் வெளி விஷயங்களில் இவனுக்கு வைராக்3யம் ஏற்படுகையாலே விளைகிறது அந்த வைராக்3யமும் மிக இனிதான ஆத்மாநுப4வத்தால் விளைகிறது என்று கருத்து (ப்3ரஹ்மபூ4யாய கல்பதே) இத்தகைய பெருமைகளை உடையவனும், தியான யோகத்தைச் செய்பவன் எல்லா ப3ந்த4ங்களிலிருந்தும் நீங்கப் பெற்றவனுய் ஆத்மாவை உள்ளபடி அநுப4விக்கிருன். ''த்4யானமாகிற யோக3ம் த்4யான யோக3ம்'' என்றே ''த்4யானத்தோடு யோக3ம் (சேர்த்தி)'' என்றே பொருளாகையாலே, இங்கு தியானமே 'தியான யோகம்' எனப்படுகிறது. அடுத்த ஶ்லோகத்தின் அர்த்த2த்தை யொட்டி இங்கு 'ப்3ரஹ்ம' ஶப்3த3ம் ஆத்மாவைக் குறிக்கிறது. இங்கு சொல்லப்படும் ஆத்மாநுப4வம் ப4க்தியை விளைப்பதாக அடுத்த ஶ்லோகத்தில்கூறுகையாலே, இது இவ்வுலகில் ப4க்திக்கு அங்கமாக அமைந்த ஆத்ம ஸாக்ஷாத்காரமேயாகும். ப்ரக்ருதி மண்ட3லத்திற்கு அப்பால் அடையப்படுவதாக 6, 7, 8 அத்தியாயங்களில் சொல்லப்பட்ட கைவல்ய மோக்ஷம் அன்று. 51, 52, 53

ब्रह्मभूतः प्रसन्नात्मा न शोचति न काङ्क्षति ।
समस्सर्वेषु भूतेषु मद्भक्तिं लभते पराम् ॥ ५४ ॥

54 ப்₃ரஹ்மபூ₄த: ப்ரஸந்நாத்மா ந ஶோசதி ந காங்க்ஷதி ।
ஸமஸ்ஸர்வேஷு பூ₄தேஷு மத்₃ப₄க்திம் லப₄தே பராம் ॥

ப்₃ரஹ்மபூ₄த: — ஆத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி கண்டவன், ப்ரஸந்நாத்மா — கலங்காத மனத்தை உடையவனாய், ந ஶோசதி — (என்னைத் தவிர்ந்த வேறு எப்பொருளைப்பற்றியும்) வருந்துவதில்லை; ந காங்க்ஷதி — (வேறொன்றை) விரும்புவதுமில்லை; ஸர்வேஷு பூ₄தேஷு — (என்னைத்தவிர்ந்த) மற்ற எல்லா ப்ராக்ருதப் பொருள்களிலும், ஸம: — (பற்றற்றிருக்கையில்) ஒத்தவனாய், பராம் — மேலான, மத்₃ப₄க்திம் — என் விஷயமான ப₄க்தியை, லப₄தே — அடைகிறான்.

---

55. தொன்மைப் பிரமவுயிர் தோன்றமன திற்றெளிந்து
புன்மைப் பலசோகம் பூணசையின்— றன்மையவித்
தெப்பொருட்கு மொத்தென்பா லேய்ந்தபர பத்தியினைத்
தப்பறவே சேருஞ் சமைந்து.

தொன்மைப்பிரமஉயிர் தோன்ற — பிரம்மம் எனப்படும் அநாதி₃யான தன் ஆத்மாவானது உள்ளபடி காட்சியளிக்க, மனதில் தெளிந்து — மனத்தில் கலக்கங்கள் அற்றவனாய், புன்மைப் பலசோகம் பூண் நசையின் தன்மை அவித்து — (என்னைத்தவிர்ந்த வேறு பொருள்களைப் பற்றிய இழப்பினால் ஏற்படும்) பல வருத்தங்கள் (அவற்றின் சேர்த்தியினால் உண்டாகும்)பலவிருப்பங்கள் ஆகிய தாழ்வுகளைப்போக்கி, எப்பொருட்கும்—என்னைத் தவிர்ந்த அந்த எல்லாப் பொருட்களிலும்,ஒத்து—(பற்றற்று இருக்கையில்) ஒத்தவனாய், என்பால் ஏய்ந்த பரபத்தியினை—என்னிடம் உண்டான பரப₄க்தியை, தப்பறவே சமைந்து சேரும்—குறைவில்லாமல் பரிபூர்ணமாக அடைவான்.

भा ॥ ब्रह्मभूतः—आविर्भूतापरिच्छिन्नज्ञानैकाकारमच्छेषैकस्व-भावात्मस्वरूपः, * इतस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम् (७ ५) इति हि स्वशेषतोक्ता; प्रसन्नात्मा — क्लेशकर्मादिभिरकलुषस्वरूपो

54. கர்மயோகம் முதலானவற்றாலே ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படும் என்று இதுவரையில் சொல்லப்பட்டது. அந்த ஆத்ம ஸாக்ஷாத்காரத்தாலே பரப₄க்தி விளையும் என்று இந்த ஶ்லோகத்தில் சொல்லுகிறான். (ப்₃ரஹ்மபூ₄த:) எல்லையற்ற ஞானத்தையே இயல்வாகக் கொண்டதாய், எனக்கு அடிமைப் பட்டிருக்கும் இயல்வுடையதான தன் ஆத்ம ஸ்வரூபத்தை நேரே கண்டவன்; ஆத்மாவானது இயல்வான நிலையில் எல்லையற்ற ஞானத்தை உடையதாய் எங்கும் வியாபித்திருக்கையாலே அது இங்கு 'ப்₃ரஹ்ம' ஶப்₃த₃த்தால் சொல்லப்படுகிறது. இப்படிப்பட்ட எல்லையற்ற ஞானத்தை உடையதாய், "இதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம வித்₃தி₄ மே பராம் ஜீவபூ₄தாம்" [கீதை 7—5] [இந்த அசேதன ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்டதாய், மேலானதான ஜீவஸ்வரூபத்தையும் எனக்குப் பரதந்த்ரம் என்று அறிவாயாக] என்று எனக்கு அடிமைப் பட்டிருக்கையையே இயல்வாக உடையதான ஆத்மஸ்வரூபத்தை முற்கூறியபடி கர்மயோகாதி₃களாலே கண்டவன் என்று கருத்து. (ப்ரஸந்நாத்மா) பரப₄க்தி ஏற்படுவதைத் தடைசெய்யும் க்லேசம், கர்மம், விபாகம், ஆஶயம் என்று யோக₃ சாஸ்திரங்களில் சொல்லப் படுமவற்றால் கலங்காமல்தெளிந்தமனத்தையுடையனாய் இருப்பவன். "ராக₃ாதி₃தூ₃ஷிதே சித்தே நாஸ்பதீ₃ மது₄ஸூத₃ந:| ந ப₃த்₄நாதி பத₃ம் ஹம்ஸ: கதா₃சித் கர்த்த₃மாம்பு₃ஸி||" [விஷ்ணுதர்மம 9-10] [விருப்பு வெறுப்புகளால் தூஷிக்கப்பட்ட மனத்தில் மது₄ஸூத₃னன் எழுந்தருளமாட்டான். அன்னப்பறவை ஒரு போதும் சேற்றில் கால்வைக்காதன்றே] என்று சொல்லப்பட்டதன்றே. "க்லேஶ கர்ம விபாகாஶயை: அபராம்ருஷ்ட:" [யோக₃ஸூத்ரம் 1—24] [கிலேசம், கர்மம், விபாகம், ஆஶயம் ஆகியவற்றால் தொடப்படாதவன்] என்று பதஞ்ஜலி யோக₃ஸூத்ரத்தில் சொல்லியபடியாலே, பா₄ஷ்யத்தில் 'க்லேஶ கர்மாதி₃பி₄:' என்றது இந்த நான்கையும் கூறுகிறது. "அவித்₃யா-அஸ்மிதா-ராக₃-த்₃வேஷ-அபி₄நிவேஶா: பஞ்ச க்லேஶா:" [1) தே₃ஹத்தை ஆத்மாவாக நினைப்பதாகிற

मद्व्यतिरिक्तं न कंचन भूतविशेषं प्रति शोचति; न किंचन काङ्क्षति;

---

அஜ்ஞாநம், 2) ஆத்மாவையும் புத்திகையும் ஒன்ருக நினைப்பதாகிற அஸ்மிதை, 3) ப்ராக்ருதவிஷயங்களில் விருப்பாகிற ராகம், 4) அவற்றில் வெறுப்பாகிற த்வேஷம், 5) 'சரீரம் விஷயங்கள் ஆகியவை பிரிந்து விடுமோ' என எண்ணும் பயமாகிற அபிநிவேசம் என்கிற இந்த ஐந்தும் க்லேசம் எனப்படும ] என்று யோகஸூத்ரத்தில் க்லேசம் விளக்கப்பட்டது. அநாதிகாலமாக ஜீவன் சேர்த்து வைத்திருக்கும் புண்யபாபங்கள் 'கர்ம' எனப்படும். இவற்றின் விளைவாக இவனுக்கு ஏற்படும் பிறப்பு, ஆயுள், போகங்கள் ஆகியவை 'விபாகம்' எனப்படும். பிறப்பு போகம் முதலானவற்ருல் இவனுக்கு ஏற்படுகிற வாஸனையான ஸம்ஸ்காரம் 'ஆசயம்' எனப்படும். இவற்ருல் அடியோடு தொடப்படாதவன் பரமபுருஷன் என்று முன் எடுத்த [1—24] யோகஸூத்ரம் கூறிற்று. இந்த ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெற்ற ஜீவனுக்கு, பரபக்தி உண்டாவதற்குத் தடையாயிருக்கும் இவை நீங்கி விடும் என்று இங்கு கூறப்படுகிறது. (ந சோசதி) என்னைத் தவிர்ந்த எப்பொருளைப் பற்றியும், அது கிடைக்கப் பெருமையாலே வருந்துவதில்லை. "யஸ்மிந் ஸ்திதோ நதுக்கேந குருணாऽபி விசால்யதே" [கீதை 6—22] [எந்த யோகத்தில் இருப்பவன் (அதிலிருந்து ஓய்ந்திருக்கும் நேரத்திலும்) மிகப்பெரிய துன்பத்தினுலும் மநோவிகாரமடைவதில்லையோ ] என்று சொல்லப்பட்டதன்ரே. (ந காங்க்ஷதி) என்னைத் தவிர்ந்த வேறு எப்பொருளையும் விரும்புவதுமில்லை. "யம் லப்த்வா சாபரம் லாபம் மந்யதே நாதிகம் தத:" [கீதை 6—22] [எந்த யோகத்தைப் பெற்றபின் வேறொரு லாபத்தை அதைக் காட்டிலும் சிறந்ததாக (யோகத்திலிருந்து ஓய்ந்திருக்கும் நேரத்திலும் யோகி) எண்ணுவதில்லையோ ] என்று சொல்லப்பட்டதன்ரே. "ந ஹ்ருஷ்யதி" என்று சங்கரரால்எடுக்கப்பட்ட பாடாந்தரம் அப்ரஸித்தமாகையாலே எம்பெருமானுரால் அங்கீகரிக்கப்படவில்லை. ஆத்மாநுபவத்தைச் செய்பவனுக்கு ப்ராக்ருத விஷயங்களில் பற்றின்மை தன்னடையே விளையும்; இந்த ஆத்மாநுபவத்தை விடப் பரமாத்மாநுபவம் சிறந்தது என்று சாஸ்திரங்கள் கூறுகையால் அப்பரமாத்மாவை அநுபவிக்க வேண்டும் என்னும் விருப்பம் இவனுக்கும் இருக்கும். ஆகையால் பரமாத்மாவைத் தவிர்ந்த மற்ற விஷயங்களிலேயே இவனுக்கு வருத்தமோ விருப்பமோ இல்லை என்று சொல்லப்படுகிறது என்று

अपितु मद्व्यतिरिक्तेषु सर्वेषु भूतेषु अनादरणीयतायां समो निखिलं वस्तुजातं तृणवन्मन्यमानो मद्भक्तिं लभते परां--मयि सर्वेश्वरे निखिल [जगदुद्भवस्थितिप्रलयलीले] जगदुदयविभवलयलीले निरस्त-

---

கொள்ளவேண்டும். இனி, வருத்தமும் விருப்பமும் உண்டாகாமலிருப்பதற்குக் காரணத்தைக் கூறுகிறுன் — (ஸம: ஸர்வேஷு பூ$_4$தேஷு) என்னைத் தவிர்ந்த மற்ற எல்லா ப்ராக்ருத விஷயங்களிலும் பற்றற்றிருக்கும் விஷயத்தில் ஒருபடிப்பட்டிருப்பவன்; 'மற்றவர்கள் பற்றுவைக்கும் கொண்ட பெண்டிர், மக்கள், உற்ருர், பெருஞ்செல்வம் ஆகியவற்றில் இவன் பற்று அற்றிருக்கையாலே அவற்றின் இழப்பால் இவன் வருந்துவதில்லை. அப்பொருள்கள் அனைத்தையும் புல்லென மதிப்பவன் இவன். ரத்தின பர்வதத்தில் ஏறவிரும்புகிறவனை கைக்கோல்போர்மீது பற்று வைப்பானே' என்று கருத்து. இத்தகைய நிலை விளைந்தவனுக்குத் தன் அருளாலே தன்னிடம பரப$_4$க்தி விளையும் என்று காட்டுகிருன் கடைசிப்பாதத்தாலே. (மத்$_3$ப$_4$க்திம் லப$_4$தே பராம்) என் விஷயத்தில் பரப$_4$க்தி எனப்படும் மோக்ஷஸாத$_4$நமான சிறந்த ப$_4$க்தியை அடைகிருன். மற்ற விஷயங்களில் பற்றற்றுத் தன் ஆத்மாவை அநுப$_4$வித்து வந்த போதிலும், தன் ஆத்மாவுக்கும் எனக்கும் உள்ள நெடுவாசியை அறிந்தவனுகையாலே, என்னை அடைவதற்கு ஸாத$_4$னமான மேலான ப$_4$க்தியை அடைகிருன் என்று கருத்து. 'மத்$_3$ ப$_4$க்திம்' என்ற விடத்தில் 'மத்' ஶப்$_3$த$_3$த்தால் – பர ப$_4$க்தியின் உற்பத்திக்கும் வளர்ச்சிக்கும் ஸாத$_4$னமாக இந்த கீ$_3$தையிலும் மற்ற சாஸ்திரங்களிலும் சொல்லப்படுகின்றனவாய், உபாஸனதசையில் உபாஸகர்களால் அநுஸந்தி$_4$க்கத்தக்கவையான (எம்பெருமானுக்குள்ள) பின்வரும் பெருமைகள் (அவனுல்) கருதப்படுகின்றன:— (1) நான் எல்லா ஜீவர்களையும் நியமிக்கும் ஸர்வேஶ்வரன். ஆகையால் நியமிக்கப்படும் ஜீவர்களிடம் ஈடுபடுவதைவிட நியமிக்கும் ஸர்வேஶ்வரனை என்னிடம் ஈடுபடுவதே சிறந்தது. (2) நான் எல்லா உலகையும் படைத்துஅளித்து அழிப்பதை விளையாட்டாகக் கொண்டவன். ஆகையால் 'காரணம் து த்$_4$யேய:' [அத$_2$ர்வசிகை—8] [எது உலகிற்குக் காரணமோ அந்தப் பரப்பொருளே தியானிக்கத்தக்கது] என்ற வேதவாக்யத்தின்படி நானே ப$_4$க்தி செலுத்தத்தக்கவன். மேலும் சரீரங்கள்

समस्तहेयगन्धेऽनवधिकातिशयासंख्येयकल्याणगुणगणैकताने लावण्यामृत-

---

இந்திரியங்கள் முதலானவற்றைக் கொடுத்துப் பேருதவிபுரிந்த வனாய், தேவர், மனிதர், திர்யக், ஸ்தாவரம் என்னும் நாலு வகைப் பட்ட படைப்புக்கும் காரணமான நான் இருக்கையில் படைத்து அளித்து அழிக்கப்படுகிறவர்களாகவே இருக்கும் மற்றவர்களிடம் அன்பு செலுத்துவது தகாது (3) தாழ்வுகள் எதுவுமற்றவன் நான். ஆகையால் தாழ்வுகளுக்கு இருப்பிடமான மற்றவர்களை விட்டு என்னையே பற்றுவது தக்கது. (4) எல்லையற்ற மேன் மையை உடைய கணக்கற்ற கல்யாணகுணக் கூட்டங்களுக்கு இருப்பிடமாயிருப்பவன் நான். பரத்துவததுக்கு (மேன்மைக்கு) உறுப்பான ஞானம் சக்தி முதலான குணங்களோடு, ஸௌலப்ய யத்திற்கு (எளிமைக்கு) உறுப்பான ஸௌசீல்யம், வாத்ஸல்யம் முதலான குணங்களையும் ஒரு சேரப்பெற்றவனாகையாலும், ஒவ் வொரு குணமும் நெஞ்சை ஈர்க்கும் பெருமையுடையதாகையா லும் என்னிடமே அன்பு செலுத்தவேண்டும். (5) அமுதக்கடல் போன்ற திருமேனி அழகையுடையவன் நான். ஆகையால் உபா ஸிப்பவர்களுக்கு உபாஸிக்கத்தக்க ஶுபாஶ்ரயமான திருமேனி யுடைய என்னையே உபாஸிக்கவேண்டும். (6) லக்ஷ்மீநாதனா யிருப்பவன் நான். அவளாலும் புருஷகாரமாக ஆஶ்ரயிக்கத்தக்க வளாகையாலும், 'அகலகில்லேன் இறையும்' என்று என்னை என்றும் ஆஶ்ரயித்திருப்பதாலும் 'ஶ்ரீ:' என்று பெயர் பெற்றிருப்பவ ளான பெரிய பிராட்டியோடு கூடியவன் நான் என்று 'ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ' [புருஷஸூக்தம்] [உனக்கு ஶ்ரீபூமிதேவிகள் பத்தினிகள்] என்று வேதங்களிலும், "நித்யை வைஷா ஜகந்மாதா விஷ்ணோ: ஶ்ரீ: அநபாயிநீ" [விஷ்ணு புராணம் 1—8—17] [எப்பொழுதும் விஷ்ணுவை விட்டுப் பிரியா மலே இருப்பவள் உலகின் தாயான ஶ்ரீதேவி] என்று ஸ்ம்ருதி களிலும் முழங்கப்படுகையாலே. ஶ்ரிய:பதியான நானே உபாஸிக் கத்தக்கவனாகவும், அடையப்படுபவனாகவும் இருப்பவன். ["நித்ய ஸந்நிஹித ஶக்தி:" (எப்பொழுதும் எம்பெருமானோடு கூடியே இருக்கும் ஶக்தியாயிருப்பவள் ஶ்ரீதேவி) என்று பாஞ்சராத்ரத்திற்கு மூலவேதமான ரஹஸ்யாம்நாயத்தில் கூறியிருப்பதாகத் தாத்பர்ய சந்த்ரிகையில் எடுக்கப்பட்டுள்ளது.] (7) தாமரைக்கண்ணனாயிருப் பவன் நான், "தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ

सागरे श्रीमति पुण्डरीकनयने स्वस्वामिन्यत्यर्थप्रियानुभवरूपां परां भक्तिं लभते ॥ ५४ ॥

---

தஸ்ய உதி3தி நாம; ஏஷ ஸர்வேப்4ய: பாப்மப்4யே உதி3த: உதே3தி ஹவை ஸர்வேப்4ய: பாப்மப்4யோ யஏவம் வேத3" [ச2ாந் 1—6—7] [அந்தப் பரமாத்மாவிற்கு ஸூர்யனால் மலர்ந்த தாமரைபோன்ற இரு கண்கள் உள. அவனுக்கு 'உத்' (உயர்ந்தவன்) என்று பெயராகும். அவன் எல்லாப்பாபங்களுக்கும் அப்பாற்பட்டவன். இதை அறிபவன் எல்லாப் பாபங்களிலிருந்தும் நீங்கப்பெறுகிறான்.] என்று ஶ்ருதியிலும் தாமரைக்கண்ணனை என்னை உபாஸிப்பவனுக்கே எல்லாப்பாபங்களும் நீங்கும் என்று முழங்கப்பட்டது. "சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி ரகு4நந்த3ந| க3மிஷ்யாமி அக்ஷயாந் லோகாந் த்வத்ப்ரஸாத3ாத் அரிந்த3ம||" [ரா—ஆர 64—18] [எதிரிகளை அழிக்கும் ரகுகுலத்தோன்றலே! உன்னுடைய அருள் நிரம்பிய பார்வையாலே நான் பரிசுத்தி பெற்றேன்; உன் அருளாலே தான் அழியாத உலகங்களுக்குச் செல்வேன்.] "ஜாயமாநம் ஹி புருஷம் யம் பஶ்யேந் மது4ஸூத3ந:| ஸாத்விக: ஸது விஜ்ஞேய: ஸவை மோக்ஷார்த்த2சிந்தக:||" [ப4ார—மோக்ஷ 349—73] [ஒரு மனிதன் பிறக்கும்போது அவனை மதுஸூதனன் கடாக்ஷித்தானாகில் அவன் ஸத்வகுணமுடையவனாவான் என்றும், மோக்ஷத்தைப்பற்றிச் சிந்திப்பான் என்றும் அறியத்தக்கது.] என்று ஸ்ம்ருதிகளிலும் இவ்வர்த்தம் விளக்கப்பட்டது. ஆகையால் என் விஷயத்தில் ப4க்தி செய்வதே தக்கது. (8) ஜீவர்களுக்கு உடையவனான ஸ்வாமியாய் நான் இருக்கையாலே ப4க்தியை உண்டாக்கி வளர்ப்பது என் பொறுப்பு [ப4க்தியை உண்டாக்குவது முதலியவற்றில் முற்கூறிய பெருமைகளெல்லாம் ஒருதட்டு என்றால் 'ஸ்வாமித்வம்' ஒரு தட்டு ஆகும். இவனுக்கு உடைமையாயில்லாத ஜீவர்கள் ஒருவரும் இலர் என்று தாத்பர்ய சந்த்ரிகை.] 54.

मां ॥ तत्फलमाह —

भक्त्या मामभिजानाति यावान्यश्चास्मि तत्त्वतः ।
ततो मां तत्त्वतो ज्ञात्वा विशते तदनन्तरम् ॥ ५५ ॥

55 ப₄க்த்யா மாம் அபி₄ஜாநாதி யாவாந் யஶ்சாஸ்மி, தத்த்வத: ।
ததோ மாம் தத்த்வதோ ஜ்ஞாத்வா விஶதே தத₃நந்தரம் ॥

ய: — ஸ்வரூபத்தாலும் ஸ்வபா₄வத்தாலும் நான் எத்தகையவனோ, யாவாந் ச அஸ்மி — கு₃ணத்தாலும் செல்வத்தாலும் நான் எப்படிப்பட்டவனோ, மாம் — அத்தகைய என்னை, ப₄க்த்யா — முற்கூறிய பரப₄க்தியாலே, தத்த்வத: — உள்ளபடி, அபி₄ஜாநாதி — அறிகிறான்; மாம் — என்னை, தத்த்வத: ஜ்ஞாத்வா — உள்ளபடி அறிந்து, தத₃நந்தரம — அதற்குப் பிறகு, தத: — பரம ப₄க்தியாலே, மாம் — என்னை, விஶதே — பரிபூர்ணமாக அடைகிறான்.

---

55. ஏவனு னாவேனமற் றெவ்வளவி னுண்மையினு
லாவனுங் கென்னை யறிவதுதான் — மேவநிகழ்
பத்தியான் மெய்யுணர்ந்தே பண்பா லெனைப்பின்னை
முத்தியால் வந்தடையு முற்று.

ஏவன் நான் ஆவேன் — ஸ்வரூபத்தாலும் ஸ்வபா₄வத்தாலும் நான எத்தகையவனோ, மற்று — மேலும், எவ்வளவின் ஆவன் — கு₃ணத்தாலும் செல்வத்தாலும் நான் எப்படிப்பட்டவனோ, ஆங்கு என்னை — அத்தகைய என்னை, மேவநிகழ் பத்தியான் — முற்கூறிய பரப₄க்தியாலே, உண்மையினால் அறிவதுதான் — உள்ளபடி அறிகிறான்; மெய் உணர்ந்தே — உள்ளபடி அறிந்து, பின்னை — அதற்குப் பிறகு, பண்பால் — பரமப₄க்தியினாலே, எனை — என்னை, முத்தியால் உற்று வந்தடையும் — மோக்ஷநிலையில் பரிபூர்ணமாக வந்தடைவான்.

भा ॥ स्वरूपतः स्वभावतश्च योऽहम्; गुणतो विभूतितोऽपि

55. முன் ஶ்லோகத்தில் சொன்ன பரபக்தியாலே என்னை உள்ளபடி அறிகையாகிற பரஜ்ஞானத்தைப் பெறுகிறான் என்றும், அதற்குப் பின் அந்தப்பரபக்தி முற்றிய நிலையான பரமபக்தியாலே முக்தி நிலையில் என்னோடு ஸாயுஜ்யம் பெறுகிறான் என்றும் கூறுகிறான் இந்த ஶ்லோகத்தில். "கஶ்சிந் மாம் வேத்தி தத்த்வத:" [கீதை 7—3] [பல்லாயிரவரில் ஒருவனே என்னை உள்ளபடி அறிகிறான்] என்றும், "வாஸுதே₃வஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுது₃ர்லப₄:" [7—19] ['வாஸுதேவனே எனக்குப் பரம ப்ராப்யமாகவும், ப்ராபகனாகவும், த₄ாரகம், போஷகம், போ₄க்யம் முதலான எல்லாமாகவும் இருக்கிறான்' என்று எண்ணி என்னை ஶரணமடைகிறான், அவன் விசாலமான நெஞ்சை உடையவன் ஆவான்; (இவ்வுலகில்எனக்கும்) மிகவும்கிடைத்தற்கரியவனுவான்] என்று ஏழாம் அத்தியாயத்திலும்,

பக்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம் விதோ₄ऽர்ஜுந ।
ஜ்ஞாதும் த்₃ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப ॥
[கீதை 11—54]

[எதிரிகளைத் தவிக்கச்செய்யும் அர்ஜுனனே! நான் ஸ்வயம் ப்ரயோஜன ப₄க்தியாலேயே இவ்வண்ணமாக உள்ளபடி (ஶாஸ்த்ரங்களால்) அறிவதற்கும், காண்பதற்கும் அடைவதற்கும் கூடியவன்] என்று பதினேராம் அத்தியாயத்திலும் சொல்லப்பட்ட மஹாத்மாவான ஸ்வயம் ப்ரயோஜன ப₄க்தி நிஷ்டனைப்பற்றிப் பேசுகிறது இந்த ஶ்லோகம். (ய: அஸ்மி) எத்தகைய ஸ்வரூபத்தை உடையவனும் நான் இருக்கிறேனே; சென்ற ஶ்லோகத்தில் "மத்₃ப₄க்திம்" என்றவிடத்திலுள்ள 'மத்' ஶப்₃த₃த்தாலே கருதப்படும் ஜக₃த்காரணத்வம் ஸர்வேஶ்வரத்வம் ஆகியவற்றோடு கூடிய ப₄க₃வத் ஸ்வரூபத்தைக் காட்டுகிறது. அத்துடன் 'ய:' என்னும் இச்சொல், "ஸத்யம் ஜ்ஞாநம் அநந்தம் ப்₃ரஹ்ம" [தை·ஆந 1] [விகாரமற்றதாய், தானே ப்ரகாசிப்பதாய், தேசத்தாலும் காலத்தாலும் வஸ்துவாலும் அளவற்றதாயிருக்கும் ப்₃ரஹ்மம்] "ஆநந்தோ₃ ப்₃ரஹ்ம" [தைத்-ப்₄ருகு₃ 6—1] [ஆனந்தமே வடிவாயிருப்பது ப்₃ரஹ்மம்] "அபஹதபாப்மா விஜர: விம்ருத்யு: விஶோக:விஜிக₄த்ஸ: அபிபாஸ:"[சா₂ந் 8-7-1] [பரமாத்மா பாபமற்றவன்; கிழத்தனமற்றவன்; மரணமற்றவன்; வருத்தமற்றவன்; பசியற்றவன்; தாகமற்றவன்.] முதலான ஶோத₄க வாக்கியங்களில் சொல்லப்பட்ட ஸ்வரூப நிருபக கு₃ணங்களான ஸத்யத்வம் [விகாரமற்றதாயிருக்கை] ஜ்ஞாநத்வம் [தானேபிரகாசிப்பதாயிருக்கை] அநந்தத்வம் [மூவகை அளவும் அற்றதாயிருக்கை] ஆநந்த₃த்வம் [ஆனந்தமயமாயிருக்கை] அமலத்வம் [தாழ்வுகள் அற்றதாயிருக்கை] என்னும் ஸ்வரூப நிருபகத₄ர்மங்களையும் குறிக்கிறது.

यावांश्चाहम्, तं मामेवंरूपया भक्त्या तत्त्वतोऽभिजानाति; मां तत्त्वतो

---

எல்லா வித்3யைகளிலும் அநுஸந்திக்கத்தக்கவையான இவற்றை அறிந்து கொண்டால் தான் ப்3ரஹ்ம ஸ்வரூபத்தை அறிந்து கொள்ள முடியுமாகையாலே இவை ஸ்வரூப நிரூபக கு3ணங்கள் எனப்படுகின்றன. இவை பா4ஷ்யத்தில் ''ஸ்வபா4வத:'' என்று சொல்லப்படுகின்றன. 'ஸ்வரூப' ஶப்3த3ம் ஸ்வரூப நிரூபக த4ர்மங்களைக் குறிக்கின்றது என்றும், ''ஸ்வபா4வ'' ஶப்தம் ஸௌலப்4யத்தைக் குறிக்கின்றது. என்றும் சிலர் உரையிட்டதாகத் தாத்பர்ய சந்த்ரிகை (யாவாந் ச அஸ்மி) நான் எந்த ஆகாரத்தை உடையவனாயிருக்கிறேனோ. 'யாவத்' என்னும் ஶப்3த3ம் ஒரு பொருளின் உயர்வு தாழ்வுகளை அளவிடுவதற்கு உறுப்பான ஆகாரத்தைக் குறிக்கிறது. இங்கு 'கு3ணத்தாலும் விபூ4தி எனப்படும் செல்வத்தாலும் நான் எந்த ஆகாரத்தை உடையவனோ' என்று சொல்லப்பட்டதாகிறது. இங்கு 'குணம்' என்று நிருபித ஸ்வரூப விஶேஷணமான (ஸ்வரூப நிரூபக குணங்களால் நிர்ணயிக்கப்பட்ட ஸ்வரூபத்தில் உள்ள மற்ற கு3ணங்களான) ஜ்ஞாநம், ஶக்தி முதலான மற்ற எல்லாக் குணங்களையும் சொல்லுகிறது. (மாம்) அத்தகைய என்னை. (ப4க்த்யா தத்த்வத: அபி4ஜாநாதி) முற்கூறிய ப4க்தியாலே நானே ப்ராப்யமாகவும்ப்ராபகமாகவும் த4ாரக போஷக போ4க்3யங்களாகவும் இருப்பவன் என்று உபாஸகன் உள்ளபடி அறிகிறான். ''கஶ்சிந் மாம் வேத்தி தத்த்வத:'' [கீ3தை 7-3] ''வாஸுதே3வஸ் ஸர்வமிதி ஸமஹாத்மா ஸுது3ர்லப4:'' [7-19] ''ப4க்த்யா த்வநந்யயா ஶக்ய:...ஜ்ஞாதும் த்3ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச''[11-54]என்ற விடங்களில் ஜ்ஞாநியின் பரிபக்குவ நிலையாகச்சொல்லப்பட்ட பகவத3த்யந்த பாரதந்த்ரிய ஜ்ஞாநத்தையுடைய மஹாத்மாவாக உபாஸகன் பரிணமித்து நிற்குமநிலையைச் சொல்லுகிறது. ''யாவாந் யஶ்சாஸ்மி'' என்னும் தொடரோடு 'தத்த்வத:'என்னும் பத3த்தைச்சேர்ப்பதில் ஸ்வாரஸ்யமில்லையாகையாலும், ''தத்த்வத: அபி4ஜாநாதி'' என்று கூட்டுவதால் 'ஐயந்திரிபற என் ஸ்வரூபஸ்வபா4வங்களை அறிகிறான்' என்னும் சிறந்த பொருள் கிடைக்கையாலும் இப்படிக் கூட்டிப் பொருள் கொள்ளப்படுகிறது. பரப4க்தியினால் உண்டாகும் இந்த தத்த்வஜ்ஞாநமே பரஜ்ஞாநம் எனப்படுகிறது. உபாஸகனுக்குப் பரபக்தியின் முற்றிய நிலையில் விளையும் இந்தப் பரஜ்ஞாநம் ஆழ்வாருக்கு ''மயர்வற

ज्ञात्वा तदनन्तरम् -- तत्त्वज्ञानानन्तरं ततो — भक्तितो मां विशते — प्रविशति । तत्त्वतस्स्वरूपस्वभावगुणविभूतिदर्शनोत्तरकालभाविन्या अन-

---

மதிநலம் அருளினன்'' [திருவாய் 1-1-1] என்கிறபடியே எம்பெருமானுடைய நிர்ஹேதுக கிருபையினுலேயே உண்டாயிற்று. ''மாம் வேத்தி தத்த்வத:'' [கீதை 7-3] ''ஜ்ஞாதும் த்3ரஷ்டும் ச தத்த்வேந'' [கீதை 11-54], ''தத்த்வத: அபி4ஜாநாதி'' [கீதை 18-56] என்னும் இந்த கீதா ஶ்லோகங்களைத் திருவுள்ளம் பற்றியே ஆசார்ய ஹ்ருதயகாரர் மூன்றும் ப்ரகரணத்தின் இறுதிச் சூர்ணையில் 'தத்வவேத3ந மறப்பற்று' என்றும், நாலாம் ப்ரகரணத்தின் முதல் சூர்ணையில், ''தத்வஜ்ஞானவர்'' என்றும் அருளிச் செய்திருப்பது அநுஸந்தி4க்கத்தக்கது. (மாம் தத்த்வத: ஜ்ஞாத்வா) என்னை முற்கூறியபடி உள்ளபடி அறிந்து, இந்தப் பரஜ்ஞாநமானது இவனுக்கு உபாயமாகவன்றிக்கே ஸ்வயம் ப்ரயோஜனமாய் இருக்கையாலே அதன் இனிமையை நோக்கி மறுபடியும் அநுவதி3க்கிருன். (தத3நந்தரம்) அந்தத் தத்வஜ்ஞானம் உண்டான உடனேயே; இவன் ப்ராப்யனும் எம்பெருமானே ப்ராபகமாகவும் இருப்பவன் என்று உணர்ந்து விட்டபடியால் இவனுக்கு ஜந்மாந்தரம் இல்லையென்றும், இந்த ஜ்ஞானம் உண்டான ஜந்மத்திலேயே இவனுக்கு மோக்ஷம் ஸித்திக்கும் என்றும் உணர்த்தப்படுகிறது. ''தத்த்வத: ஜ்ஞாத்வா விஶதே'' என்று கூறினுலே தத்வஜ்ஞானத்திற்கு அடுத்தபடி ப4கவத் ப்ராப்தி ஸித்3தி4க்கிறது என்று தேறக்கூடியதாயிருக்க, 'தத3நந்தரம்' என்னும் பதத்தையிட்டது — இவனுக்கு மற்ற உபாஸகர்களைப்போலே ப்ராரப்3த4கர்ம ஶேஷம் இருந்தாலும் அதை அநுப4விப்பதற்காக மற்ருெரு பிறப்பை எடுக்க வேண்டிய அவசியமில்லை என்று உணர்த்துவதற்காக (தத3நந்தரம் விஶதே) இவன் ''ப்ராப்தாவும், ப்ராபகனும், ப்ராப்திக்கு உகப்பானும் நானே'' என்பதை அறிந்து விட்டானுகையாலே, மற்ற உபாஸகர்களுக்குப்போலே, ப்ராரப்3த4கர்மம் முடியும் வரை பல பிறவிகளைக்கொடுத்து உண்மையறிவு விளைவதற்காக ஆத்மயாதா2த்ம்யாநுஸந்தா4னம், த்ரிவித4 பரித்யாகம் முதலானவற்றுடன் ப4க்தி செய்யும்படி விதி4த்து இவனை என்னைவிட்டு விலக்குவதில்லை; அந்தப் பிறவிலேயே என்னை அடைவிக்கிறேன் (தத: மாம் விஶதே) அந்த ப4க்தியினுலேயே என்னை அடைகிருன். இங்கு விஶதே என்று கீ3தை

अधिकातिशयभक्त्या मां प्राप्नोतीत्यर्थः । अत्र तत इति प्राप्तिहेतुतया

யில் ஆத்மநேபத₃ப்ரயோக₃ம் செய்யப்பட்ட போதிலும் மஹாத்மா வான இவன் "தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே" [திருவாய் 2-9-4] என்றும், 'உனக்கே நாமாட்செய்வோம்" [திருப்பாவை 29] என்றும் இவன் பெறுவது பரார்த்த₂ாநுப₄வகைங்கர்யங்களே என உணர்த்துவதற்காக பா₄ஷ்யகாரர் "ப்ரவிஶதி" என்று பரஸ்மை பத₃ச்சொல்லாலே விளக்கியருளினர். "ப்ரவேஷ்டும் ச' [11—54] என்று கீ₃தையிலும் முன்னமே இவன்பெறும்பயன் ப்ரவேஶஶப்₃த₃த் தாலே குறிக்கப்பட்டதன்றோ. 'ப்ரவேஷ்டுமிதி ப்ராகு₃க்தை கார்த்₂யஜ்ஞாபநாய பரஸ்மை பத₃ஸித்₃த₄யே ச 'ப்ரவிஶதி' இத் யுக்தம்" ["ப்ரவேஷ்டும் ச" [கீ₃தை 11—54] என்று முன் இதே விஷயம் சொல்லப்பட்டது என்று நினைவுறுத்துவதற்காகவும், (இவன் பெறும் ப₂லன் பரமனின் உகப்பிற்கு உறுப்பானதே என்று) பரஸ்மைபத₃ப்ரயோக₃த்தால் உணர்த்துவதற்காகவும் 'ப்ரவிஶதி' என்று பா₄ஷ்யத்தில் அருளிச்செய்யப்பட்டது] என்று இவ்விஷயம் தாத்பர்யசந்த்₃ரிகையிலும் தெளிவாகக் காட்டப் பட்டது. "ப₄க்த்யா த்வநந்யயா ஶக்ய:......ஜ்ஞாதும் த்₃ரஷ்டும் ச தத்வேந ப்ரவேஷ்டும் ச" [கீ₃தை 11-54] என்று ஜ்ஞாந தரிசனங்களுக்குக் காரணமாயிருக்கும் ப₄க்தியே ப்ரவேஶமாகிற ப₄க₃வத்ப்ராப்திக்கும் காரணம்என்று கண்ணன்முன்னமே சொல்லி யிருக்கையாலே இங்கு 'தத:' என்றது அருகிலிருக்கும் தத்வ ஜ்ஞானத்தைக் காட்டாமல் ஶ்லோகத்தின் தொடக்கத்திலிருக்கும் ப₄க்தியையே காட்டுகிறது. பரப₄க்தியினாலே பரஜ்ஞாநம் உண் டாவதாகச் சொல்லிவிட்டு, இங்கு ப்ராப்திக்குக் காரணமாகச் சொல்லப்படும் ப₄க்தி அந்தப் பரப₄க்தியின் முற்றிய நிலையாய், அந்தப் பரஜ்ஞாநத்திற்குப் பிறகே உண்டாவதான பரமப₄க்தியே என்று அறியத்தக்கது. எம்பெருமானுடைய ஸ்வரூப ஸ்வபா₄வ கு₃ணவிபூ₄திகளை உள்ளபடி அறிந்த பின்பு அந்த அறிவுக்குக் காரணமான பரப₄க்தி எல்லையற்ற பெருமையுடைய பரமப₄க்தி யாய் முதிர்ச்சி அடைகிறது என்றும், அதுவே அவனுக்கு அந்த ஜன்மத்திலேயே ப₄கவத்ப்ராப்தியை அளிக்கிறது என்றும் சொல் லப்படுகிறது. இத்தால், பரப₄க்தியினாலே தத்வஜ்ஞானம் உண் டாகிறது; அந்தத் தத்வஜ்ஞானத்தாலே நேரே மோக்ஷம் உண் டாகிறது என்னும் சங்கரரின் மதம் கண்ணன் திருவுள்ளத்திற்கு உகந்ததன்று என்று விளங்குகிறது. இங்கு 'மாம் அபி₄ஜாநாதி,

निर्दिष्टा भक्तिरेवाभिधीयते, * भक्त्या त्वनन्यया शक्यः (११. ५४) इति तस्या एव तत्त्वतः प्रवेशहेतुत्वाभिधानात् ॥ ५५ ॥

---

என்று சொல்லப்படும் பரஜ்ஞாநம் பரமாத்ம தரிசனமே ஆகையாலே 'அபே₄த₃ வாக்யார்த்த₂ ஜ்ஞாநத்தாலே மோக்ஷம்' என்னும் அத்₃வைத மதத்திற்கு இது எவ்வகையிலும் பொருந்தாது. 'தத:' என்பதை முதலிலிருக்கும் ப₄க்தியைக்குறிப்பதாகக் கொள்ளாமல் அருகிலிருக்கும் தத்வஜ்ஞாநத்தைக் குறிப்பதாகக் கொண்டால் 'தத்வதோ ஜ்ஞாத்வா' என்பதோடு புநருக்தி தோ₃ஷமும் உண்டாகும். தத்வ ஜ்ஞாநத்திற்குக் காரணமான பரப₄க்தியே 'தத:' என்று பகவத் ப்ராப்திக்குக் காரணமாகிறது என்று சொல்லுவதில் பயனில்லையாகையாலே பரப₄க்தியின் முற்றிய நிலையான பரம ப₄க்தியே இங்கு 'தத:' என்று அநுவதிக்கப்படுகிறது என்று கொள்ள வேண்டும்.

பரப₄க்திரத்₃ருஷ்டார்த்த₂ ப்ரத்யக்ஷாபி₄நிவேஶநம்|
பரஜ்ஞாநம் து தஸ்யைவ ஸாக்ஷாத்கார: பரிஸ்பு₂ட:|
புநர்விஶ்லேஷ பீ₄ருத்வம் பரமா ப₄க்திருச்யதே ||

[பரப₄க்தியாவது – சாஸ்திரம் முதலானவற்றாலே அறிந்த பகவத்விஷயத்தை நேரே காணவேண்டும் என்னும் விருப்பம், பரஜ்ஞாநமாவது அந்த ப₄க₃வத்₃ விஷயத்தைத் தெளிவாக மனத்திலே கண்டுஅநுப₄விப்பது.பரமப₄க்தியாவது அந்தப₄க₃வத்₃ விஷயத்தைப் பிரியில் த₄ரிக்கமாட்டாமை.] "த₃ர்ஶநம் பரப₄க்தி: ஸ்யாத் பரஜ்ஞாநம் து ஸங்க₃ம:"[பரமாத்மாவைமனத்திலேகாண்பது பரப₄க்தியாகும். மனத்திலே அவனோடுகலந்து பரிமாறுவது பரஜ்ஞானமாகும்.] என்றுபரப₄க்தி பரஜ்ஞாந ப₄ரமபக்திகளை விளக்குவர் நம்மாழ்வாருக்கு "சூழ்விசும் பணிமுகில்"[திருவாய் 10-9] என்னும்திருவாய்மொழிக்கு முன்வரையில்பரப₄க்தி நிலை."சூழ்விசும்பணிமுகில்" [10—9] திருவாய்மொழியில் பரஜ்ஞாந நிலை. "முனியே நான்முகனே" [திருவாய் 10—10] என்னும் திருவாய்மொழியில் பரம ப₄க்தி நிலை என்று ஆசார்யர்கள் அருளிச்செய்வர்.) (ததோ விஶதே) எம்பெருமானைப் பிரியில் த₄ரியாமையாகிற பரமப₄க்தியை இவன் பெற்றுவிட்டதையிட்டு இவனுக்கு ப்ராரப்₃த₄ ஶேஷத்தையும், அதனால்வரும் மறுபிறவிகளையும் கழித்துவிடுகிறுகையாலே, உண்மையில் தனது நிர்ஹேதுககிருபையாலே பேறு பெறும் இவனை ப₄க்தியாலே பேறுபெறுபவனாகக் கூறுகிறான். 55.

भा ।। एवं वर्णाश्रमोचितनित्यनैमित्तिककर्मणां परित्यक्तफलादिकानां परमपुरुषाराधनरूपाणामनुष्ठितानां विपाक उक्तः । इदानीं काम्यानामपि कर्मणामुक्तेनैव प्रकारेणानुष्ठितानां स एव विपाक इत्याह-

सर्वकर्माण्यपि सदा कुर्वाणो मद्व्यपाश्रयः ।
मत्प्रसादादवाप्नोति शाश्वतं पदमव्ययम् ।। ५६ ।।

56. ஸர்வகர்மாண்யபி ஸதா3 குர்வாணோ மத்3வ்யபாஶ்ரய: |
மத்ப்ரஸாதா3த3வாப்நோதி ஶாஶ்வதம் பத3மவ்யயம் ||

ஸர்வகர்மாணி அபி — எல்லாக் காம்யகர்மங்களையும், மத்3வ்யபாஶ்ரய: — என்னிடத்தில் கர்த்ருத்வம் முதலானவற்றை ஸமர்ப்பித்தவனாய், ஸதா3 குர்வாண: — எப்போதும் செய்பவன், மத்ப்ரஸாதா3த் — என் அருளாலே, ஶாஶ்வதம் — என்றும் இருப்பதாய், அவ்யயம் — குறையில்லாததான, பத3ம் — ப்ராப்யமான என்னை, அவாப்நோதி — அடைகிறான்.

---

56. மற்றிக் கருமங்க ளெல்லா மருவியெனைப்
பற்றிப் பயின்றென்றும் பார்த்தியல்வா — னற்றமற
மேவு மெனதருளால் மிக்கடையு மற்கமற
ஓவுதலி லாப்பதத்தை யுற்று.

மற்று இக்கருமங்கள் எல்லாம் — (முற்கூறிய நித்ய நைமித்திக கர்மங்கள் மாத்திரமல்லாமல்) காம்யகர்மங்கள் அனைத்தையும் கூட, எனை மருவிப் பற்றிப் பயின்று — என்னிடத்தில் கர்த்ருத்வம் முதலானவற்றை ஸமர்ப்பித்தவனாய், என்றும் பார்த்து இயல்வான் — எப்போதும் செய்பவன், அற்க மற — குறைவில்லாததாய், ஓவுதல் இலா — அழியாததான, பதத்தை — ப்ராப்யமான என்னை, அற்றம் அற மேவும் எனது அருளால் — தடையில்லாமல் வெள்ளமிடும் எனதருளால், உற்று — அணுகி, மிக்கு அடையும் — பரிபூர்ணமாகப் பெறுவான்.

भा ॥ न केवलं नित्यनैमित्तिकानि कर्माणि, अपितु सर्वाणि काम्यान्यपि कर्माणि, मद्व्यपाश्रयः — मयि संन्यस्तकर्तृत्वादिकः, कुर्वाणो मत्प्रसादाच्छाश्वतं पदमव्ययम् — अविकलं प्राप्नोति । पद्यत इति पदम्; मां प्राप्नोतीत्यर्थः ॥ ५६ ॥

---

56. இவ்வண்ணமாக அவரவர் வர்ணாஶ்ரமங்களுக்குரிய நித்ய நைமித்திக கர்மங்களை, ப2லஸங்க3கர்த்ருத்வத்யாக3த்தோடு பரம புருஷனுக்கு ஆராதனமாக அநுஷ்டி2ப்பவர்கள் காலக்ரமத்தில் பரப4க்தி பரஜ்ஞாந பரமப4க்திகளையும அடைந்து என்னைப் பெறுவர் என்று இதுவரையில் கூறப்பட்டது. இதற்குமேல் "இழந்த ராஜ்யத்தைப்பெறவேண்டும் என்பதற்காக நான் செய்யும் காம்ய கர்மத்தினால் மோக்ஷம் ஸித்3தி4க்குமோ?" என்று அர்ஜுனனுக்கு ஐயம்விளைய, "காம்யகர்மங்களையும் முற்கூறியபடி மூன்றுவகைப் பட்டபரித்யாக3த்தோடு அநுஷ்டி2த்தால் மோக்ஷப2லனையடையலாம் என்கிறான் இந்த ஶ்லோகத்தில். (ஸர்வகர்மாணி அபி) இதுவரையில் சொல்லப்பட்ட நித்ய நைமித்திக கர்மங்கள் மாத்திரமல்லாமல் எல்லாக்காம்யகர்மங்களையும்கூட, "ப4க3வானைப்பற்றிநிற்பவர்களின் பெருமையை விளக்குவதற்காக, 'ஸர்வகர்மாணி' என்று இதுவரையில் சொல்லப்பட்ட சாஸ்த்ர விஹித கர்மங்களைக் காட்டிலும் வேறுபட்ட சாஸ்த்ர நிஷித்3த4 கர்மங்களை அநுஷ்டி2த்தாலும் இவன் மோக்ஷமடைவான்" என்று இந்த ஶ்லோகத்தில் சொல்லப்படுவதாக சங்கரர் முதலானோர் உரையிட்டது 'நிஷித்3த4கர்மங்களை அநுஷ்டி2க்கலாகாது' என்று கூறும் ஸகல சாஸ்திரங்களுக்கும் முரண்படும். ஆகையால் இதுவரையில் கூறிவந்த நித்ய நைமித்திக கர்மங்களிலிருந்து வேறுபட்ட காம்யகர்மங்களையே இங்கு கூறுவதாகக் கொள்ளவேண்டும். "மோக்ஷம் தவிர்ந்த ப2லனுக்காக அநுஷ்டி2க்கப்படும் காம்ய கர்மங்களால் மோக்ஷத்திற்குத் தடையான இம்மைப்பலன்களன்றோ விளையும்?" என்னும் கேள்வியெழ, (ஸதா3 மத்3வ்யபாஶ்ரய: குர்வாண:) எப்போதும் என்னிடத்தில் ப2லம் கர்த்ருத்வம் முதலானவற்றை ஸமர்ப்பித்து அநுஷ்டி2ப்பானாகில், தடையான அப்ப2லன்கள் கிடைக்காது; மோக்ஷமே கிடைக்கும் என்று கருத்து. (மத்ப்ரஸாதா3த்) மோக்ஷப2லனை அருளவல்ல என்னுடைய அருளாலே. சென்றஶ்லோகத்தில் ப4க்தியினால் அடைவதாகக் கூறிய போதிலும், உண்மையில் எனது நிர்ஹேதுககிருபையாலேயே அடைகிறான் என்று கருத்து. (ஶாஶ்வதம் அவ்யயம் பத3ம்

भा ।। यस्मादेवं, तस्मात्,

चेतसा सर्वकर्माणि मयि संन्यस्य मत्परः ।
बुद्धियोगमुपाश्रित्य मच्चित्तस्सततं भव ।। ५७ ।।

57 சேதஸா, ஸர்வகர்மாணி, மயி ஸந்ந்யஸ்ய, மத்பர: ।
பு3த்3தி4யோக3முபாஶ்ரித்ய, மச்சித்தஸ் ஸததம் ப4வ ।

சேதஸா — (ஆத்மா என்னுடையது, என்னால் நியமிக்கப்படுவது என்னும்) நினைவோடு, ஸர்வகர்மாணி — எல்லாக்கர்மங்களையும், மயி ஸந்ந்யஸ்ய— என்னிடத்தில் ஸமர்ப்பித்து. மத்பர: — என்னையே ப2லனாக நினைப்பவனாய், பு3த்3தி4யோக3ம் உபாஶ்ரித்ய — முற்கூறப்பட்ட பரித்யாக3ங்களை உடையவனாய், ஸததம் — எப்போதும், மச்சித்த: ப4வ — என்னிடம் நெஞ்சு செலுத்துபவனாக ஆவாயாக.

57. நெஞ்சாற் கருமமெல்லா நேராக வென்னிடைவைத்
தெஞ்சாம லெற்பரனா யெந்நாளுந்— துஞ்சாத
புத்தியோ கத்தைப் புணர்ந்து பொருவிலென்றன்
பத்தியோ கப்பெறுநீ பார்த்து.

நெஞ்சால் — (என்னுடையவன் என்றும் என்னால் ஆளப்படுகிறவன் என்றும் அறிகின்ற) மனத்தைக் கொண்டு, கருமம் எல்லாம் — எல்லாக்கருமங்களையும். நேராகஎன்னிடைவைத்து-நேரேஎன்னிடத்தில் ஸமர்ப்பித்து, எஞ்சாமல் எற்பரனாய் — என்னையே நிறைவான ப2லனாகக் கொண்டு. எந்நாளும் துஞ்சாத — எப்போதும் அழியாத,

அவாப்நோதி) நிலையானதாய், குறைவற்ற ப்ராப்யமான என்னை அடைகிறான். சென்றஶ்லோகத்தில் சொன்ன ப2லனையே இங்கும் கூறுகிறான் என்பது 'நிலையானதாய்' 'குறைவற்றதாய்' என்னும் விசேஷணங்களால் விளங்குகையாலே, பத3ம் என்னும் சொல்லும் "பத்3யதே—க3ம்யதே இதிபத3ம்" [அடையப்படுகிறதாகையால் 'பத3ம்' என்று ப்ராப்யத்தைச் சொல்லுகிறது.] என்னும் வ்யுத்பத்தியாலே 'ப்ராப்யம்' எனப் பொருள்படுகையாலே ப்ராப்யமான என்னை அடைகிறான் என்று பொருள் கூறப்பட்டது. 56.

भा ॥ चेतसा — आत्मनो मदीयत्वमन्नियाम्यत्वबुद्धया, उक्तं हि ＊ मयि सर्वाणि कर्माणि संन्यस्याध्यात्मचेतसा (३-३०) इति; सर्वकर्माणि सकर्तृकाणि साराध्यानि मयि संन्यस्य, मत्परः — अहमेव फलतया प्राप्य इत्यनुसंदधानः, कर्माणि कुर्वन्निममेव बुद्धियोगमुपाश्रित्य सततं मच्चित्तो भव ॥ ५७ ॥

---

புத்தியோகத்தைப் புணர்ந்து — (முற்கூறிய)பரித்யாகங்களை உடையவனாய், பார்த்து — ஆராய்ந்து, நீ — நீ, பொருவில் என்தன் — ஒப்பில்லாத என் விஷயமான, பத்தியோகம் பெறு — பக்தியோகத்தை அடைவாயாக.

---

57. இழந்த ராஜ்யத்தைப் பெறுவதற்காகச் செய்யப்படும் யுத்தமாகையாலே காம்ய கர்மம் எனத் தோன்றினும் மூவகையான பரித்யாகங்களோடும் செய்யப்பட்டால் அதுவே மோக்ஷ ஸாதநமாகும் என்று சொன்னான் சென்ற ஶ்லோகத்தில். ஆகையால் அத்தகைய பரித்யாகங்களோடு என்னிடம் நெஞ்சை வைத்து உனக்குரிய யுத்தம் முதலான கர்மங்களைச் செய்வாயாக என்கிறான் இந்த ஶ்லோகத்தில், (சேதஸா) 'ஜீவாத்மாவானது ஸர்வேஶ்வரனை என்னுடையது, என்னால் நியமிக்கப்படுவது' என்னும் நினைவோடு; 'சிந்தநம் செய்வது சேதஸ்' என்னும் வ்யுத்பத்தியாலே 'சேதஸ்' எனும் சப்தம் சிந்திக்கும்நெஞ்சைக் குறிப்பது. இங்கு ப்ரகரணத்துக்குப் பொருத்தமாக புத்தியாகிய நினைவைக் குறிப்பதாக பாஷ்யமிடப்பட்டது.

மயி ஸர்வாணி கர்மாணி ஸந்ந்யஸ்யாத்யாத்மசேதஸா।
நிராஶீர் நிர்மமோ பூத்வா யுத்யஸ்வ விகதஜ்வர: ॥
[கீதை—3—30]

[ஆத்மாவைப் பற்றியஅறிவோடு (அனுஸந்தானத்தோடு) எல்லாக் கர்மங்களையும் ஸர்வாந்தர்யாமியான என்னிடத்தில் நன்குவைத்து, கர்ம பலத்தில் விருப்பமற்றவனாகவும், கர்மங்களில் மமகாரமற்றவனாகவும் ஆகி, அநாதி பாபத்தைப்பற்றிக் கவலைப்படாதவனாய், போர் புரிவாயாக.] என்று மூன்றும் அத்தியாயத்திலும் சொல்லப்பட்டதன்றோ.

मच्चित्तस्सर्वदुर्गाणि मत्प्रसादात्तरिष्यसि ।
अथ चेत्त्वमहङ्कारान्न श्रोष्यसि विनङ्क्ष्यसि ॥ ५८ ॥

18-X-09.
12-1-11.

58. மச்சித்தஸ்ஸர்வதுர்க்காணி மத்ப்ரஸாதாத் தரிஷ்யஸி ।
அத² சேத் த்வமஹங்காராந்ந ஶ்ரோஷ்யஸி விநங்க்ஷ்யஸி॥

மச்சித்த: — என்னிடம் நெஞ்சுவைத்தவனாய் (முற்கூறியபடி எல்லாக்கர்மங்களையும் செய்தாயானால்), ஸர்வ துர்க்காணி-ஸம்ஸாரத்தில் கட்டிவைக்கும் எல்லாத்தடைகளை

---

இந்த ஶ்லோகத்தில் 'அத்⁴யாத்ம சேதஸா' என்னும் பதத்தில் 'சேத:' என்னும் மனத்தைக் குறிக்கும் பதம் மனத்தின் மூலம் வெளிவரும் ஜ்ஞாநத்தைக் குறிக்கிறது. 'அத்⁴யாத்ம சேதஸா ஸந்ந்யஸ்ய' என்றது ''ஆத்ம ஸ்வரூப விஷயமாக நூற்றுக்கணக்கான ஶ்ருதிஸ்ம்ருதிகளிலிருந்து உண்டாகும் ஞானத்தாலே என்னிடத்தில் எல்லாக் கர்மங்களையும் நன்கு வைத்து'' என்று பொருள் படுகிறது. அதுவே ''சேதஸா மயி ஸந்ந்யஸ்ய'' என்று இங்கு சொல்லப்படுகிறது. (ஸர்வ கர்மாணி மயி ஸந்ந்யஸ்ய) எல்லாக் கர்மங்களையும் என்னிடத்தில் ஸமர்ப்பித்து, 'ஸர்வ' ஶப்³தம் எல்லாக் கர்மங்களையும் குறிப்பதோடல்லாமல் கர்மங்களோடு சேர்ந்திருக்கும் 'கர்த்தா' 'ஆராதிக்கப்படும் தே³வதை' ஆகியவற்றையும் குறிக்குமாகையாலே ''எல்லாக் கர்மங்களையும் கர்த்தாவோடும் தேவதையோடும் கூட என்னிடம் ஸமர்ப்பித்து, என்று பொருள் படுகிறது. (மத்பர:) 'நானே பலனாக அடையத்தக்கவன்' என்று அநுஸந்திப்பவனாய். (பு³த்³தி⁴யோக³ம் உபாஶ்ரித்ய) இங்கு முமுக்ஷுவுக்கு அவசியம் வேண்டுபவையாகச் சொல்லப்பட்ட அகர்த்ருத்வாநுஸந்தானமுதலான பு³த்³தி⁴களோடு கூடியவனாய், (மச்சித்த: ஸததம் ப⁴வ) எப்போதும் என்னிடத்தில் நெஞ்சை வைப்பாயாக. ஆக, யுத்³த⁴ம் முதலான காம்ய கர்மங்களும் மூவகையான பரித்யாகங்களோடு செய்யப்பட்டால் மோக்ஷஸாத⁴நமாகுமாகையாலே அத்தகைய பரித்யாகங்களோடு என்னிடம் நெஞ்சை வைத்து உனக்குரிய யுத்³த⁴ம் முதலான கர்மங்களைச் செய்வாயாக என்று சொல்லிற்றாயிற்று. 57

भा ॥ एवं मच्चित्तस्सर्वकर्माणि कुर्वन् सर्वाणि सांसारिकाणि

யும், மத்ப்ரஸாதா₃த் — என் அருளாலே, தரிஷ்யஸி — தாண்டிவிடுவாய்; அத₂ — அப்படியல்லாமல், த்வம் — நீ. அஹங்காராத் — நானே எல்லாமறிந்தவன் என்னும் எண்ணத்தாலே, ந ஶ்ரோஷ்யஸி சேத் — நான் சொன்னதைக் கேட்காமலிருப்பாயாகில், விநங்க்ஷ்யஸி — அழிந்துவிடுவாய்.

58. என்னை நினைந்தநீ யென்றுமித் துர்க்கங்க
டன்னிகரி லென்னருளாற் றுங்கடத்தி — பின்னிதனை
யஹங்காரத் தாலே யமர்ந்துநீ கேளாயேற்
றுங்காதிங் கேநசித்தி தான்.

என்னை நினைந்த நீ — என்னிடம் நெஞ்சை வைத்தவனை நீ (முற்கூறியபடி எல்லாக்கர்மங்களையும் செய்தாயானால்), இத்துர்க்கங்கள் - ஸம்ஸாரத்தில்கட்டிவைக்கும் எல்லாத் தடைகளையும், தன்னிகரில் என் அருளால்தான் — ஒப்பற்ற என்னுடைய அருளாலே, என்றும் கடத்தி — எப்போதும் தாண்டி விடுவாய்; பின் — அப்படியல்லாமல், ஆங்காரத் நானே எல்லாமறிந்தவன் என்னும் எண்ணத்தாலே. தாலே — இதனை - நான் சொன்னதை, நீ - நீ. அமர்ந்து கேளாயேல் — நன்கு கேட்காவிட்டால், இங்கே தாங்காது — இவ்வுலகில் ஸத்தை பெறுமல், நசித்திதான் — ஆத்மநாசத்தை அடைந்துவிடுவாய்.

58. மூன்று வகைப்பட்ட பரித்யாக₃ங்களோடு உனக்கு ஸ்வத₄ர்மமான யுத்₃த₄ம் முதலான கர்மங்களைச் செய்யவேண்டுமென்று சென்ற ஶ்லோகத்தில் கூறினன். அப்படிச் செய்தால் ஸம்ஸாரத் துன்பங்களையெல்லாம் தாண்டலாம் என்றும், அப்படிச் செய்யாவிட்டால் ஆத்மநாசத்தையே அடைவாய் என்றும் கூறுகிருன் இந்த ஶ்லோகத்தில். (மச்சித்த:) முன் ஶ்லோகத்தில் சொன்னபடி என்னிடம் நெஞ்சை வைத்தவனுய் மூன்றுவகைப்பட்ட பரித்யாகங்களோடு எல்லாக் கர்மங்களையும் செய்பவனுயிருக்கும்

दुर्गाणि मत्प्रसादादेव तरिष्यसि । अथ त्वम्, अहंकारात् - अहमेव

---

நீ: ஶ்லோகத்தில் பிற்பாதியிலிருக்கும் 'த்வம்' என்னும் பத3த்தை இங்குக் கூட்டிக்கொள்ளவேணும். 'மச்சித்த:' என்று முன் ஶ்லோகத்தில் சொன்னபதத்தையே இங்கு இடுவதனாலும், மேல் ஶ்லோகங்களில் யுத்3த4த்தைச் செய்யவேண்டுமென்று வலியுறுத்துவதினாலும், இந்தஶ்லோகத்திலும் மோக்ஷஸாத4நமாகச் சொல்லுகையாலும் 'மச்சித்த:' என்பதற்கு இவ்வளவும் பொருள் கொள்ள வேண்டும். (ஸர்வது3ர்க்க3ாணி தரிஷ்யஸி) ஸம்ஸாரத்தில் உன்னைக் கட்டிவைக்கும் எல்லாத் தடைகளையும் தாண்டுவாய். 'து3ர்க்க3' ஶப்3த3ம் மலையரண், காட்டரண், நீரரண் முதலான அரண்களையே பிரஸித்தமாகக் குறிக்குமாயினும், போர் புரியவிருக்கும் அர்ஜுனனுக்கு அவற்றைத்தாண்டுவது அவசியமாயினும் முன்பின் ஶ்லோகங்களையொட்டிப் பார்க்கும் போது மோக்ஷத்திற்குத் தடையாய் ஸம்ஸாரத்தில் கட்டிவைக்கும் தடைகளே இங்கு பொருளாக அடுக்கும். (மத்ப்ரஸாத3ாத் தரிஷ்யஸி) 'ஸர்வஸ்வாமியாய்ஸர்வநியந்தாவான கண்ணன் சொன்னதை அவனுக்கு தா3ஸனாய் அத்யந்த பரதந்த்ரனான நாம் செய்யவேண்டும்' என்னும் நினைவுடன் போர் முதலான கர்மங்களைச் செய்தாயானால் என்னுடைய நிர்ஹேதுக க்ருபையினாலேயே நீ ஸம்ஸாரத்தைத் தாண்டி விடுவாய். அவ்வளவு பக்குவமில்லாவிடினும் யுத்3த4ம் முதலான கர்மங்களைக் கர்ம யோக3மாக அனுஷ்டித்தால் மோக்ஷஸாத4நமாகும் என்று நான் சொன்னதைப் பின்பற்றிப் போர் புரிந்தாயானாலும் அந்தக் கர்ம யோக3த்தால் உகந்த என் அருளாலே ஸம்ஸாரத்தைத் தாண்டிவிடுவாய் என்று கருத்து. 'மத் ப்ரஸாத3ாத்' என்றதால் ''கர்மத்தின் ப2லனாக ஒரு அபூர்வம் உண்டாகிறது. அதுவே ப2லனளிக்கிறது'' என்று ச்ருதி, ஸ்ம்ருதி முதலானவற்றுக்கு முரணாக மீமாம்ஸகர்கள் கூறும் கற்பனை தவறு; கர்மத்தால் உகந்த என் அருளாலேயே பலன் கிடைக்கிறது என்று உணர்த்தப்படுகிறது. நான் அருள் புரிவதற்கு, ''எனக்கு எல்லாம் தெரியும். நீ என்ன சொல்லுவது'' என்னும் எண்ணம் மாறினால் போதும்என்றும் உணர்த்தப்படுகிறது. ஆக, இவ்வளவால் நித்ய நைமித்திக காம்யங்களாகிற மூன்று வகைப்பட்ட கர்மங்களும் முற்கூறிய பு3த்3தி4 விசேஷ நியமங்களோடு அனுஷ்டிக்கப்பட்டால், கர்ம யோகம் என்று பெயர் பெற்று பரம்பரயா ஸம்ஸாரத்தைத் தாண்டச் செய்து பரம புருஷனை அடைவித்து விடுமாகையால்

कृत्याकृत्यविषयं सर्वं जानामीति भावात्, मदुक्तं न श्रोष्यसि चेत्, विनङ्क्ष्यसि -- विनष्टो भविष्यसि नहि कश्चिन्मद्व्यतिरिक्तः कृत्स्नस्य प्राणिजातस्य कृत्याकृत्ययोर्ज्ञाता प्रशासिता वाऽस्ति ॥ ५८ ॥

---

கர்மயோகமே உனக்குச் செய்யத்தக்கது என்று சொல்லப்பட்டது. இதைச் செய்யாவிட்டால் வரும் தோஷத்தை ஶ்லோகத்தின் பிற்பாதியால் கூறுகிறான். (அத$_2$) இப்படியல்லாமல். (த்வம் அஹங் காராத் ந ஶ்ரோஷ்யஸி சேத்) ''நானே செய்யத்தக்கது, செய்யத் தகாதது அனைத்தையும் அறிவேன்'' என்னும் துரபிமானத்தாலே நீ நான் சொன்னதைக் கேட்காமலிருந்தாயானால்; ஆப்தனாகிற கண்ணன் சொன்னதைக் கேட்காமலிருக்கைக்குக் காரணம் ''எனக்கு எல்லாம் தெரியும்'' என்னும் நினைவே என்று 'அஹங் கார' ஶப்தத்தால் உணர்த்தப்படுகிறது. ''ந ஶ்ரோஷ்யஸி சேத்'' [கேட்கவில்லையானால்] என்றது கேட்டு அதன்படி நடக்கவில்லையா னால் என்று பொருள்படும். (விநங்க்ஷ்யஸி) ஆத்ம நாசத்தை அடை வாய்; அநாதிகாலமாக ஜ்ஞானமும் அதற்குத்தக்க அனுஷ்டானமும் இல்லாமையாலே இருந்தும் இல்லாததுபோல் இருந்த உன் ஆத்மா மேல்வரும் காலத்திலும் அப்படியே ஆகிவிடும் என்று கருத்து. ''பு$_3$த்$_3$தி$_4$ நாஶாத் ப்ரணஶ்யதி'' [கீதை 2-63] [அறிவு கெட்டால் நாசத்தையடைகிறான்] என்று முன் சொல்லப்பட்டதை நினைவுறுத்து கிறான், ''உலகிலுள்ள எல்லா உயிர்களுக்கும் 'செய்யத்தக்கது இன்னது, செய்யத் தகாதது இன்னது' என்பதை அறிவதற்கும் அதற்குத் தக்கபடி அவர்களை நியமிப்பதற்கும் என்னைக் காட்டிலும் வேறொருவன் இல்லையாகையால், என் வார்த்தையைக் கேட்காத நீ அழிந்து நிச்சயம்'' என்று கருத்து. உலகில் நல்லதைச் சொல்லும் மற்றவர்கள் சிலர் இருந்தபோதிலும் அவர்களும் என்னால் நியமிக்கப் பட்டு ஒரு சில விஷயங்களையே கூறுகிறார்கள். நானோ எல்லா அதி$_4$காரிகளுக்கும் எல்லாவிதமான நன்மை தீமைகளையும் அறிந்தவன். மற்ற ஆப்தர்கள் கூறும் வாக்கியங்களும், எவராலும் இயற்றப்படாத வேதங்களும் என் ஆணையாய் இருப்பதாலேயே ப்ரமாணமாய் உள்ளன. ஆகையால் என் வார்த்தையைக் கேட்கா விட்டால் உய்வடைய உனக்கு வேறுவழியில்லை என்றபடி. 58

यदहङ्कारमाश्रित्य न योत्स्य इति मन्यसे ।
मिथ्यैष व्यवसायस्ते प्रकृतिस्त्वां नियोक्ष्यति ॥ ५९ ॥

18-X-09.
13-1-11.

59. யத்₃யஹங்காரமாஶ்ரித்ய, ந யோத்ஸ்ய இதி, மந்யஸே |
மித்₂யைஷ வ்யவஸாயஸ்தே ப்ரக்ருதிஸ்த்வாம்
நியோக்ஷ்யதி ||

அஹங்காரம் ஆஶ்ரித்ய — நன்மை தீமைகளை அறிவதில் நானே வல்லவன் என்னும் எண்ணத்தை மேற்கொண்டு (என்னுடைய ஆணையைமீறி), ந யோத்ஸ்யே இதி —"நான் போர்புரியமாட்டேன்" என்று, யதி₃ மந்யஸே — நினைப்பாயானல், ஏஷ: தே வ்யவஸாய: — இந்த உன்னுடைய உறுதி, மித்₂யா — பொய்யாகவே ஆகிவிடும்; (ஏனெனில்) ப்ரக்ருதி: — மூலப்ரக்ருதியின் காரியமான உன் ஶரீரம், த்வாம் — உன்னை, நியோக்ஷ்யதி — போர்புரியும்படி செய்துவிடும்.

---

59. ஓங்குமகங் காரத்தி லுற்றே யுயர்சமர
மீங்குமுய லேனென் றிருத்தியே — லாங்குநிறை
மேவுந் துணிவதுவு மெய்யன்று தன்மையுனை
யேவுஞ் சமரத்தி லேய்ந்து.

ஓங்கும் அகங்காரத்தில் உற்றே — (எனக்கு நன்மை தீமைகளை நானே அறிவேன் என்னும்) மிகுதியான அஹங்காரத்தை அடைந்து, (என் வார்த்தையைக் கேளாமல்), உயர் சமரம் ஈங்கு முயலேன் என்று இருத்தியேல் — சிறப்புடைய போரை இப்போர்க்களத்தில் செய்யமாட்டேன் என்று இருந்து விட்டாயானல், ஆங்கு நிறைமேவும் துணிவு அதுவும் — உன்னிடத்தில் நிறைந்திருக்கும் அந்தத் துணிவும், மெய் அன்று — பொய்யாகிப்போகும். தன்மை — உன் சரீரம். உனை — உன்னை, சமரத்தில் — போர்புரிவதில், ஏய்ந்து ஏவும் — நன்கு தூண்டிவிடும்.

भा ॥ यदहङ्कारम् — आत्मनि हिताहितज्ञाने स्वातन्त्र्याभिमानम्, आश्रित्य मन्नियोगमनादृत्य न योत्स्य इति मन्यसे, एष ते स्वातन्त्र्यव्यवसायो मिथ्या भविष्यति; यतः प्रकृतिस्त्वां युद्धे नियोक्ष्यति — मत्स्वातन्त्र्योद्विग्नं त्वामज्ञं प्रकृतिर्नियोक्ष्यति। ५९ ॥

---

59. முன் ஶ்லோகத்தில் ''நான் சொன்னதைக் கேளாமல் போர் புரிவதினின்றும் நீ கைவாங்கினால் ஆத்ம நாசத்தை யடைவாய்'' என்றான். இந்த ஶ்லோகத்தில், 'போர்புரிவதிலிருந்து நீ மீளவே முடியாது'' என்கிறான். அன்றிக்கே, ''கர்மயோகம் என்றால் செய்யத்தக்கதானாலும், போர்புரிவதைத் தவிர வேறுவகைப் பட்ட கர்மயோகத்தைக் கைக்கொண்டு என்விநாசத்தை நான் தவிர்த்துக் கொள்ளலாமே'' என்று அர்ஜுனனுக்குக் கருத்தாகக் கொண்டு ''எப்படியாயினும் நீ போர்புரிவதைத் தவிர்க்கமுடியாது'' என்கிறான் இந்த ஶ்லோகத்தில் என்றும் கொள்ளலாம். (அஹங்காரம் ஆஶ்ரித்ய) 'எனக்கு நன்மை தீமைகளை அறியவல்லவன் நானே' என்னும் ஸ்வாதந்த்ர்யாபிமானத்தை அடைந்து, அது காரணமாக என்னுடைய ஆணையைமீறி (ந யோத்ஸ்யே இதி யத் மந்யஸே) 'நான் போர்புரியமாட்டேன்' என்று நீ நினைப்பாயானால்; இது அஹங்காரங்கொள்வதின் பலனாகும். சென்ற ஶ்லோகத்தில் ''அஹங்காராத் ந ஶ்ரோஷ்யஸி சேத்'' என்றதையே இந்த ஶ்லோகத்தின் முற்பாதியால் விவரிக்கிறான். (ஏஷ தே வ்யவஸாய: மித்யா) ''என் நன்மைதீமைகளை நிர்ணயிப்பதற்கு நானே வல்லவன்'' என்ற இந்த உன்னுடைய ஸ்வாதந்த்ர்யாபிமானத்தால் ஏற்பட்ட உறுதி பொய்யாகவே போகிறது 'என்னுடைய நன்மை தீமைகளை அறிய நானே வல்லவன்' என்பது ஸ்வாதந்த்ர்யாபிமாநம். 'நான் போர்புரியமாட்டேன்' என்னும் உறுதி அதனால் ஏற்பட்ட ஸ்வாதந்த்ரிய வ்யவஸாயம் என்றறியத்தக்கது. பொய்யாகப் போகிறது என்பது எப்படி என்னும் கேள்விக்குக் கடைசிப் பாதத்தில் பதில்கூறுகிறான் — (ப்ரக்ருதி: த்வாம் நியோக்ஷ்யதி) மூலப்ரக்ருதியின் கார்யமான உன் சரீரம் உன்னைப் போர் புரியும்படி தூண்டிவிடும். இங்கே ப்ரக்ருதி சப்தம் ப்ரக்ருதியின் கார்யமான சரீரத்தைக் குறிக்கிறது. 'அசேதநமான ப்ரக்ருதி என்னை எப்படி நியமிக்க முடியும்' எனில் — ''நான் சொல்லியபடி செய்தால் உன் காரியம் அனைத்தும் ஸர்வஜ்ஞனான என்னுடைய பொறுப்பாகிவிடும். என்னுடைய ஆணையை மீறினாயானால் நான் உதாஸீனனாய் இருப்பேன். அப்போது சரீரத்திற்குப் பரதந்த்ரனான நீ தவறான வழியிலேயே செல்வாய் என்று கருத்து. 59

भा ॥ तदुपपादयति —

स्वभावजेन कौन्तेय निबद्धः स्वेन कर्मणा ।
कर्तुं नेच्छसि यन्मोहात्करिष्यस्यवशोऽपि तत् ॥ ६० ॥

60. ஸ்வபா4வஜேந கௌந்தேய நிப3த்3த4: ஸ்வேந கர்மணா।
கர்த்தும் நேச்ச2ஸி யந்மோஹாத் கரிஷ்யஸி
அவஶோऽபி தத் ॥

கௌந்தேய — குந்திபுத்திரனே! ஸ்வபா4வஜேந — உன் முன்வினையால் உண்டான, ஸ்வேந கர்மணா — ஶௌர்யமாகிற உனக்குரிய கர்மத்தால், நிப3த்3த4: — கட்டுப்பட்டவனாய், அவஶ: — அதனாலேயே உன் ஶரீரத்திற்கு வசப்பட்டவனாய், — யத் மோஹாத் கர்த்தும் ந இச்ச2ஸி தத் — யாதொரு போரை அறிவின்மையால் நீ செய்ய விரும்பாதிருக்கிறாயோ, அதை — கரிஷ்யஸி அபி — (என் ஆணையை மீறினாலும் வேறொரு காரணத்தால்) நீ செய்யத்தான் போகிறாய்.

---

60. தன்மையமர் தன்கருமந் தன்னாற் பிணிப்புண்டு
நன்மை யமர்ந்தவமர் நாணிநீ - யுன்மருவு
மோகத்தால் மீண்டிடினு மூண்டே யவசனாய்
வேகத்தாற் செய்வுதிநீ மிக்கு,

தன்மை அமர் தன்கருமம் தன்னால் — உன் முன்வினையால் உனக்குரிய ஶௌர்யமாகிற செயலால், பிணிப்புண்டு — கட்டுப்பட்டவனாய், அவசனாய் — (அதனாலேயே உன் சரீரத்திற்கு வசப்பட்டவனாய், — உன் மருவு மோகத்தால் — உன்னையடைந்திருக்கும் அறிவின்மையால், நாணி — (உறவினர் முதலானோரைக் கொல்வதற்கு) வெட்கமுற்று, நீ — நீ, நன்மை அமர்ந்த அமர் மீண்டிடினும் — (இப்போது) நன்மையை விளைக்கும் போரிலிருந்து வைாங்கினாலும், வேகத்தால் மூண்டே - (பிறர் அவமதிக்கும்போது) உண்டான வேகத்தாலேபோரிட முற்பட்டு, மிக்கு செய்வுதி — மிகுதியாகப் போர் புரியவே போகிறாய்.

भा ॥ स्वभावजं हि क्षत्रियस्य कर्म शौर्यम्, स्वभावजेन शौर्याख्येन स्वेन कर्मणा निबद्धः, तत एवावशः, परैर्धर्षणमसहमानस्त्वमेव तद्युद्धं करिष्यसि, यदिदानीं मोहात् -- अज्ञानात् कर्तुं नेच्छसि ॥ ६० ॥

---

60 "என் ஆணையை மீறி நீ 'போர்புரிய மாட்டேன்' என்று உறுதி கொண்டாலும் உன் சரீரம் உன்னைப் போர் புரியும்படி நியமித்து விடும்" என்று சென்ற ஶ்லோகத்தில் சொன்னதை விளக்குகிறான். (ஸ்வபா4வஜேந ஸ்வேந கர்மணா) முன்வினையால் உண்டான உனக்குரிய ஶௌர்யமாகிற செயலாலே, "ஸ்வபா4வப்ரப4வைர்கு3ணை:" என்று நாற்பத்தோராவது ஶ்லோகத்திலும், "ஶௌர்யம் தேஜ:...க்ஷாத்ரம் கர்ம ஸ்வபா4வஜம்" என்று நாற்பத்துமூன்றாவது ஶ்லோகத்திலும் உள்ளபடி 'ஸ்வபா4வ' ஶப்3த3ம முன்வினையைக் குறிக்கும். 'ஸ்வேந கர்மணா' என்றது நாற்பத்து மூன்றாவது ஶ்லோகத்திலுள்ள ஶௌர்யமாகிற க்ஷத்திரியனுக்குரிய செயலைக் குறிக்கும். ஶௌர்யமாவது—ப4யமில்லாமல் எதிரிகளின் ஸேனையில் நுழையும் திறமை. (நிப3த்3த4:) சௌர்யத்தால் கட்டுப் பட்டிருக்கும் நீ வாஸநா ப3லத்தாலும் இயல்வான ருசிக்கு விஷயமாகையாலும் ஶௌர்யமாகிற கர்மம் உன்னைக்கட்டுப்படுத்தி விடும் என்று கருத்து. (அவஶ:) அதனாலேயே உன் இந்த்ரியங்களோடு கூடிய சரீரத்திற்கு வசப்பட்டவனாகிவிடுவாய்; அது எப்படியெனில்: யுத்3த4த்தை விட்டுக் கைவாங்கி நிற்கும் உன்னைக்கண்டு உன் எதிரிகள் 'பெரிய வீரனென்று பெயர்பெற்ற அர்ஜுனன் பயந்து விட்டான்' என்று அவமதிப்பார்கள். அதைப்பொறுக்கமாட்டாத உன் மனமும் அந்த மனத்திற்கு வசப்பட்ட உன் சரீரமும இந்த்ரியங்களும் உன்னைப் போர்புரியும்படி செய்துவிடும் என்று கருத்து. சென்றஶ்லோகத்தில் சரீரம் உன்னை நியமித்துவிடும் என்று சொன்னதை இந்த ஶ்லோகத்தின் பிற்பாதி விளக்குகிறது. (யத் மோஹாத் கர்த்தும் ந இச்ச2ஸி தத் கரிஷ்யஸி அபி) யாதொரு போரை அறிவின்மையால் நீ செய்ய விரும்பவில்லையோ, அந்தப் போரைச் செய்தே தீரப்போகிறாய். நான் சொன்னதை மீறி இப்போது நீ போர்புரிய மாட்டேனென்று கூறினாலும், விரைவிலேயே பிறரால் அவமதிக்கப்படும்போது நீ போர்புரியத்தான் போகிறாய். சரியானகாலத்தில் இப்போது த4ர்மயுத்3த4த்தை நீ கைவிட்டாலும், காலம் கடந்த பின்பு பிறருடைய அவமதிப்பைத் தாங்காமல். வெள்ளம் போனபின்பு அணை கட்டுவதைப் போலே போர்புரியத்தான் போகிறாய் என்று கருத்து.

Indiscriminate = தான் தோன்றித்தனமாக.



सर्वं हि भूतजातं सर्वेश्वरेण मया पूर्वकर्मानुगुण्येन प्रकृत्यनुवर्तने नियमितं, तच्छृणु ।

ईश्वरस्सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति ।
भ्रामयन्सर्वभूतानि यन्त्रारूढानि मायया ॥ ६१ ॥

19-X-09.
17-1-11.

61. ஈஶ்வரஸ் ஸர்வபூ₄தாநாம் ஹ்ருத்₃தே₃ஶே அர்ஜுந திஷ்ட₂தி ।
ப்₄ராமயந் ஸர்வபூ₄தாநி யந்த்ராரூட₄ாநி மாயயா ।

அர்ஜுந! — அர்ஜுனனே! ஈஶ்வர: — அனைவரையும் நியமிக்கும் வாஸுதே₃வன், ஸர்வபூ₄தாநாம் ஹ்ருத்₃தே₃ஶே — எல்லா உயிர்களுக்கும் (அறிவு உதயமாகும்) இதயமாகிற இடத்தில், யந்த்ராரூட₄ாநி — ப்ரக்ருதி கார்யமான சரீரமாகிற யந்திரத்தில் ஏறி நிற்கும், ஸர்வபூ₄தாநி — எல்லா உயிர்களையும், மாயயா — ஸத்வ ரஜஸ் தமோகுணமயமான மாயையாலே, ப்₄ராமயந் — அந்த குணங்களுக்கு அனுகுணமாக நடக்கச் செய்துகொண்டு, திஷ்ட₂தி — நிற்கிறான்.

---

61. ஈச னவனொருவ னெல்லா ரிதயமாந்
தேச மதினிற்குஞ் சீர்விசயா—பாசமுட
னெல்லா வுயிர்களையு மாயையினு லேதிரிக்க
வல்லா னியந்திரத்தில் வைத்து.

---

'மோஹாத்' என்றது தன் உபதேசத்தைஏற்றுக் கொள்ளாமையாகிற அறிவின்மையைக் குறிக்கிறது. (கௌந்தேய) குந்திபுத்ரனே! என் அத்தைபிள்ளையாகையாலே, என் வார்த்தையைக் கேட்காவிட்டால் உனக்கு நேரப்போகும் அனர்த்த₂த்தைப் பொறுக்க மாட்டாமல் இவ்வளவு தூரம் வற்புறுத்திக் கூறுகிறேன் என்று கருத்து. 60.

भा ॥ ईश्वरः— सर्वनियमनशीलो वासुदेवः सर्वभूतानां हृद्देशे-

---

சிர்விசயா — குணங்கள் மிக்க அர்ஜுனா! ஈசன் அவன் ஒருவன் — அனைவரையும் நியமிக்கும் ஒப்பற்ற வாஸு தேவன், எல்லார் இதயமாம் தேசம் அதில் — எல்லா உயிர்களுக்கும் (அறிவு உதயமாகும்) இதயமாகிற இடத்தில், எல்லா உயிர்களையும் — எல்லா ஜீவர்களையும், பாசமுடன் இயந்திரத்தில் வைத்து — (விஷயங்களில்) பற்றோடு கூடியவர்களாய், சரீரமாகிற இயந்திரத்தில்வைத்து, மாயையினாலே- (ஸத்வ ரஜஸ் தமோகுணமயமான ப்ரக்ருதியாகிற) மாயையினாலே, திரிக்கவல்லான் — அந்த குணங்களுக்கு அனுகுணமாக நடக்கச்செய்துகொண்டு, நிற்கும் — நிற்கிருன்.

---

61. சென்ற இரண்டு ஶ்லோகங்களிலும் ''என் ஆணையை மீறி இப்போது நீ போர் புரியாவிட்டால் நான் உதாஸீனனாய் உன்னைக் கைவிட்டு விடுவேன். அதனால் நீ உன் முன் வினைகளால் தூண்டப் பெற்று சரீரத்தின் வழிச்சென்று அழிந்துவிடுவாய்'' என்று கூறினான். அதற்கு மேல், '' நீ உதாஸீனனாய் இருந்தால் நான் எப்படிச் செயல் புரிய முடியும். நீ தூண்டாமலே நான் செயல் புரிய முடியுமானால் நீ எப்படி ஸர்வ காரணனாக முடியும்?'' என்று அர்ஜுனனுக்குக் கருத்தாகக் கொண்டு, அதற்கு ''எல்லாவுயிர்களும் ஸர்வேஶ்வரனான என்னால் பூர்வ கர்மங்களை அநுஸரித்து சரீரத்தின் வழியில் செல்லும் படி நியமிக்கப் பட்டுள்ளார்கள். அப்போதும் நான் அந்த சரீரேந்திரியங்களைக் கொடுத்து அவற்றைத் தரித்து நின்று நீ செயல்பட உதவிபுரிகிறேனாகையாலே என்னுடைய ஸர்வகாரணத்வத்திற்கும் குறையில்லை என்று பதில் கூறுகிருன் இந்த ஶ்லோகத்தில். (ஈஶ்வர:) அனைவரையும் நியமிக்கும் இயல்வுடைய வாஸுதேவன். 'ஈஶ்வர' ஶப்தம் நியமிப்பவனைக் குறிக்கும். இங்கு முன் பின் ப்ரகரணங்களையொட்டி அனைவரையும் நியமிக்கும் வாஸுதேவனைக் குறிக்கும். வாஸுதேவன், நாராயணன், விஷ்ணு முதலான பகவானுக்கே உரிய திருநாமங்கள் எல்லாவிடத்திலும் வியாபித்து அனைவரையும் நியமிப்பவன் வாஸுதேவனே என்று காட்டுகின்றன. ஆகையால்

அவனே முக்₂யமான ஈஶ்வரன் ஆவான். சிவன் முதலானோர் ஈஶ்வர ஶப்₃த₃த்தால் சொல்லப்பட்ட போதிலும், நாராயணனால் அளிக்கப் பட்ட சக்தியையுடையவர்களாய் ஒரு சிலரை நியமிப்பவர்களாகை யாலே, எல்லா உயிர்களின் ஹ்ருத₃யத்திலும் இருப்பதாக இங்கு சொல்லப்பட்ட ஈஶ்வரனாக முடியாது. வாஸுதே₃வனான கிருஷ்ணன் மயாऽத்₄யக்ஷேண ப்ரக்ருதி: ஸூயதே ஸசராசரம் | ஹேதுநாऽநேந கௌந்தேய! ஜக₃த்₃ விபரிவர்த்ததே || [9—10] [குந்தீபுத்ரனே! (என்னுடையதான) மூலப்ரக்ருதி தலைவனான என்னால் (தூண்டப்பட்டதாய்) அசைவனவும், அசையாதனவும் அடங்கிய உலகத்தை (ஜீவர்களின் கர்மாநுகு₃ணமாக) ஸ்ருஷ்டிக் கிறது; (ஜீவர்களின் கர்மாநுகு₃ணமான என் ஸங்கல்பமாகிற) இந்தக் காரணத்தால் முற்கூறிய உலகம் ஆவதும் வளர்வதும் அழிவதுமாக ஆகிறதன்றோ.] முதலானவிடங்களில் அனைவரையும் நியமிப்பவனாகத் தன்னையே குறித்திருக்கையாலே, இங்கு 'ஈஶ்வர' என்று படர்க்கையில் சொல்லியிருந்த போதிலும் இந்தப்பதம் வாஸுதேவனையே குறிக்கிறது. (ஸர்வபூ₄தாநாம் ஹ்ருத்₃தே₃ஶே திஷ்ட₂தி) எல்லாவுயிர்களின் ஹ்ருத₃யப் பிரதேசத்திலும் நிற்கிறான். ஈஶ்வரன் எல்லாவிடத்திலும் வியாபித்திருக்கையில் ஹ்ருதய ப்ரதேசத்தில் மட்டும் சிறப்பாக வியாபித்திருப்பதை இங்கு சொல்லுவதற்குக் கருத்தென்ன? எனில்—ஜீவர்கள் ஒவ்வொரு செயலையும் செய்வதற் கும் செய்யாமலிருப்பதற்கும் காரணமான ஜ்ஞானம் உண்டாகும் இடமாகையாலே அங்கிருந்து கொண்டு ஜீவர்களை ப்ரக்ருதியின் வழியே செல்லும்படி மயக்குகிறானாகையாலே அதைச் சிறப்பாகச் சொல்லுகிறான். "எதை உபகரணமாகக் கொண்டு என்ன செய்து கொண்டிருக்கிறான்?" என்னும் கேள்விக்குப் பதிலுரைக்கிறது ஶ்லோகத்தின் பிற்பாதி. எதை உபகரணமாகக் கொண்டு? என்ற கேள்விக்கு மாயையாகிற ப்ரக்ருதியை உபகரணமாகக்கொண்டு என்று பதில். என்ன செய்து கொண்டு? என்ற கேள்விக்கு யந்த்ரமாகிற ஶரீரத்தில் ஏறியிருக்கும் எல்லாவுயிர்களையும் மயக்கிக் கொண்டு என்று பதில். (யந்த்ராரூடா₄நி ஸர்வபூ₄தாநி) தன்னா லேயே படைக்கப்பட்ட தே₃ஹேந்த்₃ரிய நிலையிலிருக்கும் ப்ரக்ருதி யாகிய யந்த்ரத்தில் ஏறி நிற்கும் எல்லா உயிர்களையும். 'பூ₄த' ஶப்₃த₃த்தையும், ஹ்ருத₃யப்ரதேசத்தைக் குறித்திருப்பதையும்,

यन्त्रारूढानि सर्वभूतानि मायया भ्रामयन्--स्वेनैव निर्मित देहेन्द्रिया वस्थं प्रकृत्याख्यं यन्त्रमारूढानि सर्वभूतानि स्वकीयया सत्त्वादिगुण-

---

ஜீவர்களை மயக்குவதாகச் சொல்லியிருப்பதையும் பார்க்கும்போது யந்த்ரஶப்3த3ம் தே3ஹேந்த்3ரியங்களின் கூட்டையே குறிக்கும என்று விளங்குகிறது. 'மஹத: பரம் அவ்யக்தம்' என்று தொடங் கும் கட2வல்லீ மந்திரத்தில் 'அவ்யக்த' ஶப்3த3த்தாலே சரீரத்தைக் குறித்து, அடுத்தபடி 'ஶரீரம் ரத2மேவது' [கட2 3—3—11] என்று அதையே ரத2மாகிற யந்த்ரமாக அவ்வுபநிஷத்து உருவகப்படுத்து கையாலே இங்கு யந்த்ரம் என்று சரீரத்தைக் குறிப்பது பொருத்த மாகும். ''ஸர்வாஜீவே ஸர்வஸம்ஸ்தே2 ப்3ருஹந்தே தஸ்மிந் ஹம்ஸோ ப்4ராம்யதே ப்3ரஹ்மசக்ரே | ப்ருத2க்3ஆத்மாநம் ப்ரேரிதாரம் ச மத்வா ஜுஷ்டஸ் ததஸ்தேந அம்ருதத்வமேதி ||'' [ஶ்வேதாஶ்வதர—1—6] [அனைவரையும் வாழவைப்பதும், அனை வருக்கும் இறுதியில் சேருமிடமாயிருப்பதும், மிகப்பெரியதுமான ப்3ரஹ்மமாகிற சக்ரத்தில் ஜீவன் மயக்கப்படுகிறான்; (மயக்குகின்ற) பரமாத்மாவையும் (மயங்கிக்கிடக்கும் ஶரீரமான) தன்னையும் வெவ்வேறாக அறிந்து அப்பரமாத்மாவாலே அருளப்பட்டவனாய் மோக்ஷமடைகிறான்.] என்ற ஶ்ருதியும் இவ்விடத்தில் ப்ரமாணமாக அறியத்தக்கது. இப்படி ஸ்வரஸமாகப் பொருள்கொள்ள இடமிருக் கும் போது 'யந்த்ராரூட4ாநி இவ' [யந்த்ரத்தில் ஏறியிருப்பனை போலே] என்று 'இவ' ஶப்3த3த்தை வருவித்துக் கொண்டு சங்கரர் பொருள் கொண்டது பொருந்தாது. (மாயயா ப்4ராமயந் திஷ்ட2தி) தை3வீ ஹ்யேஷா கு3ணமயீ மம மாயா து3ரத்யயா [7—*14] [என்னுடையதான இந்த முக்குணமயமான ப்ரக்ருதி தே3வனை என்னால் படைக்கப்பட்டதாகையாலே (எவராலும் தம் முயற்சியால் மாத்திரம்) கடக்க அரிதாயுள்ளது.] என்கிறபடியே தன்னுடைய தான ஸத்வாதி3கு3ணங்களோடு கூடிய மாயையாகிறப்ரக்ருதியாலே அந்த கு3ணங்களுக்கு அனுகு3ணமாக நடக்கச்செய்து கொண்டு நிற்கிறான். ''அஸ்மாந்மாயீ ஸ்ருஜதே விஶ்வமேதத் தஸ்மிம்ஶ் சாந்யோ மாயயா ஸந்நிருத்3த4:, மாயாம் து ப்ரக்ருதிர் வித்3யாந் மாயிநம் து மஹேஶ்வரம்'' [ஶ்வே 4—9] [மாயையைத் தூண்டும் மாயோன் இந்த மாயையாகிற ப்ரக்ருதியிலிருந்து இந்த உலகனைத் தையும் படைக்கிறான். அவனைக் காட்டிலும் வேறுபட்டவனான ஜீவன் அந்த உலகில் அந்த மாயையாலே கட்டுப்பட்டு நிற்கிறான்.

मत्या मायया गुणानुगुणं प्रवर्तयन्नित्यर्थः । पूर्वमप्येतदुक्तं * सर्वस्य चाहं हृदि सन्निविष्टो मत्तः स्मृतिर्ज्ञानमपोहनं च (१५. १५) इति; * मत्तः सर्वं प्रवर्तते (१०-८) इति च । * य आत्मनि तिष्ठन् (बृ ५ ७ २२) इत्यादिका श्रुतिश्च ॥ ६१ ॥

---

'மாயை' என்று சொல்லப்படுவது 'ப்ரக்ருதி' என்று அறிவாயாக; [மாயையைத்தூண்டும் மாயவனையே ஸர்வேஶ்வரன் என்று அறிவாயாக] என்று ஶ்ருதியும் இவ்வர்த்தத்தையே கூறிற்று. இப்படி ஜீவனை மாயவன் தூண்டுகிருன் என்ருல் அவனுக்குக் கர்த்ருத்வம் இல்லாமல் போய்விடுமே எனில்—முன்வினைகளை யொட்டி இவனுடைய சரீரத்தில் அமைந்திருக்கும் குணங்களுக்கு அனுகுணமாகவே தூண்டுகிருனுகையாலே இவனுடைய கர்த்ருத்வத்திற்குக் குறையில்லை. ஈஶ்வரன் ஜீவனை, பேய் பிசாசுகள் தம்மால் பிடிக்கப்பட்டவனைத் தூண்டுவது போலே தூண்டுவதில்லை. ஸத்வாதி குணங்கள் நிறைந்த பொருள்களை முன்னிட்டு ஏற்கனவே ஜீவனுக்குள்ள வாஸனையாலே உண்டான பற்றின் மூலமாகவே தூண்டுகிருனுகையாலே ஜீவனுடைய கர்த்ருத்வத்திற்கு எக்குறையுமில்லை. 'ப்₄ராமயந்' என்றது 'ப்₄ராமயந்' என்றபடி. 'மயக்கிக்கொண்டு' என்றுபொருள். குணனுகுணமாக நடக்கச் செய்து கொண்டு என்று தாத்பர்யம். இந்த ஶ்லோகத்தில் ஈஶ்வரன் என்று படர்க்கையில் சொல்லியிருந்த போதிலும் மாயையாகிற ப்ரக்ருதியைவிட்டு மயக்குவது மாயவனான கண்ணனுக்கே உள்ளது என்று அவனே சொல்லியிருப்பதை முதலிலேயே காட்டினேம், "ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி₃ ஸந்நிவிஷ்ட: மத்த: ஸ்ம்ருதிர் ஜ்ஞாநமபோஹநம் ச" [கீதை 15—15] [நான் எல்லா ஜீவர்களின் ஹ்ருத₃யத்திலும் இருக்கிறேன். என்னிடத்திலிருந்தே அவர்களுக்கு நினைவும், அறிவும், மறதியும் உண்டாகிறது] "மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே" [10—8] [என்னுலேயே பொருள்களனைத்தும் செயல் படுகிறது] என்னுமிடங்களிலும் இது சொல்லப்பட்டது. இவற்றுக்கெல்லாம் மூலமாக ப்₃ருஹதா₃ரண்யகத்தில் 'ய ஆத்மநி திஷ்ட₂ந்" [ப்₃ருஹ 5-7—22] [எவன் ஆத்மாவில் நிற்கிருனே] என்றும், ஸுபாலோபநிஷத்தில் "ஏஷ ஸர்வபூ₄தாந்தராத்மாऽபஹதபாப்மா தி₃வ்யோ தே₃வ ஏக ஏவ நாராயண:" [ஸுபா₃ல 7 வது கண்டம்] [இவனே எல்லா ஜீவர்களுக்கும் அந்தராத்மாவாய், தோ₃ஷமற்றானுய், பரமபதத்தில்

भा ॥ एतन्मायानिवृत्तिहेतुमाह—

तमेव शरणं गच्छ सर्वभावेन भारत ।
तत्प्रसादात्परां शान्तिं स्थानं प्राप्स्यसि शाश्वतम् ॥ ६२ ॥

19-x-09
18-1-11

62, தமேவ ஶரணம் க₃ச்ச₂ ஸர்வபா₄வேந பா₄ரத !
தத்ப்ரஸாதா₃த் பராம் ஶாந்திம் ஸ்தா₂நம் ப்ராப்ஸ்யஸி
ஶாஶ்வதம் ||

பா₄ரத — பரத குலத்தில் உதித்தவனே ! தம் ஏவ — அந்தப் பரமாத்மாவான என்னையே, ஸர்வபா₄வேந — எல்லாவகையாலும், ஶரணம் க₃ச்ச₂ — பின்பற்றுவாய்; தத்ப்ரஸாதா₃த் — அவனுடைய அருளாலே, பராம் ஶாந்திம்— எல்லாக் கர்மப₃ந்த₄ங்களிலிருந்தும் விடுதலையையும், ஶாஶ்வதம் ஸ்தா₂நம் ச — நிலையான மோக்ஷஸ்தா₂நமான பரமபத₃த்தையும், ப்ராப்ஸ்யஸி — அடைவாய்.

---

62. அந்தவவன் றன்னையே யாறுத வன்சரணுச்
சந்த முடனடைநீ தார்விசயா—முந்தவவன்
றன்னருளான் மேலான சாந்தியையுஞ் சாயாத
வன்பதமும் நீபெறுதி வாய்ந்து.

தார் விசயா — வெற்றிமாலை சூடிய அர்ஜுநனே! அந்த அவன் தன்னையே—அந்தப்பரமாத்மாவான என்னையே, சந்தமுடன் —எல்லா வகையாலும், நீ ஆறுத வன்சரணு அடை— நீ அழியாத வலிய உபாயமாக அடைவாய், முந்த அவன் தன் அருளால்—மேலான அவனுடைய அருளாலே, நீ—நீ, மேலான சாந்தியையும் — எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுதலையையும், சாயாத வன் பதமும் —அழியாத பரமபதத்தையும், வாய்ந்து பெறுதி — நன்கு பெறுவாய்.

---

எழுந்தருளியிருக்கும் ஒப்பற்ற தேவனான நாராயணன்] என்றும் சொல்லப்பட்டது. (அர்ஜுந!) வெளுத்தமனமுடையவனே! நீ சுத்தமான மனமுடையவனாய் இருப்பதும் உன் இதயத்திலிருக்கும் அவனுடைய நியமனத்தாலேயே என்று கருத்து. 61.

भा । यस्मादेवं, तस्मात्तमेव--सर्वस्य प्रशासितारमाश्रितवात्सल्येन त्वत्सारथ्येऽवस्थितम्, * इत्थं कुर्विति च शासितारं, सर्वभावेन--

---

62. எம்பெருமான் ஜீவர்களைத் தன் மாயையாலே ஹ்ருதயத்திலிருந்துகொண்டு ஆட்டிவைக்கிறான் என்று சொன்னான் சென்ற ச்லோகத்தில். ஸ்வதந்த்ரனான எம்பெருமான் அப்படி ஆட்டிவைக்கும்போது பரதந்த்ரனான ஜீவன் எப்படி அந்த மாயையைத் தாண்ட முடியும்? என்ற கேள்விக்குப் பதில் கூறுகிறான் இந்த ச்லோகத்தில். ஏழாம் அத்தியாயத்திலிருந்து தொடங்கி பரமாத்மாவான தானே உயிர்களுக்கு முக்கியமான ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் இருப்பவன் என்றும், மற்ற வஸ்துகளுக்கு உள்ள ப்ராப்யத்வமும் ப்ராபகத்வமும் தன்னால் அளிக்கப்பட்டவையே என்றும், செயற்கையானவையே என்றும் பலவிடங்களில் ஆங்காங்கு காட்டியிருக்கிறான். அந்த அரும்பொருளை இந்த ச்லோகத்திலும் வெளியிடுகிறான். (தமேவ) அனைவரையும் நியமிப்பவனாய், அடியானான உன்னிடம் வாத்ஸல்யத்தாலே உனக்கு ஸாரதியாய் இருப்பவனாய், யுத்தம் செய்யவேண்டுமென்று உன்னை நியமிப்பவனான அந்தப் பரவாஸுதேவனையே, சென்ற ச்லோகத்தில் ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தியான வாஸுதேவன் அஜ்ஞர்களாய் அசக்தரான ஜீவர்களை ஹ்ருத$_3$யத்திலிருந்துகொண்டு ஆட்டிவைக்கிறான் என்று சொல்லப்பட்டது. இப்படியிருக்கும்போது அஜ்ஞனாய் அசக்தனான நீ உன் காரியத்தைச் செய்துகொள்ள முடியாதென்றும், அவனையே உபாயமாகக் கொள்ளவேண்டுமென்றும் உணர்த்துகிறான். 'ஏவ' காரத்திற்கு — அனைவரையும் நியமிக்கை முதலான பரத்வத்திற்கு உறுப்பான குணங்களையும், ப$_4$க்தவாத்ஸல்யம் ப$_4$க்தபாரதந்த்ர்யம் முதலான எளிமைக்கு உறுப்பான குணங்களையும் உடைய அவனைத் தவிர வேறு எவரைக்கொண்டும் இந்த மாயையைப் போக்கடித்துக் கொள்ளமுடியாது என்று கருத்து. நான் செய்யவேண்டியதென்ன? எனில் (ஸர்வபா$_4$வேந ஶரணம் க$_3$ச்ச$_2$) "வாஸுதே$_3$வஸ் ஸர்வமிதி மாம் ப்ரபத்$_3$யதே ஸ மஹாத்மா" [7-19] [வாஸுதே$_3$வனே எனக்குப் பரமப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் தா$_4$ரகம் போஷகம் போ$_4$க்$_3$யம் முதலான எல்லாமாகவும் இருக்கிறான் என்று எண்ணி என்னைச் சரணமடைகிறான். அவனே மஹாத்மா] முதலான இடங்களில் சொன்னதுபோலே அந்தப் பரமபுருஷனை உனக்கு அந்தர்யாமியாகவும் உபதேசம் செய்யும் ஆசார்யனாகவும் பரமப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும், தாரகம் போஷகம் போ$_4$க்$_3$யம் முதலான எல்லாமாகவும் இருக்கிறான்

सर्वात्मना शरणं गच्छ सर्वात्मनाऽनुवर्तस्व । अन्यथाऽपि तन्मायाप्रेरितेन अज्ञेन त्वया युद्धादिकरणमवर्जनीयम्; तथा सति नष्टो भविष्यसि;

---

என்று எண்ணி அவனையே உபாயமாகக் கொள்ளுவாய். (ஶரணம் கச்ச) "உபாயே க்ருஹ ரக்ஷித்ரோ: ஶப்த: ஶரணம் இத்யயம் வர்த்ததே" [அஹிர்புத்-ஸம்ஹிதை 36—36] [உபாயம் வீடு ரக்ஷகன் என்னும் மூன்று பொருள்களை உடையது ஶரணம் என்னும் சொல்] என்கிறபடியே ஶரண ஶப்தம் உபாயத்தையும் ரக்ஷகனையும் குறிக்கும்; ஆகையால் அந்தப் பரமபுருஷனையேஎல்லாப் படியாலும் உன்னை ரக்ஷிப்பவனாக உறுதி கொள்வாய் என்றோ எல்லாப்படியாலும் உனக்கு உய்வுபாயமாக உறுதிகொள்வாய் என்றோ பொருள் கொள்ளவேண்டும். இப்படி அவனே தஞ்சமாயிருப்பதால் அவன் சொன்னதை எல்லாப்படியாலும் செய்வதொன்றே உன் கடமை; அதுவே ஶரணாகதி என்று கருத்து. "ந ஶ்ரோஷ்யஸி" [18—58] "ந யோதஸ்யே" [18—59] என்கிற ஶ்லோகங்களில் சொன்ன ஸ்வாதந்த்ர்யாபிமானத்தைக் கைவிட்டு நான் சொன்னபடி செய்வதே உனக்குத் தக்கது என்றபடி. இப்போது நான் சொன்னபடி நீ கேட்காவிட்டாலும், விரைவிலேயே பிறர் உன்னை அவமதிக்கும்போது, உன் ஸ்வபாவத்திற்கேற்ப அதைப்பொறுக்கமாட்டாமல் என்னுடைய மாயையினாலே தூண்டப்பட்டவனாய் அறிவற்ற நீ போர் புரியப்போவது தவிர்க்க முடியாதது. அப்படி நேர்ந்தால் உனக்கு ஸ்வரூபநாஶமே விளையும் என்பதை முன்னமே சொன்னேன். ஆகையால் பரத்வஸௌலப்யங்களையுடைய பரமபுருஷனான நான் சொன்னபடி உனக்குரிய தர்மமான யுத்தம் முதலானவற்றைச் செய்வாயாக என்பது ஶ்லோகத்தின் முற்பாதியின் திரண்டபொருள். இப்படித் தான் சொன்னதைக் கேட்டால் விளையும் பெரும்பயனைச் சொல்லுகிறான் ஶ்லோகத்தின் பிற்பாதியாலே. (தத் ப்ரஸாதாத்) அந்தப் பரவாஸுதேவனுடைய அருளாலே, 'ஸ்வாமியான அவன் சொல்லுவதை தாஸனான நான் கேட்டே தீரவேண்டும்' என்னும் எண்ணத்துடன் தயக்கமில்லாமல் சடக்கெனச்சொன்னபடி கேட்டாயானால் அது முக்ய ஶரணாகதியாய் அவனுடைய நிர்ஹேதுக க்ருபையாலே பெரும்பயனை நீ அடைவாய். பெரும்பயனான மோக்ஷத்தை அடைவதற்குக் கர்மயோகம் ஸாதனம் என்னும் நினைவுடன் நீ போர்புரிந்தாயானாலும், அங்கப்ரபத்தியோடு கூடிய அந்தக் கர்மயோகத்தால் உகந்த அந்தப்பரமபுருஷனுடைய அருளாலே நீ பெரும் பயனை அடைவாய் என்று கருத்து.

अतस्तदुक्तप्रकारेण युद्धादिकं कुर्वित्यर्थः। एवं कुर्वाणस्तत्प्रसादात् परां शान्ति—सर्वकर्मबन्धोपशमं, शाश्वतं च स्थानं प्राप्स्यसि। यदभि-

---

அப்பெரும் பயன்தான் யாதெனில்: அநிஷ்ட நிவ்ருத்தியாகவும் இஷ்ட ப்ராப்தியாகவும் இருவகையாயிருக்கும் என்று காட்டுகிறுன் இனி— (பராம் ஶாந்திம் ப்ராப்ஸ்யஸி) எல்லாக் கர்ம பந்தங்களிலிருந்தும் விடுதலையடைவாய். 58 வது ஶ்லோகத்தில் ''மத்ப்ராஸாதாத் ஸர்வதுர்க்காணி தரிஷ்யஸி''என்று சொன்ன அர்த்தத்தையே இங்கும் கூறுகிருன். 'ஶாந்தி' என்று பரமபுருஷார்த்தலக்ஷண மோக்ஷத்திற்குத் தடையாயிருக்குமவை நீங்கப் பெறுவதைச் சொல்லுகிறது. 'பராம் ஶாந்திம்' என்று 'ஶாந்தி'யை விசேஷித்ததாலே அத்தடைகள் மறுபடியும் எழும்பாதபடி முழுவதும் நீங்குவதைக் கூறுகிறது. ஆக, இவ்வளவால் அநிஷ்ட நிவ்ருத்தி சொல்லப்பட்டது. இனி, இஷ்டப்ராப்தியைக் கூறுகிருன்,—(ஸ்தாநம் ப்ராப்ஸ்யஸி ஶாஶ்வதம்) என் அருளாலேயே நிலையான மோக்ஷஸ்தானத்தையும் அடைவாய். 'தத்ப்ராஸாதாத்' என்பதை இங்கும் சேர்த்துக்கொள்ளவேண்டும், ''மத்ப்ரஸாதாத் அவாப்நோதி ஶாஶ்வதம் பதமவ்யயம்'' [56] என்று இஷ்டப்ராப்திக்கும் தன் அருளே காரணமென்று முன்னமே சொன்னுனன்றே. அங்கு'ஶாஶ்வதம் பதம்' என்று பரமப்ராப்யனுன தன்னை அடைவதையே இஷ்டப்ராப்தியாகக் கூறினுன். இங்கு ''ஸ்தாநம் ப்ராப்ஸ்யஸி ஶாஶ்வதம்'' என்கையாலே, ''தன்னை அப்படியடைவது ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களுக்கு இலக்கான ப்ராக்ருதமான இவ்வுலகிலல்ல; என்றும் நிலையாயிருக்கும் அப்ராக்ருதமான பரமபதத்திலேயே'' என்று காட்டுகிருன். 'ஶாஶ்வத' ஶப்தத்தாலே ''ஆப்ரஹ்ம புவநால்லோகா: புநராவர்த்திநோऽர்ஜுந'' [8-16] [அர்ஜுநு! (ப்ரஹ்மாண்டத்தினுள்ளிருக்கும்) ப்ரஹ்மலோகம்வரையில் உள்ள எல்லா உலகங்களும் அழிவை உடையவை] என்று சொல்லப்பட்ட பிரமன் தொடங்கியுள்ள அனைவருடைய ப்ராக்ருத லோகங்களையும் வேறுபடுத்துகிறது. இதிலிருந்து ''மோக்ஷத்திற்கு வேருரு லோகத்திற்குச் செல்லவேண்டியதில்லை. இங்கேயே மோக்ஷம் கிடைக்கிறது'' என்னும் அத்வைதிகளுடைய மதமும்,

धीयते श्रुतिशतैः — * तद्विष्णोः परमं पदं सदा पश्यन्ति सूरयः * ते ह नाकं महिमानस्सचन्ते, यत्र पूर्वे साध्यास्सन्ति देवाः (पु) * यत्र ऋषयः प्रथमजा ये पुराणाः (यजु॰ ४ ७ १३) * परेण नाकं निहितं

---

''ஸூக்ஷ்ம நிலையிலுள்ள மூலப்ரக்ருதியே மோக்ஷஸ்த2ாநம்'' என்றும், ''பிரமனின் ஸத்யலோகம் போலவே மோக்ஷஸ்த2ாநமான விஷ்ணுலோகமும் ப்ரக்ருதி மண்டலத்திலேயே இருக்கிறது'' என்னும் மதமும் கீதாசார்யன் உகந்ததல்ல என்று விளங்குகிறது. இவ்விஷயம் பலபல வேதவாக்யங்களிலும் முழங்கப்படுகிறது. அவையாவன:— ''தத்3விஷ்ணோ: பரமம் பத3ம் ஸதா3 பஶ்யந்தி ஸூரய:'' [ரிக்வேதம் விஷ்ணு ஸூக்தம் 1-2-7] [அந்த விஷ்ணுவினுடைய மேலான ஸ்த2ானத்தை நித்யஸூரிகள் எப்போதும் காண்கிறார்கள்.] என்று ருக்வேதம் விஷ்ணுஸூக்தம் முழங்கிற்று. இவ்வாக்யத்தில் 'ஸதா3 பஶ்யந்தி' என்றதால் எப்போதுமே ஸம்ஸாரஸம்ப3ந்த4மற்ற நித்ய ஸூரிகள் பரமபத3த்திலிருப்பது ஸித்திக்கிறது. 'விஷ்ணுவின் பரமபத3ம்' என்கையாலே, இங்கு பரமப்ராப்யமான விஷ்ணுவின் ஸ்வரூபத்தைச் சொல்லுவதும் ஸ்வரஸமாகாது. (2) ''தே ஹ நாகம் மஹிமாநஸ் ஸசந்தே யத்ர பூர்வே ஸாத்4யாஸ் ஸந்தி தே3வா:''[புருஷஸூக்தம் 18] [இதை அறிபவர்கள் மஹிமையுடையவர்களாய், பழமையானவர்களான நித்யஸூரிகள் வாஸம் செய்யும் பரமபதத்தை அடைகிறார்கள்.] என்று புருஷஸூக்தத்திலும் இவ்விஷயம் சொல்லப்பட்டது, இதில் 'பூர்வே தே3வா:' என்னும் பதங்களாலே 'பிரமன்' முதலான ப்ராக்ருத தே3வர்களுக்கும் முற்பட்டவர்கள் இவர்கள் என்றும், 'ஸாத்4யா:' என்றதாலே இவர்கள் சேதநர்களுக்குப் பரமப்ராப்யர்கள் என்றும் உணர்த்தப்படுகிறது. (3) ''யத்ர ருஷய: ப்ரத2மஜா யே புராணா:'' [யஜுர் 4-7-13] [இந்த ஸ்த2ானத்தில் ஆதிகாலத்திலிருந்தே இருப்பவர்களாய், பழையவர்களான ஜ்ஞானிகள் வாழ்கிறார்கள்] இந்த மந்திரத்திலும் 'ப்ரத2மஜா: புராணா:' என்னும் பதங்களாலே பிரமன் முதலான தேவர்களைக்காட்டிலும் வேறுபட்டவர்களான நித்யஸூரிகள் வாழும் ஸ்தானம் குறிக்கப்படுகிறது. (4) ''பரேண நாகம் நிஹிதம் கு3ஹாயாம்'' [தை-நா 10-21] [ப்ரக்ருதிமண்ட3லத்திற்கு அப்பாற்பட்டிருக்கும் பரமபதத்திலிருக்கும் பரம்பொருளே ஹ்ருத3ய கு3ஹையிலும் இருக்கிறது.]

गुहायां (ना) * यो अस्याध्यक्षः परमे व्योमन् (तै. ब्रा. २. ८. ९) * अथ यदतः परो दिवो ज्योतिर्दीप्यते (छा. ३. १३. ७) * सोऽध्वनः पारमाप्नोति तद्विष्णोः परमं पदम् (क. ३. ९) इत्यादिभिः ॥ ६२ ॥

---

(5) "யோ அஸ்யாத்4யக்ஷ: பரமே வ்யோமந்" [தைத்-ப்ரா 2-8-9] [பரமாகாசம் எனப்படும் பரமபதத்தில் இந்த ப்ரக்ருதி மண்டலத்திற்கு நிர்வாஹகனாயிருப்பவன் எழுந்தருளியிருக்கிறான்.] (6) " அத2 யத3த: பரோதி3வோ ஜ்யோதிர் தீ3ப்யதே" [ச2ாந் 3-13-7] [பரமபத3த்தில் பரஞ்சோதி ஒளிவீசுகிறது.] (7) "ஸோ$\mathcal{S}$த்4வந: பாரமாப்நோதி தத்3 விஷ்ணோ: பரமம் பத3ம்" [கட2 3-9] [முக்தியடையும் அந்த ஜீவன் ஸம்ஸாரமண்ட3லத்திற்கு அக்கரையை அடைகிறான். அதுவே விஷ்ணுவின் பரம பத3ம்] இந்த எல்லா வேத3வாக்யங்களிலும் மோக்ஷஸ்த2ானமானது ஸம்ஸாரமண்டலத்திற்கு அப்பாற்பட்டதொரு லோகமே என்று தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதுபோல் மற்றும் பல வேத3வாக்யங்களும் உண்டு. இதிஹாஸ புராணங்களிலும் ஆயிரக்கணக்கான வசனங்கள் இந்த ஸ்த2ானத்தை மிக விரிவாக விளக்கின. மஹாபா4ரதத்தில் "ரம்யாணி காமசாராணி விமாநாநி ஸபா4ஸ் தத2ா | ஆக்ரீட3ா விவித4ா ராஜந் பத்3மிந்யஸ்சாமலோத3கா:...ஏதேவை நிரயாஸ்தாத ஸ்த2ாநஸ்ய பரமாத்மந:||" [பா4ரத-ஸாந்தி-மோக்ஷ 193-4] [அந்தப் பரமாத்மாவின் உலகத்தில் அழகானவையாய் எங்கும் ஸஞ்சரிக்கக்கூடிய விமானங்களும், ஸபைகளும் உள்ளன. பலவிதமான விளையாடுமிடங்களும் தெளிந்த நீரையுடைய குளங்களும் உள்ளன. இவ்வுலகிலுள்ள ஸ்த2ானங்கள் அந்தப் பரமாத்மாவின் ஸ்த2ானத்தோடு ஒப்பிடும்போது நரகத்தையொக்கும்] என்று பா4ரதம் மோக்ஷத4ர்மத்திலும், " ஏகாந்திநஸ் ஸதா3 ப்3ரஹ்ம த்4யாயிநோ யோகி3நோ ஹி யே | தேஷாம் தத் பரமம் ஸ்த2ாநம் யத்3வை பஶ்யந்தி ஸூரய:||" [வி-பு 1-6-39] [எப்போதும் ப்3ரஹ்மத்தை தியானிப்பவர்களாய், அவன் ஒருவனையே ப்ராப்யமாகக் கொண்ட உபாஸகர்களுக்கு நித்யஸூரிகள் கண்டுகொண்டிருக்கும் மேலான ஸ்த2ானம் உரியதாகிறது] என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலும் சொல்லப்பட்டதைக் காணலாம். இப்படி ஆங்காங்கு கண்டுகொள்வது. (பா4ரத) பா4ரத குலத்தில் உதித்த நீ இந்த உத்தம ஸ்த2ானத்தை அடைவது தக்கது என்று கருத்து. 62.

इति ते ज्ञानमाख्यातं गुह्याद्गुह्यतरं मया ।
विमृश्यैतदशेषेण यथेच्छसि तथा कुरु ॥ ६३ ॥

63 இதிதே ஜ்ஞாநமாக்₂யாதம் கு₃ஹ்யாத் கு₃ஹ்யதரம் மயா]
விம்ருஶ்யைதத₃ஶேஷேண யதே₂ச்ச₂ஸி தத₂ா குரு ॥

இதி—இவ்வண்ணமாக, கு₃ஹ்யாத் கு₃ஹ்யதரம்—ரஹஸ்யங்கள் எல்லாவற்றைக் காட்டிலும் சிறந்த ரஹஸ்யமான, ஜ்ஞாநம் — (மோக்ஷத்திற்கு உறுப்பான) அறிவு, தே — உனக்கு, மயா — என்னாலே, ஆக்₂யாதம் — சொல்லப்பட்டது; ஏதத் — இதை, அஶேஷேண விம்ருஶ்ய — முழுவதும் ஆராய்ந்து, யத₂ா இச்ச₂ஸி — உன் தகுதிக்கு ஏற்றவாறு எதை விரும்புகிறாயோ, தத₂ாகுரு — அதை அநுஷ்டிப்பாயாக.

---

63. இவ்வாறு ஞானமுனக் கிங்கே யெழில்மறையிற்
செவ்வா மறைபொருளைச் செப்பினே—னெவ்வாறு
தன்னியல்வை யாராய்ந்து சார்ந்ததனை யிச்சித்தாய்
நின்னியல்வாற் செய்நீ நிகழ்ந்து.

இவ்வாறு – இவ்வண்ணமாக, ஞானம்—பலவகைப்பட்ட ஞானோபதேசங்களில், எழில் மறையில் செவ்வாம் மறை பொருளை—அழகிய ரஹஸ்யங்கள் எல்லாவற்றைக் காட்டிலும் சிறந்த ரஹஸ்யமான அர்த்த₂த்தை, உனக்கு — உனக்கு, இங்கே செப்பினேன் — இந்த கீதையில் சொன்னேன்; எவ்வாறும் தன்இயல்வை ஆராய்ந்து - எல்லாவகையாலும் உன் தகுதியை ஆராய்ந்து, எதனை— எந்த உபாயத்தை, நின் இயல்வாய் இச்சித்தாய் — உன் தகுதிக்குத் தக்கப்படி நீ விரும்பினாயோ, அதனை — அந்த உபாயத்தை, சார்ந்து—ஏற்றுக்கொண்டு, நீ நிகழ்ந்து செய் — (அதை) நீ நன்றாக அநுஷ்டிப்பாயாக.

भा ॥ इति — एवं ते मुमुक्षुभिरधिगन्तव्यं ज्ञानं सर्वस्माद्गुह्याद्

63. இவ்வண்ணமாக அர்ஜுனனைப் போர்புரிய வைப்பதை வியாஜமாகக்கொண்டு மோக்ஷ ஶாஸ்த்ரங்களின் ஸாரத்தை யெல்லாம் உபதேசித்து, எந்த நிஷ்டையை மேற்கொண்டாலும் நித்ய கர்மம் கைவிட இயலாததாகையாலே, அர்ஜுனன் போர்புரிந்தே தீரவேண்டும் என்று நிலைநாட்டினன். இனி, "ஸ ஹி த₄ர்மஸ் ஸுபர்யாப்தோ ப்₃ரஹ்மண: பத₃வேத₃நே" [ப₄ாரத – ஆஶ்வ 16-12] [அந்த த₄ர்மமே ப்₃ரஹ்மத்தின் ஸ்த₂ானத்தை அறிவதில் மிகவும் போதுமானது.] என்று சொன்ன ரீதியில் இனி இதற்குமேல் சொல்லவேண்டியது ஒன்றுமில்லை என்று உணர்த்துவதற்காக இதுவரையில் மோக்ஷஸாத₄னமாகச் சொன்னவை அனைத்தையும் பரிபூர்ணமாக விளக்கிவிட்டபடியால், அதில் உன் தகுதிக்கும் விருப்பத்திற்கும் ஏற்றதை நீ கைக்கொள்வாய் என்று கூறுகிருன் இந்த ஶ்லோகத்தில். (தே) "யச்ச்₂ரேய: ஸ்யாந் நிஶ்சிதம் ப்₃ரூஹி தந்மே ஶிஷ்யஸ் தேஹம் ஶாதி₄ மாம் த்வாம் ப்ரபந்நம்" [2-7] [(இவ்விஷயத்தில்) (எனக்கு) எது உறுதியாக நன்மை பயக்குமோ அதை எனக்குச் சொல்லுவாயாக. நான் உனக்கு சிஷ்யனுகிறேன். உன்னை ஶரணடைந்த என்னை சிக்ஷிப்பாயாக] என்று ப்ரபந்நனுகவும், சிஷ்யனுகவும் கேட்ட உனக்கு. (இதி) இவ்வண்ணமாகப் பதினெட்டு அத்தியாயங்களில். (மயா கு₃ஹ்யாத் கு₃ஹ்யதரம் ஜ்ஞாநம் ஆக்₂யாதம்) என்னுலே ரஹஸ்யங்களைக் காட்டிலும் அதிரஹஸ்யமான முமுக்ஷுக்கள் அறியவேண்டிய ஜ்ஞானம் அனைத்தும் சொல்லப்பட்டது. கர்மயோக₃விஷயமாகவும், ஜ்ஞாநயோக₃விஷயமாகவும், ப₄க்தியோக₃ விஷயமாகவும் அனைத்தும் விரிவாகச் சொல்லப்பட்டது. "மாமேவ யே ப்ரபத்₃யந்தே" [7-14] "ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்₃யதே வாஸுதே₃வஸ் ஸர்வமிதி" [7-19] "தமேவ ஶரணம் க₃ச்ச₂" [18-62] முதலானவிடங்களில் ஸ்வதந்த்ர ப்ரபத்தியையும் அங்க₃ப்ரபத்தியையும் உபதேசித்திருக்கிறேன். நாலாம் அத்தியாயத்தின் தொடக்கத்தில் அவதார ரஹஸ்ய ஜ்ஞாநத்தையும் உபதேசித்திருக்கிறேன். முதல் ஷட்கத்திலும் ஏழாம் அத்தியாயத்திலும் மற்றும் பலவிடங்களிலும் ஆத்மாவைப்பற்றிய உண்மை அறிவையும்

गुह्यतरं कर्मयोगविषयं ज्ञानयोगविषयं भक्तियोगविषयं च सर्वमाख्यातम्।

---

பலவிடங்களில்பரமாத்மாவாகியஎன்னைப்பற்றிய உண்மையறிவையும் உபதேசித்திருக்கிறேன். பதினைந்தாம் அத்தியாயத்தில் புருஷோத்தமவித்யையை உபதேசித்திருக்கிறேன். இவ்வண்ணமே முமுக்ஷுக்கள் அறியவேண்டும் அனைத்தையும் உபதேசித்திருக்கிறேன் என்று கருத்து. (கு3ஹ்யாத் கு3ஹ்யதரம் ஜ்ஞாநம்) ரஹஸ்யங்களைக் காட்டிலும் அதிரஹஸ்யமான அறிவு. நீ இதுவரையில் க்ஷத்ரியர்களுக்குரியபலரஹஸ்யங்களை துரோணர் முதலான பல ஆசார்யர்களிடம் இருந்து கற்றிருக்கிறாய். ஆயுர்வேதம், த4நுர்வேதம், கா3ந்த4ர்வ வேத3ம் (ஸங்கீதம்), அர்த்த2ஶாஸ்த்ரம் நீதிஶாஸ்த்ரம் முதலான லௌகிக ஶாஸ்த்ரங்களிலிருந்து நீ அறிந்த அறிவைக்காட்டிலும், மறுமையில் ஸ்வர்க்க3ம் முதலான புருஷார்த்த2ங்களைப்பற்றியும் அவற்றுக்கு உபாயங்களைப்பற்றியும் வேதங்களிலிருந்து அறிவது ரஹஸ்யம் எனத்தக்கது. வேதா3ந்தங்களிலிருந்து அறியப்படுவதாய், அதை விளக்கும் இந்த கீ3தா ஶாஸ்த்ரத்தாலே நன்கு விளக்கப்படுவதாய், மோக்ஷத்தை அடைய விரும்புபவர்களால் அவரவர் தகுதிக்கேற்ப அறிந்து அநுஷ்டி2க்கத்தக்கதான எல்லா மோக்ஷோபாயங்களைப் பற்றிய அறிவு கு3ஹ்யதரம் (அதிரஹஸ்யம்) எனத்தக்கது. இந்த கு3ஹ்யதரமான உபாயங்களாக கர்ம ஜ்ஞான ப4க்தி யோகங்கள் மூன்று மாத்திரம் பாஷ்யத்தில் எடுக்கப்பட்டபோதிலும், மேலே காட்டிய மற்ற உபாயங்களும் 'ச' காரத்தால் ஸமுச்சயிக்கப்படுவதாகக்கொள்ளவேண்டும். அந்தமோக்ஷோபாயங்களும் கீ3தையில் ஆங்காங்கு சொல்லப்பட்டிருக்கின்றனவன்றோ. பா4ஷ்யத்தில் 'ஸர்வமாக்2யாதம்' (எல்லாம் சொல்லப்பட்டது) என்றருளியதாலும் கீதாஶாஸ்த்ரத்தில் சொல்லப்பட்ட எல்லா மோக்ஷோபாய ஜ்ஞானங்களையும் கண்ணன் 'ஜ்ஞாந' ஶப்தத்தாலே கருதுகிறான் என்று விளங்குகிறது. ஶ்லோகத்தின் பிற்பாதியிலுள்ள 'அஶேஷேண' என்னும் பதத்தாலும் இவ்விஷயம் அறிவிக்கப்படுகிறது. (மயா ஆக்2யாதம்) இயற்கையிலேயே எல்லாம் அறிந்தவனாய், உள்ளதை உள்ளபடி சொல்லும் ஆப்தர்களில் தலைவனாய், உனக்கு நன்மையை விரும்புகிற என்னாலே சொல்லப்பட்டது. ஶ்லோகத்தின் பிற்பாதியாலே அர்ஜுனன் செய்யவேண்டியதை நியமிக்கிறான் —(ஏதத் அஶேஷேண விம்ருஶ்ய) பதினெட்டு அத்தியாயங்களிலும் நான் சொன்ன மோக்ஷோபாயங்கள் அனைத்தையும் ஆராய்ந்து (யதா2 இச்ச2ஸி ததா2 குரு) இவை அனைத்தையும்

एतदशेषेण विमृश्य स्वाधिकारानुरूपं यथेच्छसि तथा कुरु — कर्मयोगं ज्ञानयोगं भक्तियोगं वा यथेष्टमातिष्ठेत्यर्थः ॥ ६३ ॥

---

ஆராய்ந்தபின் உன்னுடைய தகுதிக்குப் பொருத்தமானதாக எதை நீ விரும்புகிருயோ, அதைக் கைக்கொள்வாய். கர்மயோக3த்தையோ, ஜ்ஞாநயோக3த்தையோ, பக்தியோக3த்தையோ அல்லது பரிபூர்ணமாக என்னைச் சரணடைவதையோ கைக்கொள்வாய் என்று கருத்து. கர்ம ஜ்ஞாந பக்தியோக3ங்களைக் கைக்கொண்டாலும் உனக்குரிய கர்மமான போர்புரிதல் அந்த யோக3ங்களுக்கு அங்க3மாகையாலே அதை நீ கைவிடமுடியாது. உன்னுடைய அத்யந்த பரதந்த்ர ஸ்வரூபத்தை உணர்ந்து பரிபூர்ண ஶரணாக3தியைக் கைக்கொண்டாலும் ஸ்வாமியான நான் சொன்னதை நீ கேட்கவேண்டுமாகையாலே, போர்புரிதலை நீ கைவிடமுடியாது என்று கருத்து. 'நீ எதை விரும்புகிருயோ அதைச் செய்' என்று கூறியதாலே எம்பெருமான் ஜீவனுக்குத் தனக்குரிய மோக்ஷோபாயத்தைத் தேர்ந்தெடுக்கும் ஸ்வாதந்த்ரியத்தைக் கொடுக்கிருன் என்று விளங்குகிறது. ப்3ரஹ்மஸூத்ரத்தில் பராயத்தாதி4கரணத்தில் 'க்ருதப்ரயத்நாபேக்ஷஸ்து' என்று தொடங்கும் இரண்டாவது ஸூத்ரத்தில் ஜீவனுக்கு ஒவ்வொரு செயலிலும் ப்ரத2ம ப்ரவ்ருத்தியில் எம்பெருமான் ஸ்வாதந்த்ர்யத்தை அளித்திருக்கிருன் என்னும் விஷயம் கீதை18—14, 15 ஶ்லோகங்களின் வ்யாக்யானத்தில் விளக்கப்பட்டதை இது வலியுறுத்துகிறது. ஆனால் இங்கு கண்ணன் தனக்கு மிக இனியவனை அர்ஜுனனுக்கு நன்மையை விரும்புகிறவனாகையாலே, போரிலிருந்து அர்ஜுனன் கைவாங்குவதைத்தடுத்து, மோக்ஷோபாயத்தைத் தேர்ந்தெடுப்பதில் மாத்திரம் ஸ்வாதந்த்ர்யத்தைக் கொடுக்கிருன். எந்த மோக்ஷோபாயத்தைத் தேர்ந்தெடுத்தாலும் நீ போர்புரிய வேண்டியது அவசியம் என்று வலியுறுத்துகிருன். "இந்த ஶ்லோகத்தில் கர்ம ஜ்ஞாந யோக3ங்கள் முடிவுறுத்தப்படுகின்றன. அடுத்த ஶ்லோகத்திலிருந்து பக்தியோக3ம் சொல்லப்படுகிறது" என்று சிலர் உரையிட்டார்கள். 'ஜ்ஞாநம் ஆக்2யாதம்' [ஜ்ஞாநம் முழுவதும் சொல்லப்பட்டது] 'அஶேஷேண விம்ருஶ்ய] [முழுவதையும் ஆராய்ந்து] என்று கீதையில் கூறுகையாலே இந்த உரை பொருந்தாது. 63.

सर्वगुह्यतमं भूयः शृणु मे परमं वचः ।
इष्टोऽसि मे दृढमिति ततो वक्ष्यामि ते हितम् ॥ ६४

64. ஸர்வகு₃ஹ்யதமம் பூ₄யஶ்ஶ்ருணுமே பரமம் வச: ।
இஷ்டோऽஸி மே த்₃ருட₄மிதி ததோ வக்ஷ்யாமி தே
ஹிதம் ॥

ஸர்வகு₃ஹ்யதமம்—இந்த ரஹஸ்யங்கள் அனைத்திலும் மிகச் சிறந்த ரஹஸ்யமாயிருக்கும் ப₄க்தி யோக₃த்தைப் பற்றிய, மே—என்னுடைய, பரமம் வச:—மேலான வார்த்தையை, பூ₄ய: ஶ்ருணு — மறுபடி கேட்பாயாக; மே—எனக்கு, த்₃ருட₄ம் இஷ்ட; அஸி—மிகவும் இனியவனாக இருக்கிறாய், இதி தத:—என்னும் காரணத்தால், தே —உனக்கு, ஹிதம் வக்ஷ்யாமி—நன்மையைச் சொல்லுகிறேன்.

---

64. இன்ன மறைபொருள்கட் கெல்லா மிகமேலா
மென்னமருஞ் சொல்லி னிறுதிகேள் — முன்னமரு
மிட்டன் றிடனென்னு மித்தா லுனக்கிதமாய்
பட்டதனைச் சொல்வன் பரிந்து.

இன்ன மறைபொருள்கட்கு எல்லாம் — இதுவரை சொன்ன ரஹஸ்யப் பொருள்கள் அனைத்திலும், மிக மேலாம் —சிறந்ததாய் இருப்பதான, என் அமரும் சொல்லின் இறுதி கேள் — நான் சொல்லும் இறுதியான வார்த்தையைக் கேட்பாயாக, முன் அமரும் இட்டன் திடன் என்னும் இத்தால்— என் முன் அமர்ந்திருக்கும் மிக இனியவன் என்னும் காரணத்தால், உனக்கு இதமாய் பட்டதனை — உனக்கு நன்மையென்று எனக்கு எது பட்டதோ அதை, பரிந்து சொல்வன் — பரிவுடன் மறுபடி கூறுகிறேன்.

भा ।। सर्वेष्वेतेषु गुह्येषु भक्तियोगस्य श्रेष्ठ्याद्गुह्यतम[म्] इति पूर्वमेवोक्तम्—इदं तु ते गुह्यतमं प्रवक्ष्याम्यनसूयवे (९. १) इत्यादौ।

---

64. "இதுவரையில் கீதையில் சொன்ன மோக்ஷோபாயங்கள் அனைத்திலும் உன்னுடைய தகுதிக்குத் தக்கபடி எதை விரும்புகிறாயோ அதைச் செய்" என்று சொன்னான் சென்ற ஶ்லோகத்தில். எப்பொழுதும் ஸ்வார்த்த2மான ப்ரவ்ருத்திகளிலேயே (முயற்சிகளிலேயே) ஈடுபடும் க்ஷத்திரியனான அர்ஜுனனுக்கு சுயநல மனப்பான்மை சிறிதும் இல்லாத அத்யந்த பாரந்த்ரிய நிஷ்ட2ர்களுக்கே ருசிக்கும் பரிபூர்ண ஶரணாக3தியை ஏற்றுக்கொள்ள ருசியில்லை. ருசியிருந்திருந்தால் "கரிஷ்யே வசநம் தவ" [18-73] [நீ சொன்னபடி கேட்கிறேன்] என்னும் வார்த்தை உடனே அவனிடமிருந்து வெளிவந்திருக்கும். ஆகையால், அவனுக்குத்தக்க உபாயம் ப4க்தி யோக3மே என்று நிர்ணயித்து, அதை அடுத்த ஶ்லோகத்திலும், அதற்கு அடுத்ததான சரம ஶ்லோகத்தில் இந்த ப4க்தி யோக3த்திற்கு அங்க3மான ஶரணாக3தியையும் விதி4க்கிறான். (ஸர்வகு3ஹ்யதமம்) இதுவரையில் சொன்னவைகளுள் மிகச் சிறந்த ரஹஸ்யமான ப4க்தியோக3த்தை; கர்ம ஜ்ஞாந ப4க்தி யோக3ங்கள் மூன்றிலும், கர்மயோக3மும், ஜ்ஞாந யோக3மும் ப4க்தியோக3த்தை விளைத்தே பலனை ஸாதித்துத்தரும். ப4க்தி யோக3மோ ப4க3வத் ப்ராப்தியாகிற அப்பலனை நேரே ஸாதித்துத் தருகிறது. ஆகவே, அதுவே மிகச்சிறந்த ரஹஸ்யம் என்று கருத்து, ஒன்பதாம் அத்தியாயத்தின் தொடக்கத்தில் "இத3ம் து தே கு3ஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே" [9-1] [இந்த அதிரஹஸ்யமான உபாஸனரூபமான அறிவை என் விஷயத்தில் பொறாமையற்ற உனக்கு நன்கு கூறுகிறேன்.] என்று கூறி, அவ்வத்தியாயத்தின் இறுதியில் பெரும்பாலும் அடுத்த ஶ்லோகத்தில் உள்ளது போலவே "மந்மநா ப4வ" [9-34] என்று தொடங்கி ப4க்தியோக3த்தை விதித்தானன்றோ. (ஶ்ரு4ய: ஶ்ருணு) மறுபடியும் கேட்பாயாக, இதிலிருந்து ஒன்பதாம் அத்தியாயத்தில் விதி4க்கப்பட்ட ப4க்தி யோக3மே அடுத்த ஶ்லோகத்தில் விதிக்கப்படுகிறது என்று தெளிவாகிறது இதையே ஆளவந்தார் கீ3தார்த்த2 ஸங்க்3ரஹத்திலும் "ஶாஸ்த்ர ஸாரார்த்த2 உச்யதே" [22] [இந்த கீ3தா சாஸ்திரத்தின் ஸாரமான ப4க்தி

भूयोऽपि तद्विषयं परमं मे वचः शृणु। इष्टोऽसि मे दृढमिति ततस्ते हितं वक्ष्यामि ॥ ६४ ॥

---

யோகமும் (கடைசியில்) சொல்லப்படுகிறது ] என்று அருளிச் செய்தார். (ஸர்வ கு₃ஹ்யதமம் வச:) எல்லாவற்றிலும் மிகச் சிறந்த ரஹஸ்யமான ப₄க்தியோக₃த்தைப்பற்றிய வார்த்தையை. வார்த்தையினுடைய பொருளாயிருக்கும் ப₄க்தியோகம் மிகச் சிறந்த ரஹஸ்யமாகையாலே 'மிகச்சிறந்த ரஹஸ்யமாகிற வார்த்தை' என்று உபசார வழக்காகக் கூறுகிறான். (பூ₄ய: வச: ஶ்ருணு) 'மறுபடியும் வார்த்தையைக் கேட்பாய்' என்று பொருளாலும் வார்த்தையின் பொருளான ப₄க்தியோகத்தை மறுபடியும் கேட்பாய் என்று தாத்பர்யம் கொள்ளவேணும். இது மிகச் சிறந்த ரஹஸ்யம் என்று காட்டுவதற்காகவே, முன் சொன்ன ரீதியிலேயே மறுபடியும் கூறுகிறேன் என்று கருத்து. (பரமம் வச:) மிகமிக மேலான வார்த்தை. இதற்கு மேலான வார்த்தையொன்று இல்லை என்று கருத்து. அன்றிக்கே, இதன் பொருளான ப₄க்தியோகமும் மிகமிகமேலானதாகையாலே இந்த வார்த்தை மிகமிக மேலானது என்று கருத்து, "யஸ்மாத்₃ த₄ர்மாத் பரோ த₄ர்மோ வித்₃யதே நேஹ கஶ்சந" [பா₄ர-மோக்ஷ 256–1][ப₄க்தியோக₃த்தைக் காட்டிலும் மேலான த₄ர்மம் இவ்வுலகில் ஒன்றுமில்லை] என்றும், "இஜ்யாசார த₃மாஹிம்ஸா தா₃ந ஸ்வாத்₄யாய கர்மணாம்| அயந்து பரமோ த₄ர்மோ யத்₃ யோகே₃நாத்மத₃ர்ஶநம் ||" [யாஜ்ஞ-ஆ 8] [யாகம், ஆசாரம், புலனடக்கம், அஹிம்ஸை, தா₃னம், வேதா₃த்₄யயனம் முதலான கர்மங்களைக் காட்டிலும் ப₄க்தியோக₃த்தால் பரமாத்மாவைக்காண்பது மிகச் சிறந்ததாகும்] என்றும் ப₄க்தியோக₃த்தின் சிறப்பு சொல்லப்பட்டதன்றோ; ஶ்லோகத்தின் பிற்பாதியில் 'இது பரமரஹஸ்யம் என்பது வெறும் புகழ்ச்சியல்ல' என்று உணர்த்துவதற்காக எனக்கு மிக இனியவனாகையாலே உனக்கு நன்மையைச் சொல்லுகிறேன் என்கிறான். (இஷ்டோऽஸி மே) என்னுடைய உகப்புக்கு மிகவும் விஷயமாக இருப்பவன். அடுத்த ஶ்லோகத்திலும் "ப்ரியோऽஸி மே" என்று கூறுகிறானன்றோ. (த்₃ருட₄ம் இஷ்டோऽஸி இதி) மிகவும் இனியவன் என்னும்காரணத்தால், "ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த₂ம் அஹம் ஸ ச மம ப்ரிய:" [7–17] [நான் ஞானிக்குச் சொல்லவொண்ணாத அளவுக்கு இனியவன். அவனும் எனக்கு இனியவன்] என்று சொல்லப்பட்ட ஜ்ஞானியைப்போலே எனக்கு நீ இனியவன் என்று கருத்து. (ததோ

मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।
मामेवैष्यसि सत्यं ते प्रतिजाने प्रियोऽसि मे ॥ ६५ ॥

65. மந்மநா ப₄வ மத்₃ப₄க்தோ மத்₃யாஜீ மாம் நமஸ்குரு |
மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜாநே
ப்ரியோऽஸி மே ||

மந்மநா ப₄வ — என்னிடத்தில் இடைவிடாமல் நெஞ்சு செலுத்தியவனாக ஆவாயாக; மத்₃ப₄க்த: ப₄வ — (அதிலும்) என்னிடம் மிகவும் அன்புடையவனாக ஆவாயாக; மத்₃ யாஜீ ப₄வ — (அதிலும்) என்னை ஆராதி₄ப்பவனாக ஆவாயாக, மாம் — என்னை, நமஸ்குரு — (முக்கரணத்தாலும்) வணங்குவாயாக; மாமேவ ஏஷ்யஸி — (இப்படி அநுஷ்டிப்பதன்மூலம்) என்னையே அடைவாய்; ஸத்யம் தே ப்ரதிஜாநே — இது உண்மை என்று உனக்கு ப்ரதிஜ்ஞை செய்கிறேன்; (ஏனெனில்) மே ப்ரிய: அஸி — எனக்கு நீ இனியவனாய் இருக்கிறாயன்றோ.

---

65. என்னை மனனம்பண் ணென்பத்த னாகியே
யென்னை யருச்சி யெனவணங்கு — என்னையே
மேவுதிநீ மெய்யுனக்கு மிக்கறுதி சொன்னேனா
னேவுதலற் றென்னுகப்பா லுற்று.

என்பத்தனாகியே — என்னிடத்தில் ப₄க்திஉடையவனாகி, என்னை மனனம் பண்ணு — என்னிடம் எப்பொழுதும் நெஞ்சு செலுத்துவாய்; என்னை அருச்சி — என்னை அர்ச்சிப்பாயாக; எனை வணங்கு — என்னை வணங்குவாயாக; என்னையே நீ மேவுதி — (இப்படி நடந்து கொண்டால்) என்னையே நீ அடைவாய்; மெய் — இது உண்மை; உனக்கு — உனக்கு,

---

வக்ஷ்யாமி தே ஹிதம்) எனக்கு மிக இனியவனாகையாலே உனக்கு நன்மையைச் சொல்லுகிறேன். அன்றிக்கே, இந்த அதி ரஹஸ்யார்த்த₂த்தை உனக்குச் சொல்லவேண்டுமளவுக்கு எனக்கு நீ இனியவன் என்றும் பொருள் கொள்ளலாம்.

भा ।। वेदान्तेषु * वेदाहमेतं पुरुषं महान्तम्, आदित्यवर्णं तमसः परस्तात् । तमेवं विद्वानमृत इह भवति, नान्यः पन्था विद्यतेऽयनाय ।।

---

நான் – நான், ஓவுதலற்று – இடைவெளியில்லாமல், என் உகப்பால் — என்னுடைய ப்ரீதியால், உற்று மிக்கறுதி சொன்னேன் – உன் முன்பே ப்ரதிஜ்ஞை செய்தேன்.

---

65. ஸித்3தோ4பாயநிஷ்டை2யான பரிபூர்ண சரணாக3தியில் அர்ஜுனனுக்கு ருசியில்லாமையாலே, ஏற்கனவே 9—34 ஶ்லோகத்தில் அவனைக் குறித்து விதி4த்த ப4க்தி யோக3த்தை ப்ரவ்ருத்திபரனான அவனுக்கு மறுபடியும் விதி4க்கிறான். "மாமேவைஷ்யஸி" என்பது வரையில் அந்த ஶ்லோகமும் இந்த ஶ்லோகமும ஒன்றாயிருப்பது குறிக்கொள்ளத்தக்கது. அந்த ஶ்லோகத்தின் பா4ஷ்யவ்யாக்யானங்களும் இங்கு அநுஸந்திக்கத்தக்கவை. (மந்மநா ப4வ) என்னிடத்திலேயே இடைவிடாது நெஞ்சு செலுத்துகிறவனாவாய்; 'ஸர்வம் வாக்யம் ஸாவதா4ரணம்' [எல்லாவாக்யமும பொதுவாக ஏகாரத்தோடு கூடியது] என்கிற நியாயப்படி இங்குள்ள ஒவ்வொருதொடரிலும் ஏகாரத்தைச் சேர்த்தே பொருள்கொள்ளவேண்டும். இதிலிருந்து வேதாந்தங்களில் "வேதா3ஹமேதம் புருஷம் மஹாந்தம் ஆதி3த்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் | தமேவம் வித்3வாந் அம்ருத இஹ ப4வதி நாந்ய: பந்தா2 வித்3யதே-஽யநாய" [புருஷஸூக்தம் 2—2] [தமோகு3ணமுடைய மூலப்ரக்ருதிக்கு அப்பால் ஸூர்யன்போல் பிரகாசிப்பவனான இந்த மஹாபுருஷனை நான் அறிகிறேன். அவனை இப்படி அறிபவன் இங்கு மோக்ஷமடைகிறான். மோக்ஷத்திற்கு வேறு வழியில்லை.] முதலான வேதாந்த வாக்யங்களில் 'வேத3நம்' என்றும், 'த்4யாநம்' என்றும், 'உபாஸநம்' என்றும் சொல்லப்படுவதாய், நேரே காண்பது போன்ற நினைவுத்தொடராக இருப்பதான தியானமே இங்கு விதிக்கப்படுகிறதென்று விளங்குகிறது. 'மோக்ஷத்திற்கு வேறு வழியில்லை' என்று இந்த வாக்யத்தில் சொன்னது—இந்த த்4யானமானது கர்மஜ்ஞாநயோக3ங்களைப்போலே மற்றொரு ஸாத்4யோபாயத்தை இடையிட்டு உபாயமாவதில்லை, நேரே உபாயமாகிறது என்று காட்டுகைக்காக. இந்தப் புருஷ ஸூக்த வாக்யத்தில் மஹாபுருஷ ஶப்3த3த்தாலே பரமாத்மாவைச் சொல்லியிருக்கை

(ना) इत्यादिषु विहितं वेदनध्यानोपासनादिशब्दवाच्यं दर्शनसमानाकारं स्मृतिसंतानमत्यर्थप्रियमिह मन्मना भवेति विधीयते । मद्भक्तः

யால் "அதோऽஸ்மி லோகே வேதே₃ ச ப்ரதி₂த: புருஷோத்தம:" [15—18] என்று புருஷோத்தமனாக சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட தன்னைப் பற்றியவையே இந்த வேதவாக்யங்கள் என்று "மத்" ஶப்₃த₃த்தாலே உணர்த்துகிறான். இங்கு அறிதலே சொல்லப்பட்ட போதிலும் ஸாமாந்ய விசேஷ நியாயத்தாலே இந்த வேத₃நம் (அறிதல்)— த்₄யானம், உபாஸநம். த்₄ருவா ஸ்ம்ருதி முதலான ஶப்₃த₃ங்களால் சொல்லப்படும் உபாஸநத்தையே குறிக்கும் என்பது ஸ்ரீ பா₄ஷ்யம் முதலான க்ரந்தங்களில் ஸ்ரீபா₄ஷ்யகாரரால் நிலைநாட்டப்பட்டது. "த்₃ரஷ்டவ்ய: ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதி₃த்₄யாஸிதவ்ய:" [ப்₃ருஹ 4-4-5] [பரமாத்மா கேட்கத்தக்கவன், நினைக்கத்தக்கவன், தியானிக்கத்தக்கவன், காணத்தக்கவன்] என்று ஶ்ரவண மனன நிதி₃த்₄யாஸந த₃ர்ஶநங்களைக் கூறிய வேதவாக்யம் அதைத் திருப்பிச் சொல்லும்போது "ஆத்மநோ வா அரே த₃ர்ஶநேந ஶ்ரவணேந மத்யா விஜ்ஞாநேந" [ப்₃ருஹ 4-4-5] என்று முறையே ஶ்ரவண மதி விஜ்ஞாந தர்சநசப்தங்களாலே அநுவதி₃க்கையால் விஜ்ஞாநமும் நிதி₃த்₄யாஸனமாகிற தியானமும் ஒன்றென்று விளங்குகிறது. இந்த ஜ்ஞாநமானது த₃ர்ஶனஸமாநாகாரமான (நேரேகாண்பது போல் இருப்பதான) ஒரு நினைவுத்தொடராயிருக்கிறது என்றும் பல வேதவாக்கியங்களிலிருந்து விளங்குகிறது. "தஸ்மிந் த்₃ருஷ்டே பராவரே—பி₄த்₃யதே ஹ்ருத₃ய க்₃ரந்தி₂:" (முண்டக 2-2-9] [இந்தப் பரமபுருஷன் காணப்பட்டவளவில், மனத்திலுள்ள முடிச்சுகளனைத்தும் பிளக்கின்றது] என்னும் வாக்யம் பரமாத்மாவைக் காண்பதாகச் சொன்னபோதிலும், அது மோக்ஷத்தில் காண்பதல்லவாகையாலும், ஸாத₄ந தசையில் காணும் காட்சியாகையாலும் ப்ரத்யக்ஷமான காட்சி என்று கொள்ள முடியாது. 'த்₃ரஷ்டவ்ய:' என்னும் இந்த ஶ்ருதியும் அத்தகையதேயாகையால் இதுவும் ப்ரத்யக்ஷமான காட்சியைக் கூறுது. "ஆஹாரஶுத்₃தௌ₄ ஸத்வஶுத்₃தி₄:, ஸத்வஶுத்₃தௌ₄ த்₄ருவா ஸ்ம்ருதி:, ஸ்ம்ருதிலம்பே₄ ஸர்வக்₃ரந்தீ₂நாம் விப்ரமோக்ஷ:" [சா₂ந் 7—26—2] [உணவு தூயதானால் மனம் தூய்மையடையும்; மனம் தூய்மை

யடைந்தால் (பரமாத்மாவைப் பற்றிய) நிலையான நினைவு உண்டாகும்; அந்த நினைவு விளைந்தால் எல்லாத் தாழ்வுகளும் அடியோடு நீங்கிவிடும்] என்னும் வாக்கியம் மோக்ஷஸாத4நமான இந்த தரிசனத்தையே 'நிலையான நினைவு' என்று கூறுகிறது. இந்த வாக்கியங்களில் கூறப்படும் மோக்ஷஸாத4நங்கள் அனைத்தும் ஒன்றேயாகவேண்டும். ஆகையால் த3ர்சன ஸப்3த3த்தால் சொல்லப்படும் ப்ரத்யக்ஷம் நேரே காண்பதுபோல் இருக்கும் நினைவுத் தொடராயிருப்பதே என்று நிர்ணயிக்கப்படுகிறது. "ஸ்வப்நதீ4க3ம்யம் பரம் புருஷம் வித்3யாத்" [மநு 12—122] [கனவில் காண்பது போன்ற நினைவுத்தொடராலே அடையப்படும் பரமபுருஷனை உபாஸிக்கக் கடவன்] என்னும் மநுஸ்ம்ருதியும் இதை வலியுறுத்துகிறது. ஆகையால் "த்3ரஷ்டவ்ய:" [ப்3ருஹ 4-4-5] "தஸ்மிந் த்3ருஷ்டே" [முண்ட3க 2-2-9] "நிசாய்ய தம் ம்ருத்யுமுகா2த் ப்ரமுச்யதே" [கட2 3-15] [அந்தப்பரமாத்மாவைக் காண்பதால் ஸம்ஸாரத்திலிருந்து நீங்குகிறான்.] முதலான வேத3வாக்கியங்களில் சொல்லப்படும் 'தரிசனம்' நேரே காண்பது போன்ற நினைவுத் தொடரே என்று நிர்ணயிக்கப்படுகிறது. "ஸ்ம்ருதி: ஸந்தந்யதே யத்ர" [நினைவு எதில் தொடர்கிறதோ அது ஸ்ம்ருதி ஸந்தானம்] "ஸ்ம்ருதே: ஸந்தாநோ யத்ர" [நினைவின் தொடர்ச்சி எதில் உண்டாகிறதோ அது ஸ்ம்ருதி ஸந்தானம்] என்னும் வ்யுத்பத்திகள் பா4ஷ்யத்திலுள்ள 'ஸ்ம்ருதி ஸந்தானம்' என்னும் நபும்ஸகபத3த்திற்குத் தாத்பர்ய சந்த்ரிகையில் காட்டப்பட்டன. இப்பதம் மனம் ஒருமுகப்பட்டிருத்தலைக் குறிக்கும். ஆகையால் எண்ணெய்த்தாரைபோலே இடைவிடாதிருக்கும் நினைவைக்காட்டுகிறது. இந்த நினைவுத் தொடரானது தலைசிறந்த ப்ரீதி ரூபமான ப4க்தியாகவும் இருக்க வேண்டும் என்று "நாயமாத்மா" [முண்ட3க 3-2-3] என்று தொடங்கும் வேதவாக்கியத்திலிருந்து ஸித்3தி4க்கிறது, இவ்விஷயம் ஸ்ரீ பா4ஷ்யம் லகு4ஸித்3தா4ந்தத்தில் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. கீதை 9-34 ஸ்லோகவ்யாக்2யாநத்திலும் விளக்கப்பட்டது ஆக மோக்ஷத்திற்கு நேரே உபாயமாக ப4க்தியையே வேதா3ந்தங்களில் விதித்திருந்த போதிலும். அர்ஜுனன் அதை உணராமையால் இங்கு 'என்னிடத்திலேயே நெஞ்சு செலுத்தியவனாக ஆவாயாக' என்று அர்ஜுனனுக்கு அந்த ப4க்தியை விதிக்கிறான் கண்ணன். (மத்3ப4க்த:) என்னிடம் மிகவும் அன்பு செலுத்துகிறவனாவாய்; "ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்த2ம் அஹம்" [7-17] [நான் ஞானிக்கு

— अत्यर्थमत्प्रियः; अत्यर्थमत्प्रियत्वेन निरतिशयप्रियां स्मृतिसंततिं कुरुष्वेत्यर्थः। मद्याजी- तत्रापि मद्भक्त इत्यनुषज्यते; यजनं पूजनं, अत्यर्थप्रिय-मदाराधनपरो भव। आराधनं हि परिपूर्णशेषवृत्तिः। मां नमस्कुरु— नमो--नमनं, मय्यतिमात्रप्रह्वीभावमत्यर्थप्रियं कुर्वित्यर्थः। एवं वर्तमानो

---

மிகவும் இனியவன் ] என்று இவ்விஷயத்தை முன்னமே கூறினான்றோ. என்னிடம் மிகவும் அன்புசெலுத்துகிறவனுகையாலே மிகவும் இனிய நினைவுத்தொடரான ப4க்தியை என்னிடம் செய்வாயாக என்பது இவ்விரண்டு தொடர்களின் தாத்பர்யம். (மத்3யாஜீ) என்னை ஆராதிப்பவனாக ஆவாயாக. முன்னிரு பதங்களோடு இதைச்சேர்த்துக் கொண்டு பொருள் கொள்ளவேண்டும். என்னை அநுப4விப்பதால் உண்டான எல்லையற்ற அன்பினுல் விளைந்த எனது திருவாராதனத்திலேயே ஈடுபட்டவனும்படி என்னிடம் நெஞ்சைச் செலுத்து என்பது திரண்ட பொருள். 'யஜ-தே3வபூஜாயாம்' என்று தா4துவாகையாலே இங்கு ஸாத4நப4க்தி ஸ்வரூபத்தை நிர்ணயிக்கும் ப்ரகரணத்தையொட்டி, தேவதேவனை இவனைப் 'பாஞ்சராத்ரம்' முதலானசாஸ்திரங்களில் சொன்னபடி நேரே ஆராதி4ப்பதை இப்பதம் காட்டுகிறது. இந்த்3ராதி3களுக்கு அந்தர்யாமியாக இவனை ஆராதி4க்கும் யாக3ங்கள் இங்கு பொருளாகமாட்டா. இங்கு சொல்லப்படும் யாக3மாவது பரிபூர்ண சேஷவ்ருத்தியாகிற கைங்கர்யம். 'பத்ரம் புஷ்பம்' [கீ3தை 9-26] முதலானவிடங்களில் இந்தத் திருவாராதனம் கீதையிலும் விளக்கப்பட்டது. இந்தத் திருவாராதனத்தைப் பற்றிய மற்றும் பல விளக்கங்கள் [கீ3தை 9-24] பா4ஷ்யத்திலும், வ்யாக்2யானத்திலும் காணத்தக்கது. (மாம் நமஸ்குரு) எல்லையற்ற இனிமைச் சிறப்பையுடைய எனது அநுப4வத்தினுல் விளைந்ததான வர்ணிக்கமுடியாத அன்பினுல் உண்டான எல்லாக்கைங்கர்யங்களையும் செய்வதோடல்லாமல் என்னிடம் உன்னுடைய ஸ்வரூபத்திற்குத் தகுந்ததாய் எல்லையற்ற இன்பமாய் இருப்பதான (மனோவாக்காயங்களால்) வணங்கியிருத்தலில் உறுதியைக் கொள்வாயாக, ''ணம ப்ரஹ்வீபா4வே'' என்னும் தா4துவிலிருந்து தோன்றிய நமஸ்காரஶப்3த3ம் இங்கு மனோவாக்காயங்கள் மூன்றினுலும் வணங்கியிருத்தலைக் குறிக்கிறது. தன்னுடைய ஆத்மாவும் ஆத்மாவைச் சேர்ந்த எல்லாப்பொருள்களும் எம்பெருமானுடையதே என்று அநுஸந்

मामेवैष्यसि, एतत्सत्यं ते प्रतिजाने -- तव प्रतिज्ञां करोमि; नोपच्छन्दनमात्रम् । यतस्त्वं प्रियोऽसि मे; * प्रियो हि ज्ञानिनोऽत्यर्थमहं स च मम प्रियः (७. १७) इति पूर्वमेवोक्तम् ।

---

திப்பதே மிகவும் வணங்கியிருத்தல் ஆகும். (மாமேவ ஏஷ்யஸி) இப்படிப்பட்ட ப4க்தியை ஸாத4நமாக அநுஷ்டி2த்தாயாகில் நீ என்னையே அடைவாய், ஏவகாரத்தாலே வேருரு ஸாத்4யோபாயத்தை இடையிடாமல் இந்த ஸாத4ந ப4க்தியே என்னை அடைவிக்கும் என்று உணர்த்துகிறது. (ஸத்யம் தே ப்ரதிஜாநே) இதை உண்மையென்று உனக்கு நான் ப்ரதிஜ்ஞை செய்கிறேன்; உன்னை ஏமாற்றுவதற்காகச் சொல்லும் வார்த்தையல்ல என்றபடி.

"த்3யௌ: பதேத் ப்ருதி2வீ ஶீர்யேத் ஹிமவாந் ஶகலீ ப4வேத் ।
ஶுஷ்யேத் தோயநிதி4: க்ருஷ்ணே நமே மோக4ம்
வசோ ப4வேத் ॥" [பார உத் 81—48]

[திரௌபதியே! வானம் இடிந்து விழலாம்; பூமி தூளாகலாம்; இமயமலை பொடியாகலாம்; கடல் வற்றிப்போகலாம்; ஆனால் என் வார்த்தை வீணாகாது] என்று திரௌபதிக்குக் கண்ணன் செய்த பிரதிஜ்ஞை இங்கு அநுஸந்திக்கத் தக்கது. (ப்ரதிஜாநே) "வாஸ்தோஷ்பதே ப்ரதிஜாநீஹ்யஸ்மாந்" [யஜுர் 3-4-10] [வாஸ்தோஷ்பதியே! எங்களை அறிவாயாக] முதலானவிடங்களில் 'ப்ரதி' என்னும் உபஸர்க்கம், தாதுவின் அர்த்த2த்தை மாற்றாமல் இருப்பது போல் இங்கு கொண்டால் 'ஸத்ய' ஶப்3த3த்தோடு சேர்த்திருப்பது ஒட்டாது. ஆகையால் 'ப்ரதி' என்னும் உபஸர்க்க3த்தோடு சேர்ந்த "ஜ்ஞா" தா4து இங்கு ப்ரகரணத்தையொட்டி ப்ரதிஜ்ஞை செய்வதையே குறிக்கும். (ப்ரியோ ऽஸி மே) நீ எனக்கு இனியவனன்றோ. ஆகையால் யுத்3த4த்தில் உன்னை மூட்டுவதற்காக ப4க்தி யோக3த்தைப் புகழ்கிறேன் என்று நீ நினைக்கலாகாது. "ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த2ம் அஹம் ஸ ச மம ப்ரிய;" [7-17] [நான் ஞானிக்கு மிகவும் இனியவன். அவனும் எனக்கு இனியவன்.] என்று முன்னமே சொன்னேனன்றோ, அர்ஜுனன் ஞானியாகி விட்டானோ? எனில்—தான் நியமித்தபடி ப4க்தி யோக3த்தை அநுஷ்டி2த்து ஞானியாகி விடுவான் என்னும் நிச்சயத்தாலே சொல்லுகிறான் என்று கண்டுகொள்க.

यस्य मय्यतिमात्रा प्रीतिर्वर्तते, ममापि तस्मिन्नतिमात्रा प्रीतिर्भवतीति तद्वियोगमसहमानोऽहं तं मां प्रापयामि । अतस्सत्यमेव प्रतिज्ञातं * मामेवैष्यसीति ॥ ६५ ॥

---

நீ என்னிடம் மிகுந்த அன்பைக்காட்டும் ப4க்தியோக3த்தை அனுஷ்டித்தாயானால் எனக்கும் உன்னிடம் மிகுந்த அன்பு உண்டாகும். ஆகையால் உன்னைப் பிரிந்திருக்கமாட்டாமல் நான் உன்னை என்னை அடையும்படி செய்து விடுவேன்; ஆகையால் 'நீ என்னையே அடைவாய்' என்று நான் சொன்னது உண்மையான பிரதிஜ்ஞையேயாகும் என்று கருத்து. கீதை 9—34ல் உள்ள பத3ங்களே பெரும்பாலும் இந்த ஶ்லோகத்திலும் உள்ளதால் அங்கு விதி4க்கப்பட்ட ப4க்தியோக3மே இங்கும் விதி4க்கப் படுகிறது என்று விளங்குகிறது அங்கு "மாமேவைஷ்யஸி" என்றதற்குப் பிறகு "யுக்த்வைவம் ஆத்மாநம் மத்பராயண:" [9-34] [இவ்வண்ணமாக நெஞ்சைப் பழக்குவதன் மூலம் என்னையே மேலான ப்ராப்ய ப்ராபகங்களாகக் கொண்டவனாகி] என்னும் பத3ங்கள் காணப்படுகின்றன. இங்கு அப்பத3ங்களின் ஸ்தா2னத்தில் "ஸத்யம் தே ப்ரதிஜாநே ப்ரியோऽஸி மே" என்னும் பத3ங்கள் உள்ளன. அங்கு அதிகப்படியாக உள்ள 'ஏவம் ஆத்மாநம் யுக்த்வா மத்பராயண:' என்னும பதங்களால் மோக்ஷஸாத4நமான பரப4க்தியைப் பழகி வந்தால் அது பரஜ்ஞாநமும் பரம ப4க்தியுமாகப் பரிணமித்து, பரம புருஷனைப் பிரிந்தால் உயிர்வாழ முடியாத அளவுக்கு ஸ்வயம்ப்ரயோஜன ப4க்தியாக மாறி இந்த ஜன்மத்திலேயே மோக்ஷத்தை அளித்துவிடும் என்று காட்டினான். "ப4க்த்யா மாம் அபி4ஜாநாதி...விஶதே தத3நந்தரம்" [18-55] என்று இந்த அத்தியாயத்திலும் அதைத் தெளிவாகவே காட்டினான். "தமேவ ஶரணம் க3ச்ச2" [18-62] என்று பரம புருஷனை தன்னிடமே பரிபூர்ண ஶரணாகதியைச் செய்யும்படியும் விதித்தான். ஆனால் ப்ரவ்ருத்திபரனான அர்ஜுனனுக்கு அதில் ருசியில்லாமையாலே, அவன் முதலில் பரப4க்தியையாவது அநுஷ்டிக்கட்டும் என்னும் திருவுள்ளத்தாலே, பரப4க்தியின் ப2லனான ஸ்வயம் ப்ரயோஜனமான பரமப4க்தியைக் காட்டும், "யுக்த்வைவம் ஆத்மாநம் மத்பராயண:" என்னும் பத3ங்களை நீக்கிவிட்டு இந்த ஶ்லோகத்தில் பரப4க்தியை விதி4க்கிறான் என்று கண்டு கொள்வது. 65.

सर्वधर्मान् परित्यज्य मामेकं शरणं व्रज।
अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि मा शुचः ॥ ६६ ॥

66. ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ!
அஹம் த்வா ஸர்வபாபேப்₄யோ மோக்ஷயிஷ்யாமி
மா ஶுச: ||

ஸர்வத₄ர்மாந் — எல்லா ஸாத₄நங்களேயும், பரித்யஜ்ய — நன்கு விட்டு, மாம் ஏகம் — என்னை ஒருவனையே, ஶரணம் — உபாயமாக, வ்ரஜ — அநுஸந்திப்பாய்; அஹம் — நான், த்வா — உன்னை, ஸர்வபாபேப்₄ய: — எல்லாப் பாபங்களிலிருந்தும், மோக்ஷயிஷ்யாமி — விடுவிக்கிறேன், மாஶுச: — வருந்தாதே.

---

66. எல்லா வறங்களேயு மிங்கறவிட் டென்னையே
நல்லார் சரணமா நண்ணியிடு — தொல்லாரும்
பாவங்க ணின்றுன்னைப் பற்றுவிடு விப்பனுன்
றுவந் தனையொழிநீ தான்.

எல்லா அறங்களையும் — எல்லா ஸாத₄நங்களையும், இங்கு அறவிட்டு — இப்போது நன்கு கைவிட்டு, என்னையே — என்னையே, நல் ஆர் சரணமா — நல்ல நிறைந்த உபாயமாக, நண்ணியிடு — அநுஸந்தி₄ப்பாய்; தொல் ஆரும் பாவங்கள் நின்று — அநாதிகாலமாக நிறைந்திருக்கும் பாபங்களிலிருந்து, நான் — நான், உன்னை — உன்னை, பற்று விடுவிப்பன் — தொடர்பு விட்டுப்போம்படி செய்வேன்; நீ தான் — நீ, தாவம் தனை — வருத்தத்தை, ஒழி — விட்டுவிடுவாய்.

भा ।। कर्मयोगज्ञानयोगभक्तियोगरूपान् सर्वान् धर्मान् परमनिश्श्रेयससाधनभूतान् मदाराधनत्वेन अतिमात्रप्रीत्या यथाधिकारं कुर्वाण एवोक्तरीत्या फलकर्मकर्तृत्वादिपरित्यागेन परित्यज्य मामेक-

---

66. அர்ஜுனனுக்குச் சென்ற ஶ்லோகத்தில் பக்தியோகம் விதிக்கப்பட்டது, இந்த ஶ்லோகத்தில் அதற்கு அங்கமாக ஶரணாகதி விதிக்கப்படுகிறது. இதற்கு இரண்டு விதமாக பாஷ்யம் இடப்படுகிறது. முதல் பாஷ்யத்தை முதலில் விவரிப்போம். சென்ற ஶ்லோகத்தில் 'பக்தி யோகத்தை அநுஷ்டித்தால் நீ என்னை அடைவாய்' என்று கூறினன். 'பரமபுருஷனை உன்னை அடைவதற்குத் தடையாகக் கணக்கற்ற பாபங்கள் உள்ளனவே. அவற்றை நான் எப்படிப் போக்கமுடியும்?' என்று அர்ஜுனன் வருத்தமடைய, "கர்மயோகம், ஜ்ஞாநயோகம், பக்தியோகம் ஆகிய எல்லா மோக்ஷஸாதநங்களையும் எனக்கு ஆராதனமாக மிக்க அன்புடன் உன் அதிகாரத்திற்குத் தக்கபடி அநுஷ்டித்துக் கொண்டே இந்த அத்தியாயத்தில் நான் கூறியபடி மூவகைப் பட்ட பரித்யாகங்களுடன் அவற்றைச்செய்பவனாய், என்னை ஒருவனையே செய்விப்பவனாகவும், அவற்றால் ஆராதிக்கப்படுபவனாகவும், அடையத்தக்கவனாகவும் கொண்டு, பாபங்கள் போவதற்கு என்னையே உபாயமாகப் பற்றினையானால் உன்னை என்னை அடைவதற்குத் தடையான எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன்; நீ வருந்தாதே" என்று கூறுகிறான். இந்த ஶ்லோகத்தில் (ஸர்வதர்மாந்) தலைசிறந்த பயனான மோக்ஷத்திற்கு ஸாதநமாக இந்த கீதையில் சொல்லப்பட்ட கர்மயோகம், ஜ்ஞாநயோகம், பக்தியோகம் எனப்பட்ட எல்லா உபாயங்களையும். "த்ருதி ஸாதந பூத: தர்ம:" [தரித்து நிலைநிற்பதற்கு ஸாதநமாயிருப்பது தர்மம்.] என்னும் வ்யுத்பத்தியாலே, தர்ம ஶப்தம் தலைசிறந்த மோக்ஷத்திற்கு நேரேயோ பரம்பரையாகவோ ஸாதநமாகக்கூறப்பட்ட கர்மஜ்ஞாநபக்தியோகங்களைச் சொல்லுகிறது. அவை ஸாதனமாவது எம்பெருமானுக்கு ஆராதனமாயிருக்கையாலே. (பரித்யஜ்ய) இந்த ஸாதனங்களை மிக்க அன்புடன் தன் அதிகாரத்திற்குத் தக்கபடி அநுஷ்டித்துக்கொண்டே, இந்த அத்தியாயத்தில் சொன்னபடி. 'இந்தக்கர்மத்தின் பலன் என்னுடையதல்ல' என்று அநுஸந்திக்கையாகிற பலத்யாகத்தோடும், 'இந்தக் கர்மம் என்னுடையதல்ல' என்று அநுஸந்திக்கையாகிற

मेव कर्तारमाराध्यं प्राप्यमुपायं चानुसंधत्स्व । एष एव सर्वधर्माणां शास्त्रीयपरित्याग इति — * निश्चयं शृणु मे तत्र त्यागे भरतसत्तम । त्यागो हि पुरुषव्याघ्र त्रिविधस्संप्रकीर्तितः ॥ (४) इत्यारभ्य * सङ्गं त्यक्त्वा फलं चैव स त्यागस्सात्त्विको मतः ॥ -- नहि देहभृता

---

கர்மத்யாகத்தோடும், 'இதைச் செய்பவன் நானல்ல' என்று அநுஸந்திக்கையாகிற கர்த்ருத்வத்யாகத்தோடும் நன்கு விட்டவனாய். இந்த ஸாதநங்கள் ஐச்வர்யம் முதலான பலன்களுக்கு ஸாதநம் என்னும் நினைவை விடுவது பலத்யாகமாகும். மோக்ஷமாகிற பலமும் தன் ஆனந்தத்திற்கு உறுப்பானது என்னும் எண்ணத்தை விடுவதும் பலத்யாகமாகும். பாஷ்யத்தில் ''பல கர்ம கர்த்ருத்வாதிபரித்யாகேந'' என்னுமிடத்தில் ''ஆதி'' ஶப்தத்தாலே பரமபுருஷன் தனக்குச் சட்டையாக அணிந்து கொண்டிருக்கும் இந்திரன் முதலானவர்களுக்கு ஆராதனமாக இருப்பவை இவை என்னும் எண்ணத்தையும் கைவிடவேண்டுமென்று உணர்த்தப்படுகிறது—என்று தாத்பர்ய சந்த்ரிகை. (மாம் ஏகம்) செய்பவனாகவும், ஆராதிக்கப்படுபவனாகவும், அடையத்தக்கவனாகவும் முன் ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட என்னை ஒருவனையே. பிறர் தன்னையும் இவற்றைச் செய்பவனாக நினைப்பார்கள். இந்திரன் முதலான தெய்வங்களை ஆராதிக்கத் தக்கவராக நினைப்பார்கள். ஸ்வர்க்கம் முதலானவற்றை ப்ராப்யமாக நினைப்பார்கள். முமுக்ஷுக்கள் தன்னைச் செய்விக்கும் அந்தர்யாமியாகவும், தன் செயலை அனுமதிப்பவனாகவும் உள்ள என்னையே கர்த்தாவாக நினைக்கவேண்டும். அப்படி நினைப்பதால் 'தான் செய்பவன்' என்னும் அபிமானம் கைவிடப்படுகிறது. முமுக்ஷுக்கள் இந்தக் கர்மங்கள் இந்திரன் முதலான மற்ற தேவதைகளுக்கு ஆராதனம் என்றும், தனக்கு சேஷமானவை என்றும் எண்ணுவதைக் கைவிட்டு எம்பெருமானுக்கு ஆராதனம் என்றே நினைக்கவேண்டும். ''அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தா ச'' [9-24] [நானே எல்லா யஜ்ஞங்களையும் அனுபவிப்பவன்] என்றும், ''ஸ்வகர்மணா தமப்யர்ச்ய'' [18—46] [தன் கர்மத்தாலே பரம புருஷனை ஆராதித்து] என்றும் முன்னமே சொல்லப்பட்டதன்றோ. முமுக்ஷுக்கள் மற்றவர்களைப்போலே ஸ்வர்க்கம் முதலானவற்றை ப்ராப்யமாக

शक्यं त्यक्तुं कर्माण्यशेषतः । यस्तु कर्मफलत्यागी स त्यागीत्यभिधीयते ॥ (११) इत्यध्यायादौ सुदृढमुपपादितम् । अहं त्वा सर्वपापेभ्यो मोक्ष-यिष्यामि- एवं वर्तमानं त्वां मत्प्राप्तिविरोधिभ्योऽनादिकालसंचितानन्ता-

---

(அடையத்தக்கதாக) நினைக்காமல் என்னையே ப்ராப்யமாக (அடையத்தக்கவனாக) நினைக்கவேண்டும். (ஶரணம் வ்ரஜ) என்னை அடைவதற்கு விரோதியான பாபங்களைப் போக்குவதற்கு என்னையே உபாயமாக உறுதிகொள்வதாய், 'அவன் உகப்பாலேயே பலன் ஏற்படுகிறது' என்பது ஸகல ஶாஸ்த்ர ஸாரமாகும் என்று முன்பே நிர்ணயிக்கப்பட்டது "தன் முயற்சியால் ஸாதிக்கப் படுவதாய் விரைவில் அழிவதான யஜ்ஞம், உபாஸனம முதலான செயல்களில் பிறிதொருகாலத்தில் உண்டாகும் மோக்ஷத்திற்கு ஸாதநம் என்னும் நினைவை அடியோடு விட்டு, ஸித்தனாய் நிலை நிற்பவனாய் எல்லாம் அறிந்தவனாய், தடைபடாத ஸங்கல்பத்தை உடையவனாய், வண்மை முதலான குணங்களையுடையவனாய் அந்த ஸாத்யோபாயங்களாலும் ஆராதிக்கப்படுபவனான நானே அவற்றுக்குப் பலன் அளிப்பவனாகையாலே என்னையே உபாயமாக அநுஸந்திப்பாய்" என்று கருத்து. 'எல்லா தர்மங்களையும் விட்டு என்னையே உபாயமாக அனுஸந்திப்பாய்' என்று இங்கு கூறியிருக்கையாலே முற்கூறிய கர்மஜ்ஞாநபக்தி யோகங்களாகிற மோக்ஷஸாதநங்களை அடியோடு கைவிடவேண்டுமென்று தோன்றுகிறதே எனில்: இந்த அத்தியாயத்தின் தொடக்கத்தில் "நிஶ்சயம் ஶ்ருணு மே தத்ர த்யாகே பரதஸத்தம । த்யாகோ ஹி புருஷவ்யாக்ர த்ரிவிதஸ்ஸம்ப்ரகீர்த்தித:" என்று நாலாவது ஶ்லோகத்தில் மூன்று வகைப்பட்ட பரித்யாகத்தைக் கூறத் தொடங்கி, "ஸங்கம் த்யக்த்வா பலம் சைவ ஸ த்யாகஸ் ஸாத்விகோ மத: । ந ஹி தேஹப்ருதா ஶக்யம் த்யக்தும் கர்மாண்யஶேஷத:। யஸ்து கர்மபல த்யாகீ ஸ த்யாகீத்யபிதீயதே" [11] என்று பதினோராவது ஶ்லோகம் வரையில் கர்மங்களை அடியோடு கைவிடுவது ஸாத்விகமான த்யாகமாகாது என்றும், பலஸங்க கர்த்ருத்வங்களை விடுவதே ஸாத்விகமான த்யாகம் என்றும் உறுதியாகக் கண்ணன் கூறியிருக்கையாலே இங்கு அவற்றையே 'பரித்யஜ்ய' என்னும் ஶப்தத்திற்குப் பொருளாகக் கொள்ள வேணும். (அஹம த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி) இப்

कृत्यकरण-कृत्याकरण-रूपेभ्यः सर्वेभ्यः पापेभ्यो मोक्षयिष्यामि । मा शुचः — शोकं मा कृथाः । अथवा—

படி மூவகைப்பட்ட பரித்யாக$_3$ங்களோடு மோக்ஷஸாத$_4$னத்தை அநுஷ்டித்துப் பாபங்கள் போக என்னை உபாயமாகக் கொண்ட உன்னை, என்னை அடைவதற்குத் தடையாயிருப்பவையாய், அநாதி$_3$காலமாக உன்னால் செய்து குவிக்கப்பட்டிருப்பவையாய், அளவற்றவையாய், (ஶாஸ்த்ரங்களில்) செய்யத்தகாதவையென்று தடுக்கப்பட்டிருப்பவற்றைச் செய்வது, செய்யவேண்டியவை என்று விதிக்கப்பட்டவற்றைச் செய்யாமலிருப்பது என்று இருவகைப்பட்டிருக்கும் எல்லாப்பாபங்களிலிருந்தும் உன்னை விடுவிக்கிறேன். (அஹம்) முன்சொன்ன ரீதியில் உன்னால் ஆராதி$_4$க்கப்பட்டவனாய், பாபங்களைப்போக்குவதாகிற ப$_2$லனைக்கொடுப்பதற்குறுப்பாக எல்லாம் அறிந்தவனாயிருக்கை, எல்லாம் வல்லவனாயிருக்கை, பரம காருணிகனாயிருக்கை முதலான கல்யாண கு$_3$ணங்களோடு கூடிய நான் என்று கருத்து. (த்வா) என் ஆணைப்படி மோக்ஷஸாத$_4$நங்களை அநுஷ்டி$_2$த்த உன்னை. (ஸர்வ பாபேப்$_4$யோ மோக்ஷயிஷ்யாமி) முன் ஶ்லோகத்தில் "மாமேவ ஏஷ்யஸி" [என்னை அடைவாய்] என்று கூறியிருக்கையாலே இங்கு "ஸர்வ பாப" ஶப்$_3$த$_3$ம் தன்னை அடைவதற்குத் தடையான எல்லாப் பாபங்களையும் குறிக்கிறது. இங்கு ப$_4$க்தியோக$_3$நிஷ்ட$_2$னைப்பற்றிய ப்ரகரணமாகையாலே ப்ராரப்$_3$த$_4$கர்மம் தவிர்ந்த மற்ற பாபங்களையே 'ஸர்வ பாப' ஶப்$_3$த$_3$ம் குறிக்கிறது. ப$_4$க்திநிஷ்ட$_2$ன் ப்ராரப்$_3$த$_4$ கர்மங்களை அநுபவித்தே கழிக்கவேண்டுமென்று ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டதன்றோ. ப்ராரப்$_3$த$_3$கர்மங்களை அநுப$_4$வித்தபின் எஞ்சியிருக்கும் ஸஞ்சித$_3$ கர்மங்கள் என்னால் நீக்கப்படும். உடனே உன்னுடைய ஸாத$_4$நாநுஷ்ட$_2$ானத்தால் உகந்த என் அருளாலே உன்னுடைய ஸ்வரூபாவிர்ப$_4$ாவத்தோடு என்னை அடைவதாகிற மோக்ஷம் தன்னடையே உண்டாகும் என்று கருத்து.

முற்கூறிய அர்த்தத்தில் சில அஸ்வாரஸ்யங்கள் உள்ளன. அதாவது:— கர்மஜ்ஞாநப$_4$க்தியோக$_3$ங்கள் மூன்றையும் விளக்கிய பிறகு, அவைத்திலும் பரம ரஹஸ்யமாய், ஶாஸ்த்ர ஸாரார்த்த$_2$மான ப$_4$க்தியோக$_3$த்தை மறுபடியும் அர்ஜுநனுக்குத் தக்கதாகக் காட்டியபின்பு, முற்கூறிய மூன்று யோக$_3$ங்களுக்கும் பொதுவானதாக முன்னமே காட்டப்பட்ட மூவகைப்பட்ட பரித்யாக$_3$மாகிற அநுஸந்தா$_3$நத்தை மறுபடியும் 'பரித்யஜ்ய' என்னும் பத$_3$த்தால் கூறுவதால் பயனில்லையே. இது வேறொரு அர்த்த$_2$த்தைக்காட்டும்

ச்லோகமாகவும் காணப்படவில்லை. கீ3தார்த்த2ஸங்க்3ரஹத்திலும் "ஶாஸ்த்ர ஸாரார்த்த2 உச்யதே" [இறுதியில் சாஸ்த்ர ஸாரப் பொருளான ப4க்தியோக3ம் சொல்லப்படுகிறது] என்றதால் 'ஸர்வ த4ர்மாந்' என்னும் ஶ்லோகம் அங்க3ப்ரபத்தியையே கூறுகின்றது என விளங்குகிறது. ஸங்க்3ரஹத்தின் தொடக்கத்திலும் "ப4க்த்யேகதே3ாசர:" என்று இவ்விஷயம் சொல்லப்பட்டது. பா4ஷ்யத்திலும், "தமுவாச" [2—10] என்னும் ஶ்லோகத்திற்கு உரையிடும்போது, "ஆத்மபரமாத்ம யாதா2த்ம்ய-தத்ப்ராப்த்யுபாயபூ4த கர்மயோக3 ஜ்ஞாநயோக3 ப4க்தியோக3கோ3சரம் 'நத்வேவாஹம் ஜாது நாஸம்' இத்யாரப்4ய, 'அஹம் த்வா ஸர்வபாபேப்4யோ மோக்ஷயிஷ்யாமி மாஶுச:' இத்யேதத3ந்தம் வச உவாசேத்யர்த்த2:" [ஆத்மபரமாத்மாக்களைப் பற்றிய உண்மையறிவு, அவ்வாத்மபரமாத்மாக்களை அடைய உபாயமாயிருக்கும் கர்மயோக3 ஜ்ஞாநயோக3 ப4க்தியோக3ங்கள் ஆகியவற்றைத் தெரிவிக்கும் 'ந த்வேவாஹம் ஜாது நாஸம்' எனத் தொடங்கி, "அஹம் த்வா ஸர்வபாபேப்4யோ மோக்ஷயிஷ்யாமி மாஶுச:" என்பதீறான கீ3தாஶாஸ்த்ரத்தைக் கூறுகிறான் என்று பொருள்] என்று ப4க்தியோக3மே இறுதியில் சொல்லப்படுவது என அருளிச்செய்யப்பட்டது. மேலும் இங்கு 'வருந்தாதே' என்று கூறியது சாஸ்த்ரத்தின் தொடக்கத்தில் உறவினர்களிடம் உண்டான தகாத ஸ்நேஹ கருணைகள், த4ர்மமான யுத்3த4த்தை அத4ர்மமென மயங்கியது ஆகியவற்றால் ஏற்பட்ட வருத்தத்தைப் பற்றியதல்ல; முதல் ஷட்கத்திலேயே அது அடியோடு நீக்கப்பட்டுவிட்டது. ஆகையால் "மாஶுச: ஸம்பத3ம் தை3வீமபி4ஜாதோऽஸி பாண்ட3வ" [16—5] [பாண்டுபுத்திரனே! நீ தேவ ஸம்பத்தைச் சேர்ந்தவனே; 'நான் ஆஸுரஸம்பத்துடையவனோ?' என வருந்தாதே] என்றவிடத்திற்போலே, சற்றுமுன் ப்ரகரணத்தில் விளைந்த சோகத்தைப்போக்குவதற்காகவே இங்கு 'வருந்தாதே' என்று கண்ணன் கூறுகிறான் என்று கொள்ளவேண்டும். நுண்ணிய அறிவுடையவனாய், தா4ர்மிகர்களில் முன்நிற்கும் க்ஷத்ரியனான அர்ஜுனனுக்கு எல்லாமறிந்த கண்ணன் காட்டிய உபாயங்களில் அஜ்ஞாநத்தாலேயோ, தகுதியின்மையாலோ, முக்2யாம்ஶத்தில் நிர்ணயமில்லாமையாலோ இந்த வருத்தம் விளைந்தது என்று கூறுவதும் பொருந்தாது. "என்னையே அடைவாய்" என்று கண்ணன் உறுதியளித்திருக்கையால் ப2லத்தில் ஐயத்தால் விளைந்த வருத்தம் என்றும் கூறமுடியாது. ஆகை

सर्वपापविनिर्मुक्तात्यर्थभगवत्प्रियपुरुषनिर्वर्त्यत्वाद्भक्तियोगस्य तदारम्भविरोधिपापानामानन्त्यात् तत्प्रायश्चित्तरूपैर्धर्मैः परिमितकालकृतैस्तेषां दुस्तरतया आत्मनो भक्तियोगारम्भानर्हतामालोच्य शोचतोऽर्जुनस्य शोकमपनुदन् श्रीभगवानुवाच — * सर्वधर्मान्परित्यज्य मामेकं शरणं व्रजेति॥

---

யால் நெடுங்காலம் இடைவிடாமல் ஆர்வத்துடன் அனுஷ்டிக்க வேண்டிய உபாயத்தின் அருமையை நோக்கியோ, பலத்தின் தாமதத்தைப்பற்றியோதான் இங்கு வருத்தம் விளைந்திருக்க வேண்டும், அதில் 'எல்லாப் பாபங்களையும் போக்கினாலன்றோ உன்னை அடையமுடியும்? அது என்னால் இயலாதே' என்று அர்ஜுனன் வருந்துவதைத் தவிர்ப்பதாக முதற் பொருள் கூறப்பட்டது. ஆனாலும், அப்பொருளில் முன் சொன்ன குறையோடு, "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்றவிடத்தில் கர்மஸ்வரூபத்யாகம் வெளிப்படையாகத் தெரியும்போது, அதை த்ரிவிதபரித்யாகமாகக் கொள்ளவேண்டிய குறையும் உள்ளது. அதனால், சில கர்மங்களின் ஸ்வரூபத்யாகத்தையே கூறும் இரண்டாவது பொருள் விவரிக்கப்படுகிறது இனி.

சென்ற ஸ்லோகத்தைக் கேட்டவுடன், "உன்னை அடைய வேண்டுமென்றால் பக்தியோகத்திற்குத் தடையான முன்வினைகள் அனைத்தும் நீங்கவேண்டும். அதற்குப்பின்பே உனக்கு மிக இனியவனாகி பக்தியோகத்தைத் தொடங்கமுடியும். 'நராணாம் க்ஷீண பாபாநாம் க்ருஷ்ணே பக்தி: ப்ரஜாயதே' [லகுவிஷ்ணு] [பாபம் நீங்கப்பெற்றவர்களுக்கே கிருஷ்ணனிடம் பக்தி உண்டாகிறது] என்று சொல்லப்பட்டதன்றோ. 'விக்நாயுதாநி கோவிந்தே ந்ருணாம் பக்திர் நிவார்யதே' [விஷ்ணு தர்மம் 74—94] [பதினாயிரக்கணக்கான இடையூறுகளால் மனிதர்களுக்குக் கிருஷ்ண பக்தி தடை செய்யப்படுகிறது.] என்கிறபடியே அந்த பக்திக்கு இடையூறுகள் கணக்கற்றவை. அளவுபட்ட காலத்தில் செய்யப்படும் பிராயச்சித்தங்களால் அவற்றைப்போக்கமுடியாது; 'ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு... பக்தி: ப்ரஜாயதே' [லகுவிஷ்ணு] [ஆயிரக்கணக்கான ஜன்மங்களில் பாபம் நீங்கியபின்பே கிருஷ்ண பக்தி விளையும்] என்கிறபடியே அதற்கு ஆயிரக்கணக்கான பிறப்பெடுக்கவேண்டும். இது இயலாத காரியமாயிற்றே" என்று அர்ஜுனன் வருத்தமுற, "என்னை உபாயமாக அடைந்தால் பக்தியோகத்தைத் தொடங்குவதற்குத் தடையான பாபங்கள் அனைத்தும் இப்போதே நீங்கிவிடும்" என்கிறான் இந்த ஸ்லோகத்திலே.

भक्तियोगारम्भविरोध्यनादिकालसंचितनानाविधानन्तपापानुगुणान् तत्त-

(ஸர்வத4ர்மாந் பரித்யஜ்ய) ப4க்தி யோக3த்தைத் தொடங்குவதற்குத் தடையாய அநாதிகாலமாகச் செய்து குவிக்கப்பட்டிருப்பவையான பலவிதமான கணக்கற்ற பாபங்களைப் போக்குவதற்கு, அந்தந்தப்பாபத்திற்குப்பிராயச்சித்தமாயிருக்கும்க்ருச்ச்2ரம், சாந்த்3ராயணம், கூஶ்மாண்ட3ம், வைஶ்வாநரம், வ்ராதபதி, பவித்ரேஷ்டி, த்ரிவ்ருத், அக்3நிஷ்டோமம் முதலான பல வகைப்பட்ட கணக்கற்ற கர்மங்களை அளவுபட்ட காலத்தில் வாழும் உன்னால் அநுஷ்டித்துத் தலைக்கட்ட முடியாதாகையாலே, அவையனைத்தையும் அடியோடு விட்டு. முந்தின ஶ்லோகத்தில் "மந்மநா ப4வ மத்3ப4க்த:" என்று ப4க்தியோக3ம் விதி4க்கப்பட்டிருக்கையால், "அந்த ப4க்தியோக3த்தைத்தொடங்குவதற்குத் தடையான கணக்கற்ற பாபங்கள் இருக்கின்றனவே; அவற்றையெல்லாம் போக்குவதற்குக் கணக்கற்ற பிராயச்சித்தங்களை நான் செய்யவேண்டுமே; ஒரு சில வருடங்களே வாழக்கூடிய நான் பலவிதமான கணக்கற்ற பிராயச்சித்தங்களை இந்தக் குறுகிய காலத்தில் எப்படிச்செய்யமுடியும்?" என்று அர்ஜுனன் வருத்தப்படுவதை அவன் முகக்குறியாலே கண்டு "அவையனைத்தையும் அடியோடு கைவிட்டு என்னைச் சரணமடைந்தாலே அப்பாபங்களனைத்தும் நீங்கிவிடும், நீ ப4க்தியோக3த்தைத் தொடங்கலாம்" என்கிறான் இந்த ஶ்லோகத்தாலே, இங்கு ஸர்வத4ர்ம ஶப்3த3ம் அந்தந்தப் பாபங்களைப் போக்கும் எல்லாப் பிராயச்சித்த கர்மங்களையும் குறிக்கிறது. "த4ர்மேண பாபம் அபநுத3தி" [தை-நா] [வைதி3க கர்மங்களால் பாபத்தைப் போக்கடிக்கிறான்.] என்று உபநிஷத்திலும் சொல்லப்பட்டதன்றோ. 'த4ர்மாந்' என்கிற பன்மையாலே இத்தகைய ப்ராயச்சித்த கர்மங்கள் பலவகைப் பட்டவை என்று விளங்குகிறது. 'ஸர்வத4ர்மாந்' என்று 'ஸர்வ' ஶப்3த3த்தாலே விசேஷித்திருக்கையாலே, அவை கணக்கற்றவை என்றும் உணர்த்தப்படுகிறது. பாபங்கள் பலவகைப்பட்டவையாகவும் கணக்கற்றவையாகவும் இருப்பதாலே பிராயச்சித்தங்களும் பலவகைப்பட்டவையாகவும் கணக்கற்றவையாகவும் இருக்கின்றன. பா4ஷ்யத்தில் பிரசித்தமான சில பிராயச்சித்தங்கள் எடுத்துக்

प्रायश्चित्तरूपान् कृच्छ्रचान्द्रायणकूश्माण्डवैश्वानरव्रातपतिपवित्रेष्टित्रिवृद-

காட்டப்பட்டுள்ளன. அக்நிஷ்டோமம் முதலானவற்றுக்கு வேறு பலன்களும் சொல்லப்பட்டிருந்தபோதிலும், அவை பிராயச்சித்த கர்மங்களாகவும் ஆகின்றன. பா₄ஷ்யத்தில் 'ஆதி₃' ஶப்₃த₃த்தாலே "தை₃வமேவாபரே" [கீ₃தை 4-25] முதலானவிடங்களில் சொல்லப்பட்டபலவகைப்பட்ட கர்மயோக₃ங்களும், ஜ்ஞானயோக₃மும் உணர்த்தப்படுகின்றன. கர்மயோக₃ ஜ்ஞானயோக₃ங்களும் ப₄க்தியோக₃த்தைத் தொடங்குவதற்குத் தடையான பாபங்களைப் போக்குகின்றன என்று முன்னமே விளக்கப்பட்டதன்றோ. "பரித்யஜ்ய" (அடியோடுகைவிட்டு)என்பதாலே,இந்த ப்ராயச்சித்தகர்மங்களுடைய ஸ்வரூபத்யாக₃மே சொல்லப்படுகிறது. அநுஷ்டி₂க்க அரியவையான பிராயச்சித்த கர்மங்களையே இங்கு விடச்சொல்லியிருக்கையாலே நித்யநைமித்திக கர்மங்கள் இங்கு 'ஸர்வத₄ர்ம' ஶப்₃த₃த்திற்குப் பொருளாகமாட்டா. நித்ய நைமித்திகங்களிலும் அநுஷ்டிக்க அரியவற்றைக் கைவிடலாமென்று சாஸ்திரமும் அநுமதித்திருக்கிறது. சாஸ்திரமே சக்தியுடையவன் விஷயத்தில்தான் செயல்படும். சக்தியில்லாதவன் செய்யாவிடில் தோஷமில்லை. முக்₂யகல்பத்தை அநுஷ்டி₂க்க சக்தியில்லாமல், அநுகல்பத்தை அநுஷ்டி₂க்க சக்தியிருந்தால் அதையே அநுஷ்டிக்கவேண்டும். இவ்விடத்தில் எல்லாப் பிராயச்சித்தங்களையும் அநுஷ்டிக்கையாகிற முக்யகல்பத்தை, குறுகிய ஆயுளுடைய எவருமே அநுஷ்டிக்க இயலாததாகையாலே, அவர்களுக்கு எல்லா விதத்திலும் முக்₂யமான அநுகல்பமாகவே ப₄க₃வத்ப்ரபத்தி விதி₄க்கப்படுகிறது. முக்₂யகல்பமாயினும் அநுகல்பமாயினும் அது அதை அநுஷ்டிக்கும் அந்தந்த அதி₄காரிக்குப் ப₂லனில் வேற்றுமையில்லை. சக்தியுடையவன் முக்₂யகல்பத்தையும், அது இல்லாதவன் அநுகல்பத்தையும் அநுஷ்டிக்கவேண்டுமாகையாலே, "அநுஷ்டி₂க்காமையாலே முக்₂ய கல்பம் அப்ரமாணமாகிவிடும்" எனனும் கேள்விக்கு இடமில்லை. 'ப்ரணவம் வா த்ரிரப்₄யஸேத் ஸ்மரேத்₃வா விஷ்ணுமவ்யயம்' [மூன்று முறை ப்ரணவத்தை ஓதவேண்டும்; அல்லது அழிவற்றவனான விஷ்ணுவை நினைக்கவேண்டும்.] என்ற விடத்தில் ப்ரணவத்தை மூன்றுமுறை ஓதுவதற்குப் பதிலாக விஷ்ணுஸ்மரணம் விதிக்கப்பட்டது. "மாந்த்ரம் பௌமம் தத₂ா ஆக்₃நேயம் வாயவ்யம் தி₃வ்யமேவ ச | வாருணம் மாநஸம் சேதி ஸ்நாநம் ஸப்தவித₄ம் ஸ்ம்ருதம் ||" [யோக₃யாஜ்ஞ

ग्निष्टोमादिकान् नानाविधाननन्तांस्त्वया परिमितकालवर्तिना दुरनुष्ठानान्

வல்க்யம் ] [மந்த்ரஸ்நானம், பௌ4மஸ்நாநம், ஆக்3நேயஸ்நானம், வாயவ்யஸ்நானம், தி3வ்யஸ்நானம், வாருண ஸ்நானம், மாநஸ ஸ்நாநம் என்று ஸ்நானம் ஏழுவகைப்பட்டது.] என்றவிடத்தில் நதியில் மூழ்கிக்குளிப்பதாகிற முக்யஸ்நானம் செய்ய இயலாதவர்களுக்கு விஷ்ணுஸ்மரணமே அப்பலனை அளிப்பதாகக் கூறப்பட்டது. அதுபோலவே இங்கும் குறுகியகாலம் வாழ்கையாலே கணக்கற்ற பிராயச்சித்தங்களைச் செய்ய இயலாதவர்களுக்கு ப4க3வத் ப்ரபத்தி விதிக்கப்படுகிறது என்று கண்டு கொள்வது, "ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதி3த்4யாஸிதவ்ய:" [ப்3ருஹ 4-4-5] என்னும் வாக்கியத்தில் தியானத்திற்கு உபகாரம் செய்வதாகையாலே ராக3ப்ராப்தமான (விரும்பிச் செய்யக்கூடிய) ஶ்ரவண மனனங்கள் தியானத்தோடு சேர்ந்து விதிக்கப்படுவதுபோலே, இங்கும் நெடுங்காலம் அநுஷ்டிக்கவேண்டியவையும் செயற்கரியவையுமான பிராயச்சித்தங்களை விடுவது அல்ப சக்தியையுடையவனாய், குறுகிய காலம் வாழ்பவனான அர்ஜுனனுக்கு ராக3ப்ராப்தமானாலும் எம்பெருமானையே உபாயமாகப் பற்றுவதற்கு உபகாரம் செய்வதாகையாலே, 'பரித்யஜ்ய' என்று விதிப்பது போலே அநுவதிக்கப்படுகிறது. 'ஸர்வ த4ர்மாந்' என்னும் ஸமஸ்த பத3த்திற்கு 'ஸர்வேஷாம் த4ர்மாந்' என்று விக்3ரஹம் கொண்டால் தேவதாந்தரங்களைக் குறித்துச்செய்யப்படும் தர்மங்களையும் கைவிடவேண்டுமென்று விதி4ப்பதாகச் சொல்லவேண்டிவரும். மோக்ஷத்தைக் குறித்து உபாயாநுஷ்டா2னம் செய்யும் இவன் ஏற்கனவே தே3வதாந்தரங்களைக் குறித்துச் செய்யப்படும் உபாயங்களைக் கைவிட்டிருப்பவனாகையாலே, 'ஸர்வ த4ர்மாந்' என்னும் ஸமஸ்தபத3த்திற்கு 'ஸர்வாந் த4ர்மாந்' என்று விக்ரஹம் கொண்டு, எம்பெருமானைக் குறித்துச் செய்யப்படும் தர்மங்களை மட்டும் பொருளாக பா4ஷ்யத்தில் காட்டப்பட்டது. இங்கு ஓர் ஆக்ஷேபம் எழுகிறது. இந்த ப்ராயச்சித்தங்களை அநுஷ்டிக்க சக்தியுள்ளவனைக் குறித்து, அவற்றைக் கைவிடவேண்டுமென்று இங்கு விதிப்பதாகக் கொண்டால், அந்தப் பிராயச்சித்தங்களை விதித்த சாஸ்திரங்கள் வீணாகிவிடும். சக்தியில்லாதவன் ஏற்கனவே அவற்றைக் கைவிட்டிருப்பவனாகையாலே அவனைக் குறித்து விதிக்கவேண்டிய அவசியமில்லை—என்பது அவ்வாக்ஷேபம். இதற்குப் பதில் பின்வருமாறு:—

सर्वान् धर्मान् परित्यज्य भक्तियोगारम्भसिद्धये मामेकं परमकारुणिक-

சரணாகதி மற்றோர் சாதனத்தைப் பற்றில்
அரணாகா தஞ்சனை தன்சேயை—முரணழியக்
கட்டியது வேறோர் கயிறு கொண்டார்ப்பதன்முன்
விட்ட படைபோல் விடுப். [ஞானசாரம்—28]

என்று அருளாளப்பெருமாள் எம்பெருமானார் அருளிச்செய்த படியே, "உபாயாந்த்ரங்களைப் பற்றினால் சரணாகதியானது—அனுமனைக் கட்டிய பிரம்மாஸ்திரம் சணற் கயிற்றினால் கட்டியவுடன் விட்டதுபோலே கைவிட்டுவிடும்" என்று அசக்தனுக்கு உணர்த்த வேண்டியிருப்பதால் விதிக்கப்படுகிறது. சக்தியுள்ளவனுக்கும் அனுஷ்டிக்கத் தொடங்கிய பிறகு அசக்தி உண்டானால் அவனும் உபாயாந்தரங்களைக் கைவிட்டு எம்பெருமானை உபாயமாகப் பற்றலாம் என்று உணர்த்துகிறதாகையாலே அவனைக் குறித்தும் இது பயனுடையதாகிறது. நிற்க; ப4க்தியோக3த்தைத் தொடங்குவதற்குத் தடையான பாபங்களைப் போக்கிக்கொள்வதற்கே இங்கு எம்பெருமானையே உபாயமாகப்பற்றவேண்டும் என்று விதிக்கப்படுகிறது. ஆக, ப4க3வச்ச2ரணாக3திக்குப்பலன் ப4க்தியோக3த்தைத் தொடங்குவதற்குத் தடையான பாபங்கள் நீங்குவதே என்று தேறுகிறது. சரணாகதியோடு கூடப்படிக்கப்படும் ஸர்வ த4ர்ம பரித்யாக3த்திற்குத் தனியாக ஒரு ப2லன் ஓதப்படவில்லை. ஆகையால் 'ப2லவத் ஸந்நிதெ4ள அப2லம் தத3ங்க3ம்" [ப2லனோடு கூடியதொன்றுக்கு ப2லனில்லாமல் கூடப்படிக்கப்படும் மற்றொன்று அங்கமாகும்.] என்னும் நியாயப்படி ஸர்வ த4ர்ம பரித்யாக3ம் ப4க3வச்ச2ரணாகதிக்கு அங்க3மென்று தேறுகிறது. அதாவது:— ப4க3வச்ச2ரணாக3திக்கு ஸர்வத4ர்ம பரித்யாக3ம் உதவிபுரிகிறது என்று கருத்து. ஆகையால், எந்தப்பாபங்களை நீக்கிக்கொள்வதற்காக எம்பெருமானை உபாயமாகப் பற்றுகிறானோ அந்தப் பாபங்களைப் போக்கிக்கொள்வதற்காக விதிக்கப்பட்ட பிராயச்சித்த தர்மங்களே ஸர்வ த4ர்ம ஶப்3த3த்திற்குப் பொருளாக வேணும். நித்ய நைமித்திக கர்மங்கள் பொருளாகமாட்டா. அந்தப் பிராயச்சித்தங்களை அநுஷ்டிப்பதே முற்கூறியபடி ப4க3வச்ச2ரணாகதிக்குத் தடையுமாகும். நித்ய நைமித்திக கர்மங்களை அநுஷ்டிப்பது ப4க3வச்ச2ரணாகதிக்குத் தடையாகமாட்டாது. ஆகையால் வேறு விதிகளால் ஸித்திக்கும் வர்ணாச்ரமங்களுக்குரிய நித்ய நைமித்திக கர்மானுஷ்டானங்கள் இந்த ஶ்லோகத்தில் தவிர்க்கப்படவில்லை என்று கண்டு கொள்வது. (மாம் ஏகம்) பரமகாருணிகனாய், ஏற்றத்தாழ்வுகள் பாராமல் எல்லா ஜீவர்களா

मनालोचितविशेषाशेषलोकशरण्यमाश्रितवात्सल्यजलधिं शरणं प्रपद्यस्व ।

---

லும் சரணமடையத்தக்கவனாய், அடியார்களிடம் வாத்ஸல்யமே வடிவெடுத்தோர் கடல்போல் இருப்பவனான என்னை ஒருவனையே. 'ஸர்வ த4ர்மாந்-மாம் ஏகம்' என்கையால் விடச்சொன்னவை கணக்கற்றவை, அசேதனமானவை, ஸாத்யமானவை; பற்றப்படும் நானோ ஒருவனே, பரமசேதனனாயிருப்பவன், ஸித்3த4மாயிருப்பவன் என்று காட்டுகிறான், 'ஏக' சப்தத்தாலே "அவை பல அங்கங்களை அபேக்ஷிப்பவை. நான் எதையும் எதிர்பாராதவன்" என்று காட்டுவதாகவும் கொள்ளலாம்; 'மாம்' என்னும்ஶப்3த3த்தாலே சேதனன் சரணமடைவதற்கும், அவனுடைய காரியத்தைச் செய்வதற்குமுறுப்பான பரமகருணை, அனைவராலும சரணமடையத்தக்கவனாயிருக்கை, அடியவர்களிடம் மிகுந்த வாத்ஸல்யமுடையவனாயிருக்கை ஆகிய குணங்கள் உணர்த்தப்படுகின்றன "வத4ார்ஹமபி காகுத்ஸ்த2: க்ருபயா பர்யபாலயத்" [ரா-ஸு 38-34] முதலானவிடங்களில் கொல்லத்தகுந்த காகாஸுரனையும் கருணையாலே காப்பாற்றுகையாலே, இவன் பரமகருணையுடையவன் என்பதும், அடைபவனின் தாழ்வுபாராமல் அனைவரையும் ஏற்றுக்கொள்கிறான் என்பதும் ஸித்திக்கிறது. "ஸர்வஸ்ய ப்ரபு4ம் ஈஶாநம் ஸர்வஸ்ய ஶரணம்ஸுஹ்ருத்" [ஶ்வே 3-17] [அனைவருக்கும் ஸ்வாமியாகவும், ஈஶ்வரனாகவும் இருப்பவன். அனைவர்க்கும் உபாயமாகவும் நண்பனாகவும் இருப்பவன்] என்று உபநிஷத் ஓதுகையாலே, ஏற்றத்தாழ்வு பாராமல் அனைவர்க்கும் ஶரண்யனாயிருப்பவன் இவன் என்று ஸித்திக்கிறது. இதையே 'ஶர்வ லோக ஶரண்யாய' [ரா-யு 17-14] [அனைத்துலகுக்கும் சரணமடையத்தக்கவனான ராகவனுக்கு (என்னை அறிவியுங்கள்)] என்று விபீ4ஷணனும் கூறினான். "விபீ4ஷணோ வா ஸுக்3ரீவ யதி3வா ராவண:ஸ்வயம்—ஆநயைநம்" [ரா ஸு 18-37] [ஸுக்ரீவ! வந்திருப்பவன் விபீ4ஷணனாயிருந்தாலும் ராவணன் தானேயாயிருந்தாலும் அவனை அழைத்துவா] என்று இதையே தன்வாயாலும் அருளிச்செய்தான். இதனால் இவன் ஶரணமடைபவர்களுடைய ஜாதியையோ, வர்ணத்தையோ கல்வியையோ, ஒழுக்கத்தையோ, கு3ணம் பிரதியுபகாரம் செய்கை முதலானவற்றையோ கணிசியாமல் காரியம்செய்பவன் என உணர்த்தப்படுகிறது. "விதி3தஸ் ஸ ஹி த4ர்மஜ்ஞஶ்ஶரணாக3தவத்ஸல:" [ரா-ஸு 21-19] [அந்த ராமபிரான் த4ர்மமறிந்தவர், ஶரணமடைந்தவரிடம் வாத்ஸல்யமுடையவர்] என்று பிராட்டியும் பெருமாளின் வாத்ஸல்யத்தை ராவணனுக்கு உபதேசித்தாள். "தோ3ஷோ யத்3யபி தஸ்ய ஸ்யாத்" [ரா-யு 18-3] [அவனுக்கு தோ3ஷம் இருந்

अहं त्वा सर्वपापेभ्यो यथोदितस्वरूपभक्त्यारम्भविरोधिभ्यस्सर्वेभ्यः पापेभ्यो मोक्षयिष्यामि मा शुचः ॥ ६६ ॥

---

தாலும் இருக்கட்டுமே (தோஷமில்லாதவனை ரக்ஷிப்பதைக் காட்டிலும் தோஷம் உள்ளவனை ரக்ஷிப்பதே எனக்குச் சிறப்பு] என்று தான் வாத்ஸல்யக் கடலாயிருப்பவன் என்பதை ஸ்ரீராமபிரானே அருளிச்செய்தான். (ஶரணம் வ்ரஜ) உபாயமாகப் பற்றுவாய். "உபாயே க்3ருஹரக்ஷித்ரோ: ஶப்3த3: ஶரணம் இத்யயம்| வர்த்ததே ஸாம்ப்ரதம் த்வேஷ உபாயார்த்தைக வாசக:||" [அஹிர்பு3த்4ந்யஸம்ஹிதை 36-33] [சரணம் என்னும்சொல் உபாயம் வீடு ரக்ஷகன் என்னும் மூன்று பொருள்களில் வழங்கப்படும். இப்போது இங்கு உபாயம் என்னும் பொருளையே சொல்லுகிறது] என்று ப்ரபத்தி ப்ரகரணத்தில் ஶரண ஶப்2த3த்தின் பொருள் விளக்கப்பட்டது. "ஶரணம் க்3ருஹ ரக்ஷித்ரோருபாயே ச நிக3த்3யதே" [அமர 3-209] [ஶரணம் என்னும் சொல் வீடு ரக்ஷகன் உபாயம் என்னும் பொருளில் வரும்.] என்று அமரகோசத்திலும் சொல்லப்பட்டது. (ஸர்வ த4ர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ) "அநந்யஸாத்4யே ஸ்வாபீ4ஷ்டே மஹாவிஶ்வாஸ பூர்வகம்| ததே3கோபாயதாயாச்ஞா ப்ரபத்தி: ஶரணாக3தி:||" [விஷ்வக்ஸேந ஸம்ஹிதை] [தன்னுடைய விருப்பம் தன்னாலோ பிறராலோ ஸாதி4த்துக்கொள்ள முடியாதபோது மஹா விஶ்வாஸத்துடன் எம்பெருமான் ஒருவனையே உபாயமாகவேண்டும் என்று யாசிப்பதே ப்ரபத்தி என்றும் சரணாகதி என்றும் சொல்லப்படுகிறது.] என்கிற ப்ரபத்தி லக்ஷணத்தின்படி ப4க3வச்சரணாக3தியே முற்கூறிய எல்லாப்பாபங்களுக்கும் பிராயச்சித்தமாகிறது என்று கருத்து. (ஶரணம் வ்ரஜ) உபாயமாக உறுதிகொள்வாய். "வ்ரஜ" என்பதற்கு 'அடைவாய்' என்றேபொருளானாலும், "க3த்யர்த்த2ா பு3த்3த்4யர்த்த2ா:" [க3தியைச் சொல்லும் பத3ங்கள் (மனத்தின் க3தியான) புத்தியையும் சொல்லும்] என்னும் நியாயப்படி '(என்னையே உபாயமாக) உறுதிகொள்வாய்' என்று பொருள்படுகிறது. ஸர்வ ப்ராயச்சித்த த4ர்மங்களையும் அடியோடு கைவிடச் சொல்லுகையாலே இப்பொருளில் இதுவே பொருத்தம். முன்யோஜனையில் உபாயங்களின் த்ரிவித4பரித்யாக3 ரூபமான அநுஸந்த4ானத்தைச் சொல்லுகையாலே, அதற்கு அநுகு3ணமாக, "உபாயமாக அநுஸந்தி4ப்பாய்" என்று பொருள் கொள்ளப்பட்டது. இனி,ஶ்லோ

கத்தின் பிற்பாதியில், "ப4க்தியோக3த்தைத் தொடங்குவதற்குத் தடையான பாபங்களை நானே போக்குகிறேன்; ப்ராயச்சித்த த4ர்மங்கள் செயற்கரியவையாயிருப்பதைக்கண்டுவருந்தாதே" என்கிறான்— (அஹம் த்வா) எல்லாமறிந்தவனாய், எல்லாம் வல்லவனான நான் அற்பஜ்ஞானத்தையும், அற்பசக்தியையும் உடைய உன்னை. (ஸர்வபாபேப்4யோ மோக்ஷயிஷ்யாமி) "'ப4க்தியோக3த்தைத் தொடங்குவதற்குத் தடையான பாபங்கள் கணக்கற்றவையாயுள்ளனவே; அவை ஒவ்வொன்றுக்கும் ப்ராயச்சித்தங்களை அநுஷ்டிப்பது அற்பஞானசக்திகளையுடையவனாய், குறுகிய காலம் வாழ்பவனான என்னால் இயலாதே' என்று நீ வருந்தவேண்டா; செயற்கெளிதாய், கணநேரத்தில் அநுஷ்டி2க்கக்கூடியதாய், எல்லாப்பாபங்களையும் ஒருசேரப் போக்கடிக்கக் கூடியதான ப்ரபத்தியை அநுஷ்டி2த்த உனக்கு, ஸர்வஜ்ஞனாய், ஸர்வசக்தியான நானே அப்பாபங்கள் அனைத்தையும் போக்கிவிடுவேன்; நீ ப4க்தியோக3த்தைத் தொடங்குவதற்கு எந்தத்தடையும் இராது" என்று கருத்து.

"என்னை அடைவதற்குத் தடையான எல்லாப் பாபங்களையும் போக்கி உபாயாந்தரங்களின் ஸ்தானத்தில் நின்று நானே சேதனனை என்னை அடைவிப்பவனாகையாலே, மற்ற எந்த உபாயத்தையும் நீ அநுஷ்டிக்கவேண்டியதில்லை" என்னும் அரும்பொருளைச் சொல்லுவதாக ஆழ்வார்களாலும், எல்லா ஆசார்யர்களாலும் உரையிடப்பெற்றதாய், க3த்3யத்ரயத்திலும் அப்படியே தம்மால் விவரிக்கப்பட்டதான இந்தச் சரமஶ்லோகத்திற்கு, இங்கு பா4ஷ்யகாரர் அப்பொருளை அருளிச்செய்யாமல், ஸர்வபாபங்களும் போவதற்கு மாத்திரம் தன்னைச்சரணமடையும்படி முதல் யோஜனையிலும், ப4க்தியோக3த்தைத் தொடங்குவதற்குத் தடையான பாபங்களை மாத்திரம் போக்குவதற்குத் தன்னை சரணமடையும்படி இரண்டாவது யோஜனையிலும் பா4ஷ்யமிடுவானேன்? எனில்: இதற்கு ஸ்ரீ வேதா3ந்ததே3ஶிகரும், அவருக்கு முற்பட்ட பல ஆசார்யர்களும் அருளிச்செய்யும் ஸமாதா4னங்கள் வேறுபடுகின்றன.

ஸ்ரீவேதா3ந்ததே3சிகர் அருளிச்செய்யும் ஸமாதா4னம் பின்வருமாறு:— ப்ரபத்தி எல்லாப் பாபங்களையும் போக்குவதாயினும், ப4க்தியை மோக்ஷோபாயமாக விதி4க்கும் சாஸ்திரம் வீணாகாமைக்காக, ப4க்தியோக3த்தை அநுஷ்டி2க்க சக்தியுடையவன் அதையே அநுஷ்டி2க்க வேண்டும் எனக்கொள்ளவேண்டும். அர்ஜுனன்

அந்தகையவனுகையாலே, அவனுக்கு 'மந்மநா ப₄வ' என்று பக்தியை விதித்து, அவன் தனக்குச் செயற்கரியதாகக் கருதும் ஸர்வபாபங்களையும் போக்குவதைக் குறித்தோ, ப₄க்தியோக₃த்தைத் தொடங்குவதற்குத் தடையான பாபங்களனைத்தையும் போக்குவதைக் குறித்தோ தன்னைச் சரணடையும்படி கண்ணன் கூறுகிறான் சரம ஶ்லோகத்தில். அதனால் இங்கு அப்படியே உரையிட்டார் பா₄ஷ்யகாரர். ப₄க்தியோக₃த்தை அநுஷ்டி₂க்க ஜ்ஞானசக்திகள் இல்லாதாரைக்குறித்து, சரணமடைந்த அவர்களுக்குத் தன்னை அடையத் தடையாயிருக்கும் எல்லாப்பாபங்களையும் போக்குவதாகக் கண்ணன் கூறுவதாகவே இந்த ஶ்லோகம் பொருள் படும் என்பதை க₃த்₃யத்ரயத்தில் காட்டினார் என்றபடி.

ஸாது₄ஷ்கரேண மோசேத்₃யோ யேந யேந இஷ்டஹேதுநா।
ஸ ஸ தஸ்யாஹமேவேதி சரமஶ்லோக ஸங்க்₃ரஹ:॥

[எவனொருவன் தான் அடையவிரும்பும் எந்தஎந்தப் பலன்களுக்கு ஸாத₄னம் தன்னால் செயற்கரியது என வருந்தி என்னைச் சரணமடைகிறானோ அவனுக்கு அவ்வப்பலன்களை ஸாதி₄த்துத் தருபவன் நானேயாகிறேன் என்பது சரமஶ்லோகத்தின் திரண்டபொருளாகும்] என்னும் தாத்பர்யசந்த்₃ரிகா ஶ்லோகம் இங்கு அநுஸந்தி₄க்கத் தக்கது.

(இவ்விஷயத்தில் முற்பட்ட ஆசார்யர்கள் அருளும்ஸமாதா₄னம் பின்வருமாறு:— எம்பெருமான் ஒவ்வொரு செயலிலும் ஜீவனுக்கு அளித்திருக்கும் ஸ்வாதந்திரியத்தைப் பயன்படுத்தி, ஜீவன் அநுஷ்டிக்கும் எந்த ஸாத₄னமும் (அது மோக்ஷ ஸாத₄னமாகவே இருந்தாலும்) ஜீவனுடைய அத்யந்தபாரதந்திர ஸ்வரூபத்தோடு முரண்பட்டது. ஆகையால், அக்காரணத்தாலேயே, "கர்மஜ்ஞாந ப₄க்தியோக₃ங்கள் மோக்ஷோபாயம் என்னும் எண்ணத்தை வாஸனையோடு கைவிட்டு, இயல்வான உபாயமாயிருக்கும் என்னை ஒருவனையே மோக்ஷோபாயமாகப்பற்று; நான் உனக்கு என்னையடையத்தடையான எல்லாப்பாபங்களையும் நீக்குகிறேன்; வருந்தாதே" என்பதே இந்த ச்லோகத்திற்கு முக்யமான பொருளாகும். ப்ரவ்ருத்திபரனான அர்ஜுனனுக்கு இவ்வர்த்த₂ம் ருசிக்காமையாலே, கண்ணன் அவனுக்கு ப₄க்தியோக₃த்தை விதி₄த்து, அதற்கு அங்க₃மாக இந்தச் சரமஶ்லோகத்தில் ப்ரபத்தியை விதி₄க்கிறானாகையாலே, பா₄ஷ்யகாரர் அதற்கு அநுகு₃ணமாக இரு யோஜனைகளை வெளியிட்டார். க₃த்₃யத்ரயத்தில் முக்₂யார்த்த₂த்தை வெளியிட்டார் என்றபடி)

ப்ரவ்ருத்திபரனுன அர்ஜுனனுக்கு இந்த ஶ்லோகத்தின் முக்₂யார்த்த₂ம் ருசிக்கவில்லை என்று எப்படிக் கூறுவது? எனில்: இந்த ப்ரகரணத்தை ஆராய்ந்தால் அது தெளிவாக விளங்குகிறது. அதாவது: கீதை 18-61ல் ''ஸர்வேஶ்வரன் எல்லா ஜீவர்களின் இதயத்திலும் இருந்துகொண்டு ஶரீரமாகிற யந்திரத்தில் வைத்து அவர்களை ஆட்டிவைக்கிருன்'' என்று சொல்லப்பட்டது. இதற்கு மேல் இதிலிருந்து தப்பிக்க வழியென்ன என்பதை அடுத்த ஶ்லோகத்தில் [18-62] "ஆட்டிவைக்கும் அந்தப் பரம புருஷனையே (ப்ராப்யம் ப்ராபகம் முதலான) எல்லாமாக நினைத்து ஶரணமடைவாயாக. அப்படிச் சரணமடைந்தால் அவனருளாலே எல்லாப் பாபங்களும் நீங்கப்பெற்றுப் பரமபதத்தையும் அடைவாய்'' என்று அருளிச்செய்கிருன் கண்ணன். இந்த உபதேசம் அர்ஜுனன் நெஞ்சில் ஏறியிருந்தால் '' கரிஷ்யே வசநம் தவ '' [18-73] [நான் நீ சொல்லுகிறபடி போர் புரிகிறேன்] என்னும் வார்த்தை அர்ஜுனனிடமிருந்து உடனேயே வந்திருக்கும். எம்பெருமான் ஒவ்வொரு செயலிலும் ஜீவனுக்கு முதல் முயற்சியில் ஸ்வாதந்த்ரியம் கொடுத்திருக்கிருனுகையாலே, அர்ஜுனனை நிர்ப்பந்தப்படுத்தி அவனை முக்ய ப்ரபந்நனுக்கி உடனே போர்புரியச் செய்யவல்லவனுயினும் அவ்வாறு செய்யமாட்டான். அதனுலேயே அடுத்த ஶ்லோகத்தில் [18 63] ''ரஹஸ்யங்கள், அனைத்திலும் பரமரஹஸ்யமான எல்லா ஜ்ஞாநங்களையும் உனக்கு நான் உபதேசித்து விட்டேன். இவையனைத்தையும் நன்ருக ஆராய்ந்து நீ எதை விரும்புகிருயோ அதைச் செய்வாய்'' என்று அவனை கர்ம ஜ்ஞாந ப₄க்தி யோக₃ங்களாகிற ப்ரவ்ருத்திகளையோ, ப்ரவ்ருத்திகள் அனைத்தினின்றும் நீங்கி அவனை எல்லாப்படியாலும் அநுவர்த்திப்பதாகிற முக்₂ய ஶரணுக₃தியையோ அநுஷ்டிக்கும் ஸ்வாதந்த்ர்யத்தை அவனுக்குக் கொடுத்தான் கண்ணன், ''நீ சொல்லுகிறபடி போர்புரிகிறேன்'' என்று அர்ஜுனனிடமிருந்து உடனே பதில் வராமையாலே, எல்லாப் படியாலும் தான் சொல்லுகிறபடி கேட்கையாகிற முக்₂ய ப்ரபந்நனின் நிலையில் அவனுக்கு ருசியில்லை என்று அறிந்தான். ப்ரவ்ருத்தி பரனுன இவனுக்கு ''ப₄க₃வத் ப்ரவ்ருத்தி விரோதி₄ ஸ்வ ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி: ப்ரபத்தி:''[எம்பெருமான் செயல்புரிவதற்குத் தடையாயிருக்கும்(தன் நன்மைக்குத்)தான் பாடுபடுவதாகிற அனைத்தினின்றும் நீங்கியிருத்தலே ப்ரபத்தியாகும்.] என்னும் லக்ஷணத்தையுடைய முக்₂யப்ரபத்தியை ஏற்றுக்கொள்ளும் மனப்பான்மையில்லை என்று உணர்ந்ததனுல் அடுத்த ஶ்லோகத்தில் [18—64]

தான் ஏற்கனவே ஒன்பதாம் அத்தியாயத்தில் உபதேசித்த பக்தி யோகமே இவனுக்கு நன்மை பயக்கும் என்று நிச்சயித்து, அதைக் கூறுவதாகச் சொல்லி "மந்மநா பவ" [18-65] என்று தொடங்கி அந்த பக்தி யோகத்தையே மோக்ஷஸாதனமாக விதிக்கிறான் கண்ணன். அதற்கு அங்கமாகச் சரம ஸ்லோகத்தில் [18—66] ப்ரபத்தியை விதிக்கிறான். இவற்றிலிருந்து 18—62 ல் விதிக்கப்பட்ட முக்ய ப்ரபத்தி அர்ஜுனனுக்கு ருசிக்காமையால் தான் கண்ணன் அந்த [18—66] ஸ்லோகத்தில் அர்ஜுனனுக்கு அங்கப்ரபத்தியை விதிக்கிறான் என்று இந்த ப்ரகரணத்திலிருந்து விளங்குகிறது.

சக்தியுடையவர்கள் பக்தியையே அநுஷ்டிக்கவேண்டும் என்னும் காரணத்தாலேயே கண்ணன் "மந்மநா பவ" என்று பக்தியையும் அடுத்த ஸ்லோகத்தில் அங்கப்ரபத்தியையும் விதிக்கிறானென்று கொண்டால், [கீதை 18—62] ல் கண்ணன் அர்ஜுனனுக்கு "எல்லாப்படியாலும் பரமபுருஷனைச் சரணமடைவாய். அவனருளாலே எல்லாப்பாபங்களும் நீங்கப்பெற்றுப் பரம பதத்தையும் அடைவாய்" என்று பரமமோக்ஷத்தின் பொருட்டு எல்லாப்படியாலும் பரமபுருஷனைப் பின்பற்றியிருக்கையாகிற முக்ய ப்ரபத்தியை விதித்திருப்பது ஒட்டாது, ஸர்வஜ்ஞனான கண்ணன் பக்தி யோகத்தில் சக்தியுடையவன் அர்ஜுனன் என்று அறிந்தும் [18—62] ல் முக்ய ப்ரபத்தியை விதித்து அடுத்த ஸ்லோகத்தில் [18—63] "நீ உன் விருப்பம் போல் அனுஷ்டிப்பாய்" என்று கூறியிருக்கையாலே சக்தியுடையவர்களும் ஜீவன் பரமாத்மாவுக்கு அத்யந்த பரதந்த்ரமானது என்னும் ஸ்வரூபஜ்ஞானம் உடையவர்களாக இருந்தால் முக்ய ப்ரபத்தியை அனுஷ்டிக்கலாம் என்று திருவுள்ளம் பற்றுகிறான் என்று விளங்குகிறது "ஸர்வபாவேந ஶரணம் கச்ச" [18-62] என்று விதித்து, அதற்குப் பலனாக ஸர்வபாபவிமோசநத்தையும் பரமபதத்தையும் அருளியிருக்கையாலே இந்த ஸ்லோகம் முக்ய ப்ரபத்தியை விதிக்கவில்லை என்று கூறமுடியாது இதையொட்டியிருக்கும் முன்ஸ்லோகங்களில் பக்தியோகம் விதிக்கப்படவில்லையாகையால் இந்த ஸ்லோகம் அங்கப்ரபத்திபரம் என்றும் கூற முடியாது. ஒன்பதாம் அத்தியாயத்திலிருந்து தொடங்கிவிதிக்கப்பட்ட பக்தியோகத்திற்கு அங்கமாகவே இங்கு ப்ரபத்தியைவிதிக்கிறான் என்று கொள்ளப்பார்த்தால் அடுத்துவரும் [18-65, 66] ஸ்லோகங்களில் மறுபடியும்பக்தியை விதித்து அங்கப்ரபத்தியை விதிப்பதுஒட்

டாது. மேலும் "ஸர்வபூ₄ரவேந ஶரணம் க₃ச்ச₂" என்கையால்முக்₂ய ஶரணாக₃தியே இங்கு விதிக்கப்படுகிறது என்றும், அதற்குப் ப₂லனாக ஶ்லோகத்தின உத்தரார்த்த₄த்தில் இஷ்டப்ராப்தியும் அநிஷ்ட நிவ்ருத்தியும் கூறப்படுகிறது என்றும, "தத்ப்ரஸாத₃ாத்" என்று இப்பலன் உண்மையில் எபெருமானுடைய நிர்ஹேதுக க்ருபையாலே கிடைக்கிறது என்றும் ஶ்லோகத்திலிருந்தும் பூ₄ாஷ்யத்திலிருந்தும் மிகத் தெளிவாக விளங்குகிறது.

சக்தியுள்ளவர்களும் எம்பெருமானை எல்லாப்படியாலும் பின்பற்றி நிற்கையாகிற ஸித்₃தோ₄பாய நிஷ்டை₂யுள்ள முக்₂ய ப்ரபந்நனாயிருக்கலாம் என்பதை ஒரு லோக த்₃ருஷ்டாந்தத்தின் மூலமும் காணலாம். அதாவது:— ஒரு சிறந்த தகப்பனுக்கு இரு பிள்ளைகள் இருக்கிறார்கள், தகப்பன் இரு பிள்ளைகளின முன்னேற்றத்திற்கும் அரும்பாடுபடுகிறான். ஆயினும் புண்யவசத்தால் ஒருபிள்ளை உயர்ந்த பதவிக்கு வந்து மிக அதிகமாகப் பொருளீட்டித் தன்னைத் தானே ரக்ஷித்துக்கொள்ள சக்தியுள்ளவனாகிறான். மற்றொரு மகன் அவன் முற்பிறவிகளில் செய்த பாபங்களாலே உலகவாழ்க்கையில் முன்னேற முடியாமல் தகப்பனாலேயே தன் ரக்ஷணம் நடைபெற வேண்டிய நிலையில் இருக்கிறான். இதில் முந்திய மகன் தான் மிகுதியாக ஸம்பாதிப்பதைக்கொண்டு தன்னைத் தானேயும் ரக்ஷித்துக்கொள்ளலாம். தன்னை இந்த அளவுக்கு உருவாக்கியவர் தந்தையே என்பதை உணர்ந்து, தான் ஈட்டும் பொருளனைத்தும் அவருடையதே என்று அறுதியிட்டு, அவற்றை அவருடைய திருவடிகளில் ஸமர்ப்பித்து. "தேவரீரே என்னை ரக்ஷித்தருள வேண்டும்" என்றுகூறி அதன்படியும் வாழலாம். முதல் முறையில் வாழ்ந்தான் என்றால் அவன் ஸ்வரூப ஜ்ஞானம் இல்லாதவன் என்றும், இரண்டாவது முறையில் வாழ்ந்தால் அவன் ஸ்வரூப ஜ்ஞானம் உள்ளவன் என்றும் விளங்கும். இதே ரீதியில் ப₄க்தி யோக₃த்தை அனுஷ்டி₂க்க ஶக்தியுள்ளவன் தனது நன்மையாகிற மோக்ஷத்திற்கு அதை ஸாத₄நமாகக்கொண்டு பேரின்பம் பெற்றும் வாழலாம். அல்லது தான் ப₄க்தியோக₃த்தை அனுஷ்டிக்கவல்லவனானதும் எம்பெருமான் அநாதி₃காலமாகச் செய்த முயற்சிகளின் பயனே என்றும், உண்மையில் நாம் அவனைப்பெற ஆசைப்படுவதைக்காட்டிலும் அவன் நம்மைப்பெற ஆசைப்பட்டு அநாதி₃காலமாகப் பல முயற்சிகள் செய்கிறான் என்றும், நாம் நமது இன்பத்திற்காகப் பாடுபட்டு வந்ததே இத்தனை நாட்களாக அவனைப் பெறுவ

தற்குத் தடையாயிருந்தது என்றும் உணர்ந்து அந்த பக்தியையும் ஸாதனமாகக் கருதாமல் ஸ்வயம்ப்ரயோஜனமாக எண்ணி அவனுடைய நிர்ஹேதுக க்ருபையைக்கொண்டே அவனைப்பெறவிருக்கும் ப்ரபந்நனுகவும் வாழலாம். இதில் முந்திய நிலையைக் கொண்டானுல் அவனுக்கு ஸ்வரூபஜ்ஞாநம் பூர்ணமாக இல்லை என்றும், பிந்திய நிலையைக் கொண்டானுல் அவனுக்கே ஸ்வரூப ஜ்ஞானம் பரிபூர்ணமாக உள்ளது என்றும் தெளிவாக விளங்குகிறது. பக்தியை உபாயமாகக் கொண்டவனுக்கும் இந்த ஸ்வரூப ஜ்ஞாநம் உண்டாகவேண்டும் என்னும் காரணத்தாலேயே "இந்தக் கர்மம என்னுடையதன்று, இதன் பலன் என்னுடையதன்று, இதைச் செய்பவன் நானல்லன்" என்னும் மூன்றுவகைப் பட்ட அநுஸந்தானங்களோடு (த்ரிவித த்யாகங்களோடு) ப்ராரப்த கர்மம் முடியும் வரையில் பல ஜந்மங்கள் அவனை பக்தி யோகத்தை அநுஷ்டிக்கும்படி செய்திருக்கிருன் எம்பெருமான் என்றும் விளங்குகிறது.

இந்த ஸ்வரூப ஜ்ஞாநம் உண்டாகிவிட்டால் அவனுக்கு ப்ராரப்த கர்மங்கள் எஞ்சியிருந்தாலும், அவன் பக்தனுயிருப்பதோடு ப்ரபந்நனுகவும் ஆகிவிட்டபடியால் அவனுடைய பக்தி ஸ்வயம் ப்ரயோஜந பக்தி ஆகிவிடுகிறது என்றும், அவனுக்கு இந்த ஜ்ஞானம் உண்டான ஜன்மத்திலேயே மோக்ஷம் கிடைத்து விடுகிறது என்றும் கீதையில் பலவிடங்களில் காட்டியிருக்கிருன் கண்ணன்.

ஏழாம் அத்தியாயத்திலிருந்து தொடங்கி, உண்மையில் மோக்ஷத்திற்கு இயற்கையான உபாயமாயிருப்பவன் தானே என்றும், மனிதனின் முயற்சி முதலானவையெல்லாம் செயற்கையான உபாயங்களே என்றும், தன் நன்மைக்குத் தான் பாடுபடுவதையே அநாதிகாலமாக இயல்வாகக்கொண்ட சேதனனுக்குத் தானே உபாயம் என்னும் இந்த உண்மையை உணர்த்துவதற்காகவே— அவனை அவனுக்குப் பள்ளமடையான கர்மஜ்ஞான பக்தியோகங்களிலே மூட்டி மோக்ஷோபாயமாக அவனுக்குப் பரபக்தியை விதித்து. அதற்கு அங்கமாக ஆத்மாவைப்பற்றிய உண்மையறிவை இடைவிடாது அனுஸந்திக்கச்செய்து, அந்த அநுஸந்தானத்தின் பொருளை நன்குணர்ந்தவுடன் எம்பெருமானே உபேயமாக இருப்பதோடல்லாமல் உபாயமாகவும் இருக்கிருன் என்னும் உணர்வாகிற பரஜ்ஞாநத்தை அவனுக்கு விளைத்து. அதற்குப் பின் எம்பெருமானைக் கணநேரம் விட்டுப்பிரியிலும் தரியாமலிருக்

கையாகிற பரமப4க்தியை அவனுக்கு விளைக்கிறான் என்றும், அந்தப் பரமப4க்தி விளைந்தவுடன் அவனுக்கு ப்ராரப்3த4கர்மப்படி இன்னும் சில ஜன்மங்கள் எடுக்கவேண்டியிருந்தாலும் பரமப4க்தி விளைந்த அந்த ஜன்மத்திலேயே அவனுக்கு மோக்ஷமளித்து விடுவதாகவும் கண்ணன் கூறியிருக்கும் சில இடங்களைக் காண்போம் இனி.

1. ஏழாம் அத்தியாயத்தில் ப4க்தி யோக3த்தை உபதேசிக்கத் தொடங்குமுன் 'அதை அநுஷ்டி2ப்பவன் அநுஸந்திக்கவேண்டிய தன்னைப்பற்றிய உண்மையறிவை ஐயந்திரிபறப் பரிபூர்ணமாகச் சொல்லுகிறேன்' என முதல் ஶ்லோகத்தில் கூறுகிறான். இரண்டாம் ஶ்லோகத்தில் இவ்வறிவைப் பூர்ணமாகப் பெற்றால் அறிய வேண்டுவது வேறொன்றுமில்லை என்கிறான். மூன்றாம ஶ்லோகத்தில் 'உலகிலுள்ள மனிதர்களில் ஆயிரத்தில் ஒருவனே ஶப்3த3ாதி3 விஷயங்களில் நசையற்று மோக்ஷத்திற்காக அதை அடையும் வரையில் முயல்பவன்' என்றும், 'அவர்களிலும் பலர் தம் ஆத்மாவைத் தாம் அநுப4விப்பதாகிற தாழ்ந்த கைவல்யமோக்ஷத்தைப்பெற்று விடுகிறார்களாகையாலே மோக்ஷத்தின் பொருட்டு முயல்பவர்களிலும ஆயிரத்தில் ஒருவனே என்னை ப்ராப்யமாக அறிந்து. என்னை அடைவதாகிற பரம மோக்ஷத்தைப் பெறும் வரையில் முயல்கிறான்' என்றும், 'அவர்களிலும் ஆயிரத்தில் ஒருவனே நான் ப்ராப்யமாக இருப்பதோடல்லாமல் ப்ராபகமாகவும் இருப்பவன் என்பதை அறிபவன்' என்றும் கூறுகிறான். இங்கு முதலில் இருக்கும் இருவரைச் சொல்லும்போது 'முயற்சி செய்பவர்கள்' என்று கூறி, மூன்றாமவனைக் கூறும்போது 'முயற்சி செய்பவன்' என்று கூறாமல் 'உள்ளபடி அறிபவன்' என்று மட்டும் கூறுவதால் உபாயம் எம்பெருமானேயாகையாலே அவனைப் பெறுவதற்கான முயற்சிகளினின்றும் கையாங்கி அவனையே ப்ராப்யம் ப்ராபகம் முதலிய எல்லாமாகவும் கொண்டிருக்கும் ஸித்3தோ4பாய நிஷ்ட2னான அதிகாரியே இவன் என்று விளங்குகிறது. அத்தகைய அதிகாரி ஒருவனுமே இல்லை என்று கண்ணன் திருவுள்ளம் பற்றுகிறான் என்பதை பா4ஷ்யகாரர் இவ்வத்தியாயத்தின் 19, 26 ஶ்லோகங்களை ஆதா4ரமாகக் காட்டி நிரூபிப்பதிலிருந்து ப்ரவ்ருத்திபரர்கள் நிறைந்த த்வாபரயுகம் வரையில், ப4க3வத்ப்ரவ்ருத்தி விரோதி4 ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியில் [எம்பெருமான் சேதநனை அடைவதற்குச் செய்யும் முயற்சிகளுக்குத் தடையாயிருக்கும் (தன் நன்மைக்கான) தன் முயற்சிகளிலிருந்து நீங்கி நிற்கையாகிற ப்ரபத்தியில்] ஊன்றியிருக்கும் ஆழ்வார்களைப்

போன்ற அதிகாரிகள் இல்லை என்று விளங்குகிறது. நாலாம் ஸ்லோகத்தில் அசேதந ஸமஷ்டிப் பொருள்கள் அனைத்தும் பரமபுருஷனை தனக்குப் பரதந்த்ரமானது என்கிறான். ஐந்தாம் ஸ்லோகத்தில் அவ்வசேதநப் பொருளுக்கு மேற்பட்ட சேதந ஸமஷ்டியும் தனக்குப் பரதந்த்ரமானது என்கிறான். இதனால் சேதநன் அசேதனத்தைப்போலே பரதந்த்ரமானவனுகையாலே தன் நன்மைக்குத் தான் பாடுபடுவது ஆத்ம பரமாத்மாக்களைப் பற்றிய உண்மையறிவுக்கு முரணானது என்று உணர்த்தப்படுகிறது. ஆறும் ஸ்லோகத்தில் முற்கூறிய சேதநாசேதந ஸமஷ்டிப் பொருள்களைக் காரணமாகக்கொண்ட வ்யஷ்டிப் பொருள்களுக்கும் பரமபுருஷனை தானே காரணமாகவும் சேஷியாகவும் இருப்பவன் என்கிறான். இதிலிருந்து காரணமாகவும் சேஷியாகவும் இருக்கும் தானே கார்யமாகவும் சேஷனுகவும் இருக்கும் சேதநனின் நன்மைக்குப் பாடுபட வேண்டியவன் என்றுஉணர்த்துகிறான். ஏழாவது ஸ்லோகத்தின் முற்பாதியில் கல்யாண குணங்களில் ஜீவர்களைக் காட்டிலும் உயர்ந்தவன் தானே என்கிறான். இதனால் ஜ்ஞாநம், ஶக்தி முதலானவற்றில் குறைந்தவர்களான ஜீவர்கள் தம் நன்மைக்குத் தாம் பாடுபடுவதைக் காட்டிலும், தம்முடைய பொறுப்பை என்னிடம் ஒப்படைத்திருப்பது நல்லது என்று உணர்த்துகிறான். ஏழாவது ஸ்லோகத்தின் பிற்பாதியில் தானே அனைத்துக்கும் ஶரீரியாயிருப்பதால் ஶரீரத்திற்கு நன்மையைத் தேடுவதற்கு ஶரீரியான தனக்கே உரிமையுண்டு. ஶரீரத்திற்குத் தன் நன்மையைத் தானே தேடிக்கொள்ள உரிமையில்லை என்று உணர்த்துகிறான். இக்காரணங்களால் கண்ணன் சேதநர்களுக்குத் தானே இயற்கையான ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும் இருப்பவன் என்று அறுதியிட்டான். எட்டு முதல் பன்னிரண்டாவது ஸ்லோகம் ஈறாக, சேதநாசேதநப் பொருள்களில் அவற்றின் ப்ராப்யத்வத்திற்கும் ப்ராபகத்வத்திற்கும் உறுப்பான சிறந்த பெருமைகள் எல்லாம் தன்னால் வருபவையே என்றும், தான் அவற்றுக்கு அதீனமானவனல்லன் என்றும் உணர்த்தினான். இந்தப் பன்னிரண்டு ஸ்லோகங்களிலும் பரமபுருஷனுகிற கண்ணன் தன்னைப் பற்றிய உண்மையறிவைக் கூறுகிறான் என்பதை ''ஸ்வயாதாத்ம்யம்'' என்னும் பதத்தால் ஆளவந்தார் கீதார்த்தஸங்க்ரஹத்தில் (11) உணர்த்துகிறார்.

2 இப்படி எம்பெருமானே உபாயமாகவும் உபேயமாகவும் இருக்கும்போது அதை ஜீவர்கள் ஏன் உணர்வதில்லை என்னும் கேள்வியெழுகிறது. 13 வது ஸ்லோகத்திலும் 14 வது ஸ்லோகத்தின் முற்பகுதியிலும் 'என்னைப் பற்றிய இந்த உண்மை அறிவை என்

னுடையதான அசேதநப்ரக்ருதியின் தொடர்பு ஜீவனுக்கு மறைக்கிறது' என்று காட்டுகிருன் 14 வது ஸ்லோகத்தின் பிற்பகுதியில் "ஜீவனுக்குள்ள இந்தப்ரகருதியின் தொடர்பு என்னைச் சரணமடைவதாலேயே நீங்குகிறது" என்று காட்டுகிருன். ஆக, தன் முயற்சியில் ஈடுபட்டவனும் அவ்வப்போது தன்னைச் சரணமடைந்தே தடைகளை நீக்கிக்கொள்ளவேண்டும் என்று உணர்த்துகிருன், பதினைந்தாவது ஸ்லோகத்தில் பாபத்தை மிகுதியாகச் செய்த நாலு வகைப்பட்ட ஜீவர்கள் தன்னைச்சரணமடைவதில்லை என்று காட்டுகிருன். இவ்வத்தியாயத்தின் இவ்விரண்டாவதுபகுதி "ப்ரக்ருத்யா அஸ்ய திரோதி₄: ஶரணாக₃தி:" [பரமபுருஷனைப்பற்றிய உண்மை நிலை (ஜீவனுக்கு) பிரக்ருதியாலே மறைக்கப்படுவதும், அம்மறைவைப்போக்கடிக்கும் ஶரணாகதியும்] என்று ஆளவந்தாரால் கீ₃தார்த்த₂ஸங்க்ரஹத்தில் [11] சுருக்கிக்கூறப்பட்டது

3. இப்படிப் பாபம் மிகுந்திருக்கும் ஜீவர்களுக்கு எதிர்த்தட்டாக, புண்யம் மிகுந்திருக்கும் நாலுவகைப்பட்ட ஜீவர்கள் அவரவர் புண்யத்தின் ஏற்றத்தாழ்வுகளுக்குத் தக்கபடி ஐஶ்வர்யத்தையோ ஆத்மாநுப₄வமாகிற கைவல்யத்தையோ என்னையோ அடையவிரும்பி அதன் பொருட்டு என்னைச் சரணம் புகுந்து என்னிடம் ப₄க்தி செலுத்துகிருர்கள் என்று பதினாறுவது ஸ்லோகத்தில் கூறுகிருன். இங்கு நாலுவகைப்பட்டவர்கள் சொல்லப்பட்டிருந்தபோதிலும் ஆர்த்தன், அர்த்தா₂ர்த்தி₂ ஆகிய இருவரும் ஐஶ்வர்யார்த்தி₂ என்னும் ஒரேவகையில் அடங்குவர். ஆக, ஐஶ்வர்யத்தை விரும்புகிறவர், கைவல்யத்தை விரும்புகிறவர், பரமாத்மாவை விரும்புகிறவர் ஆகிய மூவரும் முறையே ஒருவர்க்குமேல் ஒருவர் மிகுந்த புண்யம் செய்தவர்கள் என்பது இந்த ஸ்லோகத்திலுள்ள 'ஸுக்ருதிந:' என்னும் பதத்திலிருந்து விளங்குகிறது. இப்பதத்தின் பா₄ஷ்யத்தில் "ஸுக்ருததாரதம்யேந ப்ரதிபத்தி வைஶேஷ்யாத் உத்தரோத்தரம் அதி₄கதமா ப₄வந்தி" [ஒருவனுக்குமேல் ஒருவன் மிகுந்த புண்யம் செய்திருக்கையாலே அவர்கள் விரும்பும் பொருள் மேன்மேலே சிறந்ததாயிருக்கையால் ஒருவர்க்குமேல் ஒருவர் சிறந்தவர்களாக ஆகிருர்கள்.] என்று அருளிச்செய்யப் பட்டது "குறைந்த புண்யம் உள்ளவன் அபபுண்யத்துக்குத் தக்கபடி ஐஶ்வர்யத்தை விரும்புகிருன். அவனிலும் மிகுந்த புண்ணியம் உள்ளவன் ஆத்மாநுப₄வமாகிற கைவல்யத்தை விரும்புகிருன். அவனிலும் மிகுந்த புண்யம் உள்ளவன் அனைத்திலும் மேலான என்னையே விரும்புகிருன். அவரவர் விருப்பத்தைப் பெறுவதற்காக என்னை ஶரணமடைந்து உபாஸந விரோதி₄பாவம் நீங்கப்பெற்று, தங்கள் விருப்பம் நிறைவுபெறுவதற்காக என்னை உபாஸிக்கிருர்கள்" என்பது இந்த ஸ்லோகத்தின் திரண்ட

பொருள் என்பது இந்த பாஷ்யத்திலிருந்து விளங்குகிறது. இவர்களில் மிகச்சிறந்தவனான ஜ்ஞாநியும் பரமபுருஷனைப் பெற்று, தான் பேரின்பம் அடைவதற்காக பக்தி யோகமாகிற முயற்சியைச் செய்பவன் என்பது குறிக்கொள்ளத்தக்கது. பதினேழாவது ஶ்லோகத்திலிருந்து தொடங்கி பதினெட்டாவது ஶ்லோகம் ஈருக மற்ற பக்தர்களைக் காட்டிலும் இந்த உபாஸக ஜ்ஞாநியின் சிறப்பு சொல்லப்பட்டது. பத்தொன்பதாவது ஶ்லோகத்தில் ''பல ஜன்மங்கள் கழித்து உபாஸக ஜ்ஞாநிக்குப் பரமபுருஷனைப்பற்றிய உண்மையறிவை அநுஸந்திப்பதாலே 'அவனே ப்ராப்யனாகவும் ப்ராபகனாகவும் இருப்பவன்' என்னும் அறிவு ஏற்பட்டு அவனையே எல்லாமாகப் பற்றுகிறான். இவ்வறிவு ஏற்பட்ட ஜன்மமே இவனுக்குக் கடைசி ஜன்மம். இத்தகைய ஜ்ஞாநி மஹாத்மா எனத்தக்கவன், எம்பெருமானுக்கே கிடைத்தற்கரியவன்'' என்று சொல்லப்பட்டது இதிலிருந்து எம்பெருமானை ப்ராப்யமாகவும், தன் முயற்சியாகிற பக்தி யோகத்தை ப்ராபகமாகவும் நினைக்கும் உபாஸக ஜ்ஞாநிக்குத் தன் ஸ்வரூபத்தைப்பற்றிய ஜ்ஞானம் பூர்ணமாக இல்லை என்றும், 'எம்பெருமானே ப்ராபகமாகவும் இருப்பவன்' என்னும் உண்மையறிவு ஏற்பட்டால்தான் பக்தியை ஸாதநமாக எண்ணும் நினைவு நீங்கப்பெற்று அது ஸ்வயம் ப்ரயோஜநபக்தியாகப் பரிணமித்து அவன் ப்ரபந்நனாகிறானகை யாலே 'மஹாத்மா' என்று கொண்டாடத்தக்கவனாகிறான் என்றும் உணர்த்தப்படுகிறது. ''பஹூநாம் ஜந்மநாம் அந்தே'' என்கையாலே ப்ராரப்த கர்மம் எஞ்சியிருந்தபோதிலும் ப்ரபந்நனாகப் பரிணமித்த இந்த ஜன்மமே அவனுக்குக் கடைசி ஜன்மம் என்று உணர்த்தப்படுகிறது. எம்பெருமான் பக்தியோகத்தை விதிப்பதே அந்த உபாஸகன் இப்படி மஹாத்மாவான ஜ்ஞானியாகப் பரிணமிக்கவேண்டும் என்னும் திருவுள்ளத்தாலேயே என்றும் விளங்குகிறது. இருபதாவது ஶ்லோகத்திலிருந்து தொடங்கி இருபத்தைந்தாவது ஶ்லோகம் வரையில் இத்தகைய மஹாத்மாவான ஜ்ஞாநி மிகச்சிறந்தவன் என்று நிலைநிறுத்துவதற்காக, பலகோடி ஜனங்கள் என்னைப்பற்றிய அறிவே இல்லாமல் ராஜஸ தாமஸ நூல்களைப் பற்றி நின்று மற்ற தெய்வங்களை உபாஸிப்பவர்களாகவும், தன்னைப் பரமாத்மாவென்று உணராத அறிவிலிகளாகவும் வாழ்வதாகக் கூறுகிறான் கண்ணன். ஜ்ஞாநியின் சிறப்பைக் காட்டுவதில் நோக்குடையவை இந்த ஶ்லோகங்கள், இப்பகுதி ''பக்தபேதத: ப்ரபுத்தஸ்ய ஶ்ரைஷ்ட்யம் உச்யதே'' [பக்தர் நால்வரில் ஜ்ஞாநியின் சிறப்புக்கூறப்படுகிறது.] என்று ஆளவந்தாரால் கீதார்த்த ஸங்க்ரஹத்தில் சுருக்கமாகக் கூறப்பட்டது.

4. இருபத்தாறுவது ஶ்லோகத்தில் 'நான் எல்லாபூ₃த்₃த₄ ஜீவர்களையும் அறிந்திருந்தபோதிலும் அந்த ஜீவர்களில் ஒருவனும் என்னை உள்ளபடி அறிவதில்லை' என்று கூறுகிறுன். மூன்றுவது ஶ்லோகத்தின் பா₄ஷ்யத்தில் எப்பெருமானை உள்ளபடி அறிபவன் ஒருவனுமில்லை என்று கூறிவிட்டு, அதற்கு ப்ரமாணமாக 'ஸ மஹாத்மா ஸுது₃ர்லப₄:' என்று பத்தொன்பதாவது ஶ்லோகப் பகுதியையும் ''மாம் து வேத₃ ந கஶ்சந'' [என்னை ஒருவனும் உள்ளபடி அறிவதில்லை ] என்னும் இந்த ஶ்லோகப் பகுதியையும் காட்டியிருப்பதிலிருந்து. ஆழ்வார்களைப்போன்ற மஹாத்மாவான ஜ்ஞானி தன் காலத்தில் ஒருவருமே இல்லையென்னும் குறையோடேயே கண்ணன் எழுந்தருளியிருந்தான் என்று விளங்குகிறது. இப்படி ஒருவருமே தன்னை உள்ளபடி அறியாமல் இருப்பதற்குக் காரணத்தையும், இவர்களில் சிலர் 16வது ஶ்லோகத்தில் சொன்னபடி தன்னுடைய ப₄க்தர்களாக எப்படி ஆகிறுர்கள் என்பதையும் 27—28 ஶ்லோகங்களில் விளக்குகிறுன் கண்ணன். இவ்விரு ஶ்லோகங்களிலும் அவற்றின் பா₄ஷ்யத்திலும் புண்ய பாப லக்ஷணம் காட்டப்படுகிறது. அந்த ஶ்லோகங்களின் வியாக்கியானத்தில் இது மிகவும் விரிவாக நிரூபிக்கப்பட்டிருக்கிறது. ''புண்யத்தாலே பாபம் சிறிது சிறிதாக அழியப்பெற்றவர்கள் தத்தம் புண்ணியத்தின் ஏற்றத் தாழ்வுகளுக்கு ஏற்ப, ஐஶ்வர்யத்தையோ, கைவல்யத்தையோ, பரமபுருஷனையோ பெறவிரும்பி உறுதியுடன் பக்தி செய்கிறுர்கள்'' என்பது இந்த இருஶ்லோகங்களின் திரண்டபொருள். ''ஶாஸ்திரங்களையொட்டி ஶப்₃தா₃தி₃ விஷயங்களை விரும்பிச்செய்யப்படும் முயற்சிகள் புண்ணியம் என்றும், ஶாஸ்திரங்களுக்கு மாறுக அவ்விஷயங்களை விரும்பிச்செய்யப்படும் முயற்சிகள் பாபம் என்றும் சொல்லப்படுகின்றன. ஆத்மாவையோ, பரமாத்மாவையோ விரும்பிச் செய்யப்படும் கர்ம ஜ்ஞான ப₄க்தி யோக₃ங்கள் முதலான முயற்சிகள் புண்யபாபங்கள் எனத்தக்கவையல்ல. மோக்ஷஸாத₄னங்கள் என்னும் வகுப்பில் சேர்ந்தவை அவை'' என்னும் மர்மம் இவ்விரு ஶ்லோகங்களிலிருந்து வெளிப்படுகிறது. அதனாலேயே கைவல்யார்த்தி₂க்கு ஶப்₃தா₃தி₃ விஷயங்களில் விருப்பத்தால் உண்டான புண்ய பாபங்கள் கழிந்த பின்பும் தன் விருப்பத்தையொட்டி அனுஷ்டிக்கும் மோக்ஷஸாத₄நத்தாலேஅவன் கைவல்யமோக்ஷத்தைப் பெறுகிறுன் என்றும், பரமபுருஷனை அடையவிரும்புபவன் தன்விருப்பத்தையொட்டி அவன் அனுஷ்டிக்கும் மோக்ஷ

ஸாத₄னத்தாலே பரமபுருஷனைப் பெறுகிறான் என்றும்விளங்குகிறது. 16 ஆது ஶ்லோகபா₄ஷ்யத்தில் "ப்ரதிபத்தி வைஶேஷ்யாத்" என்று புண்ணியத்தின் தாரதம்யத்தால் ஏற்பட்டவிருப்பத்தின் தாரதம்யத்தையிட்டு, இவர்களுக்குப் ப₂லனில் தாரதம்யம் ஏற்படுகிறது என்று சொல்லப்பட்டது. எட்டாம் அத்தியாயத்தின் அவதாரிகையிலும் உபாஸகர்களின் மூன்று வகைகளைச் சொல்லும் போது பா₄ஷ்யகாரர் "ப்ரதிபத்தி வைஶேஷ்யாத்" என்னும் பத₃த்தை மறுபடி வழங்கியிருப்பதும் காணத்தக்கது. புண்ய பாபங்களை விளக்கும் இந்த ஶ்லோகங்களிலும் அப்புண்ய பாபங்கள் ஸத்வாதி₃ கு₃ணமயமான விஷயங்களை விரும்புவதனால் ஏற்படுபவையே என்பதைக் காட்டியிருக்கிறார். இவற்றிலிருந்து புண்ணியத்தின் ஏற்றத் தாழ்வினால் விளைந்த விருப்பங்களின் ஏற்றத் தாழ்வினால், எல்லாக்கர்மங்களும் கழியப்பெற்றமோக்ஷத்திலும ஸத்வாதி₃ கு₃ணங்களில் ஈடுபாட்டால் ஏற்பட்ட எல்லாக் கர்மங்களும் கழிந்த பின்பும் ஆத்ம பரமாத்மாக்கள் பற்றிய விருப்பதின் ஏற்றத்தாழ்வால் முறையே ஆத்மாநுப₄வமாகிற தாழ்ந்த மோக்ஷமும் பரமாத்மாநுப₄வமாகிற உயர்ந்த மோக்ஷமும் விளைகின்றன என்று தெளிவாகிறது. இதே நியாயப்படி மோக்ஷானந்த₃த்திற்காகத் தான் முயலும் உபாஸக ஜ்ஞானி 'யதோ₂பாஸனம் ப₂லம்' [உபாஸனத்திற்கு அனுகு₃ணமாகவே ப₂லன் விளைகிறது.] என்னும் தத்க்ரது ந்யாயத்தாலே தன் ஆனந்தத்துக்கு உறுப்பாகப்பரமபுருஷனை அனுப₄விக்கும் ஸ்வார்த்த₂மோக்ஷத்தைப் பெறுகிறான் என்பதும், ப₄க்தியையும் ஸாத₄நமாகக்கொள்ளாமல் ஸ்வயம் ப்ரயோஜனமாகக்கொண்டு எம்பெருமானையே உபாயமாகக்கொள்ளும் மஹாத்மாவான ஜ்ஞானி அவன் விருப்பப்படி எம்பெருமானின் ஆனந்த₃த்திற்கு உறுப்பான மோக்ஷத்தைப் பெறுகிறான் என்றும் எளிதில் விளங்கும். இவற்றிலிருந்து "ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய" என்னும் சரமஶ்லோகத்தின் முற்பாதிக்கு "மோக்ஷமடைவதற்கு உபாயமாகத் தன்னால் கீ₃தையில் உபதேசிக்கப்பட்ட எல்லா உபாயங்களையும் வாஸனையோடுவிட்டுத் தன்னை ஒருவனையே உபாயமாகக் கொள்ளவேண்டும்" என்பதே கண்ணன் திருவுள்ளம் பற்றும் முக்₂யார்த்த₂மாகும என விளங்குகிறது.

ஸர்வோபநிஷதோ₃ கா₃வ: தோ₃க்₃தா₄ கோ₃பாலநந்த₃ந: |
பார்த்தோ₂ வத்ஸோ ஸுதீ₄ர் போ₄க்தா து₃க்₃த₄ம்
கீ₃தாம்ருதம் மஹத் ||

[எல்லா உபநிஷத்துக்களும் பசுக்கள் போன்றவை. அவற்றைக் கறப்பவன் ஆயர்குலத்திற்கு அணிவிளக்கான கண்ணன். பார்த்தன் பசுவின் கன்று போன்றவன். ஜ்ஞாநியே அந்தப்பாலின் பெரும்பகுதியைப் பருகுபவன். கீதையின் அரிய பெரிய பொருள்களே பாலாகும்] என்னும் ப்ரமாணத்தில் கூறியபடி அர்ஜுனன் போர் புரிவதாகிற கர்மயோகத்தைச் செய்யவேண்டும் என்னும் இவ்வளவையே கீ3தாம்ருதத்தில் ஏற்றுக்கொண்டானுகையாலே அவன் மிகக் குறைந்த அளவு பாலைக் குடிக்கும் கன்று போன்றவனுகையால் கீ3தாபா4ஷ்யத்தில் அங்க3ப்ரபத்தியையே சரமஸ்லோகத்தில் அவனுக்குரிய பொருளாகக் கூறினர் பா4ஷ்யகாரர்; பெரும்பகுதியான பாலைப்பருகும் ஜ்ஞானிகளுக்கு முக்2ய ப்ரபத்தியையே கீ3தா சரமஸ்லோகத்தின் பொருளாக க3த்3யத்ரயத்திலே காட்டினர் என்று கண்டுகொள்வது. ஆகையால் கீ3தா பா4ஷ்ய க3த்3யங்களிடையே விரோத4மில்லை.

5. ஏழு எட்டு அத்தியாயங்களில் கைவல்யத்தைப் பற்றிய கீ3தா பா4ஷ்ய ஸ்ரீஸூக்திகளை விரிவாக ஆராய்ந்து, மற்ற பல ப்ரமாணங்களையும் காட்டி 'கைவல்ய ஸித்3த4ாஞ்ஜனம்' என்னும் நூலில் 'கைவல்யம் மோக்ஷமே' என்னும் விஷயம் (96 பக்கங்களில்) நிலைநாட்டப்பட்டது. இதிலிருந்து தனக்கு நன்மையைத் தன் முயற்சியாலே அடைய விரும்பி மோக்ஷஸாத4நங்களை அனுஷ்டி2ப்பது ஆத்மா உள்ளவரையில் ப4க3வத3நுப4வமே இல்லாமல் போகும் கைவல்ய மோக்ஷத்தையும் விளைத்து விடும் என்று விளங்குகையால், மற்ற உபாயங்கள் ஆத்ம ஸ்வரூபத்துக்கு முரண்பட்டவை என்று தெளிவாகத் தேறுகிறது.

6. ஒன்பதாம் அத்தியாயத்தில் 13 வது ஸ்லோகத்தில் மஹாத்மாக்களான ஜ்ஞாநிகளின் பெருமையை விளக்கும்போது "ப4ஜந்த்யநந்ய மநஸ:" என்னும் பதங்களுக்கு "மத்ப்ரியத்வாதிரேகேண மத்3ப4ஜநேந விநா மநஸஶ்ச ஆத்மநஶ்ச பா3ஹ்யகரணாநாம் ச த்4ாரணமலப4மாநா: மத்3ப4ஜநைக ப்ரயோஜநா ப4ஜந்தே" [நானே அவர்களுக்கு மிகவும் இனியவனுகையால், என்னிடம் அன்பு செலுத்தாவிடில் தம்முடைய மனமும் ஆத்மஸ்வரூபமும் வெளி இந்திரியங்களும் த4ரிக்கமாட்டாமல் என்னுடைய ப4க்தியையே ஸ்வயம் ப்ரயோஜநமாகக்கொண்டு (அதை மோக்ஷோபாயமாகவும் கருதாமல்) ப4க்தி செலுத்துகிருர்கள்.] என்று பா4ஷ்யகாரர் விளக்கம் அருளுகையாலே, உபாஸக

ஜ்ஞாநி ஸ்வயம் ப்ரயோஜந ப₄க்திநிஷ்ட₂னாகப் பரிணமிக்க வேண்டும் என்பதே கீ₃தாசார்யனின் திருவுள்ளம் என்று விளங்குகிறது.

7. ஒன்பதாம் அத்தியாயத்தில் "மந்மநா ப₄வ" என்று தொடங்கும் இறுதி ஶ்லோகத்தில் "யுக்த்வைவம் ஆத்மாநம் மத்பராயண: மாமேவைஷ்யஸி" [இவ்வண்ணமாக நெஞ்சைப் பழக்குவதன் மூலம் என்னையே மேலான ப்ராப்யமாகவும் (ப்ராபகமாகவும்) கொண்டவனாகி என்னையே அடைவாய்] என்னும் உத்தரார்த்த₄த்திலிருந்து ஸாத₄னப₄க்தியானது பிரிந்தால் உயிர் வாழமுடியாத அளவுக்கு ஸ்வயம் ப்ரயோஜந ப₄க்தியாகப் பரிணமிக்க வேண்டும் என்பதே எம்பெருமானுடைய திருவுள்ளம என்று விளங்குகிறது, இங்கு பா₄ஷ்யத்தில் "மத்பராயண: — மயா விநா ஆத்மதா₄ரணா—அஸம்பா₄வநயா மதா₃ஶ்ரய இத்யர்த்த₂:" [என்னைப் பிரிந்தால் உயிர்வாழ இயலாத அளவுக்கு என்னையே பரமப்ராப்யமாக (பெரும் பயனாகக்) கொண்டவன்" என்பது "மத்பராயண" ஶப்₃த₃த்₃தின் பொருள்] என்று அருளிச்செய்திருக்கையால், மோக்ஷஸாத₄னமான ப₄க்தி கண நேரம் பிரியிலும் த₄ரிக்க இயலாத பரமப₄க்தியாகப் பரிணமிக்க வேண்டும் என்பதே எம்பெருமானுடைய திருவுள்ளம் என்று விளங்குகிறது.

8. பத்தாம் அத்தியாயத்தில் 9, 10, 11 ஶ்லோகங்களாலே தனது ஐஶ்வர்யம், கல்யாண கு₃ணங்கள் ஆகியவற்றை அநுஸந்தி₄ப்பதால் ப₄க்தி வளர்ந்து உச்சநிலையில் ஸ்வயம் ப்ரயோஜன ப₄க்தியாகப் பரிணமிக்கும் என்று காட்டி, அத்தகைய மஹாத்மாக்களின் பெருமையை விளக்குகிறான். 9 ம் ஶ்லோகத்தில் 'துஷ்யந்தி ச ரமந்தி ச' என்னும் பத₃ங்களின் ஸ்வாரஸ்யத்தைத் திருவுள்ளத்தில் கொண்டு "அநந்ய ப்ரயோஜநேந தத்₃வசநேந துஷ்யந்தி" என்று பா₄ஷ்யகாரர் அருளியிருப்பதிலிருந்து கண்ணன் மோக்ஷப₂லனில் குறியுடைய உபாஸந ப₄க்தனும் அநந்ய ப்ரயோஜந ப₄க்தனாகப் பரிணமிக்க வேண்டுமென்றே திருவுள்ளம் பற்றுகிறான் என்னும் பா₄ஷ்யகாரருடைய திருவுள்ளம் தெளிவாக விளங்குகிறது. பத்தாம் ஶ்லோகத்தில் "இப்படி ஸ்வயம் ப்ரயோஜன ப₄க்தியாகப் பரிணமித்தவளவில், அந்த ப₄க்தனுக்கு என்னை அடைவதற்கு முன் ஏற்படும் பரஜ்ஞானம் எனப்படும் மிகத்தெளிவான ஸாக்ஷாத்காரத்தை நானே நிர்ஹேதுக

மாக உகப்புடன் தருகிறேன்'' என்கிருன், ''ப்ரீதி பூர்வகம் பஜ தாம்'' என்று அந்வயிக்காமல், ''ப்ரீதி பூர்வகம் ததாமி'' என்று அந்வயித்து பாஷ்யத்தில் பொருள் கொள்ளுகையால், இத்தகைய பக்தன் பரமனிடம் காட்டும் உகப்பைக் காட்டிலும் அவனிடம் எம்பெருமான் காட்டும் உகப்பு மிக விஞ்சியிருக்கிறது என்று உணர்த்தப்படுகிறது. 'தானம' என்னும் பொருளுடைய தாதுவிலிருந்து உண்டான 'ததாமி' என்னும் சொல்லாலே, எம்பெருமான் இவனுக்குப் பரஜ்ஞானத்தை நிர்ஹேதுகமாக அளிக்கிருன் என்று விளங்குகிறது. இப்படி அந்திம ஸ்ம்ருதி வரையில் ஸ்வயம் ப்ரயோஜன பக்தியாகப் பரிணமிக்காத பக்தியையுடைய உபாஸக ஜ்ஞாநி விஷயத்தில் அவ்வுபாஸநத்தின் பலமாக அந்திம ஸ்ம்ருதியில் பரஜ்ஞாந பரபக்திகளை விளைத்து அவன் விரும்பும் ஸ்வார்த்த மோக்ஷத்தை அளிக்கிருன் என்று இதனுல் தேறுகிறது. 11 வது ஸ்லோகத்தில் பரஜ்ஞானத்திற்குத் தடையான அஜ்ஞானவிருளை அந்த ஸ்வயம் ப்ரயோஜன பக்தி நிஷ்டர்களுக்குத் தன் நிர்ஹேதுக க்ருபையால் ஜ்ஞானம் என்னும் ஒளிவிளக்கை ஏற்றிப் போக்குவதாக அருளிச்செய்கிருன். 'அநுகம்பாயை' என்னும் சொல்லை இடாமல் 'அநுகம்பார்த்தம்' என்று 'அர்த்த' ஶப்தத்தைப் பிரயோகித்திருப்பதாலும் 'ஏவ' என்னும் சொல்லையிட்டிருப்பதாலும் பகவான் தனது நிர்ஹேதுக க்ருபையாலே தன் பேருக இதைச்செய்கிருன் என்று விளங்குகிறது. உபாஸக ஜ்ஞாநி தனது உபாஸநத்தாலே விஷய ப்ராவண்யத்தைப் போக்கிக்கொண்ட பின்பு உபாஸந பலமாக அவனுக்கு அந்திமஸ்ம்ருதியில் பரஜ்ஞாநத்தை விளைக்கிருன் என்றும், மஹாத்மாவான ஜ்ஞாநிக்குத் தனது பக்தியை ஸ்வயம் ப்ரயோஜனமாக எண்ணத்தொடங்கிய அந்த ஜன்மத்திலேயே நிர்ஹேதுகமாக விஷய ப்ராவண்யத்தைப்போக்கிப் பரஜ்ஞானத்தை விளைத்து மோக்ஷத்தையும் அளிக்கிருன் என்றும் உணர்த்துவதன் மூலம் இருவர்க்குமுள்ள வாசி காட்டப்படுகிறது.

9. பதினோராம் அத்தியாயத்தில் கண்ணன் அர்ஜுநனுக்கு விஸ்வரூபத்தைக் காட்டிய பிறகு இறுதியிலுள்ள 53, 54, 55 வது ஸ்லோகங்களாலே ''வேதங்கள், தவம், தானம், யாகங்கள் முதலானவற்ருல் என்னை இப்படிக் காணமுடியாது; ஸ்வயம் ப்ரயோஜன பக்தியினுலேயே இவ்வண்ணமாக என்னை அறிந்து

கண்டு அடையலாம்." என்று கூறுகிறான். "கஶ்சிந் மாம் வேத்தி தத்த்வத:" [7-3] என்று ஏழாம் அத்தியாயத்தின் தொடக்கத்தில் சொல்லப்பட்ட மஹாத்மாவான ஜ்ஞானியையே இங்கு "அநந்யயா பக்த்யா— தத்த்வேந ஜ்ஞாதும் த்ரஷ்டும் ப்ரவேஷ்டும் ச ஶக்ய:" [53] என்று ஸ்வயம ப்ரயோஜன பக்தியினாலே ஜ்ஞாந தர்ஶன ப்ராப்திகளை உள்ளபடி அடைபவனாகக் கூறுகிறான். 'முயற்சியினால் எம்பெருமானைப் பெற்றுவிடலாம்' என்னும் ஜ்ஞானம தத்வ ஜ்ஞானமாகாது. 'ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியாகிற ப்ரபத்தியால் பெறலாம்' என்று அறிவதே தத்வஜ்ஞாநமாகும்; உபாஸந பலமாக அந்திம ஸ்ம்ருதியில் பெறும் தர்ஶனம் தத்வ தர்ஶனமாகாது ஸ்வயம் ப்ரயோஜன பக்தியினாலே அந்திம ஸ்ம்ருதிக்கு முன்பே விளையும் பரஜ்ஞானமாகிற தர்ஶநமே தத்வதர்ஶனமாகும். உபாஸந பலமாகப்பெறும் ஸ்வார்த்த மோக்ஷம் தத்வ ப்ரவேஶமாகாது. ஸ்வயம் ப்ரயோஜன பக்தியினாலே பரஜ்ஞாந பரம பக்திகள் விளைந்து நிர்ஹேதுகமாகப் பெறும் பரார்த்தாநுபவ கைங்கர்யங்களே தத்வப்ரவேசமாகும் என்னும் அரும்பொருள் இங்குள்ள "தத்த்வேந" என்னும் பதத்தை ஜ்ஞாதும், த்ரஷ்டும், ப்ரவேஷ்டும் என்னும் மூன்று பதங்களோடும் கூட்டிப்பொருள் கொள்ளும்போது கிடைக்கிறது. 53, 54 ஶ்லோகங்கள் "நாயமாத்மா ப்ரவசநேந லப்ய: ந மேதயா ந பஹுநா ஶ்ருதேந | யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய: தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம் ||" [கட-2-23] [இந்தப் பரமாத்மா (பக்தியில்லாத) ஶ்ரவண மநந த்யானங்களாலே அடையத்தக்கவனல்லன். (பக்தியுடைய) எவனை இந்தப் பரமாத்மா வரிக்கிறானோ அவனுக்கே இவன் தனது ஸ்வரூபரூபங்களைக் காட்டுகிறான்] என்னும் உபநிஷத் வாக்கியத்திற்கு விவரணமாய் இருந்துகொண்டு பரகத ஸ்வீகார நிஷ்டையையும் ஸ்வயம் ப்ரயோஜன பக்தியையும் விளக்குகின்றன. "உபபத்தேஶ்ச" [ப்ரஹ்மஸூத்ரம் 3-2-34] என்னும் ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் 'எம்பெருமானே உபாயம்' என்னும் அர்த்தத்திற்கு ப்ரமாணமாகவும், ஸ்ரீபாஷ்யத் தொடக்கத்திலும், இந்த ஶ்லோக பாஷ்யத்திலும் "எல்லையற்ற பக்தியுடையவனுக்கு எம்பெருமான் தன்னைக் காட்டுகிறான்" என்னும் அர்த்தத்திற்கு ப்ரமாணமாகவும் இம்மந்திரத்தை பாஷ்யகாரர் எடுத்திருப்பது ஸ்வயம் ப்ரயோஜன பக்திநிஷ்டனை பரகத ஸ்வீகார நிஷ்டனே இந்த மந்த்ரத்தில் "யம்" என்கிற ஶப்தத்திற்கு முக்யார்த்தமாகை

யாலே முரண்படாது. 55 வது ஶ்லோகத்தின் பாஷ்யத்தில் "மத்₃ப₄க்த:—அத்யர்த்த₂மத்ப்ரியத்வேந மத்கீர்த்தந ஸ்துதித்₄யான அர்ச்சந ப்ரணாமாதி₃பி₄: விநா ஆத்மதா₄ரண மலப₄மாநோ மதே₃கப்ரயோஜநதயா யஸ் ஸததம் தாநி கரோதி, ஸ மத்₃ப₄க்த:" [என்னிடம் அளவுகடந்த அன்புடையவனுகையாலே, என்னை ஸங்கீர்த்தனம் செய்வது துதிப்பது தியானிப்பது அர்ச்சனம் செய்வது வணங்குவது முதலானவற்றைச் செய்யாமல் தன் உயிர் தரிக்கமாட்டாதவனுய், என்னையே பயனுகக் கொண்டவனுய் எப்போதும் எனக்கு ஆராத₄னமாகக் கர்மங்களைச் செய்பவன் என் ப₄க்தன்] என்று 'ப₄க்த' ஶப்₃த₃த்தை பாஷ்யகாரர் விவரணம் செய்திருக்கையால், இந்த மூன்று ஶ்லோகங்களிலும் கருதப்படுபவன் ஸ்வயம் ப்ரயோஜன ப₄க்தி நிஷ்ட₂னே என்று விளங்குகிறது.

10. பன்னிரண்டாம் அத்தியாயத்தில் எம்பெருமான் 6, 7 ஶ்லோகங்களில் தன்னை உபாஸிப்பவர்களின் பெருமையைக் கூறும் போது "அநந்யேநைவ யோகே₃ந மாம் த்₄யாயந்த உபாஸதே" [வேறுபயன் கருதாத யோக₃த்தினுல் என்னைக் குறித்துத் தியானம் முதலானவற்றைச் செய்துகொண்டு உபாஸிக்கிருர்கள்] என்று குறிப்பிடுகிருன். இங்கு பாஷ்யமிடும்போது "அநந்யேநைவ யோகே₃ந — அநந்யப்ரயோஜநேந யோகே₃ந மாம் த்₄யாயந்த உபாஸதே — த்₄யாநார்ச்சந ப்ரணாம ஸ்துதி கீர்த்தநாதீ₃நி ஸ்வயமேவாத்யர்த்த₂ ப்ரியாணி ப்ராப்யஸமாநி குர்வந்தோ மாமுபாஸத இத்யர்த்த₂:" ['அநந்யேநைவ யோகே₃ந' என்றது வேறுபயன் கருதாத ப₄க்தியோக₃த்தைக் குறிக்கிறது. "மாம் த்₄யாயந்த: உபாஸதே" என்னும் தொடர் "தியானம், அர்ச்சனம், ப்ரணாமம், துதி, ஸங்கீர்த்தனம் முதலானவற்றை, மிக இனியவையாயிருக்கையாலே (மோக்ஷத்தையும் இவற்றுக்குப் பயனுகக் கொள்ளாமல்) ஸ்வயம் ப்ரயோஜனமாகச் செய்து கொண்டு என்னை உபாஸிக்கிருர்கள்" என்று பொருள் படுகிறது] என்று அருளிச்செய்திருக்கையால், ப₄க்தியோக₃ம் மோக்ஷஸாத₄நமாக விதி₄க்கப்பட்ட போதிலும் மோக்ஷத்தையும் இதற்குப் பயனுகக் கருதாமல் ஸ்வயம் ப்ரயோஜனமாகக் கருதிச் செய்வதே எம்பெருமானுக்கு மிகவும் உகப்பு என்றும், உபாஸகனையும் ஸ்வயம் ப்ரயோஜன ப₄க்தி நிஷ்ட₂னை ஸித்₃தோ₄பாய நிஷ்ட₂னுக்குவதிலேயே ப₄க்திவிதி₄ ஶாஸ்த்ரங்களுக்கு நோக்கு என்றும் விளங்குகிறது. ஏழாவது ஶ்லோகத்தில்

„'தேஷாமஹம் ஸமுத்₃த₄ர்த்தா ம்ருத்யுஸம்ஸார ஸாக₃ராத்। ப₄வாமி நசிராத்'' [அவர்களை, (என்னை அடையத் தடையாகையாலே) ஆத்ம நாசத்தை விளைக்கும் ஸம்ஸாரம் என்னும் கடலிலிருந்து நான் விரைவிலேயே கைதூக்கி விடுபவனு கிறேன்] என்று உபாஸந ப₄க்தியானது ஸ்வயம் ப்ரயோஜந ப₄க்தியாகப் பரிணமித்துவிட்டதென்றல் விரைவிலேயே, அதாவது அந்த ஜன்மத்தின் இறுதியிலேயே, ஸம்ஸாரம் நீங்கிவிடும் என்று காட்டுகிறது.

11. பதினெட்டாம் அத்தியாயத்தில் 45வது ஸ்லோகம் தொடங்கி கீதையில் இதுவரை சொல்லிவந்தது அனைத்தையும் சுருக்கமாகக் கூறுகிருன் கண்ணன். 45வது ஸ்லோகம் தொடங்கி 54வது ஸ்லோகம் வரையில் ஆத்மாவைப் பற்றிய உண்மையறிவை முன்னிட்டுக்கொண்டு கர்ம யோக₃த்தை அனுஷ்டி₂த்தால் ஆத்மத்₄யானம் ஏற்படும் என்றும், அந்த ஆத்மத்₄யானத்தாலே ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படும் என்றும், அப்படி ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி கண்டபின்பு தன் விஷயமான பரப₄க்தி ஏற்படும் என்றும் கூறுகிருன். இது கீதையின் முதல் ஷட்கத்தின் சுருக்கமாகும். 55வது ஸ்லோகத்தில் ப₄க்தி யோக₃த்தின் உச்ச நிலையான பரப₄க்தி பரஜ்ஞாந பரம ப₄க்திகளை அடைவதைக் கூறுவதன் மூலம் இரண்டாவது ஷட்கத்தைச் சுருக்கிக் கூறுகிருன். (பரப₄க்தியாலே தன்னுடைய ஸ்வரூப ஸ்வபா₄வங்களை உள்ளபடி அறிகையாகிற பரஜ்ஞானத்தைப் பெறுகிருன் என்றும், அதற்குப்பின் அந்தப் பர ப₄க்தியின் முற்றிய நிலையான பரமப₄க்தியைப் பெறுகிருன் என்றும், க்ஷணநேரமும் தன்னைப் பிரிந்து நிற்க இயலாமையாகிற பரமப₄க்தியைப் பெற்றவுடன் அக்காரணத்தாலேயே அவன் அந்த ஜன்மத்திலேயே மோக்ஷமடைந்து விடுகிருன் என்றும் கூறுகிருன் கண்ணன். "தத₃நந்தரம் தத்த்வத: விஶதே" என்று பரஜ்ஞாந பரமப₄க்திகளைப் பெற்ற அந்த ஜன்மத்திலேயே அவனுக்கு உள்ளபடி எம்பெருமானை அடைவதாகிற பரமமோக்ஷம் ஸித்₃தி₄க்கிறது என்று கூறியிருப்பது குறிக்கொள்ளத்தக்கது.)

"கஶ்சிந் மாம் வேத்தி தத்த்வத:" (7-3) [பல்லாயிரவரில் ஒருவனே என்னை உள்ளபடி அறிகிறான்] என்றும்,

"ப₄க்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம்விதோ₄ऽர்ஜுந ।
ஜ்ஞாதும் த்₃ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப" ॥
[11-54]

[எதிரிகளைத் தவிக்கச் செய்யும் அர்ஜுனனே! நான் ஸ்வயம் ப்ரயோஜன ப₄க்தியாலேயே இவ்வண்ணமாக உள்ளபடி அறிவதற்கும், காண்பதற்கும், அடைவதற்கும் தக்கவன்] என்றும் சொல்லப்பட்ட தத்த்வ ஜ்ஞான, தத்த்வ தர்சன, தத்த்வ ப்ரவேசங்களே இந்த ஶ்லோகத்தில் [18-55] "தத்த்வத: அபி₄ஜாநாதி" என்றும், "தத்த்வத: ஜ்ஞாத்வா" என்றும், "தத்த்வத: விஶதே" என்றும் அநுவதி₃க்கப்படுவதன் மூலம் உபாஸக ஜ்ஞானி அவ்வுபாஸநத்தின் உச்சநிலையில் எம்பெருமானே உபேயமாக இருப்பதோடு உபாயமாகவும் இருக்கிறான் என்னும் தத்த்வ ஜ்ஞானத்தைப் பெறுகிறான் என்றும், இதற்குப்பின் அவனுக்கு உள்ளபடி எம்பெருமானைக் காண்கையாகிற பரஜ்ஞாநம் உண்டாகிறது என்றும், அது பரமப₄க்தியாக முற்றியபின் எம்பெருமானை உள்ளபடி அடைகையாகிற ஸாயுஜ்யநிலை ஏற்படுகிறது என்றும் உணர்த்தப்படுகிறது. ப்ராரப்₃த₄ கர்மம் முடியும் வரையில் இந்தப் பரஜ்ஞாந பரமப₄க்திகள் உபாஸக ஜ்ஞானிக்கு விளையவில்லையென்றால், அந்திமஸ்ம்ருதியில் அவனுடைய உபாய ப₄க்தியின் ப₂லனாக பரஜ்ஞாந பரமப₄க்திகளை விளைத்து, அவனுக்கு மோக்ஷத்தை அளித்து விடுகிறான் எம்பெருமான் என்றும் "உபாஸித்தபடியே ப₂லம்" என்னும் தத்க்ரது ந்யாயத்தாலே அவன் பெறும் பரஜ்ஞான பரமப₄க்திகளும் மோக்ஷமும் "தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே" [திருவாய் 2-9-4] என்கிறபடி பரார்த்த₂மாக அமையாமல், ஸ்வார்த்த₂மாகவும் அமைந்துவிடும் என்றும் தேறுகிறது.

12. ஐம்பத்தாறுவது ஶ்லோகத்திலிருந்து அறுபதாவது ஶ்லோகம் வரையில் இவ்வண்ணமாகக் கர்மயோகத்தை அனுஷ்டி₂ப்பது காலக்ரமத்தில் பரப₄க்தி பரஜ்ஞான பரமப₄க்திகளையும் விளைத்து, பரமமோக்ஷத்தையும் அடைவித்துவிடுமாகையாலே க்ஷத்திரியனாகிய நீ போர் புரிதலாகிற உன்னுடைய த₄ர்மத்தைக்

கர்மயோக₃மாக அநுஷ்டி₂க்க வேண்டுமென்றும் இதை நீ தவிர்க்கவே முடியாது என்றும் வலியுறுத்திக் கூறுகிறுன். 61வது ஶ்லோகத்தில் ''ஸர்வேஶ்வரனுன நான் அனைவருடைய இருதயத்திலும் இருந்துகொண்டு ஶரீரத்தில் இருக்கும் எல்லா உயிர்களையும் என்னுடையதான ஸத்வாதி₃ கு₃ணங்களோடு கூடிய மாயையாகிற ப்ரக்ருதியாலே அந்த கு₃ணங்களுக்கு அனுகு₃ணமாக நடக்கச் செய்து கொண்டு நிற்கிறேன், ஆகையால் உன்னுடைய ரஜோ கு₃ணத்தையொட்டி நீ போர் புரிவதைத் தவிர்க்கமுடியாது'' என்கிறுன். அடுத்ததான 62வது ஶ்லோகத்தில் ''இந்த மாயையாகிற ப்ரக்ருதியைப் போக்கிக் கொள்ள வேண்டுமென்ருல் என்னை எல்லாப்படியாலும் சரணமடைவதே வழி. இப்படிச் சரணமடைய உனக்கு ருசியிருந்தால், நீ என் வார்த்தையைச் சிரமேற்கொண்டு போர் புரிய வேண்டும்'' என்று உணர்த்துகிறுன். ஆக 'மோக்ஷமடைவதற்காக ப₄க்தி யோகத்தை அனுஷ்டி₂ப்பதாயிருந்தாலும், அதற்கு அங்க₃மாக யுத்₃த₄த்தைக் கர்மயோகமாக நீ செய்யவேண்டும்; என்னையே உபாயமாகக் கொள்ளும் முக்₂ய ப்ரபத்தியை அனுஷ்டி₂ப்பதானுலும் நான் சொல்லுகிறபடி கேட்டுப் போர் புரிய வேண்டும்'' என்று உணர்த்தினுனுயிற்று. அடுத்ததான 63வது ஶ்லோகத்தில் ''நான் உனக்கு எல்லா ரஹஸ்யங்களையும் உபதேசித்து விட்டேன். அனைத்தையும் ஆராய்ந்து உனக்கு எது ருசிக்கிறதோ அதைச் செய்வாய்'' என்று கூறினுன் கண்ணன். உடனே ''நீ சொல்லுகிறபடி செய்கிறேன்'' என்னும் வார்த்தை சடக்கென அர்ஜுனனிடமிருந்து வரவில்லையாகையாலே ப்ரவ்ருத்திபரனுன அவனுக்கு முக்₂ய ப்ரபத்தியில் ருசியில்லை என்று உணர்ந்து, 64வது ஶ்லோகத்தில் 'உனக்கு ஹிதமான பரம ரஹஸ்யத்தை மறுபடி சொல்லுகிறேன்' என்று தொடங்கி, 65வது ஶ்லோகத்தில் ப₄க்தி யோக₃த்தையும், 66வதான சரம ஶ்லோகத்தில் அதற்கு அங்க₃மாக ஶரணுக₃தியையும் விதி₄க்கிறுன் கண்ணன். இவற்றிலிருந்து, ஸர்வேஶ்வரனை எல்லாப்படியாலும் பின்பற்றி நிற்கிற முக்₂ய ப்ரபத்திக்கு உறுப்பான ப₄க₃வத் பாரதந்த்ர்ய ஜ்ஞானமில்லாமையாலேயே கண்ணன் அவனுக்கு ப₄க்தியோக₃த்தை விதி₄க்கிறுன் என்று தேறுகிறது

கீ₃தா ப₄ாஷ்யத்தில் சரம ஶ்லோகத்தை அங்க₃ ப்ரபத்தி பரமாகவே கொண்டு இரண்டு வகையான நிர்வாஹங்களைக் காட்டியிருப்பதற்கு அநுகு₃ணமாக "ப்ரவ்ருத்திபரனான அர்ஜுனனுக்குப் பொருந்தும்படி ப₄ாஷ்யகாரர் கீ₃தா ப₄ாஷ்யத்தில் அங்க₃ ப்ரபத்திபரமாகச் சரம ஶ்லோகத்திற்கு ப₄ாஷ்யமிட்டார். தம்முடைய அந்தரங்க₃ சிஷ்யர்களுக்கு க₃த்₃யத்ரயத்தில் சரம ஶ்லோகத்தை ஸ்வதந்த்ர ப்ரபத்திபரமாகக் கொள்வதே முக்₂யார்த்த₂ம் என்று காட்டினர்" என்று சில பூர்வாசார்யர்கள் திருவுள்ளம் பற்றியது இதுவரையில் விவரிக்கப்பட்டது.

திவ்ய ப்ரபந்தங்களையும், ரஹஸ்ய த்ரயத்தையும் வ்யாக்₂யானம் செய்த ஶ்ரீபராசரப₄ட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத்திருவீதிப்பிள்ளை, பிள்ளைலோகாசார்யர் முதலான பூர்வாசார்யர்களின் நிர்வாஹம் இந்த நிர்வாஹத்தைக் காட்டிலும் சில விஷயங்களில் மாறுபடுகிறது. அதாவது:—

1. கீ₃தையின் பரமஸாரமான அர்த்த₂த்தைத் தெரிவிக்கும் சரமஶ்லோகத்திற்கு அர்ஜுனனுக்கு ஒரு பொருள், அந்தரங்க₃ர்களுக்கு மற்றொரு பொருள் என்று பிரிப்பது பொருந்தாது. அனைவர்க்கும் ஒரே பொருளேயாக வேண்டும்.

2. கீதையில் ஏழாம் அத்தியாயத்திலேயே 4, 5 ஶ்லோகங்களில் ஜீவாத்ம ஸ்வரூபம் அசேதநத்தைப்போலே தனக்குப் பரதந்த்ரமானது என்று கண்ணன் அர்ஜுனனுக்கு உபதேசிக்கிறன். மேல் ஶ்லோகங்களில் இப்படி ஜீவஸ்வரூபம் பரதந்த்ரமானதாகையாலும், தனக்கு ஶரீரமாயிருப்பதாகையாலும், ஜ்ஞானம், சக்தி முதலான குணங்களில் தானே ஜீவனைக் காட்டிலும் மிகச்சிறந்தவனாயிருக்கையாலும், ஜீவன் தன் காரியத்தைத் தான் செய்து கொள்ளுவதைக்காட்டிலும் பரமாத்மாவைக் கொண்டு தன் காரியங்களை நிறைவேற்றிக்கொள்ளுவது சிறந்தது என்று உபதேசித்திருக்கிறன். ப்ராப்யத்வம், ப்ராபகத்வம் முதலானவை அனைத்தும் மற்ற பொருள்களிடம் செயற்கையாகவே உள்ளது என்றும், தன்னிடமே இயற்கையாக உள்ளது என்றும் காட்டியிருக்கிறன். பத்தொன்பதாவது ஶ்லோகத்தில் தன்னையே ப்ராப்யம் ப்ராபகம் முதலான எல்லாமாகவும் கொண்ட மஹாத்மாவான ஜ்ஞானியின் பெருமையைத் தெளிவாக விளக்கியிருக்கிறன்.

3. ஏழாம் அத்தியாயத்தில் 3வது ஸ்லோகத்தில் "கஸ்சித் யததி ஸித்$_3$த$_4$யே" என்று கைவல்ய நிஷ்ட$_2$னுக்குக் கிடைக்கிற ஆத்மாநுப$_4$வமாகிற மோக்ஷத்தை "ஸித்$_3$தி$_4$" ஸப்$_3$த$_3$த்தாலே சொன்னான் எம்பெருமான். "கஸ்சிந் மாம் வேத்தி" என்று தன்னையே ப்ராப்யமாகக் கொள்ளும் உபாஸகன் அவனிலும் மேற்பட்டவன் என்றும் காட்டினான். "கஸ்சித் மாம் தத்த்வத: வேத்தி" என்று ப$_4$க்தியில் உபாயபுத்திவைக்கும் உபாஸகனைப் போலும், ப்ரபத்தியில் உபாய புத்தி கொள்ளும் ஸ்வக$_3$த ஸ்வீகார நிஷ்ட$_2$னைப்போலும் ஸ்வப்ரவ்ருத்திபரனாயிராமல் தன் நன்மைக்கான தன் முயற்சி அனைத்தினின்றும் நீங்கிய மஹாத்மாவான ஜ்ஞானி ஸ்வப்ரவ்ருத்திபரர்களைக் காட்டிலும் சிறந்தவனென்று காட்டினான். இவ்விஷயத்தை எட்டாம் அத்தியாயம் பதினைந்தாவது ஸ்லோகத்தில் மஹாத்மாவான ஜ்ஞானியின் பலனைச் சொல்லும்போது "மஹாத்மாந: ஸம்ஸித்$_3$தி$_4$ம் பரமாம் க$_3$தா:" என்னும் தொடராலே விவரிக்கிறான் கண்ணன். "கைவல்ய நிஷ்ட$_2$ன் பெறும் ஆத்மாநுப$_4$வமான மோக்ஷம் 'ஸித்$_3$தி$_4$'யாகும். ஸ்வப்ரவ்ருத்திபரனான ஜ்ஞானியின் ப$_2$லன் 'ஸம்ஸித்$_3$தி$_4$' எனத்தக்க ஸ்வார்த்த$_2$ மோக்ஷமாகும். தன் முயற்சியினின்றும் நீங்கிய மஹாத்மாவான ஜ்ஞானியின் ப$_2$லன் 'பரமா ஸம்ஸித்$_3$தி$_4$' எனத்தக்க பரார்த்த$_2$ மோக்ஷமாகும்" என்று கீதை 7 – 3 ஸ்லோகத்தில் சொல்லப்பட்ட மூன்று வகையான முமுக்ஷுக்களுக்கு ஒன்றுக்கொன்று மேற்பட்ட மூன்று வகையான மோக்ஷப$_2$லன் கிடைப்பதாக 8 – 15ல் விவரிக்கப் பட்டுள்ளது தெளிவாக விளங்குகிறது.

4. ஒன்பதாம் அத்தியாயத்திலும் ப$_4$க்தி யோக$_3$த்தை உபதேசிப்பதற்கு முன் நாலாவது ஸ்லோகம் தொடங்கி எல்லா வுலகும் தனக்கு சரீரம் என்றும் தான் இட்ட வழக்கு என்றும் நிருபித்திருக்கிறான். 13வது ஸ்லோகத்திலும், 22வது ஸ்லோகத்திலும் மறுபடியும் மஹாத்மாக்களான ஜ்ஞானிகளின் பெருமையைக் கூறுகிறான். ப$_4$க்தி யோக$_3$த்தை விதிக்கும் 34வது ஸ்லோகத்திலும் உபாஸக ஜ்ஞானி தன்னையே ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் கொண்ட மஹாத்மாவான ஜ்ஞானியாகப் பரிணமிக்க வேண்டும் என்று காட்டுகிறான்.

5. பத்தாம் அத்தியாயத்தில் 9, 10, 11 ஶ்லோகங்களில் தனது ஐஶ்வர்யம் கல்யாண கு₃ணங்கள் ஆகியவற்றை அனுஸந்திப்பதால் ப₄க்தி வளர்ந்து உச்ச நிலையில் ஸ்வயம் ப்ரயோஜன ப₄க்தியாகப் பரிணமிக்கும் என்று காட்டி, அத்தகைய மஹாத்மாக்களின் பெருமையை விளக்குகிறான். மஹாத்மாவான ஜ்ஞாநிக்குத் தனது ப₄க்தியை ஸ்வயம் ப்ரயோஜனமாக எண்ணத் தொடங்கிய அந்த ஜன்மத்திலேயே நிர்ஹேதுகமாக விஷயப்ராவண்யத்தைப் போக்கிப் பரஜ்ஞானத்தை விளைத்து மோக்ஷத்தையும் அளிப்பதாகவும் கண்ணன் அர்ஜுனனுக்கு உபதேசிக்கிறான் என்றும் இந்த ஶ்லோகங்களிலிருந்து தெளிவாகிறது.

6. பதினோராம் அத்தியாயத்தில் கண்ணன் அர்ஜுனனுக்கு விஶ்வரூபத்தைக் காட்டிய பிறகு இறுதியிலுள்ள 53, 54, 55 ஶ்லோகங்களில், ''எவனாலும் தன் முயற்சியால் என்னை இப்படிக் காண முடியாது. ஸ்வயம் ப்ரயோஜன ப₄க்தியினாலேயே இவ்வண்ணமாக என்னை அறிந்து கண்டு அடையலாம்'' என்று அர்ஜுனனுக்கு உபதேசிக்கிறான்.

7. பன்னிரண்டாம் அத்தியாயத்தில் 6, 7 ஶ்லோகங்களில் ப₄க்தி யோக₃ம் மோக்ஷ ஸாத₄னமாக விதிக்கப்பட்டபோதிலும், மோக்ஷத்தையும் இதற்குப் பயனாகக் கருதாமல் ஸ்வயம் ப்ரயோஜனமாகக் கருதிச் செய்வதே தனக்கு மிகவும் உகப்பு என்றும், உபாஸந ப₄க்தியானது ஸ்வயம் ப்ரயோஜன ப₄க்தியாகப் பரிணமித்து விட்டதென்றால் விரைவிலேயே, அதாவது அந்த ஜன்மத்தின் இறுதியிலேயே, ஸம்ஸாரம் நீங்கி விடும் என்றும் அர்ஜுனனுக்கு உபதேசிக்கிறான்.

8. பதினெட்டாம் அத்தியாயத்தில் ப₄க்தி யோக₃த்தை விவரிக்கும் இரண்டாவது ஷட்கத்தின் ஸாரமான 55வது ஶ்லோகத்தில் ப₄க்தி யோக₃த்தின் உச்ச நிலையான பரப₄க்தியாலே உபாஸகன் தன்னுடைய ஸ்வரூப ஸ்வபா₄வங்களை உள்ளபடி அறிகையாகிற பரஜ்ஞானத்தைப் பெறுகிறான் என்றும், அதற்குப் பின் அந்தப் பரப₄க்தியின் முற்றிய நிலையான பரமப₄க்தியைப் பெறுகிறான் என்றும், க்ஷணநேரமும் தன்னைப் பிரிந்து நிற்க இயலாமையாகிற பரமப₄க்தியைப் பெற்றவுடன் அக்காரணத்தாலேயே அவனுக்கு அந்த ஜன்மத்திலேயே மோக்ஷமளித்து விடுகிறேன் என்றும் கூறுகிறான் கண்ணன். (இந்த எட்டு பாராக்களில் சுருக்கிச் சொல்லப்பட்ட விஷயங்கள் பக்கம் 836 முதல் பக்கம் 850 வரையில் விரிவாக நிரூபிக்கப்பட்டுள்ளன.)

இவ்வண்ணமாக ஜீவாத்மாவின் அத்யந்த பாரதந்த்ரியத்தையும், கர்ம ஜ்ஞாந பக்தி யோகங்கள் பல ஜன்மங்கள் மிகுந்த சிரமப்பட்டு அனுஷ்டிக்கப்படவேண்டியவை என்பதையும் உபாஸகன் எம்பெருமானையே ப்ராபகமாகவும் அறியும் மஹாத்மாவான ஜ்ஞாநியாகவும் ஸ்வயம் ப்ரயோஜன பக்திநிஷ்டனாகவும் பரிணமிக்க வேண்டும் என்றும், அப்படிப் பரிணமித்து விட்டால் அவனுக்கு அந்த ஜன்மத்திலேயே மோக்ஷம் கிடைத்து விடுகிறது என்றும் கண்ணன் உபதேசித்ததையும் கேட்ட அர்ஜுனன் ஸ்வஸ்வாதந்த்ர்யம் கழியப்பெறாத ப்ரவ்ருத்திபரனாகவே இருந்தான் என்று கொள்ளுவது பொருந்தாது.

அப்படியானால் பதினெட்டாவது அத்தியாயம் 62வது ஶ்லோகத்தில், பரமபுருஷனையே எல்லாப்படியாலும் பின்பற்றி நிற்கையாகிற முக்ய ப்ரபத்தியை விதித்து, அடுத்த ஶ்லோகத்தில் 'இவற்றில் எதை விரும்புகிறாயோ அதை நீ அனுஷ்டிப்பாயாக' என்று கண்ணன் கூறியவுடன் 'கரிஷ்யே வசநம் தவ' [ 18 - 73 ] [ நீ சொன்னபடியே செய்கிறேன் ] என்னும் வார்த்தையை அர்ஜுனன் ஏன் உடனே சொல்லவில்லை என்னும் கேள்வி எழுகிறது. இங்கு அர்ஜுனனுடைய மனோ வ்ருத்தியைப் பூர்வாசார்யர்கள் பின்வருமாறு திருவுள்ளம் பற்றுகிறார்கள் :— "ஜீவாத்ம ஸ்வரூபம் அசித்தைப்போலே அத்யந்த பரதந்த்ரமாய் இருக்கும்போது, செயற்கரியவையாய், ஸ்வரூபத்துக்கு முரண்பட்டவையான கர்ம ஜ்ஞான பக்திகளில் நம்மை ஏவுவதும், 62வது ஶ்லோகத்தில் 'ஶரணம் கச்ச' என்று ஶரணாகதியாகிற உபாயத்தை அனுஷ்டிக்கச் சொல்லுவதும், 63வது ஶ்லோகத்தில் 'உன் விருப்பப்படி செய்வாய்' என்று 'எது நமக்கு நல்லது' என்று தீர்மானிக்கும் பொறுப்பை நம் தலையிலே வைப்பதும் பொருந்தவில்லையே. நமக்கு எது நன்மையோ அதைக் கண்ணனே சொல்லட்டும்" என்று பேசாமலிருந்தான் அர்ஜுனன். அப்போது நெடுநாள் ப்ரவ்ருத்திபரனான இவனுக்கு பக்தியோகமே பொருத்தமாயிருக்கும் என்னும் திருவுள்ளத்தாலோ, அல்லது இவனுடைய நினைவைச் சோதிப்பதற்காகவோ 64வது ஶ்லோகத்தில் 'உனக்கு நன்மையான பரம ரஹஸ்யத்தை மறுபடியும் சொல்லுகிறேன்' என்று கூறி, 65வது ஶ்லோகத்தில் 'மந்மநா பவ' என்று பக்தி யோகத்தை அர்ஜுனனுக்கு விதிக்கிறான் கண்ணன். இதைக் கேட்டவுடன், "செயற்கரியதும் கண்ணனால் உபதேசிக்கப்பட்ட அத்யந்த பாரதந்த்ரியத்துக்கு முரண்பட்டதுமான பக்தி யோகத்தில் நம்மை ஏவுகிறானே; இந்த பக்தி யோகத்தையும் அதற்கு அங்கமான கர்ம ஜ்ஞான யோகங்களையும்

நான் எப்படி அனுஷ்டி₂ப்பது'' என்னும் ப₄யம் அர்ஜுனனுக்கு விளைந்ததைக் கண்டான் கண்ணன். அதன் பிறகே சரம ஶ்லோகத்தில் ''நீ செயற்கரியவை என்றும், ஸ்வரூப விருத்₃த₄மானவை என்றும் பயப்படும் எல்லா உபாயங்களையும் வாஸனையோடே விட்டு என்னை ஒருவனையே உபாயமாகப் பற்றுவாய். நான் உன்னை என்னை அடையத் தடையாயிருக்கும் எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன். வருந்தாதே'' என்று சரமமான உபாயமான தன்னைக் காட்டுகிறான்— என்று கொள்வதே ஆழ்வார்களின் அருளிச்செயல்களுக்கும், ஆசார்யர்களின் அனுஷ்டா₂னத்திற்கும் பொருந்தும்.

இப்படிக்கொண்டால், ''தமேவ ஶரணம் க₃ச்ச₂'' [ 62 ] என்று முக்₂ய ப்ரபத்தியை விதித்த ஶ்லோகத்தோடு ''மாமேகம் ஶரணம் வ்ரஜ'' என்று இங்கு முக்₂ய ப்ரபத்தியை விதிப்பது புநருக்தியாகுமே; இங்கும் 'என்னையே ஶரணமடைவாய்' என்று உபாய ஸ்வீகாரமாகிற ஒரு காரியத்தை அர்ஜுனன் தலையிலே ஏறிடுகையாலே அவனுக்கு சோகம் அடியோடு நீங்காதே என்னும் ஐயம் எழுகிறது.

62-ம் ஶ்லோகத்தில் முன் விதிக்கப்பட்ட ப₄க்திக்கு அங்க₃மாக ப்ரபத்தி விதிக்கப்படுவதாகக்கொண்டு புநருக்தி பரிஹாரம் செய்யலாம். அன்றிக்கே அந்த ஶ்லோகம் முக்₂ய ப்ரபத்தியை விதிப்பதானாலும், ''தமேவ ஶரணம் க₃ச்ச₂'' என்னுமிடத்தில் 'ஏவ'காரத்தாலே உபாயாந்தரங்களைக் கைவிட வேண்டும் என்னும் அர்த்தம் கிடைக்கிறது; ஆனால் உபாய ஸ்வீகாரமாகிற ஶரணாக₃தியிலும் உபாயபு₃த்₃தி₄ வைக்கக் கூடாது என்னும் அர்த்த₂ம் அந்த ஶ்லோகத்தில் சொல்லப்படவில்லை, ஆகையால், அந்த ஶ்லோகத்தில் உபதேசிக்கப்பட்டது ஶரண வரணத்தில் உபாயத்தன்மையை ஸஹிக்கும் ஸ்வக₃த ஸ்வீகார நிஷ்டை₂ என்றே கொள்ளவேண்டும். 66வது ஶ்லோகமான சரம ஶ்லோகத்தில் 'ஸர்வ த₄ர்மாந் பரித்யஜ்ய' என்று 'ஸாத்₄யோபாயங்கள் அனைத்தையும் கைவிட வேண்டும்' என்று கூறி, 'மாம் ஏகம்' என்று 'ஏக' பத₃த்தாலே இங்கு சொல்லப்படும் ஶரண வரணத்திலும் உபாய புத்தி தவிர்க்கப்படுகையாலே இங்கு சொல்லப்படுவது தலைசிறந்த ஶரணாக₃தியாகிற பரக₃த ஸ்வீகார நிஷ்டை₂யாகும். ஆகையால் அந்த ஶ்லோகத்தோடு இது புநருக்தியுமில்லை; 'ஶரண வரணமாகிற ஒரு செயலை நம் தலையில் வைக்கிறானே' என்று அர்ஜுனன் வருந்தவும் இங்கு இடமில்லை. ஆகையால், அர்ஜுனனுக்கும் எல்லாச் சேதநர்க்கும் பரக₃த ஸ்வீகார நிஷ்டை₂யாகிற தலைசிறந்த ஶரணாக₃தியே சரம ஶ்லோகத்தில் உபதேசிக்கப்படுகிறது என்று கொள்ளுவதே பொருந்தும்.

'பார்த்தோ₂ வத்ஸ: ஸுதீ₄ர் போ₄க்தா' என்று பக்கம் 842ல் எடுக்கப்பட்ட ஸ்லோகத்தில், பார்த்தன் கீ₃தையில் கைக் கொண்டது பேரர் புரிதலாகிற இவ்வளவேயாகையாலே, அவனைக் கன்றாகவும, ஜ்ஞானிகளை கீ₃தாம்ருதப் பாலைப் பருகும் பா₄க்₃ய முடையவர்களாகவும் சொல்லிற்று. கீதையைக் கேட்டபிறகு கண்ணன் உபதேசித்த அர்த்த₂ங்களையெல்லாம் மறந்து 'து₃ர்மேத₄ாஸ் சாஸி' [அறிவு கெட்டவனாயிருக்கிறாயே] என்று கண்ணனால் நிந்திக்கப் பெற்று, சுருக்கமாக அனுகீ₃தையை உபதேசிக்கப் பெற்றான் அர்ஜுனன் என்பது ப்ரஸித்₃த₄மாகை யாலே அவனைக் கன்று போன்றவன் என்று சொல்லுவதில் தவறில்லை. அது கொண்டு கீ₃தையை உபதேசித்தபோது அவன் அதைப் புரிந்துகொள்ளவில்லையென்று கூற இயலாது.

இப்படி முக்₂ய ப்ரபத்தியே சரம ஸ்லோகத்திற்கு அனைவர்க்கும் முக்₂யார்த்த₂மானால் அதை பா₄ஷ்யகாரர் சரம ஸ்லோக பா₄ஷ்யத்தில் வெளியிடாமல், அர்ஜுனனை ப்ரவ்ருத்திபரனாகக் கொண்டு அங்க₃ ப்ரபத்தியை உபதேசித்தான் என்னும் அமுக்₂ய நிர்வாஹத்தையே சொல்லி ஏன் நிறுத்தினார் என்னும் கேள்வியெழுகிறது.

இதற்கு நம்முடைய பூர்வாசார்யர்கள் திருவுள்ளம் பற்றும் ஸமாதா₄நம் பின்வருமாறு :— பதினெட்டு முறை திருக்கோட்டி யூருக்கு நடந்தபின் பரம ரஹஸ்யமான சரம ஸ்லோகார்த்த₂த்தை நம்பி எம்பெருமானாருக்கு உபதேசித்தபோது, "எம்பெருமா னுக்கும் அவன் அடியார்களுக்குமேயான வாழ்க்கையை நடத்தும் பக்குவம் பொருதவர்களிடம் இந்த அர்த்த₂த்தை — திருமந்த்ரார்த் த₂த்தை ஆசையுடையோர்க்கெல்லாம் உபதேசித்தது போலே உபதேசிக்கக்கூடாது. அதி₄காரிகளைப் பரீக்ஷித்தே இவ்வர்த் த₂த்தை உபதேசிக்க வேண்டும்" என்று நியமித்து வைத்தார். அதைச் சிரமேற்கொண்ட எம்பெருமானார் கூரத்தாழ்வானுக்கும் அவர் ஒரு மாதம் உபவாஸமிருந்த பிறகே உபதேசித்தார். அத்தகைய அர்த்த₂த்தை ப்ரதிபக்ஷிகளும் காணக்கூடிய கீ₃தா பா₄ஷ்யத்தில் வெளியிடலாகாது என்று சரம ஸ்லோகத் திற்கு அங்க₃ ப்ரபத்திபரமான அமுக்₂யார்த்த₂த்தை வெளியிட்டு, முக்₂யார்த்த₂த்தை அந்தரங்க₃ர்களுக்கே உபதேசிக்கத்தக்க க₃த்₃யத்ரயத்தில் வெளியிட்டார் என்கை. இவ்விஷயம் ஆறாயிரப் படி குருபரம்பரா ப்ரபா₄வம் முதலிய நூல்களிலே உள்ளது இங்கு அநுஸந்திக்கத்தக்கது. பிள்ளை லோகாசார்யரும் தம்முடைய 'தனிசரமம்' என்னும் ரஹஸ்யத்தில், "இவ்வளவு பிறவாதவ னுக்கு இவ்வர்த்த₂ம் சொல்லுகை யாகிறது, பறிப்பான் கையில் சிற்றரிவாள் கொடுக்குமோபாதி— என்று திருக்கோட்டியூர்நம்பி அருளிச்செய்வர்" என்னும் ஐதிஹ்யத்தில் இவ்விஷயத்தை அருளிச்செய்திருப்பதைக் குறிக்கொள்வது. [பறிப்பான் — வழிப்பறி செய்பவன்]

இனி, பட்டருடைய அஷ்டஶ்லோகீ பெரியவாச்சான் பிள்ளையின் பரந்த ரஹஸ்யம், பிள்ளைலோகாசார்யருடைய முமுக்ஷுப்படி, பரந்தபடி, ஶ்ரிய:பதிப்படி, யாத்ருச்சிகப்படி, தனிசரமம் ஆகிய க்ரந்தங்களையும், மணவாளமாமுனிகளின் முமுக்ஷுப்படி வ்யாக்யானத்தையும் அனுஸரித்து சரமஶ்லோகத்திற்கு எளிய நடையில் விவரணம் வெளியிடுகிறோம். திருக்கோட்டியூர் நம்பியின் நியமனத்தைப் பின்பற்றி எம்பெருமானார் கீதாபாஷ்யத்தில் முக்யார்த்தத்தை மறைத்துப் போந்தாராலும், இவ்வரும் பொருள் அடியோடு மறைந்துவிடக்கூடாது என்னும் திருவுள்ளத்தாலே பட்டர் முதலான முற்கூறிய ஆசார்யர்கள் இதை வெளியிட்டருளினராகையாலே, நாமும் அவர்களுடைய அடிச்சுவட்டைப் பின்பற்றி இங்கு எளியநடையில் விவரிப்பதில் குறையில்லை.

அவதாரிகை:— கீதையில் பதினெட்டு அத்தியாயங்களிலும் இதுவரையில் கர்மயோகம், ஜ்ஞாநயோகம் முதலிய பல உபாயங்களைத் தன்னையடைவதாகிற மோக்ஷத்திற்கு ஸாதனமாகக் கண்ணன் விரிவாக உபதேசித்ததைக் கேட்டு, அவை உடலை வருத்திச்செய்யவேண்டியவையாகையாலும், "சஞ்சலம் ஹி மந:" [கீதை 6-34] "இந்த்ரியாணி ப்ரமாதீநி" [2-60] என்கிறபடியே மனம் முதலான இந்த்ரியங்களை அடக்குவது மிக அரிதாகையாலும், இவ்வுபாயங்களையும் பல ஜன்மங்கள் கவனமாக அனுஷ்டிக்கவேண்டியிருக்கையாலும் அவற்றை அனுஷ்டிப்பது அரிது என்றும், ஜீவர்கள் அனைவரும் தனக்கு ஶரீரமாகவும் உடைமையாகவும் இருப்பதாகக் கண்ணன் கூறுகையாலே, பரதந்த்ரமான ஜீவாத்ம ஸ்வரூபத்துக்கு, தன் நன்மைக்குத் தான் முயற்சி செய்வது முரண்பட்டது என்றும் எண்ணி 'இந்தக் கர்மஜ்ஞாந பக்தி யோகங்கள் முதலான ஸாத்யோபாயங்களால் எம்பெருமானைப் பெறுவது இயலாது, பேற்றை இழந்து போக வேண்டியதே'' என்கிற சோகத்தாலே பீடிக்கப்பட்ட அர்ஜுனனைக் குறித்து, அவனுடைய அந்த ஶோகம் நீங்குவதற்காக "செயற்கு எளியதாகையாலும், ஜீவஸ்வருபத்தோடு பொருந்தியிருக்கையாலும் இனி இதற்கு மேல் ஓர் உபாயம் இல்லை" என்னும்படியான சரமமான (முடிவான) உபாயத்தை அருளிச்செய்கையாலே, "சரமஶ்லோகம்" என்னும் பெயர் சான்றோர்களால் இதற்கு வழங்கப்

பட்டது. இந்த ஸ்லோகத்தின் மூற்பாதியாலே இதில் சொல்லப் பட்ட அர்த்தத்தை அனுஷ்டிக்கும் தகுதியுடைய ஜீவாத்மா செய்யவேண்டிய காரியத்தை அருளிச்செய்கிருன் கண்ணன். பிற்பாதியாலே உபாயமான தான் ஜீவனுக்கு அருளும் பேற்றை அருளிச்செய்கிருன். "தகுதியுள்ள ஜீவன் செய்யவேண்டியதாவது— எம்பெருமானையே உபாயமாகப் பற்றுவது; அதனை மற்ற உபாயங்களை விடுவதாகிற அங்கத்தோடு செய்யவேண்டும்" என்று மூற்பாதியில் விதிக்கிருன், "செயற்கு எளியதும் ஸ்வரூபத்திற்குப் பொருந்தியதுமான உபாயத்தைக் கைக்கொள்வது ஜீவனே ஆசைப் படவேண்டியதொன்ருயிற்றே. இதை விதிக்கவேண்டுமோ?" எனில்: இனிமையாலே எவரும் பருக ஆசைப்படும் பாலை, பித்த நோய்க்கு மருந்தாகக் கொடுக்கச் சொல்லி வைத்தியர் விதித்தால் விரைவில் கைக்கொள்வதற்கு உறுப்பாவதுபோலே, மற்ற உபாயங்களிற்காட்டில் பலவித₄ங்களில் சிறப்புற்ற இவ்வுபாயம் ஜீவன் ஆசைப்பட வேண்டியதொன்ருயினும், 'இதைக்கைக்கொள்ளவேண்டும்' என்னும் வித₄யும் இருந்தால் விரைவில் கைக்கொள்ளலாமன்ருே; எனவே முற்பாதியில் இவ்வுபாயத்தைக் கைக்கொள்ளும்படி விதிப்பது பொருந்தும்.

வ்யா:— (ஸர்வத₄ர்மாந்) எல்லா த₄ர்மங்களையும்; இந்தச் சொல்லில் "த₄ர்ம" ஶப்₃த₃ம், "த₄ர்மாந்" என்கிற பன்மை, "த₄ர்ம" ஶப்₃த₃த்திற்கு விசேஷணமான 'ஸர்வ' ஶப்₃த₃ம் ஆகிய மூன்று அம்சங்கள் இருக்கின்றன. இவை ஒவ்வொன்றுக்கும் பொருளை உணரவேண்டும்; த₄ர்மமாவது — ஒரு ப₂லனுக்கு ஸாத₄நமாயிருப்பது. ஆனல் இந்த கீ₃தையில் இவ்வுலகப்பலன்களை விலக்கவேண்டுமென்றும், மோக்ஷப₂லனையே விரும்பவேண்டுமென்றும் கூறி, அந்த மோக்ஷத்தைப் பெறுவதற்கு ஸாத₄நங்களை உபதேசித்து வருகிற ப்ரகரணமாகையாலே, இங்குள்ள இந்த த₄ர்ம ஶப்₃த₃ம் பெண்டு பிள்ளைகள், மாடுமனைகள், அன்னபானதிகள் முதலான இவ்வுலகப் பலன்களுக்கும், ஸ்வர்க்க₃ம் முதலான ப்ராக்ருதமான மறுமைப்பலன்களுக்கும் ஸாத₄நங்களைச் சொல்லாமல், கைவல்யமாகிற தாழ்ந்த மோக்ஷத்திற்கும் ஸாத₄நத்தைச் சொல்லாமல் எம்பெருமானை அடைவதாகிற உயர்ந்த மோக்ஷத்திற்கு ஸாத₄நமானவற்றைச் சொல்லுகிறது. "த₄ர்மாந்" என்கிற பன்மையாலே ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் இந்தப் பரமமோக்ஷத்திற்கு ஸாத₄நமாக விதிக்கப்பட்டிருப்பவை பல என்று காட்டுகிறது.

அவையாவன— ''கர்மணைவஹி'' [3-20] என்று தொடங்கும் ஶ்லோகத்தில் விதி4க்கப்பட்ட கர்மயோகமும், ''ஸர்வம் கர்மாகி2லம்'' [4-33] என்று தொடங்கும் ஶ்லோகத்திலும், ''ந ஹி ஜ்ஞாநேந ஸத்3ருஶம்'' [4-38] என்று தொடங்கும் ஶ்லோகத்திலும் சொல்லப்பட்ட கர்மயோக3த்தினால் ஸாதி4க்கப்படும் ஜ்ஞாநயோக4ம், ''ப4க்த்யா த்வநந்யயா ஶக்ய:'' [11-54] என்ற ஶ்லோகத்திலும், ''மந்மநா ப4வ'' [18-65] என்ற ஶ்லோகத்திலும் விதி4க்கப்பட்டதாய், அந்தக் கர்ம ஜ்ஞாநயோக3ங்களை அங்க3மாகக் கொண்டதான ப4க்தியோக3ம், ''ஜந்ம கர்ம ச மே தி3வ்யம்'' [4-9] என்ற ஶ்லோகத்தில் ஸம்ஸாரஸம்ப3ந்த4ம் நீங்கி பகவானை அடைவதற்கு ஸாத4நமாகச் சொல்லப்பட்ட அவதாரரஹஸ்ய ஜ்ஞாநம், ''ஏதத்3 பு3த்3த்4வா பு3த்3தி4மாந் ஸ்யாத்'' [15-20] என்ற ஶ்லோகத்தில் மோக்ஷ ப2லத்தைத் தருவதன் மூலம் ஜீவனை க்ருதக்ருத்யனாக்குவதாக (கடமையைச் செய்தவனாக்குவதாக)ச் சொல்லப்பட்ட புருஷோத்தம வித்3யை, ''தே3ஶோயம் ஸர்வகாமது4க்'' [கா3ருட3புராணம்-ஸ்ரீரங்க3மாஹாத்ம்யம்] [இந்த தேசம் எல்லா இஷ்டங்களையும் கொடுக்கும்] என்று எல்லா விருப்பங்களையும் அளிப்பதாகச் சொல்லப்பட்ட புண்யக்ஷேத்ரவாஸம்,

வாஸுதே3வாஶ்ரயோ மர்த்யோ வாஸுதே3வ பராயண: |
ஸர்வபாபவிஶுத்3தா4த்மா யாதி ப்3ரஹ்ம ஸநாதநம் ||
[பா4ர-ஆநுஶா 254-132]

[(நாமஸங்கீர்த்தனத்தாலே) வாஸுதே3வனை அடைந்து வாஸுதேவனையே மேலான புகலாகக்கொண்ட மனிதன், எல்லாப்பாபங்களினின்றும் விடுபட்ட ஸ்வரூபத்தையுடையவனாய், பரம்பொருளை அடைகிறான்.] என்று எல்லாப் பாபங்களையும் நீக்கி எம்பெருமானை அடைவிப்பதாகச் சொல்லப்பட்ட திருநாம ஸங்கீர்த்தனம்,

க்4ருதேந வாத2 தைலேந தீ3பம் யோ ஜ்வாலயேந் நர: |
விஷ்ணவே விதி4வத்3 ப4க்த்யா தஸ்ய புண்யப2லம் ஶ்ருணு ||

விஹாய ஸகலம் பாபம் ஸஹஸ்ராதி3த்யஸந்நிப4: |
ஜ்யோதிஷ்மதா விமாநேந விஷ்ணுலோகே மஹீயதே ||
[நாரஸிம்ஹபுராணம் 33-27]

[எந்த மனிதன் விஷ்ணுவின் பொருட்டு, அன்போடு சாஸ்திரத்திற் சொன்ன முறைப்படி நெய்யினாலாவது அல்லது எண்ணெ

யினுலாவது திருவிளக்கை எரியும்படி செய்கிருனே அவனுடைய புண்ணியத்தின் பலனைக் கேள்; அவன் எல்லாப் பாபங்களையும் விட்டு, ஆயிரம் சூரியனுக்கு ஒப்பானவனுகி ஒளிபெற்ற விமானத்தாலே விஷ்ணுலோகத்தில் பெருமை பெறுகிருன்,] என்று எல்லாப் பாபங்களையும் போக்கி எம்பெருமானை அடைவிக்கும் ஸாத₄நமாகச் சொல்லப்பட்ட திருவிளக்கெரிக்கை. அதுபோலவே எல்லாப்பாபங்களையும் போக்கி எம்பெருமானை அடைவிக்கும் ஸாத₄நமாகச் சொல்லப்பட்ட திருமாலை கட்டிச் சாத்துகை முதலிய மோக்ஷஸாத₄ந பு₃த்₃தி₄யோடு செய்யப்படும் எல்லா ஸாத₄நங்களும் (பன்மையாலே குறிக்கப்படுவன). ''நெறியெல்லாம் எடுத்துரைத்த நிறை ஞானத்தொரு மூர்த்தி'' [திருவாய் 4-8-6] என்று கீதையில் கண்ணன் மோக்ஷோபாயங்கள் அனைத்தையும் கூறியதாக அருளிச்செய்தாரன்றே நம்மாழ்வார். இனி 'ஸர்வ' ஶப்₃த₃த்தாலே அந்தந்த மோக்ஷோபாயங்களை அனுஷ்டிக்கும் போது, அவற்றை அனுஷ்டி₂க்கத் தகுதியை விளைக்கும ஸந்த்₄யாவந்த₃னம் பஞ்சமஹாயஜ்ஞம் முதலான நித்ய கர்மங்களைச்சொல்லுகிறது.

ஸந்த்₄யாஹீநோ(அ)ஶுசிர் நித்யமநர்ஹ: ஸர்வகர்மஸு ||
[த₃க்ஷஸ்ம்ருதி 1-12]

[ஸந்த்₄யாவந்த₃னம் பண்ணுதவன் பரிஶுத்தியற்றவன்: எப்போதும் எல்லாக் கர்மங்களிலும் தகுதியற்றவன்,] என்கிறபடியே ஸந்த்₄யாவந்த₃னம் செய்யாதவன் வேறு எந்தக் கர்மத்தையும் அனுஷ்டிக்கத் தகுதியற்றவன் என்று சொல்லப்பட்டபடியாலே ஸந்த்யாவந்தனமற்றவன் இந்த ஶரணாக₃தியையும் அனுஷ்டி₂க்கத் தகுதியற்றவனே என்ற ஐயம் விளையும். அதனுல் 'ஸர்வ' ஶப்₃த₃த்தாலே ஸந்த்₄யாவந்த₃னம் முதலான நித்யகர்மங்களைக் கைவிடத்தக்கவைகளில் சேர்க்கிருன். இவை கைக்கொள்ளத் தக்கவை என்று கொண்டால், இவையில்லாத ஸ்த்ரீ ஶூத்₃ரர்களுக்கு ஶரணாக₃தியில் அதிகாரமில்லாமல் போகும். மற்றவர்களும் ஶரணாக₃திக்குத் தகுதியை விளைப்பவை என்னும் எண்ணத்தோடு இவைகளை அனுஷ்டி₂க்ககூடாது. ப₄க₃வத₃ாஜ்ஞா கைங்கர்யமாகவே இவைகளை அனுஷ்டிக்கவேண்டும். ஆக, 'ஸர்வத₄ர்மாந்' என்றதாலே

சோத₃நாலக்ஷணோர்த்தோ₂ த₄ர்ம:
[பூர்வமீமாம்ஸை 1-1-2]

['இதைச்செய்; அதைச்செய்யாதே' என்றாற்போன்ற ஒரு விதி₄யி ஞல் விதி₄க்கப்படும் பொருள் த₄ர்மம் எனப்படுகிறது.] என்கிற படியே ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் விதி₄க்கப்பட்டவையாய், நித்யகர்மம் நைமித்திக கர்மம் என்று வழங்கப்படுபவையான கர்மங்களை வடிவாகவுடையதான கர்மயோக₃ம் முதலிய மோக்ஷோபாயங் களைச் சொல்லிற்று. இங்கு ஓர் ஐயம் எழுகிறது — அத்யந்த பரதந்த்ரமான ஆத்மாவின் ஸ்வரூபத்தோடு முரண்பட்ட ஸ்வ ப்ரவ்ருத்தி (தன்முயற்சி) ரூபமான இவற்றை, ஸ்வரூபத்தோடு முரண்பட்டிருக்கையாலே 'அத₄ர்மம்' என்று சொல்லவேண்டி யிருக்க, 'த₄ர்மம்' என்று கண்ணன் சொன்னது எப்படி? எனில்; தனக்குரிய த₄ர்மமான யுத்₃த₄த்தை 'அத₄ர்மம்' என்றும், இவற் றைத் த₄ர்மம் என்றும் மயங்கிய அர்ஜுனனுடைய நினைவாலே 'த₄ர்மம்' என்கிறான் என்று கொள்ளவேண்டும்.

இனி, இரண்டாவது பதத்தாலே இந்த எல்லா த₄ர்மங்களை யும் ருசி வாஸனைகளோடு விடவேண்டும் என்கிறான். (பரித்யஜ்ய) இப்பதமும் தா₄துவால் சொல்லப்படும் த்யாக₃மும் 'த்யஜ்ய' என் னுமிடத்தில் உள்ள 'ல்யப்'பும் 'பரி' என்கிற உபஸர்க்க₃முமா கிற மூன்று பகுதியாயிருக்கிறது, 'த்யாக₃'மாவது— வெறும் விடுகையல்ல முன் அத்தியாயங்களில் சொல்லப்பட்ட உபாயங் களின் தன்மையை ஆராய்ந்தால் "வெள்ளியல்லாத சிப்பியை வெள்ளியென்று நினைப்பது போலவும், ஒருகாரியத்தின் பொருட்டு ஒருதிசையில் போக எண்ணி அதற்கு நேர்மாறான திசையில் செல்லுவது போலவும் எம்பெருமானை அடைய வழிதேடும் நாம் உபாயமல்லாதவற்றிலே உபாயம் என்னும் நினைவை வைத் தோம்" என்கிற எண்ணத்தோடு விடுகையே என விளங்கும். 'பரி' என்கிற உபஸர்க்க₃ம் 'பரி ஸாகல்யே' என்கிறபடியே எல்லாவற் றையும் விடுவதையும் குறிக்கும். ஆனால், ஸர்வ ஶப்₃த₃த்தாலே அது ஏற்கனவே சொல்லப்பட்டு விட்டதாகையாலே அப்பொருள் தேவையற்றது. ஆகையால் இந்த 'பரி' என்னும் உபஸர்க்க₃ம் மிகுதியைக் குறிப்பதாய் மிகவும் விடுகையைச் சொல்லுகிறது. அதாவது:-

ப்₃ரஹ்மஹத்யா ஸுராபாநம் ஸ்தேயம் கு₃ர்வங்க₃நாக₃ம: |
மஹாந்தி பாதகாந்யாஹு: ஸம்ஸர்க்க₃ஶ்சாபி தை: ஸஹ ||

[மநுஸ்ம்ருதி 11-54]

[ அந்தணனைக் கொல்லுதல், கள்குடித்தல், பொன்னைத்திருடுதல், ஆசார்ய பத்தினியைப் புணர்தல் ஆகிய இவையும், இவை செய்தவரோடு கூடுதலும் (பஞ்ச) மஹாபாதகங்கள் எனப்படுகின்றன ] என்கிற பஞ்ச மஹாபாதகங்கள் முதலானவற்றை விடும்போது அவற்றில் மறுபடி தொடர்பு ஏற்படுத்துவதற்குக் காரணமான ருசி வாஸனைகளோடுகூட 'நாம் இதைச் செய்வதே!' என்கிற லஜ்ஜையோடு விடுவதுபோல இவற்றையும் விடவேண்டும் என்று சொல்லுகிறது. இவ்விடத்தில் பிள்ளைலோகாசார்யர் பரந்தபடி சரமஶ்லோக ப்ரகரணத்தில் எடுத்திருக்கும் ''அநாதிகாலம் அநுபாயங்களிலே உபாய பு3த்3தி4 பண்ணிப் போந்தோம் என்று லஜ்ஜாபுரஸ்ஸரமான த்யாகத்தைச் சொல்லுகிறது' என்று ஆழ்வான் பணிக்கும்'' என்ற ஐதிஹ்யம் அநுஸந்திக்கத்தக்கது.

வால்மீகி, பராஶரர், வ்யாஸர், ஶுகர் முதலான மஹரிஷிகள் அநுஷ்டித்துப்போந்த ப4க்தியோக3த்தை இப்படிக் கண்டிப்பது தகுமோ? என்னும் கேள்வி இங்கு எழுகிறது. ப4ர்த்ரு போ4க3த்தை விலைக்குறுப்பாக்குவது போலே, ஸ்வயம் ப்ரயோஜனமான ப4க்தியை விலையாகக்கொடுத்து மோக்ஷத்தைப் பெறுவதும் அத்யந்த பரதந்த்ரமான ஜீவாத்ம ஸ்வரூபத்துக்குத் தகாது என்னும் திருவுள்ளத்தாலேயே பூர்வாசார்யர்கள் இதைக் கண்டித்திருக்கிறார்கள். ரிஷிகளைக் காட்டிலும் ஸத்வகு3ணத்தின் எல்லையில் நிற்பவர்களான ஆழ்வார்களின் நெஞ்சாலே காணும்போது இந்தக் கண்டனம் பொருத்தமானதே. "யத்3யத்க்ருத்யம் ஶ்ருதீநாம் முநிக3ணவிஹிதை: ஸேதிஹாஸை: புராணை:, தத்ராஸௌ ஸத்வஸீம்ந: ஶட2மத2ந முநே: ஸம்ஹிதா ஸார்வபௌ4மீ'' [முனிவர்கள் இயற்றிய இதிஹாஸ புராணங்கள் செய்யும் வேத விளக்கத்தைக் காட்டிலும், ஸத்வகு3ணத்தின் எல்லையில் நிற்கும் நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியின் வேத விளக்கம் மிகச் சிறப்புற்றது.] என்று த்3ரமிடோ3பநிஷத்தாத்பர்ய ரத்னாவளியில் ஸ்ரீதேசிகனும் ரிஷிகளுக்கும் ஆழ்வார்களுக்கும் உள்ள வாசியை ஏற்றுக்கொண்டிருக்கிறார், தத்வவித்துக்களான வால்மீகி, பராஶரர், ஶுகர் முதலான உபாஸக ஜ்ஞானிகளான மஹரிஷிகளையும் எம்பெருமான் கீ3தையில் அருளியபடி ஸ்வயம்ப்ரயோஜன ப4க்தி நிஷ்ட2ர்களாய், மஹாத்மாக்களான ஜ்ஞானிகளாக்கி மோக்ஷத்தை நிர்ஹேதுகமாக அளிக்கிறான் என்று கொண்டால் எக்குறையும் இல்லை.

அத2 பாதகபீ4தஸ்த்வம் ஸர்வபா4வேந பா4ரத |
விமுக்தாந்யஸமாரம்போ4 நாராயணபரோ ப4வ ||

விஷ்ணுத4ர்மம் 66-71.

[பூ₄ரதவம்சத்துதித்தவனே! இனி நீ (மற்ற உபாயங்களை அநுஷ்டி₂த்தலாகிற) பாவத்தைச் செய்ய அஞ்சினுயாகில், முழுமனத்தோடு வேறு முயற்சிகளைக் கைவிட்டு நாராயணனிடமே உபாயபு₃த்₃தி₄யுள்ளவனுக இருப்பாயாக.] என்று ஸ்ரீவிஷ்ணுத₄ர்மத்திலே த₄ர்ம தே₃வதை பாபமாகச் சொன்ன மற்ற மோக்ஷோபாயங்களை விடும்போது, நினைவறிந்து அவற்றில் ஈடுபடுவதற்குக் காரணமான ருசியும், அறியாமையாலே அவற்றில் ஈடுபடுவதற்குக் காரணமான வாஸனையுமாகிற அவைற்றேடேகூட, "எம்பெருமான் ஒருவனையே தஞ்சமாகக் கொள்ளவேண்டிய நம் ஸ்வரூபத்தோடு மிகவும் முரண்பட்ட இவற்றை நாம் செய்யலாமோ!" என்ற லஜ்ஜையோடு கூட மறுபடியும் அவ்வுபாயங்களோடு தொடர்பு ஏற்படாதபடி விடவேண்டும் என்று கருத்து. 'த்யஜ்ய' என்கிற ல்யப்பாலே இந்த உபாயாந்தரங்களை விட்டே எம்பெருமானைப் பற்றவேண்டும் என்று காட்டுகிறது. 'க்த்வா' ப்ரத்யயம் 'ல்யப்' ப்ரத்யயம் முதலானவற்றிற்கு.

ஶ்ராத்₃த₄போ₄ஜநகாலே து தீ₃போ யதி₃ விநஶ்யதி |
புநரந்நம் ந போ₄க்தவ்யம் பு₄க்த்வா சாந்த்₃ராயணம் சரேத் || உஶந:ஸம்ஹிதை 5-50

[ஶ்ராத்₃த₄த்தில் புசிக்கும்பொழுது விளக்கு அணைந்தால் உணவை மறுபடியும் புசிக்கலாகாது; புசித்தால், (அதற்கு ப்ராயஶ்சித்தமாக) சாந்த்₃ராயணவிரதத்தை அனுஷ்டிக்கவேணும்] முதலானவிடங்களிற்போலே எல்லா உபாயங்களையும் விட்டுவிட்டால் என்னைச் சரணமடை என்று இங்கு பொருள்படவில்லை;

ஸ்நாத்வா பு₄ஞ்ஜீத

[ஸ்நானம் செய்துவிட்டே புசிக்கவேண்டும்,]

ப்ரக்ஷால்ய பாத₃ாவாசாமேத் ஸ்நாத்வா விதி₄வத₃ர்ச்சயேத் |
ஸ்தி₂த்வார்க்₄யம் ப்₄ரநவே த₃த்₃யாத் த்₄யாத்வா தே₃வம் ஜபேந் மநும் ||

[கால்களைக் கழுவிக்கொண்டபின்புதான் ஆசமனம் செய்யவேண்டும்: ஸ்நாநம் செய்தபின்புதான் விதி₄ப்படி பூஜிக்கவேண்டும்: நின்றுகொண்டுதான் அர்க்₄யத்தைச் சூரியனுக்குக் கொடுக்கவேண்டும். தே₃வனை தியானித்துக்கொண்டுதான் மந்திரத்தை ஜபிக்கவேண்டும்.] என்றவிடங்களிற்போலே, ஸித்₃தோ₄பாயமான எம்பெருமானைப் பற்றும்போது

கைவிடத்தக்க உபாயாந்தரங்களை விட்டே பற்ற வேண்டும் என்னும் நியமத்தைச் சொல்லுகிறது. இவ்விஷயத்தில் ஸ்ரீவேதாந்த தேசிகரின் கருத்து வேறுபடுகிறது. அதாவது பக்தியை அநுஷ்டிப்பதற்கு ஜ்ஞாநசக்திகளையுடையவன் பக்தியோகமாகிற ஸாதநத்தையே அநுஷ்டிக்கவேண்டும். அத்தகைய ஜ்ஞாந சக்திகள் இல்லாதவனே ப்ரபத்தியை அநுஷ்டிக்கவேண்டும் என்பது அவர் திருவுள்ளம். இதற்கேற்ப "ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய (ஸ்திதஸ்சேத்)" [(ஜ்ஞாநசக்திகள் இல்லாமையால்) மற்ற உபாயங்களை விட்டிருந்தாயானால்] என்று 'ஸ்திதஸ்சேத்' என்னும் பதங்களை வருவித்துக்கொண்டு, ஜ்ஞாந சக்திகள் இல்லாமையால் மற்ற உபாயங்களைச் செயற்கரியவை என்று தன்னையே விட்டிருக்கும் அதிகாரியைக் குறித்தே "மாமேகம் ஶரணம் வ்ரஜ" [என்னை ஒருவனையே ஶரணமாகப் பற்றுவாய்] என்று ப்ரபத்தியை விதிக்கிறான் என்று அவர் சரம ஶ்லோகத்தின் முற்பாதிக்குப் பொருள் கொள்கிறார். "ஜ்ஞாந ஶக்திகள் மிகுந்த பூர்வாசார்யர்கள் ப்ரபந்நர்களாயிருந்திருக்கிறார்களே" என்னும் கேள்விக்கு, ஜ்ஞாந ஶக்திகள் இருந்தாலும் இப்பிறப்பிலேயே மோக்ஷமடைய வேண்டுமென்னும் ஆர்த்தியுடையவர்கள் ப்ரபத்தியையே அநுஷ்டிக்கவேண்டும் என்று அவர் பதிலளிக்கிறார். 'பக்தி நிஷ்டர்களும் அவதார ரஹஸ்ய ஜ்ஞாநத்தோடு சேர்ந்து பக்தியோகத்தை அநுஷ்டித்தால் இந்த ஜன்மத்திலேயே மோக்ஷம் பெறலாமாகையாலே பூர்வாசார்யர்கள் அவ்வாறு பக்தியோகத்தை அநுஷ்டித்திருக்கலாமே" என்று எழும் கேள்விக்கு இந்தப்பக்ஷத்தில் பதிலளிப்பது மிகக் கடினம். ஆகையால், தன் நன்மைக்குத் தான் முயற்சி செய்வது தன்னுடைய அத்யந்த பரதந்த்ர ஸ்வரூபத்தோடு முரண்பட்டதாகையாலே, பூர்வாசார்யர்கள் தம் நன்மைக்குத் தாம் முயற்சி செய்வதாகிற பக்தியை அநுஷ்டிக்காமல் அத்தகைய பக்தி முதலான முயற்சிகளினின்றும் நீங்கி, பகவத்ப்ரவ்ருத்தி விரோதிஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியாகிற [எம்பெருமான் சேதநனைத்தான் பெறச்செய்யும் முயற்சிகளுக்குத் தடையாயிருக்கும் தமது முயற்சிகள் அனைத்தினின்றும் நீங்கியிருக்கையாகிற] ப்ரபத்தியைக் கைக்கொண்டார்கள் என்று கொள்வதே சிறந்தது. மேலும் இது பற்றிய பல விசாரங்கள் கீதா 18-ம் அத்தியாய வ்யாக்யாநத்தில் (பக்கம் 834 முதல்பக்கம் 836 வரை) காணத்தக்கவை.

யோ வஜ்ரபாதாசநி ஸந்நிபாதாத்

ந சுக்ஷுபே$_4$ நாபி சசால ராஜா |

ஸ ராமபா$_3$ணாபி$_4$ஹதோ ப்$_4$ருசார்த்த:

சசால சாபஞ்ச முமோச வீர: ||

[ரா-யு 59-140]

[எந்த ராவணன் வஜ்ராயுத$_4$த்தால் அடிபட்டாலும், இடிவிழுந்தாலும் மனக்கலக்கத்தை அடையவில்லையோ, சரீரம் நடுங்கப் பெறவுமில்லையோ, அந்த ராவணன் ஸ்ரீராமபா$_3$ணத்தாலே அடிக்கப் பெற்று மிகவும் கலங்கி நடுநடுங்கினான். வீரனாயிருந்தும் (நிராயுத$_4$பாணியை ராக$_4$வன் அடிக்கமாட்டான் என்னும் நினைவாலே) வில்லையும் கைவிட்டான்.] என்கிறபடியே, ராவணன் ராமனுடைய அம்புகளாலே மிகவும் வருத்தமுற்று, நிலைகலங்கி, யுத்$_3$த$_4$களத்தை விட்டுப்போகப்பார்த்தாலும் கையில் வில்லிருக்கும் வரையில் ஸ்ரீராமபிரான் அவனைப் போகவிடவில்லை.

க$_3$ச்ச$_2$ா நுஜாநாமி ரணார்தி$_3$தஸ்த்வம்

ப்ரவிச்ய ராத்ரிஞ்சரராஜ லங்காம் |

ஆச்வாஸ்ய நிர்யாஹி ரதீ$_2$ ச த$_4$ந்வீ

ததா$_3$ ப$_3$லம் த்$_3$ரக்ஷ்யஸி மே ரத$_2$ஸ்த$_2$:||

[ரா-யு 59-144]

[ராக்ஷஸ ராஜனே! நீ யுத்தத்தில் களைப்படைந்துவிட்டாய்; திரும்பிப்போ; நானே அனுமதிக்கிறேன். லங்கையில் நுழைந்து களைப் பாற்றிக்கொண்டு, ரத$_2$த்தையுடையவனாகவும், வில்லையுடையவனாகவும் திரும்பி வா. ரத$_2$த்திலிருந்து கொண்டு அப்போது என்னுடைய ப$_3$லத்தைப் பார்ப்பாய்.] என்கிறபடியே வில்லைக் கைவிட்டவுடன் போர்க்களத்தைவிட்டுப்போவதற்குப் பண்ணின அனுமதியை, வில்லை அவன் கையில் கொண்டிருந்தபோது ஸ்ரீராமபிரான் செய்யவில்லை. ஆகையால், கையிலிருந்த அந்த வில் எதிரியை வெல்வதற்கு ஸாத$_4$நமாகாதது மாத்திரமன்றிக்கே, போர்க்களத்தை விட்டுப்போகவும் ஒண்ணாதபடி இவனுக்குக் கால் கட்டாயிருந்தது; அதுபோலே, இந்த உபாயாந்தரங்களிலே சிறிது தொடர்பு இருந்தாலும், இவை பேற்றுக்கு ஸாத$_4$நமாகாததோ

டன்றியில் அதற்குத் தடையும் ஆகிவிடும் என்று கருத்து. மற்றும் ஓர் உதாரணம் அறியத்தக்கது. அதாவது — ஏற்கனவே கைகேயிக்குக் கொடுத்த வரத்தை இப்போது மறுக்கவொண்ணாது என்று ஸத்யமாகிற மேலெழத்தோன்றும் த₄ர்மத்தைப் பற்றி நின்று,

ராமோ விக்₃ரஹவாந் த₄ர்ம: ஸாது₄: ஸத்யபராக்ரம: ||
ராஜா ஸர்வஸ்ய லோகஸ்ய தே₃வாநாம் மக₄வாநிவ ||
[ ரா-ஆ 37-13 ]

[ராமன் த₄ர்மமே உருவெடுத்தவன்; நல்லொழுக்கமுடையவன்; உண்மை வீரன்; தேவர்களுக்கு இந்திரனைப்போல் எல்லாவுலகிற்கும் இவன் அரசனாகிறான்] என்று சொல்லப்படும் இயல்வான த₄ர்மமான ஸ்ரீராமபிரானோடு கூடிவாழ இருந்த பேற்றை இழந்த தசரத சக்ரவர்த்தியைப்போலே, மேலெழத்தோன்றும் உபாயாந்தரங்களில் தொடர்புகொள்ளுவது

யே ச வேத₃விதோ₃ விப்ரா: யே சாத்₄யாத்மவிதோ₃ ஜநா:|
தே வத₃ந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம் த₄ர்மம் ஸநாதநம் ||
[ பார ஆர-தீர்த்த₂-86-26 ]

[வேத₃மறிந்த வேதியர்களும், வேத₃ாந்தமுணர்ந்த வித்தகர்களும் மஹாபுருஷனை கிருஷ்ணனையே பழமையான த₄ர்மஸ்வரூபியென்று சொல்லுகிறார்கள்.] என்று ஸநாதன த₄ர்மமான (இயல்வான உபாயமான) எம்பெருமானோடே கூடிவாழ்க்கையாகிற பேற்றை இழப்பதற்குக் காரணமாய்விடும் என்று கருத்து.

இங்கு ஓர் ஆக்ஷேபம் எழுகிறது. அதாவது –''இங்கே கைவிடத்தக்கதாகச் சொல்லப்பட்ட 'த₄ர்மம்' 'இதைச்செய்' என்னும் விதி₄ரூபமாகவும், 'இதைச்செய்யாதே' என்னும் நிஷேத₄ரூபமாகவும் இருக்கிறது, 'எல்லா த₄ர்மங்களையும் விட்டு' என்று இங்கு சொல்லுகையாலே விதி₄த்திருப்பதை அனுஷ்டிக்காமல் விடுவதுபோலே, நிஷேதி₄த்திருப்பதை விலக்குவதையும் விடவேண்டிவரும். 'பொய் சொல்லாதே' முதலான நிஷேத₄சாஸ்திரங்களில் சொல்லப்பட்டவற்றை விட்டால் பொய்சொல்லுவது முதலான தவறான காரியங்கள் அனைத்தையும் செய்யவேண்டிவருமே'' என்பது அவ்வாக்ஷேபம். இங்கு 'த₄ர்மங்களை விடு' என்று சொல்லிற்றேயொழிய

'அத₄ர்மங்களைச் செய்' என்று சொல்லாமையாலே, இந்த அனர்த்தம் வராது : 'அத₄ர்மங்களினின்று நீங்குவதும் த₄ர்ம ஶப்₃த₃த்தால் சொல்லப்படுவது தானே' எனில் — அத₄ர்மங்களிலிருந்து நீங்குவது த₄ர்ம ஶப்₃த₃த்தால் சொல்லப்படுவது ஆகாது. 'ஸர்வ' ஶப்₃த₃த்தால் விசேஷித்திருக்கையால், 'த₄ர்ம' ஶப்₃த₃ம் இதையும் காட்டாதோ? எனில் — காட்டினாலும் அத₄ர்ம நிவ்ருத்தியைத்தவிர, விதிக்கப்பட்டதை அநுஷ்டிப்பதாகிற த₄ர்மங்களை மட்டும் இங்கு காட்டுவதாகக் கொள்ளுகிறோம். இப்படி உள்ள பொருளைக் குறுக்கிச் சொல்லவேண்டிய நிர்ப்பந்தம் ஏன்? எனில் — தன் ஸ்வருபத்தையும் ஈஶ்வர ஸ்வருபத்தையும் ப₂லஸ்வருபத்தையும் பார்த்தால், அத₄ர்மங்கள் உட்புக இடமில்லையாதலால் இப்படியே கொள்ளவேண்டும். அதாவது — அத₄ர்மங்களைச் செய்வது ஸ்வாமியான எம்பெருமானுக்குக் கோபத்தை விளைக்குமாகையாலே, அவனுக்குச் சிறப்பை விளைக்க வேண்டிய சேதநஸ்வருபத்துக்குப் பொருந்தாது. வேறு எந்தத் துணையையும் எதிர்பாராத எம்பெருமான் ஜீவனிடம் தன் முயற்சியினின்றும் நீங்குவதைத்தவிர எந்தவிதமான முயற்சியையும் பொறுக்கமாட்டாதவனாகையாலே ஈஶ்வர ஸ்வருபத்தைப்பார்த்தாலும் அத₄ர்மங்களைச் செய்வது பொருந்தாது. இவனுடைய முயற்சிக்குப் ப₂லன் அவனுடைய உகப்பேயாகையாலே, ப₂லஸ்வருபத்தைப் பார்த்தாலும், அவனுடைய நிக்₃ரஹத்தை விளைக்கும் அத₄ர்மங்களைச் செய்வது பொருந்தாது. ஆகையால் த₄ர்மஶப்₃த₃ம் அத₄ர்மநிவ்ருத்திதவிர மற்ற த₄ர்மங்களைச் சொல்லுவதாகவே கொள்ளவேண்டும்.

இங்கு எல்லா த₄ர்மங்களையும விடச்சொன்னது குறித்து வார்த்தாமாலையில் 118ம் வார்த்தையில் எங்களாழ்வான் நடாதூரம்மாளுக்குச்சொன்ன அரும்பொருள் அனுஸந்திக்கத்தக்கது:—

நடாதூரம்மாள், பிள்ளையெங்களாழ்வான் ஸ்ரீபாத₃த்திலே சரமஶ்லோகார்த்த₂ம் கேளாநிற்கச்செய்தே, பிள்ளை, ''ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய'' என்றருளிச்செய்ய; அம்மாள், 'இதொரு ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யமிருந்தபடியென்!' என்ன; பிள்ளையும் ''நீர் இப்படி சொல்லுவானென்? அதி₄காரிக்குச் சேர்ந்தத்தை விடச்சொல்லிலன்றோ நீர் இப்படி சொல்லவேண்டுவது; அதி₄காரிக்குச் சேராதத்தையன்றோ விடச்சொல்லிற்று, ஆகையால் ஈஶ்வரஸ்வாதந்த்ர்யமன்று காணும் இது. அதி₄காரிக்கு ஸ்வருபஹாநியாகையாலே காண் இத்தை விடச்சொல்லிற்று'' என்று அருளிச்செய்தார்.

இனி, மூன்றாவதான 'மாம்' என்னும் பதத்தாலே, தஞ்சமான எம்பெருமானைக் காட்டுகிறது.—(மாம்) அனைவரையும் ரக்ஷிப்பவனாய், உனக்குக் கையாளாய், உன் இசைவு பார்த்து, உன் தோஷத்தையும் போக்யமாகக்கொண்டு உனக்குப் புகலாய், தண்ணீர் சுடுவதுபோலே உன்னை என்னோடு சேர்த்துவிடும் புருஷகாரபூதரே பிரிக்கமுயன்றாலும் விடமாட்டாமல் ரக்ஷிக்கிற என்னைக் குறித்து 'நம்மை ரக்ஷிப்பானோ மாட்டானோ' என்று நீ ஐயமுற வேண்டா; அனைவரையும் ரக்ஷிக்கும் விரதம் கொண்டவனன்றோ நான்.

ஹ்ருஷீகேஶம் ததா வாக்யமிதமாஹ மஹீபதே ।
ஸேநயோருபயோர் மத்யே ரதம் ஸ்தாபய மேச்யுத ॥
[கீதை 1-22]

[அரசனே! அப்போது அர்ஜுனன் கண்ணனைப் பார்த்து இவ்வாறு வார்த்தை சொன்னான் —''அச்சுதனே! இரண்டு சேனைகளுக்குமிடையே என் தேரை நிறுத்துவாய்'' என்று ] என்கிற படியே ஏவிக் கார்யம் கொள்ளலாம்படி உனக்குக் கையாளாயிருக்கையாலே ''தன் பெருமையையும நம் சிறுமையையும் பார்த்து நம்மோடு கலக்காமல் இருப்பானோ '' என்று ஐயமுற வேண்டியதில்லை.

ஸர்வஜ்ஞோऽபி ஹி ஸர்வேஶோ ஸதா காருணிகோऽபி ஸந் ।
ஸம்ஸாரதந்த்ர வாஹித்வாத் ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே ॥
[லக்ஷ்மீதந்த்ரம் 17-78]

[ஸர்வேஶ்வரன் எல்லாமறிந்தவனாயிருந்தபோதிலும், எப்போதும் கருணையுடையவனாயிருந்தபோதிலும, ஸம்ஸாரத்தை (நெறிவழுவாமல்) நடத்திக்கொண்டுபோக வேண்டியிருத்தலால் ரக்ஷிக்கப்பட வேண்டிய ஜீவன் (என்னை ரக்ஷிக்கவேண்டுமென்று) அபேக்ஷிப்பதாகிற ஒன்றைமாத்திரம் எதிர்பார்க்கிறான்.] என்கிற படியே உன்னை ரக்ஷிப்பதில் உள்ள ஆர்வத்தாலே உன் இசைவை எதிர்பார்த்திருப்பவனாகையாலே, உன்னை ரக்ஷிப்பேனோ என்று நீ ஐயமுற வேண்டியதில்லை. தகாத உறவினரிடம் அன்பும், கருணையும், உனக்குரிய தர்மமான யுத்தத்தில் அதர்மம் என்னும் நினைவும் கொண்டு கலங்கிநிற்கும் உன் தோஷத்தையும் போக்யமாகக்கொண்டு மேல்விழுந்து உனக்கு உபதேசித்தவ

ஞைகையாலே, "நம் குற்றத்தைப் பார்த்து நம்மைக்கைவிடுவானே" என்று நீ அஞ்சவேண்டியதில்லை. நீயும் பிறரும் உன்னை ரக்ஷிக்காமலிருந்த நிலைகளிலெல்லாம் உனக்குத் தஞ்சமாயிருந்துஉன்னை ரக்ஷித்தவனுகையாலே, உனக்குத் தஞ்சமாயிருப்பேனே என்று நீ அஞ்சவேண்டியதில்லை. குளிர்த்தியே இயற்கையாகக் கொண்ட தண்ணீர் சுடுவது போலே, உன்னைச் சேரவிடும் புருஷகாரபூதையான பிராட்டியும் "தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல்" [பெரியாழ்திரு 4—9—2] என்கிறபடியே உன்னிடம் குற்றத்தைக் காட்டி அகற்றினலும் உன்னை விடமுடியாமல் "என்னடியார் அது செய்யார்" [பெரியாழ் திரு 4-9-2] என்று மறுத்து உறுதியாக ரக்ஷிப்பவனுகையாலே, 'என் குற்றத்தை மறைத்துச் சேர விடுவார் இல்லை' என்று நீ அஞ்சவேண்டியதில்லை என்று கருத்து.

"மாம்" என்று கண்ணுக்கு இலக்காய் அருகிலிருக்கிற விப₄வாவதாரமான தன்னைக் காட்டுகையாலே, சேதநன் அணுக இயலாத தூ₃ரதே₃சத்தில் இருக்கையாலே, காணவும் கிட்டவும் ஒண்ணாமல் இருக்கும் பரவாஸுதே₃வனையும் வ்யூஹமூர்த்திகளையும் சரணமடைவதற்கு விஷயமாகக் கொள்ளலாகாது என்று உணர்த்துகிறது. (உபாயாந்தரங்களைப்பற்றி நிற்பவர்களுக்குத் தியானிக்கத் தக்கதாயிருக்கும் அக்₃நி இந்த்₃ரன் முதலான தே₃வதாந்தரங்களுக்கு அந்தர்யாமியாய் இருக்கும் நிலையும், அப்ராக்ருதத் திருமேனியுடையதல்லாமையாலே, அதுவும் சரணமடையத்தக்கதல்ல என்று உணர்த்துகிறது.)

பரித்ராணாய ஸாதூ₄நாம் விநாஶாய ச து₃ஷ்க்ருதாம் |
த₄ர்மஸம்ஸ்தா₂பநார்த்தா₂ய ஸம்ப₄வாமி யுகே₃ யுகே₃ ||

[கீ₃தை 4-8]

[ஸாது₄க்களை ரக்ஷிப்பதற்கும், தீயவர்களை அழிப்பதற்கும், வைதி₃கத₄ர்மத்தை நிலைநிறுத்துவதற்கும் யுக₃ந்தோறும் பிறக்கிறேன்,] என்கிறபடியே தன்னையடைவதற்கு ஸாத₄நங்களான த₄ர்மங்களை நிலைநிறுத்துவதற்காக அவதரித்த நானே "ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய" என்று "மோக்ஷஸாத₄நங்களாக ஶாஸ்த்ரங்களில் விதி₄க்கப்படும் எல்லா த₄ர்மங்களையும் விட்டு என்னைப் பற்று" என்று சொல்லுகையாலே, அவை இயல்வான த₄ர்மங்களன்று. நிலைநிறுத்தப்படும் இயல்வான த₄ர்மம் 866ம் பக்கத்

தில் எடுக்கப்பட்ட "க்ருஷ்ணம் த₄ர்மம் ஸநாதநம்" என்ற ப்ரமாணத்தின்படி ஸநாதந த₄ர்மமான தானே என்று உணர்த்துகிறது. இதிலிருந்து விடச்சொன்ன ஸாத₄நங்களைக் காட்டிலும் "மாம்" என்று சொல்லப்பட்ட இந்த ஸாத₄நந்துக்கு உள்ள சிறப்புகள் விளங்குகின்றன. அதாவது:- ஜீவனுடைய முயற்சியாலே உருப்பெறவேண்டியவை உபாயாந்தரங்கள்; ஸநாதந த₄ர்மமான இது அப்படியிராமல் ஏற்கனவே உருப்பெற்றிருப்பது. உபாயாந்தரங்கள் அசேதநங்கள் (அறிவற்றவை); ஆகையாலே ஜீவனுடைய காரியங்களைத் தாம் அறியவும் மாட்டா; இந்த ஸாத₄நம்

யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித் யஸ்ய ஜ்ஞாநமயம் தப:

[முண்ட₃க 1-1-10]

[எந்தப் பரமாத்மாவானவன் எல்லா வஸ்துக்களுடைய ஸ்வரூபத்தையும், ஸ்வபா₄வங்களையும் அறிகிறனோ, எவனுடைய ஸங்கல்பமானது ஞானமயமாயிருக்கிறதோ.........] என்கிறபடியே எல்லாமறிந்த பரமசேதநன். உபாயாந்தரங்கள் ஜீவனுடைய காரியத்தைச் சாதித்துத்தரவல்ல ஶக்தியுடையவையல்ல; இந்த ஸாத₄நம்

பராஸ்ய ஶக்திர் விவிதை₄வ ஶ்ரூயதே ஸ்வாபா₄விகீ

ஜ்ஞாநப₃லக்ரியா ச

[ஶ்வே 6-8]

[இந்தப் பரமாத்மாவுக்குப் பலபடிப்பட்டதும், மேலானதுமான ஶக்தியும், இயற்கையான ஞானமும், பலமும் ஸ்ருஷ்டித்தல் முதலிய) காரியங்களும் உண்டென்று அறியப்படுகிறது,] என்கிறபடியே எல்லாம் வல்லதாயிருப்பது. உபாயாந்தரங்கள் ஒரு ஜீவனுடைய முயற்சியால் ஸாதிக்கப்படுபவையாகையாலே இடையில் தடைகள் நேருவதற்கு இடமுடையவையாய் இருக்கும். ஸித்₃த₄ வஸ்துவான இந்த ஸாத₄நத்தைத் தடுக்கவல்லது எதுவும் இல்லை. உபாயாந்தரங்கள் மிகவும் பரதந்த்ரனான சேதநனுடைய ஸ்வரூபத்துக்குத் தகாதவையாயிருக்கும்; இந்த ஸாத₄நம் அவன் ஸ்வரூபத்துக்குத் தக்கதாயிருக்கும். உபாயாந்தரங்கள் கர்மயோக₃ம் ஜ்ஞாநயோக₃ம் முதலான பல துணைகளை எதிர்பார்த்திருக்கும்; பரமசேதநமாய் எல்லாம் வல்லதாய் இருப்பதாகையாலே, இந்த ஸாத₄நம் துணை எதையும் எதிர் பாராதது. இவ்

விஷயத்தைச் சிறிது விவரிக்கிறோம். மற்ற உபாயங்கள் ஒரு சேதநனுடைய முயற்சியால் ஸாதிக்கப்படுகையாலே தாம் உருப் பெறுவதற்கு அந்தச் சேதநனை எதிர்ப்பார்த்திருக்கும். அறிவற்ற வையாய் ஶக்தியற்றவையாய் இருக்கையால், மோக்ஷமாகிற காரியத்தை நிறைவேற்றுவதற்கும் ஈஶ்வரனை எதிர்பார்த்திருக்கும். இந்த உபாயம் அவற்றுக்கு நேர் எதிராக ஸித்₃த₄மாய், பரமசேதநமாய், எல்லாம் வல்லதாயிருக்கையாலே எதையும் எதிர்பாராததாய் இருக்கும்.

சேதநன் பரமசேதநனை ஶரணமடையும் ப்ரகரணமாகையாலே, ஆஶ்ரயிப்பதற்கு உதவிபுரியும் குணங்களே "மாம" என்னும் இப்பதத்தில் பிரகாசிக்கின்றன. அவையாவன:-(1) வாத்ஸல்யம்: தனக்குரியத₄ர்மமான யுத்தத்திலிருந்து அத₄ர்மம் என்னும் எண்ணத்தாலே நீங்கிய அர்ஜுனனுக்கு அவனுடைய குற்றம் பாராமல் அவனைத் திருத்துவதற்குத் தேவையான அனைத்தையும் அருளிச்செய்கையாலே, குற்றத்தைக் காணாமலிருக்கையாகிற வாத்ஸல்ய குணம் பிரகாசிக்கிறது (2) ஸ்வாமித்வம் (உடையவனாயிருக்கை): தன்னுடைய மேன்மையை கீ₃தையில் பலவிடங்களில் அருளிச்செய்ததோடல்லாமல், அர்ஜுனன் நேரே காணும்படி தன் விஶ்வரூபத்தைக் காட்டுகையாலே ஸ்வாமித்வம் பிரகாசிக்கிறது. (3) ஸௌஶீல்யம் (நீர்மை): அதாவது—பெரியவன் சிறியவர்களோடும் ஒரு நீராகக் கலந்து பரிமாறுதல்,

ஸகே₂தி மத்வா ப்ரஸப₄ம் யது₃க்தம்
ஹே க்ருஷ்ண ஹே யாத₃வ ஹே ஸகே₂தி |
அஜாநதா மஹிமாநம் தவேத₃ம்
மயா ப்ரமாதா₃த் ப்ரணயேந வாபி ||
யச்சாபஹாஸார்த்த₂மஸத்க்ருதோஸி
விஹாரஶய்யாஸந போ₄ஜநேஷு |
ஏகோऽத₂வாப்யச்யுத தத்ஸமக்ஷம்
தத் க்ஷாமயே த்வாமஹமப்ரமேயம் || [கீ₃தை 11-41]

[அச்சுதனே! உன்னுடைய இந்த மஹிமையை அறியாத என்னால், கவனமின்மையாலும் அன்பினாலும், (உன்னை) நண்பனென எண்ணி 'ஏ கிருஷ்ணா! யாதவா! நண்பா!' என்று (உன் விஷயத்தில்) சொல்லப்பட்டது யாதொன்று உண்டோ, பரிஹாஸத்திற்காக, விளையாடும்போதும், படுத்திருக்கும்போதும், உட்கார்ந்

திருக்கும்போதும், உண்ணும்போதும் ஒருவனுயிருக்கும்போதும், பலர் முன்னிலையிலும் (நீ என்னால்) அவமதிக்கப்பட்டது யாதொன்றுண்டோ அது அனைத்தையும், நான் அளத்தற்கரிய உன்னைப் பொறுக்கும்படி வேண்டுகிறேன் ] என்று அர்ஜுனன் தானே சொல்லும்படி அவனோடு கலந்து பரிமாறுகையாலே ஸௌசீல்யம் பிரகாசிக்கிறது (4) ஸௌலப்₄யம் (எளிமை): அப்ராக்ருதமான திருமேனியைக் கண்ணுக்கு இலக்காம்படி பண்ணுகையாலே ஸௌலப்₄யம் பிரகாசிக்கிறது. ஆஶ்ரயிப்பதற்குத் தேவையான குணங்களாகையாலே 'மாம்' என்னும் பதத்தில் இவை தெளிவாகப் பிரகாசிக்கின்றன, இந்த நாலு குணங்களிலும் மிகவும் தேவையானது ஸௌலப்₄யமாகிற 'எளிமை', அவதரித்திருப்பதோடல்லாமல் அர்ஜுனனுக்குத் தேரோட்டியாக நிற்கும் எளிமையின் எல்லை நிலத்தை 'மாம' என்னும் பத₃த்தாலே காட்டுகிறான். "கையும் உழவுகோலும் பிடித்த சிறுவாய்க் கயிறும் ஸேநா தூ₄ளிதூ₄ஸரிதமான திருக்குழலும், திருத்தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற ஸாரத்₂ய வேஷத்தை 'மாம்' என்று காட்டுகிறான்" என்பது முமுக்ஷுப்படி சூர்ணிகை 218. அதாவது—குதிரைகளைத் தூண்டி ஓடச்செய்வதற்காக, திருக்கையிலே தரித்த சாட்டைக் குச்சியும், அக்குதிரைகளை இடப்புறமும் வலப்புறமும் திருப்புவதற்காகவும், நிறுத்தவேண்டிய சமயத்தில் இழுத்துப்பிடித்து நிறுத்துவதற்காகவும் கையிலே பிடித்த கடிவாளமும், தேரோட்டியாய் நிற்கும் நிலைக்குச் சேர, தலையிலே கிரீடத்தை வைக்காமலிருக்கையாலே ஸேனைகளின் ஸஞ்சாரத்தால் கிளம்பிய புழுதி படிந்திருக்கும் திருக்குழல் கற்றையும், "தேர் கடவிய பெருமான் கனைகழல்" [திருவாய் 3—6—10] என்கிறபடியே திருவடிகளிலே சாத்தின சிறுச் சதங்கையும் தானுமாகத் தேருக்குக்கீழே தொங்கவிட்டிருக்கும் திருவடிகளோடு நிற்கிற தேரோட்டி வேஷத்தை 'என்னை' என்று காட்டுகிறான் என்று கருத்து.

இனி, ஏகாரப்பொருளையுடைய நாலாவது பத₃ம் விவரிக்கப்படுகிறது. (மாம் ஏகம்) என்னையே என்றபடி. இந்த ஸித்₃தோ₄பாயத்தைச் சொல்லுமிடங்கள் பலவற்றிலும் ஏகாரத்தோடு சேர்த்தே வழங்கப்படுகையாலே, பிரணவத்தில் உகாரம் போலே இந்த 'ஏக' ஶப்₃த₃மும் ஸ்த₂ந ப்ரமாணத்தாலே அவத₄ரணமாகிற (ஏகாரமாகிற) அர்த்த₂த்தைக் காட்டுகிறது.

தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா |
மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே ||
[கீதை 7-14]

[தேவனுகிற என்னால் நிர்மிக்கப்பட்டதும், முக்குணங்களை உடையதுமான இந்த என்னுடைய மாயை தாண்ட அரிதானது. என்னையே எவர்கள் ஶரணமடைகிறார்களோ அவர்கள் இந்த மாயையைத் தாண்டுகிறார்கள்.]

தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே-
யத: ப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா புராணீ [கீதை 15-4]

[ஆதிபுருஷனான அவனையே ஶரணடைந்து (அஜ்ஞானமழிதல் முதலான) இவையனைத்துக்கும் (ஸாதநமான) (முமுக்ஷுக்களுடைய) செயல்கள் பழங்காலத்திலிருந்து ஏற்பட்டிருக்கிறது]

அஹமஸ்ம்யபராதாநாமாலயோऽகிஞ்சநோऽகதி: |
த்வமேவோபாயபூதோ மே பவேதி ப்ரார்த்தநாமதி:||
ஶரணாகதிரித்யுக்தா ஸா தேவேஸ்மிந் ப்ரயுஜ்யதாம் ||
[அஹிர்புத்ந்யஸம்ஹிதை 36—38]

["நான் குற்றங்களுக்கெல்லாம் கொள்கலமாயிருப்பவன்; (உன்னைத் தவிர) வேறு உபாயமற்றவன்; வேறு உபேயமுமற்றவன். நீயே எனக்கு உபாயமாவாயாக" என்று பிரார்த்திக்கும் புத்தியே ஶரணாகதியெனப்படுகிறது. அது இந்த தேவனிடத்தில் செய்யப் படட்டும்.] என்று இந்த உபாயத்தைப் பற்றுவதைச் சொல்லும் இடங்களிலெல்லாம், உபாயத்தைச் சொல்லும் பதத்தோடு 'ஏவ' காரத்தைச் சேர்த்தே சொல்லியிருப்பதைக் காண்கிறோம். "ஆறெனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்" [திருவாய் 5—7—10] என்று ஆழ்வாரும் 'நின்பாதமே' என்று அருளிச்செய்தார். ஆகையாலே 'மாம் ஏகம்' என்ற இவ்விடத்திலும் ஸ்தாநப்ரமாணத்தாலே 'ஏக' ஶப்தம் 'மாமேவ' 'தமேவ' 'த்வமேவ' 'நின்பாதமே' என்றவிடங்களிற்போலே ஏவகாரப் பொருளையுடையதாயிருக்கிறது என்பது தெளிவு. 'என்னையே' என்கிற இந்த ஏகாரத்தால் ஏதோவொன்றில் உபாயத்தன்மை

தவிர்க்கப்படுகிறது என்று விளங்குகிறது. அது 'எது' என்று ஆராய்ந்தால் 'எல்லா உபாயங்களையும் விட்டு' என்று ஏற்கனவே சொல்லிவிட்டபடியால், உபாயாந்தரங்கள் இப்பதத்தால் தவிர்க்கப்படுகிறது என்று கூறினால் புநருக்திதோ₃ஷம் வரும். 'மற்ற தெய்வங்களை விட்டு என்னையே பற்று' என்று சொல்லுவதாகக் கொள்ளலாமே என்று பார்த்தால், தெய்வங்களுக் கெல்லாம் தலைவனான தன்னைக் காட்டும் 'மாம்' என்னும் பதத்தி லிருந்தே இது ஸித்₃தி₄க்கையாலே அதுவும் பொருந்தாது. ஆகையால், இந்த ஏகாரத்தாலே 'ஶரணம் வ்ரஜ' (உபாயமாக அடைவாய்) என்று அடுத்தபடி சொல்லப்போகும் உபாய ஸ்வீகாரத்தில் உபாயத்தன்மை கழிக்கப்படுகிறது என்றே கொள்ளவேண்டும். "இந்த ஸித்₃தோ₄பாயத்தைப் பற்றினால்தான் மோக்ஷப₂லம் கிடைக்கும். பற்றுவிட்டால் மோக்ஷப₂லம் கிடைக் காது" என்னும் நிலையிருக்கிறபடியாலே, இந்த உபாயஸ்வீகாரத்தை யும் உபாயமாக நினைக்க இடமுள்ளது. அவசியம் விடவேண்டிய அந்நினைவை இந்த ஏகாரம் கழிக்கிறது. இந்த உபாயஸ்வீகாரம் செய்தாலொழிய ஸித்₃தோ₄பாயமாகிற எம்பெருமான் காரியம் செய்யமாட்டானாகையாலே சேதநன் பெறும் பேற்றுக்கு இது அவசியம் வேண்டியிருக்க, இதில் உபாயத்தன்மையை எப்படிக் கழிப்பது? எனில்: பின்வரும் அநுஸந்தா₄னத்தைச் செய்வதன் மூலம் கழிக்கவேண்டும். 'இந்த ஸித்₃தோ₄பாய ஸ்வீகாரமும் அந்த எம்பெருமானாலேயே வந்தது' என்று அநுஸந்திக்கவேண்டும். அதாவது—ஸித்₃தோ₄பாயத்தைப் பற்றிய பிறகு இச்சேதநனுக்கு அநிஷ்டங்களான பாவங்கள் நீங்குவதும், இஷ்டமான பிரம்மாநு பவ கைங்கர்யங்கள் கிடைப்பதும் அவனாலேயே நேருவதுபோலே, இவையிரண்டுக்கும் முன்னால் உண்டாகும் உபாய ஸ்வீகாரமும் அவனாலே உண்டானது என்று அநுஸந்திக்கவேண்டும். ஸ்வீகாரம் அவனாலே உண்டானது என்று சொல்லுவது எப்படி? எனில்—தே₃ஹேந்திரியங்கள் இல்லாமலும், இவ்வுலக போ₄க₃மும் மோக்ஷாநந்த₃மும் இல்லாமலும், அசேதநப் பொருளோடு வாசி யற்றுக் கிடக்கும் பிரளயநிலையிலே, தே₃ஹேந்த்₃ரியங்களோடு கூடியவனாகவும் அறிவு மலரப்பெற்றவனாகவும் ஆம்படி இச்சேத நனைப்படைத்து "எதிர் சூழல் புக்கு" [திருவாய் 2—7—6] என்கிற படியே இவனைத் திருத்தித் தன் வசப்படுத்துவதற்காகப் பல அவதாரங்களைப் பண்ணி, அப்படி அவதரிக்கும்போது தன்னை யடைவதில் ருசியும் விஶ்வாஸமும் ஏற்படுவதற்காகத் தன்னுடைய

ஸ்வரூபகுணங்களையும், ரூபகுணங்களையும், திவ்யமான செயல்களையும் வெளிப்படுத்தி, இம்முறையிலே ஸர்வேஸ்வரன் பண்ணிய முயற்சி பலித்ததனால் இந்த உபாய ஸ்வீகாரம் உண்டாயிற்று என்று அநுஸந்திக்கவேண்டும். இவ்விஷயத்தை "உணர்வில் உம்பரொருவனை அவனதருளால் உறற் பொருட்டு என்னுணர்வினுள்ளே இருத்தினேன்" [திருவாய் 8—8—3] [உணர்வு மிகுந்திருக்கும் நித்ய ஸூரிகளுடைய ஸத்தா ஸ்தி₂தி ப்ரவ்ருத்திகளுக்கும் காரணமான ஒப்பற்ற எம்பெருமானை, அவனுடைய அருளாலே அடைவதற்காக, அவனை அடையவேண்டும் என்னும் விருப்பமாயிருக்கும் அறிவுக்குள்ளே அடக்கிக்கொண்டேன்.] என்று தம்முடைய உபாய ஸ்வீகாரத்தை அருளிச் செய்தவுடன், "அதுவும் அவனது இன்னருளே" என்று அந்த ஸ்வீகாரமும் அவனுடைய நிர்ஹேதுக க்ருபையினாலே உண்டானது என்று ஆழ்வார் அருளிச்செய்கையாலே, ஸ்வீகாரமும் அவனுடைய முயற்சியின் பலம் என்றே கொள்ள வேண்டும் என்று விளங்குகிறது. ஆகையால், இந்த ஸ்வீகாரம் ஸித்₃தோ₄பாயத்தினால் உண்டாவதேயொழிய இதற்கு உபாயத்வம இல்லை என்று தெளிவாகிறது. "இப்படி இந்த ஸ்வீகாரத்துக்கும் தானே முயற்சி செய்கின்றவனாகையாலே, இதற்காக அவன் நமக்குக் காரியம் செய்யவில்லை. இது இல்லாவிடினும் ஆத்மாக்களை உய்விக்கவேண்டும் என்னும் பெருவிருப்பமுடைய தானே நம்முடைய அநிஷ்டங்களைப்போக்கி இஷ்டங்களை அளிப்பான்"என்று இச்சேதநன் அநுஸந்திக்கவேண்டும் என்று கருத்து. இப்படியல்லாமல் அவன் காரியம் செய்வதற்கு இந்த ஸ்வீகாரமும் வேண்டுமென்று நினைத்தால், இந்த ஸித்₃தோ₄பாயம் எந்தத் துணையையும் எதிர்பாராதது என்னும் பெருமை இதற்கு இல்லாமல் போய்விடும். அப்படியானால் ஜீவன் மோக்ஷம் பெறும் விஷயத்தில் இந்த ஸ்வீகாரம் எவ்வகையில் உதவுகிறது, அல்லது எந்த இடத்தைப் பெறுகிறது? என்னும் கேள்வியெழுகிறது. இதற்குப் பதில் பின்வருமாறு:— 1. இது ஸர்வமுக்தி ப்ரஸங்க₃ பரிஹாரத்துக்கு உறுப்பாக இருந்துகொண்டு உதவுகிறது; அதாவது— 'இந்த ஜீவனிடம் ஒரு செயலுமில்லாமல் இருக்கும் போது ஈஸ்வரன் தானே இவனுக்கு மோக்ஷமளிக்கிறான்' என்று நிர்ஹேதுகமாக மோக்ஷத்தைக் கொண்டால், 'எல்லா ஜீவர்களும் இப்படி நிர்ஹேதுகமாக மோக்ஷமடைய வேண்டுமே' என்று எழும் ஐயத்தை இந்த ஸ்வீகாரம் போக்குகிறது. எப்படியெனில்;

ஈஶ்வரன் அனைவருக்குமே மோக்ஷமளிக்கவே அநாதிகாலமாகப் பல செயல்களைச் செய்கிறான். ஆனால் அப்படி ஜீவன் மோக்ஷமடைவதற்கு இந்த ஜீவனிடம் ஒரு தகுதியை எதிர்பார்க்கிறான். இந்த உபாய ஸ்வீகாரமே அத்தகுதியின் வெளிப்பாடாகும். ஒருவன் ஒருபேற்றுக்குத் தகுதியற்றவனானால் அவனுக்கு அப்பேற்றை அளிப்பது பயனளிக்காமல் போவதோடு தீங்கையும் விளைக்கும், உதாரணமாக, உடலோடு சுவர்க்கம் செல்லத் தகுதியற்ற திரிசங்குவை விச்வாமித்ரர் தன் தவவலிமையாலே சுவர்க்கத்திற்கு அனுப்பியபோது, இந்திரன் முதலானோர் அவனைத் தலைகீழாகத் தள்ளி விட்டனர். அவன் சுவர்க்கத்தை அடையமுடியாமல்போனதோடல்லாமல், என்றும் தலைகீழாக அந்தரத்தில் தொங்கும் நிலையும் அவனுக்கு ஏற்பட்டது. இங்கு பக்தனுக்கும் ப்ரபந்நனுக்கும் முமுக்ஷுத்வம் (மோக்ஷமடைவதில் விருப்பம்) பொதுவான தகுதியாகும். ப்ரபந்நனுக்கோ தன்னிடம் கைம்முதல் ஒன்றுமில்லாமையாகிற ஆகிஞ்சந்யமும், வேறு புகலில்லாமையாகிற அநந்ய கதித்வமும் சிறப்பான தகுதிகளாகும். மற்ற எல்லா உபாயங்களையும் விட்டு எம்பெருமானையே உபாயமாகப் பற்றுவது ஜீவனுக்கு உள்ள இந்தத் தகுதியை வெளிப்படுத்துவதின் மூலம் எம்பெருமானை மோக்ஷமளிக்கச் செய்கிறது.

2. ஜீவனுடைய புத்தி ஸமாதானம் பிறப்பதற்கு உறுப்பாயிருப்பதன் மூலமும் இந்த ஸ்வீகாரம் உதவுகிறது; எப்படியெனில்:– 'நெடுங்காலம் தம்மை ரக்ஷிக்காத எம்பெருமான் இன்று நம்மை ரக்ஷிப்பான் என்று நாம் இருக்கிறது எதைக்கொண்டு' என்று ஜீவன் மனம்தளராமல், இவ்வளவுநாள் எம்பெருமானைப் பற்றாத நாம், இப்போது பற்றிவிட்டோம்; இனி நாம் உய்வதற்குக் குறையில்லை, என்று ஜீவனுக்கு மனச்சமாதானம் ஏற்படுவதற்குக் காரணமாய் உள்ளது. இங்கு 'பற்றுதல்' உபாயமாகாதோ? எனில்—உபாயமாகப்பற்றுதல் என்பது உபாயமாக மனத்தில் நினைத்தலேயாகையால் இது தகுதியைக்காட்டும் அதிகாரி விசேஷணமாகுமேயொழிய அங்கங்களோடு கூடிய பெருமுயற்சியாயிருக்கும் உபாயமாகாது. இதையே ஆழ்வார் "மற்றொன்றில்லை சுருங்கச் சொன்னோம் மாநிலத்து எவ்வுயிர்க்கும் சிற்றவேண்டா சிந்திப்பே அமையும் கண்டீர்கள் அந்தோ" [திருவாய் 9—1—7] என்றும், "கண்ணனல்லால் இல்லை கண்டீர் சரண்" [திருவாய் 9—1—10] என்றும் அறுதியிட்டார். இவ்

விடத்தில் "இதுவும் அதிகாரிக்கு வ்யாவர்த்தக விசேஷணமாய்க் கிடக்கிறது; இனி அதிகாரி அங்கமாமன்று, தத்விசேஷண மான இந்த ஸ்வீகாரமும் அங்கமாகக் கடவது. க்ஷேத்து அன்னத் துக்கு ஸாதநமாமன்றிறே. இந்த ஸ்வீகாரத்துக்கு ஸாதனத்வ முண்டாவது" என்று பெரியவாச்சான் பிள்ளை பரந்த ரஹஸ்யத் தில் அருளிச்செய்தது இங்கு அநுஸந்திக்கத்தக்கது, ஒரு வள்ளல் "பசியுள்ளவர்களுக்கெல்லாம் அன்னமளிக்கப்படும்" என்னும் அறிவிப்புடன் அன்ன சத்திரம் கட்டிவைத்திருந்தால், அங்கு சாப்பிடுகிறவனுக்கு, பசி அன்னப்ராப்திக்குத் தகுதியை அளிக்கு மதாகுமே யொழிய உபாயமாகாது; அதுபோல் ஸ்வீகாரமும் அதிகாரிக்குத் தகுதியை அளிப்பதே என்று கருத்து. 3. ஜீவன் எம்பெருமானை உபாயமாகப் பற்றுவதாகிற இந்த ஸ்வீகாரம் இவ னுடைய அறிவின் செயலாய் உள்ளது. அதாவது—இந்த ஜீவன் அறிவற்ற அசேதனமாயிராமல் அறிவுள்ள சேதனனாயிருக்கை யாலே, அவனே உபாயம் என்கிற இவ்வுறுதி இந்த அறிவினால் விளைவது; இது உபாயமாகாது. 4. இந்த ஸ்வீகாரம் ஜீவன் ஆசைப்படவேண்டியதொன்றாகையாலே விதியில்லாமலே விளை யக்கூடியது. அதாவது-எல்லாவிதமான உறவுமாயிருக்கும் எம்பெரு மானைத் தஞ்சமாகப் பற்றுவதுதானே சுவையுடையதாகையாலே, இதன் சுவையறிந்த இவன் தானே ஆசைப்படவேண்டியதொன்று. 'தஞ்சமாகப் பற்றுவாய்' என்னும் விதி தேவையில்லை. இவன் விரைவில் பற்றவேண்டுமென்பதற்காக 'சரணம் வ்ரஜ' என்று விதிப்பதைக்கொண்டு இதை உபாயமாக்கவொண்ணாது. 5. இது ஸ்வரூபத்தில் நிற்பது. அதாவது— எம்பெருமானையே ரக்ஷகனாகக் கொள்வதாகிற இந்த ஸ்வீகாரம் அவனாலேயே ரக்ஷிக்கத்தக்க வனாயிருக்கையாகிற ஸ்வரூபத்தில் சேர்ந்ததாகையாலே, ஸ்வரூபத் தைக் காட்டிலும் தனித்து நிற்கும் உபாயமன்று. இங்கு 'ஸ்வ ரூபம்' என்றது 'ஸ்வரூப நிரூபக தர்மம்' என்றபடி. 6. அப்ரதிஷேதத்யோதகம்—விலக்காமையை வெளிப்படுத்துவது. அதாவது—அநாதிகாலமாக எம்பெருமான், ஜீவர்களை உய் வடையச் செய்வதற்காக ஸ்ருஷ்டி அவதாரம் முதலான பல செயல்களைச் செய்கிறான். பக்ஷபாதமும் கருணையின்மையும் தனக்கு விளையாமைக்காக, ஜீவனுக்கு ஒவ்வொரு செயலைச் செய்யத் தொடங்கும் போதும் ஒரு ஸ்வாதந்த்ர்யத்தை அளித்திருக்கிறான். அதைப் பயன்படுத்திக்கொண்டு இந்த ஜீவன் தன் ரக்ஷணத்தைத் தானே செய்ய முற்பட்டவனாய், "யாதானும் பற்றி நீங்கும் விரதம்" [திருவிருத்தம் 95] என்கிறபடியே, எம்பெருமானைத்

தவிர்ந்த ஶப்₃த₃ாதி₃ விஷயங்கள் எதையாவது பற்றி அவனை விட்டு நீங்கும் விரதத்தை மேற்கொண்டு, எம்பெருமான் பண்ணும் ரக்ஷணத்தை விலக்கி நிற்கிறுன். அவனையே தஞ்சமாகப்பற்றும் இந்த ஸ்வீகாரம், "அநாதி₃காலமாக நீ என்னை என்வசத்தே விட்டமையாலே, நீ கொடுத்த அந்த ஸ்வாதந்த்ர்யத்தைப் பயன் படுத்திக்கொண்டு உன்னிடமிருந்து விலகிச் செல்லுவதன் மூலம் நீ செய்யும் ரக்ஷணத்தை விலக்கிவந்தேன்; இப்போது என் நன்மைக்கு நான் பாடுபடுவதினின்றும் தவிர்ந்தேன்" என்று எம்பெருமானிடம் தன்னுடைய விலக்காமையை வெளிப்படுத்து வதாய் அமைந்திருக்கிறது. ஆகையால் இது உபாயமாகாது என்றபடி.

இவ்விஷயத்தில் ஸ்ரீவேதாந்த தேசிகரின் திருவுள்ளம் வேறு படுகிறது. "'ஏக' ஶப்₃த₃ம் ஶரணவரணத்தில் உபாயத்வத்தைத் தவிர்க்கிறது" என்று பூர்வாசார்யர்கள் பலர் ஸாதித்து வந்ததை அவர் அங்கீகரிக்கவில்லை "'ஏக' ஶப்₃த₃ம் ப்ரபத்தியை ஸித்₃த₄ோபாயமான பகவானேடு ஒக்க உபாயமாக எண்ணக்கூடாது என்றே காட்டும்" என்று அவர் திருவுள்ளம் பற்றினர். இது காரணமாக, "ஶரணவரணத்தை ஸம்ப₃ந்த₄ஜ்ஞானமாத்ரம், அநிவாரண (விலக்காமை) மாத்ரம், அநுமதிமாத்ரம், சைதந்ய க்ருத்யம், சித்தஸமாதா₄னம், அதி₄காரி விஶேஷணம் என்று பூர்வாசார்யர்கள் கூறுவது அதிவாதமாத்ரமே (மிகைப்படக்கூறுதலே)" என்று ரஹஸ்யத்ரயஸாரத்தில் சரமஶ்லோகாதி₄காரத்தில் 'ஏக' ஶப்₃த₃ார்த்த₂த்தை விவரிக்கும்போது ஸாதித்துள்ளார். இப்படி அதிவாத₃மாகக் கொள்ளாமல் இவை உண்மையென்று கொண்டால், பல தோஷங்கள் வரும் என்றும் காட்டியுள்ளார். உதா₃ஹ ரணமாக "அநிவாரணமாத்ரம் என்றது விலக்காத மாத்ரமானல் ரக்ஷகனுன ஈஶ்வரனை இவன் முன்பு ப்ரப₃லனுய் (வலிமையுடைய வனுய்) விலக்கினனுகில் ஈஶ்வரனுடைய ஈஶ்வரத்வம் ஸங்குசித மாம் (குறைந்து போகும்)...... ஸ்வரக்ஷணார்த்த₂ வ்யாபாரத்தாலே விலக்கினனென்னில், நிர்வ்யாபாரமான ஸுஷுப்தி ப்ரளயாத்₃ய வஸ்தைகளிலும் (எச்செயலுமற்ற தூக்கம், ப்ரளயம் முதலான நிலைகளிலும்) வ்யாபரிக்க யோக்₃யனுயிருக்கிற ஜாக்₃ரத்₃த₃ஶையில் விலக்காதேயிருக்கும்போதும் ஈஶ்வரன் மோக்ஷப்ரதா₃நம் பண்ண ப்ரஸங்கி₃க்கும் (மோக்ஷமளித்தலைப் பண்ண வேண்டிவரும்)" என்று, "அப்ரதிஷேத₄த்₃யோதகம்" என்று முமுக்ஷுப்படி சூர்ணை 228ல் ஸாதித்திருப்பதை உண்மையென்று கொண்டால் "அசக்த

ஞன ஜீவன் ஸர்வசக்தனை ஈஶ்வரனைத் தடுக்கவல்லவன் என்று ஆகுமாகையால் ஈஶ்வரனுடைய சக்திக்குக் குறைவு உண்டாகும்'' என்றும், ''தன்னை ரக்ஷித்துக்கொள்வதற்குத் தான் முயற்சி செய்வதன் மூலம் ஈஶ்வரனை விலக்கினுன் என்று கூறினுல், 'ஒரு செயலுமற்ற தூக்கம் ப்ரளயம் முதலான நிலைகளிலும், விழித்திருக்கும்போது, தன்னை ரக்ஷித்துக்கொள்ளத் தான் முயலாதிருக்கும்போதும் ஈஶ்வரன் இவனுக்கு மோக்ஷம் அளிக்க வேண்டிவரும்.' என்னும் தோஷங்களுண்டாகும்'' என்றும் காட்டுகிருர்.

இவ்விஷயத்தில் 'விலக்காமை' என்று பூர்வாசார்யர்கள் எதைத்திருவுள்ளம் பற்றுகிருர்கள் என்பதை உணர்ந்தால், இந்த தோஷங்கள் விளையமாட்டா என்று விளங்கும். ஸர்வேஶ்வரன் ஜீவனுக்கு ஒவ்வொரு காரியத்தைச் செய்யத் தொடங்கும்போதும் முதல் முயற்சியில் ஓர் ஸ்வாதந்த்ர்யத்தை அளித்திருக்கிருன் என்பது பராயத்தாதிகரணத்தின் இரண்டாவது ஸூத்ரத்திலிருந்தும், அதன் பாஷ்யத்திலிருந்தும், அந்த அதிகரணத்தை விளக்கும் ''ஆதௌ ஈஶ்வர தத்தயைவ'' என்று தொடங்கும் நடாதூரம்மாளின் தத்வஸாரஶ்லோகத்திலிருந்தும் தெளிவாக விளங்குகிறது. இதை அந்த அதிகரணத்தின் வ்யாக்யானத்தில் ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் விரிவாக விளக்கியுள்ளார். இந்த ஸ்வாதந்த்ர்யத்தைப் பயன் படுத்திக்கொண்டு, சேதநன் மோக்ஷத்தைப் பெறுவதற்காக பக்தி முதலான ஸாதநங்களைச் செய்தானுகில், அத்யந்த பரதந்த்ரமான ஜீவஸ்வரூபத்தோடு முரண்பட்ட அது ஈஶ்வரனை ஜீவனுக்கு அந்த ஜந்மத்திலேயே நிர்ஹேதுகமாக மோக்ஷமளிக்கவொண்ணுதபடி செய்துவிடும். இந்த முறையில் ஜீவன் ஈஶ்வரனை மோக்ஷமளிக்க இயலாதபடி தடைசெய்வதையே பூர்வர்கள் ஜீவன் செய்யும் விலக்குதலாகத் திருவுள்ளம் பற்றினுர்கள்; மோக்ஷார்த்தமான தன்முயற்சிகளைக் கைவிட்டு எம்பெருமானையே உபாயமாகப்பற்றுவது அவனுடைய விலக்காமையைக் காட்டுகிறது என்று கொண்டார்கள். ஆகையால் ஈஶ்வரனுடைய ஶக்திக்கு எந்தக்குறையும் விளையாது. ஜீவனுடையமோக்ஷார்த்தமான முயற்சிகளே இப்படி எம்பெருமானைத் தடைசெய்வதாக இவர்கள் கொண்டார்களாகையாலே, தூக்கம் ப்ரளயம் முதலான நிலைகளிலும் மோக்ஷமளிக்க வேண்டிவரும் என்று சொல்லுவது பொருந்தாது, இவ்விஷயத்தில் பூர்வாசார்யர்களுடைய திருவுள்ளம் இவ்வண்ணமாகப் பராயத்தாதிகரணத்தை அடிப்படையாகக் கொண்டதாய் உள்ளது. ஶ்ரீவேதாந்ததேசிகரோவெனில் பரா

யத்தாதி₄கரணத்திலிருந்து ஜீவனுக்கு முதல் முயற்சியில் ஸ்வா தந்த்ர்யம் உண்டென்று தேருது என்ற திடமான அபிப்ரா யத்தைஉடையவர். ''அதி₄ஷ்டா₂நம் ததா₂ கர்த்தா'' [கீதை 18-14, 15] எனும் ஶ்லோகங்களின் கீ₃தாபா₄ஷ்யதாத்பர்ய சந்த்₃ரிகையில் இதை அவர் விரிவாகக் காட்டியிருக்கிறுர். நமது கீதா வ்யாக்யா னத்தில் பக்கம் 650 முதல் 652 வரை இதை விளக்கியிருக்கி ரேும். ஆகையால், இந்தக் கருத்துவேற்றுமையை அடிப்படையாகக் கொண்டே சரமஶ்லோகத்தின் 'ஏக' ஶப்₃த₃த்திற்குப் பொருள் கொள் வதிலும் கருத்து வேற்றுமை விளைந்தது என்று தெளிவாக விளங்குகிறது, இவ்விடத்தில் பிள்ளையுலகாசிரியர் தனிசரமத்தில்,

''விஷ்ணூபாயோ யோऽந்யப₂லஸ்ஸோऽத₄ம: பரிகீர்த்தித:|
அந்யோபாயோ விஷ்ணுப₂லோ மத்₄யம: பரிகீர்த்தித: ||
மாத₄வாங்க்₄ரித்₃வயோபாயோ மாத₄வாங்க்₄ரி ப்ரயோஜந: |
யஸ்ஸ ஏவோத்தம: ப்ரோக்தோ மாத₄வேனைவ தேநவை ||

[விஷ்ணுவை உபாயமாகக்கொண்டு வேறுபயன்களைப் பெறுபவன் அத₄மன் (கீழானவன்) எனப்படுகிறுன். வேறு உபாயங்களைக் கொண்டு விஷ்ணுவைப் பயனுகப் பெறுபவன் மத்₄யமன் (கீழுக் குப் மேலுக்கும் நடுவிலிருப்பவன்) எனப்படுகிறுன். மாத₄வனின் திருவடிகளையே உபாயமாகக்கொண்டு அவற்றையே பயனுக அடை பவன் அந்த மாத₄வனுலேயே உத்தமன் (மிகமேலானவன்) எனப் படுகிறுன்.] என்னக்கடவதிறே. ஆனுல் அவஶ்யகர்த்தவ்யமான உபாயஸ்வீகாரத்துக்கு வேஷமேதென்னில், அசித்₃வ்யாவ்ருத்தி லக்ஷ ணமுமாய், ப்ரதிப₃ந்த₄க நிவர்த்தகமுமாய், ஸ்வசித்தஸமாத₄ா நமுமாய்க் கிடக்கிறது.

ப₄க₃வத்ப்ரவ்ருத்தி விரோதி₄ ஸ்வப்ரவ்ருத்திநிவ்ருத்தி:
ப்ரபத்தி:

[ஸ்ரீராமாநுஜசிஷ்யரான ராமமிஶ்ரர் எனப்படும் சோமாசியாண் டான் வார்த்தை]

[நாம் எம்பெருமானை அடைவதற்குச் செய்யும் எந்த முயற்சியும் எம்பெருமான் நம்மை அடைவதற்குச் செய்யும் முயற்சிக்குத் தடை யாக உள்ளது. ஆகையால் அத்தகைய நமது முயற்சியைக் கை விட்டிருத்தலே ப்ரபத்தியாகும்.] என்று ஸோமாசியாண்டான் அருளிச்செய்வர்'' என்று அருளிச்செய்ததும் அநுஸந்திக்கத்தக்கது.

"ஸோமாசியாண்டானும், 'ப₄க₃வத் ப்ரவ்ருத்தி விரோதி₄ ஸ்வப்ரவ்ருத்தி ஸாத்₄யாயா ப₄க்தே: ஸ்வாதந்த்ர்யரூபாஹங்காரஜநகத்வாச்ச ப₄க₃வந்தமுபேத்ய தச்சரணாரவிந்த₃ யுக₃ள ஶரணாக₃தேரபி நிரங்குஶைஶ்வர்ய ப₄க₃வத் ஸ்வாதந்த்ர்ய ஸ்மரண த்₃வாரா பீ₄திஹேதுத்வாச்ச தது₃ப₄யவிஷயப₄க₃வ த₃வதாரபூ₄தபரமகாருணிக - ராமாநுஜயோகி₃ - சரணாரவிந்த₃-ஶரணாக₃திரேவ ஸர்வோஜ்ஜீவநாய ப₄வதீதி ஸமர்த்தி₂தம்'

[எம்பெருமான் சேதனரக்ஷணத்தின் பொருட்டுத் தான் முயல்வதற்குத் தடையாயிருக்கும் ஜீவப்ரயத்னத்தினால் விளையும் ப₄க்தி ஸ்வாதந்த்ர்யரூபமான அஹங்காரத்தை ஜீவனுக்கு விளைப்பதாயிருக்கையாலும், எம்பெருமானின் திருவடித்தாமரைகளை ஶரணமடைவதாகிற ப்ரபத்தியும் எல்லையற்ற ஐஶ்வர்யமுடைய எம்பெருமானின் ஸ்வாதந்த்ரியத்தை நினைத்து ஜீவன் அச்சமடையக் காரணமாயிருக்கையாலும், இந்த ப₄க்தி ப்ரபத்திகளுக்கு விஷயமான எம்பெருமானின் அவதாரமாய், பரமகாருணிகரான ஸ்ரீராமாநுஜமுனிவரின் திருவடித்தாமரைகளில் ஶரணமடைவதே அனைவரையும் உய்விக்கும் உபாயமாகும் என்று நிரூபிக்கப்பட்டது] என்று ஸ்வப்ரணீதமான சரமோபாய விவரணத்திலே அருளிச்செய்தாரிறே" என்று நாலூராச்சான் பிள்ளையின் சரமோபாய தாத்பர்யத்தில் எடுக்கப்பட்ட ஸோமாசியாண்டானின் சரமோபாய விவரண வாக்யமும் இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

'விடுகைக்கோ, பற்றுகைக்கோ உபாயத்வமில்லை' என்று காட்டும் வார்த்தாமாலையிலுள்ள 'ஒரு ஸ்ரீவைஷ்ணவர் 'விடுகை உபாயமோ? பற்றுகை உபாயமோ?' என்று கேட்க, 'விடுகையும் உபாயமன்று; பற்றுகையும் உபாயமன்று; விடுவித்துப் பற்றுவிக்கிறவனே உபாயம்' என்று அருளிச்செய்தார்" என்னும் ஆச்சான் பிள்ளையின் வார்த்தையும் இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

இதுபோலவே ப்ரபத்தி அதி₄காரி விஶேஷணம், சைதந்ய கார்யம் என்று பூர்வாசார்யர்கள் வர்ணிப்பதோடு தேசிகர் கருத்துவேற்றுமையைத் தெரிவிப்பதும், ப்ரபத்தி லக்ஷணத்தில் இவர்களிடையேயுள்ள கருத்துவேற்றுமையை அடிப்படையாகக் கொண்டதே என்பதை இங்கு சிறிது விளக்குவோம்.

சரணாகதிலக்ஷணம் - பூர்வாசார்ய ஸம்ப்ரதாயம், தேசிகர் மதம் - என்ற பேதம் -



"அஹமஸ்ம்யபராத₄நாமாலயோऽகிஞ்சநோऽக₃தி: |
த்வமேவ உபாயபூ₄தோ மே ப₄வேதி ப்ரார்த்த₂நாமதி: ||
ஶரணாக₃திரித்யுக்தா ஸா தே₃வேஸ்மிந் ப்ரயுஜ்யதாம் ||
[ அஹிர்பு₃த்₄ந்ய ஸம்ஹிதை 37 – 30, 31 ]

["நான் குற்றங்களுக்கெல்லாம் கொள்கலமாயிருப்பவன்; (உன்னைத் தவிர) வேறு உபாயமற்றவன்; வேறு உபேயமற்றவன். நீயே எனக்கு உபாயமாவாயாக" என்று பிரார்த்திக்கும் பு₃த்₃தி₄யே ஶரணாக₃தியெனப்படுகிறது. அது இந்த தே₃வனிடத்தில் செய்யப்படட்டும்.] முதலான வசநங்களில் எம்பெருமானையே உபாயமாகக் கொள்வதாகிற மதியை — கோ₃ப்த்ருத்வவரணத்தை — ப்ரபத்தியாகச் சொல்லியிருப்பதை ப்ரபத்திலக்ஷணமாகக் கொண்டு ஆநுகூல்யஸங்கல்பம், ப்ராதிகூல்யவர்ஜநம், ரக்ஷிப்பான் என்னும் மஹாவிஶ்வாஸம், ஆத்மப₄ர ஸமர்ப்பணம், கைம்முதலும் புகலுமில்லாமையாகிற கார்ப்பண்யம் ஆகிய ஐந்தையும் இந்த அத்₄யவஸாயமுடையவனுக்குத் தன்னடையே விளையும் ஸம்பா₄வித ஸ்வபா₄வமாகக் கொண்டார்கள் பூர்வாசார்யர்கள். இதை 'நண்ணாத வாளவுணர்' [பெரிய திரு 2-6] ப்ரவேஶத்தில் பெரியவாச்சான் பிள்ளை விளக்கியிருக்கிறார். இப்படி மதியே ஶரணாக₃தியாகையாலே அது சைதந்ய கார்யமென்றும், அதி₄காரி விஶேஷணமென்றும் இவர்கள் விளக்கினார்கள்.

வேதா₃ந்ததேசிகரோவெனில் "நிக்ஷேபாபர பர்யாய: ந்யாஸ: பஞ்சாங்க₃ ஸம்யுத: | ஸந்யாஸஸ்த்யாக₃ இத்யுக்த: ஶரணாக₃திரித்யபி ||" [லக்ஷ்மீ தந்த்ரம் 17-74] [நிக்ஷேபம் (ஆத்மாவை ஸமர்ப்பிப்பது), ஸந்யாஸம், த்யாக₃ம், ஶரணாக₃தி என்று சொல்லப்படும் ப₄ரந்யாஸம் ஐந்து அங்கங்களோடு கூடியது] என்னும் வசநம் ஶரணாக₃தி லக்ஷணத்தைக் கூறுவதாகக் கொண்டு ஆத்ம ஸமர்ப்பணமாகிற செயலே ஶரணாக₃தியென்றும், ஆநுகூல்ய ஸங்கல்பம், ப்ராதிகூல்ய வர்ஜநம், மஹாவிச்வாஸம், கோ₃ப்த்ருத்வவரணம் (உபாயமாக வரிப்பதாகிற ஶரணவரணம்), கார்ப்பண்யம் ஆகிய ஐந்தையும் அந்த ப்ரபத்தியாகிற செயலுக்கு அங்க₃ங்களென்றும் கொண்டு அதை ஸாத்₄யோபாயமாகக் கருதினார். "ந்யாஸ: பஞ்சாங்க₃ ஸம்யுத:" என்னும் இந்த வசநம் ப்ரபத்தியில் உபாயபுத்தி கொள்ளும் ஸ்வக₃த ஸ்வீகார நிஷ்டை₂யைக் காட்டுகிறது; இதை அநுஷ்டிப்பவர்களுக்கு ஸ்வார்த்த₂ கைங்கர்ய ப்ரதா₄நமான மோக்ஷமே

கிடைக்குமென்று பூர்வாசார்யர்கள் திருவுள்ளம் பற்றினர்கள். இவ்வண்ணமாக, ப்ராயத்தாதி₄கரணத்திற்குப் பொருள்கொள்ளுவதிலும், ஶரணாக₃தி லக்ஷணத்தைக் கூறுவதிலும் தேசிகருக்கு மற்ற ஆசார்யர்களோடு விளைந்த கருத்து வேற்றுமையை அடிப்படையாகக் கொண்டதே 'ஏக' பத₃த்திற்குப் பொருள் கொள்வதில் விளைந்துள்ள கருத்து வேற்றுமை என்று தெளிவாக விளங்குகிறது.

"ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய" என்றவிடத்தில் எல்லா உபாயங்களையும் விடச் சொல்லுகையாலே, ஸாத்₄யோபாயங்களான சேதநப்ரவ்ருத்திகளும் அவற்றுக்குப் பலனளிக்கும் தானுமாகக் கூடிநின்று ப₂லனளிக்கும் நிலையைக் குலைத்தான் கண்ணன். "ஏகம்" என்கிற இடத்தில் சேதநன் செய்யும் ஸ்வீகாரமும் உபாயமன்று என்கையாலே, உபாயமாயிருக்கும் தானும் தான் பற்றும் பற்றில் உபாயம் என்று எண்ணம்கொண்டிருக்கும் சேதனனுமான நிலையைக் குலைக்கிறன். இயல்பாக ரக்ஷிப்பவனாகவே இருக்கும் ஸர்வேஶ்வரனை அவனால் ரக்ஷிக்கப்படும் ஜீவன் தன் ரக்ஷணத்துக்கு உறுப்பாகப் பற்றுகிற ஸ்வக₃த ஸ்வீகாரம் எம்பெருமான் ஜீவனுக்கு ஒவ்வொரு செயலிலும் ப்ரத₂ம ப்ரவ்ருத்தியில் கொடுத்திருக்கும் ஸ்வாதந்த்ர்யத்தைப் பயன் படுத்திக்கொண்டு செய்வதாகையாலே அஹங்காரத்தை உள்ளடக்கியது. அதாவது "எம்பெருமான் நிர்ஹேதுகமாக அநாதி₃ காலமாக நம்மைக் காக்கின்றவனாகவும் நமக்கு ஸ்வாமியாகவும் இருக்கிறன். அத்தகையவன் நமக்கு ஸ்வரூபஜ்ஞாநத்தை உண்டாக்கி அதன்மூலம் அவன் திருவடிகளைப் பற்றும்படி செய்கிறன்" என்று கருதாமல், "நமது மோக்ஷத்தின் பொருட்டு நாம் இந்த ஸ்வீகாரத்தைச் செய்கிறேம்" என்று நினைப்பது அஹங்காரத்தோடு கூடியது. அத்துடன் தந்தையிடம் மகன் தன்னை ரக்ஷிப்பதற்குக் கையெழுத்து வாங்குவதுபோலே குற்றத்தை விளைப்பதாயும் இருக்கும். குழந்தைப் பருவத்திலிருந்து தன்னை ரக்ஷித்து வந்த தகப்பனிடம் 'என்னை ரக்ஷிப்பதற்காக உம்மைப் பற்றினேன், நீர் என்னைக் காக்கவேண்டும்' என்று நிர்ப்பந்திப்பது இருவருக்கும் உள்ள உறவிற்குக் குறையாய் முடியுமன்றே. இவன் பற்றும் பற்று இவனை ரக்ஷிப்பதல்லவென்றால் இவனை ரக்ஷிப்பது எது? எனில்—இந்த ஆத்மாவினுடைய ரக்ஷணத்துக்காகவே உறுதிகொண்டு அநாதி₃காலமாகச் செயல்படும் எம்பெருமான் 'இவனை நாம் ரக்ஷிக்கக்கடவோம்' என்று அபிமானித்து ஏற்றுக்

கொள்ளுகையாகிற பரகதஸ்வீகாரமே உண்மையில் இவனை ரக்ஷிக்குமென்று கண்டு கொள்வது. ஆராய்ந்தால், எம்பெருமானுகிற ஸித்தோபாயம் ஜீவனுடைய முயற்சியில் எதையும் பொறுக்கமாட்டாதது. ஸாத்யோபாயங்களான கர்ம ஜ்ஞான பக்திகள் ஜீவனுடைய முயற்சியால் கைகூடவேண்டியிருப்பவையாகையால் அந்த உபாயங்களைப் பற்றி நிற்பவர்களுக்கு, தம் முயற்சிகளிலிருந்து நீங்குவது குற்றமாயிருக்கும். இந்த ஸித்தோபாயமோவெனில் வேறு எந்தத்துணையையும் பொறுக்கமாட்டாததாகையாலே இங்கு இந்த ஜீவன் தன் நன்மைக்குத் தான் முயற்சி செய்வதே குற்றமாயிருக்கும், இந்த ஸித்தோபாயத்தைப் பற்றுவதைச் சொல்லுகிற "மற்றிருன்றில்லை" [திருவாய் 9-1-7] என்று தொடங்கும் பாட்டிலே, நம்மாழ்வார் "சிற்றவேண்டா" [செயல் புரிய வேண்டா] என்று சேதநன் தன் நன்மைக்குத் தான் முயல வேண்டியதில்லையென்றும், 'சிந்திப்பே அமையும்' என்று எம்பெருமானை ரக்ஷகனாக நினைத்திருப்பதே போதும் என்றும் அருளிச் செய்திருப்பது இவ்விஷயத்தை நிரூபிக்கிறது. இக்கருத்தே "ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய" என்கிறவிடத்தில் சேதநன் தன் நன்மைக்குத் தான் முயல்வதைக் கைவிடவேண்டுமென்று சொல்லப்பட்டது, இங்கு ஒரு கேள்வியெழுகிறது ஆழ்வார்கள் "என்னைத் தீமனம் கெடுத்தாய்" [திருவாய 2-7-8] "மருவித் தொழும் மனமே தந்தாய்" [திருவாய் 2-7-7] என்று எம்பெருமானிடம் அவன் செய்த உபகாரத்திற்கு நன்றி தெரிவிக்கிருர்கள். முயற்சி கூடாதென்ருல் அது கூடத்தேவையில்லை என்று தோன்றுகிறதே. அது உபாயத்தில் சேர்ந்துவிடாதா? என்பது அக்கேள்வி. இச்சேதநன் அறிவுடையவனுகையாலே, இவன் பண்ணும் உபகாரஸ்ம்ருதி (செய்ந்நன்றி அறிவித்தல்) இவனுடைய அறிவினுல் விளைந்ததாகும். இது செய்ததாலன்ரே எம்பெருமான் கார்யம் செய்தான் என்னும் நினைவுக்கு இங்கு இடமில்லையாகையால் இது உபாயத்தில் சேராது.

இனி, ஐந்தாவது பதம் விவரிக்கப்படுகிறது. (ஶரணம்) உபாயமாக.

> உபாயே க்ருஹரக்ஷித்ரோ: ஶப்த: ஶரணமித்யயம் |
> வர்த்ததே ஸாம்ப்ரதம் சைஷ உபாயார்த்தைகவாசக: ||
>
> [அஹிர் 36—37]

[உபாயம், வீடு, ரக்ஷகன் என்னும் மூன்று பொருள்களையுடையது 'ஶரணம்' என்னும் சொல், இப்போது இந்த ஶரணஶப்தம்

'உபாயம்' என்னும் பொருளையே கூறுகிறது.] என்கிறபடியே "ஶரணம்" என்னும் இப்பதம் ரக்ஷகனையும் வீட்டையும் காட்டக் கூடியதானாலும், எல்லாவுபாயங்களையும் விட்டுத் தன்னையே பற்றச்சொல்லுகிற ப்ரகரணமாகையாலே, இங்கு 'உபாயம்' என்னும் பொருளையே காட்டுகிறது. இங்கு ஓர் ஆக்ஷேபம் எழுகிறது:- 'எல்லாவுபாயங்களையும் விட்டு என்னையே பற்று' என்று சொன்னாலே 'என்னை உபாயமாகப்பற்று' என்னும் பொருள் கிடைக்குமே! 'ஶரணம்' என்னும் சொல் வேண்டுமோ? என்பது அவ்வாக்ஷேபம். இதற்கு ஸமாதாநம் பின்வருமாறு:— ஒருமனிதன் ஓடமாகிற ஸாத₄நத்தைக்கொண்டு நதியைக்கடந்து அக்கரையை அடைகிறான். இங்கு அக்கரையாகிற ப்ராப்யத்தை அடையும்போது ஓடமாகிற ஸாத₄நத்தைக் கைவிடுதல் காணப்படுகிறது. இவ்விடத்தில் அப்படியல்ல. "மற்ற உபாயங்களை விட்டு என்னையே உபாயமாகக் கொள்ளவேணும்" என்று சொல்லுமிடமாகையாலே 'உபாயமாக' என்னும் பதம் ப்ராப்யமாகக் கொள்ளுகையை வேறுபடுத்துகிறதாகையாலே அவசியம் வேண்டியிருக்கிறது. இதற்குமேல் ஒருகேள்வி எழுகிறது. ஓடத்தைவிட்டு அக்கரையை அடைகிறான் என்றவிடத்தில் 'ஓடத்தை விடுகை' அக்கரையை அடைவதற்கு அங்கமாகாது இங்கோவெனில் மற்ற உபாயங்களை விடுவது எம்பெருமானைப் பற்றுவதற்கு அங்கமாக விதிக்கப்படுகிறது இங்கு 'உபாயம்' என்பதைக்காட்டும் 'ஶரண' ஶப்தம் இல்லாவிடினும் அப்பொருள் தன்னடையே தேறிவிடுமே? 'ஶரண' ஶப்₃த₃ம் தேவையில்லையே என்பது அக்கேள்வி. இதற்கு ஸமாத₄ாநம் பின்வருமாறு:—

ஆக்ஷேபத; ப்ராப்தாத₃ாபி₄த₄ாநிகஸ்யைவ க்₃ராஹ்யத்வாத்

[ஸ்ரீப₄ாஷ்யாரம்ப₄ம்]

[அர்த்த₂ப₃லத்தால் வருவதைக்காட்டிலும், ஶப்₃த₃ப₃லத்தால் வருவதே ஏற்றுக்கொள்ளத்தக்கதாகையால்] என்று ஸ்ரீப₄ாஷ்யகாரர் அருளிச்செய்தபடியே, அர்த்த₂ப₃லத்தால் தேறுமிடங்களிலும் சொல்லாலே சொல்லுவதுசிறப்புற்றதாகையாலே, 'ஶரண' ஶப்₃த₃ம் வேண்டியதேயாகும். எம்பெருமானாகிற வஸ்து பேறாகவும் (ப்ராப்யமாகவும்) பற்றத்தக்கது. ஆறாகவும் (ப்ராபகமாகவும்) பற்றத்தக்கது; இவ்விடத்தில் பேறாகப்பற்றப்படவில்லை. ஆறாகவே பற்றப்படுகிறது என்று தெளிவாகக் காட்டுவதற்கு 'ஶரண' ஶப்₃த₃ம் வேண்டியிருக்கிறது என்று தேறிற்று.

இனி ஶ்லோகத்தின் முற்பாதியின் கடைசிப்பதமான ஆறாவது பதமும் விவரிக்கப்படுகிறது. (வ்ரஜ) உறுதி கொள்வாய். 'வ்ரஜ க₃தௌ' என்கிற த₄ாதுவிலே தோன்றியதாகையாலே, இப்பதம் பொதுவாக ஸஞ்சரிப்பதைச் சொல்லும்; இங்கு உபாய ப்ரகரணமாகையாலே "க₃த்யர்த்த₂ா பு₃த்₃த்₄யர்த்த₂ா:" [இலக்கண நூல் வழக்கு.] [க₃தியைச் சொல்லும் ஶப்₃த₃ங்கள் (மானஸக₃தியான) பு₃த்₃தி₄யைச் சொல்லுகின்றன.] என்கிறபடியே மனத்தால் ஸஞ்சரித்தலாகிற உறுதிகொள்வதைக் கூறுகிறது இந்த உறுதிகொள்ளுதல் எத்தகையது என்பதை விளக்கி, பிள்ளைலோகாசார்யர் பரந்த படியில், "இந்த உறுதியானது கைவிடத் தக்கதென்று சொல்லப்பட்ட மற்ற உபாயங்களைக் காட்டிலும் வேறுபட்டதாய், இதுதானும் உபாய வகுப்பில் சேராததாய், மற்ற உபாயங்களை விட்டபின்பே கொள்ளத்தக்கதாய், எம்பெருமானைப் பிரார்த்திப்பதை உள்ளடக்கியிருப்பதாய், எம்பெருமானுடைய முகமலர்த்திக்குக் காரணமாயிருப்பதாய், ஜீவாத்ம ஸ்வரூபத்துக்குத்தக்கதாய், பேற்றை விளைப்பதில் தவறிப் போகாமலும் தாமதத்துக்கு இடங்கொடாமலும் இருப்பதொரு அத்₄யவஸாயம் (உறுதி) ரூபமானதொரு அறிவாகும்" என்னும் பொருளுள்ள ஸ்ரீஸூக்திகளை அருளிச்செய்திருப்பது இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

இங்கு ஓர் கேள்வி எழுகிறது. "வ்ரஜ க₃தௌ" என்னும் த₄ாது மனோவாக்காயங்களாகிற மூன்றாலும் ஸஞ்சரித்தலைச் சொல்லுவதாயிருக்க மனத்தாலே ஸஞ்சரிப்பதாகிற உறுதி கொள்வதை மாத்திரம் இதற்குப் பொருளாகக் கொள்ளுவானேன்? என்பது அக்கேள்வி. இதற்குப் பதில் பின்வருமாறு:— "சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும்" [திருவாய் 6—5—11] என்கிறபடியே இந்த ஸ்வீகாரம் மனோவாக்காயங்களாகிற முக்கரணங்களாலும் உண்டானால் தகுதியின் நிறைவுக்கு உறுப்பாயிருக்கையாலே 'ஶரணம் பற்றுகிறேன்' என்று வாயாலும், அஞ்சலி நமஸ்காரம் முதலானவற்றைச் செய்வதாகிற காயிக வ்யாபாரத்தாலும் அநுஷ்டிப்பதும் தேவையாயிருந்தபோதிலும், "ஜ்ஞானத்தாலேயே மோக்ஷம்" என்று ஶாஸ்த்ரங்களனைத்தும் ஒருமிடறாகக் கூறுகையாலே, வாசிககாயிக வ்யாபாரங்களைச் சொல்லாமல் மனத்தால் உறுதிகொள்வதையே சொல்லுகிறது.

'ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ' என்னும் சரம ஶ்லோகத்தின் முற்பாதிக்குத் திரண்டபொருளை, "இவ்விடத்திலே பிள்ளையருளிச்செய்து போருவதொரு வார்த்தையுண்டு. அதாவது:— 'பதர்க்கூட்டைவிட்டுப் பர்வதத்தை அண்டைகொள்வாரைப்போலே பற்று என்கிறான்' என்று; அது எங்ஙனே? என்னில், அவை ஸாத்₄யங்களாகையாலும், பலவாகையாலும், அசேதநங்களாகையாலும் பதர்க் கூட்டிறே. இவன் ஸித்₃த₄ ஸ்வரூபனுகையாலும், ஒருவனுகையாலும், பரம சேதநனுகையாலும் பர்வதம்" என்று பிள்ளைலோகாசார்யர் தனிசரமத்தில் அருளிச்செய்தார். பெரியவாச்சான்பிள்ளையும் பரந்த ரஹஸ்யத்தில் இதே பொருளுள்ள ஸ்ரீஸூக்திகளை அருளியுள்ளார்.

ஷோட₄ாஹி வேத₃விது₃ஷோ வத₃ந்த்யேநம் மஹாமுநே ।
ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம் ।
ரக்ஷிஷ்யதீதி விஶ்வாஸோ கோ₃ப்த்ருத்வவரணம் த₂தா₂ ।
ஆத்மநிக்ஷேப கார்ப்பண்யே ஷட்₃வித₄ா ஶரணாக₃தி: ॥
[அஹிர்-ஸம் 37—27, 28]

[மஹர்ஷியே! வேதமறிந்தவர்கள் இந்த சரணாக₃தியை ஆறுவகைப் பட்டதாகச் சொல்லுகின்றனர். (அவையாவன) 1. (பகவத்பாகவத விஷயத்தில்) அநுகூலனுயிருப்பதாக ஸங்கல்பித்துக்கொள்வது. 2. (அவர்களுக்கு) ப்ரதிகூலமாயிருப்பவற்றை விடுவது. 3. 'உடையவன் உடைமையைக் காப்பாற்றுவான்' என்னும் நம்பிக்கை. 4. "நீ என்னை ரக்ஷிக்க வேண்டும்" என்று எம்பெருமானை வேண்டுவது. 5. தன்னுடைய ஆத்மாவை அவனிடத்திலே அடைக்கலமாக வைப்பது 6. அவனையடையத் தன்னிடம் ஒரு ப்ரவ்ருத்தியுமில்லாமலிருப்பது என்று ஆறுவிதமானது சரணாகதி,] என்று அஹிர்பு₃த்₄ந்ய ஸம்ஹிதையில் சரணாகதி ஆறுவிதமாகச் சொல்லப்பட்டது. இதில் நாலாவதான கோ₃ப்த்ருத்வ வரணமே சரணாகதியாகும் என்பது இந்தச் சரம ஶ்லோகத்தில் 'ஶரணம் வ்ரஜ' [சரணம் அடைவாய்] என்னும் விதி₄யாலே தெளிவு படுத்தப்படுகிறது. அநுஸந்த₄ாந ரஹஸ்யமான த்₃வயத்திலும் 'ஶரணம் ப்ரபத்₃யே' [உபாயமாக அடைகிறேன்] என்றிருப்பது இதையே வலியுறுத்துகிறது. 882 வது பக்கத்தில் எடுக்கப்பட்ட "அஹமஸ்மி......ப்ரார்த₂நா மதி: ஶரணாக₃தி:" என்னும் அஹிர்பு₃த்₄ந்ய ஸம்ஹிதையிலுள்ள லக்ஷணவாக்யமும்

அநந்யஸாத்$_4$யே ஸ்வாபீ$_4$ஷ்டே மஹாவிஶ்வாஸ பூர்வகம் |
ததே$_3$கோபாயதா யாச்ஞா ப்ரபத்தி: ஶரணாக$_3$தி: ||

[ப$_4$ரதமுனி; விஷ்வக்ஸேந ஸம்ஹிதை]

[தன் இஷ்டம் வேறொன்றால் ஆகாதபோது, மஹாவிஶ்வாஸத்தை முன்னிட்டுக்கொண்டு எம்பெருமான் ஒருவனையே 'உபாயமாக இருக்கவேணும்' என்று யாசிப்பது ப்ரபத்தி; அதுவே ஶரணாக$_3$தி] என்னும் ப$_4$ரதமுனிவரால் சொல்லப்பட்ட ஶரணாக$_3$தி லக்ஷணமும் இதை வலியுறுத்துகின்றன. 'தமேவ ஶரணம் க$_3$ச்ச$_2$' [கீதை 18-62] [பரமபுருஷனையே உபாயமாகக் கொள்வாய்] 'மாமேவ யே ப்ரபத்$_3$யந்தே' [கீதை 7-14] [என்னையே எவர்கள் உபாயமாகக் கொள்கிறார்களோ]

தமேவ சாத்$_3$யம் புருஷம் ப்ரபத்$_3$யே –
யத: ப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா புராணீ [கீ$_3$தை 15-4]

[ஆதி$_3$புருஷனான அவனையே ஶரணமடைந்து (அஜ்ஞானமழிதல் முதலான) இவையனைத்துக்கும் (ஸாத$_4$னமான) (முமுக்ஷுக்களுடைய) செயல்கள் பழங்காலத்திலிருந்து ஏற்பட்டிருக்கிறது.] முதலான விடங்களில் கீ$_3$தையிலும் ஶரணாக$_3$தியைப் பற்றிச் சொல்லுமிடங்களிலெல்லாம் உபாயஸ்வீகாரமாகிற கோ$_3$ப்த்ருத்வ வரணமே ஶரணாக$_3$தியாகச்சொல்லப்பட்டது இதை மிகவும் தெளிவாக்குகிறது. 'கண்ணனல்லால் இல்லை கண்டீர் சரண்' [திருவாய் 9-1-9] 'ஆறெனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்' [திருவாய் 5-7-10] என்று ஆழ்வார்களும் எம்பெருமானையே (அல்லது திருவடிகளையே) உபாயமாக உறுதிகொள்வதையே ஶரணாக$_3$தியாக அறுதியிட்டார்கள். அதனாலேயே முதலில் எடுத்த அஹிர்புத்ந்ய ஸம்ஹிதாவசனத்தில் ஆறுவிதமாகச் சொல்லப்பட்ட சரணாக$_3$தியின் மற்ற ஐந்தும் உபாயாத்$_4$யவஸாயமுடைய அதிகாரிக்கு, நெல்லைக்குத்தினால் தன்னடையே வியர்வை வடிவதுபோலே, உபாய ஸ்வீகாரத்துக்கு முன்னும் பின்னும் தன்னடையே விளையக்கூடிய தன்மைகள் (ஸம்ப$_4$வித ஸ்வப$_4$ாவங்கள்) என்று கொண்டார்கள் பூர்வாசார்யர்கள். 882 வது பக்கத்தில் எடுக்கப்பட்ட 'ந்யாஸ: பஞ்சாங்க$_3$ ஸம்யுத:' [லக்ஷ்மீ தந்த்ரம் 17-74] [ஆத்மாவை ஸமர்ப்பிப்பது ஐந்து அங்கங்களோடு கூடியது] என்னும் ப்ரமாணத்தில் ஆத்ம ஸமர்ப்பணத்தை ஶரணாக$_3$தியாகவும் மற்ற ஐந்தையும் அதற்கு அங்கங்களாகவும் கூறும் வசனத்தை ப்ரபத்தியை ஸாத்$_4$யோபாயமாகக் கருதிச் செயல்படும் ஸ்வக$_3$தஸ்வீகாரமாகிற அமுக்$_2$யசரணாகதியைச் சொல்லுவதாகக் கொண்டனர்.

"எனதாவி தந்தொழிந்தேன் இனி மீள்வதென்பதுண்டே" [திருவாய் 2-3-4] என்று ஆத்ம ஸமர்ப்பணம் செய்த ஆழ்வார் "எனதாவி யார் யானார் தந்த நீ கொண்டாக்கினையே" [ஷை] என்று உண்மையில் எம்பெருமானுடையதான தன் ஆத்மாவை ஸமர்ப்பிப்பதற்குத் தனக்கு அருகதையில்லை என்று அநுஸந்தி₄த்தார். "உதவிக் கைம்மாறு என் உயிரென்ன உற்றெண்ணில் அதுவுமற்றங்கவன்றன்னது ... ... எதுவும் ஒன்று மில்லை செய்வது இங்கும் அங்கே" [திருவாய் 7-9-10], "திண்ணமா நும் உடைமை உண்டேல் அவனடி சேர்த்துய்ம்மினோ, எண்ணவேண்டா நும்மதாதும் அவனன்றி மற்றில்லையே" [திருவாய் 9-1-10] என்னுமிடங்களிலும் ஆத்ம ஸமர்ப்பணம் செய்தவுடன் அதற்கு அநுதாபத்தையும் அறிவித்தார் ஆழ்வார். இதை அடியொற்றியே,

"அஹம் அத்₃யைவ மயா ஸமர்ப்பித:" [ஸ்தோ-ரத் 52]

[நானாகிற ஆத்மா இன்றே உன் திருவடித் தாமரைகளில் ஸமர்ப்பிக்கப்பட்டது] என்று ஆத்ம ஸமர்ப்பணம் செய்த ஆளவந்தாரும் அடுத்த ஶ்லோகத்தில்

"அத₂வா கிம் நு ஸமர்ப்பயாமி தே" [53]

[நான் உனக்கு எதை ஸமர்ப்பிப்பேன்] என்று அதற்கு அநுதாபத்தை அறிவித்தார்.

ஆக, சரம ஶ்லோகத்தின் முற்பாதியில் — 'ஸர்வத₄ர்மாந்' என்று கைவிடவேண்டிய ஸாத்₄யோபாயங்களைச் சொல்லி 'பரித்யஜ்ய' என்று அவற்றை விடும்போதும், இவ்வளவு நாள் அவற்றை உபாயமாக நினைத்தது குறித்து லஜ்ஜையோடும், ருசி வாஸனைகளோடும் விடவேண்டுமென்று சொல்லிற்று. 'மாம்' என்று பற்றப்படவேண்டிய எம்பெருமானாகிய ஸித்₃தோ₄பாயமான எம்பெருமானைச் சொல்லி, 'ஏகம்' என்று சேதநன் பரம சேதநனைப் பற்றும் பற்றாகிற ஸ்வீகாரத்துக்கு உபாயத்வம் இல்லை என்று சொல்லி, 'ஶரணம்' என்று எம்பெருமானுக்கே உபாயத்வம் சொல்லி, 'வ்ரஜ' என்று சேதநன் பரம சேதநனை உபாயமாகப் பற்றுவதாகிற ஸ்வீகாரத்தைச் சொல்லுகிறது என்றதாயிற்று.

இனி, ஶ்லோகத்தின் பிற்பாதியில் நான்கு பதங்களாலே எம்பெருமான் இச்சேதநனுக்குச் செய்யும் அருட்செயலைக் கூறுகிறான். (அஹம்) எல்லாமறிந்தவனாய், எல்லாம் வல்லவனாய், உனக்கு வகுத்த ஸ்வாமியாய் இருக்கும் நான்.

யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித் யஸ்ய ஜ்ஞாநமயம் தப:
[முண்டக 1-1-10]

[எந்தப் பரமாத்மாவானவன் எல்லா வஸ்துக்களுடைய ஸ்வரூபத்தையும், ஸ்வபாவங்களையும் அறிகிறானோ, எவனுடைய ஸங்கல்பமானது ஞானமயமாயிருக்கிறதோ.......] என்கிறபடியே எல்லாப் பொருள்களுடைய ஸ்வரூப ஸ்வபாவங்களனைத்தையும் அறிபவனாய்,

பராஸ்ய ஶக்திர் விவிதைவ ஶ்ரூயதே ஸ்வாபாவிகீ
ஜ்ஞாநபலக்ரியா ச [ஶ்வே 6-8]

[இந்தப் பரமாத்மாவுக்குப் பலபடிப்பட்டதும், மேலானதுமான ஶக்தியும், இயற்கையான ஞானமும், பலமும் (ஸ்ருஷ்டித்தல் முதலிய) காரியங்களும் உண்டென்று அறியப்படுகிறது.] என்கிறபடியே எச்செயலையும் செய்ய வல்லமையுடையவனாய், இயல்வான சேஷியாய் இருக்கையாலே ஸ்வரூபத்துக்குத் தகுந்த உறவினனாயிருககிற நான் என்று கருத்து. இந்த 'அஹம்' ஶப்தம் சேதனனுக்குப் பேற்றை அளிப்பதற்குத் தேவையான குணங்களைச் சொல்லவேண்டும. அநிஷ்டங்கள் நீங்குவது இஷ்டங்களைப் பெறுவது என்னும் இருவகையாயிருக்கும் பேற்றையும் எம்பெருமான் சேதனனுக்கு அளிக்கும்போது இவன் முன் நின்ற நிலையையும், மேல் போக வேண்டிய வழியையும் அறிவதற்கும், அறிந்தபடியே செய்து பேற்றை அளிப்பதற்கும் வேண்டியவையாகையாலே 'ஸர்வஜ்ஞத்வம்' (எல்லாம் அறிந்தவனாயிருக்கை) 'ஸர்வ ஶக்தத்வம்' (எல்லாம் வல்லவனாயிருக்கை) ஆகிய குணங்களை இந்த 'அஹம்' ஶப்தம் சொல்லுகிறது. இப்படி எம்பெருமான் காரியம் செய்யும்போது இந்த ஜீவனுக்காகவல்லாமல் இவனையடைவது தன் பேறாகச் செய்து தலைக்கட்டுவதற்கு வேண்டிய சேஷித்வ (உடையவனாயிருக்கை) ரூபமான உறவையும் இந்த 'அஹம்' ஶப்தம் சொல்லுகிறது. 'மாம்' என்கிற ஶப்தத்தில் எம்பெருமானைச் சரணமடைவதற்கு உறுப்பான 'எளிமை' முதலான குணங்கள்

சொல்லப்பட்டதுபோலே, 'அஹம்' என்ற இந்த ஶப்₃த₃த்தாலும் எம்பெருமான் காரியம் செய்வதற்கு உறுப்பான இந்த கு₃ணங்களைச் சொல்லவேண்டியது பொருத்தமன்றே. 'வாத்ஸல்யம்', 'ஸௌலப்₄யம்', 'ஸௌஶீல்யம்' முதலான குணங்களில்லாதபோது எம்பெருமானை அடையமுடியாததுபோலே ஜ்ஞாநம், ஶக்தி முதலான கு₃ணங்கள் இல்லாதபோது பலனளிப்பவன் காரியம் செய்யமுடியாதன்றே. இந்த கு₃ணங்கள் ஶ்லோகத்தின் முற்பாதியில் சொன்ன அதி₄காரியின் மஹாவிஶ்வாஸத்திற்கும் காரணமாயிருக்கும். இங்கு ஜ்ஞாந ஶக்திகளையும் ஸ்வாமித்வமாகிற ப்ராப்தியையும் முமுக்ஷுப்படியில் சொன்னது அவாப்த ஸமஸ்த காமத்வமாகிற பூர்த்திக்கும், கருணா கு₃ணத்திற்கும் உபலக்ஷணம். இவ்விடத்தில் பெரியவாச்சான் பிள்ளை பரந்த ரஹஸ்யத்தில் "ஆகையாலே, ஜ்ஞாநாநுகு₃ணமாகக் கார்யம் செய்கைக்கு ஸர்வஶக்தியாக வேணும். ஸர்வஶக்தியானாலும் இவனிடும் பச்சைகொண்டு குறை தீர வேண்டும்படி அபூர்ணனாயிருக்குமாகில், அவனுக்கீடாக இவனால் இடலாவதொன்றில்லாமையாலே, அவை யிரண்டும் அகிஞ்சித்கரம் (பயனற்றவை) ஆமிறே. அங்ஙனன்றியிலேயொழியும்போது அவாப்தஸமஸ்த காமனாகவேணும். ஸர்வஜ்ஞனானாலும், ஸர்வஶக்தனானாலும், அவாப்த ஸமஸ்த காமனானாலும் இச்சேதநனோடு ஒரு ஸம்ப₃ந்த₄மில்லாதவன்று அவை மூன்றும் கார்யகரமாகாதே; அதுக்காக ஸர்வ ஸ்வாமியாக வேணும். இவை நாலும் விபரீத ப₂லமாகாதே, இவனுடைய ரக்ஷணத்துக்கு உறுப்பாம் போதைக்கு பரது₃:க்க₂ாஸஹத்வ லக்ஷணமான பரமத₃யை உடையவனாக வேணும். இல்லாதவன்று ஸர்வஜ்ஞத்வம் இச்சேதநன் பண்ணின குற்றங்களைத் தப்பாமல் கணக்கிடுகைக்கு உறுப்பாயறும்; ஸர்வஶக்தித்வம் அக்குற்றங்களுக்கீடாக நரகாதி₃களில் தள்ளி அறுத்தறுத்துத்தீற்றுகைக்கு உறுப்பாயறும்; தீற்றநின்றால் கண் பார்த்து நெகிழாமைக்கு உறுப்பாயறும், அவாப்த ஸமஸ்த காமத்வ நிப₃ந்த₄னமான நைரபேக்ஷ்யம் (எவரையும் பொருட்படுத்தாமலிருக்கை); 'இங்ஙன் செய்யாநின்றால் கடவதல்ல' வென்று நியமிப்பாரில்லாமைக்கு ஹேதுவாமித்தனை, ஸர்வ ஸ்வாமித்வப்ரயுக்தமான நிரங்குஶ ஸ்வாதந்த்ர்யம்; ஆகையாலே ஸர்வஜ்ஞத்வத்தை ரக்ஷண வித₄யா விஷயமாக்குகைக்கும், ஸர்வ ஶக்தித்வத்தை ரக்ஷண வ்யாபாரத்திலே ஆக்குகைக்கும், அவாப்தஸமஸ்தகாமதையை ப்ரயோஜந நிரபேக்ஷமாக ரக்ஷிக்கைக்கு உறுப்பாக்குகைக்கும், ஸர்வ ஸ்வாமி

த்வத்தைத் தன் பேருகக் கார்யம் செய்கைக்கு உறுப்பாக்கு கைக்கும் த₃யை வேணும். ஆகையாலே இக்காரியம் செய்கைக்கு உறுப்பான இவ்வைந்து கு₃ணங்களும் 'அஹம்' ஶப்₃த₃த்திலே அநுஸந்தே₄யம். ஆக, ஸர்வஜ்ஞனுமாய், ஸர்வஶக்தியுமாய், அவாப்த ஸமஸ்த காமனுமாய் (அனைத்து விருப்பமும் நிறைவேறப்பெற்றவனாய்), ஸர்வ ஸ்வாமியுமாய், பரமத₃யாவானுமான நான் என்கிறதாயிற்று'') என்று அருளிச்செய்தது இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கது.

கண்ணன் 'மாம்' என்று தேரோட்டி வேஷத்துடன் நிற்கும் தன்னைப்பற்றச் சொன்னபோது, அர்ஜுனன் தன்னுடைய ரக்ஷணத்தின் பொருட்டு அவன் ஏறிட்டுக்கொண்ட தேரோட்டிவேஷத்தை ''அனைவரிலும் பெரியவன் இப்படித் தாழநின்றது தன் நீர்மைக் குணத்தாலேயன்றோ'' என்று அவனையிட்டுப்பாராதே, 'நமக்கு இழிதொழில் செய்து தேரோட்டியாய் நிற்கிறவனன்றோ' என்று தன்னையிட்டுப் பார்த்து, ''எல்லா த₄ர்மங்களையும் விட்டு என்னைப் பற்று என்கிறானிவன். இது எப்படி முடியப்போகிறதோ'' என்று அஞ்சின அச்சம்தீர தனக்கு வசப்பட்டிருக்கும் மூவகைப்பட்ட சேதநாசேதநங்களின் ஸ்வரூப ஸ்தி₂தி ப்ரவ்ருத்திகளையுடையவனாய், தடையற்ற ஸ்வாதந்த்ர்யத்தையுடையவனாயிருக்கிற தன்னுடைய உண்மையான ஸ்வரூபத்தை 'அஹம்' என்று காட்டுகிறான். முற்பாதியில் 'மாம்' எனுமிடத்தில் சொல்லப்பட்ட தேரோட்டி நின்ற பாரதந்த்ரியமும், நினைத்ததைச் செய்யும்போது தன்னை எவரும் தடுக்கமுடியாதபடியான இந்த ஸ்வாதந்த்ர்யத்தினுடைய எல்லை நிலம் என்று அறியத்தக்கது.

இனி, பிற்பாதியின் இரண்டாவது பதம் விளக்கப்படுகிறது. (த்வா) உன் கார்யத்தை அறிவதற்குத் தக்க அறிவில்லாதவனாய், அறிந்தாலும் அதைச் செய்து முடிக்க வலிமையில்லாதவனாய், அப்படிவலிமையிருந்தாலும் உன்னுடைய ரக்ஷணத்தை நீயே செய்து கொள்ளத்தகுதியில்லாதவனாய், இப்படியிருக்கையாலே எல்லா உபாயங்களையும் விட்டு என்னையே துணையை எதிர்பாராத உபாயமாகப் பற்றியிருக்கும் உன்னை. 'அஹம்' என்றதை 'குறைவொன்றுமில்லாத கோவிந்தா' என்றும், 'த்வா' என்றதை 'கறவைகள் பின்சென்று கானம் சேர்ந்துண்போம் அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்து' என்றும் ஆண்டாள் திருப்பாவையில் விவரித்தது இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

இனி, பிற்பாதியில் மூன்றும் பதம் விவரிக்கப்படுகிறது. (ஸர்வ பாபேப்₄ய:) எல்லாப்பாபங்களிலிருந்தும். 'ஸர்வத₄ர்மாந்' என்றபத₃ம் போல், இப்பத₃மும் பாபமும், அதன் பன்மையும், ஸர்வ ஶப்₃த₃

மூமாக மூன்று வகைப்பட்டிருக்கும். பாபமாவது — இஷ்டத்திற்குத் தடையாகவும் அநிஷ்டத்தை விளைப்பதாகவும் இருப்பது. இது மோக்ஷ ப்ரகரணமாகையாலே இங்கு இஷ்டவிரோதியாய் இருப்பவை மோக்ஷத்தை அடைவதற்குத் தடையாய் இருப்பவையே ஆகும். இத்தடை நாலு வகைப்பட்டது. அதாவது—(1) ஜ்ஞாந விரோதி பாபங்கள்;— ஜ்ஞாநமாவது தத்த்வம், ஹிதம், புருஷார்த்தம் ஆகியவைபற்றிய அறிவு. இந்த கீதையில் அர்ஜுனனுக்குக் கண்ணன் இவற்றை முழுவதும் உபதேசித்திருக்கிறுகையாலே இவனுக்கு இப்பாபத்தைப்போக்க வேண்டிய அவசியமில்லை. (2) ருசிவிரோதிபாபங்கள்:— அதாவது: 'மோக்ஷத்தின் பொருட்டு எம்பெருமானைப் பற்றவேண்டும்' என்னும் ருசியைத் தடைசெய்யும் பாபங்கள். இந்த ருசியையும் கண்ணன் கீதையில் அர்ஜுனனுக்கு ஏற்கனவே விளைத்து விட்டானுகையாலே இப்பாபமும் இங்கு இவனுக்கு இல்லை (3) உபாயவிரோதி பாபங்கள்— எம்பெருமானுகிய உபாயத்தைப் பற்ற விடாமல் தடைசெய்யும் பாபங்கள் என்றபடி. தானே உபாயம் என்பதைக் கீதையில் முன் ப்ரகரணங்களில் விரிவாகக் காட்டித் தன்னைப் பற்றும்படி முற்பாதியில் கண்ணனே விதித்திருக்கையாலே இப்பாபங்களும் இவனுக்கு இல்லை. (4) ப்ராப்திவிரோதி பாபங்கள்— எம்பெருமானை அடைவதற்குத் தடையாயிருக்கும் பாபங்கள் என்றபடி. இப்பாபங்களே இவனுக்குக் கழிக்கப்பட வேண்டியவையாக உள்ளதாகையால், இங்கு இப்பதம் அவற்றையே குறிக்கிறது. ஆக, 'என்னை அடைவதற்குத் தடையாயிருப்பவை என்று எந்தப்பாபங்களைக் குறித்து நீ அஞ்சுகிருயோ அந்தப் பாபங்கள் அனைத்தினின்றும்' என்று பொருள்படுகிறது. பன்மையாலே "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக்குடம்பும்" [திருவிருத்தம் 1] என்று சொல்லப்பட்ட அவித்யை, கர்மம், வாஸனை, ருசி, ப்ரக்ருதிஸம்பந்தம் ஆகியவற்றைச் சொல்லுகிறது. நம்மாழ்வாருடைய இப்பாசுரத்திற்குப் பொருள்:— எப்போதும் தோன்றி அழிவதாகையாலே 'பொய்' என்று சொல்லப்படும் அசேதநப்பொருளான தேஹத்தை ஆத்மா என்று அறிவது பொய்ந்நின்ற ஞானமாகிறது. இந்தப் பொய்ந்நின்ற ஞானமாகிற மயக்கத்தால் பிறர் பொருள் முதலியவற்றைக் கவருவது முதலியவை 'பொல்லாவொழுக்கு' எனப்படுகிறது. இந்த மயக்கத்திற்கும் இந்த ஒழுக்கத்திற்கும் காரணமாகவும், விளைவாகவும் இருப்பதாய் மாம்சம், ரத்தம் முதலான அழுக்குகள் நிறைந்

ததான தே₃ஹஸம்ப₃ந்த₄ம் 'அழுக்குடம்பு' எனப்படுகிறது. ஆழ்வாரால் சொல்லப்பட்ட 'பொய்ந்நின்ற ஞானம்' அவித்யை என்றும், 'பொல்லாவொழுக்கு' கர்மம் என்றும், 'அழுக்குடம்பு' ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄ம் என்றும் வடமொழி நூல்களில் சொல்லப்படும். இம்மூன்றைச்சொன்னது வாஸனைக்கும் ருசிக்கும் உபலக்ஷணம் என்று பிள்ளை லோகாசார்யர் திருவுள்ளம். இவற்றில் அவித்யையாவது— (1) அறிவு பிறவாமலிருக்கையாகிற ஜ்ஞாந அநுத₃யம். (2) ஒரு பொருளின் தன்மையை வேறாக அறிகையாகிற அந்யதா₂ ஜ்ஞாநம். (3) ஒரு பொருளையே வேறாக அறிகையாகிற விபரீதஜ்ஞாநம் என்று மூன்று வகைப்பட்ட அறிவின்மையாகும். கர்மமாவது— ஶாஸ்த்ரவிதி₄ நிஷேத₄ங்களையொட்டி நடக்கும் புண்யங்களும், ஶாஸ்த்ரவிதி₄ நிஷேத₄ங்களுக்கு முரணாக நடக்கும் பாபங்களுமாகும். மோக்ஷம் பெறவிரும்புவார்க்கு, பாபத்தைப் போலே புண்யமும் விடத்தக்கதேயாகும்.

தத₃ா வித்₃வாந் புண்யபாபே விதூ₄ய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி [முண்ட₃க 3 1-3]

[பரமபுருஷனை ஸாக்ஷாத்கரித்தவுடன் ப்₃ரஹ்மஜ்ஞானியானவன், புண்யபாபங்களை விட்டு, ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄மற்றவனாய், (புருஷோத்தமனுடன்) மேலான ஸாம்யத்தை அடைகிறான்] என்று உபநிஷத் ஓதிற்றன்றோ. வாஸனையாவது நீண்டநாள் பழக்கத்தால் ஏற்படும் ஒரு ஸம்ஸ்காரம். இது அஜ்ஞாந வாஸனையென்றும் கர்ம வாஸனையென்றும், ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄வாஸனையென்றும் மூன்றுவகைப்பட்டிருக்கும். அஜ்ஞாநம், கர்மம், ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄ம் இந்த மூன்றேடும் அநாதிகாலமாகப் பழகியிருக்கையாலே அவற்றில் ஒரு தவிர்க்கவொண்ணாத பிடிமானம் ஏற்பட்டு மேன்மேலே அவற்றையே செய்யத்தூண்டுதலாயிருப்பது இந்த வாஸனை எனப்படும் ஸம்ஸ்காரம். ருசியாவது—ஶப்₃தா₃தி₃ விஷயங்களில் விருப்பம். இந்த விஷயங்கள் பலவகைப்பட்டவையாகையாலே, அவற்றில் விருப்பமாகிற ருசியும் பலவகைப்பட்டதாயிருக்கும். ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄மாவது— அசேதனமான மூலப்ரக்ருதியின் பரிணாமமான பஞ்சபூ₄தங்களும், பதினொரு இந்திரியங்களும் அமைந்த ஸ்தூல ஸூக்ஷ்ம ஶரீரங்களோடு ஜீவனுக்கு உள்ள தொடர்பு.

இனி, ஸர்வஶப்₃த₃த்தாலே சொல்லப்படுபவை பின்வருமாறு:— 1. துரும்பு நறுக்குகை, அரித்த இடத்தைச் சொறிகை முதலானவை போலே, தம் நினைவில்லாமலே, ப்ரக்ருதி வாஸனையாலே ஜீவ

னுக்கு சரணாகதனை பின்பு விளையும் பாபங்கள். 2. 'நாம் இவற்றைச் செய்யாதபோது உலகம் நம்மைப் பழிக்குமே' என்னும் பயத்தாலும், 'நம்மைக்கண்டு மற்ற உலகினர் இவற்றை விட்டு விட்டால் அவர்களுக்கு ஸ்வரூபநாசமாகுமே, ஐயோ!' என்கிற கருணையாலும் செய்யும் நித்ய நைமித்திக கர்மங்கள், 3. எம்பெருமானை உபாயமாகப் பற்றிய பின்பு ரஜோ குணத்தாலும் தமோ குணத்தாலும் கலங்கி, கைவிட்ட உபாயங்களில் ஈடுபடுதல், மறுபடி சரணமடைதல் (ஆகிய இம்மூன்றும் ஸர்வசப்தத்தால் சொல்லப்படுகிறது )

'மோக்ஷத்திற்கு ஸாதநம் என்னும் எண்ணத்தோடு செய்யப் படாமல், பழிக்கு அஞ்சியோ, கருணையாலோ, கலக்கத்தாலோ செய்யப்படுபவை ஸாதநவகுப்பில் சேருமோ' என்னும் ஐயம் இங்கு எழுகிறது. அதாவது—

உந்மாதஸ் சித்த விப்ரம: [அமர 1—200]

[உந்மாதமென்னும் சொல்லும் மனமயக்கமும் பர்யாயம் (ஒரு பொருளுடையவை)] என்கிறபடியே புத்திமாருட்டமடைந்தவன் ஒருவன் 'இன்ன ஊருக்குப்போகிறேன்' என்கிற நினைவு இல்லாமல் ஒரு வழியில்போகும் போது அவ்வழியிலுள்ள ஏதோவொரு ஊருக்குச் சென்று சேருவதுபோலே, ஸாதநபுத்தியில்லாமல் பழிக்கஞ்சியோ, கருணையாலோ கலக்கத்தாலோ செய்யப்படுகிற இச்செயல்கள் விட்ட உபாயங்களில் சேர்ந்து விடுமோ? என்பது இவ்வாக்ஷேபம். இவையும் விட்ட உபாயங்களில் சேர்ந்தே விடுமென்பதை ''ஆந்ருசம்ஸ்ய (கருணை) ப்ரதாநராய் அநுஷ்டித்தாலும், ஏறிட்ட (உயர எறிந்த) கட்டி ஆகாசத்திலே நில்லாதாப்போலே அவையும் ஒரு பலத்தோடே ஸந்திப்பிக்கக்கடவது (சேர்த்து விடும்). ஆகையாலே அவையும் பாபசப்தவாச்யமாகக்கடவது'' என்று பிள்ளை லோகாசார்யர் தனிசரமத்தில் அருளிச்செய்துள்ளார். 'பழிக்கஞ்சியோ, கருணையாலோ, கலக்கத்தாலோ செய்யப்படும் புண்யகர்மங்கள் பாபம் எனத்தக்கவையானாலும் மறுபடி சரணமடைவதில் குற்றமுண்டோ?' எனில்— ஒருமுறையே அநுஷ்டிக்க வேண்டியதாய், மறுமுறை அநுஷ்டிப்பதைப் பொறுக்காத ப்ரபத்தியின் இயல்வை அறியாமல் கலங்கி அநிஷ்டங்கள் போவதற்காகவும், இஷ்டங்களை அடைவதற்காகவும் மறுபடியும் பண்ணும் சரணாகதியும் 6-ம் பக்கத்திலுள்ள ''அதபாதக'' என்று தொடங்கும் ப்ரமாணத்தின்படி உபாயாந்தரங்களைப்போலே பாபத்தையொக்கும் என்று அறியத்தக்கது.

இனி, சரம ஶ்லோகத்தின் பிற்பாதியில் நாலாவது பதம் விளக்கப்படுகிறது — (மோக்ஷயிஷ்யாமி) இந்தப் பாபங்களிலிருந்து விடப்பட்டவனும்படி செய்யக்கடவேன். "மோக்ஷயாமி" என்று 'பாபங்களிலிருந்து விடுதலையளிப்பேன்' என்று கூறாமல், "மோக்ஷயிஷ்யாமி" 'பாபங்களிலிருந்து விடுவிப்பேன்' என்று 'ணிச்' ப்ரயோகமும் செய்திருக்கையாலே, "நானும் இதற்கு ஒரு முயற்சி செய்யவேண்டா. நீயும் இதற்காக என்னை இறைஞ்ச வேண்டா, நீ என்னைச் சரணடைந்த ராஜகுலப்பெருமையாலே உன்னைக் கண்டு அப்பாபங்கள் தாமே பயப்பட்டு

"வானோ மறிகடலோ மாருதமோ தீயகமோ —
கானோ ஒருங்கிற்றுக் கண்டிலமால் —
... ... வன்துயரையாவா! மருங்கு" [பெரிய திருவ 54]

என்கிறபடியே போனவழி தெரியாமல் தானாகவே விட்டுப்போய் விடும் என்று அருளிச்செய்கிறார். இப்படி அருளிச்செய்வதற்குக் கருத்து பின்வருமாறு :— பாபமாவது குப்பையில் ஆமணக்குச் செடிபோலே முளைத்து எழுந்து பாம்பு போலே கழுத்தைக் கொத்தும் ஸ்தூலப்பொருளன்று. இந்த ஜீவன் செய்த கர்மங்களின் பயனாய் வந்ததொன்றேயாகும். இவன் செய்த கர்மங்கள் செய்த அக்கணத்திலேயே அழிந்துவிடுகின்றன. அவற்றைச் செய்தவனான இவனும் அவற்றை மறந்து விடுகிறான். ஆனால் ஸர்வேஶ்வரன் இவன் செய்த கர்மங்கள் யாவற்றையும் நினைத்திருந்து, தக்க காலத்தில் ஒன்றையும் விடாமல் அவற்றின் பயனை இவன் அனுபவிக்கும்படி செய்கிறான். இவ்வநுபவம் ஸர்வேஶ்வரனுடைய நிக்ரஹத்தால் விளைவது. அந்த ஸர்வேஶ்வரனே நிக்ரஹத்திற்கு நேர்மாறான அநுக்ரஹத்தைச் செய்தால் ஜீவனைத் துன்புறுத்தி வந்த அப்பாபம் அவனுக்கு அருகிலும் நிற்காமல் ஓடிவிடும் என்று கருத்து. 'அவை தானே விட்டுப் போய்விடும்' என்றதற்கு அநாதிகாலமாகத் துன்பங்களையளிக்கும் பாபங்கள் வந்து மேலிட்டால் அவற்றைக் கண்டு ஜீவன் நடுங்கின நடுக்கமனைத்தையும், எம்பெருமானை ஆஶ்ரயித்த ராஜகுலப்பெருமையையுடைய அந்த ஜீவனைக்கண்டு அப்பாபங்கள் வயிறெரிந்து நடுங்கும்படி செய்கிறான் ஸர்வேஶ்வரன் என்று கருத்து.

''இவை நமக்கு முன்பு உண்டாய்க் கழிந்தது என்று தோற்றாத படி போக்குவதையும், அவை நினைவுக்கு வந்தாலும் தன்னுடைய இயல்வான ஜ்ஞாநாநந்தாதி ஸ்வரூபத்தைப் பார்த்து 'கனவு கண்டாற்போலே இவை நமக்கு வந்தேறியாய்க் கழிந்தது' என்றிருப்பதையும், அவற்றின் நினைவாலே துன்பம் தொடராதிருப்பதையும் திருவுள்ளம் பற்றிப் 'பாபங்கள் தானே விட்டுப்போம்' என்கிறது'' என்னும் பொருளுள்ள ஸ்ரீஸூக்திகளைப் பிள்ளை லோகாசார்யர் தனி சரமத்தில் அருளிச்செய்திருப்பது இங்கு அநுஸந்திக்கத் தக்கது. 'பாபங்கள் போய்விடும்' என்று பொதுவாகச் சொல்லாமல் 'மோக்ஷயிஷ்யாமி' [பாபங்கள் விட்டுப் போமபடி செய்யக்கடவேன்] என்று எம்பெருமான் தன்மையில் அருளிச்செய்ததற்கு ஒரு கருத்துண்டு. அதாவது:— ''இவ்வளவு காலமாக 'நம காரியத்தை நாம் செய்து கொள்ளவேண்டும்' என்று நீ செயல்பட்டபடியால், 'இவன் காரியத்தை இவனே செய்து கொள்ளட்டும்' என்று உன்னை விட்டிருந்தேன் நான். எனக்கு நீ ஶரீரமாய் அடிமைப்பட்டிருப்பவன் என்பதை உணர்ந்து என்னிடம் உன்னுடைய ரக்ஷணப் பொறுப்பை ஒப்படைத்த பிறகு 'உன்னுடைய பாபத்தைப் போக்கிக்கொள்வதற்கு நீ பக்தியோகம் முதலானவற்றைச் செய்து கொள்' என்று உன் கையிலும் உன்னைக் காட்டித்தரமாட்டேன். என்னுடைய சரீரமான உன்னுடைய அஜ்ஞாநம் முதலான அழுக்குகளை, சரீரத்தையுடையவனான நானே போக்கிக்கொள்வேன்'' என்பது அக் கருத்து உன்னையடைவது எனக்கே பேறுகையாலே அதற்கான முயற்சியையும் நானே செய்வேன் என்றபடி. ஆகையால் ஜீவன் ஈஶ்வரனை ரக்ஷகனாக அடைந்தபிறகு இவனுக்கு ஒரு விரோதியும் இருக்க இடமில்லை என்று கருத்து.

''இங்கு 'எல்லாப்பாபங்களினின்றும் உன்னை விடுவிக்கக் கடவேன்' என்று தடைகளை நீக்குவதை மட்டும் சொல்லிற்று. கைங்கர்யத்தைப் பெறுதலாகிற இஷ்டப்ராப்தியைச் சொல்லாததற்குக் காரணமென்ன?'' என்னும் கேள்வி இவ்விடத்தில் எழுகிறது. இவன் பகவத்கைங்கர்யத்தைப் பெறுவதற்கே சரணமடைகையாலே, அவற்றுக்குத் தடையான பாபங்கள் நீங்குவதைச் சொன்னால் கைங்கர்யத்தை அடைவது தன்னடையே வருமாகையாலே அதைத் தனியாகச் சொல்லவில்லை. அப்படியல்லாமல், இந்தச்

சரம ஶ்லோகத்திற்கு முந்தின ஶ்லோகத்தில் ப₄க்தியை விதி₄க்கும் போது 'மாமேவ ஏஷ்யஸி' [என்னையே அடைவாய்] என்று தன்னையடைவதாகிற இஷ்டப்ராப்தியைச் சொன்னது இவனுக்கும் பொருந்துமாகையாலே சொல்லவில்லை என்றும் கொள்ளலாம். 'அப்படியானால் அந்த ப₄க்தி நிஷ்ட₂னுக்குமுள்ள ஸர்வ பாப விமோசநத்தையும் சொல்லாமல் விட்டிருக்கலாமே' எனில், ப₄க்தி நிஷ்ட₂னுக்கு ப்ராரப்₃த₄ கர்மங்கள் தவிர்ந்த மற்ற பாபங்களையே போக்குகிறான். அவன் ப்ராரப்₃த₄ கர்மம் முடியும்வரை பிறப் பெடுத்தே ஆகவேண்டும். இந்த ஶரணாக₃தனுக்கு இந்த ஜன்மம் தவிர மேல் ஜன்மங்களில் அநுப₄விக்கவேண்டிய ப்ராரப்₃த₄ கர்மத்தையும் போக்குகிறானாகையாலே அது இங்கு சொல்லப் பட்டது. தடை நீங்கினால் ப₂லன் தானே வருமாகையால் அதைத் தனித்துச் சொல்ல வேண்டாவன்றே. இவ்விஷயம் பிள்ளைலோகா சார்யருடைய ஶ்ரிய:பதிப்படியில் சுருக்கமாகவும், பரந்தபடி தனிசரமங்களில் விரிவாகவும் விளக்கப்பட்டது. ''மலயோக₃த்தாலே (அழுக்கின் சேர்த்தியாலே) மழுங்கின மாணிக்கத்தை அழுக்கறக் கடைந்தால் தன்னடையே தத்₃க₃தமான ஒளி ப்ரகாசிக்குமோபாதி, இவனுக்கும் அவித்₃யாதி₃களாகிற திரோத₄ானங்களடையக் கழிகையாலே, ஸ்வாஶ்ரயமான அபஹதபாப்மத்வாதி₃களடையத் தன்னடையே ப்ரகாசிக்குமிறே. ஆகையாலே விரோதி₄ நிவ்ருத்தி யிறே அபேக்ஷிதம். அந்த ப்ராத₄ாந்யம் தோற்ற விரோதி₄ நிவ்ருத்தியைச் சொல்லுகிறது. ஆகையிறே, 'ஆவிஸ்ஸ்யுர் மம ஸஹஜகைங்கர்ய வித₄ய:' [அஷ்டஶ்லோகீ—8] [எனக்கு இயல்வான கைங்கர்யங்கள் ஆவிர்ப்பவிக்கட்டும்] என்று பட்டர் அருளிச்செய்தது'' என்று பெரியவாச்சான் பிள்ளையும் பரந்த ரஹஸ்யத்தில் அருளிச்செய்துள்ளார்.

இனி, சரம ஶ்லோகத்தில் கடைசிப் பதம் விளக்கப்படுகிறது. (மாஶுச:) வருந்தாதே. அநாதிகாலமாக உன் காரியத்தில் நீயே முயலும் நிலையில் இருந்து வந்தாய். அதனால் நானும் உன்னை உன் வசத்தே விட்டிருந்தேன். அந்நிலையில் 'நம் காரியத்தை நம்மால் முடிக்க முடியுமோ முடியாதோ' என்று நீ வருந்தியிருப்பதற்கு இடமுண்டு; இப்போது உன் காரியத்தில் நீ முயல்வதைக் கைவிட்டு விட்டாய். அதனால் நானும் உன் காரியத்தை என் காரியமாக ஏற்றுக் கொண்டு செயல் புரியத் தொடங்கிவிட்டேன். ஆகையால், முன்போலே 'நம் காரியம் முடியுமோ முடியாதோ'

என்றோ 'நம் காரியத்தில் எம்பெருமான் பாராமுகமாய் இருக்கிறனே; நாம் எப்படி உய்வோம்' என்றோ நீ வருந்த இடமில்லை. உன் பேற்றுக்கு முயற்சி பலன் ஆகிய இரண்டிலும் தொடர்பற்ற உன் பாரதந்த்ரிய நிலையை நீ நன்குணர்ந்து, உன் ரக்ஷண காரியத்தை நீ மேற்கொள்ளாமையாலும், உன்னை ரக்ஷிப்பதில் முயற்சியும் பலனும் என்னுடையவை எனக் கருதியுள்ள நானே உன் பாபங்களைப்போக்கி உன்னை ரக்ஷிக்கும் செயலை ஏற்றுக்கொண்டு விட்டபடியாலும் உனக்கு வருந்துவதற்கு இடமேயில்லை என்று கருத்து. இவ்விடத்தில் பெரியவாச்சான்பிள்ளை பரந்த ரஹஸ்யத்தில்—"நிரபாய உபாயபூ₄தனான நான் உன்னுடைய விரோதி₄ நிவ்ருத்தி பூர்வகமான அபி₄மதஸித்₃தியை ஸாதி₄த்துத்தரக் கடவனாக ஏறிட்டுக் கொண்ட பின்பு ஸாபாயமான ஸாத₄நாந்தரங்களினுடைய து₃ஷ்கரத்வாதி₃களை அநுஸந்தி₄த்து சோகிக்கக் கடவையல்லை; அந்த ஸாத₄ந விசேஷங்களையொழிய் நிரபாய உபாயம் இல்லாதவன்று அன்றோ உனக்கு சோகிக்கவேண்டுவது. அவற்றை விட்டு என்னை ஆச்ரயிக்கையாலும் சோகிக்கவேண்டா. ஆச்ரயணீயனான நான் வத்ஸலனாகையாலே, உன்னுடைய தோ₃ஷங்கண்டு சோகிக்கவேண்டா. ஸுலப₄னாகையாலே, து₃ர்லப₄னென்று சோகிக்கவேண்டா. ஸுசீலனாகையாலே, உன்னுடைய சிறுமைகண்டு சோகிக்கவேண்டா. ஸர்வஸ்வாமியாகையாலே அப்ராப்தனென்று சோகிக்கவேண்டா. அவாப்த ஸமஸ்தகாமனாகையாலே, உன்னுடைய அபூர்த்திகண்டு சோகிக்க வேண்டா. ஸர்வசக்தியாகையாலே உன்னுடைய அசக்தி கண்டு சோகிக்கவேண்டா. நிருபாதி₄க ப₃ந்து₄வாகையாலும், பரமத₃யாவானாகையாலும், 'கார்யம் செய்யுமோ? செய்யானோ?' என்று சோகிக்க வேண்டா. ஸர்வபாபவிமோசகனாகையாலும் சோகிக்க வேண்டா. உன்னைப் பார்த்தாலும் சோகிக்க வேண்டா; என்னைப் பார்த்தாலும் சோகிக்கவேண்டா; விரோதியைப் பார்த்தாலும் சோகிக்கவேண்டா. நீ என் பக்கல் ஸர்வப₄ரந்யாஸம் பண்ணுகையாலே, உன்னைப் பார்த்தாலும் சோகிக்கவேண்டா; நான் ஸர்வஜ்ஞத்வாதி₃கு₃ணவிசிஷ்டனாகையாலே, என்னைப் பார்த்தாலும் சோகிக்கவேண்டா; விரோதி₄யாகிறது, என்னுடைய நிக்₃ரஹரூபமாகையாலே பொறுத்தோம் என்னத் தீரும்; ஆகையாலே விரோதி₄யைப் பார்த்தாலும் சோகிக்கவேண்டா") என்று அருளிச்செய்தது இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

முமுக்ஷுப்படியில் பிள்ளைலோகாசார்யரும், 259 வது சூர்ணிகையில் 'அஹம்' என்னும் பதத்தில் சொல்லப்பட்ட ரக்ஷகனுடைய ஸ்வபாவத்தையும் 'த்வா' என்னும் பதத்தில் சொல்லப்பட்ட ரக்ஷிக்கப்படும் அதிகாரியின் ஸ்வரூபத்தையும் காட்டி, கண்ணன் வருத்தத்தைப் போக்கியபடியை அருளிச்செய்த பின்பு 260 வது சூர்ணிகையில் — 'அஹம' என்று எல்லாமறிந்தவனாயிருக்கை முதலான குணங்களோடு கூடியவனாயிருந்து இவனுடைய தடைகளைப்போக்கும் தன் ஸ்வரூபத்தைச் சொல்லி, 'த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி' என்று 'கழிக்கவேண்டிய பாபங்கள் உன்னைக் கண்டு தானே அஞ்சி ஓடிப்போகுமே யொழிய என்னையே உபாயமாகப் பற்றியிருக்கும் உன்னை வந்து துன்புறுத்தாது' என்னும் விஷயத்தைச் சொல்லி, அதற்குப் பிறகு 'மாஶுச:' என்கையாலே 'இப்படியான பின்பு உனக்கு வருந்துவதற்கு இடமேயில்லை என்கிறான்' என்றருளிச்செய்து, 261 வது சூர்ணிகையில், இவ்விஷயத்திற்குப் பிரமாணமாக "எத்திறலிடர்க்கடற்கிடத்தி ஏழை நெஞ்சமே" [திருச்சந்த 115] என்னும் திருமழிசைப்பிரான் பாசுரத்தை அருளிச்செய்தார். "எந்தக் காரணத்தால் நீ இப்படித் துன்பக் கடலிலே மூழ்கியிருக்கிறாய்? நமக்கு நன்மையை அறிவதற்கு நாம் எல்லாம் அறிந்தவராகவும் அவன் அறியாதவனாகவும் இருக்கிறான் என்னும் காரணத்தாலா? நமக்கு நன்மையை நடத்துவதற்கு நாம் சக்தியுள்ளவராய் அவன் சக்தியில்லாதவனாய் இருக்கிறான் என்னும் காரணத்தாலா? நம்முடைய கார்யத்தை நாம் செய்துகொள்வதற்கு நமக்குத் தகுதியுண்டாய் அவனுக்குத் தகுதியில்லையென்னும் காரணத்தாலா? நாம் அறிவற்றவராய், அசக்தராய், தகுதியற்றவராயும், அவன் எல்லாம் அறிந்தவனாய், எல்லாம் வல்லவனாய், தகுதியுடையவனாய், இதற்குமேல் தன் மேன்மை பாராமல் தான் தாழ நின்று உதவுபவனாக இருக்க, நீ துன்பக் கடலில் துவள்கிறது எக்காரணத்தாலே? அறிவிலியான நெஞ்சே! பகவத் விஷயத்தில் தொடர்பு கொள்வதற்கு முன்பு, 'இதில் தொடர்பில்லாமல் இருக்கிறோமே' என்று வருந்தவும் அறியாமல், யானையின் கழுத்திலே வீற்றிருப்பதுபோலே நினைத்துக்கொண்டு அறிவுகெட்டிருந்தாய். இப்போது அவ்விஷயத்தில் தொடர்புகொண்டு நம் காரியங்களை அவன் ஏற்றுக்கொண்ட பின்பு இன்று வருந்துகிறதும் அறிவின்மையாலன்றோ" என்பது பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானத்தின்படி இப்பாசுரத்தின் பொருளாகும்.

முமுக்ஷுப்படி 262 வது சூர்ணையில் இவனுடைய வருத்தம் திரும்பிவராதபடி நீங்குவதற்குக் காரணமான எம்பெருமானுடைய திருவுள்ளத்தை "பாபங்களை நான் பொறுத்துப் புண்யமென்று நினைப்பிடாநிற்க, நீ ஶோகிக்கக்கடவையோ?" என்று அருளிச்செய்கிறார். இதன் கருத்தாவது:- "நீ செய்த பாபங்களை நான் முதலில் என்னுடைய பொறுமைக்கு இலக்காக்கி, அத்துடன் நில்லாமல் உன்னிடம் எனக்குண்டான வாத்ஸல்யத்தாலே, 'செய்த குற்றம் நற்றமாகவே கொள் ஞாலநாதனே' [திருச்சந்த 111] 'தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல். என்னடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார் என்பர் போலும்' [பெரியாழ் திரு 4—9—2] என்கிறபடியே அவற்றைப் பாபமாக நினையாமல் புண்யமென்று நினைப்பிடாநிற்க, இனி நீ வருந்தலாமோ?" என்கை.

ஆக, சரமஶ்லோகத்தின் பிற்பாதியில் 'அஹம்' என்னும் பதத்தாலே பாபங்களைப் போக்கும் உபாயமாயிருக்கும் எம்பெருமானுடைய இயல்பும், 'த்வா' என்று அப்பாபங்களுக்கு இருப்பிடமான ஶரணாகதனுடைய தன்மையும், 'ஸர்வ பாபேப்யஃ' என்று நீக்கப்படும் பாபங்களும், 'மோக்ஷயிஷ்யாமி' என்று அப்பாபங்கள் நீங்கும் வழியும் கூறப்பெற்று, 'மாஶுச:' என்று இது காரணமாகவே ஶரணாகதன் வருந்த இடமேயில்லை என்று சொல்லப்பட்டதாயிற்று.

இதுவரையில், திருக்கோட்டியூர் நம்பியிடமிருந்து எம்பெருமானாரால் மிகமுயன்று பெறப்பட்டதும், ஆசார்ய பரம்பரை மூலம் எம்பார், கூரத்தாழ்வான், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை முதலான ஆசார்யர்களின் உபதேசம் மூலமாகவும் தம்தம் க்ரந்தங்கள் மூலமாகவும் கிடைத்ததுவுமான சரமஶ்லோகார்த்தம் முமுக்ஷுப்படியை முக்யமாகக் கொண்டு மற்ற க்ரந்தங்களையும் மேற்கோள் காட்டி விவரிக்கப்பட்டது. ரஹஸ்யத்ரயவிவரணமாக அமைந்த க்ரந்தங்களில் முதன்மைபெற்றதான அஷ்டஶ்லோகியில் இவ்வர்த்தமே சுருக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளது என்பதை நடுநிலையாளர்கள் உணர்ந்துகொள்ளுவதற்காக அஷ்டஶ்லோகியில் சரமஶ்லோக விவரணமாக அமைந்த கடைசி இரண்டு ஶ்லோகங்கள் அவற்றின் பொழிப்புரையுடன் கொடுக்கப்படுகின்றன.

மதப்ராப்த்யர்த்ததயா மயோக்தமகிலம் ஸந்த்யஜ்ய
தர்மம் புநঃ
மாமேகம் மதவாப்தயே ஶரணமித்யார்த்தோऽவஸாயம் குரு।
த்வாமேவம் வ்யவஸாயயுக்த மகிலஜ்ஞாநாதி பூர்ணோ
ஹ்யஹம்
மத்ப்ராப்தி ப்ரதிபந்தகை: விரஹிதம் குர்யாம்
ஶுசம் மாக்ருதா:॥ [ அஷ்டச்லோகீ—7 ]

[என்னைப் பெறுகைக்கு உபாயமாக (உன் நெஞ்சைச் சோதிப்பதற்காக) என்னாலே சொல்லப்பட்ட எல்லா மோக்ஷோபாயங்களையும் ருசிவாஸனைகளோடு விட்டு என்னை அடைய வேண்டுமென்னும் ஆர்த்திமிகுந்தவனாய் என்னை ஒருவனையே என்னைப் பெறுகைக்கு உபாயமாய் இருப்பவனென்று உறுதிகொள்வாயாக. இப்படி உறுதிகொண்ட உன்னை ஜ்ஞானம் ஶக்தி முதலிய குணங்கள் நிறைந்த நான் என்னைப் பெறுகைக்குத் தடையான பாபங்கள் அற்றவனாகச் செய்யக்கடவேன்; வருந்தாதே.]

நிஶ்சித்ய த்வததீநதாம் மயி ஸதா கர்மாத்யுபாயாந் ஹரே
கர்த்தும் த்யக்துமபி ப்ரபத்துமநலம் ஸீதாமி து:க்காகுல:।
ஏதத் ஜ்ஞாநமுபேயுஷோ மம புநஸ் ஸர்வாபராதக்ஷயம்
கர்த்தாஸீதி த்ருடோऽஸ்மி தே து சரமம் வாக்யம் ஸ்மரந்
ஸாரதே:॥ [ அஷ்டச்லோகீ 8 ]

[எம்பெருமானே! அடியேன் எப்போதும் தேவரீருக்கு அத்யந்த பரதந்த்ரமானவன் என்று உறுதிகொண்டு கர்மயோகம் முதலிய உபாயங்களைச் செய்வதற்கும், அடியோடு விடுவதற்கும், ப்ரபத்தி செய்வதற்கும் கூட வல்லமையற்றவனாய் மிகவும் வருந்துகின்றேன். பார்த்தஸாரதியாய் நின்ற தேவரீருடைய கீதாசரமஶ்லோகத்தை நினைத்திருப்பவனாய், நீயே உபாயம் என்னும் இந்த உறுதியைப் பெற்றிருக்கும் அடியேனுக்கு தேவரீர் எல்லாப்பாபங்களையும் போக்கியருளுவீர் என்று வருத்தமற்று உறுதியோடு இருக்கிறேன்.]

இனி, இந்தச் சரமஶ்லோகார்த்தத்தில் ஊன்றியிருக்கும் அதிகாரிகள் மிகவும் கிடைத்தற்கரியர் என்பதைவிளக்கும் முமுக்ஷுப்படி சூர்ணைகள் (263 முதல் 278 வரை) பதினாறையும் விளக்கிச் சரமஶ்லோகப் பொருளை நிறைவு படுத்துவோம்.

சூர்ணை 263: உய்யக்கொண்டார் விஷயமாக உடையவர் அருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது.

இந்தச் சரமஶ்லோகார்த்தத்தில் ஒருவனுக்கு ருசி பிறப்பதில் உள்ள அருமையைக் காட்டுவதற்காக இதில் ஓர் ஐதிஹ்யம் எடுக்கப்படுகிறது. அதாவது எம்பெருமானார் காலத்திலிருந்தவராய், 'தத்வ நிர்ணயம்' என்னும் க்ரந்தத்தைச் செய்தவரான உய்யக்கொண்டார் என்பவர் பக்தியோகத்தில் ஊன்றியிருந்தார். எம்பெருமானார் அவரை ப்ரபத்தி நிஷ்டராம்படி பண்ண வேணுமென்று, திருக்கோட்டியூர் நம்பியிடமிருந்து தாம் பெற்ற இந்த ஶ்லோகத்தின் அரும்பொருளை அவருக்கு அருளிச் செய்தார். அதைக் கேட்டவுடன் உய்யக்கொண்டார், "இவ்வர்த்தம் மிகவும் அழகாயிருக்கிறது. ஆனாலும், பக்தியோகத்தை விட்டு ப்ரபந்நனாவதற்குத் தக்க ருசி எனக்கு இல்லை" என்று கூறினாராம். இதைக் கேட்ட உடையவர் "அறிவாளியாகையாலே இவ்வர்த்தத்தை ஏற்றுக்கொண்டாய்; எம்பெருமானுடைய அருளில்லாமையாலே இதில் உனக்கு ருசி பிறக்கவில்லை." என்றருளிச்செய்தார் என்பது அந்த ஐதிஹ்யம். இந்தச் சரமஶ்லோகார்த்தத்தில் அறிவாளிகளுக்கும் ருசி பிறப்பது அரிது என்பதை இவ்வைதிஹ்யம் காட்டுகிறது.

சூர்ணை 264: இதுக்கு ஈஶ்வரஸ்வாதந்த்ரியத்திலே நோக்கு:

இந்தச் சரமஶ்லோகத்திற்கு இன்னதிலே நோக்கு என்று இதில் அருளிச்செய்கிறார். அதாவது:— ஶாஸ்த்ரங்களெல்லாம் ஒருதட்டு என்றால் ஶாஸ்த்ரதாத்பர்யமான இந்த ஶ்லோகம் ஒரு தட்டாயிருக்கிறது. ஸகல ஶாஸ்த்ரங்களிலும் விதிக்கப்பட்ட எல்லா மோக்ஷோபாயங்களையும் வாஸனையோடு விடச்செய்து, இச்சேதநனுக்குத் தானே எத்துணையும் எதிர்பாராத ஸாதநமாய், இவன் தன்னையடைவதற்குத் தடையான எல்லாப் பாபங்களையும் நீக்கித் தன்னையடையும்படி செய்கின்றவனாய், அனைத்தையும் தன் வசப்படி நடத்துகின்றவனான ஸர்வேஶ்வரனுடைய, ஸ்வாதந்த்ரியத்திலே இந்த ஶ்லோகத்திற்குத் தாத்பர்யம் என்றபடி.

சூர்ணை 265: "இதுதான் அநுவாதகோடியில்" என்று வங்கிப்புரத்து நம்பிவார்த்தை:

இந்தச் சரமஶ்லோகார்த்தத்தில் நம்பிக்கை பிறப்பது மிகவும் அரிது என்பது இச்சூர்ணையில் காட்டப்படுகிறது. அதாவது:— முன்பு அறியப்படாத ஒருபொருளை அறிவித்து அதைச் செய் என்று கட்டளையிடுவது விதி எனப்படுகிறது. அறிந்ததொரு அர்த்தத்தையே திருப்பிச் சொல்லுவது அநுவாதமெனப்படுகிறது. மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது 'என்னையே சரணமடைவாய்' என்று இந்த ஶ்லோகத்தில் கண்ணன் அர்ஜுனனைக் குறித்து விதிப்பதாகத் தோன்றினாலும், அர்ஜுனன் ஏற்கனவே அறிந்த விஷயத்தையே இதில் கண்ணன் அநுவாதம் செய்கிறான் என்பதே உண்மை என்று மிகவும் ஆப்தரான வங்கிப்புரத்து நம்பி இவ்வார்த்தையில் திருவுள்ளம் பற்றினார் என்கிறது இச்சூர்ணை. வங்கிப்புரத்து நம்பி எம்பெருமானாரால் நியமிக்கப்பெற்ற எழுபத்துநாலு ஸிம்ஹாஸநாதிபதிகளில் ஒருவர் என்பது இங்கு குறிக்கொள்ளத்தக்கது.

266 வது சூர்ணை:— அர்ஜுனன் க்ருஷ்ணனுடைய ஆனைத்தொழில்களாலும், ருஷிகள் வாக்யங்களாலும், க்ருஷ்ணன் தன் கார்யத்திலே அதிகரித்துக்கொண்டு பேசுகையாலும், இவனே நமக்குத் தஞ்சமென்று துணிந்த பின்பு தன்னைப் பற்றச்சொல்லுகையாலே

வங்கிப்புரத்து நம்பியின் திருவுள்ளத்தை இந்தச் சூர்ணை விவரிக்கிறது. அதாவது— இந்தச் சரமஶ்லோகத்தைக் கேட்கும் அதிகாரியான அர்ஜுனன் இளமை தொடங்கி, கண்ணன் செய்தற்கரிய பல செயல்களைச் செய்ததைக் கண்டும் கேட்டுமிருப்பவன். அவையாவன:— கோவர்த்தனத்தைக் குடையாய்ப்பிடித்தல், காளியனுடைய படங்களில் குதித்து நர்த்தனம் செய்தல், மாண்ட ஆசார்ய புத்ரனையும் வைகுண்டம் சென்ற வைதிக புத்ரர்களையும் மீட்டுக்கொடுத்தல் முதலானவை. அத்துடன் ரிஷிகளுடைய வாக்யத்தாலும் கண்ணன் இயல்வான உபாயமான பரமாத்மாவாய் இருப்பவன் என்று உணர்ந்தவன்.

அவ்வாக்கியங்களாவன:—

ஏஷ நாராயண: ஶ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந: |
நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாக₃தோ மது₂ராம் புரீம் ||
[ப₄ார-ஆர-தீர்த்த₂ 86-24; ஹரிவம்ஶம் 133-62]

[பாற்கடலில் பள்ளிகொண்டவனான இந்த ஸ்ரீமந்நாராயணனே பைந்நாகப்பாயை விட்டு மதுராபுரிக்கு வந்திருக்கிறான்.]

புண்யா த்₃வாரவதீ யத்ர தத்ராஸ்தே மது₄ஸூத₃ந: |
ஸாக்ஷாத் தே₃வ: புராணோऽஸௌ ஸ ஹி த₄ர்ம: ஸநாதந: ||
[ப₄ார-ஆர 86-25]

[புண்ணியமான த்₃வாரகையிருக்குமிடத்தில் மது₄ஸூத₃னனிருக்கிறான்; அவன்தான் இயற்கையான தே₃வனும் பழையோனுமிருப்பவன்; அவனே பழமையான த₄ர்மமாவான்.]

யத்ர நாராயணோ தே₃வ: பரமாத்மா ஸநாதந:|
தத்ர க்ருத்ஸ்நம் ஜக₃த் பார்த்த₂ தீர்த்தா₂ந்யாயதநாநி ச ||
[ப₄ார-ஆர 88-27]

[பார்த்தனே! பரம்பொருளும் பழையோனும் தே₃வனுமான நாராயணன் எங்கிருக்கிறானோ அங்குதான் எல்லாவுலகும் தீர்த்தங்களும் கோயில்களுமுள்ளன.]

யே ச வேத₃விதோ₃ விப்ரா: யே சாத்₄யாத்மவிதோ₃ ஜநா: |
தே வத₃ந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம் த₄ர்மம் ஸநாதநம் ||
[ப₄ார-ஆர-தீர்த்த₂ 86-26]

[வேத₃மறிந்த வேதியர்களும், வேதா₃ந்தமுணர்ந்த வித்தகர்களும் மஹாபுருஷனான கிருஷ்ணனையே பழமையான த₄ர்மஸ்வரூபியென்று சொல்லுகிறார்கள்.]

பவித்ராணாம் ஹி கோ₃விந்த₃: பவித்ரம் பரமுச்யதே |
புண்யாநாமபி புண்யோऽஸௌ மங்க₃ளாநாஞ்ச மங்க₃ளம் ||
[ப₄ார-ஆர 86-27]

[புனிதப்படுத்தும் பொருள்களில் மேலான புனிதப்பொருளாகச் சொல்லப்படுகிறான் கோ₃விந்த₃ன்; புண்ணியங்களுக்கெல்லாம் புண்ணியமாயிருப்பவனும், மங்க₃ளங்களுக்கெல்லாம் மங்க₃ளமாயிருப்பவனுமவனே.]

க்ருஷ்ண ஏவஹி லோகாநாமுத்பத்திரபி சாப்யய:|
க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூ₄தமித₃ம் விஶ்வம் சராசரம் ||
[ப₄ார-ஸப₄ா 41-23]

[கண்ணனே உலகங்களையெல்லாம் படைப்பவனும் அழிப்பவனு மாவானன்றோ; ஸ்தா₂வரஜங்க₃மரூபமான இவ்வுலகெல்லாம் கண்ணனுக்கே உரியதன்றோ.]

அத்துடன் இளமை தொடங்கியே, அரசாண்ட போதும் காட்டி லிருந்தபோதும் கண்ணன் தங்களுடைய காரியத்தைத் தன்காரிய மாக ஏற்றுக்கொண்டு நடத்தினவன் என்பதைக்கண்டு உணர்ந்தவன். அத்துடன் இந்த கீ₃தையிலும் உபாஸக ஜ்ஞாநியானவன் எம்பெரு மானையே உபாயமாகவும் கொண்ட மஹாத்மாவான ஜ்ஞாநியாகப்பரி ணமிக்கவேண்டுமென்றும், ப₄க்தியோக₃நிஷ்ட₂ன் ஸ்வயம் பரயோஜந ப₄க்திநிஷ்ட₂னைகப் பரிணமிக்கவேண்டுமென்றும் பலவிடங்களில் உபதேசித்திருப்பதைக் கேட்டிருப்பவன். (இவ்விஷயம் கீதா சரம ஶ்லோக வ்யாக்யானத்தில் பக்கம் 836 முதல் 853 வரை விரிவாக விளக்கப்பட்டுள்ளது) அர்ஜுனன் இவ்வளவும் உணர்ந்தவனு கையாலே, "இக்கண்ணன் சொல்லுகிற உபாயங்களெல்லாம் நமக்குத் தஞ்சமன்று. இவனே நமக்குத் தஞ்சம்" என்று பரிபூர்ண மாக விஶ்வாஸம் கொண்டு, 'அப்படிப்பட்ட இவன் நம்மை இவ் வுபாயங்களிலேயே மூட்டுகிறானே' என்று வருத்தமடைந்தபிறபு 'அப்படியானால் என்னைப் பற்று' என்று ஏற்கனவே அர்ஜுனன் அறிந்த விஷயத்தையே அவனுக்கு அறிவுறுத்துகிறான் என்று கருத்து.

சூர்ணை 267:— புறம்பு பிறந்தது எல்லாம், இவன் நெஞ்சை ஶோதி₄க்கைக்காக.

"அப்படி இவ்விஷயம் ஏற்கனவே அர்ஜுனனுக்குத் தெரிந்த தானால், கீ₃தையின் தொடக்கத்திலேயே அதைச்சொல்லாமல் 'நெறியெல்லாம் எடுத்துரைத்த' [திருவாய் 4-8-6] என்கிறபடியே எல்லாவுபாயங்களையும் உபதேசித்ததற்குக் காரணம் என்ன?" என்னும் கேள்விக்குப் பதிலளிக்கிறது இந்தச் சூர்ணை. அதாவது:—

கார்ப்பண்யதோ₃ஷோபஹதஸ்வபா₄வ:
ப்ருச்சா₂மி த்வாம் த₄ர்மஸம்மூட₄சேதா: |
யச்ச்₂ரேய: ஸ்யாந்நிஶ்சிதம் ப்₃ரூஹி தந்மே
ஶிஷ்யஸ்தேऽஹம் ஶாதி₄ மாம் த்வாம் ப்ரபந்நம் ||

[கீ₃தை 2-7]

[குறுகிய மனப்பான்மையாகிற குற்றத்தால் நலங்கெட்ட நான் த₄ர்மம் இன்னதென்றறியாமல் உன்னைக் கேட்கிறேன். எனக்கு

உறுதியாக எது நன்மை பயக்குமோ அதைச்சொல்லு. உனக்கு நான் சீடன். உன்னை ஶரணமடைந்த எனக்கு நல்லறிவை உண்டாக்குவாய்] என்று கீதையின் தொடக்கத்தில் தனக்கு நன்மையைச் சொல்ல வேண்டுமென்று சரணமடைந்த அர்ஜுனனுக்கு முதலில் இந்த ஶரணாகதியை உபதேசிக்காமல் மற்ற உபாயங்களை விரிவாக உபதேசித்ததெல்லாம் "இவன் தன்னுடைய நன்மையைத் தான் ஸாதிக்க விரும்பி அவ்வுபாயங்களில் ஈடுபடுவானா? அல்லது எம்பெருமானுக்கு அத்யந்த பரதந்த்ரமான ஜீவாத்மா தன் நன்மைக்குத் தான் பாடுபடுவது தவறு என்று உணர்ந்து 'எம்பெருமானே உபாயம்' என்னும் உபதேசத்தைப் பெறுவதற்குத் தகுதியுள்ளவனாவானா?" என்று இவனுடைய நெஞ்சைப் பரீக்ஷிப்பதற்காகவே என்று கண்டுகொள்வது.

சூர்ணை 268:— வேத₃புருஷன் உபாயாந்தரங்களை விதி₄த்தது, கொண்டிப்பசுவுக்குத் தடிகட்டி விடுவாரைப்போலே, அஹங்கார மமகாரங்களால் வந்த களிப்பு அற்று ஸ்வரூப ஜ்ஞானம் பிறக்கைக்காக.

கண்ணன் அர்ஜுனனுடைய நெஞ்சைப் பரீக்ஷிக்க உபாயாந்தரங்களை உபதேசித்தானானாலும் வேத₃ புருஷன் உபாயாந்தரங்களை விரிவாக விதி₄ப்பதேன்? எனும் கேள்விக்கு பதிலளிக்கிறது இந்தச் சூர்ணை. அதாவது:— ஆப்தர்களில் தலைசிறந்தவனான வேத₃ புருஷன்

தமேவ தீ₄ரோ விஜ்ஞாய ப்ரஜ்ஞாம் குர்வீத ப்₃ராஹ்மண: |
நாநுத்₄யாயாத் ப₃ஹூந் ஶப்₃தா₃ந் வாசோ விக்லாப₃நம்
ஹி தத் || [ப்₃ருஹ 6—4—21]

[வேத₃மோதியவன் அறிவுடையவனாய் அந்தப் பரமபுருஷனையே (ஶ்ரவண மநநங்களால்) அறிந்து தியானம் செய்யக்கடவன், (அவனையொழிந்தவற்றைச் சொல்லும்) பல சொற்களை மனத்தாலும் எண்ணவேண்டாம். அப்படி எண்ணுவது வார்த்தைகளை வாட்டுவதேயாகுமன்றோ.]

ஓமித்யேவ த்₄யாயத₂ாத்மாநம் ஸ்வஸ்தி வ: பாராய தமஸ:
பரஸ்தாத் [முண்டக 2-2-6]

[ப்ரக்ருதிக்கு அப்பாலுள்ள அவனைப் பெறுவதற்கு, பரமாத்மாவை 'ஓம்' என்றே தியானியுங்கள்; உங்களுக்கு நன்மையுண்டாகும்.]

ஆத்மாநமேவ லோகமுபாஸீத [ப்3ருஹ 3-4-15]
[காணத்தக்க பரமாத்மாவை உபாஸியுங்கள்.]

ஆத்மா வா அரே த்3ரஷ்டவ்ய:ஸ்
ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதி3த்4யாஸிதவ்ய:
[ப்3ருஹ 6-5-6]

[கேட்கத்தக்கதும், நினைக்கத்தக்கதுமான ஆத்மா தியானிக்கத் தக்கது; பார்க்கத்தக்கது.] முதலான வாக்கியங்களாலே ப4க்தி யோகம் முதலான உபாயங்களை மோக்ஷஸாத4நமாக விதி4த்தது ஏனெனில்: எவருக்கும் அடங்காமல் தன்னிஷ்டப்படி ஊரெங்கும மேய்ந்து திரியும் கொண்டிப் பசுவை அப்படி மேயாமல் தம் வசப் படுத்துவதற்காக அதன் கழுத்தில் தடி கட்டி விடுவாரைப்போலே, அஹங்கார மமகாரங்களால் தே3ஹாத்மாபி4மானியாய் நாத்திக னாய்த் திரியும் மனிதனுக்கு அவன் விருப்பும் சத்ரு நிரஸனத்தைச் செய்து தரும் ஶ்யேந யாக3த்தை விதி4த்து அவனுக்கு ஶாஸ்த்ர விஶ்வாஸத்தை உண்டாக்கி, பணம், பிள்ளை, மழை முதலான இம்மைப் பலன்களை அடைவதற்கு மற்றும் பல யாக3ங்களை விதி4த்து அந்த ஶாஸ்த்ர விஶ்வாஸத்தை உறுதிப்படுத்தி, அவன் மறுமைப் பலன்களைப்பற்றிச் சிந்திக்கத்தொடங்கியவுடன் ஸ்வர்க்3 கம் முதலான மறுமைப்பலன்களுக்கு ஜ்யோதிஷ்டோமம் முத லான யாக3ங்களை விதி4த்து 'தேஹத்தைக்காட்டிலும் வேறு பட் டது ஆத்மா' என்று அவனை உணரவைத்து, ஸ்வர்க்3ம் முத லான அல்பாஸ்தி2ரப2லன்களின் விருப்பம் நீங்கி அநந்தஸ்தி2ர ப2லனான மோக்ஷத்தில் அவனுக்கு விருப்பமுண்டானவுடன் அந் நிலையிலும் இவன் தான் இன்புறுவதற்காகவே மோக்ஷத்தை விரும்புகிறானாகையாலே, இந்தச் சுயநலம் நீங்குவதற்காகக் கர்ம ஜ்ஞாந ப4க்தி யோக3ங்களை விதி4த்து, இப்படி அஹங்கார மம காரங்களுக்கு வசப்பட்டுச் செருக்கித்திரிகிற இவனுக்கு

ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு தபோஜ்ஞாநஸமாதி4பி4: ।
நராணாம் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே ப4க்தி: ப்ரஜாயதே॥
[லகு4அத்ரிஸ்ம்ருதி 1]

[ஆயிரக்கணக்கான பிறப்புக்களில் கர்மஜ்ஞாநப4க்தி யோக3ங் களை அநுஷ்டி2த்துப் பாபம் நீங்கப்பெற்ற மனிதர்களுக்குக் கண்ணனிடம் ப4க்தியானது உண்டாகிறது.] என்கிறபடியே உடலை வருத்திச் செய்யவேண்டிய கர்மாநுஷ்டா2னம், புலன்களை

அடக்குவது முதலான அரிய ஸாத₄நங்களாலே படிப்படியாக இவனுடைய அஹங்கார மமகாரங்கள் அடங்கப்பெற்று, 'மோக்ஷத்திலும் தன் ஆனந்தத்திற்காகத்தான் பாடுபடுவது தக்கதன்று' என்று உணருவதற்குறுப்பான ப₄க₃வத் பாரதந்த்ர்யமாகிற ஸ்வரூபஜ்ஞாநம் பிறப்பதற்காகவே, கர்மஜ்ஞாநயோக₃ங்களையும், வைராக்₃யத்தையும் அங்க₃மாகக்கொண்டதாய், த்ரிவித₄ பரித்யாக₃த்தோடும் ஆத்₂மயாத₂ாத்ம்ய அநுஸந்தாநத்தோடும் (ஆத்மாவைப் பற்றிய உண்மை நிலை அநுஸந்தித்தலோடும்) கூடிய ப₄க்தி யோக₃மாகிற ஸாத₄நத்தை வேத₃புருஷன் விதித்திருக்கிறன் என்று கண்டுகொள்வது.

சூர்ணை 269:- ஸந்யாஸி முன்புள்ளவற்றை விடுமாபோலே இவ்வளவு பிறந்தவன் இவற்றைவிட்டால் குற்றம் வாராது.

"இப்படி இந்தக் கர்ம ஜ்ஞான ப₄க்தியோக₃ங்கள் ஸ்வரூபஜ்ஞானத்தை விளைப்பவையானால், இவற்றை விடுவது குற்றமன்றோ" என்ற கேள்விக்குப் பதில் சொல்லுகிறது இந்தச்சூர்ணை. அதாவது:— துறவு நிலையை அடைந்த ஸந்யாஸி ஒருவன் முன்னிருந்த பிரம்மசரிய கிருஹஸ்தாஶ்ரம நிலைகளில் தான் கடைப்பிடித்தொழுகிய த₄ர்மங்களை அடியோடு விடுவது போலவே, மற்ற மோக்ஷோபாயங்களைக் கைக்கொள்ளுதல் தன் அத்யந்த பாரதந்த்ர்ய நிலைக்குப் பொருந்தாதென்றும், எம்பெருமான் ஒருவனையே உபாயமாகப் பற்றுவதே தன் நிலைக்கு ஏற்றதென்றும் கருதக்கூடிய இவ்வளவு உயர்ந்த ஜ்ஞாநம் பிறந்தவன் கர்ம ஜ்ஞாந ப₄க்தி யோக₃ங்களாகிற உபாயாந்தரங்களை விடுதல் குற்றமாகாது.

சூர்ணை 270:— இவன்தான் இவைதன்னை நேராக விட்டிலன்.

அதாவது— இந்தக் கர்ம ஜ்ஞாந ப₄க்திகள் இவனுக்கு வேறொரு முறையில் உள்ளனவாகையால், இவன் இவற்றை அடியோடு விடவில்லை என்பது இந்தச் சூர்ணையின் கருத்து.

சூர்ணை 271:— கர்மம்—கைங்கர்யத்திலே புகும்; ஜ்ஞாநம்—ஸ்வரூபப்ரகாஶத்திலே புகும்; ப₄க்தி-ப்ராப்ய ருசியிலே புகும்; ப்ரபத்தி—ஸ்வரூபயாத₂ாத்ம்ய ஜ்ஞாநத்திலே புகும்.

இவன் இவற்றை அடியோடு விடவில்லை என்பது எப்படிப் பொருந்தும்? என்னும் கேள்விக்கு விடையளிக்கிறது இந்தச் சூர்ணை. அதாவது இவன் மோக்ஷ ஸாதநம் என்னும் எண்ணத்தோடு கர்மயோகத்தை விட்டாலும், தன் வர்ணத்திற்கும் ஆச்ரமத்திற்கும் தக்கபடி சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கும் கர்மங்களை இவன் செய்கிறான். இதற்கு விலையாக மோக்ஷத்தைப் பெறவேண்டும் என்னும் எண்ணமில்லாமல். தன்னளவு பக்குவமில்லாதவர்கள் தவறிப்போகக் கூடாது என்னும் எண்ணத்துடன் அவர்களிடம் இரக்கத்தாலே எம்பெருமானுடைய ஆஜ்ஞா கைங்கர்யமாக இவற்றை அநுஷ்டிக்கிறான்; இது எம்பெருமானுக்கு மிகவும் உகப்பாகையாலே அவனுக்கு உகப்பை விளைக்கும் கைங்கர்யத்திலே சேர்ந்துவிடும். 'நுண்ணறிவு' [திருவாய் 5-7-1] என்கிறபடியே தன் ஸ்வரூபத்தை அறிவதை முன்னிட்டுக்கொண்டு எம்பெருமானுடைய ஸ்வரூபத்தையே அறிவதற்குக் காரணமாகும் ஜ்ஞாநயோகமும் அது மோக்ஷோபாயம் என்னும் எண்ணம் நீங்கியவுடன் ஸ்வஸ்வரூப பரஸ்வரூபங்கள் இவனுக்கு வெளிப்படுவதில் சேர்ந்துவிடும்:

பக்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம் விதோ₄ऽர்ஜுந |
ஜ்ஞாதும் த்₃ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப ||
[கீ₃தா 11-54]

[அர்ஜுநா! எதிரிகளை அழிப்பவனே! ஒரு பலனை எதிர்பாராத பக்தியினாலேயே இம்மாதிரியான நான், உண்மையாக அறிவதற்கும், பார்ப்பதற்கும், நுழைவதற்கும் தக்கவன்] என்கிறபடியே எம்பெருமானை அடைவதற்கு ஸாதநமான பக்தி அந்த ஸாதந புத்₃தி₄ நீங்கியவுடன் உணவு உண்பதற்குத் தேவையான பசிபோலே, இவன் அடைய வேண்டிய பரமாந்நமான கைங்கர்யத்திற்கு முன் இருக்கவேண்டிய கைங்கர்ய ருசியில் சேர்ந்துவிடும். ஸித்₃தோ₄பாயமான எம்பெருமானை மோக்ஷத்தின் பொருட்டு உபாயமாக வரிக்கிற ப்ரபத்தி, 'ஏக' பத₃த்தில் சொல்லுகிறபடியே அதில் ஸாத₄நம் என்னும் எண்ணம் கழிந்தவுடன், அத்யந்த பரதந்த்ரமாகையாலே அநந்ய ஶரணமாய் இருந்துள்ள (எம்பெருமான் தவிர்ந்த எதையும் உபாயமாகக் கொள்ளாமல் இருக்கையாகிற) ஜீவாத்ம ஸ்வரூபத்தினுடைய உண்மையறிவிலே சேர்ந்துவிடும். ஆகையால் கர்ம ஜ்ஞாநபக்திகளை இவன் அடியோடு விடவில்லை. இவனுக்கும் ஒரோர் ஆகாரத்தில் அவை உண்டு என்று கருத்து.

இவ்விடத்தில் பெரியவாச்சான்பிள்ளை பரந்தரஹஸ்யத்தில், "அவன் (உபாஸகன்) உபாயத்வ பு3த்3த்4யா அநுஷ்டி2க்கும்; இவன் (ப்ரபந்நன்) போ4க3பு3த்3த்4யா அநுஷ்டிக்கும்; அவன் விதி4ப்ரேரிதனாய் (விதி4யால் தூண்டப்பட்டு) அநுஷ்டிக்கும்; இவன் ராக3ப்ரேரிதனாய் (விருப்பத்தால் தூண்டப்பட்டு) அநுஷ்டிக்கும். அவனுக்கு வர்ணாச்ரம த4ர்மம் நியமேந அநுஷ்டிக்கவேணும்; இவனுக்கு வர்ணாஸ்ரமத4ர்மாநுஷ்டானமாகவுமாம்; வைஷ்ணவ கிஞ்சித்காரமாகவுமாம்; ப்ராதிகூல்யநிவ்ருத்தியிலே நியமம். ஆநுகூல்யங்களில் ஏதேனுமாம். ஆகையிறே நம்மாசார்யர்கள் இவற்றை அநுஷ்டிப்பாரும் அநுஷ்டியாதாருமாய்ப் போருகிறது. அந்த நியமமில்லாமையிறே ஸாத4னனை அக்ரூரன் க்ருஷ்ண ப3லராமர்களை கம்ஸனிடம் அழைத்துச் செல்லும்போது வஸ்து ஸந்நிஹிதமாயிருக்கச் செய்தேயும், தன்னுடைய க்ருத்யத்திலே (கர்மாநுஷ்டானத்தில்) அந்வயித்தது" என்று அருளிச்செய்தது இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

சூர்ணை 272:— ஒரு பலத்துக்கு அரிய வழியையும், எளிய வழியையும் உபதேசிக்கையாலே இவை இரண்டும் ஒழிய ப4க3வத் ப்ரஸாத3மே உபாயமாகக்கடவது.

ப4க்தி ப்ரபத்தி ஆகிய இரண்டுமே உபாயமல்லவானால் இந்த ஜீவனுடைய பேற்றுக்கு ஸாத4நமாயிருப்பது எது? என்னும் கேள்விக்கு இங்கு பதிலுரைக்கப்படுகிறது. அதாவது—எம்பெருமானை அடைவதாகிற ஒரு பலனுக்கு 908ம் பக்கத்திலுள்ள (சூர்ணை 268ன் விவரணத்தில் எடுக்கப்பட்ட) "ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு" என்று தொடங்கும் ப்ரமாணத்தின்படி பல பிறவிகளிலே கர்மயோக3ம் ஜ்ஞாநயோக3ம் முதலான அங்கங்களாலே ஸாதிக்கப்படுவதாகையாலே அரிதாயிருக்கும் ப4க்தியோக3வழியையும் இந்தச் சரமஸ்லோகத்தில் தன் நன்மைக்குத் தான் பாடுபடுவதினின்றும் நீங்குவதை முன்னிட்டுக்கொண்டு அவனை ஒருமுறை சரணமடைவதாயிருக்கையாலே எளிதாயிருக்கும் ப்ரபத்தி வழியையும் உபதேசிக்கையாலே வழிகளில் அருமை எளிமை என்பதில் முக்யத்வமில்லாமல் உபாயமான ப4க்தியை வ்யாஜமாகக் கொண்டோ, அதி4காரி விசேஷணமான ப்ரபத்தியை வ்யாஜமாகக் கொண்டோ ப2லனை அளிக்கும் அவனுடைய அருளுக்கே முக்2யத்வமாகையாலே ப4க்தி ப்ரபத்திகள் உபாயமல்ல, எம்பெருமானுடைய அருளே உபாயமென்று விளங்குகிறது என்றபடி.

சூர்ணை 73;— பேற்றுக்கு வேண்டுவது—விலக்காமையும், இரப்பும்.

ஆனாலும் பேற்றுக்கு இவனிடமும் ஏதேனும் இருக்கவேண்டாமோ? என்னும் கேள்விக்குப் பதிலுரைக்கிறது இச் சூர்ணை. அதாவது—பேற்றையடைவதற்குச் சேதனனிடம் இருக்கவேண்டியது எம்பெருமான் தன்னையடைவதற்குப் பண்ணும் ரக்ஷணைச் செயலைத் தன் நன்மைக்குத் தான் முயல்வதன் மூலம் விலக்காமலிருக்கையும், கைங்கர்யமாகிற அப்பேறு இவனால் விரும்பப்படுவது என்பதைக் காட்டும் கைங்கர்ய ப்ரார்த்தனையுமேயாகும்.

சூர்ணை 274:- சக்ரவர்த்தித்திருமகன், பாபத்தோடே வரிலும் அமையுமென்றான், இவன் புண்யத்தைப் பொகட்டு வர வேணும் என்றான்.

இப்படியல்லாமல், இச்சேதனனிடமும் சில புண்ணியச்செயல்கள் இருக்கவேண்டுமென்று கொள்ளக் கூடாதோ? என்னும் கேள்வியெழ, அது உபாயமான எம்பெருமானுடைய விருப்பத்திற்கு மாறானது என்கிறது இச்சூர்ணை அதாவது—

ராமோ விக்₃ரஹவாந் த₄ர்ம: ஸாது₄: ஸத்யபராக்ரம: |
ராஜா ஸர்வஸ்ய லோகஸ்ய தே₃வாநாம் மக₄வாநிவ ||

[ரா-ஆ 37-13]

[ராமன் த₄ர்மமே உருவெடுத்தவன்; நல்லொழுக்கமுடையவன்; உண்மை வீரன்; தேவர்களுக்கு இந்திரனைப்போல் எல்லாவுலகிற்கும் இவன் அரசனாகிறான் ] என்கிறபடியே தர்ம ஸ்வரூபியான சக்ரவர்த்திதிருமகன்,

ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட₂ த₃த்தமஸ்யாப₄யம் மயா |
விபீ₄ஷணோ வா ஸுக்₃ரீவ! யதி₃ வா ராவண: ஸ்வயம் ||

[ரா-யு 18-35]

[வானரர்களுள் சிறந்தவனான ஸுக்ரீவனே! இவனை அழைத்து வா! விபீ₄ஷணனாயிருந்தாலும், ராவணன் தானேயாயிருந்தாலும், இவனுக்கு என்னால் அப₄யமளிக்கப்பட்டது ] என்கிறபடியே, கொடும்பாபம் புரிந்த ராவணனே வந்தாலும் அழைத்துவா என்று ஸுக்ரீவனைப் பணிக்கையாலே, பாபம் பேற்றுக்குக் காரணமாக நினைப்பதற்கு இடமில்லாமையாலே பாபத்துடன் வந்தாலும் ரக்ஷிக்கத் தடையில்லை என்றான்.

யே ச வேத₃விதோ₃ விப்ரா: யே சாத்₄யாத்ம விதோ₃ ஜநா:।
தே வத₃ந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம் த₄ர்மம் ஸநாதநம்॥
[பார-ஆர-தீர்த்த 86-26]

[வேத₃மறிந்த வேதியர்களும், வேதா₃ந்தமுணர்ந்த வித்தகர்களும் மஹா புருஷனான கிருஷ்ணனையே பழமையான த₄ர்மஸ்வரூபி என்று சொல்லுகிறார்கள்.] என்கிறபடியே (ஸநாதந) பழைய தான த₄ர்மமாயிருக்கும் கண்ணன் 'எல்லா த₄ர்மங்களையும் அடியோடு விட்டு' என்கையாலே பேற்றுக்குக் காரணமாக நினைப்பதற்கு இடமுள்ள புண்யத்தை விட்டுவரவேண்டுமென்றான். ஆகையால் ரக்ஷிக்கும்போது வேறொரு துணையை அடியோடு பொறுக்காத உபாயமாயிருக்கும் எம்பெருமானுக்கு, சேதனனிடம் இவனை ரக்ஷிப்பதற்கு உறுப்பாக ஒரு புண்யம் இருப்பது அநிஷ்டம் என்று விளங்குகிறது.

சூர்ணை 275:— "ஆஸ்திகனாய் இவ்வர்த்தத்தில் ருசி விஶ்வாஸங்களுடையனாய் உஜ்ஜீவித்தல், நாஸ்திகனாய் நஶித்தல் ஒழிய நடுவில் நிலையில்லை" என்று பட்டருக்கு எம்பார் அருளிச்செய்த வார்த்தை

இந்தச் சரமஶ்லோகார்த்த₂த்தில் தொடர்பு கொண்டவனுக்கு இதில் நம்பிக்கையுள்ள ஆஸ்திகனாய் உய்வு பெறுதல், இதில் நம்பிக்கையில்லாத நாஸ்திகனாய் ஆத்ம நாஶத்தைப் பெறுதல் ஆகிய இரண்டு நிலை ஒழிய நடுவில் ஒரு நிலையில்லை என்பதை, பூர்வாசார்ய வசநத்தாலே அறிவிக்கிறார் இச்சூர்ணையில். அதாவது: இந்தச் சரமஶ்லோகார்த்தத்தில் தொடர்பு கொண்டவன் 'எம்பெருமானுடைய பெருமையைப் பார்க்கும்போது இது உண்மையே' என்னும் நம்பிக்கையுடைய ஆஸ்திகனாய், இவ்வர்த்தத்தில் விருப்பமும், இது தப்பாமல் பேற்றைத்தரும் என்ற நம்பிக்கையும் உடையவனாய் உய்வுபெறுதல், "சாஸ்திரங்களெல்லாம் பல அரிய செயல்களைச் செய்து மோக்ஷமடைய வேண்டுமென்று சொல்லும்போது இந்த ஶ்லோகம் 'எல்லாப் புண்யச் செயல்களையும் விட்டு என்னையே பற்று' என்று கூறுவதை எப்படி நம்புவது?" என்று நம்பிக்கையற்ற நாஸ்திகனாய் இந்த அர்த்தத்தைக் கைக்கொள்ளாமல் ஆத்மநாசத்தைப் பெறுதல் ஆகிய இரண்டு நிலையொழிய

நடுவிலொரு நிலையில்லை—என்று எல்லா மாஸ்த்ரங்களும் அறிந்தவரான ப₄ட்டருக்கு பரம ஆப்தரான (ஆசார்யரான) எம்பார் அருளிய வார்த்தை என்றபடி;

சூர்ணை 276 வ்யவஸாயம் இல்லாதவனுக்கு இதில் அந்வயம் ஆமத்தில் போ₄ஜநப் போலே,

இந்த அர்த்தத்தில் நம்பிக்கையோடு கூடிய உறுதியில்லாதவன் இதில் தொடர்பு கொள்ளுவது அவன் ஆத்மநாசத்தை அடைவதற்குக் காரணமாகிவிடும் என்பதை ஓர் உதாரணத்தோடு விளக்குகிறுர் இச்சூர்ணையில். அதாவது—இந்த ஶ்லோகத்தில் சொல்லப்படும் ஸர்வத₄ர்ம பரித்யாக₃த்திலும் எம்பெருமானை சரணமடைவதிலும் பரிபூர்ணமான நம்பிக்கையோடு கூடிய உறுதியில்லாதவனுக்கு, இவ்வர்த்தத்தில் உண்டாகும் தொடர்பு—அஜீர்ணமாயிருக்கும்போது உண்ட உணவு தே₃ஹநாசத்திற்குக் காரணமாவதுபோலே இவனது ஆத்மநாசத்திற்குக் காரணமாகிவிடும் என்றபடி.

சூர்ணை 277— 'விட்டுசித்தர் கேட்டிருப்பர்' என்கிறபடியே அதி₄காரிகள் நியதர்.

இந்தச் சரமஶ்லோகார்த்த₂த்தைக் கடைப்பிடிக்கும் அதி₄காரிகள் எத்தகையவர் என்பதை இச்சூர்ணையில் அருளிச்செய்கிறுர். அதாவது— "செம்மையுடைய திருவரங்கர் தாம் பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டு இருப்பர்" [நாச்-திரு 11-10] என்று 'மனம், மொழி, செயல் என்னும் முக்கரணங்களும் மூன்று படியாய் இருப்பவர்களைத் தம்மோடு சேரவிடுவதற்குத் தாம் அம்மூன்றிலும் ஒருபடியாய் இருப்பவராய், அதைச் செயல் படுத்திக்கொண்டு திருவரங்கத்திலே பள்ளிகொண்டிருக்கும் பெரிய பெருமாள், தாம் கண்ணனாய் இருக்கும்போது அர்ஜுனனை வ்யாஜமாகக் கொண்டு திருத்தேர்த்தட்டிலே நின்று அருளிச்செய்ததாய், உண்மையானதாய், சிறப்புமிக்கதாய், அனைவர்க்கும் அனுஷ்டிக்க எளியதான சரமஶ்லோகமான வார்த்தையை விஷ்ணுசித்தராகிற பெரியாழ்வார் தாமும் கேட்டு அதன்படி என்றும் ஒழுகுபவராயிருப்பர்' என்று ஆண்டாள் அருளிச்செய்த

படியே இந்த ஸ்லோகத்தைக் கேட்டு அதன்படி என்றும் நடக்கக் கூடிய பெரியாழ்வாரைப் போன்றவர்களே அதிகாரிகள் என்று கருத்து. 'கேட்டிருப்பர்'' என்றதின் கருத்தை ''அவ்வார்த்தையைக் கேட்டபின்பு உபாயம் என்னும் எண்ணத்துடன் வழியிலே குறுக்கிடும் ஒரு துரும்பைக் கூட நறுக்கியறியார். ப்ராப்யம் (ஸ்வயம் ப்ரயோஜனம்) என்னும் எண்ணத்தோடு செய்ய வேண்டுவதெல்லாம் செய்வார்'' என்று பெரியவாச்சான்பிள்ளை விவரித்தருள்வர், இப்படி இந்தச்சரமஸ்லோகார்த்தத்திற்கு அதிகாரிகள் மிகவும் அரியவர்களாகையாலேயே க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யரான எம்பெருமானுர் முதலானேரும் கூரத்தாழ்வான் போன்ற சிறந்த அதிகாரிகளுக்கும் பரீக்ஷித்த பின்பே இதை உபதேசித்துப் போந்தனர். அதனுலேயே அனைவரும் காணக்கூடிய கீதாபாஷ்யத்தில் சரமஸ்லோகத்தை விவரிக்கும்போது திருக்கோட்டியூர் நம்பியிடமிருந்து தாம் கேட்ட இந்த முக்யார்த்தத்தை வெளிப்படுத்தாமல் அங்கப்ரபத்தி பரமான அமுக்ய நிர்வாஹத்தையே வெளியிட்டார் எம்பெருமானுர் என்று கண்டு கொள்வது.

சூர்ணை 278:—''வார்த்தை யறிபவர்'' என்கிற பாட்டும், ''அத்தனாகி'' என்கிற பாட்டும் இதுக்கு அர்த்தமாக அநுஸந்தேயம்.

இந்தச்சரமஸ்லோகார்த்தத்தில் ஊன்றியிருக்கும் ஆழ்வார்களுடைய திவ்யஸூக்தியில் இவ்வர்த்தத்தைச் சொல்லுகின்றவையாக நம்முடைய பூர்வாசார்யர்களால் அநுஸந்திக்கப்படும் இரண்டு பாட்டுக்களை அருளிச்செய்து சரமஸ்லோக ப்ரகரணத்தை நிறைவுறுத்துகிருர் இச்சூர்ணையில் (1) நம்மாழ்வார் திருவாய்மொழியில் [7-5-10] அருளிச்செய்த பாட்டின் அந்வயம் பின்வருமாறு:— ''வார்த்தை அறிபவர்— போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பிவை பேர்த்துப் பெருந்துன்பம் வேரறநீக்கித் தன் தாளின் கீழ்ச் சேர்த்து அவன் செய்யும் சேமத்தை எண்ணித் தெளிவுற்று மாயவற்கு ஆளன்றி ஆவரோ'' என்கை. இதன் பொருள் பின்வருமாறு:— ''என்னையே உபாயமாக உறுதிகொள்வாய்; நான் உன்னை என்னை அடையத் தடையாயிருக்கும் எல்லாப்பாபங்களினின்றும் விடுவிக்கிறேன்' என்ற சரமஸ்லோகமாகிற நல்வார்த்தையை அறிகின்றவர்கள் — பட்டுப்பூச்சிபோன்ற சில ஜந்துக்கள் தம்மைச் சுற்றிக் கூடுகட்டிக்கொண்டு தம் அழிவைத் தாமே விளைத்துக் கொள்வதைப் போலே, இந்த ஜீவாத்மாவே தன் ஸ்வரூபம்

தெரியாதபடி தன்செயல்களால் விளைத்துக்கொண்ட பிறப்புக்கள், அது காரணமாக வரும் நோய்கள், அவற்றைப்பொறுத்துக் கொண்டாலும் தவிர்க்கவொண்ணாதபடி இடிவிழுந்தாற்போலே வரும் கிழத்தனம், அப்படியாவது நிலையாயிருக்க முடியாதபடி இவன் விரும்பாமல் இருக்கும் போது வந்து சேரும் மரணம் ஆகிய வற்றை, வலியவர்கள் நெடுஞ்சுவரை எளிதில் தள்ளுவது போலே தள்ளி, அவை நீங்கின பிறகு, என்றும் எம்பெருமானை விட்டுப் பிரிந்திருக்கையாலே 'பெருந்துன்பம்' எனத்தக்க கைவல்ய மோக்ஷமும் வராதபடி அடியோடு நீக்கி, பாதரேகைபோலே விட்டுப் பிரியாதபடி தன் திருவடிகளின் கீழே சேருப்படி பண்ணி, மறுபடியும் ஸம்ஸாரத்திற்குத் திருப்பி வராதபடி அவன் பண்ணும் ரக்ஷணத்தை அநுஸந்தித்து, 'இவனே நமக்கு ரக்ஷகன்' என்று தெளிந்து உறுதிபூண்டு, தங்களுக்கு அடையத்தக்கவனாய், விரோதியையும் போக்குபவனாய், வியக்கத்தக்கவனான அக்கண்ணனையொழிய வேறொருவர்க்கு ஆளாவரோ?'' என்கை,

(2) ''அத்தனாகி'' என்று தொடங்கும் திருச்சந்தவிருத்தம் 115 வது பாட்டின் அந்வயம் பின்வருமாறு:— ''முத்தனார் முகுந்தனார் ஒத்து ஒவ்வாத பல்பிறப்பு ஒழித்து நம்மை ஆட்கொள்வான்—அத்தனாகி அன்னையாகி ஆளும் எம்பிரானுமாய்ப் புகுந்து நம்முள் மேவினார்; ஏழை நெஞ்சமே! எத்தினால் இடர்க்கடல் கிடத்தி'' என்று. இதன் பொருள் பின்வருமாறு:— தாழ்வுகளுக்கெல்லாம் எதிர்த்தட்டான வராகையாலே ஸம்ஸாரத்தின் வாஸனையும் அண்டப்பெறுதவராய், முக்தி பூமியை அளிக்கின்றவராகையாலே 'முகுந்தர்' எனப்படுகிறவர், எல்லா தேஹங்களிலிருக்கும் ஆத்மாக்களும் அறிவே வடிவெடுத்தவராகையாலே ஒத்து, தேவர், மனிதர், திர்யக்கு, தாவரம் என்னும் வேறுபாட்டாலே ஒவ்வாமலிருக்கும் பலவகைப்பட்ட பிறவிகளைப்போக்கி, அநாதிகாலமாக ஸம்ஸாரிகளாய் இருக்கும் நமக்கு நித்யஸூரிகள் அநுபவிக்கும் கைங்கர்ய ஸுகத்தை அளிப்பதற்காக நன்மையையே நடத்தும் தந்தையாகவும், இனியதையே செய்யும் தாயாகவும், அடிமை கொள்ளக் கூடிய நம் ஸ்வாமியாகவும் இப்படி எல்லா உறவினராகவும் இருந்து நம்முடைய தாழ்வையும் தம்முடைய பெருமையையும் பாராமல், நம்முடைய எல்லாப்பொறுப்பையும் தாமே ஏற்றுக்கொண்டு செய்பவராக மிகத்தாழ்ந்த நம்முள்ளே புகுந்து ஒரு நீராகப் பொருந்தினார்.

அறிவிலியான நெஞ்சே! எந்தக்காரணத்தால் நீ இப்படித் துன்பக் கடலிலே மூழ்கியிருக்கிறாய்? நமக்கு நன்மையை அறிவதற்கு நாம் எல்லாம் அறிந்தவராகவும், அவன் அறியாதவனாகவும் இருக்கிறான் என்னும் காரணத்தாலா? நமக்கு நன்மையை நடத்துவதற்கு நாம் சக்தியுள்ளவராய், அவன் சக்தியில்லாதவனாய் இருக்கிறான் என்னும் காரணத்தாலா? நம்முடைய காரியத்தை நாம் செய்து கொள்வதற்கு நமக்குத் தகுதியுண்டாய், அவனுக்குத் தகுதியில்லை என்னும் காரணத்தாலா? நாம் அறிவற்றவராய், அசக்தராய், தகுதியற்றவராயும், அவன் எல்லாம் அறிந்தவனாய் எல்லாம் வல்லவனாய், தகுதியுடையவனாய், இதற்குமேல் தன் மேன்மை பாராமல் தான் தாழநின்று உதவுபவனாகவும் இருக்க, நீ துன்பக்கடலில் துவள்கிறது எக்காரணத்தாலே?—என்கை "வார்த்தையறிபவர்" என்னும் திருவாய்மொழிப்பாட்டும் 'அத்தனாகி" என்னும் திருச்சந்த விருத்தப்பாட்டும் இந்தச்சரமஶ்லோகத்திற்கு அர்த்தமாக அநுஸந்திக்கத்தக்கவை என்பது இச்சூர்ணையின் கருத்து.

ஆக, பூர்வார்த்தத்தில் 'ஸர்வதர்மாந்' என்னும் பதத்தாலே எம்பெருமானை உபாயமாகப் பற்றுவதற்கு அங்கமாகக் கைவிடத் தக்க மோக்ஷோபாயங்களையும், 'பரித்யஜ்ய' என்னும் பதத்தாலே 'அவற்றை விடும்போது வாஸனையோடும் ருசியோடும் விட வேண்டும்' என்பதையும், 'மாம்' என்னும் பதத்தாலே, அந்த உபாயங்களை விட்டுப் பற்றும்படியான எம்பெருமானுடைய எளிமை முதலான குணச்சேர்த்தியையும், 'ஏகம்' என்னும் பதத்தாலே அந்த குணங்களோடு கூடிய எம்பெருமான் வேறு எத்துணையையும் எதிர்பாராத துணையுடையவன் என்பதையும், "ஶரணம்" என்னும் பதத்தாலே அவ்வெம்பெருமானே 'உபாயம்' என்பதையும், 'வ்ரஜ' என்னும் பதத்தாலே, அவ்வெம்பெருமானை உபாயமாக வரிக்கையையும், உத்தரார்த்தத்தில் 'அஹம்' என்னும் பதத்தாலே வரிக்கப்பட்ட உபாயமாகிற அவ்வெம் பெருமான் ஜ்ஞாநம் ஶக்தி முதலிய குணங்களோடு சேர்ந்தவன் என்பதையும், 'த்வா' என்னும் பதத்தாலே, அத்தகைய குணங்களோடு கூடிய எம்பெருமானிடம் தன் பொறுப்பை

ஒப்படைத்த அதிகாரியையும், 'ஸர்வபாபேப்₄ய:' என்னும் பத₃த்தாலே அந்த அதிகாரிக்குத் தடையாய் இருக்கும் பாபங் களையும், 'மோக்ஷயிஷ்யாமி' என்னும் பத₃த்தாலே, அந்தப் பாபங்களை எம்பெருமான் போக்கும் முறையையும், 'மாஸு₂ச:'' என்னும் பத₃த்தாலே, அப்படிப் பாபங்கள் நீங்கப்பெற்ற அதிகாரி கவலையற்றிருக்கவேண்டும் என்பதையும் சொல்லு வதாகத் தேறிற்று.

சரமஸ்லோக விவரணம் நிறைவுற்றது.

இனி சங்கர பா₄ஷ்யத்தில் இந்தச் சரமஸ்லோகத்திற்கு விளக் கப்பட்டுள்ள பொருள் சிறிதும் பொருந்தாது என நிலைநாட்டப் படுகிறது ''மந்மநா ப₄வ' இதி ஸ்லோகேந ஸர்வகர்மயோக₃ நிஷ்ட₂ாயா: பரம ரஹஸ்யம் ஈஸ்வர ஸரணதாம் உபஸம்ஹ்ருத்ய அத₂ இதா₃நீம் கர்மயோக₃நிஷ்ட₂ாப₂லம் ஸம்யக்₃த₃ர்ஸநம் ஸர்வ வேதா₃ந்தஸாரம் விஹிதம் வக்தவ்யம் இதி ஆஹ—ஸர்வ த₄ர்மாந் இதி'' ['மந்மநா ப₄வ' (18-65) என்னும் ஸ்லோகத்தினால் கர்மயோக₃நிஷ்டை₂யினுடைய பரமரஹஸ்யமான ஈஸ்வரனையே தஞ்சமாகக் கொண்டிருக்கையைக் கூறிமுடித்து, இந்த (66 வது) ஸ்லோகத்தாலே, கர்மயோக₃நிஷ்டை₂யின் ப₂லமாயிருப்பதாய், ஸர்வ வேதா₃ந்தங்களின் ஸாரமான (ஜீவப்₃ரஹ்ம ஐக்யமாகிற) உண்மையறிவை விதித்து உபதேசிக்கவேண்டும் என்னும் கருத் தாலே 'ஸர்வத₄ர்மாந்' என்று தொடங்குகிறான் ] என்று சரம ஸ்லோகத்திற்கு அவதாரிகை இட்டார் சங்கரர்.

'''அத₄ர்மம் த₄ர்மமிதி யா மந்யதே தமஸா வ்ருதா |
ஸர்வார்த்தா₂ந் விபரீதாம்ஸ்ச பு₃த்₃தி₄ஸ்ஸா பார்த்த₂
தாமஸீ ||' [18-32]

[குந்திபுத்திரனே! எந்த அறிவானது தமோகு₃ணத்தால் சூழப் பட்டதாய், அத₄ர்மத்தை த₄ர்மம் என்று அறிகிறதோ, (ஸித்₃த₄ மாகவும் ஸாத்₄யமாகவும் இருக்கும்) எல்லாப்பொருள்களையும் நேர்மாறாக அறிகிறதோ அந்த அறிவு தமோகு₃ணத்தால் உண் டாகும் பு₃த்₃தி₄யாகும்.] என்னும் கீ₃தா ஸ்லோகத்திற்கு இது பொருத்தமான உதாரணமாகும்'' என்றும், ''கர்மயோக₃நிஷ்டை₂ யைக்காட்டிலும் வேறுபட்டதாக ப₄க்தியோக₃நிஷ்டை₂ காட்டப் பட்டிருக்கையாலும், இந்த ஸ்லோகத்தில் 'ஸரணமடைவாய்' என்று

தெளிவாகச் சொல்லியிருக்கையாலும், முன் ஶ்லோகத்திலேயே கர்மயோக₃நிஷ்டை₂ முடிவுறுத்தப்பட்டது என்பது பொருந்தாது" என்றும் ஸ்ரீவேதா₃ந்த தேசிகர் தாத்பர்ய சந்த்₃ரிகையில் இந்த அவதாரிகையைக் கண்டித்தார்.

சரமஶ்லோகத்தின் இரண்டாம் பாத₃த்தின் பதவிளக்கம் காட்டும்போது, "மாம் ஏகம் ஸர்வாத்மாநம் ஸமம் ஸர்வபூ₄தஸ்த₂ம் ஈஶ்வரம் அஹமேவேத்யேவம் ஏகம் ஶரணம் வ்ரஜ—ந மத்தோऽந்யத் அஸ்தீத்யவதா₄ரய: இத்யர்த்த₂:||" ["மாம் ஏகம் ஶரணம் வ்ரஜ" என்றதற்கு, "ஸர்வாத்மாவாய், ஸமனாய், எல்லா பூ₄தங்களிலுமிருப்பவனாய், ஈஶ்வரனானவனை 'நானே அவன்' என்று ஒன்றுபட்டவனாய் எண்ணி, 'என்னைக் காட்டிலும் வேறொன்று இல்லை என்று உணர்வாய்" என்று பொருள்.] என்று ஜீவ ப்₃ரஹ்ம ஐக்யத்தை உபதேசிப்பதாக ஶங்கரர் உரையிட்டார். பத₃ஶக்தியாலோ, லக்ஷணையாலோ இப்பொருள் பொருந்த வழியேயில்லை. நேர்மாறாக "நான் உன்னை எல்லாப்பாபங்களினின்றும் விடுவிக்கிறேன்; வருந்தாதே" என்று சரமஶ்லோகத்தின் உத்தரார்த்த₄ம் (பிற்பாதி) அமைந்திருக்கையால், ஸ்ரீராமாயணத்தில் விபீ₄ஷணனைக் குறித்து அபயமளிக்கும் "மித்ரபா₄வேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கத₂ஞ்சந [நட்புறவுடன் வந்தடைந்தவனை ஒருபோதும் விடமாட்டேன்.] "ஸக்ருதே₃வ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே | அப₄யம் ஸர்வபூ₄தேப்₄யோ த₃தா₃ம்யேதத்₃ வ்ரதம் மம ||" [ஒருகால் ஶரணமடைந்தவன் பொருட்டும், 'உனக்கேயாகிறேன்' என்று யாசிப்பவன் பொருட்டும் எல்லா பூ₄தங்களிடமிருந்தும் அப₄யமளிக்கிறேன், இது என் விரதம்] என்னும் ஸ்ரீராம சரமஶ்லோகங்களிற் போல் இந்த ஸ்ரீ க்ருஷ்ண சரமஶ்லோகத்திலும் ஶரணாக₃தனாய், ரக்ஷிக்கப்படுபவனான அர்ஜுனனுக்கும் ஶரண்யனாய், ரக்ஷிக்கும் கண்ணனுக்கும் பே₄த₃மன்றோ விளங்கிநிற்கிறது. மற்ற சாஸ்திரங்களும் ஜீவப்₃ரஹ்மபே₄த₃த்தையே நிலைநிறுத்துகின்றன என்னும் விஷயம் முன்னமே காட்டப்பட்டது.

சரமஶ்லோகத்தின் முதல் பாத₃ம் மோக்ஷமடைய விரும்பும் ஸந்யாஸிகள் எல்லாக்கர்மங்களையும் அடியோடு கைவிடவேண்டும் என்று கூறுவதாகப் பொருள் கொண்டார் சங்கரர். இது இவ்வத்தியாயத்தின் ஏழாம் ஶ்லோகத்தில் "நித்ய நைமித்திக கர்மங்களை அடியோடு கைவிடுவது பொருந்தாது. (கர்மம் குற்றமுடையது) என்னும் மயக்கத்தால் அதைக் கைவிடுவது தமோகு₃ணத்தால் விளைவது" என்று சொல்லப்பட்ட தாமஸத்யா

கத்தை ஏற்றுக்கொண்டபடியாம். இதை நிரூபிப்பதற்காகவே ஸ்ரீபாஷ்யகாரர் ஸாத்விகத்யாகமும் இங்கு விதிக்கப்படுவதாகப் பொருள் கொண்டார்.

இதற்குமேல் அத்வைதிகள் கூறும் பதிலாவது; "கர்மங்களில் ஊன்றியிருப்பவர்கள் விஷயத்திலேயே பதினெட்டாம் அத்தியாயத்தில் த்யாகமும், ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என மூன்றாகப் பிரிக்கப்பட்டது. கர்மம் ஸம்ஸாரத்தில் ஜீவனைக்கட்டிவைப்பது என்னும் உண்மையை உணர்ந்து எல்லாக் கர்மங்களையும் கைவிட்ட ஸந்யாஸிகளுக்கு மயக்கத்தால் வரும் தாமஸத்யாகமும் ஏற்பட இடமில்லையன்றோ; ஸாத்விகத்யாகமும் கர்மத்தில் ஊன்றியிருப்பவர்களைக் குறித்துச்சொல்லப்பட்டதேயொழிய ஸர்வ கர்மங்களையும் விட்ட ஸந்யாஸிகளைக் குறித்துச் சொல்லப்படுவதன்று" என்பது அத்வைதிகளின் பதில், இது சரியல்ல. இவ்வத்தியாயத்தின் தொடக்கத்தில் பொதுவாக த்யாக ஸந்யாஸங்களைப்பற்றிக் கேட்கப் பட்டிருப்பதால், பதிலும் கர்மத்தில் ஊன்றியிருக்கும் கர்மநிஷ்டர்களைப் பற்றியது மாத்திரமல்ல; ஜ்ஞாநநிஷ்டர்களும் நித்ய நைமித்திக கர்மங்களை அடியோடு விடக்கூடாது என்று முன்னமே நிலைநாட்டப்பட்டதன்றோ. சங்கரர் தம் பாஷ்யத்தில் சரமஶ்லோகம், எல்லாக் கர்மங்களையும் கைவிடவேண்டும் என்றும், ஜீவனும் பிரம்மமும் ஒன்றே என்றும், மற்றவை எதுவும் இல்லை என்றும் காட்டுவதாக வலிந்து வாது செய்கின்றார். "த்யஜ தர்மம் அதர்மம் ச" என்னும் பாரத மோக்ஷதர்ம ஶ்லோகத்தையும் இதற்கு ப்ரமாணமாகக் காட்டுகிறார். இந்த வாதங்களுக்குத் தாத்பர்ய சந்த்ரிகையில் ஸ்ரீதேசிகனால் அருளிச் செய்யப்பட்டிருக்கும் பதில்கள் சுருக்கமாகக் கொடுக்கப்படுகின்றன: "நைவ தர்மீ ந சாதர்மீ ந சாபி ஹி ஶுபாஶுபீ | யஸ்ஸ்யாத் ஏகாஸநே லீநः தூஷ்ணீம் கிஞ்சித் அசிந்தயந் || [பார ஆஶ்வ 20-7] [தர்மமும் அதர்மமும் அற்றவனாய், சுபமும் அசுபமும், அற்றவனாய், ஒரே ஆஸநத்தில் மௌனமாக எதையும் நினைக்காமல் வீற்றிருக்கவேண்டும்.] "ஜ்ஞாநம் ஸந்யாஸ லக்ஷணம்" [பார-ஆஶ்வ 43—26] [கர்மத்யாகத்தை லக்ஷணமாக உடைய ஜ்ஞானம்.] "தஸ்மாத்த்வம் உத்தவ உத்ஸ்ருஜ்ய சோதநாம் ப்ரதிசோதநாம் | ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச ஶ்ரோதவ்யம் ஶ்ருதமேவ ச | மாம் ஏகமேவ ஶரணம் ஆத்மாநம் ஸர்வதேஹிநாம் | யாஹி ஸர்வாத்மபாவேந யாஸ்யஸி ஹ்யகுதோபயம் | [பாகவதம் 11—12 — 14,15]

[உத்₃த₄வரே! 'சோத₃நா' எனப்படும் விதி₄யையும் 'ப்ரதி சோத₃நா' எனப்படும் நிஷேத₄த்தையும், ப்ரவ்ருத்தி த₄ர்மத்தையும் நிவ்ருத்தி த₄ர்மத்தையும், கேட்கவேண்டியதையும் கேட்டதையும் கைவிட்டு எல்லா ஜீவர்களுக்கும் ஆத்மாவாயிருக்கும் என்னை ஒருவனையே அனைத்துமாக ஶரணமடைவாய், (இப்படி சரணமடைந்தால்) எதனிடமும் பயமற்றவனுவாய்] முதலான ஶ்லோகங்களில் கர்மங்களைக் கைவிடச் சொல்லுவதுபோலத் தோன்றினும் 'குர்வந்நேவேஹ கர்மாணி' [ஈஶாவாஸ்ய 2] என்று உபநிஷத்தில் கர்மங்கள் ஆயுள் உள்ளவரை அநுஷ்டி₂க்க வேண்டியவையே என்று கூறியிருக்கையாலும், கீ₃தையிலும் அப்படியே கூறி, கர்மத்தின் ப₂லத்தையும், ஸங்கத்தையும், கர்த்ருத்வத்தையும் கைவிடுவதே கர்மத்யாக₃மாகும் என்று விளக்கியிருக்கையாலும், முற்கூறிய வசனங்களும் இந்த த்ரிவித₄பரித்யாக₃த்தைக் கூறுகின்றன என்றே கொள்ளவேணும். அன்றிக்கே, இவை மோக்ஷோபாயம் என்னும் எண்ணத்தைக் கைவிடச் சொல்லுவதாகவும் கொள்ளலாம்.

த்யஜ த₄ர்மம் அத₄ர்மம் ச த்யஜ ஸத்யாந்ருதே அபி |
உபே₄ ஸத்யாந்ருதே த்யக்த்வா யேந த்யஜஸி தத்த்யஜ||

[பா₄ரத ஶாந்தி மோக்ஷ 337-40] [த₄ர்மத்தையும் அத₄ர்மத்தையும் விடுவாய். உண்மையையும் பொய்யையும் விடுவாய். இவ்விரட்டைகளை விட்டபின்பு, விட்டோம என்கிற எண்ணதலதையும் விடுவாய்] என்று இவ்விஷயம் பா₄ரதம் மோக்ஷத₄ர்மத்தில் சொல்லப்பட்டு,

த்யஜ த₄ர்மம் அஸங்கல்பாத் அத₄ர்மம் சாபி அலிப்ஸயா |
உபே₄ ஸத்யாந்ருதே பு₃த்₃த்₄யா பு₃த்₃தி₄ம் பரமநிஶ்சயாத் ||

[த₄ர்மங்களாகிற மோக்ஷோபாயங்களை அவை மோக்ஷோபாயங்கள் என்னும் எண்ணத்தை விடுவதன் மூலமும், அத₄ர்மமாகிற தீச்செயல்களை அவற்றை விரும்பாமலிருப்பதன் மூலமும் கைவிடுவாய். "பொய் எப்படி மோக்ஷோபாயமல்லவோ அப்படியே மெய்யும் மோக்ஷோபாயமல்ல" என்னும் எண்ணத்தால் பொய்மெய் ஆகிய இரண்டையும் விடுவாய். எம்பெருமானே உபாயம் என்னும் மேலான உறுதியாலே முற்கூறியவற்றை விட்டது மோக்ஷோபாயம் என்னும் எண்ணத்தையும் விடுவாய்] எனும் அடுத்த

ஶ்லோகத்தில் விவரிக்கப்பட்டதாகையாலே சரம ஶ்லோகத்துக்கு முக்₂யார்த்த₂ம் இதுவே என்று விளங்குகிறது. "இந்த ஶ்லோகங்கள் ஸாத்விகத்யாக₃த்தைச் சொல்லுமவை" என்று தாத்பர்ய சந்த்₃ரிகை; சரம ஶ்லோகத்தில் "மாமேகம் ஶரணம் வ்ரஜ" என்று 'என்னை ஒருவனையே உபாயமாகப்பற்று' என்றும், உத்தரார்த்த₄த்தில் "இப்படிப்பற்றப்பெற்ற நான் உன்னை எல்லாப்பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன்; வருந்தாதே" என்றும் தெளிவாகச் சொல்லியிருக்க, அதில் நிர்விசேஷ சிந்மாத்ரமான ஒன்றே உண்மைப்பொருள் என்று சொல்லியிருப்பதாக அத்வைதிகள் கூறுவதைக் கேட்கும் சிறுவர்களும் சிரிப்பார்கள்—என்றும் தாத்பர்யசந்த்ரிகை. ஆகையால் ஏக சப்தத்திற்கு, பூர்வாசார்யர்கள் காட்டிய பொருளே பொருத்தமானது. "அபேத்யாஹம் இமாம் ஹித்வா ஸம்ஶ்ரயிஷ்யே நிராமயம் | க்ஷமம் மம ஸஹாநேந நைகத்வம் அநயா ஸஹ ॥ [பா₄ரத மோக்ஷ 308-38] [இவளை இங்கு கைவிட்டு நல்வழியில் செல்வேன். இதுவே தக்கது இவளோடு ஒன்றாயிருப்பது இயலாது] என்று மஹாபா₄ரதத்தில் வெவ்வேறான இருவர் விஷயத்தில் ஒன்று சேர்ந்திருப்பது ஏகத்வமாக வழங்கப்பட்டது. ஸ்ரீராமாயணத்திலும் "வாநராணாம் நராணாம் ச கத₂ம் ஆஸீத் ஸமாக₃ம:" [ரா- ஸு-35-2] [வானரர்களுக்கும் நரர்களுக்கும் சேர்த்தி எப்படி உண்டாயிற்று?] என்று பிராட்டி அனுமனைக் கேட்டதற்கு, "ராம ஸுக்₃ரீவயோ: ஐக்யம் தே₃வ்யேவம் ஸமஜாயத" [ரா-ஸு 35-2] [தேவியே! ராமனுக்கும் ஸுக்ரீவனுக்கும் ஐக்யமானது இப்படி உண்டாயிற்று.] என்று அனுமன் பதில் சொன்னதிலிருந்து இரண்டு தனித் தத்துவங்களின் சேர்த்தியைக் குறித்தும 'ஏக' ஶப்தம் வழங்கப்படலாமென்று விளங்குகிறது. யாதவப்ரகாஶர், தம் கீ₃தாபா₄ஷ்யத்தில் 'ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய' என்னுமிடத்தில் விரோதி₄த₄ர்மங்களை மாத்திரமே விடச்சொல்லுவதாகப் பொருள்கொண்டார் என்றும், அதில் அர்த்த விவாதமில்லை என்றும் தாத்பர்ய சந்திரிகை. "'அவசியம் செய்யவேண்டிய எல்லா த₄ர்மங்களையும் விட்டாலும் என்னை ஶரணமடைந்தால் எல்லாப்பாபங்களிலிருந்தும் நீங்கப்பெறலாம்' என்று, ஶரணாக₃தியைப் புகழ்வதாகச் சிலர் சரமஶ்லோகத்திற்குப்பொருள் கொண்டார்கள். அதில் 'விட்டாலும்' என்று 'அபி' ஶப்தத்தைச் சேர்த்துக்கொள்ளவேண்டிய அஸ்வாரஸ்யம் உள்ளதாகையால் பொருந்தாது" என்று தாத்பர்ய சந்த்ரிகை. "அவசியம் அனுஷ்டிக்கத்தகுந்த நித்யநைமித்திககர்மங்களைத் தவிர்ந்த மற்ற

கர்மங்களின் பரித்யாக3மே இங்கு சொல்லப்படுகிறது' என்று நாராயணார்யர் சொல்லியதிலும் அநுஷ்டான விரோதமில்லை'' என்று தாத்பர்யசந்த்ரிகை இவ்விடத்தில் நாராயணார்யருடைய கீதா வ்யாக்யானத்தில் முதலத்தியாயத்திலிருந்து பதினெட்டாம் அத்தியாயம் வரையில் பல பங்க்திகளையெடுத்து சிலவற்றில் விவாதம் இல்லையென்றும், பல கருத்துக்கள் பொருந்தமாட்டா என்றும் ஸ்ரீதேசிகன் தாத்பர்ய சந்த்ரிகையில் விரிவாகக் காட்டியுள்ளார். அந்த நாராயணார்யரின் வ்யாக்யானம் இப்போது இல்லையாகையாலும், அவருடைய மதத்தைப் பின்பற்றி நிற்பவர்கள் எவரும் இப்போது காணப்படவில்லையாகையாலும் அவை பற்றிய விளக்கம் இங்கு செய்யப்படவில்லை. ''இதுபோலவே மற்றுமுள்ள கீ3தாபா4ஷ்யங்களிலும் இனிவருங்காலத்தில் வரப்போகும் கீ3தா பா4ஷ்யங்களிலும் யாமுநாசார்யரும் ஸ்ரீகீ3தாபா4ஷ்யகாரரும்காட்டிய அர்த்தங்களுக்கு மாறுகவுள்ள அர்த்தங்களினால் விளையும் மயக்கங்களும் இதே ரீதியில் பரிஹரிக்கத்தக்கவை'' என்றும், ''கீ3தா பா4ஷ்யத்திற்கு நெருங்கியிருக்கும் சில யோஜநா பே4த3ங்கள் பொருட்படுத்தாமலிருக்கத் தக்கவை'' என்றும் ஸ்ரீதேசிகன் தாத்பர்ய சந்த்ரிகையில் அருளினார்.

இறுதியாக, சரமஶ்லோக கீ3தாபா4ஷ்ய தாத்பர்ய சந்திரிகையில் காணப்படும் பின்வரும் ஸாரமான ஸ்ரீஸூக்தி அனைவராலும் அநுஸந்திக்கத்தக்கது ''பிஶாச ரந்தி தே3வகு3ப்த ஶங்கர யாத3வப்ரகாஶ பா4ஸ்கர நாராயணார்ய யஜ்ஞஸ்வாமி ப்ரப்4ருதிபி4: ஸ்வம் ஸ்வம் மதம் ஆஸ்தி2தை: பரஶ்ஶதை: பா4ஷ்யக்ருத்3பி4: அஸ்மத் ஸித்3தா4ந்த தீர்த்த2கரைஶ்ச ப4க3வத்3 யாமுநாசார்ய பா4ஷ்யகாராதி3பி4: அவிகீ3தபரிக்3ருஹீதோऽயமத்ரஸாரார்த்த2:—'ப4க3வாநேவ பரம் தத்த்வம். அநந்ய ஶரணை: யதா2தி4காரம் தத்தே3க—ஆஶ்ரயணம் பரமத4ர்ம:' இதி'' [1 பிஶாசர், 2 ரந்தி, 3 தே3வகு3ப்தர், 4 ஶங்கரர், 5 யாதவப்ரகாசர் 6 பா4ஸ்கரர், 7 நாராயணார்யர், 8 யஜ்ஞஸ்வாமி முதலான பல மதங்களைச் சேர்ந்த நூற்றுக்கணக்கான கீ3தாபா4ஷ்யகாரர்களாலும், நம்முடைய ஸித்3தா4ந்தத்தை நிலைநாட்டிய ப4க3வத்யாமுநாசார்யர், ஸ்ரீபா4ஷ்யகாரர் முதலானவர்களாலும் ஒருமுகமாக ஏற்றுக்கொள்ளப்பட்ட மேலான ஸாரார்த்த2ம் இதுவே; அதாவது:- ''ப4க3வானாகிற நாராயணனே பரதத்வம்; வேறு தஞ்சமில்லாத அனைவருக்கும் அவரவர் அதி4காரத்துக்குத்தக்கபடி அவனை ஆஶ்ரயிப்பதே மேலான த4ர்மம்'' என்பது.] 66.

5-11-09.
24-2-2011

इदं ते नातपस्काय नाभक्ताय कदाचन ।
न चाशुश्रूषवे वाच्यं न च मां योऽभ्यसूयति ॥ ६७ ॥

67. இத$_3$ம் தே நாதபஸ்காய நாப$_4$க்தாய கத$_3$ாசந |
ந சாஶுஶ்ருஷவே வாச்யம் ந ச மாம்
யோऽப்$_4$யஸூயதி ||

இத$_3$ம்— (பரமரஹஸ்யமாக என்னால் சொல்லப்பட்ட) இந்த ஶாஸ்த்ரம், தே — உன்னாலே. அதபஸ்காய ந (வாச்யம்) – தவம் செய்யாதவனுக்குச் சொல்லப்படலாகாது; அப$_4$க்தாய — (என்னிடமும் உன்னிடமும்) ப$_4$க்தியில்லாதவனுக்கு. கத$_3$ாசந ந (வாச்யம்)— ஒருபோதும் சொல்லப்படலாகாது; அஶுஶ்ருஷவே ச — கேட்பதில் விருப்பமில்லாதவனுக்கும், ந (வாச்யம்)— சொல்லப்படலாகாது; மாம் — என்னை, ய:— எவனொருவன், அப்$_4$யஸூயதி — துவேஷிக்கிருனே (அவனுக்கும்), ந வாச்யம் — சொல்லப்படலாகாது.

---

67. இப்பொருளை யில்லாத் தவத்தார்க்கு மென்னிடையின்
மெய்ப்பொருளாம் பத்தியிலா வீணற்குஞ்— சொப்
படவே
யிச்சையுடன் கேளாற்கு மென்னைப் பொருதாற்கு
மச்சமுற நீயுரையே லாங்கு

இப்பொருளை— இங்கு நான் உரைத்த இந்த சாஸ்த்ரமாகிற ரஹஸ்யார்த்த$_2$த்தை, இல்லாத் தவத்தாற்கும்—தவம் செய்யாதவனுக்கும், என்னிடையில் — என்விஷயத்தில், மெய்ப்பொருளாம் பத்தியிலா வீணற்கும் — உண்மையான பக்தியில்லாத அஸத்துக்கும், சொப்படவே இச்சையுடன் கேளாற்கும் — நிறைந்த விருப்பத்துடன் கேளாதவனுக்கும். என்னைப் பொருதாற்கும் — என்னைத் துவேஷிப்பவனுக்கும், ஆங்கு அச்சமுற — இவ்வுலகில் பயம் விளையும்படியாக, நீ உரையேல் — நீ உபதேசித்துவிடாதே.

भा ॥ इदं ते परमं गुह्यं शास्त्रं मयाऽऽख्यातम्, अतपस्काय— अतप्ततपसे त्वया न वाच्यम्; त्वयि वक्तरि मयि चाभक्ताय कदाचन

---

67. மூலையிலே கிடந்தபொருள்களை முற்றத்தில் வைப்பாரைப் போலே அதிரஹஸ்யமான வேதார்த்தங்களை நீசர்கள் நிறைந்த யுத்த பூமியிலே இதுவரையில் அர்ஜுனனுக்கு உபதேசித்தான், அவ னிடமுள்ள வ்யாமோஹத்தாலும திரௌபதிக்கு நேர்ந்த அவ மானத்தைப் பொறுத்திருக்க மாட்டாமையாலும், பரமரஹஸ்ய மான சரமஶ்லோகத்தைச் சொன்னவுடன் 'என்ன காரியம் செய்துவிட்டோம்' என்று பதறி, 'நீ இவ்வர்த்தத்தை அநதி₄காரி களுக்கு (தகுதியில்லாதவர்களுக்கு) உபதேசிக்காமல் இருப்பா யாக' என்கிறுன் கண்ணன் இந்த ஶ்லோகத்தில்.

(இத₃ம்) "இதி தே ஜ்ஞாநம் ஆக்₂யாதம் கு₃ஹ்யாத் கு₃ஹ்ய தரம் மயா" [63] என்கிறபடியே பரமரஹஸ்யமாய் என்னல் சொல்லப்பட்டதான இந்த சாஸ்திரம். (தே) த்வயா என்று வேற் றுமையை மாற்றிக்கொண்டு 'உன்னுல்' என்று பொருள் கொள்ளவேண்டும். (அதபஸ்காய ந வாச்யம்) தவத்தைப் பரி பரிபூர்ணமாகச் செய்யாதவனுக்குச் சொல்லலாகாது, தவத்தைத் தொடங்கி இடையில் நின்று விட்டாலும் அவனுக்குத் தகுதியில்லை. "செய்த வேள்வியர்" [திருவாய் 5—7—5] என்கிறபடியே தவம் செய்து முடித்தவராய் இருக்க வேண்டுமென்று கருத்து. (அப₄க் தாய கதா₃சந ந வாச்யம்) உபதேசிக்கும உன்னிடமோ, உபதேச விஷயமான என்னிடமோ ப₄க்தியில்லாதவனுக்கு ஒருபோதும் சொல்லலாகாது.

யஸ்ய தே₃வே பரா ப₄க்தி: யதா₂ தே₃வே ததா₂ கு₃ரௌ ।
தஸ்யைதே கதி₂தா ஹ்யர்த்தா₂: ப்ரகாஶந்தே மஹாத்மந: ॥

[ஶ்வேதா 6--23] [எவனுக்குப் பரமாத்மாவிடம் மேலான ப₄க்தி யுள்ளதோ அதுபோலவே ஆசார்யனிடமும் ப₄க்தியுள்ளதோ அந்த மஹாத்மாவுக்கே ஆசார்யனுல் உபதேசிக்கப் பட்ட அர்த்தங்கள் பிரகாசிக்கும்] என்று சொல்லப்பட்டதன்றோ. (கதா₃சந ந வாச்யம்) 'ஒருபோதும் சொல்லலாகாது' என்று கூறுகையாலே, 'தவம் செய்தவனுயிருந்தாலும், என்னிடமும் உன் னிடமும் பக்தியில்லாதவனுக்கு ஒருபோதும் சொல்லக்கூடாது' என்னும் கருத்து வெளிப்படுகிறது. நிஷேத₄த்தைத் தெரிவிக்கும்

न वाच्यम्, तप्ततपसे चाभक्ताय न वाच्यमित्यर्थः। न चाशुश्रूषवे-
भक्तायाप्यशुश्रूषवे न वाच्यम्। न च मां योऽभ्यसूयति — मत्स्वरूपे

---

'நஞ்' தனித்தனியாக இடப்படுகையாலே ஒவ்வொன்றும் மிகவும் தவிர்க்க வேண்டியவை என்றும், வரிசைக்கிரமத்தாலே முன்னதற்கு மேல் பின்னது மிகவும் தவிர்க்க வேண்டியது என்றும் உணர்த்தப் படுகிறது. இவ்விரண்டைக் காட்டிலும் மிகவும தவிர்க்க வேண்டியதை அடுத்தபடி கூறுகிறான். (ந ச அஶுஶ்ருஷவே வாச்யம) தவம் செய்த பக்தனாயிருந்தாலும் கேட்பதில் விருப்பமில்லாதவனுக்குச் சொல்லவே கூடாது.

"ஸ த்வம் அக்₃நிம் ஸ்வர்க்₃யமத்₄யேஷி ம்ருத்யோ
ப்ரப்₃ரூஹி தம் ஶ்ரத்₃த₃தா₄ய மஹ்யம் |
ஸ்வர்க₃லோகா அம்ருதத்வம் ப₄ஜந்த ஏதத்₃
த்₃விதீயேந வ்ருணே வரேண ||

[கடோபநிஷத் 1-1-13]

[யமராஜனே! மோக்ஷத்தைப் பயனாக உடைய அக்₃நிவித்யையை நீ அறிவாய். அதைக் கேட்பதில் விருப்பமுள்ள எனக்கு அதை உபதேசிப்பாயாக, மோக்ஷலோகம் செல்கிறவர்கள் மரணமற்ற நிலையான முக்தியை அடைகிறார்களன்றோ, இதை இரண்டாவது வரத்தால் நான் வேண்டுகிறேன்.] என்று கேட்பதில் விருப்பமுள்ளவனுக்கே மோக்ஷவித்யையை உபதேசிக்கவேண்டும என்று உபநிஷத்திலும் உணர்த்தப்பட்டதன்றோ, இம்மூவரைக் காட்டிலும் மிகவும் தவிர்க்கவேண்டியவனை நாலாவது பாதத்தாலே கூறுகிறான், (ந ச மாம் ய: அப்₄யஸூயதி) "என்னுடைய ஸ்வரூபமும், என் செல்வமும், என் குணங்களும் செவிப்பட்டால் எவன் அவற்றிலே குற்றம் காண்கிறானோ அவனுக்குச் சொல்லவே கூடாது" என்று கருத்து. 'மாம்' என்னும் பதத்தாலே ஸ்வரூப ரூப குண விபூதிகள் அனைத்தையும் உணர்த்துகிறான். ஶ்லோகத்தின் முற்பகுதியில் முந்தின மூவரையும் கூறினது போலே "ந ச அப்₄யஸூயதே" என்று சொல்லாமல் வேற்றுமையை மாற்றி "ய: மாம் அப்₄யஸூயதி (தஸ்மை) ந வாச்யம்" [எவன் என்னிடம் பொறாமை கொள்கிறானோ (அவனுக்குச்) சொல்லக்கூடாது] என்று கூறியது—முந்தியவர்களைக் காட்டிலும் இவனை முற்றிலும் தவிர்க்க வேண்டுமென்று காட்டுவதற்

मदैश्वर्ये मद्गुणेषु च कथितेषु यो दोषमाविष्करोति, न तस्मै वाच्यम् । असमानविभक्तिनिर्देशस्तस्यात्यन्तपरिहरणीयताज्ञापनाय ॥६७॥

காக. குணங்களையே தோஷங்களாக நினைக்கும் மனநிலையே அஸூயை எனப்படுகிறது. அந்த மனநிலையை உடையவனுக்கு என் பெருமையைச் சொல்லும் இந்த சாஸ்த்ரத்தைக் கூறினால் அவன் மேலும் மேலும் அபசாரத்தைச் செய்து ஆத்ம நாசத்தை அடைவானாகையாலே அவனைக் குறித்து இந்த சாஸ்திரத்தை உபதேசம் செய்வதை மிகவும் தவிர்க்கவேண்டும் என்கிறான். தன் பெருமையை விவரிக்கும் ஒன்பதாம் அத்தியாயத்தைத் தொடங்கும் போதே "இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாமி அநஸூயவே" [9-1] [இந்த அதிரஹஸ்யமான அறிவை என் விஷயத்தில் பொருமையற்ற உனக்கு நன்கு கூறுகிறேன்] என்று அர்ஜுனனுக்கு அஸூயை இல்லாமையையே தகுதியாகக் கூறினானன்றோ. 'அஸூயகாய அந்ருஜவே' [பார மோக்ஷ 246-17] [பொருமையுள்ளவனுக்கும் நேர்மையில்லாதவனுக்கும் சொல்லக்கூடாது.] 'அஸூயகாய மாம் மாதா:' [மநு 2-114] [பொருமையுள்ளவனுக்கு (வித்யையாகிற) என்னை உபதேசித்து விடாதே (என்று வித்யை கூறிற்று)] என்று பொருமையுள்ளவனுக்கு எதையுமே உபதேசிக்கக்கூடாது என்று சொல்லப்பட்டிருக்கையாலே, பரமாத்மாவிடம் பொருமையுள்ளவனுக்கு அவனைப்பற்றி உபதேசிக்கக்கூடாது என்பது சொல்லாமலே விளங்கும். 'சொல்லக்கூடாது' என்று தவிர்க்கையாலே இத்தகையவர்களுக்கு உபதேசித்தால் பாபம் விளையும் என்பதும் உணர்த்தப்படுகிறது. 'மேதாவிநே தபஸ்விநே வா' [(இந்த நல்ல அர்த்தங்களை) மிகுந்த அறிவுடையவனுக்கோ மிகுந்த தவம் செய்தவனுக்கோ உபதேசிக்கவேண்டும்] என்று சாஸ்திரங்களில் உபதேசத்திற்குத் தகுதியுள்ளவர்கள் மேதாவியாகவோ தபஸ்வியாகவோ இருக்கவேண்டும் என்று சொல்லப்பட்டது; பக்தனாகவோ பொருமையற்றவனாகவோ இருக்கவேண்டுமென்று சொல்லப்படவில்லை. இது மோக்ஷசாஸ்திரமாகையாலே "மேதாவியாகவும் தபஸ்வியாவும் இருந்தாலும் பக்தி வைராக்யம் முதலான நற்குணங்கள் அற்றவனுக்குச் சொல்லக்கூடாது. பக்தி வைராக்யம் முதலான எல்லா குணங்களுமிருந்தாலும் பரம புருஷனிடம் பொருமையுள்ளவனுக்குச் சொல்லவே கூடாது" என்று நியமிக்கிறான் எம்பெருமான்.

य इदं परमं गुह्यं मद्भक्तेष्वभिधास्यति ।
भक्तिं मयि परां कृत्वा मामेवैष्यत्यसंशयः ॥ ६८ ॥

68. ய இத3ம் பரமம் கு3ஹ்யம் மத்3ப4க்தேஷ்வபி4தா4ஸ்யதி ।
பக்திம் மயி பராம் க்ருத்வா மாமேவைஷ்யதி
அஸம்ஶய: ॥

ய:—எவனொருவன், பரமம் கு3ஹ்யம் இத3ம் —மேலான ரஹஸ்யமான இந்த ஶாஸ்த்ரத்தை, மத்3ப4க்தேஷு —என்னுடைய ப4க்தர்களிடம், அபி4தா4ஸ்யதி — வியாக்கியானம் செய்கிருனோ (அவன்), மயி—என்னிடத்தில், பராம் ப4க்திம் க்ருத்வா—மேலான ப4க்தியைச் செய்து, மாம் ஏவ ஏஷ்யதி — என்னையே அடைகிருன்; அஸம்ஶய: — இதில் ஐயமில்லை.

---

68. இத்தகையின் மேலா மறைபொருளை யேவனென்
பத்தரிடை நின்று பரிந்துரைக்கு - மத்தகையோன்
அன்பாற் பரமமாம் பத்தியெய்தி யையமற
வின்பா லென்னையடையு மேய்ந்து.

இத்தகையின்—இப்படிப்பட்ட, மேலாம் மறைபொருளை —மேலான ரஹஸ்யார்த்தத்தை, ஏவன்—எவனொருவன், என் பத்தரிடை நின்று பரிந்துரைக்கும்—என்னுடைய பக்தர்களிடம் அவர்கள்நெஞ்சில் பதியும்படி வியாக்யானம் செய்கிருனோ, அத்தகையோன்—அப்படிப்பட்ட பெருமையையுடையவன், அன்பால் பரமமாம் பத்தி எய்தி—(என்னிடம்) அன்பில் இதற்கு மேற்பட்டதில்லை எனத்தக்க பரம ப4க்தியை அடைந்து, ஐயமற - சந்தேகமில்லாமல், இன்பால் ஏய்ந்து—பேரானந்தம் பொருந்தப்பெற்று, எனை அடையும்—என்னை அடைவான்.

मा । इदं परमं गुह्यं मद्भक्तेषु योऽभिधास्यति—व्याख्यास्यति

68 இந்த ஶ்லோகத்தில் — தகுதியுள்ளவர்களுக்கு இந்த சாஸ்திரத்தை அவசியம் பொருளுடன் உபதேசிக்கவேண்டுமென்றும், அப்படி உபதேசிப்பவனுக்கு மோக்ஷபலமே ஸித்திக்குமென்றும் கூறுகிறுன். (பரமம் குஹ்யம் இதம்) மேலான ரஹஸ்யமான இந்த சாஸ்திரத்தை, (ய: மத்பக்தேஷு அபிதாஸ்யதி) எவனொருவன் என் பக்தர்களிடம் வியாக்கியானம் செய்கிருனே: 'ஸ:' (அவன்) என்பதைச் சேர்த்துக்கொள்ள வேண்டும். (மத்பக்தேஷு) என் பக்தர்களிடம்.

ந சலதி நிஜவர்ணதர்மதோ யஸ் ஸமமதிராத்ம ஸுஹ்ருத்விபக்ஷபக்ஷே ।
ந ஹரதி நச ஹந்தி கிஞ்சித் உச்சை: ஸிதமநஸம் தமவேஹி விஷ்ணுபக்தம் [ஸ்ரீவிஷ்ணுபுராணம் 3-7-20]

[எவனொருவன் தன்னுடைய வர்ண தர்மத்தை மீருமலிருக்கிருனே, தன் நன்மையையும், நண்பர்களின் நன்மையையும், பகைவர்களின் நன்மையையும் ஒக்க எண்ணுகிருனே, பிறர் பொருள் எதையும் கவராதிருக்கிருனே, எவ்வுயிரையும் நலியாதிருக்கிருனே, மிகவும் வெள்ளைமனம் உடையவனுயிருக்கிருனே அவனை விஷ்ணு பக்தனென்று அறிவாயாக] என்று தொடங்கி யமதர்மன் சொல்லியிருக்கும் பக்தலக்ஷணத்தையுடையவர்களிடமிருந்து. முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட தவம் செய்யாதவனுயிருக்கை, கேட்பதில் விருப்பமில்லாதவனுயிருக்கை, பொருமையுள்ளவனுயிருக்கை முதலான துர்க்குணங்கள் மிகவும் விலகி நிற்குமாகையாலே, 'என் பக்தர்களிடம்' என்று மாத்திரம் இங்கு சொல்லப்பட்டது. (அபிதாஸ்யதி) பொருளுடன் வியாக்கியானம் செய்கிருனே. "ஶ்ராவயேச் சதுரோ வர்ணாந்" [பாரத மோக்ஷ 335 – 48] [(இதிஹாஸபுராணங்களை) நாலு வர்ணங்களையும் கேட்கச் செய்யவேண்டும்] என்கிறபடியே இதிஹாஸபுராணங்களைக் கேட்பதற்கு அனைவருக்குமே தகுதி உண்டாயினும், மோக்ஷ ஶாஸ்த்ரமான இந்த கீதையைப் பொருளுடன் கேட்பதற்கு என் பக்தர்களே முக்கியமான அதிகாரிகள் என்று கருத்து. "அபிதாஸ்யதி" என்கையாலே பொருளுடன் வியாக்கியானம்செய்ய வேண்டுமென்று உணர்த்தப்படுகிறது. இப்படி வியாக்கியானம்

सः मयि परमां भक्तिं कृत्वा मामेवैष्यति; न तत्र संशयः ॥६८॥

नच तस्मान्मनुष्येषु कश्चिन्मे प्रियकृत्तमः ।
भविता नच मे तस्मादन्यः प्रियतरो भुवि ॥ ६९ ॥

5-11-09, 24-2-11

69. ந ச தஸ்மாந் மநுஷ்யேஷு கஶ்சிந்மே ப்ரியக்ருத்தம: ।
ப₄விதா ந ச மே தஸ்மாத₃ந்ய: ப்ரியதரோ பு₄வி ॥

பு₄வி — இவ்வுலகில், மநுஷ்யேஷு — மனிதர்களில், தஸ்மாத் அந்ய: கஶ்சித — இந்த சாஸ்திரத்தை வியாக்கியானம் செய்பவனைக் காட்டிலும் வேறொருவன், மே — எனக்கு, ப்ரியக்ருத்தம: ந ச — மிகவும் இனியது செய்பவன் இருந்ததில்லை, தஸ்மாத் அந்ய: — அவனைக் காட்டிலும் வேறொருவன், மே — எனக்கு, ப்ரியதர: ப₄விதா நச — வருங்காலத்தில் மிகவும் இனியவன் உண்டாகப்போவதுமில்லை.

---

செய்பவனுக்கு விளையும் பலனை ஶ்லோகத்தின் பிற்பாதியிலே விவரிக்கிறான். (ப₄க்திம் மயி பராம் க்ருத்வா) "இந்த ஶாஸ்த்ரத்தின் பொருளை உள்ளபடி உணர்ந்து இதைப் பிறர்க்கும் உபதேசிப்பவனுக்கு 'ஸர்வேஶ்வரனாகிற நானே அனைத்துயிர்க்கும் அடையத் தக்க ப்ராப்யமாகவும் அடையும் வழியான ஸாத₄னமாகவும் இருப்பவன்' என்னும் மஹாத்மாவான ஜ்ஞானியின் ஜ்ஞானமும், மோக்ஷத்தையும் பயனாகக் கருதாத ஸ்வயம்ப்ரயோஜனமான ப₄க்தியும் விளைந்து விடுமாகையாலே, என்னுடைய நிர்ஹேதுக க்ருபையால் அவனுக்குப் பரப₄க்தி பரஜ்ஞான பரமப₄க்திகளை நான் இந்த ஜன்மத்திலேயே விளைத்து விடுவேன்" என்றும், "அவன் கர்மஜ்ஞான ப₄க்தியோகங்களைப் பல ஜன்மங்களில் மிகுந்த சிரமப்பட்டு அனுஷ்டிக்கவேண்டியதில்லை" என்றும் கருத்து. (மாம் ஏவ ஏஷ்யதி) என்னையே அடைகிறான். இவ்வளவு பரிபக்குவம் அடைந்தவன் ஐஶ்வர்ய கைவல்யங்களாகிற தாழ்ந்த பலன்களை ஒருபொருளாகக் கருதமாட்டானாகையாலே அவன் என்னையே அடைவான் என்று கருத்து. (அஸம்ஶய:) இதில் ஐயமில்லை என்று ஸம்ஶயத்தைத் தவிர்ப்பதாகவும் கொள்ளலாம். "அஸம்ஶய: ஏஷ்யதி" என்று கூட்டி, "எந்த ஸம்ஶயமும் அற்றவனாய் என்னையே அடைவான்" என்றும் பொருள் கொள்ளலாம். 68

भा ॥ सर्वेषु मनुष्येभ्यःपूर्वं तस्मादन्यो मनुष्यो मे न

69. மானிடரி லாங்கவனின் மற்றொருவ னென் னுகப்பிற்
றானியல்வு மிக்கவவன் றானில்லை — மேனிகழு
மெக்காலு மேதினியி லில்லையா மென்னுகப்பில்
தக்கார்வ மிக்கினியோன் றான்.

மேதினியில் - இவ்வுலகிலுள்ள, மானிடரில் — மனிதர்களில். ஆங்கு அவனின் மற்றொருவன் — இந்த சாஸ்திரத்தை வியாக்கியானம் செய்பவனைக் காட்டிலும் வேறொருவன், என் உகப்பில் தான் இயல்வு மிக்க அவன் தான் இல்லை — எனக்கு மிகவும் இனியது செய்பவன் ஒருவனும் இல்லை. மேல் நிகழும் எக்காலும் — மேல் வரும் எக்காலத்திலும், என் உகப்பில் தக்கார்வம் மிக்கு இனியோன் தான் — என்னிடம் அன்புசெய்வதில் ஈடுபட்டு எனக்கு மிகவும் இனியவனாயிருப்பவன், இல்லையாம் — இல்லை

69. "இந்த சாஸ்திரத்தை வியாக்கியானம் செய்பவன் என்னிடம் பரமபக்தியை அடைந்து, என்னையே அடைவான் என்பதில் ஐயமில்லை" என்றான் சென்ற ஶ்லோகத்தில். "கர்ம ஜ்ஞாந பக்தியோகங்களை அனுஷ்டித்த பரமவிரக்தர்களுக்குக்கிடைக்கக் கூடிய இப்பலன் இந்த சாஸ்திரத்தை பக்தர்களுக்குத் தெரிவிப்பவனுக்குக் கிடைத்து விடுமோ? இது பொருந்துவதாயில்லையே" என்னும் ஐயம் எழ, 'இந்த உபாயங்களை அனுஷ்டிக்காமலே மஹாத்மாவான ஜ்ஞானியின் மனநிலையை இந்தசாஸ்திரத்தை பக்தர்களுக்குத் தெரிவிப்பதாலேயே பெற்றுவிடும் அவனைக் காட்டிலும் எனக்கு இனியது செய்பவனோ இனியவனோ முக்காலத்திலும் வேறொருவன் இல்லையாகையாலே இது பொருந்தியதே" என்று கூறி, சென்ற ஶ்லோகத்தை விளக்குகிறான் இந்த ஶ்லோகத்தில். (புவி) இந்த லீலாவிபூதியில். (மநுஷ்யேஷு) சிந்தனை செய்யும் பேறு பெற்ற எல்லா மனிதர்களுக்குள்ளும். (தஸ்மாத் அந்ய: மே ப்ரியக்ருத்தம: கஶ்சித் ந ச) அவனைக் காட்டிலும் எனக்கு இனியது செய்பவன் எவனும் இருந்ததில்லை. ஆகையால் எனக்கு இனியவனும் வேறொருவன் இருந்ததில்லை என்று

कश्चित्प्रियकृत्तमोऽभूत्; इत उत्तरं च न भविता । अयोग्यानां प्रथम-

---

கருத்து. (தஸ்மாத் அந்ய: மே ப்ரியதர: ந ச ப$_4$விதா) இப்படி எனக்கு மிகவும் இனியது செய்பவனுகையாலே எனக்கு இனியவனுயிருப்பவன் அவனைக்காட்டிலும் வருங்காலத்திலும் வேறு எவனும் இல்லை. சென்ற காலத்தையும் வருங்காலத்தையும் சொன்னதாலே, நிகழ்காலத்தையும் சொன்னதாகத் தன்னடையே தேறும். இப்படி முக்காலத்திலும் எனக்கு மிகவும் இனியது செய்து மிகவும் இனியனுயிருப்பவன் வேறு எவனுமில்லையாகையாலே 'யமேவைஷ வ்ருணுதே தேந லப்$_4$ய:' [கட$_2$ 1-2-23] [எவனை இந்தப் பரமாத்மா தானே வரிக்கிருனே அவனுலேயே இப்பரமன் அடையத்தக்கவன்] என்கிறபடியே, நானே அவனை வரிக்கிறேனுகையாலே இவ்வர்த்தத்தில் ஐயமுற இடமே இல்லை என்று கருத்து "ப்ரியக்ருத்தம:" [இனியது செய்பவரில் மிகமிகச் சிறந்தவன்] என்றும், "ப்ரியதர:" [மிக இனியவன்] என்றும் தரதமப்ரத்யயங்களைப் பயன் படுத்தி, எதிர்மறையாலே இவனைக்காட்டிலும் எனக்கு மிகமிக இனியது செய்பவனே, மிக இனியவனே வேருெருவன் இல்லை என்று கூறுகையாலே "ஸ ச மம ப்ரிய:" [கீதை 7-17] என்று சொல்லப்பட்ட உபாஸகஜ்ஞானியைக் காட்டிலும் இவன் சிறந்தவன் என்றும், "ஸ மஹாத்மா ஸுதுர்லப$_4$:" [கீதை 7-19] [அந்த மஹாத்மா எனக்கும் கிடைத்தற்கரியவன்] என்று கூறப்பட்ட மஹாத்மாவான ஜ்ஞானியே இவன் என்றும் உணர்த்தப்படுகிறது. அதனுலேயே பா$_4$ஷ்யகாரரும் சென்ற ஸ்லோகத்தில் "பராம் ப$_4$க்திம்" என்று மூலத்தில் உள்ள பதங்களுக்கு "பரமாம் ப$_4$க்திம்" என்று உரையிடுவதன் மூலம் இவன் பரமப$_4$க்தியை இப்பிறவியிலேயே அடையும் மஹாத்மாவாவான் என்று உணர்த்தினர்.

இந்த ஸ்லோகத்தின் முற்பாதியை இறந்தகால விஷயமாகவும் பிற்பாதியைவருங்காலவிஷயமாகவும் கொள்ளாமல், ஸ்லோகம் முழுவதையும் வருங்கால விஷயமாகவே பொருள்கொள்ள இடமிருந்தபோதிலும், முக்காலத்திலும் இவனைவிட இனியவன் இல்லை என்று கொள்வதிலுள்ள பொருட்சுவையை நோக்கி, பா$_4$ஷ்யத்தில் இவ்வாறு பொருள் சொல்லப்பட்டது

मुपादानं योग्यानामकथनादपि तत्कथनस्यानिष्टतमत्वात् ॥ ६९ ॥

---

இவ்விடத்தில் ஒரு கேள்வியெழுகிறது. சாஸ்திரத்தைக் கேட்பதற்குத் தகுதியுடையவர்கள் யார் என்று சாஸ்திரத்தின் இறுதியில் சொல்லுவதே உசிதமாகையாலே அதைச் சொன்னாலே கேட்பதற்குத் தகுதியில்லாதவன் யாரென்று விளங்கிவிடும். அன்றிக்கே, ப்ரத₄மனாக தகுதியுள்ளவனைக் கூறியபின், தகுதியில்லாதவன் இன்னாரென்று கூறுவதிலும் குறையில்லை. இங்கு முதலில் தகுதியில்லாதவனைக் கூறிவிட்டு பிறகு தகுதியுள்ளவனைக் கூறுவதற்குக் கருத்தென்ன என்பது அக்கேள்வி. இதற்கு பதில் பின்வருமாறு:—

தஸ்மை ஸ வித்வாந் உபஸந்நாய ஸம்யக்
ப்ரஸாந்த சித்தாய ஸமாந்விதாய ।
யேநாக்ஷரம் புருஷம் வேத₃ ஸத்யம்
ப்ரோவாச தாம் தத்த்வதோ ப்₃ரஹ்ம வித்₃யாம் ॥
[முண்ட₃க 1—2—13]

[அந்த ப்₃ரஹ்ம ஜ்ஞானியான ஆசாரியன் தன்னிடம் உரிய முறையில் உபதேசம் பெற அணுகியவனாய், உள்வெளி இந்த்ரியங்களை அடக்கியவனான சிஷ்யனுக்கு ஸ்வரூபஸ்வபாவங்களில் விகாரமற்றதான ப்₃ரஹ்மத்தை அறிவிக்கும் ப்₃ரஹ்மவித்₃யையை உள்ளபடி உபதேசிக்க வேண்டும்] என்று உபநிஷத்வாக்கியம் ஆசார்யன் மோக்ஷசாஸ்திரத்தை உபதேசிக்கவேண்டுமென்று விதிக்கையால், சிஷ்யன் எவனுக்கும் ஓர் ஆசார்யன் உபதேசிக்கவில்லையென்றால் அது பரமபுருஷனுக்கு அநிஷ்டமேயாகும். ஆனாலும் தகுந்த சிஷ்யன் வந்து கேட்காத காரணத்தாலே ஆசார்யன் உபதேசிக்காமல் போவதற்கும் இடமுண்டு. ஆனால் தகுதியில்லாதவர்களுக்கு இதை உபதேசித்து விட்டால் அவர்கள் இந்த சாஸ்த்ரத்தில் நம்பிக்கையில்லாதிருப்பவராயிருக்கையாலே இதை தூஷிப்பதிலும், (இதரபாஷ்யகாரர்களைப்போலே) தவறுகப்பொருள் கொள்ளுவதிலும் இறங்கி, தங்களுக்கும் பிறர்க்கும் ஆத்ம நாசத்தை விளைத்து விடுவார்கள். இந்தப் பேராபத்திற்கு அஞ்சியே சாஸ்திரத்தைக் கற்பதற்குத் தகுதியுள்ளவர்களுக்கு உபதேசிக்கும்படி கூறுவதற்கு முன், தகுதியில்லாதவனுக்கு உபதேசித்துவிடாதே என்று கூறுகிறான் என்று கண்டுகொள்வது.

अध्येष्यते च य इमं धर्म्यं संवादमावयोः।
ज्ञानयज्ञेन तेनाहमिष्टस्स्यामिति मे मतिः ॥ ७० ॥

70. அத்₃யேஷ்யதே ச ய இமம் த₄ர்ம்யம் ஸம்வாத₃-
மாவயோ: ।
ஜ்ஞாந யஜ்ஞேந தேநாஹமிஷ்டஸ்ஸ்யாமிதி மே மதி: ॥

ய:—எவன், ஆவயோ: — நம்மிருவர்களிடையே நிகழ்ந்த, இமம் த₄ர்ம்யம் ஸம்வாத₃ம் — மோக்ஷோபாயங்களைப் பற்றிய இந்த ஸம்வாத₃ரூபமான சாஸ்திரத்தை, அத்₃யேஷ்யதே— ஓதுகின்றானோ, தேந - அவனால், ஜ்ஞாந யஜ்ஞேந அஹம் இஷ்ட: ஸ்யாம — இந்த சாஸ்திரத்தில் சொல்லப்படும் ஜ்ஞாந யஜ்ஞத்தினால் நான் ஆராதிக்கப் பட்டவனாவேன், இதி - என்பது மே மதி: — என் அபிப்பிராயமாகும்.

---

70 நாமிருவர் நின்றியம்பு நல்லறஞ்சேர் இக்கீதை
பாமருவி யோதும் பரிவனெனைத் தூமருவு
நெஞ்சறிவா மெச்சத்தா னேரே யிறைஞ்சினனென்
றெஞ்சலற யான்மதிப்ப னிங்கு

நாம் இருவர் நின்று இயம்பும் நல்லறம் சேர் இக்கீதை— நாம் இருவரும் நின்று போர்க்களத்தில் பேசிக்கொண்டதாய், மோக்ஷோபாயங்கள் நிறைந்ததான இந்த கீதையின், பா மருவி ஓதும் பரிவன்— பாவோகங்களை மனமொன்றி ஓதும் பரிவுடையவன், தூமருவு நெஞ்சறிவாம் எச்சத்தால் — தூய்மை பொருந்திய ஜ்ஞாந யஜ்ஞத்தாலே, எனை — என்னை, நேரே இறைஞ்சினன் என்று — நேரே ஆராதித்தான் என்று, யான் - நான், இங்கு — இவ்வுலகில், எஞ்சல் அற மதிப்பன் — குறைவற எண்ணுவேன்.

भा ॥ य इममावयोर्धर्म्यं संवादमध्येष्यते, तेन ज्ञानयज्ञेनाहमिष्टः

70. கீதையை அர்த்தத்துடன் உபதேசிப்பவனுக்குப்பலன் சொல்லப்பட்டது. ஓர் ஆசார்யனிடமிருந்து இந்த சாஸ்திரத்தை அர்த்தத்தோடு கேட்பவனுக்கு என்ன பலன் என்பதை இந்த ஸ்லோகத்திலும், ஸப்தத்தை மாத்திரம் கேட்பவனுக்கு என்ன பலன் என்பதை அடுத்த ஸ்லோகத்திலும் கூறுகிறான். (யஃ ஆவயோஃ இமஂ தர்ம்யம் ஸம்வாதம் அத்யேஷ்யதே) எவனொருவன் நம்மிருவர்க்கிடையே நிகழ்ந்த மோக்ஷோபாயங்களைப்பற்றிய இந்த ஸம்வாதத்தை ஓதுகிறானோ; 'ச' காரம் சென்ற இரு ஸ்லோகங்களில் சொல்லப்பட்ட வியாக்கியானம் செய்பவனைக் காட்டிலும் அர்த்தத்தோடு இதை ஓதுபவன் வேறானவன் என்று காட்டுகிறது. இங்கு க்ருஷ்ணார்ஜுன ஸம்வாதமாகிற இந்த கீதை இப்போதுதான் முடிந்திருக்கிறது. இனி, நெடுங்காலத்திற்குப் பிறகு இதை வியாஸர் ஏடுபடுத்திய பிறகே இதை ஓதுவதற்கு இயலும். அப்படி வருங்காலத்தில் ஓதுபவர்களை, முக்காலமும் அறிந்தவனான எம்பெருமான் இங்கு சொல்லுவதாகத் தோன்றும். ஆனால் பாரதத்தின் ஸ்லோகங்களை ஆராய்ந்தால், த்ருதராஷ்ட்ரன் முதலானவர்கள் உண்டாவதற்கு முன்பே, எம்பெருமானுடைய அருளாலே திவ்ய ஜ்ஞானத்தைப்பெற்ற வேதவ்யாஸர் பாரதத்தை இயற்றிவிட்டார் என்பதும், சிஷ்யர்களுக்கு உபதேசித்துவிட்டாரென்றும் விளங்கும்.

நாரதோ'ஸ்ராவயத் தேவாந் அஸிதோ தேவலஃ பித்ருந்।
கந்தர்வயக்ஷரக்ஷாம்ஸி ஸ்ராவயாமாஸ வை ஸுகஃ ॥
[பாரதம் ஆஸ்வமேதிகம் 1—111]

[இந்த மஹாபாரதத்தை நாரதர் தேவர்களுக்கும், அஸிதர் தேவலர் பித்ருக்களுக்கும், சுகர் கந்தர்வ யக்ஷ ராக்ஷஸர்களுக்கும் சொல்லிவைத்தார்] என்று மநுஷ்யலோகம் தவிர்ந்த மற்றலோகங்களில் இது பிரசாரத்திலிருந்தது என்று மஹாபாரதத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது மனுஷ்ய லோகத்தில்தான் ஜனமேஜயனை முன்னிட்டுக் கொண்டு இது பிற்காலத்தில் வெளிவரப்போகிறது. ஆகையால் ஏற்கனவே மற்ற லோகங்களில் பிரசாரம் அடைந்திருக்கும் கீதா சாஸ்திரத்தைக் கருத்தில் கொண்டே எம்பெருமான் இந்த ஸ்லோகங்களில் இதை வியாக்கியானம் செய்பவர்

स्यामिति मे मतिः—अस्मिन् यो ज्ञानयज्ञोऽभिधीयते, तेनाहमेतदध्य-
यनमात्रेणेष्टस्स्यामित्यर्थः ॥ ७० ॥

---

களைப் பற்றியும் இதை ஓதுகிறவர்களைப்பற்றியும் சொல்லுகிறுன் என்று தாத்பர்ய சந்திரிகையில் விளக்கப்பட்டது. உபநிஷத்துகளின் ஸாரமாகையாலே 'அத்4யேஷ்யதே' (ஓதுகிறுனே) என்று சொல்லப்பட்டது ப4ட்டபா3ணகவியும் 'காதம்பரி'யில் ''அநவரதாதீ4த ப4க3வத்3கீ3தா'' [ப4க3வத்3கீ3தையின் அத்யயனத்தை இடைவிடாமல் பெற்றிருந்தது ஆசிரமம] என்று ஆஶ்ரம வர்ணத்தில் கூறினுரன்றே. (தேந) அவனுலே (ஜ்ஞாந யஜ்ஞேந அஹம் இஷ்ட: ஸ்யாம்) ஜ்ஞாந யஜ்ஞத்தாலே நான் ஆராதிக்கப்பட்டவனுவேன்.

ஜ்ஞாந யஜ்ஞேந சாப்யந்யே யஜந்தோ மாமுபாஸதே |
ஏகத்வேந ப்ருத2க்த்வேந ப3ஹுதா4 விஶ்வதோமுக2ம் ||
[கீதை 9-15]

[மற்றும் சில மஹா புருஷர்கள் (முற்கூறிய கீர்த்தனம் முதலானவற்றோடு) ஜ்ஞானம் எனும் யஜ்ஞத்தினுலும், ஆராதிப்பவர்களாய், தனித்தனிப்பொருள்களாகப் பலவகைப்பட்டிருக்கும் இவ்வுலகை உருவமாகக்கொண்டவனுகையாலே எல்லாப் பொருள்களையும் ப்ரகாரமாகக் கொண்டவனை என்னை (காரணநிலையில்) ஒன்றுயிருப்பவனுக உபாஸிக்கிறுர்கள்] என்று சொல்லப்பட்ட உபாஸனத்தின் முற்றிய நிலையாலே நான் ஆராதிக்கப்பட்டவனுவேன் என்று கருத்து. சென்ற இரு ஶ்லோகங்களில் இந்த சாஸ்திரத்தை வியாக்கியானம் செய்பவன் ''நானே ப்ராப்யம் ப்ராபகம் முதலான எல்லாமாயுமிருப்பவன். பக்தியும் ஸ்வயம் ப்ரயோஜனமாயிருப்பது'' என்று உணர்ந்து விடுவானுகையாலே ஒப்பற்ற மஹாத்மாவான ஜ்ஞானியாகி எனக்கு மிக இனியவனுவான் என்று சொல்லப்பட்டது. இந்த ஶ்லோகத்தில் இந்த ஶாஸ்திரத்தைப் பொருளுடன் கேட்பவன் உபாஸக ஜ்ஞானிக்குத் துல்யனுவான் என்று சொல்லப்படுகிறது.

இங்கு ஜ்ஞாநயஜ்ஞம் என்று சொல்லப்படுவது — "ஶ்ரேயாந் த்₃ர வ்யமயாத்₃ யஜ்ஞாத் ஜ்ஞாநயஜ்ஞ: பரந்தப" [கீதை4-33][த்ரவ்ய மயமான யஜ்ஞமாகிற கர்மயோகத்தைக் காட்டிலும் அதற்கு அங்க மாக அநுஸந்திக்கப்படும் ஆத்மஞானம் சிறந்தது] என்று சொல்லப் பட்ட கர்மயோகி அனுஸந்திக்கவேண்டிய ஆத்மயாதாத்ம்யஜ்ஞாந மாகிற ஜ்ஞாநயஜ்ஞம் அல்ல. இந்த ஶாஸ்த்ரத்தில் முக்கியமாகச் சொல்லப்படுவதான பக்தியோகத்தின் முற்றிய நிலையான முற் கூறிய ஜ்ஞாநயஜ்ஞமே ஆகும் என்பது எம்பெருமான் இவனைக் கொண்டாடிச் சொல்லுவதிலிருந்து விளங்குகிறது. இந்த ஶாஸ்த்ரத்தை அத்₄யயனம் செய்பவனை ஜ்ஞாந கர்ம யோக₃ ப₂லனாக உபாஸனம் கைவரப்பெற்றவனுக்குத் துல்யமாகச் சொல்லுவது உயர்வு நவிற்சியாகாதோ எனில்— (இதி மே மதி:) என்பது என்னுடைய கருத்து. இந்த ஶாஸ்த்ரத்தை ஓராசார்ய னிடமிருந்து பொருளுடன் கற்பவன் விரைவில் பலருக்கு உப தேசிப்பவனாகும்போது முன் ஶ்லோகங்களில் சொன்னபடி மஹாத் மாவான ஜ்ஞாநியாகி விடுவானாகையாலே இப்போது அவனுக்கு முன்நிலையான உபாஸக ஜ்ஞானியை ஒத்தவன் ஆகிறான் என்பது என் கருத்து என்கிறான். "யோ அஶ்வமேதே₄ந யஜதே. ய உ சைநமேவம் வேத₃" [அஶ்வமேத₄ ப்ரஶ்நம் 2] [எவனொரு வன் அஶ்வமேத₄யாக₃த்தைச் செய்கிறானோ, எவனொருவன் இந்த யாகத்தைப் பற்றி இவ்வண்ணம அறிகிறானோ அவ்விருவரும் இப்பலனைப் பெறுகிறார்கள்] "யம் யம் க்ரதுமதீ₄தே தேந தேநா ஸ்யேஷ்டம் ப₄வதி" [யஜுர் ஆரண்யகம் ப்ரஶ்நம் 2-15] [எந்த எந்த யாகப்ரகரணத்தை ஒருவன் ஆசார்யன் முகமாகஓதுகிறானோ, அந்தந்த யாகத்தை அவன் செய்தவனாகிறான்] முதலான வாக் யங்களில் அந்தந்த யாக₃ப்ரகரணங்களை அத்யயனம் செய்பவ னுக்கும் அந்தந்த யாகத்தின் பலன் விளைவதாகக் கூறியிருப்ப தைப் போலே இங்கும் கீ₃தையை அத்யயனம செய்வது அதன் ஸாரமான ஜ்ஞாநயஜ்ஞத்தினால் விளையும ப₄க₃வத் ப்ரீதியை உண்டாக்கும் என்று தாத்பர்ய சந்திரிகையில் அருளிச்செய்யப் பட்டது. 70.

5-11-09.
24-2-11.

श्रद्धावाननसूयुश्च शृणुयादपि यो नरः ।
सोऽपि मुक्तःशुभाँल्लोकान्प्राप्नुयात्पुण्यकर्मणाम् ॥ ७१ ॥

71. ஶ்ரத்3தா4வாந் அநஸூயுஶ்ச ஶ்ருணுயாத3பி யோ நர: ।
ஸோऽபி முக்த: ஶுபா4ந் லோகாந் ப்ராப்நுயாத்
புண்ய கர்மணாம் ॥

ஶ்ரத்3தா4வாந்—கேட்பதில் விருப்பமுடையவனாய், அநஸூயு: ச — பொறாமையற்றவனாய், ய: நர: — எந்த மனிதன், ஶ்ருணுயாத் அபி— இந்த ஶாஸ்த்ரத்தைக் கேட்பது மட்டும் செய்கிறானோ, ஸ: அபி — அந்த மனிதனும், முக்த: — (என்னிடம் ப4க்தி தொடங்குவதற்குத் தடையான பாபங்களிலிருந்து) விடுபட்டவனாய், புண்ய கர்மணாம் — மிகுந்த புண்யங்கள் செய்த (என்னுடைய) அடியார்களுடைய, ஶுபா4ந் லோகாந் — மங்களமான கூட்டங்களை, ப்ராப்நுயாத — அடைவான்.

---

71. சேர்ந்து சிரத்தையினைச் சேரா தசூயையினை
யார்ந்திதனைக் கேட்குநர னானவனுந்—தீர்ந்துதுய
ரற்றே யறிவெய்து மன்புடையோர் தங்கூட்டம்
பெற்றே மகிழும் பெருத்து.

சிரத்தையினை சேர்ந்து—கேட்பதில் விருப்பத்தோடு கூடியவனாய், அஸூயையினை சேராது — பொறாமையில்லாதவனாய், ஆர்ந்து ஓராசார்யனை அடைந்து, இதனைக் கேட்கும் நரன் ஆனவனும்—இந்தஶாஸ்த்ரத்தைக்கேட்பதை மட்டும் செய்யும் மனிதனும், துயர் தீர்ந்து — ப4க்திக்குத் தடையான பாபங்கள் நீங்கப்பெற்று, அற்றே அறிவு எய்தும் அன்புடையோர் தம் கூட்டம் — (மற்ற விஷயங்களில்) பற்றற்று, (பகவத் விஷயத்தில் ஈடுபடும்) அறிவை அடைந்த பக்தர்களின் கூட்டங்களை, பெற்றே—அடைந்து, பெருத்து மகிழும்— மிகவும் இன்புறுவான்.

मा । श्रद्धावाननसूयुश्च यो नरःशृणुयादपि, तेन श्रवणमात्रेण

71 இந்த சாஸ்திரத்தைப் பொருளுடன் கற்பவன் உபாஸக ஜ்ஞானியை ஒத்தவன் என்று சொன்னான் சென்ற ஶ்லோகத்தில். இந்த ஶாஸ்த்ரத்தை ஓராசார்யனிடமிருந்து கேட்பதை மட்டும் செய்பவனும் என்னிடம் பக்திக்குத் தடையான பாபங்கள் நீங்கப் பெற்று, இதன் பொருளையும் உணரலாம்படி பக்தர்களின் கூட்டத்தில் சேரப்பெறுகிறான் என்கிறான் இந்த ஶ்லோகத்தில். (ஶ்ரத்3த4ாவாந் அநஸூயு: ச) 67 வது ஶ்லோகத்தில் சொன்னபடி இதைக் கேட்பதில் விருப்பமுடையவனாய், ஆசார்யனிடமும், என்னிடமும பொறாமையும் அற்றவனாய்; 'ச' காரத்தாலே, "தத்3 வித்3தி4 ப்ரணிபாதேந பரிப்ரஶ்நேந ஸேவயா" [4-34] [இவ்வறிவை நீ ஜ்ஞானிகளை வணங்கியும் அவர்களை உரிய முறையில் கேட்டும அவர்களுக்குப் பணிபுரிந்தும் பெற வேண்டும] என்று சொலலப் பட்ட ப்ரணிபாத பரிப்ரஶ்ந ஸேவைகள் உணர்த்தப்படுகின்றன 'ஶ்ருணுயாத்' என்றதால் ஓர் ஆசார்யனிடமிருந்து கேட்கவேண்டுமென்று உணர்த்தப்படுகிறது. "தத்3விஜ்ஞாநார்த்த2ம் ஸ கு3ரு மேவாபி4க3ச்சே2த்" [முண்ட3க 1-2-22] இந்த ப்3ரஹ்ம வித்3 யையைப் பெறுவதற்கு அவன் ஆசார்யனையே அடைய வேண்டும்] என்றும, 'ஆசார்யாத்3தை4வ வித்3யா விதி3தா ஸாதி4ஷ்ட2ம் ப்ராபத்" [சா2ந் 4-9-3] [ஆசார்யனிடமிருந்து அறியப்பட்ட வித்யையே நிலையாக நிற்கும்.] என்றும் சொல்லப் பட்டதன்றோ. தானே ஏடுபார்த்துப்படிப்பது, மறைவிடத்தில் இருந்து கேட்பது முதலானவை விபரீத ப2லனையே தருமாகை யாலே தகுதியுள்ள ஆசார்யனிடமிருந்தே கேட்கவேண்டுமென்று இந்த வேத3வாக்கியங்களால் உணர்த்தப்படுகிறது. (ய: நர: ஶ்ருணுயாத3பி) எந்த மனிதன் இந்த ஶாஸ்த்ரத்தைக் கேட்பதை மட்டும் செய்கிறானோ. சென்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்டதைப் போல் பொருளுடன் கற்காமல் மூலத்தை மட்டும் கேட்கிறானோ என்று கருத்து. (ஸ: அபி) அவனும். முன் மூன்று ஶ்லோகங் களில் சொல்லப்பட்ட இருவகை அதி4காரிகளைக் காட்டிலும் தாழ்ந்தவன் இவன் என்று உணர்த்தப்படுகிறது. (முக்த:) அந்த ஶ்ரவண மாத்ரத்தாலே, என்னிடம் ப4க்தியுண்டாவதற்குத் தடை யாயிருக்கும் பாபங்கள் நீங்கப்பெறுகிறான் என்று கருத்து. இப் பொழுதுதான் இந்த ஶாஸ்த்ரத்தைக் காதல் கேட்கிறானாகை யாலே, இதுவரையில் என்னிடம் ப4க்தியில்லாமலிருந்த இவ

सोऽपि भक्तिविरोधिपापेभ्यो मुक्तः पुण्यकर्मणां मद्भक्तानां लोकान्— समूहान् प्राप्नुयात् ॥ ७१ ॥

कच्चिदेतच्छ्रुतं पार्थ त्वयैकाग्रेण चेतसा ।
कच्चिदज्ञानसंमोहः प्रनष्टस्ते धनञ्जय ॥ ७२॥

72. கச்சிதே3தச்ச்2ருதம் பார்த்த2 த்வயைகாக்3ரேண சேதஸா |
கச்சித3ஜ்ஞாநஸம்மோஹ: ப்ரநஷ்டஸ்தே த4நஞ்ஜய ||

---

ணுக்கு அந்த ப4க்தியுண்டாவதற்குத் தடையாயிருக்கும் பாபங்கள் இந்த மூலத்தைக் கேட்பதனாலேயே நீங்கிவிடும் என்று கருத்து. இப்படிக் கொள்ளாமல் முக்தனாகிவிடுகிறான் என்று பொருள் கொண்டால் 'ஜ்ஞானத்தாலேயே மோக்ஷம்' என்று கூறும் ஶாஸ்த்ரங்கள் பழுதாகிவிடும். (புண்ய கர்மணாம் ஶுபா4ந் லோகாந் ப்ராப்நுயாத்) மிகுந்தபுண்யச்செயல்கள் புரிந்தவர்களாய், அதுகாரணமாகவே என்னிடம் ப4க்தியுடையவர்களாயிருக்கும் மங்களமான அடியவர்களின் ஸமூஹங்களை அடைவான். 'ஶுபா4ந் லோகாந்' என்று 'மங்களமான லோகங்களை' என்று சொல்லியிருக்கும்போது ப4க்தர்களின் ஸமூஹங்களை என்று இங்குபொருள் கொள்ளக் காரணமென்ன? எனில்:— 68, 69 வது ஶ்லோகங்களில் இந்த ஶாஸ்த்ரத்தை ப்ரவசநம் செய்பவனுக்கு மிக உயர்ந்த ப2லனை பரமப4க்தியும் ப4க3வத்ப்ராப்தியும் சொல்லப்பட்டது. 70 வது ஶ்லோகத்தில் இந்த ஶாஸ்த்ரத்தைப் பொருளுடன் ஓதுபவன் உபாஸக ஜ்ஞானியை ஒத்தவன் ஆவான் என்று சொல்லப்பட்டது. இந்த ஶ்லோகத்தில் இந்த ஶாஸ்த்ரத்தைக் கேட்பதை மாத்திரம் செய்பவனுக்கு இவன் மோக்ஷமடைவதற்கு உறுப்பானதொருப2லனைச் சொல்லுவதே உசிதம்; ஜ்ஞானிகளுக்கு நரகத்தை ஒக்கும் ஸ்வர்க்கம் முதலான புண்ணிய லோகங்களைச் சொல்லுவது உசிதமன்று. அதனாலேயே பா4ஷ்யகாரர் 'ப4க்தி தொடங்குவதற்குத் தடையான பாபங்கள் நீங்கப்பெற்று ப4க்தர்களின் ஸமூஹங்களை அடைகிறான்' என்று பொருள் கொண்டார். இந்த ஶாஸ்த்ரத்தைக் கேட்பதனால் உகந்த பரமபுருஷன் அவனைத் தன் ப4க்தர்களை அடையும்படி செய்கிறான்; அது படிப்படியாக மோக்ஷத்தை அடைவித்து விடும் என்று கருத்து. 71

भा ।। मया कथितमेतत्पार्थ त्वयाऽवहितेन चेतसा कच्चिच्छ्रुतम्

பார்த்த₂ — குந்திபுத்திரனே! ஏதத் — (என்னால் சொல்லப்பட்ட) இந்த ஶாஸ்த்ரம், த்வயா—உன்னாலே, ஏகாக்₃ரேண சேதஸா — ஒருமுகப்பட்ட மனத்தோடு, கச்சித் ஶ்ருதம் — கேட்கப்பட்டதா? த₄நஞ்ஜய—தனஞ்ஜயனே! தே—உன்னுடைய, அஜ்ஞாநஸம்மோஹ:—அறிவின்மையால் விளைந்த மயக்கம், கச்சித் ப்ரநஷ்ட: — அழிந்துவிட்டதா?

72. பார்த்தனே நின்றொருமை பற்றியாஞ் சித்தத்தாற்
சீர்த்தவிது கேட்டுச் சிறந்தாயே—பேர்த்துன்னை
மோகத்தைச் செய்மாய முற்றுங் கழிந்ததே
யோகத்தைச் சேர்ப்பான் புணர்ந்து.

பார்த்தனே — குந்தீபுத்திரனே! நின் ஒருமை பற்றி ஆம் சித்தத்தால்— உன்னுடைய ஒருமுகப்பட்ட மனத்தாலே, சீர்த்த இது கேட்டு— சிறப்பு மிக்க இந்த சாஸ்திரத்தைக் கேட்டு, யோகத்தைச் சேர்ப்பான் புணர்ந்து — கர்மயோகமாகிற யுத்தத்தைச் செய்யவேண்டுமென்று இசைந்து, சிறந்தாயே—சிறப்படைந்தாயா? உன்னை பேர்த்து— வீரனான) உன்னை முற்றிலும் மாற்றி, மோகத்தைச் செய் மாயம்— (போர்புரிய மாட்டேன் என்னும்) மயக்கத்தை விளைத்த அறிவின்மை, முற்றும் கழிந்ததே — முழுவதும் நீங்கிற்றா?

72. அர்ஜுனனின் கருத்தறிந்தவனாயிருந்த போதிலும், ப₄க₃வான் தன் உபதேசம் பயனுடையதாயிற்று என்று அவன் வாயாலே கேட்கத் திருவுள்ளம் கொண்டு கேட்கிறான் இந்தச் ஶ்லோகத்தில். (ஏதத்) முன் பல அத்தியாயங்களிலே நான் சொன்ன இது அனைத்தும். (த்வயா ஏகாக்₃ரேண சேதஸா ஶ்ருதம் கச்சித்) உன்னால் ஒருமுகப்பட்ட மனத்தோடு கேட்கப்பட்டதா? (பார்த₂) பெரிய ஜ்ஞானியான குந்தியின் புத்திரனான

तत्राज्ञानसंमोहः कच्चित्प्रनष्टः, येन ज्ञानेन मूढो न योत्स्यामी-त्युक्तवान्॥ ७२ ॥

अर्जुन उवाच—

नष्टो मोहः स्मृतिर्लब्धा त्वत्प्रसादान्मयाऽच्युत ।
स्थितोऽस्मि गतसंदेहः करिष्ये वचनं तव ॥ ७३ ॥

அர்ஜுந உவாச—

73: நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர்லப்₃த₄ா த்வத்ப்ரஸாத₃ாந் மயாச்யுத ।
ஸ்தி₂தோ ऽஸ்மி க₃தஸந்தே₃ஹ: கரிஷ்யே வசநம் தவ ॥

அச்யுத—அச்யுதனே! த்வத் ப்ரஸாத₃ாத்— உன் அருளாலே, மோஹ: — (என்னுடைய) விபரீத ஜ்ஞாநம், நஷ்ட: — அழிந்தது; ஸ்ம்ருதி: — உண்மையறிவு, மயா— என்னாலே, லப்₃த₄ா— அடையப்பெற்றது; க₃தஸந்தே₃ஹ:— ஐயம் நீங்கப்பெற்றவனாய், ஸ்தி₂த: அஸ்மி — உண்மை உணரப்பெற்று நிலைநின்றவனாகிறேன்; தவ வசநம் — (போர்புரியவேண்டுமென்று கூறிய) உன் வார்த்தைப்படி, கரிஷ்யே— செய்கிறேன்.

---

நீ இதை நன்கு பொருளுணர்ந்து கேட்டிருக்கவேண்டுமே. 'ஒருமுகப்பட்ட நெஞ்சோடு' என்று கூறுகையாலே 'பொருள் உணர்ந்து கேட்டாயா' என்றே கொள்ளவேண்டும். நெடுநேரம் நான் சொன்னதெல்லாம் களர் நிலத்தில் விதைத்த விதைபோலே பயனற்றுப் போகாமல் செழுமையுடைய நிலத்தில் விதைத்த விதைபோலே பயனுடையதாயிற்று? என்று கருத்து. ஶ்லோகத்தின் மேல் பாதியாலே இப்படிக் கேட்டதின் பயனும் விளைந்ததா? என்று கேட்கிறான். (தே அஜ்ஞாந ஸம்மோஹ:) உன்னுடைய அறிவின்மையால் விளைந்த மயக்கம். (கச்சித் ப்ரணஷ்ட:) நீங்கிற்று? பந்துக்களிடம் விளைந்த தகாத சிநேகமும் தர்மமான யுத்தத்தை அதர்மம் என்று நினைத்ததும் அறிவின்மையாகும். 'ந யோத்ஸ்யாமி' [போர் புரியமாட்டேன்] என்று உறுதி கொண்டது அவ்வறிவின்மையால் விளைந்த மயக்கமாகும். (த₄நஞ்ஜய) உலகங்களிலுள்ள பலவகைப்பட்ட செல்வங்களை ஜயித்ததால் த₄நஞ்ஜயன் என்று பெயர் பெற்ற நீ இவ்வறிவின்மையை வென்றால்தான் உனக்கு அப்பெயர் பொருந்தும் என்று கருத்து.72

भा ॥ मोहः — विपरीतज्ञानम्, त्वत्प्रसादान्मम तद्विनष्टम् । स्मृतिः — यथावस्थिततत्त्वज्ञानम्, त्वत्प्रसादादेव तच्च लब्धम् । अना-

---

73. என்றிறையோன் சொல்ல வெழில்விசையன் செப்பினு
னின்றியலு மோகம்போ யேய்ந்துமதி — நின்றுநா
னுன்னருளி னுன்மயக்க மொன்றின்றிச் சென்றியல்வன்
சொன்னதெல்லாஞ் செய்வன் றுணிந்து.

என்று இறையோன் சொல்ல — இவ்வண்ணமாகக் கண்ணன் அருளிச்செய்ய, எழில் விசையன்-அழகிய அர்ஜுனன், செப்பினுன் — பின்வருமாறு கூறினுன்; உன் அருளினுல் — உன்னுடைய அருளாலே, நின்று இயலும் மோகம் போய் — இவ்வளவு காலம் நிலையாக இருந்த மயக்கம் நீங்கப்பெற்று. மதி ஏய்ந்து நின்று — அறிவு பொருந்தப் பெற்று, நான் — நான், மயக்கம் ஒன்று இன்றிச் சென்று இயல்வன் — ஐயம் ஒன்றும் இல்லாமல் நிலையாயிருக்கிறேன், சொன்னதெல்லாம் - நீ சொன்னது அனைத்தும், துணிந்து செய்வன் — உறுதியுடன் செய்வேன்.

---

73 அர்ஜுனன் தன் செய்ந்நன்றியைக் காட்டிக்கொண்டு கண்ணன் சொன்னதைக் கேட்டதாலே தன் ஐயம் நீங்கிற்றென்றும். அவன் சொன்னபடி போர் புரிவதாகவும் கூறுகிருன். (மோஹ: நஷ்ட:) தகாத இடத்தில் அன்பாலும் கருணையாலும். த4ர்மமாகிற யுத்3த4த்தை அத4ர்மமாக எண்ணிய என் மயக்கம் அழிந்தது. (மயா ஸ்ம்ருதி: லப்3த4ா) என்றுல் உண்மையறிவு அடையப்பெற்றது. 'ஸ்ம்ருதி' என்னும் சொல் முக்கியமாக ஏற்கெனவே அனுபவிக்கப்பட்ட அர்த்த2த்தை நினைப்பதையே கூறுமாயினும், இங்கு உண்மையில் இவ்வர்த்த2ம் ஏற்கெனவே அர்ஜுனனுல் அறியப்பட்டதல்லவாகையால், அந்த ஸ்ம்ருதிக்கு மூலமாக சப்தத்தினுல் உண்டாகும் அனுபவத்தையே இங்கு லக்ஷணையாலே சொல்லுகிறது. 'ஸ நோ தே3வ: ஶுப4யா ஸ்ம்ருத்யா ஸம்யுநக்து' [தை நா 2-10] [அந்த தேவன் நமக்கு மங்களமான ஸ்ம்ருதியை அளிக்கட்டும்] என்னும் தைத்திரீய மந்திரம் ஶ்வே

त्मनि प्रकृतावात्माभिमानरूपो मोहः, परमपुरुषशरीरतया तदात्मकस्य कृत्स्नस्य चिदचिद्वस्तुन अतदात्माभिमानरूपश्च, नित्यनैमित्तिकरूपस्य कर्मणः परमपुरुषाराधनतया तत्प्राप्त्युपायभूतस्य बन्धकत्वबुद्धिरूपश्च सर्वो विनष्टः। आत्मनः प्रकृतिविलक्षणत्वतत्स्वभावरहिततातज्ज्ञातृत्वैक-स्वभावतापरमपुरुषशेषतातन्नियाम्यत्वैकस्वरूपताज्ञानम्, निखिलजगदुद्भव-

---

தாஶ்வதரத்தில், "ஸ நோ பு3த்3த்4யா ஶுப4யா ஸம்யுநக்து" [அப்பெருமான் நமக்கு மங்களமான புத்தியை அளிக்கட்டும்.] என்று படிக்கப்படுகையால் பு3த்3தி4 ஶப்3த3மும் ஸ்ம்ருதி ஶப்3த3மும் மிக நெருங்கியவையாய் ஒரே பொருளைக் குறிக்கின்றன என்று விளங்குகிறது. (த்வத்ப்ரஸாதா3த்) இவை இரண்டும் உன்னுடைய நிர்ஹேதுகமான க்ருபையாலேயே எனக்கு விளைந்தன. (அச்யுத) நீ அடியவரை நழுவவிடாத அச்சுதனானமையாலே உன் பரம கருணையாலே என் மயக்கத்தை நீக்கி ஜ்ஞானத்தை அளித்தாய் என்று கருத்து. கீதை முழுவதையும ஆராயும் போது இங்கு சொல்லப்படும் மோஹமாகிற மயக்கம் பின்வருமாறு மூன்று வகைப்பட்டது என்று விளங்குகிறது:- (1) ஆத்மாவல்லாததான ப்ரக்ருதி கார்யமான ஶரீரத்தில் ஆத்மா என்று அபி4மானிப்பதாகிற மயக்கம். (2) பரமபுருஷனுக்குச் சரீரமாகையாலே அவனை அந்தர்யாமியாகக் கொண்ட சேதநாசேதநப் பொருள்களனைத்தும அவனோடு தொடர்பற்றது என்று எண்ணும மயக்கம். (3) நித்யநைமித்திக ரூபமான கர்மங்கள் பரம புருஷனுக்கு ஆராத4னமாய், அவனை அடைவதற்கு உபாயமாயிருக்கும் போது, அவை நம்மை ஸம்ஸாரத்தில் கட்டிவைப்பவை என்னும், மயக்கம். இந்த மயக்கமனைத்தும் அழிந்தது என்கிறான். இங்கு சொல்லப்படும் ஸ்ம்ருதி எனப்படும் ஜ்ஞானமும் பின்வருமாறு மூன்று வகைப்படும்:— (1) ஜீவாத்மாவானது அசேதநமான ப்ரக்ருதியைக்காட்டிலும் வேறுபட்டது; அதனுடைய ஸ்வபா4வமில்லாதது; 'ஜ்ஞாத்ருத்வம்' எனப்படும் அறிபவனாயிருக்கையையே இயல்வாகவுடையது; பரமபுருஷனுக்கு அடிமைப்பட்டிருப்பதாய், அவனால் நியமிக்கப்படுகையையே இயல்வாகக் கொண்டதாய் இருப்பது என்னும் ஆத்மவிஷயமான ஜ்ஞானம்.

स्थितिप्रलयलीलाशेषदोषप्रत्यनीककल्याणैकस्वरूपस्वाभाविकानवधिकाति-
शयज्ञानबलैश्वर्यवीर्यशक्तितेजःप्रभृतिसमस्तकल्याणगुणगणमहार्णवपरब्रह्म-
शब्दाभिधेयपरमपुरुषयाथात्म्यज्ञानं च; एवंरूपपरावरतत्त्वयाथात्म्यविज्ञान-
तदभ्यासपूर्वकाहरहरुपचीयमानपरमपुरुषप्रीत्येकफलनित्यनैमित्तिककर्म-
निषिद्धपरिहारशमदमाद्यात्मगुणनिर्वर्त्यभक्तिरूपतापन्नपरमपुरुषोपासनैक-
लभ्यो वेदान्तवेद्यः परमपुरुषो वासुदेवस्त्वमिति ज्ञानम् च लब्धम्। ततश्च
बन्धुस्नेहकारुण्यप्रवृद्धविपरीतज्ञानमूलात्सर्वस्मादवसादाद्विमुक्तो गतसंदेहः

---

2) ''பரம புருஷன் உலகம் யாவையும் படைத்து அளித்து அழிப்பதையே விளையாட்டாகக் கொண்டவன்; எல்லாக் குற்றங்களுக்கும் எதிர்த்தட்டாய் மங்களங்களுக்கெல்லாம் இருப்பிடமானவன்; இயல்வானவையாய் எல்லையற்ற மேன்மையை உடையவையான ஜ்ஞானம், ப3லம், ஐஶ்வர்யம், வீர்யம், ஶக்தி, தேஜஸ் முதலான எல்லாக் கல்யாணகுணங்களையும் தன்னுள் கொண்ட கடல்போல் இருப்பவன்; பரப்3ரஹ்ம ஶப்3த3த்தால் சொல்லப்படுபவன்'' என்னும் பரம புருஷனைப்பற்றிய உண்மையறிவு. (3) ''இப்படிப்பட்ட ஜீவபரர்களைப் பற்றிய உண்மையை அறிந்து, அதை தினந்தோறும் அனுஸந்தித்துக்கொண்டு தினந்தோறும் வளரும் பரம புருஷனுடைய ப்ரீதியையே ப2லனாகக் கொண்டு நித்யநைமித்திக கர்மங்களை அனுஷ்டிப்பதாலும் ஶாஸ்த்ரங்களில் விலக்கப்பட்டவற்றைத் தவிர்ப்பதாலும் உள்வெளி இந்த்ரியங்களை அடக்குவதாகிற ஶமம் த3மம் முதலான ஆத்மகு3ணங்களாலும் உண்டாகும் ப4க்தி நிலையை அடைந்த பரமபுருஷனின் உபாஸனத்தாலேயே வேதாந்தங்களால் அறியப்படும் பரமபுருஷனான வாஸுதே3வனாகிற நீ அடையப்படுகிறாய்'' என்னும் ஜ்ஞானம், உன் அருளாலே முற்கூறிய மயக்கமனைத்தும் அழிந்ததுபோலே இந்த ஜ்ஞானம் அனைத்தும் என்னால் அடையப்பட்டது என்பது முற்பாதியின் திரண்ட கருத்து. இனி இந்த மோஹநாஶ ஸ்ம்ருதிலாப4ங்களின் விளைவை ஶ்லோகத்தின் பிற்பாதியாலே விளக்குகிறான்—(க3தஸந்தே3ஹ: ஸ்தி2தோऽஸ்மி) உறவினரிடம் ஸ்னேஹத்தாலும், தகாதவிடத்தில் கருணையாலும்

स्वस्थः स्थितोऽस्मि। इदानीमेव युद्धादिकर्तव्यताविषयं तव वचनम् करिष्ये; यथोक्तं युद्धादिकं करिष्य इत्यर्थः ॥७३ ॥

---

ளர்ந்த முற்கூறிய விபரீதஜ்ஞானமாகிற மயக்கத்தால் விளைந்த வையாய், "ஸீத3ந்தி மம கா3த்ராணி" [கீதை 1—29] என்று தொடங்கி எனக்கு ஏற்பட்ட எல்லாத் தளர்ச்சிகளினின்றும் விடுபட்டு ஐயம் நீங்கப்பெற்றவனாய், இயல்வான நிலையை அடைந்து விட்டேன். (தவ வசநம் கரிஷ்யே) நீ நியமித்தபடி செய்கிறேன், நீ சொன்னபடி போர்புரிதலாகிற கர்மயோகம் தொடங்கி ப4க்தி யோக3ம் ஈறான அனைத்தையும் செய்கிறேன் என்று கருத்து. சரம ச்லோகத்தை அங்க3ப்ரபத்தி பரமாக விவரிப்பதற்கு அனுகு3ணமான நிர்வாஹம் இது. இப்படிச் சொன்ன அர்ஜுனன் போர்புரிதலைத் தவிர வேறு எதுவும் பண்ணுவதற்குக் காரணம் என்ன என்னும் கேள்வியெழுகிறது செய்யாததற்குக் காரணம உபதேசித்ததனைத்தையும் மறந்ததேயாகும். "யத்து த்வத்3 ப4வதா ப்ரோக்தம் புரா கேசவ ஸௌஹ்ருதா3த் | தத் ஸர்வம் புருஷவ்யாக்4ர ப்4ரஷ்டம் மே நஷ்டசேதஸ:" [பா4ர ஆச்வமேதிகம் (அநுகீதை) 17—6] [புருஷோத்தமனான கேசவனே! நட்பினாலே நீ முன்பு சொன்ன கீதை முழுவதும மறதியாலே என் நினைவை விட்டகன்று விட்டது] என்று அர்ஜுனனே கூறினான்றோ. அதற்குப் பதிலாக ப4க3வானும், "ச்ராவிதஸ்த்வம் மயா கு3ஹ்யம் ஜ்ஞாபிதச்ச ஸநாதநம் | த4ர்மஸ்வரூபிணம் பார்த்த2 ஸர்வ லோகாச்ச சாச்வதாந் | அபு3த்3த்4யா மாக்3ரஹீர்யத்த்வம் தந்மே ஸுமஹத3ப்ரியம் ..... ......ஸ ஹி த4ர்ம ஸ்ஸுபர்யாப்தோ ப்3ரஹ்மண: பரிவேத3நே" [பா4ர—ஆச்வ அநுகீ3தை 17—12] [பார்த்த2னே! பழமையான ரஹஸ்யமானது என்னால் உனக்குச் சொல்லப்பட்டது; நிலைவுறுத்தப்பட்டது. நிலையான எல்லாவுலகங்களையும், நித்யமாய் த4ர்ம ஸ்வரூபியான பரம்பொருளையும் உனக்கு (நான் கூறினேன்.) அறிவின்மையால் அதை நீ நினைவில் கொள்ளாமலிருப்பது எனக்குப் பெருத்த அப்ரியமாகும்........ ப்3ரஹ்மஸ்வரூபத்தை நன்கு அறிவதில் அதுவே போதுமான த4ர்மமாகும்] என்று தன் வருத்தத்தை வெளிப்படுத்தியதும் இங்கு குறிக்கொள்ளத்தக்கது முக்2யப்ரபத்தி பரமான நிர்வாஹத்தில் "சுதந்திரன் என்னும் மயக்கம் நீங்கி, உனக்கு அத்யந்த பரதந்திரன் என்னும் அறிவு பெற்ற நான் நீ சொன்னபடி போர் புரிகிறேன்" என்பது இந்த ச்லோகத்தின் திரண்டபொருள். 73

भा ॥ धृतराष्ट्राय स्वपुत्राः पाण्डवाश्च युद्धे किं करिष्यन्तीति पृच्छते --

संजय उवाच —

इत्यहं वासुदेवस्य पार्थस्य च महात्मनः ।
संवादमिममश्रौषमद्भुतं रोमहर्षणम् ॥ ७४ ॥

6-11-09.
28-2-11.

ஸஞ்ஜய உவாச —

74 இத்யஹம் வாஸுதே₃வஸ்ய பார்த்த₂ஸ்ய ச மஹாத்மந: |
ஸம்வாத₃மிமமஶ்ரௌஷமத்₃பு₄தம் ரோமஹர்ஷணம் ||

இதி — இவ்வண்ணமாக, வாஸுதே₃வஸ்ய — வஸுதே₃வ புத்ரனான கண்ணனுக்கும், மஹாத்மந: பார்த்த₂ஸ்ய ச— பேரறிவாளனான அர்ஜுநனுக்கும் இடையே (நிகழ்ந்த), இமம் — இந்த, ரோமஹர்ஷணம் அத்₃பு₄தம் ஸம்வாத₃ம் — மயிர்க்கூச்செறியச் செய்யும் ஆச்சர்யமான இந்தக் கலந்துரையாடலை, அஹம் அஶ்ரௌஷம் — நான் கேட்டேன் (என்று ஸஞ்ஜயன் கூறினான்).

---

74. இவ்வண்ண மாயனுக்கு மேந்துயர்சீர்ப் பார்த்தனுக்கும்
மெய்வண்ணம் வார்த்தை விளைந்தபடி — செய்வண்ண
மீண்டேநான் கேட்டேனிவ் வற்புதத்தை யிவ்வுடலிற்
பூண்டே மயிரெறிவாம் பூண்டு.

இவ்வண்ணம் — இவ்விதமாக, மாயனுக்கும் — மாயப்பிரானான கண்ணனுக்கும், ஏந்து உயர்சீர் பார்த்தனுக்கும் — சிறந்த அறிவுபொருந்திய அர்ஜுநனுக்கும், மெய்வண்ணம் வார்த்தை விளைந்தபடி — உண்மையாகவே நிகழ்ந்த கலந்துரையாடலை, செய்வண்ணம் — அது நடந்தபோதே, இவ்வுடலில் மயிரெறிவாம் பூண்டே — எனது உடலில் மயிர்கூச்செறியும்படியாக, இவ்வற்புதத்தைப் பூண்டு— இந்த அற்புதக்காட்சியைக்கண்டு, ஈண்டே நான் கேட்டேன்— இப்போதே நான் கேட்டேன்.

भा ॥ इति एवं वासुदेवस्य — वसुदेवसूनोः, पार्थस्य च — तत्पितृष्वसुः पुत्रस्य च महात्मनो महाबुद्धेस्तत्पदद्वन्द्वमाश्रितस्येमं रोमहर्षणमद्भुतम् संवादमहं यथोक्तमश्रौषम् — श्रुतवानहम् ॥ ७४ ॥

---

74. இந்த கீ$_3$தையின் தொடக்கத்தில் "மாமகா: பாண்ட$_3$வாஸ்சைவ கிம் அகுர்வத ஸஞ்ஜய" [கீ$_3$தை 1—1] [(இந்தக்குருக்ஷேத்ரத்தில் போர்புரியக் கூடியிருக்கும்) என் பிள்ளைகளும் பாண்டுவின் பிள்ளைகளும் என்ன செய்தார்கள்?] என்று கேட்ட கேள்விக்குப் பதிலை நிறைவுபடுத்துகிறான் ஸஞ்ஜயன் இனி. (இதி) இவ்வண்ணமாக. பதினெட்டு அத்தியாயங்களிலும் நிகழ்ந்த கிருஷ்ணார்ஜுந ஸம்வாத$_3$ம் முழுவதையும் உணர்த்துகிறான். (வாஸுதே$_3$வஸ்ய பார்த்த$_2$ஸ்ய ச) வஸுதே$_3$வனின் பிள்ளையான கண்ணனுக்கும், அவனுடைய அத்தையான குந்தியின் பிள்ளையான அர்ஜுனனுக்கும், உறவைச் சொல்லுகையாலே இளமை தொடங்கி இருவருக்கும் உள்ள ஸ்நேஹம் உணர்த்தப்படுகிறது. (மஹாத்மந: பார்த்த$_2$ஸ்ய ச) சிறந்த அறிவுள்ள அர்ஜுனனுக்கும் என்கையாலே தனது அறிவாலே அர்ஜுனன் இளமை தொடங்கிக் கண்ணனுக்கு அடியவனாயிருந்தவன் என்று உணர்த்தப்படுகிறது. "க்ருஷ்ணாஸ்ரயா: க்ருஷ்ணப$_3$லா: க்ருஷ்ணநாத$_2$ாஸ்சபாண்ட$_3$வா:" [ப$_4$ார த்$_3$ரோண 183-24] [கண்ணனையே சார்விடமாகவும், ப$_3$லமாகவும், ஸ்வாமியாகவும் கொண்டவர்கள் பாண்டவர்கள்] என்று த்$_3$ரோணபர்வத்திலே இவ்விஷயம் சொல்லப்பட்டது. "ஸிஷ்யஸ்தேऽஹம் ஸாதி$_4$ மாம் த்வாம் ப்ரபந்நம்" [கீ$_3$தை 2-7] [உனக்கு நான் ஸிஷ்யன், உன்னைச் சரணடைந்த என்னை நியமிப்பாயாக] என்று கீ$_3$தையின் தொடக்கத்தில் அர்ஜுனனே இதைக் கூறினான்றோ. (ரோமஹர்ஷணம் அத்$_3$பு$_4$தம் இமம் ஸம்வாத$_3$ம்) பேராச்சரியமாயிருக்கையாலே மயிர்க்கூச்செறியவைப்பதாயிருக்கும் இந்தக் கலந்துரையாடலை. (இமம் அஸ்ரௌஷம்) நடந்த இந்த ஸம்வாத$_3$த்தை நடந்தபடியே கேட்டேன். அதில் என்னால் கேட்கப்படாத அம்சம் இல்லை என்று கருத்து. இதனால் இவன் உள்ளதை உள்ளபடி கண்டவன் என்று உணர்த்தப்படுகிறது. (இதி அஹம் இமம் அஸ்ரௌஷம்) உனக்குச் சொன்ன ரீதியிலேயே இந்த ஸம்வாதத்தை நான் கேட்டேன் என்றும் பொருள் கொள்ளலாம். இதனால் கண்டதைக் கண்டபடியே

व्यासप्रसादाच्छ्रुतवानेतद्गुह्यमहं परम् ।
योगं योगेश्वरात्कृष्णात्साक्षात्कथयतः स्वयम् ॥ ७५ ॥

75. வ்யாஸப்ரஸாதா₃த் ஶ்ருதவாந் ஏதத்₃கு₃ஹ்ய மஹம் பரம் !
யோக₃ம் யோகே₃ஶ்வராத் க்ருஷ்ணாத் ஸாக்ஷாத் கத₂யதஸ் ஸ்வயம் ||

வ்யாஸ ப்ரஸாத₃ாத் — வியாஸருடைய அருளாலே, (தி₃வ்யமான கண்ணையும் செவியையும் பெற்று) ஏதத் — இந்த, பரம் — மேலான, கு₃ஹ்யம் யோக₃ம் — யோக₃ம் எனப்படும் ரஹஸ்யத்தை, ஸ்வயம் கத₂யத: யோகேஶ்வராத் க்ருஷ்ணாத் — நேரே பேசிய கல்யாண குணங்கள் நிறைந்த கண்ணனிடமிருந்து, அஹம் — நான், ஸாக்ஷாத் ஶ்ருதவாந் — நேரே கேட்டேன்.

---

75. சீரார் வியாதன் றிருவருளான் மிக்குயர்ந்த [மைக்
ஏரார் மறை பொருளா மியோகத்தைப் — பேராண்
கண்ணனவன் றானே கருத்தோ டுரைத்தருள
வெண்ணமுடன் கேட்டேனு னிங்கு.

சீரார் வியாதன் திருவருளால் — சிறப்புமிக்க வேத வியாஸருடைய பேரருளாலே (திவ்யமான கண்ணையும் செவியையும் பெற்று), மிக்கு உயர்ந்த ஏரார் மறை பொருளாம் இயோகத்தை — மிகவும் உயர்ந்த சிறந்த ரஹஸ்யப் பொருளான 'யோக₃ம்' எனப்படும் இந்த சாஸ்திரத்தை, பேராண்மை கண்ணன் அவன்தானே கருத்தோடு உரைத் தருள — ஸர்வேஶ்வரத்வம் முதலான கல்யாணகு₃ணங்களை உடைய கண்ணன் தானே மனமொன்றிக்கூற, நான் — (ஸஞ்ஜயனாகிற) நான், இங்கு — இவ்விடத்தில், எண்ண முடன் கேட்டேன் — பொருளுணர்ந்து கேட்டேன்.

---

சொல்லுபவன் ஸஞ்ஜயன் என்று உணர்த்தப்படுகிறது. உள்ளதை உள்ளபடி காண்பதும், கண்டதைக் கண்டபடி சொல்லுவதுமாகிற ஆப்தலக்ஷணம் ஸஞ்ஜயனிடம் நிறைந்திருக்கிறது என்று கருத்து.

भा ।। व्यासप्रसादात् — व्यासानुग्रहेण दिव्यचक्षुःश्रोत्रलाभात् एतत्परं योगाख्यं गुह्यं योगेश्वरात् — ज्ञानबलैश्वर्यवीर्यशक्तितेजसां निधेर्भगवतः कृष्णात् स्वयमेव कथयतः साक्षाच्छ्रुतवानहम् ।। ७५ ।।

---

75. இந்த ஸம்வாத3த்தை இப்படி நான் கேட்டது வியாஸருடைய பேரருளாலே என்று கூறுகிறான் ஸஞ்ஜயன். (வ்யாஸ ப்ரஸாதா3த்) வியாஸருடைய அருளாலே. இங்கு வியாஸர் செய்த அருளாவது இவனுக்கு தி3வ்யமான கண்ணையும் (பார்க்கும் சக்தியையும்), செவியையும் (கேட்கும் சக்தியையும்) கொடுத்து, தேவர்களாலும் காண்பரியதான விஶ்வரூபத்தைக் காண வைத்ததும், வெகுதூரத்தில் நடந்த ஸம்வாதத்தைக் காணவும், கேட்கவும் வைத்ததுமேயாகும். கலக்கத்தை நீக்குவதையும் 'ப்ரஸாத3ம்' என்று சொல்லலாமாயினும், அது இங்கு பொருந்தாதாகையாலே, திவ்யமான கண்ணையும் செவியையும் அளித்ததையே 'ப்ரஸாத3' ஶப்3த3த்திற்குப் பொருளாகக் கொள்ள வேண்டும். அர்ஜுனனுக்கு விஶ்வருபதரிசனத்தின்போது தி3வ்ய சக்ஷுஸ்ஸைக் கண்ணன் அருளியதுபோலே, ஸஞ்ஜயனுக்கும் வியாஸருடைய அருளாலே தி3வ்யமான கண்ணும் செவியும் கிடைத்தன என்று கொள்ளவேணும். இங்கு 'தி3வ்யம்' என்றது அப்ராக்ருதமன்று. மற்றவர்களால் காணவும் கேட்கவும் ஒண்ணாததைக் காண்பிக்கவும் கேட்பிக்கவும் வல்லது என்றே தி3வ்ய ஶப்3த3த்துக்குப் பொருள் கொள்ளவேண்டும். (ஏதத் பரம் கு3ஹ்யம் யோக3ம்) இந்தப் பரமரஹஸ்யமான யோக3ம் எனப்படும் கீதா ஶாஸ்த்ரத்தை. (பரம் கு3ஹ்யம் ஶ்ருதவாந்) பரம ரஹஸ்யமான இந்த அர்த்தத்தை அதைக் கேட்கத் தகுதியில்லாதவனுயிருந்த போதிலும் வியாஸருடைய அருளாலே கேட்கப் பெற்றேன் என்று கருத்து யாரிடமிருந்து கேட்டது எனில்; (யோகே3ஶ்வராத் க்ருஷ்ணாத்) ஜ்ஞாநம், ப3லம், ஐஶ்வர்யம், வீர்யம், ஶக்தி, தேஜஸ் முதலான கல்யாண குணங்களை ஆள்பவனான கிருஷ்ணனிடமிருந்து கேட்டேன். இங்கு 'யோக3' ஶப்தம் கல்யாணகுண யோகத்தை (சேர்த்தியைக்) குறிக்கிறது. "ஏதாம் விபூ4திம் யோக3ம் ச" [கீ3தை 10—7] என்றவிடத்திலும் யோக3ஶப்3த3ம்

राजन् संस्मृत्य संस्मृत्य संवादमिममद्भुतम् ।
केशवार्जुनयोः पुण्यं हृष्यामि च मुहुर्मुहुः ॥ ७६ ॥

76. ராஜந் ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ஸம்வாத₃மிமம் அத்₃பு₄தம் ।
கேஶவார்ஜு⁻நயோ: புண்யம் ஹ்ருஷ்யாமி ச முஹு⁻ர்முஹு⁻: ॥

ராஜந் — திருதராஷ்ட்ர மஹாராஜனே! கேஶவார்ஜு⁻நயோ: — கேசவனுக்கும் அர்ஜு⁻நனுக்கும் இடையில் நிகழ்ந்த. இமம் புண்யம் அத்₃பு₄தம் ஸம்வாத₃ம் — இந்தப் புனிதமாய் ஆச்சர்யமான கலந்துரையாடலை, ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய — நினைக்கும்தோறும், முஹு⁻:முஹு⁻: — மறுபடியும் மறுபடியும், ஹ்ருஷ்யாமி ச — நான் பேரானந்தமடைகிறேன்.

---

கல்யாணகு₃ணச் சேர்த்தியைக் குறித்ததன்றோ. (ஸ்வயம் கத₂யத: க்ருஷ்ணாத் ஶ்ருதம்) கண்ணன் நேரே சொல்லக் கேட்டேன். பிறர் மூலம் சொல்லியனுப்பக் கேட்டதில்லை அவனே சொல்லக் கேட்டது என்று கருத்து. இதனால் வக்த்ருவைலக்ஷண்யம் (சொல்லுகிறவனின் சிறப்பு) உணர்த்தப்படுகிறது. "பஞ்சராத்ரஸ்ய க்ருத்ஸ்நஸ்ய வக்தா நாராயண: ஸ்வயம்" [பா₄ர ஶாந்தி-மோக்ஷ 359—63] [பாஞ்சராத்ர ஶாஸ்த்ரம் முழுவதையும் பகவான் நாராயணன் நேரே சொன்னான்] என்ற இடத்தில் போலே. (ஸாக்ஷாத் அஹம் ஶ்ருதவாந்) நான் நேரே கேட்டேன். "இமம் விவஸ்வதே யோக₃ம் ப்ரோக்தவாந் அஹம்" [கீ₃தை 4—1] [இந்தக் கர்மயோக₃த்தை நான் ஸூர்யனுக்கு முதலில் உபதேசித்தேன்] என்றவிடத்தில் ப₄க₃வானுடைய ஶிஷ்யனாகச் சொல்லப்பட்ட ஸூர்யனிடமிருந்தோ, அல்லது கண்ணனிடமிருந்து கீ₃தையைக் கேட்ட அர்ஜு⁻னனிடமிருந்தோ நான் இதைக்கேட்கவில்லை. கண்ணனிடமிருந்து நேரே கேட்டேன் என்று கருத்து. அன்றிக்கே, 'வெகு தூரத்திலிருந்த போதிலும் நேரே கேட்டேன்' என்றும் கருத்துரைக்கலாம். 75.

रा ॥ केशवार्जुनयोरिमं पुण्यमद्भुतं संवादं राजन्संस्मृत्य संस्मृत्य
मुहुर्मुहुर्हृष्यामि ॥ ७६ ॥

76. மன்னவா கேசவனும் பாண்டவனும் வார்த்தையினைச்
சொன்னவா நானினையுந் தோறெல்லா — மின்னவா
றென்னவொண்ணு தற்புதமா யேல்கின்ற புண்ணியமாப்
பன்னவுகப் பாவன் பயின்று.

மன்னவா — திருதராஷ்ட்ர மஹாராஜனே! இன்னவாறு என்னவொண்ணாது அற்புதமாய் — இப்படிப்பட்டது என்று சொல்லமுடியாதபடி ஆச்சர்யமாயிருப்பதாய், ஏல்கின்ற புண்ணியமாய் — பாவனத்தன்மைப் பொருந்தியதான, கேசவனும் பாண்டவனும் வார்த்தையினை சொன்னவா — கேசவனும் பாண்டவனும் வார்த்தை பேசிய கலந்துரையாடலை, நினையும் தோறெல்லாம் — நினைக்கும் போதெல்லாம், நான் — நான். பயின்று — மறுபடியும் மறுபடியும், மன்ன உகப்பாவன் — மிகவும் ஆனந்தமடைவேன்.

76. இந்த ஶ்லோகத்தால் 'இந்தக் கேசவார்ஜுந ஸம்வாதம் பேராச்சரியமாகவும் பேரானந்தத்தை விளைப்பதாகவும் இருந்தது' என்கிறான் ஸஞ்ஜயன். (ராஜந்) திருதராஷ்ட்ர மகாராஜனே! (புண்யம் அத்₃பு₄தம் கேஶவார்ஜுநயோ: இமம் ஸம்வாத₃ம் ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய) கேசவனுக்கும் அர்ஜுநனுக்கும் இடையே நிகழ்ந்ததாய், கேட்கும்போதே கேட்பவனை மிகவும் பரிசுத்தப்படுத்துவதாய், சொல்லாலும் பொருளாலும் பேராச்சரியத்தை விளைப்பதான இந்த ஸம்வாதத்தை நினைக்குந்தோறும். (புண்யம்) கேட்பவனுக்கும் இது பெரும் பயனை விளைப்பது என்பது 70 71 வது ஶ்லோகங்களில் விளக்கப்பட்டது. (முஹுர்முஹு: ஹ்ருஷ்யாமி ச) 'அப்படிப் புண்யமாயிருக்கையாலும் அத்₃பு₄தமாயிருக்கையாலும் இதை நினைக்கும் போதெல்லாம் நான் மீண்டும் மீண்டும் பேரானந்தப்படுகிறேன்' என்று திருதராஷ்ட்ரனுக்கு ஸஞ்ஜயன் கேசவார்ஜுன ஸம்வாத₃த்தின் பெருமையை உணர்த்துகிறான். 76.

तच्च संस्मृत्य संस्मृत्य रूपमत्यद्भुतं हरेः ।
विस्मयो मे महान् राजन् हृष्यामि च पुनः पुनः ॥७७॥

6-11-09
28-2-11-

77. தச்ச ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ரூபம் அத்யத்₃பு₄தம் ஹரே: ।
விஸ்மயோ மே மஹாந் ராஜந் ஹ்ருஷ்யாமி ச புந:புந: ॥

ராஜந் – திருதராஷ்டிரமஹாராஜனே! ஹரே: தத் அத்யத்₃பு₄தம் ரூபம் — கண்ணனுடைய அந்தப் பேராச்சரியமான விஶ்வரூபத்தை, ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ச — நினைக்கும் தோறும், மே — எனக்கு, மஹாந் விஸ்மய: — பெரு வியப்பு (உண்டாகிறது), புந:புந: ஹ்ருஷ்யாமி ச — மறு படியும் மறுபடியும் பேரானந்தமும் அடைகிறேன்.

---

77. ஆங்குமிக வற்புதமா மண்ணல் வடிவினையு
மீங்குநினை தோறு மெழவியபபா – யோங்கு
முகப்புமிகு மேன்மேலு முற்றென் றுரைத்தான்
மிகப்புகழ்சேர் சஞ்சயன்றான் மிக்கு. 77

ஆங்குமிக அற்புதமாம் — போர்க்களத்திலே பேராச்சரியமாகக் காட்சியளித்த, அண்ணல் வடிவினையும் — கண்ணனுடைய விஶ்வருபத்தையும், ஈங்கு நினைதோறும் — இவ்விடத்திலிருந்து நினைக்கும் போதெல்லாம், எழ வியப்பாய் ஓங்கும் — மிகுந்த வியப்பு (எனக்கு) ஓங்கிநிற்கும்; மேன் மேலும் உற்று உகப்பு மிகும் — மேன்மேலே வளர்ந்து ஆனந்தம் மிகுதியாகும், என்று — என்று, மிகப் புகழ் சேர் சஞ்சயன் தான் – மிகவும் புகழுடைய ஸஞ்ஜயன், மிக்கு உரைத்தான் — உறுதியாகக் கூறினன்.

भा ।। तच्चार्जुनाय प्रकाशितमैश्वरं हरेस्तदद्भुतं रूपं मया साक्षात्कृतं संस्मृत्य संस्मृत्य हृष्यतो मे महान् विस्मयो जायते; पुनःपुनश्च हृष्यामि ।। ७७ ।।

भा ।। किमत्र बहुनोक्तेन--

यत्र योगेश्वरः कृष्णो यत्र पार्थो धनुर्धरः ।
तत्र श्रीर्विजयो भूतिर्ध्रुवा नीतिर्मतिर्मम ।। ७८ ।।

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु मोक्षसंन्यासयोगो नाम
अष्टादशोऽध्यायः ।। १८ ।।

---

77 இந்த ஶ்லோகத்தில் விஶ்வரூபதரிசனத்தினால் தனக்கு விளைந்த வியப்பையும் ஆனந்தத்தையும் கூறுகிறான் ஸஞ்ஜயன். (ஹரே: தத் அத்$_3$பு$_4$தம் ரூபம்) கண்ணனுடைய அந்தப் பேராச்சரியமான உருவத்தை. 'அத்$_3$பு$_4$தம்' என்று அடைமொழியிடுகையாலும், அதனால் பெருவியப்பும் ஆனந்தமும் உண்டாவதாகக் கூறுகையாலும், கண்ணனுடைய சாதாரண ரூபத்தைக் காட்டிலும் பேராச்சரியத்தை விளைக்கக்கூடியதாய், ''ஐஶ்வரம் ரூபம்'' [கீதை 11—3] என்று அர்ஜுனனால் குறிக்கப்பட்டதான விஶ்வரூபமே இங்கு சொல்லப்படுகிறது என்று விளங்குகிறது. (ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய) மறுபடியும் மறுபடியும் நினைக்குந்தோறும். ஶ்லோகத்தின் பிற்பாதியில் சொன்னபடி பேரானந்தத்தை விளைக்கையாலே என்றால் நேரே காணப்பட்ட அந்த ரூபத்தை மறுபடியும் மறுபடியும் நினைக்க வேண்டியிருக்கிறது என்று கருத்து. (மே மஹாந் விஸ்மய:) எனக்குப் பெரிய வியப்பு உண்டாகிறது. (புந: புந: ஹ்ருஷ்யாமி ச) சென்ற ஶ்லோகத்தில் சொன்னபடி இந்த ஸம்வாத$_3$த்தை நினைத்துப் பேரானந்த$_3$த்தை அடைந்ததற்கு மேலே, இந்த விஶ்வரூபத்தை நினைத்து மீண்டும் மீண்டும் பேரானந்தமடைகிறேன். (ராஜந்!) திருதராஷ்டிர மஹாராஜனே! உனக்கு உசாத்துணையாக இருந்ததால் நான் பெற்றபேறு இது என்று கருத்து.

9.11.09-ஒருவ ஸ்ரீ பத்பாகவதம் தொடர்.



6-11-09.
28-7-11.

78. யத்ர யோகே₃ஶ்வர: க்ருஷ்ணோ யத்ர பார்த்தோ₂ த₄நுர்த₄ர:।

தத்ர ஶ்ரீர்விஜயோ பூ₄திர்த்₄ருவா நீதிர்மதிர்மம ॥

இதி ஶ்ரீமத்₃ப₄க₃வத்₃கீ₃தாஸு உபநிஷத்ஸு மோக்ஷ-ஸந்ந்யாஸயோகோ₃ நாம அஷ்டாத₃ஶோऽத்₄யாய: [18]

யத்ர—எவ்விடத்தில், யோகே₃ஶ்வர:—சிறப்புக்களையெல்லாம் ஆள்பவனான, க்ருஷ்ண:—கண்ணன் (இருக்கிருனே), யத்ர—எவ்விடத்தில், த₄நுர்த₄ர:—வில்லை ஏந்திய, பார்த்த₂:—அர்ஜுனன் (இருக்கிருனே), தத்ர—அவ்விடத்திலேயே, ஶ்ரீ:—எல்லாச்செல்வமும், விஜய:—வெற்றியும். பூ₄தி:—வைபவங்களும், நீதி:—த₄ர்மமும், த்₄ருவா—நிலையாக (உள்ளன என்பது), மம மதி:—என்கருத்தாகும்.

---

78. எவ்விடத்தான் யோகத்துக் கீசனுங் கண்ணன்ருன்
எவ்விடத்தான் வில்லேந் தெழில் விசய—னவ்விடத்தே
வாய்ந்த திருவிசையம் வாழ்வுவள நீதிதிட
மேய்ந்தனவென் றேமதிப்பன் யான்.

யோகத்துக்கு ஈசனும் கண்ணன்தான் எவ்விடத்தான்—சிறப்புக்கள் அனைத்தையும் ஆள்பவனான கண்ணன் எவ்விடத்திலிருக்கிருனே, வில் ஏந்து எழில் விசயன் எவ்விடத்தான்—வில்லை ஏந்திய அழகிய அர்ஜுனன் எவ்விடத்தில் இருக்கிருனே. அவ்விடத்தே — அந்த இடத்திலேயே. வாய்ந்த திரு — பொருந்தி நிற்கும் செல்வம், விசையம் — வெற்றி, வாழ்வு வளம் — வாழ்க்கை நலன்கள், நீதி— தர்மம் (ஆகியவை), திடம் ஏய்ந்தன—உறுதியாகப்பொருந்தி நிற்கின்றன. என்றே—என்றே, யான் மதிப்பன் — நான் எண்ணுகிறேன்.

भा ।। यत्र योगेश्वरः — कृत्स्नस्योच्चावचरूपेणावस्थितस्य चेत-नस्याचेतनस्य च वस्तुनो ये ये स्वभावयोगाः; तेषां सर्वेषां योगाना-

---

78 தன் பிள்ளையான துரியோதனனின் வெற்றியை விரும்பி, ''மாமகா: பாண்ட3வாஶ்சைவகிமகுர்வத'' [கீதை1—1][என்பிள்ளைகளும் பாண்டுவின் பிள்ளைகளும் என்ன செய்தார்கள்] என்று கேள்வி கேட்ட திருதராஷ்டிரன், ''அர்தே4ாக்தா: குருபாஞ்சாலா:'' [குருநாட்டைச் சேர்ந்தவர்களும், பாஞ்சால நாட்டைச் சேர்ந்தவர்களும் பாதி சொன்னால் புரிந்து கொள்வார்கள்] என்கிறபடியே குருநாட்டைச் சேர்ந்தவனானையாலே, தன் கருத்தை உள்ளடக்கிப் பாதி சொன்னாலே புரிந்து கொள்வானென்று கருதி, சென்ற ஶ்லோகங்களிலே க்ருஷ்ணார்ஜுன ஸம்வாத3ம் அற்புதமானது, புண்யமானது என்றெல்லாம் சொல்லுவதன் மூலம் 'வெற்றி அர்ஜுனனுக்கே' என்று ஸஞ்ஜயன் திருதராஷ்டிரனுக்கு உணர்த்தினான். வெளிக்குருடாயிருப்பதோடன்றியில் பிள்ளைப் பாசத்தாலே உட்குருடாயும் இருந்தபடியாலே, அதை திருதராஷ்டிரன் புரிந்துகொள்ளவில்லை, அதனால் கேள்விக்கு வெளிப்படையாக ''பல சொல்லியென்! கண்ணனும் அர்ஜுனனும் இருக்குமிடத்திலேயே வெற்றி முதலான எல்லாம் நிலையாய் இருக்கும்'' என்று பதில் சொல்லுகிறான் ஸஞ்ஜயன் இந்த ஶ்லோகத்தில். (யத்ர) எந்தப் பக்ஷத்தில். (யோகே3ஶ்வர: க்ருஷ்ண:) யோகே3ஶ்வரனான கண்ணன் இருக்கிறானோ; 75ம் ஶ்லோகம் கண்ணன் ஆப்தர்களில் தலை சிறந்தவன் என்று சொல்லுமிடமாகையாலே அங்கு ''யோகே3ஶ்வர'' பத3த்திலுள்ள ''யோக3'' ஶப்3த3ம் ஜ்ஞானம் முதலான கல்யாண கு3ணச்சேர்த்தியைக் கூறுவதாகப் பொருள் கொள்ளப்பட்டது. இங்கு கண்ணனிருக்கும் இடத்திலேயே வெற்றி முதலான எல்லாம வந்து சேரும் என்று கூறுமிடமாகையாலே, அதற்கு அநுகுணமாக ''யோகே3ஶ்வர'' ஶப்3த3த்திலுள்ள ''யோக3'' பத3ம், உலகில் பலவிதமான ஏற்றத்தாழ்வுகளையுடைய சேதநாசேதநப் பொருள்களில் அமைந்துள்ள சிறப்புக்களைக் குறிப்பதாய், ''யோகே3ஶ்வர'' ஶப்3த3ம் அந்தச் சிறப்புக்களனைத்தையும் ஆள்பவன் கண்ணன் என்று உணர்த்துகிறது. தன்னையொழிந்த எல்லாப் பொருள்களின் ஸ்வரூபம் (ஸத்தை). ஸ்தி2தி (வாழ்வு), ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகள் ஆகிய அனைத்தும் தன்

मीश्वरः, स्वसंकल्पायत्तस्वेतरसमस्तवस्तुस्वरूपस्थितिप्रवृत्तिभेदः कृष्णः- वसुदेवसूनुः, यत्र च पार्थो धनुर्धरः तत्पितृष्वसुः पुत्रः तत्पदद्वन्द्वैकाश्रयः;

---

ஸங்கல்பத்தாலே ஆம்படி இருப்பவன் என்று கருத்து. (க்ருஷ்ண:) இந்த யோகேஃஶ்வரனாயிருக்கும் பெருமை பரநிலையில் மாத்திர மன்று; வஸுதேவனின் பிள்ளையான கிருஷ்ணனாக அவதரித்த போதும் உண்டு என்று கருத்து. (யத்ர பார்த்தோ₂ த₄நுர்த₄ர:) எவ்விடத்தில் வில்லேந்தியவனான பார்த்தன் இருக்கிறானோ. (பார்த்த₂:) ப்ருதை₂ எனப்படும் குந்தியின் பிள்ளை; அத்தையின் பிள்ளையாகையாலே கண்ணனுடைய அன்புக்கு இலக்கானவன் என்று உணர்த்தப்படுகிறது. ''பார்த்த₂ஸ்ய ச மஹாத்மந:'' என்று 74 வது ஶ்லோகத்தில் சொல்லியபடியே பேரறிவாளனாகை யாலே கண்ணனுடைய திருவடியிணையைப் பற்றி நிற்பவன் என்னும் பொருளும் இங்கே உணர்த்தப்படுகிறது. (த₄நுர்த₄ர:) வில்லேந்தியவன். ''விஸ்ருஜ்ய ஸஶரம் சாபம்'' [கீதை 1-47] [அம்போடு கூடிய வில்லைக் கைவிட்டு] என்றுகைவிட்ட காண்டீபவில்லை, கண்ணன் கீதோபதேசம் செய்தபிறகு கைக்கொண்டுவிட்டான் என்று கருத்து. கண்ணனையும் அர்ஜுனனையும் சேர்த்துச் சொல்லுகையாலே, ''உன் பிள்ளையான துரியோதனனைப்போலே அஸாரமான யாதவஸேனையைக் கண்ணனிடமிருந்து வேண்டிப் பெறாமல், பரமாத்மாவான கண்ணனையே துணையாகக் கொண்டவன் அர்ஜுனன்'' என்று உணர்த்துகிறான் ஸஞ்ஜயன். (தத்ர) அவ்விடத்திலேயே. பாண்டவர்களுக்கே வெற்றி என்று முகத்தில் அறைந்ததுபோலே சொல்லாமல், தா₃க்ஷிண்யத்தாலே 'அவ்விடத்தில்' என்று சொல்லுகிறான். (ஸ்ரீ:) செல்வம்; ராஜ்யம் முதலான போ₄க்₃யங்களின் ஸம்ருத்₃தி₄யைச் சொல்லுகிறது. (விஜய:) வெற்றி; எதிரிகளை அழித்து வெற்றி கொள்ளுதல். (பூ₄தி:) ஐஶ்வர்யம்; ''விபூ₄திர் பூ₄திரைஶ்வர்யம்'' [அமரகோஶம் 1] என்னும் நிக₄ண்டு காணத்தக்கது. பல புருஷர்களை ஆளும் திறமையை இங்கு ஐஶ்வர்ய ஶப்₃த₃ம் குறிக்கிறது ஆகையால் 'ஸ்ரீ' ஶப்₃த₃த்தோடு புனருக்தியில்லை. அன்றிக்கே, 'ஸ்ரீ' ஶப்₃த₃த்தால் சொல்லப்பட்ட போ₄க்₃ய ஸம்ருத்₃தி₄யின் அபிவிருத்தி ''பூ₄தி'' ஶப்₃த₃த்தால் சொல்லப்படுவதாகவும் கொள்ளலாம். (நீதி:) ராஜ நீதியைச் சொல்லும் அர்த்த₂ ஶாஸ்த்ரங்களால் உண்டாகும்

तत्र श्रीर्विजयो भूतिर्नीतिश्च ध्रुवा-निश्चला इति मतिर्ममेति ॥ ७८ ॥

इति श्रीभगवद्रामानुजविरचिते श्रीमद्गीताभाष्ये अष्टादशोऽध्यायः । १८॥

---

அரசன் செய்ய வேண்டிய கடமைகளில் உறுதியைக் குறிக்கிறது. அல்லது ஶாஸ்த்ரங்களில், சொல்லப்பட்ட அறத்தின் வழியில் நிற்பதைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். (த்4ருவா) இவையெல்லாம் கண்ணனும் அர்ஜுனனும் சேர்ந்திருக்குமிடத்திலேயே நிலையாயிருக்கும் என்று கருத்து. உன் பிள்ளைகளும், அவர்களுடைய துணைவர்களும் ராஜதந்திரத்தில்மிக்கவர்களாய், கவனத்தோடு ஸாமம், தா3னம், பே4த3ம், த3ண்ட3ம் என்னும் நால்வகை உபாயங்களைப் பயன் படுத்தினாலும் செல்வம் முதலானவைகள் பாண்டவர்களை விட்டு அசையாமலிருக்கும் என்று கருத்து. (மதிர் மம) இது என்னுடைய உறுதியான கருத்து. உனக்கு இவ்விஷயத்தில் உறுதியில்லாதிருந்தபோதிலும் எனக்கு இதில் உறுதியுண்டு என உணர்த்துகிறான். "ஶ்ருணு ராஜந் ந தே வித்3யா மம வித்3யா ந ஹீயதே। வித்3யாஹீநஸ்தமோத்4வஸ்தோ நாபி4ஜாநாஸி கேஶவம்।...மாயாம் ந ஸேவே ப4த்3ரம் தே ந வ்ருதா2 த4ர்மமாசரே। ஶுத்3த4பா4வம் க3தோ ப4க்த்யா ஶாஸ்த்ராத்3 வேத்3மி ஜநார்த3நம்।" [பா4ர-உத்3யோ 68—2, 5] [உலகையாளும் அரசனே! எனக்கு ப்3ரஹ்ம ஜ்ஞானம் குறைவற உள்ளது. உனக்கு அது இல்லை. ப்3ரஹ்ம ஜ்ஞானமில்லாமையாலே தமோகு3ணத்திற்கு வசப்பட்டுக் கேசவனை நீ அறிகிறாயல்லை......(நான் உன்னைப்போல்) வஞ்சனையைக் கைக்கொள்ளுவதில்லை. உனக்கு மங்களம் உண்டாகுக. (உன்னைப்போல்) வீணான த4ர்மத்தை நான் அனுஷ்டிப்பதில்லை. பரிசுத்தமான ஸ்வபாவத்தையுடையவனாய், ப4க்தியினாலும் ஶாஸ்த்ரத்தினாலும் ஜனார்த்தனனை அறிகிறேன் நான்] என்று ஸஞ்ஜயன் திருதராஷ்ட்ரனைக் குறித்துச் சொன்னானன்றோ. 78.

ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி தாஸன்
இயற்றிய கீதாவ்யாக்யானத்தில்
பதினெட்டாம் அத்தியாயத்தின்
விவரணம் நிறைவுற்றது.

## பகவத்கீதை வெண்பா

(பதினெட்டாம் அத்தியாயத்தின் ஸாரத்தைக்கூறும் பாசுரம்)

தன்மைக் கருமந் தகுகுணத்தின் றூய்மையுட
னன்மை பயில்சார நன்கறியத்—தொன்மைப்
பரமனருள் கீதைப் பதினெட்டா மோத்தாஞ்
சரமமுரைத் தோர்ந்ததிது தான்.

தன்மைக்கருமம்—மூவகைப் பரித்யாகத்துடன் செய்யப்படும் கர்மயோகமும் மோக்ஷோபாயமாயிருக்கும் என்பதையும், தகுகுணத்தின் தூய்மையுடன் — ஸத்வ குணம் தூயதாகையாலே கைக்கொள்ளத்தக்கது என்பதையும், நன்மை பயில் சாரம் — கீதா ஶாஸ்த்ரத்தின் ஸாரமான பக்தி ப்ரபத்திகளே நன்மையளிப்பவை என்பதையும், நன்கு அறிய — நன்ருக அறியும்படியாக, தொன்மைப் பரமன் அருள் கீதை பதினெட்டாம் ஓத்தாம் சரமம் — பழையோனுன கிருஷ்ண பரமாத்மா அருளிய கீதையின் பதினெட்டாவது கடைசி அத்தியாயம், உரைத்து ஓர்ந்தது இது தான்—உரைத்து நிச்சயித்தது இதுவேயாகும்.

வாதிகேஸரி ஜீயர் அருளிய பகவத்கீதை
வெண்பாவில் பதினெட்டாம்
அத்தியாயம் முற்றிற்று.

## த்ருதீய ஷட்கத்தின் ஸாரப்பொருள்

உடலுயிரின் றன்மை யுறுகுணத்தின் பன்மை
யிடரிலெழி லீசன்ற னேற்றந் திடவசுரர்
தேவ ரியல்வுகுணஞ் சேர்கருமஞ் சார்ந்தமர்வு
மாவனபின் னுரைத் தமர்ந்து.

உடல் உயிரின் தன்மை — உடல் உயிர் ஆகியவற்றின் தன்மைகள், உறு குணத்தின் பன்மை—உடலில் சேர்ந்தி

ருக்கும் குணங்கள் மூன்றுயிருக்கை, இடரில் எழில் ஈசன் தன் ஏற்றம்—குற்றமற்ற நன்மைகளையுடைய ஈசனுடைய பெருமைகள், திட அசுரர் தேவர் இயல்வு (ஒவ்வொரு மனிதனை) உறுதியாகப் பற்றிநிற்கும் அசுரத்தன்மையும் தேவத்தன்மையும். குணம் சேர் கருமம் சார்ந்து அமர்வும் ஆவன — குணத்துக்குத் தக்க கருமமுடைய நாலுவர்ணமும் ஆகியவற்றையும், பின் ஆறு ஓத்து அமர்ந்து — கடைசியாக ஆறு அத்தியாயங்கள் கொண்ட த்ருதீயஷட்கம் கூறுகிறது,

## பகவத்கீதை வெண்பா—பின்னுரை

(வாதிகேஸரி ஜீயர்)

தூயகரு மங்களினுற் சத்வமிக வுண்டாக்கி
யேயவுணர் வாலுயிரி னீறறிந்து—மாயனிடை
முத்தியுறுஞ் சிந்தை முயலாசை முன்பணியாற்
பத்தியுறல் கீதைப் பயன். 1.

தூய கருமங்களினுல்—புண்யகருமங்களால், சத்வம் மிக உண்டாக்கி - ஸத்வ குணத்தை மிகவும் வளரும்படி செய்து, ஏய உணர்வால் — அதனுல் உண்டான ஜ்ஞானத்தால், உயிரின் ஈறு அறிந்து—ஆத்மாவுக்கு முடிவான பயனைத் தெரிந்துகொண்டு. மாயனிடை — எம்பெருமானிடம், முத்தி உறும் சிந்தை-மோக்ஷத்தை விரும்பும் மனத்தோடும், முன் பணியால் முயல் ஆசை — அவன் திருமுன்பே கைங்கர்யம் செய்வதில் விருப்பத்தோடும், பத்தி உறல்—அவனிடம் அன்பு செலுத்துதல், கீதைப் பயன்—கீதையைப் படித்ததின் பயனுகும்.

எவ்வறமுஞ் சொல்லி யிறுவாஞ் சுலோகத்தாற்
செவ்வறமாந் தன்சரணச் செப்புதலா—லவ்வறத்துத்
தான்துணையா மாயன் றனித்துத் தனையளிக்கும்
வான்றுணையா மென்றிருத்தல் வாய்ப்பு. 2.

எவ்வறமும் சொல்லி — எல்லா மோக்ஷோபாயங்களை யும் சொல்லி, இறுவாம் சுலோகத்தால் — ('ஸர்வத₄ர் மாந் பரித்யஜ்ய' என்று தொடங்கும்) சரம ஶ்லோகத் தால், செவ்வறமாம் தன் சரணு செப்புதலால் — உண்மை யான மோக்ஷோபாயம் தன்னைச் சரணடைவதே என்று கூறுகையால் அவ்வறத்து — கர்ம ஜ்ஞான ப₄க்தி யோக₃ங் களாகிற மோக்ஷோபாயங்களிலும், தான் துணையாம மாயன் — தான் பலனளிப்பவனுயிருந்து கொண்டு உதவி புரியும் எம்பெருமான், தனித்து — (அவ்வுபாயங்களில்லா விடினும்) தான் தனியாகவே, தனை அளிக்கும் — (ஜீவாத் மாவுக்குத்) தன்னைக் கொடுக்கும், வான் துணையாம் — பெரிய உபாயமாக இருப்பான், என்று இருத்தல் — என்று நினைத்து இருப்பது, வாய்ப்பு — நல்லது.

நெஞ்சுட் கலந்தென்னை நேர்நினைத்து நூலிட்டுச்
செஞ்சுடர்சேர் தாற்பரிய தீபத்தாற் — பஞ்சவர்தந்
தேர்ப்பாகன் கீதைச் சிறந்தபொருள் காட்டினு
னேர்ப்பாகு நன்றே யினிது. 3

பஞ்சவர்தம் தேர்ப்பாகன் — பஞ்சபாண்டவர்களில் ஒரு வனை அர்ஜுனனுக்குச் சாரதியாய் இருந்த கண்ணன், என்னை நெஞ்சுள் கலந்து — என்னுடைய மனத்தில் புகுந்து, நேர் நினைத்து நூல் இட்டு — என்னைத்தக்கவனுக எண்ணி இந்நூலை எழுதச் செய்து, செஞ்சுடர் சேர் தாற்பரிய தீபத் தால் — செவ்வையான பொருளோடு கூடிய (ஒளிமிக்க) தாத்பர்யமாகிற விளக்கால், கீதை சிறந்த பொருள் காட்டி னுன் — கீதையின் சிறந்த பொருளை வெளிப்படுத்தினுன். நேர்ப்பாகு நன்றே இனிது — சாரதியாக இருந்து என்னை நேராகச் செலுத்தியது நன்ருகவும் இனிதாகவும் உள்ளது.

மாய னருள்கீதை மன்னு பொருடன்னைத்
தூய பெரும்பூதூர்த் தொன்முனிதன்—மேய
தகையான் மணவாள மாமுனிவன் சொன்னான்
றொகையாறும் வெண்பாச் சுரந்து. 4

மாயன் அருள் கீதை மன்னு பொருள் தன்னை — கண்ணன் அருளிய கீதையின் உண்மையான பொருளை, தூய பெரும் பூதூர் தொன்முனிதன் மேய தகையால் — ஸ்ரீபெரும் பூதூரில் அவதரித்த தூய்மைமிக்க யதிராஜரின் பரம கருணையாலே, தொகை ஆறும் வெண்பாச் சுரந்து—தொகுத்துக் கூறும் வெண்பாக்களாகப் பாடி, மணவாள மாமுனிவன் சொன்னான் — அழகிய மணவாளச் சீயர் சொன்னார்.

சொட்டை மணவாளத் தூய்முனிவன் சொற்செய்த
சட்ட மருவுந் தமிழ்ப்பாவாற்—கட்டெழில்சீர்க்
கோமா னருள்கீதை கூறும் பொருளுணர்வார்
சீமா னடிசேர்வர் சென்று. 5

சொட்டை மணவாளத் தூய்முனிவன் சொற்செய்த— சொட்டைக்குலம் எனப்படும் ஶட₂மர்ஷண கோத்திரத்தில் உதித்த அழகிய மணவாளச்சீயர் இயற்றிய, சட்டம் மருவும் தமிழ்ப்பாவால் — இலக்கண விதிகளுக்கு உட்பட்ட தமிழ்ப்பாட்டால், கட்டு எழில் சீர் கோமான் அருள் கீதை கூறும் பொருள் உணர்வார் — முழுவதும் அழகு நிறைந்த கண்ணனருளிய கீதை சொல்லும் பொருளை அறிபவர்கள், சீமானடி — அந்த ஸ்ரீமந் நாராயணனுடைய திருவடிகளை, சென்று—அர்ச்சிராதிகதியாலேசென்று, சேர்வர்— சேர்வார்கள்.

**ஸுதர்சனர் எழுதிய பதவுரையுடன் கூடிய**

**பகவத்கீதை வெண்பா முற்றிற்று.**

## கீதார்த்த சங்கிரகம்

[ ஸ்ரீ வேதாந்த தேசிகர் அருளியது ]

பதினெட்டாம் அத்தியாயத்தின் ஸாரப்பொருள்

சத்துவ வீடுடை நற்கரு மந்தா னுகந்தமையுஞ்
சத்துவ முள்ளது தான்குறிக் கொள்வகை செய்ததுவுஞ்
சத்துவ நற்கிரி சைப்பய னுஞ்சர ணுகதியுஞ்
சத்துவ மேதரு வானுரைத் தான்றனிப் பார்த்தனுக்கே.

சத்துவமே தருவான்—ஸத்வகுணத்தையே அருளும் கண்ணன், தனிப்பார்த்தனுக்கு — ஒப்பற்ற அர்ஜுன னுக்கு, சத்துவ வீடு உடை — ஸாத்விகத்யாகத்தோடு கூடிய, நல் கருமம்—(சாஸ்திரத்தை யொட்டிய) சிறந்த கருமங்களை, தான் உகந்தமையும் — (ஸர்வேஶ்வரனுகிற) தான் விரும்பியிருப்பதையும், சத்துவமுள்ளது — ஸாத்விக மான கர்மத்தை, தான் குறிக்கொள் வகை செய்ததுவும்— ஜீவன் கைக்கொள்ளலாம்படி (கர்மங்களை ஸாத்விகம் ராஜ ஸம் தாமஸம் என்று) மூவகையாகப் பிரித்ததும், சத்துவ நல் கிரிசைப் பயனும் — ஸாத்விகமான சிறந்த கர்மங்களின் பயன் முக்தியே என்பதும், சரணுகதியும் — (சரம ஶ்லோ கத்தால் சொல்லப்பட்ட) சரணுகதியும் (ஆகிய இவற்றை) உரைத்தான் — உபதேசித்தான்.

## கீதார்த்தசங்கிரகம்-நூற்பயன்

வன்பற் றறுக்கு மருந்தென்று மாயவன் ருனுரைத்த
வின்பக் கடலமு தாமென நின்றவிக் கீதைதனை
யன்பர்க் குரைப்பவர் கேட்பவ ராதரித் தோதுமவர்
துன்பக் கடலுட் டுளங்குகை நீங்கித் துலங்குவரே.

வன்பற்று — உறுதியான ஸம்ஸாரபந்தத்தை, அறுக் கும் — ஒழிக்கக்கூடிய, மருந்து என்று — மருந்தாயிருக் கும் என்னும் திருவுள்ளத்தாலே, மாயவன் தான்உரைத்த— மாயப்பிரானுன கண்ணன் தானே அருளிச்செய்ததாய்,

இன்பக்கடல்--(மஹாபாரதமாகிற) ஆனந்த சமுத்திரத்தின், அமுது ஆம் என நின்ற — அமிர்தமாகும் என்னும்படி நிலை நின்றதான, இக்கீதைதனை — இந்த கீதையை, அன்பர்க்கு உரைப்பவர் — தன்னை அன்புடன் அடைந்தவர்களுக்கு உபதேசிப்பவர்களும், கேட்பவர்—அவர்களிடம் கேட்பவர்களும், ஆதரித்து ஓதுமவர்— அன்புடன் அத்யயனம் செய்பவர்களும், துன்பக்கடலுள் — (ஸம்ஸாரமாகிற) துக்கம் நிறைந்த சமுத்திரத்திற்குள், துளங்குகை நீங்கி — உழலுவதிலிருந்து நீங்கப்பெற்று, துலங்குவரே — பிரகாசிப்பார்கள்.

## கீதார்த்த சங்கிரகம்— இறுதிப்பாட்டு

தீதற்ற நற்குணப் பாற்கடற் றுமரைச் செம்பலர்மேன்
மாதுற்ற மார்பன் மருவவின் கீதையின் வண்பொருளைக்
கோதற்ற நான்மறை மௌலியி னாசிரி யன்குறித்தான்
காதற் றுணிவுடை யார்கற்கும் வண்ணங் கருத்துடனே.

தீது அற்ற — குற்றமில்லாத, நல்குண — சிறந்த குணங்களையுடையவளாய், பாற்கடல் - திருப்பாற்கடலில் (உள்ளதான)செம் தாமரை மலர்மேல்—சிவந்த தாமரைப் பூவின்மேல் (வீற்றிருப்பவளான),மாது உற்ற - பெரியபிராட்டியார் எழுந்தருளியிருக்கும், மார்பன் — திருமார்பை உடைய கண்ணன், மருவ — ஏற்றுக்கொள்ளும்படி. இன் கீதையின் — இனிய பகவத்கீதையின், வண்பொருளை — அழகிய தாத்பர்யத்தை, காதல் துணிவு உடையார் — (அவ்வெம்பெருமானிடம்) அன்பையும், (அவனே தஞ்சமென்னும்) உறுதியையும் உடையவர்கள், கருத்துடன் — சிரத்தையுடன், கற்கும் வண்ணம் — கற்று அறியும்படி, கோது அற்ற — எந்தக் குறையுமில்லாத, நால்மறை மௌலியின் ஆசிரியன் — நான்கு வேதாந்தங்களின் ஆசிரியரான வேதாந்தாசாரியர், குறித்தான் — விளக்கினார்.

பதவுரையுடன் கூடிய கீதார்த்த சங்கிரகம்
நிறைவுற்றது.

## கீதாவ்யாக்யானம்-முடிவுரை

சேயன் அணியன் சிறியன் மிகப்பெரியன்
ஆயன் துவரைக்கோ னாய்நின்ற – மாயன் அன் (று)
ஓதிய வாக்கதனைக் கல்லார் உலகத்தில்
ஏதிலராம் மெய்ஞ்ஞான மில். [நான் திருவ-71]

என்னும் பாட்டில் திருமழிசைப்பிரான் கீதையின் ஸாரார்த்தத்தை உணராதவன் அறிவிலி என்று அருளிச் செய்தார்.

இல்லறம் இல்லேல் துறவற மில்என்னும்
சொல்லற மல்லனவும் சொல்லல்ல – நல்லறம்
ஆவனவும் நால்வேத மாத்தவமும், நாரணனே
யாவதீ தன்றென்பா ரார்? [நான் திருவ-72]

என்னும் அடுத்தபாட்டில் 'இல்லறம்' என்று கர்மயோகத்தையும், 'துறவறம்' என்று ஜ்ஞானயோகத்தையும் 'அல்லன அறம்' என்று பக்தி முதலான மற்ற மோக்ஷோபாயங்களையும் குறிப்பிட்டு, 'அவற்றை மோக்ஷோபாயமாகக் கூறுவது சரியல்ல' என்றும், 'நாரணன் ஒருவனே வேதத்தில் குறிக்கப்பட்ட மோக்ஷோபாயம்' என்றும் கூறி 'இதை மறுக்க வல்லார் உண்டோ?' என்று அறை கூவினர். இதுவே கீதையின் ஸாரமான சரமச்லோகத்தின் பொருள் என்பது ஆழ்வார்களின் கருத்து என்று இதிலிருந்து விளங்குகிறது இக்கருத்தை மற்றை ஆழ்வார்களும் அறுதியிட்டிருப்பதை இந்த கீதா வ்யாக்யானத்திலேயே ஆங்காங்கு காட்டியுள்ளோம். இவ்வர்த்தம் ஸ்ரீமந்நாராயணனிடமிருந்து ஸேனைமுதலியார் (விஷ்வக்ஸேநர்) மூலம் நம்மாழ்வாருக்கும், நம்மாழ்வாரிடமிருந்து நாதமுனிக்கும், நாதமுனியிடமிருந்து உய்யக்கொண்டார் மூலமாக மணக்கால் நம்பிக்கும், மணக்கால் நம்பியிடமிருந்து நாதமுனியின் திருப்

பேரனுரான ஆளவந்தார் என்னும் யாமுனாசாரியருக்கும் குருபரம்பராப்ராப்தமாக உபதேசிக்கப்பெற்று, ஆளவந்தாரால் கீதார்த்த ஸங்க்₃ரஹம் என்னும் 32 ஶ்லோகங்கள் கொண்ட க்ரந்தத்தில் முதன் முதலாக வெளியிடப் பெற்றது. இந்த கீ₃தார்த்த₂ஸங்க்₃ரஹத்தை அடிப்படையாகக் கொண்டே எம்பெருமானார் தம் கீ₃தாப₄ாஷ்யத்தில் கீதையின் பொருளை விளக்கியுள்ளார் என்பதை இதுவரை விரிவாக விவரித்திருக்கிறோம். கீதார்த்த₂ ஸங்க்₃ரஹத்தின் 22 ஶ்லோகங்களுக்கும் இதுவரை பதவுரைகொடுக்கப்பட்டு அவற்றின் ஸாரார்த்த₂மும் கீதாவ்யாக்யானத்திலேயே வெளியிடப்பட்டது. இனி கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹத்தில் எஞ்சியிருக்கும் பத்து ஶ்லோகங்களிலும் கீதையிலிருந்து நாம் தெரிந்துகொள்ளவேண்டிய மற்றும் பல விஷயங்களும் கீ₃தா சரமஶ்லோகார்த்த₂மும் விவரிக்கப்படுகின்றன. அடுத்தபடியாக அந்த ஶ்லோகங்களுக்குப் பதவுரையும் அளித்து வியாக்கியானமும் செய்து கீதார்த்த விவரணம் என்னும் இந்த கீதாவ்யாக்யானத்தை நிறைவு படுத்துகிறோம்.

## யாமுநாசார்யர் அருளிய கீதார்த்த ஸங்க்ரஹம் (23 – 32)

कर्मयोगस्तपस्तीर्थदानयज्ञादिसेवनम् ।
ज्ञानयोगो जितस्वान्तैः परिशुद्धात्मनि स्थितिः ॥ २३ ॥

23. கர்மயோக₃ஸ்தபஸ்தீர்த்த₂தா₃நயஜ்ஞாதி₃ஸேவநம் ।
ஜ்ஞாநயோகோ₃ ஜிதஸ்வாந்தை: பரிஶுத்₃தா₄த்மநி
ஸ்தி₂தி: ॥

கர்மயோக₃: – கர்மயோக₃மாவது. தபஸ்தீர்த்த₂தா₃ந யஜ்ஞாதி₃ஸேவநம் – தவம், தீர்த்தயாத்திரை, தானம், யஜ்ஞம் (யாகம்) முதலானவற்றில் இடைவிடாது ஈடுபடுதலே

யாகும், ஜ்ஞாந யோக₃: — ஜ்ஞாநயோக₃மாவது, ஜித ஸ்வாந்தை:— தமது மனத்தை வென்றவர்களால், பரிஶுத்₃த₄ாத்மநி ஸ்தி₂தி:-ஶரீரத்தோடு தொடர்பற்ற தம் ஆத்மாவில் (இடைவிடாமல் சிந்திப்பதன் மூலம்) நிலைநிற்றலேயாகும்.

23. இந்த ஶ்லோகத்தின் முற்பாதியாலே கர்மயோக₃த்தை விளக்குகிறார். கர்மயோக₃மாவது தவம், தீர்த்தயாத்திரை, தானம், யாகம் முதலானவற்றில் இடைவிடாமல் ஈடுபடுதலேயாகும் என்றபடி. 'ஆதி₃' ஶப்தத்தாலே நாலாம் அத்தியாயத்தில் 25 முதல் 30 வது ஶ்லோகம் வரை சொல்லப்பட்ட கர்மயோகத்தின் வகைகளும், மற்றும் பல சாஸ்த்ரீய கர்மங்களும் குறிக்கப்படுகின்றன. 'ஸேவநம்' என்றது பலனை அடையும் வரையில் ஆர்வத்தோடு இடைவிடாமல் கைக்கொள்வதைக் குறிக்கிறது. இனி ஶ்லோகத்தின் இரண்டாம் பாதியாலே இந்தக் கர்மயோக₃த்தாலே விளையும் ஜ்ஞாநயோக₃த்திற்கு அதி₄காரிகள் யாரென்று காட்டி அந்த ஜ்ஞானயோகத்தையும் விளக்குகிறார். 'ஜிதஸ்வாந்தை:' என்றது கர்மயோக₃த்தை அநுஷ்டி₂ப்பதாலே மனத்துக்குத் தூய்மையுண்டாகி மனத்தை வென்றவர்களே ஜ்ஞானயோக₃த்துக்கு அதி₄காரிகள் என்றபடி. (பரிஶுத்₃த₄ாத்மநி ஸ்தி₂தி:—ஜ்ஞாநயோக₃:) தேஹத்தோடு தொடர்பில்லாத பரிசுத்தமான தம் ஆத்மாவை இடைவிடாமல் சிந்திப்பதன் மூலம் அதில் நிலைநிற்பதே ஜ்ஞாநயோக₃மாகும் என்று கருத்து. 23.

भक्तियोगः परैकान्तप्रीत्या ध्यानादिषु स्थितिः ।
त्रयाणामपि योगानां त्रिभिरन्योन्यसङ्गमः ॥ २४ ॥

24 ப₄க்தியோக₃: பரைகாந்தப்ரீத்யா த்₄யாநாதி₃ஷு ஸ்தி₂தி:|
த்ரயாணாமபி யோகா₃நாம் த்ரிபி₄: அந்யோந்ய ஸங்க₃ம:||

ப₄க்தியோக₃: —ப₄க்தியோக₃மாவது, பரைகாந்த ப்ரீத்யா —பரமாத்மாவான ஸ்ரீமந்நாராயணனிடமே செலுத்தப்பட்ட அன்போடுகூட, த்₄யாநாதி₃ஷு ஸ்தி₂தி: — அவனை

தியானித்தல் அர்ச்சனம் செய்தல் வணங்குதல் முதலான வற்றில் நிலைநிற்றலேயாகும்; த்ரயாணுமபி யோகாநாம் கர்மம், ஜ்ஞாநம், பக்தி எனப்படும் மூன்று யோகங்களில், த்ரிபி: அந்யோந்ய ஸங்கம:—ஒவ்வொரு யோகத்திலும் மற்ற இரண்டும் சேர்ந்திருக்கின்றன.

24. நெருங்கிய அங்கங்களோடு கூடிய பக்தி யோகத் திற்கு லக்ஷணம் கூறுகிறார் இந்த ஶ்லோகத்தின் முற்பாதியாலே. பரப்ரஹ்மத்திடம் ஒருமுகப்படுத்தப்பட்ட அன்போடு கூட அப் பரம்பொருள் விஷயமான தியானம் முதலானவற்றில் நிலைநிற் றல் பக்தியோகம் என்று கருத்து 'மஹநீய விஷயே ப்ரீதி: பக்தி:'' [பெரியோர்கள் விஷயத்தில் அன்பே பக்தி எனப் படுவது] என்னும் பக்திலக்ஷணம் இதனால் உணர்த்தப்படுகிறது. "ஸ்நேஹ பூர்வம் அநுத்யாநம் பக்திரித்யபிதீயதே'' [லிங்கம் உத்தர] [அன்போடு தியானிப்பதே பக்தி என்று சொல்லப் படுகிறது] என்று புராணத்திலும் சொல்லப்படுகிறதன்றோ. 'த்யாந' ஶப்தத்தாலே அதுவே பக்தியின் முக்கியமான பகுதி என்று உணர்த்தப்படுகிறது, 'ஆதி' ஶப்தத்தாலே அர்ச்சனம், ப்ரணாம [வணங்குதல்], ஸங்கீர்த்தனம் முதலான நெருங்கிய அங்கங்கள் சொல்லப்படுகின்றன 'பரமபுருஷ சரணயுகள த்யாநார்ச்சந ப்ரணாமாதி: அத்யர்த்தப்ரிய: தத்ப்ராப்திபல:'' [பரமபுருஷனுடைய திருவடியிணைகளை தியானிப்பது அர்ச்சனம் செய்வது வணங்குவது முதலானவற்றை மிகுந்த அன்போடு செய்வது அவனை அடைவிக்கும்] என்று வேதார்த்த ஸங்க்ரஹத்திலும் சொல்லப்பட்டதன்றோ இனி, ஓர் ஆக்ஷேபம் எழு கிறது.—இங்கு மூன்று யோகங்களுக்கும் மூன்று ஶ்லோகார்த்தங் களாலே லக்ஷணங்கள் சொல்லப்பட்டன. ஆராய்ந்து பார்த்தால் கர்மயோகத்திலும் ஆத்மாவைப்பற்றிய அறிவும், கர்மத்தால் ஆராதிக்கப்படும் எம்பெருமானிடம் அன்பும் கலந்திருக்கிறது. ஜ்ஞாந யோகத்திலும் மனம் ஶுத்தியடைவதற்காக நித்ய கர்மம் தொடர்ந்து வருகிறது என்று சொல்லப்பட்டது, அதனால் அக்கர்மத்தால் ஆராதிக்கப்படும் எம்பெருமானிடம் பக்தியும் அதில் சேர்ந்தேயிருக்கும், இவ்வண்ணமாக பக்தியோகத்திலும் கர்ம ஜ்ஞானங்கள் சேர்ந்தேயிருக்கும் என்பது தெளிவு.

ஆக இப்படி இவை ஒன்றேடொன்று சேர்ந்திருக்கையால் கர்ம யோகம் ஜ்ஞாநயோகம் பக்தியோகம் என்று பிரிப்பது இய லாதே—என்பது அவ்யாக்ஷேபம். இதற்கு ஸமாதானம் பின்வரு மாறு:- பாலில் சர்க்கரை கலந்திருப்பதுபோலே ஒவ்வொரு யோகத்திலும் மற்ற இரண்டு யோகங்களும் கலந்திருந்தாலும் அப்ரதாநமாகக் கலந்த ஜ்ஞானபக்திகளோடு கூடிய கர்ம யோகத்தை கர்மயோகம் என்று வழங்குகையாலும் அப்ரதாந மாகக் கலந்த கர்மபக்திகளோடு கூடிய ஜ்ஞாநயோகத்தை ஜ்ஞாநயோகம் என்று வழங்குகையாலும் அப்ரதாநமாகக் கலந்த கர்ம ஜ்ஞானங்களோடு கூடிய பக்தியோகத்தை பக்தியோகம் என்று கூறுகையாலும், இந்த மூன்று யோகங் களுக்கும் தனித்தனியாக லக்ஷணங்கள் கூறியதில் குறையில்லை. இந்த ஸமாதானத்தையே இந்த ஶ்லோகத்தின் பிற்பகுதியாலே 'த்ரயாணாமபி யோகாநாம் த்ரிபி: அந்யோந்யஸங்கம:' என்று கூறுகிறர். 24

नित्यनैमित्तिकानाम् च पराराधनरूपिणाम् ।
आत्मदृष्टेस्त्रयोऽप्येते योगद्वारेण साधकाः ॥ २५ ॥

25. நித்ய நைமித்திகாநாம் ச பராராதநரூபிணாம் ।
ஆத்மத்ருஷ்டேஸ் த்ரயோ ऽப்யேதே யோகத்வாரேண
ஸாதகா: ॥

பராராதநரூபிணாம் — பரமபுருஷனுக்கு ஆராதனமா யிருக்கும், நித்யநைமித்திகாநாம் ச — நித்ய நைமித்திக கர்மங்களுக்கும், (த்ரிபி: ஸங்கம: — மூன்று யோகங்களிலும் சேர்த்தி உண்டு), ஏதே த்ரய: அபி — இந்த மூன்று யோகங் களும், யோகத்வாரேண — (மனம் ஒருமுகப்பட்டிருக்கை யாகிற) ஸமாதிநிலையை விளைப்பதன் மூலம், ஆத்ம த்ருஷ் டே: — ஆத்மஸாக்ஷாத்காரத்திற்கு, ஸாதகா: — உபாயங்க ளாகின்றன.

25. சென்ற ஶ்லோகத்தின் பிற்பாதியாலே கர்மயோகம் ஜ்ஞானயோகம் பக்தியோகம் ஆகிய ஒவ்வொன்றிலும் மற்றவை இரண்டும் அப்ரதானமாகக் கலந்திருக்கின்றன என்று சொல்லப்

பட்டது. இந்த ஶ்லோகத்தின் முற்பாதியாலே பரமபுருஷனுக்கு ஆராதநமாயிருக்கும் நித்ய நைமித்திக கர்மங்களும் மூன்று யோகங்களிலும் சேர்ந்திருக்கின்றன என்று சொல்லப்படுகிறது. இதில் பின்வருமாறு ஓர் ஆக்ஷேபம் எழுகிறது.— ஒவ்வொரு யோகத்திலும் மற்ற இரண்டு யோகங்கள் கலந்திருக்கிறதானால் பரமபுருஷன் ஒருவனிடமே வைக்கப்பட்ட அன்பு இம்மூன்று யோகங்களிலுமே உண்டென்று கொள்ளவேண்டும். மற்ற தெய்வங்களிடம் பக்தி இருந்தால் இது ஸித்திக்காது.

"ப்ரஹ்மாணம் ஶிதிகண்டம் ச யாஶ்சாந்யா: தேவதா: ஸ்ம்ருதா: |
ப்ரதிபுத்தா ந ஸேவந்தே யஸ்மாத் பரிமிதம் பலம் ||
[பார மோக்ஷ 350—36]

[பிரமனையும் சிவனையும் மற்ற தேவதைகளையும் அறிவாளிகள் வணங்குவதில்லை; அவர்களால் கிடைக்கும் பலம் அளவுபட்டதாகையாலே.]

அநந்ய தேவதா பக்தா யே மத்பக்த ஜநப்ரியா: |
மாமேவ ஶரணம் ப்ராப்தா: தே மத்பக்தா: ப்ரகீர்த்திதா: ||
[பார ஆஶ்வ 104—91]

[வேறு தெய்வங்களிடம் பக்தி கொள்ளாதவர்களாய், என் அடியார்களிடம் பக்தி கொண்டவர்களாய், என்னையே உபாயமாகக் கொண்டவர்கள் என்னுடைய பக்தர்கள் என்று சொல்லப்படுகிறார்கள்] என்று முழங்கப்படுகிறதன்றோ. அக்னி, இந்திரன் முதலான பல தேவதைகளை ஆராதிக்கும் மந்திரங்களைக் கொண்ட வர்ணாச்ரமங்களுக்குரிய நித்யநைமித்திககர்மங்கள் புறந்தொழாமையோடு முரண்படுகையால், அக்கர்மங்கள் மூன்று யோகங்களிலும் விலக்கத்தக்கவையன்றோ— என்பது அந்த ஆக்ஷேபம். புறந்தொழாமைக்கு எந்த முரண்பாடும் இதனால் ஏற்படாமையாலே நித்ய நைமித்திக கர்மங்கள் மூன்று யோகங்களிலும் சேர்ந்திருக்கக் குறையில்லை என்று இவ்வாக்ஷேபத்திற்கு ஸமாதானம் இந்த ஶ்லோகத்தின் முற்பாதியால் சொல்லப்படுகிறது. எப்படியெனில்—

நியதஸ்ய து ஸந்ந்யாஸ: கர்மணோ நோபபத்₃யதே |
[கீதை 18—7]

[நித்யம் நைமித்திகம் முதலான கர்மத்தினுடைய த்யாக₃ம் (கை விடுதல்) பொருந்தாது]

யத: ப்ரவ்ருத்திர்பூ₄தாநாம் யேந ஸர்வமித₃ம் ததம் |
ஸ்வகர்மணா தமப்₄யர்ச்ய ஸித்₃தி₄ம் விந்த₃தி மாநவ: ||
[கீதை 18-46]

[எந்தப் பரமபுருஷனிடமிருந்து எல்லாப்பொருள்களுக்கும் உற்பத்தி முதலான செயல்கள் அனைத்தும் விளைகின்றதோ, எந்தப் பரமபுருஷனாலே இந்தப் பொருள்களனைத்தும் வியாபிக்கப்பட்டுள்ளதோ, அந்தப் பரம புருஷனான என்னை, தனக்குரிய வர்ணாஶ்ரம கர்மத்தாலே ஆராதனம் செய்து மனிதன் மேலான ப்ராப்யமான என்னை அடைகிறான்.]

ஆசார ப்ரப₄வோ த₄ர்ம: த₄ர்மஸ்ய ப்ரபு₄ரச்யுத: |
[ப₄ார ஆநு 254—139]

[வர்ணாசிரமங்களுக்குரிய ஆசாரத்தினாலுண்டாவது த₄ர்மம்; அந்த த₄ர்மத்திற்கு ஸ்வாமியாய் இருப்பவன் அச்யுதன்.]

வர்ணாஶ்ரமாசாரவதா புருஷேண பர: புமாந்|
விஷ்ணுராராத்₄யதே பந்தா₂: நாந்ய: தத்தோஷகாரக: ||
[வி-பு 3-7-9]

[வர்ணாஶ்ரமங்களுக்குரிய ஆசாரங்களோடு கூடிய மனிதனாலேயே பரம புருஷனான விஷ்ணு ஆராதிக்கப்படுகிறான். அதை விட்டிருக்கும் வழி அவனை உகப்பிக்காது.] முதலான பிரமாணங்களில் வர்ணாஶ்ரம த₄ர்மங்களைக் கைவிடக்கூடாது என்று சொல்லியிருக்கையாலே, அக்கர்மங்களில் வரும் அக்₃னி, இந்திரன் முதலான ஶப்₃த₃ங்களை ப்ரதர்த₃நவித்₃யையில் போலே அந்தந்த தெய்வங்களை ஶரீரமாகக்கொண்ட பரமாத்மாவைக் குறிப்பனவாகவே கொள்ளவேண்டும், அப்படியல்லாமல் "ஸாக்ஷாத₃ப்யவிரோத₄ம் ஜைமினி:" [ப்₃ரஹ்ம ஸூத்ரம் 1-2-29] என்கிற ஸூத்ரத்தில் சொன்னபடி, அக்₃னி இந்திரன் முதலான ஶப்₃த₃ங்கள் முறையே 'அக்₃ர நயனமாகிற உயர்த்துவதைச்செய்பவன்' 'பரமைஶ்வர்யத்தையுடையவன்' என்னும் தா₄த்வர்த்த₂ங்கள் மிகப்பொருந்தியிருக்கை

யையிட்டுப் பரம புருஷனை நேரே குறிக்கும் என்றும் கொள்ளலாம். ஆகையால் இக்கர்மங்கள் நேரே பரமபுருஷனை ஆராதிப்பவையாகையால் மற்ற தெய்வங்களைத் தொழும் குற்றம் இல்லை. ஆகையால் நித்ய நைமித்திக கர்மங்களும் மூன்று யோகங்களுக்கும் அங்கமாகச் சேர்ந்திருக்கக் குறையில்லை என்றபடி. இவ்விஷயம் கீதா பாஷ்யத்தில் பலவிடங்களில் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இனி ஶ்லோகத்தின் பிற்பாதியாலே கர்ம ஜ்ஞாந பக்தி யோகங்கள் மூன்றுமே பரபக்திக்குக் காரணமாயிருக்கும் ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை விளைக்கின்றன என்று கூறப்படுகிறது. (ஏதே த்ரய: அபி) முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட கர்ம ஜ்ஞான பக்தியோகங்கள் மூன்றுமே. (ஆத்மத்ருஷ்டே: ஸாதகா:) ஆத்மாவை மனத்தாலே அனுபவிப்பதாகிற ஆத்மஸாக்ஷாத்காரத்தை விளைக்கின்றன என்றபடி. இதை நேரே விளைக்கின்றனவோ? எனில் '(யோகத்வாரேண) மனத்தை ஒருமுகப்படுத்தி ஆத்மாவைச் சிந்திக்கையாகிற ஸமாதி நிலையை விளைப்பதன் மூலமே ஆத்மஸாக்ஷாத்காரத்தை உண்டாக்குகின்றன என்று கருத்து. 'யோக' ஶப்தம் இங்கு மனத்தை ஆத்ம விஷயத்தில் ஒருமுகப்படுத்திச் சிந்திப்பதால் உண்டாகும் ஸமாதி நிலையைக் குறிக்கும். இங்கு ஒரு கேள்வி எழுகிறது:- கீதையில் கர்மயோகத்தால் ஜ்ஞாநயோகம் உண்டாகி அதனால் ஆத்மஸாக்ஷாத்காரம் விளைகிறது என்று இரண்டாம் அத்தியாயத்தில் 53 வது ஶ்லோகத்தில் சொல்லப்பட்டது. மூன்றும் அத்தியாயத்தில் 27 முதல் 30 வது ஶ்லோகம் வரையில் ஜ்ஞானம் கலந்த கர்மயோகத்தால் நேரே ஆத்ம ஸாக்ஷாத்காரத்தைப் பெறலாம் என்றும் சொல்லப்பட்டது. இந்த ஆத்ம ஸாக்ஷாத்காரத்தால் பக்தியோகம் உண்டாகிறது என்று இரண்டாவது ஷட்கத்தில் கூறப்பட்டது. அப்படியிருக்க, இங்கு பக்தி யோகத்தால் ஆத்மஸாக்ஷாத்காரம் உண்டாவதாகக் கூறுவது எப்படிப் பொருந்தும்?—என்பது அக்கேள்வி. இதற்கு பதில் பின்வருமாறு; — ஆத்மஸாக்ஷாத்காரத்தால் விளையும் பக்தியைச் சொல்லும்போது ''மத்பக்திம் லபதே பராம்'' [18-54] என்று 'பரா பக்தி:' (மேலான பக்தி) என்று சொல்லப்படுகிறது. இது ஆத்மஸாக்ஷாத்காரத்தால் விளைவதாய் மோக்ஷத்திற்குக் காரணமான பரபக்தியாகும். இந்தப்பரபக்திக்குக்கீழ் நிலையிலுள்ள பக்தியாலே ஆத்மஸாக்ஷாத்காரம் விளைவதாக இங்கு கூறப்படுகிறதாகையாலே குறையில்லை. அதனாலேயே ஆத்மஸாக்ஷாத்காரத்

தால் விளையும் பக்தியானது பரபக்தி (மேலான பக்தி) என்று விசேஷிக்கப்படுகிறது. ஆகையால் ஆத்மஸாக்ஷாத்காரமில்லாத இன்றுள்ள பக்தர்களைப்போலே துதிப்பது வணங்குவது ஸங்கீர்த்தனம் செய்வது முதலான பக்தியை அனுஷ்டிப்பதால் ஆத்ம ஸாக்ஷாத்காரம் உண்டாவது பொருத்தமேயாகும். பக்தியானது பல படிகளை உடையது என்று வேதார்த்த ஸங்க்ரஹத்தில் அருளியிருக்கும் ஸ்ரீஸூக்திகளை இங்கு ஸ்ரீவேதாந்த தேசிகர் கீதார்த்த ஸங்க்ரஹரக்ஷையில் எடுத்துக்காட்டியிருப்பது அனுஸந்திக்கத் தக்கது. 25.

निरस्तनिखिलाज्ञानो दृष्ट्वात्मानं परानुगम् ।
प्रतिलभ्य परां भक्ति तयैवाप्नोति तत्पदम् ॥ २६ ॥

26 நிரஸ்த நிகிலாஜ்ஞாநோ த்ருஷ்ட்வாத்மாநம் பராநுகம் ।
ப்ரதிலப்ய பராம் பக்திம் தயைவாப்நோதி தத்பதம் ॥

நிரஸ்த நிகிலாஜ்ஞாநః — (உபாயத்திற்குத் தடையான) எல்லா அஜ்ஞானங்களும் நீங்கப்பெற்றவனாய், பராநுகம் — பரமபுருஷனுக்கு அடிமைப்பட்டிருக்கும், ஆத்மாநம் — தன் ஸ்வரூபத்தை, த்ருஷ்ட்வா — கண்டு (அதன் விளைவாக), பராம் பக்திம் — பரபக்தியை, ப்ரதிலப்ய — அடைந்து, தயா ஏவ — அந்த மேலான பக்தியாலேயே, தத் பதம் — அந்த எம்பெருமானுடைய திருவடிகளை, ஆப்நோதி — அடைகிறான்.

26 கர்ம ஜ்ஞாந பக்தியோகங்கள் மூன்றுமே ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை விளைப்பவை என்று சென்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்டது. இந்த ஶ்லோகத்தில் அந்த ஆத்ம ஸாக்ஷாத்காரத்தால் பரபக்தி விளைந்து அதன் பக்குவநிலையான பரம பக்தியைப் பெற்று அந்த பக்தியாலேயே எம்பெருமானை அடைகிறான் என்கிறார். (நிரஸ்த நிகிலாஜ்ஞாநः) எம்பெருமானை அடைவதற்கு உபாயமாகிற ஆத்மஸாக்ஷாத்காரத்திற்கும் அதனால் விளையும் பரபக்திக்கும் தடையாயிருக்கும் எல்லா அஜ்ஞானங்

களும் நீங்கப்பெற்றவனாய், (பராநுகூம் ஆத்மாநம் த்ருஷ்ட்வா) பரமாத்மாவுக்கு அடிமைப்பட்டிருக்கும் தன் ஆத்மாவைக் கண்டு. இதனால் ஆத்ம ஸாக்ஷாத்காரம் சொல்லப்படுகிறது.

நாஹம் தேவோ ந மர்த்யோ வா ந திர்யக் ஸ்தாவரோऽபி வா |
ஜ்ஞாநாநந்தமயஸ்த்வாத்மா ஶேஷோ ஹி பரமாத்மந: ||

[இந்த ஆத்மாவானவன் தேவனுமல்லன், மனிதனுமல்லன், குறுக்கே வளரும் விலங்கு பறவைகளுமல்லன். இவன் ஜ்ஞாநமும் ஆனந்தமுமே ஸ்வரூபமாயிருப்பவன்; பரமாத்மாவுக்கு அடிமைப்பட்டவனாகவும் இருப்பவன்.] என்று சொல்லப்பட்ட ஆத்ம ஸ்வரூபத்தை மனத்தாலே அநுபவிக்கிறான் என்றதாயிற்று.

மந்த்ரராஜபதஸ்தோத்திரத்தில் சிவனும்,

தாஸபூதா: ஸ்வத ஸ்ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந: |
அதோऽஹமபி தே தாஸ: இதி மத்வா நமாம்யஹம் ||

[எல்லா ஆத்மாக்களும் பரமாத்மாவுக்கு இயல்வாகவே அடிமைப்பட்டவை. ஆகையால் உனக்கு நானும் அடிமைப்பட்டவன் என்று எண்ணி உன்னை வணங்குகிறேன்] என்று பகவச் சேஷத்வம் ஆத்மாவின் ஸ்வரூபம என்று காட்டியது இங்கு அநுஸந்திக்கத்தக்கது. இனி ஶ்லோகத்தின் பிற்பாதியாலே இந்த ஆத்ம ஸாக்ஷாத்காரத்தின் பயனாகப் பரபக்தி விளைந்து அதன் விளைவாகப் பரமபுருஷனால் பரமபக்தியை அருளப்பெற்று, அதனால் பரமபுருஷனை அடைகிறான் என்று சொல்லப்படுகிறது (பரம பக்திம் ப்ரதிலப்ய) இந்த ஆத்மஸாக்ஷாத்காரத்தின் விளைவாக எம்பெருமானிடமிருந்து பரபக்தி என்னும் மோக்ஷஸாதநமான பக்தியை அடைகிறான் உபாஸகன் என்றபடி. (தயைவ) அந்தப் பரபக்தியின் முற்றிய நிலையாய், மோக்ஷமடைவதற்கு நேரே காரணமான பரமபக்தியாலே. (தத் பதம் ஆப்நோதி) அந்த எம்பெருமானின் திருவடிகளை அடைகிறான். 'பதம்' என்று திருவடிகளைக் குறிக்கிறது, அல்லது 'பதம்' என்று—எம்பெருமானுடைய பரமபதமாகிற ஸ்தானத்தையோ, பரமப்ராப்யமான அவனுடைய ஸ்வரூபத்தையோ குறிப்பதாகவும் கொள்ளலாம். கீதை 18—54 வது ஶ்லோகத்தில் "மத் பக்திம் லபதே பராம்"என்று மோக்ஷஸாதநமான பரபக்தியை அடைகிறான் என்று குறித்து, அதற்கு அடுத்த ஶ்லோகத்தில்அதன்விளைவாக, தன்னை உள்ளபடி அறிகையாகிற பரஜ்ஞானத்தைப்பெறுகிறான் என்றும். அதற்குப்பின் அந்தப்பரபக்தி

…ின் முற்றிய நிலையான பரமப$_4$க்தியாலே முக்தி நிலையில் தன்னை அடைகிறான் என்றும் கூறியது இங்கு அநுஸந்திக்கத்தக்கது, இதிலிருந்து உபாஸக ஜ்ஞாநி ப$_4$க்தியை ஸ்வயம் ப்ரயோஜநமாக நினைக்கும் மஹாத்மாவான ஜ்ஞானியாகிவிட்டானாகில், அந்த ஜன்மத்திலேயே பரஜ்ஞாந பரமப$_4$க்திகளை எம்பெருமானால் அருளப்பெற்றுப் பரார்த்த$_2$ கைங்கர்ய ரூபமான மோக்ஷத்தைப் பெறுகிறான் என்றும், ப்ராரப்$_3$த$_4$கர்மம் முடியும் வரையில் உபாஸகனாகவே யிருந்தானாகில், அந்திம ஸ்ம்ருதியில் எம்பெருமானால் பரஜ்ஞாநபரமப$_4$க்திகள் அருளப்பெற்று ஸ்வார்த்த$_2$மோக்ஷத்தைப் பெறுகிறான் என்றும் உணர்த்தப்படுகிறது. கீ$_3$தை 18-55 வியாக்கியானத்தில் இது விரிவாக விளக்கப்பட்டது. 26

भक्तियोगस्तदर्थी चेत्समग्रैश्वर्यसाधकः ।

आत्मार्थी चेत्त्रयोऽप्येते तत्कैवल्यस्य साधकाः ॥ २७ ॥

27. ப$_4$க்தி யோக$_3$ஸ் தத$_3$ர்த்தீ$_2$ சேத் ஸமக்$_3$ரைஶ்வர்ய ஸாத$_4$க: ।

ஆத்மார்த்தீ$_2$ சேத் த்ரயோऽப்யேதே தத்கைவல்யஸ்ய ஸாத$_4$கா: ॥

ப$_4$க்தியோக$_3$:— ப$_4$க்தியோக$_3$மானது, தத$_3$ர்த்தீ$_2$ சேத்— (மிகச்சிறந்த) செல்வத்தை விரும்பினவனாகில், ஸமக்$_3$ரைஶ்வர்ய ஸாத$_4$க: — மிகச்சிறந்த செல்வத்தையளிக்கும்; ஏதே த்ரய: அபி — இந்த மூன்று யோக$_3$ங்களுமே, ஆத்மார்த்தீ$_2$ சேத் — ஆத்மஸ்வரூபத்தை அநுப$_4$விக்க விரும்பினானாகில். தத்கைவல்யஸ்ய ஸாத$_4$கா:— ஆத்மமாத்ராநுப$_4$வத்தை அளிக்கக்கூடியவை.

27. ப$_4$க்தியோக$_3$ம் ஐஶ்வர்யாநுப$_4$வமாகிற மோக்ஷத்திற்கு ஸாத$_4$நமாகிறது என்று சென்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்டது. ஏழாம் அத்தியாயத்தில் ப$_4$க்தர்களாகச் சொல்லப்பட்ட ஐஶ்வர்யார்த்தி$_2$க்கும் கைவல்யார்த்தி$_2$க்கும் ஸாத$_4$நத்தைக் காட்டுகிறார் இந்த ஶ்லோகத்தில். மூன்று தத்துவங்களையிட்டுப் புருஷார்த்தங்கள் மூன்றாகின்றன. 'அசித்' தத்துவத்தின் பரிணாமமான இவ்வுலகச் செல்வங்களின் அநுப$_4$வம் ஐஶ்வர்ய புருஷார்த்தம் எனப்

படுகிறது. 'சித்' எனப்படுவதும் ஸூக்ஷ்ம சரீரமும் இல்லாததுமான ஆத்மாவை அநுபவிப்பது கைவல்ய புருஷார்த்தமெனப் படுகிறது. ஈஶ்வரதத்துவத்தை அநுபவிப்பது மேலான மோக்ஷ புருஷார்த்தமாகிறது. ஸத்யலோகத்தின் முற்பாதிக்கு பிரமனின் செல்வமாகிற அண்டாதிபத்யம் போன்ற மிகச்சிறந்த ஐஶ்வர்யத்தைப் பெற விரும்பினானாகில், அவனுக்கு பக்தியோகமே அச்செல்வத்தை ஸாதித்துக்கொடுக்கும்'' என்று பொருள். இந்திரபதவி முதலான மற்ற தாழ்ந்த செல்வங்களைப் பெறவிரும்புவோர் நூறு அஶ்வமேதயாகங்கள் செய்வது போன்ற கர்மங்களாலே அவைதப் பெற்றுவிடமுடியும். பிரமனுடையது போன்ற மிகச்சிறந்த ஐஶ்வர்யத்தை பக்தி யோகத்தாலேயே பெறமுடியும் என்று கருத்து. அதனாலேயே 'ஸமக்ரைஶ்வர்யம்' என்று ஐஶ்வர்யத்திற்கு விசேஷணமிட்டிருக்கிறார், இவ்வுலகத்திலுள்ள அற்பமான ஐஶ்வர்யங்களை மற்ற தெய்வங்களிடமிருந்தும் பெற்றுவிடமுடியும். இந்திரபதவி போன்றவற்றை அஶ்வமேதம் முதலான கர்மங்களாலே எம்பெருமானை ஆராதித்துப் பெற்றுவிடமுடியும். பிரமனின் பதவி உருத்திரனின் பதவி ஆகிய சிறந்த செல்வங்களை எம்பெருமானிடமிருந்தே, அதுவும் பக்தியோகத்தின் மூலமே பெற முடியும் என்றபடி பிரமன் முதலானோர் தாமே தம் பதங்களைப் பிறருக்கு அளிக்க மாட்டார்களன்றோ.

''ப்ராஜாபத்யம் த்வயா கர்ம ஸர்வம் மயி நிவேஶிதம்''

[அண்டத்திற்கு அதிபதியாயிருக்கும் பதவி என் தந்தையான உன்னாலே எனக்குத் தரப்பட்டது] என்று இவ்விஷயம் பிரமனாலேயே சொல்லப்பட்டது.

யுககோடி ஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்ய பத்மபூ: ।
புநஸ்த்ரைலோக்ய தாத்ருத்வம் ப்ராப்தவாநிதி ஶுஶ்ரும: ॥
[பாரத-குண்டதார உபாக்யாநம்]

[ஆயிரம் கோடி யுகங்கள் விஷ்ணுவை ஆராதித்தபின் பிரமன் மூவுலகிற்கும் பதியாயிருக்கும் பெருமையை மறுபடியும் பெற்றான்] என்று பாரதத்திலும் சொல்லப்பட்டது.

அஸ்ய தே₃வஸ்ய மீடு₄ஷோ

வயா விஷ்ணோரேஷஸ்ய ப்ரப்₄ருதே₂ ஹவிர்ப்பி₄: |

விதே₃ ஹி ருத்₃ரோ ருத்₃ரியம் மஹித்வம்

யாஸிஷ்டம் வர்திரஸ்விநாவிராவத் ||

[ருக்₃வேத₃ம் மண்டலம் 7-41-5]

[(விருப்பங்களைப்) பொழிபவனும் வேண்டத்தக்கவனும் (இயற்கையான) தேவனுமான விஷ்ணுவுக்குக் கிளை போன்றவனான உருத்திரன் (ஸர்வமேத₄ம் எனும்) பெரியயாகத்தில் (தன்னை யுள்ளிட்ட எல்லா) ஹவிஸ்ஸுக்களையும் கொடுத்து ருத்ர பதவியைச் சேர்ந்ததான பெருமையை அடைந்தானன்றோ. அச்வினீ தேவதைகளே! செல்வம் நிரம்பிய ஸ்தானத்தை (நீங்களும் விஷ்ணுவின் அருளாலேயே) அடைந்தீர்கள் ] என்று ருத்ரனின் பதவியும் விஷ்ணுவிடமிருந்தே கிடைக்கிறது என்று ருக்வேதத்தில் முழங்கப்படுகிறது.

மஹாபா₄ரதத்திலும்

மஹாதே₃வஸ் ஸர்வமேதே₄ மஹாத்மா

ஹுத்வாऽऽத்மாநம் தே₃வதே₃வோ ப₃பூ₄வ |

ஸர்வாந் லோகாந் வ்யாப்ய விஷ்டப்₄ய கீர்த்யா

விராஜதே த்₃யுதிமாந் க்ருத்திவாஸா: ||

[பார-ராஜதர்மம் 22-12]

[மஹாத்மாவான மஹாதேவர் ஸர்வமேத₄யாக₃த்தில் தன்னையே ஹோமம் செய்து தேவதேவனாக ஆனார். யானைத்தோலுடுத்துப் பிரகாசிக்குமவராய், எல்லா உலகங்களையும் தன் புகழால் வியாபித்துக்கொண்டும், தரிக்கச் செய்துகொண்டும் விளங்குகிறார்.] என்று இந்த வேதமந்திரம் விளக்கப்பட்டது.

ஏதௌ த்₃வௌ விபு₃த₄ஶ்ரேஷ்டௌ₂

ப்ரஸாத₃க்ரோத₄ஜௌ ஸ்ம்ருதௌ |

தத₃ாத₃ர்ஶித பந்தா₂நௌ ஸ்ருஷ்டி ஸம்ஹார காரகௌ ||

[பா₄ர சாந்தி 350—19]

[ப₄க₃வானுடைய ஸந்தோஷத்தாலும் கோபத்தாலுமுண்டான தேவஶ்ரேஷ்டர்களான ப்₃ரஹ்மா சிவன் என்ற இவ்விருவரும் விஷ்ணுவால் காட்டப்பட்ட வழியால் (அவனால் கொடுக்கப்பட்ட அறிவைக் கொண்டு) படைத்தலையும் அழித்தலையும் செய்கிறார்கள் ] என்று பா₄ரதத்தில் சொல்லப்பட்டதும் இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

ப₄க்தி யோக₃ம் ஒன்றே எப்படி மோக்ஷத்திற்கும் ஐஸ்வர்யத்திற்கும் ஸாத₄நமாகக் கூடும்? எனில்: விருப்பத்தின் வேறுபாட்டையிட்டுப் ப₂லனிலும் வேறுபாடு விளையும் என்று 'தத₃ர்த்தீ₂ சேத்' என்னும் தொடரா லே காட்டுகிறார். பராயத்தாதி₄கரணத்தின் அடிப்படையில் ஜீவனுக்கு அளிக்கப்பட்ட ஸ்வாதந்த்ர்யத்தைக்கொண்டு அவன் ஐஸ்வர்யத்தை விரும்பினானாகில் ப₄க்தி யோக₃மே அதற்கு ஸாத₄நமாகும் என்று கருத்து. இவ்விஷயம் கீதை 7—16 ப₄ாஷ்யத்திலும் 'ப்ரதிபத்தி வைஶேஷ்யாத்' என்னும் பதத்தாலே உணர்த்தப்பட்டது. கீதை 7-16 வியாக்யானத்தில் இதன் விரிவு காணத்தக்கது. "ஸர்வேப்₄ய: காமேப்₄யோ ஜ்யோதிஷ்டோம:" என்று ஜ்யோதிஷ்டோம ஹோமம் முதலான யாகங்களும் விருப்பத்தையிட்டு எல்லாப் பலன்களையும் கொடுக்கும் என்னும் பிரமாணத்தை இவ்விடத்தில் காட்டியுள்ளார் ஸ்ரீவேதாந்ததேசிகர்.

இனி, ஶ்லோகத்தின் பிற்பாதியாலே 'சித்' தத்வத்தின் அநுப₄வமாய், 'கேவலாத்மாநுப₄வம்' என்றும், 'கைவல்யம்' என்றும் சொல்லப்படும் ஆத்மாநுப₄வத்திற்கு மூன்று யோக₃ங்களுமே ஸாத₄நமாகும் என்று காட்டுகிறார். அசித்தின் அநுப₄வமாகிற ஐஶ்வர்யாநுப₄வத்தில் அசித்தான தே₃ஹத்தோடு சேர்ந்த ஆத்மாக்களின் அநுப₄வமும் சேர்ந்திருக்கும். ஈஶ்வராநுப₄வமும் கலந்திருக்கும். இருந்தபோதிலும் ப்ரதா₄ந்யத்தையிட்டு அது ஐஶ்வர்யாநுப₄வம் என்று சொல்லப்பட்டது. ஈஶ்வராநுப₄வமாகிற பரமமோக்ஷத்திலும் ஈஶ்வரனுடைய விபூ₄தியான சித₃சித₃நுப₄வங்கள் அப்ரதா₄நமாகக் கலந்திருக்கும். ஆனால் இந்த ஆத்மாநுப₄வத்தில் அசித₃நுப₄வமோ ஈஶ்வராநுப₄வமோ சிறிதுமில்லையாகையால் அது ஆத்மமாத்ராநுப₄வம் என்றும் கேவலாத்மாநுப₄வம் என்றும் கைவல்யம் என்றும் சொல்லப்படுகிறது. 25 வது ஶ்லோகத்தில் மூன்று யோகங்களுமே ஆத்மஸாக்ஷாத்காரத்திற்கு ஸாத₄நங்கள் என்று சொல்லப்பட்டது. அந்த ஆத்ம ஸாக்ஷாத்காரத்தைப் பெற்றவன் அந்த ஆத்மாவின் இனிமையிலே ஈடுபட்டு அதை என்றும் அநுப₄வித்திருக்கையாகிற கைவல்ய மோக்ஷத்தை விரும்பினானாகில், இந்த மூன்று யோகங்களுமே தனித்தனியே ஸாத₄நமாயிருந்து அந்த மோக்ஷத்தைப் பெற்றுத் தரும் என்கிறார் இங்கு, இக்கைவல்ய மோக்ஷத்

தில் ஸூக்ஷ்ம ஶரீரமும் கழிந்தால்தான் பூர்ணமான ஆத்மாநுபவம் ஏற்படுமாகையாலே இந்த ப்ரக்ருதி மண்டலத்திற்கப்பால், விரஜைக்கு அக்கரையிலுள்ள ஒரு ஸ்தானத்தில் இதை விரும்புகிறவர்கள் இந்தத் தாழ்ந்த மோக்ஷத்தை அடைகிறார்கள் என்று ஶாஸ்த்ரங்களில் கூறப்படுகிறது. எல்லாக் கர்மங்களும் கழிந்தாலொழிய ஸூக்ஷ்ம ஶரீரம் நீங்கிக் கேவலாத்மாநுபவம் விளையாதாகையாலே இவனுக்கும் எல்லாக் கர்மங்களும் கழிந்துவிடுகின்றன என்றும், தர்மபூத ஜ்ஞாநம் விரிவடைகிறது என்றும் கொள்ளவேண்டும். உபய விபூதியும் இவனது அறிவுக்கு விஷயமானாலும், தன்னாத்மாவைத்தவிர வேறெதையும் அநுபவிப்பதில் இவனுக்கு விருப்பமில்லாமையாலே இவன் அதை மாத்திரம் அநுபவிக்கின்றவனாய், என்றுமே இத்தாழ்ந்த மோக்ஷத்தைப் பெற்றுவிடுகிறான். எல்லாக் கர்மங்களும கழிந்தபின்பும் பராயத்தாதிகரணத்தின் அடிப்படையில் ஈஶ்வரனால் அளிக்கப்பட்ட ஸ்வாதந்த்ர்யத்தாலே இவன் தன் ஆத்மாவை மாத்திரம் அநுபவிக்கவிரும்புகிறானாகையாலே அதற்குரிய ஸாதநத்தை அநுஷ்டித்த பின்பு இவனுக்கு இந்த மோக்ஷம் கிடைக்கிறது. ஆகையால் 'எல்லாக் கர்மங்களும் கழிந்த பின்பு மோக்ஷத்தில் உயர்ந்தது தாழ்ந்தது என்னும் வேறுபாடு எப்படி ஏற்படும்?' என்னும் கேள்விக்கு இடமில்லை, இதையே 'ஆத்மார்த்தீ சேத்' [ஆத்மாநுபவத்தை விரும்புகிறவனாகில்] என்னும் தொடராலே ஆளவந்தார் உணர்த்துகிறார். கீதா பாஷ்யத்திலும் 7–16 ஶ்லோகத்தின் பாஷ்யத்தில்இதையே'ப்ரதிபத்திவைஶேஷ்யாத்' என்னும் பதத்தாலே பாஷ்யகாரரும் உணர்த்தினார். இதுபற்றிய எல்லாப்ரமாணங்களும் எட்டாம் அத்தியாயத்தின் கீதாவ்யாக்யானத்தின் 23 வது ஶ்லோகம் அவதாரிகா பாகத்தின் இறுதியில் இணைக்கப்பட்டுள்ள கைவல்யஸித்தாஞ்ஜனத்தில் நம்மால் விரிவாகக்காட்டப்பட்டுள்ளன. அங்கு கண்டுகொள்வது. இங்கு இந்தக் கைவல்யானுபவத்தைப் பெறுவதற்குக் கர்மஜ்ஞாநபக்தி யோகங்கள் மூன்றும் தனித்தனியே ஸாதனமென்கையாலே பஞ்சாக்நிவித்யை ஒன்றையே ஸாதநமாகக்கொண்ட பஞ்சாக்நி வித்யா நிஷ்டனைக்காட்டிலும் இவன் வேறுபட்டவன் என்றும் தெளிவாகிறது. 27

ऐकान्त्यं भगवत्येषां समानमधिकारिणाम् ।
यावत्प्राप्ति परार्थी चेत्तदेवात्यन्तमश्नुते ॥ २८ ॥

28. ஐகாந்த்யம் ப4க3வத்யேஷாம் ஸமாநமதி4காரிணாம் |
யாவத்ப்ராப்தி பரார்த்தீ2 சேத் ததே3வாத்யந்தமஶ்நுதே ||

ஏஷாம் அதி4காரிணாம் — இந்த மூன்றுவகைப்பட்ட அதி4காரிகளுக்கும், ப4க3வதி— எம்பெருமானிடம், ஐகாந்த்யம் — மற்றதெய்வங்களைத் தொழாமல் அவன் ஒருவனையே தொழுபவர்களாயிருக்கும் ப4க்தி, ஸமாநம்— பொதுவானது; யாவத்ப்ராப்தி— ப2லனை அடைவதற்குள், பரார்த்தீ2 சேத்— (ஐஶ்வர்யார்த்தி2யும் கைவல்யார்த்தி2யும்) பரமப்ராப்யமான பரமபுருஷனின் திருவடிகளை அடைய விரும்பினாகில், தத் ஏவ — அந்தத்திருவடியையே, அத்யந்தம— எப்போதும், அஶ்நுதே— அடைகிறான். (உபாஸக ஜ்ஞானி ப2லனை அடையும் வரையில் எம்பெருமானையே விரும்பினாகில், அவன் திருவடியையே என்றும் அடைகிறான்.)

28. இருபத்தாறுவது ஶ்லோகத்தில் பரமபுருஷனை அடைய விரும்பும் உபாஸக ஜ்ஞானிக்குப் பரப4க்தியே ஸாத4நமாகிறது என்று கூறி, இருபத்தேழாவது ஶ்லோகத்தில், சிறந்த செல்வத்தைப் பெற விரும்பும் ஐஶ்வர்யார்த்தி2க்கு ப4க்தி யோக3மும் ஸாத4நமாகிறது என்றும், ஆத்மமாத்ரானுப4வத்தைப் பெற விரும்பும் கைவல்யார்த்திக்கு இந்த மூன்று யோக3ங்களும் தனித்தனியே ஸாத4நங்களென்றும் சொல்லப்பட்டது. இந்த ஶ்லோகத்தில் ஐஶ்வர்யார்த்தி2, கைவல்யார்த்தி2, பரமபுருஷனைப்பெற விரும்பும் உபாஸகன் ஆகிய மூவருமே எம்பெருமானைத் தவிர மற்ற தெய்வங்களைத் தொழாதவராய் இருக்கவேண்டும் என்றும், ஐஶ்வர்ய கைவல்யார்த்திகளும் தங்கள் ப2லனையடைவதற்குள் பரமபுருஷனை விரும்பி விட்டாராகில் அப்பரமபுருஷனையே என்றும் அடைந்து விடுவார்கள் என்றும், உபாஸக ஜ்ஞானியும் கடைசிவரையில் பரமபுருஷனையே விரும்பினாகில் அவனையே அடைவான் என்றும் சொல்லப்படுகிறது. (ஏஷாம் அதி4காரிணாம்) இருபத்தாறாவது ஶ்லோகத்தில் பரமபுருஷனையடைபவனாகச் சொல்லப்பட்ட உபாஸக ஜ்ஞானிக்கும், இருபத்தேழாவது ஶ்லோகத்தில் ஐஶ்வர்ய கைவல்யங்களை விரும்புகிறவர்களாகச் சொல்லப்பட்ட இருவகை ப4க்தர்களுக்கும், (ப4க3வதி ஐகாந்த்யம் ஸமாநம்) வேறு தேவதையைத் தொழாமல் எம்பெருமான் ஒருவனையே தொழும் ப4க்தி

பொதுவானதாகும். 'ஸமாநம்' என்று பொதுவான பெருமையைச் சொன்னதால் இவர்களுக்குள் வேற்றுமையும் உண்டு என்று உணர்த்தப்படுகிறது. கீ$_3$தை 7-17 ல் சொல்லப்பட்டபடி ஐஶ்வர்ய கைவல்யார்த்தி$_2$கள் ப$_2$லனைப் பெறும் வரையில் எம்பெருமானிடம் ஈடுபாட்டையுடையவர்களாய் இருந்தபோதிலும் ப$_2$லனைப் பெற்ற பிறகு தத்தம் ப$_2$லன்களான ஐஶ்வர்யத்திலும் கைவல்யத்திலும் முறையே ஈடுபாடுடையவர்களாக ஆகிவிடுவார்கள்; ஜ்ஞானியோவெனில் ஸாத$_4$நத$_3$சையோடு ப்ராப்திதசையோடு வாசியற எம்பெருமானிடமே ஈடுபட்டிருப்பான் என்பது அவ்வேறுபாடு. இம்மூவரும் எம்பெருமான் ஒருவனையே தெய்வமாகக்கொண்ட ஏகாந்திகளாய் இருந்தபோதிலும், உபாஸக ஜ்ஞாநி ஒருவனே அவனையே பயனாகவும் கொண்டவன் என்று கருத்து. அப்படியானால் மற்ற இருவரும் எம்பெருமானைப் பயனாக அடைய வழி இல்லையோ? எனில்:— வழியுண்டு என்கிறது ஶ்லோகத்தின் பிற்பாதி. (யாவத் ப்ராப்தி பரார்த்தீ$_2$ சேத்) தங்களுடைய விருப்பங்களையடைவதற்குள் 27 வது ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட ஐஶ்வர்யார்த்தி$_2$யும் கைவல்யார்த்தி$_2$யும் முறையே 'தநா$_3$ர்த்தீ$_2$ சேத்' என்று சொல்லப்பட்ட ஐஶ்வர்யத்தில் விருப்பத்தையும், 'ஆத்மார்த்தீ$_2$ சேத்' என்று சொல்லப்பட்ட கைவல்யத்தில் விருப்பத்தையும் விட்டு பரமபுருஷனையே அடைந்து அநுப$_4$விக்கவேண்டுமென்று விரும்பினால் (ததே$_3$வாத்யந்தமஶ்நுதே) அப்பரமபுருஷனின் திருவடியையேஎன்றும் அடைந்து அநுப$_4$விக்கிறான். 'யாவத்ப்ராப்தி பரார்த்தீ$_2$ சேத்' என்று கூறியதன் மூலம் எம்பெருமான் ஐஶ்வர்ய கைவல்யார்த்திகளுக்கும் தன்னிடத்தில் விருப்பம் உண்டாவதற்காகவே கர்ம ஜ்ஞாந ப$_4$க்தி யோக$_3$ங்களை ஸாத$_4$நமாக விதித்திருக்கிறான் என்றும், ஆத்மபரமாத்மாக்களின் உண்மையறிவை அநுஸந்திக்க வேண்டுமென்றும் ஶுபா$_4$ஶ்ரயமான திருமேனியைச் சிந்திக்கவேண்டுமென்றும் விதித்திருக்கிறான் என்றும் உணர்த்தப்படுகிறது. இந்த ஶ்லோகத்தின் பிற்பாதிக்கு ஸ்ரீவேதாந்த தேசிகரால் பின்வருமாறு வேறுவகையாகப் பொருள் கொள்ளப்பட்டது:- '(யாவத் ப்ராப்தி பரார்த்தீ$_2$ சேத்) ஜ்ஞானியானவன் தன் ப$_2$லனை எம்பெருமானை அடையும் வரையில் ஐஶ்வர்ய கைவல்யங்களாகிற மற்ற பலன்களை விரும்பாமல் எம்பெருமானையே விரும்பியிருந்தானாகில். (ததே$_3$வாத்யந்தம் அஶ்நுதே) அவ்வெம்பெருமானின் திருவடியையே என்றும் அடைகிறான்; ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவருவதில்லை என்று கருத்து. 'ததே$_3$வ' என்னு

மிடத்தில் 'தத்' என்னும் சொல் எம்பெருமானுடைய பதத்தை (திருவடிகளை)க் குறிக்கிறதாகையால் நபும்ஸகலிங்கமாயுள்ளது'' என்று. முதலர்த்த₂த்திலே ஐஶ்வர்ய கைவல்யார்த்தி₂களுக்கும் அந்திமஸ்ம்ருதிவரையில் விருப்பம் மாறினால் எம்பெருமானை அடைய இடமுண்டு எனக்காட்டப்படுகின்றது. கைவல்யார்த்தி₂ அந்திம ஸ்ம்ருதியில் தன் தாழ்ந்த விருப்பத்தை மாற்றி எம்பெருமானை விரும்பினானாகில் அவனுக்கு ஸாத₄நமாயிருந்த கர்மஜ்ஞாநப₄க்தி யோக₃ங்களில் ஒன்றே பரம மோக்ஷஸாத₄நமாகவும் ஆகிவிடுகிறது என்று இதிலிருந்து தேறுகிறது. இதைத் திருவுள்ளத்திற் கொண்டே நம்முடைய பூர்வாசார்யர்கள், கர்மஜ்ஞாநப₄க்தி யோக₃ங்கள் மூன்றும் தனித்தனியே ப₄க₃வத் ப்ராப்திக்கு ஸாத₄நமாகக் கூடும் என்று அருளிச்செய்துள்ளனர் என்பது அறியத் தக்கது. ஸ்ரீதேசிகன் காட்டிய இரண்டாமர்த்த₂த்தில் பரமபுருஷனை அடைய விரும்பி ப₄க்தி யோக₃த்தை அநுஷ்டிக்கும் ஜ்ஞானியும் மற்ற ப₂லனை விரும்பி விட்டானாகில் ப₄க₃வத் ப்ராப்தியை அடைவது தடைபடக்கூடும் என்று சொல்லப்படுகிறது, 'அஶ்நுதே' என்னும் ஆத்மநே பத₃த்தாலே உபாஸக ஜ்ஞானியானவன் மோக்ஷானந்தத்திற்காகத் தான் ஸாத₄நாநுஷ்டானம் அனுஷ்டிக்கிறானாகையாலே அவன் பெறுவதும் அவனது ஆனந்தத்திற்குறுப்பான ஸ்வார்த்த₂மோக்ஷம் என்று உணர்த்தப்படுகிறது. இரு அர்த்த₂ங்களும் தொனிக்கும்படி ஆளவந்தார் இந்த ஶ்லோகத்தின் உத்தரார்த்த₄த்தை அமைத்திருக்கும் அழகு அனுப₄விக்கத்தக்கது. 28

ज्ञानी तु परमैकान्ती तदायत्तात्मजीवनः ।
तत्संश्लेष-वियोगैक-सुखदुःखस्तदेकधीः ॥ २९ ॥

29. ஜ்ஞாநீ து பரமைகாந்தீ தத₃ாயத்தாத்ம ஜீவநः।
தத்ஸம்ஶ்லேஷ - வியோகைக₃க - ஸுக₂து₃:க்க₂ஸ்ததே₃கதீ₄:॥

பரமைகாந்தீ ஜ்ஞாநீ து-பரமைகாந்தியான ஜ்ஞானியோவெனில், தத₃ாயத்தாத்ம ஜீவநः — எம்பெருமானையே பற்றி நிற்கும் தன் வாழ்வையுடையவனாய், தத் ஸம்ஶ்லேஷ வியோகைக₃க ஸுக₂து₃:க்க₂: — அந்த எம்பெருமானோடு சேர்ந்தால் இன்பத்தையும், அவனைப் பிரிந்தால் துன்பத்தையும் அடைபவனாய், ததே₃கதீ₄:— அவன் ஒருவனிடமே தன் அறிவை வைத்தவனாய் இருப்பவன்.

29. இருபத்தாறு முதல் இருபத்தெட்டு ஶ்லோகங்கள் ஈறாக ஐஶ்வர்ய கைவல்ய பகவச்சரணார்த்திகள் மூவரும் எம்பெருமானைத் தவிர மற்ற தெய்வங்களைத் தொழாத ஏகாந்திகளென்றும் அவர்களில் எம்பெருமானையே ப்ராப்யமாகக் கொண்ட உபாஸக ஜ்ஞானி சிறந்ததான பரமமோக்ஷத்தைப் பெறுகிறான் என்றும் சொல்லப்பட்டது. இனி நாலு ஶ்லோகங்களாலே உபாஸக ஜ்ஞானியைப் போலே தன் முயற்சியான பக்தி யோகத்தை ஸாதநமாகக் கொள்ளாமல், கீதை 7—19 ஶ்லோகத்தில் சொன்னபடியே எம்பெருமானையே ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும், தாரக போஷக போக்யங்கள் முதலான எல்லாமாகவும் கொண்ட பரமைகாந்தியான ஜ்ஞானியின் பெருமையைப் பேசுகிறார். ஏகாந்திகளாகச் சொல்லப்பட்ட ஐஶ்வர்ய கைவல்யார்த்திகளைக்காட்டிலும், எம்பெருமானையே ப்ராப்யமாகக் கொண்டவனுகையாலே உபாஸக ஜ்ஞானி சிறந்தவன்; அவனைப்போலே எம்பெருமானை ப்ராப்யமாக மாத்திரம்கொள்ளாமல், ப்ராபகம்முதலான எல்லாமாகவும் கொண்டவனுகையாலே இந்த மஹாத்மாவானஜ்ஞானி மிகச்சிறந்தவனாய் பரமைகாந்தீ எனத்தக்கவன் என்று உணர்த்துகிறார் 'ஜ்ஞானீ து பரமைகாந்தீ'' என்னும்தொடராலே. 'து'ஶப்தத்தாலே மூல ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட மூன்று அதிகாரிகளைக் காட்டிலும் இவனுடைய சிறப்பைக்காட்டுகிறார். ''பரமஶ் சாஸௌ ஏகாந்தீ ச—பரமைகாந்தீ'' [ஏகாந்திகளுள் மிகச்சிறந்தவன் பரமைகாந்தி] என்றோ, 'பரம ஏகாந்த:— அநந்யத்வம் அஸ்ய அஸ்தி இதி பரமைகாந்தீ' [மேலான அநந்யத்வம் (எம்பெருமானைத் தவிர வேறெவரையும் நினையாமை) எவனிடம் இருக்கிறதோ அவன் பரமைகாந்தி] என்றோ வ்யுத்பத்தி கொள்ளலாம். இவன் ஐஶ்வர்ய கைவல்யார்த்திகளைப் போலே வேறு தெய்வங்களைத் தொழாதவனாக மாத்திரமல்லாமல், உபாஸக ஜ்ஞானியைப்போலே அவனை ப்ராப்யமாகவும் கொண்டவனாக மாத்திரமல்லாமல் அவனையே ப்ராபகம் முதலான எல்லாமாகவும் கொண்டவன்; தன் செயல்கள் எதிலும் உபாயம் என்னும் நினைவு கொள்ளாதவன் என்று கருத்து. 'உபாயதாம் பரித்யஜ்ய' என்று 31 வது ஶ்லோகத்தில் இதை விளக்கப்போகிறார். இனி 32 வது ஶ்லோகம் வரை இந்தப் பரமைகாந்தியான ஜ்ஞானியின் சிறப்புக்கள் விளக்கப்படுகின்றன. (ததாயத்தாத்ம ஜீவந:) எம்பெருமானையே தன் வாழ்வாகக் கொண்டவன். உபாஸக ஜ்ஞானியைப்போலே மோக்ஷத்தில் தான் ஆனந்தமடைவதற்காகப் பாடுபடவேண்டியிராமல், எம்பெருமா

னுடைய முகமலர்த்தியையே தனக்குப் பெரும் பேருகக் கொண்டவன். ப4ர்த்ரு பே4ாக3த்தை விலைக்குறுப்பாக்குவாரைப் போலே, ஸர்வலோக ப4ர்த்தாவை விஷயமாகக் கொண்ட ஸ்வயம ப்ரயோஜனமான ப4க்தியை மோக்ஷத்திற்கு விலையாகக் கருதும் உபாஸக ஜ்ஞாநியைப்போல் அல்லாமல், "தனியேன் வாழ் முதலே" [திருவாய் 2-3-5] "வைப்பும் நங்கள் வாழ்வுமானுன்" [பெரிய திருமொழி 1-8-7] என்கிறபடியே எம்பெருமானுடைய முகமலர்த்தியையே தனக்கு ப்ரயோஜனமாகக் கொண்டவனுய், "தனக்கேயாக எனைக் கொள்ளும் ஈதே எனக்கே கண்ணனை யான் கொள் சிறப்பே" [திருவாய் 2-9-4] "உனக்கே நாம் ஆட்செய்வோம்" [திருப்பாவை 29] என்கிறபடியே சுயநலம் சிறிதுமில்லாத பரார்த்த2 கைங்கர்ய நிஷ்ட2ஞயிருப்பவன் என்று கருத்து. (தத் ஸம்ஶ்லேஷ வியோகை3க ஸுக2து3:க்க2:) எம்பெருமானேடு சேர்ந்திருப்பதையே இன்பமாகவும் அவனைப் பிரிந்திருப்பதையே துன்பமாகவும் கொண்டவன். எம்பெருமானையே தன்னுடைய வாழ்வாகக் கொண்டவனுகையாலே எம்பெருமானேடு கூடியிருப்பதையே இன்பமாகவும் அவனைப் பிரிந்திருப்பதையே துன்பமாகவும் கொண்டவன் என்று கருத்து. இங்கு எம்பெருமானேடு கூடியிருக்கையாவது மனத்திலே அவனை அநுப4விக்கையாகிற மானஸாநுப4வம். இந்த மானஸாநுப4வத்தில் திருப்தி இல்லாமல் வெளியிலும் அவனைக் கண்டு தழுவி முழுசிப் பரிமாறவேண்டும் என்று விருப்பமுற்று அது கிடையாமற்போகை வியோக3மாகிறது. நம்மாழ்வாருக்குத் திருவாய்மொழியில் இந்த ஸம்ஶ்லேஷ வியோக3ங்கள் மாறி மாறி வரும். அதனுலேயே அவரை 'தீ3ர்க்4ஸ சிந்தயந்தீ' என்று நம் பூர்வாசார்யர்கள் அழைப்பர். இவ்வண்ணமாக எம்பெருமானையே வாழ்வாகக்கொண்டு அவனது முகமலர்த்தியொழியத் தனக்கு ஒரு பயன் கருதாதிருக்கையாலே தன் முயற்சி எதையும் உபாயமாகக் கருதாமல் அவனையே ப்ராப்யமாக மாத்திரமல்லாமல் உபாயமாகவும் த4ாரக போஷக பே4ாக்3யங்களாகவும் கொண்டவன் என்று காட்டுகிருர் மேலே—(ததே3கதீ4:) "வாஸுதே3வஸ் ஸர்வமிதி—ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்3யதே" [கீதை 7-19] [அறிவு முதிரப்பெற்ற ஜ்ஞாநியானவன் 'வாஸுதே3வனே எனக்குப் பரமப்ராப்யமாகவும், ப்ராபகனுகவும், த4ாரகம், போஷகம், பே4ாக்3யம் முதலான எல்லாமாகவும் இருக்கிருன்' என்று எண்ணி என்னை ஶரணமடைகிருன்] என்கிறபடியே உபாஸக ஜ்ஞாநியைப்போலே அவனை ப்ராப்யமாக மாத்திரம் கொண்டு தன் முயற்சியை உபாயமாக எண்ணுமல் எம்பெருமானையே எல்லாமாக எண்ணியிருப்பவன். இந்த ஶ்லோகம் தொடக்கமாக நான்கு ஶ்லோகங்களும் உபாஸக ஜ்ஞாநியைப் பற்றியவையே என்று கொண்டு உரையிட்டார் ஸ்ரீவேத3ாந்த தேசிகர். 29

भगवद्ध्यान-योगोक्ति-वन्दन स्तुति-कीर्तनैः ।
लब्धात्मा तद्गतप्राण मनोबुद्धीन्द्रिय-क्रियः ॥ ३० ॥

30. ப₄க₃வத்₃த்₄யாந யோகே₃ாக்தி வந்த₃நஸ்துதிகீர்த்தநை: ।
லப்₃த₄ாத்மா தத்₃க₃தப்ராண மநோபு₃த்₃தீ₄ந்த்₃ரிய க்ரிய: ॥

ப₄க₃வத்₃த்₄யாந யோகே₃ாக்தி வந்த₃ந ஸ்துதி கீர்த்தநை: - எம்பெருமானைத் தியானிப்பது, காண்பது, அவனைப்பற்றிப் பேசுவது, அவனை வணங்குவது, துதிப்பது, திருநாம ஸங்கீர்த்தனம் செய்வது ஆகியவற்றால், லப்₃த₄ாத்மா — உயிர் தரிக்கப்பெற்றவன்; தத்₃க₃தப்ராண மநோ பு₃த்₃தீ₄ந்த்₃ரிய க்ரிய: — எம்பெருமானிடமே ஈடுபட்டப்ராணன், மனம், புத்தி, இந்த்ரியங்கள் ஆகியவற்றின் செயல்களை உடையவன்.

30. இந்த ஶ்லோகத்தில் பரமைகாந்தியான ஜ்ஞானியின் பரமப₄க்தியைக்காட்டும் செயல்களைப் பேசுகிறார். (ப₄க₃வத்₃த்₄யாந யோகே₃ாக்தி வந்த₃ந ஸ்துதி கீர்த்தநை:) இங்கு 'த்₄யானம்' எனப்படுவது அவனை இடைவிடாமல் சிந்திப்பது, 'யோக₃மாவது இப்படித் தியானிப்பதற்குறுப்பாக மனத்திலே அவனைக் காண்பது. அன்றிக்கே திவ்ய தேசங்களிலே அர்ச்சாமூர்த்தியாய் எழுந்தருளியிருக்கும் அவனைக்காண்பதென்றுமாம். "பாதெ₃ள நிருணும் தெள த்₃ருமஜந்ம ப₄ாஜௌ க்ஷேத்ராணி நாநுவ்ரஜதோ ஹரேர்யெள" [மனிதர்களின் எந்தக் கால்கள் ஹரி எழுந்தருளியிருக்கும் கோயில்களுக்குச் செல்லுவதில்லையோ, அந்தக் கால்கள் மரங்களையொத்தவை]

யோக₃ஸ்து த்₃விவித₄: ப்ரோக்தோ பா₃ஹ்யமாப்₄யந்தரம் ததா₂।
பா₃ஹ்யம் ப₃ஹி:க்ரியாபேக்ஷமாந்தரம் த்₄யாநமுச்யதே ॥

[யோக₃ம் என்பது பா₃ஹ்யம் (வெளியிலிருப்பது) ஆப்₄யந்தரம் (உள்ளிருப்பது) என்று இருவகைப்பட்டது. பா₃ஹ்யமாவது (கோயிலுக்குச் செல்லுவதுபோன்ற) வெளிச்செயல்களால் உண்டாவது. சிந்தனமே ஆப்₄யந்தரம் எனப்படுவது] என்னும் ப்ர

மாணங்கள் இங்கு வேதாந்த தேசிகரால் எடுத்துக்காட்டப் பட்டன. இங்கு சொல்லப்படும் 'உக்தி'யாவது—கேட்கவிரும்பும் தக்க அதிகாரிகளுக்கு எம்பெருமானுடைய பெருமையை எடுத்துச்சொல்லுவது 'வந்த3ன'மாவது—முக்கரணங்களாலும்வணங்குதல், 'ஸ்துதி' யாவது—எம்பெருமானுடைய குணங்களைச் சொல்லித் துதித்தல், 'கீர்த்தன'மாவது—எம்பெருமானுடைய அநந்தகுணங்கள், செல்வங்கள், செயல்கள் ஆகியவற்றைப் பொருளாகக் கொண்ட அவனுக்கே உரிய திருநாமங்களை ஸங்கீர்த்தனம் செய்தல். (லப்3த4ாத்மா) இவற்றாலே உயிர்தரிக்கப்பெற்றவன், உபாஸக ஜ்ஞாநி இவையெல்லாம் அடங்கிய ப4க்தியை ஸாத4நமாக நினைப்பவன். பரமைகாந்தியோவெனில் இவற்றை ஸ்வயம் ப்ரயோஜநமாகக் கொண்டு இவற்றைச் செய்யாவிடில் உயிர்தரிக்க மாட்டான், "உன்னைத் தெரித்தெழுதி வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது—தரித்திருந்தேனாகவே" [நான் திருவ 63] என்னும் திருமழிசையாழ்வார் பாசுரம் இங்கு அநுஸந்திக்கத்தக்கது. (தத்3க3த ப்ராண மநோ பு3த்3தீ4ந்த்3ரிய க்ரிய:) எம்பெருமானிடம் ஈடுபட்ட தன்னுடைய ப்ராணன், மனம், பு3த்3தி4, இந்திரியம் ஆகியவற்றின் செயல்களை உடையவன். 'ப்ராணன்' என்பது மூச்சு விடுவதற்குக் காரணமானதாய், ப்ராணன், அபானன், வ்யானன், உதானன், ஸமானன் என்னும் ஐந்து வகையாகச் செயல்படுவதான வாயு விசேஷம். 'மன'மாவது இந்த்ரியங்களுக்குத் தலைமை பெற்றிருப்பதாய், ஸங்கல்பம் விகல்பம் முதலியவற்றைச் செயலாக உடைய அந்த:கரணம் எனப்படும் உள்ளிந்திரியம். அந்த மனத்தின் உறுதி கொள்ளுகையாகிற செயலே பு3த்3தி4 அன்றிக்கே, உறுதி கொள்ளுகையாகிற செயலோடு கூடிய மனமே பு3த்3தி4 என்று சொல்லப்படுவதாகவும் கொள்ளலாம். "அத்4யவஸாயாபி4மான சிந்தா வ்ருத்தி பே4த3ாத் மந ஏவ பு3த்3த்4யஹங்கார சித்த ஶப்3தை3: வ்யபதி3ஶ்யதே" [ஸ்ரீப4ாஷ்யம்][ உறுதிகொள்ளல், அபிமானித்தல், சிந்தித்தல் ஆகிய செயல்களின் வேறுபாட்டையிட்டு மனமே முறையே பு3த்3தி4, அஹங்காரம், சித்தம் என்னும் சொற்களால் சொல்லப்படுகிறது ] என்று ஸ்ரீப4ாஷ்யத்திலும் அருளிச்செய்யப்பட்டது. 'இந்த்3ரிய' ஶப்3த3ம் கோ3ப3லீவர்த்த3 ந்யாயத்தாலே கர்மேந்த்ரியங்கள் ஐந்தும் ஜ்ஞானேந்த்ரியங்கள் ஐந்துமான வெளி இந்த்ரியங்களைச் சொல்லுகிறது. ப்ராணன் மனம் புத்தி இந்திரியம் ஆகியவற்றின் செயல்கள் எம்பெரு

மானிடம் ஈடுபடுகையாவது— "முடியானே" [திருவாய் 3-8] என்னும் திருவாய்மொழியில் ஆழ்வாருடைய இந்திரியங்கள் தத்தமக்குரிய அநுப₄வங்களை எம்பெருமானிடம் பெறுவதோடு ஓர் இந்திரியத்தின் செயலை மற்றோர் இந்திரியம் பெறவிரும்புகையும், எம்பெருமானுடைய அநுபவம் இல்லாவிட்டால் "காலாழும் நெஞ் சழியும் கண்சுழலும்" [பெரிய திருவ 34]

'காலுமெழா கண்ண நீரும் நில்லா உடல்
சோர்ந்து நடுங்கிக் குரல்
மேலுமெழா மயிர்க் கூச்சுமறு என
தோள்களும் வீழ்வொழியா
மாலுகளா நிற்கு மென் மனனே" [பெரியாழ் திரு 5-3-5]

என்கிறபடியே இந்திரியங்கள் தரிக்கமாட்டாதிருக்கையுமாகும். 29, 30 ஆகிய இவ்விரு ஶ்லோகங்களிலும் பரமைகாந்தியான ஜ்ஞானிக்குச் சொல்லப்படும் பெருமைகளை எம்பெருமானர் ஸ்வயம் ப்ரயோஜந ப₄க்தி நிஷ்ட₂னுய் மஹாத்மாவான ஜ்ஞானியைப் பற்றிய கீதா ஶ்லோகங்களின் பா₄ஷ்யத்தில் ஆங்காங்கு வெளி யிட்டருளினர். சிலவிடங்கள் கொடுக்கப்படுகின்றன:—

(1) "மத் ப்ரியத்வாதிரேகேண மத்₃ப₄ஜநேந விநா மநஸஶ்ச ஆத்மநஶ்ச பா₃ஹ்ய கரணாநாம் ச த₄ாரண மலப₄மாநா: மத்₃ ப₄ஜநைக ப்ரயோஜநா ப₄ஜந்தே" [கீ₃தை 9—13] [நானே அவர்களுக்கு மிகவும் இனியவனுகையால், என்னிடம் அன்பு செலுத்தாவிடில் தம்முடைய மனமும் ஆத்ம ஸ்வருபமும் வெளி இந்திரியங்களும் த₄ரிக்கமாட்டாமல் என்னுடைய ப₄க்தி யையே ஸ்வயம்ப்ரயோஜனமாகக்கொண்டு (அதை மோக்ஷோபாய மாகவும் கருதாமல்) பக்தி செலுத்துகிருர்கள்,]

(2) "மத் பராயண:-மயாவிநா ஆத்ம த₄ாரண-அஸம்ப₄ாவ நயா மத₃ாஶ்ரய இத்யர்த்த₂:" [9—34] ["என்னைப்பிரிந்தால் உயிர்வாழ இயலாத அளவுக்கு என்னையே பரமப்ராப்யமாக (பெரும் பயனுக)க் கொண்டவன்" என்பது மத்பராயண ஶப்₃த₃த்தின் பொருள்.]

(3) "அநந்ய ப்ரயோஜநேந தத்₃வசநேந துஷ்யந்தி"[10-9] [வேறு பயன் கருதாத ப₄க₃வத்₂கு₃ணவசனத்தால் இன்புறு கிருர்கள்.]

(4) மத்₃ப₄க்த:-அத்யர்த்த₂ மத்ப்ரியத்வேந மத்கீர்த்தந ஸ்துதி த்₄யாந அர்ச்சந ப்ரணாமாதி₃பி₄: விநா ஆத்மதா₄ரண மலப₄மாநோ மதே₃க ப்ரயோஜநதயா யஸ் ஸததம் தாநி கரோதி ஸ மத்₃ப₄க்த:" [11-55]
[என்னிடம் அளவுகடந்த அன்புடையவனுகையாலே, என்னை ஸங்கீர்த்தனம் செய்வது துதிப்பது தியானிப்பது அர்ச்சனம் செய்வது வணங்குவது முதலானவற்றைச் செய்யாமல் தன் உயிர் த₄ரிக்கமாட்டாதவனுய், என்னையே பயனுகக்கொண்டவனுய், எப்போதும் எனக்கு ஆராதனமாகக் கர்மங்களைச் செய்பவன் என் ப₄க்தன்]

(5) அநந்யேநைவ யோகே₃ந—அநந்ய ப்ரயோஜநேந யோகே₃ந, மாம் த்₄யாயந்த உபாஸதே — த்₄யாநார்ச்சந ப்ரணம ஸ்துதி கீர்த்தநாதீ₃நி ஸ்வயமேவாத்யர்த்த₂ ப்ரியாணி ப்ராப்யஸமாநி குர்வந்தோ மாமுபாஸத இத்யர்த்த₂:" [12-6]
[அநந்யேநைவ யோகே₃ந—என்றது வேறு பயன் கருதாத ப₄க்தி யோக₃த்தைக் குறிக்கிறது. "மாம் த்₄யாயந்த: உபாஸதே" என்னும் தொடர் "தியானம், அர்ச்சனம், ப்ரணமம், துதி, ஸங்கீர்த்தனம் முதலானவற்றை, மிக இனியவையாயிருக்கையாலே (மோக்ஷத்தையும் இவற்றுக்குப் பயனுகக் கொள்ளாமல்) ஸ்வயம் ப்ரயோஜனமாகச் செய்துகொண்டு என்னை உபாஸிக்கிறுர்கள்" என்று பொருள் படுகிறது.] மற்றும் பல இடங்கள் கீதா வ்யாக்யானத்தில் காட்டப்பட்டுள்ளன. இதிலிருந்து இங்கு பரமைகாந்தியான ஜ்ஞானியென்று சொல்லப்படுபவன் மஹாத்மாவான ஜ்ஞானியே என விளங்குகிறது. 30

निजकर्मादि भक्त्यन्तं कुर्यात्प्रीत्यैव कारितः ।
उपायतां परित्यज्य न्यस्येद्देवे तु तामभीः ॥ ३१ ॥

31. நிஜகர்மாதி₃ ப₄க்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித: ।
உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத்₃தே₃வே து தாமபீ₄: ॥

நிஜகர்மாதி₃— தனது வர்ணுஶ்ரமங்களுக்குரிய கர்மம் தொடக்கமாக, ப₄க்த்யந்தம்—ப₄க்தி ஈருகவுள்ள அனைத்தையும், உபாயதாம் பரித்யஜ்ய - இவை 'உபாயம்' என்னும் எண்

ணத்தைக் கைவிட்டு, ப்ரீத்யா ஏவ காரித: — (வகுத்த ஸ்வாமியைப் பற்றியவை என்னும்) அன்பாலேயே தூண்டப்பட்டவனாய், குர்யாத்—(பரமைகாந்தியான ஜ்ஞாநி) செய்யக்கடவன்; அபீ₄: – பயமற்றவனாய், தாம்—அந்த உபாயத்வத்தை, தே₃வே து—எம்பெருமானிடமே, ந்யஸ்யேத்-அநுஸந்தி₄க்கவேண்டும்.

31. இந்த ஶ்லோகத்தில் சரமஶ்லோகத்தின் அர்த்தத்தை வெளியிடுகிறார். "உபாஸக ஜ்ஞாநியாயிருந்தபோது கர்ம ஜ்ஞாந ப₄க்தி யோக₃ங்களை மோக்ஷஸாத₄நமாக அநுஷ்டித்து வந்தஇவன எம்பெருமானையே உபாயமாகக்கொண்ட பரமைகாந்தியானவுடன் கர்மஜ்ஞாந ப₄க்திகளைக் கைவிட்டு விடுவானோ?" என்னும் கேள்விக்குப் பதிலளிக்கிறது இந்த ஶ்லோகம். (நிஜ கர்மாதி₃ ப₄க்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித: உபாயதாம் பரித்யஜ்ய) கர்ம ஜ்ஞாந ப₄க்திகளை உபாயம் என்னும் எண்ணத்தைக் கைவிட்டு வகுத்த ஸ்வாமி விஷயமானவை என்னும் அன்பாலேயே தூண்டப்பட்டவனாய்ச் செய்யக்கடவன். தன்னுடைய வர்ணாஶ்ரமங்களுக்குரிய கர்மங்களை, உபாயம் என்னும் எண்ணத்தை விட்டு எம்பெருமானுடைய ஆஜ்ஞா கைங்கர்யமாகவும், தன் ஸ்வரூபத்தையும், எம்பெருமானுடைய ஸ்வரூபத்தையும் காண்பதற்குக் காரணமான ஜ்ஞாந யோக₃த்தை அது மோக்ஷோபாயம் என்னும் எண்ணத்தை விட்டு ஸ்வஸ்வரூப பரஸ்வரூபங்களைத் தனக்கு வெளிப்படுத்துவதற்கு உறுப்பாகவும், எம்பெருமானை அடைவதற்கு ஸாத₄நமான ப₄க்தி யோக₃த்தை அது மோக்ஷஸாத₄நம் என்னும் எண்ணத்தை விட்டு, உணவு உண்பதற்குத் தேவையான பசிபோலே, தான் அடையவேண்டிய பரமானந்தமான கைங்கர்யத்திற்கு முன் இருக்கவேண்டிய கைங்கர்ய ருசிக்கு உறுப்பாகவும் இவன் கைக்கொண்டு இருப்பானாகையாலே அவற்றை விடுவதற்கு இடமேயில்லை. அவை மோக்ஷோபாயம் என்னும் எண்ணத்தையே விடவேண்டும் என்று கருத்து. இத்தால் சரம ஶ்லோகத்தில் "ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய" என்னுமிடத்தில் சொல்லப்படும் மோக்ஷஸாத₄ந த்யாக₃ம் உபாயத்வபு₃த்₃தி₄ த்யாக₃மேயொழிய த₄ர்ம ஸ்வரூபத்யாக₃மன்று என்று காட்டினாராயிற்று. இதனால் — "இத₃ம் தே நாதபஸ்காய" [கீதை 18 - 67] என்று சரமஶ்லோகார்த்த₂த்தை அநதி₄காரிக

ளுக்கு வெளியிடக் கூடாது என்னும் ப₄க₃வந்நியமனத்தைப் பின் பற்றியும், அந்த நியமனத்தைக் காட்டிலும் வலியதான திருக் கோட்டியூர் நம்பியின் நியமனமான ஆசார்ய நியமனத்தைச் சிரமேற்கொண்டும் எம்பெருமானுர் கீ₃தா பா₄ஷ்யத்தில் 'ஸர்வ த₄ர்மாந் பரித்யஜ்ய' என்ற விடத்தில் இந்த முக்₂யார்த்த₂த்தை வெளியிடாமல் வேறு இரு பொருள்களை அருளிச் செய்தபோதி லும், அவர் க₃த்₃யத்ரயத்தில் அந்தரங்கர்களுக்கு வெளியிட்ட உபா யத்வ பு₃த்₃தி₄ த்யாக₃மே முக்₂யார்த்த₂மாகும் என்பதை, பரமா சார்யரான ஆளவந்தார் மிகத்தெளிவாகக் காட்டினுராயிற்று. இவ் விடத்தில் வ்யாக்₂யான சக்ரவர்த்தியான பெரியவாச்சான்பிள்ளை அருளிய பரந்தரஹஸ்யத்தில் ''அனந்தரம் 'பரித்யஜ்ய' என்று அதினுடைய த்யாக₃ப்ரகாரத்தைச் சொல்லுகிறது. இங்கு த்யாக₃ ஶப்₃த₃த்தாலே சொல்லுகிறது த₄ர்ம ஸ்வரூப த்யாக₃த்தையோ? த₄ர்மப₂லாதி₃ த்யாக₃த்தையோ? த₄ர்மத்தில் உபாயத்வ பு₃த்₃தி₄ த்யாக₃த்தையோ? என்னில்: இவ்வதிகாரிக்கு யாவச் ச₂ரீரபாதம் காலக்ஷேபத்துக்காக ப₄க₃வத் 'தோஷ' (ஸந்தோஷ) ஹேது பூ₄த மானவை அநுஷ்டே₂யமாகையாலே, த₄ர்மஸ்வரூபத்யாக₃மாகமாட் டாது; ப₂லாதி₃கள் ஸாத₄கனுக்குங்கூட த்யாஜ்யமாகக் கீழே உக்தமாகையாலே, ப₂லாதி₃த்யாக₃த்தைச் சொல்லுகிறதாக வொண்ணுது ஆக, இங்கு த₄ர்மங்களினுடைய உபாயத்வபு₃த்₃தி₄ த்யாக₃த்தைச் சொல்லுகிறது. அந்த உபாயத்வ பு₃த்₃தி₄ த்யாக₃ மாவது:— லாப₄ ஹேதுவான ப₄க₃வத் ப்ரீதிக்கு ஸாத₄நமென்கிற ப்ரதிபத்தியைத் தவிருகை. ஆகையாலே ஸ்வரூபத்யாக₃த் தால் வரும் குறையும், ப₂லாதி₃ த்யாக₃த்தைச் சொல்லுகிறதென் கிறத்தால் வரும் புநருக்தியுமின்றியிலே ஒழியும்'' என்று அருளிச் செய்தது இங்கு அநுஸந்திக்கத்தக்கது. இந்த ஶ்லோகத்தில் சொன்ன அர்த்த₂மே முமுக்ஷுப்படி 270, 271 சூர்ணைகளில் பிள்ளைலோகாசார்யரால் வெளியிடப்பட்டது. இவ்விரு சூர்ணைக ளும் பொருளோடு கீதா சரமஶ்லோக விவரணத்தில் பக்கம் 909 முதல் 913 வரையில் கொடுக்கப்பட்டிருப்பதும் இங்கு அநுஸந் திக்கத்தக்கது. இனி, இங்கு ஒரு கேள்வி எழுகிறது. உபாஸக ஜ்ஞானிக்கு எம்பெருமான் ப₂லப்ரத₃னை உபாயமாகவும், ப₄க்தி யோக₃ம் ப₂லகரணமான (எம்பெருமானை ப₂லத்தை அளிக்கச் செய்வதான) உபாயமாகவும் அமைந்திருக்கையாலே, பரமை காந்தி ப₄க்தி முதலானவற்றில் ப₂லகரணரூபமான உபாயத்வத் தையே கைவிடமுடியும். அப்படியானுல் இவனுக்குப் ப₂லகரண

மாயிருப்பது எது? என்பது அக்கேள்வி. இதற்கு பதிலளிக்கிருர் மேலே — (தாம் தே₃வே து ந்யஸ்யேத்) கைவிடப்பட்ட அந்தப் ப₂லகரணரூபமான உபாயத்வத்தை எம்பெருமானிடமே அநுஸந்திக்கவேண்டுமென்று பொருள். ப₂லப்ரத₃-உபாயமும் ப₂லகரண உபாயமும் ஒன்ருயிருக்குமிடம் உண்டோ? எனில், ஒரு குடும்பத் தலைவன் உறவைப் பார்த்துத் தன் குடும்பத்தினரை ரக்ஷிக்குமிடத்தில் குடும்பத்தலைவனே ப₂ல ப்ரதோ₃பாயமாகவும், ப₂லகரணோபாயமாகவும் ஆவதையும், குடும்பத்தினரிடமிருக்கும் எந்தச் செயலும் ப₂லகரணோபாயமாவதில்லை என்பதையும் காண்கிரும். ஆகையாலே, "உன்றன்னேடுற்ருேமேயாவோம்" [திருப்பாவை—29] என்கிறபடியே உறவைக்கொண்டு எம்பெருமான் காலில் விழும் பரமைகாந்தியான ஜ்ஞானிக்கு எம்பெருமானே ப₂லகரண-உபாயமாகவும் ப₂லப்ரத₃-உபாயமாகவும் ஆவதில் குறையில்லை. (அபீ₄:) பயமற்றவனுக ஸாத₄நாந்தரங்களில் உபாயத்வ பு₃த்₃தி₄யைக் கைவிட்டு எம்பெருமானிடமே அதை அநுஸந்திக்கவேண்டுமென்று கருத்து. "அநாதிகாலமாக நம் காரியத்திற்காக நாமே முயலும் நிலையில் இருந்து வந்தோம். அதனுல் எம்பெருமானும் நம்மை நம் வசத்தே விட்டிருந்தான்; அந்த நிலையில், 'நம காரியத்தை நம்மால் முடிக்கமுடியுமோ முடியாதோ' என்று நாம்வருந்தியிருப்பதற்கு இடமுண்டு; இப்போது நம் காரியத்திற்காக நாம் முயல்வதைக் கைவிட்டு அவனிடமே விட்டு விட்டோம்; அதனுல் எம்பெருமானும் நம் காரியத்தைத் தன் காரியமாக ஏற்றுக்கொண்டு செயல் புரியத் தொடங்கிவிடுவான். ஆகையால் முன்போலே, 'நம் காரியம் முடியுமோ முடியாதோ' என்ருே, 'நம் காரியத்தில் எம்பெருமான் பாராமுகமாய் இருக்கிருனே; நாம் எப்படி உய்வோம்' என்ருே நாம் வருந்துவதற்கு இடமில்லை நம்முடைய பேற்றுக்கு முயற்சி ப₂லன் ஆகிய இரண்டிலும் தொடர்பற்ற நம்முடைய பாரதந்த்ர்ய நிலையை நன்குணர்ந்து நமது ரக்ஷணகார்யத்தை நாம் மேற்கொள்ளாமையாலும், நம்மை ரக்ஷிப்பதில் முயற்சியும் ப₂லனும் தன்னுடையவை எனக்கருதியுள்ள எம்பெருமானே நம் பாபங்களைப்போக்கி நம்மை ரக்ஷிக்கும் செயலை ஏற்றுக் கொண்டுவிட்டபடியாலும் நமக்கு வருந்துவதற்கு இடமேயில்லை" என்பது இவனுடைய அநுஸந்தான ப்ரகாரம். இந்த ஶ்லோகத்

தில் "நிஜகர்மாதி₃ ப₄க்த்யந்தம்ʼஸூர்யாத் ப்ரீத்யைவ காரித: உபாயதாம் பரித்யஜ்ய" என்னும் பகுதியாலே சரமஶ்லோகத்தில் 'ஸர்வ த₄ர்மாந் பரித்யஜ்ய" என்னும்பகுதியும், "ந்யஸ்யேத்₃ தே₃வேது தாம் அபீ₄:" என்னும் பகுதியாலே சரமஶ்லோகத்தில் "மாமேகம் ஶரணம் வ்ரஜ | அஹம் த்வா ஸர்வபாபேப்₄யோ மோக்ஷயிஷ்யாமி மாஶுச: ||" என்னும் பகுதியும் விவரிக்கப் படுகின்றன என்று அறியத்தக்கது. 31.

एकान्तात्यन्त-दास्यैकरतिस्तत्पदमाप्नुयात् ।
तत्प्रधानमिदं शास्त्रमिति गीतार्थसङ्ग्रहः ॥ ३२ ॥

32 ஏகாந்தாத்யந்த தா₃ஸ்யைக ரதிஸ் தத்பத₃மாப்நுயாத் |
தத்ப்ரதா₄நமித₃ம் ஶாஸ்த்ரமிதி கீ₃தார்த்த₂ஸங்க்₃ரஹ: ||

யாமுநாசாரியர் என்னும் ஆளவந்தார் அருளிய "கீ₃தார்த்த₂ஸங்க்₃ரஹம்" நிறைவுற்றது.

ஏகாந்தாத்யந்த தா₃ஸ்யைகரதி:— எம்பெருமானுடைய முகமலர்த்தியையே பயனாகக்கொண்டதாய், எல்லாக்காலத்திலும் செய்யப்படுவதான அடிமையையே விரும்புகின்ற பரமைகாந்தி, தத் பத₃ம் — (அவ்வடிமைக்குறுப்பாக) எம்பெருமானுடைய திருவடிகளை, ஆப்நுயாத் — அடைவான்; இத₃ம் ஶாஸ்த்ரம் — இந்த கீ₃தா ஶாஸ்த்ரம். தத்ப்ரதா₄நம் — சேதனனைப் பரமைகாந்தியாக்குவதை முக்கியமான குறிக்கோளாகக் கொண்டது. இதி — இவ்வண்ணமாக. கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹ: — கீ₃தையின் பொருளைச் சுருக்கிக்கூறும் 'கீ₃தார்த்த₂ஸங்க்₃ரஹம்' என்னும் நூல் நிறைவுபெறுகிறது.

32. பரமைகாந்திக்குப் ப₂லனைக்கூறி 'சேதனனைப் பரமைகாந்தியாக்குவதே கீதையின் குறிக்கோள்' என்று அருளிச்செய்து கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹத்தை நிறைவு படுத்துகிறார். (ஏகாந்தாத்யந்த தா₃ஸ்யைக ரதி:) ஏகாந்தமாய் அத்யந்தமான கைங்கர்யத்திலேயே ஈடுபட்ட பரமைகாந்தி என்று ஶப்₃தார்த்த₂ம்.

'ஏகாந்த தா₃ஸ்யம்' என்கையாலே –உபாஸக ஜ்ஞாநியைப் போலே தன் ஆனந்தத்திற்காகப் பாடுபடாமல், இவன் எம்பெருமானுடைய ஆனந்தத்தையே பயனாகக் கொண்ட பரமைகாந்தியாகை யாலே இவனுடைய பயனும் அவனுடையதைப் போலே ஸ்வார்த்த₂மாயிராமல் 'தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே' (திருவாய்2-9-4) 'உனக்கே நாம் ஆட்செய்வோம்' [திருப்பாவை 29] என்கிறபடியே எம்பெருமானுடைய முகமலர்த்தியையே பயனாகக்கொண்ட கைங்கர்யமாயிருக்கும் என்று உணர்த்தப்படுகிறது. 'அத்யந்த தா₃ஸ்ய' மாவது—அநந்தமான வருங்காலம் முழுவதிலும் செய்யப்படும் அடிமை, இத்தகைய அடிமையிலேயே ஈடுபாடுகொண்டவன் என்கையாலே ''ஒழிவில்காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்'' [திருவாய் 3—3—1] என்ற நம்மாழ்வாரைப்போலே ஒழிவில்காலமெல்லாம் செய்யப்படும் பரார்த்த₂ கைங்கர்யத்தில் ஈடுபாடுடையவன் பரமைகாந்தி என்று கருத்து. (தத்பத₃ம் ஆப்நுயாத்) இந்த ஈடுபாட்டுக்குத் தக்கபடி நிர்ஹேதுகமாக அருளப்பெற்ற எம்பெருமானுடைய திருவடிகளை அடைவான் இந்தப் பரமைகாந்தி என்று கருத்து. கீ₃தார்த்த₂ஸங்க்₃ரஹம் 26 வது ஶ்லோகத்தில் ''ப்ரதிலப்₄ய பராம்ப₄க்திம் தயைவாப்நோதிதத்பத₃ம்'' என்று ஜ்ஞாநிகளனைவர்க்கும் பரமபதப்ராப்தி உண்டென்று அருளினர். 28 வது ஶ்லோகத்தில், ''யாவத்ப்ராப்தி பரார்த்தீ₂ சேத் ததே₃வாத்யந்தமஶ்நுதே'' என்று உபாஸகஜ்ஞாநிக்கு ஸ்வார்த்த₂நுப₄வ ப்ரதா₄நமான மோக்ஷம் உண்டென்று அருளினர். 32 வது ஶ்லோகத்தின் முற்பாதியான இங்கு பரமைகாந்தியான ஜ்ஞானிக்குப் பரார்த்த₂கைங்கர்யமே பயனாகிறது என்று அருளுகிறார். ஆகையாலே புநருக்தியில்லை. (தத் ப்ரதா₄நம் இத₃ம் ஶாஸ்த்ரம்) இந்த கீ₃தா ஶாஸ்த்ரம் இந்தப் பரமைகாந்தியையே ப்ரதா₄னமாகக்கொண்டது சேதனனைப் பரமைகாந்தியாக்குவதையே முக்கியமான குறிக்கோளாகக் கொண்டது என்று கருத்து. மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது கர்மம் ஜ்ஞானம் ப₄க்தி முதலான ஸாத₄நங்களை அநுஷ்டித்துச் சேதனன் மோக்ஷமடைய வேண்டும் என்று இந்த கீ₃தா ஶாஸ்த்ரம் சொல்லுவது போலத் தோன்றினாலும், ஆங்காங்கு ப₄க்தியானது ஸ்வயம்ப்ரயோஜன ப₄க்தியாகப் பரிணமிக்கவேண்டுமென்று கூறியிருக்கையாலும், உபாஸக ஜ்ஞானியானவன் 'ப்ராப்யம், ப்ராபகம் முதலான எல்லாம் வாஸுதே₃வனே' என்று எம்பெருமானைச் சரணமடை

யும் மஹாத்மாவான ஜ்ஞானியாகப் பரிணமிக்கவேண்டுமென்று கூறியிருக்கையாலும் ஸ்வயம் ப்ரயோஜந ப₄க்தி நிஷ்ட₂னாய், பரார்த்த₂ கைங்கர்ய நிஷ்ட₂னாய், கண்ணனுக்கே கிடைத்தற்கரியவனான பரமைகாந்தியாகச் சேதனன் உருவாக வேண்டும் என்னும் குறிக்கோளையுடையது இந்த கீதாஸாஸ்த்ரம் என்று தாத்பர்யம். (இதி கீத₃ார்த்த₂ ஸங்க்₃ரஹ:) இவ்வண்ணமாக கீ₃தையின் பொருளைச் சுருக்கிக் கூறும் கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹம் என்னும் நூல் நிறைவடைகிறது

"இத்த₂மேவ ஸத்வநிஷ்ட₂ஸம்ப்ரத₃ாய பரம்பராக₃த: ஸமீசீநோ கீ₃தார்த்த₂:, ந புந: குத்₃ருஷ்டிபி₄ருந்நீத:; ஸ சைஷ ஸ்வயோக₃மஹிம கலகித பரமபுருஷ விபூ₄தியுக₃ல ப₄க₃வந்நாத₂ முநிநியோக₃ாநுவர்த்தி ஸ்ரீமத்₃ ராமமிஸ்ர ஸகாஸாத்₃ ப₃ஹுஸாஸ்த்ர வித்₃பி₄ரஸ்மாபி₄: ப₃ஹுஸ: ஸ்ருதஸ்ய ப₄க₃வத்₃கீ₃தார்த்த₂ ப்ரபஞ்சஸ்ய ஸங்க்₃ரஹ இதி முமுக்ஷுபி₄ஸ் ஸங்க்₃ராஹ்யதம இதி பா₄வ: ||"

[இதுவே ஸத்வ கு₃ணத்தில் ஊன்றி நிற்கும் ஆசார்யர்களுடைய ஸம்ப்ரத₃ாய பரம்பரையாலே நமக்குக்கிடைத்த உண்மையான கீ₃தைப் பொருளாகும். (சங்கரர் யாதவப்ரகாசர் முதலான) கீதைக்கு அவப்பொருளுரைக்கும் உரையாசிரியர்களால் தன்னெஞ்சில் தோன்றினவாறு எழுதப்பட்டது கீ₃தைக்கு உண்மையான பொருளல்ல. இந்த உண்மைப்பொருளோ, தன்னுடைய யோக₃ மகிமையினால் பரமபுருஷனுடைய உப₄ய விபூ₄தியையும் வசப்படுத்திய ப₄க₃வான் நாதமுனியின் கட்டளையைப் பின்பற்றிய (அவரது ப்ரஸிஷ்யரான) ஸ்ரீராமமிஸ்ரர் எனும் மணக்கால் நம்பிகளிடமிருந்து பல சாஸ்திரங்களையும் கற்ற நம்மாலே பலமுறை கேட்கப்பட்டு, இந்த கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹ நூலில் வெளியிடப்பெற்றது. ஆகையாலே இதுவே முமுக்ஷுக்களால் மிகவும் ஏற்றுக்கொள்ளத்தக்கது என்று கருத்து.] என்று இந்த ஸ்லோகத்தின் நாலாவது பாதத்திற்கு ஸ்ரீவேதாந்த தேசிகர் தாத்பர்யமருளியது இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

கீ₃தாவ்யாக்₂யான முடிவுரை நிறைவுற்றது.

### நிக3மன ஶ்லோகங்கள்

ஸ்ரீயாமுநமுநி: ஸ்ரீமாந் ராமாநுஜமுநிர் மஹாந் |
கீ3தாவ்யாக்2யாமிமாம் ஹ்ருத்3யாம் க்ருதவந்தௌ நமத்க்ருதி:||

ஸ்ரீபார்த்த2ஸாரதி2: ஸ்ரீமாந் ஸ்வஸ்மை ஸ்வப்ரீதயே ஸ்வயம் |
ஏதாம் காரிதவாந் வ்யாக்2யாம் கல்யாண கு3ணவாரிதி4:||

ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி தா3ஸேந ஸ்ரீநிவாஸார்ய ஸூநுநா |
ஸ்ரீவிஷ்ணுசித்த வம்ஶ்யேந ஸுத3ர்ஶந ப்4ருதா முதா3 ||

ஶார்வர்யப்3தே3 ஸமாரப்3த4ம் ஸம்பூர்ணம் தா4த்ரு நாமநி |
ஷட்த்ரிம்ஶத்3வர்ஷ பர்யந்தம் ஸ்ரீவைஷ்ணவ ஸுத3ர்ஶநே ||

பூர்வாசார்யைர் த3ர்ஶிதேந மார்க்கே3ண லிகி2தாம் ஶுபா4ம் |
கீ3தாவ்யாக்2யாமிமாம் பூர்ணாம் ஸேவந்தாம் ஸாத்விகா ஜநா: ||

[ஜ்ஞாநப4க்தி வைராக்யச்செல்வம்மிக்க பெரியோர்களான ஸ்ரீயாமுனமுனி எனும் ஆளவந்தாரும், ஸ்ரீராமானுஜராகிற யதிராஜரும் நெஞ்சுக்கினிய இந்த கீ3தையுரையை (அடியேனை எழுதுகோலாகக் கொண்டு) இயற்றினார்கள். (இது புல்லறிவாளனான) எனது நூலல்ல. ஶ்ரிய: பதியாய், கல்யாணகு3ணக்கடலான ஸ்ரீபார்த்த2 ஸாரதியாம் கண்ணன் தன்பொருட்டுத் தன் உகப்பிற்காக இவ்வுரையைத் தானே செய்வித்துக் கொண்டான். ஸ்ரீவிஷ்ணுசித்தர் எனும் எங்களாழ்வானின் ஜ்ஞான வம்ஶத்தில் உதித்தவனாய், (ஸுதர்சனஸ்தாபகரான) ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமியின் ஜ்யேஷ்ட2 குமாரனாய், 'ஸுதர்சனம்' பத்திரிகையின் ஆசிரியனான ஸ்ரீக்ருஷ்ண ஸ்வாமி தாஸனாலே (ப4க3வத்3ப4ாக3வத ஆசார்யர்களுக்கு உகந்த கைங்கர்யம் இது என்னும்) உகப்பாலே "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்" என்னும் மாதப்பத்திரிகையில் சார்வரி வருடத்தில் தொடங்கப்பெற்றதாய் தா4த்ருஸம்வத்ஸரத்தில் நிறைவடைந்ததாய் முப்பத்தாறு வருடங்கள் பூர்வாசார்யர்கள் காட்டிய வழியில் எழுதப்பெற்றதான மங்களமான இந்த கீ3தா வ்யாக்2யானத்தை ஸாத்விக மஹநீயர்கள் முழுவதும் ஸேவிப்பார்களாக.]

**ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி தா3ஸனால் வெளியிடப்பெற்ற கீ3தார்த்த2 விவரணம் நிறைவுற்றது.**

# கீதா ஶ்லோகார்த்தச் சுருக்கம்

## பதினெட்டாம் அத்தியாயம்

ஶ்லோகம் அர்த்தம்

1. ஸந்ந்யாஸத்யாகங்கள் ஒன்ரு வெவ்வேரு, அவற்றின் ஸ்வரூபம் என்ன என்று அறிவதற்காக அர்ஜுனனின் கேள்வி.

2, 3. ஸந்யாஸத்யாகங்கள் பற்றிய அறிவாளிகளின் கருத்துக்கள்;

4, 5, 6. த்யாகம் ஸந்யாஸம் எனும் இரண்டும் ஒன்றே; கர்மங்களுடைய ஸ்வரூபத்யாகம் தவருனது. ஸங்கலபத்தையும் (கர்மம் என்னுடையது என்னும் எண்ணத்தையும்) பலனில் விருப்பத்தையும் விட்டு, கர்மங்கள் அனுஷ்டிக்கப்பட வேண்டியவையே.

7. கர்மஸ்வருபத்யாகம் தாமஸத்யாகம் (தமோகுணத்தால் விளைவது)

8. உடலுக்கு வருத்தம் விளையும் என்னும் அச்சத்தால் கர்மத்தை விடுவது ராஜஸத்யாகம். அதற்குப் பயனில்லை.

9. பலஸங்கங்களை மட்டும் விட்டு நித்யநைமித்திக கர்மங்களை அனுஷ்டிப்பது ஸாத்விகத்யாகமாகும்.

10. ஸாத்விகத்யாகத்தோடு கூடியவனுடைய ஆத்மகுணங்கள்.

11, 12. கர்மபலத்யாகமே உண்மையான த்யாகமாகும், அத்தகையவனிடம் கர்மத்தின் பலன் ஒட்டாது. (இதுவரை) அர்ஜுனனின் கேள்விக்குப் பதில் உரைக்கப்பட்டது.

13, 14, 15 கர்த்ருத்வத்யாகத்தை ப்ரஸ்தாபித்தல், கர்மங்களுக்கு ஐந்து காரணங்களைக் காட்டுதல், ஐந்தாவது காரணமான பரமாத்மாவே ப்ரதாநகாரணம என்று கூறுதல் (பராயத்தாதிகரண விசாரம் — பூர்வாசாரியர்களுக்கும் வேதாந்ததேசிகருக்கும் கருத்துவேறுபாடு.)

16, 17. கர்த்ருத்வத்யாகத்தை விளக்குதல். (இந்த ஶ்லோகம் வரை 'கர்மங்களைச்செய்பவன் ஈஶ்வரனே' என்னும் அறிவு விளக்கப்படுகிறது—கீதார்த்தஸங்க்ரஹம்)

18. கர்மங்களைப் பற்றிய வேத₃விதி₄—ஜ்ஞாநம், ஜ்ஞேயம் ஜ்ஞாதா என்னும் மூன்றுடன் கூடியது. கர்மத்தின் வகை கரணம், கர்ம, கர்த்தா என்று மூன்று.

19. ஜ்ஞாநம் (கர்மத்தைப்பற்றிய அறிவு), கர்மம் (செய்யப் படும் கர்மம்), கர்த்தா (கர்மத்தைச்செய்பவன்) ஆகிய ஒவ்வொன்றும் மூக்குணங்களையிட்டு மூன்றாகப் பிரிக்கப் படுகின்றன.

20. ஸாத்விக ஜ்ஞாநத்தின் விளக்கம்

21. ராஜஸ ஜ்ஞாநத்தின் விளக்கம்

22. தாமஸ ஜ்ஞாநத்தின் விளக்கம்

23. ஸாத்விக கர்மத்தின் விளக்கம்

24. ராஜஸ கர்மத்தின் விளக்கம்

25. தாமஸ கர்மத்தின் விளக்கம்

26. ஸாத்விக கர்த்தாவின் விளக்கம்

27. ராஜஸ கர்த்தாவின் விளக்கம்

28. தாமஸ கர்த்தாவின் விளக்கம்

29. பு₃த்₃தி₄, த்₄ருதி ஆகியவை கு₃ணத்தையிட்டு மூவகைப் படும் என்று கூறுதல்

30. ஸாத்விக பு₃த்₃தி₄யின் விளக்கம்

31. ராஜஸ பு₃த்₃தி₄யின் விளக்கம்

32. தாமஸ பு₃த்₃தி₄யின் விளக்கம்

33. ஸாத்விக த்₄ருதியின் விளக்கம்

34. ராஜஸத்₄ருதியின் விளக்கம்

35. தாமஸத்₄ருதியின் விளக்கம்

36, 37 ஸுக₂ம் கு₃ணத்தை யிட்டு மூவகைப் படுவதை விளக்கத் தொடங்கி ஸாத்விகஸுக₂த்தின் விளக்கம்

38. ராஜஸஸுக₂த்தின் விளக்கம்

39. தாமஸஸுக₂த்தின் விளக்கம்

(ஶ்லோ 18 முதல் 39 வரையில் ஸத்வகுணமே கைக்கொள்ளத்தக்கது என்னும் விஷயம் விளக்கப்படுகிறது—கீ₃தார்த்த₂ஸங்க்₃ரஹ:)

40. பத்₃த₄ ஜீவர்களில் இந்த முக்குணங்களிலிருந்து விடு பட்டவன் எவனுமில்லை.

41. நாலு வர்ணத்தவர்களுக்கும் அவரவர் குலத்துக்கேற்ற படி தொழில்களையும் ஜீவனோபாயங்களையும் விளக்கத் தொடங்குதல்

42. பிராம்மணருக்குரிய செயல்கள்

43. க்ஷத்திரியருக்குரிய செயல்கள்

44. வைசிய சூத்₃ரர்களுக்குரிய செயல்கள் (ஜாதிவிஷயத்தில் உப₄யஸம்ப்ரதா₃ய ஆசார்யர்களின் திருவுள்ளம்)

45. அவனவன் வர்ணத்திற்குரிய கர்மங்களில் நிலைநிற்ப தால் மோக்ஷத்தையே அடையலாம் என்று விளக்கத் தொடங்குகிறான்.

46. அந்தந்த வர்ணத்திற்குரிய கர்மம் பரமாத்மாவுக்கு ஆரா த₄னமாகையால் மோக்ஷகாரணமாகும்.

47. கர்மயோக₃மே ஜ்ஞானயோக₃த்தைக் காட்டிலும் சிறந் தது, அதை அனுஷ்டிப்பவன் ஸம்ஸாரத்தை அடைய மாட்டான்.

48. ஜ்ஞானயோக₃த்தைச் செய்யத் தகுதியுள்ளவனுக்கும் கர்மயோக₃த்தை அனுஷ்டி₂ப்பதே சிறந்தது;

49. கர்மயோக₃த்தை அனுஷ்டி₂ப்பதாலேயே ஜ்ஞாநயோக₃த் தின் ப₂லனாகிய தியான நிஷ்டையை அடையலாம்.

50. இந்தத் தியான நிஷ்டையால் ஆத்மதரிசனத்தைப் பெறும் வழியைக் கூறத் தொடங்குதல்

51, 52, 53. ஆத்ம தரிசனத்தைப் பெறும் வழியைச் சுருக்கமாக விளக்குதல்

54. ஆத்ம ஸாக்ஷாத்காரத்தாலே பரமபுருஷன் விஷயத்தில் பரப₄க்தி விளையும்

55. பரப₄க்தியாலே பரமபுருஷனை உள்ளபடி அறிகையாகிற பரஜ்ஞாநத்தைப்பெற்று, அதற்குப்பின் அந்தப்பரப₄க்தி யின் முற்றிய நிலையான பரமபக்தியாலே முக்தி நிலையில் பரமபுருஷனோடு ஸாயுஜ்யயம் பெறுகிறான் ஜீவன்.

56. காம்யகர்மங்களையும் முற்கூறியபடி மூன்று வகைப்பட்ட பரித்யாகத்தோடு அனுஷ்டித்தால் மோக்ஷபலனை அடையலாம்.

57 'மூவகைப்பட்ட பரித்யாகங்களோடு என்னிடம் நெஞ்சை வைத்து உனக்குரிய யுத்தம் முதலான கர்மங்களைச் செய்வாயாக' என்று அர்ஜுனனை நியமிக்கிறான்.

58. 'முற்கூறியபடி கர்மங்களைச் செய்தால் ஸம்ஸாரத் துன்பங்களைத் தாண்டலாம், செய்யாவிட்டால் ஆத்மநாசத்தையே அடைவாய்' என்கிறான்,

59. எப்படியாயினும் நீ போர் புரிவதைத் தவிர்க்க முடியாது என்கிறான்.

60. நீ போர்புரிய மாட்டேன் என்று உறுதிகொண்டாலும உன் சரீரம் உன்னைப் போர்புரியும்படி நியமித்துவிடும் என்கிறான்,

(இதுவரையில் தனக்குரிய கர்மத்தால் மோக்ஷத்தையே அடையலாம் என்னும் விஷயம் விளக்கப்படுகிறது—கீதார்த்த ஸங்க்ரஹம்)

61. எல்லா உயிர்களும் ஸர்வேஶ்வரனை என்னுள் ஹ்ருதயத்திலிருந்து பூர்வகர்மங்களை அனுஸரித்து சரீரத்தின் வழியில் செல்லும்படி நியமிக்கப் படுகிறார்கள் என்கிறான்.

62. அந்தப் பரமாத்மாவான என்னையே எல்லாவகையாலும் சரணமடைவாய். என் அருளாலே எல்லாக்கர்மங்களிலிருந்தும் விடுபட்டுப் பரமபதத்தையும் அடைவாய் என்கிறான்.

63 நான் இதுவரையில் மோக்ஷஸாதநமாகச் சொன்னவைகளில் உன் தகுதிக்கும் விருப்பத்திற்கும் ஏற்றதை நீ கைக்கொள்வாய் என்கிறான்.

64, 65. 62வது ஶ்லோகத்தில் சொல்லப்பட்டசரணாகதியை உடனே அர்ஜுனன் ஏற்றுக்கொள்ளாமையால் ப்ரவ்ருத்திபரனை அவனுக்கு பக்தியோகத்தை விதிக்கிறான்.

63. சென்றஸ்லோகத்தில் விதிக்கப்பட்ட பக்தியோகத்திற்கு அங்கமாக சரணாகதி சொல்லப்படுகிறது. (இதுவரை கீதா பாஷ்யத்தையொட்டி 62 வது ஸ்லோகம் முதல் 66 வது ஸ்லோகம் வரை சுருக்கமாக சொல்லப்பட்டது. கத்யங்களில் எம்பெருமானார் திருவுள்ளம் பற்றியபடி அவற்றின் சுருக்கம் பின்வருமாறு:—)

62. ஸர்வேஸ்வரனை ஜீவன் பற்றும் பற்றுகிற ஸ்வகதஸ்வீகாரம் விதிக்கப்படுகிறது.

63, கர்மஜ்ஞானபக்தி யோகங்கள் தான் பற்றும் பற்றில் உபாய புத்தியுடன் ஈஸ்வரனைச் சரணமடைவது ஆகிய இந்த மோக்ஷோபாயங்களில் ஏதாவதொன்றை நீ கைக்கொள்வாய் என்கிறான்.

64, 65. அர்ஜுனன் வாளாவிருந்ததைக் கண்டு பக்தியோகமே அவனுக்குத் தக்கது என்று நினைத்து பக்தி யோகத்தை அவனுக்கு விதிக்கிறான்.

66. "ஸர்வஸ்வாமியாய், அனைவரையும் நியமிக்கும் எம்பெருமான் அவனுக்கு அத்யந்த பரதந்த்ரனான என்னிடம் என்னை ரக்ஷித்துக்கொள்ளும் பொறுப்பைவிட்டுவிட்டானே" என்று கலங்கிய அர்ஜுனனுக்கு "இந்த எல்லா உபாயங்களிலும் உபாயபுத்தியை வைக்காமல் என்னைச் சரணடைந்தால், நான் உன்னை எல்லாப்பாபங்களினின்றும் விடுவிக்கிறேன்" என்கிறான்)

(கீதார்த்தஸங்க்ரஹத்தில் இதுவே சாஸ்த்ரஸாரார்த்தம் எனப்பட்டது.)

67. 'நீ இவ்வர்த்தத்தைத் தகுதியில்லாதவர்களுக்கு உபதேசிக்காதே' என்று கூறுகிறான்.

68. 'தகுதியுள்ளவர்களுக்கு இந்த ஶாஸ்த்ரத்தை அவசியம் பொருளுடன் உபதேசிக்கவேண்டும்' என்றும், 'அப்படி உபதேசிப்பவனுக்கு மோக்ஷபலனே ஸித்திக்கும்' என்றும் கூறுகிறான்.

69. 'இந்த ஶாஸ்த்ரத்தை வியாக்யானம் செய்பவன் என்னிடம் பரமபக்தியை அடைந்து என்னையே அடைவான் என்று கூறியது பொருந்துமோ' என்னும் ஐயம் எழ, "மஹாத்மாவான ஜ்ஞானியின் மனநிலையை இந்த ஶாஸ்த்ரத்தை பக்தர்களுக்குத் தெரிவிப்பதாலேயே பெற்றுவிடும் அவனைக்காட்டிலும் எனக்குஇனியது செய்பவனோ இனியவனோ முக்காலத்திலும் வேறொருவன் இல்லையாகையாலே இது பொருந்தியதே" என்று சென்ற ஸ்லோகத்தை விளக்குகிறான்.

70. "ஓர் ஆசார்யனிடமிருந்து இந்த ஶாஸ்த்ரத்தை அர்த்தத்தோடு கேட்பவன் உபாஸக ஜ்ஞாநியை ஒத்தவனுகிருன்" என்று கூறுகிருன்.

71 "இந்த ஶாஸ்த்ரத்தை ஓர் ஆசார்யனிடமிருந்து கேட்பதை மட்டும் செய்பவன் என்னிடம் பக்திக்குத் தடையான பாபங்கள் நீங்கப்பெற்று இதன் பொருளையும் உணரலாம்படி பக்தர்களின் கூட்டத்தில் சேரப்பெறுகிருன்" என்கிருன்.

72. "இந்த ஶாஸ்த்ரத்தை ஒருமுகப்பட்ட மனத்தோடு கேட்டாயா? அறிவின்மையால் உனக்கு விளைந்த மயக்கம் தீர்ந்ததா?" என்று அர்ஜுனனைக் கேட்கிருன்.

73. "உன் அருளால் என்னுடைய விபரீத ஜ்ஞாநம் அழிந்தது. உண்மையறிவை அடைந்து ஐயம் நீங்கப்பெற்று நிலைநின்றவனுனேன். உன் வார்த்தைப்படி போர் புரிகிறேன்" என்று அர்ஜுனன் கூறுகிருன்.

74-78 ஸஞ்ஜயன் திருதராஷ்டிரனுக்கு "கண்ணனும் அர்ஜுனனும் இருக்குமிடத்தில் தான் வெற்றி" என்னும் தன்னுடைய அபிப்பிராயத்தைக் கூறுகிருன்.

கீதா ஶ்லோகார்த்தச் சுருக்கம் நிறைவுற்றது.



## 9 முதல் 18 அத்தியாயங்களின் ஸாரப்பொருள்

(முதல் எட்டு அத்தியாயங்களின் ஸாரப்பொருள்
எட்டாம் அத்தியாய வ்யாக்யானத்தின்
இறுதியில் இணைக்கப்பட்டுள்ளது.)

9. (1) ஸர்வேஸ்வரனுடைய பெருமை. (2) அவன் மனிதனாய் இருக்கும்போதே மேன்மையுடையவர். (3) மஹாத்மாவான ஜ்ஞாநிகளுக்குள்ள சிறப்பு. (4) ப₄க்தியோக₃ம் எனப்படும் உபாஸநம்.

10 ஸாத₄ந ப₄க்தி உண்டாகி வளர்வதன் பொருட்டு, தனது கல்யாண கு₃ணங்களின் அளவின்மை பற்றியும், அனைத்துப் பொருள்களும் தனக்கு அதீ₄நமாயிருப்பது பற்றியும் கண்ணன் விரிவாக விளக்குகிறான்.

11, (1) தன்னை உள்ளபடி காண்பதற்குரிய தி₃வ்யமான கண் அர்ஜுனனுக்குக் கண்ணனால் கொடுக்கப்பட்டது. (2) பரம்பொருளை அறிவது, காண்பது, அடைவது ஆகியவை ப₄க்தி ஒன்றையே காரணமாகக் கொண்டவை என்று சொல்லப்பட்டது.

12. (1) ஆத்மாவை ப்ராப்யமாக நினைத்து உபாஸிப்பதைக் காட்டிலும், ப₄க₃வானை ப்ராப்யமாக நினைத்து உபாஸிக்கிற ப₄க்தியின் சிறப்பு. (2) இந்த ப₄க்திக்கு உபாயத்தைத் தெரிவித்தல். (3) ப₄க்தியில் சக்தியில்லாதவன் ஆத்மாவையே உபாஸிக்கவேண்டும். (4) கர்மயோக₃ம் அனுஷ்டிப்பவர்கள் கைக்கொள்ளவேண்டிய ஆத்மகு₃ணங்கள். (5) ப₄க்தனிடம் எம்பெருமானுக்கு மிகுந்த ப்ரீதி.

13. (1) தே₃ஹத்தின் ஸ்வரூபம். (2) ஜீவாத்ம ஸ்வரூபத்தை அடைவதற்கு உபாயம். (3) ஆத்மாவை ஆராய்ந்து அறிதல் (4) ஆத்மாவுக்கு அசித்தோடு தொடர்பு ஏற்படுவதற்குக் காரணம். (5) ஆத்மாவை அசித்திலிருந்து பிரித்து அநுஸந்தி₄க்கும் முறை.

14. (1) ஸத்வம் முதலான மூன்று கு₃ணங்கள் ஸம்ஸார ப₃ந்த₄த்திற்குக் காரணமாகும் முறை. (2) அந்த கு₃ணங்கள் செயலுக்குக்காரணமாயிருக்கும் தன்மை. (3) அந்த கு₃ணங்களை நீக்கும் முறை. (4) ஐஶ்வர்யம், கைவல்யம், ப₄க₃வத் ப்ராப்தி என்னும் மூன்று ப₂லன்களும் எம் பெருமானிடமிருந்தே கிடைக்கின்றன.

15. அசேதனமான ப்ராக்ருத ஶரீரத்தோடு சேர்ந்திருக்கும் ப₃த்₃த₄ ஜீவனைக் காட்டிலும், ப்ராக்ருத ஶரீரத்திலிருந்து விடுபட்டுப் பரிஶுத்₃தி₄யடைந்த முக்த ஜீவனைக் காட்டிலும், (அவர்களை) வியாபித்திருக்கையாலும், (அவர்களைத்) தாங்குகையாலும், (அவர்களை) உடையவனுயிருக்கையாலும் வேறுபட்டவன் புருஷோத்தமனுன நாராயணன்.

16. (அடையத்தக்க) தத்துவத்தையும், (அதை அடைவிக்கும்) உபாயானுஷ்ட₂ானத்தையும் பற்றிய அறிவு உறுதிப்படுவதற்காக, (மனிதர்க்குள்) தே₃வப்பிரிவு, அஸுரப்பிரிவு என்னும் இருபிரிவுகள் இருப்பதை விளக்கியபின் மனிதன் சாஸ்திரத்திற்கு வசப்பட்டவன் எனும் உண்மையை விளக்குதல்.

17 (1) ஶாஸ்த்ரத்தில் விதி₄க்கப்படாத கர்மம் அனைத்தும் அஸுரர்க்குரியது; ஆகையால் பயனற்றது. (2) ஶாஸ்த்ரத்தில் விதி₄க்கப்பட்ட கர்மம் ஸத்வ ரஜஸ் தமோ கு₃ணங்கள் மூன்றையிட்டு மூன்றுவிதமாய் இருப்பது, (3) "ஓம் தத்ஸத்" என்னும் மூன்று பத₃ங்கள் ஶாஸ்த்ர விஹித கர்மங்களோடு சேர்வதன் மூலம் (அவற்றை மற்ற கர்மங்களினின்று வேறுபடுத்தும்) லக்ஷணமாகின்றன.

18. (1) கர்மங்களைச் செய்பவன் ஈஶ்வரனே என்னும் நினைவு அவசியம். (2) ஸத்வகு₃ணம் கைக்கொள்ளத்தக்கது. (3) முற்கூறிய நினைவுடன் அனுஷ்டி₂க்கப்படும் ஸாத்விக கர்மத்தின் ப₂லன் மோக்ஷமாகும் (4) இந்த கீ₃தா ஶாஸ்த்ரத்தின் ஸாரார்த்த₂மான ப₄க்தி ப்ரபத்திகள்.

## கீதை பதினெட்டு அத்தியாயங்களின் பரம ஸாரப் பொருள்

எம்பெருமானே ப்ராப்யம் ப்ராபகம் முதலான அனைத்தும் என்னும் உறுதியுடன், அவனிடம் ஸ்வயம் ப்ரயோஜனமாக பக்தி செய்யும் பரமைகாந்திக்கு எம்பெருமான் பரம மோக்ஷத்தை நிர்ஹேதுகமாக அருளுகிறான்; கர்மயோகம் முதலான உபாயங்கள் அனைத்தும் இத்தகைய பரமைகாந்திகளை உருவாக்கும் வழிகளே.

கீதை அத்யாய ஸாரார்த்தம் நிறைவுற்றது



ஆளவந்தார், காட்டுமன்னார் கோயில்

# ப₄க₃வத்₃கீ₃தையில்

# தத்வஹித புருஷார்த்தங்கள்

[ ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் [ஸுதர்சனர்]
3 B. புத்தூர் அக்ரஹாரம், புத்தூர். திருச்சிராப்பள்ளி-620017 ]

## முன்னுரை

பாரததேசத்தில் அநாதிகாலமாக நிலவிவரும் மதத்திற்கு மூலநூல் வேதமாகும். அதனாலேயே அதற்கு வைதிகமதம் என்று பெயர். இதை விளக்கவந்தவை ஸ்ம்ருதிகள், இதிஹாஸங்கள், புராணங்கள் என்று பல வகைப்படும். வேதத்தின் பூர்வபாகமான கர்மகாண்டத்தை விளக்கவந்தவை மனு முதலான ஸ்ம்ருதிகளாகும். இவை த₄ர்மஶாஸ்த்ரங்கள் என்றும் சொல்லப்படுகின்றன. வேதத்தின் உத்தரபாகம் என்றும், ஜ்ஞாந காண்டம் என்றும் சொல்லப்படும் உபநிஷத்துக்களை விளக்கவந்தவை இதிஹாஸபுராணங்கள். அவற்றில் புராணங்கள் ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று மூன்று வகைப்பட்டவையாகையாலே ரஜஸ் தமோகுணங்களையுடையவர்களுக்காகவும் சில விஷயங்களை ஏறிட்டுச் சொல்லும். இதிஹாஸங்கள் அப்படியல்லாமல் உள்ளதை உள்ளபடி கூறுகின்றவையாகையாலே வலிமை மிக்கவை. நம் நாட்டில் பல்லாயிரம் வருடங்களாகப் புகழ்பெற்று விளங்குபவை ஸ்ரீராமாயணம், மஹாப₄ாரதம் என்னும் இரண்டு இதிஹாஸங்களாகும். இவற்றில் ஆதிகவியான வால்மீகியால் இயற்றப்பெற்ற ஸ்ரீராமாயணம் நாராயணனின் அவதாரமான ராமனின் பெருமையைப் பேசுகிறது. வேதவியாஸரால் இயற்றப்பட்டு, ஐந்தாம் வேதமென்று பிரஸித்திபெற்ற மஹாபாரதம் பஞ்சபாண்டவர்கள் கதையையும், அவர்களுக்கும் கௌரவர்களுக்கும் நடந்த மஹாப₄ாரதப் போரில் நாராயணனின் மற்றொரு அவதாரமான கண்ணன் தன் பெருமையெல்லாம் காட்டி அவர்களை வெற்றிபெறச் செய்த வரலாற்றையும் கூறுகிறது. இந்த மஹாப₄ாரதத்தில் பரமஸாரமான பகுதியாய் இருப்பது ப₄க₃வத்₃கீ₃தை.

தன் உறவினர்களும் ஆசார்யர்களும் தனக்கு எதிரே போருக்காக அணிவகுத்து நிற்பதைக்கண்ட அர்ஜுனன் 'இவர்களை எதிர்த்துப் போரிட்டுக் கொன்று பெறும் அரசால் பயனில்லை' என்று உறுதி பூண்டு வில்லைக் கை விட்டுத் தனக்கு ஸாரதியாயிருந்த கண்ணனைச் சரணடைந்து தனக்கு நன்மையை உபதேசிக்கவேண்டுமென்று வேண்ட, கண்ணனுகிற கோபாலன் உபநிஷத்துக்களாகிற பசுக்களிடமிருந்து அர்ஜுனனுகிற கன்றை முன்னிட்டுக்கொண்டு கீதாம்ருதமாகிற பாலை ஜ்ஞானிகளுக்குக் கறந்து கொடுத்ததே கீதாசாஸ்த்ரம்.

நம்முடைய வைதிகமதத்திற்கு மூலநூலான வேதம், அதன் பொருளை விளக்குவதற்காக வேதவ்யாஸரான பாதராயணர் இயற்றிய ப்ரஹ்மஸூத்ரம், பகவத்கீதை ஆகிய மூன்றும் வேதத்தை ப்ரமாணமாகக் கொள்ளும் எல்லா மதத்தினராலும் ப்ரஸ்தானத்ரயம் என்று போற்றப்படுகின்றன. நமது நாட்டிலுள்ள வைதிகமதாசார்யர்களனைவரும் இவற்றுக்கு பாஷ்யங்களும், விளக்கங்களும் எழுதுவதன் மூலமே தம் மதங்களை நிலைநாட்டமுற்பட்டார்கள். இம் மூன்றினுள்ளும் பகவத்கீதை ஒப்புயர்வற்ற பெருமையை உடையது. இதற்கு அந்நாள் தொடங்கி, இந்நாள்வரை பல்லாயிரக்கணக்கான உரைகளும் விளக்கங்களும் எழுதப்பட்டுள்ளன. உலகிலுள்ள பல பாஷைகளிலும் பகவத்கீதை மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இக்காரணங்களால் மூல நூலான வேதத்தைக் காட்டிலும், அதற்கு விளக்கமாக வெளிவந்த ப்ரஹ்ம ஸூத்ரத்தைக் காட்டிலும் பகவத்கீதையே வைதிக மதத்தை விளக்கும் நூல்களில் தலைமையிடத்தைப் பெற்றுத் திகழ்கிறது. இந்த பகவத்கீதையில் தத்வ ஹித புருஷார்த்தங்கள் எபபடிச்சொல்லப்பட்டிருக்கின்றன என்பதைச் சுருக்கமாக ஆராய்வோம்.

## 1. பகவத்கீதையில் தத்வம்

கீதை ஏழாம் அத்தியாயத்தில் நாலாவது ஶ்லோகத்தில்

பூமி ராபோऽநலோ வாயு: கம் மநோ புத்திரேவ ச ।
அஹங்கார இதீயம் மே பிந்நா ப்ரக்ருதிரஷ்டதா ॥

[நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் (எனும் ஐம்பூதங்களும்), மனம் (முதலிய இந்திரியங்களும்), மஹானும் அஹங்காரமும் ஆகிய எட்டுவிதமாகப் பிரிந்திருக்கும் இந்த ப்ரக்ருதி என்னுடையதேயாகும் (என்று) அறிவாய்] என்று அறிவற்ற அசேதநப்பொருள்களுக்கெல்லாம் காரணமானவற்றை எடுத்து அவை தன்னுடைய உடமை என்கிறான் கண்ணன். அடுத்த ஶ்லோகத்தில்,

அபரேயமிதஸ் த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம் ।
ஜீவபூதாம் மஹாபாஹோ யயேதம் தார்யதே ஜகத் ॥

[தடக்கையனே! இந்த அசேதந ப்ரக்ருதி தாழ்ந்தது. இதைக் காட்டிலும் மிகவும் வேறுபட்டதாய், ஜீவன் என்று பெயர் பெற்றதாய், முற்கூறிய அசேதநப்ரக்ருதியைக் காட்டிலும் மேலானதாய், இவ்வுலகனைத்தையும் தரிப்பதான ப்ரக்ருதியை என்னுடையது என்று அறிவாயாக] என்று இந்த அசேதநப் பொருள்களை தரிக்கும் சேதநப் பொருள்களும் தன் உடைமை என்று கூறுகிறான். ஏழாம் ஶ்லோகத்தில்

மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய ।
மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ ॥

[அர்ஜுனா! என்னைக்காட்டிலும் வேறுபட்டிருப்பவற்றில் ஒன்றுகூட மிகவும் மேலானதாயில்லை, இந்த எல்லாப் பொருள்களும் நூலில் ரத்தினங்கள் கோக்கப்பட்டிருப்பது போலே என்னிடத்தில் கோக்கப்பட்டிருக்கின்றன.] என்று தான் இந்தச்சேதநாசேதநங்களைக்காட்டிலும் மிகவும் மேலானவன் என்றும், தனக்குச் சரீரமாயிருக்கும் சேதநாசேதநங்கள் அனைத்தும் ஆத்மாவான தன்னால் ரத்தினமாலையில்

உள்ள நூல் ரத்தினங்களைத் தாங்குவதுபோலே, தாங்கப் படுகின்றன என்றும் கூறுகிறான். 'ரஸோऽஹமப்ஸு'' (நீரில் சுவை நானே) என்று தொடங்கும் எட்டாவது ஸ்லோகம் தொடங்கி, பதினோராவது ஸ்லோகம் வரை தான் அப்படி அனைத்துக்கும் ஆத்மாவும் அவை தனக்கு சரீரமாகவும் ப்ரகாரமாகவும் இருக்கையால், அவற்றைச் சொல்லும் எல்லாச் சொற்களும் தன்னையே கூறும் என்று பல சேதநாசேதநப் பொருள்களைத் தன்னோடு ஒரே வேற்றுமையில் படிப்பதன் மூலம் காட்டுகிறான் கண்ணன். தன் விபூ₄திகளை (செல்வங்களை)க் கூறும் பத்தாம் அத்தியாயத்திலும் இருபதாம் ஸ்லோகத்தில் தானே எல்லா ஜீவராசிகளின் இதயத்திலும் இருக்கும் அந்தர்யாமி என்றும் அவற்றைப் படைத்தளித்து அழிப்பவன் என்றும் கூறி, இப்படி எல்லாப்பொருள்களுக்கும் அந்தர்யாமியாகவும் காரணமாகவும் இருக்கையாலே அப்பொருள்களைச் சொல்லும் சொற்கள் தன்னையும் குறிக்கும் என்பதை 21 வது ஸ்லோகம் முதல் 39 வது ஸ்லோகம் வரையில் விரிவாகச்சொல்லி, சராசரங்களான (அசைவனவும் அசையாதனவுமான) பொருள்களில் தன்னைவிட்டுப் பிரிந்திருப்பது ஒன்றுமேயில்லை என்று முடிக்கிறான். இதிலிருந்து சித் அசித ஈஸ்வரன் என்னும் மூன்று தத்வங்களை (உண்மைப்பொருளை) ஏற்றுக்கொண்டு, மற்ற இரண்டு தத்துவங்களையும் ஸரீரமாகக்கொண்டு, நாராயணன் ஒருவனே விளங்குகையாலே, அவன் ஒருவனே தத்வம் என்றும் கூறலாம் என்று ஒப்புக் கொள்ளும் விசிஷ்டாத்வைத வேதாந்தத்தையே கண்ணன் ஆதரிக்கிறான் என்று விளங்குகிறது, பதினோராவது அத்தியாயத்தில் 40 வது ஸ்லோகத்தில் ''ஸர்வம் ஸமாப்நோஷி ததோऽஸி ஸர்வ:'' [உன்னையொழிந்த எல்லாப் பொருள்களையும் (ஆத்மாவாய்) வியாபித்திருக்கிறாய்; ஆகையால் அந்த எல்லாப்பொருள்களையும் சொல்லும் சொற்களாலும் சொல்லப்படுபவனாகிறாய்.] என்னும் அர்ஜுனன் வாக்கியமும் இதை வலியுறுத்துகிறது.

"ஜீவர்கள் முக்தி நிலையில் பரம்பொருளோடு ஒன்ருகி விடுகின்றனர். அவர்கள் வெவ்வேருனவர் அல்லர்" என்று கூறும் அத்வைத மதத்திற்கு இடமளிக்காமல், கீதா சாஸ்திரத்தை உபதேசிக்கத் தொடங்கும்போதே முழக்கமிடுகிருன் கண்ணன், உபதேசத்தின் தொடக்கமான இரண்டாம் அத்தியாயம் பன்னிரண்டாவது ஶ்லோகம் பின்வருமாறு:

ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜநாதி₄பா:।
ந சைவ ந ப₄விஷ்யாம: ஸர்வே வயமத: பரம் ॥

[(ஸர்வேச்வரனை) நான் (முற்காலத்தில்) எப்போதும் இல்லாமலிருந்தேன் என்பதில்லை; (ஜீவனை) நீயும் (முற்காலத்தில் எப்போதும் இல்லாமலிருந்தாய் என்பது) இல்லை. (ஜீவர்களான) இந்த அரசர்களும் (முற்காலத்தில் எப்போதும் இல்லாமலிருந்தனர் என்பது) இல்லை. (நானும் நீயும் இவர்களுமாகிய) நாம் அனைவரும் இதற்கு மேல் உள்ள காலத்திலும் இருக்கமாட்டோம் என்பதும் இல்லவே இல்லை.] இந்த ஶ்லோகத்தில் கண்ணன் 'அஹம்', 'த்வம்', 'இமே ஜநாதி₄பா:' 'ஸர்வே வயம்' என்று பதங்களையிடுகை யாலே, ஸர்வேச்வரனை தன்னைக் காட்டிலும் ஜீவர்கள் உண்மையில் வேறுபட்டவர்களென்றும், ஜீவர்களுக்குள்ளும் உண்மையான வேறுபாடு உண்டு என்றும் காட்டுகிருன். அஜ்ஞானத்தால் மயங்கி நிற்கும் அர்ஜுனனைக் குறித்து இவன் உபதேசிக்கிருனுகையாலே, மயக்க நிலையில் பொய்யாகத் தோன்றும் பொருள்களை உபதேசிக்கமாட்டான். அர்ஜுனனின் மயக்கம் நீங்குவதற்காக உண்மை யாகவும், நித்யமாகவும் உள்ள தத்துவங்களை உபதேசிக்கும் சமயமாகையாலே, 'அஹம்', 'த்வம்', 'இமே', 'வயம்' என்னும் பதங்களில் ஜீவர்களிடையேயும், ஸர்வேச்வரனுக்கும் ஜீவர்களுக்கும் இடையிலும் பேதமே உண்மை என்பதே கண்ணனின் கருத்தாக முடியும். 'அஹம்'

என்று ஸர்வேச்வரனை தன்னைச் சொல்லுகிறது. 'த்வம்' என்று எதிரில் நிற்கும் மற்றொரு சேதநனை அர்ஜுனனைச் சொல்லுகிறது. 'இமே' என்று தங்களை எதிரிட்டு நிற்கும் பல சேதனர்களைச் சொல்லுகிறது. 'ஸர்வே வயம்' என்று இப்படி பரஸ்பரம் வேறுபட்ட சேதனர்கள் கணக்கற்றவர்கள் என்று காட்டுகிறது. இங்கு அத்வைதிகள் ''தேஹத்தில் பேதத்தைக்கருதிக் கண்ணன் பன்மையில் பேசுகின்றான். ஆத்மாவின் பேதத்தைக் கருதி யன்று'' என்று வியாக்யானம் செய்கிறார்கள். அவர்களுடைய பக்ஷத்தில் ஆத்ம பேதத்தைப் போலே தேஹங்களும், தேஹ பேதமும் பொய்யாகையாலே தேஹபேதத்தைக் கருதிக் கண்ணன் பேசுகிறான் என்பது பொருந்தாது. மேலும் அத்வைதிகளுடைய மதப்படி சாஸ்திரத்தை உபதேசிப்பது, அதை உபதேசிப்பவன், அதைக்கேட்பவன், அதன் பயன் ஆகிய எதுவுமே பொருந்தாது என்று இவ்விடத்தில் கீதா பாஷ்யத்தில் ஸ்ரீராமாநுஜர் விரிவாக நிரூபித்துள்ளார்,

13 வது அத்தியாயத்தில் ''க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்₃தி₄ ஸர்வக்ஷேத்ரேஷு பா₄ரத'' [13-2] [பரத குலத்தில் உதித்தவனே! தேவர், மனிதர் முதலான எல்லா சரீரங்களிலும் க்ஷேத்ரஜ்ஞன் எனப்படும் ஆத்மாவும் நானே என்று அறிவாய்] என்று ஜீவ ப்₃ரஹ்ம அபே₄த₃த்தைக் கூறியிருப்பதாக அத்வைதிகள் கூறுகிறார்கள். இங்கு ''க்ஷேத்ரஜ்ஞம் மாம் வித்₃தி₄'' என்று கூறாமல் ''க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்₃தி₄'' என்று 'ச' 'அபி' என்று இரண்டு சொற்கள் இடப்பட்டுள்ளன. முந்தின ஶ்லோகத்தில் சொல்லப்பட்டதோடு கூட்டுவதற்கு 'ச' காரமே போதுமாயிருக்க, அதற்கு மேலும் ஒரு 'அபி' சப்தத்தையிடுகையாலே, ''முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட க்ஷேத்ரத்தையும் நானாக அறி'' என்னும் அர்த்தமும் உணர்த்தப்படுகிறது. ''க்ஷேத்ரம் எனப்படும் ஶரீரம் க்ஷேத்ரஜ்ஞன் எனும் ஜீவனுக்கு விஶேஷணமாக இருப்பதையே

இயல்வாக உடையதாயிருப்பதால் அவனை விட்டுப் பிரியாமலிருப்பதையிட்டு அவனோடு ஒரே வேற்றுமையில் குறிக்கத் தக்கதாக எப்படி ஆகிறதோ, அப்படியே க்ஷேத்ரமும் க்ஷேத்ரஜ்ஞனும் எனக்கு விசேஷணமாயிருப்பதையே இயல்வாக உடையவையாயிருக்கையால் என்னை விட்டுப் பிரியாமையையிட்டு என்னோடு ஒரே வேற்றுமையில் குறிக்கத்தக்கவையாக ஆகின்றன என்று அறிவாய்' என்று கருத்து. அபிஶப்₃த₃த்தாலே ஶரீரத்தையும் தானாகக் குறிக்கையால் ஜீவனை அவனது ஶரீரத்தோடு ஒரே வேற்றுமையில் குறிப்பதற்கு எந்த ஶரீராத்மப₄ாவம் காரணமாகிறதோ அந்த ஶரீராத்மப₄ாவம் க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞர்களைக் குறித்து எனக்குமுள்ளது; இப்படி விட்டுப்பிரியாத ஶரீரமாயிருக்கையையிட்டு க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களை என்னோடு ஒரே வேற்றுமையில் குறிப்பது முக்₂யமானதே என்றபடி. ஆகையால், இந்த ஶ்லோகத்திலிருந்தும் அத்வைதிகளின் மதம் தேருது என்னும் விஷயமும் ஸ்ரீராமாநுஜரால் கீ₃தா ப₄ாஷ்யத்தில் விரிவாக நிருபிக்கப்பட்டது. கீதையிலும் பலவிடங்களில் அசேதநப் பொருள்களையும் சேதந வஸ்துக்களையும் பரமாத்மாவோடு ஒரே வேற்றுமையில் படிப்பதற்குக் காரணம் பரமாத்மா அவற்றுக்கு ஆத்மாவாய், அவை அவனுக்கு ஶரீரமாயிருக்கையே என்று விளக்கப்பட்டிருப்பதை முன்னமே காட்டியுள்ளோம்.

''உலகம் பொய், ஜீவனும் ப்₃ரஹ்மமும் ஸ்வரூபத்தில் ஒன்றே'' என்னும் கேவலாத்வைதம் கீதையில் ஒப்புக்கொள்ளப்படாவிடினும், வேதசாஸ்திரங்களிலிருந்து ஸித்திக்கும் இரு வகையான அத்வைதம் கீதையிலும் சொல்லப்பட்டிருக்கிறது. அவையே ஜீவாத்₃வைதம் என்றும், ப்₃ரஹ்மாத்₃வைதம் என்றும் சொல்லப்படும். இவற்றை முறையே ப்ரகாராத்₃வைதம், ப்ரகாரி-அத்வைதம் என்றும் கூறுவதுண்டு. ஒரு மனிதனுக்கு அவன் அணிந்

விசிஷ்டாத்வைதம் — ப்ரஹ்மம்.



திருக்கும் குண்டலம் முதலான ஆபரணங்களும் கைக் கொண்டிருக்கும் கைத்தடி முதலானவையும் ப்ரகாரம் எனப்படும். ஆனால் இவை என்றும் அவனைக் காட்டித் தரும் ப்ரகாரங்களாயிராமையாலே 'அநியத ப்ரகாரங்கள்' எனப்படும். ஆனால் வஸ்திரத்திற்கு வெண்மை நிறம். கடம் முதலான பொருளுக்கு கடத்வம் முதலான ஜாதி முதலியவை அந்த வஸ்து உள்ளவரை அதற்கு விசேஷணமாயிருக்கையாலே நியதப்ரகாரங்கள் எனப்படும். சேதநாசேதநங்களடங்கிய இவ்வுலகம் ப்ரஹ்மத்தை எப்போதும் விட்டுப்பிரியாத விசேஷணமாயிருக்கையாலே அதற்கு நியதப்ரகாரமாயிருக்கிறது. ப்ரகாரியான (விசேஷ்யமான) ப்ரஹ்மம் ஒன்றே தன்னைத் தவிர்ந்த மற்ற அனைத்தையும் ப்ரகாரமாகக் கொண்டதாய் உள்ளது. அதைப்போலே அனைத்துக்கும் ப்ரகாரியாயிருக்கும் வேறொரு பொருளில்லை. இதுவே ப்ரகார்யத்வைதம் அல்லது ப்ரஹ்மாத்வைதம் எனப்படுகிறது இந்த அத்வைதத்தையே ''மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய'' [கீதா 7-7] என்று முன் எடுத்த ஶ்லோகம் விவரிக்கிறது. இந்த அத்வைதத்தால் அனைத்தையும்ப்ரகாரமாகக்கொண்ட இரண்டாவது வஸ்து இல்லையென்று தேறுமேயொழிய ப்ரகாரமாயிருக்கும் உலகம் இல்லை என்று தேருது. இதுவே ''ஏகமேவாத்விதீயம்'' என்னும் சாந்தோக்ய ஶ்ருதிக்கும் தாத்பர்யமாகும். சோழ அரசன் அத்விதீயனாய் இருக்கிறான் என்றால் அவனைப்போல வேறு அரசன் இல்லை என்று தேறுமேயொழிய, அவனுக்குப் பத்னி புத்ரர்கள் மந்திரி முதலானோர் இல்லையென்று தேருது.

இனி, ப்ரகாராத்வைதமான ஜீவாத்வைதமாவது— ஒரு கிராமத்திலுள்ள வீடுகளில் ஒரே ஜாதியான சம்பா நெல்லாகவேயிருப்பதையிட்டு 'ஒரே நெல்' என்று சொல்வதுபோலே, எல்லா சரீரத்திலிருக்கும் ஜீவாத்மாக்கள் ஸ்வரூபத்தில் வேறுபட்டவர்களாயினும் ஒரே ஜாதியைச் சேர்ந்தவர்கள்— ஒரே ப்ரகாரத்தோடு கூடியவர்கள் என்னும் கருத்தாலே ஜீவர்கள் ஒன்றாயிருப்பவர்கள் என்று சொல்லுவதே ஜீவாத்வைத வாதமாகும்.

அதாவது—ஶரீரத்திலுள்ள தேவத்வம் மநுஷ்யத்வம் ஸ்தாவரத்வம் முதலான பேதங்களும், ஸ்த்ரீத்வம் புருஷத்வம் முதலான பேதங்களும் ஆத்ம ஸ்வரூபத்தில் இல்லை; எல்லா ஆத்மாக்களும் நித்யராயிருக்கை, அணுவாயிருக்கை, ஜ்ஞானத்தையே ஸ்வரூபமாக (வடிவாக)க் கொண்டவராயிருக்கை, ஜ்ஞானத்தை குணமாகவும் கொண்டவராயிருக்கை, எம்பெருமானுக்கு சேஷபூ₄தராய் (அடிமைப்பட்டவராய்) இருக்கை எனப்படும் ஒத்த தன்மைகளோடு கூடியிருப்பர்கள் என்றபடி. இவ்விஷயத்தை கீதையில்

வித்₃யா விநய ஸம்பந்நே ப்₃ராஹ்மணே க₃வி ஹஸ்திநி ।
ஶுநி சைவ ஶ்வபாகே ச பண்டி₃தா: ஸமத₃ர்ஶிந: ॥
[கீதை 5—18]

[அறிவாளிகள் கல்வியும், அடக்கமுமுடைய அந்தணனிடமும். (அவையற்ற) அந்தணனிடமும், (உருவத்தால் சிறிய) பசுவினிடமும், (உருவத்தால் பெரிய) யானையிடமும், (கொன்று தின்னப்படும்) நாயிடமும், (அதைக்கொன்று தின்னும்) சண்ட₃ாளனிடமுங்கூட (ஆத்மா ஒருபடிப்பட்டிருக்கையாலே) ஸமமாகப் பார்ப்பவர்களாயிருக்கின்றனர்] என்று சொல்லப்பட்டது. இதனால், ஆத்மாக்களிடையேயும் புருஷ ஆத்மா, ஸ்த்ரீ ஆத்மா, பாம்பு ஆத்மா, பறவை ஆத்மா என்று பேதங்களை முக்தி நிலையிலும் ஒப்புக்கொள்ளும் த்வைத மதம் கீதையில் ஆதரிக்கப்படவில்லை என்று விளங்குகிறது. இவ்வண்ணம் சேதநர்களைப்போலே நித்யமாய் விகாரமற்றதாயிராமல் எப்போதும் வேறுபாடடைவதாலேயே அசேதநப்பொருள்கள் அஸத்யமானவை என்று சொல்லப்படுகின்றன என்றும், அதிலிருந்து அவை முயற்கொம்பு போலே இல்லாத பொருள் என்று தேருது என்றும் ஸித்திக்கிறது.

ஆக சித், அசித், ஈஶ்வரன் என்னும் மூன்று தத்து வங்களும் உண்மையானவையே என்றும், சேதநாசேத நங்களனைத்தையும் தனக்கு ஶரீரமாகக் கொண்ட நாரா யணன் ஒருவனே பரப்₃ரஹ்மம் என்றும் கீதையிலிருந்து தேறுகிறது, சிவன் முதலான மற்ற தெய்வங்கள் பரம் பொருள் என்று கூறும் சைவம் முதலான மதங்களுக்கும், சக்தியைப் பரம்பொருளாகக் கூறும் சாக்தமதத்திற்கும் கீதையில் சிறிதும் இடமில்லை என்றும் விளங்குகிறது.

## 2 ப₄க₃வத்₃கீ₃தையில் ஹிதம் (உபாயம்)

கர்மயோக₃ம், ஜ்ஞாநயோக₃ம் ஆகியவற்றை அங்க மாகக்கொண்ட ப₄க்தியோக₃த்தாலே ப₄க₃வானை அடைய லாம் என்பது கீ₃தையின் திரண்டபொருளாகக் காணப் படுகிறது. ப்ரதமஷட்கமான முதல் ஆறு அத்தியாயங் களின் சுருக்கம்

ஜ்ஞாநகர்மாத்மிகே நிஷ்டே₂ யோக₃லக்ஷ்யே

ஸுஸம்ஸ்க்ருதே|

ஆத்மாநுபூ₄தி ஸித்₃த்₄யர்த்தே₂ பூர்வஷட்கேந சோதி₃தே||

[கீ₃தார்த்த₂ஸங்க்ரஹம்-2]

[(சேஷத்வ ஜ்ஞாநம், இதர விஷயங்களில் பற்றின்மை முதலான பு₃த்₃தி₄ விசேஷங்களாலே) நன்கு அலங்கரிக் கப்பட்ட ஞானயோக₃மும், கர்மயோக₃மும் (ஆத்மஸாக்ஷாத் காரமாகிற) யோக₃த்தை அடையும் பொருட்டும், (அதற்குப் பின்) ஆத்மாநுப₄வத்தை அடையும் பொருட்டும் (கீ₃தை யின்) முதல் ஆறு அத்தியாயங்களாலும் விதிக்கப்பட்டன] என்றும், மத்₄யமஷட்கமான இரண்டாவது ஆறு அத்தி யாயங்களின் சுருக்கம்,

மத்₄யமே ப₄க₃வத்தத்த்வயாதா₂த்ம்யாவாப்தி ஸித்₃த₄யே |

ஜ்ஞாநகர்மாபி₄நிர்வர்த்யோ ப₄க்தியோக₃: ப்ரகீர்த்தித: ||

[கீ₃தார்த்தஸங்க்ரஹம்-3]

[நடு ஆறு அத்தியாயங்களில் ப₄க₃வானுகிற பரதத்துவத்தின் உண்மையான அநுபவம் உண்டாவதன் பொருட்டு, ஜ்ஞாநத்தோடு கூடிய கர்மயோக₃த்தாலே உண்டாகும் ப₄க்தியோக₃ம் சொல்லப்படுகிறது] என்றும் ஆளவந்தாரால் கீதார்த்தஸங்க்ரஹத்தில் அருளிச்செய்யப்பட்டது. தத்த்வ ஹிதங்களைப் பற்றி முன் இரண்டு ஷட்கங்களில் விடுபட்ட விஷயங்கள் மூன்ருவது ஷட்கமான கடைசி ஆறு அத்தியாயங்களில் விளக்கப்படுகின்றன என்றும் ஆளவந்தார் அருளிச்செய்தார். கீ₃தா பா₄ஷ்யத்திலும் வெளிப்படையான இந்த அர்த்தங்கள் விரிவாக ஸ்ரீராமாநுஜரால் விளக்கப்பட்டன. ஆனல் ப₄க்தி யோக₃த்தைத் தொடங்கும் ஏழாம் அத்தியாயத்திலிருந்து கீ₃தா ஶ்லோகங்களையும் பா₄ஷ்யத்தையும் ஊன்றிப்பார்த்தால், உண்மையில் மோக்ஷத்திற்கு இயற்கையான உபாயமாயிருப்பவன் தானே என்றும், மனிதனின் முயற்சி முதலானவையெல்லாம் செயற்கையான உபாயங்களே என்றும், தன் நன்மைக்குத் தான் பாடுபடுவதையே அநாதி₃ காலமாக இயல்வாகக் கொண்ட சேதனனுக்குத் தானே உபாயம் என்னும் இந்த உண்மையை உணர்த்துவதற்காகவே—அவனை அவனுக்குப் பள்ளமடையான கர்ம ஜ்ஞான ப₄க்தி யோக₃ங்களிலே மூட்டி, மோக்ஷோபாயமாக அவனுக்குப் பரப₄க்தியை விதித்து, அதற்கு அங்க₃மாக ஆத்மாவைப் பற்றிய உண்மையறிவை இடைவிடாது அனுஸந்திக்கச்செய்து, அந்த அனுஸந்தானத்தின் பொருளை நன்குணர்ந்தவுடன் எம்பெருமானே உபேயமாக இருப்பதோடல்லாமல் உபாயமாகவும் இருக்கிருன் என்னும் அறிவையும் அதன் விளைவாக பரஜ்ஞாநத்தையும் அவனுக்கு விளைத்து, அதற்குப்பின் எம்பெருமானைக் கண நேரம் விட்டுப்பிரியிலும் த₄ரியாமலிருக்கையாகிற பரம ப₄க்தியை அவனுக்கு விளைக்கிருன் என்றும், அந்தப் பரம ப₄க்தி விளைந்தவுடன் அவனுக்கு ப்ராரப்₃த₄ கர்மப்படி இன்னும் சிலஜன்மங்கள் எடுக்கவேண்டியிருந்தாலும், பரமப₄க்தி விளைந்த அந்த ஜன்மத்திலேயே மோக்ஷமளித்துவிடுவதாகவும் கண்ணன் உணர்த்தியிருப்பதைக் காண்கிருேம்.

ஏழாம் அத்தியாயத்தில் பூக்தி யோகூத்தை உப தேசிக்கத் தொடங்குமுன் 'அதை அனுஷ்டிூப்பவன் அநு ஸந்திக்க வேண்டிய தன்னைப்பற்றிய உண்மையறிவை ஐயந்திரிபறப் பரிபூர்ணமாகச் சொல்லுகிறேன்' என முதல் ஶ்லோகத்தில் கூறுகிறான். இரண்டாம் ஶ்லோகத்தில் 'இவ்வறிவைப் பூர்ணமாகப் பெற்றால் அறியவேண்டுவது வேறொன்றுமில்லை' என்கிறான். மூன்றாம் ஶ்லோகத்தில் 'உலகிலுள்ள மனிதர்களில் ஆயிரத்தில் ஒருவனே ஶப்ூ தூாதிூ விஷயங்களில் நசையற்று மோக்ஷத்திற்காக அதை அடையும் வரையில் முயல்பவன்' என்றும், 'அவர்களி லும் பலர் தம் ஆத்மாவைத் தாம் அனுபூவிப்பதாகிற தாழ்ந்த கைவல்ய மோக்ஷத்தைப்பெற்று விடுகிறார்களா கையாலே, மோக்ஷத்தின் பொருட்டு முயல்பவர்களிலும் ஆயிரத்தில் ஒருவனே என்னை ப்ராப்யமாக அறிந்து, என்னை யடைவதாகிற பரம மோக்ஷத்தைப் பெறும் வரையில் முயல்கிறான்' என்றும், 'அவர்களிலும் ஆயிரத்தில் ஒருவனே நான் ப்ராப்யமாக இருப்பதோடல்லாமல் ப்ராபகமாகவும் இருப்பவன் என்பதை அறிபவன்' என்றும் கூறுகிறான். இங்கு முதலில் இருக்கும் இருவரைச் சொல்லும்போது 'முயற்சி செய்பவர்கள்' என்று கூறி, மூன்றாமவனைக் கூறும்போது 'முயற்சி செய்பவன்' என்று கூறாமல் 'உள்ளபடி அறிபவன்' என்று மட்டும் கூறுவதால் உபா யம் எம்பெருமானேயாகையாலே அவனைப் பெறுவதற்கான முயற்சிகளினின்றும் கைவாங்கி, அவனையே ப்ராப்யம் ப்ராபகம் முதலிய எல்லாமாகவும் கொண்டிருக்கும் ஸித்ூ தேூாபாய நிஷ்டூஞன அதிகாரியே இவன் என்று விளங்கு கிறது. அத்தகைய அதிகாரி ஒருவனுமே இல்லை என்று கண்ணன் திருவுள்ளம் பற்றுகிறான் என்பதை பூாஷ்ய காரர் இவ்வத்தியாயத்தின் 19, 25 ஶ்லோகங்களை ஆதூா ரமாகக் காட்டி நிரூபிப்பதிலிருந்து ப்ரவ்ருத்திபரர்கள் நிறைந்த த்ூவாபரயுகம் வரையில், பூகூவத்ப்ரவ்ருத்தி விரோதிூ ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியில் [எம்பெருமான்

சேதநனை அடைவதற்குச் செய்யும் முயற்சிகளுக்குத் தடையாயிருக்கும் (தன் நன்மைக்கான) தன்முயற்சிகளிலிருந்து நீங்கி நிற்கையாகிற ப்ரபத்தியில்] ஊன்றியிருக்கும் ஆழ்வார்களைப் போன்ற அதி,காரிகள் இல்லை என்று விளங்குகிறது. நாலாம் ஶ்லோகத்தில் அசேதந ஸமஷ்டிப் பொருள்கள் அனைத்தும் பரமபுருஷனை தனக்குப் பரந்த த்ரமானது என்கிருன். ஐந்தாம் ஶ்லோகத்தில் அவ்வ சேதநப் பொருளுக்கு மேற்பட்ட சேதந ஸமஷ்டியும் தனக்குப் பாதந்த்ரமானது. என்கிருன். இதனுல் சேதநன் அசேதநத்தைப்போலே பரதந்த்ரமானவனுகையாலே தன் நன்மைக்குத் தான் பாடுபடுவது ஆத்மபரமாத்மாக்களைப் பற்றிய உண்மையறிவுக்கு முரணுனது என்று உணர்த்தப் படுகிறது, ஆறும் ஶலோகத்தில் முற்கூறிய சேதநா சேதந ஸமஷ்டிப்பொருள்களைக் காரணமாகக்கொண்ட வ்யஷ்டிப் பொருள்களுக்கும் பரமபுருஷனை தானே காரணமாகவும் சேஷியாகவும் இருப்பவன் என்கிருன். இதிலிருந்து காரணமாகவும் சேஷியாகவும் இருக்கும் தானே கார்யமாகவும் சேஷனுகவுமிருக்கும்சேதனனின் நன்மைக்குப் பாடுபடவேண்டியவன் என்று உணர்த்துகிருன். ஏழாவது ஶ்லோகத்தின் முற்பாதியில் கல்யாண கு₃ணங்களில் ஜீவர்களைக் காட்டிலும் உயர்ந்தவன் தானே என்கிருன். இதனுல் ஜ்ஞானம் சக்தி முதலானவற்றில் குறைந்தவர்களான ஜீவர்கள் தன் நன்மைக்குத் தாம் பாடுபடுவதைக் காட்டிலும், தம்முடைய பொறுப்பை என்னிடம் ஒப்படைத்திருப்பது நல்லது என்று உணர்த்துகிருன்; ஏழாவது ஶ்லோகத்தின் பிற்பாதியில் 'தானே அனைத்துக்கும் ஶரீரியாயிருப்பதால் ஶரீரத்திற்கு நன்மையைத் தேடுவதற்கு ஶரீரியான தனக்கே உரிமையுண்டு. ஶரீரத்திற்குத் தன் நன்மையைத் தானே தேடிக்கொள்ள உரிமையில்லை' என்று உணர்த்துகிருன். இக்காரணங்களால் கண்ணன் சேதநர்களுக்குத் தானே இயற்கையான ப்ராப்யமாகவும், ப்ரா

பகமாகவும் இருப்பவன் என்று அறுதியிட்டான். எட்டு முதல் பன்னிரண்டாவது ஶ்லோகம் ஈறாக, சேதநாசேதநப் பொருள்களில் அவற்றின் ப்ராப்யத்வத்திற்கும் ப்ராபகத்வத்திற்கும் உறுப்பான சிறந்த பெருமைகள் எல்லாம் தன்னால் வருபவையே என்றும், தான் அவற்றுக்கு அதீனமானவனல்லன் என்றும் உணர்த்தினான். இந்தப் பன்னிரண்டு ஶ்லோகங்களிலும் பரமபுருஷனாகிற கண்ணன் தன்னைப்பற்றிய உண்மையறிவைக் கூறுகிறான் என்பதை ''ஸ்வயாதாத்ம்யம்'' என்னும் பதத்தால் ஆளவந்தார் கீதார்த்தஸங்க்ரஹத்தில் (17) உணர்த்துகிறார்.

இப்படி எம்பெருமானே உபாயமாகவும் உபேயமாகவும் இருக்கும்போது அதை ஜீவர்கள் ஏன் உணர்வதில்லை என்னும் கேள்வியெழுகிறது. 13 வது ஶ்லோகத்திலும் 14 வது ஶ்லோகத்தின் முற்பகுதியிலும் 'என்னைப்பற்றிய இந்த உண்மை அறிவை என்னுடையதான அசேதநப்ரக்ருதியின் தொடர்பு ஜீவனுக்கு மறைக்கிறது' என்று காட்டுகிறான். 14 வது ஶ்லோகத்தின் பிற்பகுதியில் ''ஜீவனுக்குள்ள இந்த ப்ரக்ருதியின் தொடர்பு என்னைச் சரணமடைவதாலேயே நீங்குகிறது.'' என்று காட்டுகிறான். ஆக, தன் முயற்சியில் ஈடுபட்டவனும் அவ்வப்போது தன்னைச் சரணமடைந்தே தடைகளை நீக்கிக்கொள்ள வேண்டும் என்று உணர்த்துகிறான். பதினைந்தாவது ஶ்லோகத்தில் பாபத்தை மிகுதியாகச் செய்த நாலு வகைப்பட்ட ஜீவர்கள் தன்னைச்சரணமடைவதில்லை என்று காட்டுகிறான். இவ்வத்தியாயத்தில் இவ்விரண்டாவது பகுதி ''ப்ரக்ருத்யா அஸ்ய திரோதி: ஶரணாகதி:'' [பரமபுருஷனைப்பற்றிய உண்மை நிலை (ஜீவனுக்கு) ப்ரக்ருதியாலே மறைக்கப்படுவதும், அம்மறைவைப் போக்கடிக்கும் ஶரணாகதியும்] என்று ஆளவந்தாரால் கீதார்த்தஸங்க்ரஹத்தில் (17) சுருக்கிக்கூறப்பட்டது.

இப்படிப் பாபம் மிகுந்திருக்கும் ஜீவர்களுக்கு எதிர்த் தட்டாக, புண்யம் மிகுந்திருக்கும் நாலுவகைப்பட்ட ஜீவர்கள் அவரவர் புண்யத்தின் ஏற்றத்தாழ்வுகளுக்குத் தக்கபடி ஐஶ்வர்யத்தையோ, ஆத்மாநுப₄வமாகிற கைவல்யத்தையோ, என்னையோ அடையவிரும்பி அதன் பொருட்டு என்னைச் சரணம் புகுந்து என்னிடம் பக்தி செலுத்துகிறார்கள் என்று பதினாறுவது ஶ்லோகத்தில் கூறுகிறான். இங்கு நாலுவகைப்பட்டவர்கள் சொல்லப்பட்டிருந்தபோதிலும் ஆர்த்தன், அர்த்தா₂ர்த்தி₂ ஆகிய இருவரும் ஐஶ்வர்யார்த்தி₂ என்னும் ஒரேவகையில் அடங்குவர். ஆக, ஐஶ்வர்யத்தை விரும்புகிறவர், கைவல்யத்தை விரும்புகிறவர், பரமாத்மாவை விரும்புகிறவர் ஆகிய மூவரும் முறையே ஒருவருக்குமேல் ஒருவர் மிகுந்த புண்யம் செய்தவர்கள் என்பது இந்த ஶ்லோகத்திலுள்ள 'ஸுக்ருதிந:' என்னும் பதத்திலிருந்து விளங்குகிறது. இப்பதத்தின் பா₄ஷ்யத்தில் ''ஸுக்ருதக₃ரீயஸ்தவேந ப்ரதிபத்தி வைஶேஷ்யாத் உத்தரோத்தரம் அதி₄கதமா ப₄வந்தி'' [ஒருவனுக்கு மேல் ஒருவன் மிகுந்த புண்யம் செய்திருக்கையாலே அவர்கள் விரும்பும் பொருள் மேன்மேல் சிறந்ததாயிருக்கையால் ஒருவருக்குமேல் ஒருவர் சிறந்தவர்களாக ஆகிறார்கள்] என்று அருளிச்செய்யப்பட்டது. ''குறைந்த புண்யம் உள்ளவன் அப்புண்யத்துக்குத்தக்கபடி ஐஶ்வர்யத்தை விரும்புகிறான். அவனிலும் மிகுந்த புண்யம் உள்ளவன் ஆத்மாநுப₄வமாகிற கைவல்யத்தை விரும்புகிறான். அதனிலும் மிகுந்த புண்யம் உள்ளவன் அனைத்திலும் மேலான என்னையே விரும்புகிறான் அவரவர் விருப்பத்தைப் பெறுவதற்காக என்னை ஶரணமடைந்து உபாஸந விரோதி, பாபம் நீங்கப்பெற்று, தங்கள் விருப்பம் நிறைவுபெறு

வதற்காக என்னை உபாஸிக்கிறார்கள்'' என்பது இந்த ஸ்லோகத்தின் திரண்டபொருள் என்பது இந்த பாஷ்யத்திலிருந்து விளங்குகிறது. இவர்களில் மிகச்சிறந்தவனான ஜ்ஞானியும் பரமபுருஷனைப் பெற்று, தான் பேரின்பம் அடைவதற்காக பக்தி யோகமாகிற முயற்சியைச் செய்பவன் என்பது குறிக்கொள்ளத்தக்கது, பதினேழாவது ஸ்லோகத்திலிருந்து தொடங்கி, பதினெட்டாவது ஸ்லோகம் ஈறாக மற்ற பக்தர்களைக் காட்டிலும் இந்த உபாஸக ஜ்ஞானியின் சிறப்பு சொல்லப்பட்டது. பத்தொன்பதாவது ஸ்லோகத்தில் ''பல ஜன்மங்கள் கழிந்தபின் உபாஸக ஜ்ஞானிக்குப் பரமபுருஷனைப்பற்றிய உண்மையறிவை அநுஸந்திப்பதாலே 'அவனே ப்ராப்யனாகவும் ப்ராபகனாகவும் இருப்பவன்' என்னும் அறிவு ஏற்பட்டு அவனையே எல்லாமாகப் பற்றுகிறான். இவ்வறிவு ஏற்பட்ட ஜன்மமே இவனுக்குக் கடைசிஜன்மம். இத்தகைய ஜ்ஞானி மஹாத்மா எனத்தக்கவன். எம்பெருமானுக்கே கிடைத்தற்கரியவன்'' என்று சொல்லப்பட்டது. இதிலிருந்து, எம்பெருமானை ப்ராப்யமாகவும் தன் முயற்சியாகிற பக்தியோகத்தை ப்ராபகமாகவும் நினைக்கும் உபாஸக ஜ்ஞானிக்குத் தன் ஸ்வரூபத்தைப்பற்றிய ஜ்ஞானம் பூர்ணமாக இல்லை என்றும், 'எம்பெருமானே ப்ராபகமாகவும் இருப்பவன்' என்னும் உண்மையறிவு ஏற்பட்டால்தான் பக்தியை ஸாதநமாக எண்ணும் நினைவு நீங்கப்பெற்று அது ஸ்வயம் ப்ரயோஜந பக்தியாகப் பரிணமித்து அவன் ப்ரபந்நனாகிறானாகையாலே 'மஹாத்மா' என்று கொண்டாடத்தக்கவனாகிறான் என்றும் உணர்த்தப்படுகிறது. ''பஹூநாம் ஜந்மநாம் அந்தே'' என்கையாலே, ப்ராரப்த கர்மம் எஞ்சியிருந்தபோதிலும் ப்ரபந்நனாகப் பரிணமித்த இந்த ஜன்மமே அவனுக்குக் கடைசி ஜன்மம் என்று உணர்த்தப்படுகிறது.

எம்பெருமான் ப₄க்தியோக₃த்தை விதிப்பதே அந்த உபாஸகன் இப்படி மஹாத்மாவான ஜ்ஞானியாகப் பரிணமிக்கவேண்டும் என்னும் திருவுள்ளத்தாலேயே என்றும் விளங்குகிறது. இருபதாவது ஶ்லோகத்திலிருந்து தொடங்கி இருபத்தைந்தாவது ஶ்லோகம் வரையில் இத்தகைய மஹாத்மாவான ஜ்ஞாநி மிகச்சிறந்தவன் என்று நிலை நிறுத்துவதற்காக, பலகோடி ஜனங்கள் என்னைப்பற்றிய அறிவே இல்லாமல் ராஜஸ தாமஸ நூல்களைப் பற்றி நின்று மற்ற தெய்வங்களை உபாஸிப்பவர்களாகவும் தன்னைப் பரமாத்மாவென்று உணராத அறிவிலிகளாகவும் வாழ்வதாகக் கூறுகிறான் கண்ணன். ஜ்ஞாநியின் சிறப்பைக்காட்டுவதில் நோக்குடையவை இந்த ஶ்லோகங்கள், இப்பகுதி ''ப₄க்தபே₄த₃: ப்ரபு₃த்₃த₄ஸ்ய ஶ்ரைஷ்ட்₂யம் உச்யதே'' [பக்தர் நால்வரில் ஜ்ஞானியின் சிறப்பு கூறப்படுகிறது.] என்று ஆளவந்தாரால் கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹத்தில் சுருக்கமாகக் கூறப்பட்டது.

இருபத்தாறுவது ஶ்லோகத்தில் 'நான் எல்லா ப₃த்₃த₄ ஜீவர்களையும் அறிந்திருந்தபோதிலும் அந்த ஜீவர்களில் ஒருவனும் என்னை உள்ளபடி அறிவதில்லை' என்று கூறுகிறான். மூன்றுவது ஶ்லோகத்தின் பா₄ஷ்யத்தில் 'எம்பெருமானை உள்ளபடி அறிபவன் ஒருவனுமில்லை' என்று கூறிவிட்டு, அதற்கு ப்ரமாணமாக பா₄ஷ்யகாரர் 'ஸ மஹாத்மா ஸுது₃ர்லப₄:' என்ற பத்தொன்பதாவது ஶ்லோகப் பகுதியையும், ''மாம் து வேத₃ ந கஶ்சந'' [என்னை ஒருவனும் உள்ளபடி அறிவதில்லை] என்னும் இந்த ஶ்லோகப் பகுதியையும் காட்டியிருப்பதிலிருந்து ஆழ்வார்களைப்போன்ற மஹாத்மாவான ஜ்ஞானி தன் காலத்தில் ஒருவருமே இல்லையென்னும் குறையோடேயே கண்ணன் எழுந்தருளியிருந்தான் என்று விளங்குகிறது. இப்படி ஒருவருமே தன்னை உள்ளபடி

அறியாமல் இருப்பதற்குக் காரணத்தையும், இவர்களில் சிலர் 16-வது ஶ்லோகத்தில் சொன்னபடி தன்னுடைய ப₄க்தர்களாக எப்படி ஆகிறார்கள் என்பதையும் 27, 28 ஶ்லோகங்களில் விளக்குகிறான் கண்ணன். இவ்விரு ஶ்லோகங்களிலும் அவற்றின் பா₄ஷ்யத்திலும் புண்ய பாப லக்ஷணம் காட்டப்படுகிறது. அந்த ஶ்லோகங்களின் வியாக்கியானத்தில் இது மிகவும் விரிவாக நிரூபிக்கப் பட்டிருக்கிறது. ''புண்யத்தாலே பாபம் சிறிது சிறிதாக அழியப்பெற்றவர்கள் தத்தம் புண்ணியத்தின் ஏற்றத் தாழ்வுகளுக்கு ஏற்ப, ஐஶ்வர்யத்தையோ, கைவல் யத்தையோ, பரமபுருஷனையோ பெறவிரும்பி உறுதியுடன் பக்தி செய்கிறார்கள்'' என்பது இந்த இரு ஶ்லோகங் களின் திரண்டபொருள். ''சாஸ்திரங்களையொட்டி ஶப்₃ தா₃தி₃ விஷயங்களை விரும்பிச்செய்யப்படும் முயற்சிகள் புண்ணியம் என்றும், சாஸ்திரங்களுக்கு முரணாக அவ் விஷயங்களை விரும்பிச்செய்யப்படும் முயற்சிகள் பாபம் என்றும் சொல்லப்படுகின்றன. ஆத்மாவையோ, பரமாத் மாவையோ விரும்பிச் செய்யப்படும் கர்ம ஜ்ஞான ப₄க்தி யோக₃ங்கள் முதலான முயற்சிகள் புண்யபாபங்கள் எனத்தக்கவையல்ல. மோக்ஷஸாத₄னங்கள் என்னும் வகுப்பில் சேர்ந்தவை அவை'' என்னும் மர்மம் இவ்விரு ஶ்லோகங்களிலிருந்து வெளிப்படுகிறது. அதனாலேயே கைவல்யார்த்தி₂க்கு ஶப்₃த₃ா₃தி₃ விஷயங்களில் விருப்பத்தால் உண்டான புண்ய பாபங்கள் கழிந்த பின்பும், தன் விருப் பத்தையொட்டி அனுஷ்டிக்கும் மோக்ஷஸாத₄நத்தாலே அவன் கைவல்யமோக்ஷத்தைப் பெறுகிறான் என்றும், பரம புருஷனை அடையவிரும்புபவன் தன் விருப்பத்தையொட்டி அவன் அனுஷ்டிக்கும் மோக்ஷஸாத₄னத்தாலே பரம புருஷனைப் பெறுகிறான் என்றும் விளங்குகிறது. 16-வது ஶ்லோகபா₄ஷ்யத்தில் ''ப்ரதிபத்தி வைஶேஷ்யாத்'' என்று புண்ணியத்தின் தாரதம்யத்தால் ஏற்பட்ட விருப்பத்தின்

தாரதம்யத்தையிட்டு, இவர்களுக்குப் பலனில் தாரதம்யம் ஏற்படுகிறது என்று சொல்லப்பட்டது. எட்டாம் அத்தியாயத்தின் அவதாரிகையிலும் உபாஸகர்களின் மூன்று வகைகளைச் சொல்லும்போது பாஷ்யகாரர் "ப்ரதிபத்தி வைஶேஷ்யாத்" என்னும் பதத்தை மறுபடி வழங்கியிருப்பதும் காணத்தக்கது. புண்ய பாபங்களை விளக்கும் இந்த ஶ்லோகங்களிலும், அப்புண்ய பாபங்கள் ஸத்வாதிகுண மயமான விஷயங்களை விரும்புவதனுல் ஏற்படுபவையே என்பதைக் காட்டியிருக்கிருர். இவற்றிலிருந்து புண்ணியத்தின் ஏற்றத் தாழ்விஞல் விளைந்த விருப்பங்களின் ஏற்றத் தாழ்விஞல், எல்லாக்கர்மங்களும் கழியப்பெற்ற மோக்ஷத்திலும் ஸத்வாதி குணங்களில் ஈடுபாட்டால் ஏற்பட்ட எல்லாக் கர்மங்களும் கழிந்த பின்பும், ஆத்ம பரமாத்மாக்கள் பற்றிய விருப்பதின் ஏற்றத்தாழ்வால் முறையே ஆத்மாநுபவமாகிற தாழ்ந்த மோக்ஷமும் பரமாத்மாநுபவமாகிற உயர்ந்த மோக்ஷமும் விளைகின்றன என்று தெளிவாகிறது. இதே நியாயப்படி மோக்ஷானந்தத்திற்காகத் தான் முயலும் உபாஸக ஜ்ஞானி 'யதோபாஸனம் பலம்' [உபாஸனத்திற்கு அனுகுணமாகவே பலன் விளைகிறது] என்னும் தத்க்ரது ந்யாயத்தாலே தன் ஆனந்தத்துக்கு உறுப்பாகப் பரமபுருஷனை அனுபவிக்கும் ஸ்வார்த்தமோக்ஷத்தைப் பெறுகிருன் என்பதும், பக்தியையும் ஸாதநமாகக்கொள்ளாமல் ஸ்வயம் ப்ரயோஜனமாகக் கொண்டு எம்பெருமானையே உபாயமாகக்கொள்ளும் மஹாத்மாவான ஜ்ஞானி அவன் விருப்பப்படி எம்பெருமானின் ஆனந்தத்திற்கு உறுப்பான மோக்ஷத்தைப் பெறுகிருன் என்றும் எளிதில் விளங்கும். இவற்றிலிருந்து "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்னும் சரமஶ்லோகத்தின் முற்பாதிக்கு "மோக்ஷமடைவதற்கு உபாயமாகத் தன்னுல் கீதையில் உபதேசிக்கப்பட்ட எல்லா உபாயங்களையும் வாஸனையோடு விட்டுத் தன்னை ஒருவனையே உபாயமாகக் கொள்ள வேண்டும்" என்பதே கண்ணன் திருவுள்ளம் பற்றும் முக்யார்த்தமாகும் என விளங்குகிறது.

ஆக, கீதையில் வெளிப்படையாகப் பார்க்கும்போது கர்ம ஜ்ஞாந ப₄க்தியோக₃ங்களை மோக்ஷமடைவதற்கு ஸாத₄நமாக விதித்திருந்த போதிலும், ஊன்றிப்பார்க்கும்போது ப₂லப்ரத₃ ஸாத₄நமான எம்பெருமானே — தன் முயற்சிகளினின்றும் நீங்கி அவனையே ப₂லகரணமான உபாயமாகக் கொள்ளுகிறவர்களுக்கு உபாயாந்தரஸ்தானத்திலும் தானே நின்று நிர்ஹேதுகமாக மோக்ஷத்தை அளிக்கிறான் என்று விளங்குகிறது.

''தத்த்வமஸி'' ''அஹம் ப்₃ரஹ்மாஸ்மி'' முதலான மஹாவாக்யங்களின் பொருளை உணருவதாலேயே, ஜீவன் நிர்கு₃ணப்₃ரஹ்மமாவதாகிற மோக்ஷம் உண்டாகிறது என்று அத்₃வைதிகள் ஹிதத்தை வர்ணிக்கிறார்கள். இதற்கு கீதையில் எங்கும் இடமிருப்பதாகத் தெரியவில்லை.

## 3. ப₁க₃வத்₃கீ₃தையில் புருஷார்த்த₂ம் (பேறு)

'ஜீவன் ப்₃ரஹ்மமாவதே புருஷார்த்தம்' என்கிறார்கள் அத்₃வைதிகள். இதற்கும் கீதையில் எங்கும் இடமில்லை. பல கீ₃தாஶ்லோகங்கள் இதற்கு முரணாயிருக்கின்றன. கீதையைத்தொடங்கும்போதே ''ந த்வேவாஹம்'' என்னும் ஶ்லோகத்தில் ''ந சைவ ந ப₄விஷ்யாம:'' என்று எல்லா ஜீவர்களும் வருங்காலத்திலும் இல்லாமலிருக்கப் போவதில்லை என்று கூறுகையாலே, மோக்ஷத்திலும் ஜீவர்களின் பேதம் வலியுறுத்தப்பட்டது. கீதையின் முதல் ஷட்கத்தில் கர்மஜ்ஞாநயோக₃ங்களை ஆத்மாநுப₄வமாகிற மோக்ஷத்திற்கு ஸாதநமாகக் கூறுகிறான் கண்ணன். ஆறும் அத்தியாயத்தில் அந்த ஆத்மாநுப₄வரூபமான மோக்ஷத்தைக் கூறும்போது,

யுஞ்ஜந்நேவம் ஸதா₃ऽऽத்மாநம் யோகீ₃ நியதமாநஸ:।
ஶாந்திம் நிர்வாண பரமாம் மத்ஸம் ஸ்த₂ாமதி₄க₃ச்ச₂தி ॥

[கீதை 6 — 15]

[யோக₃ாப்₄யாஸம் செய்பவன் இவ்வண்ணமாக மனத்தைஎப் போதும் (என்னிடம்)செலுத்துகின்றவனுய், (அதனுல்) நிலே பெற்றமனத்தையுடையவனுய், என்னிடம் இருப்பதாய், சரீர மோக்ஷத்தின் எலலே நிலமாயிருப்பதான (ஷடூ₃ர்மி) ஶாந்தியை அடைகிருன்] என்று மரணம், தோற்றம், பிணி, மூப்பு, க்லேசம், கர்மம் ஆகியவையும் அவற்றுக்குக் காரணமான ப்ராக்ருத ஶரீரமும் அற்று, தனக்கு ஸமானமான நிலேயை அவன் மோக்ஷத்தில் அடைவதாகச் சொல்லுகிருனேயொழிய, பரமாத்மாவாகிற தானுவதாகச் சொல்லவில்லே. 44வது ஶ்லோகத்தில் அக்கைவல்யநிஷ்ட₂னுக்குப் ப₂லனேச்சொல்லும் போதும் ''ஶப்₃த₃ப்₃ரஹ்ம அதிவர்த்ததே'' [ஶப்₃த₃ப்₃ரஹ்ம என்னும் ப்ரக்ருதியைத் தாண்டிவிடுகிருன்] என்றும், 45 வது ஶ்லோகத்தில் ''யாதி பராம் க₃திம்'' [மேலான க₃தியான ஆத்ம ப்ராப்தியை அடைகிருன்] என்றும்,ப்ரக்ருதி மண்ட₃லத்தைத் தாண்டிஆத்மாநுப₄வத்தை அடைவதாகக் கூறுகிருனேயொழிய பரமாத்மாவாவதாகக் கூறவில்லே, பதினலாவது அத்தியாயத்திலும் தன் ஆத்மாவை அடைந்து அனுபவிப்பதாகிற இக்கைவல்ய மோக்ஷத்தைப் பற்றிப் பேசும்போது, முதல் ஶ்லோகத்தில் ''பராம் ஸித்₃தி₄மிதோ க₃தா:'' [தம் பரிஶுத்₃த₄ாத்ம ஸ்வருபத்தை அடைவதாகிற மேலான பேற்றைப் பெறுகின்றனர்] என்றும், இரண்டாம் ஶ்லோகத்தில்

இத₃ம் ஜ்ஞாநமுபாஶ்ரித்ய மம ஸாத₄ர்ம்யமாக₃தா: ।
ஸர்க்கேऽபி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யத₂ந்தி ச ॥

[(சொல்லப்போகும்) இந்த அறிவை அடைந்து, என்னேடு ஸாம்யத்தை அடைந்தவர்களாய், (அவர்கள்) இங்கு ஸ்ருஷ்டிகாலத்தில் படைக்கப் படுவதுமில்லே; ப்ரளயகாலத்தில் அழிக்கப் படுவதுமில்லே] என்றும் மோக்ஷத்தில் இவர்களுக்குத் தன்னேடு ஸாம்யமே முழங்கப்பட்டதேயொழிய, பரமாத்மாவாவதாகக் கூறவில்லே.

ஆரும் அத்தியாயத்தில் 47 வதான கடைசி ஶ்லோகத்திலும் தன்னையடைய விரும்பி ப₄க்தி யோக₃த்தை அநுஷ்டிப்பவன் முற்கூறிய கைவல்ய நிஷ்ட₂னைக்காட்டிலும் சிறந்தவன் என்று பே₄த₃த்தையே காட்டுகிருன். ப₄க்தி யோக₃த்தாலே தன்னையடைய விரும்பும் அந்த உபாஸகனுக்குப் ப₂லனைச் சொல்லும்போதும் "மாமேவ ஏஷ்யஸி" [9—34; 18—65] [என்னையே அடைவாய்] என்று ஆத்ம பரமாத்மாக்களுக்கு பே₄த₃த்தையே மோக்ஷத்திலும் காட்டுகிருன். சரணுகதியை விதிக்கும் சரமஶ்லோகத்திலும் "நான் உன்னை எல்லாப்பாபங்களினின்றும் விடுவிக்கிறேன். வருந்தாதே" என்று ஸர்வபாபவிமோசனத்தைப் பலனுகச் சொன்னுனேயொழிய, ஜீவன் ப்₃ரஹ்மமாக ஆகிவிடுவதாகச் சொல்லவேயில்லை. இப்படி முதலிலிருந்து முடிவுவரையில் அத்₃வைதிகள் கூறும் ஜீவப்₃ரஹ்ம ஐக்யம் கீதையில் எங்கும் சொல்லப்படவில்லை என்பதும், நேர்மாருக பே₄த₃மே சொல்லப்பட்டுள்ளது என்பதும் குறிக்கொள்ளத்தக்கது,

கீதையில் சித் அசித், ஈஶ்வரன் என்ற மூன்று தத்துவங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன என்பதை முன்னமே பார்த்தோம், அந்த மூன்று தத்துவங்களோடு தொடர்பு கொண்ட மூன்று புருஷார்த்த₂ங்களும் கீதையில் சொல்லப்பட்டன. அறிவற்ற பொருளாகிற அசித்தை அனுபவிப்பது ஐஶ்வர்யபுருஷார்த்தமாகும். இந்த அசித்தின் தொடர்பற்ற சித்தாகிற தன் ஆத்மாவைத் தானே அனுப₄விப்பது கைவல்ய புருஷார்த்தமாகும். ஈஶ்வரனை அனுப₄விப்பது தலைசிறந்த மோக்ஷ புருஷார்த்த₂மாகும். இந்த மூன்று புருஷார்த்தங்களும் ஏழாம் அத்தியாயத்திலிருந்து தொடங்கி கீதையில் பல ஶ்லோகங்களில் விவரிக்கப்படுகின்றன.

"ஆப்₃ரஹ்ம பு₄வநால்லோகா: புநராவர்த்திநோऽர்ஜுந"

[கீதை 8—16]

[அர்ஜுனா! (ப்₃ரஹ்மாண்ட₃த்தினுள்ளிருக்கும்) ப்₃ரஹ்ம லோகம் வரையிலுள்ள எல்லா உலகங்களும் அழிவை உடையவை] என்று கீ₃தையில் ஐஶ்வர்ய புருஷார்த்த₂ம் அழியக்கூடியது என்று சொல்லப்பட்டது. அழியக்கூடிய (எப்போதும் மாறுதலடையக்கூடிய) அசித்தின் அநுப₄வ மாகையால் அது அழியக்கூடியது என்பது சொல்லாமலே விளங்கும். ஆத்மாவின் அனுப₄வமும் பரமபுருஷனின் அனுப₄வமும் அசித் அடியோடு கழிந்த பின்பே பரிபூர்ண மாக உண்டாகுமாகையாலே, அவை ஸூக்ஷ்ம ஶரீரமும் கழியப்பெற்றபின் விரஜைக்கப்பாலிருக்கும் பரமபத₃த்தி லேயே உண்டாகும் என்பது வெளிப்படையாகவே விளங்கு கிறது, சாஸ்திரங்களிலிருந்தும் ஸித்திக்கிறது. கீதை 6, 7. 8 முதலான அத்தியாயங்களில் கைவல்யத்தைப் பற்றிய கீ₃தாஶ்லோகங்களையும், ஸ்ரீராமாநுஜருடைய கீ₃தா ப₄ாஷ்யத்தையும் ஆராயும்போது கைவல்யாநுப₄வம் ப்ர க்ருதி மண்டலத்திற்கு அப்பால் அநுப₄விக்கப்படும் தாழ்ந்ததொரு மோக்ஷமே என்று தெளிவாக விளங்கு கிறது. ப்ராரப்₃த₄ கர்மம் கழியும் வரையில் இவன் அந்த மோக்ஷத்தையே விரும்பி அதற்குரிய ஸாத₄நத்தை அநு ஷ்டித்தானாகில் இவனுடைய விருப்பத்தையொட்டி எம் பெருமான் அந்த ஆத்மாநுப₄வத்தை அளித்து விடுகிறான் என்பதும், ப்ரக்ருதி மண்ட₃லத்திற்கு அப்பால் மோக்ஷ ஸாத₄நம் எதையும் அநுஷ்டி₂க்கமுடியாதாகையாலே, இவ்வாத்மாநுப₄வம் நிலையானதாய், பரம புருஷாநுப₄ வத்தை என்றும் இவனுக்கு இல்லாததாகச் செய்துவிடும் என்பதும் வெளிப்படை. அதனாலேயே இது ஆத்மமாத்ராநு ப₄வம் என்றும், கேவலாத்மாநுப₄வம் என்றும், கைவல்யாநு ப₄வம் என்றும் சொல்லப்படுகிறது. அசித₃நுப₄வமான ஐஶ்வர்யாநுப₄வத்திலும் அப்ரத₄ாநமாக ஆத்மாநுப₄வமும் ஈஶ்வராநுப₄வமும் ஏற்படக்கூடுமாகையாலே, அது அசிந் மாத்ராநுப₄வம் என்று சொல்லப்படுவதில்லை. பரம மோக்ஷத்தையடைந்து ஈஶ்வரனை அநுப₄விக்கும்போதும் அவனுடைய விபூ₄தியாக சித₃சித்துக்களும் அனுப₄விக்கப்படு

கின்றனவாகையாலே அதையும் ஈஶ்வரமாத்ராநுபவம் என்று சொல்லுவதில்லை. மற்ற அநுபவங்கள் அடியோடு இல்லாமையால் கைவல்யாநுப₄வம் ஒன்றே ஆத்மமாத்ரா நுபவம் என்று சொல்லப்படுவது குறிக்கொள்ளத்தக்கது. ஆக, அநித்யமாகையாலே ஐஶ்வர்யானுபவமும், நித்ய மாக ப₄க₃வத₃நுபவத்தை இல்லாமல் செய்துவிடுமாகை யாலே கைவல்யாநுப₄வமும் விலக்கத்தக்கவை என்றும், அநந்தமாய், ஸ்தி₂ரமாய், எல்லையற்றதான ப₄க₃வத₃நுப₄வமே கைக்கொள்ளத்தக்கது என்றும் கீதையில் காட்டப் பட்டதாயிற்று.

இனி, இந்த ப₄க₃வத₃நுப₄வத்திற்கு ஸாத₄நமாக விதிக் கப்படும் பக்தியைப்பற்றி ஆராய்வோம். ஒன்பதாம் அத்தி யாயத்திலிருந்து தொடங்கி, கீதையின் பல ஶ்லோகங்களில் ஸாத₄நப₄க்தியானது தானே புருஷார்த்த₂மாயிருக்கும் ஸ்வயம் ப்ரயோஜனப₄க்தியாகப் பரிணமிக்கவேண்டும் என் பதே தன் திருவுள்ளம் என்பதைக் கண்ணன் ஆங்காங்கு காட்டுகிறான்.

ஒன்பதாம் அத்தியாயத்தில் 13 வது ஶ்லோகத்தில் மஹாத்மாக்களான ஜ்ஞானிகளின் பெருமையை விளக்கும் போது "ப₄ஜந்தி அநந்யமநஸ:" என்னும் பதங்களுக்கு "மத்ப்ரியத்வாதிரேகேண மத்₃ப₄ஜநேந விநா மநஸஶ்ச ஆத் மநஶ்ச பா₃ஹ்ய கரணாநாம் ச தா₄ரணமலப₄மாநா: மத்₃ப₄ ஜநைக ப்ரயோஜநா ப₄ஜந்தே" [ நானே அவர்களுக்கு மிக வும் இனியவனாகையால், என்னிடம் அன்பு செலுத்தா விடில் தம்முடைய மனமும் ஆத்ம ஸ்வரூபமும் வெளி இந்திரியங்களும் த₄ரிக்கமாட்டாமல் என்னுடைய ப₄க்தி யையே ஸ்வயம் ப்ரயோஜனமாகக்கொண்டு (அதை மோக்ஷோபாயமாகவும் கருதாமல்) ப₄க்தி செலுத்துகிறார் கள் ] என்று பா₄ஷ்யகாரர் விளக்கம் அருளுகையாலே, உபாஸகஜ்ஞாநி ஸ்வயம்ப்ரயோஜந ப₄க்திநிஷ்ட₂னாகப் பரிணமிக்கவேண்டும்என்பதே கீ₃தாசார்யனின் திருவுள்ளம் என்று விளங்குகிறது.

ஒன்பதாம் அத்தியாயத்தில் 22, 26, 27, 30 ஶ்லோகங்களிலும் இவ்வர்த்தமே வலியுறுத்தப்பட்டது. ''மந்மநா ப₄வ'' என்று தொடங்கும் இறுதி ஶ்லோகத்தில் ' யுக்த்வைவம் ஆத்மாநம் மத்பராயண: மாமேவைஷ்யஸி' [இவ்வண்ணமாக நெஞ்சைப் பழக்குவதன் மூலம் என்னையே மேலான ப்ராப்யமாகவும் (ப்ராபகமாகவும்) கொண்டவனாகி என்னையே அடைவாய்] என்னும் உத்தரார்த்த₄த்திலிருந்து ஸாத₄ன ப₄க்தியானது பிரிந்தால் உயிர்வாழமுடியாத அளவுக்கு ஸ்வயம் ப்ரயோஜன ப₄க்தியாகப் பரிணமிக்கவேண்டுமென்பதே எம்பெருமானுடைய திருவுள்ளம் என்று விளங்குகிறது. இங்கு பா₄ஷ்யத்தில் ''மத்பராயண: — மயா விநா ஆத்மத₄ாரண — அஸம்ப₄ாவநயா மத₃ாஶ்ரய இத்யர்த்த₂:'' [''என்னைப் பிரிந்தால் உயிர்வாழ இயலாத அளவுக்கு என்னையே பரமப்ராப்யமாக (பெரும் பயனாக)க் கொண்டவன்'' என்பது 'மத்பராயண'' ஶப்₃த₃த்₃தின் பொருள்] என்று அருளிச்செய்திருக்கையால், மோக்ஷஸாத₄னமான ப₄க்தி கணநேரம் பிரியிலும் த₄ரிக்க இயலாத பரமப₄க்தியாகப் பரிணமிக்க வேண்டுமென்பதே எம்பெருமானுடைய திருவுள்ளம் என்று விளங்குகிறது.

பத்தாம் அத்தியாயத்தில் 9, 10, 11 ஶ்லோகங்களாலே தனது ஐஶ்வர்யம், கல்யாண கு₃ணங்கள் ஆகியவற்றை அநுஸந்தி₄ப்பதால் ப₄க்தி வளர்ந்து உச்சநிலையில் ஸ்வயம் ப்ரயோஜன ப₄க்தியாகப் பரிணமிக்கும் என்று காட்டி, அத்தகைய 'மஹாத்மாக்களின் பெருமையை விளக்குகிருன் 9-வது ஶ்லோகத்தில். 'துஷ்யந்தி ச ரமந்தி ச' என்னும் பத₃ங்களின் ஸ்வாரஸ்யத்தைத் திருவுள்ளத்தில்கொண்டு ''அநந்ய ப்ரயோஜநேந தத்₃வசநேந துஷ்யந்தி'' என்று ப₄ாஷ்யகாரர் அருளியிருப்பதிலிருந்து, கண்ணன் மோக்ஷ ப₂லனில் குறியுடைய உபாஸக ப₄க்தனும் அநந்ய ப்ரயோஜந ப₄க்தனுகப் பரிணமிக்க வேண்டுமென்றே திருவுள்ளம் பற்றுகிருன் என்னும் ப₄ாஷ்யகாரருடைய திரு

வுள்ளம் தெளிவாக விளங்குகிறது, பத்தாம் ஶ்லோகத்தில் இப்படி ஸ்வயம் ப்ரயோஜந ப₄க்தியாகப் பரிணமித்த வளவில், 'அந்த ப₄க்தனுக்கு என்னை அடைவதற்கு முன் ஏற்படும் பரஜ்ஞானம் எனப்படும் மிகத்தெளிவான ஸாக்ஷாத்காரத்தை நானே நிர்ஹேதுகமாக உகப்புடன் தருகிறேன்' என்கிருன். ''ப்ரீதி பூர்வகம் ப₄ஜதாம்'' என்று அந்வயிக்காமல், ''ப்ரீதி பூர்வகம் த₃தா₃மி'' என்று அந்வயித்து பா₄ஷ்யத்தில் பொருள் கொள்ளுகையால், இத்தகைய ப₄க்தன் பரமனிடம் காட்டும் உகப்பைக் காட்டிலும் அவனிடம் எம்பெருமான் காட்டும் உகப்பு மிக விஞ்சியிருக்கிறது என்று உணர்த்தப்படுகிறது. 'தா₃னம்' என்னும் பொருளுடைய தா₄துவிலிருந்து உண்டான 'த₃தா₃மி' என்னும் சொல்லாலே, எம்பெருமான் இவனுக்குப் பரஜ்ஞானத்தை நிர்ஹேதுகமாக அளிக்கிருன் என்று விளங்குகிறது. இப்படி அந்திம ஸ்ம்ருதி வரையில் ஸ்வயம் ப்ரயோஜந ப₄க்தியாகப் பரிணமிக்காத ப₄க்தியையுடைய உபாஸக ஜ்ஞாநிவிஷயத்தில் அவ்வுபாஸநத்தின் ப₂லமாக அந்திம ஸ்ம்ருதியில் பரஜ்ஞாந பரமப₄க்திகளை விளைத்து அவன் விரும்பும் ஸ்வார்த்த₂மோக்ஷத்தை அளிக்கிருன் என்று இதனல் தேறுகிறது,

''தேஷாமேவாநுகம்பார்த்த₂ம் அஹமஜ்ஞாநஜம் தம: |
நாஶயாம்யாத்ம பா₄வஸ்த₂: ஜ்ஞாநதீ₃பேந பா₄ஸ்வதா ||''

[9 – 11]

[அந்த ஸ்வயம் ப்ரயோஜந ப₄க்தி நிஷ்டா₂ர்களிடம் அருளினலேயே அவர்களுடைய நெஞ்சுக்கு விஷயமானவனய் (எனது கல்யாண கு₃ணங்களை வெளிப்படுத்தி) என் விஷயமான ஜ்ஞானமெனும் ஒளிமிக்க விளக்காலே ஜ்ஞாநத்துக்கு விரோதி₄யான பண்டைவினைகளால் உண்டான (ஶப்₃த₃ாதி₃ விஷய ப்ராவண்யமாகிற) இருளை அழிக்கிறேன்] என்று கீதை 10ம் அத்தியாயம் 11 வது ஶ்லோ

கத்தில் பரஜ்ஞானத்திற்குத் தடையான அஜ்ஞான இருளை அந்த ஸ்வயம் ப்ரயோஜன பக்தி நிஷ்டர்களுக்குத் தன் நிர்ஹேதுக கருணையால் ஜ்ஞானம் என்னும் ஒளி விளக்கை ஏற்றிப் போக்குவதாக அருளிச்செய்கிறான். 'அநுகம்பாயை' என்னும் சொல்லை இடாமல் 'அநுகம் பார்த்தம்' என்று 'அர்த்த' ஶப்தத்தைப் பிரயோகித் திருப்பதாலும், 'ஏவ' என்னும் சொல்லையிட்டிருப்பதா லும் பகவான் தனது நிர்ஹேதுக க்ருபையாலே தன் பேருக இதைச் செய்கிறான் என்று விளங்குகிறது. உபா ஸக ஜ்ஞாநி தனது உபாஸநத்தாலே விஷய ப்ராவண் யத்தைப் போக்கிக்கொண்ட பின்பு உபாஸந பலமாக அவனுக்கு அந்திம ஸ்ம்ருதியில் பரஜ்ஞாநத்தை விளைக் கிறான் என்றும், மஹாத்மாவான ஜ்ஞாநிக்குத் தனது பக்தியை ஸ்வயம் ப்ரயோஜனமாக எண்ணத்தொடங்கிய அந்த ஜன்மத்திலேயே நிர்ஹேதுகமாக விஷய ப்ராவண் யத்தைப்போக்கிப் பரஜ்ஞானத்தை விளைத்து மோக்ஷத்தை யும் அளிக்கிறான் என்றும் உணர்த்துவதன் மூலம் இரு வருக்குமுள்ள வாசி காட்டப்படுகிறது.

பதினேராம் அத்தியாயத்தில் கண்ணன் அர்ஜுந னுக்கு விஶ்வருபத்தைக் காட்டிய பிறகு இறுதியிலுள்ள 53, 54, 55 வது ஶ்லோகங்களாலே "வேதங்கள், தவம், தானம், யாகங்கள் முதலானவற்றால் என்னை இப்படிக் காணமுடியாது; ஸ்வயம் ப்ரயோஜன பக்தியினாலேயே இவ்வண்ணமாக என்னை அறிந்து கண்டு அடையலாம்" என்று கூறுகிறான். "கஶ்சிந்மாம் வேத்தி தத்த்வத:" [7-3] என்று ஏழாம் அத்தியாயத்தின் தொடக்கத்தில் சொல்லப் பட்ட மஹாத்மாவான ஜ்ஞானியையே இங்கு "அநந்யயா பக்த்யா—தத்த்வேந ஜ்ஞாதும் த்ரஷ்டும் ப்ரவேஷ்டும் ச ஶக்ய:" [54] என்று ஸ்வயம் ப்ரயோஜன பக்தியினாலே ஜ்ஞாந தர்ஶன ப்ராப்திகளை உள்ளபடி அடைபவனாகக்

கூறுகிருன். 'நமது முயற்சியினுல் எம்பெருமானைப் பெற்றுவிடலாம்' என்னும் ஜ்ஞானம் தத்வஜ்ஞானமாகாது. 'ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியாகிற ப்ரபத்தியால் பெறலாம்' என்று அறிவதே தத்வஜ்ஞாநமாகும்; உபாஸந ப₂லமாக அந்திம ஸ்ம்ருதியில் பெறும் த₃ர்ஶனம் தத்வ த₃ர்ஶனமாகாது. ஸ்வயம் ப்ரயோஜன ப₄க்தியினுலே அந்திம ஸ்ம்ருதிக்கு முன்பே விளையும் பரஜ்ஞானமாகிற த₃ர்ஶனமே தத்வத₃ர்ஶனமாகும். உபாஸன ப₂லமாகப் பெறும் ஸ்வார்த்த₂மோக்ஷம் தத்வப்ரவேசமாகாது. ஸ்வயம்ப்ரயோஜன ப₄க்தியினுலே பரஜ்ஞான பரமப₄க்திகள் விளைந்து நிர்ஹேதுகமாகப்பெறும் பரார்த்த₂ாநுப₄வ கைங்கர்யங்களே தத்வப்ரவேசமாகும் என்னும் அரும்பொருள் இங்குள்ள 'தத்த்வேந' என்னும் பதத்தை ஜ்ஞாதும், த்₃ரஷ்டும், ப்ரவேஷ்டும் என்னும் மூன்று பத₃ங்களோடும் கூட்டிப் பொருள் கொள்ளும்போது கிடைக்கிறது. 53, 54 ஶ்லோகங்கள் "நாயமாத்மா ப்ரவசநேந லப்₄ய: ந மேத₄யா ந ப₃ஹுநா ஶ்ருதேந। யமேவைஷ வ்ருணுதே தேந லப்₄ய: தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்॥" [கட₂ 2-23] [இந்தப் பரமாத்மா (ப₄க்தியில்லாத) ஶ்ரவண மநந த்₄யாநங்களாலே அடையத்தக்கவனல்லன்; (ப₄க்தியுடைய) எவனை இந்தப் பரமாத்மா வரிக்கிருனே அவனுக்கே இவன் தனது ஸ்வரூபரூபங்களைக் காட்டுகிருன்.] என்னும் உபநிஷத் வாக்யத்திற்கு விவரணமாய் இருந்து கொண்டு பரக₃த ஸ்வீகார நிஷ்டை₂யையும் ஸ்வயம் ப்ரயோஜன ப₄க்தியையும் விளக்குகின்றன. "உபபத்தேஶ்ச" [ப்₃ரஹ்மஸூத்ரம் 3-2-34] என்னும் ஸூத்ரத்தின் ப₄ாஷ்யத்தில் 'எம்பெருமானே உபாயம்' என்னும் அர்த்த₂த்திற்கு ப்ரமாணமாகவும், ஸ்ரீப₄ாஷ்யத் தொடக்கத்திலும் இந்த ஶ்லோக ப₄ாஷ்யத்திலும் "எல்லையற்ற ப₄க்தியுடையவனுக்கு எம்பெருமான் தன்னைக்காட்டுகிருன்" என்னும் அர்த்த₂த்திற்கு ப்ரமாணமாகவும் இம்மந்திரத்தை ப₄ாஷ்ய

காரர் எடுத்திருப்பது ஸ்வயம் ப்ரயோஜன ப₄க்திநிஷ்ட₂னை பரக₃த ஸ்வீகார நிஷ்ட₂னே இந்த மந்த்ரத்தில் 'யம்' என்கிற ஶப்₃த₃த்திற்கு முக்₂யார்த்த₂மாகையாலே முரண் படாது. 55 வது ஶ்லோகத்தின் பா₄ஷ்யத்தில் ''மத்₃ப₄க்த: — அத்யர்த்த₂மத்ப்ரியத்வேந மத்கீர்த்தந ஸ்துதித்₄யாந அர்ச்சந ப்ரணாமாதி₃பி₄: விநா ஆத்மதா₄ரண மலப₄மாநோ மதே₃க ப்ரயோஜநதயா யஸ் ஸததம் தாநி கரோதி ஸ மத்₃ப₄க்த:'' [என்னிடம் அளவுகடந்த அன்புடையவனாகையாலே, என்னை ஸங்கீர்த்தனம் செய்வது துதிப்பது தியானிப்பது அர்ச்சனம் செய்வது வணங்குவது முதலானவற்றைச் செய்யாமல் தன் உயிர் தா₄ரிக்கமாட்டாதவனாய், என்னையே பயனாகக் கொண்டவனாய், எப்போதும் எனக்கு ஆராத₄னமாகக் கர்மங்களைச் செய்பவன் என் ப₄க்தன்] என்று 'ப₄க்த' ஶப்₃த₃த்தை பா₄ஷ்யகாரர் விவரணம் செய்திருக்கையால், இந்த மூன்றுஶ்லோகங்களிலும் கருதப் படுபவன் ஸ்வயப்ப்ரயோஜன ப₄க்தி நிஷ்டனே என்று விளங்குகிறது.

பன்னிரண்டாம் அத்தியாயத்தில் எம்பெருமான் 6, 7 ஶ்லோகங்களில் தன்னை உபாஸிப்பவர்களின் பெருமையைக் கூறும்போது ''அநந்யேநைவ யோகே₃ந மாம் த்₄யாயந்த உபாஸதே'' [வேறு பயன் கருதாத யோக₃த்தினால் என்னைக் குறித்துத் தியானம் முதலானவற்றைச் செய்துகொண்டு உபாஸிக்கிறார்கள்] என்று குறிப்பிடுகிறான். இங்கு பா₄ஷ்யமிடும்போது ''அநந்யேநைவ யோகே₃ந — அநந்யப்ரயோஜநேந யோகே₃ந, மாம த்₄யாயந்த உபாஸதே — த்₄யாநார்ச்சந ப்ரணாம ஸ்துதி கீர்த்தநாதீ₃நி ஸ்வயமேவாத்யர்த்த₂ ப்ரியாணி ப்ராப்யஸமாநி குர்வந்தோ மாமுபாஸத இத்யர்த்த₂:'' [''அநந்யநைவ யோகே₃ந-என்றது வேறுபயன் கருதாத ப₄க்தியோக₃த்தைக் குறிக்கிறது. 'மாம் த்₄யாயந்த: உபாஸதே' என்னும் தொடர் 'தியானம், அர்ச்சனம், ப்ரணாமம், துதி, ஸங்கீர்த்தனம் முதலானவற்றை மிக இனியவையாயிருக்கையாலே

(மோக்ஷத்தையும் இவற்றுக்குப் பயனாகக் கொள்ளாமல்) ஸ்வயம் ப்ரயோஜனமாகச் செய்துகொண்டு என்னை உபாஸிக்கிறார்கள்'' என்று பொருள் படுகிறது] என்று அருளிச் செய்திருக்கையால், பக்தியோகம் மோக்ஷஸாதநமாக விதிக்கப்பட்ட போதிலும் மோக்ஷத்தையும் இதற்குப் பயனாகக் கருதாமல் ஸ்வயம்ப்ரயோஜநமாகக் கருதிச் செய்வதே எம்பெருமானுக்கு மிகவும் உகப்பு என்றும், உபாஸகனையும் ஸ்வயம் ப்ரயோஜன பக்தி நிஷ்டனாக ஸித்தோபாய நிஷ்டனாக்குவதிலேயே பக்திவிதி ஶாஸ்த்ரங்களுக்கு நோக்கு என்றும் விளங்குகிறது. ஏழாவது ஶ்லோகத்தில் ''தேஷாமஹம் ஸமுத்தர்த்தா ம்ருத்யுஸம்ஸார ஸாகராத் பவாமி நசிராத்'' [அவர்களை (என்னை அடையத் தடையாகையாலே) ஆத்ம நாசத்தை விளைக்கும் ஸம்ஸாரம் என்னும் கடலிலிருந்து நான் விரைவிலேயே கைதூக்கி விடுபவனாகிறேன்] என்று உபாஸந பக்தியானது ஸ்வயம் ப்ரயோஜந பக்தியாகப் பரிணமித்துவிட்டதென்றால் விரைவிலேயே, அதாவது—அந்த ஜன்மத்தின் இறுதியிலேயே, ஸம்ஸாரம் நீங்கிவிடும் என்று காட்டப்படுகிறது.

பதினெட்டாம் அத்தியாயத்தில் 45வது ஶ்லோகம் தொடங்கி கீதையில் இதுவரை சொல்லிவந்தது அனைத்தையும் சுருக்கமாகக் கூறுகிறான் கண்ணன். 45 வது ஶ்லோகம் தொடங்கி 54 வது ஶ்லோகம் வரையில் ஆத்மாவைப்பற்றிய உண்மையறிவை முன்னிட்டுக்கொண்டு கர்மயோகத்தை அனுஷ்டித்தால் ஆத்மத்யானம் ஏற்படும் என்றும், அந்த ஆத்மத்யானத்தாலே ஆத்மஸாக்ஷாத்காரம் ஏற்படும் என்றும், அப்படி ஆத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி கண்டபின்பு தன் விஷயமான பரபக்தி ஏற்படும் என்றும் கூறுகிறான். இது கீதையின் முதல் ஷட்கத்தின் சுருக்கமாகும். 55 வது ஶ்லோகத்தில் பக்தி யோகத்தின் உச்சநிலையான பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளை அடைவ

தைக் கூறுவதன் மூலம் இரண்டாவது ஷட்கத்தைச் சுருக்கிக் கூறுகிறுன். பரப₄க்தியாலே தன்னுடைய ஸ்வ ரூப ஸ்வப₄ாவங்களை உள்ளபடி அறிகையாகிற பரஜ்ஞா னத்தைப் பெறுகிருன் என்றும், அதற்குப் பின் அந்தப் பரப₄க்தியின் முற்றிய நிலையான பரமப₄க்தியைப் பெறு கிருன் என்றும், கணநேரமும் தன்னைப் பிரிந்து நிற்க இயலாமையாகிற பரமப₄க்தியைப் பெற்றவுடன் அக்கார ணத்தாலேயே அவன் அந்த ஜன்மத்திலேயே மோக்ஷ மடைந்து விடுகிருன் என்றும் கூறுகிருன் கண்ணன். ''ததஃநந்தரம் தத்த்வத: விஶதே'' என்று பரஜ்ஞாந பரம ப₄க்திகளைப் பெற்ற அந்த ஜன்மத்திலேயே அவனுக்கு உள்ளபடி எம்பெருமானை அடைவதாகிற பரமமோக்ஷம் ஸித்₃தி₄க்கிறது என்று கூறியிருப்பது குறிக்கொள்ளத் தக்கது. ''கஶ்சிந் மாம் வேத்தி தத்த்வத:'' (7-3) [பல்லா யிரவரில் ஒருவனே என்னை உள்ளபடி அறிகிருன்] என்றும்,

''ப₄க்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம்விதோ₄ऽர்ஜுந ।
ஜ்ஞாதும் த்₃ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப ॥''
[11-54]

[எதிரிகளைத் தவிக்கச் செய்யும் அர்ஜுனனே! நான் ஸ்வயம் ப்ரயோஜந ப₄க்தியாலேயே இவ்வண்ணமாக உள்ளபடி அறிவதற்கும், காண்பதற்கும், அடைவதற் கும் தக்கவன்] என்றும் சொல்லப்பட்ட தத்த்வ ஜ்ஞான, தத்த்வ தர்சன, தத்த்வ ப்ரவேசங்களே இந்த ஶ்லோகத் தில் [18-55] ''தத்த்வத: அபி₄ஜாநாதி'' என்றும், ''தத் த்வத: ஜ்ஞாத்வா'' என்றும், ''தத்த்வத: விஶதே'' என் றும் அநுவதி₃க்கப்படுவதன் மூலம் உபாஸக ஜ்ஞாநி அவ் வுபாஸநத்தின் உச்சநிலையில் எம்பெருமானே உபேயமாக இருப்பதோடு உபாயமாகவும் இருக்கிருன் என்னும் தத்வ ஜ்ஞாநத்தைப்பெறுகிறுன் என்றும், இதற்குப்பின் அவனுக்கு உள்ளபடி எம்பெருமானைக் காண்கையாகிற பரஜ்ஞாநம் உண்டாகிறது என்றும், அது பரமப₄க்தியாக முற்றியபின்

எம்பெருமானை உள்ளபடி அடைகையாகிற ஸாயுஜ்ய நிலை ஏற்படுகிறது என்றும் உணர்த்தப்படுகிறது. ப்ராரப்த கர்மம் முடியும் வரையில் இந்தப் பர ஜ்ஞாந பரமபக்திகள் உபாஸக ஜ்ஞானிக்கு விளைய வில்லையென்றால், அந்திமஸ்ம்ருதியில் அவனுடைய உபாய பக்தியின் பலனாக பரஜ்ஞாந பரமபக்திகளை விளைத்து அவனுக்கு மோக்ஷத்தை அளித்து விடுகிறான் எம்பெருமான் என்றும், "உபாஸித்தபடியே பலன்" என்னும் தத்க்ரது ந்யாயத்தாலே அவன் பெறும் பரஜ்ஞான பரமபக்திகளும், மோக்ஷமும் "தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே" [திரு வாய் 2—9—4] என்கிறபடியே பரார்த்தமாக அமையாமல், ஸ்வார்த்தமாகவும் அமைந்துவிடும் என்றும் தேறுகிறது.

## இவ்விஷயத்தில் பூர்வாசார்யர்களிடையே இரு வேறு கருத்துக்கள்

கீதையிலும் மற்ற ஶாஸ்த்ரங்களிலும் தத்வஹித புருஷார்த்தங்களை நிர்ணயிக்கும்போது எம்பெருமானாருடைய ஶிஷ்யப்ரஶிஷ்யர்களிடையே இரண்டுவிதமான கருத்துக்கள் விளைந்துள்ளன. நடாதூர் அம்மாள், ஶ்ருதப்ரகாஶிகாசார்யர், நம்பிள்ளை தொடக்கமாய் மணவாள மாமுனிகள் ஈறுகவுள்ள திவ்யப்ரபந்த வ்யாக்யாதாக்கள் ஆகியோருடைய கருத்து இதுவரையில் காட்டப்பட்டது.

அதன் ஸாரமாவது:— "ஜீவனுக்கு ஒவ்வொரு காரியத்திலும் முதல் முயற்சியில் ஸ்வாதந்த்ரியம் உண்டென்று பராயத்தாதிகரணத்திலிருந்து தேறுகிறபடியால் அந்த முதல் முயற்சியைப் பயன்படுத்தி, தம் ஆனந்தத்திற்காக ஒரு பயனை விரும்பி அனுஷ்டிக்கப்படும் ஸாதநாந்தரங்கள் அனைத்துமே ஜீவனுடைய அத்யந்த பரதந்த்ர ஸ்வரூபத்திற்கு முரண்பட்டவை;

அந்த ஸாத₄நங்களை அனுஷ்டி₂த்து மோக்ஷத்தையே பெற்றாலும், தத்க்ரது ந்யாயத்தாலே, அந்த ஸாத₄நங்களுக்குப் ப₂லமாகக் கிடைக்கும் மோக்ஷமும் தம் ஆனந்தத்திற்கு உறுப்பாகவே அமையும். 'தன் ஆனந்தத்திற்கு உறுப்பாகத் தன் ஆத்மாவை அனுப₄விப்பதே போதும்' என்று நினைத்துக் கைவல்யத்தைப் பெறவிரும்பி, அதற்குரிய ஸாத₄நத்தை அந்திமஸ்ம்ருதி பர்யந்தம் அனுஷ்டித்தானால், தத்க்ரதுந்யாயத்தின்படி கைவல்யமாகிற தாழ்ந்த மோக்ஷமே அவனுக்கு நிரந்தரமாகக் கிடைத்துவிடும். தம் ஆனந்த₃த்தை விரும்பி ப₄க்தியை ஸாத₄நமாக அனுஷ்டி₂ப்பவர்களுக்கும் ஸ்வார்த்த₂மாக ப₄க₃வானை அநுப₄விப்பதை முக்கியமாகக்கொண்ட மோக்ஷம் கிடைத்துவிடும். உபாயமாக நினைத்து ப்ரபத்தியை அனுஷ்டி₂ப்பவர்களுக்கும் ஸ்வார்த்த₂மான ப₄க₃வத்கைங்கர்யத்தை முக்கியமாகக் கொண்ட மோக்ஷம் கிடைத்துவிடும். ப₄க்தி நிஷ்ட₂ர்களுக்கு ஸ்வார்த்த₂ப₄க₃வத₃நுப₄வம் ப்ரத₄ானமாகவும், ப₄க₃வத்கைங்கர்யம் அதற்கு அடங்கியும், ப்ரபத்தியை உபாயமாக அனுஷ்டி₂ப்பவர்களுக்கு ஸ்வார்த்த₂ ப₄க₃வத்கைங்கர்யம் ப்ரத₄ானமாகவும், ப₄க₃வத₃நுப₄வம் அதற்கு உறுப்பாகவும் அமையும். முக்தியிலும் எம்பெருமானுடைய ஆனந்த₃த்தையே உத்₃தே₃ஶ்யமாகக்கொண்டு மோக்ஷத்திற்குத் தாம் ஒரு ஸாத₄நாநுஷ்ட₂ானத்தைக் கைக்கொள்வது ஸ்வரூபவிருத்₃த₄ம் என்று உணர்ந்து, தாம் பற்றும் பற்று உபாயம் என்னும் எண்ணத்தைக் கொள்ளாமல், எம்பெருமான் நம்மைப்பற்றுவதே உபாயமாகும் என்று உறுதி பூண்டு, * சாதகம்போல் நாதன் தனதருளே பார்த்திருக்கும் பரக₃தஸ்வீகார நிஷ்ட₂ர்களான உத்தமஶரணாக₃தர்களுக்கு எம்பெருமான் நிர்ஹேதுகமாகப் பரார்த்த₂ாநுப₄வ கைங்கர்யரூபமானமோக்ஷத்தை அருளுவான் என்றபடி.

ஸ்ரீவேதாந்த தேசிகரின் ஆசார்யரான கிடாம்பி அப்புள்ளாருக்கும் வேதாந்ததேசிகருக்கும் இக்கருத்தில் உடன்பாடு இல்லை. ஶாஸ்த்ரத்தில் விதி₄க்கப்பட்டதாகவும்,

ரிஷிகள் அநுஷ்டி₂த்து வந்ததாகவும் உள்ள ப₄க்தியோக₃த்தை ஸ்வரூப விருத்₃த₄ம் என்று கூறுவதும், அதன் ப₂லனாக மோக்ஷத்திலும் ஸ்வார்த்த₂ ப₂லன் விளைந்து விடும் என்று கூறுவதும் சரியல்ல என்பது இவர்களுடைய திருவுள்ளம். ப்ரத₂மப்ரவ்ருத்தியில் ஜீவனுக்கு ஸ்வாதந்த்ரியத்தை ஒப்புக்கொண்டால் அந்த ஸ்வாதந்த்ரியத்தைப் பயன்படுத்தி அநுஷ்டி₂க்கப்படும் ஸாத₄நாந்தரங்கள் ஸ்வரூபவிருத்₃த₄ம் என்று தேறிவிடுமாகையால் "ப்ரத₂மப்ரவ்ருத்தியில் ஜீவனுக்கு ஸ்வாதந்த்ரியம் உண்டு என்பதே சரியல்ல. ஜீவனுடைய பூர்வ பூர்வகர்மங்களே மேன்மேலே அவன் செய்யும் நன்முயற்சிகளுக்கும், தீய முயற்சிகளுக்கும் காரணமாகின்றன என்று கொண்டு விடலாம். இதன் மூலமே எம்பெருமானுக்கு வைஷம்ய நைர்க்₄ருண்ய பரிஹாரம் முதலானவை ஏற்பட்டுவிடும்" என்று இவர்கள் முற்கூறிய பல ஆசார்யர்களுடைய திருவுள்ளத்தை மறுக்க முற்பட்டிருக்கிறார்கள். இவ்வண்ணமாக "ஜீவனுக்கு ப்ரத₂மப்ரவ்ருத்தியில் ஸ்வாதந்த்ரியம் உண்டு; அந்த ஸ்வாதந்த்ரியத்தைப் பயன்படுத்தி மோக்ஷத்தின் பொருட்டு அநுஷ்டி₂க்கப்படும் ஸாத₄நாந்தரங்களும் ஸ்வரூபவிருத்₃த₄மே. அந்த ஸாத₄நாந்தரங்களின் மூலம் அடையும் மோக்ஷமும் ஸ்வார்த்த₂மாகவே அமையும்; மோக்ஷத்திலும் எம்பெருமானுடைய ஆனந்த₃த்தையே உத்₃தே₃ஶ்யமாகக்கொண்டு அவனுடைய அருளையே ஸாத₄நமாகக்கொண்டு தம்மிடமுள்ளது எதையும் ஸாத₄நமாக நினைக்காத உத்தமப்ரபந்நர்களுக்கே எம்பெருமான் நிர்ஹேதுகமாக பரார்த்த₂ கைங்கர்ய ப்ரத₄ானமான மோக்ஷத்தை அருள்கிறான்." என்னும் தத்வ ஹித புருஷார்த்த₂க் கொள்கைகளை அடிப்படையாகக்கொண்டு தென்னாசார்ய ஸம்ப்ரதாயமும், "ஜீவனுக்கு ப்ரத₂ம ப்ரவ்ருத்தியில் ஸ்வாதந்த்ரிய லேசமும் இல்லை. ஆகையால், ஸாத₄நாந்தரங்கள் ஸ்வரூபவிருத்₃த₄ம் என்னும் பேச்சுக்கே இடமில்லை. ஆகையால் முக்தியிலும் ஸ்வார்த்த₂ம் பரார்த்த₂ம் என்று இருவகை மோக்ஷமில்லை. கைவல்யம் மோக்ஷமாகாது; தலைசிறந்ததொரு ஐஸ்வர்யமே" என்னும்

தத்வ ஹித புருஷார்த்த₂க் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு தேசிக ஸம்ப்ரதாயமும் வளர்ந்துள்ளன என்று விளங்குகிறது.

இக்கருத்து வேற்றுமையால் கீதையில் பரமஸாரமான ஶ்லோகமாக ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவராலும் கொண்டாடப்படும் சரமஶ்லோகத்திற்குப் பொருள் கொள்வதிலும் ஸ்ரீவேத₃ாந்த தேசிகருக்கும், மற்ற ஆசார்யர்களுக்கும் கருத்துவேற்றுமை விளைந்துள்ளது. ப₄ட்டருடைய அஷ்ட ஶ்லோகீ, பெரியவாச்சான் பிள்ளையின் பரந்த ரஹஸ்யம், பிள்ளை லோகாசார்யரின் முமுக்ஷுப்படி முதலிய தென்னாசார்ய க்ரந்தங்களின்படி சரமஶ்லோகத்தின் பொருள் பின்வருமாறு:— ''செயற்கரியவையாய் அதயந்தபரதந்த்ரமான ஜீவஸ்வரூபத்திற்குத் தகாதவையான கர்மஜ்ஞாந ப₄க்தி யோக₃ங்கள் முதலான சேதந ப்ரவ்ருத்தி ரூபமானமோக்ஷோபாயங்கள் அனைத்தையும் 'உபாயமல்லாத இவற்றை உபாயமென்று எண்ணினோமே' என்ற லஜ்ஜையுடன் அடியோடு விட்டு என் ஒருவனையே உபாயமாகக்கொள்வாய். என்னை உபாயமாக நீ பற்றும்பற்றையும் உபாயம் என்றுஎண்ணாதே. இப்படிப்பட்ட உன்னை ஜ்ஞாநம், ஶக்தி முதலான குணங்கள் நிறைந்த நான், என்னை அடையத் தடையாயிருக்கும் எல்லாப் பாபங்களினின்றும் விடுவிக்கிறேன்'' என்றபடி.

ஸ்ரீவேதாந்த தேசிகரின் தாத்பர்ய சந்த்ரிகை, ரஹஸ்ய த்ரயஸாரம் முதலிய க்ரந்தங்களின்படி சரம ஶ்லோகத்தின் பொருள் பின்வருமாறு;— கர்மஜ்ஞாநயோக₃ங்களை அங்கமாகக் கொண்ட ப₄க்தியோக₃த்தை அநுஷ்டி₂ப்பதற்கு சக்தியுள்ளவன், இந்த ஜந்மத்திலேயே மோக்ஷமடையவேண்டும் என்னும் த்வரையில்லாமலிருந்தால் ப₄க்தி யோக₃த்தையே மோக்ஷோபாயமாகவும், ப்ரபத்தியை அங்க₃மாகவும் அனுஷ்டி₂க்கவேண்டும். அப்படி ப₄க்தியோக₃த்தை அனுஷ்டிப்பதற்கு ஜ்ஞாந ஶக்திகள் இல்லாதவர்களாலும், ஜ்ஞாநஶக்திகள் இருந்தாலும் இந்த ஜன்மத்திலேயே மோக்ஷமடையவேண்டும் என்னும் த்வரையுடையவர்களாலும் முக்₂யப்ரபத்தியே அனுஷ்டி₂க்கத்தக்கது.

அவர்களுக்கு 'ப4க்தி முதலான எல்லாமோக்ஷோபாயங்களை யும் கைவிட்டு என்னை ஒருவனையே மோக்ஷோபாயமாகக் கொள்ளும் ஶரணாகதியை அநுஷ்டிப்பாய். நீ பற்றும் பற்றையும் எம்பெருமானுக்குத் துல்யமான உபாயமாகக் கருதாதே. இப்படி சரணாக3தியை அநுஷ்டித்த உன்னை நான் என்னை அடையத் தடையாயிருக்கும் எல்லாப் பாபங் களினின்றும் விடுவிக்கிறேன்' என்பது சரமஶ்லோகத்தின் பொருள். அங்க3ப்ரபத்தி செய்பவர்களுக்கு ''ப4க்தியோக3ம் தொடங்குவதற்குத் தடையான பாபங்களையோ, ப4க்தி யோக3த்தைத் தொடர்ந்து அநுஷ்டி2ப்பதற்குத் தடை யான பாபங்களையோ நீக்கிக்கொள்வதற்குத் தன்னால் இய லாதென்று கருதினால் அதன் பொருட்டு என்னையே சரண மடைவாய். அந்தப் பாபங்களனைத்தையும் உனக்கு நான் நீக்குகிறேன்'' என்பது சரமஶ்லோகத்தின் பொருள். ஆக, இந்த சரமஶ்லோகம் முக்யப்ரபத்தி செய்பவர்களுக்கும், ப4க்தி யோக3த்தின் அங்கமாக ப்ரபத்தி செய்பவர்களுக்கும் பொது வானது. அவரவருக்குத் தக்கபடி பொருள் வேறுபடுகிறது என்பது ஸ்ரீவேதாந்த தேசிகரின் திருவுள்ளமாகும்.

முடிவுரை

இவற்றிலிருந்து ''சேதநாசேதந விசிஷ்டமான பரப்3ரஹ்ம மான ஸ்ரீமந்நாராயணனே 'தத்வம்' என்பது ஸகல பூர்வாசார் யர்களும் உடன்பட்ட கீதா தாத்பர்யமாகும்; ஹித புருஷார்த்த2 விஷயத்தில் 'இரக்கத்தோடு கூடிய அப்பரமபுருஷனே உபாயம், சேதநனின் முயற்சிகள் எதுவும் உபாயமல்ல; அப்பரமபுருஷ னின் உகப்புக்குரிய கைங்கர்யமே பரமபுருஷார்த்த2ம்; தன் முயற்சியில் உபாயம் என்னும் எண்ணம் கொள்பவர்கள் அடை யும் ஸ்வார்த்த2மோக்ஷமும் கைவல்யமோக்ஷமும் பரம புருஷார்த் தங்களல்ல' என்பது தென்னாசார்யர்களின் திருவுள்ளம்; 'ப4க்தி யும் ப்ரபத்தியும் மோக்ஷத்திற்கு ஸாத்4யோபாயங்கள். ப4க்தர் ப்ரபந்நர் இருவர்க்கும் எம்பெருமான் மோக்ஷத்தில் ஒரேவகையான புருஷார்த்த2த்தை அளிக்கும் ஸித்3தோ4பாயம். மோக்ஷத்தில் ஸ்வார்த்த2 பரார்த்த2பே4த3ம் இல்லை. கைவல்யம் மோக்ஷமல்ல; ஸம்ஸாரமண்டலத்தில் அநுபவிக்கப்படும் ஓர் ஐஶ்வர்யமே யாகும்' என்பது ஸ்ரீவேதாந்ததேசிகரின் திருவுள்ளம்'' என்று தேறுகிறது.

---

இக்கட்டுரை சென்னைப்பல்கலைக்கழகம் வைணவத்துறையின் ஆதரவில் 1995 நவம்பர் 14, 15 தேதிகளில் நிகழ்த்தப்பெற்ற அறக்கட்டளைச் சொற்பொழிவாகும்.